அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்

# ஸஹீஹ் முஸ்லிம்

## தமிழாக்கம்

## முழுமையான பாகம்

மூலம் : சென்னை ரஹ்மத் அறக்கட்டளை

ஆதாரம் : http://onlinepj.com

ஆக்கம் : http://sunmarkam.blogspot.com

...::: இலவச வெளியீடு :::...

அஸ்ஸலாமு அலைக்கும்...

வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் மாபெரும் உதவியாலும், கிருபையாலும், தீனுல் இஸ்லாத்தின் அடிப்படைகளான அல்குர்ஆன், அல்ஹதீஸ் கிரந்தங்களில்,மிகவும் முக்கிய இடத்தை வகிக்கும் ஸஹீஹ் முஸ்லிம், முழுமையான பாகம் தமிழில் – மின்நூல் வடிவில், அனைவரும் எளிமையாக பயன்படுத்தும் வண்ணம் உருவாக்கப்பட்டுள்ளது.

ஸஹீஹ் முஸ்லிமின் இந்த முழுமையான பாகமானது, ஆன்லைன் பிஜெ தளத்தில் உள்ள, ரஹ்மத் அறக்கட்டளை நான்கு பாகங்களாக வெளியிட்ட ஸஹீஹ் முஸ்லிம் தொகுப்பை மூல ஆதாரமாகக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது. இந்த ஆக்கம் விற்பனை நோக்கிலோ,வேறெந்த ஆதாய நோக்கத்திலோ உருவாக்கப்பட்டதல்ல.இதன் பொருட்டு அல்லாஹ்வின் மாபெரும் பொருத்தத்தையும், இம்மை மறுமை பலன்களையும் எதிர்நோக்கி, முழுக்க முழுக்க தமிழ் இஸ்லாமியச் சமுதாய மக்களின் எளிமையான பயன்பாட்டிற்காக உருவாக்கப்பட்டுள்ளது.

<u>சில விளக்கங்கள்</u>

ஸஹீஹ் முஸ்லிமானது அத்தியாயம் இரண்டு, ஈமானில் இருந்து துவங்குகிறது.ஹதீஸ் எண்களும் அத்தியாயம் ஈமானில் இருந்து துவங்குகிறது.அத்தியாயம் ஒன்று ஹதீஸ் கலையானது – ஹதீஸ்கள், அதன் அறிவிப்பாளர்கள்,மற்றும் படித்தரங்களை விளங்கிக்கொள்ள கொடுக்கப்பட்டுள்ளது.

ஒரு அத்தியாயம் அல்லது ஒரு தலைப்பில் ஹதீஸ்களை படிக்கும்போது, அதுகுறித்த அனைத்து அறிவிப்புகளையும் படியுங்கள்.அதன்மூலம் பல்வேறுபட்ட அறிவிப்பாளர்களின் அறிவிப்புகள், விதிவிலக்கான பிற்கால சட்டமாற்றம்,இவைகளில் தெளிவுபெற ஏதுவாக இருக்கும்.
இந்த மின்நூலானது,சிரமமின்றி பயன்படுத்தும் வண்ணம் எளிய,அனைவருக்கும் கிடைக்கக்கூடிய எழுத்துருவில் உருவாக்கப்பட்டுள்ளது. இதன்மூலம் எங்கும் எழுத்துரு பிரச்சனையின்றி இதை பயன்படுத்த முடியும்.மேலும் ஹதீஸ்களை எளிதில் காப்பி செய்து பிற தரவுகளில் பயன்படுத்திக் கொள்ளலாம்.
இந்த மாபெரும் களஞ்சியத்தை மேலும் எளிமைப்படுத்தும் முயற்சியாக, ஆயிரத்திற்கும் மேற்பட்ட துணைத்தலைப்புகளை,பக்க எண்களுடன், அந்தந்த அத்தியாயத் தலைப்பின்கீழ் காணும் வண்ணம் வகைப்படுத்தப்பட்டுள்ளது.அத்தியாய அட்டவணையில், தலைப்பிற்கு அருகில் உள்ள இந்த (▶) சுட்டியை க்ளிக் செய்தால் விரிவாக்கப்பட்ட துணைத்தலைப்பு அட்டவணை தோன்றும்.இது அந்தந்த அத்தியாயத்தின் உள்ளடக்கத்தை சுருக்கமாக அறியவும்,மேலும் விரைவான தேடல் மூலம், தேவையான ஹதீஸ்களை எளிதில் கண்டுகொள்ளும் முகமாகவும், உருவாக்கப்பட்டுள்ளது. மற்ற இடங்களில் க்ளிக் செய்தால்,துணைத்தலைப்பு அட்டவணை மறைந்துவிடும்.

இந்த மின்நூல் பதிப்பானது,உம்மத் வலைக்குழும சகோதர சகோதரிகளால்,இதன் மூல ஆதாரத்துடன் சரிபார்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.இந்த ஆக்கத்தை உருவாக்க வாய்ப்பளித்த வல்லோன் அல்லாஹ்வுக்கும்,மற்றும் ரஹ்மத் அறக்கட்டளை நிர்வாகத்தினருக்கும், ஆன்லைன் பிஜெ தளத்தினருக்கும், மேலும் இம்முயற்சியில் பங்குகொண்ட அனைத்து நல்லுள்ளங்களுக்கும், நன்றி நவின்றவனாக இம்மின்நூலை பயன்பாட்டிற்கு அளிப்பதில் பெருமிதம் கொள்கிறேன்.

<u>மின்நூலை பதிவிறக்க</u> : Go to ***http://sunmarkam.blogspot.com***

அன்புடன்
H.ரஜின் அப்துல் ரஹ்மான்
*askabt.islam@gmail.com*
*http://sunmarkam.blogspot.com*

# முஸ்லிம் தமிழாக்கம் - அத்தியாய அட்டவணை

# அத்தியாயம் : 01 – ஹதீஸ் கலை

**பாடம் :1 நம்பத்தகுந்த அறிவிப்பாளர்களிடமிருந்தே ஹதீஸ்களை அறிவிப்பதும், பொய்யர்களின் அறிவிப்புகளைக் கைவிடுவதும் கட்டாயமாகும் என்பது பற்றியும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மீது (அவர்கள் சொல்லாத ஒன்றைச் சொன்னதாகப்) பொய்யுரைப்பது தொடர்பாக வந்துள்ள எச்சரிக்கையும்.**

அல்லாஹ் உங்களுக்கு நல்லருள் பாலிப்பானாக!
ஆதாரபூர்வமான அறிவிப்புகள் எவை, பலவீனமான அறிவிப்புகள் எவை, நம்பத்தகுந்த அறிவிப்பாளர் யார், சந்தேகத்திற்குள்ளான அறிவிப்பாளர் யார் எனப் பகுத்தறியும் திறன் யாருக்கு இருக்கிறதோ அவர் தாம் அறிந்த தரமான மற்றும் நேர்மையான அறிவிப்பாளர் அறிவித்துள்ள ஹதீஸ்களை மட்டுமே அறிவிப்பது அவசியமாகும். சந்தேகத்திற்கு உள்ளானவர்கள், புதிய வழக்கங்களில் பிடிவாதமாக இருப்பவர்கள் ஆகியோரால் அறிவிக்கப்பெற்ற ஹதீஸ்களைத் தவிர்ப்பதும் அவசியமாகும்.
நாம் கூறிய இக்கருத்தே சரியானதாகும் என்பதற்குப் பின்வரும் இறைவசனங்கள் சான்றுகளாகும்:

அல்லாஹ் கூறுகின்றான்:
நம்பிக்கையாளர்களே! தீயவன் எவனும் உங்களிடம் ஒரு செய்தியைக் கொண்டுவந்தால், அதைத் தீர்க்கமாக விசாரித்துக்கொள்ளுங்கள்; (இல்லையேல்) அறியாமையினால் (குற்றமற்ற) ஒரு சமூகத்தாருக்கு நீங்கள் தீங்கு செய்துவிடலாம்;பின்னர் நீங்கள் செய்தவை பற்றி நீங்களே கவலைப்படுபவர்களாக ஆவீர்கள் (49:6).

அல்லாஹ் கூறுகின்றான்:
நீங்கள் விரும்புகின்ற சாட்சிகளில் ஓர் ஆணும் இரு பெண்களும் சாட்சியம் அளிக்க வேண்டும் (2:282).

உங்களில் இரு நேர்மையாளர்களைச் சாட்சிகளாக வைத்துக்கொள்ளுங்கள் (65:2).

இவ்வசனங்களிலிருந்து தீயவனின் செய்தியும் நேர்மையில்லாதவனின் சாட்சியமும் ஏற்கத் தக்கவை அல்ல என்று தெரிகிறது.தகவல் அறிவித்தல், சாட்சியம் அளித்தல் ஆகிய இவ்விரண்டின் பொருளும் சில கோணங்களில் வேறுபட்டிருந்தாலும் பெரும்பாலான விஷயங்களில் அவ்விரண்டும் ஒன்றுபட்டே இருக்கின்றன.

கல்வியாளர்களிடம் தீயவனின் சாட்சியம் ஏற்கப்படாததைப் போன்றே, தீயவனின் தகவலும் அவர்கள் அனைவராலும் நிராகரிப்பட்டுள்ளது. தீயவன் கூறும் செய்திக்கு இடமில்லை எனக் குர்ஆன் சுட்டிக் காட்டியிருப்பதைப் போன்றே, மறுக்கப்பட்ட அறிவிப்பாளரின் ஹதீஸிற்கும் இடமில்லை என நபிமொழி சுட்டிக் காட்டுகிறது.
இது குறித்து பிரபலமான நபிமொழி ஒன்று வந்துள்ளது.

001 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பொய் எனக் கருதப்படும் ஒரு செய்தியை என்னைப் பற்றி யார் அறிவிக்கிறாரோ அவரும் பொய்யர்களில் ஒருவராவார்.இந்த ஹதீஸ் முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களிடமிருந்தும் சமுரா பின் ஜுன்தப் (ரலி)அவர்களிடமிருந்தும் அறிவிக்கப்படுகிறது.

**பாடம் : 2 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்மீது பொய்யுரைப்பது தொடர்பாக வந்துள்ள கண்டனம்.**

002 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என்னைப் பற்றி (நான் சொல்லாத ஒன்றைச் சொன்னதாக)ப் பொய்யுரைக்காதீர்கள். ஏனெனில், என்னைக் குறித்து யார் பொய் கூறுகிறாரோ அவர் நரகம்தான் செல்வார்.இந்த ஹதீஸை அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் தமது சொற்பொழிவில் அறிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

003 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்னைப் பற்றி (நான் சொல்லாத ஒன்றைச் சொன்னதாக) யார் வேண்டுமென்றே பொய்யுரைக்கிறாரோ அவர் தமது இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக் கொள்ளட்டும்" என்று கூறியிருப்பதுதான் உங்களுக்கு நான் அதிக எண்ணிக்கையில் ஹதீஸ்களை அறிவிக்கவிடாமல் தடுக்கிறது.

004 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என்னைப் பற்றி (நான் சொல்லாத ஒன்றைச் சொன்னதாக) யார் வேண்டுமென்றே பொய்யுரைக்கிறாரோ அவர் தமது இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக்கொள்ளட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

005 அலீ பின் ரபீஆ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூஃபா நகரின் ஆளுநராய் இருந்தபோது நான் (மஸ்ஜிது கூஃபா) பள்ளிவாசலுக்குச் சென்றேன். அப்போது முஃகீரா (ரலி) அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நீங்கள்) என்மீது கூறும் பொய் மற்றவர்மீது நீங்கள் கூறும் பொய்யைப் போன்றதன்று. யார் என்மீது வேண்டுமென்றே பொய்யுரைக்கிறாரோ அவர் தமது இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக்கொள்ளட்டும்" என்று கூறுவதை நான் கேட்டுள்ளேன்.

- மேற்கண்ட ஹதீஸ் முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "(நீங்கள்) என்மீது கூறும் பொய் மற்றவர் மீது நீங்கள் கூறும் பொய்யைப் போன்றதன்று" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 3 கேள்விப்பட்டதையெல்லாம் அறிவிப்பது கூடாது.**

006 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் தாம் கேள்விப்பட்டதையெல்லாம் (பிறருக்கு) அறிவிப்பதே அவர் பொய்யர் என்பதற்குப் போது(மான சான்றாகு)ம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

007 உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் தாம் கேள்விப்பட்டதையெல்லாம் (பிறருக்கு) அறிவிப்பதே அவர் பொய்யர் என்பதற்குப் போது(மான சான்றாகு)ம்.
இதை அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

008 அப்துல்லாஹ் பின் வஹ்ப் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்கள், தெரிந்துகொள்! கேள்விப்பட்டதையெல்லாம் அறிவிக்கும் ஒரு மனிதர் (பொய்யிலிருந்து) தப்பமாட்டார்; கேள்விப்பட்டதையெல்லாம் அறிவிக்கும் ஒருவர் ஒருபோதும் (வழிகாட்டும்) தலைவராக இருக்கமாட்டார்" என்று கூறினார்கள்.

009 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் தாம் கேள்விப்பட்டதையெல்லாம் அறிவிப்பதே அவர் பொய்யர் என்பதற்குப் போது(மான சான்றாகு)ம்.
இதை அபுல்அஹ்வஸ் அவ்ஃப் பின் மாலிக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

010 அப்துர் ரஹ்மான் பின் மஹ்தீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் தாம் கேள்விப்பட்டவற்றில் (சந்தேகத்திற்குரிய) சிலவற்றையாவது (பிறருக்குத்) தெரிவிப்பதிலிருந்து வாய்மூடாதவரை அவர் பின்பற்றப்படும் தலைவராக ஆக முடியாது.
இதை முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

011 சுஃப்யான் பின் ஹுசைன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் இயாஸ் பின் முஆவியா (ரஹ்) அவர்கள், குர்ஆனைக் கற்பதில் உங்களுக்கிருக்கும் ஈடுபாட்டை நான் அறிவேன். எனவே, குர்ஆனிலுள்ள ஓர் அத்தியாயத்தை எனக்கு ஓதிக்காட்டி விளக்கமளிப்பீராக! நீங்கள் கற்றதை நான் (சரி) பார்க்க வேண்டும்" என்று கூறினார்கள். நான் அவ்வாறே செய்தேன். அப்போது அவர்கள் என்னிடம், நான் உங்களுக்கு ஒரு விஷயத்தைச் சொல்கிறேன். அதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.நிராகரிக்கப்பட்ட செய்திகளைக் கூறவேண்டாமென உங்களை நான் எச்சரிக்கிறேன். ஏனெனில், அச்செய்திகளைக் கூறித் திரிகின்றவர் இழிவடையாமலும் பொய்யர் என இனங்காணப்படாமலும் இருத்தல் அரிது" என்றார்கள்.

012 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நீங்கள் ஒரு சமூகத்தாரிடம் அவர்களது அறிவுக்கு எட்டாத ஒரு விஷயத்தை அறிவிப்பதானது, அவர்களில் சிலரையேனும் குழப்பத்தில் ஆழ்த்தாமல் விடுவதில்லை.
இதை உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்தத்தகவல் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 பலவீனமான அறிவிப்பாளர்களிடமிருந்து நபிமொழிகளை அறிவிப்பதற்கு வந்துள்ள தடையும், அவற்றை அறிவிப்பதிலிருந்து விலகிக்கொள்வதும்.**

013 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது சமுதாயத்தில் இறுதிக் காலத்தவரிடையே சிலர் தோன்றுவார்கள். நீங்களோ உங்கள் மூதாதையரோ கேள்விப்பட்டிராத (புதுப்புது) ஹதீஸ்களையெல்லாம் உங்களிடம் அவர்கள் சொல்வார்கள். ஆகவே, அவர்கள் குறித்து உங்களை நான் எச்சரிக்கிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

014 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறுதிக் காலத்தில் பெரும் பொய்யர்களான "தஜ்ஜால்கள்' தோன்றுவார்கள். நீங்களோ உங்கள் மூதாதையரோ கேள்விப்பட்டிராத ஹதீஸ்களை உங்களிடம் அவர்கள் சொல்வார்கள். ஆகவே, அவர்களைக் குறித்து உங்களை நான் எச்சரிக்கிறேன். அவர்கள் உங்களை வழிகெடுத்துவிடவோ குழப்பத்தில் ஆழ்த்திவிடவோ (நீங்கள் இடமளித்துவிட) வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

015 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நிச்சயமாக ஷைத்தான் மனித உருவில் மக்களிடையே வந்து பொய்யான ஹதீஸ்களை எடுத்துரைப்பான். அதன் பிறகு மக்கள் கலைந்து செல்வார்கள். அப்போது அவர்களில் ஒருவர், "யாரோ ஒரு மனிதர் (வந்து) ஒரு ஹதீஸ் சொல்வதை நான் கேட்டேன். அவரது முகம் எனக்குத் தெரியும்; ஆனால், அவருடைய பெயர் என்னவென்று எனக்குத் தெரியாது" என்று கூறுவார்.– இதை ஆமிர் பின் அபதா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

016 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கடலுக்குள் சில ஷைத்தான்கள் சிறைவைக்கப்பட்டுள்ளனர். அவர்களை (இறைத்தூதர்) சுலைமான் (அலை) அவர்கள் கட்டிவைத்தார்கள். அந்த ஷைத்தான்கள் வெகுவிரைவில் வெளியேறி வந்து மக்களுக்கு முன் குர்ஆனை(ப் போன்ற ஒன்றை) ஓதிக் காட்டுவார்கள்.
இதை தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

017 தாவூஸ் பின் கைசான் அல்யமானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இதோ இவர் –புஷைர் பின் கஅப் (ரஹ்) அவர்கள்– இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் வந்து நபிமொழிகளை அறிவிக்கலானார். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இன்ன

இன்ன நபிமொழிகளை மீண்டும் அறிவியுங்கள்"என்றார்கள். அவ்வாறே புஷைர் அவர்களும் மீண்டும் அறிவித்துவிட்டுத் தொடர்ந்து நபிமொழிகளை அறிவிக்கலானார். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "இன்ன இன்ன ஹதீஸ்களை மீண்டும் அறிவியுங்கள்" என்றார்கள். அவ்வாறே புஷைர் அவர்கள் மீண்டும் அறிவித்துவிட்டு, "(நான் தெரியாமல் தான் கேட்கிறேன்:) நான் அறிவித்த எல்லா நபிமொழிகளையும் ஏற்றுக்கொண்டுவிட்டு, (குறிப்பிட்ட) இந்த நபிமொழியை மட்டும் மறுக்கிறீர்களா? அல்லது நான் அறிவித்த எல்லா ஹதீஸ்களையும் மறுத்துவிட்டு, (குறிப்பிட்ட) இந்த நபிமொழியை மட்டும் ஏற்கிறீர்களா? என்று எனக்குத் தெரியவில்லை" என்றார்.

அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "நாங்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து ஹதீஸ்களை அறிவித்துக் கொண்டுதானிருந்தோம். அப்போதெல்லாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்மீது பொய்யுரைக்கப்பட்டதில்லை. பின்னர் மக்கள் பிடிவாதம் பிடிக்கும் ஒட்டகங்களிலும் கட்டுப்படும் ஒட்டகங்களிலும் பயணம் செய்து (வித்தியாசமே இல்லாமல் எல்லா வழிகளிலும்) செல்லத் தொடங்கியபோது நபிமொழிகளை அறிவிப்பதையே நாங்கள் நிறுத்திவிட்டோம்" என்று கூறினார்கள்.

இதை ஹிஷாம் பின் ஹுஜைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாக வந்துள்ளது.

018 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நாங்கள் (நபி (ஸல்) அவர்களது காலத்தில்) ஹதீஸ்களை மனனமிட்டுவந்தோம். ஹதீஸ்கள் அன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து கேட்டே மனனமிடப்பட்டுவந்தன. (ஆனால், இன்று) நீங்கள் பிடிவாதம் பிடிக்கும் ஒட்டகங்களிலும், கட்டுப்படும் ஒட்டகங்களிலும் பயணம் செய்து (வித்தியாசமே இல்லாமல் எல்லா வழிகளிலும்) செல்லத் தொடங்கியவுடன் எல்லாம் பாரதூரமான விஷயமாகிவிட்டது.

இதை அப்துல்லாஹ் பின் தாவூஸ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

019 முஜாஹித் பின் ஜப்ர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

புஷைர் பின் கஅப் அல்அதவீ (ரஹ்) அவர்கள், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் வந்து, ‘அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்' என்று கூறியவாறு நபிமொழிகளை அறிவிக்கலானார். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களோ அவரது அறிவிப்பைச் செவிகொடுத்துக் கேட்கவோ அவரை ஏறெடுத்துப் பார்க்கவோ தலைப்பட வில்லை. உடனே புஷைர் அல் அதவீ, "இப்னு அப்பாஸ் அவர்களே! நீங்கள் எனது ஹதீஸைச் செவிகொடுத்துக் கேட்பதாகத் தெரியவில்லையே! நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக உங்களிடம் அறிவித்துக் கொண்டிருக்க, நீங்களோ காது கொடுக்காமல் இருக்கின்றீர்களே!" என்று கேட்டார். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) பதிலுரைத்தார்கள்:

ஒரு காலம் இருந்தது. அக்காலத்தில் யாரேனும் ஒருவர் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்' என்று சொல்வதை நாங்கள் கேட்டுவிட்டால் உடனே அவரை நோக்கி எங்கள் பார்வை செல்லும்; அவர் கூறுவதைக் கேட்க எங்கள் காதுகளைத் தாழ்த்துவோம். பிறகு மக்கள் பிடிவாதம் பிடிக்கும் ஒட்டகங்களிலும் கட்டுப்படும் ஒட்டகங்களிலும் பயணம்

செய்து (வித்தியாசமே இல்லாமல் எல்லா வழிகளிலும்) செல்ல ஆரம்பித்தவுடன் நாங்கள் (நபியவர்களிடமிருந்து) அறிந்துள்ள (சரியான)வற்றை மட்டுமே மக்களிடமிருந்து ஏற்றுக் கொண்டோம். - இதைக் கைஸ் பின் சஅத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

020 அப்துல்லாஹ் பின் உபைதில்லாஹ் பின் அபீமுலைக்கா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், எனக்கு ஒரு மடல் வரையுமாறும், (அதில் குழப்பவாதிகளான ஷியாக்களின் கருத்துகள்) எதுவும் இடம்பெறாமல் பார்த்துக் கொள்ளுமாறும் வேண்டிக் கடிதம் எழுதினேன். (கடிதம் கண்ட) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "அவர் நல்ல பிள்ளை; அவருக்காக நான் சில விஷயங்களை நன்கு தேர்ந்தெடுத்து, சொல்லக் கூடாதவற்றைத் தவிர்த்துவிடப்போகிறேன்" என்று கூறிவிட்டு, அலீ (ரலி) அவர்கள் அளித்த தீர்ப்புகளைக் கொண்டுவரும்படி கூறினார்கள். அவற்றில் சிலவற்றை எழுதத் தொடங்கினார்கள். ஒரு (குறிப்பிட்ட) விஷயம் வந்தபோது "இப்படியெல்லாம் அலீ (ரலி) அவர்கள் தீர்ப்பளித்திருக்க முடியாது; வழிதவறியவன்தான் இப்படித் தீர்ப்பளிப்பான்" என்று கூறினார்கள்.
இதை நாஃபிஉ பின் உமர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

021 தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அலீ (ரலி) அவர்கள் அளித்த தீர்ப்புகள் அடங்கிய (நீண்ட சுருள்) ஏடு ஒன்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் கொண்டுவரப் பட்டது. அதில் ஒரு (முழம்) அளவிற்கு மட்டும் வைத்துக்கொண்டு மற்றதை அழித்துவிட்டார்கள்.(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் இதை அறிவிக்கும்போது தமது முழங்கையால் ("இந்த அளவு' என்று) சைகை செய்தார்கள்.
இதை ஹிஷாம் பின் ஹுஜைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

022 அபூஇஸ்ஹாக் அம்ர் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அலீ (ரலி) அவர்களுக்குப் பின் (அன்னாரின் தீவிர ஆதரவாளர்களான ஷியா பிரிவு) மக்கள் பல்வேறு புதிய கோட்பாடுகளை உருவாக்கியபோது, அலீ (ரலி) அவர்களின் நண்பர்களில் ஒருவர் "அல்லாஹ் இம்மக்களை (தனது அருளிலிருந்து) அப்புறப்படுத்துவானாக! எத்தகைய ஞானத்தை அவர்கள் சீரழித்துவிட்டார்கள் (தெரியுமா!)" என்று (கடிந்து) கூறினார்.
இதை சுலைமான் பின் மிஹ்ரான் அல்அஃமஷ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

023 முஃகீரா பின் மிக்சம் அள்ளப்பீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அலீ (ரலி) அவர்கள் குறித்த அறிவிப்பாளர்களில் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களுடைய மாணவர்கள் மட்டுமே உண்மை உரைப்பவர்களாய் இருந்தனர்.
இதை அபூபக்ர் பின் அய்யாஷ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 5 அறிவிப்பாளர் தொடர்களை எடுத்துரைப்பது மார்க்கத்தின் ஓர் அம்சமாகும்; நம்பத்தகுந்த அறிவிப்பாளர்களிடமிருந்து வரும் அறிவிப்புகள் மட்டுமே ஏற்கப்படும்; அறிவிப்பாளர்களிடம் காணப்படும் குறைகளை எடுத்துரைப்பது அனுமதிக்கப்பட்டது என்பது மட்டுமன்றி, அது ஒரு கடமையும் கூட. அது தடை செய்யப்பட்டுள்ள புறங்கூறல் ஆகாது; மாறாக, புனித மார்க்கத்தைக் காக்கும் (அறப்) பணியாகும்.

024 முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நிச்சயமாக இந்த (நபிமொழி)க்கல்வியும் மார்க்கம்தான். எனவே, உங்களுடைய மார்க்க (ஞான)த்தை எவரிடமிருந்து பெறுகிறீர்களோ அவரை உற்றுக் கவனியுங்கள்.
இதை ஹிஷாம் பின் ஹஸ்ஸான் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்தத் தகவல் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாக வந்துள்ளது.

025 முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மக்கள் (ஆரம்பக் காலங்களில் ஹதீஸ்கள் அறிவிக்கப்படும்போது அவற்றின்) அறிவிப்பாளர் தொடர்கள் குறித்துக் கேட்டதில்லை. ஆனால், (பிற்காலத்தில்) குழப்பங்கள் தோன்றியபோது உங்களுக்கு இந்த ஹதீஸை அறிவித்த அறிவிப்பாளர்களின் பெயர்களையும் எங்களுக்கு அறிவியுங்கள்" என்று கூறலாயினர். ஆகவே, அந்த அறிவிப்பாளர்கள் நபிவழிக்காரர்களா என்று கவனித்து, அவ்வாறிருந்தால் அவர்கள் அறிவிக்கும் ஹதீஸ்கள் மட்டும் ஏற்கப்படும். அவர்கள் (நபிவழியில் இல்லாதவற்றைக் கூறும்) புதுமைவாதிகளாய் இருந்தால் அவர்கள் அறிவிக்கும் ஹதீஸ்கள் ஏற்கப்படா.
இதை ஆஸிம் அல்அஹ்வல் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

026 சுலைமான் பின் மூசா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்களைச் சந்தித்து, இன்னார் எனக்கு இன்னின்னவாறு அறிவித்தார்" என்று கூறினேன். அதற்கு தாவூஸ் (ரஹ்) அவர்கள்,இதை உமக்கு அறிவித்தவர் நம்பத்தகுந்தவராய் இருந்தால் ஏற்றுக்கொள்க" என்று கூறினார்கள்.
இதை அபூஅம்ர் அப்துர் ரஹ்மான் பின் அம்ர் அல்அவ்ஸாயீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

027 சுலைமான் பின் மூசா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்களிடம், இன்னார் எனக்கு இன்னின்னவாறு அறிவித்தார்" என்று கூறினேன். அதற்கு தாவூஸ் (ரஹ்) அவர்கள்,உமக்கு இதை அறிவித்தவர் நம்பத் தகுந்தவராய் இருந்தால் ஏற்றுக்கொள்க" என்று கூறினார்கள்.
இதை சயீத் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

028 அபுஸ்ஸினாத் அப்துல்லாஹ் பின் தக்வான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மதீனாவில் நம்பிக்கைக்குரிய நூறு பேரைச் சந்தித்திருக்கிறேன். ஆனால், அவர்களிடமிருந்து அறிவிக்கப்படும் ஹதீஸ்கள் எடுத்துக்கொள்ளப்படுவதில்லை. இவர்கள் அதற்குத் தகுதியானவர்கள் அல்லர்" என்று சொல்லப்பட்டது.
இதை அப்துர் ரஹ்மான் பின் அபிஸ் ஸினாத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

029 சஅத் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நம்பத்தகுந்தவர்கள் மட்டுமே ஹதீஸ்களை அறிவிக்க வேண்டும்.இதை மிஸ்அர் பின் கிதாம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்தத் தகவல் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

030 அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அறிவிப்பாளர் தொடரும் மார்க்கத்தின் ஓர் அங்கமே. அறிவிப்பாளர் தொடர் (இஸ்னாத்) மட்டும் இருந்திருக்காவிட்டால் (மார்க்கத்தில்) நினைத்தவர்கள் நினைத்ததையெல்லாம் சொல்லியிருப்பார்கள்.

அப்பாஸ் பின் அபீரிஸ்மா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள், நமக்கும் மக்களுக்குமிடையே அறிவிப்பாளர் தொடர் என்ற கால்கள் உள்ளன (அவற்றைக் கொண்டே ஹதீஸ்கள் நிற்கும்)" என்று கூறுவதை நான் கேட்டுள்ளேன்.

அபூஇஸ்ஹாக் இப்ராஹீம் பின் ஈசா அத்தாலகானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்களிடம்,நீ உனக்காக தொழுவதுடன் உன் பெற்றோருக்காகத் தொழுவதும், உனக்காக நோன்பு நோற்பதுடன் உன் பெற்றோருக்காக நோன்பு நோற்பதும் நன்மைக்கு மேல் நன்மை தரும் செயலாகும்" என்று ஒரு நபிமொழி வந்துள்ளது என்றேன். அதற்கு அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள், அபூஇஸ்ஹாக்! இதை உங்களுக்கு அறிவித்தவர் யார்?" என்று கேட்டார்கள். நான், இது, ஷிஹாப் பின் கிராஷ் (ரஹ்) அவர்கள் அறிவித்த ஹதீஸ்" என்றேன். அதற்கு அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள், அன்னார் நம்பத்தகுந்த அறிவிப்பாளர்தாம்" என்று கூறிவிட்டு, அன்னாருக்கு இதை அறிவித்தவர் யார்?" என்று கேட்டார்கள். நான்,ஹஜ்ஜாஜ் பின் தீனார்" என்றேன். அன்னாரும் நம்பத்தகுந்த அறிவிப்பாளர்தாம்" என்று கூறிவிட்டு, அன்னாருக்கு இதை அறிவித்தவர் யார்?" என்று அப்துல்லாஹ் கேட்டார்கள். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்றேன். அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்),அபூஇஸ்ஹாக்! ஹஜ்ஜாஜ் பின் தீனார் அவர்களுக்கும் நபி (ஸல்) அவர்களுக்குமிடையே பயண ஒட்டகங்களின் கழுத்துகள் முறிந்துவிடும் அளவுக்கு நீண்ட (கால)இடைவெளி உள்ளது. (இதை எப்படி அவர் நபியவர்களிடம் கேட்டிருக்க முடியும்?.) எனினும் (ஒருவர் தம் பெற்றோருக்காக)தான தர்மம் செய்வது (நன்மையே என்பது) தொடர்பாக எந்தக் கருத்து வேறுபாடுமில்லை" என்று சொன்னார்கள்.
அலீ பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:

அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் மக்கள் மத்தியில் அம்ர் பின் ஸாபித்திடமிருந்து அறிவிப்பதை விட்டுவிடுங்கள். ஏனெனில், அவர் முன்னோரைப் பழிப்பவராய் இருந்தார்" என்று கூறுவதை நான் செவியேற்றேன்.

031 அபூஅக்கீல் யஹ்யா பின் அல்முத்தவக்கில் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூமுஹம்மத் காசிம் பின் உபைதில்லாஹ் (ரஹ்) மற்றும் யஹ்யா பின் சயீத் (ரஹ்) ஆகியோர் அருகில் அமர்ந்திருந்தேன்.அப்போது யஹ்யா (ரஹ்) அவர்கள் காசிம் (ரஹ்) அவர்களிடம், அபூமுஹம்மதே! மார்க்க விவகாரத்தில் ஏதேனும் ஒன்றைப் பற்றி உங்களிடம் வினவப்பட்டு, அதற்குரிய விடையோ தீர்வோ உங்களிடம் இல்லாதிருப்பது உங்களைப் போன்றவர்களுக்குப் பெருங்குறையாயிற்றே!" என்று கூறினார்கள். அதற்குக் காசிம் (ரஹ்) அவர்கள், ஏன் அவ்வாறு கூறுகின்றீர்கள்?" என்று கேட்டார்கள்.அதற்கு யஹ்யா (ரஹ்) அவர்கள்,நீங்கள் நேர்வழித் தலைவர்களான அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோரின் வழித் தோன்றலாயிற்றே!" என்று சொன்னார்கள். அதற்குக் காசிம் (ரஹ்) அவர்கள், நான் (தக்க)அறிவின்றிப் பேசுவதோ, நம்பத்தகாதவர்களிடமிருந்து ஒன்றை அறிவிப்பதோ தான் அல்லாஹ்வைப் பற்றி அறிந்தவர்களிடம் இதைவிட மோசமானதாகும்" என்று கூறினார்கள். (இதைக்கேட்ட) யஹ்யா (ரஹ்) அவர்கள் பதிலேதும் சொல்லாமல் அமைதியாகிவிட்டார்கள்.
இதை அபுந்நள்ர் ஹாஷிம் பின் அல்காசிம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

032 அபூஅக்கீல் யஹ்யா பின் அல்முத்த வக்கில் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களுடைய (புதல்வரின்) புதல்வரிடத்தில் (காசிம் பின் உபைதில்லாஹ் அவர்களிடம்) மக்கள் ஒரு விஷயம் குறித்து வினவினர். ஆனால், அன்னாருக்கு அதற்கான விடை தெரிந்திருக்கவில்லை. அப்போது காசிம் (ரஹ்) அவர்களிடம் யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்கள் நீங்கள் நேர்வழித் தலைவர்களின் – அதாவது உமர் (ரலி), இப்னு உமர் (ரலி) ஆகியோரின்– வழித்தோன்றல் ஆவீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களைப் போன்றவர்களிடம் ஒரு விஷயம் குறித்து வினவப்பட்டு, அதற்கான விளக்கம் உங்களிடம் இல்லாமலிருப்பதைப் பெருங்குறையாகவே நான் கருதுகிறேன்" என்று சொன்னார்கள். அதற்குக் காசிம் (ரஹ்) அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (தக்க)அறிவின்றிப் பேசுவதோ, நம்பத்தகாதவர்களிடமிருந்து ஒன்றை அறிவிப்பதோ தான் அல்லாஹ்விடமும், அவனைப் பற்றி அறிந்தவர்களிடமும் அதைவிடப் பெருங்குறையாகும்" என பதிலளித்தார்கள். அவ்விருவரும் இவ்வாறு உரையாடிக் கொண்டிருந்தபோது அங்கு நானும் இருந்தேன்.
இதை சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

033 யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் சுஃப்யான் பின் சயீத் அஸ்ஸவ்ரீ (ரஹ்), ஷுஅபா பின் அல்ஹஜ்ஜாஜ் (ரஹ்), மாலிக் பின் அனஸ் (ரஹ்),சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) ஆகியோரிடம், என்னிடம் ஒருவர் வந்து நபிமொழித் துறையில் நம்பத்தகாத ஒருவரைப் பற்றி வினவினால் (நான் அவரது குறையை எடுத்துரைக்கலாமா?)" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் அனைவரும், அவர் நம்பத்தகுந்தவர் அல்லர் என்று (மறைக்காமல்) எடுத்துரைத்துவிடுங்கள். (அது புறம் பேசல் ஆகாது)" என்று பதிலளித்தனர்.
இதை அம்ர் பின் அலீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

034 நள்ர் பின் ஷுமைல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அவ்ன் பின் அர்திபான் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்களிடம் ஷஹ்ர் பின் ஹவ்ஷப் என்பாரின் அறிவிப்புக் குறித்து வினவப்பட்டது. அப்போது வீட்டின் நிலைப்படி மேல் நின்றுகொண்டிருந்த இப்னு அவ்ன் (ரஹ்) அவர்கள் ஷஹ்ர் மீது மக்கள் ஈட்டியைப் பாய்ச்சியுள்ளனர்; ஷஹ்ர் மீது மக்கள் ஈட்டியைப் பாய்ச்சியுள்ளனர்" என்று (இரு முறை) கூறினார்கள். அதாவது அவரது அறிவிப்புக் குறித்து மக்கள் குறை கூறியுள்ளனர்.
இதை உபைதுல்லாஹ் பின் சயீத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

035 ஷுஅபா பின் அல்ஹஜ்ஜாஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஷஹ்ர் பின் ஹவ்ஷப் என்பாரைச் சந்தித்திருக்கிறேன்; ஆனால், அவரை நான் பொருட்படுத்தியதில்லை.
இதை ஷபாபா பின் சவார் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

036 அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் சுஃப்யான் அஸ்ஸவ்ரீ (ரஹ்) அவர்களிடம், அப்பாத் பின் கஸீர் என்பாரின் நிலை உங்களுக்குத் தெரிந்ததே. அவர் ஹதீஸை அறிவித்தால் விபரீதமான விஷயங்களை (நிராகரிக்கப்பட்ட ஹதீஸ்களை)யே கூறுகிறார். ஆகவே,அவரிடமிருந்து ஹதீஸ்களை ஏற்க வேண்டாமென மக்களிடம் நான் கூறி விடுவதைப் பற்றி நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு சுஃப்யான் (ரஹ்) அவர்கள், ஆம் (அவ்வாறே கூறிவிடுங்கள்)" என்றார்கள்.
அதற்குப் பிறகு ஏதேனும் ஓர் அவையில் நானிருக்கும்போது அப்பாத் பின் கஸீரைப் பற்றிப் பேச்சு வந்தால், அவரது மார்க்க ஈடுபாடு குறித்து நான் மெச்சிப் பேசுவேன். ஆனால், அவர் அறிவிக்கும் அறிவிப்புகளை ஏற்றுக்கொள்ளாதீர்கள் என்று (மக்களிடம்) கூறிவிடுவேன்.

அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
நான் ஷுஅபா (ரஹ்) அவர்களிடம் சென்றிருந்தேன். அப்போது அவர்கள் இதோ இந்த அப்பாத் பின் கஸீர் விஷயத்தில் எச்சரிக்கையாக இருந்துகொள்ளுங்கள் (அவருடைய அறிவிப்புகளைத் தவிர்த்துக்கொள்ளுங்கள்)" என்று கூறினார்கள்.

037 ஃபள்ல் பின் சஹ்ல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் முஅல்லா பின் மன்ஸூர் அர்ராஸீ (ரஹ்) அவர்களிடம், அப்பாத் பின் கஸீருக்கு ஹதீஸ்களை அறிவிப்பவரான முஹம்மத் பின் சயீத் என்பாரைப் பற்றிக் கேட்டேன். அதற்கு முஅல்லா அர்ராஸீ (ரஹ்) அவர்கள் ஈசா பின் யூனுஸ் (ரஹ்) அவர்கள் தம்மிடம் (பின்வருமாறு) கூறியதாகத் தெரிவித்தார்கள்:
நான் முஹம்மத் பின் சயீதின் வீட்டுவாசலில் நின்றுகொண்டிருந்தேன். அவர் அருகில் சுஃப்யான் அஸ்ஸவ்ரீ (ரஹ்) அவர்களும் இருந்தார்கள். சுஃப்யான் (ரஹ்) அவர்கள் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றபோது அன்னாரிடம் நான் முஹம்மத் பின் சயீத் பற்றிக் கேட்டேன். அப்போது அவர்கள் அவர் ஒரு பொய்யர்" என்று கூறினார்கள்.

038 முஹம்மத் பின் யஹ்யா பின் சயீத் அல்கத்தான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்கள், ஹதீஸ் அறிவிப்புகளில் பொய்யுரைப்பதை விட அதிகமாக வேறெதிலும் பொய்யுரைக்கும் நல்லவர்களை நாம் கண்டதில்லை" என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான முஹம்மத் பின் அபீஅத்தாப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் முஹம்மத் பின் யஹ்யா (ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது இது பற்றிக் கேட்டேன். அப்போது அவர்கள், ஹதீஸ் அறிவிப்புகளில் பொய்யுரைப்பதைவிட அதிகமாக வேறெதிலும் நல்லவர்கள் பொய்யுரைப்பதை நீ காண மாட்டாய்" என்று தம் தந்தை கூறியதாகச் சொன்னார்கள்.
அபுல்ஹுசைன் முஸ்லிம் (பின் அல் ஹஜ்ஜாஜ் ஆகிய நான்) கூறுகிறேன்:
நல்லவர்கள் நாவில் (தம்மை அறியாமலேயே) பொய் வந்துவிடுகிறது; அவர்கள் வேண்டுமென்றே பொய்யுரைப்பதில்லை.

039 கலீஃபா பின் மூசா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஃகாலிப் பின் உபைதில்லாஹ் அவர்களிடம் சென்றபோது அவர் என்னிடம் மக்ஹூல் எனக்கு அறிவித்தார்;மக்ஹூல் எனக்கு அறிவித்தார்" என்று கூறி, (சில ஹதீஸ்களை) எழுதிக்கொள்ளுமாறு கூறலானார். அப்போது அவருக்குச் சிறுநீர் கழிக்க வேண்டிய அவசரம் ஏற்பட்டுவிடவே உடனே அவர் எழுந்து சென்றுவிட்டார். அப்போது நான் (அவரது) பதிவேட்டைப் பார்த்தேன். அதில் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து எனக்கு அபான் அறிவித்தார்கள். அபான் இன்னாரிடமிருந்து அறிவித்தார்கள்" என்று எழுதப்பட்டிருந்தது. (அவர் என்னிடம் சொன்னதற்கும் குறிப்பேட்டில் உள்ளதற்கும் வேறுபாடு இருந்ததால்) உடனே நான் அவரை விட்டுவிட்டு அங்கிருந்து எழுந்து சென்றுவிட்டேன்.
ஹசன் பின் அலீ அல்ஹுல்வானீ (ரஹ்) அவர்கள், நான் அஃப்பான் என்பாரின் (ஹதீஸ்) பதிவேட்டில், உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் தொடர்பான செய்தி ஒன்றை, ஹிஷாம் அபில்மிக்தாம் அவர்கள் அறிவித்திருந்ததைக் கண்டேன். அதில் ஹிஷாம் அவர்கள் முஹம்மத் பின் கஅப் என்பாரிடமிருந்து இன்னாரின் புதல்வரான யஹ்யா எனும் ஒருவர் எனக்கு அறிவித்தார்" என்று எழுதப்பட்டிருந்தது. உடனே நான் அஃப்பான் அவர்களிடம், நபிமொழியியல் அறிஞர்கள், முஹம்மத் பின் கஅப் என்பாரிடமிருந்தே ஹிஷாம் அறிவித்ததாகக் கூறுகின்றனரே?" என்று கேட்டேன். அதற்கு அஃப்பான் அவர்கள், இந்த ஹதீஸ் விஷயத்தில்தான் ஹிஷாம் அகப்பட்டுக்கொண்டார். அவர் முஹம்மத் பின் கஅப் அவர்களிடமிருந்து எனக்கு யஹ்யா அறிவித்தார்" என்று முன்பு கூறிவந்தார். பின்னர் தாமே முஹம்மத் பின் கஅப் அவர்களிடமிருந்து (நேரடியாக இந்த ஹதீஸைச்) செவியேற்றதாக அவர் (மாற்றிக்) கூறலானார்" என்று சொன்னார்கள்.

040 அப்துல்லாஹ் பின் உஸ்மான் பின் ஜபலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்களிடம் நோன்புப் பெருநாள், வெகுமதிகளின் நாளாகும்' என்பது பற்றிய அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களின் ஹதீஸைத் தங்களுக்கு அறிவித்தவர் யார்? என்று கேட்டேன். அதற்கு அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள்,சுலைமான் பின் அல்ஹஜ்ஜாஜ் அவர்கள்தாம். உங்கள் கரத்தில்

நீங்கள் வைத்துள்ள அன்னாரிடமிருந்து கிடைத்த (மகத்தான) செய்திகளைப் பாருங்கள்" என்று (புகழ்ந்து) கூறினார்கள்.

அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
நான் ஒரு வெள்ளி நாணயம் அளவு இரத்தம் (பட்ட நிலையில் தொழுதவரின் தொழுகை நிறைவேறாது; அதைத் திரும்பத் தொழ வேண்டும்)' என்ற ஹதீஸின் அறிவிப்பாளரான ரவ்ஹ் பின் ஃகுதைஃப் என்பாரைச் சந்தித்தேன். அவருடன் சிறிது நேரம் அமர்ந்தேன். ஆயினும், அவருடன் நான் அமர்ந்திருப்பதை என் தோழர்கள் பார்த்துவிடுவார்களோ எனக் கூச்சப்படலானேன். அவரது ஹதீஸ் வெறுக்கப்பட்டதே அதற்குக் காரணம்.

041 அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(அறிவிப்பாளர்) பகிய்யா பின் அல்வலீத் உண்மையாளர்தாம். ஆயினும், அவர் வருவோர் போவோரிடமிருந்தெல்லாம் (வித்தியாசமின்றி) ஹதீஸ்களை அறிவிப்பார்.
இதை சுஃப்யான் பின் அப்தில் மலிக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

042 ஆமிர் பின் ஷராஹீல் அஷ்ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்ஹாரிஸ் பின் அப்தில்லாஹ் அல் அஃவர் அல்ஹம்தானீ என்பார் எனக்கு ஹதீஸ்களை அறிவித்தார். ஆனால்,அவர் ஒரு பொய்யராவார்.
இதை அபூஹிஷாம் முஃகீரா பின் மிக்சம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

043 அபூஹிஷாம் முஃகீரா அள்ளப்பீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆமிர் அஷ்ஷஅபீ (ரஹ்) அவர்கள் அல்ஹாரிஸ் பின் அப்தில்லாஹ் அல்அஃவர் எனக்கு ஹதீஸ்களை அறிவித்தார்"என்று கூறிவிட்டு, அவர் பொய்யர்களில் ஒருவர்" என அறுதியிட்டுக் கூறினார்கள்.
இதை முஃபள்ளல் பின் முஹல்ஹல் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

044 இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்கமா (ரஹ்) அவர்கள், நான் குர்ஆனை இரண்டு ஆண்டுகளில் பயின்றேன்" என்று கூறினார்கள். அப்போது (அங்கிருந்த) அல் ஹாரிஸ் அல்அஃவர், குர்ஆன் எளியது; வேத அறிவிப்பு தான் (வஹீ) வலியது" என்று கூறினார்.
இதை முஃகீரா பின் மிக்சம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

045 இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்ஹாரிஸ் அல்அஃவர் நான் குர்ஆனை மூன்று வருடங்களிலும் வேத அறிவிப்பை (வஹீ) இரண்டு வருடங்களிலும்'அல்லது வேத அறிவிப்பை மூன்று வருடங்களிலும் குர்ஆனை இரண்டு வருடங்களிலும்' பயின்றேன்" என்று கூறினார்.
இதை சுலைமான் அல்அஃமஷ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

046 இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்ஹாரிஸ் சந்தேகத்திற்கிடமானவர் எனக் கருதப்பட்டார்.
இதை முஃகீரா பின் மிக்சம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்தத் தகவல் இரு அறிவிப்பாளார் தொடர்களில் வந்துள்ளது.

047 ஹம்ஸா அஸ்ஸய்யாத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முர்ரா அல்ஹம்தானீ (ரஹ்) அவர்களிடம் அல்ஹாரிஸ், ஒரு ஹதீஸை அறிவித்தார். அப்போது முர்ரா (ரஹ்) அவர்கள்,வாசலிலேயே அமர்ந்திருப்பீராக!" என்று கூறிவிட்டு இல்லத்திற்குள் சென்று தமது உடைவாளை எடுத்தார்கள். (நிலைமையின்) விபரீதத்தை உணர்ந்த அல்ஹாரிஸ் (அங்கிருந்து) சென்று விட்டார்.

048 அப்துல்லாஹ் பின் அவ்ன் பின் அர்திபான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
எங்களிடம் இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள், முஃகீரா பின் சயீத், அபூஅப்திர் ரஹீம் ஆகியோர் குறித்து உங்களை நான் எச்சரிக்கிறேன். அவ்விருவரும் பொய்யார்கள் ஆவர்" என்று கூறினார்கள்.

049 ஆஸிம் பின் சுலைமான் அல்அஹ்வல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் இளம் பிள்ளைகளாக இருந்தபோது அபூஅப்திர் ரஹ்மான் அஸ்ஸுலமீ (அப்துல்லாஹ் பின் ஹபீப் பின் ருபய்யிஆ -ரஹ்) அவர்களிடம் செல்வோம். அப்போது அவர்கள் எங்களிடம்,அபுல்அஹ்வஸைத் தவிர வேறெந்தப் பேச்சாளர்களிடமும் நீங்கள் உட்காராதீர்கள்! ஷகீக் அள்ளப்பீ என்பாரைக் குறித்தும் உங்களை நான் எச்சரிக்கிறேன் (அவரிடமிருந்து ஹதீஸ்களை அறிவிக்காதீர்கள்!)" என்று கூறுவார்கள். மேலும், இந்த ஷகீக், காரிஜீய்யாக்களின் கொள்கை கொண்டவராய் இருந்தார். இந்த ஷகீக், அபூவாயில் (என்றழைக்கப்படும் ஷகீக் பின் சலமா') அல்லர்" என்றும் கூறுவார்கள்.

050 ஜரீர் பின் அப்தில் ஹமீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் பின் யஸீத் அல்ஜுஅஃபீ என்பாரைச் சந்தித்தேன். ஆனால், அவரிடமிருந்து (எந்த ஹதீஸையும்) நான் பதிவு செய்துகொள்ளவில்லை. ஏனெனில் அவர்,(ராஃபிஜிகளின் கொள்கையான) ரஜ்ஆ' எனும் கொள்கையில் நம்பிக்கையுடையவராய் இருந்தார்.
இதை அபூஃகஸ்ஸான் முஹம்மத் பின் அம்ர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

051 மிஸ்அர் பின் கிதாம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் யஸீத் (அடிப்படையற்ற) நூதனக் கருத்துகளை நம்பிக்கை கொள்வதற்கு முன் எனக்கு ஹதீஸ்களை அறிவித்திருக்கிறார்.
இதை யஹ்யா பின் ஆதம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

052 ஹுமைதீ (அப்துல்லாஹ் பின் ஸுபைர் பின் ஈசா-ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள், ஜாபிர் பின் யஸீத் (அடிப்படையற்ற) நூதனக் கருத்துகளை வெளியிடுவதற்கு முன் அவரிடமிருந்து மக்கள் ஹதீஸ்களை அறிவித்து வந்தனர். அவர் நூதனக் கருத்துகளை வெளியிட்ட பின் அவரை ஹதீஸ் துறையில் மக்கள் சந்தேகிக்கலாயினர். சிலர் அவரிடமிருந்து ஹதீஸ்கள் அறிவிப்பதை நிறுத்திக்கொண்டனர்" என்று கூறினார்கள். அப்போது சுஃப்யான் (ரஹ்) அவர்களிடம் ஜாபிர் அப்படி எதை வெளியிட்டார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு சுஃப்யான் (ரஹ்) அவர்கள்(அலீ (ரலி)

அவர்கள் மேகத்தினுள் மறைந்திருக்கிறார்கள் என்ற) ரஜ்ஆ' எனும் கொள்கையை" என்று பதிலளித்தார்கள்.
இதை சலமா பின் ஷபீப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

053 அல்ஜர்ராஹ் பின் மலீஹ் அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் யஸீத், என்னிடம் எழுபதாயிரம் ஹதீஸ்கள் உள்ளன. அவை அனைத்தும் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூஜஅஃபர் (முஹம்மத் பின் அலீ பின் ஹுசைன் பின் அலீ அல்பாகிர்-ரஹ்) அவர்களால் அறிவிக்கப் பெற்றவையாகும்" என்று கூறினார்.

054 ஸுஹைர் பின் முஆவியா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் யஸீத்,என்னிடம் ஐம்பதாயிரம் ஹதீஸ்கள் உள்ளன. அவற்றில் எதையும் நான் (யாரிடமும்) அறிவிக்கவில்லை" என்று கூறினார். பிறகு ஒரு நாள் அவர் ஒரு ஹதீஸை அறிவித்துவிட்டு,(அந்த) ஐம்பதாயிரம் ஹதீஸ்களில் இதுவும் ஒன்றாகும்" என்றார்.
இதை அஹ்மத் பின் யூனுஸ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

055 சல்லாம் பின் அபீமுதீஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் யஸீத் அல்ஜுஅஃபீ,என்னிடம் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவிக்கப் பெற்ற ஐம்பதாயிரம் ஹதீஸ்கள் உள்ளன" என்று கூறினார்.
இதை அபுல்வலீத் ஹிஷாம் பின் அப்தில் மலிக் அத்தயாலிஸீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

056 சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் ஜாபிர் பின் யஸீதிடம்,ஆகவே, என் தந்தை எனக்கு அனுமதி அளிக்கும்வரை, அல்லது அல்லாஹ் எனக்கு (இது தொடர்பாகத்) தீர்ப்பளிக்கும்வரை நான் இந்த பூமியை விட்டு ஒருபோதும் அகலவேமாட்டேன்; தீர்ப்பளிப்போரில் அவனே மேலானவன்" எனும் (12:80ஆவது) இறைவசனத்தைப் பற்றிக் கேட்டார். அதற்கு ஜாபிர் பின் யஸீத், இந்த வசனத்திற்குரிய விளக்கம் இன்னும் வரவில்லை" என்று பதிலளித்தார். நான் ஜாபிர் பொய் சொல்கிறார்" என்று கூறினேன்.
இதன் அறிவிப்பாளரான ஹுமைதீ (அப்துல்லாஹ் பின் ஸுபைர் பின் ஈசா-ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
நாங்கள் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களிடம்,ஜாபிர் என்ன நோக்கத்தில் இவ்வாறு கூறினார்?" என்று கேட்டோம். அதற்கு சுஃப்யான் (ரஹ்) அவர்கள்,அலீ (ரலி) அவர்கள் மேகத்தினுள் இருந்துகொண்டிருக்கிறார்கள். வானிலிருந்து ஒருவர் -அதாவது அலீ (ரலி) அவர்கள்- இன்னாருடன் செல்லுங்கள்' என்று (குறிப்பிட்டுக்)கூறாதவரை நாங்கள் அவர்களுடைய வழித்தோன்றல்களில் யாரையும் பின்தொடரமாட்டோம்' எனும் (ரஜ்ஆ') கொள்கையினை ராஃபிளாக்கள் கூறிவருகின்றனர். இதுதான் அவ்வசனத்தின் பொருள் என்று ஜாபிர் பின் யஸீதும் கூறிவருகிறார். ஆனால், இது பொய். (உண்மையில்) அவ்வசனம் (இறைத்தூதர்) யூசுஃப் (அலை) அவர்களுடைய சகோதரரர்கள் தொடர்பாக அருளப் பெற்றதாகும்" என்று கூறினார்கள்.

057 சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் யஸீத் அறிவித்த ஏறத்தாழ முப்பதாயிரம் ஹதீஸ்களை நான் செவியேற்றுள்ளேன். எனக்கு இன்ன இன்னது (பரிசாகக்) கிடைத்தாலும் அந்த ஹதீஸ்களில் எதையும் எடுத்துரைக்க நான் இசையமாட்டேன்.

அபூஃகஸ்ஸான் முஹம்மத் பின் அம்ர் அர்ராஸீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜரீர் பின் அப்தில் ஹமீத் (ரஹ்) அவர்களிடம், நீங்கள் ஹாரிஸ் பின் ஹஸீராவைச் சந்தித்திருக்கின்றீர்களா?"என்று கேட்டேன். அதற்கு ஜரீர் (ரஹ்) அவர்கள்,ஆம்; அவர் நெடிய மௌனம் காக்கும் கிழவர்; அபத்தமான (ரஜ்ஆ) கொள்கையில் பிடிவாதமாக இருப்பவர்" என்று கூறினார்கள்.

058 ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அய்யூப் அஸ்ஸக்தியானீ (ரஹ்) அவர்கள், ஒரு மனிதர் குறித்து அவர் சீரான நாவுடையவர் அல்லர்" என்றும்,மற்றொரு மனிதர் குறித்து அவர் எண்ணிக்கையைக் கூட்டிச் சொல்பவர்" (ஹதீஸ் விஷயத்தில் மோசடி செய்பவர்) என்றும் கூறியதை நான் கேட்டேன்.
இதை அப்துர் ரஹ்மான் பின் மஹ்தீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

059 ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அய்யூப் அஸ்ஸக்தியானீ (ரஹ்) அவர்கள்,எனக்கு ஓர் அண்டைவீட்டுக்காரர் இருக்கிறார்" என்று கூறிவிட்டு, அவருடைய சிறப்புகளில் சிலவற்றை எடுத்துக்கூறினார்கள். பிறகு என்னிடம் அவர் இரு பேரீச்சம்பழங்களுக்காகச் சாட்சியமளிக்க முன்வந்தாலும் அவரது சாட்சியத்தை நான் ஏற்கமாட்டேன்" என்று கூறினார்கள்.
இதை சுலைமான் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

060 மஅமர் பின் ராஷித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அய்யூப் அஸ்ஸக்தீயானீ (ரஹ்) அவர்கள் யாரைப் பற்றியும் ஒருபோதும் புறங்கூறுவதை நான் கண்டதில்லை. ஆனால், அபூஉமய்யா அப்துல் கரீம் என்பவரைத் தவிர! அவரைப் பற்றிக் கூறுகையில் அல்லாஹ்தான் (அவரை மன்னித்து) அவருக்கு அருள்புரிய வேண்டும். அவர் நம்பத்தகாதவர்; இக்ரிமா (ரஹ்) அவர்கள் (எனக்கு) அறிவித்த ஒரு ஹதீஸ் குறித்து என்னிடம் அவர் கேட்டுவிட்டு, இக்ரிமாவிடம் தாமே செவியேற்றதாக அறிவித்தார்'' என்றார்கள். - இதை அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

061 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
எங்களிடம் அபூதாவூத் (நுஃபய்உ பின் அல்ஹாரிஸ்) அல்அஃமா என்பார் வந்து பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்தார்கள்; ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்தார்கள்" என்று ஹதீஸ்களை அறிவிக்கலானார். நாங்கள் இதைப்பற்றி கத்தாதா (ரஹ்) அவர்களிடம் சொன்னபோது அவர் பொய் சொல்கிறார்; அவர் இவர்கள் எவரிடமிருந்தும் (எந்த ஹதீஸையும்) செவியுறவில்லை. அல்ஜாரிஃப்' கொள்ளைநோய் காலத்தில் மக்களிடம் கையேந்தும் யாசகராகவே அவர் இருந்தார்" என்று கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறினார்கள். - இதை அஃப்பான் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

062 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அபூதாவூத் அல்அஃமா, கத்தாதா (ரஹ்) அவர்களிடம் வந்துவிட்டு எழுந்து சென்றார். அப்போது (அங்கிருந்த) மக்கள்,இவர் பத்ருப் போரில் கலந்துகொண்ட பதினெட்டு நபித்தோழர்களைத் தாம் சந்தித்ததாகக் கூறிவருகிறார்" என்று கூறினர். அப்போது கத்தாதா (ரஹ்) அவர்கள்,இவர் அல்ஜாரிஃப்' கொள்ளைநோய் காலத்திற்கு முன்பு (மக்களிடம்) யாசகம் கேட்டுத் திரிந்துகொண்டிருந்தார். அவர் இந்த (ஹதீஸ்) துறையில் கவனம் செலுத்தியதுமில்லை; அது குறித்து அவர் பேசியதுமில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! (இவரைவிட மூத்தவர்களான) ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்), சயீத் பின் அல்முஸய்யப் (ரஹ்) ஆகியோர்கூட பத்ருப்போரில் கலந்துகொண்ட நபித்தோழர்களில் சஅத் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்து தவிர வேறு யாரிடமிருந்தும் நேரடியாகச் செவியுற்றதாக எமக்கு ஹதீஸ்களை அறிவித்ததில்லை" என்றார்கள்.
இதை யஸீத் பின் ஹாரூன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

063 ரகபா பின் மஸ்கலா பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஜஅஃபர் (அப்துல்லாஹ் பின் மிஸ்வர்) அல்ஹாஷிமீ அல்மதனீ என்பவர் உண்மையான தகவல்கள் சிலவற்றை (நபிமொழிகள் என்ற பெயரில்) புனைந்து கூறிவந்தார். (உண்மையில்) அவை நபிமொழிகளாக இருக்கவில்லை. ஆனால், அவற்றை நபி (ஸல்) அவர்கள் கூறியதாகவே அவர் அறிவித்து வந்தார்.

064 யூனுஸ் பின் உபைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அம்ர் பின் உபைத் என்பார் ஹதீஸ் அறிவிப்பில் பொய்யுரைத்துவந்தார்.
இதை ஷுஅபா பின் அல்ஹஜ்ஜாஜ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

065 முஆத் பின் முஆத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அவ்ஃப் பின் அபீஜமீலா (ரஹ்) அவர்களிடம், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், யார் நமக்கெதிராக ஆயுதம் ஏந்துகிறாரோ அவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்' என்று கூறியதாக ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்து அம்ர் பின் உபைத் எமக்கு அறிவித்தார்" என்று கூறினேன். அதற்கு அவ்ஃப் (ரஹ்) அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! அம்ர் பொய்யுரைத்துவிட்டார்" என்றார்கள். (ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்து அவர் இந்த ஹதீஸைச் செவியுறவில்லை.) மாறாக, தமது (அடிப்படையற்ற) தீய கோட்பாட்டை நிலைநிறுத்துவதே (இந்த ஹதீஸை அறிவிப்பதன் மூலம்) அவரது நோக்கமாகும்" என்று கூறினார்கள்.
இதை அம்ர் பின் அலீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

066 ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் எப்போதும் அபூபக்ர் அய்யூப் அஸ்ஸக்தியானீ (ரஹ்) அவர்களுடன் இருந்து கொண்டு, அன்னாரிடம் ஹதீஸ்களைக் கற்று வந்தார். பிறகு (சிறிது காலமாக) அந்த மனிதரைக் காணவில்லை. அய்யூப் (ரஹ்) அவர்கள் விசாரித்தபோது மக்கள், அபூபக்ரே! இப்போது அவர் அம்ர் பின் உபைதுடன் இருந்துகொண்டிருக்கிறார்" என்று கூறினார்கள்.

இவ்வாறிருக்க, ஒரு நாள் காலையில் நான் அய்யூப் (ரஹ்) அவர்களுடன் அங்காடிக்குச் சென்றேன்.அப்போது அய்யூப் (ரஹ்) அவர்களை அந்த மனிதர் எதிர்கொண்டார். அவருக்கு அய்யூப் (ரஹ்) அவர்கள் சலாம் கூறி, நலம் விசாரித்தார்கள். பிறகு, நீங்கள் (தற்போது) அந்த அம்ர் பின் உபைத் என்பாருடன் இருப்பதாக எனக்குச் செய்தி எட்டியதே?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், அபூபக்ரே! ஆம் (உண்மைதான்); அம்ர் எங்களுக்கு அபூர்வமான பல தகவல்களைச் சொல்கிறார்" என்று கூறினார். அதற்கு அய்யூப் (ரஹ்) அவர்கள், அந்த அபூர்வமான தகவல்களைக் கண்டுதான் நாங்கள் வெருண்டோடுகிறோம்' அல்லது அஞ்சுகிறோம்' என்று கூறினார்கள்.
இதை உபைதுல்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

067 ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அய்யூப் அஸ்ஸக்தியானீ (ரஹ்) அவர்களிடம், பேரீச்சம்பழச்சாற்றில் தயாரிக்கப்பட்ட மதுவால் போதை உண்டானவனுக்குச் சாட்டையடி தண்டனை வழங்கப்படாது என ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்து அம்ர் பின் உபைத் அறிவிக்கிறாரே?" என்று கேட்கப்பட்டது.அதற்கு அய்யூப் (ரஹ்) அவர்கள்,அம்ர் பொய்யுரைக்கிறார். ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்கள் பேரீச்சம்பழச் சாற்றில் தயாரான மதுவால் போதை ஏற்பட்டவனுக்குச் சாட்டையடி தண்டனை அளிக்கப்படும்' என்று கூறியதை நான் செவியேற்றுள்ளேன்" என்று சொன்னார்கள்
இதை சுலைமான் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

068 சல்லாம் பின் அபீமுதீஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அம்ர் பின் உபைதிடம் சென்றுவரும் தகவல் அய்யூப் அஸ்ஸக்தியானீ (ரஹ்) அவர்களுக்கு எட்டியது. இந்நிலையில், ஒரு நாள் அய்யூப் (ரஹ்) அவர்கள் என்னைச் சந்தித்தார்கள். அப்போது ஒருவரை அவரது மார்க்க நம்பிக்கையில் நீங்கள் நம்பாமலிருக்க, அவருடைய ஹதீஸ்களை மட்டும் நீங்கள் நம்புவீர்களா, என்ன?" என்று கேள்வி எழுப்பினார்கள்.
இதை சுலைமான் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

069 அபூமூசா இஸ்ராயீல் பின் மூசா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அம்ர் பின் உபைத் (முஅதஸிலாக்களின்) மாறுபட்ட சிந்தனைகளை வெளியிடுவதற்கு முன் எங்களுக்கு ஹதீஸ்களை அறிவித்துள்ளார்.
இதை சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

070 முஆத் பின் முஆத் பின் நஸ்ர் அல் அம்பரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஷுஅபா பின் அல்ஹஜ்ஜாஜ் (ரஹ்) அவர்களுக்கு வாசித்' நகரின் நீதிபதியான இப்ராஹீம் அபூஷைபா குறித்து (அவரிடமிருந்து ஹதீஸ்களை அறிவிக்கலாமா?' என்று) கேட்டு கடிதம் எழுதினேன். அதற்கு ஷுஅபா (ரஹ்) அவர்கள் அவரிடமிருந்து எந்த ஹதீஸையும் நீங்கள் பதிவு செய்துகொள்ள வேண்டாம்! (படித்ததும்) எனது இக்கடிதத்தைக் கிழித்து விடுக" என்று எனக்கு பதில் கடிதம் எழுதினார்கள்.
இதை உபைதுல்லாஹ் பின் முஆத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

071 அஃப்பான் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஹம்மாத் பின் சலமா (ரஹ்) அவர்களிடம், ஸாபித் அவர்களிடமிருந்து சாலிஹ் பின் பஷீர் அல்முர்ரீ அறிவித்த ஹதீஸ் ஒன்றைக்கூறினேன். அப்போது ஹம்மாத் (ரஹ்) அவர்கள், சாலிஹ் பொய்யுரைத்துவிட்டார்" என்று கூறினார்கள்.
(இதைப்போன்றே) நான் ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்களிடம், சாலிஹ் அல்முர்ரீ அறிவித்த மற்றோர் ஹதீஸை எடுத்துரைத்தபோது அவர்களும் சாலிஹ் பொய்யுரைத்து விட்டார்" என்றே கூறினார்கள்.
இதை ஹசன் பின் அலீ அல்ஹுல்வானீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

072 அபூதாவூத் சுலைமான் பின் தாவூத் அத்தயாலிசீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் ஷுஅபா (ரஹ்) அவர்கள், நீங்கள் ஜரீர் பின் ஹாஸிம் (ரஹ்) அவர்களிடம் சென்று ஹசன் பின் உமாரா அறிவிக்கும் ஹதீஸ்களை அறிவிப்பது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதன்று.ஏனெனில், அவர் பொய்யுரைக்கிறார்" என்று சொல்லுங்கள் என்றார்கள்.
நான், ஏன் இவ்வாறு கூறுகின்றீர்கள்?" என்று ஷுஅபா (ரஹ்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், ஹசன் பின் உமாரா, ஹகம் பின் உதைபா அல்கிந்தீ (ரஹ்) அவர்களிடமிருந்து சில ஹதீஸ்களை அறிவித்தார். ஆனால், அவற்றுக்கு எந்த ஆதாரமும் இல்லை" என்று சொன்னார்கள். நான், எந்தெந்த ஹதீஸ்களை (உமாரா அறிவித்தார்)?" என்று கேட்டேன். அதற்கு ஷுஅபா (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்:

நான் ஹகம் அவர்களிடம், உஹுத் போரில் கொல்லப்பட்ட உயிர் தியாகிகளுக்காக நபி (ஸல்) அவர்கள் (இறுதித்தொழுகை-ஜனாஸாத் தொழுகை') தொழுவித்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு ஹகம் அவர்கள்,அவர்களுக்காக நபி (ஸல்) அவர்கள் தொழ வைக்கவில்லை" என்று பதிலளித்தார்கள். ஆனால், இந்த ஹசன் பின் உமாராவோ, நபி (ஸல்) அவர்கள் உஹுத் போர் உயிர் தியாகிகளுக்காக ஜனாஸாத் தொழுகை தொழுவித்து அடக்கமும் செய்தார்கள்" என இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்து மிக்சம் (ரஹ்) அவர்கள் அறிவித்ததாக ஹகம் அவர்களிடமிருந்து ஒரு ஹதீஸை (புனைந்து) அறிவித்தார். (இதைப் போன்றே) நான் ஹகம் பின் உதைபா (ரஹ்) அவர்களிடம் விபசாரத்தில் பிறந்த குழந்தைகள் தொடர்பாகத் தாங்கள் என்ன கூறுகிறீர்கள் (அவை இறந்துவிட்டால் அவற்றுக்காகத் தொழவைக்கப்படுமா)?" என்று கேட்டேன். அதற்கு ஹகம் (ரஹ்) அவர்கள், (ஆம்;) அவற்றுக்காகத் தொழவைக்கப்படும்" என்று பதிலளித்தார்கள். எந்த அறிவிப்பாளர் வழியாக வரும் ஹதீஸிலிருந்து (இவ்வாறு கூறுகின்றீர்கள்)?" என்று கேட்டேன். அதற்கு ஹகம் (ரஹ்) அவர்கள்,ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்கள் வழியாக வரும் ஹதீஸில் இவ்வாறு அறிவிக்கப்படுகிறது" என்று பதிலளித்தார்கள். ஆனால், இந்த ஹசன் பின் உமாராவோ, தமக்கு ஹகம் அவர்களும், ஹகம் அவர்களுக்கு யஹ்யா பின் அல்ஜஸ்ஸார் அவர்களும், யஹ்யா அவர்களுக்கு அலீ (ரலி) அவர்களும் அறிவித்ததாகக் கூறினார். (இதனால்தான் ஹசன் பின் உமாரா பொய்யுரைக்கிறார் என்று நான் குறிப்பிட்டேன் என்றார்கள் ஷுஅபா (ரஹ்) அவர்கள்.)

073 ஹசன் பின் அலீ அல்ஹுல்வானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யஸீத் பின் ஹாரூன் (ரஹ்) அவர்கள் ஸியாத் பின் மைமூன் என்பவர் குறித்துக் கூறுகையில், நான் அவரிடமிருந்தும் காலித் பின் மஹ்தூஜ் என்பவரிடமிருந்தும் எந்த ஹதீஸையும் அறிவிக்க மாட்டேன் எனச் சத்தியம் செய்துள்ளேன்"என்று கூறிவிட்டுப் பின்வருமாறும் கூறினார்கள்:
நான் ஸியாத் பின் மைமூன் என்பவரைச் சந்தித்து ஒரு ஹதீஸ் குறித்து (அதை உங்களுக்கு அறிவித்தவர் யார் என்று) கேட்டேன். அதற்கு ஸியாத், பக்ர் பின் அப்தில்லாஹ் அல்முஸனீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்" என்று கூறினார். மற்றொரு முறை அவரைச் சந்தித்தபோது முவர்ரிக் பின் அல்முஷம்ரிஜ் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்"என்று கூறினார். பின்னர் இன்னொரு முறை அவரைச் சந்தித்தபோது ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்"என்றார்.

ஹசன் அல்ஹுல்வானீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
(ஸியாத் பின் மைமூன், காலித் பின் மஹ்தூஜ் ஆகிய) அவ்விருவரையும் பொய்யர்கள் என யஸீத் பின் ஹாரூன் (ரஹ்) அவர்கள் கூறிவந்தார்கள். நான், அப்துஸ் ஸமத் (ரஹ்) அவர்களிடம் (ஹதீஸ்களை) செவியேற்றுக்கொண்டிருந்தேன். ஸியாத் பின் மைமூன் பற்றி நான் குறிப்பிட்டபோது, அப்துஸ் ஸமத் (ரஹ்) அவர்களும் அவரைப் பொய்யர் என்றே கூறினார்கள்.

074 மஹ்மூத் பின் ஃகைலான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூதாவூத் அத்தயாலிசீ (ரஹ்) அவர்களிடம், நீங்கள் அப்பாத் பின் மன்ஸூரிடமிருந்து அதிகமான ஹதீஸ்களை அறிவித்துள்ளீர்கள். ஆனால், அவரிடமிருந்து வாசனைப் பொருள் வியாபாரியான (ஹவ்லா எனும்) பெண்ணின் ஹதீஸை நீங்கள் ஏன் அறிவிக்கவில்லை? அந்த ஹதீஸை நள்ர் பின் ஷுமைல் எங்களுக்கு அறிவித்துள்ளாரே!" என்று கேட்டேன். அதற்கு அபூதாவூத் அத்தயாலிசீ (ரஹ்) அவர்கள் என்னிடம் கூறினார்கள்: அமைதியாக இருங்கள்! நானும் அப்துர் ரஹ்மான் பின் மஹ்தீ (ரஹ்) அவர்களும் ஸியாத் பின் மைமூனைச் சந்தித்து (இந்த ஹதீஸ் குறித்து)க் கேட்டோம். (அவர்தாம் ஹவ்லா தொடர்பான இந்த ஹதீஸை அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து அறிவித்தவர்.)அப்போது நாங்கள் இந்த ஹதீஸ்களை நீங்கள் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தா அறிவிக்கிறீர்கள்?" என்று கேட்டோம். அதற்கு ஸியாத், பாவம் செய்த ஒருவர் பின்னர் வருந்தித் திருந்திவிட்டால் அவருடைய பாவத்தை அல்லாஹ் மன்னிக்க மாட்டானா என்ன, சொல்லுங்கள்?" என்று கேட்டார். நாங்கள், ஆம் (மன்னிப்பான்)' என்றோம். ஸியாத், இவற்றிலிருந்து எந்த ஒரு சிறிய மற்றும் பெரிய ஹதீஸையும் நான் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து செவியுறவுமில்லை; அனஸ் (ரலி) அவர்களை நான் சந்திக்கவும் இல்லை என்பது பொதுமக்களுக்குத்தான் தெரியாது! உங்கள் இருவருக்குமா தெரிந்திருக்க வில்லை?" என்று கேட்டார்.
பின்னர் ஸியாத் (அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாக ஹதீஸ்களை) அறிவித்துவருகிறார் என்ற செய்தி எங்களுக்கு எட்டியது. உடனே நானும் அப்துர் ரஹ்மான் பின் மஹ்தீ (ரஹ்) அவர்களும் அவரிடம் சென்றோம். அப்போது அவர்,நான் பாவமன்னிப்புக் கோருகிறேன்"

என்று கூறினார். பிறகு (பழையபடியே) அவர் ஹதீஸ்களை அறிவிக்கவே அவரை நாங்கள் (அடியோடு) கைவிட்டோம்.

075 அபூஅம்ர் ஷபாபா பின் சவார் அல்ஃபஸாரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல் குத்தூஸ் பின் ஹபீப் அத்திமஷ்கீ என்பவர் எங்களுக்கு ஹதீஸ்களை அறிவிப்பார். அப்போது (சுவைத் பின் ஃகஃபலா' எனும் ஓர் அறிவிப்பாளரின் பெயரை) சுவைத் பின் அகலா என்று (மாற்றிக்) கூறுவார். மேலும் அப்துல் குத்தூஸ், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காற்றுக்காக (அர்ரவ்ஹ்) இலக்கு (அர்ள்) ஏற்படுத்துவதற்குத் தடை விதித்தார்கள்" என்று கூறுவதை நான் செவியுற்றேன். அப்போது அவரிடம், இதற்கு என்ன பொருள்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், காற்று வருவதற்காகச் சுவரில் துளை ஏற்படுத்துவதாகும்" என்று (ஹதீஸின் மூல வார்த்தைகளைச் சிதைத்து அநர்த்தமாகக்) கூறினார்.
உபைதுல்லாஹ் பின் உமர் அல்கவாரீரீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
மஹ்தீ பின் ஹிலால் என்பார் (ஹதீஸ்களை அறிவிப்பதற்காக) அமர்ந்த சில நாட்களுக்குப் பின்னால், (அவரிடம் ஹதீஸ்களைக் கேட்ட) ஒரு மனிதரிடம் அபூஇஸ்மாயீல் ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் என்ன உங்கள் திசையிலிருந்து (பொய் எனும்) உவர்ப்பு நீரூற்று கொப்பளிக்கிறதே!" என்று கேட்டார்கள். அதற்கு அம்மனிதர் ஆம் (உண்மைதான்), அபூஇஸ்மாயீலே!" என்று பதிலளித்தார்கள்.

076 அபூஅவானா அல்வள்ளாஹ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்து எனக்குக் கிடைக்கப்பெறாத ஹதீஸ்களையெல்லாம் நான் அபான் பின் அபீஅய்யாஷிடம் செல்லும்போது அவர் எனக்கு வாசித்துக் காட்டாமல் இருந்ததில்லை.
இதை அஃப்பான் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

077 அலீ பின் முஸ்ஹிர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் ஹம்ஸா அஸ்ஸய்யாத் அவர்களும் அபான் பின் அபீஅய்யாஷிடமிருந்து ஏறத்தாழ ஓராயிரம் ஹதீஸ்களைச் செவியுற்றிருக்கிறோம். பின்னர் நான் ஹம்ஸா அஸ்ஸய்யாத் அவர்களைச் சந்தித்தேன். அப்போது அவர்கள் நான் நபி (ஸல்) அவர்களைக் கனவில் கண்டேன். நான் அபானிடமிருந்து செவியுற்ற ஹதீஸ்களை நபியவர்களிடம் எடுத்துரைத்தேன். அவற்றில் ஐந்து அல்லது ஆறு ஹதீஸ்களைத்தான் நபியவர்கள் ஏற்றுக்கொண்டார்கள்" என்று கூறினார்கள்.

078 ஸகரிய்யாஉ பின் அதீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அபூஇஸ்ஹாக்(இப்ராஹீம் பின் முஹம்மத் பின் அல்ஹாரிஸ்) அல்ஃபஸாரீ (ரஹ்) அவர்கள், பகிய்யா பின் அல்வலீத் (எனும் அறிவிப்பாளர்), பிரபல அறிவிப்பாளர்களிடமிருந்து அறிவிக்கும் ஹதீஸ்களை எழுதிக்கொள்ளுங்கள்; பிரபலமற்ற அறிவிப்பாளர்களிடமிருந்து அவர் அறிவிப்பதை எழுதாதீர்கள். இஸ்மாயீல் பின் அய்யாஷ் (எனும் அறிவிப்பாளர்), பிரபல அறிவிப்பாளர்களிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் அறிவிக்கும் எந்த ஹதீஸ்களையும் எழுதாதீர்கள்" என்று கூறினார்கள்.
இதை அப்துல்லாஹ் பின் அப்துர் ரஹ்மான் அத்தாரிமீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

079 அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
பகிய்யா பின் அல்வலீத் நல்ல மனிதர்தாம். எனினும், அவர் அறிவிப்பாளர்களின் சொந்தப் பெயர்களை(க் குறிப்பிட வேண்டிய இடத்தில் அவற்றை)க் குறிப்பிடாமல் குறிப்புப் பெயர்களையும், குறிப்புப்பெயர்களை(க் குறிப்பிட வேண்டிய இடத்தில் அவற்றை)க் குறிப்பிடாமல் சொந்தப் பெயர்களையும் குறிப்பிட்டு வந்தார். (இதனால் குழப்பம் நேர்ந்தது.) நீண்ட நாட்களாக அவர் அபூசயீத் அல்வுஹாழீ எனும் (குறிப்புப் பெயருடைய) ஓர் அறிவிப்பாளரிடமிருந்து ஹதீஸ்களை அறிவித்துவந்தார். நாங்கள் (அவரது இயற்பெயர் என்னவென்று) ஆராய்ந்த போது அவர் அப்துல் குத்தூஸ் என்ற (பலவீனமான) அறிவிப்பாளர்தாம் எனத் தெரிந்து கொண்டோம்.

080 அப்துர் ரஸ்ஸாக் பின் ஹுமாம் பின் நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் யாரைப் பற்றியும் அவர் பொய்யர்' என்று வெளிப்படையாகக் கூறுவதை நான் கேட்டதில்லை. அப்துல் குத்தூஸைப் பற்றி அவர் பொய்யர்' என்று அன்னார் கூறியதை நான் கேட்டுள்ளேன்.

081 அபூநுஜஸம் அல்ஃபள்ல் பின் துகைன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அல்முஅல்லா பின் உர்ஃபான் என்பார் ஸிஃப்பீன் போரின்போது அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் எங்களிடம் வந்தார்கள்..." என்று (தொடங்கும் ஒரு ஹதீஸை) எங்களுக்கு அபூவாயில் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்" என்றார். உடனே நான், இறந்துபோன அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் மண்ணறையிலிருந்து எழுந்தா (ஸிஃப்பீனுக்கு) போனார்கள்?" என்று கேட்டேன்.

082 அஃப்பான் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் இஸ்மாயீல் பின் உலய்யா (ரஹ்) அவர்களிடம் இருந்தோம். அப்போது (அங்கிருந்த) ஒருவர் மற்றொருவரிடமிருந்து (அவர் கூறியதாக) ஒரு ஹதீஸை அறிவித்தார். உடனே நான், அவர் நம்பிக்கைக்குரியவர் அல்லர்" என்று சொன்னேன். உடனே அந்த நபர், நீங்கள் அவரைக் குறித்துப் புறம் பேசிவிட்டீர்கள்" என்றார். அப்போது இஸ்மாயீல் பின் உலய்யா (ரஹ்) அவர்கள்,அவரைக் குறித்து இவர் புறம் பேசவில்லை; அவர் நம்பத்தகுந்தவர் அல்லர் என்று தீர்ப்பளித்தார் (அவ்வளவுதான்)" என்று கூறினார்கள்.
இந்தத் தகவல் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

083 பிஷ்ர் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்களிடம், சயீத் பின் அல்முஸய்யப் (ரஹ்) அவர்களிடமிருந்து ஹதீஸ்களை அறிவிக்கும் முஹம்மத் பின் அப்திர் ரஹ்மான் என்பவரைப் பற்றிக்கேட்டேன். மாலிக் (ரஹ்) அவர்கள், அவர் நம்பத்தகுந்தவர் அல்லர்" என்று கூறினார்கள். அவர்களிடம், (உமய்யா பின் கலஃபின் புதல்வியான) தவ்அமா அவர்களின் முன்னாள் அடிமையான ஸாலிஹ் என்பாரைப் பற்றிக் கேட்டேன். அவரும் நம்பத்தகுந்தவர் அல்லர்" என்று சொன்னார்கள். அபுல் ஹுவைரிஸ் அப்துர் ரஹ்மான் பின் முஆவியா என்பவரைப் பற்றிக் கேட்டதற்கு, அவரும் நம்பத்தகுந்தவர் அல்லர்" என்றார்கள். இப்னு அபீதிஉப் (முஹம்மத் பின் அப்திர் ரஹ்மான்) அவர்களுக்கு ஹதீஸ்களை அறிவித்த

ஷுஅபா பின் தீனார் அல்குறஷீ பற்றிக் கேட்டபோது அவரும் நம்பத்தகுந்தவர் அல்லர்" என்று கூறினார்கள். ஹராம் பின் உஸ்மான் என்பவர் பற்றிக் கேட்ட போது அவரும் நம்பத்தகுந்தவர் அல்லர்" என்றார்கள்.

இந்த ஐந்து அறிவிப்பாளர்களைப் பற்றியும் நான் மாலிக் (ரஹ்) அவர்களிடம் வினவியபோது இவர்கள் ஐவரும் தங்களுடைய ஹதீஸ் அறிவிப்புகளில் நம்பத்தகுந்தவர் அல்லர்" என்றே கூறினார்கள். மற்றொருவரைப் பற்றி அவர்களிடம் கேட்டேன். -அவரது பெயரை மறந்துவிட்டேன்- அதற்கு மாலிக் (ரஹ்) அவர்கள், இவரது பெயரை என் ஹதீஸ் பதிவேடுகளில் நீர் கண்டுள்ளீரா?" என்று கேட்டார்கள். நான் இல்லை' என்றேன். மாலிக் (ரஹ்) அவர்கள், அவர் நம்பத்தகுந்தவராக இருந்திருந்தால் நிச்சயமாக அவரது பெயரை என் ஹதீஸ் பதிவேடுகளில் பார்த்திருப்பீர்" என்று சொன்னார்கள்.
இதை அபூஜஅஃபர் அஹ்மத் பின் சயீத் அத்தாரிமீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

084 ஹஜ்ஜாஜ் பின் யூசுஃப் பின் ஹஜ்ஜாஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அபீதிஉப் (ரஹ்) அவர்கள் ஷுரஹ்பீல் பின் சஅத் என்பவரிடமிருந்து ஹதீஸ் அறிவித்தார்கள். ஷுரஹ்பீல் சந்தேகத்திற்குரியவராகக் கருதப்பட்டார்.
இதை யஹ்யா பின் முயீன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

085 அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நீங்கள் சொர்க்கம் செல்ல விரும்புகிறீர்களா, அல்லது (அதற்கு முன்) அப்துல்லாஹ் பின் அல்முஹர்ரர் அவர்களைச் சந்திக்க விரும்புகிறீர்களா? என்று என்னிடம் கேட்கப்பட்டால், (முதலில்) அவரைச் சந்தித்துவிட்டுப் பின்னர் சொர்க்கம் செல்ல விரும்புகிறேன் என்றே சொல்லியிருப்பேன். (அந்த அளவுக்கு அவர்மீது நான் மதிப்பு வைத்திருந்தேன்.) பின்னர் (அவர் ஒரு பொய்யர் என) அவரை நான் (இனம்) கண்டபோது, அவரைவிடக் கெட்டிச் சாணம் எவ்வளவோ பரவாயில்லை என்று எனக்குப் பட்டது.
இதை அபூஇஸ்ஹாக் அத்தாலகானீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

086 உபைதுல்லாஹ் பின் அம்ர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஸைத் பின் அபீஉனைஸா (ரஹ்) அவர்கள், என் சகோதரர் (யஹ்யா பின் அபீஉனைஸா) இடமிருந்து எதையும் அறிவிக்காதீர்கள்" என்று கூறினார்கள்.
இதை வலீத் பின் ஸாலிஹ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

087 அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் அர்ரக்கீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யஹ்யா பின் அபீஉனைஸா ஒரு பொய்யர் ஆவார் என உபைதுல்லாஹ் பின் அம்ர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.
இதை அப்துஸ் ஸலாம் பின் அப்திர் ரஹ்மான் அல்வாபிஸீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

088 ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அய்யூப் அஸ்ஸக்தியானீ (ரஹ்) அவர்களிடம் ஃபர்கத் பின் யஅகூப் அஸ்ஸப்கீ அவர்களைப் பற்றிக் கூறப்பட்டது. அப்போது அய்யூப் (ரஹ்) அவர்கள் அவர் நபிமொழித் துறையைச் சேர்ந்தவர் அல்லர்" என்று கூறினார்கள்.
இதை சுலைமான் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

089 அப்துர் ரஹ்மான் பின் பிஷ்ர் அல்அப்தீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யஹ்யா பின் சயீத் அல்கத்தான் (ரஹ்) அவர்களிடம் முஹம்மத் பின் அப்துல்லாஹ் பின் உபைத் பின் உமைர் அல்லைஸீ என்பவரைப் பற்றிக் கூறப்பட்டது. அப்போது யஹ்யா (ரஹ்) அவர்கள், அவர் மிகவும் பலவீனமான அறிவிப்பாளர்" என்று கூறினார்கள். உடனே யஹ்யா (ரஹ்) அவர்களிடம், இவர் யஅகூப் பின் அதாஉ என்பவரைவிட மிகவும் பலவீனமான அறிவிப்பாளரா?" என்று வினவப்பட்டது. அதற்கு யஹ்யா (ரஹ்) அவர்கள், ஆம்' என்றார்கள். பிறகு,முஹம்மத் பின் அப்தில்லாஹ் பின் உபைத் பின் உமைரிடமிருந்து எவரும் ஹதீஸ் அறிவிப்பார் என்பதை என்னால் எண்ணியும் பார்க்க முடியவில்லை" என்று கூறினார்கள்.

090 பிஷ்ர் பின் அல்ஹகம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யஹ்யா பின் சயீத் அல்கத்தான் (ரஹ்) அவர்கள் ஹகீம் பின் ஜுபைர், அப்துல் அஃலா மற்றும் யஹ்யா பின் மூசா பின் தீனார் ஆகியோர் பலவீனமான அறிவிப்பாளர்கள் என்று கூறினார்கள். மேலும் யஹ்யா பின் மூசாவின் அறிவிப்புகள் காற்று (போல வந்த வேகத்தில் மறையக்கூடியவை)தாம்" என்றும் தெரிவித்தார்கள். மேலும் மூசா பின் திஹ்கான், ஈசா பின் அபீஈசா அல்மதனீ ஆகியோரும் பலவீனமானவர்கள் என்று அன்னார் கூறினார்கள்.

091 யஹ்யா பின் சயீத் அல்கத்தான் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
ஹசன் பின் ஈசா (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறியதை நான் செவிமடுத்துள்ளேன்: என்னிடம் அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள்,நீங்கள் ஜரீரிடம் சென்றால் அவரிடமுள்ள அனைத்து ஹதீஸ்களையும் எழுதிக்கொள்ளுங்கள்; ஆனால், மூவர் அறிவித்த ஹதீஸ்களைத் தவிர. உபைதா பின் முஅத்திப், சரிய்யீ பின் இஸ்மாயீல், முஹம்மத் பின் சாலிம் ஆகியோரே அம்மூவரும்" என்றார்கள்.

அபுல்ஹுசைன் முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான் கூறுகிறேன்:
சந்தேகத்திற்குரிய அறிவிப்பாளர்கள் குறித்தும், அவர்களுடைய குறைகள் குறித்தும் (நபிமொழி) அறிஞர்கள் குறிப்பிட்டுள்ள இதைப் போன்ற தகவல்கள் ஏராளம் உள்ளன. அவற்றையெல்லாம் முழுமையாகக் குறிப்பிட இந்த ஏடு போதாது. நாம் இதுவரை எடுத்துரைத்த தகவல்கள் இந்த விஷயத்தில் நபிமொழி அறிஞர்களின் கோட்பாடு என்ன என்பதை அறிந்துகொள்ள விரும்புவோருக்குப் போதுமானவை ஆகும்.
நபிமொழி அறிவிப்பாளர்களிடம் காணப்பட்ட குறைகளை எடுத்துரைப்பதையும், தங்களிடம் வினவப்பட்டபோது அவற்றைத் தெளிவாகக் கூறுவதையும் நபிமொழி அறிஞர்கள் கட்டாயமாக்கிக் கொண்டதற்குக் காரணமே, அ(வற்றை மறைப்ப)தில் உள்ள மாபெரும்

கேடுதான். ஆம்! மார்க்கச் செய்தி என்பதே அனுமதிக்கப்பட்டது (ஹலால்), தடை செய்யப்பட்டது (ஹராம்), செய்யத் தூண்டுவது (அம்ர்), தடுப்பது (நஹ்யு), ஆவலூட்டுவது (தர்ஃகீப்), எச்சரிப்பது (தர்ஹீப்) ஆகியவற்றில் ஒன்றாகத்தான் இருக்கும். இந்நிலையில் மார்க்கச் செய்திகளை அறிவிப்பவர் உண்மைக்கும் நம்பகத்தன்மைக்கும் எடுத்துக்காட்டாக இல்லாமலிருந்தால் நிலைமை என்னவாகும்? அவரைப் பற்றித் தெரிந்த ஒருவர் அவரிடமிருந்து மார்க்கச் செய்திகளை அறிவிக்கப்போய், அவரிடமுள்ள குறைகளை விவரம் தெரியாத மக்களிடம் மறைத்தால், அது பாவம் மட்டுமல்ல; முஸ்லிம் பொதுமக்களுக்குச் செய்யும் துரோகமும் ஆகும்.

ஏனெனில், அச்செய்திகள் அனைத்துமோ பெரும்பாலானவையோ அடிப்படையற்ற பொய்யான தகவல்களாக இருக்க,அவற்றைக் கேட்கும் சிலர் அப்படியே அவற்றைச் செயல் படுத்திவிடலாம்; அல்லது சிலவற்றையாவது செயல்படுத்திவிடலாம். அதே நேரத்தில், நம்பத் தகுந்த, திருப்தி தருகின்ற அறிவிப்பாளர்கள் வாயிலாகக் கிடைத்துள்ள சரியான தகவல்கள் ஏராளம் உள்ளன. அப்படியிருக்க, நம்பத்தகாத, திருப்திகொள்ள முடியாத அறிவிப்பாளர்களின் செய்திகளுக்கு என்ன அவசியம் நேர்ந்தது?

பலவீனமான ஹதீஸ்களையும் அடையாளம் தெரியாத அறிவிப்பாளர் தொடர்களையும் தெரிந்துகொண்டே அறிவிப்பதில் சிலர் முனைப்புக் காட்டுகின்றனர். இவர்களில் பெரும்பாலோர் பொதுமக்களிடம் தங்களை அதிக அறிவுபடைத்தவர்கள் என்று காட்டிக் கொள்ள வேண்டுமென விரும்புகிறார்கள் என்றே கருதுகிறேன். இன்னார் எத்துனை எத்துனை ஹதீஸ்களை அறிந்துள்ளார்; ஏராளமான ஹதீஸ்களைத் திரட்டியுள்ளார் என்று (சிலாகித்துக்)கூறப்பட வேண்டும் என்பதே அவர்களின் இந்த அறிவிப்புகளுக்குக் காரணம். (ஹதீஸ் எனும்) கல்வித் துறையில் இந்தப் பாதையைத் தேர்ந்தெடுத்துக்கொண்ட எவருக்கும் விமோசனமே கிடையாது. இவர்களை அறிஞர்கள்' என்று குறிப்பிடுவதை விட முட்டாள்கள்' என்று கூறுவதே பொருத்தமாயிருக்கும்.

## பாடம் : 6 "அல்முஅன்அன்' ஹதீஸை ஆதாரமாக ஏற்கலாம்.

இன்று தம்மை நபிமொழியியலார் என்று சொல்லிக்கொள்கின்ற சிலர், சரியான அறிவிப்பாளர் தொடர் எது, சரியில்லாத அறிவிப்பாளர் தொடர் எது? என்பது தொடர்பாக ஒரு கருத்தை வெளியிட்டுள்ளனர். அதை எடுத்துரைக்காமலும் அதிலுள்ள தவறைச் சுட்டிக்காட்டாமலும் விட்டுவிடுவதே சரியான முடிவாக இருக்கும். ஏனெனில், கைவிடப்பட வேண்டிய ஒரு கருத்தை அடியோடு சாய்ப்பதற்கும் அந்தக் கருத்தாளரைப் பற்றிய நினைவை முற்றாக ஒழிப்பதற்கும் சிறந்த வழி என்னவென்றால், அந்தக் கருத்தை(க்கண்டு கொள்ளாமல்) அலட்சியப்படுத்துவதுதான். அறியாமக்களுக்கு அதை அறிமுகப்படுத்தி விடாமல் இருப்பதற்கும் அதுவே ஏற்றதாகும். இருப்பினும், பின்விளைவுகளை யோசித்தும், அறியாமக்கள் புதிய கருத்துகளைக் கண்டு ஏமாந்து, அறிஞர்களால் புறக்கணிக்கப்பட்ட தவறான கொள்கைகளையும் கூட விரைந்து ஏற்றுவிடுவர் என்பதை அஞ்சியும் அந்தச் சிலரது தவறான கருத்தை விவரிப்பதே பொதுமக்களுக்கு நல்லது என்று கருதினோம்;

அந்தத் தவறான கருத்துக்கு, உரிய முறையில் பதிலளிப்பது எதிர்காலத்திற்குச் சிறந்ததாகும் என்ற முடிவுக்கு வந்தோம்.

இனி, அந்தச் சிலரது தவறான சிந்தனை என்னவென்று பார்ப்போம்: ஒரு ஹதீஸின் அறிவிப்பாளர் தொடரில் "இன்னார் குறித்து இன்னார் அறிவித்தார்" என்று கூறப்பட்டிருந்தால் அதை ஆதாரமாக ஏற்பதற்குச் சில நிபந்தனைகள் உண்டு. அதாவது அவ்விரு அறிவிப்பாளர்களும் தம் வாழ்நாளில் ஓரிரு முறையாவது சந்தித்துக் கொண்டார்கள் என நாம் அறிந்திருக்க வேண்டும். அல்லது ஒருவரிடமிருந்து மற்றவர் நேரடியாக ஹதீஸைக் கேட்டிருக்க வேண்டும். அல்லது ஒரு தடவையோ பல தடவைகளோ சந்தித்தார்கள் என்ற செய்தி வேறு அறிவிப்புகளிலாவது வந்திருக்க வேண்டும். இதை விடுத்து, இருவரும் ஒரே காலத்தில் வாழ்ந்தார்கள் என்பதாலோ, அவரிடமிருந்து இவர் நேரடியாகக் கேட்டிருக்க வாய்ப்புண்டு என்பதாலோ மட்டும் அந்த அறிவிப்பை ஏற்க முடியாது. இருவரும் சந்தித்தார்கள்; ஒருவரிடமிருந்து மற்றவர் நேரடியாகச் செவியேற்றார் என்று உறுதியாகத் தெரியாதவரை இத்தகைய அறிவிப்புகள் ஏற்புக்குரியவை அல்ல. இத்தகைய அறிவிப்புகள் கிடைத்தால் அவற்றை நிறுத்தி வைத்துவிட்டு, ஒருவரிடமிருந்து மற்றவர் சிறிதளவோ அதிக அளவோ செவியேற்றார் என்பதற்கு வேறு சான்று கிடைக்கும்போது அவற்றை ஆதாரமாக ஏற்கலாம்;இல்லையேல் கூடாது.

அல்லாஹ் உங்களுக்கு அருள்புரிவானாக!
அறிவிப்பாளர்தொடர்களில் இத்தகைய குறைகாணும் இவர்களது கூற்று (அடிப்படையற்ற) கற்பனையாகும். இதற்கு முன்பும் சரி; இப்போதும் சரி; கல்வியாளர்களின் ஆதரவு இக்கூற்றுக்குக் கிடையாது. அன்றும் இன்றும் ஹதீஸ்களையும் அறிவிப்புகளையும் அறிந்துள்ள கல்வியாளரிடையே பரவலான ஏகோபித்த கருத்து இதுதான்:

அதாவது நம்பத்தகுந்த அறிவிப்பாளர் ஒருவர் தம்மைப் போன்ற மற்றோர் அறிவிப்பாளரிடமிருந்து ஒரு ஹதீஸை அறிவிக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவர்கள் இருவரும் ஒரே காலத்தில் வாழ்ந்து ஒருவர் மற்றவரை நேரடியாகச் சந்தித்து உரையாடியிருக்க வாய்ப்பு உண்டு என்றிருந்தாலே, அந்த அறிவிப்பை ஏற்கலாம்; அது கட்டாயம் ஆதாரமாகும். இருவரும் சந்தித்துப் பேசினர் என்பதற்கு எந்தத் தகவலும் கிடைக்காவிட்டாலும் சரிதான். ஆனால்,இருவரும் சந்திக்கவில்லை என்பதற்கோ, ஒருவரிடமிருந்து மற்றவர் எதையும் செவியேற்கவில்லை என்பதற்கோ தெளிவான சான்று இருப்பின் அப்போது அந்த அறிவிப்பை ஏற்க முடியாது. இந்தத் தெளிவு ஏற்படாதவரை நாம் விவரித்த சாத்தியக்கூற்றை வைத்து செவியேற்றதாக எடுத்துக்கொள்ளப்படும்.

(அறிவிப்பாளர் இருவரும் ஒரேகாலத்தில் வாழ்ந்திருந்தாலும் அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் சந்தித்திருக்க வேண்டும் என்பது பற்றிய)இக்கருத்தை வெளியிட்ட அந்தச் சிலரிடமும் அவர்களுடைய ஆதரவாளர்களிடமும் நாம் ஒன்றைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறோம்:

"நம்பத்தகுந்த அறிவிப்பாளர் ஒருவர் நம்பத்தகுந்த மற்றோர் அறிவிப்பாளரிடமிருந்து அறிவிக்கும் ஹதீஸ் ஆதாரபூர்வமானது; அதன்படி செயல்படுவது கடமை" என நீங்களே சொல்லிவிட்டுப் பிறகு நீங்களே "அவ்விரு அறிவிப்பாளர்களும் ஒரு தடவையோ, பல தடவைகளோ நேரடியாகச் சந்தித்திருக்கிறார்கள்; அல்லது ஒருவரிடமிருந்து மற்றவர் செவியேற்றிருக்கிறார் என்பது தெளிவாகாதவரை அவ்விரு அறிவிப்பாளர் வழியாக வந்த ஹதீஸை ஏற்றுக் கொள்ளமாட்டோம்" என்றொரு நிபந்தனையை இணைத்துக் கொள்கிறீர்களே! (இதுமுறையா?) இந்நிபந்தனையை முன்னோடியான வேறு யாரும் விதித்துள்ளார்களா? அப்படி விதித்திருந்தால் எங்கே அதற்கான சான்றைக் கொண்டு வாருங்கள் பார்ப்போம்!

முந்தைய அறிஞர்களில் சிலர் இவ்வாறு நிபந்தனை விதித்திருந்தார்கள் என்று நீங்கள் கூறினால் எங்கே அவர்களுடைய பெயர்களைக் கூறுங்கள் என்று கேட்போம். அதற்கு அவர்களாலோ மற்றவர்களாலோ எந்த பதிலும் அளிக்க முடியாது. அப்படியே ஏதேனும் ஒன்றைக் கொண்டுவந்தால்கூட "இதில் எங்கே உங்களுக்கு ஆதாரம் உள்ளது?"என்று கேட்போம்.

அதற்கு அவர்கள் பின்வருமாறு பதிலளிக்கலாம்: அன்றும் இன்றும் நபிமொழி அறிவிப்பாளர்கள் பலரை நாம் பார்த்திருக்கிறோம். அவர்களில் ஒருவர் மற்றொருவரை நேரில் பார்த்திராமலும், ஒருவரிடமிருந்து மற்றொருவர் எதையும் செவியேற்றிராமலும் ஹதீஸ்களை அறிவித்துள்ளனர். இவ்வாறு செவியுறாமல், அறிவிப்பாளர் ஒருவர் தமக்கு அறிவித்தவரின் பெயரைக் குறிப்பிடாமல் (முர்சலாக) ஹதீஸ்களை அறிவிப்பதை அவர்கள் அனுமதித்துள்ளார்கள். ஆனால், இடையே அறிவிப்பாளர் பெயர் விடுபட்ட இத்தகைய (முர்சலான) ஹதீஸ் நம்மிடமும் நபிமொழி அறிஞர்களிடமும் ஆதாரம் ஆகாது. (பெயர் குறிப்பிடப்படாத அறிவிப்பாளர் யார், அவரிடம் மற்றவர் செவியேற்றாரா? என்று உறுதியாகத் தெரியாததே இதற்குக் காரணம்.) அப்படியானால், அறிவிப்பாளர் ஒருவர் மற்றவரிடம் செவியேற்றாரா, இல்லையா? என்பதைக் கவனிக்க வேண்டிய அவசியம் உண்டு எனத் தெரிகிறது. ஒருவர் மற்றவரிடமிருந்து சிறிதளவேனும் செவியேற்றார் என்பது உறுதியாகி விட்டால், அவர்களின் எல்லா அறிவிப்புகளையும் ஏற்பதில் சிக்கல் இல்லை. இந்த விளக்கம் கிடைக்காதபோது, அந்த அறிவிப்பை நிறுத்திவைக்க வேண்டியதுதான். அதை ஆதாரமாக எடுக்கலாகாது. ஏனெனில், அதுவும் "முர்சலாக' இருக்கக்கூடும்.

இவ்வாறு கூறும் அவர்களிடத்தில் பின்வருமாறு நாம் கேள்வி எழுப்புவோம்:

ஒரு ஹதீஸ் பலவீனமானது என்பதற்கும், அதை ஆதாரமாக எடுக்கலாகாது என்பதற்கும் அதன் அறிவிப்பாளர் தொடருக்கிடையே எவரும் விடுபட்டிருக்கக்கூடும் என்ற சாத்தியக் கூற்றைக் காரணமாகக் கூறுகிறீர்கள். அப்படிப் பார்த்தால், "இன்னார் குறித்து இன்னார் அறிவித்தார்" என்று கூறப்படும் எந்த ("முஅன் அன்') ஹதீஸ்களையும்,அதன் அறிவிப்பாளர் ஆரம்பம் முதல் இறுதிவரை ஒருவரிடமிருந்து மற்றவர் செவியேற்றார் என்று தெரிந்த பிறகே ஏற்க வேண்டியதுவரும். (ஆனால், "முஅன் அன்' ஹதீஸ்களில் அவ்வாறு நாம் பார்ப்பதில்லை.)

உதாரணத்திற்கு, ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்கள் தம் தந்தை உர்வா (ரஹ்) அவர்களிடமிருந்தும், அன்னார் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தும் (ஹிஷாம் பின் உர்வா "அன்' அபீஹி "அன்' ஆயிஷா) அறிவிக்கும் அறிவிப்பாளர்தொடரை எடுத்துக்கொள்வோம். இதில் ஹிஷாம் (ரஹ்) அவர்கள் தம் தந்தை உர்வா (ரஹ்) அவர்களிடமிருந்தும் உர்வா (ரஹ்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தும் ஆயிஷா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்தும் இந்த ஹதீஸைச் செவியேற்றார்கள் என உறுதியாக நாம் அறிகிறோம். ஆனால், ஹிஷாம் (ரஹ்) அவர்கள் தம் தந்தையிடமிருந்து அறிவிக்கும் ஓர் அறிவிப்பில் "நான் செவியேற்றேன்'என்றோ, "எனக்கு (என் தந்தை) அறிவித்தார்' என்றோ கூறியிருக்காவிட்டால் ஹிஷாமுக்கும் அவருடைய தந்தை உர்வாவுக்குமிடையே இன்னோர் அறிவிப்பாளர் இருந்து, அவர் ஹிஷாமுடைய தந்தையிடம் அந்த ஹதீஸைக் கேட்டு ஹிஷாமுக்கு அறிவித்திருக்கலாம்; ஹிஷாம் நேரடியாகத் தம் தந்தையிடம் அதைக் கேட்டிருக்கமாட்டார். இந்நிலையில், இடையில் அறிவிப்பாளர் விடுபட்டதை அறிவிக்க விருப்பமில்லாமல் தாம் யாரிடம் கேட்டார் என்பதை ஹிஷாம் கூறியிருக்க மாட்டார். (நேரடியாகத் தந்தையிடம் கேட்டதைப் போன்றே காட்டியிருப்பார்.) இதைப் போன்றே, ஹிஷாமுடைய தந்தை உர்வாவுக்கும் ஆயிஷா (ரலி) அவர்களுக்கும் இடையே ஓர் அறிவிப்பாளர் விடுபட்டிருக்க இடமுண்டு. ஏன், எந்த ஹதீஸின் அறிவிப்பாளர் தொடரிலெல்லாம், ஒருவர் மற்றவரிடமிருந்து செவியேற்றதற்கான குறிப்பு இல்லையோ அதிலெல்லாம் இதே நிலை இருக்க இடமுண்டு.

பொதுவாக, அறிவிப்பாளர்களில் ஒருவர் மற்றொருவரிடமிருந்து அடிக்கடி ஹதீஸ்களைச் செவியேற்றுள்ளார் என்று தெரியும்போது, எப்போதாவது சில வேளைகளில் சில ஹதீஸ்களை அவரிடமிருந்து நேரடியாகக் கேட்காமல் வேறொருவர் வாயிலாகக் கேட்டிருக்க இடமுண்டு. அப்போது அந்த வேறொருவரின் பெயரைக் குறிப்பிடாமல் நேரடியாகக் கேட்டதைப் போன்றே அவர் அறிவிக்கலாம். அல்லது (மகிழ்ச்சி) வேகத்தில் அந்த வேறொருவரின் பெயரைக் குறிப்பிடவும் செய்யலாம்.

நாம் சொன்ன இந்த நடைமுறை நபிமொழித் துறையில் பரவலாக உள்ளது. நம்பத்தகுந்த நபிமொழியியலார் மற்றும் முக்கிய அறிஞர்களின் செயல்களிலிருந்து இதை அறியலாம். இனி, இம்முறையில் அறிவிக்கப்பெற்ற சில அறிவிப்பாளர்தொடர்களை (இன்ஷா அல்லாஹ்) நாம் குறிப்பிட விரும்புகிறோம். அவற்றைக் கொண்டு பெரும்பாலானவற்றின் நிலை என்ன என்பதைக் கணிக்க முடியும்.

092 அய்யூப் அஸ்ஸக்தியானீ, அப்துல்லாஹ் பின் அல்முபாரக், வகீஉ பின் அல்ஜர்ராஹ் மற்றும் இப்னு நுமைர் (ரஹ்) உள்ளிட்ட பலர் ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்களிடமிருந்தும், ஹிஷாம் தம் தந்தை உர்வா (ரஹ்) அவர்களிடமிருந்தும், உர்வா ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தும் (பின்வருமாறு) அறிவிக்கிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஹ்ராம் கட்டியிருந்தபோதும், இஹ்ராம் கட்டாமல் இருந்தபோதும் என்னிடம் இருந்தவற்றிலேயே நல்ல மணமுடைய வாசனைப் பொருளை அவர்களுக்கு நான் பூசி வந்தேன்.

இதே ஹதீஸை லைஸ் பின் சஅத், தாவூத் அல்அத்தார், ஹுமைத் பின் அல்அஸ்வத், உஹைப் பின் காலித் மற்றும் அபூஉசாமா (ரஹ்) ஆகியோர் ஹிஷாம் (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கின்றனர். ஹிஷாம் (தம் சகோதரர்) உஸ்மான் பின் உர்வா (ரஹ்) அவர்களிடமிருந்தும், உஸ்மான் (தம் தந்தை) உர்வா (ரஹ்) அவர்களிடமிருந்தும், உர்வா ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தும் அறிவிக்கிறார்கள்.

093 ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்கள் தம் தந்தை உர்வா பின் ஸுபைர் (ரஹ்) அவர்களிடமிருந்தும், உர்வா அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தும் அறிவிக்கிறார்கள்; ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: நபி (ஸல்) அவர்கள் இஃதிகாஃப் இருக்கும்போது (பள்ளிவாசலுக்குள்ளிருந்து) தமது தலையை, மாதவிடாய் ஏற்பட்டிருந்த என் பக்கம் நீட்டுவார்கள். நான் அவர்களுக்குத் தலைவாரிவிடுவேன்.

இதே ஹதீஸை மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்கள் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்தும்,ஸுஹ்ரீ அவர்கள் உர்வா (ரஹ்) அவர்களிடமிருந்தும், உர்வா (ரஹ்) அவர்கள் அம்ரா (ரஹ்) அவர்களிடமிருந்தும்,அம்ரா அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தும், ஆயிஷா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்தும் அறிவித்துள்ளனர்.

094 இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) மற்றும் சாலிஹ் பின் அபீஹஸ்ஸான் (ரஹ்) ஆகியோர் அபூசலமா (ரஹ்) அவர்களிடமிருந்தும், அபூசலமா அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தும் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் தாம் நோன்பு நோற்றிருக்கும் போது (என்னை) முத்தமிட்டுள்ளார்கள்.

நோன்பு நோற்றிருக்கும்போது (மனைவியை) முத்தமிடுவது தொடர்பான மேற்கண்ட ஹதீஸை அறிவிக்கும்போது யஹ்யா பின் அபீகஸீர் (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: எனக்கு அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களும், அபூசலமா அவர்களுக்கு உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களும், அன்னாருக்கு உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களும், உர்வா அவர்களுக்கு ஆயிஷா (ரலி) அவர்களும் "நபி (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருக்கும்போது என்னை முத்தமிட்டுள்ளார்கள்' என்று அறிவித்துள்ளனர்.

095 சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) முதலானோர் அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்களிடமிருந்தும், அம்ர் அவர்கள் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தும் (பின்வருமாறு) அறிவித்துள்ளனர்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குக் குதிரை இறைச்சியை உண்ண அனுமதியளித்தார்கள்; (நாட்டுக்) கழுதை இறைச்சியை உண்ண வேண்டாமெனத் தடைவிதித்தார்கள்.

இதே ஹதீஸை ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்களிடமிருந்தும், அம்ர் அவர்கள் முஹம்மத் பின் அலீ (ரஹ்) அவர்களிடமிருந்தும், முஹம்மத் பின் அலீ அவர்கள் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தும், ஜாபிர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்தும் அறிவித்துள்ளனர்.

இத்தகைய அறிவிப்புகள் அதிக எண்ணிக்கையில் வந்துள்ளன. அறிவுடையோர்க்கு நாம் மேலே குறிப்பிட்ட சில உதாரணங்களே போதுமானவை ஆகும்.

நிலைமை இவ்வாறிருக்க, அறிவிப்பாளர்களில் ஒருவர் மற்றவரிடமிருந்து கேட்டார் என்று உறுதியாகத் தெரியாதபோது அந்த ஹதீஸ் பலவீனமானதுதான் என்று தீர்மானிக்க, இடையில் அறிவிப்பாளர் பெயர் விடுபட்டிருப்பதற்கான (முர்சலாக இருப்பதற்கான) வாய்ப்பே போதும் என்று அந்தச் சிலர் கூறியுள்ளனர். அப்படியானால், ஒருவர் மற்றவரிடமிருந்து செவியேற்றார் என்று தெரியும் போதுகூட, செவியேற்றதைப் பற்றிய குறிப்பு ஹதீஸில் இடம்பெறாதவரை அந்த (முஅன்அன்) ஹதீஸை ஏற்க முடியாது என்று சொல்ல வேண்டிய கட்டாயம் நேரும். ஏனெனில், நாம் முன்பு கூறியதைப்போன்று, ஹதீஸ் அறிவிப்பாளர்கள் தமக்கு அறிவித்தவரின் பெயரை (அவரிடமிருந்து செவியேற்றிருந்தும் கூட) குறிப்பிடாமல் இடையில் விட்டுவிடுவதும் உண்டு. இன்னும் சில நேரங்களில் (மகிழ்ச்சி) வேகத்தில் தாம் கேட்ட பிரகாரமே அறிவிப்பாளர் பெயரைக் குறிப்பிடுவதும் உண்டு. அவர்கள் இப்படிக் கீழே இறங்குவதும் உண்டு; அப்படி மேலே ஏறுவதும் உண்டு. முன்பே இதை நாம் விவரித்துள்ளோம்.

அறிவிப்பாளர் தொடர்களில் உண்மையானவை எவை, போலியானவை எவை? என ஆராயுந்திறன் படைத்த முன்னோர்களான அய்யூப் அஸ்ஸக்தியானீ (ரஹ்), இப்னு அவ்ன் (ரஹ்), மாலிக் பின் அனஸ் (ரஹ்), ஷுஅபா பின் அல்ஹஜ்ஜாஜ் (ரஹ்), யஹ்யா பின் சயீத் அல்கத்தான் (ரஹ்), அப்துர் ரஹ்மான் பின் மஹ்தீ (ரஹ்) மற்றும் அவர்களுக்குப் பின் வந்த நபிமொழி அறிஞர்கள் பலரும் (இவர்கள் வாதிடுவதைப் போன்று) ஒரு ஹதீஸின் அறிவிப்பாளர் தொடரில் இடம்பெற்றுள்ள ஒருவர் மற்றவரிடமிருந்து நேரடியாகச் செவியுற்றாரா என்று துருவி ஆராய்ந்ததாக நாம் அறியவில்லை.
ஆனால், ஹதீஸ் அறிவிப்பில் இருட்டடிப்பு ("தத்லீஸ்') செய்வதில் பிரசித்திபெற்றவராக ஒருவர் இருந்தால், அவர் மற்றவரிடமிருந்து கேட்டாரா? என்பது குறித்து அவர்கள் ஆராய்வதுண்டு.அந்த இருட்டடிப்பு வேலைக்குத் தாமும் துணைபோய்விடக்கூடாது என்பதே அதற்குக் காரணம். இதன்றி, இருட்டடிப்புச் செய்யாத அறிவிப்பாளர்கள் விஷயத்திலும் இதே நடைமுறையைக் கையாண்டார்கள் என்பதற்கு நாம் மேலே குறிப்பிட்ட அறிஞர்களிடமோ மற்ற அறிஞர்களிடமோ எந்தச் சான்றையும் நாம் காணவில்லை.

எடுத்துக்காட்டாக, அப்துல்லாஹ் பின் யஸீத் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சந்தித்த நபித்தோழர் ஆவார்கள். அன்னார் ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி), அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) ஆகிய இருவரிடமிருந்தும் நபிமொழிகளை அறிவித்துள்ளார்கள்.ஆனால், அவர்கள் இருவரிடமிருந்து அன்னார் எதையும் செவியேற்றதாக எந்த அறிவிப்பிலும் காணப்படவில்லை. அப்துல்லாஹ் பின் யஸீத் (ரலி) அவர்கள் ஹுதைஃபா (ரலி) அவர்களுடன் அல்லது அபூமஸ்ஊத் (ரலி) அவர்களுடன் நேரடியாக உரையாடியதாகவோ இருவரையும் சந்தித்ததாகவோ எந்த அறிவிப்பிலிருந்தும் நம்மால் அறிய முடியவில்லை.

அதே நேரத்தில், ஹுதைஃபா (ரலி), அபூமஸ்ஊத் (ரலி) ஆகியோரிடமிருந்து அப்துல்லாஹ் பின் யஸீத் (ரலி) அவர்கள் அறிவித்துள்ள இந்த ஹதீஸ்கள் பலவீனமானவை எனக் கல்வியாளர்கள் எவரும் அன்றும் சரி; இன்றும் சரி குறை கூறியதில்லை. மாறாக, இது போன்ற அறிவிப்புகளை வலுவான அறிவிப்பாளர்தொடர் வரிசையில் சேர்த்திருப்பதுடன், ஆதாரங்களாகவும் அவற்றை அவர்கள் பயன்படுத்தியுள்ளனர்.
ஆனால், இந்த அறிவிப்புகளெல்லாம், நாம் முன்பு குறிப்பிட்ட சிலரது கூற்றுப்படி பலவீனமானவையாகவும் வீணானவையாகவும் கருதப்பட வேண்டிய நிலை உருவாகும். ஒருவர் யாரிடமிருந்து அறிவிக்கிறாரோ அவரிடம் நேரடியாகச் செவியேற்றிருக்க வேண்டும் என இவர்கள் கட்டாயப்படுத்துவதே இதற்குக் காரணமாகும். இவர்களது கூற்றுப்படி பலவீனமானவை என்று கருதப்படும் அதேவேளையில், கல்வியாளர்களிடம் சரியானவைதாம் என்று அறிவிக்கப்பட்டுள்ள இத்தகைய செய்திகளை நாம் பட்டியலிடுவதென்றால் அது நீண்டுகொண்டே போகும்; சிரமமும்கூட. இருப்பினும், நமது கூற்றுக்கு அடையாளமாக ஒரு சிலவற்றை இங்கே குறிப்பிட விரும்புகின்றோம்.

அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) மற்றும் அபூராஃபி அஸ்ஸாயிஃக் (ரஹ்) ஆகிய இருவரும் அறியாமைக் காலத்தைக் கண்டவர்கள்; பத்ருப் போரில் கலந்துகொண்ட (முக்கிய) நபித்தோழர்களின் தோழமையைப் பெற்றவர்கள்; மேலும்,அவர்களிடமிருந்து நபிமொழிகள் பலவற்றை அறிவித்தவர்கள். பின்னர் அவர்கள் இருவரும் (பத்ருப் போரில் கலந்து கொள்ளாத)அபூஹுரைரா (ரலி), இப்னு உமர் (ரலி) போன்றோரிடமிருந்தும் நபி மொழிகளை அறிவித்தனர்.
இவர்கள் (அபூஉஸ்மான், அபூராஃபி) ஒவ்வொருவரும் உபை பின் கஅப் (ரலி) அவர்களிடமிருந்தும் நபிமொழிகளை அறிவித்துள்ளனர். ஆனால், அவர்கள் இருவரும் எந்த ஓர் அறிவிப்பிலும் "உபை பின் கஅப் (ரலி) அவர்களை நாங்கள் நேரடியாகச் சந்தித்தோம்" என்றோ "அவர்களிடமிருந்து செவியேற்றோம்" என்றோ கூறியதாக நாம் காணவில்லை.

அபூஅம்ர் அஷ்ஷைபானீ (ரஹ்) அவர்கள் அறியாமைக் காலத்திலும் நபி (ஸல்) அவர்களின் காலத்திலும் வாழ்ந்திருக்கிறார்கள். அன்னாரும் அபூமஅமர் அப்துல்லாஹ் பின் சக்பரா (ரஹ்) அவர்களும் அபூமஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்து தலா இரண்டு நபிமொழிகளை அறிவித்துள்ளார்கள்.

உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்கள் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்தும், உம்மு சலமா (ரலி) அவர்கள் தம் கணவர் நபி (ஸல்) அவர்களிடமிருந்தும் ஒரு நபிமொழியை அறிவித்துள்ளார்கள். ஆனால், உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்கள் நபி (ஸல்) அவர்களது காலத்தில் சிறு குழந்தையாக இருந்துள்ளார்கள்.
கைஸ் பின் அபீஹாஸிம் (ரஹ்) அவர்கள் நபி (ஸல்) அவர்களது காலத்தை அடைந்தவர்கள்.அன்னார் அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் வழியாக மூன்று நபிமொழிகளை அறிவித்துள்ளார்கள்.

அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரஹ்) அவர்கள் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடமிருந்து ஹதீஸை மனனமிட்டுள்ளார்கள்; அலீ (ரலி) அவர்களின் தோழமையைப்

பெற்றவர்கள். அன்னார் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்து ஒரு நபிமொழியை அறிவித்துள்ளார்கள்.

ரிப்ஈ பின் ஹிராஷ் (ரஹ்) அவர்கள் இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் வழியாக இரண்டு நபிமொழிகளையும்,அபூபக்ரா (ரலி) அவர்கள் வழியாக ஒரு நபிமொழியையும் அறிவித்துள்ளார்கள். அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களிடமிருந்தும் ஹதீஸ்களை செவியுற்று அன்னார் அறிவித்துள்ளார்கள்.

நாஃபிஉ பின் ஜுபைர் பின் முத்இம் (ரஹ்) அவர்கள் அபூஷுரைஹ் அல்குஸாயீ (ரலி) அவர்களிடமிருந்து ஒரு நபிமொழியை அறிவித்துள்ளார்கள்.

நுஅமான் பின் அபீஅய்யாஷ் (ரஹ்) அவர்கள் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் வழியாக மூன்று நபிமொழிகளை அறிவித்துள்ளார்கள்.

அதாஉ பின் யஸீத் அல்லைஸீ (ரஹ்) அவர்கள் தமீம் அத்தாரீ (ரலி) அவர்கள் வழியாக ஒரு நபிமொழி அறிவித்துள்ளார்கள்.

சுலைமான் பின் யசார் (ரஹ்) அவர்கள் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் வழியாக ஒரு நபிமொழியை அறிவித்துள்ளார்கள்.

ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் அல் ஹிம்யரீ (ரஹ்) அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வாயிலாகப் பல நபிமொழிகளை அறிவித்துள்ளார்கள்.

மேற்கண்ட நபித்தோழர்களிடமிருந்து நபிமொழிகளை அறிவிக்கும் இந்த நபித்தோழர்களின் நண்பர்களில் (தாபிஉகள்) எவரும் சம்பந்தப்பட்ட ஹதீஸை அந்த நபித்தோழரிடமிருந்து நேரடியாகச் செவியுற்றார்கள் என்பதற்கோ அல்லது அவர்களை நேரடியாகச் சந்தித்தார்கள் என்பதற்கோ அந்த அறிவிப்புகளில் எந்தக் குறிப்பும் காணப்படவில்லை. ஆனால்,நபிமொழி மற்றும் நபிமொழி அறிவிப்பாளர் பற்றிய அறிவு படைத்தவர்கள் இவை அனைத்தும் உண்மையான அறிவிப்பாளர்தொடர் என்றே கருத்துத் தெரிவித்துள்ளனர். இவற்றில் எதையும் அவர்கள் பலவீனமானதாக அறிவிக்கவில்லை. மேலும், அறிவிப்பாளர்களில் ஒருவர் மற்றவரிடம் நேரடியாகச் செவியேற்றாரா, என அவர்கள் தேடிக் கொண்டிருக்கவுமில்லை.
ஏனெனில், இவ்வறிவிப்புகளில் இடம்பெற்றுள்ள ஒவ்வோர் அறிவிப்பாளரும் மற்ற அறிவிப்பாளரிடமிருந்து நபிமொழியைச் செவியேற்றிருக்க சாத்தியக்கூறுகள் உள்ளன. அதை நிராகரிக்க முடியாது. ஏனென்றால், இவர்கள் அனைவரும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் ஆவர்.

ஆகவே, நாம் குறிப்பிட்ட அந்தச் சிலர் ஒரு ஹதீஸை பலவீனப்படுத்த என்ன காரணம் கூறினார்களோ அது விவாதிக்கவே அருகதையற்றதாகும். இது பின்னாளில் கூறப்பட்ட புதிய கூற்றாகும். கல்வியாளர்களில் முன்னோர்கள் எவரும் இக்கருத்தை வெளியிடவில்லை. சொல்லப்போனால், அவர்களுக்குப் பின்வந்த அறிஞர்களும் கூட இதை

நிராகரித்துள்ளார்கள். நாம் இதுவரை எடுத்துக் கூறிய விளக்கத்திற்கு அதிகமாக மறுப்புச் சொல்ல வேண்டிய தேவையில்லை. ஏனெனில், இக்கூற்றின் தரமும் இதைக் கூறியவர்களின் தரமும் நாம் விவரித்த அளவில்தான் உள்ளது.

நபிமொழி அறிஞர்களின் கொள்கைக்கு எதிரான அக்கருத்தை வென்றெடுக்க வல்ல அல்லாஹ் உதவுவான். அவனையே நாம் முற்றிலும் சார்ந்திருக்கிறோம்.

# அத்தியாயம் : 02 - ஈமான்

**பாடம் : 1 இறைநம்பிக்கை (ஈமான்), அடிபணிதல் (இஸ்லாம்), அழகிய முறையில் செயலாற்றல் (இஹ்சான்) ஆகியவை பற்றிய விளக்கமும்; தூய்மையாளனும் உயர்ந்தோனுமாகிய அல்லாஹ் நிர்ணயித்துள்ள விதியை நம்புவதன் அவசியமும்; விதியை நம்பாதவனுக்கும் இஸ்லாத்துக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை' என்பதற்கான ஆதாரமும்; அவன் தொடர்பாக வந்துள்ள கண்டனமும்.**

அபுல்ஹுசைன் முஸ்லிம் பின் அல் ஹஜ்ஜாஜ் அல்குஷைரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அல்லாஹ்வின் உதவியால் ஆரம்பிக்கிறோம். அவனைக் கொண்டே நாம் நிறைவடைகிறோம். வல்லமை மிக்க (அந்த) அல்லாஹ்வின் நல்லருள் இன்றி நாம் நல்வாய்ப்பினைப் பெற இயலாது.

001 யஹ்யா பின் யஅமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(இராக்கிலுள்ள) பஸ்ரா நகரில் முதன் முதலில் விதி தொடர்பாக (அப்படி ஒன்று இல்லை என மாற்று)க் கருத்துத் தெரிவித்தவர் மஅபத் அல் ஜுஹனீ என்பவரேயாவார். இந்நிலையில், நானும் ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் அல்ஹிம்யரீ (ரஹ்) அவர்களும் ஹஜ்' அல்லது உம்ரா'ச் செய்வதற்காக (புனித மக்கா நோக்கி)ச் சென்றோம். அப்போது நாங்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தோழர்களில் யாரேனும் ஒருவரை நாம் சந்தித்தால் அவரிடம் விதி தொடர்பாக இவர்கள் கூறிவருவதைப் பற்றிக் கேட்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டோம். அப்போது பள்ளிவாசலுக்குள் நுழைந்து கொண்டிருந்த அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களைச் சந்திக்கும் வாய்ப்பு எங்களுக்குக் கிடைத்தது.
உடனே நானும் என் தோழரும் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களைச் சூழ்ந்துகொண்டு, எங்களில் ஒருவர் அவர்களுக்கு வலப்பக்கத்திலும் மற்றொருவர் அவர்களுக்கு இடப்பக்கத்திலும் இருந்துகொண்டோம். (நான் சரளமாகப் பேசக்கூடியவன் என்பதால் அன்னாருடன்) பேசுகின்ற பொறுப்பை என்னிடமே என் தோழர் விட்டுவிடுவார் என எண்ணி நானே பேசினேன். அபூஅப்திர் ரஹ்மான் அவர்களே! எங்கள் பகுதியில் சிலர் தோன்றியிருக்கின்றனர். அவர்கள் குர்ஆனை ஓதுகின்றனர்; தேடித் திரிந்து கல்வி பயில்கின்றனர்'' என அவர்களது (நல்ல) தன்மைகளை எடுத்துரைத்து, ஆனால், அவர்கள் விதி என்று ஏதுமில்லை எனவும், நடக்கின்ற காரியங்கள் (இறைவன் திட்டமிடாமலேயே) தற்செயலாகத்தான் நடக்கின்றன என்றும் அவர்கள் கருதுகிறார்கள் என்றேன்.
அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: இத்தகையோரை நீங்கள் சந்தித்தால், அவர்களை விட்டு நானும் என்னை விட்டு அவர்களும் விலகிவிட்டவர்கள் என அவர்களிடம் தெரிவித்துவிடுங்கள்.(இந்த) அப்துல்லாஹ் பின் உமர் யார்மீது சத்தியம் செய்வானோ அ(ந்த இறை)வன் மீது சத்தியமாக! அவர்களில் ஒருவரிடம் உஹுத் மலையளவு தங்கம் இருந்து, அதை அவர் (அறவழிகளில்) செலவிட்டாலும் அவர் விதியை

நம்பிக்கை கொள்ளாதவரை அவரிடமிருந்து அல்லாஹ் அதை ஏற்கமாட்டான் (என்றும் கூறிவிடுங்கள்).

பிறகு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: என் தந்தை உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள்:

நாங்கள் ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அருகில் இருந்தபோது தூய வெண்ணிற ஆடை அணிந்த, அடர் கறுப்பு நிறத்தில் தலைமுடி உடைய ஒரு மனிதர் வந்தார். பயணத்தில் வந்த எந்த அடையாளமும் அவரிடம் காணப்படவில்லை;எங்களில் எவருக்கும் அவரை (யார் என)த் தெரிய வில்லை. அவர் நபி (ஸல்) அவர்களின் அருகில் (சென்று), தம் முழங்கால்களை நபியவர்களின் முழங்கால்களோடு இணைத்துக்கொண்டு (நெருக்கமாக) அமர்ந்தார். அவர் தம் கைகளைத் தம் தொடைகள்மீது வைத்(து பவ்வியமாக அமர்ந்)தார். பிறகு முஹம்மதே! இஸ்லாம் (அடிபணிதல்) என்றால் என்னவென்று எனக்குத் தெரிவியுங்கள்'' என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இஸ்லாம் என்பது, அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும் முஹம்மத் (ஆகிய நான்) அல்லாஹ்வின் தூதர் என்றும் நீங்கள் உறுதி கூறுவதாகும். மேலும்,தொழுகையைக் கடைப்பிடிப்பதும், ஸகாத்தை வழங்கிவருவதும், ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பதும், சென்றுவர இயன்றால் இறையில்லம் கஅபாவில் ஹஜ்' செய்வதும் ஆகும்'' என்று பதிலளித்தார்கள். அதற்கு அந்த மனிதர் உண்மைதான்'' என்றார்.

அவர் இவ்வாறு கூறியதைக் கேட்டு, அவரே கேள்வியும் கேட்டுவிட்டு அவரே நபி (ஸல்) அவர்கள் அளித்த பதிலை உறுதிப்படுத்தவும் செய்கிறாரே என்று நாங்கள் வியப்படைந்தோம்.

அடுத்து அவர், ஈமான் (இறைநம்பிக்கை) பற்றி எனக்குத் தெரிவியுங்கள்'' என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,அல்லாஹ்வையும் அவனுடைய வானவர்களையும் அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும் இறுதி நாளையும் நீங்கள் நம்புவதாகும்; நன்மை, தீமை அனைத்தும் விதியின்படியே நடக்கின்றன என்றும் நீங்கள் நம்புவதுமாகும்'' என்று கூறினார்கள். அதற்கும் அம்மனிதர் உண்மைதான்'' என்றார்.

அடுத்து அம்மனிதர்,இஹ்சான் (அழகிய முறையில் செயலாற்றல்) பற்றி எனக்குத் தெரிவியுங்கள்'' என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,(இஹ்சான் என்பது,) அல்லாஹ்வை நீங்கள் பார்த்துக் கொண்டிருப்பதைப் போன்ற உணர்வுடன் வழிபடுவதாகும். ஏனெனில், அவனை நீங்கள் பார்க்கவில்லை என்றாலும், அவன் உங்களைப் பார்க்கின்றான்'' என்று பதிலளித்தார்கள்.

அம்மனிதர்,மறுமை (உலக அழிவு) நாளைப் பற்றி (அது எப்போது வரும் என) எனக்குத் தெரிவியுங்கள்'' என்று கேட்க, நபி (ஸல்) அவர்கள், கேள்வி கேட்கப்படுபவர் (அதாவது நான்), கேட்பவரைவிட (அதாவது உங்களைவிட) அதிகம் அறிந்தவர் அல்லர். (இது பற்றி எனக்கும் தெரியாது; உங்களுக்கும் தெரியாது.)'' என்று கூறினார்கள்.

அம்மனிதர்,மறுமை நாளின் அடையாளங்களைப் பற்றி எனக்குத் தெரிவியுங்கள்!'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,ஓர் அடிமைப் பெண் தன் எசமானியைப் பெற்றெடுப்பதும், காலில் செருப்பில்லாத, அரைகுறை ஆடைகளை அணிந்துள்ள ஏழைகளான ஆட்டு இடையர்கள் போட்டி போட்டுக்கொண்டு உயரமான கட்டடங்கள் கட்டுவதை நீங்கள் காண்பதும் ஆகும்'' என்று கூறினார்கள்.

பிறகு அம்மனிதர் சென்றுவிட்டார். நீண்ட நேரம் நான் (அங்கேயே) இருந்தேன். பின்னர் என்னிடம் நபி (ஸல்) அவர்கள்,உமரே! கேள்வி கேட்ட அந்த நபர் யார் என்று உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டார்கள். நான், அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்'' என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், அவர்தாம் (வானவர்) ஜிப்ரீல். உங்களுக்கு உங்களது மார்க்கத்தைக் கற்றுத் தருவதற்காக உங்களிடம் அவர் வந்தார்'' என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாக வந்துள்ளது.

002 யஹ்யா பின் யஅமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மஅபத் பின் காலித் அல்ஜுஹனீ என்பார் விதி தொடர்பாக (மாறுபட்ட) கருத்தைத் தெரிவித்த போது அதை நாங்கள் ஆட்சேபித்தோம். இந்நிலையில், நானும் ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களும் ஒரு தடவை ஹஜ்ஜுக்குச் சென்றோம்.
இதையடுத்து மேற்கண்ட ஹதீஸை அதன் அறிவிப்பாளர்தொடர் (இஸ்னாத்) உடன் அப்படியே முழுமையாகக் கூறுகிறார்கள். ஆனால், அதில் சிற்சில வார்த்தைகளில் கூடுதல் குறைவு உண்டு.- இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

003 அப்துல்லாஹ் பின் புரைதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யஹ்யா பின் யஅமர் (ரஹ்) மற்றும் ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) ஆகியோர், நாங்கள் (ஹஜ்ஜுக்குச் சென்றிருந்தபோது) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களைச் சந்தித்தோம். அப்போது விதியைப் பற்றியும் அது குறித்து அவர்கள் (மஅபதும் அவர் ஆதரவாளர்களும்) சொல்லிக்கொண்டிருப்பதைப் பற்றியும் குறிப்பிட்டோம்'' என்று கூறிவிட்டு, உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் (மேற்கண்ட) ஹதீஸிலுள்ளபடி அறிவித்தனர். ஆனால், அதைவிடச் சற்றுக் கூடுதலாகவும் சில இடங்களில் சற்றுக் குறைத்தும் அறிவித்தனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

004 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

005 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நாள் மக்கள் முன் வந்திருந்தார்கள். அப்போது ஒரு மனிதர் அவர்களிடம் வந்து,அல்லாஹ்வின் தூதரே! ஈமான் (இறைநம்பிக்கை) என்றால் என்ன?'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,அல்லாஹ்வையும் அவனுடைய வானவர் (மலக்கு)களையும், அவனுடைய வேதத்தையும், அவனது சந்திப்பையும், அவனுடைய தூதர்களையும் நீங்கள் நம்புவதும், (மரணத்திற்குப் பின்) இறுதியாக (அனைவரும்) உயிருடன் எழுப்பப்படுவதை நம்புவதும் ஆகும்'' என்று பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் தூதரே! இஸ்லாம்' (அடிபணிதல்) என்றால் என்ன?'' என்று அவர் கேட்டார். நபி (ஸல்) அவர்கள், இஸ்லாம் என்பது அல்லாஹ்வை நீங்கள் வணங்குவதும், அவனுக்கு நீங்கள் எதையும் இணைவைக்காமலிருப்பதும், கடமையான தொழுகையைக் கடைப்பிடிப்பதும், கடமையான ஸகாத்தை நிறைவேற்றி வருவதும், ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பதும் ஆகும்'' என்றார்கள்.

அம்மனிதர், அல்லாஹ்வின் தூதரே! இஹ்சான் (அழகிய முறையில் செயலாற்றல்) என்றால் என்ன?'' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், இஹ்சான் என்பது அல்லாஹ்வை நீங்கள் பார்த்துக்கொண்டிருப்பதைப் போன்ற உணர்வுடன் வழிபடுவதாகும். நீங்கள் அவனைப் பார்த்துக்கொண்டிராவிட்டாலும் அவன் உங்களைப் பார்த்துக்கொண்டிருக்கிறான்'' என்று பதிலளித்தார்கள்.அல்லாஹ்வின் தூதரே! மறுமை(நாள்) எப்போது வரும்?'' என்று அம்மனிதர் கேட்க, நபி (ஸல்) அவர்கள், கேள்வி கேட்கப்படுபவர் (அதாவது நான்), கேட்பவரைவிட (அதாவது உங்களைவிட) அதிகம் அறிந்தவர் அல்லர். ஆயினும், நான் உங்களுக்கு மறுமை நாளின் அடையாளங்கள் சிலவற்றை எடுத்துரைக்கிறேன் என்றார்கள்:
ஓர் அடிமைப் பெண் தன் எசமானைப் பெற்றெடுப்பாளாயின் அது மறுமையின் அடையாளங்களில் ஒன்றாகும். முழு ஆடையில்லாத, செருப்பணியாதவர்கள் எல்லாம் மக்களின் தலைவர்களாக இருந்தால் அதுவும் அதன் அடையாளங்களில் ஒன்றாகும். ஆட்டுக்குட்டிகளை மேய்ப்பவர்கள் போட்டி போட்டுக்கொண்டு உயரமான கட்டடங்களைக் கட்டினால் அதுவும் மறுமையின் அடையாளங்களில் ஒன்றாகும். (மறுமை நாள் எப்போது நிகழவிருக்கிறது எனும் அறிவானது) அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியாத ஐந்து விஷயங்களில் அடங்கும்.
பிறகு,நிச்சயமாக, மறுமை (நாள் எப்போது நிகழும் என்பது) பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. அவனே மழையை இறக்கிவைக்கிறான். இன்னும் அவன் கர்ப்பங்களில் உள்ளவற்றையும் (தீர்க்கமாக) அறிகின்றான். தாம் நாளை என்ன சம்பாதிப்போம் என்பதை (அவனைத் தவிர வேறு) யாரும் (உறுதியாக) அறிவதில்லை. எந்த இடத்தில் தாம் இறக்கப்போகிறோம் என்பதையும் எவரும் அறிவதில்லை. அல்லாஹ்தான் (இவற்றையெல்லாம்)நன்கறிந்தவன்; நுணுக்கமானவன்'' எனும் (31:34ஆவது) இறை வசனத்தை நபியவர்கள் ஓதிக் காட்டினார்கள்.

பின்னர் (கேள்வி கேட்ட) அம்மனிதர் திரும்பிச் சென்றுவிட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அந்த மனிதரைத் திரும்ப என்னிடம் அழைத்துவாருங்கள்'' என்று சொன்னார்கள். மக்கள் உடனே அவரைத் திரும்ப அழைத்துவரச் செல்லலாயினர். (அவரைத் தேடியும்) அவரை அவர்கள் எங்கேயும் காணவில்லை. பின்னர், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இ(ப்போது வந்து போன)வர், (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள்தாம். மக்களுக்கு அவர்களது மார்க்கத்(தின் அடிப்படைத் தத்துவத்)தை கற்றுத் தருவதற்காக அவர் வந்திருந்தார்'' என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

006 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாக முஹம்மத் பின் அப்தில்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களால் அறிவிக்கப்பெற்றுள்ளது. ஆயினும், அவர்களது அறிவிப்பில் (ஓர் அடிமைப் பெண் தன் எசமானைப் பெற்றெடுப்பாளாயின்...' என்பதற்கு பதிலாக) ஓர் அடிமைப் பெண் தன் கணவனைப் பெற்றெடுப்பாளாயின்...'' என்று காணப்படுகிறது.

007 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடம்), என்னிடம் (விளக்கம்) கேளுங்கள்'' என்று கூறினார்கள். மக்கள் அவர்களிடம் கேட்க அஞ்சினார்கள்.அப்போது (எங்கிருந்தோ) ஒரு மனிதர் வந்து நபி (ஸல்) அவர்களின் முழங்கால்களுடன் ஒட்டி அமர்ந்து,அல்லாஹ்வின் தூதரே! இஸ்லாம் (அடிபணிதல்) என்றால் என்ன?'' என்று கேட்டார்.நபி (ஸல்) அவர்கள் (இஸ்லாம் என்பது), அல்லாஹ்வுக்கு நீங்கள் எதையும் இணைவைக்காமலிருப்பதும், தொழுகையைக் கடைப்பிடிப்பதும், ஸகாத்தை வழங்கி வருவதும், ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பதும் ஆகும்'' என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) அம்மனிதர் உண்மைதான்'' என்று கூறினார்.

அல்லாஹ்வின் தூதரே! ஈமான் (இறை நம்பிக்கை) என்றால் என்ன?'' என்று அம்மனிதர் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,அல்லாஹ்வையும் அவனுடைய வானவர்களையும், அவனுடைய வேதத்தையும், அவனது சந்திப்பையும், அவனுடைய தூதர்களையும் நீங்கள் நம்புவதும் (மரணத்திற்குப் பின் இறுதியாக அனைவரும்) உயிருடன் எழுப்பப்படுவதை நீங்கள் நம்புவதும்,விதியை முழுமையாக நம்புவதும் ஆகும்'' என்று கூறினார்கள். அதற்கும் அம்மனிதர் உண்மை தான்'' என்றார்.

அல்லாஹ்வின் தூதரே! இஹ்சான் (அழகிய முறையில் செயலாற்றல்) என்றால் என்ன?'' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள்,அல்லாஹ்வை நீங்கள் பார்த்துக் கொண்டிருப்பதைப் போன்ற உணர்வுடன் அவனை நீங்கள் அஞ்சுவதாகும். ஏனெனில், நீங்கள் அவனைப் பார்த்துக்கொண்டிராவிட்டாலும் அவன் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கின்றான்'' என்று கூறினார்கள். அதற்கும் அம்மனிதர் உண்மைதான்'' என்று கூறினார். அல்லாஹ்வின் தூதரே! மறுமை (நாள்) எப்போது நிகழும்?'' என்று அம்மனிதர் கேட்க,நபி (ஸல்) அவர்கள், கேள்வி கேட்கப்படுபவர் (அதாவது நான்) கேள்வி கேட்பவரை விட (அதாவது உங்களைவிட) அதிகம் அறிந்தவர் அல்லர். ஆயினும், நான் உங்களுக்கு மறுமை நாளின் அடையாளங்கள் சிலவற்றை எடுத்துரைக்கிறேன் என்றார்கள்:
ஒரு (அடிமைப்) பெண் தன் எசமானையே பெற்றெடுப்பதை நீங்கள் கண்டால் அது மறுமை நாளின் அடையாளங்களில் ஒன்றாகும். காலில் செருப்பணியாத, உடலில் உடையணியாத, செவிடர்களையும் குருடர்களையும் (போன்று வாழ்கின்ற கல்வி கலாசாரமற்ற மக்களை) நீங்கள் பூமியின் அரசர்களாய்க் கண்டால் அதுவும் மறுமை நாளின் அடையாளங்களில் ஒன்றாகும். மேலும்,ஆட்டுக்குட்டிகளை மேய்க்கும் இடையர்கள் போட்டி போட்டுக்கொண்டு உயரமான கட்டடங்களைக் கட்டுவதை நீங்கள் கண்டால் அதுவும் மறுமையின் அடையாளங்களில் அடங்கும். இவ்வாறு கூறிவிட்டு, நிச்சயமாக, மறுமை (நாள் எப்போது நிகழும் என்பது) பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. அவனே மழையை இறக்கி வைக்கின்றான். இன்னும் அவனே கர்ப்பங்களில் உள்ளவற்றையும் (தீர்க்கமாக) அறிகின்றான்.தாம் நாளை என்ன சம்பாதிப்போம் என்பதை (அவனைத் தவிர வேறு) யாரும் (உறுதியாக) அறிவதில்லை. எந்த இடத்தில் தாம் இறக்கப்போகிறோம் என்பதையும் எவரும் அறிவதில்லை. அல்லாஹ்தான் (இவற்றையெல்லாம்) நன்கறிந்தவன்; நுணுக்கமானவன்'' எனும் (31:34ஆவது) இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

பிறகு (கேள்வி கேட்க வந்த) அம்மனிதர் எழுந்து (சென்று)விட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அந்த மனிதரை என்னிடம் திரும்ப அழைத்துவாருங்கள்'' என்று கூறினார்கள்.
உடனே அவர் தேடப்பட்டார். ஆனால், மக்களால் அவரைக் காண இயலவில்லை. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இ(ப்போது வந்துபோன)வர் (வானவர்)ஜிப்ரீல் (அலை) அவர்கள்தாம். நீங்கள் என்னிடம் (விளக்கம்) கேட்க முற்படாதபோது, (தம் வாயிலாக) நீங்கள் விளக்கம் பெற வேண்டும் என அவர் விரும்பினார். (அதற்காகவே அவர் வந்தார்)'' என்று கூறினார்கள்.

**பாடம் : 2 இஸ்லாத்தின் தூண்களில் ஒன்றான தொழுகை பற்றிய விளக்கம்.**

008 தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நஜ்த்வாசிகளில் ஒருவர் தலைவிரி கோலத்துடன் (பயணம் முடிந்த கையோடு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார். (அவர் சற்றுத் தொலைவில் இருந்ததால்) அவரது குரலை எங்களால் கேட்க முடிந்ததே தவிர, அவர் என்ன சொல்கிறார் என்பதை எங்களால் அறிய முடியவில்லை. பின்னர் அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நெருங்கினார். அப்போதுதான் அவர் இஸ்லாத்தைப் பற்றி வினவுகிறார் என்று எங்களுக்குப் புரிந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நாளொன்றுக்கு) பகலிலும் இரவிலும் ஐந்து தொழுகைகள் (நிறைவேற்றுவது இஸ்லாத்தின் விதியாகும்)'' என்று பதிலளித்தார்கள். உடனே அவர், "இவற்றைத் தவிர வேறு (தொழுகைகள்) ஏதேனும் என்மீது (விதியாக்கப்பட்டு) உள்ளதா?'' என்று கேட்க, "இல்லை; நீயாக விரும்பித்தொழும் (கூடுதலான) தொழுகையைத் தவிர'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அடுத்து ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பது (இஸ்லாத்தின் விதியாகும்) என நபி (ஸல்) அவர்கள் (அவரிடம்) கூறினார்கள். அவர், "இதைத் தவிர வேறு (நோன்புகள்) ஏதேனும் என்மீது (விதியாக்கப்பட்டு) உள்ளதா?'' என்று கேட்க, "இல்லை; நீயாக விரும்பி நோற்கும் (கூடுதலான) நோன்பைத் தவிர'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மேலும், ஸகாத் (வழங்குவது இஸ்லாத்தின் விதி என்பது) பற்றியும் அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எடுத்துக் கூறினார்கள். அவர், "இதைத் தவிர வேறு ஏதேனும் (தர்மம்) என்மீது (கடமையாக்கப்பட்டு) உள்ளதா?'' எனக் கேட்க, "இல்லை; நீயாக விரும்பிச் செய்யும் (கூடுதலான) தர்மத்தைத் தவிர'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அந்த மனிதர், "அல்லாஹ்வின் மீதாணையாக! இதற்கு மேல் நான் அதிகமாகச் செய்யவுமாட்டேன்; இதைக் குறைக்கவுமாட்டேன்''என்று கூறியபடி திரும்பிச் சென்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் (தாம் கூறியதில்) உண்மையாளராக இருந்தால் வெற்றியடைந்துவிட்டார்'' என்று சொன்னார்கள்.

009 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், (அவற்றின் இறுதியில்) "அவருடைய தந்தை மீதாணையாக! அவர் (தாம் கூறியதில்) உண்மையாளராக இருந்தால் வெற்றியடைந்துவிட்டார்' அல்லது "அவருடைய தந்தை மீதாணையாக! அவர் (தாம் கூறியதில்) உண்மையாளராக இருந்தால் சொர்க்கத்தில் நுழைந்துவிட்டார்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 3 இஸ்லாத்தின் தூண்(களான முக்கியக் கடமை)கள் குறித்துக் கேட்டறிதல்.

010 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவசியமற்ற) சில விஷயங்கள் குறித்துக் கேள்வி கேட்கக்கூடாதென தடை விதிக்கப்பட்டிருந்தோம். எனவே, (இந்தத் தடையை அறிந்திராத) கிராமவாசிகளில் (புத்திசாலியான) ஒருவர் வந்து நபியவர்களிடம் கேள்வி கேட்க வேண்டும்; நாங்களும் அதைச் செவியுற வேண்டும் என்பது எங்கள் ஆசையாக இருந்தது. அவ்வாறே (ஒரு நாள்) கிராமவாசிகளில் ஒருவர் வந்து, முஹம்மதே! உங்கள் தூதர் ஒருவர் எங்களிடம் வந்து, அல்லாஹ் உங்களை (மனித இனம் முழுமைக்கும்) தூதராக அனுப்பியுள்ளான் என்று நீங்கள் கூறுவதாக எங்களிடம் சொன்னாரே (அது உண்மையா)?'' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள் உண்மைதான்'' என்று கூறினார்கள்.

அந்தக் கிராமவாசி, வானத்தைப் படைத்தவன் யார்?'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்' என்று பதிலளித்தார்கள். பூமியைப் படைத்தவன் யார்?'' என்று அவர் கேட்டார். நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்' என்றார்கள். இந்த மலைகளை நட்டுவைத்து அதிலுள்ளவற்றை உருவாக்கியவன் யார்?'' என்று கிராமவாசி கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்' என்றார்கள். அவர், அப்படியானால், வானத்தைப் படைத்து, பூமியையும் படைத்து. இந்த மலைகளை நட்டும்வைத்தவன் மீதாணையாக! அல்லாஹ்தான் உங்களைத் தூதராக அனுப்பினானா?'' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள்,ஆம்' என்று சொன்னார்கள்.
அவர் இரவிலும் பகலிலும் (நாளொன்றுக்கு) ஐவேளைத் தொழுகைகள் எங்கள்மீது (கடமையாக்கப்பட்டு) உள்ளன என்று உங்கள் தூதர் கூறினாரே (அது உண்மையா)?'' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், உண்மைதான்'' என்றார்கள். உங்களைத் தூதராக அனுப்பி வைத்தவன் மீதாணையாக! அல்லாஹ்தான் உங்களுக்கு இவ்வாறு கட்டளையிட்டானா?'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், ஆம்' என்றார்கள்.
தொடர்ந்து அவர், நாங்கள் எங்கள் செல்வங்களில் இருந்து ஸகாத் வழங்குவது எங்கள்மீது (கடமையாக்கப்பட்டு) உள்ளது என்று உங்கள் தூதர் கூறினாரே!'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,உண்மைதான்'' என்றார்கள். உங்களைத் தூதராக அனுப்பி வைத்தவன் மீதாணையாக! அல்லாஹ்தான் இவ்வாறு உங்களுக்குக் கட்டளையிட்டானா?'' என்று அந்தக் கிராமவாசி கேட்டார். நபி (ஸல்) அவர்கள், ஆம்' என்றார்கள். அவர், ஒவ்வோர் ஆண்டும் ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பது எங்கள்மீது (கடமையாக்கப்பட்டு) உள்ளது என்று உங்கள் தூதர் கூறினாரே?'' என்று கேட்க, நபி (ஸல்) அவர்கள், உண்மைதான்'' என்றார்கள்.

உங்களைத் தூதராக அனுப்பிவைத்தவன் மீதாணையாக! அல்லாஹ்தான் இவ்வாறு உங்களுக்குக் கட்டளையிட்டானா?'' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள்,ஆம்' என்றார்கள். மேலும் உங்கள் தூதர் எங்களில் வசதிபடைத்தோர் இறையில்லம் கஅபாவில் ஹஜ் செய்வது (கடமையாக்கப்பட்டு) உள்ளது என்று கூறினாரே?'' என்று கேட்டார். அதற்கும் நபி (ஸல்) அவர்கள், உண்மைதான்''என்றார்கள்.
பிறகு அந்தக் கிராமவாசி, உங்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீதாணையாக! இவற்றைவிட நான் அதிகமாக்கவுமாட்டேன்; இவற்றிலிருந்து (எதையும்) குறைக்கவும் மாட்டேன்'' என்று கூறிவிட்டுத் திரும்பிச் சென்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள் அவர் (தாம் கூறியதில்) உண்மையாளராக இருந்தால் நிச்சயமாக சொர்க்கம் செல்வார்'' என்று கூறினார்கள்.

011 ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் (ரலி) அவர்கள்,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவசியமற்ற) சில விஷயங்கள் தொடர்பாகக் கேள்வி கேட்கக்கூடாதென நாங்கள் குர்ஆன் மூலம் தடை விதிக்கப்பெற்றிருந்தோம்'' என்று கூறிவிட்டு, மேற்கண்ட ஹதீஸைப் போன்றே தொடர்ந்து அறிவித்தார்கள்.

**பாடம் : 4 சொர்க்கம் செல்வதற்குக் காரணமாய் அமையும் இறைநம்பிக்கை (ஈமான்) பற்றிய விளக்கமும், தமக்குக் கட்டளையிடப்பட்டவற்றைக் கடைப்பிடித்து வாழ்ந்தவர் சொர்க்கம் செல்வார் என்பது பற்றிய விளக்கமும்.**

012 அபூஅய்யூப் அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பயணத்தில் இருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கிராமவாசி ஒருவர் இடைமறித்து அவர்களது ஒட்டகத்தின் கடிவாளத்தை' அல்லது மூக்கணாங்கயிற்றைப்' பிடித்துக்கொண்டார். பிறகு அல்லாஹ்வின் தூதரே' அல்லது முஹம்மதே 'என்னைச் சொர்க்கத்திற்கு நெருக்கமாகவும் நரகத்திலிருந்து விலக்கியும் வைக்குமே அத்தகைய ஒரு (நற்)செயலை எனக்குத் தெரிவியுங்கள்!'' என்று கேட்டார்.
நபி (ஸல்) அவர்கள் (ஏதும் பேசாமல்) அமைதியாக இருந்தார்கள். பிறகு தம் தோழர்களைக் கூர்ந்து பார்த்தார்கள். பின்னர் நிச்சயமாக இவர் நல்லருள் பெற்றுவிட்டார்' அல்லது நேர்வழியில் செலுத்தப்பட்டுவிட்டார்''' என்று கூறினார்கள்.
பிறகு நபி (ஸல்) அவர்கள் நீர் என்ன சொன்னீர்?'' என்று (அந்தக் கிராமவாசியிடம்) கேட்டார்கள். அவர் முன்பு கூறியதைப் போன்றே மீண்டும் கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வை (மட்டுமே) நீர் வழிபட வேண்டும்; அவனுக்கு எதையும் இணையாக்கக் கூடாது; (கடமையான) தொழுகையைக் கடைப்பிடிக்க வேண்டும்; (கடமையான) ஸகாத்தை வழங்க வேண்டும்; உறவைப் பேணி வாழ வேண்டும்'' என்று கூறிவிட்டு, ஒட்டகத்தை விட்டுவிடுவீராக (நாங்கள் பயணத்தைத் தொடர வேண்டும்)'' என்று கூறினார்கள்.

013 மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

014 அபூஅய்யூப் அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, எனக்கு ஒரு (நற்)செயலை அறிவியுங்கள். நான் அதைச் செயல்படுத்தினால் அது என்னைச் சொர்க்கத்திற்கு நெருக்கமாகவும் நரகத்திலிருந்து விலக்கியும் வைக்கவேண்டும்'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வையே நீங்கள் வழிபட வேண்டும்; அவனுக்கு எதையும் நீங்கள் இணையாக்கக் கூடாது; (கடமையான) தொழுகையை நீங்கள் கடைப்பிடிக்க வேண்டும்; (கடமையான) ஸகாத்தை நீங்கள் வழங்க வேண்டும்; உங்கள் உறவினரைப் பேணி வாழ வேண்டும்'' என்று கூறினார்கள்.
அந்த மனிதர் திரும்பிச் சென்றதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இவர் தமக்குக் கட்டளையிடப்பட்டவற்றைக் கடைப்பிடித்தால் கட்டாயம் இவர் சொர்க்கம் சென்றுவிடுவார்'' என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாக வந்துள்ளது.
அவற்றில், அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் இதை இவர் கடைப்பிடித்தால்...'' என்று இடம்பெற்றுள்ளது.

015 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமவாசி ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! எனக்கு ஒரு (நற்)செயலை அறிவியுங்கள்! நான் அதைச் செயல்படுத்தினால் சொர்க்கத்திற்குச் செல்ல வேண்டும்'' என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வையே நீங்கள் வழிபட வேண்டும்; அவனுக்கு எதையும் நீங்கள் இணையாக்கக் கூடாது; கடமையாக்கப்பட்ட தொழுகையை நீங்கள் கடைப்பிடிக்க வேண்டும்; கடமையாக்கப் பட்ட ஸகாத்தை நிறைவேற்ற வேண்டும்; ரமளான் மாதத்தில் நோன்பு நோற்க வேண்டும்'' என்று கூறினார்கள்.
அதற்கு அந்த மனிதர், என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! ஒரு போதும் இதைவிட அதிகமாக எதையும் நான் செய்யமாட்டேன்; இதிலிருந்து எதையும் நான் குறைக்கவும் மாட்டேன்'' என்று கூறினார்.
அவர் திரும்பிச் சென்றதும் நபி (ஸல்) அவர்கள், சொர்க்கவாசிகளில் ஒருவரைப் பார்ப்பது யாருக்கு மகிழ்ச்சி அளிக்குமோ அவர் (இதோ!) இவரைப் பார்த்துக்கொள்ளட்டும்'' என்று கூறினார்கள்.

016 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நுஅமான் பின் கவ்கல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! நான் கடமையான தொழுகையை நிறைவேற்றி, (மார்க்கத்தில்) விலக்கப் பட்டவற்றை விலக்கப்பட்டவை என்றும் அனுமதிக்கப்பட்டவற்றை அனுமதிக்கப்பட்டவை என்றும் ஏற்று வாழ்ந்தால் நான் சொர்க்கத்தில் நுழைந்துவிடுவேனா? கூறுங்கள்'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,ஆம்' என்றார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

017 மேற்கண்ட ஹதீஸ் வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் நுஅமான் பின் கவ்கல் (ரலி) அவர்கள் இதைவிட அதிகமாக வேறெதையும் நான் செய்யமாட்டேன்'' என்று கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

018 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், கடமையான தொழுகைகளை நான் தொழுது, ரமளான் மாதத்தில் நோன்பு நோற்று, (மார்க்கத்தில்) அனுமதிக்கப்பட்டவற்றை அனுமதிக்கப்பட்டவை என்றும் விலக்கப்பட்ட வற்றை விலக்கப்பட்டவை என்றும் ஏற்று வாழ்ந்து, இவற்றைவிட வேறெதையும் அதிகமாகச் செய்யாவிட்டாலும் நான் சொர்க்கத்தில் நுழைந்துவிடுவேனா?'' என்று கேட்டார்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள் ஆம்' என்றார்கள். அந்த மனிதர் அல்லாஹ்வின் மீதாணையாக! இவற்றைவிட வேறெதையும் நான் அதிகமாகச் செய்யமாட்டேன்'' என்று கூறினார்.

பாடம் : 5 இஸ்லாத்தின் (ஐம்)பெரும் தூண்களான முக்கியக் கடமைகள் பற்றிய விளக்கம்.

019 சஅத் பின் உபைதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் "இஸ்லாம் (எனும் மாளிகை) ஐந்து (தூண்கள்)மீது எழுப்பப்பட்டுள்ளது. அவை: 1.இறைவன் ஒருவன் என ஏற்பது. 2. தொழுகையைக் கடைப் பிடிப்பது. 3. ஸகாத் வழங்குவது. 4. ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பது. 5. ஹஜ் செய்வது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என்றார்கள்.
அப்போது ஒருவர், "(நான்காவதாக) ஹஜ் செய்வதையும் (ஐந்தாவதாக) ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பதையும்தானே (நபி அவர்கள் குறிப்பிட்டார்கள்)?'' என்று கேட்டார். அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "இல்லை. (நான்காவது) ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பது, (ஐந்தாவது) ஹஜ் செய்வது'' என்று கூறிவிட்டு, "இவ்வாறுதான் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியேற்றேன்'' என்று கூறினார்கள்.

020 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இஸ்லாம் ஐந்து (தூண்கள்)மீது நிறுவப்பட்டுள்ளது. அல்லாஹ்வையே வழிபட்டு, அவன் அல்லாதவற்றை நிராகரிப்பது;தொழுகையைக் கடைப்பிடிப்பது; ஸகாத் வழங்குவது; இறையில்லம் கஅபாவில் ஹஜ் செய்வவது; ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பது. (ஆகியனவே அந்த ஐந்தும்.)
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

021 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இஸ்லாம் ஐந்து (தூண்கள்)மீது நிறுவப்பட்டுள்ளது. (அவை:) அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும்,முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதரும் ஆவார்கள் என்றும் உறுதிமொழி அளிப்பது;தொழுகையைக்

கடைப்பிடிப்பது; ஸகாத் வழங்குவது; இறையில்லம் கஅபாவில் ஹஜ் செய்வது; ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பது.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

022 தாவூஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(காரிஜிய்யா கூட்டத்தைச் சேர்ந்த) ஒருவர் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், "நீங்கள் அறப்போரில் கலந்துகொள்வதில்லையே (ஏன்)?'' என்று கேட்டார். அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறக்கேட்டுள்ளேன்: நிச்சயமாக இஸ்லாம் ஐந்து (தூண்கள்)மீது நிறுவப்பட்டுள்ளது. (அவை:) அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று உறுதிமொழி அளிப்பது; தொழுகையைக் கடைப்பிடிப்பது; ஸகாத் வழங்குவது; ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பது; இறையில்லம் கஅபாவில் ஹஜ் செய்வது. (போரில் கலந்துகொள்வது இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில் ஒன்றல்ல. அதிலும் இப்போது நடைபெறும் போர்கள் வெறும் அரசியல் காரணங்களுக்காகவே நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன)'' என்று கூறினார்கள்.

**பாடம் : 6 அல்லாஹ்வையும், அவனுடைய தூதரையும், மார்க்க நெறிமுறைகளையும் நம்பிக்கை கொள்ளுமாறும், அதன்பால் (மக்களை) அழைத்தல், அதைக் குறித்துக் கேட்டுத் தெரிந்துகொள்ளல், அ(வ்வாறு தெரிந்துகொண்ட)தை மனனம் செய்து காத்தல், அதைப் பற்றிய தகவல் எட்டாத மக்களுக்கு அதை எட்டச்செய்தல் ஆகிய பணிகளை மேற்கொள்ளுமாறும் வந்துள்ள கட்டளை.**

023 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழுவினர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் "ரபீஆ' கோத்திரத்தின் இன்ன (அப்துல் கைஸ்) குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஆவோம். (உங்களைச் சந்திக்கவிடாமல்) உங்களுக்கும் எங்களுக்குமிடையே "முளர்' குலத்து இறைமறுப்பாளர்கள் தடையாக உள்ளனர். அதனால், (போர் புரியக்கூடாதெனத் தடை விதிக்கப்பட்ட) புனித மாதத்தில்தான் நாங்கள் உங்களிடம் வர முடியும்.ஆகவே, எங்களுக்குச் சில கட்டளைகளை அளியுங்கள். அவற்றை நாங்களும் கடைப்பிடித்து, எங்களுக்குப் பின்னால் (எங்கள் ஊரில்) இருப்பவர்களையும் அவற்றைக் கடைப்பிடித்து நடக்கும்படி அழைப்போம்" என்று சொன்னார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான்கு விஷயங்களை (செயல்படுத்தும்படி) உங்களுக்கு நான் கட்டளையிடுகின்றேன். நான்கு பொருட்களை உங்களுக்குத் தடை செய்கின்றேன்.
(கட்டளையிடும் நான்கு விஷயங்கள்:)
1. அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்வது. (பிறகு அதை மக்களுக்கு விவரித்துக் கூறும் முகமாக பின்வருமாறு கூறினார்கள்:) அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவார்கள் என்றும் உறுதிகூறுவது. 2. தொழுகையைக் கடைப்பிடிப்பது. 3. ஸகாத் வழங்குவது. 4. நீங்கள் அடைந்த

போர்ச் செல்வங்களில் ஐந்திலொரு பங்கை (அரசு பொதுநிதிக்கு)ச் செலுத்துவது (ஆகியவைதாம் அவை).
(மது ஊற்றிவைக்கப் பயன்படும்) சுரைக்காய்க் குடுவை, மண் சாடி, (பேரீச்ச மரத்தின் அடிப் பாகத்தைக் குடைந்து தயாரித்த) மரப்பீப்பாய், தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றை உபயோகிக்க வேண்டாமென உங்களுக்கு நான் தடை விதிக்கிறேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாக வந்துள்ளது.

அவற்றில், கலஃப் பின் ஹிஷாம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை"என்று கூறி, (அந்த நான்கில்) "ஒன்று' என (தமது விரலை) மடித்துக் காட்டினார்கள் என்று அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

024 அபூஜம்ரா நஸ்ர் பின் இம்ரான் அள்ளுபஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுக்கும் (அரபுமொழி தெரியாத) மக்களுக்கும் இடையே மொழிபெயர்ப்பாளனாக இருந்தேன். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் ஒரு பெண்மணி வந்து பழச்சாறு (மது) ஊற்றிவைக்கப் பயன்படுத்தப்படும் மண்பானை குறித்து (அதை வேறு உபயோகத்திற்குப் பயன்படுத்தலாமா? என)க் கேட்டார். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழுவினர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இத்தூதுக் குழுவினர் யார்?' அல்லது "இக்கூட்டத்தார் யார்?' என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "ரபீஆ' (குடும்பத்தினர்)" என்று பதிலளித்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இழிவுக்குள்ளாகாமலும் மன வருத்தத்திற்குள்ளாகாமலும் வருகைபுரிந்த சமூகத்தாரே! வருக! உங்கள் வரவு நல்வரவாகுக!" என்று (வாழ்த்துச்) சொன்னார்கள். அத்தூதுக் குழுவினர், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் வெகுதொலைவிலிருந்து உங்களிடம் வந்திருக்கிறோம். எங்களுக்கும் உங்களுக்குமிடையே "முளர்' குலத்து இறைமறுப்பாளர்களில் இன்ன குடும்பத்தார் (நாம் சந்திக்க முடியாதபடி) தடையாக உள்ளனர். (இதனால், போர் நிறுத்தம் நிகழும்) புனித மாதங்களில் தவிர வேறு மாதங்களில் நாங்கள் உங்களிடம் வர முடியாது. ஆகவே, எங்களுக்குத் தெளிவான சில கட்டளைகளை அளியுங்கள். அவற்றை நாங்கள் எங்களுக்குப் பின்னால் (ஊரில்) இருப்பவர்களுக்குத் தெரிவிப்போம்; அ(வற்றைச் செயல்படுத்துவ)தன் மூலம் நாங்களும் சொர்க்கம் செல்வோம்" என்றார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவர்களுக்கு நான்கு விஷயங்களைக் கட்டளையிட்டார்கள். நான்கு பொருட்களை(ப் பயன்படுத்த வேண்டாமென)த்தடை செய்தார்கள்: அல்லாஹ் ஒருவனையே நம்பிக்கை கொள்ளுமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டுவிட்டு, "அல்லாஹ்வை நம்பிக்கை கொள்வது என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்" என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும், முஹம்மத் (ஆகிய நான்) அல்லாஹ்வின் தூதர் என்றும் உறுதி கூறுவது (என விளக்கமளித்துவிட்டு); தொழுகையைக் கடைப்பிடிப்பது; ஸகாத் வழங்குவது; ரமளான் மாதம்

நோன்பு நோற்பது. அத்துடன், போரில் கிடைக்கும் பொருள்களிலிருந்து ஐந்திலொரு பங்கை (அரசுப் பொதுநிதிக்கு) நீங்கள் செலுத்திட வேண்டும்" என்று(ம்) கூறினார்கள்.
மது ஊற்றி வைக்கப்படும் பாத்திரங்களான சுரைக்காய்க் குடுவை, மண் சாடி மற்றும் தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றை (பயன்படுத்தக் கூடாதெனத்) தடை விதித்தார்கள். "இவற்றை நினைவில் வைத்து, உங்களுக்குப் பின்னால் இருப்பவர்களுக்கு அறிவித்து விடுங்கள்" என்றும் கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அறிவிப்பாளர் அபூஜம்ரா (ரஹ்) அவர்கள் சில நேரங்களில் "(பேரீச்சமரத்தின் அடிப் பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்படும்) மரப் பீப்பாய்' ("அந்நகீர்')என்றும், வேறு சில நேரங்களில் "தார் பூசப்பட்ட பாத்திரம்' (அல்முகய்யர்) என்றும் அறிவித்தார்கள்.
அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உங்களுக்குப் பின்னால் இருப்பவர்களுக்கு (அறிவித்துவிடுங்கள்)' என்பதுவரை மட்டுமே இடம்பெற்றுள்ளது. "தார் பூசப்பட்ட பாத்திரம்' ("அல்முகய்யர்') பற்றி அதில் காணப்படவில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

025 மேற்கண்ட ஹதீஸ் வேறு இரு அறிவிப்பாளர்தொடர்களிலும் வந்துள்ளது.
அவற்றில், "(மது ஊற்றிவைக்கப்படும் பாத்திரங்களான) சுரைக்காய்க் குடுவை, (பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்படும்) மரப் பீப்பாய், மண்சாடி மற்றும் தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் ஊறவைக்கப்படும் பானங்களுக்குத் தடை விதிக்கிறேன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

முஆத் அல்அம்பரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அப்துல் கைஸ் குலத்தின் (தலைவர்) அஷஜ் (எனும் முன்திர் பின் ஆயித்-ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறியதாக இடம்பெற்றுள்ளது:
(அஷஜ்ஜே!) அல்லாஹ் நேசிக்கக்கூடிய இரு குணங்கள் உங்களிடம் உள்ளன 1. அறிவாற்றல் 2. நிதானம்.

026 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்துல் கைஸ் குலத்தைச் சேர்ந்த சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "இறைவனின் தூதரே! நாங்கள் "ரபீஆ' குலத்தாரின் (இன்ன) குடும்பத்தார் ஆவோம். எங்களுக்கும் உங்களுக்குமிடையே "முளர்' குலத்து இறைமறுப்பாளர்கள் (நாம் சந்திக்க முடியாதபடி தடையாக) உள்ளனர். இதனால் (போர் நிறுத்தம் நிகழும்) புனித மாதங்களில் தவிர வேறு மாதங்களில் நாங்கள் உங்களிடம் வர முடியாது. ஆகவே, எங்களுக்கு ஒரு கட்டளையிடுங்கள். அதை(ச் செயல்படுத்துமாறு) எங்களுக்கு அப்பால் இருப்பவர்களுக்கு நாங்கள் கட்டளையிடுவோம். அதைக் கடைப்பிடித்து நடந்தால் நாங்களும் சொர்க்கம் செல்வோம்" என்று கூறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான்கு விஷயங்களை உங்களுக்கு நான் கட்டளையிடுகின்றேன். நான்கு பொருட்களை உங்களுக்குத் தடை செய்கின்றேன்: அல்லாஹ் ஒருவனையே வழிபடுங்கள். அவனுக்கு எதையும் இணையாக்காதீர்கள். தொழுகையைக் கடைப்பிடியுங்கள். ஸகாத் வழங்குங்கள்.

ரமளான் மாதத்தில் நோன்பு நோற்றுக்கொள்ளுங்கள். அத்துடன் போரில் கிடைக்கும் பொருட்களிலிருந்து ஐந்திலொரு பங்கை (அரசு பொதுநிதிக்கு)ச் செலுத்துங்கள்.
நான்கு பொருட்களை உங்களுக்கு நான் தடை செய்கிறேன். சுரைக்காய்க் குடுவை, மண்சாடி, தார் பூசப்பட்ட பாத்திரம் மற்றும் மரப் பீப்பாய் ("அந்நகீர்') ஆகியவைதாம் அவை" என்று கூறினார்கள்.
அப்போது மக்கள், "இறைவனின் தூதரே! "அந்நகீர் என்பது என்னவென்று தாங்கள் அறிவீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம் (அறிவேன்).பேரீச்சமரத்தின் அடி மரத்தைத் துளையிட்டு அதில் "சிறு பேரீச்சம் பழங்களை' அல்லது "பேரீச்சம் பழங்களை' நீங்கள் போட்டு வைப்பீர்கள். பிறகு அதில் தண்ணீரை ஊற்றுவீர்கள். அதன் கொதி நிலை அடங்கியதும் அதை நீங்கள் அருந்துவீர்கள். (அதை அருந்தியதும் போதையேற்றப்பட்டுவிடுகிறது.) எந்த அளவிற்கென்றால் "உங்களில் ஒருவர்' அல்லது"மக்களில் ஒருவர்' தம்முடைய தந்தையின் சகோதரர் மகனையே கூட வாளால் வெட்டிவிடுகின்றார்" என்று கூறினார்கள்.

அந்தத் தூதுக் குழுவினரிடையே இவ்வாறு காயமேற்பட்ட ஒரு மனிதர் இருந்தார். அவர் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வெட்கப்பட்டுக்கொண்டு அ(ந்தக் காயத்)தை மறைத்துக் கொண்டிருந்தேன்" என்று கூறுகிறார். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் (வேறு) எந்தப் பாத்திரத்தில்தான் அருந்துவோம்?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "வாய்ப்பகுதி சுருக்கிட்டுக் கட்டப்படும் தோல் பைகளில்" என்று கூறினார்கள். அதற்கு மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! எங்கள் நாட்டில் ஏராளமாகப் பெருச்சாளிகள் உள்ளன. அங்கு தோல் பைகள் சரிப்பட்டுவரா" என்று கூறினர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அவற்றைப் பெருச்சாளிகள் சாப்பிட்டாலும் சரியே! அவற்றைப் பெருச்சாளிகள் சாப்பிட்டாலும் சரியே! அவற்றைப் பெருச்சாளிகள் சாப்பிட்டாலும் சரியே!" என்று கூறினார்கள்.
மேலும், நபி (ஸல்) அவர்கள் அப்துல் கைஸ் குலத்தாரின் (தலைவர்) அஷஜ் (ரலி) அவர்களிடம் கூறினார்கள்:
உங்களிடம் அல்லாஹ் நேசிக்கின்ற இரு குணங்கள் உள்ளன. 1. அறிவாற்றல் 2. நிதானம்.
அறிவிப்பாளர் கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்த அப்துல் கைஸ் தூதுக் குழுவினரைச் சந்தித்த ஒருவர் (இந்த ஹதீஸை) நமக்கு அறிவித்தார்.

027 அபூநள்ரா முன்திர் பின் மாலிக் அல்அவகீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழுவினர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தது பற்றி மேற்கண்ட ஹதீஸிலுள்ளவாறே அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவித்தார்கள். ஆனால் அதில், (மரப் பீப்பாய் (அந்நகீர்) பற்றி விளக்கமளிக்கையில் நபி (ஸல்) அவர்கள்) "பேரீச்சமரத்தின் அடிமரத்தைக் குடைந்து அதனுள் "சிறு பேரீச்சம் பழங்களை' அல்லது "பேரீச்சம் பழத்தையும் தண்ணீரையும்' கலந்துவிடுவீர்கள்" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

"சிறு பேரீச்ச மரங்களை' அல்லது "பேரீச்சம் பழங்களை' என்று ஐயப்பாட்டுடன் அறிவிப்பாளர் சயீத் (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ள வாசகம் அதில் இடம்பெறவில்லை.
அந்தத் தூதுக் குழுவினரைச் சந்தித்த பலர் எனக்கு இதை அறிவித்தனர் என்று கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறினார்கள். (அவர்களில் ஒருவரான) அபூநள்ரா மேற்கண்டவாறு அறிவித்தார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

028 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழுவினர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் எங்களைத் தங்களுக்கு அர்ப்பணமாக்கட்டும்! எந்தெந்தக் குடிபானங்கள் எங்களுக்குத் தகும்?" என்று கேட்டார்கள்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "மரப் பீப்பாயில் ("அந்நகீரில்'-ஊற்றிவைக்கப்பட்ட பானத்தை) அருந்தாதீர்கள்" என்று கூறினார்கள். அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் எங்களைத் தங்களுக்கு அர்ப்பணமாக்கட்டும்! அந்நகீர் என்பது என்ன என்று தாங்கள் அறிவீர்களா?" என்று கேட்டார்கள்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "ஆம். பேரீச்சமரத்தின் அடிப்பாகத்தின் நடுவே துளையிடப் படுவதுதான்" என்று கூறிவிட்டு, "சுரைக்காய்க் குடுவையிலும் மண் சாடியிலும் நீங்கள் அருந்தாதீர்கள்.சுருக்குக் கயிற்றால் வாய்ப்பகுதி கட்டப்படும் தோல் பைகளையே பயன்படுத்துங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 7 இஸ்லாமிய உறுதிமொழிகள் மற்றும் நெறிமுறைகளை ஏற்குமாறு அழைப்பு விடுத்தல்.

029 முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை (யமன் நாட்டின் நீதி நிர்வாகத்தைக் கவனிக்க) அனுப்பிவைத்தபோது சொன்னார்கள்:

நீங்கள் வேதக்காரர்களில் ஒரு சமூகத்தாரிடம் செல்கிறீர்கள். அவர்களிடம் நீங்கள் (செல்லும் போது), அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும், நான் அல்லாஹ்வின் தூதர் என்றும் உறுதிமொழி அளிக்கும்படி அவர்களுக்கு அழைப்புவிடுங்கள். இதற்கு அவர்கள் கட்டுப்பட்டால், அல்லாஹ் அவர்கள்மீது ஒவ்வொரு நாளும் ஐந்து (நேரத்) தொழுகைகளைக் கடமையாக்கியுள்ளான் என்று அவர்களுக்குத் தெரிவியுங்கள். இதற்கும் அவர்கள் கட்டுப்பட்டால், அவர்கள்மீது அல்லாஹ் ஸகாத் (எனும் கட்டாய தர்மத்)தைக் கடமையாக்கியுள்ளான் என்றும், அது அவர்களில் செல்வர்களிடமிருந்து பெறப்பட்டு ஏழைகளுக்கு வழங்கப்பட வேண்டும் என்றும் அவர்களுக்குத் தெரிவியுங்கள். இதற்கும் அவர்கள் கட்டுப்பட்டால், (அவர்களிடம் ஸகாத்தை வசூலிக்கும்போது) அவர்களின் செல்வங்களில் (நடுத்தரமானவற்றை விடுத்து) உயர்ந்தவற்றை எடுத்துக்கொள்ள வேண்டாமென உங்களை நான் எச்சரிக்கிறேன். அநீதி இழைக்கப்பட்டவனின்

பிரார்த்தனைக்கு அஞ்சுங்கள். ஏனெனில், அவன் செய்யும் பிரார்த்தனைக்கும் அல்லாஹ்வுக்குமிடையே திரையேதுமில்லை.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

030 அபூமஅபத் (நாஃபித்-ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"நபி (ஸல்) அவர்கள் முஆத் (ரலி) அவர்களை யமன் நாட்டுக்கு அனுப்பியபோது "நீங்கள் ஒரு சமுதாயத்தாரிடம் செல்கிறீர்கள்...' என்று சொன்னார்கள்'' எனத் தொடங்கும் மேற்கண்ட ஹதீஸை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் முழுமையாக அறிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாக வந்துள்ளது.

031 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முஆத் (ரலி) அவர்களை யமன் நாட்டுக்கு அனுப்பிவைத்த போது சொன்னார்கள்:
நீங்கள் வேதக்காரர்களில் ஒரு சமுதாயத்தாரிடம் செல்கிறீர்கள். ஆகவே, அவர்களுக்கு நீங்கள் விடுக்கும் முதலாவது அழைப்பு, (ஏக இறைவனான) அல்லாஹ் ஒருவனையே வழிபடுங்கள் என்பதாகவே இருக்க வேண்டும். அவர்கள் அல்லாஹ்வை (ஏகன் என்று) ஏற்றுக்கொண்டால், அல்லாஹ் அவர்கள்மீது (நாளொன்றுக்கு) இரவிலும் பகலிலும் ஐந்து தொழுகைகளைக் கடமையாக்கியுள்ளான் என்று அவர்களுக்குத் தெரிவியுங்கள். தொழுகையை அவர்கள் நிறைவேற்றினால், அவர்களில் செல்வர்களாய் இருப்பவர்களிடமிருந்து வசூலிக்கப்பெற்று அவர்களில் ஏழைகளாயிருப்பவர்களிடையே விநியோகிக்கப்பட வேண்டிய ஸகாத்தை அல்லாஹ் அவர்கள்மீது கடமையாக்கியுள்ளான் என்று அவர்களுக்குத் தெரிவியுங்கள். இதற்கு அவர்கள் கட்டுப்பட்டால் அவர்களிடமிருந்து ஸகாத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள். ஆனால், மக்களின் செல்வங்களிலிருந்து உயர்ந்தவற்றைத் தவிர்த்துவிடுங்கள். (அவற்றை ஸகாத்தாகப் பெறாதீர்கள்).

பாடம் : 8 மக்கள் "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை; முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவார்கள்' என்று கூறி, தொழுகையைக் கடைப்பிடித்து, ஸகாத் வழங்கி, நபி (ஸல்) அவர்கள் கொண்டுவந்த அனைத்துக் கட்டளைகளையும் நம்பிக்கை கொள்ளாதவரை அவர்களுடன் போரிடுமாறு (இறைத் தூதருக்கு) இடப்பெற்ற உத்தரவு; அவ்வாறு செய்தவர் தகுந்த காரணம் இருந்தால் தவிர தமது உயிரையும் உடைமையையும் காத்துக்கொள்வார்; அவரது அந்தரங்கம் அல்லாஹ்விடம் விடப்படும் என்ற அறிவிப்பு; ஸகாத் முதலான இஸ்லாமியக் கடமைகளில் ஒன்றை மறுப்பவருடன் போரிடப்படும் என்ற அறிவிப்பு; ஆட்சித் தலைவர் இஸ்லாமிய அடையாளங்(களான சில விதி(முறை)களுக்கு முக்கியத்துவம் அளித்திடவேண்டும் என்ற உத்தரவு.

032 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்தபின் அபூபக்ர் (ரலி) அவர்கள் ஆட்சியாளர் ஆக்கப்பட்டதும் அரபுகளில் சிலர் (ஸகாத் வழங்க மறுத்ததன் மூலம்) இறை மறுப்பாளர்களாகிவிட்டனர். (அவர்களுடன் போர் தொடுக்க கலீஃபா அபூபக்ர் (ரலி) அவர்கள்

ஆயத்தமானார்கள். அப்போது) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை (லா இலாஹ இல்லல்லாஹ்) என்று (இந்த) மக்கள் கூறும்வரை அவர்களுடன் போரிடுமாறு நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். லா இலாஹ இல்லல்லாஹ் என்று கூறியவர் (தகுந்த காரணமிருந்தாலன்றி)தமது செல்வத்தையும் உயிரையும் என்னிடமிருந்து பாதுகாத்துக் கொள்வார். அவரது (அந்தரங்கம் பற்றிய) விசாரணை அல்லாஹ்விடமே உள்ளது." என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியிருக்கும்போது நீங்கள் எவ்வாறு (இறை நம்பிக்கை கொண்டுள்ள) இந்த மக்களுடன் போர் செய்ய முடியும்?'' என்று கேட்டார்கள். அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! தொழுகையையும் ஸகாத்தையும் வேறுபடுத்திப் பார்ப்போருடன் நிச்சயமாக நான் போர் செய்வேன். ஏனெனில் ஸகாத், செல்வத்திற்குரிய கடமையாகும். அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வழங்கிவந்த ஒட்டகத்தின் கயிற்றை இவர்கள் என்னிடம் வழங்க மறுத்தாலும் அதை மறுத்ததற்காக நான் இவர்களுடன் போர் செய்வேன்'' என்றார்கள். இது குறித்து உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! அபூபக்ர் (ரலி) அவர்களின் இதயத்தை, போர் (தொடுப்பதன் மீது உறுதியான முடிவு) செய்வதற்காக அல்லாஹ் விசாலமாக்கியிருந்ததை நான் கண்டுகொண்டேன். அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறியதே சரியானது என நான் விளங்கிக்கொண்டேன்'' என்று கூறினார்கள்.

033 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை (லா இலாஹ இல்லல்லாஹ்) என்று கூறும்வரை இந்த மக்களுடன் போரிடுமாறு எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. யார் "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை' என்று கூறிவிடுகிறாரோ அவர் –தகுந்த காரணம் இருந்தாலன்றி– தமது செல்வத்தையும் உயிரையும் என்னிடமிருந்து காத்துக் கொள்வார்.அவரது (அந்தரங்கம் குறித்த) விசாரணை அல்லாஹ்வின் பொறுப்பாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

034 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை (லா இலாஹ இல்லல்லாஹ்) என உறுதிமொழி கூறி, என்னையும் எனக்குக் கிடைத்துள்ள (மார்க்கத்)தையும் நம்புகின்றவரை இந்த மக்களுடன் போரிடுமாறு எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. இதை அவர்கள் செயல்படுத்தினால் (தகுந்த காரணம் இருந்தாலன்றி) தமது உயிரையும் செல்வத்தையும் என்னிடமிருந்து காத்துக்கொள்வார்கள். அவர்களது (அந்தரங்கம் குறித்த) விசாரணை அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

035 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை (லா இலாஹ இல்லல்லாஹ்) என்று கூறும்வரை இந்த மக்களுடன் போரிடுமாறு எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. அவர்கள் "லா இலாஹ இல்லல்லாஹ்' என்று சொல்லிவிட்டால் (தகுந்த காரணம் இருந்தாலன்றி) என்னிடமிருந்து தம் உயிரையும் உடைமைகளையும் பாதுகாத்துக்கொள்வார்கள். அவர்களது (அந்தரங்கம் குறித்த) விசாரணை அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது'' என்று கூறினார்கள். பிறகு, "(நபியே!) நிச்சயமாக நீர் நினைவூட்டுபவர்தாம். அவர்கள்மீது ஆதிக்கம் செலுத்துபவர் அல்லர்'' எனும் இறை வசனங்களை (88:21, 22) ஓதிக் காட்டினார்கள்.
வேறு சில அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

036 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும் முஹம்மத் (ஆகிய நான்) அல்லாஹ்வின் தூதர் ஆவேன் என்றும் உறுதிமொழி கூறி, தொழுகையைக் கடைப்பிடித்து, ஸகாத்தும் வழங்கும்வரை இந்த மக்களுடன் போரிடுமாறு எனக்குக் கட்டளை இடப்பட்டுள்ளது. இவ்வாறு அவர்கள் செய்துவிட்டால் (தகுந்த காரணம் இருந்தாலன்றி) என்னிடமிருந்து தம் உயிரையும் உடைமைகளையும் பாதுகாத்துக் கொள்வார்கள். அவர்களது (அந்தரங்கம் குறித்த) விசாரணை அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

037 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறி னார்கள்:
அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று யார் (உறுதிமொழி) கூறி, (மக்களால்) வழிபாடு செய்யப்படும் இதர தெய்வங்களை நிராகரித்துவிடுகிறாரோ அவரது உடைமையும் உயிரும் பாதுகாப்புப் பெற்றுவிடும். அவரது (அந்தரங்கம் குறித்த) விசாரணை அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது.
இதைத் தாரிக் பின் அஷ்யம் பின் மஸ்ஊத் அல்அஷ்ஜயீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

038 மேற்கண்ட ஹதீஸ் தாரிக் பின் அஷ்யம் (ரலி) அவர்களிடமிருந்தே வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "யார் ஓரிறைக் கொள்கையை ஏற்று...' என்று ஹதீஸ் ஆரம்பிக்கிறது.

**பாடம் : 9 மரணத் தறுவாயில் உள்ள ஒருவர், உயிர் பிரிவதற்கு சற்று முன்னர் இஸ்லாத்தை ஏற்றால்கூட அது செல்லும்;இணைவைப்பாளர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோருவதற்கு அனுமதி மறுக்கப்பட்டது; இணைவைப்பாளராக உள்ள நிலையில் இறந்து போனவர் நரகவாசிகளில் ஒருவர்தாம். அவரை எந்த வகையிலும் காப்பாற்ற முடியாது- என்பதற்கான ஆதாரம்.**

039 முஸய்யப் பின் ஹஸ்ன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய பெரிய தந்தை) அபூதாலிப் அவர்களுக்கு மரண வேளை நெருங்கிவிட்டபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரிடம் வந்தார்கள். அங்கே, அவரருகே அபூஜஹ்லையும், அப்துல்லாஹ் பின் அபீஉமய்யா பின் அல்முஃகீராவையும் கண்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் பெரிய தந்தையே! அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை (லா இலாஹ இல்லல்லாஹ்) என்று சொல்லுங்கள்! இந்த (ஏகத்துவ உறுதிமொழிக்கான) சொல்லை வைத்து நான் உங்களுக்காக அல்லாஹ்விடம் சாட்சியம் கூறுவேன்'' என்று சொன்னார்கள். அப்போது அபூஜஹ்லும் அப்துல்லாஹ் பின் அபீ உமய்யாவும் "அபூதாலிபே! நீங்கள் (உங்கள் தந்தை) அப்துல் முத்தலிபின் மார்க்கத்தையா வெறுத்து ஒதுக்கப்போகிறீர்கள்?'' என்று கேட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏகத்துவ உறுதிமொழியைக் கூறும்படி அபூதாலிப் அவர்களிடம் கோரிக்கொண்டேயிருந்தார்கள்; தாம் முன்பு சொன்னதையே அவரிடம் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.
இறுதியில் அபூதாலிப் கடைசியாக அவர்களிடம் பேசியது "நான் (என் தந்தை) அப்துல் முத்தலிபின் மார்க்கத்திலேயே இருக்கிறேன்'' என்பதாகவே இருந்தது. "லா இலாஹ இல்லல்லாஹ்'' எனும் உறுதிமொழியைச் சொல்ல அவர் மறுத்துவிட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அறிந்துகொள்ளுங்கள்! அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்குத் தடை விதிக்கப்படும்வரை உங்களுக்காக நான் பாவமன்னிப்புக் கேட்டுக்கொண்டேயிருப்பேன்'' என்று சொன்னார்கள். அப்போது தான் கண்ணியமும் மாண்பும் உடைய அல்லாஹ், "இறைவனுக்கு இணைவைப்பவர்கள் நரகவாசிகள் தாம் என்பது நன்கு தெளிவாகிவிட்ட பின்னரும் (அவர்கள் நெருங்கிய உறவினர்களாயிருந்தாலும் சரி) அவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோர இறைத்தூதருக்கும் இறை நம்பிக்கையாளர்களுக்கும் உரிமையில்லை'' எனும் (9:113ஆவது) வசனத்தை அருளினான். அபூதாலிப் தொடர்பாக (நபியவர்கள் வருந்தியபோது) அல்லாஹ், "(நபியே!) நீங்கள் விரும்பியவரை(யெல்லாம்) நேர்வழியில் செலுத்திவிட முடியாது. மாறாக, அல்லாஹ்தான் தான் நாடியவர்களை நேர்வழியில் செலுத்துகிறான்'' எனும் (28:56ஆவது) வசனத்தை அருளினான்.

040 மேற்கண்ட ஹதீஸ் மேலும் சில அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஸாலிஹ் பின் கைசான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அப்போது அல்லாஹ் வசனத்தை அருளினான்'' என்று ஹதீஸ் முடிகிறது. அவ்விரு வசனங்களும் அந்த அறிவிப்பில் இடம்பெறவில்லை. மேலும், "அபூ ஜஹ்லும் அப்துல்லாஹ் பின்

அபீஉமய்யாவும் தாம் முன்பு சொன்னதையே (அபூதாலிபிடம்) திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்'' என்றும் இடம்பெற்றுள்ளது.
மஅமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் இந்த இடத்தில் "அவ்விருவரும் அவரிடம் அதைச் சொல்லிக்கொண்டேயிருந்தார்கள்'' என்று இடம்பெற்றுள்ளது.

041 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் பெரிய தந்தை (அபூதாலிப்) உடைய மரண தறுவாயில் "லா இலாஹ இல்லல்லாஹ் என்று சொல்லுங்கள்; இதை வைத்து உங்களுக்காக நான் மறுமைநாளில் (அல்லாஹ்விடம்) சாட்சியம் கூறுவேன்'' என்று கூறினார்கள். ஆனால் அவர், (ஏகத்துவ உறுதிமொழி கூற) மறுத்துவிட்டார். அப்போது அல்லாஹ், "(நபியே!) நீங்கள் விரும்பியவரை(யெல்லாம்) நேர்வழியில் செலுத்திவிட முடியாது'' எனும் (28:56ஆவது) வசனத்தை அருளினான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

042 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம் பெரிய தந்தை (அபூதாலிபின் மரண தறுவாயில்) அவர்களிடம், "லா இலாஹ இல்லல்லாஹ் என்று சொல்லுங்கள். இதை வைத்து உங்களுக்காக நான் மறுமைநாளில் சாட்சியம் கூறுவேன்'' என்று கூறினார்கள். அதற்கு அவர், "பயம்தான் அவரை இவ்வாறு செய்யவைத்தது என்று என்னைப் பற்றிக் குறைஷியர் குறை கூறிவிடுவார்கள் என்ற அச்சம் எனக்கு இல்லையாயின் (ஏகத்துவ உறுதிமொழியான) இதைக் கூறி உம்முடைய கண்களை நான் குளிர வைத்திருப்பேன்'' என்று கூறினார். அப்போதுதான் அல்லாஹ் "(நபியே!) நீங்கள் விரும்பியவரை (யெல்லாம்) நேர்வழியில் செலுத்திவிட முடியாது. மாறாக, அல்லாஹ்தான் தான் நாடியவர்களை நேர்வழியில் செலுத்துகிறான்'' எனும் (28:56 ஆவது) வசனத்தை அருளினான்.

## பாடம் : 10 ஓரிறைக் கோட்பாட்டில் இறந்தவர் சொர்க்கம் செல்வது உறுதி என்பதற்கான ஆதாரம்.

043 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று யார் (மனமார) அறிந்த நிலையில் இறந்துவிடுகின்றாரோ அவர் சொர்க்கம் செல்வார்.
இதை உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
மேற்கண்ட ஹதீஸ் உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

044 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தோம். அப்போது மக்களிடம் இருந்த உணவுப் பொருட்கள் தீர்ந்துவிட்டன. அதனால் மக்களின் (உணவுக்காகப்) பயண ஒட்டகங்களில் சிலவற்றை அறுக்கலாம் என்று கூட நபி (ஸல்) அவர்கள் எண்ணினார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! மக்களிடம் எஞ்சியுள்ள உணவுப்

பொருட்களை ஒன்றுதிரட்டி, அதில் (பெருக்கம் ஏற்பட) தாங்கள் பிரார்த்தித்தால் நன்றாயிருக்குமே!'' என்று கூறினார்கள். அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் செய்தார்கள். அப்போது தம்மிடம் கோதுமை வைத்திருந்தவர் கோதுமையைக் கொண்டுவந்தார்; பேரீச்சம் பழங்கள் வைத்திருந்தவர் பேரீச்சம் பழங்களைக் கொண்டுவந்தார். –அறிவிப்பாளர் தல்ஹா பின் முஸர்ரிஃப் (ரஹ்) கூறுகிறார்கள்: முஜாஹித் (ரஹ்) அவர்கள், "பேரீச்சம் பழங்களின் கொட்டைகள் வைத்திருந்தவர் பேரீச்சம்பழக் கொட்டைகளைக் கொண்டுவந்தார்'' என்று கூறினார்கள். நான், "பேரீச்சம் பழத்தின் கொட்டைகளை வைத்து மக்கள் என்ன செய்து கொண்டிருந்தார்கள்?'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அவற்றை வாயிலிட்டுச் சுவைத்துவிட்டு, அதற்கு மேல் தண்ணீரை அருந்திக்கொள்வார்கள்'' என்று கூறினார்கள்.–

(மக்களிடமிருந்த உணவுப் பொருட்கள் ஒன்று திரட்டப்பட்டன.) அதில் (பெருக்கம் ஏற்பட) நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். (அவ்வாறே பெருக்கம் ஏற்பட்டது.) எந்த அளவிற்கென்றால் மக்கள் அனைவரும் தங்கள் பயண(த்திற்கு வேண்டிய) உணவை நிரப்பிக் கொண்டனர். (இதைக் கண்ட) நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும், நான் அல்லாஹ்வின் தூதர் ஆவேன் என்றும் நான் உறுதி கூறுகிறேன். இவ்விரு உறுதிமொழிகளுடன், அவற்றில் சந்தேகம் கொள்ளாமல் இறைவனைச் சந்திக்கும் அடியார் எவரும் சொர்க்கம் செல்லாமல் இருக்கமாட்டார்'' என்று கூறினார்கள்.

045 அபூஹுரைரா (ரலி), அல்லது அபூசயீத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
தபூக் போரின்போது மக்களுக்குக் கடுமையான பசி ஏற்பட்டது. அப்போது அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் எங்களுக்கு அனுமதி அளித்தால் நாங்கள் எங்கள் ஒட்டகங்களை அறுத்துச் சாப்பிடவும் (அவற்றின் கொழுப்புகளை உருக்கி) எண்ணெய் எடுத்துக்கொள்ளவும் செய்வோமே!'' என்று கேட்டனர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அவ்வாறே) செய்துகொள்ளுங்கள்'' என்று கூறினார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! இவ்வாறு நீங்கள் செய்(ய அனுமதியளித்)தால் வாகனப் பிராணிகள் குறைந்துவிடும். இதைவிடுத்து, மக்களிடம் எஞ்சியுள்ள உணவுப் பொருட்களைக் கொண்டுவரச் சொல்லுங்கள். பின்னர் அவற்றில் பெருக்கம் (பரக்கத்) ஏற்பட அவர்களுக்காகப் பிரார்த்தியுங்கள். அல்லாஹ் அதில் (பெருக்கத்தை) ஏற்படுத்தக்கூடும்'' என்றார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்'' என்று கூறிவிட்டு, ஒரு தோல் விரிப்பைக் கொண்டுவந்து விரிக்கச் சொன்னார்கள். பிறகு மக்களிடம் எஞ்சியிருந்த உணவுப் பொருட்களைக் கொண்டுவரச் சொன்னார்கள்.
(மக்களில்) ஒருவர் ஒரு கையளவு கோதுமையைக் கொண்டுவரலானார். மற்றொருவர் ஒரு கையளவு பேரீச்சம் பழங்களுடன் வந்தார். இன்னொருவர் ரொட்டித் துண்டு ஒன்றைக் கொண்டுவந்தார். அந்த விரிப்பின் மீது சிறிதளவு உணவுப் பொருட்கள் சேர்ந்தன. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதில் பெருக்கம் ஏற்படப் பிரார்த்தித்தார்கள். பிறகு "உங்கள் பைகளில் நிரப்பிக்கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே மக்களும் தம் பைகளில் நிரப்பிக் கொண்டனர். அந்தப் படையினர் தம்மிடம் இருந்த எந்தப் பையையும் விட்டுவைக்காமல் எல்லாவற்றிலும் நிரப்பிக்கொண்டனர். மக்களும் வயிறு நிரம்பச்

சாப்பிட்டனர். (இருப்பினும்) இன்னும் அது எஞ்சியது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும் நான் அல்லாஹ்வின் தூதர் என்றும் நான் உறுதி கூறுகிறேன். இவ்விரண்டு உறுதிமொழிகளையும் சந்தேகம் கொள்ளாமல் நம்பிய நிலையில் அல்லாஹ்வைச் சந்திக்கும் எந்த அடியாரும் சொர்க்கத்தைவிட்டுத் தடுக்கப்படமாட்டார்''என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

046 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையாளன் யாருமில்லை. முஹம்மத் (ஆகிய நான்) அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதரும் ஆவேன்; (இறைத் தூதர்) ஈசா (அலை) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய அடிமையின் புதல்வரும் ஆவார்; அல்லாஹ் மர்யமை நோக்கிச் சொன்ன ("ஆகுக' எனும்) ஒரு வார்த்தை(யில் பிறந்தவர்); அவனிடமிருந்து (ஊதப்பட்ட) ஓர் உயிர்; சொர்க்கம் உண்மை; நரகம் உண்மை என்றெல்லாம் யார் உறுதிமொழி கூறுகின்றாரோ அவரைச் சொர்க்கத்தின் எட்டு வாசல்களில் தான் நாடிய வாசல் வழியாக அல்லாஹ் நுழைவிப்பான்.
இதை உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆனால், (அதன் இறுதியில்) "அவரை அல்லாஹ் அவருடைய செயல்களுக்கேற்ப சொர்க்கத்தில் நுழைவிப்பான்' என்று இடம்பெற்றுள்ளது. "சொர்க்கத்தின் எட்டு வாசல்களில் தான் நாடிய வாசல் வழியாக நுழைவிப்பான்' என்பது இடம்பெறவில்லை.

047 அபூஅப்தில்லாஹ் அப்துர் ரஹ்மான் பின் உசைலா அஸ்ஸுனாபிஹீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் மரணப் படுக்கையில் இருந்தபோது நான் அவர்களிடம் சென்று அழுதேன். அப்போது அவர்கள் "அமைதியாயிருங்கள். ஏன் அழுகிறீர்கள்? அல்லாஹ்வின் மீதாணையாக! சாட்சியம் கூறுமாறு எனக்கு வாய்ப்பளிக்கப் பட்டால் உங்களுக்காக நான் சாட்சியம் கூறுவேன். பரிந்துரை செய்ய எனக்கு வாய்ப்பளிக்கப்பட்டால் உங்களுக்காக நான் பரிந்துரைப்பேன்; எனக்கு சக்தி இருந்தால் நிச்சயமாக உங்களுக்கு நான் பயன் அளிப்பேன்'' என்று கூறினார்கள். பிறகு பின்வருமாறு கூறினார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியேற்ற உங்களுக்குப் பயனுள்ள எந்தச் செய்தியையும் உங்களிடம் தெரிவிக்காமல் இருந்ததில்லை. ஆனால், ஒரே ஒரு செய்தியைத் தவிர. அந்தச் செய்தியையும் இதோ என் உயிர் பிரியப்போகும் இந்நேரத்தில் உங்களிடம் நான் சொல்லப் போகிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யார் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும் முஹம்மத் (ஆகிய நான்) அல்லாஹ்வின் தூதர் என்றும் உறுதி கூறுகிறாரோ அவருக்கு அல்லாஹ் நரகத்தைத் தடை செய்துவிடுகிறான்.

048 முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் (வாகனத்தில்) இருந்தேன். எனக்கும் அவர்களுக்குமிடையே (ஒட்டகச்) சேணத்துடன் இணைந்த சாய்வுக் கட்டைதான் இருந்தது. (அவ்வளவு நெருக்கத்தில் இருந்தேன்.) அப்போது நபி (ஸல்) அவர்கள், "முஆத் பின் ஜபல்' என்று அழைத்தார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன்(கூறுங்கள்)'' என்றேன். பிறகு சிறிது தூரம் சென்ற பின் (மீண்டும்) "முஆத் பின் ஜபல்' என்று அழைத்தார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன் (கூறுங்கள்)'' என்றேன். சிறிது தூரம் சென்ற பின் (மீண்டும்) "முஆத்பின் ஜபல்!!'' என்று அழைத்தார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன் (கூறுங்கள்)'' என்றேன்.
நபி (ஸல்) அவர்கள், "அடியார்கள்மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா?'' என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்'' என்று பதிலளித்தேன். நபி (ஸல்) அவர்கள், "அடியார்கள் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்னவென்றால், அவர்கள் அவனையே வழிபட வேண்டும்; அவனுக்கு எதையும் இணை கற்பிக்கக் கூடாது'' என்றார்கள்.
இன்னும் சிறிது தூரம் சென்ற பின் "முஆத் பின் ஜபல்' என்று அழைத்தார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன்(கூறுங்கள்)'' என்றேன். அவர்கள், "அவ்வாறு (அல்லாஹ்வையே வழிபட்டு அவனுக்கு இணைவைக்காமல்) செயல்பட்டுவரும் அடியார்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா?'' என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்'' என்று பதிலளித்தேன். நபி (ஸல்) அவர்கள், "(இத்தகைய) அடியார்களை அவன் (மறுமையில்) வேதனை செய்யாமல் இருப்பது தான்'' என்று சொன்னார்கள்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

049 முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் "உஃபைர்' என்றழைக்கப்பட்ட கழுதையின் மீது அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள், "முஆத்! அல்லாஹ்வுக்கு அடியார்கள் மீதுள்ள உரிமை என்ன? அடியார்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா?'' என்று (என்னிடம்) கேட்டார்கள்.
நான், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்'' என்று பதில் கூறினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அடியார்கள்மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்னவென்றால், அவர்கள் அவனையே வழிபட வேண்டும், அவனுக்கு எதையும் இணையாக்கக்கூடாது; அல்லாஹ்வின் மீது அடியார்களுக்குள்ள உரிமை யாதெனில், அவனுக்கு எதையும் இணைகற்பிக்காமலிருப்பவரை (மறுமையில்) அவன் வேதனை செய்யாமல் இருப்பதாகும்'' என்று கூறினார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் இந்த நற்செய்தியை மக்களுக்கு அறிவிக்கட்டுமா?'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "மக்களுக்கு இந்த நற்செய்தியை அறிவிக்காதீர்கள். அவர்கள் இதையே நம்பி (நற்செயல்களில் ஈடுபடாமல்) இருந்துவிடுவார்கள்''என்று பதிலளித்தார்கள்.
இதை அம்ர் பின் மைமூன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

050 முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "முஆத்! அடியார்கள்மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா?'' என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்'' என்று பதிலளித்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வே வணங்கப்பட வேண்டும். அவனுக்கு எதுவும் இணையாக்கப்படக்கூடாது''என்று கூறிவிட்டு, "அவ்வாறு (அல்லாஹ்வையே வணங்கி, அவனுக்கு இணைகற்பிக்காமல்)செயல்பட்டுவரும் அடியார்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா?'' என்று கேட்டார்கள். அதற்கு நான், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்'' என்று பதிலளித்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இத்தகைய) அடியார்களை அவன் (மறுமையில்) வேதனை செய்யாமல் இருப்பதாகும்'' என்று சொன்னார்கள்.
இதை அல்அஸ்வத் பின் ஹிலால் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

051 அல்அஸ்வத் பின் ஹிலால் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஆத் (ரலி) அவர்கள், "என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அழைத்தார்கள். நான் அவர்களுக்கு பதிலளித்தேன். அப்போது அவர்கள் "மனிதர்கள்மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா?' என்று கேட்டார்கள்''. (இவ்வாறு கூறிவிட்டு) மேற்கண்ட ஹதீஸிலுள்ளதைப் போன்றே அறிவித்தார்கள்.

052 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சுற்றி அமர்ந்திருந்தோம். எங்களுடன் அமர்ந்திருந்த சிலரில் அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோரும் இருந்தனர். அப்போது எங்களிடையேயிருந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து சென்றார்கள். நெடுநேரமாகியும் அவர்கள் எங்களிடம் (திரும்பி) வரவில்லை. அவர்களுக்கு (எதிரிகளால்) ஏதேனும் ஆபத்து நேர்ந்து விட்டதோ என்று நாங்கள் அஞ்சினோம்; நாங்கள் பீதி அடைந்தவர்களாக (அங்கிருந்து) எழுந்தோம். பீதியுற்றவர்களில் நானே முதல் ஆளாக இருந்தேன். எனவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைத் தேடிக்கொண்டு புறப்பட்டேன். பனூ நஜ்ஜார் குலத்தைச் சேர்ந்த அன்சாரிகளுக்குச் சொந்தமான ஒரு தோட்டத்திற்கு வந்து சேர்ந்தேன். அத்தோட்டத்தின் வாசல் எங்கே என்று (தேடியவனாக) அதைச் சுற்றி வந்தேன். ஆனால் (அதன் வாசலை) நான் காணவில்லை. அத்தோட்டத்திற்கு வெளியே இன்னொரு தோட்டத்திலிருந்து வாய்க்கால் ஒன்று அதனுள் சென்று கொண்டிருந்தது. உடனே நான் குள்ளநரி உடலைக் குறுக்குவதைப் போன்று (என் உடலைக்) குறுக்கிக் கொண்டு (அந்த வாய்க்கால் வழியே தோட்டத்திற்குள்) நுழைந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள், "அபூஹுரைராவா?'' என்று கேட்டார்கள். நான், "ஆம், அல்லாஹ்வின் தூதரே!'' என்றேன். "என்ன விஷயம்?'' என்று கேட்டார்கள். "நீங்கள் எங்களிடையே இருந்து கொண்டிருந்தீர்கள். (திடீரென) எழுந்து சென்றீர்கள். நெடுநேரமாகியும் நீங்கள் எங்களிடம் திரும்பவில்லை. எனவே, (எதிரிகளால்) ஏதேனும் உங்களுக்கு ஆபத்து நேர்ந்துவிட்டதோ என்று நாங்கள் அஞ்சினோம்; பீதியுற்றோம்.

நான்தான் பீதியுற்றவர்களில் முதல் ஆளாவேன். எனவேதான் குள்ளநரி உடலைக் குறுக்குவதைப் போன்று உடலைக் குறுக்கிக்கொண்டு இந்தத் தோட்டத்திற்கு வந்தேன். இதோ மக்கள் என் பின்னால் வந்துகொண்டிருக்கிறார்கள்'' என்று சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அபூஹுரைரா!' (என்று என்னை அழைத்து) தம் காலணிகள் இரண்டையும் என்னிடம் கொடுத்து, "இவ்விரு காலணிகளையும் கொண்டு செல்! அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று யார் தமது உள்ளத்தால் உறுதியாக நம்பிச் சான்று கூறுகின்றாரோ அவரைத் தோட்டத்திற்கு அப்பால் நீ சந்தித்தால் அவருக்குச் சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று நற்செய்தி சொல்!'' என்று கூறினார்கள்.
நான் உமர் (ரலி) அவர்களையே முதலில் சந்தித்தேன். அப்போது உமர் (ரலி) அவர்கள், "இவை என்ன காலணிகள்,அபூஹுரைரா?'' என்று கேட்டார்கள். அதற்கு நான் "இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய காலணிகள். அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று தமது உள்ளத்தால் உறுதியாக நம்பிச் சாட்சியம் கூறுகின்ற எவரை நான் சந்தித்தாலும் அவருக்குச் சொர்க்கம் கிடைக்கும் என்ற நற்செய்தி கூறுமாறு சொல்லி, இக்காலணிகளை (ஆதாரமாக)க் கொடுத்து என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுப்பிவைத்தார்கள்'' என்று சொன்னேன். உடனே உமர் (ரலி) அவர்கள் தமது கரத்தால் எனது மார்பில் அடித்தார்கள். நான் மல்லாந்து விழுந்தேன். "திரும்பிச் செல்லுங்கள், அபூஹுரைரா!'' என்று சொன்னார்கள். உடனே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். எனக்கு அழுகை அழுகையாக வந்தது. என்னைப் பின்தொடர்ந்து வந்த உமரும் அங்கே எனக்குப் பின்னால் வந்து நின்றார். என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அபூஹுரைரா! உமக்கு என்ன நேர்ந்தது?'' என்று கேட்டார்கள்.

நான், "உமரைச் சந்தித்து நீங்கள் என்னிடம் சொல்லி அனுப்பிய விஷயத்தை அவரிடம் தெரிவித்தேன். அவர் என் மார்பில் ஓர் அடி அடித்தார். நான் மல்லாந்து விழுந்துவிட்டேன். பிறகு, "திரும்பிச் செல்லுங்கள்' என்று கூறினார்'' என்றேன். அப்போது உமர் (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமரே! ஏன் இவ்வாறு செய்தீர்?'' என்று கேட்டார்கள். உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று உள்ளத்தால் உறுதிகொண்ட நிலையில் சாட்சியம் சொல்பவர் எவரைச் சந்தித்தாலும் அவருக்குச் சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று நற்செய்தி சொல்லுமாறு கூறி உங்கள் காலணிகளைக் கொடுத்து நீங்கள்தாம் அபூஹுரைராவை அனுப்பிவைத்தீர்களா?'' என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்' என்றார்கள். உமர் (ரலி) அவர்கள், "அவ்வாறு செய்யாதீர்கள்! ஏனெனில், மக்கள் அதையே நம்பி (நற்செயல்களில் ஈடுபடாமல்) இருந்துவிடுவார்களோ என்று நான் அஞ்சுகிறேன். அவர்கள் (நற்)செயல் புரிய விட்டுவிடுங்கள்'' என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறே அவர்களை விட்டுவிடுங்கள் (அவர்கள் நற்செயல் புரியட்டும்)'' என்று சொன்னார்கள்.

053 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு பயணத்தில்) நபி (ஸல்) அவர்கள் தமக்குப் பின்னால் வாகனத்தில் அமர்ந்திருந்த முஆத்பின் ஜபல் (ரலி) அவர்களை "முஆத்!' என்று அழைத்தார்கள். "அல்லாஹ்வின் தூதரே! இதோ! உங்களுக்குக் கீழ்ப்படியக் காத்திருக்கிறேன்(கூறுங்கள்)'' என்று முஆத் பதிலளித்தார்கள். (சிறிது தூரம் சென்ற பின்) "முஆத்!' என்று (மீண்டும்) அழைத்தார்கள். முஆத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இதோ! உங்களுக்குக் கீழ்ப்படியக் காத்திருக்கிறேன் (கூறுங்கள்)'' என்றார்கள். (இன்னும் சிறிது தூரம் சென்ற பின்) "முஆத்!' என்று (மீண்டும்) அழைத்தார்கள். முஆத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன் (கூறுங்கள்)'' என்றார்கள். பிறகு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும் முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனுடைய அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் உறுதிகூறுகின்ற எந்த அடியாருக்கும் அல்லாஹ் நரகத்தைத் தடை செய்யாமல் இருப்பதில்லை'' என்று கூறினார்கள். முஆத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இதை நான் மக்களுக்கு அறிவித்துவிடட்டுமா? (இதைக் கேட்டு அவர்கள்) மகிழ்ச்சி அடைவார்களே!'' என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(வேண்டாம்) இவ்வாறு நீர் அறிவித்தால் மக்கள் இதையே நம்பிக் கொண்டு (நற்செயல்களில் ஈடுபடாமல்) இருந்துவிடுவார்கள்'' என்று கூறினார்கள்.
(கல்வியை மறைத்த) குற்றத்திலிருந்து தப்புவதற்காகத் தமது இறப்பின்போதுதான் இதை முஆத் (ரலி) அவர்கள் (மக்களிடையே) அறிவித்தார்கள்.

054 மஹ்மூத் பின் ரபீஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் மதீனாவுக்குச் சென்று இத்பான் பின் மாலிக் (ரலி) அவர்களைச் சந்தித்து, "தங்களைப் பற்றிய ஒரு செய்தி எனக்கு எட்டியது (அது உண்மையா? கூறுங்கள்!)'' என்றேன். அப்போது இத்பான் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
என் பார்வையில் ஏதோ ஏற்பட்டு (என் கண்பார்வை போய்)விட்டது. ஆகவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஆளனுப்பி "நீங்கள் வந்து என் வீட்டில் தொழ வேண்டும். அதை நான் தொழுமிடமாக ஆக்கிக்கொள்ள விரும்புகிறேன்'' என்று சொல்லியனுப்பினேன். எனவே, நபி (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களில் அல்லாஹ் நாடிய சிலரும் (மறுநாள் என் வீட்டுக்கு) வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் (வீட்டுக்குள்) வந்து வீட்டி(ன் ஒரு மூலையி)ல் தொழுது கொண்டிருந்தார்கள். நபித் தோழர்களோ தம்மிடையே (நயவஞ்சகர்களைப் பற்றியும் அவர்களால் தங்களுக்கு ஏற்படும் தொந்தரவு பற்றியும்) பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு அதில் மாலிக் பின் துக்ஷுன் அவர்களுக்குப் பெரும் பங்கிருப்பதாகக் கூறினர்.
அவருக்கெதிராக நபியவர்கள் பிரார்த்தித்து அவர் அழிந்துபோக வேண்டும் என்று மக்கள் விரும்பினர். அவருக்கு ஏதேனும் கேடு நேரவேண்டும் என்றும் விரும்பினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும் நான் அல்லாஹ்வின் தூதர் என்றும் அவர் (மாலிக் பின் துக்ஷும்) சாட்சியம் கூறவில்லையா?'' என்று கேட்டார்கள். மக்கள், "அவர் அவ்வாறு (சாட்சியம்) கூறுகிறார். ஆனால், அது அவருடைய இதயத்தில் இல்லையே?'' என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை

என்றும் நான் அல்லாஹ்வின் தூதர் ஆவேன் என்றும் சாட்சியம் கூறும் ஒருவர் "நரகத்தில் நுழையமாட்டார்' அல்லது "நரகம் அவரைத் தீண்டாது' '' என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸை (மஹ்மூத் பின் ரபீஉ (ரலி) அவர்களிடமிருந்து) அறிவிக்கும் அனஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்: இந்த ஹதீஸ் என்னை வியப்படையச் செய்தது. ஆகவே, நான் என் புதல்வரிடம் "இதை எழுதி வைத்துக்கொள்'' என்று கூறினேன். அவ்வாறே அவர் அதை எழுதி வைத்துக் கொண்டார்.

055 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இத்பான் பின் மாலிக் (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள்:
எனக்குக் கண்பார்வை போய்விட்டது. ஆகவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஆளனுப்பி "(என் வீட்டுக்கு) நீங்கள் வந்து எனக்காக நான் தொழுமிடம் ஒன்றை அறிவியுங்கள்'' என்று கூறினேன். எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் மக்களும் (என் வீட்டுக்கு) வந்தனர். அப்போது மக்களில் மாலிக் பின் துக்ஷும் என்றழைக்கப்பட்ட ஒரு மனிதரைப் பற்றி விமர்சிக்கப்பட்டது. (இவ்வாறு கூறிவிட்டு) சுலைமான் பின் அல்முஃகீரா (ரஹ்) அவர்களின் மேற்கண்ட அறிவிப்பிலுள்ளதைப் போன்றே தொடர்ந்து கூறினார்கள்.

பாடம் : 11 அல்லாஹ்வை இறைவனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்களை இறைத் தூதராகவும் மன நிறைவோடு ஏற்றுக்கொண்டவர் இறை நம்பிக்கையாளர் (முஃமின்)தாம். அவர் பெரும் பாவங்களைச் செய்திருந்தாலும் சரியே- என்பதற்கான ஆதாரம்.

056 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் அல்லாஹ்வை இறைவனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்களை இறைத்தூதராகவும் மன நிறைவோடு ஏற்றுக்கொண்டாரோ அவர் இறை நம்பிக்கையின் சுவையை அடைந்துவிட்டார்.
இதை அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 12 இறைநம்பிக்கையின் கிளைகளின் எண்ணிக்கை, அவற்றில் உயர்ந்தவை மற்றும் தாழ்ந்தவை, இறைநம்பிக்கையின் ஓர் அம்சமான நாணத்தின் சிறப்பு ஆகியவை பற்றிய விளக்கம்.

057 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கை (ஈமான்) என்பது எழுபதுக்கும் அதிகமான கிளைகளைக் கொண்டதாகும். நாணமும் இறைநம்பிக்கையின் ஒரு கிளையாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

058 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கை என்பது "எழுபதுக்கும் அதிகமான' அல்லது "அறுபதுக்கும் அதிகமான' கிளைகள் கொண்டதாகும். அவற்றில் உயர்ந்தது "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை' என்று கூறுவதாகும். அவற்றில் தாழ்ந்தது, தொல்லை தரும் பொருளைப் பாதையிலிருந்து அகற்றுவதாகும். நாணமும் இறைநம்பிக்கையின் ஒரு கிளைதான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

059 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் தம் சகோதரருக்கு, (அதிகமாக) நாணம் (கொள்வதால் ஏற்படும் நஷ்டம்) தொடர்பாக அறிவுரை கூறிக்கொண்டிருந்ததை நபி (ஸல்) அவர்கள் செவியுற்றார்கள்.
அப்போது "(அவரை விட்டுவிடு!) நாணம் இறை நம்பிக்கையில் அடங்கும்'' என்று நபியவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
"நபி (ஸல்) அவர்கள் அன்சாரிகளில் ஒருவரைக் கடந்து சென்றார்கள். அவர் தம் சகோதரருக்கு நாணப்படுவது தொடர்பாக அறிவுரை கூறிக்கொண்டிருந்தார்'' என்று அந்த அறிவிப்பு (சிறு வித்தியாசத்துடன்) தொடங்குகிறது.

060 அபுஸ் ஸவ்வார் அல்அதவீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் "நாணம் நன்மையே தரும்'' என நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் என்று அறிவித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது புஷைர் பின் கஅப் (ரஹ்) அவர்கள், "சில (வகை) நாணத்தில் கம்பீரம் உண்டு; சில (வகை) நாணத்தில் மன அமைதி உண்டு எனத் தத்துவ(ப் புத்தக)த்தில் எழுதப்பட்டுள்ளது'' என்று கூறினார். அப்போது (அவரிடம்) இம்ரான் (ரலி) அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (கூறியது) பற்றி உங்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் உங்கள் ஏடுகளில் உள்ளவை குறித்துச் சொல்லிக்கொண்டிருக்கிறீர்களே!'' என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

061 அபூகத்தாதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒரு குழுவாக இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களுடன் இருந்தோம். எங்களிடையே புஷைர் பின் கஅப் (ரஹ்) அவர்களும் இருந்தார்கள். அன்றைய தினம் இம்ரான் (ரலி) அவர்கள் "நாணம், முழுக்க முழுக்க நன்மையாகும்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என எங்களுக்கு அறிவித்தார்கள். அப்போது புஷைர் பின் கஅப் (ரஹ்) அவர்கள், "நாங்கள் "சில நூல்களில்' அல்லது "தத்துவ(ப் புத்தகத்)தில்' அல்லாஹ்விற்காக மேற்கொள்ளப்படும் சில (வகை) நாணத்தில் மன அமைதியும் கம்பீரமும் உண்டு. மற்றச் சில வகையில் பலவீனம் உண்டு என்று (எழுதப்பட்டிருப்பதைக்) காண்கிறோம்'' என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) இம்ரான் (ரலி) அவர்கள் தம் கண்கள் சிவக்கும் அளவிற்குக் கோபமடைந்தார்கள். "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நாணம் முழுக்க நன்மைதான் என்று) கூறியதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறேன்.

நீங்களோ அதற்கு எதிர்க்கருத்து கூறுகின்றீர்களே!'' என்று சொல்லி விட்டுத் தாம் முன்பு சொன்ன ஹதீஸையே மீண்டும் சொன்னார்கள். புஷைர் அவர்களும் முன்பு தாம் சொன்னதையே மீண்டும் கூறினார்கள். அப்போதும் இம்ரான் (ரலி) அவர்கள் கோபமடைந்தார்கள். நாங்கள், "அபூநுஜைதே! அவர் நம்மைச் சார்ந்தவர்தாம். அவரிடம் (கொள்கைக்) குறைபாடு ஏதுமில்லை'' என்று கூறி (இம்ரான் அவர்களை சமாதானப் படுத்தி)க்கொண்டிருந்தோம்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 13 இஸ்லாத்தின் அனைத்து விஷயங்களையும் உள்ளடக்கிக்கொண்ட அம்சம்.**

062 சுஃப்யான் பின் அப்தில்லாஹ் அஸ்ஸகஃபீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் "அல்லாஹ்வின் தூதரே! இஸ்லாம் குறித்து (சுருக்கமாக) எனக்கு ஒரு விளக்கம் அளியுங்கள். "தங்களுக்குப் பிறகு யாரிடமும்' அல்லது "தங்களைத் தவிர வேறு யாரிடமும்' அது குறித்து நான் கேட்க வேண்டிய திருக்கலாகாது'' என்று வினவினேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ""அல்லாஹ்வின் மீது நான் நம்பிக்கை கொண்டேன்' என்று கூறி, அதில் உறுதியாக நிலைத்து நிற்பீராக!'' என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 14 இஸ்லாம் கூறும் நல்லறங்களுக்கிடையேயான வித்தியாசமும் அவற்றில் மிகவும் சிறந்தது எது என்பது பற்றிய விளக்கமும்.**

063 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "இஸ்லாமி(யப்பண்புகளி)ல் மிகவும் சிறந்தது எது?'' என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(பசித்தவருக்கு) உணவளிப்பதும், உமக்கு அறிமுகமானவருக்கும் உமக்கு அறிமுகம் அற்றவருக்கும் சலாம் (முகமன்) சொல்வதுமாகும்'' என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

064 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "முஸ்லிம்களில் சிறந்தவர் யார்?'' என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எவருடைய நாவிலிருந்தும் கரத்திலிருந்தும் மற்ற முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெற்றிருக்கிறார்களோ அவரே (முஸ்லிம்களில் சிறந்தவர்)'' என்று பதிலளித்தார்கள்.

065 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எவருடைய நாவிலிருந்தும் கரத்திலிருந்தும் மற்ற முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெற்றிருக்கிறார்களோ அவரே (உண்மையான) முஸ்லிம் ஆவார்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

066 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! இஸ்லாமி(யப் பண்புகளி)ல் மிகவும் சிறந்தது எது?'' என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எவருடைய நாவிலிருந்தும் கரத்திலிருந்தும் மற்ற முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெற்றிருக்கிறார்களோ அவரே (சிறந்தவர்; அவருடைய பண்பே சிறந்தது)'' என்று பதிலளித்தார்கள். மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் முஸ்லிம்களில் சிறந்தவர் யார் என்று கேட்கப்பட்டது'' என்று ஹதீஸ் ஆரம்பிக்கிறது. மீதி மேற்கண்டவாறே இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 15 இறைநம்பிக்கையின் இனிமையை உணர்ந்திட ஒருவரிடம் அமைந்திருக்க வேண்டிய பண்புகள் பற்றிய விளக்கம்.

067 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எவரிடம் மூன்று தன்மைகள் உள்ளனவோ அவர் இறைநம்பிக்கையின் இனிமையை உணர்வார். (அவை:)
1. அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஒருவருக்கு மற்றெதையும் விட நேசத்திற்குரியோராய் இருப்பது.
2. அவர் மற்றொருவரை அல்லாஹ்வுக்காகவே நேசிப்பது.
3. இறைமறுப்பிலிருந்து அல்லாஹ் தம்மைக் காப்பாற்றிய பின் மீண்டும் அதற்குத் திரும்புவதை நெருப்பில் தாம் வீசப்படுவதை வெறுப்பதைப் போன்று அவர் வெறுப்பது.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

068 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எவரிடம் மூன்று தன்மைகள் உள்ளனவோ அவர் இறைநம்பிக்கையின் சுவையை உணர்ந்து கொள்வார்.
1. ஒருவர் மற்றொருவரை அல்லாஹ்வுக்காகவே நேசித்துக்கொண்டிருப்பது.
2. அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஒருவருக்கு மற்றெதையும் விட நேசத்திற்குரியோராவது.
3. இறைமறுப்பிலிருந்து அல்லாஹ் தம்மைக் காப்பாற்றிய பின் மீண்டும் அதற்குத் திரும்புவதை விட நெருப்பில் வீசப்படுவதையே அவர் விரும்புவது.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- அனஸ் (ரலி) அவர்கள் வழியாக மற்றோர் அறிவிப்பாளர்தொடரிலும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது.
அதில் "மீண்டும் யூதராகவோ கிறிஸ்தவராகவோ தாம் மாறுவதைவிட (நெருப்பில் வீசப்படுவதை அவர் விரும்புவது)'' என்று (சிறு மாற்றத்துடன்) ஹதீஸ் இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 16 மனைவி மக்களையும் பெற்றோரையும், மக்கள் அனைவரையும் விட அதிகமாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நேசிப்பது கடமை என்பது பற்றியும், அல்லாஹ்வின் தூதரை இந்த அளவு நேசிக்காதவரிடம் இறைநம்பிக்கை இல்லை என்று கூறலாம் என்பதும்.**

069 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவருக்கு தம் குடும்பத்தார்,தமது செல்வம்,ஏனைய மக்கள் அனைவரையும் விட நான் நேசத்திற்குரியவனாக ஆகாதவரை “எந்த அடியாரும் அல்லது எந்த மனிதரும்,இறை நம்பிக்கையுள்ளவராக ஆகமாட்டார்.-இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

070 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருக்கு,அவருடைய குழந்தைகள்,பெற்றோர்,மற்ற மக்கள் அனைவரையும் விட நான் அதிகம் நேசத்திற்குரியவனாக ஆகாதவரை அவர் இறைநம்பிக்கையாளராக ஆகமாட்டார்.-இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 17 தமக்கு விரும்பும் நன்மையை தம் சகோதர முஸ்லிமுக்கும் விரும்புவது,இறை நம்பிக்கையின் அடையாளக் குணங்களில் ஒன்றாகும் என்பதற்கான ஆதாரம்.**

071 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தமக்கு விரும்புவதையே “தம் சகோதரருக்கும் அல்லது தம் அண்டை வீட்டாருக்கும் விரும்பாதவரை அவர் (முழுமையான) இறைநம்பிக்கையாளர் ஆகமாட்டார்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

072 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! தமக்கு விரும்புவதையே தம் அண்டை வீட்டாருக்கும் அல்லது தம் சகோதரருக்கும் விரும்பாத எந்த அடியாரும் முழுமையான இறைநம்பிக்கையாளர் ஆகமாட்டார்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 18 அண்டை வீட்டாருக்கு தொல்லை தருவது தடை செய்யப்பட்டுள்ளது.**

073 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எவருடைய நாசவேலைகளில் இருந்து அவருடைய அண்டைவீட்டார்க்குப் பாதுகாப்பு உணர்வு ஏற்படவில்லையோ அவர் சொர்க்கத்தில் நுழையமாட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 19 அண்டைவீட்டாரைக் கண்ணியப்படுத்துதல்,நல்லதையே பேசுதல் அல்லது வாய்மூடி இருத்தல் ஆகியவற்றை தூண்டும் நபிமொழிகளும்,இக்குணங்கள் யாவும் இறைநம்பிக்கையில் அடங்கும் என்பதும்.**

074 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் மறுமைநாளையும் நம்பியவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும்,அல்லது வாய்மூடி இருக்கட்டும்,அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பியவர் தம் அண்டை வீட்டாரை கண்ணியப்படுத்தட்டும்,அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பியவர் தம் விருந்தாளியைக் கண்ணியப்படுத்தட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

075 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பியவர் தமது அண்டைவீட்டாருக்குத் தொல்லை தர வேண்டாம்.அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பியவர் தம் விருந்தாளியைக் கண்ணியப்படுத்தட்டும்.அல்லாஹ்வையும் மறுமைநாளையும் நம்பியவர் ஒன்று நல்லதை பேசட்டும் அல்லது வாய் மூடி இருக்கட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

076 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆனால் அதில் “(அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பியவர்) தம் அண்டை வீட்டாருக்கு உதவி செய்யட்டும் “ என்று (சிறு வித்தியாசத்துடன்) காணப்படுகிறது.

077 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பியவர் தம் அண்டை வீட்டாருக்கு உதவி செய்யட்டும்,அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பியவர் தம் விருந்தாளியைக் கண்ணியப்படுத்தட்டும்,அல்லாஹ்வையும் மறுமைநாளையும் நம்பியவர் (ஒன்று) நல்லதை பேசட்டும் அல்லது வாய் மூடி இருக்கட்டும்.
இதை அபூஷுரைஹ் அல்குஸாஈ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 20 தீமைகளை தடுப்பது இறைநம்பிக்கையின் ஓர் அம்சமாகும்;இறைநம்பிக்கை கூடலாம்;குறையலாம்;நல்லதை(ச் செய்யுமாறு) ஏவுவதும் தீமையை தடுப்பதும் இரு கடமைகளாகும் என்பன பற்றிய விளக்கம்.**

078 தாரிக் பின் ஷிஹாப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முதன்முதலில் பெருநாள் தினத்தில் தொழுகைக்கு முன் சொற்பொழிவு (குத்பா) நிகழ்த்தியவர் மர்வான் பின் ஹகம் ஆவார்.(அவ்வாறு அவர் சொற்பொழிவு நிகழ்த்திக்

கொண்டிருந்தார்.)அப்போது அவரை நோக்கி ஒருவர் எழுந்து நின்று, “சொற்பொழிவுக்கு முன்பே (பெருநாள் தொழுகை) தொழ வேண்டும் என்று கூறினார்.
அதற்கு மர்வான் “முன்பு நடைபெற்றது கைவிடப்பட்டுவிட்டது (இப்போது அது நடைமுறையில் இல்லை) “ என்று கூறினார்.(அப்போது அங்கிருந்த) அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள்,இதோ இந்த மனிதர் தமது கடமையை நிறைவேற்றிவிட்டார்.அல்லாஹ்வின் தூதர் (ஸல) அவர்கள் (பின்வருமாறு) கூற நான் கேட்டுள்ளேன்:
உங்களில் ஒருவர் ஒரு தீமையை (மார்க்கத்திற்கு முரணான ஒரு செயலை)க் கண்டால் அவர் அதைத் தமது கரத்தால் தடுக்கட்டும்,முடியாவிட்டால் தமது நாவால் (சொல்லித் தடுக்கட்டும்),அதுவும் முடியாவிட்டால் தமது உள்ளத்தால் (அதை வெறுத்து ஒதுக்கட்டும்). இந்த (இறுதி) நிலையானது இறைநம்பிக்கையின் பலகீனமா(ன நிலையா)கும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

079 மர்வான் பின் ஹகம் சம்பவத்தின் போது அபூசயீத் அல்குத்ரி (ரலி) அவர்கள் அறிவித்த மேற்கண்ட ஹதீஸ் வேறுசில அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

080 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனக்கு முந்தைய சமுதாயத்தார் மத்தியில் அல்லாஹ் அனுப்பிய ஒவ்வோர் இறைத் தூதருக்கும் அவருடைய சமுதாயத்திலேயே சிறப்பு உதவியாளர்களும் நண்பர்களும் இல்லாமல் இருந்ததில்லை. அவர்கள் அந்த இறைத்தூதரின் வழிமுறையைக் கடைப்பிடிப்பார்கள்;அவரது உத்தரவைப் பின்பற்றி நடப்பார்கள்.அந்தத் தோழர்களுக்கு பிறகு சிலர் வருவார்கள்.அவர்கள் தாம் செய்யாதவற்றைச் சொல்வார்கள்.தமக்கு கட்டளையிடப்படாதவற்றைச் செய்வார்கள்.ஆகவே,யார் இ(த்தகைய)வர்களுடன் தமது கரத்தால் போராடுவாரோ அவர் இறைநம்பிக்கையாளர் ஆவார்.யார் இவர்களுடன் தமது உள்ளத்தால் போராடுவாரோ அவரும் இறைநம்பிகையாளர்தாம்.இவற்றுக்கப்பால் இறை நம்பிக்கை என்பது கடுகளவு கூட கிடையாது.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்வூத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(இதை அப்துல்லாஹ் பின் மஸ்வூத் (ரலி) அவர்களிடம் இருந்து அறிவிக்கும்) அபூரா ஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸ் நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் கூறினேன்.அதை அவர்கள் மறுத்தார்கள்.இந்நிலையில் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் (மதினாவின் பள்ளத்தாக்குகளில் ஒன்றான) “கனாத்“ எனும் இடத்திற்கு (ஒருமுறை) வந்தார்கள்,அப்போது அவர்களை நலம் விசாரிக்கச் சென்ற அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தம்முடன் என்னை வருமாறு கூறினார்கள்.நானும் அவர்களுடன் சென்றேன். நாங்கள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் அமர்ந்த போது,
நான் இந்த ஹதீஸ் குறித்து அவர்களிடம் வினவினேன்.அப்போது அவர்கள் நான் அப்துல்லாஹ் பின் உமர்(ரலி) அவர்களுக்கு அறிவித்ததைப் போன்றே அதை எனக்கு அறிவித்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஸாலிஹ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

(சர்ச்சைக்குரியவரான ஹாரிஸிடமிருந்து மட்டுமின்றி வேறு வழிகளிலும் இதை போன்றே அறிவிக்கப் பட்டுள்ளது.)
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் இருந்து மற்றோர் அறிவிப்பாளர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் “ஒவ்வொரு இறைத்தூதருக்கும் சிறப்பு உதவியாளர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்கள் அந்த இறைத்தூதரின் வழியில் நடப்பார்கள்; அவருடைய வழிமுறையைப் பின்பற்றுவார்கள்“என்று இடம்பெற்றுள்ளது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸ்ஸிலுள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
ஆனால், அதில் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் “கனாத்“ எனும் பள்ளத்தாக்கிற்கு வந்தது பற்றியோ அவர்களை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் சந்தித்தது பற்றியோ குறிப்பில்லை.

## பாடம் : 21 இறைநம்பிகையில்,இறைநம்பிக்கையாளர்களிடையே உள்ள ஏற்றத்தாழ்வும், இறைநம்பிக்கையில் யமனியர் முதலிடம் பெற்றிருப்பதும்.

081 அபூமஸ்ஊத் உக்பா அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தமது கரத்தால் யமன் நாட்டுத் திசையை நோக்கி சைகை காட்டி, “அறிந்து கொள்ளுங்கள்! இறைநம்பிக்கை (ஈமான்) இங்கே உள்ளது.கல் மனமும் (இரக்கமற்ற) கடின சுபாவமும் ஒட்டகங்களின் வால்களை பிடித்தபடி,அவற்றி அதட்டிக் கொண்டே (நாடோடிகளாகச்) சென்று கொண்டிருக்கும் (பாலைவன) ஒட்டக மேய்ப்பர்களிடையே காணப்படும்.அங்கிருந்துதான் ஷைத்தானின் இரு கொம்புகளும் (குழப்பங்கள்) உதயமாகும்.(அதாவது) ரபிஆ மற்றும் முளர் குலத்தாரிடையே அவை தோன்றும்“ என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

082 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யமன்வாசிகள் (உங்களிடம்) வந்திருக்கிறார்கள்.அவர்கள் இளகிய நெஞ்சமுடையவர்கள்; இறைநம்பிக்கை,யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்.மார்க்க ஞானமும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்.விவேகமும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

083 மேற்கண்ட ஹதீஸ் வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

084 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யமன்வாசிகள் உங்களிடம் வந்துள்ளனர்.அவர்கள் இளகிய மனம் படைத்தவர்கள்; மென்மையான நெஞ்சம் உடையவர்கள்.மார்க்க ஞானம் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும். விவேகமும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

085 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைமறுப்பின் தலைமைப் பீடம் கிழக்கு திசையில் (அக்னி ஆராதகாரர்களான மஜூசிகள் வசிக்கும் பாரசீகத்தில்) உள்ளது.குதிரைகள் மற்றும் ஒட்டகங்களின் உரிமையாளர்களிடமும் (நாடோடிப்) பாலைவனத்தவர்களான ஒட்டக் மேய்ப்பர்(களிடமும் பண்ணை முதலாளி)களிடமும் தற்பெருமையும் அகம்பாவமும் காணப்படுகின்றன.ஆடுகளின் உரிமையாளர்களிடம் அமைதி(யும் பணிவும்) காணப்படுகின்றது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

086 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கை யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்.இறைமறுப்பு (அக்னி ஆராதனையாளர்கள் வசிக்கும்)கிழக்கு திசையில் (பாரசீகத்தில்) உள்ளது.அமைதி,ஆடுகளின் உரிமையாளர்களிடம் காணப்படுகிறது.தற்பெருமையும் முகஸ்துதியும் குதிரைகள் மற்றும் ஒட்டகங்களின் உரிமையாளர்களும் (நாடோடிப்) பாலைவனவாசிகளுமான ஒட்டக மேய்ப்பர் (களிடமும் பண்ணை முதலாளி)களிடமும் காணப்படுகின்றன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

087 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பெருமையும் கர்வமும் ஒட்டகங்களின் உரிமையாளர்களான நாடோடிகளிடையே காணப்படும்.அமைதி(யும் பணிவும்) ஆடுகளின் உரிமையாளர்களிடையே காணப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

088 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வாயிலாக மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அறிவிப்பாளர் ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் “இறைநம்பிக்கை யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்.விவேகமும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்“ என்று அதிகப்படியாக அறிவித்துள்ளார்கள்.

089 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யமன்வாசிகள் (உங்களிடம்) வந்திருக்கின்றார்கள்.அவர்கள் மென்மையான நெஞ்சம் உடையவர்கள்; இளகிய மனம் படைத்தவர்கள்.இறைநம்பிக்கை யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்.விவேகமும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்.அமைதி(யும் பணிவும்)ஆடுகளின் உரிமையாளர்களிடையே காணப்படும்.பெருமையும் கர்வமும் கிழக்குத் திசையிலுள்ள ஒட்டக உரிமையாளர்களான நாடோடிகளிடையே காணப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

090 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யமன்வாசிகள் உங்களிடம் வந்திருக்கிறார்கள்.அவர்கள் இளகிய மனம் படைத்தவர்கள்; மென்மையான நெஞ்சம் உடையவர்கள்.இறைநம்பிக்கை யமன் நாட்டைச் சேர்ந்ததாகும். இறை மறுப்பின் தலைமைப்பீடம் கிழக்குத் திசையில் (அக்னி ஆராதனையாளர்களான மஜீஸிகல் வசிக்கும் பாரசீகத்தில்) உள்ளது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், அறிவிப்பாளஎ அஃமஷ் (ரஹ்) அவர்கல் “இறைமறுப்பின் தலைமைப் பீடம் கிழக்குத் திசையில் உள்ளது“ எனும் வாசகத்தை குறிப்பிடவில்லை.

091 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அறிவிப்பாளர் அஃமஷ் (ரஹ்) அவர்கள், “பெருமையும் அகம்பாவமும் ஒட்டக உரிமையாளர்களிடையே காணப்படும்.அமைதியும் கம்பீரமும் ஆடுகளின் உரிமையாளர்களிடையே காணப்படும்“ என்று (நபி (ஸல்) அவர்கல் கூறியதாக அதிகப்படியாக அறிவித்துள்ளார்கள்.

092 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கல் மனமும் (இரக்கமற்ற) கடின சுபாவமும் கிழக்குத் திசையில் (பாரசீக அக்னி ஆராதனையாளர்களிடையே) காணப்படும்.இறைநம்பிக்கை ஹிஜாஸ்வாசிகளிடையே காணப்படும்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம்:22 இறைநம்பிக்கையாளர்களைத் தவிர வேறெவரும் சொர்க்கத்தில் நுழைய முடியாது; இறைநம்பிக்கையாளர்களை நேசிப்பதும் இறைநம்பிக்கையின் ஓர் அம்சமே; சலாத்தை பரப்புவது அந்த நேசம் ஏற்படக் காரணமாக அமையும்.

093 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் இறைநம்பிக்கை கொள்ளாதவரையில் சொர்க்கத்தில் நுழைய முடியாது.நீங்கள் ஒருவரை ஒருவர் நேசிக்காதவரை (முழுமையான) இறைநம்பிக்கையாளராக முடியாது. ஒன்றை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? அதை நீங்கள் செயல்படுத்தினால் ஒருவரை ஒருவர் நேசம் கொள்ளலாம்.உங்களிடையே சலாத்தைப் பரப்புங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

094 மேற்கண்ட ஹதீஸைப் போன்றே மற்றோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் வந்துள்ளது.
அதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்). அவர்கள், “என் உயிர் யார் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நீங்கள் இறைநம்பிக்கை கொள்ளாதவரை சொர்க்கத்தில் நுழைய முடியாது“ என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

**பாடம்:23 மார்க்கம் (தீன்) என்பதே ”நலம் நாடுவது” தான்.**

095 தமீமுத் தாரீ (ரலி) அவர்கல் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், “மார்க்கம் (தீன்) என்பதே “நலம் நாடுவது“ தான் என்று கூறினார்கள்.நாங்கள்,யாருக்கு (நலம் நாடுவது)?“ என்று கேட்டோம்.நபி (ஸல்) அவர்கள், “அல்லாஹ்வுக்கும், அவனது வேதத்துக்கும், அவனது தூதருக்கும், முஸ்லிம் தலைவர்களுக்கும், அவர்களில் பொதுமக்களுக்கும்“ என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ்ஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் சுஹைல் பின் அபீஸாலிஹ் (ரஹ்) அவர்களிடம் “அம்ர் அவர்கள் கஅகாஃ அவர்களிடலிருந்தும்,அவர் உங்கள் தந்தை அபூஸாலிஹ் அவர்களிடமிருந்தும் இந்த ஹதீஸை எமக்கு அறிவித்தார்கள்“ என்றேன்.அதற்கு சுஹைல் “எனக்கும் என் தந்தைக்கும் இடையே வேறொருவர் அறிவிப்பாளராக இருப்பதை நான் விரும்பவில்லை“ என்று கூறியதுடன், “என் தந்தை யாரிடமிருந்து இந்த ஹதீஸைக் கேட்டார்களோ அவரிடமிருந்தே நானும் கேட்டேன்.அவர் எனக்கு ஷாமில் (சிரியாவில்) நண்பராக இருந்தார் “என்றும் கூறினார்கள்.பின்னர் அந்த நண்பரான அதா பின் யஸீத் (ரஹ்) அவர்களிடமிருந்து நேரடியாகவே சுஹைல் அறிவித்தார்.

096 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

097 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் தொழுகையைக் கடைப்பிடிப்பதாகவும்,ஸகாத் வழங்குவதாகவும்,ஒவ்வொரு முஸ்லிமுக்கும் நலம் நாடுவதாகவும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி (பைஅத்) அளித்தேன்.
இதை கைஸ் பின் அபீஹாஸிம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

098 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் நான் முஸ்லிம்களில் ஒவ்வொருவருக்கும் நலம் நாடுவதாக உறுதிமொழி (பைஅத்) அளித்தேன்.
இதை ஸியாத் பின் இலாக்கா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

099 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது.
நபி (ஸல்) அவர்களிடம் நான் (அவர்களின் கட்டளையைச்) செவியேற்று (அதற்குக்) கீழ்படிவதாக உறுதிமொழி அளித்தேன்.அப்போது “என்னால் இயன்ற விஷயங்களில் “ என்று சேர்த்துக் கூறும்படி எனக்கு அவர்கள் சொல்லிக் கொடுத்தார்கள்.மேலும்,ஒவ்வொரு முஸ்லிமுக்கும் நனமை நாடுவேன் என்றும் உறுதிமொழி அளித்தேன்.
இதை ஷஅபீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம்:24 பாவங்களால் இறைநம்பிக்கை குறைகிறது;பாவத்தில் ஈடுபட்டுள்ளவன் இறைநம்பிக்கையாளன் அல்லன் என்று கூறுவது,நிறைவான இறைநம்பிக்கை அவனிடம் இல்லை என்ற கருத்தில்தான்.**

100 அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
விபச்சாரம் புரிகின்றவன் விபச்சாரம் புரியும் போது இறை நம்பிக்கையாளனாக இருந்தபடி அதைச் செய்யமாட்டான்.திருடன் திருடும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி திருடமாட்டான்.(மது அருந்துகின்றவன்)மது அருந்தும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி மது அருந்தமாட்டான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல் மலிக் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
இந்த ஹதீஸை அபூபக்ர் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மக்களுக்கு அறிவித்துவந்தார்கள்.பிறகு "மேற்கண்ட குற்றங்களுடன் பின்வரும் குற்றத்தையும் அபூஹுரைரா (ரலி) அவர்கள் சேர்த்துக் கூறிவந்தார்கள் "என்று கூறுவார்கள்:மக்களின் மதிப்பு மிக்க செல்வத்தை அவர்கள் தம் விழிகளை உயர்த்திப் பார்த்துக் கொண்டிருக்கக் கொள்ளையடிப்பவன் அதைக் கொள்ளையடிக்கும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி கொள்ளையடிக்கமாட்டான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

101 இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
மேற்கண்ட ஹதீஸை அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து அபூபக்ர் பின் அப்திர் ரஹ்மான் பின் அல்ஹாரிஸ் பின் ஹிஷாம் (ரஹ்) அவர்கள் எனக்கு அறிவித்தார்கள்.
அதில் (ஹதீஸில் இடம்பெற்றுள்ள மூன்று விஷயங்களுடன்) "மக்களின் செல்வத்தைக் கொள்ளையடிப்பவன் கொள்ளையடிக்கும் போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி கொள்ளையடிப்பதில்லை "என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது. "மக்களின் மதிப்பு மிக்க செல்வம்" எனும் வாசகத்தை அவர்கள் குறிப்பிடவில்லை.
அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து சயீத் பின் முஸய்யப் (ரஹ்),அபூசலமா பின் அப்திர் ரஹ்மான்(ரஹ்) ஆகியோர் அறிவித்துள்ள இதைப் போன்ற ஹதீஸில் "கொள்ளையடித்தல்" தொடர்பான தகவலைத் தவிர மற்ற அனைத்தும் இடம்பெற்றுள்ளன.

102 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் கொள்ளையடித்தல் பற்றி இடம்பெற்றுள்ளது. "மதிப்பு மிக்க செல்வத்தை" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

103 மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது. மற்றோர் அறிவிப்பில் ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களது மேற்கண்ட ஹதீஸைப் போன்ற எல்லாம் இடம்பெற்றுள்ளது.
ஆயினும் அல்அலாஉ பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்),ஸஃப்வான் பின் சுலைம் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "மக்கள் தம் விழிகளை உயர்த்திப் பார்த்துக் கொண்டிருக்க (கொள்ளையடிப்பவன் அதைக் கொள்ளையடிக்கும் போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி கொள்ளையடிக்கமாட்டான்) " எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
ஹம்மான் பின் முஅப்பிஹ் (ரஹ்) அவர்கல் தமது அறிவிப்பில் " இறைநம்பிக்கையாளர்கள் தம் விழிகளை உயர்த்திப் பார்த்துக் கொண்டிருக்கக் கொள்ளையடிப்பவன் அதை கொள்ளையடிக்கும் போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி கொள்ளையடிக்கமாட்டான் "என்று அறிவித்துள்ளார்கள்.மேலும், "மோசடி செய்பவன் செய்யும் போது அவன் இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி மோசடி செய்வதில்லை.(இவற்றிலிருந்து விலகிக் கொள்ளுமாறு) உங்களை நான் எச்சரிக்கிறேன்;உங்களை எச்சரிக்கிறேன் " என்றும் (நபி (ஸல்) அவர்கள் கூறினார்கல் என) அதிகப்படியாக அறிவித்துள்ளார்கள்.

104 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
விபச்சாரம் புரிகின்றவன் விபச்சாரம் புரியும் போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி அதைச் செய்யமாட்டான்.(திருடன்) திருடும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி திருடமாட்டான்.(மது அருந்துகின்றவன்) மது அருந்தும் போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி மது அருந்தமாட்டான்.மனம் வருந்தி பாவமன்னிப்புக் கோரல் பின்னர்தான் ஏற்படுகிறது.– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

105 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம்:25 நயவஞ்சகனின் குணங்கள்.

106 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான்கு குணங்கள் எவரிடம் குடிகொண்டுள்ளனவோ அவர் அப்பட்டமான நயவஞ்சகர் ஆவார்.எவரிடம் அவற்றில் ஒரு குணம் குடிகொண்டுள்ளதோ அவர் அதை விட்டுவிடும் வரை அவருள் நயவஞ்சகத்தின் ஒரு குணம் குடியிருக்கும்.
பேசினால் பொய் சொல்வதும்,ஒப்பந்தம் செய்து கொண்டால் (நம்பிக்கை) மோசடி செய்வதும்,வாக்களித்தால் மாறுசெய்வதும்,வழக்காடினால் நேர்மை தவறுவது தான் அவை (நான்கும்).
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இவற்றில் ஏதேனும் ஒரு குணம் அவரிடம் இருந்தால் நயவஞ்சகத்தின் ஒரு குணம் அவரிடம் இருக்கிறது" என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக) இடம்பெற்றுள்ளது.

107 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்றாகும்:அவன் பேசும்போது பொய் உரைப்பான்; வாக்களித்தால் அதற்கு மாறுசெய்வான்; அவனிடம் நம்பி (ஏதேனுமொன்றை) ஒப்படைத்தால் (அதில்) மோசடி செய்வான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

108 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மூன்று குணங்கள் நயவஞ்சகனின் அடையாளங்களில் அடங்கும்: பேசும்போது பொய் உரைப்பதும்,வாக்களித்தால் அதற்கு மாறுசெய்வதும், நம்பி (ஏதேனுமொன்றை) ஒப்படைத்தால் (அதில்) மோசடி செய்வதும்தான் அவை (மூன்றும்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

109 மேற்கண்ட அறிவிப்பாளர் தொடர் வழியாகவே யஹ்யா பின் முஹம்மத் (ரஹ்) அவர்களும் இந்த ஹதீஸை அறிவித்துள்ளார்கள்.
அதில் நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்றாகும்...அவன் நோன்பு நோற்றாலும், தொழுதாலும், தன்னை ஒரு முஸ்லிம் என்று கூறிக்கொண்டாலும் சரியே" என்று இடம்பெற்றுள்ளது.

110 வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது.

## பாடம் : 26 தம் சகோதர முஸ்லிமை நோக்கி "இறைமறுப்பாளனே!" (கா∴பிர்) என்று அழைத்தவரது இறைநம்பிக்கையின் நிலை.

111 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் தம் (முஸ்லிம்) சகோதரரை "இறைமறுப்பாளர்" (கா∴பிர்) என்று கூறினால் நிச்சயம் அவர்கள் இருவரில் ஒருவர் அச்சொல்லுக்கு உரியவராகத் திரும்புவார்,
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எந்த மனிதர் தம் (முஸ்லிம்) சகோதரரைப் பார்த்து "இறைமறுப்பாளனே!' ("கா∴பிரே!') என்று அழைக்கின்றாரோ நிச்சயம் அவர்களிருவரில் ஒருவர் அச்சொல்லுக்கு உரியவராகத் திரும்புவார். அவர் கூறியதைப் போன்று இவர் இருந்தால் சரி! இல்லாவிட்டால் அவர் சொன்ன சொல் அவரை நோக்கியே திரும்புகிறது.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

112 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தன் தந்தை அல்லாத(ஒரு)வரை, அவர் தன் தந்தையல்ல என்று விவரம் அறிந்துகொண்டே "அவர்தாம் என் தந்தை" என்று கூறும் ஒரு மனிதன் நன்றி கெட்டவன் (காஃபிர்) ஆகிவிட்டான். தனக்குச் சொந்தமில்லாத ஒன்றைக் குறித்து "அது தனக்குரியதுதான்" என்று கூறிக்கொள்பவன் நம்மைச் சார்ந்தவன் அல்லன்; அவன் தன் இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக்கொள்ளட்டும். ஒருவர் மற்றொரு ((முஸ்லிமான) மனிதரை "இறைமறுப்பாளர்' என்றோ "அல்லாஹ்வின் எதிரியே!' என்றோ அழைத்தால் -அவர் (உண்மையில்) அவ்வாறு (இறை மறுப்பாளராக) இல்லையாயின்- சொன்னவரை நோக்கியே அச்சொல் திரும்பிவிடுகின்றது.
இதை அபூதர் (ஜுன்துப் பின் ஜுனாதா-ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 27 தெரிந்துகொண்டே தன் தந்தையை வெறுத்து (வேறொருவரை தன் தந்தை என்று கூறி)விடுகின்றவனது இறை நம்பிக்கையின் நிலை.**

113 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்கள் தந்தையரை நீங்கள் வெறுக்காதீர்கள். யார் தம் தந்தையை வெறுத்து (வேறொருவரைத் தம் தந்தை என்று கூறி)விடுகின்றாரோ அவர் நன்றி கொன்றவர் (காஃபிர்) ஆவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

114 அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஸியாத் பின் உபைத் அஸ்ஸகஃபீ என்பார் (அபூசுஃப்யான் (ரலி) அவர்களுடைய புதல்வர் என்று) அழைக்கப்பட்டபோது, நான் அபூபக்ரா (ரலி) அவர்களைச் சந்தித்தேன். அவர்களிடம் "ஏன் இவ்வாறு செய்கின்றீர்கள்? சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் "யார் இஸ்லாத்தில் தம் தந்தையல்லாத வேறொருவரை -அவர் தம் தந்தையல்ல என்று தெரிந்துகொண்டே- தம் தந்தை என்று கூறுகின்றாரோ அவருக்குச் சொர்க்கம் தடை செய்யப்பட்டுள்ளது' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூற என் காதுகளால் கேட்டேன் எனக் கூறியுள்ளார்களே!" என்று சொன்னேன். அதற்கு அபூபக்ரா (ரலி) அவர்கள் "நானும் இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியேற்றுள்ளேன்" என்று சொன்னார்கள்.

115 அபூஉஸ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஹம்மத் (ஸல்) அவர்கள் "யார் தம் தந்தையல்லாத ஒருவரை (அவர் தம் தந்தை அல்ல என்பதை அறிந்துகொண்டே) தந்தை என்று கூறுவாரோ அவருக்குச் சொர்க்கம் தடை செய்யப்பட்டுள்ளது" என்று கூறியதைத் தம் காதுகள் செவியேற்றதாகவும், மனம் நினைவில் நிறுத்திக்கொண்டதாகவும் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி), அபூபக்ரா (ரலி) ஆகியோர் கூறினர்.

**பாடம் : 28 "ஒரு முஸ்லிமை ஏசுவது பாவமாகும். அவனுடன் போரிடுவது இறைமறுப்பாகும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.**

116 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமை ஏசுவது பாவமாகும். அவனுடன் போரிடுவது (அல்லது கொலை செய்வது) இறைமறுப்பு (போன்ற பாவச்செயல்) ஆகும்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸுபைத் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:

நான் அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்களிடம் "இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிப்பதை நீங்கள் செவியேற்றீர்களா?" என்று கேட்டேன். அபூவாயில் (ரஹ்) அவர்கள், "ஆம்' என்று கூறினார்கள்.
ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அபூவாயில் (ரஹ்) அவர்களிடம் ஸுபைத் (ரஹ்) அவர்கள் (மேற்கண்டவாறு) கேட்டது பற்றிய குறிப்பு இடம் பெறவில்லை.

117 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 29 "எனக்குப் பின்னால் உங்களில் ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக் கொள்ளும் இறைமறுப்பாளர்களாய் மாறிவிடாதீர்கள்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதன் பொருள்.**

118 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"விடைபெறும்' ஹஜ்ஜின்போது (உரை நிகழ்த்திக்கொண்டிருக்கையில்) நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "மக்களை மௌனமாக இருக்கச் சொல்லுங்கள்!" என்று கூறிவிட்டு, "எனக்குப் பின்னால் உங்களில் ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக்கொள்ளும் இறைமறுப்பாளர்களாய் மாறிவிடாதீர்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

119 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

120 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் விடைபெறும் ஹஜ்ஜின்போது (உரையாற்றுகையில்), "உங்களுக்கு அழிவு தான் (வைஹக்கும்)' அல்லது "உங்களுக்குக் கேடுதான் (வைலக்கும்)'. எனக்குப் பிறகு ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக்கொள்ளும் இறைமறுப்பாளர்களாய் நீங்கள் மாறிவிடாதீர்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 30 பரம்பரையைக் குறை கூறுவதையும், (இறந்தவருக்காக) ஒப்பாரி வைப்பதையும் இறைமறுப்பு என்று குறிப்பிடுவது.**

121 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களிடம் உள்ள இரு குணங்கள் இறை மறுப்பாகும்: 1. பரம்பரையைக் குறை கூறுவது. 2. இறந்தவருக்காக ஒப்பாரிவைப்பது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 31 (எசமானைவிட்டு) ஓடிப்போன அடிமையை "இறைமறுப்பாளன்" என்று குறிப்பிடுவது.**

122 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
எந்த அடிமை தன் எசமானர்களிடமிருந்து ஓடிப்போகிறானோ அவன் அவர்களிடம் திரும்பி வரும்வரை இறைமறுப்பாளனாகவே இருக்கிறான்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான மன்ஸூர் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
அல்லாஹ்வின் மீது சத்தியமாக! (மேற்கண்ட ஹதீஸ் ஜரீர் (ரலி) அவர்களது சொந்தக் கருத்தல்ல. மாறாக,) நபி (ஸல்) அவர்கள் கூறியது என்றே (எனக்கு) அறிவிக்கப்பட்டது. ஆயினும், (குழப்பவாதிகளான முஃதஸிலா மற்றும் காரிஜிய்யாக்கள் நிறைந்துள்ள) இந்த பஸ்ரா நகரில் என் வாயிலாக இது அறிவிக்கப்படுவதை நான் விரும்பவில்லை.

123 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எந்த அடிமை (தன் எசமானிடமிருந்து) ஓடிப் போகிறானோ அவனைவிட்டு (இறைவனின்) பொறுப்பு(ம் பாதுகாப்பும்) நீங்கிவிடுகிறது.
இதை ஜரீர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

124 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அடிமை (தன் எசமானிடமிருந்து) ஓடிப் போய்விட்டால் அவனுடைய எந்தத் தொழுகையும் ஏற்றுக்கொள்ளப்படாது. (தொழுகையின் நன்மை கிடைக்காது.)
இதை ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 32 நட்சத்திர இயக்கத்தால்தான் நமக்கு மழை பொழிந்தது என்று கூறுவது இறைமறுப்பாகும்.**

125 ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஹுதைபியா' எனுமிடத்தில் எங்களுக்கு சுப்ஹுத் தொழுகை தொழுவித்தார்கள். (அன்றிரவு மழை பெய்திருந்தது.) தொழுது முடித்ததும் மக்களை நோக்கி நேராகத் திரும்பி, "உங்கள் இறைவன் என்ன கூறினான் என்பதை நீங்கள்

அறிவீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்" என்று கூறினர்.
அப்போது "என் அடியார்களில் என்னை நம்பக்கூடியவர்களும் உள்ளனர்; (என்னை) மறுக்கக்கூடியவர்களும் உள்ளனர். "அல்லாஹ்வின் தயவாலும் அவன் கருணையாலும்தான் நமக்கு மழை பொழிந்தது' எனக் கூறியவர்கள் என்னை நம்பி, நட்சத்திரத்தை மறுத்தவர்களாவர். "இன்ன இன்ன நட்சத்திரத்தினால்தான் எங்களுக்கு மழை பொழிந்தது' எனக் கூறியவர்களோ என்னை மறுத்து நட்சத்திரத்தை நம்பியவர்கள் ஆவர்' என அல்லாஹ் சொன்னான்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

126 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் இறைவன் என்ன சொன்னான் என்று நீங்கள் அறிவீர்களா?" என (மக்களிடம்) கேட்டார்கள். பிறகு, "என் அடியார்களுக்கு நான் என் அருட்செல்வங்களில் ஒன்றை வழங்கும்போது அவர்களில் ஒரு சாரார் "(இதற்கெல்லாம் காரணம்) நட்சத்திரங்கள்தாம்; நட்சத்திரங்களாலேயே (இது எங்களுக்குக் கிடைத்தது)' என்று கூறி, அந்த அருட்செல்வத்தின் விஷயத்தில் நன்றி கெட்டவர்களாய் நடந்துகொள்ளாமல் இருந்ததில்லை (என்று அல்லாஹ் சொன்னான்)" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் வானிலிருந்து ஏதேனும் ஒரு வளத்தை இறக்கும்போதெல்லாம் மக்களில் ஒரு சாரார் அதன் விஷயத்தில் நன்றி கொன்றவர்களாய் மாறிவிடாமல் இருந்ததில்லை. (வானிலிருந்து) அல்லாஹ் மழை பொழிவிக்கிறான். அவர்களோ, "இன்ன இன்ன நட்சத்திரம் தான் (மழை பொழிவித்தது)' என்று கூறுகின்றனர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், முஹம்மத் பின் சலமா அல்முராதீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இன்ன இன்ன நட்சத்திரங்களால்தான் (மழை பொழிந்தது என்று அவர்கள் கூறுகின்றனர்)" என வந்துள்ளது.

127 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களது காலத்தில் (ஒரு நாள்) மழை பெய்தது. அப்போது நபி (ஸல்) அவர்கள், "மக்களில் நன்றியுள்ளவர்களும் உள்ளனர். நன்றி கெட்டவர்களும் உள்ளனர். (மழை பொழியும் போது) இது அல்லாஹ்வின் கருணை என்று (சிலர்) கூறுகின்றனர். வேறு சிலரோ, இன்ன இன்ன நட்சத்திர இயக்கம் மெய்யாகிவிட்டது என்று கூறுகின்றனர்" என்றார்கள்.
அப்போதுதான், "நட்சத்திர மண்டலங்களின் மீது நான் சத்தியம் செய்கிறேன்" என்று தொடங்கி, "(இறைவன் வழங்கிய) உங்கள் வாழ்வாதாரத்திற்கு (நன்றியாக) உங்களது அவிசுவாசத்தை ஆக்குகின்றீர்களா?" என்று முடியும் இறைவசனங்கள் (56:75-82) அருளப்பெற்றன.

**பாடம் : 33 அன்சாரிகளையும் அலீ (ரலி) அவர்களையும் நேசிப்பது இறைநம்பிக்கையும் அதன் அடையாளங்களில் ஒன்றும் ஆகும்; அவர்களை வெறுப்பது நயவஞ்சகத்தின் அடையாளங்களில் ஒன்றாகும் என்பதன் ஆதாரம்.**

128 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நயவஞ்சகனின் அடையாளம் அன்சாரிகளை வெறுப்பதாகும்; இறைநம்பிக்கையாளரின் அடையாளம் அன்சாரிகளை நேசிப்பதாகும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மற்றோர் அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அன்சாரிகளை நேசிப்பது இறைநம்பிக்கையின் அடையாளமாகும்; அவர்களை வெறுப்பது நயவஞ்சகத்தின் அடையாளமாகும்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

129 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகள் தொடர்பாக நபி (ஸல்) அவர்கள் கூறுகையில், "இறைநம்பிக்கையாளரைத் தவிர வேறெவரும் அவர்களை நேசிக்கமாட்டார்கள்; நயவஞ்சகனைத் தவிர வேறெவரும் அவர்களை வெறுக்கமாட்டார்கள். யார் அவர்களை நேசிக்கிறார்களோ அவர்களை அல்லாஹ்வும் நேசிக்கிறான். யார் அவர்களை வெறுக்கிறார்களோ அவர்களை அல்லாஹ்வும் வெறுக்கிறான்" என்று குறிப்பிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: நான் (இதை எனக்கு அறிவித்த) அதீ பின் ஸாபித் (ரஹ்) அவர்களிடம், "இதை பராஉ (ரலி) அவர்களிடமிருந்தா செவியுற்றீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "(ஆம்;) எனக்குத்தான் அவர்கள் அறிவித்தார்கள்" என்று பதிலளித்தார்கள்.

130 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொண்ட எவரும் அன்சாரிகளை வெறுக்கமாட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொண்ட எவரும் அன்சாரிகளை வெறுக்கமாட்டார்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

131 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
எவன் வித்துக்களைப் பிளந்தானோ, உயிர்களைப் படைத்தானோ அவன்மீது ஆணையாக! உம்மீ நபி (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) என்னிடம் அறுதியிட்டுக் கூறினார்கள்:

இறைநம்பிக்கையாளரைத் தவிர வேறெவரும் என்னை (அலீயை) நேசிக்கமாட்டார்கள். நயவஞ்சகனைத் தவிர வேறெவரும் என்னை வெறுக்கமாட்டார்கள்.
இதை ஸிர்ரு பின் ஹுபைஷ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 34 வணக்க வழிபாடுகள் குறைவதால் இறைநம்பிக்கையும் குறையும்; நன்றி மறத்தல், உரிமை மீறல் போன்ற இறைமறுப்பு அல்லாத செயல்களுக்கும் "குஃப்ர்' எனும் சொல் ஆளப்படும்.**

132 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உரையாற்றுகையில்), "பெண்கள் சமுதாயமே! தானதர்மங்கள் செய்யுங்கள்; அதிகமாகப் பாவமன்னிப்புக் கோருங்கள். ஏனெனில், நரகவாசிகளில் நீங்களே அதிகமாக இருப்பதை நான் கண்டேன்" என்று கூறினார்கள். அப்போது அங்கிருந்த புத்திசாலியான ஒரு பெண்மணி, "நரகவாசிகளில் அதிகம் பேராக நாங்கள் இருப்பதற்கு என்ன காரணம்? அல்லாஹ்வின் தூதரே!" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் அதிகமாகச் சாபம் கொடுக்கிறீர்கள்; கணவனிடம் நன்றி இல்லாதவர்களாக நடந்துகொள்கிறீர்கள்; அறிவிலும் மார்க்கத்திலும் குறைபாடுள்ளவர்களாகவும், அறிவிற் சிறந்தோரைக்கூட (கவர்ச்சியால்) வீழ்த்தக் கூடியவர்களாகவும் (பெண்களான) உங்களைப் போன்று வேறு யாரையும் நான் காணவில்லையே" என்று பதிலளித்தார்கள்.

அப்பெண்மணி, "அறிவிலும் மார்க்கத்திலும் எங்களுடைய குறைபாடு என்ன? அல்லாஹ்வின் தூதரே!" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அறிவிலுள்ள குறைபாடு யாதெனில், ஓர் ஆணின் சாட்சியத்திற்கு இரு பெண்களின் சாட்சியம் நிகராகிறது. இதுதான் (பெண்களின்) அறிவிலுள்ள குறைபாடாகும். (மாதவிடாய் ஏற்படும்) பல நாட்கள் அவள் தொழாமல் இருந்துகொண்டிருக்கிறாள்; ரமளான் மாதத்தில் நோன்பு நோற்காமல் இருக்கிறாள். இதுதான் (அவளுடைய) மார்க்கத்திலுள்ள குறைபாடு" என்று கூறினார்கள்.
மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸைப் போன்றே அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களும் அபூஹுரைரா (ரலி) அவர்களும் அறிவித்துள்ளார்கள்.

**பாடம் : 35 தொழுகையைக் கைவிடுவதற்கும் "குஃப்ர்' எனும் சொல் ஆளப்படுவதுண்டு.**

133 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதமின் மைந்தன் (மனிதன்) சஜ்தா (சிரவணக்கத்திற்கான) வசனத்தை ஓதி சிரவணக்கம் (சஜ்தா) செய்தால் ஷைத்தான் அழுதவாறே "அந்தோ எனக்கு வந்த நாசமே! ஆதமின் மைந்தன் சிரவணக்கம் செய்யும்படி கட்டளையிடப்பட்டான். அவன் சிரவணக்கம் செய்துவிட்டான். அவனுக்குச் சொர்க்கம் கிடைக்கப்போகிறது. ஆனால் (ஆதி மனிதர்

ஆதமுக்குச்) சிரம்பணியும்படி எனக்குக் கட்டளையிடப்பட்டது. நானோ மறுத்து விட்டேன். எனவே, எனக்கு நரகம்தான்" என்று கூறியபடி விலகிச்செல்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "(ஆதமுக்குச் சிரம்பணியும்படி எனக்குக் கட்டளையிடப்பட்டது.) ஆனால், நான் (அதற்கு) மாறுசெய்தேன். எனவே, எனக்கு நரகம்தான்" என்று (சிறு வித்தியாசத்துடன்) இடம்பெற்றுள்ளது.

134 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நிச்சயமாக மனிதனுக்கும் இணைவைப்பு மற்றும் இறைமறுப்பு ஆகியவற்றுக்குமிடையே (பாலமாக இருப்பது) தொழுகையைக் கைவிடுவது தான்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மனிதனுக்கும் இணைவைப்பு மற்றும் இறைமறுப்பு ஆகியவற்றுக்குமிடையே (பாலமாக இருப்பது) தொழுகையைக் கைவிடுவதுதான்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(இதன் அறிவிப்பாளர்தொடர் வேறுபடுகிறது.)

## பாடம் : 36 அல்லாஹ்வை நம்பிக்கைகொள்வதே (நற்)செயல்களில் மிகவும் சிறந்ததாகும்.

135 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "(நற்)செயல்களில் சிறந்தது எது?" என்று கேட்கப் பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வை நம்பிக்கை கொள்வது" என்று கூறினார்கள். "பிறகு எது (சிறந்தது)?" என்று கேட்கப்பட்டபோது, "அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவது" என்றார்கள். "பிறகு எது (சிறந்தது)?" எனக் கேட்கப்பட்டபோது, "(பாவச் செயல் எதுவும் கலவாத) ஒப்புக்கொள்ளப்பட்ட ஹஜ்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் முஹம்மத் பின் ஜஅ்ஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ("அல்லாஹ்வை நம்பிக்கைகொள்வது' எனும் இடத்தில்) "அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நம்பிக்கைகொள்வது" என்று இடம்பெற்றுள்ளது.

136 அபூதர் அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! (நற்)செயல்களில் சிறந்தது எது?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் மீது நம்பிக்கை (ஈமான்) கொள்வதும் அவனது பாதையில் அறப்போர் புரிவதும் ஆகும்" என்று பதிலளித்தார்கள். நான், "எந்த அடிமை(யை விடுதலை செய்வது) சிறந்தது?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "தன்

எசமானர்களிடம் பெறுமதி மிக்க, அதிக விலை கொண்ட அடிமைதான் (சிறந்தவன்)" என்று பதிலளித்தார்கள்."அ(த்தகைய அடிமையை விடுதலை செய்வ)து என்னால் இயலவில்லையென்றால்...?"என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "தொழில் செய்பவருக்கு உதவி செய்க; அல்லது வேலை இல்லாதவருக்கு வேலை தருக" என்று சொன்னார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! (நற்)செயல்களில் சிலவற்றைக்கூட என்னால் செய்ய இயலவில்லையென்றால் (நான் என்ன செய்வது?) கூறுங்கள்!" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "மக்களுக்குத் தீங்கு செய்யாமல் இருங்கள்! ஏனெனில், அதுவும் நீங்கள் உங்களுக்குச் செய்துகொள்ளும் ஒரு நல்லறம்தான்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் வேறு இரு அறிவிப்பாளர் தொடர்களிலும் வந்துள்ளது.
அவற்றில் ("தொழில் செய்பவனுக்கு உதவி செய்க' என்பதற்கு பதிலாக) "பலவீனருக்கு உதவி செய்க; அல்லது வேலை இல்லாதவருக்கு வேலை தருக' என இடம்பெற்றுள்ளது.

137 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "(நற்)செயல்களில் சிறந்தது எது?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "உரிய நேரத்தில் தொழுகையை நிறைவேற்றுவது" என்று பதிலளித்தார்கள். நான் "பிறகு எது?" என்று கேட்டேன். "தாய் தந்தையருக்கு நன்மை புரிவது" என்றார்கள். நான், "பிறகு எது?" என்று கேட்டேன். அதற்கு "அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவது" என்றார்கள். (நபி அவர்களுக்கு தொந்தரவு கொடுக்கக் கூடாது என்று) அவர்கள்மீது பரிவுகாட்டியே நான் மேலும் மேலும் கேட்பதை நிறுத்திவிட்டேன்.

138 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் நபியே! (நற்)செயல்களில் சொர்க்கத்திற்கு மிகவும் நெருக்கமானது எது?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உரிய நேரத்தில் தொழுகையை நிறைவேற்றுவது" என்று கூறினார்கள். "அடுத்து எது? அல்லாஹ்வின் நபியே!" என்று கேட்டேன். அதற்கு, "தாய் தந்தையருக்கு நன்மை புரிவது" என்றார்கள். "அடுத்து எது? அல்லாஹ்வின் நபியே!" என்று கேட்டபோது, "அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவது" என்றார்கள்.

139 வலீத் பின் அல்அய்ஸார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களின் இல்லத்தைச் சுட்டிக் காட்டியவாறு அபூஅம்ர் அஷ் ஷைபானீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: இதோ! இந்த வீட்டுக்காரர் (பின்வருமாறு) என்னிடம் கூறினார்கள்:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான செயல் (அமல்) எது?" என்று கேட்டேன். அவர்கள், "உரிய நேரத்தில் தொழுகையை நிறைவேற்றுவது" என்று கூறினார்கள். நான் "பிறகு எது?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "பிறகு தாய் தந்தையருக்கு நன்மை புரிவது" என்றார்கள். நான், "பிறகு எது?" என்று கேட்டபோது, "பிறகு அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவது" என்றார்கள்.

இவற்றை மட்டுமே என்னிடம் அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். இன்னும் அதிகமாக (இது குறித்து) நான் கேட்டிருந்தால் அவர்களும் எனக்கு அதிகமாகச் சொல்லியிருப்பார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களின் இல்லத்தை நோக்கி அபூஅம்ர் அஷ்ஷைபானீ (ரஹ்) அவர்கள் சாடை காட்டினார்கள்; அன்னாரது பெயரை எங்களிடம் குறிப்பிடவில்லை" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

140 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"நற்செயல்களில்' அல்லது "நற்செயலில்' சிறந்தது உரிய நேரத்தில் தொழுகையை நிறைவேற்றுவதும் தாய் தந்தையருக்கு நன்மை புரிவதுமாகும்
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 37 இறைவனுக்கு இணைவைப்பதுதான் பாவங்களிலேயே மிகவும் மோசமானது. அதற்கடுத்த பெரும் பாவம் எது என்பது பற்றிய விளக்கம்.

141 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்விடம் பாவங்களில் மிகப் பெரியது எது?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க, அவனுக்கு நீ இணை கற்பிப்பது" என்று சொன்னார்கள். நான் அவர்களிடம், "நிச்சயமாக அது மிகப் பெரிய பாவம்தான்" என்று சொல்லிவிட்டு, "பிறகு எது?" என்று கேட்டேன். "உன் குழந்தை உன்னுடன் (அமர்ந்து உன் உணவைப் பங்குபோட்டு) உண்ணும் என அஞ்சி அதை நீ கொல்வது" என்று சொன்னார்கள். நான் "பிறகு எது?" என்று கேட்க, அவர்கள், "உன்(மீது அபார நம்பிக்கைவைத்துள்ள) அண்டை வீட்டானின் மனைவி(யைக் கவர்ந்து அவள்) உடன் நீ விபசாரம் செய்வது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

142 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (நபி (ஸல்) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்விடம் எந்தப் பாவம் மிகப் பெரியது?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், "அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க, அவனுக்கு நீ இணைவைப்பதுதான், (பெரும் பாவம்)" என்று பதிலளித்தார்கள். அவர், "பிறகு எது?" என்று கேட்டார். அவர்கள், "உன் குழந்தை உன்னுடன் (அமர்ந்து உன் உணவைப் பங்குபோட்டு) உண்ணும் என அஞ்சி அதை நீ கொல்வது" என்று சொன்னார்கள். "பிறகு எது?" என்று அவர் கேட்க, "உன் அண்டை வீட்டானின் மனைவி(யைக் கவர்ந்து அவள்) உடன் நீ விபசாரம் செய்வது" என்று அவர்கள் பதிலளித்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது இக்கூற்றை மெய்ப்பிக்கும் வகையில், "மேலும், அவர்கள் அல்லாஹ்வுடன் வேறெந்தத் தெய்வத்தையும் அழைப்பதில்லை. மேலும், (கொலை செய்யக் கூடாது என்று) அல்லாஹ் தடை விதித்துள்ள எந்த உயிரையும் (சட்டபூர்வமான) உரிமையின்றி அவர்கள் கொலை செய்வதில்லை; மேலும், விபசாரமும் செய்வதில்லை.

யாரேனும் இச்செயல்களைச் செய்தால் அவன் (தன் பாவத்திற்கான) தண்டனையைப் பெற்றே தீருவான்" எனும் (25:68ஆவது) வசனத்தை அல்லாஹ் அருளினான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 38 பெரும் பாவங்களும் மிகப்பெரும் பாவங்களும்.

143 அபூபக்ரா நுஃபைஉ பின் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருகில் இருந்தோம். அப்போது அவர்கள், "பெரும் பாவங்களிலேயே மிகப்பெரும் பாவங்களை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?" என்று (மூன்று முறை) கேட்டு விட்டு, "அல்லாஹ்வுக்கு இணைவைப்பது, பெற்றோரைப் புண்படுத்துவது, "பொய் சாட்சியம் சொல்வது' அல்லது "பொய் பேசுவது' ஆகியவை (தாம் அவை)" என்று கூறினார்கள். அப்போது சாய்ந்துகொண்டிருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து அமர்ந்து இ(றுதியாகச் சொன்ன)தை திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டேயிருந்தார்கள். இதைக் கண்ட நாங்கள் "அவர்கள் நிறுத்திக் கொள்ளக்கூடாதா!" என்று கூறினோம்.

144 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வுக்கு இணைவைப்பது, பெற்றோரைப் புண்படுத்துவது, கொலைசெய்வது மற்றும் பொய் பேசுவது ஆகியவை பெரும்பாவங்களில் அடங்கும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
- அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை) "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெரும் பாவங்கள் பற்றிக் கூறினார்கள்' அல்லது "பெரும் பாவங்கள் குறித்து அவர்களிடம் வினவப்பட்டது'. அப்போது அவர்கள், "அல்லாஹ்வுக்கு இணைவைப்பது, கொலை செய்வது, பெற்றோரைப் புண்படுத்துவது ஆகியன (பெரும்பாவங்களாகும்)" என்று கூறினார்கள்.
பிறகு "பெரும் பாவங்களிலேயே மிகப் பெரும் பாவம் ஒன்றை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?" என்று கேட்டுவிட்டு, "பொய் பேசுவது' அல்லது "பொய் சாட்சியம் கூறுவது' தான் (அது) என்று சொன்னார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: "பொய் சாட்சியம்' என்றே நான் பெரிதும் கருதுகிறேன்.

145 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பேரழிவை ஏற்படுத்தும் ஏழு பெரும் பாவங் களைத் தவிர்த்திடுவீர்!" என்று கூறினார்கள். அப்போது, "அல்லாஹ்வின் தூதரே! அவை எவை?" என்று கேட்கப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பது, சூனியம் செய்வது, (சட்டபூர்வமான) உரிமையின்றி கொல்லக் கூடாது என்று அல்லாஹ் தடை விதித்துள்ள உயிரைக் கொல்வது, அநாதைகளின் செல்வத்தை உண்பது, வட்டியை உண்பது, போரின்போது புறமுதுகிட்டு ஓடுவது, அப்பாவிகளான, இறை நம்பிக்கை கொண்ட,

கற்புள்ள பெண்கள்மீது அவதூறு கூறுவது ஆகியவைதாம் (அந்தப் பெரும் பாவங்கள்)" என்று பதிலளித்தார்கள்.

146 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஒரு மனிதர் தம் தாய் தந்தையரை ஏசுவது பெரும் பாவங்களில் உள்ளதாகும்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது "அல்லாஹ்வின் தூதரே! ஒரு மனிதர் தம் தாய் தந்தையரையே ஏசுவாரா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம். ஒருவர் இன்னொருவரின் தந்தையை ஏசுவார். உடனே (பதிலுக்கு) அவர் இவருடைய தந்தையை ஏசுவார். ஒருவர் இன்னொருவரின் தாயை ஏசுவார். உடனே (பதிலுக்கு) அவர் இவருடைய தாயை ஏசுவார். (ஆக, தம் பெற்றோர் ஏசப்படுவதற்கு இவரே காரணமாகிவிடுகிறார்)" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 39 தற்பெருமை கூடாது; தற்பெருமை என்றால் என்ன?

147 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "யாருடைய உள்ளத்தில் அணுவளவு தற்பெருமை இருக்கிறதோ அவர் சொர்க்கத்தில் நுழையமாட்டார்" என்று கூறினார்கள். அப்போது ஒரு மனிதர், "தமது ஆடை அழகாக இருக்க வேண்டும்; தமது காலணி அழகாக இருக்க வேண்டும் என ஒருவர் விரும்புகிறார். (இதுவும் தற்பெருமையில் சேருமா?)" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ் அழகானவன்; அழகையே அவன் விரும்புகின்றான். தற்பெருமை என்பது (ஆணவத்தோடு) உண்மையை மறுப்பதும், மக்களைக் கேவலமாக மதிப்பதும்தான்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

148 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தமது உள்ளத்தில் கடுகு மணியளவு இறைநம்பிக்கையுள்ள எவரும் நரகத்தில் நுழைய மாட்டார். தமது உள்ளத்தில் கடுகு மணியளவு அகம்பாவமுள்ள எவரும் சொர்க்கத்தில் நுழையமாட்டார்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

149 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யாருடைய உள்ளத்தில் அணுவளவு தற்பெருமை உள்ளதோ அவர் சொர்க்கத்தில் நுழையமாட்டார்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 40 அல்லாஹ்வுக்கு எதையும் இணை வைக்காமல் இறந்தவர் சொர்க்கம் செல்வார். இணைவைப்பாளராக இறந்து போனவர் நரகம் செல்வார்.**

150 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "யார் அல்லாஹ்வுக்கு இணைவைத்தவராக இறந்து விடுகிறாரோ அவர் நிச்சயமாக நரகம் செல்வார்" என்று கூறியதை நான் கேட்டேன். நான் (அதே கருத்தை) "யார் அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்காமல் இறந்துவிடுகிறாரோ அவர் நிச்சயமாக சொர்க்கம் செல்வார்" என்று கூறினேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

151 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "(சொர்க்கத்தையும் நரகத்தையும்) கட்டாயமாகத் தேடித் தருகின்ற இரண்டு விஷயங்கள் என்னென்ன?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "யார் அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்காமல் இறந்துவிடுகிறாரோ அவர் (நிச்சயமாகச்) சொர்க்கம் செல்வார். யார் அல்லாஹ்வுக்கு இணைவைத்தவராக இறந்துவிடுகிறாரோ அவர் (நிச்சயமாக) நரகம் செல்வார்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

152 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்காமல் அவனைச் சந்திக்கிறாரோ அவர் சொர்க்கம் செல்வார். யார் அவனுக்கு இணைவைத்தவராக அவனைச் சந்திக்கிறாரோ அவர் நரகம் செல்வார்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், ஹஜ்ஜாஜ் பின் அஷ்ஷாயிர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஜாபிர் (ரலி) அவர்கள் எங்களுக்கு அறிவித்தார்கள்" என்று (முத்தஸிலாகவு)ம், அபூஅய்யூப் அல்ஃகைலானீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்படுகிறது" என்று (முன்கத்திஉ ஆகவு)ம் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

153 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என்னிடம் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து "உங்கள் சமுதாயத்தாரில் யார் அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்காமல் இறந்துவிடுகிறாரோ அவர் நிச்சயமாகச் சொர்க்கம் செல்வார்" என்று நற்செய்தி கூறினார். உடனே நான், "அவர் விபசாரம் செய்தாலும் திருடினாலுமா?" என்று கேட்டேன். அதற்கு ஜிப்ரீல் "விபசாரம் செய்தாலும் திருடினாலும் சரியே" என்று பதிலளித்தார்.
இதை அபூதர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

154 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் வெள்ளை ஆடை அணிந்தபடி உறங்கிக்கொண்டிருந்தார்கள். (சிறிது நேரத்திற்குப்) பிறகு மீண்டும் நான் அவர்களிடம் சென்றேன். அப்போதும் அவர்கள் உறங்கிக்கொண்டிருந்தார்கள். பிறகு (மீண்டும்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் விழித்திருந்தார்கள். நான் அவர்கள் அருகில் அமர்ந்தேன். அப்போது "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை("லா இலாஹ இல்லல்லாஹ்') என்று சொல்லி, பிறகு அதே நம்பிக்கையில் இறந்துவிடும் எந்த அடியாரும் சொர்க்கம் புகுந்தே தீருவார்" என்று நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள். நான், "அவர் விபசாரம் புரிந்தாலும் திருடினாலுமா?" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், "அவர் விபசாரம் புரிந்தாலும் திருடினாலும் சரியே (சொர்க்கம் புகுந்தே தீருவார்)" என்று சொன்னார்கள். நான் (மீண்டும்) "அவர் விபசாரம் புரிந்தாலும் திருடினாலுமா?" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், "அவர் விபசாரம் புரிந்தாலும் திருடினாலும் சரியே (சொர்க்கம் புகுந்தே தீருவார்)" என்று சொன்னார்கள்.- இவ்வாறு மூன்று தடவை நடந்தது. நான்காவது தடவை "(அவர் சொர்க்கம் புகுந்தே தீருவார்.) அபூதர்ரின் மூக்கு மண்ணைக் கவ்வட்டும்! (அதாவது நீர் இதை விரும்பாவிட்டாலும் சரியே)" என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர் அபுல்அஸ்வத் அத்தீலீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
அபூதர் (ரலி) அவர்கள் "அபூதர்ரின் மூக்கு மண்ணைக் கவ்வட்டும்" என்று கூறியபடியே புறப்பட்டுச் சென்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 41** இறைமறுப்பாளர் ஒருவர் "லா இலாஹ இல்லல்லாஹ்' என்று (கலிமாச்) சொன்னதற்குப் பிறகு அவரைக் கொலை செய்வது கூடாது.

155 மிக்தாத் பின் அம்ர் அல்அஸ்வத் அல்கிந்தீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்) "இறை மறுப்பாளர்களில் ஒருவனை நான் சந்தித்தேன். அவன் என்னிடம் சண்டையிட்டான். அப்போது அவன் என் கைகளில் ஒன்றை வாளால் வெட்டித் துண்டித்துவிட்டான். பிறகு, அவன் என்னை விட்டு ஓடிப்போய் ஒரு மரத்தில் அபயம் தேடி (ஒளிந்து)கொண்டு, "அல்லாஹ்வுக்கு அடிபணிந்(து இஸ்லாத்தில் இணைந்)தேன்' என்று சொன்னான். இதை அவன் சொன்னதற்குப் பிறகு நான் அவனைக் கொல்லலாமா? அல்லாஹ்வின் தூதரே!" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(வேண்டாம்) அவனைக் கொல்லாதே!" என்றார்கள். அதற்கு நான், "அல்லாஹ்வின் தூதரே! அவன் எனது கையைத் துண்டித்துவிட்டான். அதைத் துண்டித்த பிறகுதானே இதைச் சொன்னான்!" என்று கேட்டேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவனை நீ கொல்லாதே! அவ்வாறு நீ அவனைக் கொன்றுவிட்டால் அவனைக் கொல்வதற்கு முன்பு நீயிருந்த (குற்றமற்ற) நிலைக்கு அவன் வந்து விடுவான். அந்த வார்த்தையைச் சொல்வதற்கு முன் அவனிருந்த (குற்றவாளி எனும்) நிலைக்கு நீ சென்றுவிடுவாய்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

156 மேற்கண்ட ஹதீஸ் வேறு சில அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மஅமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நான் அவனைக் கொல்வதற்கு முற்படும் போது அவன் "லா இலாஹ இல்லல்லாஹ்' (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை) என்று கூறினான். (இதற்குப் பிறகு அவனை நான் கொல்லலாமா? என்று மிக்தாத் (ரலி) அவர்கள் வினவினார்கள்) என இடம்பெற்றுள்ளது.

157 அதாஉ பின் யஸீத் அல்லைஸீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உபைதுல்லாஹ் பின் அதீ பின் கியார் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
பனூ ஸுஹ்ரா குலத்தாரின் நட்புக் குலத்தைச் சேர்ந்தவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பத்ருப்போரில் பங்கேற்றவருமான மிக்தாத் பின் அம்ர் பின் அல்அஸ்வத் அல்கிந்தீ (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! கூறுங்கள்: இறைமறுப்பாளர்களில் ஒருவனை நான் சந்தித்தேன்..." என்று கேட்டார்கள்.
இதைத் தொடர்ந்து மேற்கண்ட (155ஆவது) ஹதீஸிலுள்ளதைப் போன்றே உபைதுல்லாஹ் பின் அதீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்.

158 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் படைப்பிரிவொன்றில் அனுப்பி வைத்தார்கள். ஜுஹைனா குலத்தைச் சேர்ந்த "ஹுரக்காத்' கூட்டத்தாரிடம் நாங்கள் காலையில் சென்றடைந்தோம். (அவர்களுடன் நடந்த சண்டையில் அவர்களை நாங்கள் தோற்கடித்தோம்.) அப்போது நான் ஒருவரைச் சந்தித்தேன். (அவரை நாங்கள் சுற்றி வளைத்துக்கொண்டபோது) அவர், "லா இலாஹ இல்லல்லாஹ்" (அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு இறைவன் இல்லை) என்று சொன்னார். நான் (எனது ஈட்டியால்) அவரைத் தாக்கி(க் கொன்று)விட்டேன். ஆனால் அது என் மனதில் உறுத்திக்கொண்டே இருந்தது. (திரும்பி வந்தபோது) நான் இது குறித்து நபி (ஸல்) அவர்களிடம் சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "லா இலாஹ இல்லல்லாஹ் என்று அவர் சொன்ன பிறகுமா அவரை நீ கொன்றாய்?" என்று கேட்டார்கள். "ஆயுதத்தை அஞ்சித்தான் அவர் இவ்வாறு சொன்னார், அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினேன். "அதை அவர் (உளப்பூர்வமாக) சொன்னாரா இல்லையா என்று அறிய அவருடைய இதயத்தை நீ பிளந்து பார்த்தாயா?" என்று (கடிந்து) கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் அந்தக் கேள்வியையே என்னிடம் திரும்பத் திரும்பக் கேட்டுக்கொண்டேயிருந்தார்கள். எந்த அளவிற்கென்றால், நான் (அதற்கு முன் இஸ்லாத்தை ஏற்றிராமல்) அன்றைய தினத்தில் இஸ்லாத்தை ஏற்றிருந்தால் நன்றாயிருந்திருக்குமே என்றுகூட ஆசைப்பட்டேன்.

எனவேதான் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! எந்த முஸ்லிமுடன் நான் போரிடுவதாக இருந்தாலும் அவருடன் இந்தச் "சின்ன வயிற்றுக்காரர்' - உசாமா- போரிடாதவரை போரிடமாட்டேன்" என்று கூறினார்கள். அப்போது ஒரு மனிதர் (சஅத் (ரலி) அவர்களிடம்), "(பூமியிலிருந்து) குழப்பம் நீங்கி, கீழ்ப்படிதல் முற்றிலுமாக அல்லாஹ்வுக்கென்றே ஆகிவிடும்வரை அவர்களுடன் நீங்கள் போரிடுங்கள்" (8:39) என்று அல்லாஹ் கூறவில்லையா? என்று கேட்டார். அதற்கு சஅத் (ரலி) அவர்கள், "(அல்லாஹ்வின்

தூதர் (ஸல்) அவர்களது காலத்தில்) குழப்பம் முற்றிலும் நீங்கிவிட வேண்டுமென்பதற்காக நாங்கள் போரிட்டோம். ஆனால், நீரும் உம் தோழர்களும் குழப்பம் உருவாக வேண்டுமென்பதற்காகப் போரை விரும்புகிறீர்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாக வந்துள்ளது.

159 உசாமா பின் ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஜுஹைனா குலத்தைச் சேர்ந்த "ஹுரக்கா' கூட்டத்தாரிடம் அனுப்பிவைத்தார்கள். நாங்கள் அந்தக் கூட்டத்தாரிடம் காலையில் சென்றடைந்தோம். (அவர்களுடன் நடந்த சண்டையில்) அவர்களை நாங்கள் தோற்கடித்தோம். அப்போது நானும் அன்சாரிகளில் ஒருவரும் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவரிடம் போய்ச்சேர்ந்தோம். அவரை நாங்கள் சுற்றி வளைத்துக்கொண்டபோது, அவர் "லா இலாஹ இல்லல்லாஹ்' (அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு இறைவன் இல்லை) என்று சொல்ல, அந்த அன்சாரி (அவரைக் கொல்லாமல்) விலகிக்கொண்டார். நான் என் ஈட்டியால் அவரைக் குத்திக் கொன்றுவிட்டேன். நாங்கள் (திரும்பி) வந்தபோது நபி (ஸல்) அவர்களுக்கு இந்தச் செய்தி எட்டவே அவர்கள் என்னிடம், "உசாமா! அவர் "லா இலாஹ இல்லல்லாஹ்' என்று (ஏகத்துவ வாக்கியத்தை) மொழிந்த பின்னருமா அவரை நீ கொன்றாய்?" என்று கேட்டார்கள். நான், "அவர் உயிரைப் பாதுகாக்கவே (அவ்வாறு கூறினார்)" என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள் "அவர் "லா இலாஹ இல்லல்லாஹ்' என்று மொழிந்த பின்னருமா அவரை நீ கொன்றாய்?" என்று (மீண்டும்) கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் அந்தக் கேள்வியையே திரும்பத் திரும்பக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். எந்த அளவிற்கென்றால், நான் "(அந்தப் பாவத்தைச் செய்த) அந்த நாளுக்கு முன்பு இஸ்லாத்தை ஏற்காமல் (அதற்குப் பிறகு ஏற்று) இருந்திருந்தால் நன்றாயிருந்திருக்குமே; (பாவம் மன்னிக்கப்பட்டிருக்குமே!)' என்றுகூட ஆசைப்பட்டேன்.

160 ஸஃப்வான் பின் முஹ்ரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களது காலத்தில் நடந்த சண்டையின் போது ஜுன்தப் பின் அப்தில்லாஹ் அல்பஜலீ (ரலி) அவர்கள் அஸ்அஸ் பின் சலமா (ரஹ்) அவர்களிடம் "எனக்காக உங்களுடைய சகோதரர்களில் சிலரை ஒன்றுகூட்டுங்கள். அவர்களிடம் நான் பேச வேண்டும்" என்று சொல்லி அனுப்பினார்கள். (தம் சகோதரர்களை அழைத்து வருமாறு) அஸ்அஸ் ஒரு தூதுவரை அவர்களிடம் அனுப்பினார். அவ்வாறே அவர்கள் ஒன்றுகூடியதும் (அவர்களிடம்) மஞ்சள் நிற முக்காட்டு ஆடை ஒன்றை அணிந்து கொண்டு ஜுன்தப் (ரலி) அவர்கள் வந்து "நீங்கள் பேசிக்கொண்டிருந்ததை (தொடர்ந்து) பேசுங்கள்" என்று சொன்னார்கள். அதையடுத்து அவர்கள் ஒவ்வொருவராக பேசிக்கொண்டே வந்து ஜுன்தப் (ரலி) அவர்கள் பேச வேண்டிய முறை வந்தபோது அவர்கள் தமது தலையிலிருந்த முக்காட்டை விலக்கிவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்: நான் உங்களிடம் வரும்போது உங்களுக்கு உங்களுடைய நபியின் செய்தி ஒன்றை அறிவிக்க வேண்டும் என நான் எண்ணியிருக்கவில்லை. (ஆனால், அறிவிக்க வேண்டுமென இப்போது விரும்புகிறேன்.) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இணைவைப்பாளர்களில் ஒரு கூட்டத்தாரை நோக்கி முஸ்லிம்களின் படைப் பிரிவொன்றை அனுப்பிவைத்தார்கள். அவர்கள் (அக்கூட்டத்தாரிடம்

சென்று) அவர்களை(ப் போர்க்களத்தில்) சந்தித்தனர். அப்போது இணைவைப்பாளர்களில் ஒரு மனிதர் முஸ்லிம்களில் எவரையேனும் தாக்க முற்படும்போதெல்லாம் (குறி தவறாமல்) தாக்கிக் கொலை செய்துகொண்டிந்தார். இந்நிலையில் முஸ்லிம்களில் ஒருவர் (அவர் உசாமா பின் ஸைத் என்றே நாங்கள் பேசிக்கொண்டதுண்டு) அந்த எதிரி அயர்ந்துபோகும் நேரத்திற்காகக் காத்திருந்தார். (அந்த நேரமும் வந்தது.) அந்த மனிதர்மீது இவர் வாளை உயர்த்தியபோது அவர் (தம்மைக் காப்பாற்றிக்கொள்வதற்காக) "லா இலாஹ இல்லல்லாஹ்' என்று (ஏகத்துவ உறுதிமொழியை) கூறினார். ஆனால் (அதைப் பொருட்படுத்தாமல்) உசாமா (ரலி) அவர்கள் அந்த மனிதரைக் கொன்றுவிட்டார்கள். (அந்தப் போரில் முஸ்லிம்கள் வெற்றி பெற்றனர்.) அந்த வெற்றியை அறிவிப்பதற்காக ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அவரிடம் நபி (ஸல்) அவர்கள் அந்தப் போரின் நிலவரம் குறித்து விசாரித்தார்கள். அப்போது அவர் நடந்த நிகழ்ச்சிகளையும் (கொல்லப்பட்ட) அந்த மனிதர் நடந்துகொண்ட விதம் பற்றியும் தெரிவித்தார். ஆகவே, நபி (ஸல்) அவர்கள் உசாமா (ரலி) அவர்களை வரவழைத்து அவர்களிடம் "ஏன் அவரைக் கொன்றாய்?" என்று கேட்டார்கள். உசாமா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அந்த மனிதர் முஸ்லிம்களுக்குப் பெருத்த சேதத்தை ஏற்படுத்தினார்.இன்னார் இன்னாரை அவர் கொன்றுவிட்டார் (சிலருடைய பெயரை உசாமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் குறிப்பிட்டார்கள்) ஆகவே, நான் அவரைத் தாக்கினேன். அவர் வாளைக் கண்டதும் (பயந்துபோய்) "லா இலாஹ இல்லல்லாஹ்' என்று (ஏகத்துவ உறுதிமொழி) கூறினார்" என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரை நீ கொன்றுவிட்டாயா?" என்று கேட்டார்கள். உசாமா, "ஆம்' என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அவர் ஏற்றுக்கொண்ட ஏகத்துவ உறுதிமொழியான) "லா இலாஹ இல்லல்லாஹ்' மறுமை நாளில் (உனக்கெதிரான சாட்சியாக) வரும்போது நீ என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டார்கள். இதைவிட அதிகமாக வேறெதையும் கேட்காமல், "லா இலாஹா இல்லல்லாஹ்' மறுமை நாளில் வரும் போது நீ என்ன செய்யப்போகிறாய்?" என்றே (திரும்பத் திரும்ப) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

**பாடம் : 42 "நமக்கெதிராக ஆயுதம் ஏந்தியவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.**

161 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நமக்கெதிராக ஆயுதம் ஏந்தியவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

162 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நமக்கெதிராக வாளை உருவியவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்.
இதை சலமா பின் அல்அக்வஃ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

163 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நமக்கெதிராக ஆயுதம் ஏந்தியவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்.
இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 43 "நமக்கு மோசடி செய்தவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.

164 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நமக்கெதிராக ஆயுதம் ஏந்தியவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்; நம்மை வஞ்சித்தவரும் நம்மைச் சார்ந்தவர் அல்லர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் உணவு(தானிய)க் குவியலைக் கடந்து சென்றார்கள். (விற்பனைக்காக வைக்கப்பட்டிருந்த) அந்தக் குவியலுக்குள் தமது கையை அவர்கள் நுழைத்தார்கள். அப்போது (தானியக் குவியலில் இருந்த) ஈரம் அவர்களின் விரல்களில் பட்டது. உடனே அவர்கள் "உணவு (தானியத்தின்) உரிமையாளரே! என்ன இது (ஈரம்)?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "இதில் மழைச்சாரல் பட்டுவிட்டது, அல்லாஹ்வின் தூதரே!" என்றார். அப்போது அவர்கள், "ஈரமானதை மக்கள் பார்க்கும் விதமாக உணவு (தானியத்து)க்கு மேலே வைத்திருக்கக் கூடாதா?" என்று கேட்டுவிட்டு, "மோசடி செய்தவர் என்னைச் சார்ந்தவர் அல்லர்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 44 (துக்கத்தில்) கன்னங்களில் அறைந்துகொள்வது, சட்டைப் பைகளைக் கிழித்துக் கொள்வது, அறியாமைக் கால வழக்கப்படி புலம்புவது ஆகியவை தடை செய்யப்பட்டுள்ளன.

165 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(துக்கத்தில்) கன்னங்களில் அறைந்துகொள்பவன், அல்லது சட்டைப் பைகளைக் கிழித்துக் கொள்பவன், அல்லது அறியாமைக் கால வழக்கப்படி புலம்புகின்றவன் நம்மைச் சார்ந்தவன் அல்லன்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் இப்னு நுமைர், அபூபக்ர் பின் அபீஷைபா ஆகியோரது அறிவிப்பில் "அல்லது' என்பது இடம்பெறவில்லை. "அறைந்துகொள்பவனும் கிழித்துக்கொள்பவனும் புலம்புகின்றவனும்" என இடம்பெற்றுள்ளது.

166 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் ("அல்லது' என்பது இடம்பெறாமல்) "அறைந்துகொள்பவனும் கிழித்துக் கொள்பவனும் புலம்புகின்றவனும்' என்றே காணப்படுகிறது.

167 அபூபுர்தா பின் அபீமூசா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) அபூமூசா (ரலி) அவர்கள் (தமது) கடுமையான (மரண) வேதனையில் மயக்கமடைந்துவிட்டார்கள். அவர்களது தலை அவர்களுடைய குடும்பப் பெண் ஒருவரின் மடிமீது இருந்தது. அப்போது அவர்களுடைய குடும்பத்துப் பெண்மணி ஒருவர் ஓலமிட்டு அழுதார். அபூமூசா (ரலி) அவர்களால் அப்பெண்ணுக்கு பதிலேதும் சொல்ல முடியவில்லை.
பிறகு மயக்கம் தெளிந்தபோது, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் யாரை விட்டுத் தமது பொறுப்பை விலக்கிக்கொண்டார்களோ அவரை விட்டு நானும் என் பொறுப்பை விலக்கிக் கொள்கிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (துன்பத்தின்போது) ஓலமிட்டு அழும் பெண், தலையை மழித்துக்கொள்ளும் பெண், ஆடையைக் கிழித்துக்கொள்ளும் பெண் ஆகியோரிடமிருந்து தமது பொறுப்பை விலக்கிக்கொண்டார்கள்" என்று கூறினார்கள்.

- அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்), அபூபுர்தா பின் அபீமூசா (ரஹ்) ஆகியோர் கூறியதாவது:
அபூமூசா (ரலி) அவர்கள் (மரணப் படுக்கையில் இருந்தபோது) மயக்கமடைந்துவிட்டார்கள். அப்போது அவர்களின் துணைவியார் உம்மு அப்தில்லாஹ் சப்தமிட்டு (ஒப்பாரிவைத்து) அழுது கொண்டே (அங்கு) வந்தார். பிறகு மயக்கம் தெளிந்தபோது, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(துக்கத்தில்) தலையை மழித்துக்கொண்டவர், ஓலமிட்டு அழுதவர், ஆடையைக் கிழித்துக்கொண்டவர் ஆகியோரிடமிருந்து நான் எனது பொறுப்பை விலகிக் கொண்டேன்' (எனக்கும் அவர்களுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது) என்று கூறியது உனக்குத் தெரியாதா?" என்று அபூமூசா (ரலி) அவர்கள் கேட்டார்கள். இந்த ஹதீஸைத் தம் துணைவியாருக்கு ஏற்கெனவே அபூமூசா (ரலி) அவர்கள் கூறியிருந்தார்கள். (எனவேதான் "உனக்குத் தெரியாதா?' என்று கேட்டார்கள்.)
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் இயாள் அல்அஷ்அரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நான் எனது பொறுப்பை விலக்கிக்கொண்டேன்' என்பதற்கு பதிலாக "நம்மைச் சார்ந்தவர் அல்லர்' என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக) வந்துள்ளது.

## பாடம் : 45 கோள் சொல்வது வன்மையாகத் தடை செய்யப்பட்டுள்ளது.

168 அபூவாயில் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (மக்கள்) பேசிக்கொள்வதை (ஆட்சியாளர்வரைக் கொண்டுபோய்) கோள் சொல்லிக்கொண்டிருக்கிறார் எனும் செய்தி ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்களுக்கு எட்டியது. அப்போது ஹுதைஃபா (ரலி) அவர்கள், "கோள் சொல்கின்றவன் சொர்க்கம் செல்லமாட்டான் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

169 ஹம்மாம் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (மக்களிடையே நடக்கும்) உரையாடல்களை ஆட்சியாளர்வரைக் கொண்டு போய்ச் சேர்த்துக்கொண்டிருந்தார். நாங்கள் (ஒரு நாள்) பள்ளிவாசலில் அமர்ந்திருந்தோம். அப்போது மக்கள், "இதோ! இவர் (நமக்கிடையே நடக்கும்) உரையாடல்களை ஆட்சியாளர் வரைக் கொண்டுபோய்ச் சேர்ப்பவர்களில் ஒருவர் என்று (ஒருவரைச் சுட்டிக்காட்டி) கூறினர். அந்த மனிதர் வந்து எங்கள் அருகில் அமர்ந்தார். அப்போது ஹுதைஃபா (ரலி) அவர்கள், "கோள் சொல்கின்றவன் சொர்க்கம் செல்லமாட்டான் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

170 ஹம்மாம் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஹுதைஃபா (ரலி) அவர்களுடன் பள்ளிவாசலில் அமர்ந்திருந்தோம். அப்போது ஒரு மனிதர் வந்து எங்கள் அருகில் உட்கார்ந்தார். உடனே ஹுதைஃபா (ரலி) அவர்களிடம் "இதோ! இந்த மனிதர் (நாம் பேசிக்கொள்ளும்) பல விஷயங்களை ஆட்சியாளர் வரைக் கொண்டு போய்ச் சொல்கிறார்" என்று கூறப்பட்டது. அப்போது ஹுதைஃபா (ரலி) அவர்கள் அந்த மனிதருக்குக் கேட்கும் விதமாக, "கோள் சொல்கின்றவன் சொர்க்கம் செல்லமாட்டான் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 46 கீழங்கியை (கணுக்காலுக்கு)க் கீழே இறக்கிக் கட்டுவது,கொடுத்த நன்கொடையைச் சொல்லிக் காட்டுவது, பொய்ச் சத்தியம் செய்து சரக்கை விற்பனை செய்வது ஆகியன வன்மையாகத் தடை செய்யப்பட்டுள்ளன; (இந்த) மூன்று (செயல்களைச் செய்கின்ற) பேர்களிடம் மறுமை நாளில் அல்லாஹ் பேசவுமாட்டான்; அவர்களை ஏறெடுத்துப் பார்க்கவுமாட்டான்; அவர்களைத் தூய்மைப்படுத்தவுமாட்டான்; துன்பம் தரும் வேதனைதான் அவர்களுக்கு உண்டு.**

171 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "மூன்று பேரிடம் மறுமை நாளில் அல்லாஹ் பேசவுமாட்டான்; அவர்களை ஏறெடுத்துப் பார்க்கவுமாட்டான்; அவர்களைத் தூய்மைப்படுத்தவுமாட்டான்; அவர்களுக்குத் துன்பம் தரும் வேதனைதான் உண்டு" என்று கூறினார்கள். இதையே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மூன்று முறை கூறினார்கள். நான், "(அவ்வாறாயின்) அவர்கள் இழப்புக்குள்ளாகிவிட்டனர்; நஷ்டமடைந்துவிட்டனர்; அவர்கள் யார் அல்லாஹ்வின் தூதரே!" என்று கேட்டேன். அதற்கு, "தமது ஆடையை (கணுக்காலுக்கு)க் கீழே இறக்கிக் கட்டியவர், (செய்த உபகாரத்தைச்) சொல்லிக் காட்டுபவர், பொய்ச் சத்தியம் செய்து தமது சரக்கை விற்பனை செய்பவர் ஆகியோர்(தாம் அம்மூவரும்)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மூன்று பேரிடம் மறுமை நாளில் அல்லாஹ் பேசமாட்டான்: 1. செய்த தருமத்தைச் சொல்லிக் காட்டுபவர். அவர் எதை வழங்கினாலும் அதைச் சொல்லிக் காட்டாமல் இருக்கமாட்டார். 2. பொய்ச் சத்தியம் செய்து தமது சரக்கை விற்பனை செய்பவர். 3. தமது கீழங்கியை (கணுக் காலுக்கும்) கீழே இறக்கிக் கட்டுபவர்.
இதை அபூதர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "(அந்த) மூன்று பேரிடம் அல்லாஹ் பேசவுமாட்டான்; அவர்களை ஏறெடுத்துப் பார்க்கவுமாட்டான்; அவர்களைத் தூய்மைப்படுத்தவுமாட்டான்; அவர்களுக்குத் துன்பம் தரும் வேதனைதான் உண்டு" என இடம்பெற்றுள்ளது.

172 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"மூன்று பேரிடம் மறுமை நாளில் அல்லாஹ் பேசவுமாட்டான்; அவர்களைத் தூய்மைப் படுத்தவுமாட்டான்- அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவர்களைப் பார்க்கவுமாட்டான்' என்றும் இடம்பெற்றுள்ளது.- அவர்களுக்குத் துன்பம் தரும் வேதனைதான் உண்டு: விபசாரம் புரிகின்ற முதியவர், பொய் சொல்கின்ற அரசன், பெருமையடிக்கும் ஏழை ஆகியோர்(தாம் அம்மூவரும்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

173 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மூன்று பேரிடம் மறுமை நாளில் அல்லாஹ் பேசவுமாட்டான்; அவர்களை ஏறெடுத்துப் பார்க்கவுமாட்டான்; அவர்களைத் தூய்மைப்படுத்தவுமாட்டான்; அவர்களுக்குத் துன்பம் தரும் வேதனைதான் உண்டு:
ஒருவர், வனாந்தரத்தில் தேவைக்கு அதிகமாகத் தண்ணீரை வைத்திருந்தும், வழிப்போக்கனுக்கு வழங்காமல் அதைத் தடுப்பவர் ஆவார்.
இன்னொருவர், அஸ்ர் தொழுகைக்குப் பிறகு (மக்கள் கடைவீதியில் திரளும்போது) தமது வியாபாரப்பொருளை ஒருவரிடம் விற்பதற்காகத் தாம் இன்ன விலை கொடுத்து அப்பொருளை வாங்கியதாக அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து அவரை நம்பவும் வைத்துவிட்டவர் ஆவார். ஆனால், உண்மை(யான விலை) வேறொன்றாக இருக்கும்.
மற்றொருவர், ஆட்சித் தலைவரிடம் உலக ஆதாயத்திற்காகவே விசுவாசப் பிரமாணம் (பைஅத்) செய்து கொடுத்தவர் ஆவார். ஆட்சித் தலைவரிடமிருந்து ஆதாயம் கிடைத்தால் (பிரமாணத்தின் அடிப்படையில்) அவரிடம் விசுவாசமாக நடந்துகொள்வார். கிடைக்காவிட்டால் விசுவாசமாக நடந்து கொள்ளமாட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் வேறிரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் ஜரீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஒருவர் இன்னொருவரிடம் ஒரு பொருளுக்கு (இன்னின்னவாறு) விலை கூறினார்' என்று (சிறிது வித்தியாசத்துடன்) இடம்பெற்றுள்ளது.

174 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"மூன்று பேரிடம் மறுமை நாளில் அல்லாஹ் பேசவுமாட்டான்; அவர்களை ஏறெடுத்துப் பார்க்கவுமாட்டான்; அவர்களுக்குத் துன்பம் தரும் வேதனைதான் உள்ளது. ஒருவர், அஸ்ருத் தொழுகைக்குப் பிறகு ஒரு முஸ்லிமின் செல்வத்தை அபகரித்துக்கொள்ளும் நோக்கத்துடன் (பொய்) சத்தியம் செய்தவர்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸின் தொடர்ச்சி மேற்கண்ட (173ஆவது) ஹதீஸிலுள்ளதைப் போன்றே வந்துள்ளது.

**பாடம் : 47 தற்கொலை செய்வது வன்மையாகத் தடை செய்யப்பட்டுள்ளது; எந்தப் பொருளால் ஒருவர் தற்கொலை செய்து கொள்கிறாரோ அதன் மூலமே அவர் நரகத்தில் வேதனை செய்யப்படுவார்; (இறைவனுக்கு அடிபணிந்து வாழ்ந்த) முஸ்லிமைத் தவிர வேறெவரும் சொர்க்கத்தில் நுழையமாட்டார்.**

175 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஒரு (கூரான) ஆயுதத்தால் தற்கொலை செய்துகொள்கிறாரோ அவர் தமது கையில் அந்த கூராயுதத்தை வைத்துக்கொண்டு நரக நெருப்பில் தமது வயிற்றில் தாமே என்றென்றும் நிரந்தரமாக அதனால் குத்திக்கொண்டேயிருப்பார். யார் விஷம் குடித்துத் தற்கொலை செய்துகொள்கிறாரோ அவர் (விஷத்தை கையில் வைத்துக்கொண்டு) நரக நெருப்பில் என்றென்றும் நிரந்தரமாக அதைக் குடித்துக்கொண்டேயிருப்பார். யார் மலையின் மீதிருந்து கீழே குதித்துத் தற்கொலை செய்துகொள்கிறாரோ அவர் நரக நெருப்பில் (தள்ளப்பட்டு மேலிருந்து கீழே) என்றைக்கும் நிரந்தரமாகக் குதித்துக் கொண்டேயிருப்பார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாக வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

176 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் இஸ்லாம் அல்லாத மார்க்கத்தின் மீது பொய்ச் சத்தியம் செய்கிறாரோ அவர் தாம் சொன்னதைப் போன்றே ஆகிவிடுகிறார். எந்தப் பொருளின் மூலம் ஒருவர் தற்கொலை செய்து கொள்கிறாரோ அதன் மூலமே அவர் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவார். தமக்கு உடைமையில்லாத ஒன்றில் நேர்த்திக்கடன் செய்வது(ம் அந்த நேர்த்திக் கடனை நிறைவேற்றுவதும்) எந்த மனிதருக்கும் தகாது.
இதை அந்த மரத்தினடியில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (பைஅத்துர் ரிள்வான்) உறுதிமொழி அளித்தவரான ஸாபித் பின் அள்ளஹ்ஹாக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தமக்கு உடைமையில்லாத ஒன்றில் நேர்த்திக்கடன் செய்வது(ம் அந்த நேர்த்திக்கடனை நிறைவேற்றுவதும்) எந்த மனிதருக்கும் தகாது. ஓர் இறைநம்பிக்கையாளரை சபிப்பது அவரைக் கொலை செய்வதற்குச் சமம். இவ்வுலகில் எந்தப் பொருள் மூலம் ஒருவர் தற்கொலை செய்துகொள்கிறாரோ, அதன் மூலமே மறுமை நாளில் அவர் வேதனை செய்யப்படுவார். யார் (தனது செல்வத்தை) அதிகமாக்கிக் கொள்வதற்காகப் பொய்வாதம் புரிகிறாரோ அவருக்கு அல்லாஹ் குறைவையே (இழப்பையே) அதிகப்படுத்துவான். யார் (நீதிபதி முன் அளிக்கும்) பிரமாண வாக்குமூலத்தின்போது பொய்ச் சத்தியம் செய்கிறாரோ (அவர் தம்மீது கோபம் கொண்ட நிலையிலேயே அல்லாஹ்வைச் சந்திப்பார்).
இதை ஸாபித் பின் அள்ளஹ்ஹாக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

177 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் இஸ்லாம் அல்லாத மார்க்கத்தின் மீது திட்டமிட்டுப் பொய்ச் சத்தியம் செய்கிறாரோ அவர் தாம் சொன்னதைப் போன்றே ஆகிவிடுகிறார். எந்தப் பொருள் மூலம் ஒருவர் தற்கொலை செய்துகொள்கிறாரோ அதன் மூலமே அல்லாஹ் அவரை நரக நெருப்பில் வேதனை செய்வான்.
இதை ஸாபித் பின் அள்ளஹ்ஹாக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் அறிவிப்பாளர் சுஃப்யான் அஸ்ஸவ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ள ஹதீஸிலேயே மேற்கண்டவாறு இடம் பெற்றுள்ளது.
ஷுஅபா (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ள ஹதீஸில், "யார் இஸ்லாம் அல்லாத மார்க்கத்தின் மீது பொய்ச் சத்தியம் செய்கிறாரோ அவர் தாம் சொன்னதைப் போன்றே ஆகிவிடுகிறார். எந்தப் பொருள் மூலம் ஒருவர் தம்மைத்தாமே அறுத்துக்(கொண்டு தற்கொலை செய்து) கொள்கிறாரோ அதன் மூலமே அவர் மறுமை நாளில் அறுக்கப்படுவார்" என்று இடம் பெற்றுள்ளது.

178 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் ஹுனைன் போரில் கலந்து கொண்டோம்.அப்(போரின்)போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம்முடன்) இருந்த முஸ்லிம் என்று கருதப்பட்ட ஒருவரைப் பற்றி "இவர் நரகவாசிகளில் ஒருவர்" என்று கூறினார்கள். போரிடும் நேரம் வந்தபோது அந்த நபர் கடுமையாகப் போரிட்டார். அதனால் அவருக்குக் காயங்கள் ஏற்பட்டன. அப்போது (நபி (ஸல்) அவர்களிடம்) "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் யாரைப் பற்றி "இவர் நரகவாசிகளில் ஒருவர்' என்று சொன்னீர்களோ அவர் இன்றைய தினம் கடுமையாகப் போரிட்டு இறந்துவிட்டார்" என்று கூறப்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள் "அவர் நரகத்திற்குத்தான்" என்றார்கள். உடனே முஸ்லிம்களில் சிலர் (நபி (ஸல்) அவர்களின் இக்கூற்றை) சந்தேகப்படும் அளவுக்குச் சென்றுவிட்டார்கள். நிலைமை இவ்வாறிருக்க, "அந்த மனிதர் (போரில்) இறக்கவில்லை. அவருக்குக் கடுமையான காயம்தான் ஏற்பட்டது" என்று கூறப்பட்டது. பின்னர் இரவு வந்தபோது அவரால் வலி

பொறுக்க முடியாமல் தற்கொலை செய்துகொண்டார். இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. அப்போது அவர்கள், "அல்லாஹ் மிகவும் பெரியவன். நான் அல்லாஹ்வின் அடியானும் அவனுடைய தூதரும் ஆவேன் என்று நான் உறுதி கூறுகிறேன்" என்றார்கள். பிறகு பிலால் (ரலி) அவர்களிடம் "(துன்பங்களை எல்லா நிலைகளிலும் சகித்துக்கொண்டு அடிபணிந்து வாழ்ந்த) முஸ்லிமான மனிதர்தாம் சொர்க்கத்தில் நுழைவார். மேலும், அல்லாஹ் இந்த மார்க்கத்திற்குப் பாவியான மனிதனின் மூலமும் வலுவூட்டுகிறான்" என்று மக்களிடையே அறிவிப்புச் செய்யுமாறு கூறினார்கள். அவ்வாறே பிலால் (ரலி) அவர்கள் மக்களிடையே அறிவிப்புச் செய்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

179 சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் (யூத) இணைவைப்பாளர்களும் (கைபரில்) சந்தித்துப் போரிட்டனர். (ஒருநாள் போர் முடிந்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம் படையினரிடமும், எதிர் அணியினர் தம் படையினரிடமும் திரும்பியபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களிடையே ("குஸ்மான்' என்றழைக்கப்பட்ட) ஒரு மனிதர் இருந்தார். அவர் (எதிரிகளின் அணியிலிருந்து) பிரிந்து சென்ற (மற்றும் பிரிந்து செல்லாத) எவரையும் விட்டுவிடாமல் அவர்களைப் பின்தொடர்ந்து சென்று தமது வாளால் வெட்டி வீழ்த்திக்கொண்டிருந்தார். "இன்று இவரைப் போன்று நம்மில் வேறு யாரும் தேவையான அளவிற்கு (நிறைவாகப்) போரிடவில்லை" என்று மக்கள் பேசிக்கொண்டனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இவர் நரகவாசிகளில் ஒருவர்" என்று (அந்த வீரரைப் பற்றிக்) கூறினார்கள். உடனே மக்களில் ஒருவர், "நான் அவருடன் தொடர்ந்து செல்லப் போகிறேன்" என்று கூறிவிட்டு அந்த மனிதருடன் புறப்பட்டார்.

அந்த வீரர் நிற்கும்போதெல்லாம் அவருடன் இவரும் நின்றார். அவர் விரைந்துசென்றால் அவருடன் இவரும் விரைந்துசென்றார். இந்நிலையில் அவ்வீரர் (போரில்) கடுமையாகக் காயப்படுத்தப்பட்டார். அதனால் அவர் அவசரமாக இறந்துபோக விரும்பி தனது வாளின் கீழ்முனையை பூமியில் (நட்டு) வைத்து, அதன் (கூரான) மேல் முனையைத் தன் மார்புகளுக்கிடையே வைத்து, பிறகு அந்த வாளின் மீது தன் உடலை சாய்த்துக்கொண்டு தன்னை மாய்த்துக்கொண்டார். (பின்தொடர்ந்து சென்ற) அந்த மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "தாங்கள் அல்லாஹ்வின் தூதர் என்று நான் உறுதிகூறுகின்றேன்" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்ன விஷயம்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "இவர் நரகவாசிகளில் ஒருவர் என்று ஒரு மனிதரைப் பற்றித் தாங்கள் சற்று முன்பு கூறினீர்களல்லவா? அதை மக்கள் பெரிதாகக் கருதினர். எனவே, நான் "அவர் விஷயத்தில் உங்களுக்கு நான் பொறுப்பு" என்று (மக்களிடம்) கூறிவிட்டு அவரைத் தேடிப் புறப்பட்டேன். (அவரைக் கண்டுபிடித்துப் பின்தொடர்ந்தேன்.) அவர் (ஒரு கட்டத்தில் எதிரிகளால்) மிகக் கடுமையாகக் காயப்படுத்தப்பட்டார். எனவே, அவர் அவசரமாக இறந்துபோக விரும்பி, தனது வாளின் கீழ்முனையை பூமியில் (நட்டு) வைத்து அதன் மேல் முனையைத் தன் மார்புகளுக்கிடையில் வைத்துத் தன்னை அந்த வாளின் மீது சாய்த்துக்கொண்டு தன்னையே மாய்த்துக்கொண்டார்" என்று கூறினார். அப்போது

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மக்களின் வெளிப்பார்வைக்கு ஒரு மனிதர் சொர்க்கவாசிகளின் (நற்)செயலைச் செய்துவருவார். ஆனால், (உண்மையில்) அவர் நரகவாசிகளில் ஒருவராக இருப்பார். அவ்வாறே ஒரு மனிதர் மக்களின் வெளிப்பார்வைக்கு நரகவாசிகளின் (தீய) செயலைச் செய்துவருவார். ஆனால், (உண்மையில்) அவர் சொர்க்க வாசிகளில் ஒருவராக இருப்பார்" என்று கூறினார்கள்.

180 ஹசன் அல்பஸரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உங்களுக்கு முன்னிருந்த (பனூ இஸ்ராயீல்) மக்களிடையே ஒருவர் இருந்தார். அவருடைய உடலில் ஒரு கொப்புளம் கிளம்பியது. அது அவரைத் தொல்லைபடுத்தியபோது (பொறுமை இழந்த) அவர் தமது அம்புக் கூட்டிலிருந்து ஓர் அம்பை உருவி கொப்புளத்தில் பாய்ச்சினார். (கொப்புளம் உடைந்து) இரத்தம் நிற்காமல் கொட்டிக் கொண்டிருந்தது. இறுதியில் அவர் இறந்துபோனார். உங்கள் இறைவன் "(என் அடியான் அவசரப்பட்டு தன்னை அழித்துக் கொண்டதால்) அவன்மீது நான் சொர்க்கத்தைத் தடை செய்துவிட்டேன்" என்று கூறினான்.
(இதை ஹசன் அல்பஸரீ (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் ஷைபான் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:)

பிறகு ஹசன் அல்பஸரீ (ரஹ்) அவர்கள் (பஸ்ராவிலுள்ள) பள்ளிவாசலை நோக்கித் தமது கையை நீட்டியவாறு, "ஆம், அல்லாஹ்வின் மீதாணையாக! ஜுன்தப் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து இந்த ஹதீஸைத் தாம் செவியுற்றதாக இந்தப் பள்ளிவாசலில் வைத்துத்தான் எனக்கு அறிவித்தார்கள்" என்றார்கள்.

181 ஹசன் அல்பஸரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜுன்தப் பின் அப்தில்லாஹ் அல்பஜலீ (ரலி) அவர்கள் (இந்த நபிமொழியை பஸ்ராவிலுள்ள) இந்தப் பள்ளிவாசலில் எமக்கு அறிவித்தார்கள். (அவர்கள் அறிவித்ததிலிருந்து அதை) நாம் மறக்கவில்லை; ஜுன்தப் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்மீது பொய்யுரைத்திருப்பார்களோ என்ற அச்சமும் நமக்கு இல்லை. ஜுன்தப் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவித்தார்கள்:

"உங்களுக்கு முன்னிருந்தவர்களிடையே வாழ்ந்த ஒரு மனிதரின் உடலில் கொப்புளம் கிளம்பியது" என்று தொடங்கி (மேற்கண்ட) ஹதீஸிலுள்ளதைப் போன்றே அறிவித்தார்கள்.

**பாடம் : 48** (பங்கிடப்படாத போர்ச்செல்வம் போன்ற பொதுச் சொத்துகளை) கையாடல் செய்வது வன்மையாகத் தடை செய்யப்பட்டுள்ளது. இறைநம்பிக்கை கொண்டவரைத் தவிர வேறெவரும் சொர்க்கத்தில் நுழையமாட்டார்கள்.

182 உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் போர் தினத்தன்று நபித்தோழர்களில் சிலர் "இன்னார் உயிர்த்தியாகி (ஷஹீத்) ஆகி விட்டார், இன்னார் உயிர்த்தியாகி ஆகிவிட்டார்' என்று கூறிக்கொண்டேவந்து இறுதியாக ஒரு மனிதரைப் பற்றி "இன்னாரும் உயிர்த்தியாகி ஆகிவிட்டார்' என்று கூறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இல்லை! (போர்ச்செல்வங்கள் பங்கிடப்படும் முன்

அவற்றிலிருந்து) கோடுபோட்ட வண்ணப் போர்வை ஒன்றை அவர் எடுத்துக்கொண்ட காரணத்தால் அவரை நான் நரகத்தில் கண்டேன் (எனவே அவரை உயிர்த்தியாகி என்று கூறாதீர்கள்)" என்றார்கள்.
பிறகு (என்னிடம்) "கத்தாபின் புதல்வரே! நீங்கள் சென்று, "இறைநம்பிக்கையாளர்கள்தாம் சொர்க்கத்தில் நுழைவார்கள்' என்று மக்களுக்கு அறிவித்துவிடுங்கள்!" என்றார்கள். அவ்வாறே நானும் சென்று, "அறிந்துகொள்ளுங்கள்! இறைநம்பிக்கையாளர்கள்தாம் சொர்க்கத்தில் நுழைவார்கள்" என்று (மக்களிடையே) அறிவித்தேன்.
இதை அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

183 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் கைபரை நோக்கிப் புறப்பட்டோம். அல்லாஹ் எங்களுக்கு வெற்றியளித்தான். அப்போ(ரின்போ)து நாங்கள் தங்கத்தையோ வெள்ளியையோ போர்ச் செல்வங்களாகப் பெறவில்லை. உபயோகப் பொருட்கள், உணவுப் பொருட்கள், ஆடைகள் ஆகியவற்றையே போர்ச்செல்வங்களாகப் பெற்றோம். பிறகு நாங்கள் (மதீனா அருகிலுள்ள) "வாதீ(அல்குரா)' எனுமிடத்தை நோக்கி நடந்தோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அவர்களுடைய (மித்அம் என்றழைக்கப்படும்) ஓர் அடிமையும் இருந்தார். அவரை "பனுள்ளுபைப்' குலத்திலுள்ள ஜுதாம் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் அல்லாஹ்வின் தூதருக்கு அன்பளிப்பாக வழங்கியிருந்தார். அவர் "ரிஃபாஆ பின் ஸைத்' என்று அழைக்கப் பட்டார்.

நாங்கள் அந்த (வாதில் குரா) பள்ளத்தாக்கில் இறங்கியபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அந்த அடிமை எழுந்து அவர்களது சிவிகையை (ஒட்டகத்திலிருந்து) இறக்கிக் கொண்டிருந்தார். அப்போது (எங்கிருந்தோ வந்த) ஓர் அம்பால் அவர் தாக்கப்பட்டார். அதுவே அவரது இறப்புக்குக் காரணமாக அமைந்தது. அப்போது நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! அவருக்கு இறைவழியில் உயிர்த் தியாகம் செய்யும் பேறு கிடைத்துவிட்டது. வாழ்த்துகள்!" என்று கூறினோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை, என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! கைபர் போரில் கிடைத்த போர்ச் செல்வங்கள் பங்கிடப்படும் முன்பே அவர் எடுத்துக்கொண்ட போர்வை அவருக்கு நரக நெருப்பாக எரிந்துகொண்டிருக்கிறது" என்று கூறினார்கள்.
(இதைக் கேட்ட) மக்கள் திடுக்குற்றனர். அப்போது ஒரு மனிதர் "ஒரு செருப்பு வாரை' அல்லது "இரண்டு செருப்பு வார்களை'க் கொண்டு வந்து "(இதை) நான் கைபர் போரின்போது எடுத்துக் கொண்டேன்" என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இது சாதாரண செருப்பு வார் அன்று; இதைத் திருப்பித் தராமல் இருந்திருந்தால் இதுவே) "நரகத்தின் செருப்பு வார்' அல்லது "நரகத்தின் இரு செருப்பு வார்கள்' ஆகும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 49 "தற்கொலை செய்துகொண்டவர் இறைமறுப்பாளர் (காஃபிர்) அல்லர்' என்பதற்கான ஆதாரம்.**

184 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அறியாமைக் காலத்தில் தவ்ஸ் குலத்தாருக்குக் கோட்டை ஒன்றிருந்தது. தவ்ஸ் குலத்தைச் சேர்ந்த துஃபைல் பின் அம்ர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! (தாங்கள் ஹிஜ்ரத் செய்யும்போது எதிரிகளிடமிருந்து உங்களைத்) தற்காத்துக்கொள்ள உறுதியான கோட்டை கொத்தளம் தங்களுக்கு வேண்டுமா? (அத்தகைய கோட்டை தவ்ஸ் குலத்தாரின் வசிப்பிடத்தில் உள்ளது)" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் அதற்கு இணங்கவில்லை. (அந்த வாய்ப்பை மதீனாவாசிகளான) அன்சாரிகளுக்கென அல்லாஹ் வழங்கியிருந்ததே அதற்குக் காரணமாகும். நபி (ஸல்) அவர்கள் நாடு துறந்து மதீனாவுக்கு (ஹிஜ்ரத்) சென்றபோது நபி (ஸல்) அவர்களிடம் துஃபைல் பின் அம்ர் (ரலி) அவர்களும் நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்றார்கள். துஃபைல் (ரலி) அவர்களுடன் அவர்களுடைய சமூகத்தைச் சேர்ந்த ஒரு மனிதரும் நாடு துறந்து சென்றார். (அவர்கள் மதீனாவிற்குச் சென்றபோது) மதீனாவின் தட்பவெப்பநிலை அவர்களுக்கு ஒத்துக்கொள்ளவில்லை. அந்த மனிதர் நோய்வாய்ப்பட்டுவிட்டார். (நோயின் வேதனை பொறுக்க முடியாமல்) பதறிப்போன அந்த மனிதர் தம்முடைய பெரிய அம்புகளை எடுத்துத் தமது கை நாடியை அறுத்துக் கொண்டார். கைகளிலிருந்து இரத்தம் கொட்டியது. இறுதியில் அவர் இறந்துவிட்டார். அவரைத் துஃபைல் பின் அம்ர் (ரலி) அவர்கள் கனவில் கண்டார்கள். அவர் நல்ல நிலையில் தான் இருந்தார். ஆனால், அவருடைய இரு கைகளும் போர்த்தி மூடப்பட்டு இருப்பதைக் கண்டார்கள். அவரிடம், "உம்மிடம் உம்முடைய இறைவன் எவ்வாறு நடந்துகொண்டான்?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், "நான் நபி (ஸல்) அவர்களிடம் நாடு துறந்து (ஹிஜ்ரத்) வந்ததால் அல்லாஹ் எனக்கு மன்னிப்பு அளித்தான்" என்று பதிலளித்தார். துஃபைல் (ரலி) அவர்கள், "ஏன் உம்மிரு கைகளும் போர்த்தி மூடப்பட்டிருக்கின்றன?" என்று கேட்டார்கள். "நீ வீணாக்கிய உனது கையை நாம் சீராக்கமாட்டோம்" என்று (இறைவனின் தரப்பிலிருந்து) என்னிடம் கூறப்பட்டது" என்று அவர் சொன்னார்.
துஃபைல் (ரலி) அவர்கள் இக்கனவு பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எடுத்துரைத்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! அவருடைய இரு கைகளுக்கும் மன்னிப்பு அளிப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

**பாடம் : 50 மறுமை நாள் நெருங்கும்போது ஒரு காற்று வீசும்; எவருடைய உள்ளத்தில் சிறிதளவு இறைநம்பிக்கை இருக்குமோ அவ(ரது உயி)ரை அது கைப்பற்றும்.**

185 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மறுமை நாள் நெருங்கும்போது) யமன் நாட்டி(ன் திசையி)லிருந்து பட்டைவிட மென்மையான ஒரு காற்றை அல்லாஹ் அனுப்புவான். எவரது உள்ளத்தில் "கடுகளவு' அல்லது "அணுவளவு' இறைநம்பிக்கை உள்ளதோ அவ(ரது உயி)ரை அது கைப்பற்றிக் கொள்ளும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அபூஅல்கமா அல்ஃபர்வீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "கடுகளவு' என்றும் அப்துல் அஸீஸ் பின் முஹம்மத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அணுவளவு' என்றும் இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 51 குழப்பங்கள் தோன்றுவதற்கு முன் விரைந்து (நற்)செயல்கள் புரியும்படி வந்துள்ள தூண்டுதல்.**

186 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இருள் மிகுந்த இரவின் பகுதிகளைப் போன்ற குழப்பங்கள் தோன்றுவதற்கு முன் விரைந்து (நற்)செயல்கள் புரிந்துகொள்ளுங்கள். (அக்குழப்பங்களின்போது) காலையில் இறை நம்பிக்கையாளனாக இருக்கும் ஒரு மனிதன் மாலையில் இறைமறுப்பாளனாக மாறிவிடுவான். மாலையில் இறைநம்பிக்கையாளனாக இருக்கும் ஒருவன் காலையில் இறைமறுப்பாளனாக மாறிவிடுவான். இவ்வுலகின் அற்ப சுகங்களுக்காகத் தனது மார்க்கத்தையே அவன் விற்றுவிடுவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 52 இறைநம்பிக்கையாளர் தமது (நற்)செயல் அழிந்துவிடுமோ என அஞ்சுதல்.**

187 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"இறைநம்பிக்கை கொண்டவர்களே! உங்கள் குரல்களை நபியின் குரலுக்கு மேல் உயர்த்தாதீர்கள்!" எனும் இந்த (49:2ஆவது) வசனம் அருளப்பெற்ற பின் ஸாபித் பின் கைஸ் (ரலி) அவர்கள் தமது இல்லத்திலேயே அமர்ந்து விட்டார்கள். "நான் நரகவாசிகளில் ஒருவன்' என்று கூறிக்கொண்டு, நபி (ஸல்) அவர்களிடம் வராமல் (வீட்டிலேயே) அடைந்துகிடந்தார்கள். எனவே, நபி (ஸல்) அவர்கள் (ஸாபித் குறித்து) சஅத் பின் முஆத் (ரலி) அவர்களிடம், "அபூ அம்ர்! ஸாபித்துக்கு என்ன ஆயிற்று? அவருக்கு உடல் நலமில்லையா?" என்று கேட்டார்கள். அதற்கு சஅத் (ரலி) அவர்கள், "அவர் என் பக்கத்து வீட்டுக்காரர்தாம். அவருக்கு எந்த நோயுமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை" என்று கூறினார்கள். பிறகு சஅத் (ரலி) அவர்கள் ஸாபித் (ரலி) அவர்களிடம் சென்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டதைப் பற்றிச் சொன்னார்கள்.
அப்போது ஸாபித் (ரலி) அவர்கள், "இந்த (49:2ஆவது) வசனம் அருளப்பெற்றுள்ளது. உங்களில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன் குரலை உயர்த்திப் பேசுபவன் நான் என்பதை நீங்கள் அறிந்தே உள்ளீர்கள். ஆகவே நான், நரகவாசிகளில் ஒருவன்தான்" என்று கூறினார்கள். இதை சஅத் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் (சென்று) சொன்னார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை. அவர் சொர்க்கவாசிகளில் ஒருவர் ஆவார்" என்று கூறினார்கள்.

188 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஸாபித் பின் கைஸ் பின் ஷம்மாஸ் (ரலி) அவர்கள் அன்சாரிகளின் பேச்சாளராக இருந்தார். இந்த (49:2ஆவது) வசனம் அருளப்பெற்றபோது..." என்று தொடங்கி மற்றவை மேற்கண்ட ஹதீஸிலுள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
ஆனால், அதில் சஅத் பின் முஆத் (ரலி) அவர்களைப் பற்றியக் குறிப்பேதும் இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "உங்கள் குரல்களை நபியின் குரலைவிட உயர்த்தாதீர்கள் எனும் (49:2ஆவது) இறைவசனம் அருளப்பெற்றபோது..." என்று ஹதீஸ் தொடங்குகிறது. அந்த ஹதீஸிலும் சஅத் பின் முஆத் (ரலி) அவர்களைப் பற்றியக் குறிப்பு இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதிலும் சஅத் பின் முஆத் (ரலி) அவர்களைப் பற்றியக் குறிப்பு இடம்பெறவில்லை. அதில் "எங்களிடையே நடமாடிய ஒரு சொர்க்கவாசியாகவே நாங்கள் ஸாபித் (ரலி) அவர்களைக் கருதிவந்தோம்" என்று (அனஸ் (ரலி) அவர்கள்) கூறினார்கள் எனக் கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 53 அறியாமைக் காலத்தில் செய்த (தீய) செயல்களுக்காக ஒருவர் (மறுமையில்) தண்டிக்கப்படுவாரா?

189 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்களில் சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "நாங்கள் அறியாமைக் காலத்தில் செய்த(த)வற்றிற்காகத் தண்டிக்கப்படுவோமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் இஸ்லாத்தில் (இணைந்து தொடர்ந்து) நன்மை புரிகிறாரோ அவர் அறியாமைக் காலத்தில் செய்த தவறுகளுக்காகத் தண்டிக்கப் படமாட்டார். யார் (இஸ்லாத்தில் நுழைந்த பிறகு "இறைமறுப்பு' எனும்) தீமை புரிகிறாரோ அவர் அறியாமைக் காலத்தில் செய்த தவறுகளுக்காகவும் இஸ்லாத்தில் (நுழைந்த பிறகு) செய்த தவறுகளுக்காகவும் (மறுமையில்) தண்டிக்கப்படுவார்" என்று கூறினார்கள்.

190 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அறியாமைக் காலத்தில் செய்த(த)வற்றிற்காக (மறுமையில்) தண்டிக்கப்படுவோமா?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "யார் இஸ்லாத்தில் (நுழைந்து தொடர்ந்து) நன்மை புரிகிறாரோ அவர் அறியாமைக் காலத்தில் செய்த(த)வற்றுக்காக தண்டிக்கப்படமாட்டார். யார் இஸ்லாத்தில் (நுழைந்த பிறகு "இறைமறுப்பு' எனும்) தீமை புரிகிறாரோ அவர் (இஸ்லாத்தைத் தழுவுவதற்கு) முன் செய்த தவறுகளுக்காகவும் (இஸ்லாத்தை ஏற்ற பின் செய்த இந்த) பிந்திய தவறுகளுக்காகவும் தண்டிக்கப்படுவார்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

191 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 54 முந்தைய பாவங்களை இஸ்லாம் அழித்துவிடுகிறது. ஹிஜ்ரத்தும் ஹஜ்ஜும் அவ்வாறுதான்.

192 அப்துர் ரஹ்மான் பின் ஷுமாசா அல்மஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இறப்பின் நெருக்கத்தில் இருந்த அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களிடம் நாங்கள் சென்றோம். அவர்கள் நீண்ட நேரம் அழுதார்கள். பிறகு அவர்கள் சுவரை நோக்கித் தமது முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள். அப்போது அவர்களுடைய புதல்வர், "அருமைத் தந்தையே! தங்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இன்னின்ன நற்செய்திகளைக் கூறவில்லையா?" என்று கேட்டார். உடனே அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் தமது முகத்தை (தம் புதல்வரை நோக்கி)த் திருப்பி (பின்வருமாறு) கூறினார்கள்: "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும் முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவார்கள்' என்றும் உறுதி கூறியதே நமது சேமிப்புகளில் சிறந்தது ஆகும். நான் (என் வாழ்நாளில்) மூன்று கட்டங்களைக் கடந்து வந்திருக்கிறேன்.

(முதலாவது கட்டத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்மீது கடுமையான வெறுப்புக் கொண்டவர் என்னைவிட வேறெவரும் இருக்கவில்லை என்றே நான் கருதினேன். என்னால் இயன்றால் அவர்களைக் கொன்றுவிட வேண்டும் என்பதே எனக்கு மிகவும் விருப்பமான விஷயமாக இருந்தது. அந்தக் காலகட்டத்தில் மட்டும் நான் இறந்துவிட்டிருந்தால் நான் நரகவாசிகளில் ஒருவனாக ஆகியிருப்பேன்.

(இரண்டாவது கட்டத்தில்) அல்லாஹ் என் உள்ளத்தில் இஸ்லாத்தை ஊட்டினான். அப்போது நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று "உங்கள் வலக் கரத்தை நீட்டுங்கள். நான் உங்களிடம் உறுதிப் பிரமாணம் (பைஅத்) அளிக்கிறேன்" என்று கூறினேன். நபி (ஸல்) அவர்கள் தமது வலக் கரத்தை நீட்டினார்கள். உடனே நான் எனது கையை இழுத்துக்கொண்டேன். நபி (ஸல்) அவர்கள், "அம்ரே! உமக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்டார்கள். நான், "சில நிபந்தனைகளை விதிக்க விரும்புகிறேன்" என்று கூறினேன். நபி (ஸல்) அவர்கள், "என்ன நிபந்தனை விதிக்கப்போகிறீர்?" என்று கேட்டார்கள். "என் (முந்தைய) பாவங்கள் மன்னிக்கப்பட வேண்டும்" என்று கூறினேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "முந்தைய பாவங்களை இஸ்லாம் அழித்துவிடும்; ஹிஜ்ரத்தும் (மார்க்கத்திற்காக நாடுதுறத்தல்) முந்தைய பாவங்களை அழித்துவிடும்; ஹஜ்ஜும் முந்தைய பாவங்களை அழித்துவிடும் என்று உமக்குத் தெரியாதா?" என்று கேட்டார்கள். (பிறகு நான் இஸ்லாத்தைத் தழுவினேன்.) அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைவிட மிகவும் பிரியமானவர் வேறெவரும் எனக்கு இருக்கவில்லை; எனது பார்வைக்கு அவர்களை விட மிகவும் கண்ணியமானவர் வேறெவரும் இருக்கவில்லை. அப்போது அவர்கள்மீது நான் வைத்திருந்த மரியாதையினால் என் கண்கள் நிரம்ப அவர்களைப் பார்க்கக்கூட என்னால் முடியவில்லை. அவர்களை வர்ணித்துக் கூறும்படி நான் கேட்டுக்கொள்ளப்பட்டால் அதற்கும் என்னால் இயலாது. ஏனெனில், நான் அவர்கள்மீது வைத்திருந்த மரியாதையின் காரணத்தால் என் கண்கள்

நிரம்ப அவர்களை நான் பார்த்திருக்கவிலலை. அந்த நிலையில் நான் இறந்திருந்தால் சொர்க்கவாசிகளில் ஒருவனாக ஆகியிருப்பேன் என்றே எதிர் பார்க்கிறேன்.

பிறகு (மூன்றாவது கட்டத்தில்) பல்வேறு பொறுப்புகளை நாம் வகித்தோம். அவற்றில் எனது நிலையென்ன என்பது எனக்குத் தெரியாது. எனவே, நான் இறந்துவிட்டால் ஒப்பாரி வைப்பவரோ நெருப்போ என் சடலத்தோடு இருக்கலாகாது. என்னை (குழிக்குக்குள் வைத்து) நீங்கள் அடக்கம் செய்யும்போது என்மீது மண்ணைத் தள்ளுங்கள். பிறகு ஓர் ஒட்டகத்தை அறுத்து அதன் இறைச்சியைப் பங்கிடும் நேரம் அளவுக்கு நீங்கள் அடக்கத்தலத்தைச் சுற்றி நில்லுங்கள். உங்களால் நான் ஆசுவாசமடைவேன்; என் இறைவனின் தூதர்க(ளான வானவர்க)ளிடம் நான் என்ன பதிலளிப்பது என்பதையும் கண்டுகொள்வேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

193 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இணைவைப்பவர்களில் சிலர், நிறைய கொலைகளைப் புரிந்திருந்தனர்; விபசாரம் அதிகமாகச் செய்திருந்தனர். பிறகு (ஒரு நாள்) அவர்கள் முஹம்மத் (ஸல்) அவர்களிடம் வந்து, "நீங்கள் கூறிவருகின்ற (போதனை முதலிய)வையும் நீங்கள் அழைப்புவிடுக்கின்ற (இஸ்லாமிய) மார்க்கமும் உறுதியாக நல்லவையே! நாங்கள் புரிந்துவிட்ட பாவங்களுக்குப் பரிகாரம் ஏதேனும் உண்டா என நீங்கள் எங்களுக்குத் தெரிவித்தால் (நாங்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொள்வோம்)" என்று கூறினர்.
அப்போது, "(ரஹ்மானின் உண்மையான அடியார்களான) அவர்கள் அல்லாஹ்வுடன் வேறெந்தத் தெய்வத்தையும் அழைப்பதில்லை. மேலும், (கொலை செய்யக்கூடாது என்று) அல்லாஹ் தடைசெய்துள்ள எந்த உயிரையும் முறையின்றி அவர்கள் கொலை செய்வதில்லை; மேலும், விபசாரம் புரிவதில்லை. ஆகவே, யார் இவற்றைச் செய்கிறாரோ அவர் தண்டனை அடைய நேரிடும்" எனும் (25:68ஆவது) வசனம் அருளப்பெற்றது. மேலும், "(நபியே!) கூறுங்கள்: வரம்புமீறித் தமக்குத் தாமே அநீதியிழைத்துக்கொண்ட என் அடியார்களே! அல்லாஹ்வின் கருணைமீது அவநம்பிக்கை கொண்டுவிடாதீர்கள்..." எனும் (39:53ஆவது) வசனமும் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 55 இஸ்லாத்தைத் தழுவுதற்கு முன் இறைமறுப்பாளர் ஒருவர் செய்த (நற்)செயலின் நிலையென்ன?

194 ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "(நான் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்பு) அறியாமைக் காலத்தில் செய்துவந்த நல்லறங்களைப் பற்றித் தாங்கள் என்ன கூறுகிறீர்கள்? அவற்றுக்கு (மறுமையில்) எனக்கு (நற்பலன்) ஏதும் உண்டா?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் முன்னர் செய்த நற்செயல்(களுக்கான பிரதிபலன்)களுடன்தான் இஸ்லாத்தைத் தழுவியுள்ளீர்" என்று எனக்கு பதிலளித்தார்கள்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

195 ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் அறியாமைக் காலத்தில் தானதர்மம், அடிமைகளை விடுதலை செய்தல், உறவைப் பேணுதல் ஆகிய நல்லறங்களைப் புரிந்துள்ளேன். அவற்றுக்கு (மறுமையில்) நற்பலன் ஏதும் உண்டா, கூறுங்கள்?" என்று கேட்டேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் முன்னர் செய்த நற்செயல்(களுக்கான பிரதிபலன்)களுடன்தான் இஸ்லாத்தைத் தழுவியுள்ளீர்" என்று பதிலளித்தார்கள்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் அறியாமைக் காலத்தில் (நன்மையை நாடி) பல நற்பணிகள் ஆற்றிவந்தேன். (அவற்றுக்கு மறுமையில் எனக்குப் பிரதிபலன் உண்டா?)" என்று கேட்டேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் முன்னர் செய்த நற்செயல்(களுக்கான பிரதிபலன்)களுடன்தான் இஸ்லாத்தைத் தழுவியுள்ளீர்(; உமக்கு நற்பலன் உண்டு)" என்று பதிலளித்தார்கள். அப்போது நான் "அல்லாஹ்வின் மீதாணையாக! அறியாமைக் காலத்தில் செய்துவந்த நற்செயல் எதையும் இஸ்லாத்திலும் செய்யாமல் இருக்கமாட்டேன்" என்று கூறினேன்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

196 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் அறியாமைக் காலத்தில் நூறு அடிமைகளை விடுதலை செய்தார்கள்; நூறு பயண ஒட்டகங்களை தர்மம் செய்தார்கள்; அவ்வாறே அன்னார் இஸ்லாத்தைத் தழுவிய பிறகும் நூறு அடிமைகளை விடுதலை செய்தார்கள். நூறு பயண ஒட்டகங்களை தர்மம் செய்தார்கள்.
பிறகு நபி (ஸல்) அவர்களிடம் சென்று மேற்கண்ட ஹதீஸிலுள்ளவாறு கேட்டார்கள்.

## பாடம் : 56 இறைநம்பிக்கையின் வாய்மையும் தூய்மையும்.

197 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"எவர் இறைநம்பிக்கை கொண்டு (பின்னர்) தமது இறைநம்பிக்கையுடன் அநீதியைக் கலந்துவிடவில்லையோ அவர்களுக்கே உண்மையில் அமைதி உண்டு" எனும் (6:82ஆவது) இறைவசனம் அருளப்பெற்றபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களுக்கு அது கடினமாகத் தெரிந்தது. மேலும், அவர்கள் "எங்களில் யார்தாம் தமக்குத் தாமே அநீதி இழைக்காதவர்?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அநீதி என்பதற்கு நீங்கள் நினைக்கின்ற அர்த்தம் இல்லை. உண்மையில் (அறிஞர்) லுக்மான் அவர்கள் தம் புதல்வரிடம் "என் அன்பு மகனே! அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்காதே. அல்லாஹ்வுக்கு இணைகற்பிப்பது தான் மாபெரும் அநீதியாகும்" என்று

சொன்ன(தாக 31:13ஆவது வசனத்தில் அல்லாஹ் கூறியிருப்ப)துதான் அதற்குப் பொருள் ஆகும்.- இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

198 மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 57 தூயவனான அல்லாஹ், அவரவர் ஆற்றலுக்கு ஏற்பவே சுமைகளைத் தருகின்றான்.

199 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"வானங்கள் மற்றும் பூமியில் உள்ள அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன; உங்கள் மனத்திலுள்ளவற்றை நீங்கள் வெளியிட்டாலும், அவற்றை மறைத்துக்கொண்டாலும் அவற்றைப் பற்றியும் அல்லாஹ் உங்களிடம் விசாரணை செய்வான். அவன் நாடியவர்களை மன்னிப்பான்; அவன் நாடியவர்களை வேதனை செய்வான். இன்னும் அல்லாஹ் அனைத்துப் பொருள்கள்மீதும் ஆற்றல் உள்ளவன் ஆவான்" எனும் (2:284ஆவது) வசனம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருளப்பெற்றபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களுக்கு அது கடினமாகத் தெரிந்தது. ஆகவே, அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, மண்டியிட்டு அமர்ந்து, "அல்லாஹ்வின் தூதரே! எங்கள் சக்திக்குட்பட்ட தொழுகை, நோன்பு, அறப்போர், தர்மம் (ஸகாத்) ஆகியவற்றைச் செய்யுமாறு நாங்கள் உத்தரவிடப்பட்டோம். ஆனால், (இப்போது) தங்களுக்கு (மேற்கண்ட) இந்த வசனம் அருளப்பெற்றுள்ளது. இது எங்கள் சக்திக்கு மீறியதாயிற்றே?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களுக்கு முந்தைய இரு வேதக்காரர்(களான யூதர்களும் கிறிஸ்தவர்)களும் கூறியதைப் போன்று 'செவியுற்றோம்; மாறு செய்தோம்' என்று நீங்களும் கூற விரும்புகின்றீர்களா? வேண்டாம்.(அவ்வாறு கூறிவிடாதீர்கள். மாறாக,) "எங்கள் அதிபதியே! (உன் கட்டளைகளை) நாங்கள் செவியுற்றோம்; கீழ்ப்படிந்தோம். உன்னிடம் மன்னிப்புக் கோருகின்றோம். இன்னும் உன்னிடமே (எங்களின்) மீட்சியும் உள்ளது' என்றே கூறுங்கள்" என்றார்கள். அவ்வாறே மக்கள், "எங்கள் அதிபதியே! (உன் கட்டளைகளை) நாங்கள் செவியுற்றோம்; கீழ்ப்படிந்தோம். உன்னிடம் மன்னிப்புக் கோருகின்றோம். (எங்களின்) மீட்சியும் உன்னிடமே உள்ளது" என்று கூறினர். மக்கள் இவ்வாறு சொல்லச் சொல்ல அவர்களின் நாவு (இறைவனுக்குப்) பணிந்தது (உள்ளமும்தான்).

அதைத் தொடர்ந்து அல்லாஹ், "(மனிதர்களே! நம்முடைய) தூதர், தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பெற்ற (வேதத்)தை நம்புகின்றார். நம்பிக்கையாளர்களும் (நம்புகின்றனர்). (இவர்கள்) யாவரும் அல்லாஹ்வையும், அவனுடைய வானவர்களையும், அவனுடைய வேதங்களையும், அவனுடைய தூதர்களையும் நம்பிக்கை கொள்கின்றனர். (மேலும் கூறுகின்றனர்:) அவனுடைய தூதர்கள் எவருக்கிடையிலும் (சிலரை ஏற்று சிலரை மறுத்து) நாங்கள் வேற்றுமை காட்டமாட்டோம். "எங்கள் அதிபதியே! நாங்கள் செவியுற்றோம்; கீழ்ப்படிந்தோம். உன்னிடம் மன்னிப்புக் கோருகின்றோம். உன்னிடமே (எங்களின்) மீட்சியும் உள்ளது' என்றும் அவர்கள் வேண்டுகிறார்கள்" எனும் (2:285ஆவது) வசனத்தை அருளினான்.

ஆக, மக்கள் இவ்வாறு செயல்பட்டதையடுத்து அல்லாஹ், ("உங்கள் மனத்திலுள்ளவற்றை நீங்கள் வெளியிட்டாலும் மறைத்தாலும் உங்களிடம் அல்லாஹ் விசாரணை செய்வான்' எனும்) முந்திய வசனத்(தின் சட்டத்)தை மாற்றி (அதற்கு பதிலாகப்) பின்வரும் வசனத்தை அருளினான்: எந்த ஆன்மாவுக்கும் அது தாங்கிக்கொள்ள முடியாத பொறுப்பை அல்லாஹ் சுமத்துவதில்லை; அது சம்பாதித்த நன்மை அதற்கே; அது சம்பாதித்த தீமையும் அதற்கே. (நம்பிக்கையாளர்களே! பிரார்த்தனை செய்யுங்கள்:) எங்கள் அதிபதியே! நாங்கள் மறந்துபோயிருப்பினும், அல்லது நாங்கள் தவறு செய்திருப்பினும் எங்களை தண்டித்து விடாதே! (2:286). "ஆகட்டும்! (அவ்வாறே செய்கிறேன்)" என்றான் அல்லாஹ்.

"எங்கள் அதிபதியே! எங்களுக்கு முன் சென்றோர்மீது சுமத்திய சுமையைப் போன்று எங்கள்மீது சுமத்திவிடாதே!" அப்போதும் "ஆகட்டும்!' என்றான் அல்லாஹ்.

"எங்கள் சக்திக்கு மீறிய (எங்களால் தாங்க முடியாத) சுமையை எங்கள்மீது சுமத்திவிடாதே!" அதற்கும் "ஆகட்டும்!' என்றான் அல்லாஹ்.

"எங்கள் பாவங்களை நீக்கி, எங்களை மன்னித்தருள்வாயாக! எங்கள்மீது கருணை புரிவாயாக! நீயே எங்கள் காவலன்; மறுக்கின்ற கூட்டத்தாருக்கு எதிராக எங்களுக்கு உதவி செய்வாயாக!" அதற்கும் "சரி! ஆகட்டும்!' என்றான் அல்லாஹ்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

200 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"உங்கள் மனத்திலுள்ளவற்றை நீங்கள் வெளியிட்டாலும், அவற்றை மறைத்துக் கொண்டாலும் அவற்றைப் பற்றியும் அல்லாஹ் உங்களிடம் விசாரணை செய்வான்" எனும் இந்த (2:284ஆவது) வசனம் அருளப்பெற்றபோது, மக்களின் உள்ளத்தில் முன்பு ஏற்பட்டிராத (கலக்கம்) ஒன்று அப்போது ஏற்பட்டது. உடனே நபி (ஸல்) அவர்கள், "செவியுற்றோம்; கீழ்ப்படிந்தோம்; எங்களை ஒப்படைத்தோம்' (சமிஃனா, வ அதஃனா, வ சல்லம்னா) என்று கூறுங்கள்" என்றார்கள்.
உடனே (மக்களும் அவ்வாறு செய்யவே) அவர்களது உள்ளத்தில் அல்லாஹ் நம்பிக்கையை ஊட்டினான். மேலும், "அல்லாஹ் எந்த ஆன்மாவுக்கும் அது தாங்கிக்கொள்ள முடியாத பொறுப்பைச் சுமத்துவதில்லை; அது சம்பாதித்த நன்மை அதற்கே; அது சம்பாதித்த தீமையும் அதற்கே. (நம்பிக்கையாளர்களே!) "எங்கள் அதிபதியே! நாங்கள் மறந்துபோயிருப்பினும், அல்லது நாங்கள் தவறு செய்திருப்பினும் எங்களைத் தண்டிக்காதிருப்பாயாக!' (என்று பிரார்த்தியுங்கள்)" எனும் (2:286ஆவது) வசனத் தொடரை அல்லாஹ் அருளினான். (அவ்வாறே மக்கள் பிரார்த்தித்ததும்) அல்லாஹ் "(உங்கள் பிரார்த்தனையை ஏற்று) அவ்வாறே செய்தேன்" என்றான்.

"எங்கள் அதிபதியே! எங்களுக்கு முன் சென்றோர்மீது சுமத்திய சுமையைப் போன்று எங்கள்மீது சுமத்தாதிருப்பாயாக!" "அவ்வாறே செய்தேன்' என்றான் அல்லாஹ்.

"எங்கள் பாவங்களை நீக்கி, எங்களை மன்னித்தருள்வாயாக! எங்கள்மீது கருணை புரிவாயாக! நீயே எங்கள் காவலன்" அதற்கும் அல்லாஹ் "அவ்வாறே செய்தேன்' என்றான்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 58 உள்ளத்தில் தோன்றும் கெட்ட எண்ணங்களும் ஆசைகளும் (செயல் வடிவம் பெற்று) உறுதியாகாவிட்டால் அவற்றை அல்லாஹ் மன்னிக்கிறான்.**

201 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரின் உள்ளங்களில் எழும் தீய எண்ணங்களை, அவர்கள் (வெளிப்படுத்திப்) பேசாமல், அல்லது அதன்படி செயல்படாமல் இருக்கும்வரை அல்லாஹ் மன்னிக்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

202 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மாண்பும் வலிவுமிக்க அல்லாஹ், என் சமுதாயத்தாரின் உள்ளங்களில் எழும் தீய எண்ணங்களை, அவர்கள் (அதன்படி) செயல்படாமல், அல்லது அதை (வெளிப்படுத்திப்) பேசாமல் இருக்கும்வரை மன்னிக்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 59 ஓர் அடியார் நன்மை செய்ய வேண்டும் என எண்ணினாலே அது (நன்மையாகப்) பதிவு செய்யப்படும்; தீமை செய்ய வேண்டும் என எண்ணுவதால் (மட்டும் தீமையாக) அது பதிவு செய்யப்படுவதில்லை.**

203 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மாண்பும் வலிவுமிக்க அல்லாஹ் (நன்மை தீமைகளைப் பதிவு செய்யும் வானவர்களிடம்) கூறினான்: என் அடியான் ஒரு தீமை செய்ய எண்ணிவிட்டாலே அதை நீங்கள் பதிவு செய்துவிடாதீர்கள். தான் எண்ணியபடி அவன் (அந்தத் தீமையை) செயல்படுத்திவிட்டால் அதை ஒரேயொரு குற்றமாகவே பதிவு செய்யுங்கள். அவன் ஒரு நன்மையைச் செய்ய எண்ணி அதைச் செய்யாமல் இருந்துவிட்டாலும் அதை ஒரு நன்மையாகவே பதிவு செய்யுங்கள். எண்ணியபடி அந்த நன்மையை அவன் செய்து முடித்துவிட்டால் அதைப் பத்து நன்மைகளாகப் பதிவு செய்யுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

204 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மாண்பும் வலிவுமிக்க அல்லாஹ் கூறினான்: என் அடியான் ஒரு நன்மையைச் செய்ய எண்ணி, அதைச் செய்யாமல் இருந்துவிட்டாலும் அதை அவனுக்கு ஒரு நன்மையாகவே நான் பதிவு செய்வேன். (எண்ணியபடி) அந்த நன்மையை அவன் செய்து முடித்தால் அதை

நான் பத்து முதல் எழுநூறு மடங்கு நன்மைகளாகப் பதிவு செய்வேன். அவன் ஒரு தீமையைச் செய்ய எண்ணினான்; ஆனால், அதைச் செய்யவில்லை என்றால், அதை நான் ஒரு குற்றமாகப் பதிவு செய்வதில்லை. (எண்ணியபடி) அவன் அந்தத் தீமையைச் செய்து முடித்துவிட்டால் அதை ஒரேயொரு குற்றமாகவே நான் பதிவு செய்வேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

205 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து (நபித்தோழர்) அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்குப் பல ஹதீஸ்களை அறிவித்தார்கள். அவற்றில் ஒன்றுதான் (பின்வரும்) இந்த ஹதீஸும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மாண்பும் வலிவுமிக்க அல்லாஹ் கூறினான்: என் அடியான் ஒரு நன்மை செய்ய வேண்டும் என நினைத்தாலே, அவன் அதைச் செய்து முடிக்காவிட்டாலும் ஒரு நன்மையாகவே அதை நான் பதிவு செய்வேன். அதை அவன் செய்து முடித்து விட்டாலோ, அதைப் போன்ற பத்து நன்மைகளாக அதை நான் பதிவு செய்வேன். (அதே நேரத்தில்) அவன் ஒரு தீமையைச் செய்ய வேண்டும் என்று நினைத்தால், அதைச் செய்யாமல் இருக்கும்வரை நான் மன்னிப்பேன். அவ்வாறு தீமை செய்துவிட்டால் செய்ததற்கொப்ப ஒரு குற்றமாகவே அதை நான் பதிவு செய்வேன்.
தொடர்ந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வானவர்கள், "இறைவா! உன்னுடைய இந்த அடியான் ஒரு தீமையைச் செய்ய விரும்புகின்றானே?" என்று -அந்த அடியானைப் பற்றி அல்லாஹ் நன்கு தெரிந்திருந்தும்- கேட்கின்றனர். அதற்கு அல்லாஹ் அவனைக் கண்காணித்துவாருங்கள்! அவ்வாறு அந்தத் தீமையை அவன் செய்து முடித்துவிட்டால் செய்ததற்கொப்ப ஒரு குற்றமாகவே அதை நீங்கள் பதிவு செய்யுங்கள். எண்ணியபடி அவன் அந்தத் தீமையைச் செய்யாமல் இருந்துவிட்டால் அதை அவனுக்கு ஒரு நன்மையாகப் பதிவு செய்யுங்கள். ஏனெனில், என் (மீதிருந்த அச்சத்தி)னால்தான் அதை அவன் கைவிட்டான்" என்று கூறினான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மேலும் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தமது இஸ்லாமை (நம்பிக்கையாலும் நடத்தையாலும்) அழகுபடுத்திக் கொண்டால், அவர் செய்யும் ஒவ்வொரு நன்மைக்கும் அதைப் போன்று பத்து மடங்கிலிருந்து எழுநூறு மடங்குவரை (நன்மை) பதிவு செய்யப்படுகிறது. அவர் செய்யும் ஒவ்வொரு தீமைக்கும் அதற்கொப்ப ஒரு தீமையே (அவர் இறைவனைச் சந்திக்கும்வரை) பதிவு செய்யப்படுகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

206 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் ஒரு நன்மை செய்ய வேண்டும் என(மனத்தில்) எண்ணிவிட்டாலே (அதைச் செய்யா விட்டாலும்) அது ஒரு நன்மையாகவே பதிவு செய்யப்படும். ஒருவர் ஒரு நன்மை செய்ய வேண்டும் என (மனத்தில்) எண்ணி, எண்ணிய படி அதை அவர் செய்து முடித்துவிட்டால் பத்து முதல் எழுநூறு மடங்கு நன்மைகளாக அது பதிவு செய்யப்படும். (அதே நேரத்தில்)

ஒருவர் ஒரு தீமை செய்ய எண்ணி, அதைச் செய்யாமல் இருந்துவிட்டால் அது (ஒரு குற்றமாகப்) பதியப்படுவதில்லை. எண்ணியபடியே அவர் செய்து முடித்தால் அது (ஒரேயொரு குற்றமாக மட்டுமே) பதிவு செய்யப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

207 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் இறைவனைப் பற்றி அறிவிக்கையில் (பின்வருமாறு) கூறினார்கள்:
அல்லாஹ் நன்மைகளையும் தீமைகளையும் (அவை இன்னின்னவை என நிர்ணயித்து) எழுதிவிட்டான். பிறகு அவற்றை விவரித்தான். அதாவது ஒருவர் ஒரு நன்மை செய்ய வேண்டும் என (மனத்தில்) எண்ணிவிட்டாலே (அதைச் செயல்படுத்தாவிட்டாலும்) அவருக்காகத் தன்னிடம் அதை ஒரு முழுமையான நன்மையாக அல்லாஹ் பதிவு செய்கிறான். அதை அவர் எண்ணியதுடன் செயல்படுத்தியும்விட்டால், அந்த ஒரு நன்மையைத் தன்னிடம் பத்து நன்மைகளாக, எழுநூறு மடங்காக, இன்னும் அதிகமாக அல்லாஹ் பதிவு செய்கிறான். ஆனால், ஒருவர் ஒரு தீமை செய்ய எண்ணி, (அல்லாஹ்வுக்கு அஞ்சி) அதைச் செய்யாமல் கைவிட்டால், அதற்காக அவருக்குத் தன்னிடம் ஒரு முழு நன்மையை அல்லாஹ் எழுதுகிறான். எண்ணியபடி அந்தத் தீமையை அவர் செய்து முடித்துவிட்டாலோ, அதற்காக ஒரேயொரு குற்றத்தையே அல்லாஹ் எழுதுகிறான்.

208 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "(ஒருவர் தாம் எண்ணியபடி ஒரு தீமையைச் செய்து விட்டால் அதை ஒரேயொரு குற்றமாகவே அல்லாஹ் எழுதுகிறான்.) அல்லது அதையும் அல்லாஹ் மன்னித்து விடுகிறான். (இத்துணை விசாலமான இறையன்புக்குப் பிறகும் ஒருவர் பாவத்தில் மூழ்கி அழிகின்றார் என்றால்,) அல்லாஹ்வின் திட்டப்படி அழியக்கூடியவர் தாம் (அவ்வாறு) அழிந்துபோவார்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

### பாடம் : 60 இறைநம்பிக்கை தொடர்பாக ஏற்படும் மனக்குழப்பமும் அந்தக் குழப்பத்தை உணர்கின்றவர் சொல்ல வேண்டியதும்.

209 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுடைய தோழர்களில் சிலர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "எங்கள் உள்ளத்தில் சில (குழப்பமான) விஷயங்கள் எழுகின்றன. அவற்றை (வெளிப்படுத்திப்) பேசுவதைக்கூட நாங்கள் மிகப்பெரும் (பாவ) காரியமாகக் கருதுகிறோம் (இது பற்றி தாங்கள் என்ன கூறுகின்றீர்கள்?)" என்று கேட்டனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உண்மையிலேயே நீங்கள் அத்தகைய உணர்வுகளுக்கு உள்ளாகின்றீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு நபித் தோழர்கள், "ஆம்' என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள், "அதுதான் ஒளிவுமறைவற்ற இறைநம்பிக்கை" என்று கூறினார்கள்.

210 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

211 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் "மனக் குழப்பம்' குறித்து வினவப்பட்டது. அதற்கு அவர்கள், "அதுதான் ஒளிவுமறைவற்ற இறைநம்பிக்கை" என்று பதிலளித்தார்கள்.
இதை அல்கமா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

212 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்கள் (இதைப் படைத்தவர் யார்? இதைப் படைத்தவர் யார்? என்று ஒவ்வொன்றாகக்) கேட்டுக்கொண்டேவந்து இறுதியில், "அல்லாஹ் படைப்பினங்களைப் படைத்தான். அல்லாஹ்வைப் படைத்தவன் யார்?" என்று கேட்கும் நிலைக்கு உள்ளாவார்கள். இத்தகைய எண்ணம் ஒருவருக்கு ஏற்பட்டால் அவர் உடனே, "அல்லாஹ்வை நான் நம்பிக்கை கொண்டேன்' (ஆமன்த்து பில்லாஹ்) என்று சொல்லட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

213 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "உங்களில் ஒருவரிடம் ஷைத்தான் வந்து, வானத்தைப் படைத்தவர் யார்? பூமியைப் படைத்தவர் யார்?" என்று கேட்பான். அவர் "அல்லாஹ்' என்று பதிலளிப்பார். (பிறகு அல்லாஹ்வைப் படைத்தவர் யார் என்றும் கேட்பான்) என்று தொடங்கி, மேற்கண்ட ஹதீஸைப் போன்றே இடம்பெற்றுள்ளது. மேலும், "(இத்தகைய எண்ணங்கள் ஏற்பட்டால் "நான் அல்லாஹ்வையும்) அவனுடைய தூதர்களையும் நம்பிக்கை கொண்டேன்' என்று கூறுங்கள்" என்றும் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

214 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவரிடம் ஷைத்தான் வந்து, "இன்னின்னவற்றைப் படைத்தவர் யார்?" என்று கேட்டுக்கொண்டே வந்து இறுதியில் அவரிடம், "உன் இறைவனைப் படைத்தவர் யார்?" என்று கேட்பான். இந்தக் (கேள்வி கேட்கும்) கட்டத்தை அவன் எட்டும்போது, அவர் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரட்டும். (இத்தகைய சிந்தனையிலிருந்து) அவர் விலகிக் கொள்ளட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் அடியாரிடம் ஷைத்தான் வந்து, "இன்னின்னவற்றைப் படைத்தவர் யார்?" என்று கேட்பான் எனத் தொடங்கி மற்றவை மேற்கண்ட ஹதீஸிலுள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

215 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்கள் உங்களிடம் கல்வியறிவு தொடர்பான கேள்விகளைக் கேட்டுக்கொண்டேவந்து இறுதியில், "இதோ! அல்லாஹ்தான் நம்மைப் படைத்தான். அல்லாஹ்வைப் படைத்தவர் யார்?" என்று கேட்பார்கள்.

இதன் அறிவிப்பாளரான அபூஹுரைரா (ரலி) அவர்கள் ஒரு மனிதரின் கையைப் பிடித்துக் கொண்டு, "அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உண்மையே கூறினர். "(மேற்கண்டவாறு) என்னிடம் இருவர் கேட்டுவிட்டனர். இதோ! இவர்தாம் மூன்றாமவர்' அல்லது "(அவ்வாறு ஏற்கெனவே) என்னிடம் ஒருவர் கேட்டுவிட்டார். இதோ! இவர்தாம் இரண்டாமவர்'" என்று கூறினார்கள்.
இதை முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதாக இடம்பெறவில்லை. ஆயினும், அதன் இறுதியில் "அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உண்மையே கூறினர்' எனும் வாசகம் இடம் பெற்றுள்ளது.

- அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அபூஹுரைரா! உம்மிடம் மக்கள் கேள்வி கேட்டுக்கொண்டேவந்து இறுதியில், "இதோ! இவன்தான் (நம்மைப் படைத்த) அல்லாஹ். அல்லாஹ்வைப் படைத்தவர் யார்?' என்று கேட்பார்கள்" என்று கூறினார்கள்.
ஒரு நாள் நான் பள்ளிவாசலில் அமர்ந்திருக்கையில் என்னிடம் கிராமவாசிகளில் சிலர் வந்து, "அபூஹுரைரா! இதோ! இவன்தான் அல்லாஹ். அல்லாஹ்வைப் படைத்தவர் யார்?" என்று கேட்டார்கள். உடனே நான் எனது கையில் சில சிறு கற்களை எடுத்து அவர்கள்மீது வீசியெறிந்தேன். பிறகு, "எழுந்து செல்லுங்கள்! எழுந்து செல்லுங்கள்! என் உற்ற தோழர் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்) உண்மையே உரைத்தார்கள்" என்றேன்.
இதை அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

216 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நிச்சயமாக மக்கள் உங்களிடம் ஒவ்வொன்றைப் பற்றியும் வினா தொடுப்பார்கள். இறுதியில் "அல்லாஹ்தான் ஒவ்வொன்றையும் படைத்தான். அவனைப் படைத்தவர் யார்?" என்றும் கேட்பார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

217 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மாண்பும் வலிவுமிக்க அல்லாஹ் (என்னிடம் பின்வருமாறு) கூறினான்: உம்முடைய சமுதாயத்தார் (உம்மிடம்), "இது என்ன (இதைப் படைத்தவர் யார்)? இது என்ன (இதைப் படைத்தவர் யார்)?" என்று கேட்டுக்கொண்டே வந்து இறுதியில் "இதோ! அல்லாஹ்தான் படைப்பினங்களைப் படைத்தான். அல்லாஹ்வைப் படைத்தவர் யார்?" என்றும் கேட்பார்கள்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், இது அல்லாஹ் கூறியதாக இடம்பெறவில்லை.

**பாடம் : 61 பொய்ச் சத்தியம் செய்து ஒரு முஸ்லிமின் உரிமையை அபகரிக்கின்றவருக்கு நரகம் தான் (தண்டனை) என்ற எச்சரிக்கை.**

218 அபூஉமாமா அல்ஹாரிஸீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் (பொய்ச்) சத்தியம் செய்து ஒரு முஸ்லிமின் உரிமையை அபகரித்துக்கொள்கிறாரோ அவருக்கு அல்லாஹ் நரகத்தைக் கட்டாயமாக்கி விட்டான்; சொர்க்கத்தை அவருக்குத் தடை செய்துவிட்டான்" என்று கூறினார்கள்.
அப்போது ஒரு மனிதர், "அது ஒரு சிறிய பொருளாய் இருந்தாலுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மிஸ்வாக் மரத்தின் ஒரு குச்சியாக அது இருந்தாலும் சரியே!" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

219 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

220 அபூவாயில் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "யார் ஒரு பிரமாண (வாக்கு மூல)த்தின்போது ஒரு முஸ்லிமின் செல்வத்தை அபகரித்துக் கொள்வதற்காகத் திட்டமிட்டுப் பொய்ச் சத்தியம் செய்கிறாரோ அவர் (மறுமையில்) தம்மீது அல்லாஹ் கோபம் கொண்டிருக்கும் நிலையில் தான் அவனைச் சந்திப்பார்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்கள். அப்போது அஷ்அஸ் பின் கைஸ் (ரலி) அவர்கள் வந்து (மக்களை நோக்கி), "அபூஅப்திர் ரஹ்மான் (அப்துல்லாஹ் பின் மஸ்ஊத்) உங்களிடம் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார்?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "இன்னின்னவாறு (சொன்னார்)" என்று பதிலளித்தனர். அப்போது அஷ்அஸ் (ரலி) அவர்கள், "அபூஅப்திர் ரஹ்மான் சொன்னது உண்மையே. என் தொடர்பாகத்தான் இந்த இறைவசனம் (3:77) அருளப்பெற்றது. எனக்கும் இன்னொரு மனிதருக்கும் இடையே யமன் நாட்டில் (உள்ள) ஒரு நிலம் (தொடர்பாக வழக்கு) இருந்தது. அந்த வழக்கை நான் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு சென்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "(உமது வாதத்தை நிரூபிக்க) உமக்கு ஆதாரம் ஏதும் உண்டா?" என்று (என்னிடம்) கேட்க, நான், "இல்லை' என்று பதிலளித்தேன். "அவ்வாறாயின் (பிரதிவாதியான) அவர் சத்தியம் செய்ய வேண்டியதுதான்" என்று கூறினார்கள். நான், "அப்படியென்றால் அவர் (தயங்காமல்) பொய்ச் சத்தியம் செய்வாரே!" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எவர் ஒரு பிரமாண வாக்குமூலத்தின்போது ஒரு முஸ்லிமின் செல்வத்தை அபகரித்துக் கொள்வதற்காகத் திட்டமிட்டுப் பொய்ச்சத்தியம் செய்கிறாரோ அவர்மீது அல்லாஹ் கோபம் கொண்ட நிலையில்தான் (மறுமையில்) அவனை அவர் சந்திப்பார்" என்று கூறினார்கள். அப்போதுதான் "எவர் அல்லாஹ்விடம் செய்துகொண்ட ஒப்பந்தத்தையும் தம் சத்தியங்களையும் சொற்ப விலைக்கு விற்று விடுகின்றார்களோ..." என்று தொடங்கும் (3:77ஆவது) வசனம் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

221 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "யார் ஒரு செல்வத்தை அடைவதற்காகத் திட்டமிட்டுப் பொய்ச்சத்தியம் செய்கிறாரோ அவர்மீது அல்லாஹ் கோபம் கொண்டிருக்கும் நிலையிலேயே அவனை (மறுமையில்) அவர் சந்திப்பார்" என்று தொடங்கி மேற்கண்ட ஹதீஸிலுள்ள தகவல்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால், அதில், "எனக்கும் ஒரு மனிதருக்குமிடையே ஒரு கிணறு தொடர்பாக தகராறு இருந்தது. ஆகவே, நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வழக்கைக் கொண்டு சென்றோம். அவர்கள், "உம்முடைய இரு சாட்சிகள்; அல்லது (பிரதிவாதியான) அவரது சத்தியம் (தீர்ப்பளிக்கத் தேவைப்படுகின்றன)' என்று கூறினார்கள்" என (சிறிய வித்தியாசத்துடன்) இடம்பெற்றுள்ளது.

222 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "யார் (ஒரு பிரமாண வாக்குமூலத்தின்போது சட்டபூர்வமான) உரிமையின்றி ஒரு முஸ்லிமின் செல்வத்(தை அபகரிக்கும் நோக்கத்)திற்காகப் பொய்சத்தியம் செய்கிறாரோ, அவர்மீது அல்லாஹ் கோபம் கொண்டிருக்கும் நிலையிலேயே அவனை (மறுமையில்) அவர் சந்திப்பார்" என்று கூறினார்கள்.
பிறகு தமது கூற்றை உறுதிப்படுத்தும் வகையில் "யார் அல்லாஹ்விடம் செய்து கொண்ட ஒப்பந்தத்தையும் தம் சத்தியங்களையும் அற்ப விலைக்கு விற்றுவிடுகிறார்களோ..." என்று தொடங்கும் (3:77ஆவது) இறைவசனத்தை எங்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) ஓதிக்காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

223 வாயில் பின் ஹுஜ்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் (யமன் நாட்டிலுள்ள) "ஹள்ரமவ்த்' எனும் இடத்தைச் சேர்ந்த மனிதர் ஒருவரும் "கிந்தா' எனும் குலத்தைச் சேர்ந்த இன்னொரு மனிதரும் வந்தனர். அப்போது ஹள்ரமவ்த்தைச் சேர்ந்த அந்த மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தைக்குச் சொந்தமான நிலத்தை இவர் ஆக்கிரமித்துவிட்டார்" என்று கூறினார். அதற்கு கிந்தா குலத்தைத் சேர்ந்த அந்த மனிதர், "அது என் கைவசமுள்ள என்னுடைய நிலம்; அதில் நான் விவசாயம் செய்துவருகிறேன்; அதில் இவருக்கு எந்த உரிமையும் கிடையாது" என்று கூறினார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹள்ரமவ்த்தைச் சேர்ந்த அந்த மனிதரிடம், "(உமது வாதத்தை நிரூபிப்பதற்கு) உம்மிடம் ஆதாரம் ஏதும் உண்டா?" என்று கேட்டார்கள். அவர் "இல்லை' என்று பதிலளித்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியென்றால் இவர் சத்தியம் செய்வதுதான் உமக்கு (வழி)" என்று கூறினார்கள். உடனே ஹள்ரமவ்த்தைச் சேர்ந்த அந்த மனிதர் "அவர் (துணிந்து பொய் சொல்லும்) பொல்லாத மனிதர். தாம் எதற்குச் சத்தியம் செய்கிறோம் என்பதைப் பற்றி அவர் கவலைப்படமாட்டார். எந்த விவகாரத்திலும் அவர் நேர்மையைப் பற்றி யோசிப்பவரில்லை" என்று சொன்னார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதைத் தவிர உமக்கு வேறு வழி கிடையாது" என்று கூறினார்கள். உடனே (பிரதிவாதியான) அந்த (கிந்தா குலத்து) மனிதர்

சத்தியம் செய்வதற்காக (குறிப்பிட்ட இடத்திற்கு)ச் சென்றபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவருடைய செல்வத்தை உண்பதற்காக அநியாயமாக அவர் பொய்ச் சத்தியம் செய்தால், அல்லாஹ் அவரைப் புறக்கணிக்கும் நிலையிலேயே (மறுமையில்) அவனை அவர் சந்திப்பார்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

224 வாயில் பின் ஹுஜ்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருகில் இருந்தேன். அப்போது அவர்களிடம் ஒரு நிலம் தொடர்பான வழக்கை இருவர் கொண்டுவந்தனர். அவர்களில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! அறியாமைக் காலத்தில் இவர், எனது நிலத்தை ஆக்கிரமித்துக் கொண்டார்" என்று கூறினார் -அவ(ரது பெய)ர் இம்ரஉல் கைஸ் பின் ஆபிஸ் அல்கிந்தீ. ரபீஆ பின் இப்தான் அவருடைய பிரதிவாதி(யின் பெயர்). அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமது ஆதாரம் என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "என்னிடம் ஆதாரம் ஏதும் இல்லை" என்று பதிலளித்தார். "அப்படியென்றால் (பிரதிவாதியான) இவரது சத்தியம் (தான் வழி)" என்று சொன்னார்கள். உடனே (வாதியான) அவர், "அவ்வாறாயின் (பொய்ச் சத்தியம் செய்து) அவர், அந்த நிலத்தைத் தட்டிக்கொண்டு போய்விடுவாரே!" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உமக்கு இதைத் தவிர வேறு வழி இல்லை" என்று கூறினார்கள். ஆகவே, (பிரதிவாதியான) அந்த மனிதர் சத்தியம் செய்வதற்காக எழுந்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அநியாயமாக ஒரு நிலத்தை அபகரித்துக்கொள்பவர் தம்மீது அல்லாஹ் கோபம் கொண்ட நிலையிலேயே அவனை (மறுமையில்) சந்திப்பார்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "(பிரதிவாதியான அந்த மனிதரின் பெயர்) ரபீஆ பின் அய்தான்" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 62 முறையின்றி பிறரது செல்வத்தைப் பறிக்க முனைகின்றவனின் உயிர் மதிப்பற்றதாகிவிடும்; அவன் கொல்லப்பட்டுவிட்டால் நரகத்திற்கே செல்வான்; தமது செல்வத்தைக் காக்கப் போராடிய ஒருவர் கொலை செய்யப்பட்டுவிட்டால் அவர் உயிர்த்தியாகி (ஷஹீத்) ஆவார் என்பதற்கான ஆதாரம்.**

225 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! ஒருவன் எனது செல்வத்தைப் பறிக்கும் நோக்கத்தில் வந்தால் (நான் என்ன செய்ய வேண்டும்) கூறுங்கள்?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவனுக்கு உமது செல்வத்தை (விட்டு)க் கொடுக்க வேண்டியதில்லை" என்று கூறினார்கள். அந்த மனிதர், "அவன் என்னுடன் சண்டையிட்டால்...?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீரும் அவனுடன் சண்டையிட வேண்டியது தான்!" என்று கூறினார்கள். "(அந்தச் சண்டையில்) அவன் என்னைக் கொன்றுவிட்டால்...?" என்று அந்த மனிதர் கேட்டார். அவர்கள், "அப்போது நீர் உயிர்த்தியாகி (ஷஹீத்) ஆவீர்" என்றார்கள். "நான் அவனைக்

கொன்றுவிட்டால்...?" என்று அவர் கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவன் நரகத்திற்குச் செல்வான்" என்று பதிலளித்தார்கள்.

226 உமர் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களின் முன்னாள் அடிமையான ஸாபித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களுக்கும் அன்பஸா பின் அபீசுஃப்யான் அவர்களுக்குமிடையே (ஒரு வாய்க்கால் தொடர்பாக) பிரச்சினை ஏற்பட்டு சண்டை மூளும் நிலை ஏற்பட்டது. அப்போது காலித் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களிடம் புறப்பட்டுவந்து அவர்களுக்கு அறிவுரை கூறினார்கள்.
அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள், "தமது செல்வத்தை காப்பதற்காக போராடிய போது ஒருவர் கொல்லப்பட்டுவிட்டால் அவர் உயிர்த்தியாகி (ஷஹீத்) ஆவார்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியது உங்களுக்குத் தெரியாதா? என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 63 குடிமக்களைச் சுரண்டும் ஆட்சியாளன் நரகத்திற்குரியவன் ஆவான்.

227 ஹசன் அல்பஸரி (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மஅகில் பின் யசார் அல்முஸனீ (ரலி) அவர்கள் எந்த நோயில் இறந்துபோனார்களோ அந்த நோயின்போது அவர்களை உடல்நலம் விசாரிப்பதற்காக( பஸ்ராவின் ஆளுநர்) உபைதுல்லாஹ் பின் ஸியாத் சென்றார்.அப்போது மஅகில் (ரலி) அவர்கள் உபைதுல்லாஹ்விடம் (பின்வருமாறு) கூறினார்கள்:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்ற செய்தி ஒன்றை உமக்கு அறிவிக்கிறேன். நான் இன்னும் (சில நாள்) உயிர்வாழ்வேன் என்று அறிந்திருந்தால் (அதை) உமக்கு அறிவிக்கமாட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: குடிமக்களில் சிலரை நிர்வகிக்கும் பொறுப்பை அல்லாஹ் ஓர் அடியாருக்கு வழங்கியிருக்க, அவர் அந்த மக்களை ஏமாற்றி மோசடி செய்த நிலையிலேயே இறந்து போனால், அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தைத் தடை செய்யாமல் இருப்பதில்லை.

228 ஹசன் அல்பஸரி (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மஅகில் பின் யசார் (ரலி) அவர்கள் நோயுற்றிருந்தபோது (உடல்நலம் விசாரிப்பதற்காக) அவர்களிடம் (பஸ்ராவின் ஆளுநர்) உபைதுல்லாஹ் பின் ஸியாத் சென்றார். அப்போது உபைதுல்லாஹ்விடம் மஅகில் (ரலி) அவர்கள், "முன்பு நான் உம்மிடம் அறிவித்திராத செய்தி ஒன்றை அறிவிக்கிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், 'குடிமக்களில் சிலரை நிர்வகிக்கும் பொறுப்பை அல்லாஹ் ஓர் அடியாருக்கு வழங்கியிருக்க, அவர் அந்த மக்களை ஏமாற்றி மோசடி செய்த நிலையிலேயே இறந்துபோனால், அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தைத் தடைசெய்யாமல் இருப்பதில்லை' என்று கூறினார்கள்" என்றார்கள். அப்போது உபைதுல்லாஹ், "இதற்கு முன்பு இதை நீங்கள் எனக்கு அறிவிக்கவில்லையே?" என்று

கேட்டார். மஅகில் (ரலி) அவர்கள், "நான் உமக்கு (காரணத்தோடுதான்) அறிவிக்கவில்லை' அல்லது "உம்மிடம் நான் (காரணத்தோடுதான்) அறிவிக்கவில்லை' " என்று பதிலளித்தார்கள்.

229 ஹசன் அல்பஸரி (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் மஅகில் பின் யசார் (ரலி) அவர்களை உடல்நலம் விசாரிக்கச் சென்றிருந்தோம். அப்போது (ஆளுநர்) உபைதுல்லாஹ் பின் ஸியாத் வந்தார். அவரிடம் மஅகில் (ரலி) அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்ற செய்தி ஒன்றை உமக்கு அறிவிக்கப்போகிறேன்..."என்று கூறிவிட்டு, மேற்கண்ட ஹதீஸின் பொருள்பட அறிவித்தார்கள்.
- அபுல்மலீஹ் அல்பஸரி (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மஅகில் பின் யசார் (ரலி) அவர்கள் நோயுற்றிருந்தபோது அவர்களை உடல் நலம் விசாரிக்க (ஆளுநர்) உபைதுல்லாஹ் பின் ஸியாத் வந்தார். அவரிடம் மஅகில் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
"உமக்கு நான் ஒரு ஹதீஸை அறிவிக்கப்போகிறேன். நான் இறக்கும் தறுவாயில் இல்லாவிட்டால் அதை நான் உமக்கு அறிவித்திருக்கமாட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன்: ஓர் ஆட்சியாளர் முஸ்லிம்களை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பின்னர் அவர்களுக்காக உழைக்காமலும் (அவர்கள்மீது) அக்கறை காட்டாமலும் இருந்தால், அவர்களுடன் அவர் சொர்க்கத்திற்குச் செல்லவே மாட்டார்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 64 சிலரது உள்ளத்திலிருந்து நம்பகத்தன்மை அகன்றுவிடுவதும் உள்ளங்களில் குழப்பங்கள் தோன்றுவதும்.**

230 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு (நம்பகத்தன்மை தொடர்பாக) இரு செய்திகளைக் கூறினார்கள். அவற்றில் ஒன்றை நான் (என் வாழ்நாளிலேயே) பார்த்து விட்டேன். மற்றொன்றை எதிர்பார்த்(துக் காத்)திருக்கிறேன்.
ஒரு செய்தி யாதெனில், (இயற்கையாகவே) மனிதர்களின் ஆழ்மனத்தில் ("அமானத்' எனும்) நம்பகத் தன்மை இடம்பிடித்தது. பிறகு குர்ஆன் அருளப்பெற்றபோது குர்ஆனிலிருந்தும் (அதை) அறிந்துகொண்டார்கள்; (எனது வழியான) "சுன்னா'விலிருந்தும் அறிந்துகொண்டார்கள். (நபியவர்கள் கூறிய இதை நான் பார்த்துவிட்டேன்.)
இரண்டாவது செய்தி, நம்பகத்தன்மை அகற்றப்படுவது தொடர்பானதாகும். மனிதன் ஒரு முறை உறங்குவான். (உறக்கத்திலேயே) அவனது உள்ளத்திலிருந்து நம்பகத்தன்மை (சிறிது) கைப்பற்றப்படும். அதையடுத்து அ(து அகற்றப்பட்ட)தன் அடையாளம் சிறு (கரும்)புள்ளி அளவுக்கு (அவனில்) தங்கிவிடும். பிறகு மீண்டும் ஒரு முறை அவன் உறங்குவான். அப்போது (மறுபடியும்) அது கைப்பற்றப்படும். இம்முறை அ(து கைப்பற்றப்பட்ட)தன் அடையாளம் (கடின உழைப்பால் கையில் ஏற்படும்) காய்ப்பு அளவுக்கு அவனில் நிலைத்துவிடும். (இவ்வாறு முதலில் "நம்பகத்தன்மை' எனும் ஒளி உள்ளத்தில் ஏற்றப்பட்டுப்

பிறகு சிறிது சிறிதாக அது அணைக்கப்படுவதானது,) காலில் தீக்கங்கை உருட்டிவிட்டு, அதனால் கால் கொப்புளித்து உப்பிவிடுவதைப் போன்றதாகும். பார்வையில் அது உப்பிப் பெரியதாகத் தெரியுமே தவிர, அதனுள் ஒன்றும் இருக்காது. -பிறகு நபி (ஸல்) அவர்கள் சிறு கற்களை எடுத்துத் தமது காலால் அதை உருட்டிக் காட்டினார்கள்.-

பின்னர் காலையில் மக்கள் தங்களிடையே கொடுக்கல் வாங்கல் செய்துகொள்வார்கள். (ஆனால், அவர்களில்) யாருமே நம்பிக்கையைக் காப்பாற்ற முனையமாட்டார்கள். இன்னாருடைய மக்களில் நம்பிக்கையாளரான ஒருவர் இருக்கிறார் என்று (தேடிக் கண்டுபிடித்து) சொல்லப்படும் (அளவுக்கு நம்பிக்கையாளர்கள் அரிதாகிவிடுவார்கள்). மேலும், ஒருவரைப் பற்றி "அவருடைய வீரம்தான் என்ன? அவருடைய விவேகம்தான் என்ன? அவருடைய அறிவுதான் என்ன?" என்று (சிலாகித்து) கூறப்படும். ஆனால், அந்த மனிதருடைய இதயத்தில் கடுகளவுகூட இறைநம்பிக்கை இருக்காது.

(அறிவிப்பாளர் ஹுதைஃபா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:)

என்மீது ஒரு காலம் வந்திருந்தது. அக்காலத்தில் நான் உங்களில் யாரிடம் கொடுக்கல் வாங்கல் செய்கிறேன் என்று பொருட்படுத்தியதில்லை. (ஏனெனில்,) முஸ்லிமாக இருந்தால், இஸ்லாம் (எனது பொருளை) அவரிடமிருந்து மீட்டுத் தந்துவிடும். கிறிஸ்தவராகவோ யூதராகவோ இருந்தால் அவருக்கான அதிகாரி (எனது பொருளை) அவரிடமிருந்து மீட்டுத் தந்துவிடுவார். ஆனால், இன்றோ நான் இன்னார், இன்னாரிடம் மட்டுமே கொடுக்கல் வாங்கல் செய்யத் தயாராக இருக்கிறேன்.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

231 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நாங்கள் (கலீஃபா) உமர் (ரலி) அவர்களிடம் அமர்ந்திருந்தோம். அப்போது அவர்கள், "உங்களில் யார் சோதனை (ஃபித்னா) தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றுள்ளார்?" என்று கேட்டார்கள். அப்போது சிலர், "நாங்கள் செவியுற்றுள்ளோம்' என்று கூறினர். உமர் (ரலி) அவர்கள், "ஒரு மனிதன் தன் குடும்பத்தார் மற்றும் அண்டை வீட்டார் விஷயத்தில் சோதனைக்கு உள்ளாக்கப்படுவதையே நீங்கள் நினைக்கிறீர்கள் போலும்" என்று கூறினார்கள். அதற்கு மக்கள், "ஆம்' என்றனர். "இத்தகைய சோதனையில் ஆழ்த்தப்படும் போது தொழுகை, நோன்பு, தானதர்மம் ஆகியவை அதற்கான பரிகாரமாக அமைந்து விடும். (நான் அந்த அர்த்தத்திலுள்ள ஃபித்னா பற்றி உங்களிடம் கேட்கவில்லை.) மாறாக, கடல் அலையைப் போன்று அடுக்கடுக்காகத் தோன்றும் என நபியவர்கள் (முன்னறிவிப்பாகக்) கூறிய (அரசியல் குழப்பம் எனும் பொருள் கொண்ட) ஃபித்னாவைப் பற்றிச் செவியுற்றவர் உங்களில் யார்?" என்று கேட்டார்கள். அப்போது மக்கள் (பதிலளிக்காமல்) அமைதியாக இருந்தனர். ஆகவே, நான், "நான் (செவியுற்றுள்ளேன்)" என்று கூறினேன். "உம் தந்தை அல்லாஹ்வுக்கு அர்ப்பணம்! (உம்மைப் போன்றே அவரும் நல்ல மனிதர்.) நீரா (செவியுற்றீர்)?" என்று கேட்க, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றதை(ப் பின்வருமாறு) கூறினேன்:

கோரை கோரையாக வைத்துப் பாய் பின்னப்படுவதைப் போன்று மக்கள் உள்ளங்களில் சோதனைகள் பின்னப்படும். எந்த உள்ளம் அந்தச் சோதனைகளில் அமிழ்ந்துவிடுகிறதோ

அந்த உள்ளத்தில் ஒரு கரும்புள்ளி இடப்படும். எந்த உள்ளம் அவற்றை நிராகரித்து விடுகிறதோ அந்த உள்ளத்தில் ஒரு வெண்புள்ளி இடப்படும். இவ்வாறு சோதனைகள் இரு விதமான உள்ளங்களில் ஏற்படுகின்றன. ஒன்று, வெண்பாறை போன்று தூய்மையானது; வானங்களும் பூமியும் நிலைத்திருக்கும்வரை எந்தச் சோதனையும் அதற்கு இடரளிக்காது. மற்றொன்று, சிறிதளவு வெண்மை கலந்த கருமையான உள்ளம். அது தலைகீழாகக் கவிழ்க்கப்பட்ட கூஜாவைப் போன்று நல்லதை அறியவும் செய்யாது; தீமையை நிராகரிக்கவும் செய்யாது. மனஇச்சையில் அமிழ்ந்து கிடப்பது ஒன்றுதான் அதற்குத் தெரிந்ததெல்லாம்.
(அறிவிப்பாளர் ஹுதைஃபா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:)
(மேற்கண்ட ஹதீஸை நான் உமர் (ரலி) அவர்களிடம் அறிவித்துவிட்டு, "இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே!) உங்களுக்கும் அந்தக் குழப்பங்களுக்கும் இடையே மூடிய கதவு ஒன்று உண்டு; அக்கதவு (விரைவில்) உடைக்கப்படக் கூடும்" என்று கூறினேன். உடனே உமர் (ரலி) அவர்கள், "நீர் தந்தையற்றுப் போவீர்! அது உடைக்கப்படுமா? அது (உடைக்கப் படாமல்) திறக்கப்பட்டாலாவது மீண்டும் அது மூடப்பட இடமுண்டே!" என்று கூறினார்கள். நான், "இல்லை. (அது திறக்கப்படாது.) உடைக்கத்தான் படும்" என்று சொன்னேன். மேலும், நான் அவர்களிடம் "அந்தக் கதவு "கொல்லப்படவிருக்கும்' அல்லது "இறந்துபோகவிருக்கும்' ஒரு மனிதர் தாம். இது கட்டுக்கதை அன்று. (உண்மையான செய்திதான்)" என்றும் கூறினேன்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூகாலித் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (அறிவிப்பாளர்) சஅத் பின் தாரிக் (ரஹ்) அவர்களிடம், "அபூமாலிக்கே! (இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள) "அஸ்வது முர்பாத்தன்' என்பதன் பொருள் என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "கறுப்பில் தூய வெள்ளை" என்று கூறினார்கள். நான் "அல்கூஸு முஜக்கியன்' என்பதன் பொருள் யாது?" என்று கேட்டேன். அதற்கு, "தலைகீழாகக் கவிழ்க்கப்பட்ட கூஜா' என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், (கலீஃபா) உமர் (ரலி) அவர்களிடமிருந்து (விடைபெற்று மதீனாவிலிருந்து) ஹுதைஃபா (ரலி) அவர்கள் புறப்பட்டு (கூஃபா) வந்து எங்களுடன் அமர்ந்துகொண்டு (பின்வருமாறு) கூறினார்கள் என்று காணப்படுகிறது:

நான் நேற்று இறைநம்பிக்கையாளர்களின் தலைவரிடம் அமர்ந்திருந்தபோது அவர்கள் தம் தோழர்களிடம், "உங்களில் யார் (இனி தலைதூக்கவிருக்கும் அரசியல்) குழப்பங்கள் குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னதை நினைவில் வைத்திருக்கிறார்?" என்று கேட்டார்கள். அபூமாலிக் (ரஹ்) அவர்கள் அளித்த அருஞ் சொற்பொருள்கள் அதில் குறிப்பிடப்படவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் பின்வருமாறு காணப்படுகிறது:
உமர் (ரலி) அவர்கள் மக்களிடம் "(அரசியல்) குழப்பங்கள் குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை எமக்கு அறிவிப்பவர் உங்களில் யார்?" என்று கேட்டார்கள். அங்கு ஹுதைஃபா (ரலி) அவர்களும் இருந்தார்கள். அவர்கள் "நான் (கேட்டிருக்கிறேன்)' என்று கூறினார்கள்.

ஹதீஸின் இறுதியில் "இது கட்டுக்கதை அன்று; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதுதான்" என ஹுதைஃபா (ரலி) அவர்கள் தெரிவித்துள்ளார்கள்.

**பாடம் : 65 இஸ்லாம் குறைந்த எண்ணிக்கை கொண்ட மக்களிடையேதான் தோன்றியது; குறைந்த எண்ணிக்கையினரிடையே தான் அது திரும்பிச்செல்லும். அது (இறுதியில் மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதுந் நபவீ ஆகிய) இரு பள்ளிவாசல்களிடையே அபயம் பெறும்.**

232 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இஸ்லாம் குறைந்த எண்ணிக்கை கொண்ட மக்களிடையேதான் தோன்றியது. அது தோன்றிய பழைய நிலைக்கே திரும்பிச்செல்லும். அந்தக் குறைந்த எண்ணிக்கையிலான மக்களுக்கு சுபம் உண்டாகட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இஸ்லாம் குறைந்த எண்ணிக்கை கொண்ட மக்களிடையேதான் தோன்றியது. அது தோன்றிய பழைய நிலைக்கே திரும்பிச்செல்லும். பாம்பு தனது புற்றில் (சென்று) அபயம் பெறுவதைப் போன்று இஸ்லாம் இரு பள்ளிவாசல்களில் அபயம் பெறும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்தள்ளது.

233 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பாம்பு தனது புற்றில் (சென்று) அபயம் பெறுவதைப் போன்று இறைநம்பிக்கை (ஈமான்) மதீனாவில் அபயம் பெறும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 66 இறுதிக் காலத்தில் இறைநம்பிக்கை (இல்லாமற்) போய்விடுவது.**

234 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பூமியில் "அல்லாஹ், அல்லாஹ்' என்று சொல்லப்படாதபோதுதான் மறுமை நாள் நிகழும்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"அல்லாஹ், அல்லாஹ்' என்று சொல்லிக்கொண்டிருக்கும் (இறைநம்பிக்கையாளர்) எவர்மீதும் மறுமை நாள் நிகழாது.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 67 (எதிரிகளால் தொல்லை ஏற்படும் என்று) அஞ்சுகின்றவர் தமது இறை நம்பிக்கையை இரகசியமாக வைத்துக்கொள்வது.**

235 ஹுதைஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள், "எத்தனை பேர் இஸ்லாத்தை ஏற்றுள்ளார்கள்? என்பதை எனக்குக் கணக்கிட்டுச் சொல்லுங்கள்!" என்று கூறினார்கள். நாங்கள் அறுநூறு முதல் எழுநூறு பேர்வரை இருக்க, எங்களைப் பற்றி அஞ்சுகிறீர்களா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டோம்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களுக்குத் தெரியாது. நீங்கள் (எதிரிகளால்) சோதிக்கப்படலாம்!" என்று சொன்னார்கள். அவ்வாறே நாங்கள் சோதிக்கப் பட்டோம். எந்த அளவுக்கென்றால், (ஒரு கட்டத்தில்) எங்களில் சிலர் இரகசியமாகவே தவிரத் தொழ முடியாத நிலை ஏற்பட்டது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 68 தமது இறைநம்பிக்கை குறித்து அஞ்சுகின்ற பலவீனமான ஒருவரின் உள்ளத்தைத் தேற்றுவதும், உறுதியான ஆதாரமின்றி ஒருவரை இறைநம்பிக்கையாளர் என்று முடிவு செய்வதற்கு வந்துள்ள தடையும்.**

236 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு சமயம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தர்மப் பொருள்களைப்) பங்கிட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! இன்னாருக்கு நீங்கள் கொடுங்கள். அவர் ஓர் இறைநம்பிக்கையாளர் (முஃமின்)" என்று சொன்னேன். உடனே நபி (ஸல்) அவர்கள், "அவரை முஸ்லிம் (வெளித்தோற்றத்தில் இறைநம்பிக்கையாளர்) என்று சொல்லுங்கள்!" என்றார்கள். நான் முன்பு கூறியதைப் போன்றே மூன்று முறை கூறினேன். நபி (ஸல்) அவர்களும் முன்பு கூறியதைப் போன்றே "அவரை முஸ்லிம் (என்று சொல்லுங்கள்)" என்று மூன்று முறை என்னிடம் கூறினார்கள். பிறகு, "நான் ஒருவருக்குக் கொடுக்கிறேன்; ஆனால், அவரைவிட மற்றொருவர் என் அன்புக்குரியவராய் இருப்பார். (அப்படியிருந்தும் அவருக்கு நான் கொடுப்பதற்குக்) காரணம், (நான் ஏதும் கொடுக்காதிருந்தால் வறுமையினால் அவர் குற்றம் ஏதும் இழைத்து அதனால்) அவரை இறைவன் நரகத்தில் குப்புறத் தள்ளிவிடுவானோ எனும் அச்சம்தான்" என்றார்கள்.

237 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு குழுவினருக்கு (தர்மப் பொருள்களை) வழங்கினார்கள். அவர்களிடையே நானும் அமர்ந்திருந்தேன். அப்போது, அக்குழுவினரில் எனக்குப் பிடித்த ஒருவருக்கு ஏதும் கொடுக்காமல் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விட்டுவிட்டார்கள். ஆகவே நான், "அல்லாஹ்வின் தூதரே! (அவரை ஏன் விட்டுவிட்டீர்கள்?) அவர்மீது உங்களுக்கு என்ன (அதிருப்தி)? அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் ஓர் இறைநம்பிக்கையாளர் (முஃமின்) என நான் அறிவேன்" என்று கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரை முஸ்லிம் (வெளித்தோற்றத்தில் இறை நம்பிக்கையாளர்) என்று சொல்லுங்கள்!" என்றார்கள். சிறிது நேரம் நான் அமைதியாக

இருந்தேன். நான் அவரைப் பற்றி அறிந்திருந்த விஷயங்கள் மிகைத்துவிடவே, "அல்லாஹ்வின் தூதரே! அவர்மீது உங்களுக்கு என்ன (அதிருப்தி)? அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் ஓர் இறைநம்பிக்கையாளர் என்று நான் அறிவேன்" என்று (மீண்டும்) கூறினேன். அதற்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரை முஸ்லிம் (என்று சொல்லுங்கள்!)" என்றார்கள். சிறிது நேரம் நான் அமைதியாக இருந்தேன். நான் அவரைப் பற்றி அறிந்திருந்த விஷயங்கள் என்னை மிகைத்துவிடவே, "அல்லாஹ்வின் தூதரே! அவர்மீது உங்களுக்கு என்ன (அதிருப்தி)? அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் ஓர் இறை நம்பிக்கையாளர் என்று நான் அறிவேன்" என்றேன். அப்போதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரை முஸ்லிம் (என்று சொல்லுங்கள்!) நான் ஒருவருக்குக் கொடுக்கிறேன்; ஆனால், மற்றொருவர் அவரைவிட என் அன்புக்குரியவராய் இருப்பார். (அப்படியிருந்தும் அவருக்கு நான் கொடுப்பதற்குக்) காரணம், (நான் ஏதும் கொடுக்காதிருந்தால் வறுமையினால் அவர் குற்றமேதும் இழைத்து, அதனால்) அவர் நரகத்தில் முகம் குப்புற வீழ்த்தப்படுவாரோ எனும் அச்சம்தான்" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், "(அக்குழுவினரில் ஒருவருக்கு ஏதும் கொடுக்காததால்) நான் எழுந்து சென்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அவர்மீது உங்களுக்கு என்ன (அதிருப்தி)?' என்று இரகசியமாகக் கேட்டேன்" என்று (சஅத் பின் அபீக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாக) அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், (மூன்று முறை கேட்டு பதிலுரைத்த பின்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது கழுத்திற்கும் புஜத்திற்கும் மத்தியில் அடித்து, "சஅதே! (என்னிடம் வழக்காடி) மோத வருகின்றீர்களா? நான் ஒருவருக்குக் கொடுக்கிறேன்..." என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 69 (இறைச்)சான்றுகள் வெளிப்படுவதன் மூலம் (இறைநம்பிக்கை மீது) மன அமைதி அதிகரிப்பது.

238 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(இறந்துபோனவற்றுக்கு அல்லாஹ் எப்படி உயிரூட்டுகிறான் என்ற சந்தேகம் இறைத்தூதர் களுக்கு வருவதாயிருந்தால் இறைத்தூதர்) இப்ராஹீம் (அலை) அவர்களைவிடவும் நாமே சந்தேகம் கொள்ள அதிகத் தகுதியுடையவர்கள் ஆவோம். (அவர்கள் சந்தேகப்பட்டு அப்படிக் கேட்கவில்லை.) ஏனெனில், "என் இறைவா! மரித்தவர்களை எவ்வாறு நீ உயிர்ப்பிப்பாய் என்று எனக்குக் காட்டுவாயாக!" என்று அன்னார் கேட்டார்கள். இறைவன், "நீங்கள் நம்பிக்கை கொள்ளவில்லையா?" என்று கேட்டான். அதற்கு அவர்கள், "ஆம்! ஆயினும் என் உள்ளம் நிம்மதியடைவதற்காகவே கேட்கிறேன்" என்று பதிலளித்தார்கள். (2:260)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறும்) கூறினார்கள்:

அல்லாஹ், லூத் (அலை) அவர்களுக்குக் கருணை புரிவானாக! அன்னார் வல்லமை மிக்க ஓர் உதவியாளனிடமே தஞ்சம் புகுந்தவர்களாய் இருந்தார்கள். யூசுஃப் (அலை) அவர்கள் தங்கியிருந்த அளவிற்கு நீண்ட காலம் நான் சிறையில் தங்கியிருக்க நேரிட்டு (பிறகு

அவர்களை விடுதலை செய்ய அழைப்பாளர் ஒருவர் வந்ததைப் போன்று என்னிடம் வந்து) இருந்தால், நான் அந்த அழைப்பாளரின் அழைப்பை ஏற்றுக்கொண்டிருப்பேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "பிறகு நபி (ஸல்) அவர்கள் இந்த (2:260ஆவது) இறைவசனத்தை முழுமையாக ஓதிக் காட்டினார்கள்" என்றும் இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதிலும் "நபி (ஸல்) அவர்கள் இந்த (2:260ஆவது) இறை வசனத்தை முழுமையாக ஓதிக் காட்டினார்கள்" என்றே இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 70 முஹம்மத் (ஸல்) அவர்கள் (உலக) மக்கள் அனைவருக்கும் இறைத்தூதராக அனுப்பப்பட்டுள்ளார்கள் என்றும், அவர்களது மார்க்கத்தின் மூலம் மற்ற (முந்தைய) மார்க்கங்கள் காலாவதியாகிவிட்டன என்றும் நம்புவது கட்டாயமாகும்.**

239 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வோர் இறைத்தூதருக்கும் சில அற்புதங்கள் வழங்கப்பெற்றே இருந்தன. அவற்றைக் காணும் மக்கள் நம்பித்தான் ஆக வேண்டியநிலை இருந்தது. எனக்கு வழங்கப்பெற்ற அற்புதமெல்லாம், அல்லாஹ் எனக்கு அருளிய வேதஅறிவிப்பு (வஹீ)தான். ஆகவே, இறைத்தூதர்களிலேயே மறுமை நாளில், பின்பற்றுவோர் அதிகம் உள்ள இறைத்தூதராக நான் இருக்க வேண்டும் என எதிர்பார்க்கிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

240 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முஹம்மதின் உயிர் யாருடைய கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! இந்த(இறுதி)ச் சமுதாயத்திலுள்ள யூதரோ கிறிஸ்தவரோ யாரேனும் ஒருவர் என்(மார்க்கத்தி)னைப் பற்றிக் கேள்விப்பட்ட பிறகும்கூட நான் கொண்டுவந்த (மார்க்கத்)தை நம்பிக்கை கொள்ளாமல் இறந்துவிட்டால், அவர் நரகவாசிகளில் ஒருவராகவே இருப்பார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

241 ஸாலிஹ் பின் ஸாலிஹ் அல்ஹம்தானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(அன்றைய) குராசான் நாட்டைச் சேர்ந்த ஒரு மனிதர் ஆமிர் அஷ்ஷஅபீ (ரஹ்) அவர்களிடம், "அபூஅம்ரே! "ஒருவர் தம் அடிமைப் பெண்ணை விடுதலை செய்து அவளைத் தாமே மணந்துகொள்ளும்போது, அவர் தமது ஒட்டகத்திலேயே பயணம் செய்து கொண்டிருப்பவரைப் போன்றவராகிறார் (அவருக்கு அதற்காக நன்மை ஏதும் கிடைக்காது)' என எங்கள் குராசான் பகுதியைச் சேர்ந்த சிலர் கூறுகின்றனரே!?" என்று கேட்டார். அதற்கு ஷஅபீ (ரஹ்) அவர்கள் சொன்னார்கள்: அபூபுர்தா பின் அபீமூசா (ரஹ்) அவர்கள் தம் தந்தை அபூமூசா (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறியதாக எனக்கு அறிவித்தார்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மூன்று பேருக்கு (அல்லாஹ்விடத்தில்) இரட்டை நன்மைகள் அளிக்கப்படும்:
1.வேதக்காரர்களில் ஒருவர் தம்முடைய (சமூகத்தாருக்கு நியமிக்கப்பெற்ற) இறைத்தூதரையும் நம்பினார்; எனது காலத்தை அவர் அடைந்தபோது என்னையும் நம்பினார்; பின்பற்றினார்; மெய்ப்படுத்தினார். அவருக்கு இரு நன்மைகள் உண்டு.
2.அடிமையாக உள்ள ஒருவர் இறைவனின் கடமையையும் நிறைவேற்றி, தன் எசமானின் கடமையையும் நிறைவேற்றினார். அவருக்கும் இரு நன்மைகள் உண்டு.
3.ஒருவர் தம்மிடமிருந்த அடிமைப் பெண்ணுக்கு நிறைவாக உணவளித்(துப் பராமரித்து வந்)தார். அவளுக்கு நற்குணங்களைக் கற்றுக்கொடுத்தார். அதையும் செம்மையாகச் செய்தார். பிறகு அவளை அடிமைத்தளையிலிருந்து விடுதலை செய்து தாமே மணந்துங்கொண்டார் எனில், அவருக்கும் இரட்டை நன்மைகள் உண்டு.
பிறகு ஷஅபீ (ரஹ்) அவர்கள் அந்தக் குராசான்வாசியிடம், "(கட்டணம்) ஏதுமின்றி (உங்களுக்கு நான் அறிவித்த) இந்த ஹதீஸைப் பெற்றுக்கொள்ளுங்கள். இதைவிடச் சிறிய விஷயங்களை அறிந்துகொள்வதற்காகவெல்லாம் சிலர் மதீனா வரை பயணம் சென்றதுண்டு" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 71 (உலக அழிவுக்கு முன்) மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்கள் (பூமிக்கு) இறங்கி வந்து, நம்முடைய நபி முஹம்மத் (ஸல்) அவர்களின் மார்க்க நெறியின்படி நீதி வழங்குதல்.**

242 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன்மீது சத்தியமாக! விரைவில் (உலக அழிவுக்கு முன்) மர்யமின் மைந்தர் (ஈசா -அலை) உங்களிடையே நேர்மையாகத் தீர்ப்பளிக்கும் நீதிபதியாக இறங்கவிருக்கிறார். அவர் சிலுவையை உடைப்பார்; பன்றியைக் கொல்வார்; ஜிஸ்யா (எனும் காப்பு)வரியை வாங்க மறுப்பார்; (இஸ்லாம் ஒன்றையே மக்களிடமிருந்து ஏற்பார்.) அப்போது செல்வம் (பெருகி) வழிந்தோடும். எந்த அளவுக்கென்றால் அதை வாங்கிக்கொள்ள எவரும் இருக்கமாட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஓர் அறிவிப்பில், "(மர்யமின் மைந்தர்) நீதிவழுவாத் தலைவராக, நேர்மையாகத் தீர்ப்பளிக்கும் நீதிபதியாக (இறங்கவிருக்கிறார்.)" என்று இடம்பெற்றுள்ளது.
மற்றோர் அறிவிப்பில் "நேர்மையாகத் தீர்ப்பளிக்கும் நீதிபதியாக' என்பது மட்டுமே இடம் பெற்றுள்ளது. "நீதிவழுவாத் தலைவராக' என்பது இடம்பெறவில்லை. மற்றோர் அறிவிப்பில் "நீதிவழுவாத் தீர்ப்பாளராக' என இடம்பெற்றுள்ளது. அதில் "அந்த நேரத்தில் செய்யப்படும் ஒரேயொரு சஜ்தா (சிரவணக்கம்) இந்த உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்ததாக இருக்கும்" என்றும் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
இந்த நபிமொழியை அறிவிக்கும் அபூஹுரைரா (ரலி) அவர்கள், "வேதம் வழங்கப் பெற்றவர்களில் எவரும், அவர் (மர்யமின் மைந்தர்) இறப்பதற்கு முன்பாக அவரை நம்பிக்கை

கொள்ளாமல் இருக்கமாட்டார்..." எனும் (4:159ஆவது) இறைவசனத்தை நீங்கள் விரும்பினால் ஓதிக்கொள்ளுங்கள்!" என்று கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.

243 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் மீதாணையாக! (உலக அழிவுக்கு முன்) மர்யமின் மைந்தர் (ஈசா, உங்களிடையே) நேர்மையாகத் தீர்ப்பளிக்கும் நீதிபதியாக இறங்கவிருக்கிறார். அவர் சிலுவையை உடைப்பார்; பன்றியைக் கொல்வார்; ஜிஸ்யா (எனும் காப்பு)வரியை வாங்க மறுப்பார்; அப்போது (உயர்ந்த செல்வமான) ஒட்டகங்கள் அப்படியே விடப்படும். அவற்றை யாரும் தேடி அலையமாட்டார்கள். (அந்த நேரத்தில் மக்களிடையே) பகைமையும் வெறுப்பும் போட்டி பொறாமையும் அகன்றுவிடும். செல்வங்களைப் பெற்றுக்கொள்ளுமாறு மக்கள் அழைக்கப்படுவார்கள். ஆனால், அதை யாரும் ஏற்கமாட்டார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

244 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களைச் சேர்ந்த ஒருவரே உங்களுக்கு(த் தொழுகை நடத்தும்) இமாமாக இருக்க, மர்யமின் மைந்தர் (ஈசா)உங்களிடையே இறங்குவாரேயானால் அப்போது உங்களுக்கு எப்படியிருக்கும்?
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

245 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மர்யமின் மைந்தர் (ஈசா) உங்களிடையே இறங்கி, உங்களுக்குத் தலைவராக இருந்தால் உங்களுக்கு எப்படியிருக்கும்?
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

246 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மர்யமின் மைந்தர் (ஈசா) உங்களிடையே இறங்கி வந்து, உங்களுக்கு இமாமாக இருந்தால் அப்போது உங்களுக்கு எப்படியிருக்கும்?" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான வலீத் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த இப்னு அபீதிஉப் (ரஹ்) அவர்களிடம் நான், "அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து வரும் அவ்ஸாயீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உங்களைச் சேர்ந்த ஒருவரே உங்களுக்கு இமாமாக இருக்க (மர்யமின் மைந்தர் உங்களிடையே இறங்குவாரேயானால்...)' என இடம்பெற்றுள்ளதே?" என்று கேட்டேன். அதற்கு இப்னு அபீதிஉப் (ரஹ்) அவர்கள் "மர்யமின் மைந்தர் உங்களுக்கு இமாமாக இருந்தால்...' என்பதன் பொருள் என்னவென்று நீங்கள் அறிவீர்களா? என்று கேட்டார்கள். நான், "நீங்களே கூறுங்கள்!" என்றேன். அப்போது அவர்கள், "உங்களுடைய இறைவனின் வேதத்தின்படியும் உங்களுடைய நபியின் வழிமுறைப்படியும் உங்களை வழிநடத்திச் செல்வார் என்று பொருள்" என்றார்கள்.

247 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் ஒரு பிரிவினர் சத்தியத்திற்கு ஆதரவாகப் போராடிக் கொண்டேயிருப்பார்கள். மறுமை நாள்வரை அவர்கள் (சத்தியத்தில்) மேலோங்கியே நிற்பார்கள். பிறகு மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்கள் (பூமிக்கு) இறங்கிவருவார்கள். அப்போது முஸ்லிம்களின் தலைவர், "வாருங்கள், வந்து எங்களுக்குத் தலைமை தாங்கித் தொழுகை நடத்துங்கள்!" என்று (ஈசாவிடம்) கூறுவார். அதற்கு ஈசா (அலை) அவர்கள், "இல்லை (உங்களுக்கு நான் தலைமை தாங்கித் தொழுவிக்கமாட்டேன்). உங்களில் சிலர்தாம் மற்றச் சிலருக்குத் தலைவராக இருப்பார்; இது, அல்லாஹ் இந்தச் சமுதாயத்திற்கு அளித்துள்ள மரியாதையாகும்" என்று கூறிவிடுவார்கள்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 72 இறைநம்பிக்கை (ஈமான்) கொள்ள முன்வந்தாலும் ஏற்கப்படாத (இறுதிக்) காலம்.

248 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மேற்கிலிருந்து சூரியன் உதயமாகாதவரை மறுமைநாள் வராது. அவ்வாறு அது மேற்கிலிருந்து உதயமாகும்போது மக்கள் அனைவரும் (அதைப் பார்த்துவிட்டு) ஒட்டு மொத்தமாக இறைநம்பிக்கை கொள்வார்கள். ஆனால், முன்பே இறைநம்பிக்கை கொண்டிராத, அல்லது இறைநம்பிக்கை கொண்டிருந்தாலும் நன்மையேதும் செய்திராத எந்த மனிதருக்கும் அந்த (இறுதி) நாளில் கொள்ளும் இறைநம்பிக்கை பயனளிக்காது. (6:158)
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

249 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மூன்று அடையாளங்கள் தோன்றிவிட்டால் முன்பே இறைநம்பிக்கை கொண்டிராத,அல்லது இறைநம்பிக்கை கொண்டிருந்தாலும் நன்மையேதும் செய்திராத எந்த மனிதருக்கும் அந்த நேரத்தில் கொள்ளும் இறைநம்பிக்கை பயனளிக்காது. (அவை:) 1. மேற்கிலிருந்து சூரியன் உதயமாகுதல். 2. தஜ்ஜால் (தோன்றுதல்). 3. பூமியிலிருந்து வெளிப்படும் (அதிசய) கால்நடை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

250 அபூதர் அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "இந்தச் சூரியன் எங்கு செல்கிறது என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். மக்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிவார்கள்" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், "அது (சூரியன்) இறை அரியாசனத்துக்கு (அர்ஷுக்கு)க் கீழே தலைவணங்குவதற்காகத் தனது நிலையை நோக்கிச் செல்கிறது. அதனிடம், "எழுந்து, நீ வந்த வழியே சென்றுவிடு' என்று கூறப்படும் வரை அது அவ்வாறே இருந்துகொண்டிருக்கிறது. அவ்வாறு கூறப்பட்டதும் அது சென்று கிழக்கிலிருந்து உதயமாகிறது. பிறகு (மறுநாள் மீண்டும்) இறை அரியாசனத்துக்குக் கீழே தனது நிலையை

நோக்கிச் சென்று தலைவணங்குகிறது, அதனிடம், "நீ எழுந்து, வந்த வழியே திரும்பிச் சென்றுவிடு!' என்று கூறப்படும்வரை அது அவ்வாறே இருந்துகொண்டிருக்கிறது. அவ்வாறு கூறப்பட்டதும் அது திரும்பிச் சென்று கிழக்கிலிருந்து உதயமாகிறது. பிறகு மக்களுக்கு (எந்த வித்தியாசமும்) தெரியாத விதத்தில் இறை அரியாசனத்துக்குக் கீழே தனது நிலையை நோக்கிச் செல்கிறது. அப்போது அதனிடம், "நீ எழுந்து மேற்கிலிருந்து உதயமாகு!' என்று கூறப்படும். அப்போது அது (வழக்கத்திற்கு மாறாக) மேற்கிலிருந்து உதயமாகும்" என்று கூறினார்கள்.

பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது எந்த நாள் என்று உங்களுக்குத் தெரியுமா? அது, முன்பே இறைநம்பிக்கை கொண்டிராத, அல்லது இறைநம்பிக்கை கொண்டிருந்தாலும் நன்மையேதும் செய்திராத எந்த மனிதருக்கும் அந்த நேரத்தில் கொள்ளும் இறைநம்பிக்கை பயனளிக்காத (இறுதி) நாளாகும்" என்று கூறினார்கள்.(6:158)

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

- அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு நாள்) நான் பள்ளிவாசலுக்குள் நுழைந்தபோது அங்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்திருந்தார்கள். சூரியன் மறைந்தபோது (என்னிடம்) அவர்கள், "இந்தச் சூரியன் எங்கு செல்கிறது என்று உமக்குத் தெரியுமா, அபூதர்?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்" என்று கூறினேன். அப்போது அவர்கள், "அது (இறை அரியாசனத்துக்குக் கீழே) சென்று தலைவணங்குவதற்கு அனுமதி கேட்கிறது. உடனே அதற்கு அனுமதியளிக்கப்படுகிறது. அதனிடம், "நீ வந்த வழியே திரும்பிச் சென்றுவிடு' என்று கூறப்படுகிறது போலும். (இறுதியாக ஒரு நாள்) அது மேற்கிலிருந்து உதயமாகும்" என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் அபூதர் (ரலி) அவர்கள் இதை அறிவித்துவிட்டு, (குர்ஆனில் "வஷ்ஷம்சு தஜ்ரீ லி முஸ்தகர்ரின் லஹா' என்று இடம்பெற்றுள்ள 36:38ஆவது வசனத்தை) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களின் ஓதல் முறையில் உள்ளபடி "வ தாலிக முஸ்தகர்ருன் லஹா' என்று ஓதிக்காட்டினார்கள். (பொருள்: அதுதான் அது நிலைகொள்ளும் இடமாகும்.)

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

251 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "சூரியன் தான் நிலைகொள்ளும் இடத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறது" எனும் (36:38ஆவது) வசனம் குறித்துக் கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது நிலைகொள்ளுமிடம் இறைவனின் அரியாசனத்திற்குக் கீழே உள்ளது" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 73 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு வேதஅறிவிப்பு (வஹீ) அருளப் பெற்றதன் துவக்கம்.**

252 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஆரம்பமாக வந்த வேதஅறிவிப்பு (வஹீ) தூக்கத்தில் கண்ட உண்மைக் கனவுகளாகவே இருந்தது. அது அதிகாலைப் பொழுதின் விடியலைப் போன்று (தெளிவாகவே) இருக்கும். பின்னர் தனிமையிலிருப்பது அவர்களுக்கு விருப்பமாயிற்று. எனவே, அவர்கள் "ஹிரா' குகையில் தனித்திருந்து கணிசமான இரவுகள் வணக்க வழிபாட்டில் ஈடுபட்டுவந்தார்கள். அதற்காகத் தம் குடும்பத்தாரிடம் சென்று (பல நாட்களுக்கு வேண்டிய) உணவைத் தம்முடன் கொண்டுசெல்வார்கள். (அந்த உணவு தீர்ந்ததும்) மீண்டும் (தம் துணைவியார்) கதீஜா (ரலி) அவர்களிடம் திரும்பிவந்து அதைப் போன்று (பல நாட்களுக்கு வேண்டிய) உணவைப் பெற்றுச் செல்வார்கள். இந்நிலை, "ஹிரா' குகையில் அவர்களுக்குச் சத்திய(வேத)ம் வரும் வரை நீடித்தது. (ஒரு நாள்) அந்த வானவர் (ஜிப்ரீல்) நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "ஓதுவீராக!' என்றார். நபி (ஸல்) அவர்கள்,
"நான் ஓதத் தெரிந்தவனில்லையே!" என்று சொன்னார்கள். (பின்பு நடந்தவற்றை) நபி (ஸல்) அவர்கள் (பின்வருமாறு எடுத்துக்) கூறினார்கள்:

வானவர் (ஜிப்ரீல்) என்னைப் பிடித்து நான் திணறும் அளவிற்கு இறுகக் கட்டியணைத்தார். பிறகு என்னை விடுவித்துவிட்டு "ஓதுவீராக!' என்றார். அப்போதும் "நான் ஓதத் தெரிந்த வனில்லையே!" என்றேன். உடனே அவர் என்னைப் பிடித்து நான் திணறும் அளவிற்கு (மீண்டும்) இறுகக் கட்டியணைத்தார். பிறகு, என்னை விடுவித்துவிட்டு "ஓதுவீராக!' என்றார். அப்போதும் "நான் ஓதத் தெரிந்தவனில்லையே!" என்றேன். உடனே அவர் என்னைப் பிடித்து என்னால் தாங்க இயலாத அளவிற்கு மூன்றாவது முறையாக இறுகத் தழுவினார். பின்னர் என்னை விடுவித்துவிட்டு, "படைத்த உம்முடைய இறைவனின் (திருப்) பெயரால் ஓதுவீராக! அவனே மனிதனை "பற்றித் தொங்கும் (அட்டைபோன்ற) நிலை'யிலிருந்து படைத்தான். (நபியே!) ஓதுவீராக! உம்முடைய இறைவன் மாபெரும் கொடையாளி; அவன்தான் எழுதுகோல் மூலம் (எழுதக்) கற்றுக்கொடுத்தான். மனிதன் அறியாதவற்றையெல்லாம் அவனுக்குக் கற்பித்தான்" எனும் (96:1-5) இறைவசனங்களை அவர் ஓதினார்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அந்த வசனங்களுடன், (அச்சத்தால்) தம் கழுத்துச் சதைகள் படபடக்கத் திரும்பிவந்து, (தம் துணைவியார்) கதீஜாவிடம் சென்றார்கள். "எனக்குப் போர்த்திவிடுங்கள்; எனக்குப் போர்த்திவிடுங்கள்" என்றார்கள். அவ்வாறே (வீட்டாரும்) அவர்களுக்குப் போர்த்திவிட அச்சம் அவர்களைவிட்டு அகன்றது. பின்னர் கதீஜாவிடம் நடந்தவற்றைத் தெரிவித்து விட்டு "எனக்கு என்ன ஆயிற்று? எனக்கேதும் நேர்ந்துவிடுமோ என நான் அஞ்சுகிறேன்" என்று சொன்னார்கள். அதற்கு கதீஜா (ரலி) அவர்கள், "அப்படியொன்றும் ஆகாது. நீங்கள் ஆறுதலடையுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களை ஒருபோதும் அல்லாஹ் இழிவுபடுத்தமாட்டான்; ஏனெனில், அல்லாஹ்வின் மீதாணை(யிட்டுச் சொல்கிறேன்)! நீங்கள் உறவுகளைப் பேணி நடந்துகொள்கிறீர்கள்; உண்மையே பேசுகிறீர்கள்; (சிரமப்படுவோரின்) பாரத்தைச் சுமக்கின்றீர்கள்; வறியவர்களுக்காகப் பாடுபடுகின்றீர்கள்; விருந்தினர்களை உபசரிக்கின்றீர்கள்;

சத்திய சோதனையில் ஆட்படுவோருக்கு உதவி செய்கின்றீர்கள் (அதனால் நீங்கள் அஞ்ச வேண்டியதில்லை)" என்று (ஆறுதல்) சொன்னார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்களை அழைத்துக் கொண்டு தம் தந்தையின் சகோதரர் மகனான வரக்கா பின் நவ்ஃபல் பின் அசத் பின் அப்தில் உஸ்ஸா என்பாரிடம் கதீஜா (ரலி) அவர்கள் சென்றார்கள்.
"வரக்கா' அறியாமைக் காலத்திலேயே கிறிஸ்தவ சமயத்தைத் தழுவியவராக இருந்தார். மேலும், அவர் அரபி (மற்றும் எபிரேய) மொழியில் எழுதத் தெரிந்தவராக இருந்தார். எனவே, இன்ஜீல் வேதத்தை அல்லாஹ் நாடிய அளவிற்கு (எபிரேய மொழியிலிருந்து) அரபு மொழியில் (மொழிபெயர்த்து) எழுதுவார். அவர் கண்பார்வையிழந்த முதியவராகவும் இருந்தார்.

அவரிடம் கதீஜா (ரலி) அவர்கள், "என் தந்தையின் சகோதரரே! உங்களுடைய சகோதரரின் புதல்வர் (முஹம்மத்) இடம் (அவர் கூறுவதைக்) கேளுங்கள்" என்றார்கள். அப்போது வரக்கா பின் நவ்ஃபல் (நபி (ஸல்) அவர்களிடம்), "என் சகோதரர் மைந்தரே! நீங்கள் என்ன பார்த்தீர்கள்?" எனக் கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தாம் பார்த்தவற்றின் விவரத்தை அவரிடம் தெரிவித்தார்கள். (இதைக் கேட்ட) வரக்கா, "(நீர் கண்ட) இவர்தாம் (இறைத்தூதர்) மூசாவிடம் அனுப்பப்பெற்ற வானவர் (ஜிப்ரீல்) ஆவார்" என்று நபியவர்களிடம் கூறிவிட்டு, "(மகனே!) உம்மை உம் சமூகத்தார் (உமது நாட்டிலிருந்து) வெளியேற்றும் அந்தச் சமயத்தில் நான் திடகாத்திரமானவனாக இருந்தால் நன்றாயிருக்குமே! நான் அந்தத் தருணத்தில் உயிரோடு இருந்தால் நன்றாயிருக்குமே!" என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(என் சமூக) மக்கள் என்னை (நாட்டைவிட்டு) வெளியேற்றவா செய்வார்கள்?" என்று கேட்க, வரக்கா, "ஆம், நீங்கள் பெற்றுள்ள (உண்மையான வேதம் போன்ற)தைப் பெற்ற (இறைத்தூதர்) எவரும் (மக்களால்) பகைத்துக்கொள்ளப்படாமல் இருந்ததில்லை. உங்களது (தூதுத்துவப் பணி பரவலாகும்) நாளை நான் அடைந்தால் உங்களுக்குப் பலமான உதவிபுரிவேன்" என்று கூறினார்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

253 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் ("அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களை ஒருபோதும் அல்லாஹ் இழிவுபடுத்த மாட்டான்' எனும் வாசகத்திற்கு பதிலாக) "அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களை ஒருபோதும் அல்லாஹ் கவலையில் ஆழ்த்தமாட்டான்' என்று (கதீஜா (ரலி) அவர்கள் ஆறுதல் கூறியதாக) இடம்பெற்றுள்ளது.
அவ்வாறே ("என் தந்தையின் சகோதரரே!' என்று வரக்காவிடம் கூறியதற்கு பதிலாக) "என் தந்தையின் சகோதரர் புதல்வரே!' என கதீஜா (ரலி) அவர்கள் கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.

254 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் ("தம் கழுத்து சதைகள் படபடக்க நபியவர்கள் தம் துணைவியார் கதீஜாவிடம் திரும்பிவந்து' எனும் வாசகத்திற்கு பதிலாக) "(அச்சத்தால்) இதயம் படபடக்க நபியவர்கள் (தம் துணைவியார்) கதீஜாவிடம் திரும்பிவந்து' என்று இடம்பெற்றுள்ளது. "அல்லாஹ்வின் தூதர்

(ஸல்) அவர்களுக்கு ஆரம்பமாக வந்த வேத அறிவிப்பு (வஹீ) தூக்கத்தில் கண்ட உண்மைக் கனவுகளாகவே இருந்தது' என்று இந்த அறிவிப்பின் தொடக்கத்தில் கூறப்படவில்லை.
யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களை ஒருபோதும் அல்லாஹ் இழிவுபடுத்தமாட்டான்' என்ற வாசகமே இடம்பெற்றுள்ளது. மேலும், கதீஜா (ரலி) அவர்கள் "என் தந்தையின் சகோதரர் புதல்வரே! உங்கள் சகோதரர் மகனிடம் கேளுங்கள்' என்று சொன்னதாகவும் அதில் கூறப்பட்டுள்ளது.

255 நபித்தோழர் ஜாபிர் பின் அப்தில்லாஹ் அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்கு வேதஅறிவிப்பு (வஹீ) நின்றுபோயிருந்த இடைக்காலத்தைப் பற்றி அறிவிக்கையில் (பின்வருமாறு) கூறினார்கள்:
நான் நடந்து போய்க்கொண்டிருக்கும்போது வானத்திலிருந்து ஒரு குரலைக் கேட்டு அண்ணாந்து பார்த்தேன். அங்கே, நான் "ஹிரா'வில் இருந்தபோது என்னிடம் வந்த அதே வானவர் (ஜிப்ரீல்) வானுக்கும் பூமிக்குமிடையே ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். அவரைப் பார்த்து பயந்து அதிர்ச்சிக்குள்ளானேன். உடனே நான் (வீட்டிற்குத்) திரும்பிவந்து (என் வீட்டாரிடம்), "எனக்குப் போர்த்திவிடுங்கள்; எனக்குப் போர்த்திவிடுங்கள்" என்று சொன்னேன். அவர்களும் போர்த்திவிட்டார்கள். அப்போது சுபிட்சமும் உயர்வும் உடைய அல்லாஹ், "போர்த்தியிருப்பவரே! எழுந்து எச்சரிக்கை செய்வீராக! உம்முடைய இறைவனைப் பெருமைப்படுத்துவீராக! உம்முடைய ஆடைகளைத் தூய்மையாக வைத்திருப்பீராக! அசுத்தத்திலிருந்து விலகியிருப்பீராக" எனும் வசனங்களை (74:1-5) அருளினான். பின்னர் வேதஅறிவிப்பு (வஹீ) தொடர்ந்து வரலாயிற்று.
மேற்கண்ட (74:5ஆவது) வசனத்தின் மூலத்திலுள்ள "அர்ருஜ்ஸ்' (அசுத்தம்) என்பது சிலைகளைக் குறிக்கும்.

256 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது:
பின்னர் சிறிது காலம் எனக்கு வேதஅறிவிப்பு (வஹீ) நின்றுபோயிற்று. அப்போது (ஒரு நாள்) நான் நடந்துபோய்க்கொண்டிருந்தேன். ...அவரைப் பார்த்து பயந்து அதிர்ச்சிக்குள்ளான நான் தரையில் விழுந்துவிட்டேன்... பின்னர் வேதஅறிவிப்புத் தொடர்ந்து அதிகமாக வரலாயிற்று.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.
அதில், "தொழுகை கடமையாக்கப்படுவதற்கு முன்னர் அந்த வசனங்களை (74:1-5) அல்லாஹ் அருளினான்' என்று சிறு வித்தியாசத்துடன் இடம்பெற்றுள்ளது.

257 யஹ்யா பின் அபீகஸீர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்களிடம், "குர்ஆனில் எந்த வசனம் முதன் முதலில் அருளப்பெற்றது?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "போர்த்தியிருப்பவரே!' (யா அய்யுஹல் முத்தஸ்ஸிர்) எனும் (74:1ஆவது) வசனம்" என்றார்கள். நான், "ஓதுக (என்று தொடங்கும் 96:1ஆவது) வசனம் இல்லையா?" என்று கேட்டேன். அதற்கு அபூசலமா (ரஹ்) அவர்கள், "நான் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம், "எந்த

வசனம் முதன் முதலில் அருளப்பெற்றது?" என்று (இதே கேள்வியைக்) கேட்டேன். அதற்கு அவர்கள், "போர்த்தியிருப்பவரே!" எனும் (74:1ஆவது) வசனம்" என்றே பதிலளித்தார்கள். உடனே நான் "ஓதுக (இக்ரஃ பிஸ்மி ரப்பிக்க...) எனும் (96:1ஆவது) வசனம் இல்லையா?" என்று (நீங்கள் கேட்டதைப் போன்றே) கேட்டேன். அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குச் சொன்னதையே உங்களுக்கு நான் சொல்கிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான் ஹிரா மலைக் குகையில் ஒரு மாதம் தங்கியிருந்தேன். பிறகு என் தங்குதலை முடித்துக்கொண்டு (மலையிலிருந்து) இறங்கி, அங்கிருந்த "பத்னுல் வாதீ' பள்ளத்தாக்கின் நடுவே வந்து சேர்ந்தேன். அப்போது என்னை அழைக்கும் குரலைக் கேட்டு நான் என் முன் புறத்திலும் பின் புறத்திலும் எனக்கு வலப் பக்கத்திலும் எனக்கு இடப் பக்கத்திலும் பார்த்தேன். அங்கு யாரையும் நான் காணவில்லை. பிறகு (மீண்டும்) என்னை அழைக்கும் குரல் கேட்டுப் பார்வையைச் செலுத்தினேன். யாரையும் நான் காணவில்லை. பிறகு (மூன்றாவது முறையாக) என்னை அழைக்கும் குரல் கேட்டு அண்ணாந்து பார்த்தேன். அப்போது அவர் (வானவர் ஜிப்ரீல்) ஆகாயவெளியில் ஓர் ஆசனத்தில் இருந்தார். அப்போது நான் கடுமையாக நடுக்கமுற்றேன். உடனே நான் (என் துணைவியார்) கதீஜாவிடம் வந்து, "எனக்குப் போர்த்திவிடுங்கள்" என்று கூறினேன். அவ்வாறே (என் வீட்டார்) எனக்குப் போர்த்தி விட்டார்கள். என்மீது தண்ணீரை ஊற்றினார்கள். அப்போது மாண்பும் வலிவுமிக்க அல்லாஹ், "போர்த்தியிருப்பவரே! எழுந்து எச்சரிக்கை செய்வீராக! உம்முடைய இறைவனைப் பெருமைப்படுத்துவீராக! உமது ஆடைகளைத் தூய்மையாக வைத்திருப்பீராக" எனும் (74:1-5) வசனங்களை அருளினான்.

258 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அவர் (வானவர் ஜிப்ரீல்) வானுக்கும் பூமிக்குமிடையே ஓர் ஆசனத்தில் அமர்ந்து கொண்டிருந்தார்" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 74 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விண்ணுலகப் பயணத்திற்காக (மிஃராஜ்) இரவில் அழைத்துச் செல்லப்பட்டதும், தொழுகை கடமையாக்கப்பட்டதும்.**

259 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(விண்ணுலகப் பயணத்தின்போது) என்னிடம் கோவேறு கழுதையைவிடச் சிறியதும், கழுதையைவிடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த நீளமான புராக் எனும் (மின்னல் வேக) வாகனம் ஒன்று கொண்டுவரப்பட்டது. அது பார்வை எட்டுகிற தூரத்திற்குத் தனது கால் குளம்பை எடுத்து (எட்டு) வைக்கும். அதிலேறி நான் பைத்துல் மக்திஸ் (ஜெரூசலேம்) இறை ஆலயம் வரை சென்றேன். பிறகு இறைத்தூதர்கள் தமது வாகனத்தைக் கட்டி வைக்கும் வளையத்தில் எனது வாகனத்தைக் கட்டிவைத்துவிட்டு அந்த இறையாலயத்திற்குள் நுழைந்து இரண்டு ரக்அத்கள் தொழுதேன். பிறகு நான் அங்கிருந்து புறப்பட்ட போது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் (என்னிடம்) ஒரு பாத்திரத்தில் மதுவும் மற்றொரு பாத்திரத்தில் பாலும் கொண்டுவந்தார். (அதில் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு

கூறினார்.) நான் பால் பாத்திரத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். அப்போது ஜிப்ரீல், "இயற்கையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டீர்" என்று கூறினார்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு முதல் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது "நீங்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஜிப்ரீல்' என்று பதிலளித்தார். "உங்களுடன் (வந்திருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "முஹம்மத்' என்று பதிலளித்தார். "(அவரை அழைத்து வரச்சொல்லி) அவரிடம் ஆள் அனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(அவரை அழைத்து வரச்சொல்லி என்னை) அவரிடம் அனுப்பி வைக்கப்பட்டிருந்தது" என்றார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. நான் அங்கு (ஆதி மனிதர்) ஆதம் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் என்னை வாழ்த்தி வரவேற்று, எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள். பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக் கொண்டு இரண்டாம் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி சொன்னார். அப்போது "நீங்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஜிப்ரீல்' என்று பதிலளித்தார். "உங்களுடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "முஹம்மத்' என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப் பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்து வரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப் பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு சகோதரிகளின் புதல்வர்களான ஈசா பின் மர்யம் (அலை), யஹ்யா பின் ஸகரிய்யா (அலை) ஆகியோரை நான் கண்டேன்.அவர்கள் இருவரும் என்னை வரவேற்று, எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தனர்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு மூன்றாம் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது "நீங்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஜிப்ரீல்' என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர், "முஹம்மத்' என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். உடனே எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் யூசுஃப் (அலை) அவர்களைக் கண்டேன். (மொத்த) அழகில் பாதி அவர்களுக்கு வழங்கப்பெற்றிருந்தது. அன்னாரும் என்னை வரவேற்று எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு நான்காம் வானத்திற்கு உயர்ந்தார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்' என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர் "முஹம்மத்' என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம் அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் இத்ரீஸ் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் (என்னை) வரவேற்று எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள். (இத்ரீஸ் (அலை)

அவர்கள் தொடர்பாக) அல்லாஹ், "மேலும், நாம் அவரை ஓர் உயரிய இடத்தில் உயர்த்தினோம்" (19:57) என்று கூறுகின்றான்.-

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு ஐந்தாம் வானத்தில் ஏறினார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது, "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்' என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர், "முஹம்மத்' என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவருமாறு) ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவருமாறு என்னை) அவரிடம் அனுப்பி வைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் ஹாரூன் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் (என்னை) வரவேற்று எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு ஆறாம் வானத்தில் ஏறினார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்' என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர் "முஹம்மத்' என்று பதிலளித்தார் "(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் மூசா (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் (என்னை) வரவேற்று, எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு ஏழாவது வானத்தில் ஏறினார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்' என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர், "முஹம்மத்' என்று பதிலளித்தார். "(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் இப்ராஹீம் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் அல்பைத்துல் மஅமூர் (எனும் வானவர்கள் அதிகம் சஞ்சரிக்கும்) இறையில்லத்தில் தமது முதுகைச் சாய்த்து அமர்ந்துகொண்டிருந்தார்கள். அ(ந்த இறையில்லத்)தில் ஒவ்வொரு நாளும் எழுபதாயிரம் வானவர்கள் (இறைவனை வணங்கச்) செல்வார்கள். அவர்கள் மறுபடியும் அங்கு நுழைவதில்லை. (புதியவர்களே அடுத்து நுழைவார்கள்.)

பிறகு (வான் எல்லையிலுள்ள இலந்தை மரமான) "சித்ரத்துல் முன்தஹா' எனும் இடத்திற்கு என்னை ஜிப்ரீல் அழைத்துச்சென்றார். அதன் இலைகள் யானைகளின் காதுகளைப் போன்றிருந்தன. அதன் பழங்கள் கூஜாக்களைப் போன்றிருந்தன. அல்லாஹ்வின் கட்டளையால் இனம் புரியாத (நிறங்கள்) அதைச் சூழ்ந்து கொண்டபோது (அதன் அமைப்போ முற்றிலும்) மாறிவிட்டது. அல்லாஹ்வின் படைப்புகளில் எவராலும் அதன் அழகை விவரித்துக் கூற முடியாது. அப்போது அல்லாஹ் அறிவிக்க வேண்டியச் சிலவற்றை எனக்கு

அறிவித்தான். என்மீது இரவிலும் பகலிலும் (நாள் ஒன்றுக்கு) ஐம்பது தொழுகைகளைக் கடமையாக்கினான்.

பிறகு நான் மூசா (அலை) அவர்களிடம் இறங்கிவந்தேன். அப்போது அவர்கள், "உங்கள் சமுதாயத்தாருக்கு உம்முடைய இறைவன் என்ன கடமையாக்கினான்?" என்று கேட்டார்கள். "ஐம்பது (வேளைத்) தொழுகைகளை(க் கடமையாக்கினான்)" என்று நான் பதிலளித்தேன். "உங்கள் இறைவனிடம் திரும்பிச்சென்று (உங்கள் சமுதாயத்தாருக்காக தொழுகையின் எண்ணிக்கையைக்) குறைக்கும்படி கேளுங்கள். ஏனெனில், உங்கள் சமுதாயத்தார் இதைத் தாங்கமாட்டார்கள். நான் (என்னுடைய) பனூ இஸ்ராயீல் மக்களிடம் பழகி அனுபவப் பட்டிருக்கிறேன்" என்று கூறினார்கள். நான் என் இறைவனிடம் திரும்பிச்சென்று, "என் இறைவா! என் சமுதாயத்தார்மீது (ஐம்பது வேளைத் தொழுகைகளின் எண்ணிக்கையைக்) குறைப்பாயாக!" என்று கேட்டேன். இறைவன் (ஐம்பதிலிருந்து) ஐந்தை எனக்குக் குறைத்தான். நான் மூசா (அலை) அவர்களிடம் திரும்பிவந்து, "(ஐம்பதிலிருந்து) ஐந்தை எனக்குக் குறைத்தான்" என்று கூறினேன். அப்போது அவர்கள், "உங்கள் சமுதாயத்தார் இதையும் தாங்கமாட்டார்கள். எனவே, உங்கள் இறைவனிடம் திரும்பிச்சென்று இன்னும் குறைக்கும்படி கேளுங்கள்" என்றார்கள். இவ்வாறே நான், என் இறைவனுக்கும் மூசா (அலை) அவர்களுக்குமிடையே திரும்பிச் சென்றுகொண்டிருந்தேன்.
இறுதியாக, "முஹம்மதே! இவை இரவிலும் பகலிலும் (நிறைவேற்ற வேண்டிய) ஐவேளைத் தொழுகைகள் ஆகும். ஒவ்வொரு தொழுகைக்கும் பத்து (நற்பலன்) உண்டு. (நற்பலனில்) இவை ஐம்பது வேளைத் தொழுகை(க்கு ஈடு) ஆகும். ஒருவர், ஒரு நன்மை செய்ய வேண்டும் என (மனத்தில்) எண்ணிவிட்டாலே, அதைச் செயல்படுத்தாவிட்டாலும் அவருக்காக ஒரு நன்மை பதிவு செய்யப்படும். அதை அவர் செய்து முடித்துவிட்டால் அவருக்காகப் பத்து நன்மைகள் பதிவு செய்யப்படும். ஒருவர் ஒரு தீமையைச் செய்ய எண்ணி, (அல்லாஹ்வுக்கு அஞ்சி) அதைச் செய்யாமல் இருந்துவிட்டால் (குற்றம்) எதுவும் பதியப்படுவதில்லை. (எண்ணியபடி) அதை அவர் செய்து முடித்துவிட்டால் ஒரு குற்றமாகவே அது பதிவு செய்யப்படுகிறது" என்று கூறினான்.
பின்னர் நான் அங்கிருந்து புறப்பட்டு மூசா (அலை) அவர்களிடம் வந்துசேர்ந்தேன். அ(ல்லாஹ் கூறிய)தை அவர்களிடம் நான் தெரிவித்தேன். அப்போது அவர்கள், "உங்கள் இறைவனிடம் திரும்பிச் சென்று இன்னும் குறைக்கும்படி கேளுங்கள்" என்று கூறினார்கள். உடனே நான், "(பல முறை) என் இறைவனிடம் திரும்பிச் சென்றுவிட்டேன். (இன்னும்) அவனிடம் (குறைத்துக் கேட்க) நான் வெட்கப்படுகிறேன்" என்று கூறிவிட்டேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

260 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என்னை அ(ந்த வான)வர்கள் ஸம்ஸம் கிணற்றுக்குக் கொண்டுசென்றார்கள். என் நெஞ்சைப் பிளந்து, (இதயத்தை வெளியிலெடுத்து) ஸம்ஸம் கிணற்றின் நீரால் (என் இதயம்) கழுவப்பட்டது. பிறகு மீண்டும் (அதே இடத்திற்கு) நான் கொண்டுவந்து விடப்பட்டேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

261 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது சிறு வயதில்) சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து நபியவர்களைப் பிடித்துப் படுக்கவைத்து,அவர்களின் நெஞ்சைத் திறந்து இருதயத்தை வெளியிலெடுத்தார்கள். ஓர் (சதைத்) துண்டை வெளியில் எடுத்து, "இதுதான் உம்மிடமிருந்த ஷைத்தானுக்குரிய பங்கு" என்று ஜிப்ரீல் கூறினார். பிறகு ஒரு தங்கத் தாம்பூலத்தில் இதயத்தை வைத்து ஸம்ஸம் நீரால் அதைக் கழுவினார். பின்னர் முன்பு இருந்த இடத்தில் இதயத்தைப் பொருத்தினார். (நபியவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்த) அந்தச் சிறுவர்கள் நபியவர்களின் செவிலித் தாயிடம் ஓடிச் சென்று "முஹம்மத் கொல்லப்பட்டுவிட்டார்" என்று கூறினர். குடும்பத்தார் நபியவர்களை நோக்கி வந்தபோது (அச்சத்தால்) நபியவர்கள் நிறம் மாறிக் காணப்பட்டார்கள்.
அறிவிப்பாளர் அனஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:
நபி (ஸல்) அவர்களின் நெஞ்சில் ஊசியால் தைத்த அந்த அடையாளத்தை நான் பார்த்திருக்கிறேன்.

262 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகச் சிறிது முன் பின்னாகவும் கூடுதல் குறைவுடனும் அறிவிக்கப்பட்டுள்ளது.
அந்த ஹதீஸ் பின்வருமாறு துவங்குகிறது: ஷரீக் பின் அப்தில்லாஹ் பின் அபீநமிர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவு நேரத்தில் (விண்ணுலகப் பயணத்திற்காக) கஅபா பள்ளிவாசலில் இருந்து அழைத்துச் செல்லப்பட்டது குறித்து அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
நபி (ஸல்) அவர்களுக்கு (மீண்டும்) வேத அறிவிப்பு (வஹீ) வருவதற்கு முன் இறையில்லம் கஅபா அருகில் படுத்து உறங்கிக்கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களிடம் (வானவர்) மூன்று பேர் வந்தார்கள்...

263 அபூதர் (ரலி) அவர்கள் அறிவித்துவந்ததாக அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் மக்காவில் இருந்தபோது என் வீட்டின் கூரை பிளக்கப்பட்டது. (அதன் வழியாக வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் இறங்கி (வந்து) என்னுடைய நெஞ்சைப் பிளந்தார். பிறகு அதை "ஸம்ஸம்' நீரால் கழுவினார். பிறகு நுண்ணறிவாலும் இறைநம்பிக்கையாலும் நிரம்பிய தங்கத் தாம்பூலம் ஒன்றைக் கொண்டு வந்து என் நெஞ்சத்தினுள் அதை ஊற்றி (நிரப்பி)னார். பிறகு (பழையபடியே) நெஞ்சை மூடிவிட்டார்.

பிறகு என் கையைப் பிடித்து (என்னை அழைத்து)க் கொண்டு விண்ணில் ஏறினார். முதல் வானத்திற்கு நாங்கள் வந்தபோது முதல் வானத்தின் காவலரிடம் ஜிப்ரீல், "திறப்பீராக!' என்று கூறினார். அதற்கு அக்காவலர் "யார் அது?" எனக் கேட்டார். அவர் "ஜிப்ரீல்' என்று பதிலளித்தார். "உம்முடன் யாரேனும் வந்திருக்கிறார்களா?" என்று அக்காவலர் கேட்டார். அவர், "என்னுடன் முஹம்மத் (ஸல்) வந்திருக்கிறார்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று அவர் கேட்க, ஜிப்ரீல் "ஆம்' என்று பதிலளித்தார். (முதல் வானத்தின் கதவை அதன்) காவலர் திறந்தார். நாங்கள் முதல்

வானத்தில் (இன்னும்) மேலே சென்றபோது அங்கே ஒரு மனிதர் இருந்தார். அவரது வலப் பக்கத்திலும் மக்கள் இருந்தனர்; இடப் பக்கத்திலும் மக்கள் இருந்தனர். அவர் தமது வலப் பக்கம் பார்க்கும்போது சிரித்தார்; இடப் பக்கம் பார்க்கும்போது அழுதார். (பிறகு, என்னைப் பார்த்து,) "நல்ல இறைத்தூதரே, வருக! நல்ல மகனே, வருக!" என்று அந்த மனிதர் கூறினார். நான் ஜிப்ரீல் (அலை) அவர்களிடம், "யார் இவர் ஜிப்ரீலே?" என்று கேட்டேன். ஜிப்ரீல் (அலை) அவர்கள், "இவர்தாம் (ஆதிமனிதர்) ஆதம் (அலை) அவர்கள். இவருடைய வலப் பக்கமும் இடப் பக்கமும் இருக்கும் மக்கள் அன்னாரின் வழித்தோன்றல்கள்; வலப் பக்கமிருப்பவர்கள் சொர்க்கவாசிகள். இடப் பக்கமிருப்பவர்கள் நரகவாசிகள். ஆகவேதான், அவர் வலப் பக்கம் (சொர்க்கவாசிகளான தம் மக்களைப்) பார்க்கும் போது சிரிக்கிறார். இடப் பக்கம் (நரகவாசிகளான தம் மக்களைப்) பார்க்கும்போது அழுகிறார்" என்று பதிலளித்தார்.
பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னை அழைத்துக்கொண்டு இரண்டாம் வானில் ஏறினார். இரண்டாம் வானம் வந்ததும் அதன் காவலரிடம் "திறப்பீராக!" என்று கூறினார். அதன் காவலரும் முதலாம் வானத்தின் காவலர் கேட்டதைப் போன்றே கேட்டார். பிறகு ((முன்பு போன்றே ஜிப்ரீல் அவர்கள் பதிலளித்த பின்) அவர் கதவைத் திறந்தார்.

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வானங்களில் ஆதம் (அலை), இத்ரீஸ் (அலை), ஈசா (அலை), மூசா (அலை) மற்றும் இப்ராஹீம் (அலை) ஆகியோரைக் கண்டதாக அபூதர் (ரலி) அவர்கள் கூறினார்களே தவிர அவர்கள் எங்கெங்கே தங்கியிருந்தார்கள் என்பது பற்றி (என்னிடம்) அவர்கள் குறிப்பிட்டுக் கூறவில்லை. ஆனால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆதம் (அலை) அவர்களை முதல் வானத்திலும் இப்ராஹீம் (அலை) அவர்களை ஆறாவது வானத்திலும் கண்டதாகக் கூறினார்கள் என அபூதர் (ரலி) அவர்கள் சொன்னார்கள்.

அனஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:
ஜிப்ரீல் (அலை) அவர்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் இத்ரீஸ் (அலை) அவர்களைக் கடந்து சென்றபோது, "நல்ல இறைத்தூதரும் நல்ல சகோதரருமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்" என்று இத்ரீஸ் (அலை) அவர்கள் (வாழ்த்துச்) சொன்னார்கள். பிறகு (அவரைக்) கடந்து சென்றபோது, நான் "இவர் யார்?" என்று கேட்டேன். அதற்கு ஜிப்ரீல் "இவர்தாம் இத்ரீஸ் (அலை) அவர்கள்" என்று பதிலளித்தார்.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: பின்னர் நான் மூசா (அலை) அவர்களையும் கடந்துசென்றேன். அவர்களும் "நல்ல இறைத்தூதரும் நல்ல சகோதரருமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்." என்று (வாழ்த்துக்) கூறினார்கள்.

நான் (ஜிப்ரீலிடம்), "இவர் யார்?" என்று கேட்டேன். ஜிப்ரீல், "இவர்தாம் மூசா" என்று பதிலளித்தார். பிறகு நான் ஈசா (அலை) அவர்களையும் கடந்துசென்றேன். அவர்களும் "நல்ல இறைத்தூதரும் நல்ல சகோதரருமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்" என்று (வாழ்த்துக்) கூறினார்கள். நான், "இவர் யார்?" என்று கேட்டேன். அதற்கு ஜிப்ரீல் (அலை), "இவர்தாம் மர்யமின் மைந்தர் ஈசா" என்று பதிலளித்தார். பிறகு நான் இப்ராஹீம் (அலை) அவர்களைக் கடந்துசென்றேன். அவர்கள், "நல்ல இறைத்தூதரும் நல்ல மகனுமான உங்கள் வரவு

நல்வரவாகட்டும்" என்று (வாழ்த்துச்) சொன்னார்கள். நான், "இவர் யார்?" என்று கேட்டேன். ஜிப்ரீல் (அலை), "இவர்தாம் இப்ராஹீம்" என்று பதிலளித்தார்.
இப்னு ஷிஹாப் (முஹம்மத் பின் முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ-ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இப்னு அப்பாஸ் (ரலி), அபூஹப்பா அல் அன்சாரி (ரலி) ஆகியோர் அறிவித்துவந்துள்ளதாக இப்னு ஹஸ்ம் (அபூபக்ர் பின் முஹம்மத் -ரஹ்) அவர்கள் என்னிடம் (பின்வருமாறு) கூறினார்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னை அழைத்துக்கொண்டு (இன்னும் மேலே) உயர்ந்தார்கள். நான் ஓர் உயரமான இடத்தில் ஏறிக்கொண்டிருந்தபோது (வானவர்கள் தலை விதிகளைப் பதிவு செய்து கொண்டிருக்கும்) எழுதுகோல்களின் ஓசையைச் செவியுற்றேன்.
இப்னு ஹஸ்ம் (ரஹ்), அனஸ் பின் மாலிக் (ரலி) ஆகியோர் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அப்போது அல்லாஹ் என் சமுதாயத்தார்மீது (நாளொன்றுக்கு) ஐம்பது தொழுகைகளைக் கடமையாக்கினான். அதைப் பெற்றுக்கொண்டு நான் திரும்பியபோது மூசா (அலை) அவர்களைக் கடந்தேன். அப்போது மூசா (அலை) அவர்கள், "உங்கள் சமுதாயத்தார்மீது உங்கள் இறைவன் என்ன கடமையாக்கினான்?" என்று கேட்டார்கள். நான், அவர்கள்மீது (நாளொன்றுக்கு) ஐம்பது தொழுகைகளைக் கடமையாக்கியுள்ளான்" என்று பதிலளித்தேன். "அவ்வாறாயின் உங்கள் இறைவனிடம் திரும்பிச் செ(ன்று குறைக்கும்படி சொ)ல்லுங்கள்! ஏனெனில், உங்கள் சமுதாயத்தாரால் அவற்றைத் தாங்க முடியாது" என்று கூறினார்கள். உடனே நான் என் இறைவனிடம் திரும்பிச்சென்றேன். (தொழுகைகளின் எண்ணிக்கையைக் குறைத்துக் கேட்டபோது) அவன் அதில் ஒரு பகுதியைக் குறைத்தான். நான் மூசா (அலை) அவர்களிடம் திரும்பிவந்து (அதில் ஒரு பகுதியை இறைவன் குறைத்துவிட்டான் என்று) தெரிவித்தபோது (மீண்டும்) அவர்கள், "உங்கள் இறைவனிடம் திரும்பிச் செல்லுங்கள். (இன்னும் சிறிது குறைத்துத் தரும்படி கேளுங்கள்.) ஏனெனில், இதையும் உங்கள் சமுதாயத்தார் தாங்கமாட்டார்கள்" என்று சொன்னார்கள். இவ்வாறாக நான் என் இறைவனிடம் திரும்பிச் சென்று (இறுதியில்), "இவை ஐவேளைத் தொழுகைகள் ஆகும். (நற்பலனில்) ஐம்பது (வேளைத் தொழுகைக்கு ஈடு) ஆகும். என்னிடம் இந்தச் சொல் (இனி) மாற்றப்படாது" என்று கூறிவிட்டான்.
நான் மூசா (அலை) அவர்களிடம் திரும்பிச்சென்றேன். அவர்கள், "உங்கள் இறைவனிடம் திரும்பிச் செல்லுங்கள்!" என்றார்கள். நான், "என் இறைவனிடம் (மேலும் சலுகை கோர) வெட்கப்படுகிறேன்" என்று சொன்னேன்.

பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னை அழைத்துக்கொண்டு (வானுலக எல்லையில் அமைந்துள்ள இலந்தை மரமான) "சித்ரத்துல் முன்தஹா'வுக்குப் போய்ச்சேர்ந்தார்கள். பல வண்ணங்கள் அதைப் போர்த்திக்கொண்டிருந்தன. அவையென்ன என்று எனக்குத் தெரியாது. பிறகு நான் சொர்க்கத்திற்குள் அனுமதிக்கப்பட்டேன். அங்கே முத்தாலான கோபுரங்கள் இருந்தன. சொர்க்கத்தின் மண் (நறுமணம் கமழும்) கஸ்தூரியாக இருந்தது.

264 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் தம் சமூகத்தைச் சேர்ந்த மாலிக் பின் ஸஅஸஆ (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் இறையில்லம் கஅபா அருகில் (பாதி) உறக்கத்திலும் (பாதி) விழிப்பிலும் இருந்தபோது, (வானவர்) ஒருவர் (வந்து), "இரண்டு பேருக்கு (ஹம்ஸா மற்றும் ஜஅஃபர்-ரலி) நடுவில் படுத்திருக்கும் மூன்றாவது மனிதரைத்தாம் (நாம் அழைத்துச் செல்லவேண்டும்)" என்று கூறுவதைக் கேட்டேன். பிறகு நான் அழைத்துச் செல்லப்பட்டேன். அப்போது என்னிடம் ஒரு தங்கத்தட்டு கொண்டுவரப்பட்டது. அதில் "ஸம்ஸம்' நீர் இருந்தது. பிறகு எனது நெஞ்சு இங்கிருந்து இதுவரையில் பிளக்கப்பட்டது.

-இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: நான் என்னுடன் இருந்த ஒருவரிடம் (-அனஸ் (ரலி) அவர்களின் நண்பர் ஜாரூத் (ரஹ்) அவர்களிடம்), ஹதீஸின் அறிவிப்பாளரான அனஸ் (ரலி) அவர்கள் "இங்கிருந்து இதுவரையில்... என்று எதைக் கருத்தில் கொண்டு கூறினார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர், "(நெஞ்சின் ஆரம்பத்திலிருந்து) அடிவயிறுவரை" என்ற கருத்தில் அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்" என்று பதிலளித்தார்கள்.-
பிறகு எனது இருதயம் வெளியிலெடுக்கப்பட்டு, ஸம்ஸம் நீரால் அது கழுவப்பட்டது. பிறகு பழையபடி அது இருந்த இடத்தில் வைக்கப்பட்டது. பிறகு இறைநம்பிக்கையாலும் நுண்ணறிவாலும் அது நிரப்பப்பட்டது. பிறகு கோவேறு கழுதையைவிடச் சிறியதும் கழுதையைவிடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த "புராக்' எனப்படும் (மின்னல் வேக) வாகனம் ஒன்று என்னிடம் கொண்டு வரப்பட்டது. அந்த வாகனம் பார்வை எட்டுகிற தூரத்திற்கு ஓர் எட்டு வைக்கும். பிறகு நான் அந்த வாகனத்தில் ஏற்றப்பட்டேன். பின்னர் நாங்கள் (புறப்பட்டு) முதல் வானத்திற்குச் சென்றோம். அதன் கதவைத் திறக்கும்படி ஜிப்ரீல் (அலை) அவர்கள் கூறினார்கள். அப்போது "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "ஜிப்ரீல்' என்று பதிலளித்தார்கள். "உம்முடன் (வந்திருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு ஜிப்ரீல் (அலை) அவர்கள், "முஹம்மத் (ஸல்)' என்று பதிலளித்தார்கள். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "ஆம்' என்றார்கள். அப்போது (அந்த வானத்தின் காவலர்) எங்களுக்காகக் கதவைத் திறந்து "அவரது வரவு நல்வரவாகட்டும். அவரது வருகை மிக நல்ல வருகை" என்று (வாழ்த்துக்) கூறினார். நாங்கள் (அந்த வானிலிருந்த) ஆதம் (அலை) அவர்களிடம் சென்றோம். -ஹதீஸை இறுதிவரை குறிப்பிடுகிறார்கள்.
மேலும், நபி (ஸல்) அவர்கள் இரண்டாம் வானத்தில் ஈசா (அலை), யஹ்யா (அலை) ஆகியோரைத் தாம் சந்தித்ததாகக் குறிப்பிட்டார்கள். மூன்றாம் வானத்தில் யூசுஃப் (அலை) அவர்களையும், நான்காம் வானத்தில் இத்ரீஸ் (அலை) அவர்களையும், ஐந்தாம் வானத்தில் ஹாரூன் (அலை) அவர்களையும் சந்தித்ததாக குறிப்பிட்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் (தொடர்ந்து) கூறினார்கள்:
பிறகு நாங்கள் ஆறாம் வானத்தைச் சென்றடைந்தோம். அங்கு நான் மூசா (அலை) அவர்களிடம் சென்று அவர்களுக்கு சலாம் சொன்னேன். அவர்கள், "நல்ல சகோதரரும் நல்ல நபியுமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்" என்று (வாழ்த்துக்) கூறினார்கள். நான்

அவர்களைக் கடந்து சென்றபோது அவர்கள் அழுதார்கள். "நீங்கள் ஏன் அழுகிறீர்கள்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "இறைவா! என் சமுதாயத்தாரில் சொர்க்கம் செல்கின்றவர்களை விட அதிகமானவர்கள் எனக்குப் பிறகு உன்னால் அனுப்பப்பெற்ற இந்த இளைஞரின் சமுதாயத்தாரிலிருந்து சொர்க்கம் செல்வார்கள்" என்று பதிலளித்தார்கள். பிறகு நாங்கள் ஏழாம் வானத்தைச் சென்றடைந்தோம். அங்கு நான் இப்ராஹீம் (அலை) அவர்களிடம் சென்றேன்.
(ஏழாம் வானத்தின் எல்லையிலிருந்த இலந்தை மரமான சித்ரத்துல் முன்தஹாவை நான் கண்டேன்.) நான்கு நதிகளையும் கண்டேன். அந்த மரத்தின் வேர்ப்பகுதியிலிருந்து வெளிநோக்கி இரண்டு நதிகளும், உள்நோக்கி இரண்டு நதிகளும் (ஊற்றெடுத்துப்) பாய்ந்து கொண்டிருந்தன. நான் ஜிப்ரீல் (அலை) அவர்களிடம், "ஜிப்ரீலே! இந்நதிகள் எவை?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "உள்ளே இருப்பவை இரண்டும் சொர்க்கத்தில் உள்ள (சல்சபீல், கவ்ஸர் ஆகிய)வையாகும். வெளியே இருப்பவை இரண்டும் நைல் நதியும் யூப்ரடீஸ் நதியும் ஆகும்" என்று பதிலளித்தார்கள்.

பிறகு, "அல்பைத்துல் மஅமூர்' (எனும் வானவர்கள் அதிகம் சஞ்சரிக்கும் இறையில்லம்) எனக்கு (அருகே கொண்டுவந்து) காட்டப்பட்டது. நான், "ஜிப்ரீல்! இது என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இதுதான் "அல்பைத்துல் மஅமூர்' ஆகும். இதில் (இறைவனை வணங்குவதற்காக) ஒவ்வொரு நாளும் எழுபதாயிரம் வானவர்கள் நுழைகிறார்கள். அவர்கள் இங்கிருந்து வெளியே சென்றால் திரும்ப இங்கு வரமாட்டார்கள். அதுவே அவர்கள் கடைசியாக நுழைந்ததாகிவிடும்" என்று சொன்னார்கள். பிறகு என்னிடம் இரண்டு பாத்திரங்கள் கொண்டுவரப்பட்டன; அவற்றில் ஒரு பாத்திரத்தில் மதுவும் மற்றொரு பாத்திரத்தில் பாலும் இருந்தது. அவ்விரு பாத்திரங்களையும் என்னிடம் எடுத்துக் காட்டப் (பட்டு, அவற்றில் ஒன்றைத் தேர்ந்தெடுக்குமாறு கூறப்)பட்டது. நான் பாலைத் தேர்ந்தெடுத்தேன். அப்போது, "இயற்கை நெறியையே நீங்கள் பெற்றுள்ளீர்கள்; இறைவன், உங்கள் மூலம் இயற்கை நலனையே நாடியுள்ளான். உங்கள் சமுதாயத்தாரும் அந்த இயற்கை நெறியிலேயே உள்ளனர்"என்று கூறப்பட்டது.
பிறகு என்மீது நாளொன்றுக்கு ஐம்பது தொழுகைகள் கடமையாக்கப்பட்டன. இதைத் தொடர்ந்து நடந்த நிகழ்ச்சிகளை இறுதிவரை குறிப்பிட்டார்கள்.

265 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "...பிறகு என்னிடம் நுண்ணறிவாலும் இறைநம்பிக்கையாலும் நிரப்பப்பெற்ற தங்கத் தாம்பூலம் ஒன்று கொண்டுவரப்பட்டது. பிறகு எனது (நெஞ்சு) காறையெலும்பிலிருந்து அடிவயிறுவரை பிளக்கப்பட்டு ஸம்ஸம் நீரால் கழுவப்பட்டது. பிறகு நுண்ணறிவாலும் இறை நம்பிக்கையாலும் (என் நெஞ்சம்) நிரப்பப்பட்டது" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக மாலிக் பின் ஸஅஸஆ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

266 நபி (ஸல்) அவர்களுடைய பெரிய தந்தையின் புதல்வரான இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தாம் (விண்ணுலகப் பயணத்திற்காக) அழைத்துச் செல்லப்பட்ட நாள் குறித்து நினைவுகூர்ந்தார்கள்.

அப்போது "மூசா (அலை) அவர்கள் மாநிறமுடையவர்கள்; (யமனியர்களான) "ஷனூஆ' குலத்து மனிதர்களைப் போன்று உயரமானவர்கள்" என்று கூறினார்கள். மேலும், "ஈசா (அலை) அவர்கள் சுருள் முடியுடையவர்கள்; நடுத்தர உயரமுடையவர்கள்" என்றும் சொன்னார்கள். நரகத்தின் காவலர் (வானவர்) மாலிக் அவர்களைப் பற்றியும் தஜ்ஜாலைப் பற்றியும் குறிப்பிட்டார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

267 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் (விண்ணுலகப் பயணத்திற்காக) அழைத்துச்செல்லப்பட்ட இரவில் இம்ரானின் புதல்வர் மூசா (அலை) அவர்களைக் கடந்துசென்றேன். மூசா (அலை) அவர்கள் (யமனியர்களான) "ஷனூஆ' குலத்தைச் சேர்ந்த மனிதரைப் போன்று மாநிறமுடையவர்கள்; உயரமானவர்கள்; சுருள்முடியுடைவர்கள். (அப்பயணத்தில்) மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்களையும் கண்டேன். அவர்கள் நடுத்தர உயரமும் சிவப்பும் வெண்மையும் கலந்த, மிதமான சரும அமைப்புக் கொண்டவர்களாகவும் படிந்த, தொங்கலான தலைமுடி உடையவர்களாகவும் இருந்தார்கள். மேலும், நரகத்தின் காவலரான (வானவர்) மாலிக்கும், (இறுதிக் காலத்தில் வரவிருக்கும் மகா பொய்யனான) தஜ்ஜாலும் எனக்குக் காட்டப்பட்டனர். இவையெல்லாம் அல்லாஹ் எனக்குக் காண்பித்த அவனுடைய சான்றுகளில் உள்ளவை. "நீங்கள் அவரைச் சந்தித்ததில் சந்தேகம் ஏதும் கொள்ள வேண்டாம்". (32:23)
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
மேற்கண்ட (32:23ஆவது) வசனத்திற்கு விளக்கமளிக்கையில் கத்தாதா (ரஹ்) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் மூசா (அலை) அவர்களைச் சந்தித்தது பற்றி நீங்கள் சந்தேகம் ஏதும் கொள்ள வேண்டாம்" என்று கூறினார்கள்.

268 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு பயணத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்அஸ்ரக்' பள்ளத்தாக்கைக் கடந்து சென்றார்கள்.அப்போது, "இது எந்தப் பள்ளத்தாக்கு?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "அல்அஸ்ரக் பள்ளத்தாக்கு" என்று பதிலளித்தார்கள். "மூசா (அலை) அவர்கள் உரத்த குரலில் "தல்பியா' சொல்லிக்கொண்டு இந்த மலைக் குன்றிலிருந்து இறங்கிவந்து கொண்டிருப்பதை (இப்போதும்) நான் காண்பதைப் போன்று உள்ளது" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். பிறகு ஹர்ஷா மலைக் குன்றுக்குச் சென்றார்கள். "இது எந்த மலைக் குன்று?" என்று கேட்டார்கள். மக்கள், "(இது) ஹர்ஷா மலைக் குன்று" என்று பதிலளித்தனர். அதற்கு "யூனுஸ் பின் மத்தா (அலை) அவர்கள் கம்பளி நீளங்கி அணிந்தவர்களாகக் கட்டுடல் கொண்ட சிவப்பு ஒட்டகமொன்றின் மீது "தல்பியா' சொல்லிக் கொண்டிருப்பதை நான் (இப்போதும்) காண்பதைப் போன்று உள்ளது. அவர்களது ஒட்டகத்தின் கடிவாளம் ஈச்ச நாரினாலானது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

269 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மக்காவுக்கும் மதீனாவுக்குமிடையே பயணம் செய்துகொண்டிருந்தபோது ஒரு பள்ளத்தாக்கைக் கடந்து சென்றோம். அப்போது

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது எந்தப் பள்ளத்தாக்கு?" என்று கேட்டார்கள். மக்கள், "அல்அஸ்ரக் பள்ளத்தாக்கு" என்று பதிலளித்தனர். அப்போது அவர்கள், "மூசா (அலை) அவர்கள் தம் இருவிரல்களைக் காதுகளுக்குள் நுழைத்தவர்களாக உரத்த குரலில் தல்பியாச் சொன்னபடி இந்தப் பள்ளத்தாக்கைக் கடந்து சென்றுகொண்டிருப்பதை நான் (இப்போதும்) காண்பதைப் போன்று உள்ளது" என்று கூறினார்கள். -அப்போது மூசா (அலை) அவர்களது நிறத்தைப் பற்றியும் முடியைப் பற்றியும் ஏதோ குறிப்பிட்டார்கள். ஆனால் அது அறிவிப்பாளர் தாவூத் (ரஹ்) அவர்களது நினைவிலில்லை.-
பிறகு நாங்கள் பயணம் செய்து ஒரு மலைக் குன்றுக்கு வந்துசேர்ந்தோம். அப்போது "இது எந்த மலைக் குன்று?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். மக்கள், "ஹர்ஷா' அல்லது "லிஃப்த்' என்று பதிலளித்தனர். அப்போது, "யூனுஸ் (அலை) அவர்கள் சிவப்பு நிற ஒட்டகத்தின் மீது கம்பளி நீளங்கி அணிந்தவர்களாக தல்பியா சொன்னவாறு இந்த (மலைக் குன்றின்) பள்ளத்தாக்கைக் கடந்துசெல்வதை நான் (இப்போதும்) பார்ப்பதைப் போன்று உள்ளது. அவர்களது ஒட்டகத்தின் கடிவாளம் ஈச்ச நார் (கொண்டு பின்னப்பட்டது) ஆகும்" என்று சொன்னார்கள்.

270 முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது மக்கள் (இறுதிக் காலத்தில் வரவிருக்கும் மகா பொய்யனான) தஜ்ஜாலைப் பற்றி பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது ஒருவர், "அவனுடைய இரு கண்களுக்குமிடையே "காஃபிர்' (இறைமறுப்பாளன்) என எழுதப்பட்டிருக்கும்" என்று சொன்னார். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்: நான் இவ்வாறு கேள்விப்பட்டதில்லை. ஆனால், நபி (ஸல்) அவர்கள், "(இறைத்தூதர்) இப்ராஹீம் (அலை) அவர்கள் எத்தகைய உருவ அமைப்பில் இருந்தார்கள் என்று அறிய வேண்டுமென்றால் உங்கள் தோழரை (என்னை)ப் பாருங்கள். மூசா (அலை) அவர்கள் எத்தகையவர் என்றால், அவர்கள் மாநிறமுடையவர்கள்; சுருள் முடி கொண்டவர்கள்; ஈச்ச நாரினால் மூக்கணாங்கயிறு இடப்பட்ட சிவப்பு ஒட்டகம் ஒன்றின் மீது பயணம் செய்தபடி இருப்பார்கள். அவர்கள் (ஹஜ் செய்ய) தல்பியா கூறியபடி இந்த (அல்அஸ்ரக்) பள்ளத்தாக்கில் இறங்கியபோது (அவர்களைக் கண்டேன். அந்தக் காட்சியை) நான் (இப்போதும்) பார்ப்பதைப் போன்று உள்ளது" என்று சொன்னார்கள்.

271 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இறைத்தூதர்கள் எனக்குக் காட்டப்பட்டனர். மூசா (அலை) அவர்கள் (யமனியர்களான) “ஷனூஆ குலத்தைச் சேர்ந்த மனிதரைப் போன்று உயரமான மனிதராக இருந்தார்கள். மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்களையும் நான் பார்த்தேன். அவர்கள் (என் தோழர்) உர்வா பின் மஸ்ஊதுக்கு மிக நெருக்கமான சாயலுடையவராக இருந்தார்கள். இப்ராஹிம் (அலை) அவர்களையும் நான் பார்த்தேன். அவர்கள் உங்கள் தோழருக்கு (எனக்கு) மிக நெருக்கமான சாயலுடையவராக இருந்தார்கள். (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் (என் தோழர்) தஹ்யா அவர்களுக்கு மிக நெருக்கமான சாயலுடையவராக இருந்தார்கள்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், முஹம்மத் பின் ரும்ஹூ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், “தஹ்யா பின் கலீஃபா அவர்களுக்கு” என்று (தந்தை பெயரும் இணைத்து) கூறப்பெற்றுள்ளது.

272 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், (விண்ணுலகப்) பயணத்திற்காக அழைத்துச் செல்லப்பட்ட இரவில் நடந்தவற்றை விவரித்துக் கூறியபடி, “நான் மூசா (அலை) அவர்களைச் சந்தித்தேன் என்று கூறிவிட்டு அவர்(களின் அங்க அடையாளங்)களை வர்ணித்தார்கள்.(அப்போது கூறினார்கள்:) மூசா (அலை) அவரகள் (யமனியர்களான) ஷனூஆ குலத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவரைப் போன்று ஒல்லியாக, தலைமுடி தொங்கலாக (வாரி) விட்டிருப்பராக இருந்தார்கள்.
(தொடர்ந்து நபி (ஸல் அவர்கள்) நான் ஈசா (அலை) அவர்களைச் சந்தித்தேன் என்று கூறிவிட்டு, அவர்(களின் அங்க அடையாளங்)களை வர்ணித்தார்கள்; சிவப்பு நிறமுடையவர்களாக, நடுத்தர உயரம் கொண்டவர்களாக, (அப்போதுதான்) குளியலறையிலிருந்து வெளியே வந்தவரைப் போன்று அவர்கள் இருந்தார்கள். மேலும், நான் இப்ராஹீம் (அலை) அவர்களைப் பார்த்தேன். நான்தான் அவர்களுடைய வழித் தோன்றல்களிலேயே சாயலில் அவர்களுக்கு மிகவும் நெருக்கமானவனாக இருக்கின்றேன். (அந்த பயணத்தில்) என்னிடம் இரு பாத்திரங்கள் கொண்டுவரப்பட்டன. அவற்றில் ஒன்றில் பாலும் மற்றொன்றில் மதுவும் இருந்தது. “நீங்கள் விரும்பியதை எடுத்துக்கொள்ளுங்கள் என்று என்னிடம் சொல்லப்பட்டது. நான் பாலை எடுத்து பருகினேன். அப்போது, “நீங்கள் இயற்கையான வழியில் செலுத்தப்பட்டுவிட்டீர்கள் அல்லது “நீங்கள் இயற்கை மரபை பெற்றுக்கொண்டீர்கள். நீங்கள் மதுவை எடுத்துக் கொண்டிருந்தால் உங்கள் சமுதாயம் வழி தவறிப்போயிருக்கும் என்று என்னிடம் சொல்லப்பட்டது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 75 மர்யமின் மைந்தர் மஸீஹ் (ஈசா-அலை), "தஜ்ஜால்' எனும் மஸீஹ் ஆகியோரைப் பற்றிய குறிப்பு.**

273 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இரவில் (இறையில்லம்) கஅபாவின் அருகே(கனவில்) நான் என்னைக் கண்டேன், அப்போது மனிதர்களில் மாநிறத்தில் நீ பார்த்தவர்களிலேயே மிக அழகான முடி அவருக்கு இருந்தது, அதை அவர் வாரிவிட்டிருந்தார், அதிலிருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. அவர் “இரு மனிதர்களின் மீது சாய்ந்தபடி அல்லது “இரு மனிதர்களின் தோள்கள் மீது சாய்ந்தபடி இறையில்லத்தைச் சுற்றி (தவாஃப்) வந்துகொண்டிருந்தார். நான், “இவர் யார்? என்று கேட்டேன். “இவர் தாம் மர்யமின் மைந்தர் மஸீஹ் (ஈசா) என்று பதிலளிக்கப்பட்டது. பின்னர் அங்கே கடும் சுருள்முடி கொண்ட, வலக் கண் குருடான மனிதன் ஒருவன் இருந்தான்,அவனுக்கிருந்த கண் (ஒரே குலையில்) துருத்திக்கொண்டிருக்கும் திராட்சையைப் போன்றிருந்தது, நான், இவர் யார்? என்று கேட்டேன். “இவன் தான் அல்மஸீஹுத் தஜ்ஜால் என்று பதிலளிக்கப்பட்டது.
இதை அப்துல்லாஹ் பின் உமர்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

274 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் ஒரு நாள் மக்களிடையே "தஜ்ஜால் எனும் மஸீஹை நினைவுகூர்ந்தார்கள்.அப்போது "அல்லாஹ்,ஒற்றைக் கண்ணன் அல்லன், ஆனால் "தஜ்ஜால் எனும் மஸீஹ், வலது கண் குருடானவன். அவனது கண், (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சையைப் போன்றிருக்கும் என்று கூறினார்கள்.
மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இன்றிரவு நான் கஅபாவின் அருகே கனவில் என்னைக் கண்டேன், நீ கண்ட மனிதர்களின் மாநிறத்திலேயே மிக அழகான மாநிறம் கொண்ட மனிதர் ஒருவர் அங்கிருந்தார். அவரது தலைமுடி அவருடைய தோள்களுக்கிடையே தொங்கிக்கொண்டிருந்தது; படிய வாரப்பட்ட தொங்கலான முடியுடையவராக இருந்தார். அவரது தலையிலிருந்து நீர் சொட்டிக் கொண்டிருந்தது, இரு மனிதர்களின் தோள்கள்மீது அவர் தம் இரு கைகளையும் வைத்துக் கொண்டு கஅபாவைச் சுற்றி (தவா∴ப்) வந்து கொண்டிருந்தார். நான், இவர் யார்? என்று கேட்டேன்."மர்யமின் மைந்தர் மஸீஹ் (ஈசா) என்று பதிலளித்தார்கள். அவருக்குப் பின்னால் நிறைய சுருள்முடி கொண்ட, வலக் கண் குருடான ஒரு மனிதனைக் கண்டேன். அவன் நான் பார்த்த மனிதர்களிலேயே இப்னு கத்தனுக்கு மிக நெருக்கமான சாயல் உடையவனாக இருந்தான். நான், இவன் யார்? என்று கேட்டேன். "இவன் "தஜ்ஜால் எனும் மஸீஹ் என்று பதிலளித்தார்கள்.

275 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் (கனவில்) இறையில்லம் கஅபா அருகில் மாநிறமுடைய, படிய வாரப்பட்ட தலை முடியுடைய ஒரு மனிதரைக் கண்டேன். அவர் இரு மனிதர்கள் மீது தம் இரு கைகளை வைத்துக்கொண்டிருந்தார்; "அவருடைய தலையிலிருந்து தண்ணீர் வழிந்து கொண்டிருந்தது அல்லது அவருடைய தலையிலிருந்து தண்ணீர் சொட்டிக்கொண்டிருந்தது. நான் "இவர் யார்? என்று கேட்டேன். அதற்கு, "மர்யமின் மைந்தர் ஈசா அல்லது "மர்யமின் மைந்தர் மஸீஹ் என்று பதிலளித்தார்கள். இவற்றில் எதை அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள் என்று எங்களுக்குத் தெரியாது,அவருக்குப் பின்னால் சிவப்பு நிறைமுடைய, சுருள்முடி கொண்ட, வலக் கண் குருடான ஒரு மனிதனை நான் பார்த்தேன். அவன் நான் பார்த்தவர்களிலேயே இப்னு கத்தனுக்கு மிக நெருக்கமான சாயலுடையவனாக இருந்தான். நான், "இவன் யார்? என்று கேட்டேன்.(இவன்) "தஜ்ஜால்" எனும் மஸீஹ் என்று பதிலளித்தார்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

276 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்;
(நான் இரவின் சிறு பகுதியில் புனித கஅபாவிலிருந்து பைத்துல் மகதிஸ் (ஜெருசலேம்) வரை சென்று வந்த தகவலைச் சொன்ன சமயம்) குறைஷியர் என்னை நம்ப மறுத்தனர், அப்போது நான் (கஅபாவில்) "ஹிஜ்ர் எனும் (வளைந்த பகுதியில் நின்றிருந்தேன். அல்லாஹ் எனக்கு அப்போது பைத்துல் மக்திஸைக் காட்சியளிக்கச் செய்தான். உடனே நான் அதைப் பார்த்தபடியே அதன் அடையாளங்களைக் குறைஷியருக்கு விவரிக்கலானேன்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

277 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் உறங்கிக்கொண்டிருக்கையில் (கனவில்) இறையில்லம் கஅபாவைச் சுற்றி நான் (தவா∴ப்) வந்துகொண்டிருப்பதைக் கண்டேன். அங்கு மாநிறமுடைய, படிய வாரப்பட்ட தலைமுடி கொண்ட ஒருவர் இரண்டு மனிதர்களுக்கிடையே இருந்தார். "அவருடைய தலையிலிருந்து தண்ணீர் சொட்டிக்கொண்டிருந்தது அல்லது அவருடைய தலையிலிருந்து தண்ணீர் கொட்டிக்கொண்டிருந்தது. நான், "இவர் யார்? என்று கேட்டேன். "இவர்தாம் மர்யமின் மைந்தர் என்று பதிலளித்தார்கள்.
பிறகு நான் திரும்பிச் சென்ற போது சிவப்பான, உடல் பருத்த, சுருள்முடி கொண்ட, (ஒரு) கண் குருடான மனிதன் ஒருவன் அங்கிருந்தான். அவனது கண் (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சை போன்றிருந்தது.நான், "இவன் யார்? என்று கேட்டேன். "தஜ்ஜால் என்று பதிலளித்தார்கள், மக்களிலேயே அவனுக்கு மிக நெருக்கமான சாயலுடையவர் இப்னு கத்தன் தாம்.- இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

278 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
நான் (கஅபாவிலோ ஹிஜ்ர் எனும் (வளைந்த) பகுதியில் இருந்தேன். நான் (இரவின் ஒரு சிறு பகுதியில் மக்காவிலிருந்து பைத்துல் மக்திஸ் – ஜெருசலேம் வரை) பயணம் மேற்கொண்டது பற்றி என்னிடம் குறைஷியர் கேள்வி கேட்டுக்கொண்டிருந்தனர். அப்போது பைத்துல் மக்திஸிலுள்ள சில பொருட்களைப் பற்றி என்னிடம் அவர்கள் கேட்டனர். ஆனால், அவை என் நினைவிலிருக்கவில்லை. அப்போது நான் மிகவும் வருந்தினேன். முன்பு எப்போதும் அந்த அளவுக்கு நான் வருந்தியதேயில்லை. உடனே அல்லாஹ் பைத்துல் மக்திஸை எனக்குக் காட்டினான். அதைப் பார்த்துக்கொண்டே அவர்கள் கேட்ட ஒவ்வொன்றுக்கும் (சரியான) தகவல் தெரிவித்தேன்.
(பைத்துல் மக்திஸில்) இறைத்தூதர்களில் ஒரு குழுவினர் இருந்தனர். அங்கு மூசா (அலை) அவர்கள் நின்று தொழுதுகொண்டிருந்தார்கள். அவர்கள் (யமனியர்களான) ஷனூஆ குலத்தைச் சேர்ந்த மனிதரைப் போன்று (உயரமாக) திரண்ட உடல் உள்ள மனிதராக இருந்தார்கள்.அங்கு மர்யமின் மைந்தர் ஈசா அவர்களும் நின்று தொழுதுகொண்டிருந்தார்கள். அவர்கள் மனிதர்களிலேயே (என் தோழர்) உர்வா பின் மஸ்ஊத் அஸ்ஸகஃபீ அவர்களுக்கு மிக நெருக்கமான சாயலுடையவராக இருந்தார்கள். அங்கு இப்ராஹீம் (அலை) அவர்களும் நின்று தொழுதுகொண்டிருந்தார்கள். மக்களில் அவர்களுக்கு மிக நெருக்கமான சாயல் உடையவர் உங்கள் தோழர் (நான்)தான்.
அப்போது (ஒரு) தொழுகையின் நேரம் வந்துவிடவே இறைதூதர்களுக்கு நான் தலைமை தாங்கித் தொழுகை நடத்தினேன்.தொழுது முடித்தபோது (என்னிடம்) ஒருவர், "முஹம்மதே! இதோ இவர்தாம் நகரத்தின் காவலர் மாலிக்.அவருக்கு சலாம் சொல்லுங்கள்! என்று கூறினார். நான் அவரை நோக்கித் திரும்பிய போது அவர் முந்திக் கொண்டு எனக்கு சலாம் சொல்லிட்டார்.-இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 76 (வான்) எல்லையிலுள்ள இலந்தை மரம் (சித்ரத்துல் முன்தஹா) பற்றிய குறிப்பு.

279 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூஹர் (ஸல்) அவர்கள் (விண்ணுலகப் பயணத்திற்காக)இரவில் அழைத்துச் செல்லப்பட்ட போது (வான் எல்லையிலுள்ள இலந்தை மரமான) சித்ரத்துல் முன்தஹா வரை அவர்கள் கொண்டுசெல்லப்பட்டார்கள். அ(ந்த மரத்தில் வேர்பகுதியான)து ஆறாம் வானத்தில் அமைந்துள்ளது. பூமியிலிருந்து மேலே கொண்டு செல்லப்படும் (உயிர்கள், மனிதர்களின் செயல்கள் பற்றிய குறிப்புகள்) யாவும் அங்கு தான் சென்று சேர்கின்றன; அங்கே அவை கையகப்படுத்தப்படுகின்றன.அதற்கு மேலேயிருந்து கிழே கொண்டு வரப்படும் (இறைக்கட்டளைகள்) யாவும் அங்குதான் வந்து சேர்கின்றன; அங்கே (வானவர்களால்) அவை பெற்றுக்கொள்ளப்படுகின்றன.
“சித்ரத்துல் முன்தஹா எனும் அம்மரத்தை ஏதோ (பிரமாண்டமான) ஒன்று சூழ்ந்து கொண்டிருக்கிறது எனும் (53:16 ஆவது) வசனம் தங்கத்தாலான விட்டில் பூச்சிகளையே குறிக்கிறது.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்று(கட்டளைகள்) வழங்கப்பட்டன. அவையாவன: 1. ஐவேளைத்தொழுகைகள் வழங்கப்பட்டன. 2. அல்பகரா அத்தியாயத்தின் இறுதி (மூன்று) வசன்ங்கள் அருளப்பெற்றன. 3. அவர்களுடைய சமுதாயத்தாரில் அல்லாஹ்வுக்கு இணையேதும் வைக்காதவர்களுக்குப் பேரழிவை ஏற்படுத்தும் பெரும்பாவங்கள் மன்னிக்கப்(படுவதாக அறிவிக்கப்)பட்டது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

280 சுலைமான் அஷ்ஷைபானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஸிர்ரு பின் ஹுபைஷ் (ரஹ்) அவர்களிடம் “(வளைந்த) வில்லின் இரு முனைகளுக்கிடையிலான நெருக்கத்தைப் போன்று, அல்லது அதைவிடச் சமீபமாக (வானவர் ஜிப்ரீலும் நபிக்கும் இடையிலான நெருக்கம்) இருந்தது எனும் (53:9வது) வசனம் தொடர்பாகக் கேட்டேன்.அதற்கு அவர்கள்,“(வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களை, அறுநூறு இறக்கைகள் இருக்க, (அவரது நிஜத் தோற்றத்தில்) நபி (ஸல்) அவர்கள் பார்த்தார்கள் (என்பதே இவ்வசனத்தின் கருத்தாகும்) என இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள் என்று பதிலளித்தார்கள்.

281 ஸிர்ரு பின் ஹுபைஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், “நபியின்) உள்ளம்,அவர் கண்டது தொடர்பாகப் பொய்யுரைக்கவில்லை” எனும் (53:11 ஆவது) வசனத்திற்குப் பின்வருமாறு விளக்கமளித்தார்கள்:
நபி (ஸல்) அவர்கள், (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களுக்கு அறுநூறு இறக்கைகள் இருக்க, (அவரது நிஜத் தோற்றத்தில்) அவரைப் பார்த்தார்கள்.

282 ஸிர்ரு பின் ஹுபைஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
“உறுதியாக அவர் தம் இறைவனின் சான்றுகளில் மிகப் பெரியதைக் கண்டார் எனும் (53:18 ஆவது) வசனம் குறித்து அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
நபி (ஸல் அவர்கள், (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களுக்கு அறுநூறு இறக்கைகள் இருக்க, அவரது (நிஜ) உருவத்தில் அவரைப் பார்த்தார்கள்.

பாடம் : 77 "நிச்சயமாக அவர் மற்றொரு முறையும் அவரைக் கண்டார்" எனும் (53:13ஆவது) இறைவசனத்தின் பொருளும், விண்ணுலகப் பயணத்தின்போது நபி (ஸல்) அவர்கள் தம் இறைவனைப் பார்த்தார்களா? என்பதும்.

283 அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"நிச்சயமாக அவர் மற்றொரு முறையும் அவரைக் கண்டார்" எனும் (53:13ஆவது) வசனம், "நபி (ஸல்) அவர்கள் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களைப் பார்த்ததையே குறிக்கிறது" என்று அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

284 அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தம் இறைவனை அகத்தால் பார்த்தார்கள் என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், (53:13 ஆவது) வசனத்திற்கு விளக்கம்) கூறினார்கள்.

285 அபுல் ஆலியா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
“(நபியின்) உள்ளம், அவர் கண்டது தொடர்பாகப் பொய்யுரைக்கவில்லை (53:11), “நிச்சயமாக அவர் மற்றொரு முறையும் அவனைக் கண்டார் (53:13), ஆகிய வசனங்கள் குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
நபி (ஸல்) அவர்கள் தம் இறைவனை இரண்டு முறை தமது அகத்தால் பார்த்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

286 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

287 மஸ்ரூக் பின் அஜ்த உ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (அன்னை) ஆயிஷா (ரலி) அவர்களிடம் சாய்ந்து அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள் (என்னிடம்), “அபூஆயிஷா, மூன்று விஷயங்கள் உள்ளன. அவற்றில் எந்த ஒன்றை யார் கூறினாலும் அவர் அல்லாஹ்வின் மீது மிகப்பெரும் பொய்யை இட்டுக்கட்டியவர் ஆவார் என்று கூறினார்கள்: நான், அவை எவை? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், “யார் முஹம்மத் (ஸல்) அவர்கள் தம் இறைவனை (நேரில்) பார்த்தார்கள் என்று கூறுகின்றாரோ அவர் அல்லாஹ்வின் மீது மிகப்பெரும் பொய்யை இட்டுக்கட்டிவிட்டார் என்று சொன்னார்கள். உடனே சாய்ந்து அமர்ந்து (ஓய்வு எடுத்துக்)கொண்டிருந்த நான் எழுந்து (நேராக) அமர்ந்து, “இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! நிதானித்துக் கூறுங்கள்! அவசரப்படாதீர்கள். வலிவும் மாண்புமிக்க அல்லாஹ், “திண்ணமாக அவனைத் தெளிவான அடிவானத்தில் அவர் கண்டார் (81:23) என்றும், “நிச்சயமாக அவர் மற்றொரு முறையும்

அவனைக் கண்டார் (53:13) என்றும் கூறவில்லையா? என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் பின்வருமாறு விளக்கமளித்தார்கள்:

இந்த சமுதாயத்தாரில் இது தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேள்வி கேட்ட முதல் ஆள் நான்தான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது,(வானவர்) ஜிப்ரீலை, (நான் பார்த்ததை)யே குறிக்கிறது. நான் ஜிப்ரீலை, அவர் படைக்கப்பெற்றுள்ள (நிஜத்) தோற்றத்தில் இந்த இரு தடவைகள் தவிர வேறெப்போதும் பார்த்ததில்லை. அவர் வானிலிருந்து(பூமிக்கு) இறங்கிக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன்.அப்போது அவருடைய பிராமாண்டமான தோற்றம் வானம் பூமிக்கிடையேயுள்ள இடைவெளியை அடைத்துக் கொண்டிருந்தது என்று கூறினார்கள்.
மேலும், ஆயிஷா (ரலி) அவர்கள் (தமது கருத்துக்குச் சான்றாக) அல்லாஹ் (பின்வருமாறு) கூறுவதை நீங்கள் செவியுறவில்லையா? என்று கேட்டார்கள்.
"கண் பார்வைகள் அவனை எட்ட முடியாது; அவனோ அனைத்தையும் பார்க்கிறான். அவன் நுட்பமானவனும் நன்கறிந்தவனும் ஆவான் (6:103).
அல்லது (பின்வருமாறு) அல்லாஹ் கூறுவதை நீங்கள் செவியுறவில்லையா? "எந்த மனிதருடனும் அல்லாஹ் நேருக்கு நேர் பேசுவதில்லை. ஆயினும், வஹியின் (தனது அறிவிப்பின்) மூலமோ, திரைக்கு அப்பாலிருந்தோ, ஒரு தூதரை அனுப்பிவைத்துத் தன் அனுமதியின் பேரில் தான் நாடுகின்றவற்றை (வேதமாக) அறிவிக்கச்செய்தோ அல்லாமல் நேரடியாகப் பேசுவதில்லை; நிச்சயமாக அவன் உயர்ந்தோனும் ஞானமிக்கோனும் ஆவான் (42:51).
(தொடர்ந்து) ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறைவேத்திலிருந்து எதையும் மறைத்தார்கள் என்று யாரேனும் கூறினால், அவரும் அல்லாஹ்வின் மீது மிகப்பெரும் பொய்யை இட்டுகட்டிவிட்டார்.அல்லாஹ்வோ, "(எம்) தூதரே! உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு அருளப்பெற்ற (வேதத்)தை (மக்களுக்கு) எடுத்துரைத்துவிடுங்கள்! (இவ்வாறு) நீங்கள் செய்யாவிட்டால், அவனுடைய தூதை நீங்கள் நிறைவேற்றியவராகமாட்டீர்கள் (5:67) என்று கூறுகின்றான்.
"நபி (ஸல்) அவர்கள் நாளை நடக்கவிருப்பதைத் தெரிவிப்பார்கள் என்று யாரேனும் கூறினால் அவர் அல்லாஹ்வின் மீது மிகபெரும் பொய்யைப் புனைந்துவிட்டார். அல்லாஹ்வோ, "(நபியே!) கூறுக: அல்லாஹ்வைத் தவிர வான்ங்களிலும் பூமியிலும் உள்ள யாரும் மறைவானவற்றை அறியமாட்டார் (27:65) என்று கூறுகின்றான்.

288 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் கீழ்க்காணும் தகவல் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது:
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: முஹம்மத் (ஸல்) அவர்கள் தமக்கு அருளப்பெற்ற (வேதத்)திலிருந்து எதையும் மறைப்பவராக இருந்தால், பின்வரும் வசனத்தை மறைத்திருப்பார்கள்: (நபியே!) எவருக்கு அல்லாஹ்வும் அருள்புரிந்து நீங்களும் அவர்மீது உபகாரம் புரிந்தீர்களோ, அவரிடத்தில் நீங்கள், "அல்லாஹ்வுக்குப் பயந்து நீர் உம் துணைவியை (மணவிலக்குச் செய்துவிடாமல்) உம்மிடமே நிறுத்திவைத்துக்கொள்ளும்'

என்று சொன்னபோது, அல்லாஹ் வெளிப்படுத்த இருந்ததை மனிதர்களுக்குப் பயந்து நீங்கள் உங்களது மனத்தில் மறைத்துவைத்தீர்கள்; அல்லாஹ்வே நீங்கள் அஞ்சுவதற்கு மிகவும் தகுதியுடையோன். (33:37)

289 மேற்கண்ட (287ஆவது) ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், மஸ்ரூக் (ரஹ்) அவர்கள், "நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் "முஹம்மத் (ஸல்) அவர்கள் தம் இறைவனைப் பார்த்தார்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ் தூயவன். நீர் கூறியதைக் கேட்டு என் ரோமம் சிலிர்த்துவிட்டது...' என்று கூறியதாக ஹதீஸ் துவங்குகிறது. (இது தொடர்பான அறிவிப்புகளில்) மேற்கண்ட (287ஆவது) ஹதீஸே முழுமையானதும் விரிவானதும் ஆகும்.

290 மஸ்ரூக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்கள் இறைவனைப் பார்க்கவில்லை என்று கூறிய) ஆயிஷா (ரலி) அவர்களிடம் நான், "(வளைந்த) வில்லின் இரு முனைகளுக்கிடையிலான நெருக்கத்தைப் போன்று, அல்லது அதைவிடச் சமீபமாக (அவர்கள் இருவருக்கும் இடையிலான) நெருக்கம் இருந்தது. பிறகு அல்லாஹ் தன் அடியாருக்கு எதை அறிவித்தானோ அதை அறிவித்தான்" எனும் (53:9-11) வசனங்களின் பொருள் என்ன?" என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் "அது (வானவர்) ஜிப்ரீலை (நபியவர்கள் பார்த்ததை)யே குறிக்கிறது. ஜிப்ரீல் (அலை) அவர்கள் மனித உருவிலேயே நபி (ஸல்) அவர்களிடம் வருவார்கள். ஆனால், இம்முறை மட்டும் அடிவானத்தையே அடைத்தபடி (பிரமாண்டமான) தமது (நிஜ) உருவத்தில் வந்தார்கள்" என்றார்கள்.

**பாடம் : 78 "(அவனைச் சுற்றிலும் இருப்பது) ஒளியாயிற்றே! நான் எப்படி அவனைப் பார்க்க முடியும்?'' என்றும், "நான் ஓர் ஒளியைக் கண்டேன்'' என்றும் நபி (ஸல்) அவர்கள் கூறியது.**

291 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "நீங்கள் உங்கள் இறைவனைப் பார்த்தீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "(அவனைச் சுற்றிலும் இருப்பது) ஒளியாயிற்றே! நான் எப்படி அவனைப் பார்க்க முடியும்?" என்று (திருப்பிக்) கேட்டார்கள்.

292 அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூதர் (ரலி) அவர்களிடம் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்திருந்தால் அவர்களிடம் (ஒரு விஷயத்தைப் பற்றி) கேட்டிருப்பேன்" என்று கூறினேன். "எதைப் பற்றிக் கேட்டிருப்பாய்?" என்று என்னிடம் அவர்கள் கேட்டார்கள். நான், "நீங்கள் உங்கள் இறைவனைப் பார்த்தீர்களா? என்று கேட்டிருப்பேன்" என்றேன்.
அபூதர் (ரலி) அவர்கள், "(இதுபற்றி) நான் அல்லாஹ்வின் தூதரிடமே கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் ஓர் ஒளியைக் கண்டேன் (அவ்வளவுதான்; வேறு எதையும் நான் காணவில்லை)' என்று பதிலளித்தார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 79 "அல்லாஹ் உறங்கமாட்டான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதும், "ஒளியே (அவனைப் பார்க்கவிடாமல் தடுக்கும்) அவனது திரையாகும்; அதை அவன் விலக்கிவிட்டால் அவனது பார்வை எட்டும் தூரம்வரையுள்ள படைப்பினங்களை அவனது ஒளிச்சுடர் சுட்டெரித்துவிடும்'' என்று அவர்கள் கூறியதும்.**

293 அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே நின்று ஐந்து விஷயங்களைச் சொன்னார்கள். (அவை:)
1) வலிவும் மாண்புமிக்க அல்லாஹ் உறங்க மாட்டான்; உறங்குவது அவனுக்குத் தகாது.
2) அவன் தராசைத் தாழ்த்துகிறான்; உயர்த்துகிறான்.
3) (மனிதன்) இரவில் புரிந்த செயல், பகலில் புரிந்த செயலுக்கு முன்பே அவனிடம் மேலே கொண்டுசெல்லப்படுகிறது.
4) (மனிதன்) பகலில் புரிந்த செயல், இரவில் புரிந்த செயலுக்கு முன்பே அவனிடம் மேலே கொண்டுசெல்லப்படுகிறது.
5) ஒளியே (அவனைப் பார்க்கவிடாமல் தடுக்கும்) அவனது திரையாகும். -மற்றோர் அறிவிப்பில் "நெருப்பே அவனது திரையாகும்' என்று காணப்படுகிறது.- அத்திரையை அவன் விலக்கிவிட்டால் அவனது பார்வை எட்டும் தூரம் வரையுள்ள அவனுடைய படைப்பினங்களை அவனது ஒளிச்சுடர் சுட்டெரித்துவிடும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

294 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே நின்று நான்கு விஷயங்களைச் சொன்னார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. மேலும் அதில் "அவனுடைய படைப்பினங்கள்' எனும் சொற்றொடர் இடம்பெறவில்லை. "ஒளியே அவனது திரையாகும்' என்று இடம்பெற்றுள்ளது.

295 அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே நின்று நான்கு விஷயங்களைச் சொன்னார்கள்:
1) அல்லாஹ் உறங்கமாட்டான்; உறங்குவது அவனுக்குத் தகாது.
2) அவன் தராசை உயர்த்துகிறான்; தாழ்த்துகிறான்.
3)(மனிதன்) பகலில் புரிந்த செயல், இரவில் இறைவனிடம் மேலே கொண்டுசெல்லப்படுகிறது.
4) (மனிதன்) இரவில் புரிந்த செயல் பகலில் அவனிடம் மேலே கொண்டுசெல்லப்படுகிறது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 80 இறைநம்பிக்கையாளர்கள் மறுமையில் இறைவனைக் காண்பார்கள் என்பதற்குரிய சான்று.**

296 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரு சொர்க்கங்கள் உண்டு. அவற்றின் பாத்திரங்களும் இதரப் பொருட்களும் வெள்ளியால் ஆனவை. (வேறு) இரு சொர்க்கங்களும் உண்டு. அவற்றின் பாத்திரங்களும் இதரப் பொருட்களும் பொன்னால் ஆனவை. "அத்ன்' எனும் சொர்க்கத்தில் இருப்பவர்கள் தங்கள் இறைவனைக் காண்பதற்கு, அவன்மீதுள்ள "பெருமை' எனும் மேலாடை தவிர வேறெந்தத் தடையும் இராது.
இதை அப்துல்லாஹ் பின் கைஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

297 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கவாசிகள் சொர்க்கத்தில் நுழைந்துவிடும்போது (அவர்களிடம்) அல்லாஹ், "உங்களுக்கு நான் இன்னும் கூடுதலாக ஏதேனும் வழங்க வேண்டுமென நீங்கள் விரும்புகின்றீர்களா?" என்று கேட்பான். அதற்கு அவர்கள் "(இறைவா!) நீ எங்கள் முகங்களை வெண்மையாக்க வில்லையா? எங்களை நரகத்திலிருந்து காப்பாற்றி சொர்க்கத்திற்குள் பிரவேசிக்கச் செய்யவில்லையா (இதைவிடக் கூடுதலாக எங்களுக்கு வேறென்ன வேண்டும்)?" என்று கேட்பார்கள்.
அப்போது அல்லாஹ், (தன்னைச் சுற்றிலும் இருக்கும்) திரையை விலக்கி (அவர்களுக்கு தரிசனம் தந்தி)டுவான். அப்போது தம் இறைவனைக் (காணும் அவர்களுக்கு அவனைக்) காண்பதைவிட மிகவும் விருப்பமானது வேறெதுவும் வழங்கப்பட்டிராது.
இதை ஸுஹைப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

298 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "பிறகு "நன்மை புரிந்தோருக்கு நன்மையும், (அதைவிட) அதிகமும் கிடைக்கும்' எனும் இந்த (10:26ஆவது) வசனத்தையும் நபி (ஸல்) அவர்கள் ஓதிக் காட்டினார்கள்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 81 இறைவனைக் காணும் வழிமுறை.**

299 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்களில் சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதரே! மறுமையில் நாங்கள் எங்கள் இறைவனைக் காண்போமா?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பௌர்ணமி இரவில் முழு நிலவைக் காண்பதில் உங்களுக்குச் சிரமம் உண்டா?" என்று கேட்டார்கள். மக்கள், "(சிரமம்) இல்லை; அல்லாஹ்வின் தூதரே!" என்று பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மேகம் மறைக்காத சூரியனைக் காண்பதில் உங்களுக்குச் சிரமம் உண்டா?" என்று கேட்டார்கள். மக்கள், "(சிரமம்) இல்லை; அல்லாஹ்வின் தூதரே!" என்று பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இவ்வாறுதான் (மறுமையில்) இறைவனை நீங்கள் காண்பீர்கள். அல்லாஹ் மறுமை நாளில் மனிதர்களை ஒன்றுகூட்டி, "(உலகத்தில்) யார் எதை வழிபட்டுக்கொண்டிருந்தாரோ அவர் அதைப் பின்தொடர்ந்து செல்லட்டும்" என்று கூறுவான். ஆகவே, சூரியனை வழிபட்டுக்கொண்டிருந்தவர்கள் சூரியனைப் பின்தொடர்ந்து செல்வார்கள். சந்திரனை வழிபட்டுக்கொண்டிருந்தவர்கள் சந்திரனைப் பின்தொடர்ந்து செல்வார்கள். ஷைத்தான்(களான தீயசக்தி)களை வழிபட்டுக்கொண்டிருந்தவர்கள் அவற்றைப் பின்தொடர்ந்து செல்வார்கள். இறுதியில் இந்தச் சமுதாயத்தார் மட்டும் எஞ்சியிருப்பார்கள். அவர்களிடையே நயவஞ்சகர்களும் இருப்பார்கள்.

அப்போது இறைவன் அவர்களிடம், அவர்கள் அறிந்திராத ஒரு தோற்றத்தில் வந்து, "நான் உங்கள் இறைவன்" என்பான். உடனே அவர்கள், "உன்னிடமிருந்து அல்லாஹ்விடம் நாங்கள் பாதுகாப்புக் கோருகிறோம். எங்கள் இறைவன் எங்களிடம் வரும்வரை நாங்கள் இங்கேயே இருப்போம். எங்கள் இறைவன் எங்களிடம் வந்தால் அவனை நாங்கள் அறிந்துகொள்வோம்" என்பர். அப்போது அவர்கள் அறிந்துகொள்ளும் தோற்றத்தில் அவர்களிடம் இறைவன் வந்து, "நான் உங்கள் இறைவன்" என்பான். அதற்கு அவர்கள், "நீயே எங்கள் இறைவன்" என்று கூறியவாறு அவனைப் பின் தொடர்ந்து செல்வார்கள். அங்கு நரகத்திற்கு மேலே பாலம் அமைக்கப்படும். நானும் என் சமுதாயத்தாருமே (அந்தப் பாலத்தைக்) கடப்பவர்களில் முதல் ஆளாக இருப்போம். அன்று இறைத்தூதர்களைத் தவிர வேறெவரும் பேசமாட்டார்கள். அந்தச் சூழ்நிலையில் இறைத் தூதர்கள் அனைவரின் பிரார்த்தனையும் "அல்லாஹ்வே! காப்பாற்று; காப்பாற்று" என்பதாகவே இருக்கும். நரகத்(தின் மேலே உள்ள அப்பாலத்)தில் கொக்கிகள் மாட்டப்பட்டிருக்கும். அவை கருவேல மரத்தின் (சஅதான்) முற்களைப் போன்றிருக்கும்.
-பிறகு "கருவேலமரத்தை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். மக்கள், "ஆம் (பார்த்திருக்கிறோம்), அல்லாஹ்வின் தூதரே!" என்று பதிலளித்தார்கள்.-

(தொடர்ந்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அந்தக் கொக்கிகள் கருவேல மரத்தின் முள்ளைப் போன்றுதான் இருக்கும். ஆயினும், அதன் பருமன் என்னவென்று அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். அந்தக் கொக்கிகள் மக்களை அவர்களின் செயல்களுக்கேற்ப கவ்விப்பிடிக்கும். அவர்களில் தமது (பாவச்) செயலால் (அங்கு) தங்கிவிட்ட இறைநம்பிக்கையாளரும் இருப்பார். இன்னும் அவர்களில் தண்டனை அளிக்கப்பட்டுப் பின்னர் விடுவிக்கப்படுபவரும் இருப்பார். இறுதியாக இறைவன், அடியார்களிடையே தீர்ப்பு வழங்கி முடித்த பின், நரகவாசிகளில் தான் நாடிய சிலரைத் தனது கருணையினால் (நரகத்திலிருந்து) வெளியேற்ற விரும்புவான். அதன்படி அல்லாஹ்விற்கு எதையும் இணைகற்பிக்காமல் இருந்து, "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை' என்று உறுதிகூறியவர்களில், தான் கருணைகாட்ட நாடிய சிலரை நரகத்திலிருந்து வெளியேற்றுமாறு வானவர்களுக்கு இறைவன் ஆணையிடுவான். வானவர்கள் நரகத்திலிருக்கும் அவர்களை சஜ்தாவின் அடையாளங்களை வைத்து இனம் கண்டுகொள்வார்கள். மனிதனி(ன் உடலி)ல் உள்ள சஜ்தாவின் அடையாளத்தைத் தவிர மற்றப் பகுதிகளை நரகம் தீண்டுகிறது. சஜ்தா அடையாளத்தைத் தீண்டக் கூடாதென

நரகத்திற்கு இறைவன் தடை விதித்துள்ளான். ஆகவே, அவர்கள் அங்கமெல்லாம் கரிந்துவிட்ட நிலையில் நரகத்திலிருந்து வெளியேற்றப்படுவார்கள்.
அப்போது அவர்கள்மீது "மாஉல் ஹயாத்' எனப்படும் (ஜீவ) நீர் ஊற்றப்படும். உடனே அவர்கள் சேற்று வெள்ளத்தில் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று (புதுப் பொலிவுடன்) நிறம் மாறிவிடுவார்கள்.

பிறகு இறைவன் (தன்) அடியார்களிடையே தீர்ப்பு வழங்கி முடிப்பான். அப்போது நரகத்தை முன்னோக்கியபடி ஒரு மனிதர் மட்டும் எஞ்சியிருப்பார். அந்த மனிதர்தாம் சொர்க்கத்தில் நுழையும் இறுதி மனிதராவார். அவர் "என் இறைவா! நரகத்தின் (வெப்பக்) காற்றால் எனக்கு மூச்சடைக்கிறது. அதன் ஜுவாலை என்னைக் கரிக்கிறது. ஆகவே, நரகத்தைவிட்டு என் முகத்தை (வேறு பக்கம்) திருப்பிடுவாயாக!" என்று கூறி, அல்லாஹ் நாடிய சில பிரார்த்தனைகளைச் சொல்லி அல்லாஹ்விடம் பிரார்த்தித்துக் கொண்டிருப்பார். பிறகு அல்லாஹ், "இ(ப்போது நீ கோரிய)தை உனக்கு நான் செய்(து கொடுத்)தால் வேறொரு கோரிக்கையையும் நீ முன்வைக்கலாம் அல்லவா?" என்று கேட்பான். அதற்கு அந்த மனிதர், "(இல்லை;) வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்" என்று சொல்லிவிட்டு, அல்லாஹ் நாடிய வாக்குறுதிகளையும் உறுதிமொழிகளையும் அவர் தம் இறைவனிடம் வழங்குவார். ஆகவே, இறைவன் அவரது முகத்தை நரகத்தைவிட்டு (வேறு பக்கம்) திருப்பிவிடுவான். இதையடுத்து அவர் சொர்க்கத்தை முன்னோக்கி, அ(திலுள்ள)தைக் காணும்போது அல்லாஹ் நாடிய நேரம்வரை அமைதியாக இருப்பார்.
பிறகு, "என் இறைவா! சொர்க்கத்தின் வாசல்வரை என்னைக் கொண்டுசெல்வாயாக!" என்பார். அதற்கு இறைவன் அவரிடம், "இப்போது உனக்கு நான் வழங்கியதைத் தவிர வேறெதையும் என்னிடம் கேட்கமாட்டேன் என நீ வாக்குறுதியும் உறுதிமொழியும் வழங்கவில்லையா? மனிதா! உனக்குக் கேடுதான். உன்னுடைய ஏமாற்று வேலைதான் என்ன!" என்பான். ஆனால், அவர் தொடர்ந்து "என் இறைவா...' என்று கூறி அல்லாஹ்வைப் பிரார்த்தித்துக்கொண்டே இருப்பார். அவரிடம் இறைவன், "(உனது இந்தக் கோரிக்கையை ஏற்று) இதை நான் உனக்கு வழங்கிவிட்டால் வேறொரு கோரிக்கையையும் நீ முன்வைக்கலாம் அல்லவா?" என்று கேட்பான்.
அதற்கு அவர், "இல்லை; உன் கண்ணியத்தின் மீதாணையாக! (வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்)" என்று சொல்லிவிட்டு, அல்லாஹ் நாடிய வாக்குறுதிகளையும் உறுதிமொழிகளையும் தம் இறைவனிடம் வழங்குவார். ஆகவே, அல்லாஹ் அவரைச் சொர்க்கத்தின் வாசல்வரை கொண்டு செல்வான். அவர் சொர்க்கத்தின் வாசலில் நிற்கும்போது அவருக்காகச் சொர்க்கம் திறந்துகொள்ளும். உடனே அவர் அதிலுள்ள உல்லாசமான சுகங்களைக் காணும்போது அல்லாஹ் நாடிய நேரம்வரை மௌனமாக இருப்பார். பிறகு, "என் இறைவா! என்னைச் சொர்க்கத்திற்குள் அனுப்புவாயாக!" என்று கூறுவார். அப்போது அவரிடம் இறைவன், "இப்போது உனக்கு வழங்கப்பெற்றதைத் தவிர வேறெதையும் என்னிடம் கேட்கமாட்டாய் என்று கூறி என்னிடம் வாக்குறுதிகளையும் உறுதிமொழிகளையும் நீ வழங்கவில்லையா? மனிதா! உனக்குக் கேடுதான். உனது ஏமாற்று வேலைதான் என்ன!" என்று கேட்பான். அதற்கு அவர், "என் இறைவா! நான் உன் படைப்புகளிலேயே நற்கதியற்றவனாக ஆகிவிடக்கூடாது" என்று கூறி அல்லாஹ்விடம்

பிரார்த்தித்துக்கொண்டேயிருப்பார். இறுதியில் அவரைக் கண்டு இறைவன் சிரித்துவிடுவான். அவரைக் கண்டு இறைவன் சிரித்ததும் "சொர்க்கத்திற்குள் நுழைந்துகொள்!" என்று கூறிவிடுவான். சொர்க்கத்திற்குள் அவர் நுழைந்த பின், "நீ (விரும்பிய) இன்னதை ஆசைப்படலாம்" என்று அவரிடம் இறைவன் கூறுவான். அவ்வாறே அவர் ஆசைப்பட்டுத் தம் இறைவனிடம் கோருவார். அப்போது இறைவன் இன்னின்னதை ஆசைப்படு என்று அவருக்கு நினைவு படுத்துவான். இறுதியில் அவருடைய ஆசைகள் அனைத்தும் அடங்கிவிடும்போது, "இதுவும் உனக்குக் கிடைக்கும்; இதைப் போன்று இன்னொரு மடங்கும் உனக்குக் கிடைக்கும்" என்று இறைவன் கூறுவான்.

அறிவிப்பாளர் அதாஉ பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
(மேற்கண்ட ஹதீஸை அறிவித்த) அபூ ஹுரைரா (ரலி) அவர்களுடன் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களும் இருந்தார்கள். அன்னார் அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்த இந்த ஹதீஸிற்கு எந்த மறுப்பும் தெரிவிக்கவில்லை. ஆனால்,"இதுவும் உனக்குக் கிடைக்கும்; இதைப் போன்று இன்னொரு மடங்கும் உனக்குக் கிடைக்கும்' என்று இறைவன் அம்மனிதரிடம் கூறுவான்" என்று அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்தபோது தான், அபூசயீத் (ரலி) அவர்கள் (குறுக்கிட்டு) "இதுவும் இதைப் போன்று பத்துமடங்கும் உனக்குக் கிடைக்கும் என்று அல்லாஹ் கூறுவான்" என்றல்லவா ஹதீஸ் இருக்கிறது, அபூஹுரைரா!" என்றார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்கள், " "இதுவும் உனக்குக் கிடைக்கும்; இதைப் போன்று இன்னொரு மடங்கும் உனக்குக் கிடைக்கும்' என்றே நான் மனனமிட்டுள்ளேன்" என்று கூறினார்கள். அதற்கு அபூசயீத் (ரலி) அவர்கள், "நான் "இதுவும் இதைப்போன்று பத்துமடங்கும் உனக்குக் கிடைக்கும்' என்றுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து மனனமிட்டுள்ளேன் என்று அறுதியிட்டுக் கூறுகிறேன்" என்றார்கள்.
அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்: இந்த மனிதர்தாம் சொர்க்கத்தில் நுழையும் கடைசி மனிதராவார்.

300 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் பின்வருமாறு ஹதீஸ் துவங்குகிறது:
நபி (ஸல்) அவர்களிடம் மக்கள் "அல்லாஹ்வின் தூதரே, மறுமை நாளில் எங்கள் இறைவனை நாங்கள் காண்போமா?" என்று கேட்டார்கள். மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம் பெற்றுள்ளன.

301 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் இந்த ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் உங்களில் ஒருவரது குறைந்தபட்சத் தகுதி என்னவென்றால், "நீ (இன்னதை) ஆசைப்படு" என்று அவரிடம் (இறைவன்) சொல்வதாகும். அப்போது அவர் ஒவ்வொன்றாக ஆசைப்படுவார். (இறுதியில்) அவரிடம், "ஆசைப்பட்டு (முடித்து)விட்டாயா?" என்று இறைவன் கேட்பான். அதற்கு அவர், "ஆம்' என்று பதிலளிப்பார். அப்போது அவரிடம், "நீ ஆசைப்பட்டதும் அத்துடன் அதைப் போன்றதும் உனக்குக் கிடைக்கும்" என்று இறைவன் கூறுவான்.

302 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் மக்கள் சிலர் "அல்லாஹ்வின் தூதரே! மறுமை நாளில் நாங்கள் எங்கள் இறைவனைக் காண்போமா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம் (காண்பீர்கள்); மேகமே இல்லாத தெளிவான நண்பகல் நேரத்தில் சூரியனைப் பார்க்க நீங்கள் ஒருவரையொருவர் முண்டியடித்துக் கொண்டு சிரமப்படுவீர்களா? மேகமே இல்லாத தெளிவான பௌர்ணமி இரவில் முழு நிலவைக் காண்பதற்கு நீங்கள் ஒருவரையொருவர் முண்டியடித்துக்கொண்டு சிரமப்படுவீர்களா?" என்று கேட்டார்கள். மக்கள் "இல்லை, அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: இவ்விரண்டில் ஒன்றைப் பார்க்க நீங்கள் சிரமப்படாததைப் போன்றே மறுமை நாளில்- சுபிட்சமும் உயர்வும் மிக்க- அல்லாஹ்வைக் காணவும் நீங்கள் சிரமப்படமாட்டீர்கள். மறுமை நாள் ஏற்படும்போது அழைப்பாளர் ஒருவர் "ஒவ்வொரு சமுதாயத்தாரும் (உலகத்தில்) தாம் வழிபட்டுவந்தவர்களைப் பின்தொடர்ந்து செல்லட்டும்" என்று அழைப்புவிடுப்பார். அப்போது, அல்லாஹ்வை விடுத்து பொய்த் தெய்வங்களையும் சிலைகளையும் வழிபட்டுக்கொண்டிருந்தவர்கள் ஒருவர்கூட எஞ்சாமல் அனைவரும் நரக நெருப்பில் விழுவர். முடிவில் அல்லாஹ்வை வழிபட்டுக்(கொண்டு நன்மைகளும் புரிந்து)கொண்டிருந்த நல்லவர்களும் (அல்லாஹ்வை வழிபட்டுப் பாவங்களும் புரிந்து வந்த) பாவிகளும் வேதக்காரர்களில் மிஞ்சியவர்களும்தாம் எஞ்சியிருப்பர்.
அப்போது (வேதக்காரர்களான) யூதர்கள் அழைக்கப்படுவார்கள். அவர்களிடம், "நீங்கள் எதை வழிபட்டுவந்தீர்கள்?" என்று கேட்கப்படும். அவர்கள், "அல்லாஹ்வின் மைந்தர் உஸைர் அவர்களை நாங்கள் வழிபட்டுக்கொண்டிருந்தோம்" என்று பதிலளிப்பார்கள். அப்போது அவர்களிடம், "நீங்கள் பொய்யுரைக்கிறீர்கள். அல்லாஹ் தனக்கு எந்தத் துணைவியையும் குழந்தையையும் ஆக்கிக் கொள்ளவில்லை" என்று கூறப்படும். மேலும், "இப்போது உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், "எங்கள் இறைவா! எங்களுக்குத் தாகமாக உள்ளது. எங்களுக்கு (நீர்) புகட்டுவாயாக!" என்பார்கள். உடனே நீங்கள் தண்ணீர் உள்ள (அந்த) இடத்திற்குச் செல்லக் கூடாதா என (ஒரு திசையை)ச் சுட்டிக் காட்டப்படும். பிறகு (அத்திசையிலுள்ள) நரகத்தின் பக்கம் அவர்கள் கொண்டு செல்லப் படுவார்கள். அது கானலைப் போன்று காணப்படும். அதன் ஒரு பகுதி மற்றொரு பகுதியைச் சிதைத்துக்கொண்டிருக்கும். அப்படியே அவர்கள் அந்த நரக நெருப்பில் விழுவார்கள்.

பிறகு, கிறிஸ்தவர்கள் அழைக்கப்பட்டு, "நீங்கள் எதை வழிபட்டுக்கொண்டிருந்தீர்கள்?" என்று அவர்களிடம் கேட்கப்படும். அவர்கள், "நாங்கள் அல்லாஹ்வின் மைந்தர் மஸீஹை (ஈசாவை) வழிபட்டுக்கொண்டிருந்தோம்" என்று கூறுவர். அப்போது அவர்களிடம், "நீங்கள் பொய்யுரைக்கிறீர்கள். அல்லாஹ் தனக்கு எந்தத் துணைவியையும் குழந்தையையும் ஆக்கிக் கொள்ளவில்லை" என்று சொல்லப்படும். மேலும், அவர்களைப் பார்த்து, "உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், "எங்கள் இறைவா! எங்களுக்குத் தாகமாக உள்ளது. எங்களுக்கு (நீர்) புகட்டுவாயாக!" என்று (யூதர்கள் கூறியதைப் போன்றே) கூறுவார்கள். உடனே நீங்கள் தண்ணீர் உள்ள (அந்த) இடத்திற்குச் செல்லக் கூடாதா என (ஒரு திசையை)ச் சுட்டிக் காட்டப்படும். பிறகு (அந்தத் திசையிலுள்ள) நரகத்தின் பக்கம்

அவர்கள் கொண்டுசெல்லப்படுவார்கள். அது கானலைப் போன்று காட்சி தரும். அதன் ஒரு பகுதி மற்றொரு பகுதியைச் சிதைத்துக்கொண்டிருக்கும். அப்படியே அவர்கள் அந்த நரக நெருப்பில் விழுவார்கள்.
இறுதியில் அல்லாஹ்வை வழிபட்டு(க்கொண்டு நன்மைகளும் புரிந்து)வந்த நல்லோர் மற்றும் (அல்லாஹ்வையும் வழிபட்டுக்கொண்டு பாவங்களும் புரிந்துவந்த) தீயோர் மட்டும் எஞ்சியிருப்பர். அவர்களிடம் அகிலத்தாரின் இரட்சகன் வருவான். (அவனுடைய தன்மைகளை முன்பே அறிந்திருந்ததன் மூலம் தம் உள்ளத்தில்) அவனைப் பற்றி அவர்கள் எண்ணி வைத்திருந்த தோற்றங்களில் (அடையாளம் கண்டுகொள்வதற்கு) மிக நெருக்கமானதொரு தோற்றத்தில் (அவன் வருவான்). அப்போது "நீங்கள் எதை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்? ஒவ்வொரு சமுதாயத்தாரும் (உலகில்) தாம் வழிபட்டுக் கொண்டிருந்தவற்றைப் பின்தொடர்ந்து சென்றுகொண்டிருக்கின்றார்களே!" என்று அவன் கேட்பான். அவர்கள், "எங்கள் இறைவா! உலகத்தில் நாங்கள் (வாழ்க்கையின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக) இந்த மக்களிடம் அதிக அளவில் தேவையுள்ளவர்களாக இருந்தும், அவர்களுடன் உறவாடிக்கொண்டிராமல் அவர்களைப் பிரிந்திருந்தோம். (அப்படியிருக்க, இப்போதா அவர்களைப் பின்தொடர்வோம்?)" என்று பதிலளிப்பார்கள்.

அப்போது இறைவன், "நானே உங்கள் இறைவன்" என்று கூறுவான். (அவர்களால் உறுதிசெய்ய முடியாத தோற்றத்தில் அப்போது அவன் இருப்பதால்) அதற்கு அவர்கள், "உன்னிடமிருந்து அல்லாஹ்விடம் நாங்கள் பாதுகாப்புக்கோருகிறோம்; நாங்கள் அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்க மாட்டோம்" என்று இரண்டு தடவையோ அல்லது மூன்று தடவையோ கூறுவார்கள். (அந்தச் சோதனையான கட்டத்தில்) அவர்களில் சிலர் (சத்தியத்திலிருந்து) பிறழ்ந்துவிடும் அளவுக்குப் போய் விடுவார்கள். அப்போது இறைவன், "அவனை இனங்கண்டுகொள்ள உங்களுக்கும் அவனுக்குமிடையே ஏதேனும் அடையாளம் உண்டா?" என்று கேட்பான். அதற்கு அவர்கள் "ஆம் (இறைவனின் கணைக்கால் தான் அடையாளம்)" என்று கூறுவார்கள். உடனே (இறைவனின்) கணைக்காலைவிட்டும் (திரை) விலக்கப்படும். அப்போது (உலகத்தில்) மனப்பூர்வமமாக அல்லாஹ்வுக்குச் சிரம்பணிந்து கொண்டிருந்தவர் யாரோ அவர் சிரம்பணிய இறைவன் அனுமதிப்பான். தற்காப்புக்காகவோ பாராட்டுக்காகவோ சிரம்பணிந்து கொண்டிருந்தவருடைய முதுகை (நெடும் பலகையைப் போன்று) ஒரே நீட்டெலும்பாக அல்லாஹ் ஆக்கிவிடுவான். அவர் சிரம்பணிய முற்படும்போதெல்லாம் மல்லாந்து விழுந்துவிடுவார். (அவரால் சிரம் பணிய முடியாது.)
பின்னர் அவர்கள் தம் தலையை உயர்த்துவார்கள். அப்போது முதலில் அவர்கள் பார்த்த அதே தோற்றத்தில் இறைவன் காட்சியளித்து "நானே உங்கள் இறைவன்" என்று கூறுவான். அதற்கு அவர்கள் "நீயே எங்கள் இறைவன்" என்று கூறுவார்கள். பிறகு நரகத்தின் மீது பாலம் அமைக்கப்படும்; (பாவம் புரிந்த இறை நம்பிக்கையாளர்களுக்காகப்) பரிந்துரை செய்ய அனுமதி கிடைக்கும். அப்போது மக்கள், "அல்லாஹ்வே! காப்பாற்று; காப்பாற்று" என்று பிரார்த்திப்பார்கள்.

-(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மேற்கண்டவாறு கூறிக்கொண்டிருந்தபோது அவர்களிடம்) "அல்லாஹ்வின் தூதரே! பாலம் என்றால் என்ன? (அது எதைக் குறிக்கிறது?)"

என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "(கால்கள்) வழுக்கிவிடக்கூடிய ஓர் இடமாகும். அ(ந்தப் பாலத்)தில் நஜ்துப் பகுதியில் முளைக்கும் "சஅதான்' எனப்படும் ((முட்)செடியின் முற்களைப் போன்ற கொக்கிகள் இருக்கும்" என்று பதிலளித்தார்கள்.-
இறைநம்பிக்கையாளர்கள் கண் சிமிட்டும் நேரத்தில் மின்னல், காற்று, பறவை, உயர் ரகக் குதிரைகள் மற்றும் ஒட்டகங்கள் ஆகியவற்றைப் போன்று (விரைவாக அந்தப் பாலத்தைக்) கடந்துவிடுவார்கள். (அப்போது அவர்கள் மூன்று வகையினராக இருப்பார்கள்:) அவர்களில் பாதுகாப்பாகத் தப்பித்துக்கொள்வோரும் உண்டு. கீறிக் காயப்படுத்தப்பட்டுத் தப்புவோரும் உண்டு. பின்புறத்திலிருந்து தள்ளப்பட்டு நரக நெருப்பில் விழுவோரும் உண்டு. இறுதியில் இறைநம்பிக்கையாளர்கள் (அந்தப் பாலத்தைக் கடந்து) நரக நெருப்பிலிருந்து தப்பிவிடுவார்கள்.

என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! மறுமை நாளில் நரகத்தில் கிடக்கும் தம் சகோதரர்களின் நன்மையை வலியுறுத்தி இறைவனிடம் மிகவும் மன்றாடி வேண்டுபவர்கள் இறை நம்பிக்கையாளர்களைவிட வேறெவருமில்லை. அவர்கள் (பின்வருமாறு) கூறுவார்கள்: எங்கள் இறைவா! இவர்கள் எங்களுடன்தான் நோன்பு நோற்றார்கள்; தொழுதார்கள்; ஹஜ் செய்தார்கள் (எனவே இவர்களை நீ நரகத்திலிருந்து விடுதலை செய்வாயாக!). அப்போது அவர்களிடம், "நீங்கள் (சென்று) உங்களுக்குத் தெரிந்தவர்களை (நரகத்திலிருந்து) வெளியேற்றுங்கள்" என்று கூறப்படும். மேலும், (நரகத்திலுள்ள அவர்களை இவர்கள் அடையாளம் காண்பதற்கு வசதியாக) அவர்களது உடலைத் தீண்டக் கூடாதென நரகத்திற்குத் தடை விதிக்கப்படும். உடனே அவர்கள் (நரகத்திற்குச் சென்று) ஏராளமான மக்களை வெளியே கொண்டுவருவார்கள். அப்போது (நரகத்தில் இருந்த) அவர்களில் சிலருடைய கணைக்கால்களில் பாதிவரையும், (இன்னும் சிலருடைய) முழங்கால்கள்வரையும் நரக நெருப்பு தீண்டியிருக்கும். பிறகு, "எங்கள் இறைவா! நீ யாரை வெளியேற்றுமாறு கூறினாயோ அவர்களில் ஒருவர்கூட நரகத்தில் எஞ்சவில்லை (எல்லாரையும் நாங்கள் வெளியேற்றிவிட்டோம்)" என்று கூறுவார்கள்.
அப்போது இறைவன் "நீங்கள் திரும்பிச் சென்று எவரது உள்ளத்தில் ஒரு பொற்காசு அளவு நன்மை இருக்கிறதோ அவரை வெளியேற்றுங்கள்" என்று கூறுவான். அவ்வாறே அவர்களும் (இன்னும்) ஏராளமான மக்களை வெளியேற்றிவிட்டு (வந்து), "எங்கள் இறைவா! நீ உத்தரவிட்ட யாரையும் அதில் நாங்கள் விட்டு வைக்கவில்லை (எல்லாரையும் வெளியேற்றி விட்டோம்)" என்று கூறுவார்கள். பிறகு இறைவன், "நீங்கள் திரும்பிச்சென்று எவரது உள்ளத்தில் அரைப் பொற்காசு அளவு நன்மை இருக்கிறதோ அவரையும் (நரகத்திலிருந்து) வெளியேற்றிவிடுங்கள்" என்பான். அவர்களும் ஏராளமான மக்களை வெளியே கொண்டு வருவார்கள். பின்னர் "எங்கள் இறைவா, நீ கட்டளையிட்ட ஒருவரையும் நாங்கள் விட்டு வைக்கவில்லை" என்று கூறுவார்கள். பின்பும் இறைவன் "நீங்கள் திரும்பிச்சென்று எவரது உள்ளத்தில் அணுவளவு நன்மை இருக்கிறதோ அவரை வெளியேற்றுங்கள்" என்பான். அவ்வாறே அவர்கள் (சென்று) அதிகமான மக்களை வெளியேற்றிவிட்டு (வந்து), "எங்கள் இறைவா! நரகத்தில் எந்த நன்மையையும் நாங்கள் விட்டுவைக்கவில்லை" என்று கூறுவார்கள்.

-அறிவிப்பாளர் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் கூறும் இந்த ஹதீஸை நீங்கள் நம்பாவிட்டால், "திண்ணமாக அல்லாஹ் (எவருக்கும்) அணுவளவும் அநீதி இழைக்கமாட்டான். அணுவளவு நன்மை இருந்தாலும் அதை அவன் பன்மடங்காக்கி (வழங்குவதுடன்) தன்னிடமிருந்து மாபெரும் சன்மானத்தையும் வழங்குவான்" எனும் (4:40ஆவது) இறைவசனத்தை நீங்கள் விரும்பினால் ஓதிக்கொள்ளுங்கள்.-
பிறகு வலிவும் மாண்புமிக்க அல்லாஹ், "வானவர்கள் பரிந்துரைத்துவிட்டார்கள்; இறைத்தூதர்களும் பரிந்துரைத்துவிட்டார்கள்; இறைநம்பிக்கையாளர்களும் பரிந்துரைத்து விட்டார்கள். இப்போது கருணையாளர்களுக்கெல்லாம் கருணையாளன் மட்டுமே எஞ்சியிருக்கிறான்" என்று கூறிவிட்டு, நரகத்திலிருந்து ஒரு கைப்பிடி அளவிலான மக்களை அள்ளியெடுத்து, அறவே எந்த நன்மையும் செய்திராத ஒரு கூட்டத்தை நரகத்திலிருந்து வெளியேற்றுவான். அவர்கள் கரிக்கட்டை போன்று மாறியிருப்பார்கள். எனவே, அவர்களைச் சொர்க்கத்தின் நுழைவாயில்களில் உள்ள ஒரு நதியில் போடுவான். -அதற்கு "ஜீவநதி' (நஹ்ருல் ஹயாத்) என்று பெயர்.- உடனே அவர்கள் சேற்று வெள்ளத்தில் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று (புதுப் பொலிவுடன்) வெளியேறுவார்கள். நீங்கள் விதைப் பயிரைப் பார்த்ததில்லையா? பாறையோரங்களில் அல்லது மரங்களுக்கு அருகில் அவை வளர்கின்றன. அவற்றில் வெயில் படுமிடத்தில் இருப்பவை மஞ்சளாகவும் பச்சையாகவும் இருக்கும். (வெயில் படாமல்) நிழலில் இருப்பவை (வெளிறிப்போய்) வெள்ளை நிறத்தில் இருக்கும் அல்லவா?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் கிராமப் புறங்களில் (கால்நடைகளை) மேய்த்துக் கொண்டிருந்தீர்கள் போலும்" என்றார்கள்.

(தொடர்ந்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஆக, அவர்கள் (அந் நதியிலிருந்து) முத்துகளைப் போன்று (ஒளிர்ந்தவர்களாக) வெளியேறுவார்கள். அவர்களது கழுத்தில் ("நரக விடுதலை பெற்றோர்' எனும்) முத்திரை இருக்கும். (அதை வைத்து) அவர்களைச் சொர்க்கவாசிகள் அடையாளம் கண்டு கொள்வார்கள். "இவர்கள் அல்லாஹ்வால் (நரகத்திலிருந்து) விடுதலை செய்யப்பட்டவர்கள்; (உலகில்) எந்த நற்செயலும் புரிந்திராமலும் எந்த நன்மையும் செய்துவைத்திராமலும் இருந்த இவர்களை அல்லாஹ்வே (தனது தனிப்பெரும் கருணையால்) சொர்க்கத்திற்கு அனுப்பினான்" என்று பேசிக்கொள்வார்கள்.

பிறகு (அவர்களிடம்) இறைவன், "சொர்க்கத்திற்குள் செல்லுங்கள்; அங்கு எதையெல்லாம் நீங்கள் காண்கிறீர்களோ அது உங்களுக்கே உரியது" என்று கூறுவான். அதற்கு அவர்கள், "எங்கள் இறைவா! அகிலத்தாரில் யாருக்கும் வழங்காத (பாக்கியத்)தை எங்களுக்கு நீ வழங்கிவிட்டாய்" என்று (நன்றியுடன்) கூறுவார்கள். அதற்கு இறைவன், "உங்களுக்கு இதைவிடச் சிறந்த வேறொன்று உள்ளது" என்று கூறுவான். அதற்கு அவர்கள், "எங்கள் இறைவா! இதைவிடச் சிறந்த அந்த ஒன்று எது?" என்று கேட்பார்கள். அதற்கு, "எனது திருப்தி(தான் அது). இனி ஒருபோதும் உங்கள் மீது நான் கோபம் கொள்ளமாட்டேன்" என்பான் இறைவன்.

முஸ்லிம் (பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான்) கூறுகிறேன்:
நான், பரிந்துரை (ஷஃபாஅத்) தொடர்பான இந்த ஹதீஸை ஈசா பின் ஹம்மாத் ஸுஃக்பதல் மிஸ்ரீ (ரஹ்) அவர்களிடம் வாசித்துக்காட்டி, "இந்த ஹதீஸை லைஸ் பின் சஅத் (ரஹ்) அவர்களிடமிருந்து நீங்கள் செவியுற்றதாக உங்களிடமிருந்து நான் அறிவிக்கலாமா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஆம் (அறிவியுங்கள்)' என்றார்கள்.
மேலும் "இந்த ஹதீஸைத் தங்களுக்கு லைஸ் பின் சஅத் (ரஹ்) அவர்கள் காலித் பின் யஸீத் (ரஹ்) அவர்களிடமிருந்தும், காலித் அவர்கள் சயீத் பின் அபீஹிலால் (ரஹ்) அவர்களிடமிருந்தும், சயீத் அவர்கள் ஸைத் பின் அஸ்லம் (ரஹ்) அவர்களிடமிருந்தும், ஸைத் அவர்கள் அதாஉ பின் யசார் (ரஹ்) அவர்களிடமிருந்தும், அதாஉ அவர்கள் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தும், அபூசயீத் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்தும் அறிவித்தார்களா?" என்றும் நான் ஈசா பின் ஹம்மாத் அவர்களிடம் கேட்டேன்.
அதாவது அபூசயீத் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்: நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே, நாங்கள் எங்கள் இறைவனைக் காண்போமா?' என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "(மேகமூட்டமில்லாத) தெளிவான பகல் நேரத்தில் சூரியனைப் பார்க்க நீங்கள் முண்டியடித்துக்கொண்டு சிரமப்படுவீர்களா?' என்று கேட்டார்கள்... என்று தொடங்கும் மேற்கண்ட ஹதீஸை முழுமையாக அறிவித்தார்கள்.
அதில், "(உலகில்) எந்த நற்செயலும் புரிந்திராமலும், எந்த நன்மையும் செய்துவைத்திராமலும் இருந்த இவர்களை அல்லாஹ்வே (தனது தனிப்பெரும் கருணையால்) சொர்க்கத்திற்கு அனுப்பினான்" எனும் வாசகத்திற்குப் பின்னால் "நீங்கள் காணக்கூடிய இதுவும் இதைப் போன்று இன்னொரு மடங்கும் உங்களுக்கே உரியது என அவர்களிடம் கூறப்படும்" எனும் வாசகத்தை அதிகப்படியாகவும் அறிவித்துள்ளார்கள்.

மேலும், அபூசயீத் (ரலி) அவர்கள் கூறினார்கள்: "அந்தப் பாலம் முடியைவிட மெலிதானது; வாளைவிட கூர்மையானது' எனும் செய்தி எனக்கு எட்டியது.
லைஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "(நரகத்திலிருந்து விடுதலை பெற்று சொர்க்கம் சென்ற) மக்கள், "எங்கள் இறைவா! அகிலத்தாரில் யாருக்கும் நீ வழங்காத (பாக்கியத்)தை எங்களுக்கு நீ வழங்கிவிட்டாய்' என்று கூறுவார்கள் எனும் வாசகமும் அதற்குப் பிறகு வருபவையும் இடம்பெறவில்லை.
நான் அறிவித்த இவை அனைத்தையும் ஈசா பின் ஹம்மாத் (ரஹ்) அவர்கள் ஒப்புக் கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

303 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் வந்துள்ள வாசகங்களில் சிறிது கூடுதல் குறைவு காணப்படுகிறது.

**பாடம் : 82 (மறுமையில்) பரிந்துரை (ஷஃபாஅத்) உண்டு என்பதற்கான சான்றும், ஓரிறைக் கோட்பாட்டை நம்பினோர் (அனைவரும்) நரகத்திலிருந்து வெளியேற்றப்படுவதும்.**

304 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மறுமையில் விசாரணைகள் முடிந்த பின்) அல்லாஹ் சொர்க்கவாசிகளைச் சொர்க்கத்திற்கு அனுப்புவான். தான் நாடும் சிலரைத் தனது (தனிப் பெரும்) கருணையால் அவன் சொர்க்கத்திற்கு அனுப்புவான். நரகவாசிகளை நரகத்தில் நுழையவைப்பான். பிறகு (இறைநம்பிக்கையாளர்களிடம்), "பாருங்கள்; யாருடைய உள்ளத்தில் கடுகளவு இறைநம்பிக்கை (ஈமான்) உள்ளதோ அவரை (நரகத்திலிருந்து) வெளியேற்றுங்கள்" என்று கூறுவான். அப்போது கரிந்து கரிக்கட்டையாகிவிட்ட நிலையில் நரகவாசிகள் வெளியேற்றப் படுவார்கள். பின்னர் அவர்கள் "நஹ்ருல் ஹயாத்' (ஜீவ) நதியில் அல்லது "நஹ்ருல் ஹயா' (மழை) நதியில் போடப்படுவார்கள். உடனே அவர்கள் சேற்று வெள்ளத்தில் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று (புதுப் பொலிவுடன்) நிறம் மாறிவிடுவார்கள். அந்த வித்து(விலிருந்து வரும் புற்பூண்டுகள்) மஞ்சள் நிறத்தில் (பார்ப்பதற்கு அழகாகவும், காற்றில்) அசைந்தாடக் கூடியதாக(வும்) எவ்வாறு முளைக்கின்றது என்பதை நீங்கள் கண்டதில்லையா?
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

305 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அவர்கள் நஹ்ருல் ஹயாத் (ஜீவ) நதியில் போடப்படுவார்கள்' என்று ஐயப்பாடின்றி இடம்பெற்றுள்ளது.
காலித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் வெள்ளத்தின் ஓரத்தில் குப்பைக் கூளங்கள் (மத்தியிலுள்ள வித்துகள்) முளைப்பதைப் போன்று' என்று இடம்பெற்றுள்ளது.
உஹைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "களிமண் வெள்ளத்தில்' அல்லது "சேற்று வெள்ளத்தில்' மிதந்துவரும் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று' என்று (ஐயப்பாட்டுடன்) இடம்பெற்றுள்ளது.

306 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகத்திற்கே உரியவர்களான நரகவாசிகள் நரகத்தில் இறக்கவுமாட்டார்கள்; வாழவு மாட்டார்கள். ஆனால், "தம் பாவங்களால்' அல்லது "தம் குற்றங்களால்' நரக நெருப்பிற்கு ஆளான மக்களை உடனே இறைவன் இறக்கச் செய்துவிடுவான். அவர்கள் (எரிந்து) கரிக் கட்டையாக மாறிவிடும் போது (அவர்களுக்காகப்) பரிந்துரை செய்ய (சொர்க்கவாசிகளான இறைநம்பிக்கையாளர்களுக்கு) அனுமதி வழங்கப்படும். உடனே அவர்கள் தனித் தனிக் கூட்டங்களாகக் கொண்டுவரப்பட்டு, சொர்க்க நதிகளின் படுகையில் பரப்பி வைக்கப்படுவர். பிறகு (சொர்க்கத்திலிருப்பவர்களிடம்) "சொர்க்கவாசிகளே! அவர்கள்மீது தண்ணீரை ஊற்றுங்கள்" என்று கூறப்படும். (அவ்வாறே ஊற்றப்படும்.) உடனே அவர்கள் வெள்ளத்தில் மிதந்து வரும் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று (புதுப் பொலிவுடன்) மாறி விடுவார்கள்.

இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியபோது மக்களில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கிராமப்புறத்தில் இருந்திருக்கிறார்கள் போலும்" என்று கூறினார்.

307 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "வெள்ளத்தில் மிதந்துவரும் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று' என்பது வரைதான் இடம்பெற்றுள்ளது. அதற்குப் பிறகுள்ள தகவல் இடம்பெறவில்லை.

## பாடம் : 83 நரகத்திலிருந்து இறுதியாக வெளியேறுபவர்.

308 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சொர்க்கவாசிகள் மற்றும் நரகவாசிகளின் நிலை குறித்துப் பின்வருமாறு) கூறினார்கள்:
நரகவாசிகளில் இறுதியாக நரகத்திலிருந்து வெளியேறுபவர் யார் என்பதையும், சொர்க்க வாசிகளில் இறுதியாகச் சொர்க்கத்தில் நுழைபவர் யார் என்பதையும் நான் நன்கறிவேன். நரகத்திலிருந்து தவழ்ந்தபடி வெளியேறுகின்ற ஒரு மனிதரே அவர். அவரிடம் அல்லாஹ், "நீ போய் சொர்க்கத்தில் நுழைந்துகொள்" என்பான். அவர் சொர்க்கத்திற்குச் செல்வார். அது நிரம்பியிருப்பதைப் போன்று அவருக்குத் தோன்றும். உடனே அவர் திரும்பிவந்து, "என் இறைவா! அது நிரம்பியிருக்கக் கண்டேன்" என்று கூறுவார். அதற்கு அல்லாஹ், "நீ சென்று சொர்க்கத்தில் நுழைந்துகொள்!" என்று (மீண்டும்) சொல்வான். அவர் சொர்க்கத்திற்குச் செல்வார். அது நிரம்பியிருப்பதைப் போன்று அவருக்குத் தோன்றும். ஆகவே, அவர் திரும்பிவந்து, "என் இறைவா! அது நிரம்பியிருக்கக் கண்டேன்" என்று கூறுவார். அதற்கு அவன், "நீ சென்று சொர்க்கத்தில் நுழைந்துகொள். ஏனெனில், "உலகம் மற்றும் அதைப் போன்று பத்து மடங்கு' அல்லது "உலகத்தைப் போன்று பத்து மடங்கு' (இடம் சொர்க்கத்தில்) உனக்கு உண்டு" என்று சொல்வான். அதற்கு அவர், "அரசனாகிய நீ என்னைப் "பரிகாசம் செய்கிறாயா?' அல்லது "என்னை நகைக்கின்றாயா?' என்று கேட்பார்.
(இதைக் கூறும்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்ததை நான் பார்த்தேன்.
அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார்: இவரே சொர்க்கவாசிகளில் குறைந்த அந்தஸ்து உடையவர் ஆவார் என்று கூறப்பட்டுவந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

309 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நரகவாசிகளின் நிலை குறித்துப் பின்வருமாறு) கூறினார்கள்: நரகவாசிகளில் இறுதியாக நரகத்திலிருந்து வெளியேறுபவர் யார் என்பதை நான் நன்கறிவேன். நரகத்திலிருந்து தவழ்ந்தபடி வெளியேறுகின்ற ஒரு மனிதரே அவர். அவரிடம், "நீ சென்று சொர்க்கத்தில் நுழைந்து கொள்" என்று கூறப்படும். அவர் சென்று சொர்க்கத்தில் நுழைவார். அங்கு மக்கள் தத்தமது இருப்பிடங்களைப் பிடித்துக் கொண்டிருப்பதை அவர் காண்பார். அவரிடம், "நீ கடந்து வந்த காலத்தை நினைவுகூருகிறாயா?" என்று கேட்கப்படும். அதற்கு அவர், "ஆம்' என்பார். "நீ (இன்ன

இன்னதை) ஆசைப்படலாம்" என்று கூறப்படும். அவர் அவ்வாறே ஆசைப்படுவார். அவரிடம், "நீ ஆசைப்பட்டதும் உனக்குக் கிடைக்கும்; உலகத்தைப் போன்று பத்து மடங்கும் உனக்குக் கிடைக்கும்" என்று கூறப்படும். உடனே அவர், "அரசனாகிய நீ என்னைப் பரிகாசம் செய்கிறாயா?" என்று கேட்பார்.
(இதைக் கூறும்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்ததை நான் பார்த்தேன்.

310 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நரகத்திலிருந்து விடுதலை பெறும் மனிதர் குறித்துப் பின்வருமாறு) கூறினார்கள்:
(நரகத்திலிருந்து வெளியேறி) இறுதியாக சொர்க்கத்தில் நுழையும் ஒரு மனிதர் சில சமயம் நடந்து வருவார். சில சமயம் தவழ்ந்தபடி வருவார். சில சமயம் நரக நெருப்பு அவரது முகத்தைத் தாக்கிக் கரித்தும்விடும். இந்நிலையில் அவர் நரகத்தைத் தாண்டியதும் அதைத் திரும்பிப் பார்த்து, "உன்னிடமிருந்து என்னைக் காப்பாற்றிய (என் இறை)வன் சுபிட்சமிக்கவன்; முன்னோர் பின்னோர் யாருக்கும் வழங்காத (பாக்கியத்)தை அல்லாஹ் எனக்கு வழங்கினான்" என்று கூ(றி இறைவனைப் போற்)றுவார். அப்போது அவருக்கு ஒரு மரம் காட்டப்படும். உடனே அவர், "என் இறைவா! அந்த மரத்தின் அருகே என்னைக் கொண்டு செல்வாயாக! அதன் நிழலை நான் பெற்றுக் கொள்வேன்; அதன் (கீழே பாயும்) நீரைப் பருகிக்கொள்வேன்" என்று கூறுவார். அதற்கு அல்லாஹ், "மனிதா! அதை நான் உனக்கு வழங்கினால் வேறொன்றை நீ என்னிடம் கேட்கக்கூடுமல்லவா" என்று கூறுவான். அதற்கு அவர், "இல்லை; இறைவா! வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்" என்று கூறி, வாக்குறுதி அளிப்பார். அவரிடம் பொறுமை இல்லை என்பதைக் காணும் அவருடைய இறைவன், அவருக்கு வாய்ப்பளித்து, அவரை அந்த மரத்தின் அருகே கொண்டுசெல்வான். அங்கு அவர் அந்த மரத்தின் நிழலைப் பெறுவார்; அதன் நீரையும் பருகிக்கொள்வார்.
பிறகு அவருக்கு மற்றொரு மரம் காட்டப்படும். அது முதலில் காட்டப்பட்ட மரத்தைவிட மிகவும் அழகாய் இருக்கும். (அதைக் கண்ட) உடன் அவர், "என் இறைவா! இதற்கருகே என்னைக் கொண்டு செல்வாயாக! நான் அதன் நீரைப் பருகி அதன் நிழலை அடைந்து கொள்வேன்! இதைத் தவிர வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்" என்று கூறுவார். அதற்கு இறைவன், "மனிதா! வேறெதையும் கேட்கமாட்டேன் என்று என்னிடம் நீ (முன்பு) வாக்குறுதி அளிக்கவில்லையா? அதன் அருகில் உன்னை நான் கொண்டுசென்றால், வேறொன்றை என்னிடம் நீ கேட்கக்கூடுமல்லவா" என்பான். உடனே அவர், வேறெதையும் கேட்கமாட்டேன் என்று வாக்குறுதி அளிப்பார். இறைவனும் அவரிடம் பொறுமை இல்லை என்பதைக் கண்டு அவருக்கு வாய்ப்பளித்து, அவரை அதன் அருகே கொண்டுசெல்வான். அவர் அதன் நிழலை அனுபவித்துக் கொண்டு அதன் (கீழே ஓடும்) நீரையும் அருந்துவார்.
பிறகு சொர்க்க வாசல் அருகே உள்ள மரம் அவருக்குக் காட்டப்படும். அது முதலிரண்டு மரங்களை விடவும் ரம்மியமானதாய் இருக்கும். உடனே அவர், "என் இறைவா! அந்த மரத்தின் அருகே என்னைக் கொண்டுசெல்வாயாக! நான் அதன் நிழலைப் பெறுவேன்; அதன் நீரைப் பருகிக்கொள்வேன்; இதைத் தவிர வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்" என்று கூறுவார். அதற்கு இறைவன், "மனிதா! வேறெதையும் நான் கேட்கமாட்டேன் என்று

(முன்பு) என்னிடம் நீ வாக்குறுதி அளிக்கவில்லையா?" என்று கேட்பான். அதற்கு அவர், "ஆம்; என் இறைவா! இந்தத் தடவை (மட்டும்); இனி, இதன்றி வேறெதையும் உன்னிடம் கேட்கமாட்டேன்" என்று கூறுவார். இறைவனும் அவரிடம் பொறுமை இல்லை என்பதைக் கண்டு அவருக்கு வாய்ப்பளித்து, அவரை அதன் அருகே கொண்டுசெல்வான். அவர் அந்த மரத்தை நெருங்கும்போது சொர்க்கவாசிகளின் குரல் அவருக்குக் கேட்கும். உடனே அவர், "என் இறைவா! சொர்க்கத்திற்குள் என்னை அனுப்புவாயாக!" என்பார். அதற்கு இறைவன், "மனிதா! ஏன் என்னிடம் கோருவதை நிறுத்திக்கொண்டாய்? உலகத்தையும் அதைப் போன்ற இன்னொரு மடங்கையும் உனக்கு நான் வழங்கினால் உனக்கு மகிழ்ச்சி ஏற்படும்தானே?" என்று கேட்பான். அதற்கு அவர், "என் இறைவா! அகிலத்தின் அதிபதியே! நீயே என்னைப் பரிகாசம் செய்கிறாயா?" என்று கேட்பார்.

(இதை அறிவித்தபோது) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் சிரித்தார்கள். பிறகு "நான் ஏன் சிரித்தேன் என்று என்னிடம் நீங்கள் கேட்கமாட்டீர்களா?" என்று கேட்டார்கள். அப்போது மக்கள் "ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "இவ்வாறுதான் (இதை அறிவிக்கையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்தார்கள். அப்போது நபித் தோழர்கள், "ஏன் சிரித்தீர்கள், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள் அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அகிலத்தின் அதிபதியாகிய நீயே என்னைப் பரிகாசம் செய்கிறாயா?" என்று அந்த மனிதர் கூறும்போது அதைக் கேட்டு இறைவன் சிரிப்பான். (அதனால் தான் நான் சிரித்தேன்.) மேலும், "நான் உன்னைப் பரிகாசம் செய்யவில்லை. மாறாக, நாடியதைச் செய்கின்ற ஆற்றல் உள்ளவன் நான்" என இறைவன் கூறுவான் என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

## பாடம் : 84 சொர்க்கவாசிகளில் மிகக் குறைந்த தரம் உடையவர்.

311 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

(சொர்க்கவாசிகளில் மிகக் குறைந்த தரமுடைய மனிதர் பற்றி) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:

சொர்க்கவாசிகளில் மிகக் குறைந்த தரமுடைய மனிதர் யாரெனில், அவரது முகத்தை அல்லாஹ் நரகத்திலிருந்து சொர்க்கத்தின் பக்கம் திருப்பிவிடுவான்; மேலும், நிழல் தரும் மரம் ஒன்றை அவருக்குக் காட்டுவான். அப்போது அவர், "என் இறைவா! இந்த மரத்தின் அருகே என்னைக் கொண்டுசெல்வாயாக! நான் அதன் நிழலில் இருக்க வேண்டும்" என்பார்.

-பிறகு இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களின் (மேற்கண்ட) அறிவிப்பில் உள்ளவாறே காணப்படுகிறது.-

ஆனால், "மனிதா! ஏன் என்னிடம் கோருவதை நிறுத்திக்கொண்டாய்?" என்பதிலிருந்து இறுதிவரையுள்ள மற்ற தகவல்கள் இதில் இடம்பெறவில்லை. "இன்னின்னதை நீ கேட்கலாம்!"என்று அவருக்கு அல்லாஹ் நினைவூட்டுவான். (அவ்வாறே அவர் ஆசைப்பட்டுக் கேட்பார்.) இறுதியில் ஆசைகள் அனைத்தும் அடங்கிவிடும்போது, "இதுவும் உனக்குக் கிடைக்கும்; இதைப் போன்று இன்னும் பத்து மடங்கும் உனக்குக் கிடைக்கும்' என்று இறைவன் கூறுவான்" என்று அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

பிறகு அந்த மனிதர் (சொர்க்கத்திலுள்ள) தமது இல்லத்திற்குள் நுழைவார். அப்போது அவருடைய "ஹூருல் ஈன்' எனும் (கண்ணழகுக் கன்னியரான) சொர்க்கத் துணைவியர் இருவர் அவரிடம் வந்து, "எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அவன்தான் எங்களுக்காக உங்களையும், உங்களுக்காக எங்களையும் உயிர்ப்பித்தான்"என்று கூறுவார்கள். அப்போது அந்த மனிதர் "எனக்கு வழங்கப்பட்டதைப் போன்று வேறு யாருக்கும் வழங்கப் படவில்லை" என்று (மகிழ்ந்து) கூறுவார்.
இதை நுஅமான் பின் அபீஅய்யாஷ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

312 ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது நின்றவாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக(பின்வருமாறு) மக்களுக்கு அறிவித்தார்கள்: மூசா (அலை) அவர்கள் இறைவனிடம், "சொர்க்கவாசிகளில் மிகக் குறைந்த தரம் உடையவர் யார்?" என்று கேட்டார்கள். அதற்கு இறைவன் கூறினான்: சொர்க்கவாசிகள் சொர்க்கத்திற்குள் நுழைந்த பிறகு ஒரு மனிதர் வருவார். அவரிடம் "நீ (சென்று) சொர்க்கத்திற்குள் நுழைந்துகொள்!" என்று கூறப்படும். அதற்கு அவர், "இறைவா! எப்படி (நான் நுழைவேன்)? மக்கள் அனைவரும் அவரவர் இருப்பிடங்களைப் பிடித்துக்கொண்டு தமக்குக் கிடைத்ததை எடுத்துக்கொண்டுவிட்டார்களே?" என்று கூறுவார். அவரிடம், "உலக அரசர்களில் ஒருவரது ஆட்சிக்குட்பட்ட பகுதியைப் போன்று உனக்குக் கிடைத்தால் திருப்திதானே?" என்று கேட்கப்படும். அதற்கு அவர் "திருப்தியடைவேன், இறைவா!' என்பார். அப்போது இறைவன், "இதுவும் உனக்குக் கிடைக்கும்; இதைப் போன்று இன்னொரு மடங்கும், இதைப் போன்று இன்னொரு மடங்கும், இதைப் போன்று இன்னொரு மடங்கும், இதைப் போன்று இன்னொரு மடங்கும் உனக்குக் கிடைக்கும்" என்று (நான்கு மடங்கைக்) குறிப்பிடுவான். ஐந்தாம் மடங்கு பற்றிக் கூறும்போது, அவர், "திருப்தியடைந்துவிட்டேன், இறைவா!" என்பார்.
உடனே இறைவன், "இதுவும் உனக்குக் கிடைக்கும்; இதைப் போன்று பத்து மடங்கும் உனக்குக் கிடைக்கும். உன் மனம் விரும்புகின்ற, உன் பார்வை ரசிக்கின்ற அனைத்தும் உனக்குக் கிடைக்கும்" என்பான். அப்போது அவர், "திருப்தியடைந்தேன், இறைவா!" என்று கூறுவார்.
பின்னர் மூசா (அலை) அவர்கள், "இறைவா! சொர்க்கத்தில் மிக உயர்ந்த தரமுடையவர் யார்?" என்று கேட்டார்கள். அதற்கு இறைவன், "அவர்களை நானே தேர்ந்தெடுத்தேன். அவர்களுக்குரிய தரங்களையும் நானே நேரடியாகத் தீர்மானித்தேன். அவற்றின் மீது நான் முத்திரையும் வைத்துவிட்டேன். எனவே, (அவர்களின் தரத்தை) எந்தக் கண்ணும் பார்த்திராது; எந்தக் காதும் கேட்டிராது. எந்த மனிதனின் உள்ளத்திலும் தோன்றியிராது" என்றான்.
இதை மெய்ப்பிக்கும் வகையில் அல்லாஹ்வின் வேதத்தில், "அவர்கள் செய்த (நற்)செயல்களுக்குரிய பிரதிபலனாக அவர்களுக்கென மறைத்துவைக்கப்பட்டுள்ள கண் குளிர்ச்சியை (மறுமையின் பேரின்பத்தை) எந்த ஓர் ஆன்மாவும் அறிந்து கொள்ள முடியாது" (32:17) என்று இடம் பெற்றுள்ளது.
இது, அறிவிப்பாளர் இப்னு அப்ஜர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்ன செய்தி (மர்ஃபூஉ) என்றும், முதர்ரிஃப் பின் தரீஃப் (ரஹ்) அவர்களது

அறிவிப்பில் முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் தாமே சொன்ன செய்தி (மவ்கூஃப்) என்றும் இடம்பெற்றுள்ளது.
இந்த ஹதீஸ் பல அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

313 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "மூசா (அலை) அவர்கள் அல்லாஹ்விடம் சொர்க்கவாசிகளில் மிகத் தாழ்ந்த தரமுடைய மனிதரைப் பற்றிக் கேட்டார்கள்" என்று முஃகீரா (ரலி) அவர்கள் கூறியதாக ஹதீஸ் தொடங்குகிறது.

314 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சொர்க்கவாசிகள் மற்றும் நரகவாசிகளின் நிலை குறித்துப் பின்வருமாறு) கூறினார்கள்:
சொர்க்கவாசிகளில் இறுதியாகச் சொர்க்கத்தில் நுழைபவர் யார் என்பதையும், நரகவாசிகளில் இறுதியாக நரகத்திலிருந்து வெளியேறுபவர் யார் என்பதையும் நான் நன்கறிவேன். மறுமை நாளில் ஒரு மனிதர் கொண்டுவரப்படுவார். அப்போது, "இவர் புரிந்த சிறு பாவங்களை இவருக்கு எடுத்துக் காட்டுங்கள்! இவர் புரிந்த பெரும்பாவங்களை இவரைவிட்டு நீக்கிவிடுங்கள்" என்று கூறப்படும். அவ்வாறே அவருக்கு அவர் புரிந்த சிறுபாவங்கள் எடுத்துக் காட்டப்பட்டு, "நீ இன்ன இன்ன நாளில் இன்ன இன்ன (பாவத்)தைச் செய்துள்ளாய்; இன்ன இன்ன நாளில் இன்ன இன்ன பாவத்தைச் செய்துள்ளாய்' என்று கூறப்படும். அவரும் "ஆம்' என்று (ஒப்புதல்) கூறுவார்; அவரால் எதையும் மறுக்க முடியாது. தாம் புரிந்துவிட்டிருக்கும் பெரும் பாவங்கள் தம்மிடம் எடுத்துக் காட்டப்பட்டுவிடுமோ என்றும் அஞ்சிக்கொண்டிருப்பார். இந்நிலையில் அவரிடம், "நீ செய்த ஒவ்வொரு (சிறு) தவறுகளுக்கும் ஈடாக ஒரு நன்மை உனக்கு உண்டு" என்று கூறப்படும். அப்போது அவர், "இறைவா! நான் இன்னும் பல (பெரும் பாவச்) செயல்களைப் புரிந்திருந்தேனே! அவற்றையெல்லாம் இங்கு நான் காணவில்லையே!" என்று கேட்பார்.
(இதைக் கூறும்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்ததை நான் பார்த்தேன்.

315 மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

316 அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் ("உங்களில் யாரும் அங்கு -நரகத்திற்கு- வராமல் இருக்க முடியாது" எனும் (19:71ஆவது) வசனத்தில் இடம்பெற்றுள்ள) "வருதல்' பற்றிக் கேட்கப்பட்டது. அப்போது அவர்கள் (பின் வருமாறு) கூறினார்கள்:
மறுமை நாளில் நாம் இப்படி இப்படி -அதாவது எல்லா மக்களுக்கும் மேல் (உயரமான குன்றின் மீது)- வருவோம். அப்போது ஒவ்வொரு சமுதாயத்தாரும் அவரவர் தெய்வச் சிலைகளுடனும் அவர்கள் வழிபட்டுவந்தவையுடனும் அழைக்கப்படுவர். முதலில் முதல் சமுதாயம், அடுத்து அதற்கடுத்த சமுதாயம் (என வரிசை முறையுடன் அழைக்கப்படுவார்கள்). பிறகு நம்மிடம் நம் இறைவன் வந்து "நீங்கள் யாரை எதிர்பார்த்துக் காத்திருக்கிறீர்கள்?" என்று கேட்பான். அப்போது (ஓரிறை நம்பிக்கையுள்ள) மக்கள், "நாங்கள்

எங்கள் இறைவனை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறோம்" என்று பதிலளிப்பார்கள். உடனே, அவன், "நான்தான் உங்கள் இறைவன்" என்பான். மக்கள் "நாங்கள் உன்னை (நேரடியாகப்) பார்க்காதவரை (உறுதி கொள்ளமாட்டோம்)" என்று கூறுவார்கள். ஆகவே, இறைவன் சிரித்தபடி அவர்களிடையே காட்சியளிப்பான். அவர்களை அழைத்துக்கொண்டு நடப்பான். அவர்களும் அவனைப் பின்தொடர்ந்து செல்வார்கள். அப்போது அவர்களிலுள்ள நம்பிக்கையாளர் (முஃமின்), நயவஞ்சகர் (முனாஃபிக்) ஆகிய ஒவ்வொருவருக்கும் ஓர் ஒளி வழங்கப்படும். அவர்கள் அந்த ஒளியைப் பின்தொடர்ந்து செல்வார்கள். நரகத்தின் (மேல் அமைக்கப்பட்டிருக்கும்) பாலத்தின் மீது கொக்கிகளும் முட்களும் இருக்கும். அவை அல்லாஹ் நாடிய சிலரை (அவரவர் தீமைகளுக்கேற்ப) கவ்விப் பிடிக்கும். பிறகு நயவஞ்சகர்களுக்கு வழங்கப்பட்டிருந்த ஒளி அணைக்கப்பட்டுவிடும். அதன் பிறகு (அந்தப் பாலத்தைக் கடந்து) நம்பிக்கையாளர்கள் மட்டும் தப்பிச்செல்வார்கள். (அவர்களில்) தப்பிச்செல்லும் முதல் கூட்டத்தாரின் முகங்கள் பௌர்ணமி இரவின் முழு நிலவைப் போன்று ஒளிரும்; அவர்கள் எழுபதாயிரம் பேர் இருப்பர்; அவர்களிடம் எந்த விசாரணையும் நடத்தப்படாது. பிறகு அவர்களைத் தொடர்ந்துவரும் கூட்டத்தார் வானத்துத் தாரகைகள் போன்று ஜொலிப்பர். இவ்வாறே அடுத்தடுத்து வருபவர்களும் (அவர்களது நன்மைகளுக்கேற்ப இலங்குவர்).

பிறகு பரிந்துரை (ஷஃபாஅத்) நடைபெறும். "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை' (லா இலாஹ இல்லல்லாஹ்) என்று கூறிய எவரது உள்ளத்தில் வாற்கோதுமையளவு நன்மை உள்ளதோ அவர் நரகத்திலிருந்து வெளியேறும்வரை (பரிந்துரைக்கு அனுமதி பெற்றவர்கள்) பரிந்துரைப்பார்கள். அ(ப்போது நரகத்திலிருந்து வெளியேற்றப்படுப)வர்கள் சொர்க்கத்தின் முற்றத்தில் வைக்கப்படுவார்கள். அவர்கள்மீது சொர்க்கவாசிகள் (ஜீவ) நீரைத் தெளிப்பார்கள். முடிவில் வெள்ளத்தில் வரும் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று (பொலிவுடன்) அவர்கள் எழுவார்கள். அத்தகையவர் மீதிருந்த தீக்காயங்கள் மறைந்துவிடும். பிறகு அவர் தமக்கு இந்த உலகமும் இன்னும் அதைப் போன்று பத்து மடங்கும் (சொர்க்கத்தில் தமக்குரியதாக) ஆக்கப்படும்வரை வேண்டிக்கொண்டேயிருப்பார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

317 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"மக்களில் சிலரை அல்லாஹ் நரகத்திலிருந்து வெளியேற்றி,சொர்க்கத்திற்குள் அனுப்புவான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் என் காதுபடக்கேட்டேன்.

318 ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்களிடம், "மக்களில் சிலரைப் பரிந்துரையின் பேரில் அல்லாஹ் நரகத்திலிருந்து வெளியேற்றுவான் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிப்பதை நீங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்' என்றார்கள்.

319 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மக்களில்) சிலர் தம் முகத்தைச் சுற்றியுள்ள பகுதிகளைத் தவிர மற்ற (அங்கங்கள்) யாவும் கரிந்துவிட்டிருக்கும் நிலையில் நரகநெருப்பிலிருந்து வெளியேறி, சொர்க்கத்திற்குள் நுழைவார்கள்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

320 யஸீத் அல்ஃபகீர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
காரிஜிய்யாக்களின் கொள்கைகளில் ஒன்று என் உள்ளத்தை உறுத்திக்கொண்டேயிருந்தது. இந்நிலையில் (கணிசமான) எண்ணிக்கை கொண்ட ஒரு குழுவாக நாங்கள் ஹஜ் செய்துவிட்டுப் பிறகு (காரிஜிய்யாக்களின் அக்கொள்கை குறித்து விவாதிக்க) மக்களிடம் புறப்பட்டுச் செல்லத் தீர்மானித்தோம். அப்(பயணத்தின்)போது நாங்கள் மதீனாவைக் கடந்துசென்றோம். அங்கு ஒரு தூண் அருகில் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அமர்ந்துகொண்டு மக்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிய செய்திகளைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அப்போது "நரக விடுதலை பெறுவோர்' பற்றியும் அவர்கள் குறிப்பிட்டார்கள்.
நான், "இறைத்தூதரின் தோழரே! நீங்கள் இவ்வாறு கூறுகின்றீர்கள்? அல்லாஹ்வோ, "நீ எவரை நரக நெருப்பில் புகுத்துகின்றாயோ அவரை நிச்சயமாக நீ இழிவாக்கிவிட்டாய்" (3:192) என்றும், "அவர்கள் அ(ந்த நரகத்) திலிருந்து வெளியேற நாடும் போதெல்லாம், அதிலேயே மீண்டும் தள்ளப்படுவார்கள்" (32:20) என்றும் கூறுகின்றானே? ஆனால், நீங்களோ வேறுவிதமாகச் சொல்லிக்கொண்டிருக்கிறீர்களே?" என்று கேட்டேன்.

அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள், "நீங்கள் குர்ஆனை ஓதிவருபவர்தாமே?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். "அவ்வாறாயின், நீங்கள் முஹம்மத் (ஸல்) அவர்களின் உயர் தகுதியைப் பற்றி -அதாவது நபியவர்களை அல்லாஹ் ("மகாமு மஹ்மூத்' எனும் உயர் இடத்திற்கு) அனுப்புவானே அதைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறீர்களா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அப்போது அவர்கள், "அந்த "மகாமு மஹ்மூத்' எனும் உயர் இடத்திலிருந்து கொண்டுதான் நபி (ஸல்) அவர்களின் மூலம் அல்லாஹ் சிலரை (நரகத்திலிருந்து) வெளியேற்றுவான்" என்று கூறிவிட்டு, பிறகு "ஸிராத்' எனும் பாலம் அமைக்கப்படுவது பற்றியும் அதைக் கடந்து மக்கள் செல்வது பற்றியும் விவரித்தார்கள். மேலும் "இதை நான் நினைவிலிருத்தாதவனாக ஆகிவிடுவேனோ என்று அஞ்சுகிறேன்" என்றும் குறிப்பிட்டார்கள்.
மேலும், "ஆயினும், சிலர் நரகத்திலிருந்த பின் அங்கிருந்து வெளியேறுவார்கள்- அதாவது எள்ளுச் செடியின் குச்சிகளைப் போன்று (கரிய நிறத்தில் கருகி) வெளியேறுவார்கள். பிறகு சொர்க்க நதிகளில் ஒன்றில் நீராடுவார்கள். அதையடுத்து வெள்ளைத் தாள்களைப் போன்று (புதுப் பொலிவுடன்) வெளியேறுவார்கள்" என்று கூறினார்கள்.

நாங்கள் "(காரிஜிய்யாக்களே!) உங்களுக்கு நாசம் உண்டாகட்டும். இந்த மூதறிஞர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்மீது பொய்யுரைக்கிறார் என்றா நீங்கள் கருதுகிறீர்கள்?" என்று சொல்லிக்கொண்டே (அங்கிருந்து) திரும்பினோம். அல்லாஹ்வின் மீதாணையாக! (பரிந்துரையும் நரக விடுதலையும் உண்டு எனும் எங்கள்

கொள்கையிலிருந்து) எங்களில் ஒரேயொரு மனிதரைத் தவிர வேறெவரும் விலகிவிடாத நிலையில் நாங்கள் (ஹஜ்ஜிலிருந்து) திரும்பினோம்.
(முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான் கூறுகின்றேன்:)
(ஹஜ்ஜாஜ் பின் அஷ்ஷாஇர் (ரஹ்) அவர்கள், அபூநுஜம் ஃபள்ல் பின் துகைன் (ரஹ்) அவர்களிடமிருந்து இவ்வாறுதான் எனக்கு அறிவித்தார்கள் என்று நான் கருதுகிறேன்.) அல்லது அபூநுஜம் (ரஹ்) அவர்கள் எவ்வாறு கூறினார்களோ அவ்வாறு.

321 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறுதிக் கட்டத்தில்) நான்கு பேர் (நரக) நெருப்பிலிருந்து வெளியேறுவார்கள். அந்நால்வரும் அல்லாஹ்வின் முன் நிறுத்தப்படுவார்கள். அப்போது அவர்களில் ஒருவர் (நரகத்தை நோக்கித்) திரும்பி, "இறைவா! இ(ந்தக் கொடிய நரகத்)திலிருந்து என்னை நீ வெளியேற்றிய பின் மீண்டும் அதற்குள் என்னை அனுப்பிவிடாதே!" என்று கூறுவார். அதையடுத்து அல்லாஹ் அதிலிருந்து அவரைக் காப்பாற்றுவான்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

322 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் மறுமை நாளில் மக்களை ஒன்று கூட்டுவான். அப்போது அவர்கள் "(அமளிகள் நிறைந்த) அந்த நாளைப் பற்றி (அதிலிருந்து விடுபடும் வழிவகை குறித்து) கவலையோடு யோசிப்பார்கள்' அல்லது "அது குறித்த எண்ணம் அவர்களது உள்ளத்தில் ஏற்படுத்தப்படும்'. ஆகவே, அவர்கள் "(அதி பயங்கரமான) இந்த நிலையிலிருந்து நம்மை விடுவிக்க நம் இறைவனிடம் பரிந்துரைக்கும்படி (யாரையாவது) நாம் கேட்டுக்கொண்டால் நன்றாயிருக்குமே!" என்று கூறியவாறு (ஆதி மனிதரும் ஆதித் தூதருமான) ஆதம் (அலை) அவர்களிடம் வருவார்கள். அவரிடம் "நீங்கள்தாம் மனித குலத்தின் தந்தை ஆவீர்கள்; அல்லாஹ் தனது கையால் உங்களைப் படைத்தான். தன்(னால் படைக்கப்பட்ட) உயிரை உங்களுக்குள் அவன் ஊதினான். மேலும், தன் வானவர்களுக்கு அவன் கட்டளையிட, அவர்கள் உங்களுக்குச் சிரம்பணிந்தனர். ஆகவே, இந்த(ச் சோதனையான) கட்டத்திலிருந்து எங்களை விடுவிப்பதற்காக உங்கள் இறைவனிடத்தில் எங்களுக்காகப் பரிந்துரை (ஷஃபாஅத்) செய்யுங்கள்" என்று கூறுவார்கள். அதற்கு ஆதம் (அலை) அவர்கள், "(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறியவாறு, (உலகில்) தாம் புரிந்துவிட்ட தவறை நினைத்துப் பார்த்து தம் இறைவனுக்கு முன் அதற்காக வெட்கப்படுவார்கள். பிறகு, "நீங்கள் (எனக்குப் பின் முக்கிய) முதல் தூதராக இறைவன் அனுப்பிவைத்த நூஹ் (அலை) அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறுவார்கள்.
உடனே மக்கள், நூஹ் (அலை) அவர்களிடம் செல்வார்கள். அன்னாரும் "(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறி, (உலகில்) தாம் புரிந்துவிட்ட தவறை நினைத்து அதற்காகத் தம் இறைவனுக்கு முன் வெட்கப்படுவார்கள். மேலும், "அல்லாஹ் தன்னுடைய உற்ற நண்பராக்கிக் கொண்ட (நபி) இப்ராஹீம் (அலை) அவர்களிடம் நீங்கள் செல்லுங்கள்" என்று கூறிவிடுவார்கள்.

உடனே மக்கள், இப்ராஹீம் (அலை) அவர்களிடம் செல்ல, அவர்களும் "(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறி, தாம் புரிந்துவிட்ட தவறை நினைத்து அதற்காகத் தம் இறைவன் முன் வெட்கப்படுவார்கள். மேலும், "நீங்கள் அல்லாஹ் உரையாடிய, தவ்ராத் (வேதத்)தையும் வழங்கிய (நபி) மூசா (அலை) அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறிவிடுவார்கள்.
உடனே மக்கள், மூசா (அலை) அவர் களிடம் செல்வார்கள். அன்னாரும் "(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறி, தாம் புரிந்துவிட்ட தவறை நினைத்து அதற்காகத் தம் இறைவனுக்கு முன் வெட்கப்படுவார்கள். மேலும், "நீங்கள் அல்லாஹ்வின் ஆவியும் அவனுடைய வார்த்தையுமான (நபி) ஈசாவிடம் செல்லுங்கள்" என்று கூறி விடுவார்கள். உடனே மக்கள், அல்லாஹ்வின் ஆவியும் அவனுடைய வார்த்தையுமான (நபி) ஈசாவிடம் செல்ல, அவர்களும் "(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறிவிடுவார்கள். "எனவே, நீங்கள் முன் பின் பாவங்கள் மன்னிக்கப்பட்ட அடியாரான (நபி) முஹம்மத் (ஸல்) அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறிவிடுவார்கள்.

உடனே மக்கள், என்னிடம் வருவார்கள். அப்போது நான் என் இறைவனிடத்தில் அனுமதி கேட்பேன். எனக்கு அனுமதி அளிக்கப்படும். இறைவனை நான் கண்டதும் சிரம் பணிந்தவனாக (சஜ்தாவில்) விழுந்துவிடுவேன். அவன் நாடிய நேரம்வரை (அப்படியே) என்னை விட்டுவிடுவான். பிறகு (இறைவனின் தரப்பிலிருந்து) "முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள். சொல்லுங்கள்; செவியேற்கப்படும். கேளுங்கள்; உங்களுக்குக் கொடுக்கப்படும். பரிந்துரை செய்யுங்கள்; உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்" என்று கூறப்படும். உடனே நான் எனது தலையை உயர்த்தி என் இறைவன் எனக்குக் கற்றுத்தரும் புகழ்மொழிகளைக் கூறி அவனைப் புகழ்வேன். பிறகு, நான் பரிந்துரை செய்வேன். அப்போது இறைவன் (நான் யார் யாருக்குப் பரிந்துரை செய்யலாம் என்பதை வரையறுத்து) எனக்கு வரம்பு விதிப்பான். பின்னர் அவர்களை நான் நரகத்திலிருந்து வெளியேற்றி சொர்க்கத்திற்கு அனுப்பிவைப்பேன். பின்னர் மீண்டும் நான் (இறைவனிடம்) சென்று சிரம்பணிந்து விழுவேன். இறைவன் தான் நாடும் நேரம்வரை (அப்படியே) என்னை விட்டுவிடுவான். பிறகு "முஹம்மதே, உங்கள் தலையை உயர்த்துங்கள். சொல்லுங்கள்; செவியேற்கப்படும். கேளுங்கள்; அது உங்களுக்குத் தரப்படும். பரிந்துரை செய்யுங்கள்; உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்" என்று சொல்லப்படும். நானும் அவ்வாறே என் தலையை உயர்த்தி, என் இறைவன் எனக்கு அப்போது கற்றுத்தருகின்ற புகழ்மொழிகளைக் கூறி அவனை நான் புகழ்வேன். பிறகு நான் பரிந்துரைப்பேன். (நான் யார் யாருக்குப் பரிந்துரைக்கலாம் என்பதை வரையறுத்து) எனக்கு அவன் வரம்பு விதிப்பான். பிறகு அவர்களை நான் நரகத்திலிருந்து வெளியேற்றி, சொர்க்கத்திற்கு அனுப்பிவைப்பேன். (இதைப் போன்றே மூன்று அல்லது நான்கு முறை நடக்கும்.)

அறிவிப்பாளர் கூறுகிறார்: மூன்றாவது முறையிலா, அல்லது நான்காவது முறையிலா என்று தெரியவில்லை; நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: "என் இறைவா! குர்ஆன் தடுத்துவிட்டவர்கள் -அதாவது நிரந்தர நரகம் கட்டாயமாகிவிட்டவர்(களான

இறைமறுப்பாளர்கள் மற்றும் நயவஞ்சகர்)களைத் தவிர வேறு யாரும் நரகத்தில் எஞ்சியிருக்கவில்லை" என்று கூறுவேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு உபைத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (பின்வருமாறு) கூறப்பட்டுள்ளது: கத்தாதா பின் திஆமா (ரஹ்) அவர்கள், "குர்ஆன் தடுத்துவிட்டவர்களைத் தவிர' என்பதற்கு விளக்கமாக "நிரந்தர நரகம் கட்டாயமாகிவிட்டவர்களைத் தவிர' என்று கூறினார்கள்.

323 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், "மறுமை நாளில் இறை நம்பிக்கையாளர்கள் ஒன்றுகூடி..." என்று தொடங்கி, இறுதியில் "பிறகு நான் நான்காம் முறையும் இறைனிடம் "சென்று' அல்லது திரும்பிப்போய்', "என் இறைவா, குர்ஆன் தடுத்து விட்டவர்களைத் தவிர வேறு யாரும் நரகத்தில் எஞ்சியிருக்கவில்லை' என்று கூறுவேன்" என்று இடம்பெற்றுள்ளது.

324 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் மறுமை நாளில் இறைநம்பிக்கையாளர்களை ஒன்றுகூட்டுவான். அப்போது அவர்களுடைய உள்ளத்தில் (பரிந்துரைக்கும்படி யாரையாவது நாம் கேட்டுக்கொண்டால் நன்றாயிருக்குமே' எனும்) எண்ணம் ஏற்படுத்தப்படும்.
மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன.
இந்த அறிவிப்பிலும் "நான்காம் முறை நான் "என் இறைவா, குர்ஆன் தடுத்து விட்டவர்களைத் தவிர - அதாவது நிரந்தர நரகம் கட்டாயமாகிவிட்டவர்களைத் தவிர- வேறு யாரும் நரகத்தில் எஞ்சியிருக்கவில்லை' என்று கூறுவேன்" என்று இடம்பெற்றுள்ளது.

325 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை (லா இலாஹ இல்லல்லாஹ்) என்று கூறிய எவரது உள்ளத்தில் வாற்கோதுமையளவு நன்மை இருக்குமோ அவர் (நரக) நெருப்பிலிருந்து வெளியேற்றப்படுவார். பிறகு "லா இலாஹ இல்லல்லாஹ்' எனக் கூறிய எவரது உள்ளத்தில் மணிக்கோதுமையளவு நன்மை இருக்குமோ அவர் (நரக) நெருப்பிலிருந்து வெளியேற்றப் படுவார். பிறகு "லா இலாஹ இல்லல்லாஹ்' எனக் கூறிய எவரது உள்ளத்தில் அணுவளவு அளவு நன்மை இருக்குமோ அவர் (நரக) நெருப்பிலிருந்து வெளியேற்றப்படுவார்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் பல அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
முஹம்மத் பின் மின்ஹால் (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை அறிவிக்கும்போது (பின் வருமாறு) யஸீத் பின் ஸுரைஉ (ரஹ்) அவர்கள் கூறியதாக அதிகப்படியாகக் குறிப்பிட்டார்கள்:
நான் ஷுஅபா (ரஹ்) அவர்களைச் சந்திக்கும்போது இந்த ஹதீஸை அவர்களிடம் எடுத்துரைத்தேன். அப்போது ஷுஅபா (ரஹ்) அவர்கள், "இந்த ஹதீஸை நபி (ஸல்) அவர்களிடமிருந்து அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களும், அன்னாரிடமிருந்து கத்தாதா (ரஹ்) அவர்களும் எமக்கு அறிவித்தார்கள்" என்றார்கள். ஆனால், ஷுஅபா (ரஹ்) அவர்கள்

("அணுவளவு என்பதைக் குறிக்க,) "தர்ரா' எனும் சொல்லுக்கு பதிலாக "துரா' எனும் சொல்லைக் கூறியுள்ளார்கள். அபூபிஸ்தாம் (என்ற ஷுஅபா) அவர்கள்தாம் இவ்வாறு மாற்றியுள்ளார்கள்.

326 மஅபத் பின் ஹிலால் அல்அனஸீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(பஸ்ராவாசிகளான) நாங்கள் (அபூஹம்ஸா) அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களை நோக்கிப் புறப்பட்டோம். (பரிந்துரை குறித்த ஹதீஸை அன்னார் எங்களுக்கு அறிவிக்க) ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்களின் பரிந்துரையை நாடினோம். அனஸ் (ரலி) அவர்கள் "ளுஹா' தொழுது கொண்டிருக்கையில் நாங்கள் அங்கு போய்ச்சேர்ந்தோம். நாங்கள் உள்ளே நுழைய எங்களுக்காக ஸாபித் (ரஹ்) அவர்கள் அனுமதி கேட்டார்கள். பிறகு நாங்கள் உள்ளே நுழைந்தோம். அப்போது அனஸ் (ரலி) அவர்கள் தமது கட்டிலில் ஸாபித் (ரஹ்) அவர்களைத் தம்முடன் அமரவைத்துக்கொண்டார்கள். ஸாபித் (ரஹ்) அவர்கள், "அபூஹம்ஸா! பஸ்ராவைச் சேர்ந்த உங்கள் சகோதரர்கள் பரிந்துரை (ஷ்ஃபாஅத்) தொடர்பான ஹதீஸைத் தமக்கு அறிவிக்குமாறு உங்களிடம் கோருகிறார்கள்" என்று சொன்னார்கள். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
முஹம்மத் (ஸல்) அவர்கள் எங்களிடம் தெரிவித்தார்கள்: (பீதி நிறைந்த) மறுமை நாள் நிகழும்போது மக்கள் சிலர் சிலரோடு அலைமோதுவார்கள். அப்போது மக்கள் ஆதம் (அலை) அவர்களிடம் வந்து, "உங்கள் வழித்தோன்றல்களுக்காக நீங்கள் பரிந்துரை செய்யுங்கள்" என்பார்கள். அதற்கு ஆதம் (அலை) அவர்கள், "அந்தத் தகுதி எனக்கு இல்லை; நீங்கள் இப்ராஹீம் (அலை) அவர்களைப் போய்ப்பாருங்கள். ஏனெனில், அவர்தாம் அல்லாஹ்வின் உற்ற நண்பர் ஆவார்" என்று கூறுவார்கள்.

உடனே மக்கள், இப்ராஹீம் (அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது இப்ôôஹீம் (அலை) அவர்களும், "எனக்கு அந்தத் தகுதி இல்லை; நீங்கள் மூசா (அலை) அவர்களைப் போய்ப்பாருங்கள். ஏனெனில், அவர்தாம் அல்லாஹ்விடம் உரையாடியவர் ஆவார்" என்று கூறுவார்கள்.
உடனே (பரிந்துரை பற்றிய மக்களின் கோரிக்கை) மூசா (அலை) அவர்களிடம் கொண்டு செல்லப்படும். மூசா (அலை) அவர்களும், "அந்தத் தகுதி எனக்கு இல்லை; நீங்கள் ஈசா (அலை) அவர்களைப் போய்ப்பாருங்கள். ஏனெனில், அவர்தாம் அல்லாஹ்வின் ஆவியும் அவனுடைய வார்த்தையும் ஆவார்" என்று சொல்வார்கள்.
உடனே (மக்களின் கோரிக்கை) ஈசா (அலை) அவர்களிடம் கொண்டுசெல்லப்படும். அப்போது ஈசா (அலை) அவர்களும் "எனக்கு அந்தத் தகுதி இல்லை; நீங்கள் முஹம்மத் (ஸல்) அவர்களை அணுகுங்கள்" என்று கூறுவார்கள். உடனே (மக்களின் கோரிக்கை) என்னிடம் கொண்டுவரப்படும். அப்போது "நான் அதற்குரியவனே" என்று நான் சொல்லிவிட்டுச் சென்று (மக்களுக்காகப் பரிந்துரைக்க) என் இறைவனிடம் அனுமதி கேட்பேன். அப்போது எனக்கு அனுமதி வழங்கப்படும். உடனே நான் இறைவனுக்கு முன்னால் நின்று தற்போது என்னால் சொல்லவியலாத புகழ்மொழிகளைக் கூறி அவனைப் போற்றுவேன்;அவற்றை அல்லாஹ்வே (அந்த நேரத்தில்) என் எண்ணத்தில் தோன்றச் செய்வான். பிறகு (அவனைக் காணும்போது) அவனுக்காகச் சிரம் பணிந்தவனாக (சஜ்தாவில்) விழுந்துவிடுவேன். அப்போது (இறைவனின்

தரப்பிலிருந்து) "முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள். சொல்லுங்கள்; உங்கள் சொல் செவியேற்கப்படும். கேளுங்கள்; உங்களுக்குத் தரப்படும். பரிந்துரை செய்யுங்கள்; உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்" என்று சொல்லப்படும். அப்போது நான், "என் இறைவா! என் சமுதாயம்; என் சமுதாயம்" என்பேன்.

அப்போது, "செல்லுங்கள்; எவரது உள்ளத்தில் மணிக்கோதுமை அல்லது வாற்கோதுமையளவு இறைநம்பிக்கை (ஈமான்) உள்ளதோ அவரை நரகத்திலிருந்து வெளியேற்றுங்கள்" என்று கூறப்படும். ஆகவே, நான் சென்று அவ்வாறே செய்வேன். பிறகு மீண்டும் என் இறைவனிடம் வந்து, அதே புகழ்மொழிகளைக் கூறி அவனைப் போற்றுவேன். பிறகு (அவனைக் காணும்போது) அவனுக்காகச் சிரம்பணிந்தவனாக (சஜ்தாவில்) விழுந்துவிடுவேன். அப்போதும், "முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள். சொல்லுங்கள்; உங்கள் சொல் செவியேற்கப்படும். கேளுங்கள்; உங்களுக்குத் தரப்படும். பரிந்துரை செய்யுங்கள்; உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்" என்று கூறப்படும். அப்போதும் "என் இறைவா! என் சமுதாயம்; என் சமுதாயம்" என்பேன். அப்போது என்னிடம், "செல்லுங்கள்; யாருடைய உள்ளத்தில் கடுகளவு இறைநம்பிக்கை (ஈமான்) உள்ளதோ அவரை (நரக) நெருப்பிலிருந்து வெளியேற்றுங்கள்" என்று கூறப்படும்.

நான் சென்று அவ்வாறே செய்துவிட்டு, மீண்டும் என் இறைவனிடம் திரும்பிவருவேன். அதே புகழ்மாலைகளைக் கூறி அவனைப் போற்றுவேன். பின்னர் அவனுக்காகச் சிரம்பணிந்து விழுவேன். அப்போதும் என்னிடம் "முஹம்மதே, எழுந்திருங்கள். சொல்லுங்கள்; உங்கள் சொல் செவியேற்கப்படும். கேளுங்கள்; தரப்படும். பரிந்துரையுங்கள்; ஏற்கப்படும்" என்று கூறப்படும். அதற்கு நான் "என் இறைவா, என் சமுதாயம்; என் சமுதாயம்" என்பேன். அப்போது "செல்லுங்கள்; எவரது உள்ளத்தில் கடுகுமணியை விட மிக மிகச் சிறியஅளவு இறைநம்பிக்கை இருக்கிறதோ அவரை நரகத்திலிருந்து வெளியேற்றுங்கள்" என என்னிடம் சொல்லப்படும். நானும் சென்று அவ்வாறே செய்வேன்.
இதுதான் அனஸ் (ரலி) அவர்கள் எங்களுக்கு அறிவித்த (பரிந்துரை பற்றிய) ஹதீஸாகும். நாங்கள் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து (விடைபெற்றுப்) புறப்பட்டோம். நாங்கள் பாலைவன (மணல்)மேட்டுக்கு வந்தபோது, "நாம் ஹசன் அல்பஸரி (ரஹ்) அவர்களைச் சந்தித்து சலாம் சொல்லிவிட்டு வந்தால் (நன்றாயிருக்கும்)" என்று பேசிக்கொண்டோம். அன்னார் (அமீர் ஹஜ்ஜாஜ் பின் யூசுஃபிற்கு அஞ்சி) அபூகலீஃபா என்பவரின் இல்லத்தில் ஒளிந்திருந்தார்கள். அவ்வாறே நாங்கள் அவர்களிடம் சென்று சலாம் கூறினோம். மேலும், "அபூசயீத்! நாங்கள் உங்கள் சகோதரர் அபூஹம்ஸா (அனஸ்-ரலி) அவர்களிடமிருந்து வந்துள்ளோம். பரிந்துரை (ஷஃபாஅத்) தொடர்பாக அவர்கள் எங்களுக்கு அறிவித்த ஹதீஸைப் போன்று வேறு யாரும் அறிவிக்க நாங்கள் கேட்டதில்லை" என்று கூறினோம்.

அதற்கு ஹசன் அல்பஸரி (ரஹ்) அவர்கள், "எங்கே சொல்லுங்கள்!" என்றார்கள். அந்த ஹதீஸை நாங்கள் அவர்களிடம் சொன்னோம். அப்போது அவர்கள் "இன்னும் சொல்லுங்கள்!" என்றார்கள். அதற்கு நாங்கள், "இதைவிடக் கூடுதலாக எங்களிடம் அனஸ் (ரலி) அவர்கள் கூறவில்லை" என்றோம். அதற்கு ஹசன் அல்பஸரி (ரஹ்) அவர்கள், இருபது ஆண்டுகளுக்கு முன்னால் நினைவாற்றலும் உடல்பலமும் மிக்கவராக இருந்தபோது இந்த

ஹதீஸை (இன்னும் விரிவாக) எமக்கு அனஸ் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள். அதில் சிலவற்றை இப்போது அனஸ் (ரலி) அவர்கள் கூறாமல் விட்டுள்ளார்கள். முதியவரான அன்னார் அதை மறந்துவிட்டார்களா? அல்லது (நபிகளாரின் பரிந்துரை மீது அபரிமிதமான) நம்பிக்கை வைத்துக்கொண்டு (நல்லறங்களில் நாட்டமில்லாமல்) நீங்கள் இருந்து விடுவீர்கள் என்று அஞ்சினார்களா என்று எனக்குத் தெரியவில்லை" என்று கூறினார்கள்.
நாங்கள் ஹசன் அல்பஸரி (ரஹ்) அவர்களிடம், "(அந்தக் கூடுதல் செய்தியை) எங்களுக்குச் சொல்லுங்கள்!" என்றோம். (இதைக் கேட்டவுடன்) ஹசன் (ரஹ்) அவர்கள் சிரித்துவிட்டு, "மனிதன் அவசரக்காரனாகவே படைக்கப்பட்டுள்ளான். இந்த நபிமொழியை உங்களுக்கு அறிவிக்க வேண்டும் என்பதற்காகவே உங்களிடம் நான் இவ்வாறு குறிப்பிட்டேன்" என்று (சொல்லிவிட்டு, அந்தக் கூடுதல் செய்தியையும்) கூறினார்கள்.

(நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:)
பிறகு நான்காம் முறையும் நான் என் இறைவனிடம் திரும்பிச்சென்று அதே புகழ்மொழிகளைக் கூறி அவனைப் போற்றுவேன். பிறகு அவனுக்காகச் சிரம்பணிந்தவனாக (சஜ்தாவில்) விழுந்துவிடுவேன். அப்போது, "முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள். சொல்லுங்கள்; உங்கள் சொல் செவியேற்கப்படும். கேளுங்கள்; உங்களுக்குத் தரப்படும். பரிந்துரை செய்யுங்கள்; உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்" என்று கூறப்படும். அப்போது நான், "என் இறைவா! 'லா இலாஹ இல்லல்லாஹ்' மொழிந்தவர்கள் விஷயத்தில் (பரிந்துரை செய்ய) எனக்கு அனுமதி வழங்குவாயாக!" என்று கேட்பேன். அதற்கு இறைவன், "அந்த உரிமை உங்களுக்கில்லை' அல்லது "அந்தப் பொறுப்பு உங்களிடம் ஒப்படைக்கப்படவில்லை'. மாறாக, என் வல்லமையின் மீதும், பெருமையின் மீதும், மகத்துவத்தின் மீதும், அதிகாரத்தின் மீதும் ஆணையாக! "லா இலாஹ இல்லல்லாஹ்' என்று சொன்னவரை நிச்சயமாக நானே (நரகத்திலிருந்து) வெளியேற்றுவேன்" என்று கூறுவான்.
அறிவிப்பாளர் மஅபத் பின் ஹிலால் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: "ஹசன் அல்பஸரி (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை எங்களுக்கு அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்' என்று நான் அறுதியிட்டுக் கூறுகிறேன். மேலும், ஹசன் அல்பஸரி (ரஹ்) அவர்கள், "இருபது ஆண்டுகளுக்கு முன்னால் அனஸ் (ரலி) அவர்கள் நினைவாற்றலும் உடல் பலமும் மிக்கவராக இருந்தார்கள். (அப்போது இந்த ஹதீஸை அறிவித்தார்கள்)" என்றும் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

327 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் (விருந்தொன்றில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இறைச்சி பரிமாறப் பட்டது. அப்போது (சமைக்கப்பட்ட) முன்கால் சப்பை ஒன்று அவர்களிடம் வழங்கப்பட்டது. அது அவர்களுக்கு மிகவும் பிடித்தமானதாக இருந்தது. (அதை) அவர்கள் தம் பற்களால் கடித்து, அதிலிருந்து சிறிது உண்டார்கள்.
பிறகு (பின்வருமாறு) கூறினார்கள்: நான் மறுமை நாளில் மனிதர்களின் தலைவன் ஆவேன். அது எப்படி என்று உங்களுக்குத் தெரியுமா? (அந்நாளில்) அல்லாஹ் (மனிதர்களில்) முந்தியவர்களையும் பிந்தியவர்களையும் ஒரே சமவெளியில் ஒன்றுதிரட்டுவான்.

அழைப்பவர் எவரும் அந்த மக்களை அழைத்தால் அதை அவர்கள் செவியேற்க முடியும். (பார்ப்போரின்) பார்வை அவர்களை ஊடுருவிச் செல்லும். சூரியன் (அவர்களுக்கு) அருகில் வரும். அப்போது மனிதர்களிடம் அவர்களால் தாங்கிக் கொள்ளவோ சகித்துக்கொள்ளவோ இயலாத துன்பங்களும் துயரங்களும் வந்துசேரும். அப்போது மனிதர்களில் சிலர் (சிலரை நோக்கி) "நீங்கள் (சிக்கிக்கொண்டு) இருக்கும் (அவல) நிலையைக் கவனிக்கவில்லையா? உங்களுக்கு எத்தகைய (ஆபத்தான) நிலை நேர்ந்திருக்கிறது என்பதை நீங்கள் பார்க்க வில்லையா? உங்களுக்காக உங்கள் இறைவனிடம் பரிந்து பேசுபவரை(த் தேடி)ப் பார்க்கமாட்டீர்களா?" என்று கேட்பார்கள். அப்போது மனிதர்களில் சிலர் வேறு சிலரிடம், "(ஆதி மனிதர்) ஆதம் (அலை) அவர்களிடம் செல்லுங்கள் (அவர் உங்களுக்காகப் பரிந்து பேசுவார்)" என்பர்.

ஆகவே, மனிதர்கள், ஆதம் (அலை) அவர்களிடம் சென்று, "ஆதமே, நீங்கள் மனித இனத்தின் தந்தையாவீர்கள்; உங்களை அல்லாஹ் தனது கரத்தால் படைத்தான். தன்(னால் உருவாக்கப்பட்ட) உயிரை உங்களுக்குள் அவன் ஊதினான். வானவர்களை உங்களுக்குச் சிரம்பணியும்படி உத்தரவிட்டான். அவ்வாறே அவர்களும் உங்களுக்குச் சிரம் பணிந்தார்கள். நீங்கள் உங்கள் இறைவனிடம் எங்களுக்காகப் பரிந்து பேசுங்கள். நாங்கள் (சிக்கிக்கொண்டு) இருக்கும் (அவல) நிலையையும், எங்களுக்கு நேர்ந்திருக்கும் (துன்ப) நிலையையும் நீங்கள் கவனிக்கவில்லையா?" என்று கேட்பார்கள்.
அதற்கு ஆதம் (அலை) அவர்கள் "(நான் செய்த தவறின் காரணத்தால்) என் இறைவன் என்மீது இன்று (கடுங்)கோபம் கொண்டிருக்கிறான். இதற்கு முன் இதைப் போன்று அவன் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பிறகும் அவன் இதைப் போன்று ஒருபோதும் கோபம் கொள்ளப்போவதுமில்லை. (நான் நெருங்கக்கூடாத ஒரு) மரத்திலிருந்து (உண்ண வேண்டாமென்று) என்னை அவன் தடுத்தான். நான் அவனுக்கு மாறு செய்தேன். என்னையே நான் காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது; என்னையே நான் காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது" என்று கூறிவிட்டு, "நீங்கள் வேறெவரிடமாவது செல்லுங்கள். நீங்கள் (இறைத்தூதர்) நூஹிடம் செல்லுங்கள்" என்று சொல்வார்கள்.
உடனே மக்கள் நூஹ் (அலை) அவர்களிடம் சென்று "நூஹே! நீங்கள் பூமி(யில் வசிப்பவர்களு)க்கு (அனுப்பப்பெற்ற முக்கியமான) முதலாவது இறைத்தூதர் ஆவீர்கள். உங்களை அல்லாஹ் 'நன்றியுள்ள அடியார்' என்று குறிப்பிட்டுள்ளான். எங்களுக்காக உங்கள் இறைவனிடம் பரிந்து பேசுங்கள். நாங்கள் (சிக்கிக்கொண்டு) இருக்கும் (அவல) நிலையையும், எங்களுக்கு நேர்ந்திருக்கும் (துன்ப) நிலையையும் நீங்கள் கவனிக்கவில்லையா?" என்று கேட்பார்கள். அதற்கு நூஹ் (அலை) அவர்கள் "என் இறைவன் இன்று (என்மீது) கடுங்கோபம் கொண்டுள்ளான். இதற்கு முன் அவன் இதைப் போன்று கோபம் கொண்டதில்லை. இதற்குப் பிறகும் அவன் இதைப் போன்று ஒருபோதும் கோபம் கொள்ளப் போவதுமில்லை. (எல்லா நபிமார்களுக்கும் இருப்பதைப் போன்று விசேஷமான) பிரார்த்தனை ஒன்று எனக்கு (வழங்கப்பட்டு) இருந்தது. அதை நான் என் சமுதாயத்தாருக்கு எதிராகப் பயன்படுத்தி விட்டேன். நான் என்னையே காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது; நான் என்னையே காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது!" என்று கூறிவிட்டு, "நீங்கள் (இறைவனின் உற்ற நண்பர்) இப்ராஹீம் (அலை) அவர்களிடம் செல்லுங்கள்' என்பார்கள்.

அவ்வாறே மக்களும் இப்ராஹீம் (அலை) அவர்களிடம் சென்று, "நீங்கள் இறைத்தூதரும் பூமியில் வசித்தவர்களில் இறைவனின் உற்ற நண்பரும் ஆவீர்கள். எங்களுக்காக உங்கள் இறைவனிடம் பரிந்துரையுங்கள். நாங்கள் (சிக்கிக்கொண்டு) இருக்கும் (அவல) நிலையையும், எங்களுக்கு நேர்ந்திருக்கும் (துன்ப) நிலையையும் நீங்கள் கவனிக்கவில்லையா?" என்று கேட்பார்கள். அதற்கு இப்ராஹீம் (அலை) அவர்கள் "என் இறைவன் இன்று (என்மீது) கடுங்கோபம் கொண்டுள்ளான். இதற்கு முன்பும் இதைப் போன்று அவன் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பிறகும் இதைப் போன்று அவன் ஒருபோதும் கோபம் கொள்ளப்போவதுமில்லை" என்று கூறிவிட்டுத் தாம் சொன்ன (மூன்று) பொய்களை நினைவு கூருவார்கள். பிறகு "நான் என்னையே காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது; நான் என்னையே காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது. (ஆகவே,) வேறெவரிடமாவது நீங்கள் செல்லுங்கள். (இறைத் தூதர்) மூசாவிடம் செல்லுங்கள்" என்று கூறிவிடுவார்கள்.
உடனே மக்கள் மூசா (அலை) அவர்களிடம் சென்று, "மூசாவே! நீங்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவீர்கள். தன்னுடைய தூதுவத்தை வழங்கியும் உங்களிடம் உரையாடியும் மக்கள் அனைவரையும் விட உங்களை அல்லாஹ் மேன்மைப்படுத்தியுள்ளான். (ஆகவே,) எங்களுக்காக உங்கள் இறைவனிடம் பரிந்து பேசுங்கள். நாங்கள் (சிக்கிக்கொண்டு) இருக்கும் (அவல) நிலையையும், எங்களுக்கு நேர்ந்திருக்கும் (துன்ப) நிலையையும் நீங்கள் கவனிக்க வில்லையா?" என்று கூறுவார்கள். அதற்கு மூசா (அலை) அவர்கள் "இன்று என் இறைவன் (என்மீது) கடுங்கோபம் கொண்டுள்ளான். இதற்கு முன்பும் இதைப் போன்று அவன் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பின்பும் இதைப் போன்று அவன் ஒருபோதும் கோபம் கொள்ளப்போவதுமில்லை. கொலை செய்யுமாறு எனக்கு ஆணையிடப்படாமலேயே நான் ஒரு மனித உயிரைக் கொலை செய்துவிட்டிருக்கிறேன். நான் என்னையே காப்பாற்றிக் கொள்ள வேண்டியுள்ளது; நான் என்னையே காப்பாற்றிக் கொள்ள வேண்டியுள்ளது. (ஆகவே,) நீங்கள் (இறைத்தூதர்) ஈசா (அலை) அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறுவார்கள்.

உடனே மக்கள் ஈசா (அலை) அவர்களிடம் சென்று, "ஈசாவே! நீங்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவீர்கள். நீங்கள் (குழந்தையாய்) தொட்டிலில் இருந்தபோதே மக்களிடம் பேசினீர்கள். மர்யமிடம் இறைவனிட்ட அவனது வார்த்தையும் அவன் (ஊதிய) உயிரும் ஆவீர்கள். ஆகவே, எங்களுக்காக உங்கள் இறைவனிடம் பரிந்து பேசுங்கள். நாங்கள் (சிக்கிக்கொண்டு) இருக்கும் (அவல) நிலையையும், எங்களுக்கு நேர்ந்துள்ள (துன்ப) நிலையையும் நீங்கள் கவனிக்கவில்லையா?" என்று கேட்பார்கள். அதற்கு ஈசா (அலை) அவர்கள், "என் இறைவன் இன்று (என்மீது) கடுங்கோபம் கொண்டுள்ளான். இதற்கு முன்பும் இதைப் போன்று அவன் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பின்பும் இதைப் போன்று அவன் ஒருபோதும் கோபம் கொள்ளப்போவதுமில்லை- (தாம் புரிந்துவிட்டதாக) எந்தப் பாவத்தையும் அவர்கள் குறிப்பிடாமல்- நான் என்னையே காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது; நான் என்னையே காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது. நீங்கள் வேறெவரிடமாவது செல்லுங்கள்; நீங்கள் (இறுதித்தூதர்) முஹம்மத் (ஸல்) அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறுவார்கள்.
அப்போது மக்கள் என்னிடம் வந்து, "முஹம்மதே! நீங்கள் அல்லாஹ்வின் தூதர்; இறைத் தூதர்களில் இறுதியானவர். உங்களது முன் பின் பாவங்களை இறைவன் மன்னித்து விட்டான். எங்களுக்காக உங்கள் இறைவனிடம் பரிந்து பேசுங்கள். நாங்கள் (சிக்கிக்கொண்டு)

இருக்கும் (அவல) நிலையையும், எங்களுக்கு நேர்ந்துள்ள (துன்ப) நிலையையும் நீங்கள் கவனிக்கவில்லையா?" என்று கூறுவர்.

அப்போது நான் புறப்பட்டு இறைவனின் அரியாசனத்திற்குக் கீழே சென்று என் இறைவனுக்கு(ப் பணிந்து) சஜ்தாவில் விழுவேன். பிறகு இறைவன் எனக்கு முன் வேறெவருக்கும் (உள்ளத்தில்) உதிக்கச் செய்திராத இறைப் புகழ்மாலைகளையும் அழகிய தோத்திரங்களையும் எனக்கு உதிக்கச் செய்வான். பிறகு "முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள்! கேளுங்கள்; அது உங்களுக்குத் தரப்படும். பரிந்துரையுங்கள்; உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்" என்று சொல்லப்படும். அப்போது நான் என் தலையை உயர்த்தி, "இறைவா! என் சமுதாயம்; என் சமுதாயம்" என்பேன். அதற்கு "முஹம்மதே! சொர்க்கவாசல்களில் வலப் பக்க வாசல் வழியாக எந்தவிதக் கேள்வி கணக்கும் இல்லாமல் உங்கள் சமுதாயத்தார் சிலரை நுழையச் செய்யுங்கள்; அவர்கள் மற்ற வாசல்களிலும் மக்களுடன் இணைந்து நுழைந்து கொள்ளலாம்' என்று கூறப்படும்.
முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! சொர்க்கவாசலின் இரு பக்கங்களுக்கிடையேயான தூரம் "மக்காவிற்கும் (பஹ்ரைனிலுள்ள) ஹஜர் எனும் ஊருக்கும்' அல்லது "மக்காவுக்கும் (சிரியாவிலுள்ள) புஸ்ரா எனும் ஊருக்கும்' இடையிலுள்ள தூரமாகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

328 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் (ஒரு விருந்தில்) தக்கடி ("ஸரீத்') எனும் உணவும் (சமைக்கப்பட்ட) இறைச்சியும் இருந்த ஒரு தட்டு வைக்கப்பட்டது. அப்போது அதிலிருந்து முன்கால் சப்பை ஒன்றை எடுத்துக் கடித்து சிறிது உண்டார்கள். ஆட்டிலேயே அதுதான் அவர்களுக்குப் பிடித்த பகுதியாகும். பிறகு, "நான் மறுமை நாளில் மனிதர்களின் தலைவன் ஆவேன்" என்று கூறினார்கள்.
பிறகு இன்னொரு முறை கடித்துவிட்டு, "நான் மறுமை நாளில் மக்களின் தலைவன் ஆவேன்" என்று (மீண்டும்) கூறினார்கள். தம் தோழர்கள் அது குறித்து (ஏன்) எவ்வாறு என்று வினவாததைக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது எவ்வாறு என்று நீங்கள் வினவமாட்டீர்களா?" என்று கேட்டார்கள். உடனே தோழர்கள், "அது எவ்வாறு, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(மறுமை நாளில்) மக்கள் அகிலத்தின் அதிபதிக்கு முன்னால் நின்றுகொண்டிருப்பார்கள்..." என்று தொடங்கி, மேற்கண்ட ஹதீஸிலுள்ளதைப் போன்றே கூறினார்கள்.
இப்ராஹீம் (அலை) அவர்கள் தொடர்பாக இதில் பின்வரும் தகவல்கள் அதிகப்படியாக இடம் பெற்றுள்ளன:
இப்ராஹீம் (அலை) அவர்கள் (மக்களுக்காகத் தம்மால் பரிந்து பேசமுடியாது என்று கூறிவிட்டு), தாம் (உலகில்) நட்சத்திரத்தைப் பார்த்து "இதுதான் என் இறைவன்" என்றும், அம்மக்களின் தெய்வச் சிலைகளை (உடைத்தது) குறித்து, "இவற்றில் பெரியதுதான் இவ்வாறு செய்தது" என்றும், (நோயில்லாமலேயே) "நான் நோயுற்றிருக்கிறேன்' என்றும் (மூன்று பொய்களைச்) சொன்னதை நினைவு கூர்ந்தார்கள்.

மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகப் பின்வரும் தகவலும் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது:
முஹம்மதின் உயிர் யார் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! சொர்க்க வாயிலின் இரு பக்கத் தூண்களுக்கிடையேயான தூரம் "மக்காவிற்கும் (பஹ்ரைனிலுள்ள) ஹஜர் எனும் ஊருக்கும்' அல்லது "ஹஜர் எனும் ஊருக்கும் மக்காவிற்கும்' இடையிலுள்ள தூரமாகும். "இதில் எதை ((முந்தி எதைப் பிந்தி)க் கூறினார்கள் என்று தெரியவில்லை" என்று அறிவிப்பாளர் கூறுகிறார்.

329 அபூஹுரைரா (ரலி) மற்றும் ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) ஆகியோர் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் (மறுமை நாளில்) மனிதர்களை ஒன்றுகூட்டுவான். அங்கு இறை நம்பிக்கையாளர்களும் நின்றுகொண்டிருப்பார்கள். அவர்களுக்கு அருகில் சொர்க்கம் கொண்டு வரப்படும். உடனே அவர்கள் ஆதம் (அலை) அவர்களிடம் சென்று, "எங்கள் தந்தையே! எங்களுக்காகச் சொர்க்கத்தின் வாசலைத் திறக்கும்படி கூறுங்கள்" என்பார்கள். அதற்கு ஆதம் (அலை) அவர்கள் "உங்கள் தந்தை ஆதம் செய்த தவறுதானே உங்களைச் சொர்க்கத்திலிருந்தே வெளியேற்றியது! அ(வ்வாறு சொர்க்கத்தைத் திறக்குமாறு கூறுவ)தற்கு நான் உரியவன் அல்லன். (ஆகவே,) நீங்கள் என் புதல்வரும் அல்லாஹ்வின் உற்ற நண்பருமான இப்ராஹீம் அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறுவார்கள்.
(அவ்வாறே மக்களும் செல்ல) இப்ராஹீம் (அலை) அவர்கள், "நான் அதற்கு உரியவன் அல்லன். நான் உற்ற நண்பனாக இருந்ததெல்லாம் (வானவர் ஜிப்ரீல் தூதுவராக இருந்த) பின்னணியில்தான்; அந்தப் பின்னணியில்தான். (ஆகவே,) நீங்கள் அல்லாஹ் (நேரடியாக) உரையாடிய மூசா (அலை) அவர்களை நாடிச் செல்லுங்கள்" என்று கூறுவார்கள். அவ்வாறே மக்களும் மூசா (அலை) அவர்களிடம் செல்ல, அவர்களும் "நான் அதற்கு உரியவன் அல்லன். (ஆகவே,) நீங்கள் அல்லாஹ்வின் வார்த்தையும் அவனுடைய ஆவியுமான ஈசா (அலை) அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறுவார்கள். (அவ்வாறே மக்களும் செல்ல) ஈசா (அலை) அவர்கள், "நான் அதற்கு உரியவன் அல்லன்" என்று கூறுவார்கள்.
பின்னர் மக்கள் முஹம்மத் (ஸல்) அவர்களிடம் செல்வார்கள். உடனே அவர்கள் எழு(ந்து பரிந்துரைக்க அனுமதி கோரு)வார்கள். அவர்களுக்கு அனுமதி வழங்கப்படும். அப்போது நம்பகத்தன்மையும் இரத்தபந்த உறவும் அனுப்பிவைக்கப்படும். அவையிரண்டும் (நரகத்தின் மீதுள்ள "ஸிராத்' எனும்) அப்பாலத்தின் இரு மருங்கிலும் வலம் இடமாக நின்றுகொள்ளும். அப்போது உங்களில் முதல் அணியினர் மின்னலைப் போன்று அதைக் கடந்துசெல்வார்கள்.
-இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியபோது, நான் (அபூஹுரைரா-ரலி),
"என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். மின்னலைப் போன்று கடந்துசெல்வது என்றால் என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "மின்னல் எவ்வாறு கண் இமைக்கும் நேரத்தில் சென்று விட்டுத் திரும்புகிறதென்று நீங்கள் பார்க்க வில்லையா?" என்று கேட்டார்கள்.-
பிறகு காற்று வீசுவதைப் போன்றும், பறவை பறப்பதைப் போன்றும், மனிதர்கள் விரைந்து ஓடுவதைப் போன்றும் இறைநம்பிக்கையாளர்களை அழைத்துக்கொண்டு அவர்களின் (நற்)செயல்கள் ஓடும். உங்கள் நபியோ அந்தப் பாலத்தின் மீது நின்றுகொண்டு, "இறைவா!

காப்பாற்று! காப்பாற்று!' என்று கூறிக்கொண்டிருப்பார்கள். இறுதியில் அடியார்களின் செயல்கள் செயலிழந்துபோகும்; அப்போது ஒருவர் வருவார். அவரால் நடக்க முடியாமல் தவழ்ந்தபடியே (அதைக் கடந்து) செல்வார். அந்தப் பாலத்தின் இரு ஓரங்களிலும் கொக்கிகள் மாட்டப்பட்டிருக்கும். சிலரைப் பிடிக்கும்படி அவற்றுக்கு உத்தரவிடப்பட்டிருக்கும். சிலர் காயப்படுத்தப்பட்டுத் தப்பிவிடுவர்; சிலர் நரகநெருப்பில் தள்ளப்படுவர்.
அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அபூஹுரைராவின் உயிர் யார் கையில் உள்ளதோ அவன்மீது ஆணையாக! நரகத்தின் ஆழமானது, எழுபது ஆண்டுகள் தொலைதூரம் கொண்டதாகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 85 "நானே சொர்க்கத்திற்காகப் பரிந்துரைக்கும் முதல் மனிதராவேன்; இறைத் தூதர்களிலேயே அதிகமான மக்களால் பின்பற்றப்படுபவன் ஆவேன்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.**

330 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நானே சொர்க்கத்திற்காகப் பரிந்துரைக்கும் முதல் மனிதராவேன்; இறைத்தூதர்களிலேயே அதிகமான மக்களால் பின்பற்றப்படுபவன் ஆவேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

331 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நானே மறுமை நாளில் இறைத்தூதர்களிலேயே அதிகமான மக்களால் பின்பற்றப்படுபவன் ஆவேன்; நானே சொர்க்கத்தின் வாசலை முதன் முதலில் தட்டுபவன் ஆவேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

332 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நானே சொர்க்கத்திற்காகப் பரிந்துரைக்கும் முதல் ஆள் ஆவேன். நான் (இறைவனின் தூதர் என) ஏற்றுக்கொள்ளப்பட்ட அளவுக்கு இறைத்தூதர்களில் வேறெவரும் ஏற்றுக் கொள்ளப் பட்டதில்லை. இறைத்தூதர்களில்(இப்படியும்) ஒருவர் இருந்தார்; அவருடைய சமுதாயத்தாரில் ஒரேயொரு மனிதர்தாம் அவரை ஏற்றுக்கொண்டார்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

333 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் மறுமை நாளில் சொர்க்கத்தின் தலைவாயிலுக்குச் சென்று அதைத் திறக்கும்படி கோருவேன். அப்போது அதன் காவலர், "நீங்கள் யார்?" என்று கேட்பார். நான், "முஹம்மத்' என்பேன். அதற்கு அவர், "உங்களுக்காகவே நான் கட்டளையிடப்பட்டுள்ளேன்; உங்களுக்கு முன் வேறு யாருக்காகவும் (சொர்க்க வாயிலை) நான் திறக்கலாகாது (எனப் பணிக்கப் பட்டுள்ளேன்)" என்று கூறுவார்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்தள்ளது.

**பாடம் : 86 நபி (ஸல்) அவர்கள் (தமக்கு அளிக்கப்பட்ட சிறப்புப்) பிரார்த்தனையி(ன் வாய்ப்பி)னை தம் சமுதாயத்தாருக்குப் பரிந்துரை செய்வதற்காகப் பத்திரப்படுத்தியது.**

334 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வோர் இறைத்தூதருக்கும் அவர் (தம் சமுதாயத்தாருக்காகப்) பிரார்த்தித்துக்கொள்ள (அங்கீகரிக்கப்பட்ட) பிரார்த்தனை ஒன்று (வழங்கப்பட்டு) உள்ளது. நான் எனது பிரார்த்தனையை, மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்குப் பரிந்துரை செய்வதற்காகப் பத்திரப்படுத்தவே விரும்புகிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

335 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வோர் இறைத்தூதருக்கும் (தம் சமுதாயத்தார் தொடர்பாக) ஒரு (சிறப்புப்) பிரார்த்தனை உண்டு. அல்லாஹ் நாடினால் நான் எனது பிரார்த்தனையை, மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்குப் பரிந்துரை செய்வதற்காகப் பத்திரப்படுத்தவே விரும்புகிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்தள்ளது.

336 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

337 அம்ர் பின் அபீசுஃப்யான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் கஅபுல் அஹ்பார் (ரஹ்) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள், "ஒவ்வோர் இறைத்தூதருக்கும் அவர் (தம் சமுதாயத்தாருக்காகப்) பிரார்த்தித்துக் கொள்ள பிரார்த்தனை ஒன்று உண்டு. நான் அல்லாஹ் நாடினால் எனது பிரார்த்தனையை, மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்குப் பரிந்துரை செய்வதற்காகப் பத்திரப்படுத்தவே விரும்புகிறேன் என்று கூறினார்கள்" என்றார்கள்.
அதற்கு கஅப் (ரஹ்) அவர்கள்,"நீங்கள் இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள், "ஆம்' என்று பதிலளித்தார்கள்.

338 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வோர் இறைத்தூதருக்கும் (தம் சமுதாயத்தார் தொடர்பாக) ஒரு (சிறப்புப்) பிரார்த்தனை உண்டு; எல்லா இறைத்தூதர்களும் அந்தப் பிரார்த்தனையை அவசரப்பட்டு (இம்மையிலேயே) கேட்டுவிட்டனர். நான் எனது பிரார்த்தனையை, மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்குப் பரிந்துரை செய்வதற்காகப் பத்திரப்படுத்தி வைத்துள்ளேன். அல்லாஹ் நாடினால் என் சமுதாயத்தாரில் யார் அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்காமல் மரணிக்கிறாரோ அவருக்கு அது கிடைக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

339 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வோர் இறைத்தூதருக்கும் அவர் பிரார்த்தித்துக்கொள்ள அங்கீகரிக்கப்பட்ட பிரார்த்தனை ஒன்று உண்டு. அது ஏற்றுக் கொள்ளப்பட்டு, வழங்கப்பட்டும்விட்டது. நான் எனது பிரார்த்தனையை, மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்குப் பரிந்துரை செய்யப் பத்திரப் படுத்தி வைத்துவிட்டேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

340 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வோர் இறைத்தூதருக்கும் தம் சமுதாயத்தார் தொடர்பாக ஒரு (சிறப்புப்) பிரார்த்தனை செய்துகொள்ள உரிமை உண்டு; அதை அவருக்கு ஏற்கப்பட்டும்விட்டது. நான் அல்லாஹ் நாடினால் எனது பிரார்த்தனையை, மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்காகப் பரிந்துரை செய்யத் தள்ளிவைக்க விரும்புகிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

341 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வோர் இறைத்தூதருக்கும் தம் சமுதாயத்தார் தொடர்பாக ஒரு (சிறப்புப்) பிரார்த்தனை செய்ய உரிமை உண்டு. நான் எனது பிரார்த்தனையை, மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்காகப் பரிந்துரை செய்ய பத்திரப்படுத்தி வைத்துவிட்டேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

342 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

343 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளளது.
அவற்றில், அறிவிப்பாளர் வகீஉ (ரஹ்) அவர்கள் "ஒவ்வோர் இறைத்தூதருக்கும் ஒரு (சிறப்புப்) பிரார்த்தனை வழங்கப்பட்டது' என்று குறிப்பிட்டார்கள்.

344 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப் பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
இதை அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து கத்தாதா (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

345 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வோர் இறைத்தூதருக்கும் தம் சமுதாயத்தார் தொடர்பாக ஒரு (சிறப்புப்) பிரார்த்தனை செய்ய உரிமை உண்டு. நான் எனது பிரார்த்தனையை, மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்காகப் பரிந்துரை செய்யப் பத்திரப்படுத்திவிட்டேன்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 87 நபி (ஸல்) அவர்கள் தம் சமுதாயத்தாருக்காகப் பிரார்த்தித்ததும், அவர்கள் மீதுள்ள பரிவால் அழுததும்.**

346 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள், இப்ராஹீம் (அலை) அவர்கள் தொடர்பாக அல்லாஹ் குறிப்பிட்டுள்ள "இறைவா! நிச்சயமாக! இவை (சிலைகள்) மக்களில் அதிகம் பேரை வழிகெடுத்துவிட்டன;எனவே, எவர் என்னைப் பின்பற்றுகிறாரோ அவர் என்னைச் சேர்ந்தவராவார்; எவர் எனக்கு மாறு செய்கிறாரோ (அவரை) நீயே மன்னிப்பவனாகவும் கருணைபுரிபவனாகவும் இருக்கின்றாய்" என்ற (14:36ஆவது) வசனத்தையும், ஈசா (அலை) அவர்கள் கூறியதாகக் குறிப்பிட்டுள்ள "(இப்போது) நீ இவர்களுக்கு வேதனை அளித்தால் இவர்கள் நிச்சயமாக உன்னுடைய அடியார்களே! நீ இவர்களை மன்னித்தாலும் (அப்போதும்) நீயே யாவற்றையும் மிகைத்தவனும் நுண்ணறிவுடையவனுமாய் இருக்கின்றாய்" என்ற (5:118 ஆவது) வசனத்தையும் ஓதிக் காட்டினார்கள். அப்போது நபியவர்கள் தம்மிரு கைகளையும் உயர்த்தியவாறு "இறைவா! என் சமுதாயம்; என் சமுதாயம் (இவர்களைக் காப்பாற்றுவாயாக!)" என்று பிரார்த்தித்தார்கள்; அழுதார்கள். அப்போது வலிவும் மாண்புமிக்க அல்லாஹ் (வானவர் ஜிப்ரீலிடம்), "ஜிப்ரீலே! நீங்கள் முஹம்மதிடம் சென்று (உங்கள் இறைவனுக்கு எல்லாம் தெரியும்; என்றாலும்) "நீங்கள் ஏன் அழுகிறீர்கள்?' என்று கேளுங்கள்" என்றான்.
அவ்வாறே ஜிப்ரீல் (அலை) அவர்கள் சென்று, அது குறித்துக் கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், -அல்லாஹ்வுக்குத் தெரியும்; என்றாலும்- தாம் கூறியவற்றை (மேற்கண்டவாறு) தெரிவித்தார்கள். அதற்கு அல்லாஹ், ""ஜிப்ரீலே! முஹம்மதிடம் சென்று, நாம் உம் சமுதாயத்தார் தொடர்பாக உம்மை திருப்தியடையச் செய்வோம்; உம்மை நாம் கவலையடையச் செய்யமாட்டோம்" என்று கூறுக என்றான்.

**பாடம் : 88 இறைமறுப்பாளராக இறந்தவர் நரகத்திற்கே செல்வார். எந்தப் பரிந்துரையும் அவருக்குக் கிடைக்காது; இறை நெருக்கம் பெற்றவர்கள் யாருடைய உறவும் அவருக்குப் பயனளிக்காது.**

347 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! (இஸ்லாத்திற்கு முன் இறந்துவிட்ட) என் தந்தை எங்கே இருக்கிறார்?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(நரக) நெருப்பில்" என்று பதிலளித்தார்கள். அவர் திரும்பிச் சென்றபோது அவரை நபி (ஸல்) அவர்கள் அழைத்து, "என் தந்தையும் உன் தந்தையும் (நரக) நெருப்பில்தான் (இருக்கிறார்கள்)" என்று கூறினார்கள்.

**பாடம் : 89 "(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கு நீங்கள் எச்சரிக்கை செய்யுங்கள்'' எனும் (26:214ஆவது) இறைவசனம்.**

348 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கு எச்சரிக்கை செய்யுங்கள்" எனும் இந்த (26:214ஆவது) இறைவசனம் அருளப்பெற்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறைஷியரை (ஓரிடத்திற்கு) அழைத்தார்கள்.
அவர்கள் அனைவரும் ஒன்றுகூடினர். அப்போது பொதுவாகவும் தனித்தனியாகவும் பெயர் குறிப்பிட்டு,"கஅப் பின் லுஅய்யின் மக்களே! உங்களை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். முர்ரா பின் கஅபின் மக்களே! உங்களை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். அப்து ஷம்சின் மக்களே! உங்களை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். அப்து மனா∴பின் மக்களே! உங்களை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். ஹாஷிமின் மக்களே! உங்களை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். அப்துல் முத்தலிபின் மக்களே! உங்களை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். (என் மகள்) ∴பாத்திமாவே! உன்னை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றிக் கொள்! ஏனென்றால், அல்லாஹ்விடமிருந்து வரும் (முடிவாகிவிட்ட சோதனை) எதிலிருந்தும் உங்களைக் காக்க என்னால் இயலாது. ஆயினும், உங்களுடன் எனக்கு இரத்த உறவு உண்டு. அதை நான் (காய்ந்துபோகவிடாமல்) பசுமையாக்குவேன் (உங்களுடைய உறவைப் பேணி நடந்துகொள்வேன்)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

349 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
இருப்பினும், முந்தைய அறிவிப்பே நிறைவானதும் நிரப்பமானதும் ஆகும்.

350 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கு எச்சரிக்கை செய்யுங்கள்" எனும் (26:214ஆவது) இறைவசனம் அருளப்பெற்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஸ∴பா' மலைக் குன்றின் மீதேறி, "முஹம்மதின் மகள் ∴பாத்திமாவே! அப்துல் முத்தலிபின் மகள் ஸ∴பிய்யாவே! அப்துல் முத்தலிபின் மக்களே! அல்லாஹ்விடமிருந்து வரும் (முடிவாகிவிட்ட சோதனை) எதிலிருந்தும் உங்களை என்னால் காக்க இயலாது. (வேண்டுமானால்) என் செல்வத்திலிருந்து நீங்கள் விரும்பியதை என்னிடம் கேளுங்கள் (தருகிறேன்)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

351 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு "(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கு எச்சரிக்கை செய்யுங்கள்" எனும் (26:214ஆவது) இறைவசனம் அருளப்பெற்ற போது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குறைஷிக் கூட்டத்தாரே! உங்கள் உயிர்களை (இஸ்லாத்தை ஏற்பதன் மூலம்) விலைக்கு வாங்கிக் (காப்பாற்றிக்)கொள்ளுங்கள். உங்களை அல்லாஹ்விடமிருந்து ஒரு சிறிதும் என்னால் காப்பாற்ற முடியாது. அப்துல் முத்தலிபின்

மக்களே! உங்களை அல்லாஹ்விடமிருந்து ஒரு சிறிதும் என்னால் காப்பாற்ற இயலாது. அப்பாஸ் பின் அப்தில் முத்தலிபே! உங்களை அல்லாஹ்விடமிருந்து ஒரு சிறிதும் என்னால் காப்பாற்ற இயலாது. அல்லாஹ்வின் தூதருடைய அத்தை ஸஃபிய்யாவே! உங்களை அல்லாஹ்விடமிருந்து ஒரு சிறிதும் என்னால் காப்பாற்ற இயலாது. அல்லாஹ்வின் தூதருடைய புதல்வி ஃபாத்திமாவே! என் செல்வத்திலிருந்து நீ விரும்பியதைக் கேள்! (தருகிறேன்.) ஆனால், அல்லாஹ்விடமிருந்து, உன்னை என்னால் ஒரு சிறிதும் காப்பாற்ற முடியாது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

352 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

353 கபீஸா பின் அல்முகாரிக் (ரலி), ஸுஹைர் பின் அம்ர் (ரலி) ஆகியோர் கூறியதாவது:
"(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கு எச்சரிக்கை செய்யுங்கள்" எனும் (26:214 ஆவது) இறைவசனம் அருளப்பெற்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒரு மலையின் பாறைக் குவியலை நோக்கிச் சென்று அதன் உச்சியிலிருந்த கல்மீது ஏறி, கூவி அழைத்து, "அந்தோ! அப்து மனாஃபின் மக்களே! நான் (உங்களை) எச்சரிப்பவன் ஆவேன். எனது நிலையும் உங்களது நிலையும் ஒரு மனிதனின் நிலையை ஒத்திருக்கிறது. அவன் எதிரிகளைக் கண்டான். தன் குடும்பத்தாரைப் பாதுகாப்பதற்காக உடனே அவன் (விரைந்து) சென்றான். அப்போது (எங்கே தான் செல்வதற்கு முன் எதிரிகள்) முந்திக்கொண்டு (தம் குடும்பத்தாரைத் தாக்கி)விடுவார்களோ என்று அவன் அஞ்சினான். எனவே, அவன் (அங்கிருந்தபடியே), "யா ஸபாஹா! (உதவி, உதவி! அதிகாலை ஆபத்து)' என்று சப்தமிடத் தொடங்கினான்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

354 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

355 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கு எச்சரிக்கை செய்யுங்கள் (அவர்களில் நல்லெண்ணம் படைத்த உங்கள் கூட்டத்தாரையும் எச்சரிக்கை செய்யுங்கள்)" எனும் (26:214ஆவது) இறைவசனம் அருளப் பெற்றபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டுச்சென்று "ஸஃபா' மலைக்குன்றின் மீதேறி உரத்த குரலில் "யா ஸபாஹா!' (உதவி! உதவி! அதிகாலை ஆபத்து) என்று உரத்த குரலில் கூறினார்கள். அப்போது (குறைஷி) மக்கள், "சப்தமிடும் இந்த மனிதர் யார்?" என்று கேட்டார்கள். அதற்கு "முஹம்மத்' என்று (சிலர்) பதிலளித்தனர். உடனே முஹம்மத் (ஸல்) அவர்களை நோக்கி மக்கள் திரண்டனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்னாரின் மக்களே, இன்னாரின் மக்களே, இன்னாரின் மக்களே! அப்து மனாஃபின் மக்களே! அப்துல் முத்தலிபின் மக்களே!" என்று அழைத்தார்கள். அவர்கள் அனைவரும் ஒன்றுகூடினர். அப்போது, "இந்த மலை அடிவாரத்திலிருந்து (உங்களைத் தாக்குவதற்காக எதிரிகளின்) குதிரைப் படையொன்று புறப்பட்டுவருகிறது என்று நான் உங்களிடம் தெரிவித்தால், என்னை நீங்கள் நம்பியிருப்பீர்களா?" என்று கேட்டார்கள். மக்கள், "உம்மிடமிருந்து எந்தப் பொய்யையும்

நாங்கள் (இதுவரை) அனுபவித்ததில்லை. (அவ்வாறிருக்க, இதை நாங்கள் நம்பாமல் இருப்போமா?)" என்று சொன்னார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியென்றால், (என் மார்க்கத்தை நீங்கள் ஏற்காவிட்டால் இறைவனின்) கடும் வேதனையொன்று எதிர்நோக்கியுள்ளது என்று உங்களை எச்சரிக்கை செய்கின்றேன்" என்றார்கள். (அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்து குறைஷித் தலைவர்களில் ஒருவனான) அபூலஹப், "உமக்கு அழிவுண்டாகட்டும்! இதற்காகத்தான் எங்களை ஒன்றுகூட்டினாயா?" என்று கேட்டான். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (புறப்பட) எழுந்தார்கள். அப்போது "அழியட்டும் அபூலஹபின் இரு கரங்கள்; அவனே அழியட்டும்" எனும் (111ஆவது) அத்தியாயம் அருளப்பெற்றது.
இந்த (111:1ஆவது) வசனத்தை (அதன் இறுதியில் "கத்' (ஞூ்குப்) எனும் இடைச் சொல்லை இணைத்து) "வ கத் தப்ப' (அவன் அழிந்தேவிட்டான்) என்றே அப்போது (அறிவிப்பாளர்) அஃமஷ் (ரஹ்) அவர்கள் ஓதினார்கள்.

356 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஸஃபா' மலைக்குன்றின் மீது ஏறி, "யா ஸபாஹா!" (உதவி! உதவி! அதிகாலை ஆபத்து!) என்று கூறினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பிக்கிறது.
"(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கு எச்சரிக்கை செய்யுங்கள்" எனும் (26:214ஆவது) வசனம் அருளப்பெற்றது தொடர்பாக அவற்றில் கூறப்படவில்லை.

**பாடம் : 90 நபி (ஸல்) அவர்கள் (தம் பெரிய தந்தை) அபூதாலிப் அவர்களுக்காகப் பரிந்துரை செய்ததும், அதை முன்னிட்டு அவர்களுக்கு (நரக வேதனை) குறைக்கப்பட்டதும்.**

357 அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், "அல்லாஹ்வின் தூதரே! அபூதாலிப் அவர்களுக்கு ஏதேனும் (பிரதி) உபகாரம் செய்தீர்களா? ஏனெனில், தங்களை அவர் பாதுகாப்பவராகவும் தங்களுக்காக (எதிரிகள்மீது) கோபப்படுபவராகவும் இருந்தாரே!" என்று கேட்டேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்; அவர் இப்போது (கணுக்கால்வரை தீண்டும்) சிறிதளவு நரக நெருப்பிலேயே உள்ளார். நான் இல்லையானால் அவர் நரகின் அடித்தளத்திற்குச் சென்றிருப்பார்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

358 அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், "அல்லாஹ்வின் தூதரே! அபூதாலிப் தங்களைப் பாதுகாப்பவராகவும், தங்களுக்கு உதவி செய்பவராகவும் இருந்தாரே! அது அவருக்குப் பயனளித்ததா?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்; அவரை நான் நரகத்தின் பிரதான பகுதியில் கண்டேன். உடனே அவரை அங்கிருந்து அப்புறப்படுத்தி (கணுக்கால்வரை தீண்டும்) சிறிதளவு நெருப்பிற்குக் கொண்டுவந்தேன்" என்று கூறினார்கள்.

359 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

360 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் அவர்களுடைய பெரிய தந்தை அபூதாலிப் அவர்களைப் பற்றிக் கூறப்பட்டது. அப்போது அவர்கள், "மறுமை நாளில் அவருக்கு என் பரிந்துரை பயனளிக்கக் கூடும்; (அதனால்) நரக நெருப்பு அவரது (முழு உடலையும் தீண்டாமல்) கணுக்கால்கள்வரை மட்டுமே தீண்டும்படி ஆக்கப்படலாம். (ஆனால்,) அதனால் அவருடைய மூளை (தகித்துக்) கொதிக்கும்" என்று கூறினார்கள்.

**பாடம் : 91 நரகவாசிகளிலேயே மிகவும் குறைவான வேதனை அனுபவிக்கும் மனிதர்.**

361 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகவாசிகளிலேயே மிகவும் குறைவான வேதனை அனுபவிப்பவர், நெருப்பாலான இரு காலணிகளை அணி(விக்கப்படு)வார். அந்தக் காலணிகளின் வெப்பத்தால் அவரது மூளை (தகித்துக்) கொதிக்கும்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

362 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகவாசிகளிலேயே மிகவும் குறைவான வேதனை அனுபவிப்பவர் அபூதாலிப் ஆவார். அவர் (நெருப்பாலான) இரு காலணிகளை அணிந்துகொண்டிருப்பார். அதனால் அவரது மூளை (தகித்துக்) கொதிக்கும்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

363 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் நரகவாசிகளிலேயே மிகவும் குறைவான வேதனை அனுபவிப்பவர் ஒரு மனிதராவார். அவருடைய உள்ளங்கால்களின் நடுவில் இரண்டு நெருப்புக் கங்குகள் வைக்கப் படும். அவற்றால் அவரது மூளை கொதிக்கும்.
இதை நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் உரையாற்றிக்கொண்டிருக்கும்போது அறிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

364 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகவாசிகளிலேயே மிகவும் குறைவான வேதனை அனுபவிக்கும் நபர் ஒரு மனிதராவார். அவருக்கு நெருப்பாலான இரு காலணிகளும் வார்களும் இருக்கும். (அடுப்பில் வைக்கப் பட்டுள்ள) செம்புப் பாத்திரம் கொதிப்பதைப் போன்று அவற்றால் அவரது மூளை கொதிக்கும். நரகவாசிகளிலேயே அவர் தாம் மிகவும் குறைவான வேதனை அனுபவிப்பவராய் இருக்க, அவரோ "தம்மைவிட வேறெவரும் மிகக் கடுமையாக வேதனை செய்யப்படவில்லை' என எண்ணுவார் (அந்த அளவுக்கு வேதனை கடுமையாக இருக்கும்).
இதை நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 92 இறைமறுப்பாளராக மரணித்த ஒருவருக்கு அவர் புரிந்த (நற்)செயல் எதுவும் (மறுமையில்) பயனளிக்காது என்பதற்கான சான்று.**

365 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், "அல்லாஹ்வின் தூதரே! இப்னு ஜுத்ஆன் அறியாமைக் காலத்தில் உறவுகளைப் பேணி நடப்பவராகவும் ஏழைகளுக்கு உணவளிப்பவராகவும் இருந்தாரே! இவை அவருக்கு (மறுமை நாளில்) பயனளிக்குமா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அவருக்குப் பயனளிக்கா; அவர் ஒரு நாள்கூட "இறைவா! விசாரணை நாளில் என் பாவத்தை மன்னித்தருள்வாயாக!' என்று கேட்டதேயில்லை" என்று பதிலளித்தார்கள்.

**பாடம் : 93 (கொள்கைச் சகோதரர்களான) இறை நம்பிக்கையாளர்களுடன் நட்பு கொள்வதும், (எதிரிகளான) மற்றவர்களின் நட்புறவைத் துண்டிப்பதும், அவர்களிடமிருந்து தம் பொறுப்பை விலக்கிக் கொள்வதும்.**

366 அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"இன்னாரின் தந்தையின் குடும்பத்தார் என் நேசர்கள் அல்லர்; என் நேசர்கள் யாரெனில், அல்லாஹ்வும் நல்ல இறைநம்பிக்கையாளர்களும்தாம்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒளிவுமறைவின்றி பகிரங்கமாகவே கூறுவதை நான் கேட்டேன்.

**பாடம் : 94 முஸ்லிம்களில் ஒரு பெருங்கூட்டம் எந்த விதமான விசாரணையும் வேதனையும் இல்லாமல் சொர்க்கத்தில் நுழைவார்கள் என்பதற்கான சான்று.**

367 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "என் சமுதாயத்தாரில் எழுபதாயிரம் பேர் எந்த விசாரணையுமின்றி சொர்க்கத்தில் நுழைவார்கள்" என்று கூறினார்கள்.
உடனே (உக்காஷா எனும்) ஒரு மனிதர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வே! இவரை அவர்களில் ஒருவராக ஆக்குவாயாக!" எனப் பிரார்த்தித்தார்கள். பிறகு மற்றொரு மனிதர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்றார். நபி (ஸல்) அவர்கள் "இந்த விஷயத்தில் உக்காஷா உம்மை முந்திவிட்டார்" என்று சொன்னார்கள்.

368 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

369 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் சமுதாயத்தாரில் எழுபதாயிரம் பேர் கொண்ட ஒரு கூட்டம் பௌர்ணமி இரவில் சந்திரன் பிரகாசிப்பதைப் போன்று முகங்கள் பிரகாசித்த படி (விசாரணையின்றி சொர்க்கத்துக்குள்) நுழைவார்கள்" என்று கூறினார்கள்.
உடனே உக்காஷா பின் மிஹ்ஸன் அல் அசதீ (ரலி) அவர்கள் தம் மீதிருந்த கோடுபோட்ட சால்வையை உயர்த்தியவாறு எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று சொன்னார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வே! இவரையும் அவர்களில் ஒருவராக ஆக்குவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள். பிறகு அன்சாரிகளில் ஒருவர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்!" என்று சொன்னார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்த விஷயத்தில் உக்காஷா உம்மை முந்திவிட்டார்" என்று சொன்னார்கள்.

370 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் எழுபதாயிரம் பேர் (விசாரணையின்றி) சொர்க்கத்தில் நுழைவார்கள். அவர்களில் ஒரேயொரு கூட்டத்தினர் சந்திரனைப் போன்று பிரகாசிப்பர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

371 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "என் சமுதாயத்தாரில் எழுபதாயிரம் பேர் எந்த விசாரணையுமின்றி சொர்க்கத்தில் நுழைவார்கள்" என்று கூறினார்கள். மக்கள், "அவர்கள் யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், "அவர்கள் (நோய்க்காக) சூடிட்டுக் கொள்ளமாட்டார்கள்; ஓதிப்பார்க்கமாட்டார்கள்; தங்கள் இறைவன்மீதே முழு நம்பிக்கை வைப்பார்கள்" என்று கூறினார்கள்.
உடனே உக்காஷா (ரலி) அவர்கள் எழுந்து, "அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும் படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்!" என்று சொன்னார். நபி (ஸல்) அவர்கள், "அவர்களில் நீரும் ஒருவர்தாம்" என்று சொன்னார்கள். உடனே இன்னொருவர் எழுந்து, "அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள், நபியே!" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், "இந்த விஷயத்தில் உக்காஷா உம்மை முந்திவிட்டார்" என்று சொன்னார்கள்.

372 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,
"என் சமுதாயத்தாரில் எழுபதாயிரம் பேர் விசாரணையின்றி சொர்க்கத்தில் நுழைவார்கள்" என்று கூறினார்கள். மக்கள், "அவர்கள் யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்கள் எத்தகையவர்கள் எனில், ஓதிப்பார்க்கமாட்டார்கள்; பறவை சகுனம் பார்க்கமாட்டார்கள்; (நோய்க்காக) சூடிட்டுக் கொள்ளமாட்டார்கள்; தங்கள் இறைவன் மீதே முழு நம்பிக்கை வைப்பார்கள்" என்று கூறினார்கள்.

373 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நிச்சயமாக என் சமுதாயத்தாரில் 'எழுபதாயிரம் பேர்' அல்லது 'ஏழு லட்சம் பேர்' ஒருவரையொருவர் பற்றிக்கொண்டு ஒரே சீராக (விசாரணையின்றி) சொர்க்கத்தில் நுழைவார்கள். அவர்களில் கடைசி நபர் நுழையாதவரை முதல் நபர் நுழையமாட்டார்; (அனைவரும் ஓரணியில் நுழைவர்). மேலும், அவர்களுடைய முகங்கள் பௌர்ணமி இரவில் (பிரகாசிக்கும்) முழு நிலவின் வடிவத்தில் இருக்கும்.
இதை சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

("எழுபதாயிரம் பேர்', "ஏழு இலட்சம் பேர்' ஆகிய) இவற்றில் எது என்று அறிவிப்பாளர் அபூஹாஸிம் (ரஹ்) அவர்களுக்குத் தெரியவில்லை.

374 ஹுஸைன் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்களிடம் இருந்துகொண்டிருந்தேன். அப்போது அவர்கள், "இன்றிரவு நட்சத்திரம் விழுந்ததைக் கண்டவர் உங்களில் யார்?" என்று கேட்டார்கள். நான், "நான் (கண்டேன்)' என்று பதிலளித்தேன். பிறகு, "(நான் தொழுகையில் ஈடுபட்டிருந்ததால் அப்போது விழித்திருந்தேன் என எண்ணிவிடாதீர்கள். ஏனெனில், அப்போது நான் எந்தத் தொழுகையிலும் இருக்கவில்லை. மாறாக, என்னை விஷ ஜந்து தீண்டிவிட்டது (அதனால் விழித்திருந்தபோதுதான் நட்சத்திரம் விழுந்ததைப் பார்த்தேன்)" என்று கூறினேன். "(விஷக்கடிக்காக) நீங்கள் என்ன செய்தீர்கள்" என்று சயீத் கேட்டார்கள். நான், "ஓதிப்பார்த்துக் கொண்டேன்" என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள், "ஏன் அவ்வாறு செய்தீர்கள்?" என்று கேட்டார்கள். நான், "ஆமிர் அஷ்ஷஅபீ (ரஹ்) அவர்கள் எமக்கு அறிவித்த ஒரு நபிமொழிதான் (அதற்குக் காரணம்)" என்று கூறினேன். அவர்கள் "ஆமிர் அஷ்ஷஅபீ (ரஹ்) அவர்கள் உங்களுக்கு என்ன அறிவித்தார்கள்?" என்று கேட்க, நான், "புரைதா பின் ஹுஸைப் அல் அஸ்லமீ (ரலி) அவர்களிடமிருந்து "கண்ணேறு, அல்லது விஷக்கடி தவிர வேறெதற்காகவும் ஓதிப்பார்த்த(லி)ல் (சிறப்பு) கிடையாது என்று ஆமிர் அஷ்அஷபீ (ரஹ்) அவர்கள் எமக்கு அறிவித்தார்கள்" என்று பதிலளித்தேன். அதற்கு சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள், "யார் தாம் செவியுற்றபடி செயல்பட்டாரோ அவர் நன்மையே செய்தார். ஆயினும், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து (பின்வருமாறு) எமக்கு அறிவித்தார்கள் என்றார்கள்:
(நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:)
(மிஃஹ்ராஜ் எனும் விண்ணுலகப் பயணத்தின்போது) எனக்குப் பல சமுதாயத்தார் எடுத்துக் காட்டப்பட்டனர். அப்போது ஓர் இறைத்தூதரை நான் கண்டேன். அவருடன் (அவருடைய சமுதாயத்தாரில் பத்துக்கும் குறைந்த) ஒரு சிறு குழுவினரே இருந்தனர். மற்றோர் இறைத்தூதருடன் ஓரிரு நபர்களே இருந்தனர். இன்னோர் இறைத்தூதருடன் ஒருவர்கூட இருக்கவில்லை. பின்னர் எனக்கு ஒரு பெருங்கூட்டம் காட்டப்பட்டது. அவர்கள் என் சமுதாயத்தார்தாம் என்று நான் எண்ணினேன். ஆனால், இது (இறைத்தூதர்) மூசாவும் அவருடைய சமுதாயமும்தான்; அடிவானத்தைப் பாருங்கள்" என்று என்னிடம் கூறப்பட்டது. அவ்வாறே நான் பார்த்தேன். அங்கு ஒரு பெரும் மக்கள் கூட்டம் இருந்தது. மேலும் "மற்றோர் அடிவானத்தைப் பாருங்கள்" என்றும் என்னிடம் கூறப்பட்டது. பார்த்தேன்; அங்கும் ஒரு பெரும் மக்கள் கூட்டம் இருந்தது. அப்போது "இதுதான் உங்கள் சமுதாயம். எந்த விசாரணையும் வேதனையுமின்றி சொர்க்கம் செல்லும் எழுபதாயிரம் பேரும் இவர்களில் அடங்குவர்" என்று எனக்குச் சொல்லப்பட்டது.
(எந்த விசாரணையும் வேதனையுமின்றி சொர்க்கம் செல்லும் அந்த எழுபதாயிரம் பேர் யார் என்பதை விளக்காமலேயே) நபி (ஸல்) அவர்கள் அங்கிருந்து சென்று தமது வீட்டுக்குள் நுழைந்து விட்டார்கள். எனவே, விசாரணையும் வேதனையுமின்றி சொர்க்கம் செல்வோர் யார் என்பது தொடர்பாக மக்கள் விவாதிக்கத் தொடங்கினார்கள். சிலர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழமையைப் பெற்றவர்களே அவர்களாக இருக்கலாம்" என்று கூறினர்.

வேறு சிலர், "இஸ்லாத்தில் பிறந்து, இறைவனுக்கு இணைவைக்காமல் இருந்தவர்களே அவர்களாக இருக்கலாம்" என்றும், இன்னும் பலவற்றையும் கூறினார்கள். அப்போது அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து, "எது குறித்து நீங்கள் விவாதித்துக்கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். அப்போது, மக்கள் (நடந்த விவாதங்களைத்) தெரிவித்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், "(எந்த விசாரணையும் வேதனையுமின்றி சொர்க்கம் செல்லவுள்ள) அவர்கள் யாரெனில், அவர்கள் தாங்களும் ஓதிப்பார்க்கமாட்டார்கள்; ஓதிப்பார்க்குமாறு பிறரிடம் கோரவுமாட்டார்கள்; பறவைகளை வைத்து சகுனம் பார்க்கமாட்டார்கள்; தம் இறைவனையே முழுமையாகச் சார்ந்திருப்பார்கள்" என்று கூறினார்கள்.

அப்போது உக்காஷா பின் மிஹ்ஸன் (ரலி) அவர்கள் எழுந்து, "அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அவர்களில் நீரும் ஒருவர்தாம்" என்று கூறினார்கள். பிறகு மற்றொருவர் எழுந்து, "அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "இந்த விஷயத்தில் உக்காஷா உம்மை முந்திவிட்டார்" என்று சொன்னார்கள்.

375 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் வாயிலாக வரும் மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

"எனக்குப் பல சமுதாயத்தார் எடுத்துக் காட்டப்பட்டனர்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என இந்த அறிவிப்பு தொடங்குகிறது. அறிவிப்பாளர் ஹுஸைன் (ரஹ்) அவர்கள் ஆரம்பத்தில் குறிப்பிட்டுள்ள தகவல் இடம்பெறவில்லை.

## பாடம் : 95 சொர்க்கவாசிகளில் பாதிப்பேராக இந்த (இறுதிச்) சமுதாயத்தார் இருப்பர்.

376 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம், "சொர்க்கவாசிகளில் நான்கில் ஒரு பகுதியினராக இருக்க நீங்கள் விரும்புகின்றீர்களா?" என்று கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ் மிகப் பெரியவன்' என்று (தக்பீர்) முழங்கினோம். பிறகு "சொர்க்கவாசிகளில் மூன்றில் ஒரு பகுதியினராக இருக்க நீங்கள் விரும்புகின்றீர்களா?" என்று கேட்டார்கள். அப்போதும் நாங்கள், "அல்லாஹ் மிகப் பெரியவன்' என்று (தக்பீர்) முழங்கினோம்.

பிறகு "சொர்க்கவாசிகளில் பாதிப்பேராக (என் சமுதாயத்தாரான) நீங்கள் இருக்க வேண்டுமென்றே நான் எதிர்பார்க்கிறேன். அ(தற்குரிய காரணம் என்ன என்ப)து பற்றி உங்களுக்கு நான் தெரிவிக்கிறேன்: இறைமறுப்பாளர்களுடன் ஒப்பிடுகையில் முஸ்லிம்கள் "கறுப்புக் காளைமாட்டி(ன் உடலி)லுள்ள வெள்ளை முடியைப் போன்றுதான்' அல்லது "வெள்ளைக் காளைமாட்டிலுள்ள கறுப்பு முடியைப் போன்றுதான்' என்று கூறினார்கள்.

377 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நாங்கள் சுமார் நாற்பது பேர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு (தோல்) கூடாரத்தில் இருந்துகொண்டிருந்தோம். அப்போது அவர்கள், "சொர்க்கவாசிகளில் நான்கில் ஒரு பகுதியினராக இருக்க நீங்கள் விரும்புகின்றீர்களா?" என்று கேட்டார்கள். நாங்கள் "ஆம்'

என்று சொன்னோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சொர்க்கவாசிகளில் மூன்றில் ஒரு பகுதியினராக இருக்க நீங்கள் விரும்புகின்றீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கும் நாங்கள் "ஆம்' என்றோம்.
பிறகு அவர்கள் "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! சொர்க்கவாசிகளில் பாதிப்பேராக (என் சமுதாயத்தாரான) நீங்கள் இருக்க வேண்டுமென்றே நான் எதிர்பார்க்கிறேன். அதற்குக் காரணம், சொர்க்கத்தில் முஸ்லிமானவரைத் தவிர வேறெவரும் நுழைய முடியாது. இணைவைப்பாளர்களுடன் ஒப்பிடும்போது நீங்கள் "கறுப்புக் காளைமாட்டின் தோலில் உள்ள வெள்ளை முடியைப் போன்றுதான்' அல்லது "சிவப்புக் காளைமாட்டின் தோலில் உள்ள கறுப்பு முடியைப் போன்றுதான்' என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

378 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது முதுகை தோல் கூடாரமொன்றில் சாய்த்தபடி எங்களிடையே உரையாற்றினார்கள். அப்போது, "அறிந்துகொள்ளுங்கள்; சொர்க்கத்தில் முஸ்லிமானவரைத் தவிர வேறெவரும் நுழைய முடியாது. இறைவா! நான் (சொல்ல வேண்டிய செய்தியைச்) சொல்லிவிட்டேனா? இறைவா (இதற்கு) நீயே சாட்சி" என்று கூறிவிட்டு, "சொர்க்கவாசிகளில் நான்கில் ஒரு பகுதியினராக இருக்க நீங்கள் விரும்புகின்றீர்களா?" என்று கேட்டார்கள். நாங்கள், "ஆம்; அல்லாஹ்வின் தூதரே!" என்று சொன்னோம். அவர்கள், "சொர்க்கவாசிகளில் மூன்றில் ஒரு பகுதியினராக இருக்க நீங்கள் விரும்புகிறீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "ஆம்; அல்லாஹ்வின் தூதரே!" என்று சொன்னார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சொர்க்கவாசிகளில் பாதிப்பேராக (என் சமுதாயத்தாரான) நீங்கள் இருக்க வேண்டும் என்றே நான் எதிர்பார்க்கிறேன். மற்ற சமுதாயங்களுடன் ஒப்பிடும்போது நீங்கள் "வெள்ளைக் காளைமாட்டிலுள்ள "கறுப்பு முடியைப் போன்றுதான்' அல்லது கறுப்புக் காளைமாட்டிலுள்ள வெள்ளை முடியைப் போன்றுதான்" என்று சொன்னார்கள்.

**பாடம் : 96 (மறுமை நாளில்) ஆதம் (அலை) அவர்களிடம், "ஒவ்வோர் ஆயிரம் பேரிலிருந்தும் நரகத்திற்குச் செல்லவிருக்கும் தொள்ளாயிரத்து தொண்ணூற்றொன்பது பேரை நீங்கள் தனியாகப் பிரித்திடுங்கள்'' என்று அல்லாஹ் கூறுவான்.**

379 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வலிவும் மாண்புமிக்க அல்லாஹ் (மறுமை நாளில் ஆதிமனிதரை நோக்கி), "ஆதமே!" என்பான். அதற்கு ஆதம் (அலை) அவர்கள், "(இறைவனின் அழைப்பை ஏற்று, இறைவா!) இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (கட்டளையிடு) நலம் அனைத்தும் உன் கரங்களில்தான்" என்று கூறுவார்கள். அப்போது இறைவன், "(உங்கள் வழித்தோன்றல்களில்) நரகத்திற்குச் செல்லவிருப்பவர்களை (மற்றவர்களிலிருந்து) தனியாகப் பிரித்திடுங்கள்" என்று சொல்வான். அதற்கு அவர்கள், "எத்தனை நரகவாசிகளை (அவ்வாறு பிரிக்க வேண்டும்)?" என்று கேட்பார்கள். அதற்கு இறைவன், "ஒவ்வோர் ஆயிரம் பேரிலிருந்தும் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேரை(த் தனியாகப் பிரித்திடுங்கள்)" என்று பதிலளிப்பான்.

அப்போது(ள்ள பயங்கரச் சூழ்நிலையில்) பாலகன்கூட நரைத்து (மூப்படைந்து)விடுகின்ற, கர்ப்பம் கொண்ட பெண் ஒவ்வொருவரும் கர்ப்பத்தைப் (பீதியின் காரணத்தால் அரைகுறையாகப்) பிரசவித்துவிடுகின்ற நேரம் இதுதான். மக்களை (அச்சத்தால்) போதையுற்றவர்களாக நீங்கள் காண்பீர்கள். ஆனால், அவர்கள் (உண்மையிலேயே மதுவால்) போதையுற்றிருக்கமாட்டார்கள். ஆனால் அல்லாஹ்வின் வேதனை கடுமையானதாகும்.

இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியது, மக்களுக்கு மிகவும் சிரமமானதாக இருந்தது. எனவே அவர்கள், "(ஒவ்வோர் ஆயிரத்திலும் நரகத்திற்குச் செல்லாமல் எஞ்சியிருக்கும்) அந்த ஒரு நபர் எங்களில் யார்?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(பயப்படாதீர்கள்!) நற்செய்தி பெறுங்கள். யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரில் ஓராயிரம் பேர் என்றால், உங்களில் ஒருவர் (நரகத்திற்குச் செல்ல தனியாகப் பிரிக்கப்பட்டோரில்) இருப்பார்" என்று கூறிவிட்டுப் பின்னர், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! சொர்க்கவாசிகளில் நான்கில் ஒரு பகுதியினராக நீங்கள் இருக்க வேண்டுமென்று நான் பேராவல் கொள்கிறேன்" என்று கூறினார்கள். உடனே நாங்கள் (இந்த மகிழ்ச்சியூட்டும் நற்செய்தியைக் கேட்டு) அல்லாஹ்வைப் புகழ்ந்து, "அல்லாஹ் மிகப் பெரியவன்' (அல்லாஹு அக்பர்) என்று முழங்கினோம். பின்னர், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! சொர்க்கவாசிகளில் மூன்றில் ஒரு பகுதியினராக நீங்கள் இருக்க வேண்டுமென்று நான் ஆசைப்படுகிறேன்" என்று கூறினார்கள். அப்போதும் நாங்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து, "அல்லாஹ் மிகப் பெரியவன்' (அல்லாஹு அக்பர்) என்று முழக்கமிட்டோம். பின்னர், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! சொர்க்கவாசிகளில் பாதிப்பேராக (என் சமுதாயத்தாரான) நீங்கள் இருக்க வேண்டுமென்று நான் பேராவல் கொள்கிறேன். மற்றச் சமுதாயங்களுடன் ஒப்பிடும்போது உங்கள் (எண்ணிக்கையின்) நிலை, "கறுப்புக் காளை மாட்டின் தோலில் உள்ள வெள்ளை முடியைப் போன்றுதான்' அல்லது "கழுதையின் முன்னங்காலிலுள்ள வெள்ளை சொட்டையைப் போன்றுதான்' என்று கூறினார்கள்.

380 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "அன்றைய தினம் (மற்ற) மனிதர்களுடன் ஒப்பிடும்போது நீங்கள் "கறுப்புக் காளை மாட்டிலுள்ள வெள்ளை முடியைப் போன்றுதான்' அல்லது "வெள்ளைக் காளைமாட்டிலுள்ள கறுப்பு முடியைப் போன்றுதான்" எனும் வாக்கியம் இடம்பெற்றுள்ளது. "கழுதையின் முன்னங்காலிலுள்ள வெள்ளை சொட்டையைப் போன்றுதான்' என்பது இடம்பெறவில்லை.

# அத்தியாயம் : 03 - உளூ

## பாடம் : 1 அங்கத் தூய்மையின் (உளூ) சிறப்பு:

381 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தூய்மை இறைநம்பிக்கையில் பாதியாகும். அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!) என்(று இறைவனைத் துதிப்)பது, (நன்மை மற்றும் தீமைகளை நிறுக்கக்கூடிய) தராசை நிரப்பக்கூடியதாகும். சுப்ஹானல்லாஹி, வல்ஹம்து லில்லாஹி (அல்லாஹ் தூயவன்; எல்லாப் புகழும் அவனுக்கே உரியது) என்(று அவனைத் துதிப்)பது வானங்கள் மற்றும் பூமிக்கிடையேயுள்ள இடத்தை நிரப்பிவிடக்கூடிய (அளவிற்கு அபரிமிதமான நன்மைகளைக் கொண்ட)தாகும். தொழுகை (வழிகாட்டும்)ஒளியாகும். தானதர்மம் சான்றாகும். பொறுமை ஒரு வெளிச்சமாகும். குர்ஆன் ஒன்று உனக்கு ஆதரவான சான்றாகும்; அல்லது எதிரான சான்றாகும். மக்கள் அனைவரும் காலையில் புறப்பட்டுச் சென்று தம்மை விற்பனை செய்கின்றனர். சிலர் தம்மை (இறைவனிடம் விற்று நரகத்திலிருந்து தம்மை) விடுவித்துக் கொள்கின்றனர். வேறு சிலர் (ஷைத்தானிடம் விற்று) தம்மை அழித்துக்கொள்கின்றனர்.
இதை அபூமாலிக் அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 2 தொழுகைக்குத் தூய்மை அவசியம்.

முஸ்அப் பின் சஅத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நோயுற்றிருந்த இப்னு ஆமிர் (ரஹ்) அவர்களை உடல்நலம் விசாரிப்பதற்காக அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் சென்றார்கள். அப்போது இப்னு ஆமிர் (ரஹ்) அவர்கள், இப்னு உமர் அவர்களே! எனக்காகத் தாங்கள் அல்லாஹ்விடம் பிரார்த்திக்கக் கூடாதா? என்று கேட்டார்கள். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்யாமல் எந்தத் தொழுகையும் ஏற்கப்படாது; மோசடி செய்த பொருளால் செய்யப்படும் எந்த தானதர்மமும் ஏற்கப்படாது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். நீங்கள் பஸ்ராவி(ன் ஆட்சிப் பொறுப்பி)ல் இருந்தீர்கள் என்று கூறி (மறுத்து)விட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

382 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருக்கு சிறு துடக்கு (ஹதஸ்) ஏற்பட்டுவிட்டால், அவர் அங்கத் தூய்மை (உளூ) செய்துகொள்ளாதவரை அவரது தொழுகை ஏற்கப்படாது.

**பாடம் : 3 அங்கத் தூய்மை (உளூ) செய்யும் முறையும் அதன் நிறை(வான அள)வும்.**

383 உஸ்மான் (ரலி) அவர்களுடைய முன்னாள் அடிமையான ஹும்ரான் பின் அபான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்வதற்காகத் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி அங்கத் தூய்மை செய்தார்கள். (முதலில்) தம்முடைய இரு முன் கைகளை மூன்று முறை கழுவினார்கள். பிறகு வாய் கொப்புளித்து (மூக்கிற்கு நீர் செலுத்தி) மூக்குச் சிந்தினார்கள். பின்னர் தமது முகத்தை மூன்று முறை கழுவினார்கள். பிறகு தமது வலக் கரத்தை முழங்கை மூட்டுவரை மூன்று முறை கழுவினார்கள். அடுத்துத் தமது இடக் கரத்தையும் அதைப் போன்றே (முழங்கை மூட்டுவரை மூன்று முறை) கழுவினார்கள். பின்னர் தலையை (ஈரக் கையால் தடவி) மஸ்ஹு செய்தார்கள். பிறகு தமது வலக் காலை கணுக்கால்வரை மூன்று முறை கழுவினார்கள். பிறகு இடக் காலையும் அதைப் போன்றே (கணுக்கால்வரை மூன்று முறை) கழுவினார்கள்.
பின்னர் நான் செய்த இந்த அங்கத் தூய்மையைப் போன்றே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அங்கத் தூய்மை செய்ததை நான் பார்த்தேன். மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் யார் நான் செய்த இந்த அங்கத் தூய்மையைப் போன்று அங்கத் தூய்மை செய்து, பின்னர் வேறு எந்த (கெட்ட) எண்ணங்களுக்கும் இடம் தாராமல் இரண்டு ரக்அத்கள் நின்று தொழுகிறாரோ அவர் முன்பு செய்த (சிறிய) பாவங்கள் அவருக்கு மன்னிக்கப்படும் என்று கூறினார்கள் என்றார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் (முஹம்மத் பின் முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ –ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
இவ்வாறு அங்கத் தூய்மை செய்வதுதான் தொழுகைக்காக ஒருவர் அங்கத் தூய்மை செய்யும் முறைகளிலேயே மிகவும் நிறைவானதாகும் என்று நம் அறிஞர்கள் கூறுகின்றனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

384 உஸ்மான் (ரலி) அவர்களுடைய முன்னாள் அடிமையான ஹும்ரான் பின் அபான் (ரஹ்) அவர்கள் கூறியாதாவது:
உஸ்மான் (ரலி) அவர்கள் ஒரு பாத்திரம் (தண்ணீர்) கொண்டுவரச் சொல்லி (அங்கத் தூய்மை செய்தார்கள். ஆரம்பமாக) தம்முடைய முன் கைகளில் மூன்று முறை தண்ணீர் ஊற்றிக் கழுவினார்கள். பிறகு தமது வலக் கரத்தைப் பாத்திரத்தினுள் செலுத்தி (தண்ணீர் அள்ளி) வாய் கொப்புளித்து (மூக்கிற்கு நீர் செலுத்தி) மூக்குச் சிந்தினார்கள். பிறகு தமது முகத்தை மூன்று முறை கழுவினார்கள். மேலும், இரு (கைகளையும்) முழங்கை மூட்டுவரை மூன்று முறை கழுவினார்கள். பிறகு தலையை (ஈரக் கையால் தடவி) மஸ்ஹு செய்தார்கள். பிறகு தம்மிரு கால்களையும் மூன்று முறை கழுவினார்கள்.
பின்னர் யார் எனது இந்த உளூவைப் போன்று உளூச் செய்து வேறு எந்த (கெட்ட) எண்ணங்களுக்கும் இடம் தராமல் இரண்டு ரக்அத்கள் தொழுகிறாரோ, அவர் முன்பு செய்த (சிறிய) பாவங்கள் அவருக்கு மன்னிக்கப்படும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று தெரிவித்தார்கள்.

## பாடம் : 4 அங்கத் தூய்மை செய்வதன் சிறப்பும், அதன் பின் தொழுவதன் சிறப்பும்.

385 உஸ்மான் (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான ஹும்ரான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் பள்ளிவாசலின் முற்றத்தில் இருந்து கொண்டிருந்தார்கள். அப்போது அஸ்ர் நேரம். அவர்களிடம் தொழுகை அறிவிப்பாளர் (முஅத்தின்) வந்தார். உடனே உஸ்மான் (ரலி) அவர்கள் அங்கத் தூய்மை செய்யத் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி, அங்கத் தூய்மை செய்தார்கள். பிறகு, அல்லாஹ்வின் மீதாணையாக! நான் ஒரு நபிமொழியை அறிவிக்கப்போகிறேன். (குர்ஆனில்) ஒரு வசனம் (2:159) மட்டும் இல்லையானால் இதை நான் உங்களுக்கு அறிவிக்கமாட்டேன் என்று கூறிவிட்டு (பின்வருமாறு) கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒரு மனிதர் அழகிய முறையில் (நிறைவாக) அங்கத் தூய்மை செய்து, ஒரு தொழுகையை நிறைவேற்றுவாராயின் அவருக்கும் அடுத்த தொழுகைக்கும் இடையிலான (சிறு) பாவங்களை அவருக்காக அல்லாஹ் மன்னிக்காமலிருப்பதில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அபூஉசாமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அழகிய முறையில் அங்கத் தூய்மை செய்த பின்,கடமையாக்கப்பட்ட ஒரு தொழுகையை நிறைவேற்றுவாராயின் என இடம் பெற்றுள்ளது.

386 ஹும்ரான் பின் அபான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் (ரலி) அவர்கள் அங்கத் தூய்மை செய்தபோது, அல்லாஹ்வின் மீதாணையாக! நான் ஒரு நபிமொழியை உங்களுக்கு அறிவிக்கப்போகிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! இறைவேதத்திலுள்ள ஒரு வசனம் மட்டும் இல்லையானால் இதை நான் உங்களுக்கு அறிவிக்கமாட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் அழகிய முறையில் அங்கத்தூய்மை செய்து, பின்னர் தொழுகையை நிறைவேற்றுவாராயின் அவருக்கும் அடுத்த தொழுகைக்கும் இடையிலான (சிறு) பாவங்கள் அவருக்காக மன்னிக்கப்படாமலிருப்பதில்லை.
இதன் அறிவிப்பாளரான உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
நாம் தெளிவான வசனங்களையும் நேர்வழியையும் அருளியதுடன் அவற்றை மக்களுக்கு வேதத்தில் விளக்கிய பின்னரும் அவற்றை யார் மறைக்கிறார்களோ அவர்களை நிச்சயமாக அல்லாஹ் சபிக்கின்றான். இன்னும் சபிப்போரும் அவர்களைச் சபிக்கின்றார்கள் எனும் (2:159 ஆவது) வசனமே (உஸ்மான் (ரலி) அவர்கள் குறிப்பிட்ட) அந்த வசனமாகும்.

387 அம்ர் பின் சயீத் பின் அல்ஆஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு முறை) உஸ்மான் (ரலி) அவர்களிடம் இருந்தேன். அப்போது அவர்கள் (அங்கத் தூய்மை செய்வதற்காக ஒரு பாத்திரம்) தண்ணீர் கொண்டுவரச் சொன்னார்கள். பிறகு (பின்வருமாறு) கூறினார்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒரு முஸ்லிமான மனிதர் கடமையாக்கப்பட்ட ஒரு தொழுகை(யின் நேரம்) வந்ததும், அதற்காக அழகிய முறையில் அங்கத் தூய்மை செய்து உள்ளச்சத்துடன் முறையோடு தொழுவாராயின், அந்தத் தொழுகை அதற்கு முந்தைய (சிறிய) பாவங்களுக்குப் பரிகாரம் ஆகாமலிருப்பதில்லை; அவர் பெரும் பாவம் ஏதும் செய்தால் தவிர. இது எல்லாக் காலத்திற்கும் பொருந்தும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

388 உஸ்மான் (ரலி) அவர்களின் முன்னாள் அடிமை ஹும்ரான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்களிடம் அங்கத் தூய்மை செய்வதற்கான தண்ணீர் கொண்டுவந்தேன். அவர்கள் அங்கத் தூய்மை செய்தார்கள். பிறகு அவர்கள் கூறினார்கள்: சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து ஹதீஸ்களை அறிவிக்கின்றனர். ஆனால், அவற்றின் நிலை என்ன என்று எனக்குத் தெரியாது. ஆயினும், (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இதோ) இப்போது நான் செய்த அங்கத் தூய்மை போன்று அங்கத் தூய்மை செய்ததை நான் பார்த்தேன். பிறகு யார் இவ்வாறு அங்கத் தூய்மை செய்கின்றாரோ, அவரது முந்தைய (சிறு) பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும். பிறகு அவர் தொழும் தொழுகையும் பள்ளிவாசலை நோக்கி அவர் நடப்பதும் அவருக்குக் கூடுதலா(ன வணக்கமா)க மாறிவிடும் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு அப்தா (ரஹ்) அவர்களது அறிவிப்பில்,நான் உஸ்மான் (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள் என்று ஹதீஸ் தொடங்குகிறது.

389 அபூஅனஸ் (மாலிக் பின் அபீஆமிர் -ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(மதீனா பள்ளிவாசலுக்கருகில் உள்ள) மகாஇத் எனுமிடத்தில் உஸ்மான் (ரலி) அவர்கள் அங்கத் தூய்மை செய்தார்கள். அப்போது அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்த அங்கத்தூய்மை முறையை உங்களுக்கு நான் காட்டட்டுமா? என்று கூறிவிட்டு, மும்மூன்று முறை (ஒவ்வோர் உறுப்பையும் கழுவி) அங்கத் தூய்மை செய்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், குதைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில்,அப்போது உஸ்மான் (ரலி) அவர்களின் அருகில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தோழர்களில் சிலரும் இருந்தனர் என்று (அபூஅனஸ் (ரஹ்) கூறியதாக) அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

390 ஹும்ரான் பின் அபான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் (ரலி) அவர்கள் அங்கத் தூய்மை செய்வதற்காக அவர்களுக்குத் தண்ணீர் கொண்டுவந்து வைப்பவனாக நான் இருந்தேன். அவர்கள் தினமும் சிறிதளவு நீரிலாவது குளிக்காமல் இருக்க மாட்டார்கள். மேலும் அவர்கள் கூறினார்கள்: நாங்கள் (ஒரு நாள்) இந்தத் தொழுகையை (அதாவது அஸ்ர் தொழுகையை) முடித்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தோம். அப்போது எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒன்றைப் பற்றி உங்களிடம் நான் அறிவிக்கலாமா? அல்லது வாய்மூடி இருந்து விடலாமா? என்று

எனக்குத் தெரியவில்லை என்று சொன்னார்கள். உடனே நாங்கள், அல்லாஹ்வின் தூதரே! அது நல்ல தகவலாக இருப்பின் எங்களுக்கு அறிவியுங்கள். இல்லாவிட்டால்,அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள் என்று கூறினோம். அப்போது அவர்கள், ஒரு முஸ்லிம் தம்மீது அல்லாஹ் கட்டாயமாக்கியுள்ள அங்கத் தூய்மையை (உளூவை) முழுமையாகச் செய்து, இந்த ஐவேளைத் தொழுகைகளைத் தொழுவாராயின் அந்த ஐவேளைத் தொழுகைகளுக்கிடையே ஏற்படும் (சிறு) பாவங்களுக்கு அவை பரிகாரமாக அமையாமலிருப்பதில்லை என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

391 ஜாமிஉ பின் ஷத்தாத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
பிஷ்ர் பின் மர்வான் பின் அல்ஹகமுடைய ஆட்சிக் காலத்தில் ஹும்ரான் பின் அபான் (ரஹ்) அவர்கள் இந்த (பஸ்ரா) பள்ளிவாசலில் வைத்து அபூபுர்தா (ரஹ்) அவர்களிடம் (பின் வருமாறு) அறிவிப்பதை நான் செவியுற்றேன்:
உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் கட்டளைக்கேற்ப யார் முழுமையாக அங்கத் தூய்மை செய்கின்றாரோ அவர் தொழும் கடமையாக்கப்பட்ட தொழுகைகள் (ஒவ்வொன்றும்) அவற்றுக்கு இடையே ஏற்படும் (சிறு) பாவங்களுக்குப் பரிகாரமாகும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இவ்வாறுதான் உபைதுல்லாஹ் பின் முஆத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் காணப்படுகிறது.
ஃகுன்தர் முஹம்மத் பின் ஜஅஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பிஷ்ர் பின் மர்வான் ஆட்சிக் காலத்தில் எனும் வாசகமோ கடமையாக்கப்பட்ட என்ற குறிப்போ இடம் பெறவில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

392 உஸ்மான் (ரலி) அவர்களுடைய முன்னாள் அடிமையான ஹும்ரான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் அழகிய முறையில் அங்கத் தூய்மை செய்தார்கள். பிறகு பின்வருமாறு கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு முறை) அழகிய முறையில் அங்கத் தூய்மை செய்ததை நான் பார்த்தேன். பிறகு யார் இவ்வாறு அங்கத்தூய்மை செய்துவிட்டுத் தொழுவதற்காக என்றே பள்ளிவாசலுக்குப் புறப்பட்டுச் செல்கிறாரோ அவர், முன்பு செய்த (சிறு) பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

393 உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டேன்: யார் தொழுகைக்காக முழுமையான முறையில் அங்கத் தூய்மை (உளூ) செய்து, கடமையான தொழுகைக்காக நடந்துசென்று, மக்களுடன் தொழுகிறாரோ அல்லது கூட்டுத் தொழுகையில் கலந்து கொள்கிறாரோ அல்லது பள்ளிவாசலில் தொழுகிறாரோ அவருக்கு அவருடைய பாவங்களை அல்லாஹ் மன்னித்துவிடுகின்றான்.

இதை உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்களுடைய முன்னாள் அடிமையான ஹும்ரான் பின் அபான் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 5 ஐவேளைத் தொழுகைகளும், ஒரு ஜுமுஆவிலிருந்து மறு ஜுமுஆவும், ஒரு ரமளானிலிருந்து அடுத்த ரமளானும் அவற்றுக்கிடையே ஏற்படும் பாவங்களுக்குப் பரிகாரங்களாகும்; பெரும் பாவங்கள் நீங்கலாக.

394 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஐவேளைத் தொழுகைகள், ஒரு ஜுமுஆவிலிருந்து மறு ஜுமுஆ ஆகியன அவற்றுக்கிடையே ஏற்படும் பாவங்களுக்குப் பரிகாரங்களாகும். பெரும்பாவங்களில் சிக்காதவரை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

395 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஐவேளைத் தொழுகைகள், ஒரு ஜுமுஆவிலிருந்து மறு ஜுமுஆ ஆகியன அவற்றுக்கிடையே ஏற்படும் (சிறு) பாவங்களுக்குப் பரிகாரங்களாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

396 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஐவேளைத் தொழுகைகள், ஒரு ஜுமுஆவிலிருந்து மறு ஜுமுஆ, ஒரு ரமளானிலிருந்து மறு ரமளான் ஆகியன அவற்றுக்கிடையே ஏற்படும் பாவங்களுக்குப் பரிகாரங்களாகும்; பெரும் பாவங்களில் ஈடுபடாமல் இருந்தால்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் :6 அங்கத் தூய்மை (உளூ) செய்த பின்னால் ஓதப்படும் விரும்பத்தகுந்த திக்ர்.

397 உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (முறைவைத்து) ஒட்டகங்கள் மேய்த்துவந்தோம். இந்நிலையில் எனது முறை வந்தபோது மாலை நேரத்தில் நான் அவற்றை ஓட்டிக்கொண்டு மேய்ச்சல் நிலத்திற்குச் சென்றேன். (பிறகு நான் திரும்பிவந்தேன்.) அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடையே நின்று உரையாற்றிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள்,ஒரு முஸ்லிம் அழகிய முறையில் அங்கத் தூய்மை செய்து, அகத்தையும் முகத்தையும் ஒருமுகப்படுத்தி (பணிந்து,உள்ளச்சத்துடன்) தொழுதால் அவருக்குச் சொர்க்கம் கட்டாயமாகாமல் இருப்பதில்லை என்று கூறுவதை நான் கேட்டேன்.
உடனே நான் என்ன அருமையான வார்த்தை! என்றேன். அப்போது எனக்கு முன்னால் இருந்த ஒருவர் இதற்கு முன்னர் சொன்ன வார்த்தை இதைவிட அருமையானது என்றார். உடனே நான் (அவர் யார் என்று) பார்த்தேன். அங்கே உமர் (ரலி) அவர்கள் இருந்தார்கள். உமர் (ரலி) அவர்கள் (என்னிடம்) கூறினார்கள்: சற்று முன்னர்தான் நீங்கள் இங்கு

வந்தீர்கள்; நான் பார்த்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நீங்கள் வருவதற்கு முன் பின்வருமாறு) கூறினார்கள்:
உங்களில் ஒருவர் முழுமையான முறையில் அங்கத் தூய்மை செய்துவிட்டு, அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு வ அன்ன முஹம்மதன் அப்துல்லாஹி வரசூலுஹு (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் உறுதிமொழிகிறேன்) என்று கூறினால், சொர்க்கத்தின் எட்டு வாசல்களும் அவருக்காகத் திறக்கப்படுகின்றன.அவற்றில் தாம் நாடிய வாசலில் அவர் நுழைந்துகொள்ளலாம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், அங்கத் தூய்மை செய்துவிட்டு, அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்க லஹு,வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வ ரசூலுஹு என்று கூறுவாராயின் என்று (சற்று வித்தியாசத்துடன்) இடம்பெற்றுள்ளது. (பொருள்: அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையானவர் வேறெவருமில்லை என்று நான் உறுதிமொழிகிறேன். மேலும். முஹம்மத் (ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதரும் ஆவார்கள் என்றும் நான் உறுதிமொழிகிறேன்.)

## பாடம் : 7 நபி (ஸல்) அவர்கள் செய்த அங்கத் தூய்மை (உளூ) முறை.

398 யஹ்யா பின் உமாரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நபித்தோழர் அப்துல்லாஹ் பின் ஸைத் பின் ஆஸிம் அல்அன்சாரி (ரலி) அவர்களிடம், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்ததைப் போன்று எங்களுக்கு நீங்கள் அங்கத் தூய்மை செய்து காட்டுங்கள்! என்று கூறப்பட்டது.
அப்போது அப்துல்லாஹ் பின் ஸைத் (ரலி) அவர்கள், ஒரு பாத்திரம் (தண்ணீர்) கொண்டுவரச் சொல்லி அதிலிருந்து சிறிதளவு நீரை தம்மிரு (முன்) கைகளில் ஊற்றி அவற்றை மூன்று முறை கழுவினார்கள். பிறகு (பாத்திரத்திற்குள்) தமது கையை நுழைத்து ஒரு கையளவு நீர் அள்ளி, வாய் கொப்புளித்து (மூக்கிற்கு நீர் செலுத்தி) மூக்குச் சிந்தினார்கள். இவ்வாறு மூன்று முறை செய்தார்கள். பிறகு (பாத்திரத்திற்குள்) தமது கையை நுழைத்து நீர் எடுத்து மூன்று முறை முகத்தைக் கழுவினார்கள். பின்னர் (பாத்திரத்திற்குள்) தமது கையை நுழைத்து நீர் எடுத்து தம் இரு கைகளையும் முழங்கைகள் வரை இரண்டிரண்டு முறை கழுவினார்கள். பிறகு (பாத்திரத்திற்குள்) தமது கையை நுழைத்தெடுத்து (ஈரக் கையால்) தமது தலையைத் தடவி (மஸ்ஹு செய்யலா)னார்கள். (அதாவது) தம் இரு கைகளையும் முன்னிருந்து பின்னே கொண்டு சென்றார்கள்; பின்னிருந்து முன்னே கொண்டுவந்தார்கள். பின்னர் இரு கால்களையும் கணுக்கால்வரை கழுவினார்கள். பிறகு இவ்வாறுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்துவந்தார்கள் என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் இரு கணுக்கால்வரை எனும் வாசகம் இடம்பெறவில்லை.

- மேற்கண்ட ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், (அப்துல்லாஹ் பின் ஸைத்-ரலி) அவர்கள் மூன்று முறை வாய் கொப்புளித்து (மூக்கிற்கு நீர் செலுத்தி) மூக்குச் சிந்தினார்கள் என்று இடம்பெற்றுள்ளது. ஒரு கையளவு நீரினால் எனும் வாசகம் இடம்பெறவில்லை. மேலும், அந்த அறிவிப்பில் முன்னிருந்து பின்னே கொண்டுசென்றார்கள். பின்னிருந்து முன்னே கொண்டுவந்தார்கள் எனும் வாசகத்திற்குப் பிறகு தம் இரு கைகளையும் முன் தலையில் வைத்து அப்படியே அவற்றைப் பிடரிவரை கொண்டு சென்றார்கள். பிறகு ஆரம்பித்த இடத்திற்கே திரும்பவும் கொண்டுவந்தார்கள். பின்னர் இரு கால்களையும் கழுவினார்கள் என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், மூன்று முறை கையால் நீர் அள்ளி வாய் கொப்புளித்தார்கள்; மூக்கிற்கு நீர் செலுத்தினார்கள் என்று காணப்படுகிறது.மேலும், மஸ்ஹு செய்யும்போது ஒரேயொரு முறை முன்னிருந்து பின்னே, பின்னிருந்து முன்னே (ஈரக் கையைக்) கொண்டுசென்றார்கள் என்றும் இடம்பெற்றுள்ளது.
அறிவிப்பாளர் பஹ்ஸ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த ஹதீஸை எனக்கு உஹைப் (ரஹ்) அவர்கள் சொல்லிக்கொடுத்தார்கள். உஹைப் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: எனக்கு இந்த ஹதீஸை அம்ர் பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் இரண்டு முறை சொல்லிக்கொடுத்தார்கள்.

399 அப்துல்லாஹ் பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்ததை நான் பார்த்தேன். அப்போது அவர்கள் வாய் கொப்புளித்துவிட்டு (மூக்கிற்கு நீர் செலுத்தி) மூக்குச் சிந்தினார்கள். பிறகு தமது முகத்தை மூன்று முறை கழுவினார்கள்; தமது வலக் கையை மூன்று முறை கழுவினார்கள். மற்றொரு கையையும் மூன்று முறை கழுவினார்கள். ஏற்கெனவே தமது கையிலிருந்த தண்ணீர் அல்லாத (புதிதாக எடுத்த) தண்ணீரால் தமது தலையைத் தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள். மேலும், தம் கால்களை, அவை சுத்தமாகும்வரை (நன்கு) கழுவினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 8 மூக்குச் சிந்தும்போதும் (மல ஜலம் கழித்துவிட்டு) கற்களால் துப்புரவு செய்யும்போதும் ஒற்றைப்படையாகச் செய்வது.**

400 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் எவரேனும் (மல ஜலம் கழித்து விட்டு) கற்களால் துப்புரவு செய்தால் அதை ஒற்றைப்படையாகவே செய்யட்டும். உங்களில் எவரேனும் அங்கத் தூய்மை (உளூ) செய்தால் அவர் மூக்கிற்கு நீர் செலுத்திப் பின்னர் மூக்கைச் சிந்தட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

401 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் எவரேனும் அங்கத் தூய்மை (உளூ) செய்தால் அவர் தம்முடைய இரு மூக்குத் துவாரங்களுக்குள் நீர் செலுத்திப் பின்னர் சிந்தட்டும்.

402 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அங்கத் தூய்மை செய்பவர், (மூக்கிற்குள் நீர் செலுத்தி) மூக்குச் சிந்தட்டும்! (மல ஜலம் கழித்துவிட்டு) கற்களால் துப்புரவு செய்பவர், ஒற்றைப்படையாகச் செய்யட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) மற்றும் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) ஆகியோரிடமிருந்து வேறு இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

403 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் உறங்கியெழுந்ததும் (தமது மூக்கிற்குள் நீர் செலுத்தி) மூன்று முறை மூக்குச் சிந்தட்டும். ஏனெனில்,இரவில் ஷைத்தான் அவரது உள்மூக்கில் தங்குகிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

404 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் (மல ஜலம் கழித்து விட்டுக்) கற்களால் துப்புரவு செய்தால் ஒற்றைப் படையாகச் செய்யட்டும்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

### பாடம் : 9 இரு கால்களையும் முழுமையாகக் கழுவுவது கட்டாயம் (வாஜிப்) ஆகும்.

405 ஷத்தாத் பின் அல்ஹாத் (ரலி) அவர்களுடைய முன்னாள் அடிமையான சாலிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் இறந்த தினத்தன்று நான் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது (ஆயிஷா (ரலி) அவர்களுடைய சகோதரர்) அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்கள் அங்கு வந்து அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், அப்துர் ரஹ்மான்! உளூவை நிறைவாகச் செய்! ஏனெனில், (உளூவில் சரியாகக் கழுவப்படாத) குதிகால்களுக்கு நரக வேதனைதான் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுவதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் சாலிம் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்களிலும் வந்துள்ளது.

அவற்றில், நானும் அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்களும் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களின் இறுதித் தொழுகைக்காக (ஜனாஸா) புறப்பட்டுச் சென்றோம். அப்போது ஆயிஷா (ரலி) அவர்களின் அறைவாயிலைக் கடந்துசென்றோம். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் (மேற்கண்ட ஹதீஸிலுள்ளபடி) கூறினார்கள் என்று இடம்பெற்றுள்ளது.
இந்த அறிவிப்புகளில் மஹ்ரீ (ரலி) அவர்களுடைய (அதாவது ஷத்தாத் பின் அல்ஹாத் அவர்களுடைய) முன்னாள் அடிமை சாலிம் (ரஹ்) அவர்கள் என்று கூறப்பட்டுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் சாலிம் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், நான் ஆயிஷா (ரலி) அவர்களுடன் இருந்துகொண்டிருந்தேன். அப்போது அவர்கள் நபி (ஸல்) அவர்கள் (மேற்கண்டபடி) கூறினார்கள் என்று தெரிவித்தார்கள் என இடம் பெற்றுள்ளது.
இந்த அறிவிப்பில் ஷத்தாத் பின் அல்ஹாத் (ரலி) அவர்களுடைய முன்னாள் அடிமை சாலிம் என்று காண்பபடுகிறது.

406 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு பயணத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மக்காவிலிருந்து மதீனாவை நோக்கித் திரும்பிக்கொண்டிருந்தோம். சாலையிலிருந்த ஒரு நீர்நிலைக்கு நாங்கள் வந்துசேர்ந்தபோது சிலர் அஸ்ர் (தொழுகை) நேரத்தில் அவசரப்பட்டனர். (அதற்காக) அவசர அவசரமாக அங்கத்தூய்மை (உளூ) செய்தனர். நாங்கள் அவர்களிடம் போய்ச்சேர்ந்த போது அவர்களுடைய குதிகால்களில் தண்ணீர் படாமல் சொட்டையாக அவை காட்சியளித்தன. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (சரியாகக் கழுவப்படாத இத்தகைய) குதிகால்களுக்கு நரக வேதனைதான். உளூவை முழுமையாகச் செய்யுங்கள் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், உளூவை முழுமையாகச் செய்யுங்கள் எனும் வாசகம் இடம்பெறவில்லை.

407 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் மேற்கொண்ட பயணமொன்றில் நபி (ஸல்) அவர்கள் எங்களுக்குப் பின்னால் (சற்று தாமதமாக) வந்துகொண்டிருந்தார்கள். அஸ்ர் தொழுகையின் நேரம் வந்துவிட்ட நிலையில் எங்களிடம் அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அப்போது நாங்கள் (கால்களைக் கழுவாமல்) கால்களைத் தண்ணீர் தொட்டுத் தடவ (மஸ்ஹு செய்ய) ஆரம்பித்தோம். (இதைக் கண்ணுற்ற) நபி (ஸல்) அவர்கள் (உளூவில் சரியாகக் கழுவப்படாத இத்தகைய) குதிகால்களுக்கு நரக வேதனைதான் என்று அறிவிப்புச் செய்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

408 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
தம் குதிகால்களைக் கழுவா(மல் உளூச் செய்துகொண்டிருந்)த ஒரு மனிதரை நபி (ஸல்) அவர்கள் கண்டார்கள். அப்போது (உளூவில் சரியாகக் கழுவப்படாத இத்தகைய) குதிகால்களுக்கு நரக வேதனை தான் என்று கூறினார்கள்.

409 முஹம்மத் பின் ஸியாத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் நீர்குவளையில் இருந்து (தண்ணீர் ஊற்றி) அங்கத் தூய்மை (உளூ) செய்துகொண்டிருந்த மக்கள் சிலரைக் கண்டார்கள். அப்போது, உளூவை முழுமையாகச் செய்யுங்கள். ஏனெனில், (உளூவில் சரியாகக் கழுவப்படாத) குதிகால் நரம்புகளுக்கு நரக வேதனைதான் என்று அபுல் காசிம் (முஹம்மத் –ஸல்) அவர்கள் கூறுவதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

410 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(உளூவில் சரியாகக் கழுவப்படாத) குதிகாலகளுக்கு நரக வேதனைதான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 10 (அங்கத் தூய்மை செய்யும்போது) கழுவ வேண்டிய உறுப்புகள் அனைத்தையும் சிறிதும் விடுபடாமல் முழுமையாகக் கழுவது கட்டாயம் (வாஜிப்) ஆகும்.

411 உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அங்கத் தூய்மை (உளூ) செய்தார். அப்போது அவர் தமது பாதத்தில் நகம் அளவு இடத்தை (கழுவாமல்) விட்டுவிட்டார். இதைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், திரும்பிச் சென்று, சரியாக உளூச் செய்யுங்கள் என்று கூறினார்கள். அவ்வாறே அவர் திரும்பிச் சென்று (மீண்டும் உளூச் செய்து) பின்னர் தொழுதார்.

## பாடம் : 11 அங்கத் தூய்மை செய்த நீரோடு (சிறு) பாவங்களும் வெளியேறுகின்றன.

412 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமான அல்லது முஃமினான (இறைநம்பிக்கை கொண்ட) அடியார் அங்கத்தூய்மை (உளூ) செய்யும்போது முகத்தைக் கழுவினால், கண்களால் பார்த்துச் செய்த பாவங்கள் அனைத்தும் (முகத்தைக் கழுவிய) நீருடன் அல்லது நீரின் கடைசித் துளியுடன் முகத்திலிருந்து வெளியேறுகின்றன. அவர் கைகளைக் கழுவும்போது கைகளால் பற்றிச் செய்திருந்த பாவங்கள் அனைத்தும் (கைகளைக் கழுவிய) தண்ணீருடன் அல்லது தண்ணீரின் கடைசித் துளியுடன் வெளியேறுகின்றன.
அவர் கால்களைக் கழுவும்போது, கால்களால் நடந்து செய்த பாவங்கள் அனைத்தும் (கால்களைக் கழுவிய) நீரோடு அல்லது நீரின் கடைசித்துளியோடு வெளியேறுகின்றன. இறுதியில், அவர் பாவங்களிலிருந்து தூய்மை அடைந்தவராக (அந்த இடத்திலிருந்து) செல்கிறார்.– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

413 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் முறையாக அங்கத் தூய்மை செய்யும்போது (அவர் செய்திருந்த) அவருடைய (சிறு) பாவங்கள் அவரது உடலிலிருந்து வெளியேறிவிடுகின்றன. முடிவில், அவருடைய நகக்கண்களுக்குக் கீழேயிருந்தும் (அவருடைய பாவங்கள்) வெளியேறிவிடுகின்றன.
இதை உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 12 அங்கத் தூய்மை செய்யும்போது முகம், கை, கால் ஆகிய உறுப்புகளைக் (கழுவ வேண்டிய எல்லையைவிடக்)கூடுதலாகக் கழுவுவது விரும்பத் தக்கதாகும்.

414 நுஜம் பின் அப்தில்லாஹ் அல்முஜ்மிர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்ததை நான் பார்த்தேன். அப்போது அவர்கள் தமது முகத்தை முழுமையாகக் கழுவினார்கள். பிறகு தமது வலக்கரத்தை புஜம்வரைக் கழுவினார்கள். பிறகு இடக்கரத்தை புஜம் வரைக் கழுவினார்கள். பிறகு (ஈரக் கையால்) தமது தலையைத் தடவி (மஸ்ஹு செய்யலா)னார்கள். பிறகு வலக் காலை கணைக்கால் வரைக் கழுவினார்கள். பிறகு இடக்காலையும் (அவ்வாறே) கணைக்கால்வரைக் கழுவினார்கள். பின்னர், இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கத் தூய்மை செய்வதை நான் பார்த்தேன் என்று கூறினார்கள்.
மேலும், அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் அங்கத் தூய்மையை முழுமையாகச் செய்தமையால் மறுமை நாளில் (பிரதான) உறுப்புகள் பிரகாசிப்போராய் இருப்பீர்கள். எனவே, உங்களில் யாருக்கு முடியுமோ அவர் (தம் பிரதான உறுப்புகளை) எல்லைக்கு மேல் அதிகமாகக் கழுவிக்கொள்ளட்டும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

415 நுஜம் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் அங்கத் தூய்மை செய்வதை நான் பார்த்தேன். அப்போது அவர்கள் தமது முகத்தையும் கைகளையும் கழுவிக் கொண்டே தோள்பட்டைவரை சென்றார்கள். பிறகு கால்களைக் கழுவிக்கொண்டே கணைக்கால்வரை சென்றார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மறுமை நாளில் என் சமுதாயத்தார் அங்கத் தூய்மை செய்ததன் அடையாளமாக(ப் பிரதான) உறுப்புகள் பிரகாசிப்பவர்களாய் வருவார்கள். ஆகவே, உங்களில் எவருக்கு (உளூவில் தம் பிரதான உறுப்புக்களை நீட்டிக் கழுவி) தமது ஒளியை நீட்டிக்கொள்ள முடியுமோ அவர் அதைச் செய்துகொள்ளட்டும் என்று கூறியதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.

416 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மறுமையில் எனக்கு வழங்கப்படவிருக்கும் அல்கவ்ஸர் எனும்) எனது நீர்த்தடாக(த்தின் இரு கரைகளுக்கிடையேயான தூர)மானது, (தென் அரபகத்திலுள்ள) அதன் நகரத்திலிருந்து (வட அரபகத்திலுள்ள) அய்லா நகர(ம் வரையிலான தூர)த்தைவிட அதிகத் தொலைவுடையதாகும். அ(தன் நீரான)து, பனிக்கட்டியைவிட மிகவும் வெண்மையானது; பால்

கலந்த தேனைவிட மதுரமானது. அதன் பாத்திரங்கள் விண்மீன்களின் எண்ணிக்கையை விட அதிகமானவை. ஒருவர் தமது நீர்த்தொட்டியை விட்டும் (பிற) மக்களின் ஒட்டகங்களைத் தடுப்பதைப் போன்று, நான் அந்தத் தடாகத்தை விட்டும் மக்கள் சிலரைத் தடுப்பேன் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
மக்கள், அல்லாஹ்வின் தூதரே! அன்றைய தினம் (உங்கள் சமூகத்தாராகிய) எங்களை நீங்கள் அடையாளம் கண்டுகொள்வீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், ஆம்; வேறெந்தச் சமுதாயத்தாருக்கும் இல்லாத ஓர் அடையாளம் உங்களுக்கு இருக்கும். அங்கத் தூய்மை செய்ததன் அடையாளமாக(ப் பிரதான) உறுப்புகள் பிரகாசிப்பவர்களாய் என்னிடம் நீங்கள் வருவீர்கள். (அதை வைத்து உங்களை நான் அடையாளம் கண்டு கொள்வேன்)என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

417 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (மறுமை நாளில்) எனது சமுதாயத்தார் எனது (அல்கவ்ஸர் எனும்) தடாகத்திற்கு வருவார்கள். ஒருவர் தமது ஒட்டகத்தை விட்டும் பிறரது ஒட்டகத்தை விரட்டிவிடுவதைப் போன்று, நான் அந்தத் தடாகத்தை விட்டும் சிலரை விரட்டுவேன் என்று கூறினார்கள். மக்கள், அல்லாஹ்வின் நபியே! எங்களை நீங்கள் அடையாளம் கண்டுகொள்வீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஆம்; வேறெவருக்கும் இல்லாத ஓர் அடையாளம் உங்களுக்கு இருக்கும். அங்கத் தூய்மை செய்ததன் அடையாளமாக(ப் பிரதான) உறுப்புகள் பிரகாசிப்பவர்களாய் என்னிடம் நீங்கள் வருவீர்கள். உங்களில் ஒரு குழுவினர் என்னைவிட்டுத் தடுக்கப்படுவர். அவர்களால் (என்னருகில்) வந்து சேரமுடியாது. அப்போது நான், என் இறைவா! இவர்கள் என் தோழர்கள் என்பேன். அப்போது வானவர் ஒருவர் என்னிடம், உங்களுக்குப் பின்னால் இவர்கள் (புதிது புதிதாய் உங்களது மார்க்கத்தில்) என்னென்ன உருவாக்கினார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? என்று கேட்பார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

418 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், எனது (அல்கவ்ஸர் எனும்) தடாக(த்தின் இரு கரைகளுக்கிடையேயான தூர)மானது, (தென் அரபகத்திலுள்ள) அதன் நகரத்திலிருந்து (வட அரபகத்திலுள்ள) அய்லா நகர(ம் வரையிலான தூர)த்தைவிட அதிகத் தொலைவுடையதாகும். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! ஒருவர் தமது நீர்த்தொட்டியை விட்டு மற்றவர்களின் ஒட்டகத்தை விரட்டுவதைப் போன்று, அந்தத் தடாகத்திலிருந்து சிலரை நான் விரட்டிவிடுவேன் என்று கூறினார்கள்.
மக்கள், அல்லாஹ்வின் தூதரே! எங்களை நீங்கள் அடையாளம் கண்டுகொள்வீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஆம்; நீங்கள் அங்கத் தூய்மை செய்ததன் அடையாளமாக(ப் பிரதான) உறுப்புகள் பிரகாசிப்பவர்களாய் என்னிடம் வருவீர்கள். இந்த அடையாளம் வேறெவருக்கும் இருக்காது என்று கூறினார்கள்.

419 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (முஸ்லிம்களின்) பொது மையவாடிக்குச் சென்று அஸ்ஸலாமு அலைக்கும் தார கவ்மின் முஃமினீன். வ இன்னா இன்ஷா அல்லாஹு பி(க்)கும் லாஹிகூன் (அடக்கத் தலங்களிலுள்ள இறை நம்பிக்கையாளர்களே! உங்கள்மீது இறைச்சாந்தி பொழியட்டும். இறைவன் நாடினால் நிச்சயமாக நாங்களும் உங்களை வந்து சேருபவர்கள்தாம்) என்று கூறி விட்டு, நம் சகோதரர்களை (இவ்வுலகிலேயே) பார்க்க நான் ஆசைப்படுகிறேன் என்று சொன்னார்கள்.
மக்கள், அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் உங்கள் சகோதரர்கள் இல்லையா? என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நீங்கள் என் தோழர்கள்தாம். (நான் கூறுவது) இதுவரை (பிறந்து) வந்திராத நம் சகோதரர்கள் என்று கூறினார்கள். மக்கள், உங்கள் சமுதாயத்தாரில் இதுவரை (பிறந்து) வராதவர்களை நீங்கள் எவ்வாறு அறிந்து கொள்வீர்கள், அல்லாஹ்வின் தூதரே? என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒரு மனிதரிடம் முகமும் கை கால்களும் வெண்மையாக உள்ள குதிரை ஒன்று இருந்தது. அது கறுப்புக் குதிரைகளுக்கிடையே இருந்தால் தமது குதிரையை அவர் அறிந்துகொள்ளமாட்டாரா, கூறுங்கள் என்று கேட்டார்கள். மக்கள், ஆம் (அறிந்து கொள்வார்), அல்லாஹ்வின் தூதரே! என்று பதிலளித்தனர். (அவ்வாறே) அவர்கள் அங்கத் தூய்மையினால் (பிரதான) உறுப்புகள் பிரகாசிக்கும் நிலையில் (மறுமையில்) வருவார்கள். நான் அவர்களுக்கு முன்பே (அல்கவ்ஸர் எனும் எனது) தடாகத்திற்குச் சென்று அவர்களுக்கு நீர் புகட்டக் காத்திருப்பேன். அறிந்துகொள்ளுங்கள்! வழி தவறி(விளைச்சல் நிலத்திற்குள் நுழைந்து)விட்ட ஒட்டகம் துரத்தப்படுவதைப் போன்று, சிலர் எனது தடாகத்திலிருந்து துரத்தப்படுவார்கள். அவர்களை நான் வாருங்கள் என்று சப்தமிட்டு அழைப்பேன். அப்போது, இவர்கள் உங்களுக்குப் பின்னால் (உங்களது மார்க்கத்தை) மாற்றிவிட்டார்கள் என்று சொல்லப்படும். அப்போது நான் (இவர்களை) இறைவன் தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக;அப்புறப்படுத்துவானாக! என்று கூறுவேன்.– இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு நாள்) பொது மையவாடிக்குப் புறப்பட்டார்கள். (அங்கு போய்) அஸ்ஸலாமு அலைக்கும் தார கவ்மின் முஃமினீன்; வ இன்னா இன்ஷா அல்லாஹு பி(க்)கும் லாஹிகூன் என்று கூறினார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது. (அறிந்துகொள்ளுங்கள் என்பதற்கு பதிலாக) உறுதியாக என்று காணப்படுகிறது.

**பாடம் : 13 உளூவின் நீர், (உறுப்புகளில்) எங்கெல்லாம் படுகிறதோ அங்கெல்லாம் (மறுமையில்) வெண்மையும் பரவும்.**

420 அபூஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
தொழுகைக்காக அங்கத் தூய்மை (உளூ) செய்துகொண்டிருந்த அபூஹுரைரா (ரலி) அவர்களுக்குப் பின்னால் நான் இருந்து கொண்டிருந்தேன். அப்போது அவர்கள் தமது கையை அக்குள்வரை நீட்டிக் கழுவினார்கள்.

நான், அபூஹுரைரா (ரலி) அவர்களே! இது என்ன அங்கத் தூய்மை? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ஃபர்ரூகின் மக்களே! (பாமரர்களான) நீங்கள் இங்குதான் இருந்தீர்களா? நீங்கள் இங்குதான் இருக்கிறீர்கள் என்று நான் அறிந்திருந்தால் இவ்வாறு அங்கத் தூய்மை செய்திருக்கமாட்டேன். என் உற்ற தோழர் (ஸல்) அவர்கள், இறைநம்பிக்கையாளரின் உறுப்புகளில் எங்கெல்லாம் உளூவின் நீர் படுகிறதோ அங்கெல்லாம் வெண்மை பரவும் என்று கூறுவதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.

## பாடம் : 14 சிரமமான சூழ்நிலைகளிலும் முழுமையாக அங்கத் தூய்மை செய்வதன் சிறப்பு.

421 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (உங்கள்) தவறுகளை அல்லாஹ் மன்னித்து, தகுதிகளை உயர்த்தும் செயல்கள் சிலவற்றை உங்களுக்கு நான் சொல்லட்டுமா? என்று கேட்டார்கள். மக்கள், ஆம்; (சொல்லுங்கள்) அல்லாஹ்வின் தூதரே! என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (அவை:) சிரமமான சூழ்நிலைகளிலும் அங்கத் தூய்மையை முழுமையாகச் செய்வதும், பள்ளிவாசல்களை நோக்கி அதிகமான காலடிகளை எடுத்துவைத்துச் செல்வதும், ஒரு தொழுகைக்குப் பின் அடுத்தத் தொழுகையை எதிர்பார்த்துக் காத்திருப்பதும் ஆகும். இவைதாம் கட்டுப்பாடுகளாகும் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இன்னும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் கட்டுப்பாடு பற்றிய குறிப்பு இடம் பெறவில்லை. மாலிக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் இவைதாம் கட்டுப்பாடுகளாகும்; இவைதாம் கட்டுப்பாடுகளாகும் என்று இரு முறை (அல்லாஹ்வின் தூதர்) கூறியதாக இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 15 பல் துலக்குதல்.

422 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளர்களுக்கு அல்லது என் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்பட்டுவிடும் என்று நான் அஞ்சாமலிருந்தால் ஒவ்வொரு தொழுகையின்போதும் பல் துலக்குமாறு அவர்களுக்கு நான் கட்டளையிட்டிருப்பேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
423 ஷுரைஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், நபி (ஸல்) அவர்கள் வீட்டுக்குள் நுழைந்ததும் அவர்கள் செய்யும் முதல் வேலை எது? என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், பல் துலக்குவது என்று பதிலளித்தார்கள்.

424 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வீட்டுக்குள் நுழைந்ததும் முதலில் பல் துலக்குவார்கள்.

இதை ஷுரைஹ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

425 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது பல் துலக்கும் குச்சியின் முனை அவர்களின் வாயில் இருந்தது (அவர்கள் பல் துலக்கிக்கொண்டிருந்தார்கள்).

426 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவுத் தொழுகை (தஹஜ்ஜுது)க்காக எழுந்ததும் பல் துலக்கும் குச்சியால் தமது வாயைத் தேய்ப்பார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் எழுந்தால்... என ஹதீஸ் தொடங்குகிறது; இரவுத் தொழுகைக்காக எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

427 ஹுதைஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் (உறங்கி) எழுந்ததும் பல் துலக்கும் குச்சியால் தம் வாயைத் தேய்ப்பார்கள்.
இந்த ஹதீஸ் பல அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

428 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (என் சிறிய தாயார் மைமூனா (ரலி) அவர்களின் இல்லத்தில்) நபி (ஸல்) அவர்களுடன் ஓர் இரவு தங்கினேன். இரவின் இறுதிப்பகுதியில் நபி (ஸல்) அவர்கள் எழுந்து வெளியே சென்று வானத்தைப் பார்த்தார்கள்.
பிறகு திண்ணமாக வானங்கள் மற்றும் பூமியின் படைப்(பு அமைப்)பிலும், இரவு-பகல் மாறி மாறி வருவதிலும்... என்று தொடங்கி நரக வேதனையிலிருந்து எங்களை நீ காப்பாயாக என்பதுவரை இந்தக் குர்ஆன் வசனங்களை (3:190,191)ஓதினார்கள். பின்னர் வீட்டிற்குள் திரும்பிவந்து பல் துலக்கி, அங்கத் தூய்மை செய்தார்கள். பிறகு நின்று தொழுதார்கள். பின்னர் சாய்ந்து படுத்துக்கொண்டார்கள். பிறகு எழுந்து (வீட்டிற்கு) வெளியே சென்று வானத்தைப் பார்த்தபடி இந்த (3:190,191) வசனங்களை (மீண்டும்) ஓதினார்கள். பிறகு திரும்பி வந்து பல் துலக்கி, அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். பின்னர் நின்று தொழுதார்கள்.

## பாடம் : 16 இயற்கை மரபுகள்.

429 நபி (ஸல்) அவர்கள் கூறியதாவது:
இயற்கை மரபுகள் ஐந்தாகும் அல்லது ஐந்து செயல்கள் இயற்கை மரபுகளில் (-இறைத் தூதர்கள் வழியில்) அடங்கும். (அவையாவன:) விருத்த சேதனம் செய்வது, மர்ம உறுப்பின் முடியைக் களை(ந்திடச் சவரக் கத்தியைப் பயன்படுத்து)வது, நகங்களை வெட்டிக்கொள்வது, அக்குள் முடிகளை அகற்றுவது, மீசையைக் கத்தரித்துக்கொள்வது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

430 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இயற்கை மரபுகள் ஐந்தாகும். விருத்த சேதனம் செய்வது, மர்ம உறுப்பின் முடிகளைக் களை(ந்து கொள்வதற்காகச் சவரக்கத்தியைப் பயன்படுத்து)வது, மீசையைக் கத்தரித்துக் கொள்வது, நகங்களை வெட்டிக்கொள்வது, அக்குள் முடிகளை அகற்றிக்கொள்வது ஆகியவைதாம் அவை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

431 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மீசையைக் கத்தரிப்பது, நகங்களை வெட்டுவது, அக்குள் முடிகளை அகற்றுவது, மர்ம உறுப்பின் முடிகளை மழிப்பது ஆகியவற்றில் நாற்பது நாட்களுக்கு மேல் விட்டு வைக்கக் கூடாதென எங்களுக்குக் கால வரம்பு விதிக்கப்பட்டிருந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

432 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மீசையை ஒட்ட நறுக்குங்கள். தாடியை வளரவிடுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

433 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மீசையை ஒட்ட நறுக்குமாறும் தாடியை வளர்க்குமாறும் கட்டளையிட்டார்கள்.

434 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இணைவைப்பாளர்களுக்கு மாறு செய்யுங்கள்: மீசையை ஒட்ட நறுக்குங்கள். தாடியை வளரவிடுங்கள்.-இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

435 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மீசையை ஒட்டக் கத்தரியுங்கள். தாடியை வளரவிடுங்கள். அக்னி ஆராதகர் (மஜூசி)களுக்கு மாறு செய்யுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

436 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பத்து விஷயங்கள் இயற்கை மரபுகளில் அடங்கும். (அவையாவன:) மீசையைக் கத்தரிப்பது, தாடியை வளர்ப்பது, பல் துலக்குவது, நாசிக்கு நீர் செலுத்துவது, நகங்களை வெட்டுவது, விரல் கணுக்களைக் கழுவுவது, அக்குள் முடிகளை அகற்றுவது, மர்ம உறுப்பின் முடிகளை மழிப்பது, (மல ஜலம் கழித்த பின்) தண்ணீரால் துப்புரவு செய்வது.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்தள்ளது.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸகரிய்யா பின் அபீஸாயிதா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
(இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) முஸ்அப் பின் ஷைபா (ரஹ்) அவர்கள், பத்தாவது விஷயத்தை நான் மறந்துவிட்டேன். அது வாய் கொப்புளிப்பதாய் இருக்கலாம் என்று கூறினார்கள்.
குதைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள) இன்திகாஸுல் மாயி எனும் சொற்றொடருக்கு (மலஜலம் கழித்த பின்) துப்புரவு செய்தல் என்று பொருள் எனவும் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அறிவிப்பாளர் ஸகரிய்யா பின் அபீஸாயிதா (ரஹ்) அவர்கள், தம் தந்தை அபூஸாயிதா (ரஹ்) அவர்கள்தாம் அந்த பத்தாவது விஷயத்தை மறந்துவிட்டேன் எனக் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 17 கழிப்பிடத்தில் துப்புரவு செய்தல்.

437 அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சல்மான் அல்ஃபார்சீ (ரலி) அவர்களிடம், மலஜலம் கழிக்கும் முறை உட்பட அனைத்தையுமே உங்கள் இறைத்தூதர் உங்களுக்குக் கற்றுத்தந்திருக்கிறார் (போலும்) என்று (பரிகாசத்துடன்) கேட்கப்பட்டது. (இணைவைப்பாளர்கள்தாம் அவ்வாறு கேட்டனர்.)
அதற்கு சல்மான் (ரலி) அவர்கள், ஆம் (உண்மைதான்); மலஜலம் கழிக்கும்போது கிப்லாவை முன்னோக்க வேண்டாமென்றும் (மலஜலம் கழித்த பின்) வலக்கரத்தால் துப்புரவு செய்ய வேண்டாமென்றும், மூன்றை விடக்குறைவான கற்களால் துப்புரவு செய்ய வேண்டாமென்றும்,கெட்டிச் சாணத்தாலோ எலும்பாலோ துப்புரவு செய்ய வேண்டாமென்றும் எங்களை (எங்கள் நபி) தடுத்தார்கள் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- சல்மான் அல்ஃபார்சீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்களிடம் இணைவைப்பாளர்கள் (சார்பாக ஒருவர்) உங்கள் தோழர் (நபி (ஸல்) அவர்கள்) உங்களுக்கு மலஜலம் கழிக்கும் முறையைக்கூட கற்றுத்தருவதாக நான் கருதுகிறேன் என்று கூறின(ô)ர். அதற்கு நான் ஆம்(உண்மைதான்);எங்களில் ஒருவர் வலக் கரத்தால் துப்புரவு செய்யக்கூடாதென்றும் (மலஜலம் கழிக்கும்போது) கிப்லாவை முன்னோக்கக் கூடாதென்றும், கெட்டிச்சாணம், எலும்புகள் ஆகியவற்றை (துப்புரவு செய்வதற்காக)ப் பயன்படுத்தக் கூடாதென்றும் அன்னார் எங்களுக்குத் தடை விதித்தார்கள். மேலும், உங்களில் ஒருவர் மூன்றைவிடக் குறைவான கற்களால் துப்புரவு செய்ய வேண்டாம் என்றும் கூறினார்கள் என்றேன்.

438 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மலஜலம் கழித்த பின்) எலும்பாலோ கெட்டிச் சாணத்தாலோ துடைத்துத் துப்புரவு செய்யப்படுவதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைசெய்தார்கள்.

439 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் கழிப்பிடத்திற்குச் சென்று மலஜலம் கழிக்கும்போது கிப்லா (கஅபா)த் திசையை முன்னோக்கவும் வேண்டாம்;அதைப் பின்னோக்கவும் வேண்டாம். மாறாக, கிழக்கு நோக்கியோ மேற்கு நோக்கியோ திரும்பிக் கொள்ளுங்கள்.
இதன் அறிவிப்பாளரான அபூஅய்யூப் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:
நாங்கள் ஷாம் (சிரியா) நாட்டிற்குச் சென்றிருந்தபோது அங்குள்ள கழிப்பறைகள் கிப்லாவை முன்னோக்கி (அமரும் விதத்தில்) கட்டப்பட்டிருந்ததைக் கண்டோம். ஆகவே, நாங்கள் (கிப்லாவின் திசையிலிருந்து) திரும்பிக் கொண்டோம்;அல்லாஹ்விடம் பாவமன்னிப்பும் கோரினோம்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
நான் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களிடம் மேற்கண்ட ஹதீஸை வாசித்துக் காட்டி, இதை அதாஉ பின் யஸீத் (ரஹ்) அவர்களிடமிருந்து ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்ததை நீங்கள் செவியுற்றீர்களா? என்று கேட்டேன். அதற்கு சுஃப்யான் (ரஹ்) அவர்கள், “ஆம்” என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

440 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
உங்களில் ஒருவர் இயற்கைக் கடனை நிறைவேற்ற அமர்ந்தால் அவர் கிப்லாவை முன்னோக்கவும் வேண்டாம்;அதைப் பின்னோக்கவும் வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

441 வாசிஉ பின் ஹப்பான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் பள்ளிவாசலில் தொழுதுகொண்டிருந்தேன். அப்போது அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கிப்லாத் திசையில் தமது முதுகைச் சாய்த்து அமர்ந்திருந்தார்கள். நான் தொழுகையை முடித்துக்கொண்டு என் இடத்தில் இருந்தவாறே அவர்களைத் திரும்பிப் பார்த்தேன். அப்போது அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: நீங்கள் உங்களது இயற்கைக் கடனை நிறைவேற்ற அமர்ந்தால்,கிப்லா (கஅபாவின்) திசையையோ பைத்துல் மக்திஸையோ முன்னோக்கி அமரக்கூடாது என்று மக்கள் சிலர் கூறுகின்றனர். ஆனால், நான் (என் சகோதரி ஹஃப்ஸா) வீட்டின் கூரை மீது (ஒரு வேலையாக) ஏறினேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரு செங்கற்கள்மீது பைத்துல் மக்திஸின் திசையை முன்னோக்கியபடி இயற்கைக் கடனை நிறைவேற்ற அமர்ந்திருப்பதை (தற்செயலாகக்) கண்டேன்.

442 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் சகோதரி(யும் நபியவர்களின் துணைவியாருமான) ஹஃப்ஸா (ரலி) அவர்களது வீட்டின் (கூரை)மீது (ஒரு வேலையாக) ஏறினேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பைத்துல் மக்திஸ் உள்ள) ஷாம் நாட்டின் திசையை முன்னோக்கியபடியும்

கிப்லா(கஅபா)வைப் பின்னோக்கியபடியும் இயற்கைக் கடனை நிறைவேற்ற அமர்ந்திருந்ததைக் கண்டேன்.

**பாடம் : 18** (மல ஜலம் கழித்த பின்) வலக்கரத்தால் துப்புரவு செய்யலாகாது.

443 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் சிறுநீர் கழிக்கும்போது அவர் தமது பிறவி உறுப்பை வலக்கரத்தால் பிடிக்க வேண்டாம். மலஜலம் கழித்த பின் வலக் கரத்தால் சுத்தம் செய்ய வேண்டாம். நீங்கள் (ஏதேனும் பருகும்போது) பாத்திரத்தினுள் மூச்சுவிட வேண்டாம்.
இதை அபூகத்தாதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

444 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
உங்களில் ஒருவர் கழிப்பிடத்திற்குச் சென்றால் அவர் தமது வலக் கரத்தால் பிறவி உறுப்பைத் தொட வேண்டாம்.
இதை அபூகத்தாதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

445 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், ஒருவர் (ஏதேனும் பருகும்போது) பாத்திரத்தினுள் மூச்சுவிட வேண்டாம் என்றும், (இயற்கைக் கடனை நிறைவேற்றும்போது) வலக் கரத்தால் பிறவி உறுப்பைத் தொட வேண்டாம் என்றும், வலக் கரத்தால் துப்புரவு செய்ய வேண்டாம் என்றும் தடை விதித்தார்கள்.

**பாடம் : 19** தூய்மைப்படுத்தல் உள்ளிட்ட செயல்களை வலப் பக்கத்திலிருந்து ஆரம்பித்தல்.

446 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உளூ மற்றும் குளியல் மூலம்) தம்மைத் தூய்மைப் படுத்திக்கொள்ளும்போதும்,அவர்கள் தலை வாரிக்கொள்ளும்போதும், காலணி அணியும் போதும் வலப் பக்கத்திலிருந்து தொடங்குவதையே விரும்பிவந்தார்கள்.

447 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் செயல்கள் அனைத்திலும் வலப் பக்கத்தை(க் கொண்டு தொடங்குவதை)யே விரும்பக்கூடியவர்களாக இருந்தார்கள்; காலணி அணியும் போதும், தலை வாரிக்கொள்ளும்போதும், (உளூ மற்றும் குளியல் மூலம் தம்மைத்) தூய்மைப்படுத்திக்கொள்ளும்போதும் (வலப் பக்கத்திலிருந்து தொடங்குவதையே விரும்பி வந்தார்கள்).

பாடம்: 20 நடைபாதைகளிலும் நிழல்(உள்ள இடங்)களிலும் மலம் கழிப்பதற்கு வந்துள்ளதடை.

448 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், சாபத்திற்குரிய இரு செயல்களைத் தவிர்த்து விடுங்கள் என்று கூறினார்கள். மக்கள், சாபத்திற்குரிய அவ்விரு செயல்கள் என்ன, அல்லாஹ்வின் தூதரே? என்று கேட்டார்கள்.
அதற்கு, மக்களின் நடைபாதையில், அல்லது அவர்களின் (ஓய்விடங்களான) நிழல்களில் மலம் கழிப்பதுதான் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விடையளித்தார்கள்.

பாடம் : 21 மலம் கழித்த பின் தண்ணீரால் துப்புரவு செய்வது.

449 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு தோட்டத்திற்குள் சென்றார்கள். அப்போது எங்களில் வயதில் சிறியவரான ஒருவர் தம்முடன் தண்ணீருள்ள பாத்திரம் ஒன்றை எடுத்துக்கொண்டு அவர்களைப் பின்தொடர்ந்தார். பின்னர் அதை ஓர் இலந்தை மரம் அருகே வைத்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்றிய பின் அந்தத் தண்ணீரால் துப்புரவு செய்துவிட்டு எங்களிடம் வந்தார்கள்.

450 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்குச் சென்றால் நானும் என்னைப் போன்ற இன்னொரு சிறுவரும் தண்ணீர் நிரம்பிய ஒரு தோல் பாத்திரத்தையும் (இரும்புப் பிடிபோட்ட) கைத்தடி ஒன்றையும் எடுத்துக்கொண்டு செல்வோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இயற்கைக் கடனை நிறைவேற்றிய பின்) அந்தத் தண்ணீரால் துப்புரவு செய்வார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

451 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்ற ஒதுக்குப் புறங்களுக்குச் செல்வார்கள். அப்போது நான் அவர்களுக்காகத் தண்ணீர் கொண்டு செல்வேன். அதன்மூலம் அவர்கள் கழுவி(த் துப்புரவு செய்து)கொள்வார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 22 காலுறைகள் (மோஸா)மீது ஈரக் கையால் தடவி (மஸ்ஹு செய்து)கொள்வது.

452 ஹம்மாம் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் சிறுநீர் கழித்துவிட்டுப் பின்னர் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். (அப்போது கால்களைக் கழுவுவதற்கு பதிலாக ஈரக் கையால்) தம் காலுறைகள்மீது தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள். அவர்களிடம் (இது குறித்து), இவ்வாறு செய்யலாமா? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,ஆம் (செய்யலாம்). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறுநீர் கழித்துவிட்டுப் பின்னர் அங்கத் தூய்மை (உளூ) செய்வதை நான் பார்த்தேன். (அப்போது) அவர்கள் தம் (கால்களைக் கழுவுவதற்கு

பதிலாக ஈரக் கையால்) காலுறைகள்மீது தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள் என்று பதிலளித்தார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
(காலுறைகள் மீது மஸ்ஹு செய்து தொழலாம் எனும்) இந்த ஹதீஸ் மக்களுக்கு மகிழ்ச்சியளிப்பதாகவே அமைந்தது. ஏனெனில், ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் (குர்ஆனில்) 5:6 ஆவது வசனம் அருளப்பெற்ற பின்னரே இஸ்லாத்தைத் தழுவினார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஈசா பின் யூனுஸ் (ரஹ்) மற்றும் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், அப்தில்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களுடைய தோழர்களுக்கு இந்த ஹதீஸ் மகிழ்ச்சியளித்து வந்தது. ஏனெனில், ஜரீர் (ரலி) அவர்கள் அல்மாயிதா எனும் (5ஆவது) அத்தியாயம் அருளப்பெற்ற பின்னரே இஸ்லாத்தைத் தழுவினார்கள் என்று இடம் பெற்றுள்ளது.

453 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுடன் (சென்றுகொண்டு) இருந்தேன். அவர்கள் ஒரு சமூகத்தாரின் குப்பைக் குழிக்குச் சென்று (அங்கு) நின்றுகொண்டு சிறுநீர் கழித்தார்கள். உடனே நான் அவர்களை விட்டும் சற்று ஒதுங்கிச்சென்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், அருகில் வா! என்று கூறினார்கள். நான் அருகில் சென்று அவர்களுக்குப் பின்பக்கம் நின்று(அவர்களை மறைத்துக்)கொண்டேன். பிறகு நபியவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். அப்போது தம் (கால்களைக் கழுவுவதற்கு பதிலாக ஈரக் கையால்) காலுறைகள்மீது தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள்.

454 அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் சிறுநீர் (துளிகள் தெறிக்கும்) விஷயத்தில் மிகவும் கண்டிப்பானவராய் இருந்தார்கள். (மேனியில் சிறுநீர் தெறித்துவிடக் கூடாது என்பதற்காக) அவர்கள் கண்ணாடிக் குடுவையில் சிறுநீர் கழிப்பார்கள். மேலும், இஸ்ரவேலர்களில் ஒருவரது சருமத்தில் சிறுநீர் பட்டுவிட்டால் அந்த இடத்தைக் கத்தரிக்கோலால் கத்தரித்து விடக் கூடியவராக அவர் இருந்தார் என்று கூறுவார்கள்.
(இதை அறிந்த) ஹுதைஃபா பின் அல் யமான் (ரலி) அவர்கள், உங்கள் தோழர் (அபூ மூசா) இந்த அளவு கண்டிப்பானவராய் இருக்க வேண்டியதில்லை என்றே நான் விரும்புகிறேன். (ஒரு முறை) நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் நடந்து சென்று கொண்டிருந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு சுவருக்குப் பின்னாலிருந்த குப்பைக் குழிக்குச் சென்று உங்களில் ஒருவர் நிற்பதைப் போன்று (சாதாரணமாக) நின்று கொண்டு சிறுநீர் கழித்தார்கள். உடனே நான் அவர்களைவிட்டும் சற்று ஒதுங்கிச் சென்றேன். அப்போது அவர்கள் என்னை நோக்கி (தம் அருகில் வருமாறு) சைகை செய்தார்கள். நான் அவர்களிடம் சென்று அவர்கள் தமது தேவையை முடித்துக் கொள்ளும்வரை அவர்களுக்குப் பின்பக்கம் நின்று (மறைத்துக்) கொண்டிருந்தேன்.

455 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காகப் புறப்பட்டுச் சென்றார்கள். உடனே நான் தண்ணீர் குவளையுடன் அவர்களைப் பின்தொடர்ந்தேன். அவர்கள் இயற்கைக் கடனை முடித்து (துப்புரவு செய்து),திரும்பியபோது அவர்களின் (கை கால்கள்)மீது நான் தண்ணீரை ஊற்ற, அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். (தமது கால்களைக் கழுவுவதற்கு பதிலாக ஈரக் கையால்) தம் காலுறைகள்மீது தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், நபி (ஸல்) அவர்கள் தமது முகத்தையும் கைகளையும் கழுவினார்கள். மேலும், (ஈரக் கையால்) தமது தலையில் தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள். பிறகு தம் காலுறைகள் மீது மஸ்ஹு செய்தார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

456 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் இரவில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (ஒரு பயணத்தில்) இருந்தேன். அப்போது அவர்கள் (தமது வாகனத்திலிருந்து) இறங்கி இயற்கைக் கடனை நிறைவேற்றினார்கள். பிறகு (திரும்பி) வந்தார்கள். அப்போது நான் என்னிடமிருந்த குவளையிலிருந்து தண்ணீரை அவர்களின் (கை கால்கள்) மீது ஊற்றினேன். அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். (கால்களைக் கழுவுவதற்கு பதிலாக ஈரக் கையால்) தம் காலுறைகள்மீது தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள்.

457 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுடன் (தபூக் போர்) பயணத்தில் இருந்தேன். அப்போது அவர்கள், முஃகீரா! தண்ணீர் குவளையை எடுங்கள்! என்று கூறினார்கள். அதை நான் எடுத்துக் கொண்டு அவர்களுடன் புறப்பட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நடந்து (என் கண்ணுக்கெட்டாத தூரத்திற்குச்) சென்று என்னைவிட்டு மறைந்து இயற்கைக் கடனை நிறைவேற்றி விட்டு (திரும்பி) வந்தார்கள். அப்போது அவர்கள், கைப் பகுதி குறுகலான ஷாம் நாட்டு நீளங்கி அணிந்திருந்தார்கள். எனவே, தமது கையைச் சட்டைக் கைகளிலிருந்து வெளியே எடுக்கப்போனார்கள். ஆனால்,சட்டைக் கைகள் குறுகலாக இருக்கவே, தமது கையை அதன் கீழிருந்து வெளியே எடுத்தார்கள். நான் அவர்களின் (கை, கால்கள்)மீது தண்ணீர் ஊற்றினேன். அவர்கள் தொழுகைக்காக அங்கத் தூய்மை செய்வதைப் போன்று அங்கத் தூய்மை செய்தார்கள். பிறகு (கால்களைக் கழுவுவதற்கு பதிலாக ஈரக் கையால்) தம் காலுறைகள்மீது தடவி (மஸ்ஹு செய்து)விட்டுப் பின்னர் தொழுதார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

458 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காகப் புறப்பட்டுச் சென்றார்கள். பிறகு அவர்கள் திரும்பி வந்தபோது தண்ணீர் குவளையுடன் அவர்களைச் சந்தித்தேன். அவர்களின் (கை கால்கள்)மீது நான் தண்ணீர் ஊற்றினேன்.

அவர்கள் தம் (முன்) கைகளைக் கழுவிவிட்டுப் பிறகு முகத்தைக் கழுவினார்கள். பிறகு தம் முழங்கைகளைக் கழுவப்போனபோது அவர்கள் அணிந்திருந்த நீளங்கி குறுகலானதாக இருந்தது. எனவே, தம் கைகளை நீளங்கியின் கீழிருந்து வெளியே எடுத்து அவற்றைக் கழுவினார்கள். மேலும், (ஈரக் கையால்) தமது தலையைத் தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள்; தம் காலுறைகள் மீதும் (அவ்வாறே ஈரக் கையால்) தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள். பிறகு எங்களுக்கு (இமாமாக நின்று) தொழுவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

459 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஒரு பயணத்தில் ஓரிரவு நபி (ஸல்) அவர்களுடன் இருந்தேன். அப்போது அவர்கள், உம்மிடம் தண்ணீர் இருக்கிறதா? என்று கேட்டார்கள். நான், ஆம்! (இருக்கிறது) என்று பதிலளித்தேன். உடனே அவர்கள் தமது வாகனத்திலிருந்து இறங்கி இரவின் இருளில் என் பார்வையிலிருந்து மறையும் அளவுக்கு நடந்தார்கள். (இயற்கைத் தேவையை முடித்த) பிறகு அவர்கள் வந்தார்கள். நான் குவளையிலிருந்த நீரை அவர்கள்மீது ஊற்றினேன். அவர்கள் தமது முகத்தைக் கழுவினார்கள். அப்போது கம்பளி நீளங்கி அணிந்திருந்தார்கள். ஆதலால், அங்கியிலிருந்து தம் முழங்கைகளை வெளியே எடுக்க அவர்களால் இயலவில்லை. ஆகவே, முழங்கைகளை அங்கியின் கீழிருந்து வெளியே எடுத்துக் கழுவினார்கள். பிறகு தமது தலையை (ஈரக் கையால்) தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள். பிறகு நான் அவர்களின் காலுறைகள் இரண்டையும் கழற்ற முனைந்தேன். அப்போது அவர்கள், அவற்றை விட்டுவிடுவீராக! ஏனெனில், நான் (என் கால்கள்) இரண்டையும் தூய்மையான நிலையிலேயே (காலுறைகளுக்குள்) நுழைத்திருந்தேன் என்று சொல்லி, (ஈரக் கையால்) அவற்றைத் தடவி (மஸ்ஹு செய்து) கொண்டார்கள்.

460 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் அங்கத் தூய்மை செய்வதற்காக நான் தண்ணீர் ஊற்றினேன். அவர்கள் அங்கத் தூய்மை செய்தார்கள். (ஈரக் கையால்) தம் காலுறைகள்மீது தடவி (மஸ்ஹு செய்து)கொண்டார்கள். அப்போது நான் (காலுறைகளைக் கழற்ற வேண்டுமல்லவா என்பது குறித்து) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், நான் (என் கால்கள்) இரண்டையும் தூய்மையான நிலையிலேயே (காலுறைகளுக்குள்) நுழைத்திருந்தேன் என்று சொன்னார்கள்.

## பாடம் : 23 (ஈரக் கையால்) முன்தலையின் மீதும் தலைப்பாகையின் மீதும் தடவி (மஸ்ஹு செய்து) கொள்வது.

461 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு பயணத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்னால் (தாமதமாக) வந்து கொண்டிருந்தார்கள். நானும் அவர்களுடன் வந்துகொண்டிருந்தேன். அப்போது அவர்கள் (வாகனத்திலிருந்து இறங்கி) இயற்கைக் கடனை முடித்துக் கொண்டு வந்து, உம்மிடம் தண்ணீர் உள்ளதா? என்று கேட்டார்கள். நான் தண்ணீர் குவளையை அவர்களிடம்

எடுத்துச்சென்றேன். அவர்கள் தம்முடைய முன் கைகளையும் முகத்தையும் கழுவினார்கள். பிறகு தமது முழங்கையை வெளியே எடுக்கப்போனபோது சட்டைக் கை குறுகலாக இருந்தது. எனவே, தமது கையை (அவர்கள் அணிந்திருந்த) நீளங்கியின் கீழிருந்து வெளியே எடுத்தார்கள். நீளங்கியைத் தோளில் போட்டுக்கொண்டார்கள். பிறகு தமது முழங்கை வரைக் கழுவினார்கள். பின்னர் (ஈரக் கையால்) தமது முன்தலையின் மீதும் தலைப்பாகை மீதும் காலுறைகள்மீதும் தடவி (மஸ்ஹு செய்து) கொண்டார்கள். பிறகு வாகனத்தில் ஏறினார்கள். நானும் ஏறிக்கொண்டேன். நாங்கள் (எங்களுக்கு முன்னால் சென்றுகொண்டிருந்த) மக்களிடம் வந்துசேர்ந்தோம். அவர்கள் நின்று தொழுதுகொண்டிருந்தார்கள். அவர்களுக்கு அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் (இமாமாக இருந்து) தொழுவித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு ரக்அத் தொழுது முடித்திருந்தார்கள். (இதற்கிடையே) நபி (ஸல்) அவர்கள் வந்துவிட்டதை உணர்ந்த அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் பின்வாங்கப் பார்த்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் (அங்கேயே நின்று தொழுமாறு) சைகை செய்தார்கள். எனவே, அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் (எஞ்சிய ரக்அத்தையும்) மக்களுக்குத் தொழுவித்தார்கள். அவர் (தொழுகையின் இறுதியில்) சலாம் கொடுத்ததும் நபி (ஸல்) அவர்களும் நானும் எழுந்து எங்களுக்கு விடுபட்டுப்போயிருந்த ஒரு ரக்அத்தைத் தொழுதோம்.

462 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ஈரக் கையால்) தம் காலுறைகள், முன்தலை மற்றும் தலைப்பாகை ஆகியவற்றின் மீது தடவி (மஸ்ஹு செய்து)கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

463 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்தபோது (ஈரக் கையால்) தமது முன் தலையின் மீதும் தலைப்பாகைமீதும் காலுறைகள் மீதும் தடவி (மஸ்ஹு செய்து) கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான பக்ர் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: இந்த ஹதீஸை நான் முஃகீரா (ரலி) அவர்களுடைய புதல்வர் உர்வா (ரஹ்) அவர்களிடம் செவியேற்றேன்.

464 பிலால் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஈரக் கையால்) தம்முடைய காலுறைகள் மற்றும் தலைப்பாகையின் மீது தடவி (மஸ்ஹு செய்திடலா)னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் ஒன்றில், (மேற்கண்டவாறு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்ததை நான் பார்த்தேன் என்று பிலால் (ரலி) அவர்கள் கூறியதாக இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 24 காலுறைகள்மீது மஸ்ஹு செய்வதற்கான காலவரம்பு.

465 ஷுரைஹ் பின் ஹானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் காலுறைகள்மீது மஸ்ஹு செய்வது குறித்துக் கேட்பதற்காகச் சென்றேன். அப்போது அவர்கள், நீங்கள் அலீ பின் அபீதாலிப் அவர்களை அணுகிக் கேளுங்கள். அவர்தாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பயணம் செய்பவராய் இருந்தார்கள் என்று கூறினார்கள். எனவே, அலீ (ரலி) அவர்களிடம் (சென்று) அதைப் பற்றிக் கேட்டோம். அப்போது அவர்கள், பயணத்திலிருப்பவருக்கு மூன்று பகல் மூன்று இரவுகளையும்,உள்ளூரிலிருப்பவருக்கு ஒரு பகல் ஓர் இரவையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிர்ணயித்தார்கள் என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் அஸ்ஸவ்ரீ (ரஹ்) அவர்கள், தமக்கு இந்த ஹதீஸை அறிவித்த அம்ர் பின் கைஸ் (ரஹ்) அவர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது அன்னாரைப் பாராட்டுவார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஷுரைஹ் பின் ஹானீ (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வருமாறு காணப்படுகிறது:
ஷுரைஹ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: காலுறைகள்மீது மஸ்ஹு செய்வதைப் பற்றி ஆயிஷா (ரலி) அவர்களிடம் நான் வினவினேன். அதற்கு அவர்கள், அலீ அவர்களிடம் செல்லுங்கள். ஏனெனில், என்னைவிட அவர்தாம் இதுகுறித்து நன்கறிந்தவர் என்று கூறினார்கள். ஆகவே, நான் அலீ (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது மேற்கண்டவாறு அலீ (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## பாடம் : 25 ஒரே உளூவினால் பல (நேரத்) தொழுகைகளைத் தொழலாம்.

466 புரைதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி தினத்தன்று ஒரு முறை செய்த உளூவினால் பல நேரத் தொழுகைகளைத் தொழுதார்கள். அப்போது (கால்களைக் கழுவாமல் ஈரக் கையால்) காலுறைகள்மீது தடவி (மஸ்ஹு செய்து)கொண்டார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், முன்னெப்போதும் செய்யாத ஒன்றை இன்றைக்குத் தாங்கள் செய்கிறீர்களே? என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், செய்ய வேண்டுமென்றுதான் செய்தேன், உமரே! என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 26 அங்கத் தூய்மை (உளூ) செய்பவரும் மற்றவர்களும் தமது கை அசுத்தம் அடைந்திருக்குமோ என்று சந்தேகப்படும் போது, மும்முறை கையைக் கழுவாமல் பாத்திரத்திற்குள் நுழைப்பது விரும்பத்தக்க செயலன்று.**

467 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் உறக்கத்திலிருந்து விழித்தெழுந்தால் அவர் தமது கையை மூன்று முறை கழுவாமல் பாத்திரத்திற்குள் இட வேண்டாம். ஏனெனில், இரவில் அவரது கை எங்கே இருந்தது என்பதை அவர் அறியமாட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று (வெளிப்படை யாகவு)ம், வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அபூஹுரைரா (ரலி) அவர்கள் ஹதீஸை மர்ஃபூஉ (நபியவர்கள் கூறியது) எனக் குறிப்பிட்டார்கள் என்றும் காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வாயிலாகவே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

468 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் உறங்கியெழுந்ததும் பாத்திரத்திற்குள் கையை இடுவதற்கு முன் மூன்று முறை தண்ணீர் ஊற்றிக் கையைக் கழுவிக்கொள்ளட்டும். ஏனெனில், இரவில் அவரது கை எதில் கிடந்தது என்பதை அவர் அறியமாட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே வேறு ஏழு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அந்த அனைத்து அறிவிப்புகளிலும் கைகளைக் கழுவுவதற்கு முன் (பாத்திரத்தினுள் இட வேண்டாம்) என்றே (பொதுவாக) வந்துள்ளது.
ஜாபிர் (ரலி), சயீத் பின் முஸய்யப் (ரஹ்), அபூசலமா (ரஹ்), அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்), அபூசாலிஹ் (ரஹ்),அபூரஸீன் (ரஹ்) ஆகியோரின் அறிவிப்புக்களில்தான் மூன்று முறை கைகளைக் கழுவுவதற்கு முன் (பாத்திரத்தினுள் இடவேண்டாம்) எனும் குறிப்பு இடம் பெற்றுள்ளது.

**பாடம் : 27 (பாத்திரத்தில்) நாய் வாய்வைப்பது தொடர்பான சட்டம்.**

469 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவரது பாத்திரத்தில் நாய் வாய் வைத்துவிட்டால் அவர் அதைக் கொட்டி விட்டு ஏழு தடவை பாத்திரத்தைக் கழுவிக்கொள்ளட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அதை அவர் கொட்டிவிடட்டும் எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

470 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவரது பாத்திரத்தில் நாய் (வாய்வைத்துக்) குடித்துவிடுமானால் அந்தப் பாத்திரத்தை அவர் ஏழு முறை கழுவிக்கொள்ளட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

471 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நாய் வாய்வைத்துவிட்ட உங்களது பாத்திரத்தைச் சுத்தம் செய்யும் முறை யாதெனில், அதை ஏழு தடவை தண்ணீரால் கழுவுவதாகும். முதல் தடவை மண்ணிட்டுக் கழுவ வேண்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

472 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நாய் வாய்வைத்துவிட்ட உங்களது பாத்திரத்தைச் சுத்தம் செய்யும்முறை யாதெனில், அதை ஏழு தடவை கழுவுவதாகும்.

473 அப்துல்லாஹ் பின் அல்முகஃப்பல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஆரம்பத்தில்) நாய்களைக் கொல்லுமாறு உத்தரவிட்டார்கள். பின்னர் மக்களுக்கும் நாய்களுக்கும் என்ன நேர்ந்தது (அவர்கள் நாய்களை ஏன் கொல்ல வேண்டும்)? என்று கேட்டார்கள். பின்னர் வேட்டை நாய்களுக்கும் கால்நடைகளின் பாதுகாப்பிற்காக வைத்திருக்கும் நாய்களுக்கும் அனுமதியளித்தார்கள். மேலும் பாத்திரத்தில் நாய் வாய் வைத்துவிட்டால் ஏழு தடவை (தண்ணீரால்) கழுவிக் கொள்ளுங்கள். எட்டாவது தடவை மண்ணிட்டுக் கழுவுங்கள் என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அல்முஃகஃப்பல் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் கால்நடைகளின் பாதுகாப்பிற்காக,வேட்டையாடுவதற்காக, விவசாயப் பண்ணைகளைப் பாதுகாப்பதற்காக வைத்திருக்கும் நாய்களுக்கு அனுமதியளித்தார்கள் என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
மற்றவர்களது அறிவிப்பில் விவசாயப் பண்ணைகளைப் பாதுகாப்பதற்காக வைத்திருக்கும் நாய்கள் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 28 தேங்கி நிற்கும் நீரில் சிறுநீர் கழிக்க வந்துள்ள தடை.**

474 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
தேங்கி நிற்கும் தண்ணீரில் சிறுநீர் கழிக்க வேண்டாம் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

475 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் எவரும் தேங்கி நிற்கும் தண்ணீரில் சிறுநீர் கழிக்கவும் வேண்டாம். பின்னர் அதில் குளிக்கவும் வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

476 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓடாமல் தேங்கி நிற்கும் தண்ணீரில் நீ சிறுநீர் கழிக்காதே! பின்னர் அதில் குளிக்காதே!

**பாடம்: 29 தேங்கி நிற்கும் தண்ணீரில் (பெருந்துடக்கு உள்ளவர்) குளிப்பதற்கு வந்துள்ள தடை.**

477 அபுஸ் ஸாயிப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உங்களில் ஒருவர் பெருந்துடக்கு உள்ளவராய் இருக்கும்போது தேங்கி நிற்கும் தண்ணீரில் குளிக்க வேண்டாம் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் சொன்னார்கள். அப்போது நான், அவர் என்ன செய்ய வேண்டும், அபூஹுரைரா அவர்களே? என்று கேட்டேன். அதற்கு அவர் (அதிலிருந்து) தண்ணீரை அள்ளிக் குளிக்க வேண்டும் என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 30 பள்ளிவாசலில் பட்டுவிட்ட சிறுநீர் முதலான அசுத்தங்களைக் கழுவித் துப்புரவு செய்வது கட்டாயமாகும். நிலம் தண்ணீராலேயே தூய்மையாகிவிடும்; அதைத் தோண்ட வேண்டியதில்லை.**

478 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு கிராமவாசி பள்ளிவாசலினுள் சிறுநீர் கழித்தார். அவரை நோக்கிச் சிலர் (வேகத்துடன்) எழுந்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (அவர் சிறுநீர் கழிப்பதை) இடை மறிக்காதீர்கள். அவரை விட்டுவிடுங்கள் என்று கூறினார்கள். அவர் சிறுநீர் கழித்து முடித்ததும் ஒரு வாளியில் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி அதைச் சிறுநீர் மீது ஊற்றினார்கள்.

479 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு கிராமவாசி பள்ளிவாசலின் ஒரு பகுதியில் நின்று சிறுநீர் கழித்தார். அப்போது அவரைப் பார்த்து மக்கள் சப்தமிட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரை விட்டுவிடுங்கள் என்று கூறினார்கள். அவர் (சிறுநீர் கழித்து) முடித்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு வாளியில் தண்ணீர் கொண்டுவரச் சொன்னார்கள். அவ்வாறே (தண்ணீர் கொண்டுவரப்பட்டு) அது சிறுநீர் மீது ஊற்றப்பட்டது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

480 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு முறை நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பள்ளிவாசலில் இருந்தோம். அப்போது கிராமவாசியொருவர் வந்து பள்ளிவாசலுக்குள் நின்று சிறுநீர் கழித்தார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தோழர்கள் நிறுத்து! நிறுத்து! என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அவர் சிறுநீர் கழிப்பதை) இடைமறிக்காதீர்கள். அவரை விட்டுவிடுங்கள் என்று கூறினார்கள். எனவே, நபித்தோழர்கள் அவரை விட்டுவிட்டனர். அவர் சிறுநீர் கழித்து முடித்தார்.
பிறகு அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அழைத்து இந்தப் பள்ளிவாசல்கள் சிறுநீர் கழித்தல், அசுத்தம் செய்தல் ஆகியவற்றுக்குரிய இடமல்ல. இவை இறைவனை நினைவுகூர்ந்து போற்றுவதற்கும் தொழுவதற்கும் குர்ஆனை ஓதுவதற்கும் உரியதாகும் என்றோ, அல்லது இந்தக் கருத்திலமைந்த வேறு வார்த்தைகளையோ அவரிடம் கூறினார்கள். பிறகு மக்களில் ஒருவரிடம் ஒரு வாளித் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி அதை அந்தச் சிறுநீர் மீது ஊற்றச் செய்தார்கள்.

## பாடம் : 31 பால்குடி மாறாத குழந்தையின் சிறுநீர் பற்றிய சட்டமும் அதைக் கழுவும் முறையும்.

481 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் குழந்தைகள் கொண்டுவரப்படுவார்கள். அவர்களுக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுபிட்சம் (பரக்கத்) வேண்டிப் பிரார்த்தித்து, இனிப்புப் பொருளை மென்று அக்குழந்தைகளின் வாயிலிடுவார்கள். (ஒரு முறை) அவர்களிடம் ஓர் ஆண் குழந்தை கொண்டுவரப்பட்டது. அது அவர்கள்மீது சிறுநீர் கழித்துவிட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்
தண்ணீர் கொண்டுவரச் சொல்லி சிறுநீர் கழித்த இடத்தில் தண்ணீரை ஊற்றினார்கள். அதைக் கழுவவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

482 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பால்குடி மாறாத ஓர் ஆண்குழந்தை கொண்டு வரப்பட்டது. அது அவர்களது மடியில் சிறுநீர் கழித்துவிட்டது. அப்போது அல்லாஹ்வின்

தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி சிறுநீர் கழித்த இடத்தில் ஊற்றி விட்டார்கள்.
- மேற்கண்ட (481ஆவது) ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

483 உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், உணவு உட்கொள்ளாத (பால்குடி மாறாத) என்னுடைய ஆண் குழந்தையைக் கொண்டுவந்து அவர்களது மடியில் வைத்தேன். அது (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்மீது) சிறுநீர் கழித்துவிட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சிறுநீர் பட்ட இடத்தில்) தண்ணீரைத் தெளித்துவிட்டதைத் தவிர வேறொன்றும் கூடுதலாகச் செய்யவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி, அதை (சிறுநீர் பட்ட இடத்தில்) தெளித்துவிட்டார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

484 உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உத்பா பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி எடுத்துக்கொண்டவரும் ஆரம்பமாக நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்ற பெண்மணிகளில் ஒருவரும் பனூ அசத் பின் குஸைமா குலத்தாரில் ஒருவரான உக்காஷா பின் மிஹ்ஸன் (ரலி) அவர்களுடைய சகோதரியுமான உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
நான் (பாலைத் தவிர வேறு திட) உணவு உட்கொள்ளும் பருவத்தை அடையாத என் ஆண் மகவுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அக்குழந்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மடியில் சிறுநீர் கழித்துவிட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி (சிறுநீர் பட்ட) தமது ஆடையின் மீது தெளித்தார்கள். அதை(க் கசக்கி) அழுத்தமாகக் கழுவவில்லை.

## பாடம் : 32 விந்து பற்றிய சட்டம்.

485 அல்கமா (ரஹ்) மற்றும் அஸ்வத் (ரஹ்) ஆகியோர் கூறியதாவது:
ஒரு மனிதர் (அன்னை) ஆயிஷா (ரலி) அவர்களிடம் (விருந்தினராகத்) தங்கினார். அவர் காலையில் தமது ஆடையைக் கழுவினார். (இதைக் கண்ட) ஆயிஷா (ரலி) அவர்கள், அது உமது ஆடையில் தென்பட்டால் அந்த இடத்தைக் கழுவினால் போதும். அவ்வாறு அது தென்படாவிட்டால் அந்த இடத்தைச் சுற்றிலும் தண்ணீர் தெளித்துவிடுவீராக! நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஆடையில்பட்ட இந்திரியத்தை நன்கு சுரண்டிவிடுவேன். அந்த ஆடையை அணிந்துகொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுவார்கள் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

486 அஸ்வத் (ரஹ்) மற்றும் ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) ஆகியோர் கூறியதாவது: இந்திரியம் பற்றி ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகையில், அதை நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஆடையிலிருந்து சுரண்டிவிடுவேன் என்று குறிப்பிட்டார்கள்.

487 மேற்கண்ட (485ஆவது) ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

488 அம்ர் பின் மைமூன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் சுலைமான் பின் யசார் (ரஹ்) அவர்களிடம் ஒருவரது ஆடையில் இந்திரியம் பட்டு விட்டால் அ(து பட்ட இடத்)தை (மட்டும்) கழுவ வேண்டுமா? அல்லது அந்த ஆடையையே கழுவ வேண்டுமா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாக (பின்வருமாறு) கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது ஆடையில் பட்ட) இந்திரியத்தை (மட்டும்) கழுவிவிட்டு அதே ஆடையில் தொழுகைக்காகப் புறப்பட்டுச் செல்வார்கள். அந்த ஆடையில் கழுவியதற்குரிய அடையாளத்தை (ஈரத்தை) நான் காண்பேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீஸாயிதா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் இந்திரிய(ம் பட்ட இட)த்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கழுவுவார்கள் என்று இடம்பெற்றுள்ளது.
இப்னுல் முபாரக் (ரஹ்) மற்றும் அப்துல் வாஹித் பின் ஸியாத் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஆடையிலிருந்து அதை நான் கழுவுவேன் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

489 அப்துல்லாஹ் பின் ஷிஹாப் அல்கவ்லானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (அன்னை) ஆயிஷா (ரலி) அவர்களிடம் (ஒரு நாள் விருந்தினராகத்) தங்கியிருந்தேன். இரு ஆடைகளில் (உறங்கிய) எனக்கு உறக்கத்தில் ஸ்கலிதம் ஏற்பட்டது. எனவே, அவ்விரு ஆடைகளையும் (கழுவுவதற்காகத்) தண்ணீரில் முக்கி வைத்தேன். இதை ஆயிஷா (ரலி) அவர்களின் பணிப்பெண் பார்த்துவிட்டு(ப் போய்) ஆயிஷாவிடம் தெரிவித்துவிட்டார். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் என்னை வரச்சொல்லி ஆளனுப்பினார்கள். (நான் சென்றேன்.) அப்போது அவர்கள், உங்கள் ஆடைகளை இவ்வாறு நீங்கள் செய்யக் காரணமென்ன? என்று கேட்டார்கள். நான், தூங்கக்கூடியவர் கனவில் எதைக் காண்பாரோ அதை நான் கண்டேன் என்று கூறினேன். அந்த ஆடைகளில் ஏதேனும் (இந்திரியம் பட்டிருக்கக்) கண்டீர்களா? என்று கேட்டார்கள். நான் இல்லை என்றேன். அப்படியே எதையேனும் நீங்கள் பார்த்திருந்தாலும்கூட அதைக் கழுவத்தான் வேண்டுமா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஆடையில் பட்டுக் காய்ந்துவிட்டிருந்த இந்திரியத்தை நான் என் நகத்தால் சுரண்டித் தான்விடுவேன் (கழுவமாட்டேன்) என்று கூறினார்கள்.

**பாடம் : 33 இரத்தம் அசுத்தமாகும் என்பது பற்றியும் அதைக் கழுவும் முறை பற்றியும்.**

490 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, எங்களில் ஒரு பெண்ணுடைய ஆடையில் மாதவிடாய் இரத்தம் பட்டுவிட்டால் அவள் என்ன செய்ய வேண்டும்? என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் (அவ்வாறு பட்டுவிட்டால்) அவள் அதைச் சுரண்டிவிட்டுப் பின்னர் அந்த இடத்தில் தண்ணீர் ஊற்றித் தேய்த்துக் கழுவட்டும். பின்னர் அந்த ஆடையிலேயே தொழுதுகொள்ளலாம் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 34 சிறுநீர் அசுத்தமாகும்; அதைத் துப்புரவு செய்வது கட்டாயமாகும் என்பதற்கான சான்று.**

491 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரு அடக்கத்தலங்களைக் கடந்துசென்றார்கள். அப்போது அறிந்துகொள்ளுங்கள்! (இதோ) இவர்கள் இருவரும் (சவக் குழிக்குள்) வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஒரு பெரிய (பாவச்) செயலுக்காக இவர்கள் வேதனை செய்யப்படவில்லை. இவர்களில் ஒருவரோ (மக்களிடையே) கோள் சொல்லித் திரிந்து கொண்டிருந்தார். மற்றொருவரோ சிறுநீர் கழிக்கும்போது (தமது உடலை) மறைக்கமாட்டார் என்று கூறினார்கள்.
பிறகு பச்சை பேரீச்சமட்டை ஒன்றைக் கொண்டுவரச் சொல்லி அதை இரண்டாகப் பிளந்து இவர் (சவக் குழி)மீது ஒரு துண்டையும் இவர் (சவக் குழி)மீது மற்றொரு துண்டையும் ஊன்றிவைத்தார்கள். பிறகு இவ்விரண்டின் ஈரம் உலராதவரை இவர்களின் வேதனை குறைக்கப்படலாம் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் மற்றொருவரோ சிறுநீர் கழித்துவிட்டுத் துப்புரவு செய்யமாட்டார் என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக) இடம்பெற்றுள்ளது.

# அத்தியாயம் : 04 - மாதவிடாய்

## பாடம் : 1 மாதவிடாயில் உள்ள மனைவியைக் கீழாடைக்கு மேல் அணைத்துக் கொள்வது.

492 (நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவரான) ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்களில் ஒருவருக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது கீழாடை கட்டிக்கொள்ளுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுவார்கள். (ஆடை கட்டிக்கொண்ட) பின்னர் அணைத்துக்கொள்வார்கள்.
இதை அஸ்வத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

493 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களுடைய துணைவியரான) எங்களில் ஒருவருக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும் போது இரத்தப்போக்கு அதிகமாக இருக்கும் நிலையிலேயே கீழாடை கட்டிக்கொள்ளுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுவார்கள். பிறகு அணைத்துக்கொள்வார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது ஆசையைக் கட்டுப்படுத்திக்கொண்டதைப் போன்று உங்களில் எவரால் தமது ஆசையைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியும்? (அவ்வாறிருந்தும் ஆடைக்கு மேல்தான் அணைத்தார்கள்.)
இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

494 (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) மைமூனா பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மாதவிடாய் ஏற்பட்டுள்ள தம் துணைவியரை கீழாடைக்கு மேலாக அணைத்துக்கொள்வார்கள்.
இதை அப்துல்லாஹ் பின் ஷத்தாத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 2 மாதவிடாய் உள்ள மனைவியுடன் ஒரே போர்வைக்குள் படுப்பது.

495 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது என்னுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் படுத்திருப்பார்கள். எனக்கும் அவர்களுக்கும் இடையே ஓர் ஆடையே (தடையாக) இருக்கும்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் முன்னாள் அடிமை குறைப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

496 (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் குஞ்சம் வைத்த ஒரு போர்வைக்குள் படுத்துக் கொண்டிருந்தேன். அப்போது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. உடனே நான் (போர்வைக்குள்ளிருந்து) மெல்ல நழுவி(ச் சென்று) மாதவிடாய் (கால)த் துணியை எடுத்து

(அணிந்து)கொண்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா? என்று கேட்டார்கள். நான் ஆம் என்றேன். (ஆயினும்) அவர்கள் என்னை (தம்மருகில்) அழைத்தார்கள். நான் (சென்று) அவர்களுடன் அந்தப் போர்வைக்குள் படுத்துக்கொண்டேன். பெருந்துடக்குடன் இருந்த நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் ஒரே பாத்திரத்தில் நீராடுவோம்.

பாடம் : 3 மாதவிடாய் உள்ள பெண் தன் கணவனின் தலையைக் கழுவிவிடுவதும் தலைவாரி விடுவதும் செல்லும்; அவளது உமிழ்நீர் தூய்மையானதுதான்; அவளது மடியில் தலை வைத்துப் படுக்கலாம்; அவ்வாறு படுத்துக்கொண்டு குர்ஆன் ஓதவும் செய்யலாம்.

497 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இஃதிகாஃப் இருந்துகொண்டிருக்கும் போது (அருகிலிருக்கும் வீட்டிலிருந்த) என் பக்கம் தலையை நீட்டுவார்கள். நான் அவர்களுக்குத் தலை வாரிவிடுவேன். இயற்கைத் தேவைக்காக மட்டுமே வீட்டுக்குள் நுழைவார்கள்.

498 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (பள்ளிவாசலில் இஃதிகாஃப் இருக்கும் போது) இயற்கைத் தேவைக்காக மட்டுமே வீட்டுக்குள் நுழைவேன். வீட்டில் யாரேனும் உடல் நலமில்லாமல் இருந்தால் போகிற போக்கில் அப்படியே (உடல்நலம்) விசாரித்துக் கொள்வேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இஃதிகாஃபில் இருந்தால்) பள்ளிவாசலில் இருந்துகொண்டு தமது தலையை என் பக்கம் நீட்டுவார்கள். நான் அவர்களுக்குத் தலை வாரிவிடுவேன். அவர்கள் இஃதிகாஃபில் இருக்கும்போது இயற்கைத் தேவைக்காக மட்டுமே வீட்டுக்குள் நுழைவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், முஹம்மத் பின் ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (மக்கள்) இஃதிகாஃபில் இருக்கும் போது... என இடம்பெற்றுள்ளது.

499 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஃதிகாஃபில் இருக்கும்போது பள்ளிவாசலிலிருந்து தமது தலையை என் பக்கம் நீட்டுவார்கள். மாதவிடாய் எற்பட்டுள்ள நிலையிலும் நான் அவர்களது தலையைக் கழுவிவிடுவேன்.

500 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பள்ளிவாசலில் இஃதிகாஃபில் இருக்கும்போது) அறையிலிருக்கும் என் பக்கம் தமது தலையை நீட்டுவார்கள். மாதவிடாய் எற்பட்டுள்ள நிலையிலும் நான் அவர்களுக்குத் தலை வாரிவிடுவேன்.

501 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எனக்கு மாதவிடாய் ஏற்பட்ட நிலையில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தலையைக் கழுவிவிடுவதுண்டு.

502 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் (இஃதிகாஃபில்) இருந்துகொண்டு, (அறையிலுள்ள) தொழுகை விரிப்பை எடு என்று என்னிடம் சொன்னார்கள். அதற்கு நான் எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுள்ளதே! என்றேன். அப்போது அவர்கள் மாதவிடாய் என்பது உனது கையில் (ஒட்டிக்கொண்டிருப்பது) இல்லை என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

503 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் (இஃதிகாஃபில்) இருந்துகொண்டு (வெளியே உள்ள) தொழுகை விரிப்பை எடுத்து வருமாறு என்னிடம் கூறினார்கள். அதற்கு நான் எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுள்ளதே! என்றேன். அப்போது அவர்கள் அதை எடுத்துவா! மாதவிடாய் என்பது உனது கையில் (ஒட்டிக்கொண்டிருப்பது) இல்லை என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

504 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் (இஃதிகாஃப்) இருந்து கொண்டிருக்கும்போது (தம் துணைவியாரிடம்), ஆயிஷா! அந்தத் துணியை எடுத்துத் தா! என்றார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள், எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுள்ளதே! என்றார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மாதவிடாய் உனது கையிலில்லை என்று சொன்னார்கள். அதையடுத்து அந்தத் துணியை ஆயிஷா (ரலி) அவர்கள் எடுத்துக் கொடுத்தார்கள்.

505 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது நான் (ஏதேனும் பானத்தைப்) பருகிவிட்டு அதை நபி (ஸல்) அவர்களிடம் கொடுப்பேன். அப்போது அவர்கள் நான் வாய் வைத்த இடத்தில் தமது வாயை வைத்து அருந்துவார்கள். மாதவிடாய் எற்பட்டிருந்த நான் இறைச்சியுள்ள எலும்புத் துண்டைக் கடித்துவிட்டு அதை நபியவர்களிடம் கொடுப்பேன். நான் வாய் வைத்த இடத்தில் அவர்கள் தமது வாயை வை(த்துப் புசி)ப்பார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அவர்கள் அருந்துவார்கள் எனும் வாசகம் இடம்பெறவில்லை.

506 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் மடியில் தலை வைத்துப் படுத்துக்கொண்டு குர்ஆன் ஓதுவார்கள்.

507 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
யூதர்கள் மாதவிடாய் ஏற்பட்ட பெண்களுடன் அமர்ந்து சாப்பிடமாட்டார்கள்; வீடுகளில் அவர்களுடன் ஒட்டி உறவாடாமல் (ஒதுங்கி) இருப்பார்கள். எனவே, நபி (ஸல்) அவர்களுடைய தோழர்கள் (இது குறித்து) நபியவர்களிடம் கேட்டனர். அப்போது, (நபியே!)

அவர்கள் மாதவிடாய் பற்றி உம்மிடம் வினவுகின்றார்கள். அது ஓர் (இயற்கை) உபாதை என்று நீர் கூறுவீராக! எனவே, மாதவிலக்குற்ற போது பெண்களை (தாம்பத்திய உறவு கொள்வதை) விட்டு விலகியிருங்கள்... என்று தொடங்கும் (2:222ஆவது) வசனத்தை அல்லாஹ் அருளினான். அதையடுத்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தாம்பத்திய உறவைத் தவிர மற்ற காரியங்களைச் செய்துகொள்ளுங்கள் என்று கூறினார்கள்.

இந்தச் செய்தி யூதர்களுக்கு எட்டியபோது, நம்முடைய காரியங்களில் எந்த ஒன்றுக்கும் மாறு செய்யாமல் விடக்கூடாது என்பதே இந்த மனிதரது விருப்பம் என்று கூறினர். எனவே உசைத் பின் ஹுளைர் (ரலி), அப்பாத் பின் பிஷ்ர் (ரலி) ஆகியோர் வந்து, அல்லாஹ்வின் தூதரே! யூதர்கள் இன்னின்னவாறு கூறுகின்றனர். எனவே, (மாதவிடாய் ஏற்பட்டுள்ள) பெண்களுடன் நாமும் ஒட்டி உறவாடாமல் இருந்தாலென்ன? என்று கேட்டனர்.
(இதைக் கேட்டதும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகம் (கோபத்தால்) நிறமாறிவிட்டது. ஆகவே, (கேள்வி கேட்ட) அவர்கள் இருவர்மீதும் நபியவர்களுக்குக் கோபம் ஏற்பட்டுவிட்டதோ என்று நாங்கள் எண்ணினோம். அவர்கள் இருவரும் புறப்பட்டுச் சென்றதும் நபி (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்பட்ட பால் அவ்விருவரையும் எதிர்கொண்டது. உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்விருவரையும் பின்தொடர்ந்து ஆளனுப்பி அவர்களை அழைத்துவரச் சொன்னார்கள். (அவர்கள் வந்ததும்) அவர்கள் இருவருக்கும் (அந்தப் பாலை) பருகக் கொடுத்தார்கள். தங்கள் மீது நபியவர்களுக்குக் கோபமில்லை என்று அவர்கள் இருவரும் புரிந்துகொண்டனர்.

## பாடம் : 4 பாலுணர்வு கிளர்ச்சி நீர்.

508 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் பாலுணர்வு கிளர்ச்சி நீர் (மதீ) அதிகமாக வெளிப்படும் ஆடவனாக இருந்தேன். இது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேட்க வெட்கப்பட்டுக் கொண்டிருந்தேன். நபியவர்களின் புதல்வியார் (ஃபாத்திமா) என் துணைவியாராக இருந்ததே இதற்குக் காரணம். எனவே, நான் மிக்தாத் பின் அல்அஸ்வத் (ரலி) அவர்களிடம் (இது குறித்து நபியவர்களிடம் கேட்குமாறு) கூறினேன். அவர் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், பிறவி உறுப்பைக் கழுவிக்கொண்டு அங்கத் தூய்மை (உளூ) செய்துகொள்ள வேண்டும் (குளிக்க வேண்டியதில்லை) என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

509 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம் பாலுணர்வு கிளர்ச்சி நீர் (மதீ) பற்றிக் கேட்க வெட்கப்பட்டேன். (நபி (ஸல்) அவர்களின் புதல்வி) ஃபாத்திமா என் துணைவியாராக இருந்ததே இதற்குக் காரணம். எனவே, நான் மிக்தாத் (ரலி) அவர்களிடம் (இது பற்றிக் கேட்கச்) சொன்னேன். அவர் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார். அதற்கு அவர்கள், அதற்காக அங்கத் தூய்மை (உளூ) செய்தல் வேண்டும் (குளிக்க வேண்டியதில்லை) என்று பதிலளித்தார்கள்.

510 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மனிதனிலிருந்து வெளியாகும் பாலுணர்வு கிளர்ச்சி நீர் குறித்து, அது கசிந்தால் என்ன செய்ய வேண்டும்? என்று கேட்பதற்காக மிக்தாத் பின் அல்அஸ்வத் (ரலி) அவர்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நாம் அனுப்பிவைத்தோம். அ(வர் கேட்ட)தற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அங்கத் தூய்மை (உளூ) செய்துகொள்ளுங்கள்: பிறவி உறுப்பில் தண்ணீர் ஊற்றி(க் கழுவி)விடுங்கள் என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 5** உறங்கியெழுந்ததும் முகத்தையும் கைகளையும் அலம்பிக்கொள்வது.

511 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நான் என் சிறிய தாயாரும் நபியவர்களின் துணைவியாருமான மைமூனா (ரலி) அவர்களது இல்லத்தில் ஓரிரவு தங்கியிருந்தேன்.) நபி (ஸல்) அவர்கள் இரவில் விழித்தெழுந்து இயற்கைக் கடனை நிறைவேற்றச் சென்றார்கள். பிறகு முகத்தையும் கைகளையும் அலம்பிவிட்டு வந்து பின்னர் (மீண்டும்) உறங்கினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது

**பாடம் : 6** பெருந்துடக்கு உடையவர் (குளிக்காமலேயே) உறங்கலாம்; அவர் உண்ணவோ பருகவோ உறங்கவோ (மீண்டும்) புணரவோ விரும்பினால் தமது பிறவி உறுப்பைக் கழுவிக்கொண்டு அங்கத் தூய்மை (உளூ) செய்துகொள்வது விரும்பத்தக்கதாகும்.

512 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருந்துடக்கு ஏற்பட்டு (குளியல் கடமையாகி) இருக்கும் நிலையில் உறங்க விரும்பினால் உறங்கப் போவதற்கு முன் தொழுகைக்காக அங்கத் தூய்மை (உளூ) செய்வதைப் போன்று அங்கத் தூய்மை செய்துகொள்வார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

513 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருந்துடக்கு எற்பட்டு (குளியல் கடமையாகி) இருக்கும்போது உண்ணவோ உறங்கவோ விரும்பினால் (முன்னதாக) தொழுகைக்கு அங்கத் தூய்மை (உளூ) செய்வதைப் போன்று அங்கத் தூய்மை செய்துகொள்வார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது

514 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! எங்களில் ஒருவர் பெருந்துடக்கு உடையவராய் இருக்க, (குளிக்காமலேயே) அவர் உறங்கலாமா? என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஆம்,அவர் அங்கத் தூய்மை (உளூ) செய்துகொண்ட பின் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

515 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம், எங்களில் ஒருவர் பெருந்துடக்கு உடையவராய் இருக்க,அவர் (குளிக்காமல்) உறங்கலாமா? என்று விளக்கம் கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், ஆம்; அவர் அங்கத் தூய்மை (உளூ) செய்துவிட்டுப் பின்னர் உறங்கட்டும். விரும்பும்போது குளித்துக்கொள்ளட்டும் என்று பதிலளித்தார்கள்.

516 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இரவு நேரத்தில் தமக்குப் பெருந்துடக்கு ஏற்பட்டுவிடுவது பற்றிக் கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அங்கத் தூய்மை (உளூ) செய்து கொள்ளுங்கள்; பிறவி உறுப்பைக் கழுவிக் கொள்ளுங்கள். பிறகு உறங்குங்கள் என்று கூறினார்கள்.

517 முஆவியா பின் சாலிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அபீகைஸ் (ரஹ்) அவர்கள் நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வித்ர் தொழுகை பற்றிக் கேட்டேன் என்று கூறி விட்டு அது தொடர்பான ஹதீஸை அறிவித்தார்கள். (மேலும் அவர்கள் கூறினார்கள்:)
நான் (ஆயிஷா (ரலி) அவர்களிடம்), பெருந்துடக்கு விஷயத்தில் நபி (ஸல்) அவர்கள் எப்படி நடந்துகொண்டார்கள்? உறங்குவதற்கு முன் குளிப்பார்களா? அல்லது குளித்துவிட்டு உறங்குவார்களா? என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், இரண்டு முறைகளையும் கையாண்டுவந்தார்கள். சில நேரங்களில் குளித்துவிட்டுப் பின்னர் உறங்கினார்கள். சில நேரங்களில் (குளிக்காமல்) அங்கத் தூய்மை (உளூ) செய்துவிட்டு உறங்கினார்கள் என்று பதிலளித்தார்கள். நான், (மார்க்க) விஷயங்களில் தாராளத்தை ஏற்படுத்திய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்று கூறினேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

518 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் இல்லாளிடம் பாலுறவு கொண்டுவிட்டுப் பின்னர் மீண்டும் (உறவுகொள்ள) விரும்பினால் அவர் (இடையில்) அங்கத் தூய்மை (உளூ) செய்து கொள்ளட்டும்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், சிறு வாசக மாற்றத்துடன் அவ்விரண்டுக்குமிடையே அவர் ஒரு முறை உளூச் செய்துகொள்ளட்டும் என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

519 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தம் துணைவியரிடம் (தாம்பத்தியஉறவு கொள்ளச்) சென்றுவிட்டு வந்து ஒரேயொரு தடவை குளிப்பார்கள்.

**பாடம் : 7 பெண்ணுக்கு (மதன) நீர் வெளிப்படுவதன் மூலம், அவள்மீது குளியல் கடமையாகும்.**

520 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உம்மு சுலைம் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! ஆண்கள் உறக்கத்தில் (கனவில்) காண்பதைப் போன்று பெண்ணும் கண்டு, ஆண்கள் தம்மிடம் காண்பதைப் போன்றே பெண்ணும் தம்மிடம் (நீரைக்) கண்டாள். (இந்நிலையில் அவள்மீது குளியல் கடமையாகுமா?) என்று கேட்டார்கள். அப்போது ஆயிஷா (ரலி) அவர்களும் அங்கு இருந்தார்கள். அவர்கள், உம்மு சுலைம்! (இவ்வாறு வெட்கமின்றி கேட்டதன் மூலம்) பெண்ணினத்தையே கேவலப்படுத்திவிட்டாயே! உன் வலக் கை மண்ணைக் கவ்வட்டும் என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம், இல்லை; நீதான் (பெண்ணினத்தைக் கேவலப் படுத்திவிட்டாய்!) உனது வலக் கை மண்ணைக் கவ்வட்டும்! என்று கூறிவிட்டு, ஆம்; அவ்வாறு அவள் கண்டால் அவள் குளித்துக்கொள்ள வேண்டும் என்று (உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம்) கூறினார்கள்.
இதை இஸ்ஹாக் பின் அப்தில்லாஹ் பின் அபீதல்ஹா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள். அன்னாருடைய பாட்டிதான் உம்முசுலைம் (ரலி) அவர்கள்.

521 உம்மு சுலைம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், ஓர் ஆண்மகன் தூக்கத்தில் காண்பதைப் போன்று தனது தூக்கத்தில் காணும் பெண்ணைப் பற்றி (அவள்மீது குளியல் கடமையாகுமா? என்று) கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவ்வாறு ஒரு பெண் கண்டால் அவள் குளித்துக் கொள்ளவேண்டும் என்று கூறினார்கள். (இவ்வாறு நான் கேட்டுவிட்டு) அதற்காக நானே வெட்கப்பட்டேன். மேலும், இவ்வாறு (பெண்ணுக்கும் தூக்கத்தில் ஸ்தலிதம்) ஏற்படுமா? என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஆம்; பிறகு எப்படி (தாயின்) சாயல் (சேயில்) ஏற்படுகிறது? ஆணின் நீர் (விந்து) வெள்ளை நிறத்தில் கெட்டியானதாய் இருக்கும்; பெண்ணின் (மதன) நீர் மஞ்சள் நிறத்தில் இளகலானதாய் இருக்கும். இவ்விரு(வரின்) நீரில் எது மேலோங்கிவிடுகிறதோ அல்லது முந்திக்கொண்டுவிடுகிறதோ அந்தச் சாயலில்தான் குழந்தை பிறக்கிறது என்று கூறினார்கள்.

522 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், ஆண் உறக்கத்தில் காண்பதைப் பெண் கண்டால் (அவள் என்ன செய்ய வேண்டும்)? என்று கேட்டார். அதற்கு அவர்கள், ஆணுக்கு ஏற்படுவதைப் போன்றே பெண்ணுக்கும் (ஸ்கலிதம்) ஏற்பட்டால் அவள் குளிக்க வேண்டும் என்று பதிலளித்தார்கள்.

523 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
உம்மு சுலைம் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! சத்தியத்தைக் கூற அல்லாஹ் வெட்கப்படுவதில்லை. ஒரு பெண்ணுக்குத் தூக்கத்தில் ஸ்கலிதம் எற்பட்டால் அவள்மீது குளியல் கடமையாகுமா?என்று கேட்டார்கள். அதற்கு

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஆம்; (விழித்தெழும்போது தன்மீது) அவள் (மதன) நீரைக் கண்டால் (குளியல் அவள்மீது கடமைதான்) என்று பதிலளித்தார்கள். உடனே நான் அல்லாஹ்வின் தூதரே! பெண்ணுக்குத் தூக்கத்தில் ஸ்கலிதம் எற்படுமா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், உனது கை மண்ணைக் கவ்வட்டும்! பிறகு எப்படி அவளது சாயலில் குழந்தை பிறக்கிறது? என்று (திருப்பிக்) கேட்டார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (இந்தக் கேள்வியைக் கேட்டதன் மூலம்) பெண்ணினத்தையே நீ கேவலப்படுத்திவிட்டாய் என்று உம்மு சலமா (ரலி) அவர்கள் உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம் கூறினார்கள் என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளளது.
- மேற்கண்ட ஹதீஸ் நபி (ஸல்) அவர்களுடைய துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் வாயிலாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.
அதில், ஆயிஷா (ரலி) அவர்கள், சீ! பெண்ணும் அதைக் காண்பாளா? என்று உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம் கேட்டதாக இடம்பெற்றுள்ளது.

524 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், ஒரு பெண்ணுக்குத் தூக்கத்தில் ஸ்கலிதம் ஏற்பட்டுத் தம்மீது அவள் (மதன)நீரைக் கண்டால் அவள்மீது குளியல் கடமையாகுமா? என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆம் என்று பதிலளித்தார்கள்.
அப்போது நான் அந்தப் பெண்ணிடம், உன் கைகள் மண்ணைக் கவ்வட்டும்; காயமடையட்டும் என்று கூறினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவரை விட்டுவிடு! (தாயுக்கும் சேயுக்குமிடையே) இதை முன்னிட்டுத் தானே உருவ ஒற்றுமையே (சாயல்) ஏற்படுகிறது! பெண்ணுடைய நீர் (கருமுட்டை) ஆணுடைய நீரை (விந்தணுவை) விட மேலோங்கி (முந்தி) விட்டால் குழந்தை தன் தாயின் சகோதரர்களது (மாமன்) சாயலில் பிறக்கிறது. ஆணுடைய நீர் பெண்ணுடைய நீரைவிட மேலோங்கிவிட்டால் அது தன் தந்தையின் சகோதரர்களது (பெரியப்பன், சிற்றப்பன்) சாயலில் பிறக்கிறது என்று கூறினார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 8 ஆண் மற்றும் பெண்ணுடைய விந்தின் தன்மையும், இருவருடைய நீர்மத்திலிருந்தே குழந்தை படைக்கப்படுகிறது என்ற விவரமும்.

525 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அடிமையாயிருந்த ஸவ்பான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் நின்று கொண்டிருந்தேன். அப்போது யூத அறிஞர் ஒருவர் வந்து, முஹம்மதே! அஸ்ஸலாமு அலைக்க! என்று (முகமன்) கூறினார். உடனே நான் அவரைப் பிடித்து ஒரு தள்ளு தள்ளினேன். அவர் நிலை தடுமாறி விழப்போனார். அவர், ஏன் என்னைத் தள்ளுகிறாய்?

என்று கேட்டார். நான்,அல்லாஹ்வின் தூதரே! என்று நீர் சொல்லக்கூடாதா (முஹம்மத் என்று பெயர் கூறி அழைக்கிறீரே)? என்று கேட்டேன். அதற்கு அந்த யூதர், அவருடைய குடும்பத்தார் அவருக்கு இட்ட பெயரால்தான் அவரை நாம் அழைக்கின்றோம் என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், எனது பெயர் முஹம்மத் தான். இதுவே என் குடும்பத்தார் எனக்கு இட்ட பெயர் என்று சொன்னார்கள். அந்த யூதர், உங்களிடம் நான் (சில விஷயங்கள் குறித்து) கேட்பதற்காகவே வந்தேன் என்று கூறினார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நான் கூறப்போகும் எந்த விஷயமும் உமக்குப் பயனளிக்குமா? என்று கேட்டார்கள். அவர், நான் காது கொடுத்துக் கேட்பேன் என்றார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்மிடமிருந்த ஒரு குச்சியால் தரையைக் கீறியவாறு (ஆழ்ந்த சிந்தனையுடன்), கேளுங்கள்! என்றார்கள்.

அந்த யூதர், இந்த பூமியும் வானங்களும் இப்போதுள்ள அமைப்பல்லாத வேறோர் அமைப்பிற்கு மாற்றப்படும் (விசாரணை) நாளில் மக்கள் எங்கே இருப்பார்கள்? என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (அஸ்ஸிராத் எனும்) பாலத்திற்கு அருகே இருளில் அவர்கள் இருப்பார்கள் என்று பதிலளித்தார்கள். அவர்,மக்களிலேயே முதன்முதலில் (அந்தப் பாலத்தைக்) கடப்பவர்கள் யார்? என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஏழை முஹாஜிர்கள் என்று பதிலளித்தார்கள். அந்த யூதர், அவர்கள் சொர்க்கத்துக்குள் நுழையும்போது அவர்களுக்கு வழங்கப்படும் வெகுமதி என்ன? என்று கேட்டார். அதற்கு மீனின் ஈரலில் ஒட்டிக்கொண்டிருக்கும் தனித்துண்டு என்று பதிலளித்தார்கள். அதற்கடுத்து அவர்களுக்கு வழங்கப்படும் உணவு என்ன? என்று அவர் கேட்க,சொர்க்கத்தின் ஓரங்களில் மேய்ந்துகொண்டிருக்கும் காளைமாடு அவர்களுக்காக அறு(க்கப்பட்டு விருந்தளி)க்கப்படும் என்று பதிலளித்தார்கள். அதற்குப் பின் அவர்கள் எதை அருந்துவார்கள்? என்று அவர் கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அங்குள்ள ஸல்ஸபீல் என்றழைக்கப்படும் நீரூற்றிலிருந்து (அருந்துவார்கள்) என்று பதிலளிக்க, அவர் நீர் கூறியது உண்மையே என்று கூறினார்.
பிறகு பூமியில் வசிப்பவர்களில் ஓர் இறைத்தூதர் அல்லது ஓரிரண்டு மனிதர்கள் தவிர வேறெவரும் அறிந்திராத ஒரு (குறிப்பிட்ட) விஷயத்தைப் பற்றிக் கேட்கவே நான் உம்மிடம் வந்தேன் என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நான் கூறப்போகும் விஷயம் உமக்குப் பயன் தருமா? என்று கேட்டார்கள். அவர் நான் காது கொடுத்துக் கேட்பேன் என்றார். பிறகு அவர், குழந்தை(யின் பிறப்பு) குறித்துக் கேட்பதற்காக நான் உம்மிடம் வந்தேன் என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆணின் நீர் (விந்து) வெண்ணிறமுடையதும் பெண்ணின் (மதன)நீர் மஞ்சள் நிறமுடையதுமாகும். அவையிரண்டும் சேரும்போது ஆணின் நீர் (விந்து உயிரணு) பெண்ணின் நீரை (சினை முட்டையை) மிகைத்துவிட்டால், அல்லாஹ்வின் நியதிப்படி ஆண் குழந்தை பிறக்கும். (இதற்கு மாறாக) பெண்ணின் நீர் (சினை முட்டை), ஆணின் நீரை (விந்து உயிரணுவை) மிகைத்துவிட்டால் அல்லாஹ்வின் நியதிப்படி பெண் குழந்தை பிறக்கும் என்று பதிலளித்தார்கள்.
அந்த யூதர், நீர் சொன்னது உண்மைதான். நிச்சயமாக நீர் ஓர் இறைத்தூதர் (நபி)தாம் என்று கூறிவிட்டுத் திரும்பிச் சென்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இவர் எவற்றைக்

குறித்து என்னிடம் கேட்டாரோ அவற்றைக் குறித்து நான் ஏதும் அறியாதவனாகத்தான் இருந்தேன். அல்லாஹ்தான் அவற்றை எனக்கு அறிவித்துத்தந்தான் என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருகில் அமர்ந்துகொண்டிருந்தேன் என்று ஸவ்பான் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது. மேலும், (மீனில் ஈரலில் ஒட்டிக்கொண்டிருக்கும் தனித்துண்டு என்பதைக் குறிக்க ஸியாதத் எனும் சொல்லுக்கு பதிலாக) ஸாயிதத் எனும் சொல்லும், (ஆண் குழந்தை பிறக்கும்; பெண் குழந்தை பிறக்கும் என்பதைச் சுட்ட) அத்கரா மற்றும் ஆனஸா எனும் இருமை வாசகத்திற்கு பதிலாக, அத்கர மற்றும் ஆனஸ எனும் ஒருமை வாசகமும் இடம் பெற்றுள்ளன.

பாடம் : 9 பெருந்துடக்கிற்கான குளியல் முறை.

526 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருந்துடக்கிற்காகக் குளிக்கும்போது முதலில் தம் கைகளை (மணிக்கட்டுவரை) கழுவுவார்கள். பிறகு வலக் கையால் (தண்ணீர் அள்ளி) இடக் கையின் மீது ஊற்றிப் பிறவி உறுப்பைக் கழுவுவார்கள். பின்னர் தொழுகைக்காக அங்கத் தூய்மை (உளூ) செய்வதைப் போன்று அங்கத் தூய்மை செய்வார்கள். அதன் பின்னர் தண்ணீரை அள்ளி மயிர்க்கால்களுக்கு இடையே விரல்களை நுழை(த்துத் தலையைத் தேய்)ப்பார்கள். தலைமுடி முழுவதும் நனைந்துவிட்டதாகத் தெரிந்ததும் இரு கைகளிலும் மூன்று தடவை தண்ணீர் அள்ளி தலையில் ஊற்றுவார்கள். பிறகு மேனி முழுவதிலும் தண்ணீர் ஊற்றுவார்கள். பின்னர் கால்களைக் கழுவுவார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், கால்களைக் கழுவியது பற்றியக் குறிப்பு இடம்பெறவில்லை.

527 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பெருந்துடக்கிற்காகக் குளிக்கும்போது முதலில் இரு கைகளையும் (மணிக்கட்டு வரை) மூன்று முறை கழுவுவார்கள்.
மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. இந்த அறிவிப்பிலும் கால்களைக் கழுவியது பற்றியக் குறிப்பு இடம் பெறவில்லை.
- ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருந்துடக்கிற்காகக் குளிக்கும்போது பாத்திரத்திற்குள் கையை நுழைப்பதற்கு முன்பாக தம் கைகளை (மணிக்கட்டுவரை) கழுவுவார்கள். பிறகு தொழுகைக்காக அங்கத் தூய்மை (உளூ) செய்வதைப் போன்று அங்கத் தூய்மை செய்வார்கள்.

528 மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருந்துடக்கிற்குக் குளிப்பதற்காக தண்ணீர் கொண்டுவந்து வைத்தேன். அவர்கள் (முதலில்) தம்மிரு கைகளையும் (மணிக்கட்டுவரை) இரண்டு அல்லது மூன்று தடவை கழுவினார்கள். பிறகு பாத்திரத்திற்குள் கையை நுழைத்து

(தண்ணீரை அள்ளி) பிறவி உறுப்பின் மீது ஊற்றி, தமது இடக் கையால் கழுவினார்கள். பிறகு தமது இடக் கையை பூமியில் வைத்து நன்கு தேய்த்துக் கழுவினார்கள்.
பின்னர் தொழுகைக்கு அங்கத் தூய்மை செய்வதைப் போன்று அங்கத் தூய்மை செய்தார்கள். பிறகு தம் கைகள் நிரம்ப மூன்று முறை தண்ணீர் அள்ளித் தமது தலையில் ஊற்றினார்கள். பின்னர் மேனி முழுவதையும் கழுவினார்கள். பிறகு அங்கிருந்து சற்று நகர்ந்து (நின்று) தம் கால்களைக் கழுவினார்கள். பின்னர் நான் அவர்களுக்காகத் துவாலையைக் கொண்டு வந்தேன்.ஆனால், அவர்கள் அதை வாங்கி(த் துடைத்து)க்கொள்ள மறுத்துவிட்டார்கள்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் தம் சிறிய தாயார் மைமூனா (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஏழு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், மூன்று முறை கை நிரம்ப தலைக்குத் தண்ணீர் ஊற்றியது பற்றிய வாசகம் இடம்பெறவில்லை.
வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அங்கத் தூய்மை செய்த முறை முழுமையாக விவரிக்கப்பட்டுள்ளது. வாய் கொப்புளித்தது, மூக்கிற்கு நீர் செலுத்தியது பற்றியக் குறிப்பு இடம்பெற்றுள்ளது.
அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் துவாலை (கொண்டுவந்தது) பற்றிய குறிப்பு இல்லை.

529 மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் துவாலை கொண்டு வரப்பட்டது. ஆனால், அவர்கள் அதைத் தொடவில்லை. தண்ணீரைத் தமது கரத்தால் இவ்வாறு உதறிவிடலானார்கள்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

530 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருந்துடக்கிற்காகக் குளிப்பார்களானால் பால் கறக்கும் குவளை போன்ற ஒன்றைக் கொண்டு வரச் சொல்லி, ஒரு கையால் தண்ணீர் அள்ளி முதலில் தமது தலையின் வலப் பக்கத்திலும் பிறகு இடப் பக்கத்திலும் ஊற்றுவார்கள். பின்னர் இரு கைகளால் தண்ணீரை அள்ளித் தமது தலையின் மீது ஊற்றுவார்கள்.
இதை காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 10 பெருந்துடக்கிற்காகக் குளிப்பவர் பயன்படுத்த வேண்டிய தண்ணீரின் விரும்பத் தக்க அளவு, ஒரே நேரத்தில் ஒரே பாத்திரத்திலிருந்து ஆணும் பெண்ணும் நீராடுவது, இரு பாலரில் ஒருவர் மிச்சம் வைத்த தண்ணீரில் மற்றொருவர் குளிப்பது ஆகியவை பற்றி.**

531 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருந்துடக்கிற்காக ஒரு ஃபரக் கொள்ளளவு பாத்திரத்தில் குளிப்பார்கள்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

532 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ஃபரக் கொள்ளளவு கொண்ட பாத்திரத்தில் குளிப்பார்கள். நானும் அவர்களும் ஒரே பாத்திரத்தில் குளிப்போம்.
இந்த ஹதீஸ் ஏழு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், சுஃப்யான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ஒரே பாத்திரத்திலிருந்து (தண்ணீர் எடுத்து) குளிப்போம் என்றும் ஒரு ஃபரக் என்பது மூன்று ஸாஉ கொள்ளளவாகும் என்றும் இடம்பெற்றுள்ளது.

533 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் ஆயிஷா (ரலி) அவர்களுடைய பால்குடிச் சகோதரர் ஒருவரும் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றோம்.அப்போது அவர்களுடைய சகோதரர், நபி (ஸல்) அவர்கள் பெருந்துடக்கிற்காகக் குளித்த முறை பற்றி ஆயிஷா (ரலி) அவர்களிடம் கேட்டார். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் ஒரு ஸாஉ அளவுள்ள பாத்திரம் ஒன்றைக் கொண்டுவரச் சொல்லி குளித்துக் காட்டினார்கள். அப்போது எங்களுக்கும் அவர்களுக்குமிடையே திரை ஒன்றிருந்தது. தமது தலையில் மூன்று முறை தண்ணீர் ஊற்றினார்கள்.(அது மட்டும் எங்களுக்குத் தெரிந்தது.)
நபி (ஸல்) அவர்களுடைய துணைவியர், காதின் சோனைவரை இருக்கும் அளவிற்குத் தம் தலை முடியிலிருந்து சிறிதளவை(க் கத்தரித்து) எடுத்துவிடுவார்கள்.

534 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குளிக்கும்போது முதலில் தம் (உடலின்) வலப் பக்கத்தில் தண்ணீர் ஊற்றிக் கழுவுவார்கள். பிறகு தம்மீதுள்ள அசுசிமீது தமது வலக் கரத்தால் தண்ணீர் ஊற்றி இடக் கரத்தால் அதை(த் தேய்த்து)க் கழுவுவார்கள். இவற்றைச் செய்து முடித்துவிட்டுத்தான் தலைக்குத் தண்ணீர் உற்றுவார்கள். நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் பெருந்துடக்கிற்காகக் குளிக்கும்போது ஒரே பாத்திரத்தில் குளிப்போம்.
இதை அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

535 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் நபி (ஸல்) அவர்களும் மூன்று முத்து அல்லது அதற்கு நெருக்கமான அளவு கொண்ட பாத்திரத்தில் குளிப்போம்.
இதை ஹஃப்ஸா பின்த் அப்திர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

536 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் பெருந்துடக்கிற்காக (சேர்ந்து) ஒரே பாத்திரத்திலிருந்து குளிப்போம். அப்போது எங்கள் இருவருடைய கைகளும் அந்தப் பாத்திரத்தினுள் மாறிமாறிச் செல்லும்.
இதைக் காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

537 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் பெருந்துடக்குடையவர்களாய் இருக்கும் போது ஒரே பாத்திரத்திலிருந்து (தண்ணீர் அள்ளிக்) குளிப்போம். அது எனக்கும் அவர்களுக்கும் இடையே இருக்கும். அப்போது அவர்கள் என்னை முந்திக்கொண்டு தண்ணீர் அள்ளுவார்கள். அப்போது நான் எனக்கும் விட்டுவையுங்கள்; எனக்கும் விட்டு வையுங்கள் என்று கூறுவேன்.

538 (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் நபி (ஸல்) அவர்களும் ஒரே பாத்திரத்தில் குளிப்போம்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

539 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியாரும் என் சிறிய தாயாருமான) மைமூனா (ரலி) அவர்கள் மிச்சம் வைத்த தண்ணீரில் குளிப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

540 (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் பெருந்துடக்கிற்காக ஒரே பாத்திரத்தில் குளிப்போம்.
இதை ஸைனப் பின்த் உம்மி சலமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

541 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஐந்து முத்து அளவுத் தண்ணீரில் குளிப்பார்கள்; ஒரு முத்து அளவுத் தண்ணீரில் அங்கத் தூய்மை (உளூ) செய்வார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

542 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு முத்து அளவுத் தண்ணீரில் அங்கத் தூய்மை (உளூ) செய்வார்கள். ஒரு ஸாஉ அளவு முதல் ஐந்து முத்து வரைத் தண்ணீரில் குளிப்பார்கள்.

543 (நபித்தோழர் அபூஅப்திர் ரஹ்மான்) ச∴பீனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ஸாஉத் தண்ணீரில் பெருந்துடக்கிற்காகக் குளித்து விடுவார்கள்; ஒரு முத்துத் தண்ணீரில் உளூச் செய்துவிடுவார்கள்.
இதை அபூரைஹானா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

544 நபித்தோழர் ச∴பீனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ஸாஉ அளவுத் தண்ணீரில் குளிப்பார்கள்; ஒரு முத் அளவுத் தண்ணீரில் அங்கத் தூய்மை (உளூ) செய்வார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அலீ பின் ஹுஜ்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ஒரு முத்து அளவுத் தண்ணீரில் அங்கத் தூய்மை (உளூ) செய்துவிடுவார்கள் என்று இடம்பெற்றுள்ளது.
இதன் அறிவிப்பாளரான அபூரைஹானா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
ச..பீனா (ரலி) அவர்கள் (நினைவாற்றல் குறைந்த) முதுமைப் பருவத்தை அடைந்திருந்தார்கள். எனவே, அன்னாரது அறிவிப்பின் மீது எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை.

**பாடம் : 11 (குளியலின்போது) தலை உள்ளிட்ட உறுப்புகள்மீது மூன்று முறை தண்ணீர் ஊற்றுவது விரும்பத் தக்கதாகும்.**

545 ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் (குளியல் முறை தொடர்பாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அருகில் விவாதித்துக் கொண்டனர். அப்போது மக்களில் ஒருவர், நானோ என் தலையை இப்படி இப்படிக் கழுவுகிறேன் என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நானோ என் தலையில் மூன்று முறை இரு கைகள் நிரம்பத் தண்ணீரை ஊற்றுகிறேன் என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

546 ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் பெருந்துடக்கிற்காகக் குளிக்கும் முறை பற்றிப் பேசப்பட்டது. அப்போது அவர்கள், நானோ என் தலையில் மூன்று முறை தண்ணீர் ஊற்றுகிறேன் என்று சொன்னார்கள்.

547 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஸகீ..ப் குலத்தாரின் தூதுக் குழுவினர் நபி (ஸல்) அவர்களிடம், எங்கள் நாடு குளிர் பிரதேசமாகும்; (நாங்கள்) எப்படிக் குளிப்பது? என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், நானோ என் தலையின் மீது மூன்று முறை தண்ணீர் ஊற்றுகிறேன் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இஸ்மாயீல் பின் சாலிம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ஸகீ..ப் குலத்தாரின் தூதுக் குழுவினர், அல்லாஹ்வின் தூதரே! என்று (அழைத்து மேற்கண்டவாறு) வினவினார்கள் என இடம்பெற்றுள்ளது.

548 முஹம்மத் பின் அலீ பின் ஹுசைன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருந்துடக்கிற்காகக் குளிக்கும்போது இரு கைகள் நிரம்பத் தண்ணீர் அள்ளித் தமது தலையில் மூன்று முறை ஊற்றுவார்கள் என்று ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள். அப்போது ஜாபிர் (ரலி) அவர்களிடம் ஹசன் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள், எனக்குத் தலைமுடி அதிகமாக இருக்கிறதே? (மூன்று முறை ஊற்றினால் போதாதே!) என்று கேட்டார்கள். அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள், என்

சகோதரர் மகனே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தலைமுடி உமது முடியைவிட அதிகமாகவும் சிறந்ததாகவும் இருந்தது (அவர்களே மூன்று முறைதான் தலைக்குத் தண்ணீர் ஊற்றினார்கள்) என்று பதிலளித்தார்கள்.

## பாடம் : 12 குளிக்கும் பெண்களின் பின்னல்முடி பற்றிய சட்டம்.

549 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், அல்லாஹ்வின் தூதரே! நான் தலைமுடியை இறுக்கமாகப் பின்னிக்கொள்ளும் பெண் ஆவேன். பெருந்துடக்கிற்காகக் குளிக்கும்போது பின்னலை நான் அவிழ்த்துவிட வேண்டுமா? என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இல்லை; நீ இரு கையளவுத் தண்ணீரை உன் தலைமீது மூன்று முறை ஊற்றினால் போதும். பிறகு உன் (உடல்)மீது தண்ணீர் ஊற்றிக்கொள்; துப்பரவாகி விடுவாய் என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், மாதவிடாய் மற்றும் பெருந்துடக்கிற்காக (குளிக்கும்போது) பின்னலை அவிழ்த்துவிட வேண்டுமா? என்று உம்மு சலமா (ரலி) அவர்கள் வினவியதாகவும், அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இல்லை என்று கூறியதாகவும், பிறகு மேற்கண்ட ஹதீஸின் கருத்துப்படி கூறியதாகவும் இடம் பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், பெருந்துடக்கிற்காகக் குளிக்கும் போது அந்தப் பின்னலை நான் அவிழ்த்துக் கழுவ வேண்டுமா? என்று உம்மு சலமா (ரலி) அவர்கள் வினவியதாக இடம்பெற்றுள்ளது. மாதவிடாய் பற்றியக் குறிப்பு அதில் இடம்பெறவில்லை.

550 உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் பெண்கள் குளிக்கும்போது தம் பின்னலை அவிழ்த்துவிட வேண்டும் என்று வலியுறுத்தி வந்த செய்தி ஆயிஷா (ரலி) அவர்களுக்கு எட்டியது. அப்போது அவர்கள், இந்த இப்னு அம்ரைப் பார்த்து நான் வியப்படைகிறேன். பெண்கள் குளிக்கும்போது தம் பின்னலை அவிழ்த்துவிடுமாறு பணிக்கிறாரே! ஏன் தலையை மழித்துக்கொள்ளுமாறு பெண்களுக்கு அவர் கட்டளையிட வேண்டியதுதானே! நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் ஒரே பாத்திரத்தில் குளிப்போம். என் தலையில் மூன்று முறை தண்ணீர் ஊற்றுவதைவிடக் கூடுதலாக வேறொன்றும் நான் செய்யவில்லை என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 13 பெண்கள் மாதவிடாய்க் குளியலின் போது கஸ்தூரி தோய்த்த (நறுமணப்) பஞ்சைக் குருதி வந்த இடத்தில் உபயோகிப்பது விரும்பத் தக்கதாகும்.**

551 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி மாதவிடாயிலிருந்து (நீங்கிக்கொள்ள) தாம் எவ்வாறு குளிக்க வேண்டும் என்று கேட்டார். அவருக்கு நபி (ஸல்) அவர்கள் குளிக்கும் முறையை விளக்கினார்கள். பிறகு கஸ்தூரி (நறுமணம்) தடவப்பட்ட பஞ்சுத்துண்டு ஒன்றை எடுத்து அதனால் தூய்மைப்படுத்திக்கொள் என்று சென்னார்கள்.
அந்தப் பெண்மணி, அதை வைத்து நான் எப்படித் தூய்மைப்படுத்த வேண்டும்? என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், (வெட்கப்பட்டவாறு) அல்லாஹ் தூயவன்; அதனால் தூய்மைப்படுத்திக்கொள் என்று (மறுபடியும்) சொன்னார்கள். –அப்போது நபி (ஸல்) அவர்கள் (தமது (முகத்தை) மூடிக்கொண்டார்கள் என்பதை அறிவிப்பாளர் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் தமது முகத்தின் மீது கையை வைத்து (மூடி) சைகை செய்து காட்டினார்கள்.
தொடர்ந்து ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
நபி (ஸல்) அவர்கள் என்ன சொல்ல வருகிறார்கள் என்பதை நான் புரிந்துகொண்டு, அந்தப் பெண்மணியை என் பக்கம் இழுத்தேன். இரத்தம் படிந்த இடத்தை அந்த (நறுமணப் பொருள் தடவப்பட்ட) பஞ்சினால் துடைப்பாயாக! என்று கூறினேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் இரத்தம் படிந்த இடங்களை என்று (பன்மையில்) ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.
- ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி, (மாதவிடாயிலிருந்து) துப்புரவு செய்துகொள்ளும் போது நான் எவ்வாறு குளிக்க வேண்டும்? என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், கஸ்தூரி தடவப்பட்ட பஞ்சுத்துண்டு ஒன்றை எடுத்து அதன் மூலம் துப்புரவு செய்து கொள்வாயாக! என்று சொன்னார்கள். மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

552 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அஸ்மா பின்த் ஷகல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம், மாதவிடாய்க் குளியல் பற்றிக் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், உங்களில் ஒருவர் (மாதவிடாய்க் குளியலின் போது) தண்ணீரையும் இலந்தை இலைகளையும் எடுத்து நன்கு சுத்தம் செய்துகொள்ளட்டும். பிறகு தலைக்குத் தண்ணீர் ஊற்றி நன்றாகத் தேய்த்து தலையின் சருமம் நனையும்வரைக் கழுவட்டும். பிறகு உடம்புக்குத் தண்ணீர் ஊற்றட்டும். அதன் பின்னர் கஸ்தூரி தடவப்பட்ட பஞ்சுத்துண்டு ஒன்றை எடுத்து சுத்தம் செய்துகொள்ளட்டும் என்று சொன்னார்கள்.
அதற்கு அஸ்மா (ரலி) அவர்கள், அதை வைத்து அவள் எவ்வாறு சுத்தம் செய்வாள்? என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்!). அதனால் சுத்தம் செய்துகொள்ளட்டும் என்று (மீண்டும்) சொன்னார்கள்.

உடனே நான், இரத்தம் படிந்த இடத்தில் தடவிக்கொள் என்று -பிறர் காதில் விழாதவாறு அதை இரகசியமாகச்- சொன்னேன்.
மேலும், அஸ்மா நபி (ஸல்) அவர்களிடம், பெருந்துடக்கிற்காகக் குளிக்கும் முறை பற்றிக் கேட்டார். அதற்கு அவர்கள்,தண்ணீர் எடுத்து நன்கு சுத்தம் செய்துகொள். பிறகு தலைக்குத் தண்ணீர் ஊற்றி தலையின் சருமம் நனையும் அளவுக்கு நன்கு தேய்த்துக்கொள். பின்னர் உன் (மேனியின்) மீது தண்ணீர் ஊற்று! என்றார்கள்.
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
பெண்களிலேயே மிகச் சிறந்தவர்கள் அன்சாரிப் பெண்களாவர். மார்க்கத்தை விளங்கிக் கொள்வதில் வெட்கம் அவர்களுக்குத் தடையாக இருந்ததில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அல்லாஹ் தூயவன்! அதனால் துப்புரவு செய்துகொள் என்று கூறிவிட்டு நபி (ஸல்) அவர்கள் தமது முகத்தை (வெட்கப்பட்டு) மறைத்துக்கொண்டார்கள் என்று இடம் பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் (பின்வருமாறு) இடம்பெற்றுள்ளது:
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அஸ்மா பின்த் ஷகல் எனும் பெண்மணி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே, எங்களில் ஒருவருக்கு மாதவிடாய் நின்று விட்டால் அவர் எவ்வாறு குளிக்க வேண்டும்? என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மேற்கண்ட ஹதீஸிலுள்ளபடி பதிலளித்தார்கள். இந்த அறிவிப்பில் பெருந்துடக்கிற்கான குளியலைப் பற்றியக் குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 14 உயர் இரத்தப்போக்கு (இஸ்திஹாளா) ஏற்படும் பெண்களும், அவர்களது குளியல் மற்றும் தொழுகை முறையும்.

553 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஃபாத்திமா பின்த் அபீஹுபைஷ் எனும் பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! நான் உயர் இரத்தப் போக்கு (இஸ்திஹாளா) ஏற்படுபவளாக இருக்கிறேன்; (மாதம் முழுதும்) நான் சுத்தமாவதில்லை. எனவே,நான் தொழுகையை விட்டுவிடலாமா? என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், இல்லை (தொழுகையை விட்டுவிடாதே!) ஏனெனில், இது(இஸ்திஹாளா), இரத்தக் குழா(யிலிருந்து வருவதே)யாகும்; (கர்ப்பப் பையிலிருந்து வெளிவரும்) மாதவிடாயன்று. (மாதத்தில் வழக்கமாக) மாதவிடாய் ஏற்படும் நாட்களில் தொழுகையை விட்டுவிடு! மாதவிடாய்க் காலம் முடிந்துவிட்டால் இரத்தத்தைக் கழுவிவிட்டுத் தொழுது கொள்! என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஜரீர் (ரஹ்) அவர்களிடமிருந்து குதைபா (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸில் ஃபாத்திமா பின்த் அபீஹுபைஷ் பின் அப்தில் முத்தலிப் பின் அசத் (ரலி) அவர்கள்

(நபியவர்களிடம்) வந்தார்கள். அவர் எங்கள் குலத்தைச் சேர்ந்த பெண்மணியாவார் எனும் குறிப்பு (கூடுதலாக) இடம்பெற்றுள்ளது.
ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ஒரு கூடுதலான தகவல் காணப்படுகிறது. (இரத்தத்தைக் கழுவிக்கொள்; உளூச் செய்துகொள் என்பதே அந்தத் தகவலாகும்.) ஆயினும், அதை நாம் குறிப்பிடவில்லை. (ஹம்மாத் ஒருவர் மட்டுமே இதை அறிவித்திருப்பதே அதற்குக் காரணம்.)

554 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
உம்மு ஹபீபா பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நான் உயர் இரத்தப்போக்கு ஏற்படுபவளாக இருக்கிறேன் என்று கூறி தீர்ப்புக் கேட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இது இரத்தக் குழா(யிலிருந்து வருவதே)யாகும். எனவே (மாதவிடாய் காலம் முடிந்தவுடன்) குளித்துவிட்டுத் தொழுது கொள்! என்றார்கள். எனவே உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்கும் குளித்துவந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான லைஸ் பின் சஅத் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: (எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த) இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள், உம்மு ஹபீபா (ரலி) அவர்களை ஒவ்வொரு தொழுகைக்கும் குளிக்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள் என்று கூறவில்லை. மாறாக (தனிப்பட்ட விருப்பில்) உம்மு ஹபீபா அவர்கள் தாமாகவே அவ்வாறு செய்துவந்தார்கள்.
இப்னு ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் இப்னத்து ஜஹ்ஷ் என்று இடம்பெற்றுள்ளது. உம்மு ஹபீபா எனும் பெயர் இடம்பெறவில்லை.

555 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மைத்துனியும், அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களின் துணைவியாருமான உம்மு ஹபீபா பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களுக்கு ஏழு வருட காலமாக உயர் இரத்தப்போக்கு (இஸ்திஹாளா) இருந்துவந்தது. எனவே, அவர் இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தீர்ப்புக் கோரினார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இது மாதவிடாயன்று; இது இரத்தக் குழா(யிலிருந்து வருவதே)யாகும். எனவே நீ (மாதவிடாய்க் காலம் முடிந்ததும்) குளித்துவிட்டுத் தொழுதுகொள்! என்று கூறினார்கள்.
தொடர்ந்து ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:
உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் தம் சகோதரி(யும் நபியவர்களின் துணைவியாருமான) ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களது இல்லத்திலிருந்த துணி அலசும் பாத்திரத்தில் (நின்று) குளிப்பார்கள். (அவ்வாறு அவர்கள் குளிக்கும்போது அந்தப் பாத்திரத்தில்) அவர்களது இரத்தத்தின் நிறம் தண்ணீரை மிகைத்திருக்கும்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:

நான் இந்த ஹதீஸை அபூபக்ர் பின் அப்திர் ரஹ்மான் பின் ஹாரிஸ் பின் ஹிஷாம் (ரஹ்) அவர்களிடம் எடுத்துரைத்தேன். அப்போது அபூபக்ர் (ரஹ்) அவர்கள், ஹிந்தாவுக்கு அல்லாஹ் கருணை புரிவானாக! (நபி (ஸல்) அவர்கள் அளித்த) இந்தத் தீர்ப்பை அவர் செவியுற்றிருந்தால் அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் அழுதுவிடுவார். ஏனெனில், ஹிந்தா (உயர் இரத்தப்போக்கின் காரணமாக) தொழாமல் இருந்துவந்தார் என்று கூறினார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் இப்னு ஷிஹாப் (ரஹ்) அவர்களது கூற்று இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களுக்கு ஏழாண்டுகளாக உயர் இரத்தப்போக்கு இருந்து வந்தது என்று ஹதீஸ் தொடங்குகிறது.

556 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (உயர்) இரத்தப் போக்கு பற்றிக் கேட்டார். நான் அவர் (நின்று) குளித்துவந்த துணி அலசும் பாத்திரத்தில் இரத்தம் நிரம்பியிருக்கக் கண்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (வழக்கமாக) மாதவிடாய் நிற்கும் நாட்கள்வரை நீ காத்திரு! அதற்குப் பின்னர் குளித்துவிட்டுத் தொழுது கொள்! என்று அவரிடம் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

557 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களின் துணைவியார் உம்மு ஹபீபா பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் தமக்கு (உயர்) இரத்தப்போக்கு ஏற்படுவதாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் முறையிட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மாதவிடாய் நிற்கும் நாட்கள்வரை நீ காத்திரு! பின்னர் குளித்துக்கொள்! என்று அவரிடம் கூறினார்கள். உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்கும் குளிப்பவராய் இருந்தார்கள்.

## பாடம் : 15 மாதவிடாய் நாட்களில் விடுபட்ட நோன்பை மீண்டும் நோற்பது (களாச் செய்வது) கட்டாயமாகும்; விடுபட்ட தொழுகைகளை மீண்டும் தொழ வேண்டியதில்லை.

558 முஆதா பின்த் அப்தில்லாஹ் அல்அதவிய்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண் ஆயிஷா (ரலி) அவர்களிடம், எங்களில் ஒருத்தி மாதவிடாய் நாட்களில் தமக்கு விடுபட்டுப்போன தொழுகைகளை மீண்டும் தொழ வேண்டுமா? என்று கேட்டார். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், நீ (கரிஜிய்யாக் கூட்டத்தாரின் கேந்திரமான) ஹரூரா எனும் இடத்தைச் சேர்ந்தவளா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் எங்களில் ஒருத்திக்கு மாதவிடாய் ஏற்படும். பின்னர் எதையும் மீண்டும் தொழுமாறு அவள் கட்டளையிடப்பட்டதில்லை என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

559 முஆதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், மாதவிடாய் ஏற்பட்ட பெண் விடுபட்டத் தொழுகைகளை மீண்டும் நிறைவேற்ற வேண்டுமா? என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், நீ ஹரூரா எனும் இடத்தைச் சேர்ந்தவளா?அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியருக்கு மாதவிடாய் ஏற்படும்போது (விடுபட்டத் தொழுகைகளை மீண்டும்) நிறைவேற்றுமாறு அவர்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிடவா செய்தார்கள்? என்று (திருப்பிக்) கேட்டார்கள்.

560 முஆதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் மாதவிடாய் ஏற்பட்ட பெண்ணின் நிலை என்ன? (விடுபட்ட) நோன்பை மட்டும் அவள் மீண்டும் நோற்க வேண்டும். (விடுபட்டத்) தொழுகைகளை மீண்டும் தொழக் கூடாதா? என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், நீ ஹரூரா எனும் இடத்தைச் சேர்ந்தவளா? என்று கேட்டார்கள். நான் ஹரூரா எனும் இடத்தைச் சேர்ந்தவள் அல்லள். ஆயினும், (தெரிந்துகொள்வதற்காகவே) கேட்கிறேன் என்றேன். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், எங்களுக்கும் அது (மாதவிடாய்) ஏற்படத்தான் செய்தது. அப்போது விடுபட்ட நோன்பை மீண்டும் நோற்குமாறு நாங்கள் பணிக்கப்பட்டோம். விடுபட்டத் தொழுகையை மீண்டும் தொழுமாறு நாங்கள் பணிக்கப்படவில்லை என்று பதிலளித்தார்கள்.

## பாடம் : 16 குளிப்பவர் துணி போன்றவற்றைத் திரையாக்கிக்கொள்வது.

561 உம்மு ஹானீ பின்த் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கா வெற்றிகொள்ளப்பட்ட ஆண்டில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குளித்துக்கொண்டிருப்பதைக் கண்டேன். அவர்களை, அவர்களுடைய புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்கள் ஒரு துணியால் திரையிட்டு மறைத்துக்கொண்டிருந்தார்கள்.

562 உம்மு ஹானீ பின்த் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் மக்கா வெற்றிகொள்ளப்பட்ட ஆண்டில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் மக்காவின் மேட்டுப் பகுதியில் இருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குளியலுக்காக எழுந்தார்கள். அப்போது அவர்களை ஃபாத்திமா (ரலி) அவர்கள் திரையிட்டு மறைத்தார்கள். (குளித்த) பிறகு தமது ஆடையை வாங்கிப் போர்த்திக்கொண்டார்கள். பின்னர் முற்பகல் தொழுகை (ளுஹா) எட்டு ரக்அத்கள் தொழுதார்கள்.

563 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அவர்களுடைய புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்கள் அவர்களது ஆடையினால் திரையிட்டு மறைத்துக்கொண்டார்கள். குளித்து முடிந்த பின் அந்த ஆடையை வாங்கிப் போர்த்திக்கொண்டார்கள். பின்னர் நின்று எட்டு ரக்அத்கள் தொழுதார்கள். அது முற்பகல்

(ளுஹா) நேரமாகும் என்று உம்மு ஹானி (ரலி) அவர்கள் கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

564 மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுக்கு (குளிக்கத்) தண்ணீர் வைத்துவிட்டு அவர்களைத் திரையிட்டு மறைத்துக்கொண்டேன். அவர்கள் குளித்தார்கள்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 17 மறைக்க வேண்டிய பிறருடைய உறுப்புகளைப் பார்ப்பது தடை செய்யப் பட்டுள்ளது.

565 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் ஆண் மற்றோர் ஆணின் மறைக்க வேண்டிய உறுப்பைப் பார்க்க வேண்டாம்;
ஒரு பெண் மற்றோர் பெண்ணின் மறைக்க வேண்டிய உறுப்பைப் பார்க்க வேண்டாம். ஒரே ஆடைக்குள் இரு ஆண்கள் சேர்ந்து படுக்க வேண்டாம்; ஒரே ஆடைக்குள் இரு பெண்கள் சேர்ந்து படுக்க வேண்டாம்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மறைக்க வேண்டிய உறுப்பு (அவ்ரத்) எனும் வார்த்தைக்கு பதிலாக மற்றோர் ஆணின் நிர்வாணத்தை,மற்றொரு பெண்ணின் நிர்வாணத்தை(ப் பார்க்க வேண்டாம்) என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 18 தனிமையில் குளிக்கும்போது ஆடையின்றிக் குளிக்கலாம்.

566 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பனூ இஸ்ராயீல் சமுதாயத்தார் பிறந்த மேனியுடன் ஒருவர் மற்றவரது மறைக்க வேண்டிய உறுப்பைப் பார்த்துக்கொண்டே குளிப்பார்கள். மூசா (அலை) அவர்கள் தனியாகவே குளிப்பார்கள். (அன்னாரைக் கொச்சைப்படுத்த விரும்பிய) அந்த மக்கள் அல்லாஹ்வின் மீதாணையாக! மூசா குடலிறக்க நோயாளியாய் இருப்பதனால்தான் அவர் நம்முடன் சேர்ந்து குளிப்பதில்லை என்று கூறினர். ஒரு முறை மூசா (அலை) அவர்கள் குளிக்கப் போனார்கள். அப்போது அவர்கள் தமது ஆடையை(க் களைந்து) ஒரு கல்லின் மீது வைத்தார்கள். அந்தக் கல் அவர்களது துணியுடன் ஓடியது. மூசா (அலை) அவர்கள் அதைப் பின்தொடர்ந்து கல்லே, எனது துணி! கல்லே, எனது துணி! என்று கூறியவாறு விரைந்து ஓடினார்கள். இறுதியாக (பனூ இஸ்ராயீல் மக்கள் பகுதிக்கு வந்தபோது அவர்கள்) மூசா (அலை) அவர்களின் மறைக்க வேண்டிய உறுப்பைப் பார்த்துவிட்டு,அல்லாஹ்வின் மீதாணையாக! மூசாவிற்கு எந்தக் குறையுமில்லை என்று கூறினர். மூசா (அலை) அவர்கள் (நன்கு) பார்க்கப்படும்வரை (ஓடிய) அந்தக் கல் (பின்பு) நின்றுவிட்டது. உடனே மூசா (அலை) அவர்கள் தமது ஆடையை எடுத்துக்கொண்டு அந்தக் கல்லை (தமது கைத்தடியால்) அடிக்கலானார்கள்.

இதன் அறிவிப்பாளரான அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! மூசா (அலை) அவர்கள் (தமது கையிலிருந்த தடியால்) கல்லின் மீது அடித்த காரணத்தால் ஆறு அல்லது ஏழு தழும்புகள் அந்தக் கல்லில் பதிந்துவிட்டன.
அறிவிப்பாளர் ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்குப் பல ஹதீஸ்களை அறிவித்தார்கள். இந்த ஹதீஸும் அவற்றில் ஒன்றாகும்.

## பாடம் : 19 மறைக்க வேண்டிய உறுப்பை (மறைத்து)க் காப்பதில் கவனம் செலுத்துதல்.

567 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபியவர்களுக்கு நபித்துவம் வழங்கப்படுவதற்கு முன்பு) கஅபா புதுப்பித்துக் கட்டப்பட்ட போது நபி (ஸல்) அவர்களும் அப்பாஸ் (ரலி) அவர்களும் கற்களைச் சுமந்து எடுத்து வந்தார்கள். அப்போது அப்பாஸ் (ரலி) அவர்கள், (சிறுவராயிருந்த) நபி (ஸல்) அவர்களை நோக்கி கல் சுமப்பதற்கு (வசதியாக) உமது வேட்டியை அவிழ்த்துத் தோளில் (சும்மாடாக) வைத்துக் கொள்க! என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்களும் அவ்வாறே செய்தார்கள். உடனே மயக்கமுற்றுக் கீழே விழுந்தார்கள். அவர்களுடைய கண்கள் வானத்தை நோக்கி நிலைகுத்தி நின்றன. பிறகு எழுந்து என் வேட்டி, என் வேட்டி என்றார்கள். வேட்டியை (எடுத்துக் கொடுத்த உடனே அதை) இறுக்கமாகக் கட்டிக் கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மது பின் ராஃபிஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், உமது தோளில் என்பதற்கு பதிலாக உமது பிடரியில் என இடம்பெற்றுள்ளது.

568 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(குறைஷிக் குலத்தார் கஅபாவைப் புதுப்பிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தபோது சிறுவராயிருந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் மக்களுடன் கஅபாவுக்காகக் கற்களை(ச் சுமந்து) எடுத்து வந்துகொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் ஒரு வேட்டி அணிந்திருந்தார்கள். அவர்களிடம் அவர்களுடைய பெரிய தந்தையான அப்பாஸ் (ரலி) அவர்கள், என் சகோதரரின் மகனே! நீங்கள் உங்கள் வேட்டியை அவிழ்த்து, தோள்மீது கல்லுக்குக் கீழே வைத்துக்கொள்ளலாமே!என்று கூறினார்கள். (சிறுவராயிருந்த) அல்லாஹ்வின் தூதரும் அவ்வாறே அதை அவிழ்த்துத் தமது தோள்மீது வைத்தார்கள். உடனே மயக்கம் ஏற்பட்டுக் கீழே விழுந்தார்கள். அந்த நாளுக்குப் பின் ஒருபோதும் அவர்கள் (ஆடையின்றி) பிறந்த மேனியுடன் காணப்பட்டதில்லை.

569 மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஒரு கனமான கல்லைத் தூக்கிக்கொண்டு வந்துகொண்டிருந்தேன். அப்போது என் உடலில் ஒரு மெல்லிய வேட்டி இருந்தது. அது அவிழ்ந்துவிட்டது. என்னிடமோ பெரிய கல். எனவே, என்னால் அதை இறக்கி வை(த்துவிட்டு வேட்டியைப் பிடி)க்க முடியாமல் சேர வேண்டிய இடம்வரை போய்ச் சேர்ந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்கள், உமது ஆடையை நோக்கிச் சென்று அதை எடுத்து (உடுத்தி)க்கொள்க! நிர்வாணமாக நடக்காதீர்! என்று கூறினார்கள்.

## பாடம் : 20 இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்கான மறைவான இடங்கள்.

570 அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாகனத்தில் என்னைத் தமக்குப் பின்னால் அமர்த்திக்கொண்டு சென்றார்கள். அப்போது என்னிடம் இரகசியமாக ஒரு செய்தியைச் சொன்னார்கள். அதை நான் யாரிடமும் சொல்லமாட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்றச் செல்லும் மறைவிடங்களிலேயே மேடு அல்லது பேரீச்சந்தோட்டம் ஆகியனவே அவர்களுக்கு மிகவும் விருப்பமானவையாக இருந்தன.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு அஸ்மா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள) ஹாயிஷு நக்ல் என்பதற்கு பேரீச்சந்தோட்டம் என்று பொருள் என இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 21 நீர் (விந்து) வெளிப்பட்டால்தான் நீர் (குளியல்) கடமையாகும்.

571 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஒரு திங்கள் கிழமை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மதீனாவிற்கு அருகிலுள்ள) குபா எனும் இடத்திற்குச் சென்றேன். நாங்கள் பனூ சாலிம் கோத்திரத்தார் வசிக்குமிடத்திற்கு வந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இத்பான் பின் மாலிக் (ரலி) அவர்களது வீட்டு வாசலில் நின்று அவர்களைச் சப்தமிட்டு அழைத்தார்கள். உடனே இத்பான் (ரலி) அவர்கள் தமது கீழங்கியை இழுத்தபடி (அவசர அவசரமாக) வெளியே வந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நாம் இம்மனிதரை அவசரப்படுத்திவிட்டோம் என்று கூறினார்கள்.
அப்போது இத்பான் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! ஒருவர் (தாம்பத்திய உறவுகொள்ளும்போது) விந்து வெளிவருவதற்கு முன்பே தம் மனைவியைவிட்டு அவசரப்படுத்தப்பட்டு (விலக்கப்பட்டு)விட்டார். இந்நிலையில் என்ன சட்டம், (அவர்மீது குளியல் கடமையாகுமா) கூறுங்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தண்ணீர் (விந்து) வெளிப்பட்டால்தான் தண்ணீர் (குளியல்) கடமையாகும் என்றார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

572 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தண்ணீர் (விந்து) வெளிப்பட்டால்தான் தண்ணீர் (குளியல்) கடமையாகும்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

573 அபுல்அலா யஸீத் பின் அப்தில்லாஹ் பின் ஷிக்கீர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
குர்ஆனின் ஒரு வசனம் மற்றொரு வசனத்(தின் சட்டத்)தை மாற்றுவதைப் போன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஹதீஸ் (பொன்மொழி)களில் ஒன்று மற்றொன்றை மாற்றி (காலாவதியாக்கி) வந்தது.

574 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிகளில் ஒருவரைக் கடந்து சென்றபோது அவரை அழைத்து வருமாறு ஒருவரை அனுப்பினார்கள். உடனே அந்த அன்சாரி (அவசர அவசரமாகக் குளித்துவிட்டுத்) தமது தலையிலிருந்து தண்ணீர் வழியும் நிலையில் வந்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நாம் உங்களை அவசரப்படுத்திவிட்டோம் போலும் என்றார்கள். அதற்கு அவர், ஆம், அல்லாஹ்வின் தூதரே! என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நீங்கள் (தாம்பத்திய உறவு கொள்ளும்போது) அவசரப்பட்டு எழ நேர்ந்தால் அல்லது விந்தை வெளியேற்றாமலிருந்தால் நீங்கள் குளிக்க வேண்டியதில்லை; அங்கத் தூய்மை (உளூ) செய்துகொள்ளுங்கள் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் ஒன்றில் சொல் வித்தியாசம் காணப்படுகிறது.

575 உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், ஒருவர் தம் மனைவியுடன் சிறிது நேரம் தாம்பத்திய உறவு கொண்டு,விந்தை வெளியேற்ற முடியாமற்போவது பற்றிக் கேட்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,மனைவியிடமிருந்து தம்மீது பட்டதை அவர் கழுவிக்கொள்ள வேண்டும். பிறகு அங்கத் தூய்மை (உளூ) செய்துகொண்டு தொழலாம் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

576 உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒருவர் தம் துணைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டார். ஆனால் விந்தை வெளியேற்றவில்லை (இந்நிலையில் அவர்மீது குளியல் கடமையாகுமா?) என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவர் தமது பிறவி உறுப்பைக் கழுவிக்கொண்டு அங்கத் தூய்மை (உளூ) செய்துகொள்ள வேண்டும் என்று கூறினார்கள்.

577 ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்களிடம், ஒருவர் தம் துணைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டார். ஆனால், விந்தை வெளியேற்றவில்லை. (இந்நிலையில் அவர்மீது குளியல் கடமையாகுமா?) என்று கேட்டேன். அதற்கு உஸ்மான் (ரலி) அவர்கள், அவர் பிறவி உறுப்பைக் கழுவிவிட்டுத் தொழுகைக்கு அங்கத் தூய்மை (உளூ) செய்வதைப் போன்று அங்கத் தூய்மை செய்துகொள்ள வேண்டும். இதை நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியேற்றேன் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஅய்யூப் அல்அன்சாரி (ரலி) அவர்களும் செவியேற்றதாக அறிவித்துள்ளார்கள்.

**பாடம் : 22 நீர் (விந்து) வெளிப்பட்டால்தான் நீர் (குளியல்) கடமையாகும் எனும் சட்டம் மாற்றப்பட்டுவிட்டது; ஆண்-பெண் குறிகள் சந்தித்துவிட்டாலே குளியல் கடமையாகிவிடும்.**

578 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் தம் மனைவியின் (இரு கைகள், இரு கால்கள் ஆகிய) நான்கு கிளைகளுக்கிடையே அமர்ந்து, பின்னர் அவள்மீது தனது வலிமையைக் காட்டினாலே அவர்மீது குளியல் கடமையாகிவிடும். – இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், ம(த்)தர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் விந்து வெளியாகாவிட்டாலும் சரியே! எனும் வாசகமும் (அதிகப் படியாக) இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இன்னும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாக அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே அறிவிக்கப்பட்டுள்ளது. அவற்றில் ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பின்னர் அவர் முயற்சி செய்தால் என்று இடம்பெற்றுள்ளது. ஆனால், விந்து வெளியாகாவிட்டாலும் சரியே! எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

579 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஹாஜிர்களிலும் அன்சாரிகளிலும் ஒரு குழுவினர் இ(ரு குறிகளும் சந்தித்துக்கொண்டால் குளியல் கடமையாகுமா,அல்லது விந்து வெளிப்பட்டால் தான் குளியல் கடமையாகுமா என்ப)து குறித்துக் கருத்து வேறுபாடு (கொண்டு விவாதித்துக்) கொண்டனர். அன்சாரிகள், விந்து வெளியானால் தான் அல்லது துள்ளல் இருந்தால்தான் குளியல் கடமையாகும் என்று கூறினர். முஹாஜிர்கள், இல்லை, (இரு குறிகளும்) கலந்துவிட்டாலே குளியல் கடமையாகிவிடும். (விந்து வெளிப்படாவிட்டாலும் சரியே!) என்று கூறினர்.
உடனே நான், இப்பிரச்சினைக்கு நான் முற்றுப்புள்ளி வைக்கிறேன் என்று கூறிவிட்டு எழுந்து ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று (வீட்டுக்குள் நுழைய) அனுமதி கோரினேன். எனக்கு அனுமதி கிடைத்தது. நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், அன்னையே! அல்லது இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! நான் தங்களிடம் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்க விரும்புகிறேன். ஆனால், தங்களிடம் கேட்க எனக்கு வெட்கமாக இருக்கிறது என்று சொன்னேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், உங்களைப் பெற்றெடுத்த தாயிடம் நீங்கள் எதைப் பற்றிக் கேட்பீர்களோ அதைப் பற்றி என்னிடம் கேட்க நீங்கள் வெட்கப்பட வேண்டியதில்லை. நானும் உங்கள் தாயார்தாம் என்றார்கள். நான், குளியல் எதனால் கடமையாகும்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்: சரியான ஆளிடம்தான் நீர் வந்திருக்கிறீர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் தம் மனைவியின் (இரு கைகள், இரு கால்கள் ஆகிய) நான்கு கிளைகளுக்கிடையே அமர்ந்து (ஆண்)குறி (பெண்)குறியைத் தொட்டு (சந்தித்து)விட்டாலே (இருவர்மீதும்) குளியல் கடமையாகிவிடும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

580 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் தம் துணைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டார். விந்தை வெளியாக்காமல் எழுந்துவிட்டார். இந்நிலையில் அவர்கள் இருவர்மீதும் குளியல் கடமையாகுமா என்று ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டார். அப்போது நானும் அங்கு அமர்ந்திருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இதோ இவளும் நானும் அவ்வாறு செய்வோம். பின்னர் நாங்கள் குளிப்போம் என்றார்கள்.
இதை உம்முகுல்ஸூம் பின்த் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 23 சமைக்கப்பட்ட பொருளைச் சாப்பிட்ட பின் அங்கத் தூய்மை செய்வது.

581 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நெருப்புத் தீண்டிய பொருளை (சமைத்த உணவை) உண்ட பின் (புதிதாக) அங்கத் தூய்மை (உளூ) செய்ய வேண்டும்.
இதை ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- அப்துல்லாஹ் பின் இப்ராஹீம் பின் காரிழ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் பள்ளிவாசலில் உளூச் செய்துகொண்டிருப்பதை நான் கண்டேன். அப்போது அவர்கள் கூறினார்கள்: (சமைக்கப்பட்ட) பாலாடைக் கட்டிகளை நான் சாப்பிட்டதால்தான் (இப்போது) உளூச் செய்து கொண்டிருக்கிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நெருப்புத் தீண்டிய பொருளை (சமைத்த உணவை) சாப்பிட்டால் (புதிதாக) உளூச் செய்துகொள்ளுங்கள் என்று கூறுவதை நான் கேட்டுள்ளேன்.
- இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் சயீத் பின் காலித் பின் அம்ர் பின் உஸ்மான் (ரஹ்) அவர்களிடம் மேற்கண்ட ஹதீஸை அறிவித்துக்கொண்டிருந்தேன். அப்போது சயீத் பின் காலித் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களிடம், சமைக்கப்பட்ட உணவைச் சாப்பிட்ட பின் உளூச் செய்ய வேண்டுமா?என்று கேட்டேன். அதற்கு உர்வா (ரஹ்) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாக (பின்வருமாறு) கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நெருப்புத் தீண்டிய பொருளை (சமைத்த உணவை)ச் சாப்பிட்டால் (புதிதாக) உளூச் செய்து கொள்ளுங்கள்.

## பாடம் : 24 சமைக்கப்பட்ட உணவைச் சாப்பிட்ட பின் உளூச் செய்ய வேண்டும் எனும் சட்டம் மாற்றப்பட்டுவிட்டது.

582 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சமைக்கப்பட்ட) ஆட்டின் சப்பை இறைச்சியைச் சாப்பிட்ட பின் (புதிதாக) உளூச் செய்யாமலேயே தொழுதார்கள்.
- இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் (சமைக்கப்பட்ட) இறைச்சி அல்லது இறைச்சியுள்ள எலும்பைச் சாப்பிட்ட பின் தொழுதார்கள். (புதிதாக)உளூச் செய்யவுமில்லை; தண்ணீரைத் தொடவுமில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

583 அம்ர் பின் உமய்யா அள்ளம்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது கரத்திலிருந்த) ஆட்டுச் சப்பையை (க் கத்தியால்) துண்டுபோட்டுச் சாப்பிடுவதை நான் பார்த்தேன். பிறகு (புதிதாக) உளூச் செய்யாமலேயே தொழுதார்கள்.

584 அம்ர் பின் உமய்யா அள்ளம்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆட்டின் சப்பையை(க் கத்தியால்) துண்டு போட்டுச் சாப்பிடுவதை நான் பார்த்தேன். அப்போது தொழுகைக்காக அழைக்கப்பட்டது. உடனே அவர்கள் கத்தியைப் போட்டுவிட்டு எழுந்து தொழுதார்கள்; அவர்கள் (புதிதாக) உளூச் செய்யவில்லை.
இந்த ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தும் அறிவிக்கப் பெற்றுள்ளது.
- நபி (ஸல்) அவர்களின் துணைவியார் மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என்னிடம் (வந்து) (ஆட்டுச்) சப்பையை சாப்பிட்டுவிட்டுத் தொழுதார்கள். ஆனால், அவர்கள் (புதிதாக) உளூச் செய்ய வில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மைமூனா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

585 அபூரா ஃபிஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காக ஆட்டு ஈரலையும் அதையொட்டி உள்ள பகுதியையும் பொரித்துக்கொடுத்துள்ளேன் என்று உறுதி கூறுகிறேன். (அவர்கள் அதை உண்டுவிட்டுத்) தொழுதார்கள்.(புதிதாக) உளூச் செய்யவில்லை.

586 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பால் அருந்திய பின்னர் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி வாய் கொப்புளித்தார்கள். பிறகு இதில் கொழுப்பு இருக்கிறது (ஆகவேதான், வாய் கொப்புளித்தேன்) என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

587 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் ஆடைகளை எடுத்து அணிந்து கொண்டு தொழுகைக்குப் புறப்பட்டார்கள். அப்போது அவர்களிடம் ரொட்டியும் இறைச்சியும் அன்பளிப்பாகக் கொண்டுவரப்பட்டன. அவர்கள் அதிலிருந்து மூன்று கவளம் சாப்பிட்டு

விட்டுப் பின்னர் மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். அவர்கள் தண்ணீரைத் தொடக்கூட இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அப்போது நபி (ஸல்) அவர்களுடன் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இருந்தார்கள் என்று காணப்படுகிறது. மேலும், தொழுதார்கள் என்று இடம்பெற்றுள்ளதே தவிர, மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள் என்று இடம்பெறவில்லை.

**பாடம் : 25 ஒட்டக இறைச்சி சாப்பிட்ட பிறகு அங்கத் தூய்மை (உளூ) செய்வது.**

588 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், ஆட்டிறைச்சி சாப்பிட்டால் நான் (புதிதாக) அங்கத் தூய்மை (உளூ) செய்ய வேண்டுமா? என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நீர் விரும்பினால் உளூச் செய்துகொள்க! விரும்பா விட்டால் உளூச் செய்ய வேண்டாம் என்று சொன்னார்கள். அந்த மனிதர், ஒட்டக இறைச்சி சாப்பிட்டால் நான் (புதிதாக) அங்கத் தூய்மை செய்ய வேண்டுமா? என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஆம்; ஒட்டக இறைச்சி சாப்பிட்டால் உளூச் செய்துகொள்க! என்றார்கள். அவர், ஆட்டுத் தொழுவத்தில் நான் தொழலாமா? என்று கேட்டார். அதற்கு ஆம் (தொழலாம்) என்றார்கள். அவர், ஒட்டகத் தொழுவத்தில் தொழலாமா?என்று கேட்டார் அதற்கு நபி (ஸல்) அவர்கள் இல்லை (தொழ வேண்டாம்) என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 26 தாம் (அங்கத்) தூய்மையோடு இருப்பதாக நம்பும் ஒருவருக்கு, பின்னர் துடக்கு ஏற்பட்டுவிட்டதோ என்ற சந்தேகம் எழுந்தால், அவர் (பழைய) தூய்மையோடே தொழலாம் என்பதற்கான சான்று.**

589 அப்பாத் பின் தமீம் (ரஹ்) அவர்கள் தம் தந்தையின் சகோதரர் (அப்துல்லாஹ் பின் ஸைத் பின் ஆஸிம்-ரலி) இடமிருந்து கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம், ஒருவருக்குத் தொழும்போது வாயு பிரிவதைப் போன்ற உணர்வு ஏற்படுவதாக முறையிடப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள், (வாயு பிரிந்ததன்) சப்தத்தைக் கேட்காதவரை, அல்லது நாற்றத்தை உணராதவரை அவர் (தொழுகையிலிருந்து) திரும்ப வேண்டியதில்லை என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் பல அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்), மற்றும் ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் அப்பாத் பின் தமீம் (ரஹ்) அவர்களுடைய தந்தையின் சகோதரர் பெயர் அப்துல்லாஹ் பின் ஸைத் (ரலி) என்று இடம்பெற்றுள்ளது.

590 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தமது வயிற்றில் ஏதோ ஏற்படுவதைப் போன்று உணர்ந்து, அதிலிருந்து ஏதேனும் வெளியேறிவிட்டதா இல்லையா என்று சந்தேகப்பட்டால், அவர் (வாயு பிரிவதன்)

சப்தத்தைக் கேட்காதவரை, அல்லது நாற்றத்தை உணராதவரை (உளூ முறிந்துவிட்டதென எண்ணி) பள்ளிவாசலில் இருந்து வெளியேறிவிட வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 27 செத்த பிராணியின் தோல் பதனிடப்படுவதால் தூய்மை அடையும்.

591 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மைமூனா (ரலி) அவர்களின் அடிமைப் பெண் ஒருவருக்கு தர்மமாக வழங்கப்பட்ட ஓர் ஆடு செத்துவிட்டது. அந்த வழியாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கடந்துசென்றார்கள். அப்போது, நீங்கள் இதன் தோலை எடுத்துப் பதனிட்டுப் பயனடையக் கூடாதா? என்று கேட்டார்கள். மக்கள், இது செத்துப்போனதாயிற்றே! என்று கேட்க, அதற்கு அவர்கள், இதை உண்பதுதான் தடை செய்யப்பட்டுள்ளது என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்), இப்னு அபீஉமர் (ரஹ்) ஆகியோர் இந்த ஹதீஸை மைமூனா (ரலி) அவர்களே அறிவித்ததாகக் குறிப்பிட்டுள்ளார்கள்.

592 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மைமூனா (ரலி) அவர்களின் அடிமைப் பெண்ணுக்கு தர்மமாக வழங்கப்பட்ட ஓர் ஆடு செத்துக் கிடந்ததை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்டார்கள். அப்போது, நீங்கள் இதன் தோலைப் பயன்படுத்திக்கொள்ளக் கூடாதா? என்று கேட்டார்கள். மக்கள், இது செத்துப் போனதாயிற்றே! என்று கேட்க, அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இதை உண்பதுதான் தடை செய்யப்பட்டுள்ளது என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

593 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மைமூனா (ரலி) அவர்களின் அடிமைப் பெண்ணுக்கு தர்மமாக வழங்கப்பட்ட ஆடு ஒன்று செத்துக் கிடந்தது. அந்த வழியாகக் கடந்துசென்ற அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இதன் தோலை எடுத்துப் பதனிட்டு அவர்கள் பயனடையக் கூடாதா? என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

594 மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியார் ஒருவருக்கு வளர்ப்புப் பிராணி (ஆடு) ஒன்று இருந்தது. அது செத்துவிட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நீங்கள் இதன் தோலை எடுத்து (பதனிட்டு)ப் பயனடையக் கூடாதா? என்று கேட்டார்கள்.

595 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் சிறிய தாயார்) மைமூனா (ரலி) அவர்களின் அடிமைப் பெண்ணுக்குரிய ஆடு ஒன்று (செத்துவிட்டது. அது) கிடந்த வழியே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கடந்து சென்றார்கள். அப்போது நீங்கள் இதன் தோலால் பயனடையக் கூடாதா? என்று கேட்டார்கள்.

596 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தோல் பதனிடப்பட்டுவிட்டால் தூய்மை அடைந்துவிடும்.
இதை அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே அறிவிக்கப்பட்டுள்ளது.

597அபுல்கைர் மர்ஸத் பின் அப்தில்லாஹ் அல்யஸனீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துர் ரஹ்மான் பின் வஅலா அஸ்ஸபஇய்யீ (ரஹ்) அவர்கள் தோலாடை ஒன்றை அணிந்திருப்பதைக் கண்டேன். நான் அதைத் தடவிப்பார்த்தேன். அப்போது அவர்கள், ஏன் இதைத் தடவிப்பார்க்கிறீர்கள்? நான் இதை (அணிவது) பற்றி அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடம், நாங்கள் மேற்கே வசித்துவருகிறோம். எங்களுடன் (ஆப்பிரிக்கர்களான) பர்பர் இன மக்களும் அக்னி ஆராதகர்(களான மஜூசி)களும் வசித்து வருகின்றனர். அவர்கள் அறுத்த ஆடுகள் எங்களிடம் கொண்டுவரப்படுவதுண்டு. ஆனால், அவர்கள் அறுத்ததை நாங்கள் சாப்பிடுவதில்லை. மேலும், அவர்கள் தோல்பைகளில் கொழுப்புகளை வைத்து எங்களிடம் கொண்டுவருகின்றனரே (அந்தத் தோலை நாங்கள் பயன்படுத்தலாமா?) என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், நாங்கள் இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினோம். அதற்கு அவர்கள், அதைப் பதனிடுவதே அதைத் தூய்மையாக்கிவிடும் என்று பதிலளித்தார்கள் என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

598 அப்துர் ரஹ்மான் பின் வஅலா அஸ்ஸபஇய்யீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், நாங்கள் மேற்கே வசித்துவருகிறோம். அக்னி ஆராதனையாளர்(மஜூசி)கள் தோல்பைகளில் தண்ணீரையும் கொழுப்பையும் எங்களிடம் கொண்டுவருகின்றனர். (நாங்கள் அந்தத் தோல் பைகளில் அருந்தலாமா?) என்று கேட்டேன். அதற்கு அவர்கள், அருந்தலாம் என்றார்கள். நான், இது உங்களது சுயமான கருத்தா?என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைப் பதப்படுத்துவதே அதைத் தூய்மையாக்கிவிடும் என்று கூறுவதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 28 தயம்மும்.

599 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மேற்கொண்ட ஒரு பயணத்தில் (பனூ முஸ்தலிக் போரின் பயணத்தில்) அவர்களுடன் புறப்பட்டுச் சென்றோம். நாங்கள்

(மதீனாவுக்கும் கைபருக்கும் இடையே) பைதா அல்லது தாத்துல் ஜைஷ் எனுமிடத்தில் (வந்துகொண்டு) இருந்தபோது (என் சகோதரி அஸ்மாவிடம் நான் இரவல் வாங்கியிருந்த) எனது கழுத்தணி அவிழ்ந்து (காணாமற்போய்)விட்டது. அதைத் தேடுவதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அங்கு) தங்கினார்கள். அவர்களுடன் மக்களும் தங்கினர். அப்போது அவர்கள் எந்த நீர்நிலை அருகிலும் இருக்கவில்லை; அவர்களிடமும் தண்ணீர் எதுவும் இருக்கவில்லை.
அப்போது மக்கள் (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்களிடம் சென்று, (உங்கள் புதல்வி) ஆயிஷா செய்ததை நீங்கள் பார்த்தீர்களா? அல்லாஹ்வின் தூதரையும் மக்களையும் (இங்கு) தங்கும்படி செய்துவிட்டார். இங்கும் தண்ணீர் இல்லை;மக்களிடமும் தண்ணீர் இல்லை என்று முறையிட்டனர். உடனே அபூபக்ர் (ரலி) அவர்கள் (என்னிடம்) வந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் மடிமீது தலை வைத்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள் (என்னைப் பார்த்து), அல்லாஹ்வின் தூதரையும் மக்களையும் (பயணத்தைத் தொடர முடியாமல்) தடுத்துவிட்டாயே! இங்கும் தண்ணீர் இல்லை; மக்களிடமும் தண்ணீர் இல்லை என்று கூறினார்கள். அவர்கள் எதை எதைச் சொல்ல இறைவன் நாடினானோ அதையெல்லாம் சொல்லி என்னைக் கண்டித்தபடி தமது கரத்தால் எனது இடுப்பில் குத்தலானார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் மடிமீது (தலைவைத்துப் படுத்து) இருந்ததுதான் என்னை அசையவிடாமல் (அடிவாங்கிக் கொண்டிருக்கும் படி) செய்துவிட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிகாலையில் விழித்தெழுந்த போதும் தண்ணீர் இருக்கவில்லை. அப்போது தான் தயம்மும் உடைய (5:6ஆவது) வசனத்தை அல்லாஹ் அருளினான். மக்கள் தயம்மும் செய்தனர்.
(இது குறித்து) அல்அகபா உறுதிமொழி அளித்த தலைவர்களில் ஒருவரான– உசைத் பின் அல்ஹுளைர் (ரலி) அவர்கள், அபூபக்ரின் குடும்பத்தாரே! உங்கள் மூலமாக ஏற்பட்ட பரக்கத் (சமுதாய நலன்)களில் இ(ந்தத் தயம்மும் எனும் சலுகையான)து, முதலாவதாக இல்லை. (எத்தனையோ நலன்கள் இதற்கு முன்பும் உங்கள் மூலம் ஏற்பட்டுள்ளன) என்று கூறினார்கள். (பிறகு) நானிருந்த ஒட்டகத்தைக் கிளப்பியபோது, அதன் அடியில் (காணாமற்போன) அந்தக் கழுத்தணி கிடந்தது.

600 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (என் சகோதரி) அஸ்மாவிடம் கழுத்தணி ஒன்றை இரவல் வாங்கினேன். அது (பனூ முஸ்தலிக் போரின் பயணத்தில்) தொலைந்துபோய்விட்டது. ஆகவே, அதைத் தேடுவதற்காக தம் தோழர்களில் சிலரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுப்பிவைத்தார்கள். (அவர்கள் அதைத் தேடச் சென்றனர்.) அப்போது (வழியில்) அவர்களுக்குத் தொழுகை நேரம் வந்துவிட்டது. அந்த நேரம் (உளூச் செய்வதற்குத் தண்ணீர் கிடைக்காததால்) உளூச் செய்யாமலேயே அவர்கள் தொழுதார்கள். அவர்கள் திரும்பி வந்தபோது (உளூச் செய்யாமல் தொழுதது குறித்து) நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டனர். அப்போதுதான் தயம்மும் தொடர்பான (5:6ஆவது) இறைவசனம் அருளப்பெற்றது.
இதையடுத்து (என்னிடம்) உசைத் பின் ஹுளைர் (ரலி) அவர்கள், தங்களுக்கு அல்லாஹ் நற்பலன் வழங்கட்டும். அல்லாஹ்வின் மீதாணையாக! ஓர் (இக்கட்டான) சம்பவம்

நேரும்போதெல்லாம் அதிலிருந்து விடுபடுவதற்கான முகாந்திரத்தைத் தங்களுக்கும், அதில் ஒரு சுபிட்சத்தை முஸ்லிம்களுக்கும் அல்லாஹ் ஏற்படுத்தாமல் இருந்ததில்லை என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

601 ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி), அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) ஆகியோருடன் அமர்ந்திருந்தேன். அப்போது அபூமூசா (ரலி) அவர்கள் (அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம்), அபூஅப்திர் ரஹ்மான்! பெருந்துடக்கு ஏற்பட்டு (குளியல் கடமையாகி)விட்ட ஒருவருக்கு ஒரு மாதகாலம்வரை தண்ணீர் கிடைக்காவிட்டால் அவர் எவ்வாறு தொழுவார்? என்று கேட்டார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், ஒரு மாத காலம் தண்ணீர் கிடைக்காவிட்டாலும் சரியே, அவர் தயம்மும் செய்யமாட்டார். (அவர் தொழவுமாட்டார்) என்று கூறினார்கள். உடனே அபூமூசா (ரலி) அவர்கள், அப்படியானால் அல்மாயிதா அத்தியாயத்தில் வரும் உங்களுக்குத் தண்ணீர் கிடைக்காவிட்டால் சுத்தமான மண்ணில் தயம்மும் செய்துகொள்ளுங்கள் எனும் இந்த (5:6ஆவது) வசனத்தை என்ன செய்வீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், இந்த வசனத்தை முன்னிட்டு மக்களுக்கு (பொதுவான) அனுமதி அளிக்கப்பட்டுவிடுமானால் தண்ணீர் அவர்களுக்குக் குளிராகத் தெரிந்தால்கூட மண்ணில் தயம்மும் செய்துகொள்ளப் பார்ப்பார்கள் என்றார்கள்.
உடனே அபூமூசா (ரலி) அவர்கள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் அம்மார் பின் யாசிர் (ரலி) அவர்கள் (உமர் (ரலி) அவர்களிடம்) சொன்ன (பின்வரும்) செய்தியை நீங்கள் கேள்விப்படவில்லையா? என்று கேட்டார்கள்.(அம்மார் கூறினார்கள்:) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை ஒரு தேவை நிமித்தம் (படைப்பிரிவொன்றில்) அனுப்பிவைத்தார்கள். அப்(பயணத்தின்)போது எனக்குப் பெருந்துடக்கு ஏற்பட்டு (குளியல் கடமையாகி)விட்டது. அப்போது எனக்குத் தண்ணீர் கிடைக்கவில்லை. ஆகவே, நான் (குளியலுக்குத் தயம்மும் செய்வதற்காகப்) பிராணிகள் புரள்வதைப் போன்று மண்ணில் புரண்டேன். பிறகு (ஊர் திரும்பியதும்) நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று நடந்ததைச் சொன்னேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் உங்களுடைய கரங்களால் இப்படிச் செய்திருந்தால் போதுமே! என்று கூறிவிட்டுத் தம் கரங்களால் பூமியில் ஓர் அடி அடித்து, பின்னர் தமது இடக் கரத்தால் வலக் கரத்தையும் இரு புறங்கைகளையும் முகத்தையும் தடவலானார்கள்.
(இந்நிகழ்ச்சியைக் கேட்டுவிட்டு) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், அம்மார் (ரலி) அவர்கள் சொன்னதில் உமர் (ரலி) அவர்களுக்கு மனநிறைவு ஏற்படவில்லை என்பதைத் தாங்கள் அறியவில்லையா? என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

602 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆனால் அதில், நபி (ஸல்) அவர்கள் இப்படிச் செய்திருந்தால் உங்களுக்குப் போதுமானதாக இருந்திருக்குமே! என்று கூறிவிட்டு, தம் கைகளை பூமியில் அடித்து, பின்னர் அவற்றை உதறிவிட்டு, தமது முகத்திலும் முன் கைகளிலும் தடவினார்கள் என்று இடம் பெற்றுள்ளது.

603 அப்துர் ரஹ்மான் பின் அப்ஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
உமர் (ரலி) அவர்களிடம் ஒருவர் வந்து, நான் பெருந்துடக்குடையவனாகிவிட்டேன். ஆனால் (குளிப்பதற்கு) எனக்குத் தண்ணீர் கிடைக்கவில்லை. (இந்நிலையில் நான் என்ன செய்ய வேண்டும்?) என்று கேட்டார். அதற்கு உமர் (ரலி) அவர்கள், நீர் தொழ வேண்டியதில்லை என்று கூறினார்கள். அப்போது (அங்கிருந்த) அம்மார் (ரலி) அவர்கள், இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! நானும் நீங்களும் ஒரு படைப்பிரிவில் இருந்தோம். அப்போது நமக்குப் பெருந்துடக்கு ஏற்பட்டு (குளியல் கடமையாகி)விட்டது. நமக்குத் தண்ணீர் கிடைக்கவில்லை. எனவே, நீங்கள் தொழவில்லை; நானோ (உளூவிற்கு பதிலாக தயம்மும் செய்வதைப் போன்று குளியலுக்கு பதிலாக) மண்ணில் புரண்டெழுந்து பின்னர் தொழுதேன். (இதுபற்றி நான் தெரிவித்தபோது) நபி (ஸல்) அவர்கள், உம்மிரு கைகளையும் தரையில் அடித்துப் பிறகு (கைகளை) ஊதிவிட்டுப் பின்னர் இரு கைகளால் உமது முகத்தையும் இரு முன் கைகளையும் தடவிக்கொண்டிருந்தால் போதுமே (ஏன் மண்ணில் புரண்டீர்கள்?) என்று கூறியது உங்களுக்கு நினைவில்லையா? என்று கேட்டார்கள். அதற்கு உமர் (ரலி) அவர்கள், அல்லாஹ்வை அஞ்சிக்கொள், அம்மாரே! என்று சொன்னார்கள். உடனே அம்மார் (ரலி) அவர்கள், நீங்கள் விரும்பினால் இதை நான் யாருக்கும் அறிவிக்கமாட்டேன் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் நீர் எதற்குப் பொறுப்பேற்றுக்கொண்டீரோ அதற்கு உம்மையே நாம் பொறுப்பாளியாக்கினோம் என்று உமர் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

604 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் உமர் (ரலி) அவர்களிடம் ஒருவர் வந்து, எனக்குப் பெருந்துடக்கு ஏற்பட்டு (குளியல் கடமையாகி)விட்டது... என்று தொடங்கி மேற்கண்ட ஹதீஸிலுள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளது. அதில், அம்மார் (ரலி) அவர்கள்,இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! உங்களுக்கு என்மீது இறைவன் விதியாக்கிய கடமையை முன்னிட்டு இதை நான் யாரிடமும் அறிவிக்கக் கூடாது என்று நீங்கள் விரும்பினால் நான் இதை யாருக்கும் அறிவிக்கமாட்டேன் என்று கூறினார்கள் என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

605 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான உமைர் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் மைமூனா (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான அப்துர் ரஹ்மான் பின் யசார் (ரஹ்) அவர்களும் அபுல்ஜஹ்ம் பின் ஹாரிஸ் பின் ஸிம்மா அல்அன்சாரி (ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது அபுல்ஜஹ்ம் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு அருகிலுள்ள) பிஃரு ஜமல் எனும் இடத்திலிருந்து வந்துகொண்டிருந்தார்கள். அப்போது அவர்களை ஒருவர் சந்தித்து சலாம் சொன்னார். நபி (ஸல்) அவர்கள் அவருக்கு உடனடியாக பதில் சலாம் சொல்லாமல் ஒரு சுவரை நோக்கிப் போய் (அதில் தம் கைகளை அடித்து) தமது முகத்தையும் இரு கைகளையும் தடவி (தயம்மும் செய்து)கொண்ட பின்னர் அவருக்கு பதில் சலாம் சொன்னார்கள்.

606 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறுநீர் கழித்துக்கொண்டிருந்தபோது அவர்களைக் கடந்துசென்ற மனிதர் ஒருவர் சலாம் சொன்னார். அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதில் சலாம் சொல்லவில்லை.

## பாடம் : 29 ஒரு முஸ்லிம் (பெருந்துடக்கு ஏற்பட்டதால்) அசுத்தமாகிவிடமாட்டார் என்பதற்கான சான்று.

- அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் பெருந்துடக்கு ஏற்பட்டவனாய் (குளியல் கடமையான நிலையில்) மதீனாவின் சாலைகளில் ஒன்றில் இருந்தபோது நபி (ஸல்) அவர்கள் என்னைச் சந்தித்தார்கள். உடனே நான் அவர்களிடமிருந்து நழுவிச் சென்று குளித்தேன். இதற்கிடையே நபி (ஸல்) அவர்கள் என்னைக் காணாமற் தேடினார்கள். நான் (குளியலை முடித்துவிட்டு) அவர்களிடம் வந்தபோது, (இவ்வளவு நேரம்) எங்கே இருந்தீர், அபூஹுரைரா? என்று கேட்டார்கள். நான், அல்லாஹ்வின் தூதரே! பெருந்துடக்கு ஏற்பட்டவனாய் நானிருந்த நிலையில் என்னைத் தாங்கள் சந்தித்தீர்கள். குளிக்காமல் தங்களிடம் அமர்வதை நான் வெறுத்தேன் என்று கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்). இறைநம்பிக்கையாளர் (பெருந்துடக்கு ஏற்பட்டதால்) அசுத்தமாகி விடமாட்டார் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

607 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் பெருந்துடக்கு ஏற்பட்டவனாய் (குளியல் கடமையான நிலையில்) இருந்தபோது என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சந்தித்தார்கள். உடனே நான் அவர்களிடமிருந்து விலகிச்சென்று குளித்துவிட்டு வந்து, நான் பெருந்துடக்கு உள்ளவனாய் இருந்தேன். (குளித்துவிட்டு வரத் தாமதமாகி விட்டது) என்று கூறினேன். அதற்கு அவர்கள் ஒரு முஸ்லிம் (பெருந்துடக்கினால்) அசுத்தமாகிவிடமாட்டார் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 30 பெருந்துடக்கு போன்ற நிலைகளில் அல்லாஹ்வை திக்ர் செய்தல் (துதித்தல்).**

608 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் எல்லா நிலைகளிலும் அல்லாஹ்வை திக்ர் செய்பவர்களாய் இருந்தார்கள்.- இதை உர்வா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 31 சிறு துடக்கு ஏற்பட்டவர் (உளூச் செய்யாமல்) உணவு உட்கொள்ளலாம். அவ்வாறு செய்வது ஓர் அருவருக்கத் தக்க செயலன்று. (துடக்கு ஏற்பட்ட) உடனே உளூச் செய்வது கட்டாயமல்ல.**

609 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் கழிவறையிலிருந்து வெளியேறியபோது அவர்களுக்கு உணவு கொண்டுவரப்பட்டது. அப்போது மக்கள் உளூச் செய்யுமாறு அவர்களுக்கு நினைவூட்டினர். நபி (ஸல்) அவர்கள், நானென்ன தொழவா போகிறேன்,உளூச் செய்துகொள்வதற்கு? என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

610 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள் கழிப்பிடத்திற்குச் சென்று விட்டு வந்தார்கள். மேலும், அவர்களுக்கு உணவு கொண்டுவரப்பட்டது. (அவர்கள் சாப்பிடப் போனபோது) அவர்களிடம், நீங்கள் உளூச் செய்துகொள்ளவில்லையே? என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள், ஏன்? நானென்ன தொழவாபோகிறேன், உளூச் செய்து கொள்வதற்கு? என்று கேட்டார்கள்.

611 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கழிவறைக்குச் சென்றுவிட்டுத் திரும்பி வந்தபோது அவர்களுக்கு முன்னால் உணவு வைக்கப்பட்டது. அப்போது, நீங்கள் உளூச் செய்துகொள்ள வில்லையே, அல்லாஹ்வின் தூதரே!? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், எதற்கு, தொழுகைக்கா? என்று கேட்டார்கள்.

612 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்றிவிட்டுக் கழிவறையிலிருந்து வந்தார்கள். அப்போது அவர்களுக்கு உணவு கொண்டுவந்து பரிமாறப்பட்டது. அவர்கள் அதைச் சாப்பிட்டார்கள். ஆனால், தண்ணீரைத் தொடவேயில்லை (உளூச் செய்யவில்லை).
சயீத் பின் அல்ஹுவைரிஸ் (ரஹ்) அவர்களிடமிருந்து அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில் நபி (ஸல்) அவர்களிடம் நீங்கள் உளூச் செய்யவில்லையே? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், நான் எந்தத் தொழுகையையும் நிறைவேற்றப்போக வில்லையே, அவ்வாறிருந்தால்தானே நான் உளூச் செய்ய வேண்டும்? என்று கேட்டார்கள் என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 32 கழிப்பிடத்திற்குச் செல்லும்போது ஓத வேண்டிய பிரார்த்தனை.

613 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்குள் நுழையும்போது அல்லாஹும்ம இன்னீ அவூது பிக்க மினல் குப்ஸி வல்கபாயிஸி என்று கூறுவார்கள்.
(பொருள்: இறைவா! ஆண் மற்றும் பெண் ஷைத்தான்களி(ன் தீங்கி)லிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.)
ஹுஷைம் பின் பஷீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (கழிப்பிடம் என்பதைக் குறிக்க அல்கலா எனும் சொல்லுக்கு பதிலாக) அல்கனீஃப் எனும் சொல் காணப்படுகிறது.
- இந்த ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், நபி (ஸல்) அவர்கள் அவூது பில்லாஹி மினல் குப்ஸி வல்கபாயிஸி என்று கூறுவார்கள் என இடம்பெற்றுள்ளது.
(பொருள்: ஆண் மற்றும் பெண் ஷைத்தான்களின் தீங்கிலிருந்து அல்லாஹ்விடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்.)

## பாடம் : 33 உட்கார்ந்துகொண்டு உறங்கினால் உளூ முறியாது என்பதற்கான சான்று.

614 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள் இஷாத் தொழுகைக்காக) இகாமத் சொல்லப்பட்டது. (ஆனால்,) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம் (நீண்டநேரம்) தனியாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். இறுதியில் மக்கள் (உட்கார்ந்துகொண்டே) தூங்கிவிட்டார்கள். பின்னர்தான் நபி (ஸல்) அவர்கள் தொழுகைக்கு (வந்து) நின்றார்கள்.

615 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள் இஷாத் தொழுகைக்காக) இகாமத் சொல்லப்பட்டது. ஆனால், நபி (ஸல்) அவர்களோ ஒரு மனிதரிடம் தனியாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் (நீண்டநேரம்) பேசிக்கொண்டிருந்ததில் நபித்தோழர்கள் (உட்கார்ந்துகொண்டே) தூங்கிவிட்டார்கள். பிறகு நபி (ஸல்) அவர்கள் வந்து மக்களுக்குத் தொழுவித்தார்கள்.

616 ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்கள் (உட்கார்ந்துகொண்டே) உறங்கிவிட்டு (பிறகு எழுந்து) தொழுவார்கள். (அதற்காகப் புதிதாக) உளூச் செய்யமாட்டார்கள் என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறுவதை நான் கேட்டேன் என கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறினார்கள். நான், இதை அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து நீங்கள் செவியுற்றீர்களா? என்று கேட்டேன். அதற்கு கத்தாதா (ரஹ்) அவர்கள், ஆம், அல்லாஹ்வின் மீதாணையாக! என்று சொன்னார்கள்.

617 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) இஷாத் தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டது. அப்போது ஒரு மனிதர் (நபி (ஸல்) அவர்களிடம்) எனக்கு (தங்களிடம்) ஓர் அலுவல் (குறித்துப் பேச வேண்டியது) இருக்கிறது என்று சொன்னார். உடனே நபி (ஸல்) அவர்கள் எழுந்து அவரிடம் (நீண்ட நேரம்) தனியாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். (எந்த அளவுக்கென்றால்) மக்கள் அனைவரும் அல்லது மக்களில் சிலர் (உட்கார்ந்த நிலையிலேயே) உறங்கிவிட்டனர். பிறகு (புதிதாக உளூச் செய்யாமலேயே) தொழுதனர்.

# அத்தியாயம் : 05 - தொழுகை

**பாடம் : 1 தொழுகை அறிவிப்பின் (பாங்கு) துவக்கம்.**

618 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஸ்லிம்கள் (மக்காவிலிருந்து) மதீனாவிற்கு வந்தபோது தொழுகைக்கு அழைப்பு விடுப்பதெற்கென யாரும் இருக்கவில்லை. அவர்கள் ஒன்றுகூடி தொழுகை(க்கு வரவேண்டிய) நேரத்தை முடிவு செய்துகொள்வார்கள். ஒரு நாள் இதுதொடர்பாக அவர்கள் கலந்து பேசினர். அப்போது அவர்களில் சிலர், கிறிஸ்தவர்கள் மணி அடிப்பதைப் போன்று மணி அடியுங்கள் என்றனர். வேறு சிலர், யூதர்கள் கொம்பூதுவதைப் போன்று கொம்பூதுங்கள் என்றனர். அப்போது உமர் (ரலி) அவர்கள், தொழுகைக்காக அழைக்கின்ற ஒருவரை நீங்கள் நியமிக்கக் கூடாதா? என்றார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் (பிலால் (ரலி) அவர்களிடம்) பிலாலே! எழுந்து தொழுகைக்காக (மக்களை) அழையுங்கள்! என்று சொன்னார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 2 தொழுகை அறிவிப்பு வாசகங்களை இரட்டையாகவும் இகாமத்தின் வாசகங்களை ஒற்றையாகவும் சொல்ல வேண்டும்.**

619 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
தொழுகை அறிவிப்பின் வாசகங்களை இரட்டையாகவும் இகாமத்தின் வாசகங்களை ஒற்றையாகவும் சொல்லும்படி பிலால் (ரலி) அவர்கள் கட்டளையிடப்பட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (இகாமத்தில் சொல்லப்படும்) கத் காமத்திஸ் ஸலாஹ் என்ற வாசகத்தைத் தவிர என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது. (இகாமத்தில் அந்த வாசகத்தை மட்டும் இரண்டு முறை கூற வேண்டும்.)

620 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
தொழுகை நேரத்தை மக்களுக்கு அறிவிப்பதற்காக, அவர்கள் புரிந்துகொள்ளக்கூடிய (அறிவிப்பு) முறையை உருவாக்குவது குறித்து (நபித்தோழர்கள்) பேசினார்கள். அப்போது சிலர், நெருப்பு மூட்டுவோம்; அல்லது மணி அடிப்போம் என்றனர். (இவை யூத, கிறிஸ்தவக் கலாசாரம் என்று மறுப்புத் தெரிவிக்கப்பட்டது.) இதையடுத்து தொழுகை அறிவிப்பு வாசகங்கள் இரட்டையாகவும் இகாமத்தின் வாசகங்கள் ஒற்றைப்படையாகவும் கூறும்படி பிலால் (ரலி) அவர்கள் கட்டளையிடப்பட்டார்கள்.

621 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் காலித் அல்ஹத்தாஉ (ரஹ்) அவர்கள் பின்வருமாறு அறிவித்துள்ளார்கள்:
முஸ்லிம்களின் எண்ணிக்கை அதிகமானபோது, தொழுகை நேரத்தை மக்களுக்கு அறிவிக்கும் முறை குறித்துப் பேசினார்கள். அவர்களில் சிலர், நெருப்பு மூட்டுவோம்; அல்லது மணி அடிப்போம் என்றனர்.

622 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
தொழுகை அறிவிப்பின் வாசகங்களை இரட்டையாகவும் இகாமத்தின் வாசகங்களை ஒற்றைப்படையாகவும் கூறும்படி பிலால் (ரலி) அவர்கள் கட்டளையிடப்பட்டார்கள்.

பாடம் : 3 தொழுகை அறிவிப்பு முறை.

623 அபூமஹ்தூரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் எனக்கு இந்தத் தொழுகை அறிவிப்பு(பாங்கு) முறையைக் கற்றுத் தந்தார்கள்:
அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன், அல்லாஹ் மிகப் பெரியவன்).
(பின்னர் மெதுவாக) அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹ், அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹ் (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்று நான் உறுதிமொழிகிறேன்; அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்று நான் உறுதிமொழிகிறேன்).
அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ், அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ் (முஹம்மத் (ஸல்) அவர்கள் இறைவனின் தூதர் ஆவார்கள் என்று நான் உறுதிமொழிகிறேன்; முஹம்மத் (ஸல்) அவர்கள் இறைவனின் தூதர் ஆவார்கள் என்று நான் உறுதிமொழிகிறேன்).
பின்னர் மீண்டும் (சப்தமாக) அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹ், அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹ். அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ், அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்.
பின்னர் ஹய்ய அலஸ் ஸலாஹ் (தொழ வாருங்கள்) என்று இரு முறையும், ஹய்ய அலல் ஃபலாஹ் (வெற்றியின் பக்கம் வாருங்கள்) என்று இரு முறையும் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (ஹய்ய அலல் ஃபலாஹ் என்பதற்குப் பிறகு) அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர், லாயிலாஹ இல்லல்லாஹ் (அல்லாஹ் மிகப் பெரியவன், அல்லாஹ் மிகப் பெரியவன், அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை) என்று நபி (ஸல்) அவர்கள் பாங்கு சொல்லக் கற்றுக்கொடுத்தார்கள் என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

பாடம் : 4 ஒரே பள்ளிவாசலுக்கு இரு தொழுகை அறிவிப்பாளர்களை ஏற்படுத்துவது விரும்பத்தக்கதாகும்.

624 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களு(டைய பள்ளிவாசலு)க்கு இரு தொழுகை அறிவிப்பாளர்கள் இருந்தனர். ஒருவர் பிலால் (ரலி) அவர்கள்; மற்றொருவர் கண்பார்வை இழந்த இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாக ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்பட்டுள்ளது.

**பாடம் : 5 கண்பார்வையற்றவர் தொழுகை அறிவிப்புச் செய்வது செல்லும்; (தொழுகை நேரத்தை அறிந்து சொல்ல) அவருடன் கண்பார்வை உள்ள ஒருவர் இருந்தால்.**

625 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களு(டைய பள்ளிவாசலு)க்கு இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்கள் தொழுகை அறிவிப்பாளராக இருந்தார்கள். அன்னார் கண் பார்வையற்றவராவார். (அவருக்கு உதவியாளராக பிலால் (ரலி) அவர்கள் இருந்தார்கள்.)
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 6 (இஸ்லாமிய அரசின் துருப்புகள்) இணை வைப்பாளர்கள் வாழும் நாட்டில் (போருக்காகச் செல்லும்போது) அவர்களிடையே தொழுகை அறிவிப்பின் சப்தம் கேட்டால் அந்த மக்களைத் தாக்குவதை நிறுத்த வேண்டும்.**

626 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (போர்க் காலத்தில்) ஃபஜ்ர் நேரம் ஆரம்பிக்கும்போது போர் தொடுப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள். (போரை ஆரம்பிக்கு முன்) ஃபஜ்ர் தொழுகையின் அறிவிப்பு சப்தத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். அப்படி தொழுகை அறிவிப்பு சப்தத்தைக் கேட்டால் போரை நிறுத்திவிடுவார்கள். இல்லையென்றால் தாக்குவார்கள்.
(ஒரு முறை) ஒரு மனிதர், அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர் என்று சொல்லக் கேட்டார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நீ இயற்கையில் (இஸ்லாத்தில்) இருக்கிறாய் என்று சொன்னார்கள். பின்பு அவர், அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹ், அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹ் என்று சொன்னார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நீ நரகத்திலிருந்து (விடுதலை பெற்று) வெளியேறி விட்டாய் என்று சொன்னார்கள். நபித்தோழர்கள் அவர் யாரென்று பார்த்தபோது அவர் வெள்ளாடுகளை மேய்க்கும் ஓர் இடையர் என்று தெரிந்தது.

**பாடம் : 7 தொழுகை அறிவிப்பை (பாங்கை)க் கேட்பவர், அறிவிப்பாளர் கூறுவதைப் போன்றே கூறுவதும் பின்பு நபி (ஸல்) அவர்கள்மீது ஸலவாத் கூறி, அவர்களுக்குச் சொர்க்கத்தின் உயர்ந்த பதவி கிடைப்பதற்காகப் பிரார்த்திப்பதும் விரும்பத்தக்கதாகும்.**

627 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகை அறிவிப்பை நீங்கள் செவியேற்றால், அறிவிப்பாளர் கூறுவதைப் போன்றே நீங்களும் கூறுங்கள்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

628 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகை அறிவிப்பாளரின் அறிவிப்பை நீங்கள் செவியுற்றால் அவர் கூறுவதைப் போன்றே நீங்களும் கூறுங்கள். பின்பு என்மீது ஸலவாத் சொல்லுங்கள். ஏனெனில், என்மீது யார் ஒருமுறை ஸலவாத் சொல்கிறாரோ அதன் காரணத்தால் அவருக்குப் பத்து முறை அல்லாஹ் அருள்புரிகின்றான். பின்பு எனக்காக அல்லாஹ்விடம் வஸீலாவைக் கேளுங்கள். வஸீலா என்பது சொர்க்கத்திலுள்ள (உயர்) பதவியாகும்; அல்லாஹ்வின் அடியார்களில் ஒருவருக்குத்தான் அது கிடைக்கும். அந்த ஒருவர் நானாகவே இருக்க விரும்புகிறேன். எனவே, எனக்காக அந்தப் பதவியை (அல்லாஹ்விடம்) கேட்பவருக்கு (மறுமை நாளில்) எனது பரிந்துரை அவசியம் கிடைக்கும்.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

629 அல்லாஹ்வின் தூதர் ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகை அறிவிப்பாளர் அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர் என்று சொன்னால் நீங்களும் அல்லாஹு அக்பர்,அல்லாஹு அக்பர் என்று சொல்லுங்கள். பின்பு அவர், அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹ் என்று சொன்னால் நீங்களும் அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹ் என்று சொல்லுங்கள். பின்பு அவர், அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ் என்று சொன்னால் நீங்களும் அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ் என்று சொல்லுங்கள். பின்பு அவர் ஹய்ய அலஸ் ஸலாஹ் என்று சொன்னால் நீங்கள் லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்(அல்லாஹ்வின் உதவியில்லாமல் (பாவங்களிலிருந்து) விலகிச்செல்லவோ (நல்லறங்கள் புரிய) ஆற்றல் பெறவோ மனிதனால் முடியாது) என்று சொல்லுங்கள். பின்பு அவர் ஹய்ய அலல் ஃபலாஹ் என்று சொன்னால் நீங்கள், லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் என்று சொல்லுங்கள். பின்பு அவர் அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர்என்று சொன்னால் நீங்களும் அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர் என்று சொல்லுங்கள். பின்பு அவர் லா இலாஹ இல்லல்லாஹ் என்று சொன்னால் நீங்களும் லா இலாஹ இல்லல்லாஹ் என்று மனப்பூர்வமாகச் சொல்லுங்கள். உங்களில் இவ்வாறு கூறுபவர் சொர்க்கத்தில் நுழைந்துவிட்டார்.
இதை உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

630 அல்லாஹ்வின் தூதர் ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகை அறிவிப்பாளரின் அறிவிப்பைக் கேட்கக்கூடியவர் (அறிவிப்பு முடிந்த பின்பு) அஷ்ஹது அல்லா இலாஹ இல்லல்லாஹு, வஹ்தஹு, லா ஷரீக்க லஹு, வ அன்ன முஹம்மதன் அப்துஹு வ ரசூலுஹு, ரளீத்து பில்லாஹி ரப்பன், வபி முஹம்மதின் ரசூலன், வபில் இஸ்லாமி தீனன் என்று சொன்னால் அவருடைய பாவங்கள் மன்னிக்கப்பட்டு விடும்.
(பொருள்: அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையேதுமில்லை. முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனுடைய அடியாரும் தூதருமாவார்கள் என்று நான் உறுதிமொழிகிறேன். அல்லாஹ்வை இறைவனாகவும்

முஹம்மத் (ஸல்) அவர்களை (அவனுடைய) தூதராகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் நான் மனநிறைவுடன் ஏற்றுக்கொண்டேன்.)
இதை சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், முஹம்மத் பின் ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (அஷ்ஹது (உறுதிமொழிகிறேன்) என்பதற்கு பதிலாக) வ அன அஷ்ஹது (நானும் உறுதிமொழிகிறேன்) என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 8 தொழுகை அறிவிப்புச் செய்வதன் (பாங்கு) சிறப்பும், தொழுகை அறிவிப்பைக் கேட்கும் போது ஷைத்தான் வெருண்டோடுவதும்.**

631 ஈசா பின் தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் முஆவியா பின் அபீசுஃப்யான் (ரலி) அவர்களுடன் இருந்தேன். அப்போது அவர்களைத் தொழுகைக்கு அழைப்பதற்காக அவர்களிடம் அழைப்பாளர் (முஅத்தின்) வந்தார். அப்போது முஆவியா (ரலி) அவர்கள்,மறுமை நாளில் மக்களிலேயே நீண்ட கழுத்து உடையவர்களாகத் தொழுகை அறிவிப்பாளர்கள் காணப்படுவார்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டிருக்கிறேன் என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் முஆவியா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

632 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகை அறிவிப்பை ஷைத்தான் செவியுற்றால் ரவ்ஹா எனும் இடம்வரை அவன் (வெருண்டோடிச்) சென்றுவிடுவான்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அறிவிப்பாளர்களில் ஒருவரான சுலைமான் பின் மிஹ்ரான் அல்அஃமஷ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த அபூசுஃப்யான் தல்ஹா பின் நாஃபிஉ (ரஹ்) அவர்களிடம் அ(ந்த ரவ்ஹா எனும் இடத்)தைப் பற்றி நான் கேட்டேன். அதற்கு அவர்கள், அது மதீனாவிலிருந்து முப்பத்தாறு மைல் தொலைவிலுள்ள ஓர் இடமாகும் என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

633 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகை அறிவிப்பை ஷைத்தான் செவியுற்றால் அந்தச் சப்தத்தை கேட்காமலிருப்பதற்காக வாயு வெளியேறிய வண்ணம் (வெகு தூரம்) வெருண்டோடுகிறான். தொழுகை அறிவிப்பு முடிந்ததும் மீண்டும் (பள்ளிவாசலுக்கு) வந்து (தொழக்கூடியவர்களின் உள்ளத்தில்) ஊசலாட்டத்தை ஏற்படுத்துகிறான். இகாமத் சொல்லும் சப்தத்தைக் கேட்கும்போது அந்தச் சப்தத்தை கேட்காமலிருப்பதற்காக (மீண்டும் வெகுதூரம்) வெருண்டோடுகிறான். இகாமத்

சொல்லி முடிந்ததும் மீண்டும் (பள்ளிவாசலுக்கு) வந்து (தொழக்கூடியவர்களின் உள்ளத்தில்) ஊசலாட்டத்தை ஏற்படுத்துகிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

634 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகை அறிவிப்புச் செய்பவர் அறிவிப்புச் செய்ய ஆரம்பித்தால் ஷைத்தான் வாயு வெளியேறிய வண்ணம் புறமுதுகுகிட்டு ஓடுகிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

635 சுஹைல் பின் அபீஸாலிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) என் தந்தை (அபூஸாலிஹ்) என்னை பனூ ஹாரிஸா கூட்டத்தாரிடம் அனுப்பினார்கள். என்னுடன் எங்களுடைய அடிமை ஒருவரும் அல்லது எங்களுடைய நண்பர் ஒருவரும் வந்திருந்தார். அப்போது என்னுடன் வந்தவரின் பெயரைக் குறிப்பிட்டு ஒரு சுவருக்கு அப்பாலிருந்து ஒருவர் அவரை அழைத்தார். என்னுடன் வந்தவர் அந்தச் சுவரின் மீதேறிப் பார்த்தபோது அங்கு யாரும் தென்படவில்லை. பின்னர் இதைப் பற்றி என் தந்தையிடம் குறிப்பிட்டேன். அப்போது அவர்கள், இப்படி ஒரு நிலையை நீ சந்திக்க நேரிடும் என்று நான் உணர்ந்திருந்தால் உன்னை நான் அனுப்பியிருக்கமாட்டேன். எனினும், (இது போன்ற) சப்தத்தை நீ கேட்டால் தொழுகை அறிவிப்பை நீ சப்தமாகக் கூறு. ஏனெனில், தொழுகை அறிவிப்புச் செய்யப்பட்டால் ஷைத்தான் வாயு வெளியேறிய வண்ணம் வெருண்டோடுவான் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துக் கொண்டிருந்ததை நான் கேட்டுள்ளேன் என்று கூறினார்கள்.

636 நபி (ஸல்) அவர்கள் கூறியதாவது:
தொழுகைக்காக அறிவிப்புச் செய்யப்பட்டால் ஷைத்தான் தொழுகை அறிவிப்பைக் கேட்காமலிருப்பதற்காக வாயு வெளியேறிய வண்ணம் (வெகு தூரத்திற்கு) பின்வாங்கி ஓடுகிறான். தொழுகை அறிவிப்பு முடிந்ததும் மீண்டும் (பள்ளிவாசலுக்கு) வருகிறான். பின்னர் இகாமத் சொல்லப்பட்டால் பின்வாங்கி ஓடுகிறான். இகாமத் சொல்லி முடிக்கப் பட்டதும் (திரும்பவும் பள்ளிவாசலுக்கு) வந்து, (தொழுது கொண்டிருக்கும்) மனிதரின் உள்ளத்தில் ஊசலாட்டத்தைப் போடுகிறான். அவரிடம் இன்ன இன்னதை நினை என்று தொழுகைக்கு முன்பு அவரது நினைவில் வராதவற்றையெல்லாம் (தொழுகையில் நினைத்துப் பார்க்கும்படி) கூறுகிறான். இறுதியில், அந்த மனிதருக்குத் தாம் எத்தனை ரக்அத்கள் தொழுதோம் என்பதேகூடத் தெரியாமல் போய்விடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

637 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் (அந்த மனிதருக்குத் தாம் எத்தனை ரக்அத்கள் தொழுதோம் என்பதேகூடத் தெரியாமல் போய்விடும் என்பதற்கு பதிலாக) அந்த மனிதருக்குத் தாம் எப்படித் தொழுதோம் என்பதேகூடத் தெரியாமல் போய்விடும் என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம்: 9 (தொழுகையின் தொடக்கத்தில் சொல்லப்படும்) தக்பீரத்துல் இஹ்ராம், ருகூஉவிற்குச் செல்லும்போதும் ருகூஉவிலிருந்து எழும்போதும் சொல்லப்படும் தக்பீர் ஆகியவற்றின்போது இரு கைகளையும் தோளுக்கு நேராக உயர்த்துவது விரும்பத் தக்கதாகும். சஜ்தாவிலிருந்து எழும்போது அவ்வாறு கைகளை உயர்த்தலாகாது.**

638 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை ஆரம்பிக்கும்போது தம் தோள்களுக்கு நேராக தம்மிரு கைகளையும் உயர்த்துவதை நான் பார்த்திருக்கிறேன். மேலும், ருகூஉ செய்வதற்கு முன்பும் ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தும்போதும் (அவ்வாறு செய்வார்கள்). இரண்டு சஜ்தாக்களுக்கு மத்தியில் கைகளை உயர்த்தமாட்டார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

639 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகைக்காக நின்றால் தம்மிரு கைகளையும் தம் தோள்களுக்கு நேராக இருக்கும் வகையில் உயர்த்திய பின் (அல்லாஹு அக்பர் என்று) தக்பீர் கூறுவார்கள். ருகூஉச் செய்ய விரும்பும்போதும், ருகூஉவிலிருந்து நிமிரும்போதும் அவ்வாறு செய்வார்கள். சஜ்தாலிருந்து தலையை உயர்த்தும்போது அவ்வாறு செய்ய மாட்டார்கள்.

640 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறியதாக இடம்பெற்றுள்ளது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகைக்காக நின்றால் தம்மிரு கைகளையும் தம் தோள்களுக்கு நேராக இருக்கும் வகையில் உயர்த்திய பின் (அல்லாஹு அக்பர் என்று) தக்பீர் சொல்வார்கள்.

641 அபூகிலாபா (அப்துல்லாஹ் பின் ஸைத் பின் அம்ர்-ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மாலிக் பின் அல்ஹுவைரிஸ் (ரலி) அவர்கள் தொழ ஆரம்பித்தால் (அல்லாஹு அக்பர் என்று) தக்பீர் சொல்லி தம்மிரு கைகளை உயர்த்துவதையும், அவர்கள் ருகூஉச் செய்ய விரும்பும்போதும், ருகூஉவிலிருந்து தமது தலையை உயர்த்தும்போதும் தம்மிரு கைகளை உயர்த்துவதையும் நான் பார்த்திருக்கிறேன். மேலும் அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறுதான் செய்துகொண்டிருந்தார்கள் என்று கூறினார்கள்.

642 மாலிக் பின் அல்ஹுவைரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுகையில் ஆரம்பத்) தக்பீர் சொல்லும்போதும், ருகூஉ செய்யும்போதும் தம்மிரு கைகளையும் தம் காதுகளுக்கு நேராக உயர்த்துவார்கள். ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தும்போது சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் (அல்லாஹ் தன்னைப் புகழ்வோரின் புகழுரையை ஏற்கிறான்) என்று கூறும்போதும் அதைப் போன்றே கைகளை உயர்த்துவார்கள்.

643 மாலிக் பின் அல்ஹுவைரிஸ் (ரலி) அவர்களிடமிருந்து கத்தாதா (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், நபி (ஸல்) அவர்கள் தம்மிரு காதுகளின் கீழ் முனைகளுக்கு நேராக இரு கைகளையும் உயர்த்தியதை நான் கண்டேன் என (மாலிக் பின் அல்ஹுவைரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாக) இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 10 தொழுகையில் ஒவ்வொரு முறை குனியும்போதும் நிமிரும்போதும் (அல்லாஹு அக்பர் என்று) தக்பீர் கூற வேண்டும். ருகூஉவிலிருந்து நிமிரும் போது மட்டும் சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் (தன்னைப் புகழ்வோரின் புகழுரையை அல்லாஹ் ஏற்கின்றான்) என்று கூற வேண்டும்.**

644 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(நபித்தோழர்) அபூஹுரைரா (ரலி) அவர்கள் மக்களுக்குத் தொழுவித்துவந்தார்கள். ஒவ்வொரு முறை குனியும்போதும் நிமிரும் போதும் அன்னார் தக்பீர் கூறுவார்கள். தொழுது முடிந்ததும் அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களிலேயே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுததைப் போன்று தொழுகின்றவன் நானே என்று கூறுவார்கள்.

645 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகைக்காக நின்றவுடன் (ஆரம்பத்தில்) தக்பீர் கூறுவார்கள். பிறகு ருகூஉச் செய்யும்போதும் தக்பீர் கூறுவார்கள். பின்பு ருகூஉவிலிருந்து முதுகை நிமிர்த்தும் போது சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் (தன்னைப் புகழ்வோரின் புகழுரையை அல்லாஹ் ஏற்கின்றான்) என்று கூறுவார்கள். பின்பு நிலைக்கு வந்து ரப்பனா வ லக்கல் ஹம்து (எங்கள் இறைவா! புகழனைத்தும் உனக்கே உரியது) என்று கூறுவார்கள். பிறகு சஜ்தாவுக்காகச் சரியும்போதும் தக்பீர் கூறுவார்கள். பின்பு (சஜ்தாவிலிருந்து) தலையை உயர்த்தும்போதும் தக்பீர் கூறுவார்கள். பிறகு (இரண்டாவது) சஜ்தாவுக்குச் செல்லும்போதும், பின்னர் (சஜ்தாவிலிருந்து) தலையை உயர்த்தும்போதும் தக்பீர் கூறுவார்கள். பின்பு தொழுது முடிக்கும்வரை இவ்வாறே தொழுகையின் எல்லா ரக்அத்களிலும் செய்வார்கள். இரண்டாவது ரக்அத்தில் அமர்ந்துவிட்டு எழும்போதும் தக்பீர் கூறுவார்கள் என்று கூறினார்கள்.
பிறகு உங்களிலேயே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுததைப் போன்று தொழுகின்றவன் நானே என்று அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.
இதை அபூபக்ர் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

646 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகைக்காக நின்றவுடன் தக்பீர் கூறுவார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது.
ஆனால், உங்களிலேயே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுததைப் போன்று தொழுகின்றவன் நானே என அபூஹுரைரா (ரலி) அவர்கள் குறிப்பிட்டது அதில் இடம் பெறவில்லை.

647 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மர்வான் பின் ஹகம் என்பார், அபூஹுரைரா (ரலி) அவர்களை மதீனாவின் ஆளுநராக நியமித்த காலகட்டத்தில் அபூஹுரைரா (ரலி) அவர்கள் தொழுவிக்கத் துவங்கும்போது தக்பீர் (தஹ்ரீம்) கூறுவார்கள் என்று தொடங்கி முந்தைய ஹதீஸைப் போன்றே (645) குறிப்பிட்டுள்ளார்கள்.
மேலும் இந்த அறிவிப்பில், தொழுது முடித்துவிட்டு சலாம் கொடுத்ததும் பள்ளிவாசலில் இருப்பவர்களை முன்னோக்கி அமர்ந்துகொண்டு என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுததைப் போன்று தொழுகின்றவன் நானே என்று அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று காணப்படுகிறது.

648 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் தொழுகையில் ஒவ்வொரு முறை நிமிரும்போதும் குனியும்போதும் தக்பீர் கூறிக்கொண்டிருந்தார்கள். (தொழுகை முடிந்ததும் அவர்களிடம்) நாங்கள், அபூஹுரைரா! இது என்ன தக்பீர்? என்று கேட்டோம். அதற்கு அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தொழுகை இவ்வாறுதான் அமைந்திருந்தது என்று பதிலளித்தார்கள்

649 அபூஸாலிஹ் தக்வான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் (தொழுகையில்) ஒவ்வொரு முறை குனியும்போதும் நிமிரும்போதும் தக்பீர் கூறிவந்தார்கள். மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்துவந்ததாகவும் அறிவிப்பார்கள்.

650 முதர்ரிஃப் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நானும் இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களும் அலீ பின் தாலிப் (ரலி) அவர்களுக்குப் பின்னால் (நின்று அவர்களைப் பின்பற்றித்) தொழுதோம். அலீ (ரலி) அவர்கள் சஜ்தாவுக்காகக் குனியும்போது தக்பீர் கூறினார்கள். (சஜ்தாவிலிருந்து) தலையை உயர்த்தும்போதும் தக்பீர் கூறினார்கள். இரண்டாவது ரக்அத்திலிருந்து எழும்போதும் தக்பீர் கூறினார்கள். நாங்கள் தொழுகையை முடித்துத் திரும்பியதும் இம்ரான் (ரலி) அவர்கள் (மகிழ்ச்சியுடன்) எனது கையைப் பிடித்து நமக்கு இவர் முஹம்மத் (ஸல்) அவர்களின் தொழுகையைப் போன்றே தொழுவித்தார் அல்லது இவர் முஹம்மத் (ஸல்) அவர்களின் தொழுகையை எனக்கு நினைவுபடுத்திவிட்டார் என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 11 (தொழுகையில்) ஒவ்வொரு ரக்அத்திலும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதுவது கட்டாயமாகும். ஒருவருக்கு அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை முறைப்படி ஓதத் தெரியாமலும் அதைக் கற்றுக்கொள்ள முடியாமலும் போனால் அவருக்குத் தெரிந்த இதர இறைவசனங்களை அவர் ஓதிக்கொள்ளலாம்.**

651 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குர்ஆனின் தோற்றுவாய் (எனப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை) ஓதாதவருக்குத் தொழுகையே இல்லை.
இதை உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

652 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குர்ஆனின் அன்னை (எனப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை) ஓதாதவருக்குத் தொழுகையே இல்லை.
இதை உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

653 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குர்ஆனின் அன்னை (எனப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை) ஓதாதவருக்குத் தொழுகையே இல்லை.
இதை உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள் என மஹ்மூத் பின் அர்ரபீஉ (ரலி) அவர்கள் கூறினார்கள். (மஹ்மூத் சிறுவராக இருந்தபோது) அவர்களது கிணற்றிலிருந்து தண்ணீர் அள்ளி (வாயில் செலுத்திய பின்) அவரது முகத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (செல்லமாக) உமிழ்ந்தார்கள்.

654 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் (குர்ஆனின் அன்னை எனப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தையும்) அதற்கு மேலாகவும் ஓதாதவருக்குத் தொழுகையே கிடையாது என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

655 அப்துர் ரஹ்மான் பின் யஅகூப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் குர்ஆனின் அன்னை (எனப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை) ஓதாமல் தொழுதவரின் தொழுகை குறையுள்ள தொழுகையாகும்; நிறைவு பெறாததாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அறிவித்தார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் நாங்கள் இமாமக்குப் பின்னால் தொழுது கொண்டிருக்கிறோம் (அப்போதுமா ஓத வேண்டும்)? என்று கேட்கப்பட்டது. அதற்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்: அதை உங்களுடைய மனதில் ஓதிக்கொள்ளுங்கள். ஏனெனில், அல்லாஹ் கூறியதாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

தொழுகை(யில் ஓதப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயம்)தனை எனக்கும் என் அடியானுக்குமிடையே (துதித்தல்,பிரார்த்தித்தல் ஆகிய) இரு பகுதிகளாகப் பிரித்துள்ளேன். என் அடியான் கேட்டது அவனுக்குக் கிடைக்கும். அடியான் அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன் (அனைத்துலகின் அதிபதியான அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்) என்று சொன்னால் மிக்க மேலான அல்லாஹ், என் அடியான் என்னைப் புகழ்ந்து விட்டான் என்று கூறுவான். அடியான் அர்ரஹ்மானிர் ரஹீம் (அவன் அளவிலா அருளாளன்; நிகரிலா அன்புடையோன்) என்று சொன்னால் மிக்க மேலான அல்லாஹ், என் அடியான் என்னைத் துதித்துவிட்டான் என்று கூறுவான். அடியான் மாலிக்கி யவ்மித்தீன் (தீர்ப்பு நாளின் அதிபதி) என்று சொன்னால், அல்லாஹ், என் அடியான் என்னைக் கண்ணியப்படுத்திவிட்டான் என்று கூறுவான். (நபி (ஸல்) அவர்கள் சில வேளைகளில் என் அடியான் தன் காரியங்களை என்னிடம் ஒப்படைத்துவிட்டான் என்றும் கூறியுள்ளார்கள்.)
மேலும், அடியான் இய்யாக்க நஅபுது வ இய்யாக்க நஸ்தஈன் (உன்னையே நாங்கள் வணங்குகிறோம். உன்னிடமே நாங்கள் உதவி தேடுகிறோம்) என்று சொன்னால், அல்லாஹ், இது எனக்கும் என் அடியானுக்கும் இடையே உள்ளது. என் அடியானுக்கு அவன் கேட்டது கிடைக்கும் என்று கூறுவான். அடியான் இஹ்தினஸ் ஸிராத்தல் முஸ்தகீம். ஸிராத் தல்லதீன அன்அம்த்த அலைஹிம், ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம் வலள் ளால்லீன் (எங்களுக்கு நீ நேரான வழியைக் காட்டுவாயாக. அவ்வழி உன்னுடைய அருளைப் பெற்றவர்களின் வழி. உன்னுடைய கோபத்திற்கு ஆளானவர்கள் வழியுமல்ல; வழிதவறியோரின் வழியுமல்ல) என்று சொன்னால், அல்லாஹ் இது என் அடியானுக்கு உரியது. என் அடியானுக்கு அவன் கேட்டது கிடைக்கும் என்று கூறுவான்.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை அலாஉ பின் அப்திர் ரஹ்மான் பின் யஅகூப் (ரஹ்) அவர்கள் எனக்கு அறிவித்தார்கள். அன்னார் தமது இல்லத்தில் நோயுற்றிருந்தபோது அவர்களைச் சந்திக்க நான் சென்றிருந்தேன். அப்போது நானே இந்த ஹதீஸ் குறித்து அன்னாரிடம் கேட்டேன்.

656 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

657 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
இவ்விரு அறிவிப்புகளிலும் தொழுகை(யில் ஓதப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயம்)தனை எனக்கும் என் அடியானுக்குமிடையே இரு பகுதிகளாகப் பிரித்திருக்கிறேன். அதில் ஒரு பகுதி எனக்கும் மற்றொரு பகுதி என் அடியானுக்கும் உரியதாகும் என்று அல்லாஹ் கூறினான் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

658 அலாஉ பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என் தந்தை (அப்துர் ரஹ்மான் பின் யஅகூப்-ரஹ்) அவர்களும் அபுஸ்ஸாயிப் (ரஹ்) அவர்களும் அபூஹுரைரா (ரலி) அவர்களுடைய நண்பர்களாக இருந்தனர். அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாக அவ்விருவரும் கூறினர்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: குர்ஆனின் தோற்றுவாய் (எனப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை) ஓதாமல் தொழுதவரின் தொழுகை குறையுள்ளதாகும். இதை மூன்று முறை கூறினார்கள்.

659 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(குர்ஆனின் வசனங்களை) ஓதாமல் தொழுகையே கிடையாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்த ரக்அத்தில் சப்தமிட்டு ஓதினார்களோ அந்த ரக்அத்தில் நாங்களும் சப்தமிட்டு ஓதுகிறோம். அவர்கள் எந்த ரக்அத்தில் சப்தமின்றி அமைதியாக ஓதினார்களோ அந்த ரக்அத்தில் நாங்களும் சப்தமின்றி அமைதியாக ஓதுகிறோம்.

660 அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையில் ஒவ்வொரு ரக்அத்திலும் குர்ஆன் வசனங்களை ஓதுவார்கள். அவர்கள் எந்த ரக்அத்தில் எங்களுக்குக் கேட்கும்படி சப்தமிட்டு ஓதினார்களோ (அதைப் போன்றே) நாங்களும் அந்த ரக்அத்தில் உங்களுக்குக் கேட்கும்படி சப்தமாக ஓதுகிறோம். அவர்கள் எந்த ரக்அத்தில் எங்களுக்குக் கேட்காத வகையில் அமைதியாக ஓதினார்களோ (அதைப் போன்றே) நாங்களும் அந்த ரக்அத்தில் உங்களுக்குக் கேட்காத வகையில் அமைதியாக ஓதுகிறோம் என்று கூறினார்கள்.
அப்போது அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர், (தொழுகையில்) குர்ஆனின் அன்னை (எனப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை)விடக் கூடுதலாக (எதையும்) நான் ஓதாமலிருந்தால்...? என்று கேட்டார். அதற்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள் அதைவிட அதிகமாக ஓதினால் அது உமக்குச் சிறந்ததாகும். அத்துடன் முடித்துக்கொண்டாலும் அது உமக்குப் போதுமானதாகிவிடும் என்று பதிலளித்தார்கள்.

661 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
தொழுகையில் ஒவ்வொரு ரக்அத்திலும் குர்ஆன் வசனங்களை ஓத வேண்டும். நபி (ஸல்) அவர்கள் எந்த ரக்அத்தில் எங்களுக்குக் கேட்கும்படி சப்தமாக ஓதினார்களோ அந்த ரக்அத்தில் நாங்களும் உங்களுக்குக் கேட்கும்படி சப்தமாக ஓதுகிறோம். அவர்கள் எந்த ரக்அத்தில் எங்களுக்குக் கேட்காத வகையில் சப்தமின்றி அமைதியாக ஓதினார்களோ நாங்களும் அந்த ரக்அத்தில் உங்களுக்குக் கேட்காத வகையில் அமைதியாக ஓதுகிறோம். ஒருவர் குர்ஆனின் அன்னை (எனப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை) மட்டும் ஓதுவது போதுமானதாகும். அதைவிட அதிமாக ஓதுவது சிறப்பிற்குரியதாகும்.

662 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலுக்கு வந்தார்கள். அப்போது ஒரு மனிதர் பள்ளிவாசலுக்கு வந்து (அவசரமாக அவசரமாக) தொழலானார். (தொழுது முடித்ததும்) அவர் வந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு சலாம் சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதில் சலாம் சொல்லிவிட்டு நீர் திரும்பச் சென்று தொழுவீராக. ஏனெனில், நீர் முறையாகத் தொழவில்லை என்று சொன்னார்கள்.

அந்த மனிதர் திரும்பிப்போய் முன்பு தொழுததைப் போன்றே மீண்டும் தொழுதுவிட்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்து சலாம் சொன்னார். அப்போதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வ அலைக்கஸ் ஸலாம் (உன் மீதும் சாந்தி நிலவட்டும்) என்று பதில் சலாம் சொல்லிவிட்டு, நீர் (முறையாகத்) தொழவில்லை. எனவே, திரும்பச் சென்று தொழுவீராக என்று கூறினார்கள். இவ்வாறு மூன்று தடவை நடந்தது. பிறகு அந்த மனிதர் சத்திய (மார்க்க)த்துடன் தங்களை அனுப்பியவன் மீதாணையாக! இதைவிடச் சிறந்த முறையில் எனக்குத் தொழத் தெரியாது. எனவே, எனக்கு (தொழுகை முறையை)க் கற்றுத்தாருங்கள் என்று கேட்டார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நீர் தொழுகைக்கு நின்றதும் (அல்லாஹு அக்பர் என்று) தக்பீர் கூறுவீராக. பிறகு குர்ஆனில் உமக்குத் தெரிந்ததை ஓதிக்கொள்வீராக. பிறகு (குனிந்து) ருகூஉச் செய்வீராக. அதில் (சற்று நேரம்) நிலைகொள்வீராக. பின்னர் தலையை உயர்த்தி நேராக நிற்பீராக. பிறகு சிரவணக்கம் (சஜ்தா) செய்வீராக. அதில் சற்று நேரம் நிலைகொள்வீராக. பின்னர் தலையை உயர்த்தி (சற்று நேரம்) நன்றாக அமர்வீராக. பிறகு இதே (நடை)முறையை உமது தொழுகை முழுவதிலும் கடைப்பிடிப்பீராக என்று சொன்னார்கள்.

663 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

ஒரு மனிதர் (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலுக்குள் நுழைந்து தொழுதார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பள்ளிவாசலின்) ஓர் ஓரத்தில் இருந்தார்கள்.

மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

மேலும் அதில் நீர் தொழ நினைத்தால் (முதலில்) பரிபூரணமாக அங்கத் தூய்மை (உளூ) செய்வீராக. பிறகு கிப்லாவை முன்னோக்கித் தக்பீர் கூறுவீராக என்று அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 12 இமாமைப் பின்பற்றித் தொழக்கூடியவர் சப்தமாக (குர்ஆன் வசனங்களை) ஓதலாகாது.

664 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு லுஹர் தொழுகை அல்லது அஸ்ர் தொழுகை தொழுவித்தார்கள். (தொழுது முடித்ததும்) அவர்கள், சப்பிஹிஸ்மரப்பிக்கல் அஃலா (மிக்க மேலான உம்முடைய இறைவனின் பெயரைத் துதிப்பீராக!) என்று தொடங்கும் (குர்ஆனின் 87ஆவது) அத்தியாயத்தை எனக்குப் பின்னால் (நின்று) ஓதியவர் யார்? என்று கேட்டார்கள். அப்போது ஒரு மனிதர் நான்தான் (ஓதினேன்). நன்மையை நாடியே அவ்வாறு செய்தேன் என்றார். (பிறகு மக்களிடம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உங்களில் சிலர் (சப்தமாக) ஓதுவதன் மூலம் (என்னை ஓதவிடாமல்) என்னுடன் தகராறு செய்வதாக நான் அறிந்தேன். (எனவே, உங்களில் எவரும் எனக்குப் பின்னால் நின்று தொழும்போது சப்தமாக ஓத வேண்டாம்) என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

665 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் லுஹ்ர் தொழுகை தொழுவித்தார்கள். அப்போது அவர்களுக்குப் பின்னால் (தொழுது கொண்டிருந்த) ஒரு மனிதர் சப்பிஹிஸ்ம ரப்பிகல் அஃலா (என்று தொடங்கும் 87ஆவது) அத்தியாயத்தை ஓதலானார். தொழுகையை முடித்துத் திரும்பியபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களில் (எனக்குப் பின்னால் நின்று சப்தமாக) ஓதியவர் யார்? அல்லது உங்களில் ஓதிக்கொண்டிருந்தவர் யார்? என்று கேட்டார்கள். அப்போது ஒரு மனிதர் நான்தான் (ஓதினேன்) என்றார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,உங்களில் சிலர் (எனக்குப் பின்னால் சப்தமிட்டு) ஓதுவதன் மூலம் (என்னை ஓதவிடாமல்) என்னுடன் அவர் தகராறு செய்வதாக எண்ணி விட்டேன். (எனவே, உங்களில் யாரும் எனக்குப் பின்னால் நின்று சப்தமாக ஓத வேண்டாம்) என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

666 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களிடமிருந்து கத்தாதா (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் லுஹ்ர் தொழுகை தொழுவித்தார்கள். (தொழுகை முடிந்ததும்) உங்களில் சிலர் (குர்ஆன் வசனங்களை சப்தமாக) ஓதுவதன் மூலம் (என்னை ஓதவிடாமல்) என்னுடன் தகராறு செய்வதாக அறிந்தேன் (எனவே, உங்களில் யாரும் எனக்குப் பின்னால் நின்று சப்தமாக ஓத வேண்டாம்) என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## பாடம் : 13 (தொழுகையில்) பிஸ்மில்லாஹ்வை சப்தமிட்டு ஓதலாகாது என்று கூறுவோரின் ஆதாரம்.

667 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) மற்றும் உஸ்மான் (ரலி) ஆகியோருடன் (அவர்களுக்குப் பின்னால் நின்று) நான் தொழுதிருக்கிறேன். அவர்களில் யாருமே பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்பதை (சப்தமாக) ஓதியதை நான் கேட்டதில்லை.
இதை கத்தாதா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

668 கத்தாதா (ரஹ்) அவர்களிடமிருந்து ஷுஅபா (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் ஷுஅபா ரஹ்) அவர்கள் (பின்வருமாறு) அதிகப்படியாக அறிவித்துள்ளார்கள்:
நான் கத்தாதா (ரஹ்) அவர்களிடம், நீங்கள் இந்த ஹதீஸை அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து (நேரடியாகச்) செவியுற்றீர்களா? என்று கேட்டேன். அதற்கு கத்தாதா

(ரஹ்) அவர்கள், ஆம். அது குறித்து நாங்கள் அனஸ் (ரலி) அவர்களிடம் கேட்(டுத் தெரிந்துகொண்)டோம் என்று பதிலளித்தார்கள்.

669 அப்தா பின் அபீலுபாபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் (தொழுகையின் தொடக்கத்தில் தக்பீர் கூறிய பின்) சுப்ஹானகல்லாஹும்ம வ பி ஹம்திக்க, தபாரக்கஸ்முக்க, வ தஆலா ஜத்துக்க, வலா இலாஹ ஃகைருக்க என்று சப்தமிட்டுக் கூறுவார்கள்.
(பொருள்: இறைவா! உன்னைத் துதித்துப் போற்றுகிறேன். உனது பெயர் சுபிட்சம் வாய்ந்தது. உனது பெருமை உயர்வானது. உன்னைத் தவிர வேறு இறைவனில்லை.)
அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) மற்றும் உஸ்மான் (ரலி) ஆகியோருக்குப் பின்னால் (நின்று) நான் தொழுதிருக்கிறேன். அவர்கள் (அனைவரும்) அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்... என்று ஓதியே (தொழுகையை) ஆரம்பித்து வந்தார்கள். அவர்கள் (அதை) ஓதுவதற்கு முன்போ, பின்போ பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்று கூறமாட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.
அதில், இந்த ஹதீஸை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்து செவியேற்றேன் என இஸ்ஹாக் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

**பாடம் : 14 பிஸ்மில்லாஹ் குர்ஆனிலுள்ள ஒவ்வோர் அத்தியாயத்தின் முதல் வசனமாகும்; (9ஆவது அத்தியாயமான) பராஅத்(அத்தவ்பா) அத்தியாயத்தைத் தவிர என்று கூறுவோரின் ஆதாரம்.**

670 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே இருந்தார்கள். அப்போது அவர்கள் (திடீரென) உறங்கிவிட்டார்கள். (சிறிது நேரத்திற்குப்) பிறகு புன்னகைத்தவர்களாகத் தமது தலையை உயர்த்தினார்கள். அப்போது நாங்கள், அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் சிரிக்கக் காரணம் என்ன? என்று கேட்டோம். அதற்கு அவர்கள், சற்று முன் (குர்ஆனின் 108ஆவது அத்தியாயமான அல்கவ்ஸர் எனும்) ஓர் அத்தியாயம் எனக்கு அருளப்பெற்றது என்று கூறிவிட்டு அந்த அத்தியாயத்தை (பின்வருமாறு) ஓதிக் காட்டினார்கள்:
பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம். இன்னா அஃத்தைனாகல் கவ்ஸர். ஃபஸல்லி லி ரப்பிக்க வன்ஹர். இன்ன ஷானிஅக்க ஹுவல் அப்தர்.
(பொருள்: அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்... (நபியே!) நிச்சயமாக நாம் உமக்கு அல்கவ்ஸரை நல்கியுள்ளோம். எனவே, உம்முடைய இறைவனைத் தொழுது, குர்பானியும் கொடுப்பீராக! நிச்சயமாக உம்முடைய பகைவன்தான் சந்ததியற்றவன்.)
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அல்கவ்ஸர் என்றால் என்ன? என்று உங்களுக்குத் தெரியுமா? என்று கேட்டார்கள். அதற்கு நாங்கள், அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே அறிந்தவர்கள் என்று பதிலளித்தோம். அவர்கள்,அது ஒரு (சொர்க்க)நதி.

என்னுடைய இறைவன் (மறுமை நாளில்) அதை(த்தருவதாக) எனக்கு வாக்களித்துள்ளான்; அதில் அபரிமிதமான நன்மைகள் உள்ளன. அது ஒரு நீர் தடாகம்; மறுமை நாளில் என்னுடைய சமுதாயத்தார் (தண்ணீர் அருந்துவதற்காக) அதை நோக்கி வருவார்கள். அதன் குவளைகள் நட்சத்திரங்களின் எண்ணிக்கையைப் போன்று (அதிகமாகக்) காணப்படும். அப்போது அவர்களில் ஓர் அடியார் (தண்ணீர் அருந்தவிடாமல்) தடுக்கப்படுவார். உடனே நான், இறைவா! அவர் என் சமுதாயத்தாரில் ஒருவர். (அவர் ஏன் தடுக்கப்படுகிறார்?) என்று கேட்பேன். அதற்கு இறைவன், உங்கள் சமுதாயம் உங்களுக்குப் பின்னால் புதிது புதிதாக உருவாக்கிவிட்டதை நீங்கள் அறியமாட்டீர்கள் என்று கூறுவான்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு ஹுஜ்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே இருந்தார்கள் என்பதற்கு பதிலாக) எங்களிடையே பள்ளிவாசலில் இருந்தார்கள் என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது. மேலும், (உங்கள் சமுதாயம் உங்களுக்குப் பின்னால் புதிது புதிதாக உருவாக்கிவிட்டதை என்பதற்கு பதிலாக) அந்த மனிதர் உங்களுக்குப் பின்னால் புதிது புதிதாக உருவாக்கிவிட்டதை என்று இடம் பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், அது ஒரு நதி. என்னுடைய இறைவன் சொர்க்கத்தில் அதை(த் தருவதாக) எனக்கு வாக்களித்துள்ளான்; அதில் ஒரு நீர் தடாகம் உள்ளது என்று (நபி (ஸல்) அவர்கள் கூறியதாக) இடம் பெற்றுள்ளது. ஆனால், அதன் குவளைகள் நட்சத்திரங்களின் எண்ணிக்கையைப் போன்று (அதிகமாகக்) காணப்படும் எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 15 (தொழுகையின் ஆரம்பத்தில்) தக்பீரத்துல் இஹ்ராம் கூறிய பின் நெஞ்சுக்குக் கீழ் தொப்புளுக்கு மேல் உள்ள பகுதியில் இடக் கைமீது வலக் கையை வைப்பதும், சஜ்தாவில் தோள்களுக்கு நேராக நிலத்தில் இரு கைகளையும் (விரித்து) வைப்பதும் (விரும்பத் தக்கதாகும்).**

671 வாயில் பின் ஹுஜ்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் தொழுகையை ஆரம்பித்தபோது தம்மிரு கைகளையும் உயர்த்தித் தக்பீர் கூறியதை நான் பார்த்தேன்.

-இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹம்மாம் (ரஹ்) அவர்கள் இரு காதுகளுக்கு நேராக என்று விவரித்தார்கள்.–

பின்னர் தமது ஆடையால் (இரு கைகளையும்) மூடி இடக் கையின் மீது வலக் கையை வைத்தார்கள். அவர்கள் ருகூஉச் செய்ய விரும்பியபோது தம் கைகளை ஆடையிலிருந்து வெளியே எடுத்துப் பின்னர் அவற்றை உயர்த்தித் தக்பீர் கூறி ருகூஉச் செய்தார்கள். (ருகூஉவிலிருந்து நிமிரும்போது) சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறுகையில் (முன் போன்றே) தம்மிரு கைகளையும் உயர்த்தினார்கள். பிறகு சஜ்தாச் செய்யும்போது தம்மிரு உள்ளங்கை(ளை நிலத்தில் வைத்து அவை)களுக்கிடையே (நெற்றியை வைத்து) சஜ்தாச் செய்தார்கள்.

## பாடம் : 16 தொழுகையில் அத்தஹிய்யாத் ஓதுவது.

672 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பின்தொடர்ந்து தொழுகையில் (அமர்வில்) அஸ்ஸலாமு அலல்லாஹ், அஸ்ஸலாமு அலா ஃபுலான் (அல்லாஹ்வுக்குச் சாந்தி உண்டாகட்டும்: இன்னாருக்குச் சாந்தி உண்டாகட்டும்) என்று கூறிவந்தோம். இதைக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நாள் எங்களிடம்,நிச்சயமாக அல்லாஹ்வே சலாம் (சாந்தியளிப்பவன்) ஆவான். எனவே, நீங்கள் தொழுகையி(ன் இருப்பி)ல் அமர்ந்தால் அத்தஹிய்யாத்து லில்லாஹி வஸ்ஸலவாத்து வத்தய்யிபாத்து, அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹந் நபிய்யு, வ ரஹ்மத்துல்லாஹி வ பரக்காத்துஹு. அஸ்ஸலாமு அலைனா வ அலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன் (சொல்,செயல், பொருள் சார்ந்த எல்லாக் காணிக்கைகளும் வணக்கங்களும் பாராட்டுகளும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே! உங்கள்மீது சாந்தியும் அல்லாஹ்வின் அருளும் சுபிட்சமும் உண்டாகட்டுமாக! எங்கள்மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீதும் சாந்தி உண்டாகட்டும்!) என்று கூறுங்கள். இவ்வாறு நீங்கள் கூறினாலே வானம் பூமியிலுள்ள நல்லடியார்கள் அனைவருக்கும் சலாம் கூறியதாகும். மேலும், அஷ்ஹது அல் லாயிலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வ ரசூலுஹு (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்று நான் உறுதிமொழிகிறேன். மேலும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவார்கள் என்றும் நான் உறுதி கூறுகிறேன்) என்றும் கூறுங்கள். பிறகு நீங்கள் விரும்பியவற்றை (அல்லாஹ்விடம்) கோரிப் பிரார்த்திக்கலாம் என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

673 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்து அபூவாயில் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.அவற்றில் பிறகு நீங்கள் விரும்பியவற்றை (அல்லாஹ்விடம்) கோரிப் பிரார்த்திக்கலாம் எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

674 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் பிறகு நீங்கள் நாடியவற்றை அல்லது நீங்கள் விரும்பியவற்றை (அல்லாஹ்விடம்) கோரிப் பிரார்த்திக்கலாம் என்று (ஐயப்பாட்டுடன்) இடம்பெற்றுள்ளது.

675 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் தொழுகையில் (இருப்பில்) அமர்ந்திருந்தால் என்று தொடங்கி மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது. (அதன் இறுதியில்) பிறகு நீங்கள் (விரும்பிய) பிரார்த்தனையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்று இடம்பெற்றுள்ளது.

676 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் இரு கைகளுக்கிடையே எனது கை இருந்த நிலையில் குர்ஆனின் அத்தியாயத்தைக் கற்றுத் தருவதைப் போன்று (தொழுகையின் இருப்பில் ஓதப்படும்) அத்தஹிய்யாத்தை எனக்கு அவர்கள் கற்றுத்தந்தார்கள்
மற்ற அறிவிப்பாளர்கள் அத்தஹிய்யாத் (ஓதும் விதத்)தை அறிவித்திருப்பதைப் போன்றே இந்த ஹதீஸின் அறிவிப்பாளரும் அறிவித்துள்ளார்.

677 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குர்ஆனின் அத்தியாயம் ஒன்றைக் கற்றுத் தருவதைப் போன்று (தொழுகையின் இருப்பில் ஓதப்படும்) அத்தஹிய்யாத்தை எங்களுக்கு (பின்வருமாறு) கற்றுத்தந்தார்கள்:
அத்தஹிய்யாத்துல் முபாரக்காத்துஸ் ஸலவாத்துத் தய்யிபாத்து லில்லாஹி. அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹந் நபிய்யு, வ ரஹ்மத்துல்லாஹி வ பரகாத்துஹு. அஸ்ஸலாமு அலைனா வ அலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன். அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்.
(பொருள்: சொல், செயல், பொருள் சார்ந்த எல்லாக் காணிக்கைகளும் சுபிட்சங்களும் வணக்கங்களும் பாராட்டுகளும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே! உங்கள்மீது சாந்தியும் அல்லாஹ்வின் அருளும் சுபிட்சமும் உண்டாகட்டுமாக! எங்கள்மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள்மீதும் சாந்தி உண்டாகட்டும்! அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்று நான் உறுதிமொழிகிறேன். மேலும் முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் உறுதிமொழிகிறேன்.)
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் குர்ஆனைக் கற்பிப்பதைப் போன்று என இடம்பெற்றுள்ளது.

678 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குர்ஆனின் அத்தியாயத்தைக் கற்றுத்தருவதைப் போன்று (தொழுகை இருப்பில் ஓதப்படும்) அத்தஹிய்யாத்தை எங்களுக்குக் கற்றுத் தருவார்கள்.

679 ஹித்தான் பின் அப்தில்லாஹ் அர்ரகாஷீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்களுடன் ஒரு தொழுகையில் கலந்து கொண்டேன். அவர்கள் (தொழுகையில் அத்தஹிய்யாத்) அமர்வில் இருந்தபோது ஒரு மனிதர் உகிர்ரத்திஸ் ஸலாத்து பில்பிர்ரி வஸ்ஸகாத்தி (நன்மை,தானதருமம் ஆகியவற்றுடன் சேர்ந்து தொழுகையும் ஒரு கடமையாக ஏற்கப்பட்டுவிட்டது) என்று கூறினார். அபூமூசா (ரலி) அவர்கள் தொழுகையை முடித்து சலாம் கொடுத்துத் திரும்பியதும் உங்களில் இன்னின்ன வார்த்தையைக் கூறியவர் யார்? என்று கேட்டார்கள். அப்போது மக்கள் அமைதியாயிருந்தனர். மீண்டும் உங்களில் இன்னின்ன வார்த்தையைக் கூறியவர் யார்? என்று கேட்டார்கள். அப்போதும் மக்கள் அமைதியாயிருந்தனர். பிறகு அவர்கள் (என்னிடம்), ஹித்தான்! நீங்கள்தாம் அதைக் கூறியிருக்க வேண்டும் என்று சொல்ல, அதை நான்

கூறவில்லை. அதை நான் சொன்னதாக நினைத்துக்கொண்டு என்னைக் கண்டிப்பீர்களென பயந்துவிட்டேன் என்றேன் நான். அப்போது மக்களில் ஒருவர் நான்தான் அவ்வாறு கூறினேன்.அதன் மூலம் நல்லதையே நாடினேன் என்று சொன்னார். அப்போது அபூமூசா (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:

உங்களுடைய தொழுகையி(ல் அமர்வி)ல் என்ன கூற வேண்டும் என்று உங்களுக்குத் தெரியாதா? நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு முறை) எங்களுக்கு உரையாற்றினார்கள். (அதில்) நாம் பின்பற்ற வேண்டிய வழிமுறையை எங்களுக்கு விளக்கிச் சொன்னார்கள். நாம் தொழ வேண்டிய முறையைக் கற்றுக்கொடுத்தார்கள்.

அப்போது அவர்கள் கூறினார்கள்:

நீங்கள் தொழ ஆரம்பித்தால் உங்களுடைய தொழுகை வரிசைகளை ஒழுங்குபடுத்திக் கொள்ளுங்கள். பிறகு உங்களில் ஒருவர் உங்களுக்கு(தலைமை தாங்கி)த் தொழுவிக்கட்டும். அவர் (இமாம்), தக்பீர் கூறினால், நீங்களும் தக்பீர் கூறுங்கள். அவர் ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம் வலள் ளால்லீன் என்று கூறினால் நீங்கள் ஆமீன் என்று சொல்லுங்கள். (அவ்வாறு செய்தால்) அல்லாஹ் உங்களு(டைய பிரார்த்தனை)க்கு பதிலளிப்பான். பிறகு அவர் தக்பீர் கூறி ருகூஉச் செய்தால் நீங்களும் தக்பீர் கூறி ருகூஉச் செய்யுங்கள். நிச்சயமாக இமாம் உங்களுக்கு முன் ருகூஉச் செய்வார். உங்களுக்கு முன் (ருகூஉவிலிருந்து) எழுந்துவிடுவார். எனவே, இது (இமாம் உங்களுக்கு முன் ருகூஉச் செய்து, உங்களுக்கு முன் நிமிர்வது) அதற்கு (நீங்கள் இமாமுக்குப் பிறகு ருகூஉச் செய்து, இமாமுக்குப் பிறகு நிமிர்வதற்கு)ச் சமமாகிவிட்டது (அதாவது இருவருடைய ருகூஇன் நேரமும் சமமாகி விட்டது) என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மேலும், அவர் (இமாம்) சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் (தன்னைப் புகழ்வோரின் புகழுரையை அல்லாஹ் ஏற்றுக்கொள்கின்றான்) என்று கூறினால் அல்லாஹும்ம ரப்பனா லக்கல் ஹம்து (அல்லாஹ்வே! எங்கள் இறைவா! உனக்கே எல்லாப் புகழும்) என்று நீங்கள் கூறுங்கள். (அவ்வாறு செய்தால்) அல்லாஹ் உங்களுடைய புகழுரையைச் செவியேற்பான். திண்ணமாக அல்லாஹ் தன்னுடைய தூதரின் நாவின் மூலம் சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறினான்.

மேலும், அவர் (இமாம்) தக்பீர் கூறி சஜ்தாச் செய்தால் நீங்களும் தக்பீர் கூறி சஜ்தாச் செய்யுங்கள். நிச்சயமாக இமாம் உங்களுக்கு முன் சஜ்தாச் செய்வார். உங்களுக்கு முன் சஜ்தாலிருந்து எழுவார். எனவே இது (அதாவது இமாம் உங்களுக்கு முன் சஜ்தாச் செய்து, உங்களுக்கு முன் நிமிர்வது) அதற்கு (நீங்கள் இமாமுக்குப் பிறகு சஜ்தாச் செய்து, இமாமுக்குப் பிறகு எழுவதற்கு)ச் சமமாகிவிட்டது (அதாவது இருவருடைய சஜ்தாவின் நேரமும் சமமாகிவிட்டது) என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மேலும், நீங்கள் அத்தஹிய்யாத் இருப்பில் அமர்ந்தால் உங்களுடைய முதல் சொல் இதுவாக இருக்கட்டும்: அத்தஹிய்யாத்துத் தய்யிபாத்துஸ் ஸலவாத்து லில்லாஹி. அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹந் நபிய்யு, வ ரஹ்மத் துல்லாஹி வ பரக்காத்துஹு. அஸ்ஸலாமு அலைனா வ அலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன். அஷ்ஹது அல் லாயிலாஹ இல்லல்லாஹு, வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வ ரதூலுஹு.

(பொருள்: சொல், செயல், பொருள் சார்ந்த எல்லாக் காணிக்கைகளும் பாராட்டுகளும் வணக்கங்களும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே! உங்கள்மீது சாந்தியும் அல்லாஹ்வின்

அருளும் சுபிட்சமும் உண்டாகட்டுமாக! எங்கள்மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீதும் சாந்தி உண்டாகட்டும்! அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்று நான் உறுதிமொழிகிறேன். மேலும் முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதருமாவார்கள் என்றும் உறுதிமொழிகிறேன்.)
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

680 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் ஓர் அறிவிப்பில் அவர் (இமாம்) ஓத ஆரம்பித்தால் நீங்கள் வாய்மூடி இருங்கள் என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
திண்ணமாக அல்லாஹ் தன்னுடைய தூதரின் நாவின் மூலம் சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறினான் எனும் வாசகம் அபூஅவானா (ரஹ்) அவர்களிடமிருந்து அபூகாமில் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் தகவலில் மட்டுமே இடம்பெற்றுள்ளது.
அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது: அபூபக்ர் பின் உக்தி அபிந் நஸ்ர் (ரஹ்) அவர்கள் அவர் (இமாம்) ஓத ஆரம்பித்தால் நீங்கள் வாய்மூடி இருங்கள் என்ற இந்த ஹதீஸ் தொடர்பாகக் கடுமையாக விமர்சித்தார்கள். அப்போது முஸ்லிம் (ரஹ்) அவர்கள் (இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்தொடரில் வரக்கூடிய) சுலைமான் அத்தைமீ (ரஹ்) அவர்களைவிடச் சிறந்த நினைவாற்றல் உள்ள ஒருவரை நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அபூபக்ர் (ரஹ்) அவர்கள், அபூஹுரைரா (ரலி) அவர்கள் மூலம் அறிவிக்கப்படும் ஹதீஸ் இருக்கிறதே! என்று பதிலளித்தார்கள். அப்போது முஸ்லிம் (ரஹ்) அவர்கள், அந்த ஹதீஸ் சரியானதுதான்; என்னிடம் ஏற்கப்பட்டது தான் என்று கூறினார்கள். அதற்கு அபூபக்ர் (ரஹ்) அவர்கள், அப்படியானால் அவர்கள் அறிவித்த ஹதீஸை நீங்கள் ஏன் இடம்பெறச் செய்யவில்லை? என்று கேட்டார்கள். அதற்கு முஸ்லிம் (ரஹ்) அவர்கள் என்னிடம் சரியானதாக உள்ள எல்லா ஹதீஸையும் நான் இதில் இடம்பெறச்செய்து விடுவதில்லை; (என் பார்வையில்) ஒருமித்தக் கருத்துப்படி சரியாக உள்ள ஹதீஸையே இங்கு இடம்பெறச் செய்துள்ளேன் என்று பதிலளித்தார்கள்.

681 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் திண்ணமாக அல்லாஹ் தன்னுடைய தூதரின் நாவின் மூலம் அல்லாஹ் தன்னைப் புகழ்வோரின் புகழுரையை ஏற்றுக்கொள்கின்றான் என்று தீர்மானித்துவிட்டான் என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 17 (தொழுகையின் இறுதி அமர்வில்) அத்தஹிய்யாத்திற்குப் பின்னால் நபி (ஸல்) அவர்கள்மீது ஸலவாத் ஓதுவது.

682 அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நாங்கள் சஅத் பின் உபாதா (ரலி) அவர்களுடைய அவையில் இருந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அப்போது பஷீர் பின் சஅத் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! உங்கள்மீது ஸலவாத் கூறும்படி அல்லாஹ் எங்களுக்குக் கட்டளையிட்டுள்ளான். எனவே, உங்கள்மீது நாங்கள் ஸலவாத் கூறும் முறை

யாது? என்று கேட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பதிலேதும் கூறாமல்) அமைதியாக இருந்தார்கள். அதனால் அவர்களிடம் அவர் (இதைக்) கேட்காமலிருந்திருக்க வேண்டும் என்றுகூட நாங்கள் எண்ணினோம். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு ஸலவாத்) கூறும்படி சொன்னார்கள்:
அல்லாஹும்ம, ஸல்லி அலா முஹம்மதின், வ அலா ஆலி முஹம்மதின், கமா ஸல்லய்த்த அலா ஆலி இப்ராஹீம,வ பாரிக் அலா முஹம்மதின் வ அலா ஆலி முஹம்மதின், கமா பாரக்த அலா ஆலி இப்றாஹீம ஃபில் ஆலமீன இன்னக்க ஹமீதும் மஜீத்.
(பொருள்: இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்களுடைய குடும்பத்தாருக்கு நீ கருணை புரிந்ததைப் போன்று முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தாருக்கும் நீ கருணை புரிவாயாக! அகிலத்தாரில் இப்ராஹீம் (அலை) அவர்களுடைய குடும்பத்தாருக்கு நீ சுபிட்சம் அளித்ததைப் போன்று முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தாருக்கும் நீ சுபிட்சமளிப்பாயாக! நிச்சயமாக நீ புகழுக்குரியவனும் பெருமைக்குரியவனுமாவாய்.)
பிறகு (எனக்கு) சலாம் சொல்லும் முறை, நீங்கள் (ஏற்கெனவே) அறிந்துவைத்திருப்பதைப் போன்றுதான் என்று அவர்கள் கூறினார்கள்.

683 அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் என்னைச் சந்தித்தார்கள். அப்போது நான் உங்களுக்கு ஓர் அன்பளிப்பு வழங்கட்டுமா? என்று கேட்டுவிட்டு (பின்வருமாறு) கூறினார்கள்:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அப்போது (அவர்களிடம்) நாங்கள், (அல்லாஹ்வின் தூதரே!) உங்களுக்கு நாங்கள் எப்படி சலாம் கூற வேண்டுமென அறிந்திருக்கின்றோம். ஆனால்,உங்கள்மீது நாங்கள் எப்படி ஸலவாத் கூற வேண்டும்? என்று கேட்டோம். அப்போது அவர்கள், அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வ அலா ஆலி முஹம்மதின், கமா ஸல்லய்த்த அலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத். அல்லாஹும்ம, பாரிக் அலா முஹம்மதின் வ அலா ஆலி முஹம்மதின், கமா பாரக்த அலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத் என்று கூறுங்கள் என்றார்கள்.
(பொருள்: இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்களுடைய குடும்பத்தாருக்கு நீ கருணை புரிந்ததைப் போன்று முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தாருக்கும் நீ கருணை புரிவாயாக. நிச்சயமாக நீ புகழுக்குரியனும் பெருமைக்குரியவனுமாவாய். இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்களுடைய குடும்பத்தாருக்கு நீ சுபிட்சம் வழங்கியதைப் போன்று முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தாருக்கும் நீ சுபிட்சம் வழங்குவாயாக. நிச்சயமாக நீ புகழுக்குரியவனும் பெருமைக்குரியவனுமாவாய்).
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

684 மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் நான் உங்களுக்கு ஓர் அன்பளிப்பு வழங்கட்டுமா? எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

685 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், வ பாரிக் அலா முஹம்மதின் (முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு நீ சுபிட்சம் வழங்குவாயாக!) என்று (மட்டுமே) இடம்பெற்றுள்ளது. (அதன் ஆரம்பத்தில்) அல்லாஹும்ம (இறைவா!) என்பது இடம் பெறவில்லை.

686 அபூஹுமைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (நபி (ஸல்) அவர்களிடம்), அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் உங்கள்மீது எப்படி ஸலவாத் கூற வேண்டும்?என்று கேட்டோம். அதற்கு அவர்கள், அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வ அலா அஸ்வாஜிஹி, வ துர்ரியத்திஹி, கமா ஸல்லய்த்த அலா ஆலி இப்ராஹீம, வ பாரிக் அலா முஹம்மதின் வ அலா அஸ்வாஜிஹி வ துர்ரியத்திஹி, கமா பாரக்த அலா ஆலி இப்ராஹீம. இன்னக்க ஹமீதும் மஜீத் என்று கூறுங்கள் என்றார்கள்.
(பொருள்: இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்களுடைய குடும்பத்தாருக்கு நீ கருணை புரிந்ததைப் போன்று முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் அவர்களுடைய துணைவியர் மற்றும் சந்ததியினருக்கும் நீ கருணை புரிவாயாக! இப்ராஹீம் (அலை) அவர்களுடைய குடும்பத்தாருக்கு நீ சுபிட்சம் வழங்கியதைப் போன்று முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் அவர்களுடைய துணைவியர் மற்றும் சந்ததியினருக்கும் நீ சுபிட்சம் வழங்குவாயாக! நிச்சயமாக நீ புகழுக்குரியவனும் பெருமைக்குரியவனுமாவாய்.)
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

687 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என்மீது ஒரு தடவை ஸலவாத் சொல்கின்றவருக்கு அல்லாஹ் பத்து முறை அருள்புரிகின்றான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 18 (தொழுகையில்) சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ், ரப்பனா ல(க்)கல் ஹம்து கூறுவதும் ஆமீன் கூறுவதும்.

688 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தொழுகையில்) இமாம், சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறும்போது நீங்கள் அல்லாஹும்ம ரப்பனா ல(க்)கல் ஹம்து (எங்கள் இறைவா! எல்லாப் புகழும் உனக்கே உரியது) என்று கூறுங்கள். எவருடைய இந்த வார்த்தை வானவர்களின் வார்த்தைக்கு (நேரத்தால்) ஒத்து அமைந்துவிடுகிறதோ அவருடைய முந்தைய பாவங்கள் அவருக்காக மன்னிக்கப்பட்டுவிடுகின்றன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸின் கருத்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

689 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இமாம், (அல்ஃபாத்திஹா அத்தியாயம் ஓதி முடித்து) ஆமீன் கூறும்போது நீங்களும் ஆமீன் கூறுங்கள். ஏனெனில்,எவருடைய ஆமீன், வானவர்கள் கூறும் ஆமீனுடன் (நேரத்தால்) ஒத்து அமைந்துவிடுகிறதோ அவருடைய முந்தைய பாவங்கள் அவருக்காக மன்னிக்கப்படுகின்றன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. (இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆமீன் கூறுபவர்களாக இருந்தார்கள்.

690 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னுஷிஹாப் (ரஹ்) அவர்களது கூற்று இடம்பெறவில்லை.

691 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகையில் உங்களில் ஒருவர் ஆமீன் கூற, வானத்திலுள்ள வானவர்களும் ஆமீன் கூற, அவற்றில் ஒன்று மற்றொன்றுடன் (நேரத்தால்) ஒத்து அமைந்துவிட்டால் அவருடைய முந்தைய பாவங்கள் அவருக்காக மன்னிக்கப்படுகின்றன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

692 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தொழுகையில்) உங்களில் ஒருவர் ஆமீன் கூற, வானத்திலுள்ள வானவர்களும் ஆமீன் கூற, அவற்றில் ஒன்று மற்றொன்றுடன் (நேரத்தால்) ஒத்து அமைந்துவிட்டால் அவருடைய முந்தைய பாவங்கள் அவருக்காக மன்னிக்கப்படுகின்றன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

693 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓதக்கூடியவர்(இமாம்), ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம் வலள் ளால்லீன் என்று கூறும் போது, அவருக்குப் பின்னால் நிற்பவர் ஆமீன் கூறி, அவர் கூறும் ஆமீன், வானத்திலுள்ள (வான)வர்கள் கூறும் ஆமீனுடன் ஒத்து அமைந்துவிட்டால் அவருடைய முந்தைய பாவங்கள் அவருக்காக மன்னிக்கப்பட்டுவிடுகின்றன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 19 இமாமை மஃமூம் பின்தொடர்தல்.

694 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் குதிரையிலிருந்து கீழே விழுந்துவிட்டார்கள். அதனால் அவர்களது வலப் பக்க விலாவில் சிராய்ப்பு ஏற்பட்டுவிட்டது. எனவே, நாங்கள் அவர்களை உடல்நலம் விசாரிக்கச் சென்றோம். அப்போது தொழுகையின் நேரம் வந்துவிடவே அவர்கள் எங்களுக்கு அமர்ந்தவாறே தொழுவித்தார்கள். நாங்களும் அவர்களுக்குப் பின்னால்

அமா்ந்தவாறே தொழுதோம். அவா்கள் தொழுகையை முடித்ததும் (பின்வருமாறு) கூறினாா்கள்:
இமாம் பின்பற்றப்படுவதற்காகவே ஏற்படுத்தப்பட்டுள்ளாா். எனவே, அவா் தக்பீா் கூறினால் நீங்களும் தக்பீா் கூறுங்கள். அவா் சஜ்தா (சிரவணக்கம்) செய்தால் நீங்களும் சஜ்தாச் செய்யுங்கள். அவா் (தலையை) உயா்த்தினால் நீங்களும் (தலையை) உயா்த்துங்கள். அவா் (குனிந்து நிமிரும்போது) சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் (தன்னைப் புகழ்வோரின் புகழுரையை அல்லாஹ் ஏற்கின்றான்) என்று கூறினால் நீங்கள் ரப்பனா வ லக்கல் ஹம்து (எங்கள் இறைவா! உனக்கே புகழ் அனைத்தும் உரியது) என்று கூறுங்கள். அவா் அமா்ந்தவாறு தொழுதால் நீங்கள் அனைவரும் அமா்ந்தவாறே தொழுங்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளா்தொடா்களில் வந்துள்ளது.

695 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவா்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளா் தொடா்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அல்லாஹ்வின் தூதா் (ஸல்) அவா்கள் குதிரையிலிருந்து விழுந்துவிட்டாா்கள். அதனால் அவா்களுக்குச் சிராய்ப்பு ஏற்பட்டுவிட்டது. பின்னா் அமா்ந்தவாறே எங்களுக்குத் தொழவைத்தாா்கள் என்று இடம்பெற்றுள்ளது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

696 மேற்கண்ட ஹதீஸ் மற்றோா் அறிவிப்பாளா் தொடா் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அனஸ் (ரலி) அவா்கள் அல்லாஹ்வின் தூதா் (ஸல்) அவா்கள் குதிரையிலிருந்து விழுந்துவிட்டாா்கள். அதனால் அவா்களது வலப்பக்க விலாவில் சிராய்ப்பு ஏற்பட்டுவிட்டது என்று கூறியதாகவும், மேலும் மேற்கண்ட ஹதீஸ்களிலுள்ள மற்றக் குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன. அத்துடன் இமாம் நின்று தொழுதால் நீங்களும் நின்று தொழுங்கள் என்று அல்லாஹ்வின் தூதா் (ஸல்) அவா்கள் கூறினாா்கள் என அதிகப்படியாகவும் இடம் பெற்றுள்ளது.

697 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவா்களிடமிருந்தே மற்றோா் அறிவிப்பாளா்தொடா் வழியாகவும் வந்துள்ளது.
அதில், (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதா் (ஸல்) அவா்கள் குதிரையின் மீது ஏறியபோது கீழே விழுந்துவிட்டாா்கள். அதனால் அவா்களுடைய வலப்பக்க விலாவில் சிராய்ப்பு ஏற்பட்டுவிட்டது என்று காணப்படுகிறது. மேலும், இந்த அறிவிப்பில் இமாம் நின்று தொழுதால் நீங்களும் நின்று தொழுங்கள் என்று (அல்லாஹ்வின் தூதா் (ஸல்) அவா்கள் கூறியதாகவு)ம் இடம்பெற்றுள்ளது.

698 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவா்களிடமிருந்தே மற்றோா் அறிவிப்பாளா்தொடா் வழியாகவும் வந்துள்ளது.
அதில் நபி (ஸல்) அவா்கள் குதிரையிலிருந்து விழுந்ததால் அவா்களது வலப்பக்க விலாவில் சிராய்ப்பு ஏற்பட்டுவிட்டது என்று இடம்பெற்றுள்ளது. இந்த அறிவிப்பில், மேற்கண்ட அறிவிப்புகளில் இடம்பெற்றுள்ள (இமாம் நின்று தொழுதால் நீங்களும் நின்று தொழுங்கள் எனும்) அதிகப்படியான குறிப்பு இடம்பெறவில்லை.

699 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (குதிரையிலிருந்து விழுந்ததால்) உடல் நலிவுற்றார்கள். அப்போது அவர்களுடைய தோழர்களில் சிலர் அவர்களை உடல்நலம் விசாரிக்க வந்தனர். அப்போது (தொழுகை நேரம் வந்துவிடவே) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உட்கார்ந்தபடி தொழுவித்தார்கள். மக்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் நின்றவாறு தொழுதனர். உடனே உட்கார்ந்து தொழுமாறு அவர்களை நோக்கி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சைகை செய்தார்கள். தொழுது முடித்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இமாம் பின்பற்றப் படுவதற்காகவே ஏற்படுத்தப்பட்டுள்ளார். எனவே, அவர் குனிந்(து ருகூஉசெய்)தால் நீங்களும் குனியுங்கள். அவர் (ருகூஉவிலிருந்து தலையை) உயர்த்தினால் நீங்களும் (தலையை) உயர்த்துங்கள். அவர் உட்கார்ந்தவாறு தொழுதால் நீங்களும் உட்கார்ந்தவாறே தொழுங்கள் என்று கூறினார்கள்.

700 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

701 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தபோது அவர்களுக்குப் பின்னால் நாங்கள் (நின்றவாறே) தொழுதோம். அவர்கள் அமர்ந்தவாறே எங்களுக்குத் தொழுவித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தக்பீர் கூற, அதை அபூபக்ர் (ரலி) அவர்கள் மக்களுக்குக் கேட்கும் விதமாக (உரத்த குரலில்) கூறிக்கொண்டிருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களைத் திரும்பிப் பார்த்தார்கள். அப்போது நாங்கள் நின்றவாறு தொழுதுகொண்டிருந்தோம். உடனே எங்களையும் உட்கார்ந்து தொழுமாறு சைகை செய்தார்கள். உடனே நாங்கள் உட்கார்ந்தவாறே அவர்களைப் பின்பற்றித் தொழுதோம். அவர்கள் சலாம் கொடுத்(து தொழுகையை முடித்த)ததும்,நீங்கள் சிறிது நேரத்திற்கு முன் பாரசீகர்கள் மற்றும் ரோமர்களைப் போன்று நடந்து கொள்ளப் பார்த்தீர்கள். அவர்கள்தாம் தங்கள் மன்னர்கள் அமர்ந்திருக்கும்போது நின்றுகொண்டு இருப்பார்கள். நீங்கள் அவ்வாறு செய்யாதீர்கள். உங்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிப்பவர்களை நீங்கள் பின்பற்றுங்கள். அவர் நின்று தொழுதால் நீங்களும் நின்று தொழுங்கள். அவர் அமர்ந்து தொழுதால் நீங்களும் அமர்ந்தே தொழுங்கள் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

702 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நோய்வாய்ப்பட்டிருந்தபோது) எங்களுக்குத் தொழுவித்தார்கள். அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னாலிருந்து கொண்டிருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தக்பீர் கூறும்போது எங்களுக்குக் கேட்கும் விதமாக அபூபக்ர் (ரலி) அவர்கள் (சப்தமாக) தக்பீர் கூறினார்கள். மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

703 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இமாம் பின்பற்றப்படுவதற்காகவே ஏற்படுத்தப்பட்டுள்ளார். எனவே, அவருடன் நீங்கள் முரண்படாதீர்கள். அவர் தக்பீர் கூறினால் நீங்களும் தக்பீர் கூறுங்கள். அவர் குனிந்(து ருகூஉச் செய்)தால் நீங்களும் குனியுங்கள். அவர் சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் (தன்னைப் புகழ்வோரின் புகழுரையை அல்லாஹ் ஏற்கின்றான்) என்று கூறினால்,நீங்கள் அல்லாஹும்ம ரப்பனா ல(க்)கல் ஹம்து (அல்லாஹ்வே! எங்கள் இறைவா! எல்லாப் புகழும் உனக்கே உரியது) என்று கூறுங்கள். அவர் சஜ்தா (சிரவணக்கம்) செய்தால் நீங்களும் சஜ்தாச் செய்யுங்கள். அவர் அமர்ந்து தொழுதால் நீங்கள் அனைவரும் அமர்ந்தே தொழுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 20 (தொழுகையில்) தக்பீர் கூறுவதிலும் பிற செயல்களிலும் இமாமை முந்தலாகாது.

704 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு (தொழுகை முறையை)க் கற்றுக் கொடுத்தார்கள். (அப்போது) நீங்கள் இமாமை முந்தாதீர்கள். அவர் தக்பீர் கூறினால் நீங்களும் தக்பீர் கூறுங்கள். அவர் வலள் ளால்லீன் என்று கூறினால் நீங்கள் ஆமீன் என்று கூறுங்கள். அவர் ருகூஉச் செய்தால் நீங்களும் ருகூஉச் செய்யுங்கள். அவர் சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று சொன்னால் நீங்கள் அல்லாஹும்ம ரப்பனா ல(க்)கல் ஹம்து என்று சொல்லுங்கள் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அவர் வலள் ளால்லீன் என்று கூறினால் நீங்கள் ஆமீன் என்று கூறுங்கள் எனும் குறிப்பு இடம்பெறவில்லை. இந்த அறிவிப்பில் இமாமுக்கு முன்பாக நீங்கள் தலையை உயர்த்தாதீர்கள் என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

705 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்க்ள் கூறினார்கள்:
இமாம் என்பவர் கேடயமே ஆவார். எனவே, அவர் உட்கார்ந்து தொழுதால் நீங்களும் உட்கார்ந்தே தொழுங்கள். அவர் சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறினால் நீங்கள் அல்லாஹும்ம ரப்பனா ல(க்)கல் ஹம்து என்று கூறுங்கள். பூமியில் உள்ளோரின் (இந்த துதிச்) சொல் வானிலுள்ளோரின் (துதிச்) சொல்லுடன் (நேரத்தால்) ஒத்து அமைந்துவிட்டால் அவருடைய முந்தைய பாவங்கள் அவருக்காக மன்னிக்கப்பட்டுவிடுகின்றன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

706 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்க்ள் கூறினார்கள்:
இமாம் பின்பற்றப்படுவதற்காகவே ஏற்படுத்தப்பட்டுள்ளார். எனவே, அவர் தக்பீர் கூறினால் நீங்களும் தக்பீர் கூறுங்கள். அவர் குனிந்(து ருகூஉச்செய்)தால் நீங்களும் குனியுங்கள். அவர் சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று சொன்னால் நீங்கள் அல்லாஹும்ம ரப்பனா லக்கல் ஹம்து என்று சொல்லுங்கள். அவர் நின்று தொழுதால் நீங்களும் நின்று தொழுங்கள். அவர் உட்கார்ந்து தொழுதால் நீங்கள் அனைவரும் உட்கார்ந்தே தொழுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 21 இமாமுக்கு நோய், பயணம் உள்ளிட்ட காரணம் ஏதேனும் ஏற்பட்டால் மக்களுக்குத் தொழுவிக்கத் தமக்கு பதிலாக மற்றொருவரை நியமிப்பதும், நின்று தொழ முடியாத காரணத்தால் அமர்ந்து தொழுதுகொண்டிருக்கும் இமாமைப் பின்பற்றித் தொழுபவர் நிற்பதற்கு சக்தி பெற்றிருந்தால் அவர் நின்றே தொழ வேண்டும்; உட்கார்ந்து தொழும் இமாமைப் பின்பற்றித் தொழுகின்றவர் உட்கார்ந்தே தொழ வேண்டும் எனும் சட்டம் நிற்பதற்குச் சக்தி உள்ளவர் விஷயத்தில் மாற்றப்பட்டுவிட்டது என்பதும்.

707 உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இறுதி நாட்களில்) நோய்வாய்ப்பட்டிருந்தது பற்றி எனக்கு நீங்கள் அறிவிக்கக் கூடாதா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ஆம் (கூறுகிறேன்) என்று சொல்லிவிட்டு (பின்வருமாறு) தெரிவித்தார்கள்:
நபி (ஸல்) அவர்களுக்கு நோய் கடுமையானது. அந்த (இஷா) நேரத்தில் மக்கள் தொழுது விட்டனரா? என்று நபியவர்கள் கேட்டார்கள். நாங்கள், இல்லை, அல்லாஹ்வின் தூதரே! மக்கள் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கூறினோம். அப்போது தண்ணீர் தொட்டியில் எனக்காகத் தண்ணீர் வையுங்கள் என்று சொன்னார்கள். அவ்வாறே நாங்கள் செய்தோம். அவர்கள் (அதில்) குளித்துவிட்டு எழ முயன்றார்கள். ஆனால், (எழ முடியாமல்) மயக்கமுற்றுவிட்டார்கள். பிறகு அவர்களுக்கு மயக்கம் தெளிந்தபோது மக்கள் தொழுது விட்டனரா? என்று கேட்டார்கள். நாங்கள், இல்லை; அவர்கள் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள், அல்லாஹ்வின் தூதரே!என்று சொன்னோம். அப்போது தண்ணீர் தொட்டியில் எனக்காகத் தண்ணீர் வையுங்கள் என்றார்கள். அவ்வாறே நாங்கள் செய்தோம். அவர்கள் குளித்துவிட்டு எழ முற்பட்டார்கள். ஆனால், (எழ முடியாமல் மீண்டும்) மயக்கமுற்றுவிட்டார்கள். பின்னர் மயக்கம் தெளிந்தபோது, மக்கள் தொழுதுவிட்டனரா? என்று (மீண்டும்) கேட்டார்கள். நாங்கள், இல்லை;அவர்கள் உங்களை எதிர்பாத்துக் கொண்டிருக்கிறார்கள், அல்லாஹ்வின் தூதரே! என்றோம்.
-அப்போது மக்கள் இஷாத் தொழுகைக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை எதிர்பார்த்தபடி பள்ளிவாசலில் வீற்றிருந்தனர்.
ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் ஆளனுப்பி மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு கூறினார்கள். அந்தத் தூதுவர் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் சென்று, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு உங்களைப் பணிக்கிறார்கள் என்று சொன்னார். அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள்

(அன்னார் இளகிய மனமுடையவராக இருந்தார்கள்) உமரே! நீங்கள் மக்களுக்குத் தொழுகை நடத்துங்கள் என்று சொன்னார்கள். அதற்கு உமர் (ரலி) அவர்கள், இதற்கு நீங்கள்தாம் (என்னைவிடத்) தகுதியுடையவர் என்று கூறிவிட்டார்கள். ஆகவே அபூபக்ர் (ரலி) அவர்கள் (நபியவர்கள் நோயுற்றிருந்த) அந்த நாட்களில் (மக்களுக்குத் தலைமை தாங்கித்) தொழுகை நடத்தினார்கள்.

பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது நோய் சற்றுக் குறைந்திருப்பதைக் கண்டபோது இரண்டு பேருக்கிடையே (கைத்தாங்கலாக) லுஹர் தொழுகைக்காகப் புறப்பட்டுவந்தார்கள். (அவ்விருவரில் அப்பாஸ் (ரலி) அவர்கள் ஒருவராவார்கள்.)அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் மக்களுக்கு (இமாமாக நின்று) தொழுகை நடத்திக் கொண்டிருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கண்டதும் அபூபக்ர் (ரலி) அவர்கள் பின்வாங்கப் பார்த்தார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வாங்க வேண்டாமென அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு சைகை செய்தார்கள். (தம்மை அழைத்துவந்த அவர்கள்) இருவரிடமும், என்னை அபூபக்ர் அவர்களுக்குப் பக்கத்தில் உட்காரவையுங்கள் என்று கூறினார்கள். அவ்வாறே அவர்கள் இருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அபூபக்ர் (ரலி) அவர்களுக்குப் பக்கவாட்டில் அமர்த்தினர். அப்போது நபி (ஸல்) அவர்கள் அமர்ந்து தொழ, அவர்களைப் பின்பற்றி அபூபக்ர் (ரலி) அவர்கள் நின்று தொழுதார்கள். மக்கள் அபூபக்ரைப் பின்பற்றித் தொழலானார்கள்.

அறிவிப்பாளர் உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
நான் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்று, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தது குறித்து ஆயிஷா (ரலி) அவர்கள் என்னிடம் கூறியதை நான் உங்களிடம் எடுத்துரைக்கட்டுமா? என்று கேட்டேன். அதற்கு அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள், ஆகட்டும் (சொல்லுங்கள்) என்றார்கள். ஆகவே,நான் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸை அவர்களிடம் எடுத்துரைத்தேன். அதில் எதையும் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் மறுக்கவில்லை. ஆயினும், அப்பாஸ் (ரலி) அவர்களுடனிருந்த அந்த மற்றொரு மனிதரின் பெயரை ஆயிஷா (ரலி) அவர்கள் குறிப்பிட்டார்களா? என்று கேட்டார்கள். நான், இல்லை என்றேன். அதற்கு அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள், அவர்தாம் அலீ (ரலி) என்று கூறினார்கள்.

708 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) மைமூனா (ரலி) அவர்களின் இல்லத்தில் இருந்தபோதுதான் முதலில் அவர்களுக்கு உடல் நலம் குன்றியது. அப்போது எனது வீட்டில் தங்கி சிகிச்சை பெறுவதற்காகத் தம் (மற்ற) துணைவியரிடம் அனுமதி கேட்டார்கள். அதற்கு அவர்களும் அனுமதியளித்தனர். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது ஒரு கையை ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்களின் (தோள்)மீதும் மற்றொரு கையை மற்றொரு மனிதரின் (தோள்)மீதும் வைத்து(த் தொங்கி)க்கொண்டு, தம் கால்கள் பூமியில் இழுபட (எனது வீட்டிற்கு)ப் புறப்பட்டுவந்தார்கள்.

(இதன் அறிவிப்பாளரான) உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை நான் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடம் தெரிவித்தபோது அவர்கள், ஆயிஷா (ரலி) அவர்கள் பெயர் குறிப்பிடாத அந்த மற்றொரு மனிதர் யார் தெரியுமா? அவர்தாம் அலீ (ரலி) என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

709 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு நோய் கடுமையாகி வேதனை அதிகரித்தபோது, எனது வீட்டில் தங்கி சிகிச்சை பெறுவதற்காகத் தம் (மற்ற) துணைவியரிடம் அனுமதி கேட்டார்கள். அதற்கு அவர்களும் அனுமதியளித்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் கால்கள் பூமியில் இழுபட, அப்பாஸ் (ரலி) அவர்களுக்கும் மற்றொரு மனிதருக்குமிடையே தொங்கியபடி (எனது வீட்டிற்கு)ப் புறப்பட்டு வந்தார்கள்.
(இதன் அறிவிப்பாளரான) உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்த இந்த ஹதீஸை நான் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடம் எடுத்துரைத்தேன். அப்போது அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் என்னிடம், ஆயிஷா (ரலி) அவர்கள் பெயர் குறிப்பிடாத அந்த மற்றொரு மனிதர் யார் என்று உங்களுக்குத் தெரியுமா? என்று கேட்டார்கள். நான் இல்லை (தெரியாது) என்று பதிலளித்தேன். அதற்கு அவர் அலீ (ரலி) என்று கூறினார்கள்.

710 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தபோது மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு அபூபக்ர் (ரலி) அவர்களிடம் கூறச் சொன்னார்கள்.) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வேறு ஒருவரை தொழுவிக்க ஏற்பாடு செய்யும்படி மீண்டும் மீண்டும் வலியுறுத்தினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களு(டைய இறப்பு)க்குப் பின் அவர்களுடைய இடத்தில் (இமாமாக) நிற்கும் எவரையும் மக்கள் நேசிப்பார்கள் என்று என் மனதில் தோன்றவில்லை; மாறாக, அவர்களது இடத்தில் யார் வந்தாலும் அவரை ஒரு துர்குறியாகவே மக்கள் கருதுவார்கள் என்பதால்தான் திரும்பத் திரும்ப (அவ்வாறு) நான் வலியுறுத்தினேன். அந்தப் பொறுப்பை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூபக்ர் அவர்களிடமிருந்து மாற்றி (வேறு யாரிடமாவது ஒப்படைத்து)விட வேண்டும் என்று நான் விரும்பினேன்.

711 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சிகிச்சைக்காக) எனது இல்லத்துக்கு வந்தபோது அபூபக்ர் அவர்களிடம் மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு கூறுங்கள்! என்றார்கள். நான் அல்லாஹ்வின் தூதரே! (என் தந்தை) அபூபக்ர் அவர்கள் இளகிய மனமுடையவர்; அவர் குர்ஆனை ஓதினால் அவரால் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியாது. எனவே,அபூபக்ர் (ரலி) அவர்களை விடுத்து மற்றொரு மனிதருக்கு நீங்கள் கட்டளையிட்டால் நன்றாக இருக்குமே!

என்று கூறினேன். அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய இடத்தில் முதன் முதலாக நிற்பவரை மக்கள் துர்குறியாகக் கருதுவதை நான் விரும்பாததே இவ்வாறு நான் கூறியதற்குக் காரணமாகும். இரண்டு அல்லது மூன்று முறை நான் அதைத் திரும்பத் திரும்ப வலியுறுத்தினேன். ஆனால் நபியவர்கள், அபூபக்ர் மக்களுக்குத் தொழுவிக்கட்டும் என்று கூறிவிட்டு, (பெண்களாகிய) நீங்கள் (நபி) யூசுஃப் (அலை) அவர்களுடைய (அழகில் மயங்கிய) தோழிகள் போன்(று உள்நோக்கத்துடன் பேசுகின்)றவர்கள் தாம் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

712 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு நோய் கடுமையாயிருந்தபோது அவர்களைத் தொழுகைக்கு அழைப்பதற்காக பிலால் (ரலி) அவர்கள் வந்தார்கள். அப்போது அபூபக்ர் அவர்களை மக்களுக்குத் தொழுவிக்கச் சொல்லுங்கள்! என்று நபியவர்கள் கூறினார்கள். உடனே நான், அல்லாஹ்வின் தூதரே! (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள் வேகமாகத் துக்கப்படுகின்றவர்; (தொழுகைக்காக) நீங்கள் நிற்குமிடத்தில் அவர்கள் நின்றால் (மனம் நெகிழ்ந்து அழுது கொண்டிருப்பார்கள்.) அவர்களால் (சப்தமிட்டு ஓதி) மக்கள் கேட்கும்படி செய்ய முடியாது. எனவே, உமர் (ரலி) அவர்களுக்குக் கட்டளையிட்டால் நன்றாயிருக்குமே! என்று சொன்னேன். அப்போது அபூபக்ரிடம் சொல்லுங்கள்; அவர் மக்களுக்குத் தொழுவிக்கட்டும் என்று (மீண்டும்) நபியவர்கள் சொன்னார்கள். உடனே நான் (மற்றொரு துணைவியாரான) ஹஃப்ஸாவிடம் அபூபக்ர் (ரலி) வேகமாகத் துக்கப்படுகின்றவர்; உங்களது இடத்தில் அவர் நின்றால் அவரால் மக்களுக்குக் கேட்கும்படி செய்ய முடியாது; உமர் (ரலி) அவர்களுக்கு நீங்கள் கட்டளையிட்டால் என்ன?என்று நபியவர்களிடம் கூறுங்கள் என்றேன். ஹஃப்ஸாவும் அவ்வாறே சொன்னார். அதற்கு (பெண்களாகிய) நீங்கள் யூசுஃபுடைய (அழகில் மயங்கிய) தோழிகள் போன்(று உள்நோக்கத்துடன் பேசுகின்)றவர்கள்தாம். மக்களுக்குத் தொழுவிக்கும்படி அபூபக்ரிடம் சொல்லுங்கள் என்று நபியவர்கள் கூறினார்கள். அவ்வாறே மக்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் தங்களுக்குத் தொழுவிக்குமாறு கூறினர். அபூபக்ர் (ரலி) அவர்கள் தொழ ஆரம்பித்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது உடல்நலம் சற்றுத் தேறியிருப்பதைக் கண்டார்கள். உடனே எழுந்து இரண்டு மனிதர்களுக்கிடையே தொங்கியபடி தம் கால்கள் பூமியில் இழுபடப் புறப்பட்டார்கள். அவர்கள் பள்ளிவாசலுக்குள் வருவதை உணர்ந்த அபூபக்ர் (ரலி) அவர்கள் பின்வாங்க ஆரம்பித்தார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உங்கள் இடத்திலேயே இருங்கள் என்று அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு சைகை செய்தார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து, அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு இடப் பக்கத்தில் அமர்ந்தார்கள். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்துகொண்டு மக்களுக்குத் தொழுவிக்க, அபூபக்ர் (ரலி) அவர்கள் நின்றுகொண்டு தொழலானார்கள். நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றி அபூபக்ரும், அபூபக்ர் அவர்களைப் பின்பற்றி மக்களும் தொழுதார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

713 மேற்கண்ட ஹதீஸ் இன்னும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின் போது... என்று இடம்பெற்றுள்ளது.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு முஸ்ஹிர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அப்போது அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அழைத்துவரப்பட்டு அபூபக்ர் (ரலி) அவர்களுக்குப் பக்கவாட்டில் அமர்த்தப்பட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் மக்களுக்குத் தொழுவிக்க, அபூபக்ர் (ரலி) அவர்கள் அந்தத் தக்பீரை மக்களுக்குக் கேட்கும் விதமாக சப்தமாகக் கூறிக் கொண்டிருந்தார்கள் என்று இடம்பெற்றுள்ளது.
ஈசா பின் யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்து மக்களுக்குத் தொழுவிக்க, அபூபக்ர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்குப் பக்கவாட்டிலிருந்துகொண்டு மக்களுக்குக் கேட்கும் விதமாக (தக்பீர்) கூறிக்கொண்டிருந்தார்கள் என்று இடம் பெற்றுள்ளது.

714 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் இறுதி நாட்களில்) நோயுற்றிருந்தபோது அபூபக்ர் (ரலி) அவர்களை மக்களுக்குத் தொழுவிக்குமாறு கூறினார்கள். அவ்வாறே அபூபக்ர் (ரலி) அவர்கள் மக்களுக்குத் தொழுவித்து வந்தார்கள். இதனிடையே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்குச் சற்று உடல்நலம் தேறியிருப்பதை உணர்ந்தார்கள். எனவே, அவர்கள் (பள்ளிவாசலுக்குப்) புறப்பட்டு வந்தார்கள். அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் மக்களுக்குத் தொழுவித்துக்கொண்டிருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கண்ட அபூபக்ர் (ரலி) அவர்கள் (தொழுமிடத்திலிருந்து) பின்வாங்க முயன்றார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நீங்கள் நிற்கும் இடத்திலேயே நில்லுங்கள் என்று அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு சைகை செய்தார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு நேராக அவர்களது பக்கவாட்டில் அமர்ந்தார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பின்பற்றித் தொழ, மக்கள் அபூபக்ர் (ரலி) அவர்களைப் பின்பற்றித் தொழலானார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

715 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் மக்களுக்குத் தொழுவித்து வந்தார்கள். இவ்வாறிருக்க, (ஒரு) திங்கள் கிழமை அன்று மக்கள் தொழுகை வரிசையில் நின்றுகொண்டிருந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஆயிஷா (ரலி) அவர்களது) அறையின் திரைச் சீலையை விலக்கி, நின்றுகொண்டு எங்களைப் பார்த்தார்கள். அப்போது அவர்களுடைய முகம் குர்ஆன் பிரதியின் தாளைப் போன்று (பொலிவுடன்) இருந்தது. பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களைப் பார்த்து (மகிழ்ச்சியோடு) புன்னகைத்தார்கள். நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெளியே வந்ததைக் கண்டு மகிழ்ச்சியால் தொழுகையிலிருக்கும் போதே (இன்ப) அதிர்ச்சியடைந்தோம். அபூபக்ர் (ரலி) அவர்கள் (தமக்குப் பின்னுள்ள முதல்) வரிசையில் சேர்ந்துகொள்ளத் தம் குதிகால்களால் பின்வாக்கில் நகர்ந்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகைக்காகப் புறப்பட்டு வரப்போகிறார்கள் என்று அபூபக்ர் (ரலி) அவர்கள் நினைத்துவிட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களை நோக்கி உங்கள் தொழுகையை நிறைவுசெய்யுங்கள் என்று தமது கையால் சைகை செய்தார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அறைக்குள்) நுழைந்து திரைச் சீலையைத் தொங்கவிட்டார்கள். அன்றைய தினமே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

716 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திங்கள் கிழமையன்று (தமது அறையின்) திரைச் சீலையை விலக்கியபோது நான் அவர்களைப் பார்த்ததுதான் இறுதியாக நான் பார்த்ததாகும் என்று இடம்பெற்றுள்ளது.
(இதற்கு முந்தைய) ஸாலிஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பே நிறைவானதும் நிரப்பமானதுமாகும்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

717 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (இறுதியாக எங்களுக்கு அமர்ந்து தொழுவித்துவிட்டுப் போனதிலிருந்து) மூன்று நாட்கள் அவர்கள் வெளியில் வரவில்லை. (மூன்றாம் நாள்) தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டபோது அபூபக்ர் (ரலி) அவர்கள் தொழுகை நடத்த முன்சென்றார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் (தமது அறையின்) திரைச் சீலையைப் பிடித்து உயர்த்தினார்கள். நபி (ஸல்) அவர்களின் முகம் எங்களுக்குத் தெரிந்தபோது (நாங்கள் மிகவும் மகிழ்ந்தோம். எந்த அளவிற்கென்றால்) எங்களுக்குக் காட்சியளித்த அவர்களது முகத்தை விடவும் மகிழ்வூட்டுகின்ற எந்தக் காட்சியையும் நாங்கள் கண்டதில்லை. அப்போது நபி (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் (தொழுகையைத் தொடர) முன்னே செல்லுமாறு தமது கரத்தால் சைகை செய்தார்கள். பிறகு இறக்கும்வரை நபி (ஸல்) அவர்களை எங்களால் பார்க்க முடியவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

718 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இறுதி நாட்களில்) நோய்வாய்ப்பட்டு அவர்களது நோய் கடுமையானபோது, அபூபக்ரை மக்களுக்குத் தொழுவிக்கச் சொல்லுங்கள்! என்று கூறினார்கள். உடனே ஆயிஷா (ரலி) அவர்கள்,அல்லாஹ்வின் தூதரே! (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள் இளகிய மனமுடையவர்; (தொழுகைக்காக) நீங்கள் நிற்குமிடத்தில் அவர்கள் நின்றால் (மனம் நெகிழ்ந்து அழுது கொண்டிருப்பார்கள்.) அவர்களால் மக்களுக்குத் தொழுவிக்க முடியாது என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அபூபக்ரிடம் சொல்லுங்கள்! அவர் மக்களுக்குத் தொழுவிக்கட்டும்! (பெண்களாகிய) நீங்கள் நபி யூசுஃப்

(அலை) அவர்களுடைய (அழகில் மயங்கிய) தோழிகள் போன்(று உள்நோக்கத்துடன் பேசுகின்)றவர்கள் என்று கூறினார்கள். பிறகு அபூபக்ர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வாழ்நாளிலேயே மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள்.

**பாடம் : 22 இமாம் வருவது தாமதமானால் மக்கள் தங்களுக்குத் தொழுவிக்க மற்றொருவரை முன்னிறுத்தலாம்.ஆனால், அவரை முன்னிறுத்துவதால் குழப்பம் உண்டாகுமோ என்ற அச்சம் ஏற்படாதிருக்க வேண்டும்.**

719 சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(குபா பகுதியிலிருந்த பனூ அம்ர் குலத்தாரிடையே தகராறு ஏற்பட்ட செய்தி வந்ததையொட்டி) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்த) பனூ அம்ர் பின் அவ்ஃப் குலத்தாரிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்த அவர்களிடம் சென்றார்கள். அப்போது (அஸ்ர்) தொழுகையின் நேரம் வந்துவிடவே, தொழுகை அறிவிப்பாளர் (பிலால் (ரலி) அவர்கள்) அபூபக்ர் (ரலி) அவர்களிடம் வந்து, (நபியவர்கள் வருவதில் தாமதம் ஏற்படுவதால்) நீங்கள் மக்களுக்குத் (தலைமை தாங்கித்) தொழுவிக்கிறீர்களா, நான் இகாமத் சொல்லட்டுமா? என்று கேட்டார்கள். அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் சரி என்று கூறிவிட்டு, மக்களுக்குத் தொழுவித்தார்கள்.மக்கள் தொழுகையில் இருந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து (தொழுகை வரிசைகளை) விலக்கிக்கொண்டு (முதல்) வரிசையில் வந்து நின்றார்கள். இதைக் கண்ட மக்கள் (அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு உணர்த்த) கை தட்டினார்கள்.(பொதுவாக) அபூபக்ர் (ரலி) அவர்கள் தொழுதுகொண்டிருக்கும்போது திரும்பிப் பார்க்கமாட்டார்கள்.) மக்கள் கைதட்டலை அதிகரித்தபோது திரும்பிப் பார்த்தார்கள். அங்கே (முதல் வரிசையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கண்டார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களை நோக்கி அங்கேயே இருங்கள் என்று சைகை செய்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்மை இதற்குப் பணித்தமைக்காக அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் கைகளை உயர்த்தி அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள்; பிறகு (திரும்பாமல் அப்படியே முதல்) வரிசையில் சேர்ந்து கொண்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்னே சென்று தொழுவித்தார்கள். பின்னர் (தொழுது முடித்து) திரும்பியதும் அபூபக்ரே! நான் உங்களை அங்கேயே நிற்குமாறு பணித்தும்கூட நீங்கள் அங்கேயே நிற்காமலிருந்ததற்குக் காரணம் என்ன? என்று கேட்டார்கள். அதற்கு அபூக்ர் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் தொழுவிப்பதற்கு (இந்த) அபூகுஹாஃபாவின் மகனுக்குத் தகுதியில்லை என்று பதிலளித்தார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களைப் பார்த்து), நீங்கள் ஏன் (இந்த அளவு) அதிகமாகக் கை தட்டினீர்கள்? ஒருவருக்குத் தமது தொழுகையில் ஏதேனும் தோன்றினால் (அதை உணர்த்துவதற்காக) அவர் சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்) என்று கூறட்டும்! ஏனெனில், அவர் அவ்வாறு கூறும் போது அவர்பால் கவனம் செலுத்தப்படும். கை தட்டும் முறை பெண்களுக்குரியதாகும் என்று கூறினார்கள்.

720 மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அபூபக்ர் (ரலி) அவர்கள் தம்மிரு கைகளையும் உயர்த்தி அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள். பிறகு (நெஞ்சைத் திருப்பாமல் அப்படியே) பின்வாக்கில் நகர்ந்துவந்து வரிசையில் நின்றார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

721 சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் அம்ர் பின் அவ்ஃப் குலத்தாரிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்துவதற்காகச் சென்றார்கள். தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளது.
மேலும், இந்த அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள் தொழுகை வரிசைகளை விலக்கிக் கொண்டு முன்வரிசைக்கு அருகில் வந்து நின்றார்கள் என்றும், அபூபக்ர் (ரலி) அவர்கள் (திரும்பாமல் அப்படியே) பின்வாக்கில் நகர்ந்தார்கள் என்றும் அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

722 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தபூக் போரில் கலந்துகொண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுகைக்கு முன் இயற்கைக்கடனை நிறைவேற்றுவதற்காக ஒதுக்குப் புறத்திற்குச் சென்றார்கள். அப்போது அவர்களுடன் நான் ஒரு (தண்ணீர்)பாத்திரத்தை எடுத்துச் சென்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது தேவையை முடித்துவிட்டு) என்னிடம் திரும்பி வந்தபோது பாத்திரத்திலிருந்த தண்ணீரை அவர்களுடைய கைகளில் ஊற்றினேன். அவர்கள் (மணிக்கட்டுவரை) மூன்று முறை கைகளைக் கழுவினார்கள். பின்னர் முகத்தைக் கழுவினார்கள். பிறகு (முழங்கைவரைக் கழுவுவதற்காகத்) தமது நீளங்கியை முழங்கைகளிலிருந்து வெளியிலெடுக்க முயன்றார்கள். நீளங்கியின் கைப் பகுதி இறுக்கமாக இருந்த காரணத்தால் தம் கைகளை நீளங்கியில் நுழைத்து நீளங்கியின் கீழேயிருந்து கைகளை வெளியில் எடுத்தார்கள். பிறகு கைகைளை மூட்டுவரை கழுவினார்கள். பிறகு (கால்களைக் கழுவுவதற்கு பதிலாக) இரு காலுறைகள்மீதும் ஈரக் கையால் தடவி (மஸ்ஹுச் செய்யலா)னார்கள். பின்னர் (பள்ளிவாசலை நோக்கிச்) சென்றார்கள். நானும் அவர்களுடன் சென்றேன். அப்போது மக்கள் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களைத் தொழுவிக்கச் சொல்லி (அவர்களுக்குப் பின்னால் நின்று) தொழுதுகொண்டிருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு (அந்தத் தொழுகையின்) இரு ரக்அத்களில் ஒரு ரக்அத்தான் கிடைத்தது. எனவே, கிடைத்த அந்த இறுதி ரக்அத்தை மக்களுடன் சேர்ந்து தொழுதார்கள். அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் (தொழுகையை முடிப்பதற்காக) சலாம் கொடுத்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து, (எஞ்சிய ஒரு ரக்அத்தைத் தொழுது) தமது தொழுகையை நிறைவு செய்தார்கள். இ(வ்வாறு நபியவர்களை முந்திக் கொண்டு தாங்கள் தொழுத)து, முஸ்லிம்களுக்கு அதிர்ச்சியளித்தது. ஆகவே, அவர்கள் பல முறை தஸ்பீஹ் கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்த பின் மக்களைப் பார்த்து, நீங்கள் செய்தது நல்லதுதான் அல்லது

நீங்கள் செய்தது சரிதான் என்று குறித்த நேரத்தில் மக்கள் தொழுததைப் பாராட்டும் வகையில் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், (நபி (ஸல்) அவர்கள் வந்ததும்) அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களைப் பின்னுக்கு கொண்டுவர நான் நினைத்தேன். ஆனால், நபி (ஸல்) அவர்கள் அவரை விட்டுவிடுங்கள் (தொழுவிக்கட்டும்)! என்று கூறினார்கள் என முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

பாடம் : 23 தொழுகையில் (இமாமுக்கு ஏற்பட்ட தவறைச் சுட்டிக்காட்ட) ஏதேனும் (செய்ய வேண்டுமெனத்) தோன்றினால் ஆண்கள் சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்) என்று கூற வேண்டும்; பெண்கள் கை தட்ட வேண்டும்.

723 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தஸ்பீஹ் கூறுதல் ஆண்களுக்கும் கைதட்டுதல் பெண்களுக்கும் உரியதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் பல அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. ஹர்மலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அறிஞர்களில் பலரை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் தஸ்பீஹ் கூறி, சைகை செய்வார்கள் என்று இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

724 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது.
அதில், தொழுகையில் எனும் குறிப்பு அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

பாடம் : 24 தொழுகையைச் சிறந்த முறையில் (அதன் வழிமுறைகளைப் பேணி) முழுமையாகவும் உள்ளச்சத்துடனும் தொழ வேண்டும் எனும் கட்டளை.

725 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுவித்தார்கள். தொழுது முடித்ததும் (ஒருவரைப் பார்த்து), இன்னாரே, நீங்கள் நல்ல முறையில் தொழக் கூடாதா? தொழுதுகொண்டிருப்பவர் தாம் எப்படித் தொழுகிறோம் என்பதைக் கவனிக்கக் கூடாதா?அவர் தமக்காகத்தானே தொழுகிறார்? அல்லாஹ்வின் மீதாணையாக! நான் எனக்கு முன்னால் இருப்பவர்களைப் பார்ப்பதைப் போன்றே எனக்குப் பினனால் இருப்பவர்களையும் பார்க்கிறேன் என்று கூறினார்கள்.

726 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தொழுகையில்) நான் நோக்கும் திசை இதுதான் (இத்திசையில் மட்டுமே நான் பார்க்கிறேன்) என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களுடைய ருகூஉம்

(குனிதலும்) சஜ்தாவும் (சிரவணக்கமும்) எனக்குத் தெரியாமலிருப்பதில்லை. நிச்சயமாக, எனது முதுகுக்குப் பின்னாலும் உங்களை நான் பார்க்கிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

727 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தொழுகையில்) ருகூஉவையும் சஜ்தாவையும் செம்மையாகச் செய்யுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் எனக்குப் பின்னால் அல்லது என் முதுகுக்குப் பினனால் நீங்கள் குனி(ந்து ருகூஉ செய்)யும்போதும் சிரவணக்கம் (சஜ்தா) செய்யும்போதும் உங்களை நான் காண்கிறேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

728 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தொழுகையில்) ருகூஉவையும் சஜ்தாவையும் முழுமையாகச் செய்யுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் என் முதுகுக்குப் பின்னால் நீங்கள் குனி(ந்து ருகூஉ செய்)யும்போதும் சிரவணக்கம் (சஜ்தா) செய்யும்போதும் உங்களை நான் காண்கிறேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 25 இமாமை முந்திக்கொண்டு ருகூஉ மற்றும் சஜ்தா போன்றவற்றைச் செய்யலாகாது.

729 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுவித்தார்கள். தொழுது முடித்ததும் எங்களை நோக்கித் திரும்பி, மக்களே! நான் (உங்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிக்கும் உங்களுடைய) இமாம் ஆவேன். எனவே ,(தொழுகையில்) குனிதல் (ருகூஉ), சிரவணக்கம் (சஜ்தா), நிற்றல்(கியாம்) மற்றும் (சலாம் கொடுத்துத்) திரும்புதல் ஆகியவற்றில் என்னை முந்தாதீர்கள். ஏனெனில், நான் உங்களை எனக்கு முன்னாலும் பார்க்கிறேன்;எனக்குப் பின்னாலும் பார்க்கிறேன். முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நான் பார்த்ததை நீங்கள் பார்த்திருந்தால் நிச்சயமாக நீங்கள் குறைவாகவே சிரிப்பீர்கள்; அதிமாக அழுவீர்கள் என்று கூறினார்கள். மக்கள் நீங்கள் எதைப் பார்த்தீர்கள், அல்லாஹ்வின் தூதரே? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,சொர்க்கத்தையும் நரகத்தையும் நான் பார்த்தேன் என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

730 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், (சலாம் கொடுத்துத்) திரும்புதல் என்பது இடம்பெறவில்லை.

731 முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தொழுகையில்) இமாமுக்கு முன்னால் தமது தலையை உயர்த்துகின்றவர், அவருடைய தலையைக் கழுதையின் தலையாக அல்லாஹ் மாற்றிவிடுவதை அஞ்ச வேண்டாமா?
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

732 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகையில் இமாமுக்கு முன்னால் தனது தலையை உயர்த்துகின்றவர், அவருடைய உருவத்தைக் கழுதையின் உருவமாக அல்லாஹ் மாற்றிவிடுவதை அஞ்சாமல் இருக்க முடியாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

733 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ரபீஉ பின் முஸ்லிம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அவருடைய முகத்தைக் கழுதையின் முகமாக அல்லாஹ் மாற்றிவிடுவதை (அவரால் அஞ்சாமல் இருக்க இயலாது) என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 26 தொழும்போது வானத்தை அண்ணாந்து பார்ப்பதற்கு வந்துள்ள தடை.**

734 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழும்போது வானத்தை அண்ணாந்து பார்க்கும் மக்கள் அதை நிறுத்திக்கொள்ளட்டும். அல்லது அவர்களுடைய பார்வை திரும்பிவராமல் போகட்டும்.
இதை ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

735 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகையில் பிரார்த்திக்கும்போது வானத்தை அண்ணாந்து பார்க்கும் மக்கள் அதை நிறுத்திக் கொள்ளட்டும். அல்லது அவர்களுடைய பார்வை பறிக்கப்பட்டுவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 27 தொழுகையில் அடக்கத்தோடு இருக்க வேண்டும்; சலாம் கொடுக்கும்போது கையால் சைகை செய்வதோ கையை உயர்த்துவதோ கூடாது. முன் வரிசையை முதலில் பூர்த்தி செய்ய வேண்டும்; வரிசைகளில் (இடைவெளியின்றி) நெருக்கமாகவும் இணைந்தும் நிற்க வேண்டும்.**

736 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள் நாங்கள் தொழுதுகொண்டிருந்தபோது எங்களிடம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டுவந்தார்கள். அப்போது (நாங்கள் சலாம் கொடுக்கையில் கைகளை

உயர்த்திக் கொண்டிருந்தோம். இதைக் கண்ட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஏன் நீங்கள் உங்களது கைகளைச் சண்டிக் குதிரை வாலை (உயர்த்துவதை)ப் போன்று உயர்த்திக்கொண்டிருக்கிறீர்கள்? தொழுகையில் அடக்கத்தோடு இருங்கள் என்று கூறினார்கள். பிறகு (மற்றொரு முறை) அவர்கள் எங்களிடம் வந்தபோது நாங்கள் வட்ட வட்டமாக (தனித்தனிக் குழுவாக) நின்றுகொண்டிருப்பதைக் கண்டார்கள். அப்போது அவர்கள், ஏன் (ஓரணியில் இணையாமல்) பிரிந்து பிரிந்து நிற்கிறீர்கள்? என்று கேட்டார்கள். பிறகு (இன்னொரு முறை) அவர்கள் எங்களிடம் வந்தபோது, அறிந்துகொள்ளுங்கள்! வானவர்கள் தம் இறைவனுக்கு முன்னால் அணிவகுத்து நிற்பதைப்போன்று நீங்கள் அணிவகுத்து நில்லுங்கள் என்று கூறினார்கள். அப்போது நாங்கள், அல்லாஹ்வின் தூதரே! வானவர்கள் தம் இறைவனுக்கு முன்னால் எப்படி அணிவகுத்து நிற்கிறார்கள்? என்று கேட்டோம். அதற்கு வானவர்கள் (முதலில்) முதல் வரிசையைப் பூர்த்தி செய்வார்கள்; வரிசைகளில் ஒருவரோடு ஒருவர் (இடைவெளி விடாமல்) நெருக்கமாக நிற்பார்கள் என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

737 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழு(து சலாம் கொடுக்கு)ம்போது அஸ்ஸலாமு அலைக்கும் வ ரஹ்மத்துல்லாஹ், அஸ்ஸலாமு அலைக்கும் வ ரஹ்மத்துல்லாஹ் (அல்லாஹ்வின் சாந்தியும் அருளும் உங்கள் மீது நிலவட்டுமாக, அல்லாஹ்வின் சாந்தியும் அருளும் உங்கள்மீது நிலவட்டுமாக) என்று கூறி, இரு புறங்களிலும் கையை உயர்த்தி சைகை செய்துவந்தோம்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஏன் நீங்கள் உங்கள் கைகளால் சண்டிக் குதிரை வாலை (உயர்த்துவதை)ப் போன்று சைகை செய்துகொண்டிருக்கிறீர்கள்? உங்களில் ஒருவர் (அத்தஹிய்யாத் இருப்பில்) தமது கையைத் தொடையின் மீது வைத்துக்கொண்டு, பிறகு தமக்கு வலப் பக்கத்திலும் இடப் பக்கத்திலும் அமர்ந்திருக்கும் தம் சகோதரர்மீது சலாம் கூறினால் போதும் என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

738 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழுதுகொண்டிருந்தேன். அப்போது நாங்கள் சலாம் கொடு(த்து தொழுகையை முடி)க்கும்போது எங்கள் கைகளால் சைகை செய்தவாறு அஸ்ஸலாமு அலைக்கும், அஸ்ஸலாமு அலைக்கும் (உங்கள்மீது சாந்தியுண்டாகட்டும், உங்கள்மீது சாந்தியுண்டாகட்டும்) என்று சலாம் கூறிவந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களை நோக்கி, ஏன் நீங்கள் உங்கள் கைகளால் சண்டிக் குதிரை வாலை (உயர்த்துவதை)ப் போன்று சைகை செய்து கொண்டிருக்கிறீர்கள்? உங்களில் ஒருவர் சலாம் கொடு(த்து தொழுகையை முடி)க்கும் போது (தமக்கு அருகிலிருக்கும்) தம் தோழரின் பக்கம் திரும்பட்டும்; கையால் சைகை செய்ய வேண்டாம் என்று கூறினார்கள்.

**பாடம் : 28 தொழுகை வரிசைகளைச் சீராக்கி ஒழுங்குபடுத்துவதும், முதல் வரிசை மற்றும் அடுத்தடுத்த வரிசைகளின் சிறப்பும்,முதல் வரிசையில் நிற்பதற்காக முந்திக் கொண்டு போட்டியிடுவதும், (அறிவில்) சிறந்தோருக்கு முதலிடம் அளித்து அவர்களை இமாமுக்கு அருகில் ((முதல் வரிசையில்) நிற்க வைப்பதும்.**

739 அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையி(ன் ஆரம்பத்தி)ல் எங்களுடைய தோள்களைத் தடவி (அவை சமமாக இருக்கின்றனவா என்று சரி) பார்ப்பார்கள்; மேலும், நேராக நில்லுங்கள்; (முன்பின்னாக) வேறுபட்டு நிற்காதீர்கள்; அப்படி (வேறுபட்டு) நின்றால், உங்கள் உள்ளங்களும் வேறுபட்டுவிடும். உங்களில் அறிவிற்சிறந்தவர்கள் எனக்கு அருகில் (முதல் வரிசையில்) நிற்கட்டும். பிறகு அவர்களுக்கு அடுத்து உள்ளவர்களும், பிறகு அவர்களுக்கு அடுத்து உள்ளவர்களும் நிற்கட்டும் என்று கூறுவார்கள்.
தொடர்ந்து அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஆனால், நீங்களோ இன்று (வரிசையில் சீராக நிற்காத காரணத்தால்) கடுமையான கருத்துவேறுபாட்டுடன் காணப்படுகின்றீர்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

740 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் அறிவிற்சிறந்தவர் எனக்கு அருகில் (தொழுகையில் முதல் வரிசையில்) நிற்கட்டும். பிறகு அவர்களுக்கு அடுத்த நிலையிலுள்ளவர்கள் (அடுத்த வரிசையில்) நிற்கட்டும். (இதை மூன்று முறை கூறினார்கள்.) மேலும், (தொழுகைக்கு ஒன்றுகூடும்போது) கடைத்தெரு(வில் கூச்சலிடுவதைப் போன்று) கூச்சலிடுவதிலிருந்து உங்களை நான் எச்சரிக்கிறேன்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

741 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்கள் (தொழுகை) வரிசைகளை ஒழுங்குபடுத்திக்கொள்ளுங்கள். ஏனெனில், வரிசைகளை ஒழுங்குபடுத்துவது தொழுகை முழுமை அடைவதன் ஓர் அங்கமாகும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

742 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தொழுகை) வரிசைகளை முழுமையாக்கிக் கொள்ளுங்கள். ஏனெனில், நான் எனது முதுகுக்குப் பின்னாலும் உங்களைக் காண்கிறேன்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

743 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: தொழுகையில் வரிசைகளை ஒழுங்கு படுத்திக்கொள்ளுங்கள். ஏனெனில், வரிசையை ஒழுங்குபடுத்துவது தொழுகையை அழகுறச் செய்வதில் அடங்கும்.

744 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களது (தொழுகை) வரிசைகளை ஒழுங்குபடுத்திக்கொள்ளுங்கள். இல்லையெனில், அல்லாஹ் உங்கள் முகங்களுக்கிடையே மாற்றத்தை (பிளவை) ஏற்படுத்திவிடுவான்.
இதை நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

745 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (வளைந்த) அம்புக் குச்சிகளைச் சீராக்குவதைப் போன்று எங்கள் (தொழுகை) அணிகளைச் சீராக்குவார்கள். இதை நாங்கள் (நன்கு) புரிந்து கொண்டோம் என்று அவர்கள் கருதியவரை (இவ்வாறு செய்துவந்தார்கள்). பின்னர் ஒரு நாள் அவர்கள் வந்து (தொழுவிப்பதற்காக) நின்று தக்பீர்(தஹ்ரீம்) கூறப்போகும் நேரத்தில் ஒரு மனிதரின் நெஞ்சு வரிசையிலிருந்து (விலகி) வெளியேறியவாறு நிற்பதைக் கண்டார்கள். அப்போது அல்லாஹ்வின் அடியார்களே! உங்களது (தொழுகை) வரிசைகளை ஒழுங்குபடுத்திக்கொள்ளுங்கள். இல்லையெனில்,அல்லாஹ் உங்கள் முகங்களுக்கிடையே மாற்றத்தை (பிளவை) ஏற்படுத்தி விடுவான் என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

746 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகை அறிவிப்புச் செய்வதிலும் (கூட்டுத் தொழுகையில்) முதல் அணியி(ல் நிற்பதி)லும் உள்ள(நன்மை)தனை மக்கள் அறிவார்களாயின் அ(தை அடைந்துகொள்வ)தற்குச் சீட்டுக் குலுக்கிப் போடுவதைத் தவிர வேறு வழியில்லாமல்போகுமானால் நிச்சயம் சீட்டுக் குலுக்கிப் போடுவார்கள். தொழுகைக்கு அதன் ஆரம்ப நேரத்தில் விரைந்து செல்வதில் உள்ள நன்மையை மக்கள் அறிவார்களாயின் அதற்கு முந்திக்கொள்வார்கள். இஷாத் தொழுகையிலும் சுப்ஹுத் தொழுகையிலும் உள்ள நன்மையை அவர்கள் அறிவார்களாயின் அதற்குத் (தரையில்) தவழ்ந்தாவது அவர்கள் வந்து விடுவார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

747 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்கள் சிலர் (தொழுகையில் முன் வரிசையில் சேராமல்) பின்னால் விலகி நிற்பதைக் கண்டார்கள். அப்போது முன் வரிசைக்கு வந்து என்னைப் பின்பற்றித் தொழுங்கள். உங்களுக்குப் பின்னால் இருப்பவர்கள் உங்களைப் பின்பற்றித் தொழட்டும். மக்களில் சிலர் எப்போதும் (தொழுகை வரிசையில்)

பின்தங்கிக்கொண்டே இருப்பார்கள். முடிவில் அவர்களை அல்லாஹ் (தனது அருளிலிருந்து) பின்தங்கச் செய்துவிடுவான் என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களில் சிலர் பள்ளிவாசலின் பிற்பகுதியில் (நிற்பதைக்) கண்டார்கள்...என்று ஹதீஸ் தொடங்குகிறது.

748 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(கூட்டுத் தொழுகையில்) முன்வரிசையில் இருக்கும் நன்மையை நீங்கள் அறிவீர்களாயின் அல்லது மக்கள் அறிவார்களாயின் (அதை அடைந்துகொள்ள போட்டியேற்பட்டு) சீட்டுக் குலுக்கிப்போடும் நிலையேற்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில்,முதல் வரிசையில் இருக்கும் நன்மையை அடைந்து கொள்வதற்குச் சீட்டுக் குலுக்கிப் போடுவதைத் தவிர வேறு வழியில்லாமல் போகும் நிலையே ஏற்படும் என்று இடம்பெற்றுள்ளது.

749 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(கூட்டுத் தொழுகையில்) ஆண்களுடைய வரிசைகளில் சிறந்தது முதல் வரிசையாகும். அவற்றில் தீயது கடைசி வரிசையாகும். பெண்களுடைய வரிசைகளில் சிறந்தது கடைசி வரிசையாகும். அவற்றில் தீயது முதல் வரிசையாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 29 ஆண்களுக்குப் பின்னால் நின்று தொழும் பெண்கள், ஆண்கள் (சஜ்தாவிலிருந்து) தலையை உயர்த்திய பின்னரே தம் தலைகளை சஜ்தாவிலிருந்து உயர்த்த வேண்டும் என்ற கட்டளை.**

750 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களது காலத்தில் மேலாடையில்லாமல்) ஆண்கள் அணிந்த கீழாடை சிறியதாக இருந்த காரணத்தால்,சிறுவர்களைப் போன்று அவர்கள் தம் கீழாடைகளை பிடரிகள்மீது கட்டிக்கொண்டு நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் (தொழுதுகொண்டு) இருந்ததை நான் பார்த்திருக்கிறேன். ஆதலால், பெண்களே! ஆண்கள் (சஜ்தாவிலிருந்து) நிமிரும்வரை நீங்கள் உங்களுடைய தலைகளை (சஜ்தாவிலிருந்து) உயர்த்த வேண்டாம் என்று (நபியவர்கள் பிறப்பித்த உத்தரவை) ஒருவர் கூறுவார்.

**பாடம் : 30 குழப்பம் ஏற்படாதிருப்பின், பெண்கள் பள்ளிவாசலுக்குச் செல்லலாம்; நறுமணம் பூசிக்கொண்டு அவர்கள் வரலாகாது.**

751 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவரிடம் அவருடைய மனைவி பள்ளிவாசலுக்குச் செல்ல அனுமதி கோரினால் அவளை அவர் தடுக்க வேண்டாம்.
இதை சாலிம் (ரஹ்) அவர்கள் தம் தந்தை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

752 சாலிம் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்கள் மனைவியர் உங்களிடம் பள்ளிவாசல்களுக்குச் செல்ல அனுமதி கோரினால் அவர்களை நீங்கள் தடுக்காதீர்கள் என்று கூறுவதை நான் கேட்டுள்ளேன் என்று (என் தந்தை) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள். அப்போது (என் சகோதரர்) பிலால் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் அவர்களைத் தடுப்போம் என்று கூறினார்கள். உடனே அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் (தம் புதல்வர்) பிலால் பின் அப்தில்லாஹ்வை நோக்கி மிகக் கடுமையாக ஏசினார்கள். அதைப் போன்று அவர்கள் ஏசியதை நான் கேட்டதே இல்லை. பிறகு அவர்கள், நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை உனக்கு அறிவிக்கிறேன். ஆனால், நீயோ அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களை நாங்கள் தடுப்போம் என்று கூறுகிறாயே? என்றார்கள்.

753 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் அடியார்க(ளான பெண்க)ள் அல்லாஹ்வின் பள்ளிவாசல்களுக்குச் செல்வதைத் தடுக்காதீர்கள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

754 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்கள் துணைவியர் பள்ளிவாசல்களுக்குச் செல்ல உங்களிடம் அனுமதி கோரினால் அவர்களுக்கு அனுமதி அளியுங்கள் என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்.

755 முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெண்கள் இரவில் பள்ளிவாசல்களுக்குச் செல்வதை நீங்கள் தடுக்காதீர்கள் என்று கூறினார்கள் என அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தெரிவித்தார்கள். அப்போது அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களுடைய புதல்வர்களில் ஒருவர், பெண்களை வெளியே செல்ல நாங்கள் விடமாட்டோம். (அவர்கள் வெளியே செல்ல) இதையே ஒரு சாக்காக ஆக்கிவிடுவார்கள் என்று கூறினார். அப்போது அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று

கூறுகிறேன். ஆனால், நீ அவர்களை நாங்கள் விடமாட்டோம் என்று கூறுகிறாயா?என்று கூறி, தம் புதல்வரைக் கண்டித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் முஜாஹித் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

756 முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பெண்கள் இரவு நேரத்தில் பள்ளிவாசல்களுக்குச் செல்ல நீங்கள் அனுமதியளியுங்கள் என்று கூறினார்கள் என அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தெரிவித்தார்கள்.
அப்போது அவர்களுடைய புதல்வர் வாகித் (ரஹ்) அவர்கள் அவ்வாறு அனுமதி கொடுத்தால் அவர்கள் அதையே ஒரு சாக்காக ஆக்கிவிடுவார்கள் என்று கூறினார்கள். உடனே அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தம் புதல்வருடைய நெஞ்சில் அடித்து நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னதை உனக்கு அறிவிக்கிறேன்; ஆனால் நீ முடியாது என்று கூறுகிறாயே என்று (கடிந்து) கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

757 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பெண்கள் பள்ளிவாசல்களுக்குச் செல்வதற்காக உங்களிடம் அனுமதி கேட்டால் பள்ளிவாசலில் அவர்களுக்குரிய உரிமையைத் தடுக்காதீர்கள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவித்தபோது அவர்களுடைய புதல்வர் பிலால் (ரஹ்) அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களை நாங்கள் தடுப்போம் என்று கூறினார்கள். அப்போது அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள் என்று நான் கூறுகிறேன்; ஆனால், நீயோ அவர்களைத் தடுப்போம் என்று கூறுகிறாயே! என்று (கண்டித்துக்) கூறினார்கள்.

758 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(பெண்களே!) நீங்கள் இஷாத் தொழுகையில் கலந்துகொள்ள (பள்ளிவாசலுக்கு)ச் செல்லும் போது அந்த இரவில் நறுமணம் பூசிச் செல்லாதீர்கள்.
இதை ஸைனப் பின்த் முஆவியா அஸ் ஸகஃபிய்யா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

759 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களுடைய துணைவியார் ஸைனப் பின்த் முஆவியா (ரலி) அவர்கள் கூறியதாவது;
நீங்கள் (ஜமாஅத் தொழுகையில் கலந்துகொள்வதற்காகப்) பள்ளிவாசலுக்குச் செல்லும் போது நறுமணம் பூசாதீர்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் கூறினார்கள்.

760 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நறுமணப் புகையைப் பயன்படுத்திய எந்தப் பெண்ணும் கடைசித் தொழுகையான இஷாத் தொழுகையில் நம்முடன் கலந்துகொள்ள வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

761 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(இன்று) பெண்கள் உருவாக்கியுள்ள (அலங்கார உத்திகள் போன்ற)வற்றை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பார்த்திருப்பார்களேயானால் பனூஇஸ்ராயீல் சமுதாயப் பெண்கள் பள்ளிவாசலுக்குச் செல்லக் கூடாதெனத் தடுக்கப்பட்டதைப் போன்று இவர்களையும் தடுத்திருப்பார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களிடம், பனூஇஸ்ராயீல் சமுதாயப் பெண்கள் பள்ளிவாசலுக்குச் செல்லக் கூடாதெனத் தடுக்கப்பட்டார்களா? என்று கேட்டேன். அதற்கு அம்ரா (ரஹ்) அவர்கள் ஆம் என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 31 சப்தமிட்டு (குர்ஆன்) ஓதப்படும் தொழுகைகளில், சப்தமிட்டு ஓதுவதால் இடையூறு ஏற்படும் என்ற அச்சமிருந்தால், (ஒரேயடியாகக்) குரலை உயர்த்தாமலும் (ஒரேயடியாகக்) குரலைத் தாழ்த்தாமலும் நடுநிலையாக ஓத வேண்டும்.**

762 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், (நபியே!) உங்கள் தொழுகையில் குரலை மிகவும் உயர்த்தவும் வேண்டாம். மிகவும் தாழ்த்தவும் வேண்டாம் எனும் (17:110ஆவது) இறைவசனம் தொடர்பாகப் பின்வருமாறு விளக்கமளித்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இஸ்லாத்தின் ஆரம்பக் காலத்தில் எதிரிகளின் தொல்லைகளைக் கருதி) மக்காவில் தலைமறைவாக இருந்துவந்தார்கள். அப்போது தம் தோழர்களுடன் தொழும் வேளையில் சப்தமிட்டுக் குர்ஆனை ஓதிவந்தார்கள். அதை இணைவைப்பாளர்கள் கேட்டுவிட்டால், குர்ஆனையும் அதை அருளிய(இறை)வனையும் அதை (மக்கள் முன்) கொண்டுவந்த (நபிய)வர்களையும் அவர்கள் ஏசுவார்கள். ஆகவே, உயர்ந்தோனாகிய அல்லாஹ் தன் நபியிடம் நீங்கள் உங்கள் தொழுகையில் குரலை உயர்த்தாதீர்கள். அவ்வாறு செய்தால், நீங்கள் ஓதுவதை இணைவைப்பாளர்கள் கேட்டுவிடுவார்கள். (அதற்காக உடன் தொழுகின்ற) உங்கள் தோழர்களைவிட்டு ஒரேடியாக மறைத்துவிடாதீர்கள்; அவர்களது செவிக்கு எட்டுமாறு ஓதுங்கள். அதிகமாகச் சப்தமிட்டு ஓதாதீர்கள். இவ்விரண்டுக்குமிடையே மிதமான போக்கைக் கைகொள்ளுங்கள் என்று கூறினான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

763 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபியே!) உங்கள் தொழுகையில் குரலை மிகவும் உயர்த்தவும் வேண்டாம்; மிகவும் தாழ்த்தவும் வேண்டாம் எனும் (17:110ஆவது) இறைவசனம், பிரார்த்தனை (துஆ) தொடர்பாக அருளப்பெற்றதாகும்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்கள் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 32 குர்ஆன் ஓதப்படும்போது காது தாழ்த்திக் கேட்க வேண்டும்.

764 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(நபியே!) இந்த வேதஅறிவிப்பை அவசரம் அவசராமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள் எனும் (75:16ஆவது) வசனம் குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
(வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் தம்மிடம் வேதஅறிவிப்பு (வஹீ) கொண்டுவரும் போது நபி (ஸல்) அவர்கள் தம் நாவையும் இதழ்களையும் (எங்கே இறைவசனங்கள் மறந்துவிடப் போகின்றனவோ என்ற அச்சத்தால் மனனமிடுவதற்காக) அசைத்துக் கொண்டிருப்பார்கள். இது அவர்களுக்குச் சிரமமாக இருந்தது. இது அவர்களது வதனத்திலேயே காணப்படலாயிற்று. ஆகவே அல்லாஹ், (நபியே!) இந்த வேதஅறிவிப்பை அவசர அவசரமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள். அதை (உங்கள் மனத்தில்) ஒன்றுசேர்த்து, அதை (நீங்கள்) ஓதும்படி செய்வது எமது பொறுப்பாகும் எனும் (75:16,17) வசனங்களை அருளினான்.
அதாவது உங்கள் நெஞ்சத்தில் பதியச் செய்வதும் அதை உங்கள் நாவால் ஓதும்படி செய்வதும் எமது பொறுப்பாகும் என்று இறைவன் கூறினான். மேலும் நாம் இதனை ஓதிவிட்டோமாயின், நீங்கள் ஓதுவதைத் தொடருங்கள் எனும் (75:18ஆவது) வசனத்தையும் அருளினான். அதாவது நாம் (வானவர் மூலம் வேதவசனங்களை) அருளும்போது, அதைக் கவனத்துடன் கேளுங்கள் என்று கூறினான். பின்னர் அதை விளக்குவதும் எமது பொறுப்பாகும் எனும் (75:19ஆவது) வசனத்தையும் அருளினான். அதாவது உங்கள் நாவினால் அதை(ப் பிறருக்கு) விளக்கித் தரும்படி உங்களை (ஆயத்தம்) செய்வது நமது பொறுப்பாகும் என்று கூறினான்.
(இந்த வசனங்கள் அருளப்பெற்ற) பின்னர் தம்மிடம் ஜிப்ரீல் (அலை) அவர்கள் (வஹீ கொண்டு) வரும்போது நபி (ஸல்) அவர்கள் தலையைத் தாழ்த்தி (அருளப்படுவதை அமைதியாகக்) கேட்டுக் கொண்டிருப்பார்கள். (வசனங்களை அருளிவிட்டு) ஜிப்ரீல் (அலை) அவர்கள் சென்றுவிடும்போது அல்லாஹ் வாக்களித்தபடி நபி (ஸல்) அவர்கள் அவற்றை ஓதினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

765 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(நபியே!) இந்த வேதஅறிவிப்பை அவசரம் அவசரமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள் எனும் (75:16ஆவது) வசனம் குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
(வானவர் ஜிப்ரீல் (அலை) அவர்கள் தம்மிடம் வேதஅறிவிப்பு (வஹீ) கொண்டு வரும்போது) நபி (ஸல்) அவர்கள் தம் இதழ்களை, (எங்கே இறைவசனங்கள் மறந்துவிடப் போகின்றனவோ என்ற அச்சத்தால் மனனமிடுவதற்காக) அசைத்துக்கொண்டிருப்பார்கள். அதனால் அவர்கள் சிரமத்தை அனுபவித்தார்கள்.
-இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் இதழ்களை அசைத்ததைப் போன்று உங்களுக்கு நான் அசைத்துக் காட்டுகிறேன் என்று என்னிடம் கூறினார்கள்.
(அறிவிப்பாளர் மூசா பின் அபீஆயிஷா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:)
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் தம் இதழ்களை அசைத்ததைப் போன்று நான் உங்களுக்கு அசைத்துக் காட்டுகிறேன் என்று சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறிவிட்டு, (அவ்வாறே) அசைத்துக் காட்டினார்கள்.

தொடர்ந்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
(நபி (ஸல்) அவர்கள் தம் இதழ்களை அசைத்துக்கொண்டிருந்தபோது) அல்லாஹ் இந்த வேதஅறிவிப்பை அவசர அவசரமாக மனனம் செய்வதற்காக, உங்கள் நாவை அசைக்காதீர்கள். அதை (உங்கள் மனத்தில்) ஒன்றுசேர்த்து, அதை (நீங்கள்) ஓதும்படி செய்வது எமது பொறுப்பாகும் எனும் (75:16, 17) வசனங்களை அருளினான். அதாவது, உங்கள் நெஞ்சத்தில் பதியச் செய்வதும் அதை உங்கள் நாவால் ஓதும்படி செய்வதும் (எமது பொறுப்பாகும்) என்று இறைவன் கூறினான்.
மேலும், நாம் இதனை ஓதிவிட்டோமாயின் நீங்கள் ஓதுவதைத் தொடருங்கள் எனும் (75:18ஆவது) வசனத்தையும் அருளினான். அதாவது நாம் (வானவர் மூலம்) அருளும்போது, அதைக் கவனத்துடனும் அமைதியாகவும் கேளுங்கள். பின்னர் அதை உங்கள் நாவால் ஓதும்படி செய்வது எமது பொறுப்பாகும் என்று கூறினான்.
(இவ்வசனங்கள் அருளப்பெற்ற பின்னர்) தம்மிடம் ஜிப்ரீல் (அலை) அவர்கள் (வஹீ கொண்டு) வரும்போது நபி (ஸல்) அவர்கள் கவனத்துடன் கேட்பார்கள். ஜிப்ரீல் (அலை) அவர்கள் (வசனங்களை அருளிவிட்டுச்) சென்றுவிடும்போது ஜிப்ரீல் (அலை) அவர்கள் ஓதிக் காட்டியபடி அவற்றை நபி (ஸல்) அவர்கள் ஓதினார்கள்.

## பாடம் : 33 சுப்ஹுத் தொழுகையில் (நபி (ஸல்) அவர்கள்) சப்தமிட்டுக் குர்ஆன் ஓதியதும் ஜின்களுக்கு ஓதிக் காட்டியதும்.

766 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஜின்களுக்கு(க் குர்ஆனை) ஓதிக்காட்டவுமில்லை; ஜின்களை அவர்கள் பார்க்கவுமில்லை. (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்கள் சிலருடன் உக்காழ் எனும் சந்தையை நோக்கிச் சென்றார்கள். (இந்த

நேரத்தில்) ஷைத்தான்களுக்கும் வானுலகச் செய்திகளுக்கும் இடையே தடை ஏற்படுத்தப் பட்டுவிட்டது. மேலும், (வானுலகச் செய்திகளை ஒட்டுக்கேட்கச் செல்லும்) ஷைத்தான்கள் மீது தீப்பந்தங்கள் (எரிகற்கள்) ஏவிவிடப்பட்டிருந்தன. ஷைத்தான்கள் தம் கூட்டத்தாரிடம் (ஒரு செய்தியும் கிடைக்காமல் வெறுமனே) திரும்பியபோது உங்களுக்கு என்ன நேர்ந்தது? என்று கூட்டத்தார் கேட்டார்கள். அதற்கு ஷைத்தான்கள் நமக்கும் வானுலகச் செய்திகளுக்கும் இடையே தடை ஏற்படுத்தப்பட்டு விட்டது; மேலும், எங்கள்மீது தீப்பந்தங்கள் ஏவப்பட்டன என்று கூறினர். ஏதேனும் புதியதொரு நிகழ்ச்சி ஏற்பட்டதே இதற்குக் காரணமாக இருக்க வேண்டும். எனவே, நீங்கள் பூமியின் கீழ்த்திசை, மேல்திசை எங்கும் விரவிச் சென்று, நமக்கும் வானுலகச் செய்திகளுக்கும் இடையே தடையாக உள்ள இந்த நிகழ்ச்சி என்னவென்று ஆராயுங்கள் என்றார்கள். அவ்வாறே ஷைத்தான்கள் பூமியின் கீழ்த்திசை,மேல்திசை எங்கும் விரவிச் சென்றார்கள். அவர்களில் ஒரு குழுவினர் திஹாமா எனும் பகுதியை நோக்கிச் சென்றனர். உக்காழ் சந்தைக்குச் செல்லும் வழியில் நக்ல் எனுமிடத்தில் அப்போது நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்கு ஃபஜ்ர் தொழுகை தொழுவித்துக் கொண்டிருந்தார்கள். அதில் ஓதப்பட்ட குர்ஆன் வசனங்களை ஷைத்தான்கள் செவியுற்றபோது நமக்கும் வானுலகச் செய்திக்கும் இடையே தடையாக இருப்பது இதுதான் என்று கூறிக்கொண்டு,தங்கள் கூட்டத்தாரிடம் திரும்பினர். அவர்களிடம், எங்கள் சமுதாயமே! நிச்சயமாக நாங்கள் ஆச்சரியமான ஒரு வேதத்தைச் செவிமடுத்தோம். அது நேர்வழியைக் காட்டுகிறது. எனவே, அதை நாங்கள் நம்பினோம். நாங்கள் (இனி) ஒருபோதும் எங்கள் இறைவனுக்கு எவரையும் இணையாக்க மாட்டோம் என்று கூறினர். இதையடுத்து அல்லாஹ் தன்னுடைய தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு நிச்சயமாக ஜின்களில் சிலர் (குர்ஆனைச்) செவியேற்றனர் என எனக்கு வஹீ (வேதஅறிவிப்பு) அறிவிக்கப்பட்டதென்று (நபியே!) நீர் கூறுவீராக! எனும் (72:1ஆவது) வசனத்தை அருளினான்.

767 ஆமிர் பின் ஷரஹ்பீல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அல்கமா (ரஹ்) அவர்களிடம், இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் ஜின்களின் இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தார்களா? என்று கேட்டேன். அதற்கு அல்கமா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
நான் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களிடம், ஜின்களின் இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் உங்களில் யாராவது இருந்தீர்களா? என்று கேட்டேன். அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்: இல்லை; ஆனால், ஒரு நாள் இரவு நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தபோது திடீரென அவர்களைக் காணவில்லை. எனவே, பள்ளத்தாக்குகளிலும் மலைக் கணவாய்களிலும் அவர்களைத் தேடிப்பார்த்தோம். (அவர்கள் அங்கு கிடைக்காமல் போகவே) ஜின் அவர்களைத் தூக்கிச் சென்றிருக்கும்; அல்லது மர்மமான முறையில் அவர்கள் கொல்லப்பட்டிருப்பார்கள் என்று நாங்கள் பேசிக் கொண்டோம். பின்னர் அன்றைய மோசமான இரவை (ஒரு வழியாக)க் கழித்தோம்.
அதிகாலையில் நபி (ஸல்) அவர்கள் ஹிரா மலைக்குன்றின் திசையிலிருந்து வந்து கொண்டிருந்தார்கள். உடனே நாங்கள் அல்லாஹ்வின் தூதரே! உங்களைக் காணாமல் நாங்கள் தேடினோம். நீங்கள் கிடைக்காமல்போகவே அந்த மோசமான இரவை (ஒருவாறு) கழித்தோம் என்று கூறினோம். அப்போது நபி (ஸல்) அவர்கள், ஜின்களில் ஒருவர் என்னை

அழைக்க வந்தார். எனவே அவருடன் சென்று ஜின்களுக்குக் குர்ஆனை ஓதிக் காட்டினேன் என்று கூறினார்கள். பிறகு எங்களை அழைத்துச் சென்று ஜின்கள் விட்டுச்சென்ற அடையாளங்களையும் அவர்கள் பயன்படுத்திய நெருப்பின் தடயத்தையும் காட்டினார்கள். ஜின்கள் நபி (ஸல்) அவர்களிடம் (தங்களுக்கு அனுமதிக்கப்பட்ட) உணவு குறித்துக் கேள்வி கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் பெயர் சொல்லி அறுக்கப்பட்ட ஒவ்வொரு பிராணியின் எலும்பும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதாகும். அது உங்கள் கரங்களில் இறைச்சியைவிட நிறைவானதாக இருக்கும். ஒவ்வொரு கெட்டிச் சாணமும் உங்களுடைய கால்நடைகளுக்குத் தீவனமாகும் என்று கூறினார்கள்.பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களிடம்), எனவே, நீங்கள் (இயற்கைக் கடனை நிறைவேற்றிய பின்பு எலும்பு, கெட்டிச் சாணம் ஆகிய) அவ்விரண்டின் மூலம் துப்புரவு (இஸ்தின்ஜா) செய்யாதீர்கள்; அவ்விரண்டும் உங்களுடைய சகோதரர்க(ளான ஜின்க)ளின் உணவாகும் என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் அவர்கள் பயன்படுத்திய நெருப்பின் தடயத்தையும் என்பது வரை இடம்பெற்றுள்ளது.

-ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் (தங்களது) உணவு குறித்து ஜின்கள் வினவினர். அவர்கள் (அரபு) தீபகற்பத்தைச் சேர்ந்த ஜின்கள் ஆவர்.

768 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்து அல்கமா (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ்,மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அந்த அறிவிப்பிலும் அவர்கள் பயன்படுத்திய நெருப்பின் தடயத்தையும் என்பது வரையே இடம்பெற்றுள்ளது. அதற்குப் பிறகுள்ள குறிப்புகள் இடம்பெறவில்லை.

769 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஜின்களின் இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நான் இருக்கவில்லை. அவர்களுடன் நான் இருந்திருக்க வேண்டும் என்று விரும்பினேன்.

770 அப்துர் ரஹ்மான் பின் அப்தில்லாஹ் பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மஸ்ரூக் பின் அஜ்தஉ (ரஹ்) அவர்களிடம், ஜின்கள் குர்ஆனைச் செவிமடுத்த அந்த இரவில் ஜின்களும் அங்கு இருந்தார்கள் என்பதை நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிவித்தவர் யார்? என்று கேட்டேன். அதற்கு மஸ்ரூக் (ரஹ்) அவர்கள் ஒரு மரம்தான் நபி (ஸல்) அவர்களிடம் ஜின்களைப் பற்றித் தெரிவித்தாக உங்கள் தந்தை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள் என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 34 லுஹர் மற்றும் அஸ்ர் தொழுகைகளில் குர்ஆன் ஓதுதல்.

771 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுகை நடத்தும்போது லுஹ்ர் மற்றும் அஸ்ர் தொழுகைகளின் முதலிரண்டு ரக்அத்களில் அல்ஃபாத்திஹா (அல்ஹம்து)

அத்தியாயத்தையும் (அதனுடன் ஒவ்வொரு ரக்அத்திலும் ஓர் அத்தியாயம் என) இரு அத்தியாயங்களையும் ஓதுவார்கள். சில நேரங்களில் சில வசனங்களை எங்கள் காதில் விழும் அளவுக்கு (குரலுயர்த்தி) ஓதுவார்கள். லுஹ்ர் தொழுகையின் முதல் ரக்அத்தில் நீளமாகவும், இரண்டாவது ரக்அத்தில் (அதைவிடக்) குறைவாகவும் ஓதுவார்கள். சுப்ஹுத் தொழுகையிலும் இவ்வாறே செய்வார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

772 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் லுஹ்ர் மற்றும் அஸ்ர் தொழுகைகளின் முதலிரண்டு ரக்அத்களில் அல் ஃபாத்திஹா (அல்ஹம்து) அத்தியாயத்தையும் மற்றோர் அத்தியாயத்தையும் ஓதுவார்கள். சில நேரங்களில் சில வசனங்களை எங்கள் காதில் விழும் அளவுக்கு (சப்தமிட்டு) ஓதுவார்கள். பிந்திய இரு ரக்அத்களிலும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை (மட்டுமே) ஓதுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

773 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் லுஹர் மற்றும் அஸ்ர் தொழுகைகளில் எவ்வளவு நேரம் நிலையில் நின்றார்கள் என்பதை நாங்கள் மதிப்பிட்டுவந்தோம்:
லுஹ்ர் தொழுகையின் முன்னிரு ரக்அத்களில் (முப்பது வசனங்களைக் கொண்ட) அலிஃப், லாம், மீம் தன்ஸீல் அஸ்ஸஜ்தா (எனும் 32ஆவது) அத்தியாயம் ஓதும் அளவுக்கும், அதன் பின்னிரு ரக்அத்களில் அதில் பாதியளவுக்கும் நிற்பார்கள். அஸ்ர் தொழுகையின் முன்னிரு ரக்அத்களில் லுஹ்ர் தொழுகையின் பின்னிரு ரக்அத்கள் அளவுக்கும்,அதன் பின்னிரு ரக்அத்களில் அதில் பாதியளவுக்கும் நிற்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அலிஃப், லாம், மீம் தன்ஸீல் என்பதற்கு பதிலாக முப்பது வசனங்கள் ஓதும் அளவுக்கு (நிற்பார்கள்) என்று இடம்பெற்றுள்ளது.

774 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் லுஹ்ர் தொழுகையின் முந்திய இரு ரக்அத்களில் தலா முப்பது வசனங்கள் அளவும், அதன் பிந்திய இரு ரக்அத்களில் அதில் பாதி அல்லது பதினைந்து வசனங்கள் அளவும் ஓதுவார்கள். அஸ்ர் தொழுகையின் முந்திய இரு ரக்அத்களில் தலா பதினைந்து வசனங்கள் அளவும், அதன் பிந்திய இரு ரக்அத்களில் அதில் பாதியளவும் ஓதுவார்கள்.

775 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கூஃபாவாசிகள் (தம் ஆளுநரான அபூ இஸ்ஹாக்) சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களைப் பற்றி (கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடம் புகார் கூறினர். சஅத் அவர்கள் தொழுவிப்பது குறித்து அவர்கள் (குறை) கூறினர். இதையொட்டி உமர் (ரலி) அவர்கள் சஅத் (ரலி) அவர்களிடம் ஆளனுப்பித் தம்மிடம் வருமாறு கூறினார்கள். அவ்வாறே சஅத் (ரலி) அவர்களும் வந்தார்கள். அப்போது சஅத் (ரலி) அவர்களிடம் உமர்

(ரலி) அவர்கள் தொழுகை தொடர்பாக மக்கள் கூறிய குற்றச்சாட்டை எடுத்துரைத்தார்கள். அதற்கு சஅத் (ரலி) அவர்கள், நிச்சயமாக நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது காட்டிய முறைப்படியே அவர்களுக்குத் தொழுவித்து வருகிறேன்; அவர்கள் தொழுது காட்டியதைவிட நான் குறைத்துவிடவில்லை. நான் தொழுகையின் முந்திய இரு ரக்அத்களில் நீளமாக ஓதியும் பிந்திய இரு ரக்அத்களில் சுருக்கமாக ஓதியும் தொழுவிக்கிறேன் என்று கூறினார்கள். அதற்கு உமர் (ரலி) அவர்கள்,அபூஇஸ்ஹாக்! உங்களைப் பற்றி (நமது) எண்ணமும் அதுவே என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

776 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
உமர் (ரலி) அவர்கள் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடம், (கூஃபா நகர) மக்கள், தொழுகை நடத்துவது உள்ளிட்ட எல்லா விஷயங்களிலும் உங்களைப் பற்றி (என்னிடம்) முறையிட்டனர் (இது குறித்து நீங்கள் என்ன விளக்கம் கூறுகிறீர்கள்?) என்று கேட்டார்கள். அதற்கு சஅத் (ரலி) அவர்கள், நானோ (தொழுகையின்) முதல் இரண்டு ரக்அத்களில் நீளமாக ஓதுகிறேன். பின் இரண்டு ரக்அத்களில் சுருக்கமாக ஓதுகிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுவித்துக் காட்டிய முறையைப் பின்பற்றுவதில் எந்தக் குறையும் நான் செய்யவில்லை என்று கூறினார்கள். அதற்கு உமர் (ரலி) அவர்கள், உங்களைப் பற்றி (நமது) எண்ணமும் அல்லது உங்களைப் பற்றி எனது எண்ணமும் அதுவே என்று கூறினார்கள்.

777 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் கிராமவாசிகள் எனக்குத் தொழுகையைக் கற்றுத்தருகிறார்களா? என்று (சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கேட்டதாக) அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

778 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களது காலத்தில்) லுஹ்ர் தொழுகைக்காக இகாமத் சொல்லப்படும். அப்போது ஒருவர் பகீஉல் ஃகர்கத் பகுதிக்குச் சென்று இயற்கைக் கடனை நிறைவேற்றி, அங்கத் தூய்மை செய்துவிட்டுத் திரும்பிவந்து விடுவார். அப்போதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முதல் ரக்அத்திலேயே இருந்துகொண்டிருப்பார்கள். அவர்கள் (முதல் ரக்அத்தில்) நீண்ட நேரம் (குர்ஆன் வசனங்களை) ஓதிவந்ததே இதற்குக் காரணம்.

779 கஸ்ஆ பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்களைச் சுற்றி நிறையப் பேர் குழுமியிருந்தனர். மக்கள் அனைவரும் கலைந்து சென்றதும் நான், (இதோ) இவர்கள் உங்களிடம் கேட்டதையெல்லாம் நான் உங்களிடம் கேட்கமாட்டேன். நான் உங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தொழுகையைப் பற்றிக் கேட்கிறேன் என்று சொன்னேன். அதற்கு அபூசயீத் (ரலி) அவர்கள், (நபியவர்களின் முழு நிறைவான தொழுகையைப் போன்று உங்களால் தொழ இயலாது என்பதால்) இது தொடர்பாகக் கேட்பதில் உங்களுக்குப் பயன் இல்லை என்று கூறினார்கள். நான் மீண்டும் அதே

கேள்வியைக் கேட்டேன். அப்போது அபூசயீத் (ரலி) அவர்கள் (நபி (ஸல்) அவர்களது காலத்தில்) லுஹர் தொழுகைக்காக இகாமத் சொல்லப்படும். அப்போது எங்களில் ஒருவர் பகீஉல் ஃகர்கத் பகுதிக்குச் சென்று இயற்கைக் கடனை நிறைவேற்றுவார். பிறகு தமது இல்லத்திற்குச் சென்று அங்கத் தூய்மை செய்துவிட்டுப் பள்ளிவாசலுக்குத் திரும்பிவருவார். அப்போதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முதல் ரக்அத்திலேயே இருந்து கொண்டிருப்பார்கள் என்று கூறினார்கள்.

## பாடம் : 35 சுப்ஹுத் தொழுகையில் குர்ஆன் ஓதுதல்.

780 அப்துல்லாஹ் பின் அஸ்ஸாயிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நபி (ஸல்) அவர்கள் மக்காவில் எங்களுக்கு சுப்ஹுத் தொழுகை நடத்தினார்கள். அப்போது அல்முஃமினூன்(எனும் 23ஆவது) அத்தியாயத்தை ஓதலானார்கள். அதில் மூசா (அலை), ஹாரூன் (அலை) ஆகியோரைப் பற்றிய (23:45ஆவது) வசனம் அல்லது ஈசா (அலை) அவர்களைப் பற்றிய (23:50ஆவது) வசனம் வந்ததும் (இந்த இடத்தில் அறிவிப்பாளர் முஹம்மத் பின் அப்பாத் (ரஹ்) அவர்கள் ஐயப்பாட்டுடன் அறிவிக்கிறார்கள். அல்லது மற்ற அறிவிப்பாளர்கள் அன்னார் சொன்ன வார்த்தை குறித்து வேறுபடுகிறார்கள்.) நபி (ஸல்) அவர்களுக்கு இருமல் ஏற்பட்டுவிட்டது. உடனே (அவர்களால் தொடர்ந்து ஓத முடியாமல்) ருகூஉச் செய்துவிட்டார்கள். அந்தத் தொழுகையில் நானும் கலந்துகொண்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அத்தோடு நிறுத்திக் கொண்டு நபி (ஸல்) அவர்கள் ருகூஉச் செய்துவிட்டார்கள் என்று காணப்படுகிறது.
மேலும் இந்த அறிவிப்பில், (அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துல்லாஹ் பின் அம்ர் அவர்களது பெயரில் இப்னுல் ஆஸ் என்பது இடம்பெறவில்லை. (ஆகவே, இந்த அப்துல்லாஹ் நபித்தோழரான அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் அல்லர்.)

781 அம்ர் பின் ஹுரைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுகையில் பின்வாங்கிச் செல்லும் இரவின் மீது சத்தியமாக எனும் (81:17ஆவது) வசன(ம் இடம்பெற்றுள்ள 81ஆவது அத்தியாய)த்தை ஓதுவதை நான் செவியுற்றேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

782 குத்பா பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் தொழுதேன்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அப்போது) எங்களுக்குத் தொழுவித்தார்கள். (அத்தொழுகையில்) காஃப் வல்குர்ஆனில் மஜீத் (என்று தொடங்கும் 50ஆவது) அத்தியாயத்தை ஓதினார்கள். அதில் வந்நக்ல பாசிகா(த்)தின் எனும் (10ஆவது) வசனத்தை அன்னார் ஓதியபோது, நானும் அதைத் திரும்ப ஓதலானேன்; ஆனால், அவர்கள் ஓதிய(தன் பொருள் என்னவென்ப)து எனக்குப் புரியவில்லை.

783 குத்பா பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுகையில் கனிகள் நிறைந்து, குலைகள் அடுக்கடுக்காய்த் தொங்குகின்ற நீண்ட நெடிய பேரீச்ச மரங்களையும் (நாமே முளைக்கச் செய்தோம்) எனும் (50:10ஆவது) வசன(ம் இடம்பெற்றுள்ள காஃப் அத்தியாய)த்தை ஓதுவதை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

784 ஸியாத் பின் இலாக்கா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என் தந்தையின் சகோதரர் (குத்பா பின் மாலிக்-ரலி) அவர்கள், நான் நபி (ஸல்) அவர்களுடன் சுப்ஹுத் தொழுகை தொழுதேன். முதல் ரக்அத்தில் நபி (ஸல்) அவர்கள் கனிகள் நிறைந்து, குலைகள் அடுக்கடுக்காய்த் தொங்குகின்ற நீண்ட நெடிய பேரீச்ச மரங்களையும் (நாமே முளைக்கச் செய்தோம்) எனும் (50:10ஆவது) வசன(ம் இடம்பெற்றுள்ள காஃப் அத்தியாய)த்தை (ஓதினார்கள்) என்று கூறினார்கள். சில வேளைகளில், காஃப் எனும் (50ஆவது) அத்தியாயத்தை ஓதினார்கள் என்று கூறுவார்கள்.

785 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ஆரம்பக் காலத்தில்) ஃபஜ்ர் தொழுகையில் காஃப் வல்குர்ஆனில் மஜீத் எனும் (50ஆவது) அத்தியாயத்தை ஓதிவந்தார்கள். அதற்குப் பின்னர் அவர்களது தொழுகை சுருக்கமாகவே அமைந்தது.

786 சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்களின் தொழுகை குறித்துக் கேட்டேன். அப்போது அவர்கள், நபி (ஸல்) அவர்கள் சுருக்கமாகவே தொழுவிப்பார்கள்; இதோ இவர்கள் தொழுவிப்பதைப் போன்று (நீளமாகத்) தொழுவிக்கமாட்டார்கள் என்று கூறினார்கள். மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுகையில் காஃப் வல்குர்ஆனில் மஜீத் (என்று தொடங்கும் 50ஆவது அத்தியாயம்) போன்றதை ஓதுவார்கள் என்றும் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

787 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் லுஹ்ர் தொழுகையில் வல்லைலி இதா யஃக்ஷா (என்று தொடங்கும் 92ஆவது) அத்தியாயத்தை ஓதுவார்கள்.
அஸ்ர் தொழுகையில் அது போன்றதையும் சுப்ஹுத் தொழுகையில் அதைவிடப் பெரிய (அத்தியாயத்)தையும் ஓதுவார்கள்.

788 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் லுஹ்ர் தொழுகையில் சப்பிஹிஸ்ம ரப்பிக்கல் அஃலா... (என்று தொடங்கும் 87ஆவது) அத்தியாயத்தை ஓதுவார்கள். சுப்ஹுத் தொழுகையில் அதைவிடப் பெரிய(அத்தியாயத்)தை ஓதுவார்கள்.

789 அபூபர்ஸா நள்லா பின் உபைதா அல் அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிகாலைத் தொழுகையில் அறுபது முதல் நூறு வசனங்கள் வரை ஓதுவார்கள்.
- அபூபர்ஸா நள்லா பின் உபைதா அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுகையில் அறுபது முதல் நூறு வசனங்கள் வரை ஓதுவார்கள்.

790 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் வல்முர்சலாத்தி உர்ஃபன் எனும் (77ஆவது) அத்தியாயத்தை ஓதினேன். அதைச் செவியுற்ற (என் தாயார்) உம்முல் ஃபள்ல் (ரலி) அவர்கள், என்னருமை மகனே! இந்த அத்தியாயத்தை ஓதிக்காட்டி (ஒன்றை) நீ எனக்கு நினைவுபடுத்திவிட்டாய். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மஃக்ரிப் தொழுகையில் இ(ந்த அத்தியாயத்)தை ஓதக் கேட்டதே நான் கடைசியாக அவர்களிடமிருந்து செவியுற்றதாகும் என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், சாலிஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அதன் பிறகு அவர்களின் உயிரை அல்லாஹ் கைப்பற்றும்வரை அவர்கள் எங்களுக்குத் (தலைமையேற்றுத்) தொழுவிக்க வில்லை என்று (உம்முல் ஃபள்ல் (ரலி) அவர்கள் கூறினார்கள் என) அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

791 ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மஃக்ரிப் தொழுகையில் அத்தூர் எனும் (56ஆவது) அத்தியாயத்தை ஓதியதை நான் செவியுற்றேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 36 இஷாத் தொழுகையில் குர்ஆன் ஓதுதல்.

792 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தார்கள். அப்போது இஷாத் தொழுகையின் இரண்டு ரக்அத்களில் ஒன்றில் வத்தீனி வஸ் ஸைத்தூனி எனும் (95ஆவது) அத்தியாயத்தை ஓதினார்கள்.

793 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இஷாத் தொழுகையைத் தொழுதேன். அதில் அவர்கள் வத்தீனி வஸ்ஸைத்தூனி எனும் (95ஆவது) அத்தியாயத்தை ஓதினார்கள்.

794 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையில் வத்தீனி வஸ்ஸைத்தூனி எனும் (95ஆவது) அத்தியாயத்தை ஓதியதை நான் கேட்டேன். அவர்களைவிட அழகிய குரலில் வேறு யாரும் ஓதி நான் கேட்டதில்லை.

795 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுடன் தொழுதுவிட்டுப் பிறகு (தம் கூட்டத்தாரிடம்) திரும்பிச் சென்று (நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் தொழுத தொழுகையை மீண்டும்) தம் கூட்டத்தாருக்குத் தொழுவிப்பார்கள்.
ஒரு நாள் இரவில் முஆத் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுடன் இஷாத் தொழுது விட்டுத் தம் கூட்டத்தாரிடம் திரும்பிச் சென்று அவர்களுக்கு (அதே இஷாவை)த் தொழுவித்தார்கள்.அதில் (பெரிய அத்தியாயமான) அல்பகராஎனும் (2ஆவது) அத்தியாயத்தை ஓத ஆரம்பித்தார்கள். அப்போது ஒரு மனிதர் (தொழுகையிலிருந்து) விலகி சலாம் கொடுத்தார். பின்னர் தனியாகத் தொழுதுவிட்டுத் திரும்பிச் சென்றுவிட்டார். மக்கள் அவரிடம், இன்னாரே, நீர் நயவஞ்சகர் (முனாஃபிக்) ஆகிவிட்டீரா? என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், இல்லை. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! (நான் நயவஞ்சகன் அல்லன்). நிச்சயம் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று (இது குறித்து) தெரிவிப்பேன் எனக் கூறினார்.
அவ்வாறே அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் பகல் வேளைகளில் வேலைவெட்டிகளில் ஈடுபடுகின்றவர்கள். நாங்கள் ஒட்டகங்கள் மூலம் தண்ணீர் பாய்ச்சுவோம். இந்நிலையில் முஆத் பின் ஜபல் அவர்கள் (நேற்றிரவு) உங்களுடன் இஷாத் தொழுதுவிட்டு வந்து (எங்களுக்குத் தொழுவித்தார். அதில் பெரிய அத்தியாயமான) அல்பகரா அத்தியாயத்தை ஓதலானார். (எனவேதான் விலகிச் சென்று தனியாகத் தொழுதேன்) என்று கூறினார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முஆத் (ரலி) அவர்களை நோக்கித் திரும்பி, முஆதே! (நீரென்ன) குழப்பவாதியா? என்று கேட்டுவிட்டு, (நீர் மக்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிக்கும் போது சற்று சிறிய அத்தியாயமான) இன்ன அத்தியாயத்தை ஓதுவீராக; இன்ன அத்தியாயத்தை ஓதுவீராக என்று சொன்னார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்களிடம், (நபி (ஸல்) அவர்கள் முஆத் (ரலி) அவர்களிடம்) வஷ்ஷம்ஸி வ ளுஹாஹா, வள்ளுஹா வல்லைலி, வல்லைலி இதா யஃக்ஷா, சப்பிஹிஸ்ம ரப்பிக்கல் அஃலா ஆகிய (முறையே 91, 93,92,87ஆவது) அத்தியாயங்களை ஓதுவிராக என்று கூறியதாக ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்து அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் எமக்கு அறிவித்தார்களே? என்று கேட்டேன். அதற்கு அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள், (ஆம்) இது போன்றுதான் (அறிவித்தார்கள்) என்றார்கள்.

796 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஆத் பின் ஜபல் அல்அன்சாரி (ரலி) அவர்கள் தம் தோழர்க(ளான எங்க)ளுக்கு (ஒரு நாள்) இஷாத் தொழுகை தொழுவித்தபோது (நீளமான அத்தியாயத்தை ஓதித் தொழுகையை) நீட்டினார். உடனே எங்களில் ஒருவர் விலகிச் சென்று தனியாகத் தொழுதார். இதுபற்றி முஆத் (ரலி) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டபோது அவர் ஒரு நயவஞ்சகர் (முனாஃபிக்) என்று முஆத் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அந்த மனிதருக்கு இச்செய்தி எட்டியபோது அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று முஆத் (ரலி) அவர்கள் கூறியதைத் தெரிவித்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், முஆத்! நீர் குழப்பவாதியாக இருக்க விரும்புகின்றீரா? நீர் மக்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிக்கும்போது வஷ்ஷம்ஸி வ ளுஹாஹா (91),சப்பிஹிஸ்ம ரப்பிக்க (87), இக்ர:ஃ பிஸ்மி ரப்பிக்க (96), வல்லைலி இதா யஃக்ஷா (92) ஆகிய(வற்றைப் போன்ற சற்று சிறிய) அத்தியாயங்களை ஓதுவீராக! என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

797 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (இரவின்) இறுதித் தொழுகையான இஷாவைத் தொழுவார்கள். பிறகு தம் கூட்டத்தாரிடம் திரும்பிச் சென்று அதே தொழுகையை அவர்களுக்குத் தொழுவிப்பார்கள்.

798 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஆத் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இஷாத் தொழுகை தொழுவார்கள். பிறகு தம் கூட்டத்தாரின் பள்ளிவாசலுக்குச் சென்று அவர்களுக்கு (அதே தொழுகையை)த் தொழுவிப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 37 தொழுகையைச் சுருக்கமாக அதே நேரத்தில் நிறைவாகத் தொழுவிக்குமாறு இமாம்களுக்கு இடப்பட்டுள்ள கட்டளை.

799 அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, இன்னார் தொழுகையை நீண்ட நேரம் எங்களுக்குத் தொழுவிப்பதால் சுப்ஹுத் தொழுகை(யின் ஜமாஅத்து)க்குச் செல்லாமல் நான் தாமதித்துவிடுகிறேன் என்று கூறினார். இதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்றைக்குக் கோபமடைந்ததைவிடக் கடுமையாக வேறு எந்தச் சொற்பொழிவின் போதும் கோபமடைந்து அவர்களை நான் கண்டதில்லை. பிறகு அவர்கள், மக்களே! உங்களில் வெறுப்பூட்டும் சிலர் உள்ளனர். ஆகவே, உங்களில் எவர் மக்களுக்குத் தொழுவிக்கின்றாரோ அவர் சுருக்கமாகத் தொழுவிக்கட்டும். ஏனெனில்,அவருக்குப் பின்னால் முதியவர்களும், பலவீனர்களும் அலுவல் உடையவர்களும் உள்ளனர் என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

800 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் மக்களுக்குத் தொழுவித்தால் அவர் சுருக்கமாகத் தொழுவிக்கட்டும். ஏனெனில், அ(வருக்குப் பின்னால் தொழுப)வர்களில் சிறுவர்களும் முதியவர்களும் பலவீனர்களும் நோயாளிகளும் உள்ளனர். அவர் தனியாகத் தொழுதால் தாம் விரும்பியவாறு தொழுதுகொள்ளட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

801 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் மக்களுக்காகத் தொழுவிக்க நின்றால் அவர் சுருக்கமாகத் தொழுவிக்கட்டும். ஏனெனில்,அவர்களிடையே முதியவர்களும் பலவீனர்களும் உள்ளனர். அவர் தனியாகத் தொழ நின்றால் தாம் விரும்பிய அளவுக்கு நீட்டித் தொழுதுகொள்ளட்டும்.

802 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் மக்களுக்குத் தொழுகை நடத்தினால் அவர் சுருக்கமாகத் தொழுவிக்கட்டும். ஏனெனில், மக்களிடையே பலவீனர்களும் நோயாளிகளும் அலுவலுடையோரும் உள்ளனர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் நோயாளிகள் என்பதற்கு பதிலாக முதியவர்கள் எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

803 உஸ்மான் பின் அபில்ஆஸ் அஸ்ஸகஃபீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என்னிடம், நீங்கள் உங்கள் கூட்டத்தாருக்குத் தலைமை தாங்கித் தொழுவியுங்கள் என்று கூறினார்கள். நான், அல்லாஹ்வின் தூதரே! என் உள்ளத்தில் (பெருமை) ஏதும் ஏற்பட்டுவிடுவதை நான் அஞ்சுகிறேன் என்று சொன்னேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அருகில் வாருங்கள்! என்று என்னை அழைத்து, என்னைத் தமக்கு முன்னால் அமரவைத்தார்கள். பிறகு தமது கரத்தை என் நெஞ்சில் மார்புகளுக்கிடையே வைத்தார்கள். பிறகு திரும்புங்கள் என்றார்கள். (நான் திரும்பியதும்) தமது கரத்தை என் தோள்களுக்கிடையே முதுகில் வைத்தார்கள். பிறகு நீங்கள் உங்கள் கூட்டத்தாருக்குத் தலைமை தாங்கித் தொழுவியுங்கள். எவர் ஒரு கூட்டத்தாருக்குத் தலைமை தாங்கித் தொழுவிக்கிறாரோ அவர் சுருக்கமாகத் தொழுவிக்கட்டும். ஏனெனில், அவர்களிடையே முதியவர்கள் உள்ளனர்; அவர்களிடையே நோயாளிகளும் பலவீனர்களும் அலுவலுடையோரும் உள்ளனர். உங்களில் ஒருவர் தனியாகத் தொழுதால் அவர் தாம் விரும்பியபடி தொழுதுகொள்ளட்டும் என்று கூறினார்கள்.

804 உஸ்மான் பின் அபில்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு இறுதியாகச் செய்த உபதேசம், நீங்கள் ஒரு சமுதாயத்தாருக்குத் தலைமை தாங்கித் தொழுவித்தால் அவர்களுக்கு (சிரமம் ஏற்பட்டு விடாமல்) சுருக்கமாகத் தொழுவியுங்கள் என்பதேயாகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

805 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தொழுகையைச் சுருக்கமாகவும் (அதே நேரத்தில் ஏதொன்றும் விடுபடாமல்) நிறைவாகவும் தொழுவிப்பார்கள்.

இதை அப்துல் அஸீஸ் பின் ஸுஹைப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

806 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை மிகச்சுருக்கமாகவும்(அதே நேரத்தில்) நிறைவாகவும் தொழுவிப்பவர்களாய் இருந்தார்கள்.
இதை கத்தாதா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

807 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை விட மிகச்சுருக்கமாகவும் (அதே சமயம்) முழுமையாகவும் தொழுவிக்கக்கூடிய வேறு எந்த இமாமுக்குப் பின்னாலும் ஒருபோதும் நான் தொழுததில்லை.
இதை ஷரீக் பின் அப்தில்லாஹ் பின் அபீநிம்ர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

808 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுவித்துக்கொண்டிருக்கும்போது (பின்னால் தொழும் பெண்களிடையே உள்ள) குழந்தை தன் தாயிடம் அழுதுகொண்டிருப்பதைச் செவியேற்பார்கள். உடனே சுருக்கமான அத்தியாயத்தை அல்லது சிறிய அத்தியாயத்தை ஓதுவார்கள்.– இதை ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

809 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் நீண்ட நேரம் தொழுவிக்கும் எண்ணத்துடன் தொழுகையைத் துவக்குவேன். அப்போது (பின்னால் தொழும் பெண்களிடையே) குழந்தை அழுவதைச் செவியேற்பேன். குழந்தைமீது தாய்க்குள்ள கடுமையான ஈடுபாட்டை எண்ணி நான் தொழுகையைச் சுருக்கமாக முடித்துக்கொள்வேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 38 தொழுகையின் முக்கிய நிலை(களான நிற்றல், குனிதல், சிரம்பணிதல் ஆகியவை)களை நிறுத்தி நிதானமாகச் செய்வதும், அவற்றைச் சுருக்கமாக அதே நேரத்தில் முழுமையாக நிறைவேற்றுவதும்.

810 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் முஹம்மத் (ஸல்) அவர்களது தொழுகையை ஊன்றிக் கவனித்தேன். தொழுகையில் அவர்களது நிற்றல் (கியாம்),குனிதல் (ருகூஉ), குனிந்து நிமிர்ந்த பின் நிலைகொள்ளல், அவர்களின் சிரவணக்கம் (சஜ்தா), இரு சிரவணக்கங்களுக்கிடையிலான அமர்வு, பிறகு சலாம் கொடுப்பதற்கும் எழுந்து செல்வதற்கும் இடையேயான இடைவெளி ஆகியவற்றின் கால அளவுகள் ஏறக்குறைய சம அளவில் அமைந்திருந்தன.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

811 ஹகம் பின் உதைபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(இராக்கிலுள்ள) கூஃபா நகரை, இப்னுல் அஷ்அஸ் காலத்தில் ஒரு மனிதர் வெற்றி கொண்டார். (அவரது பெயரையும் அறிவிப்பாளர் குறிப்பிட்டார்,) அந்த மனிதர் (மத்தர் பின் நாஜியா), அபூஉபைதா பின் அப்தில்லாஹ் பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்களை மக்களுக்கு (தலைமை தாங்கி)த் தொழுவிக்குமாறு பணித்தார். அவ்வாறே அபூஉபைதா அவர்களும் தொழவைக்கலானார்கள். அவர்கள் தொழுகையில் ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தினால், பின்வருமாறு நான் சொல்லும் அளவிற்கு நிற்பார்கள்: அல்லாஹும்ம ரப்பனா ல(க்)கல் ஹம்து மில்அஸ் ஸமாவாத்தி வ மில்அல் அர்ளி,வ மில்அ மா ஷிஃத்த மின் ஷையிம் பஅத். அஹ்லஸ் ஸனாயி வல்மஜ்த். லா மானிஅ லிமா அஉதைத்த, வலா முஉத்திய லிமா மனஉத்த, வலா யன்ஃபஉ தல்ஜத்தி மின்க்கல் ஜத்.
(பொருள்: இறைவா! எங்கள் அதிபதியே! வானங்கள் நிரம்ப, பூமி நிரம்ப, நீ நாடும் இன்ன பிற பொருட்கள் யாவும் நிரம்பப் புகழனைத்தும் உனக்கே உரியது. புகழுக்கும் மாண்புக்கும் உரியவனே! நீ கொடுத்ததைத் தடுப்பவர் யாருமிலர். நீ தடுத்ததைக் கொடுப்பவர் யாருமிலர். எந்தச் செல்வரின் செல்வமும் அவருக்கு உ(ந்தன் வேதனை த)ன்னிலிருந்து பயன் அளிக்காது.)

தொடர்ந்து ஹகம் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
நான் இந்த ஹதீஸை அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரஹ்) அவர்களிடம் கூறினேன். அப்போது அவர்கள் கூறினார்கள்:
பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறியதை நான் கேட்டுள்ளேன்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தொழுகை (நிற்றல்), அவர்களது குனிதல் (ருகூஉ), குனிந்து எழு(ந்ததும் நிலைகொள்)வது, அவர்களின் சிரவணக்கம் (சஜ்தா), இரு சிர வணக்கங்களுக்கிடையிலான அமர்வு ஆகியன ஏறத்தாழ சம அளவில் அமைந்திருந்தன.
(இந்த ஹதீஸின் அறிவிப்பாளரான) ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
நான் இந்த ஹதீஸை அம்ர் பின் முர்ரா (ரஹ்) அவர்களிடம் கூறினேன். அப்போது அவர்கள், நான் அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரஹ்) அவர்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால், அவர்களது தொழுகை இவ்வாறு அமைந்திருக்கவில்லையே என்று கூறினார்கள்.
- ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஹகம் (ரஹ்) அவர்கள், மத்தர் பின் நாஜியா என்பார் கூஃபா நகரை வெற்றி கொண்டபோது அபூஉபைதா (பின் அப்தில்லாஹ் பின் மஸ்ஊத்-ரஹ்) அவர்களை மக்களுக்குத் (தலைமை தாங்கித்) தொழுவிக்குமாறு கூறினார் என்று தொடங்கி, மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி அறிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

812 ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் (ரலி) அவர்கள் (எங்களிடம்), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுவித்ததைப் போன்றே நான் உங்களுக்குத் தொழுவிக்கிறேன்; அதில் எந்தக் குறையும் வைக்கமாட்டேன் என்று கூறினார்கள். (பிறகு தொழுவித்தார்கள்.)

அனஸ் (ரலி) அவர்கள் (தொழுவித்தபோது) ஒன்றைச் செய்வார்கள். ஆனால், அவ்வாறு நீங்கள் செய்வதை நான் பார்த்ததில்லை. அனஸ் (ரலி) அவர்கள் குனிந்து (ருகூஉ செய்து) நிமிர்ந்ததும் (நீண்ட நேரம்) நேராக நிற்பார்கள். எந்த அளவிற்கென்றால் அவர்கள் மறந்துவிட்டார்களோ! என்று எவரேனும் கூறிவிடுவார். அவர்கள் சிரவணக்கம் (சஜ்தா) செய்து தலையை உயர்த்தியதும் இருப்பில் (நீண்ட நேரம்) நிலைகொண்டிருப்பார்கள். எந்த அளவிற்கென்றால் அவர்கள் மறந்துவிட்டார்களோ! என்று எவரேனும் கூறிவிடுவார்.

813 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை விட மிகச் சுருக்கமாக, அதே நேரத்தில் நிறைவாகத் தொழுவிக்கக்கூடிய எவருக்குப் பின்னாலும் நான் தொழுததில்லை. அவர்களது தொழுகை(யின் ஒவ்வொரு நிலையும்) சமமான அளவிலேயே அமைந்திருந்தது. அபூபக்ர் (ரலி) அவர்களது தொழுகை(யின் ஒவ்வொரு நிலையும் அவ்வாறே) சமமான அளவிலேயே அமைந்திருந்தது. உமர் (ரலி) அவர்கள் (ஆட்சிக்கு) வந்தபோது ஃபஜ்ர் தொழுகையை நீண்ட நேரம் தொழுவித்தார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுகையில்) சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறியதும் நீண்ட நேரம் நிலையில் நிற்பார்கள். எந்த அளவிற்கென்றால் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மறந்துவிட்டார்களோ என்று கூறுவோம். பிறகு சிரவணக்கம் (சஜ்தா) செய்வார்கள். இரு சிரவணக்கங்களுக்கிடையே (நீண்ட நேரம்) அமர்ந்திருப்பார்கள். எந்த அளவிற்கென்றால் அவர்கள் மறந்துவிட்டார்களோ என்று நாங்கள் கூறுவோம்.

## பாடம் : 39 இமாமைப் பின்தொடர்ந்து தொழுவதும், எதையும் அவர் செய்த பின்பே செய்வதும்.

814 அப்துல்லாஹ் பின் யஸீத் அல்கத்மீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள் (அன்னார் பொய் உரைப்பவர் அல்லர்):
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் (அவர்களைப் பின்பற்றித்) தொழுது வந்தோம். அப்போது அவர்கள் குனிந்து (ருகூஉ செய்து) தலையை உயர்த்திவிட்டால் அவர்கள் பூமியில் தமது நெற்றியை வைக்காதவரை (எங்களில்) யாரும் தமது முதுகை (சஜ்தாச் செய்வதற்காக) வளைப்பதை நான் கண்டதில்லை. (அவர்கள் சஜ்தாவுக்குச் சென்ற) பிறகுதான் பின்னாலிருப்பவர்கள் சஜ்தாவுக்குச் செல்வார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

815 அப்துல்லாஹ் பின் யஸீத் அல்கத்மீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறிவிட்டால் அவர்கள் சஜ்தாச் செய்யாதவரை எங்களில் யாரும் எங்கள் முதுகை (சஜ்தாவிற்காக) வளைக்கமாட்டோம்; (அவர்கள் சஜ்தாச் செய்த) பிறகுதான் நாங்கள் சஜ்தாச்

செய்வோம் என்று பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் என்னிடம் அறிவித்தார்கள். அன்னார் பொய் உரைப்பவர் அல்லர்.

816 முஹாரிப் பின் திஸார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் யஸீத் அல்கத்மீ (ரலி) அவர்கள் (பள்ளிவாசலில்) சொற்பொழிவு மேடையிலிருந்தபடி (பின்வருமாறு) கூறுவதை நான் கேட்டுள்ளேன்:
பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் எங்களிடம் கூறினார்கள்:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழுதுவந்தோம். அப்போது அவர்கள் ருகூஉச் செய்த பிறகுதான் நாங்கள் ருகூஉச் செய்வோம். அவர்கள் ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தி சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறிய பின் அவர்கள் (சஜ்தாவிற்குச் சென்று) தமது நெற்றியை பூமியில் வைப்பதை நாங்கள் பார்க்கும்வரை நாங்கள் நின்றுகொண்டேயிருப்போம். பிறகுதான் அவர்களைப் பின்தொடர்வோம்.

817 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் (தொழுகையில்) இருக்கும்போது அவர்கள் சஜ்தாச் செய்துவிட்டதைப் பார்க்காதவரை எங்களில் எவரும் (சஜ்தாச் செய்வதற்காக) தமது முதுகை வளைக்கமாட்டார்.
இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடரிலும் வந்துள்ளது. அதில் அவர்கள் சஜ்தாச் செய்து கொண்டிருப்பதை நாங்கள் பார்க்காதவரை என்று இடம்பெற்றுள்ளது.

818 அம்ர் பின் ஹுரைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் ஃபஜ்ர் தொழுகையைத் தொழுதேன். அதில் அவர்கள் ஃபலா உக்ஸிமு பில் குன்னஸில் ஜவாரில் குன்னஸி எனும் வசன(ங்கள் இடம் பெற்றுள்ள 81ஆவது அத்தியாய)த்தை ஓதுவதை நான் செவியுற்றேன். நபி (ஸல்) அவர்கள் முழுமையாக சஜ்தாவிற்குப் போய்ச்சேராதவரை எங்களில் எவரும் தமது முதுகை (சஜ்தாவிற்காக) வளைக்கமாட்டார்.

## பாடம் : 40 ருகூஉவிலிருந்து தலையை உயர்த்திய பின் ஓத வேண்டியவை.

819 அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ருகூஉவிலிருந்து தமது முதுகை நிமிர்த்திவிட்டால் சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ். அல்லாஹும்ம ரப்பனா ல(க்)கல் ஹம்து மில்அஸ் ஸமாவாத்தி வ மில்அல்அர்ளி வ மில்அ மா ஷிஃத்த மின் ஷையிம் பஅது என்று கூறுவார்கள்.
(பொருள்: அல்லாஹ் தன்னைப் புகழ்வோரின் புகழுரையை ஏற்றுக்கொள்கின்றான். இறைவா! எங்கள் அதிபதியே! வானங்கள் நிரம்ப, பூமி நிரம்ப, அவற்றுக்குப் பின் நீ நாடிய இன்ன பிற பொருள்கள் நிரம்பப் புகழ் அனைத்தும் உனக்கே உரியது.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

820 அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ருகூஉவிலிருந்து நிமிர்ந்து சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறியதும்), அல்லஹும்ம ரப்பனா ல(க்)கல் ஹம்து, மில்அஸ் ஸமாவாத்தி வ மில்அல் அர்ளி வ மில்அ மா ஷிஃத்த மின் ஷையிம் பஅது என்று துதிப்பார்கள்.
(பொருள்: இறைவா! எங்கள் அதிபதியே! வானங்கள் நிரம்ப, பூமி நிரம்ப, அவற்றுக்குப் பின் நீ நாடிய இன்ன பிற பொருள்கள் நிரம்பப் புகழ் அனைத்தும் உனக்கே உரியது.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

821 அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ருகூஉவிலிருந்து நிமிர்ந்ததும்), அல்லாஹும்ம ல(க்)கல் ஹம்து, மில்அஸ் ஸமாவாத்தி வ மில்அல் அர்ளி, வ மில்அ மா ஷிஃத்த மின் ஷையிம் பஅது. அல்லாஹும்ம, தஹ்ஹிர்னீ பிஸ்ஸல்ஜி வல்பரதி வல்மாயில் பாரித். அல்லாஹும்ம, தஹ்ஹிர்னீ மினத் துனூபி வல்கத்தாயா கமா யுனக்கஸ் ஸவ்புல் அப்யளு மினல் வஸ(க்)கி என்று பிரார்த்திப்பார்கள்.
(பொருள்: இறைவா! வானங்கள் நிரம்ப, பூமி நிரம்ப, அவற்றுக்குப் பின் நீ நாடிய இன்ன பிற பொருள்கள் நிரம்பப் புகழ் அனைத்தும் உனக்கே உரியது. இறைவா, பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் குளிர்ந்த நீராலும் என்னைத் தூய்மைப்படுத்துவாயாக! இறைவா, அழுக்கிலிருந்து வெண்மையான ஆடை தூய்மைப்படுத்தப்படுவதைப் போன்று பாவங்களிலிருந்தும் தவறுகளிலிருந்தும் என்னைத் தூய்மைப்படுத்துவாயாக!)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், முஆத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (வஸக் எனும் சொல்லுக்கு பதிலாக) தரன் எனும் சொல் இடம்பெற்றுள்ளது. யஸீத் பின் ஹாரூன் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் தனஸ் எனும் சொல் இடம் பெற்றுள்ளது. (எல்லாவற்றுக்கும் பொருள்: அழுக்கு.)

822 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ருகூஉவிலிருந்து தமது தலையை உயர்த்தியதும் ரப்பனா! ல(க்)கல் ஹம்து மில்அஸ் ஸமாவாத்தி வல்அர்ளி, வ மில்அ மா ஷிஃத்த மின் ஷையிம் பஅது. அஹ்லஸ் ஸனாயி வல்மஜ்த். அஹக்கு மா காலல் அப்து, வ குல்லுனா ல(க்)க அப்துன். அல்லாஹும்ம, லா மானிஅ லிமா அஉதைத்த, வலா முஉத்திய லிமா மனஉத்த, வலா யன்ஃபஉ தல்ஜத்தி மின்க்கல் ஜத் என்று கூறுவார்கள்.
(பொருள்: எங்கள் அதிபதியே! வானங்களும் பூமியும் நிரம்பும் அளவுக்கு, நீ நாடும் இன்ன பிற பொருள்கள் யாவும் நிரம்பும் அளவுக்குப் புகழனைத்தும் உனக்கே உரியது. புகழுக்கும் மாண்புக்கும் உரியவனே! நாங்கள் அனைவரும் உன் அடிமைகள்தாம். அடியார்கள் கூறும் சொற்களிலேயே மிகவும் தகுதி வாய்ந்தது, இறைவா! நீ கொடுத்ததைத் தடுப்பவர் யாருமிலர். நீ தடுத்ததைக் கொடுப்பவர் யாருமிலர். எந்தச் செல்வரின் செல்வமும் அவருக்கு உ(ந்தன் வேதனை த)ன்னிலிருந்து பயன் அளிக்காது என்பதேயாகும்.)

823 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தியதும் அல்லாஹும்ம, ரப்பனா, ல(க்)கல் ஹம்து மில்அஸ் ஸமாவாத்தி வ மில்அல் அர்ளி, வ மா பய்னஹுமா, வ மில்அ மா ஷிஃத்த மின் ஷையிம் பஅது. அஹ்லஸ் ஸனாயி வல்மஜ்த். லா மானிஅ லிமா அஉதைத்த, வ லா முஉத்திய லிமா மனஉத்த, வ லா யன்ஃபஉ தல்ஜத்தி மின்க்கல் ஜத் என்று கூறுவார்கள்.
(பொருள்: இறைவா, எங்கள் அதிபதியே! வானங்கள் நிரம்ப, பூமி நிரம்ப, இன்னும் அவற்றுக்கிடையே உள்ளவை நிரம்ப மற்றும் நீ நாடிய இன்ன பிற பொருள்கள் நிரம்பப் புகழனைத்தும் உனக்கே உரியது. புகழுக்கும் மாண்புக்கும் உரியவனே! நீ கொடுத்ததைத் தடுப்பவர் யாருமிலர். நீ தடுத்ததைக் கொடுப்பவர் யாருமிலர். எந்தச் செல்வரின் செல்வமும் அவருக்கு உ(ந்தன் வேதனை த)ன்னிலிருந்து பயன் அளிக்காது.)
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் வமில்அ மா ஷிஃத்த மின் ஷையிம் பஅது (மற்றும் நீ நாடிய இன்ன பிற பொருள்கள் நிரம்பப் புகழனைத்தும் உனக்கே உரியது) என்பதுவரையே இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னால் உள்ளது குறிப்பிடப்படவில்லை.

## பாடம் : 41 ருகூஉ மற்றும் சஜ்தாவில் குர்ஆன் (வசனங்களை) ஓதுவதற்கு வந்துள்ள தடை.

824 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் இறுதி நாட்களில் உடல் நலிவுற்றிருந்தபோது தமது அறையின்) திரைச் சீலையை விலக்கி (பள்ளிவாசலுக்குள் நோக்கி)னார்கள். அப்போது மக்கள், அபூபக்ர் (ரலி) அவர்களுக்குப் பின்னால் அணிவகுத்து நின்றுகொண்டிருந்தனர். (அவர்களிடம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மக்களே! நபித்துவத்தின் நற்செய்திகளிலிருந்து ஒரு முஸ்லிம் காண்கின்ற அலலது அவருக்குக் காட்டப்படுகின்ற நல்ல (உண்மையான) கனவுகளைத் தவிர வேறெதுவும் எஞ்சியிருக்கவில்லை. அறிந்து கொள்ளுங்கள்: ருகூஉ அல்லது சஜ்தாச் செய்துகொண்டிருக்கையில் குர்ஆன் (வசனங்களை) ஓத வேண்டாமென்று நான் தடை விதிக்கப்பெற்றுள்ளேன். ருகூஉவில் வலிவும் மாண்பும் உடைய இறைவனை மகிமைப்படுத்துங்கள். சஜ்தாவில் முனைந்து பிரார்த்தியுங்கள். உங்கள் பிரார்த்தனை ஏற்கப்பட அது மிகவும் தகுதியானதாகும் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

825 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நோய்வாய்ப்பட்டிருந்தபோது தமது அறையின்) திரைச் சீலையை விலக்கினார்கள். அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின் காரணத்தால் அவர்களது தலையில் துணி ஒன்று கட்டப்பட்டிருந்தது. அப்போது அவர்கள், இறைவா! (உன் செய்திகளை) நான் (மக்களிடம்) சேர்த்துவிட்டேனா? என்று மும்முறை கூறிவிட்டு, நபித்துவத்தின் நற்செய்திகளிலிருந்து ஒரு நல்ல அடியார் காண்கின்ற அல்லது

அவருக்குக் காட்டப்படுகின்ற (நல்ல) கனவைத் தவிர வேறெதுவும் எஞ்சியிருக்கவில்லை என்று சொன்னார்கள்.
தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது.

826 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ருகூஉ அல்லது சஜ்தாவில் குர்ஆன் (வசனங்களை) ஓத வேண்டாமென்று எனக்குத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

827 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ருகூஉ அல்லது சஜ்தாவில் இருக்கும்போது குர்ஆன் (வசனங்களை) ஓத வேண்டாமென என்னைத் தடுத்தார்கள்.

828 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ருகூஉ மற்றும் சஜ்தாவில் குர்ஆன் (வசனங்களை) ஓத வேண்டாமென என்னைத் தடுத்தார்கள். உங்களையும் தடுத்தார்கள் என்று நான் கூற மாட்டேன்.

829 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் நேசர் (நபி (ஸல்) அவர்கள்) ருகூஉ அல்லது சஜ்தாச் செய்துகொண்டிருக்கும் போது குர்ஆன் (வசனங்களை) ஓத வேண்டாமென என்னைத் தடுத்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

830 மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ருகூஉச் செய்துகொண்டிருக்கும்போது குர்ஆன் (வசனங்களை) ஓதவேண்டாமென என்னை நபி (ஸல்) அவர்கள் தடுத்தார்கள் என்றே இடம்பெற்றுள்ளது. சஜ்தாவிலிருக்கும் போது குர்ஆனை ஓதக்கூடாது என்பது பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை
- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அந்த அறிவிப்பிலும் சஜ்தாவில் குர்ஆனை ஓதலாகாது என்பது பற்றிய குறிப்பு இடம்பெற வில்லை.

831 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ருகூஉச் செய்துகொண்டிருக்கும்போது குர்ஆன் (வசனங்களை) ஓத வேண்டாமென நான் தடை விதிக்கப்பெற்றுள்ளேன்.
இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்தொடரில் அலீ (ரலி) அவர்களது பெயர் இடம்பெறவில்லை.

## பாடம் : 42 ருகூஉவிலும் சஜ்தாவிலும் ஓத வேண்டியவை.

832 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் அடியார் தம் இறைவனிடம் (அவனது அருளுக்கு இலக்காகி) இருக்கும் நிலைகளில் மிக நெருக்கமானது, அவர் சஜ்தாவிலிருக்கும் போதேயாகும். எனவே, நீங்கள் (சஜ்தாவில்) அதிகமாகப் பிரார்த்தியுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

833 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழும்போது) தமது சஜ்தாவில் அல்லாஹும்மஃக்பிர்லீ குல்லஹு, திக்கஹு வ ஜில்லஹு, வ அவ்வலஹு வ ஆகிரஹு, வ அலானிய்யத்தஹு வ சிர்ரஹு என்று பிரார்த்திப்பார்கள்.
(பொருள்: இறைவா! என் பாவங்கள் அனைத்தையும் மன்னிப்பாயாக! அவற்றில் சிறியதையும் பெரியதையும்,ஆரம்பமாகச் செய்ததையும் இறுதியாகச் செய்ததையும், வெளிப்படையாகச் செய்ததையும் மறைமுகமாகச் செய்ததையும் மன்னிப்பாயாக.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

834 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குர்ஆனின் (110ஆவது அத்தியாயத்தின்) கட்டளையைச் செயல்படுத்தும் வகையில், தமது (தொழுகையின்) ருகூஉவிலும் சஜ்தாவிலும் சுப்ஹானக்கல்லாஹும்ம ரப்பனா வபி ஹம்திக, அல்லாஹும்மஃக்ஃபிர்லீ (இறைவா! எங்கள் அதிபதியே! உன்னைப் போற்றிப் புகழ்ந்து துதிக்கிறேன். இறைவா! எனக்கு மன்னிப்பளிப்பாயாக!) என்று அதிகமாகக் கூறிவந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

835 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறப்பதற்கு முன்னால் சுப்ஹானக வபி ஹம்திக அஸ்தஃக்ஃபிருக வ அதூபு இலைக்க (இறைவா! உன்னைப் போற்றிப் புகழ்ந்து துதிக்கிறேன். உன்னிடத்தில் பாவமன்னிப்புக்கோரி உன்னிடமே மீளுகிறேன்) என்று அதிகமாகக் கூறிவந்தார்கள். (ஒருநாள்) நான், அல்லாஹ்வின் தூதரே! இந்த வார்த்தைகள் என்ன? இவற்றைத் தாங்கள் புதிதாகக் கூறத் துவங்கியுள்ளீர்களே (என்ன காரணம்)? என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வரும்போது... (என்று தொடங்கும் 110ஆவது) அத்தியாயத்தில் என் சமுதாயத்தார் விஷயத்தில் எனக்கோர் அடையாளம் கூறப்பட்டுள்ளது. அதை நான் காண்பதால் இவற்றைக் கூறிவருகிறேன் என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

836 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வரும்போது... என்று தொடங்கும் (110ஆவது) அத்தியாயம் அருளப்பெற்றது முதல் ஒவ்வொரு தொழுகையிலும் சுப்ஹானக்க ரப்பீ வபி ஹம்திக்க, அல்லாஹும்மஃக்ஃபிர்லீ என்று கூறாமல் அல்லது பிரார்த்திக்காமல் இருந்ததில்லை.
(பொருள்: என் அதிபதியே! உனைப் போற்றிப் புகழ்ந்து துதிக்கிறேன். இறைவா! எனக்கு மன்னிப்பளிப்பாயாக!)

837 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது தொழுகையில்) மிகுதியாக சுப்ஹானல் லாஹி வபி ஹம்திஹி,அஸ்தஃக்ஃபிருல்லாஹ வ அதூபு இலைஹி (அல்லாஹ் மிகத் தூயவன் எனப் புகழ்ந்தவனாய் அவனைத் துதிக்கிறேன். அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி மீளுகிறேன்) என்று கூறிவந்தார்கள். நான், அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் சுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி, அஸ்தஃக்ஃபிருல்லாஹ வ அதூபு இலைஹி என்று மிகுதியாகக் கூறிவருவதை நான் காண்கிறேன் (இதற்கு என்ன காரணம்?) என்று கேட்டேன். அதற்கு அவர்கள் பின்வருமாறு பதிலளித்தார்கள்:
என் சமுதாயத்தார் தொடர்பாக நான் ஓர் அடையாளத்தைக் காண்பேன் என்றும், அதைக் காணும்போது இந்தத் தஸ்பீஹை நான் அதிகமாக ஓத வேண்டும் என்றும் என் இறைவன் எனக்கு அறிவித்திருந்தான். அந்த அடையாளத்தை நான் கண்டுவிட்டேன். (அதுதான் இந்த அத்தியாயமாகும்): அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வந்து, மேலும்,அல்லாஹ்வின் மார்க்கத்தில் மக்கள் கூட்டங்கூட்டமாக நுழைவதை நீங்கள் காணும்போது உங்கள் இறைவனைப் புகழ்ந்து துதிப்பீராக; மேலும், அவனிடமே பாவமன்னிப்புக் கோருவீராக! நிச்சயமாக அவன் பாவமன்னிப்புக் கோரலை ஏற்பவனாக இருக்கிறான் (110:1-3). இதில் வெற்றி என்பது மக்கா வெற்றியைக் குறிக்கும்.

838 இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்களிடம், நீங்கள் ருகூஉவில் என்ன ஓதுவீர்கள்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், சுப்ஹானக்க வபி ஹம்திக்க லாயிலாஹ இல்லா அன்த்த (இறைவா! உன்னைப் போற்றிப் புகழ்ந்து துதிக்கிறேன். உன்னைத் தவிர வேறு இறைவனில்லை) என்று ஓதுகிறேன். ஏனெனில், இப்னு அபீமுலைக்கா (ரஹ்) அவர்கள் (பின்வருமாறு) அறிவித்தார்கள்:
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: நான் ஒருநாள் இரவில் நபி (ஸல்) அவர்களைக் காணாமல் தேடினேன். அவர்கள் தம் மற்றத் துணைவியரில் எவரிடமாவது சென்றிருப்பார்கள் என்று எண்ணிக் கொண்டே அவர்களைத் தேடிப் போனேன். (அவர்களை எங்கும் காணாமல்) பின்னர் திரும்பிவந்தேன். அப்போது அவர்கள் (தொழுது கொண்டிருந்தார்கள். அவர்கள்) ருகூஉவில் அல்லது சஜ்தாவில் சுப்ஹானக்க வபி ஹம்திக்க லாயிலாஹ இல்லா அன்த்த (இறைவா! உன்னைப் போற்றிப் புகழ்ந்து துதிக்கிறேன். உன்னைத் தவிர வேறு இறைவனில்லை) என்று கூறிக்கொண்டிருந்தார்கள். அப்போது நான், என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! நான் ஓர்

எண்ணத்தில் இருந்தேன். ஆனால், நீங்கள் மற்றோர் எண்ணத்தில் இருக்கிறீர்கள் என்று கூறினேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

839 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் இரவில் படுக்கை விரிப்பில் (என்னுடனிருந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் காணவில்லை. ஆகவே, அவர்களை நான் தேடினேன். அப்போது அவர்கள் பள்ளிவாசலில் (சஜ்தாவில்) இருந்தார்கள். எனது கை, நட்டுவைக்கப்பட்டிருந்த அவர்களது உள்ளங்காலில் பட்டது. அப்போது அவர்கள் அல்லாஹும்ம, அஊது பி ரிளாக்க மின் சகதிக்க, வபி முஆ◌ஃபாத்திக்க மின் உகூபத்திக்க, வ அஊது பிக்க மின்க்க, லா உஹ்ஸீ ஸனாஅன் அலைக்க அன்த்த கமா அஸ்னய்த்த அலா ந◌ஃப்சிக்க என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.
(பொருள்: இறைவா, உன் திருப்தியின் மூலம் உனது கோபத்திலிருந்தும், உன் மன்னிப்பின் மூலம் உனது தண்டனையிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! உன் (கருணையி)னைக் கொண்டு உன் (தண்டனையி)னைவிட்டுப் பாதுகாப்புக் கோருகிறேன். உன்னைப் புகழ என்னால் இயலவில்லை. உன்னை நீ புகழ்ந்துகொண்டதைப் போன்றே நீ இருக்கிறாய்.)

840 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழும்போது) தமது ருகூஉவிலும் சஜ்தாவிலும் சுப்பூஹுன் குத்தூசுன், ரப்புல் மலாயிகத்தி வர்ரூஹ் என்று கூறுவார்கள்.
(பொருள்: (இறைவா! நீ தூயவன். மிகப் பரிசுத்தமானவன். வானவர்கள் மற்றும் ரூஹின் அதிபதி.)

841 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 43 சஜ்தாவின் சிறப்பும், அதை (அதிகமாகச்) செய்யுமாறு வந்துள்ள தூண்டுதலும்.

842 மஅதான் பின் அபீதல்ஹா அல்யஅமரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அடிமையான ஸவ்பான் (ரலி) அவர்களைச் சந்தித்து, என்னால் செய்ய முடிந்த ஒரு நற்செயலை அல்லது அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான ஒரு நற்செயலை எனக்குச் சொல்லுங்கள். அல்லாஹ் அதன் மூலம் என்னைச் சொர்க்கத்திற்குள் நுழைவிக்க வேண்டும் என்று கேட்டேன். அதற்கு ஸவ்பான் (ரலி) அவர்கள் (பதிலளிக்காமல்) அமைதியாக இருந்தார்கள். பிறகு நான் மீண்டும் (அதே கேள்வியைக்) கேட்டேன். அப்போதும் அவர்கள் அமைதியாகவே இருந்தார்கள். நான் மூன்றாவது முறையாக அவர்களிடம் கேட்டபோது இதுபற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நான் கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுக்கு நீ அதிகமாக சஜ்தா (சிரவணக்கம்) செய்வாயாக! ஏனெனில், நீ அவனுக்காக ஒரு சஜ்தாச் செய்தால் அதற்காக அவன் உனது ஒரு தகுதியை உயர்த்தி, உன்

குற்றங்களில் ஒன்றை அவன் மன்னிக்காமல் இருப்பதில்லை என்று கூறினார்கள் என்றார்கள்.
பின்னர் நான் அபுத்தர்தா (ரலி) அவர்களைச் சந்தித்தபோது இது குறித்துக் கேட்டேன். அவர்களும் ஸவ்பான் (ரலி) அவர்கள் கூறியதைப் போன்றே கூறினார்கள்.

843 ரபீஆ பின் கஅப் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தங்கியிருந்தேன். அவர்கள் (இரவுத் தொழுகைக்காக எழுந்தபோது) இயற்கைக்கடனை நிறைவேற்றி(ய பின் துப்புரவு செய்து) கொள்வதற்கும் அங்கத் தூய்மை (உளூ) செய்துகொள்வதற்கும் தண்ணீர் கொண்டு சென்றேன். அப்போது அவர்கள் என்னிடம் (ஏதேனும்) கோருவீராக! என்று என்னிடம் கூறினார்கள். உடனே நான், சொர்க்கத்தில் நான் உங்களுடன் இருக்க வேண்டும் என்று கோருகிறேன் என்றேன். அதற்கு வேறு ஏதேனும் (கோருவீராக!) என்றார்கள். நான் (இல்லை) அதுதான் என்றேன். அதற்கு அவர்கள், அப்படியானால் உமது கோரிக்கை நிறைவேற அதிகமாகச் சஜ்தா செய்து எனக்கு உதவுவீராக! என்று சொன்னார்கள்.

## பாடம் : 44 சிரவணக்கத்தின்(போது பூமியில் பட வேண்டிய) உறுப்புகளும், தொழும்போது தலை(முடி, ஆடை ஆகியவற்றை(க் கீழே படாமல்) பிடித்துக்கொள்ளல், (ஆண்கள்) தலை(முடியைச் சுருட்டி கொண்டை போட்டுக்கொள்ளல் ஆகியவற்றுக்கு வந்துள்ள தடையும்.

844 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஏழு உறுப்புகள் (தரையில்) படுமாறு சிர வணக்கம் (சஜ்தா) செய்யும்படி நபி (ஸல்) அவர்கள் கட்டளையிடப்பட்டார்கள்; (சிர வணக்கத்தின்போது தரையில் படாதவாறு) தமது தலை(முடி, ஆடை ஆகியவற்றைப் பிடித்துக்கொள்ள வேண்டாம் என்று தடை விதிக்கப் பட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அபுர்ரபீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், இரு உள்ளங்கைகள், இரு முழங்கால்கள், இரு பாதங்(களின் நுனி)கள், மற்றும் நெற்றி ஆகிய ஏழு உறுப்புகள் படுமாறு (சஜ்தாச் செய்யும்படி நபி (ஸல்) அவர்கள் கட்டளையிடப்பட்டார்கள்); தமது தலை(முடி, ஆடை ஆகியவற்றைப் பிடித்துக் கொள்ள வேண்டாமென்று தடை விதிக்கப்பட்டார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

845 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் ஏழு உறுப்புகள் (தரையில்) படுமாறு சஜ்தாச் செய்யும்படியும், (எனது) ஆடையையோ முடியையோ (தரையில் படாதவாறு) நான் பிடித்துக்கொள்ளக் கூடாது எனவும் கட்டளையிடப்பட்டுள்ளேன்.– இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

846 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஏழு உறுப்புகள் (தரையில்) படுமாறு சஜ்தாச் செய்யும்படி நபி (ஸல்) அவர்கள் கட்டளையிடப்பட்டார்கள்; முடியையோ ஆடையையோ (தரையில் படாதவாறு) பிடித்துக் கொள்ள வேண்டாம் என்று தடை விதிக்கவும்பட்டார்கள்.

847 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் நெற்றி, இரு (உள்ளங்)கைகள், இரு (முழங்)கால்கள், இரு பாதங்களின் நுனிகள் ஆகிய ஏழு உறுப்புகள் (தரையில்) படுமாறு சஜ்தாச் செய்யும்படி கட்டளையிடப்பட்டுள்ளேன். (நெற்றியைப் பற்றிக் குறிப்பிடும்போது) தமது கையால் தமது மூக்கை நோக்கி (மூக்கு உட்பட என்பதைப் போன்று) சைகை செய்தார்கள். நாம் ஆடையையோ முடியையோ (தரையில் படாதவாறு) பிடிக்கக் கூடாதெனவும் கட்டளையிடப்பட்டுள்ளோம்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

848 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் நெற்றி-மூக்கு, இரு (உள்ளங்)கைகள், இரு முழங்கால்கள், இரு பாதங்(களின் நுனி)கள் ஆகிய ஏழு உறுப்புகள் (தரையில்) படுமாறு சஜ்தாச் செய்யும்படி கட்டளையிடப்பட்டுள்ளேன். நான் முடியையோ ஆடையையோ (தரையில் படாதவாறு) பிடித்துக்கொள்ள வேண்டாம் எனவும் கட்டளையிடப்பட்டுள்ளேன்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் அடியார் சிரவணக்கம் (சஜ்தா) செய்தால் அவருடன் ஏழு உறுப்புகள் சிரவணக்கம் செய்கின்றன: அவருடைய முகம்,இரு உள்ளங்கைகள், இரு முழங்கால்கள் மற்றும் இரு பாதங்(களின் நுனி)கள் ஆகியவையே அவை.
இதை அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

849 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களால் விடுதலை செய்யபபட்ட அடிமை குறைப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் தமது தலைமுடியைப் பின்பக்கமாகக் கொண்டையிட்டுத் தொழுதுகொண்டிருப்பதை அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் பார்த்தார்கள். உடனே அவர்கள் எழுந்து சென்று அவருடைய கொண்டையை அவிழ்த்து விடலானார்கள். அவர் தொழுது முடித்ததும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களை நோக்கித் திரும்பி உங்களுக்கு என்ன நேர்ந்தது? ஏன் எனது தலைமுடியை அவிழ்த்துவிட்டீர்கள்? என்று கேட்டார். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு தொழுகின்றவரின் நிலை பின்புறமாகக் கைகள் கட்டப்பட்டவாறு தொழுபவரின் நிலைக்கு ஒத்திருக்கிறது என்று கூறியதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.

**பாடம் : 45 சஜ்தாவில் உள்ளங்கைகளைத் தரையில் வைத்து, விலாப் புறங்களைவிட்டு முழங்கைகளையும் தொடைகளிலிருந்து வயிற்றையும் அகற்றிவைத்து (முறையாக) நடுநிலையோடு சஜ்தாச் செய்வது.**

850 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சஜ்தாவில் நடுநிலையைக் கையாளுங்கள். உங்களில் எவரும் தம் கைகளை நாய் பரப்பி வைப்பதைப் போன்று பரப்பி வைக்க வேண்டாம்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், முஹம்மத் பின் ஜஅ்ஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ள வலா யப்சுத் எனும் சொற்றொடர்) வலா யத்தபஸ்ஸத் என்று இடம் பெற்றுள்ளது. (இரண்டுக்கும் பொருள்: பரப்பி வைக்க வேண்டாம்.)

851 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் சஜ்தாச் செய்யும்போது உள்ளங்கைகளை (தரையில்) வையுங்கள்; முழங்கைகளை (தரையிலிருந்து) அகற்றி வையுங்கள்.
இதை பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 46 தொழுகை முறை; தொழுகையை எப்படி ஆரம்பிப்பது, எப்படி முடிப்பது?; ருகூஉ, சஜ்தாச் செய்யும் முறை; அவற்றில் நடுநிலையைக் கையாளுவது; நான்கு ரக்அத் தொழுகைகளில் ஒவ்வோர் இரண்டு ரக்அத் முடிந்ததும் அத்தஹிய்யாத் ஓதுவது; இரு சஜ்தாக்களுக்கு மத்தியிலும் முதல் அத்தஹிய்யாத்திலும் அமர்கின்ற முறை ஆகியவை குறித்த மொத்த விவரங்கள்.

852 அப்துல்லாஹ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழும்போது தம்மிரு அக்குள்களின் வெண்மை தென்படும் அளவுக்கு இரு கைகளையும் விரித்துவைப்பார்கள்.

853 அப்துல்லாஹ் பின் மாலிக் பின் புஹைனா (ரலி) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அம்ர் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சஜ்தாச் செய்யும்போது தம்மிரு அக்குள்களின் வெண்மை தென்படும் அளவுக்குத் தம் கைகளை (விலாவிலிருந்து) அகற்றிவைப்பார்கள் என்று இடம்பெற்றுள்ளது.
லைஸ் பின் சஅத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சஜ்தாச் செய்யும்போது தம்மிரு அக்குள்களைவிட்டுக் கைகளை விரித்து வைப்பார்கள். எந்த அளவிற்கென்றால் நான் அவர்களுடைய அக்குள்களின் வெண்மையைப் பார்ப்பேன் என்று (அப்துல்லாஹ் பின் மாலிக் பின் புஹைனா (ரலி) அவர்கள் கூறியதாக) இடம்பெற்றுள்ளது.

854 (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) மைமூனா பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சஜ்தாச் செய்யும்போது, ஓர் ஆட்டுக் குட்டி நினைத்தால் அவர்களின் இரு கைகளுக்கிடையே கடந்து சென்றுவிட முடியும் (அந்த அளவுக்கு அவர்கள் கைகளைத் தரையிலிருந்து அகற்றி வைப்பார்கள்).
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

855 நபி (ஸல்) அவர்களுடைய துணைவியார் மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சஜ்தாச் செய்யும்போது பின்னாலிருந்து (பார்த்தால்) அவர்களுடைய இரு அக்குள்களின் வெண்மை தென்படும் அளவுக்குத் தம் கைகளை

விரித்து (இடைவெளி விட்டு) வைப்பார்கள். அவர்கள் (சஜ்தாவிலிருந்து எழுந்ததும்) தமது இடது தொடையின் (காலின்) மீது லாவகமாக அமர்ந்துகொள்வார்கள்.

856 (நபி (ஸல்) அவர்களுடைய துணைவியார்) மைமூனா பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சஜ்தாச் செய்யும்போது தம் அக்குள்களின் வெண்மையைப் பின்னாலிருப்பவர் பார்க்கும் அளவுக்குக் கைகளை அகற்றி வைப்பார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அறிவிப்பாளர்களில் ஒருவரான வகீஉ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: (இந்த ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ள) வள்ஹ் எனும் சொல்லுக்கு வெண்மை என்று பொருள்.

857 (நபி (ஸல்) அவர்களுடைய துணைவியார்) ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அல்லாஹு அக்பர் என்று) தக்பீர் கூறித் தொழுகையைத் துவக்குவார்கள்;அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்... என்று (குர்ஆன்) ஓத ஆரம்பிப்பார்கள். ருகூஉச் செய்யும்போது தலையை உயர்த்தவுமாட்டார்கள்; ஒரேடியாகத் தாழ்த்தவுமாட்டார்கள். மாறாக, நடுநிலையாக வைத்திருப்பார்கள்.ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தினால் நிமிர்ந்து நிற்காமல் சஜ்தாவுக்குச் செல்லமாட்டார்கள். சஜ்தாவிலிருந்து தலையை உயர்த்தினால் நேராக நிமிர்ந்து உட்காராமல் (இரண்டாவது) சஜ்தாச் செய்ய மாட்டார்கள்.ஒவ்வோர் இரண்டு ரக்அத்திலும் அத்தஹிய்யாத் ஓதுவார்கள். (அந்த அமர்வில்) இடது காலை விரித்துவைத்து, வலது காலை நட்டுவைப்பார்கள். மேலும், ஷைத்தான் உட்காருவதைப் போன்று (கால்களை நட்டுவைத்து, புட்டத்தைத் தரையில் படியவைத்து) உட்கார வேண்டாம் என்றும், மிருகங்கள் உட்காருவதைப் போன்று முழங்கைகளைத் தரையில் பரப்பி வைத்து உட்கார வேண்டாம் என்றும் தடை விதித்துவந்தார்கள். அவர்கள் சலாம் கூறியே தொழுகையை முடிப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அபூகாலித் (ரஹ்) அவர்களிடமிருந்து இப்னு நுமைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸில் (ஷைத்தான் அமர்வதைப் போன்று என்பதைக் குறிக்க மூலத்தில் வந்துள்ள உக்பா என்பதற்கு பதிலாக) அகிப் என்று காணப்படுகிறது.

## பாடம் : 47 தொழுபவர் (தமக்கு முன்னால்) தடுப்பு ஒன்றை வைத்துக்கொள்வது.

858 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் (தொழும்போது) தமக்கு முன்னால் வாகன (ஒட்டக)த்தின் (சேணத்திலுள்ள) சாய்வுக்கட்டை போன்றதை (தடுப்பாக) வைத்துக்கொண்டு தொழட்டும். அந்தக் கட்டைக்கு அப்பால் கடந்துசெல்பவரை அவர் பொருட்படுத்த வேண்டாம்.
இதைத் தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

859 தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (திறந்தவெளிகளில்) தொழுது கொண்டிருப்போம். அப்போது எங்களுக்கு முன்னால் கால்நடைகள் கடந்துசெல்லும். எனவே, இது பற்றி நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறினோம். அப்போது அவர்கள், உங்களில் ஒருவர் வாகன (ஒட்டக)த்தின் (சேணத்திலுள்ள) சாய்வுக்கட்டை போன்றதை (தடுப்பாக) வைத்துக்கொள்ளட்டும். பிறகு அவரை எது கடந்துசென்றாலும் அவருக்குப் பிரச்சினை இல்லை என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், பிறகு அவரை யார் கடந்துசென்றாலும் அவருக்குப் பிரச்சினை இல்லை என்று இடம் பெற்றுள்ளது.

860 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், தொழுபவர் (தமக்கு முன்னால்) தடுப்பு வைத்துக்கொள்வது பற்றிக் கேட்கப்பட்டது. அப்போது அவர்கள் வாகன (ஒட்டக)த்தின் (சேணத்திலுள்ள) சாய்வுக்கட்டை போன்றதை வைத்துக்கொள்ளுமாறு கூறினார்கள்

861 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
தபூக் போரின் போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், தொழுபவர் (தமக்கு முன்னால்) தடுப்பு வைத்துக்கொள்வது பற்றிக் கேட்கப்பட்டது. அப்போது அவர்கள் வாகன (ஒட்டக)த்தின் (சேணத்திலுள்ள) சாய்வுக்கட்டை போன்ற ஒன்றை (தடுப்பாக) வைத்துக் கொள்ளுமாறு கூறினார்கள்.

862 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருநாள் தினத்தன்று (தொழுவிப்பதற்காகத் தொழுகைத் திடலுக்குப்) புறப்படும்போது (முனை அகலமான) ஈட்டியை எடுத்துவருமாறு உத்தரவிடுவார்கள். (தொழுகைத் திடலில்) அவர்களுக்கு முன்னால் அந்த ஈட்டி (தடுப்பாக நட்டு) வைக்கப்படும். பிறகு அதை நோக்கித் தொழுவிப்பார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னால் இருப்பார்கள். பொதுவாகப் பயணத்திலும் இவ்வாறே செய்வார்கள். இதனால் தான் (நம்) தலைவர்களும் இவ்வழக்கத்தைக் கடைப்பிடிக்கின்றனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

863 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (கைப்பிடி உள்ள) கைத்தடியை நட்டுவைத்து அதை நோக்கித் தொழுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.அவற்றில், அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அது (முனை அகலமான) ஈட்டியாகும் என்று உபைதுல்லாஹ் பின் ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

864 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (திறந்தவெளியில் தொழும்போது) தமது வாகன (ஒட்டக)த்தைக் குறுக்கே (தடுப்பாக) வைத்து,அதை நோக்கித் தொழுவார்கள்.

865 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தமது வாகன (ஒட்டக)த்தை நோக்கித் தொழுதார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளரதொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள் ஒட்டகத்தை நோக்கித் தொழுதார்கள் என இடம்பெற்றுள்ளது.

866 அபூஜுஹைஃபா வஹ்ப் பின் அப்தில்லாஹ் அஸ்ஸுவாயீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ஹஜ்ஜின்போது) மக்காவி(லிருந்து மினா செல்லும் சாலையி)லுள்ள அப்தஹ் எனுமிடத்தில் தோலால் ஆன சிவப்பு நிறக் கூடாரமொன்றில் இருக்க, அவர்களிடம் நான் சென்றேன். அப்போது நபியவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். பிலால் (ரலி) அவர்கள் (உள்ளே சென்று) நபி (ஸல்) அவர்கள் உளூச் செய்த தண்ணீரின் மிச்சத்தை வெளியே கொண்டுவந்தார்கள். மக்களில் சிலா் அதை (பிலால் (ரலி) அவர்களிடமிருந்து நேரடியாகப்) பெற்றுக்கொண்டனா். மற்றச் சிலா் அதைப் பெற்றவர்களிடமிருந்து பெற்று(த் தம்மீது தடவி)க்கொண்டனா். பிறகு நபி (ஸல்) அவர்கள் சிவப்பு நிற அங்கி அணிந்தவர்களாக வெளியே வந்தார்கள். (அதை அவர்கள் உயர்த்திப் பிடித்துக்கொண்டு வந்ததால் அவர்களின் கால்கள் வெளியில் தெரிந்தன.) இப்போதும் நான் நபி (ஸல்) அவர்களுடைய கால்களின் வெண்மையைப் பார்ப்பதைப் போன்றுள்ளது. பிறகு பிலால் (ரலி) அவர்கள் பாங்கு சொன்னார்கள். அவர்கள் ஹய்ய அலஸ் ஸலாஹ், ஹய்ய அலல் ஃபலாஹ் என்று கூறும்போது இங்கும் அங்குமாக (அதாவது, வலப் பக்கமாகவும் இடப் பக்கமாகவும்) திரும்பியபோது நான் அவர்களது வாயையே பார்த்துக்கொண்டிருந்தேன். பிறகு நபி (ஸல்) அவர்களுக்காக (கைப்பிடி உள்ள) கைத்தடி ஒன்று (தடுப்பாக) நட்டுவைக்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் முன்னே சென்று லுஹா் தொழுகையை இரண்டு ரக்அத்களாகத் தொழுவித்தார்கள். அவர்களுக்கு முன்னால் (அந்தக் கைத்தடிக்கு அப்பால்) கழுதை, நாய் ஆகியன தடையின்றி கடந்து சென்றுகொண்டிருந்தன. பிறகு நபி (ஸல்) அவர்கள் அஸ்ரையும் இரண்டு ரக்அத்களாகத் தொழுவித்தார்கள். பின்னா் மதீனாவிற்குத் திரும்பிச் செல்லும்வரை (கடமையான நான்கு ரக்அத் தொழுகைகளை) இரண்டு ரக்அத்களாகவே தொழுவித்துக் கொண்டிருந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளா்தொடா்களில் வந்துள்ளது.

867 அபூஜுஹைஃபா வஹ்ப் பின் அப்தில்லாஹ் அஸ்ஸுவாயீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஹஜ்ஜின்போது) தோலால் ஆன சிவப்பு நிறக் கூடாரமொன்றில் அல்லாஹ்வின் தூதா் (ஸல்) அவர்களைப் பார்த்தேன். பிலால் (ரலி) அவர்கள் (அல்லாஹ்வின் தூதா் (ஸல்) அவர்கள் உளூச் செய்து) மிச்சம் வைத்த தண்ணீரை வெளியே எடுத்துவருவதையும் பார்த்தேன். அந்த மிச்சத் தண்ணீருக்காக மக்கள் போட்டியிட்டுக் கொள்வதையும் நான் பார்த்தேன். அந்தத் தண்ணீரில் சிறிதளவைப் பெற்றவா் அதைத் (தம் மேனியில்)

தடவிக்கொண்டார். அதில் சிறிதும் கிடைக்காதவர் (தண்ணீர் கிடைத்த) தம் தோழரின் கையிலுள்ள ஈரத்தைத் தொட்டு(த் தடவி)க்கொண்டார். பிறகு பிலால் (ரலி) அவர்கள் ஒரு கைத்தடியை எடுத்து வந்து நட்டுவைப்பதை நான் பார்த்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிவப்பு நிற அங்கியொன்றை அணிந்தவர்களாக (தம் கணைக்கால்கள் தெரியுமளவுக்கு அங்கியை) உயர்த்திப் பிடித்தபடி வெளியில் வந்தார்கள். பிறகு அந்தக் கைத்தடியை நோக்கி (நின்று) மக்களுக்கு இரண்டு ரக்அத்கள் தொழுவித்தார்கள். அந்தக் கைத்தடிக்கு அப்பால் மனிதர்களும் கால்நடைகளும் கடந்துசெல்வதை நான் பார்த்தேன்.

868 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், மாலிக் பின் மிஃக்வல் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், நண்பகல் நேரமானபோது பிலால் (ரலி) அவர்கள் வந்து தொழுகைக்காக அறிவிப்புச் செய்தார்கள் எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

869 அபூஜுஹைஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹஜ்ஜின்போது ஒரு நாள்) நண்பகல் நேரத்தில் பத்ஹாவை (அப்தஹ்) நோக்கிப் புறப்பட்டார்கள். அப்போது அவர்கள் அங்கத் தூய்மை செய்துவிட்டு லுஹர் தொழுகை இரண்டு ரக்அத்கள் தொழுவித்து, அஸ்ர் தொழுகை இரண்டு ரக்அத்கள் தொழுவித்தார்கள். அப்போது அவர்களுக்கு முன்னால் கைத்தடி ஒன்று (நடப்பட்டு) இருந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அந்தக் கைத்தடிக்கு அப்பால் பெண்கள் மற்றும் கழுதைகள் (உள்ளிட்ட கால்நடைகள்) கடந்துசென்றுகொண்டிருந்தன எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

870 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. ஹகம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள் உளூச் செய்த தண்ணீரின் மிச்சத்தைப் பெற்றுக்கொள்ள மக்கள் போட்டியிடலாயினர் என அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

871 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (விடைபெறும் ஹஜ்ஜின்போது) மினாவில் (தடுப்பு எதையும் முன்னோக்காமல்) மக்களுக்குத் தொழுவித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது நான் பெட்டைக் கழுதையொன்றில் பயணித்தபடி (அவர்களை) நோக்கிச் சென்றேன். –அந்த நாளில் நான் பருவ வயதை நெருங்கிவிட்டிருந்தேன்.– (தொழுதுகொண்டிருந்தவர்களின்) அணிக்கு முன்னால் நான் கடந்துசென்று (கழுதையிலிருந்து) இறங்கி அதை மேயவிட்டு விட்டுத் தொழுகை அணியினூடே நுழைந்து (நின்று)கொண்டேன். அ(வ்வாறு நான் தொழுகை அணியைக் கடந்துசென்ற)தற்காக என்னை யாரும் ஆட்சேபிக்கவில்லை.

872 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
விடைபெறும் ஹஜ்ஜின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மினாவில் மக்களுக்குத் தொழுவித்தபடி நின்றுகொண்டிருந்தார்கள். அப்போது கழுதையொன்றில்

பயணித்தபடி நான் அவர்களை நோக்கிச் சென்றேன். (எனது) கழுதை (தொழுகையாளிகளின்) அணியில் ஒரு பகுதிக்கு முன்னால் நடந்துசென்றது. பிறகு நான் அதிலிருந்து இறங்கி மக்களுடன் வரிசையில் சேர்ந்துகொண்டேன்.

873 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், (அப்போது) நபி (ஸல்) அவர்கள் அரஃபாவில் (மக்களுக்குத்) தொழுவித்துக் கொண்டிருந்தார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

874 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், மினா, அரஃபா என்ற குறிப்பு இடம்பெறவில்லை. மாறாக, விடைபெறும் ஹஜ்ஜின் போது அல்லது மக்காவெற்றி நாளில் என்று (பொதுவாக) இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 48 தொழுதுகொண்டிருப்பவருக்கு முன்னால் குறுக்கே செல்பவரைத் தடுப்பது.

875 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தொழும்போது எவரையும் தமக்கு முன்னால் கடந்து செல்ல அவர் அனுமதிக்க வேண்டாம். இயன்றவரை அவரைத் தடுக்கட்டும். அவர் (விலகிச்செல்ல) மறுக்கும்போது அவருடன் சண்டையிட(நேர்ந்தால் சண்டையிட்டு தடுக்க)ட்டும்! ஏனெனில், அவன்தான் ஷைத்தான்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

876 ஹுமைத் பின் ஹிலால் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் என் தோழர் ஒருவரும் ஒரு ஹதீஸ் குறித்துப் பேசிக்கொண்டிருந்தோம். அப்போது (அங்கு வந்த) சாலிஹ் அஸ்ஸம்மான் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
நான் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்து செவியேற்ற ஒரு ஹதீஸையும் அவர்களிடம் நான் கண்ட ஒரு நிகழ்ச்சியையும் உமக்குக் கூறுகிறேன்:
நான் ஒரு வெள்ளிக்கிழமை (ஜுமுஆ) தினத்தன்று அபூசயீத் (ரலி) அவர்களுடன் தொழுது கொண்டிருந்தேன். அப்போது அவர்கள் மக்களில் யாரும் தமக்கு குறுக்கே சென்று விடாமலிருக்கத் தடுப்பொன்றை வைத்து அதை நோக்கித் தொழுதுகொண்டிருந்தார்கள். அப்போது பனூ அபீமுஐத் குலத்தைச் சேர்ந்த இளைஞர் ஒருவர் அபூசயீத் (ரலி) அவர்களுக்கு முன்னால் குறுக்கே கடந்துசெல்ல முற்பட்டார். உடனே அபூசயீத் (ரலி) அவர்கள் தமது கையால் அவரது நெஞ்சில் (கை வைத்துத்) தள்ளினார்கள். அந்த இளைஞர் பார்த்தார். அபூசயீத் (ரலி) அவர்களுக்கு முன்னால் கடந்துசெல்வதைத் தவிர வேறு வழியில்லை என்பதைக் கண்ட அவர், மீண்டும் அவர்களைக் கடந்து செல்லப்பார்த்தார். அபூசயீத் (ரலி) அவர்கள் முன்னைவிடக் கடுமையாக அவரது நெஞ்சில் (கை வைத்துத்) தள்ளினார்கள். அந்த இளைஞர் அப்படியே நின்றுகொண்டு அபூசயீத் (ரலி) அவர்களைச் சாடினார்.
பிறகு மக்களை விலக்கிக்கொண்டு (மதீனாவின் ஆளுநராயிருந்த) மர்வான் பின் ஹகமிடம் சென்று நடந்ததை அந்த இளைஞர் முறையிட்டார். அபூசயீத் (ரலி) அவர்களும் மர்வானிடம் சென்றார்கள். அப்போது மர்வான், அபூசயீத் (ரலி) அவர்களிடம், உங்களுக்கும் உங்கள்

சகோதரர் புதல்வருக்கும் (இடையே) என்ன நேர்ந்தது? அவர் உங்களைப் பற்றி முறையிடுகிறாரே! என்று கேட்டார். அதற்கு அபூசயீத் (ரலி) அவர்கள், மக்களில் எவரும் குறுக்கே செல்லாமலிருக்கத் தமக்கு முன்னே ஒரு தடுப்பை வைத்துக்கொண்டு உங்களில் ஒருவர் தொழும்போது, அவருக்கு முன்னால் குறுக்கே செல்ல யாரும் முற்பட்டால் அவரது நெஞ்சில் (கை வைத்துத்) தள்ளட்டும். அவர் (விலகிச் செல்ல) மறுக்கும்போது அவருடன் சண்டையிட(நேர்ந்தால் சண்டையிட்டுத் தடுக்க)ட்டும்! ஏனெனில், அவன்தான் ஷைத்தான் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியேற்றுள்ளேன் (எனவே தான், அந்த இளைஞரை அவ்வாறு நான் தடுத்தேன்) என்று கூறினார்கள்.

877 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தொழும்போது எவரையும் தமக்கு முன்னே கடந்துசெல்ல அவர் அனுமதிக்க வேண்டாம். (அவரைத் தடுக்கட்டும்.) அவர் (விலகிக்கொள்ள) மறுக்கும்போது சண்டையிட(நேர்ந்தால் சண்டையிட்டுத் தடுக்க)ட்டும்! ஏனெனில்,அவருடன் கூட்டாளி (ஷைத்தான்) உள்ளான்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

878 புஸ்ர் பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னை ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் அபூஜுஹைம் பின் அல்ஹாரிஸ் அல்அன்சாரி (ரலி) அவர்களிடம் அனுப்பி, தொழுது கொண்டிருப்பவருக்குக் குறுக்கே செல்பவர் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் என்ன செவியேற்றார்கள் என்று கேட்டுவருமாறு சொன்னார்கள். (நான் சென்று கேட்டேன்.) அப்போது அபூஜுஹைம் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுது கொண்டிருப்பவருக்குக் குறுக்கே செல்பவர் அதனால் எத்தகைய பாவம் தம்மீது ஏற்படும் என்பதை அறிந்திருப்பாரானால் அவருக்கு முன்னால் கடந்துசெல்வதைவிட நாற்பது (நாட்கள்/மாதங்கள்/வருடங்கள் அப்படியே காத்து) நிற்பது அவருக்கு நல்லதாக இருந்திருக்கும்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபுந்நள்ர் சாலிம் பின் அபீஉமய்யா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
புஸ்ர் பின் சயீத் (ரஹ்) அவர்கள் நாட்களில் நாற்பது என்று சொன்னார்களா, அல்லது மாதங்களில் நாற்பது என்று சொன்னார்களா, அல்லது வருடங்களில் நாற்பது என்று சொன்னார்களா என்று எனக்குத் தெரியவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அபூஜுஹைம் அல்அன்சாரி (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் (இது தொடர்பாக) என்ன கேட்டார்கள் என்று அறிந்து வருமாறு என்னை ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் அனுப்பினார்கள் என இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 49 தொழுபவர் தடுப்புக்கு அருகில் நெருங்கி நிற்க வேண்டும்.

879 சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழநிற்கும் இடத்திற்கும் (பள்ளிவாசலின் கிப்லாத் திசையில் அமைந்த) சுவருக்கும் இடையே ஓர் ஆடு கடந்து செல்லும் அளவுக்கு இடைவெளி இருந்தது.

880 யஸீத் பின் அபீஉபைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சலமா பின் அக்வஃ (ரலி) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலில்) குர்ஆன் வைக்கப்படும் இடத்திற்கு அருகில் (உள்ள தூண் அருகே) கூடுதலான (நஃபில்) தொழுகையைத் தொழுவார்கள். மேலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்து (இந்தத் தூணை முன்னோக்கி நின்று) தொழுவார்கள். சொற்பொழிவு மேடைக்கும் (மிம்பர்) கிப்லாவுக்கும் இடையே ஓர் ஆடு கடந்துசெல்லும் அளவுக்கு இடைவெளி இருந்தது என்றும் குறிப்பிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

881 யஸீத் பின் அபீஉபைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சலமா பின் அக்வஃ (ரலி) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலில்) குர்ஆன் வைக்கப்படும் இடத்திற்குப் பக்கத்திலிருந்த தூணருகில் தொழுவதைத் தேர்ந்தெடுத்துக்கொள்வார்கள். அவர்களிடம் நான், அபூ முஸ்லிம்! தாங்கள் இந்தத் தூணுக்கு அருகில் தொழுவதையே தேர்ந்தெடுத்துக் கொள்வதை நான் காண்கிறேனே (என்ன காரணம்)? என்று கேட்டேன். அதற்கு சலமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் இந்தத் தூணுக்கு அருகில் தொழுவதைத் தேர்ந்தெடுத்துக்கொள்வதை நான் பார்த்திருக்கிறேன் (ஆகவேதான், நானும் இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தேன்) என்று பதிலளித்தார்கள்.

## பாடம் : 50 தொழுபவருக்கு முன்னால் தடுப்பு எந்த அளவு இருக்க வேண்டும்?

882 அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூதர் அல்கிஃபாரீ (ரலி) அவர்கள், உங்களில் ஒருவர் (திறந்தவெளியில்) தொழ நிற்கும் போது தமக்கு முன்னால் வாகன (ஒட்டக)த்தின் (சேணத்திலுள்ள) சாய்வுக்கட்டை போன்றது இருந்தால் அதுவே அவருக்குத் தடுப்பாக அமைந்துவிடும். சாய்வுக்கட்டை போன்றது இல்லாவிட்டால் கழுதை, பெண் மற்றும் கறுப்புநாய் ஆகியன அவரது (கவனத்தை ஈர்த்து) தொழுகையை முறித்துவிடும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்கள். உடனே நான், அபூதர் (ரலி) அவர்களே! சிவப்பு நிற நாய், மஞ்சள் நிற நாய் ஆகியவற்றை விட்டுவிட்டுக் கறுப்பு நிற நாயை மட்டுமே குறிப்பிடக் காரணம் என்ன? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், என் சகோதரரின் புதல்வரே! நீங்கள் என்னிடம் கேட்டதைப் போன்றே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் கறுப்பு நாய் ஷைத்தான் ஆகும் என்று கூறினார்கள் என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ், மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

883 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தடுப்பு இல்லாமல் தொழுகின்றவரின்) தொழுகையைப் பெண் (முறித்துவிடுவாள். மேலும்), கழுதை, நாய் ஆகியவை(யும்) முறித்துவிடும். வாகன (ஒட்டக)த்தின் (சேணத்திலுள்ள) சாய்வுக்கட்டை போன்றது அதிலிருந்து பாதுகாத்துவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 51 தொழுபவருக்கு முன்னால் குறுக்கே படுத்திருப்பது.

884 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இரவுத் தொழுகை தொழுதுகொண்டிருப்பார்கள். அப்போது நான் அவர்களுக்கும் தொழும் திசை (கிப்லாவு)க்கும் இடையே குறுக்குவாக்கில் ஜனாஸா (சடலம்) போன்று படுத்துக்கொண்டிருப்பேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

885 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இரவுத் தொழுகையை முழுமையாக தொழுது முடிப்பார்கள். அப்போது நான் அவர்களுக்கும் தொழும் திசைக்கும் (கிப்லா) இடையே குறுக்குவாக்கில் படுத்துக் கொண்டிருப்பேன். அவர்கள் இறுதியில் வித்ர் தொழுகை தொழ எண்ணும்போது என்னை எழுப்பிவிடுவார்கள். நான் (எழுந்து) வித்ர் தொழுகை தொழுவேன்.

886 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் சிறிய தாயார்) ஆயிஷா (ரலி) அவர்கள் (எங்களிடம்), தொழுகையை முறிக்கக் கூடியவை எவை? என்று கேட்டார்கள். நாங்கள், பெண்களும் கழுதைகளும் (குறுக்கே செல்வது) என்று பதிலளித்தோம். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், பெண்கள் என்ன தீய பிராணிகளா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுதுகொண்டிருக்கும் போது அவர்களுக்கு முன்னால் நான் ஜனாஸாவைப் போன்று குறுக்குவாக்கில் படுத்துக் கொண்டிருப்பேன் என்று கூறினார்கள்.

887 மஸ்ரூக் பின் அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள் அருகில் நாயும் கழுதையும் பெண்ணும் (தொழுபவருக்குக் குறுக்கே செல்வது) தொழுகையை முறித்துவிடும் என்பது பற்றி பேசப்பட்டது. அதைக் கேட்ட ஆயிஷா (ரலி) அவர்கள், (பெண்களாகிய) எங்களைக் கழுதைகளுக்கும் நாய்களுக்கும் ஒப்பாக்கிவிட்டீர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் (அவர்களின்) கிப்லாவுக்குமிடையே கட்டிலில் ஒருக்களித்துப் படுத்துக் கொண்டிருக்க அவர்கள் தொழுதுகொண்டிருப்பார்கள். அப்போது எனக்கு ஏதேனும் தேவையேற்பட்டால் நபி (ஸல்) அவர்களுக்கு முன்னால் (எழுந்து) உட்கார்ந்து அவர்களுக்கு இடையூறு ஏற்படுத்த விரும்பாமல் கட்டிலின் இரு கால்கள் வழியாக நான் நழுவிச் சென்றுவிடுவேன் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

888 அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள் (நாய்கள், கழுதைகள், பெண்கள் ஆகியோர் தொழுபவருக்குக் குறுக்கே சென்றால் தொழுகை முறிந்துவிடும் என்று கூறிய ஒருவரிடம்), எங்களை நாய்களுக்கும் கழுதைகளுக்கும் சமமாக்கி விட்டீர்களே! நான் கட்டிலில் ஒருக்களித்துப் படுத்துக்கொண்டிருப்பேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து கட்டிலின் நடுப்பகுதிக்கு நேராக (நின்று) தொழுவார்கள். (ஏதேனும் தேவை ஏற்பட்டால்,) அவர்களது பார்வையில் படும்விதமாக எழுந்து அமரப் பிடிக்காமல் கட்டிலின் இரு கால்களினூடே மெல்ல நழுவி, எனது போர்வையிலிருந்து நழுவிச் சென்றுவிடுவேன் என்று கூறினார்கள்.

889 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (இரவில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் (படுத்து) உறங்கிக் கொண்டிருப்பேன். அப்போது என் கால்கள் அவர்களது கிப்லாவில் (சஜ்தாச் செய்யுமிடத்தில்) இருந்துகொண்டிருக்கும். அவர்கள் (நிலையிலிருந்து) சஜ்தாவுக்கு வரும்போது என்னைத் தமது விரலால் தொட்டுணர்த்துவார்கள். உடனே நான் என் கால்களை மடக்கிக்கொள்வேன். அவர்கள் (மீண்டும்) நிலைக்குச் சென்றுவிட்டால் நான் (மறுபடியும்) கால்களை நீட்டிக் கொள்வேன். அந்த நாட்களில் (எங்கள்) வீடுகளில் விளக்குகள் இருக்கவில்லை.

890 நபி (ஸல்) அவர்களுடைய துணைவியார் மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுதுகொண்டிருக்கும்போது அவர்களுக்கு எதிரில் மாதவிடாய் ஏற்பட்டிருக்கும் நிலையில் நான் இருந்துகொண்டிருப்பேன். சில நேரங்களில் அவர்கள் சஜ்தாச் செய்யும்போது அவர்களது ஆடை என்மீது படும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

891 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இரவுத் தொழுகை தொழுதுகொண்டிருப்பார்கள். அப்போது மாதவிடாய் ஏற்பட்ட நிலையில் நான் அவர்களது விலாப் பக்கத்தில் (படுத்துக்கொண்டு) இருப்பேன். நான் போர்த்தியிருந்த போர்வையில் ஒரு பகுதி அவர்கள்மீது அவர்களது விலாப் புறத்தில் கிடக்கும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 52 ஒரே ஆடையில் தொழுவதும் அதை அணியும் முறையும்.

892 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரே ஆடையை அணிந்து கொண்டு தொழுவது குறித்துக் கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உங்களில் ஒவ்வொருவருக்கும் இரண்டு ஆடைகள் உண்டா? என்று (திருப்பிக்) கேட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

893 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களை அழைத்து, எங்களில் ஒருவர் ஒரே அடையை அணிந்து தொழலாமா? என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், உங்களில் ஒவ்வொருவரும் இரு ஆடைகள் வைத்திருக்கிறாரா? என்று (திருப்பிக்) கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

894 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் தோள்களை மறைக்காமல் ஒரே ஆடையை அணிந்துகொண்டு தொழ வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

895 உமர் பின் அபீசலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உம்முசலமா (ரலி) அவர்களது இல்லத்தில் ஒரே ஆடையை அணிந்துகொண்டு தொழுததை நான் பார்த்தேன். அந்த ஆடையின் இரு ஓரங்களையும் தம் தோள்கள்மீது (வலது தோள் மீதிருக்கும் ஓரத்தை இடது கைக்குக் கீழேயும் இடது தோள் மீதிருக்கும் ஓரத்தை வலது கைக்குக் கீழேயுமாக) மாற்றிப் போட்டுக்கொண்டு தொழுததை நான் பார்த்தேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், (அதன் இரு ஓரங்களையும் தோள்கள்மீது மாற்றிப் போட்டுக்கொண்டார்கள் என்பதைக் குறிக்க மூலத்தில்) முஷ்தமிலன் என்று குறிப்பிடாமல் முதவஷ்ஷிஹன் என்று குறிப்பிடபபட்டுள்ளது. (இரண்டு சொற்களுக்கும் பொருள் ஒன்றே.)

896 உமர் பின் அபீசலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உம்முசலமா (ரலி) அவர்களது இல்லத்தில் ஒரே ஆடையை அணிந்துகொண்டு தொழுததை நான் பார்த்தேன். அப்போது அதன் இரு ஓரங்களையும் அவர்கள் மாற்றிப்போட்டுக்கொண்டிருந்தார்கள்.

897 உமர் பின் அபீசலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரே ஆடையை போர்த்திக்கொண்டு அதன் இரு ஓரங்களையும் மாற்றிப் போட்டுக்கொண்டு தொழுததை நான் பார்த்தேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், ஈசா பின் ஹம்மாத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் தம் தோள்கள்மீது (மாற்றிப் போட்டுக்கொண்டு தொழுதார்கள்) எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது.

898 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரே ஆடையை மாற்றிப் போட்டுக்கொண்டு தொழுததை நான் பார்த்தேன்.

899 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்கள் இடம்பெற்றுள்ள அறிவிப்பில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன் என்று ஹதீஸ் தொடங்குகிறது.

900 அபுஸ்ஸுபைர் அல்மக்கீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் பல ஆடைகளிருக்கவே ஒரே ஆடையை அணிந்து, (அதன் இரு ஓரங்களையும்) மாற்றிப் போட்டுக்கொண்டு தொழுததை நான் பார்த்தேன். இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்ததை நான் பார்த்திருக்கிறேன் என்றும் ஜாபிர் (ரலி) அவர்கள் குறிப்பிட்டார்கள்.

901 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு முறை) நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் ஒரு பாயில் சஜ்தாச் செய்துகொண்டிருந்ததை நான் கண்டேன். மேலும், அவர்கள் ஒரே ஆடையை அணிந்து (அதன் இரு ஓரங்களையும்) மாற்றிப் போட்டுக் கொண்டு தொழுததையும் நான் பார்த்தேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

902 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அதன் இரு ஓரங்களையும் தம் தோள்கள் மீது போட்டுக்கொண்டு (தொழுததை நான் பார்த்தேன்) எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது.
அபூபக்ர் பின் அபீஷைபா, சுவைத் பின் சயீத் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், (அதன் இரு ஓரங்களையும்) மாற்றிப் போட்டுக்கொண்டு எனும் குறிப்பும் இடம்பெற்றுள்ளது.

# அத்தியாயம் : 06 - மஸ்ஜித் - தொழுமிடங்கள்

## பாடம் : 1 பூமியில் முதலாவதாக எழுப்பப்பெற்ற இறை ஆலயம்.

903அபூதர் அல்கிஃபாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்) "அல்லாஹ்வின் தூதரே! பூமியில் முதன் முதலாக அமைக்கப்பெற்ற பள்ளிவாசல் எது?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல் மஸ்ஜிதுல் ஹராம் (மக்கா நகரிலுள்ள புனித கஅபா அமைந்திருக்கும்) பள்ளிவாசல்" என்று பதிலளித்தார்கள். நான் "பிறகு எது?" என்று கேட்டேன். அவர்கள் "(ஜெரூஸலத்திலுள்ள) அல்மஸ்ஜிதுல் அக்ஸா" என்று பதிலளித்தார்கள். நான், "அவ்விரண்டுக்குமிடையே எத்தனை ஆண்டுக் காலம் (இடைவெளி இருந்தது)?" என்று கேட்டேன். அவர்கள் "நாற்பதாண்டுகள்' (மஸ்ஜிதுல் ஹராம் அமைக்கப்பெற்று நாற்பதாண்டுகள் கழித்து மஸ்ஜிதுல் அக்ஸா அமைக்கப்பெற்றது). (பின்னர்) உங்களைத் தொழுகை (நேரம்) எங்கே வந்தடைகிறதோ அங்கு நீங்கள் தொழுதுகொள்ளுங்கள்! ஏனெனில், அதுதான் இறைவனை வழிபடும் தலம் (மஸ்ஜித்) ஆகும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், அபூகாமில் அல்ஜஹ்தரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பிறகு உங்களைத் தொழுகை (நேரம்) எங்கே வந்தடைந்தாலும் (அங்கு) நீங்கள் தொழுதுகொள்ளுங்கள். ஏனெனில், அதுதான் இறைவனை வழிபடும் தலம் (மஸ்ஜித்) ஆகும்" என்று இடம்பெற்றுள்ளது.

904இப்ராஹீம் பின் யஸீத் அத்தைமீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் பள்ளிவாசலை ஒட்டியுள்ள இடத்தில் என் தந்தை (யஸீத் அத்தைமீ) அவர்களிடம் குர்ஆனை ஓதிக் காட்டிக்கொண்டிருந்தேன். அப்போது நான் "சஜ்தா' வசனத்தை ஓதியவுடன் என் தந்தை (அங்கேயே) சஜ்தாச் செய்தார்கள். நான், "தந்தையே! (நடை)பாதையில் சஜ்தா (சிரவணக்கம்) செய்கிறீர்களே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
அபூதர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், பூமியில் முதன் முதலில் அமைக்கப்பெற்ற பள்ளிவாசல் குறித்துக் கேட்டேன். அவர்கள், "அல்மஸ்ஜிதுல் ஹராம் (மக்கா நகரிலுள்ள புனித கஅபா அமைந்திருக்கும்) பள்ளிவாசல்" என்று பதிலளித்தார்கள். "பின்னர் எது?" என்று கேட்டேன். (ஜெரூஸலத்திலுள்ள) "அல்மஸ்ஜிதுல் அக்ஸா" எனறார்கள். நான், "அவ்விரண்டுக்குமிடையே எத்தனை ஆண்டுக் காலம் (இடைவெளி இருந்தது)?" என்று கேட்டேன். அவர்கள், "நாற்பதாண்டுகள்" என்று கூறினார்கள். "பிறகு பூமி முழுவதுமே உங்களுக்குத் தொழுமிடம்தான். ஆகவே, உங்களைத் தொழுகை (நேரம்) எங்கே வந்தடைந்தாலும் அங்கே நீங்கள் தொழுதுகொள்ளுங்கள்!" என்றும் சொன்னார்கள்.

905அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனக்கு முன்னர் வாழ்ந்த (இறைத்தூதர்கள்) எவருக்கும் வழங்கப்பெறாத ஐந்து விஷயங்கள் எனக்கு வழங்கப்பெற்றுள்ளன:
1.ஒவ்வோர் இறைத்தூதரும் தத்தம் சமுதாயத்தாருக்கு மட்டுமே (தூதராக நியமிக்கப்பட்டு) அனுப்பப்பட்டார்கள். நான் சிவப்பர் கறுப்பர் (என்ற பாகுபாடின்றி) அனைவருக்கும் தூதராக அனுப்பப்பெற்றுள்ளேன்.
2.போரில் கிடைக்கப்பெறும் செல்வங்கள் எனக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. எனக்கு முன்னிருந்த (இறைத்தூதர்) எவருக்கும் அவை அனுமதிக்கப்படவில்லை.
3.எனக்கு பூமி முழுவதும் சுத்தம்(தயம்மும்) செய்வதற்கேற்றதாகவும் தூய்மையானதாகவும் தொழுமிடமாகவும் ஆக்கப்பட்டுள்ளது. (என் சமுதாயத்தாரில்) யாரேனும் ஒருவருக்குத் தொழுகை(யின் நேரம்) வந்துவிட்டால் அவர் எந்த இடத்தில் இருக்கிறாரோ அந்த இடத்திலேயே தொழுதுகொள்வார்.
4.எதிரிகளுக்கும் எனக்குமிடையே) ஒரு மாதகாலப் பயணத் தொலைவிருந்தாலும் (அவர்களுடைய உள்ளங்களில் என்னைப் பற்றிய மதிப்புக் கலந்த) அச்சம் ஏற்படுத்தப் படுவதன் மூலம் நான் வெற்றியளிக்கப்பெற்றுள்ளேன்.
5.மறுமையில் என் சமுதாயத்தாருக்காக) பரிந்துரை செய்யும் வாய்ப்பு அளிக்கப் பெற்றுள்ளேன்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

906அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறுதி சமுதாயத்தாராகிய) நாம் மூன்று விஷயங்களில் (மற்ற) மக்கள் அனைவரை விடவும் சிறப்பிக்கப்பட்டுள்ளோம்:
1.நம் (தொழுகை) வரிசைகள் வானவர்களின் (தொழுகை) வரிசைகளைப் போன்று (சீராக) ஆக்கப்பட்டுள்ளன.
2. நமக்கு பூமி முழுவதும் தொழுமிடமாக ஆக்கப்பட்டுள்ளது. (தொழுகைக்காக "அங்கத் தூய்மை' செய்ய) நமக்குத் தண்ணீர் கிடைக்காதபோது தரை முழுவதும் சுத்தம் (தயம்மும்) செய்வதற்கேற்றதாக ஆக்கப்பட்டுள்ளது.
மற்றொரு சிறப்பையும் நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள்.
இதை ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் ஹுதைஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

907அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் மற்ற இறைத்தூதர்களைவிடவும் ஆறு விஷயங்களில் சிறப்பிக்கப்பட்டுள்ளேன்:
1.நான் ஒருங்கிணைந்த (பொருள்களைக் குறிக்கும்) சொற்கள் வழங்கப்பெற்றுள்ளேன்.
2.எதிரிகளின் உள்ளத்தில் என்னைப் பற்றிய (மதிப்பும்) அச்ச(மு)ம் ஊட்டப்பட்டு எனக்கு வெற்றியளிக்கப்பட்டுள்ளது.
3.போர்ச் செல்வங்கள் எனக்கு (மட்டும்) அனுமதிக்கப்பட்டுள்ளன.

4.எனக்கு பூமி முழுவதும் சுத்தம் (தயம்மும்) செய்வதற்கேற்றதாகவும் தொழுமிடமாகவும் ஆக்கப்பட்டுள்ளது.
5.நான் மனித இனம் முழுவதற்கும் தூதராக நியமிக்கப்பெற்றுள்ளேன்.
6.என்னோடு நபிமார்களின் வருகை முற்றுப்பெற்றுவிட்டது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

908அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் ஒருங்கிணைந்த (பொருள்களைக் குறிக்கும்) சொற்களுடன் அனுப்பப்பெற்றுள்ளேன். (எதிரிகளின் உள்ளத்தில் என்னைப் பற்றிய மதிப்பும்) அச்ச(மு)ம் ஊட்டப்பட்டு எனக்கு வெற்றியளிக்கப்பட்டுள்ளது. (ஒரு முறை) நான் உறங்கிக் கொண்டிருக்கையில் பூமியின் கருவூலங்களுடைய திறவுகோல்கள் கொண்டுவரப்பட்டு என் முன்னால் வைக்கப்பட்டன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துவிட்டு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்றுவிட்டார்கள். நீங்கள் அந்தக் கருவூலங்களை (தேடி) வெளியே எடுத்து (அனுபவித்து)க் கொண்டிருக்கிறீர்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே வேறு நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

909அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எதிரிகளுக்கு (என்னைப் பற்றிய மதிப்பும்) அச்ச(மு)ம் ஊட்டப்பட்டு நான் வெற்றியளிக்கப் பட்டுள்ளேன். நான் ஒருங்கிணைந்த (பொருள்களைக் குறிக்கும்) சொற்கள் வழங்கப் பெற்றுள்ளேன். (ஒருமுறை) நான் உறங்கிக்கொண்டிருக்கையில் பூமியின் கருவூலங்களுடைய திறவுகோல்கள் கொண்டுவரப்பட்டு என் கைகளில் வைக்கப்பட்டன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

910ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும் இவை. அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எதிரிகளுக்கு (என்னைப் பற்றிய மதிப்பும்) அச்ச(மு)ம் ஊட்டப்பட்டு நான் வெற்றியளிக்கப்பட்டுள்ளேன். நான் ஒருங்கிணைந்த (பொருள்களைக் குறிக்கும்) சொற்கள் வழங்கப்பெற்றுள்ளேன்.

## பாடம் : 2 மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசல் கட்டப்பெற்ற விவரம்.

911அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பிறந்தகத்தைத் துறந்து) மதீனாவுக்கு வந்தபோது மதீனாவின் மேட்டுப்பாங்கான பகுதியில் இறங்கி, "பனூ அம்ர் பின் அவ்ஃப்'

என்றழைக்கப்பட்டுவந்த ஒரு குடும்பத்தாரிடையே பதிநான்கு நாட்கள் தங்கினார்கள். பிறகு பனூ நஜ்ஜார் கூட்டத்தாருக்கு (அவர்களை அழைத்து வருமாறு) ஆளனுப்பினார்கள். பனூநஜ்ஜார் கூட்டத்தார் (நபியவர்களை வரவேற்கும் முகமாகத்) தம் வாட்களை (கழுத்தில்) தொங்கவிட்டபடி வந்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வாகன(ஒட்டக)த்தில் அமர்ந்திருக்க, அவர்களுக்குப் பின்னால் அபூபக்ர் (ரலி) அவர்கள் அமர்ந்திருக்க, பனூநஜ்ஜார் கூட்டத்தார் புடைசூழ அவர்களைக் குழுமியிருந்த காட்சியை இப்போதும் நான் காண்பதைப் போன்றுள்ளது. இறுதியில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வாகனம் அபூஅய்யூப் (ரலி) அவர்களின் வீட்டு முற்றத்தில் அவர்களை இறக்கிவிட்டது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகை நேரம் வந்தடையும் இடத்திலேயே தொழுகையை நிறைவேற்றுவார்கள்; ஆட்டுத் தொழுவங்களிலும் தொழுவார்கள். (இது அவர்களது வழக்கமாக இருந்தது.) இந்நிலையில்தான், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசல் கட்டும்படி உத்தரவிட்டார்கள். பனூநஜ்ஜார் கூட்டத்தாரை (அழைத்துவரச் சொல்லி) ஆளனுப்பினார்கள். அவர்கள் வந்தபோது, "பனூநஜ்ஜார் கூட்டத்தாரே! உங்களுடைய இந்தத் தோட்டத்தை எனக்கு விலைபேசி (விற்று)விடுங்கள்" என்று கேட்டார்கள். அதற்கு அக்கூட்டத்தார், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! இதற்கான விலையை நாங்கள் அல்லாஹ்விடமே கோருவோம்" என்று கூறி (அத்தோட்டத்தை அளித்த)னர்.

நான் (உங்களிடம்) கூறவிருப்பவைதாம் அத்தோட்டத்தில் இருந்தன: அதில் சில பேரீச்ச மரங்கள்,இணைவைப்பாளர்களின் சமாதிகள், இடிபாடுகள் ஆகியவைதாம் இருந்தன. எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பள்ளிவாசல் கட்டும்போது அங்கிருந்த) பேரீச்ச மரங்களை வெட்டும்படி உத்தரவிட, அவ்வாறே அவை வெட்டப்பட்டன. இணை வைப்பாளர்களின் சமாதிகளைத் தோண்டி (அப்புறப் படுத்தி)டுமாறு உத்தரவிட அவ்வாறே அவை தோண்டப்பட்டன. இடிபாடுகளை (அகற்றி)ச் சமப்படுத்தும்படி உத்தரவிட அவ்வாறே அவை சமப்படுத்தப்பட்டன.

பள்ளிவாசலின் கிப்லாத் திசையில் பேரீச்ச மரங்களை வரிசையாக நட்டனர். பள்ளிவாசலின் (நுழைவாயிலின்) இரு நிலைக்கால்களாகக் கல்லை (நட்டு) வைத்தனர். அப்போது "ரஜ்ஸ்" எனும் ஒருவித யாப்பு வகைப் பாடலை பாடிக்கொண்டிருந்தனர். அவர்களுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் (பாடியபடி பணியில் ஈடுபட்டு) இருந்தார்கள்.

"இறைவா! மறுமையின் நன்மையைத் தவிர வேறு நன்மை கிடையாது; ஆகவே, (மறுமையின் நன்மைகளுக்காகப் பாடுபடும்) அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் நீ உதவி செய்வாயாக!" என்று அவர்கள் பாடினர்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

912அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பள்ளிவாசல் கட்டப்படுவதற்கு முன்னால் ஆட்டுத் தொழுவங்களில் தொழுதிருக்கிறார்கள்.

இதை அபுத்தய்யாஹ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

-மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 3 கிப்லாத் திசை, பைத்துல் மக்திஸைவிட்டு கஅபாவிற்கு மாற்றப்படல்.

913பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுடன் பைத்துல் மக்திஸை நோக்கிப் பதினாறு மாதங்கள் தொழுதேன். "அல்பகரா'அத்தியாயத்திலுள்ள "நீங்கள் எங்கிருந்தாலும் உங்கள் முகங்களை (தொழுகையின்போது) அதன் (-கஅபாவின்) பக்கமே திருப்புங்கள்" எனும் (2:144ஆவது) வசனம் அருளப்பெறும்வரை (இவ்வாறே நாங்கள் செய்தோம்). நபி (ஸல்) அவர்கள் தொழுது முடித்த பின்னர்தான் இவ்வசனம் அருளப்பெற்றது. (நபி (ஸல்) அவர்களுடன் தொழுது முடித்த) மக்களில் ஒருவர் அன்சாரிகளில் சிலரைக் கடந்துசென்றார். அவர்கள் (பைத்துல் மக்திஸை நோக்கித்) தொழுதுகொண்டிருந்தனர். அந்த மனிதர் (தொழும் திசை மாற்றப்பட்டுவிட்ட செய்தியை) அவர்களிடம் தெரிவித்தார். உடனே அவர்கள் (தொழுகையிலிருந்தவாறே) தம் முகங்களை இறையில்லம் (கஅபாவை) நோக்கித் திருப்பிக்கொண்டனர்.

914பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பைத்துல் மக்திஸை நோக்கிப் "பதினாறு" அல்லது "பதினேழு" மாதங்கள் தொழுதோம். பிறகு நாங்கள் கஅபா (எனும் தற்போதைய கிப்லா) நோக்கித் திருப்பப்பட்டோம்.
இதை அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

915இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் குபாவில் சுப்ஹு தொழுதுகொண்டிருந்தபோது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "சென்ற இரவு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குக் குர்ஆன் (வசனம் ஒன்று) அருளப்பெற்றுள்ளது. (தொழுகையில், இதுவரை முன்னோக்கிவந்த பைத்துல் மக்திஸை விட்டு) இனிமேல் இறையில்லம் கஅபாவை முன்னோக்க வேண்டுமென்று அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. ஆகவே, நீங்கள் கஅபாவை முன்னோக்கித் தொழுங்கள்" என்று அறிவித்தார். அப்போது மக்களின் முகம் (பைத்துல் மக்திஸ் இருக்கும் திசையான) ஷாம் நாட்டை நோக்கியிருந்தது. (இந்த அறிவிப்பைக் கேட்ட) உடனே மக்கள் தங்கள் முகங்களை (அப்படியே) கஅபாவின் பக்கம் திருப்பிக்கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

916மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

917அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பைத்துல் மக்திஸை நோக்கித் தொழுது கொண்டிருந்தார்கள். அப்போது "(நபியே!) உங்கள் முகம் (அடிக்கடி) வானத்தின் பக்கம் திரும்புவதை நாம் காண்கிறோம். எனவே, நீங்கள் விரும்புகின்ற கிப்லா(வாகிய கஅபா)வின் பக்கம் நிச்சயமாக (இதோ) உங்களை நாம் திரும்பச்செய்கிறோம். ஆகவே,உங்கள் முகத்தை மஸ்ஜிதுல் ஹராம் (புனிதப் பள்ளிவாசலை) நோக்கித் திருப்புங்கள்" எனும் (2:144ஆவது) இறைவசனம் அருளப்பெற்றது. அப்போது பனூசலிமா குலத்தைச் சேர்ந்த ஒருவர் (நபி (ஸல்) அவர்களுடன் தொழுதுவிட்டுத்) தமது குலத்தாரைக் கடந்துசென்றார். அப்போது அவர்கள் ஃபஜ்ர் தொழுகையின் முதல் ரக்அத்தைத் தொழுதுவிட்டு (இரண்டாவது ரக்அத்தின்) ருகூஉவில் இருந்தனர். உடனே அம்மனிதர், "அறிந்துகொள்ளுங்கள்: இந்தக் கிப்லா (தொழும் திசை) மாற்றப்பட்டுவிட்டது" என்று உரத்த குரலில் அறிவித்தார். உடனே அம்மக்கள் தொழுகையிலிருந்தவாறு அப்படியே (கஅபா எனும் தற்போதைய) இந்தக் கிப்லாவை நோக்கித் திரும்பிக்கொண்டனர்.

## பாடம் : 4 மண்ணறைகள்மீது பள்ளிவாசல்கள் எழுப்புதல், அவற்றில் உருவப்படங்களை வரைதல், அடக்கத்தலங்களை வணக்கத்தலங்களாக ஆக்கிக்கொள்ளல் ஆகியவை தடை செய்யப்பட்டுள்ளன.

918ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
உம்முஹபீபா (ரலி), உம்முசலமா (ரலி) ஆகிய இருவரும் (அபிசீனிய ஹிஜ்ரத்தின் போது) அபிசீனியாவில் தாங்கள் பார்த்த உருவப் படங்கள் கொண்ட ஒரு கிறிஸ்தவ ஆலயத்தைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அவர்கள் எத்தகையோர் எனில்,) அவர்களிடையே நல்ல மனிதர் ஒருவர் வாழ்ந்து இறந்துவிடும்போது, அவருடைய சமாதியின் மீது வணக்கத்தலம் ஒன்றை நிறுவி அதில் அம்மாதிரியான உருவப்படங்களை பொறித்துவிடுவார்கள். அவர்கள்தாம் மறுமை நாளில் அல்லாஹவிடம் மக்களிலேயே மிக மோசமானவர்கள்" என்று சொன்னார்கள்.

919ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உடல் நலிவுற்று (தம் இறுதிநாட்களில்) இருந்த போது அவர்களிடம் மக்கள் பேசிக்கொண்டிருந்தனர். அப்போது உம்முசலமா (ரலி) அவர்களும் உம்முஹபீபா (ரலி) அவர்களும் (தாங்கள் கண்ட) கிறிஸ்தவ ஆலயத்தைப் பற்றிக் கூறினர்.
தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

920ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் துணைவியர் (சிலர்) தாங்கள் கண்ட "மாரியா" எனப்படும் ஒரு கிறிஸ்தவ ஆலயத்தைப் பற்றிக் கூறினர். மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

921ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்த நோயிலிருந்து எழாமல் (இறந்து) போய்விட்டார்களோ அந்த நோயின்போது, "அல்லாஹ் யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் தனது கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக! அவர்கள் தங்களுடைய நபிமார்களின் அடக்கத்தலங்களை வணக்கத்தலங்களாக ஆக்கிக்கொண்டார்கள்" என்று கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது இந்த அறிவிப்பு (மட்டும்) இல்லாவிட்டால் நபியவர்களின் அடக்கத்தலம் (அனைவருக்கும் தெரியும்படி) வெளிப்பபடையாக அமைக்கப்பட்டிருக்கும். ஆயினும், அவர்களது அடக்கத்தலம் எங்கே வணக்கத்தலமாக ஆக்கப்பட்டுவிடுமோ என்று அஞ்சப்பட்டது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

922அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் யூதர்களைத் தனது கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக! அவர்கள் தம் நபிமார்களின் அடக்கத்தலங்களை வணக்கத்தலங்களாக ஆக்கிக்கொண்டார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

923அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் தனது கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக! அவர்கள் தம் நபிமார்களின் அடக்கத்தலங்களை வழிபாட்டுத் தலங்களாக ஆக்கிக்கொண்டார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

924ஆயிஷா (ரலி) அவர்களும் அப்துல்லாஹ் பின் அப்பாஸ்(ரலி) அவர்களும் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு (நோய் அதிகமாகி) இறப்பு நெருங்கிவிட்டபோது அவர்கள் தமது கறுப்புக் கம்பளி ஆடையைத் தமது முகத்தின் மீது போட்டுக் கொள்ளலானார்கள். அவர்களுக்கு மூச்சுத் திணறல் ஏற்படும்போது தமது முகத்திலிருந்து அதை அகற்றிவிடுவார்கள். அவர்கள் அதே நிலையில் இருந்துகொண்டே, "யூதர்கள்மீதும் கிறிஸ்தவர்கள்மீதும் அல்லாஹ்வின் சாபம் உண்டாகுக! அவர்கள் தம் நபிமார்களின் அடக்கத்தலங்களை வணக்கத்தலங்களாக ஆக்கிக் கொண்டார்கள்" என்று அவர்கள் செய்ததை(ப் போன்று நீங்களும் செய்துவிடக் கூடாது என அதை)க் குறித்து எச்சரித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

925ஜுன்தப் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இறப்பதற்கு ஐந்து நாட்களுக்கு முன் "உங்களில் ஒருவர் என் (தேவைகளுக்காக நான் அணுகும்) உற்ற தோழராக இருப்பதிலிருந்து (விலகி) நான் அல்லாஹ்வையே சார்ந்திருக்கிறேன். ஏனெனில், உயர்வுக்குரிய அல்லாஹ் இப்ராஹீம் (அலை) அவர்களை (தன்) உற்ற தோழராக ஆக்கிக்கொண்டதைப் போன்று என்னையும் (தன்) உற்ற தோழனாக ஆக்கிக்கொண்டான். நான் என் சமுதாயத்தாரில் ஒருவரை என் உற்ற தோழராக ஆக்கிக்கொள்வதாயிருந்தால் அபூபக்ர் அவர்களையே நான் என் உற்ற

தோழராக ஆக்கிக்கொண்டிருப்பேன். அறிந்துகொள்ளுங்கள்: உங்களுக்கு முன்னிருந்த (சமுதாயத்த)வர்கள் தங்களுடைய நபிமார்கள் மற்றும் சான்றோர்களின் அடக்கத் தலங்களை வழிபாட்டுத்தலங்களாக ஆக்கிக் கொண்டார்கள். எச்சரிக்கை! நீங்கள் அடக்கத் தலங்களை வழிபாட்டுத்தலங்களாக ஆக்கிவிடாதீர்கள். அவ்வாறு செய்ய வேண்டாம் என்று உங்களுக்கு நான் தடை விதிக்கிறேன்" என்று கூறுவதை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 5 பள்ளிவாசல் எழுப்புவதன் சிறப்பும் அது குறித்து வந்துள்ள ஆர்வமூட்டலும்.**

926உபைதுல்லாஹ் அல்கவ்லானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டிய (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலை (விரிவுபடுத்தி)க் கட்ட எண்ணியபோது அது குறித்து மக்கள் அதிருப்தி தெரிவித்தனர். அப்போது உஸ்மான் (ரலி) அவர்கள் (மக்களிடம்), "நீங்கள் மிக அதிகமாகவே பேசிவிட்டீர்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "யார் அல்லாஹ்வுக்காகப் பள்ளிவாசல் ஒன்றைக் கட்டுகிறாரோ (புகைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் திருப்தியை நாடி (பள்ளிவாசல் ஒன்றைக் கட்டுகிறாரோ...)' என்று இடம்பெற்றுள்ளது) அவருக்காக அல்லாஹ் சொர்க்கத்தில் ஒரு வீட்டைக் கட்டுகிறான்" என்று கூறியதை நான் செவியேற்றுள்ளேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அஹ்மத் பின் ஈசா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அதைப் போன்ற ஒன்றைச் சொர்க்கத்தில் (அல்லாஹ் அவருக்காகக் கட்டுகிறான்)" என்று இடம்பெற்றுள்ளது.

927மஹ்மூத் பின் லபீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலை (விரிவுபடுத்தி)க் கட்டத் திட்டமிட்டபோது அதை மக்கள் வெறுத்தனர்; அதை முன்பிருந்த அமைப்பிலேயே விட்டுவிட வேண்டும் என்று மக்கள் விரும்பினர். அப்போது உஸ்மான் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "யார் அல்லாஹ்வுக்காகப் பள்ளிவாசல் ஒன்றைக் கட்டுகிறாரோ அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தில் அதைப் போன்ற ஒன்றைக் கட்டுகிறான்" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 6 (தொழுகையில்) ருகூஉவில் முழங்கால்கள் மீது கைகளை வைக்குமாறு வந்துள்ள வலியுறுத்தலும், உள்ளங்கைகளை இணைத்து இருதொடைகளுக்கு இடையே வைக்கும் முறை மாற்றப்பட்டுவிட்டதும்.**

928அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) மற்றும் அல்கமா (ரஹ்) ஆகியோர் கூறியதாவது:
நாங்கள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களைச் சந்திக்க அவர்களது இல்லத்திற்குச் சென்றோம். அப்போது அவர்கள், "(இமாம்களான) உங்களுக்குப் பின்னால் (ஆட்சியாளர்களான) இவர்கள் (உரிய நேரத்தில்) தொழுகின்றனரா?" என்று கேட்டார்கள். நாங்கள் "இல்லை" என்று சொன்னோம். (அப்போது தொழுகை நேரம் வந்தும்

அவர்களிருவரும் தொழாமலிருந்த காரணத்தால்) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "நீங்கள் (இருவரும்) எழுந்து (என்னைப் பின்பற்றித்) தொழுங்கள்!" என்று கூறினார்கள்- அப்போது (பள்ளிவாசலில் பாங்கு சொல்லப்பட்டுவிட்டதால்) அவர்கள் பாங்கு சொல்லும்படியோ இகாமத் சொல்லும்படியோ எங்களிடம் கூறவில்லை- நாங்கள் (இருவரும்) அவர்களுக்குப் பின்னால் நிற்கப்போனோம். உடனே அவர்கள் எங்கள் கைகளைப் பிடித்து எங்களில் ஒருவரை தமது வலப் பக்கத்திலும் மற்றொருவரை இடப் பக்கத்திலும் நிறுத்தினார்கள்.

அவர்கள் ருகூஉச் செய்தபோது நாங்கள் எங்கள் கைகளை முழங்கால்கள்மீது வைத்(துக்கொண்டு ருகூஉச் செய்)தோம். உடனே அவர்கள் எங்கள் கைகள்மீது அடித்துவிட்டு, தம்மிரு உள்ளங்கைகளையும் இணைத்துத் தம் தொடைகளின் நடுவே இடுக்கிக்கொண்டார்கள்.

அவர்கள் தொழுது முடித்ததும், "விரைவில் உங்களுக்குத் தலைவர்களாக சிலர் வருவார்கள். அவர்கள் தொழுகையை உரிய நேரத்தில் தொழாமல் தாமதப்படுத்தி, நெருக்கடியில் நிறைவேற்றுவார்கள். அவர்கள் இவ்வாறு செய்வதை நீங்கள் கண்டால் உரிய நேரத்தில் நீங்கள் தொழுகையை நிறைவேற்றிவிடுங்கள். கூடுதலான (நஃபில்) தொழுகை என்ற முறையில் அவர்களுடனும் சேர்ந்து (மீண்டும்) தொழுதுகொள்ளுங்கள். நீங்கள் மூன்று பேர் இருந்தால் (ஒரே அணியில்) இணைந்து தொழுங்கள். அதைவிட அதிகம் பேர் இருந்தால் உங்களில் ஒருவர் உங்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிக்கட்டும். உங்களில் ஒருவர் ருகூஉச் செய்யும்போது தம் முன்கைகளை தொடைமீது சாத்திக்கொண்டு குனிந்து நிற்கட்டும். அவர் தம் உள்ளங்கைகளை இணைத்து இரு தொடைகளுக்கு இடையே வைத்துக் கொள்ளட்டும். ஏனெனில், (இவ்வாறு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழும்போது ருகூஉவில்) தம் விரல்களைக் கோத்துக்கொண்டிருந்ததை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது" என்று கூறிவிட்டு, அவ்வாறு தம் கைகளைக் கோத்துக் காட்டினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

929மேற்கண்ட ஹதீஸ் மேலும் பல அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், இப்னு முஸ்ஹிர் (ரஹ்) மற்றும் ஜரீர் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ருகூஉச் செய்துகொண்டிருந்தபோது அவர்களுடைய விரல்கள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருந்ததை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது" என இடம்பெற்றுள்ளது.

930அல்கமா (ரஹ்) மற்றும் அஸ்வத் (ரஹ்) ஆகியோர் கூறியதாவது:
நாங்கள் இருவரும் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது அவர்கள் (எங்களிடம்), "உங்களுக்குப் பின்னால் உள்ள மக்கள் தொழுதுவிட்டனரா?" என்று கேட்டார்கள். நாங்கள் இருவரும், "ஆம்" என்றோம். அப்போது அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் எங்கள் இருவருக்குமிடையே (தொழுவதற்காக) நின்றார்கள். எங்களில் ஒருவரைத் தமது வலப் பக்கத்திலும் மற்றொருவரை இடப் பக்கதிலும் நிறுத்தலானார்கள். பிறகு நாங்கள் ருகூஉச் செய்தபோது எங்கள் (உள்ளங்)கைகளை எங்களுடைய

முழங்கால்கள் மீது நாங்கள் வைத்தோம். உடனே அவர்கள் எங்கள் கைகளில் அடித்தார்கள். பிறகு தம்மிரு கைகளைக் கோத்துக்கொண்டு அவ்விரண்டையும் தம் தொடைகளுக்கிடையே இடுக்கிக்கொண்டார்கள். தொழுது முடித்ததும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இப்படித்தான் செய்தார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

931முஸ்அப் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் என் தந்தை (சஅத் பின் அபீவக்காஸ் -ரலி) அவர்களின் விலாப் புறத்தில் (நின்று) தொழுதேன். அப்போது நான் (ருகூஉவில்) என்னிரு கைகளையும் (கோத்து) என் இரு முழங்கால்களுக்கு நடுவே இடுக்கிக்கொள்ளலானேன். உடனே என் தந்தை, "உன் உள்ளங் கைகளை முழங்கால்கள்மீது வை!" என்று சொன்னார்கள். நான் (அவ்வாறு செய்யாமல்) மீண்டும் அவ்வாறே (முன்பு போன்றே) செய்தேன். உடனே அவர்கள் என் கைகள்மீது அடித்துவிட்டு, "இவ்வாறு செய்ய வேண்டாம் என எங்களுக்குத் தடை விதிக்கப்பட்டுவிட்டது. உள்ளங்கைகளை முழங்கால்கள் மீது வைக்கும்படி எங்களுக்கு உத்தரவிடப்பட்டது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "இவ்வாறு செய்ய வேண்டாம் என எங்களுக்குத் தடை விதிக்கப்பட்டுவிட்டது" என்பதுவரை இடம்பெற்றுள்ளது. அதற்குப் பிறகுள்ள குறிப்பு இடம்பெறவில்லை.

932முஸ்அப் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (தொழுகையில்) இவ்வாறு (கைகளைக் கோத்து என் தொடைகளுக்கிடையே வைத்துக் கொண்டு) ருகூஉச் செய்தபோது என் தந்தை, "நாங்கள் இவ்வாறுதான் செய்து கொண்டிருந்தோம். பின்னர் கைகளை முழங்கால்கள் மீது வைத்துக்கொள்ளுமாறு உத்தரவிடப்பட்டோம்" என்று சொன்னார்கள்.

933முஸ்அப் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் என் தந்தை (சஅத் பின் அபீவக்காஸ் -ரலி) அவர்களின் விலாப் புறத்தில் தொழுதேன். நான் ருகூஉச் செய்தபோது என் விரல்களைக் கோத்து அவ்விரண்டையும் என் முழங்கால் களுக்கிடையே வைத்துக்கொண்டேன். உடனே அவர்கள் என் கைகள்மீது அடித்தார்கள். தொழுது முடித்ததும், "நாங்கள் இவ்வாறுதான் செய்துகொண்டிருந்தோம். பின்னர் முழங்கால் களுக்கு மேல் கைகளைத் தூக்கிவைக்குமாறு உத்தரவிடப்பட்டடோம்" என்று கூறினார்கள்.

## பாடம் : 7 (இரு சஜ்தாக்களுக்கு இடையேயான அமர்வில்) குதிகால்கள்மீது அமரலாம்.

934தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் (இரு சஜ்தாக்களுக்கு நடுவே) பாதங்கள்மீது (அவற்றை நட்டுவைத்து) அமர்வது பற்றிக் கேட்டோம். அவர்கள், "அது நபிவழிதான்" என்று சொன்னார்கள். நாங்கள், "இவ்வாறு அமர்வது அந்த மனிதரின் அசட்டையான (பொடுபோக்கான) செயல் என்றே நாங்கள் கருதுகிறோம்" என்றோம். அதற்கு இப்னு

அப்பாஸ் (ரலி) அவர்கள், "இல்லை; அது உங்கள் நபியின் வழிமுறைதான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 8 தொழும்போது பேசுவது தடை செய்யப்பட்டுள்ளது. (ஆரம்பக் காலத்தில்) அதற்கு அளிக்கப்பட்டிருந்த அனுமதி மாற்றப்பட்டுவிட்டது.**

935முஆவியா பின் அல்ஹகம் அஸ்ஸுலமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழுதுகொண்டிருந்தேன். அப்போது (தொழுதுகொண்டிருந்த) மக்களில் ஒருவர் தும்மினார். உடனே நான் "யர்ஹமுக் கல்லாஹ்" (அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரிவானாக) என்று (மறுமொழி) கூறினேன். உடனே மக்கள் என்னை வெறித்துப் பார்த்தனர். நான் "என்னை என் தாய் இழக்கட்டும்! நீங்கள் ஏன் என்னை இவ்வாறு பார்க்கிறீர்கள்?" என்று கேட்டேன். மக்கள் (பதிலேதும் கூறாமல்) தங்கள் கைகளால் தொடைகள் மீது தட்டினர். என்னை அவர்கள் அமைதியாக இருக்கச் சொல்கிறார்கள் என்று நான் அறிந்துகொண்டு அமைதியாகி விட்டேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் என் தந்தையும் என் தாயும் நபியவர்களுக்கு அர்ப்பணமாகட்டும்– (பின்வருமாறு அறிவுரை) கூறினார்கள். அவர்களுக்கு முன்னரோ பின்னரோ அவர்களைவிட மிக அழகிய முறையில் கற்பிக்கும் ஆசிரியர் ஒருவரை நான் (என் வாழ்நாளில்) கண்டதேயில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் என்னைக் கண்டிக்கவுமில்லை; அடிக்கவுமில்லை; திட்டவுமில்லை. (மாறாக,) அவர்கள், "இந்தத் தொழுகையானது, மக்களின் பேச்சுகளுக்கு உரிய நேரமன்று. தொழுகை என்பது இறைவனைத் துதிப்பதும் பெருமைப்படுத்துவதும் குர்ஆன் ஓதுவதுமாகும்" என்றோ அல்லது இதைப் போன்றோ சொன்னார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் அறியாமைக் காலத்திற்கு நெருக்கமானவன். அல்லாஹ் இந்த இஸ்லாத்தை வழங்கினான். எங்களில் சிலர் சோதிடர்களிடம் செல்கிறார்களே?" என்றேன். அதற்கு அவர்கள் "சோதிடர்களிடம் நீங்கள் செல்லாதீர்கள்" என்றார்கள். நான் "எங்களில் இன்னும் சிலர் பறவையை வைத்துக் குறி பார்க்கிறார்களே?" என்றேன். அதற்கு நபியவர்கள் "இது, மக்கள் தம் உள்ளங்களில் காணும் (ஐதீகம் சார்ந்த) விஷயமாகும். ஆனால், இது "அவர்களை' அல்லது "உங்களை' (செயலாற்றுவதிலிருந்து) தடுத்திட வேண்டாம்" என்று கூறினார்கள். நான், "எங்களில் இன்னும் சிலர் (நற்குறி அறிய மணலில்) கோடு வரை(யும் பழங்கால கணிப்பு முறையை மேற்கொள்)கின்றனர்" என்றேன். அதற்கு அவர்கள், "நபிமார்களில் ஒருவர் இவ்வாறு கோடு வரைந்துவந்தார். யார் அவரைப் போன்று கோடு வரைகிறாரோ அது (சாத்தியம்)தான்" என்றார்கள்.
அடுத்து என்னிடம் ஓர் அடிமைப் பெண் இருந்தாள். அவள் என் ஆட்டு மந்தையை (மதீனாவிற்கு அருகிலுள்ள) உஹுத் மலை மற்றும் (அதையொட்டி அமைந்துள்ள) ஜவ்வானிய்யாப் பகுதியில் மேய்த்துவந்தாள். ஒரு நாள் நான் சென்று பார்த்தபோது ஓநாய் ஒன்று அவளிடமிருந்த ஆடுகளில் ஒன்றைக் கொண்டு சென்றுவிட்டது. (சராசரி) மனிதன் கோபப்படுவதைப் போன்று நானும் கோபப்பட்டேன். ஆயினும், அவளை நான்

அறைந்துவிட்டேன். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றபோது அது குறித்து அவர்கள் என்னைக் கடுமையாகக் கண்டித்தார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் அவளை விடுதலை செய்துவிடட்டுமா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அந்தப் பெண்ணை என்னிடம் அழைத்துவாருங்கள்!" என்று சொன்னார்கள். நான் அவளை அழைத்துச் சென்றபோது அவளிடம், "அல்லாஹ் எங்கே இருக்கின்றான்?" என்று நபியவர்கள் கேட்டார்கள். அவள், "வானத்தில்" என்று பதிலளித்தாள். அவர்கள், "நான் யார்?" என்று கேட்டார்கள். அவள், "நீங்கள் அல்லாஹ்வின் தூதர்" என்றாள். அவர்கள் (என்னிடம்), "அவளை விடுதலை செய்துவிடுங்கள்! ஏனெனில், அவள் இறைநம்பிக்கையுடைய (முஃமினான) பெண் ஆவாள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

936அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுதுகொண்டிருக்கையில் நாங்கள் அவர்களுக்கு சலாம் (முகமன்) சொல்வோம். உடனே அவர்கள் எங்களுக்கு பதில் சலாம் சொல்வார்கள்.
ஆனால், நாங்கள் (அபிசீனிய மன்னர்) நஜாஷியிடமிருந்து திரும்பிவந்த சமயம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு (அவர்கள் தொழுதுகொண்டிருக்கும்போது) சலாம் சொன்னோம். அப்போது அவர்கள் எங்களுக்கு பதில் சலாம் சொல்லவில்லை. பின்னர் நாங்கள் "அல்லாஹ்வின் தூதரே! (நீங்கள் தொழும்போது) நாங்கள் உங்களுக்கு சலாம் சொல்ல, நீங்களும் அதற்கு பதில் சலாம் சொல்லி வந்தீர்களே?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "நிச்சயமாக தொழுகைக்கென தனிக்கவனம் தேவைப்படுகின்றது" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

937ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஆரம்பக் காலத்தில்) நாங்கள் தொழுகையில் பேசிக்கொண்டிருந்தோம். ஒருவர் (தொழுது கொண்டிருக்கும்போது) தம் அருகிலிருக்கும் தோழரிடம் (சொந்தத் தேவைகள் குறித்து) பேசிக் கொண்டிருப்பார். "மேலும், நீங்கள் உள்ளச்சம் உடையவர்களாக நின்று அல்லாஹ்வை வணங்குங்கள்" எனும் (2:238ஆவது) வசனத் தொடர் அருளப்பெறும்வரை (நாங்கள் இவ்வாறே தொழுகையில் பேசிவந்தோம்). இந்த வசனம் அருளப்பெற்றவுடன் அமைதியாக இருக்கும்படி எங்களுக்குக் கட்டளையிடப்பட்டது; பேசக்கூடாது என்று எங்களுக்குத் தடை விதிக்கப்பட்டது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

938ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை ஓர் அலுவல் நிமித்தம் அனுப்பினார்கள். பிறகு அவர்கள் (தமது வாகனத்தில் கூடுதலான தொழுகை) தொழுதவாறு சென்று கொண்டிருந்தபோது அவர்களிடம் நான் போய்ச்சேர்ந்தேன். அவர்களுக்கு சலாம்

சொன்னேன். உடனே அவர்கள் (பதிலுக்கு) என்னை நோக்கி சைகை செய்தார்கள் (பதில் சலாம் சொல்லவில்லை). அவர்கள் தொழுது முடித்ததும் என்னை அழைத்து, "சற்று முன்னர் எனக்கு நீங்கள் சலாம் சொன்னீர்கள். அப்போது நான் தொழுதுகொண்டிருந்தேன் (அதனால்தான் பதில் சலாம் சொல்லவில்லை)" என்று கூறினார்கள். அப்போது அவர்களுடைய முகம் கிழக்குத் திசையை முன்னோக்கி இருந்தது (கிப்லாவை முன்னோக்கியிருக்கவில்லை).
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

939ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பனுல் முஸ்தலிக் குலத்தாரை நோக்கிப் பயணம் செய்தபோது என்னை (ஓர் அலுவல் நிமித்தம் ஓரிடத்திற்கு) அனுப்பினார்கள். நான் (அலுவலை முடித்துவிட்டு) அவர்களிடம் வந்தபோது அவர்கள் தமது ஒட்டகத்தில் அமர்ந்தவாறு குர்ஆன் ஓதித் தமது தலையால் சைகை செய்து தொழுது கொண்டிருந்தார்கள். அப்போது நான் அவர்களிடம் பேச்சுக்கொடுத்தேன். உடனே அவர்கள் தமது கரத்தால் இவ்வாறு சைகை செய்தார்கள் -இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஸுஹைர் (ரஹ்) அவர்கள் இதை அறிவிக்கும்போது தமது கரத்தால் (இவ்வாறு என) சைகை செய்து காட்டினார்கள்- பிறகு மீண்டும் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பேச்சுக்கொடுத்தேன். அப்போதும் அவர்கள் இவ்வாறு சைகை செய்தார்கள் -அறிவிப்பாளர் ஸுஹைர் (ரஹ்) அவர்கள் மீண்டும் (இவ்வாறு என) பூமியை நோக்கித் தமது கரத்தால் சைகை செய்து காட்டினார்கள்.- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும், "நான் உங்களை அனுப்பிவைத்த காரியம் என்ன ஆயிற்று?" என்று கேட்டுவிட்டு, "நான் தொழுதுகொண்டிருந்ததால்தான் (நீங்கள் பேசியபோது) உங்களிடம் நான் பேசவில்லை" என்று சொன்னார்கள்.
அறிவிப்பாளர் ஸுஹைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும்போது இறையில்லம் கஅபாவை முன்னோக்கி அமர்ந்திருந்தார்கள். அப்போது பனுல் முஸ்தலிக் குலத்தாரின் வசிப்பிடத்தை நோக்கி சைகை செய்து காட்டினார்கள்;அப்போது கஅபா அல்லாத வேறொரு திசையை நோக்கியே தமது கரத்தால் சைகை செய்தார்கள்.

940ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (பனுல் முஸ்தலிக் பயணத்தின்போது) நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள் என்னை ஓர் அலுவல் விஷயமாக அனுப்பினார்கள். நான் (அந்த அலுவலை முடித்துத்) திரும்பி வந்தபோது அவர்கள் தமது வாகன(ஒட்டக)த்தில் இறையில்லம் கஅபா அல்லாத வேறொரு திசையை நோக்கி அமர்ந்தவாறு (கூடுதலான தொழுகையைத்) தொழுதுகொண்டிருந்தார்கள். நான் அவர்களுக்கு சலாம் சொன்னேன். ஆனால் அவர்கள் எனக்கு பதில் சலாம் சொல்லவில்லை. அவர்கள் தொழுது முடித்ததும் "நான் தொழுதுகொண்டிருந்ததால்தான் உங்களுக்கு பதில் சலாம் கூறவில்லை" என்றார்கள்.
-மேற்கண்ட ஹதீஸின் கருத்திலமைந்த ஒரு ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 9 தொழுகைக்கு இடையில் ஷைத்தானைச் சபிக்கலாம்; அவனிடமிருந்து காக்குமாறு (இறைவனை) வேண்டலாம். தொழுகையில் குறைந்த அளவிலான புறச்செயல்களைச் செய்யலாம்.**

941அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு நாள் பின்வருமாறு) கூறினார்கள்:
நேற்றிரவு முரட்டு ஜின் ஒன்று எனது தொழுகையைக் கெடுக்க சதி செய்தது. அல்லாஹ் அதன் மீது எனக்குச் சக்தியை வழங்கினான். அதன் குரல்வளையை நான் பிடித்துவிட்டேன். காலையில் "எல்லாரும்' அல்லது "நீங்கள் அனைவரும்'வந்து அதைக் காணும்வரை இந்த (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் அதைக் கட்டிவைக்க நான் நினைத்தேன். பிறகு என் சகோதரர் சுலைமான் (அலை) அவர்கள், "இறைவா! என்னை மன்னித்துவிடுவாயாக! மேலும்,எனக்குப் பின் வேறெவருக்கும் கிடைக்காத ஓர் ஆளுமையை எனக்கு நீ வழங்குவாயாக" (38:35) என்று வேண்டியது என் நினைவுக்கு வந்தது. ஆகவே, (அந்த எண்ணத்தைக் கைவிட்டேன். பின்னர்) அல்லாஹ் அந்த ஜின்னை இழிந்த நிலையில் விரட்டியடித்துவிட்டான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ஜஅ்ஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நான் அதன் குரல்வளையைப் பிடித்துவிட்டேன்'எனும் குறிப்பு இடம்பெறவில்லை. அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நான் அதை பலமாகப் பிடித்துத் தள்ளிவிட்டேன்' என்று இடம்பெற்றுள்ளது.

942 அபுத்தர்தா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு நாள்) தொழும்போது "நான் உன்னிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்" என்றும், "அல்லாஹ்வின் சாபத்தால் உன்னை நான் சபிக்கிறேன்"என்றும் மூன்று முறை கூறியதை நாங்கள் செவியுற்றோம். மேலும், அவர்கள் தமது கரத்தை விரித்து எதையோ பிடிப்பதைப் போன்று சைகை செய்தார்கள். தொழுது முடித்ததும் நாங்கள் "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் தொழும்போது ஒன்றைக் கூறினீர்கள். இதற்கு முன் தாங்கள் அவ்வாறு கூறியதை நாங்கள் கேட்டதில்லையே? மேலும், நீங்கள் உங்கள் கரத்தை விரித்ததையும் நாங்கள் கண்டோமே (ஏன்)?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள் "அல்லாஹ்வின் எதிரி இப்லீஸ் ஒரு தீப்பந்தத்தை ஏந்திக்கொண்டு அதை என் முகத்தில் வைக்க (என்னிடம்) வந்தான். உடனே நான் "உன்னிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்" என்று மூன்று முறையும் "அல்லாஹ்வின் முழு சாபத்தால் உன்னை நான் சபிக்கிறேன்" என மூன்று முறையும் கூறினேன். ஆனால், அவன் பின்வாங்கிச் செல்லவில்லை. பிறகு நான் அவனைப் பிடிக்க விரும்பினேன். அல்லாஹ்வின் மீதாணையாக! எம் சகோதரர் சுலைமான் (அலை) அவர்களின் வேண்டுதல் மட்டும் இல்லையாயின், காலையில் மதீனா நகரச் சிறுவர்கள் அவனுடன் விளையாடும் வகையில் (இந்தப் பள்ளிவாசலில்) அவன் கட்டிவைக்கப் பட்டிருப்பான்" என்று சொன்னார்கள்.

## பாடம் : 10 குழந்தைகளைச் சுமந்துகொண்டு தொழலாம்.

943அபூகத்தாதா ஹாரிஸ் பின் ரிப்ஈ அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் -தம் புதல்வி ஸைனபுக்கும் அபுல்ஆஸ் பின் அர்ரபீஉ அவர்களுக்கும் பிறந்த- (தம் பேத்தி) உமாமாவை (தமது தோளில்) சுமந்துகொண்டு தொழுவார்கள். அவர்கள் (நிலையில்) நிற்கும்போது உமாமாவைச் சுமப்பார்கள்; சஜ்தாவுக்குச் செல்லும்போது உமாமாவை இறக்கிவிடுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அறிவிப்பாளர்களில் ஒருவரான யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் மாலிக் (ரஹ்) அவர்களிடம், "இந்த ஹதீஸை அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்து அம்ர் பின் சுலைம் அஸ்ஸுரைக் (ரஹ்) அவர்களும், அம்ர் அவர்களிடமிருந்து ஆமிர் பின் அப்தில்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களும் உங்களுக்கு அறிவித்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஆம்' என்றார்கள்.

944அபூகத்தாதா அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், -தம் புதல்வி ஸைனபுக்கும் அபுல்ஆஸ் பின் அர்ரபீஉக்கும் பிறந்த- (தம் பேத்தி) உமாமா பின்த் ஸைனபைத் தமது தோளில் சுமந்துகொண்டு மக்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவித்ததை நான் பார்த்தேன். அவர்கள் ருகூஉக்குச் செல்லும் போது உமாமாவை இறக்கிவிட்டார்கள். சஜ்தாவிலிருந்து எழும்போது மீண்டும் உமாமாவைத் தமது தோளில் அமர்த்திக்கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

945அபூகத்தாதா அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் பேத்தி) உமாமா பின்த் ஸைனபைத் தமது கழுத்தின் மீது சுமந்தவாறு மக்களுக்குத் தொழுவித்துக்கொண்டிருந்ததை நான் பார்த்தேன். அவர்கள் சஜ்தாவிற்குச் செல்லும் போது உமாமாவை இறக்கிவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நாங்கள் பள்ளிவாசலில் அமர்ந்திருந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள்' என ஹதீஸ் ஆரம்பமாகிறது. ஆனால், "அத்தொழுகையை அவர்கள் மக்களுக்குத் தொழுவித்தார்கள்' எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

## பாடம் : 11 தொழுகையில் ஓரிரு அடிகள் எடுத்து வை(த்து நட)க்கலாம்.

946அபூஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடம் சிலர் வந்து (நபி (ஸல்) அவர்களின்) மிம்பர் (சொற்பொழிவு மேடை) எந்த மரத்தால் செய்யப்பட்டது

என்பது தொடர்பாகச் சர்ச்சை செய்தனர். அப்போது சஹ்ல் (ரலி) அவர்கள், "அறிந்து கொள்ளுங்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! அது எந்த மரத்தால் செய்யப்பட்டது, அதைச் செய்தவர் யார் என்பதை நான் நன்கறிவேன். அதன் மீது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முதல் நாளில் அமர்ந்ததையே நான் பார்த்திருக்கிறேன்" என்று கூறினார்கள். நான், "அபூஅப்பாஸ் (சஹ்ல் பின் சஅத்) அவர்களே! அது பற்றி எங்களுக்கு (விவரமாக)ச் சொல்லுங்கள்" என்று கூறினேன். அப்போது அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பெண்மணியிடம் ஆளனுப்பி (அவரை வரவழைத்து), "தச்சு வேலை தெரிந்த உன் அடிமையைப் பார்த்து, எனக்காக மரச்சட்டங்களை (இணைத்து மிம்பர் ஒன்றை)ச் செய்யச் சொல்வாயாக! நான் அதன் மீது அமர்ந்து மக்களுக்கு உரையாற்ற வேண்டும்" என்று கூறினார்கள். -அன்று அப்பெண்ணின் பெயரையும் சஹ்ல் (ரலி) அவர்கள் குறிப்பிட்டார்கள்.- அப்போதுதான் மூன்று படிகள் கொண்ட இந்த மிம்பரை அந்த அடிமை செய்தார். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட, அது (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலில்) இந்த இடத்தில் வைக்கப்பட்டது. அது "அல்ஃகாபா" வனத்திலிருந்த ஒரு வகை சவுக்கு மரத்தால் செய்யப்பட்டது.அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த மேடைமீது (தொழுவதற்காக) நின்று, தக்பீர் கூறினார்கள். அவர்களுக்குப் பின்னாலிருந்து மக்கள் தக்பீர் கூறினர். பிறகு (ருகூஉவிலிருந்து) நிமிர்ந்ததும் திரும்பாமல் அப்படியே பின்வாக்கில் இறங்கி அந்த மேடையின் கீழ்ப் பகுதி(க்கருகில் தரை)யில் சஜ்தாச் செய்தார்கள். பிறகு முன்போன்றே மீண்டும் (அந்த மேடையில் ஏறியும் இறங்கியும்) இறுதிவரை தொழுதார்கள். பின்னர் மக்களை முன்னோக்கி, "மக்களே! நீங்கள் என்னைப் பின்பற்றவும், எனது தொழுகையை நீங்கள் கற்றுக்கொள்ளவுமே இவ்வாறு நான் செய்தேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

947அபூஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மக்கள் (சிலர்) சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடம் வந்து "நபி (ஸல்) அவர்களின் சொற்பொழிவு மேடை (மிம்பர்) எந்த மரத்தால் செய்யப்பட்டது?' என்று கேட்டனர்.
மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 12 தொழுகையில் இடுப்பில் கை வைப்பது வெறுக்கத் தக்கதாகும்.

948அபூஹுரைரரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் தமது இடுப்பில் கை வைத்தவாறு தொழுவதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 13 தொழும்போது (சஜ்தாச் செய்வதற்காகத் தரையில் உள்ள) சிறு கற்களை அப்புறப்படுத்துவதும் மண்ணைச் சமப்படுத்துவதும் வெறுக்கத் தக்கதாகும்.**

949முஜகீப் பின் அபீ ஃபாத்திமா அத்தவ்சீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், சஜ்தாச் செய்யுமிடத்தில் கிடக்கும் சிறு கற்களை அப்புறப்படுத்துவது பற்றிக் கூறுகையில், "அவ்வாறு செய்துதான் ஆக வேண்டும் என்றிருந்தால் ஒரு தடவை மட்டும் செய்துகொள்க" என்றார்கள்.

950முஜகீப் பின் அபீ ஃபாத்திமா அத்தவ்சீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம், தொழுகையில் (சஜ்தாச் செய்யுமிடத்தில் கிடக்கும்) சிறு கற்களை அப்புறப்படுத்துவது பற்றி மக்கள் கேட்டனர். அதற்கு அவர்கள், "ஒரு தடவை மட்டும் (செய்துகொள்ளுங்கள்)" என்று பதிலளித்தார்கள்.
-இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடரிலும் வந்துள்ளது.

951முஜகீப் பின் அபீ ஃபாத்திமா அத்தவ்சீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (தொழுகையில்) சஜ்தாச் செய்யும் இடத்திலிருந்த மண்ணைச் சமப்படுத்திய ஒரு மனிதர் தொடர்பாக, "நீர் இவ்வாறு செய்துதான் ஆக வேண்டுமென்றால் ஒரு தடவை மட்டும் செய்துகொள்வீராக!"என்று சொன்னார்கள்.

**பாடம் : 14 தொழும்போதோ மற்ற நேரங்களிலோ பள்ளிவாசலுக்குள் எச்சில் துப்பலாகாது.**

952அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பள்ளிவாசலின்) கிப்லாத் திசையிலுள்ள சுவரில் (உமிழப்பட்டிருந்த) எச்சிலைக் கண்டார்கள். உடனே அதைச் சுரண்டி(சுத்தப்படுத்தி)ய பின் மக்களை நோக்கி, "உங்களில் ஒருவர் தொழும்போது தமது முகத்துக்கெதிரே (கிப்லாத் திசையில்) எச்சில் துப்பவேண்டாம். ஏனெனில், அவர் தொழும்போது அல்லாஹ் அவருடைய முகத்துக்கெதிரே இருக்கிறான்" என்று கூறினார்கள்.

953மேற்கண்ட ஹதீஸ் மேலும் எட்டு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "பள்ளிவாசலின் கிப்லாத் திசையில் (உமிழப்பட்டிருந்த) சளியைக் கண்டார்கள்" என ஹதீஸ் தொடங்குகிறது. ஆனால், ளஹ்ஹாக் பின் உஸ்மான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "கிப்லாத் திசையில் (காறி உமிழப்பட்டிருந்த) சளியைக் கண்டார்கள்" எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது. ("பள்ளிவாசலின்' என்ற குறிப்பு இல்லை).

954அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலின் கிப்லாத் திசையில் (காறி உமிழப்பட்டிருந்த) சளியைக் கண்டார்கள். உடனே ஒரு சிறு கல்(லை எடுத்து அதன்) மூலம் அதைச் சுரண்டி (சுத்தப்படுத்தி)னார்கள். பிறகு "ஒரு மனிதர் (தொழும்போது உமிழ வேண்டிய அவசியம் ஏற்பட்டால்) தமது வலப் பக்கத்தில் அல்லது முன் பக்கத்தில் உமிழ வேண்டாம்" என்று தடை விதித்தார்கள். "மாறாக, தமது இடப் பக்கத்தில் அல்லது தம் பாதங்களுக்கு அடியில் அவர் உமிழ்ந்துகொள்ளட்டும்"என்றார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) மற்றும் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) ஆகியோரிடமிருந்து மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றிலும் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ,(காறி உமிழப்பட்டிருந்த) சளியைக் கண்டார்கள்" எனும் வாசகமே இடம் பெற்றுள்ளது.
-ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலின் கிப்லாத் திசையிலுள்ள சுவரில் "எச்சிலை" அல்லது "மூக்குச் சளியை' அல்லது "காறல் சளியைக்" கண்டார்கள். உடனே அதைச் சுரண்டி(சுத்தப் படுத்தி)னார்கள்.

955அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலின் கிப்லாவில் (காறி உமிழப்பட்டிருந்த) சளியைக் கண்டார்கள். உடனே அவர்கள் மக்களை முன்னோக்கி, "உங்களில் ஒருவருக்கு என்ன நேர்ந்துவிட்டது? அவர் தம் இறைவனை முன்னோக்கி நின்று கொண்டு அவனுக்கு முன்னேயே காறி உமிழுகின்றார். உங்களில் ஒருவர் தமது முகத்திற்கெதிரே உமிழப்படுவதை விரும்புவாரா? உங்களில் ஒருவருக்கு உமிழ வேண்டிய அவசியம் ஏற்பட்டால் அவர் தமது இடப் பக்கத்தில் பாதத்திற்கடியில் உமிழ்ந்து கொள்ளட்டும். அது முடியாவிட்டால் அவர் இவ்வாறு செய்துகொள்ளட்டும்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான காசிம் பின் மிஹ்ரான் (ரஹ்) அவர்கள் இதை அறிவிக்கும் போது, தமது ஆடையி(ன் ஓர் ஓரத்தி)ல் உமிழ்ந்து அதன் ஒரு பகுதியை மற்றொரு பகுதியுடன் கசக்கிக் காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஹுஷைம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது ஆடையின் (ஓர் ஓரத்தில் உமிழ்ந்து) அதன் ஒரு பகுதியை மற்றொரு பகுதியுடன் கசக்கிவிட்டதை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது" என்று (அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் என) அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

956அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தொழும்போது அவர் தம் இறைவனுடன் இரகசியமாக உரையாடுகிறார். எனவே, அவர் தமக்கு முன்னாலோ (அதாவது கிப்லாத் திசையிலோ) வலப் பக்கமோ உமிழ வேண்டாம். (வேண்டுமானால்) அவர் தமது இடப் பக்கத்தில் பாதத்திற்கடியில் உமிழ்ந்து கொள்ளட்டும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

957அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பள்ளிவாசலுக்குள் உமிழ்வது குற்றமாகும். அ(வ்வாறு உமிழ்ந்த)தை மண்ணுக்குள் புதைப்பதே அதற்குரிய பரிகாரமாகும்.

இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

958ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் கத்தாதா (ரஹ்) அவர்களிடம் பள்ளிவாசலுக்குள் உமிழ்வது பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறியதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பள்ளிவாசலுக்குள் உமிழ்வது குற்றமாகும். அ(வ்வாறு உமிழ்ந்த)தை மண்ணுக்குள் புதைப்பதே அதற்குரிய பரிகாரமாகும்.

959நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரின் நற்செயல்களும் தீய செயல்களும் எனக்கு எடுத்துக் காட்டப்பட்டன. சாலையில் கிடக்கும் தொல்லை தரும் பொருட்களை அகற்றுவதை, அவர்களின் நற்செயல்களி(ன் பட்டியலி)ல் கண்டேன். பள்ளிவாசலில் (உமிழ்ந்து) மண்ணுக்குள் புதைக்கப் படாமல் இருக்கும் சளியை, அவர்களின் தீய செயல்களில் கண்டேன்.
இதை அபூதர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

960அப்துல்லாஹ் பின் அஷ்ஷிக்கீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழும்போது அவர்கள் சளியை உமிழ்ந்ததை நான் பார்த்தேன். பின்னர் அதைத் தமது காலணியால் (தரையில்) தேய்த்தார்கள்.

961அப்துல்லாஹ் பின் அஷ்ஷிக்கீர் (ரலி) அவர்கள் கூறியதாவது
நான் நபி (ஸல்) அவர்களுடன் தொழுதேன். அப்போது அவர்கள் சளியை உமிழ்ந்துவிட்டு அதைத் தமது இடது கால் காலணியால் தேய்த்து விட்டார்கள்.

### பாடம் : 15 காலணி அணிந்துகொண்டே தொழலாம்.

962அபூமஸ்லமா சயீத் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காலணிகளுடன் தொழுதுவந்தார்களா?" என்று கேட்டேன். அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் அபூமஸ்லமா சயீத் பின் யஸீத் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 16 (கண்ணைக் கவரும்) வேலைப்பாடு மிக்க ஆடை அணிந்து தொழுவது வெறுக்கப் பட்டதாகும்

.

963ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வேலைப்பாடு மிக்க (சதுரமான) கறுப்புக் கம்பளி ஆடை ஒன்றை அணிந்துகொண்டு தொழுதார்கள். (தொழுது முடித்ததும்,) இதன் வேலைப்பாடுகள் எனது கவனத்தை ஈர்த்துவிட்டன. எனவே, இந்த ஆடையை (எனக்கு அன்பளித்த) அபூ ஜஹ்மிடம் சேர்த்துவிட்டு (அவரிடமிருந்து மற்றொரு) சாதாரண ஆடையை என்னிடம் கொண்டு வாருங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

964ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வேலைப்பாடு மிக்க (சதுரமான) கறுப்புக் கம்பளி ஆடை ஒன்றை அணிந்துகொண்டு நின்று தொழுதார்கள். அதன் வேலைப்பாட்டை உற்று நோக்கினார்கள். தொழுது முடித்ததும், "இந்த ஆடையை (எனக்கு அன்பளித்த) அபூ ஜஹ்ம் பின் ஹுதைஃபாவிடம் (இதைக்) கொண்டுசெல்லுங்கள். (அவரிடமிருந்து மற்றொரு) சாதாரண ஆடையை என்னிடம் கொண்டுவாருங்கள். ஏனெனில், சற்று முன்பு இது தொழுகையிலிருந்து எனது கவனத்தைத் திருப்பிவிட்டது" என்று சொன்னார்கள்.

965ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் வேலைப்பாடு மிக்க (சதுரமான) கறுப்புக் கம்பளி ஆடை ஒன்று இருந்தது. அது தொழுகையில் அவர்களது கவனத்தை ஈர்த்துவந்தது. எனவே, அதை (தமக்கு அன்பளித்த) அபூஜஹ்மிடம் கொடுத்துவிட்டு அவரிடமிருந்து மற்றொரு சாதாரண ஆடையை வாங்கிக்கொண்டார்கள்.

## பாடம் : 17 உடனே உண்ண விரும்பும் உணவு அங்கு காத்திருக்கத் தொழுவது வெறுக்கப் பட்டதாகும்; சிறுநீர் மற்றும் மலத்தை அடக்கிக்கொண்டு தொழுவதும் வெறுக்கப் பட்டதாகும்.

966நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரவு நேர உணவு முன்னே காத்திருக்கத் தொழுகைக்காக இகாமத் சொல்லப்படுமானால் நீங்கள் முதலில் உணவை உண்ணுங்கள்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
-அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் மஃக்ரிப் தொழுகை தொழுவதற்கு முன்னால் (உங்கள் முன்) இரவு நேர உணவு வைக்கப்படுமானால் முதலில் உணவை உண்ணுங்கள். (பிறகு தொழுகையை நிறைவேற்றுங்கள்.) உங்களது இரவு உணவை விடுத்து (தொழுகைக்காக) நீங்கள் அவசரப்பட வேண்டாம்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

967மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாக ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தும் வந்துள்ளது.

968அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருக்கு முன்னால் இரவு நேர உணவு வைக்கப்பட்டுவிட, தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டுவிட்டால் முதலில் உணவை உண்ணுங்கள். அதை உண்டு முடிக்கும்வரை (தொழுகைக்காக) அவசரப்பட வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

969இப்னு அபீஅத்தீக் (அப்துல்லாஹ் பின் முஹம்மத் அபீஅத்தீக் பின் அப்திர் ரஹ்மான் பின் அபீபக்ர் அஸ்ஸித்தீக்-ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் என் தந்தையின் அடிமைப் பெண்ணுக்குப் பிறந்தவரான காசிம் பின் முஹம்மத் பின் அப்திர் ரஹ்மானும் (அன்னை) ஆயிஷா (ரலி) அவர்களிடம் ஒரு விஷயம் குறித்துப் பேசிக்கொண்டிருந்தோம். காசிம் (எதையும்) பிழையாகப் பேசுபவராக இருந்தார். அவரிடம் ஆயிஷா (ரலி) அவர்கள், "உனக்கு என்ன நேர்ந்தது? நீ ஏன் இந்த என் சகோதரர் புதல்வரைப் போன்று (பிழையின்றி) பேசுவதில்லை? இந்தப் பழக்கம் உனக்கு எங்கிருந்து வந்தது என்று நான் அறிந்துகொண்டேன். இவரை இவருடைய தாய் வளர்த்தார். உன்னை உன்னுடைய தாய் வளர்த்தார்" என்று கூறினார்கள். இதைக் கேட்ட காசிம் கோபம் கொண்டு, ஆயிஷா (ரலி) அவர்கள்மீது எரிச்சலடைந்தார். ஆயிஷா (ரலி) அவர்களுக்கு முன் உணவுத் தட்டு கொண்டுவரப்பட்டபோது காசிம் எழுந்துவிட்டார். ஆயிஷா (ரலி) அவர்கள், "எங்கே (போகிறாய்)?" என்று கேட்க, காசிம் "நான் தொழப்போகிறேன்" என்றார். ஆயிஷா (ரலி) அவர்கள், "உட்கார்!" என்றார்கள். காசிம் "நான் தொழப்போகிறேன்" என்று (மீண்டும்) கூறினார். ஆயிஷா (ரலி) அவர்கள் "அவசரக்காரனே! உட்கார்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உணவு வந்து காத்திருக்கும்போதும், சிறுநீர் மற்றும் மலத்தை அடக்கிக்கொண்டும் தொழக்கூடாது' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. ஆனால், அவற்றில் காசிம் பின் முஹம்மதைப் பற்றியக் குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 18 (சமைக்கப்படாத) வெள்ளைப் பூண்டு, வெங்காயம், சீமைப் பூண்டு போன்ற துர்வாடையுள்ளவற்றைச் சாப்பிட்டவர் அதன் வாடை போவதற்கு முன் பள்ளிவாசலுக்குச் செல்லலாகாது. அவரைப் பள்ளிவாசலில் இருந்து வெளியேற்றலாம்.

970இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் போரின்போது, "இந்தச் செடியிலிருந்து விளைகின்றதை (அதாவது வெள்ளைப் பூண்டை) சாப்பிட்டவர் பள்ளிவாசலுக்குச் செல்ல வேண்டாம்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில், ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஒரு போரின்போது' என்று காணப்படுகிறது. "கைபர் போரின்போது' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

971அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்தச் செடியிலிருந்து விளைவதை (அதாவது வெள்ளைப் பூண்டை) சாப்பிட்டவர் அதன் வாடை விலகாதவரை நம்முடைய பள்ளிவாசல்களை நெருங்க வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

972அப்துல் அஸீஸ் பின் ஸுஹைப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் (ரலி) அவர்களிடம் வெள்ளைப் பூண்டு குறித்து வினவப்பட்டது. அதற்கு அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இந்தச் செடியிலிருந்து (விளையும் பூண்டைச்) சாப்பிட்டவர் நம்மை நெருங்கவோ நம்முடன் தொழவோ வேண்டாம்' எனச் சொன்னார்கள்" என்று பதிலளித்தார்கள்.

973அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்தச் செடியிலிருந்து விளைகின்றதைச் சாப்பிட்டவர் நமது பள்ளிவாசலை நெருங்கவோ, பூண்டின் (துர்)வாடையால் நமக்குத் தொல்லை தரவோ வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

974ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெங்காயம், சீமைப் பூண்டு ஆகியவற்றைச் சாப்பிட வேண்டாம் என்று தடைசெய்தார்கள். எங்களுக்குத் தேவை மிகைத்துவிடவே அவற்றிலிருந்து நாங்கள் சாப்பிட்டுவிட்டோம். அப்போது அவர்கள், "துர்வாடையுள்ள இந்தச் செடியிலிருந்து விளைகின்றதைச் சாப்பிட்டவர் நமது பள்ளிவாசலை நெருங்க வேண்டாம். ஏனெனில், மனிதர்களுக்குத் தொல்லை தருகின்றவை வானவர்களுக்கும் தொல்லை தருகின்றன" என்று கூறினார்கள்.

975ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "வெள்ளைப் பூண்டோ வெங்காயமோ சாப்பிட்டவர் "நம்மிடமிருந்து' அல்லது "நமது பள்ளிவாசலிலிருந்து' விலகியிருக்கட்டும்; அவர் (கூட்டுத் தொழுகைக்கு வராமல்) தம் இல்லத்திலேயே அமர்ந்துகொள்ளட்டும்" என்று கூறினார்கள்.
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு பாத்திரம் கொண்டு வரப்பட்டது. அதில் காய்கறிகளும் கீரைகளும் இருந்தன. அவற்றில் (துர்)வாடை வீசுவதை நபியவர்கள் உணர்ந்தார்கள். (அவற்றைப் பற்றி) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்க, அதிலுள்ள கீரைகள் குறித்து அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைத் தம் தோழர்களில் ஒருவருக்குக் கொடுத்துவிடுமாறு கூறினார்கள். அத்தோழரும் அதை உண்ண விரும்பாமலிருந்ததைக் கண்டபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் சாப்பிடுங்கள். ஏனெனில்,

நீங்கள் உரையாடாத (வான)வர்களுடன் நான் உரையாட வேண்டியதுள்ளது"என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

976ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "இந்தச் செடியிலிருந்து விளைகின்ற வெள்ளைப் பூண்டைச் சாப்பிட்டவர் -மற்றோர் தடவை "வெங்காயம், வெள்ளைப் பூண்டு, சீமைப் பூண்டு ஆகியவற்றைச் சாப்பிட்டவர்'- நமது பள்ளிவாசலை நெருங்க வேண்டாம். ஏனெனில், மனிதர்கள் எதனால் தொல்லை அடைகிறார்களோ அதனால் வானவர்களும் தொல்லை அடைகின்றனர்" என்று கூறினார்கள்.

977மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "இந்தச் செடியிலிருந்து விளைகின்றதைச் சாப்பிட்டவர் நம் பள்ளிவாசலில் நம்மைச் சூழ்ந்திருக்க வேண்டாம்" என நபி (ஸல்) அவர்கள் வெள்ளைப் பூண்டைக் கருத்தில் கொண்டு கூறினார்கள் என்று இடம்பெற்றுள்ளது. ஆனால், வெங்காயம், சீமைப் பூண்டு ஆகியவற்றைப் பற்றியக் குறிப்பு இடம்பெறவில்லை.

978அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் வெற்றி கொள்ளப்பட்டு (அதன் கோட்டையைக்கூட) நாங்கள் கடந்திருக்க வில்லை. (அதற்குள் வழியிலுள்ள) அந்த வெள்ளைப் பூண்டு பயிரி(டப்பட்டிருந்த வயலி)ல் நபித்தோழர்களான நாங்கள் புகுந்தோம். அப்போது மக்கள் பசியுடன் இருந்தனர்.
எனவே, நாங்கள் வெள்ளைப் பூண்டை நன்கு சாப்பிட்டோம். பிறகு நாங்கள் தொழும் இடத்துக்குச் சென்றபோது (எங்களிடமிருந்து வெள்ளைப் பூண்டின்) நெடி வீசுவதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உணர்ந்தார்கள். அப்போது, "இந்த துர்வாடை வீசும் செடியிலிருந்து எதையேனும் சாப்பிட்டவர் தொழுமிடத்தில் நம்மருகே நெருங்க வேண்டாம்" என்று கூறினார்கள். மக்கள் "வெள்ளைப் பூண்டு தடை செய்யப்பட்டுவிட்டது. வெள்ளைப் பூண்டு தடை செய்யப்பட்டுவிட்டது" என்று கூறினர். இந்த விஷயம் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, "மக்களே! அல்லாஹ் எனக்கு அனுமதித்த ஒன்றைத் தடை செய்யும் உரிமை எனக்கு இல்லை. இருப்பினும், அந்தச் செடியின் துர்வாடையை நான் வெறுக்கிறேன்" என்று கூறினார்கள்.

979அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் வெங்காயம் பயிரிடப்பட்டிருந்த ஒரு வயலைக் கடந்துசென்றார்கள். அப்போது மக்களில் சிலர் அதில் இறங்கி வெங்காயங்களை (பறித்து)ச் சாப்பிட்டனர். வேறு சிலர் சாப்பிட வில்லை. பிறகு நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றபோது வெங்காயம் சாப்பிடாதவர்களை (தம்மருகே) அழைத்தார்கள். மற்றவர்களை, அதன் வாடை விலகும்வரை (நெருங்கவிடாமல்) தள்ளி இருக்கச்செய்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

980மஅதான் பின் அபீதல்ஹா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் ஒரு வெள்ளிக் கிழமை (ஜுமுஆ) தினத்தன்று உரை நிகழ்த்தினார்கள். அவர்கள் (தமது உரையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களையும் அபூபக்ர் (ரலி) அவர்களையும் நினைவுகூர்ந்தார்கள். மேலும், அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: நான் (இன்று) ஒரு கோழி என்னை மூன்று முறை கொத்துவதைப் போன்று (கனவு) கண்டேன். இதற்கு என் ஆயுட்காலம் முடிந்துவிட்டது என்றே நான் (விளக்கம்) கண்டேன். மக்களில் சிலர் நான் (எனக்குப் பின்னால்) என் (ஆட்சிக்குப்) பிரதிநிதி (கலீஃபா) ஒருவரை அறிவிக்குமாறு கூறுகின்றனர். நிச்சயமாக அல்லாஹ் தனது மார்க்கத்தையோ, தன் (அடியார்களின்) ஆட்சித் தலைமையையோ, நபி (ஸல்) அவர்களை எதனுடன் அனுப்பிவைத்தானோ அதையோ பாழாக்கிவிடமாட்டான். எனக்கு ஏதேனும் நேர்ந்துவிட்டால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எவரைக் குறித்து திருப்தியடைந்த நிலையில் இறந்தார்களோ அத்தகைய இந்த ஆறுபேர் ஆட்சித் தலைமை குறித்துத் தம்மிடையே கலந்தாலோசித்து முடிவு செய்வார்கள்.
சிலர் இந்த விஷயத்தில் என்னைக் குறை கூறிவருவது எனக்குத் தெரியும். நான் (சில நேரங்களில்) அவர்களை இஸ்லாத்திற்காக எனது இந்தக் கையால் அடித்திருக்கிறேன். அவர்கள் இவ்வாறு செய்(வதை மார்க்க அங்கீகாரமுடைய ஒரு செயலாக நினைத்)தால் அத்தகையோர்தாம் இறைவனின் விரோதிகளும் வழிகெட்ட இறைமறுப்பாளர்களும் ஆவர்.
நான் எனக்குப் பின்னால் "கலாலா'வைவிட ஒரு முக்கியமான விஷயத்தை விட்டுச் செல்லவில்லை. நான், இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் விவாதித்ததைப் போன்று வேறு எதற்காகவும் விவாதித்ததில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் இது தொடர்பாக என்னிடம் கடிந்துகொண்டதைப் போன்று வேறு எதற்காகவும் என்னிடம் கடிந்துகொண்டதில்லை. எந்த அளவிற்கு (அவர்கள் என்னைக் கடிந்துகொண்டார்கள்) எனில், அவர்கள் தமது விரலால் என் நெஞ்சில் குத்தினார்கள். "உமரே! அந்நிஸா அத்தியாயத்தின் கடைசியிலுள்ள (4:176ஆவது) வசனம் உமக்குப் போதுமானதாக இல்லையா?" என்று கேட்டார்கள்.
நான் இன்னும் (சிறிது காலம்) வாழ்ந்தால் இந்த "கலாலா' தொடர்பாகக் குர்ஆனைக் கற்றோரும் கல்லாதோரும் தீர்ப்பளிக்கும் விதத்தில் தெளிவான ஒரு தீர்ப்பை வழங்குவேன்.
பின்னர் (தொடர்ந்து) கூறினார்கள்:
"இறைவா! நகரங்களின் ஆளுநர்களுக்கு உன்னையே சாட்சியாக்குகிறேன். நான் அவர்களை அந்த மக்களிடையே நேர்மையாக நடந்துகொள்வதற்காகவும் அவர்களுடைய மார்க்கத்தையும் அவர்களுடைய நபி (ஸல்) அவர்களது வழிமுறையையும் கற்றுத் தருவதற்காகவுமே அனுப்பிவைத்தேன். மேலும், அவர்களுக்குப் போரிடாமல் கிடைத்த ("ஃபய்உ' எனும்) செல்வத்தை அவர்கள் தம்மிடையே (முறையோடு) பங்கிட வேண்டும்; அவர்களுடைய விவகாரங்களில் சிக்கல் எழும்போது அதை என் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டும் (என்றும் கூறி அனுப்பினேன்.)
மக்களே! நீங்கள் இரு செடிகளிலிருந்து விளைகின்றவற்றைச் சாப்பிடுகிறீர்கள். அவ்விரண்டையும் நான் அருவருப்பானவையாகக் கருதுகிறேன். இந்த வெங்காயமும் வெள்ளைப் பூண்டுமே (அவை இரண்டுமாகும்). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இருக்கும்போது ஒருவரிடமிருந்து அவற்றின் துர்வாடை வருவதைக்

கண்டால், அவரை "அல்பகீஉ' பொது மையவாடிக்குக் கொண்டுபோய் விட்டுவிட்டு வருமாறு கூறுவார்கள். எனவே, யார் அதைச் சாப்பிட விரும்புகிறாரோ அவர் அதைச் சமைத்து அதன் வாடையை நீக்கிக்கொள்ளட்டும்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 19 காணாமற்போன பொருட்களைப் பள்ளிவாசலுக்குள் தேடுவதற்கு வந்துள்ள தடையும் அவ்வாறு தேடிக்கொண்டிருப்பவரின் குரலைக் கேட்பவர் கூற வேண்டியதும்.**

981அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காணாமற்போன ஒரு பொருளைப் பள்ளிவாசலுக்குள் தேடிக்கொண்டிருப்பவரின் குரலைச் செவியுறுபவர் "அல்லாஹ் அதை உனக்குத் திரும்பக் கிடைக்காமல் செய்வானாக!" என்று கூறட்டும். ஏனெனில், பள்ளிவாசல்கள் இதற்காகக் கட்டப்படவில்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

982புரைதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
காணாமற்போன (தமது ஒட்டகத்)தைப் பற்றிப் பள்ளிவாசலுக்குள் விசாரித்த ஒரு மனிதர், "(எனது) சிவப்பு ஒட்டகத்தி(னைக் கண்டுபிடித்து அதனி)டம் (என்னை) அழைத்துச் செல்பவர் யார்?" என்று கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "(உனது ஒட்டகம்) உனக்குக் கிடைக்காமற்போகட்டும். பள்ளிவாசல்கள் எதற்காகக் கட்டப்பட்டனவோ அதற்கு மட்டுமே உரியனவாகும்" என்று கூறினார்கள்.

983புரைதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் ஒரு மனிதர் எழுந்து "(காணாமற் போன எனது) சிவப்பு ஒட்டகத்தி(னைக் கண்டுபிடித்து அதனி)டம் (என்னை) அழைத்துச் செல்பவர் யார்?" என்று கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "(உனது ஒட்டகம்) உனக்குக் கிடைக்காமற் போகட்டும். பள்ளிவாசல்கள் எதற்காகக் கட்டப்பட்டனவோ அதற்கு மட்டுமே உரியனவாகும்" என்று சொன்னார்கள்.
-புரைதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுகையைத் தொழுத பின் ஒரு கிராமவாசி வந்து பள்ளி வாசலின் கதவு வழியே தமது தலையை நீட்டினார்.
மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

**பாடம் : 20 தொழுகையில் மறதி ஏற்படுவதும் அதற்கு(ப் பரிகாரமாக) சஜ்தாச் செய்வதும்.**

984அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தொழுகையில் நின்றால் அவரிடம் ஷைத்தான் வந்து, அவர் எத்தனை ரக்அத்கள் தொழுதார் என்பதையே அறியாத அளவுக்குக் குழப்பத்தை ஏற்படுத்திவிடுகிறான்.

எனவே, உங்களில் ஒருவருக்கு இந்நிலை ஏற்பட்டால் (தொழுகையின் இறுதியில்) அமர்வில் அவர் இரு சஜ்தாக்கள் செய்துகொள்ளட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

985அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகைக்கான அறிவிப்புச் செய்யப்பட்டால் அதன் ஒலி தனக்குக் கேட்காமலிருப்பதற்காக ஷைத்தான் வாயு வெளியேறியவனாகத் திரும்பி ஓடுகிறான். தொழுகை அறிவிப்பு முடிந்துவிட்டால் அவன் திரும்பிவருகிறான். தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டால் மீண்டும் ஓடிவிடுகிறான். இகாமத் சொல்லி முடியும்போது திரும்பிவந்து, (தொழுகையில் ஈடுபட்டுள்ள) மனிதரின் உள்ளத்தில் ஊடுருவி "இதை இதையெல்லாம் நினைத்துப்பார்' என்று கூறுகிறான்; அவர் இதுவரை நினைத்துப் பார்த்திராதவற்றையெல்லாம் நினைவூட்டுகிறான்; (அதன் விளைவாக) அவர் எத்தனை ரக்அத்கள் தொழுதார் என்பதை அறியாதவராகிவிடுகிறார். உங்களில் ஒருவருக்குத் தாம் எத்தனை ரக்அத்கள் தொழுதோம் என்பது தெரியாவிட்டால் அவர் (தொழுகையின் இறுதியில்) அமர்வில் (மறதிக்குப் பரிகாரமாக) இரு சஜ்தாக்கள் செய்துகொள்ளட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

986மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகைக்காக இகாமத் சொல்லப்படும்போது ஷைத்தான் வாயு வெளியேறியவனாக ஓடுகிறான்.
தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ள தகவல்கள் இடம்பெற்றிருப்பதுடன் "மேலும், அவன் திரும்பிவந்து தொழுகையில் ஈடுபட்டுள்ள மனிதருக்குப் பல்வேறு எண்ணங்களையும் ஆசைகளையும் ஊட்டுகிறான். அவர் இதுவரை நினைத்துப்பார்த்திராத பல அலுவல்களை அவருக்கு அவன் நினைவுபடுத்துகிறான்" என்றும் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

987அப்துல்லாஹ் பின் புஹைனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நான்கு ரக்அத்கள் கொண்ட) ஒரு தொழுகையில் இரண்டு ரக்அத்கள் தொழுவித்து முடித்த பின் (முதலாம் அத்தஹிய்யாத் இருப்பில்) அமராமல் (மூன்றாவது ரக்அத்துக்காக) எழுந்துவிட்டார்கள். எனவே, அவர்களோடு மக்களும் எழுந்துவிட்டனர். தொழுகை முடியும் தறுவாயில் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சலாம் கொடுப்பதை எதிர்பார்த்திருந்தபோது, அந்த அமர்விலேயே சலாம் கொடுப்பதற்கு முன் தக்பீர் கூறி (மறதிக்குப் பரிகாரமாக) இரு சஜ்தாக்கள் செய்துவிட்டுப் பிறகு சலாம் கொடுத்தார்கள்.

988பனூ அப்தில் முத்தலிப் குலத்தாரின் நட்புக் குலத்தைச் சேர்ந்த அப்துல்லாஹ் பின் புஹைனா அல்அசதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் லுஹ்ர் தொழுகையின் (முதல் அத்தஹிய்யாத் இருப்பில்) உட்கார வேண்டியதிருக்க (உட்காராமல் மூன்றாவது ரக்அத்துக்காக) எழுந்து விட்டார்கள். பிறகு தொழுகையை முடிக்கும் தறுவாயில் (இறுதி) அமர்வில் சலாம் கொடுப்பதற்கு முன் இரு சஜ்தாக்கள் செய்தார்கள். ஒவ்வொரு சஜ்தாவின்போதும் தக்பீர் கூறினார்கள். மக்களும் அவர்களோடு இரு சஜ்தாக்கள் செய்தனர். (முதல்) இருப்பை மறந்ததற்குப் பகரமாகத்தான் இவ்வாறு செய்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

989அப்துல்லாஹ் பின் புஹைனா அல்அஸ்தீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தொழுகையில் இரண்டு ரக்அத்களை முடித்த பின் அமருவதை விரும்புவார்கள். ஆனால், (ஒரு நாள்) அமராமல் (மூன்றாவது ரக்அத்துக்காக) எழுந்து தொடர்ந்து தொழுதார்கள். தொழுகை முடியும் தறுவாயில் சலாம் கொடுப்பதற்கு முன் (முதல் இருப்பில் அமராததற்குப் பரிகாரமாக இரு) சஜ்தாக்கள் செய்தார்கள். பிறகு சலாம் கொடுத்தார்கள்.

990அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருக்குத் தாம் மூன்று ரக்அத்கள் தொழுதோமா அல்லது நான்கு ரக்அத்கள் தொழுதோமா என்று தொழுகையில் சந்தேகம் ஏற்பட்டால் சந்தேகத்தைக் கைவிட்டு, உறுதியான (மூன்று ரக்அத்கள் என்ப)தன் அடிப்படையில் (மீதியுள்ள ஒரு ரக்அத்தைத்) தொழுதுவிட்டு சலாம் கொடுப்பதற்கு முன் இரு சஜ்தாக்கள் செய்துகொள்ளட்டும். அவர் (உண்மையில்) ஐந்து ரக்அத்கள் தொழுது விட்டிருந்தால் (மறதிக்காகச் செய்த அவ்விரு சஜ்தாக்களால்) அவரது தொழுகையை அந்த (ஐந்து) ரக்அத்கள் இரட்டைப்படை ஆக்கிவிடும். அவர் நான்கு ரக்அத்கள் பூர்த்தி செய்துவிட்டிருந்தால் அவ்விரு சஜ்தாக்களும் (தொழுகையில் குழப்பம் ஏற்படுத்திய) ஷைத்தானை முறியடித்ததாக அமையும்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதிலும் "சலாம் கொடுப்பதற்கு முன் இரு சஜ்தாக்கள் செய்துகொள்ளட்டும்" என்றே இடம் பெற்றுள்ளது.

991அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (லுஹ்ர் அல்லது அஸ்ர் தொழுகையை வழக்கத்திற்கு மாறாகக்) கூட்டியோ அல்லது குறைத்தோ தொழுவித்தார்கள். அவர்கள் சலாம் கொடுத்(துத் தொழுகையை முடித்)தபோது அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! தொழுகையில் (மாற்றம்) ஏதும் ஏற்பட்டுவிட்டதா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்ன அது?" என்று கேட்டார்கள். மக்கள் "நீங்கள் இப்படி இப்படித் தொழுவித்தீர்கள் (அதனால்தான் கேட்கிறோம்)" என்று கூறினர். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுகை இருப்பில் அமர்வதைப் போன்று) தம் கால்களை மடக்கி, கிப்லாவை முன்னோக்கி இரு சஜ்தாக்கள் செய்தார்கள். பிறகு சலாம்

கொடுத்தார்கள். பின்னர் எங்களை நோக்கித் திரும்பி, "ஒரு விஷயம்! தொழுகையில் (எனக்கு) ஏதேனும் புதிய அறிவிப்பு வருமானால் கட்டாயம் அதை நான் உங்களுக்குத் தெரிவித்து விடுவேன். ஆயினும், நானும் மனிதன்தான்; (சில நேரங்களில்) நீங்கள் மறந்து விடுவதைப் போன்று நானும் மறந்துவிடுகிறேன். அவ்வாறு நான் எதையேனும் மறந்து விட்டால் எனக்கு (அதை) நினைவுபடுத்துங்கள். உங்களில் ஒருவர் தொழுகையில் (எதையேனும் கூடுதலாகவோ அல்லது குறைவாகவோ செய்துவிட்டதாகச்) சந்தேகித்தால் யோசித்து முடிவு செய்து,அதற்கேற்ப தொழுகையைப் பூர்த்தி செய்யட்டும். பிறகு இரு சஜ்தாக்கள் செய்துகொள்ளட்டும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

992மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், இப்னு பிஷ்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவற்றில் சரியானதை முடிவு செய்ய அவர் நன்கு யோசிக்கட்டும்" என்றும், வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "யோசித்து முடிவு செய்யட்டும்" என்றும் இடம்பெற்றுள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
மன்ஸூர் (ரஹ்) அவர்களது அந்த அறிவிப்பில் "அவற்றில் சரியானதை முடிவு செய்ய அவர் நன்கு யோசிக்கட்டும்"என்று இடம்பெற்றுள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் மன்ஸூர் (ரஹ்) அவர்கள், "அவர் யோசித்து முடிவு செய்யட்டும்" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.
-மற்றோர் அறிவிப்பாளர்தொடரில் வரும் மன்ஸூர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவற்றில் சரியானதற்கு மிக நெருக்கமானதை யோசித்து முடிவு செய்யட்டும்" என்று இடம் பெற்றுள்ளது.
-மற்றோர் அறிவிப்பில் "இதுதான் சரி எனக்கருதப்படுவதை யோசித்து முடிவு செய்யட்டும்" என்று இடம்பெற்றுள்ளது.
-மற்றோர் அறிவிப்பில் "சரியானதை யோசித்து முடிவு செய்யட்டும்" என்று இடம் பெற்றுள்ளது.

993அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் லுஹ்ர் தொழுகையில் ஐந்து ரக்அத்கள் தொழுவித்தார்கள். அவர்கள் சலாம் கொடுத்(துத் தொழுகையை முடித்)தபோது அவர்களிடம், "தொழுகையில் (ரக்அத்) அதிகமாக்கப்பட்டுவிட்டதா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள், "என்ன அது?" என்று கேட்டார்கள். மக்கள், "நீங்கள் ஐந்து ரக்அத்கள் தொழுவித்தீர்கள்" என்று கூறினர். உடனே நபி (ஸல்) அவர்கள் இரு சஜ்தாக்கள் செய்தார்கள்.

994அல்கமா (ரஹ்) அவர்களது மற்றோர் அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்கள் மக்களுக்கு ஐந்து ரக்அத்கள் தொழுவித்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
-இப்ராஹீம் பின் சுவைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை) அல்கமா (ரஹ்) அவர்கள் எங்களுக்கு லுஹர் தொழுகையில் ஐந்து ரக்அத்கள் தொழுவித்தார்கள். அவர்கள் சலாம் கொடுத்தபோது (அவர்களிடம்) மக்கள், "அபூஷிப்ல்! தாங்கள் ஐந்து ரக்அத் தொழுவித்து விட்டீர்கள்!"என்று கூறினர். அதற்கு அவர்கள், "இல்லை; அவ்வாறு நான் செய்யவில்லை" என்று கூறினார்கள். மக்கள் "ஆம்' (அவ்வாறு தான் செய்தீர்கள்) என்று கூறினர். அப்போது சிறுவனாயிருந்த நான் கூட்டத்தின் ஓரத்தில் இருந்து கொண்டிருந்தேன். நானும், "ஆம், தாங்கள் ஐந்து ரக்அத்கள் தொழுவித்துவிட்டீர்கள்" என்று கூறினேன். அல்கமா (ரஹ்) அவர்கள் என்னைப் பார்த்து, "மாறு கண்ணா! (அஃவர்!), நீயுமா இவ்வாறு கூறுகிறாய்?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். உடனே அவர்கள் அப்படியே திரும்பி இரு சஜ்தாக்கள் செய்துவிட்டுப் பின்னர் சலாம் கொடுத்தார்கள். பிறகு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாகப் பின்வருமாறு கூறினார்கள்:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு ஐந்து ரக்அத்கள் தொழுவித்தார்கள். அவர்கள் தொழுகையை முடித்துத் திரும்பியபோது மக்கள் தமக்கிடையே முணு முணுத்துக்கொண்டனர். அப்போது அவர்கள், "உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! தொழுகையில் (ரக்அத்) அதிகமாக்கப் பட்டுவிட்டதா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இல்லை' என்றார்கள். "அவ்வாறாயின், தாங்கள் ஐந்து ரக்அத்கள் தொழுவித்துவிட்டீர்களே?" என்று கூறினர். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அப்படியே) திரும்பி, இரு சஜ்தாக்கள் செய்துவிட்டுப் பிறகு சலாம் கொடுத்தார்கள். மேலும் "நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதன்தான். நீங்கள் மறப்பதைப் போன்று நானும் மறந்துவிடுகிறேன்" என்று கூறினார்கள்.
இப்னு நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உங்களில் ஒருவர் (தமது தொழுகையில்) மறந்து விட்டால் அவர் இரு சஜ்தாக்கள் செய்துகொள்ளட்டும்" என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக) இடம்பெற்றுள்ளது.

995அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு ஐந்து ரக்அத்கள் தொழுவித்தார்கள். நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! தொழுகையில் (ரக்அத்) ஏதேனும் அதிகமாக்கப் பட்டுவிட்டதா?" என்று கேட்டோம். அவர்கள், "என்ன அது?" என்று கேட்டார்கள். மக்கள், "தாங்கள் ஐந்து ரக்அத் தொழுவித்தீர்கள்!" என்று கூறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதன்தான். நீங்கள் நினைப்பதைப் போன்று நானும் நினைக்கிறேன். நீங்கள் மறப்பதைப் போன்று நானும் மறக்கிறேன்" என்று கூறிவிட்டு, பிறகு மறதிக்கான இரு சஜ்தாக்கள் செய்தார்கள்.

996அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுவித்தார்கள். அதில் அவர்கள் கூட்டியோ குறைத்தோ தொழவைத்துவிட்டார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்ராஹீம் பின் சுவைத் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: (கூட்டினார்களா அல்லது குறைத்தார்களா என்பதில்) சந்தேகம் எனக்குத் தான்-.

அப்போது "அல்லாஹ்வின் தூதரே! தொழுகையில் (ரக்அத்) ஏதேனும் அதிகமாக்கப் பட்டுவிட்டதா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதன்தான். நீங்கள் மறப்பதைப் போன்று நானும் மறந்துவிடுகிறேன். ஆகவே, உங்களில் ஒருவர் (தொழுகையில்) மறந்துவிட்டால் அதே இருப்பில் இரு சஜ்தாக்கள் செய்துகொள்ளட்டும்" என்று கூறிவிட்டுப் பிறகு (கிப்லாவை நோக்கித்) திரும்பி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரு சஜ்தாக்கள் செய்தார்கள்.

997அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சலாம் கொடுத்து (மக்களிடம்) பேசிய பின் மறதிக்கான இரு சஜ்தாக்கள் செய்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

998அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழுதோம். அப்போது அவர்கள் ஒன்று (ரக்அத்தைக்) கூட்டிவிட்டார்கள்; அல்லது குறைத்துவிட்டார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்ராஹீம் பின் சுவைத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! இது (கூட்டினார்களா அல்லது குறைத்தார்களா என்ற ஐயப்பாடு) எனது தரப்பிலிருந்து ஏற்பட்டதேயாகும்-.
உடனே நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! தொழுகையில் (மாற்றம்) ஏதேனும் வந்துவிட்டதா?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள் "இல்லை' என்றார்கள். உடனே அவர்களிடம் அவர்கள் செய்ததைத் தெரிவித்தோம். அப்போது அவர்கள், "ஒருவர் (தமது தொழுகையில்) கூட்டிவிட்டாலோ அல்லது குறைத்துவிட்டாலோ அவர் இரு சஜ்தாக்கள் செய்துகொள்ளட்டும்" என்று சொல்லிவிட்டுப் பிறகு (தாம் மறந்துவிட்டதற்காக) இரு சஜ்தாக்கள் செய்தார்கள்.

999அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு மதியத் தொழுகைகளில் ஒன்றை (லுஹர் அல்லது அஸ்ர் தொழுகையைத்) தொழுவிக்கும்போது இரண்டு ரக்அத் முடிந்த உடனே சலாம் கொடுத்துவிட்டார்கள். பிறகு பள்ளிவாசலின் கிப்லாத் திசையிலிருந்த ஒரு பேரீச்சம் கட்டைக்கு வந்து அதன்மீது சாய்ந்து கொண்டார்கள். அப்போது ஏதோ கோபத்தில் இருந்தார்கள். மக்களிடையேயிருந்த அபூபக்ர் (ரலி) அவர்களும் உமர் (ரலி) அவர்களும் நபியவர்களிடம் பேச்சுக்கொடுக்க அஞ்சினர். மக்களில் தொழுதுவிட்டு விரைந்து செல்பவர்கள் "தொழுகை குறைக்கப்பட்டுவிட்டது' என்று புறப்பட்டுச் சென்றும்விட்டனர்.
இந்நிலையில் "துல்யதைன்' (கிர்பாக் பின் அம்ர்-ரலி) என்பவர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! தொழுகை குறைக்கப்பட்டுவிட்டதா? அல்லது தாங்கள் மறந்துவிட்டீர்களா?" என்று கேட்டார். உடனே நபி (ஸல்) அவர்கள் வலப் பக்கமும் இடப் பக்கமும் (திரும்பிப்) பார்த்தார்கள். பிறகு "துல்யதைன் என்ன சொல்கிறார்?" என்று கேட்டார்கள். மக்கள் "(ஆம்) அவர் சொல்வது உண்மைதான். தாங்கள் இரு ரக்அத்கள்தாம் தொழுவித்தீர்கள்" என்று கூறினர். உடனே நபி (ஸல்) அவர்கள் மேலும் இரு ரக்அத்கள் தொழுவித்துவிட்டு சலாம்

கொடுத்தார்கள். பிறகு தக்பீர் சொல்லி ஒரு சஜ்தாச் செய்துவிட்டு மற்றொரு தக்பீர் சொல்லி எழுந்(து அமர்ந்)தார்கள். பிறகு இன்னொரு தக்பீர் சொல்லி மற்றொரு சஜ்தாச் செய்தார்கள். பிறகு தக்பீர் சொல்லிவிட்டு எழுந்துவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களது அறிவிப்பில் "(இறுதியில்) சலாம் கொடுத்தார்கள்" என்றும் இடம்பெற்றுள்ளது.

1000மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதிலும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதியத் தொழுகைகளில் ஒன்றை எங்களுக்குத் தொழுவித்தார்கள்" என்று தொடங்கி மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது.

1001அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு அஸ்ர் தொழுகையைத் தொழுவித்த போது இரண்டு ரக்அத் முடிந்ததும் சலாம் கொடுத்து விட்டார்கள். உடனே துல்யதைன் (கிர்பாக் பின் அம்ர்-ரலி) என்பார் எழுந்து, "தொழுகை(யின் ரக்அத் ஏதேனும்) குறைக்கப்பட்டு விட்டதா, அல்லாஹ்வின் தூதரே! அல்லது தாங்கள்தாம் மறந்துவிட்டீர்களா?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவற்றில் எதுவுமே நடக்க வில்லை" என்று கூறினார்கள். துல்யதைன், "(இல்லை) இதில் ஏதோ ஒன்று நிகழவே செய்தது, அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களை நோக்கி "துல்யதைன் சொல்வது உண்மைதானா?" என்று கேட்டார்கள். அப்போது மக்கள், "ஆம், அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினர். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எஞ்சிய ரக்அத்களையும் தொழு(வித்)துவிட்டு அந்த இருப்பிலேயே சலாம் கொடுத்த பின் இரு சஜ்தாக்கள் செய்தார்கள்.
-அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் லுஹ்ர் தொழுகையின் இரண்டு ரக்அத் முடிந்ததும் சலாம் கொடுத்துவிட்டார்கள். அப்போது பனூசுலைம் குலத்தைச் சேர்ந்த ஒருவர் (துல்யதைன்) வந்து, "அல்லாஹ்வின் தூதரே! தொழுகை(யின் ரக்அத்) குறைக்கப்பட்டு விட்டதா, அல்லது தாங்கள் மறந்துவிட்டீர்களா?" என்று கேட்டார்.
தொடர்ந்து முந்தைய ஹதீஸின் தொடர்ச்சி அப்படியே இடம்பெற்றுள்ளது.

1002அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் லுஹர் தொழுகை தொழுது கொண்டிருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரண்டாவது ரக்அத் முடிந்ததும் சலாம் கொடுத்துவிட்டார்கள். உடனே பனூசுலைம் குலத்தைச் சேர்ந்த ஒருவர் (துல்யதைன்) எழுந்தார்.
மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

1003இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகையில் மூன்றாவது ரக்அத் முடிந்ததும் சலாம் கொடுத்துவிட்டுத் தமது இல்லத்திற்குள் நுழைந்துவிட்டார்கள். உடனே "கிர்பாக்' எனப்படும் கைகள் நீளமான ஒரு மனிதர் (துல்யதைன்) எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே!' என்றழைத்து அவர்கள் செய்ததை நினைவூட்டினார். அப்போது கோபத்தோடு தமது மேல்துண்டை தரையில் இழுத்தபடி வெளியேறிய அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடம் வந்துசேர்ந்தார்கள். பிறகு "இவர் சொல்வது உண்மைதானா?" என்று கேட்டார்கள். மக்கள் "ஆம்' என்றனர். உடனே அவர்கள் இன்னொரு ரக்அத் தொழுவித்து சலாம் கொடுத்தார்கள். பிறகு (மறதிக்காக) இரு சஜ்தாக்கள் செய்து விட்டுப் பிறகு (மீண்டும்) சலாம் கொடுத்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1004இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகை (தொழும்போது) மூன்று ரக்அத் முடிந்ததும் சலாம் கொடுத்துவிட்டார்கள். பிறகு எழுந்து தமது அறைக்குள் சென்று விட்டார்கள். உடனே நீளமான கைககளை உடைய ஒரு மனிதர் (துல்யதைன்) எழுந்து "தொழுகை குறைக்கப்பட்டுவிட்டதா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கோபத்தோடு வெளியே வந்தார்கள். விடுபட்ட ரக்அத்தைத் தொழுவித்தார்கள். பிறகு சலாம் கொடுத்தார்கள். பிறகு (மறதிக்கான) இரு சஜ்தாக்கள் செய்துவிட்டு, (மீண்டும்) சலாம் கொடுத்தார்கள்.

## பாடம் : 21 (குர்ஆன்) ஓதலுக்கான சஜ்தா.

1005இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள்; சஜ்தா வசனமுள்ள அத்தியாயத்தை (எங்களுக்கு) ஓதிக்காட்டும் போது அவர்கள் சிரவணக்கம் (சஜ்தா) செய்வார்கள். உடனே நாங்களும் சிரவணக்கம் செய்வோம். அப்போது (ஏற்படும் இட நெருக்கடியால்) எங்களில் சிலருக்கு நெற்றி வைக்கக்கூட இடம் கிடைக்காது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1006இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சில நேரங்களில் குர்ஆன் ஓதி, சஜ்தா வசனத்தைக் கடந்து செல்கையில் எங்களுடன் சேர்ந்து சஜ்தாச் செய்வார்கள். அப்போது இட நெருக்கடி ஏற்பட்டு எங்களில் ஒருவருக்கு சஜ்தாச் செய்யக் கூட இடம் கிடைக்காது. தொழுகை அல்லாத நேரங்களில் இவ்வாறு நடைபெற்றது.

1007அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "அந்நஜ்ம்' எனும் (53ஆவது) அத்தியாயத்தை ஓதிய பின் சஜ்தாச் செய்தார்கள். அவர்களுடன் இருந்த (முஸ்லிம்கள், இணைவைப்பாளர்கள் ஆகிய) அனைவரும் சஜ்தாச் செய்தனர். அங்கிருந்த ஒரு வயோதிகன் மட்டும் ஒரு கையளவு

கூழாங்கற்களையோ அல்லது மண்ணையோ அள்ளித் தனது நெற்றிவரை கொண்டு சென்றுவிட்டு, "இது எனக்குப் போதும்' என்று (சஜ்தாவைக் கேலி செய்து) சொன்னான். பிறகு அ(க்கிழ)வன் இறைமறுப்பாளனாகவே (பத்ருப் போரில்) கொல்லப்பட்டதை நான் கண்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1008அதாஉ பின் யசார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்களிடம், இமாமைப் பின்பற்றித் தொழுபவர் (மஃமூம்) கிராஅத் - ஓதுவதைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் "இமாமைப் பின்பற்றித் தொழுபவருக்கு ஓதல் (கிராஅத்) ஏதும் கிடையாது" என்று கூறினார்கள். மேலும், அவர்கள் கூறும்போது "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "வந்நஜ்மி இதா ஹவா...' (எனத் தொடங்கும் 53ஆவது) அத்தியாத்தை ஓதிக் காட்டினேன். அதற்காக அவர்கள் சஜ்தாச் செய்யவில்லை"என்றும் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1009அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் (தொழுகையில்) எங்களுக்கு "இதஸ்ஸமாஉன் ஷக்கத்' எனும் (84ஆவது) அத்தியாயத்தை ஓதி அதில் (சஜ்தா வசனம் (21) வந்ததும்) சஜ்தாச் செய்தார்கள். அவர்கள் தொழுது முடித்துத் திரும்பிய பின் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்த அத்தியாயத்தை ஓதியபோது சஜ்தாச் செய்தார்கள்' எனத் தெரிவித்தார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1010அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் "இதஸ்மாஉன் ஷக்கத்' (84), "இக்ரஃ பிஸ்மி ரப்பிக்க' (96) ஆகிய அத்தியாயங்களில் நபி (ஸல்) அவர்களுடன் சஜ்தாச் செய்தோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1011அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இதஸ்ஸமாஉன் ஷக்கத்...' (எனத் தொடங்கும் 84ஆவது அத்தியாயம்), "இக்ரஃ பிஸ்மி ரப்பிக்க...' (எனத் தொடங்கும் 96ஆவது அத்தியாயம்) ஆகியவற்றை ஓதியபோது சஜ்தாச் செய்தார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1012அபூராஃபிஉ நுஃபைஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூஹுரைரா (ரலி) அவர்களுடன் இஷாத் தொழுகையைத் தொழுதேன். அவர்கள் "இதஸ்ஸமாஉன் ஷக்கத்...' (எனத் தொடங்கும் 84ஆவது) அத்தியாயத்தை ஓதி, (சஜ்தா வசனம் வந்த) உடன் அதில் சஜ்தாச் செய்தார்கள். நான் அவர்களிடம், "இது என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் அபுல் காசிம் (முஹம்மத்-ஸல்) அவர்களுக்குப் பின்னால் (தொழுதபோது தொழுகையிலேயே) இ(ந்த அத்தியாயத்தை ஓதிய)தற்காகச்

சஜ்தாச் செய்திருக்கிறேன். அவர்களை நான் சந்திக்கும்வரை (அதாவது நான் இறக்கும்வரை) அ(தை ஓதிய)தற்காக நான் சஜ்தாச் செய்துகொண்டுதான் இருப்பேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "அபுல்காசிம் (ஸல்) அவர்களுக்குப் பின்னால்' எனும் வாசகம் இடம்பெற வில்லை.

1013அபூரா ஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் "இதஸ்ஸமாஉன் ஷக்கத்...' (எனத் தொடங்கும் 84ஆவது) அத்தியாயத்தை ஓதி, சஜ்தாச் செய்ததை நான் கண்டேன். அப்போது நான் அவர்களிடம், "இ(தை ஓதிய)தற்காக சஜ்தாச் செய்கிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம், என் உற்ற தோழர் இதை ஓதி சஜ்தாச் செய்ததை நான் கண்டேன். அவர்களை நான் சந்திக்கும்வரை (அதாவது நான் இறக்கும்வரை) அ(தை ஓதிய)தற்காக நான் சஜ்தாச் செய்து கொண்டுதான் இருப்பேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் "நபி (ஸல்) அவர்களையா (உற்ற தோழர் என) அறிவித்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அதாஉ பின் அபீமைமூனா (ரஹ்) அவர்கள் "ஆம்' என்றார்கள்.

## பாடம் : 22 தொழுகையில் (அத்தஹிய்யாத்) அமர்வில் உட்காரும் முறையும், அப்போது தொடைகள் மீது இரு கைகளை வைக்கும் முறையும்.

1014அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையில் (அத்தஹிய்யாத்) அமர்வில் உட்காரும்போது தமது இடது பாதத்தை (வலது) தொடைக்கும் கணைக்காலுக்கும் இடையே (அவற்றுக்குக் கீழே) வைத்து, வலது பாதத்தை விரித்து(ப் படுக்க)வைப்பார்கள். தமது இடக் கையை இடது கால் மூட்டின் மீதும், வலக் கையை வலது தொடையின் மீதும் வைத்துத் தமது (சுட்டு) விரலால் சைகை செய்வார்கள்.

1015அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழும்போது (அத்தஹிய்யாத்) அமர்வில் பிரார்த்திக்க உட்கார்ந்தால் தமது வலக் கையை வலது தொடையின் மீதும், இடக் கையை இடது தொடையின் மீதும் வைத்துச் சுட்டு விரலால் சைகை செய்வார்கள். தமது பெருவிரலி(ன் நுனியி)னை நடு விரலின் (நுனி)மீது வைப்பார்கள். இடது உள்ளங்கையைத் தமது (இடக் கால்) மூட்டின் மீது வைத்து வளையமிட்டுப் பிடித்திருப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1016இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தொழுகையில் (அத்தஹிய்யாத்) அமர்வில் உட்கார்ந்தால், தம் கைகளை முழங்கால்கள்மீது வைப்பார்கள். பெருவிரலை ஒட்டியுள்ள வலக் கை(சுட்டு)

விரலை உயர்த்திப் பிரார்த்திப்பார்கள். இடக் கையை இடது கால் மூட்டின் மீது விரித்து வைத்திருப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1017இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அத்தஹிய்யாத் அமர்வில் உட்கார்ந்தால் தமது இடக் கையை இடது கால் மூட்டின் மீதும் வலக் கையை வலது கால் மூட்டின் மீதும் வைப்பார்கள். (அரபியர் வழக்கில்) ஐம்பத்து மூன்று என எண்ணுவதைப் போன்று (சிறு விரல், மோதிர விரல், நடு விரல் ஆகிய மூன்று விரல்களையும் உள்ளங்கையுடன் சேர்த்து) சுட்டு விரலால் சைகை செய்வார்கள்.

1018அலீ பின் அப்திர் ரஹ்மான் அல்முஆவீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (சிறிய வயதில்) தொழுகையில் சிறு கற்களால் விளையாடிக்கொண்டிருப்பதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கண்டார்கள். அவர்கள் தொழுகையை முடித்துத் திரும்பியதும் (அவ்வாறு செய்யலாகாது என) என்னைத் தடுத்தார்கள். "(தொழுகையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்துகொண்டிருந்ததைப் போன்று நீயும் செய்!" என்றார்கள். நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்ன செய்வார்கள்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையில் (அத்தஹிய்யாத்) அமர்வில் உட்கார்ந்தால், தம்முடைய வலது முன் கையை வலது தொடையின் மீது வைத்துத் தம் (வலக் கை) விரல்கள் அனைத்தையும் மடக்கிக்கொண்டு, பெருவிரலை ஒட்டியுள்ள (சுட்டு)விரலால் சைகை செய்வார்கள். இடது முன் கையை இடது தொடையில் வைப்பார்கள்" என்று சொன்னார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் இப்னு உமர் (ரலி) அவர்களுக்குப் பக்கத்தில் தொழுதுகொண்டிருந்தேன்" என்று (அலீ பின் அப்திர் ரஹ்மான் அல்முஆவீ (ரஹ்) அவர்கள் கூறியதாக) இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 23 (தொழுது முடித்து) தொழுகையிலிருந்து வெளியேறுவதற்காக அதன் இறுதியில் சலாம் சொல்வதும் அதன் முறையும்.

1019அபூமஅமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மக்காவின் ஆட்சியாளராக இருந்த ஒருவர் (தொழுகையை முடிக்கும்போது வலம் இடமாக) இரு முறை சலாம் கூறுவார். (இதைக் கண்ட) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "இந்த (வழி)முறையை அவர் எவ்வாறு அறிந்துகொண்டார்!" என்று (வியப்போடு) கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், ஹகம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறுதான் செய்வார்கள்" என்று (அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாக) இடம் பெற்றுள்ளது.

1020அபூமஅமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"ஓர் ஆட்சியாளர்" அல்லது "ஒரு மனிதர்" (தொழுகையை முடிக்கும்போது வலம் இடமாக) இரு முறை சலாம் கூறுவார். (இதைக் கண்ட) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "இந்த (வழி)முறையை அவர் எவ்வாறு அறிந்து கொண்டார்!" என்று (வியந்து) கூறினார்கள்.

1021சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுகையை முடிக்கும்போது) வலப் பக்கத்திலும் இடப் பக்கத்திலும் (முகத்தைத் திருப்பி இருமுறை) சலாம் கூறுவார்கள். (அவ்வாறு திரும்பும்போது) அவர்களுடைய கன்னத்தின் வெண்மையை நான் காண்பேன்.

## பாடம் : 24 தொழுகைக்குப் பின் ("அல்லாஹு அக்பர்" என) திக்ர் செய்தல்.

1022இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்துவிட்டார்கள் என்பதை, (மக்கள் "அல்லாஹ் அக்பர்" என்று) தக்பீர் கூறுவதைவைத்து நாங்கள் அறிந்துகொள்வோம்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அம்ர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை எனக்கு அபூமஅபத் (ரஹ்) அவர்கள்தாம் அறிவித்தார்கள். பிறகு (இதை நான் அபூமஅபத் அவர்களிடம் எடுத்துரைத்த போது) அவர்களே அதை (அவ்வாறு தாம் அறிவிக்கவில்லை என) மறுத்துவிட்டார்கள்.

1023இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்துவிட்டார்கள் என்பதை, (மக்கள் கூறும்) தக்பீரின் மூலமே நாங்கள் அறிந்துவந்தோம்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அம்ர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை நான் அபூமஅபத் (ரஹ்) அவர்களிடம் எடுத்துரைத்தபோது "இதை நான் உமக்கு அறிவிக்கவில்லை" என்று கூறினார்கள். ஆனால், அவர்கள்தாம் முன்னர் எனக்கு இந்த ஹதீஸை அறிவித்தார்கள்.

1024இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் கடமையான (ஃபர்ள்) தொழுகையை முடிக்கும்போது சப்தமாக திக்ருச் செய்யும் நடைமுறை நபி (ஸல்) அவர்களது காலத்தில் இருந்தது. அவ்வாறு (மக்கள் உரத்த குரலில் திக்ருச்) செய்வதைக் கேட்டால் மக்கள் தொழுகையை முடித்துவிட்டார்கள் என்பதை நான் அறிந்துகொள்வேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 25 (தொழுகையில்) கப்றுடைய வேதனையிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருவது விரும்பத்தக்கதாகும்.

1025ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் யூதப்பெண் ஒருவர் "உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் உங்கள் சவக்குழிகளில் (கப்றுகளில்) வேதனை செய்யப்படுவீர்கள்" என்று கூறிக்கொண்டிருந்தார். அப்போது

என்னிடம் வந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திடுக்குற்றார்கள். மேலும் "யூதர்கள்தாம் (சவக்குழிகளில்) வேதனை செய்யப்படுவார்கள்" என்றார்கள்.
சில நாட்கள் கழிந்த பின் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "நீ அறிவாயா: சவக்குழிகளில் நீங்கள் வேதனை செய்யப்படுவீர்கள் என இறைவனால் எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது" என்று கூறினார்கள். அதற்குப் பின் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சவக்குழியின் வேதனையிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருவதை நான் செவியுற்றேன் -.இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1026அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதற்குப் பின் சவக்குழியின் வேதனையிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருவதை நான் செவியுற்றேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1027ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மதீனா யூத மூதாட்டிகளில் இருவர் என்னிடம் வந்து (பேசிக்கொண்டிருந்தபோது) "சவக் குழிகளில் புதைக்கப்பட்டிருப்போர் வேதனை செய்யப்படுகின்றனர்" என்று கூறினர். அவர்கள் இருவரும் கூறியதை நான் நம்ப மறுத்தேன். அவர்கள் கூறியதை நம்புவதற்கு என் மனம் இடம் தரவில்லை. பிறகு அவர்கள் இருவரும் வெளியேறிவிட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! மதீனா யூத மூதாட்டியரில் இருவர் என்னிடம் வந்து "சவக்குழிகளில் புதைக்கப்பட்டிருப்போர் வேதனை செய்யப்படுகின்றனர்' என்று கூறினர்" என அவர்களிடம் தெரிவித்தேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்கள் சொன்னது உண்மையே. (சவக் குழிகளிலிருக்கும் பாவிகள்) கடுமையாக வேதனை செய்யப்படுகின்றனர். அந்த வேதனை(யால் அவர்களிடும் ஓலம்)தனை மிருகங்கள் செவியேற்கின்றன" என்று கூறினார்கள். அதற்குப் பின் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்தத் தொழுகையிலும் சவக்குழியின் வேதனையிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோராமல் இருந்ததில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1028மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதற்குப் பிறகு தாம் தொழுத எந்தத் தொழுகையிலும் சவக்குழியின் வேதனையிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோராமல் இருந்ததில்லை" என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 26 தொழுகையில் (இறைவனிடம்) பாதுகாப்புக் கோரப்பட வேண்டியவை.

1029ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தொழுகையில் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருவதை நான் செவியுற்றிருக்கிறேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1030அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் (தொழுகையில்) அத்தஹிய்யாத் அமர்வில் இருக்கும்போது நான்கு விஷயங்களிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். (அவை:) அல்லாஹூம்ம இன்னீ அஊது பிக்க மின் அதாபி ஜஹன்னம, வ மின் அதாபில் கப்றி, வ மின் ஃபித்னத்தில் மஹ்யா வல் மமாத்தி, வ மின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜால்.
(பொருள்: இறைவா, உன்னிடம் நான் நரகத்தின் வேதனையிலிருந்தும், சவக்குழியின் வேதனையிலிருந்தும், வாழ்வின் சோதனையிலிருந்தும் இறப்பின் சோதனையிலிருந்தும், (பெருங்குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலால் ஏற்படும் குழப்பத்தின் தீங்கிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் பல அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1031நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தொழுகையில் "அல்லாஹூம்ம இன்னீ அஊது பி(க்)க மின் அதாபில் கப்றி, வ அஊது பிக மின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜாலி, வ அஊது பிக மின் ஃபித்னத்தில் மஹ்யா வல் மமாத்தி, அல்லாஹூம்ம இன்னீ அஊது பிக்க மினல் மஃஸமி வல்மஃக்ரம்' (இறைவா! உன்னிடம் நான் சவக்குழியின் வேதனையிலிருந்து பாதுகாப்புக் கோருகிறேன். மஸீஹுத் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்து உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன். வாழ்வின் சோதனையிலிருந்தும் மரணத்தின் சோதனையிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! பாவத்திலிருந்தும் கடனிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்) என்று பிரார்த்திப்பார்கள். (இதைச் செவியுற்ற) ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம், "தாங்கள் கடன்படுவதிலிருந்து (இவ்வளவு) அதிகமாகப் பாதுகாப்புக் கோரக் காரணம் என்ன, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "மனிதன் கடன்படும்போது பொய் பேசுகிறான்; வாக்குறுதி அளித்துவிட்டு (அதற்கு) மாறு செய்கிறான்" என்று பதிலளித்தார்கள்.

1032அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் (தமது தொழுகையில்) கடைசி அத்தஹிய்யாத் ஓதியதும் நான்கு விஷயங்களிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரட்டும். (அவை:) நரகத்தின் வேதனை, சவக்குழியின் வேதனை, வாழ்வு மற்றும் இறப்பின் சோதனை, (பெருங் குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலின் தீங்கு ஆகியனவாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "உங்களில் ஒருவர் அத்தஹிய்யாத் ஓதியதும்...' எனும் வாசகமே இடம் பெற்றுள்ளது. "கடைசி அத்தஹிய்யாத்' எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

1033அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்லாஹூம்ம இன்னீ அஊது பி(க்)க மின் அதாபில் கப்றி, வ அதாபிந் நாரி, வ ஃபித்னத்தில் மஹ்யா வல் மமாத்தி, வ ஷர்ரில்

மஸீஹித் தஜ்ஜால்' (இறைவா! உன்னிடம் நான் சவக்குழியின் வேதனையிலிருந்தும், (நரக) நெருப்பின் வேதனையிலிருந்தும், வாழ்வின் சோதனையிலிருந்தும், இறப்பின் சோதனையிலிருந்தும், (பெருங்குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலின் தீங்கிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்) என்று பிரார்த்தித்தார்கள்.

1034அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். சவக்குழியின் வேதனையிலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். (பெருங் குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். வாழ்வின் சோதனையிலிருந்தும் இறப்பின் சோதனையிலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1035அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சவக்குழியின் வேதனையிலிருந்தும் நரகத்தின் வேதனையிலிருந்தும் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்தும் (இறைவனிடம்) பாதுகாப்புக் கோரிவந்தார்கள்.

1036இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களுக்குக் கீழ்க்காணும் பிரார்த்தனையைக் குர்ஆனின் அத்தியாயத்தைக் கற்றுத்தருவதைப் போன்று கற்றுத்தருவார்கள். "நீங்கள் "அல்லா ஹும்ம இன்னா நஊது பி(க்)க மின் அதாபி ஜஹன்னம, வ அஊது பி(க்)க மின் அதாபில் கப்றி, வ அஊது பி(க்)க மின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜாலி, வ அஊது பி(க்)க மின் ஃபித்னத்தில் மஹ்யா வல் மமாத்' (இறைவா, உன்னிடம் நாங்கள் நரகத்தின் வேதனையிலிருந்து பாதுகாப்புக் கோருகின்றோம். சவக்குழியின் வேதனையிலிருந்து பாதுகாப்புக் கோருகின்றேன். (பெருங்குழப்பவாதி) மஸீஹுத் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். வாழ்வின் சோதனையிலிருந்தும் இறப்பின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகின்றேன்) என்று பிரார்த்தியுங்கள்" என்று அவர்கள் கூறுவார்கள்.
முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் (ஆகிய நான்) கூறுகின்றேன்:
தாவூஸ் (ரஹ்) அவர்கள் தம் புதல்வரிடம், "உனது தொழுகையில் நீ இவ்வாறு பிரார்த்தித்தாயா?' என்று கேட்டார்கள். அதற்கு அவருடைய புதல்வர் "இல்லை' என்றார். அதற்கு தாவூஸ் (ரஹ்) அவர்கள் "தொழுகையை மீண்டும் தொழுவாயாக!' என்று கூறினார்கள் என எனக்குச் செய்தி எட்டியது. ஏனெனில், இதை தாவூஸ் (ரஹ்) அவர்கள் மூன்று அல்லது நான்கு அறிவிப்பாளர்களிடமிருந்து அறிவித்துள்ளார்கள்.

## பாடம் : 27 தொழுகைக்குப் பின் திக்ர் செய்வது விரும்பத்தக்கதாகும் என்பதும் அதன் முறை பற்றிய விவரமும்.

1037ஸவ்பான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்ததும் மூன்று முறை இறைவனிடம் பாவமன்னிப்பு (இஸ்தி்ஃக்பார்) கோரிவிட்டு, "அல்லாஹும்ம அன்த்தஸ் ஸலாம், வ மின்கஸ் ஸலாம். தபாரக்த தல் ஜலாலி வல் இக்ராம்' (இறைவா, நீ சாந்தியளிப்பவன். உன்னிடமிருந்தே சாந்தி ஏற்படுகிறது. வலிமையும் மேன்மையும் உடையவனே! நீ சுபிட்சமிக்கவன்) என்று கூறுவார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான வலீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) அவ்ஸாயீ (ரஹ்) அவர்களிடம், "எவ்வாறு பாவமன்னிப்புக் கோர வேண்டும்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அஸ்த்ஃக் ஃபிருல்லாஹ்; அஸ்த்ஃக்ஃபிருல்லாஹ் (நான் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருகிறேன்; நான் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருகிறேன்) என்று கூறுவீராக!" என்றார்கள்.

1038ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (தொழுகையில்) சலாம் கொடுத்து முடித்ததும் "அல்லாஹும்ம அன்த்தஸ் ஸலாம், வ மின்கஸ் ஸலாம். தபாரக்த தல் ஜலாலி வல் இக்ராம் (இறைவா, நீ சாந்தியளிப்பவன். உன்னிடமிருந்தே சாந்தி ஏற்படுகிறது. வலிமையும் மேன்மையும் உடையவனே! நீ சுபிட்சமிக்கவன்) என்று கூறும் அளவுக்குத்தான் அமர்ந்திருப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "யா தல் ஜலாலி வல் இக்ராம்' (வலிமையும் மேன்மையும் உடையவனே! நீ சுபிட்சமிக்கவன்) என்று ("யா' எனும் இடைச்சொல் கூடுதலாக) இடம் பெற்றுள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதிலும் "யா தல் ஜலாலி வல் இக்ராம்' (வலிமையும் மேன்மையும் உடையவனே!) எனும் வாசகமே இடம்பெற்றுள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும், அவற்றில் "யா தல் ஜலாலி வல் இக்ராம்' எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது.

1039முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அவர்களின் அடிமையான வர்ராத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள், முஆவியா பின் அபீசுஃப்யான் (ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதினார்கள். (அதில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்கள்:) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது முடித்தவுடன் (பின்வருமாறு) கூறுவார்கள்:

லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு, லா ஷரீக்க லஹு, லஹுல் முல்க்கு, வ லஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். அல்லாஹும்ம லா மானிஅ லிமா அஉதைத்த வலா முஉத்திய லிமா மனஉத்த. வலா யன்ஃபஉ தல்ஜத்தி மின்க்கல் ஜத்.
(பொருள்: அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவன் எவனுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. எல்லாப் புகழும் அவனுக்கே உரியது. அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன். இறைவா, நீ கொடுத்ததைத் தடுப்பவர் யாருமிலர். நீ தடுத்ததைக் கொடுப்பவர் யாருமிலர். எந்தச் செல்வரின் செல்வமும் அவருக்கு உன்னிடம் பயன் அளிக்காது.)
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், வர்ராத் (ரஹ்) அவர்கள் "முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் இதை எழுதுமாறு என்னிடம் கூறினார்கள். அதற்கேற்ப முஆவியா (ரலி) அவர்களுக்கு இதை நான் எழுதினேன் என்று கூறினார்கள்" என இடம் பெற்றுள்ளது.

-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் பின்வருமாறு காணப்படுகிறது: முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் முஆவியா (ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதினார்கள். (அதை வர்ராத் (ரஹ்) அவர்களே எழுதினார்கள்.) அதில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சலாம் கொடுத்தவுடன் மேற்கண்டபடி கூறுவார்கள். ஆனால், "வஹுவ அலா குல்லி ஷையின் கதீர்' (அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன்) எனும் வாசகம் இடம்பெறவில்லை.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களின் எழுத்தரான வர்ராத் (ரஹ்) அவர்கள் "முஆவியா (ரலி) அவர்கள்,முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களுக்கு (விளக்கம் கேட்டுக்) கடிதம் எழுதினார்கள்' என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

1040முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களின் எழுத்தரான வர்ராத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஆவியா (ரலி) அவர்கள், முஃகீரா (ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதி, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து தாங்கள் செவியேற்ற (ஹதீஸ்) ஒன்றை எனக்கு எழுதி அனுப்புங்கள் என்று குறிப்பிட்டிருந்தார்கள். அப்போது முஃகீரா (ரலி) அவர்கள் முஆவியா (ரலி) அவர்களுக்குப் பின்வருமாறு கடிதம் எழுதினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் "லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு, லா ஷரீக்க லஹு, லஹுல் முல்க்கு, வ லஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். அல்லாஹும்ம லா மானிஅ லிமா அஉதைத்த வ லா முஉத்திய லிமா மனஉத்த. வலா யன்ஃபஉ தல்ஜத்தி மின்க்கல் ஜத்' என்று கூறுவதை நான் செவியேற்றுள்ளேன்.
(பொருள்: அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவன் எவனுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது .எல்லாப் புகழும் அவனுக்கே உரியது. அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன். இறைவா, நீ

கொடுத்ததைத் தடுப்பவர் யாருமிலர். நீ தடுத்ததைக் கொடுப்பவர் யாருமிலர். எந்தச் செல்வரின் செல்வமும் அவருக்கு உன்னிடம் பயன் அளிக்காது).
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1041அபுஸ்ஸுபைர் அல்மக்கீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் சலாம் கொடுத்தவுடன் "லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்க லஹு, லஹுல் முல்க்கு, வ லஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ். லா இலாஹ இல்லல்லாஹு, வ லா நஅபுது இல்லா இய்யாஹு லஹுந் நிஅமத்து வ லஹுல் ஃபள்லு. வ லஹுஸ் ஸனாஉல் ஹசனு. லா இலாஹ இல்லல்லாஹு முக்லிஸீன லஹுத்தீன வலவ் கரிஹல் காஃபிரூன்' (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவன் எவனுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. எல்லாப் புகழும் அவனுக்கே உரியது. அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன். அல்லாஹ்வின் உதவியின்றி பாவங்களிலிருந்து விலகிச் செல்லவோ, நல்லறங்கள் புரிய வலிமை பெறவோ (எவராலும்) இயலாது. அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. அவனைத் தவிர வேறெவரையும் நாங்கள் வழிபடமாட்டோம். அருட்கொடைகள் அவனுக்கே உரியன. மாட்சிமை அவனுக்கே உரியது. அழகிய கீர்த்தியும் அவனுக்கே உரியது. அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. வழிபாட்டை முற்றிலும் அவனுக்கே உரித்தாக்குகிறோம் (அவனது திருப்திக்காகவே அனைத்து அறங்களையும் செய்கிறோம்); இறைமறுப்பாளர்கள் வெறுத்தாலும் சரியே) என்று கூறுவார்கள். மேலும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் இந்த திக்ருகளை ஓதிவந்தார்கள்" என்றும் கூறினார்கள்.

1042ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள், "அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் (மேற்கண்டவாறு) திக்ர் செய்வார்கள்' என்று அறிவித்துவிட்டு, பிறகு இறுதியாக "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் இந்த திக்ருகளைக் கூறுவார்கள்" என்று கூறினார்கள் என்றும் தெரிவித்தார்கள்.
-அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் இந்தச் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது நின்று உரையாற்றும்போது, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தொழுகை' அலலது "தொழுகைகளுக்கு'ப் பின் சலாம் கொடுத்தவுடன் மேற்கண்டவாறு கூறுவார்கள்" எனக் குறிப்பிட்டார்கள்.

1043மேற்கண்ட ஹதீஸ் அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதன் இறுதியிலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறித்து இப்னுஸ் ஸுபைர் (ரலி) அவர்கள் அவ்வாறு கூறியதாக இடம்பெற்றுள்ளது.

1044அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஏழை முஹாஜிர்கள் (சிலர்) வந்து, "செல்வச் சீமான்கள் (மறுமையின்) உயர் பதவிகளையும் நிலையான இன்பங்களையும் (தட்டிக்) கொண்டு போய்விடுகின்றனர்" என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அது எவ்வாறு?" என்று கேட்டார்கள். அவர்கள், "(ஏழைகளாகிய) நாங்கள் தொழுவதைப் போன்றே அவர்களும் தொழுகின்றனர். நாங்கள் நோன்பு நோற்பதைப் போன்றே அவர்களும் நோன்பு நோற்கின்றனர். ஆனால், அவர்கள் தானதர்மங்கள் செய்கின்றனர். நாங்கள் (அவ்வாறு) தானதர்மங்கள் செய்(ய முடி)வதில்லை. அவர்கள் அடிமைகளை விடுதலை செய்கின்றனர். நாங்கள் (அவ்வாறு) அடிமைகளை விடுதலை செய்(ய இயல்)வதில்லை" என்று கூறினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் ஒன்றை உங்களுக்கு அறிவிக்கட்டுமா! (அதை நீங்கள் செயல்படுத்திவந்தால் இந்தச் சமுதாயத்தில்) உங்களை முந்தி விட்டவர்களையும் உங்களுக்குப் பின்னால் வருபவர்களையும் நீங்கள் எட்டிவிடுவீர்கள். உங்களைவிட வேறெவரும் சிறந்தவர்களாக ஆகிவிட முடியாது; உங்களைப் போன்று அவர்களும் செயல்படுத்தினால் தவிர" என்று கூறினார்கள். முஹாஜிர்கள், "ஆம் (அறிவியுங்கள்) அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அது யாதெனில்) நீங்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் "சுப்ஹானல்லாஹ்' (அல்லாஹ் தூயவன்) என்றும், "அல்லாஹு அக்பர்' (அல்லாஹ் மிகப்பெரியவன்) என்றும், "அல்ஹம்து லில்லாஹ்' (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்றும் (மூன்றையும் சேர்த்து) முப்பத்து மூன்று முறை கூறுங்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ சாலிஹ் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
பிறகு அந்த ஏழை முஹாஜிர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் திரும்பிவந்து "செல்வச் சீமான்களான எங்கள் சகோதரர்கள் நாங்கள் செய்துவருவதைக் கேள்விப்பட்டு அவ்வாறே அவர்களும் செய்துவருகின்றனர்" என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இது அல்லாஹ்வின் அருட்கொடை. அவன் நாடியவர்களுக்கு அதை வழங்குகிறான்" என்று சொன்னார்கள்.
குதைபா (ரஹ்) அவர்கள் அல்லாத மற்றவர்களின் அறிவிப்பில் சுமய்யு (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள் என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது:
நான் இந்த ஹதீஸை என் குடும்பத்தாரில் ஒருவரிடம் அறிவித்தேன். அவர் "நீர் கூறுவது தவறு. அபூசாலிஹ் (ரஹ்) அவர்கள் "முப்பத்து மூன்று முறை சுப்ஹானல்லாஹ் என்றும், முப்பத்து மூன்று முறை அல்ஹம்து லில்லாஹ் என்றும், முப்பத்து மூன்று முறை அல்லாஹு அக்பர் என்றும் கூறுவீராக!' என்றே கூறினார்கள்" என்றார். உடனே நான் அபூசாலிஹ் (ரஹ்) அவர்களிடம் சென்று இது பற்றித் தெரிவித்தேன். உடனே அவர்கள் எனது கையைப் பிடித்தவாறு "அல்லாஹு அக்பர் வ சுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி, அல்லாஹுஅக்பர் வ சுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி என்று அனைத்தும் சேர்த்து முப்பத்து மூன்று முறை எட்டும் அளவுக்குக் கூறுவீராக!" என்றார்கள்.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு அஜ்லான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இந்த ஹதீஸை நான் ரஜாஉ பின் ஹய்வா (ரஹ்) அவர்களிடம் தெரிவித்தேன். அவர்களும் அபூசாலிஹ் (ரஹ்) அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வழியாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்ததைப் போன்றே எனக்கு அறிவித்தார்கள்.

1045மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும், இந்த அறிவிப்பில் அபூசாலிஹ் (ரலி) அவர்கள் கூறிய "பிறகு ஏழை முஹாஜிர்கள் திரும்பிவந்தனர்..." எனும் வாசகம் இடைச்சேர்ப்பாக இணைக்கப்பட்டுள்ளது.
மேலும், சுஹைல் (ரஹ்) அவர்கள் "(சுப்ஹானல்லாஹ், அல்ஹம்து லில்லாஹ், அல்லாஹு அக்பர் ஆகிய ஒவ்வொன்றையும்) பதினோரு முறை பதினோரு முறை கூறுங்கள். ஆக மொத்தம் இவை யாவும் சேர்ந்து முப்பத்து மூன்று முறையாகும்" என்று அறிவித்தார்கள் என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

1046அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகைக்குப் பின் ஓதப்படும் சில துதிச்சொற்கள் உள்ளன. அவற்றைக் கடமையான ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் ஓதி வருபவர் நட்டமடையமாட்டார். (அவை:) முப்பத்து மூன்று முறை சுப்ஹானல்லாஹ் என்றும் முப்பத்து மூன்று முறை அல்ஹம்து லில்லாஹ் என்றும் முப்பத்து நான்கு முறை அல்லாஹு அக்பர் என்றும் கூறுவதாகும்.
இதைக் கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1047அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகைக்குப் பின் ஓதப்படும் சில துதிச்சொற்கள் உள்ளன. அவற்றை ஓதிவருபவர் நட்டமடையமாட்டார். (அவை:) ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் முப்பத்து மூன்று முறை சுப்ஹானல்லாஹ் என்றும் முப்பத்து மூன்று முறை அல்ஹம்து லில்லாஹ் என்றும் முப்பத்து நான்கு முறை அல்லாஹு அக்பர் என்றும் கூறுவதாகும்.
இதைக் கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1048அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் முப்பத்து மூன்று முறை சுப்ஹானல்லாஹ் என்றும், முப்பத்து மூன்று முறை அல்ஹம்து லில்லாஹ் என்றும், முப்பத்து மூன்று முறை அல்லாஹு அக்பர் என்றும் ஆக மொத்தம் தொன்னூற்று ஒன்பது முறை கூறி, இறுதியில் நூறாவது முறையாக "லா இலாஹ இல்லல்லாஹு, வஹ்தஹு, லா ஷரீக்க லஹு, லஹுல் முல்க்கு, வ லஹுல் ஹம்து. வஹுவ அலா குல்லி ஷையின் கதீர்' (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவன் எவனுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. எல்லாப் புகழும் அவனுக்கே உரியது. அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன்) என்று நிறைவு செய்கிறாரோ அவருடைய (சிறு) பாவங்கள் யாவும் மன்னிக்கப்படுகின்றன. அவை கடலின் நுரையளவு இருந்தாலும் சரியே!

-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 28 (தொழுகையில்) ஆரம்பத் தக்பீருக்கும் குர்ஆன் ஓதுவதற்கும் இடையே ஓதப்படும் பிரார்த்தனை.**

1049அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையில் (ஆரம்ப) தக்பீர் கூறி, குர்ஆன் வசனங்களை (கிராஅத்) ஓதுவதற்கு முன் சிறிது நேரம் மௌனமாக இருப்பார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தையும்,என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். தக்பீருக்கும் கிராஅத்துக்குமிடையே நீங்கள் மௌனமாக இருக்கும்போது என்ன கூறுவீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் "அல்லாஹும்ம பாஇத் பைனீ வ பைன கத்தாயாய கமா பாஅத்த பைனல் மஷ்ரிக்கி வல்மஃக்ரிப். அல்லாஹும்ம நக்கினீ மின் கத்தாயாய கமா யுனக்கஸ் ஸவ்புல் அப்யளு மினத் தனஸ். அல்லாஹும்மஃக்ஸில்னீ மின் கத்தாயாய பிஸ்ஸல்ஜி வல்மாயி வல்பரத்' என்று கூறுவேன்"என்று பதிலளித்தார்கள் .
(பொருள்: இறைவா, கிழக்குக்கும் மேற்குக்கும் இடையே நீ ஏற்படுத்திய தூரத்தைப் போன்று எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ தூரத்தை ஏற்படுத்துவாயாக! இறைவா! வெண்மையான ஆடை, அழுக்கிலிருந்து தூய்மைப்படுத்தப்படுவதைப் போன்று என் தவறுகளைவிட்டு என்னைத் தூய்மைப்படுத்துவாயாக! பனிக்கட்டியாலும் தண்ணீராலும் ஆலங்கட்டியாலும் என்னிலிருந்து என் தவறுகளைக் கழுவுவாயாக!)
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1050அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரண்டாவது ரக்அத்திலிருந்து (மூன்றாவது ரக்அத்திற்கு) எழும்போது "அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்' என்று (உடனே) கிராஅத்தைத் தொடங்கி விடுவார்கள்; (சிறிது நேரம்) மௌனமாக இருக்கமாட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1051அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் மூச்சிறைக்க (விரைந்து) வந்து தொழுகை வரிசையில் சேர்ந்து, "அல்ஹம்து லில்லாஹி ஹம்தன் கஸீரன் தய்யிபன் முபாரக்கன் ஃபீஹி' (தூய்மையும் வளமும் வாய்ந்த அதிகமான புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியது) என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்ததும் "உங்களில் இவ்வார்த்தைகளை மொழிந்தவர் யார்?" என்று கேட்டார்கள். மக்கள் (பதிலளிக்காமல்) அமைதியாக இருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மீண்டும்), "உங்களில் இதை மொழிந்தவர் யார்? ஏனெனில், அவர் தவறாக ஏதும் சொல்லவில்லை" என்று கூறினார்கள். உடனே அந்த மனிதர் "நான் மூச்சிறைக்க வந்து தொழுகையில் சேர்ந்தேன். ஆகவே, இவ்வாறு சொன்னேன்" என்று பதிலளித்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பன்னிரண்டு வானவர்கள் தமக்கிடையே "இதை எடுத்துச் செல்பவர் யார்' எனும் விஷயத்தில் போட்டியிட்டுக் கொண்டிருந்ததை நான் கண்டேன்" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1052இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழுதுகொண்டிருந்தோம். அப்போது மக்களில் ஒருவர் "அல்லாஹு அக்பர் கபீரா, வல்ஹம்து லில்லாஹி கஸீரா, வ சுப்ஹானல்லாஹி புக்ரத்தவ் வ அஸீலா' (அல்லாஹ் மிகப் பெரியவன் என்று பெருமைப்படுத்துகிறேன். எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது என்று அதிகமாகப் போற்றுகிறேன். அல்லாஹ் பரிசுத்தமானவன் என்று காலையிலும் மாலையிலும் அவனைத் துதிக்கிறேன்) என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இன்ன இன்ன வார்த்தைகளை மொழிந்தவர் யார்?" என்று கேட்டார்கள். அப்போது மக்களில் ஒருவர், "நான்தான் அல்லாஹ்வின் தூதரே!' என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் இதைக் கேட்டு வியப்புற்றேன். இதற்காக வானத்தின் வாசல்கள் திறக்கப்பட்டன" என்று கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறக் கேட்டதிலிருந்து நான் அதைக் கூறாமல் இருந்ததில்லை.

## பாடம் : 29 கண்ணியமாகவும் நிதானமாகவும் தொழுகைக்குச் செல்வது விரும்பத் தக்கதாகும்; தொழுகைக்காக ஓடிச் செல்லலாகாது.

1053அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டால் தொழுகைக்கு ஓடிச்செல்லாதீர்கள்; நடந்தே செல்லுங்கள்; நிதானத்தைக் கடைப்பிடியுங்கள். உங்களுக்குக் கிடைத்த (ரக்அத்)தை (இமாமுடன்) தொழுங்கள்; தவறிப்போனதை (பின்னர் எழுந்து) நிறைவு செய்துகொள்ளுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1054அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டால் தொழுகைக்கு ஓடிச்செல்லாதீர்கள்; நிதானத்தைக் கடைப்பிடித்தவாறு (மெதுவாகச்) செல்லுங்கள். உங்களுக்குக் கிடைத்த (ரக்அத்)தை (இமாமுடன்) தொழுங்கள்; தவறிப்போனதை (பின்னர் எழுந்து) நிறைவு செய்துகொள்ளுங்கள். ஏனெனில், உங்களில் ஒருவர் தொழுகையை நாடிச் செல்லும் போது அவர் தொழுகையில் இருப்பதாகவே கருதப்படுகிறார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1055ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் இதுவும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: தொழுகைக்காக அழைப்பு (இகாமத்) விடுக்கப்பட்டால் நீங்கள் நடந்தே செல்லுங்கள்; நிதானத்தைக் கடைப்பிடியுங்கள்.

உங்களுக்குக் கிடைத்த (ரக்அத்)தைத் (இமாமுடன்) தொழுங்கள்;தவறிப்போனதை (பின்னர் எழுந்து) நிறைவு செய்துகொள்ளுங்கள்.

1056அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டால் தொழுகையை நோக்கி உங்களில் ஒருவர் ஓடிச்செல்ல வேண்டாம். மாறாக, அவர் நிதானத்தையும் கண்ணியத்தையும் மேற்கொண்டு, நடந்தே செல்லட்டும். உங்களுக்குக் கிடைத்த (ரக்அத்)தை (இமாமுடன்) தொழுது கொள்ளுங்கள்; விடுபட்டதைப் பின்னர் (எழுந்து) நிறைவேற்றிக்கொள்ளுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1057அபூகத்தாதா ஹாரிஸ் பின் ரிப்ஈ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழுது கொண்டிருந்தோம். அப்போது (சிலர் வேகமாக வரும்) காலடி ஓசையை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். பின்னர் (தொழுது முடித்ததும்), "உங்களுக்கு என்ன நேர்ந்தது? (ஏன் சலசலப்பு எழுந்தது?)" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "தொழுகையில் வந்து சேர்வதற்காக நாங்கள் விரைந்து வந்தோம்" என்று பதிலளித்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவ்வாறு செய்யாதீர்கள். தொழுகைக்கு வரும்போது நிதானத்தைக் கடைப்பிடியுங்கள். உங்களுக்குக் கிடைத்த (ரக்அத்)தை (இமாமுடன்) தொழுது கொள்ளுங்கள். தவறிப்போனதை (தொழுகை முடிந்ததும் எழுந்து) நிறைவு செய்து கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 30 (கூட்டுத்) தொழுகைக்காக மக்கள் எப்போது எழுந்து நிற்க வேண்டும்?

1058அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டால் என்னை நீங்கள் பார்க்காதவரை எழுந்திருக்க வேண்டாம்.
இதை அபூகத்தாதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், முஹம்மத் பின் ஹாத்திம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இகாமத் சொல்லப்பட்டுவிட்டால்' அல்லது "(தொழுகைக்காக) அழைப்பு விடுக்கப்பட்டால்' என்று (ஐயப்பாட்டுடன்) இடம்பெற்றுள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் பல அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நான் புறப்பட்டு வருவதை நீங்கள் பார்க்காதவரை' என்ற வாசகம் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

1059அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டது. உடனே நாங்கள் எழுந்து நின்றோம்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வருவதற்கு முன்பே

தொழுகை வரிசைகளை சீராக்கினோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்து தாம் தொழும் இடத்தில் போய் நின்றார்கள். முதல் தக்பீர் (தக்பீர் தஹ்ரீம்) சொல்வதற்கு முன் (தாம் பெருந்துடக்குடன் இருப்பது) அவர்களுக்கு நினைவுக்கு வரவே எங்களிடம், "உங்கள் இடத்திலேயே நில்லுங்கள்'என்று கூறிவிட்டுத் (தமது இல்லத்திற்குத்) திரும்பிச் சென்றுவிட்டார்கள். அவர்கள் வரும்வரை நாங்கள் அவர்களை எதிர்பார்த்து நின்றுகொண்டிருந்தோம். பிறகு அவர்கள் குளித்துவிட்டுத் தமது தலையிலிருந்து தண்ணீர் சொட்டச் சொட்ட எங்களிடம் வந்தார்கள். தக்பீர் சொல்லி எங்களுக்குத் தொழுகை நடத்தினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1060அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டது; மக்கள் தம் தொழுகை வரிசைகளில் நின்றார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டுவந்து தமது (தொழும்) இடத்தில் நின்றார்கள். (பிறகு தாம் பெருந்துடக்குடன் இருப்பது அவர்களுக்கு நினைவுக்கு வரவே) "அப்படியே இருங்கள்' என்று மக்களை நோக்கிச் சைகை செய்தார்கள். பிறகு (தமது இல்லத்திற்குச் சென்று) குளித்து விட்டுத் தமது தலையிலிருந்து தண்ணீர் சொட்டச் சொட்ட புறப்பட்டு வந்து மக்களுக்குத் தொழுவித்தார்கள்.

1061அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது இடத்தில் வந்து நிற்பதற்கு முன்பே தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டுவிடும்; மக்கள் தொழுகை வரிசையில் இடம் பிடித்தும் இருப்பார்கள்.

1062ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
பிலால் (ரலி) அவர்கள் சூரியன் உச்சி சாயும் போது (லுஹர் தொழுகைக்காக) அறிவிப்புச் செய்வார்கள். நபி (ஸல்) அவர்கள் புறப்பட்டு வராதவரை இகாமத் சொல்லமாட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் புறப்பட்டுவருவதைக் காணும்போதே தொழுகைக்காக இகாமத் சொல்வார்கள்.

**பாடம் : 31 தொழுகையில் ஒரு ரக்அத்தை (அதற்குரிய நேரத்தில்) அடைந்துகொண்டவர் அந்தத் தொழுகையையே அடைந்துகொண்டவராவார்.**

1063நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகையில் ஒரு ரக்அத்தை (அதற்குரிய நேரத்தில்) அடைந்துகொண்டவர் அந்தத் தொழுகையையே அடைந்துகொண்டவராவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1064அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் தொழுகையில் ஒரு ரக்அத்தை இமாமுடன் அடைந்துகொண்டாரோ அவர் அந்தத் தொழுகையையே (ஜமாஅத்துடன்) அடைந்துகொண்டவராவார்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், எதிலும் "இமாமுடன்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை. உபைதுல்லாஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர் அந்தத் தொழுகை முழுவதையும் அடைந்துகொண்ட வராவார்" என்று இடம்பெற்றுள்ளது.

1065அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சூரியன் உதிப்பதற்கு முன் சுப்ஹுத் தொழுகையின் ஒரு ரக்அத்தை அடைந்து கொண்டவர், சுப்ஹுத் தொழுகையை (முழுமையாக) அடைந்துகொண்டவராவார். சூரியன் மறைவதற்கு முன் அஸ்ர் தொழுகையின் ஒரு ரக்அத்தை அடைந்துகொண்டவர் அஸ்ர் தொழுகையை (முழுமையாக) அடைந்து கொண்டவராவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது .

1066அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சூரியன் மறைவதற்கு முன் அஸ்ர் தொழுகையில் ஒரு "சஜ்தா'வை, அல்லது சூரியன் உதிப்பதற்கு முன் சுப்ஹுத் தொழுகையில் ஒரு "சஜ்தா'வை அடைந்துகொண்டவர் அந்தத் தொழுகையை (முழுமையாக) அடைந்து கொண்டவராவார்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதில் இடம்பெற்றுள்ள "சஜ்தா' என்பதற்கு "ரக்அத்' என்று பொருள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1067அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சூரியன் மறைவதற்கு முன் அஸ்ர் தொழுகையில் ஒரு ரக்அத்தை அடைந்துகொண்டவர், (அந்தத் தொழுகையையே) அடைந்துகொண்டுவிட்டார். சூரியன் உதிப்பதற்கு முன் ஃபஜ்ர் தொழுகையில் ஒரு ரக்அத்தை அடைந்து கொண்டவர், (அந்தத் தொழுகையையே) அடைந்து கொண்டுவிட்டார் .
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 32 ஐவேளைத் தொழுகை நேரங்கள்.

1068இப்னு ஷிஹாப் முஹம்மத் பின் முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(வலீத் பின் அப்தில் மலிக் ஆட்சியில் மதீனாவின் ஆளுநராயிருந்த) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் (ஒரு நாள்) அஸ்ர் தொழுகையைச் சிறிது நேரம் தாமதப்படுத்தினார்கள். அப்போது அவர்களிடம் உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள், "(வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் (தொழுகை கடமையான "மிஅராஜ்' இரவுக்கு மறுநாள்) இறங்கி,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இமாமாக (நின்று) தொழுவித்தார்கள்.

(அப்போது அஸ்ர் தொழுகையை இதற்கு முந்தியே தொழுதார்கள்)" என்று கூறினார்கள். அதற்கு உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள், "நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்பதைப் புரிந்துகொள்ளுங்கள், உர்வா!" என்று சொன்னார்கள். அதற்கு உர்வா (ரஹ்) அவர்கள் கூறினர்கள்:
பஷீர் பின் அபீமஸ்ஊத் (ரஹ்) அவர்கள் அபூமஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்து பின்வருமாறு கூறியதை நான் கேட்டுள்ளேன்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(வானவர்) ஜிப்ரீல் (ஒரு நாள்) இறங்கிவந்து, எனக்குத் தலைமை தாங்கித் தொழுவித்தார்கள். அவர்களுடன் நான் தொழுதேன். பிறகும் அவர்களுடன் தொழுதேன். பிறகும் அவர்களுடன் தொழுதேன். பிறகும் அவர்களுடன் தொழுதேன். பிறகும் அவர்களுடன் தொழுதேன்" என்று சொல்லி, ஐந்து (நேரத்) தொழுகைகளைத் தம் விரல்களால் எண்ணிக் காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1069இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் (அஸ்ர்) தொழுகையைத் தாமதப் படுத்தினார்கள். அப்போது அவர்களிடம் வந்த உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் (பின்வருமாறு) தெரிவித்தார்கள்:
(கூஃபா நகரின் ஆளுநராயிருந்த) முஃகீரா பின் ஷுஅபா (ரஹ்) அவர்கள் ஒரு நாள் (அஸ்ர்) தொழுகையைத் தாமதப்படுத்தினார்கள். அப்போது அங்கு வந்த அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) அவர்கள், "ஏன் இவ்வாறு (தாமதப்படுத்தினீர்கள்), முஃகீரா? (தொழுகை கடமையாக்கப் பட்ட மிஅராஜ் இரவுக்கு மறுநாள்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் இறங்கித் தொழு(வித்)தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் தொழுதார்கள். பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் தொழுதார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் தொழுதார்கள். பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் தொழுதார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் தொழுதார்கள். பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் தொழுதார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் தொழுதார்கள். மீண்டும் ஜிப்ரீல் (அலை) அவர்கள் தொழுதார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் தொழுதார்கள். (ஐவேளைத் தொழுகையை முடித்த) பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் "இவ்வாறே நான் (உங்களுக்குச் செய்து காட்டுமாறு) பணிக்கப்பட்டேன்'என்று கூறியதையெல்லாம் நீங்கள் அறிந்திருக்க வில்லையா, என்ன?" என்று கேட்டார்கள்.
அதற்கு உர்வா (ரஹ்) அவர்களிடம் உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள், "நீங்கள் என்ன அறிவிக்கிறீர்கள் என்பதை (நன்கு) கவனியுங்கள், உர்வா! ஜிப்ரீல் (அலை) அவர்கள் தாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குத் தொழுகை நேரத்தைக் காட்டினார்களா?" என்று கேட்டார்கள். அதற்கு உர்வா (ரஹ்) அவர்கள், "(ஆம்) இவ்வாறுதான் பஷீர் பின் அபீமஸ்ஊத் (ரஹ்) அவர்கள் தம் தந்தை அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்" என்றார்கள்.

1070நபி (ஸல்) அவர்களுடைய துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எனது அறையிலிருந்து சூரிய ஒளி (முற்றாக) அகலாத நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகையைத் தொழுவார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது:
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: சூரிய ஒளி எனது அறைக்குள் விழுந்து கொண்டும் நிழல் இன்னும் (கிழக்குப்புறச் சுவரில்) விழாமலும் உள்ள நிலையில் நபி (ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுவார்கள்.
அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நிழல் இன்னும் (கிழக்குப் புறச் சுவரில்) தெரியாத நிலையில்' என்று இடம் பெற்றுள்ளது.

1071நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், சூரிய ஒளி எனது அறைக்குள் இருந்துகொண்டிருக்க, அஸ்ர் தொழுகையைத் தொழுவார்கள்; அப்போது எனது அறையில் நிழல் படிந்திருக்காது.

1072ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது
சூரிய ஒளி எனது அறைக்குள் இருந்துகொண்டிருக்க, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகையைத் தொழுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1073நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் ஃபஜ்ர் (அதிகாலைத் தொழுகை) தொழ விரும்பினால், அதன் நேரம் சூரியனின் மேற்பகுதி வெளிப்படும்வரை உள்ளது. பின்னர் நீங்கள் லுஹ்ர் (மதியத் தொழுகை) தொழ விரும்பினால், அதன் நேரம் (நண் பகலிலிருந்து) அஸ்ர் (மாலைத் தொழுகையின்) நேரம் வரும்வரை உள்ளது. பின்னர் நீங்கள் அஸ்ர் தொழ விரும்பினால், அதன் நேரம் சூரியன் பொன்னிறமாகும்வரை உள்ளது. பின்னர் நீங்கள் மஃக்ரிப் (அஸ்தமன நேரத் தொழுகை) தொழ விரும்பினால், அதன் நேரம் (அஸ்தமனத்திலிருந்து) செம்மேகம் மறையும்வரை உள்ளது. பின்னர் நீங்கள் இஷா (இரவு நேரத் தொழுகை), தொழ விரும்பினால் அதன் நேரம் (செம்மேகம் மறைந்ததிலிருந்து) நள்ளிரவுவரை உள்ளது.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1074நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
லுஹ்ர் தொழுகையின் நேரம் அஸ்ர் நேரம் வரும்வரை உள்ளது. அஸ்ர் தொழுகையின் நேரம் சூரியன் பொன்னிறமாவதற்கு முன்புவரை உள்ளது. மஃக்ரிப் தொழுகையின் நேரம் செம்மேகம் பரவி மறைவதற்கு முன்புவரை உள்ளது. இஷாத் தொழுகையின் நேரம் நள்ளிரவுவரை உள்ளது. ஃபஜ்ர் தொழுகையின் நேரம் சூரியன் உதயமாவதற்கு முன்புவரை உள்ளது.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் கூறியதாகவும், இரண்டு தடவை அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளதாக ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

1075அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
லுஹ்ர் தொழுகையின் நேரம், சூரியன் உச்சி சாய்ந்ததிலிருந்து ஒரு மனிதனின் நிழல் அவனது உயரம் அளவுக்கு(ச் சமமாக) ஆகி, அஸ்ர் நேரத்திற்கு முன்புவரை உள்ளது. அஸ்ர் தொழுகையின் நேரம் சூரியன் பொன்னிறமாவதற்கு முன்புவரை உள்ளது. மஃக்ரிப் தொழுகையின் நேரம் செம்மேகம் மறைவதற்கு முன்புவரை உள்ளது. இஷாத் தொழுகையின் நேரம் நள்ளிரவு வரை உள்ளது. சுப்ஹுத் தொழுகையின் நேரம் வைகறை நேரம் ஆரம்பமானதிலிருந்து சூரியன் உதயமாவதற்கு முன்புவரை உள்ளது. சூரியன் உதித்துவிட்டால் தொழுவதை நிறுத்திக் கொள்ளுங்கள். ஏனெனில், ஷைத்தானின் இரு கொம்புகளுக்கிடையேதான் அது உதயமாகிறது.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1076அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தொழுகை நேரங்கள் குறித்து வினவப்பட்டது. அப்போது அவர்கள், "ஃபஜ்ர் தொழுகையின் நேரம் சூரியனின் மேற்புற விளிம்பு வெளிப்படுவதற்கு முன்புவரை உள்ளது. லுஹ்ர் தொழுகையின் நேரம் சூரியன் நடுவானிலிருந்து சாய்ந்தது முதல் அஸ்ர் நேரம் வருவதற்கு முன்புவரை உள்ளது. அஸ்ர் தொழுகையின் நேரம் சூரியன் பொன்னிறமாகி அதன் விளிம்பு மறைவதற்கு முன்புவரை உள்ளது. மஃக்ரிப் தொழுகையின் நேரம், சூரியன் மறைந்தது முதல் செம்மேகம் மறைவதற்கு முன்புவரை உள்ளது. இஷாத் தொழுகையின் நேரம் நள்ளிரவுவரை உள்ளது" என்று விடையளித்தார்கள்.

1077அப்துல்லாஹ் பின் யஹ்யா பின் அபீகஸீர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என் தந்தை யஹ்யா பின் அபீகஸீர் (ரஹ்) அவர்கள், "உடல் சுகத்(தைத் தேடுவ)தினால் கல்வியை அடைய முடியாது"என்று கூறினார்கள்.

1078புரைதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் தொழுகையின் நேரம் குறித்துக் கேட்டார். அவரிடம் நபி (ஸல்) அவர்கள், "நம்முடன் இவ்விரு நாட்கள் தொழுங்கள்!" என்று கூறினார்கள். (அன்றைய தினம்) சூரியன் உச்சியிலிருந்து சாய்ந்தபோது, பிலால் (ரலி) அவர்களிடம் பாங்கு(ம் பிறகு இகாமத்தும்) சொல்லுமாறு உத்தரவிட பிலால் (ரலி) அவர்கள் லுஹ்ர் தொழுகைக்காக இகாமத் சொன்னார்கள். பிறகு பிலால் (ரலி) அவர்களிடம் (அஸ்ர் தொழுகைக்காக பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட, பிலால் (ரலி) அவர்கள் அஸ்ர் தொழுகைக்காக இகாமத் சொன்னார்கள். அப்போது சூரியன் ஒளிமிக்கதாகவும் தெளிவாகவும் (வானில்) தெரிந்தது. பிறகு பிலால் (ரலி) அவர்களிடம் (மஃக்ரிப் தொழுகைக்காக பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட, பிலால் (ரலி) அவர்கள் சூரியன் மறையும்போது மஃக்ரிப் தொழுகைக்காக இகாமத் சொன்னார்கள்.

பிறகு பிலால் (ரலி) அவர்களிடம் (இஷாத் தொழுகைக்காக பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட, பிலால் (ரலி) அவர்கள் செம்மேகம் மறையும்போது இஷாத் தொழுகைக்காக இகாமத் சொன்னார்கள். பிறகு பிலால் (ரலி) அவர்களிடம் (ஃபஜ்ர் தொழுகைக்காக பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட பிலால் (ரலி) அவர்கள் வைகறை புலரும்போது ஃபஜ்ர் தொழுகைக்காக இகாமத் சொன்னார்கள்.

இரண்டாம் நாள் நபி (ஸல்) அவர்கள் பிலால் (ரலி) அவர்களிடம் வெப்பம் தணிந்த பின் லுஹ்ர் தொழுகைக்கு (பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட, பிலால் (ரலி) அவர்கள் வெப்பம் தணிந்த பின், நன்கு வெப்பம் குறைந்திருந்த வேளையில் இகாமத் சொன்னார்கள். பின்னர் சூரியன் உயர்ந்திருக்கவே அஸ்ர் தொழுதார்கள். முந்திய நாளைவிடச் சிறிது நேரம் தாமதப்படுத்தினார்கள். செம்மேகம் மறைவதற்கு முன் மஃக்ரிப் தொழுதார்கள். இரவின் மூன்றில் ஒரு பகுதி சென்ற பின் இஷாத் தொழுதார்கள். நன்கு வெளிச்சம் வந்த பின் (சூரிய உதயத்துக்கு முன்) ஃபஜ்ர் தொழுதார்கள். பிறகு "தொழுகை நேரம் குறித்து என்னிடம் வினவியவர் எங்கே?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், "நான் (இதோ இருக்கிறேன்), அல்லாஹ்வின் தூதரே!" என்றார். நபி (ஸல்) அவர்கள் "நீங்கள் (இரு தினங்களாகக்) கண்ட நேரங்களுக்கு இடைப்பட்ட நேரம்தான் உங்கள் (ஐவேளைத்) தொழுகையின் நேரமாகும்" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1079புரைதா (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து தொழுகை நேரங்கள் குறித்து வினவினார். (அவரிடம்) நபி (ஸல்) அவர்கள், "நம்முடன் தொழுகையில் கலந்துகொள்வீராக!" என்று கூறினார்கள். இதையடுத்து நபி (ஸல்) அவர்கள் பிலால் (ரலி) அவர்களிடம் (இருட்டு இருக்கும்போதே சுப்ஹுத் தொழுகைக்காக பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட பிலால் (ரலி) அவர்கள் இருட்டு இருக்கும்போதே (சுப்ஹுத் தொழுகைக்காக) பாங்கு சொன்னார்கள். வைகறை உதயமாகும் போது நபி (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுதார்கள். பிறகு சூரியன் நடுவானிலிருந்து சாய்ந்தபோது லுஹ்ர் தொழுகைக்காக (பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட்டார்கள். பின்னர் சூரியன் உயர்ந்திருக்கும்போதே அஸ்ர் தொழுகைக்காக (பாங்கும் இகாமத்தும் சொல்லுமாறு) பிலால் (ரலி) அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள். பிறகு சூரியன் மறைந்தபோது மஃக்ரிப் தொழுகைக்காக (பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட்டார்கள். பிறகு செம்மேகம் மறைந்ததும் இஷாத் தொழுகைக்காக (பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட்டார்கள்.

மறுநாள் பிலால் (ரலி) அவர்களிடம் (சுப்ஹுத் தொழுகைக்காக பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட்டு வெளிச்சம் வந்த பின் சுப்ஹுத் தொழுதார்கள். பிறகு லுஹ்ர் தொழுகைக்கு (வெப்பம் தணிந்த பின் பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட்டு வெப்பம் தணிந்த பின் தொழுதார்கள். பிறகு பிலால் (ரலி) அவர்களிடம் அஸ்ர் தொழுகைக்காக (பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட்டு சூரியன் ஒளிமிக்கதாகவும் தெளிவாகவும் இருந்தபோது பொன்னிறம் ஏற்படுவதற்கு முன்பே அஸ்ர் தொழுதார்கள். பிறகு அவர்களிடம் செம்மேகம் மறைவதற்கு முன் மஃக்ரிப் தொழுகைக்கு (பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட்டார்கள். பிறகு இரவின் "ஒரு பகுதி' அல்லது "மூன்றில்

ஒரு பகுதி' (அறிவிப்பாளர் ஹரமீ பின் உமாரா (ரஹ்) அவர்கள் ஐயப்பாட்டுடன் அறிவிக்கிறார்கள்.) கடந்த பின் இஷாத் தொழுகைக்கு (பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட்டார்கள். அதிகாலையில், "கேள்வி கேட்டவர் எங்கே?நீங்கள் கண்ட (இவ்விரு தினங்களின் தொழுகை நேரங்களின்) இடைப்பட்ட நேரமே (ஐவேளைத்) தொழுகையின் நேரமாகும்" என்று கூறினார்கள்.

1080அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து தொழுகையின் நேரங்கள் குறித்து வினவினார். அப்போது அவருக்கு நபி (ஸல்) அவர்கள் (வாய்மொழியாக) பதிலேதும் கூறவில்லை. (பின்வருமாறு செய்துகாட்டினார்கள்:) வைகறை புலர்ந்ததும் ஃபஜ்ர் தொழுகைக்காக இகாமத் (கூறச்) சொன்னார்கள். அப்போது (இருள் இருந்த காரணத்தால்) மக்களில் சிலர் சிலரை அறிந்துகொள்ள இயலவில்லை. பிறகு பிலால் (ரலி) அவர்களிடம் (லுஹர் தொழுகைக்காக பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட்டார்கள். சூரியன் உச்சியிலிருந்து சாய்ந்ததும் லுஹ்ர் தொழுகைக்காக பிலால் (ரலி) அவர்கள் இகாமத் சொன்னார்கள். அப்போது ஒரு மனிதர் "நண்பகலாகிவிட்டது' என்று கூறினார். ஆனால், நபி (ஸல்) அவர்கள் எல்லாரையும் விட அறிந்தவர்களாக இருந்தார்கள். பிறகு பிலால் (ரலி) அவர்களிடம் (அஸ்ர் தொழுகைக்கு பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட, பிலால் (ரலி) அவர்கள் சூரியன் உயர்ந்திருக்கவே அஸ்ர் தொழுகைக்காக இகாமத் சொன்னார்கள். பிறகு பிலால் (ரலி) அவர்களிடம் (மஃகரிப் தொழுகைக்காக பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட, பிலால் (ரலி) அவர்கள் சூரியன் மறைந்தபோது மஃக்ரிப் தொழுகைக்காக இகாமத் சொன்னார்கள். பிறகு பிலால் (ரலி) அவர்களிடம் (இஷாத் தொழுகைக்கு பாங்கும் இகாமத்தும் கூறுமாறு) உத்தரவிட, பிலால் (ரலி) அவர்கள் செம்மேகம் மறைந்தபோது இஷாத் தொழுகைக்கு இகாமத் சொன்னார்கள்.
மறுநாள் ஃபஜ்ர் தொழுகையைப் பிற்படுத்தித் தொழுதார்கள். எந்த அளவிற்கென்றால் தொழுகையை முடித்துத் திரும்பியபோது ஒருவர் "சூரியன் உதயமாகிவிட்டது' அல்லது "சூரியன் உதிக்கப்போகிறது' என்று கூறினார். பிறகு லுஹ்ர் தொழுகையைப் பிற்படுத்தித் தொழுதார்கள். அது முந்திய நாள் அஸ்ர் தொழுத நேரத்திற்கு நெருக்கமாக இருந்தது. பிறகு அஸ்ர் தொழுகையைப் பிற்படுத்தித் தொழுதார்கள். எந்த அளவிற்கென்றால் தொழுகையை முடித்துத் திரும்பியபோது ஒருவர் "சூரியன் சிவந்துவிட்டது' என்று கூறினார்.
பிறகு மஃக்ரிப் தொழுகையைச் செம்மேகம் மறையும்வரை பிற்படுத்தினார்கள். பிறகு இஷாத் தொழுகையை இரவின் முந்திய மூன்றிலொரு பகுதி நேரமாகும்வரை பிற்படுத்தினார்கள். விடிந்ததும் வினாத்தொடுத்த அந்த மனிதரை அழைத்து "இவ்விரு (நாட்களின் தொழுகை) நேரங்களுக்கும் இடைப்பட்ட நேரமே (ஐவேளைத் தொழுகைகளின்) நேரமாகும்" என்று கூறினார்கள்.

1081மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் (மஃக்ரிப் தொழுகையின் நேரம் தொடர்பாக) "மறுநாள் செம்மேகம் மறைவதற்கு முன் மஃக்ரிப் தொழுதார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 33 கூட்டுத் தொழுகைக்குச் செல்லும் வழியில் வெப்பத்தாக்குதலுக்கு ஆளாவோர், கடுமையான வெயில் காலத்தில் வெப்பம் தணியும்வரை லுஹ்ர் தொழுகையைத் தாமதப்படுத்துவது விரும்பத்தக்கதாகும்.**

1082அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெப்பம் கடுமையாகும்போது அது தணியும்வரை தொழுகையைத் தாமதப்படுத்துங்கள். ஏனெனில், கடுமையான வெப்பம், நரக நெருப்பின் பெருமூச்சு காரணமாகவே உண்டாகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1083அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெப்பம் நிறைந்த நாளில் அது தணியும் வரை (லுஹ்ர்) தொழுகையைத் தாமதப் படுத்துங்கள். ஏனெனில், கடுமையான வெப்பம், நரக நெருப்பின் பெருமூச்சு காரணமாகவே உண்டாகிறது.இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் பதினைந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அம்ர் பின் சவ்வாத் (ரஹ்) அவர்கள் வழியாக வரும் அறிவிப்பில் "வெப்பம் தணியும்வரை தொழுகையைத் தாமதப்படுத்துங்கள். ஏனெனில், கடுமையான வெப்பம் நரக நெருப்பின் பெருமூச்சு காரணமாகவே உண்டாகிறது" என்று இடம்பெற்றுள்ளது.

1084அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்த(க் கோடை) வெப்பம் நரக நெருப்பின் பெருமூச்சு காரணமாகவே உண்டாகிறது. எனவே, வெப்பம் தணியும்வரை தொழுகையைத் தாமதப்படுத்துங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1085ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெப்பம் தணியும்வரை தொழுகையைத் தாமதப்படுத்துங்கள். ஏனெனில், கடுமையான வெப்பம், நரக நெருப்பின் பெருமூச்சு காரணமாகவே உண்டாகிறது

1086அபூதர் அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு பயணத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தொழுகை அழைப்பாளர் லுஹ்ர் தொழுகைக்கு அழைப்புவிடுக்க முற்பட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "வெப்பம் தணியட்டும், வெப்பம் தணியட்டும்' அல்லது "பொறுங்கள், பொறுங்கள்' என்று கூறிவிட்டு, "கடுமையான வெப்பம் நரக நெருப்பின் பெருமூச்சு காரணமாகவே உண்டாகிறது. வெப்பம் கடுமையாகும் போது அது தணியும்வரை தொழுகையைத் தாமதப்படுத்துங்கள்!" என்று சொன்னார்கள்.

(எனவே, நாங்கள் தொழுகையைத் தாமதப்படுத்தினோம்) எந்த அளவிற்கென்றால் குன்றுகள் மீது நிழல் விழுந்திருப்பதை நாங்கள் கண்டோம்.

1087அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகம் தனது இறைவனிடம், "என் இறைவா! என்னுடைய ஒருபகுதி மறுபகுதியைத் தின்கிறதே?" என முறையிட்டது. எனவே, இறைவன் அதற்கு (ஓய்வு தரும் வகையில்) ஒரு மூச்சு குளிர் காலத்திலும் மற்றொரு மூச்சு கோடை காலத்திலுமாக இரு மூச்சுகள் விட்டுக் கொள்ள அனுமதியளித்தான். அவைதாம் நீங்கள் கோடை காலத்தில் அனுபவிக்கும் கடுமையான வெப்பமும் குளிர் காலத்தில் அனுபவிக்கும் கடுமையான குளிரும் ஆகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1088அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வெப்பம் ஏற்படும்போது வெப்பம் தணியும்வரை தொழுகையைத் தாமதப்படுத்துங்கள். ஏனெனில், கடுமையான வெப்பம் நரக நெருப்பின் பெருமூச்சு காரணமாகவே உண்டாகிறது" என்று கூறிவிட்டு, "நரகம் தனது இறைவனிடம் (மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறு) முறையிட்டது. அதற்கு இறைவன் ஒரு மூச்சு குளிர் காலத்திலும் மற்றொரு மூச்சு கோடை காலத்திலுமாக இரு மூச்சுகள் விட்டுக்கொள்ள அனுமதித்தான்" என்றும் குறிப்பிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1089அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகம், "என் இறைவா! என்னுடைய ஒருபகுதி மறுபகுதியைத் தின்கிறது. எனவே, மூச்சுவிட எனக்கு அனுமதியளிப்பாயாக!" என்று வேண்டியது. அவ்வாறே இறைவன் அதற்கு ஒரு மூச்சு குளிர் காலத்திலும் மற்றொரு மூச்சு கோடை காலத்திலுமாக இரு மூச்சுகள் விட்டுக்கொள்ள அனுமதியளித்தான். நீங்கள் அனுபவிக்கும் இலேசான குளிரும் கடுங்குளிரும் நரக நெருப்பின் பெருமூச்சு காரணமாகவே உண்டாகிறது. நீங்கள் காணும் இலேசான வெப்பமும் கடுமையான வெப்பமும் நரக நெருப்பின் மூச்சு காரணமாகவே ஏற்படுகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 34 கடும் வெப்பம் இல்லாதபோது லுஹர் தொழுகையை அதன் ஆரம்ப நேரத்திலேயே தொழுவது விரும்பத்தக்கதாகும்.

1090ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (வெப்பமில்லாத நாட்களில்) சூரியன் உச்சி சாயும்போதே (நண்பகல் நேரத்தில்) லுஹர் தொழுதுவிடுவார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1091கப்பாப் பின் அல்அரத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சுடுமணல்(மீது நின்று தொழுவதிலுள்ள சிரமம்) குறித்து முறையிட்டோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் முறையீட்டை ஏற்கவில்லை.

1092கப்பாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று சுடுமணல்(மீது நின்று தொழுவதிலுள்ள சிரமம்) குறித்து முறையிட்டோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் முறையீட்டை ஏற்கவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸுஹைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்களிடம் "லுஹ்ர் தொழுகை தொடர்பாகவா (மக்கள் முறையிட்டார்கள்)?" என்று கேட்டேன். அதற்கு அபூ இஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் "ஆம்' என்றார்கள். நான், "லுஹர் தொழுகையை அதன் ஆரம்ப நேரத்திலேயே தொழுவது தொடர்பாகவா?" என்று கேட்டேன். அதற்கும் அவர்கள் "ஆம்' என்றார்கள்.

1093அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் கடுமையான வெப்ப நேரத்தில் தொழுவோம். அப்போது எங்களில் ஒருவர் பூமியில் தமது நெற்றியை வைக்க இயலா விட்டால் அவர் தமது ஆடையை விரித்து அதன்மீது சிரவணக்கம் (சஜ்தா) செய்வார்.

## பாடம் : 35 அஸ்ர் தொழுகையை அதன் ஆரம்ப நேரத்திலேயே தொழுவது விரும்பத் தக்கதாகும் .

1094அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகை தொழுவார்கள். அப்போது சூரியன் (வானில்) உயர்ந்தே இருக்கும்; (அஸ்தமனத்தை நெருங்கும்போது ஏற்படும் நிறமாற்றம் ஏற்படாமல்) தெளிவாகவே இருக்கும். (அஸ்ர் தொழுதுவிட்டு மதீனாவை அடுத்திருக்கும்) மேட்டுப் பகுதி (கிராமங்)களுக்குச் செல்பவர் அங்கு சென்று சேரும்போதும் சூரியன் உயர்ந்தே இருக்கும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், குதைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அங்கு சென்று சேரும்போதும்' எனும் வாசகம் இடம்பெறவில்லை.
-மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1095அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அஸ்ர் தொழுவோம். பிறகு எங்களில் (மேட்டுப்பகுதிகளில் ஒன்றான) "குபா'வுக்குச் செல்பவர் அங்கு சென்றடைவார். அப்போதும் சூரியன் (வானில்) உயர்ந்தே இருக்கும்.

1096அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அஸ்ர் தொழுகை தொழுவோம். பிறகு (எங்களில்) ஒரு மனிதர் பனூ அம்ர் பின் அவ்ஃப் குலத்தாரிடம் புறப்பட்டுச் செல்வார். அப்போது அவர்கள் அஸ்ர் தொழுகை தொழுதுகொண்டிருப்பதைக் காண்பார்.

1097அலாஉ பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் பஸ்ரா நகரில் தமது இல்லத்திலிருந்த அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் லுஹ்ர் தொழுதுவிட்டுச் சென்றேன். (அன்னாரின் இல்லம் பள்ளிவாசலுக்குப் பக்கத்தில் இருந்தது) நாங்கள் அவர்களிடம் சென்றபோது "நீங்கள் அஸ்ர் தொழுதுவிட்டீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு நாங்கள், "(இல்லை) நாங்கள் இப்போதுதான் லுஹர் தொழுதுவிட்டு வருகிறோம்" என்று அவர்களிடம் சொன்னோம். அனஸ் (ரலி) அவர்கள், "அவ்வாறாயின் நீங்கள் அஸ்ர் தொழுங்கள்" என்றார்கள். உடனே நாங்கள் எழுந்து (அஸ்ர்) தொழுதோம். நாங்கள் தொழுது முடித்ததும் அனஸ் (ரலி) அவர்கள், "இதுதான் நயவஞ்சகனின் தொழுகையாகும். அவன் சூரியனை எதிர்பார்த்துக்கொண்டு அமர்ந்திருப்பான். சூரியன் (சரியாக) ஷைத்தானின் இரு கொம்புகளுக்கிடையே (உதயமாகி அல்லது மறைந்து) வரும்போது அவன் (அவசர அவசரமாகக் கோழி கொத்துவதைப் போன்று) நான்கு கொத்து கொத்துவான். அவன் அதில் மிகக் குறைவாகவே இறைவனை நினைவுகூருவான்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவிமடுத்துள்ளேன் என்றார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1098அபூஉமாமா பின் சஹ்ல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களுடன் (அவர்கள் மதீனாவில் இடைக்கால ஆட்சியராக இருந்தபோது) லுஹ்ர் தொழுகையை (அதன் இறுதி நேரத்தில்) தொழுதோம். பிறகு அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் புறப்பட்டுச் சென்றோம். அப்போது அனஸ் (ரலி) அவர்கள் அஸ்ர் தொழுகை தொழுதுகொண்டிருப்பதைக் கண்டோம். அப்போது நான் (மரியாதை நிமித்தம்) "என் தந்தையின் சகோதரரே!' (என்றழைத்து) நீங்கள் தொழுதீர்களே இது என்ன தொழுகை?" என்று கேட்டேன். அவர்கள், "(இது) அஸ்ர் தொழுகை. நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இவ்வாறே (ஆரம்ப நேரத்தில்) தொழுபவர்களாக இருந்தோம்" என்று பதிலளித்தார்கள்.

1099அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு நாள்) எங்களுக்கு அஸ்ர் தொழுகையைத் தொழவைத்து முடித்தார்கள். அப்போது அவர்களிடம் பனூசலிமா குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் எங்களுக்குரிய (இறைச்சி) ஒட்டகத்தை அறுக்க விரும்புகிறோம். அ(ந்த விருந்)தில் தாங்களும் கலந்துகொள்ள வேண்டுமென நாங்கள் விரும்புகிறோம்" என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "சரி' என்று சொல்லிவிட்டு நடக்கலானார்கள். நாங்களும் அவர்களுடன் நடந்தோம். அந்த ஒட்டகம் இன்னும் அறுக்கப்படாமலிருப்பதைக் கண்டோம். பின்னர் அது அறுக்கப்பட்டு சிறுசிறு துண்டுகளாக்கப்பட்டது. பிறகு அதில் சிறிது சமைக்கப்பட்டது. பின்னர் நாங்கள் அதைச்

சூரியன் மறைவதற்குள் உண்டோம் (இவ்வளவு வேலைகளும் அஸ்ருக்கும் மஃக்ரிபுக்குமிடையே நடந்து முடிந்தது; அந்த அளவிற்கு அஸ்ரை அதன் ஆரம்ப நேரத்திலேயே தொழுதோம்-.இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1100ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அஸ்ர் தொழுகை தொழுவோம். பிறகு ஒட்டகம் அறுக்கப்படும். அது பத்துக் கூறுகளாகப் பங்கிடப்படும். பிறகு அது சமைக்கப்படும். நாங்கள் சூரியன் மறைவதற்கு முன் (அதன்) சமைக்கப்பட்ட இறைச்சியை உண்போம்.

1101மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும் அவற்றில் "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் அஸ்ர் தொழுகைக்குப் பிறகு ஒட்டகத்தை அறுப்போம்' என்று இடம்பெற்றுள்ளது. "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அஸ்ர் தொழுவோம்' எனும் வாசகம் இடம் பெறவில்லை.

## பாடம் : 36 அஸ்ர் தொழுகையைத் தவறவிடுவது தொடர்பாக வந்துள்ள கண்டனம்.

1102அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யாருக்கு அஸ்ர் தொழுகை தவறிவிடுகிறதோ அவர் தம் குடும்பத்தையும் செல்வத்தையும் இழந்து தனிமைப்படுத்தப்பட்டவரைப் போன்றவர் ஆவார்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1103அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அஸ்ர் தொழுகை யாருக்குத் தவறிவிடுகிறதோ அவர் தம் குடும்பத்தையும் செல்வத்தையும் இழந்து தனிமைப்படுத்தப்பட்டவரைப் போன்றவர் ஆவார்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1104அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அகழ்ப்போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் (எதிரிகளான) அவர்களுடைய வீடுகளையும் புதை குழிகளையும் நெருப்பால் நிரப்புவானாக! அவர்கள் சூரியன் மறையும்வரை நடுத்தொழுகை(யான அஸ்ர் தொழுகை)யிலிருந்து நம்மைத் தடுத்து நமது கவனத்தைத் திருப்பிவிட்டார்கள்" என்று கூறினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 37 அஸ்ர் தொழுகையே நடுத்தொழுகை ஆகும் என்று கூறுவோரின் சான்று.

1105அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அஹ்ஸாப் (எனும் அகழ்ப்)போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(எதிரிகளான) அவர்கள் சூரியன் மறையும் நேரம்வரை நடுத் தொழுகை(யான அஸ்ர் தொழுகை)யிலிருந்து நமது கவனத்தைத் திருப்பிவிட்டார்கள். அவர்களுடைய "புதை

குழிகளை' அல்லது "அவர்களுடைய வீடுகளை' அல்லது "அவர்களுடைய வயிறுகளை' அல்லாஹ் நெருப்பால் நிரப்புவானாக!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
வீடுகள் அல்லது வயிறுகள் என்பதில் (எந்த வார்த்தை இடம்பெற்றுள்ளது என்பது தொடர்பாக) அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்களே ஐயப்பாட்டுடன் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அவர்களுடைய வீடுகளையும் வயிறுகளையும்' என்று (ஐயப்பாடின்றி) இடம் பெற்றுள்ளது.

1106அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஹ்ஸாப் (எனும் அகழ்ப்)போரின்போது அகழின் நுழைவாயில்களில் ஒன்றில் அமர்ந்தவாறு, "(எதிரிகளான) அவர்கள் சூரியன் மறையும் நேரம்வரை நடுத்தொழுகை(யான அஸ்ர் தொழுகை)யிலிருந்து நமது கவனத்தைத் திருப்பிவிட்டார்கள். "அவர்களுடைய புதைகுழிகளையும் வீடுகளையும்' அல்லது "அவர்களுடைய புதைகுழிகளையும் வயிறுகளையும்' அல்லாஹ் நெருப்பால் நிரப்புவானாக!' என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1107அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஹ்ஸாப் (எனும் அகழ்ப்) போரின்போது "(எதிரிகளான) அவர்கள் நடுத்தொழுகையான அஸ்ர் தொழுகையிலிருந்து நமது கவனத்தைத் திருப்பிவிட்டார்கள். அவர்களுடைய வீடுகளையும் புதைகுழிகளையும் நெருப்பால் அல்லாஹ் நிரப்புவானாக!" என்று கூறினார்கள். பிறகு அத்தொழுகையை இரு இரவுத் தொழுகைகளான மஃக்ரிபுக்கும் இஷாவுக்கும் இடையே தொழுதார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1108அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இணைவைப்பாளர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சூரியன் "செந்நிறமாகும் நேரம்வரை' அல்லது "பொன்னிறமாகும் நேரம்வரை' அஸ்ர் தொழுகையைத் தொழவிடாமல் தடுத்து விட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நடுத்தொழுகையான அஸ்ர் தொழுகையிலிருந்து அவர்கள் நமது கவனத்தைத் திருப்பிவிட்டார்கள். அல்லாஹ் அவர்களுடைய வயிறுகளையும் புதைகுழிகளையும் நெருப்பால் நிரப்புவானாக!" என்று கூறினார்கள்.

1109ஆயிஷா (ரலி) அவர்களின் அடிமையாயிருந்த அபூயூனுஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள் குர்ஆன் பிரதியொன்றைத் தமக்காகப் படியெடுத்துத் தருமாறு என்னிடம் கூறினார்கள். மேலும் "அனைத்துத் தொழுகைகளையும் (குறிப்பாக) நடுத் தொழுகையையும் பேணி(த் தொழுது)வாருங்கள்" எனும் இந்த (2:238ஆவது) வசனத்தை நீ எட்டும்போது என்னிடம் தெரிவிப்பாயாக! என்றும் கூறினார்கள். அவ்வாறே நான் (அதைப்

படியெடுத்துக்கொண்டிருந்தபோது) அந்த வசனம் வந்ததும் அவர்களுக்குத் தெரிவித்தேன். அப்போது அவர்கள் "அனைத்துத் தொழுகைகளையும் (குறிப்பாக) நடுத்தொழுகையையும் (அதாவது) அஸ்ர் தொழுகையையும் பேணி(த் தொழுது) வாருங்கள். நீங்கள் உள்ளச்சம் உடையவர்களாக நின்று அல்லாஹ்வை வழிபடுங்கள்" என்று எழுதுமாறு என்னிடம் கூறினார்கள். மேலும் ஆயிஷா (ரலி) அவர்கள், "இதை நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியேற்றுள்ளேன்" என்றும் கூறினார்கள்.

1110ஷகீக் பின் உக்பா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள், "(ஆரம்பக் காலத்தில்) இந்த (2:238ஆவது) வசனம் "அனைத்துத் தொழுகைகளையும் (குறிப்பாக) அஸ்ர் தொழுகையையும் பேணி(த் தொழுது)வாருங்கள்' என்றே அருளப்பெற்றது. அல்லாஹ் நாடிய(காலம்)வரை அவ்வாறே நாங்கள் ஓதியும்வந்தோம். பின்னர் அல்லாஹ் அந்த வசனத்தைப் பின்வருமாறு மாற்றி அருளினான் என்று கூறினார்கள்: அனைத்துத் தொழுகைகளையும் (குறிப்பாக) நடுத் தொழுகையையும் பேணி(த் தொழுது)வாருங்கள்.
(இந்த ஹதீஸை என்னிடம் பராஉ (ரலி) அவர்கள் அறிவித்துக்கொண்டிருந்தபோது) எனக்கு அருகில் அமர்ந்திருந்த ஒரு மனிதர் பராஉ (ரலி) அவர்களிடம், "அப்படியானால் நடுத் தொழுகை என்பது அஸ்ர் தொழுகையையே குறிக்கிறது" என்று சொன்னார். அதற்கு பராஉ (ரலி) அவர்கள், "அவ்வசனம் (முதலில்) எவ்வாறு அருளப்பெற்றது. பின்னர் அல்லாஹ் அதை எவ்வாறு மாற்றினான் என்பதை நான் உமக்கு தெரிவித்துவிட்டேன். அல்லாஹ்வே அறிந்தவன்" என்று கூறினார்கள்.
மற்றோர் அறிவிப்பில், "நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் சில காலம் அந்த வசனத்தை ஓதி வந்தோம்" என்று பராஉ (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

1111ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அகழ்ப் போரின்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் குறைஷிக் குல இறைமறுப்பாளர்களை ஏசிக்கொண்டே (நபி (ஸல்) அவர்களிடம் வந்து), "அல்லாஹ்வின் தூதரே! சூரியன் மறையத் தொடங்கும்வரை என்னால் அஸ்ர் தொழுகை தொழ முடியாமல் போய்விட்டது" என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! நானும் அதை (இதுவரை) தொழவில்லை" என்று கூறினார்கள். பிறகு நாங்கள் (மதீனாவிலுள்ள) புத்ஹான் எனும் பள்ளத்தாக்கில் இறங்கினோம். அங்கே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கத் தூய்மை செய்தார்கள். நாங்களும் அங்கத் தூய்மை செய்தோம். (அன்று) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சூரியன் மறைந்த பிறகு அஸ்ர் தொழுதார்கள். அதன் பிறகு மஃக்ரிப் தொழுதார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 38 சுப்ஹு மற்றும் அஸ்ர் தொழுகைகளின் சிறப்பும் அவ்விரு தொழுகைகளைப் பேணி(த் தொழுது)வருவதும்.

1112அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களிடையே இரவில் சில வானவர்களும் பகலில் சில வானவர்களும் அடுத்தடுத்து (சுழற்சி முறையில்) வருகின்றனர். அவர்கள் ஃபஜ்ர் தொழுகையிலும் அஸ்ர் தொழுகையிலும் ஒன்றுசேர்கின்றனர். பிறகு உங்களிடையே இரவில் தங்கியவர்கள் (வானத்திற்கு) ஏறிச் செல்கின்றனர். அப்போது இறைவன் அ(வ்வான)வர்களிடம், "(பூமியிலுள்ள) என் அடியார்களை எந்த நிலையில் விட்டுவந்தீர்கள்?" என்று (மக்களைப் பற்றி நன்கறிந்த நிலையிலேயே) கேட்பான். அதற்கு அவ்வானவர்கள், "அவர்கள் (உன்னைத்) தொழுதுகொண்டிருந்த நிலையில் விட்டுவந்தோம்; அவர்கள் (உன்னைத்) தொழுது கொண்டிருந்த நிலையிலேயே அவர்களிடம் நாங்கள் சென்றோம்" என்று பதிலளிப்பார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "வானவர்கள் உங்களிடையே அடுத்தடுத்து வருகின்றனர்' எனும் வாசகம் இடம் பெற்றுள்ளது.

1113ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (முழு நிலவுள்ள ஓர் இரவில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது அவர்கள் முழு நிலாவைக் கூர்ந்து பார்த்தவாறு, "நீங்கள் இந்த நிலாவை நெரிசல் இல்லாமல் காண்பதைப் போன்றே உங்கள் இறைவனையும் (மறுமையில்) காண்பீர்கள். எனவே, சூரியன் உதிக்கும் முன்னருள்ள தொழுகையிலும் சூரியன் மறையும் முன்னருள்ள தொழுகையிலும் (அதாவது அஸ்ரிலும் ஃபஜ்ரிலும்) (உறக்கம் போன்ற) எதற்கும் ஆட்படாமல் இருக்க உங்களால் இயலுமானால் (அவ்வாறே செய்யுங்கள்; இறைவனை நீங்கள் தரிசிக்கலாம்)" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளரான கைஸ் பின் அபீஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
பிறகு ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள், "சூரியன் உதயமாகும் முன்னரும், மறையும் முன்னரும் உங்கள் இறைவனைப் போற்றித் துதியுங்கள்" எனும் (20:130ஆவது) இறைவசனத்தை ஓதிக்காட்டினார்கள்.

1114மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நபி (ஸல்) அவர்கள், "நினைவில் கொள்க: நீங்கள் (மறுமையில்) உங்கள் இறைவன் முன் நிறுத்தப்படுவீர்கள். அப்போது நீங்கள் அவனை இந்த நிலவைக் காண்பதைப் போன்று காண்பீர்கள்' என்று கூறினார்கள். பிறகு மேற்கண்ட (20:130ஆவது) வசனத்தை ஓதிக் காட்டினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. ஜரீர் (ரலி) அவர்கள் அந்த வசனத்தை ஓதிக் காட்டியதாகக் குறிப்பில்லை.

1115அபூபக்ர் பின் உமாரா பின் ருஜபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "சூரியன் உதயமாவதற்கு முன்னரும் சூரியன் மறைந்த பின்னரும் தொழுதவர் (அதாவது ஃபஜ்ர் மற்றும் அஸ்ர் தொழுதவர்) எவரும்

ஒருபோதும் நரக நெருப்பில் நுழையமாட்டார்" என்று கூறுவதை நான் கேட்டுள்ளேன் என (என் தந்தை) உமாரா பின் ருஜபா (ரலி) அவர்கள் கூறினார்கள். அப்போது அவர்களிடம் பஸ்ராவாசிகளில் ஒருவர், "இதை நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டார். அதற்கு உமாரா (ரலி) அவர்கள் "ஆம்' என்றார்கள். அந்த மனிதர் "நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து இவ்வாறு செவியுற்றேன் என உறுதி அளிக்கிறேன். அதை என்னிரு காதுகளும் செவிமடுத்தன; என் மனம் அதை மனனமிட்டுக்கொண்டது" என்று கூறினார்.
இந்த ஹதீஸ் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1116அபூபக்ர் பின் உமாரா பின் ருஜபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமாரா பின் ருஜபா (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "சூரியன் உதயமாவதற்கு முன்னரும் சூரியன் மறைந்த பின்னரும் (ஃபஜ்ர் மற்றும் அஸ்ர்) தொழுபவர் நரக நெருப்பில் நுழையமாட்டார்' என்று கூறினார்கள்" என்றார்கள். அப்போது உமாரா (ரலி) அவர்களுக்கு அருகில் இருந்த பஸ்ராவாசிகளில் ஒருவர், "இதை நீங்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டார். அதற்கு உமாரா (ரலி) அவர்கள் "ஆம், நபி (ஸல்) அவ்வாறு கூறினார்கள் என நான் உறுதி அளிக்கிறேன்" என்று பதிலளித்தார்கள். அதற்கு அந்த பஸ்ராவாசி "நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதை நீங்கள் செவியேற்ற அதே இடத்தில் நானும் செவியேற்றேன் என நானும் உறுதி அளிக்கிறேன்" என்றார்.

1117அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பகலின் இரு முனைகளிலுள்ள (ஃபஜ்ர், அஸ்ர் ஆகிய) இரு குளிர் நேரத்தொழுகைகளைத் தொழுபவர் சொர்க்கத்தில் நுழைவார்.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அறிவிப்பாளர் அபூபக்ர் (ரஹ்) அவர்களது பெயருடன் "இப்னு அபீமூசா' என்பதும் இணைத்துக் கூறப்பட்டுள்ளது.

## பாடம் : 39 மஃக்ரிப் தொழுகையின் ஆரம்ப நேரம் சூரியன் மறையும்போது ஆகும்.

1118சலமா பின் அக்வஃ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், சூரியன் திரையில் (அடிவானில்) மறையும்போது மஃக்ரிப் தொழுவார்கள்.

1119ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மஃக்ரிப் தொழுவோம். பிறகு எங்களில் ஒருவர் திரும்பிச் செல்லும்போது (அவர் அம்பெய்தால்) அம்பு விழும் இடத்தை அவரால் பார்க்க முடியும் (அந்த அளவு வெளிச்சம் இருக்கும்போதே மஃக்ரிப் தொழுவோம்).
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதிலும் "நாங்கள் மஃக்ரிப் தொழுவோம்...' எனும் வாசகமே இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 40 இஷாத் தொழுகையின் நேரமும் அதை(ச் சற்று)த் தாமதப்படுத்துவதும்.

1120நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையை நன்கு இருள் படரும்வரை தாமதப்படுத்தினார்கள்.- இஷா நேரம்தான் "அல்அ(த்)தமா' (இருட்டு நேரம்) என (மக்களால்) அழைக்கப்பட்டு வந்தது.- உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் "பெண்களும் சிறுவர்களும் உறங்கிவிட்டனர்" என்று கூறிய பிறகே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது இல்லத்திலிருந்து) புறப்பட்டுவந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்து, அப்போது பள்ளிவாசலில் இருந்தவர்களை நோக்கி, "(தற்போது) இந்த பூமியில் வசிப்பவர்களில் உங்களைத் தவிர வேறு யாரும் இத்தொழுகையை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருக்கவில்லை"என்று கூறினார்கள். இது, மக்களிடையே இஸ்லாம் (அதிகமாகப்) பரவுவதற்கு முன் நடைபெற்றதாகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், ஹர்மலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (பின்வருமாறு) அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது:
உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் சப்தமிட்டு அழைத்தபோது "தொழுவிக்க வருமாறு அல்லாஹ்வின் தூதரை வற்புறுத்துகின்ற உரிமை உங்களுக்கு இல்லை என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்று எனக்கு அறிவிக்கப்பட்டது என இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் இப்னு ஷிஹாப் (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ள தகவல் இடம்பெறவில்லை.

1121ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஓர் இரவில் நபி (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையை நன்கு இருள் படரும்வரைத் தாமதப்படுத்தினார்கள். எந்த அளவிற்கென்றால் இரவின் கணிசமான பகுதி கடந்துவிட்டது; பள்ளிவாசலில் இருந்தவர்கள் உறங்கியும் விட்டனர். பிறகு நபி (ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்து தொழுவித்துவிட்டு, "இதுதான் இஷாத் தொழுகைக்கான (சிறந்த) நேரமாகும். என் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்பட்டுவிடும் என்ற அச்சம் எனக்கில்லையாயின்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "என் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்பட்டுவிடும் என்பதில்லையாயின்" என (சிறு மாற்றத்துடன்) இடம்பெற்றுள்ளது.

1122அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஓர் இரவில் நாங்கள் இஷாத் தொழுகைக்காக அல்லாஹவின் தூதர் (ஸல்) அவர்களை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். இரவின் மூன்றில் ஒரு பகுதி கழிந்த பின்னரோ, அதற்குப் பிறகோதான் அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அவர்களது குடும்பத்தில் ஏதேனும் அலுவல் இருந்ததா, அல்லது வேறு காரணமா என்று எங்களுக்குத் தெரியவில்லை. அவர்கள் புறப்பட்டுவந்ததும், "நீங்கள் ஒரு தொழுகையை எதிர்பார்த்துக் காத்திருக்கிறீர்கள். உங்களைத் தவிர வேறு எந்த மார்க்கத்தைச் சேர்ந்தோரும் அதை எதிர்பார்த்திருக்கவில்லை. எனது

சமுதாயத்துக்குச் சுமை ஏற்பட்டுவிடும் என்றில்லாவிடில் இந்த நேரத்தில்தான் (இத்தொழுகையை) அவர்களுக்கு நான் தொழுவித்திருப்பேன்" என்று கூறினார்கள். பிறகு தொழுகை அறிவிப்பாளரிடம் (இகாமத் கூறும்படி) உத்தரவிட, அவர் (இஷாத்) தொழுகைக்காக இகாமத் சொன்னார். நபி (ஸல்) அவர்கள் தொழுவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1123அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஓர் இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது அலுவல் காரணமாக இஷாத் தொழுகையைத் தாமதப்படுத்தினார்கள். நாங்கள் பள்ளிவாசலிலேயே உறங்குவதும் விழிப்பதும் பின்னர் உறங்குவதும் விழிப்பதுமாக இருந்தோம். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து, "இந்த இரவில் உங்களைத் தவிர பூமியிலுள்ள வேறெவரும் இத்தொழுகையை எதிர்பார்த்துக் காத்திருக்கவில்லை" என்று கூறினார்கள்.

1124ஸாபித் பின் அஸ்லம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் (ரலி) அவர்களிடம் மக்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய மோதிரம் தொடர்பாக வினா எழுப்பினார்கள். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள் பின்வருமாறு பதிலளித்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் இரவில் இஷாத் தொழுகையைப் "பாதி இரவுவரை' அல்லது "பாதி இரவு கழியும்வரை' தாமதப்படுத்தினார்கள். பிறகு அவர்கள் வந்து "மக்கள் தொழுதுவிட்டு உறங்கிவிட்டார்கள். (ஆனால்,நீங்கள் இவ்வளவு நேரம் காத்திருக்கிறீர்கள்.) நீங்கள் ஒரு தொழுகையை எதிர்பார்த்துக் காத்திருக்கும்வரை அந்தத் தொழுகையிலேயே உள்ளீர்கள் (அதுவரை அதன் நன்மை உங்களுக்குக் கிடைத்துக் கொண்டேயிருக்கும்)" என்று சொன்னார்கள். (அப்போது அவர்களது விரலில் மோதிரத்தைப் பார்த்தேன்.) இப்போதும் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வெள்ளி மோதிரம் மின்னுவதைப் பார்ப்பதைப் போன்றுள்ளது.
இவ்வாறு கூறிய அனஸ் (ரலி) அவர்கள் தமது இடக் கை சுண்டுவிரலை உயர்த்திக் காட்டினார்கள்.

1125அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஓர் இரவில் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை (இஷாத் தொழுகைக்காக எதிர்)பார்த்து பாதி இரவு நெருங்கும்வரைக் காத்திருந்தோம். பிறகு அவர்கள் வந்து எங்களுக்கு (இஷாத்) தொழுவித்தார்கள். பிறகு எங்களை நோக்கித் திரும்பினார்கள். இப்போதும் நான் அவர்களுடைய கரத்தில் வெள்ளி மோதிரம் மின்னுவதைப் பார்ப்பதைப் போன்றுள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "பிறகு அவர்கள் எங்களை நோக்கித் திரும்பினார்கள்' எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

1126அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் என்னுடன் (யமன் நாட்டிலிருந்து) கப்பலில் வந்த என் நண்பர்களும் (மதீனா அருகிலுள்ள) "புத்ஹான்' எனும் விசாலமான பள்ளத்தாக்கில் தங்கியிருந்தோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவில் இருந்தார்கள். எங்களில் சிலர் முறைவைத்து ஒவ்வோர் இரவும் இஷாத் தொழுகை நேரத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் செல்பவர்களாக இருந்தோம். (எனது முறை வந்தபோது) நானும் என் நண்பர்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்ற வேளையில் அவர்கள் ஓர் அலுவலில் ஈடுபட்டிருந்ததால் பாதி இரவு வரை இஷாத் தொழுகையைத் தாமதப் படுத்தினார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டுவந்து மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். தொழுது முடித்ததும் அங்கிருந்த மக்களை நோக்கி, "அப்படியே இருங்கள். உங்களுக்கு ஒன்றை நான் அறிவிக்கப்போகிறேன். நற்செய்தி பெறுங்கள். "இந்த நேரத்தில் மக்களில் உங்களைத் தவிர வேறு யாரும் தொழுதுகொண்டிருக்கவில்லை' அல்லது "இந்த நேரத்தில் உங்களைத் தவிர வேறெவரும் தொழவில்லை'. (இவ்விரு வாக்கியங்களில் எதை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று நாம் அறியவில்லை.) இது அல்லாஹ் உங்களுக்குச் செய்த அருட்கொடைகளில் ஒன்றாகும்" என்று கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியேற்ற இந்தச் செய்தியைக் கேட்டுப் பெருமகிழ்ச்சியடைந்தவர்களாக நாங்கள் திரும்பினோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1127அப்துல் மலிக் பின் ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்களிடம், "நான் மக்களுக்கு, அவர்கள் "அல்அ(த்)தமா' என்று குறிப்பிடுகின்ற இஷாத் தொழுகையை எந்த நேரத்தில் தலைமை தாங்கித் தொழுவிப்பதை, அல்லது நான் தனியாகத் தொழுவதை நீங்கள் விரும்புவீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அதாஉ (ரஹ்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஓர் இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையை நன்கு இருட்டும்வரைத் தாமதப்படுத்தினார்கள். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை எதிர்பார்த்துக்கொண்டிருந்த) மக்கள் உறங்குவதும் விழிப்பதும் பின்னர் உறங்குவதும் விழிப்பதுமாக இருந்தார்கள். அப்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் எழுந்து, "தொழுகை' என்று (சப்தமிட்டுக்) கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தலையிலிருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருக்க, தலையின் ஒரு பகுதியில் தமது கையை வைத்தபடி (தலையிலிருந்த தண்ணீரைத் துடைத்தவாறு) புறப்பட்டுவந்ததை நான் இப்போதும் பார்ப்பதைப் போன்றுள்ளது. அப்போது அவர்கள் "என் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்பட்டுவிடும் என்றில்லாதிருப்பின் அவர்களை இந்த நேரத்திலேயே இத்தொழுகையைத் தொழுமாறு உத்தரவிட்டிருப்பேன்" என்று சொன்னார்கள்.
அறிவிப்பாளர் அப்துல் மலிக் பின் ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் தொடர்ந்து கூறுகிறார்கள்:
நான் அதாஉ (ரஹ்) அவர்களிடம் "நபி (ஸல்) அவர்கள் தமது தலையில் எவ்வாறு கையை வைத்திருந்தார்கள் என்பதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவித்ததைப் போன்று கூறுங்கள்" என விளக்கம் கேட்டேன். அப்போது அதாஉ (ரஹ்) அவர்கள், தம் கை

விரல்களைச் சற்று இடைவெளிவிட்டு விரித்து, விரல் நுனிகளை உச்சந்தலையில் வைத்து தலையில் அதை தடவிக்கொண்டே சென்றார்கள். இறுதியில் அவர்களது பெரு விரல் முகத்தை ஒட்டியுள்ள காதோரம், நொற்றிப்பொட்டு, தாடியின் ஓரம் ஆகியவற்றில் பட்டது. இவ்வாறு அவர்கள் தாமதியாமலும் அவசரப்படாமலும் (மிதமாகச்) செய்தார்கள்.
நான் அதாஉ (ரஹ்) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் அன்றைய இரவில் எவ்வளவு நேரம் தொழுகையைத் தாமதப்படுத்தியதாக உங்களிடம் கூறப்பட்டது?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "எனக்குத் தெரியாது' என விடையளித்தார்கள்.
மேலும் அவர்கள், "நான் தலைமை தாங்கித் தொழுவித்தாலும் தனியாகத் தொழுதாலும் நபி (ஸல்) அவர்கள் அன்றிரவு இஷாத் தொழுகையைத் தொழுததைப் போன்று தாமதித்துத் தொழவே விரும்புகிறேன். நீங்கள் தனியாகத் தொழும்போதோ அல்லது மக்களுக்குத் தலைமைத் தாங்கிக் கூட்டுத் தொழுகை நடத்தும்போதோ இவ்வாறு செய்வது உங்களுக்குச் சிரமமாகத் தோன்றினால் இதற்கு இடைப்பட்ட மத்திய நேரத்தில் அதைத் தொழுது கொள்ளுங்கள். அவசரப்படவும் வேண்டாம்; தாமதிக்கவும் வேண்டாம்" என்று சொன்னார்கள்.

1128ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையைத் தாமதப்படுத்துபவராக இருந்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1129ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நீங்கள் தொழுவதைப் போன்றே அனைத்துத் தொழுகைகளையும் தொழுவார்கள். ஆனால், இஷாத் தொழுகையை நீங்கள் தொழுவதை விடச் சற்று தாமதப்படுத்தியும் சுருக்கமாகவும் தொழுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1130அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுடைய தொழுகையின் பெயர் விஷயத்தில் உங்களைக் கிராமப்புற அரபுகள் மிகைத்துவிட வேண்டாம். நிச்சயமாக அதற்கு "இஷா' என்றே பெயர். ஆனால், கிராமவாசிகள் நன்கு இருட்டிய பிறகே ஒட்டகங்களிலிருந்து பால் கறப்பதால் (இஷா எனும் பெயரை மாற்றி) "அ(த்)தமா' (இருட்டுத் தொழுகை) என்று அழைக்கின்றனர்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1131அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கிராமப்புற அரபுகள் உங்கள் இஷாத் தொழுகையின் பெயர் விஷயத்தில் உங்களை மிகைத்துவிட வேண்டாம். அல்லாஹ்வின் வேதத்தில் அதற்கு இஷா என்ற பெயரே இடம் பெற்றுள்ளது. கிராமப்புற அரபியர் நன்கு இருட்டிய பிறகு ஒட்டகங்களிலிருந்து பால் கறப்பதால் அதனை "அ(த்)தமா' (இருட்டுத் தொழுகை) என்று அழைக்கின்றனர்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 41 சுப்ஹுத் தொழுகையை அதன் ஆரம்ப நேரத்திலேயே தொழுவது விரும்பத் தக்கதாகும்; அந்த ஆரம்ப நேரமே "த.ஃக்லீஸ்' (இருட்டு) ஆகும்; சுப்ஹுத் தொழுகையில் எந்த அளவு (குர்ஆன் வசனங்களை) ஓத வேண்டும்?**

1132ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
இறைநம்பிக்கையுள்ள பெண்கள் நபி (ஸல்) அவர்களுடன் சுப்ஹுத் தொழுதுவிட்டு தம் ஆடைகளால் உடல் முழுவதையும் போர்த்திக்கொண்டு திரும்பிச்செல்வார்கள். (அப்போதிருந்த இருட்டினால்) அவர்களை யாரும் அறிந்து கொள்ளமாட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1133நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
இறைநம்பிக்கையுள்ள பெண்கள் தம் ஆடைகளால் உடல் முழுவதையும் போர்த்திக் கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஃபஜ்ர் தொழுகையில் கலந்து கொள்வார்கள். பிறகு தம் இல்லங்களுக்குத் திரும்பிச்செல்வார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருட்டிலேயே ஃபஜ்ர் தொழுகையைத் தொழுவி(த்து முடி)ப்பதால் அப்பெண்கள் (யார் யாரென) அறிந்துகொள்ளப்படமாட்டார்கள்.

1134ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகையைத் தொழுவிப்பார்கள். அப்போது பெண்கள் தங்கள் ஆடைகளால் உடல் முழுவதையும் போர்த்திக்கொண்டு (தொழுது விட்டு) திரும்பிச்செல்வார்கள் (அப்போதிருந்த) இருட்டின் காரணத்தால் அவர்கள் (யார் யாரென) அறியப்படமாட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1135முஹம்மத் பின் அம்ர் பின் அல்ஹசன் பின் அலீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஹஜ்ஜாஜ் பின் யூசுஃப் மதீனாவி(ன் ஆட்சிப் பொறுப்பி)ற்கு வந்தபோது, (தொழுகைகளைத் தாமதப்படுத்தலானார். அப்போது,) நாங்கள் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் (தொழுகை நேரம் குறித்துக்) கேட்டோம். அப்போது ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நண்பகல் நேரத்தில் லுஹ்ர் தொழுவார்கள். சூரியன் தெளிவாக இருக்கும்போதே அஸ்ர் தொழுவார்கள். சூரியன் மறைந்ததும் மஃக்ரிப் தொழுவார்கள். இஷாவைச் சில நேரங்களில் முந்தியும் வேறு சில நேரங்களில் பிந்தியும் (சூழ்நிலைக்குத் தக்கவாறு) தொழுவார்கள். மக்கள் (முன்னேரத்திலேயே) கூடியிருப்பதைக் கண்டால் ஆரம்ப நேரத்திலேயே தொழுதுவிடுவார்கள்: மக்கள் தாமதமாக வருவதைக் கண்டால் தாமதப்படுத்துவார்கள். "மக்கள்' அல்லது "நபி (ஸல்) அவர்கள்' இருட்டிலேயே (அதிகாலை முன்னேரத்திலேயே) சுப்ஹுத் தொழுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1136மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஹஜ்ஜாஜ் தொழுகைகளைத் தாமதப்படுத்திவந்தார். ஆகவே, நாங்கள் ஜாபிர் (ரலி) அவர்களிடம் (தொழுகை நேரம் குறித்துக்) கேட்டோம்' என ஹதீஸ் தொடங்குகிறது.

1137ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சய்யார் பின் சலாமா (ரஹ்) அவர்கள் "என் தந்தை சலாமா (ரஹ்) அவர்கள் அபூபர்ஸா அல்அஸ்லமீ (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தொழுகை பற்றி வினவியதை நான் செவியுற்றேன்" என்று கூறினார்கள்.
நான் சய்யார் (ரஹ்) அவர்களிடம், "நீங்கள் அதை (நேரடியாக)ச் செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நீங்கள் கூறுவதைத் தற்போது நான் செவியேற்பதைப் போன்றே செவியேற்றேன். என் தந்தை சலாமா (ரஹ்) அவர்கள் அபூபர்ஸா (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தொழுகை குறித்து வினவினார்கள். அதற்கு அபூபர்ஸா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதை (அதாவது இஷாவை)ச் சிறிது நேரம் (அதாவது பாதி இரவுவரை) தாமதப்படுத்துவதைப் பொருட்படுத்தியதில்லை. இஷாத் தொழுகைக்கு முன் உறங்குவதையும் இஷாத் தொழுகைக்குப் பின் (உறங்காமல்) பேசிக் கொண்டிருப்பதையும் விரும்பியதில்லை" என்று கூறினார்கள்.
பிறகு (மற்றொரு முறை) நான் சய்யார் (ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது அவர்களிடம் வினவினேன். அப்போது அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சூரியன் (நடு வானிலிருந்து மேற்கு நோக்கிச்) சாயும்போது லுஹர் தொழுவார்கள். பிறகு அஸ்ர் தொழுவார்கள். ஒருவர் (அஸ்ர் தொழுதுவிட்டு) மதீனாவின் கடைக் கோடியிலுள்ள தமது இல்லத்திற்குச் சென்றுவிடுவார். அப்போதும் சூரியன் (வெளிச்சம் குன்றாமல்) இருந்து கொண்டிருக்கும். மஃக்ரிப் (தொழுகையின் நேரம்) குறித்து அபூபர்ஸா (ரலி) அவர்கள் (கூறினார்கள்: ஆனால், அவர்கள்) கூறியதை நான் அறியவில்லை (மறந்துவிட்டேன்)" என்று கூறினார்கள்.
பிறகு (இன்னொரு முறை) அவர்களைச் சந்தித்து வினவியபோது, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகையைத் தொழுவி(த்து முடி)ப்பார்கள். அப்போது (எங்களில்) ஒருவர் (தொழுதுவிட்டுத்) திரும்புவார். அவர் தமக்கு அறிமுகமான பக்கத்திலிருப்பவரைப் பார்த்து (இன்னார் என) அறிந்துகொள்வார் (அந்த அளவிற்கு வெளிச்சம் வந்திருக்கும்). சுப்ஹுத் தொழுகையில் அறுபது முதல் நூறு வசனங்கள்வரை ஓதுவார்கள்" என்று கூறினார்கள்.

1138அபூபர்ஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையைப் பாதி இரவுவரைச் சற்றே தாமதப்படுத்துவதைப் பொருட்படுத்தியதில்லை. இஷாத் தொழுகைக்கு முன் உறங்குவதையும் அதற்குப் பின் பேசிக்கொண்டிருப்பதையும் விரும்பமாட்டார்கள்.
இதை சய்யார் பின் சலாமா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: நான் மற்றொரு முறை சய்யார் பின் சலாமா (ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது "("பாதி இரவுவரை') அல்லது "இரவில் மூன்றில் ஒரு பகுதிவரை' (தாமதப்படுத்துவதைப் பொருட்படுத்தியதில்லை)" என்று கூறினார்கள்.

1139அபூபர்ஸா அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையை இரவின் மூன்றிலொரு பகுதிவரைத் தாமதப்படுத்துவார்கள். இஷாத் தொழுகைக்கு முன் உறங்குவதையும் இஷாவுக்குப் பின் பேசிக்கொண்டிருப்பதையும் வெறுப்பார்கள். ஃபஜ்ர் தொழுகையில் அறுபது முதல் நூறு வசனங்கள் வரை ஓதுவார்கள். தொழுது முடித்துத் திரும்பிச்செல்லும்போது எங்களில் ஒருவர் மற்றவரின் முகத்தை அறிந்து கொள்வார்.

பாடம் : 42 தொழுகையை அதன் உகந்த நேரத்தை விட்டுத் தாமதப்படுத்துவது வெறுக்கப்பட்டதாகும்; "இமாம்' அவ்வாறு தாமதப்படுத்தினால் பின்பற்றும் மக்கள் என்ன செய்ய வேண்டும்?

1140அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "தொழுகையை அதன் உரிய நேரத்தைவிட்டுத் தாமதப்படுத்துபவர்கள், அல்லது தொழுகையை அதன் உரிய நேரத்தில் நிறைவேற்றாமல் சாகடிப்பவர்கள் உங்களுக்குத் தலைவர்களாய் அமைந்தால் உங்களது நிலை எப்படி இருக்கும்?" என்று கேட்டார்கள். நான் "(அப்போது) நான் என்ன செய்ய வேண்டும் என்று எனக்கு உத்தரவிடுகிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "தொழுகையை அதன் உரிய நேரத்தில் தொழுதுகொள்ளுங்கள். பிறகு அவர்களுடன் நீங்கள் தொழுகையை அடைந்துகொண்டால் அப்போதும் (அவர்களுடன் இணைந்து) தொழுது கொள்ளுங்கள். அது உங்களுக்குக் கூடுதலான (நஃபில்) தொழுகையாக அமையும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், கலஃப் பின் ஹிஷாம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அதன் உரிய நேரத்தைவிட்டு' எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

1141அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "அபூதர், எனக்குப் பின்னால் சில தலைவர்கள் தோன்றுவார்கள். அவர்கள் தொழுகையை (உரிய நேரத்தில் தொழாமல் அதை)ச் சாகடிப்பார்கள். அப்போது நீங்கள் தொழுகையை அதன் உரிய நேரத்தில் தொழுது கொள்ளுங்கள்! அவ்வாறு உரிய நேரத்தில் (நீங்கள் தொழுத பின் அவர்களுடனும் சேர்ந்து) நீங்கள் தொழுதால் அது உங்களுக்குக் கூடுதலான (நஃபில்) தொழுகையாக அமையும். இல்லையேல், நீங்கள் உங்களது தொழுகையைப் பேணியவர் ஆகிவிட்டீர்" என்று கூறினார்கள்.

1142அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் உற்ற தோழர் (நபி-ஸல்) அவர்கள் என்னிடம் "(உங்கள் தலைவருடைய சொல்லை) செவியேற்று அதற்குக் கட்டுப்பட வேண்டும்; அவர் (கை, கால்) உறுப்புகள் துண்டிக்கப்பட்ட அடிமையாக இருந்தாலும் சரியே' என்றும்,தொழுகையை உரிய நேரத்தில் தொழ வேண்டும் என்றும் அறிவுறுத்தினார்கள். "பின்னர் மக்கள் தொழுது முடித்துவிட்ட நிலையில் அவர்களை நீங்கள் அடைந்தால், (முன்பே) உங்களது தொழுகையை நீங்கள் காப்பாற்றிக்

கொண்டவராவீர்கள்;அவ்வாறின்றி (அவர்களுடன் சேர்ந்து நீங்கள் மறுபடியும் தொழுதால்) அது உங்களுக்குக் கூடுதலான (நஃபில்) தொழுகையாக அமையும்" என்றும் கூறினார்கள்.

1143அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் தொடையில் அடித்து, "தொழுகையை உரிய நேரத்தில் தொழாமல் தாமதப்படுத்தும் மக்களிடையே நீங்கள் தங்க நேரிட்டால் உங்களது நிலை எப்படி இருக்கும்?" என்று கேட்டார்கள். "(அப்போது) நான் என்ன செய்ய வேண்டும் எனத் தாங்கள் உத்தரவிடுகின்றீர்கள்?" என்று நான் கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உரிய நேரத்தில் தொழுது கொள்ளுங்கள். பிறகு உங்களது தேவைக்காகச் செல்லுங்கள்! நீங்கள் பள்ளிவாசலில் இருக்கும்போதே தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டால் அப்போதும் நீங்கள் தொழுது கொள்ளுங்கள்!" என்று கூறினார்கள்.

1144அபுல்ஆலியா அல்பர்ராஃ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(பஸ்ராவில் ஆட்சியராக இருந்த) இப்னு ஸியாத் தொழுகையைத் தாமதப்படுத்தினார். அப்போது என்னிடம் அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் வந்தார்கள். நான் அவர்களுக்காக ஒரு நாற்காலியை எடுத்துப் போட்டேன். அதில் அவர்கள் அமர்ந்தார்கள். நான் அவர்களிடம் இப்னு ஸியாதின் செயல் குறித்துச் சொன்னேன். அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் தமது உதட்டைக் கடித்துக்கொண்டே என் தொடையில் அடித்துவிட்டு, "நீங்கள் என்னிடம் கேட்டதைப் போன்றே நான் (என் தந்தையின் சகோதரர்) அபூதர் (ரலி) அவர்களிடம் கேட்டேன். அப்போது அபூதர் (ரலி) அவர்கள் உமது தொடையில் நான் அடித்ததைப் போன்றே எனது தொடையில் அடித்துவிட்டு (பின்வருமாறு) கூறினார்கள்: நீங்கள் என்னிடம் கேட்டதைப் போன்றே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நான் உமது தொடையில் அடித்ததைப் போன்றே என் தொடைமீது அடித்துவிட்டு, "தொழுகையை உரிய நேரத்தில் தொழுதுகொள்ளுங்கள்! பின்னர் மக்களுடன் தொழுகின்ற வாய்ப்பு உங்களுக்குக் கிடைத்தால் அப்போதும் நீங்கள் தொழுதுகொள்ளுங்கள். "நான் (ஏற்கெனவே) தொழுதுவிட்டேன். இனி தொழமாட்டேன்' என்று சொல்லாதீர்கள்!" என்றார்கள்.

1145அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தையின் சகோதரர்) அபூதர் (ரலி) அவர்கள் (என்னிடம்), "தொழுகையை உரிய நேரத்தை விட்டுத் தாமதப்படுத்தும் மக்களிடையே நீங்கள் தங்கவேண்டிய நிலை ஏற்பட்டால் "உமது நிலை எப்படி இருக்கும்?' அல்லது (பன்மையில்) "உங்களுடைய நிலை எப்படி இருக்கும்?' "என்று கேட்டுவிட்டுப் பிறகு, "அப்போது தொழுகையை உரிய நேரத்தில் நீங்கள் தொழுதுகொள்ளுங்கள். பிறகு (கூட்டுத்) தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டால் அப்போதும் நீங்கள் மக்களுடன் (சேர்ந்து) தொழுது கொள்ளுங்கள். அது கூடுதல் நன்மையாகும்" என்று சொன்னார்கள்.

1146அபுல் ஆலியா அல்பர்ராஃ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்களிடம், "நாங்கள் வெள்ளிக்கிழமை (ஜுமுஆ) தினத்தன்று சில ஆட்சித் தலைவர்களைப் பின்பற்றித் தொழுகிறோம்; அவர்கள்

தொழுகையைத் தாமதப்படுத்தித் தொழுகின்றனர்" என்று கூறினேன். உடனே அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் எனது தொடையில் வலிக்கும் அளவிற்கு ஓர் அடி அடித்தார்கள். பிறகு, "நான் இது தொடர்பாக (என் தந்தையின் சகோதரர்) அபூதர் (ரலி) அவர்களிடம் கேட்டேன். அப்போது அவர்கள் என் தொடையில் அடித்துவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்: நான் இது தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தொழுகையை உரிய நேரத்தில் தொழுதுகொள்ளுங்கள்! பின்னர் மக்களுடன் நீங்கள் தொழும் தொழுகையைக் கூடுதலான (நஃபில்) தொழுகையாக ஆக்கிக்கொள்ளுங்கள்" என்று சொன்னார்கள்.
மேலும், அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூதர் (ரலி) அவர்களின் தொடையில் அடித்தார்கள் என என்னிடம் தெரிவிக்கப்பட்டது" என்றும் கூறினார்கள்.

## பாடம் : 43 கூட்டுத் தொழுகையின் (ஜமாஅத்) சிறப்பும், கூட்டுத் தொழுகைக்குச் செல்லாமலிருப்பது தொடர்பாக வந்துள்ள கண்டனமும்.

1147அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கூட்டாக (ஜமாஅத்துடன்) தொழுவது, உங்களில் ஒருவர் தனியாகத் தொழுவதைவிட இருபத்தைந்து பங்கு அதிகச் சிறப்புடையதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறவிக்கிறார்கள்.

1148நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் தனியாகத் தொழும் தொழுகையைவிடக் கூட்டாக (ஜமாஅத்துடன்) தொழும் தொழுகை, இருபத்தைந்து மடங்கு அதிகச் சிறப்புடையதாகும். அதிகாலை (ஃபஜ்ர்) தொழுகையில் இரவு நேரத்து வானவர்களும், பகல் நேரத்து வானவர்களும் ஒன்று சேர்கிறார்கள்.
இதை அறிவித்த அபூஹுரைரா (ரலி) அவர்கள், "நீங்கள் விரும்பினால், "(நபியே!) அதிகாலையில் ஓதுவதை (தொழுவதை)க் கடைப்பிடிப்பீராக! (ஏனெனில்,) அதிகாலையில் ஓதுவது (வானவர்களால்) சாட்சியம் சொல்லப்படக்கூடியதாகும்' எனும் (17:78ஆவது) இறைவசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்" என்று சொன்னார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
ஆனால், அவற்றில் "இருபத்தைந்து பங்கு' எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது.

1149அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கூட்டுத் தொழுகையானது, தனியாகத் தொழும் இருபத்தைந்து தொழுகைகளுக்கு நிகரானதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1150உமர் பின் அதாஉ பின் அபில்குவார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு நாள்) நாஃபிஉ பின் ஜுபைர் பின் முத்இம் (ரஹ்) அவர்களுடன் அமர்ந்திருந்தேன். அப்போது ஸைத் பின் ஸப்பான் (ரஹ்) அவர்களுடைய மருமகன் அபூஅப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் அவ்வழியாகச் சென்றார்கள். அன்னாரை நாஃபிஉ (ரஹ்) அவர்கள் அழைத்துப் பின்வருமாறு கூறினார்கள்: "இமாமுடன் சேர்ந்து தொழுவதானது, தனியாகத் தொழும் இருபத்தைந்து தொழுகைகளை விடச் சிறந்ததாகும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூஹுரைரா (ரலி) அவர்கள் சொல்ல நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1151அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கூட்டாக (ஜமாஅத்துடன்) தொழுவது, தனியாகத் தொழுவதைவிட இருபத்தேழு மடங்கு அதிகச் சிறப்புடையதாகும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1152நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் கூட்டாக (ஜமாஅத்துடன்) தொழுவது, தனியாகத் தொழுவதைவிட இருபத்தேழு மடங்கு கூடுதல் நன்மையுடையதாகும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், இப்னு நுமைர் (ரஹ்) அவர்கள் தம் தந்தை நுமைர் அவர்களிடமிருந்து அறிவிக்கும் அறிவிப்பில் "இருபதுக்கும் மேற்பட்ட (மடங்கு நன்மையுடையதாகும்)" என்றும், அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இருபத்தேழு மடங்கு (அதிக நன்மையுடையதாகும்)" என்றும் இடம்பெற்றுள்ளது.
-நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(ஜமாஅத்துடன் தொழுவது தனியாகத் தொழுவதைவிட) இருபதுக்கும் மேற்பட்ட மடங்கு கூடுதல் சிறப்புடையதாகும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1153அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களில் சிலரைச் சில தொழுகைகளில் காணாமல் தேடினார்கள். அப்போது அவர்கள் "நான் ஒரு மனிதரிடம் மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு உத்தரவு பிறப்பித்துவிட்டு, விறகுக் கட்டைகளைக் கொண்டுவரச் சொல்லி, (கூட்டுத்) தொழுகையில் கலந்துகொள்ளாத மக்களை நோக்கிச் சென்று அவர்களை வீட்டோடு தீயிட்டுக் கொளுத்திவிட வேண்டும் என்று எண்ணியதுண்டு. அவர்களில் ஒருவர் சதைத் திரட்சியுள்ள ஓர் எலும்பு கிடைக்கும் எனத் தெரிந்தால்கூட அவர் அதில் (அதாவது இஷாத் தொழுகையில்) கட்டாயம் கலந்துகொள்வார்" என்று (இடித்துக்) கூறினார்கள்.

1154அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நயவஞ்சகர்களுக்கு மிகவும் சிரமமான தொழுகை, இஷாவும் ஃபஜ்ரும் ஆகும். அவர்கள் அவ்விரு தொழுகைகளில் உள்ள சிறப்பை அறிவார்களானால் (முழங்கால்களில்) தவழ்ந்தாவது அத்தொழுகைகளுக்கு வந்து சேர்ந்துவிடுவார்கள். நான் தொழுகைக்கு (பாங்கும்) இகாமத்(தும்) சொல்லுமாறு கட்டளையிட்டுப் பின்னர் ஒருவரை மக்களுக்குத் தலைமையேற்றுத் தொழுவிக்குமாறு பணித்துவிட்டுப் பிறகு விறகுக் கட்டைகள் சகிதமாக என்னுடன் மக்களில் சிலரை அழைத்துக்கொண்டு, கூட்டுத் தொழுகையில் கலந்துகொள்ளாத மக்களை நோக்கிச் சென்று, அவர்களை வீட்டோடு சேர்த்து எரித்துவிட வேண்டும் என எண்ணியதுண்டு.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1155ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் உதவியாளர்களிடம் விறகுக்கட்டைகளைச் சேகரித்து வருமாறு உத்தரவிட்டுப் பின்னர் ஒரு மனிதரிடம் மக்களுக்குத் தலைமையேற்றுத் தொழுவிக்குமாறு கூறிவிட்டுப் பிறகு (கூட்டுத் தொழுகையில் கலந்துகொள்ளாத) வீட்டாரை அவர்களுடைய வீடுகளுடன் சேர்த்து எரித்துவிட வேண்டும் என நான் எண்ணியதுண்டு.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1156அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஜுமுஆத் தொழுகையில் கலந்துகொள்ளாத சிலர் குறித்து, "நான் ஒரு மனிதரிடம் மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு கூறிவிட்டு, பின்னர் ஜுமுஆத் தொழுகையில் கலந்துகொள்ளாமல் (வீட்டில்) இருப்பவர்களை (நோக்கிச் சென்று அவர்களை) வீட்டோடு சேர்த்து எரித்துவிட வேண்டும் என எண்ணியதுண்டு" என்று கூறினார்கள்.

பாடம் : 44 தொழுகை அறிவிப்பைக் கேட்பவர் பள்ளிவாசலுக்குச் செல்வது கட்டாயமாகும்.

1157அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் பார்வையற்ற ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! என்னைப் பள்ளிவாசலுக்கு அழைத்து வரக்கூடிய வழிகாட்டி எவரும் எனக்கு இல்லை" என்று கூறி, வீட்டிலேயே தொழுதுகொள்ள தமக்கு அனுமதியளிக்குமாறு கோரினார். அப்போது நபி (ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதியளித்தார்கள். பிறகு அவர் திரும்பிச் சென்றபோது அவரை அழைத்து, "தொழுகை அறிவிப்பு சப்தம் உமக்குக் கேட்கிறதா?" என்று கேட்டார்கள். அவர் "ஆம்' (கேட்கிறது) என்றார். நபி (ஸல்) அவர்கள் "அப்படியானால் நீர்

அதற்கு செவிசாய்ப்பீராக!" (கூட்டுத்தொழுகையில் வந்து கலந்துகொள்வீராக!) என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 45 கூட்டுத் தொழுகை நேரிய வழிகளில் ஒன்றாகும்.**

1158அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் பார்த்தவரை எங்களிடையே நயவஞ்சகர் என (வெளிப்படையாக) அறியப்பட்டவரையும் நோயாளியையும் தவிர வேறெவரும் (கூட்டுத்) தொழுகையில் கலந்துகொள்ளாமல் இருந்த தில்லை. நோயாளிகூட இரு மனிதர்களுக்கிடையே (தொங்கியவாறு) நடந்துவந்து தொழுகையில் சேர்ந்துவிடுவார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு நேரிய வழிகளைக் கற்பித்தார்கள். தொழுகை அறிவிப்புச் செய்யப்படும் பள்ளிவாசலில் தொழுவது அத்தகைய நேர்வழிகளில் ஒன்றாகும்.

1159அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
யார் நாளை (மறுமை நாளில்) முஸ்லிமாக அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புகிறாரோ அவர் தொழுகை அறிவிப்புச் செய்யப்படும் இடங்களில் (பள்ளிவாசல்களில்) இந்தத் தொழுகைகளைப் பேணி(த் தொழுது)வரட்டும். ஏனெனில்,அல்லாஹ் உங்கள் நபி (ஸல்) அவர்களுக்கு நேரிய வழிகளைக் காட்டியுள்ளான். (கூட்டுத்) தொழுகைகள் நேரிய வழிகளில் உள்ளவையாகும். கூட்டுத் தொழுகையில் கலந்துகொள்ளாமல் தமது வீட்டிலேயே தொழுதுகொள்ளும் இன்ன மனிதரைப் போன்று நீங்களும் உங்கள் வீடுகளிலேயே தொழுதுவருவீர்களானால் நீங்கள் உங்கள் நபியின் வழிமுறைகளைக் கைவிட்டவர் ஆவீர்கள். உங்கள் நபியின் வழிமுறையை நீங்கள் கைவிட்டால் நிச்சயம் நீங்கள் வழிதவறிவிடுவீர்கள்.
யார் "அங்கத் தூய்மை' (உளூ) செய்து அதைச் செம்மையாகவும் செய்து பின்னர் இப்பள்ளிவாசல்களில் ஒன்றை நோக்கி வருகிறாரோ அவர் எடுத்துவைக்கும் ஒவ்வோர் அடிக்கும் அவருக்கு அல்லாஹ் ஒரு நன்மையை எழுதுகிறான்;அவருக்கு ஒரு தகுதியை உயர்த்துகிறான்; அவருடைய பாவங்களில் ஒன்றை மன்னித்துவிடுகிறான். நான் பார்த்தவரை எங்களிடையே நயவஞ்சகம் அறியப்பட்ட நயவஞ்சகரைத் தவிர வேறெவரும் கூட்டுத் தொழுகையில் கலந்துகொள்ளாமல் இருந்ததில்லை. (எங்களில் நோயாளியான) ஒரு மனிதர் இரு மனிதருக்கிடையே தொங்கியவாறு அழைத்துவரப்பட்டு (கூட்டுத்) தொழுகையில் நிறுத்தப்பட்டதுண்டு.

**பாடம் : 46 தொழுகை அறிவிப்பாளர் (முஅத்தின்) அறிவிப்புச் செய்த பிறகு பள்ளிவாசலை விட்டு வெளியேறலாகாது.**

1160அபுஷ்ஷஅஸா அல்முஹாரிபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அபூஹுரைரா (ரலி) அவர்களுடன் பள்ளிவாசலில் அமர்ந்திருந்தோம். அப்போது தொழுகை அறிவிப்பாளர் (முஅத்தின்) அறிவிப்புச் செய்தார். உடனே (அங்கிருந்த) ஒரு மனிதர் பள்ளிவாசலில் இருந்து எழுந்து சென்றார். அந்த மனிதர் பள்ளிவாசலைவிட்டு

வெளியேறும்வரை அவரையே பார்த்துக் கொண்டிருந்த அபூஹுரைரா (ரலி) அவர்கள் பிறகு, "கவனியுங்கள்: இவர், அபுல்காசிம் (முஹம்மத்-ஸல்) அவர்களுக்கு மாறு செய்துவிட்டார்" என்று கூறினார்கள்.

1161அபுஷ்ஷஅஸா அல்முஹாரிபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
தொழுகை அறிவிப்புச் செய்யப்பட்ட பின் பள்ளிவாசலை விட்டு வெளியேறிக்கொண்டிருந்த ஒரு மனிதரை அபூஹுரைரா (ரலி) அவர்கள் பார்த்தார்கள். அப்போது அவர்கள், "கவனியுங்கள்: இந்த மனிதர், அபுல்காசிம் (முஹம்மத்-ஸல்) அவர்களுக்கு மாறு செய்துவிட்டார்" என்று கூறினார்கள்.

பாடம் : 47 இஷாவையும் சுப்ஹையும் ஜமாஅத்துடன் தொழுவதன் சிறப்பு.

1162அப்துர் ரஹ்மான் பின் அபீஅம்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் மஃக்ரிப் தொழுகைக்குப் பிறகு பள்ளிவாசலுக்கு வந்து தனியாக அமர்ந்திருந்தார்கள். அவர்களிடம் சென்று நானும் அமர்ந்தேன். அப்போது அவர்கள், "என் சகோதரரின் புதல்வரே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஷாத் தொழுகையை ஜமாஅத்துடன் தொழுகின்றவர், பாதி இரவுவரை நின்று வணங்கியவரைப் போன்றவர் ஆவார். சுப்ஹுத் தொழுகையை ஜமாஅத்துடன் தொழுகின்றவர், இரவு முழுதும் நின்று வணங்கியவரைப் போன்றவர் ஆவார்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1163அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சுப்ஹுத் தொழுதவர் அல்லாஹ்வின் பொறுப்பில் இருக்கிறார். இவ்வாறு அல்லாஹ்வின் பொறுப்பிலுள்ள ஒன்றின் விஷயத்தில் (நீங்கள் வரம்பு மீறி நடந்து, அது குறித்து) அல்லாஹ் உங்களிடம் விசாரணை செய்து, அதை உங்களிடம் கண்டுகொண்டதால் உங்களை நரக நெருப்பில் குப்புறத் தள்ளும் நிலை உங்களுக்கு ஏற்பட்டுவிட வேண்டாம்.
இதை ஜுன்தப் பின் அப்தில்லாஹ் பின் சுஃப்யான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1164அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சுப்ஹுத் தொழுகையைத் தொழுதவர் அல்லாஹ்வின் பொறுப்பில் இருக்கிறார். இவ்வாறு அல்லாஹ்வின் பொறுப்பிலுள்ள ஒன்றைக் குறித்து அவன் உங்களிடம் விசாரணை செய்(யும் நிலையை நீங்கள் ஏற்படுத்)திட வேண்டாம். ஏனெனில், அவன் தன் பொறுப்பிலுள்ள ஒன்றைக் குறித்து ஒருவரிடம் விசாரிக்கத் தொடங்கினால், அதைக் கண்டுபிடித்தே தீருவான். பின்னர் (வரம்பு மீறி நடந்துகொண்ட) அவனை நரக நெருப்பில் அல்லாஹ் முகங்குப்புறத் தள்ளிவிடுவான்.
இதை ஜுன்தப் பின் அப்தில்லாஹ் பின் சுஃப்யான் அல்கஸ்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் ஜுன்தப் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "நரக நெருப்பில் குப்புறத் தள்ளிவிடுவான்' எனும் வாசகம் இடம்பெறவில்லை.

## பாடம் : 48 தகுந்த காரணமிருப்பின் கூட்டுத் தொழுகை (ஜமாஅத்து)க்குச் செல்லாமல் இருக்க அனுமதியுண்டு.

1165 பத்ருப் போரில் கலந்துகொண்ட அன்சாரி நபித்தோழர்களில் ஒருவரான இத்பான் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! நான் என் (பனூசாலிம்) சமூகத்தாருக்குத் தொழுகை நடத்துபவனாக இருக்கின்றேன். நான் கண் பார்வையை இழந்துவருகிறேன். மழை வந்தால் எனக்கும் (என் சமூகத்தாரான) அவர்களுக்குமிடையே உள்ள பள்ளத்தாக்கில் வெள்ளநீர் வழிந்தோடும். இந்நிலையில் அவர்களுடைய பள்ளிவாசலுக்குச் சென்று அவர்களுக்கு என்னால் தொழவைக்க இயலவில்லை. ஆகவே,அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் வந்து (எனது வீட்டில்) ஓரிடத்தில் தொழுகை நடத்த வேண்டுமென்றும், (தாங்கள் நின்று தொழும்) அந்த இடத்தை நான் (என்) தொழுமிடமாக ஆக்கிக்கொள்ள வேண்டுமென்றும் விரும்புகிறேன்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்ஷா அல்லாஹ் (இறைவன் நாடினால்) நான் (அவ்வாறே) செய்வேன்" என்று சொன்னார்கள்.
தொடர்ந்து இத்பான் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
மறுநாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்களும் நண்பகல் நேரத்தில் என்னிடம் வந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என் இல்லத்தினுள் நுழைய) அனுமதி கேட்டார்கள். நான் அனுமதியளித்தேன். உள்ளே வந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உடனே உட்காரவில்லை. பிறகு என்னிடம் "(இத்பான்!) உங்கள் வீட்டில் எந்த இடத்தில் நான் தொழவேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்கள்?" என்று கேட்டார்கள். நான் வீட்டின் ஒரு மூலையைக் காட்டினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்த இடத்தில்) நின்று "தக்பீர் (தஹ்ரீம்)' சொன்னார்கள். நாங்கள் அவர்களுக்குப் பின்னே (அணிவகுத்து) நின்றோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்கள் தொழுது, சலாம் கொடுத்தார்கள். நாங்கள் அவர்களுக்காகச் சமைத்திருந்த "கஸீர்' எனும் (கஞ்சி) உணவி(னை விருந்தளிப்பத)ற்காக அவர்களை நாங்கள் இருக்கவைத்தோம்.
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்திருப்பதைக் கேள்விப்பட்ட) அந்தப் பகுதி மக்கள் எங்களைச் சுற்றிக் குழுமிவிட்டனர். கணிசமான பேர் (சிறுகச் சிறுக) வந்து (என்) வீட்டில் திரண்டுவிட்டனர். அவர்களில் ஒருவர், "மாலிக் பின் துக்ஷுன் எங்கே?" என்று கேட்டார். அதற்கு அவர்களில் மற்றொருவர், "அவர் அல்லாஹ்வையும் அல்லாஹ்வுடைய தூதரையும் நேசிக்காத ஒரு நயவஞ்சகர் (அதனால்தான் அல்லாஹ்வின் தூதரைச் சந்திக்க அவர் வரவில்லை)" என்று சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரைப் பற்றி அவ்வாறு சொல்லாதீர்கள். அல்லாஹ்வின் திருப்தியை நாடியவராக அவர் "லா இலாஹ இல்லல்லாஹ்' (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை) என்று சொன்னதை நீங்கள் பார்க்கவில்லையா?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள் "அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நன்கு அறிந்தவர்கள்" என்று கூறினார்கள். அ(வ்வாறு நயவஞ்சகர் என

விமரிசித்த)வர், "(அல்லாஹ்வின் தூதரே!) அவர் (மாலிக் பின் துக்ஷுன்) நயவஞ்சகர்களுடன் தொடர்பு வைத்திருப்பதையும் அவர்கள்மீது அபிமானம் கொண்டிருப்பதையுமே நாங்கள் காண்கிறோம்" என்று சொன்னார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் திருப்தியை நாடி "லா இலாஹ இல்லல்லாஹ்' என்று சொன்னவரை நரகத்திலிருந்து அல்லாஹ் தடுத்து (ஹராமாக்கி)விட்டான்" என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
பனூசாலிம் குலத்தைச் சேர்ந்தவரும் அவர்களில் முக்கியப் பிரமுகருமான ஹுஸைன் பின் முஹம்மத் அல்அன்சாரி (ரஹ்) அவர்களிடம் மஹ்மூத் பின் அர்ரபீஉ அல்அன்சாரி (ரலி) அவர்கள் அறிவித்த இந்த ஹதீஸ் குறித்துக் கேட்டேன். அவர்கள் அதை "உண்மைதான்' என உறுதிப்படுத்தினார்கள்.

1166மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "(அம்மக்களில்) ஒருவர் "மாலிக் பின் "துக்ஷுன்' அல்லது "துகைஷின்' எங்கே?" என்று கேட்டார்' என்று இடம்பெற்றுள்ளது. மேலும், அறிவிப்பாளர் மஹ்மூத் பின் அர்ரபீஉ (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறியதாகவும் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது:
நான் இந்த ஹதீஸைச் சிலரிடம் அறிவித்த போது அவர்களிடையே அபூஅய்யூப் அல் அன்சாரி (ரலி) அவர்களும் இருந்தார்கள். அவர்கள், "நீங்கள் சொன்னதைப் போன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியிருக்க மாட்டார்கள் என்று நான் எண்ணுகிறேன்" என்றார்கள். உடனே நான் "இத்பான் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் திரும்பச் சென்றால் அவர்களிடம் இது குறித்து (மீண்டும்) கேட்பேன்' என்று சத்தியம் செய்தேன். அவ்வாறே நான் இத்பான் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் சென்றேன். இத்பான் (ரலி) அவர்கள் பார்வையை இழந்த முதியவராக இருந்தார்கள்; தம் சமூகத்தாருக்கு இமாமாக (தொழுகை நடத்துபவராக) இருந்தார்கள். அவர்களுக்கு அருகில் நான் அமர்ந்து இந்த ஹதீஸ் தொடர்பாகக் கேட்டேன். அப்போது அவர்கள் முன்பு அறிவித்ததைப் போன்றே எனக்கு அறிவித்தார்கள்.
இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
இந்த நிகழ்ச்சிக்குப் பின்னரே கடமைகளும் இன்ன பிற விதிகளும் அருளப்பெற்றன. இவை அருளப்பெற்றதோடு இந்த விஷயம் முற்றுப்பெற்றுவிட்டது. எனவே, ஏமாந்துவிடாமலிருக்க முடிந்தவர் ஏமாந்துவிடாதிருக்கட்டும்.

1167மஹ்மூத் பின் அர்ரபீஉ அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நான் சிறுவனாக இருந்தபோது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் வீட்டிலிருந்த (கிணறு ஒன்றிலிருந்து) வாளியில் (தண்ணீர் எடுத்துத் தமது வாயில் ஊற்றி என் முகத்தில்) ஒரு முறை (செல்லமாக) உமிழ்ந்ததை நான் (இப்போதும்) நினைவில் வைத்திருக்கிறேன்.
என்னிடம் இத்பான் பின் மாலிக் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
நான் "அல்லாஹ்வின் தூதரே! என் பார்வை கெட்டுவிட்டது..." என்று தொடங்கி, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு இரண்டு ரக்அத்கள் தொழுவித்தார்கள்.

நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காகத் தயாரித்திருந்த கோதுமை மாவுக் கஞ்சி(யை அவர்கள் பருக வேண்டும் என்ற ஆசை)க்காக அவர்களை இருக்கவைத்தோம்" என்று ஹதீஸ் முடிகிறது. அதற்குப் பின்புள்ள குறிப்புகள் இடம்பெறவில்லை.

**பாடம் : 49 கூடுதலான தொழுகைகளையும் (நஃபில்) ஜமாஅத்தாகத் தொழலாம்; சுத்தமான பாய், தொழுகை விரிப்பு, துணி போன்றவற்றின் மீது தொழலாம்.**

1168அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் (தாய் வழிப்)பாட்டி முலைக்கா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காக உணவு தயாரித்து (விருந்துண்ண) அவர்களை அழைத்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வந்து) அதில் சிறிதளவைச் சாப்பிட்டுவிட்டுப் பிறகு, "எழுங்கள், உங்களுக்காக நான் (நஃபில் தொழுகை) தொழுவிக்கிறேன்" என்று கூறினார்கள். நான் எங்கள் பாயொன்றை (எடுப்பதற்காக அதை) நோக்கி எழுந்தேன்; அதுவோ நீண்ட நாட்கள் விரிக்கப்பட்டிருந்ததால் கறுப்பாகிவிட்டிருந்தது. ஆகவே, அதில் நான் தண்ணீர் தெளித்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுகைக்காக) அதில் நின்றார்கள். உடனே நானும் ஓர் அநாதைச் சிறுவரும் (ளுமைர் பின் சஅத்) அவர்களுக்குப் பின்னால் அணியில் நின்றோம். அந்த மூதாட்டி (உம்மு சுலைம்) எங்களுக்குப் பின்னால் நின்றுகொண்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்கள் தொழுவித்து விட்டுத் திரும்பிச்சென்றார்கள்.

1169அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிலேயே மிகவும் நற்குணமுடையவராக விளங்கினார்கள். அவர்கள் எங்கள் வீட்டில் இருக்கும்போது சில வேளைகளில் தொழுகை(யின் நேரம்) வந்துவிடும். உடனே, தாம் அமரும் விரிப்பைச் சுத்தம் செய்திடுமாறு பணிப்பார்கள். அவ்வாறே அது பெருக்கி(த் துடைத்து)ச் சுத்தம் செய்யப்பட்டுத் தண்ணீர் தெளிக்கப்படும். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்னே நிற்க, நாங்கள் அவர்களுக்குப் பின்னால் நிற்போம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுவிப்பார்கள். (அன்று) மக்களுடைய விரிப்பு பேரீச்ச மட்டையால் செய்யப்பட்டதாகவே இருந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1170அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் (எங்கள் வீட்டுக்கு) வந்தார்கள். அப்போது (வீட்டில்) நான், என் தாயார் மற்றும் என் சிறிய தாயார் உம்முஹராம் (ரலி) ஆகியோர் மட்டுமே இருந்தோம். நபி (ஸல்) அவர்கள், "எழுங்கள்! உங்களுக்காக நான் (நஃபில்) தொழுவிக்கப் போகிறேன்" என்று கூறிவிட்டு எங்களுக்கு (தலைமை தாங்கித்) தொழுவித்தார்கள். (அது கடமையான தொழுகையின் நேரமல்ல ).
-இதன் அறிவிப்பாளரான ஸாபித் (ரஹ்) அவர்களிடம் ஒரு மனிதர், "நபி (ஸல்) அவர்கள் அனஸ் (ரலி) அவர்களைத் தமக்கு (அருகில்) எந்தப் பக்கத்தில் நிறுத்தினார்கள்?" என்று

கேட்டார். அதற்கு ஸாபித் (ரஹ்) அவர்கள் "நபி (ஸல்) அவர்கள் அனஸ் (ரலி) அவர்களைத் தமக்கு வலப் பக்கத்தில் நிறுத்தினார்கள்" என்று பதிலளித்தார்கள்-.
பின்னர், நபி (ஸல்) அவர்கள் எங்கள் குடும்பத்தாருக்காக எல்லா விதமான இம்மை மறுமை நன்மை வேண்டிப் பிரார்த்தித்தார்கள். அப்போது என் தாயார், "அல்லாஹ்வின் தூதரே! (அனஸ்,) உங்களுடைய சிறு சேவகர். அவருக்காக நீங்கள் பிரார்த்தியுங்கள்!" என்றார். நபி (ஸல்) அவர்கள் "எனக்கு எல்லா விதமான நன்மையும் வேண்டிப் பிரார்த்தித்தார்கள். அவர்கள் எனக்காகச் செய்த பிரார்த்தனையின் இறுதியில், "இறைவா! அனஸுக்குச் செல்வத்தையும் குழந்தைகளையும் அதிகமாக்குவாயாக! அதில் அவருக்கு வளம் பாலிப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

1171அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கும் என் தாயாருக்கும், அல்லது என் சிறிய தாயாருக்கும் (தலைமை தாங்கித்) தொழுகை நடத்தினார்கள். அப்போது என்னைத் தமக்கு வலப் பக்கத்திலும் பெண்ணை எங்களுக்குப் பின்னாலும் நிறுத்தினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1172நபி (ஸல்) அவர்களின் துணைவியார் மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழும்போது அவர்களுக்கு அருகில் நான் (உறங்கிக்கொண்டு) இருப்பேன். அவர்கள் சிரவணக்கம் (சஜ்தா) செய்யும்போது சில நேரங்களில் அவர்களது ஆடை என்மீது படும். நபி (ஸல்) அவர்கள் (சிறியதொரு) தொழுகை விரிப்பில் தொழுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1173அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் பாய் ஒன்றில் சஜ்தாச் செய்து தொழுது கொண்டிருப்பதைக் கண்டேன்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 50 கூட்டாகத் தொழுவது மற்றும் தொழுகையை எதிர்பார்த்திருப்பது ஆகியவற்றின் சிறப்பு.

1174அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் தமது வீட்டில் தொழுவதைவிடவும், தமது கடைத்தெருவில் தொழுவதைவிடவும் அவர் ஜமாஅத்துடன் தொழுவது இருபதுக்கும் மேற்பட்ட மடங்கு அதிகச் சிறப்புடையதாகும். ஏனெனில், உங்களில் ஒருவர் அங்கத் தூய்மை (உளூ) செய்து, அதைச் செம்மையாகவும் செய்து, தொழ வேண்டும் என்ற ஆர்வத்தில், தொழுகின்ற ஒரே நோக்கத்துடன் பள்ளிவாசலுக்கு வந்தால் அவர் பள்ளிவாசலுக்குள் நுழையும்வரை அவர் எடுத்துவைக்கும் ஒவ்வோர் அடிக்கும் ஒரு தகுதி அவருக்கு உயர்த்தப்படுகிறது; ஒரு தவறு அவருக்காக மன்னிக்கப்படுகிறது. அவர் பள்ளிவாசலுக்குள் நுழைந்துவிட்டால், தொழுகையை எதிர்பார்த்து அவர் தம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டிருக்கும்வரை அவர் தொழுதுகொண்டிருப்பவராகவே

கருதப்படுகிறார். உங்களில் ஒருவர் தாம் தொழுத இடத்திலேயே வீற்றிருக்கும்வரை அவருக்காக வானவர்கள் பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறார்கள். "இறைவா! இவருக்குக் கருணை புரிவாயாக! இறைவா! இவருக்கு மன்னிப்பளிப்பாயாக! இறைவா! இவரது பாவமன்னிப்பை ஏற்பாயாக!" என்று அவர்கள் கூறுகின்றனர். அவர் சிறு துடக்கின் மூலம் தொல்லை தராதவரை (இது நீடிக்கும்.)
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1175அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தாம் தொழுத இடத்திலேயே வீற்றிருக்கும்வரை அவருக்காக வானவர்கள் பிரார்த்திக்கிறார்கள்."இறைவா! இவருக்கு மன்னிப்பளிப்பாயாக! இறைவா! இவருக்குக் கருணை புரிவாயாக!" என்று அவர்கள் பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறார்கள்; அவருக்குச் சிறு துடக்கு ஏற்படாமல் இருந்தால். உங்களில் ஒருவர் தொழுகையை எதிர்பார்த்துத் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கும்வரை அவர் தொழுது கொண்டிருப்பவராகவே கருதப்படுகிறார்.

1176அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அடியார் தொழுகையை எதிர்பார்த்துத் தொழுமிடத்தில் வீற்றிருக்கும்வரை அவர் தொழுகையில் இருப்பவராகவே கருதப்படுகிறார். அப்போது வானவர்கள், "இறைவா! இவருக்கு மன்னிப்பளிப்பாயாக! இறைவா! இவருக்குக் கருணை புரிவாயாக!" என்று பிரார்த்திக்கின்றனர். அவர் திரும்பிச் செல்லும்வரை அல்லது அவருக்குச் சிறு துடக்கு ஏற்படும்வரை (இது நீடிக்கும்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூராஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் "சிறு துடக்கு எது?" என்று கேட்டேன். அதற்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள் "சப்தமின்றியோ அல்லது சப்தத்துடனோ காற்று பிரிவதாகும்" என்று பதிலளித்தார்கள்.

1177அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தொழுகையை எதிர்பார்த்துத் தம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டதுடன், அவர் தம் குடும்பத்தாரிடம் திரும்பிச் செல்லவிடாமல் தொழுகை அவரைத் தடுத்து வைத்திருக்குமானால், அவர் தொழுதுகொண்டிருப்பவராகவே கருதப்படுகிறார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1178அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தொழுகையை எதிர்பார்த்து வீற்றிருக்கும்வரை அவர் தொழுது கொண்டிருப்பவராகவே கருதப்படுகிறார்; அவருக்குச் சிறு துடக்கு ஏற்படாமல் இருந்தால். அப்போது அவருக்காக வானவர்கள், "இறைவா! இவருக்கு மன்னிப்பளிப்பாயாக! இறைவா! இவருக்குக் கருணை புரிவாயாக!" என்று பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 51 பள்ளிவாசல்களுக்கு அதிகக் காலடிகள் எடுத்துவைத்து (வெகு தொலைவிலிருந்து) செல்வதன் சிறப்பு.

1179அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களில் தொழுகைக்காக அதிக நன்மை பெறுகின்றவர் (யாரெனில்), (தொழுகைக்காக) வெகுதொலைவிலிருந்து நடந்துவருபவர் ஆவார். அடுத்து அதற்கடுத்த தொலை தூரத்திலிருந்து வருபவர் ஆவார். யார் இமாமுடன் தொழக்காத்திருக்கிறாரோ அவர், (தனியாகத்) தொழுதுவிட்டு உறங்கிவிடுபவரைவிட அதிக நன்மை அடைபவராவார்.
இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இமாமுடன் ஜமாஅத்தாகத் தொழக்காத்திருக்கிறாரோ' எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது.

1180உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் இருந்தார். (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்கு அவரைவிட வெகு தொலைவிலிருந்து நடந்துவருபவர் வேறு எவரையும் நான் அறிந்திருக்கவில்லை. அவர் எந்தவொரு தொழுகையையும் தவறவிடமாட்டார். எனவே அவரிடம், "நீங்கள் ஒரு கழுதை வாங்கிக்கொண்டால் நன்றாயிருக்குமே! அதன் மீது பயணம் செய்து காரிருளிலும் கடும் வெப்பத்திலும் (தொழுகைக்கு) வரலாமே?" என்று "கேட்கப்பட்டது' அல்லது "(அவ்வாறு) நான் கேட்டேன்'. அதற்கு அவர், "எனது இல்லம் பள்ளிவாசலுக்கு அருகிலேயே அமைந்திருப்பது எனக்கு மகிழ்ச்சியளிக்காது. (ஏனெனில்,) நான் பள்ளிவாசலுக்கு நடந்துவருவதும் (பள்ளி வாசலில் இருந்து) இல்லத்தாரிடம் திரும்பிச் செல்வதும் எனக்கு (நன்மைகளாக)ப் பதிவு செய்யப்பட வேண்டுமென நான் விரும்புகிறேன்" என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவை அனைத்தையும் சேர்த்து அல்லாஹ் உங்களுக்கு வழங்கிவிட்டான்" என்று கூறினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது
-உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் ஒருவருடைய வீடு மதீனாவிலேயே (பள்ளிவாசலுக்கு) வெகு தொலைவில் அமைந்திருந்தது. அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் எல்லாத் தொழுகைகளிலும் தவறாமல் கலந்துகொள்வார். நாங்கள் அவருக்காக (வெகு தொலைவிலிருந்து சிரமப்பட்டு வருகிறாரே என்று) அனுதாபப்பட்டோம். இதையடுத்து அவரிடம் நான், "இன்னாரே! நீங்கள் கழுதையொன்றை வாங்கி (அதில் பயணம் செய்து வருவீரா)னால் நன்றாயிருக்குமே! கடும் வெப்பத்திலிருந்தும் விஷஜந்துக்களிலிருந்தும் உங்களைக் காத்துக்கொள்ளலாமே?" என்று கேட்டேன். அதற்கு அவர், "அறிவீர்: அல்லாஹ்வின் மீதாணையாக! எனது இல்லம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்களுடைய இல்லத்துடன் (மஸ்ஜிதுந் நபவீ அருகிலேயே கயிறுகளால் இணைத்துக்) கட்டப்பட்டிருக்க வேண்டும் என நான் விரும்பவில்லை"என்று கூறினார். அவர் அவ்வாறு கூறியது எனக்கு மிகுந்த மன வேதனையளிக்கவே நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்து நடந்ததைத் தெரிவித்தேன். நபி (ஸல்) அவர்கள் அவரை அழைத்(து விசாரித்)தார்கள். அவர் முன்பு (என்னிடம்) கூறியதைப் போன்றே கூறினார். மேலும், தம் கால் சுவடுகளுக்கு நன்மை பதிவு செய்யப்பட வேண்டுமெனத் தாம் விரும்புவதாகவும் அவர் தெரிவித்தார். நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் எதிர்பார்த்த நன்மை உங்களுக்கு உண்டு" என்று கூறினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1181ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்கள் குடியிருப்புகள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்குத் தொலைவில் அமைந்திருந்தன. ஆகவே, நாங்கள் எங்கள் வீடுகளை விற்றுவிட்டுப் பள்ளிவாசலுக்கு அருகில் குடியேற விரும்பினோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்ய வேண்டாமென எங்களுக்குத் தடை விதித்தார்கள். மேலும், "உங்களது ஒவ்வொரு காலடிக்கும் உங்களுக்கு ஒரு தகுதி உண்டு" என்று கூறினார்கள்.

1182ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலைச் சுற்றி காலி மனைகள் இருந்தன. பனூசலிமா குலத்தார் பள்ளிவாசலுக்கு அருகிலேயே குடியேற விரும்பினர். இந்த விஷயம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது அவர்கள், "நீங்கள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்கு அருகில் குடியேறப்போவதாக நான் அறிந்தேனே (அது உண்மையா)?"என்று கேட்டார்கள். அதற்கு பனூசலிமா குலத்தார் "ஆம், அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அவ்வாறு விரும்பினோம்" என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பனூசலிமா குலத்தாரே! உங்கள் குடியிருப்புகள் அங்கேயே இருக்கட்டும்! உங்கள் காலடிகள் (அளவுக்கு நன்மைகள்) பதிவு செய்யப்படும்; உங்கள் குடியிருப்புகள் அங்கேயே இருக்கட்டும்! உங்கள் காலடிகள் (அளவுக்கு நன்மைகள்) பதிவு செய்யப்படும்" என்று (இரு முறை) கூறினார்கள்.

1183ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பனூசலிமா குலத்தார் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்கு அருகில் குடியேற விரும்பினர். அப்போது (பள்ளிவாசலுக்கு அருகிலிருந்த) மனைகள் காலியாக இருந்தன. இந்த விஷயம் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது அவர்கள், "பனூசலிமா குலத்தாரே! உங்கள் குடியிருப்புகள் அங்கேயே இருக்கட்டும். உங்கள் காலடிகள் (அளவுக்கு நன்மைகள்) பதிவு செய்யப்படும்" என்று கூறினார்கள். பனூசலிமா குலத்தார், "நாங்கள் அவ்வாறு குடியேறியிருந்தால் எங்களுக்கு அது மகிழச்சியளித்திருக்காது" என்று கூறினர்.

**பாடம் : 52 தொழுகைக்காக நடந்துசெல்வதால் தவறுகள் மன்னிக்கப்படுகின்றன; தகுதிகள் உயர்த்தப்படுகின்றன.**

1184அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் தமது வீட்டிலேயே அங்கத் தூய்மை (உளூ) செய்துவிட்டு இறைக் கட்டளை(களான தொழுகை)களில் ஒன்றை நிறைவேற்றுவதற்காக இறையில்லங்களில் ஒன்றை நோக்கி நடந்து செல்கிறாரோ, (அவர் எடுத்துவைக்கும்) இரு காலடிகளில் ஒன்று அவருடைய தவறுகளில் ஒன்றை அழித்துவிடுகிறது; மற்றொன்று அவருடைய தகுதியை உயர்த்தி விடுகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்
.

1185அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவருடைய (வீட்டு) வாசலில் ஓர் ஆறு (ஓடிக்கொண்டு) இருக்கிறது. அதில் அவர் தினமும் ஐந்து முறை நீராடுகிறார். இந்நிலையில் அவரது உடலில் அழுக்கேதும் இருக்குமா?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள் "அவரது உடலில் அழுக்கேதும் இராது" என்று பதிலளித்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது தான் ஐவேளைத் தொழுகைகளின் நிலையாகும். அ(வற்றை நிறைவேற்றுவ)தன் மூலம் அல்லாஹ் தவறுகளை அழிக்கிறான்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாக வந்துள்ளது.

1186அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஐவேளைத் தொழுகையின் நிலையானது, உங்கள் வீட்டு வாசலில் ஓடும் ஆழமான நதிக்கு ஒத்திருக்கிறது. அதில் அவர் நாள்தோறும் ஐந்து முறை குளித்துவருகிறார்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "(அவ்வாறு ஐந்து முறை குளித்தால்) அவரது உடலில் அழுக்கெதையும் அது விட்டுவைக்குமா?" என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டதாக) இடம்பெற்றுள்ளது.

1187அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் பள்ளிவாசலுக்குக் காலையிலோ மாலையிலோ சென்று வந்தால் அவர் ஒவ்வொரு முறை சென்று வரும்போதும் அவருக்காக அல்லாஹ் சொர்க்கத்தில் ஒரு மாளிகையை (அல்லது விருந்தை)த் தயார் செய்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 53 சுப்ஹுத் தொழுகைக்குப் பின் (சூரிய உதயம்வரை) தொழுத இடத்திலேயே அமர்ந்திருப்பதன் சிறப்பும் பள்ளிவாசல்களின் சிறப்பும்.

1188சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களிடம், "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அவையில் அமர்ந்திருக்கிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஆம், அதிகமாக (அமர்ந்திருக்கிறேன்). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சூரியன் உதயமாகாத வரை (சுப்ஹுத் தொழுத இடத்திலிருந்து) எழமாட்டார்கள். சூரியன் உதயமான பின் (அங்கிருந்து) எழுவார்கள். அப்போது மக்கள் அறியாமைக் காலம் குறித்துப் பேசிச் சிரித்துக் கொண்டிருப்பார்கள். (இதைக் கேட்டு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்துக் கொண்டிருப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது .

1189ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுகை தொழுதுவிட்டு தொழுத இடத்திலேயே சூரியன் நன்கு உதயமாகும்வரை அமர்ந்திருப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நன்கு' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1190அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் ஊரிலுள்ள இடங்களில் அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமான இடம் பள்ளிவாசலாகும். ஓர் ஊரிலுள்ள இடங்களிலேயே அல்லாஹ்வின் வெறுப்பிற்குரிய இடம் கடைத்தெருவாகும். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 54 தொழவைப்பதற்கு (இமாமத்) அதிகத் தகுதியுடையவர் யார்?

1191அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்கள் மூன்று பேர் இருந்தால் அவர்களில் ஒருவர் தலைமை தாங்கித் தொழுவிக்கட்டும்; அவர்களில் நன்கு ஓதத் தெரிந்தவரே அவர்களுக்குத் தொழுவிக்க அதிகத் தகுதியுடையவர் ஆவார் -.இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
-மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது.

1192அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் வேதத்தை நன்கு ஓதத் தெரிந்தவரே மக்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிப்பார். மக்கள் அனைவருமே சம அளவில் ஓதத் தெரிந்தவர்களாய் இருந்தால் அவர்களில் நபிவழியை நன்கு அறிந்தவர் (தலைமை தாங்கித் தொழுவிப்பார்). அதிலும்

அவர்கள் சமஅளவு அறிவுடையோராய் இருந்தால் அவர்களில் முதலில் நாடு துறந்து (ஹிஜ்ரத்) வந்தவர் (தலைமை தாங்கித் தொழுவிப்பார்). அவர்கள் அனைவரும் சம காலத்தில் நாடு துறந்து வந்திருப்பின் அவர்களில் முதலில் இஸ்லாத்தைத் தழுவியவர் (தலைமை தாங்கித் தொழுவிப்பார்). ஒருவர் மற்றொரு மனிதருடைய அதிகாரத்திற்குட்பட்ட இடத்தில் (அவருடைய அனுமதியின்றி) தலைமை தாங்கித் தொழுவிக்க வேண்டாம். ஒரு மனிதருக்குரிய வீட்டில் அவரது விரிப்பின் மீது அவருடைய அனுமதியின்றி அமர வேண்டாம்.
இதை அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.
அபூசயீத் அல்அஷஜ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "முதலில் இஸ்லாத்தைத் தழுவியவர்' என்பதற்கு பதிலாக "அவர்களில் வயதில் மூத்தவர்' எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1193அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் கூறினார்கள்: அல்லாஹ்வின் வேதத்தை நன்கு ஓதத் தெரிந்தவரும் அதை முதலில் ஓதக் கற்றுக்கொண்டவரும் மக்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிப்பார். அவர்கள் அனைவருமே சமஅளவில் ஓதத் தெரிந்தவர்களாய் இருந்தால் அவர்களில் முதலில் நாடு துறந்து (ஹிஜ்ரத்) வந்தவர் மக்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிக்கட்டும். அவர்கள் அனைவரும் சம காலத்தில் நாடு துறந்து வந்தவர்களாய் இருந்தால் அவர்களில் வயதில் மூத்தவர் மக்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிக்கட்டும். ஒருவரது வீட்டிலோ அல்லது ஒருவருடைய அதிகாரத்திற்குட்பட்ட இடத்திலோ (அவருடைய அனுமதியின்றி) நீங்கள் தலைமை தாங்கித் தொழுவிக்க வேண்டாம். ஒருவருடைய வீட்டில் "அவர் உங்களுக்கு அனுமதியளித்தால் தவிர' அல்லது "அவரது அனுமதியின்றி' அவரது விரிப்பின் மீது நீங்கள் அமராதீர்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1194மாலிக் பின் அல்ஹுவைரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(பனூலைஸ் தூதுக் குழுவில்) ஒத்த வயதுடைய இளைஞர்கள் பலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றோம். அவர்களிடம் இருபது நாட்கள் தங்கினோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கருணை உள்ளம் கொண்டவராகவும் இளகிய மனம் படைத்தவராகவும் இருந்தார்கள். நாங்கள் எங்கள் குடும்பத்தாரிடம் (திரும்பிச்) செல்ல ஆசைப்படுகிறோம் என எண்ணிய அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (ஊரில்) நாங்கள் விட்டுவந்த எங்கள் குடும்பத்தாரைப் பற்றி விசாரித்தார்கள். நாங்கள் அவர்களைப் பற்றித் தெரிவித்தோம். ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் உங்கள் குடும்பத்தாரிடம் திரும்பிச்சென்று அவர்களிடையே தங்கியிருந்து அவர்களுக்குக் கல்வி கற்றுக்கொடுங்கள். (கடமைகளை நிறைவேற்றும்படி) அவர்களைப் பணியுங்கள். தொழுகை (நேரம்) வந்ததும் உங்களில் ஒருவர் தொழுகை அறிவிப்புச் செய்யட்டும்; பிறகு உங்களில் (வயதில்) மூத்தவர் உங்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிக்கட்டும்" என்றார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

-மேற்கண்ட ஹதீஸ் மாலிக் பின் அல் ஹுவைரிஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் (என் குலத்தார்) சிலருடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். நாங்கள் ஒத்த வயதுடைய இளைஞர்களாய் இருந்தோம்" என்று மாலிக் பின் அல்ஹுவைரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாக ஹதீஸ் தொடங்குகிறது.

1195மாலிக் பின் அல்ஹுவைரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் என் நண்பர் ஒருவரும் நபி (ஸல்) அவர்களிடம் சென்றோம். நாங்கள் (அவர்களிடம் சில நாட்கள் தங்கியிருந்து விட்டு) அவர்களிடமிருந்து திரும்பிச்செல்ல விரும்பிய போது எங்களிடம் அவர்கள் "தொழுகை (நேரம்) வந்துவிட்டால் தொழுகை அறிவிப்புச் செய்யுங்கள். பிறகு இகாமத் சொல்லுங்கள். உங்களில் (வயதில்) மூத்தவர் உங்களுக்குத் தலைமை தாங்கித் தொழுவிக்கட்டும்" என்றார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் காலித் அல்ஹத்தாஉ (ரஹ்) அவர்கள் "இருவரும் சமஅளவில் ஓதத் தெரிந்தவர்களாய் இருந்தனர்' என்று கூடுதலாக அறிவித்துள்ளார்கள்.

## பாடம் : 55 முஸ்லிம்களுக்கு ஏதேனும் சோதனை (பேரழிவு) ஏற்பட்டால் எல்லாத் தொழுகைகளிலும் "குனூத்' (எனும் சோதனைக் காலப் பிரார்த்தனை) ஓதுவது விரும்பத் தக்கதாகும்.

1196அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுகையில் (குர்ஆன்) ஓதிய பின் தக்பீர் சொல்(லி ருகூஉ செய்)வார்கள். பிறகு ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தும்போது "சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ்' (அல்லாஹ் தன்னைப் புகழ்வோரின் புகழுரையை ஏற்றுக்கொள்கிறான்) "ரப்பனா வ லக்கல் ஹம்து' (எங்கள் இறைவா! உனக்கே புகழ் அனைத்தும்) என்று கூறுவார்கள். பிறகு நின்றவாறு (பின்வரும் "குனூத்'தை) ஓதுவார்கள்:
இறைவா! வலீத் பின் அல்வலீத், சலமா பின் ஹிஷாம், அய்யாஷ் பின் அபீரபீஆ ஆகியோரையும் (மக்காவிலுள்ள) ஒடுக்கப்பட்ட இறைநம்பிக்கையாளர்களையும் நீ காப்பாற்றுவாயாக! இறைவா, (கடும் பகை கொண்ட) முளர் குலத்தார்மீது உனது பிடியை இறுக்குவாயாக! இறைவா! (உன் தூதர்) யூசுஃபின் காலத்தில் ஏற்பட்ட பஞ்சம் நிறைந்த ஆண்டுகளைப் போன்று இவர்களுக்கும் ஏற்படுத்துவாயாக! இறைவா! லிஹ்யான், ரிஅல், தக்வான், உஸய்யா ஆகிய குலத்தாரை நீ உன் அருளிலிருந்து அப்புறப்படுத்துவாயாக! உஸய்யா குலத்தார் (பெயருக்கேற்ப) அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்துவிட்டனர்.
பிறகு "அவர்களை அல்லாஹ் மன்னிக்கும் வரை, அல்லது அவர்கள் அக்கிரமக்காரர்களாக இருப்பதால் அவர்களை அவன் வேதனை செய்யும்வரை (அவர்களுக்குத் தண்டனை வழங்குமாறு கூற நபியே!) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை" எனும் (3:128ஆவது) இறைவசனம் அருளப்பெற்ற போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு பிரார்த்திப்பதை விட்டுவிட்டார்கள் என நமக்குச் செய்தி எட்டியது.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "(நபி) யூசுஃபின் காலத்தில் ஏற்பட்ட பஞ்சம் நிறைந்த ஆண்டுகளைப் போன்று இவர்களுக்கும் பஞ்ச ஆண்டுகளை ஏற்படுத்துவாயாக!" என்பதுவரை இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னுள்ள குறிப்புகள் இடம்பெறவில்லை.

1197அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தொழுகையில் ஒரு மாத காலம் ருகூஉவிற்குப் பிறகு குனூத் (எனும் சோதனைக் காலப்பிரார்த்தனை) ஓதினார்கள். அவர்கள் "சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ்' என்று கூறியதும் பின்வருமாறு குனூத் ஓதுவார்கள்:
இறைவா! (மக்காவில் சிக்கிக்கொண்டிருக்கும்) வலீத் பின் அல்வலீதைக் காப்பாற்றுவாயாக! இறைவா! சலமா பின் ஹிஷாமைக் காப்பாற்றுவாயாக! இறைவா! அய்யாஷ் பின் அபீரபீஆவைக் காப்பாற்றுவாயாக! இறைவா! இறைநம்பிக்கையாளர்களில் ஒடுக்கப் பட்டவர்களை நீ காப்பாற்றுவாயாக! இறைவா! முளர் குலத்தாரின் மீது உனது பிடியை இறுக்குவாயாக! இறைவா! (உன் தூதர்) யூசுஃபின் காலத்தில் ஏற்பட்ட பஞ்சம் நிறைந்த ஆண்டுகளைப் போன்று இவர்களுக்கும் பஞ்ச ஆண்டுகளை ஏற்படுத்துவாயாக!
தொடர்ந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:
இதன் பின்னர் (ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு பிரார்த்திப்பதை விட்டுவிட்டதை நான் பார்த்தேன். உடனே நான் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த (ஒடுக்கப்பட்ட) மக்களுக்காகப் பிரார்த்திப்பதை விட்டுவிட்டதாகக் கருதுகிறேன்" என்றேன். அப்போது, "(மக்காவில் சிக்கிக்கொண்டிருந்த) அவர்கள் (மதீனாவுக்குத் தப்பி) வந்துவிட்டதை நீங்கள் பார்க்கவில்லையா?" என்று கேட்கப்பட்டது.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஷா தொழுதுகொண்டிருந்த போது "சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ்'என்று சொல்லிவிட்டு, பிறகு சஜ்தாச் செய்வதற்கு முன்பாக, "இறைவா! (மக்காவில் சிக்கிக்கொண்டிருக்கும்) அய்யாஷ் பின் அபீரபிஆவைக் காப்பாற்றுவாயாக...!" என்று தொடங்கி, "(நபி) யூசுஃபின் காலத்தில் ஏற்பட்ட பஞ்ச ஆண்டுகளைப் போன்று" என்பது வரை இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னுள்ள குறிப்புகள் இடம்பெறவில்லை.

1198அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் மீதாணையாக! கிட்டத்தட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுவித்ததைப் போன்றே நான் உங்களுக்குத் தொழுவிக்கிறேன்" என்று கூறினார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்கள் லுஹ்ர், இஷா, சுப்ஹு ஆகியத் தொழுகைகளில் குனூத் (சோதனைக்காலப் பிரார்த்தனை) ஓதுவார்கள். அதில் இறை நம்பிக்கையாளர்களுக்கு சார்பாகவும் (கொடுஞ் செயல்புரிந்த) இறைமறுப்பாளர்களைச் சபித்தும் பிரார்த்திப்பார்கள்.

1199அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பிஃரு மஊனா' (எனுமிடத்தில் பிராசாரத்திற்காச் சென்ற தம்) தோழர்களைக் கொன்றவர்களுக்கு எதிராக அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்த உஸய்யா, ரிஅல், தக்வான் மற்றும் லிஹ்யான் ஆகிய குலத்தாருக்கு எதிராக (முப்பது (நாட்கள்) வைகறை (தொழுகை) நேரங்களில் பிரார்த்தித்தார்கள். பிஃரு மஊனாவில் கொல்லப்பட்டவர்கள் விஷயத்தில் அல்லாஹ் ஒரு வசனத்தை அருளினான். அதை நாங்கள் ஓதிவந்தோம். பின்னர் அந்த வசனம் (அல்லாஹ்வின் ஆணைப்படி) நீக்கப்பட்டுவிட்டது:
"நாங்கள் எங்கள் இறைவனிடம் வந்து சேர்ந்துவிட்டோம். அவன் எங்களைக் குறித்து திருப்தியடைந்தான்; நாங்கள் அவனைக் குறித்து திருப்தியடைந்தோம்' என்று எங்கள் சமுதாயத்தாரிடம் தெரிவித்துவிடுங்கள்" என்பதே அந்த வசனம்.

1200முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகையில் குனூத் (சோதனைக் காலப் பிரார்த்தனை) ஓதினார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஆம், ருகூஉவிற்குப் பின்பு சிறிது காலம் (அதாவது ஒரு மாத காலம்) ஓதினார்கள்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1201அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகையில் ருகூஉவிற்குப் பின்னால் ஒரு மாத காலம் குனூத் (சோதனைக் காலப் பிரார்த்தனை) ஓதினார்கள். அதில் ரிஅல், தக்வான் ஆகிய குலத்தாருக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள். மேலும், "உஸய்யா குலத்தார் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறுசெய்துவிட்டார்கள்" என்றும் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1202அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மாத காலம் ஃபஜ்ர் தொழுகையில் ருகூஉக்குப் பின்னால் குனூத் (சோதனைக் காலப் பிரார்த்தனை) ஓதினார்கள். அதில் பனூ உஸய்யா குலத்தாருக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்.

1203ஆஸிம் அல்அஹ்வல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் (ரலி) அவர்களிடம், "குனூத் (எனும் சோதனைக் காலப் பிரார்த்தனை நபி (ஸல்) அவர்களது காலத்தில்) ருகூஉக்கு முன்பா அல்லது அதற்குப் பின்பா (எப்போது ஓதப்பட்டது)?" என்று கேட்டேன். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள் "ருகூஉக்கு முன்புதான்" என்று பதிலளித்தர்கள். நான் "ருகூஉக்குப் பின்னர்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குனூத் ஓதினார்கள் என்று சிலர் கூறுகின்றனரே?" என்று கேட்டேன் அதற்கு அனஸ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மாத காலம்தான் (ருகூஉவிற்குப் பிறகு) குனூத் ஓதினார்கள். அதில் குர்ஆன் அறிஞர்கள் (அல்குர்ராஉ)

என்றழைக்கப்பட்ட தம் தோழர்களை (பி:ரு மஊனா எனுமிடத்தில்) கொன்ற மக்களுக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1204அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பி:ரு மஊனா' நாளில் கொல்லப்பட்ட குர்ஆன் அறிஞர்கள் (அல்குர்ராஉ) என்றழைக்கப்பட்ட எழுபது பேருக்காக மன வேதனைப்பட்டதைப் போன்று தாம் அனுப்பிவைத்த வேறு எந்தப் படைப்பிரிவினருக்காகவும் (அவர்கள் உயிர் நீத்தபோது) மனவேதனைப்பட்டதில்லை. அவர்களைக் கொன்றவர்களுக்கெதிராக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒருமாத காலம் குனூத் (சோதனைக் காலப் பிரார்த்தனை) ஓதினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் சற்று கூடுதல் குறைவுடன் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது .

1205அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (தொழுகையில்) ஒருமாத காலம் குனூத் (சோதனைக் காலப் பிரார்த்தனை) ஓதினார்கள். அதில் ரிஅல், தக்வான் மற்றும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்துவிட்ட உஸய்யா ஆகிய குலத்தாரைச் சபித்தார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1206அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுகையில்) ஒருமாதம் அரபுக் குலத்தினர் பலருக்கெதிராகப் பிரார்த்தித்து குனூத் (எனும் சோதனைக் காலப்பிரார்த்தனை) ஓதினார்கள். பின்னர் அ(வ்வாறு பிரார்த்திப்ப)தை விட்டுவிட்டார்கள்.

1207பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகையிலும் ம:க்ரிப் தொழுகையிலும் குனூத் (சோதனைக் காலப்பிரார்த்தனை) ஓதிவந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1208பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் :பஜ்ர் தொழுகையிலும் ம:க்ரிப் தொழுகையிலும் குனூத் (சோதனைக் காலப் பிரார்த்தனை) ஓதினார்கள்.

1209கு:பா:ப் பின் ஈமா அல் :கி:பாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு தொழுகையில் "இறைவா! பனூ லிஹ்யான், ரிஅல், தக்வான் மற்றும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்துவிட்ட உஸய்யா ஆகிய குலத்தாரை உன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள். ":கி:பார் குலத்தாருக்கு அல்லாஹ் மன்னிப்பளிப்பானாக;அஸ்லம் குலத்தாரை அல்லாஹ் பாதுகாப்பானாக!" என்றும் பிரார்த்தித்தார்கள்.

1210குஃபாஃப் பின் ஈமா அல் ஃகிஃபாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுகையில்) ருகூஉவிலிருந்து தலையை உயர்த்திய பிறகு "ஃகிஃபார் குலத்தாருக்கு அல்லாஹ் மன்னிப்பளிப்பானாக! அஸ்லம் குலத்தாரை அல்லாஹ் பாதுகாப்பானாக! உஸய்யா குலத்தார் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்துவிட்டனர். இறைவா! பனூ லிஹ்யான் குலத்தாரை நீ உன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவாயாக! ரிஅல் மற்றும் தக்வான் குலத்தாரையும் நீ உன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள். பிறகு சஜ்தாவிற்குச் சென்றார்கள். (கொடுஞ்செயல் புரியும்) இறைமறுப்பாளர்களைச் சபிக்கும் நடைமுறை இதை முன்னிட்டே ஏற்படுத்தப்பட்டது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "இறைமறுப்பாளர்களைச் சபிக்கும் நடைமுறை இதை முன்னிட்டே ஏற்படுத்தப்பட்டது" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 56 தவறிப்போன தொழுகையை நிறைவேற்றுவதும், அதை உடனடியாக நிறைவேற்றுவது விரும்பத்தக்கது என்பதும்.

1211அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் போரிலிருந்து திரும்பியபோது இரவு முழுவதும் பயணம் செய்தார்கள். இறுதியில் அவர்களுக்கு உறக்கம் வந்துவிடவே (ஓரிடத்தில் இறங்கி) ஓய்வெடுத்தார்கள். அப்போது பிலால் (ரலி) அவர்களிடம் "இன்றிரவு எமக்காக நீர் காவல் புரிவீராக!" என்றார்கள். பிலால் (ரலி) அவர்கள் (கண் விழித்து) அவர்களுக்கு விதிக்கப்பட்டிருந்த அளவு தொழுதார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் (படுத்து) உறங்கினார்கள். வைகறை நேரம் (ஃபஜ்ர்) நெருங்கிய வேளையில் பிலால் (ரலி) அவர்கள் வைகறை (கிழக்கு)த் திசையை முன்னோக்கியபடி தமது வாகன (ஒட்டக)த்தில் சாய்ந்து அமர்ந்து கொண்டார்கள். அப்போது தம்மையும் அறியாமல் சாய்ந்தபடியே கண்ணயர்ந்து உறங்கிவிட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களோ, பிலால் (ரலி) அவர்களோ, நபித்தோழர்களில் எவருமோ சூரிய ஒளி தம்மீது படும்வரை விழிக்கவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்தாம் முதலில் கண் விழித்தார்கள். பதறியபடியே அவர்கள் "பிலால்!" என்றழைத்தார்கள். பிலால் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! தங்களைத் தழுவிக்கொண்ட அதே (உறக்கம்)தான் என்னையும் தழுவிக்கொண்டது" என்று சொன்னார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடம்) "உங்கள் வாகனங்களைச் செலுத்துங்கள்" என்று கூற, உடனே மக்கள் தம் வாகனங்களைச் செலுத்தி சிறிது தூரம் சென்றார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இறங்கி) அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். பிலால் (ரலி) அவர்களிடம் (பாங்கு மற்றும்) இகாமத் சொல்லச் சொன்னார்கள். பிலால் (ரலி) அவர்கள் இகாமத் சொன்னதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களுக்கு சுப்ஹுத் தொழுகை தொழுவித்தார்கள். தொழுது முடிந்ததும், "தொழுகையை மறந்துவிட்டவர் நினைவு வந்ததும்

அதைத் தொழுதுகொள்ளட்டும். ஏனெனில் அல்லாஹ், "என்னை நினைவுகூரும் பொருட்டு தொழுகையை நிலைநிறுத்துவீராக!' (20:14) என்று கூறுகின்றான்" என்றார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான யூனுஸ் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
(மேற்கண்ட 20:14ஆவது வசனத்தின் மூலத்திலுள்ள "லி திக்ரீ' எனும் சொற்றொடரை) இப்னு ஷிஹாப் (ரஹ்) அவர்கள் "லித்திக்ரா' (நினைவுகூருவதற்காக) என்று ஓதுவார்கள்.

1212அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு நாள்) இரவில் நபி (ஸல்) அவர்களுடன் ஓய்வெடுத்தோம். சூரியன் உதயமாகும் வரை நாங்கள் (யாரும்) விழிக்கவில்லை. பிறகு நபி (ஸல்) அவர்கள் (எழுந்து), "ஒவ்வொருவரும் தமது வாகனத்தின் தலையைப் பிடித்து(க்கொண்டு இந்த இடத்தை விட்டு நகர்ந்து) செல்லட்டும். ஏனெனில், இந்த இடத்தில் நம்மிடம் ஷைத்தான் வந்துவிட்டான்" என்று கூறினார்கள். நாங்கள் அவ்வாறே (பயணம்) செய்தோம். பிறகு (சிறிது தூரம் சென்றதும்) தண்ணீர் கொண்டுவரச் சொல்லி அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள், பிறகு இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுதார்கள். பிறகு தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட, வைகறைத் தொழுகை (ஃபஜ்ர்) தொழுவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1213அபூகத்தாதா ஹாரிஸ் பின் ரிப்ஈ அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
(கைபர் போரிலிருந்து திரும்பும்போது)அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே உரையாற்றினார்கள். அப்போது "இன்று மாலையும் இரவும் நீங்கள் பயணம் செய்து இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) நாளை (காலை) நீங்கள் நீர்நிலையைச் சென்றடைவீர்கள்" என்று கூறினார்கள். அவ்வாறே மக்கள் யாரும் யாரையும் திரும்பிப் பார்க்காமல் (விரைவாகப்) பயணம் செய்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நடுநிசி நேரம்வரைப் பயணம் செய்தார்கள். அப்போது நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் இருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இலேசாக உறக்கம் வரவே, அவர்கள் தமது வாகனத்திலிருந்து சாய்ந்தார்கள். உடனே நான் அவர்களிடம் சென்று அவர்களது உறக்கத்தைக் கலைக்காமல் அவர்களைத் தாங்கிப் பிடித்துக்கொண்டேன். அதையடுத்து அவர்கள் தமது வாகனத்தில் நேராக அமர்ந்து கொண்டார்கள். பிறகு தொடர்ந்து பயணம் செய்து இரவின் பெரும்பகுதி கடந்தபோது (மீண்டும்) உறங்கித் தமது வாகனத்திலிருந்து சாய்ந்தார்கள். அப்போதும் நான் அவர்களது உறக்கத்தைக் கலைக்காமல் அவர்களைத் தாங்கிப் பிடித்துக்கொண்டேன். அதையடுத்து அவர்கள் தமது வாகனத்தில் நேராக அமர்ந்துகொண்டார்கள். பிறகு இன்னும் (சிறிது தூரம்) பயணம் செய்து இரவின் இறுதிப் பகுதியானபோது முன்னர் இரு முறை சாய்ந்ததைவிட மிகப் பலமாகச் சாய்ந்து கீழே விழப்போனார்கள். உடனே நான் அவர்களிடம் சென்று அவர்களை (மீண்டும்) தாங்கிப் பிடித்துக்கொண்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தலையை உயர்த்தி, "யார் அது?" என்று கேட்டார்கள். "அபூகத்தாதா' என்றேன். "நீங்கள் எப்போதிருந்து என்னருகில் பயணம் செய்துவருகிறீர்கள்?" என்று கேட்டார்கள். நான் "இரவிலிருந்து இவ்வாறு உங்கள் அருகிலேயே பயணம் செய்து வருகிறேன்" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வின் தூதரை

நீங்கள் காத்த காரணத்தால் அல்லாஹ்வும் உங்களைக் காப்பானாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
பிறகு "நாம் மக்களைவிட்டு மறைந்து (வெகு தொலைவிற்கு வந்து)விட்டோம் என்று நீங்கள் கருதுகிறீர்களா?" எனக் கேட்டார்கள். பின்னர் "மக்களில் யாரேனும் தென்படுகிறார்களா (என்று பாருங்கள்!)?" என்றார்கள். நான், "இதோ ஒரு பயணி" என்றேன். பிறகு "இதோ மற்றொரு பயணி" என்றேன். இறுதியில் நாங்கள் ஏழு பயணிகள் ஒன்றுசேர்ந்து விட்டோம்.

பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது பயண வழியிலிருந்து விலகி (ஓரிடத்திற்குச் சென்று உறங்குவதற்காகத்) தமது தலையை (ஓரிடத்தில்) சாய்த்தார்கள். பிறகு, "நீங்கள் எமது தொழுகையைக் காக்கவேண்டும் (நான் உறங்கிவிட்டால் என்னை உறக்கத்திலிருந்து எழுப்ப வேண்டும்)" என்றார்கள். (ஆனால், நாங்கள் அனைவரும் உறங்கி விட்டோம்.) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்தாம் முதலில் கண் விழித்தார்கள். அப்போது சூரிய ஒளி அவர்களது முதுகில் பட்டது. உடனே நாங்கள் திடுக்கிட்டு விழித்தெழுந்தோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்) "(இங்கிருந்து உடனே உங்கள் வாகனங்களில்) ஏறிப் புறப்படுங்கள்" என்றார்கள். உடனே நாங்கள் வாகனங்களில் ஏறிப் புறப்பட்டோம். சூரியன் நன்கு உதயமான பின் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது வாகனத்திலிருந்து) இறங்கினார்கள். பிறகு தண்ணீர் குவளையைக் கொண்டுவரச் சொன்னார்கள். அந்தக் குவளை என்னிடத்தில்தான் இருந்தது. அதில் சிறிதளவு தண்ணீரும் இருந்தது. பிறகு அதிலிருந்த தண்ணீரால் சிக்கனமாக அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். அதில் சிறிதளவு தண்ணீர் எஞ்சியது. என்னிடம், "நமக்காக உமது தண்ணீர் குவளையைப் பத்திரமாகப் பார்த்துக்கொள். விரைவில் இதில் ஒரு (அதிசய) சம்பவம் நிகழவிருக்கிறது" என்றார்கள்.
அடுத்து பிலால் (ரலி) அவர்கள் தொழுகை அறிவிப்புச் செய்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத் (ஃபஜ்ருடைய சுன்னத்) தொழுதார்கள். பின்னர் அதிகாலைத் தொழுகையைத் தொழுதார்கள். (இதையெல்லாம்) ஒவ்வொரு நாளும் செய்வதைப் போன்றே அவர்கள் செய்தார்கள்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாகனத்தில் ஏறிப் பயணத்தைத் தொடர்ந்தார்கள். நாங்களும் வாகனத்தில் ஏறி அவர்களுடன் சென்றோம். அப்போது எங்களில் சிலர் சிலரிடம் "நமது தொழுகை விஷயத்தில் நாம் செய்துவிட்ட குறைபாட்டிற்குப் பரிகாரம் என்ன?" என்று இரகசியமாகப் பேசிக்கொண்டோம். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அறிவீர்: என்னிடம் உங்களுக்கு ஓர் அழகிய முன்மாதிரி இருக்கிறதல்லவா?" என்று கேட்டுவிட்டு, "அறிவீர்: உறக்கத்தால் குறைபாடு ஏற்பட்டுவிடுவதில்லை; குறைபாடெல்லாம் ஒரு தொழுகையை மறுதொழுகை நேரம் வரும்வரை தொழாமல் இருப்பதுதான். இவ்வாறு செய்துவிட்டவர் அது பற்றிய உணர்வு வந்தவுடன் தொழுதுகொள்ளட்டும். மறுநாளாகிவிட்டால் அந்த நாளின் தொழுகையை உரிய நேரத்தில் தொழுதுகொள்ளட்டும்"என்றார்கள்.

பிறகு "மக்கள் என்ன செய்துகொண்டிருப்பார்கள் என்று நீங்கள் கருதுகின்றீர்கள்?" என்று (தம்முடன் இருந்த தோழர்களிடம்) கேட்டுவிட்டு, "மக்கள் தங்களுடைய நபியைக் காணாமல் தேடிக்கொண்டிருப்பார்கள்; அபூபக்ரும் உமரும் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களுக்குப் பின்னால் வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் உங்களைப் பின்னால் விட்டுவிட்டுச் சென்றுவிடமாட்டார்கள்' என்று கூறுவார்கள். ஆனால், மற்றவர்களோ, '(இல்லை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களுக்கு முன்பே சென்றுவிட்டார்கள்' என்று கூறுவார்கள். மக்கள் அபூபக்ர் மற்றும் உமர் ஆகிய இருவருக்கும் கட்டுப்பட்டு நடந்தால் அவர்கள் நேர்வழியடைவார்கள்" என்று கூறினார்கள்.

பிறகு நாங்கள் மக்களிடம் நண்பகல் நேரத்தில் சென்றடைந்தோம். அப்போது (வெப்பத்தால்) பொருட்களெல்லாம் சூடேறி விட்டிருந்தன. மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அழிந்தோம்; எங்களுக்கு (கடுமையான) தாகம் ஏற்பட்டுள்ளது"என்று கூறினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்களுக்கு எந்த அழிவும் இல்லை" என்றார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "எனது சிறிய பாத்திரத்தை எடுத்து வாருங்கள்!" என்று கூறி அந்த நீர்குவளையைக் கேட்டார்கள். பின்னர் (அதிலிருந்து சிறிது தண்ணீரை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஊற்ற,அதை நான் மக்களுக்குப் புகட்டிக்கொண்டிருந்தேன். மக்கள் அந்தக் குவளையில் தண்ணீரைக் கண்டதுதான் தாமதம், (அதைப் பெறுவதற்காக முண்டியடித்து) அதன் மீது விழுந்தனர். (இதைக் கண்ட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இங்கிதம் பேணுங்கள். உங்கள் அனைவரின் தாகமும் தீரும்" என்றார்கள். அவ்வாறே மக்கள் நடந்துகொண்டனர்.

இவ்விதம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் ஊற்ற அதை நான் மக்களுக்குப் புகட்டிக்கொண்டிருந்தேன். இறுதியில் என்னையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களையும் தவிர வேறெவரும் மிஞ்சவில்லை. பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் ஊற்றியபடி என்னிடம் "நீங்கள் பருகுங்கள்!" என்றார்கள். நான் "தாங்கள் பருகாதவரை நான் பருகமாட்டேன், அல்லாஹ்வின் தூதரே!" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மக்களுக்குத் தண்ணீர் புகட்டுபவரே அவர்களில் இறுதியாகப் பருக வேண்டும்" என்றார்கள். ஆகவே, நான் பருகினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் பருகினார்கள். பிறகு மக்கள் தாகம் தணிந்து மகிழ்ச்சியடைந்தவர்களாக அந்த நீரை நோக்கி வந்தனர்.
இதன் அறிவிப்பாளரான அப்துல்லாஹ் பின் ரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
நான் இந்த ஹதீஸை ஜுமுஆப் பள்ளிவாசலில் அறிவித்துக்கொண்டிருந்தேன். அப்போது (அங்கிருந்த) இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள், "இளைஞரே! நீங்கள் என்ன அறிவிக்கிறீர்கள் என்பதைக் கவனியுங்கள். ஏனெனில்,அன்றிரவு பயணம் செய்த குழுவினரில் நானும் ஒருவனாவேன்" என்றார்கள். நான், "அப்படியானால், நீங்கள்தாம் இந்த ஹதீஸ் தொடர்பாக நன்கு அறிவீர்கள்" என்றேன். அதற்கு இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் "நீங்கள் எந்த ஊரைச் சேர்ந்தவர்?" என்று கேட்டார்கள். நான், "அன்சாரிகளில் (மதீனாவாசிகளில்) ஒருவன்" என்றேன். அதற்கு அவர்கள், "அப்படியானால் நீங்களே அறிவியுங்கள். (அன்சாரிகளாகிய) நீங்கள்தாம் உங்களது ஹதீஸ் தொடர்பாக நன்கு

அறிவீர்கள்" என்றார்கள். ஆகவே, நான் மக்களிடம் (இந்த ஹதீஸை) அறிவித்தேன். அப்போது இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள், "அன்றிரவு (பயணத்தில்) நானும் கலந்துகொண்டேன். ஆனால், நீங்கள் இதை மனனமிட்டதைப் போன்று வேறெவரும் மனனமிட்டிருப்பார்கள் என்று நான் கருதவில்லை" என்றார்கள்.

1214இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மேற்கொண்ட ஒரு பயணத்தில் நானும் அவர்களுடன் இருந்தேன். அன்று நாங்கள் இரவு முழுவதும் பயணம் செய்தோம். அதிகாலை நேரம் நெருங்கியபோது நாங்கள் (ஓரிடத்தில் இறங்கி) ஓய்வெடுத்தோம். அப்போது எங்களையும் அறியாமல் கண்ணயர்ந்து, சூரியன் உதயமாகும்வரை உறங்கிவிட்டோம். எங்களில் அபூபக்ர் (ரலி) அவர்கள்தாம் முதலில் விழித்தார்கள். (பொதுவாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உறங்கிவிட்டால் அவர்கள் தாமாகவே கண்விழிக்காதவரை அவர்களை நாங்கள் உறக்கத்திலிருந்து எழுப்பமாட்டோம். பிறகு உமர் (ரலி) அவர்கள் எழுந்து நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் நின்று உரத்த குரலில் தக்பீர் கூறலானார்கள். (உமர் (ரலி) அவர்களின் தக்பீரைக் கேட்டு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விழித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தலையை உயர்த்தியபோது சூரியன் உதித்துக்கொண்டிருப்பதைக் கண்டார்கள் உடனே "இங்கிருந்து புறப்படுங்கள்" என்று கூறினார்கள். பிறகு எங்களுடன் பயணம் புறப்பட்டார்கள். சூரியன் நன்கு பிரகாசித்த பிறகு ஓரிடத்தில் இறங்கி எங்களுக்கு வைகறைத் தொழுகை (ஃபஜ்ர்) தொழுவித்தார்கள்.

அப்போது ஒருவர் எங்களுடன் தொழாமல் மக்களைவிட்டு விலகியிருந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்துத் திரும்பியதும் அந்த மனிதரிடம் "இன்னாரே! நீங்கள் எங்களுடன் தொழாமலிருக்கக் காரணம் என்ன?" என்று கேட்டார்கள், அதற்கு அந்த மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! எனக்குப் பெருந்துடக்கு ஏற்பட்டு (குளியல் கடமையாகி)விட்டது (குளிப்பதற்கு தண்ணீர் இல்லை)" என்றார். அப்போது அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மண்ணில் "தயம்மும்' செய்துகொள்ளுமாறு) உத்தரவிட, அவ்வாறே அவர் மண்ணில் "தயம்மும்' செய்துகொண்டு தொழுதார். பிறகு என்னைத் தம் முன்னிருந்த ஒரு பயணக் குழுவினருடன் சேர்ந்து தண்ணீர் தேடிவருமாறு வேகப்படுத்தினார்கள். அப்போது எங்களுக்குக் கடுமையான தாகம் ஏற்பட்டிருந்தது. அவ்வாறே நாங்கள் சென்றுகொண்டிருந்தபோது ஒரு பெண் தண்ணீர் நிரம்பிய இரு தோல் பைகளுக்கிடையே தன் கால்களைத் தொங்கவிட்டபடி (ஒட்டகத்தில் வந்துகொண்டு) இருந்தாள்.
நாங்கள் அப்பெண்ணிடம், "தண்ணீர் எங்கே (கிடைக்கும்)?" என்று கேட்டோம், அதற்கு அப்பெண், "அது வெகுதொலைவில் உள்ளது. (இங்கு எங்கும்) உங்களுக்குத் தண்ணீர் கிடையாது" என்றாள். நாங்கள் "உன் குடும்பத்தா(ர் தங்கியி)ருக்கும் (இந்த இடத்திற்கும்) தண்ணீரு(ள்ள இடத்து)க்கும் இடையே எவ்வளவு தூரம் உள்ளது?" என்று கேட்டோம். அதற்கு அப்பெண், "ஒரு பகல் ஓர் இரவு பயண தூரம்" என்று பதிலளித்தாள்.
நாங்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நீ நட!" என்றோம். அதற்கு அவள், "அல்லாஹ்வின் தூதரா (யார் அவர்)?" என்று கேட்டாள். நாங்கள் என்ன சொல்லியும் அந்தப்

பெண்ணை எங்களால் (தண்ணீர் தர) இசைய வைக்கமுடியவில்லை. இறுதியில் அவளை அல்லாஹ்வின் தூதரிடம் அழைத்துக்கொண்டு வந்தோம். அப்பெண்ணை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் கொண்டு நிறுத்திய போது அவளிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் கேட்டார்கள். அவள் எங்களிடம் சொன்னதைப் போன்றே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமும் சொன்னாள். மேலும், அவள் (தண்ணீர் சுமக்கும் தனது ஒட்டகத்திலிருந்தபடி) தான் அநாதைக் குழந்தைகளின் தாய் என்று கூறினாள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவளது ஒட்டகத்தை (மண்டியிடச் செய்யுமாறு) கூற, அவ்வாறே அது மண்டியிட்டுப் படுக்கவைக்கப்பட்டது. பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாய் கொப்புளித்து அந்தத் தண்ணீர் பைகளின் மேவாயினூடே உமிழ்ந்தார்கள். பிறகு அந்த ஒட்டகத்தைக் கிளப்பிவிட (அது எங்கள் அருகில் வந்தது.) நாங்கள் தண்ணீர் அருந்தினோம். அப்போது நாங்கள் நாற்பது பேரும் தாகத்துடன் இருந்தோம். தாகம்தீர நீரருந்தினோம். மேலும், எங்களிடமிருந்த தோல் பாத்திரங்கள், கோப்பைகள் ஆகியவற்றில் தண்ணீரை நிரப்பிக்கொண்டோம். (குளியல் கடமையாகிருந்த) எங்கள் தோழரைக் குளிக்கவைத்தோம். ஆனால், நாங்கள் எங்கள் ஒட்டகங்களுக்குத் தண்ணீர் புகட்டவில்லை. (ஆயினும்) அவ்விரு தண்ணீர் பைகளும் ஊதி வெடித்துவிடுமளவுக்கு நீர் நிரம்பியிருந்தது.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்களிடமுள்ள (உணவுப் பண்டத்)தைக் கொண்டு வாருங்கள்" என்று கூறினார்கள். நாங்கள் அந்தப் பெண்ணுக்காக ரொட்டித் துண்டுகளையும் பேரீச்சம் பழங்களையும் திரட்டினோம். பின்னர் அவற்றை ஒரு பையில் வைத்துக் கட்டி, அவளிடம் "நீ சென்று உன் குடும்பத்தாருக்கு இதை ஊட்டுவாயாக! உனது தண்ணீரில் சிறிதும் நாங்கள் குறைத்துவிடவில்லை என்பதை அறிந்துகொள்வாயாக!" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அப்பெண் தன் குடும்பத்தாரிடம் சென்று, "நான் மனிதர்களில் மிக வசீகரமான ஒருவரைச் சந்தித்தேன். அல்லது அவர் கூறியதைப் போன்று அவர் ஓர் இறைத்தூதர்தாம். அவரிடம் இப்படி இப்படி (அற்புதம்) நிகழ்ந்தது" என்று கூறினாள். இதையொட்டி அந்தப் பெண்ணால் அவளைச் சுற்றிலும் வாழ்ந்த வீட்டார்களுக்கு அல்லாஹ் நேர்வழிகாட்டினான். அவளும் அவர்களும் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டனர்.

-இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒரு பயணத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். நாங்கள் ஒரு (நாள்) இரவில் பயணித்தோம். இரவின் இறுதிப் பகுதியில் அதிகாலைக்கு முன்பாக ஓரிடத்தில் ஒரு தூக்கம் தூங்கினோம். ஒரு பயணிக்கு அதைவிட இனிமையான தூக்கம் வேறெதுவும் இருக்க முடியாது. (அந்த ஆழ்ந்த உறக்கத்திலிருந்து) எங்களைச் சூரிய வெப்பம் தான் விழிக்கச் செய்தது.
தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே சிறிது கூடுதல் குறைவு வார்த்தைகளுடன் இடம்பெற்றுள்ளது. மேலும் அந்த ஹதீஸில் பின்வருமாறும் இடம்பெற்றுள்ளது:

உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் விழித்து மக்களின் நிலையைக் கண்டபோது உரத்த குரலில் தக்பீர் சொன்னார்கள் (உமர் (ரலி) அவர்கள் உரத்த குரலுடையவராயும் நெஞ்சுரம் வாய்ந்தவராயும் இருந்தார்கள்) அவ்வாறு உமர் (ரலி) அவர்கள் உரத்த குரலில் தக்பீர் சொல்வதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்விழித்தார்கள். விழித்தெழுந்தவுடன் அவர்களிடம் மக்கள் தங்களுக்கு ஏற்பட்ட(உறக்கத்)தைப் பற்றி முறையிட்டனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பிரச்சினை இல்லை; இங்கிருந்து புறப்படுங்கள்" என்றார்கள்.

1215அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பயணத்தில் இருந்தால் இரவின் இறுதிப்பகுதியில் ஓய்வெடுப்பார்கள். அப்போது தமது வலப் பக்கத்தில் சாய்ந்து படுப்பார்கள். அதிகாலைக்குச் சற்று முன்பாக ஓய்வெடுத்தால் தமது காலை நட்டு வைத்து தம் உள்ளங்கைகள் மீது தலையை வை(த்து மல்லாந்து படுத்திரு)ப்பார்கள்.

1216அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் ஒரு தொழுகையைத் தொழ மறந்துவிட்டால் அதன் நினைவு வந்ததும் அதை அவர் தொழட்டும்! இதைத் தவிர அதற்கு வேறு பரிகாரம் ஏதுமில்லை.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
கத்தாதா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "என்னை நினைவுகூரும் பொருட்டு தொழுகையை நிலை நிறுத்துவீராக" எனும் (20:14ஆவது) வசனமும் இடம்பெற்றுள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "இதைத் தவிர அதற்கு வேறு பரிகாரம் ஏதுமில்லை" எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

1217நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் ஒரு தொழுகையைத் தொழ மறந்துவிட்டால், அல்லது தொழாமல் உறங்கிவிட்டால் அதன் நினைவு வந்ததும் அதைத் தொழுது கொள்வதே அதற்குரிய பரிகாரமாகும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1218அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தொழாமல் உறங்கிவிட்டால், அல்லது கவனமில்லாமல் இருந்துவிட்டால் அதன் நினைவு வந்ததும் அதைத் தொழுதுகொள்ளட்டும். ஏனெனில், "என்னை நினைவுகூரும் பொருட்டு தொழுகையை நிலை நிறுத்துவீராக" என (20:14ஆவது வசனத்தில்) அல்லாஹ் கூறுகின்றான்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

# அத்தியாயம் : 07 - பிரயாணத் தொழுகை

பாடம் : 1 பயணிகளின் தொழுகையும் தொழுகையை (அவர்கள்) சுருக்கித் தொழுவதும்.

1219 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
தொழுகை (ஆரம்பத்தில்) சொந்த ஊரிலிருந்தாலும் பயணத்திலிருந்தாலும் இரண்டு இரண்டு ரக்அத்களாகவே கடமையாக்கப்பட்டது. பயணத் தொழுகை (இரண்டு இரண்டு ரக்அத்களாகவே) நீடித்தது; சொந்த ஊரில் தொழும் தொழுகையில் (லுஹர், அஸ்ர், இஷா ஆகியவற்றில் இரண்டு ரக்அத்கள்) கூடுதலாக்கப்பட்டன.

1220நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ் தொழுகையைக் கடமையாக்கியபோது இரண்டு ரக்அத்களாகக் கடமையாக்கினான். பின்னர் சொந்த ஊரில் தொழும் (லுஹர், அஸ்ர், இஷா ஆகிய) தொழுகைகளை (நான்கு ரக்அத்களாக) முழுமைப்படுத்தினான்; பயணத் தொழுகை முன்பு கடமையாக்கப்பட்டிருந்தவாறு (இரண்டு ரக்அத்தாகவே) நீடித்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1221ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
தொழுகை, ஆரம்பத்தில் இரண்டு ரக்அத்களாகத்தான் கடமையாக்கப்பட்டது. பயணத் தொழுகை (இரண்டு ரக்அத்களாகவே) நீடித்தது;சொந்த ஊரில் தொழும் தொழுகை (நான்கு ரக்அத்களாக) முழுமைப்படுத்தப்பட்டது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களிடம், "ஆயிஷா (ரலி) அவர்களின் நிலைப்பாடு என்ன (அவர்கள் ஏன் பயணத்தில் சுருக்கித் தொழாமல்) முழுமையாகத் தொழுதார்கள்?" என்று கேட்டேன். அதற்கு உர்வா (ரஹ்) அவர்கள், "(இது தொடர்பாக) உஸ்மான் (ரலி) அவர்கள் அளித்த விளக்கத்தைப் போன்றே ஆயிஷா (ரலி) அவர்களும் விளக்கம் அளித்துவந்தார்கள்" என்றார்கள்.

1222யஅலா பின் உமய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது :
நான் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடம் "நீங்கள் பூமியில் பயணம் செய்தால், இறைமறுப்பாளர்கள் உங்களைத் துன்புறுத்துவார்கள் என நீங்கள் அஞ்சும்போது, தொழுகையைச் சுருக்கித் தொழுவதில் உங்கள்மீது தவறேதுமில்லை" (4:101)என்றுதானே அல்லாஹ் கூறுகின்றான்! தற்போது மக்களுக்குப் பாதுகாப்பு ஏற்பட்டுவிட்டதே? என்று கேட்டேன்.
அதற்கு உமர் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: உங்களுக்கு ஏற்பட்ட வியப்பு(ம் ஐயமும்) எனக்கும் ஏற்பட்டது. எனவே, இது குறித்து நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினேன். அப்போது "(இது) அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய கொடை

(சலுகை) ஆகும். அவனது கொடையை ஏற்றுக்கொள்ளுங்கள்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1223இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ் உங்கள் நபி (ஸல்) அவர்களது நாவின் மூலம் சொந்த ஊரிலிருக்கும்போது நான்கு ரக்அத்களாகவும்,பயணத்திலிருக்கும் போது இரண்டு ரக்அத்களாகவும், அச்ச நிலையில் ஒரு ரக்அத்தாகவும் தொழுகையைக் கடமையாக்கினான்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1224இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ் உங்கள் நபி (ஸல்) அவர்களது நாவின் மூலம் தொழுகையை பயணிக்கு இரண்டு ரக்அத்களாகவும், உள்ளூரிலிருப்பவருக்கு நான்கு ரக்அத்களாகவும், அச்ச நிலையில் (இருப்பவருக்கு) ஒரு ரக்அத்தாகவும் கடமையாக்கினான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1225மூசா பின் சலமா அல்ஹுதலீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "(வெளியூர்வாசியான) நான் மக்காவில் இருக்கும் போது இமாமுடன் தொழாமல் (தனித்துத் தொழுபவனாக) இருந்தால் எவ்வாறு தொழவேண்டும்?" என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அபுல்காசிம் (முஹம்மத்-ஸல்) அவர்களின் வழிமுறைப்படி இரண்டு ரக்அத்களாக (தொழுது கொள்ளுங்கள்)" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1226ஹஃப்ஸ் பின் ஆஸிம் பின் உமர் பின் அல்கத்தாப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு பயணத்தில் என் தந்தையின் சகோதரர்) இப்னு உமர் (ரலி) அவர்களுடன் மக்கா செல்லும் பாதையில் இருந்தேன். அப்போது இப்னு உமர் (ரலி) அவர்கள் லுஹ்ர் தொழுகையை எங்களுக்கு இரண்டு ரக்அத்களாகத் தொழுவித்தார்கள். பிறகு தமது ஓய்விடம் நோக்கிச் சென்றார்கள். நாங்களும் அவர்களுடன் சென்றோம்; அவர்கள் அமர்ந்தபோது அவர்களுடன் நாங்களும் அமர்ந்தோம். அப்போது தாம் தொழுதுவிட்டு வந்த இடத்தைத் தற்செயலாகத் திரும்பிப் பார்த்தார்கள். அங்கு சிலர் நின்றுகொண்டிருந்தனர். உடனே, "இவர்கள் என்ன செய்கிறார்கள்?" என்று கேட்டார்கள். "கூடுதலான தொழுகைகளைத் தொழுதுகொண்டிருக்கிறார்கள்" என்று நான் பதிலளித்தேன். இப்னு உமர் (ரலி) அவர்கள், "(பயணத்தில்) கூடுதலான தொழுகைகளை நான் தொழுபவனாக இருந்தால் எனது (கடமையான) தொழுகையை முழுமைப்படுத்தியிருப்பேன். என் சகோதரர் (ஆஸிமின்) மகனே! நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பயணத்தில் இருந்திருக்கிறேன். அவர்கள் பயணத்தின்போது (கடமையான) இரண்டு ரக்அத்களைவிடக் கூடுதலாக (வேறெந்த

முன், பின் சுன்னத்களையும்) தொழமாட்டார்கள். அவர்களது உயிரை அல்லாஹ் கைப்பற்றும் வரை (அவ்வாறே செய்தார்கள்).
நான் அபூபக்ர் (ரலி) அவர்களுடனும் இருந்திருக்கிறேன். (பயணத்தில்) அவர்களும் இரண்டு ரக்அத்களைவிடக் கூடுதலாகத் தொழமாட்டார்கள். அவர்களது உயிரை அல்லாஹ் கைப்பற்றும்வரை (அவ்வாறே செய்தார்கள்). நான் உமர் (ரலி) அவர்களுடனும் இருந்திருக்கிறேன். அவர்களும் இரண்டு ரக்அத்களைவிடக் கூடுதலாகத் தொழமாட்டார்கள். அவர்களின் உயிரை அல்லாஹ் கைப்பற்றும்வரை (அவ்வாறே செய்தார்கள்). பிறகு நான் உஸ்மான் (ரலி) அவர்களுடனும் இருந்திருக்கிறேன். அவர்களும் இரண்டு ரக்அத்களைவிடக் கூடுதலாகத் தொழுததில்லை. அவரகளின் உயிரை அல்லாஹ் கைப்பற்றும் வரை (அவ்வாறே செய்தார்கள்).அல்லாஹ்வோ, "அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கோர் அழகிய முன்மாதிரி இருக்கிறது' (33:21) என்று கூறுகின்றான்" என்றார்கள்.

1227ஹ ஃப்ஸ் பின் ஆஸிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் கடுமையாக நோய்வாய்ப்பட்டிருந்தபோது என்னை உடல்நலம் விசாரிப்பதற்காக (என் தந்தையின் சகோதரர்) இப்னு உமர் (ரலி) அவர்கள் வந்தார்கள். அவர்களிடம் நான் பயணத்தில் (முன் பின் சுன்னத்களான) கூடுதல் தொழுகைகள் தொழுவது பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்திருக்கிறேன். அவர்கள் (இந்தக்) கூடுதலான தொழுகைகள் தொழுவதை நான் பார்த்ததேயில்லை. நான் (பயணத்தில்) உபரியான தொழுகைகளைத் தொழுபவனாயிருந்தால் (கடமையான தொழுகையையே) முழுமைப்படுத்தியிருப்பேன். உயர்ந்தோன் அல்லாஹ்வோ, "அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கோர் அழகிய முன்மாதிரி இருக்கிறது' (33:21) என்று கூறுகின்றான்" என்றார்கள்.

1228அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவில் நான்கு ரக்அத்கள் லுஹர் தொழுதார்கள்; (மக்காவுக்குச் செல்லும் வழியில்) துல்ஹுலை ஃபாவில் இரண்டு ரக்அத்கள் அஸ்ர் தொழுதார்கள். - இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1229அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மதீனாவில் நான்கு ரக்அத்கள் லுஹ்ர் தொழுதேன்; (மக்காவுக்குச் செல்லும் வழியில்) துல்ஹுலை ஃபாவில் அவர்களுடன் இரண்டு ரக்அத்கள் அஸ்ர் தொழுதேன்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1230யஹ்யா பின் யஸீத் அல்ஹுனாயீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் தொழுகையைச் சுருக்கித் தொழுவது பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மூன்று மைல்' அல்லது "மூன்று ஃபர்ஸக்' தொலைதூரத்திற்குப் பயணம் புறப்பட்டால் (நான்கு ரக்அத்கள் கொண்ட தொழுகைகளை) இரண்டு ரக்அத்களாகவே தொழுதார்கள்" என்று பதிலளித்தார்கள். இந்த இடத்தில் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்களே ("மூன்று மைல்கள்' அல்லது "மூன்று ஃபர்ஸக்' என) ஐயப்பாட்டுடன் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1231ஜுபைர் பின் நுஃபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஷுரஹ்பீல் பின் அஸ்ஸிம்த் (ரஹ்) அவர்களுடன் பதினேழு அல்லது பதினெட்டு மைல் தொலைவிலிருந்த ஓர் ஊருக்குப் புறப்பட்டுச் சென்றேன். அவர்கள் இரண்டு ரக்அத்களே தொழுதார்கள். அப்போது அவர்களிடம் நான் (அது பற்றிக்) கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்:
உமர் (ரலி) அவர்கள் துல்ஹுலைஃபாவில் இரண்டு ரக்அத்கள் தொழுவதை நான் கண்டேன். உமர் (ரலி) அவர்களிடம் நான் அதைப் பற்றிக் கேட்டபோது அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்ததைப் போன்றே நானும் செய்கிறேன்"என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1232மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "இப்னுஸ் ஸிம்த் (அவர்களுடன் புறப்பட்டேன்...)' என்று உள்ளது. ஷுரஹ்பீல் எனும் அவர்களது பெயர் இடம்பெறவில்லை. மேலும் "அவர் பதினெட்டு மைல் தொலைவிலுள்ள ஹிம்ஸ் நாட்டின் "தூமீன்' எனும் பகுதிக்குச் சென்றார்கள்' என்று (அதிகப்படியாக) இடம்பெற்றுள்ளது.

1233யஹ்யா பின் அபீஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மதீனாவிலிருந்து (ஹஜ்ஜுக்காக) மக்காவை நோக்கிப் புறப்பட்டோம். அவர்கள் திரும்பி வரும்வரை (நான்கு ரக்அத்கள் கொண்ட தொழுகைகளை) இரண்டு இரண்டு ரக்அத்களாகவே தொழுதார்கள்" என்று கூறினார்கள். உடனே நான் (அனஸ் (ரலி) அவர்களிடம்) "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவில் எத்தனை நாட்கள் தங்கினார்கள்?" என்று கேட்டேன். அதற்குப் "பத்து (நாட்கள்)' என்று அனஸ் (ரலி) அவர்கள் பதிலளித்தார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
-அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து யஹ்யா பின் அபீஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "நாங்கள் மதீனாவிலிருந்து ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டோம்..." என்று ஹதீஸ் தொடங்குகிறது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டோம்'எனும் குறிப்பு இல்லை.

### பாடம் : 2 மினாவில் சுருக்கித் தொழுதல்.

1234அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மினா உள்ளிட்ட இடங்களில் (நான்கு ரக்அத்கள் கொண்ட தொழுகைகளை) பயணத்திலிருப்பவர் தொழுவதைப் போன்று (சுருக்கி) இரண்டு ரக்அத்களாகத் தொழுதார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களும் உமர் (ரலி) அவர்களும் (அவ்வாறே தொழுவார்கள்). உஸ்மான் (ரலி) அவர்களும் தமது ஆட்சியின் ஆரம்பக் கட்டத்தில் இரண்டு

ரக்அத்களாகவே தொழுதார்கள். பின்னர் அன்னார் (சுருக்கித் தொழாமல்) முழுமையாகவே தொழுதார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "மினாவில்' என்றே இடம்பெற்றுள்ளது. "அது உள்ளிட்ட இடங்களில்' என்ற குறிப்பு இடம்பெறவில்லை.

1235இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மினாவில் (நான்கு ரக்அத்கள் கொண்ட தொழுகையைச் சுருக்கி) இரண்டு ரக்அத்களாகத் தொழுதார்கள். அவர்களுக்குப் பிறகு அபூபக்ர் (ரலி) அவர்களும், அபூபக்ருக்குப் பிறகு உமர் (ரலி) அவர்களும், உஸ்மான் (ரலி) அவர்கள் தமது ஆட்சியின் ஆரம்பக் கட்டத்திலும் (இரண்டு ரக்அத்களே தொழுதனர்). பின்னர் உஸ்மான் (ரலி) அவர்கள் (சுருக்கித் தொழாமல்) நான்கு ரக்அத்கள் தொழுதார்கள்.(இதன் அறிவிப்பாளரான) நா∴பிஉ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
இப்னு உமர் (ரலி) அவர்கள் (மினாவில்) இமாமைப் பின்பற்றித் தொழுதால் நான்கு ரக்அத்கள் தொழுவார்கள்; தனியாகத் தொழும்போது (சுருக்கி) இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1236இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மினாவில், பயணத்திலிருப்பவர் தொழுவதைப் போன்று (கடமையான நான்கு ரக்அத்களைச் சுருக்கி இரண்டு ரக்அத்களாகத்) தொழுதார்கள். (அவ்வாறே) அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோரும் (தொழுதார்கள்). உஸ்மான் (ரலி) அவர்கள் (தமது ஆட்சியில்) "எட்டு ஆண்டுகள்' அல்லது "ஆறு ஆண்டுகள்' (அவ்வாறே தொழுதார்கள்).(இதன் அறிவிப்பாளரான) ஹ∴ப்ஸ் பின் ஆஸிம் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
(என் தந்தையின் சகோதரர்) இப்னு உமர் (ரலி) அவர்கள் மினாவில் இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டுப் பிறகு தமது படுக்கைக்கு வருவார்கள். அப்போது அவர்களிடம் நான், "என் தந்தையின் சகோதரரே! நீங்கள் (கடமையான) இந்தத் தொழுகைக்குப் பின் (கூடுதலான) இரண்டு ரக்அத்கள் தொழுதால் என்ன!" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் (அவ்வாறு) தொழுவதாயிருந்தால் கடமையான தொழுகையை (நான்கு ரக்அத்களாகவே) முழுமைப்படுத்தியிருப்பேன்" என்று சொன்னார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "மினாவில்' என்ற குறிப்பில்லை. மாறாக, "பயணத்தில் (அவ்வாறு) தொழுதார்கள்" என்றே காணப்படுகின்றது.

1237அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் (ரலி) அவர்கள் மினாவில் (இரண்டு ரக்அத்களாகச் சுருக்காமல்) நான்கு ரக்அத்களாகவே எங்களுக்குத் தொழுவித்தார்கள். இது பற்றி (அத்தொழுகையில் கலந்துகொண்ட) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் வினவப்பட்டபோது "இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்' (நாங்கள் அல்லாஹ்வுக்கே

உரியவர்கள்; அவனிடமே திரும்புபவர்களாய் உள்ளோம்) என்று கூறிவிட்டு, "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மினாவில் இரண்டு ரக்அத்களாகவே தொழுதேன். அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்களுடனும் மினாவில் இரண்டு ரக்அத்களாகவே தொழுதேன். உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களுடனும் மினாவில் இரண்டு ரக்அத்களாகவே தொழுதேன். இப்போது நான் (உஸ்மான் (ரலி) அவர்களுடன் தொழுத) நான்கு ரக்அத்களிலிருந்து ஒப்புக் கொள்ளப்பட்ட இரண்டு ரக்அத்கள் என் பங்காகக் கிடைத்தால் போதுமே!" என்று கூறினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1238ஹாரிஸா பின் வஹ்ப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மினாவில் (நான்கு ரக்அத்கள் கொண்ட தொழுகைகளை) இரண்டு ரக்அத்களாகத் தொழுதிருக்கிறேன். அந்நாளில் மக்கள் முன்னெப்போதும் இல்லாத அளவுக்குப் பாதுகாப்புடனும் அதிக எண்ணிக்கையிலும் இருந்தனர்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1239ஹாரிஸா பின் வஹ்ப் அல்குஸாஈ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் மினாவில் (நான்கு ரக்அத்கள் கொண்ட தொழுகைகளை இரண்டு ரக்அத்களாகத்) தொழுதேன். அந்நாளில் மக்கள் முன்னெப்போதும் இருந்திராத அளவுக்கு அதிகமாக இருந்தார்கள்; அதாவது "விடைபெறும்' ஹஜ்ஜின்போது (நான்கு ரக்அத்கள் கொண்ட தொழுகைகளை) இரண்டு ரக்அத்களாகத் தொழுதார்கள்.
முஸ்லிம் (ஆகிய நான்) கூறுகின்றேன்: (இந்த ஹதீஸின் அறிவிப்பாளரான) ஹாரிஸா பின் வஹ்ப் அல்குஸாஈ (ரலி) அவர்கள் உபைதுல்லாஹ் பின் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களின் தாய்வழிச் சகோதரர் ஆவார்கள்.

## பாடம் : 3 மழை நேரத்தில் இருப்பிடங்களிலேயே தொழுதுகொள்ளலாம்.

1240நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
குளிரும் காற்றும் நிறைந்த ஓர் இரவில் இப்னு உமர் (ரலி) அவர்கள் தொழுகை அறிவிப்புச் செய்தார்கள். அப்போது "அலா ஸல்லூ ஃபிர்ரிஹால்' (ஒரு முக்கிய அறிவிப்பு! நீங்கள் (உங்கள்) இருப்பிடங்களிலேயே தொழுதுகொள்ளுங்கள்) என்றும் அறிவிப்புச் செய்தார்கள். பிறகு "(கடுங்)குளிரும் மழையும் உள்ள இரவில் "ஒரு முக்கிய அறிவிப்பு! நீங்கள் (உங்கள்) இருப்பிடங்களிலேயே தொழுது கொள்ளுங்கள்' என்று அறிவிக்குமாறு தொழுகை அறிவிப்பாளரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பணிப்பார்கள்" என்றும் இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

1241நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் குளிரும் காற்றும் மழையும் நிறைந்த ஓர் இரவில் தொழுகை அறிவிப்புச் செய்தார்கள். அறிவிப்பின் இறுதியில் "ஓர் அறிவிப்பு! நீங்கள் உங்கள் இருப்பிடங்களிலேயே தொழுதுகொள்ளுங்கள்; இருப்பிடங்களிலேயே தொழுதுகொள்ளுங்கள்'

என்று கூறினார்கள். பிறகு "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குளிரோ மழையோ உள்ள இரவில் பயணம் செய்யும்போது தொழுகை அறிவிப்பாளரிடம் "நீங்கள் உங்கள் இருப்பிடங்களிலேயே தொழுது கொள்ளுங்கள்' என்று அறிவிக்குமாறு கட்டளையிடுவார்கள்" என்றும் குறிப்பிட்டார்கள்.

1242மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "இப்னு உமர் (ரலி) அவர்கள் (மக்காவுக்கு அருகிலுள்ள) "லஜ்னான்' எனும் மலைப் பகுதியில் தொழுகை அறிவிப்புச் செய்தார்கள்" என ஹதீஸ் தொடங்குகிறது. மேலும், "ஓர் அறிவிப்பு! நீங்கள் உங்கள் இருப்பிடங்களிலேயே தொழுதுகொள்ளுங்கள்' என இப்னு உமர் (ரலி) அவர்கள் ஒரு முறை அறிவித்தார்கள். இரண்டாம் முறை அறிவித்ததாக அதில் குறிப்பு இல்லை.

1243ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் சென்றுகொண்டிருந்த போது மழை பெய்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் யார் விரும்புகிறாரோ அவர் தமது இருப்பிடத்திலேயே தொழுதுகொள்ளட்டும்!" என்று கூறினார்கள்.-இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1244அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மழை பெய்துகொண்டிருந்த ஒரு நாளில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் தொழுகை அறிவிப்பாளரிடம், அஷ்ஹது அல்லா இலாஹ இல்லல்லாஹ்... அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ் என்று கூறியதும் "ஹய்ய அலஸ் ஸலாஹ்' (தொழுகைக்கு வாருங்கள்) என்று கூறாமல், "ஸல்லூ ஃபீ புயூத்திக்கும்' (உங்கள் இல்லங்களிலேயே தொழுதுகொள்ளுங்கள்) என்று கூறுவீராக!" என்றார்கள். இ(வ்வாறு அவர்கள் கூறிய)தை மக்கள் ஆட்சேபிப்பதைப் போன்றிருந்தது. அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "இ(வ்வாறு நான் கூறிய)தைக் கேட்டு நீங்கள் வியப்படைகிறீர்களா? என்னை விடச் சிறந்தவர் (நபி (ஸல்) அவர்கள்) இவ்வாறு தான் செய்தார்கள். ஜுமுஆ(த் தொழுகை) கட்டாயக் கடமையாகும் (அத்தொழுகைக்கு வாருங்கள் என்று கூறப்பட்டுவிட்டால் சிரமத்தோடு நீங்கள் வரவேண்டியதாகிவிடும்). நான் உங்களைச் சேற்றிலும் சகதியிலும் நடக்க விட்டு உங்களுக்குச் சிரமம் கொடுக்க விரும்பவில்லை (எனவேதான், இல்லங்களிலேயே தொழச் சொன்னேன்)" என்று கூறினார்கள்.

1245மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "சகதியுடைய ஒரு (மழை) நாளில் எங்களுக்கு அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் உரையாற்றினார்கள்..."என்று ஹதீஸ் தொடங்குகிறது. இந்த அறிவிப்பில் ஜுமுஆ பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை. "என்னைவிடச் சிறந்தவர் இவ்வாறு செய்தார்' என்பதற்குப் பின் "அதாவது நபி (ஸல்) அவர்கள்' என்று இடம்பெற்றுள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அதாவது நபி (ஸல்) அவர்கள்' எனும் விளக்கக் குறிப்பு இடம்பெறவில்லை.

1246மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அறிவிப்பாளர் அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள், "மழை பெய்த ஒரு வெள்ளிக்கிழமை அன்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுடைய தொழுகை அறிவிப்பாளர் அறிவிப்புச் செய்தார்" என்று கூறினார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது. மேலும், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "சேற்றிலும் சகதியிலும் நீங்கள் நடந்துவருவதை நான் விரும்பவில்லை" என்று கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.

1247மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது: இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் தம் தொழுகை அறிவிப்பாளரிடம் தொழுகை அறிவிப்புச் செய்யுமாறு கூறினார்கள். அது மழை பெய்த ஒரு வெள்ளிக்கிழமை... என்னைவிடச் சிறந்தவர் –அதாவது நபி (ஸல்) அவர்கள்– இவ்வாறு செய்தார்கள்.

1248மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், மழை பெய்த வெள்ளிக்கிழமை அன்று இப்னு இப்பாஸ் (ரலி) அவர்கள் தம் தொழுகை அறிவிப்பாளரிடம் தொழுகை அறிவிப்புச் செய்யுமாறு கூறியதாக இடம் பெற்றுள்ளது.
அறிவிப்பாளர் அய்யூப் (ரஹ்) அவர்கள் அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்களிடமிருந்து (நேரடியாகச்) செவியேற்கவில்லை என வுஹைப் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

## பாடம் : 4 பயணத்தில் வாகனத்திலிருப்பவர், வாகனம் செல்லும் திசையில் கூடுதலான (நஃபில்) தொழுகைகளைத் தொழலாம்.

1249இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது (ஒட்டகத்தின் மீதமர்ந்தவாறு) ஒட்டகம் செல்லும் திசையை நோக்கிக் கூடுதலான (நஃபில்) தொழுகை தொழுபவர்களாக இருந்தார்கள்.

1250இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தமது வாகனத்தில் அமர்ந்து, அது செல்லும் திசையை நோக்கித் தொழுதுவந்தார்கள்.

1251இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து மதீனா நோக்கி வாகனத்தில் செல்லும்போது தமது முகமிருந்த திசையில் தொழுதார்கள். இது தொடர்பாகவே "நீங்கள் எங்கு திரும்பினாலும் அங்கேயும் அல்லாஹ் இருக்கிறான்" எனும் (2:115ஆவது) வசனம் அருளப்பெற்றது.

1252மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், அப்துல்லாஹ் பின் அல்முபாரக் மற்றும் இப்னு அபீசாயிதா (ரஹ்) ஆகியோரின் அறிவிப்பில், "பிறகு இப்னு உமர் (ரலி) அவர்கள் "நீங்கள் எங்கு திரும்பினாலும் அங்கேயும் அல்லாஹ் இருக்கிறான்' (2:115) எனும் வசனத்தை ஓதிக் காட்டிவிட்டு,இது தொடர்பாகவே இந்த வசனம் அருளப்பெற்றது" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

1253இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கழுதையில் இருந்தவாறு தொழுவதை நான் கண்டேன். அப்போது அவர்கள் கைபரை நோக்கிச் சென்றுகொண்டிருந்தார்கள்.

1254சயீத் பின் யசார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (ஓர் இரவில்) மக்கா செல்லும் சாலையில் இப்னு உமர் (ரலி) அவர்களுடன் பயணித்துக் கொண்டிருந்தேன். சுப்ஹு நேரம் (நெருங்கிவிட்டது) குறித்து நான் அஞ்சியபோது (எனது வாகனத்திலிருந்து) இறங்கி "வித்ர்" தொழுதேன். பிறகு அவர்களுடன் போய்ச் சேர்ந்துகொண்டேன். இப்னு உமர் (ரலி) அவர்கள், "(இவ்வளவு நேரம்) எங்கே இருந்தீர்?" என்று கேட்டார்கள். நான் "சுப்ஹு நேரம் (நெருங்கிவிட்டது) குறித்து அஞ்சினேன். எனவே (வாகனத்திலிருந்து) இறங்கி "வித்ர்" தொழுதேன்" என்று கூறினேன். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உமக்கு அழகிய முன்மாதிரி இல்லையா?" என்று கேட்டார்கள். அதற்கு நான், "ஆம் (உள்ளது), அல்லாஹ்வின் மீதாணையாக!" என்றேன். அப்போது அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மீதமர்ந்து வித்ர் தொழுதிருக்கிறார்கள்" என்று கூறினார்கள்.

1255இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வாகனத்தின் மீதமர்ந்து அது செல்லும் திசையில் தொழுவார்கள்.
(இதன் அறிவிப்பாளரான) அப்துல்லாஹ் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இப்னு உமர் (ரலி) அவர்களும் இவ்வாறு செய்வார்கள்.

1256இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வாகனத்தின் மீதமர்ந்து வித்ர் தொழுவார்கள்.
இதை அப்துல்லாஹ் பின் தீனார் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1257இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாகனத்தில் இருந்தவாறு கூடுதல் (நஃபில்) தொழுகைகளைத் தொழுவார்கள்; அப்போது அவர்கள் எத்திசையை முன்னோக்கியிருப்பினும் சரியே! (அவ்வாறே) வாகனத்தில் இருந்தவாறு வித்ரும் தொழுவார்கள். ஆனால், கடமையான (ஃபர்ள்) தொழுகைகளை வாகனத்தின் மீதமர்ந்து தொழமாட்டார்கள். (இறங்கித்தான் தொழுவார்கள்).
இதை சாலிம் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1258ஆமிர் பின் ரபீஆ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் பயணம் செய்யும்போது தமது வாகனத்தின் முதுகிலமர்ந்தவாறு அது செல்லும் திசையில் கூடுதலான (நஃபில்) தொழுகைகள் தொழுவதை நான் பார்த்திருக்கிறேன்.
இதை அப்துல்லாஹ் பின் ஆமிர் பின் ரபீஆ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1259அனஸ் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் சிரியாவிலிருந்து திரும்பியபோது அவர்களை நாங்கள் எதிர் கொண்டோம்; "அய்னுத் தம்ர்" எனும் இடத்தில் அவர்களை நாங்கள் சந்தித்தோம். அப்போது அவர்கள் கழுதையின் மீதமர்ந்தவாறு (கூடுதலான தொழுகைகள்) தொழுவதை நான் கண்டேன். அவர்களுடைய முகம் (கிப்லா அல்லாத) வேறு திசை நோக்கி அமைந்திருந்தது. – இவ்விடத்தில் அறிவிப்பாளர் ஹம்மாம் (ரஹ்) அவர்கள் கிப்லாவுக்கு இடப் பக்கம் நோக்கி சைகை செய்துகாட்டினார்கள்.– அப்போது அவர்களிடம் நான் "நீங்கள் கிப்லா அல்லாத வேறு திசை நோக்கித் தொழுவதை நான் கண்டேனே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பயணத்தில்) இவ்வாறு செய்வதை நான் பார்த்திராவிட்டால் நானும் இவ்வாறு செய்திருக்க மாட்டேன்" என்று விடையயளித்தார்கள்.

## பாடம் : 5 பயணத்தில் இரு தொழுகைகளை ஒரே நேரத்தில் சேர்த்துத் தொழலாம்.

1260இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவசரமாகப் பயணம் செய்ய நேரிட்டால் மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுவார்கள்.

1261நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் அவசரமாகப் பயணம் செய்ய நேரிட்டால் (வானில்) செம்மேகம் மறைந்த பின் மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுவார்கள்; "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவசரமாகப் பயணம் செய்ய நேரிட்டால் மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுவார்கள்" என்றும் அவர்கள் குறிப்பிடுவார்கள்
.

1262இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவசரமாகப் பயணம் செய்ய நேரிட்டால் மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுவதை நான் பார்த்திருக்கிறேன்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1263அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவசரமாகப் பயணம் புறப்படுவதாக இருந்தால் மஃக்ரிப் தொழுகையைத் தாமதப்படுத்தி, மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுவார்கள்.

1264அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சூரியன் உச்சியிலிருந்து சாய்வதற்கு முன் பயணம் மேற்கொண்டால் லுஹ்ர் தொழுகையை அஸ்ர் நேரம்வரைத் தாமதப்படுத்தி, பின்பு (ஓரிடத்தில்) இறங்கி லுஹரையும் அஸ்ரையும் சேர்த்துத் தொழுவார்கள். பயணம் புறப்படுவதற்கு முன் சூரியன் உச்சியிலிருந்து சாய்ந்து விட்டால் லுஹர் தொழுதுவிட்டே பயணம் மேற்கொள்வார்கள்.

1265அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பயணத்தில் இரு தொழுகைகளைச் சேர்த்துத் தொழ விரும்பினால், லுஹர் தொழுகையை அஸ்ரின் ஆரம்ப நேரம் வரும்வரைத் தாமதப்படுத்துவார்கள்; பிறகு லுஹரையும் அஸ்ரையும் சேர்த்துத் தொழுவார்கள்.

1266அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் அவசரமாகப் பயணம் செய்ய நேரிட்டால் லுஹ்ர் தொழுகையை அஸ்ரின் ஆரம்ப நேரம்வரைத் தாமதப்படுத்தி, லுஹரையும் அஸ்ரையும் சேர்த்துத் தொழுவார்கள்; மஃக்ரிப் தொழுகையைத் தாமதப்படுத்தி, மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்து செம்மேகம் மறையும்போது தொழுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 6 உள்ளூரிலேயே இரு தொழுகைகளைச் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதல்.

1267இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் லுஹரையும் அஸ்ரையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள்; மஃக்ரிபையும் இஷாவையும் ஒரே நேரத்தில் தொழுதார்கள்; அப்போது (போர் அபாயம் மிகுந்த) அச்ச நிலையிலோ பயணத்திலோ அவர்கள் இருக்கவில்லை.

1268இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவில் லுஹரையும் அஸ்ரையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள். அப்போது (அவர்கள்) அச்ச நிலையிலோ பயணத்திலோ இருக்கவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபுஸ் ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு ஏன் செய்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு சயீத் (ரஹ்) அவர்கள், "நீர் என்னிடம் கேட்டதைப் போன்றே நானும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "தம் சமுதாயத்தாரில் எவருக்கும் சிரமம் ஏற்படுத்தக் கூடாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கருதினார்கள் (எனவேதான் இவ்வாறு செய்தார்கள்)' என விடையளித்தார்கள்" என்றார்கள்.

1269இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தபூக் போருக்காக மேற்கொண்ட பயணத்தின்போது லுஹரையும் அஸ்ரையும் சேர்த்து ஒரு நேரத்திலும், மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்து ஒரு நேரத்திலும் தொழுதார்கள்.
இதன் அறிவிப்பாளரான சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸஸ்) அவர்கள் இவ்வாறு ஏன் செய்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "தம் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்படுத்தக்கூடாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கருதினார்கள்" என விடையளித்தார்கள்.

1270முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தபூக் போருக்குப் புறப்பட்டுச் சென்றோம். அப்போது அவர்கள் லுஹரையும் அஸ்ரையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள்; மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள்.

1271முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தபூக் போரின்போது லுஹரையும் அஸ்ரையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள்;மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள்.(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஆமிர் பின் வாஸிலா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) முஆத் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு ஏன் செய்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "தம் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்படுத்தக்கூடாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கருதினார்கள்" என விடையளித்தார்கள்.

1272இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவில் லுஹரையும் அஸ்ரையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள்;மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள். அப்போது அச்சமோ மழையோ இருக்கவில்லை.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு ஏன் செய்தார்கள்?' என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "தம் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்படுத்தக் கூடாது என்பதற்காக (இவ்வாறு செய்தார்கள்)" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.
அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்த நோக்கத்தில் இவ்வாறு செய்தார்கள்?" என்று கேட்கப்பட்டதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "தம் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்படுத்தக் கூடாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கருதினார்கள்" என விடையளித்ததாக இடம்பெற்றுள்ளது.

1273இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுடன் எட்டு ரக்அத் (கொண்ட லுஹர், அஸ்ர் ஆகிய தொழுகை)களை ஒரே நேரத்தில் தொழுதிருக்கிறேன்;ஏழு ரக்அத் (கொண்ட மஃக்ரிப், இஷா ஆகிய தொழுகை)களை ஒரே நேரத்தில் தொழுதிருக்கிறேன்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த ஜாபிர் பின் ஸைத் (ரஹ்) அவர்களிடம்), "அபுஷ் ஷஅஸா அவர்களே! நபி (ஸல்) அவர்கள் லுஹர் தொழுகையைத் தாமதப்படுத்தி அஸ்ரின் ஆரம்ப நேரத்திலும், மஃக்ரிப் தொழுகையைத் தாமதப்படுத்தி இஷாவின் ஆரம்ப நேரத்திலும் தொழுதிருப்பார்கள் என நான் எண்ணுகிறேன்" என்றேன். அதற்கு "நானும் அவ்வாறே எண்ணுகிறேன்" என்று விடையளித்தார்கள்.

1274இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவில் லுஹரையும் அஸ்ரையும் (சேர்த்து ஒரே நேரத்தில்) எட்டு ரக்அத்களும்,மஃக்ரிபையும் இஷாவையும் (சேர்த்து ஒரே நேரத்தில்) ஏழு ரக்அத்களும் தொழுதார்கள்.

1275அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அஸ்ர் தொழுகைக்குப் பிறகு எங்களிடையே (நீண்ட) உரையாற்றினார்கள். எந்த அளவிற்கென்றால் (வானில்) சூரியன் மறைந்து நட்சத்திரங்கள் தோன்றிவிட்டன. மக்கள் "தொழுகை, தொழுகை' என்று கூறலாயினர். அப்போது பனூதமீம் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் வந்து (நின்ற இடத்தைவிட்டும்) நகராமல் இடையறாமல் தொடர்ந்து "தொழுகை தொழுகை' என்று சொல்லிக்கொண்டிருந்தார். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "நீ எனக்கு நபிவழியைக் கற்றுத் தருகிறாயா, தாயற்றுப் போவாய்!" என்று (கடிந்து) கூறினார்கள். பிறகு "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் லுஹரையும் அஸ்ரையும் சேர்த்து ஒரே நேரத்திலும் மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்து ஒரே நேரத்திலும் தொழுததை நான் பார்த்தேன்" என்று குறிப்பிட்டார்கள்.
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்டு என் மனதில் இலேசான ஐயம் எழுந்தது. உடனே நான் அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் சென்று அதைப் பற்றிக் கேட்டேன். அப்போது அபூஹுரைரா (ரலி) அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் கூற்றை உறுதிப்படுத்தினார்கள்.

1276அப்துல்லாஹ் பின் ஷகீக் அல்உகைலீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் "தொழுகை(க்கு நேரமாகிவிட்டது)' என்று கூறினார். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அமைதியாக இருந்தார்கள். பிறகு மீண்டும் அவர் "தொழுகை(க்கு நேரமாகிவிட்டது)' என்று கூறினார். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அமைதியாக இருந்தார்கள். பிறகு மீண்டும் அவர் "தொழுகை(க்கு நேரமாகிவிட்டது)' என்று கூறினார். அப்போதும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அமைதியாக இருந்தார்கள். பிறகு "தாயற்றுப் போவாய்! எங்களுக்கே தொழுகைகளைக் கற்றுத் தருகிறாயா? நாங்கள்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் இரண்டு தொழுகைகளை ஒரே நேரத்தில் சேர்த்துத் தொழுபவர்களாக இருந்தோம்" என்று கூறினார்கள்.

பாடம் : 7 தொழுது முடித்த பின் வலப் பக்கமும் திரும்பலாம்; இடப் பக்கமும் திரும்பலாம்.

1277 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(தொழுது முடித்ததும்) வலப் பக்கம் திரும்புவதே கடமை என்று எண்ணிக்கொள்வதன் மூலம் உங்களில் எவரும் தம்மிடம் ஷைத்தானுக்குச் சிறிதும் இடமளித்துவிட வேண்டாம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுது முடித்த பின்) பெரும்பாலும் தமது இடப் பக்கம் திரும்புவதையே நான் பார்த்திருக்கிறேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1278 சுத்தீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் (ரலி) அவர்களிடம், "நான் தொழுது முடித்ததும் எப்படித் திரும்ப வேண்டும்? என் வலப் பக்கத்திலா? அல்லது இடப் பக்கத்திலா?" என்று கேட்டேன். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள், "என்னைப் பொறுத்தவரை நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுது முடித்த பின்) தமது வலப் பக்கம் திரும்புவதையே அதிகமாகக் கண்டேன்" என்று கூறினார்கள்.

1279 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (தொழுது முடித்த பின்) தமது வலப் பக்கம் திரும்புவார்கள்.
இதை சுத்தீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 8 இமாமுக்கு வலப் பக்கம் நிற்பது விரும்பத்தக்கதாகும்.

1280 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் தொழும்போது அவர்களுக்கு வலப் பக்கம் இருப்பதையே விரும்புவோம். அவர்கள் (தொழுது முடித்ததும்) எங்களை நோக்கித் திரும்புவார்கள். அப்போது, "ரப்பீ கினீ அதாபக யவ்ம தப்அஸு (அல்லது "தஜ்மஉ') இபாதக்க' (இறைவா! உன் அடியார்களை "உயிர் கொடுத்து எழுப்பும்' (அல்லது ஒன்றுதிரட்டும்) நாளில் உன் வேதனையிலிருந்து என்னைக் காப்பாயாக!) என்று அவர்கள் பிரார்த்திப்பதை நான் கேட்டுள்ளேன்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "எங்களை நோக்கித் திரும்புவார்கள்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 9 முஅத்தின் (இகாமத் சொல்லத்) தொடங்கிவிட்டால் கூடுதலான (நஃபில்) தொழுகைகள் எதையும் ஆரம்பிப்பது விரும்பத்தக்கதன்று.**

1281நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டால் கடமையான (அந்த ஃபர்ள்) தொழுகையைத் தவிர வேறு தொழுகையில்லை.இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1282நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டால் கடமையான (அந்த ஃபர்ள்) தொழுகையைத் தவிர வேறு தொழுகையில்லை .இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அறிவிப்பாளர் ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
பிறகு நான் அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது இந்த ஹதீஸை அவர்கள் எனக்கு அறிவித்தார்கள். ஆனால், "இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்' என அவர்கள் குறிப்பிடவில்லை.

1283அப்துல்லாஹ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
சுப்ஹுத் தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்ட பின் (சுப்ஹுடைய சுன்னத்) தொழுது கொண்டிருந்த ஒரு மனிதரைக் கடந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்றார்கள். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏதோ சொன்னார்கள்;என்ன சொன்னார்கள் என்று எங்களுக்குத் தெரியவில்லை. தொழுது முடித்ததும் நாங்கள் அந்த மனிதரைச் சூழ்ந்துகொண்டு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உம்மிடம் என்ன சொன்னார்கள்?" என்று கேட்டோம். அவர், "உங்களில் ஒருவர் சுப்ஹுத் தொழுகையை நான்கு ரக்அத்களாக்கிவிடப் பார்க்கிறார்' என்று கூறினார்கள் என்றார்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துல்லாஹ் பின் மஸ்லமா அல்கஅனபீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: இந்த ஹதீஸை அப்துல்லாஹ் பின் மாலிக் (ரலி) அவர்கள் தம் தந்தை மாலிக் அவர்களிடமிருந்தே அறிவித்தார்கள்.
அபுல்ஹுசைன் முஸ்லிம் பின் அல் ஹஜ்ஜாஜ் (ஆகிய நான்) கூறுகின்றேன்: இந்த ஹதீஸை அப்துல்லாஹ் தம் தந்தை மாலிக் அவர்களிடமிருந்து அறிவித்தார்கள் என்பது தவறாகும்.

1284இப்னு புஹைனா (அப்துல்லாஹ் பின் மாலிக் –ரலி) அவர்கள் கூறியதாவது:
சுப்ஹுத் தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டது; அப்போது ஒரு மனிதர் (சுப்ஹுடைய சுன்னத்) தொழுதுகொண்டிருப்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்டார்கள்; முஅத்தின் இகாமத் சொல்லிக்கொண்டிருந்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்த மனிதரிடம்), "சுப்ஹை நான்கு ரக்அத்களாகத் தொழப்போகிறீரா?" என்று கேட்டார்கள்.

1285அப்துல்லாஹ் பின் சர்ஜிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வைகறைத் தொழுகை (சுப்ஹுத்) தொழுவித்துக் கொண்டிருந்தபோது ஒரு மனிதர் பள்ளிவாசலுக்குள் நுழைந்தார்; பள்ளிவாசலின் ஒரு மூலையில் (சுப்ஹுடைய சுன்னத்) இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டுப் பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (தொழுகையில்) சேர்ந்துகொண்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சலாம் கொடுத்ததும், "இன்னாரே! இவ்விரு தொழுகைகளில் எதைக் கருதி வந்தீர்? நீர் தனியாகத் தொழுவதற்கா? அல்லது எம்முடன் சேர்ந்து தொழுவதற்கா?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 10 பள்ளிவாசலுக்குள் நுழையும்போது என்ன சொல்ல வேண்டும்?

1286அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் பள்ளிவாசலுக்குள் நுழையும் போது "அல்லாஹும்ம ஃப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக' (இறைவா! உன் கருணையின் வாசல்களை எனக்குத் திறந்திடுவாயாக!) என்று கூறட்டும்; பள்ளிவாசலிலிருந்து வெளியேறும்போது "அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக மின் ஃபள்லிக' (இறைவா! உன்னிடம் நான் உன் அருட்(செல்வங்)களிலிருந்து வேண்டுகிறேன்) என்று கூறட்டும்.
இதை அபூஹுமைத் (ரலி), அல்லது அபூஉசைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் (ஆகிய நான்) கூறுகின்றேன்:
அறிவிப்பாளர் யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: இந்த ஹதீஸை நான் அறிவிப்பாளர் சுலைமான் பின் பிலால் (ரஹ்) அவர்களின் ஹதீஸ் ஏட்டிலிருந்து எழுதினேன். அதில் சுலைமான் (ரஹ்) அவர்கள் "யஹ்யா அல்ஹிம்மானீ (ரஹ்) அவர்கள் "அபூஹுமைதும் அபூஉசைதும் அறிவித்தனர்' என்றே எனக்குச் செய்தி எட்டியது" என்று குறிப்பிட்டிருந்தார்கள். (அபூஹுமைத் (ரலி) அல்லது அபூஉசைத் (ரலி) அவர்கள் என்று ஐயப்பாட்டுடன் இடம்பெற வில்லை).
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 11 (பள்ளிவாசலுக்குள் நுழைந்ததும்) பள்ளிக் காணிக்கையாக இரண்டு ரக்அத்கள் தொழுவது விரும்பத்தக்கதாகும்; அதைத் தொழுவதற்கு முன் அமர்வது விரும்பத்தகாதது ஆகும்; எல்லா நேரங்களிலும் அதைத் தொழுவது அனுமதிக்கப்பட்டுள்ளது.

1287அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் பள்ளிவாசலில் நுழைந்ததும் அமர்வதற்கு முன்பு இரண்டு ரக்அத்கள் தொழட்டும்!
இதை அபூகத்தாதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1288அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர் அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் பள்ளிவாசலுக்குள் நுழைந்தேன்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடையே அமர்ந்திருந்தார்கள். எனவே, நானும் அமர்ந்துவிட்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "நீர் அமருவதற்கு முன் ஏன் இரண்டு ரக்அத்கள் தொழவில்லை?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! தாங்களும் அமர்ந்திருந்தீர்கள்; மக்களும் அமர்ந்திருந்தார்கள் (எனவேதான் நானும் அமர்ந்துவிட்டேன்)" என்று பதிலளித்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவர் பள்ளிவாசலுக்குள் நுழைந்ததும் இரண்டு ரக்அத்கள் தொழாமல் அமர வேண்டாம்!" என்று கூறினார்கள்.

1289ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் எனக்குக் கடன் தரவேண்டியிருந்தது. அதை அவர்கள் எனக்குத் தந்தார்கள்; மேலதிகமாகவும் தந்தார்கள். பள்ளிவாசலில் இருந்த நபி (ஸல்) அவர்களிடம் நான் சென்றேன். அப்போது அவர்கள் என்னிடம் "இரண்டு ரக்அத்கள் தொழுவீராக!" என்று கூறினார்கள்.

**பாடம் : 12 பயணத்திலிருந்து திரும்பியதும் முதலில் பள்ளிவாசலுக்குச் சென்று இரண்டு ரக்அத்கள் தொழுவது விரும்பத்தக்கதாகும்.**

1290ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு பயணத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடத்தில் ஓர் ஒட்டகத்தை விலைக்கு வாங்கினார்கள். அவர்கள் மதீனாவிற்குத் திரும்பியபோது, நான் பள்ளிவாசலுக்குச் சென்று இரண்டு ரக்அத்கள் தொழ வேண்டுமென என்னைப் பணித்தார்கள்.

1291ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு போருக்குப் புறப்பட்டுச் சென்றேன். (போரை முடித்துத் திரும்பிக்கொண்டிருந்தபோது) எனது ஒட்டகம் என்னைப் பின்தங்க வைத்துவிட்டது; அது களைத்துப்போயிருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு முன்னால் (மதீனா) சென்றுவிட்டார்கள். நான் காலை நேரத்தில் (மதீனாவிற்குச்) சென்று பள்ளிவாசலுக்குள் நுழைந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பள்ளிவாசலின் நுழைவாயிலில் கண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இப்போதுதான் வருகிறீரா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். "உமது ஒட்டகத்தை விட்டுவிட்டு உள்ளே சென்று இரண்டு ரக்அத்கள் தொழுவீராக!" என்று கூறினார்கள். அவ்வாறே நான் சென்று (இரண்டு ரக்அத்கள்) தொழுதுவிட்டுப் பிறகு திரும்பினேன்.

1292கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கேனும் பயணம் சென்றால் முற்பகல் நேரத்தில்தான் (ஊர்) திரும்புவார்கள். அவ்வாறு திரும்பியதும் முதலில் பள்ளிவாசலுக்குச் சென்று இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டுப் பிறகு பள்ளிவாசலில் அமருவார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 13 முற்பகல் நேரத்தில் (ளுஹா) தொழுவது விரும்பத்தக்கதாகும்; அதில் குறைந்த பட்ச அளவு இரண்டு ரக்அத்களும், அதிக பட்சம் எட்டு ரக்அத்களும், நடுத்தர அளவு நான்கு அல்லது ஆறு ரக்அத்களுமாகும்; அதைப் பேணித் தொழுதுவருமாறு ஆர்வமூட்டப் பட்டுள்ளது.

1293அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் முற்பகல் நேரத்தில் (ளுஹா) தொழுவார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இல்லை; அவர்கள் பயணத்திலிருந்து திரும்பி வந்தால் தவிர!" என்று கூறினார்கள்.
இதை சயீத் அல்ஜுரைரீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1294அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் முற்பகல் நேரத்தில் (ளுஹா) தொழுவார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இல்லை; அவர்கள் பயணத்திலிருந்து திரும்பி வந்தால் தவிர!" என்று கூறினார்கள்.
இதை கஹ்மஸ் பின் அல்ஹசன் அல்கைஸீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1295ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒருபோதும் ளுஹாத் தொழுததை நான் பார்த்ததில்லை. ஆனால், நான் அதைத் தொழுது வருகிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சில (கூடுதலான) வழிபாடுகளைச் செய்ய விருப்பம் கொண்டிருந்தாலும்கூட, அவற்றைச் செய்யாமல் விட்டுவிடுவதுண்டு. (எங்கே தாம் செய்வதைப் போன்று) மக்களும் அவற்றைச் செய்ய, மக்கள்மீது அவை கடமையாக்கப்பட்டுவிடுமோ எனும் அச்சமே இதற்குக் காரணம்.

1296முஆதா அல்அதவிய்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முற்பகல் நேரத்தில் எத்தனை ரக்அத்கள் தொழுவார்கள்?" என்று கேட்டேன். அதற்கு "நான்கு ரக்அத்கள் (தொழுவார்கள்); நாடிய அளவு கூடுதலாகவும் தொழுவார்கள்" என ஆயிஷா (ரலி) அவர்கள் பதிலளித்தார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
யஸீத் அர்ரிஷ்க் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ் நாடிய அளவு (கூடுதலாகவும் தொழுவார்கள்)" என்று இடம்பெற்றுள்ளது.

1297ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முற்பகல் நேரத்தில் நான்கு ரக்அத்கள் (ளுஹா) தொழுவார்கள்; அல்லாஹ் நாடிய அளவு கூடுதலாகவும் தொழுவார்கள்.
இதை முஆதா அல்அதவிய்யா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1298அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் முற்பகல் நேரத்தில் (ளுஹா) தொழுததைப் பார்த்தாக உம்முஹானீ (ரலி) அவர்களைத் தவிர வேறெவரும் எனக்கு அறிவிக்கவில்லை. "நபி (ஸல்)அவர்கள் மக்கா வெற்றிகொள்ளப்பட்ட நாளில் எனது இல்லத்திற்கு வந்து எட்டு ரக்அத்கள் தொழுதார்கள்; அதைவிடச் சுருக்கமாக வேறு எந்தத் தொழுகையையும் அவர்கள் தொழுததை நான் ஒருபோதும் கண்டதில்லை. ஆயினும், ருகூஉவையும் சஜ்தாவையும் பரிபூரணமாகச் செய்தார்கள்" என உம்முஹானீ (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு பஷ்ஷார் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஒருபோதும்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1299அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் பின் நவ்ஃபல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ளுஹாத் தொழுததாக அறிவிக்கும் யாரேனும் ஒருவரை நான் கண்டால் அவரிடம் அதைப் பற்றிக் கேட்க வேண்டும் என பேராவல் கொண்டிருந்தேன். ஆனால், அவ்வாறு அறிவிக்கும் எவரும் எனக்குக் கிடைக்கவில்லை. (நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தை) அபூதாலிபின் மகள் உம்முஹானீ (ரலி) அவர்களைத் தவிர. உம்முஹானீ (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி நாளில் முற்பகல் (ளுஹா) நேரத்தில் (எனது இல்லத்திற்கு) வந்தார்கள்;அவர்களிடம் ஒரு துணி கொண்டுவரப்பட்டு அவர்களைச் சுற்றி திரையிடப்பட்டது; அவர்கள் குளித்தார்கள். பிறகு (தொழுகைக்குத் தயாராகி) நின்று எட்டு ரக்அத்கள் தொழுதார்கள். அத்தொழுகையில் அவர்களது நிற்றல் மிக நீளமானதாக இருந்ததா, அல்லது ருகூஉ, அல்லது சஜ்தா மிக நீளமானதாக இருந்ததா என்று எனக்குத் தெரியவில்லை. இவற்றில் ஒவ்வொன்றுமே கிட்டத்தட்ட ஒரே அளவிலேயே அமைந்திருந்தன. ஆனால், அவர்கள் அதற்கு முன்போ அதற்குப் பின்போ ளுஹாத் தொழுததை நான் கண்டதில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிபபாளர்தொடர்களில் வந்துள்ளது.

1300உம்மு ஹானீ பின்த் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கா வெற்றிகொள்ளப்பட்ட ஆண்டில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். (வெற்றி கிட்டிய அந்த நாளில்) நபி (ஸல்) அவர்களை, அவர்களுடைய புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்கள் ஒரு துணியால் திரையிட்டு மறைத்துக்கொண்டிருக்க,நபி (ஸல்) அவர்கள் குளித்துக் கொண்டிருப்பதைக் கண்டேன். நான் அவர்களுக்கு சலாம் சொன்னேன். (அதைக் கேட்ட) அவர்கள், "யார் அது?" எனக் கேட்டார்கள். அதற்கு "நான் உம்முஹானீ பின்த் அபீதாலிப்" என்றேன். "உம்மு ஹானியே வருக!" என்று சொன்னார்கள். குளித்து

முடித்ததும் ஒரே ஆடையை (இரு தோள்கள்மீது) மாற்றிப் போட்டுக்கொண்டு எட்டு ரக்அத்கள் (ளுஹா) தொழுதார்கள்; தொழுது முடித்ததும் நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் புகலிடம் அளித்திருக்கும் ஒரு மனிதரை - ஹுபைரா மகன் இன்னாரை - என் தாயின் புதல்வர் (என் சகோதரர்) அலீ பின் அபீதாலிப் கொல்லப் போவதாகக் கூறுகிறார்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உம்முஹானியே! நீங்கள் அபயம் அளித்தவருக்கு நாமும் அபயம் அளித்துவிட்டோம் (ஆகவே, கவலை வேண்டாம்)" என்று கூறினார்கள். (நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்ற) அந்த நேரம் முற்பகல் வேளையாக இருந்தது.

1301உம்முஹானீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டில் (முற்பகல் நேரத்தில்) எனது வீட்டில் எட்டு ரக்அத்கள் தொழுதார்கள்; அப்போது ஒரே ஆடையை (தம்மீது) சுற்றிக்கொண்டு அதன் இரு ஓரங்களையும் (தோள்கள்மீது) மாற்றிப் போட்டுக் கொண்டார்கள்.

1302நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் ஒவ்வொரு காலையிலும் (தமது உடலிலுள்ள) ஒவ்வொரு மூட்டிற்காகவும் தர்மம் செய்வது கடமையாகும்;இறைவனைத் துதிக்கும் ஒவ்வொரு துதிச் சொல்லும் (சுப்ஹானல்லாஹ்) தர்மமாகும். ஒவ்வொரு புகழ்மாலையும் (அல்ஹம்து லில்லாஹ்) தர்மமாகும். ஒவ்வொரு "ஓரிறை உறுதிமொழி'யும் (லா இலாஹ இல்லல்லாஹ்) தர்மமாகும்; அவனைப் பெருமைப்படுத்தும் ஒவ்வொரு சொல்லும் (அல்லாஹு அக்பர்) தர்மமே! நல்லதை ஏவுதலும் தர்மமே! தீமைகளைத் தடுத்தலும் தர்மமே! இவை அனைத்திற்கும் (ஈடாக) முற்பகல் நேரத்தில் (ளுஹா) இரண்டு ரக்அத்கள் தொழுவது போதுமானதாக அமையும்.
இதை அபூதர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1303அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
என் உற்ற தோழர் (நபி-ஸல்) அவர்கள் ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பது, இரண்டு ரக்அத்கள் ளுஹாத் தொழுவது, வித்ர் தொழுதுவிட்டு உறங்குவது ஆகிய மூன்று விஷயங்களை எனக்கு அறிவுறுத்தினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "என் உற்ற தோழர் அபுல்காசிம் (ஸல்) அவர்கள் மூன்று விஷயங்களை எனக்கு அறிவுறுத்தினார்கள்" என ஹதீஸ் தொடங்குகிறது.

1304அபுத்தர்தா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் நேசர் (நபி-ஸல்) அவர்கள் ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பது, ளுஹாத் தொழுவது, வித்ர் தொழாமல் உறங்கலாகாது ஆகிய மூன்று

விஷயங்களை நான் வாழ்நாளில் ஒருபோதும் கைவிடக்கூடாது என எனக்கு அறிவுறுத்தினார்கள் .இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 14 ஃபஜ்ருடைய சுன்னத் இரண்டு ரக்அத்கள் தொழுவது விரும்பத்தக்கதாகும்; அவற்றைச் சுருக்கமாகவும் தவறாமலும் தொழுதுவருமாறு வந்துள்ள தூண்டுதலும், அவ்விரு ரக்அத்களில் ஓத வேண்டிய விரும்பத்தகுந்த அத்தியாயங்களும்.

1305இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஹஃப்ஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
தொழுகை அறிவிப்பாளர் சுப்ஹுத் தொழுகைக்கான அறிவிப்புச் செய்து முடித்து, வைகறை நேரம் வந்துவிட்டால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இகாமத் சொல்லப்படுவதற்கு முன்பாகச் சுருக்கமான முறையில் இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுவார்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1306ஹஃப்ஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் உதயமாகிவிட்டால் சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) மட்டுமே தொழுவார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1307ஹஃப்ஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வைகறை (ஃபஜ்ர்) வெளிச்சம் வந்த பிறகு இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுவார்கள்.

1308ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஃபஜ்ர்) தொழுகை அறிவிப்பைச் செவியுற்றால் ஃபஜ்ருடைய (சுன்னத்) இரண்டு ரக்அத்களைச் சுருக்கமாகத் தொழுவார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அபூஉசாமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "வைகறை உதயமாகிவிட்டால்...' என்று ஹதீஸ் தொடங்குகிறது.

1309ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகையின் பாங்கிற்கும் இகாமத்திற்கும் இடையில் இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுவார்கள்.
இதை அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1310ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ருடைய (சுன்னத்) இரண்டு ரக்அத்களைச் சுருக்கமாகத் தொழுவார்கள். எந்த அளவிற்கென்றால், "அதில் அவர்கள் ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதினார்களா (இல்லையா)' என்று நான் கூறிக்கொள்வேன்.
இதை அம்ரா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1311ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் நேரம் வந்துவிட்டால் இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுவார்கள். அவ்விரு ரக்அத்களிலும் ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதுகிறார்களா (இல்லையா) என்று நான் கூறிக் கொள்வேன். (அந்த அளவிற்கு அவற்றைச் சுருக்கமாகத் தொழுவார்கள்).

1312ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகைக்கு முன் தொழும் இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) அளவிற்கு வேறு எந்தக் கூடுதலானத் தொழுகைக்கும் அதிக முக்கியத்துவம் அளித்ததில்லை.இதை உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1313ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ருத் தொழுகைக்கு முன்பு தொழும் இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) அளவிற்கு வேறு எந்தக் கூடுதலானத் தொழுகையையும் அதிவிரைவாக (மிகச் சுருக்கமாக)த் தொழுததை நான் பார்த்ததில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1314நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஃபஜ்ருடைய (சுன்னத்) இரண்டு ரக்அத்கள் இந்த உலகையும் அதில் உள்ளவற்றையும்விடச் சிறந்தவையாகும் .இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1315ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் நேரத்தில் தொழும் (சுன்னத்) இரண்டு ரக்அத்கள் பற்றிக் கூறுகையில், "அவ்விரண்டு ரக்அத்களும் உலகிலுள்ள அனைத்தையும்விட எனக்கு மிகவும் விருப்பமானவையாகும்" என்று கூறினார்கள்.

1316அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ருடைய (சுன்னத்) இரண்டு ரக்அத்களில் "குல் யா அய்யுஹல் காஃபிரூன்' (என்று தொடங்கும் 109ஆவது) அத்தியாயத்தையும், "குல் ஹுவல்லாஹு அஹத்' (என்று தொடங்கும் 112ஆவது) அத்தியாயத்தையும் ஓதினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1317இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ருடைய (சுன்னத்) இரண்டு ரக்அத்களில் முதலாவது ரக்அத்தில் "அல்பகரா' அத்தியாயத்திலுள்ள "கூலூ ஆமன்னா பில்லாஹி வ மா உன்ஸில இலைனா...’ (என்று தொடங்கும் 2:136ஆவது) வசனத்தையும்,இரண்டாவது ரக்அத்தில் "ஆமன்னா பில்லாஹி வஷ்ஹத் பிஅன்னா முஸ்லிமூன்' (என்று முடியும் 3:52ஆவது வசனத்தையும்) ஓதுவார்கள்.

1318இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ருடைய (சுன்னத்) இரண்டு ரக்அத்களில் (முதல் ரக்அத்தில் அல்பகரா அத்தியாயத்திலுள்ள) "கூலூ ஆமன்னா பில்லாஹி வ மா உன்ஸில இலைனா...'(என்று தொடங்கும் 2:136ஆவது) வசனத்தையும், (இரண்டாவது ரக்அத்தில்) "ஆலு இம்ரான்' அத்தியாயத்திலுள்ள "தஆலவ் இலா கலிமதின் சவாயிம் பைனனா வ பைனக்கும்...' (என்று தொடங்கும் 3:64ஆவது) வசனத்தையும் ஓதுவார்கள்.
-மேற்கண்ட (1317ஆவது) ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 15 கடமையான தொழுகைகளுக்கு முன்பும் பின்பும் தொழ வேண்டிய வாடிக்கையான சுன்னத் தொழுகைகளின் சிறப்பும், அவற்றின் எண்ணிக்கையும்.

1319அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஒவ்வொரு நாளும் பன்னிரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுகின்றாரோ அதற்காக அவருக்குச் சொர்க்கத்தில் ஒரு மாளிகை எழுப்பப்படுகிறது.
இதை உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் கூறினார்கள்: இதை நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டதிலிருந்து அந்தப் பன்னிரண்டு ரக்அத்களை நான் கைவிட்டதேயில்லை.
அறிவிப்பாளர் அம்பசா பின் அபீசுஃப்யான் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: இதை நான் உம்மு ஹபீபா (ரலி) அவர்களிடம் கேட்டதிலிருந்து அந்தப் பன்னிரண்டு ரக்அத்களை நான் கைவிட்டதேயில்லை.
அறிவிப்பாளர் அம்ர் பின் அவ்ஸ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: இதை நான் அம்பசா (ரஹ்) அவர்களிடமிருந்து கேட்டதிலிருந்து அந்தப் பன்னிரண்டு ரக்அத்களை நான் விட்டதேயில்லை.
அறிவிப்பாளர் நுஅமான் பின் சாலிம் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: இதை நான் அம்ர் பின் அவ்ஸ் (ரஹ்) அவர்களிடம் கேட்டதிலிருந்து அந்தப் பன்னிரண்டு ரக்அத்களை நான் கைவிட்டதேயில்லை.

1320மேற்கண்ட ஹதீஸ் உம்முஹபீபா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஒவ்வொரு நாளும் கூடுதலாகப் பன்னிரண்டு ரக்அத்கள் தொழுகின்றாரோ அவருக்காகச் சொர்க்கத்தில் ஒரு மாளிகை எழுப்பப்படுகிறது.

1321அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமான அடியார் ஒவ்வொரு நாளும் கடமையான தொழுகைகள் தவிர கூடுதலாகப் பன்னிரண்டு ரக்அத்கள் தொழுதால் "அவருக்காக அல்லாஹ் சொர்க்கத்தில் ஓர் இல்லத்தை எழுப்புகிறான்' அல்லது "அவருக்காகச் சொர்க்கத்தில் ஓர் இல்லம் எழுப்பப்படுகிறது.'

இதன் அறிவிப்பாளரான நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்முஹபீபா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
இ(தை நான் செவியுற்ற)தன் பிறகு நான் அந்தப் பன்னிரண்டு ரக்அத்களை (தவறாமல்) தொழுதுவருகிறேன்.
அறிவிப்பாளர் அம்ர் பின் அவ்ஸ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இ(தை நான் செவியேற்ற)தன் பிறகு அந்தப் பன்னிரண்டு ரக்அத்களைத் (தவறாமல்) தொழுதுவருகிறேன்.
இவ்வாறே அறிவிப்பாளர் நுஅமான் பின் சாலிம் (ரஹ்) அவர்களும் கூறினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் உம்முஹபீபா (ரலி) அவர்களிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "ஒரு முஸ்லிமான அடியார் செம்மையாக அங்கத் தூய்மை (உளூ) செய்து, அல்லாஹ்வுக்காக ஒவ்வொரு நாளும் (கூடுதலாகப் பன்னிரண்டு ரக்அத்கள்) தொழுதால்..." என்று ஹதீஸ் தொடங்குகிறது.

1322இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் லுஹரு(டைய ஃபர்ளு)க்கு முன் இரண்டு ரக்அத்களும் லுஹருக்குப் பின் இரண்டு ரக்அத்களும் மஃரிபுக்குப் பின் இரண்டு ரக்அத்களும் இஷாவுக்குப் பின் இரண்டு ரக்அத்களும் ஜுமுஆவுக்குப் பின் இரண்டு ரக்அத்களும் (சுன்னத்) தொழுதேன்.
மஃக்ரிப், இஷா மற்றும் ஜுமுஆ (ஆகியவற்றின் சுன்னத்) தொழுகைகளை நபி (ஸல்) அவர்களுடன் அவர்களது இல்லத்திலேயே தொழுதேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 16 கூடுதலான (நஃபில்) தொழுகைகளை நின்றும் உட்கார்ந்தும் தொழலாம்; (ஒரே நஃபில் தொழுகையில்) சில ரக்அத்களை நின்றும் சில ரக்அத்களை உட்கார்ந்தும் நிறைவேற்றலாம்.

1323அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது வந்த (ஃபர்ள் அல்லாத) கூடுதலான தொழுகைகளைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது வீட்டில் லுஹரு(டைய ஃபர்ளு)க்கு முன் நான்கு ரக்அத்கள் (சுன்னத்) தொழுவார்கள். பிறகு புறப்பட்டுச் சென்று மக்களுக்கு (ஃபர்ள்) தொழுவிப்பார்கள். பிறகு வீட்டுக்கு வந்து இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுவார்கள்; மக்களுக்கு மஃக்ரிப் (உடைய ஃபர்ள்) தொழுவித்துவிட்டு (வீட்டுக்கு) வந்து இரண்டு ரக்அத் (சுன்னத்) தொழுவார்கள்;மக்களுக்கு இஷாத் தொழுவித்துவிட்டு எனது வீட்டுக்கு வந்து இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுவார்கள்; இரவில் ஒன்பது ரக்அத்கள் (நஃபில்) தொழுவார்கள். அவற்றில் வித்ர் தொழுகையும் அடங்கும்; இரவில் நீண்ட நேரம் நின்றும் தொழுவார்கள்;இரவில் நீண்ட நேரம் அமர்ந்தபடியும் தொழுவார்கள். நின்று ஓதித் தொழும்போது நிலையிலிருந்தே ருகூஉ மற்றும் சஜ்தாவுக்குச் செல்வார்கள். உட்கார்ந்து

ஓதித் தொழும்போது உட்கார்ந்தபடியே ருகூஉ மற்றும் சஜ்தாச் செய்வார்கள்; ஃபஜ்ர் நேரம் வந்து விட்டால் (முன் சுன்னத்) இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்.

1324/1325ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் நீண்ட நேரம் (நஃபில்) தொழுவார்கள். நின்று தொழும்போது நின்ற நிலையிலிருந்தே ருகூஉச் செய்வார்கள். உட்கார்ந்து தொழும்போது உட்கார்ந்த நிலையிலேயே ருகூஉச் செய்வார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1326அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் பாரசீகத்தில் நோய் கண்டிருந்தபோது உட்கார்ந்தே தொழுதுகொண்டிருந்தேன். எனவே, (மதீனா வந்தபோது) அது பற்றி ஆயிஷா (ரலி) அவர்களிடம் வினவினேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் நீண்ட நேரம் நின்றும் தொழுவார்கள்..." என்று தொடங்கி, மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறு கூறினார்கள்.

1327அப்துல்லாஹ் பின் ஷகீக் அல்உகைலீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் இரவுத் தொழுகை பற்றிக் கேட்டேன். அதற்கவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் நீண்ட நேரம் நின்றும் தொழுவார்கள்; இரவில் நீண்ட நேரம் உட்கார்ந்தும் தொழுவார்கள். நின்று ஓதித் தொழும்போது நின்ற நிலையிலிருந்தே ருகூஉச் செய்வார்கள்; உட்கார்ந்து ஓதித் தொழும்போது உட்கார்ந்த நிலையிலேயே ருகூஉச் செய்வார்கள்" என்று கூறினார்கள்.

1328அப்துல்லாஹ் பின் ஷகீக் அல்உகைலீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் (இரவுத்) தொழுகை பற்றிக் கேட்டோம். அதற்கவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிகமாக நின்றும் தொழுதிருக்கிறார்கள்; உட்கார்ந்தும் தொழுதிருக்கிறார்கள். நின்று தொழ ஆரம்பித்தால் நின்ற நிலையிலிருந்தே ருகூஉக்குச் செல்வார்கள். உட்கார்ந்து தொழ ஆரம்பித்தால் உட்கார்ந்த நிலையிலேயே ருகூஉச் செய்வார்கள்" என்று கூறினார்கள்.

1329ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (முதுமை அடையும்வரை) இரவுத் தொழுகையில் ஒருபோதும் உட்கார்ந்து ஓதித் தொழுததை நான் பார்த்ததில்லை; முதுமையடைந்த பின்னர் உட்கார்ந்தவாறே ஓதித் தொழுதார்கள்; ஓத வேண்டிய அத்தியாயத்தில் முப்பது அல்லது நாற்பது வசனங்கள் எஞ்சியிருக்கும்போது எழுந்து நின்று அவற்றை ஓதுவார்கள். பிறகு (நிலையிலிருந்து) ருகூஉச் செய்வார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1330ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது முதுமைக் காலத்தில்) உட்கார்ந்தபடியே தொழுவார்கள்; அப்போது உட்கார்ந்த நிலையிலேயே ஓதுவார்கள்; ஓத வேண்டியதில் முப்பது அல்லது நாற்பது வசனங்கள் அளவுக்கு எஞ்சியிருக்கும்போது எழுந்து நின்று அவற்றை ஓதுவார்கள்; பிறகு ருகூஉம் சஜ்தாவும் செய்வார்கள்; இவ்வாறே இரண்டாவது ரக்அத்திலும் செய்வார்கள்.
இதை அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1331ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (முதுமையில் நஃபில்) தொழும்போது உட்கார்ந்த நிலையிலேயே ஓதுவார்கள்; ருகூஉச் செய்ய எண்ணும்போது எழுந்து நின்று (சாதாரணமாக) ஒருவர் நாற்பது வசனங்கள் ஓதும் அளவுக்கு ஓதுவார்கள் (பிறகு ருகூஉச் செய்வார்கள் .)
இதை அம்ரா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1332அல்கமா பின் வக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உட்கார்ந்த நிலையில் இரண்டு ரக்அத்கள் தொழும்போது என்ன செய்வார்கள்?" என்று கேட்டேன். அதற்கு "அவ்விரு ரக்அத்களிலும் குர்ஆன் வசனங்களை (அமர்ந்தபடி) ஓதுவார்கள்; ருகூஉச் செய்ய எண்ணும்போது எழுந்து நின்று, பின்னர் ருகூஉச் செய்வார்கள்" என ஆயிஷா (ரலி) அவர்கள் பதிலளித்தார்கள்.

1333அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்து தொழுதிருக்கிறார்களா?" என்று கேட்டேன். அதற்கு "ஆம். அவர்கள் முதுமை அடைந்த பிறகு" என்று விடையளித்தார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1334ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் அதிகமாக உட்கார்ந்தே தொழும் நிலை ஏற்பட்ட பிறகே இறந்தார்கள்.
இதை அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1335ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முதுமையடைந்து அவர்களது உடல் சதை போட்ட பிறகு அதிகமாக உட்கார்ந்தே தொழுதார்கள்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1336ஹஃப்ஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூடுதலான தொழுகைகளை உட்கார்ந்து தொழுததை நான் பார்த்ததில்லை; அவர்கள் இறப்பதற்கு ஓராண்டுக்கு முன்புவரை இந்நிலையே நீடித்தது. பிறகு அவர்கள் கூடுதலான தொழுகைகளை உட்கார்ந்து தொழலானார்கள்; அப்போது ஓர் அத்தியாயத்தை (ஓதினால் வேக வேகமாக ஓதாமல்) நிறுத்தி நிதானமாக ஓதுவார்கள். எந்த அளவிற்கென்றால் (அவர்கள் ஓதும் சிறிய அத்தியாயம்கூட குர்ஆனிலுள்ள) நீளமான அத்தியாயங்களில் ஒன்றைப் போன்றாகிவிடும்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், இஸ்ஹாக் பின் இப்ராஹீம் மற்றும் அப்து பின் ஹுமைத் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "ஓராண்டுக்கு அல்லது இரண்டு ஆண்டுகளுக்கு (முன்புவரை இந்நிலை நீடித்தது)" எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது.

1337ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்து தொழும் நிலை ஏற்பட்ட பிறகே இறந்தார்கள்.
இதை சிமாக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1338அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உட்கார்ந்து தொழுபவருக்கு, (நின்று தொழுபவரின்) தொழுகையில் பாதி (நன்மை)யே உண்டு" என்று கூறியதாக எனக்கு அறிவிக்கப்பட்டது. இதையடுத்து (ஒரு நாள்) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் உட்கார்ந்து தொழுதுகொண்டிருப்பதைக் கண்டேன். ஆகவே, நான் அவர்களது தலைமீது எனது கையை வைத்தேன். அப்போது அவர்கள், "அப்துல்லாஹ் பின் அம்ர்! உமக்கு என்ன (நேர்ந்தது)?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! "உட்கார்ந்து தொழுபவருக்கு, (நின்று தொழுபவரின்) தொழுகையில் பாதி (நன்மை)யே உண்டு' எனத் தாங்கள் கூறியதாக எனக்கு அறிவிக்கப்பட்டது; ஆனால் தாங்களே உட்கார்ந்து தொழுதுகொண்டிருக்கிறீர்களே?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்; ஆயினும் நான் உங்களில் ஒருவரைப் போன்றவன் அல்லன்" என்று கூறினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூயஹ்யா (ரஹ்) என்பவர் "அபூயஹ்யா அல்அஃரஜ்' ஆவார் என ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் காணப்படுகிறது.

## பாடம் : 17 இரவுத் தொழுகையும், இரவில் நபி(ஸல்) அவர்கள் தொழுத ரக்அத்களின் எண்ணிக்கையும், வித்ர் தொழுகை (குறைந்தது) ஒரு ரக்அத்தாகும் ;ஒரு ரக்அத்தும் ஒரு முழுமையான தொழுகையே என்பதும்.

1339ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் பதினோரு ரக்அத்கள் (நஃபில்) தொழுவார்கள். அவற்றில் ஒரு ரக்அத்தை வித்ராகத் தொழுதார்கள். தொழுது முடித்த பின்

(தம்மை அழைப்பதற்காக) தொழுகை அறிவிப்பாளர் தம்மிடம் வரும்வரை வலப் பக்கம் சாய்ந்து படுத்திருப்பார்கள். (அவர் வந்ததும் எழுந்து) சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் (சுப்ஹுடைய சுன்னத்) தொழுவார்கள்.
இதை உர்வா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1340நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ("அல்அத்தமா' என மக்கள் அழைக்கும்) இஷாத் தொழுகையை முடித்ததிலிருந்து ஃபஜ்ர் வரையுள்ள இடைப்பட்ட நேரத்தில் பதினோரு ரக்அத்கள் தொழுவார்கள்; ஒவ்வோர் இரண்டு ரக்அத்களுக்கும் இடையில் சலாம் கொடுப்பார்கள்; ஒரு ரக்அத் வித்ர் தொழுவார்கள். தொழுகை அறிவிப்பாளர் ஃபஜ்ர் தொழுகைக்கு அறிவிப்புச் செய்து முடித்து,வைகறை வெளிச்சம் பளிச்சிட்டிருக்க, (தம்மைத் தொழுகைக்கு அழைப்பதற்காக) அறிவிப்பாளர் வரும் போது எழுந்து சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் (சுப்ஹுடைய சுன்னத்) தொழுவார்கள்; பிறகு ஃபஜ்ர் தொழுகையை நிறைவேற்றுவதற்காக (தம்மை அழைக்க) அறிவிப்பாளர் வரும்வரை வலப் பக்கத்தின் மீது சாய்ந்து படுத்திருப்பார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஹர்மலா (ரஹ்) அவர்களது அந்த அறிவிப்பில் "வைகறை வெளிச்சம் பளிச்சிட்டிருக்க, அறிவிப்பாளர் வரும்போது' என்பதும், "தொழுகையை நிறைவேற்றுவதற்காக' எனும் குறிப்பும் இடம்பெறவில்லை. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகின்றன.

1341ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் பதிமூன்று ரக்அத்கள் தொழுவார்கள். அவற்றில் ஐந்து ரக்அத்கள் வித்ராகத் தொழுவார்கள்; அ(ந்த ஐந்து ரக்அத்)தில் கடைசி ரக்அத் தவிர வேறெந்த ரக்அத்திலும் உட்கார மாட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1342ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ருடைய (சுன்னத்) இரண்டு ரக்அத்கள் உள்பட பதிமூன்று ரக்அத்கள் (இரவில்) தொழுவார்கள்.

1343அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "ரமளான் மாதத்தி(ன் இரவுகளி)ல் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தொழுகை எவ்வாறு இருந்தது?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளானிலும் ரமளான் அல்லாத மாதங்களிலும் பதினோரு ரக்அத்களைவிட அதிகமாகத் தொழமாட்டார்கள்; (முதலில்) நான்கு ரக்அத்கள் தொழுவார்கள். அதன் அழகையும் நீளத்தையும் பற்றி நீ கேட்க வேண்டியதில்லை! பிறகு நான்கு ரக்அத்கள் தொழுவார்கள். அதன் அழகையும் நீளத்தையும் பற்றி நீ கேட்க வேண்டியதில்லை! பிறகு மூன்று ரக்அத்கள் தொழுவார்கள்" என்று விடையளித்தார்கள்.

(தொடர்ந்து) ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
நான், "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் வித்ர் தொழுவதற்கு முன் உறங்குவீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் கண்கள்தாம் உறங்குகின்றன; என் உள்ளம் உறங்குவதில்லை" என விடையளித்தார்கள்.

1344அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் (இரவுத்) தொழுகை பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் (பின்வருமாறு) விடையளித்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இரவில்) பதிமூன்று ரக்அத்கள் தொழுவார்கள்; (முதலில்) எட்டு ரக்அத்கள் தொழுவார்கள். பிறகு (மூன்று ரக்அத்) வித்ர் தொழுவார்கள்; பிறகு உட்கார்ந்த நிலையில் இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்; ருகூஉச் செய்ய எண்ணும்போது எழுந்து நின்று, நிலையிலிருந்து ருகூஉச் செய்வார்கள். பிறகு சுப்ஹுத் தொழுகையின் பாங்குக்கும் இகாமத்துக்குமிடையே இரண்டு ரக்அத்கள் (சுப்ஹுடைய சுன்னத்) தொழுவார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், "ஒன்பது ரக்அத்கள் நின்ற நிலையில் தொழுவார்கள். அவற்றில் (மூன்று ரக்அத்) வித்ராகத் தொழுவார்கள்" என்று (ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாக) இடம் பெற்றுள்ளது.

1345அபூசலமா பின் அப்திர்ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, "அம்மா! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் (இரவுத்) தொழுகை பற்றி எனக்குச் சொல்லுங்கள்" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது இரவுத் தொழுகை ரமளானிலும் ரமளான் அல்லாத மற்ற மாதங்களிலும் பதிமூன்று ரக்அத்களாகவே இருந்தன; அவற்றில் ஃபஜ்ருடைய (சுன்னத்) இரண்டு ரக்அத்களும் அடங்கும்" என்று பதிலளித்தார்கள்.

1346ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் பத்து ரக்அத்கள் தொழுவார்கள்; ஒரு ரக்அத் வித்ர் தொழுவார்கள்; ஃபஜ்ருடைய (சுன்னத்) இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். ஆக, இவை பதிமூன்று ரக்அத்களாகும்.
இதைக் காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1347அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் (இரவுத்) தொழுகை பற்றி ஆயிஷா (ரலி) அவர்கள் என்னிடம் (பின்வருமாறு) கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவின் ஆரம்பப் பகுதியில் உறங்கிவிட்டு அதன் இறுதிப் பகுதியில் விழித்திருப்பார்கள். பிறகு தம் வீட்டாரிடம் தமக்கு ஏதேனும் தேவையிருப்பின் (அவர்களிடம் சென்று) தமது தேவையை நிறைவேற்றுவார்கள்; பிறகு உறங்குவார்கள். முதல் பாங்கின் சப்தம் கேட்டதும் துள்ளி எழுந்து – அல்லாஹ்வின் மீதாணையாக! இவ்வாறுதான் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்களே தவிர, (சாதாரணமாக) "எழுந்து' என்று கூறவில்லை– தம்மீது தண்ணீர் ஊற்றுவார்கள். –அல்லாஹ்வின்

மீதாணையாக! "இவ்வாறுதான் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்களே தவிர, (சாதாரணமாகக்) "குளித்தார்கள்' என்று கூறவில்லை. அவர்கள் என்ன நோக்கத்தில் கூறினார்கள் என்பதை நான் அறிவேன்– பெருந்துடக்கு ஏற்பட்டிருக்காவிட்டால் தொழுகைக்காக அங்கத்தூய்மை (உளூ) செய்வதைப் போன்று அங்கத்தூய்மை செய்வார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1348ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் தொழும் தொழுகையில் இறுதித் தொழுகை வித்ராகவே இருக்கும்.
இதை அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1349மஸ்ரூக் பின் அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் (விருப்பத்திற்குரிய) நற்செயல் குறித்துக் கேட்டேன். அதற்கு, "அவர்கள் நிரந்தரமாகச் செய்யப்படும் நற்செயலை விரும்புவார்கள்" என ஆயிஷா (ரலி) அவர்கள் விடையளித்தார்கள். "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இரவுத் தொழுகையை) எந்த நேரத்தில் தொழுவார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "சேவல் கூவும் சப்தத்தைக் கேட்கும்போது (இரவின் இறுதிப்பகுதியில்) எழுந்து தொழுவார்கள்" என விடையளித்தார்கள்

1350நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "எனது வீட்டில்' அல்லது "என்னிடம்' தங்கியிருக்கும் நாளில் அவர்கள் உறங்கிய நிலையில் தவிர, பின்னிரவு நேரம் அவர்களை அடைந்ததில்லை.
இதை அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1351ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஃபஜ்ருடைய (சுன்னத்) இரண்டு ரக்அத்கள் தொழுததும் நான் விழித்திருந்தால் என்னுடன் பேசிக்கொண்டிருப்பார்கள்; இல்லாவிடில் (ஃபர்ள் தொழுகைக்கு அழைக்கும்வரை) சாய்ந்து படுத்துக்கொள்வார்கள்.
இதை அபூசலமா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1352ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் (தஹஜ்ஜுத்) தொழுவார்கள்; (அப்போது நான் உறங்கிக்கொண்டிருப்பேன்.) அவர்கள் வித்ருத் தொழ எண்ணும்போது, "ஆயிஷா! எழுந்து வித்ரு தொழு!" என்று கூறுவார்கள்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1353ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் (தஹஜ்ஜுத்) தொழுதுகொண்டிருக்கும் போது நான் அவர்களுக்கு முன்னால் குறுக்கே படுத்துக்கொண்டிருப்பேன். அவர்கள் (தஹஜ்ஜுத் தொழுகையை முடித்துவிட்டு) வித்ர் மட்டும் எஞ்சி இருக்கும்போது என்னை எழுப்பிவிடுவார்கள்; நான் (எழுந்து) வித்ர் தொழுவேன்.
இதைக் காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1354ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவின் எல்லாப் பகுதியிலும் வித்ர் தொழுகை தொழுதிருக்கிறார்கள்; (சில சமயம்) அவர்களின் வித்ர் தொழுகை சஹர் (அதிகாலை முந்)நேரம் வரை சென்றுவிடும்.
இதை மஸ்ரூக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1355ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவின் – ஆரம்பப் பகுதி, நடுப் பகுதி, இறுதிப் பகுதி என – எல்லாப் பகுதிகளிலும் வித்ர் தொழுகை தொழுதிருக்கிறார்கள்; (சில சமயம்) அவர்களின் வித்ர் தொழுகை சஹர் (அதிகாலை முந்)நேரம் வரை சென்றுவிடும்.
இதை மஸ்ரூக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1356ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
இரவின் அனைத்துப் பகுதியிலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வித்ர் தொழுதிருக்கிறார்கள்; (சில சமயங்களில்) அவர்களின் வித்ர் தொழுகை இரவின் இறுதிப் பகுதிவரை சென்றுவிடும்.- இதை மஸ்ரூக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 18 இரவுத் தொழுகையின் முழு விவரமும், இரவில் தொழாமல் உறங்கிவிடுதல் அல்லது நோயுற்றுவிடுதல் பற்றியும்.

1357ஸுராரா பின் அவ்ஃபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் ஹிஷாம் பின் ஆமிர் (ரஹ்) அவர்கள் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிய விரும்பினார். இதையொட்டி மதீனாவுக்குச் சென்று, மதீனாவிலிருந்த தம் அசையாச் சொத்துகளை விற்றுவிட்டு அ(ந்தப் பணத்)தை (போருக்குத் தேவையான) ஆயுதங்கள், குதிரைகள் ஆகியவற்றில் போட்டு, ரோம பைஸாந்தியர்களுடன் இறக்கும்வரை போரிட விரும்பினார். இதற்காக அவர் மதீனா வந்த போது மதீனாவாசிகளில் சிலரைச் சந்தித்தார். அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் உயிருடனிருந்த காலத்தில் ஆறு பேர் கொண்ட ஒரு குழுவினர் இவ்வாறு (முற்றும் துறந்து இறைவழியில் உயிர்த் தியாகம்) செய்ய விரும்பிய போது, அவர்களை அவ்வாறு செய்யக்கூடாது என நபி (ஸல்) அவர்கள் தடை செய்ததுடன் "என்னிடம் உங்களுக்கோர் அழகிய முன்மாதிரி இல்லையா? (நான் என்ன இறைவழிப் போராட்டத்திற்காக முற்றும் துறந்துவிட்டா செல்கிறேன்?)' என்றும் நபியவர்கள் கேட்டார்கள்"

என்று கூறினர். மக்கள் இவ்வாறு கூறியதும் சஅத் (ரஹ்) அவர்கள் மணவிலக்குச் செய்துவிட்டிருந்த தம் மனைவியை மீட்டுக்கொண்டார். மனைவியை மீட்டுக்கொண்டதற்கு (சிலரை)ச் சாட்சியாக்கினார்.

பிறகு சஅத் (ரஹ்) அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வித்ர் தொழுகை குறித்து வினவினார். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "நான் உமக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வித்ர் தொழுகை பற்றி பூமியிலுள்ளவர்களிலேயே நன்கு அறிந்த ஒருவரை அறிவிக்கட்டுமா?" என்று கேட்டார்கள். அதற்கு சஅத் (ரஹ்) "அவர் யார்?" என்று கேட்டார். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "ஆயிஷா (ரலி) அவர்கள்தாம் அவர்; அவர்களிடம் நீர் சென்று இது பற்றிக் கேட்பீராக! பிறகு அவர்கள் கூறும் பதிலை என்னிடம் வந்து தெரிவிப்பீராக!" என்றார்கள்.

சஅத் பின் ஹிஷாம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் ஆயிஷா (ரலி) அவர்களை நோக்கி நடந்தேன். (அதற்கு முன்) ஹகீம் பின் அஃப்லஹ் (ரஹ்) அவர்களிடம் சென்று, ஆயிஷா (ரலி) அவர்களிடம் செல்ல என்னுடன் வருமாறு அன்னாரை அழைத்தேன். அதற்கு ஹகீம் பின் அஃப்லஹ் (ரஹ்) அவர்கள், "நான் ஆயிஷா (ரலி) அவர்களை நெருங்கும் நிலையில் இல்லை. ஏனெனில், (மக்கள் அரசியல் குழப்பங்களால் இரு வேறு பிரிவினராகப் பிரிந்துள்ள இந்நிலையில்) இவ்விரு பிரிவினருக்கிடையே நீங்கள் எதுவும் கூற வேண்டாமென அவர்களை நான் தடுத்தேன். ஆனால், அவர்கள் உறுதியாக மறுத்து விட்டார்கள்" என்றார்கள்.

நான் ஹகீம் (ரஹ்) அவர்களை அறுதியிட்டு அழைத்ததன் பேரில் அன்னார் வந்தார்கள். நாங்கள் ஆயிஷா (ரலி) அவர்களை நோக்கி நடந்தோம். அவர்களிடம் உள்ளே வர அனுமதி கேட்டோம். அவர்கள் அனுமதியளித்தவுடன் நாங்கள் உள்ளே நுழைந்தோம். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் ஹகீம் பின் அஃப்லஹ் அவர்களை அடையாளம் கண்டுகொண்டு "ஹகீம்தானே?" என்று கேட்டார்கள். ஹகீம் அவர்கள், "ஆம்' என்றார்கள். "உம்முடன் இருப்பவர் யார்?" எனக் கேட்டார்கள். அதற்கு ஹகீம் அவர்கள் "ஹிஷாமின் புதல்வர் சஅத்" என்று பதிலளித்தார்கள். "எந்த ஹிஷாம்?" என்று கேட்டார்கள் ஆயிஷா (ரலி). "ஆமிர் (ரலி) அவர்களின் புதல்வர்" என்றார் ஹகீம். உடனே ஆயிஷா (ரலி) அவர்கள் ஆமிருக்கு அல்லாஹ் கருணை புரிவானாக எனப் பிரார்த்தித்துவிட்டு, அவர் குறித்து நல்லவற்றைக் கூறினார்கள்.

-அறிவிப்பாளர் கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: ஆமிர் (ரலி) அவர்கள் உஹுதுப் போரில் உயிர் நீத்தவர் ஆவார்-

நான் (சஅத்) "இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் குணத்தைப் பற்றிக் கூறுங்கள்!" எனக் கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "நீர் குர்ஆனை ஓதவில்லையா?" என்று கேட்டார்கள். நான் "ஆம் (ஓதியிருக்கி றேன்)' என்றேன். ஆயிஷா (ரலி) அவர்கள்,

"நபி (ஸல்) அவர்களின் குணம் குர்ஆனாகவே இருந்தது" என்று கூறினார்கள். இதைச் செவியேற்ற நான் எழுந்துவிடலாம் எனவும், இனிமேல் நான் இறக்கும்வரை எவரிடமும் எது குறித்தும் கேட்க வேண்டியதில்லை என்றும் எண்ணினேன். பின்னர் எனக்கு ஏதோ தோன்ற, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் இரவுத் தொழுகை பற்றிக் கூறுங்கள்" என்று ஆயிஷா (ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், "நீர் யா அய்யுஹல்

முஸ்ஸம்மில்..." (எனத் தொடங்கும் 73ஆவது) அத்தியாயத்தை ஓதியதில்லையா?" என்று கேட்டார்கள். நான் "ஆம் (ஓதியிருக்கிறேன்)' என்றேன். ஆயிஷா (ரலி) அவர்கள், "வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் இந்த அத்தியாயத்தின் ஆரம்ப வசனங்களின் மூலம் இரவுத் தொழுகையைக் கடமையாக்கினான். எனவே, நபி (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் ஒரு வருடகாலம் நின்று தொழுதனர். அந்த அத்தியாயத்தின் இறுதித் தொடரை அல்லாஹ் பன்னிரண்டு மாதங்கள் வானிலேயே நிறுத்தி வைத்துக்கொண்டான். பின்னர் அந்த அத்தியாயத்தின் இறுதித் தொடரில் அல்லாஹ் சலுகையை அறிவித்தான். எனவே, கடமையாக இருந்த இரவுத் தொழுகை பின்னர் கூடுதல் தொழுகையாக மாறிற்று" என்று கூறினார்கள்.

நான், "இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வித்ர் தொழுகை பற்றிக் கூறுங்கள்?"என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் "நாங்கள் (இரவில் உறங்கச் செல்வதற்கு முன்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காக அவர்களது பல் துலக்கும் குச்சி, தண்ணீர் ஆகியவற்றைத் தயாராக எடுத்து வைப்போம். இரவில் அவர்களை அல்லாஹ் தான் நாடிய நேரத்தில் எழுப்புவான். அவர்கள் எழுந்து பல்துலக்கி, அங்கத் தூய்மை (உளூ) செய்துவிட்டு ஒன்பது ரக்அத்கள் தொழுவார்கள். அவற்றில் எட்டாவது ரக்அத்தி(ன் இறுதியி)ல்தான் அவர்கள் அமர்வார்கள். பின்னர் அல்லாஹ்வை நினைவுகூர்ந்து போற்றிப் புகழ்ந்துவிட்டுப் பிரார்த்திப்பார்கள். பிறகு சலாம் கொடுக்காமல் எழுந்து ஒன்பதாவது ரக்அத் தொழுவார்கள். (ஒன்பதாவது ரக்அத்தில்) உட்கார்ந்து அல்லாஹ்வை நினைவுகூர்ந்து போற்றிப் புகழ்ந்துவிட்டுப் பிரார்த்திப்பார்கள். பிறகு எங்களுக்குக் கேட்கும் விதத்தில் சலாம் கொடுப்பார்கள். சலாம் கொடுத்த பின் உட்கார்ந்தவாறே இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். அருமை மகனே! ஆக, இவை பதினோரு ரக்அத்கள் ஆகும்.

பின்னர் நபி (ஸல்) அவர்கள் முதுமையடைந்து உடலில் சதை போட்ட நேரத்தில் ஒற்றைப்படையாக ஏழு ரக்அத்கள் தொழுவார்கள். பின்னர் இரண்டு ரக்அத்களில் முன்பு செய்ததைப் போன்றே செய்வார்கள். அருமை மகனே! இவை ஒன்பது ரக்அத்கள் ஆகும்.

(பொதுவாக) நபி (ஸல்) அவர்கள் ஒரு தொழுகையைத் தொழுதால் அதை நிரந்தரமாகக் கடைப்பிடிப்பதையே விரும்புவார்கள். இரவுத் தொழுகைக்கு எழ முடியாதபடி உறக்கமோ நோயோ மிகைத்துவிட்டால் பகலில் பன்னிரண்டு ரக்அத்கள் தொழு(து அதை ஈடு செய்)வார்கள். நபி (ஸல்) அவர்கள் முழுக் குர்ஆனையும் ஒரே இரவில் ஓதியதாகவோ, காலைவரை இரவு முழுக்கத் தொழுததாகவோ, ரமளான் அல்லாத மாதங்களில் ஒரு மாதம் முழுக்க நோன்பு நோற்றதாகவோ நான் அறியேன்" என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

பிறகு நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதை அவர்களிடம் அறிவித்தேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியது உண்மையே. நான் "அவர்களை நெருங்குபவனாயிருப்பின்' அல்லது "அவர்களிடம் செல்பவனாயிருப்பின்' அவர்களிடம் சென்று இந்த ஹதீஸை நேரடியாக அவர்களிடமே கேட்டிருப்பேன்" என்றார்கள். (அப்போதைய அரசியல் குழப்பமே அன்னார் ஆயிஷா (ரலி) அவர்களைச் சந்திக்காமல் இருந்ததற்குக் காரணம்.) நான், "நீங்கள்

அவர்களிடம் செல்லமாட்டீர்கள் என்பதை நான் (முன்பே) அறிந்திருந்தால் அவர்களைப் பற்றி உங்களிடம் அறிவித்திருக்கமாட்டேன்" என்றேன்.
-மேற்கண்ட ஹதீஸ் ஸுராரா பின் அவ்ஃபா (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "சஅத் பின் ஹிஷாம் (ரஹ்) அவர்கள் தம் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டுப் பிறகு தம் அசையாச் சொத்துகளை விற்பதற்காக மதீனா நோக்கி வந்தார்கள்" என ஹதீஸ் தொடங்குகிறது.

-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நான் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களை நோக்கிச் சென்று அவர்களிடம் வித்ர் தொழுகை பற்றி வினவினேன்" என்று இடம்பெற்றுள்ளது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன. மேலும், இந்த அறிவிப்பில், "ஹிஷாம் யார்?" என ஆயிஷா (ரலி) அவர்கள் கேட்டார்கள். நான் "ஆமிரின் புதல்வர்" என்றேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் "ஆமிர் ஒரு நல்ல மனிதராய்த் திகழ்ந்தார்; உஹுதுப் போரில் உயிர் நீத்தார்" என்று குறிப்பிட்டதாகவும் இடம்பெற்றுள்ளது.

-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "ஸுராரா பின் அவ்ஃபா (ரஹ்) அவர்கள் அறிவித்திருப்பதாவது: சஅத் பின் ஹிஷாம் என் அண்டை வீட்டாராய் இருந்தார். அவர் தம் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டார். மேலும், "ஆயிஷா (ரலி) அவர்கள், "ஹிஷாம் யார்?' என்று கேட்டார்கள். அதற்கு சஅத் அவர்கள், "ஆமிர் (ரலி) அவர்களின் புதல்வர்" என்று கூறினார்கள். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அவர் நல்ல மனிதராய்த் திகழ்ந்தார்; உஹுதுப் போரில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பங்கேற்று கொல்லப்பட்டார்' என்று கூறினார்கள். "ஹகீம் பின் அஃப்லஹ் (ரஹ்) அவர்கள் (இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம்) "நீங்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம் செல்லமாட்டீர்கள் என நான் அறிந்திருந்தால் அவர்களைப் பற்றி உங்களிடம் நான் அறிவித்திருக்கமாட்டேன்" என்று கூறினார்கள்.

1358ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு நோய் முதலியவற்றால் இரவுத் தொழுகை தவறிவிட்டால் (அதற்கு ஈடாகப்) பகலில் பன்னிரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்.
இதை சஅத் பின் ஹிஷாம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1359ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நற்செயலைச் செய்தால் அதை நிலையாகச் செய்வார்கள். அவர்கள் இரவில் உறங்கி விட்டாலோ, அல்லது நோய்வாய்ப்பட்டுவிட்டாலோ பகலில் பன்னிரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் (இரவுத் தொழுகையை) சுப்ஹுவரை நின்று தொழுததை நான் கண்டதில்லை; ஒரு மாதம் முழுக்கத் தொடர்ச்சியாக அவர்கள் நோன்பு நோற்றதில்லை; ரமளான் மாதத்தில் தவிர.

1360அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் இரவில் வாடிக்கையாக ஓதி வருபவற்றை, அல்லது அதில் ஒரு பகுதியை ஓதாமல் உறங்கிவிட்டால் அதை அவர் ஃபஜ்ர் தொழுகைக்கும் லுஹ்ர் தொழுகைக்கும் இடையே ஓதினால் இரவில் ஓதியதைப் போன்றே அவருக்கு (நன்மை) எழுதப்படுகிறது.
இதை உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 19 சுடுமணலில் ஒட்டகக்குட்டியின் கால் குழம்புகள் கரிந்துவிடும் நேரத்தில் தொழும் "அவ்வாபீன்' தொழுகை.

1361காசிம் பின் அவ்ஃப் அஷ்ஷைபானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் "ளுஹா' தொழுதுகொண்டிருந்த ஒரு கூட்டத்தாரைக் கண்டார்கள். அப்போது "இந்தத் தொழுகையை இந்நேரத்தில் அல்லாமல் வேறு நேரத்தில் தொழுவதே சிறந்தது என இவர்கள் அறிய வேண்டாமா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சுடுமணலில் ஒட்டகக்குட்டியின் கால் குழம்புகள் கரிந்துவிடும் நேரமே அவ்வாபீன் தொழுகையின் நேரமாகும்' எனக் கூறினார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1362ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனாவிற்கு அருகிலுள்ள) குபாவாசிகளை நோக்கிச் சென்றார்கள். அப்போது குபாவாசிகள் (ளுஹா) தொழுதுகொண்டிருந்தார்கள். அப்போது "சுடுமணலில் ஒட்டகக்குட்டியின் கால் குழம்புகள் கரியும் நேரமே "அவ்வாபீன்' தொழுகையின் நேரமாகும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இதைக் காசிம் பின் அவ்ஃப் அஷ் ஷைபானீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 20 இரவுத் தொழுகை இரண்டிரண்டு ரக்அத்களாகும்; வித்ர் தொழுகை இரவின் இறுதிப் பகுதியில் ஒரு ரக்அத்தாகும்.

1363இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இரவுத் தொழுகை பற்றிக் கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இரவுத் தொழுகை இரண்டிரண்டு ரக்அத்களாகும். ஆனால், உங்களில் ஒருவர் சுப்ஹு (நேரம் வந்துவிட்டதோ) என்று அஞ்சினால் அவர் ஒரு ரக்அத் (வித்ர்) தொழட்டும்! (அவ்வாறு தொழுதால்) அவர் (முன்னர்) தொழுதவற்றை அது ஒற்றையாக ஆக்கிவிடும்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1364இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் இரவுத் தொழுகை குறித்துக் கேட்டார். அதற்கு "(இரவுத் தொழுகை) இரண்டிரண்டு ரக்அத்களாகும். சுப்ஹு (நேரம் வந்துவிட்டதோ) என்று

நீங்கள் அஞ்சினால் ஒரு ரக்அத் (வித்ர்) தொழுதுகொள்ளுங்கள்!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் -.இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1365அப்துல்லாஹ் பின் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! இரவுத் தொழுகை எப்படித் தொழ வேண்டும்?" எனக் கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இரவுத் தொழுகை இரண்டிரண்டு ரக்அத்களாகும். சுப்ஹு (நேரம் வந்துவிட்டது) பற்றி நீங்கள் அஞ்சினால் ஒரு ரக்அத் (வித்ர்) தொழுதுகொள்ளுங்கள்!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1366அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதரே! இரவுத் தொழுகை எப்படித் தொழ வேண்டும்?" என்று கேட்டார். –அப்போது நான் நபியவர்களுக்கும் கேள்வி கேட்டவருக்கும் இடையே இருந்தேன். –நபி (ஸல்) அவர்கள், "(இரவுத் தொழுகை) இரண்டிரண்டு ரக்அத்களாகும். சுப்ஹு (நேரம் வந்துவிட்டதோ) என்று நீங்கள் அஞ்சினால் ஒரு ரக்அத் (வித்ர்) தொழுது கொள்ளுங்கள்! உனது தொழுகையின் இறுதியாக வித்ரை அமைத்துக்கொள்ளுங்கள்" என்று விடையளித்தார்கள். ஓர் ஆண்டிற்குப் பிறகு அவர்களிடம் ஒரு மனிதர் (அவ்வாறே) கேட்டார். அப்போதும் நான் அதே இடத்தில் (இருவருக்குமிடையே) இருந்தேன். இ(ப்போது கேள்வி கேட்ட)வர் முன்பு கேள்வி கேட்ட மனிதர்தாமா, அல்லது வேறு மனிதரா என்று எனக்குத் தெரியவில்லை. –அவரிடமும் நபி (ஸல்) அவர்கள் முன்பு கேட்டவரிடம் கூறியதைப் போன்றே பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஓர் ஆண்டிற்குப் பிறகு ஒரு மனிதர் அவ்வாறு கேட்டது பற்றியும் அதற்குப் பிறகுள்ள குறிப்புகளும் இடம்பெறவில்லை.

1367நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சுப்ஹுக்கு முன்பே விரைந்து வித்ர் தொழுதிடுவீர்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1368இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இரவில் தொழுபவர் இறுதியாக வித்ர் தொழட்டும். ஏனெனில், இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டுவந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1369நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரவில் உங்களது கடைசித் தொழுகையாக வித்ரை ஆக்கிக்கொள்ளுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1370இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இரவில் தொழுபவர் சுப்ஹுக்கு முன் தமது கடைசித் தொழுகையாக வித்ரை ஆக்கிக் கொள்ளட்டும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறே மக்களுக்குக் கட்டளையிட்டு வந்தார்கள்.

1371அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வித்ர் தொழுகை, இரவின் இறுதிப் பகுதியில் (தொழப்படும்) ஒரு ரக்அத்தாகும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1372நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வித்ர் தொழுகை இரவின் இறுதிப் பகுதியில் (தொழப்படும்) ஒரு ரக்அத்தாகும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1373அபூமிஜ்லஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் வித்ர் தொழுகை பற்றி வினவினேன். அதற்கு அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(வித்ர்) இரவின் இறுதிப் பகுதியில் ஒரு ரக்அத்தாகும்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்று விடையளித்தார்கள். அவ்வாறே இப்னு உமர் (ரலி) அவர்களிடமும் வினவினேன். அவர்களும் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இரவின் இறுதியில் (தொழப்படும்) ஒரு ரக்அத் ஆகும்' என்று கூறியதை நான் செவியேற்றுள்ளேன்" என்று விடையளித்தார்கள்.

1374இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் பள்ளிவாசலில் இருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அழைத்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் இரவுத் தொழுகையை எவ்வாறு ஒற்றைப்படையாக (வித்ராக) ஆக்குவேன்?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இரவில்) தொழுபவர் இரண்டிரண்டு ரக்அத்களாகவே தொழுதுவரட்டும். சுப்ஹு (நேரம் வந்துவிட்டது) பற்றி அவர் அறிந்தால் ஒரு ரக்அத் (வித்ர்) தொழட்டும்! முன்னர் அவர் தொழுதவற்றை அது ஒற்றைப்படையாக மாற்றிவிடும்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (இப்னு உமரிடமிருந்து அறிவிக்கும் அறிவிப்பாளரின் பெயர்) உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் என்றே இடம்பெற்றுள்ளது. உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உமர் என்று வரவில்லை.

1375அனஸ் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் "காலைத் தொழுகை (சுப்ஹு)க்கு முன்னுள்ள (சுன்னத்) இரண்டு ரக்அத்களில் நீண்ட அத்தியாயங்களை ஓதலாமா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இரவில் இரண்டிரண்டு ரக்அத்களாகத் தொழுவார்கள்; ஒரு ரக்அத் வித்ர் தொழுவார்கள்" என்று கூறினார்கள். (உடனே) நான், " இதைப் பற்றி உங்களிடம் நான் கேட்கவில்லை" என்றேன். அதற்கு

அவர்கள், "நீர் ஒரு விளங்காத மனிதர்; முழு ஹதீஸையும் சொல்ல என்னை விடமாட்டீரா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் இரண்டிரண்டு ரக்அத்களாகத் தொழுவார்கள். ஒரு ரக்அத் வித்ர் தொழுவார்கள். காலைத் தொழுகை (சுப்ஹு)க்கு முன் (சுன்னத்) இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். (அவ்விரு ரக்அத்களிலும் நீண்ட அத்தியாயங்களை ஓதிக்கொண்டிராமல்) இகாமத் சொல்லும் சப்தம் காதில் விழுவதைப் போன்று (சுருக்கமாகத் தொழுவார்கள்)" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், கலஃப் பின் ஹிஷாம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "காலைத் தொழுகை' என்பதற்கு பதிலாக (வெறும்) "காலை' என்றே இடம்பெற்றுள்ளது.

1376மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவின் இறுதிப் பகுதியில் ஒரு ரக்அத் வித்ர் தொழுவார்கள்" என்றும், "போதும்! போதும் (நிறுத்து!) நீர் ஒரு விளங்காத மனிதர்" என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.

1377உக்பா பின் ஹுரைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இரவுத் தொழுகை இரண்டிரண்டு ரக்அத்களாகும்; நீங்கள் சுப்ஹு நேரத்தை அடைந்துவிட்டதாகக் கண்டால் ஒரு ரக்அத் வித்ர் தொழுது கொள்ளுங்கள்!" என்று சொன்னதாக இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள். அப்போது இப்னு உமர் (ரலி) அவர்களிடம், "இரண்டிரண்டு ரக்அத்கள் என்பதற்கு என்ன பொருள்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "ஒவ்வோர் இரண்டு ரக்அத்திலும் சலாம் கொடுப்பதாகும்" என்று விளக்கமளித்தார்கள்.

1378நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நீங்கள் சுப்ஹை அடைவதற்கு முன் வித்ர் தொழுங்கள்!

இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1379அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

மக்கள் நபி (ஸல்) அவர்களிடம் வித்ர் தொழுகை பற்றி வினவினர். அப்போது நபி (ஸல்) அவர்கள், "சுப்ஹுக்கு முன் வித்ர் தொழுங்கள்!" என்று கூறினார்கள்.

## பாடம் : 21 இரவின் இறுதியில் எழ முடியாது என அஞ்சுவோர் இரவின் ஆரம்பப் பகுதியிலேயே வித்ர் தொழுதிட வேண்டும்.

1380அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இரவின் இறுயில் எழ முடியாது என அஞ்சுபவர் இரவின் ஆரம்பப் பகுதியிலேயே வித்ர் தொழுதுவிடட்டும்! இரவின் இறுதியில் எழ முடியும் என நம்புகின்றவர் இரவின் இறுதியிலேயே வித்ர் தொழட்டும். ஏனெனில், இரவின் இறுதி நேரத்தில் தொழும்போது (வானவர்கள்) பங்கேற்கின்றனர். இதுவே சிறந்ததாகும்.

இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1381நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யார் இரவின் இறுதியில் எழ முடியாது என அஞ்சுகிறாரோ அவர் (முதலில்) வித்ர் தொழுதுவிட்டுப் பிறகு உறங்கட்டும்! இரவில் தம்மால் எழ முடியும் என உறுதியாக நம்புகின்றவர் அதன் இறுதியில் வித்ர் தொழட்டும்! ஏனெனில், இரவின் இறுதி நேரத்தில் குர்ஆன் ஓதும்போது (வானவர்கள்) பங்கேற்கின்றனர். இதுவே சிறந்ததாகும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 22 தொழுகையில் மிகவும் சிறந்தது நீண்ட நேரம் நின்று தொழுவதாகும்.

1382அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொழுகையில் மிகவும் சிறந்தது நீண்ட நேரம் நின்று (ஓதித்) தொழுவதே ஆகும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1383ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "தொழுகையில் மிகவும் சிறந்தது எது?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "நீண்ட நேரம் நின்று (ஓதித்) தொழுவதே ஆகும்" என்று விடையளித்தார்கள் -.இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 23 பிரார்த்தனை ஏற்கப்படும் நேரம் ஒன்று இரவில் உண்டு.

1384நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரவில் ஒரு (குறிப்பிட்ட) நேரம் உண்டு; சரியாக அந்த நேரத்தில் ஒரு முஸ்லிமான மனிதர் இம்மை மற்றும் மறுமை தொடர்பான எந்த நன்மையை வேண்டினாலும் அதை இறைவன் அவருக்கு வழங்காமல் இருப்பதில்லை. இவ்வாறு ஒவ்வோர் இரவிலும் நடக்கிறது.- இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1385அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரவில் ஒரு (குறிப்பிட்ட) நேரம் உண்டு. ஒரு முஸ்லிமான அடியார் சரியாக அந்த நேரத்தில் இறைவனிடம் எந்த நன்மையை வேண்டினாலும் இறைவன் அவருக்கு அதை வழங்காமல் இருப்பதில்லை -.இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 24 இரவின் இறுதி நேரத்தில் பிரார்த்திக்குமாறும் இறைவனை நினைவுகூர்ந்து போற்றுமாறும் வந்துள்ள ஆர்வமூட்டலும் அந்த நேரத்தில் செய்யப்படும் பிரார்த்தனைகள் ஏற்கப்படும் என்பதும்.

1386அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உயர்வும் வளமும் மிக்க நம் இறைவன் ஒவ்வோர் இரவிலும், இரவின் இறுதி மூன்றிலொரு பகுதி இருக்கும்போது கீழ் வானிற்கு இறங்கிவந்து, "என்னிடம் யாரேனும் பிரார்த்தித்தால் அவரது பிரார்த்தனையை நான் ஏற்கிறேன். என்னிடம் யாரேனும் கேட்டால் அவருக்கு நான்

கொடுக்கிறேன். என்னிடம் யாரேனும் பாவமன்னிப்புக் கோரினால் அவரை நான் மன்னிக்கிறேன்" என்று கூறுகின்றான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1387அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், ஒவ்வோர் இரவிலும் இரவின் முதல் மூன்றிலொரு பகுதி முடியும்போது, கீழ் வானிற்கு இறங்கிவந்து, "நானே அரசன்;நானே அரசன்! என்னிடம் பிரார்த்திப்பவர் எவருமுண்டா? அவரது பிரார்த்தனையை நான் ஏற்கிறேன். என்னிடம் கேட்பவர் எவரும் உண்டா? அவருக்கு நான் கொடுக்கிறேன். என்னிடம் பாவமன்னிப்புக் கோருபவர் எவரும் உண்டா? அவரை நான் மன்னிக்கிறேன்"என்று கூறுகிறான். வைகறை (ஃபஜ்ர்) நேரம் புலரும்வரை இவ்வாறு கூறிக்கொண்டிருக்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1388அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரவின் பாதி நேரம் அல்லது மூன்றில் இரு பகுதி நேரம் கழியும்போது உயர்வும் வளமும் மிக்க இறைவன் கீழ் வானிற்கு இறங்கிவந்து, "கேட்பவர் எவரும் உண்டா? அவருக்குக் கொடுக்கப்படும். பிரார்த்திப்பவர் எவரும் உண்டா? அவரது பிரார்த்தனை ஏற்கப்படும். பாவமன்னிப்புக் கோருபவர் எவரும் உண்டா? அவருக்கு மன்னிப்பு அளிக்கப்படும்" என்று அதிகாலை புலரும்வரை கூறுகின்றான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1389அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், நடு இரவில் அல்லது இரவின் இறுதி மூன்றிலொரு பகுதியில் கீழ் வானிற்கு இறங்குகிறான். "என்னிடம் பிரார்த்திப்பவர் எவரும் உண்டா? அவரது பிரார்த்தனையை நான் ஏற்கிறேன். அல்லது என்னிடம் கேட்பவர் எவரும் உண்டா?அவருக்கு நான் கொடுக்கிறேன்" என்று கூறுகின்றான். பிறகு "(நான்) இல்லாதவனும் அல்லன்; (வாக்குமீறுவதன் மூலம்) அநீதி இழைப்பவனும் அல்லன். (இத்தகைய) எனக்கு (அழகிய) கடனளிப்பவர் யாரும் உண்டா?" என்று அல்லாஹ் கேட்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

முஸ்லிம் (பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான்) கூறுகின்றேன்:
இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு மர்ஜானா என்பவர் சயீத் பின் அப்தில்லாஹ் ஆவார். மர்ஜானா என்பது,அவருடைய தாயாரின் பெயராகும்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "பிறகு உயர்வும் வளமும் மிக்க (இறை)வன் தன் கரங்களை விரித்தபடி "இல்லாதவனோ அநீதி இழைப்பவனோ அல்லாத (உங்கள் இறை)வனுக்கு (அழகிய) கடன் அளிப்பவர் யாரும் உண்டா?" என்று கூறுவான் என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

1390அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், இரவின் முதல் மூன்றிலொரு பகுதி கழியும்வரை தாமதித்துவிட்டுப் பின்னர் கீழ் வானிற்கு இறங்குகின்றான். "(என்னிடம்) பாவமன்னிப்புக் கோருபவர் எவரும் உண்டா? தவ்பாச் செய்பவர் எவரும் உண்டா? கேட்பவர் எவரும் உண்டா? பிரார்த்திப்பவர் எவரும் உண்டா?" என அதிகாலை புலரும்வரை கேட்கின்றான்.
இதை அபூசயீத் (ரலி) மற்றும் அபூஹுரைரா (ரலி) ஆகியோர் அறிவிக்கின்றனர்.
இந்த ஹதீஸ் இவ்விரு நபித்தோழர்களிடமிருந்து தலா மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் தலா இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. இவ்வறிவிப்புகளில் வந்துள்ள ஹதீஸைவிட மேற்கண்ட அறிவிப்புகளில் வந்துள்ள ஹதீஸே முழுமையானதும் மிகுதியானதுமாகும்.

## பாடம் : 25 ரமளானில் இரவில் நின்று வணங்குமாறு வந்துள்ள ஆர்வமூட்டலும், அதுவே தராவீஹ் தொழுகை என்பதும்.

1391அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எவர் நம்பிக்கையோடும் நன்மையை எதிர்பார்த்தும் ரமளான் மாதத்தில் நின்று வணங்குகிறாரோ அவரது முந்தைய பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1392அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தில் நின்றுவழிபடுவதைக் கட்டாயப்படுத்தாமல் அதன் மீது மக்களுக்கு ஆர்வமூட்டிவந்தார்கள். "எவர் நம்பிக்கையோடும் நன்மையை எதிர்பார்த்தும் ரமளானில் நின்றுவழிபடுகிறாரோ அவரது முந்தைய பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும்" என்று கூறுவார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறக்கும்போது இதே நிலையே நீடித்தது. அபூபக்ர் (ரலி) அவர்களது ஆட்சிக் காலத்திலும் உமர் (ரலி) அவர்களது ஆட்சியின் ஆரம்பக் கட்டத்திலும் இந்த நிலையே இருந்தது.

1393அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எவர் நம்பிக்கையோடும் நன்மையை எதிர்பார்த்தும் ரமளானில் நின்று வழிபடுகிறாரோ அவரது முந்தைய பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும். எவர் நம்பிக்கையோடும் நன்மையை எதிர்பார்த்தும் லைலத்துல் கத்ர் இரவில் நின்று வழிபடுகிறாரோ அவரது முந்தைய பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1394நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் நம்பிக்கையோடும் நன்மையை எதிர்பார்த்தும் லைலத்துல் கத்ர் இரவில் நின்று வழிபட, அது லைலத்துல் கத்ராகவே அமைந்து விட்டால் அவருக்கு மன்னிப்பு வழங்கப்படும் -.இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1395ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் இரவில் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் தொழுதார்கள். அவர்களைப் பின்பற்றி மக்களும் தொழுதனர். மறுநாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுதபோது மக்களின் எண்ணிக்கை அதிகமானது. மூன்றாவது அல்லது நான்காவது இரவில் (அங்கு) மக்கள் திரண்டபோது அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வரவில்லை. அதிகாலையானதும் "நீங்கள் செய்ததை நான் பார்த்(துக் கொண்டுதான் இருந்)தேன். இத்தொழுகை உங்கள்மீது கடமையாக்கப்பட்டுவிடுமோ என்று நான் அஞ்சியதுதான் உங்களிடம் வரவிடாமல் என்னைத் தடுத்துவிட்டது" என்று கூறினார்கள்.இது ஒரு ரமளான் மாதத்தில் நடந்ததாகும்.

1396ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நாள் நள்ளிரவில் (வீட்டிலிருந்து) புறப்பட்டுச் சென்று பள்ளிவாசலில் தொழுதார்கள். அப்போது மக்களில் சிலரும் அவர்களைப் பின்பற்றித் தொழலாயினர். காலையில் மக்கள் இது பற்றிப் பேசலானார்கள். (மறுநாள்) முந்திய நாளைவிட அதிகமானோர் திரண்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரண்டாவது இரவு புறப்பட்டுவந்(து தொழுவித்)தார்கள். மக்களும் அவர்களுக்குப் பின்னால் நின்று தொழுதனர். (மூன்றாம் நாள்) காலையிலும் இது பற்றி மக்கள் பேசிக்கொண்டனர். அந்த மூன்றாம் நாள் இரவில் பள்ளிவாசலுக்கு வந்தவர்களின் கூட்டம் இன்னும் அதிகமானது. அன்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டுச் சென்றபோது அவர்களைப் பின்பற்றி மக்கள் தொழுதனர்.
நான்காம் நாள் இரவு வந்தபோது (மக்கள் அதிகரித்ததால்) பள்ளிவாசல் இடம் கொள்ளவில்லை. அன்றிரவு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலுக்குச் செல்லவில்லை. மக்களில் சிலர் "தொழுகை' என்று (நினைவூட்டிக்) கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடம் ஃபஜ்ர் தொழுகைக்குத்தான் சென்றார்கள். ஃபஜ்ர் தொழுகையை முடித்ததும் மக்களை முன்னோக்கி ஏகத்துவ உறுதிமொழி கூறிய பின் "அம்மா பஅத்' (இறை வாழ்த்துக்குப் பின்!) எனக் கூறிவிட்டு, "இரவில் நீங்கள் வந்திருந்தது எனக்குத் தெரியாமல் இல்லை; எனினும் உங்கள்மீது இரவுத் தொழுகை கடமையாக்கப்பட்டு, அதை உங்களால் நிறைவேற்ற முடியாமல் போய்விடுமோ என நான் அஞ்சினேன் (ஆகவேதான், நேற்றிரவு நான் வரவில்லை)" என்று கூறினார்கள்.

1397ஸிர்ரு பின் ஹுபைஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உபை பின் கஅப் (ரலி) அவர்களிடம் "ஆண்டு முழுவதும் இரவில் நின்று வணங்கியவர் லைலத்துல் கத்ர் இரவை அடைந்துகொள்வார்' என்று அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறிவருவதாகச் சொல்லப்பட்டது. அதற்கு உபை (ரலி) அவர்கள், "எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன்மீது சத்தியமாக! அது (லைலத்துல் கத்ர்) ரமளானில்தான் உள்ளது (இவ்வாறு சத்தியம் செய்தபோது அன்னார் "அல்லாஹ் நாடினால்' என்று கூறாமல் உறுதியாகவே குறிப்பிட்டார்கள்) அல்லாஹ்வின் மீதாணையாக! அது எந்த இரவு என்பதை நான் அறிவேன்; அந்த இரவில் நின்று வணங்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். அது ரமளானில் இருபத்தி ஏழாம்

இரவேயாகும். அ(து லைலத்துல் கத்ர் என்ப)தற்கு அடையாளம், அந்த இரவை அடுத்துவரும் காலைப் பொழுதில் சூரியன் வெண்ணிறத்தில் ஒளியிழந்து (மங்கலாக) உதிக்கும்" என்று கூறினார்கள்.

1398ஸிர்ரு பின் ஹுபைஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உபை பின் கஅப் (ரலி) அவர்கள் லைலத்துல் கத்ர் இரவு பற்றி (பின்வருமாறு) கூறினார்கள்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அந்த இரவைப் பற்றி நான் அறிவேன். அந்த இரவில் நின்று வணங்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்; அது (ரமளானின்) இருபத்தி ஏழாம் இரவேயாகும் என்றே அநேகமாக நான் கருதுகிறேன்.
அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்கள் "அந்த இரவில் நின்று வணங்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்' எனும் வார்த்தையில்தான் ஐயப்பாட்டுடன் அறிவிக்கிறார். மேலும், ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: என் நண்பர்களில் ஒருவர் அப்தா பின் அபீலுபாபா (ரஹ்) அவர்களிடமிருந்து இச்செய்தியை எனக்கு அறிவித்தார்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் ஷுஅபா (ரஹ்) அவர்கள் ஐயப்பாட்டுடன் அறிவித்தது பற்றியும் அதற்குப் பின்னுள்ள குறிப்புகளும் இடம்பெறவில்லை.

## பாடம் : 26 இரவுத் தொழுகையில் பிரார்த்திப்பதும் நின்று வணங்குவதும்.

1399இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் சிறிய தாயார் மைமூனா (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்தில்) ஓர் இரவில் தங்கியிருந்தேன். அந்த இரவில் நபி (ஸல்) அவர்கள் எழுந்து இயற்கைக் கடனை நிறைவேற்றச் சென்றார்கள். பிறகு (வந்து) தம் முகத்தையும் கைகளையும் கழுவினார்கள். பிறகு உறங்கினார்கள். பின்னர் எழுந்து தண்ணீர் பையை நோக்கிச் சென்று அதன் (சுருக்குக்) கயிற்றை அவிழ்த்தார்கள். பின்னர் (ஒன்றுக்கும்) அதிகமான முறைகள் உறுப்புகளைக் கழுவாமல், நடுநிலையாக அங்கத்தூய்மை (உளூ) செய்தார்கள். அதை நிறைவாகச் செய்தார்கள். பிறகு நின்று தொழுதார்கள்.
நானும் (மெல்ல) எழுந்தேன். நான் அவர்களை நோட்டமிடுவதற்காக விழித்துக் கொண்டிருப்பதை அவர்கள் காண்பது எனக்கு விருப்பமில்லாததால் மெதுவாக எழுந்து அங்கத்தூய்மை செய்தேன். அப்போது அவர்கள் நின்று தொழ, நான் அவர்களின் இடப் பக்கத்தில் நின்றேன். உடனே அவர்கள் என் கையைப் பிடித்துச் சுற்றி என்னைத் தமது வலப் பக்கத்திற்குக் கொண்டுவந்தார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது இரவுத் தொழுகையைப் பதிமூன்று ரக்அத்களுடன் முடித்துக்கொண்டார்கள். பின்னர் ஒருக்களித்துப் படுத்துக் குறட்டைவிட்டபடி உறங்கினார்கள். உறங்கும்போது குறட்டைவிடுவது அவர்களது வழக்கமாகும். பினனர் பிலால் (ரலி) அவர்கள் வந்து அவர்களை (ஃபஜ்ர்) தொழுகைக்காக அழைத்தார்கள். அவர்கள் எழுந்து (புதிதாக) அங்கத் தூய்மை செய்யாமலேயே தொழுதார்கள்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது பிரார்த்தனையில் (பின்வருமாறு) கூறிக்கொண்டிருந்தார்கள்:
அல்லாஹும்மஜ்அல் ஃபீ கல்பீ நூரன். வஃபீ பஸரீ நூரன். வ ஃபீ சம்ஈ நூரன். வ அன் யமீனீ நூரன். வ அன் யசாரீ நூரன். வ ஃபவ்கீ நூரன். வ தஹ்தீ நூரன். வ அமாமீ நூரன். வ கல்ஃபீ நூரன். வ அழ்ழிம் லீ நூரா.
(பொருள்: இறைவா! என் இதயத்தில் ஒளியை ஏற்படுத்துவாயாக! என் பார்வையிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் செவியிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் வலப் பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் இடப் பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு மேலேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்குக் கீழேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு முன்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்குப் பின்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு (எல்லாத் திசைகளிலும்) ஒளியை வலிமையாக்குவாயாக).
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) குறைப் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
(உடல் எனும்) பேழையிலுள்ள வேறு ஏழு பொருட்களிலும் ஒளியை ஏற்படுத்துமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்தார்கள். அப்பாஸ் (ரலி) அவர்களின் புதல்வர்களில் ஒருவரைச் சந்தித்தபோது அவற்றை எனக்கு அவர் அறிவித்தார்: என் நரம்பிலும் என் சதையிலும் என் இரத்தத்திலும் என் ரோமத்திலும் என் சருமத்திலும் (ஒளியை ஏற்படுத்துவாயாக) எனக் கூறிவிட்டு, மேலும் (மனம் மற்றும் நாவு ஆகிய) இரண்டையும் குறிப்பிட்டார்.

1400இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் சிறிய தாயாரும் இறைநம்பிக்கையாளர்களின் அன்னையுமான மைமூனா (ரலி) அவர்களின் இல்லத்தில் ஓர் இரவில் தங்கினேன். நான் தலையணையின் அகலவாட்டில் (தலை வைத்துப்) படுத்துக்கொண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவர்களுடைய வீட்டாரும் அதன் நீளவாட்டில் (தலை வைத்துப்) படுத்திருந்தனர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவின் பாதிவரை அல்லது அதற்குச் சற்று முன்புவரை அல்லது சற்று பின்புவரை உறங்கினார்கள். (பின்னர்) அவர்கள் விழித்தெழுந்து (அமர்ந்து) தமது கரத்தால் முகத்தில் தடவித் தூக்க(க் கலக்க)த்தைத் துடைக்கலானார்கள். பிறகு ஆலு இம்ரான் அத்தியாயத்தின் இறுதிப் பத்து வசனங்களை (3:190-200) ஓதினார்கள். பிறகு கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த ஒரு தண்ணீர் பையருகே சென்று (அதைச் சரித்து) அதிலிருந்து அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். செம்மையாக அங்கத்தூய்மை செய்துகொண்ட பின் தொழுவதற்காக நின்றார்கள்.
நானும் எழுந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்ததைப் போன்று அங்கத் தூய்மை செய்துவிட்டு அவர்களுக்கு (இட)ப் பக்கத்தில் போய் நின்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வலக் கரத்தை என் தலைமீது வைத்து, என் வலது காதைப் பிடித்துத் திருகி (தமது வலப் பக்கத்தில் நிறுத்தி)னார்கள். அப்போது இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு வித்ர் தொழுதார்கள்.

பின்னர் தொழுகை அறிவிப்பாளர் வரும் வரை சாய்ந்து படுத்திருந்தார்கள். (அவர் வந்ததும்) எழுந்து சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் (சுப்ஹுடைய சுன்னத்) தொழுது விட்டு (வீட்டிலிருந்து) புறப்பட்டுச் சென்று (மக்களுக்கு) சுப்ஹுத் தொழு(வித்)தார்கள்.

1401மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "பிறகு (தொங்கவிடப்பட்டிருந்த) பழைய தண்ணீர் பையை நோக்கிச் சென்று (அதைச் சரித்து) பல் துலக்கி, அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். அதைச் செம்மையாகச் செய்தார்கள். அதற்காகச் சிறிதளவு தண்ணீரே ஊற்றினார்கள். பிறகு என்னை அசைத்து (உசுப்பி)விட்டார்கள். நான் எழுந்தேன்..." என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன.

1402இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஓர் இரவில்) நபி (ஸல்) அவர்களின் துணைவியார் மைமூனா (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்தில்) உறங்கினேன். அந்த இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களிடம் (தங்கி) இருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்துவிட்டுப் பிறகு நின்று தொழுதார்கள். நான் அவர்களுக்கு இடப் பக்கத்தில் நின்றேன். உடனே அவர்கள் என்னைப் பிடித்துத் தமது வலப் பக்கத்தில் நிறுத்தினார்கள். அந்த இரவில் அவர்கள் பதிமூன்று ரக்அத்கள் தொழுதார்கள். பின்னர் குறட்டைவிட்டு உறங்கினார்கள். (பொதுவாக) அவர்கள் உறங்கும்போது குறட்டைவிடுவார்கள். பின்னர் அவர்களிடம் தொழுகை அறிவிப்பாளர் வந்தபோது புறப்பட்டுச் சென்று (புதிதாக) அங்கத் தூய்மை செய்யாமலேயே (சுப்ஹு) தொழு(வித்)தார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
இந்த ஹதீஸை நான் புகைர் பின் அல் அஷஜ்ஜு (ரஹ்) அவர்களிடம் அறிவித்தபோது அவர்கள், "இவ்வாறே எனக்கு குறைப் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்" என்று கூறினார்கள்.

1403இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஓர் இரவில் என் சிறிய தாயார் மைமூனா பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்தில்) தங்கியிருந்தேன். அப்போது அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இரவுத் தொழுகைக்காக) எழும்போது என்னையும் எழுப்பிவிடுங்கள்!" என்று சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இரவுத் தொழுகைக்காக) எழுந்த போது நான் எழுந்து அவர்களுக்கு இடப் பக்கத்தில் நின்றேன். உடனே அவர்கள் எனது கையைப் பிடித்துத் தமது வலப் பக்கத்தில் என்னை நிறுத்தினார்கள். நான் கண்ணயரும் போது எனது காதின் சோனையைப் பிடித்(து என்னை விழிக்கச் செய்)தார்கள். அப்போது பதினோரு ரக்அத்கள் தொழுதார்கள். பின்னர் கால்களை நட்டுவைத்துக் கைகளைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்தவாறே உறங்கினார்கள். அப்போது அவர்களின் குறட்டைச் சப்தத்தை நான் கேட்டேன். ஃபஜ்ர் நேரமானதும் (சுப்ஹுடைய சுன்னத்) இரண்டு ரக்அத்களைச் சுருக்கமாகத் தொழுதார்கள்.

1404இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் சிறிய தாயார் மைமூனா (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்தில்) ஓர் இரவு தங்கினேன். அந்த இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து, கட்டித் தொங்க விடப்பட்டிருந்த தண்ணீர் பையிலிருந்து (தண்ணீரைச் சரித்து) சுருக்கமாக அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். (அவர்கள் சிறிதளவு தண்ணீரில் சுருக்கமாகவும் சிக்கனமாகவும் அங்கத் தூய்மை செய்ததை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் சைகையால் வர்ணிக்கலானார்கள்.) நானும் எழுந்து நபி (ஸல்) அவர்கள் செய்ததைப் போன்றே (அங்கத் தூய்மை) செய்துவிட்டு வந்து அவர்களுக்கு இடப் பக்கத்தில் நின்றேன். உடனே அவர்கள் என்னை(ப் பிடித்து)ப் பின்பக்கமாகக் கொண்டுவந்து தமக்கு வலப் பக்கத்தில் நிறுத்தலானார்கள்; பிறகு தொழுதார்கள். பின்னர், படுத்து குறட்டைவிட்டு உறங்கினார்கள். பிறகு அவர்களிடம் பிலால் (ரலி) அவர்கள் வந்து (சுப்ஹுத்) தொழுகைக்காக அவர்களுக்கு அறிவிப்புக் கொடுத்தார்கள். அவர்கள் புறப்பட்டுச் சென்று (புதிதாக) அங்கத் தூய்மை செய்யாமலேயே சுப்ஹுத் தொழு(வித்)தார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (உறங்கிய பின் புதிதாக அங்கத் தூய்மை செய்யாமல் தொழும்) இந்த முறை நபி (ஸல்) அவர்களுக்கு மட்டும் உரியதாகும். ஏனெனில் "நபி (ஸல்) அவர்களின் கண்கள் மட்டுமே உறங்குகின்றன; உள்ளம் உறங்குவதில்லை" என நமக்குச் செய்தி எட்டியுள்ளது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1405இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஓர் இரவில் என் சிறிய தாயார் மைமூனா (ரலி) அவர்களது இல்லத்தில் தங்கியிருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் எப்படித் தொழுகிறார்கள் என்பதைக் கவனிக்கக் காத்திருந்தேன். அவர்கள் எழுந்து சென்று சிறுநீர் கழித்து விட்டுப் பிறகு (திரும்பிவந்து) தமது முகத்தையும் கைகளையும் கழுவிவிட்டு உறங்கினார்கள். பின்னர் எழுந்து தண்ணீர் பையை நோக்கிச் சென்று அதன் சுருக்கை அவிழ்த்தார்கள். பிறகு உணவுத் தட்டில் அல்லது பெரிய பாத்திரத்தில் அதை ஊற்றி அதில் தமது கையை நுழைத்து நடுத்தரமாக அழகிய முறையில் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். பிறகு நின்று தொழுதார்கள். நான் சென்று அவர்களுக்கு (இடப்) பக்கத்தில் நின்றுகொண்டேன். உடனே அவர்கள் என்னைப் பிடித்து தமக்கு வலப் பக்கத்தில் நிறுத்தினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிமூன்று ரக்அத்கள் தொழுது முடித்தார்கள். பிறகு குறட்டைவிட்டு உறங்கினார்கள். -(பொதுவாக) அவர்களது குறட்டைச் சப்தத்தை வைத்து அவர்கள் உறங்குகிறார்கள் என்பதை நாங்கள் அறிந்துகொள்வோம்.- பின்னர் (சுப்ஹுத்) தொழுகைக்குப் புறப்பட்டுச் சென்று தொழுதார்கள். அவர்கள் தமது "தொழுகையில்'அல்லது "சஜ்தாவில்' பின்வருமாறு கூறலானார்கள்:
அல்லாஹும்மஜ்அல் ஃபீ கல்பீ நூரன். வ ஃபீ சம்ஈ நூரன். வ ஃபீ பஸரீ நூரன். வ அன் யமீனீ நூரன். வ அன் ஷிமாலீ நூரன். வ அமாமீ நூரன். வ கல்ஃபீ நூரன். வ ஃபவ்கீ நூரன். வ தஹ்தீ நூரன். வஜ்அல்லீ நூரா/ வஜ்அல்னீ நூரா.
(பொருள்: இறைவா! என் இதயத்தில் ஒளியை ஏற்படுத்துவாயாக! என் செவியிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் பார்வையிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் வலப் பக்கத்திலும்

ஒளியை ஏற்படுத்துவாயாக. என் இடப் பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு முன்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்குப் பின்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு மேலேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்குக் கீழேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக. "எனக்கு (எல்லாத் திசைகளிலும்) ஒளியை ஏற்படுத்துவாயாக' (அல்லது) "என்னை ஒளிமயமாக்குவாயாக).'

-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

(அதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சலமா (ரஹ்) கூறினார்கள்:

நான் குறைப் (ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது, "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "நான் என் சிறிய தாயார் மைமூனா (ரலி) அவர்களிடம் இருந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள்...' என்று கூறிவிட்டு மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறு குறிப்பிட்டார்கள்" என்றார்கள். மேலும் "என்னை ஒளிமயமாக ஆக்குவாயாக" என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகவு)ம் ஐயப்பாடின்றி அறிவித்தார்கள்.

1406மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "நான் என் சிறிய தாயார் மைமூனா (ரலி) அவர்களிடம் தங்கியிருந்தேன்" என்று இப்னு அப்பாஸ் (ரலி) கூறியதாக ஹதீஸ் தொடங்குகிறது.

அதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முகத்தையும் கைகளையும் கழுவியதாகக் குறிப்பு இல்லை. மாறாக, "பிறகு அவர்கள் தண்ணீர் பையருகே சென்று அதன் சுருக்கை அவிழ்த்துவிட்டார்கள். பிறகு நடுத்தரமாக அங்கத் தூய்மை செய்தார்கள். பிறகு தமது படுக்கைக்கு வந்து உறங்கினார்கள். பிறகு மீண்டும் எழுந்து அந்தத் தண்ணீர் பைக்குச் சென்று அதன் சுருக்கை அவிழ்த்துவிட்டுச் செம்மையாக –அதுதான் அங்கத் தூய்மை (உளூ) என்று கூறுமளவுக்கு (நிறைவாக) – அங்கத் தூய்மை செய்தார்கள். மேலும், "என் ஒளியை வலிமையாக்குவாயாக" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது. "என்னை ஒளிமயமாக்குவாயாக' எனும் வாசகம் இடம்பெறவில்லை.

1407மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வருமாறு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது:

நான் ஓர் இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தங்கியிருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் பையை நோக்கிச் சென்று அதிலிருந்து தண்ணீர் ஊற்றி அங்கத் தூய்மை செய்தார்கள்; அதிகமாகத் தண்ணீரைப் பயன்படுத்தவுமில்லை; அங்கத்தூய்மையில் குறைவைக்கவுமில்லை.

மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன. மேலும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்றைய இரவில் பத்தொன்பது விஷயங்களை இறைவனிடம் வேண்டினார்கள்" எனும் குறிப்பும் இடம்பெற்றுள்ளது.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சலமா பின் குஹைல் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

எனக்கு அந்தப் பத்தொன்பது விஷயங்களையும் குறைப் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்.

அவற்றில் பன்னிரண்டு விஷயங்களை நான் மனனமிட்டுள்ளேன்; எஞ்சியவற்றை நான் மறந்துவிட்டேன். (அந்தப் பன்னிரண்டு விஷயங்கள் வருமாறு):

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹும்மஜ்அல் லீ ஃபீ கல்பீ நூரன். வஃபீ லிசானீ நூரன். வஃபீ சம்ஈ நூரன். வஃபீ பஸரீ நூரன். வ மின் ஃபவ்க்கீ நூரன். வ மின் தஹ்த்தீ நூரன். வ அய் யமீனீ நூரன். வ அன் ஷிமாலீ நூரன். வ மிம் பைனி யதைய்ய நூரன். வ மின் கல்ஃபீ நூரன். வஜ்அல் ஃபீ நஃப்சீ நூரன். வ அஃழிம் லீ நூரா" என்று வேண்டினார்கள்.

(பொருள்: இறைவா! என் இதயத்தில் எனக்கு ஒளியை ஏற்படுத்துவாயாக. என் நாவிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் செவியிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் பார்வையிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு மேலேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்குக் கீழேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு வலப் பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு இடப் பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு முன்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்குப் பின்னாலும் ஒளியை ஏற்படுத்து வாயாக. என் மனத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு ஒளியை வலிமையாக்குவாயாக).

1408மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவை தவிர பின்வருவனவும் இடம்பெற்றுள்ளன.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்:

நான் ஓர் இரவில் மைமூனா (ரலி) அவர்களது இல்லத்தில் உறங்கினேன். அந்த இரவில் நபி (ஸல்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களிடம் தங்கியிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களது இரவுத் தொழுகை எவ்வாறு உள்ளது என்பதை நோட்டமிடுவதற்காகவே (நான் அவர்களது இல்லத்தில் உறங்கினேன்). அப்போது நபி (ஸல்) அவர்கள் தம் வீட்டாருடன் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு உறங்கினார்கள்.

இந்த அறிவிப்பில் "பின்னர் எழுந்து அங்கத்தூய்மை (உளூ) செய்தார்கள்; பல் துலக்கினார்கள்" எனும் குறிப்பும் இடம்பெற்றுள்ளது.

1409இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் (ஓர் இரவில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவர்களது இல்லத்தில்) உறங்கினேன். அவர்கள் உறக்கத்திலிருந்து விழித்தெழுந்து பல் துலக்கி, அங்கத் தூய்மை (உளூ) செய்து, "திண்ணமாக வானங்கள் மற்றும் பூமியின் படைப்(பு அமைப்)பிலும், இரவு-பகல் மாறி மாறி வருவதிலும் அறிவுடையோருக்குப் பல சான்றுகள் உள்ளன" எனும் (3:190ஆவது) வசனத்தை, அந்த அத்தியாயத்தின் இறுதிவரை ஓதி முடித்தார்கள். பின்னர் எழுந்து நின்று இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். அவற்றில் நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள்; ருகூஉச் செய்தார்கள்; சஜ்தாவும் செய்தார்கள். பிறகு திரும்பிச் சென்று குறட்டைவிட்டு உறங்கினார்கள். இவ்வாறே மூன்று முறை செய்து,

ஆறு ரக்அத்கள் தொழுதார்கள். ஒவ்வொரு தடவையும் பல் துலக்கி, அங்கத்தூய்மை செய்து இந்த வசனங்களை ஓதினார்கள். பிறகு மூன்று ரக்அத் வித்ர் தொழுதார்கள். தொழுகை அறிவிப்பாளர் (சுப்ஹுத் தொழுகைக்காக) அறிவிப்புச் செய்ததும் (வீட்டிலிருந்து) புறப்பட்டுச் சென்றார்கள்.

அப்போது "அல்லாஹும்மஜ்அல் ஃபீ கல்பீ நூரன். வஃபீ லிசானீ நூரன். வஜ்அல் ஃபீ சம்ஈ நூரன். வஜ்அல் ஃபீ பஸரீ நூரன். வஜ்அல் மின் கல்ஃபீ நூரன். வமின் அமாமீ நூரன். வஜ்அல் மின் ஃபவ்க்கீ நூரன். வமின் தஹ்த்தீ நூரன். அல்லாஹும்ம அஃத்தினீ நூரா" என்று கூறினார்கள்.

(பொருள்: இறைவா! என் இதயத்தில் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் நாவிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் செவியிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் பார்வையிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்குப் பின்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு முன்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு மேலேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்குக் கீழேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக. இறைவா! எனக்கு ஒளியை வழங்குவாயாக).

1410அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "நான் ஓர் இரவில் என் சிறிய தாயார் மைமூனா (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்தில்) தங்கினேன். அந்த இரவில் நபி (ஸல்) அவர்கள் கூடுதல் தொழுகையைத் தொழுவதற்காக எழுந்தார்கள். நபியவர்கள் தண்ணீர் பையை நோக்கிச் சென்று அங்கத்தூய்மை (உளூ) செய்துவிட்டு (வந்து) தொழுதார்கள். இவ்வாறு அவர்கள் செய்வதைக் கண்டதும் நானும் எழுந்து அந்தப் பையிலிருந்து (தண்ணீரைச் சரித்து) அங்கத்தூய்மை (உளூ) செய்துவிட்டு, அவர்களின் இடப் பக்கத்தில் நின்றேன். உடனே அவர்கள் தமது முதுகுக்குப் பின்னால் கையை நீட்டி எனது கையைப் பிடித்து அப்படியே தமது முதுகுக்குப் பின்னால் கொண்டுசென்று (தமக்கு) வலப் பக்கத்தில் என்னை நிறுத்தினார்கள்" என்று கூறினார்கள். நான், "கூடுதலான (நஃபில்) தொழுகையிலா இவ்வாறு நடந்தது?" எனக் கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள்.

1411இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னை (என் தந்தை) அப்பாஸ் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். அப்போது நபியவர்கள் என் சிறிய தாயார் மைமூனா (ரலி) அவர்களது இல்லத்தில் இருந்தார்கள். நான் அந்த இரவில் அவர்களுடன் தங்கியிருந்தேன். நபி (ஸல்) அவர்கள் இரவில் தொழ நின்றார்கள். நானும் எழுந்து அவர்களுக்கு இடப் பக்கத்தில் நின்றேன். உடனே அவர்கள் தமது முதுகுக்குப் பின்னே என்னைப் பிடித்து வலப் பக்கத்திற்குக் கொண்டுசென்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் என் சிறிய தாயார் மைமூனா (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்தில்) இரவில் தங்கியிருந்தேன்' என (இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாக) இடம்பெற்றுள்ளது.

1412இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் பதிமூன்று ரக்அத்கள் தொழுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1413ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஒரு நாள் இரவு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தொழுகையை (கண்விழித்து) கவனிக்கப்போகிறேன் எனச் சொல்லிக் கொண்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (முதலில்) சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் (உளூவின் காணிக்கையாகத்) தொழுதார்கள் (2+). பிறகு மிக மிக மிக நீளமாக இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள் (2+). பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள் (2+). அவ்விரு ரக்அத்களும் அதற்கு முந்திய இரு ரக்அத்களையும்விடச் சுருக்கமாக இருந்தன. பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள் (2+). அவ்விரு ரக்அத்களும் அதற்கு முந்திய இரு ரக்அத்களையும்விடச் சுருக்கமாகவே இருந்தன. பிறகு இரண்டு ரகஅத்கள் தொழுதார்கள் (2+). அவ்விரு ரக்அத்களும் அதற்கு முந்திய இரு ரக்அத்களையும்விடச் சுருக்கமாகவே இருந்தன. பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள் (2+). அவ்விரு ரக்அத்களும் அதற்கு முந்திய இரு ரக்அத்களைவிடச் சுருக்கமாகவே இருந்தன. பிறகு (ஒரு ரக்அத்) வித்ர் தொழுதார்கள் (1=13). இவை பதிமூன்று ரக்அத்களாகும்.

1414ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தேன். நாங்கள் ஒரு நீர்நிலையின் படித்துறையைச் சென்றடைந்தோம். அப்போது அவர்கள், "ஜாபிரே, நீ படித்துறையில் இறங்கி (ஒட்டகத்திற்கு நீர் புகட்டி உனது தேவையையும் பூர்த்தி செய்துகொள்கி)றாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒட்டகத்திலிருந்து) இறங்கினார்கள். நான் படித்துறையில் இறங்கினேன். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது இயற்கைக் கடனை நிறைவேற்றச் சென்றார்கள். நான் அவர்களுக்காகத் தண்ணீர் எடுத்து வைத்தேன். அவர்கள் (திரும்பி) வந்து, அங்கத்தூய்மை (உளூ) செய்தார்கள். பிறகு எழுந்து, ஒரே ஆடையை அணிந்து, அதை (வலம் இடமாகத் தோள்கள் மீது) மாற்றிப் போட்டுக்கொண்டு தொழுதார்கள். நான் அவர்களுக்குப் பின்னால் (தொழுவதற்காக) நின்றேன். உடனே அவர்கள் எனது காதைப் பிடித்து (இழுத்து) என்னைத் தமக்கு வலப் பக்கத்தில் நிறுத்தினார்கள்.

1415ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் தொழுவதற்காக நின்றால் முதலில் சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1416நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் இரவில் தொழுவதற்காக நின்றால் முதலில் சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் தொழட்டும் -.இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1417இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நடு இரவில் (தஹஜ்ஜுத்) தொழுவதற்காக எழுந்ததும் (பின்வருமாறு) பிரார்த்திப்பார்கள்:

அல்லாஹும்ம, லக்கல் ஹம்து, அன்த்த நூருஸ் ஸமாவாத்தி வல்அர்ள். வ லக்கல் ஹம்து, அன்த்த கய்யாமுஸ் ஸமாவாத்தி வல்அர்ள். வ லக்கல் ஹம்து, அன்த்த ரப்புஸ் ஸமாவாத்தி வல்அர்ளி வமன் ஃபீஹின்ன. அன்த்தல் ஹக்கு. வ வஅதுக்கல் ஹக்கு. வ கவ்லுக்கல் ஹக்கு. வ லிகாஉக ஹக்குன். வல்ஜன்னத்து ஹக்குன். வந்நாரு ஹக்குன். வஸ்ஸாஅத்து ஹக்குன். அல்லாஹும்ம லக அஸ்லம்து, வ பிக ஆமன்து, வ அலைக தவக்கல்து, வ இலைக அனப்து, வ பிக காஸம்து, வ இலைக ஹாக்கம்து, ஃபஃக்ஃபிர்லீ மா கத்தம்து வ அக்கர்து வ அஸ்ரர்து வ அஃலன்து. அன்த இலாஹீ. லா இலாஹ இல்லா அன்த.

(பொருள்: இறைவா! உனக்கே புகழ் அனைத்தும். வானங்கள் மற்றும் பூமியின் ஒளி நீயே. உனக்கே புகழ் அனைத்தும். வானங்கள் மற்றும் பூமி ஆகியவற்றை நிர்வகிப்பவன் நீயே. உனக்கே புகழ் அனைத்தும் .வானங்கள், பூமி மற்றும் அவற்றிலுள்ளவற்றின் இறைவன் நீயே. நீ உண்மையே. உன் வாக்குறுதி உண்மையே. உனது கூற்று உண்மையே. உன் தரிசனம் உண்மை. சொர்க்கம் உண்மை. நரகம் உண்மை. மறுமை நாள் உண்மை. அல்லாஹ்வே! உனக்கே கட்டுப்பட்டேன். உன்மீதே நம்பிக்கை கொண்டுள்ளேன். உன்னையே சார்ந்துள்ளேன். உன்னிடமே திரும்புகிறேன். உன்னிடமே வழக்காடுவேன். உன்னிடமே நீதி கேட்பேன். எனவே, நான் முந்திச் செய்த, பிந்திச் செய்கிற, இரகசியமாகச் செய்த, பகிரங்கமாகச் செய்த பாவங்களை மன்னிப்பாயாக. நீயே என் இறைவன். உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை).

-மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்களது அறிவிப்பும் மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பும் இரண்டு சொற்றொடர்களில் தவிர வேறெதிலும் மாறுபட வில்லை.

"நிர்வகிப்பவன்' என்பதைக் குறிக்க இப்னு ஜுரைஜின் அறிவிப்பில் ("கய்யாம்' என்பதற்கு பதிலாக) "கய்யிம்' எனும் சொல்லும் "நான் இரகசியமாகச் செய்த' என்பதைக் குறிக்க ("வ அஸ்ரர்து' என்பதற்கு பதிலாக) "வ மா அஸ்ரர்து' எனும் சொற்றொடரும் ஆளப்பட்டுள்ளன.

இப்னு உயைனா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் சில கூடுதலான தகவல்கள் உள்ளன. மாலிக் மற்றும் இப்னு ஜுரைஜ் ஆகியோருக்குப் பல சொற்றொடர்களில் அன்னார் மாறுபடுகிறார்கள்.

-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

இந்த அறிவிப்பாளர்களின் சொற்கள் மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ள அறிவிப்பாளர்களின் சொற்களுக்குக் கிட்டத்தட்ட நெருக்கமாகவே அமைந்துள்ளன.

1418அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் இரவுத் தொழுகையைத் துவக்கியதும் முதலில் என்ன கூறுவார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் இரவுத் தொழுகையைத் துவக்கியதும் "அல்லாஹும்ம ரப்ப ஜப்ராயீல வ மீக்காயீல வ இஸ்ராஃபீல, ஃபாத்திரஸ் ஸமாவாத்தி வல்அர்ளி, ஆலிமல் ஃகைபி வஷ்ஷஹாதத்தி, அன்த தஹ்குமு பய்ன இபாதிக ஃபீமா கானூ ஃபீஹி யக்தலிஃபூன். இஹ்தினீ லிமக்துலிஃப ஃபீஹி மினல் ஹக்கி பி இத்னிக, இன்னக தஹ்தீ மன் தஷாஉ இலா ஸிராதிம் முஸ்தகீம்' என்று கூறுவார்கள்" என்று பதிலளித்தார்கள்.

(பொருள்: இறைவா! (வானவர்களாகிய) ஜிப்ராயீல், மீக்காயீல், இஸ்ரா∴பீல் ஆகியோரின் அதிபதியே! வானங்கள் மற்றும் பூமியை முன்மாதிரியின்றிப் படைத்தவனே! மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றையும் அறிந்தவனே! நீ உன் அடியார்களிடையே அவர்கள் கொண்டிருந்த கருத்துவேறுபாடுகள் குறித்து (மறுமையில்) தீர்ப்பு வழங்குவாய். (பிற மக்களால்) மாற்றுக் கருத்து கொள்ளப்பட்டாலும் சத்திய (மார்க்க)த்திலேயே உன் தயவால் என்னை நிலைத்திருக்கச் செய்வாயாக! நீ நாடியவர்களை நேரான வழியில் நீயே செலுத்துகிறாய்).

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1419அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையில் நின்றவுடன் (முதலில்) "வஜ்ஜஹ்து வஜ்ஹிய லில்லதீ ∴பதரஸ் ஸமாவாத்தி வல்அர்ள ஹனீ∴பன். வ மா அன மினல் முஷ்ரிகீன். இன்ன ஸலாத்தீ வ நுசுகீ வ மஹ்யாய வ மமாத்தீ லில்லாஹி ரப்பில் ஆலமீன். லா ஷரீக்க லஹு வ பிதாலிக உமிர்த்து. வ அன மினல் முஸ்லிமீன். அல்லாஹும்ம அன்த்தல் மலிக்கு. லா இலாஹ இல்லா அன்த்த. அன்த்த ரப்பீ வ அன அப்துக்க. ழலம்த்து ந∴ப்சீ. வஅதர∴ப்த்து பி தன்பீ. ∴ப∴க்∴பிர்லீ துனூபீ ஜமீஆ. இன்னஹு லா ய∴க்∴பிருத் துனூப இல்லா அன்த்த. வஹ்தினீ லி அஹ்சனில் அக்லாக்கி, லா யஹ்தீ லி அஹ்சனிஹா இல்லா அன்த்த. வஸ்ரி∴ப் அன்னீ சய்யிஅஹா, லா யஸ்ரி∴பு அன்னீ சய்யிஅஹா இல்லா அன்த்த. லப்பைக்க வ சஅதைக்க. வல்கைரு குல்லுஹு ∴பீ யதைக்க. வஷ்ஷர்ரு லைஸ இலைக்க. அன பிக்க, வ இலைக்க. தபாரக்த்த வ தஆலைத்த. அஸ்த∴க்∴பிருக்க வ அதூபு இலைக்க" என்று கூறுவார்கள்.

(பொருள்: நான் வானங்களையும் பூமியையும் முன்மாதிரியின்றிப் படைத்தவன் பக்கம் நேராக என் முகத்தைத் திருப்பிக்கொண்டேன். நான் இணைவைப்போரில் ஒருவனாக இருக்கமாட்டேன். என் தொழுகையும் என் தியாகமும் என் வாழ்வும் என் மரணமும் அனைத்துலகின் அதிபதியான அல்லாஹ்வுக்கே உரியன. அவனுக்கு இணையே இல்லை. இவ்வாறே எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. நான் கட்டுப்பட்டு நடப்பவர் (முஸ்லிம்)களில் ஒருவன் ஆவேன். இறைவா! நீயே அரசன். உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. நீயே என் இறைவன். நான் உன் அடிமை. எனக்கு நானே அநீதி இழைத்துக்கொண்டேன். நான் என் பாவங்களை (மறைக்காமல்) ஒப்புக்கொள்கிறேன். எனவே, என் பாவங்கள் அனைத்தையும் மன்னிப்பாயாக! பாவங்களை மன்னிப்பவர் உன்னைத் தவிர வேறெவரும் இலர். நற்குணங்களுக்கு எனக்கு வழிகாட்டுவாயாக. நற்குணங்களுக்கு வழிகாட்டுபவர் உன்னைத் தவிர வேறெவரும் இலர். துர்குணங்களை என்னிலிருந்து அகற்றுவாயாக! துர்குணங்களை அகற்றுபவர் உன்னைத் தவிர வேறெவரும் இலர். இதோ வந்தேன். கட்டளையிடு (காத்திருக்கிறேன்). நன்மைகள் அனைத்தும் உன் கரங்களிலேயே உள்ளன. தீமைகள் உன்னைச் சார்ந்தவை அல்ல. உன்னால்தான் நான் (நல்வாழ்வு கண்டேன்). உன்னிடமே நான் (திரும்பிவரப்போகிறேன்). நீ சுபிட்சமிக்கவன். உன்னதமானவன். நான் உன்னிடமே பாவமன்னிப்புக் கோருகிறேன்;பாவங்களிலிருந்து மீண்டு உன்னிடம் திரும்புகிறேன்).

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ருகூஉச் செய்யும்போது, "அல்லாஹும்ம, லக்க ரகஅத்து, வ பிக்க ஆமன்து, வ லக்க அஸ்லம்து. கஷஅ லக்க சம்ஈ வ பஸரீ வ முஃக்கீ வ அழ்மீ வ அஸபீ" என்று கூறுவார்கள். (பொருள்: இறைவா, உனக்காகக் குனிந்தேன். உன்மீதே நம்பிக்கை கொண்டேன். உனக்கே கட்டுப்பட்டேன். உனக்கே என் செவியும் பார்வையும் மூளையும் எலும்பும் நரம்பும் பணிந்தன).
அவர்கள் (ருகூவிலிருந்து) நிமிர்ந்ததும், "அல்லாஹும்ம ரப்பனா லக்கல் ஹம்து மில்அஸ் ஸமாவாத்தி வ மில்அல் அர்ளி வ மில்அ மா பைனஹுமா வ மில்அ மா ஷிஃத்த மின் ஷையிம் பஅது" (இறைவா! வானங்கள் நிரம்ப, பூமி நிரம்ப,அவற்றுக்கிடையே இருப்பவை நிரம்ப, இதன் பின்னர் நீ நாடியவை நிரம்பப் புகழ் அனைத்தும் உனக்கே உரியது) என்று கூறுவார்கள்.
அவர்கள் சிரவணக்கம் (சஜ்தா) செய்யும் போது, "அல்லாஹும்ம லக்க சஜத்து. வ பிக்க ஆமன்த்து. வ லக்க அஸ்லம்து. சஜத வஜ்ஹீ லில்லதீ கலக்கஹு வ ஸவ்வரஹு, வ ஷக்க சம்அஹு வ பஸரஹு. தபாரக்கல்லாஹு அஹ்சனுல் காலிக்கீன்" (இறைவா! உனக்கே சிரம்பணிந்தேன். உன்மீதே நம்பிக்கை கொண்டேன். உனக்கே கட்டுப்பட்டேன். என் முகத்தைப் படைத்து வடிவமைத்து அதில் காதையும் கண்ணையும் திறந்துவைத்த (இறை)வனுக்கு முன் என் முகம் பணிந்தது. படைப்பாளர்களில் மிக மேலானவனான அல்லாஹ் சுபிட்சம் மிக்கவன்) என்று கூறுவார்கள்.
பிறகு இறுதியாக அத்தஹிய்யாத்துக்கும் சலாமுக்குமிடையே "அல்லாஹும்மஃக்ஃபிர் லீ மா கத்தம்த்து வ மா அக்கர்த்து வ மா அஸ்ரர்து வ மா அஃலன்து வ மா அஸ்ரஃப்த்து வ மா அன்த அஃலமு பிஹி மின்னீ. அன்த்தல் முகத்திமு வ அன்த்தல் முஅக்கிரு லா இலாஹ இல்லா அன்த்த" (அல்லாஹ்வே! நான் முந்திச் செய்த பிந்திச் செய்கிற, இரகசிமாகச் செய்த, பகிரங்கமாகச் செய்த, வரம்பு மீறிச் செய்த, என்னைவிட நீ அறிந்துள்ள (இன்னபிற) பாவங்கள் அனைத்தையும் மன்னித்தருள்வாயாக! நீயே முன்னேறச் செய்பவன். பின்னடைவைத் தருபவன். உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை) என்று கூறுவார்கள்.

1420மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையைத் துவக்கும்போது "தக்பீர் (தஹ்ரீம்)' கூறுவார்கள். பிறகு "வஜ்ஜஹ்த்து வஜ்ஹிய' ஓதுவார்கள். அதில் ("வ அன மினல் முஸ்லிமீன்' என்பதற்கு பதிலாக) வ அன அவ்வலுல் முஸ்லிமீன் (நான் முஸ்லிம்களில் முதல்வன் ஆவேன்) என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுவார்கள். ருகூவிலிருந்து தலையை உயர்த்தும்போது "சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ்' (தன்னைப் புகழ்வோரின் புகழுரையை அல்லாஹ் ஏற்கிறான்.) "ரப்பனா வ லக்கல் ஹம்து" (எங்கள் இறைவா! உனக்கே புகழ் அனைத்தும் உரியது)" என்று கூறுவார்கள். சஜ்தாவில் "சஜத வஜ்ஹீ லில்லதீ... ஸவ்வரஹு ஃப அஹ்சன ஸுவரஹு' (முகத்தை அழகிய முறையில் வடிவமைத்த...) என்று கூறுவார்கள். சலாம் கொடுக்கும்போது "அல்லாஹும்மஃக்ஃபிர்லீ மா கத்தம்த்து..." என்று (மேற்கண்ட) ஹதீஸில் உள்ளவை போன்று இறுதிவரை ஓதுவார்கள். "அத்தஹிய்யாத்துக்கும் சலாமுக்குமிடையே" எனும் குறிப்பு இடம்பெற வில்லை.

**பாடம் : 27 இரவுத் தொழுகையில் நீண்ட நேரம் (நின்று) குர்ஆன் ஓதுவது விரும்பத் தக்கதாகும்.**

1421ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுடன் ஓர் இரவில் (தஹஜ்ஜுத்) தொழுதேன். அதில் அவர்கள் "அல்பகரா" எனும் (இரண்டாவது) அத்தியாயத்தை ஓத ஆரம்பித்தார்கள். நான் "அவர்கள் நூறு வசனம் முடிந்ததும் ருகூஉச் செய்துவிடுவார்கள்" என்று எண்ணினேன். ஆனால், அவர்கள் (நூறு வசனம் முடிந்த பின்னும்) தொடர்ந்து ஓதினார்கள். நான் "அ(ந்த அத்தியாயத்)தை (இரண்டாகப் பிரித்து ஓதி இரண்டாவது) ரக்அத்தில் முடித்துவிடுவார்கள்' என்று எண்ணினேன். ஆனால் (அதை முதல் ரக்அத்திலேயே) தொடர்ந்து ஓதினார்கள். நான் "அவர்கள் அந்த அத்தியாயம் முடிந்ததும் ருகூஉச் செய்துவிடுவார்கள்" என்று எண்ணினேன். அவர்கள் (அந்த அத்தியாயம் முடிந்ததும்) "அந்நிசா' எனும் (4ஆவது) அத்தியாயத்தை ஆரம்பித்து ஓதினார்கள்; பிறகு ஆலு இம்ரான் எனும் (3ஆவது) அத்தியாயத்தை ஆரம்பித்து நிறுத்தி நிதானமாக ஓதினார்கள். அவற்றில் இறைவனைத் துதிப்பது பற்றிக் கூறும் வசனத்தை ஓதிச்செல்லும்போது (ஓதுவதை நிறுத்திவிட்டு), (சுப்ஹானல்லாஹ் - அல்லாஹ் தூயவன் என) இறைவனைத் துதித்தார்கள்; (இறையருளை) வேண்டுவது பற்றிக்கூறும் வசனத்தைக் கடந்து செல்லும்போது (ஓதுவதை நிறுத்திவிட்டு), (இறையருளை) வேண்டினார்கள். (இறை தண்டனையிலிருந்து) பாதுகாப்புக் கோருவது பற்றிக் கூறும் வசனத்தை ஓதிச் செல்லும்போது (ஓதுவதை நிறுத்திவிட்டு, இறைவனிடம்) பாதுகாப்புக் கோரினார்கள்.
பிறகு ருகூஉச் செய்தார்கள். அவர்கள் ருகூவில் "சுப்ஹான ரப்பியல் அழீம்' (மகத்துவ மிக்க என் இறைவன் தூயவன்) என்று கூறலானார்கள். அவர்கள் நிலையில் நின்ற அளவுக்கு ருகூஉச் செய்தார்கள். பின்னர் (ருகூவிலிருந்து நிமிரும்போது) "சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ்' (அல்லாஹ் தன்னைப் புகழ்வோரின் புகழுரையை ஏற்கிறான்) என்று கூறிவிட்டுக் கிட்டத்தட்ட ருகூஉச் செய்த அளவுக்கு நீண்ட நேரம் நிலையில் நின்றிருந்தார்கள். பிறகு சஜ்தாச் செய்தார்கள். அதில் "சுப்ஹான ரப்பியல் அஃலா' (மிக்க மேலான என் இறைவன் தூயவன்) என்று கூறினார்கள். அவர்கள் நிலையில் நின்றிருந்த அளவுக்கு சஜ்தாச் செய்தார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னு ஜுரைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ், ரப்பனா லக்கல் ஹம்து' (அல்லாஹ் தன்னைப் புகழ்வோரின் புகழுரையை ஏற்கிறான்; எங்கள் இறைவா, உனக்கே புகழ் அனைத்தும் உரியது) என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

1422அபூவாயில் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "நான் (ஓர் இரவில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (தஹஜ்ஜுத்) தொழுதேன். அவர்கள் நீண்ட நேரம் நிலையில் நின்றிருந்தார்கள். நான் ஒரு தவறான முடிவுக்குக்கூடச் சென்றுவிட்டேன்?" என்று கூறினார்கள். அப்போது "அந்தத் தவறான முடிவு என்ன?" என்று கேட்கப்பட்டது. அதற்கு,

"அவர்களுடன் தொழுவதை விட்டுவிட்டு உட்கார்ந்துவிடலாம் என்று எண்ணினேன்" என அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 28 (இரவுத் தொழுகைக்கு எழாமல்) விடிய விடிய உறங்குபவர் குறித்து அறிவிக்கப் பட்டுள்ளவை.**

1423அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(இரவுத் தொழுகைக்கு எழாமல்) விடியும்வரை உறங்கிய ஒருவரைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சொல்லப்பட்டது. அதற்கு "அவருடைய காதுகளில்" அல்லது "அவரது காதில்" ஷைத்தான் சிறுநீர் கழித்துவிட்டான் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1424அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என்னிடமும் ஃபாத்திமா (ரலி) அவர்களிடமும் இரவு நேரத்தில் வந்து, "நீங்கள் இருவரும் (தஹஜ்ஜுத்) தொழவில்லையா?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! எங்களது உயிர் அல்லாஹ்வின் கையில் உள்ளது. அவன் எங்களை (தூக்கத்திலிருந்து) எழுப்ப நினைத்தால் எங்களை அவன் எழுப்பிவிடுவான்" என்று கூறினேன். நான் இவ்வாறு கூறியதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எனக்கு எந்த மறுமொழியும் கூறாமல்) திரும்பிச் சென்றார்கள். அவர்கள் திரும்பிச் சென்றபோது தமது தொடையில் அடித்துக்கொண்டே (நான் உடனடியாக பதில் சொன்னதை எண்ணி) "மனிதன் அதிகமாகத் தர்க்கம் செய்பவனாக இருக்கிறான்" (எனும் 18:54ஆவது வசனத்தைக்) கூறியபடியே சென்றார்கள்.

1425நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் உறங்கிக்கொண்டிருக்கும் போது அவரது தலையின் பின் பக்கத்தில் ஷைத்தான் மூன்று முடிச்சுகளைப் போட்டு விடுகிறான். ஒவ்வொரு முடிச்சிலும், "இன்னும் உனக்கு நீண்ட இரவு இருக்கிறது (நன்றாக உறங்கு)" என்று கூறி ஊதுகிறான். அவர் (அவனது போதனையைக் கேட்காமல் அதிகாலையில்) கண்விழித்து அல்லாஹ்வை நினைவுகூர்ந்தால் ஒரு முடிச்சு அவிழ்ந்துவிடுகிறது. அவர் அங்கத்தூய்மை (உளூ) செய்தால் இரண்டாவது முடிச்சு அவிழ்ந்துவிடுகிறது. அவர் (தஹஜ்ஜுத் அல்லது ஃபஜ்ர்) தொழுதுவிட்டால் முடிச்சுகள் முழுவதுமாக அவிழ்ந்துவிடுகின்றன. அவர் சுறுசுறுப்புடனும் நல்ல மனநிலையுடனும் காலைப் பொழுதை அடைவார். இல்லையென்றால் மந்தமான மனநிலையுடனும் சோம்பலுடனும் காலைப் பொழுதை அடைவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 29 கூடுதலான (நஃபில்) தொழுகைகளைப் பள்ளிவாசலில் தொழலாம்; ஆனால், வீட்டில் தொழுவதே உசிதமானது.**

1426நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுடைய இல்லங்களிலும் உங்கள் தொழுகைகளில் சிலவற்றைத் தொழுங்கள். இல்லங்களை (தொழுகை நடைபெறாத) சவக்குழிகளாக ஆக்கிவிடாதீர்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1427நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுடைய இல்லங்களிலும் (கூடுதலான தொழுகைகளை) தொழுங்கள். இல்லங்களை சவக்குழிகளாக ஆக்கிவிடாதீர்கள்-.இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1428அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் பள்ளிவாசலில் (ஃபர்ள்) தொழுது முடித்ததும் தமது தொழுகையில் சிலவற்றை (கூடுதல் தொழுகையை) தமது வீட்டிலும் தொழட்டும். ஏனெனில், அவ்வாறு அவர் தொழுவதால் அவரது வீட்டில் அல்லாஹ் நன்மையை உருவாக்குகிறான்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1429நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் நினைவுகூரப்பட்டுப் போற்றப்படும் இல்லத்தின் நிலை உயிருள்ளவர்களின் நிலைக்கும், அல்லாஹ் நினைவுகூரப்பட்டுப் போற்றப்படாத இல்லத்தின் நிலை உயிரற்றவனின் நிலைக்கும் ஒத்திருக்கிறது.
இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1430அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்கள் இல்லங்களை (தொழுகை, ஓதல் நடைபெறாத) சவக்குழிகளாக ஆக்கிவிடாதீர்கள். "அல்பகரா' எனும் (இரண்டாவது) அத்தியாயம் ஓதப்படும் இல்லத்திலிருந்து ஷைத்தான் வெருண்டோடிவிடுகிறான்-.இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1431ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ரமளான் மாதத்தில்) பாயினால் ஒரு சிறிய அறையை அமைத்துக்கொண்டு அதில் தொழுவதற்காகப் புறப்பட்டார்கள். அந்த இடத்தைத் தேடி (நபித் தோழர்களில்) சிலரும் வந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பின்பற்றித் தொழலாயினர். பிறகு அடுத்த நாள் இரவும் வந்து கூடினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தோழர்களிடம் வராமல் தாமதப்படுத்தினார்கள். எனவே, தோழர்கள் தங்களது குரலை உயர்த்தினர். (நபியவர்களுக்கு நினைவூட்ட அவர்களது வீட்டுக்) கதவின் மீது சிறு கற்களை எறிந்தனர்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கோபத்துடன் அவர்களை நோக்கி வெளியே வந்து, "(இத்தொழுகையில் கலந்துகொள்ளும்) உங்களுடைய இச்செயல் தொடர்ந்துகொண்டே போகிறது. (இத்தொழுகை) உங்கள்மீது கடமையாக்கப்பட்டுவிடுமோ என்று நான் எண்ணி (அஞ்சி)னேன். (ஆகவே தான் இன்று நான் உங்களிடம் வரவில்லை.) எனவே, உங்கள் இல்லங்களிலேயே (கூடுதலான – நஃபில்) தொழுகையைத் தொழுதுவாருங்கள். கடமையாக்கப்பட்ட தொழுகை தவிர மற்ற தொழுகைகளை ஒருவர் தமது வீட்டிலேயே நிறைவேற்றுவதுதான் சிறந்ததாகும்" என்று சொன்னார்கள்.

1432ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ரமளான் மாதத்தில்) பாயினால் ஓர் அறையைப் பள்ளிவாசலில் அமைத்துக் கொண்டு, சில இரவுகள் (அதைத் தடுப்பாக வைத்துக்கொண்டு) அதனுள் தொழுதார்கள். அவ்வாறு தொழும்போது மக்களில் சிலர் அவர்களிடம் திரண்டு வந்தனர்...
மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. இந்த அறிவிப்பில் ("கடமையாக்கப்பட்டுவிடுமோ என்று நான் எண்ணினேன்' என்பதற்குப் பின்) "இத்தொழுகை உங்கள்மீது கடமையாக்கப்பட்டுவிட்டால் உங்களால் அதை நிறைவேற்ற முடியாது" என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக) அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 30 இரவுத் தொழுகை உள்ளிட்ட நற்செயல்களை நிரந்தரமாகத் தொடர்ந்து செய்வதன் சிறப்பு.**

1433ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பாய் ஒன்று இருந்தது. அதை அவர்கள் இரவில் ஓர் அறை போன்று அமைத்துக்கொண்டு அதனுள் தொழுவார்கள். (அதில் அவர்கள் தொழும்போது) அவர்களைப் பின்பற்றி மக்களும் தொழலாயினர். பகலில் அந்தப் பாயை விரிப்பாக பயன்படுத்துவார்கள். ஓர் இரவில் மக்கள் கூடிவிட்டனர். அப்போது அவர்கள் "மக்களே! உங்களால் (நிரந்தரமாகச் செய்ய) முடிந்த நற்செயல்களையே கடைப்பிடித்து வாருங்கள். ஏனெனில், நீங்கள் சடையாதவரை அல்லாஹ்வும் சடைவதில்லை. நற்செயல்களில் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானது (எண்ணிக்கையில்) குறைவாக இருந்தாலும் (தொடர்ந்து செய்யப்படும்) நிலையான நற்செயலே ஆகும்" என்று கூறினார்கள்.
முஹம்மத் (ஸல்) அவர்களின் குடும்பத்தார் ஒரு நற்செயலைச் செய்தால் அதை நிலையாக(த் தொடர்ந்து) செய்வார்கள்.

1434ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"நற்செயல்களில் அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமானது எது?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கு அவர்கள் "(எண்ணிக்கையில்) குறைவாக இருந்தாலும் (தொடர்ந்து செய்யப்படும்) நிலையான நற்செயலே"என்று விடையளித்தார்கள்.

1435அல்கமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் "இறை நம்பிக்கையாளர்களின் அன்னையே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வழிபாடு எவ்வாறிருந்தது? (வழிபாட்டுக்காக என்று) குறிப்பிட்ட நாட்கள் எதையும் அவர்கள் ஒதுக்கியிருந்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "இல்லை. அவர்களின் (எந்த) வணக்க(வழிபாடு)ம் நிரந்தரமானதாகவே இருந்தது" என்று கூறிவிட்டு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களால் செய்ய முடிந்ததைப் போன்று உங்களில் எவரால் செய்ய முடியும்?" என்று கேட்டார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1436அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நற்செயல்களில் அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமானது (தொடர்ந்து செய்யப்படும்) நிலையான நற்செயலே ஆகும். அது (எண்ணிக்கையில்) குறைவாக இருந்தாலும் சரியே.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
அறிவிப்பாளர் காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: ஆயிஷா (ரலி) அவர்கள் ஒரு நற்செயலைச் செய்தால் அதை விடாமல் (தொடர்ந்து) செய்துவருவார்கள்.

பாடம் : 31 தொழும்போது தூக்கம் மேலிட்டால், அல்லது குர்ஆன் ஓதுவதோ இறைவனைத் துதிப்பதோ தடைபட்டால் தூக்கக் கலக்கம் விலகும்வரை அவர் உட்கார்ந்துவிட வேண்டும்; அல்லது உறங்கிவிட வேண்டும்.

1437அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்குள் வந்தபோது இரு தூண்களுக்கிடையில் நீண்ட கயிறு ஒன்று காணப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள் "ஸைனப் (ரலி) அவர்களுக்கு உரியதாகும்; அவர் தொழும்போது சோர்வடைந்தால் இந்தக் கயிற்றைப் பிடித்துக்கொள்வார்" என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இதை அவிழ்த்துவிடுங்கள். உங்களில் ஒருவர் உற்சாகமாக இருக்கும்போது தொழட்டும்; சோர்வடைந்தால் உட்கார்ந்துகொள்ளட்டும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1438நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹவ்லா பின்த் துவைத் பின் ஹபீப் பின் அசத் பின் அப்தில் உஸ்ஸா எனும் பெண்மணி என்னைக் கடந்து சென்றார். அப்போது என் அருகில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருந்தார்கள். நான் "இவர் ஹவ்லா பின்த் துவைத் ஆவார்; இவர் இரவெல்லாம் உறங்க மாட்டார் (விடிய விடிய தொழுது கொண்டிருப்பார்) என மக்கள் கூறுகின்றனர்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இரவில் உறங்குவதில்லையா? உங்களால் இயன்ற நற்செயலையே செய்துவாருங்கள்.

அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் சலிப்படையாதவரை அல்லாஹ்வும் சலிப்படைவதில்லை" என்று கூறினார்கள்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1439ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் ஒரு பெண்மணி இருந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வீட்டுக்கு) வந்து, "இவர் யார்?" என்று கேட்டார்கள். நான் "இவர் (இன்னார்;) இவர் (இரவெல்லாம்) உறங்காமல் தொழுதுகொண்டே இருப்பார்" என்று கூறினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நற்செயல்களில் உங்களால் இயன்றதையே செய்துவாருங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் சடைவடையாதவரை அல்லாஹ்வும் சடைவடையமாட்டான்" என்று கூறினார்கள்.
ஒருவர் நிலையாகத் தொடர்ந்து செய்து வரும் நற்செயலே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு விருப்பமானதாக இருந்தது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், அபூஉசாமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அந்தப் பெண்மணி பனூஅசத் குலத்தைச் சேர்ந்தவர் ஆவார்" என்று இடம்பெற்றுள்ளது.

1440நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் எவரேனும் தொழும்போது கண்ணயர்ந்துவிட்டால், அவர் தம்மைவிட்டுத் தூக்கம் அகலும்வரைத் தூங்கிவிடட்டும்! ஏனெனில், உங்களில் ஒருவர் உறங்கியவாறே தொழுவாரானால் அவர் (உணர்வில்லாமல்) பாவமன்னிப்புக் கோரப்போக, அவர் தம்மைத்தாமே ஏசி (சபித்து)விடக்கூடும்.- இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1441ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் இந்த ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் இரவில் தொழும்போது (உறக்கம் மேலிட்டு) நாவில் குர்ஆன் வராமல் தடைபட்டு, தாம் என்ன சொல்கிறோம் என்பதை அவர் அறியாத நிலைக்குச் சென்று விடுவாரானால் அவர் படுத்து உறங்கட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 32 குர்ஆனின் சிறப்புகளும் குர்ஆன் தொடர்பான குறிப்புகளும்.

பாடம் : 33 குர்ஆன் உடனான தொடர்பைப் புதுப்பித்துக்கொள்ளுமாறு வந்துள்ள கட்டளையும், "நான் இன்ன (குர்ஆன்) வசனத்தை மறந்துவிட்டேன்' என்று கூறலாகாது; (வேண்டுமானால்) "நான் இன்ன (குர்ஆன்) வசனத்தை மறக்க வைக்கப்பட்டேன்' என்று கூறலாம் என்பது பற்றியும்.

1442ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் இரவு நேரத்தில் (குர்ஆன் அத்தியாயங்கள் சிலவற்றை) ஓதிக்கொண்டிருப்பதை நபி (ஸல்) அவர்கள் செவியுற்றார்கள். அப்போது அவர்கள், "அல்லாஹ், அவருக்குக் கருணை புரியட்டும்! இன்ன இன்ன அத்தியாயங்களிலிருந்து எனக்கு மறந்துவிட்டிருந்த இன்ன இன்ன வசனங்களை அவர் எனக்கு நினைவூட்டிவிட்டார்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1443ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
பள்ளிவாசலில் ஒரு மனிதர் (குர்ஆன்) ஓதிக்கொண்டிருப்பதைச் செவியுற்ற நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ், அவருக்குக் கருணைபுரிவானாக! (இன்ன அத்தியாயத்திலிருந்து) எனக்கு மறக்கவைக்கப்பட்டிருந்த இன்ன வசனத்தை அவர் எனக்கு நினைவூட்டிவிட்டார்" என்று சொன்னார்கள். – இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1444அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குர்ஆனை ஓதிவருகின்றவரின் நிலையெல்லாம், கயிற்றால் கட்டிவைக்கப்பட்டுள்ள ஒட்டகத்தின் (உரிமையாளரின்) நிலையை ஒத்திருக்கிறது. அதனை அவர் கண்காணித்து வந்தால் தன்னிடமே அதை அவர் தக்கவைத்துக்கொள்ளலாம். அதை அவிழ்த்துவிட்டு விட்டாலோ அது ஓடிப்போய்விடும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1445மேற்கண்ட ஹதீஸ் மேலும் எட்டு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், மூசா பின் உக்பா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "குர்ஆனை மனனம் செய்திருப்பவர் இரவிலும் பகலிலும் அதை ஓதிவருவதில் ஈடுபட்டால் அதை நினைவில் வைத்திருப்பார்; அவ்வாறு ஈடுபடாவிட்டால் மறந்துவிடுவார்" என்று அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

1446அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"இன்ன இன்ன (குர்ஆன்) வசனங்களை நான் மறந்துவிட்டேன்" என்று ஒருவர் கூறுவது தான் அவரின் வார்த்தைகளிலேயே மிகவும் மோசமான வார்த்தையாகும். வேண்டுமானால், "மறக்கவைக்கப்பட்டுவிட்டது' என்று அவர் கூறட்டும்! குர்ஆனைத் தொடர்ந்து (ஓதி) நினைவுபடுத்திவாருங்கள். ஏனெனில், (கயிற்றில் கட்டிவைக்கப்பட்டிருக்கும் ஒட்டகம் முதலான) கால்நடைகள் அதன் கயிற்றிலிருந்து தப்பி ஓடுவதைவிட மிக வேகமாகக் குர்ஆன் மனிதர்களின் நெஞ்சங்களிலிருந்து தப்பிவிடக் கூடியதாகும்.

இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1447அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இந்தக் குர்ஆனை (ஓதி அதை)க் கவனித்துவாருங்கள். ஏனெனில், (ஒட்டகம் முதலான) கால்நடைகள் அதன் கயிற்றிலிருந்து தப்பிவிடுவதைவிட மிகவும் வேகமாகக் குர்ஆன் மனிதர்களின் நெஞ்சங்களிலிருந்து தப்பிவிடக்கூடியதாகும். மேலும்,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவர் இன்ன இன்ன குர்ஆன் வசனங்களை நான் மறந்துவிட்டேன் என்று கூற வேண்டாம். வேண்டுமானால், "மறக்கவைக்கப்பட்டுவிட்டது' என்று அவர் கூறட்டும்" எனக் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1448அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"இன்ன இன்ன (குர்ஆன்) அத்தியாயங்களை நான் மறந்துவிட்டேன்' அல்லது "இன்ன இன்ன (குர்ஆன்) வசனங்களை நான் மறந்துவிட்டேன்' என்று ஒருவர் கூறுவதுதான் அவரின் வார்த்தைகளிலேயே மிகவும் மோசமான வார்த்தையாகும். வேண்டுமானால், "மறக்க வைக்கப்பட்டுவிட்டது' என்று அவர் கூறட்டும்!
இதை இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1449நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்தக் குர்ஆனை (ஓதி அதை)க் கவனித்து வாருங்கள். ஏனெனில், முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! கயிற்றில் கட்டிவைக்கப்பட்டுள்ள ஒட்டகத்தை விட மிக வேகமாகக் குர்ஆன் தப்பிவிடக் கூடியதாகும்.
இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 34 குர்ஆனை இனிய குரலில் ஓதுவது விரும்பத்தக்கதாகும்.

1450அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ், தன் தூதர் (முழு ஈடுபாட்டுடன்) இனிய குரலில் குர்ஆன் ஓதும் போது செவிகொடுத்துக் கேட்டதைப் போன்று வேறெதையும் அவன் செவிகொடுத்துக் கேட்டதில்லை" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் இன்னும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் "ஒரு நபி (முழு ஈடுபாட்டுடன்) இனிய குரலில் குர்ஆன் ஓதும்போது அல்லாஹ் செவிகொடுத்துக் கேட்பதைப் போன்று..." என்று (சிறிய வித்தியாசத்துடன்) அறிவித்துள்ளார்கள்.

1451அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ், தன் தூதர் ஒருவர் குரலெடுத்து (முழு ஈடுபாட்டுடன்) இனிமையாகக் குர்ஆனை ஓதும்போது செவிகொடுத்துக் கேட்டதைப் போன்று வேறெதையும் அவன் செவிகொடுத்துக் கேட்டதில்லை" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்' என்றே இடம் பெற்றுள்ளது. "அவர்கள் கூறியதைக் கேட்டேன்' என்று இடம்பெறவில்லை.

1452அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், தன் தூதர் ஒருவர் குரலெடுத்து இனிமையாகக் குர்ஆன் ஓதும்போது செவி கொடுத்துக் கேட்டதைப் போன்று வேறெதையும் அவன் செவிகொடுத்துக் கேட்டதில்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "செவிகொடுத்துக் கேட்பது' என்பதைக் குறிக்க ("க அதனிஹி' என்பதற்கு பதிலாக) "க இத்னிஹீ' எனும் சொல் ஆளப்பட்டுள்ளது.

1453புரைதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அபூமூசா (ரலி) அவர்களைப் பாராட்டி) "அப்துல்லாஹ் பின் கைஸ்' அல்லது "அஷ்அரீ'தாவூத் (அலை) அவர்களின் சங்கீதம் (போன்ற இனிய குரல்) ஒன்று வழங்கப்பட்டுள்ளார்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1454அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், (நான் இனிய குரலில் குர்ஆன் ஓதுவதைப் பாராட்டி), "நீங்கள் நேற்றிரவில் குர்ஆன் ஓதிக்கொண்டிருந்ததைச் செவியுற்றேன். அப்போது நீங்கள் என்னைப் பார்த்திருந்தால் (உங்களுக்கு மகிழ்ச்சியாய் இருந்திருக்கும்). (இறைத்தூதர்) தாவூத் (அலை) அவர்களுக்கு வழங்கப்பட்டிருந்த சங்கீதம் (போன்ற இனிய குரல்) ஒன்று உங்களுக்கு வழங்கப்பட்டுள்ளது" என்று கூறினார்கள்.

## பாடம்: 35 மக்கா வெற்றி தினத்தில் நபி (ஸல்) அவர்கள் "அல்ஃபத்ஹ்' (எனும் 48ஆவது) அத்தியாயத்தை ஓதியது பற்றிய குறிப்பு.

1455முஆவியா பின் குர்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"நபி (ஸல்) அவர்கள் மக்கா வெற்றிப் பயணத்தில் தமது ஒட்டகத்தின் மீதமர்ந்தபடி "அல்ஃபத்ஹ்' எனும் (48ஆவது) அத்தியாயத்தை "தர்ஜீஉ' செய்து (ஓசை நயத்துடன்) ஓதினார்கள்" என அப்துல்லாஹ் பின் முஃகஃப்பல் அல் முஸனீ (ரலி) அவர்கள் கூற நான் கேட்டேன்.மக்கள் என்னைச் சுற்றிலும் திரண்டு விடுவார்கள் எனும் அச்சம் எனக்கில்லையாயின் அப்துல்லாஹ் பின் முஃகஃப்பல் (ரலி) அவர்கள் ("தர்ஜீஉ' செய்து) ஓதிக் காட்டியதைப் போன்று உங்களிடம் நான் ஓதிக் காட்டியிருப்பேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1456முஆவியா பின் குர்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி தினத்தில் தமது ஒட்டகத்தின் மீதமர்ந்தபடி "அல்ஃபத்ஹ்' (எனும் 48ஆவது) அத்தியாயத்தை "தர்ஜீஉ' செய்து (ஓசை நயத்துடன்) ஓதிக் கொண்டிருந்ததை நான் கண்டேன்" என்று அப்துல்லாஹ் பின் முஃகஃப்பல் (ரலி) அவர்கள் கூறிவிட்டு, "தர்ஜீஉ' செய்து (ஓசை நயத்துடன்) ஓதிக் காட்டினார்கள்.
மக்கள் (என்னைச் சுற்றிலும் திரண்டுவிடுவர் என்பது) குறித்து நான் அஞ்சவில்லையாயின் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அப்துல்லாஹ் பின் முஃகஃப்பல் (ரலி) அவர்கள் குறிப்பிட்டுக் காட்டியதைப் போன்றே உங்களுக்கும் நான் எடுத்(துரைத்)திருப்பேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது

1457மேற்கண்ட ஹதீஸ் இன்னும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் காலித் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "வாகனத்தின் மீது பயணம் செய்தபடி அல்ஃபத்ஹ் அத்தியாயத்தை ஒதிக்கொண்டிருந்தார்கள்' என்று இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 36 குர்ஆன் ஓதுவதால் அமைதி இறங்குகிறது.

1458பராஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் "அல்கஹ்ஃப்' எனும் (18ஆவது) அத்தியாயத்தை (தமது இல்லத்தில் அமர்ந்து) ஓதிக்கொண்டிருந்தார். அவருக்கு அருகில் நீண்ட இரு கயிறுகளால் குதிரையொன்று கட்டப்பட்டிருந்தது. அதை ஒரு மேகம் சூழ்ந்துகொண்டு வட்டமிட்டபடி நெருங்கத் தொடங்கியது. அதனால் குதிரை மிரள ஆரம்பித்தது. விடிந்தவுடன் அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து நடந்ததைத் தெரிவித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "குர்ஆன் ஓதியக் காரணத்தால் இறங்கிய அமைதிதான் அது" என்று கூறினார்கள்.

1459பராஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் தமது வீட்டில் வாகனப் பிராணி ஒன்று இருக்க, "அல்கஹ்ஃப்' எனும் (18ஆவது) அத்தியாயத்தை ஓதினார். உடனே அந்தப் பிராணி மிரள ஆரம்பித்தது. அந்த மனிதர் (திரும்பிப்) பார்த்தார். அப்போது மேகத்திரள் ஒன்று வந்து அவரை மூடிக்கொண்டது. இதை அந்த மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் சொன்னபோது நபி (ஸல்) அவர்கள், "இன்னாரே, நீர் தொடர்ந்து ஓதிக்கொண்டேயிரு(ந்திருக்க வேண்டு)ம். அந்த மேகம் குர்ஆனின் வசனங்களை ஓதியதற்காக (இறைவனிடமிருந்து உம்மீது) இறங்கிய அமைதி(ச் சின்னம்) ஆகும்" என்று சொன்னார்கள்-.இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ("மிரள ஆரம்பித்தது' என்பதற்கு பதிலாக) "குதிக்கலாயிற்று' என இடம்பெற்றுள்ளது.

1460உசைத் பின் ஹுளைர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஓர் இரவில் எனது பேரீச்சங்(கனிகளை உலரவைக்கும்) களத்தில் குர்ஆன் ஓதிக் கொண்டிருந்தேன். அப்போது எனது குதிரை கடுமையாக மிரண்டது. நான் தொடர்ந்து

ஓதிக்கொண்டே இருந்தேன். மீண்டும் குதிரை மிரண்டது. தொடர்ந்து நான் ஓதிக் கொண்டேயிருந்தேன். மீண்டும் அது மிரண்டது. (அங்கு படுத்திருந்த என் மகன்) யஹ்யாவை அந்தக் குதிரை மிதித்துவிடுமோ என்று நான் அஞ்சிய போது அதை நோக்கி எழுந்து சென்றேன். அங்கு மேகம் போன்றதொரு பொருளை என் தலைக்கு மேலே கண்டேன். அதில் விளக்குகள் போன்ற (பிரகாசிக்கும்) பொருள்கள் இருந்தன. நான் பார்த்தவுடன் அது வானில் உயர்ந்து (என் கண்ணைவிட்டு மறைந்து)விட்டது; பிறகு நான் அதைக் காணமுடியவில்லை.

காலையில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று "அல்லாஹ்வின் தூதரே! நான் நேற்றிரவு பாதி இரவில் எனது பேரீச்சங்களத்தில் குர்ஆன் ஓதிக்கொண்டிருக்கையில் என் குதிரை கடுமையாக மிரண்டது" என்று (நடந்ததைச்) சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இப்னு ஹுளைரே, தொடர்ந்து ஓதியிருக்கலாமே?" என்று கேட்டார்கள். "நான் தொடர்ந்து ஓதினேன். மீண்டும் எனது குதிரை மிரண்டது" என்று நான் சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இப்னு ஹுளைரே, தொடர்ந்து ஓதியிருக்கலாமே?" என்று கேட்டார்கள். "நான் தொடர்ந்து ஓதினேன். மீண்டும் எனது குதிரை மிரண்டது" என்று சொன்னேன். "இப்னு ஹுளைரே, தொடர்ந்து ஓதியிருக்கலாமே!" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மீண்டும்) கூறியபோது, "(என் மகன்) யஹ்யாவைக் குதிரை மிதித்துவிடுமோ என்று அஞ்சினேன். அவன் அதன் அருகில் இருந்தான். எனவே, நான் திரும்பிச் சென்றேன். நான் (எனது தலையை உயர்த்தி வானைப் பார்த்தபோது) அங்கு மேகம் போன்றதொரு பொருளைக் கண்டேன். அதில் விளக்குகள் போன்ற (பிரகாசிக்கும்) பொருள்கள் இருந்தன. நான் பார்த்தவுடன் அது வானில் உயர்ந்து (என் கண்ணைவிட்டு மறைந்து)விட்டது; பிறகு நான் அதைக் காணவில்லை" என்று கூறினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன் குரலைக் கேட்டு நெருங்கி வந்த வானவர்கள்தாம் அவர்கள். நீர் தொடர்ந்து ஓதியிருந்தால் காலையில் மக்களும் அதைப் பார்த்திருப்பார்கள். மக்களைவிட்டும் அது மறைந்திருக்காது" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது

## பாடம் : 37 குர்ஆனை மனனமிட்டவரின் சிறப்பு.

1461அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

குர்ஆனை(ப் பார்த்தும், மனனமிட்டும்) ஓதுகின்ற இறைநம்பிக்கையாளரின் நிலையானது நாரத்தைப் பழத்தின் நிலையைப் போன்றதாகும். அதன் வாசனையும் நன்று; சுவையும் நன்று. (மற்ற நற்செயல்கள் புரிந்து கொண்டு) குர்ஆன் ஓதாமலிருக்கும் இறை நம்பிக்கையாளரின் நிலையானது, பேரீச்சம் பழத்தின் நிலையைப் போன்றதாகும். அதற்கு வாசனை கிடையாது. (ஆனால்) அதன் சுவை நன்று. நயவஞ்சகனாகவும் இருந்துகொண்டு குர்ஆனையும் ஓதிவருகின்றவரின் நிலையானது, துளசிச் செடியின் நிலையை ஒத்திருக்கின்றது. அதன் வாசனை நன்று; சுவையோ கசப்பு. நயவஞ்சகனாகவும் இருந்துகொண்டு குர்ஆனையும் ஓதாமலிருப்பவரின் நிலையானது, குமட்டிக் காயின் நிலையை ஒத்திருக்கிறது. அதற்கு வாசனையும் கிடையாது; சுவையோ கசப்பு.

இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஹம்மாம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நயவஞ்சகன்' என்பதற்கு பதிலாக "தீயவன்' எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 38 குர்ஆனை நன்கு மனனமிட்டுத் தங்குதடையின்றி ஓதுகின்றவரின் சிறப்பும் திக்கித் திணறி ஓதுகின்றவரின் சிறப்பும்.

1462அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குர்ஆனை நன்கு மனனமிட்டுத் தங்குதடையின்றி ஓதுகின்றவர் கடமை தவறாத கண்ணியமிக்கத் தூதர்(களான வானவர்)களுடன் இருப்பார். குர்ஆனை (மனனம் செய்திராவிட்டாலும் அதைச்) சிரமத்துடன் திக்கித் திணறி ஓதிவருகின்றவருக்கு இரு மடங்கு நன்மைகள் உண்டு.இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "குர்ஆனை மிகுந்த சிரமத்துடன் ஓதிவருகின்றவருக்கு இரு மடங்கு நன்மைகள் உண்டு' என இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 39 குர்ஆனை நன்கு அறிந்தவர்கள் மற்றும் மேன்மக்கள் முன்னிலையில் குர்ஆன் ஓதுவது விரும்பத்தக்கதாகும்; யாரிடம் ஓதப்படுகிறதோ அவரைவிட ஓதுகின்றவர் சிறப்பில் மேலானவராயிருப்பினும் சரியே!

1463அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உபை பின் கஅப் (ரலி) அவர்களிடம், "உங்களுக்கு (குர்ஆன் அத்தியாயத்தை) ஓதிக்காட்டுமாறு அல்லாஹ் என்னைப் பணித்துள்ளான்" என்று சொன்னார்கள். உபை (ரலி) அவர்கள், "என் பெயரை அல்லாஹ் தங்களிடம் குறிப்பிட்டானா?" என (பெருமிதத்துடன்) கேட்டார்கள். "(ஆம்) அல்லாஹ், உங்கள் பெயரை என்னிடம் குறிப்பிட்டான்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். இதைக் கேட்டு உபை பின் கஅப் (ரலி) அவர்கள் (ஆனந்த மேலீட்டால்) அழலானார்கள்.

1464அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உபை பின் கஅப் (ரலி) அவர்களிடம் "உங்களுக்கு "லம் யகுனில்லதீன கஃபரூ...' (என்று தொடங்கும் 98ஆவது) அத்தியாயத்தை ஓதிக் காட்டுமாறு அல்லாஹ் என்னைப் பணித்துள்ளான்" என்று கூறினார்கள். "அல்லாஹ் என் பெயரைத் தங்களிடம் குறிப்பிட்டானா?" என்று உபை (ரலி) அவர்கள் கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம்' என்று பதிலளிக்க, (ஆனந்த மிகுதியால்) அப்போது உபை (ரலி) அவர்கள் அழுதார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 40 குர்ஆனை (பிறர் ஓதும்போது) செவி தாழ்த்திக் கேட்பதன் சிறப்பும், குர்ஆனை மனனம் செய்திருப்பவரிடம் ஓதிக் காட்டச் சொல்லி செவியேற்பதும், ஓதும்போது அழுவதும் ஆழ்ந்து சிந்திப்பதும்.**

1465அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "எனக்குக் குர்ஆனை ஓதிக் காட்டுங்கள்" என்று சொன்னார்கள். நான், "தங்கள்மீதே குர்ஆன் அருளப்பட்டுக்கொண்டிருக்க, தங்களுக்கே நான் ஓதிக் காட்டுவதா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் பிறரிடமிருந்து அதைக் கேட்க விரும்புகிறேன்" என்று சொன்னார்கள். ஆகவே, நான் அவர்களுக்கு "அந்நிசா' எனும் (நான்காவது) அத்தியாயத்தை ஓதிக் காட்டினேன். "ஒவ்வொரு சமுதாயத்திலிருந்தும் (அவர்களுடைய நபியாகிய) சாட்சியை நாம் (மறுமையில்) கொண்டு வரும்போதும், (நபியே!) உங்களை இவர்களுக்கெதிரான சாட்சியாகக் கொண்டு வரும்போதும் (இவர்களின் நிலை) எப்படியிருக்கும்?" எனும் (4:41ஆவது) வசனத்தை நான் அடைந்தபோது "தலையை உயர்த்தினேன்' அல்லது "எனக்குப் பக்கத்திலிருந்த ஒருவர் என்னைத் தொட்டுணர்த்தியபோது நான் தலையை உயர்த்தினேன்'. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கண்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்ததைக் கண்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஹன்னாத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி என்னிடம் "எனக்கு (குர்ஆனை) ஓதிக் காட்டுங்கள்' என்று கூறினார்கள்" என (அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாக) அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

1466அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "எனக்கு (குர்ஆனை) ஓதிக் காட்டுங்கள்!" என்று சொன்னார்கள். நான், "தங்கள்மீதே குர்ஆன் அருளப்பட்டுக்கொண்டிருக்க, தங்களுக்கே நான் ஓதிக் காட்டுவதா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் பிறரிடமிருந்து அதைக் கேட்க விரும்புகிறேன்" என்று சொன்னார்கள். ஆகவே, நான் அவர்களுக்கு "அந்நிசா' எனும் (நான்காவது) அத்தியாயத்தை ஆரம்பம் முதல் "ஒவ்வொரு சமுதாயத்திலிருந்தும் (அவர்களுடைய நபியாகிய) சாட்சியை நாம் (மறுமையில்) கொண்டுவரும்போதும், (நபியே!) உங்களை இவர்களுக்கெதிரான சாட்சியாகக் கொண்டுவரும்போதும் (இவர்களின் நிலை) எப்படியிருக்கும்?" (4:41) என்பதுவரை ஓதிக் காட்டினேன். அதைக் கேட்டு அவர்கள் அழுதார்கள் .இதை இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மிஸ்அர் (ரஹ்) அவர்கள் வழியாக மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறியதாக இடம்பெற்றுள்ளது:
நபி (ஸல்) அவர்கள் "நான் அவர்களிடையே (உயிருடன்) இருந்தவரையில் அவர்களை நான் கண்காணித்துக்கொண்டிருந்தேன்"என்று கூறினார்கள்.

1467அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (சிரியா நாட்டின் பிரபல நகரமான) ஹிம்ஸில் இருந்தேன். அப்போது மக்களில் ஒருவர், "எங்களுக்கு (குர்ஆனை) ஓதிக் காட்டுங்கள்!" என்று சொன்னார். நான் "யூசுஃப்' எனும் (12ஆவது) அத்தியாயத்தை ஓதிக்காட்டினேன். அப்போது ஒரு மனிதர் (அதை ஆட்சேபிக்கும் விதமாக) "அல்லாஹ்வின் மீதாணையாக! இவ்வாறு இந்த அத்தியாயம் அருளப்படவில்லை" என்று கூறினார். நான், "உமக்கு நாசம் உண்டாகட்டும்! அல்லாஹ்வின் மீதாணையாக! (இவ்வாறுதான்) நான் இந்த அத்தியாயத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்னிலையில் ஓதினேன். அவர்களும், "மிகச் சரியாக ஓதினாய்' என்று கூறினார்கள்"என்று பதிலளித்தேன். (ஆட்சேபிக்க வந்த) அந்த மனிதருடன் நான் பேசிக் கொண்டிருந்தபோது அவரது வாயிலிருந்து மதுவின் வாடை வருவதைக் கண்டேன். "மதுவையும் அருந்திக்கொண்டு அல்லாஹ்வின் வேதத்தை மறுக்கவும் முனைகிறாயா? (மது அருந்திய குற்றத்திற்காக) நீ சாட்டையடி பெறாமல் இந்த இடத்திலிருந்து நகர முடியாது" என்று கூறிவிட்டு, அவருக்குச் சாட்டையடி தண்டனையை நிறைவேற்றினேன்.
இதை அல்கமா பின் கைஸ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் இன்னும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் "மிகச் சரியாக ஓதினாய்' என்று கூறினார்கள்" எனும் தகவல் இடம்பெறவில்லை.

## பாடம் : 41 தொழுகையில் குர்ஆன் ஓதுவதன் சிறப்பும், குர்ஆனைக் கற்பதன் சிறப்பும்.

1468அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவர் தம் வீட்டாரிடம் செல்கையில் வீட்டில் மூன்று பெரிய கொழுத்த சினை ஒட்டகங்கள் காணப்படுவதை விரும்புகிறாரா?" என்று கேட்டார்கள். நாங்கள் "ஆம்' என்று பதிலளித்தோம். அப்போது அவர்கள், "உங்களில் ஒருவர் தமது தொழுகையில் மூன்று வசனங்களை ஓதுவது மூன்று பெரிய கொழுத்த சினை ஒட்டகங்களைவிடச் சிறந்ததாகும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1469உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலின்) திண்ணையில் இருந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்தார்கள். அப்போது "உங்களில் எவர் ஒவ்வொரு நாள் காலையிலும் "புத்ஹான்' அல்லது "அகீக்' (சந்தைக்குச்) சென்று பாவம் புரியாமலும் உறவைத் துண்டிக்காமலும் பருத்த திமில்கள் கொண்ட இரு ஒட்டகங்களுடன் திரும்பி வருவதை விரும்புவார்?" என்று கேட்டார்கள். "நாங்கள் (அனைவருமே) அதை விரும்புவோம்" என்று நாங்கள் பதிலளித்தோம். அதற்கு அவர்கள், "உங்களில் ஒருவர் காலையில் பள்ளிவாசலுக்குப் புறப்பட்டுச் சென்று அல்லாஹ்வின் வேதத்திலிருந்து இரு வசனங்களைக் "கற்றுக்கொள்வது' அல்லது "ஓதுவது' இரு ஒட்டகங்களைவிடச் சிறந்ததாகும். மூன்று வசனங்கள் மூன்று ஒட்டகங்களைவிடவும்,நான்கு வசனங்கள் நான்கு

ஒட்டகங்களைவிடவும் சிறந்ததாகும். இவ்வாறு எத்தனை வசனங்கள் ஓதுகின்றாரோ அந்த அளவு ஒட்டகங்களைவிடச் சிறந்ததாக அமையும்" என்று கூறினார்கள்.

## பாடம் : 42 குர்ஆன் ஓதுவதன் சிறப்பும் (குறிப்பாக) அல்பகரா அத்தியாயத்தின் சிறப்பும்.

1470அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குர்ஆனை ஓதிவாருங்கள். ஏனெனில், குர்ஆன் ஓதிவருபவர்களுக்கு அது மறுமையில் வந்து (இறைவனிடம்) பரிந்துரை செய்யும். இரு ஒளிச்சுடர்களான "அல்பகரா' மற்றும் "ஆலு இம்ரான்' ஆகிய இரு அத்தியாயங்களையும் ஓதிவாருங்கள். ஏனெனில், அவை மறுமை நாளில் நிழல்தரும் மேகங்களைப் போன்றோ அல்லது அணி அணியாகப் பறக்கும் பறவைக் கூட்டங்களைப் போன்றோ வந்து தம்மோடு தொடர்புள்ளவர்களுக்காக (இறைவனிடம்) வாதாடும். "அல்பகரா' அத்தியாயத்தை ஓதிவாருங்கள். அதைக் கையாள்வது வளம் சேர்க்கும். அதைக் கைவிடுவது இழப்பைத் தரும். இவ்வத்தியாயத்திற்கு முன் சூனியக்காரர்கள் செயலிழந்துபோவார்கள்.
இதை அபூஉமாமா அல்பாஹிலீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) முஆவியா பின் சல்லாம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள) "அல் பத்தலா' எனும் சொல்லுக்கு "சூனியக்காரர்கள்' என்று பொருள் என எனக்குத் தகவல் கிட்டியது.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் (அவை மேகங்களைப் போன்று அல்லது பறவைக் கூட்டங்களைப் போன்று என்பதற்கு பதிலாக) "அவை மேகங்களைப் போன்றும் பறவைக் கூட்டங்களைப் போன்றும் வந்து வாதாடும்' என்று இடம்பெற்றுள்ளது. இந்த அறிவிப்பில் முஆவியா பின் சல்லாம் (ரஹ்) அவர்கள் தமக்குக் கிட்டியதாகக் கூறிய சொற்பொருள் இடம்பெறவில்லை.

1471நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "மறுமை நாளில் குர்ஆனும் அதன்படி செயலாற்றியவர்களும் அழைத்து வரப்படுவர். அப்போது "அல்பகரா'அத்தியாயமும் "ஆலு இம்ரான்' அத்தியாயமும் முன்னே வரும்" என்று கூறிவிட்டு, இ(வ்விரு அத்தியாயங்களும் முன்னே வருவ)தற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வரும்) மூன்று உவமைகளைக் கூறினார்கள். அவற்றை நான் இதுவரை மறந்திடவில்லை. அவ்விரு அத்தியாயங்களும் (நிழல் தரும்) மேகங்களைப் போன்று, அல்லது நடுவே ஒளியுள்ள இரு கரும் நிழல்களைப் போன்று, அல்லது அணி அணியாகப் பறக்கும் இரு பறவைக் கூட்டங்களைப் போன்று (முன்னே வந்து) தம்மைக் கையாண்டவருக்காக (இறைவனிடம்) வாதாடும்.

**பாடம் : 43 "அல்ஃபாத்திஹா" அத்தியாயம் மற்றும் "அல்பகரா" அத்தியாயத்தின் இறுதி வசனங்கள் ஆகியவற்றின் சிறப்பும், "அல்பகரா"அத்தியாயத்தின் இறுதி இரு வசனங்களை ஓதுமாறு வந்துள்ள ஆர்வமூட்டலும்.**

1472இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்களிடம் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் அமர்ந்திருந்தபோது தமக்கு மேலிருந்து ஒரு சப்தம் வருவதைக் கேட்டார் அவர். அப்போது வானத்தை அண்ணாந்து பார்த்த ஜிப்ரீல் (அலை) அவர்கள், "இதோ, வானில் இதுவரை திறக்கப்பட்டிராத ஒரு கதவு இப்போது திறக்கப்பட்டிருக்கிறது. (அதன் சப்தமே இப்போது கேட்டது.)" என்று கூறினார்கள்.
அந்தக் கதவு வழியாக ஒரு வானவர் இறங்கி (நபியவர்களிடம்) வந்தார். அப்போது ஜிப்ரீல் (அலை) அவர்கள் "இதோ இந்த வானவர் இப்போதுதான் பூமிக்கு இறங்கி வந்திருக்கிறார். இதற்கு முன் எப்போதும் அவர் பூமிக்கு இறங்கியதேயில்லை" என்று கூறினார்கள்.
அவ்வானவர் சலாம் கூறிவிட்டு, "உங்களுக்கு முன் எந்த இறைத்தூதருக்கும் வழங்கப் பெற்றிராத இரு ஒளிச்சுடர்கள் உங்களுக்கு வழங்கப்பெற்றுள்ள நற்செய்தியைப் பெறுங்கள். "அல்ஃபாத்திஹா" அத்தியாயமும் "அல்பகரா" அத்தியாயத்தின் இறுதி வசனங்களுமே அவை. அவற்றிலுள்ள (பிரார்த்தனை வரிகளில்) எதை நீங்கள் ஓதினாலும் அது உங்களுக்கு வழங்கப் பெறாமல் இருப்பதில்லை"என்று கூறினார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1473அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூமஸ்ஊத் (உக்பா பின் ஆமிர் - ரலி) அவர்களை இறையில்லம் (கஅபா) அருகில் சந்தித்தேன். அவர்களிடம் "அல்பகரா அத்தியாயத்தின் இரு வசனங்கள் குறித்துத் தாங்கள் அறிவித்த ஹதீஸ் எனக்கு எட்டியது" என்று கூறினேன். அதற்கு அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள், "ஆம்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "எவர் அல்பகரா அத்தியாயத்தின் இறுதி இரு வசனங்களை இரவில் ஓதுகிறாரோ அவருக்கு அந்த இரண்டுமே போதும்" எனக் கூறினார்கள்" என்றார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1474அல்கமா பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "எவர் "அல்பகரா" அத்தியாயத்தின் இறுதி இவ்விரு 286 ,285)ஆவது) வசனங்களை இரவில் ஓதுகிறாரோ அவருக்கு அவ்விரண்டுமே போதும்" என்று கூறினார்கள் என அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
இதை அல்கமா (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வந்துகொண்டிருந்த போது அன்னாரை நான் சந்தித்தேன். அவர்களிடம் இந்த ஹதீஸ் குறித்து வினவினேன். அப்போது அவர்கள் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இந்த நபிமொழியை எனக்கு அறிவித்தார்கள்.

-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 44 "அல்கஹ்ஃப்' எனும் (18ஆவது) அத்தியாயம் மற்றும் "ஆயத்துல் குர்சீ' எனும் (2:255ஆவது) வசனம் ஆகியவற்றின் சிறப்பு.

1475நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"அல்கஹ்ஃப்' எனும் (18ஆவது) அத்தியாயத்தின் ஆரம்பப் பத்து வசனங்களை மனனம் செய்திருப்பவர் (பெருங்குழப்பவாதியான) தஜ்ஜாலிடமிருந்து பாதுகாக்கப்படுவார்.
இதை அபுத்தர்தா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்கஹ்ப் அத்தியாயத்தின் இறுதிப் பத்து வசனங்களை மனனம் செய்திருப்பவர்' என்று இடம்பெற்றுள்ளது.
ஹம்மாம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்கஹ்ஃப் அத்தியாயத்தின் ஆரம்பப் பத்து வசனங்களை...' என்று இடம்பெற்றுள்ளது. ஹிஷாம் (ரஹ்) அவர்களது அறிவிப்பிலும் இவ்வாறே இடம்பெற்றுள்ளது.

1476உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "அபுல்முன்திர், இறைவேதத்தில் உமக்குத் தெரிந்த வசனங்களிலேயே எந்த வசனம் மிகவும் மகத்தானது என்று தெரியுமா?" எனக் கேட்டார்கள். நான் "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்" என்று கூறினேன். அவர்கள் "அபுல்முன்திர், இறைவேதத்தில் உமக்குத் தெரிந்த வசனங்களிலேயே எந்த வசனம் மிகவும் மகத்தானது என்று தெரியுமா?" என (மீண்டும்) கேட்டார்கள். நான் "அல்லாஹு லாயிலாஹ இல்லாஹுவல் ஹய்யுல் கய்யூம்... எனத் தொடங்கும் (2:255 ஆவது) வசனம்" என்று விடையளித்தேன். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மகிழ்ச்சியோடு) எனது நெஞ்சில் (ஓர் அடி) அடித்துவிட்டு "அல்லாஹ்வின் மீதாணையாக! உமது கல்வியாற்றல் உம்மை நெகிழச் செய்யட்டும் (வாழ்த்துகள்), அபுல்முன்திரே!" என்றார்கள்.

## பாடம் : 45 "குல் ஹுவல்லாஹு அஹத்' (எனத் தொடங்கும் 112ஆவது அத்தியாயத்தை) ஓதுவதன் சிறப்பு.

1477அபுத்தர்தா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (மக்களை நோக்கி), "ஓர் இரவில் குர்ஆனின் மூன்றில் ஒரு பகுதியை உங்களில் ஒருவரால் ஓத முடியாதா?" என்று கேட்டார்கள். "(ஒரே இரவில்) எவ்வாறு குர்ஆனின் மூன்றிலொரு பகுதியை ஓத இயலும்?" என்று மக்கள் கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் "குல் ஹுவல்லாஹு அஹத் (என்று தொடங்கும் 112ஆவது அத்தியாயம்) குர்ஆனின் மூன்றிலொரு பங்கிற்கு ஈடானதாகும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1478மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "அல்லாஹ் குர்ஆனை மூன்று பகுதிகளாகப் பிரித்தான். அவற்றில் "குல் ஹுவல்லாஹு அஹத்' (எனத் தொடங்கும்112ஆவது அத்தியாயத்)தை குர்ஆனின் ஒரு பகுதியாக ஆக்கினான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

1479அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம், "மக்களே!) ஒன்று கூடுங்கள்; நான் உங்களுக்குக் குர்ஆனின் மூன்றிலொரு பகுதியை ஓதிக் காட்டப் போகிறேன்" என்று கூறினார்கள். அப்போது மக்கள் ஒன்றுகூடினர். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடையே) புறப்பட்டு வந்து "குல் ஹுவல்லாஹு அஹத்" (எனத் தொடங்கும் 112ஆவது) அத்தியாயத்தை ஓதிக் காட்டினார்கள். பிறகு (தமது இல்லத்திற்குள்) சென்றுவிட்டார்கள். அப்போது எங்களில் சிலர் சிலரிடம், "அவர்களுக்கு வானிலிருந்து ஏதேனும் செய்தி வந்திருக்கிறது போலும். அதன் காரணமாகவே அவர்கள் உள்ளே சென்றுவிட்டார்கள் என்று கருதுகிறேன்" என்றனர். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெளியே வந்து "நான் (சற்று முன்) உங்களிடம் குர்ஆனின் மூன்றிலொரு பகுதியை ஓதிக் காட்டுவேன் எனக் குறிப்பிட்டேன். அறிக: அந்த (112ஆவது) அத்தியாயம் குர்ஆனின் மூன்றிலொரு பகுதிக்கு ஈடானதேயாகும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1480அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடையே) புறப்பட்டு வந்து "நான் உங்களுக்குக் குர்ஆனின் மூன்றிலொரு பகுதியை ஓதிக் காட்டுகிறேன்" என்று கூறிவிட்டு "அல்லாஹ் ஒருவனே. அவன் எந்தத் தேவையுமற்றவன்" என்று தொடங்கும் (112ஆவது) அத்தியாயத்தை இறுதிவரை ஓதிக் காட்டினார்கள்.

1481ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதரை படைப் பிரிவொன்றுக்குத் தளபதியாக்கி அனுப்பினார்கள். அவர் தமது தொழுகையில் தம் தோழர்களுக்கு (குர்ஆன் வசனங்களை) ஓதி (தொழுவித்து)வந்தார்; (ஒவ்வொரு முறையும்) ஓதி முடிக்கும்போது "குல் ஹுவல்லாஹு அஹத்' எனும் (112ஆவது) அத்தியாயத்துடன் முடிப்பார். அப்படையினர் திரும்பிவந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இது குறித்துத் தெரிவிக்கப்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எதற்காக இப்படிச் செய்கிறார் என அவரிடமே கேளுங்கள்" என்று கூற, அவர்களும் அவரிடம் கேட்டனர். அவர், "ஏனெனில், அந்த அத்தியாயம் பேரருளாளனின் (ஏகத்துவப்) பண்புகளை எடுத்தியம்புகிறது. நான் அதை (அதிகமாக) ஓதுவதை விரும்புகிறேன்"என்று சொன்னார். (இதைக் கேள்விப்பட்ட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் அவரை நேசிக்கிறான் என அவருக்குத் தெரிவியுங்கள்" என்று கூறினார்கள்.
இதை நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்களால் வளர்க்கப்பட்ட அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம்: 46 "அல்முஅவ்விதத்தைன்' (குல் அஊது பி ரப்பில் ஃபலக், குல் அஊது பி ரப்பின்னாஸ் ஆகிய) அத்தியாயங்களை ஓதுவதன் சிறப்பு.**

1482அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உமக்குத் தெரியாதா? இன்றிரவு (எனக்கு) சில வசனங்கள் அருளப்பெற்றுள்ளன. அவையொத்த வசனங்கள் முன்னெப்போதும் காணப்பட்டதில்லை. அவை: குல் அஊது பிரப்பில் ஃபலக், குல் அஊது பிரப்பின்னாஸ்" (113, 114ஆகிய) அத்தியாயங்களாகும்.
இதை உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1483உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "எனக்குச் சில வசனங்கள் அருளப் பெற்றுள்ளன. அவையொத்த வசனங்கள் முன்னெப்போதும் காணப்பட்டதில்லை. அவை "அல்முஅவ்விதத்தைன்' (113, 114ஆகிய) அத்தியாயங்களாகும்" என்று கூறினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அபூஉசாமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "முஹம்மத் (ஸல்) அவர்களின் தோழர்களில் முக்கியமானவர்களில் ஒருவரான உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்" என இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 47 குர்ஆனின்படி தாமும் செயல்பட்டுப் பிறருக்கும் அதைக் கற்பிப்பவரின் சிறப்பும், மார்க்கச் சட்டம் முதலான ஞானத்தைத் தாமும் கற்று அதன்படி செயல்பட்டுப் பிறருக்கும் அதைப் போதிப்பவரின் சிறப்பும்.**

1484நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பொறாமை என்பது இரண்டில் தவிர வேறெதிலும் கூடாது. 1. ஒரு மனிதருக்கு அல்லாஹ் குர்ஆன் ஞானத்தை அருள, அவர் அதன்படி அல்லும் பகலும் செயல்பட்டு வருகிறார். 2. இன்னொரு மனிதருக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்க, அவர் அதை அல்லும் பகலும் தானம் செய்கிறார் .இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1485அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பொறாமை என்பது இரண்டில் தவிர வேறெதிலும் கூடாது. 1. ஒரு மனிதருக்கு அல்லாஹ் இந்த வேத(ஞான)த்தை அருள, அவர் அதன்படி அல்லும் பகலும் செயல்பட்டு வருகிறார். 2. இன்னொரு மனிதருக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்க, அவர் அதை அல்லும் பகலும் தானம் செய்கிறார் .இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1486அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரண்டு விஷயங்களைத் தவிர வேறெதிலும் பொறாமை கொள்ளக்கூடாது. ஒரு மனிதருக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்கி,அதை அறவழியில் செலவழிக்க அவரைத் தூண்டினான்; இன்னொரு மனிதருக்கு அல்லாஹ் அறிவு ஞானத்தை வழங்கி,அதற்கேற்ப அவர் (செயல்பட்டு) தீர்ப்பு வழங்குபவராகவும் கற்றுக்கொடுப்பவராகவும் இருக்கிறார்.

இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1487ஆமிர் பின் வாஸிலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாஃபிஉ பின் அப்தில் ஹாரிஸ் (ரலி) அவர்கள், (கலீஃபா) உமர் (ரலி) அவர்களை உஸ்ஃபான் எனுமிடத்தில் சந்தித்தார்கள். (இக்காலகட்டத்தில்) உமர் (ரலி) அவர்கள் நாஃபிஉ (ரலி) அவர்களை மக்காவின் ஆளுநராக நியமித்திருந்தார்கள். உமர் (ரலி) அவர்கள் (நாஃபிஉ (ரலி) அவர்களிடம்) "நீங்கள் இந்தப் பள்ளத்தாக்கு (மக்கா)வாசிகளுக்கு எவரை ஆளுநராக ஆக்கினீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு நாஃபிஉ (ரலி) அவர்கள், "(அப்துர் ரஹ்மான்) இப்னு அப்ஸா (ரலி) அவர்களை" என்று பதிலளித்தார்கள். உமர் (ரலி) அவர்கள், "இப்னு அப்ஸா யார்?" எனக் கேட்டார்கள். நாஃபிஉ (ரலி) அவர்கள், "எங்களால் விடுதலை செய்யப்பட்ட எங்கள் (முன்னாள்) அடிமைகளில் ஒருவர்" என பதிலளித்தார்கள். அதற்கு உமர் (ரலி) அவர்கள், "அவர்களுக்கு ஒரு முன்னாள் அடிமையையா ஆட்சித் தலைவராக்கினீர்?" என்று கேட்டார்கள். அதற்கு நாஃபிஉ (ரலி) அவர்கள், "அவர் (இப்னு அப்ஸா) இறை வேதத்தை அறிநதவர்; பாகப் பிரிவினைச் சட்டங்களை அறிந்தவர்" என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) உமர் (ரலி) அவர்கள் "அறிந்துகொள்க: அல்லாஹ் இந்த வேதத்தின் மூலம் சிலரை உயர்த்துகிறான்; வேறு சிலரைத் தாழ்த்துகிறான்" என்று உங்கள் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (இப்னு அப்ஸா வேத அறிவினால் மேன்மை பெற்றார்)" என்று சொன்னார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நாஃபிஉ பின் அல்ஹாரிஸ் அல்குஸாஈ (ரலி) அவர்கள் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களை உஸ்ஃபான் என்னுமிடத்தில் சந்தித்தார்கள்" என ஹதீஸ் தொடங்குகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன.

**பாடம் : 48 குர்ஆன் ஏழு (வட்டார) மொழிவழக்கில் அருளப்பெற்றுள்ளது என்பதன் விளக்கம்.**

1488உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹிஷாம் பின் ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் (குர்ஆனின் 25ஆவது) அத்தியாயம் அல்ஃபுர்கானை நான் ஓதுகின்ற முறைக்கு மாற்றமாக ஓதுவதைச் செவியுற்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏற்கெனவே அந்த அத்தியாயத்தை எனக்கு ஓதிக் காட்டியிருந்தார்கள். நான் உடனே ஹிஷாம் (ரலி) அவர்களைக் கண்டிக்க முற்பட்டேன். பிறகு (சற்று யோசித்து) அவர் தொழுகையை முடிக்கும்வரை அவருக்கு அவகாசம் அளித்(துக் காத்திருந்)தேன். (அவர் தொழுது முடித்த) பிறகு அவருடைய மேலாடையை கழுத்தில் போட்டு இழுத்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுசென்று, "அல்லாஹ்வின் தூதரே,நீங்கள் எனக்கு ஓதிக்கொடுத்ததற்கு மாறாக இவர் அல்ஃபுர்கான் அத்தியாயத்தை ஓதுவதை நான் செவியுற்றேன்" என்று கூறினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரை விடுங்கள்" என (என்னிடம்) கூறிவிட்டு, (ஹிஷாம் அவர்களிடம்) "நீங்கள் ஓதுங்கள்" என்று கூறினார்கள். அவர் என்னிடம் ஓதியதைப் போன்றே ஓத, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இப்படித்தான் (இந்த அத்தியாயம்) அருளப்பெற்றது"

என்று கூறினார்கள். பின்னர் என்னிடம் "நீங்கள் ஓதுங்கள்" என்றார்கள். நான் ஓதினேன். அதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இப்படித்தான் (இந்த அத்தியாயம்) அருளப்பெற்றது. இந்தக் குர்ஆன் (ஓதுவதற்கான) ஏழு முறைகளில் அருளப்பட்டிருக்கின்றது. ஆகவே, உங்களுக்கு சுலபமானது எதுவோ அதை ஓதிக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.
இதை அப்துர் ரஹ்மான் பின் அப்தில் காரீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1489மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வாழ்நாளில் ஹிஷாம் பின் ஹகீம் (ரலி) அவர்கள் அல்ஃபுர்கான் எனும் (25ஆவது) அத்தியாயத்தை (தொழுகையில்) ஓதுவதைச் செவியுற்றேன்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. "தொழுகையில் வைத்தே நான் அவரைத் தண்டிக்க முனைந்தேன். பிறகு (யோசித்து) அவர் (தொழுகையை முடித்து) சலாம் கொடுக்கும் வரை சிரமப்பட்டுப் பொறுத்துக்கொண்டேன்" என்று அதிகப்படியாகவும் இடம்பெற்றுள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1490அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரேயொரு (வட்டார) மொழிவழக்குப்படி (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் (குர்ஆனை) எனக்கு ஓதக் கற்றுத்தந்தார்கள். அதை இன்னும் பல (வட்டார) மொழிவழக்குகளின்படி எனக்கு ஓதக் கற்றுத்தருமாறு அவர்களிடம் நான் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டேயிருந்தேன். (நான் கேட்கக் கேட்க) எனக்கு அவர்கள் அதிகப்படுத்திக்கொண்டே வந்து இறுதியில் ஏழு (வட்டார) மொழிவழக்குகள் அளவிற்கு வந்து நின்றது.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
அறிவிப்பாளர் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
அந்த ஏழு (வட்டார) மொழிவழக்குகள் ஒரே கருத்தை பிரதிபலிப்பவையே ஆகும்; அனுமதிக்கப் பெற்றவை (ஹலால்) தடை செய்யப்பெற்றவை (ஹராம்) விஷயத்தில் ஒன்றுக்கொன்று முரண்பட்ட கருத்தைத் தருபவை அல்ல.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1491உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் பள்ளிவாசலில் அமர்ந்திருந்தேன். அப்போது ஒரு மனிதர் (பள்ளிவாசலுக்குள்) வந்து தொழலானார்; (தொழுகையில் குர்ஆன் வசனங்களை) ஒரு விதமாக ஓதினார். அதை நான் அறிந்திருக்கவில்லை. பிறகு மற்றொருவர் வந்து (அதே வசனங்களை) முதலாமவர் ஓதியதற்கு மாற்றமாக ஓதித் தொழலானார். தொழுகை முடிந்ததும் நாங்கள் அனைவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றோம். நான் "இவர் குர்ஆனை நான் அறிந்திராத (ஓதல்) முறையில் ஓதினார். பின்னர் மற்றவர் வந்து முதலாமவர் ஓதியதற்கு மாறாக (அதையே) வேறு முறையில் ஓதினார்"
என்றேன். நபி (ஸல்) அவர்கள் அவ்விருவரையும் ஓதிக் காட்டும்படி பணித்தார்கள். அவ்விருவரும் ஓதினர். நபி (ஸல்) அவர்கள் அவ்விருவரும் சரியாகவே ஓதினர் எனக் கூறினார்கள். (இதைக் கேட்டவுடன்) என் உள்ளத்தில் நபியவர்கள் பொய்யுரைக்கிறார்கள்

என்ற எண்ணம் விழுந்தது. அறியாமைக் காலத்தில்கூட இத்தகைய எண்ணம் எனக்கு ஏற்பட்டதில்லை. என்னை ஆட்கொண்டிருந்த (அந்த எண்ணத்)தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்டபோது என் நெஞ்சில் ஓர் அடி அடித்தார்கள். (அடி விழுந்ததும்) எனக்கு வியர்த்துக் கொட்டியது. அச்சத்தால் எனக்கு அல்லாஹ்வே காட்சியளிப்பதைப் போன்றிருந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் "உபை, "குர்ஆனை ஓர் ஓதல் முறைப்படி ஓதுவீராக' என எனக்கு (இறைவனிடமிருந்து) செய்தியறிவிக்கப்பட்டது. உடனே நான் என் சமுதாயத்தாருக்கு இன்னும் சுலபமாக்கும்படி (இறைவனிடம்) கோரினேன். அப்போது "குர்ஆனை இரண்டு ஓதல் முறைப்படி ஓதுவீராக!' என எனக்கு இரண்டாவது முறையாக இறைவன் அறிவித்தான். உடனே நான் இன்னும் என் சமுதாயத்தாருக்கு சுலபமாக்கும்படி கோரினேன். மூன்றாவது முறையில் குர்ஆனை ஏழு ஓதல் முறைகளின் படி ஓதும்படி எனக்கு இறைவன் அறிவித்தான். மேலும், "நீர் கோரிய (மூன்று கோரிக்கைகளில்) ஒவ்வொரு கோரிக்கைக்கும் பகரமாக என்னிடம் உமக்கு ஓர் (அங்கீகரிக்கப்பட்ட) பிரார்த்தனை உண்டு' என்றும் (இறைவன்) கூறினான். எனவே நான் "இறைவா! என் சமுதாயத்தாரை மன்னிப்பாயாக! இறைவா! என் சமுதாயத்தாரின் குற்றங்குறைகளை மறைப்பாயாக!' என (இரண்டு) பிரார்த்தனை செய்தேன். (இவ்விரு பிரார்த்தனைகள் அல்லாமல்) மூன்றாவது பிரார்த்தனையை நான் ஒரு நாளைக்காகத் தாமதப்படுத்தி (பத்திரப்படுத்தி) வைத்துள்ளேன். அந்நாளில் படைப்பினங்கள் அனைத்தும் என்னிடம் (பரிந்துரைக்கும்படி) ஆவலுடன் வருவார்கள்; இப்ராஹீம் (அலை) அவர்கள் உட்பட" எனக் கூறினார்கள்.

-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "நான் பள்ளிவாசலில் அமர்ந்திருந்தேன். அப்போது ஒரு மனிதர் (பள்ளிவாசலுக்குள்) நுழைந்து குர்ஆனை ஓர் ஓதல் முறைப்படி ஓதித் தொழுதார்..." என்று உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறினார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம் பெற்றுள்ளன.

1492உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் பனூ ஃகிஃபார் குலத்தாரின் நீர்நிலை அருகே இருந்தார்கள். அப்போது அவர்களிடம் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து "குர்ஆனை உங்கள் சமுதாயத்தார் ஒரேயொரு ஓதல் முறைப்படி ஓதுமாறு அல்லாஹ் கட்டளையிடுகிறான்" என்று கூறினார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள், "நான் அல்லாஹ்விடம் பாவமன்னிப்பையும் பிழை பொறுத்தலையும் வேண்டுகிறேன். (பல்வேறு மொழிவழக்குகள் கொண்ட) என் சமுதாயத்தார் இதற்குச் சக்தி பெறமாட்டார்கள்"என்று கூறினார்கள். பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் (இறைவனிடம் சென்றுவிட்டுத் திரும்பி) நபியவர்களிடம் வந்து, "குர்ஆனை உங்கள் சமுதாயத்தார் இரண்டு ஓதல் முறைகளின்படி ஓதுமாறு அல்லாஹ் கட்டளையிடுகின்றான்" என்று கூறினார்கள். (மீண்டும்) நபி (ஸல்) அவர்கள் "நான் அல்லாஹ்விடம் பாவ மன்னிப்பையும் பிழை பொறுத்தலையும் வேண்டுகிறேன். என் சமுதாயத்தார் இ(வ்வாறு ஓதல் முறையை இரு முறைகளுக்குள் அடக்குவ)தற்குச் சக்தி பெறமாட்டார்கள்" என்று கூறினார்கள். பிறகு ஜிப்ரீல் (அலை)

அவர்கள் மூன்றாவது முறை (இறைவனிடம் சென்று விட்டுத் திரும்பி)வந்து, "உங்கள் சமுதாயத்தார் குர்ஆனை மூன்று ஓதல் முறைகளின்படி ஓதுமாறு அல்லாஹ் கட்டளையிடுகின்றான்" என்று கூறினார்கள். (மீண்டும்) நபி (ஸல்) அவர்கள், "நான் அல்லாஹ்விடம் பாவ மன்னிப்பையும் பிழை பொறுத்தலையும் வேண்டுகிறேன். இ(வ்வாறு ஓதல் முறையை மூன்று முறைகளுக்குள் அடக்குவ)தற்கு என் சமுதாயத்தார் சக்தி பெறமாட்டார்கள்" என்று கூறினார்கள். பிறகு நான்காவது முறை ஜிப்ரீல் (அலை) அவர்கள் (இறைவனிடம் சென்றுவிட்டுத் திரும்பி)வந்து, "குர்ஆனை உங்கள் சமுதாயத்தார் ஏழு ஓதல் முறைகளின்படி ஓதுமாறு அல்லாஹ் கட்டளையிடுகின்றான். அவர்கள் (இந்த ஏழு முறைகளில்) எந்த முறைப்படி ஓதினாலும் அவர்கள் சரியாகவே ஓதினார்கள்" என்று கூறினார்கள்.இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 49 குர்ஆனை நிறுத்தி நிதானமாக ஓத வேண்டும்; அதிவேகமாக ஓதுவதைத் தவிர்த்திட வேண்டும். ஒரே ரக்அத்தில் இரு அத்தியாயங்களோ அதற்குக் கூடுதலாகவோ ஓதலாம்.**

1493அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நஹீக் பின் சினான் எனப்படும் ஒரு மனிதர் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் வந்து, "அபூஅப்திர் ரஹ்மான்,குர்ஆனில் (47ஆவது அத்தியாயத்திலுள்ள) இந்த எழுத்தை எப்படி ஓதுகிறீர்?: "மிம்மாயின் ஃகைரி ஆசினின்' என்று அலிஃபுடன் ஓதுகின்றீரா, அல்லாது "மிம்மாயின் ஃகைரி யாசினின்' என்று "யா'வுடன் ஓதுகின்றீரா?" எனக் கேட்டார். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "இதைத் தவிர குர்ஆன் முழுவதையும் சரியாக மனனமிட்டு விட்டாயோ?" என்று அவரிடம் கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், "நான் முஃபஸ்ஸல் எனும் (ஹுஜுராத் முதல் அந்நாஸ் (49-114) வரையிலான) அத்தியாயங்களை ஒரே ரக்அத்தில் ஓதுகின்றேன்" என்றார். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "பாட்டுப் பாடுவதைப் போன்று அவசர அவசரமாக ஓதினீரோ? மக்களில் சிலர் குர்ஆனை ஓதுவார்கள். அது அவர்களது தொண்டைக் குழியைக் கடந்து செல்லாது. அது மட்டும் அவர்களது உள்ளத்திற்குள் சென்று பதிந்துவிட்டால் நிச்சயம் பயன் தரும். தொழுகையில் மிகச் சிறந்த நிலை ருகூஉவும் சஜ்தாவுமாகும். நபி (ஸல்) அவர்கள் தமது தொழுகையின் ஒவ்வொரு ரக்அத்திலும் இரண்டிரண்டாகச் சேர்த்து ஓதிவந்த சரிநிகர் அத்தியாயங்களை நான் அறிவேன்" என்று கூறினார்கள். (இதைக் கூறிய) பிறகு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் (தமது இல்லத்தினுள்) சென்றார்கள். அவர்களைப் பின்தொடர்ந்து அல்கமா (ரஹ்) அவர்களும் உள்ளே சென்றார்கள். (சிறிது நேரம் கழித்து) அல்கமா (ரஹ்) அவர்கள் வெளியே வந்து "அந்த (சரிநிகர்) அத்தியாயங்கள் (எவை என்பது) பற்றி எனக்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பனூ பஜீலா குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர்

அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் வந்தார்" என்றே இடம்பெற்றுள்ளது. "நஹீக் பின் சினான் எனப்படும் ஒரு மனிதர்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1494மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் அபூவாயில் (ரஹ்) அவர்கள் (பின்வருமாறு) கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது:
பிறகு அல்கமா (ரஹ்) அவர்கள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்தினுள்ளே) செல்லப் போனார்கள். அப்போது நாங்கள், "நீங்கள் அவர்களிடம் (சென்று) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரே ரக்அத்தில் ஓதிவந்த அந்த சரிநிகர் அத்தியாயங்கள் (எவை என்பது) குறித்துக் கேளுங்கள்!" என்றோம். அல்கமா (ரஹ்) அவர்கள் உள்ளே சென்று,இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் வினவினார்கள். பின்னர் எங்களிடம் வந்து, "(அவை:) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் தொகுத்துவைத்துள்ள குர்ஆன் பிரதியின்படி (ஆரம்ப) இருபது முஃபஸ்ஸல் அத்தியாயங்களாகும்" என்று கூறினார்கள்.

1495மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ரக்அத்தில் இரண்டு அத்தியாயங்கள் வீதம் பத்து ரக்அத்களில் இருபது அத்தியாயங்களாக ஓதிவந்த சரிநிகர் அத்தியாயங்களை நான் அறிவேன்" என அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாக இடம் பெற்றுள்ளது.

1496அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு நாள்) காலையில் வைகறை (சுப்ஹு)த் தொழுகைக்குப் பிறகு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்திற்குச்) சென்றோம். வாசலில் (நின்று) சலாம் சொன்னோம். அவர்கள் எங்களுக்கு உள்ளே வர அனுமதியளித்தார்கள். ஆனால், நாங்கள் சிறிது நேரம் வாசலிலேயே (தயங்கியவாறு) நின்றுகொண்டிருந்தோம். அப்போது பணிப் பெண் வெளியே வந்து, "நீங்கள் உள்ளே வரக் கூடாதா?" என்று கேட்டாள். நாங்கள் உள்ளே சென்றோம். அப்போது அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் இறைவனைத் துதித்துக்கொண்டிருந்தார்கள்;
(எங்களைக் கண்டதும்) "உங்களுக்கு அனுமதியளிக்கப்பட்ட பின்பும் ஏன் நீங்கள் உள்ளே வரவில்லை?" என்று கேட்டார்கள். அதற்கு நாங்கள் "(அப்படியொன்றும்) இல்லை; (தங்கள்) வீட்டாரில் எவரேனும் உறங்கிக்கொண்டிருப்பார்கள் என்று நாங்கள் எண்ணினோம்" என்று சொன்னோம். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "இப்னு உம்மி அப்தின் குடும்பத்தார் (தொழுகையில்) அலட்சியமாக இருப்பார்கள் என எண்ணிக்கொண்டீர்களா?" என்று கூறி விட்டு (மீண்டும்) இறைவனைத் துதிப்பதில் ஈடுபடலானார்கள். பின்னர் சூரியன் உதயமாகியிருக்கலாம் என எண்ணிய அவர்கள் (தம் பணிப்பெண்ணிடம்) "பெண்ணே! சூரியன் உதயமாகிவிட்டதா, பார்?" என்றார்கள். அந்தப் பெண் பார்த்தபோது சூரியன் உதயமாகியிருக்கவில்லை. எனவே, அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் மீண்டும் இறைவனைத் துதிப்பதில் ஈடுபடலானார்கள். பின்னர் சூரியன் உதயமாகி விட்டதாக எண்ணியபோது (மறுபடியும்) "பெண்ணே, சூரியன் உதயமாகிவிட்டதா, பார்!" என்றார்கள்.

அவள் பார்த்தபோது சூரியன் உதயமாகிவிட்டிருந்தது. அப்போது அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "இன்றைய நாளை நமக்கு மீட்டுத்தந்த இறைவனுக்கே புகழ் யாவும்; அவன் நம்மை நம் பாவங்களால் அழித்துவிடவில்லை" என்று கூறினார்கள்.
அப்போது அங்கிருந்த மக்களில் ஒருவர், "நேற்றிரவு நான் "முஃபஸ்ஸல்' அத்தியாயங்கள் முழுவதையும் ஓதி முடித்தேன்" என்று கூறினார். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "பாட்டுப் பாடுவதைப் போன்று அவசர அவசரமாக (குர்ஆனை) ஓதினீரோ? நாங்கள் ஒரே அளவிலமைந்த அத்தியாயங்களை (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓதும்போது) செவியுற்றோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வழக்கமாக) ஓதிவந்த ஒரே அளவிலமைந்த "முஃபஸ்ஸல்' அத்தியாயங்கள் பதினெட்டையும் "ஹாமீம்' (எனத் தொடங்கும் அத்தியாயங்களின்) குடும்பத்தில் இரண்டு அத்தியாயங்களையும் நான் மனனமிட்டுள்ளேன்" என்றார்கள்.

1497அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
பனூ பஜீலா குடும்பத்தைச் சேர்ந்த நஹீக் பின் சினான் என்று கூறப்படும் ஒரு மனிதர் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் வந்து "நான் ஒரே ரக்அத்தில் முஃபஸ்ஸல் அத்தியாயங்கள் அனைத்தையும் ஓதுகிறேன்" என்றார். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "பாட்டுப் பாடுவதைப் போன்று அவசர அவசரமாக ஓதினீரோ! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ரக்அத்தில் இரண்டு அத்தியாயங்கள் வீதம் ஓதிவந்த சரிநிகர் அத்தியாயங்களை நான் அறிந்து வைத்துள்ளேன்" என்று கூறினார்கள்.
-அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் வந்து "நான் இன்றிரவு ஒரே ரக்அத்தில் முஃபஸ்ஸல் அத்தியாயங்கள் முழுவதையும் ஓதி முடித்தேன்" என்றார். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "பாட்டுப் பாடுவதைப் போன்று அவசர அவசரமாக ஓதினீரோ! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது தொழுகையில்) ஒவ்வொரு ரக்அத்திலும் இரண்டிரண்டு அத்தியாயங்களாகச் சேர்த்து ஓதிவந்த சரிநிகர் அத்தியாயங்களை நான் அறிந்துள்ளேன்" எனக் கூறிவிட்டு, முஃபஸ்ஸல் அத்தியாயங்களில் இருபது அத்தியாயங்களைக் குறிப்பிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 50 சில ஓதும் முறைகள் பற்றிய குறிப்பு.

1498அபூஇஸ்ஹாக் அஸ்ஸபீஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் பள்ளிவாசலில் குர்ஆன் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களிடம் ஒரு மனிதர் "நீங்கள் இந்த (54:32ஆவது) வசனத்தை எப்படி ஓதுகிறீர்கள்? ஃபஹல் மின்(ம்) முத்தகிர் என "தால்' எனும் எழுத்துடன் ஓத வேண்டுமா? அல்லது (ஃபஹல் மின்(ம்) முஸ்ஸகிர் என) "ஃதால்' எனும் எழுத்துடன் ஓத வேண்டுமா?" என்று கேட்டார். அதற்கு "தால்' (எனும் எழுத்து) கொண்டே (ஓத வேண்டும்). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முத்தகிர்' என "தால்' (எனும் எழுத்து)

கொண்டே ஓதியதை நான் கேட்டேன் என அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று அஸ்வத் (ரஹ்) அவர்கள் விடையளித்தார்கள்.

1499அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (54:32ஆவது வசனத்தின் மூலத்திலுள்ள இத்தொடரை) "ஃபஹல் மின்(ம்) முத்தகிர்' என்றே ஓதினார்கள்.
இதை அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1500அல்கமா பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களின் மாணவர்களான) நாங்கள் ஷாம் (சிரியா) நாட்டுக்குச் சென்றிருந்தோம். (நாங்கள் வந்துள்ள செய்தியறிந்து) எங்களிடம் அபுத்தர்தா (ரலி) அவர்கள் வந்து, "அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களின் ஓதல் முறைப்படி ஓதத் தெரிந்தவர் எவரேனும் உங்களிடையே உண்டா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்; நான் (இருக்கிறேன்)" என்று பதிலளித்தேன். அபுத் தர்தா (ரலி) அவர்கள், "வல்லைலி இஃதா யஃக்ஷா" எனும் இந்த (92:3ஆவது) வசனத்தை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் எவ்வாறு ஓதக் கேட்டீர்கள்?" என்று வினவினார்கள். நான் "வல்லைலி இஃதா யஃக்ஷா வத்தகரி வல் உன்ஸா' என்றே ஓதினார்கள் என்று பதிலளித்தேன். அபுத்தர்தா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் இவ்வாறு ஓதவே நான் கேட்டுள்ளேன். இந்த மக்கள் (ஷாம்வாசிகள்) "வமா கலக்கஃத் தகர வல்உன்ஸா' என்றே நான் ஓத வேண்டுமென விரும்புகிறார்கள். ஆனால், இவர்களை நான் பின்பற்றமாட்டேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1501மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அல்கமா (ரஹ்) அவர்கள் கூறியிருப்பதாவது: நான் ஷாம் (சிரியா) நாட்டிற்குச் சென்றேன். அங்கு பள்ளிவாசலுக்குச் சென்று தொழுதேன். பின்னர் எழுந்து ஒரு சபைக்குச் சென்று அதில் அமர்ந்தேன். அப்போது ஒருவர் (அபுத்தர்தா-ரலி) வந்து என் அருகே அமர்ந்தார். அவரிடம் (அக்கால) மக்களின் எளிமையையும் தோற்றத்தையும் கண்டேன். அவர் (என்னிடம்), "அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் ஓதுகின்ற முறையை நீங்கள் மனனமிட்டுள்ளீர்களா?" என்று வினவினார்.

1502அல்கமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபுத்தர்தா (ரலி) அவர்களைச் சந்தித்தேன். அவர்கள் என்னிடம் "நீங்கள் எந்த நாட்டவர்?" என்று கேட்க, "இராக்கியர்' என்று நான் பதிலளித்தேன். "இராக்கியரில் நீங்கள் எந்த ஊரைச் சேர்ந்தவர்?" என்று அன்னார் வினவ, "கூஃபாவாசி' என நான் விடையளித்தேன். "அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் ஓதிய முறையில் நீங்கள் ஓதுவீர்களா?" என அவர்கள் கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். "அப்படியானால், "வல்லைலி இதா யஃக்ஷா' எனும் (92ஆவது) அத்தியாயத்தை ஓதிக் காட்டுங்கள்" என்றார்கள். நான் "வல்லைலி இதா யஃக்ஷா' என ஓதத் தொடங்கி "வத்தகரி வல்உன்ஸா' என ஓதினேன். உடனே

அபுத்தர்தா (ரலி) அவர்கள் சிரித்துவிட்டு "இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓத நான் செவியேற்றேன்" என்று கூறினார்கள்.
-மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அல்கமா (ரஹ்) அவர்கள் "நான் ஷாம் (சிரியா) நாட்டிற்குச் சென்றேன். அங்கு அபுத்தர்தா (ரலி) அவர்களைச் சந்தித்தேன்" என்று கூறியதாக ஹதீஸ் தொடங்குகிறது.

பாடம் : 51 தொழுவதற்குத் தடை விதிக்கப்பட்டுள்ள நேரங்கள்.

1503அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ருக்குப் பின்னாலிருந்து சூரியன் மறையும் வரைத் தொழ வேண்டாம் எனவும்,சுப்ஹுக்குப் பின்னாலிருந்து சூரியன் உதயமாகும் வரைத் தொழ வேண்டாம் எனவும் தடை செய்தார்கள்.

1504இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ருக்குப் பின்னாலிருந்து சூரியன் உதயமாகும் வரையும் அஸ்ருக்குப் பின்னாலிருந்து சூரியன் மறையும் வரையும் தொழ வேண்டாமெனத் தடை செய்தார்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களில் பலர் கூறக்கேட்டுள்ளேன். அவர்களில் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களும் ஒருவர். அன்னார் எனக்கு மிகவும் விருப்பமானவர்களாவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1505மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் சயீத் மற்றும் ஹிஷாம் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் ("சூரியன் உதயமாகும் வரை' என்பதைச் சுட்ட "ஹத்தா தத்லுஅஷ் ஷம்சு' எனும் சொற்றொடருக்கு பதிலாக) "ஹத்தா தஷ்ருகஷ் ஷம்சு' எனும் சொற்றொடர் இடம்பெற்றுள்ளது.

1506அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அஸ்ர் தொழுகைக்குப் பின்னாலிருந்து சூரியன் மறையும்வரை எந்தத் தொழுகையும் இல்லை. ஃபஜ்ர் தொழுகைக்குப் பின்னாலிருந்து சூரியன் உதிக்கும்வரை எந்தத் தொழுகையும் இல்லை.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1507அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் (சரியாகச்) சூரியன் உதிக்கும் நேரத்தையும் சூரியன் மறையும் நேரத்தையும் தேர்ந்தெடுத்துத் தொழ வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1508அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(சரியாகச்) சூரியன் உதிக்கும் நேரத்தையோ சூரியன் மறையும் நேரத்தையோ நீங்கள் தொழுவதற்காகத் தேர்வு செய்யாதீர்கள். ஏனெனில் அது, ஷைத்தானின் இரு கொம்புகளுக்கிடையே உதிக்கின்றது.

இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1509அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சூரியனின் ஒரு பகுதி (கிழக்கில்) தோன்றும் போது (தொழாதீர்கள்.) அது முழுமையாக வெளிப்படும்வரைத் தொழுவதைத் தாமதப்படுத்துங்கள்; சூரியனின் ஒரு பகுதி (மேற்கில்) மறையும்போது (தொழாதீர்கள்); அது முழுமையாக மறையும்வரைத் தொழுகையைத் தாமதப்பபடுத்துங்கள்-.இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1510அபூபஸ்ரா அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு பயணத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்முகம்மஸ்' எனுமிடத்தில் எங்களுக்கு அஸ்ர் தொழுகை தொழுவித்தார்கள். பிறகு "இந்தத் தொழுகையை நிறைவேற்றுமாறு உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களிடம் கூறப்பட்டது. ஆனால்,அவர்கள் அதைப் பாழாக்கிவிட்டார்கள். எனவே, யார் இத் தொழுகையைப் பேணித் தொழுது வருகிறாரோ அவருக்கு இரு மடங்கு நற்பலன் உண்டு. அஸ்ருக்குப் பின்னாலிருந்து (சூரியன் மறைந்து) நட்சத்திரம் தோன்றும்வரை எந்தத் தொழுகையும் இல்லை.
இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள "ஷாஹித்' எனும் சொல்லுக்கு "நட்சத்திரம்' என்று பொருள்.
-மேற்கண்ட ஹதீஸ் அபூபஸ்ரா அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1511உக்பா பின் ஆமிர் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
மூன்று நேரங்களில் தொழ வேண்டாம்; அல்லது இறந்தவர்களைப் புதைக்க வேண்டாம் என எங்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்துவந்தார்கள்.
1.சூரியன் உதயமாகத் துவங்கியதிலிருந்து நன்கு உயரும்வரை ,
2.ஒருவர்உச்சிப் பொழுதில் நிற்கும்போது நிழல் விழாது போகும்) நண்பகல் துவங்கியதிலிருந்து சூரியன் (மேற்கு) சாயும்வரை.
3.சூரியன் அஸ்தமிக்கத் தலைப்பட்டதிலிருந்து நன்கு மறையும்வரை.

## பாடம் : 52 அம்ர் பின் அபசா (ரலி) அவர்கள் இஸ்லாத்தைத் தழுவிய நிகழ்ச்சி.

1512அம்ர் பின் அபசா அஸ்ஸுலமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அறியாமைக் காலத்தில் வாழ்ந்தபோது மக்கள் அனைவரும் வழிகேட்டில் இருக்கிறார்கள்; அவர்களுக்கென (வாழ்க்கை நெறி) எதுவும் கிடையாது; அவர்கள் சிலைகளை வணங்கிக்கொண்டிருக்கிறார்கள் என எண்ணி (வருந்தி)னேன். இந்நிலையில் மக்காவில் ஒரு மனிதர் (புதிய) செய்திகளைச் சொல்லிவருவதாகக் கேள்விப்பட்டேன். எனவே, நான் எனது வாகனத்தில் அமர்ந்து அவரை நோக்கிச் சென்றேன். அங்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தலைமறைவாக இருந்துகொண்டிருந்தார்கள். அவர்களுடைய சமுதாயத்தார் அவர்களுக்கெதிரான துணிகரச் செயல்களில் ஈடுபட்டுக்கொண்டிருந்தனர். எனவே, நான் அரவமின்றி மெதுவாக மக்காவுக்குள் நுழைந்து அவர்களிடம் சென்றேன்.

அவர்களிடம் நான், "நீங்கள் யார்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "நான் ஒரு நபி" என்றார்கள். நான் "நபி என்றால் என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "அல்லாஹ் என்னை (தனது செய்தியுடன்) அனுப்பி உள்ளான்" என்று கூறினார்கள். நான் "என்னென்ன செய்திகளுடன் அனுப்பியுள்ளான்?" என்று கேட்டேன். அதற்கு "இரத்த உறவுகளைப் பேணி வாழ வேண்டும்; சிலை (வழிபாடு)களை ஒழிக்க வேண்டும்; இறைவன் ஒருவனே;அவனுக்கு இணையாக எதுவுமில்லை எனும் செய்திகளுடன் என்னை அனுப்பினான்" என்று பதிலளித்தார்கள். நான் "இந்தக் கொள்கையை ஏற்றுக்கொண்டவர் யார் உங்களுடன் இருக்கின்றார்கள்?" என அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் "ஒரு சுதந்திரவானும் ஓர் அடிமையும் உள்ளனர்" என்றார்கள். (அன்றைய நாளில் அபூபக்ர் (ரலி) அவர்களும் பிலால் (ரலி) அவர்களும் நபியவர்களை ஏற்று அவர்களுடன் இருந்தனர்).
"நானும் தங்களைப் பின்பற்ற விழைகிறேன்" என்று நான் கூறினேன். அதற்கவர்கள் "இந்த நாளில் அவ்வாறு உம்மால் என்னைப் பின்பற்ற இயலாது. எனது நிலையையும் மக்களின் நிலையையும் நீர் பார்க்கவில்லையா? (தற்போது) நீர் உம்முடைய குடும்பத்தாரிடம் திரும்பிச் செல்லும்! நான் எழுச்சி கண்டேன் என என்னைப் பற்றி நீர் கேள்விப்பட்டால் என்னிடம் வாரும்!"என்றார்கள். அதற்கேற்ப நான் என் குடும்பத்தாரிடம் சென்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நாடு துறந்து) மதீனாவுக்குச் சென்றுவிட்டார்கள். நான் என் குடும்பத்தாரிடம் இருந்துகொண்டே செய்திகளைக் கேட்டு அறிந்து கொண்டிருந்தேன். அவர்கள் மதீனாவுக்குச் சென்றவுடன் மக்களிடம் அவர்களைப் பற்றி விசாரித்தேன். ஒரு சமயம் யஸ்ரிப் (மதீனா)வாசிகளில் சிலர் என்னிடம் வந்தனர். அவர்களிடம் "மதீனாவிற்கு வந்துள்ள இந்த மனிதர் என்ன செய்துகொண்டிருக்கிறார்" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "மக்கள் அவரை நோக்கி விரைந்துகொண்டிருக்கின்றனர். (மக்காவில்) அவருடைய சமுதாயத்தார் அவரைக் கொன்றுவிடத் திட்டமிட்டனர். ஆனால், அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை" என்று கூறினர்.

பின்னர் நான் மதீனாவுக்குச் சென்று நபியவர்களைச் சந்தித்தேன். அப்போது, "அல்லாஹ்வின் தூதரே! தங்களுக்கு என்னை அடையாளம் தெரிகிறதா?" என்று கேட்டேன். அவர்கள் "ஆம், மக்காவில் என்னை வந்து சந்தித்தவர்தாமே!" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். பிறகு "அல்லாஹ் உங்களுக்குக் கற்றுத்தந்துள்ள, எனக்குத் தெரியாத விஷயங்களைப் பற்றி எனக்குச் சொல்லுங்கள். தொழுகையைப் பற்றி எனக்குச் சொல்லுங்கள்!" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "சுப்ஹுத் தொழுகையைத் தொழுங்கள். பிறகு சூரியன் உதயமாகி உயரும்வரை தொழுவதை நிறுத்திக்கொள்ளுங்கள். ஏனெனில், அது உதயமாகும் போது ஷைத்தானின் இரு கொம்புகளுக்கிடையே உதயமாகிறது. அப்போதுதான் அதற்கு இறைமறுப்பாளர்கள் சிரவணக்கம் செய்கின்றனர். பிறகு தொழுங்கள்! அந்த நேரத்தில் தொழும் தொழுகை (வானவர்களால்) சாட்சியமளிக்கப்படக்கூடியதும் (வானவர்கள்) வருகை தரக்கூடியதுமாகும். ஈட்டியின் நிழல் கிழக்கிலோ மேற்கிலோ சாயாமல் அதன்மீதே விழும் (நண்பகல் நேரம்)வரைத் தொழுங்கள்! பிறகு தொழுவதை நிறுத்திக்கொள்ளுங்கள். ஏனெனில், அப்போது நரகம் எரிக்கப்படுகிறது. பிறகு நிழல் (கிழக்கே) சாய்ந்துவிட்டால் தொழுது கொள்ளுங்கள். அந்நேரத்தொழுகைக்கு (வானவர்களால்) சாட்சியமளிக்கப்படுகிறது. அவர்கள் அதில் பங்கேற்கின்றனர். பிறகு அஸ்ர்வரைத் தொழுதுகொள்க. பிறகு சூரியன்

மறையும்வரைத் தொழுவதை நிறுத்திவிடுக! ஏனெனில், அது ஷைத்தானின் இரு கொம்புகளுக்கிடையேதான் மறைகிறது. இந்த நேரத்தில் அதற்கு இறைமறுப்பாளர்கள் சிரவணக்கம் செய்கின்றனர்" என்று கூறினார்கள்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! அங்கத் தூய்மை (உளூ) செய்வது பற்றி எனக்குச் சொல்லுங்கள்!" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "உங்களில் ஒருவர் அங்கத் தூய்மை செய்வதற்குத் தண்ணீரை நெருங்கி வாய் கொப்புளித்து (மூக்கிற்கு நீர் செலுத்தி) மூக்குச் சிந்தினால் அவரது முகம், வாய் ,மூக்கு ஆகியவற்றால் ஏற்பட்ட பாவங்கள் அனைத்தும் (தண்ணீரோடு சேர்ந்து கீழே) விழுந்துவிடுகின்றன. பிறகு அவர் அல்லாஹ் உத்தரவிட்டதைப் போன்று தமது முகத்தைக் கழுவினால் அவரது முகத்தால் ஏற்பட்ட பாவங்கள் அனைத்தும் அவரது தாடி ஓரங்களிலிருந்து தண்ணீரோடு சேர்ந்து விழுந்துவிடுகின்றன. பிறகு அவர் மூட்டுவரை இரு கைகளைக் கழுவும்போது அவருடைய கைகளின் பாவங்கள் அனைத்தும் அவரது விரல் நுனிகளிலிருந்து தண்ணீரோடு சேர்ந்து விழுந்துவிடுகின்றன. பிறகு அவர் ஈரக் கையால் தலையைத் தடவி (மஸ்ஹுச் செய்தி)டும் போது அவரது தலையின் பாவங்கள் அனைத்தும் தலைமுடியின் ஓரங்களிலிருந்து தண்ணீரோடு சேர்ந்து விழுந்துவிடுகின்றன. பிறகு அவர் தம் பாதங்களைக் கணைக்கால்கள்வரைக் கழுவும்போது அவரது கால்களால் ஏற்பட்ட பாவங்கள் அனைத்தும் அவரது விரல் நுனிகளிலிருந்து தண்ணீரோடு சேர்ந்து விழுந்துவிடுகின்றன. (அதற்குப் பிறகு) அவர் எழுந்து தொழும்போது அல்லாஹ்வை அவனது தகுதிக்கேற்றதைக் கூறிப் புகழ்ந்து பெருமைப்படுத்தித் தமது உள்ளத்தில் இறைவனுக்கு மட்டுமே இடமளித்தால் அவர் திரும்பிச் செல்கையில் அன்று பிறந்த பாலகனைப் போன்று பாவங்கள் நீங்கி (பரிசுத்தமாகத்) திரும்புகிறார்" என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளரான) நபித்தோழர் அபூஉமாமா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:

இந்த ஹதீஸை அம்ர் பின் அபசா (ரலி) அவர்கள் என்னிடம் கூறியபோது நான், "அம்ர் பின் அபசா! என்ன சொல்கிறீர்கள் என்பதை நன்கு யோசித்துச் சொல்லுங்கள்! ஒரே இடத்தில் (இத்தனையும்) அந்த மனிதர் வழங்கப்பெறுகிறாரா?" என்று கேட்டேன். அதற்கு அம்ர் பின் அபசா (ரலி) அவர்கள், "அபூஉமாமா, என் வயது முதிர்ந்துவிட்டது; எனது எலும்பு நலிந்து விட்டது; எனது தவணை நெருங்கி விட்டது. இந்நிலையில் அல்லாஹ்வின் மீதோ அவன் தூதர்மீதோ பொய்யுரைப்பதற்கு எனக்கு எந்தத் தேவையுமில்லை. நான் இந்த ஹதீஸை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை (இவ்வாறு ஏழுவரை எண்ணிச் சொல்கிறார்) மட்டுமே செவியுற்றிருந்தால் இதை ஒருபோதும் நான் அறிவித்திருக்கமாட்டேன். ஆனால்,அதைவிட அதிகத் தடவைகள் நான் செவியுற்றேன் (அதனால்தான் அறிவித்தேன்)" என்றார்கள்.

## பாடம் : 53 சரியாகச் சூரியன் உதிக்கும் நேரத்தையும் மறையும் நேரத்தையும் தேர்ந்தெடுத்துத் தொழாதீர்!

1513ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

(அஸ்ருக்குப் பிறகு அறவே தொழக் கூடாது எனும் நபிமொழி அறிவிப்பில்) உமர் (ரலி) அவர்கள் தவறாகச் சொல்லிவிட்டார்கள்;அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சூரியன்

உதிக்கும் நேரத்தையும் மறையும் நேரத்தையும் குறிப்பாகத் தேர்ந்தெடுத்துத் தொழப்படுவதையே தடை செய்தார்கள்.

1514ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ருக்குப் பிறகு இரண்டு ரக்அத்கள் (கூடுதலாகத்) தொழுவதை விட்டதேயில்லை. "சரியாகச் சூரியன் உதிக்கும் நேரத்தையும் மறையும் நேரத்தையும் தேர்ந்தெடுத்துத் தொழும் வழக்கத்தை கைக்கொள்ளாதீர்கள்'என்றுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

பாடம் : 54 நபி (ஸல்) அவர்கள் அஸ்ருக்குப் பிறகு தொழுதுவந்த இரண்டு ரக்அத்கள் பற்றிய விளக்கம்.

1515இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அவர்களின் அடிமையான குறைப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி), அப்துர் ரஹ்மான் பின் அஸ்ஹர் (ரலி), மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) ஆகியோர் என்னிடம் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று "எங்கள் அனைவரின் சலாமையும் கூறுவீராக! அஸ்ருக்குப் பின் இரண்டு ரக்அத்கள் தொழுவது பற்றி அம்மையாரிடம் கேட்பீராக! "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைத் தடை செய்ததாக எங்களுக்குச் செய்தி கிடைத்திருக்க, அத்தொழுகையைத் தாங்கள் தொழுவதாகக் கேள்விப்படுகிறோமே!' என்று கேட்பீராக!" என்று கூறினர். (மேலும்) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் தாமும் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களும் (இவ்வாறு அஸ்ருக்குப் பின் தொழுபவர்களை) அடிப்பவர்களாக இருந்ததையும் தெரிவிக்கச் சொன்னார்கள்.

நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று அம்மூவரும் என்னை அனுப்பிவைத்த நோக்கத்தைச் சொன்னேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "நீர் உம்மு சலமா (ரலி) அவர்களிடம் கேளும்!" என்று கூறினார்கள். நான் அம்மூவரிடம் திரும்பிச் சென்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதைச் சொன்னேன். உம்மு சலமா (ரலி) அவர்களிடம் சென்று ஆயிஷா (ரலி) அவர்களிடம் கேட்ட அதே கேள்வியைக் கேட்குமாறு என்னை (மீண்டும்) அம்மூவரும் அனுப்பினார்கள். (நான் உம்மு சலமா (ரலி) அவர்களிடம் வந்து விஷயத்தைக் கூறியபோது) "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அஸ்ருக்குப் பின்) இவ்விரு ரக்அத்களைத் (தொழுவதைத்) தடை செய்ததை நான் கேட்டுள்ளேன். பிறகு அவர்கள் அவ்விரு ரக்அத்கள் தொழுததை நான் பார்த்தேன். (ஒரு நாள்) அவர்கள் அஸ்ர் தொழுதுவிட்டு எனது வீட்டுக்கு வந்து, அவ்விரு ரக்அத்களைத் தொழுதார்கள். அப்போது என்னுடன் அன்சாரிகளில் பனூ ஹராம் குலத்தைச் சேர்ந்த பெண்கள் சிலர் இருந்தனர். அவர்களில் ஓர் அடிமைப் பெண்ணை, தொழுதுகொண்டிருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுப்பி "நீ அவர்களுக்கு அருகில் சென்று "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் இந்த இரண்டு ரக்அத்கள் தொழ வேண்டாம் எனத் தடுத்ததை நான் கேட்டிருக்கிறேன். ஆனால், இப்போது தாங்களே அதைத் தொழுவதை நான் பார்க்கிறேனே' என நான் கேட்டதாக நீ கூறு. அவர்கள் தமது கையால் சைகை செய்தால் நீ பின்வாங்கி (வந்து)விடு!" எனக்

கூறினேன். அப்பெண்ணும் (சொன்னபடி) செய்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கையால் சைகை செய்தபோது அப்பெண்மணி திரும்பி வந்துவிட்டார். தொழுகையை முடித்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அபூஉமைய்யாவின் மகளே! அஸ்ருக்குப் பின்னால் (தொழுத) இரண்டு ரக்அத்களைப் பற்றிக் கேட்டாய். அப்துல் கைஸ் குலத்தாரில் சிலர் தம் குலத்தார் இஸ்லாத்தை ஏற்றுள்ள செய்தியுடன் என்னிடம் வந்திருந்தனர். அதனால் லுஹ்ருக்குப் பின்னால் உள்ள இரண்டு ரக்அத்கள் தொழ முடியவில்லை. அத்தொழுகையே இந்த இரண்டு ரக்அத்களாகும்" என்றார்கள் என உம்மு சலமா (ரலி) அவர்கள் விடையளித்தார்கள்.

1516அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ருக்குப் பின்னால் தொழுதுவந்த இரண்டு ரக்அத்கள் பற்றிக் கேட்டேன். அதற்கவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ருக்கு முன்னால் இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். ஏதேனும் அலுவல் காரணத்தால் தொழ முடியாமற்போகும் போது, அல்லது மறந்துவிடும்போது அவ்விரு ரக்அத்களையும் அஸ்ருக்குப் பின்னால் தொழுவார்கள். பின்னர் அவ்விரு ரக்அத்களையும் நிலையாகத் தொழலானார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு தொழுகையைத் தொழுதால் நிலையாகத் தொழுதுவருவார்கள்" என்று விடையளித்தார்கள்- .இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1517ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் இருந்த நாட்களில் ஒருபோதும் அஸ்ருக்குப் பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுவதை விட்டதேயில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1518ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது வீட்டில் இருக்கும்போது இரண்டு தொழுகைகளை இரகசியமாகவோ பகிரங்கமாகவோ ஒருபோதும் விட்டதில்லை. (அவை:) ஃபஜ்ர் தொழுகைக்கு முன் இரண்டு ரக்அத்கள்; அஸ்ர் தொழுகைக்குப் பின் இரண்டு ரக்அத்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1519ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் தங்கியிருக்கும் நாளில் என் வீட்டில் இரு ரக்அத்கள் –அஸ்ருக்குப் பின் இரண்டு ரக்அத்கள்– தொழாமல் இருந்ததில்லை.
இதை அஸ்வத் (ரஹ்) மற்றும் மஸ்ரூக் (ரஹ்) ஆகியோர் அறுதியிட்டு அறிவிக்கின்றனர்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 55 மஃக்ரிப் தொழுகைக்கு முன் இரண்டு ரக்அத்கள் தொழுவது விரும்பத்தக்கதாகும்.**

1520முக்தார் பின் ஃபுல்ஃபுல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் அஸ்ருக்குப் பின் கூடுதலான தொழுகை தொழுவது பற்றிக் கேட்டேன். அதற்கவர்கள் "அஸ்ருக்குப் பின் (கூடுதலான) தொழுகை தொழுததற்காக உமர் (ரலி) அவர்கள் காலத்தில் (தொழுபவரின்) கையில் அவர்கள் அடிப்பார்கள். நாங்கள் நபி (ஸல்) அவர்களது காலத்தில் சூரியன் மறைந்த பின் மஃக்ரிப் தொழுகைக்கு முன் இரண்டு ரக்அத்கள் தொழுதுவந்தோம்" என்று கூறினார்கள். நான் "அவ்விரு ரக்அத்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுவார்களா?" எனக் கேட்டேன். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள் "நாங்கள் அவ்விரு ரக்அத்களையும் தொழுவதைப் பார்ப்பார்கள். எங்களைத் தொழச் சொல்லவுமில்லை; தொழ வேண்டாம் எனத் தடுக்கவுமில்லை" என விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1521அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் மதீனாவில் இருந்தபோது தொழுகை அறிவிப்பாளர் மஃக்ரிப் தொழுகைக்காக அறிவிப்புச் செய்துவிட்டால் மக்கள் (நபித் தோழர்கள்) தூண்களை நோக்கிச் சென்று (அதன் அருகில் நின்று) தலா இரண்டிரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். வெளியூரிலிருந்து யாரேனும் பள்ளிவாசலுக்கு வந்தால் மிகுதியான பேர் அவ்விரு ரக்அத்கள் தொழுவதைக் கண்டு (மஃக்ரிப்) தொழுகை முடிந்துவிட்டது என எண்ணிவிடுவர்.

**பாடம் : 56 ஒவ்வொரு பாங்கிற்கும் இகாமத்திற்கும் இடையே ஒரு (கூடுதல்) தொழுகை உண்டு.**

1522அப்துல்லாஹ் பின் முஃகஃப்பல் அல்முஸனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(பாங்கு, இகாமத் ஆகிய) இரு தொழுகை அறிவிப்புகள் ஒவ்வொன்றுக்கும் இடையில் ஒரு (கூடுதல்) தொழுகை உண்டு" என (இரண்டு முறை) கூறிவிட்டு, மூன்றாம் முறை "விரும்பியவருக்கு (அதைத் தொழ உரிமை உண்டு)" என்றார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் முஃகஃப்பல் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், நபி (ஸல்) அவர்கள் (மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று மூன்று முறை கூறிவிட்டு) நான்காம் முறை "விரும்பியவருக்கு' என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 57 அச்ச நேரத் தொழுகை.**

1523இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு போர் முனையில் எங்களுக்கு) அச்ச நேரத் தொழுகை தொழுவித்தார்கள். (எங்களில்) இரு அணிகளில் ஓரணியினருக்கு (முதலில்) ஒரு ரக்அத் தொழுவித்தார்கள். (அப்போது) மற்றோர் அணியினர் எதிரிகளுக்கு முன்னால் (நின்று

கொண்டு) இருந்தனர். பிறகு முதல் அணியினர் திரும்பிச் சென்று தம் தோழர்கள் நின்று கொண்டிருந்த இடத்தில் எதிரிகளுக்கு முன்னால் நின்றுகொண்டனர். பிறகு இரண்டாம் அணியினர் (தொழுகைக்கு) வந்தனர். அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் ஒரு ரக்அத் தொழுவித்துவிட்டு சலாம் கொடுத்தார்கள். பின்னர் இந்த அணியினர் (எழுந்து மீதியிருந்த) ஒரு ரக்அத்தை நிறைவேற்றினர். பிறகு முதல் அணியினரும் (வந்து மீதியிருந்த தம்முடைய) ஒரு ரக்அத்தை நிறைவேற்றினர்.

-அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது அச்ச நேரத் தொழுகை பற்றிய இப்னு உமர் (ரலி) அவர்களது மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அச்ச நேரத் தொழுகை தொழுதிருக்கிறேன்" என்று ஹதீஸ் தொடங்குகிறது.

1524இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(போர் நடந்த) ஒரு நாளில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களுக்கு) அச்ச நேரத் தொழுகையைத் தொழுவித்தார்கள். (எங்களில்) ஓர் அணியினர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (தொழுகையில்) நின்றனர். மற்றோர் அணியினர் எதிரிகளுக்கு எதிரே (அணிவகுத்து) நின்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்முடனிருந்த அணியினருக்கு ஒரு ரக்அத் தொழுவித்தார்கள். பிறகு அவர்கள் (எதிரிகளை நோக்கிச்) சென்றுவிட்டனர்.

பிறகு இரண்டாம் அணியினர் வந்தபோது அவர்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ரக்அத் தொழுவித்தார்கள். பிறகு அவர்களில் ஒவ்வொரு அணியினரும் (தனித் தனியே) ஒவ்வொரு ரக்அத்தை நிறைவேற்றிக் கொண்டனர்.

இதைவிடக் கூடுதல் அச்சம் நிலவினால் வாகனத்தில் அமர்ந்துகொண்டோ நின்று கொண்டோ சைகை செய்து தொழுது கொள்ளலாம்.

1525ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அச்ச நேரத் தொழுகையில் நான் பங்கேற்றுள்ளேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களைத் தமக்குப் பின்னால் இரு வரிசைகளில் நிறுத்தினார்கள். அப்போது எதிரிகள் எங்களுக்கும் தொழும் திசை(யான கிப்லாவு)க்குமிடையே இருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் தக்பீர் கூறி (தொழுகையைத் துவக்கி)னார்கள். (இரு வரிசைகளில் நின்றிருந்த) நாங்கள் அனைவரும் தக்பீர் கூறினோம். பின்னர் ருகூஉச் செய்தார்கள். நாங்கள் அனைவரும் ருகூஉச் செய்தோம். பின்னர் ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தினார்கள். நாங்கள் அனைவரும் (தலையை) உயர்த்தினோம். பிறகு நபி (ஸல்) அவர்களும் அவர்களுக்கு அருகில் (முதல் வரிசையில்) நின்றவர்களும் குனிந்து சஜ்தாச் செய்தனர். அப்போது இரண்டாவது வரிசையிலிருந்தவர்கள் (அப்படியே) எதிரிகளுக்கு நேராக (அவர்களைக் கண்காணித்தவாறு) நின்றுகொண்டேயிருந்தனர். நபி (ஸல்) அவர்கள் சஜ்தாவை நிறைவேற்றி, முதல் வரிசையிலிருந்தவர்கள் (சஜ்தாச் செய்து) எழுந்து நின்றதும் இரண்டாவது வரிசையிலிருந்தவர்கள் குனிந்து சஜ்தாச் செய்தனர். பிறகு எழுந்தனர்.

பிறகு இரண்டாவது வரிசையிலிருந்தவர்கள் முன்னே (முதல் வரிசைக்கு) வந்தனர். முன் வரிசையிலிருந்தவர்கள் பின்னால் (இரண்டாம் வரிசைக்கு) வந்துவிட்டனர். பிறகு நபி (ஸல்) அவர்கள் ருகூஉச் செய்தபோது (இரு வரிசைகளில் நின்றிருந்த) நாங்கள் அனைவரும் ருகூஉச் செய்தோம். பிறகு நபி (ஸல்) அவர்கள் ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தியபோது (இரு வரிசைகளிலிருந்த) நாங்கள் அனைவரும் தலையை உயர்த்தினோம். பிறகு நபி (ஸல்) அவர்கள் குனிந்து சஜ்தாச் செய்தார்கள். முதல் ரக்அத் நடைபெற்றபோது பின் வரிசையிலிருந்தவர்களும் இப்போது நபியவர்களுக்கு அருகில் இருப்பவர்களுமான (முதல்) அணியினர் சஜ்தாச் செய்தார்கள். பின்வரிசையிலிருந்தவர்கள் (சஜ்தாச் செய்யாமல்) எதிரிகளுக்கு நேராக (அவர்களைக் கண்காணித்தவாறு) நின்று கொண்டனர். நபி (ஸல்) அவர்களும் முதல் வரிசையிலிருந்தவர்களும் சஜ்தாச் செய்து முடித்ததும் பின்வரிசையில் நின்றுகொண்டி ருந்தவர்களும் குனிந்து சஜ்தாச் செய்தனர்.
நபி (ஸல்) அவர்கள் சலாம் கொடுத்தபோது நாங்கள் அனைவரும் சலாம் கொடுத்தோம். (இன்றைக்கு எவ்வாறு) உங்கள் படைவீரர்கள் தங்கள் தலைவர்களுடன் சேர்ந்து (போர்க் களங்களில்) தொழுகின்றனரோ அதைப் போன்றுதான் (நாங்களும் செய்தோம்).

1526ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சேர்ந்து ஜுஹைனா குலத்தைச் சேர்ந்த ஒரு கூட்டத்தாருடன் போரிடப் புறப்பட்டோம். அவர்கள் எங்களிடம் கடுமையாகப் போரிட்டனர். நாங்கள் லுஹ்ர் தொழுகையில் ஈடுபட்டிருந்தபோது (எங்களை நோட்டமிட்ட) இணைவைப்பாளர்கள் "(முஸ்லிம்கள் தொழுகையில் ஈடுபடும்போது) அவர்கள்மீது நாம் அதிரடித் தாக்குதல் தொடுத்தால் அவர்களை நாம் பூண்டோடு ஒழித்துவிடலாம்" என்று பேசிக் கொண்டனர். இந்த விவரத்தை (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்தார்கள். அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் கூறினார்கள். மேலும், "அவர்கள் ஒரு தொழுகையை எதிர்நோக்கியுள்ளனர். அது அவர்களுக்கு (தங்கள்) குழந்தை குட்டிகளைவிட மிக விருப்பமானதாகும்" என்று இணைவைப்பாளர்கள் கூறுகின்றனர் என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அஸ்ர் தொழுகையின் நேரம் வந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களை இரு வரிசைகளில் அணிவகுக்கச் செய்தார்கள். இணைவைப்பாளர்கள் எங்களுக்கும் தொழும் திசை(யான கிப்லாவு)க்குமிடையே இருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முதல் தக்பீர் கூறி (தொழுகையைத் துவக்கி)னார்கள். நாங்களும் தக்பீர் கூறினோம். அவர்கள் ருகூஉச் செய்தார்கள். நாங்களும் ருகூஉச் செய்தோம். பிறகு அவர்கள் சஜ்தாச் செய்தபோது முதல் வரிசையிலிருந்தவர்கள் சஜ்தாச் செய்தனர். முதல் வரிசையிலிருந்தவர்கள் (சஜ்தாவிலிருந்து) எழுந்து நின்றதும் இரண்டாவது வரிசையிலிருந்தவர்கள் சஜ்தாச் செய்தனர்.

பிறகு முதல் வரிசையிலிருந்தவர்கள் பின்வரிசைக்குச் சென்றுவிட, இரண்டாம் வரிசையிலிருந்தவர்கள் முன் வரிசைக்கு வந்து அவர்களது இடத்தில் நின்றனர். (இரண்டாவது ரக்அத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தக்பீர் கூற நாங்கள் (அனைவரும்) தக்பீர் கூறினோம். அவர்கள் ருகூஉச் செய்தபோது நாங்களும் ருகூஉச்

செய்தோம். பிறகு அவர்கள் சஜ்தாச் செய்தபோது முதல் வரிசையிலிருந்தவர்களும் சஜ்தாச் செய்தனர். அப்போது இரண்டாவது வரிசையினர் நின்றுகொண்டனர். பின்னர் அவர்களும் சஜ்தாச் செய்த பின்னர் அனைவரும் அமர்ந்தோம். பின்னர் அனைவருடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சலாம் கொடுத்தார்கள்.
இதன் அறிவிப்பாளரான அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
பிறகு ஜாபிர் (ரலி) அவர்கள் "இன்றைய தலைவர்கள் உங்களுக்குத் தொழுவிப்பதைப் போன்றே (அன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுவித்தார்கள்)" என்று குறிப்பிட்டுச் சொன்னார்கள்.

1527சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்கு அச்ச நேரத் தொழுகையைத் தொழுவித்தபோது அவர்களை இரு வரிசைகளில் தமக்குப் பின்னால் அணிவகுக்கச் செய்தார்கள்; தம்மை அடுத்து (முதல் வரிசையில்) இருந்தவர்களுக்கு ஒரு ரக்அத் தொழுவித்தார்கள். பிறகு எழுந்து நின்று கொண்டார்கள். பின்வரிசையில் நின்றவர்கள் ஒரு ரக்அத் தொழும்வரை அவ்வாறே நின்று கொண்டிருந்தார்கள். பிறகு பின்வரிசையில் இருந்தவர்கள் முன்வரிசைக்கு வந்தனர். முன்வரிசையிலிருந்தவர்கள் பின்வரிசைக்குச் சென்றுவிட்டனர். அப்போது முன்வரிசைக்காரர்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ரக்அத் தொழுவித்தார்கள். பிறகு பின்வரிசைக்குச் சென்றவர்கள் ஒரு ரக்அத் தொழும்வரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இரண்டாவது ரக்அத்தின் சஜ்தாவை முடித்த பின்) இருப்பில் அமர்ந்திருந்தார்கள். பிறகு சலாம் கொடுத்(துத் தொழுகையை முடித்)தார்கள்.
இதை சாலிஹ் பின் கவ்வாத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1528அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "தாத்துர் ரிகாஉ' போரின்போது அச்ச நேரத் தொழுகை தொழுத (நபித்தோழர்களில்) ஒருவர் கூறியதாவது:
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்போரின்போது அச்ச நேரத் தொழுகையைத் தொழுவித்தார்கள். எங்களில்) ஓர் அணியினர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழுகையில் அணி வகுத்தனர். மற்றோர் அணியினர் எதிரிகளுக்கு எதிரே அணிவகுத்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்முடன் இருப்பவர்களுக்கு ஒரு ரக்அத் தொழுவித்துவிட்டு அப்படியே நின்றுகொண்டார்கள். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு ரக்அத் தொழுத) அந்த அணியினர் தங்களுக்கு (மீதியிருந்த இன்னொரு ரக்அத்தைத் தனியாகப்) பூர்த்தி செய்துகொண்டு திரும்பிச் சென்று எதிரிகளுக்கு எதிரே அணிவகுத்து நின்றுகொண்டார்கள். பிறகு (அதுவரை எதிரிகளுக்கு எதிரே நின்று கொண்டிருந்த) மற்றோர் அணியினர் வந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம்முடைய தொழுகையில்) மீதியிருந்த ஒரு ரக்அத்தை இவர்களுக்குத் தொழுவித்துவிட்டு (அப்படியே) அமர்ந்துகொண்டிருந்தார்கள். (இரண்டாவது அணியினர்) தங்களுக்கு (மீதியிருந்த ஒரு ரக்அத்தைத் தனியாகப்) பூர்த்தி செய்துகொண்டனர். பிறகு அவர்களுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சலாம் கொடுத்தார்கள்.
இதை சாலிஹ் பின் கவ்வாத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1529ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டுச் சென்றோம். "தாத்துர் ரிகாஉ' என்னுமிடத்தில் (போரை முடித்து) நாங்கள் இருந்தபோது நிழல் நிறைந்த ஒரு மரத்தினருகே வந்தோம்.
நாங்கள் அந்த மரத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களு(டைய மதிய ஓய்வு)க்காக விட்டுவிட்டோம். அப்போது இணைவைப்பாளர்களில் ஒருவர் வந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வாள் அந்த மரத்தில் தொங்கவிடப்பட்டிருந்தது. உடனே அவர் அந்த வாளை எடுத்து (உறையிலிருந்து) உருவிப் பிடித்துக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "எனக்கு நீர் அஞ்சுகிறீரா?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சிறிதும் அஞ்சாமல்) "இல்லை" என்று பதிலளித்தார்கள். அவர் "இப்போது என்னிடமிருந்து உம்மைக் காப்பவர் யார்?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்லாஹ் உன்னிடமிருந்து என்னைக் காப்பான்" என்று பதிலளித்தார்கள். அப்போது நபித்தோழர்கள் அவரைக் கண்டித்தார்கள். உடனே அவர் வாளை உறையிலிட்டு (பழையபடி மரத்தில்) தொங்கவிட்டுவிட்டார்.
பிறகு தொழுகைக்கு அழைப்புவிடப்பட்டது. அப்போது (தம் தோழர்களில்) ஓர் அணியினருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்கள் (அச்ச நேரத் தொழுகை) தொழுவித்தார்கள். பிறகு இவ்வணியினர் பின்னால் விலகிக்கொள்ளவே, (எதிரிகளைக் கண்காணித்துக்கொண்டிருந்த) மற்றோர் அணியினருக்கு இரண்டு ரக்அத்கள் தொழுவித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு நான்கு ரக்அத்களும், மக்களுக்கு இரண்டு ரக்அத்களும் ஆயின.

1530ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அச்ச நேரத் தொழுகையைத் தொழுதிருக்கிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம்முடனிருந்த தோழர்களில்) ஓர் அணியினருக்கு இரண்டு ரக்அத்கள் தொழுவித்தார்கள். பிறகு மற்றோர் அணியினருக்கு இரண்டு ரக்அத்கள் தொழுவித்தார்கள். அதாவது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நான்கு ரக்அத்கள் தொழுதார்கள்; (தம்முடனிருந்த) ஒவ்வோர் அணியினருக்கும் (தலா) இரண்டு ரக்அத்கள் தொழுவித்தார்கள்.

1531 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் ஜுமுஆவிற்கு (வெள்ளிக்கிழமை சிறப்புத் தொழுகைக்கு)ச் செல்ல விரும்பினால் குளித்துக்கொள்ளட்டும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1532 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவுமேடை (மிம்பர்)மீது நின்றபடி "உங்களில் யார் ஜுமுஆவு(டைய தொழுகை)க்கு வருகிறாரோ அவர் குளித்துக் கொள்ளட்டும்" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1533 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் வெள்ளிக்கிழமை (பள்ளிவாசலில்) மக்களுக்கு உரையாற்றிக்கொண்டிருந்தபோது, நபித் தோழர்களில் ஒருவர் வந்தார். அவரை உமர் (ரலி) அவர்கள் அழைத்து "இது எந்த நேரம்? (ஏன் தாமதம்?)" என்று கேட்டார்கள். அதற்கு அவர் "நான் அலுவலில் மூழ்கிவிட்டேன். தொழுகை அறிவிப்பைக் கேட்ட பிறகுதான் நான் வீட்டிற்கே திரும்பினேன். உடனே அங்கத் தூய்மை (உளூ) மட்டும் செய்துவிட்டு நான் (விரைந்து) வருகிறேன்" என்று கூறினார். அதற்கு உமர் (ரலி) அவர்கள் "வெறும் உளூ மட்டும்தானா? (குளிக்கவில்லையா?) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஜுமுஆவிற்காக) குளிக்குமாறு கட்டளையிட்டுவந்ததை நீங்கள் நன்கு அறிவீர்களே!" என்று கேட்டார்கள்.

1534 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் வெள்ளிக்கிழமை (ஜுமுஆ) தினத்தில் மக்களுக்கு உரையாற்றிக்கொண்டிருந்தபோது,உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் (பள்ளிக்குத் தாமதமாக) வந்தார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள் "சிலருக்கு என்ன நேர்ந்தது? அவர்கள் தொழுகை அறிவிப்புச் செய்யப்பட்ட பின் தாமதமாக வருகின்றனர்!" என உஸ்மான் (ரலி) அவர்களைக் குறிப்பிட்டுச் சாடையாகக் கேட்டார்கள். அதற்கு உஸ்மான் (ரலி) அவர்கள், "இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! தொழுகை அறிவிப்பைக் கேட்டவுடன் அங்கத்தூய்மை ("உளூ') மட்டும் செய்துவிட்டுப் புறப்பட்டுவிட்டேன்" என்று கூறினார்கள். அதற்கு உமர் (ரலி) அவர்கள், "வெறும் "உளூ' மட்டும்தானா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்களில் ஒருவர் ஜுமுஆவுக்குச் செல்லும்போது குளித்துக்கொள்ளட்டும்' எனக் கூறியதை நீங்கள் செவியுறவில்லையா?" என்று கேட்டார்கள்

# அத்தியாயம் : 08 - ஜும்ஆ

## பாடம் : 1 வெள்ளிக்கிழமை குளிப்பது பருவமடைந்த ஒவ்வோர் ஆண்மீதும் கடமையாகும் என்பதும், அது தொடர்பாக வந்துள்ள கட்டளையின் விவரமும்.

1535 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர் கள் கூறினார்கள்:
வெள்ளிக்கிழமை குளிப்பது பருவமடைந்த ஒவ்வொருவர் மீதும் கடமையாகும்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1536 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் வெள்ளிக்கிழமை அன்று (மதீனாவைச் சுற்றியுள்ள) மேட்டுப்புறக் கிராமங்களிலிருந்த தங்கள் குடியிருப்புகளிலிருந்து முறைவைத்து (தொழுகைக்கு) வந்துகொண்டிருந்தனர். அப்போது அவர்கள் நீளங்கி அணிந்து வருவர். அவர்கள்மீது புழுதி படிந்து அவர்களின் உடலிலிருந்து (வியர்வையின்) துர்வாடை வரும். (இந்த நிலையில்) அவர்களில் ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் இருந்தபோது வந்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இன்றைய நாளுக்காக நீங்கள் தூய்மையுடன் இருக்கக் கூடாதா?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களது காலத்தில்) மக்கள் உழைப்பாளிகளாக இருந்தனர். அவர்களிடம் (அவர்களின் பணிகளைக் கவனிக்க) வேலை யாட்கள் இருக்கவில்லை. எனவே, அவர்கள் மீது (வியர்வையின்) துர்வாடை வீசும். இதனால்தான், "நீங்கள் வெள்ளிக்கிழமை குளித்தால் என்ன?" என்று அவர்களிடம் கூறப்பட்டது.

## பாடம் : 2 ஜுமுஆ நாளில் நறுமணம் பூசுதலும் பல் துலக்கலும்.

1537 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெள்ளிக்கிழமை அன்று குளிப்பது பருவ மடைந்த ஒவ்வொருவர்மீதும் கடமையாகும்; இன்னும் பல்துலக்குவதும்தான். மேலும்,கிடைக்கின்ற நறுமணத்தைப் பூசிக்கொள்ள வேண்டும்.– இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் புகைர் பின் அல்அஷஜ்ஜு (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பெண்களின் நறுமணப் பொருளாக இருந்தாலும் சரியே"என்று இடம்பெற்றுள்ளது.

1538 தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் வெள்ளிக்கிழமைக் குளியல் பற்றிய நபிமொழியை அறிவித்த போது, அவர்களிடம் நான் "ஒருவர் (தம்மிடம் இல்லாவிட்டால்) தம் வீட்டாரிடம் இருக்கும் நறுமணத்தையோ எண்ணெயையோ பூசிக் கொள்ள வேண்டுமா?" என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இது பற்றி எனக்குத் தெரியாது" என்று பதிலளித்தார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1539 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஏழு நாட்களுக்கு ஒரு முறை (வெள்ளிக்கிழமை அன்று) தம் தலையையும் மேனியையும் கழுவிக் குளிப்பது, ஒவ்வொரு முஸ்லிமும் அல்லாஹ்விற்காகச் செய்ய வேண்டிய கடமையாகும்.- இதை அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.

1540 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பெருந்துடக்கிற்காகக் குளிப்பதைப் போன்று வெள்ளியன்று குளித்துவிட்டு (நேரத்தோடு பள்ளிவாசலுக்கு)ச் செல்பவர், ஓர் ஒட்டகத்தைக் குர்பானி கொடுத்தவர் போன்றவர் ஆவார். (அதற்கடுத்த) இரண்டாம் நேரத்தில் செல்பவர் ஒரு மாட்டைக் குர்பானி கொடுத்தவர் போன்றவர் ஆவார். மூன்றாம் நேரத்தில் செல்பவர் கொம்புள்ள ஆட்டைக் குர்பானி கொடுத்தவர் போன்றவர் ஆவார். நான்காம் நேரத்தில் செல்பவர் ஒரு கோழியைக் குர்பானி செய்தவர் போன்றவர் ஆவார். ஐந்தாம் நேரத்தில் செல்பவர் முட்டையைத் தர்மம் செய்தவர் போன்றவர் ஆவார். இமாம் (தமது அறையிலிருந்து) வெளியேறி (பள்ளிவாசலுக்குள் வந்து)விட்டால், (பெயர்களைப் பதிவு செய்யும்) வானவர்களும் இமாமின் சொற்பொழிவைச் செவியுற (உள்ளே) வந்துவிடுகின்றனர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 3 வெள்ளிக்கிழமை சொற்பொழிவின் போது மௌனமாக இரு(ந்து காது தாழ்)த்தல்.

1541 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெள்ளிக்கிழமை அன்று இமாம் உரையாற்றிக் கொண்டிருக்கும்போது, உன் அருகில் இருப்பவரிடம் நீ "மௌனமாக இரு' என்று கூறினாலும் நீ வீண்பேச்சு பேசியவனாவாய்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1542 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெள்ளியன்று இமாம் உரை நிகழ்த்திக் கொண்டிருக்கும்போது, உன் அருகிலிருப்பவரிடம் நீ "மௌனமாக இரு' என்று கூறினாலும் நீ வீண்பேச்சு பேசியவனாவாய்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபுஸ்ஸினாத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
("நீ வீண்பேச்சு பேசியவனாவாய்' என்பதைக் குறிக்க மூலத்தில்) "ஃபகத் லஃகீத்த' எனும் வாக்கியம் ஆளப்பட்டுள்ளது. இது அபூஹுரைரா (ரலி) அவர்களின் மொழிவழக்கு ஆகும். அது "ஃபகத் லஃகவ்த்த' என்றே இருக்க வேண்டும்.

**பாடம் : 4 வெள்ளியன்று (வேண்டுதல் ஏற்கப்படுவதற்கு) உள்ள நேரம்.**

1543 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை பற்றிக் குறிப்பிடுகையில் "அதில் ஒரு நேரம் இருக்கிறது. சரியாக அந்த நேரத்தில் ஒரு முஸ்லிம் அடியார் தொழுகையில் ஈடுபட்டு, அல்லாஹ்விடம் எதைக் கோரினாலும் அதை அவருக்கு அல்லாஹ் வழங்காமல் இருப்பதில்லை.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் குதைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அது மிகக் குறைந்த நேரம் என்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கையால் சைகை செய்து உணர்த்தினார்கள்" என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

1544 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபுல்காசிம் (நபி-ஸல்) அவர்கள், "வெள்ளியன்று ஒரு நேரம் உண்டு. சரியாக அந்த நேரத்தில் ஒரு முஸ்லிம் தொழுகையில் நின்று ஏதேனும் நன்மையைக் கேட்டால், அதை அவருக்கு அல்லாஹ் கொடுக்காமல் இருப்பதில்லை" என்று கூறினார்கள். அந்த நேரம் மிகவும் குறைவான நேரம் என்பதைத் தமது கையால் சைகை செய்து காட்டினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1545 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெள்ளியன்று ஒரு நேரம் உண்டு. சரியாக அந்த நேரத்தில் ஒரு முஸ்லிம் அல்லாஹ்விடம் ஏதேனும் நன்மையைக் கோரினால், அதை அவருக்கு அல்லாஹ் கொடுக்காமல் இருப்பதில்லை. அது (மிகவும்) குறைவான நேரமாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அது (மிகவும்) குறைவான நேரமாகும்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1546 அபூபுர்தா பின் அபீமூசா அல் அஷ்அரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "வெள்ளிக்கிழமையில் உள்ள அந்த (அரிய) நேரம் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக உம் தந்தையார் அறிவித்த ஹதீஸை நீர் செவியுற்றீரா?" என்று கேட்டார்கள். நான் கூறினேன்: ஆம்; என் தந்தை பின்வருமாறு அறிவித்ததை நான் செவியுற்றேன்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அது, இமாம் (சொற்பொழிவு மேடையில்) அமர்வதற்கும் தொழுகை முடிவதற்கும் இடையே உள்ள ஒரு நேரமாகும்.- இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 5 வெள்ளிக்கிழமையின் சிறப்பு.**

1547 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சூரியன் உதிக்கும் நாட்களில் வெள்ளிக்கிழமையே மிகவும் சிறந்த நாளாகும். அன்று தான் (முதல் மனிதர்) ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்டார்கள். அன்றுதான் சொர்க்கத்திற்குள் அவர்கள் அனுப்பப்பட்டார்கள். அன்றுதான் அவர்கள் அங்கிருந்து வெளியேற்றப்பட்டார்கள்.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1548 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சூரியன் உதிக்கும் நாட்களில் வெள்ளிக்கிழமையே மிகவும் சிறந்த நாளாகும். அன்று தான் ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்டார்கள்; அன்றுதான் சொர்க்கத்திற்குள் அனுப்பப் பட்டார்கள்; அன்றுதான் அங்கிருந்து வெளியேற்றப்பட்டார்கள். அன்றுதான் யுக முடிவு நிகழும்.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 6 வெள்ளிக்கிழமைதான் (வார வழிபாட்டு நாள்) என இந்தச் சமுதாயத்திற்கு அறிவிக்கப் பெற்றது.**

1549 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நாம்தாம் (காலத்தால்) பிந்தியவர்களாகவும் மறுமை நாளில் (தகுதியால்) முந்தியவர்களாகவும் இருப்போம். எனினும், (நமக்கு முன்வந்த) ஒவ்வொரு சமுதாயத்தாரும் (யூத மற்றும் கிறித்தவர்) நமக்கு முன்பே வேதம் வழங்கப்பெற்றனர். அவர்களுக்குப் பின்புதான் நாம் வேதம் வழங்கப்பெற்றோம். அல்லாஹ் நம்மீது விதியாக்கியுள்ள இந்த (வெள்ளிக்கிழமை) நாளை அல்லாஹ் நமக்காக(த் தேர்ந்தெடுத்து) அறிவித்தான். (வார வழிபாட்டு நாள் தொடர்பாக) மக்கள் நம்மைப் பின்தொடர்பவர்களாகவே உள்ளனர். (வெள்ளிக்கிழமை நமது வழிபாட்டு நாள் எனில்) அடுத்த நாள் (சனிக்கிழமை) யூதர்களின் (வழிபாட்டு) நாளாகும். அதற்கடுத்த நாள் (ஞாயிற்றுக் கிழமை) கிறித்தவர்களின் (வழிபாட்டு) நாளாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றிலும் "நாம் (காலத்தால்) பிந்தியவர்களாவோம்; மறுமை நாளில் (தகுதியால்) முந்தியவர்களாவோம்" என்றே ஹதீஸ் தொடங்குகிறது.

1550 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நாமே (காலத்தால்) பிந்தியவர்களாகவும் மறுமை நாளில் (தகுதியால்) முந்தியவர்களாகவும் இருப்போம். நாமே சொர்க்கத்தில் முதலில் நுழைவோம். எனினும், (யூதர் மற்றும் கிறித்தவரான) அவர்கள் நமக்கு முன்பே வேதம் வழங்கப்பெற்றனர். அவர்களுக்குப் பின்புதான் நாம் வேதம் வழங்கப்பெற்றோம். அவர்கள் கருத்து வேறுபாடு கொண்ட விஷயத்தில் அல்லாஹ் நமக்குச் சத்தியத்திற்கு வழிகாட்டினான். இந்த (ஜுமுஆ) நாள் விஷயத்திலும் (அதை வார வழிபாட்டு நாளாக ஏற்பது தொடர்பாக) அவர்கள் கருத்து

வேறுபாடு கொண்டனர். அல்லாஹ் நமக்கு அந்த நாளை அறிவித்துத் தந்தான். (இதில் மக்கள் அனைவரும் நம்மைப் பின்தொடரக்கூடியவர்களே ஆவர்.) இன்று (வெள்ளிக்கிழமை) நமக்குரிய (வழிபாட்டு) நாளாகும். நாளை (சனிக்கிழமை) யூதர்களுக்குரிய நாளாகும். மறுநாள் (ஞாயிற்றுக்கிழமை) கிறித்தவர்களுக்குரிய நாளாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1551 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் இந்த ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நாமே (காலத்தால்) பிந்தியவர்களாகவும் மறுமை நாளில் (தகுதியால்) முந்தியவர்களாகவும் இருப்போம். எனினும், (யூதர் மற்றும் கிறித்தவரான) அவர்கள் நமக்கு முன்பே வேதம் வழங்கப்பெற்றனர். அவர்களுக்குப் பின்பே நமக்கு வேதம் வழங்கப்பெற்றது. இந்த (வெள்ளி)க்கிழமைதான் அவர்களுக்கும் (வார வழிபாட்டு) நாளாக கடமையாக்கப்பட்டிருந்தது. ஆனால், அவர்கள் இ(ந்த நாளைத் தமது வார வழிபாட்டு நாளாக ஏற்றுக்கொள்வ)தில் கருத்து வேறுபாடு கொண்டனர். ஆகவே, அல்லாஹ் நமக்கு அந்த நாளை அறிவித்தான். இதில் அவர்கள் (அனைவரும்) நம்மைப் பின் தொடர்பவர்களே ஆவர். (எவ்வாறெனில், வெள்ளிக்கிழமை நமது வார வழிபாட்டு நாள் என்றால்) யூதர்களுக்கு நாளை (சனிக்கிழமை)யும் கிறித்தவர்களுக்கு மறுநாளும் (ஞாயிற்றுக்கிழமையும் வார வழிபாட்டு நாட்களாகும்).– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1552 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், நமக்கு முந்தைய (யூதர் மற்றும் கிறித்தவ) சமுதாயத்தாரை (வார வழிபாட்டு நாளான) வெள்ளிக்கிழமையிலிருந்து வழிபிறழ விட்டுவிட்டான். எனவே, யூதர்களுக்குச் சனிக்கிழமையும் கிறித்தவர்களுக்கு ஞாயிற்றுக்கிழமையும் (வார வழிபாட்டு நாட்களாக) அமைந்தன. பிறகு அல்லாஹ் நம்மைப் படைத்து நமக்கு வெள்ளிக்கிழமையை அறிவித்தான். (வரிசை முறையில்) வெள்ளி, சனி, ஞாயிறு என அமைந்திருப்பதைப் போன்றே மறுமை நாளிலும் அவர்கள் நம்மைப் பின்தொடர்பவர்களாகவே இருப்பார்கள். உலக மக்களில் நாமே (காலத்தால்) பிந்தியவர்களாக இருக்கிறோம்; மறுமை நாளில் (தகுதியால்) முந்தியவர்களாகவும் படைப்பினங்களில் அனைவருக்கும் முன் தீர்ப்பளிக்கப் படுபவர்களாகவும் இருப்போம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்களும் ஹுதைஃபா (ரலி) அவர்களும் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1553 மேற்கண்ட ஹதீஸ் ஹுதைஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நமக்கு வெள்ளிக்கிழமை (வார வழிபாட்டு நாளாக) அறிவிக்கப்பெற்றது. நமக்கு முன்னிருந்தவர்களை அதிலிருந்து அல்லாஹ் வழி பிறழ விட்டுவிட்டான்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக ஹதீஸ் தொடங்குகிறது.
மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே வேறு வார்த்தைகளில் இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 7 வெள்ளிக்கிழமை (தொழுகைக்கு) நேரத்தோடு செல்வதன் சிறப்பு.

1554 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெள்ளிக்கிழமை வந்துவிட்டால் வானவர்கள் (ஜுமுஆ தொழுகை நடைபெறும்) பள்ளி வாசலின் ஒவ்வொரு நுழைவாயிலிலும் நின்று கொண்டு, முதன்முதலாக உள்ளே நுழைபவரையும் அடுத்தடுத்து உள்ளே நுழைபவரையும் (அவர்கள் யார், யார் என) எழுதிப் பதிவு செய்துகொண்டிருப்பார்கள். இமாம் (மிம்பர்மீது) அமர்ந்துவிட்டால், வானவர்கள் அந்த (பெயர் பதிவு) ஏடுகளைச் சுருட்டிவைத்துவிட்டு வந்து (இமாமின்) உரையைச் செவியுறுகின்றனர். (ஜுமுஆவுக்காக) நேரத்தோடு வருபவரது நிலையானது,ஓர் ஒட்டகத்தைக் குர்பானி கொடுத்தவரது நிலைக்கு ஒப்பானதாகும். அதற்கடுத்து வருபவர் ஒரு மாட்டைக் குர்பானி கொடுத்தவர் போன்றவர் ஆவார். அதற்கடுத்து வருபவர் ஓர் ஆட்டைக் குர்பானி கொடுத்தவர் போன்றவர் ஆவார். அதற்கடுத்து வருபவர் ஒரு கோழியையும், அதற்கடுத்து வருபவர் ஒரு முட்டையையும் தர்மம் செய்தவர் போன்றவர்கள் ஆவர்.– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1555 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(வெள்ளிக்கிழமை வந்துவிட்டால்) பள்ளிவாசலின் ஒவ்வொரு நுழைவாயிலிலும் ஒரு வானவர் நின்றுகொண்டு, முதன்முதலாக நுழைபவரையும் அடுத்து முதலில் நுழைபவரையும் (அவர்கள் யார், யார் என) எழுதிப் பதிவு செய்கிறார்கள்" என்று கூறினார்கள். பிறகு ஜுமுஆவுக்கு வருபவர்களின் நிலையை, இறைச்சி ஒட்டகத்தைக் குர்பானி கொடுத்தவர் போன்றவர் ஆவார் என்பதிலிருந்து முட்டையை தர்மம் செய்தவர் போன்றவர் ஆவார் என்பதுவரை படிப்படியாகக் குறைத்து ஒப்பிட்டுக் கொண்டே போனார்கள். "இமாம் (மிம்பர்மீது) அமர்ந்துவிட்டால் பெயர்ப்பதிவேடுகள் சுருட்டப்பட்டுவிடுகின்றன; வானவர்கள் (இமாமின்) உரையில் பங்கேற்கின்றனர்" என்றும் கூறினார்கள்.

பாடம் : 8 (வெள்ளிக்கிழமை) உரையை மௌனமாகச் செவியேற்பவரின் சிறப்பு.

1556 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் (வெள்ளிக்கிழமை அன்று) குளித்துவிட்டு ஜுமுஆத் தொழுகைக்குச் சென்று, அவரது விதியில் எழுதப்பட்டிருந்த அளவு (கூடுதலாகத்) தொழுதார்; பிறகு இமாம் தமது சொற்பொழிவை (குத்பா) முடிக்கும்வரை வாய்மூடி மௌனமாக உரையைக் கேட்டுவிட்டு, அவருடன் சேர்ந்து தொழுகையை நிறைவேற்றுகிறார். இத்தகையவருக்கு அந்த ஜுமுஆவிலிருந்து அடுத்த ஜுமுஆ வரையும் மேற்கொண்டு மூன்று நாட்கள்வரையும் ஏற்படுகின்ற (சிறு) பாவங்கள் (அனைத்தும்) மன்னிக்கப்படுகின்றன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1557 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(வெள்ளிக்கிழமை) யார் அங்கத் தூய்மை (உளூ) செய்து, அதை செம்மையாகவும் செய்து ஜுமுஆவுக்கு வந்து (இமாமின் உரையை) செவிதாழ்த்தி மௌனமாகக் கேட்கிறாரோ அவருக்கு அந்த ஜுமுஆவிலிருந்து அடுத்த ஜுமுஆவரைக்கும் மேற்கொண்டு மூன்று நாட்களுக்கும் ஏற்படுகின்ற (சிறு) பாவங்கள் (யாவும்) மன்னிக்கப்படுகின்றன. யார் (இமாம் உரை நிகழ்த்தும்போது தரையில் கிடக்கும்) சிறு கற்களைத் தொட்டு (விளை யாடி)க்கொண்டிருக்கிறாரோ அவர் வீணான செயலில் ஈடுபட்டுவிட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 9 சூரியன் (உச்சியிலிருந்து) சாய்கின்ற போது ஜுமுஆத் தொழுவது.

1558 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (ஜுமுஆ) தொழுவோம்; பிறகு திரும்பிச் சென்று நீர் இறைக்கும் எங்கள் ஒட்டகங்களுக்கு ஓய்வளிப்போம்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஹசன் பின் அய்யாஷ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) ஜஅஃபர் பின் முஹம்மத் (ரஹ்) அவர்களிடம் "அது எந்த நேரம்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "சூரியன் உச்சியிலிருந்து சாயும் (நண்பகல்) நேரத்தில்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1559 முஹம்மத் பின் அலீ பின் அல்ஹுசைன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்த நேரத்தில் ஜுமுஆ தொழுவார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஜுமுஆ) தொழுவித்த பிறகு நாங்கள் எங்களுடைய ஒட்டகங்களிடம் சென்று அவற்றுக்கு ஓய்வளிப்போம்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் அப்துல்லாஹ் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "சூரியன் உச்சியிலிருந்து சாயும் (நண்பகல்) நேரத்தில் (ஜுமுஆ தொழுவார்கள்)" என்றும், ஒட்டகங்கள் என்பது "நீர் இறைக்கும் ஒட்டகங்களைக் குறிக்கும்' என்றும் அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

1560 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் 'ஜுமுஆ' தொழுத பிறகுதான் மதிய ஓய்வு மேற்கொள்வோம்; முற்பகல் உணவு உட்கொள்வோம். (அந்த அளவிற்கு நேரத்திலேயே ஜுஆமு தொழுதுவிடுவோம்.)
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அலீ பின் ஹுஜ்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

1561 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சூரியன் உச்சியிலிருந்து சாயும் (நண்பகல்) நேரத்தில் "ஜுமுஆ' தொழுவோம். பிறகு (சுவர்களுக்கு நிழல் படியாததால்) நாங்கள் (ஒதுங்கி நடக்க) நிழல் தேடியவாறே (வீட்டுக்குத்) திரும்புவோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1562 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "ஜுமுஆ' தொழுதுவிட்டு (வீட்டிற்குத்) திரும்புவோம். அப்போது (நண்பகல் நேரமாயிருப்பதால்) நாங்கள் நிழல் பெறும் அளவுக்கு சுவர்களில் நிழல் படிந்திருக்காது.

## பாடம் : 10 (ஜுமுஆ) தொழுகைக்கு முன் (இமாம்) இரு உரைகள் நிகழ்த்துவதும் அவ்விரு உரைகளுக்கு இடையே (அவர்) அமர்வதும்.

1563 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
வெள்ளிக்கிழமை அன்று (முதலில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்று கொண்டு உரை நிகழ்த்துவார்கள். பிறகு உட்கார்ந்துவிட்டு மீண்டும் எழுந்து நிற்பார்கள்; இன்று நீங்கள் செய்வதைப் போன்று.- இதை நா.ஃபிஉ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1564 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ஜுமுஆவின்போது) குர்ஆன் (வசனங்களை) ஓதி, மக்களுக்கு நினைவூட்டி இரு (குத்பா) உரைகள் நிகழ்த்துவார்கள். அவ்விரு உரைகளுக்கிடையே அமர்வார்கள்.- இதை சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1565 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஜுமுஆவின்போது) நின்றவாறே உரையாற்றுவார்கள். பிறகு உட்கார்ந்துவிட்டு (மீண்டும்) எழுந்து நின்றவாறே

உரையாற்றுவார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உட்கார்ந்தவாறே உரை நிகழ்த்துவார்கள் என்று எவரேனும் உன்னிடம் கூறினால் அவர் பொய்யுரைத்துவிட்டார். அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நான் இரண்டாயிரத்துக்கும் அதிகமான தொழுகைகளைத் தொழுதிருக்கிறேன்.
இதை சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 11 "அவர்கள் வியாபாரத்தையோ வேடிக்கையையோ கண்டால் உம்மை (அப்படியே) நிற்கவைத்துவிட்டு அவற்றை நோக்கிச் சென்றுவிடுகின்றனர்'' எனும் (62:11ஆவது) இறைவசனம்.**

1566 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை அன்று நின்றவாறு உரை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது, ஷாம் (சிரியா) நாட்டிலிருந்து ஓர் ஒட்டகக் கூட்டம் (உணவுப் பொருட்களுடன்) வந்தது. உடனே அதை நோக்கி மக்கள் அனைவரும் கலைந்து சென்று விட்டனர்; பன்னிரண்டு பேர் மட்டுமே எஞ்சியிருந்தனர். அப்போதுதான் 'அல்ஜுமுஆ' (62) அத்தியாயத்திலுள்ள "அவர்கள் வியாபாரத்தையோ வேடிக்கையையோ கண்டால் உம்மை நிற்க வைத்துவிட்டு, அவற்றை நோக்கிச் சென்றுவிடுகின்றனர்" எனும் இந்த (11ஆவது) வசனம் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உரை நிகழ்த்திக்கொண்டிருந்தார்கள்' என்பது மட்டுமே இடம்பெற்றுள்ளது. 'நின்றவாறு' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1567 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு) வெள்ளிக்கிழமை அன்று நபி (ஸல்) அவர்களுடன் இருந்தபோது, (வியாபாரப் பொருட்களுடன்) ஒட்டகக் கூட்டம் ஒன்று வந்தது. உடனே அதை நோக்கி மக்கள் அனைவரும் வெளியேறிச் சென்றுவிட்டனர்; பன்னிரண்டு பேர் மட்டுமே எஞ்சினர். அந்தப் பன்னிருவரில் நானும் ஒருவன் ஆவேன். அப்போதுதான் அல்லாஹ் "அவர்கள் வியாபாரத்தையோ வேடிக்கையையோ கண்டால் உம்மை நிற்கவைத்துவிட்டு அவற்றை நோக்கிச் சென்றுவிடுகின்றனர்..." எனும் (62:11ஆவது) வசனத்தை முழுமையாக அருளினான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1568 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை அன்று நின்றவாறு உரை நிகழ்த்திக்கொண்டிருந்த போது, (ஷாமிலிருந்து) மதீனாவிற்கு ஒட்டகக் கூட்டம் ஒன்று (உணவுப் பொருட்களுடன்) வந்தது. உடனே நபித்தோழர்கள் அனைவரும் அதன் பக்கம் விரைந்தோடினர்; நபியவர்களுடன் பன்னிரண்டு பேர் மட்டுமே எஞ்சியிருந்தனர். அந்தப் பன்னிருவரில் அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோரும் அடங்குவர். அப்போதுதான் "அவர்கள்

வியாபாரத்தையோ வேடிக்கையையோ கண்டால் உம்மை நிற்கவைத்துவிட்டு, அவற்றை நோக்கிச் சென்றுவிடுகின்றனர்" எனும் இந்த (62:11 ஆவது) வசனம் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1569 அபூஉபைதா ஆமிர் பின் அப்தில்லாஹ் பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் (ஜுமுஆ நாளில்) பள்ளிவாசலுக்குள் நுழைந்தபோது, அப்துர் ரஹ்மான் பின் உம்மில் ஹகம் உட்கார்ந்தபடியே (குத்பா) உரை நிகழ்த்திக் கொண்டிருந்தார். உடனே கஅப் (ரலி) அவர்கள் "(இதோ) இந்த மோசமான ஆளைப் பாருங்கள்: உட்கார்ந்துகொண்டு உரை நிகழ்த்துகிறார். உயர்ந்தோன் அல்லாஹ் "அவர்கள் வியாபாரத்தையோ வேடிக்கையையோ கண்டால் உம்மை நிற்கவைத்துவிட்டு அவற்றை நோக்கிச் சென்றுவிடுகின்றனர்' (62:11) என்று கூறுகின்றான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 12 ஜுமுஆத் தொழுகையைக் கைவிடுவதற்கு வந்துள்ள கண்டனம்.

1570 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) மற்றும் அபூஹுரைரா (ரலி) ஆகியோர் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடையின் படிகள்மீது நின்றபடி " மக்கள் ஜுமுஆக்களைக் கைவிடுவதிலிருந்து விலகியிருக்கட்டும்! அல்லது அவர்களின் இதயங்கள்மீது அல்லாஹ் முத்திரை பதித்துவிடுவான்; பிறகு அவர்கள் அலட்சியவாதிகளில் சேர்ந்துவிடுவர்" என்று கூறியதை நாங்கள் கேட்டோம்.
இதை ஹகம் பின் மீனாஉ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 13 (ஜுமுஆ) தொழுகையையும் (குத்பா) உரையையும் சுருக்கமாக அமைத்தல்.

1571 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழுதுவந்தேன். அவர்களது தொழுகையும் உரையும் (நீண்டதாகவும் இல்லாமல் மிகவும் சுருக்கமானதாகவும் இல்லாமல்) நடுத்தரமாகவே அமைந்திருந்தன.
இதை சிமாக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1572 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுடன் பல தொழுகைகளைத் தொழுதிருக்கிறேன். அவர்களது தொழுகையும் உரையும் நடுத்தரமாகவே அமைந்திருந்தன.
இதை சிமாக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1573 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஏதேனும் முக்கிய விஷயம் குறித்து எச்சரிக்கை செய்து) உரை நிகழ்த்தும்போது, அவர்களின் கண்கள் சிவந்துவிடும்; குரல் உயர்ந்துவிடும்;

கோபம் மிகுந்துவிடும். எந்த அளவிற்கென்றால், எதிரிப் படையினர் தாக்குதல் தொடுக்கப் போவது குறித்து "எதிரிகள் காலையில் உங்கள்மீது தாக்குதல் தொடுக்கப்போகின்றனர்; மாலையில் உங்கள்மீது தாக்குதல் தொடுக்கப்போகின்றனர்' என்று கூறி அவர்கள் எச்சரிக்கை விடுப்பவரைப் போன்றிருப்பார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நானும் மறுமை நாளும் இதோ இவ்விரு விரல்களைப் போன்று (நெருக்கமாக) அனுப்பப்பெற்றுள்ளோம்" என்று கூறியவாறு தம்முடைய சுட்டு விரலையும் நடு விரலையும் இணைத்துக் காட்டுவார்கள். மேலும், "அம்மா பஅத் (இறைவாழ்த்துக்குப் பின்!) உரைகளில் சிறந்தது அல்லாஹ்வின் வேதம் (குர்ஆன்) ஆகும். வழிகாட்டலில் சிறந்தது முஹம்மதின் வழிகாட்டலாகும். செயல்களில் தீயவை (மார்க்கத்தின் பெயரால்) புதிதாக உண்டாக்கப் படுபவை ஆகும். (மார்க்கத்தின் பெயரால் புதிதாக உருவாக்கப்படும்) ஒவ்வொரு புதுமையும் வழிகேடு ஆகும்" என்று கூறுவார்கள். பிறகு "ஒவ்வோர் இறை நம்பிக்கையாளருக்கும் அவரது உயிரைவிட நான் நெருக்கமான (உரிமையுடைய)வன் ஆவேன். (ஆகவே,) எவர் (இறக்கும்போது) ஒரு செல்வத்தை விட்டுச்செல்கிறாரோ அது அவருடைய குடும்பத்தாருக்குரியதாகும். எவர் (இறக்கும்போது) ஒரு கடனை அல்லது (தம்மைத் தவிர வேறு திக்கற்ற) மனைவி மக்களை விட்டுச்செல்கின்றாரோ அவர்கள் என்னிடத்தில் வரட்டும். என்மீதே (அவர்களைப் பராமரிப்பதும் அவர்களது கடனை அடைப்பதும்) பொறுப்பாகும்" என்று கூறினார்கள்.

1574 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை உரையில் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்வார்கள். அதைத் தொடர்ந்து தமது குரலை உயர்த்(தி மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று உரை நிகழ்த்)துவார்கள்.

1575 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஜுமுஆவில்) மக்களுக்கு உரை நிகழ்த்தும் போது, அல்லாஹ்வை அவனது தகுதிக்கேற்ற புகழ்மொழிகள் கூறிப் போற்றிப் புகழ்வார்கள். பிறகு "அல்லாஹ் யாரை நேர்வழியில் செலுத்திவிட்டானோ அவரை எவராலும் வழிகெடுக்க முடியாது. அல்லாஹ் யாரை வழிகேட்டில் விட்டுவிட்டானோ அவரை எவராலும் நேர்வழியில் சேர்க்க முடியாது. உரையில் சிறந்தது அல்லாஹ்வின் வேதம் (குர்ஆன்) ஆகும்" என்று கூறுவார்கள் என இடம்பெற்றுள்ளது.
மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

1576 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அஸ்து ஷனூஆ' எனும் குலத்தைச் சேர்ந்த ளிமாத் பின் ஸஅலபா என்பார் மக்காவுக்கு வந்தார். அவர் காற்றுகறுப்புக்காக ஓதிப்பார்ப்பவராய் இருந்தார். மக்காவைச் சேர்ந்த சில அறிவிலிகள் "முஹம்மத் ஒரு மனநோயாளி' என்று கூறுவதை அவர் செவியுற்றார். "நான் அந்த மனிதரைச் சந்தித்(து ஓதிப்பார்த்)தால் எனது கரத்தால் அவருக்கு அல்லாஹ் நிவாரணம் அளிக்கக்கூடும்" என்று ளிமாத் சொன்னார். அவ்வாறே அவர் முஹம்மத் (ஸல்)

அவர்(களிடம் வந்து அவர்)களைச் சந்தித்தபோது, "முஹம்மதே! காற்றுகறுப்புக்காக நான் ஓதிப்பார்த்துவருகிறேன். எனது கரத்தால் தான் நாடியவர்களுக்கு அல்லாஹ் நிவாரணமளிக்கிறான். உங்களுக்கு நான் ஓதிப்பார்க்கட்டுமா?" என்று கேட்டார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. நாங்கள் அவனைப் போற்றுகிறோம்; அவனிடமே உதவி கோருகிறோம். அல்லாஹ் யாரை நேர்வழியில் செலுத்திவிட்டானோ அவரை எவராலும் வழிகெடுக்க முடியாது. அவன் யாரை வழிகேட்டில் விட்டுவிட்டானோ அவரை எவராலும் நேர்வழியில் சேர்க்க முடியாது. அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையேதுமில்லை என்றும், முஹம்மத் அல்லாஹ்வின் அடிமையும் தூதருமாவார் என்றும் நான் உறுதி கூறுகிறேன். இறைவாழ்த்துக்குப் பின்!" என்று கூறினார்கள்.

(இதைக் கேட்ட) ளிமாத், "நீங்கள் (இப்போது) சொன்ன இந்த வார்த்தைகளை மீண்டும் சொல்லுங்கள்" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த வார்த்தைகளை முன்பு போன்றே மூன்று முறை கூறினார்கள். இதைக் கேட்ட ளிமாத், "நான் சோதிடர்கள், சூனியக்காரர்கள், கவிஞர்கள் ஆகியோரின் சொற்களைக் கேட்டிருக்கிறேன். ஆனால், நீங்கள் கூறிய இந்த வார்த்தைகளைப் போன்று நான் கேட்டதேயில்லை. இவ்வார்த்தைகள் ஆழ்கடலையே தொட்டுவிட்டன. உங்களது கரத்தை நீட்டுங்கள்; நான் இஸ்லாத்தை ஏற்பதற்கு உங்களிடம் உறுதிமொழி அளிக்கிறேன்" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவரிடம் உறுதிமொழி வாங்கிக்கொண்டார்கள். அப்போது "உம்முடைய சமூக மக்களுக்காகவும் (அவர்கள் சார்பாக) உறுதிமொழி அளிப்பீராக!" என்று கூறினார்கள். அதற்கு ளிமாத் "என் சமூகத்தாருக்காகவும் (உறுதி அளிக்கிறேன்)" என்று கூறினார்.
பிறகு (ஒரு கட்டத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுப்பிய படைப் பிரிவொன்று அவருடைய சமூகத்தாரைக் கடந்து சென்றது. அப்போது அப்படையின் தலைவர் தம் வீரர்களிடம், "இதோ இந்த மக்களிடமிருந்து (போர்ச் செல்வமாக) எதையேனும் பெற்றீர்களா?" என்று கேட்டார். படைவீரர்களில் ஒருவர், "(ஆம்) நான் ஒரு தண்ணீர் குவளையை அவர்களிடமிருந்து பெற்றேன்" என்றார். அதற்கு "அதைத் திருப்பிக் கொடுத்துவிடுங்கள்! இவர்கள் ளிமாதின் சமூக மக்கள். (ளிமாத் அளித்துள்ள உறுதிமொழியின் கீழ் இவர்கள் அபயம் பெற்றவர்கள்)" என்று கூறினார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1577 அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
எங்களுக்கு அம்மார் பின் யாசிர் (ரலி) அவர்கள் (ஒரு வெள்ளிக்கிழமை) சுருக்கமாகவும் செறிவுடனும் உரை நிகழ்த்தினார்கள். அவர்கள் (மேடையிலிருந்து) இறங்கியபோது, "அபுல் யக்ளானே! செறிவுடன் சுருக்கமாகப் பேசினீர்கள். இன்னும் சிறிது நேரம் பேசியிருந்தால் நன்றாயிருந்திருக்குமே?" என்று நாங்கள் கூறினோம். அதற்கு அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் 'தொழுகையை நீட்டி உரையைச் சுருக்குவது ஒருவரது மார்க்க அறிவிற்கு அடையாளம் ஆகும். ஆகவே, தொழுகையை நீட்டி உரையைச் சுருக்குங்கள். சில சொற்பொழிவுகளில் கவர்ச்சி உள்ளது' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

1578 அதீ பின் ஹா(த்)திம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்கள் அருகில் உரையாற்றினார். அப்போது "யார் அல்லாஹ்விற்கும் அவன் தூதருக்கும் கீழ்ப்படிந்து நடக்கின்றாரோ அவர் நேர்வழி அடைந்துவிட்டார். யார் அவர்கள் இருவருக்கும் மாறு செய்கின்றாரோ அவர் வழிதவறிவிட்டார்" என்று குறிப்பிட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீர் ஒரு மோசமான சொற்பொழிவாளர். "யார் அல்லாஹ்விற்கும் அவன் தூதருக்கும் மாறு செய்கின்றாரோ' என்று (பிரித்துக்) கூறுவீராக!" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
'வழிதவறிவிட்டார்' என்பதைக் குறிக்க ஹதீஸின் மூலத்தில் ஆளப்பட்டுள்ள '்கவா' எனும் சொல், அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் '்கவிய' என்று ஆளப்பட்டுள்ளது.

1579 யஅலா பின் உமய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சொற்பொழிவுமேடை மீது (உரையாற்றியபோது) "(குற்றவாளிகள் நரகத்தின் காவலரை நோக்கி) 'யா மாலிக்' (மாலிக்கே!) என்று அழைப்பார்கள்" எனும் (43:77ஆவது) வசனத்தை ஓதுவதை நான் கேட்டிருக்கிறேன்.
இதை ஸஃப்வான் பின் யஅலா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1580 அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் (ரலி) அவர்களின் சகோதரி கூறியதாவது:
நான் வெள்ளிக்கிழமை அன்று 'காஃப் வல்குர்ஆனில் மஜீத்' எனும் (50ஆவது) அத்தியாயத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வாயிலிருந்து செவியுற்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒவ்வொரு ஜுமுஆ (சொற்பொழி)விலும் இந்த அத்தியாயத்தை ஓதுவார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் (ரலி) அவர்களுடைய சகோதரியிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அம்ராவின் சகோதரி அம்ராவைவிட (வயதில்) மூத்தவராயிருந்தார்" எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

1581 ஹாரிஸா பின் நுஅமான் (ரலி) அவர்களின் புதல்வியார் கூறியதாவது:
நான் 'காஃப்' எனும் (50ஆவது) அத்தியாயத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வாயிலிருந்தே (அவர்களிடமிருந்து நேரடியாகவே) மனனமிட்டேன். அவர்கள் ஒவ்வொரு ஜுமுஆ (சொற்பொழி)வின்போதும் அந்த அத்தியாயத்தை ஓதுவார்கள். நாங்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் ஒரே அடுப்பையே பயன்படுத்திவந்தோம். (அந்த அளவிற்கு அவர்களும் நாங்களும் அக்கம் பக்கத்தில் குடியிருந்தோம்.)

1582 ஹாரிஸா பின் நுஅமான் (ரலி) அவர்களின் புதல்வியார் உம்மு ஹிஷாம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் ஓராண்டு அல்லது ஓராண்டும் சில மாதங்களும் ஒரே அடுப்பையே பயன்படுத்திவந்தோம். நான் "காஃப். வல்குர்ஆனில் மஜீத்'

எனும் (50ஆவது) அத்தியாயத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் நாவிலிருந்தே மனனமிட்டேன். அவர்கள் ஒவ்வொரு ஜுமுஆவிலும் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி மக்களுக்கு உரையாற்றும் போது அந்த அத்தியாயத்தை ஓதுவார்கள்.

1583 ஹுஸைன் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
பிஷ்ர் பின் மர்வான் (வெள்ளிக்கிழமை அன்று) மிம்பர்மீது இருந்தபடி கைகளை உயர்த்தி (உரையாற்றி)யதை உமாரா பின் ருஅய்பா (ரலி) அவர்கள் கண்டார்கள். அப்போது உமாரா பின் ருஅய்பா (ரலி) அவர்கள், "இவ்விரு கைகளையும் அல்லாஹ் இழிவுபடுத்துவானாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நான் பார்த்துள்ளேன். அவர்கள் (ஜுமுஆ நாளில் மிம்பர்மீது உரையாற்றும்போது) தமது சுட்டு விரலால் இவ்வாறு சைகை செய்வதைத் தவிர, கூடுதலாக வேறெதுவும் செய்ததில்லை" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஹுஸைன் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் பிஷ்ர் பின் மர்வான் வெள்ளிக்கிழமை அன்று தம் கைகளை உயர்த்தி (உரையாற்றி)யதை நான் பார்த்தேன். அப்போது உமாரா பின் ருஅய்பா (ரலி) அவர்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறு கூறியதாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 14 (வெள்ளிக்கிழமை) இமாம் உரை நிகழ்த்திக்கொண்டிருக்கையில் "தஹிய்யத்துல் மஸ்ஜித்' தொழுகை தொழுவது.

1584 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை அன்று உரையாற்றிக்கொண்டிருக்கையில் ஒரு மனிதர் வந்(து தொழாமல் அமர்ந்)தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இன்ன மனிதரே, தொழுதுவிட்டீரா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் 'இல்லை' என்றார். "எழுந்து, தொழுவீராக!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் (மற்ற பல அறிவிப்புகளில் இடம்பெற்றிருப்பதைப் போன்று) 'இரண்டு ரக்அத்கள் தொழுவீராக' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாகக் குறிப்பு இல்லை.

1585 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை அன்று உரையாற்றிக் கொண்டிருக்கையில் ஒரு மனிதர் பள்ளிவாசலுக்குள்ளே வந்(து தொழாமல் அமர்ந்)தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீர் தொழுதுவிட்டீரா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் "இல்லை' என்றார். "எழுந்து இரண்டு ரக்அத்கள் தொழுவீராக!" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1586 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது (நின்று) உரையாற்றிக் கொண்டிருக்கும்போது ஒரு மனிதர் வந்(து தொழாமல் அமர்ந்)தார். அப்போது நபி (ஸல்) அவர்கள் அந்த மனிதரிடம் "இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டீரா?"என்று கேட்டார்கள். அவர் ‘இல்லை' என்றார். "அவ்வாறாயின் தொழுவீராக!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1587 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் உரையாற்றினார்கள். அதில் "வெள்ளிக்கிழமை அன்று இமாம் புறப்பட்டு வந்திருக்க, உங்களில் ஒருவர் (பள்ளிவாசலுக்கு) வந்தால், அவர் இரண்டு ரக்அத்கள் தொழுதுகொள்ளட்டும்!" என்று குறிப்பிட்டார்கள்.

1588 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை அன்று சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது உட்கார்ந்துகொண்டிருந்தபோது,சுலைக் அல்ஃகதஃபானீ (ரலி) அவர்கள் வந்து தொழுவதற்கு முன் அமர்ந்துவிட்டார்கள். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டீரா?" என்று கேட்டார்கள். அவர் ‘இல்லை' என்றார். "எழுந்து அந்த இரண்டு ரக்அத்களைத் தொழுவீராக" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1589 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை உரையாற்றிக்கொண்டிருக்கையில் சுலைக் அல்ஃகதஃபானீ (ரலி) அவர்கள் வந்து (தொழாமல்) அமர்ந்தார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "சுலைக்! எழும்! சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் தொழும்" என்றார்கள். பிறகு "உங்களில் ஒருவர் வெள்ளிக்கிழமை அன்று இமாம் உரையாற்றிக்கொண்டிருக்கும்போது (பள்ளிவாசலுக்கு) வந்தால், அவர் இரண்டு ரக்அத்கள் சுருக்கமாகத் தொழுதுகொள்ளட்டும்!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 15 உரைக்கு இடையே கல்வி போதனை செய்வது.

1590 அபூரிஃபாஆ தமீம் பின் அசத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் உரை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது நான் அவர்களிடம் போய்ச் சேர்ந்தேன். நான் "அல்லாஹ்வின் தூதரே! ஒரு வெளியூர்காரர் தமது மார்க்கத்தை தெரிந்து கொள்வதற்காக வந்துள்ளார். அவர் தமது மார்க்கத்தைப் பற்றி அறியாமல் இருக்கிறார்" என்று (என்னைப் பற்றிச்) சொன்னேன். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது உரையை நிறுத்திவிட்டு, என்னை நோக்கி வந்துசேர்ந்தார்கள். ஒரு நாற்காலி கொண்டு வரப்பட்டது. –அதன் கால்கள் இரும்பினால் ஆனவை என்று நான் எண்ணுகிறேன்– அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த நாற்காலியில் அமர்ந்து, அல்லாஹ் தமக்குக்

கற்றுத் தந்தவற்றிலிருந்து சிலவற்றை எனக்குப் போதிக்கலானார்கள். பிறகு திரும்பிச் சென்று தமது உரையை முழுமையாக்கினார்கள்.

## பாடம் : 16 ஜுமுஆ தொழுகையில் ஓத வேண்டியவை

1591 உபைதுல்லாஹ் பின் அபீராஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்களை மதீனாவின் ஆளுநராக நியமித்துவிட்டு மர்வான் பின் ஹகம் மக்காவிற்குச் சென்றார். (இந்தக் காலகட்டத்தில்) அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்கு ஜுமுஆத் தொழுகை நடத்தினார்கள். அதில் 'அல்ஜுமுஆ' எனும் (62ஆவது) அத்தியாயத்தை (முதல் ரக்அத்தில்) ஓதினார்கள். பிறகு இரண்டாவது ரக்அத்தில் "இதா ஜாஅக்கல் முனாஃபிக்கூன்' (என்று தொடங்கும் 63ஆவது) அத்தியாயத்தை ஓதினார்கள். தொழுகை முடிந்ததும் அபூ ஹுரைரா (ரலி) அவர்களைச் சந்தித்து, "நீங்கள் இரண்டு அத்தியாயங்களை ஓதினீர்கள். இவ்விரு அத்தியாயங்களும் அலீ பின் அபீ தாலிப் (ரலி) அவர்கள் கூஃபாவில் இருந்த போது ஓதிவந்தவை" என்றேன். அதற்கு அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஜுமுஆ நாளில் இவ்விரு அத்தியாயங்களையும் ஓத நான் கேட்டுள்ளேன்" என்று விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உபைதுல்லாஹ் பின் அபீராஃபிஉ (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஹா(த்)திம் பின் இஸ்மாயீல் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "முதல் ரக்அத்தில் 'அல்ஜுமுஆ' அத்தியாயத்தையும் இரண்டாவது ரக்அத்தில் 'இதா ஜாஅக்கல் முனாஃபிக்கூன்' அத்தியாயத்தையும் ஓதினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
அப்துல் அஸீஸ் பின் முஹம்மத் பின் உபைத் பின் அபீஉபைத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் முந்தைய ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளது.

1592 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரு பெருநாள் தொழுகையிலும் ஜுமுஆவிலும் "சப்பி ஹிஸ்ம ரப்பிகல் அஃலா' (87) மற்றும் 'ஹல் அத்தாக்க ஹதீஸுல் ஃகாஷியா' (88) ஆகிய அத்தியாயங்களை ஓதுவார்கள்.
பெருநாளும் ஜுமுஆவும் ஒரே நாளில் வந்துவிட்டாலும், இரு தொழுகைகளிலும் அவ்விரு அத்தியாயங்களையே ஓதுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1593 உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உத்பா பின் மஸ்உத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ளஹ்ஹாக் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்களுக்கு "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஜுமுஆ நாளில் 'அல்ஜுமுஆ' அத்தியாயம் தவிர வேறு எந்த அத்தியாயத்தை ஓதுவார்கள்?" என்று கேட்டு கடிதம் எழுதினார்கள். அதற்கு

'ஹல் அத்தாக்க ஹதீஸுல் ஃகாஷியா' எனும் (88ஆவது) அத்தியாயத்தை ஓதுவார்கள்" என நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் பதில் எழுதினார்கள்.

## பாடம் : 17 வெள்ளிக்கிழமை (ஃபஜ்ர் தொழுகையில்) ஓத வேண்டியவை.

1594 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை ஃபஜ்ர் தொழுகையில் "அலிஃப் லாம் மீம் தன்ஸீல்' (எனத் தொடங்கும்) "அஸ்ஸஜ்தா'எனும் (32ஆவது) அத்தியாயத்தையும் "ஹல் அத்தா அலல் இன்சானி ஹீனும் மினத் தஹ்ர்' எனும் (76ஆவது) அத்தியாயத்தையும் ஓதுவார்கள். மேலும், நபி (ஸல்) அவர்கள் ஜுமுஆத் தொழுகையில் "அல்ஜுமுஆ' எனும் (62 ஆவது) அத்தியாயத்தையும் "அல்முனாஃபிகூன்' எனும் (63ஆவது) அத்தியாயத்தையும் ஓதுவார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- வெள்ளிக்கிழமை ஃபஜ்ர் மற்றும் ஜுமுஆத் தொழுகை ஆகியவற்றில் ஓத வேண்டிய அத்தியாயங்கள் பற்றிய மேற்கண்ட ஹதீஸ், மேலும் ஓர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1595 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை ஃபஜ்ர் தொழுகையில் "அலிஃப் லாம் மீம் தன்ஸீல்' ("அஸ்ஸஜ்தா' எனும் 32ஆவது) அத்தியாயத்தையும் 'ஹல் அத்தா அலல் இன்சான்' எனும் (76ஆவது) அத்தியாயத்தையும் ஓதுவார்கள்.

1596 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை சுப்ஹுத் தொழுகையின் முதல் ரக்அத்தில் "அலிஃப் லாம் மீம் தன்ஸீல்' ("அஸ்ஸஜ்தா'எனும் 32ஆவது) அத்தியாயத்தையும் இரண்டாவது ரக்அத்தில் 'ஹல் அத்தா அலல் இன்சானி ஹீனும் மினத் தஹ்ரி லம் யகுன் ஷைஅம் மத்கூரா' எனும் (76ஆவது) அத்தியாயத்தையும் ஓதுவார்கள்.

## பாடம் : 18 ஜுமுஆவுக்குப் பின் தொழ வேண்டியவை.

1597 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் ஜுமுஆ தொழுத பின் நான்கு ரக்அத்கள் (சுன்னத்) தொழட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1598 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஜுமுஆவுக்குப் பின் நீங்கள் (சுன்னத்) தொழுவதானால் நான்கு ரக்அத்கள் தொழுது கொள்ளுங்கள். – இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அம்ர் பின் முஹம்மத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உமக்கு ஏதேனும் அவசரம் ஏற்பட்டால் பள்ளிவாசலில் இரண்டு ரக்அத்கள் தொழுதுகொள். (வீட்டுக்குத்) திரும்பியதும் இரண்டு ரக்அத்கள் தொழுதுகொள்" என்று சுஹைல் பின் அபீசாலிஹ் தக்வான் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

1599 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் எவரேனும் ஜுமுஆவுக்குப் பின் (சுன்னத்) தொழுவதாக இருந்தால் நான்கு ரக்அத்கள் தொழட்டும்!- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஜரீர் பின் அப்தில் ஹமீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உங்களில்' எனும் சொல் இடம்பெறவில்லை.

1600 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் ஜுமுஆ தொழுதுவிட்டு தமது இல்லத்திற்குச் சென்று, அங்கு இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுவார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்துவந்ததாகவும் குறிப்பிட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1601 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது வந்த கூடுதலான தொழுகைகள் குறித்துக் கூறினார்கள். அப்போது "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஜுமுஆ தொழுத பின் (வீட்டுக்குத்) திரும்பிச் செல்லாத வரை தொழமாட்டார்கள். (வீட்டுக்குச் சென்றதும்) வீட்டில் இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுவார்கள்" என்று குறிப்பிட்டார்கள்.

1602 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஜுமுஆ தொழுத பின் இரண்டு ரக்அத்கள் (சுன்னத்) தொழுவார்கள்.
இதை நாஃபிஉ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1603 உமர் பின் அதாஉ பின் அபில்குவார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாஃபிஉ பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள், என்னை சாயிப் பின் யஸீத் (ரலி) அவர்களிடம் அனுப்பி "(ஒரு முறை) நீங்கள் முஆவியா (ரலி) அவர்களுடன் ஜுமுஆ தொழுதுவிட்டு, அதே இடத்தில் நின்று (கடமையான தொழுகைக்கும் கூடுதலான தொழுகைக்குமிடையே பிரிக்கக்கூடிய செயல்கள் ஏதும் செய்யாமல்) தொடர்ந்து தொழுதீர்கள். அதைக் கண்ட முஆவியா (ரலி) அவர்கள் என்ன கூறினார்கள்?" என்பது பற்றிக் கேட்கச் சொன்னார்கள்.
(நான் அவ்வாறே கேட்டபோது) சாயிப் (ரலி) அவர்கள், "ஆம், நான் முஆவியா (ரலி) அவர்களுடன் பள்ளிவாசலில் இருந்த ஒரு (தனி) அறையில் ஜுமுஆ தொழுதேன். இமாம் சலாம் கொடுத்ததும் நான் உடனே அதே இடத்தில் எழுந்து (கூடுதலான தொழுகை) தொழுதேன். முஆவியா (ரலி) அவர்கள் (ஜுமுஆ தொழுததும் எழுந்து) தமது அறைக்குள் நுழைந்து, என்னை அழைத்துவருமாறு ஆளனுப்பினார்கள். (நான் சென்றபோது என்னிடம்) அவர்கள், "இனிமேல் இவ்வாறு செய்யாதீர்! ஜுமுஆ தொழுததும் (ஏதேனும் வெளிப்பேச்சு) பேசாதவரை, அல்லது பள்ளிவாசலிலிருந்து புறப்பட்டுச் செல்லாத வரை தொழாதீர்! இவ்வாறுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு உத்தரவிட்டார்கள். அதாவது, (கடமையான) ஒரு தொழுகைக்கும் (கூடுதலான) மற்றொரு

தொழுகைக்குமிடையே ஏதேனும் பேச்சுகள் பேசாத வரை, அல்லது (பள்ளிவாசலில் இருந்து) புறப்பட்டுச் செல்லாத வரை அவ்விரு தொழுகைகளையும் (சேர்ந்தாற்போல்) அடுத்தடுத்து தொழக்கூடாது" என்று கூறினார்கள் என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அவர் சலாம் கொடுத்தபோது நான் எழுந்து அதே இடத்தில் நின்று..." என இடம் பெற்றுள்ளது. "இமாம் சலாம் கொடுத்தபோது" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1604 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுடனும் அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), உஸ்மான் (ரலி) ஆகியோருடனும் நோன்புப் பெருநாள் (ஈதுல் ஃபித்ர்) தொழுகையில் பங்கேற்றுள்ளேன். அவர்கள் அனைவரும் உரை நிகழ்த்துவதற்கு முன்பே (பெருநாள்) தொழுகை நடத்துபவர்களாக இருந்தனர்; அதன் பிறகே உரை நிகழ்த்துவார்கள். (உரை முடிந்த பின்) நபி (ஸல்) அவர்கள் அங்கிருந்து புறப்பட்டு ஆண்களைத் தமது கையால் அமரச் செய்ததை இன்றும் நான் காண்பதைப் போன்று உள்ளது. பிறகு அ(ங்கிருந்த ஆட)வர்களின் வரிசைகளை விலக்கிக்கொண்டு பெண்கள் பகுதிக்குச் சென்றார்கள். அப்போது அவர்களுடன் பிலால் (ரலி) அவர்களும் இருந்தார்கள். அப்போது "நபியே! இறை நம்பிக்கை கொண்ட பெண்கள் உம்மிடம் விசுவாசப் பிரமாணம் செய்வதற்காக வந்தார்களாயின்" என்று தொடங்கும் (60:12ஆவது) இறைவசனத்தை முழுமையாக ஓதி முடித்துவிட்டு (பெண்களிடம்), "இந்த உறுதிமொழியில் நீங்கள் (நிலையாக) இருக்கிறீர்களா?" என்று கேட்டார்கள். ஒரேயொரு பெண்மணி மட்டும் "ஆம்; இறைத்தூதரே! (இருக்கிறோம்)" என்றார். அவரைத் தவிர வேறெவரும் நபி (ஸல்) அவர்களுக்குப் பதிலளிக்கவில்லை. (பதிலளித்த) அந்தப் பெண்மணி யாரென்று அப்போது தெரியவில்லை. (உண்மையில் அறிவிப்பாளர் ஹசன் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்களுக்குத்தான் அது தெரியவில்லை.) அப்பெண்களை நோக்கி நபி (ஸல்) அவர்கள் "(பெண்களே) தர்மம் செய்யுங்கள்" என்று சொன்னார்கள். பிலால் (ரலி) அவர்கள் தமது ஆடையை ஏந்தியபடி "என் தந்தையும் என் தாயும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும், வாருங்கள்" என்று கூறினார்கள். அப்பெண்கள் மெட்டிகளையும் மோதிரங்களையும் (கழற்றி) பிலால் (ரலி) அவர்களின் ஆடையில் போடலாயினர்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1605 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் உறுதி கூறுகிறேன்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பெருநாள் அன்று) உரை நிகழ்த்துவதற்கு முன் தொழுதார்கள். (தொழுகைக்குப்) பிறகு உரையாற்றினார்கள். அப்போது பெண்கள் செவியேற்கும் விதத்தில் தாம் பேசவில்லை என்று எண்ணியவர்களாகப் பெண்கள் பகுதிக்குச் சென்று, அவர்களுக்கு (இஸ்லாமிய சட்டவிதிகளையும் மறுமை நாளையும்) நினைவூட்டி அறிவுரை கூறினார்கள்; தர்மம் செய்யும்படி அவர்களிடம் வலியுறுத்தினார்கள். (அவற்றைப் பெறுவதற்காக) பிலால் (ரலி) அவர்கள் தமது ஆடையை விரித்துப் பிடித்துக்கொண்டிருந்தார்கள். பெண்கள் தங்களுடைய மோதிரங்களையும் காதணிகளையும் பிறவற்றையும் (கழற்றிப்) போடலானார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1606 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் நோன்புப் பெருநாள் அன்று எழுந்து உரையாற்றுவதற்கு முன் தொழுதார்கள். அதற்குப் பிறகே மக்களுக்கு உரையாற்றினார்கள். நபி (ஸல்) அவர்கள் உரையாற்றி முடிந்ததும் அங்கிருந்து புறப்பட்டு, பெண்கள் பகுதிக்குச் சென்று பிலால் (ரலி) அவர்களது கையைத் தாங்கிக்கொண்டு பெண்களுக்கு அறிவுரை பகர்ந்தார்கள். அப்போது பிலால் (ரலி) அவர்கள் தமது ஆடையொன்றை விரித்துப் பிடிக்க, அதில் பெண்கள் தர்மத்தை இட்டுக்கொண்டிருந்தார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.
நான் அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்களிடம் "(பெண்கள்) நோன்புப் பெருநாள் (ஸதக்கத்துல் ஃபித்ர்) தர்மத்தையா (இட்டார்கள்)?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "இல்லை, அப்போதைக்குத் தாமாகவே முன்வந்து தர்மப் பொருட்களை அவர்கள் ஈந்தனர். பெண்கள் தம் மெட்டிகளையும் இன்னும் பிறவற்றையும் இடலாயினர்" என்று கூறினார்கள்.
மேலும், நான் அதாஉ (ரஹ்) அவர்களிடம், "உரை நிகழ்த்திய பின் பெண்கள் பகுதிக்குச் சென்று உபதேசம் செய்வது இன்றைக்கும் தலைவர்மீது கடமை என நீங்கள் கருதுகிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "நிச்சயம். சத்தியமாக! அது அவர்களுக்குக் கடமைதான். அதை அவர்கள் எவ்வாறு செய்யாமலிருக்க முடியும்?" என்று கேட்டார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1607 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பெருநாள் தொழுகையில் கலந்து கொண்டுள்ளேன். அப்போது அவர்கள் உரை நிகழ்த்துவதற்கு முன்பே தொழுகை நடத்தினார்கள்; பாங்கோ இகாமத்தோ இல்லை. பிறகு பிலால் (ரலி)அவர்கள் மீது சாய்ந்து கொண்டு, இறையச்சத்தைக் கடைப்பிடிக்குமாறும் இறைவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்குமாறும் வலியுறுத்தி மக்களுக்கு அறிவுரையும் நினைவூட்டலும் வழங்கினார்கள். பிறகு அங்கிருந்து புறப்பட்டு, பெண்கள் பகுதிக்குச் சென்று அவர்களுக்கு (மார்க்க நெறிமுறைகளையும் மறுமை நாளையும்) நினைவூட்டி அறிவுரை பகர்ந்தார்கள். மேலும், பெண்களை நோக்கி, "தர்மம் செய்யுங்கள். உங்களில் அதிகம் பேர் நரகத்தின் விறகு ஆவீர்கள்" என்று கூறினார்கள்.
அப்போது பெண்கள் நடுவிலிருந்து கன்னங்கள் கருத்த ஒரு பெண்மணி எழுந்து "அது ஏன், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீங்கள் அதிகமாகக் குறை கூறுகின்றீர்கள்; (நன்றி மறந்து) கணவனை நிராகரிக்கிறீர்கள்" என்று கூறினார்கள். அப்போது அப்பெண்கள் தம் காதணிகள், மோதிரங்கள் உள்ளிட்ட அணிகலன்களை (கழற்றி) பிலால் (ரலி) அவர்களின் ஆடையில் போட்டனர்.

1608 அப்துல் மலிக் பின் அப்தில் அஸீஸ் பின் ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களது காலத்தில்) நோன்புப் பெருநாள் அன்றோ, ஹஜ்ஜுப் பெருநாள் அன்றோ தொழுகைக்காக பாங்கு சொல்லப்படவில்லை என இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களும் கூறியதாக அதாஉ பின் அபீரபாஹ்

(ரஹ்) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள். சிறிது நேரத்திற்குப் பிறகு அதாஉ (ரஹ்) அவர்களிடம் அது குறித்து நான் கேட்டேன். அதற்கு அதாஉ (ரஹ்) அவர்கள், "ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் "நோன்புப் பெருநாள் தொழுகைக்கு இமாம் புறப்பட்டு வரும் போதோ, புறப்பட்டு வந்த பின்போ பாங்கு கிடையாது. அதைப் போன்றே, இகாமத்தோ தொழுகைக்கான அழைப்போ வேறு விதமான அறிவிப்புகளோ கிடையாது. (ஆக) அன்றைய நாளில் பாங்கோ இகாமத்தோ கிடையாது" என்று சொன்னார்கள் என விடையளித்தார்கள்.

1609 அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(மக்காவின் ஆட்சிப் பொறுப்பேற்ற) அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களுக்கு வாக்களிப்புப் பிரமாணம் (பைஅத்) நடைபெற்ற முதல் நாளில் அவர்களுக்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "(நபி (ஸல்) அவர்களது காலத்தில்) நோன்புப் பெருநாள் தொழுகைக்காக பாங்கு சொல்லப்பட்டதில்லை. எனவே, நீங்களும் அத்தொழுகைக்கு பாங்கு சொல்லாதீர்கள்" என்ற செய்தியைச் சொல்லியனுப்பினார்கள். அவ்வாறே அன்றைய தினம் அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களும் பாங்கு சொல்லவில்லை. மேலும், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "பெருநாள் தொழுகைக்குப் பிறகுதான் உரை நிகழ்த்த வேண்டும். இவ்வாறுதான் (முன்பு) செய்யப்பட்டுவந்தது" எனும் செய்தியையும் அவர்களுக்குத் தெரிவித்தார்கள். அவ்வாறே அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களும் உரை நிகழ்த்துவதற்கு முன்பே (பெருநாள்) தொழுகை நடத்தினார்கள்.

1610 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இரு பெருநாள் தொழுகைகளை ஒரு முறை, இரு முறை அல்ல (பல முறை) தொழுதிருக்கிறேன்; (அவற்றில்) பாங்கும் இகாமத்தும் இருந்ததில்லை.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1611 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோரும் உரை (குத்பா) நிகழ்த்துவதற்கு முன்பே இரு பெருநாள் தொழுகைகளைத் தொழுபவர்களாய் இருந்தனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1612 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருநாள் அன்றும் நோன்புப் பெருநாள் அன்றும் (திடலுக்குப்) புறப்பட்டுச் சென்று, முதலில் தொழுகையை நிறைவேற்றுவார்கள். தொழுகையை முடித்து சலாம் கொடுத்ததும் மக்களை முன்னோக்கி (உரை நிகழ்த்தியபடி) நிற்பார்கள். மக்கள் தொழுத இடத்தில் அப்படியே அமர்ந்திருப்பார்கள். ஏதேனும் படைப் பிரிவை அனுப்ப வேண்டிய தேவையிருந்தால் அதை மக்களிடம் அறிவிப்பார்கள். அல்லது வேறு தேவை ஏதேனும் இருந்தால், அதற்கான உத்தரவைப் பிறப்பிப்பார்கள். (அன்றைய தினம்) அவர்கள் "தர்மம் செய்யுங்கள்; தர்மம் செய்யுங்கள்; தர்மம் செய்யுங்கள்" என்று (திரும்பத் திரும்பக்) கூறுவார்கள். மக்களில் அதிகமாகத் தர்மம் செய்வோர் பெண்களாக இருந்தார்கள். பிறகு திரும்பிச் செல்வார்கள்.

(மதீனாவின் ஆளுநராக) மர்வான் பின் அல்ஹகம் வரும்வரை (முதலில் தொழுகை, பிறகு உரை எனும்) இந்நிலையே நீடித்தது. (மர்வான் ஆட்சிப் பொறுப்பேற்று) அவரும் நானும் ஒருவர் மற்றவரின் இடுப்பில் கைவைத்து அணைத்தவர்களாக (அல்லது கை கோத்தவர் களாக) தொழும் திடலுக்கு வந்தபோது, கஸீர் பின் அஸ்ஸல்த் என்பவர் களிமண்ணாலும் செங்கல்லாலும் கட்டியிருந்த ஒரு சொற்பொழிவு மேடை அங்கு (புதிதாக) காணப்பட்டது. அப்போது மர்வான் என்னை சொற்பொழிவு மேடை நோக்கி இழுக்க, நான் அவரைத் தொழுகைக்காக இழுக்க அவர் என்னிடமிருந்து தனது கையை விடுவித்துக் கொண்டார். (தொழுகைக்கு முன்பே உரை நிகழ்த்திட நின்றார்.) அவரிடம் இந்த நிலையைக் கண்ட நான் "எங்கே, முதலில் தொழுகைதானே நடைபெற வேண்டும்?"என்று கேட்டேன். அதற்கு மர்வான் "இல்லை அபூ சயீதே! நீங்கள் அறிந்திருக்கும் அந்த நடைமுறை கைவிடப்பட்டது" என்று கூறினார். அதற்கு நான் "இல்லை, என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நான் அறிந்திருக்கும் (நபிகளாரின்) இந்த நடைமுறையைவிடச் சிறந்த ஒன்றை உங்களால் கொண்டுவர முடியாது" என்று கூறினேன். (இவ்வாறு மூன்று முறை கூறிவிட்டு, அபூசயீத் (ரலி) அவர்கள் திரும்பிச் சென்றுவிட்டார்கள்.)

இதை இயாள் பின் அப்தில்லாஹ் பின் சஅத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 09 - பெருநாள் தொழுகை

**பாடம் : 1 பெருநாட்களில் பெண்கள், தொழும் திடலுக்கு வெளியேறிச் செல்வதும், ஆண்களுடன் கலக்காத விதத்தில் உரையில் பங்கேற்பதும் அனுமதிக்கப்பட்டவையாகும்.**

1613 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
இரு பெருநாட்களில் இளம் பெண்களையும், திரைக்கப்பால் உள்ள பெண்களையும் புறப்படச் செய்யும்படி நபி (ஸல்) அவர்கள் - எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். மாதவிடாய் ஏற்பட்ட பெண்கள் முஸ்லிம்களின் தொழும் இடத்தைவிட்டு ஒதுங்கியிருக்குமாறு அவர்கள் கட்டளையிட்டார்கள்.

1614 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
பெருநாளன்று (பெண்களாகிய) நாங்கள் (தொழும் திடலுக்குப்) புறப்பட்டுச் செல்ல வேண்டுமெனவும், திரைமறைவில் உள்ள பெண்களையும் கன்னிப் பெண்களையும் புறப்படச் செய்ய வேண்டுமெனவும் கட்டளையிடப்பட்டிருந்தோம். மாதவிடாய் ஏற்பட்டுள்ள பெண்கள் (தொழும் திடலுக்குச் சென்று) மக்களுக்குப் பின்னால் இருந்துகொண்டு மக்களுடன் சேர்ந்து "தக்பீர்'கூறுவார்கள்.

1615 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இளம் பெண்களையும் மாதவிடாய் ஏற்பட்டுள்ள பெண்களையும் திரைமறைவில் உள்ள பெண்களையும் நோன்புப் பெருநாள் மற்றும் ஹஜ்ஜுப் பெருநாள் ஆகிய (இரு) பெருநாட்களிலும் (தொழும் திடலுக்குப்) புறப்படச் செய்யுமாறு எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். ஆயினும், மாதவிடாய் ஏற்பட்டுள்ள பெண்கள் தொழுகையிலிருந்து ஒதுங்கியிருப்பார்கள்; நல்ல உரைகளிலும் முஸ்லிம்களின் பிரார்த்தனையிலும் பங்கெடுக்க வேண்டும் (என்றும் கட்டளையிட்டார்கள்). அப்போது நான் "அல்லாஹ்வின் தூதரே! எங்களில் ஒருத்தியிடம் துப்பட்டா இல்லாவிட்டால் (என்ன செய்வது)?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவளுடைய சகோதரி தமது துப்பட்டாவில் ஒன்றை அவளுக்கு இரவலாக அணிவிக்கட்டும்!" என்று கூறினார்கள்.

**பாடம் : 2 பெருநாள் தொழுகைக்கு முன்போ பின்போ தொழும் திடலில் எதுவும் தொழக் கூடாது.**

1616 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருநாள் அன்றோ அல்லது நோன்புப் பெருநாள் அன்றோ புறப்பட்டுச் சென்று இரண்டு ரக்அத்கள் (மட்டுமே) தொழுதார்கள். அதற்கு முன்பும் எதையும் (கூடுதலாகத்) தொழவில்லை; அதற்கு பின்பும் எதையும் (கூடுதலாகத்) தொழவில்லை. பிறகு தம்முடன் பிலால் (ரலி) அவர்கள் இருக்க, பெண்கள் பகுதிக்கு வந்து (அறிவுரை வழங்கினார்கள். அப்போது) தர்மம் செய்யுமாறு அவர்களைப்

பணித்தார்கள். உடனே பெண்கள் தம் காதணிகளையும் (கழுத்தில் அணிந்திருந்த) நறுமண மாலைகளையும் (கழற்றி பிலால் (ரலி) அவர்களின் கையிலிருந்த துணியில்) போட்டனர்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 3 இரு பெருநாள் தொழுகைகளில் ஓத வேண்டியவை.

1617 உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உத்பா பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அபூவாக்கித் அல்ஃப் பின் அல்ஹாரிஸ் அல் லைஸீ (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருநாள் மற்றும் நோன்புப் பெருநாள் (தொழுகை)களில் எ(ந்த அத்தியாயத்)தை ஓதுவார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அபூவாக்கித் (ரலி) அவர்கள் "காஃப் வல்குர்ஆனில் மஜீத்' எனும் (50ஆவது) அத்தியாத்தையும் "இக்தரபத்திஸ் ஸாஅத்து வன்ஷக்கல் கமர்' எனும் (54ஆவது) அத்தியாயத்தையும் ஓதுவார்கள் என்று விடையளித்தார்கள்.

1618 அபூவாக்கித் அல்ஃப் பின் அல்ஹாரிஸ் அல்லைஸீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருநாளி(ன் தொழுகையி)ல் எ(ந்த அத்தியாயத்)தை ஓதுவார்கள்?" என்று என்னிடம் உமர் (ரலி) அவர்கள் கேட்டார்கள். அதற்கு நான் "இக்தரபத்திஸ் ஸாஅத்து' எனும் (54ஆவது) அத்தியாயத்தையும் "காஃப் வல்குர்ஆனில் மஜீத்' எனும் (50ஆவது) அத்தியாயத்தையும் ஓதுவார்கள்" என்று விடையளித்தேன்.

## பாடம் : 4 பெருநாட்களில் பாவமில்லா (வீர) விளையாட்டுகளில் ஈடுபட அனுமதி உண்டு.

1619 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அறியாமைக் காலத்தில் நடந்த) "புஆஸ்' எனும் போரின்போது அன்சாரிகள் ஒருவரை நோக்கி ஒருவர் பாடிய பாடல்களை இரு அன்சாரிச் சிறுமியர் என்னருகில் பாடிக் கொண்டிருந்தனர். அப்போது (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள் என்னிடம் வந்தார்கள்.
–(உண்மையில்) அவ்விரு சிறுமியரும் பாடகியர் அல்லர்– (இதைக் கண்ட) உடனே அபூபக்ர் (ரலி) அவர்கள், "இறைத்தூதர் இல்லத்திலேயே ஷைத்தானின் இசைக் கருவிகளா?" என்று (கடிந்து) பேசினார்கள். இது நடந்தது ஒரு பெருநாள் அன்றாகும். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(அவ்விருவரையும் விட்டுவிடுங்கள்), அபூபக்ரே! (மகிழ்ச்சியை வெளிப்படுத்த) ஒவ்வொரு சமுதாயத்தாருக்கும் பண்டிகை நாள் ஒன்று உண்டு. இது நமது பண்டிகை நாள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "இரு சிறுமியர் (சலங்கையில்லா) கஞ்சிராக்களை அடித்து விளையாடிக் கொண்டிருந்தனர்" என்று இடம்பெற்றுள்ளது.

1620 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஈதுல் அள்ஹா நாட்களான) "மினா'வின் நாட்களில் என் அருகில் இரு (அன்சாரிச்) சிறுமியர் (சலங்கையில்லா கஞ்சிராக்களை) அடித்து பாட்டு பாடிக்கொண்டிருந்தனர். அப்போது (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது ஆடையால் போர்த்திக்கொண்டிருந்தார்கள். (இதைக் கண்ட) அபூபக்ர் (ரலி) அவர்கள் அச்சிறுமியர் இருவரையும் அதட்டினார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம்மீதிருந்த) துணியை விலக்கி "அவர்களை விட்டு விடுங்கள், அபூபக்ரே! இவை பண்டிகை நாட்கள்" என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைத் தமது மேல் துண்டால் மறைத்துக்கொண்டிருக்க, (பள்ளிவாசல் வளாகத்தில் ஈட்டியெறிந்து) விளையாடிக்கொண்டிருந்த அபிசீனியர்களை நான் (என் வீட்டிலிருந்தபடி) பார்த்துக்கொண்டிருந்தேன். அப்போது நான் இளம்வயதுப் பெண்ணாக இருந்தேன். விளையாட்டுமீது பேராவல் கொண்ட இளம்வயதுப் பெண் எவ்வளவு நேரம் வேடிக்கை பார்ப்பாள் என்பதை நீங்களே மதிப்பிட்டுக்கொள்ளுங்கள்.

1621 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் மீதாணையாக! (ஒரு பெருநாள் தினத்தன்று) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது பள்ளிவாசலி(ன் வளாகத்தி)ல் அபிசீனியர்கள் ஈட்டியெறிந்து (வீர விளையாட்டு) விளையாடிக்கொண்டிருந்தனர். அவர்களது விளையாட்டை நான் பார்ப்பதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது அறைவாசலில் நின்றபடி தமது மேல்துண்டால் என்னை மறைத்துக்கொண்டிருந்தார்கள். நானாக (விளையாட்டை ரசித்துச் சலிப்புற்று)த் திரும்பும்வரை எனக்காகவே அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். கேளிக்கைகள்மீது பேராவல் கொண்ட இளம்வயதுப் பெண் எவ்வளவு நேரம் வேடிக்கை பார்ப்பாள் என்பதை நீங்களே மதிப்பிட்டுக்கொள்ளுங்கள்.

1622 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் அருகில் இரு சிறுமியர் "புஆஸ்" போர் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள்; படுக்கையில் படுத்து, தமது முகத்தை (வேறு பக்கம்) திருப்பிக்கொண்டார்கள். அப்போது (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள் வந்து என்னை அதட்டி "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகிலேயே ஷைத்தானின் இசைக் கருவிகளா?" என்று கடிந்துகொண்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூபக்ரை முன்னோக்கி "அச்சிறுமியரை விட்டுவிடுங்கள்" என்று கூறினார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களின் கவனம் வேறுபக்கம் திரும்பியபோது அவ்விரு சிறுமியரையும் குறிப்பால் உணர்த்தி (வெளியேறச் சொன்)னேன். உடனே அவர்கள் இருவரும் வெளியேறிவிட்டனர். அன்று பெருநாள் தினமாக இருந்தது. சூடானியர்கள் தோல் கேடயத்தாலும் ஈட்டிகளாலும் (பள்ளிவாசல் வளாகத்தில் வீர விளையாட்டுகள்) விளையாடிக் கொண்டிருந்தனர். அப்போது நான் (அந்த விளையாட்டைப் பார்க்க) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அனுமதி) கேட்டிருக்க வேண்டும்; அல்லது அவர்களே என்னிடம் நீ (இவர்களின் வீரவிளையாட்டுகளைப்) பார்க்க விரும்புகிறாயா?" என்று கேட்க, நான் "ஆம்' என்று கூறியிருக்க வேண்டும் (சரியாக எனக்கு நினைவில்லை).

உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், என் கன்னம் அவர்களுடைய கன்னத்தின் மீது ஒட்டியபடி இருக்க, என்னைத் தமக்குப் பின்னால் நிற்கவைத்துக்கொண்டார்கள். "அர்ஃபிதாவின் மக்களே! (சூடானியர்களே!) விளையாட்டைத் தொடருங்கள்" என்று கூறினார்கள். நான் (விளையாட்டை நன்கு ரசித்து) சலிப்புற்றுவிட்டபோது, "போதுமா?' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்க,நான் "ஆம் (போதும்)' என்று சொன்னேன். "அப்படியானால் நீ போகலாம்!" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1623 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெருநாள் தினத்தில் அபிசீனியர்கள் (ஆயுதங்களை வைத்து) குதித்து விளையாடிக் கொண்டு பள்ளிவாசலுக்குள் வந்தார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் என்னை அழைத்தார்கள். நான் (வந்து) எனது தலையை நபி (ஸல்) அவர்களது தோள்மீது வைத்துக்கொண்டு அபிசீனியர்களின் (வீர) விளையாட்டுகளைப் பார்க்கலானேன். இறுதியில் அவர்(களின் வீர விளையாட்டு)களிலிருந்து நானாகத் திரும்பிச் சென்றேன். (நபி (ஸல்) அவர்கள் என்னைப் போகச் சொல்லவில்லை.)
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "பள்ளிவாசலுக்குள்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1624 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அந்த விளையாட்டு வீரர்களிடம் "நான் உங்க(ளின் விளையாட்டு)களைப் பார்க்க விரும்புகிறேன்' எனக் கூறி (அனுப்பி)னேன். அவர்கள் பள்ளிவாசல் வளாகத்தில் விளையாடினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அதைப் பார்த்துக்கொண்டு) நிற்க, நான் (எனது அறை) வாசலில் நின்றுகொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் காதுகளுக்கும் தோள்களுக்குமிடையே (எனது முகத்தை வைத்து) அதைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அதாஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(அந்த வீரர்கள்,) பாரசீகர்கள் அல்லது அபிசீனியர்கள் ஆவர். "அல்ல; அவர்கள் அபிசீனியர்களே ஆவர்" என என்னிடம் இப்னு அத்தீக் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1625 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபிசீனியர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் ஈட்டியெறிந்து விளையாடிக் கொண்டிருந்தபோது, உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அங்கு வந்து, அவர்கள்மீது எறிவதற்காகக் குனிந்து சிறு கற்களை எடுத்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்களை விட்டுவிடுங்கள், உமரே! (விளையாடட்டும்)" என்று சொன்னார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1626 அப்துல்லாஹ் பின் ஸைத் அல் மாஸினீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகைத்திடலுக்குப் புறப்பட்டுச் சென்று மழைவேண்டி(த் தொழுகை நடத்தி)னார்கள். (திடலில்) கிப்லாவை நோக்கித் திரும்பி நின்ற போது, தமது மேல்துண்டை மாற்றிப் போட்டுக் கொண்டார்கள்.

1627 அப்துல்லாஹ் பின் ஸைத் அல் மாஸினீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தொழுகைத் திடலுக்குப் புறப்பட்டுச் சென்று, கிப்லாவை முன்னோக்கி நின்று மழைவேண்டி (தொழுகை நடத்தி)னார்கள்; தமது மேல்துண்டை மாற்றிப் போட்டுக் கொண்டார்கள். மேலும், இரண்டு ரக்அத்கள் தொழு(வித்)தார்கள்.

1628 அப்துல்லாஹ் பின் ஸைத் அல்மாஸினீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மழை வேண்டி(த் தொழுவதற்காக) தொழுகைத் திடலுக்குச் சென்றார்கள்; பிரார்த்திக்க விரும்பியபோது கிப்லாவை முன்னோக்கி நின்று, தமது மேல் துண்டை மாற்றிப் போட்டுக்கொண்டார்கள்.

1629 அப்துல்லாஹ் பின் ஸைத் அல்மாஸினீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மழைவேண்டிப் பிரார்த்திப்பதற்காகப் புறப்பட்டுச் சென்றார்கள்; (பிரார்த்திக்க முற்பட்டபோது) மக்களை நோக்கி இருக்கும் விதத்தில் தமது முதுகைத் திருப்பி, கிப்லாவை முன்னோக்கி இறைவனிடம் இறைஞ்சினார்கள்; தமது மேல்துண்டை மாற்றிப் போட்டுக்கொண்டார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 10 - மழைத் தொழுகை

## பாடம் : 1 மழைவேண்டிப் பிரார்த்திக்கும்போது கைகளை உயர்த்தல்.

1630 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மழைவேண்டிப்) பிரார்த்தித்தபோது, அவர்களுடைய அக்குள்களின் வெண்மை காணப்படும் அளவிற்குத் தம் கைகளை உயர்த்தினார்கள்.

1631 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மழைவேண்டிப் பிரார்த்தித்தபோது தவிர, வேறு எந்தப் பிரார்த்தனையின் போதும் (இந்த அளவிற்கு) கைகளை உயர்த்தமாட்டார்கள். (மழை வேண்டிப் பிரார்த்தித்தபோது) தம் அக்குள்களின் வெண்மை தென்படும் அளவிற்கு அவர்கள் கைகளை உயர்த்தினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அப்துல் அஃலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவர்கள் "தமது அக்குளின் வெண்மை' அல்லது "அக்குள்களின் வெண்மை" தென்படும் அளவிற்கு (உயர்த்தினார்கள்)" என்று (ஐயப்பாட்டுடன்) இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1632 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மழைவேண்டிப் பிரார்த்தித்தபோது, தம் புறங்கைகளால் வானை நோக்கிச் சைகை செய்தார்கள்.

## பாடம் : 2 மழைவேண்டிப் பிரார்த்தித்தல்.

1633 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு வெள்ளிக்கிழமை உரை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது, ஒரு மனிதர் "தாருல் களா' திசையிலிருக்கும் வாசல் வழியாகப் பள்ளிவாசலுக்குள் வந்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்றவாறு உரையாற்றிக் கொண்டிருந்தார்கள். வந்த மனிதர் நின்றுகொண்டே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி, "அல்லாஹ்வின் தூதரே! (பஞ்சத்தால் கால்நடைச்) செல்வங்கள் அழிந்துவிட்டன; பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள். அவன் நமக்கு மழை பொழிவிப்பான்" என்று கூறினார்.
உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைகளை உயர்த்தி, "இறைவா, எங்களுக்கு மழை பொழியச் செய்வாயாக! இறைவா, எங்களுக்கு மழை பொழியச் செய்வாயாக! இறைவா, எங்களுக்கு மழை பொழியச் செய்வாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! அப்போது நாங்கள் வானத்தில் மேகக் கூட்டங்களையோ திரள்களையோ காணவில்லை. எங்களுக்கும் (மதீனாவிற்கு அருகிலுள்ள) "சல்உ' மலைக்குமிடையே எந்த வீடும் கட்டடமும் இருக்கவில்லை (என்பதை நாங்கள் தெளிவாகக்

காண முடிந்தது). அப்போது அம்மலைக்குப் பின்னாலிருந்து கேடயம் போன்று (வட்ட வடிவில்) ஒரு மேகம் தோன்றியது. அது நடுவானில் மையம் கொண்டு பரவியது; பிறகு மழை பொழிந்தது. அல்லாஹ்வின் மீதாணையாக! ஒரு வாரம்வரை நாங்கள் சூரியனையே பார்க்கவில்லை.

அடுத்த வெள்ளியன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்று உரை நிகழ்த்தும் போது, ஒரு மனிதர் அதேவாசல் வழியாக (பள்ளிவாசலுக்குள்) வந்தார். (வந்தவர்) நின்றவாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி, "அல்லாஹ்வின் தூதரே! (தொடர்ந்து பெய்த பெருமழையால்) எங்கள் (கால்நடைச்) செல்வங்கள் அழிந்துவிட்டன; பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன (போக்கு வரத்து தடைப்பட்டுவிட்டது). எனவே, மழையை நிறுத்துமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்றார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் கைகளை உயர்த்தி, "இறைவா, எங்கள் சுற்றுப்புறங்கள் மீது (இம்மழையைத் திருப்பிவிடுவாயாக!) எங்களுக்குப் பாதகமாக இதை நீ ஆக்கிவிடாதே! இறைவா, சிறு குன்றுகள், அகன்ற மலைகள், ஓடைகள்,விளைநிலங்கள் ஆகியவற்றின் மீது (இம்மழையைப் பொழியச் செய்வாயாக!)" என்று பிரார்த்தித்தார்கள். உடனே (மதீனாவில்) மழை நின்றது. நாங்கள் வெயிலில் நடந்து சென்றோம்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஷரீக் பின் அப்தில்லாஹ் பின் அபீநமிர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "இ(ரண்டாவதாக வ)ந்த மனிதர் முதலில் வந்தவர்தாமா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "எனக்குத் தெரியவில்லை' என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1634 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் (ஒரு முறை) பஞ்சம் ஏற்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை அன்று சொற்பொழிவு மேடைமீது (நின்று) உரை நிகழ்த்திக்கொண்டிருந்தபோது, ஒரு கிராமாவாசி எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே, செல்வங்கள் அழிந்துவிட்டன; குழந்தை குட்டிகள் பசியால் வாடுகின்றனர்" என்று கூறினார். (மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன.)
இந்த அறிவிப்பில் கீழ்க்காணும் தகவல்களும் இடம்பெற்றுள்ளன:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இறைவா! எங்கள் சுற்றுப்புறங்கள் மீது (எங்களுக்கு நன்மை ஏற்படும் விதத்தில் இம்மழையைத் திருப்பிவிடுவாயாக!) எங்களுக்குப் பாதகமாக இதை நீ ஆக்கிவிடாதே!" என்று பிரார்த்தித்தார்கள். மேகத்தின் எந்தப் பகுதியை நோக்கி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கையால் சைகை செய்தார்களோ அந்தப் பகுதி விலகிச்சென்றது. மதீனா (நகரைச் சுற்றிலும் மேகங்கள் ஒதுங்கியதால் நடுவில் மதீனா நகரம்) ஒரு பாதாளம் போன்று எனக்குத் தெரிந்தது. "கனாத்' ஓடையில் ஒரு மாதம் தண்ணீர் ஓடியது. எந்தப் பகுதியிலிருந்து யார் வந்தாலும் அந்த அடைமழை குறித்துப் பேசாமல் இருக்கவில்லை.

1635 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை உரை நிகழ்த்திக்கொண்டிருந்தார்கள். அப்போது மக்கள் எழுந்து உரத்த குரலில், "அல்லாஹ்வின் தூதரே, மழை பொய்த்துவிட்டது; (பச்சை) மரங்கள் (காய்ந்து) சிவந்துவிட்டன; கால்நடைகள் மாண்டுவிட்டன" என்று கூறினர். (மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அப்துல் அஃலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் கீழ்க்காணும் தகவல்கள் இடம் பெற்றுள்ளன:
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்ததும் மதீனாவைச் சூழ்ந்திருந்த மேகம் விலகி) மதீனா தெளிவடைந்தது. அதன் சுற்றுப்புறங்களில் மழை பொழியலாயிற்று. மதீனாவில் ஒரு துளி மழைகூடப் பெய்யவில்லை. அப்போது நான் மதீனாவைப் பார்த்தேன். அது கிரீடத்திற்கு நடுவில் இருப்பதைப் போன்றிருந்தது.

1636 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் பின்வரும் தகவல் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மழைவேண்டிப் பிரார்த்தித்ததும்) அல்லாஹ் மேகங்களை ஒன்றிணையச் செய்தான். (மழை கொட்டியது.) நாங்கள் (மழை விடட்டும் என) எதிர்பார்த்துக் காத்திருந்தோம். (எங்களில்) தைரியமிக்க மனிதர்கூட வீட்டுக்குச் செல்லத் தயங்கிக்கொண்டிருப்பதை நான் கண்டேன்.

1637 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளியன்று சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது இருந்தபோது ஒரு கிராமவாசி வந்தார்" என்று தொடங்கி, மேற்கண்ட ஹதீஸில் உள்ள தகவல்கள் இடம்பெற்றுள்ளன.
"(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மழையை நிறுத்துமாறு பிரார்த்தித்ததும்) சுருட்டப்படுகின்ற சால்வையைப் போன்று மேகம் கலைந்து சென்றதை நான் கண்டேன்" என்று இந்த அறிவிப்பில் அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

1638 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தபோது மழை பெய்தது. உடனே அவர்கள் மழைத் துளிகள் தம்மீது விழும் விதமாக தமது ஆடையைச் சற்று விலக்கினார்கள். நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே, ஏன் இவ்வாறு செய்தீர்கள்?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள் "இது (புத்தம் புதிதாக) இப்போதுதான் இறைவனிடமிருந்து வருகிறது" என்று பதிலளித்தார்கள்.

**பாடம் : 3 கடும் காற்றையும் மேகத்தையும் காணும்போது இறைவனிடம் பாதுகாப்புக் கோருவதும் மழை பெய்யும் போது மகிழ்ச்சி அடைவதும்.**

1639 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(சூறாவளிக்) காற்று, மழைமேகம் ஆகியவை மிகுந்துள்ள நாட்களில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முகத்தில் (ஒரு விதமான கலக்கம்) தென்படும்; முன்னும் பின்னும் நடப்பார்கள். (நிம்மதியற்று ஒருவிதத் தவிப்புடன் காணப்படுவார்கள்.) மழை பொழிந்துவிட்டால் அந்த (தவிப்பு) நிலை அவர்களைவிட்டு நீங்கிவிடும்; மகிழ்ச்சி வந்துவிடும்.
நான் அவர்களிடம் (இது குறித்துக்) கேட்டதற்கு, "அது என் சமுதாயத்தார்மீது சாட்டப்பட்ட (இறைவனின்) வேதனையாக இருக்குமோ என்று நான் அஞ்சினேன்" என்று விடையளித்தார்கள். அவர்கள் மழையைக் காணும்போது "(இது இறைவனின்) அருள்" என்று கூறுவார்கள்.

1640 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சூறாவளிக் காற்று வீசும்போது, "இறைவா, இந்தக் காற்றின் நன்மையையும் அதனுள்ளே மறைந்திருக்கும் நன்மையையும் அது எதனுடன் அனுப்பப் பெற்றுள்ளதோ அதன் நன்மையையும் உன்னிடம் வேண்டுகிறேன். இந்தக் காற்றின் தீங்கிலிருந்தும், அதனுள்ளே மறைந்திருக்கும் தீங்கிலிருந்தும், அது எதனுடன் அனுப்பப் பெற்றுள்ளதோ அதன் தீங்கிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்" என்று கூறுவார்கள். வானத்தில் மேகமூட்டம் ஏற்பட்டால் நபி (ஸல்) அவர்களது முகம் மாறிவிடும்; (தமது அறைக்கு) உள்ளே போவார்கள்; வெளியே வருவார்கள்; முன்னும் பின்னுமாக நடப்பார்கள். (நிம்மதியற்று ஒரு விதத் தவிப்புடன் காணப்படுவார்கள்.) வானம் மழை பொழிந்துவிட்டால், அந்த (தவிப்பு) நிலை அவர்களைவிட்டு நீங்கிவிடும். இதை நான் அவர்களது முகத்திலிருந்து அறிந்துகொண்டு (இது குறித்து) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆயிஷா! (குர்ஆனில் கூறப்பட்டுள்ளபடி) 'ஆத்' சமுதாயத்தார், அந்த வேதனை (கொணரும் மேகம்) தாங்கள் வசித்த பள்ளத்தாக்குகளை நோக்கி வந்து கொண்டிருப்பதைக் கண்டபோது, (தவறாகப் புரிந்துகொண்டு) "இது நமக்கு மழை பொழிவிக்கும் மேகமாகும்" (46:24) என்று கூறினார்களே, அத்தகைய மேகமாகவும் இது இருக்கலாம்" என்று பதிலளித்தார்கள்.

1641 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒரேயடியாகத் தமது உள்நாக்குத் தெரியும் அளவுக்குச் சிரித்ததை ஒருபோதும் நான் கண்டதில்லை. அவர்கள் (பெரும்பாலும்) புன்னகைப்பவர்களாகவே இருந்தார்கள். மேகத்தையோ அல்லது (சூறாவளிக்) காற்றையோ கண்டால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகத்தில் (ஒரு விதமான கலக்கம்) தென்படும். (ஒரு நாள்) நான், "அல்லாஹ்வின் தூதரே! மக்கள் மேகத்தைக் காணும்போது அது மழை மேகமாக இருக்கலாம் என்றெண்ணி மகிழ்ச்சியடைகின்றனர். ஆனால், தாங்கள் மேகத்தைக் காணும்போது ஒரு விதமான கலக்கம் தங்களது முகத்தில் தென்படக்

காண்கிறேனே (ஏன்)?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆயிஷா, அதில் (இறைவனின்) வேதனை இருக்கலாம் என்பதால், என்னால் கலக்கமடையாமல் இருக்க இயலவில்லை. ("ஆத்' எனும்) ஒரு சமூகத்தார் (சூறாவளிக்) காற்றால் வேதனை செய்யப்பட்டனர். அந்தச் சமூகத்தார் (மேகமாக வந்த) அந்த வேதனையைப் பார்த்துவிட்டு, "இது நமக்கு மழையைப் பொழிவிக்கும் மேகம்' என்றே கூறினர்" என பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 ("ஸபா' எனும்) கீழைக் காற்று மற்றும் ("தபூர்' எனும்) மேலைக் காற்று பற்றிய குறிப்பு.**

1642 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் ("ஸபா' எனும்) கீழைக்காற்றின் வாயிலாக வெற்றி அளிக்கப்பட்டுள்ளேன்; "ஆத்' சமூகத்தார் ("தபூர்' எனும்) மேலைக் காற்றால் அழிக்கப்பட்டனர்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

# அத்தியாயம் : 11 - கிரகணத் தொழுகை

## பாடம் : 1 சூரிய கிரகணத் தொழுகை.

1643 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து (மக்களுடன்) தொழுதார்கள். அதில் நன்கு நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். பிறகு ருகூஉச் செய்தார்கள். அந்த ருகூஉவை நன்கு நீண்ட நேரம் செய்தார்கள். பிறகு (ருகூஉவிலிருந்து) தலையை உயர்த்தி நன்கு நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். இ(ந்த நிலையான)து முதல் நிலையைவிடக் குறைவாகவே இருந்தது. பிறகு (மீண்டும்) ருகூஉச் செய்தார்கள். அந்த ருகூஉவையும் நன்கு நீண்ட நேரம் செய்தார்கள். இ(ந்த ருகூஉவான)து முதல் ருகூஉவைவிடக் குறைவாகவே இருந்தது. பிறகு சஜ்தா (சிரவணக்கம்) செய்தார்கள். பிறகு எழுந்து நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். இ(ந்த நிலையான)து, இதற்கு முந்தைய நிலையை விடக் குறைவாகவே இருந்தது. பிறகு ருகூஉச் செய்தார்கள். அந்த ருகூஉவையும் நீண்ட நேரம் செய்தார்கள். இ(ந்த ருகூஉவான)து இதற்கு முந்தைய ருகூஉவைவிடக் குறைவாகவே இருந்தது. பிறகு (ருகூஉவிலிருந்து) தலையை உயர்த்தி, நிலையில் நின்றார்கள். அந்த நிலையிலும் நீண்ட நேரம் நின்றார்கள். இ(ந்த நிலையான)து இதற்கு முந்தைய நிலையைவிடக் குறைவாகவே இருந்தது. பிறகு (மீண்டும்) ருகூஉச் செய்தார்கள். அந்த ருகூஉ வையும் நீண்ட நேரம் செய்தார்கள். இ(ந்த ருகூஉவான)து இதற்கு முந்தைய ருகூஉவைவிடக் குறைவாகவே இருந்தது. பிறகு சஜ்தாச் செய்தார்கள்.

பின்னர் (கிரகணம் விலகி) சூரிய வெளிச்சம் வந்துவிட்டிருந்த நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்தார்கள். பிறகு மக்களுக்கு உரையாற்றினார்கள். அவர்கள் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து விட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:
சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் உள்ளவையாகும். எவரது இறப்புக்காகவும் எவரது பிறப்புக்காகவும் கிரகணம் ஏற்படுவதில்லை. கிரகணம் ஏற்படுவதை நீங்கள் கண்டால் "தக்பீர்' (அல்லாஹு அக்பர்) கூறுங்கள்; அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்; தொழுங்கள்; தானதர்மம் செய்யுங்கள். முஹம்மதின் சமுதாயத்தாரே! தன் அடியார்களில் ஆணோ பெண்ணோ யார் விபசாரத்தில் ஈடுபட்டாலும் (அதைக் கண்டு) கடுமையாக ரோஷம் கொள்பவர் அல்லாஹ்வைவிட வேறெவருமிலர். முஹம்மதின் சமுதாயத்தாரே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அறிவதையெல்லாம் நீங்களும் அறிந்தால் குறைவாகச் சிரிப்பீர்கள்; அதிகமாக அழுவீர்கள். நான் (சொல்ல வேண்டியதைச்) சொல்லிவிட்டேன் அல்லவா?

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரு சான்றுகளாகும்" என இடம்பெற்றுள்ளது.

1644 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இறைவாழ்த்துக்குப் பின்! சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் உள்ளவையாகும்' என்று கூறியதாகவும், பிறகு இரு கைகளையும் உயர்த்தி "இறைவா, (சொல்ல வேண்டியதைச்) சொல்லிவிட்டேனா?" என்று கேட்டதாகவும் அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

1645 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உயிரோடிருந்த காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. உடனே அவர்கள் பள்ளிவாசலுக்குச் சென்று (தொழுகையில்) நின்று "தக்பீர்' கூறினார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னால் அணிவகுத்து நின்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நிலையில்) நீண்ட நேரம் (குர்ஆன்) ஓதினார்கள். பிறகு "தக்பீர்' கூறி நீண்ட நேரம் ருகூஉச் செய்தார்கள். பிறகு (ருகூஉவிலிருந்து) தலையை உயர்த்தி "சமி அல்லாஹு லிமன் ஹமிதஹ். ரப்பனா வ ல(க்)கல் ஹம்து' (அல்லாஹ் தன்னைப் புகழ்வோரின் புகழுரையை ஏற்றுக்கொள்கிறான். எங்கள் இறைவா! புகழனைத்தும் உனக்கே உரியது) என்று கூறினார்கள். பிறகு நின்ற வண்ணம் நீண்ட நேரம் (குர்ஆன்) ஓதினார்கள். இ(ப்போது அவர்கள் ஓதிய)து முந்தைய ஓதலைவிடக் குறைவாகவே இருந்தது. பிறகு "தக்பீர்' கூறி, நீண்ட நேரம் ருகூஉச் செய்தார்கள். இ(ந்த ருகூஉவான)து முந்தைய ருகூஉவைவிடக் குறைவாகவே இருந்தது. பிறகு "சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ். ரப்பனா வ ல(க்)கல் ஹம்து' எனக் கூறி (நிலையில் நின்று)விட்டு, பிறகு சஜ்தாச் செய்தார்கள். (அபுத்தாஹிர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பின்னர் சஜ்தாச் செய்தார்கள்' எனும் வாசகம் இடம்பெறவில்லை.)
பிறகு முந்தைய ரக்அத்தில் செய்ததைப் போன்றே இரண்டாவது ரக்அத்திலும் செய்தார்கள். அவர்கள் (இரண்டு ரக்அத்களில்) நான்கு ருகூஉகளும் நான்கு சஜ்தாக்களும் பூர்த்தி செய்தார்கள். அவர்கள் தொழுகையை முடிப்பதற்கு முன் சூரிய வெளிச்சம் வந்து விட்டிருந்தது. பிறகு எழுந்து நின்று மக்களுக்கு உரையாற்றினார்கள். அல்லாஹ்வை அவனது தகுதிக்கேற்ப போற்றிப் புகழ்ந்து விட்டு, "சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரு சான்றுகளாகும். எவரது இறப்புக்காகவும் எவரது பிறப்புக்காகவும் அவற்றுக்குக் கிரகணம் ஏற்படுவதில்லை. ஆகவே, அவற்றை நீங்கள் கண்டால் தொழுகைக்கு விரையுங்கள்" என்றும், "உங்களைவிட்டு அவற்றை அல்லாஹ் அகற்றும்வரை தொழுங்கள்" என்றும் கூறினார்கள்.
மேலும் "நான் இந்த இடத்தில் (தொழுகையில் நின்றிருந்தபோது) உங்களுக்கு வாக்களிக்கப் பட்டுள்ள அனைத்தையும் கண்டேன். (தொழுகையிலிருந்தபோது) நான் முன்னே செல்வதைப் போன்று நீங்கள் கண்டீர்களே, அப்போது சொர்க்கத்தின் பழக்குலை ஒன்றைப் பறிக்க நான் நாடினேன். பின்னர் நான் பின்வாங்குவதைக் கண்டீர்களே, அப்போது நான் நரகத்தைக் கண்டேன். அதன் ஒரு பகுதி மற்றொரு பகுதியை அழித்து (உக்கிரமாக எரிந்து)கொண்டிருந்தது. மேலும், நரகத்தில் (அம்ர்) இப்னு லுஹை என்பாரைக் கண்டேன். அவர்தாம் முதன்முதலில் கடவுள் சிலைக்காக ஒட்டகத்தை (சாயிபா) நேர்ந்து விட்டவர் ஆவார்" என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், அபுத்தாஹிர் (ரஹ்) அவர்களது அறிவிப்பு "தொழுகைக்கு விரையுங்கள்" என்பதோடு முடிந்துவிடுகிறது; அதற்குப் பிறகுள்ள குறிப்புகள் அவரது அறிவிப்பில் இடம் பெறவில்லை.

1646 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. அப்போது அவர்கள் அறிவிப்பாளர் ஒருவரை அனுப்பி "அஸ்ஸலாத்து ஜாமிஆ' (தொழுகை நடைபெறுகிறது) என்று அறிவிக்கச் செய்தார்கள். மக்கள் கூடியதும் முன்னே சென்று "தக்பீர்' கூறி, இரண்டு ரக்அத்களில் நான்கு ருகூஉகளும் நான்கு சஜ்தாக்களும் செய்(து தொழுவித்)தார்கள்.

1647 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் கிரகணத் தொழுகையில் சப்தமிட்டு (குர்ஆன்) ஓதினார்கள். இரண்டு ரக்அத்களில் நான்கு ருகூஉகளும் நான்கு சஜ்தாக்களும் செய்தார்கள்.
- இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (கிரகணம் ஏற்பட்டபோது) இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். அவற்றில் நான்கு ருகூஉகளும் நான்கு சஜ்தாக்களும் செய்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், சூரிய கிரகணம் ஏற்பட்ட நாளில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எவ்வாறு தொழுதார்கள் என்பதை அறிவித்துவந்தார்கள்" என ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸில் உள்ளதைப் போன்று இடம்பெற்றுள்ளன.

1648 உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
எனது நம்பிக்கைக்குரிய ஒருவர் – அதாவது ஆயிஷா (ரலி) அவர்கள்– கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டபோது, அவர்கள் (தொழுகையில்) நீண்ட நேரம் (கால்கடுக்க) நின்றார்கள். நிலையில் நிற்பார்கள்; பிறகு ருகூஉச் செய்வார்கள்; மீண்டும் நிலையில் நிற்பார்கள்; பிறகு ருகூஉச் செய்வார்கள்; பிறகு நிலையில் நிற்பார்கள்; ருகூஉச் செய்வார்கள். இவ்வாறு இரண்டு ரக்அத்களில் மூன்று ருகூஉகளும் நான்கு சஜ்தாக்களும் செய்தார்கள். சூரிய வெளிச்சம் வந்துவிட்டிருந்த நிலையில் தொழுகையை முடித்தார்கள். அவர்கள் ருகூஉச் செய்யும்போது "அல்லாஹு அக்பர்' (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று கூறிவிட்டுப் பிறகு ருகூஉச் செய்தார்கள். (ருகூஉவிலிருந்து) தலையை உயர்த்தும்போது "சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் (அல்லாஹ் தன்னைப் புகழ்வோரின் புகழுரையை ஏற்றுக்கொள்கிறான்) என்று கூறி எழுந்து அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்தார்கள். (தொழுகை முடிந்த) பிறகு "சூரியனும் சந்திரனும் எவரது இறப்புக்காகவும் எவரது பிறப்புக்காகவும் கிரகணம் காண்பதில்லை. மாறாக, அவ்விரண்டும் அல்லாஹ்வின் சான்றுகளில் உள்ளவையாகும். அவற்றின் மூலம்

அல்லாஹ் தன் அடியார்களை அச்சுறுத்(தி நல்வழிப்படுத்)துகிறான். கிரகணத்தை நீங்கள் கண்டால் (இருள் விலகி) வெளிச்சம் வரும்வரை இறையை நினைவு கூருங்கள்"என்று கூறினார்கள்.

1649 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (கிரகணத் தொழுகையில் ரக்அத்துக்கு மூன்று ருகூஉகள் வீதம்) ஆறு ருகூஉகளும் (ரக்அத்துக்கு இரண்டு சஜ்தாக்கள் வீதம்) நான்கு சஜ்தாக்களும் செய்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 2 கிரகணத் தொழுகையின்போது மண்ணறை (கப்று) வேதனை பற்றி நினைவு கூர்வது.**

1650 அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு யூதப் பெண் ஆயிஷா (ரலி) அவர்களிடம் யாசகம் கேட்டு வந்தாள். அப்போது அவள் ஆயிஷாவிடம் 'மண்ணறை (கப்று) வேதனையிலிருந்து உம்மை இறைவன் காப்பாற்றுவானாக!' என்று கூறினாள். ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஆகவே,நான் (இதுபற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறி) "அல்லாஹ்வின் தூதரே! மனிதர்கள் மண்ணறைகளில் வேதனை செய்யப்படுகிறார்களா?" எனக் கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(மண்ணறை வேதனையிலிருந்து) நானும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்" என்று கூறினார்கள்.

பிறகு (ஒரு நாள்) காலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் புதல்வர் இப்ராஹீமின் இறப்புச் செய்தி கேட்டு) வாகனத்தில் ஏறிப் பயணமானார்கள். அப்போது சூரிய கிரகணம் ஏற்பட்டு விடவே, நான் சில பெண்களுடன் சேர்ந்து அறைகளின் பின்புற வழியாகப் பள்ளிவாசலுக்குப் புறப்பட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பயணத்தை ரத்துச் செய்துவிட்டு) தமது வாகனத்திலிருந்து இறங்கி, தாம் வழக்கமாக நின்று தொழுவித்துவந்த இடத்திற்குச் சென்று நின்றார்கள். மக்களும் அவர்களுக்குப் பின்னால் நின்றனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுகையில்) நீண்ட நேரம் நிலையில் நின்றுவிட்டுப் பிறகு ருகூஉச் செய்தார்கள். அந்த ருகூஉவில் நீண்ட நேரம் இருந்தார்கள். பிறகு (ருகூஉவிலிருந்து) நிமிர்ந்து நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். இ(ந்த நிலையான)து இதற்கு முந்தைய நிலையை விடக் குறைவாகவே இருந்தது. பிறகு ருகூஉச் செய்தார்கள். அந்த ருகூஉவையும் நீண்ட நேரம் செய்தார்கள். இ(ந்த ருகூஉவான)து இதற்கு முந்தைய ருகூஉவைவிடக் குறைவாகவே இருந்தது. பிறகு (ருகூஉவிலிருந்து தலையை) உயர்த்தியபோது, சூரிய வெளிச்சம் வந்துவிட்டிருந்தது. பின்னர் (அவர்கள் ஆற்றிய உரையில்) "நீங்கள் கப்றுகளில் தஜ்ஜாலின் குழப்பத்தைப் போன்ற குழப்பத்துக்கு உள்ளாக்கப்படுவதை நான் கண்டேன்" என்று குறிப்பிட்டார்கள்.
இதன் அறிவிப்பாளரான அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் பின் சஅத் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

இதன் பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நரகநெருப்பின் வேதனையிலிருந்தும் மண்ணறை (கப்று) வேதனையிலிருந்தும் (இறைவனிடம் அதிகமாகப்) பாதுகாப்புக்கோரி வந்ததை நான் செவியுற்றேன் என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 3 கிரகணத் தொழுகையின்போது நபி (ஸல்) அவர்களுக்குச் சொர்க்கமும் நரகமும் காட்டப்பட்ட நிகழ்ச்சி.

1651 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் கடுமையான வெப்பம் நிறைந்த ஒரு நாளில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்முடைய தோழர்களுடன் (கிரகணத் தொழுகை) தொழுதார்கள். அதில் நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். எந்த அளவிற்கென்றால் மக்கள் (நிற்க முடியாமல்) கீழே விழலாயினர். பிறகு நீண்ட நேரம் ருகூஉச் செய்தார்கள். பிறகு (ருகூஉவிலிருந்து) நிமிர்ந்து நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். பிறகு (மீண்டும்) நீண்ட நேரம் ருகூஉச் செய்தார்கள். பிறகு நிமிர்ந்து நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். பிறகு இரண்டு சஜ்தாக்கள் செய்தார்கள். பிறகு (இரண்டாவது ரக்அத்திற்காக) எழுந்து முதல் ரக்அத்தில் செய்ததைப் போன்றே செய்தார்கள். அவர்கள் (இவ்விரு ரக்அத்களில்) நான்கு ருகூஉகளும் நான்கு சஜ்தாக்களும் செய்தார்கள்.

பிறகு, "நீங்கள் நுழையவிருக்கின்ற (மறுமை வெளி, சொர்க்கம் மற்றும் நரகம் உட்பட) அனைத்தும் எனக்குக் காட்டப்பட்டன. எனக்குச் சொர்க்கம் காட்டப்பட்டபோது அதிலிருந்த பழக்குலையொன்றை நான் எட்டிப் பிடிக்கப்போனேன்.ஆனால் எனது கைக்கு எட்ட வில்லை. எனக்கு (இத்தொழுகையின்போது) நரகமும் காட்டப்பட்டது. அதில் பனூ இஸ்ராயீல் சமூகத்தைச் சேர்ந்த ஒரு பெண், ஒரு பூனையின் காரணத்தால் வேதனை செய்யப்படுவதை நான் பார்த்தேன். அவள் தனது பூனைக்குத் தீனி போடாமல் கட்டிப்போட்டு வைத்திருந்தாள். அவள் அதை பூமியிலுள்ள புழுப்பூச்சிகளைத் தின்ன (அவிழ்த்து) விடவுமில்லை. (இதன் காரணமாகவே அவள் நரகம் சென்றாள்.) மேலும், நரகத்தில் நான் அபூஸுமாமா அம்ர் பின் மாலிக் என்பவரையும் பார்த்தேன்.அவர் நரகத்தில் தனது குடலை இழுத்த வண்ணம் சென்றுகொண்டிருந்தார். மக்கள் "ஒரு மாமனிதர் (அல்லது தலைவரின்) மரணத்திற்காகவே சூரியனுக்கும் சந்திரனுக்கும் கிரகணம் ஏற்படுகிறது' என்று கூறுகின்றனர். (ஆனால்) அவ்விரண்டும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரு சான்றுகளாகும். அவற்றை உங்களுக்கு இறைவன் காண்பிக்கிறான். அவற்றுக்குக் கிரகணம் ஏற்பட்டால் வெளிச்சம் வரும் வரை நீங்கள் (இறைவனைத்) தொழுங்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஹிம்யர் (யமன் நாட்டின் பழங்குடி) இனத்தைச் சேர்ந்த உயரமான கறுப்பு நிறப் பெண்ணொருத்தியை நான் நரகத்தில் கண்டேன்" எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது. "பனூ இஸ்ராயீல் சமுதாயத்தைச் சேர்ந்த' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1652 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய புதல்வர் இப்ராஹீம் (ரலி) அவர்கள் இறந்த நாளில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. அப்போது மக்கள் "இப்ராஹீம் இறந்ததனால் தான் கிரகணம் ஏற்பட்டது' என்று கூறினர். (இந்தச் செய்தி எட்டியதும்) நபி (ஸல்) அவர்கள் எழுந்து (இரண்டு ரக்அத்களில்) ஆறு ருகூஉகளும் நான்கு சஜ்தாக்களும் செய்தார்கள். அவர்கள் முதலில் "தக்பீர்' (தஹ்ரீம்) கூறினார்கள். பின்னர் நீண்ட நேரம் (குர்ஆன் வசனங்களை) ஓதினார்கள். பிறகு ஏறக்குறைய நிலையில் நின்றிருந்த அளவிற்கு ருகூஉச் செய்தார்கள். பிறகு ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தி முன்பு ஓதியதைவிடக் குறைவாக (குர்ஆனை) ஓதினார்கள். பிறகு ஏறக்குறைய முன்பு நிலையில் நின்றிருந்த அளவிற்கு ருகூஉச் செய்தார்கள். பிறகு ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தி இரண்டாவது முறை (குர்ஆனை) ஓதினார்கள். அது முதலாவது முறை ஓதியதைவிடக் குறைவாக இருந்தது. பிறகு ஏறக்குறைய முன்பு நிலையில் நின்றிருந்த அளவிற்கு ருகூஉச் செய்தார்கள். பிறகு ருகூஉவிலிருந்து தலையை உயர்த்தினார்கள். பிறகு (பூமியில்) சரிந்து இரண்டு சஜ்தாக்கள் செய்தார்கள்.
பிறகு (இரண்டாவது ரக்அத்திற்காக) எழுந்து (முந்தைய ரக்அத்தில் செய்ததைப் போன்றே) மீண்டும் மூன்று ருகூஉகள் செய்தார்கள். அவர்கள் ஒரு ருகூஉச் செய்தால் அது அதற்கு முந்தைய ருகூஉவைவிடக் குறைவாகவே இருந்தது. அவர்களது ருகூஉ ஏறக்குறைய அவர்களது சஜ்தாவின் அளவிற்கே அமைந்திருந்தது. பிறகு அவர்கள் (தாம் நின்று தொழுவித்த இடத்திலிருந்து) பின்வாங்கினார்கள். அவர்களுக்குப் பின்னாலிருந்த வரிசைகளும் அவர்களுடன் பின்வாங்கின. இறுதியில் நாங்கள் நின்ற இடத்திற்கே நபியவர்கள் வந்துவிட்டார்கள். (அறிவிப்பாளர் அபூபக்ர் கூறுகிறார்கள்: பெண்கள் நின்றிருந்த இடத்திற்கு வந்துசேர்ந்தார்கள்.) பிறகு நபி (ஸல்) அவர்கள் முன்னோக்கி நகர அவர்களுடன் சேர்ந்து மக்களும் முன்னோக்கி நகர்ந்து, முன்பு நின்றிருந்த இடத்தில் நின்றனர். (கிரகணம் விலகி) சூரியன் தனது பழைய நிலைக்குத் திரும்பிய வேளையில் தொழுகையை முடித்தார்கள். பிறகு (உரையாற்றினார்கள். அதில் பின்வருமாறு) குறிப்பிட்டார்கள்:
மக்களே, சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரு சான்றுகளாகும். மக்களில் எவரது இறப்புக்காகவும் (அறிவிப்பாளர் அபூபக்ர் கூறுகிறார்கள்: எந்த மனிதரின் இறப்புக்காகவும்) அவற்றுக்குக் கிரகணம் ஏற்படுவதில்லை. இவற்றில் எதையேனும் நீங்கள் கண்டால் சூரிய வெளிச்சம் வரும்வரை நீங்கள் தொழுங்கள். உங்களுக்கு வாக்களிக்கப் பட்டுள்ள (சொர்க்கம் மற்றும் நரகம் உள்ளிட்ட) அனைத்தையும் நான் இத்தொழுகையில் இருந்தபோது கண்டேன். நரகம் என் (கண்)முன்னே கொண்டுவரப்பட்டது. அதன் தீச்சுவாலை என்னைத் தாக்கிவிடுமோ என நான் அஞ்சினேன். அதன் காரணமாகவே நான் பின்வாங்கியதை நீங்கள் கண்டீர்கள். அ(ந்த நரகத்)தில் முனை வளைந்த கைத்தடி வைத்திருந்த ஒருவன் தனது குடலை இழுத்தபடி நரகத்தில் சென்றுகொண்டிருந்ததைக் கண்டேன். அவன் கைத்தடியின் முனையால் ஹஜ் பயணிகளிடம் திருடிவந்தான். திருட்டு அம்பலமாகிவிட்டால் "எனது கைத்தடியில் (எப்படியோ இந்தப் பொருள்) மாட்டிக்கொண்டது' என்று கூறுவான். யாருக்கும் தெரியாவிட்டால் அதைக் கொண்டு சென்றுவிடுவான்.
மேலும், நரகத்தில் நான், பூனை வளர்த்த பெண்ணையும் கண்டேன். அவள் அதற்குத் தீனி போடாமல் கட்டிப்போட்டு வைத்திருந்தாள். அவள் அதை பூமியிலுள்ள புழுப்பூச்சிகளைத்

தின்ன (அவிழ்த்து)விடவுமில்லை. அது பசியாலேயே செத்துப்போய்விட்டது. பிறகு என் (கண்) முன்னே சொர்க்கம் கொண்டுவரப்பட்டது. நான் இந்த இடத்திற்கு மீண்டும் முன்னேறி வந்ததை நீங்கள் பார்த்தீர்களே அதற்குக் காரணம் அதுதான். நீங்கள் பார்க்க வேண்டும் என்பதற்காகவே நான் சொர்க்கத்தின் கனிகளைப் பறிக்க எனது கையை நீட்டினேன். பிறகு அவ்வாறு செய்யலாகாது என்று எனக்குத் தோன்றியது (ஆகவே, அதிலிருந்து பின்வாங்கி விட்டேன்). உங்களுக்கு வாக்களிக்கப்பட்டுள்ள அனைத்தையும் இந்தத் தொழுகையில் இருந்தபோது நான் கண்டுகொண்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1653 ஃபாத்திமா பின்த் அல்முன்திர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. அப்போது நான் (என் சகோதரி) ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றேன். அவர் தொழுதுகொண்டிருந்தார். நான் ஆயிஷாவிடம் "மக்களுக்கு என்னவாயிற்று? ஏன் (இந்தநேரத்தில்) தொழுதுகொண்டிருக்கிறார்கள்?" என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா தமது தலையால் வானை நோக்கிச் சைகை செய்தார்கள். நான் "ஏதேனும் அடையாளமா?" என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா "ஆம்' என (சைகையால்) விடையளித்தார். (நானும் தொழுகையில் நின்று கொண்டேன்.)
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெகுநேரம் நிலையில் நின்றதால் எனக்குத் தலைச் சுற்றலே வந்துவிட்டது. எனக்குப் பக்கத்திலிருந்த தோல் பாத்திரத்திலிருந்து தண்ணீர் எடுத்து ‘எனது தலைமீது' அல்லது ‘முகத்தின் மீது' தெளித்தேன். சூரிய வெளிச்சம் வந்து விட்டிருந்த நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்தார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து மக்களுக்கு உரையாற்றினார்கள். "இறைவாழ்த்துக்குப் பின்! நான் இந்த இடத்தில் (தொழுதவாறு) நின்றபோது சொர்க்கம் மற்றும் நரகம் உட்பட இதுவரை நான் பார்த்திராத அனைத்தையும் கண்டேன். நீங்கள் உங்கள் மண்ணறைகளில் (கப்றுகளில்), மகாக்குழப்பவாதியான மஸீஹுத் தஜ்ஜாலின் "குழப்பத்தைப் போன்ற' அல்லது "அதற்கு நிகரான' குழப்பத்துக்கு உள்ளாக்கப்படுவீர்கள் என எனக்கு வஹீ (இறைச்செய்தி) அறிவிக்கப்பட்டது.
- ("குழப்பத்தைப் போன்ற' அல்லது "அதற்கு நிகரான' என்பதில் எதை அஸ்மா (ரலி) அவர்கள் கூறினார்கள் என எனக்குத் தெரியவில்லை) –
(நீங்கள் மண்ணறையில் (கப்று) இருக்கும்போது) உங்களில் ஒருவரிடம் (என்னைக் காட்டி) "இம் மனிதரைப் பற்றி நீ என்ன அறிந்துள்ளாய்?" என வினவப்படும். அதற்கு "இறைநம்பிக்கையாளர்' அல்லது "(இறுதித்தூதரின் மீது) உறுதிகொண்டிருந்தவர்' (இந்த இரண்டில் எதை அஸ்மா (ரலி) அவர்கள் கூறினார்கள் என எனக்குத் தெரியவில்லை.) "இவர் அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) ஆவார்கள்; எங்களிடம் தெளிவான சான்றுகளையும் நேர்வழியையும் கொண்டுவந்தார்கள். நாங்கள் அவர்களது அழைப்பை ஏற்றோம்; இணங்கினோம்" என்று மூன்று முறை கூறுவார். அப்போது அவரிடம், "உறங்குவீராக! நீர் அவரை நம்பிக்கை கொண்டிருந்தீர் என நாங்கள் அறிவோம். எனவே, நலமாக உறங்குவீராக" என்று கூறப்படும்.

ஆனால், "நயவஞ்சகன்' அல்லது "சந்தேகத்துடன் இருந்தவன்' "(அவரை) எனக்குத் தெரியாது. மக்கள் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தார்கள். அதைக் கேட்டு நானும் அதையே சொன்னேன்" என்று பதிலளிப்பான். (நயவஞ்சகன்,சந்தேகத்துடன் இருந்தவன் ஆகிய இவ்விரண்டில் எதை அஸ்மா (ரலி) அவர்கள் கூறினார்கள் என எனக்குத் தெரியவில்லை.)

1654 மேற்கண்ட ஹதீஸ் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது மக்கள் (தொழுகையில்) நின்றிருந்தார்கள். ஆயிஷாவும் தொழுதுகொண்டிருந்தார்கள். நான் "மக்களுக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டேன்" என அஸ்மா (ரலி) அவர்கள் கூறியதாக ஹதீஸ் தொடங்குகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

1655 முஹம்மத் பின் முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"(சூரிய கிரகணத்தைக் குறிக்க) "கசஃபத் திஷ் ஷம்சு' என்று கூறாதீர். மாறாக "ஃகசஃபத் திஷ் ஷம்சு' என்று கூறுக" என உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

1656 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் (சூரிய கிரகணம் ஏற்பட்ட தினத்தில்) நபி (ஸல்) அவர்கள் பதற்றமடைந்தவர்களாக (தமது மேல்துண்டுக்குப் பதிலாகத் தமது வீட்டாரின்) முகத்திரைத் துணியை எடுத்து போட்டுக்கொண்டார்கள். பிறகு, அவர்களிடம் அவர்களது மேல்துண்டு கொண்டுபோய் சேர்க்கப்பட்டது. அவர்கள் (தொழுகையில்) நின்று மக்களுக்கு நீண்ட நேரம் தொழுவித்தார்கள். எந்த அளவிற்கென்றால், ஒரு மனிதர் அங்கு வந்தால், நபி (ஸல்) அவர்கள் ருகூஉச் செய்தார்கள் என்பதைக்கூட அவரால் அறிந்துகொள்ள முடியாது; ருகூஉச் செய்தார்கள் என அவர் சொல்லவுமாட்டார். நீண்ட நேரம் நபியவர்கள் நின்றதே இதற்குக் காரணம்.

1657 மேற்கண்ட ஹதீஸ் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அவர்கள் நிற்பதும் பிறகு ருகூஉச் செய்வதுமாக நீண்ட நேரம் நின்றிருந்தார்கள்" என்றும், "நான் என்னைவிட வயதில் மூத்த ஒரு பெண்ணையும், என்னைவிட உடல் நலிவுற்ற மற்றோர் பெண்ணையும் பார்க்கலானேன். (எனவே உட்கார்ந்து விடலாமா என்ற எனது எண்ணத்தை நான் மாற்றிக்கொண்டேன்)" என்றும் அஸ்மா (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

1658 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களது காலத்தில் சூரியகிரகணம் ஏற்பட்டது. உடனே அவர்கள் பதற்றமடைந்தவர்களாக (தமது மேல்துண்டை எடுப்பதற்கு பதில்) தவறாக (தம் வீட்டாரின்) முகத்திரையை எடுத்துச் சென்றுவிட்டார்கள். பின்னர் அவர்களது மேல்துண்டு அவர்களிடம் சேர்க்கப்பட்டது.

(நபி (ஸல்) அவர்கள் கிரகணத்தொழுகை தொழுவிக்கிறார்கள் என்பதைக் கேள்விப்பட்ட போது) நான் என் தேவைகளை முடித்துக் கொண்டு வந்து பள்ளிவாசலுக்குள் நுழைந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்று (தொழுவித்துக்) கொண்டிருந்ததை நான் கண்டேன். அவர்களுடன் நானும் நின்றுகொண்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். எந்த அளவிற்கென்றால், உட்கார்ந்துவிடலாமா என நான் எண்ணினேன். பிறகு (எனக்கு அருகில்) பலவீனமான ஒரு பெண்ணைக் கண்டேன். இவரோ என்னைவிட பலவீனமானவர். (இவரே நின்று தொழும்போது) நானும் நின்றுதான் தொழுவேன்" எனக் கூறிக்கொண்டேன். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ருகூஉச் செய்தார்கள். அதையும் நீண்ட நேரம் செய்தார்கள். பிறகு (ருகூஉவிலிருந்து) தமது தலையை உயர்த்தி நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். ஒரு மனிதர் (தொழுகைக்கு இடையில்) வந்(து சேர்ந்)தால் நபி (ஸல்) அவர்கள் ருகூஉச் செய்யவில்லை என எண்ணிவிடுவார் (அந்த அளவிற்கு நீண்ட நேரம் நின்றுகொண்டேயிருந்தார்கள்.)

1659 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுவித்தார்கள். அவர்களுடன் மக்களும் தொழுதனர். அப்போது (குர்ஆனில்) ஏறக்குறைய "அல்பகரா' (எனும் இரண்டாவது) அத்தியாயத்தை ஓதும் அளவிற்கு நிலையில் நின்றார்கள். பிறகு நீண்ட நேரம் ருகூஉச் செய்தார்கள். பிறகு (ருகூஉவிலிருந்து) நிமிர்ந்து நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். இ(ந்த நிலையான)து முந்தைய நிலையைவிடக் குறைவாக இருந்தது. பிறகு (மீண்டும்) நீண்ட நேரம் ருகூஉச் செய்தார்கள். இ(ந்த ருகூஉவான)து முந்தைய ருகூஉவை விடக் குறைவாக இருந்தது. பிறகு சஜ்தாச் செய்தார்கள். பிறகு (இரண்டாவது ரக்அத்திற்காக) எழுந்து நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். இ(ந்த நிலையான)து இதற்கு முந்தைய நிலையைவிடக் குறைவாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ருகூஉச் செய்தார்கள். இ(ந்த ருகூஉவான)து இதற்கு முந்தைய ருகூஉவைவிடக் குறைவாக இருந்தது. பிறகு (ருகூஉவிலிருந்து) நிமிர்ந்து நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். இ(ந்த நிலையான)து இதற்கு முந்தைய நிலையை விடக் குறைவாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ருகூஉச் செய்தார்கள். இ(ந்த ருகூஉ வான)து இதற்கு முந்தைய ருகூஉவைவிடக் குறைவாக இருந்தது. பிறகு சஜ்தாச் செய்தார்கள். (கிரகணம் விலகி) சூரிய வெளிச்சம் வந்துவிட்டிருந்த நிலையில் (தொழுகையை முடித்துத்) திரும்பினார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரு சான்றுகளாகும். எவரது இறப்புக்காகவோ எவரது பிறப்புக்காகவோ கிரகணம் ஏற்படுவதில்லை. அதை நீங்கள் கண்டால் அல்லாஹ்வை நினைவுகூர்ந்து போற்றுங்கள்" என்று கூறினார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே, நீங்கள் (தொழும்போது) இந்த இடத்தில் நின்றுகொண்டு எதையோ பிடிக்க முயன்றதைக் கண்டோம். பிறகு (அந்த முயற்சியை) கைவிட்டதையும் கண்டோமே (அது ஏன்?)" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நான் (தொழுதுகொண்டிருக்கையில்) சொர்க்கத்தைக் கண்டேன். (அதிலிருந்து) பழக்குலையொன்றை எடுக்க முயன்றேன். அதை நான்

எடுத்திருந்தால், இந்த உலகம் உள்ளவரை நீங்கள் அதைப் புசித்திருப்பீர்கள். மேலும், நான் நரகத்தையும் கண்டேன். இன்றைய தினத்தைப் போன்று மிக பயங்கரமான காட்சி எதையும் ஒருபோதும் நான் கண்டதேயில்லை. நரகவாசிகளில் பெண்களையே அதிகமாகக் கண்டேன்" என்று கூறினார்கள். மக்கள் "ஏன் (அது), அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவர்களின் நிராகரிப்பே காரணம்" என்றார்கள். அப்போது "இறைவனையா நிராகரிக்கிறார்கள்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு "கணவர்களை நிராகரி(த்து நிந்தி)க்கிறார்கள். (கணவர் செய்த) உதவிகளுக்கு நன்றி காட்ட மறுக்கிறார்கள். காலமெல்லாம் அவர்களில் ஒருத்திக்கு நீ உதவி செய்து, பிறகு உன்னிடம் ஏதேனும் (குறை ஒன்றைக்) கண்டால் "உன்னிடமிருந்து எந்த நலனையும் ஒருபோதும் நான் கண்டதேயில்லை' என்று சொல்லிவிடுவாள்" என்று பதிலளித்தார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "பிறகு நீங்கள் பின்வாங்கி வந்ததையும் கண்டோமே (ஏன்?)" என்று மக்கள் வினவியதாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 4 கிரகணத் தொழுகையில் நபி (ஸல்) அவர்கள் (ஒரு ரக்அத்திற்கு நான்கு ருகூஉகள்; இரண்டு சஜ்தாக்கள் வீதம் மொத்தம்) எட்டு ருகூஉகளும் நான்கு சஜ்தாக்களும் செய்தார்கள் என்று கூறுவோரின் ஆதாரம்.**

1660 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சூரியகிரகணம் ஏற்பட்டபோது (ரக்அத்திற்கு நான்கு ருகூஉகள்; இரண்டு சஜ்தாக்கள் வீதம்) எட்டு ருகூஉகளும் நான்கு சஜ்தாக்களும் செய்(து இரு ரக்அத்கள் தொழு)தார்கள்.

அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களிடமிருந்தும் இவ்வாறே அறிவிக்கப்பட்டுள்ளது.

1661 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் சூரியகிரகணத் தொழுகையில் நின்று (குர்ஆனை) ஓதினார்கள். பிறகு ருகூஉச் செய்தார்கள். பிறகு (நிமிர்ந்து குர்ஆன்) ஓதிவிட்டுப் பிறகு ருகூஉச் செய்தார்கள். பிறகு (நிமிர்ந்து குர்ஆன்) ஓதிவிட்டுப் பிறகு ருகூஉச் செய்தார்கள். பிறகு (மீண்டும் நிமிர்ந்து குர்ஆன்) ஓதிவிட்டு ருகூஉச் செய்தார்கள். பிறகு சஜ்தாச் செய்தார்கள். அடுத்த ரக்அத்திலும் இவ்வாறே செய்தார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 5 கிரகணத் தொழுகைக்காக "அஸ் ஸலாத்து ஜாமிஆ' (தொழுகை நடக்கப் போகிறது) என்று அறிவிப்புச் செய்வதற்கான ஆதாரம்.**

1662 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சூரியகிரகணம் ஏற்பட்டபோது "(இன்னஸ்) ஸலாத்த ஜாமிஆ' (தொழுகை நடக்கப்போகிறது) என (மக்களுக்கு) அறிவிப்புச் செய்யப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ரக்அத்தில் இரண்டு ருகூஉகள்

செய்தார்கள். பிறகு (அடுத்த ரக்அத்திற்கு) எழுந்து (மீண்டும்) ஒரு ரக்அத்தில் இரண்டு ருகூஉகள் செய்தார்கள். (அவர்கள் தொழுகையை முடிக்கும்போது கிரகணமும் விலகி) சூரிய வெளிச்சம் வந்துவிட்டிருந்தது. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அதை விட நீண்ட ருகூஉவை ஒருபோதும் நான் செய்ததேயில்லை; நீண்ட சஜ்தாவையும் ஒரு போதும் நான் செய்ததேயில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1663 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரு சான்றுகளாகும். அல்லாஹ் தன் அடியார்களை அவற்றின் மூலம் அச்சுறுத்(தி நல்வழிப்படுத்)துகிறான். மனிதர்களில் எவரது இறப்புக்காகவும் கிரகணங்கள் ஏற்படுவதில்லை. அவற்றிலிருந்து ஏதேனும் ஒன்றை நீங்கள் கண்டால் உங்களுக்கு ஏற்பட்டுள்ளது அகற்றப்படும்வரை தொழுது, அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்.
இதை அபூமஸ்ஊத் உக்பா பின் அம்ர் அல்அன்சாரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1664 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மனிதர்களில் எவரது இறப்புக்காகவும் சூரிய மற்றும் சந்திர கிரகணங்கள் ஏற்படுவதில்லை. மாறாக, அவ்விரண்டும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரு சான்றுகளாகும். ஆகவே, கிரகணத்தை நீங்கள் கண்டால் எழுந்து தொழுங்கள்.
இதை அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1665 மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஏழு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் சுஃப்யான் (ரஹ்) மற்றும் வகீஉ (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "(நபி (ஸல்) அவர்களின் புதல்வர்) இப்ராஹீம் (ரலி) இறந்த நாளில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. அப்போது மக்கள் "இப்ராஹீமின் இறப்புக்காகவே கிரகணம் ஏற்பட்டது' என்று கூறினர்" என (அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாக) இடம்பெற்றுள்ளது.

1666 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களது காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. நபி (ஸல்) அவர்கள் யுக முடிவு நாள் வந்துவிட்டதோ என அஞ்சி(யதைப் போன்று) பதற்றமடைந்தவர்களாக எழுந்து பள்ளிவாசலுக்குச் சென்றார்கள். அங்கு நின்று தொழுதார்கள். நிலை, குனிதல், சிரவணக்கம் ஆகியவற்றை நீண்ட நேரம் செய்(து தொழு)தார்கள். அவர்கள் ஒருபோதும் இவ்வாறு எந்தத் தொழுகையிலும் செய்வதை நான் கண்டதில்லை. பிறகு, "அல்லாஹ் அனுப்பிவைக்கும் இந்த அடையாளங்கள் எவரது இறப்புக்காகவும் பிறப்புக்காகவும் ஏற்படுபவை அல்ல. எனினும், அல்லாஹ் தன் அடியார்களை இவற்றின் மூலம் எச்சரிக்கவே செய்கிறான். இவற்றில் ஏதேனும் ஒன்றை நீங்கள் கண்டால் அவனை நினைவு கூர்வதிலும் அவனிடம் பிரார்த்திப்பதிலும் அவனிடம் பாவமன்னிப்புக் கோருவதிலும் விரைந்து ஈடுபடுங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

"(சூரிய கிரகணம் ஏற்பட்டது' என்பதைக் குறிக்க இந்த ஹதீஸின் மூலத்தில் ஆளப்பட்டுள்ள "ஃகசஃபத்திஷ் ஷம்சு' எனும் சொல்) முஹம்மத் பின் அல்அலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "கசஃபத்திஷ் ஷம்சு' என்று ஆளப்பட்டுள்ளது. ("தன் அடியார்களை எச்சரிக்கவே செய்கிறான்' என்பதன் மூலச்சொல் "யுகவ்விஃபு பிஹா இபாதஹு" என்பதற்கு மாறாக) "யுகவ்விஃபு இபாதஹு" என்று இடம்பெற்றுள்ளது.

1667 அப்துர் ரஹ்மான் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உயிருடனிருந்த காலத்தில் (ஒரு நாள்) நான் என் அம்புகளை எறிந்துகொண்டிருந்தேன். அப்போது சூரிய கிரகணம் ஏற்பட்டது. உடனே நான் அம்புகளை விட்டெறிந்துவிட்டு "இன்று சூரிய கிரகணம் தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஏற்படப்போவதை நான் காண்பேன்' எனக் கூறிக்கொண்டவனாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்துசேர்ந்தேன். அப்போது அவர்கள் தம் கைகளை உயர்த்தியபடி பிரார்த்திப்பதிலும் "தக்பீர்" சொல்(லி இறைவனைப் பெருமைப் படுத்து)வதிலும் அல்லாஹ்வைப் புகழ்வதிலும் "லா இலாஹ இல்லல்லாஹ்" (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என ஏகத்துவ உறுதி மொழி) கூறுவதிலும் ஈடுபட்டிருந்தார்கள். கிரகணம் விலகி சூரிய வெளிச்சம் வந்துவிட்டிருக்க இரு அத்தியாயங்கள் ஓதி இரண்டு ரக்அத்கள் தொழு(து முடித்)தார்கள்.

1668 நபித்தோழர் அப்துர் ரஹ்மான் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உயிரோடிருந்த காலத்தில் (ஒரு நாள்) நான் மதீனாவில் அம்புகளை எய்வதில் ஈடுபட்டிருந்தேன். அப்போது சூரிய கிரகணம் ஏற்பட்டது. உடனே அவற்றை நான் எறிந்துவிட்டு "அல்லாஹ்வின் மீதாணையாக, சூரிய கிரகணம் தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஏற்படப்போவதை நான் காண்பேன்" எனக் கூறிக்கொண்டு, அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் தம் கைகளை உயர்த்தி நின்றபடி தொழுதுகொண்டிருந்தார்கள். இறைவனைத் துதிப்பதிலும் அவனைப் புகழ்வதிலும் ஏகத்துவ உறுதிமொழி கூறுவதிலும் அவனைப் பெருமைப்படுத்துவதிலும் பிரார்த்திப்பதிலும் கிரகணம் விலகும்வரை ஈடுபடலானார்கள். கிரகணம் விலகவும், அவர்கள் இரு அத்தியாயங்கள் ஓதி இரு ரக்அத்கள் தொழுது முடிக்கவும் சரியாக இருந்தது.

1669 மேற்கண்ட ஹதீஸ் அப்துர் ரஹ்மான் பின் சமுரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் நான் என் அம்புகளை எய்வதில் ஈடுபட்டிருந்தேன்" என்று ஹதீஸ் தொடங்குகிறது.

1670 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சூரியனும் சந்திரனும் யாருடைய இறப்புக்காகவோ பிறப்புக்காகவோ கிரகணம் காண்பதில்லை. உண்மையில் அவை இரண்டும் இறைவனின் சான்றுகளில் உள்ளவை ஆகும். ஆகவே, கிரகணங்களை நீங்கள் கண்டால் (இறைவனைத்) தொழுங்கள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1671 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில், அல்லாஹ்வின் தூதருடைய புதல்வர் இப்ராஹீம் (ரலி) இறந்த நாளில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. அப்போது "சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரு சான்றுகளாகும். எவரது இறப்புக்காகவும் எவரது பிறப்புக்காகவும் கிரகணங்கள் ஏற்படுவதில்லை. அவற்றை நீங்கள் கண்டால் கிரகணம் விலகும்வரை அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்; தொழுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

# அத்தியாயம் : 12 - ஜனாஸா சட்டங்கள்

**பாடம் : 1 இறப்பின் நெருக்கத்தில் இருப்போருக்கு "லா இலாஹ இல்லல்லாஹ்' (எனும் கலிமா)வை நினைவூட்டுதல்.**

1672 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் இறப்பின் நெருக்கத்தில் இருப்போருக்கு "லா இலாஹ இல்லல்லாஹ்' ("அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை' எனும் கலிமா)வை நினைவுபடுத்துங்கள்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது:

1673 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் இறப்பின் நெருக்கத்தில் இருப்போருக்கு "லா இலாஹ இல்லல்லாஹ்' (எனும் கலிமா)வை நினைவுபடுத்துங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 2 துன்பம் நேரும்போது ஓத வேண்டிய பிரார்த்தனை.**

1674 உம்மு சலமா ஹிந்த் பின்த் அபீ உமய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஒரு முஸ்லிமுக்கு ஏதேனும் துன்பம் நேரும்போது அவர் அல்லாஹ்வின் கட்டளைக்கேற்ப "இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்' (நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள்; அவனிடமே திரும்பிச் செல்பவர்கள்) என்றும், "அல்லா ஹும்மஃஜுர்னீ ஃபீ முஸீபத்தீ வ அக்லிஃப் லீ கைரம் மின்ஹா' (இறைவா, எனக்கேற்பட்ட இத்துன்பத்தை நான் பொறுமையுடன் ஏற்றதற்கு மாற்றாக எனக்கு நன்மையை வழங்குவாயாக!) என்றும் கூறினால், அதற்கு ஈடாக அதைவிடச் சிறந்ததை அவருக்கு அல்லாஹ் வழங்காமல் இருப்பதில்லை" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
(என் முதல் கணவர்) அபூசலமா (ரலி) அவர்கள் இறந்தபோது நான் "அபூசலமாவைவிட முஸ்லிம்களில் சிறந்தவர் எவர் இருக்க முடியும்? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் முதன்முதலில் நாடு துறந்துவந்த குடும்பம் (அவருடைய குடும்பம்தான்)" என்று கூறினேன். ஆயினும், (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கூற்றுக்கேற்ப) இன்னாலில்லாஹி... என்று நான் சொன்னேன். அவ்வாறே அவருக்கு ஈடாக அல்லாஹ் தன்னுடைய தூதரையே (இரண்டாவது கணவராக) எனக்கு வழங்கினான்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் ஹாத்திப் பின் அபீபல்தஆ (ரலி) அவர்களை அனுப்பி, தமக்காக என்னைப் பெண் கேட்டார்கள். அப்போது நான் "எனக்கு ஒரு மகள் இருக்கிறாள். நானோ முன்கோபக்காரி ஆவேன்" என்று கூறிவிட்டேன். (எனது பதிலைக் கேட்ட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவருடைய மகள் (அவரது துணையின்றியே) தன்னிறைவுடன் இருக்க நாம் அல்லாஹ்விடம் பிரார்த்திக்கிறோம்.

அவரது முன்கோபத்தைப் போக்கவும் நான் அல்லாஹ்விடம் பிரார்த்திக்கிறேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1675 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஓர் அடியார் தமக்கு ஒரு துன்பம் ஏற்படும்போது "இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன். அல்லாஹும்மஃஜுர்னீ ஃபீ முஸீபத்தீ வ அக்லிஃப் லீ கைரம் மின்ஹா' என்று கூறினால், அவர் துன்பம் அடைந்ததற்காக அவருக்கு அல்லாஹ் நன்மையை வழங்கி, அதைவிடச் சிறந்த ஒன்றை அதற்கு ஈடாக வழங்காமல் இருப்பதில்லை" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்.
(என் முதல் கணவர்) அபூசலமா (ரலி) அவர்கள் இறந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டதைப் போன்றே (இன்னா லில்லாஹி... என்று) நான் கூறினேன். அல்லாஹ் அபூசலமாவைவிடச் சிறந்தவரான அல்லாஹ்வின் தூதரையே எனக்கு மாற்றாக (கணவராக) வழங்கினான்.

1676 மேற்கண்ட ஹதீஸ் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் பின்வருமாறு காணப்படுகிறது:
அபூசலமா (ரலி) அவர்கள் இறந்தபோது, நான் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர் அபூசலமாவைவிடச் சிறந்தவர் எவர் இருக்க முடியும்?' என்று கூறினேன். பிறகு அல்லாஹ் என் உள்ளத்தில் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கட்டளைப்படி கூறும்) உறுதியை அளித்தபோது, நான் அவ்வாறே சொன்னேன். அல்லாஹ்வின் தூதரையே மணந்துகொண்டேன்.

## பாடம் : 3 நோயாளியிடமும் இறப்பிற்கு நெருக்கத்தில் இருப்பவரிடமும் சொல்ல வேண்டியவை.

1677 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"நீங்கள் நோயாளியையோ இறந்தவரையோ சந்திக்கச் சென்றால் நல்லதையே சொல்லுங்கள். ஏனெனில், நீங்கள் சொல்வதற்கு வானவர்கள் "ஆமீன்' கூறுகின்றனர்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
(என் கணவர்) அபூசலமா (ரலி) அவர்கள் இறந்தபோது நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதரே, அபூசலமா இறந்துவிட்டார்" என்று கூறினேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "இறைவா, என்னையும் அவரையும் மன்னிப்பாயாக! அவருக்கு மாற்றாக அவரைவிடச் சிறந்த துணையை எனக்கு வழங்குவாயாக" என்று கூறுமாறு என்னிடம் சொன்னார்கள். நான் அவ்வாறே பிரார்த்தித்தேன்.
அவரைவிடச் சிறந்தவரான முஹம்மத் (ஸல்) அவர்களையே அல்லாஹ் எனக்குத் துணையாக வழங்கினான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 உயிர் பிரிந்தவுடன் இறந்தவரின் கண்களை மூடிவிடுவதும் இறந்தவருக்காகப் பிரார்த்திப்பதும்.**

1678 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் முதல் கணவர்) அபூசலமாவின் (இறுதி நாளில் அவரது) பார்வை நிலைகுத்தி நின்றபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து, அவருடைய கண்களை மூடிவிட்டார்கள். பிறகு, "உயிர் கைப்பற்றப்படும்போது பார்வை அதைப் பின்தொடர்கிறது" என்று கூறினார்கள். அப்போது அபூசலமாவின் குடும்பத்தார் சப்தமிட்டு (புலம்பி) அழுதனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்களுக்காக நீங்கள் நல்லதைத் தவிர வேறெதையும் வேண்டாதீர்கள். ஏனெனில், நீங்கள் சொல்வதற்கு வானவர்கள் "ஆமீன்' கூறுகின்றனர்" என்று கூறினார்கள். மேலும், "இறைவா! அபூசலமாவை மன்னிப்பாயாக! நல்வழி பெற்றவர்களிடையே அவரது தகுதியை உயர்த்துவாயாக! அவருக்குப் பிறகு எஞ்சியிருப்போருக்கு அவரைவிடச் சிறந்த துணையை வழங்குவாயாக! அகிலத்தின் அதிபதியே! எங்களுக்கும் அவருக்கும் மன்னிப்பு அருள்வாயாக! அவரது மண்ணறையை (கப்று) விசாலமாக்குவாயாக! அதில் அவருக்கு வெளிச்சத்தை ஏற்படுத்துவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

1679 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அவர் விட்டுச் சென்றவர்களில் அவருக்குப் பகரமாக அவரைவிடச் சிறந்தவரை ஏற்படுத்துவாயாக" என்றும் ("இறைவா,அவரது மண்ணறையை விசாலமாக்குவாயாக!" என்பதைக் குறிக்க) "இஃப்சஹ் லஹு' எனும் சொற்றொடரை ஆளாமல் "அவ்சிஃ லஹு' என்று கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது. "பிரார்த்தனையில் ஏழாவதாக நபி (ஸல்) அவர்கள் கூறிய மற்றொன்றை நான் மறந்து விட்டேன்" என அறிவிப்பாளர்களில் ஒருவரான காலித் அல்ஹஃத்தா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

**பாடம் : 5 இறப்பவரின் பார்வை தனது உயிரை நோக்கி நிலைகுத்தி நிற்றல்.**

1680 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒரு மனிதன் இறக்கும்போது அவனது பார்வை நிலைகுத்தி நிற்பதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா?" என்று கேட்டார்கள். மக்கள் "ஆம் (கவனித்திருக்கிறோம்)" என்று விடையளித்தனர். "உயிர் பிரிந்து செல்லும்போது, அதைப் பார்வை பின்தொடர்வது தான் அது" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 6 இறந்தவருக்காக அழுவது.**

1681 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் முதல் கணவர்) அபூசலமா (ரலி) அவர்கள் இறந்தபோது, நான் "(என் கணவர்) ஒரு வெளியூர்காரர்; அந்நிய மண்ணில் (இறந்துபோயிருக்கிறார்). அவருக்காக நான் (ஒப்பாரி

வைத்து) நன்கு அழுவேன். அதுபற்றி (ஊரெல்லாம்) பேசப்பட வேண்டும்" என்று கூறிக்கொண்டு அழத் தயாரானேன். அப்போது (மதீனாவையொட்டிய "அவாலீ' எனப்படும்) மேட்டுப் பகுதியிலிருந்து ஒரு பெண் எனக்கு ஒத்தாசை செய்யும் நோக்கில் வந்து கொண்டிருந்தாள். அவளை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எதிர்கொண்டு "அல்லாஹ் ஓர் இல்லத்திலிருந்து (அந்த இல்லத்தார் இறைநம்பிக்கைகொண்டதன் மூலம்) ஷைத்தானை வெளியேற்றிய பின் அவனை நீ உள்ளே அனுமதிக்க விரும்புகிறாயா?" என்று இரண்டுமுறை கேட்டார்கள். எனவே, நான் அழுகையை நிறுத்திக்கொண்டேன்; (அதன் பின் அவருக்காக) நான் அழவில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1682 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்கள் அருகில் இருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்களுடைய புதல்வியரில் ஒருவர் (ஸைனப்-ரலி) "தமது குழந்தை' அல்லது "தம் மகன்' இறக்கும் தறுவாயில் இருப்பதால் உடனே வரும்படி நபி (ஸல்) அவர்களுக்குச் செய்தி அனுப்பினார். செய்தி கொண்டு வந்தவரிடம், "என் மகளிடம் சென்று, எடுத்ததும் கொடுத்ததும் அல்லாஹ்வுக்குரியதே! ஒவ்வொன்றுக்கும் அவனிடம் ஒரு குறிப்பிட்ட தவணை உண்டு. எனவே, பொறுமையாக இருந்து நன்மையை எதிர்பார்க்கச் சொல்!" என்று கூறியனுப்பினார்கள். அவர் (சென்றுவிட்டு) திரும்பிவந்து "தங்கள் மகள் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுத் தாங்கள் கண்டிப்பாக வரவேண்டும் எனக் கூறுகிறார்" என்றார். உடனே நபி (ஸல்) அவர்கள் எழுந்தார்கள். அவர்களுடன் சஅத் பின் உபாதா, முஆத் பின் ஜபல் (ரலி) ஆகியோரும் சென்றனர். அவர்களுடன் நானும் சென்றேன்.
(வீட்டுக்குச் சென்ற) நபி (ஸல்) அவர்களிடம், (சுவாசிக்க முடியாமல்) மூச்சுத் திணறிக் கொண்டிருக்கும் குழந்தை கொடுக்கப்பட்டது; இற்றுப்போன பழைய தோல் பையில் இருப்பதைப் போன்று (குழந்தையின் மார்பு ஏறி இறங்கிற்று). அப்போது நபி (ஸல்) அவர்களின் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன. சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே, என்ன இது (ஏன் அழுகிறீர்கள்)?" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இது, அல்லாஹ் தன் அடியார்களின் உள்ளங்களில் ஏற்படுத்திய இரக்க உணர்வாகும். நிச்சயமாக அல்லாஹ் தன் அடியார்களில் இரக்கமுடையவருக்கே இரக்கம் காட்டுகிறான்"என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
இருப்பினும், ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்களது மேற்கண்ட அறிவிப்பே (ஹதீஸ்– 1682) நிறைவானதும் விரிவானதுமாகும்.

1683 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள் நோயுற்றபோது, அவர்களை உடல்நலம் விசாரிப்பதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப், சஅத் பின் அபீவக்காஸ், அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) ஆகியோருடன் சென்றார்கள். வீட்டுக்குள் நுழைந்தபோது (சஅத் பின் உபாதா அவர்களின் குடும்பத்தார் அவரைச்) சூழ்ந்திருப்பதைக் கண்டதும் என்ன, "இறந்துவிட்டாரா?" என்று கேட்டார்கள். அவர்கள், "இல்லை, அல்லாஹ்வின்

தூதரே!" என்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அழலானார்கள். அவர்களின் அழுகையைக் கண்ட மக்களும் அழத் தொடங்கினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(மக்களே!) நீங்கள் (செவி சாய்த்துக்) கேட்கமாட்டீர்களா? நிச்சயமாகக் கண்கள் அழுவதாலும் உள்ளம் கவலை கொள்வதாலும் அல்லாஹ் தண்டிப்பதில்லை. மாறாக, இதோ இதன் காரணமாகவே தண்டிக்கிறான் அல்லது தயவு காட்டுகிறான்" என்று கூறி தமது நாவைக் காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 7 நோயாளிகளைச் சந்தித்து உடல்நலம் விசாரித்தல்.**

1684 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது அன்சாரிகளில் ஒருவர் வந்து, சலாம் கூறிவிட்டுப் பிறகு திரும்பிச் செல்லப் போனார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அன்சாரிகளின் சகோதரரே! என் சகோதரர் சஅத் பின் உபாதா எப்படி இருக்கிறார்?" என்று விசாரித்தார்கள். அதற்கு "நலமுடன் இருக்கிறார்" என்று அவர் பதிலளித்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்களில் யார் அவரை உடல் நலம் விசாரிப்ப(தற்கு நம்முடன் வருப)வர்?" என்று கேட்டு எழுந்தார்கள். அவர்களுடன் நாங்களும் எழுந்தோம். அப்போது நாங்கள் பத்துக்கும் மேற்பட்டோர் இருந்தோம். நாங்கள் காலணிகளோ காலுறைகளோ தொப்பிகளோ நீளங்கிகளோ அணிந்திருக்கவில்லை. கரடு முரடான அந்தப் பாதையில் நடந்தே அவரிடம் சென்றோம். அப்போது சஅத் (ரலி) அவர்களைச் சுற்றிலுமிருந்த அவருடைய கூட்டத்தார் அவரைவிட்டு விலகிக்கொண்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவர்களுடனிருந்த தோழர்களும் (சஅத் (ரலி) அவர்களை) நெருங்கினார்கள்.

**பாடம் : 8 துன்பம் ஏற்பட்ட முதல் கட்டத்தில் கடைப்பிடிப்பதே பொறுமை ஆகும்.**

1685 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பொறுமை என்பது துன்பம் ஏற்பட்ட முதல் கட்டத்தில் கடைப்பிடிப்பதே ஆகும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1686 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒரு பெண்மணி அருகே சென்றார்கள். அந்தப் பெண், (இறந்துபோய்விட்ட) தன் குழந்தை அருகே அழுதுகொண்டிருந்தாள். அவளிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வை அஞ்சிக்கொள். பொறுமையாக இரு" என்று கூறினார்கள். அதற்கு அப்பெண் "என் துயரத்தை நீங்கள் உணரவில்லை" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்றதும் அப்பெண்ணிடம் "அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்)" என்று சொல்லப்பட்டது. அப்பெண்ணுக்கு மரணமே வந்துவிட்டதைப் போன்று வருத்தம் ஏற்பட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வீட்டுவாசலுக்கு வந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வீட்டுவாசலில் வாயிற்காவலர் எவரும் இருக்கவில்லை. அப்பெண் "அல்லாஹ்வின் தூதரே! நான்

உங்களை (யாரென) அறியவில்லை" என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பொறுமை என்பது, துன்பம் ஏற்பட்ட முதல் கட்டத்தில் கடைப்பிடிப்பதாகும்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அப்துஸ் ஸமத் பின் அப்தில் வாரிஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நபி (ஸல்) அவர்கள் ஒரு மண்ணறை (கப்று) அருகில் இருந்து (அழுது)கொண்டிருந்த ஒரு பெண்ணைக் கடந்து சென்றார்கள்" என ஹதீஸ் துவங்குகிறது.

## பாடம் : 9 இறந்தவருக்காகக் குடும்பத்தார் (ஒப்பாரிவைத்து) அழுவதால் அவர் வேதனை செய்யப்படுகிறார்.

1687 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் இறந்தபோது அவர்களுக்காக (என் சகோதரி) ஹஃப்ஸா (ரலி) அழுதார். அப்போது நான் "அருமை மகளே! பொறுமையாக இரு! "இறந்தவருக்காக அவருடைய குடும்பத்தார் அழுவதால் அவர் வேதனை செய்யப்படுகிறார்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நீர் அறியவில்லையா?" என்று கேட்டேன்.
இதை நாஃபிஉ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1688 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறந்தவருக்காக ஒப்பாரிவைத்து அழுவதால் மண்ணறையில் (கப்று) அவர் வேதனை செய்யப்படுவார்.
இதை உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1689 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உமர் (ரலி) அவர்கள் (கத்தியால்) குத்தப்பட்டு மயக்கமுற்றிருந்தபோது, வேகமாக அழுகுரல் கேட்டது. மயக்கம் தெளிந்ததும் அவர்கள், "உயிரோடிருப்பவர் அழுவதன் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நீங்கள் அறியவில்லையா?" என்று கேட்டார்கள்.

1690 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
உமர் (ரலி) அவர்கள் (கத்தியால் குத்தப்பட்டு) காயமுற்றிருந்தபோது, ஸுஹைப் (ரலி) அவர்கள் (சப்தமிட்டு அழுதவர்களாக) "அந்தோ! சகோதரரே!" என்று கூறலானார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள் "ஸுஹைபே! "உயிரோடிருப்பவர்கள் அழுவதன் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நீர் அறியவில்லையா?"என்று கேட்டார்கள்.

1691 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
உமர் (ரலி) அவர்கள் (கத்தியால் குத்தப்பட்டு) காயமுற்றிருந்தபோது, ஸுஹைப் (ரலி) அவர்கள் தமது இல்லத்திலிருந்து உமர் (ரலி) அவர்களை நோக்கி வந்து, அவர்களுக்கு எதிரில் நின்று அழுதுகொண்டிருந்தார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள் "ஏன் அழுகிறீர்? எனக்காகவா அழுகிறீர்?" என்று கேட்டார்கள். ஸுஹைப் (ரலி) அவர்கள் "ஆம், அல்லாஹ்வின் மீதாணையாக! தங்களுக்காகவே அழுகிறேன், இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே!" என்று கூறினார்கள். உமர் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் மீதாணையாக! "எவருக்காக அழப்படுகின்றதோ அவர் வேதனை செய்யப்படுவார்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நீர் அறிந்தே உள்ளீர்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளரான அப்துல் மலிக் பின் உமைர் பின் சுவைத் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
இந்த ஹதீஸை நான் தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரஹ்) அவர்களிடம் கூறினேன். அப்போது அவர்கள் "இதுவெல்லாம் அந்த யூதர்களுக்காகத்தான் என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிவந்தார்கள்" என்றார்கள்.

1692 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் (கத்தியால்) குத்தப்பட்டபோது, அவர்களுக்காக (அவர்களுடைய புதல்வி) ஹஃப்ஸா (ரலி) அவர்கள் சப்தமிட்டு அழுதார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள் "ஹஃப்ஸா! "சப்தமிட்டு எவருக்காக அழப்படுகின்றதோ அவர் வேதனை செய்யப்படுகின்றார்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நீர் அறியவில்லையா?" என்று கேட்டார்கள். (அவ்வாறே உமர் மீது அதிக அன்புகொண்டிருந்த) ஸுஹைப் (ரலி) அவர்கள் சப்தமிட்டு அழுதபோதும் "ஸுஹைப்! "சப்தமிட்டு எவருக்கு அழப்படுகின்றதோ அவர் வேதனை செய்யப்படுவார்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நீர் அறியவில்லையா?" என்று கேட்டார்கள்.

1693 அப்துல்லாஹ் பின் உபைதில்லாஹ் பின் அபீமுலைக்கா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (மக்காவில்) இப்னு உமர் (ரலி) அவர்களுக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தேன். அப்போது நாங்கள் உஸ்மான் (ரலி) அவர்களின் புதல்வியார் உம்மு அபான் அவர்களது ஜனாஸாவை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். இப்னு உமர் (ரலி) அவர்களுக்கு அருகில் உஸ்மான் (ரலி) அவர்களுடைய புதல்வர் அம்ரும் இருந்தார். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் வந்தார்கள். அவர்களை ஒருவர் கைத்தாங்கலாக அழைத்துவந்து இப்னு உமர் (ரலி) அவர்கள் அமர்ந்திருந்த இடத்தைக் காட்டினார். உடனே அவர்கள் வந்து எனக்குப் பக்கத்தில் அமர்ந்தார்கள். நான் அவர்கள் இருவருக்குமிடையே இருந்தேன். அப்போது வீட்டிலிருந்து அழுகுரல் கேட்டது. உடனே இப்னு உமர் (ரலி) அவர்கள் அம்ரிடம் "நீங்கள் எழுந்து சென்று, அவர்களை அழவேண்டாம் எனத் தடை செய்யுங்கள்"என்று சைகை செய்துவிட்டு, "குடும்பத்தார் அழுவதன் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

அப்போது இப்னு உமர் (ரலி) அவர்கள் ("இறந்தவர் இறைமறுப்பாளராக இருந்தால்' என்று குறிப்பிட்டுச் சொல்லாமல்) பொதுப்படையாக ("இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்' என்று)தான் கூறினார்கள்.
உடனே இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
நாங்கள் (ஒரு பயணத்தில்) இறைநம்பிக்கையார்களின் தலைவர் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களுடன் இருந்தோம். நாங்கள் (மக்காவிற்கும் மதீனாவிற்கும் இடையிலுள்ள) "பைதாஉ' எனுமிடத்தில் இருந்தபோது, அங்கு ஒரு மரத்திற்குக் கீழே யாரோ ஒருவர் தங்கியிருந்தார். (இதைக் கண்ட) உமர் (ரலி) அவர்கள் என்னிடம் "நீங்கள் சென்று அவர் யாரெனப் பார்த்து வந்து என்னிடம் கூறுங்கள்" என்றார். நான் சென்று பார்த்த போது அங்கு ஸுஹைப் (ரலி) அவர்கள் இருந்தார்கள். நான் உமர் (ரலி) அவர்களிடம் திரும்பிவந்து "நீங்கள் பார்த்துவிட்டு வந்து தெரிவிக்கச் சொன்ன அந்த மனிதர் ஸுஹைப் (ரலி)" என்றேன். அதற்கு உமர் (ரலி) அவர்கள் "அவரை நம்முடன் சேர்ந்து கொள்ளச் சொல்லுங்கள்!" என்றார்கள். நான் "அவருடன் அவருடைய குடும்பத்தாரும் உள்ளார்கள்" என்றேன். உமர் (ரலி) அவர்கள் "அவருடன் அவருடைய குடும்பத்தார் இருந்தாலும் சரியே! (அவரை நம்முடன் வந்து சேர்ந்துகொள்ளச் சொல்லுங்கள்)" என்றார்கள். நாங்கள் (அனைவரும் மதீனாவுக்கு) வந்து சேர்ந்து வெகுநாட்கள் ஆகியிருக்கவில்லை. அதற்குள் இறைநம்பிக்கையாளர்களின் தலைவர் உமர் (ரலி) அவர்கள் (கத்தியால் குத்தப்பட்டு) காயமுற்றார்கள். அப்போது ஸுஹைப் (ரலி) அவர்கள் "சகோதரரே! நண்பரே!" எனக் கூறியபடியே (அழுதுகொண்டு) வந்தார். அப்போது உமர் (ரலி) அவர்கள் "குடும்பத்தாரின் அழுகைகளில் சிலவற்றால் இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை "நீர் அறியவில்லையா?' அல்லது "நீர் செவியுறவில்லையா?' என்று கேட்டார்கள். ("நீர் அறியவும் கேள்விப்படவுமில்லையா?' என்று கேட்டதாக அய்யூப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் இடம்பெற்றுள்ளது.) இப்னு உமர் (ரலி) அவர்கள் (குறிப்பிட்டுக் கூறாமல்) பொதுவாகச் சொல்லியுள்ளார்கள். உமர் (ரலி) அவர்களோ "குடும்பத்தாரின் சில அழுகையால்' என்று (குறிப்பாக்கிக்) கூறினார்கள்.

(அறிவிப்பாளர் அப்துல்லாஹ் பின் உபைதில்லாஹ் பின் அபீமுலைக்கா (ரஹ்) அவர்கள் தொடர்ந்து கூறுகின்றார்கள்:)
உடனே நான் எழுந்து ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றேன்; இப்னு உமர் (ரலி) அவர்கள் சொன்ன ஹதீஸை அவர்களிடம் தெரிவித்தேன். ஆயிஷா (ரலி) அவர்கள், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! "எவரோ ஒருவர் அழுவதன் காரணமாக இறந்துவிட்ட (இறைநம்பிக்கையாளரான) மனிதர் வேதனை செய்யப்படுகிறார்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒருபோதும் கூறவில்லை. மாறாக "குடும்பத்தார் அழுவதன் காரணமாக இறைமறுப்பாளனுக்கு அல்லாஹ் இன்னும் வேதனையை அதிகப்படுத்துகின்றான்' என்றே கூறினார்கள். அல்லாஹ்வே சிரிக்கவும் வைக்கிறான்; அழவும் வைக்கிறான் (53:43).ஓர் ஆத்மாவின் (பாவச்) சுமையை மற்றோர் ஆத்மா சுமக்காது (35:18)" என்று கூறினார்கள்.
காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
உமர் (ரலி) மற்றும் இப்னு உமர் (ரலி) ஆகியோரின் கூற்று ஆயிஷா (ரலி) அவர்களுக்கு எட்டியபோது "நீங்கள் பொய்யர்களோ பொய்ப்பிக்கப்பட்டவர்களோ அல்லாத இருவர்

சொன்ன ஹதீஸை என்னிடம் கூறுகின்றீர்கள். ஆயினும், செவி (சில நேரங்களில்) தவறாக விளங்கிவிடுகிறது" என்று கூறினார்கள்.

1694 அப்துல்லாஹ் பின் உபைதில்லாஹ் பின் அபீமுலைக்கா (ரஹ்) அவர்கள் கூறியதாவது: மக்காவில் உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்களுடைய புதல்வியார் இறந்தபோது, நாங்கள் ஜனாஸாவில் கலந்துகொள்வதற்காகச் சென்றோம். அங்கு இப்னு உமர் (ரலி), இப்னு அப்பாஸ் (ரலி) ஆகியோரும் வந்திருந்தனர். நான் அவர்கள் இருவருக்கும் நடுவில் அமர்ந்திருந்தேன். (முதலில்) அவர்களில் ஒருவருக்கு அருகில் நான் அமர்ந்தேன். பிறகு மற்றொருவர் வந்து எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்தார். அப்போது இப்னு உமர் (ரலி) அவர்கள் தமக்கு எதிரே அமர்ந்திருந்த உஸ்மான் (ரலி) அவர்களுடைய புதல்வர் அம்ர் அவர்களிடம் "நீங்கள் (சப்தமிட்டு) அழுபவர்களைத் தடுக்கக் கூடாதா? "இறந்தவருக்காக அவருடைய குடும்பத்தார் (சப்தமிட்டு) அழுவதன் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்றார்கள்.
உடனே இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "உமர் (ரலி) அவர்கள் இதே போன்ற சில ஹதீஸ்களைக் கூறியிருக்கிறார்கள். நான் உமர் (ரலி) அவர்களுடன் மக்காவிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தேன். நாங்கள் "பைதாஉ' எனும் இடத்தை அடைந்தோம். அங்கு ஒரு மரத்தின் நிழலில் ஒரு வாகனக் கூட்டத்தைக் கண்டோம். அப்போது "நீங்கள் சென்று இந்த வாகனக் கூட்டத்தார் யார் எனப் பார்த்து வாருங்கள்!" என உமர் (ரலி) அவர்கள் கூறி (என்னை அனுப்பி)னார்கள். நான் (அங்கு சென்று) பார்த்தபோது அங்கே ஸுஹைப் (ரலி) அவர்கள் இருந்தார்கள். அதை நான் உமர் (ரலி) அவர்களிடம் கூறினேன். "அவரை என்னிடம் அழைத்து வாருங்கள்' என உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள். நான் மீண்டும் ஸுஹைப் (ரலி) அவர்களிடம் சென்று "நீங்கள் புறப்படுங்கள்;இறைநம்பிக்கையாளர்களின் தலைவருடன் சேர்ந்துகொள்ளுங்கள்" என்று கூறினேன்.

பின்னர் (சிறிது நாட்களுக்குப் பின்) உமர் (ரலி) அவர்கள் (கத்தியால்) குத்தப்பட்டபோது அவர்களிடம் "சகோதரரே! நண்பரே!' எனக் கூறி அழுதவராக ஸுஹைப் (ரலி) அவர்கள் (வீட்டினுள்) நுழைந்தார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள் "ஸுஹைபே! எனக்காகவா நீங்கள் அழுகிறீர்கள்? "இறந்தவருக்காக அவருடைய குடும்பத்தார் அழும் சில அழுகையின் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் அல்லவா?" என்றார்கள்.
உமர் (ரலி) அவர்கள் இறந்தபோது, (அவர்கள் இறப்பதற்கு முன் கூறிய) அந்தச் செய்தியை நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் கூறினேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ் உமர் (ரலி) அவர்களுக்கு அருள்புரிவானாக! அல்லாஹ்வின் மீதாணையாக! "(எவரோ) ஒருவர் அழுவதன் காரணமாக இறைநம்பிக்கையாளரை அல்லாஹ் வேதனை செய்வான்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறவில்லை. மாறாக, "குடும்பத்தார் சப்தமிட்டு அழுவதன் காரணத்தால் இறைமறுப்பாளருக்கு அல்லாஹ் வேதனையை அதிகப்படுத்துகிறான்' என்றே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்"என்று சொல்லிவிட்டு, "ஓர் ஆத்மாவின் (பாவச்) சுமையை மற்றோர் ஆத்மா சுமக்காது' எனும் (35:18ஆவது) இறை வசனமே உங்களுக்கு (சான்றுக்கு)ப் போதும்" என்றார்கள்.

இதைக் கூறி முடித்தபோது "அல்லாஹ்வே சிரிக்க வைக்கிறான்; அழவும் வைக்கிறான்" (53:43) என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
(அறிவிப்பாளர்) இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
"அல்லாஹ்வின் மீதாணையாக! இ(ப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இவ்வாறு கூறிய)தற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள் (ஆட்சேபணை) எதுவும் தெரிவிக்கவில்லை" என (அறிவிப்பாளர்) அப்துல்லாஹ் பின் உபைதில்லாஹ் பின் அபீமுலைக்கா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உபைதில்லாஹ் பின் அபீமுலைக்கா (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்களுடைய புதல்வி உம்மு அபான் அவர்களின் ஜனாஸாவில் இருந்தோம்"என்று ஹதீஸ் தொடங்குகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.
இந்த அறிவிப்பில், அய்யூப் பின் அபீ தமீமா (ரஹ்) மற்றும் இப்னு ஜுரைஜ் (ரஹ்) ஆகியோரின் (முந்தைய) ஹதீஸ்களில் உள்ளதைப் போன்று நபி (ஸல்) அவர்களிடமிருந்து உமர் (ரலி) அவர்கள் கூறியதாகக் குறிப்பு இல்லை. ஆயினும், அவ்விருவரின் ஹதீஸே அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்களது (இந்த) ஹதீஸைவிட முழுமையானதாகும்.

1695 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உயிரோடிருப்பவர் அழுவதன் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1696 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"இறந்தவருக்காக அவருடைய குடும்பத்தார் அழுவதன் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்' என இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாக ஆயிஷா (ரலி) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ் அபூஅப்திர் ரஹ்மானுக்கு அருள்புரிவானாக! அவர் ஒரு ஹதீஸைச் செவியுற்றார்; ஆனால், அதை அவர் நினைவில் வைத்துக் கொள்ளவில்லை. (உண்மையில் என்ன நடந்தது என்றால்,) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கடந்து ஒரு யூதரின் சடலம் சென்றது. அவருக்காக யூதர்கள் அழுதுகொண்டிருந்தனர். அப்போது தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீங்கள் அழுதுகொண்டிருக்கிறீர்கள். ஆனால், அதுவோ வேதனை செய்யப்படுகிறது' என்று கூறினார்கள். (இறைநம்பிக்கையாளர்கள் விஷயத்தில் இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் கூறவில்லை)" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1697 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"இறந்தவருக்காக அவருடைய குடும்பத்தார் அழுவதன் காரணமாக இறந்தவர் மண்ணறையில் (கப்று) வேதனை செய்யப்படுகிறார்" என்று நபி (ஸல்) அவர்கள்

சொன்னதாக இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் என ஆயிஷா (ரலி) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது.
அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: இப்னு உமர் தவறாக விளங்கிக் கொண்டார். (நபி (ஸல்) அவர்கள் அப்படிச் சொல்லவில்லை.) "இறந்தவர் தன் (வாழ்நாளில் புரிந்த) சிறிய, பெரிய பாவங்களின் காரணத்தால் வேதனை செய்யப்படுகிறார். அவருடைய குடும்பத்தாரோ, இப்போது அவருக்காக அழுதுகொண்டிருக்கின்றனர்' என்றுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இ(ப்னு உமர் அறிவித்திருப்ப)து எப்படியிருக்கிறதென்றால், (குறைஷித் தலைவர்களான) இணைவைப்பாளர்கள் பத்ருப்போரில் கொல்லப்பட்டு எறியப்பட்டிருந்த பாழுங்கிணற்றுக்கு அருகில் நின்றுகொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏதோ பேசினார்கள். (அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "உயிரற்ற சடலங்களிடமா பேசுகிறீர்கள்?' என்று உமர் (ரலி) அவர்கள் கேட்க,) "நான் கூறுவதை அவர்கள் செவியுறுகிறார்கள்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிலளித்ததாக இப்னு உமர் தவறாகவே விளங்கிக் கொண்டார்.

"நான் அவர்களுக்குச் சொல்லிவந்ததெல்லாம் உண்மை என்று இப்போது அவர்கள் அறிகிறார்கள்' என்றுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். ("இப்போது நான் கூறுவதை அவர்கள் செவியுறுகிறார்கள்' என்று சொல்லவில்லை).
பிறகு, (இறந்தவர்கள் நாம் பேசுவதைச் செவியுறுவதில்லை என்ற தமது கருத்திற்குச் சான்றாக) ஆயிஷா (ரலி) அவர்கள் (பின்வரும்) வசனங்களை ஓதினார்கள்:
(நபியே!) இறந்தவர்களை உங்களால் கேட்கச் செய்ய முடியாது (27:80).
(நபியே!) மண்ணறைகளில் (கப்று) இருப்பவர்களை உங்களால் செவியுறச்செய்ய முடியாது (35:22).
"நரகத்தில் அவர்கள் தங்களின் இருப்பிடங்களில் ஒதுங்கும்போது (இந்நிலை ஏற்படும்)" என ஆயிஷா (ரலி) அவர்கள் (விளக்கம்) கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அபூஉசாமா (ஹம்மாத் பின் உசாமா பின் ஸைத்-ரஹ்) அவர்கள் அறிவித்த (முந்தைய) ஹதீஸே முழுமையானதாகும்.

1698 அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"உயிரோடிருப்பவர் அழுவதன் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்" என அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாக ஆயிஷா (ரலி) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ். அபூஅப்திர் ரஹ்மானை மன்னிப்பானாக! அவர் நிச்சயமாக பொய்யுரைக்கவில்லை; எனினும், அவர் மறந்திருக்கலாம். அல்லது தவறாக விளங்கியிருக்கலாம்; (நடந்தது இதுதான்:) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு யூதப் பெண்ணின் பிரேதத்தைக் கடந்துசென்றார்கள். அவளுக்காகச் சிலர் அழுதுகொண்டிருந்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இவர்கள் இவளுக்காக அழுகின்றனர். இவளோ தனது சவக்குழியில் வேதனை செய்யப்படுகிறாள்' என்றுதான் கூறினார்கள்" என்று பதிலளித்தார்கள்.

1699 அலீ பின் ரபீஆ அல்அஸ்தீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
கூஃபாவில் கரளா பின் கஅப் (ரலி) அவர்கள் இறந்ததற்காகவே முதன்முதலில் ஒப்பாரி வைக்கப்பட்டது. அப்போது (கூஃபாவின் ஆட்சியாளராயிருந்த) முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் "யாருக்காக ஒப்பாரி வைக்கப்படுகிறதோ அவர் அதனால் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவார்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியுற்றுள்ளேன் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது.

## பாடம் : 10 ஒப்பாரி வைத்தல் குறித்து வந்துள்ள கடுமையான கண்டனம்.

1700 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரிடையே நிலவுகின்ற நான்கு நடைமுறைகள் அறியாமைக் கால வழக்கங்களாகும். (பெரும்பாலான) மக்கள் அவற்றைக் கைவிடமாட்டார்கள். (அவையாவன:) குலப்பெருமை பாராட்டுவது, (அடுத்தவரின்) பாரம்பரியத்தைக் குறைகூறுவது, கிரகங்களால் மழை பொழியும் என எதிர்பார்ப்பது மற்றும் ஒப்பாரிவைத்து அழுவது.
ஒப்பாரிவைக்கும் வழக்கமுடைய பெண், தான் இறப்பதற்கு முன் பாவமன்னிப்புக் கோரி (அதிலிருந்து) மீளாவிட்டால், மறுமை நாளில் தாரால் (கீல்) ஆன நீளங்கியும் சொறிசிரங்குச் சட்டையும் அணிந்தவளாக அவள் நிறுத்தப்படுவாள்.
இதை அபூமாலிக் கஅப் பின் ஆஸிம் அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1701 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மூத்தாப் போரில்) ஸைத் பின் ஹாரிஸா (ரலி), ஜஅஃபர் பின் அபீதாலிப் (ரலி), அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலி) ஆகியோர் கொல்லப்பட்ட செய்தி வந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கவலை தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருந்தார்கள். நான் கதவிடுக்கில் கவனித்துக்கொண்டிருந்தேன். அப்போது ஒருவர் வந்து "அல்லாஹ்வின் தூதரே, ஜஅஃபர் (ரலி) அவர்களின் குடும்பப் பெண்கள் (ஒப்பாரிவைத்து) அழுகின்றனர்" எனக் கூறினார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அவ்வாறு அழுவதைத்) தடுக்கும்படி கட்டளையிட்டார்கள். அவர் சென்றுவிட்டுத் திரும்பிவந்து "அவர்கள் எனது சொல்லுக்குக் கட்டுப்படவில்லை" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீர் சென்று அவர்களைத் தடுத்து நிறுத்துவீராக!" என இரண்டாவது முறையும் கட்டளையிட்டார்கள். அவர் சென்றுவிட்டு (மூன்றாவது முறையாக) வந்து "அல்லாஹ்வின் மீதாணையாக, எம்மை அப்பெண்கள் மிகைத்துவிட்டனர் (அவர்களை எங்களால் அமைதிப்படுத்த முடிய வில்லை), அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீர் சென்று, அப்பெண்களின் வாயில் மண்ணை அள்ளிப்போடும்" எனக் (கடிந்து) கூறினார்கள் என நான் நினைக்கிறேன். பின்னர்

நான் (அவரை நோக்கி) "அல்லாஹ் உமது மூக்கை மண்ணைக் கவ்வச் செய்வானாக! அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உமக்குக் கட்டளையிட்டதையும் உம்மால் செய்ய முடியவில்லை; இன்னும் அவர்களைத் தொந்தரவு செய்வதையும் நீர் நிறுத்தவில்லை" என்று கூறினேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அப்துல் அஸீஸ் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (தொந்தரவு என்பதைக் குறிக்க "அல்அநாஉ' எனும் சொல்லுக்கு பதிலாக) "அல்இய்யு' எனும் சொல் ஆளப்பட்டுள்ளது.

1702 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் (இறைநம்பிக்கைக்கான) உறுதிமொழி வாங்கியபோது, ஒப்பாரிவைக்கக் கூடாது என்றும் உறுதிமொழி வாங்கினார்கள். எனினும், இந்த வாக்குறுதியை எங்களில் ஐந்து பெண்களைத் தவிர வேறெவரும் நிறைவேற்ற வில்லை. அப்பெண்கள்: உம்மு சுலைம் (ரலி), உம்முல் அலா (ரலி), "முஆத் (ரலி) அவர் களின் துணைவியான அபூசப்ராவின் மகள்' அல்லது "அபூசப்ராவின் மகள் மற்றும் முஆத் (ரலி) அவர்களின் துணைவி'.
இதை முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1703 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒப்பாரி வைக்கக்கூடாது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் உறுதிமொழி வாங்கினார்கள். எனினும், இந்த வாக்குறுதியை எங்களில் ஐந்து பெண்களைத் தவிர வேறெவரும் நிறைவேற்றவில்லை. அவர்களில் உம்மு சுலைம் (ரலி) அவர்களும் ஒருவராவார்.
இதை ஹஃப்ஸா பின்த் சீரீன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1704 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"நபியே! இறைநம்பிக்கை கொண்ட பெண்கள் உம்மிடம் விசுவாசப் பிரமாணம் செய்வதற்காக வந்தார்களாயின்" (60:12) என்று தொடங்கும் இறைவசனம் அருளப்பெற்ற போது, ஒப்பாரிவைப்பது தொடர்பான உறுதி மொழியும் அதில் ஒன்றாக அமைந்தது. அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே, இன்ன மனிதரின் குடும்பத்தாருக்கு நான் ஒப்பாரி வைப்பதற்கு மட்டும் எனக்கு விலக்கு அளியுங்கள். ஏனெனில், அறியாமைக் காலத்தில் அவர்கள் (என்னுடன் சேர்ந்து என் உறவினர் ஒருவருக்காக ஒப்பாரிவைத்து) எனக்கு உதவி புரிந்தனர். எனவே, (பதிலுக்கு அவர்களுடன் சேர்ந்து நான் ஒப்பாரி வைத்து) அவர்களுக்குப் பிரதியுதவி செய்ய நான் கடமைப்பட்டுள்ளேன்" என்று கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இன்ன மனிதரின் குடும்பத்திற்குத் தவிர" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 11 இறுதி ஊர்வலத்தை (ஜனாஸாவை)ப் பின்தொடர்ந்து செல்ல பெண்களுக்கு வந்துள்ள தடை

1705 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (பெண்கள்) இறுதி ஊர்வலத்தைப் பின்தொடர்ந்து செல்ல வேண்டாமெனத் தடை விதிக்கப்பட்டிருந்தோம். ஆனால்,வன்மையாகத் தடுக்கப்பட்டோமில்லை.
இதை முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1706 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நாங்கள் (பெண்கள்) இறுதி ஊர்வலத்தைப் பின்தொடரக் கூடாது எனத் தடுக்கப் பட்டோம். ஆனால் வன்மையாகத் தடுக்கப்பட்டோமில்லை" என்று உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 12 பிரேதத்தைக் குளிப்பாட்டுதல்.

1707 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் புதல்வி இறந்துவிட்டபோது அவரது பிரேதத்தை நாங்கள் நீராட்டிக்கொண்டிருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து, "இலந்தை இலை கலந்த நீரால் மூன்று, அல்லது ஐந்து, அல்லது தேவையெனக் கருதினால் அதற்கதிகமான தடவைகள் அவரை நீராட்டுங்கள்; இறுதியில் "கற்பூரத்தை' அல்லது "சிறிது கற்பூரத்தை'ச் சேர்த்துக்கொள்ளுங்கள். இவற்றை முடித்ததும் எனக்கு அறிவியுங்கள்" என்று கூறினார்கள். நாங்கள் நீராட்டி முடித்ததும் அவர்களுக்கு அறிவித்தோம். அவர்கள் தமது கீழாடையை எங்களிடம் போட்டு "இதை அவரது உடலில் போர்த்துங்கள்" என்று கூறினார்கள்.
இதை முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1708 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அவருக்குத் தலைவாரி மூன்று பின்னல்கள் இட்டோம்.
இதை ஹஃப்ஸா பின்த் சீரீன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1709 மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நபி (ஸல்) அவர்களுடைய புதல்வியரில் ஒருவர் இறந்தபோது" என்று ஹதீஸ் தொடங்குகிறது.
இப்னு உலைய்யா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது நாங்கள் அவர்களுடைய புதல்வியை நீராட்டிக் கொண்டிருந்தோம்" என்று உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறினார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது.
மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் புதல்வி இறந்துவிட்டபோது அவர்கள் எங்களிடம் வந்தார்கள்" என்று ஹதீஸ் தொடங்குகிறது.

1710 மேற்கண்ட ஹதீஸ் உம்மு அத்திய்யா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் பின்வரும் (தகவல் அதிகப்)படியாக இடம்பெற்றுள்ளது:
"இலந்தை இலை கலந்த நீரால் மூன்று, அல்லது ஐந்து, அல்லது ஏழு, அல்லது தேவையெனக் கருதினால் அதற்கதிகமான தடவைகள் அவரை நீராட்டுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
மேலும், "அவர்களது தலையில் மூன்று பின்னல் இட்டோம்' என்றும் உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உம்மு அத்திய்யா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஒற்றைப்படையாக(த் தண்ணீர் ஊற்றி) நீராட்டுங்கள்; மூன்று, அல்லது ஐந்து, அல்லது ஏழு தடவைகள் (தண்ணீர் ஊற்றுங்கள்)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாகவும் "நாங்கள் அவருக்குத் தலைவாரி மூன்று பின்னல்கள் இட்டோம்" என உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.

1711 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய புதல்வியார் ஸைனப் (ரலி) அவர்கள் இறந்தபோது "இவரை மூன்று முறை,அல்லது ஐந்து முறை ஒற்றை எண்ணிக்கையில் நீராட்டுங்கள். ஐந்தாவது முறையில் "கற்பூரத்தை' அல்லது "சிறிது கற்பூரத்தை'ச் சேர்த்துக்கொள்ளுங்கள். நீராட்டி முடித்ததும் எனக்குத் தெரிவியுங்கள்" என்று எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். நாங்கள் (அவ்வாறே செய்து முடித்ததும்) அவர்களுக்கு அதுபற்றி அறிவித்தோம். அவர்கள் தமது கீழாடையை எங்களிடம் தந்து "இதை அவருக்குப் போர்த்துங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1712 மேற்கண்ட ஹதீஸ் உம்மு அத்திய்யா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் புதல்வியரில் ஒருவரை நாங்கள் நீராட்டிக் கொண்டிருந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து "இவரை ஐந்து. அல்லது அதற்கும் அதிகமாக ஒற்றை எண்ணிக்கையில் நீராட்டுங்கள்" என்று கூறினார்கள் என உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.
மேலும், "நாங்கள் அவரது தலைமுடியை பிடரிப் பகுதியில் இரண்டும், முன்நெற்றிப் பகுதியில் ஒன்றுமாக மூன்று பின்னல்களிட்டோம்" என்று இந்த அறிவிப்பில் இடம் பெற்றுள்ளது.

1713 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் புதல்வியை நீராட்டும்போது, "அவரது வலப் புறத்திலிருந்தும் அங்கத்தூய்மை (உளூ) செய்ய வேண்டிய பகுதிகளிலிருந்தும் (நீராட்டலை) ஆரம்பியுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

1714 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்முடைய புதல்வியை நீராட்டிக் கொண்டிருந்தவர்களிடம் "அவரது வலப் புறத்திலிருந்தும் அங்கத்தூய்மை (உளூ) செய்ய வேண்டிய பகுதிகளிலிருந்தும் (நீராட்டலை) ஆரம்பியுங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 13 மய்யித்திற்கு "க:ஃபன்" அணிவித்தல்.

1715 கப்பாப் பின் அல்அரத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் திருப்தியை நாடி அல்லாஹ்வின் பாதையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்றோம். எங்களுக்கான பிரதி பலனை அளிப்பது அல்லாஹ்வின் பொறுப்பாகி விட்டது. எங்களில் சிலர் தமக்குரிய பிரதி பலனில் எதையும் (இவ்வுலகில்) அனுபவிக்காமலேயே (உலகைப் பிரிந்து) சென்றுவிட்டனர். அவர்களில் முஸ்அப் பின் உமைர் (ரலி) அவர்களும் ஒருவர். அவர்கள் உஹுதுப் போரில் கொல்லப்பட்டார்கள். அவருக்கு "க:ஃபன்' அணிவிக்கக் கோடுபோட்ட வண்ணத் துணி ஒன்று மட்டுமே (அவருடைய உடைமைகளில்) கிடைத்தது. அதைக்கொண்டு அவரது தலைப் பகுதியை மறைத்தால் கால்கள் வெளியே தெரிந்தன; கால்களை மறைத்தால் தலை வெளியே தெரிந்தது. ஆகவே, அவரது தலைப் பகுதியை அந்தத் துணியால் மறைத்து விட்டு, அவருடைய கால்கள்மீது "இத்கிர்' எனும் ஒருவகை வாசனைப் புல்லை இட்டு மறைக்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.
எங்களில் (நாடு துறந்து சென்றதன்) பலன் கனிந்து அதைப் பறித்து (அனுபவித்து)க் கொண்டிருப்பவர்களும் உள்ளனர்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1716 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இறந்தபோது) மூன்று வெண்ணிறப் பருத்தி ஆடைகளால் க:ஃபனிடப்பட்டார்கள்; அவற்றில் நீளங்கியோ தலைப்பாகையோ இருக்கவில்லை.
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது உடலில்) போர்வை அணிவிக்கப்பட்டதாக ஒரு குழப்பம் மக்களிடையே உண்டு. (அப்படி) ஒரு போர்வை அவர்களின் க:ஃபனுக்காக வாங்கப்பட்டது (உண்மைதான். ஆனால்,) பின்னர் அந்தப் போர்வையை விட்டுவிட்டு மூன்று வெண்ணிறப் பருத்தி ஆடைகளால் க:ஃபன் அணிவிக்கப்பட்டது. அந்தப் போர்வையை (என் சகோதரர்) அப்துல்லாஹ் பின் அபீபக்ர் (ரலி) அவர்கள் பெற்றுக்கொண்டு, "இதை (நான் இறந்த பிறகு) எனக்குக் க:ஃபன் அணிவிப்பதற்காகப் பத்திரப்படுத்துவேன்"என்று கூறினார்கள். பிறகு "அல்லாஹ் இந்தப் போர்வையை தன் தூதருக்காகத் தேர்ந்தெடுத்திருந்தால், அதில் அவர்களைக் க:ஃபனிடச் செய்திருப்பான். (ஆனால் அதை இறைவன் தேர்வு செய்யவில்லை.)" என்று கூறி, அதை விற்று, அந்தக் காசைத் தர்மம் செய்துவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1717 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இறந்த பின்னர் என் சகோதரர்) அப்துல்லாஹ் பின் அபீபக்ர் (ரலி) அவர்களுக்குச் சொந்தமான யமன் நாட்டுப் போர்வையில் சுற்றப்பட்டார்கள். பின்னர் அது அகற்றப்பட்டு, யமன் நாட்டின் மூன்று பருத்தி ஆடைகளால் கஃபனிடப்பட்டது. அவற்றில் தலைப் பாகையோ நீளங்கியோ இருக்கவில்லை. பிறகு அப்துல்லாஹ் பின் அபீபக்ர், அந்தப் போர்வையை எடுத்து கையில் வைத்துக்கொண்டு, "இதில்தான் நான் கஃபனிடப்பட வேண்டும்" என்றார். பின்னர் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது (உடலில்) கஃபனாக அணிவிக்கப்படாத இந்த ஆடையால் நான் கஃபனிடப்படுவதா?" என்று கூறிவிட்டு, அதைத் தர்மம் செய்துவிட்டார்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் அப்துல்லாஹ் பின் அபீபக்ர் (ரலி) அவர்களது நிகழ்ச்சி தொடர்பான குறிப்பு இடம்பெறவில்லை.

1718 அபூசலமா அப்துல்லாஹ் பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எத்தனை ஆடையில் கஃபனிடப்பட்டது?" என்று கேட்டேன். அதற்கு "மூன்று பருத்தி ஆடைகளில்" என ஆயிஷா (ரலி) அவர்கள் விடையளித்தார்கள்.

## பாடம் : 14 மய்யித்தை மூடிவைத்தல்.

1719 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்தபோது அவர்களின் உடல் (பருத்தியாலான) யமன் நாட்டுப் போர்வையால் போர்த்தி மூடப்பட்டது.
இதை அபூசலமா அப்துல்லாஹ் பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 15 மய்யித்திற்கு அழகிய முறையில் கஃபன் அணிவித்தல்.

1720 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் (எங்களிடையே) உரையாற்றுகையில், தம் தோழர் ஒருவரை நினைவுகூர்ந்தார்கள். அவர் இறந்தபோது நிறைவான கஃபன் அணிவிக்கப்படாமல் (அரைகுறை கஃபனில்) இரவிலேயே அடக்கம் செய்யப்பட்டார். எனவே, நபி (ஸல்) அவர்கள் (தாம் கலந்துகொண்டு) தொழவைக்கப்படாமல் இரவிலேயே ஒருவர் அடக்கம் செய்யப்படுவதைக் கண்டித்தார்கள். ஒருவருக்கு நிர்ப்பந்தம் ஏற்பட்டால் தவிர (அவ்வாறு செய்யவேண்டாம் எனத் தடைவிதித்தார்கள்). மேலும், "உங்களில் ஒருவர் தம் சகோதரருக்குக் கஃபனிடும்போது அழகிய முறையில் கஃபனிடட்டும்!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 16 பிரேதத்தைத் துரிதமாக எடுத்துச் செல்லல்.

1721 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பிரேதத்தைத் துரிதமாகக் கொண்டுசெல்லுங்கள். ஏனெனில், அது (பிரேதம்) நல்லறங்கள் புரிந்ததாயிருந்தால் (அதற்கான) நன்மையின் பக்கம் அதை விரைவுபடுத்துகிறீர்கள். வேறு விதமாக அது இருந்தால், ஒரு தீங்கை உங்கள் தோள்களிலிருந்து (விரைவாக) இறக்கி வைக்கிறீர்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், மஅமர் பின் ராஷித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இதை நபி (ஸல்) அவர்களிடமிருந்தே அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்தார்கள் என்றே நான் கருதுகிறேன்' என இடம் பெற்றுள்ளது.

1722 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பிரேதத்தைத் துரிதமாகக் கொண்டு செல்லுங்கள். ஏனெனில், அது நல்லதாயிருந்தால், நன்மையின் பக்கம் அதைக் கொண்டு சேர்க்கிறீர்கள். அது வேறுவிதமாக இருந்தால், ஒரு தீங்கை உங்கள் தோள்களிலிருந்து (விரைவாக) இறக்கிவைத்தவர்கள் ஆவீர்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 17 ஜனாஸா (பிரேத)த் தொழுகை மற்றும் ஜனாஸாவைப் பின்தொடர்தல் ஆகியவற்றின் சிறப்பு.

1723 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"யார் ஜனாஸா (பிரேத)த் தொழுகையில் பங்கேற்கின்றாரோ அவருக்கு ஒரு "கீராத்' நன்மையுண்டு; அடக்கம் செய்யப்படும்வரை யார் கலந்துகொள்கிறாரோ அவருக்கு இரண்டு "கீராத்'கள் நன்மை உண்டு" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது "இரண்டு "கீராத்கள்" என்றால் என்ன?" என வினவப்பட்டது. அதற்கு அவர்கள் "இரண்டு பெரிய மலைகளைப் போன்ற அளவு (நன்மை)" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஹர்மலா பின் யஹ்யா மற்றும் ஹாரூன் பின் சயீத் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் இப்னு ஷிஹாப் (ரஹ்) அவர்கள் கூறியதாக (பின்வருமாறு) இடம்பெற்றுள்ளது: "இப்னு உமர் (ரலி) அவர்கள் ஜனாஸாத் தொழுகை தொழுவித்(து முடித்)ததும் திரும்பிச் சென்று விடுவார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்களின் இந்த ஹதீஸ் அவர்களுக்கு எட்டிய போது, "நாம் ஏராளமான "கீராத்" (நன்மை)களை வீணாக்கிவிட்டோம்' என்று கூறினார்கள்" என சாலிம் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அப்துல் அஃலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மேற்கண்ட ஹதீஸின் முழு வடிவமும் இடம்பெற்றுள்ளது. மற்ற இரு அறிவிப்பாளர்தொடர்களில் "இரண்டு பெரிய

மலைகளைப் போன்ற அளவு (நன்மை)' என்பதுவரையே இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னுள்ள தகவல் இடம்பெறவில்லை.
அப்துல் அஃலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அடக்கம் முடியும்வரை கலந்து கொள்பவருக்கு" என்ற வாசகமும், அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "குழியில் வைக்கப்படும்வரை கலந்துகொள்பவருக்கு இரண்டு "கீராத்'கள் (நன்மை) உண்டு' என்ற வாசகமும் இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அடக்கப்படும்வரை அ(ந்த பிரேதத்)தைப் பின்தொடர்பவருக்கு இரண்டு "கீராத்'கள் (நன்மை) உண்டு" என இடம்பெற்றுள்ளது. இதர விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

1724 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஜனாஸா (பிரேத)த் தொழுகையில் பங்கேற்ற ஒருவர் (அதை அடக்கம் செய்யும்வரை) பின் தொடர்ந்து செல்லவில்லையானால், அவருக்கு ஒரு 'கீராத்' (நன்மையே) உண்டு; அதை (அடக்கம் செய்யும்வரை) பின்தொடர்ந்தால் அவருக்கு இரண்டு "கீராத்'கள் (நன்மை) உண்டு" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது "இரண்டு "கீராத்'கள் என்றால் என்ன?" என்று வினவப்பட்டது. அதற்கு அவர்கள் "இரண்டு "கீராத்'களில் மிகச் சிறிய அளவு, உஹுத் மலை அளவாகும்" என்று விடையளித்தார்கள்.

1725 அபூஹாஸிம் சல்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"ஜனாஸா (பிரேத)த் தொழுகையில் பங்கேற்றவருக்கு ஒரு "கீராத்' (நன்மை) உண்டு. மண்ணறையில் (கப்று) வைக்கப்படும்வரை அதைப் பின்தொடர்ந்தவருக்கு இரண்டு "கீராத்'கள் (நன்மை) உண்டு" என்று நபி (ஸல்) அவர்கள் சொன்னதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள். நான் "அபூஹுரைரா (ரலி) அவர்களே! "கீராத்' என்றால் என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "உஹுத் மலை அளவு' என்று விடையளித்தார்கள்.

1726 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"யார் ஜனாஸாவைப் பின்தொடர்கிறாரோ அவருக்கு ஒரு "கீராத்' நன்மை உண்டு' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறிவருகிறார்களே!" என இப்னு உமர் (ரலி) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கு "அபூஹுரைரா நம்மிடம் அதிகப்படுத்துகிறார்" என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறிவிட்டு, ஆயிஷா (ரலி) அவர்களிடம் ஆளனுப்பி இதைப் பற்றிக் கேட்டார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்களின் கூற்றை உறுதிப்படுத்தினார்கள். இதைக் கேட்ட இப்னு உமர் (ரலி) அவர்கள் "(அப்படியாயின்) நாம் ஏராளமான "கீராத்'களைத் தவறவிட்டுவிட்டோம்" என்றார்கள்.

1727 ஆமிர் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களுக்கு அருகில் அமர்ந்திருந்தேன். அப்போது பெரிய வீட்டுக்காரர் கப்பாப் அல்மதனீ (ரலி) அவர்கள் அங்கு வந்து, "அப்துல்லாஹ் பின்

உமர் அவர்களே! "ஒரு ஜனாஸாவின் வீட்டிலிருந்து அதனுடன் புறப்பட்டுச் சென்று, (ஜனாஸாத்தொழுகை) தொழுதுவிட்டு, அடக்கம் செய்யப்படும்வரை அதைப் பின் தொடர்கின்றவருக்கு இரண்டு "கீராத்'கள் நன்மை உண்டு; ஒவ்வொரு "கீராத்'தும் உஹுத் மலை அளவுடையதாகும்; (ஜனாஸாத்) தொழுதுவிட்டு (அடக்கம் செய்யப்படும்வரை காத்திராமல்) திரும்பிவிடுகின்றவருக்கு உஹுத் மலையளவு (ஒரு "கீராத்') நன்மை உண்டு' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறிவருகின்றார்களே?" என்று கேட்டார்கள். அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், கப்பாபை ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று அது பற்றிக் கேட்டுவிட்டு அவர்கள் அளிக்கும் பதிலைத் தம்மிடம் வந்து தெரிவிக்குமாறு அனுப்பிவைத்தார்கள். அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், போனவர் திரும்பிவரும்வரை பள்ளிவாசல் தரையில் கிடந்த சிறு கற்களில் ஒரு கைப்பிடியளவு அள்ளி தமது கையில் வைத்து கிளறிக்கொண்டிருந்தார்கள்.
(கப்பாப் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று கேட்டதற்கு) ஆயிஷா (ரலி) அவர்கள் "அபூஹுரைரா சொன்னது உண்மையே" என்றார்கள். (இதைக் கேள்விப்பட்ட) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தமது கையிலிருந்த சிறு கற்களை கீழே எறிந்துவிட்டு, "நாம் ஏராளமான "கீராத்' (நன்மை)களை தவற விட்டுவிட்டோம்" என்று கூறினார்கள்.

1728 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஜனாஸாத் தொழுகை தொழுதவருக்கு ஒரு "கீராத்' (நன்மை) உண்டு; (தொழுகையில் கலந்ததோடு) அதன் அடக்கத்திலும் கலந்துகொண்டால், அவருக்கு இரண்டு "கீராத்' (நன்மை)கள் உண்டு; "கீராத்' என்பது உஹுத் மலை அளவாகும்.
இதை, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அவர்களின் அடிமையான ஸவ்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், சயீத் மற்றும் ஹிஷாம் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "நபி (ஸல்) அவர்களிடம் "கீராத்' பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் "உஹுத் மலையளவு' என்று பதிலளித்தார்கள்" என இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 18 யாருக்கு நூறு பேர் (இறுதித் தொழுகை) தொழுகின்றார்களோ அவருக்காக அவர்கள் செய்யும் பரிந்துரை ஏற்கப்படும்.

1729 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறந்த ஒருவருக்கு நூறுபேர் கொண்ட முஸ்லிம் குழுவினர் (இறுதித்) தொழுகை தொழுது, அவர்களில் ஒவ்வொருவரும் அவருக்காகப் பரிந்துரை செய்தால் அவர்களின் பரிந்துரை ஏற்கப்படாமல் இருப்பதில்லை.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சல்லாம் பின் அபீமுதீஉ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

இந்த ஹதீஸை நான் ஷுஐப் பின் அல் ஹப்ஹாப் (ரஹ்) அவர்களிடம் கூறினேன். அதற்கு அவர்கள் "இவ்வாறே எனக்கு அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவித்தார்கள்" என்றார்கள்.

**பாடம் : 19 யாருக்கு நாற்பது பேர் (இறுதித் தொழுகை) தொழுகின்றார்களோ அவருக்காக அவர்கள் செய்யும் பரிந்துரை ஏற்கப்படும்.**

1730 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அவர்களின் அடிமையான குறைப் பின் அபீமுஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுடைய புதல்வர் ஒருவர் "குதைத்' அல்லது "உஸ்ஃபான்' எனுமிடத்தில் இறந்துவிட்டார். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "குறைப்! மக்கள் ஒன்றுகூடிவிட்டனரா எனப் பார்" என்று கூறினார்கள். நான் சென்று பார்த்தபோது அங்கு மக்களில் சிலர் குழுமியிருந்தனர். நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் வந்து விஷயத்தைச் சொன்னபோது "அவர்கள் நாற்பது பேர் இருப்பார்களா, சொல்" என்றார்கள். நான் "ஆம்' என்றேன். "அதை (மய்யித்தை) எடுத்துக்கொண்டு புறப்படுங்கள்" என்று கூறிவிட்டு, "ஒரு முஸ்லிம் இறந்தவுடன் அல்லாஹ்விற்கு எதையும் இணைவைக்காத நாற்பது பேர் அவருக்காக (இறுதித் தொழுகை) தொழுதால் அவர்களின் பரிந்துரையை அல்லாஹ் ஏற்காமல் இருப்பதில்லை' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியுற்றுள்ளேன்" என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 20 இறந்தவர் குறித்துப் புகழ்ந்து பேசப்படுதல்; அல்லது இகழ்ந்து பேசப்படுதல்.**

1731 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களைக் கடந்து) ஜனாஸா (பிரேதம்) ஒன்று கொண்டுசெல்லப்பட்டது. அது குறித்து நல்ல விதமாகப் (புகழ்ந்து) பேசப்பட்டது. இதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள் "உறுதியாகிவிட்டது; உறுதியாகிவிட்டது; உறுதியாகிவிட்டது" என்று கூறினார்கள். பின்னர் மற்றொரு பிரேதம் கொண்டுசெல்லப்பட்டது. அது குறித்து இகழ்வாகப் பேசப்பட்டது. அப்போதும் நபி (ஸல்) அவர்கள் "உறுதியாகிவிட்டது; உறுதியாகிவிட்டது; உறுதியாகிவிட்டது" என்று கூறினார்கள். உமர் (ரலி) அவர்கள் "(அல்லாஹ்வின் தூதரே!) என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! ஒரு பிரேதம் கொண்டு செல்லப்பட்ட போது அது குறித்து நல்லவிதமாகப் பேசப்பட்டது. அதற்கு நீங்கள் "உறுதியாகிவிட்டது; உறுதியாகிவிட்டது; உறுதியாகிவிட்டது;' என்று கூறினீர்கள். பிறகு மற்றொரு பிரேதம் கொண்டுசெல்லப்பட்டது. அது குறித்து இகழ்வாகப் பேசப்பட்டது. அதற்கும் நீங்கள் "உறுதியாகிவிட்டது; உறுதியாகிவிட்டது; உறுதியாகிவிட்டது;' என்று கூறினீர்கள். (இரண்டிற்குமே இவ்வாறு தாங்கள் கூறக் காரணமென்ன?)" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் யாரைப் பற்றி நல்ல விதமாகப் பேசினீர்களோ அவருக்குச் சொர்க்கம் உறுதியாகிவிட்டது; நீங்கள் யாரைப் பற்றி இகழ்வாகப் பேசினீர்களோ அவருக்கு நரகம் உறுதியாகிவிட்டது. நீங்கள் பூமியில் அல்லாஹ்வின்

சாட்சிகள் ஆவீர்கள்; நீங்கள் பூமியில் அல்லாஹ்வின் சாட்சிகள் ஆவீர்கள்;நீங்கள் பூமியில் அல்லாஹ்வின் சாட்சிகள் ஆவீர்கள்" என்று (மும்முறை) கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நபி (ஸல்) அவர்கள் இருந்த இடத்தின் வழியாக பிரேதம் ஒன்று கொண்டு செல்லப்பட்டது" என்று ஹதீஸ் தொடங்குகிறது. இதர விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும், மேற்கண்ட ஹதீஸே முழுமையானதாகும்.

## பாடம் : 21 ஓய்வு பெற்றவரும் ஓய்வு அளித்தவரும்.

1732 அபூகத்தாதா ஹாரிஸ் ரிப்ஈ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கடந்து ஒரு பிரேதம் (ஜனாஸா) கொண்டு செல்லப்பட்டது. அப்போது அவர்கள் "(இவர்) ஓய்வு பெற்றவராவார்; அல்லது (பிறருக்கு) ஓய்வு அளித்தவராவார்" என்று சொன்னார்கள். மக்கள் "அல்லாஹ்வின் தூதரே,ஓய்வு பெற்றவர்; அல்லது ஓய்வு அளித்தவர் என்றால் என்ன?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இறைநம்பிக்கைகொண்ட அடியார் (இறக்கும்போது) இவ்வுலகத்தின் துன்பத்திலிருந்து ஓய்வு பெறுகிறார். பாவியான அடியான் (இறக்கும்போது) அவனி(ன் எல்லா விதமான தொல்லையி)லிருந்து மற்ற அடியார்கள், (நாடு) நகரங்கள், மரங்கள் மற்றும் கால்நடைகள் ஆகியன ஓய்வு(பெற்று நிம்மதி) பெறுகின்றன" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இவ்வுலகத்தின் தொல்லையிலிருந்தும் துன்பத்திலிருந்தும் ஓய்வு பெற்று இறையருளை நோக்கிச் செல்கிறார்" என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 22 ஜனாஸாத் தொழுகையில் சொல்ல வேண்டிய தக்பீர்கள்.

1733 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (அபிசீனிய மன்னர்) நஜாஷீ (நீகஸ்) இறந்த அன்றே அவரது மரணச்செய்தியை மக்களுக்கு அறிவித்தார்கள். பிறகு மக்களுடன் "முஸல்லா' எனும் தொழும்திடலுக்குப் புறப்பட்டுச் சென்று ("அல்லாஹு அக்பர்' என்று) நான்கு "தக்பீர்'கள் கூறி (ஜனாஸாத் தொழுகை நடத்தி)னார்கள்.

1734 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபிசீனிய மன்னர் நஜாஷீ இறந்த அன்றே அவரது மரணச்செய்தியை எங்களிடம் அறிவித்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்கள் சகோதரருக்காகப் பாவமன்னிப்புக் கோருங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்களிடமிருந்து இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அறிவிக்கும் அறிவிப்பில் "பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்கள் மக்களை தொழுகைத்திடலில் அணிவகுக்கச் செய்து நான்கு "தக்பீர்'கள் கூறி ஜனாஸாத் தொழுகை நடத்தினார்கள்" என அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1735 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அஸ்ஹமா' எனும் நஜாஷீ (மன்னரு)க்கு நான்கு "தக்பீர்' கூறி (ஜனாஸாத் தொழுகை நடத்தி)னார்கள்.

1736 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இன்று அல்லாஹ்வின் நல்லடியார் ஒருவர் (நஜாஷீ மன்னர்) அஸ்ஹமா இறந்து விட்டார்" என்று கூறினார்கள். பின்னர் எழுந்து எங்களுக்கு முன்னால் நின்று அவருக்காக (இறுதித் தொழுகை) தொழுதார்கள்.

1737 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நஜாஷீ மன்னர் இறந்த அன்று) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்கள் சகோதரர் ஒருவர் இறந்துவிட்டார். எனவே,அவருக்காக எழுந்து தொழுங்கள்!" என்று கூறினார்கள். நாங்கள் எழுந்து இரு வரிசையாக அணி வகுத்தோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1738 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நஜாஷீ மன்னர் இறந்த அன்று) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்கள் சகோதரர் ஒருவர் –அதாவது நஜாஷீ– இறந்துவிட்டார். எனவே, அவருக்காக எழுந்து தொழுங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 23 மண்ணறை (கப்று) அருகில் (இறுதித் தொழுகை) தொழுவது.

1739 சுலைமான் பின் அபீசுலைமான் அஷ்ஷைபானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பிரேதம் அடக்கம் செய்யப்பட்ட பின் அதன் மண்ணறை (கப்று) அருகில் நின்று நான்கு "தக்பீர்'கள் கூறி (ஜனாஸாத் தொழுகை நடத்தி)னார்கள் என ஷஅபீ (ஆமிர் பின் ஷராஹீல்–ரஹ்) அவர்கள் கூறினார்கள்.
நான் "இதை உங்களுக்கு அறிவித்தவர் யார்?" என ஷஅபீ அவர்களிடம் கேட்டேன். அதற்கு "நம்பத்தகுந்த வலுவான அறிவிப்பாளரான இப்னு அப்பாஸ் (ரலி)" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஹசன் பின் அர்ரபீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பிலேயே மேற்கண்ட வாசகம் இடம்பெற்றுள்ளது.
முஹம்மத் பின் அப்தில்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஈரம் உலர்ந்திராத (புதிய) மண்ணறை (கப்று)

நோக்கிச் சென்று நான்கு "தக்பீர்'கள் கூறி தொழுவித்தார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னால் நின்று தொழுதனர்" என இடம்பெற்றுள்ளது.
ஷைபானீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் ஆமிர் பின் ஷராஹீல் (ரஹ்) அவர்களிடம் "(இதை) உங்களுக்கு அறிவித்தவர் யார்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நம்பத் தகுந்தவரும் (நிகழ்ச்சியில்) கலந்துகொண்டவருமான இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்தாம்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஏழு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் எதிலும் நபி (ஸல்) அவர்கள் அத்தொழுகையில் நான்கு "தக்பீர்'கள் கூறினார்கள் எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1740 மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
இம்மூன்று அறிவிப்புகளிலும் "நான்கு தக்பீர்கள் கூறினார்கள்' என்ற குறிப்பு இடம் பெறவில்லை.

1741 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு மண்ணறை (கப்று) அருகில் (அதற்கான இறுதித் தொழுகை) தொழுதார்கள்.

1742 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலைக் கூட்டிப் பெருக்குபவராக இருந்த கறுத்த "பெண்' அல்லது "இளைஞர்' ஒருவரைக் காணாமல் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விசாரித்தார்கள். "அவர் இறந்துவிட்டார்' என மக்கள் தெரிவித்தனர். "நீங்கள் எனக்குத் தெரிவித்திருக்கக் கூடாதா?" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர் (இறந்த) விஷயத்தை மக்கள் அற்பமாகக் கருதி விட்டனர் போலும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவரது மண்ணறையை எனக்குக் காட்டுங்கள்" என்று கூறினார்கள். மக்கள் அதைக் காட்டியதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கு (சென்று) அவருக்காக (இறுதித்) தொழுகை நடத்தினார்கள். பிறகு "இந்த அடக்கத்தலங்கள், அவற்றில் வசிப்போருக்கு இருள் மண்டிக்காணப்படுகின்றன. வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், எனது தொழுகையின் மூலம் அவற்றில் அவர்களுக்கு வெளிச்சத்தை ஏற்படுத்துவான்" என்று கூறினார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1743 அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள், எங்களில் இறந்தவர்களுக்கு (ஜனாஸாத் தொழுகை) தொழுவிக்கும்போது, (பெரும்பாலும்) நான்கு தக்பீர்கள் கூறுவார்கள். (ஆனால்) ஒரு ஜனாஸாத் தொழுகையின் போது ஐந்து தக்பீர்கள் கூறினார்கள். இதுபற்றி நான் அவர்களிடம் கேட்டதற்கு "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சில வேளைகளில்) ஐந்து தக்பீர்கள் கூறுபவர்களாய் இருந்தார்கள்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 24 ஜனாஸாவைக் கண்டு எழுந்து நிற்றல்.

1744 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பிரேதத்தைக் கண்டால் அது "உங்களைக் கடந்து செல்லும்வரை' அல்லது "(கீழே) வைக்கப் படும்வரை' அதற்காக எழுந்து நில்லுங்கள்.
இதை ஆமிர் பின் ரபீஆ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1745 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் பிரேதத்தைக் கண்டும் அதனுடன் (நடந்து) செல்லப்போவதில்லை என்றால், அது அவரைக் கடந்துசெல்லும் வரை, அல்லது அது அவரைக் கடந்துசெல்வதற்கு முன்னால் (கீழே) வைக்கப்படும்வரை அவர் எழுந்து நிற்கட்டும்!
இதை ஆமிர் பின் ரபீஆ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1746 மேற்கண்ட ஹதீஸ் ஆமிர் பின் ரபீஆ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உங்களில் ஒருவர் பிரேதத்தைக் கண்டால் அதைப் பின்தொடரும் எண்ணம் இல்லாதபோது, அது கடந்து செல்லும்வரை அவர் எழுந்து நிற்கட்டும்" என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

1747 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் பிரேதத்தைப் பின்தொடர்ந்து சென்றால், அது (கீழே) வைக்கப்படும்வரை உட்கார வேண்டாம்!
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1748 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் பிரேதத்தைக் கண்டால் எழுந்து நில்லுங்கள். அதைப் பின்தொடர்ந்து செல்பவர், அது (கீழே) வைக்கப்படும்வரை உட்கார வேண்டாம்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1749 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பிரேதம் (ஜனாஸா) எங்களைக் கடந்து சென்றபோது உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து நின்றார்கள். அவர்களுடன் நாங்களும் எழுந்து நின்றோம். நாங்கள் "அல்லாஹ்வின் தூதரே, இது யூதப் பெண்ணின் பிரேதம்" என்றோம். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மரணம் என்பது திடுக்கிடச் செய்யும் ஒரு விஷயமாகும். எனவே, பிரேதத்தைக் கண்டால் எழுந்து நில்லுங்கள்!" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1750 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு பிரேதம் தம்மைக் கடந்து சென்றபோது எழுந்து, அது (தமது கண்ணை விட்டு) மறையும்வரை நின்றார்கள்.

1751 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு யூதரின் பிரேதத்திற்காக நபி (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் எழுந்து, அது (கண்ணைவிட்டு) மறையும்வரை நின்றனர்.

1752 அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
கைஸ் பின் சஅத் (ரலி), சஹ்ல் பின் ஹுனைஃப் (ரலி) ஆகியோர் (இராக் நாட்டிலுள்ள) "காதிசிய்யா' எனும் இடத்தில் இருந்தபோது, ஒரு பிரேத (ஊர்வல)ம் அவர்களைக் கடந்து சென்றது. உடனே அவர்கள் இருவரும் எழுந்து நின்றனர். அப்போது அவர்களிடம், "இது இந்த நாட்டு (முஸ்லிமல்லாத) பிரஜையின் பிரேதமாயிற்றே?" என்று கூறப்பட்டது. அதற்கு அவ்விருவரும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கடந்து ஒரு பிரேதம் கொண்டு செல்லப்பட்டபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து நின்றார்கள். அப்போது அவர்களிடம், "இது யூதரின் பிரேதம்' எனக் கூறப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இது ஓர் (மனித) உயிரில்லையா?' என்று (திருப்பிக்) கேட்டார்கள்" என்றனர்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் கைஸ் பின் சஅத் (ரலி), சஹ்ல் பின் ஹுனைஃப் (ரலி) ஆகியோர் வழியாக மற்றோர் அறிவிப்பாளர்தொடரிலும் வந்துள்ளது.
அதில் "அதற்கு அவர்கள் இருவரும் "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது ஒரு பிரேத (ஊர்வல)ம் எங்களைக் கடந்து சென்றது" என்று கூறியதாக ஹதீஸ் தொடர்கிறது.

## பாடம் : 25 ஜனாஸாவைக் கண்டு எழுந்து நிற்கும் விதி மாற்றப்பட்டுவிட்டது.

1753 வாகித் பின் அம்ர் பின் சஅத் பின் முஆத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒரு நல்லடக்க நிகழ்ச்சியில் இருந்தபோது நான் நின்றுகொண்டேயிருந்ததை நாஃபிஉ பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கண்டார்கள். ஆனால், அவர்கள் பிரேதம் வைக்கப்படுவதை எதிர்பார்த்து உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் "ஏன் நிற்கிறீர்கள்?" என்று என்னிடம் கேட்டார்கள். நான் "பிரேதம் வைக்கப்படுவதை எதிர்பார்த்து நிற்கிறேன். அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஒரு ஹதீஸே இதற்குக் காரணம்" என்றேன். அதற்கு அவர்கள் மஸ்ஊத் பின் அல்ஹகம் (ரலி) அவர்கள் கூறியதாக (பின்வரும்) ஹதீஸை அறிவித்தார்கள்:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பிரேதத்தைக் கண்டால் ஆரம்பக்காலத்தில்) எழுந்து நின்றார்கள். பின்னர் உட்கார்ந்து விட்டார்கள்" என அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1754 மஸ்ஊத் பின் அல்ஹகம் அல்அன் சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் பிரேதங்களுக்காக எழுந்து நிற்பது தொடர்பாக "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஆரம்பக்காலத்தில்) எழுந்து நின்றார்கள்; பின்னர் உட்கார்ந்துவிட்டார்கள்" என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர் யஹ்யா பின சயீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
வாகித் பின் அம்ர் (ரஹ்) அவர்கள் பிரேதம் வைக்கப்படும்வரை நின்றுகொண்டிருப்பதைக் கண்டபோதுதான் நாஃபிஉ பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை அறிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1755 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஆரம்பக்காலத்தில்) பிரேதத்தைக் கண்டு எழுந்து நிற்பதைப் பார்த்தபோது நாங்களும் நின்றோம்; (பிற்காலத்தில்) அவர்கள் உட்கார்ந்தபோது நாங்களும் உட்கார்ந்துவிட்டோம்.
இதை மஸ்ஊத் பின் அல்ஹகம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 26 இறந்தவருக்காக ஜனாஸாத் தொழுகையில் செய்யும் பிரார்த்தனை.

1756 அவ்ஃப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பிரேதத்திற்காகத் தொழுகை நடத்தினார்கள். அப்போது அவர்கள் ஓதிய பிரார்த்தனையை நான் மனனமிட்டுள்ளேன். அவர்கள், "அல்லாஹும் மஃக்பிர் லஹு, வர்ஹம்ஹு, வ ஆஃபிஹி, வஉஃபு அன்ஹு, வ அக்ரிம் நுஸுலஹு, வ வஸ்ஸிஃ முத்கலஹு, வஃக்சில்ஹு பில்மாயி வஸ்ஸல்ஜி வல்பரத், வ நக்கிஹி மினல் கத்தாயா கமா நக்கைத்தஸ் ஸவ்பல் அப்யள மினத் தனஸி, வ அப்தில்ஹு தாரன் கைரம் மின் தாரிஹி, வ அஹ்லன் கைரம் மின் அஹ்லிஹி, வ ஸவ்ஜன் கைரம் மின் ஸவ்ஜிஹி, வ அத்கில்ஹுல் ஜன்னத்த, வ அஇத்ஹு மின் அதாபில் கப்ரி / மின் அதாபிந் நார்" என்று பிரார்த்தித்தார்கள்.
(பொருள்: இறைவா! இவருக்கு மன்னிப்பு அளிப்பாயாக; கருணை புரிவாயாக; (மறுமையின் சோதனைகளிலிருந்து) இவரைக் காப்பாயாக; பாவங்களை மாய்ப்பாயாக; இவருக்கு நல்கப்படும் விருந்தை நல்லதாக்குவாயாக! இவர் புகுமிடத்தை (கப்றை) விசாலமாக்குவாயாக; இவருடைய குற்றங்குறைகளிலிருந்து இவரை நீராலும் பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் (கழுவி),அழுக்கிலிருந்து வெண்மையான ஆடையை நீ தூய்மைப்படுத்துவதைப் போன்று தூய்மைப்படுத்துவாயாக; மேலும், இங்குள்ள வீட்டைவிடச் சிறந்த வீட்டை அவருக்கு வழங்குவாயாக; இங்குள்ள குடும்பத்தைவிடச் சிறந்த குடும்பத்தை வழங்குவாயாக;இங்குள்ள துணையைவிடச் சிறந்த துணையை இவருக்கு வழங்குவாயாக; இவரைச் சொர்க்கத்தில் பிரவேசிக்கச் செய்வாயாக;இவரை மண்ணறையின் வேதனையிலிருந்து காத்தருள்வாயாக / நரகத்தின் வேதனையிலிருந்து காத்தருள்வாயாக!)

அவ்ஃப் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: அந்தப் பிரேதம் நானாக இருந்திருக்கக் கூடாதா என நான் ஆசைப்பட்டேன்.
இந்த ஹதீஸ் அவ்ஃப் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1757 அவ்ஃப் பின் மாலிக் அல்அஷ்ஜஈ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு ஜனாஸாத் தொழுகையில் "அல்லாஹும் மஃக்ஃபிர் லஹு, வர்ஹம்ஹு, வஉஃபு அன்ஹு, வ ஆஃபிஹி, வ அக்ரிம் நுஸுலஹு, வ வஸ்ஸிஃ முத்கலஹு, வஃக்சில்ஹு பி மாயின் வ ஸல்ஜின் வ பரதின், வ நக்கிஹி மினல் கத்தாயா கமா யுனக்கஸ் ஸவ்புல் அப்யளு மினத் தனஸ், வ அப்தில்ஹு தாரன் கைரம் மின் தாரிஹி, வ அஹ்லன் கைரம் மின் அஹ்லிஹி, வ ஸவ்ஜன் கைரம் மின் ஸவ்ஜிஹி, வ கிஹி ஃபித்னத்தல் கப்றி வ அதாபந் நார்" என்று ஓதுவதை நான் செவியுற்றேன்.
(பொருள்: இறைவா! இவருக்கு மன்னிப்பு அளிப்பாயாக; கருணை புரிவாயாக; இவருடைய பாவங்களை மாய்த்து இவரைக் காப்பாயாக! இவருக்கு நல்கப்படும் விருந்தை நல்ல தாக்குவாயாக! இவர் புகுமிடத்தை (கப்றை) விசாலமாக்குவாயாக; இவருடைய குற்றங்குறைகளிலிருந்து இவரை நீராலும் பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் கழுவி, அழுக்கிலிருந்து வெண்மையான ஆடை தூய்மைப்படுத்தப்படுவதைப் போன்று தூய்மையாக்குவாயாக; மேலும், இங்குள்ள வீட்டைவிடச் சிறந்த வீட்டையும் இங்குள்ள குடும்பத்தைவிடச் சிறந்த குடும்பத்தையும் இங்குள்ள துணையைவிடச் சிறந்த துணையையும் இவருக்கு வழங்குவாயாக;மண்ணறையின் வேதனையிலிருந்தும் நரக நெருப்பின் வேதனையிலிருந்தும் இவரைக் காத்தருள்வாயாக.)
அந்தப் பிரேதத்திற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்ததைப் பார்த்துவிட்டு, அது நானாக இருந்திருந்தால் நன்றாகயிருந்திருக்குமே என்று நான் ஆசைப்பட்டேன்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 27 ஜனாஸாத் தொழுகையின்போது இமாம் எந்த இடத்தில் நிற்க வேண்டும்?

1758 சமுரா பின் ஜுன்துப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உம்மு கஅப் (ரலி) எனும் பெண்மணி பிரசவ இரத்தப்போக்கு ஏற்பட்டிருந்த நிலையில் இறந்துவிட்டார். அவருக்காக நபி (ஸல்) அவர்கள் ஜனாஸாத் தொழுகை தொழுவித்தார்கள். அப்போது அவர்களைப் பின்பற்றி நானும் தொழுதேன். அத்தொழுகையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரேதத்தின் மையப்பகுதிக்கு நேராக நின்று தொழுவித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சமுரா பின் ஜுன்துப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "உம்மு கஅப்' எனும் பெயர் இடம்பெறவில்லை.

1759 சமுரா பின் ஜுன்துப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சிறுவனாக இருந்தேன். நான் நபி (ஸல்) அவர்களிடமிருந்து (பல தகவல்களை) மனனமிட்டுவந்தேன். இங்கு என்னைவிட வயதில் பெரியவர்கள் இருப்பதே என்னை அவற்றைச் சொல்லவிடாமல் தடுக்கிறது. நான் (ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் நின்று, பிரசவ இரத்தப்போக்கில் இறந்துபோன பெண்ணிற்காக ஜனாஸாத் தொழுகை தொழுதிருக்கிறேன். அத்தொழுகையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரேதத்தின் மையப்பகுதிக்கு நேராக நின்று தொழுவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) அவர்கள்,அப்துல்லாஹ் பின் புரைதா (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்பெண்ணிற்காக தொழுவித்தபோது, சடலத்தின் மையப்பகுதிக்கு நேராக நின்றார்கள்" என்று (சமுரா (ரலி) கூறியதாக) இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 28 ஜனாஸாத் தொழுகை தொழுதுவிட்டு வாகனத்தில் திரும்பிச் செல்வது.

1760 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இப்னுத் தஹ்தாஹ் (ரலி) அவர்களது நல்லடக்கத்தை முடித்தபோது அவர்களிடம் சேணம் பூட்டப்படாத வெற்றுடலான குதிரையொன்று கொண்டுவரப்பட்டது. அதிலேறி அவர்கள் திரும்பினார்கள். நாங்கள் அவர்களைச் சுற்றி நடந்துவந்தோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இப்னுத் தஹ்தாஹ் (ரலி) அவர்களுக்கு ஜனாஸாத் தொழுகை தொழுவித்தபிறகு அவர்களிடம் சேணம் பூட்டப்படாத வெற்றுடலான குதிரையொன்று கொண்டுவரப்பட்டது. அதை ஒரு மனிதர் பிடித்துக்கொள்ள அதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏறிக்கொண்டார்கள். அது சீராக ஓடலாயிற்று. நாங்கள் அதைப் பின் தொடர்ந்து விரைந்து நடக்கலானோம். அப்போது அங்கிருந்த மக்களில் ஒருவர், "இப்னுத் தஹ்தாஹ் அல்லது அபுத்தஹ்தாஹ் (அறிவிப்பாளர் ஷுஅபாவிடமிருந்து அறிவிப்பவரின் ஐயம்) அவர்களுக்காக சொர்க்கத்தில் எத்தனையோ பேரீச்சங்குலைகள் தொங்கிக்கொண்டிருக்கின்றன' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்றார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 29 உட்குழியும் பிரேதத்தின் மீது செங்கற்களை அடுக்குவதும்.

1761 ஆமிர் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் எந்த நோயில் இறந்துபோனார்களோ அந்த நோயில் இருந்தபோது, "(நான் இறந்ததும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காகச் செய்யப்பட்டதைப் போன்று, (குழியினுள்) எனக்காக உட்குழியொன்றை வெட்டுங்கள்; என்மீது நன்கு செங்கற்களை அடுக்கிவையுங்கள்!" என்று சொன்னார்கள்.

**பாடம் : 30 கப்றுக் குழியினுள் போர்வையை விரித்து (பிரேதத்தை) வைப்பது.**

1762 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கப்றுக்குள் சிவப்புப் போர்வை ஒன்று விரிக்கப் பட்டது.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
(முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான் கூறுகின்றேன்:) இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் தொடரில் இடம்பெற்றுள்ள அபூஜம்ரா என்பவரின் பெயர் நஸ்ர் பின் இம்ரான் என்பதாகும். (இங்கு இடம்பெறாத மற்றொருவரான) அபுத்தய்யாஹ் என்பாரின் பெயர் யஸீத் பின் ஹுமைத் ஆகும். இவர்கள் இருவரும் (குராசான் நாட்டிலுள்ள) "சர்கஸ்' எனும் நகரத்தில் இறந்தனர்.

**பாடம் : 31 மண்ணறை(யின் மேற்பகுதி)யைத் தரைக்குச் சமமாக்குதல்.**

1763 ஸுமாமா பின் ஷுஃபை (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஃபளாலா பின் உபைத் (ரலி) அவர்களுடன் ரோம் நாட்டிலுள்ள "ரோடிஸ்' தீவில் இருந்தோம். அங்கு எங்கள் நண்பர் ஒருவர் இறந்துவிட்டார். அப்போது ஃபளாலா பின் உபைத் (ரலி) அவர்கள், அவரது கப்றைத் தரைமட்டமாக அமைக்கும்படி உத்தரவிட்டார்கள். பின்னர் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கப்றைத் தரைமட்டமாக்கும்படி உத்தரவிட்டதை நான் கேட்டுள்ளேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1764 அபுல்ஹய்யாஜ் அல்அசதீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் என்னிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்த அலுவலுக்காக என்னை அனுப்பினார்களோ அந்த அலுவலுக்காக உம்மை நான் அனுப்புகிறேன். (அந்த அலுவல் என்னவென்றால்) எந்த உருவச் சிலைகளையும் நீர் அழிக்காமல் விட்டுவிடாதீர்; (தரையைவிட) உயர்ந்துள்ள எந்தக் கப்றையும் தரை மட்டமாக்காமல் விடாதீர்!"என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "எந்த உருவப் படங்களையும் நீ அழிக்காமல் விடாதீர்!" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 32 கப்றுகளைக் காரையால் பூசுவதோ அதன் மீது கட்டடம் எழுப்புவதோ கூடாது.**

1765 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கப்றுகள் காரையால் (சுண்ணாம்புக் கலவையால்) பூசப்படுவதையும் அதன் மீது உட்காருவதையும் அதன் மீது கட்டடம் எழுப்பப்படுவதையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1766 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கப்றுகள் காரையால் பூசப்படுவது தடை செய்யப்பட்டுள்ளது.

## பாடம் : 33 கப்றுமீது அமர்வதோ அதன் மீது தொழுவதோ கூடாது.

1767 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர், ஒரு நெருப்புக்கங்கின் மீது அமர்ந்து அது அவரது ஆடையைக் கரித்து அவரது சருமம்வரை சென்றடைவதானது, ஓர் அடக்கத்தலத்தின் (கப்று)மீது அவர் உட்காருவதைவிட அவருக்குச் சிறந்ததாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1768 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அடக்கத்தலங்கள் (கப்று)மீது உட்காராதீர்கள்; அவற்றை நோக்கித் தொழாதீர்கள்.
இதை அபூமர்ஸத் கன்னாஸ் பின் அல் ஹுஸைன் அல்ஃகனவீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1769 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அடக்கத்தலங்களை (கப்று) நோக்கித் தொழாதீர்கள்; அவற்றின் மீது உட்காராதீர்கள்.
இதை அபூமர்ஸத் அல்ஃகனவீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 34 பள்ளிவாசலில் ஜனாஸாத் தொழுகை நடத்துவது.

1770 அப்பாத் பின் அப்தில்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள், சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களின் பிரேதத்தைப் பள்ளிவாசலுக்குக் கொண்டுசென்று தொழுகை நடத்துமாறு கூறினார்கள். மக்கள் அதற்கு ஆட்சேபம் தெரிவித்தனர். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் எவ்வளவு விரைவாக மக்கள் மறந்துவிடுகின்றனர்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், சுஹைல் பின் அல்பைளா (ரலி) அவர்களுக்குப் பள்ளிவாசலில்தான் தொழுகை நடத்தினார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1771 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் இறந்தபோது அவரது பிரேதத்தைப் பள்ளிவாசலுக்குக் கொண்டுவருமாறும், தாங்கள் அவருக்கு (இறுதித் தொழுகை) தொழப் போவதாகவும் நபி (ஸல்) அவர்களின் துணைவியர் சொல்லி அனுப்பினார்கள். அவ்வாறே மக்களும் செய்தனர். அப்போது அவரது பிரேதம் நபி (ஸல்) அவர்களின் துணைவியரின் அறைகளுக்கு அருகில் கொண்டுவந்து,அவர்கள் தொழுதுகொள்வதற்காக வைக்கப்பட்டது.

பிறகு "மகாஇத்' எனும் இடம் நோக்கி இருந்த "பாபுல் ஜனாயிஸ்' தலைவாயில் வழியாகப் பிரேதம் வெளியே கொண்டுசெல்லப்பட்டது. இது குறித்து மக்கள் குறை கூறுவதாகவும் "பிரேதங்களைப் பள்ளிவாசலுக்குள் கொண்டுசெல்லப்படாது' என்று அவர்கள் பேசிக் கொள்வதாகவும் நபி (ஸல்) அவர்களுடைய துணைவியருக்குச் செய்தி எட்டியது. அப்போது நான் "மக்கள் தங்களுக்குத் தெரியாத விஷயத்தில் ஏன் அவசரப்பட்டுக் குறை கூறுகின்றனர்? பள்ளிவாசலுக்குள் ஒரு பிரேதத்தைக் கொண்டு சென்றதற்காக எங்களை அவர்கள் குறைசொல்கின்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுஹைல் பின் அல்பைளா (ரலி) அவர்களுக்குப் பள்ளிவாசலின் நடுப்பகுதியில்தான் தொழுகை நடத்தினார்கள்" என்று கூறினேன்.
இதை அப்பாத் பின் அப்தில்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1772 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் இறந்தபோது "அவரது பிரேதத்தைப் பள்ளிவாசலுக்குக் கொண்டுசெல்லுங்கள்; அவருக்காக நான் தொழப்போகிறேன்' என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள். ஆயிஷா (ரலி) அவர்களிடம் ஆட்சேபம் தெரிவிக்கப் பட்டபோது, "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பைளா எனும் பெண்மணியின் இரு புதல்வர்களான சுஹைலுக்கும் அவருடைய சகோதரருக்கும் பள்ளிவாசலில்தான் தொழுகை நடத்தினார்கள்" என்று கூறினார்கள்.
(முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் கூறுகின்றேன்:) சுஹைல் பின் தஅத் என்பதே அவரது பெயராகும். பைளா என்பது அவருடைய தாயாரின் (புனை) பெயராகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 35 அடக்கத்தலங்களில் நுழையும்போது கூற வேண்டியதும் அடக்கம் செய்யப் பட்டிருப்பவர்களுக்காகப் பிரார்த்திப்பதும்.

1773 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் இறுதிநாட்களில்) என்னுடன் தங்கியிருந்த ஒவ்வோர் இரவின் பிற்பகுதியிலும்(மதீனாவிலுள்ள) "பகீஉல் ஃகர்கத்' பொது மையவாடிக்குச் செல்வார்கள். அங்கு (பின்வருமாறு) கூறுவார்கள்:
அஸ்ஸலாமு அலைக்கும் தார கவ்மின் முஃமினீன். வ அத்தாக்கும் மா தூஅதூன ஃகதன் முஅஜ்ஜலூன். வ இன்னா இன்ஷா அல்லாஹு பிக்கும் லாஹிகூன். அல்லாஹும்மஃக்ஃபிர் லி அஹ்லி பகீஇல் ஃகர்கத்.
(பொருள்: இந்த அடக்கத்தலத்தில் உள்ள இறைநம்பிக்கையாளர்களே! உங்கள்மீது சாந்தி பொழியட்டும்! நீங்கள் நாளை சந்திக்கப்போவதாக வாக்களிக்கப்பட்ட ஒன்று, தவணை அளிக்கப்பட்ட பின்னர் உங்களிடம் வந்துவிட்டது. நாங்கள் அல்லாஹ் நாடினால் உங்களுக்குப் பின்னால் வந்து சேரக்கூடியவர்களாக உள்ளோம். இறைவா! பகீஉல் ஃகர்கதில் உள்ளோருக்கு நீ மன்னிப்பளிப்பாயாக!)
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் குதைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உங்களிடம் வந்துவிட்டது' (அ(த்)தாக்கும்) எனும் சொற்றொடர் இடம்பெறவில்லை.

1774 அப்துல்லாஹ் பின் கஸீர் அல்முத்தலிப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) ஆயிஷா (ரலி) அவர்கள் "நான் நபி (ஸல்) அவர்களைப் பற்றியும் என்னைப் பற்றியும் உங்களுக்கு அறிவிக்க வேண்டாமா?" என்று கேட்டார்கள். அதற்கு நாங்கள் "ஆம் (அறிவியுங்கள்)' என்று கூறினோம் என முஹம்மத் பின் கைஸ் பின் மக்ரமா (ரஹ்) அவர்கள் தெரிவித்தார்கள்.
மற்றோர் அறிவிப்பில் (பின்வருமாறு) காணப்படுகிறது:
ஒரு நாள் முஹம்மத் பின் கைஸ் பின் மக்ரமா பின் அல்முத்தலிப் (ரஹ்) அவர்கள், "நான் என்னைப் பற்றியும் என் அன்னையைப் பற்றியும் உங்களுக்கு அறிவிக்க வேண்டாமா?" என்று கேட்டார்கள். அவர்கள் தம்மை ஈன்றெடுத்த அன்னையைப் பற்றித்தான் குறிப்பிடுகிறார்கள் என்று நாங்கள் எண்ணினோம். பிறகு அவர்கள் கூறினார்கள்:
(ஒரு நாள் அன்னை) ஆயிஷா (ரலி) அவர்கள் "நான் என்னைப் பற்றியும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பற்றியும் உங்களுக்கு அறிவிக்க வேண்டாமா?" என்று கேட்டார்கள். நாங்கள் "ஆம் (அறிவியுங்கள்)' என்று கூறினோம். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்:
நபி (ஸல்) அவர்கள் என்னுடன் தங்க வேண்டிய இரவில் (என்னிடம்) வந்தார்கள். தமது மேலாடையை (எடுத்துக் கீழே) வைத்தார்கள்; தம் காலணிகளைக் கழற்றித் தமது கால்மாட்டில் வைத்துவிட்டுத் தமது கீழாடையின் ஓரத்தைப் படுக்கையில் விரித்து அதில் ஒருக்களித்துப் படுத்திருந்தார்கள். நான் உறங்கிவிட்டேன் என்று அவர்கள் எண்ணும் அளவு பொறுத்திருந்தார்கள். (நான் உறங்கிவிட்டதாக எண்ணியதும்) மெதுவாகத் தமது மேலாடையை எடுத்து (அணிந்து)கொண்டார்கள்; மெதுவாகக் காலணிகளை அணிந்தார்கள்; கதவைத் திறந்து வெளியே சென்று மெதுவாகக் கதவை மூடினார்கள்.
உடனே நான் எனது தலைத் துணியை எடுத்து, தலையில் வைத்து மறைத்துக் கொண்டேன்; கீழாடையை அணிந்துகொண்டு அவர்களைப் பின்தொடர்ந்து நடந்தேன். அவர்கள் "அல்பகீஉ' பொது மையவாடிக்குச் சென்று நின்றார்கள்; அங்கு நீண்ட நேரம் நின்றிருந்தார்கள். பிறகு மூன்று முறை கைகளை உயர்த்தினார்கள். பிறகு (வீடு நோக்கித்) திரும்பினார்கள்; நானும் திரும்பினேன். அவர்கள் விரைவாக நடந்தபோது நானும் விரைவாக நடந்தேன். அவர்கள் ஓடிவந்தார்கள்; நானும் (அவ்வாறே) ஓடிவந்தேன்;அவர்களுக்கு முன்னால் (வீட்டுக்கு) வந்து படுத்துக்கொண்டேன். நான் படுத்த சிறிது நேரத்தில் அவர்கள் (வீட்டுக்குள்) வந்து "ஆயிஷ்! உனக்கு என்ன நேர்ந்தது? உனக்கு ஏன் மூச்சு வாங்குகிறது?" என்று கேட்டார்கள். நான் "ஒன்றுமில்லை' என்றேன். அதற்கு அவர்கள் "ஒன்று, நீயாகச் சொல்லிவிடு! இல்லாவிட்டால் நுண்ணறிவாளனும் மென்மையானவனுமான அல்லாஹ் எனக்கு அறிவித்துவிடுவான்" என்று கூறினார்கள். நான் "அல்லாஹ்வின் தூதரே, என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்!" என்று கூறிவிட்டு, நடந்ததை அவர்களிடம் தெரிவித்தேன். அவர்கள் "ஓ நீதான் எனக்கு முன்னால் நான் கண்ட அந்த உருவமா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். உடனே அவர்கள் என் நெஞ்சில் கையை வைத்துத் தள்ளினார்கள். எனக்கு வலித்தது. பிறகு "அல்லாஹ்வும் அவனுடைய

தூதரும் (உனக்கு) அநீதியிழைத்துவிடுவார்கள் என நீ எண்ணிக்கொண்டாயோ?" என்று கேட்டார்கள். நான் "ஆம்! மனிதர்கள் என்னதான் மறைத்தாலும் அல்லாஹ் அதை அறிந்துவிடுவானே!" என்று கூறினேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ என்னைக் கண்டபோது (வானவர்) ஜிப்ரீல் என்னிடம் வந்து மறைவாக ஓரிடத்தில் நின்றுகொண்டு என்னை அழைத்தார். நானும் அவரது அழைப்பை ஏற்று உனக்குத் தெரியாமல் மறைவாக அவரிடம் சென்றேன். -(பொதுவாக) நீ உனது ஆடையை கழற்றிவைத்துவிட்ட நேரங்களில் அவர் நீ இருக்கும் இடத்திற்கு வரமாட்டார்- (எனவே தான், மறைவாக நின்று அவர் என்னை அழைத்தார்.) நான் நீ உறங்கிவிட்டதாக நினைத்தேன். உன்னை எழுப்பிவிடவும் நான் விரும்பவில்லை. நீ தனிமையில் இருப்பதை நினைத்து பயந்துவிடுவாய் என்று நான் அஞ்சினேன். (எனவே, உன்னை உறக்கத்திலிருந்து எழுப்பவில்லை.) அப்போது ஜிப்ரீல் "உம் இறைவன் உம்மை "பகீஉ'வாசிகளிடம் சென்று அவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோரும்படி கட்டளையிடுகின்றான்' என்று கூறினார்" என்றார்கள்.
தொடர்ந்து ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் "அல்லாஹ்வின் தூதரே! அ(டக்கத்தலங்களில் இருப்ப)வர்களுக்காக நான் என்ன சொல்ல வேண்டும்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அஸ்ஸலாமு அலா அஹ்லித் தியாரி மினல் முஃமினீன வல் முஸ்லிமீன். வ யர்ஹமுல்லாஹுல் முஸ்தக்திமீன மின்னா வல் முஸ்தஃகிரீன். வ இன்னா இன்ஷா அல்லாஹு பி(க்)கும் ல லாஹிகூன்" என்று சொல்" என்றார்கள்.
(பொருள்: அடக்கத்தலங்களில் உள்ள இறைநம்பிக்கையாளர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் சாந்தி பொழியட்டும்! நம்மில் முந்திச் சென்றுவிட்டவர்களுக்கும் பிந்தி வருபவர்களுக்கும் அல்லாஹ் கருணை புரிவானாக! நாம் அல்லாஹ் நாடினால் உங்களுக்குப் பின்னால் வந்து சேரக்கூடியவர்களாக உள்ளோம்.)

1775 புரைதா பின் அல்ஹஸீப் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களுக்கு, அவர்கள் அடக்கத்தலங்களுக்குச் செல்லும்போது கூற வேண்டியதைக் கற்றுக்கொடுத்துவந்தார்கள். அ(வ்வாறு கற்றுக் கொண்ட)வர்களில் ஒருவர் "அஸ்ஸலாமு அலா அஹ்லித் தியாரி மினல் முஃமினீன வல்முஸ்லிமீன். வ இன்னா இன்ஷா அல்லாஹு ல லாஹிகூன். அஸ்அலுல்லாஹ லனா வ ல(க்)குமுல் ஆஃபிய்யா' என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கற்றுக் கொடுத்ததாகக்) கூறினார்.
(பொருள்: அடக்கத்தலங்களில் உள்ள இறைநம்பிக்கையாளர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் சாந்தி பொழியட்டும்! நாம் அல்லாஹ் நாடினால் (உங்களிடம்) வந்து சேரக்கூடியவர்களாக உள்ளோம். நான் எங்களுக்காகவும் உங்களுக்காகவும் விமோசனத்தை வேண்டுகிறேன்.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மேற்கண்ட வாசக அமைப்பு இடம்பெற்றுள்ளது.
ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அஸ்ஸலாமு அலைக்கும் அஹ்லத் தியாரி" என்று தொடங்குகிறது.

**பாடம் : 36 நபி (ஸல்) அவர்கள் தம் தாயாரின் அடக்கத்தலத்தைச் சந்திக்க இறைவனிடம் அனுமதி கோரியது.**

1776 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் என் இறைவனிடம் என் தாயாருக்காகப் பாவமன்னிப்புக் கோர அனுமதி கேட்டேன். அவன் அனுமதி வழங்கவில்லை. அவரது அடக்கத்தலத்தைச் சந்திக்க அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதி வழங்கினான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1777 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தம் தாயாரின் அடக்கத்தலத்தைச் சந்தித்தபோது அழுதார்கள்; (இதைக் கண்டு) அவர்களைச் சுற்றியிருந்தவர்களும் அழுதனர். அப்போது அவர்கள், "நான் என் இறைவனிடம் என் தாயாருக்காகப் பாவமன்னிப்புக் கோர அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதி வழங்கப்படவில்லை. அவரது அடக்கத்தலத்தைச் சந்திப்பதற்கு அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதி வழங்கினான். எனவே, அடக்கத்தலங்களைச் சந்தியுங்கள். ஏனெனில், அவை மரணத்தை நினைவூட்டும்!' என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1778 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் உங்களை அடக்கத்தலங்களைச் சந்திக்க வேண்டாமென்று தடை விதித்திருந்தேன். இனி நீங்கள் அவற்றைச் சந்தியுங்கள். குர்பானி இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேல் சேமித்துவைக்க வேண்டாமென உங்களுக்குத் தடை விதித்திருந்தேன். இனி நீங்கள் விரும்பும் நாட்கள்வரை சேமித்துவையுங்கள். பழச்சாறு மதுபானங்கள் ஊற்றிவைக்கப் பயன்படும் பாத்திரங்களைப் பயன்படுத்த வேண்டாமென்று உங்களுக்குத் தடை விதித்திருந்தேன். இனி நீங்கள் எல்லாப் பாத்திரங்களிலும் பருகலாம். ஆனால், போதையூட்டுகின்றவற்றை அருந்தாதீர்கள்.
இதை புரைதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் புரைதா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 37 தற்கொலை செய்தவனுக்கு (இறுதி)த் தொழுகையைக் கைவிட்டது.**

1779 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அகலமான அம்பால் தற்கொலை செய்து கொண்ட ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டபோது, அவருக்காக நபி (ஸல்) அவர்கள் தொழவைக்கவில்லை.

# அத்தியாயம் : 13 - ஜகாத்

1780 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தானியங்களில்) ஐந்து "வஸ்க்'குகளை விடக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை; (கால்நடைகளில்) ஐந்து ஒட்டகங்களுக்குக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை. (வெள்ளியில்) ஐந்து "ஊக்கியா'க்களுக்குக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1781 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மேற்கண்டவாறு) கூறியதை நான் கேட்டேன். அப்போது அவர்கள் தம்முடைய ஐந்து விரல்களால் சைகை செய்தார்கள்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. பிறகு மேற்கண்ட ஹதீஸில் உள்ள விவரங்களைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

1782 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தானியங்களில்) ஐந்து "வஸ்க்'குகளை விடக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை; (கால்நடைகளில்) ஐந்து ஒட்டகங்களுக்குக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை. (வெள்ளி யில்) ஐந்து "ஊக்கியா'க்களுக்குக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1783 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பேரீச்சம் பழத்திலும் தானியத்திலும் ஐந்து "வஸ்க்'குகளைவிடக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1784 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தானியத்திலும் பேரீச்சம் பழத்திலும் ஐந்து "வஸ்க்'குகளை எட்டாதவரை ஸகாத் இல்லை; ஐந்து ஒட்டகங்களுக்குக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை. (வெள்ளியில்) ஐந்து "ஊக்கியா'க்களைவிடக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும், அவற்றில் "பேரீச்சம் பழம்' (தம்ர்) என்பதற்கு பதிலாக "பழம்' (ஸமர்) என்று (பொதுவாக) இடம்பெற்றுள்ளது.

1785 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெள்ளியில் ஐந்து "ஊக்கியா'க்களைவிடக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை. ஐந்து ஒட்டகங்களுக்குக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை. பேரீச்சம் பழத்தில் ஐந்து "வஸ்க்' குகளை விடக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது

**பாடம் : 1 பத்திலொரு பாகம், அல்லது அதில் பாதி கடமையாகும் ஸகாத்.**

1786 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நதிகளாலும் மழையாலும் முளைத்தவற்றில் பத்து சதவீதம் (ஸகாத் கடமை) ஆகும். ஒட்டகத்தின் மூலம் நீர் பாய்ச்சி முளைத்தவற்றில் ஐந்து சதவீதம் (ஸகாத் கடமை) ஆகும்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 2 ஒரு முஸ்லிம் தம் அடிமைக்காகவும் குதிரைக்காகவும் ஸகாத் கொடுக்க வேண்டியதில்லை.**

1787 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமின் அடிமைக்காகவோ குதிரைக்காகவோ அவர்மீது (ஸகாத் கடமை) இல்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1788 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமின் அடிமைக்காகவோ குதிரைக்காகவோ அவர்மீது (ஸகாத் கடமை) இல்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1789 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அடிமைக்காக (உரிமையாளன்மீது) ஸகாத் (கடமை) இல்லை; நோன்புப் பெருநாள் தர்மத்தைத் தவிர.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 3 (ஓராண்டு முழுமை அடைவதற்கு முன்பே) ஸகாத் வழங்குவதும் ஸகாத் வழங்க மறுப்பதும்.**

1790 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸகாத் வசூலிப்பதற்காக உமர் (ரலி) அவர்களை அனுப்பினார்கள். அப்போது "இப்னு ஜமீல்,காலித் பின் அல்வலீத் மற்றும் அல்லாஹ்வின்

தூதர் (ஸல்) அவர்களுடைய பெரிய தந்தை அப்பாஸ் (ரலி) ஆகியோர் (ஸகாத் வழங்க) மறுத்துவிட்டனர்" என்று கூறப்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இப்னு ஜமீல் ஏழையாக இருந்து, அல்லாஹ் அவரைச் செல்வ(ந்த)ராக ஆக்கிய பிறகே அவர் (ஸகாத் வழங்க) மறுத்துள்ளார். காலிதைப் பொறுத்தவரை, நீங்கள் காலிதுக்கு அநீதி இழைக்கின்றீர்கள். அவரோ தம் கவசஉடைகளையும் போர்த்தளவாடங்களையும் அல்லாஹ்வின் பாதையில் (அறக்கொடையாக) வழங்க முடிவு செய்திருந்தார். அப்பாஸ் அவர்களைப் பொறுத்தவரையில் அவரது ஸகாத்தையும் அதைப்போன்ற இன்னொரு மடங்கையும் வழங்குவது என்மீது பொறுப்பாகும். உமரே! ஒருவருடைய தந்தையின் சகோதரர் அவருடைய தந்தையைப் போன்றவர் ஆவார் என்பது உமக்குத் தெரியாதா?" என்று கூறினார்கள்.

**பாடம் : 4 நோன்புப் பெருநாள் தர்மமாகப் பேரீச்சம் பழம், தோல் நீக்கப்படாத கோதுமை ஆகியவற்றை வழங்குவது முஸ்லிம்கள் மீது கடமையாகும்.**

1791 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஸ்லிம்களில் சுதந்திரமானவர்கள், அடிமைகள், ஆண்கள் மற்றும் பெண்கள் ஆகிய அனைவர் மீதும் பேரீச்சம் பழத்தில் ஒரு "ஸாஉ' அல்லது தோல் நீக்கப்படாத (வாற்) கோதுமையில் ஒரு "ஸாஉ' (ஏழைகளுக்கு வழங்குவது கடமையாகும்) என ரமளான் நோன்புப் பெருநாள் தர்மத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களுக்கு நிர்ணயித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1792 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அடிமைகள், சுதந்திரமானவர்கள் ஆகியோரில் சிறியவர், பெரியவர் அனைவர்மீதும் பேரீச்சம் பழத்தில் ஒரு "ஸாஉ' அல்லது தோல் நீக்கப்படாத (வாற்)கோதுமையில் ஒரு "ஸாஉ' (ஏழைகளுக்கு வழங்குவது கடமையாகும்) என நோன்புப் பெருநாள் தர்மத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிர்ணயித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1793 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
சுதந்திரமானவர்கள், அடிமைகள், ஆண்கள் மற்றும் பெண்கள் அனைவர்மீதும் பேரீச்சம் பழத்தில் ஒரு "ஸாஉ' அல்லது தோல் நீக்கப்படாத (வாற்)கோதுமையில் ஒரு "ஸாஉ' (ஏழைகளுக்கு வழங்குவது கடமையாகும்) என ரமளான் தர்மத்தை நபி (ஸல்) அவர்கள் நிர்ணயித்தார்கள். பிறகு மக்கள் (தோல் நீக்கப்பட்ட) மணிக்கோதுமையில் அரை "ஸாஉ'வை அதற்குச் சமமாக ஆக்கினர்.

1794 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு "ஸாஉ' பேரீச்சம்பழத்தையோ அல்லது ஒரு "ஸாஉ' தோல் நீக்கப்படாத (வாற்)கோதுமையையோ நோன்புப் பெருநாள் தர்மமாக வழங்கும்படி கட்டளையிட்டார்கள்.

மக்கள் ஒரு "ஸாஉ' தோல் நீக்கப்படாத கோதுமைக்குச் சமமாக இரண்டு "முத்'து (அரை "ஸாஉ') தோல் நீக்கப்பட்ட (மணிக்) கோதுமையை ஆக்கிக்கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1795 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஸ்லிம்களில் சுதந்திரமானவர்கள், அடிமைகள், ஆண்கள், பெண்கள், சிறியவர்கள், பெரியவர்கள் ஆகிய அனைவர் மீதும் பேரீச்சம் பழத்தில் ஒரு "ஸாஉ' அல்லது தோல் நீக்கப்படாத (வாற்)கோதுமையில் ஒரு "ஸாஉ' (ஏழைகளுக்கு வழங்குவது கடமையாகும்) என ரமளான் தர்மத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிர்ணயித்தார்கள்.

1796 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நோன்புப் பெருநாள் தர்மமாக ஏதேனும் உணவிலிருந்து ஒரு "ஸாஉ', அல்லது தோல் நீக்கப்படாத (வாற்)கோதுமையிலிருந்து ஒரு "ஸாஉ', அல்லது பாலாடைக் கட்டியிலிருந்து ஒரு "ஸாஉ', அல்லது உலர்ந்த திராட்சையிலிருந்து ஒரு "ஸாஉ' வழங்கிவந்தோம்.

1797 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்களிடையே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருந்த காலத்தில் சிறியவர், பெரியவர், சுதந்திரமானவர், அடிமை என அனைவருக்காகவும் நாங்கள் ஏதேனும் உணவிலிருந்து ஒரு ஸாஉ, அல்லது பாலாடைக் கட்டியிலிருந்து ஒரு "ஸாஉ', அல்லது தோல் நீக்கப்படாத (வாற்)கோதுமையிலிருந்து ஒரு "ஸாஉ', அல்லது பேரீச்சம் பழத்திலிருந்து ஒரு "ஸாஉ', அல்லது உலர்ந்த திராட்சையிலிருந்து ஒரு "ஸாஉ' நோன்புப் பெருநாள் தர்மமாக வழங்கிவந்தோம். முஆவியா பின் அபீ சுஃப்யான் (ரலி) அவர்கள் ஹஜ் அல்லது உம்ராவிற்காக எங்களிடம் வரும்வரையில் இவ்வாறே நாங்கள் வழங்கிவந்தோம். முஆவியா (ரலி) அவர்கள் (எங்களிடம் வந்ததும்) சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது நின்று மக்களுக்கு உரையாற்றினார்கள். அவர்கள் மக்களுக்கு ஆற்றிய உரையில் "ஷாம் (சிரியா) பகுதியின் தோல் நீக்கப்பட்ட (மணிக்) கோதுமையில் இரு "முத்'துகள், பேரீச்சம் பழத்தின் ஒரு "ஸாஉ'க்கு நிகரானதாகும் என நான் கருதுகிறேன்" என்று குறிப்பிட்டார்கள். மக்கள் அதைப் பிடித்துக்கொண்டனர்.
நானோ (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில்) வழங்கியதைப் போன்றே நான் உயிர் வாழும்வரை வழங்கிக்கொண்டிருப்பேன்.

1798 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்களிடையே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருந்த காலத்தில் சிறியவர், பெரியவர், சுதந்திரமானவர், அடிமை என அனைவருக்காகவும் பேரீச்சம் பழத்திலிருந்து ஒரு "ஸாஉ', பாலாடைக் கட்டியிலிருந்து ஒரு "ஸாஉ', தோல் நீக்கப்படாத (வாற்) கோதுமையிலிருந்து ஒரு "ஸாஉ' ஆகிய மூன்று இனங்களிலிருந்து நோன்புப் பெருநாள் தர்மம் வழங்கிவந்தோம். முஆவியா (ரலி) அவர்கள் வரும்வரையில் இவ்வாறே வழங்கிவந்தோம். பிறகு முஆவியா (ரலி) அவர்கள் தோல் நீக்கப்பட்ட (மணிக்)

கோதுமையிலிருந்து இரு "முத்'து, ஒரு "ஸாஉ' பேரீச்சம் பழத்திற்கு ஈடானதாகும் என்று கருதினார்கள்.
நானோ (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில்) வழங்கியதைப் போன்றே வழங்கிக் கொண்டிருப்பேன்.

1799 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் பாலாடைக்கட்டி, பேரீச்சம் பழம், தோல் நீக்கப்படாத (வாற்)கோதுமை ஆகிய மூன்று இனங்களிலிருந்தே நோன்புப் பெருநாள் தர்மத்தை வழங்கிவந்தோம்.

1800 இயாள் பின் அப்தில்லாஹ் பின் அபீசர்ஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஆவியா (ரலி) அவர்கள் தோல் நீக்கப்பட்ட அரை "ஸாஉ' (மணிக்)கோதுமையை ஒரு ஸாஉ பேரீச்சம்பழத்திற்கு ஈடாக்கியபோது அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அதை ஆட்சேபித்தார்கள். "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் வழங்கி வந்ததைப் போன்று பேரீச்சம்பழத்தில் ஒரு "ஸாஉ', அல்லது உலர்ந்த திராட்சையில் ஒரு "ஸாஉ', அல்லது தோல் நீக்கப்படாத (வாற்)கோதுமையில் ஒரு "ஸாஉ', அல்லது பாலாடைக்கட்டியில் ஒரு "ஸாஉ'வைத் தவிர வேறெதையும் நோன்புப்பெருநாள் தர்மமாக வழங்கமாட்டேன்" என்று கூறினார்கள்.

பாடம் : 5 பெருநாள் தொழுகைக்கு முன்பே பெருநாள் தர்மத்தை வழங்கிடுமாறு வந்துள்ள கட்டளை.

1801 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் பெருநாள் தொழுகைக்குப் புறப்படுவதற்கு முன்பே நோன்புப் பெருநாள் தர்மம் வழங்கப்பட வேண்டும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

1802 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் பெருநாள் தொழுகைக்குப் புறப்படுவதற்கு முன்பே நோன்புப் பெருநாள் தர்மம் வழங்கப்பட வேண்டும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

பாடம் : 6 ஸகாத் வழங்க மறுப்பது குற்றம்.

1803 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"பொன், வெள்ளி ஆகியவற்றைச் சேகரித்து வைத்துக்கொண்டு அவற்றுக்குரிய கடமையை (ஸகாத்) நிறைவேற்றாமல் இருப்பவருக்கு, மறுமை நாளில் நரக நெருப்பில் அவற்றைப் பழுக்கக் காய்ச்சி, உலோகப் பாளமாக மாற்றி, அவருடைய விலாப்புறத்திலும் நெற்றியிலும் முதுகிலும் சூடு போடப்படும். அவை குளிர்ந்து விடும்போதெல்லாம் மீண்டும் அவ்வாறே (பழுக்கக் காய்ந்த பாளமாக) மாறிவிடும். இவ்வாறு ஒரு நாள் அவர் தண்டிக்கப்படுவார். அ(ந்)த (ஒரு நாளி)ன் அளவு ஐம்பது ஆயிரம் ஆண்டுகளாகும். இறுதியில் அடியார்களிடையே இறுதித்தீர்ப்பு வழங்கப்படும். அப்போது தாம் செல்லவேண்டிய சொர்க்கத்தின் பாதையை, அல்லது நரகத்தின் பாதையை அவர் காண்பார்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது "அல்லாஹ்வின் தூதரே! ஒட்டகங்களின் நிலை என்ன? (அவற்றுக்குரிய கடமையை நிறைவேற்றாவிட்டால் என்ன தண்டனை?)" என்று கேட்கப்பட்டது. அதற்கு "ஒட்டகங்களின் உரிமையாளர் அவற்றிலிருந்து அவற்றுக்குரிய கடமையை (ஸகாத்) நிறை வேற்றாவிட்டால் - தண்ணீர் புகட்டும் நாளில் பால் கறந்து ஏழைகளுக்கு வழங்குவதும் அவற்றுக்குரிய கடமைகளில் ஒன்றாகும்- மறுமை நாளில் அவர் ஒரு விசாலமான மைதானத்தில் தூக்கியெறியப்படுவார். அந்த ஒட்டகங்களில் பால்குடி மறந்த குட்டி உள்பட ஒன்றுகூட விடுபடாமல் எல்லாம் வந்து அவரைக் கால் குளம்புகளால் மிதிக்கும்; வாயால் கடிக்கும். அவற்றில் கடைசி ஒட்டகம் மிதித்துவிட்டுச் சென்றதும் மீண்டும் முதல் ஒட்டகம் அவர்மீது ஏவிவிடப்படும். இவ்வாறு ஒரு நாள் அவர் தண்டிக்கப்படுவார். அ(ந்)த (ஒரு நாளி)ன் அளவு ஐம்பது ஆயிரம் ஆண்டுகளாகும். இறுதியில் அடியார்களிடையே இறுதித் தீர்ப்பு வழங்கப்படும். அப்போது தாம் செல்லவேண்டிய சொர்க்கத்தின் பாதையை, அல்லது நரகத்தின் பாதையை அவர் காண்பார்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது "அல்லாஹ்வின் தூதரே! ஆடு, மாடுகளின் நிலை என்ன? (அவற்றுக்குரிய கடமையை நிறைவேற்றாவிட்டால் என்ன தண்டனை?)" என்று கேட்கப்பட்டது. அதற்கு "ஆடு, மாடுகளின் உரிமையாளர் அவற்றுக்குரிய கடமையை (ஸகாத்) நிறைவேற்ற வில்லையாயின் மறுமை நாளில் அவர் ஒரு விசாலமான மைதானத்தில் தூக்கியெறியப்படுவார். கொம்பு வளைந்த,கொம்பு இல்லாத, காதுகள் கிழிக்கப்பட்ட அவருடைய ஆடு, மாடுகள் ஒன்றுவிடாமல் வந்து அவரை முட்டித்தள்ளும்; காலால் அவரை மிதிக்கும். அவற்றில் கடைசிப் பிராணி அவரை மிதித்துவிட்டுச் சென்றதும் மீண்டும் முதலில் சென்ற பிராணி அவர் மீது ஏவிவிடப்படும். இவ்வாறு ஒரு நாள் அவர் தண்டிக்கப்படுவார். அ(ந்)த (ஒரு நாளி)ன் அளவு ஐம்பது ஆயிரம் ஆண்டுகளாகும். இறுதியில் அடியார்களிடையே இறுதித் தீர்ப்பு வழங்கப்படும். அப்போது தாம் செல்ல வேண்டிய சொர்க்கத்தின் பாதையை, அல்லது நரகத்தின் பாதையை அவர் காண்பார்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது "அல்லாஹ்வின் தூதரே! குதிரைகள் (நிலை என்ன)?" என்று கேட்கப்பட்டது. அதற்கு "குதிரை மூன்று வகையாகும். அது ஒரு மனிதருக்குப் பாவச்சுமையாகும்; மற்றொரு மனிதருக்கு (பொருளாதார)ப் பாதுகாப்பு அளிக்கக்கூடியதாகும்;இன்னொரு மனிதருக்கு (இறைவனிடமிருந்து) நற்பலனைப் பெற்றுத்தருவதாகும்:

குதிரை பாவச்சுமையாக மாறும் மனிதன் யாரெனில், பகட்டுக்காகவும் பெருமைக்காகவும் இஸ்லாமியருடன் பகைமை பாராட்டுவதற்காகவும் அதை வைத்துப் பராமரித்துவந்த மனிதன் ஆவான். அது அவனுக்குப் பாவச்சுமையாகும்.

குதிரை (பொருளாதாரப்) பாதுகாப்பு அளிக்கக்கூடியதாக மாறும் மனிதர் யாரெனில், அவர் அதை இறைவழியில் பயன்படுத்துவதற்காகக் கட்டிவைத்திருந்தார். பிறகு அதனுடைய பிடரியின் (பராமரிப்பின்) விஷயத்திலும், (அதனால் தாங்கவியலும் சுமையை மட்டுமே) அதன் முதுகின் (மீது தூக்கிவைக்கும்) விஷயத்திலும் அல்லாஹ்வின் கட்டளையை (நிறைவேற்ற) மறக்காதவர் ஆவார். இப்படிப்பட்டவருக்கு அந்தக் குதிரை பாதுகாப்பு அளிக்கக்கூடியதாகும்.

குதிரை நற்பலனைப் பெற்றுத்தரக்கூடியதாக மாறும் மனிதர் யாரெனில், இஸ்லாமியருக்காக இறைவழியில் அதைப் பசும்புல் வெளியில் கட்டிவைத்துப் பராமரித்துவந்தவர் ஆவார். எந்த அளவிற்கு "அந்தப் பசும்புல் வெளியில்' அல்லது "அந்தத் தோட்டத்தில்' அது மேயுமோ அந்த அளவிற்கு அவருக்கு நன்மைகள் கிடைக்கும். அதன் கெட்டிச் சாணம், சிறுநீர் ஆகியவற்றின் அளவிற்கு அவருக்கு நன்மைகள் எழுதப்படும். அது தன் நீண்ட கயிற்றினைத் துண்டித்துக் கொண்டு ஓரிரு முறை குதித்து (அல்லது ஒன்றிரண்டு மேடுகளைக் கடந்து) சென்றால், அதன் பாதச்சுவடுகள், கெட்டிச் சாணங்கள் அளவிற்கு நன்மைகளை அவருக்கு இறைவன் எழுதாமலிருப்பதில்லை. அதன் உரிமையாளரான அந்த மனிதர் அதை ஓட்டிக்கொண்டு ஓர் ஆற்றைக் கடந்து செல்லும்போது, அதிலிருந்து அது தண்ணீர் குடித்தால் அதற்குத் தண்ணீர் புகட்டும் எண்ணம் அவருக்கு இல்லாமலிருந்தாலும் அது குடித்த தண்ணீரின் அளவிற்கு அவருக்கு அல்லாஹ் நன்மைகளை எழுதாமல் இருப்பதில்லை" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது "அல்லாஹ்வின் தூதரே, கழுதைகளின் நிலை என்ன?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், கழுதைகள் குறித்து எந்தக் கட்டளையும் எனக்கு அருளப்பெறவில்லை; "எவர் அணுவளவு நன்மை செய்திருந்தாரோ அவர் அத(ன் நற்பல)னைக் கண்டுகொள்வார். மேலும், எவர் அணுவளவு தீமை புரிந்திருந்தாரோ அவரும் அத(ற்கான தண்ட)னை(யை)க் கண்டுகொள்வார்' எனும் தனித்துவம் வாய்ந்த ஒருங்கிணைந்த இந்த (99:7,8) வசனங்களைத் தவிர" என்று சொன்னார்கள்.

1804 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஆயினும் அதில், "ஒட்டகங்களின் உரிமையாளர் அவற்றுக்குரிய கடமையை (ஸகாத்) நிறைவேற்றாவிட்டால்" என்று இடம்பெற்றுள்ளது. "அவற்றிலிருந்து அவற்றுக்குரிய கடமையை' என்று இடம்பெறவில்லை.

மேலும், இந்த அறிவிப்பில் "அந்த ஒட்டகங்களின் பால்குடி மறந்த குட்டிகள்கூட விடுபடாமல் எல்லாம் வந்து அவரைக் கால் குளம்புகளால் மிதிக்கும்" எனும் குறிப்பு இடம் பெற்றுள்ளது. "அவருடைய இரு விலாப்புறங்களிலும் நெற்றியிலும் முதுகிலும் சூடு போடப்படும்" எனவும் இடம்பெற்றுள்ளது.

1805 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(பொன், வெள்ளி போன்ற) கருவூலச் செல்வங்களைச் சேகரித்துவைத்திருக்கும் ஒருவர் அவற்றுக்குரிய ஸகாத்தை நிறைவேற்றவில்லையாயின், மறுமை நாளில் அவற்றை நரக நெருப்பில் இட்டு, உருக்கி, உலோகப்பாளங்களாக மாற்றி,அவருடைய விலாப்புறங்களிலும், நெற்றியிலும் சூடு போடப்படும். இறுதியில் அல்லாஹ் தன் அடியார்களிடையே ஒரு நாளில் –அ(ந்)த (ஒரு நாளி)ன் அளவு ஐம்பது ஆயிரம் ஆண்டுகளாகும்– தீர்ப்பளிப்பான். பிறகு அவர் தாம் செல்லவேண்டிய சொர்க்கத்தின் பாதையை, அல்லது நரகத்தின் பாதையைக் காண்பார்.

ஒட்டகங்களின் உரிமையாளர் அவற்றுக்குரிய ஸகாத்தை நிறைவேற்றவில்லையாயின், (மறுமை நாளில்) அவர் ஒரு விசாலமான மைதானத்தில் தூக்கியெறியப்படுவார்.

அவ்வொட்டகங்கள் முன்பிருந்ததைவிட மிகவும் கொழுத்தவையாக மாறி, அவர்மீது ஏறிக் குதித்தோடும். அவ்வொட்டகங்களில் கடைசி ஒட்டகம் அவரை மிதித்துவிட்டுச் சென்றதும் மீண்டும் முதல் ஒட்டகம் அவர்மீது ஏவிவிடப்படும். இறுதியில் அல்லாஹ் தன் அடியார்களிடையே ஒரு நாளில் –அ(ந்)த (ஒரு நாளி)ன் அளவு ஐம்பது ஆயிரம் ஆண்டுகளாகும்– தீர்ப்பளிப்பான். பிறகு அவர் தாம் செல்லவேண்டிய சொர்க்கத்தின் பாதையை, அல்லது நரகத்தின் பாதையைக் காண்பார்.

ஆடுகளின் உரிமையாளர் அவற்றுக்குரிய ஸகாத்தை நிறைவேற்றவில்லையாயின் (மறுமை நாளில்) அவர் ஒரு விசாலமான மைதானத்தில் தூக்கியெறியப்படுவார். அந்த ஆடுகள் முன்பிருந்ததைவிட மிகவும் கொழுத்தவையாக மாறி, அவர்மீது ஏறி,குளம்புகளால் அவரை மிதிக்கும்; கொம்புகளால் அவரை முட்டும். அவற்றில் கொம்புகள் வளைந்தவையும் இருக்காது;கொம்புகளற்றவையும் இருக்காது. அவற்றில் இறுதி ஆடு அவரைத் தாக்கிவிட்டுச் சென்றதும் மீண்டும் முதலாவது ஆடு அவர்மீது ஏவிவிடப்படும். இறுதியில் அல்லாஹ் தன் அடியார்களிடையே ஒரு நாளில் –அ(ந்)த (ஒரு நாளி)ன் அளவு நீங்கள் எண்ணிக் கணக்கிடும் நாட்களில் ஐம்பது ஆயிரம் ஆண்டுகளாகும்– தீர்ப்பளிப்பான். பிறகு அவர் செல்லவேண்டிய சொர்க்கத்தின் பாதையை,அல்லது நரகத்தின் பாதையைக் காண்பார்

-இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஹைல் பின் அபீஸாலிஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த என் தந்தை அபூஸாலிஹ்–ரஹ்) அவர்கள் மாட்டைப் பற்றிக் குறிப்பிட்டார்களா, இல்லையா என்று எனக்குத் தெரியவில்லை.–

அப்போது மக்கள் "குதிரைகள் (நிலை என்ன) அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குதிரைகளின் பிடரிகளில் மறுமை நாள்வரை நன்மைகள் பிணைக்கப்பட்டுள்ளன. குதிரை மூன்று வகையாகும்:

அது ஒரு மனிதருக்கு (இறைவனிடமிருந்து) நற்பலனைப் பெற்றுத்தருவதாகும்; மற்றொரு மனிதருக்கு (பொருளாதாரப்) பாதுகாப்பு அளிக்கக்கூடியதாகும். இன்னொரு மனிதருக்குப் பாவச்சுமையாகும்.

குதிரை நற்பலனைப் பெற்றுத் தரக்கூடியதாக மாறும் மனிதர் யாரெனில், இறைவழியில் பயன்படுத்துவதற்காக முன்னேற்பாடாக அதை வைத்திருப்பவர் ஆவார். அதன் வயிற்றுக்குள் எந்தத் தீவணம் சென்றாலும் அதற்காக அவருக்கு அல்லாஹ் நன்மையை எழுதாமல் இருப்பதில்லை. அதை அவர் ஒரு பசும்புல் வெளியில் மேயவிட்டால், அது எந்த ஒன்றைத் தின்றாலும் அதற்காக அல்லாஹ் அவருக்கு ஒரு நன்மையை எழுதாமலிருப்ப தில்லை. ஓர் ஆற்றிலிருந்து அதற்கு அவர் நீர் புகட்டினால், அதன் வயிற்றினுள் செல்லும் ஒவ்வொரு துளி நீருக்காகவும் அவருக்கு ஒரு நன்மை கிடைக்கும். (அதன் சிறுநீர், சாணம் ஆகியவற்றுக்காகக்கூட அவருக்கு நன்மைகள் எழுதப்படும் என்றும் குறிப்பிட்டார்கள்.) அது ஓரிரு முறை குதித்து (அல்லது ஒன்றிரண்டு மேடுகளைக் கடந்து) சென்றால், அது எடுத்து வைக்கும் ஒவ்வோர் எட்டுக்கும் அவருக்கு ஒரு நன்மை உண்டு.

குதிரை (பொருளாதாரப்) பாதுகாப்பு அளிக்கக்கூடியதாக மாறும் மனிதர் யாரெனில், அதை அந்தஸ்திற்காகவும் அலங்காரத்திற்காகவும் வைத்திருப்பவர் ஆவார். ஆயினும், இன்பத்திலும் துன்பத்திலும் (அதனால் தாங்க இயலும் சுமையை மட்டுமே சுமத்துவதிலும்,

அதன் பசியைத் தணிப்பதிலும்) அதன் முதுகு மற்றும் வயிற்றின் உரிமையை அவர் மறக்காதவர் ஆவார்.
குதிரை பாவச்சுமையாக மாறும் மனிதன் யாரெனில், கர்வம், செருக்கு, அகம்பாவம், மக்களிடம் காட்டிக்கொள்ளல் ஆகிய (குறுகிய) நோக்கங்களுக்காக அதை வைத்திருக்கும் மனிதன் ஆவான். அவனுக்கே அது பாவச்சுமையாகும்" என்று கூறினார்கள்.
மக்கள், "அல்லாஹ்வின் தூதரே, கழுதையின் நிலை என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "கழுதைகள் குறித்து எந்தக் கட்டளையையும் அல்லாஹ் எனக்கு அருளவில்லை; "எவர் அணுவளவு நன்மை செய்திருந்தாரோ அவர் அத(ன் நற்பல)னைக் கண்டுகொள்வார். மேலும், எவர் அணுவளவு தீமை புரிந்திருந்தாரோ அவரும் அத(ற்கான தண்ட)னை(யை)க் கண்டுகொள்வார்' எனும் தனித்துவம் வாய்ந்த ஒருங்கிணைந்த இந்த (99:7,8) வசனங்களைத் தவிர" என்று சொன்னார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "கொம்புகள் வளைந்தவை' (அக்ஸா) என்பதற்கு பதிலாக "காது கிழிக்கப்பட்டவை' (அள்பா) என்று இடம்பெற்றுள்ளது.
மேலும் "அவருடைய விலாப்புறங்களிலும் முதுகிலும் சூடு போடப்படும்' என்று இடம் பெற்றுள்ளது. "அவருடைய நெற்றியிலும்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒரு மனிதர் தம் ஒட்டகங்களில் "இறைவனுக்குரிய உரிமையை' அல்லது "தர்மத்தை' நிறவேற்றாவிடில்" என ஹதீஸ் தொடங்குகிறது.

1806 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒட்டகங்களின் உரிமையாளர் அவற்றுக்குரிய கடமைகளைச் செய்யாமல் இருந்தால், மறுமை நாளில் அவை, முன்பு ஒருபோதும் இருந்திராத அளவிற்குக் கொழுத்த நிலையில் வரும். அவற்றுக்காக அவர் விசாலமான ஒரு மைதானத்தில் உட்காருவார். அந்த ஒட்டகங்கள் குதித்தோடி வந்து தம் கால்களால் அவரை மிதிக்கும்.
மாடுகளின் உரிமையாளர் அவற்றுக்குரிய கடமைகளைச் செய்யாமல் இருந்தால், மறுமை நாளில் அவை ஏற்கெனவே இருந்ததைவிடப் பெருத்த நிலையில் அவரிடம் வரும். அவற்றுக்காக அவர் விசாலமான ஒரு மைதானத்தில் உட்காருவார். அந்த மாடுகள் வந்து அவரைக் கொம்புகளால் முட்டும்; கால்களால் மிதிக்கும். அவ்வாறே ஆடுகளின் உரிமையாளர் அவற்றுக்குரிய கடமையைச் செய்யாமலிருந்தால், அவை முன்பு இருந்ததைவிடப் பெரியவையாக மறுமை நாளில் வரும். அவற்றுக்காக அவர் விசாலமானதொரு மைதானத்தில் அமர்வார். அவை தம் கொம்புகளால் அவரை முட்டும்; கால்குளம்புகளால் மிதிக்கும். அந்த ஆடுகளில் கொம்பற்றவையோ கொம்பு முறிந்தவையோ இருக்காது.
(பொன், வெள்ளி போன்ற) கருவூலச் செல்வங்களை உடையவர் அவற்றுக்கான கடமைகளைச் செய்யாமலிருந்தால், அவருடைய செல்வங்கள் மறுமைநாளில் கொடிய

நஞ்சுடைய பெரிய பாம்பாக மாறி, தனது வாயைத் திறந்தநிலையில் அவரைப் பின்தொடரும். அவரிடம் அது வந்ததும் அவர் அங்கிருந்து வெருண்டோடுவார். அப்போது "நீ சேமித்துவைத்த உனது கருவூலத்தை நீயே எடுத்துக்கொள். அது எனக்கு வேண்டாம்" என்று அது அவரை அழைத்துக் கூறும். அதனிடமிருந்து தம்மால் தப்பமுடியாது என்று அவர் அறியும் போது, தமது கையை அதன் வாய்க்குள் நுழைப்பார். அது அவரது கையை ஒட்டகம் கடிப்பதைப் போன்று கடிக்கும்.

இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் அல் அன்சாரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளரான அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
இந்த ஹதீஸை உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்களிடமிருந்து நான் செவியுற்றேன். பிறகு ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் இதைப் பற்றிக் கேட்டபோது, அவர்களும் உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்கள் கூறியதைப் போன்றே அறிவித்தார்கள்.
உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஒரு மனிதர் "அல்லாஹ்வின் தூதரே! ஒட்டகங்களுக்குரிய கடமை என்ன?' என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தண்ணீர் புகட்டும் நாளில் அவற்றில் பால் கறந்து ஏழைகளுக்கு வழங்குவதும், அவற்றின் வாளியை இரவலாக வழங்குவதும், பொலி ஒட்டகங்களை இரவல் தருவதும், அ(தன் பால், உரோமம் ஆகிய)வற்றைப் பயன்படுத்திக்கொள்ளுமாறு அவற்றை அன்பளிப்பாக வழங்குவதும், அல்லாஹ்வின் பாதையில் அவற்றின் மீது சுமைகளை ஏற்றுவதும் ஆகும்' என்று கூறினார்கள்" என இடம்பெற்றுள்ளது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1807 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "ஒட்டகம், மாடு, ஆடு ஆகிய கால்நடைகளின் உரிமையாளர் அவற்றுக்குரிய கடமையை நிறைவேற்றாவிட்டால் மறுமை நாளில் அவர் ஒரு விசாலமான மைதானத்தில் உட்காரவைக்கப்படுவார். அப்போது கால்குளம்புகள் உடையவை தம் கால்குளம்புகளால் அவரை மிதிக்கும்; கொம்புடையவை தமது கொம்பால் அவரை முட்டித் தள்ளும். அன்றைய தினம் அவற்றுக்கிடையே கொம்புகளற்றவையும் இருக்காது; கொம்புகள் முறிந்தவையும் இராது" என்று கூறினார்கள். நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! அவற்றுக்குரிய கடமைகள் என்ன?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "பொலி ஒட்டகங்களை இரவலாக வழங்குவதும், அவற்றின் வாளியை இரவலாகக் கொடுப்பதும், அவற்றிலிருந்து பால் கறந்துகொள்வதற்கு(ம் உரோமத்தை எடுத்துக்கொள்வதற்கும்) அனபளிப்பாக வழங்குவதும், தண்ணீர் புகட்டும் நாளில் அவற்றிலிருந்து பால் கறந்து ஏழைகளுக்கு அளிப்பதும், அல்லாஹ்வின் பாதையில் அவற்றின் மீது சுமைகளை ஏற்றுவதும் ஆகும்" என்று கூறினார்கள்.
மேலும், "(பொன், வெள்ளி, பணம் உள்ளிட்ட) செல்வங்களை உடையவர் அவற்றுக்குரிய ஸகாத்தை நிறைவேற்றாவிட்டால், மறுமை நாளில் அவை கொடிய நஞ்சுடைய பாம்பாக மாறி தம்மவரை எங்கு சென்றாலும் விடாமல் பின்தொடரும். அப்போது "இதுதான் நீ கருமித்தனம் செய்து (சேர்த்து)வந்த உனது செல்வம்" என்று கூறப்படும். அவர் அதனிடமிருந்து வெருண்டோடுவார். அதனிடமிருந்து தம்மால் தப்பமுடியாது என்று அவர்

காணும் போது, தமது கரத்தை அவர் அதன் வாய்க்குள் வைப்பார். ஒட்டகம் கடிப்பதைப் போன்று அது அவரது கரத்தைக் கடிக்க ஆரம்பிக்கும்.

## பாடம் : 7 ஸகாத் வசூலிப்பவர்களிடம் பொருத்தமாக நடந்துகொள்ளல்.

1808 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சில கிராமவாசிகள் வந்து, "எங்களிடம் ஸகாத் வசூலிக்க வருபவர்களில் சிலர் எங்களிடம் வரம்புமீறி நடந்துகொள்கிறார்கள்" என்று கூறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களிடம் ஸகாத் வசூலிக்க வருபவர்களை (அவர்களது கடமையைச் செய்ய ஒத்துழைத்து) திருப்தியடையச் செய்யுங்கள்" என்று (மக்களிடம்) கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதை நான் கேட்டதுமுதல், என்னிடம் ஸகாத் வசூலிக்க வந்த எவரும் என்னைக் குறித்து திருப்தி கொள்ளாமல் திரும்பிச் சென்றதில்லை.
- ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 8 ஸகாத் வழங்காதவருக்குக் கிடைக்கும் கடுமையான தண்டனை.

1809 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (இறையில்லம்) கஅபாவின் நிழலில் அமர்ந்திருந்தபோது அவர்களிடம் நான் போய்ச்சேர்ந்தேன். என்னை அவர்கள் கண்டதும் "கஅபாவின் அதிபதிமீது ஆணையாக! அவர்கள் நஷ்டவாளிகள்" என்று கூறினார்கள். நான் சென்று (அவர்கள் அருகில்) அமர்ந்தேன். என்னால் இருப்புக்கொள்ள முடியாததால் உடனே எழுந்து, "என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! அவர்கள் யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், "அவர்கள் அதிகமான செல்வம் படைத்தவர்கள். ஆனால், (நல்வழியில் செல்வத்தை ஈந்த) சிலரைத் தவிர" என்று கூறியபடி இவ்வாறு இவ்வாறு இவ்வாறு என்று (தம் முன் பக்கம், பின் பக்கம், வலப் பக்கம், இடப் பக்கம்) சைகை செய்து (நல்வழிகள் பல உள்ளன என்பதைச் சுட்டிக்காட்டி)விட்டு, "ஆனால், அவர்கள் மிகக் குறைவானவர்களே. ஒருவருக்கு ஒட்டகமோ மாடோ ஆடோ இருந்து அவற்றுக்கான ஸகாத்தை அவர் நிறைவேற்றவில்லையாயின், மறுமை நாளில் அவை ஏற்கெனவே இருந்ததைவிடப் பெரியனவாகவும் கொழுத்தவையாகவும் வந்து அவரைக் கொம்புகளால் முட்டும்; கால் குளம்புகளால் மிதிக்கும். அவரை இறுதிப் பிராணி மிதித்துவிட்டுச் சென்றதும் மீண்டும் முதல் பிராணி அவரை மிதிக்கவரும். இந்நிலை மக்களிடையே இறுதித் தீர்ப்பு வழங்கப்படும் வரை நீடிக்கும்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூதர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நபி (ஸல்) அவர்கள் (இறையில்லம்) கஅபாவின் நிழலில் அமர்ந்திருந்தபோது அவர்களிடம் நான் போய்ச்சேர்ந்தேன்" என்று தொடங்கி, மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது.

ஆயினும் அதில், "எனது உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! ஒரு மனிதர் ஒட்டகத்தையோ மாட்டையோ ஆட்டையோ அவற்றுக்குரிய ஸகாத்தை வழங்காத நிலையில் விட்டுவிட்டு இறந்துவிடுவாராயின்" என்று இடம்பெற்றுள்ளது.

1810 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உஹுத் மலை அளவிற்கு என்னிடம் தங்கம் இருந்து, அதிலிருந்து ஒரேயொரு பொற்காசு என்னிடம் (எஞ்சி) இருந்தாலும் (அதை மக்கள் நலனுக்காகச் செலவிடாமல்) மூன்று இரவுகள்கூட கழிந்துசெல்வது எனக்கு மகிழ்ச்சியளிக்காது; கடனை அடைப்பதற்காக நான் எடுத்து வைக்கும் பொற்காசைத் தவிர.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 9 தர்மம் செய்யுமாறு வந்துள்ள ஆர்வமூட்டல்.

1811 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் இரவு நேரத்தில் நபி (ஸல்) அவர்களுடன் மதீனாவின் (பாறைகள் நிறைந்த) "ஹர்ரா'ப் பகுதியில் (எதிரிலிருந்த) உஹுத் மலையைப் பார்த்தவாறே நடந்துசென்று கொண்டிருந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அபூதர்ரே!' என்று என்னை அழைத்தார்கள். நான் "இதோ! காத்திருக்கிறேன்; கூறுங்கள் அல்லாஹ்வின் தூதரே!" என்றேன். நபி (ஸல்) அவர்கள் "இந்த உஹுத் மலை அளவிற்கு என்னிடம் தங்கம் இருந்து, அதிலிருந்து ஒரேயோரு பொற்காசு என்னிடம் (எஞ்சி) இருந்தாலும் அதை அல்லாஹ்வின் அடியார்களிடையே இப்படி இப்படி இப்படியெல்லாம் செலவிடாமல் மூன்று இரவுகள்கூட கழிந்து செல்வதை நான் விரும்பவில்லை. கடனை அடைப்பதற்காக நான் எடுத்துவைக்கும் பொற்காசைத் தவிர" என்று கூறி, வாரி இறைப்பதைப் போன்று தமது முன் பக்கமும் வலப் பக்கமும் இடப் பக்கமும் சைகை செய்தார்கள்.

பிறகு (சிறிது தூரம்) நாங்கள் நடந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் "அபூதர்ரே!' என்று (மீண்டும்) அழைத்தார்கள். நான் "இதோ! காத்திருக்கிறேன்; கூறுங்கள் அல்லாஹ்வின் தூதரே!" என்றேன். நபி ஸல்) அவர்கள் "(இம்மையில் செல்வம்) அதிகம் உள்ளவர்களே மறுமை நாளில் (நற்பலன்) குறைந்தவர்கள் ஆவர்" என்று கூறிவிட்டு, முன்பு செய்ததைப் போன்றே செய்து, "இப்படி இப்படி இப்படி (நல்வழியில்) செலவு செய்தவர்கள் தவிர" என்று கூறினார்கள்.
பிறகு (இன்னும் சிறிது தூரம்) நாங்கள் சென்றதும் நபி (ஸல்) அவர்கள் என்னிடம் "அபூதர்! நான் வரும்வரை இங்கேயே இருங்கள்!" என்று கூறிவிட்டு (இருளுக்குள் நடந்து) என்னை விட்டும் மறைந்துவிட்டார்கள். அப்போது ஏதோ மர்மமான உரத்த சப்தம் ஒன்றை நான் கேட்டு "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஏதோ ஏற்பட்டுவிட்டது போலும்' என்று கூறிக்கொண்டு, அவர்களைப் பின்தொடர எண்ணினேன். பிறகு என்னிடம் நபி (ஸல்) அவர்கள் "நான் வரும்வரை இங்கேயே இருங்கள்' என்று சொன்னது என் நினைவுக்கு வந்தது. ஆதலால், அவர்கள் என்னிடம் வரும்வரை அவர்களை எதிர்பார்த்துக்

காத்திருந்தேன். அவர்கள் வந்ததும் நான் கேட்ட சப்தத்தைப் பற்றி அவர்களிடம் எடுத்துச் சொன்னேன்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் "அது (வானவர்) ஜிப்ரீல்தாம். அவர் என்னிடம் வந்து "உங்கள் சமுதாயத்தாரில் யார் (ஏக இறைவனாம்) அல்லாஹ்வுக்கு எதையும் இணை வைக்காமல் (வாழ்ந்து) இறந்துவிடுகிறாரோ அவர் சொர்க்கம் செல்வார்" என்றார். நான் (ஜிப்ரீலிடம்) "அவர் விபச்சாரம் புரிந்தாலும் திருடினாலுமா (சொர்க்கம் புகுவார்)?" என்று கேட்டேன். அவர் "(ஆம்) விபச்சாரம் புரிந்தாலும் திருடினாலும் சரியே (இறுதியில் அவர் சொர்க்கம் செல்வார்)" என்று பதிலளித்தார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1812 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஓர் இரவு நேரத்தில் வெளியில் புறப்பட்டுச் சென்றபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தனியாக நடந்து சென்றுகொண்டிருந்தார்கள்; அவர்களுடன் எந்த மனிதரும் இருக்க வில்லை. அவர்கள் தம்முடன் யாரும் வருவதை விரும்பவில்லை என்று நான் எண்ணிக் கொண்டேன். நிலா வெளிச்சம்படாத இடத்தில் நான் (அவர்களுக்குப் பின்னால்) நடக்கலானேன். அவர்கள் திரும்பி என்னைப் பார்த்துவிட்டு, "யார் இது?" என்று கேட்டார்கள். "(நான்) அபூதர், அல்லாஹ் என்னைத் தங்களுக்கு அர்ப்பணமாக்கட்டும்" என்று பதிலளித்தேன். அவர்கள் "அபூதர்ரே, இங்கே வாருங்கள்" என்று அழைத்தார்கள். நான் அவர்களுடன் சிறிது நேரம் நடந்தேன். அப்போது அவர்கள், "(இம்மையில் செல்வம்) அதிகம் உள்ளவர்களே மறுமை நாளில் (நற்பலன்) குறைந்தவர் ஆவர். அல்லாஹ் தந்த நல்லதை (செல்வத்தை) அள்ளித் தமது வலப்பக்கமும் இடப்பக்கமும் முன்பக்கமும் பின்பக்கமும் வாரி இறைத்து, நன்மை புரிந்தவரைத் தவிர" என்று கூறினார்கள். பிறகு இன்னும் சிறிது நேரம் நான் அவர்களுடன் நடந்தேன். அப்போது அவர்கள் "இந்த இடத்திலேயே அமர்ந்திருங்கள்" என்று கூறினார்கள். பாறைகள் சூழ்ந்த ஒரு வெட்டவெளியில் "நான் திரும்பி வரும்வரையில் இந்த இடத்திலேயே அமர்ந்திருங்கள்" என்று கூறி என்னை உட்கார வைத்தார்கள். பின்னர் (பாறைகள் நிறைந்த அந்த) "ஹர்ரா'ப் பகுதியில் நடந்து சென்றார்கள். அவர்களை நான் பார்க்க முடியாத இடத்திற்குச் சென்று நீண்ட நேரம் இருந்துவிட்டு, என்னை நோக்கி வந்தார்கள். அப்போது "அவன் திருடினாலும் விபச்சாரம் புரிந்தாலும் சரியே!" என்று கூறிக்கொண்டிருந்ததை நான் செவியுற்றேன். அவர்கள் (என் அருகில்) வந்ததும் என்னால் பொறுமையுடன் இருக்க முடியாமல், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் என்னைத் தங்களுக்கு அர்ப்பணமாக்கட்டும்! "ஹர்ரா'ப் பகுதியில் தாங்கள் யாருடன் பேசிக்கொண்டிருந்தீர்கள்? யாரும் தங்களுக்கு எந்த பதிலும் அளிப்பதை நான் செவியுறவில்லையே?" என்று கேட்டேன். அதற்கு "அவர்தாம் (வானவர்) ஜிப்ரீல். அவர் ஹர்ராப் பகுதியில் என்னிடம் வந்து "யார் அல்லாஹ்விற்கு எதையும் இணைவைக்காமல் இறந்துவிடுகிறாரோ அவர் சொர்க்கத்தில் நுழைவார் எனும் நற்செய்தியை உங்கள் சமுதாயத்தாரிடம் கூறி விடுங்கள்" என்றார். உடனே நான் "ஜிப்ரீலே! அவர் திருடினாலும் விபச்சாரம் புரிந்தாலுமா?" என்று கேட்டேன். அதற்கு அவர், "ஆம்' என்று பதிலளித்தார். நான் "அவர் திருடினாலும் விபச்சாரம் புரிந்தாலுமா?" என்று (மீண்டும்) கேட்டேன். அவர்

"ஆம்' என்றார். நான் "அவர் திருடினாலும் விபச்சாரம் புரிந்தாலுமா?" என்று (மீண்டும்) கேட்டேன். அவர் "ஆம்;அவர் மது அருந்தினாலும் சரியே!" என்று கூறினார் என்றார்கள்.

**பாடம் : 10 செல்வத்தைக் குவித்து வைத்(துக்கொண்டு அதற்கான கடமையை நிறைவேற்றா)தோர் குறித்து வந்துள்ள கண்டனம்.**

1813 அஹ்னஃப் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மதீனாவிற்குச் சென்றேன். அங்கு ஓர் அவையில் பங்கேற்றேன். அந்த அவையில் குறைஷிப் பிரமுகர்களும் இருந்தனர். அப்போது மிகவும் சொரசொரப்பான ஆடையும் முரட்டுத்தனமான தோற்றமும் முகமும் கொண்ட ஒரு மனிதர் (அங்கு) வந்து அவர்கள் முன் நின்று, "(ஸகாத் வழங்காமல்) செல்வத்தைக் குவித்து வைத்திருப்போருக்கு "நற்செய்தி' கூறுக: நரக நெருப்பில் சூடாக்கப்பட்ட ஒரு கல் அவருக்கு உண்டு. அந்தக் கல் அவர்களில் ஒருவரது மார்புக் காம்பின் மேல் வைக்கப்படும். உடனே அது அவரது தோளின் மேற்பகுதி எலும்பின் வழியாக வெளியேறும். பிறகு அந்தக் கல் அவரது தோளின் மேற்பகுதியில் வைக்கப்படும். உடனே அது மார்புக்காம்பின் வழியாக ஊடுருவி வெளியேறும்" என்று கூறினார்.
(இதைக் கேட்டவுடன்) மக்கள் தங்கள் தலைகளைத் தாழ்த்திக்கொண்டனர். அவர்களில் ஒருவர்கூட அவருக்கு எந்தப் பதிலும் அளித்ததை நான் பார்க்கவில்லை.
பிறகு அந்த மனிதர் திரும்பிச்சென்றார். அவரைப் பின்தொடர்ந்து நான் சென்றேன். அவர் ஒரு தூணுக்கு அருகில் போய் உட்கார்ந்தார். அப்போது அவரிடம் நான், "தாங்கள் கூறியதைக் கேட்டு இம்மக்கள் வெறுப்படைந்ததையே நான் கண்டேன்" என்றேன். அதற்கு அவர், "இவர்கள் விவரமற்ற மக்கள். என் உற்ற தோழர் அபுல்காசிம் (முஹம்மத்-ஸல்) அவர்கள் (ஒருமுறை) என்னை அழைத்தார்கள். நான் அவர்களது அழைப்பிற்குப் பதிலளித்தேன். அப்போது அவர்கள் "உஹுத் மலையை நீர் பார்க்கிறீரா?' என்று கேட்டார்கள். தமது தேவை ஒன்றுக்காக அவர்கள் என்னை அங்கு அனுப்பப்போகிறார்கள் என எண்ணியவாறு (நேரத்தை அறிந்துகொள்ள) எனக்கு மேலே உள்ள சூரியனைப் பார்த்து விட்டு, "(ஆம்; உஹுத் மலையைப்) பார்க்கிறேன்' என்றேன். அப்போது "இந்த (உஹுத் மலை) அளவிற்கு என்னிடம் தங்கம் இருந்தாலும், அதில் அனைத்தையும் ஈந்து மகிழவே நான் விரும்புவேன். (அதில் எதையும் சேகரித்து வைக்கமாட்டேன். என் கடனை அடைப்பதற்காக நான் எடுத்து வைக்கும்) மூன்று பொற்காசுகளைத் தவிர" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். ஆனால், இந்த மக்களோ எதையுமே அறியாதவர்களாய் உலக ஆதாயங்களைச் சேகரித்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்று கூறினார்.
நான், "உங்களுக்கும் உங்களுடைய குறைஷி சகோதர்களுக்கும் என்ன ஆயிற்று? நீங்கள் அவர்களை அணுகி அவர்களிடமிருந்து எதையும் பெற்றுக்கொள்வதில்லையே?" என்று கேட்டேன். அதற்கு அவர், "உம்முடைய இறைவன் மீதாணையாக! நான் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் சந்திக்கும்வரை இவர்களிடம் இவ்வுலகப் பொருட்கள் எதையும் கேட்கமாட்டேன்; மார்க்க விஷயங்களைப் பற்றிய எந்தத் தீர்ப்பையும் கோரவுமாட்டேன்" என்று கூறினார்.

1814 அஹ்னஃப் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் குறைஷிக் குலத்தார் சிலருடன் (ஓர் அவையில்) இருந்தேன். அப்போது அவ்வழியாகச் சென்ற அபூதர் (ரலி) அவர்கள் "(ஸகாத் கொடுக்காமல்) செல்வத்தைக் குவித்து வைப்பவர்களுக்கு (பழுக்கக் காய்ச்சப்பட்ட கம்பியால்) அவர்களது முதுகில் சூடு போடப்படும். அது அவர்களது விலாவிலிருந்து வெளியேறும். அவர்களது பிடரிப் பகுதியில் ஒரு சூடு போடப்படும். அது அவர்களின் நெற்றியிலிருந்து வெளியேறும் என நற்செய்தி கூறுங்கள்" என்று கூறிவிட்டு, அங்கிருந்து விலகிப்போய் (ஓரிடத்தில்) அமர்ந்தார்கள். நான் "இவர் யார்?" என்று கேட்டேன். மக்கள் "இவர்தாம் அபூதர் (ரலி)" என்று கூறினார்கள். உடனே நான் எழுந்து அவர்களிடம் சென்று, "சற்று முன்பாகத் தாங்கள் ஏதோ கூறிக் கொண்டிருந்தீர்களே அது என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "அவர்களுடைய நபி (முஹம்மத்-ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்ற ஒரு செய்தியையே நான் கூறினேன்" என்றார்கள். நான், "(தலைவர்கள் முஸ்லிம்களுக்கு வழங்கும்) இந்த நன்கொடை தொடர்பாகத் தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அபூதர் (ரலி) அவர்கள், "அதை நீங்கள் பெற்றுக்கொள்ளுங்கள். ஏனெனில், இன்று அது உங்களுக்கு உதவியாக இருக்கும். அது உங்களது மார்க்கத்திற்கான கூலியாக இருக்குமாயின், அதை விட்டுவிடுங்கள் (பெற்றுக்கொள்ளாதீர்கள்)" என்று பதிலளித்தார்கள்.

## பாடம் : 11 தர்மம் செய்யுமாறு வந்துள்ள தூண்டலும், தர்மம் செய்பவருக்கு (சிறந்த) பிரதிபலன் உண்டு என்ற நற்செய்தியும்.

1815 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வளமும் உயர்வும் மிக்க அல்லாஹ், "ஆதமின் மகனே (மனிதா)! நீ (பிறருக்கு) ஈந்திடு. உனக்கு நான் ஈவேன்" என்று சொன்னான்.
மேலும், நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் வலக்கரம் நிரம்பியுள்ளது; இரவிலும் பகலிலும் அது வாரி வழங்குகிறது. அதை எதுவும் குறைத்துவிடாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1816 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின் வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என்னிடம் அல்லாஹ், "நீர் (பிறருக்கு ஈந்திடுக. நான் உமக்கு ஈவேன்" என்று சொன்னான்.
மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் வலக்கரம் நிரம்பியுள்ளது. அது இரவிலும் பகலிலும் வாரி வழங்கிக் கொண்டேயிருக்கிறது. எதுவும் அதைக் குறைத்துவிடவில்லை. வானத்தையும் பூமியையும் அவன் படைத்தது முதல் வழங்கியது எதுவும் அவனது வலக்கரத்திலுள்ள (செல்வத்)தை குறைத்துவிடவில்லை பார்த்தீர்களா? (வானங்களையும் பூமியையும் படைப்பதற்கு முன்னர்)

அவனது அரியாசனம் நீரின் மீ(து அமைந்)திருந்தது. அவனது மற்றொரு கரத்தில் மரணம் (உள்ளிட்ட தலைவிதியின் தராசு) உள்ளது. அவனே உயர்த்துகிறான்; தாழ்த்துகிறான்.

பாடம் : 12 குடும்பத்தார், அடிமைகள் (பணியாட்கள்) ஆகியோருக்குச் செலவழிப்பதன் சிறப்பும் அவர்களை (ஆதரிக்காமல்) வீணாக்கிவிடுபவன், அல்லது அவர்களுக்கு வழங்க வேண்டிய வாழ்க்கைப்படியை வழங்க மறுப்பவன் அடையும் பாவமும்.

1817 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் தம் குடும்பத்தாருக்காகச் செலவிடுகின்ற ஒரு பொற்காசும் (தீனார்), அல்லாஹ்வின் பாதையில் தமது வாகனத்திற்காகச் செலவிடுகின்ற ஒரு பொற்காசும், அல்லாஹ்வின் பாதையில் தம் நண்பர்களுக்காகச் செலவிடுகின்ற ஒரு பொற்காசுமே அவர் செலவிடுகின்ற பொற்காசுகளிலேயே சிறந்ததாகும்.
இதை ஸவ்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூ கிலாபா (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குடும்பத்தாருக்குச் செலவிடுவதையே ஆரம்பமாகக் கூறினார்கள்" என்று கூறிவிட்டு, "தம் சின்னஞ்சிறிய பிள்ளைகளுக்குச் செலவிடுகின்றவரைவிட அதிக நற்பலன் அடைந்துகொள்ளும் மனிதர் யார்? (ஏனெனில்) அவர்தம் பிள்ளைகளைச் சுய மரியாதையோடு வாழச்செய்கிறார். அல்லது அவர் மூலம் அல்லாஹ் அவர்களுக்கு உதவி, அவர்களைத் தன்னிறைவுடன் வாழச்செய்கிறான்" என்றும் கூறினார்கள்.

1818 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் செலவிட்ட ஒரு பொற்காசு, நீங்கள் ஓர் அடிமை(யின் விடுதலை)க்காகச் செலவிட்ட ஒரு பொற்காசு, நீங்கள் ஓர் ஏழைக்குத் தர்மம் செய்த ஒரு பொற்காசு, நீங்கள் உங்கள் குடும்பத்தாருக்காகச் செலவிட்ட ஒரு பொற்காசு – இவற்றில் நீங்கள் உங்கள் குடும்பத்தாருக்காகச் செலவிட்ட ஒரு பொற்காசே அதிக நற்பலனை உடையதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1819 கைஸமா பின் அப்திர் ரஹ்மான் பின் அபீசப்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது அவர்களுடைய கருவூலக்காப்பாளர் வீட்டுக்குள் வந்தார். அவரிடம் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் "அடிமைகளுக்கு உணவு கொடுத்துவிட்டாயா?" என்று கேட்டார்கள். அவர், "இல்லை' என்றார். "உடனே சென்று அவர்களுக்கு உணவு கொடு" என்று அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறிவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒருவரது உணவு எவரது அதிகாரத்தில் உள்ளதோ அவர், அவருக்கு உணவளிக்க மறுப்பதே அவர் பாவி என்பதற்குப் போது(மான சான்றாகு)ம்.

**பாடம் : 13 ஒருவர் முதலில் தமக்கும், பிறகு தம் குடும்பத்தாருக்கும், பிறகு தம் உறவினர்களுக்கும் செலவு செய்ய வேண்டும்.**

1820 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"பனூ உத்ரா' குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர், தாம் இறந்த பிறகு தம்முடைய அடிமை ஒருவர் விடுதலையாகிக் கொள்ளட்டும் என்று (பின்விடுதலை) அறிவித்திருந்தார். இந்த விஷயம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது (அவரிடம்), "அந்த அடிமையைத் தவிர வேறு செல்வம் எதுவும் உம்மிடம் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். அவர் "இல்லை' என்றார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்த அடிமையைக் காட்டி), "இவரை என்னிடமிருந்து வாங்கிக்கொள்பவர் யார்?" என்று கேட்டார்கள். நுஐம் பின் அப்தில்லாஹ் அல்அதவீ (ரலி) அவர்கள் அவ்வடிமையை எண்ணூறு வெள்ளிக்காசுகளுக்கு வாங்கிக்கொண்டார்கள். நுஐம் (ரலி) அவர்கள் அந்தக் காசுகளை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவர, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த அடிமையின் உரிமையாளரிடம் அவற்றைக் கொடுத்து, "உமது தர்மத்தை முதலில் உம்மிடமிருந்து தொடங்குவீராக! பிறகு உமது தேவைபோக ஏதேனும் எஞ்சினால், அது உம்முடைய குடும்பத்தாருக்கு உரியதாகும்! உன் வீட்டாருக்கு வழங்கியது போக ஏதேனும் எஞ்சினால், அது உம் உறவினர்களுக்கு உரியதாகும். உம் உறவினர்களுக்கு வழங்கியது போக ஏதேனும் எஞ்சினால், அது இவ்வாறு இவ்வாறு உமக்கு முன் பக்கமும் வலப்பக்கமும் இடப்பக்கமும் (அறவழிகளின் அனைத்து முனைகளிலும் செலவு செய்வீராக!)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அன்சாரிகளில் "அபூமத்கூர்' என்று சொல்லப்படும் ஒரு மனிதர் "யஅகூப்' எனப்படும் தம் அடிமை, தமது இறப்புக்குப் பிறகு விடுதலை பெற்றவராவார் என (பின்விடுதலை) அறிவித்திருந்தார்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

**பாடம் : 14 உறவினர்கள், மனைவி, மக்கள் மற்றும் தாய் தந்தையர் ஆகியோர் இணை வைப்பாளர்களாய் இருப்பினும் அவர்களுக்காகச் செலவழிப்பது மற்றும் தர்மம் செய்வதன் சிறப்பு.**

1821 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மதீனா அன்சாரிகளிலேயே அபூதல்ஹா (ஸைத் பின் சஹ்ல்-ரலி) அவர்கள் பெரும் செல்வராக இருந்தார். அவருடைய செல்வங்களில் "பைரஹா' எனும் தோட்டமே அவருக்கு மிகவும் விருப்பமானதாக இருந்தது. அது (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்கு எதிரில் இருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அத்தோட்டத்திற்குச் சென்று அங்குள்ள நல்ல (சுவை) நீரை அருந்துவது வழக்கம். "நீங்கள் விரும்புகின்றவற்றிலிருந்து தானம் செய்யாதவரை ஒருபோதும் நீங்கள் (நிறைவான) பலனை அடையமாட்டீர்கள்" எனும் இந்த

(3:92ஆவது) வசனம் அருளப்பெற்றபோது, அபூதல்ஹா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எழுந்துசென்று, "அல்லாஹ் தனது வேதத்தில் "நீங்கள் விரும்புகின்றவற்றிலிருந்து தானம் செய்யாதவரை ஒருபோதும் நீங்கள் (நிறைவான) பலனை அடையமாட்டீர்கள்' எனக் கூறுகின்றான். என் செல்வங்களில் எனக்கு மிகவும் விருப்பமானது "பைரஹா' (எனும் இந்தத் தோட்டமே) ஆகும். (இனி) அது அல்லாஹ்வுக்காக (நான் வழங்கும்) தர்மமாகும். அதற்கான நன்மையையும் அது (மறுமையில் எனக்குரிய) சேமிப்பாக இருப்பதையும் நான் அல்லாஹ்விடம் எதிர்பார்க்கிறேன். ஆகவே, அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் விரும்பிய வழியில் அதைப் பயன்படுத்திக்கொள்ளுங்கள்" என்று சொன்னார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நல்லது. அது (மறுமையில்) இலாபம் தரும் செல்வம்தானே! அது (மறுமையில்) இலாபம் தரும் செல்வம்தானே! நீங்கள் அது தொடர்பாகக் கூறியதை நான் செவியுற்றேன். அதை உங்கள் நெருங்கிய உறவினர்களிடையே (தானமாக) வழங்குவதையே நான் (உசிதமாகக்) கருதுகிறேன்" என்று சொன்னார்கள்.எனவே, அதை அபூதல்ஹா (ரலி) அவர்கள் தம் நெருங்கிய உறவினர்களுக்கும், தம் தந்தையின் சகோதரர் மக்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்து விட்டார்கள்.

1822 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"நீங்கள் விரும்புகின்றவற்றிலிருந்து தானம் செய்யாதவரை ஒருபோதும் நீங்கள் (நிறைவான)பலனை அடையமாட்டீர்கள்"எனும் இந்த (3:92ஆவது) வசனம் அருளப்பெற்றதும் அபூதல்ஹா (ரலி) அவர்கள், "நம் இறைவன் நம் செல்வங்களிலிருந்து சிலவற்றை நம்மிடம் (தர்மம் செய்யுமாறு) கோருவதாகவே நான் கருதுகின்றேன். ஆகவே, நான் எனது "பரீஹா' (பைரஹா) எனும் நிலத்தை அல்லாஹ்வுக்காக வழங்கிவிட்டேன். இதற்குத் தங்களையே சாட்சியாக ஆக்குகிறேன், அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதை உங்கள் நெருங்கிய உறவினர்களிடையே (தானமாக) வழங்குவீராக!" என்று கூறினார்கள். அவ்வாறே அபூதல்ஹா (ரலி) அவர்கள் அதை (தம் உறவினர்களான) ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி), உபை பின் கஅப் (ரலி) ஆகியோருக்கு (தானமாக) வழங்கிவிட்டார்கள்.

1823 குறைப் பின் அபீமுஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(அன்னை) மைமூனா பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் (தம்முடைய) அடிமைப் பெண் ஒருத்தியை விடுதலை செய்தார்கள். அதை அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ உன் தாயின் சகோதரர்களுக்கு அவளை (அன்பளிப்பாகக்) கொடுத்திருந்தால் உனக்குப் பெரும் நற்பலன் கிடைத்திருக்குமே!" என்று கூறினார்கள்.

1824 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களின் துணைவியார் ஸைனப் பின்த் முஆவியா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பெண்களே! உங்கள் நகைகளிலிருந்தாவது தர்மம் செய்யுங்கள்!" என்று கூறினார்கள். நான் (என் கணவர்) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் சென்று "நீங்களோ கையில் காசில்லாதவர்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பெண்களாகிய) எங்களைத் தர்மம் செய்யுமாறு பணித்தார்கள். நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று (வறுமையில் வாழும் உங்களுக்கே அதை நான் வழங்கலாமா எனக்) கேளுங்கள். அதுவே எனக்குப் போதுமாகும் என்றால் (நான் உங்களுக்கே வழங்கிவிடுவேன்). இல்லை (கணவனுக்கு மனைவி வழங்குவது தர்மமாகக் கருதப்படாது) என்றால், அதை நான் பிறருக்குக் கொடுத்துவிடுவேன்" என்று கூறினேன். அப்போது (என் கணவர்) அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் என்னிடம் "இல்லை, நீயே அவர்களிடம் செல்" என்று கூறிவிட்டார்கள். எனவே, நான் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்) சென்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வீட்டுவாசலில் (ஏற்கெனவே) ஓர் அன்சாரிப்பெண்ணும் இருந்தார். அவரது நோக்கமும் எனது நோக்கமாகவே இருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்மீது (எங்களுக்கு) மதிப்பு கலந்த அச்சம் இருந்தது. (எனவே, வெளியிலேயே நின்றுகொண்டிருந்தோம்.)

பின்னர் பிலால் (ரலி) அவர்கள் எங்களிடம் புறப்பட்டு வந்தபோது அவரிடம் நாங்கள், "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, இரு பெண்கள் வீட்டுவாசலில் நின்றுகொண்டு, தம் கணவன்மார்களுக்கும் தமது மடியில் வளரும் (தந்தையற்ற) அநாதைக் குழந்தைகளுக்கும் தம்மீது கடமையான தர்மத்தை வழங்கலாமா என வினவுகிறார்கள் என்று கேளுங்கள். ஆனால், நாங்கள் யார் என்று அவர்களிடம் சொல்லவேண்டாம்" என்று கூறினோம். பிலால் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று அவ்வாறே கேட்டபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவ்விருவரும் யார்?" என்று பிலாலிடம் கேட்டார்கள். அதற்கு "ஓர் அன்சாரிப் பெண்ணும் ஸைனபும்" என்று பிலால் பதிலளித்தார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "எந்த ஸைனப்?" என்று கேட்டார்கள். "அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களுடைய துணைவியார்" என்று பிலால் பதிலளித்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்விருவருக்கும் இரு நன்மைகள் உண்டு. ஒன்று நெருங்கிய உறவினரை அரவணைத்ததற்குரியது; மற்றொன்று தர்மத்திற்குரியது" என்று கூறினார்கள்.

1825 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களின் துணைவியார் ஸைனப் (ரலி) அவர்கள் அறிவித்த மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நான் பள்ளிவாசலில் இருந்தபோது என்னைப் பார்த்த நபி (ஸல்) அவர்கள் "உங்கள் நகைகளிலிருந்தாவது தர்மம் செய்யுங்கள்' என்று கூறினார்கள்" என ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

1826 (அன்னை) உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! (என் முதல் கணவரான) அபூ சலமாவின் பிள்ளைகளுக்குச் செலவழிப்பதால் (தர்மம் செய்த) நன்மை எனக்கு உண்டா? அவர்களை நான் இன்னின்னவாறு (பிறரிடம் கையேந்தும் நிலையில்) விட்டுவிடமாட்டேன். அவர்களும் என் பிள்ளைகளே" எனக் கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம். அவர்களுக்காக நீ செலவிட்ட(டால் அ)தற்கான நன்மை உனக்கு உண்டு" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1827 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிம் (இறைவனிடம்) நன்மையை எதிர்பார்த்தவராகத் தம் குடும்பத்தாருக்குச் செலவு செய்தால் அதுவும் அவர் செய்த தர்மமாகும்.
இதை பத்ருப்போரில் கலந்துகொண்டவரான அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1828 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! (இணைவைப்பவரான) என் தாயார் என்னிடம் "ஆசையுடன்' அல்லது "அச்சத்துடன்' வந்துள்ளார். நான் அவருடன் உறவு கொண்டாடலாமா?" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள் "ஆம்' என்றார்கள்.

1829 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறைஷியருடன் சமாதான ஒப்பந்தம் செய்திருந்த காலத்தில் இணைவைப்பவராக இருந்த என் தாயார் என்னிடம் வந்தார். நான், "அல்லாஹ்வின் தூதரே! என் தாயார் என்னிடம் ஆசையுடன் வந்துள்ளார்; நான் என் தாயாருடன் உறவு கொண்டாடலாமா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தீர்ப்புக் கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம். நீ உன் தாயின் உறவைப் பேணி நடந்துகொள்" என்று சொன்னார்கள்.

## பாடம் : 15 இறந்தவருக்காகத் தர்மம் செய்தால் அதன் பலன் இறந்தவரைச் சென்றடையும்.

1830 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! என் தாயார் இறுதி விருப்பம் (வஸிய்யத்) தெரிவிக்காமல் திடீரென இறந்துவிட்டார். அவர் (மட்டும் இறுதி நேரத்தில்) பேசியிருந்தால் தர்மம் செய்யுமாறு அறிவுறுத்தியிருப்பார் என்று நான் எண்ணுகிறேன். இந்நிலையில் அவருக்காக நான் தர்மம் செய்தால் அவருக்கு நன்மை கிட்டுமா?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "ஆம்' என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அபூஉசாமா (ஹம்மாத் பின் உசாமா பின் ஸைத்-ரஹ்) அவர்களது அறிவிப்பிலேயே "அவர் இறுதிவிருப்பம் (வஸிய்யத்) தெரிவிக்காமல்' எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது. மற்றவர்களது அறிவிப்பில் இக்குறிப்பு இல்லை.

**பாடம் : 16 நல்லறங்கள் ஒவ்வொன்றுக்கும் "ஸதக்கா' (தர்மம்) எனும் பெயர் பொருந்தும்.**

1831 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எல்லா நல்லறமும் தர்மமே.
இதை ஹுதைஃபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1832 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபித்தோழர்களில் (ஏழைகளான) சிலர் நபி (ஸல்) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதரே! வசதிபடைத்தோர் நன்மைகளை (தட்டி)க் கொண்டு போய்விடுகின்றனர். நாங்கள் தொழுவதைப் போன்றே அவர்களும் தொழுகின்றனர்; நாங்கள் நோன்பு நோற்பதைப் போன்றே அவர்களும் நோன்பு நோற்கின்றனர்; (ஆனால், அவர்கள்) தங்களது அதிகப்படியான செல்வங்களைத் தானதர்மம் செய்கின்றனர். (அவ்வாறு தானதர்மங்கள் செய்ய எங்களிடம் வசதி இல்லையே!)" என்று கூறினர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீங்களும் தர்மம் செய்வதற்கான (முகாந்தரத்)தை அல்லாஹ் உங்களுக்கு ஏற்படுத்தவில்லையா? இறைவனைத் துதிக்கும் ஒவ்வொரு துதிச் சொல்லும் (சுப்ஹானல்லாஹ்) தர்மமாகும்; இறைவனைப் பெருமைப்படுத்தும் ஒவ்வொரு சொல்லும் (அல்லாஹு அக்பர்) தர்மமாகும்; ஒவ்வொரு புகழ்மாலையும் (அல்ஹம்து லில்லாஹ்) தர்மமாகும்; ஒவ்வொரு "ஓரிறை உறுதிமொழி'யும் (லா இலாஹ இல்லல்லாஹ்) தர்மமாகும்; நல்லதை ஏவுதலும் தர்மமே; தீமையைத் தடுத்தலும் தர்மமே;உங்களில் ஒருவர் தமது பாலுறுப்பி(னைப் பயன்படுத்துகின்ற விதத்தி)லும் தர்மம் உண்டு" என்று கூறினார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! எங்களில் ஒருவர் (தம் துணைவியிடம்) இச்சைகளைத் தீர்த்துக்கொள்வதற்கும் நன்மை கிடைக்குமா?" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(நீங்களே) சொல்லுங்கள்: தடைசெய்யப்பட்ட வழியில் அவர் தமது இச்சையைத் தீர்த்துக்கொண்டால் அவருக்குக் குற்றம் உண்டல்லவா! அவ்வாறே அனுமதிக்கப்பட்ட வழியில் அவர் தமது இச்சையை நிறைவேற்றிக்கொள்ளும்போது அதற்காக அவருக்கு நன்மை கிடைக்கவே செய்யும்" என்று விடையளித்தார்கள்.

1833 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு விஷயம் (சொல்கிறேன்:) ஆதமின் மக்களில் ஒவ்வொரு மனிதரும் முன்னூற்று அறுபது மூட்டு எலும்புகளுடன் படைக்கப்பட்டுள்ளார்கள். எனவே, யார் அந்த முன்னூற்று அறுபது மூட்டு எலும்புகளின் எண்ணிக்கை அளவிற்கு அல்லாஹ்வைப் பெருமைப்படுத்தி (தக்பீர்), அல்லாஹ்வைப் புகழ்ந்து (தஹ்மீத்), அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்று (ஏகத்துவ உறுதி) கூறி, அல்லாஹ்வைத் துதித்து (தஸ்பீஹ்), அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி (இஸ்திஃக்ஃபார்), மக்களின் நடைபாதையில் (இடையூறாகக்) கிடந்த ஒரு கல்லையோ அல்லது முள்ளையோ அல்லது எலும்பையோ அகற்றி, நல்லதை ஏவி, அல்லது தீமையைத் தடுத்(து நல்லறங்கள் புரிந்)தாரோ அவர் அன்றைய தினத்தில் தம்மை நரக நெருப்பிலிருந்து அப்புறப்படுத்திவிட்ட நிலையிலேயே நடமாடுகிறார்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூதவ்பா அர்ரபீஉ பின் நாஃபிஉ (ரஹ்) அவர்கள் சில நேரங்களில் ("அவர் நடமாடுகிறார்' என்பதற்கு பதிலாக) "அவர் மாலைப் பொழுதை அடைகிறார்' என்று அறிவித்துள்ளார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் ("நல்லதை ஏவி' என்பதுடன் "அல்லது' என்பதைச் சேர்த்து) "அல்லது நல்லதை ஏவி' என்றும், "அவர் மாலைப் பொழுதை அடைகிறார்' என்றும் இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஒவ்வொரு மனிதனும் (முன்னூற்று அறுபது மூட்டு எலும்புகளுடன்) படைக்கப் பட்டுள்ளான்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக ஹதீஸ் தொடங்குகிறது. இந்த அறிவிப்பில் "அன்றைய தினத்தில் (தம்மை நரக நெருப்பிலிருந்து அப்புறப்படுத்திவிட்ட நிலையிலேயே) அவர் நடமாடுகிறார்" என்றே இடம்பெற்றுள்ளது.

1834 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "தர்மம் செய்வது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமையாகும்" என்று கூறினார்கள். அப்போது "(தர்மம்செய்ய ஏதும்) அவருக்குக் கிடைக்கவில்லையானால் (என்ன செய்வது), சொல்லுங்கள்?" என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள், "அவர் தம் கைகளால் உழைத்துத் தாமும் பயனடைவார்; பிறருக்கும் தர்மம் செய்வார்" என்று சொன்னார்கள். "அவருக்கு (உழைக்க உடலில்) தெம்பு இல்லையானால் (என்ன செய்வார்), சொல்லுங்கள்?" என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் "பாதிக்கப்பட்ட தேவையாளிக்கு அவர் உதவட்டும்" என்றார்கள். "(இதற்கும் அவர்) சக்தி பெறாவிட்டால் (என்ன செய்வது), சொல்லுங்கள்?" என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் "அவர் "நல்லதை' அல்லது "நற்செயலை'(ச் செய்யும்படி பிறரை) ஏவட்டும்" என்றார்கள். "(இயலாமையால் இதையும்) அவர் செய்யாவிட்டால் (என்ன செய்வது), சொல்லுங்கள்?" என்று கேட்டதற்கு, நபி (ஸல்) அவர்கள், "அவர் தீங்கு செய்யாமல் இருக்கட்டும். அதுவே தர்மம்தான்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1835 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்கு அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்த ஹதீஸ்களாகும். பின்வரும் ஹதீஸும் அவற்றில் ஒன்றாகும்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மனிதர்கள் சூரியன் உதிக்கின்ற ஒவ்வொரு நாளிலும் தம்முடைய ஒவ்வொரு மூட்டு எலும்புக்காகவும் தர்மம் செய்வது கடமையாகும். இருவருக்கிடையே நீதி செலுத்துவதும் தர்மமாகும். ஒருவர் தமது வாகனத்தின் மீது ஏறி அமர உதவுவதும் அல்லது அவரது பயணச் சுமைகளை அதில் ஏற்றிவிடுவதும் தர்மமாகும். இன்சொல்லும் தர்மமாகும். ஒருவர் தொழுகைக்குச் செல்ல எடுத்துவைக்கும் ஒவ்வோர் அடியும் தர்மமாகும். தீங்கு தரும் பொருளைப் பாதையிலிருந்து அகற்றுவதும் ஒரு தர்மமேயாகும்.

**பாடம் : 17 (நல்வழியில்) செலவு செய்பவரும் செலவு செய்ய மறுப்பவரும்.**

1836 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வொரு நாளும் அடியார்கள் காலை நேரத்தை அடையும்போது இரு வானவர்கள் (வானத்திலிருந்து) இறங்குகின்றனர். அவர்களில் ஒருவர், "இறைவா! (நல்வழியில்) செலவு செய்பவருக்குப் பிரதிபலனை அளிப்பாயாக!" என்று கூறுவார். மற்றொருவர், "இறைவா! (கடமையானவற்றில்கூடச்) செலவு செய்ய மறுப்பவருக்கு இழப்பைக் கொடுப்பாயாக!" என்று கூறுவார்.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 18 தானதர்மத்தை ஏற்க ஆள் கிடைக்காமல்போவதற்கு முன் தர்மம் செய்யுமாறு வந்துள்ள தூண்டல்.**

1837 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இப்போதே) தானதர்மம் செய்துகொள்ளுங்கள். ஏனெனில், மக்களுக்கு ஒரு காலம் வரப் போகிறது; அப்போது ஒருவர் தமது தர்மப் பொருளை எடுத்துக்கொண்டு (அதைப் பெறுபவர் யாரேனும் கிடைப்பாரா என) அலைவார். ஆனால், அதை ஏற்பவர் எவரையும் காண மாட்டார். அந்தப் பொருள் வழங்கப்படுகின்ற ஒருவன் "நேற்றே இதை நீ கொண்டு வந்திருந்தாலாவது நான் ஏற்றுக்கொண்டிருப்பேன்; இன்றோ இது எனக்குத் தேவையில்லை" என்று கூறிவிடுவான்.
இதை ஹாரிஸா பின் வஹ்ப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1838 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களுக்கு ஒரு காலம் வரும். அப்போது ஒருவர் தங்கத்தை எடுத்துக்கொண்டு தர்மம் செய்வதற்காக அலைவார். ஆனால், அதைப் பெற்றுக்கொள்ளக்கூடிய எவரையும் அவர் காணமாட்டார். மேலும், (அப்போது போர்கள் மிகுந்து) ஆண்கள் குறைந்து, பெண்கள் அதிகரித்துவிடுவதால் ஓர் ஆணை நாற்பது பெண்கள் பின்தொடர்ந்துவந்து, அவனைச் சார்ந்திருக்கும் நிலை காணப்படும்.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அப்துல்லாஹ் பின் பர்ராத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஓர் ஆணை (இந்த நிலையில்) நீங்கள் காண்பீர்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

1839 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
செல்வம் பெருகிக் கொழிக்காதவரை யுகமுடிவு நாள் நிகழாது. எந்த அளவிற்கு (செல்வம் பெருகும்) எனில், ஒருவர் தமது செல்வத்திற்குரிய ஸகாத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டுச் செல்வார். ஆனால், அவரிடமிருந்து அதைப்பெற்றுக்கொள்ள ஒருவரையும் அவர் காணமாட்டார். மேலும், அரபுமண் மேய்ச்சல் நிலங்களாகவும் (கரை புரண்டோடும்) வாய்க்கால்களாகவும் மாறாதவரை (யுகமுடிவு நாள் நிகழாது).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1840 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களிடையே செல்வம் பெருகிக் கொழிக்காதவரை யுகமுடிவு நாள் ஏற்படாது. எந்த அளவிற்கு (செல்வம் பெருகும்) எனில்,அந்நாளில் பொருளின் உரிமையாளருக்கு, அவரிடமிருந்து தர்மத்தைப் பெற்றுக்கொள்பவர் குறித்த கவலை ஏற்படும். தர்மத்தைப் பெற்றுக்கொள்ளுமாறு ஒருவர் அழைக்கப்படுவார். ஆனால், அவரோ "இது எனக்குத் தேவையில்லை' என்று கூறிவிடுவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1841 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பூமி தனது வயிற்றிலுள்ள புதையல்களான தங்கக் கட்டி, வெள்ளிக் கட்டி ஆகியவற்றைத் தூண்களைப் போன்று வாந்தியெடுக்கும். அப்போது கொலை செய்தவன் வந்து, "இதற்காகவே நான் கொலை செய்தேன்" என்று கூறுவான். உறவுகளை அரவணைக்காதவன் வந்து, "இதற்காகவே நான் என் இரத்த உறவுகளைத் துண்டித்தேன்" என்று கூறுவான். திருடன் வந்து, "இதற்காகவே எனது கரம் துண்டிக்கப்பட்டது" என்று கூறுவான். பிறகு அதை (அப்படியே) விட்டுவிடுவார்கள்; அதிலிருந்து எதையும் எடுக்கமாட்டார்கள் (அந்த அளவிற்கு அவர்கள் ஏற்கெனவே வசதியுடனிருப்பார்கள்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 19 முறையான சம்பாத்தியத்திலிருந்து செய்யும் தர்மம் (இறைவனிடம்) ஏற்கப் படுவதும் அது வளர்ச்சியடைவதும்.

1842 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் தூய்மையானதை மட்டுமே ஏற்பான். யார் தூய்மையான சம்பாத்தியத்திலிருந்து தர்மம் செய்கிறாரோ அதை அளவற்ற அருளாள(னான இறைவ)ன் தனது வலக்கரத்தால் வாங்கிக்கொள்கிறான். அது ஒரு பேரீச்சங்கனியாக இருந்தாலும் சரியே! அது அந்த அருளாளனின் கையில் வளர்ச்சி அடைந்து மலையைவிடப் பெரியதாகிவிடுகின்றது. உங்களில் ஒருவர் "தமது குதிரைக் குட்டியை' அல்லது "தமது ஒட்டகக் குட்டியை' வளர்ப்பதைப் போன்று.-இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1843 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் முறையான சம்பாத்தியத்திலிருந்து ஒரு பேரீச்சம் பழத்தைத் தர்மம் செய்தாரோ அதை அல்லாஹ் தனது கரத்தால் வாங்கி, உங்களில் ஒருவர் "தமது குதிரைக் குட்டியை' அல்லது "தமது ஒட்டகக் குட்டியை' வளர்ப்பதைப் போன்று வளர்ச்சியடையச் செய்கிறான். இறுதியில் அது மலையைப் போன்று, அல்லது அதைவிட மிகப்பெரியதாக மாறிவிடுகின்றது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ரவ்ஹ் பின் அல்காசிம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "முறையான சம்பாத்தியத்திலிருந்து அவர் உரிய முறையில் தர்மம் செய்தால்' என்று இடம்பெற்றுள்ளது.
சுலைமான் பின் பிலால் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவர் உரிய இடங்களில் (தர்மம் செய்தால்)' என்று காணப்படுகிறது.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1844 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மக்களே! அல்லாஹ் தூயவன். தூய்மையானதையே அவன் ஏற்கின்றான். அல்லாஹ் தன்னுடைய தூதர்களுக்குக் கட்டளையிட்டவற்றையே இறைநம்பிக்கையாளர்களுக்கும் கட்டளையிட்டுள்ளான்" என்று கூறிவிட்டு(ப் பின்வரும் இரு வசனங்களை) ஓதிக்காட்டினார்கள்: தூதர்களே! தூய்மையான பொருள்களிலிருந்து உண்ணுங்கள். நற்செயலைச் செய்யுங்கள். திண்ணமாக நான், நீங்கள் செய்வதை நன்கு அறிபவன் ஆவேன் (23:51). "நம்பிக்கையாளர்களே! நாம் உங்களுக்கு வழங்கிய தூய்மையான பொருள்களிலிருந்து உண்ணுங்கள். நீங்கள் (உண்மையில்) அல்லாஹ்வைத்தான் வணங்குகிறீர்களென்றால், அவனுக்கு நன்றி பாராட்டுங்கள் (2:172).
பிறகு ஒரு மனிதரைப் பற்றிச் சொன்னார்கள். "அவர் தலைவிரி கோலத்துடனும் புழுதி படிந்த நிலையிலும் நீண்ட பயணம் மேற்கொள்கிறார். அவர் தம் கரங்களை வானை நோக்கி உயர்த்தி "என் இறைவா, என் இறைவா' என்று பிரார்த்திக்கிறார். ஆனால்,அவர் உண்ணும் உணவு தடைசெய்யப்பட்டதாக இருக்கிறது; அவர் அருந்தும் பானம் தடைசெய்யப்பட்டதாக இருக்கிறது; அவர் அணியும் உடை தடைசெய்யப்பட்டதாக இருக்கிறது; தடைசெய்யப்பட்ட உணவையே அவர் உட்கொண்டிருக்கிறார். இத்தகையவருக்கு எவ்வாறு (அவரது பிரார்த்தனை) ஏற்கப்படும்?" என்று கூறினார்கள்.

**பாடம் : 20 பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டையேனும், அல்லது (இன்)சொல்லையேனும் தர்மம் செய்யுமாறு வந்துள்ள தூண்டலும் அது நரக நெருப்பிலிருந்து காக்கும் திரையாக அமையும் என்பதும்.**

1845 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யார் பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டை தர்மம் செய்தேனும் நரக நெருப்பிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ள இயன்றவராக இருக்கிறாரோ அவர் அவ்வாறே செய்து கொள்ளட்டும்!
இதை அதீ பின் ஹா(த்)திம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1846 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் மறுமை நாளில் உங்களில் ஒவ்வொருவருடனும் (தனித்தனியாகப்) பேசாமலிருப்பதில்லை. அப்போது அல்லாஹ்விற்கும் உங்களில் ஒருவருக்கும் இடையே மொழி பெயர்ப்பாளர் எவரும் இருக்கமாட்டார். பிறகு அவர் தமது வலப்பக்கம் பார்ப்பார். தாம் ஏற்கெனவே செய்த(பாவத்)தைத் தவிர வேறெதையும் அங்கு அவர் காணமாட்டார். பின்னர் அவர் தமது இடப்பக்கம் பார்ப்பார். தாம் ஏற்கெனவே செய்த(பாவத்)தைத் தவிர வேறெதையும் அங்கும் அவர் காணமாட்டார். மேலும், அவர் தமக்கு முன்னால் பார்ப்பார். தமது முகத்துக்கெதிரே நரக நெருப்பையே அவர் காண்பார். ஆகவே, முடிந்தால் பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டை தர்மம் செய்தேனும் நரகத்திலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்.
இதை அதீ பின் ஹா(த்)திம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அலீ பின் ஹுஜ்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இன்சொல்லைக் கொண்டேனும் (நரகத்திலிருந்து உங்களைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள்)" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

1847 அதீ பின் ஹாா(த்)திம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நரகத்தைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். (அப்போது நரகத்தைப் பார்த்து அஞ்சுவதைப் போன்று) தமது முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். பின்னர் "நரகத்திலிருந்து தப்பித்துக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். பிறகு (நரகத்தைக் கண்டு அஞ்சுவதைப் போன்று) தமது முகத்தை (மீண்டும்) திருப்பிக் கொண்டார்கள். அவர்கள் நரகத்தையே பார்க்கிறார்கள் போலும் என்று நாங்கள் எண்ணினோம். பின்னர் "பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டை தர்மம் செய்தேனும் உங்களை நரகத்திலிருந்து காப்பாற்றிக்கொள்ளுங்கள். அதுவும் இல்லாதவர் இன்சொல்லைக் கொண்டேனும் (நரகத்திலிருந்து தம்மைக் காப்பாற்றிக்கொள்ளட்டும்)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "(பார்க்கிறார்கள்) போலும்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை. ("அவர்கள் நரகத்தையே பார்க்கிறார்களோ என்று நாங்கள் எண்ணினோம்' என்றே இடம்பெற்றுள்ளது.)

- மேற்கண்ட ஹதீஸ் அதீ பின் ஹாா(த்)திம் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் பின்வருமாறு இடம் பெற்றுள்ளது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நரகத்தைப் பற்றிக் குறிப்பிட்டுவிட்டு அதிலிருந்து பாதுகாப்புக் கோரினார்கள். மேலும், (நரகத்தைக் கண்டு அஞ்சுவதைப் போன்று) தமது முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள். இவ்வாறு மூன்றுமுறை செய்தார்கள். பின்னர் "பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டை தர்மம் செய்தேனும் உங்களை நரகத்திலிருந்து காப்பாற்றிக்கொள்ளுங்கள். அதுவும் இல்லாதவர் இன்சொல்லைக் கொண்டேனும் (நரகத்திலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ளட்டும்)" என்று கூறினார்கள்.

1848 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நாங்கள் முற்பகல் நேரத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இருந்தோம். அப்போது செருப்பணியாத, (அரை) நிர்வாணிகளான, வட்டமாய் கிழிந்த "கம்பளி ஆடை' அல்லது "நீளங்கி' அணிந்த ஒரு கூட்டத்தார் தம் (கழுத்துகளில்) வாட்களைத் தொங்கவிட்டவர்களாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அவர்களில் பெரும்பாலானோர் "முளர்'குலத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். இல்லை; அவர்களில் அனைவருமே "முளர்' குலத்தைச் சேர்ந்தவர்கள்தாம். அவர்களது ஏழ்மை நிலையைக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகம் நிறமாறிவிட்டது. உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒருவிதத் தவிப்பு நிலையுடன்) வீட்டுக்குள் சென்றுவிட்டு வெளியே வந்து, பிலால் (ரலி) அவர்களிடம் உத்தரவிட, பிலால் (ரலி) அவர்கள் தொழுகை அறிவிப்புச்

செய்து இகாமத்தும் கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுதுவிட்டு, மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அப்போது "மக்களே! உங்களை ஒரே ஆன்மாவிலிருந்து படைத்த உங்கள் இறைவனை பயந்துகொள்ளுங்கள்" எனும் (4:1ஆவது) இறைவசனத்தை முழுமையாக ஓதிக்காட்டினார்கள். மேலும், "அல்ஹஷ்ர்' அத்தியாயத்திலுள்ள "நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். ஒவ்வொரு ஆன்மாவும் நாளைக்கென்று எதனை அனுப்பியுள்ளது என்பதை கவனத்திற்கொள்ளட்டும். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்" எனும் (59:18ஆவது) வசனத்தையும் ஓதிக்காட்டி (முளர் கூட்டத்தாருக்கு தர்மம் செய்யுமாறு கூறி)னார்கள். அப்போது "(உங்களில்) ஒருவர் தமது பொற்காசு, வெள்ளிக்காசு, துணி, ஒரு "ஸாஉ' கோதுமை, ஒரு "ஸாஉ' பேரீச்சம் பழம் ஆகியவற்றைத் தர்மம் செய்யட்டும்" என்று கூறி, "பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டையேனும் தர்மம் செய்யட்டும்" என்று வலியுறுத்தினார்கள்.
உடனே (நபித்தோழர்களில்) ஒவ்வொருவரும் தம்மிடமிருந்த பொற்காசுகளிலிருந்தும் வெள்ளிக்காசுகளிலிருந்தும் ஆடைகளிலிருந்தும் ஒரு "ஸாஉ' கோதுமையிலிருந்தும் ஒரு "ஸாஉ' பேரீச்சம் பழத்திலிருந்தும் தர்மம் செய்தார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர் ஒரு பை (நிறைய பொருட்களைக்) கொண்டுவந்தார். அதைத் தூக்க முடியாமல் அவரது கை திணறியது;ஏன் தூக்கவே முடியவில்லை. பின்னர் தொடர்ந்து மக்கள் (தங்களின் தர்மப் பொருட்களுடன்) வந்துகொண்டிருந்தனர். இறுதியில் உணவுப் பொருட்களாலும் ஆடைகளாலும் இரு குவியல்கள் சேர்ந்துவிட்டதை நான் கண்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகம் பொன்னைப் போன்று மின்னிக் கொண்டிருப்பதையும் நான் கண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் இஸ்லாத்தில் ஓர் அழகிய நடைமுறையை உருவாக்குகிறாரோ அவருக்கு அதற்குரிய நன்மையும் அவருக்குப் பின் அதன்படி செயல்படுபவர்களின் நன்மையும் உண்டு; அதற்காக அவர்களது நன்மையில் எதுவும் குறைந்துவிடாது. அவ்வாறே,யார் இஸ்லாத்தில் ஒரு தீய நடைமுறையை உருவாக்குகிறாரோ அவருக்கு அதன் பாவமும் அவருக்குப் பின் அதன்படி செயல்படுபவர்களின் பாவமும் –அ(தன்படி செயல்பட்ட)வர்களின் பாவத்திலிருந்து எதுவும் குறையாமல்– உண்டு" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றிலும் "(ஒரு நாள்) முற்பகல் நேரத்தில் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இருந்தோம்"என்றே ஹதீஸ் தொடங்குகிறது.
உபைதுல்லாஹ் பின் முஆத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் லுஹர் தொழுகை தொழுவித்துவிட்டுப் பிறகு உரை நிகழ்த்தினார்கள்" என்று சற்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

1849 மேற்கண்ட ஹதீஸ் ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நான் நபி (ஸல்) அவர்களிடம் அமர்ந்திருந்தேன். அப்போது அவர்களிடம் வட்டமாய் கிழிந்த கம்பளிஆடை அணிந்த ஒரு கூட்டத்தார் வந்தார்கள்" என்று ஹதீஸ்

தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.
மேலும் இவ்வறிவிப்புகளில் பின்வரும் தகவல்களும் இடம்பெற்றுள்ளன:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் லுஹர் தொழுவித்தார்கள். பிறகு சிறிய சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது ஏறி அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்தார்கள். பின்னர் "அம்மா பஅத்' ("இறை வாழ்த்துக்குப் பின்...) என்று கூறிவிட்டு, "அல்லாஹ் தனது வேதத்தில் "மக்களே! உங்களை ஒரே ஆன்மாவிலிருந்து படைத்த உங்கள் இறைவனைப் பயந்து கொள்ளுங்கள்...' (4:1)என்று கூறியுள்ளான்" என்றார்கள்.

1850 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "கிராமவாசிகளில் சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அவர்கள்மீது கம்பளியாடைகள் காணப்பட்டன. அவர்களது வறிய நிலையை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்டார்கள். அவர்களுக்குத் தேவை ஏற்பட்டிருந்தது..." என்று ஜரீர் (ரலி) அவர்கள் கூறியதாக ஹதீஸ் தொடங்குகிறது.

## பாடம் : 21 தர்மம் செய்வதற்காகக் கூலிக்குச் சுமை தூக்குவதும், சிறிதளவு தர்மம் செய்தவ(ராயினும் அவ)ரைக் குறைகூறுவது குறித்து வந்துள்ள கடுமையான தடையுத்தரவும்.

1851 அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
தானதர்மம் செய்யும்படி எங்களுக்குக் கட்டளையிடப்பட்டபோது, நாங்கள் (சுமைதூக்கி) கூலி வேலை செய்யலானோம். அபூ அகீல் (ஹப்ஹாப்-ரலி) அவர்கள் (கூலி வேலை செய்து) அரை "ஸாஉ' பேரீச்சம் பழம் (கொண்டு வந்து) தர்மம் செய்தார். மற்றொரு மனிதர் அதைவிடச் சிறிது அதிகமாகக் கொண்டுவந்(து தர்மம் செய்)தார். இதைக் கண்ட நயவஞ்சகர்கள், (அரை "ஸாஉ' கொண்டுவந்த) இவரது தர்மமெல்லாம் அல்லாஹ்விற்குத் தேவையில்லை; (அதைவிட அதிகமாகக் கொண்டுவந்த) இந்த மற்றொரு மனிதர் பிறர் பாராட்ட வேண்டுமென்பதற்காகவே (தர்மம்) செய்தார்" என்று (குறை) சொன்னார்கள். அப்போதுதான் "(நயவஞ்சகர்களான) அவர்கள் எத்தகையவர்கள் என்றால், இறை நம்பிக்கையாளர்களில் மனமுவந்து வாரி வழங்குவோரின் தானதர்மங்களைப் பற்றியும் குறை பேசுகின்றார்கள். (இறைவழியில் ஈவதற்காகச்) சிரமப்பட்டு சம்பாதித்ததைத் தவிர வேறெதுவும் இல்லாதவர்களைப் பற்றியும் அவர்கள் நகைக்கின்றார்கள். அல்லாஹ் அவர்களை நகைக்கின்றான். மேலும்,அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையும் உண்டு" எனும் (9:79ஆவது) இறைவசனம் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் பிஷ்ர் பின் காலித் (ரஹ்) அவர்கள் தமது அறிவிப்பில் "மனமுவந்து வாரி வழங்குவோர்' எனும் சொல்லைக் குறிப்பிடவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், சயீத் பின் அர்ரபீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நாங்கள் எங்களுடைய முதுகுகளில் (சுமை)தூக்கி கூலிவேலை செய்யலானோம்" என்று (அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாக) இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 22 பாலுக்காக இரவல் வழங்கப்படும் கால்நடைகளின் சிறப்பு.**

1852 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காலையில் ஒரு பெரிய பாத்திரம் (நிறையப்) பாலும் மாலையில் ஒரு பெரிய பாத்திரம் (நிறையப்) பாலும் தருகின்ற ஓர் ஒட்டகத்தை ஒரு வீட்டாருக்கு இரவலாகத் தரக்கூடிய மனிதர் எவரேனும் (உங்களில்) உண்டா? இதற்குரிய நற்பலன் நிச்சயமாக மிகப் பெரியதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1853 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பல விஷயங்களுக்குத் தடைவிதித்தார்கள். மேலும், அவர்கள் (பின் வருமாறு) கூறினார்கள்:
ஒருவர் ஒரு கால்நடையை (பால் கறந்து கொள்வதற்காக) இரவலாக வழங்கினால், அது காலையில் ஒரு தர்மத்தின் நன்மையையும், மாலையில் ஒரு தர்மத்தின் நன்மையையும் பெற்றுத்தருவதாக அமையும்; காலையில் கறக்கப்பட்ட பாலுக்காகவும் மாலையில் கறக்கப்பட்ட பாலுக்காகவும் (இந்த நன்மைகள் கிடைக்கும்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 23 (தாராள மனத்துடன்) செலவு செய்கின்றவருக்கும் கஞ்சனுக்கும் உள்ள உதாரணம்.**

1854 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(கஞ்சனின் நிலையோடு ஒப்பிடுகையில் தாராள மனத்துடன்)செலவு செய்கின்ற தர்மசீலரின் நிலையானது, மார்பிலிருந்து கழுத்தெலும்பு வரை (இரும்பாலான) "இரு நீளங்கிகள்' அல்லது "இரு கவசஆடைகள்' அணிந்துள்ள (இரு) மனிதரின் நிலையைப் போன்றதாகும். "(தாராள மனத்துடன்) செலவு செய்கின்றவர்' அல்லது "தர்மம் செய்கின்றவர்' தர்மம் செய்ய எண்ணும் போது அவரது கவசம் "விரிவடைந்து' அல்லது "(நீண்டு) சென்று' அவரது விரல் நுனிகளை மறைத்து (அதற்கப்பால்) அவரது பாதச் சுவடுகளைக்கூட(த் தொட்டு) அழித்து விடுகிறது. (ஆனால்,) கஞ்சன் செலவு செய்ய எண்ணும்போது அவனது கவசம் அவனை அழுத்தி, அதன் ஒவ்வொரு வளையமும் அதனதன் இடத்தை (இறுகப்) பிடித்துவிடுகிறது. அவன் அதை விரிக்க முயன்றாலும் அது விரியாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது
- அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கஞ்சனுக்கும் தர்மம் செய்கின்றவனுக்கும் பின்வருமாறு உதாரணம் கூறினார்கள்: அவ்விருவரின் நிலையானது, இரும்பாலான இரு

கவசங்கள் அணிந்துள்ள இரு மனிதர்களின் நிலையை ஒத்திருக்கிறது. அவர்களின் கைகள் அவர்களுடைய மார்போடும் கழுத்தெலும்புகளோடும் பிணைக்கப்பட்டுள்ளன. தர்மம் செய்கின்றவர் ஒன்றைத் தர்மம் செய்யும் போதெல்லாம் அவரது கவசம் விரிந்து, அவரது விரல்நுனிகளை மறைத்து, பாதச்சுவடுகளைக் கூட(த் தொட்டு) அழிக்கத் தொடங்குகிறது. (ஆனால்,) கஞ்சனோ ஒன்றைத் தர்மம் செய்ய எண்ணும் போதெல்லாம் அவனது கவசம் அவனை அழுத்தி, அதன் ஒவ்வொரு வளையமும் அதனதன் இடத்தை (இறுக்கிப்) பிடிக்கத் துவங்குகிறது. அவன் தனது கவசத்தை விரிவுபடுத்த முயலும்போது நீ பார்த்தால் (வியப்புத்தான் ஏற்படும்; ஏனெனில்,) அது விரியாது.
இதன் அறிவிப்பாளரான அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்: (இதைக் கூறியபோது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது விரலால் தமது சட்டைக் கழுத்தை (நெருக்கி), (இவ்வாறு) சுட்டிக் காட்டினார்கள்.

1855 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கஞ்சன் மற்றும் தர்மம் செய்கின்றவரின் நிலையானது, இரும்பாலான இரு கவசங்கள் அணிந்த இரு மனிதர்களின் நிலைக்கு ஒத்திருக்கிறது. தர்மம் செய்பவர் ஒன்றைத் தர்மம் செய்ய எண்ணும்போது, அவரது கவசம் விரிவடைந்து, அவரது பாதச்சுவடுகளைக்கூட(த் தொட்டு) அழித்துவிடுகிறது. (ஆனால்,) கஞ்சனோ ஒன்றைத் தர்மம் செய்ய எண்ணும்போது, அவனது கவசம் அவனை அழுத்தி, அவனுடைய கைகள் கழுத்தெலும்புவரை சென்று ஒட்டிக்கொள்கின்றன. கவசத்தின் ஒவ்வொரு வளையமும் மற்றதன் இடத்தை இறுக்கிப் பிடிக்கிறது. அதை விரிவுபடுத்த அவன் முனைவான். ஆனால், அவனால் இயலாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 24 தர்மம் செய்தவருக்கு நிச்சயம் நற்பலன் உண்டு; உரியவரின் கைக்கு தர்மம் போய்ச் சேராவிட்டாலும் சரியே!

1856 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(முற்காலத்தில்) ஒருவர் "நான் இன்றிரவு தர்மம் செய்யப்போகிறேன்' எனக் கூறிக்கொண்டு, (இரவில்) தர்மத்துடன் வெளியே வந்து, (தெரியாமல்) அதை ஒரு விபச்சாரியிடம் கொடுத்து விட்டார். காலையில் மக்கள், "இன்றிரவு ஒரு விபச்சாரிக்குத் தர்மம் கொடுக்கப்பட்டுள்ளது' எனப் பேசிக்கொண்டனர். (இதைக் கேட்ட) அவர், "இறைவா! விபச்சாரிக்குத் தர்மம் செய்ததற்காக உனக்கே புகழ் அனைத்தும் உரியது. (நாளையும்) நான் தர்மம் செய்வேன்' என்று கூறினார்.
மறுநாள் அவர் தர்மத்துடன் (இரவில்) வெளியே வந்து, அதை ஒரு பணக்காரரின் கையில் கொடுத்துவிட்டார். மறுநாள் காலையில் மக்கள், "ஒரு பணக்காரருக்குத் தர்மம் செய்யப்பட்டுள்ளது' எனப் பேசிக்கொண்டனர். (இதைக்கேட்ட) அவர், "இறைவா! பணக்காரருக்குத் தர்மம் செய்ததற்காக உனக்கே புகழ் அனைத்தும் உரியது. (நாளையும்) நான் தர்மம் செய்வேன்' என்று கூறினார்.
(மூன்றாம் நாள்) அவர் தர்மத்துடன் புறப்பட்டுச் சென்று, ஒரு திருடனின் கையில் அதைக் கொடுத்துவிட்டார். காலையில் மக்கள், "இன்றிரவு ஒரு திருடனுக்குத் தர்மம் செய்யப்

பட்டுள்ளது' என்று பேசிக்கொண்டனர். உடனே அவர், "இறைவா! விபச்சாரிக்கும் பணக்காரனுக்கும் திருடனுக்கும் தர்மம் கொடுத்ததற்காக உனக்கே எல்லாப் புகழும் உரியது' எனக் கூறினார். பின்னர் (கனவில்) அவரிடம் (வானவர்) அனுப்பிவைக்கப்பட்டு (பின்வருமாறு) கூறப்பட்டது: உமது தர்மம் ஏற்கப்பட்டுவிட்டது. விபச்சாரிக்கு நீர் கொடுத்த தர்மம், அவள் விபச்சாரத்திலிருந்து விலகி கற்பைப் பேணக் காரணமாக அமையலாம். பணக்காரனுக்குக் கொடுக்கப்பட்ட தர்மத்தால் அவன் படிப்பினை பெற்று, அல்லாஹ் தனக்கு வழங்கியவற்றிலிருந்து தர்மம் செய்யக்கூடும். திருடனுக்குக் கொடுக்கப்பட்ட தர்மம் அவன் களவைக் கைவிடக் காரணமாக அமையலாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 25 நேர்மையான ஒரு காசாளர் தம் முதலாளியின், அல்லது ஒரு மனைவி தன் கணவனின் நேரடியான அனுமதியின் பேரில்,அல்லது அவரது அனுமதியை குறிப்பால் அறிந்து வீட்டிலுள்ள (பொருளிலிருந்து) எதையும் வீணாக்காமல் தர்மம் செய்தால் அந்தக் காசாளருக்கும் அந்த மனைவிக்கும்கூட நன்மை கிடைக்கும்.

1857 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தமக்குக் கட்டளையிடப்பட்ட (தர்ம) காரியத்தைச் செயல்படுத்தக்கூடிய –அல்லது அந்தக் காரியத்திற்காக வழங்கக்கூடிய– நேர்மையான முஸ்லிம் காசாளர், தர்மத்தில் பங்கு வகிக்கும் இருவரில் ஒருவராவார். அவர் முழுமையாகவும் குறைவின்றியும் மனப்பூர்வமாகவும் அக்காரியத்திற்கு வழங்குகிறார்.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1858 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பெண் தனது வீட்டிலுள்ள உணவை முறையோடு தர்மம் செய்தால், (அறவழியில்) செலவழித்ததற்காக அவளுக்கும் நற்பலன் உண்டு. அதைச் சம்பாதித்தவன் என்ற அடிப்படையில் கணவனுக்கும் நற்பலன் உண்டு. அதைப் போன்றே காசாளருக்கும் (செலவிட உதவியதற்காக நற்பலன்) உண்டு. இவர்களில் யாரும் யாருடைய நற்பலனிலும் சிறிதும் குறைத்துவிடமாட்டார்கள்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் ("தனது வீட்டிலுள்ள உணவை' என்பதற்குப் பதிலாக) "அவளுடைய கணவனின் உணவிலிருந்து' என்று இடம்பெற்றுள்ளது.

1859 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பெண் தன் கணவனின் வீட்டிலுள்ளவற்றை முறையோடு (அறவழியில்) செலவழித்தால் அவளுக்கும் நற்பலன் உண்டு. அதைப் போன்றே, அதைச் சம்பாதித்தவன் என்ற அடிப்படையில் கணவனுக்கும் நற்பலன் உண்டு. அதைப் போன்றே, காசாளருக்கும்

(செலவிட உதவியதற்காக நற்பலன்) உண்டு. அவர்களுடைய நற்பலன்களில் சிறிதும் குறைந்துவிடாது.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 26 ஓர் அடிமை தன் உரிமையாளரின் செல்வத்திலிருந்து (அறவழியில்) செலவழித்தல்.

1860 "ஆபில் லஹ்ம்' என்பாரின் அடிமையாயிருந்த உமைர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அடிமையாக இருந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "நான் என் உரிமையாளரின் செல்வத்திலிருந்து எதையேனும் தர்மம் செய்யலாமா?" என்று கேட்டேன். அதற்கு "ஆம். (தர்மம் செய்யலாம்.) உங்கள் இருவருக்கும் சரிபாதி நற்பலன் உண்டு" என்று அவர்கள் பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1861 "ஆபில் லஹ்ம்' என்பாரின் அடிமையாயிருந்த உமைர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) என் உரிமையாளர் என்னிடம் இறைச்சியை (நீளமாக வெட்டி உப்புக் கண்டத்திற்காக)க் காயப்போடுமாறு கட்டளையிட்டார். அப்போது என்னிடம் ஓர் ஏழை வந்தார். அதிலிருந்து சிறிதளவு இறைச்சியை அவருக்கு நான் வழங்கிவிட்டேன். இதை என் உரிமையாளர் அறிந்தபோது என்னை அடித்துவிட்டார். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று நடந்ததைத் தெரிவித்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் உரிமையாளரை அழைத்து, "அவரை ஏன் அடித்தீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு "நான் சொல்லாமலேயே எனது உணவை மற்றவர்களுக்கு இவர் கொடுக்கிறார்" என்று என் உரிமையாளர் கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(ஏழைக்கு வழங்கியதால்) உங்கள் இருவருக்குமே நறபலன் உண்டு"என்று கூறினார்கள்.

1862 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பெண் தன் கணவன் உள்ளூரில் இருக்கும்போது அவனது அனுமதி இல்லாமல் (கூடுதலான- நஃபில்) நோன்பு நோற்கவேண்டாம். கணவன் ஊரில் இருக்கும்போது அவனது அனுமதி இல்லாமல் யாரையும் அவனது வீட்டுக்குள் அனுமதிக்க வேண்டாம். அவள் தன் கணவனின் உத்தரவு இல்லாமல் அவனது சம்பாத்தியத்திலிருந்து (அறவழியில்) செலவு செய்தால் அதன் நற்பலனில் பாதி அவனுக்கும் கிடைக்கும்.

## பாடம் : 27 தர்மத்தையும் இதர நற்செயல்களையும் சேர்த்துச் செய்தவர்.

1863 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எவர் அல்லாஹ்வின் பாதையில் ஒரு ஜோடிப் பொருட்களைச் செலவிட்டாரோ அவர் சொர்க்கத்தி(ன் வாசல்களில் ஒவ்வொன்றி)ல் இருந்து "அல்லாஹ்வின் அடியாரே! இது சிறந்ததாகும். (இதன் வழியாக நுழையுங்கள்)' என்று அழைக்கப்படுவார். அதாவது தொழுகையாளியாக இருந்தவர், தொழுகைக்குரிய வாசலில் இருந்து அழைக்கப்படுவார். அறப்போராளியாக இருந்தவர், அறப்போருக்குரிய வாசலில் இருந்து அழைக்கப்படுவார். தர்மம் செய்பவராக இருந்தவர் தர்மத்திற்குரிய வாசலில் இருந்து அழைக்கப்படுவார். நோன்பாளியாக இருந்தவர் (நோன்பாளிகளுக்கே உரிய) "அர்ரய்யான்' எனும் வாசலில் இருந்து அழைக்கப்படுவார்" என்று சொன்னார்கள். உடனே அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இந்த வாசல்களில் இருந்து அழைக்கப்படும் ஒருவருக்கு (வேறுவாசல் வழியாகச் செல்ல வேண்டிய) அவசியம் இராது. (ஏனெனில், எந்த வழியிலாவது அவர் சொர்க்கம் சென்றுவிடுவார். இருந்தாலும்,) அந்தத் தலைவாயில்கள் ஒவ்வொன்றிலிருந்தும் எவராவது அழைக்கப்படுவாரா?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம். அவர்களில் நீங்களும் ஒருவராக இருக்க வேண்டுமென்று நான் எதிர்பார்க்கிறேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1864 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எவர் அல்லாஹ்வின் பாதையில் ஒரு ஜோடிப் பொருட்களைச் செலவிட்டாரோ அவரைச் சொர்க்கத்தின் காவலர்கள் அழைப்பார்கள். ஒவ்வொரு வாசலின் காவலர்களும் "இன்ன மனிதரே! இங்கே வாரும்!' என்று அழைப்பார்கள்" என்று கூறினார்கள். இதைக்கேட்ட அபூபக்ர் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே! இப்படிப்பட்டவருக்குக் கவலையே கிடையாது (எந்த வாசல் வழியாகவும் அவர் சொர்க்கத்தினுள் நுழையலாம்)" என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்களில் நீங்களும் ஒருவராக இருக்கவேண்டுமென நான் எதிர்பார்க்கிறேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1865 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "இன்று உங்களில் நோன்பு நோற்றிருப்பவர் யார்?" என்று கேட்டார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள் "நான்' என்றார்கள். "இன்றைய தினம் உங்களில் ஜனாஸாவை (பிரேதம்) பின்தொடர்ந்து சென்றவர் யார்?" என்று கேட்டார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள் "நான்' என்றார்கள். "இன்றைய தினம் ஓர் ஏழைக்கு உணவளித்தவர் உங்களில் யார்?" என்று அவர்கள் கேட்க, அதற்கும் அபூபக்ர் (ரலி) அவர்கள் "நான்' என்றார்கள். "இன்றைய தினம் ஒரு நோயாளியை உடல் நலம் விசாரித்தவர் உங்களில் யார்?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்

கேட்க, அதற்கும் அபூபக்ர் (ரலி) அவர்கள் "நான்' என்றார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எந்த மனிதர் (நல்லறங்களான) இவை அனைத்தையும் மொத்தமாகச் செய்தாரோ அவர் சொர்க்கத்தில் நுழையாமல் இருப்பதில்லை" என்றார்கள்.

## பாடம் : 28 அறவழியில் தாராளமாகச் செலவிடும்படி வந்துள்ள தூண்டலும், எண்ணி எண்ணிச் செலவழிப்பது விரும்பத்தக்கதல்ல என்பதும்.

1866 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "(தாராளமாக நல்வழியில்) செலவழிப்பாயாக. (அல்லது "(ஈகை மழை) பொழிவாயாக' அல்லது "அள்ளி வழங்குவாயாக'). எண்ணி எண்ணி(ச் செலவழித்து)க்கொண்டிராதே. அப்படிச் செய்தால்,அல்லாஹ்வும் உனக்கு எண்ணி எண்ணியே தருவான்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் பின்வருமாறு இடம் பெற்றுள்ளது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அள்ளி வழங்குவாயாக.(அல்லது "(ஈகை மழை) பொழிவாயாக' அல்லது "செலவழிப்பாயாக'). எண்ணி எண்ணி(ச் செலவழித்து)க் கொண்டிராதே. (அப்படிச் செய்தால்) அல்லாஹ்வும் உனக்கு எண்ணியே தருவான். கஞ்சத்தனமாகப் பையில் (முடிந்து) வைத்துக் கொள்ளாதே. அவ்வாறு செய்தால் அல்லாஹ்வும் உன் விஷயத்தில் (தனது அருள் வளங்களைப் பொழியாமல் தனது) பையை முடிந்து வைத்துக்கொள்வான்.
- மேற்கண்ட ஹதீஸ் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1867 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று "அல்லாஹ்வின் தூதரே! எனக்கு (என் கணவர்) ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி) அவர்கள் அளித்ததைத் தவிர வேறு செல்வம் எதுவும் கிடையாது. அவர் அளிப்பவற்றில் சிலவற்றை நான் தர்மம் செய்தால் அது குற்றமாகுமா?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உன்னால் இயன்ற அளவு சிறிதளவேனும் தர்மம் செய். கஞ்சத்தனமாக பையில் (முடிந்து) வைத்துக்கொள்ளாதே. அவ்வாறு செய்தால் அல்லாஹ்வும் உன் விஷயத்தில் (தன் அருள் வளங்களைப் பொழியாமல் தனது) பையை முடிந்து வைத்துக்கொள்வான்" என்று பதிலளித்தார்கள்.
இதை அப்பாத் பின் அப்தில்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 29 சிறிதளவாயினும் தர்மம் செய்யுமாறு வந்துள்ள தூண்டலும், அற்பமாகக் கருதி சிறிதளவைத் தர்மம் செய்ய மறுக்கலாகாது என்பதும்.**

1868 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"முஸ்லிம் பெண்களே! (உங்களில்) எந்தப் பெண்ணும் தன் அண்டை வீட்டுக்காரிக்கு ஓர் ஆட்டின் கால் குளம்பை (அன்பளிப்பாக) அளித்தாலும் அதை அவள் அற்பமாகக் கருத வேண்டாம்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 30 இரகசியமாகத் தர்மம் செய்வதன் சிறப்பு.**

1869 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் தனது (அரியணையின்) நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத (மறுமை) நாளில் தனது நிழலில் ஏழு பேருக்கு நிழல் அளிப்பான்:
1. நீதி மிக்க ஆட்சியாளர்.
2. இறைவழிபாட்டிலேயே வளர்ந்த இளைஞன்.
3. பள்ளிவாசல்களுடன் (எப்போதும்) தொடர்பு வைத்துக்கொள்ளும் இதயமுடையவர்.
4. இறைவனுக்காகவே நேசித்து, அவனுக்காகவே இணைந்து, அவனுக்காகவே பிரிந்த இருவர்.
5. தகுதியும் அழகும் உடைய ஒரு பெண் தம்மை(த் தவறுசெய்ய) அழைத்தபோதும் "நான் அல்லாஹ்விற்கு அஞ்சுகிறேன்' என்று கூறியவர்.
6. தமது இடக்கரம் செய்த தர்மத்தை வலக்கரம்கூட அறியாத வகையில் இரகசியமாகத் தர்மம் செய்தவர்.
7. தனிமையில் அல்லாஹ்வை நினைத்து (அவனது அச்சத்தால்) கண்ணீர் சிந்திய மனிதர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து, அல்லது அபூசயீத் அல் குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "பள்ளிவாசலிலிருந்து புறப்பட்டுச் சென்றாலும் திரும்பி வரும்வரை அதனுடனேயே தொடர்பு வைத்துக்கொள்ளும் இதயமுடையவர்" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 31 உடல் நலத்தோடும் பணத்தேவையோடும் இருப்பவர் செய்யும் தர்மமே மிகச் சிறந்த தர்மம் ஆகும்.**

1870 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! மகத்தான தர்மம் எது?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் உடல் நலமுள்ளவராகவும், பணத்தேவை உள்ளவராகவும், வறுமையை அஞ்சி, செல்வத்தை எதிர்பார்த்தவராகவும் இருக்கும்போது நீங்கள் செய்யும் தர்மமமே (மகத்தான தர்மம் ஆகும்). உயிர் தொண்டைக்குழியை அடைந்துவிட்டிருக்க, இன்ன மனிதருக்கு இவ்வளவு (கொடுங்கள்); இன்ன மனிதருக்கு இவ்வளவு (கொடுங்கள்)' என்று சொல்லும்

(நேரம் வரும்)வரை தர்மம் செய்வதைத் தள்ளிப்போடாதீர்கள்! ஏனெனில், அப்போது உங்கள் செல்வம் (வாரிசாகிய) இன்ன மனிதருக்கு உரியதாகிவிட்டிருக்கும்" என்று பதிலளித்தார்கள்.

1871 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! மகத்தான நன்மையுடைய தர்மம் எது?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உம்முடைய தந்தைமீது அறுதியாக! அது குறித்து நிச்சயம் உமக்கு விளக்கமளிக்கப்படும். நீங்கள் உடல் நலமுள்ளவராகவும், பணத்தேவை உடையவராகவும், வறுமையை அஞ்சியவராகவும் நீண்டநாள் வாழவேண்டுமென எதிர்பார்த்தவராகவும் இருக்கும்போது, நீங்கள் செய்யும் தர்மமே (மகத்தான நன்மை தரக்கூடியதாகும்). உயிர் தொண்டைக்குழியை அடைந்துவிட்டிருக்க, இன்ன மனிதருக்கு இவ்வளவு (கொடுங்கள்); இன்ன மனிதருக்கு இவ்வளவு (கொடுங்கள்)' என்று சொல்லும் (நேரம் வரும்)வரை தர்மம் செய்வதைத் தள்ளிப்போடாதீர்கள்! (ஏனெனில்,) அப்போது உங்கள் செல்வம் (வாரிசாகிய) இன்ன மனிருக்கு உரியதாகிவிட்டிருக்கும்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஒரு மனிதர் "தர்மத்தில் சிறந்தது எது?' என்று கேட்டார்" என ஹதீஸ் தொடங்குகிறது.

பாடம் : 32 மேல் கைதான் கீழ் கையைவிடச் சிறந்ததாகும். மேல்கை என்பது கொடுக்கக் கூடியதும், கீழ் கை என்பது வாங்கக்கூடியதும் ஆகும்.

1872 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீதிருந்தபடி தர்மம் செய்வது, பிறரிடம் கையேந்தாமல் தன்மானத்துடன் இருப்பது ஆகியவற்றைப் பற்றி உபதேசித்தார்கள். அப்போது "மேலிருக்கும் கை கீழிருக்கும் கையைவிடச் சிறந்ததாகும். மேல் கை என்பது கொடுக்கக்கூடியதும், கீழ் கை என்பது யாசிக்கக்கூடியதும் ஆகும்" என்று குறிப்பிட்டார்கள்.

1873 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தேவைபோக எஞ்சியதைக் கொடுப்பதே "தர்மத்தில் சிறந்தது' அல்லது "நல்ல தர்மம்' ஆகும். மேல் கை, கீழ் கையைவிடச் சிறந்ததாகும். உங்கள் குடும்பத்தாரிலிருந்தே (உங்களது தர்மத்தைத்) தொடங்குங்கள்.
இதை ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1874 ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம் (தர்மம்) கேட்டேன். அவர்கள் எனக்குக் கொடுத்தார்கள். பிறகும் நான் அவர்களிடம் கேட்டேன். அவர்கள் எனக்குக் கொடுத்தார்கள். மீண்டும் அவர்களிடம் நான் கேட்டேன். எனக்குக் கொடுத்தார்கள். பிறகு "இந்தச் செல்வம் பசுமையானதும் இனிமையானதும் ஆகும். யார் இதைப் (பேராசையின்றி) நல்ல எண்ணத்துடன் பெறுகிறாரோ அவருக்கு அதில் வளம் (பரக்கத்) வழங்கப்படும். யார் மனத்தை அலையவிட்டு(ப் பேராசையுடன்) இதை எடுத்துக்கொள்கிறாரோ அவருக்கு அதில் வளம் வழங்கப்படுவதில்லை. அவர் உண்ட பின்பும் வயிறு நிரம்பாதவரைப் போன்றவராவார். மேல் கைதான் கீழ்க் கையைவிடச் சிறந்ததாகும்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1875 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதமின் மகனே! (மனிதனே!) உன் தேவைபோக எஞ்சியதை நீ தர்மம் செய்வதே உனக்கு நல்லதாகும். அதை (யாருக்கும் கொடுக்காமல்) இறுக்கிவைப்பது உனக்குத் தீமையாகும். தேவையுள்ள அளவு சேமித்துவைத்தால் நீ பழிக்கப்படமாட்டாய். உன் வீட்டாரிலிருந்தே உனது தர்மத்தைத் தொடங்கு. மேல் கைதான் கீழ்க் கையைவிடச் சிறந்ததாகும்.
இதை அபூஉமாமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 33 யாசிப்பதற்கு வந்துள்ள தடை

1876 அப்துல்லாஹ் பின் ஆமிர் அல்யஹ்ஸபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஆவியா (ரலி) அவர்கள், "மக்களே! (வரைமுறையின்றி) நபிமொழிகளை அறிவிப்பது குறித்து உங்களை நான் எச்சரிக்கிறேன். ஆனால், உமர் (ரலி) அவர்கள் காலத்தில் இருந்துவந்த நபிமொழிகளைத் தவிர. ஏனெனில், உமர் (ரலி) அவர்கள் வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ்வின் (மார்க்கம்) விஷயத்தில் (பொய்யுரைப்பதிலிருந்து) மக்களைப் பயமுறுத்திவந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், 'அல்லாஹ் எவருக்கு நன்மை நாடுகின்றானோ அவரை மார்க்கத்தில் விளக்கமுள்ளவராக ஆக்குகின்றான். நான் கருவூலக் காவலன் மட்டுமே. ஒருவருக்கு நான் மனப்பூர்வமாகக் கொடுத்தால், அவருக்கு அதில் வளம் வழங்கப்படும். ஒருவர் யாசித்ததை முன்னிட்டு, அல்லது அவரது பேராசையைக் கண்டு அவருக்கு நான் கொடுத்தால், அவர் உண்டாலும் வயிறு நிரம்பாதவரைப் போன்றவர் ஆவார்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

1877 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தர்மம் கேட்டு (என்னை) நச்சரிக்காதீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் ஒருவர் என்னிடம் ஏதேனும் (தர்மம்) கேட்டு,அதை நான் வெறுத்த நிலையில் அவர் என்னிடம் கேட்டது அவருக்குக் கிடைத்தால், அதில் அவருக்கு வளம் வழங்கப்படுவதில்லை.
இதை முஆவியா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் வஹ்ப் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்களை ஸன்ஆவில் (யமன்) உள்ள அவரது இல்லத்தில் சந்தித்தேன். அப்போது அவர்கள் தமது இல்லத்தில் இருந்த வாதுமைக் கொட்டையை எனக்கு வழங்கினார்கள். அவர்களின் சகோதரரிடமிருந்து இந்த ஹதீஸை எனக்கு அறிவித்தார்கள்.

1878 முஆவியா (ரலி) அவர்கள் தமது உரையில் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்லாஹ் எவருக்கு நன்மை நாடுகிறானோ அவரை மார்க்கத்தில் விளக்கமுள்ளவராக ஆக்குகிறான். நான் பங்கிடுபவன் மட்டுமே. அல்லாஹ்தான் கொடுக்கிறான்" என்று சொல்ல நான் கேட்டேன்.
இதை ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 34 (உண்மையான) ஏழை (மிஸ்கீன்) யாரென்றால், எந்தச் செல்வத்தையும் அவன் பெற்றிராததோடு, அவனது நிலையை அறிந்து அவனுக்குத் தர்மமும் வழங்கப்படுவதில்லை.

1879 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஓரிரு கவளம் உணவை, அல்லது ஓரிரு பேரீச்சம் பழங்களைப் பெறுவதற்காக இவ்வாறு மக்களிடம் அலைபவன் ஏழையல்லன்" என்று கூறினார்கள். மக்கள், "அப்படியானால் ஏழை என்றால் யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(தன் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள) எந்தச் செல்வத்தையும் அவன் பெற்றிருக்கமாட்டான்; அவனது நிலையை அறிந்து அவனுக்குத் தர்மமும் வழங்கப்படுவதில்லை. தானும் வலியச்சென்று மக்களிடம் கேட்கமாட்டான் (அவனே உண்மையான ஏழை)" என்று விடையளித்தார்கள்.

1880 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓரிரு கவளம் உணவுக்காக, அல்லது ஓரிரு பேரீச்சம் பழங்களுக்காக அலைபவன் ஏழையல்லன். ஏழை என்பவன் (தன் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளப் பிறரிடம் கேட்க வெட்கப்பட்டு) தன்மானத்துடன் நடந்து கொள்பவனே ஆவான். நீங்கள் விரும்பினால், "அவர்கள் மக்களிடம் (எதையும்) வற்புறுத்திக் கேட்கமாட்டார்கள்" (2:273) எனும் இறை வசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்தள்ளது.

## பாடம் : 35 மக்களிடம் யாசிப்பது வெறுக்கப்பட்டதாகும்.

1881 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யாசிப்பதையே வழக்கமாகக் கொண்டவர், தமது முகத்தில் சதைத்துண்டு ஏதும் இல்லாதவராகவே (மறுமை நாளில்) அல்லாஹ்வைச் சந்திப்பார்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் ("சதைத் துண்டு' என்பதில்) "துண்டு' எனும் சொல் இடம்பெறவில்லை.

1882 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களிடம் யாசிப்பதையே வழக்கமாகக் கொண்ட மனிதன், தனது முகத்தில் சதைத் துண்டு ஏதும் இல்லாதவனாகவே மறுமை நாளில் வருவான்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1883 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அதிகம் பொருள் சேர்ப்பதற்காக மக்களிடம் யாசிப்பவன், (நரகின்) நெருப்புக் கங்கையே யாசிக்கிறான்; அவன் குறைவாக யாசிக்கட்டும்; அல்லது அதிகமாக யாசிக்கட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1884 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் காலையில் ஒரு கயிற்றை எடுத்துக்கொண்டு (சென்று), விறகு வெட்டி அதைத் தமது முதுகில் சுமந்து (விற்றுப் பிழைத்து), மக்களிடம் கையேந்தாமல் தன்னிறைவுடன் (சுயமரியாதையுடன்) வாழ்வதும் அதைத் தர்மம் செய்வதும், ஒரு மனிதனிடம் யாசிப்பதைவிடச் சிறந்ததாகும். அவருக்கு அவன் கொடுத்தாலும் சரி; மறுத்தாலும் சரி. மேலிருக்கும் கை,கீழிருக்கும் கையைவிடச் சிறந்ததாகும். மேலும், உனது வீட்டாரிலிருந்தே உனது தர்மத்தைத் தொடங்கு.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "உங்களில் ஒருவர் காலையில் ஒரு கயிற்றை எடுத்துக்கொண்டு (சென்று), விறகு வெட்டி அதைத் தமது முதுகில் சுமந்து விற்பது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது.

1885 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் விறகுக்கட்டு ஒன்றைத் தமது முதுகில் சுமந்து விற்(றுப் பிழைப்)பதானது, ஒரு மனிதனிடம் யாசிப்பதைவிடச் சிறந்ததாகும். அவருக்கு அவன் கொடுக்கவும் செய்யலாம்; மறுக்கவும் செய்யலாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1886 அவ்ஃப் பின் மாலிக் அல்அஷ்ஜஈ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒன்பது பேர், அல்லது எட்டுப் பேர், அல்லது ஏழு பேர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள் "நீங்கள் அல்லாஹ்வின் தூதரிடம் உறுதிமொழி அளிக்கக்கூடாதா?" என்று கேட்டார்கள். அது நாங்கள் உறுதிமொழி அளித்திருந்த புதிதாகும். எனவே, "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் முன்பே உறுதிமொழி

அளித்துவிட்டோம்" என்று கூறினோம். பின்னர் அவர்கள் "நீங்கள் அல்லாஹ்வின் தூதரிடம் உறுதிமொழி அளிக்கக்கூடாதா?" என்று (மீண்டும்) கேட்டார்கள். "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் (ஏற்கெனவே) உறுதிமொழி அளித்துவிட்டோம்" என்று நாங்கள் (திரும்பவும்) கூறினோம். பின்னர் (மூன்றாவது முறையாக) "நீங்கள் அல்லாஹ்வின் தூதரிடம் உறுதிமொழி அளிக்கக்கூடாதா?" என்று கேட்டபோது,நாங்கள் எங்கள் கைகளை நீட்டி "அல்லாஹ்வின் தூதரே! தங்களிடம் நாங்கள் உறுதிமொழி அளிக்கிறோம். எதற்காக நாங்கள் தங்களிடம் உறுதிமொழி அளிக்கவேண்டும்?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "அல்லாஹ் ஒருவனையே நீங்கள் வழிபட வேண்டும்; அவனுக்கு எதையும் இணையாக்கக் கூடாது; ஐவேளைத் தொழுகைகளைத் தொழவேண்டும்; எனக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் (என்று உறுதிமொழி அளியுங்கள்)" என்று கூறிவிட்டு, (அடுத்த) ஒரு வார்த்தையை மெதுவாகச் சொன்னார்கள்: "மக்களிடம் எதையும் (கைநீட்டி) யாசிக்கக்கூடாது" என்றும் உறுதிமொழி கேட்டார்கள். (அவ்வாறே நாங்களும் உறுதிமொழி அளித்தோம்.) பிறகு அ(வ்வாறு உறுதியளித்த)வர்களில் சிலரை நான் பார்த்திருக்கிறேன். அவர்களில் ஒருவரது சாட்டை (வாகனத்தின் மேலிருந்து) விழுந்தால்கூட அதை யாரிடமும் எடுத்துத் தருமாறு அவர்கள் கேட்டதில்லை.

இதன் அறிவிப்பாளரான அபூமுஸ்லிம் அல்கவ்லானீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த ஹதீஸை நம்பிக்கைக்குரிய நேசர் ஒருவர் எனக்கு அறிவித்தார். அவர் எனது நேசத்திற்கு உரியவர்; அவர் என்னிடம் நம்பிக்கைக்குரியவர். (அவர்தாம்) அவ்ஃப் பின் மாலிக் அல்அஷ்ஜஈ (ரலி).

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 36 யார் யாசிக்கலாம்?

1887 கபீஸா பின் முகாரிக் அல்ஹிலாலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் (மற்றொருவர் செலுத்த வேண்டிய) ஓர் இழப்பீட்டுத் தொகைக்குப் பொறுப்பேற்றுக் கொண்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஏதேனும் கேட்பதற்காகச் சென்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தர்மப் பொருட்கள் நம்மிடம் வரும்வரை இங்கேயே இருங்கள். அதில் ஏதேனும் உங்களுக்குத் தரச்சொல்கிறோம்" என்று கூறினார்கள். பிறகு (பின்வருமாறு) கூறினார்கள்:

கபீஸா! மூன்று பேருக்கு மட்டுமே யாசிக்க அனுமதி உண்டு. ஒருவர் மற்றவரது ஈட்டுத் தொகைக்குப் பொறுப்பேற்றுக்கொண்டவர். அவர் அத்தொகையை (உரியவரிடம் ஒப்படைப்பதற்காக அதைப்) பெறுகின்றவரை யாசிக்கலாம். பிறகு (யாசிப்பதை) நிறுத்திக்கொள்ள வேண்டும். மற்றொருவர் (இயற்கைச்) சேதம் ஏற்பட்டு செல்வங்களை இழந்தவர். அவர் "வாழ்க்கையின் அடிப்படையை' அல்லது "வாழ்க்கையின் அவசியத் தேவையை' அடைந்துகொள்ளும்வரை யாசிக்கலாம். இன்னொருவர் வறுமைக்கு ஆட்பட்டவர். அவருடைய கூட்டத்தாரில் (அவரைப் பற்றி) விவரம் தெரிந்த மூவர் முன் வந்து, "இன்ன மனிதர் வறுமைக்கு ஆட்பட்டுள்ளார்" என்று (சாட்சியம்) கூறுகின்றனர் என்றால், அவர் "வாழ்க்கையின் அடிப்படையை' அல்லது "வாழ்க்கையின் அவசியத் தேவையை' அடைகின்றவரை யாசிப்பது அவருக்குச் செல்லும். கபீஸா! இவையன்றி மற்ற

யாசகங்கள் யாவும் தடைசெய்யப்பட்டவையே (ஹராம்) ஆகும். (இம்மூன்று காரணங்களின்றி ஒருவர் யாசித்துச் சாப்பிட்டால்) அவர் தடைசெய்யப்பட்டதையே (ஹராம்) சாப்பிடுகிறார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 37 ஆசையோடு எதிர்பார்க்காமலும், யாசிக்காமலும் ஒருவருக்கு வழங்கப்பட்டால் அதை அவர் பெற்றுக்கொள்ளலாம்.

1888 உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு நன்கொடை வழங்கும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். (அப்போதெல்லாம்) நான் "என்னைவிட அதிகத் தேவையுடையவருக்கு இதைக் கொடுங்களேன்" என்று சொல்வேன். (ஒருமுறை இவ்வாறு) அவர்கள் எனக்குப் பொருள் ஒன்றைக் கொடுத்தபோது "என்னைவிட அதிகத் தேவையுடையவருக்கு இதைக் கொடுங்கள்" என்று நான் சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை நீங்கள் வாங்கிக்கொள்ளுங்கள். இந்தச் செல்வத்திலிருந்து எது நீங்கள் ஆசையோடு எதிர்பார்க்காமலும் நீங்களாகக் கேட்காமலும் உங்களிடம் வருகிறதோ அதை (மறுக்காமல்) பெற்றுக்கொள்ளுங்கள். இ(வ்வாறு ஏதும் கிடைக்கவி)ல்லையாயின், நீங்களாக அதைத் தேடிச் செல்லாதீர்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1889 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களுக்கு நன்கொடை வழங்கும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், "என்னைவிட அதிகத் தேவை உள்ளவருக்கு இதைக் கொடுத்துவிடுங்கள்" என்று கூறுவார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை வாங்கி உடைமையாக்கிக் கொள்ளுங்கள்; அல்லது தர்மம் செய்துவிடுங்கள். நீங்கள் ஆசையோடு எதிர்பார்க்காமலும் நீங்களாகக் கேட்காமலும் இந்தச் செல்வத்திலிருந்து உங்களிடம் எது வருகிறதோ அதை நீங்கள் வாங்கிக்கொள்ளுங்கள். அப்படி வராவிட்டால் அதைத் தேடி நீங்களாகச் செல்லாதீர்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸின் அறிவிப்பாளரான சாலிம் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
இதனால்தான் (என் தந்தை) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் யாரிடமும் எதையும் கேட்கமாட்டார்கள். தாமாக முன்வந்து வழங்கப்பட்டால் அதை மறுக்கவுமாட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

1890 அப்துல்லாஹ் பின் அஸ்ஸாஇதீ அல்மாலிகீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் என்னை ஸகாத் வசூலிக்கும் அதிகாரியாக நியமித்தார்கள். நான் அந்தப் பணியை முடித்துவிட்டு (வந்து), உமர் (ரலி) அவர்களிடம் ஸகாத் பொருட்களை ஒப்படைத்தபோது எனக்கு ஊதியம் கொடுக்க உத்தரவிட்டார்கள்.

அப்போது நான், "நான் இந்த வேலையை அல்லாஹ்விற்காகவே செய்தேன். எனக்குரிய ஊதியம் அல்லாஹ்விடமே உள்ளது" என்று சொன்னேன். அதற்கு உமர் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: (நீங்களாகக் கேட்காமல்) உங்களுக்கு (ஏதேனும்) வழங்கப் பட்டால், அதை நீங்கள் பெற்றுக்கொள்ளுங்கள். ஏனென்றால், நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் ஸகாத் வசூலிப்பவனாக இருந்தேன். அதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு ஊதியம் வழங்கினார்கள். நீங்கள் சொன்னதைப் போன்றே நானும் சொன்னேன். அப்போது என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீங்களாகக் கேட்காமல் ஏதேனும் உங்களுக்கு (நீங்கள் செய்த பணிக்காக) வழங்கப்பட்டால் அதை நீங்கள் (வாங்கி) உட்கொள்ளுங்கள்; தர்மமும் செய்யுங்கள்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அஸ்ஸாஇதீ அல்மாலிகீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 38 உலக(ஆதாய)த்தின் மீது பேராசை கொள்வது விரும்பத்தக்கதன்று.

1891 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முதியவரின் மனம்கூட இரண்டை நேசிப்பதில் இளமையாகவே உள்ளது:
1, இம்மை வாழ்வின் மீதுள்ள ஆசை.
2, பொருளாசை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1892 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முதியவரின் மனம்கூட இரண்டை நேசிப்பதில் இளமையாகவே உள்ளது:
1. நீண்ட நாள் வாழ வேண்டும் என்ற ஆசை. 2. பொருளாசை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1893 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதமின் மகன் (மனிதன்) முதுமையை அடையும்போதும் அவனது இரு குணங்கள் மட்டும் இளமையாகவே இருக்கும்:
1. பொருளாசை. 2. (நீண்ட) ஆயுள்மீதுள்ள ஆசை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து இன்னும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 39 ஒரு மனிதனுக்கு இரு ஓடைகள் (நிறைய செல்வம்) இருந்தாலும் மூன்றாவது ஓடையை அவன் எதிர்பார்ப்பான்.**

1894 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதமின் மகனுக்கு (மனிதனுக்கு) இரு ஓடைகள் (நிரம்ப) செல்வம் இருந்தாலும் மூன்றாவது ஓடையை அவன் தேடுவான். மனிதனின் வாயை (சவக் குழியின்) மண்ணைத் தவிர வேறெதுவும் நிரப்பாது. (இது போன்ற பேராசையிலிருந்து) திருந்தி பாவமன்னிப்புக் கோரி மீண்டுவிட்டவரின் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக்கொள்கிறான்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "(மேற்கண்டவாறு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன். (இந்த வாசகம் அல்லாஹ்விடமிருந்து) அருளப்பெற்ற இறைவசனமா, அல்லது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிவந்த பொன்மொழியா என்று எனக்குத் தெரியாது" என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

1895 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதமின் மகனுக்குத் தங்கத்தாலான ஒரு நீரோடை இருந்தாலும், (அதைப் போன்று) மற்றொரு நீரோடையும் இருக்க வேண்டுமென்று அவன் ஆசைப்படுவான்.அவனது வாயை (சவக்குழியின்) மண்ணைத் தவிர வேறெதுவும் நிரப்பாது. (இது போன்ற பேராசையிலிருந்து) திருந்தி பாவமன்னிப்புக் கோரி மீண்டுவிட்டவரின் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்

1896 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதமின் மகனுக்கு (மனிதனுக்கு) ஒரு நீரோடை நிறைய செல்வம் இருந்தாலும் அதனுடன் அதைப்போன்ற மற்றொரு நீரோடை தனக்கு இருக்க வேண்டுமென்றே அவன் விரும்புவான். அவனது மனத்தை (சவக்குழியின்) மண்ணைத் தவிர வேறெதுவும் நிரப்பாது. (இது போன்ற பேராசையிலிருந்து) திருந்தி பாவமன்னிப்புக் கோரி மீண்டுவிட்டவரின் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக்கொள்கிறான்.
இதன் அறிவிப்பாளரான இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த வாசகம் குர்ஆனில் உள்ளதா, அல்லது இல்லையா என்று எனக்குத் தெரியாது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இந்த வாசகம் குர்ஆனில் உள்ளதா என்று எனக்குத் தெரியாது' என்று (மட்டும்) இடம்பெற்றுள்ளது. (இவ்வாறு) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாகக் காணப்படவில்லை.

1897 அபுல் அஸ்வத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் பஸ்ரா (இராக்) நகரத்திலுள்ள குர்ஆன் அறிஞர்களிடம் (அவர்களை அழைத்து வருமாறு) ஆளனுப்பினார்கள். (அவர்களது அழைப்பை ஏற்று) குர்ஆனைக் கற்றறிந்த முன்னூறு பேர் அவர்களிடம் வந்தார்கள். அப்போது அவர்களிடம் அபூமூசா (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
பஸ்ராவாசிகளிலேயே நீங்கள்தாம் சிறந்தவர்கள் ஆவீர்கள்; அவர்களிலேயே குர்ஆனை நன்கறிந்தவர்களும் ஆவீர்கள். எனவே, (தொடர்ந்து) குர்ஆனை ஓதிவாருங்கள். காலம் நீண்டுவிட்ட போது உங்களுக்கு முன் வாழ்ந்த (வேதம் அருளப்பெற்ற சமுதாயத்த)வர்களின் உள்ளங்கள் இறுகிவிட்டதைப் போன்று உங்களுடைய உள்ளங்களும் இறுகிவிட வேண்டாம். நாங்கள் (நபி (ஸல்) அவர்களது காலத்தில்) ஓர் அத்தியாயத்தை ஓதிவந்தோம்; நீளத்திலும் கடுமை(யான எச்சரிக்கை விடுக்கும் தோரணை)யிலும் "பராஅத்' எனப்படும் (9ஆவது) அத்தியாயத்திற்கு நிகராக அதை நாங்கள் கருதினோம். ஆனால், அந்த அத்தியாயத்தை நான் மறக்கச் செய்யப்பட்டுவிட்டேன். ஆயினும், அதில் "ஆதமின் மகனுக்கு (மனிதனுக்கு) இரு ஓடைகள் (நிரம்ப) செல்வம் இருந்தாலும் மூன்றாவது ஓடையை அவன் தேடுவான். ஆதமின் மகனுடைய வயிற்றை (சவக்குழியின்) மண்ணைத் தவிர வேறெதுவும் நிரப்பாது" எனும் வசனத்தை நான் நினைவில் வைத்துள்ளேன். மேலும், மற்றோர் அத்தியாயத்தையும் நாங்கள் ஓதிவந்தோம். அதை (சப்பஹ, யுசப்பிஹு, சப்பிஹ் என) இறைத்துதியில் தொடங்கும் அத்தியாயங்களில் ஒன்றுக்கு நிகராகவே நாங்கள் கருதினோம். அந்த அத்தியாயத்தையும் நான் மறக்கச்செய்யப்பட்டுவிட்டேன். ஆயினும்,அதில் "நம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் செய்யாததை ஏன் சொல்கிறீர்கள்? (அவ்வாறு நீங்கள் செய்யாததைப் பிறருக்குச் சொல்வீர்களாயின்) அது உங்களுக்கு எதிரான சாட்சியாக உங்களுடைய கழுத்துகளின் மீது எழுதப்படும். பின்னர் மறுமை நாளில் அது குறித்து நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள்" எனும் வசனத்தை நான் நினைவில் வைத்துள்ளேன். (இந்த அத்தியாயங்கள் பின்னர் மாற்றப்பட்டுவிட்டன.)

## பாடம் : 40 வாழ்க்கை வசதிகள் அதிகமாக இருப்பது செல்வமன்று.

1898 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வாழ்க்கை வசதிகள் அதிகமாக இருப்பது செல்வமன்று; மாறாக, போதுமென்ற மனமே (உண்மையான) செல்வமாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 41 இவ்வுலகத்தின் கவர்ச்சி குறித்து அஞ்சுதல்.

1899 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து (சொற்பொழிவு மேடைமீது) நின்று மக்களுக்கு உரையாற்றினார்கள். அப்போது, "மக்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் உங்களுக்காக வெளிப்படுத்தும் இவ்வுலகின் கவர்ச்சிப் பொருட்க(ளான கனிமப் பொருட்கள், ஆடை அணிகலன்கள், பயிர்வகை)களைத் தான் உங்கள் விஷயத்தில் நான்

அதிகம் அஞ்சுகிறேன்" என்று கூறினார்கள். அப்போது ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! (செல்வம் எனும்) நன்மை தீமையை உருவாக்குமா?" என்று கேட்டார். அதற்கு (பதிலளிக்காமல்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறிது நேரம் மௌனமாக இருந்தார்கள். பிறகு (அந்த மனிதரிடம்) "என்ன கேட்டீர்கள்?" என்றார்கள். அதற்கு அவர், "அல்லாஹ்வின் தூதரே, நன்மை தீமையை உருவாக்குமா என்று கேட்டேன்" என்றார்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நன்மையால் நன்மையே விளையும். ஆனால், இ(ந்தக் கவர்ச்சியான)து ஒரு நன்மையா? வசந்த காலத்தில் விளைகின்ற (பயிர்கள்) ஒவ்வொன்றும் (கால்நடைகளை,) வயிறு புடைக்கத் தின்னவைத்துக் கொன்றுவிடுகின்றன; அல்லது கொல்லும் அளவிற்குச் சென்றுவிடுகின்றன; (அப்போதுதான் துளிர்விட்ட) பசும் புற்களைத் தின்னும் கால்நடையைத் தவிர. (அது மடிவதில்லை. ஏனெனில்,) அது (பசும் புல்லைத்) தின்று வயிறு நிரம்பிவிடும்போது, (அசைபோடுவதற்காகச்) சூரியனை நோக்கி(ப் படுத்து)க்கொள்கிறது. (இதனால் நன்கு சீரணமாகி குழைவு நிலையில்) சாணமிடுகின்றது. அல்லது சிறுநீரை வெளியேற்றுகிறது. பின்னர் (வயிறு காலியானவுடன் மீண்டும் மேய்ந்துவிட்டு வந்து) அசைபோடுகின்றது. பிறகு (வயிறு காலியானவுடன்) மறுபடியும் சென்று மேய்கிறது. (அவ்வாறுதான்) யார் ஒரு செல்வத்தை உரிய முறையில் எடுத்துக் கொள்கிறாரோ அவருக்கு அதில் வளம் (பரகத்) வழங்கப்படும். யார் ஒரு செல்வத்தை முறையற்ற வழிகளில் எடுத்துக்கொள்கிறாரோ அவர் உண்டும் வயிறு நிரம்பாதவரைப் போன்றவர் ஆவார்" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1900 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவன் உங்களுக்காக வெளிப்படுத்தும் இவ்வுலகின் கவர்ச்சிப் பொருட்களைத்தான் உங்கள் விஷயத்தில் நான் அதிகம் அஞ்சுகிறேன்" என்று கூறினார்கள். அப்போது மக்கள், "இவ்வுலகின் கவர்ச்சிப் பொருட்கள் எவை, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(கனிமப் பொருட்கள், ஆடை அணிகலன்கள், பயிர் வகைகள் ஆகிய) பூமியின் வளங்கள்(தாம் அவை)" என்று பதிலளித்தார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! நன்மை தீமையை உருவாக்குமா?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நன்மையால் நன்மையே விளையும். நன்மையால் நன்மையே விளையும். நன்மையால் நன்மையே விளையும். வசந்த காலத்தில் விளைகின்ற (பயிர்கள்) ஒவ்வொன்றும் (கால் நடைகளை), வயிறு புடைக்கத் தின்ன வைத்துக் கொன்றுவிடுகின்றன; அல்லது கொல்லும் அளவுக்குக் கொண்டுசென்றுவிடுகின்றன; பசுமையான புல்லைத் தின்னும் கால்நடையைத் தவிர. (அது மடிவதில்லை. ஏனெனில்,) அது (புல்லைத்) தின்று வயிறு நிரம்பிவிடும்போது, சூரியனை நோக்கி(ப் படுத்துக்கொண்டு) அசைபோடுகின்றது. (இதனால் நன்கு சீரணமாகி குழைவு நிலையில்) சிறுநீரையும் வெளியேற்றி சாணமுமிடுகிறது. பின்னர் (வயிறு காலியானவுடன்) மீண்டும் சென்று மேய்கிறது.

இந்த (உலகின்) செல்வம் பசுமையானதும் இனிமையானதுமாகும். யார் அதை உரிய முறையில் சம்பாதித்து உரிய முறையில் செலவிடுகிறாரோ அவருக்கு அது நல்லுதவியாக

அமையும். யார் அதை முறையற்ற வழிகளில் சம்பாதிக்கிறாரோ அவர் உண்டும் வயிறு நிரம்பாதவரைப் போன்று இருக்கிறார்" என்று கூறினார்கள்.

1901 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், சொற்பொழிவு மேடைமீது அமர்ந்தார்கள். அவர்களைச் சுற்றி நாங்களும் அமர்ந்தோம். அப்போது அவர்கள் "எனக்குப் பின், உங்களிடையே இவ்வுலகின் கவர்ச்சியும் அதன் அலங்காரங்களும் தாராளமாகத் திறந்து விடப்படுவதானது, உங்கள் விஷயத்தில் நான் அஞ்சுகின்றவற்றில் ஒன்றாகும்" என்று கூறினார்கள். அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! (செல்வம் எனும்) நன்மை தீமையை உருவாக்குமா?" என்று கேட்டார். அதற்கு (பதிலளிக்காமல்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சிறிது நேரம்) மௌனமாக இருந்தார்கள். அப்போது அந்த மனிதரிடம் "உமக்கு என்ன ஆயிற்று? நீர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பேச்சுக் கொடுக்கிறீர். ஆனால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களோ உம்மிடம் பேசாமலிருக்கிறார்களே!" என்று கேட்கப்பட்டது. (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மௌனம் தொடருவதைக் கண்ட)நாங்கள் அவர்களுக்கு இறைஅறிவிப்பு (வஹீ) அருளப்படுகிறது என்று கருதினோம். பிறகு அவர்கள் இயல்பு நிலைக்கு வந்து தம்மீதிருந்த வியர்வைத் துளிகளைத் துடைத்துவிட்டு, "இந்தக் கேள்வி கேட்டவர் (எங்கே?)" என்று (அவரைப் பாராட்டுவதைப் போல) கேட்டார்கள். பின்னர், ""நன்மையால் நன்மையே விளையும். வசந்த காலத்தில் விளைகின்ற (பயிர்கள்) ஒவ்வொன்றும் (கால்நடைகளை), வயிறு புடைக்கத் தின்ன வைத்துக் கொன்றுவிடுகின்றன; அல்லது கொல்லும் அளவிற்குச் சென்றுவிடுகின்றன. பச்சைப் புற்களைத் தின்னும் கால்நடையைத் தவிர. (அது மடிவதில்லை. ஏனெனில்,) அது (பச்சைப் புற்களைத்) தின்று வயிறு நிரம்பிவிடும்போது, சூரியனை நேராக நோக்கி(ப் படுத்துக்கொண்டு அசை போடுகின்றது); சாணமிட்டு சிறுநீரும் கழிக்கின்றது. பின்னர் (வயிறு காலியானவுடன் மீண்டும் சென்று) மேய்கிறது.
இந்த (உலகின்) செல்வம் இனிமையும் பசுமையும் உடையதாகும். ஒரு முஸ்லிம் தமது செல்வத்திலிருந்து ஏழைகளுக்கும் அநாதைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் கொடுத்துக் கொண்டிருக்கும்வரை அ(வரது செல்வமான)து அவருக்குச் சிறந்த தோழனாகும்.-(இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்) அல்லது அவர்கள் கூறியதைப் போன்று.- யார் முறையற்ற வழிகளில் செல்வத்தை எடுத்துக்கொள்கின்றாரோ அவர் உண்டும் வயிறு நிரம்பாதவரைப் போன்றவர் ஆவார். மேலும், மறுமை நாளில் அந்தச் செல்வம் அவருக்கு எதிரான சாட்சியாக அமையும்" என்று கூறினார்கள்.

## பாடம் : 42 சுயமரியாதை மற்றும் பொறுமையின் சிறப்பு.

1902 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (பசிக்கு உணவும், செலவுக்குப் பண(மும்) கேட்டார்கள். அவர்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கொடுத்தார்கள். பிறகு (மீண்டும் மீண்டும்) அவர்கள் கேட்டபோதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கொடுத்தார்கள். இறுதியாக, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்

இருந்த அனைத்தும் (கொடுத்துத்) தீர்ந்துவிட்டபோது, "என்னிடத்தில் உள்ள எந்தச் செல்வத்தையும் உங்களுக்கு வழங்காமல் நான் சேமித்து வைக்கப்போவதில்லை. (இருப்பினும்,) யார் சுயமரியாதையோடு நடந்துகொள்கிறாரோ அவரை அல்லாஹ் தன்மானத்துடன் வாழச்செய்வான். யார் பிறரிடம் தேவையாகாமல் (தன்னிறைவுடன்) இருக்கிறாரோ அவரை அல்லாஹ் தன்னிறைவு உள்ளவராக ஆக்குவான். யார் (இன்னல்களைச்) சகித்துக்கொள்கிறாரோ அவருக்கு அல்லாஹ் (மேலும்) சகிப்புத் தன்மையை வழங்குவான். பொறுமையைக் காட்டிலும் மேலான விசாலமானதோர் அருட்கொடை வேறெதுவும் எவருக்கும் வழங்கப்படுவதில்லை" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 43 போதுமான வாழ்வாதாரமும் போதுமென்ற மனமும்.

1903 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் முஸ்லிமாகி போதுமான வாழ்வாதாரம் வழங்கப்பட்டு, அல்லாஹ் வழங்கியதைப் போதுமெனக் கருதினாரோ அவர் (வாழ்க்கையில்) வெற்றி பெற்றுவிட்டார்.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1904 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"இறைவா! முஹம்மதின் குடும்பத்தாருக்குப் பசியைத் தணிக்கத் தேவையான உணவை வழங்குவாயாக' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 44 அருவருப்பாகப் பேசியும் கடுஞ்சொற்களைப் பயன்படுத்தியும் கேட்டவருக்கும் வழங்குவது.

1905 உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சிலருக்குத் தானப்பொருட்களை) பங்கிட்டுக் கொடுத்தார்கள். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே, அல்லாஹ்வின் மீதாணையாக! இவர்களைவிட இவர்கள் அல்லாத மற்றவர்களே இ(ந்தப் பொருட்களைப் பெறுவ)தற்கு மிகவும் தகுதியுடையவர்கள்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவர்கள் அருவருப்பாகப் பேசி, அல்லது என்னைக் கஞ்சன் என்று சொல்லி என்னிடம் கேட்கும் அளவிற்கு என்னைக் கொண்டுவந்து நிறுத்திவிட்டார்கள். ஆனால், நான் கஞ்சன் அல்லன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1906 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நடந்துகொண்டிருந்தேன். அப்போது அவர்கள் தடித்த கரையுள்ள நஜ்ரான் (யமன்) நாட்டு சால்வை ஒன்றைப் போர்த்தியிருந்தார்கள். அப்போது கிராமவாசி ஒருவர் அவர்களை அடைந்து, அந்தச் சால்வையை வேகமாக இழுத்தார். அந்தக் கிராமவாசி வேகமாக இழுத்ததால் சால்வையின்

ஓரப்பகுதி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கழுத்தின் ஒரு மூலையில் (காயப்படுத்தி) அடையாளம் பதித்துவிட்டிருந்ததை நான் கண்டேன். பிறகு அவர், "முஹம்மதே! உங்களிடமுள்ள அல்லாஹ்வின் செல்வத்திலிருந்து எனக்குக் கொடுக்கும்படி கட்டளையிடுங்கள்" என்று சொன்னார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரைத் திரும்பிப் பார்த்துச் சிரித்துவிட்டு, பிறகு அவருக்கு நன்கொடை வழங்குமாறு உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், இக்ரிமா பின் அம்மார் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பிறகு அந்தக் கிராமவாசி அந்தச் சால்வையை வேகமாக இழுத்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அவர்மீது கோபப்படாமல்) தமது நெஞ்சை அந்தக் கிராமவாசிக்கு நேராகத் திருப்பினார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
ஹம்மாம் பின் யஹ்யா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவர் வேகமாக இழுத்தபோது சால்வை (இரண்டாகக்) கிழிந்துவிட்டது. அதன் ஓர் ஓரம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கழுத்திலேயே இருந்தது" என்று இடம் பெற்றுள்ளது.

1907 மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ("கபா' எனும்) மேலங்கிகளை(த் தம் தோழர்களுக்கு)ப் பங்கிட்டார்கள். (ஆனால், என் தந்தை) மக்ரமா (ரலி) அவர்களுக்கு எதையும் கொடுக்கவில்லை. ஆகவே, மக்ரமா (ரலி) அவர்கள் (என்னிடம்), "அன்பு மகனே! (என்னோடு வா!) நாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் செல்வோம்" என்று சொல்ல, அவர்களுடன் நான் சென்றேன். (அங்கு சென்று சேர்ந்ததும்) "நீ உள்ளே போய் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை என்னிடம் அழைத்து வா" என்று சொன்னார்கள். நான் அவ்வாறே மக்ரமா (ரலி) அவர்களிடம் வரும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அழைத்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்ரமா (ரலி) அவர்களிடம் புறப்பட்டு வந்தார்கள். அப்போது அவர்களிடம் அந்த அங்கிகளில் ஒன்று இருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்களுக்காக இதை நான் பத்திரப்படுத்தி வைத்தேன்" என்று சொன்னார்கள். மக்ரமா (ரலி) அவர்கள் அந்த அங்கியைக் கூர்ந்து பார்த்துவிட்டு, "மக்ரமா திருப்தி அடைந்து விட்டான்" என்று சொன்னார்கள்.

1908 மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்கு சில மேலங்கிகள் வந்தன. என்னிடம் என் தந்தை மக்ரமா (ரலி) அவர்கள், "(என்னோடு வா!) நாம் நபி (ஸல்) அவர்களிடம் செல்வோம். அவர்கள் நமக்கு அவற்றிலிருந்து எதையேனும் தருவார்கள்" என்று கூறினார்கள். என் தந்தை (நபியவர்களின் வீட்டு) வாசலருகே நின்று பேசினார்கள். நபி (ஸல்) அவர்கள் அவரது குரலைப் புரிந்து கொண்டு, தம்முடன் ஓர் அங்கியை எடுத்துக்கொண்டு, அதன் நிறைகளைக் காட்டியபடி வெளியே வந்தார்கள். அப்போது அவர்கள் "உங்களுக்காக இதை நான் பத்திரப்படுத்தி வைத்தேன்; உங்களுக்காக இதை நான் பத்திரப்படுத்தி வைத்தேன்" என்று கூறினார்கள்.

**பாடம் : 45 ஒருவரது இறைநம்பிக்கை (ஈமான்) குறித்து அஞ்சப்படும்போது அவருக்கு (பொருளாதார உதவிகள்) வழங்குதல்.**

1909 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஒரு குழுவினரிடையே அமர்ந்திருந்தபோது, அக்குழுவினருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தர்மப் பொருட்களை) வழங்கினார்கள். ஆனால், அக்குழுவினரில் எனக்குப் பிடித்த ஒருவருக்கு ஏதும் கொடுக்காமல் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விட்டுவிட்டார்கள். ஆகவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எழுந்து சென்று, "அல்லாஹ்வின் தூதரே! (அவரை ஏன் விட்டுவிட்டீர்கள்?) அவர்மீது உங்களுக்கு என்ன (அதிருப்தி)? அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் ஓர் இறைநம்பிக்கையாளர் (முஃமின்) என நான் அறிவேன்" என்று இரகசியமாகக் கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரை முஸ்லிம் (வெளித்தோற்றத்தில் இறைநம்பிக்கையாளர்) என்று சொல்" என்றார்கள். சிறிதுநேரம் நான் அமைதியாக இருந்தேன். பின்னர், நான் அவரைப் பற்றி அறிந்திருந்த விஷயங்கள் என்னையும் அறியாமல் (என் நாவில்) வந்துவிடவே, "அல்லாஹ்வின் தூதரே! அவர்மீது உங்களுக்கு என்ன (அதிருப்தி)? அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் ஓர் இறைநம்பிக்கையாளர் என்று நான் அறிவேன்" என்று (மீண்டும்) கூறினேன். அதற்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரை முஸ்லிம் என்று சொல்" என்றார்கள். சிறிதுநேரம் நான் அமைதியாக இருந்தேன். தொடர்ந்து, நான் அவரைப் பற்றி அறிந்திருந்த விஷயங்கள் என்னையும் அறியாமல் (என் நாவில்) வந்துவிடவே, "அல்லாஹ்வின் தூதரே! அவர்மீது உங்களுக்கு என்ன (அதிருப்தி)? அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் ஓர் இறைநம்பிக்கையாளர் என்று நான் அறிவேன்" என்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரை முஸ்லிம் என்று சொல்" நான் ஒருவருக்குக் கொடுக்கிறேன்; ஆனால்,மற்றொருவர் இவரைவிட என் அன்புக்குரியவராய் இருப்பார். (அப்படியிருந்தும் அவருக்கு நான் கொடுப்பதற்குக்) காரணம், (நான் ஏதும் கொடுக்காதிருந்தால் வறுமையால் அவர் குற்றமேதும் இழைத்து, அதனால்) அவர் நரகத்தில் முகம் குப்புற வீழ்த்தப்படுவாரோ எனும் அச்சம்தான்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் ஹசன் பின் அலீ அல் ஹுல்வானீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், சஅத் (ரலி) அவர்கள் இரண்டு முறை அவ்வாறு கேட்டதாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், (மூன்று முறை கேட்டு பதிலுரைத்த பின்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது கழுத்திற்கும் தோளிற்கும் இடையில் அடித்து, "சஅதே! (என்னிடம் வழக்காடி) மோத வருகின்றீர்களா? நான் ஒருவருக்குக் கொடுக்கிறேன்..." என்று கூறியதாக இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 46 இஸ்லாத்துடன் உள்ளங்கள் இணக்கமாக்கப்பட வேண்டிய (புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய)வர்களுக்கு வழங்குவதும்,இறைநம்பிக்கை வலுவாக உள்ளவர்கள் (விட்டுக்கொடுத்து) பொறுமை காப்பதும்.

1910 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ், தன் தூதர் (ஸல்) அவர்களுக்கு "ஹவாஸின்' குலத்தாரின் செல்வத்தை (போரின்றி வெற்றிப் பரிசாக) அளித்தபோது,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய) சில குறைஷியருக்கு நூறு ஒட்டகங்களைக் கொடுக்கலானார்கள். அப்போது அன்சாரிகளில் சிலர் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அல்லாஹ் மன்னிப்பானாக! (எதிரிகளான) குறைஷிகளின் இரத்தம் நம் வாட்களில் சொட்டிக் கொண்டிருக்க, (நமக்குக் கொடுக்காமல்) இவர்களுக்குக் கொடுக்கிறார்களே; ஆனால், (தியாகங்கள் பல புரிந்த) நம்மை விட்டுவிடுகின்றார்களே!" என்று (கவலையுடன்) சொன்னார்கள்.
அவர்களின் இந்தப் பேச்சு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. இதையொட்டி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிகளுக்கு ஆளனுப்பி அவர்களைப் பதனிடப்பட்ட தோலாலான ஒரு கூடாரத்தில் ஒன்றுதிரட்டினார்கள். அவர்கள் ஒன்றுகூடியதும் அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து, "உங்களைக் குறித்து எனக்கு எட்டியுள்ள செய்தி என்ன? (உண்மைதானா?)" என்று கேட்க, அன்சாரிகளிலிருந்த விவரமானவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! எங்களில் கருத்துடைய (தலை)வர்கள் எதுவும் சொல்லவில்லை. எங்களில் இளவயதுடைய மக்கள் சிலர்தாம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அல்லாஹ் மன்னிப்பானாக! நம்முடைய வாட்களில் குறைஷிகளின் இரத்தம் சொட்டிக்கொண்டிருக்க, நம்மை விட்டுவிட்டு அவர்களுக்குக் கொடுக்கிறார்களே!' என்று பேசிக்கொண்டனர்" என்று கூறினார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைமறுப்பை விட்டு இப்போதுதான் புதிதாக இஸ்லாத்தில் இணைந்த சிலருக்கு நான் கொடுக்கிறேன். (அதன் வாயிலாக இஸ்லாத்தில் அசையாத நம்பிக்கையையும் ஒட்டுறவையும் ஏற்படுத்தி) அவர்களது உள்ளங்களுடன் நான் இணக்கம் ஏற்படுத்துகிறேன். மக்கள் உலகச்செல்வங்களை எடுத்துக்கொண்டு செல்ல, நீங்கள் உங்கள் இல்லங்களுக்கு இறைத்தூதரையே கொண்டுசெல்வதை விரும்பமாட்டீர்களா? அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் பெற்றுத் திரும்பும் செல்வங்களைவிட நீங்கள் பெற்றுத்திரும்புவதே சிறந்ததாகும்" என்று சொன்னார்கள். உடனே அன்சாரிகள், "ஆம், அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் (எங்களுடன் உங்களைக் கொண்டுசெல்வதையே) விரும்புகிறோம்" என்று சொன்னார்கள். அப்போது அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "விரைவில் (உங்களைவிடப் பிறருக்கு ஆட்சியதிகாரத்தில்) அதிகமாக முன்னுரிமை வழங்கப்படுவதைக் காண்பீர்கள். ஆகவே, அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் (மறுமையில்) நீங்கள் சந்திக்கும்வரை பொறுமையாயிருங்கள். ஏனெனில், அன்று நான் (எனக்கு வழங்கப்படவுள்ள சிறப்புப் பரிசான "அல்கவ்ஸர்' எனும்) தடாகத்தின் அருகே இருப்பேன்" என்று சொன்னார்கள். அதற்கு அன்சாரிகள், "நாங்கள் பொறுமையாக இருப்போம்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் "அல்லாஹ், தன் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஹவாஸின் குலத்தாரின் செல்வங்களை வெற்றிப் பரிசாக அளித்தபோது" என்று ஹதீஸ் தொடங்குகிறது. ஆயினும், இறுதியில் "ஆனால், நாங்கள் பொறுமையாக இருக்கவில்லை" என்றே இடம் பெற்றுள்ளது. மேலும், "இளவயதுடைய மக்கள்' என்றுதான் இடம்பெற்றுள்ளது. (எங்களில் இளவயதுடைய மக்கள்' என்று இடம்பெறவில்லை.)
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் மேற்கண்ட (1910ஆவது) ஹதீஸில் உள்ளதைப் போன்றே "நாங்கள் பொறுமையாக இருப்போம்" என்று அன்சாரிகள் கூறியதாகவே இடம்பெற்றுள்ளது.

1911 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிகளை ஒன்றுதிரட்டி, "உங்களிடையே உங்களுடைய கூட்டத்தார் (அன்சாரிகள்) அல்லாத மற்றவர்கள் எவரேனும் (இங்கு வந்து) இருக்கிறாரா?" என்று கேட்டார்கள். அதற்கு அன்சாரிகள், "எங்கள் சகோதரி ஒருத்தியின் புதல்வர் ஒருவரைத் தவிர (மற்றவர்) வேறெவருமில்லை" என்று பதிலளித்தார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒரு சமுதாயத்தாரின் சகோதரி புதல்வர் அவர்களைச் சேர்ந்தவரே!' என்று கூறிவிட்டு, "குறைஷியர் அறியாமைக் காலத்திலிருந்தும் துன்பங்களிலிருந்தும் விடுபட்டு இப்போது தான் இஸ்லாத்தில் இணைந்திருக்கிறார்கள். அவர்களுக்கு ஆறுதல் அளிக்கவும் அவர்களுடன் இணக்கத்தை ஏற்படுத்தவும் விரும்பினேன். (அதனால்தான் அவர்களுக்குக் கொடுத்தேன்.) மக்கள் உலகச் செல்வங்களைப் பெற்றுக்கொண்டு தம் வீடுகளுக்குத் திருமபிச்செல்ல, நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களையே பெற்றுக்கொண்டு உங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் செல்வதை விரும்பவில்லையா? மக்கள் ஒரு கணவாயில் நடந்து செல்ல, அன்சாரிகள் வேறொரு கணவாயில் சென்றால் நான் அன்சாரிகளின் கணவாயிலேயே செல்வேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1912 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கா வெற்றி கொள்ளப்பட்டபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறைஷியரிடையே போர்ச்செல்வங்களைப் பங்கிட்டார்கள். அப்போது அன்சாரிகள் (சிலர்), "இந்த விஷயம் எங்களுக்கு ஆச்சரியத்தை அளிக்கிறது. எதிரிகளின் இரத்தம் எங்களின் வாட்களில் சொட்டிக்கொண்டிருக்க, எங்களுக்குச் சேரவேண்டிய போர்ச்செல்வங்கள் (புதிய முஸ்லிம்களான) குறைஷியரிடையே திருப்பிவிடப்படுகின்றன" என்று பேசிக்கொண்டனர். இந்த விஷயம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, அன்சாரிகளை (ஒரு கூடாரத்தினுள்) ஒன்று திரட்டி, "உங்களைக் குறித்து எனக்கு எட்டிய செய்தி என்ன? (உண்மைதானா?)" என்று கேட்டார்கள். அதற்கு அன்சாரிகள் "உங்களுக்கு எட்டியது உண்மைதான்" என்று பதிலளித்தனர். –அன்சாரிகள் பொய் பேசாதவர்களாய் இருந்தனர்– அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மக்கள் உலகச்செல்வங்களைப் பெற்றுக்கொண்டு தம் வீடுகளுக்குத் திரும்பிச்செல்ல, நீங்கள் அல்லாஹ்வின் தூதரைப் பெற்றுக்கொண்டு உங்கள் வீடுகளுக்குத் திரும்பிச்செல்வதை விரும்பவில்லையா? மக்கள்

ஒரு கணவாயிலோ பள்ளத்தாக்கிலோ நடந்து செல்ல, அன்சாரிகள் வேறொரு கணவாயிலோ பள்ளத்தாக்கிலோ நடந்துசென்றால், நான் அன்சாரிகளின் கணவாயிலேயே அல்லது அன்சாரிகளின் பள்ளத்தாக்கிலேயே செல்வேன்" என்று சொன்னார்கள்.

1913 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹுனைன் போரின்போது (எதிரிகளான) "ஹவாஸின்' குலத்தாரும் "கத்ஃபான்' குலத்தாரும் தம் குழந்தை குட்டிகளுடனும் கால்நடைகளுடனும் (இஸ்லாமியப் படையினரை) நோக்கி வந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்களுடன் (அறப்) போராளிகள் பத்தாயிரம் பேரும் (மக்கா வெற்றியின்போது) மன்னிப்பு அளிக்கப்பட்டவர்களும் இருந்தனர். அவர்கள் (அனைவரும் எதிரிகளின் தாக்குதலைத் தாக்குப்பிடிக்க முடியாமல்) நபி (ஸல்) அவர்களைத் தனியாக விட்டுவிட்டுப் பின்வாங்கிச் சென்றனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் இருமுறை அழைப்பு விடுத்தார்கள்; அவ்விரண்டுக்குமிடையே வேறெதுவும் பேசாமல் (தொடர்ச்சியாக) அழைத்தார்கள். தமது வலப்பக்கம் திரும்பி "அன்சாரிகளே!' என்று அழைக்க, அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இதோ வந்துவிட்டோம். நற்செய்தி பெறுங்கள்; நாங்கள் உங்களுடன்தான் இருக்கிறோம்" என்று கூறினர். பிறகு தம் இடப்பக்கம் திரும்பி, "அன்சாரிகளே!' என்று அழைத்தார்கள். அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே! இதோ வந்துவிட்டோம். நற்செய்தி பெறுங்கள்; நாங்கள் உங்களுடன்தான் இருக்கிறோம்" என்று கூறினர். அப்போது நபி (ஸல்) அவர்கள் வெள்ளைக் கோவேறு கழுதையின் மீது இருந்தார்கள். பிறகு அதிலிருந்து இறங்கி, "நான் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவேன்" என்று சொன்னார்கள். பிறகு (அந்தப் போரில் ஹவாஸின் மற்றும் ஃகத்ஃபான் குலத்தைச் சேர்ந்த) இணைவைப்பாளர்கள் தோல்வி கண்டதால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிகமான போர்ச்செல்வங்களைப் பெற்றார்கள்; அவற்றை முஹாஜிர்களிடையேயும் (மக்கா வெற்றியின்போது) மன்னிப்பு அளிக்கப் பட்டவர்களிடையேயும் பங்கிட்டார்கள். அன்சாரிகளுக்கு எதையும் கொடுக்கவில்லை.
ஆகவே, அன்சாரிகள் (சிலர்), "கடுமையான பிரச்சினை என்றால் நாங்கள் அழைக்கப்படுகிறோம். போர்ச் செல்வங்களோ மற்றவர்களுக்குக் கொடுக்கப்படுகின்றன" என்று (மனக்குறையுடன்) பேசிக்கொண்டனர். இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, நபி (ஸல்) அவர்கள் அன்சாரிகளை ஒரு கூடாரத்தில் ஒன்று கூட்டி, "அன்சாரிகளே! உங்களைக் குறித்து எனக்கு எட்டிய செய்தி என்ன? (உண்மைதானா?)" என்று கேட்டார்கள். அவர்கள் (அதை ஒப்புக்கொள்வதைப் போன்று) மௌனமாயிருந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அன்சாரிகளே! மக்கள் உலகச் செல்வத்தைத் தங்களுடன் கொண்டுசெல்ல, நீங்கள் (இறைத்தூதர்) முஹம்மதை உடைமையாக்கிக் கொண்டு உங்கள் இல்லங்களுக்குச் செல்வதை நீங்கள் விரும்பவில்லையா?" என்று கேட்டார்கள். அன்சாரிகள், "ஆம், அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் (அதையே) விரும்புகிறோம்" என்று பதிலளித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "மக்களெல்லாம் ஒரு பள்ளத்தாக்கில் செல்ல, அன்சாரிகள் மட்டும் ஒரு கணவாயில் செல்வார்களாயின், நான் அன்சாரிகள் செல்லும் கணவாயையே தேர்ந்தெடுப்பேன்" என்று சொன்னார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹிஷாம் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் (இதைத் தமக்கு அறிவித்த தம் பாட்டனாரான அனஸ் (ரலி) அவர்களிடம்), "அபூஹம்ஸா!

(இந்நிகழ்ச்சி நடைபெற்றபோது) தாங்கள் அங்கு இருந்தீர்களா?" என்று கேட்க, அனஸ் (ரலி) அவர்கள், "நான் நபி (ஸல்) அவர்களைவிட்டு எங்கே போவேன்?" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1914 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் மக்காவை வெற்றிகொண்டோம். பின்னர் ஹுனைனை நோக்கிப் போருக்காகப் புறப்பட்டோம். அப்போது (எதிரிகளான) இணைவைப்பாளர்கள் நான் பார்த்தவற்றிலேயே மிக அழகான முறையில் அணிவகுத்து வந்தனர். முதலில் குதிரைப் படைகள் நிறுத்தப்பட்டன. பிறகு காலாட்படையினரும் அதற்குப் பின் பெண்கள் அணியும் நிறுத்தப்பட்டது. பிறகு ஆடுகளும் பின்னர் இதர கால்நடைகளும் நிறுத்தப்பட்டன. அப்போது (எங்கள் அணியில்) அதிகமான வீரர்கள் இருந்தனர்; நாங்கள் ஆறாயிரம் பேர் இருந்தோம். எங்கள் சாலையோரக் குதிரைப்படைக்கு காலித் பின் வலீத் (ரலி) அவர்கள் (தளபதியாக) இருந்தார்கள். எங்கள் குதிரைப்படை எங்கள் முதுகுக்குப் பின்னால் திரும்பலாயிற்று. சிறிது நேரமே கழிந்திருக்கும்; அதற்குள் அவை எங்கள் (களத்திலிருந்து) விலகிச் செல்லத்தொடங்கின. எங்கள் (அணியிலிருந்த) கிராமவாசிகளும் நாங்கள் அறிந்த வேறு சிலரும் வெருண்டோடலாயினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஹாஜிர்களே, முஹாஜிர்களே' என்று அழைத்தார்கள். பின்னர் "அன்சாரிகளே, அன்சாரிகளே' என்று அழைத்தார்கள்.
-இது என் தந்தையின் சகோதரர்கள் (அல்லது என் கூட்டத்தார்) அறிவித்த தகவலாகும்–
அப்போது நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! தங்கள் அழைப்புக்குக் கீழ்படிந்தோம்" என்று கூறி(முன்னே வந்து எதிரிகளுடன் போரிடலா)னோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் முன்னேறினார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் எதிரிகளை நோக்கி முன்னேறிச் சென்றபோது, அல்லாஹ் எங்கள் எதிரிகளை தோல்வியுறச்செய்தான். (எதிரிகள் விட்டுச் சென்ற) அந்த(ப் போர்)ச் செல்வங்களை நாங்கள் கைப்பற்றினோம். பின்னர் தாயிஃப் (நகர மக்களை) நோக்கி நடந்து அவர்களை நாற்பது இரவுகள் முற்றுகையிட்டோம். பிறகு மக்காவிற்குத் திரும்பி வந்து (அங்கு) தங்கினோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களில்) ஒருவருக்கு நூறு ஒட்டகங்கள் (போர்ப் பரிசாக) வழங்கலானார்கள்.
மற்ற விவரங்கள் முந்தைய ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1915 ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹுனைன் போர்ச்செல்வங்களிலிருந்து) அபூசுஃப்யான் பின் ஹர்ப் (ரலி), ஸஃப்வான் பின் உமய்யா (ரலி), உயைனா பின் ஹிஸ்ன் (பின் பத்ர்-ரலி) மற்றும் அக்ரஉ பின் ஹாபிஸ் (ரலி) ஆகியோருக்குத் தலா நூறு ஒட்டகங்கள் கொடுத்தார்கள். அப்பாஸ் பின் மிர்தாஸ் (ரலி) அவர்களுக்கு அதைவிடக் குறைவாகவே கொடுத்தார்கள். அப்போது அப்பாஸ் பின் மிர்தாஸ் ரலி) அவர்கள் பின்வருமாறு கவி பாடினார்கள்:

எனது பங்கையும்
(என் குதிரை) உபைதின் பங்கையும்
உயைனாவுக்கும் அக்ரஉக்குமிடையே
பங்கிடுகிறீரா?
சபைகளில் மிர்தாஸை மிஞ்சுபவர்களாக
பத்ருமில்லை; ஹாபிஸும் இல்லை.
அவ்விருவரையும்விட
நான் குறைந்தவனுமில்லை.
யாரை இன்று நீர் தாழ்த்திவிட்டீரோ
அவர் உயர்த்தப்படப்போவதில்லை.
அப்போது அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நூறு ஒட்டகங்களை முழுமையாக்கி (வழங்கி)னார்கள்.

1916 மேற்கண்ட ஹதீஸ் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்கள் ஹுனைன் போரில் கிடைத்த செல்வங்களைப் பங்கிட்டார்கள். அப்போது அபூசுஃப்யான் பின் ஹர்ப் (ரலி) அவர்களுக்கு நூறு ஒட்டகங்கள் கொடுத்தார்கள்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மேலும் அதில், "அல்கமா பின் உலாஸா (ரலி) அவர்களுக்கும் நூறு ஒட்டகங்கள் வழங்கினார்கள்" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அல்கமா பின் உலாஸா (ரலி) அவர்களைப் பற்றியோ ஸஃப்வான் பின் உமய்யா (ரலி) அவர்களைப் பற்றியோ குறிப்பு இல்லை. மேலும், மேற்கண்ட கவிதையும் இடம்பெறவில்லை.

1917 அப்துல்லாஹ் பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹுனைன் போரில் வெற்றி கண்டபோது, போரில் கிடைத்த செல்வங்களைப் பங்கிட்டார்கள். அப்போது உள்ளங்கள் இணக்கமாக்கப்பட வேண்டிய (மக்கா வெற்றியின்போது புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய)வர்களுக்கு (மட்டும்) அவற்றைக் கொடுத்தார்கள். (அன்சாரிகளுக்கு எதுவும் கொடுக்கவில்லை.) அந்த மக்களுக்குக் கிடைத்ததைப் போன்று தமக்கும் கிடைக்கவேண்டுமென அன்சாரிகள் விரும்புகின்றார்கள் என்ற செய்தி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியது. இதையடுத்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து நின்று, அன்சாரிகளிடையே (அவர்களுக்கு ஆறுதலளிக்கும் விதமாக) உரையாற்றினார்கள்.
அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டுப் பிறகு, "அன்சாரிகளே! உங்களை வழிதவறியவர்களாக நான் கண்டேன்; அல்லாஹ் என் மூலமாக உங்களுக்கு நேர்வழி காட்டவில்லையா? நீங்கள் ஏழைகளாக இருந்தீர்கள். அல்லாஹ், என் மூலமாக உங்களைத் தன்னிறைவுடையவர்களாய் ஆக்கவில்லையா? நீங்கள் (இனவாதம் பேசி) பிரிந்து (சிதறிக்) கிடந்தீர்கள். அல்லாஹ் என் மூலமாக உங்களை இணக்கமாக்கவில்லையா?" என்று கேட்டார்கள். (தமது வருகையால் அன்சாரிகள் அடைந்த நன்மைகளை ஒவ்வொன்றாக

நபியவர்கள் சொல்லும்போதெல்லாம்) "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே அதிக உபகாரிகள்" என்று அன்சாரிகள் கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறிருக்க, எனக்கு நீங்கள் பதிலளிக்கமாட்டீர்களா?" என்று கேட்க, அன்சாரிகள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே மிகப்பெரும் உபகாரிகள்" என்று சொன்னார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்களும் விரும்பினால் இன்னின்னவாறு இன்னின்ன நேரத்தில் நடந்தது என்று (நீங்கள் எனக்குச் செய்த உதவிகளையும் பட்டியலிட்டுக்) கூறலாம்" என்று சில விஷயங்களைச் சொல்லிக்காட்டினார்கள்.
-அந்த விஷயங்கள் எவையெவை என்பதைத் தாம் மனனமிடவில்லை என இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அம்ர் பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.-
மேலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(புதிதாக இஸ்லாத்தை ஏற்றுள்ள) இந்த மக்கள் (நான் கொடுக்கும்) ஆடுகளையும் ஒட்டகங்களையும் (ஓட்டிக்) கொண்டுசெல்ல, நீங்கள் உங்கள் இல்லங்களுக்கு இறைவனின் தூதரையே (என்னையே) கொண்டுசெல்வதை விரும்பமாட்டீர்களா? அன்சாரி(களாகிய நீங்)கள் (மேனியுடன் ஒட்டிய) உள்ளாடைகள் போன்றவர்கள். மற்றவர்கள் மேலாடை போன்றவர்கள். ஹிஜ்ரத் (மார்க்கத்திற்காகப் பிறந்தகத்தைத் துறந்து செல்வது) மட்டும் நடந்திராவிட்டால், நான் அன்சாரிகளில் ஒருவனாயிருந்திருப்பேன். மக்களெல்லாம் ஒரு கணவாயிலும் பள்ளத்தாக்கிலும் நடந்து சென்றால், நான் அன்சாரிகள் செல்லும் கணவாயிலும் பள்ளத்தாக்கிலும்தான் செல்வேன். (அன்சாரிகளாகிய) நீங்கள் விரைவில் (ஆட்சியதிகாரத்தில்) உங்களைவிடப் பிறருக்கு முன்னுரிமை தரப்படுவதைக் காண்பீர்கள். ஆகவே, (எனக்குச் சிறப்புப் பரிசாக மறுமையில் கிடைக்கவிருக்கும் "ஹவ்ளுல் கவ்ஸர்' எனும்) தடாகம் அருகே என்னைச் சந்திக்கும்வரை பொறுமையுடன் இருங்கள்" என்று சொன்னார்கள்.

1918 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹுனைன் போரின் போது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கள் சிலருக்கு முன்னுரிமை (அளித்துப் போர்ச்செல்வங்களிலிருந்து அதிகமாக) வழங்கினார்கள். (புதிய முஸ்லிம்களில் ஒருவரான) அக்ரஉ பின் ஹாபிஸ் (ரலி) அவர்களுக்கு நூறு ஒட்டகங்களைக் கொடுத்தார்கள். உயைனா (பின் ஹிஸ்ன்-ரலி) அவர்களுக்கும் அதைப் போன்றே (நூறு ஒட்டகங்கள்) கொடுத்தார்கள். அரபுகளில் முக்கியமானவர்கள் சிலருக்கும் கொடுத்தார்கள். அன்றையதினம் அவர்களுக்கெல்லாம் பங்கீட்டில் முன்னுரிமை அளித்தார்கள். அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் மீது ஆணையாக இந்தப் பங்கீட்டில் நீதி வழங்கப்படவில்லை; அல்லாஹ்வின் திருப்தி நாடப்படவில்லை" என்று சொன்னார். உடனே நான், "இதை நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவிப்பேன்" என்று சொல்லிவிட்டு, அவர்களிடம் சென்று அவர் சொன்னதைத் தெரிவித்தேன். இதைக் கேட்டவுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முகம் சிவப்புச்சாயம் போல் மாறிவிட்டது. பிறகு "அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நீதியுடன் நடந்து கொள்ளாவிட்டால் வேறுயார் தாம் நீதியுடன் நடந்துகொள்வார்கள்? அல்லாஹ் (இறைத்தூதர்) மூசா (அலை) அவர்களுக்கு கருணை புரிவானாக! அவர்கள் இதைவிட அதிகமாக மனவேதனைக்கு ஆளாக்கப்பட்டார்கள். ஆயினும், (அதைச்) சகித்துக் கொண்டார்கள்" என்று கூறினார்கள்.

நான் "உறுதியாக! இனிமேல் எந்தச் செய்தியையும் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு செல்லமாட்டேன்" என்று சொன்னேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1919 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் போர்ச்செல்வங்களைப் பங்கிட்டார்கள். அப்போது ஒரு மனிதர், "இது இறைவனின் திருப்தி நாடப்படாத பங்கீடாகும்" என்று சொன்னார். நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று அவர் கூறியதை இரகசியமாகச் சொன்னேன். இதைக்கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கடுமையாகக் கோபப்பட்டார்கள்; (கோபத்தால்) அவர்களின் முகம் சிவந்துவிட்டது. அதை அவர்களிடம் சொல்லாமல் இருந்திருக்கலாமே என்று நான் எண்ணினேன். பிறகு அவர்கள் "(இறைத்தூதர்) மூசா (அலை) அவர்கள் இதைவிட அதிகமாக மனவேதனைக்கு உள்ளாக்கப்பட்டார்கள். ஆயினும்,அவர்கள் சகித்துக்கொண்டார்கள்" என்று கூறினார்கள்.

## பாடம் : 47 காரிஜிய்யாக்களும் அவர்களின் தன்மைகளும்.

1920 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹுனைன் போரை முடித்துத் திரும்பி வந்து கொண்டிருந்தபோது, அவர்களிடம் "ஜிஃரானா' எனுமிடத்தில் ஒரு மனிதர் வந்தார். பிலால் (ரலி) அவர்களது ஆடையில் வெள்ளி இருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதை அள்ளி மக்களுக்குக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அந்த மனிதர், "முஹம்மதே! நீதியுடன் நடந்து கொள்ளுங்கள்" என்று கூறினார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமக்குக் கேடுதான். நான் நீதியுடன் நடந்துகொள்ளாவிட்டால் வேறு யார்தாம் நீதியுடன் நடந்து கொள்வார்? நான் நீதியுடன் நடந்துகொள்ளாவிட்டால் நான் நஷ்டமடைந்துவிட்டேன்; இழப்பிற்குள்ளாகிவிட்டேன்" என்று கூறினார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், "என்னை விடுங்கள், அல்லாஹ்வின் தூதரே! இந்த நயவஞ்சகனின் தலையைக் கொய்துவிடுகிறேன்" என்று சொன்னார்கள். அதற்கு "அல்லாஹ் காப்பாற்றுவானாக! நான் என் தோழர்களையே கொலை செய்கிறேன் என்று மக்கள் பேசுவார்கள். இதோ இவரும் இவருடைய தோழர்களும் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களுடைய தொண்டைக் குழியைத் தாண்டி (உள்ளத்திற்குள்) செல்லாது. (வேட்டைக்காரனின்) அம்பு வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிலிருந்து (மறு பக்கமாக) வெளியேறிவிடுவதைப் போன்று அவர்கள் மார்க்கத்திலிருந்து (சுவடே தெரியாமல்) வெளியேறிவிடுவார்கள்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது
அவற்றில், "நபி (ஸல்) அவர்கள் போர்ச்செல்வங்களைப் பங்கிட்டார்கள்" என்று ஹதீஸ் தொடங்குகிறது.

1921 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அலீ (ரலி) அவர்கள் யமன் நாட்டிலிருந்து மண் அகற்றப்பட்டிராத தங்கக்கட்டி ஒன்றை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அனுப்பிவைத்தார்கள். அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நால்வரிடையே பங்கிட்டுவிட்டார்கள்: அக்ரஉ பின் ஹாபிஸ் அல்ஹன்ழலீ (ரலி), உயைனா பின் பத்ர் அல்ஃபஸாரீ (ரலி), பனூ கிலாப் குலத்தாரில் ஒருவரான அல்கமா பின் உலாஸா அல்ஆமிரீ (ரலி) மற்றும் பனூ நப்ஹான் குலத்தாரில் ஒருவரான ஸைத் அல்கைர் அத்தாயீ (ரலி) ஆகியோரே அந்நால்வரும்.
இதைக் கண்ட குறைஷி (முஸ்லிம்)கள் கோபமடைந்தனர். "நஜ்த்வாசிகளின் தலைவர்களுக்குக் கொடுக்கிறீர்கள்; எங்களை விட்டுவிடுகிறீர்களே!" என்று கேட்டனர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(புதிதாக இஸ்லாத்தைத் தழுவியுள்ள) அவர்களுடன் இணக்கத்தை ஏற்படுத்துவதற்காகவே நான் இவ்வாறு செய்தேன்" என்று கூறினார்கள்.
அப்போது அடர்த்தியான தாடி கொண்ட, கன்னங்கள் தடித்திருந்த, கண்கள் பஞ்சடைந்த, நெற்றி புடைத்திருந்த, தலைமுடி மழிக்கப்பட்டிருந்த மனிதர் ஒருவர் வந்து, "முஹம்மதே! அல்லாஹ்விற்கு அஞ்சுவீராக!" என்று கூறினார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நானே (அல்லாஹ்விற்கு) மாறுசெய்தால் வேறெவர்தாம் அவனுக்குக் கீழ்ப்படிவார்? பூமியில் வசிப்பவர்கள் விஷயத்தில் அவ(ர்களைப் படைத்த இறைவ)ன் என்மீது நம்பிக்கை வைத்திருக்க, நீங்கள் என்மீது நம்பிக்கை வைக்கமாட்டீர்களா?" என்று கேட்டார்கள். பின்னர் அந்த மனிதர் திரும்பிச் சென்றபோது, அங்கிருந்த மக்களில் ஒருவர் அவரைக் கொல்ல அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார். (அனுமதி கேட்டவர் காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்கள் என்றே கருதப்படுகிறது.) பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இ(வ்வாறு என்னிடம் பேசிய அ)ந்த மனிதரின் பரம்பரையிலிருந்து ஒரு சமுதாயத்தார் தோன்றுவர். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களுடைய தொண்டைக்குழிகளைத் தாண்டிச் செல்லாது; இஸ்லாமியர்களைக் கொல்வார்கள்: சிலை வணக்கம் செய்பவர்களை விட்டுவிடுவார்கள். (வேட்டைக்காரனின்) அம்பு வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிலிருந்து (மறுபக்கமாக) வெளியேறிவிடுவதைப் போன்று அவர்கள் இஸ்லாத்திலிருந்து வெளியேறிவிடுவார்கள். நான் அவர்க(ள் வாழும் நாட்க)ளை அடைந்தால் "ஆத்' கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போன்று அவர்களை நான் நிச்சயம் அழித்துவிடுவேன்" என்று சொன்னார்கள்.

1922 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கருவேல இலையால் பதனிடப்பட்ட தோல்பை ஒன்றில், மண் அகற்றப்பட்டிராத தங்கக்கட்டி ஒன்றை யமனிலிருந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அனுப்பிவைத்தார்கள். அதை நபி (ஸல்) அவர்கள் நால்வரிடையே பங்கிட்டார்கள்: உயைனா பின் ஹிஸ்ன் (ரலி), அக்ரஉ பின் ஹாபிஸ் (ரலி), ஸைத் அல்கைல் (ரலி). நான்காமவர் அல்கமா பின் உலாஸா (ரலி); அல்லது ஆமிர் பின் அத்துஃபைல் (ரலி).
அப்போது நபித்தோழர்களில் ஒருவர், "இதைப் பெறுவதற்கு இவர்களைவிடத் தகுதி வாய்ந்தவர்கள் நாம்தாம்" என்று கூறினார். இந்த விஷயம் நபி (ஸல்) அவர்களுக்கு

எட்டியது. அப்போது அவர்கள், "நான் வானத்திலுள்ளவனின் நம்பிக்கைக்குரியவனாயிருக்க, என்மீது நீங்கள் நம்பிக்கை வைக்கமாட்டீர்களா? காலையிலும் மாலையிலும் எனக்கு வானத்தின் செய்திகள் வந்தவண்ணமுள்ளன" என்று சொன்னார்கள். அப்போது கண்கள் பஞ்சடைந்த, கன்னங்கள் உப்பிய, நெற்றி புடைத்த,அடர்த்தியான தாடி கொண்ட, தலைமுடி மழிக்கப்பட்டிருந்த, கீழாடையை வரிந்து கட்டியிருந்த மனிதர் ஒருவர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்" என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள், "உமக்குக் கேடுதான். பூமியிலிருப்பவர்களில் அல்லாஹ்வை அஞ்சுவதற்கு நானல்லவா மிகவும் அருகதை வாய்ந்தவன்?" என்று கேட்டார்கள். பிறகு அந்த மனிதர் திரும்பிச் சென்றார். அப்போது காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நான் அவருடைய தலையைக் கொய்துவிடட்டுமா?" என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், "(அவரைக் கொல்ல) வேண்டாம். அவர் தொழக்கூடியவராக இருக்கலாம்" என்று சொன்னார்கள். அதற்கு காலித் (ரலி) அவர்கள், "எத்தனையோ தொழுகையாளிகள் தமது இதயத்தில் இல்லாததை நாவில் மொழிகின்றார்கள்" என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மக்களின் இதயங்களைத் துளையிட்டுப் பார்க்கவோ அவர்களின் வயிறுகளைக் கிழித்துப் பார்க்கவோ எனக்கு உத்தரவிடப்படவில்லை" என்று கூறினார்கள்.
பின்னர் திரும்பிச் சென்றுகொண்டிருந்த அந்த மனிதரைப் பார்த்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்த மனிதரின் பரம்பரையிலிருந்து ஒரு சமுதாயத்தார் தோன்றுவர். அவர்கள் அல்லாஹ்வின் வேதத்தை இனிமையாக ஓதுவார்கள். ஆனால், அது அவர்களுடைய தொண்டைக் குழிகளைத் தாண்டிச் செல்லாது. (வேட்டைக்காரனின்) அம்பு வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிலிருந்து (மறுபக்கமாக) வெளியேறி விடுவதைப் போன்று அவர்கள் மார்க்கத்திலிருந்து (சுவடே தெரியாமல்) வெளியேறிவிடுவார்கள்" என்று கூறினார்கள். "நான் அவர்க(ள் வாழும் நாட்க)ளை அடைந்தால் "ஸமூத்' கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போல அவர்களை நிச்சயம் அழித்துவிடுவேன்" என்று கூறியதாகவும் நான் எண்ணுகிறேன்.

1923 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "(அல்கமா பின் உலாஸாவா, அல்லது ஆமிர் பின் அத்துஃபைலா என்ற ஐயப்பாடின்றி) அல்கமா பின் உலாஸா என்றே இடம்பெற்றுள்ளது. ஆமிர் பின் அத்துஃபைல் (ரலி) அவர்களது பெயர் காணப்படவில்லை. மேலும் ("நெற்றி புடைத்த' என்பதைக் குறிக்க) "நாத்திஉல் ஜப்ஹா' எனும் சொற்றொடரே இடம்பெற்றுள்ளது. "நாஷிஸுல் ஜப்ஹா' எனும் சொற்றொடர் இல்லை.
மேலும், இந்த அறிவிப்பில், "அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் எழுந்து வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் அவரது தலையைக் கொய்துவிடட்டுமா?' என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வேண்டாம்' என்று கூறிவிட்டார்கள். பின்னர் அந்த மனிதர் திரும்பிச் சென்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "அல்லாஹ்வின் வாள்' (என்று சொல்லப்பட்ட) காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்கள் எழுந்து வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் அவரது தலையைக் கொய்துவிடட்டுமா?' என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வேண்டாம்' என்று கூறிவிட்டு, "இந்த மனிதரின் பரம்பரையிலிருந்து ஒரு

சமுதாயத்தார் தோன்றுவர். அவர்கள் அல்லாஹ்வின் வேதத்தை இனிமையாக, அநாயசமாக ஓதுவார்கள்" என்று கூறினார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
மேலும், "நான் அவர்க(ள் வாழும் நாட்க)ளை அடைந்தால் "ஸமூத்' கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போன்று அவர்களை நிச்சயம் அழித்துவிடுவேன்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக நான் கருதுகிறேன் என அறிவிப்பாளர் உமாரா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் வந்துள்ளது.

1924 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தத் தங்கக்கட்டியை நால்வரிடையே பங்கிட்டார்கள்: ஸைத் அல்கைர் (ரலி),அக்ரஉ பின் ஹாபிஸ் (ரலி), உயைனா பின் ஹிஸ்ன் (ரலி) மற்றும் அல்கமா பின் உலாஸா, அல்லது ஆமிர் பின் அத்துஃபைல் (ரலி) (ஆகியோரே அந்நால்வரும்)" என்று இடம்பெற்றுள்ளது.
மேலும், ("நெற்றி புடைத்த' என்பதைக் குறிக்க) "நாஷிஜுல் ஜப்ஹா' எனும் சொற்றொடரே இந்த அறிவிப்பிலும் ஆளப்பட்டுள்ளது.
இதில், "இந்த மனிதரின் பரம்பரையிலிருந்து ஒரு சமுதாயத்தார் தோன்றுவர்" என்பதும் இடம்பெற்றுள்ளது. "நான் அவர்க(ள் வாழும் நாட்க)ளை அடைந்தால் "ஸமூத்' கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போன்று அவர்களை நிச்சயம் (பூண்டோடு) அழித்துவிடுவேன்" எனும் குறிப்பு இந்த அறிவிப்பில் இல்லை.

1925 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் மற்றும் அதாஉ பின் யசார் (ரஹ்) ஆகியோர் கூறியதாவது:
நாங்கள் இருவரும் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடம் சென்று "ஹரூரிய்யா'க்கள் (காரிஜிய்யாக்கள்) குறித்துக் கேட்டோம். "அவர்களைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏதேனும் கூறியதை நீங்கள் கேட்டுள்ளீர்களா?" என்று வினவினோம். அதற்கு அபூசயீத் (ரலி) அவர்கள் கூறினார்கள்: "ஹரூரிய்யா'க்கள் யார் என்று எனக்குத் தெரியாது. ஆனால், (பின்வருமாறு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்:
இந்தச் சமுதாயத்தாரிடையே ஒரு கூட்டத்தார் புறப்படுவர். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இந்தச் சமுதாயத்தைவிட்டும்' என்று கூறாததைக் கவனத்தில் கொள்க.) அவர்களது தொழுகையுடன் உங்களது தொழுகையை ஒப்பிட்டுப் பார்த்து உங்களது தொழுகையை நீங்கள் அற்பமாகக் கருதுவீர்கள். அவர்கள் (அதிகமாகக்) குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின் தொண்டைக்குழிகளைத் தாண்டிச் செல்லாது. வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபக்கம்) வெளிப்பட்டுச் சென்றுவிடுவதைப் போன்று மார்க்கத்திலிருந்து அவர்கள் (சுவடே தெரியாமல்) வெளியேறிச் சென்றுவிடுவார்கள். அம்பெய்தவர் (அந்தப் பிராணியின் உடலைத் துளைத்து வெளிவந்ததற்கான அடையாளம் எதுவும் இருக்கிறதா என்று) அம்பின் முனையையும், (அம்பில்) அதன் முனையைப் பொருத்துவதற்குப் பயன்படும் நாணையும் பார்ப்பார். (அவற்றில் அடையாளம் எதையும் காணமாட்டார்.) அம்பின் முனையில் நாணைப் பொருத்தும் இடத்தில் இரத்தம் படிந்துள்ளதா என்றுகூட அவர் சந்தேகப்படுவார்.

1926 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ("ஹுனைன்') போரில் கிடைத்த செல்வங்களைப் பங்கிட்டுக்கொண்டிருந்தபோது அவர்களின் அருகே நாங்கள் இருந்தோம். அப்போது "பனூ தமீம்' குலத்தைச் சேர்ந்த "துல்குவைஸிரா' எனும் மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நீதியுடன் நடந்துகொள்ளுங்கள்" என்று சொன்னார். உடனே நபி (ஸல்) அவர்கள், "உனக்குக் கேடுதான். நான் நீதியுடன் நடந்துகொள்ளவில்லையென்றால் வேறு யார்தாம் நீதியுடன் நடந்துகொள்வார்? நான் நீதியுடன் நடந்துகொள்ளவில்லையென்றால் நான் இழப்புக்குள்ளாகி நஷ்டமடைந்துவிடுவேன்" என்று பதிலளித்தார்கள். உடனே உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இவரது விவகாரத்தில் எனக்கு அனுமதி கொடுங்கள். இவரது கழுத்தைக் கொய்துவிடுகிறேன்" என்று கேட்டார்கள்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவரை விட்டுவிடுங்கள். நிச்சயமாக, இவருக்குத் தோழர்கள் சிலர் இருக்கின்றார்கள். அவர்களது தொழுகையுடன் உங்களது தொழுகையையும், அவர்களது நோன்புடன் உங்களது நோன்பையும் ஒப்பிட்டுப் பார்த்து உங்களது தொழுகையையும் உங்களது நோன்பையும் அற்பமானவையாகக் கருதுவீர்கள். (அந்த அளவிற்கு அவர்களின் வழிபாடு அதிகமாக இருக்கும். ஆயினும்,) அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களது கழுத்தெலும்பை (தொண்டையை)த் தாண்டிச் செல்லாது. வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபக்கம்) வெளிப்பட்டுச் சென்றுவிடுவதைப் போன்று மார்க்கத்திலிருந்து அவர்கள் (சுவடே தெரியாமல்) வெளியேறிச் சென்றுவிடுவார்கள். (அந்தப் பிராணியின் உடலைத் துளைத்து வெளிவந்ததற்கான இரத்தக்குறி எதுவும் இருக்கிறதா என்று) அம்பின் முனை பார்க்கப்படும். அதில் (அடையாளம்) எதுவும் காணக் கிடைக்காது. பிறகு (அம்பில்) அதன் (முனையைப் பொருத்துவதற்குப் பயன்படும்) நாண் பார்க்கப்படும். அதிலும் (அடையாளம்) எதுவும் காணக் கிடைக்காது. பிறகு, அம்பின் (அடிப்பாகக்) குச்சி பார்க்கப்படும். அதிலும் எதுவும் காணப் படாது. பிறகு, அம்பின் இறகு பார்க்கப்படும். அதிலும் (அடையாளம்) எதுவும் காணப்படாது. அம்பானது சாணத்தையும் இரத்தத்தையும் (அவை தன்மீது படாதவாறு) முந்திக்கொண்டு விட்டிருக்கும். அவர்களின் அடையாளம் ஒரு கறுப்புநிற மனிதராவார். அவருடைய இரு கை புஜங்களில் ஒன்று "பெண்ணின் கொங்கை போன்றிருக்கும்' அல்லது "துடிக்கும் இறைச்சித்துண்டு போன்றிருக்கும்'. அவர்கள் மக்களிடையே பிரிவினை ஏற்படும் வேளையில் புறப்படுவார்கள்" என்று சொன்னார்கள்.
நான் இந்த நபிமொழியை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கடமிருந்து கேட்டேன் என்று உறுதி அளிக்கின்றேன். மேலும், அந்தக் கூட்டத்தாருடன் அலீ (ரலி) அவர்கள் போர் புரிந்தார்கள்.அப்போது நானும் அலீயுடன் இருந்தேன். அலீ (ரலி) அவர்கள், (நபி (ஸல்) அவர்கள் அடையாளம் கூறிய) அந்த மனிதரைக் கொண்டுவரும்படி கட்டளையிட, அவ்வாறே அவர் தேடப்பட்டு கொண்டு வரப்பட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட வர்ணனையின்படியே அவர் இருப்பதை நான் பார்த்தேன் என்றும் உறுதி கூறுகின்றேன்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1927 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தம் சமுதாயத்தாரில் தோன்றவிருக்கின்ற ஒரு கூட்டத்தாரைப் பற்றிக் கூறுகையில், "அவர்கள் மக்களிடையே பிரிவினை ஏற்படும் வேளையில் புறப்படுவார்கள். மொட்டை போடுவ(தை பக்தி மார்க்கமாகவும் வழிபாடாகவும் கொண்டிருப்ப)துதான் அவர்களின் அடையாளமாகும். "அவர்கள் தாம் படைப்பினங்களிலேயே தீயவர்கள்' அல்லது "படைப்பினங்களில் தீயவர்களில் உள்ளவர்களாவர்'. இரண்டு பிரிவினர்களில் உண்மைக்கு மிகவும் நெருக்கமான ஒரு பிரிவினர் அவர்களை அழிப்பார்கள்" என்று கூறினார்கள். பிறகு அவர்களுக்கு உதாரணமாக ஒரு மனிதரைக் குறிப்பிட்டார்கள். "ஒருவர் வேட்டைப் பிராணியை நோக்கி அம்பை எய்துவிட்டு, அம்பின் முனையைப் பார்ப்பார். அதில் (பிராணியின் உடலைத் துளைத்துவிட்டதற்கான) எந்த அடையாளத்தையும் அவர் காணமாட்டார். பிறகு அம்பின் அடிப்பாகக் குச்சியைப் பார்பபார். அதிலும் (பிராணியை வீழ்த்திவிட்டதற்கான) எந்தச் சான்றையும் அவர் காணமாட்டார். பிறகு அம்பின் முனையில் நாணைப் பொருத்தப் பயன்படும் இடத்தைப் பார்ப்பார். அதிலும் (பிராணியைத் தாக்கி விட்டதற்கான) எந்தச் சான்றையும் அவர் காணமாட்டார்" என்று கூறினார்கள்.
அபூசயீத் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
இராக்வாசிகளே! நீங்கள்தாம் அவர்களைக் கொன்றொழித்தீர்கள்.

1928 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முஸ்லிம்களிடையே பிரிவினை ஏற்படும் வேளையில் (கிளர்ச்சியாளர்கள்) கூட்டம் ஒன்று தோன்றும். இரு பிரிவினரில் சத்தியத்திற்கு மிக நெருக்கத்திலிருக்கும் பிரிவினர் அவர்களைக் கொன்றொழிப்பார்கள்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1929 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தார் இரு பிரிவினராகி நிற்கும்போது, அவர்களிடையேயிருந்து (கிளர்ச்சியாளர்கள்) கூட்டம் ஒன்று தோன்றும். அவ்விரு பிரிவினரில் சத்தியத்திற்கு மிக அருகிலிருக்கும் ஒரு சாரார் அவர்களைக் கொன்றொழிக்கப் பொறுப்பேற்றுக்கொள்வர்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1930 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களிடையே பிரிவினை ஏற்படும் வேளையில் (கிளர்ச்சியாளர்கள்) கூட்டம் ஒன்று தோன்றும். இரு பிரிவினரில் சத்தியத்திற்கு மிக அருகிலிருக்கும் பிரிவினரே அவர்களைக் கொன்றொழிக்கப் பொறுப்பேற்றுக் கொள்வர்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1931 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்கள் ஒரு கூட்டத்தாரைப் பற்றி, பிரிவினை ஏற்படும் வேளையில் அவர்கள் தோன்றுவார்கள். இரு பிரிவினரில் சத்தியத்திற்கு மிக அருகிலிருக்கும் பிரிவினரே அவர்களைக் கொன்றொழிப்பார்கள்" என்று குறிப்பிட்டதாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 48 காரிஜிய்யாக்களைக் கொல்லுமாறு வந்துள்ள தூண்டல்.**

1932 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பற்றி நான் உங்களுக்கு அறிவிக்கிறேன் என்றால், (உண்மையில் அவர்கள் சொன்னதையே அறிவிக்கிறேன். ஏனெனில்,) நான் வானத்திலிருந்து கீழே விழுந்துவிடுவது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்மீது அவர்கள் சொல்லாததைப் புனைந்து சொல்வதைவிட எனக்கு விருப்பமானதாகும். எனக்கும் உங்களுக்கும் இடையே உள்ள ஒரு விவகாரத்தில் நான் உங்களிடம் பேசினால் (ராஜதந்திரத்தைப் பயன்படுத்தாமல் இருக்கமுடியாது. ஏனெனில்,) போர் என்பது சூழ்ச்சிதான் (என்பதை நினைவில் கொள்ளவும்). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறுதிக் காலத்தில் ஒரு கூட்டத்தார் தோன்றுவார்கள். அவர்கள் இளம் வயதினராயிருப்பார்கள். முதிர்ச்சியற்ற புத்தியுடையவர்களாயிருப்பார்கள். பூமியிலேயே மிகச்சிறந்த சொல்லை (குர்ஆன் வசனங்களை) எடுத்துச்சொல்வார்கள். குர்ஆனை ஓதுவார்கள். வேட்டைப் பிராணியை விட்டு (அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபக்கம்) வெளிப்பட்டுச் சென்றுவிடுவதைப் போன்று மார்க்கத்திலிருந்து அவர்கள் (சுவடே தெரியாமல்) வெளியேறிச் சென்றுவிடுவார்கள். (இஸ்லாமிய ஆட்சியாளர்களே!) அவர்களை நீங்கள் எங்கு சந்தித்தாலும் கொன்றுவிடுங்கள். ஏனெனில், அவர்களைக் கொன்றவர்களுக்கு, அவர்களைக் கொன்றதற்காக மறுமை நாளில் நற்பலன் கிடைக்கும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபக்கம்) வெளிப்பட்டுச் சென்றுவிடுவதைப் போன்று மார்க்கத்திலிருந்து அவர்கள் வெளியேறிச் சென்றுவிடுவார்கள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1933 அபீதா பின் அம்ர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) அலீ (ரலி) அவர்கள் காரிஜிய்யாக்களைப் பற்றிக் கூறுகையில், "அவர்களிடையே ஊனமான கையுடைய ஒரு மனிதர் இருப்பார். நீங்கள் வரம்பு மீறிவிடுவீர்கள் என்ற அச்சம் எனக்கில்லையாயின், அவர்களைக் கொல்பவர்களுக்கு அல்லாஹ் தன் தூதரின் நாவினால் வாக்களித்துள்ள நற்பலனை உங்களுக்கு நான் அறிவித்துவிடுவேன்" என்று கூறினார்கள். நான், "இதைத் தாங்கள் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அலீ (ரலி) அவர்கள், "ஆம்; கஅபாவின் அதிபதிமீது சத்தியமாக! ஆம்; கஅபாவின் அதிபதிமீது சத்தியமாக! ஆம்; கஅபாவின் அதிபதிமீது சத்தியமாக!" என்று (மூன்று முறை) சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
("ஊனமான கையுடைய மனிதர்' என்பதைக் குறிக்க ஹதீஸின் மூலத்தில்) "முக்தஜுல் யதி' அல்லது "மூதனுல் யதி' அல்லது "மஸ்தூனுல் யதி' எனும் சொற்றொடர்கள் ஆளப்பட்டுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், அறிவிப்பாளர் அபீதா (ரஹ்) அவர்கள் "நான் செவியுற்ற செய்தியைத்தான் உங்களுக்கு அறிவிப்பேன்" என்று கூறிவிட்டு,அலீ (ரலி) அவர்கள் தொடர்பான மேற்கண்ட ஹதீஸை அறிவித்தார்கள்.

1934 ஸைத் பின் வஹ்ப் அல்ஜுஹனீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(நஹ்ரவான் நகரத்தைச் சேர்ந்த) காரிஜிய்யாக்களை நோக்கிச் சென்ற அலீ (ரலி) அவர்களின் படையில் நானும் இருந்தேன். (செல்லும் வழியில்) அலீ (ரலி) அவர்கள், "மக்களே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "என் சமுதாயத்திலிருந்து ஒரு கூட்டத்தார் தோன்றுவார்கள். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். அவர்களின் ஓதலுடன் உங்களின் ஓதலை ஒப்பிடும்போது,உங்களின் ஓதல் ஒன்றுமேயில்லை; அவர்களது தொழுகையுடன் உங்களது தொழுகையை ஒப்பிடும்போது, உங்களது தொழுகை ஒன்றுமேயில்லை; அவர்களது நோன்புடன் உங்களது நோன்பை ஒப்பிடும்போது, உங்களது நோன்பு ஒன்றுமேயில்லை. (அந்த அளவிற்கு அவர்களுடைய வணக்க வழிபாடுகள் அதிகமாயிருக்கும்.) தங்களுக்குச் சாதகமான ஆதாரம் என்று எண்ணிக்கொண்டு அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களுக்கு எதிரான ஆதாரமாகவே இருக்கும். அவர்களது தொழுகை(யில் அவர்கள் குர்ஆனை ஓதுவது), அவர்களது கழுத்தெலும்பைத் தாண்டிச்செல்லாது. வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபக்கம்) வெளிப்பட்டுச் சென்றுவிடுவதைப் போன்று இஸ்லாத்திலிருந்து அவர்கள் (சுவடே தெரியாமல்) வெளியேறிச் சென்றுவிடுவார்கள்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்.

அவர்களை வீழ்த்தும் படையினர், அதற்காகத் தமக்கு வழங்கப்படவுள்ள நற்பலன் குறித்துத் தங்களுடைய நபியின் நாவினால் அறிவிக்கப்பட்டுள்ளதை அறிவார்களாயின், அதையே நம்பிக்கொண்டு நற்செயல் புரியாமல் இருந்துவிடுவார்கள். அவர்களிடையே கைபுஜம் மட்டுமே உள்ள ஒரு மனிதன் அவர்களுக்கு அடையாளம் ஆவான். முழங்கைக்குக் கீழே அவனுக்குக் கையிருக்காது. அவனது கை புஜத்தின் மீது மார்புக்காம்பைப் போன்று ஒரு கட்டியிருக்கும். அதன் மீது வெள்ளை முடிகள் முளைத்திருக்கும். நீங்கள் சந்ததிகளையும் செல்வங்களையும் கவனிக்கும் பிரதிநிதிகளாக இவர்களை விட்டுவிட்டு, முஆவியா (ரலி) அவர்களிடமும் ஷாம்வாசிகளிடமும் (ஸிஃப்பீன் போருக்காகச்) சென்று விடுவீர்கள். (இந்த காரிஜிய்யாக்களோ உங்கள் குழந்தை குட்டிகளைத் துன்புறுத்துவார்கள். உங்கள் சொத்துக்களைச் சூறையாடுவார்கள்.) அல்லாஹ்வின் மீதாணையாக! (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வர்ணித்த) அந்த(காரிஜிய்யா)க் கூட்டத்தார் இவர்களாகத்தாம் இருப்பார்கள் என்று நான் நம்புகிறேன். ஏனெனில், இவர்கள் அல்லாஹ் புனிதப்படுத்தியுள்ள உயிர்களைக் கொலை செய்துள்ளார்கள்; மக்களுடைய கால்நடைகளைக் கொள்ளையடித்துள்ளார்கள். எனவே, அல்லாஹ்வின் திருப்பெயர் கூறி, அவர்களை நோக்கிச் செல்லுங்கள் (அவர்களை வெல்லுங்கள்)" என்று சொன்னார்கள்.
இதன் அறிவிப்பாளரான சலமா பின் குஹைல் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
(அந்தப் பயணத்தில்) ஸைத் பின் வஹ்ப் (ரஹ்) அவர்கள் (காரிஜிய்யாக்கள்) முகாமிட்டிருந்த ஒவ்வொரு தளங்களையும் எனக்குக் காட்டினார்கள். இறுதியாக நாங்கள் ("அத்தப்ரஜான்' எனும்) ஒரு பாலத்தைக் கடந்துசென்றோம். (கலகக்காரர்களான

காரிஜிய்யாக்களை) நாங்கள் சந்தித்தபோது, காரிஜிய்யாக்களின் அன்றைய தளபதியாக அப்துல்லாஹ் பின் வஹ்ப் அர்ராசிபீ என்பான் இருந்தான். அவன் காரிஜிய்யாக்களிடம் "ஹரூரா போரின்போது இவர்கள் அல்லாஹ்வின் பெயரால் ஆணையிட்டு உங்களிடம் (சமாதான ஒப்பந்தக்) கோரிக்கையை முன்வைத்ததைப் போன்று இப்போதும் கோரிக்கை வைத்துவிடுவார்களோ என்று நான் அஞ்சுகிறேன். (அதற்கு இடமளித்துவிடாமல்) ஈட்டியை எறியுங்கள்; வாட்களை உறைகளிலிருந்து உருவி(த் தயாராக வைத்து)க் கொள்ளுங்கள்" என்று கூறினான். உடனே அவர்கள் திரும்பிச்சென்று தூரத்தில் நின்று கொண்டு தங்களுடைய ஈட்டிகளை வீசினர்; தங்களுடைய வாட்களை உருவி(யவாறு மக்களிடையே புகுந்த)னர். (அலீ (ரலி) அவர்களுடைய படையிலிருந்த) மக்களும் அவர்கள்மீது தங்களுடைய ஈட்டிகளைப் பாய்ச்சினர். அவர்கள் ஒருவர் பின் ஒருவராகக் கொல்லப்பட்டனர். அன்றைய தினம் (அலீ (ரலி) அவர்களின் அணியிலிருந்த) மக்களில் இருவர் மட்டுமே கொல்லப்பட்டனர்.

பிறகு (எங்களிடம்) அலீ (ரலி) அவர்கள், "அவர்களிடையே ஊனமான கையுடைய அந்த மனிதனைத் தேடிப்பாருங்கள்" என்று கூறினார்கள். மக்கள் தேடிப்பார்த்தபோது அவன் தட்டுப்படவில்லை. எனவே, அலீ (ரலி) அவர்களே எழுந்து சென்று, ஒருவர்மீது ஒருவராக அவர்கள் கொல்லப்பட்டுக் கிடந்த பகுதிக்கு வந்து "உடல்களை நகர்த்துங்கள்" என்று கூறினார்கள். அவனது உடல் தரைப் பகுதியின் அடியில் கிடப்பதைக் கண்டார்கள். அப்போது அலீ (ரலி) அவர்கள் "தக்பீர்' (அல்லாஹ் மிகப்பெரியவன் என்று) கூறினார்கள். பிறகு "அல்லாஹ் உண்மையே சொன்னான்; அவனுடைய தூதர் (அவனது செய்தியை) எட்டச் செய்தார்கள்" என்று சொன்னார்கள்.
அப்போது அலீ (ரலி) அவர்களிடம் அபீதா அஸ்ஸல்மானீ (ரஹ்) அவர்கள் வந்து, "இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன்மீது சத்தியமாக! (காரிஜிய்யாக்கள் குறித்த) இந்த ஹதீஸை நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அலீ (ரலி) அவர்கள், "ஆம்;எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன்மீது சத்தியமாக!" என்று பதிலளித்தார்கள். இவ்வாறு மூன்று முறை சத்தியம் செய்யுமாறு அலீ (ரலி) அவர்களை அபீதா (ரஹ்) அவர்கள் கோரினார்கள். அலீ (ரலி) அவர்களும் அவ்வாறே சத்தியம் செய்தார்கள்.

1935 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அடிமையாயிருந்த (பிற்காலத்தில் இஸ்லாத்தைத் தழுவிய) உபைதுல்லாஹ் பின் அபீரா்பிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஹரூராவாசி(களான காரிஜிய்யாக்)கள் தோன்றியபோது நான் அலீ (ரலி) அவர்களுடன் (அவர்களது அணியில்) இருந்தேன். ஹரூரிய்யாக்கள் "ஆட்சி அல்லாஹ்வைத் தவிர வேறெவருக்குமில்லை' (லா ஹுக்ம இல்லா லில்லாஹ்) எனும் கோஷத்தை எழுப்பினர். அலீ (ரலி) அவர்கள், "(இது) சத்திய வார்த்தைதான். ஆனால், தவறான நோக்கம் கொள்ளப்படுகிறது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சில மனிதர்களைப் பற்றி(ய அடையாளங்களை) எங்களுக்குத் தெரிவித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட அப்பண்புகள் (காரிஜிய்யாக்களான) இவர்களிடம் (இருப்பதை) நான் அறிகிறேன். இவர்கள்

நாவால் உண்மை சொல்கிறார்கள். ஆனால், அது அவர்களது தொண்டையைத் தாண்டாது (என்று கூறி, தொண்டையைச் சுட்டிக்காட்டுகிறார்கள்);அல்லாஹ்வின் படைப்புகளிலேயே அவனிடம் மிகவும் வெறுப்புக்குரியவன், இவர்களில் கறுப்புநிறமுடைய ஒரு மனிதனாவான். அவனது கைகளில் ஒன்று "ஆட்டின் பால் மடியைப் போன்றிருக்கும்' அல்லது "(பெண்ணின்) மார்புக் காம்பைப் போன்றிருக்கும்" என்று கூறினார்கள்.
அலீ (ரலி) அவர்கள் (தம் படையினருடன் சேர்ந்து காரிஜிய்யாக்களுடன் போரிட்டு) அவர்களைக் கொன்றொழித்தபோது, "(அந்தக் கறுப்பு மனிதனைத் தேடிப்) பாருங்கள்" என்று கூறினார்கள். அவர்கள் (தேடிப்)பார்த்தபோது அவர்களுக்குக் கிடைக்கவில்லை. அலீ (ரலி) அவர்கள் "திரும்பவும் சென்றுபாருங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் பொய்யுரைக்கவில்லை; என்னிடம் பொய்யுரைக்கப்படவுமில்லை" என்று இரண்டு அல்லது மூன்று முறை சொன்னார்கள். பிறகு அவர்கள் அவனது உடலை ஒரு குழியில் கண்டனர். அதைக் கொண்டுவந்து அலீ (ரலி) அவர்களுக்கு முன்னால் வைத்தனர். இந்த நிகழ்ச்சி நடந்தபோதும் காரிஜிய்யாக்கள் குறித்து அலீ (ரலி) அவர்கள் கூறியபோதும் அந்த இடத்தில் நான் இருந்தேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
யூனுஸ் பின் அப்தில் அஃலா (ரஹ்) அவர்களது மற்றோர் அறிவிப்பில், "அந்தக் கறுப்பு மனிதனை நான் பார்த்தேன்" என்று இப்னு ஹுனைன் (ரஹ்) அவர்கள் கூறியதாக இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 49 காரிஜிய்யாக்கள் மனிதர்கள் மற்றும் உயிரினங்களிலேயே மோசமானவர்கள் ஆவர்.

1936 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"எனக்குப் பின் என் சமுதாயத்தில்' ("அல்லது எனக்குப் பின் விரைவில் என் சமுதாயத்தில்') ஒரு கூட்டத்தார் தோன்றுவார்கள். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களுடைய கழுத்துகளைத் தாண்டிச் செல்லாது. வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபக்கம்) வெளிப்பட்டுச் சென்று விடுவதைப் போன்று, மார்க்கத்திலிருந்து அவர்கள் (சுவடே தெரியாமல்) வெளியேறிச் சென்று விடுவார்கள். பிறகு அதன் பக்கம் திரும்பமாட்டார்கள். அவர்கள்தாம் மனிதர்கள் மற்றும் உயிரினங்களிலேயே மோசமானவர்கள் ஆவர்.
இதை அபூதர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(இந்த ஹதீஸை அபூதர் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கும்) அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
நான் ஹகம் அல்கிஃபாரீ (ரலி) அவர்களுடைய சகோதரர் ராஃபிஉ பின் அம்ர் அல்கிஃபாரீ (ரலி) அவர்களைச் சந்தித்தபோது, "அபூதர் (ரலி) அவர்களிடமிருந்து நான் செவியுற்ற இன்னின்ன ஹதீஸ்கள் என்ன?" என்று கூறிவிட்டு, மேற்கண்ட ஹதீஸையும் அவர்களிடம் சொன்னேன். அப்போது ராஃபிஉ பின் அம்ர் (ரலி) அவர்கள், "நானும் இந்த ஹதீஸை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றேன்" என்று சொன்னார்கள்.

1937 யுசைர் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் சஹ்ல் பின் ஹுனைஃப் (ரலி) அவர்களிடம், "காரிஜிய்யாக்கள் குறித்து நபி (ஸல்) அவர்கள் கூற ஏதேனும் கேட்டுள்ளீர்களா?"என்று கேட்டேன். அதற்கு அவர்கள், நபி (ஸல்) அவர்கள் கிழக்கு (இராக்) திசையில் தமது கையால் சைகை செய்தவாறு இப்படிக் கூறினார்கள் என்றார்கள்: (இங்கிருந்து) ஒரு கூட்டத்தார் புறப்படுவார்கள். அவர்கள் குர்ஆன் ஓதுவார்கள். ஆனால், அது அவர்களது கழுத்தெலும்பை (தொண்டைக் குழியை)த் தாண்டிச் செல்லாது. வேட்டைப் பிராணியை விட்டு (அதன் உடலைத் துளைத்த) அம்பு (உடலின் மறு புறம்) வெளியேறிச் செல்வதைப் போன்று, இஸ்லாத்திலிருந்து அவர்கள் (சுவடே தெரியாமல்) வெளியேறிச் சென்றுவிடுவார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "இங்கிருந்து சில கூட்டத்தார் கிளம்புவார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

1938 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கிழக்கு (இராக்) திசையிலிருந்து வழிதவறிய ஒரு கூட்டத்தார் கிளம்புவார்கள். அவர்களுடைய தலைகள் மழிக்கப்பட்டு (மொட்டையாக) இருக்கும்.
இதை சஹ்ல் பின் ஹுனைஃப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 50** அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தாருக்கும் ஸகாத் (பெறுவது) தடை செய்யப்பட்டுள்ளது. பனூ ஹாஷிம் மற்றும் பனுல் முத்தலிப் குலத்தாரே அவர்களுடைய குடும்பத்தார் ஆவர்; மற்றவர்கள் அல்லர்.

1939 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) ஹசன் பின் அலீ (ரலி) அவர்கள், தர்மப் பேரீச்சம் பழங்களில் ஒன்றை எடுத்து வாயில் போட்டார். இதைக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "சீ...சீ... கீழே போடு; நாம் தர்மப் பொருளைச் சாப்பிடக்கூடாது என்பது உனக்குத் தெரியாதா?" என்றார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நமக்கு தர்மப்பொருட்கள் அனுமதிக்கப்படவில்லை என்பது உனக்குத் தெரியாதா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நாம் தர்மப் பொருளைச் சாப்பிடக்கூடாது" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகவே இடம்பெற்றுள்ளது.

1940 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் என் வீட்டாரிடம் திரும்பிச்செல்லும் போது எனது படுக்கையின் மீது பேரீச்சம்பழம் கிடப்பதைப் பார்த்து, அதை உண்பதற்காக எடுப்பதுண்டு. பின்னர் அது தர்மப்பொருளாக இருக்குமோ என்று நான் அஞ்சி, உடனே அதைப் போட்டுவிடுகின்றேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1941 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக.! நான் எனது வீட்டாரிடம் திரும்பிச் செல்லும் போது "எனது படுக்கையின் மீது' (அல்லது "எனது வீட்டில்') பேரீச்சம் பழம் கிடப்பதைப் பார்த்து, அதை உண்பதற்காக எடுப்பதுண்டு. பின்னர் அது "தர்மப்பொருளாக' (அல்லது "தர்மப்பொருட்களில் ஒன்றாக') இருக்குமோ என்று அஞ்சி உடனே அதைப் போட்டுவிடுகின்றேன்.

1942 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு பேரீச்சம் பழத்தைக் கண்டபோது, "இது தர்மப்பொருளாக இருக்காது என்றிருந்தால் இதை நான் சாப்பிட்டிருப்பேன்" என்றார்கள்.

1943 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சாலையில் (கிடந்த) ஒரு பேரீச்சம் பழத்தைக் கடந்து சென்றபோது, "இது தர்மப் பொருளாக இருக்காது என்றிருந்தால் இதை நான் சாப்பிட்டிருப்பேன்" என்றார்கள்.

1944 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு பேரீச்சம் பழத்தைக் கண்டபோது, "இது தர்மப்பொருளாக இருக்காது என்றிருந்தால், இதை நான் சாப்பிட்டிருப்பேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 51 நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தாரை தர்மப்பொருட்களை வசூலிக்கும் பொறுப்பில் அமர்த்தலாகாது.

1945 அப்துல் முத்தலிப் பின் ரபீஆ பின் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) ரபீஆ பின் அல்ஹாரிஸ் (ரலி) அவர்களும் (என் பாட்டனாரின் சகோதரர்) அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்களும் (ஓரிடத்தில்) ஒன்றுகூடி, (என்னையும் ஃபள்ல் பின் அப்பாஸையும் சுட்டிக்காட்டி) "இவ்விரு இளைஞர்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுப்பி, அவ்விருவரையும் இந்தத் தர்மப்பொருட்களை வசூலிக்கும் பொறுப்பில் அமர்த்துமாறு கேட்கச் சொல்வோம்.(அவ்வாறு இவர்கள் அமர்த்தப் பட்டால்), மக்கள் வழங்குகின்ற (ஸகாத்)தை அவர்கள் இருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒப்படைப்பார்கள். (இந்தப் பணிக்காக) மக்களுக்குக் கிடைக்கின்ற (சன்மானப்) பொருள் இவர்களுக்குக் கிடைக்கும்" என்று பேசிக்கொண்டனர்.
இவ்வாறு அவர்கள் இருவரும் பேசிக்கொண்டிருக்கும்போதே அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் அங்கு வந்து அவர்களுக்கு முன்னால் நின்றார்கள். அப்போது அவர்கள் இருவரும் அலீ (ரலி) அவர்களிடம் அ(வர்களிருவரும் பேசிக்கொண்ட)தைத் தெரிவித்தனர். அதைக் கேட்ட அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள், "அவ்வாறு செய்யாதீர்கள். அல்லாஹ்வின் மீது

சத்தியமாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்யமாட்டார்கள்" என்று சொன்னார்கள். ரபீஆ பின் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் அலீ (ரலி) அவர்களை நோக்கி "அல்லாஹ்வின் மீதாணையாக! எங்கள்மீதுள்ள பொறாமையால்தான் இவ்வாறு நீங்கள் செய்கிறீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களு(டைய மகளை மணமுடித்துக்கொண்டதன் மூலம் அவர்களு)டன் திருமண பந்தத்தை அடைந்துகொண்டுவிட்டீர்கள். அதைக் கண்டு நாங்கள் உங்கள் மீது பொறாமை கொள்ளவில்லையே!" என்று கூறினர். அலீ (ரலி) அவர்கள், "(சரி) அவர்கள் இருவரையும் அனுப்பிவையுங்கள்" என்று கூறினார்கள். நாங்கள் இருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி நடந்தோம். அலீ (ரலி) அவர்கள் (அங்கேயே) சாய்ந்து படுத்துக் கொண்டார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் லுஹர் தொழுகையை முடித்ததும் அவர்களது அறையை நோக்கி நாங்கள் (இருவரும்) முந்திக்கொண்டு சென்று, அவர்களது அறைக்கு அருகில் நின்றோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து எங்களுடைய காதுகளைப் பிடித்து, "நீங்கள் இருவரும் உங்கள் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்துங்கள்" என்று சொன்னார்கள். பிறகு அறைக்குள் நுழைந்தார்கள். நாங்களும் உள்ளே நுழைந்தோம். அன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களிடம் தங்கியிருந்தார்கள். நாங்கள் இருவரும் ("நீ பேசு, நீ பேசு' என) ஒருவரையொருவர் பேசச்சொல்லிக் கொண்டிருந்தோம். பிறகு எங்களில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் மக்களிலேயே மிகவும் ஈகை குணம் கொண்டவரும் உறவினர்களை நன்கு அரவணைத்துக்கொள்பவரும் ஆவீர்கள். நாங்கள் மணமுடிக்கும் வயதை அடைந்துவிட்டோம். எனவே, இந்தத் தானதர்மங்களை வசூலிக்கும் பொறுப்புகளில் ஒன்றில் எங்களை நீங்கள் நியமிப்பதற்காக நாங்கள் வந்துள்ளோம். மக்கள் வழங்கும் ஸகாத் பொருட்களை அப்படியே உங்களிடம் கொண்டுவந்து ஒப்படைப்போம். (இப்பணிக்குச் சன்மானமாக) அவர்கள் பெற்றுக்கொள்வதை நாங்களும் பெற்றுக்கொள்வோம்" என்று கூறினார்.

இதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நீண்டநேரம் அமைதியாக இருந்தார்கள். இறுதியில் அவர்களிடம் நாங்களே பேசலாமா என்று எண்ணினோம். (இதற்குள்) ஸைனப் (ரலி) அவர்கள் திரைக்கு அப்பாலிருந்து பேசவேண்டாம் என எங்களுக்குச் சைகை செய்யலானார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தர்மப் பொருள் முஹம்மதின் குடும்பத்தாருக்குத் தகாது. (ஏனெனில்,) அவை மக்களின் (செல்வத்திலிருந்து வரும்) அழுக்குகள்தாம்" என்று கூறிவிட்டு, "(பனூ அசத் கூட்டத்தைச் சேர்ந்தவரான) மஹ்மியாவையும் நவ்ஃபல் பின் அல்ஹாரிஸ் பின் அப்தில் முத்தலிபையும் என்னிடம் வரச் சொல்லுங்கள்" என்று கூறினார்கள். (அப்போது மஹ்மியா (ரலி) அவர்கள் போரில் கிடைத்த ஐந்தில் ஒரு பாகம் (குமுஸ்) நிதியைப் பாதுகாக்கும் பொறுப்பில் இருந்தார்கள்.) அவர்கள் இருவரும் வந்தபோது மஹ்மியா (ரலி) அவர்களிடம், "இந்த இளைஞருக்கு (ஃபள்ல் பின் அப்பாஸுக்கு) உங்களுடைய மகளை மணமுடித்து வையுங்கள்" என்று சொன்னார்கள். அவ்வாறே மஹ்மியா (ரலி) அவர்கள் மணமுடித்து வைத்தார்கள். பிறகு நவ்ஃபல் பின் அல்ஹாரிஸ் (ரலி) அவர்களிடம், (என்னைச் சுட்டிக்காட்டி), "இந்த இளைஞருக்கு உங்களுடைய மகளை மணமுடித்து வையுங்கள்" என்று சொன்னார்கள்.

அவ்வாறே நவ்ஃபல் (ரலி) அவர்கள் எனக்கு(த் தம்முடைய மகளை) மணமுடித்து வைத்தார்கள். மேலும், மஹ்மியா (ரலி) அவர்களிடம் "இவர்கள் இருவருக்காகவும் போரில் கிடைத்த ஐந்தில் ஒருபாகம் நிதியிலிருந்து இன்ன இன்னதை மணக்கொடையாக (மஹ்ர்) கொடுங்கள்" என்று சொன்னார்கள்.
இதன் அறிவிப்பாளரான ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள், "அப்துல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் நவ்ஃபல் (ரஹ்) அவர்கள் (அந்த) மஹ்ர் தொகை (எவ்வளவு என்பது) குறித்து என்னிடம் குறிப்பிடவில்லை" என்று கூறினார்கள்.

1946 மேற்கண்ட ஹதீஸ் அப்துல் முத்தலிப் பின் ரபீஆ பின் அல்ஹாரிஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "என் தந்தை ரபிஆ பின் அல் ஹாரிஸ் பின் அப்தில் முத்தலிப் (ரலி) மற்றும் அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப் (ரலி) ஆகியோர் என்னிடமும் ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடமும் "நீங்கள் இருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் செல்லுங்கள்' என்று கூறியதாக ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
மேலும் அதில், அலீ (ரலி) அவர்கள் தமது மேல்துண்டைப் போட்டு அதன் மீது சாய்ந்து படுத்துக்கொண்டார்கள். மேலும், "நான் ஹசனின் தந்தை (அபுல் ஹசன்) ஆவேன்; கருத்துடையவனும் ஆவேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறியனுப்பிய விஷயத்திற்கு உங்களுடைய புதல்வர்கள் இருவரும் பதில் கொண்டுவரும் வரை இவ்விடத்தைவிட்டு நான் நகரமாட்டேன்" என்று அலீ (ரலி) அவர்கள் கூறியதாகவும் இடம் பெற்றுள்ளது.
மேலும் இந்த ஹதீஸில் பின்வருமாறும் காணப்படுகிறது:
பிறகு எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இந்தத் தர்மப்பொருட்கள், மக்களின் (செல்வத்திலிருந்து வரும்) அழுக்குகள்தாம். இவை முஹம்மதுக்கோ முஹம்மதின் குடும்பத்தாருக்கோ அனுமதிக்கப்படவில்லை" என்று கூறினார்கள். மேலும், "மஹ்மியா பின் ஜஸ்உவை என்னிடம் வரச் சொல்லுங்கள்" என்றார்கள். அவர் பனூ அசத் குலத்தைச் சேர்ந்தவராவார். அவரை போரில் கிடைத்த செல்வங்களில் ஐந்தில் ஒரு பாக (குமுஸ்) நிதியைப் பாதுகாக்கும் பொறுப்பில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நியமித்திருந்தார்கள்.

**பாடம் : 52 நபி (ஸல்) அவர்களுக்கும் பனூ ஹாஷிம் மற்றும் பனுல் முத்தலிப் குடும்பத்தாருக்கும் அன்பளிப்புகள் வழங்கலாம்;அன்பளிப்பவர் ஸதக்கா என்ற முறையில் அதை உடைமையாக்கியிருந்தாலும் சரியே! தர்மம் வழங்கப்பெற்றவர் தர்மப் பொருளைக் கைப்பற்றியவுடனேயே "தர்மப்பொருள்' எனும் பெயர் அதை விட்டும் நீங்கிவிடும்; தர்மம் வாங்கக் கூடாதவர் அதைப் பெறலாம்.**

1947 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஜுவைரியா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்து, "உணவேதும் உள்ளதா?" என்று கேட்டார்கள். நான், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! எங்களிடம்

ஆட்டின் ஓர் எலும்பைத் தவிர வேறெந்த உணவும் இல்லை, அல்லாஹ்வின் தூதரே! அந்த எலும்புகூட என் முன்னாள் அடிமைப் பெண்ணுக்குத் தர்மமாக வழங்கப்பட்டதாகும்" என்று சொன்னேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அதை எனக்கு அருகில் வை! அது தனது இடத்தை (அன்பளிப்பின் தகுதியை) அடைந்துவிட்டது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1948 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பரீரா (ரலி) அவர்கள் தமக்குத் தர்மமாகக் கொடுக்கப்பட்ட இறைச்சியை நபி (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக அளித்தார்கள். அப்போது (இது தர்மமாகக் கொடுக்கப்பட்ட இறைச்சியாயிற்றே என்று வினவப்பட்டது. அதற்கு) நபி (ஸல்) அவர்கள் "இது பரீராவுக்குத்தான் தர்மமாகும்; ஆனால், நமக்கு அன்பளிப்பாகும்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1949 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் மாட்டிறைச்சி கொண்டுவரப்பட்டது. அப்போது "இது பரீராவுக்குத் தர்மமாகக் கொடுக்கப்பட்டதாகும்" என்று சொல்லப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இது பரீராவுக்குத்தான் தர்மமாகும்; ஆனால், நமக்கு அன்பளிப்பாகும்"என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1950 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அடிமையாயிருந்து விடுதலை பெற்ற) பரீரா (ரலி) அவர்களால் (மக்களுக்கு) மூன்று தீர்ப்புகள் கிட்டின. மக்கள் பரீராவுக்குத் தர்மம் கொடுப்பார்கள். அதை பரீரா எங்களுக்கு அன்பளிப்பாக வழங்குவார்கள். இதை நான் நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தபோது, அவர்கள் "இது பரீராவுக்குத்தான் தர்மமாகும்; உங்களுக்கு அன்பளிப்பாகும். எனவே, இதை நீங்கள் சாப்பிடலாம்"என்றார்கள். (இது அத்தீர்ப்புகளில் ஒன்றாகும்).
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1951 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் அதில், "இது நமக்கு பரீராவிடமிருந்து அன்பளிப்பாக வந்ததாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

1952 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தர்ம ஆடு ஒன்றை எனக்கு அனுப்பிவைத்தார்கள். அதில் சிறிது இறைச்சியை நான் ஆயிஷா (ரலி) அவர்களுக்குக் கொடுத்தனுப்பினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றபோது, "உங்களிடம் (உண்பதற்கு) ஏதும் உள்ளதா?" எனக் கேட்டார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள், "இல்லை. நீங்கள் நுஸைபா (உம்மு அத்திய்யா)வுக்கு (தர்மமாக) அனுப்பிய ஆட்டின் ஒரு

பகுதியை அவர் நமக்கு அனுப்பிவைத்தார். அதைத் தவிர வேறொன்றுமில்லை" என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது தனது இடத்தை (அன்பளிப்பின் தகுதியை) அடைந்துவிட்டது" என்று சொன்னார்கள்.

பாடம் : 53 நபி (ஸல்) அவர்கள் அன்பளிப்பை ஏற்றதும் தர்மத்தை மறுத்ததும்.

1953 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் ஓர் உணவுப் பொருள் கொண்டுவரப்படும்போது, அது குறித்து (இது அன்பளிப்பா, தர்மமா என்று) கேட்பார்கள். அது அன்பளிப்பு என்று பதிலளிக்கப்பட்டால், அதைச் சாப்பிடுவார்கள்; தர்மம் என்று கூறப்பட்டால் அதைச் சாப்பிடமாட்டார்கள்.

பாடம் : 54 தர்மம் கொண்டுவந்தவருக்காகப் பிரார்த்தித்தல்.

1954 அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு கூட்டத்தார் தம் தர்மப்பொருட்களைக் கொண்டுவந்தால், "இறைவா! இவர்களுக்கு நீ அருள்புரிவாயாக!" என்று பிரார்த்திப்பார்கள். என் தந்தை அபூஅவ்ஃபா (ரலி) அவர்கள் தம் தர்மப் பொருட்களை நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுசென்றபோது, "இறைவா! அபூ அவ்ஃபாவின் குடும்பத்தாருக்கு நீ அருள்புரிவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் ("அபூஅவ்ஃபாவின் குடும்பத்தாருக்கு' என்பதற்கு பதிலாக) "அவர்களு(டைய குடும்பத்தார்களு)க்கு அருள்புரிவாயாக' என்று (பிரதிப் பெயர்ச்சொல்லாக) இடம் பெற்றுள்ளது.

பாடம் : 55 ஸகாத் வசூலிப்பவர், தடைசெய்யப்பட்டதைக் கோராதவரை அவரை திருப்திபடுத்துவது (அவசியமாகும்).

1955 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களிடம் ஸகாத் வசூலிப்பவர் வந்தால், உங்கள்மீது திருப்தி கொண்ட நிலையிலேயே அவர் உங்களிடமிருந்து திரும்பிச் செல்லட்டும்.
இதை ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஏழு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 14 - நோன்பு

**பாடம் : 1 ரமளான் மாதத்தின் சிறப்பு**

1956 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ரமளான் வந்துவிட்டால் சொர்க்கத்தின் வாயில்கள் திறக்கப்படுகின்றன; நரகத்தின் வாயில்கள் அடைக்கப்படுகின்றன; ஷைத்தான்கள் விலங்கிடப்படுகின்றனர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1957 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ரமளான் மாதம் ஆகிவிட்டால் அருளின் வாயில்கள் திறக்கப்படுகின்றன; நரகத்தின் வாயில்கள் அடைக்கப்படுகின்றன; ஷைத்தான்கள் சங்கிலியால் விலங்கிடப்படுகின்றனர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "ரமளான் மாதம் நுழைந்துவிட்டால்' என்று ஹதீஸ் தொடங்குகிறது.

**பாடம் : 2 ((முதல்)பிறையைப் பார்த்து ரமளான் நோன்பு நோற்பதும் (மறு)பிறையைப் பார்த்து நோன்பை விடுவதும் கடமையாகும். மாதத்தின் ஆரம்பத்திலோ அல்லது இறுதியிலோ (வானில்) மேகமூட்டம் தென்பட்டால் அம்மாதத்தின் எண்ணிக்கை முப்பது நாட்களாக முழுமையாக்கப்படும்.**

1958 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ரமளான் பற்றிக் கூறுகையில், "ரமளான் பிறையைக் காணாதவரை நோன்பு நோற்காதீர்கள்; (மறு) பிறையைக் காணாதவரை நோன்பை விடாதீர்கள்; உங்களுக்கு மேகமூட்டம் தென்பட்டால், அந்த மாதத்தை (முப்பது நாட்களாக)க் கணக்கிட்டுக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.

1959 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் பற்றிக் கூறுகையில் தம்மிரு கைகளையும் (மூன்று தடவை) அடித்தவாறு, "மாதம் என்பது இவ்வளவு, இவ்வளவு, இவ்வளவுதான்" என்று கூறினார்கள். (மூன்றாவது தடவையில் தமது பெருவிரலை மடக்கிக் கொண்டார்கள்.) மேலும் "பிறை பார்த்து நோன்பு நோறுங்கள்; பிறை பார்த்தே நோன்பை விடுங்கள்; உங்களுக்கு மேகமூட்டம் தென்பட்டால், அந்த மாதத்தை முப்பது (நாட்கள்) ஆகக் கணக்கிட்டுக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.

1960 மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "உங்களுக்கு மேகமூட்டம் தென்பட்டால், முப்பதாக (அந்த மாதத்தின் நாட்களை)க் கணக்கிட்டுக்கொள்ளுங்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதம் குறித்துக் கூறுகையில், "மாதம் என்பது இருபத்தொன்பது நாட்களா(கவும் இருக்)கும்; மாதம் என்பது இவ்வளவு, இவ்வளவு, இவ்வளவுதான்" என்று கூறி (மூன்றாவது தடவையில் பெருவிரலை மடக்கி)னார்கள். மேலும், அதில், "(மேகமூட்டம் தென்பட்டால்,) அந்த மாதத்தைக் கணக்கிட்டுக்கொள்ளுங்கள்" என்று மட்டுமே இடம்பெற்றுள்ளது. "முப்பதாக' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

1961 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மாதம் என்பது இருபத்தொன்பது நாட்களா(கவும் இருக்)கும். எனவே, பிறையைப் பார்க்காமல் நீங்கள் நோன்பு நோற்காதீர்கள். பிறையைப் பார்க்காமல் நோன்பை விடாதீர்கள். உங்களுக்கு மேகமூட்டம் தென்பட்டால், அந்த மாதத்தை (முப்பது நாட்களாக)க் கணக்கிட்டுக் கொள்ளுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1962 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மாதம் என்பது இருபத்தொன்பது நாட்களா(கவும் இருக்)கும். எனவே, நீங்கள் பிறை பார்த்ததும் நோன்பு நோறுங்கள்; பிறை பார்த்ததும் நோன்பை விடுங்கள். உங்களுக்கு மேகமூட்டம் தென்பட்டால், அந்த மாதத்தை (முப்பது நாட்களாக)க் கணக்கிட்டுக் கொள்ளுங்கள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1963 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் பிறை பார்த்ததும் நோன்பு நோறுங்கள். (மறு)பிறை பார்த்ததும் நோன்பை விடுங்கள். உங்களுக்கு (வானில்) மேகமூட்டம் தென்பட்டால், அந்த மாதத்தை (முப்பது நாட்களாக)க் கணக்கிட்டுக்கொள்ளுங்கள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1964 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மாதம் என்பது இருபத்தொன்பது இரவுகளா(கவும் இருக்)கும். எனவே, பிறையைப் பார்க்காமல் நீங்கள் நோன்பு நோற்காதீர்கள். பிறையைப் பார்க்காமல் நோன்பை விடாதீர்கள். உங்களுக்கு (வானில்) மேகமூட்டம் தென்பட்டால் தவிர. அவ்வாறு உங்களுக்கு மேகமூட்டம் தென்படுமானால், அந்த மாதத்தை (முப்பது நாட்களாக)க் கணக்கிட்டுக் கொள்ளுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1965 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ரமளான் பற்றிக் கூறுகையில்) "மாதம் என்பது இவ்வளவு, இவ்வளவு, இவ்வளவுதான்" என்று கூறினார்கள். மூன்றாவது தடவையில் தமது பெருவிரலை மடக்கிக்கொண்டார்கள்.

1966 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மாதம் என்பது இருபத்தொன்பது நாட்களா(கவும் இருக்)கும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1967 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ரமளான் பற்றிக் கூறுகையில்) "மாதம் என்பது இவ்வளவு, இவ்வளவு, இவ்வளவுதான்" என்று கூறி, பத்து + பத்து + ஒன்பது (=இருபத்தொன்பது) என்று (கைகளால் சைகை செய்து) கூறினார்கள்.

1968 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இரு கைவிரல்களையும் இருமுறை அடித்து (கைதட்டி), மூன்றாவது முறை வலக் கை,அல்லது இடக் கையின் பெருவிரலை மடக்கியவாறு "மாதம் என்பது இவ்வளவு இவ்வளவு இவ்வளவு தான்" என்று சொன்னார்கள்.

1969 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒரு மாதம் என்பது இருபத்தொன்பது நாட்களா(கவும் இருக்)கும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் இதைக் கூறுகையில், இரு கைகளையும் மூன்று முறை கோத்துக் காட்டி, முன்றாவது தடவையில் பெருவிரலை மடித்துக்கொண்டார்கள்.
அறிவிப்பாளர் உக்பா பின் ஹுரைஸ் (ரஹ்) அவர்கள், "ஒரு மாதம் என்பது முப்பது நாட்களாகும் என இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறி, தம்மிரு கைகளையும் மூன்று முறை கோத்துக் காட்டியதாகவே நான் கருதுகிறேன்" என்று கூறினார்கள்.

1970 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "நாம் எழுதப்படிக்கத் தெரியாத சமுதாயம் (உம்மத்துன் உம்மிய்யா) ஆவோம்; எழுதுவதை நாம் அறியமாட்டோம்; (நட்சத்திரக்) கணிதத்தையும் நாம் அறியமாட்டோம். மாதம் என்பது (சில வேளைகளில்) இப்படியும் இப்படியும் இப்படியும் (இருபத்தொன்பது நாட்களாக) இருக்கும்" என்று (மூன்று தடவை) கூறி, மூன்றாவது தடவையில் பெருவிரலை மடக்கிக்கொண்டார்கள். மேலும், மாதம் என்பது (சில வேளைகளில்) இப்படியும் இப்படியும் இப்படியும் -அதாவது முப்பது நாட்களாகவும்– இருக்கும் என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது. அதில் இரண்டாவது மாதத்தைக் குறிப்பிடுகையில், "அதாவது முப்பது இரவுகள்' எனும் விளக்கக் குறிப்பு இடம்பெறவில்லை.

1971 சஅத் பின் உபைதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் "இன்றைய இரவு (மாதத்தின்) பாதி இரவாகும் (இன்றிரவுடன் அரை மாதமாகிறது)" என்று கூறியதை இப்னு உமர் (ரலி) அவர்கள் செவியுற்றார்கள். உடனே அந்த மனிதரிடம் "இன்றைய இரவுதான் (மாதத்தின்) பாதியாகும் என உமக்கு எப்படித் தெரியும்? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது கை விரல்களால் இரண்டு முறை பத்து பத்து எனச் சைகை செய்து) "மாதம் என்பது இவ்வளவு இவ்வளவு இரவுகளாகும்" என்று கூறிவிட்டு, (மூன்றாவது தடவையில்) "இவ்வளவு' (என்று கூறியவாறு எல்லா விரல்களாலும் சைகை செய்து பெருவிரலை மட்டும் மடக்கிக்காட்டி மாதம் என்பது இருபத்தொன்பது இரவுகளாகவும் இருக்கும்) என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

1972 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் பிறையைப் பார்த்து நோன்பு நோறுங்கள். (மறு)பிறையைப் பார்த்து நோன்பை விடுங்கள். (ரமளான் பிறை இருபத்தொன்பதாம் நாள் மாலை) உங்களுக்கு மேகமூட்டம் தென்படுமானால் முப்பதாவது நாளும் நோன்பு நோற்றுக்கொள்ளுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1973 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பிறை பார்த்து நோன்பு வையுங்கள்; (மறு)பிறை பார்த்து நோன்பை விடுங்கள்; உங்களுக்கு மேகமூட்டம் தென்பட்டால், (ஷஅபான் மாதத்தின்) எண்ணிக்கையை (முப்பது நாட்களாக) முழுமையாக்கிக்கொள்ளுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1974 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பிறை பார்த்து நோன்பு வையுங்கள்; (மறு)பிறை பார்த்து நோன்பை விடுங்கள்; (மேக மூட்டத்தால்) உங்களுக்குத் திங்கள் தென்படவில்லையானால் முப்பது நாட்களாக எண்ணிக் கொள்ளுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1975 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிறை குறித்துக் கூறுகையில், "நீங்கள் பிறையைப் பார்த்து நோன்பு வையுங்கள். (மறு)பிறையைப் பார்த்து நோன்பை விடுங்கள். உங்களுக்கு மேகமூட்டம் தென்பட்டால், (மாதத்தை) முப்பது நாட்களாகக் கணக்கிட்டுக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.

**பாடம் : 3 ரமளானுக்கு முந்தைய நாளும் அதற்கு முந்தைய நாளும் நோன்பு நோற்காதீர்.**

1976 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ரமளானுக்கு முந்தைய நாளும் அதற்கு முந்தைய நாளும் நோன்பு நோற்காதீர்கள். (வழக்கமாக அந்த நாளில்) ஏதேனும் நோன்பு நோற்கும் மனிதரைத் தவிர! அவர் அந்நாளில் நோன்பு நோற்கட்டும். - இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 மாதம் என்பது இருபத்தொன்பது நாட்களாகவும் இருக்கும்.**

1977 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியருடன் ஒரு மாதகாலம் சேரப் போவதில்லை என்று சத்தியம் செய்துவிட்டு (விலகி) இருந்தார்கள். பின்னர் இருபத்தொன்பது இரவுகள் முடிந்ததும் (அந்த இரவுகளை நான் எண்ணிக்கொண்டே இருந்தேன்) என்னிடம்தான் முதன்முதலில் வந்தார்கள். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் ஒரு மாதம் எங்களிடம் வரமாட்டீர்கள் என்று சத்தியம் செய்திருந்தீர்களே, இருபத்தொன்பது நாட்கள் முடிந்ததும் வந்துவிட்டீர்களே? நான் அந்த இரவுகளை எண்ணிக் கொண்டிருந்தேனே!" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மாதம் என்பது இருபத்தொன்பது நாட்களாகவும் இருக்கும்" என்றார்கள்.

1978 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம் துணைவியரிடமிருந்து ஒரு மாதகாலம் விலகியிரு(க்கப்போவதாகக் கூறியிரு)ந்தார்கள். பின்னர் இருபத்தொன்பதாம் நாள் எங்களிடம் வந்தார்கள். அப்போது நாங்கள், "இன்று இருபத்தொன்பதாவது நாள்தான்" என்று சொன்னோம். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மூன்று தடவை கைகளைத் தட்டி, இறுதியில் ஒரு விரலை மட்டும் விரிக்காமல் மடக்கிவைத்திருந்துவிட்டு, "மாதம் என்பது இப்படி (இருபத்தொன்பது நாட்களாகவும்) இருக்கும்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1979 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தம் துணைவியரிடமிருந்து ஒரு மாதகாலம் விலகியிரு(க்கப் போவதாகக் கூறியிரு)ந்தார்கள். பின்னர் இருபத்தொன்பதாம் நாள் காலையிலேயே புறப்பட்டு எங்களிடம் வந்தார்கள். அப்போது சிலர், "அல்லாஹ்வின் தூதரே! (இன்று) இருபத்தொன்பதாம் நாள் காலைதான்" என்று கூறினர். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "மாதம் என்பது இருபத்தொன்பது நாட்களாகவும் இருக்கும்" என்று சொன்னார்கள். பிறகு நபி (ஸல்) அவர்கள் தம் கை விரல்களை (விரித்து) மூன்று முறை சேர்த்துக் காட்டினார்கள். இரண்டு தடவை எல்லா விரல்களையும் விரித்தார்கள்; மூன்றாவது தடவை ஒன்பது விரல்களை மட்டுமே விரித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பபாளர்தொடர்களில் வந்துள்ளது.

1980 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தம் துணைவியரில் சிலரிடம் ஒரு மாதகாலம் செல்லப்போவதில்லை எனச் சத்தியம் செய்து (விலகி) இருந்தார்கள். பின்னர் இருபத்தொன்பது நாட்கள் முடிந்ததும் அன்று "காலையில்' அல்லது "மாலையில்' அவர்களிடம் சென்றார்கள். அப்போது, "இறைவனின் தூதரே! எங்களிடம் ஒரு மாதகாலம் வரமாட்டீர்கள் எனச் சத்தியம் செய்திருந்தீர்களே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு நபியவர்கள், "மாதம் என்பது இருபத்தொன்பது நாட்களாகவும் இருக்கும்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1981 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது ஒரு கையை மற்றொரு கையில் (மூன்று தடவைகள்) அடித்து, "மாதம் என்பது இப்படியும் இப்படியும் இருக்கும்' என்று சொன்னார்கள். மூன்றாவது தடவையில் ஒரு விரலை மடக்கிக்கொண்டார்கள்.

1982 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "மாதம் என்பது இப்படி, இப்படி, இப்படி இருக்கும்" என்று கூறி (தம் கை விரல்களை முதலிரு முறை) பத்து,பத்து என்றும், (மூன்றாவதாக) ஒரு முறை ஒன்பது என்றும் சைகை செய்து காட்டினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 5 ஒவ்வோர் ஊர்க்காரர்களுக்கும் அவரவர் பார்க்கும் பிறையே (கணக்கில் எடுத்துக் கொள்ளப்படும்). ஓர் ஊரில் பிறை பார்த்தால்,வெகு தொலைவில் உள்ளவர்களுக்கு அது பொருந்தாது.

1983 (இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் அடிமையாயிருந்த) குறைப் பின் அபீமுஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உம்முல் ஃபள்ல் பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் (ஒரு வேலை நிமித்தம்) என்னை ஷாம் (சிரியா) நாட்டிலிருந்த முஆவியா (ரலி) அவர்களிடம் அனுப்பினார்கள். நான் ஷாம் சென்று அவரது தேவையை நிறைவுசெய்தேன். நான் ஷாமில் இருந்தபோது ரமளான் (முதல்)பிறை எனக்குத் தென்பட்டது. வெள்ளிக்கிழமை இரவில் நான் பிறையைக் கண்டேன். பிறகு அந்த (ரமளான்) மாதத்தின் இறுதியில் நான் மதீனா வந்துசேர்ந்தேன்.
அப்போது அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் (பயணம் குறித்து) என்னிடம் விசாரித்தார்கள். பின்னர் பிறை குறித்தும் பேசினார்கள். அப்போது "நீங்கள் (ஷாமில்) எப்போது பிறை பார்த்தீர்கள்?" என்று கேட்டார்கள். நான், "நாங்கள் வெள்ளியன்று பிறை கண்டோம்" என்று பதிலளித்தேன். அவர்கள், "நீயே அதைக் கண்டாயா?" என்று கேட்டார்கள். நான், "ஆம் (நானும் கண்டேன்). மக்களும் அதைக் கண்டார்கள். மக்களும் நோன்பு நோற்றனர். முஆவியா (ரலி) அவர்களும் நோன்பு நோற்றார்கள்" என்று கூறினேன். அதற்கு அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள், "ஆனால், நாங்கள் சனிக்கிழமை இரவுதான் (முதல்) பிறை கண்டோம். எனவே, நாங்கள் (ரமளான் மாதத்தின்) எண்ணிக்கையை முப்பது நாட்களாக முழுமையாக்கும் வரை, அல்லது (ஷவ்வால் மாதத்தின் முதல்) பிறையைப்

பார்க்கும்வரை நோன்பு நோற்றுக்கொண்டேயிருப்போம்" என்று சொன்னார்கள். அதற்கு நான், "முஆவியா (ரலி) அவர்கள் (முதல்பிறை) கண்டு, நோன்பு நோற்றது உங்களுக்குப் போதாதா?" என்று கேட்டேன். அதற்கு, "இல்லை. இப்படித்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டுள்ளார்கள்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 6 (முதல்)பிறை பெரியதாகவோ சிறியதாகவோ தென்படுவதற்கு எந்த முக்கியத்துவமும் இல்லை. பார்ப்பதற்காகவே பிறையை (சிறிது நேரம்) அல்லாஹ் தென்படச் செய்கிறான். மேகமூட்டம் தென்பட்டால் (மாதத்தின் நாட்கள்) முப்பதாக முழுமையாக்கப்படும்.**

1984 அபுல் பக்தரீ சயீத் பின் ஃபைரூஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் உம்ராவிற்காக (மக்காவிற்கு)ப் புறப்பட்டுச் சென்றோம். (வழியில்) நாங்கள் "பத்னு நக்லா' எனுமிடத்தில் தங்கியிருந்தபோது, பிறையைப் பார்க்க ஒன்றுகூடினோம். அப்போது மக்களில் சிலர், "அது மூன்றாவது பிறை" என்று கூறினர். வேறுசிலர், "(அல்ல) அது இரண்டாவது பிறை" என்று கூறினர். பின்னர் நாங்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களைச் சந்தித்தபோது, "நாங்கள் பிறை பார்த்தோம். மக்களில் சிலர் "அது மூன்றாவது பிறை' என்றனர். வேறுசிலர் "அது இரண்டாவது பிறை' என்று கூறினர்" என்று சொன்னோம். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "எந்த இரவில் நீங்கள் பிறை கண்டீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு, "இன்ன (மாதத்தின்) இன்ன இரவில்' என்று பதிலளித்தோம். அப்போது, "பார்ப்பதற்காகவே பிறையை அல்லாஹ் சிறிதுநேரம் தென்படச் செய்கிறான். ஆகவே, அது நீங்கள் கண்ட இரவுக்குரியதே ஆகும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்கள்.

1985 அபுல் பக்தரீ சயீத் பின் ஃபைரூஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் "தாத்து இர்க்' எனும் இடத்தில் இருந்தபோது ரமளான் (முதல்) பிறையைக் கண்டோம். அதைப் பற்றிக் கேட்பதற்காக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் ஒருவரை அனுப்பினோம். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "பார்ப்பதற்காகவே பிறையை அல்லாஹ் சிறிதுநேரம் தென்படச்செய்கிறான். உங்களுக்கு (வானில்) மேகமூட்டம் தென்படுமானால் (மாதத்தின் நாட்களின்) எண்ணிக்கையை (முப்பதாக) முழுமையாக்கிக் கொள்ளுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 7 இரு பெருநாட்களின் மாதங்கள் (சேர்ந்தாற்போல்) குறையாது.**

1986 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரு பெருநாட்களின் மாதங்களான ரமளானும் துல்ஹஜ்ஜும் குறையாது.
இதை அபூபக்ரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1987 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரு பெருநாட்களின் மாதங்கள் குறையாது.
இதை அபூபக்ரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் காலித் பின் மஹ்ரான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இரு பெருநாட்களின் மாதங்களான ரமளானும் துல்ஹஜ்ஜும் குறையாது" என்று காணப்படுகிறது.

**பாடம் : 8 ஃபஜ்ர் நேரம் வந்தவுடன் நோன்பு ஆரம்பமாகிவிடும். ஃபஜ்ர் நேரம் வரும்வரை உண்ணுதல் உள்ளிட்ட செயல்கள் செல்லும். நோன்பு ஆரம்பமாகுதல், சுப்ஹுத் தொழுகையின் நேரம் ஆரம்பமாகுதல் உள்ளிட்ட விதிமுறைகளுடன் தொடர்புடைய ஃபஜ்ர் நேரம் எது?**

1988 அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"கறுப்புக் கயிற்றிலிருந்து விடியலின் வெள்ளைக் கயிறு உங்களுக்குத் தென்படும்வரை நீங்கள் உண்ணுங்கள்; பருகுங்கள்" (2:187) வசனம் அருளப்பெற்றபோது நான் நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! நான் வெள்ளை நிறத்தில் ஒரு கயிறு, கறுப்பு நிறத்தில் மற்றொரு கயிறு என இரு கயிறுகளை என் தலையணையின் கீழே வைத்து, பகலில் இருந்து இரவை (பிரித்து) அறிய முயன்றேன். (ஆயினும், என்னால் பிரித்தறிய முடியவில்லை)" என்று சொன்னேன். அதற்கு அவர்கள், "உங்கள் தலையணை நிச்சயம் (மிக) அகலமானதாய் இருக்கவேண்டும். (கறுப்புக்கயிறு, வெள்ளைக்கயிறு என்பன அவற்றின் உண்மையான பொருளில் கூறப்படவில்லை. மாறாக,) அது இரவின் கருமையும் பகலின் வெண்மையுமே ஆகும்" என்று கூறினார்கள்.

1989 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"கறுப்புக் கயிற்றிலிருந்து வெள்ளைக் கயிறு உங்களுக்குத் தென்படும்வரை நீங்கள் உண்ணுங்கள்; பருகுங்கள்" எனும் இந்த (2:187 ஆவது) வசனம் அருளப்பெற்றபோது, ஒருவர் வெள்ளைக்கயிறு ஒன்றையும் கறுப்புக்கயிறு ஒன்றையும் எடுத்து வைத்துக்கொண்டு, அவையிரண்டும் பார்வைக்குத் தெளிவாகப் புலப்படும்வரை (சஹர் உணவு) சாப்பிட்டுக் கொண்டிருப்பார். அதன் பின்னர் அல்லாஹ், "மினல் ஃபஜ்ர்" (விடியலின்) எனும் சொல்லையும் சேர்த்து அருளி அ(வ்வசனத்)தைத் தெளிவுபடுத்தினான்.

1990 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"கறுப்புக் கயிற்றிலிருந்து வெள்ளைக் கயிறு உங்களுக்குத் தென்படும்வரை நீங்கள் உண்ணுங்கள்; பருகுங்கள்" எனும் இந்த (2:187 ஆவது) வசனம் அருளப்பெற்றபோது, நோன்பு நோற்க நாடியுள்ள ஒருவர் தம் இரு கால்களில் (ஒன்றில்) கறுப்புக்கயிற்றையும் (மற்றொன்றில்) வெள்ளைக்கயிற்றையும் கட்டிக்கொண்டு, அவ்விரண்டும் தமது பார்வைக்குத் தெளிவாகப் புலப்படும்வரை சாப்பிட்டுக்கொண்டிருப்பார். ஆகவே, அதற்குப் பின்னர் அல்லாஹ், "மினல் ஃபஜ்ர்" (விடியலின்) எனும் சொல்லையும் சேர்த்து அருளினான். அப்போதுதான் மக்கள், இதன் மூலம் அல்லாஹ் அதிகாலையையும் இரவையுமே நாடுகிறான் என்பதை அறிந்துகொண்டார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

1991 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பிலால் அவர்கள், (பின்)இரவில் தொழுகை அறிவிப்புச்செய்வார். எனவே, (ஃபஜ்ர் தொழுகைக்காக) இப்னு உம்மி மக்தூம் செய்யும் தொழுகை அறிவிப்பை நீங்கள் கேட்கும்வரை உண்ணுங்கள்; பருகுங்கள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

1992 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பிலால் (பின்)இரவில் தொழுகை அறிவிப்புச் செய்வார். (நீங்கள் சஹர் நேரம் முடிந்து விட்டதாக நினைத்துவிடாதீர்கள்.) இப்னு உம்மி மக்தூமின் தொழுகை அறிவிப்பை நீங்கள் கேட்கும்வரை உண்ணுங்கள்; பருகுங்கள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1993 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இரு தொழுகை அறிவிப்பாளர்கள் இருந்தார்கள். (ஒருவர்) பிலால் (ரலி) அவர்கள். (மற்றொருவர்) கண் பார்வையற்ற இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பிலால் (பின்)இரவில் தொழுகை அறிவிப்புச் செய்வார். எனவே, இப்னு உம்மி மக்தூம் (ஃபஜ்ர் தொழுகைக்காக) அறிவிப்புச் செய்யும்வரை உண்ணுங்கள்; பருகுங்கள்" என்று சொன்னார்கள்.
அவர் அறிவிப்புச் செய்துவிட்டு இறங்குவார்; இவர் அறிவிப்புச் செய்வதற்காக ஏறுவார். இதைத் தவிர இருவரு(டைய அறிவிப்பு நேரங்களு)க்கிடையே (பெரிய இடைவெளி) ஏதும் இருக்காது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாக ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தும் அறிவிக்கப்பட்டுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) மற்றும் ஆயிஷா (ரலி) ஆகியோர் வாயிலாக (தலா) மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

1994 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர் கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் சஹர் உணவு உண்பதிலிருந்து பிலாலின் தொழுகை அறிவிப்பு (அல்லது பிலாலின் அழைப்பு) அவரைத் தடுத்துவிடவேண்டாம். உங்களில் (இரவுத் தொழுகை) தொழுதுகொண்டிருப்பவர் திரும்புவதற்காகவும் உங்களில் உறங்கிக்கொண்டிருப்பவரை எழுப்புவதற்காவுமே பிலால் "அறிவிப்புச் செய்கிறார்' அல்லது "அழைக்கிறார்'.
இதன் அறிவிப்பாளரான அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:
இதைக் கூறும்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தமது கையைக் கீழே தாழ்த்திப் பின்னர் மேலே உயர்த்திக் காட்டி, இவ்வாறு இவ்வாறு (கீழ் மேலாகச் செங்குத்தாய் தெரியும் வெளிச்சம் ஃபஜ்ர்) அல்ல என்று கூறிவிட்டு, பிறகு தம் கைவிரல்களை விரித்துக் காட்டி இவ்வாறு (அடிவானில் நாலா பாகமும் பரவலாகத் தெரியும் வெளிச்சமே ஃபஜ்ர் ஆகும்) என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், அதில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் கைவிரல்களை ஒன்றுசேர்த்து பூமியை நோக்கித் தாழ்த்திக் காட்டி, இவ்வாறு (செங்குத்தான வெளிச்சமாக) இருப்பது ஃபஜ்ர் அல்ல; மாறாக, ஒரு சுட்டு விரல்மீது மற்றொரு சுட்டுவிரல் வைத்துத் தம் இரு கைகளையும் நீட்டிக் காட்டி இவ்வாறு (பரவாலான வெளிச்சமாக) இருப்பதே ஃபஜ்ர் ஆகும் என்று கூறினார்கள்.

1995 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், முஅதமிர் பின் சுலைமான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உங்களில் உறங்கிக் கொண்டிருப்பவரை எழுப்புவதற்காகவும் உங்களில் (இரவுத்தொழுகை) தொழுது கொண்டிருப்பவர் திரும்புவதற்காகவுமே (பிலால் அறிவிப்புச்செய்கிறார்)" என்பது வரையே இடம்பெற்றுள்ளது.
இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இவ்வாறு தெரிவது ஃபஜ்ர் அல்ல; மாறாக, இவ்வாறு தெரிவதே ஃபஜ்ர் ஆகும். அதாவது செங்குத்தானது ஃபஜ்ர் அன்று; அகலத்தில் பரவியிருப்பதே ஃபஜ்ர் ஆகும்" என இடம்பெற்றுள்ளது.

1996 முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் சஹ்ர் உணவு உண்பதிலிருந்து பிலாலின் தொழுகை அறிவிப்பு ஏமாற்றி (தடுத்து)விட வேண்டாம். நீளவாக்கில் (செங்குத்தாகத்) தென்படும் இந்த வெண்மையானது (அடிவானில்) பரவலாகத் தெரியும்வரை அதுவும் உங்களை ஏமாற்றி (தடுத்து)விட வேண்டாம்.
இதை சமுரா பின் ஜுன்துப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1997 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களை (சஹ்ர் உணவு உண்பதிலிருந்து) பிலாலின் தொழுகைஅறிவிப்பு ஏமாற்றி (தடுத்து) விடவேண்டாம். (செங்குத்தாகத் தெரியும்) இந்த வெளிச்சமும் (இவ்வாறு பரவலாகத் தெரியும்வரை) ஏமாற்றி (தடுத்து) விடவேண்டாம். இவ்வாறு (அகலவாக்கில்) பரவலாகத் தெரியும்வரை.
இதை சமுரா பின் ஜுன்துப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

1998 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களை சஹ்ர் உணவு உண்பதிலிருந்து பிலாலின் தொழுகை அறிவிப்பு ஏமாற்றி (தடுத்து) விடவேண்டாம். அடிவானில் நீளவாக்கில் (செங்குத்தாய்) தெரியும் இந்த வெண்மை – இவ்வாறு (அகலவாக்கில்) பரவும் வரை– ஏமாற்றி (தடுத்து) விடவேண்டாம்.
இதை சமுரா பின் ஜுன்துப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் அ(கலவாக்கில் பரவலாகத் தெரியும்வரை என்ப)தை அறிவிக்கும்போது, இவ்வாறு என்று தம் இரு கரங்களால் சைகை செய்து (விரித்துக்) காட்டினார்கள்.

1999 நபி (ஸல்) அவர்கள் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களை (சஹர் செய்வதிலிருந்து) பிலாலின் தொழுகைஅறிவிப்பு ஏமாற்றிவிட வேண்டாம். (அடிவானில் நீளவாக்கில் தென்படும்) இந்த வெண்மை –வைகறை "வெளிப்படும் வரை' அல்லது "தோன்றும்வரை'- ஏமாற்றி (தடுத்து) விடவேண்டாம்.
இதை சமுரா பின் ஜுன்துப் (ரலி) அவர்கள் உரையாற்றுகையில் அறிவித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சமுரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது.

பாடம் : 9 சஹர் செய்வதன் சிறப்பு; அது வலியுறுத்தப்பெற்ற விரும்பத்தகுந்த செயலாகும்; சஹரை அதன் இறுதி நேரத்தில் செய்வதும்,நோன்பு துறத்தலை அதன் ஆரம்ப நேரத்தில் செய்வதும் விரும்பத்தக்கவை ஆகும்.

2000 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சஹர் செய்யுங்கள். ஏனெனில், சஹர் செய்வதில் அருள்வளம் (பரக்கத்) உள்ளது.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2001 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நமது நோன்பிற்கும் வேதக்காரர்களின் உபவாசத்திற்கும் இடையில் உள்ள வேறுபாடு சஹர் நேரத்தில் உண்பதுதான்.
இதை அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2002 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"நாங்கள் சஹர் செய்துவிட்டுப் பின்னர் (ஃபஜ்ர்) தொழுகைக்குத் தயாராவோம்" என்று ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறினார்கள். நான், "சஹருக்கும் (ஃபஜ்ர்) தொழுகைக்குமிடையே எவ்வளவு இடைவெளி இருக்கும்?" என்று கேட்டேன். அதற்கு ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள், "(குர்ஆனில்) ஐம்பது வசனங்கள் (ஓதும் நேரம்)" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இன்னும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2003 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நோன்பு துறப்பதை விரைவுபடுத்தும் காலமெல்லாம் மக்கள் நன்மையில் நிலைத்திருப்பார்கள்.
இதை சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் அறவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடமிருந்தே வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2004 அபூஅத்திய்யா மாலிக் பின் ஆமிர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் மஸ்ரூக் (ரஹ்) அவர்களும் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றோம். "இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! இரு நபித்தோழர்களில் ஒருவர் விரைந்து நோன்பு துறக்கிறார்; (மஃக்ரிப் தொழுகையின் ஆரம்ப நேரத்திலேயே) விரைந்து தொழுகிறார். இன்னொருவர், நோன்பு துறப்பதையும் தாமதப்படுத்துகிறார்; தொழுகையையும் தாமதப் படுத்துகிறார் (இவ்விருவரில் யார் செய்வது சரி?)" என்று கேட்டோம். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் "விரைந்து நோன்பு துறந்து, விரைந்து தொழுபவர் யார்?" என்று கேட்டார்கள். நாங்கள் "அப்துல்லாஹ் பின் மஸ்ஊத்' என்றோம். அதற்கு, "இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்வார்கள்" என்று ஆயிஷா (ரலி) அவர்கள் விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இன்னொரு நபித்தோழர் அபூமூசா (ரலி) ஆவார்' என அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

2005 அபூஅத்திய்யா மாலிக் பின் ஆமிர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் மஸ்ரூக் (ரஹ்) அவர்களும் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது மஸ்ரூக், ஆயிஷா (ரலி) அவர்களிடம் "முஹம்மத் (ஸல்) அவர்களின் தோழர்களில் இருவர் நன்மையில் குறைவைப்பவர்கள் அல்லர். அவ்விருவரில் ஒருவர் மஃக்ரிப் தொழுகையையும் நோன்பு துறப்பதையும் விரைவாகவே செய்கிறார். மற்றொருவர் அவ்விரண்டையுமே தாமதப்படுத்துகிறார்" என்று கூறினார். அப்போது "மஃக்ரிபையும் நோன்பு துறப்பதையும் விரைவுபடுத்துபவர் யார்?" என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கேட்டார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத்' என்றார் மஸ்ரூக். ஆயிஷா (ரலி) அவர்கள், "இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்வார்கள்" என்று விடையளித்தார்கள்.

## பாடம் : 10 நோன்பு முடியும் நேரமும் பகலின் வெளியேற்றமும்.

2006 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரவு வந்து, பகல் போய், சூரியன் மறைந்துவிட்டால் நோன்பாளி நோன்பு துறப்பார்.
இதை உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2007 அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ரமளான் மாதத்தில் நோன்பு நோற்றவர்களாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தோம். சூரியன் மறைந்ததும், "இன்ன மனிதரே, (ஒட்டகத்திலிருந்து) இறங்கி நமக்காக மாவு கரைப்பீராக!" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள். அவர், "அல்லாஹ்வின் தூதரே! பகல் இன்னும் எஞ்சியுள்ளதே?" என்று சொன்னார். "இன்ன மனிதரே, (ஒட்டகத்திலிருந்து) இறங்கி நமக்காக மாவு கரைப்பீராக!" என்று (மீண்டும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள். எனவே, அவர் இறங்கிவந்து, மாவு கரைத்துக் கொண்டுவந்தார். உடனே நபி (ஸல்) அவர்கள் அதை அருந்திவிட்டு, "சூரியன் இங்கிருந்து மறைந்து, இரவு இங்கிருந்து வந்துவிட்டால் நோன்பாளி நோன்பு துறப்பார்" என்று கையால் சைகை செய்து கூறினார்கள்.

2008 அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒரு பயணத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். சூரியன் மறைந்ததும் ஒரு மனிதரிடம், "(ஒட்டகத்திலிருந்து) இறங்கி நமக்காக மாவு கரைப்பீராக" என்று சொன்னார்கள். அவர், "அல்லாஹ்வின் தூதரே, மாலைநேரம் ஆகட்டுமே!" என்று சொன்னார். "இறங்கி நமக்காக மாவு கரைப்பீராக" என்று (மீண்டும்) சொன்னார்கள். அவர், "இன்னும் பகல் இருக்கிறதே!" என்று சொல்லிவிட்டு, இறங்கி நபி அவர்களுக்காக மாவு கரைத்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதை அருந்தினார்கள். பின்னர், கிழக்குத் திசையை நோக்கி சைகை செய்து "இரவு இங்கிருந்து முன்னோக்கி வந்துவிட்டதை நீங்கள் காணும்போது நோன்பாளி நோன்பு துறப்பார்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (ஒரு பயணத்தில்) சென்றோம். அவர்கள் நோன்பு நோற்றிருந்தார்கள். சூரியன் மறைந்ததும், "இன்ன மனிதரே, இறங்கி நமக்காக மாவு கரைப்பீராக" என்று கூறினார்கள் என அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறினார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2009 மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், மேற்கண்ட இரு ஹதீஸ்களில் உள்ள தகவல்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால், இந்த அறிவிப்புகளில் "ரமளான் மாதத்தில்' எனும் குறிப்போ, "இரவு இங்கிருந்து வந்துவிட்டால்' எனும் சொற்றொடரோ காணப்படவில்லை. ஹுஷைம் பின் பஷீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டுமே இவ்வாசகங்கள் இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 11 தொடர்நோன்பு நோற்பதற்கு வந்துள்ள தடை.

2010 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
நபி (ஸல்) அவர்கள் தொடர்நோன்பு நோற்கலாகாது எனத் தடைவிதித்தார்கள். "நீங்கள் தொடர்நோன்பு நோற்கிறீர்களே?" என்று மக்கள் வினவினர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நான் (இந்த விஷயத்தில்) உங்களைப் போன்றவன் அல்லன்; எனக்கு (இறைவனிடமிருந்து) உணவும் பானமும் வழங்கப்படுகிறது" என்று சொன்னார்கள்.

2011 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ரமளான் மாதத்தில் தொடர்நோன்பு நோற்றார்கள். மக்களும் அவ்வாறே தொடர்நோன்பு நோற்றனர். ஆனால், மக்களுக்குத் தடை விதித்துவிட்டார்கள். "நீங்கள் தொடர்நோன்பு நோற்கிறீர்களே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "நான் (இந்த விஷயத்தில்) உங்களைப் போன்றவன் அல்லன். எனக்கு (என் இறைவனிடமிருந்து) உணவும் பானமும் வழங்கப்படுகிறது" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "ரமளான் மாதத்தில்' எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

2012 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொடர்நோன்பிற்குத் தடை விதித்தார்கள். அப்போது முஸ்லிம்களில் ஒருவர், "தாங்கள் மட்டும் தொடர்நோன்பு நோற்கிறீர்களே, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் என்னைப் போன்றவர் யார் இருக்கிறார்? எனக்கு என் இறைவன் உண்ணவும் பருகவும் வழங்குகின்ற நிலையில் நான் இரவைக் கழிக்கிறேன்" என்று சொன்னார்கள். ஆனால், தொடர்நோன்பு நோற்பதிலிருந்து விலகிக்கொள்ள மக்கள் மறுத்தபோது,தம்முடன் ஒரு நாள் தொடர்நோன்பு நோற்க மக்களையும் நபியவர்கள் அனுமதித்தார்கள். பின்னர் அடுத்த நாளும் அனுமதித்தார்கள். பிறகு (அடுத்த மாதத்தின்) தலைப்பிறையை மக்கள் கண்டனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் "தலைப்பிறை இன்னும் தள்ளிப்போயிருந்தால் (உங்களால் இயலாத அளவிற்குத் தொடர்நோன்பு நோற்பதை) மேலும் நான் உங்களுக்கு அதிகப் படுத்தியிருப்பேன்" என்று சொன்னார்கள். மக்கள் தொடர்நோன்பு நோற்பதிலிருந்து விலகிக் கொள்ள மறுத்ததைக் கண்டிக்கும் விதத்திலேயே இவ்வாறு கூறினார்கள்.

2013 அபூஹுரைரா ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தொடர்நோன்பு நோற்பதிலிருந்து உங்களை நான் எச்சரிக்கிறேன்" என்று கூறினார்கள். "தாங்கள் மட்டும் தொடர்நோன்பு நோற்கிறீர்களே, அல்லாஹ்வின் தூதரே?" என்று மக்கள் கேட்டார்கள். "இவ்விஷயத்தில் நீங்கள் என்னைப் போன்றவர்கள் அல்லர். எனக்கு என் இறைவன் உண்ணவும் பருகவும் வழங்குகின்ற நிலையில் நான் இரவைக் கழிக்கிறேன். எனவே, நற்செயல்களில் உங்களால் இயன்ற சுமையை மட்டும் ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், அதில் "உங்களுக்குச் சக்தியுள்ள சுமையை மட்டுமே ஏற்றுக்கொள்ளுங்கள்" என இடம் பெற்றுள்ளது. - மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "நபி (ஸல்) அவர்கள், தொடர் நோன்பிற்குத் தடை விதித்தார்கள்" என ஹதீஸ் தொடங்குகிறது.

2014 அனஸ் ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தில் தொழுவார்கள். (ஒரு நாள்) நான் சென்று அவர்களுக்கு விலாப் பக்கத்தில் நின்றுகொண்டேன். இன்னொரு மனிதர் வந்து அவரும் நின்றுகொண்டார். இறுதியில் நாங்கள் ஒரு கூட்டமாகவே ஆகிவிட்டோம். தமக்குப் பின்னால் நாங்கள் நிற்பதை நபி (ஸல்) அவர்கள் உணர்ந்ததும் தொழுகையைச் சுருக்கலானார்கள். பிறகு தமது இல்லத்திற்குள் சென்று, எங்களுடன் தொழாத விதத்தில் (நீளமாகத்) தொழுதார்கள். காலையில் நாங்கள் அவர்களிடம் "இந்த இரவு (உங்களுக்குப் பின்னால் இருந்த) எங்களைத் தாங்கள் அறிந்தீர்களா?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள் "ஆம். அதுதான் நான் எதைச் செய்தேனோ அதைச் செய்ததற்கு (சுருக்கித் தொழுததற்கு)க் காரணமாக அமைந்தது" என்று சொன்னார்கள். அந்த மாதத்தின் இறுதியில்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொடர்நோன்பு நோற்க ஆரம்பித்தார்கள்.

அவர்களுடைய தோழர்களில் சிலரும் அவ்வாறே தொடர்நோன்பு நோற்கலாயினர். அப்போது நபி (ஸல்) அவர்கள், "சிலருக்கு என்ன நேர்ந்தது? அவர்கள் தொடர்நோன்பு நோற்கிறார்கள்! நீங்கள் (இவ்விஷயத்தில்) என்னைப் போன்றவர்கள் அல்லர். கவனத்தில் வையுங்கள்! அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த மாதம் இன்னும் தள்ளிப்போயிருந்தால் (உங்களால் தொடர இயலாத அளவிற்கு) இன்னும் பல நாட்கள் நான் தொடர்நோன்பு நோற்றிருப்பேன். அப்போது (வழிபாடுகளில்) அதீத ஆர்வம் காட்டுவோர் தங்கள் போக்கைக் கைவிட்டிருப்பர்" என்று சொன்னார்கள்.

2015 அனஸ் ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தின் ஆரம்பத்தில் தொடர்நோன்பு நோற்றார்கள். (இதைக் கண்டு) முஸ்லிம்கள் சிலரும் தொடர்நோன்பு நோற்றார்கள். இந்த விஷயம் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது அவர்கள், "எமக்கு (மட்டும்) இந்த மாதம் (எத்தனை நாட்கள்) நீட்டிக்கப்பட்டிருந்தாலும் எம்மால் தொடர்நோன்பு நோற்றிருக்க முடியும். அப்போது (வழிபாடுகளில்) அதீத ஆர்வம் காட்டுபவர்கள் தங்களது போக்கைக் கைவிட்டிருப்பர். "நீங்கள் (இவ்விஷயத்தில்) என்னைப் போன்றவர்கள் அல்லர்' அல்லது "நான் உங்களைப் போன்றவன் அல்லன்'. எனக்கு என் இறைவன் உண்ணவும் பருகவும் வழங்கும் நிலையில் நான் பகல் நேரத்தைக் கழிக்கிறேன்" என்று சொன்னார்கள்.

2016 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
தொடர்நோன்பு நோற்கலாகாது என நபி (ஸல்) அவர்கள் மக்களுக்குத் தடைவிதித்தார்கள். மக்கள்மீது கொண்ட கருணையே இதற்குக் காரணம். அப்போது "தாங்கள் (மட்டும்) தொடர் நோன்பு நோற்கிறீர்களே!" என்று மக்கள் கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நான் (இவ்விஷயத்தில்) உங்களைப் போன்றவன் அல்லன். எனக்கு என் இறைவன் உண்ணவும் பருகவும் வழங்குகின்றான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 12 பாலுணர்வைத் தூண்டாது எனில் நோன்பாளி (தம் மனைவியை) முத்தமிடுவது தடைசெய்யப்பட்டதன்று.**

2017 (ஆயிஷா (ரலி) அவர்களின் சகோதரியின் புதல்வர்) உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் தம் துணைவியரில் ஒருவரை முத்தமிடுவார்கள்" எனக் கூறிவிட்டு ஆயிஷா (ரலி) அவர்கள் சிரிப்பார்கள்.

2018 சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துர் ரஹ்மான் பின் அல்காசிம் (ரஹ்) அவர்களிடம், "நீங்கள் உங்கள் தந்தை (காசிம் பின் முஹம்மத் – ரஹ்) அவர்கள் வாயிலாக "நபி (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றுக் கொண்டு என்னை முத்தமிடுவார்கள்' என ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸைச்

செவியுற்றீரா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் (பதிலளிக்காமல் சிறிது நேரம்) அமைதியாக இருந்துவிட்டுப் பிறகு "ஆம்' என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2019 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் என்னை முத்தமிடுவார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டதைப் போன்று உங்களில் எவரால் தம் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளமுடியும்?
இதைக் காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் அஸ்ஸித்தீக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2020 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் (தம் துணைவியை) முத்தமிடுவார்கள்; நோன்பு நோற்றிருந்த நிலையில் கட்டியணைப்பார்கள். ஆயினும், அவர்கள் தம் உணர்ச்சிகளை, உங்களையெல்லாம்விட அதிகமாகக் கட்டுப்படுத்திக் கொள்பவர்களாக இருந்தார்கள்.
இதை மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஏழு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2021 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் (தம் துணைவியை) முத்தமிடுவார்கள்; (அதே நேரத்தில்) அவர்கள் தம் உணர்ச்சிகளை, உங்களையெல்லாம்விட அதிகமாகக் கட்டுப்படுத்திக் கொள்பவர்களாக இருந்தார்கள்.
இதை அல்கமா பின் கைஸ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2022 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் (தம் துணைவியைக்) கட்டியணைப்பார்கள்.
இதை அல்கமா பின் கைஸ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2023 அஸ்வத் பின் யஸீத் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் மஸ்ரூக் (ரஹ்) அவர்களும் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்ற நிலையில் (தம் துணைவியரைக்) கட்டியணைப்பார்களா?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "ஆம். ஆயினும், "அவர்கள் தம் உணர்ச்சிகளை, உங்களையெல்லாம்விட அதிகமாகக் கட்டுப்படுத்திக்கொள்பவர்களாக இருந்தார்கள்". அல்லது "அவர்கள் உங்களில் தம் உணர்ச்சிகளை அதிகமாகக் கட்டுப்படுத்திக் கொள்பவர்களில் ஒருவராக இருந்தார்கள்' " என்றார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நாங்கள் இருவரும் இறை நம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் (நோன்பு நோற்றுக் கொண்டு முத்தமிடுவது பற்றிக்) கேட்பதற்காகச் சென்றோம்" என்று அஸ்வத் (ரஹ்), மஸ்ரூக் (ரஹ்) ஆகியோர் கூறியதாக ஹதீஸ் தொடங்குகிறது.

2024 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் என்னை முத்தமிடுவார்கள்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2025 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு மாதத்தில் (நோன்பு நோற்றிருந்த நிலையில் தம் துணைவியரை) முத்தமிடுவார்கள்.
இதை அம்ர் பின் மைமூன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2026 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தில் நோன்பு நோற்றிருந்த நிலையில் (தம் துணைவியரை) முத்தமிடுவார்கள்.
இதை அம்ர் பின் மைமூன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2027 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் (தம் துணைவியரை) முத்தமிடுவார்கள்.
இதை அலீ பின் அல்ஹுசைன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2028 ஹஃப்ஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் (தம் துணைவியரை) முத்தமிடுவார்கள்.
இதை ஷுதைர் பின் ஷகல் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஹஃப்ஸா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2029 உமர் பின் அபீசலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "நோன்பாளி (மனைவியை) முத்தமிடலாமா?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது பற்றி நீ (உன் தாயார்) உம்மு சலமாவிடம் கேள்!" என்றார்கள். (அவ்வாறே நான்

கேட்டபோது, என் தாயார்), "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்வார்கள்" என்று என்னிடம் தெரிவித்தார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! (தாங்கள் இவ்வாறு செய்தால் குற்றமில்லை. ஏனெனில்) அல்லாஹ், தங்கள் முன்பின் பாவங்களை மன்னித்து (விட்டதாக அறிவித்து)விட்டான்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கவனி! அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களையெல்லாம்விட நான் அதிகமாக அல்லாஹ்விற்கு அஞ்சி (பாவங்களிலிருந்து விலகி) வாழ்கிறேன்; அவனு(டைய தண்டனை)க்குப் பயந்து வாழ்கிறேன்" என்று சொன்னார்கள்.

பாடம் : 13 பெருந்துடக்குடன் வைகறைப் பொழுதை அடைந்தவரின் நோன்பு செல்லும்.

2030 அபூபக்ர் பின் அப்திர் ரஹ்மான் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் "பெருந்துடக்குடன் வைகறைப் பொழுதை அடைந்தவருக்கு நோன்பு இல்லை (அது செல்லாது)" என்று அறிவிப்பதை நான் செவியுற்றேன். இதை நான் (என் தந்தை) அப்துர் ரஹ்மான் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்களிடம் சொன்னேன். அதை அவர்கள் மறுத்தார்கள். பின்னர் ஆயிஷா (ரலி) மற்றும் உம்மு சலமா (ரலி) ஆகியோரை நோக்கி நடந்தார்கள். அவர்களுடன் நானும் நடந்தேன். அவ்விருவரிடம் நாங்கள் போய்ச் சேர்ந்தோம். அதைப் பற்றி அவர்களிடம் என் தந்தை கேட்டார்கள். அதற்கு அவர்கள் இருவரும், "நபி (ஸல்) அவர்கள் (இரவில் தாம்பத்திய உறவு கொண்டு) குளிப்புக் கடமையான நிலையில் -உறக்க ஸ்கலிதத்தினால் அல்ல- வைகறைப் பொழுதை அடைவார்கள். பிறகு நோன்பு நோற்பார்கள்" என்று கூறினர்.
எனவே, நாங்கள் இருவரும் (மதீனாவின் ஆட்சியராயிருந்த) மர்வான் பின் அல்ஹகமை நோக்கிச் சென்றோம். (என் தந்தை) அப்துர் ரஹ்மான் அவர்கள் (அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துவந்த விஷயத்தையும் அதற்கு மாறாக ஆயிஷா (ரலி) மற்றும் உம்மு சலமா (ரலி) ஆகியோர் கூறியதையும்) மர்வான் பின் அல்ஹகமிடம் எடுத்துரைத்தார்கள். உடனே மர்வான், "நீங்கள் அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் சென்று, அவர்கள் அறிவித்து வருவதற்கு மறுப்புத் தெரிவித்துத் தான் ஆகவேண்டும்" என்று கூறினார். அவ்வாறே நாங்கள் இருவரும் அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் சென்றோம். இந்த நிகழ்ச்சி முழுவதிலும் நானும் அங்கிருந்தேன். நடந்தவற்றை அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடம் அப்துர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறினார்கள். இதைக்கேட்ட அபூஹுரைரா (ரலி) அவர்கள், "(ஆயிஷா (ரலி) மற்றும் உம்மு சலமா (ரலி) ஆகிய) அவ்விருவருமா உம்மிடம் இவ்வாறு கூறினார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு (என் தந்தை) அப்துர் ரஹ்மான் அவர்கள், "ஆம் (அவர்கள் இருவருமே கூறினர்)'என்றார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்கள், "(நபி (ஸல்) அவர்களின் துணைவியரான) அவர்கள் இருவரும் (இதுகுறித்து) நன்கறிந்தவர்கள்" என்று சொன்னார்கள்.

பின்னர் அபூஹுரைரா (ரலி) அவர்கள் தாம் இதுவரை ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதையே அறிவித்து வந்ததாகக் கூறிவிட்டு, "இதை நான் ஃபள்லிடமிருந்தே செவியுற்றேன்; (நேரடியாக) நபி (ஸல்) அவர்களிடமிருந்து செவியுறவில்லை" என்று சொன்னார்கள். பின்னர் இது தொடர்பாகத் தாம் கூறிவந்த கருத்தை அபூஹுரைரா (ரலி) அவர்கள் திரும்பப் பெற்றுக்கொண்டார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) அப்துல் மலிக் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்களிடம், "ரமளான் மாதத்தில் (நபி (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்ததாக) ஆயிஷாவும் உம்மு சலமாவும் கூறினார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "(ஆம்) அவ்வாறுதான். நபி (ஸல்) அவர்கள் குளிப்புக் கடமையான நிலையில் -உறக்க ஸ்கலிதத்தினால் அல்ல- வைகறைப் பொழுதை அடைவார்கள். பிறகு நோன்பைத் தொடருவார்கள் என்று கூறினர்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2031 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தில் பெருந்துடக்குடையவர்களாக வைகறை (ஃபஜ்ர்) நேரத்தை அடைவார்கள்; ஸ்கலிதம் ஏற்பட்டதால் அல்ல (தாம்பத்திய உறவில் ஈடுபட்டதால்தான்). பின்னர் குளித்துவிட்டு நோன்பைத் தொடருவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2032 அபூபக்ர் பின் அப்திர் ரஹ்மான் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மர்வான் பின் அல்ஹகம், "பெருந்துடக்குடன் வைகறைப் பொழுதை அடைந்த மனிதர் நோன்பு நோற்கலாமா?' என்பது குறித்துக் கேட்பதற்காக என்னை உம்மு சலமா (ரலி) அவர்களிடம் அனுப்பினார். (அவ்வாறே நான் கேட்டதற்கு) "நபி (ஸல்) அவர்கள் (இரவில்) தாம்பத்திய உறவில் ஈடுபட்டுப் பெருந்துடக்குடன் -உறக்க ஸ்கலிதத்தால் அல்ல- வைகறைப் பொழுதை அடைவார்கள். பிறகு நோன்பை(த் தொடர்வார்களே தவிர) விட்டுவிடமாட்டார்கள்; (பின்னாளில் "களா' வாகத்) திரும்ப நோற்கவுமாட்டார்கள்" என உம்மு சலமா (ரலி) அவர்கள் விடையளித்தார்கள்.

2033 நபி (ஸல்) அவர்களின் துணைவியரான ஆயிஷா (ரலி) மற்றும் உம்மு சலமா (ரலி) ஆகியோர் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாத்தில் (இரவில்) தாம்பத்திய உறவில் ஈடுபட்டு, பெருந்துடக்குடையவர்களாக சுப்ஹு நேரத்தை அடைவார்கள். ஸ்கலிதம் ஏற்பட்டதால் அல்ல. பின்னர் நோன்பைத் தொடருவார்கள்.

2034 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது::
ஒரு மனிதர் (ஒரு விஷயத்தில்) தீர்ப்புக் கேட்பதற்காக நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அப்போது நான் கதவுக்குப் பின்னாலிருந்து கேட்டுக்கொண்டிருந்தேன். அவர், "அல்லாஹ்வின் தூதரே! எனக்குப் பெருந்துடக்கு ஏற்பட்டிருக்கும் நிலையில் (ஃபஜ்ர்) தொழுகையின் நேரம் என்னை வந்தடைந்தால், அப்போதும் நான் நோன்பு நோற்கவேண்டுமா?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எனக்குப் பெருந்துடக்கு ஏற்பட்ட நிலையில் (ஃபஜ்ர்) தொழுகைநேரம் என்னை வந்தடைகிறது. அப்போதும் நான் நோன்பைத் தொடரவே செய்கிறேன்" என்று விடையளித்தார்கள். அதற்கு அந்த மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் எங்களைப் போன்றவர்கள் அல்லர். அல்லாஹ் தங்களின் முன் பின் பாவங்களை மன்னித்துவிட்டானே?" என்று சொன்னார். அதற்கு, "அல்லாஹ்வின் மீதாணையாக!

உங்களைவிட அதிகமாக நான் அல்லாஹ்வை அஞ்சுபவனாகவும், எவற்றிலிருந்து நான் தவிர்ந்துகொள்ள வேண்டும் என்பதை உங்களைவிட அதிகமாக அறிந்தவனாகவும் இருக்கவே நான் ஆசிக்கிறேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2035 சுலைமான் பின் யசார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் உம்மு சலமா (ரலி) அவர்களிடம் "பெருந்துடக்குடன் காலை (சுப்ஹு) நேரத்தை அடைந்த ஒரு மனிதர் நோன்பைத் தொடரலாமா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இரவில் தாம்பத்திய உறவில் ஈடுபட்டு), பெருந்துடக்குடையவர்களாக சுப்ஹு நேரத்தை அடைவார்கள்; ஸ்கலிதம் ஏற்பட்டதால் அல்ல. பின்னர் நோன்பைத் தொடருவார்கள்" என்று விடையளித்தார்கள்.

பாடம் : 14 நோன்பாளி ரமளான் பகலில் தாம்பத்திய உறவில் ஈடுபடுவது கடுமையாகத் தடை செய்யப்பட்டுள்ளது; அவ்வாறு ஈடுபட்டால் அதற்காகப் பெரிய பரிகாரம் செய்வது கடமையாகும் என்பதன் விளக்கம்; ஏழை, செல்வர் அனைவர்மீதும் அந்தப் பரிகாரம் கடமையாகும். ஆனால், ஏழைக்கு வசதி வரும்வரை அவகாசம் உண்டு.

2036 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "நான் அழிந்துவிட்டேன், அல்லாஹ்வின் தூதரே!" என்றார். நபி (ஸல்) அவர்கள், "உமது அழிவுக்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்கள். "நான் ரமளானில் (நோன்பு வைத்துக்கொண்டே) என் மனைவியுடன் (பகலில்) தாம்பத்திய உறவு கொண்டுவிட்டேன்" என்று அவர் சொன்னார். நபி (ஸல்) அவர்கள், "(இதற்குப் பரிகாரமாக) ஓர் அடிமையை விடுதலைசெய்ய உம்மால் இயலுமா?" என்று கேட்டார்கள். அவர் "இல்லை' என்றார். "தொடர்ந்து இருமாதங்கள் நோன்பு நோற்க உம்மால் முடியுமா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர் "இல்லை' என்றார். "அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க உம்மால் இயலுமா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்க, அவர் "இல்லை' என்று கூறிவிட்டுப் பிறகு அமர்ந்துவிட்டார்.
பின்னர் நபி (ஸல்) அவர்களிடம் பேரீச்சம் பழங்கள் உள்ள ஒரு கூடை கொண்டு வரப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் அந்த மனிதரிடம், "இதை(ப் பெற்று) தர்மம் செய்வீராக!" என்று கூறினார்கள். அவர், "எங்களைவிட ஏழையாக இருப்போருக்கா (நான் தர்மம் செய்ய வேண்டும்)? இந்நகரத்தின் இருமலைகளுக்கு இடையே எங்களைவிட மிக வறியநிலையில் எந்த வீட்டாரும் இல்லை" என்றார். உடனே நபி (ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப்பற்கள் தெரியச் சிரித்துவிட்டு, "நீர் (இதைப் பெற்றுச்) சென்று, உம் வீட்டாருக்கே ஊட்டுவீராக!" என்றார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "கூடை ("அரக்') என்பதற்கு "ஸன்பீல்' (பெரிய கூடை) என்று பொருள்" என இடம் பெற்றுள்ளது. மேலும், "உடனே நபி (ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப்பற்கள் தெரியச் சிரித்தார்கள்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

2037 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் ரமளானில் (நோன்பு வைத்துக்கொண்டு) தம் மனைவியுடன் (பகலில்) தாம்பத்திய உறவில் ஈடுபட்டு (வந்து), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அது குறித்துத் தீர்ப்புக்கேட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(விடுதலை செய்ய) ஓர் அடிமையை நீர் பெற்றுள்ளீரா?" என்று கேட்டார்கள். அவர் "இல்லை' என்றார். "(தொடர்ந்து) இருமாதங்கள் நோன்பு நோற்க உம்மால் முடியுமா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர் "இல்லை' என்றார். "அவ்வாறாயின், அறுபது ஏழைகளுக்கு உணவளிப்பீராக!" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2038 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒரு மனிதர் ரமளானில் (பகலில் தாம்பத்திய உறவு கொண்டு) நோன்பை முறித்துவிட்டார். ஓர் அடிமையை விடுதலை செய்யுமாறு அம்மனிதருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்" என ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட (2036ஆவது) ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2039 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் ரமளானில் (பகலில் தாம்பத்திய உறவு கொண்டு) நோன்பை முறித்துவிட்டார். ஓர் அடிமையை விடுதலை செய்யவேண்டும்; அல்லது (தொடர்ந்து) இரு மாதங்கள் நோன்பு நோற்கவேண்டும்; அல்லது அறுபது ஏழைகளுக்கு உணவளிக்கவேண்டும் என அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2040 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் கரிந்துபோனேன்" என்றார். "ஏன் (உமக்கு என்ன நேர்ந்தது)?" என்று அவர்கள் கேட்டார்கள். அவர், "நான் ரமளானில் பகலில் (நோன்பு நோற்றுக்கொண்டு) என் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டுவிட்டேன்" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தர்மம் செய்வீராக, தர்மம் செய்வீராக!" என்று சொன்னார்கள். அவர், "என்னிடம் ஏதும் இல்லையே?" என்றார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அங்கேயே) அமர்ந்திருக்குமாறு உத்தரவிட்டார்கள். பின்னர் உணவுப்பொருட்கள் உள்ள இரண்டு பெரிய கூடைகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்(து சேர்ந்)தன. அதை(ப் பெற்று) தர்மம் செய்யுமாறு அம்மனிதருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

2041 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்" என ஹதீஸ் தொடங்குகிறது. ஹதீஸின் ஆரம்பத்தில் "தர்மம் செய்வீராக, தர்மம் செய்வீராக' என்பதும் "பகலில்' எனும் குறிப்பும் இடம்பெறவில்லை.

2042 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் ரமளானில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பள்ளிவாசலுக்கு வந்து, "நான் கரிந்துபோனேன், அல்லாஹ்வின் தூதரே! நான் கரிந்துபோனேன்" என்றார். "அவருக்கு என்ன ஆயிற்று?" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரிடம் வினவினார்கள். அவர், "நான் (நோன்பு நோற்றுக்கொண்டு) என் மனைவியுடன் (பகலில்) தாம்பத்திய உறவு கொண்டுவிட்டேன்" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தர்மம் செய்வீராக!' என்றார்கள்.
அவர் "அல்லாஹ்வின் மீதாணையாக! நபியே! (தர்மம் செய்ய) என்னிடம் எதுவும் இல்லை. அதற்கான சக்தியும் எனக்கு இல்லை" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அமர்வீராக' என்றார்கள். அவர் அமர்ந்தார். அவர் அமர்ந்திருந்தபோது மற்றொரு மனிதர் ஒரு கழுதையை ஓட்டிக்கொண்டு (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்) வந்தார். அதன் மீது உணவுப்பொருட்கள் இருந்தன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சற்று முன்னர் கரிந்துபோனவர் எங்கே?" என்று கேட்டார்கள். அந்த மனிதர் எழுந்து நின்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை(ப் பெற்று) தர்மம் செய்வீராக!" என்றார்கள். அவர், "அல்லாஹ்வின் தூதரே! எங்களைவிட்டு மற்றவர்களுக்கா (தர்மம் செய்யச் சொல்கிறீர்கள்)? அல்லாஹ்வின் மீது ஆணையாக! நாங்களே பசியோடு இருக்கிறோம். எங்களிடம் எதுவும் இல்லை?" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின், அதை நீங்களே உண்ணுங்கள்!" என்றார்கள்.

**பாடம் : 15** ரமளான் மாதத்தில் பயணம் செய்பவர் நோன்பு நோற்பதும் நோற்காமலிருப்பதும் செல்லும்; அவரது பயணம் பாவ(நோக்க)மில்லாமல் இரண்டு நாள் பயணத்தொலைவோ அதைவிட அதிகமாகவோ இருக்கவேண்டும். (பயணத்தில்) இடையூறின்றி நோன்பு நோற்கச் சக்தி உள்ளவர் நோன்பு நோற்பதும், சிரமப்படுகின்றவர் நோன்பை விட்டுவிடுவதும் சிறந்ததாகும்.

2043 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவெற்றி ஆண்டில் ரமளானில் (மதீனாவிலிருந்து மக்காவிற்குப்) புறப்பட்டார்கள். அப்போது அவர்கள் நோன்பு நோற்றிருந்தார்கள். "அல்கதீத்' எனும் இடத்தை அடைந்ததும் நோன்பை விட்டுவிட்டார்கள். (பொதுவாக) நபித்தோழர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் செயல்களில் பிந்தியதை, அடுத்து பிந்தியதையே பின்பற்றுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறுதியாகச் சொன்னதையே கடைப்பிடிக்கப்படும்" எனக் கூறியவர் யார் என்று எனக்குத் தெரியாது என சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், (பயணத்தில்) நோன்பை விடுவதே நபி (ஸல்) அவர்களின் இரு செயல்களில் இறுதியானதாக இருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் செயல்களில் இறுதியானது, அதற்கடுத்து இறுதியானது எதுவோ அதுவே எடுத்துக்கொள்ளப்படும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்த ஆண்டு) ரமளான் பதிமூன்றாம் நாள் காலையில் மக்காவில் இருந்தார்கள்" என்று இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபித்தோழர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் செயல்களில் பிந்தியதை, அடுத்து பிந்தியதையே பின்பற்றுவார்கள். பிந்தியது, முந்தியதைக் காலாவதியாக்கக்கூடியதும் இறுதி செய்யப்பட்டதுமாகும் என்று கருதுவார்கள்' என இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது.
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தில் (மதீனாவிலிருந்து மக்காவிற்குப்) பயணம் மேற்கொண்டார்கள். அப்போது அவர்கள் நோன்பு நோற்றிருந்தார்கள். "உஸ்ஃபான்' எனும் இடத்தை அடைந்ததும் குடிநீருள்ள பாத்திரத்தைக் கொண்டுவரச் சொல்லி, மக்கள் காண்பதற்காக பகல் நேரத்திலேயே அதை அருந்தி நோன்பை விட்டார்கள். இறுதியில் மக்காவிற்குள் நுழை(யும்வரை நோன்பு நோற்கமாலேயே இரு)ந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பயணத்தில்) நோன்பு நோற்றும் இருக்கிறார்கள்; நோன்பை விட்டும் இருக்கிறார்கள். எனவே, (நோன்பு நோற்க) விரும்புகின்றவர் நோன்பு நோற்கலாம்; (விட்டுவிட) விரும்புகின்றவர் விட்டுவிடவும் செய்யலாம்.

2044 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(பயணத்தில்) நோன்பு நோற்றிருப்பவரையும் குறை கூறாதீர்; விட்டுவிட்டவரையும் குறை கூறாதீர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பயணத்தில் நோன்பு நோற்றும் இருக்கிறார்கள்; விட்டும் இருக்கிறார்கள்.

2045 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவெற்றி ஆண்டில் ரமளான் மாதத்தில் மக்காவை நோக்கிப் புறப்பட்டார்கள். அப்போது அவர்கள் நோன்பு நோற்றார்கள். மக்களும் அவர்களுடன் நோன்பு நோற்றனர். "குராஉல் ஃகமீம்' எனும் இடத்தை அடைந்ததும் தண்ணீர் பாத்திரத்தைக் கொண்டுவரச் சொல்லி மக்கள் பார்க்கும் அளவுக்கு உயர்த்திக் காட்டிய பின் அருந்தினார்கள். அதன் பிறகு அவர்களிடம், "மக்களில் சிலர் நோன்புடனேயே இருக்கின்றனர்" என்று சொல்லப்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,

"இத்தகையோரே (எனக்கு) மாறுசெய்பவர்கள்; இத்தகையோரே (எனக்கு) மாறுசெய்பவர்கள்" என்று சொன்னார்கள்.

2046 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "மக்களுக்கு நோன்பு நோற்பது சிரமமாக இருக்கிறது. நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்பதையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சொல்லப்பட்டது. இதையொட்டியே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகைக்குப் பின் தண்ணீர் பாத்திரத்தைக் கொண்டுவரச் சொன்னார்கள்" என்று அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

2047 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தபோது, ஒரு மனிதர் நிழலில் தங்கவைக்கப்பட்டு, அவரைச் சுற்றிலும் மக்கள் குழுமியிருந்ததைக் கண்டார்கள். அப்போது "இவருக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். "இவர் நோன்பு நோற்றிருக்கிறார்" என்று மக்கள் கூறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பயணத்தில் நீங்கள் நோன்பு நோற்பது நற்செயலில் சேராது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதரைக் கண்டார்கள்" என்று ஹதீஸ் தொடங்குகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே வந்துள்ளது.
அதில் ஷுஅபா (ரஹ்) அவர்கள் பின்வருமாறு அறிவித்துள்ளார்கள்: அறிவிப்பாளர் யஹ்யா பின் அபீகஸீர் (ரஹ்) அவர்கள் "அல்லாஹ் உங்களுக்கு வழங்கியுள்ள சலுகையைப் பயன் படுத்திக்கொள்ளுங்கள்" என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என) அதிகப்படியாக அறிவித்தார்கள். அது பற்றி அவர்களிடம் நான் கேட்டபோது, அது அவர்களது நினைவில் இருக்கவில்லை.

2048 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது.
நாங்கள் ரமளான் மாதம் பதினாறாவது நாள் அன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சேர்ந்து போர் புரிந்தோம். அப்போது எங்களில் சிலர் நோன்பு நோற்றிருந்தனர். வேறுசிலர் நோன்பு நோற்காமலிருந்தனர். அப்போது நோன்பு நோற்றிருந்தவர் நோன்பு நோற்காதவரையோ, நோன்பு நோற்காதவர் நோன்பு நோற்றவரையோ குறை சொல்லவில்லை.

2049 மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், சுலைமான் பின் தர்கான் அத்தைமீ, உமர் பின் ஆமிர், ஹிஷாம் பின் அபீஅப்தில்லாஹ் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "(ரமளான் மாதம்) பதினெட்டாவது நாள் அன்று' என்றும், சஈத் பின் அபீ அரூபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பன்னிரண்டாவது நாள் அன்று' என்றும், ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பதினேழாவது நாள், அல்லது பத்தொன்பதாவது நாள் அன்று' என்றும் இடம்பெற்றுள்ளது.

2050 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ரமளான் மாதத்தில் பயணம் செய்திருக்கிறோம். அப்போது நோன்பு நோற்றவர் நோற்றதற்காகவோ, நோன்பு நோற்காதவர் நோற்காததற்காகவோ குறை கூறப்படவில்லை.

2051 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ரமளான் மாதத்தில் போர் புரிந்திருக்கிறோம். எங்களில் நோன்பு நோற்றவரும் இருந்தார்; நோன்பு நோற்காதவரும் இருந்தார். நோன்பு நோற்றவர் நோன்பு நோற்காதவர்மீதோ, நோன்பு நோற்காதவர் நோன்பு நோற்றவர்மீதோ அதிருப்தி கொள்ளமாட்டார். (பயணத்தில்) சக்தி இருப்பவர் நோன்பு நோற்றால் அதுவும் நன்றே;பலவீனம் உள்ளவர் நோன்பை விட்டால் அதுவும் நன்றே என்று தான் நபித்தோழர்கள் கருதினர்.

2052 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) மற்றும் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) ஆகியோர் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் பயணம் செய்துள்ளோம். அப்போது, (எங்களில்) சிலர் நோன்பு நோற்பார்கள்;சிலர் நோன்பு நோற்கமாட்டார்கள். இவர்களில் யாரும் மற்றவரைக் குறை கூறமாட்டார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2053 ஹுமைத் பின் அபீஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் (ரலி) அவர்களிடம், ரமளானில் பயணத்தின்போது நோன்பு நோற்பது குறித்து வினவப்பட்டது. அதற்கு அவர்கள், "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ரமளானில் பயணம் செய்தோம். அப்போது. நோன்பு நோற்றவர் நோன்பு நோற்காதவரையோ, நோன்பு நோற்காதவர் நோன்பு நோற்றவரையோ குறை கூறியதில்லை" என்று கூறினார்கள்.

2054 ஹுமைத் பின் அபீஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (பயணம்) புறப்பட்டேன். (பயணத்தில்) நோன்பு நோற்றிருந்தேன். அப்போது மக்கள் என்னிடம், "(பயணத்தில் நோன்பு நோற்காதீர்.) பின்னர் (ஊர் திரும்பியபின்) நோற்றுக் கொள்ளுங்கள்!" என்றார்கள். அதற்கு நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்கள் பயணம் செய்யும்போது (சிலர் நோன்பு நோற்பர். சிலர் நோற்பதில்லை. அப்போது) நோன்பு நோற்றவர் நோன்பு நோற்காதவரையோ, நோன்பு நோற்காதவர் நோன்பு

நோற்றவரையோ குறை கூறமாட்டார்" என என்னிடம் அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் என்றேன்.
பின்னர் நான் இப்னு அபீமுலைக்கா (ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது அவர்கள் "மேற்கண்டவாறு ஆயிஷா (ரலி) அவர்கள் என்னிடம் அறிவித்தார்கள்" என்று கூறினார்கள்.

**பாடம் : 16** **பயணத்தில் நோன்பைக் கைவிட்ட ஒருவர், பொதுப்பணி ஆற்றினால் கிடைக்கும் நன்மை.**

2055 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் (ஒரு) பயணத்திலிருந்தோம். அப்போது எங்களில் நோன்பு நோற்றவர்களும் இருந்தனர்; நோன்பு நோற்காதவர்களும் இருந்தனர். அப்போது வெப்பமிக்க ஒரு நாளில் ஓர் இடத்தில் இறங்கித் தங்கினோம். எங்களில் மேல்துண்டு வைத்திருந்தவரே (அன்று) அதிகமாக நிழலைப் பெற்றார். தமது கரத்தால் வெயிலை மறைத்துக் கொண்டோரும் எங்களில் இருந்தனர். நோன்பு நோற்றிருந்தவர்கள் செயலற்றுப்போயினர். நோன்பு நோற்காதிருந்தவர்கள் எழுந்து (செயல்படத் தொடங்கினர்.) கூடாரங்களை நிறுவினர்; வாகன (ஒட்டக)ங்களுக்கு நீர் புகட்டினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்று நோன்பு நோற்காதவர்கள் நன்மையைத் தட்டிச் சென்றுவிட்டனர்" என்று கூறினார்கள்.

2056 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தார்கள். அப்போது (அவர்களுடனிருந்த) சிலர் நோன்பு நோற்றனர்;வேறுசிலர் நோன்பு நோற்காமல் விட்டு விட்டனர். நோன்பு நோற்காதவர்கள் மும்முரமாகப் பணி புரிந்துகொண்டிருந்தார்கள். நோன்பு நோற்றிருந்தவர்கள் ஒருசில வேலைகளை(க் கூட)ச் செய்யமுடியாமல் பலவீனமடைந்தனர். இது தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்று நோன்பு நோற்காதவர்கள் நன்மைகளைத் தட்டிச் சென்றுவிட்டனர்" என்று கூறினார்கள்.

2057 கஸஆ பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்களைச் சுற்றி நிறைய மக்கள் குழுமியிருந்தனர். (அவர்கள் மக்கள் கேட்ட கேள்விகளுக்கு விளக்கம் அளித்துக் கொண்டிருந்தார்கள்.) மக்கள் கலைந்துசென்றதும் நான், "இவர்கள் கேட்டதையெல்லாம் உங்களிடம் நான் கேட்கமாட்டேன்" என்று கூறிவிட்டு, பயணத்தில் நோன்பு நோற்பது பற்றி அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மதீனாவிலிருந்து) மக்காவுக்குப் பயணம் செய்தோம். அப்போது நாங்கள் நோன்பு நோற்றிருந்தோம். (வழியில்) ஓரிடத்தில் இறங்கி(த் தங்கி)னோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் உங்கள் எதிரிகளை நெருங்கிவிட்டீர்கள். இந்நிலையில் நீங்கள் நோன்பை விட்டுவிடுவதே உங்களுக்கு வலுசேர்க்கும்" என்று கூறினார்கள். இது ஒரு சலுகையாகவே இருந்தது. எனவே, எங்களில் சிலர் நோன்பு நோற்றனர்; வேறுசிலர் நோன்பை விட்டுவிட்டனர். பிறகு மற்றோர் இடத்தில் நாங்கள் இறங்கி(த் தங்கி)னோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் "நீங்கள் (நாளைக்) காலையில்

எதிரிகளைச் சந்திக்கப்போகிறீர்கள்கள். இந்நிலையில் நோன்பை விட்டுவிடுவதே உங்களுக்கு வலுசேர்க்கும். எனவே, நோன்பை விட்டுவிடுங்கள்" என்று சொன்னார்கள். இது ஒரு கட்டளையாகவே இருந்தது. ஆகவே, நாங்கள் நோன்பை விட்டுவிட்டோம். அதன் பின்னர் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பயணத்தில் நோன்பு நோற்பவர்களாகவே இருந்தோம்.

பாடம் : 17 பயணத்தில் நோன்பு நோற்கவும் நோன்பை விட்டுவிடவும் உரிமை உண்டு.

2058 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹம்ஸா பின் அம்ர் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பயணத்தில் நோன்பு நோற்பது குறித்துக் கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் நாடினால் நோன்பு நோற்பீராக; நாடினால் நோன்பை விட்டுவிடுவீராக!" என்றார்கள்.

2059 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹம்ஸா பின் அம்ர் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! நான் தொடர்ந்து நோன்பு நோற்கும் மனிதன் ஆவேன். பயணத்திலும் நான் நோன்பு நோற்கலாமா?" என்று கேட்டார்கள். அதற்கு, "நீர் நாடினால் நோன்பு நோற்பீராக! நீர் நாடினால் நோன்பை விட்டுவிடுவீராக!" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

2060 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2061 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "நான் (விடாமல்) நோன்பு நோற்கும் மனிதன் ஆவேன். பயணத்தில் நான் நோன்பு நோற்கலாமா?" என்று ஹம்ஸா பின் அம்ர் (ரலி) அவர்கள் கேட்டார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது.

2062 ஹம்ஸா பின் அம்ர் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், "அல்லாஹ்வின் தூதரே! பயணத்தில் நோன்பு நோற்க எனக்குச் சக்தி உண்டு என நான் உணர்கிறேன். (அவ்வாறு நோன்பு நோற்பது) என்மீது குற்றமாகுமா?" என்று கேட்டேன். அதற்கு "இது அல்லாஹ்விடமிருந்து (வந்துள்ள) சலுகையாகும். யார் அதைப் பயன்படுத்திக் கொள்கிறாரோ அது நல்லதே. (பயணத்தில்) நோன்பு நோற்க விரும்புகின்றவர் மீதும் குற்றம் இல்லை" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், ஹாரூன் பின் சஈத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இது சலுகையாகும்" என்றே இடம்பெற்றுள்ளது. "அல்லாஹ்விடமிருந்து” எனும் குறிப்பு இல்லை.

2063 அபுத்தர்தா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ரமளான் மாதத்தில் கடுமையான வெப்பத்தில் (பயணம்) புறப்பட்டோம். கடும் வெப்பம் காரணமாக எங்களில் சிலர் தமது

கையைத் தமது தலைமீது வைத்து (மறைத்து)க்கொண்டனர். அப்(பயணத்தின்) போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களையும் அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலி) அவர்களையும் தவிர எங்களில் வேறு யாரும் நோன்பு நோற்றிருக்கவில்லை.

2064 அபுத்தர்தா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மேற்கொண்ட பயணமொன்றில் கடுமையான வெப்பமுள்ள நாளில் அவர்களுடன் நாங்களும் இருந்தோம். கடும் வெப்பத்தின் காரணமாக சிலர் தமது கையைத் தமது தலைமீது வைத்து(மறைத்து)க்கொண்டனர். அப்(பயணத்தின்) போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களையும் அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலி) அவர்களையும் தவிர வேறு யாரும் நோன்பு நோற்றிருக்கவில்லை.

**பாடம் : 18 அர∴பா (துல்ஹஜ் 9ஆவது) நாளில் "அர∴பாத்'தில் தங்கும் ஹாஜிகள் நோன்பு நோற்காமலிருப்பது விரும்பத்தக்கதாகும்.**

2065 உம்முல் ∴பள்ல் பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இன்று நோன்பு நோற்றிருக்கிறார்களா?' என்று "அர∴பா' நாளில் எனக்கருகே மக்கள் சிலர் விவாதித்தனர். சிலர் "அவர்கள் நோன்பு வைத்திருக்கிறார்கள்' என்றனர். மற்றும் சிலர் "அவர்கள் நோன்பு வைக்கவில்லை' என்றனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பால் கோப்பை ஒன்றை நான் கொடுத்தனுப்பினேன்; அப்போது அவர்கள் "அர∴பா' பெருவெளியில் ஒட்டகத்தின் மேல் இருந்தார்கள். அதை அவர்கள் அருந்தி (தாம் நோன்பாளியல்ல என்பதை உணர்த்தி)னார்கள்.
இதை அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களின் அடிமையாயிருந்த உமைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "அவர்கள் ஒட்டகத்தின் மேல் இருந்தார்கள்' எனும் குறிப்பு இல்லை. "உம்முல் ∴பள்ல் (ரலி) அவர்களின் அடிமையாயிருந்த உமைர் (ரஹ்) அவர்கள் இதை அறிவிக்கிறார்கள்' என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதிலும், "உம்முல் ∴பள்ல் (ரலி) அவர்களின் அடிமையாயிருந்த உமைர் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்' என்றே இடம்பெற்றுள்ளது.

2066 உம்முல் ∴பள்ல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அர∴பா' நாளில் நோன்பு நோற்றிருக்கிறார்களா' என்று நபித்தோழர்களில் சிலர் சந்தேகம் தெரிவித்தனர். (அன்றைய தினம்) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அர∴பாவில் இருந்தோம். அர∴பாவிலிருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பாலிருந்த ஒரு கிண்ணத்தை நான் கொடுத்தனுப்பினேன். அதை அவர்கள் அருந்தினார்கள்.

2067 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அரஃபா நாளில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருக்கிறார்களா என்பதில் மக்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. அரஃபாவில் தங்கியிருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நான் பால் பாத்திரத்தைக் கொடுத்தனுப்பினேன். மக்கள் பார்த்துக் கொண்டிருக்க, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிலிருந்து அருந்தினார்கள்.

**பாடம் : 19 ஆஷூரா (முஹர்ரம் பத்தாவது) நாளில் நோன்பு நோற்றல்.**

2068 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அறியாமைக் காலத்தில் குறைஷியர் ஆஷூரா (முஹர்ரம் பத்தாவது நாள்) அன்று நோன்பு நோற்றுவந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அந்நாளில் நோன்பு நோற்று வந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு நாடு துறந்து சென்றதும் (அங்கும்) ஆஷூரா நோன்பு நோற்றார்கள்; அந்நாளில் நோன்பு நோற்குமாறு (மக்களையும்) பணித்தார்கள். ரமளான் நோன்பு கடமையாக்கப்பட்டதும், நாடியவர் ஆஷூரா நோன்பு நோற்கலாம்; நாடியவர் அதை விட்டுவிடலாம்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

2069 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அந்நாளில் நோன்பு நோற்று வந்தார்கள்' எனும் குறிப்பு ஹதீஸின் ஆரம்பத்தில் இடம்பெறவில்லை. ஹதீஸின் இறுதியில் "(ரமளான் நோன்பு கடமையாக்கப்பட்டதும்) முஹர்ரம் பத்தாவது நாளில் (ஆஷூரா) நோன்பு நோற்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விட்டுவிட்டார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. எனவே,நாடியவர் அந்நாளில் நோன்பு நோற்றனர்; நாடியவர் அதை விட்டுவிட்டனர்" என்றே இடம்பெற்றுள்ளது. ("நாடியவர் நோற்கலாம்;நாடியவர் விட்டு விடலாம்' என) நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இல்லை.
- ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அறியாமைக் காலத்தில் முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) அன்று நோன்பு நோற்கப் பட்டுவந்தது. இஸ்லாம் வந்தபோது விரும்பியவர் அந்த நோன்பை நோற்றனர்; (விட்டுவிட) விரும்பியவர் அதை விட்டுவிட்டனர்.

2070 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ரமளான் நோன்பு கடமையாக்கப்படுவதற்கு முன்பு (ஆஷூரா நாள்) அன்று நோன்பு நோற்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டுவந்தார்கள். ரமளான் நோன்பு கடமையாக்கப்பட்டதும் நாடியவர் ஆஷூரா நாளன்று நோன்பு நோற்றனர்;நாடியவர் (அதை) விட்டுவிட்டனர்.

2071 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அறியாமைக் காலத்தில் குறைஷியர் முஹர்ரம் பத்தாவது நாளில் (ஆஷூரா) நோன்பு நோற்றுவந்தனர். ரமளான் நோன்பு கடமையாக்கப்படும்வரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் ஆஷூரா நாளில் நோன்பு நோற்குமாறு கட்டளையிட்டார்கள். (ரமளான் நோன்பு

கடமையாக்கப்பட்ட) பின்னர் "முஹர்ரம் பத்தாவது நாளில் விரும்பியவர் (ஆஷூரா) நோன்பு நோற்கட்டும்; (விட்டுவிட) விரும்பியவர் அதை விட்டுவிடட்டும்!" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2072 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அறியாமைக் கால மக்கள் (குறைஷியர்) முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) அன்று நோன்பு நோற்றுவந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் ரமளான் நோன்பு கடமையாக்கப்படுவதற்கு முன்புவரை முஹர்ரம் பத்தாவது நாளில் நோன்பு நோற்றனர். ரமளான் நோன்பு கடமையாக்கப்பட்டதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "முஹர்ரம் பத்தாவது நாள் அல்லாஹ்வின் நாட்களில் ஒரு நாளாகும். நாடியவர் அந்நாளில் நோன்பு நோற்கலாம்; நாடியவர் அ(ந்நாளில் நோன்பு நோற்ப)தை விட்டுவிடலாம்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2073 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) குறித்துப் பேசப்பட்டது. அப்போது, "அது, அறியாமைக் காலத்தார் நோன்பு நோற்ற தினமாகும். உங்களில் அன்றையதினம் நோன்பு நோற்க விரும்புகின்றவர் நோன்பு நோற்கட்டும்! விரும்பாதவர் நோன்பை விட்டுவிடட்டும்!" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2074 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இது, அறியாமைக் காலத்தார் நோன்பு நோற்றுவந்த தினமாகும். விரும்புகின்றவர் அந்நாளில் நோன்பு நோற்கட்டும்; அதை விட்டுவிட விரும்புகின்றவர் விட்டுவிடட்டும்!" என்றார்கள்.
இதன் அறிவிப்பாளர் நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், தாம் நோற்கும் வேறு ஏதேனும் நோன்பு அந்நாளில் தற்செயலாக அமைந்தால் தவிர, முஹர்ரம் பத்தாவது நாளன்று நோன்பு நோற்கமாட்டார்கள்.

2075 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் முஹர்ரம் பத்தாவது நாளில் (ஆஷூரா) நோன்பு நோற்பது குறித்துப் பேசப்பட்டது" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மற்றபடி மேற்கண்ட ஹதீஸிலுள்ள தகவல்கள் (அனைத்தும்) அப்படியே இதிலும் இடம்பெற்றுள்ளன.

2076 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) குறித்துப் பேசப்பட்டது. அப்போது, "அது, அறியாமைக் காலத்தார் நோன்பு நோற்றுவந்த நாளாகும். எனவே, நாடுகின்றவர் அந்நாளில் நோன்பு நோற்கலாம்;நாடுகின்றவர் அதை விட்டுவிடலாம்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள்.

2077 அஷ்அஸ் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் காலை உணவு உண்டுகொண்டிருந்தார்கள். மேலும் அவர்கள், "அபூமுஹம்மதே, சாப்பிட வாருங்கள்" என்று (என்னிடம்) கூறினார்கள். நான், "இன்று ஆஷூரா (முஹர்ரம் பத்தாவது) நாளல்லவா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆஷூரா நாள் எ(த்தகைய)து என்று நீர் அறிவீரா?" என்று கேட்டார்கள். "அது என்ன நாள்?" என்று கேட்டேன். அவர்கள், "அது ரமளான் நோன்பு கடமையாவதற்கு முன்பு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றுவந்த நாளாகும். ரமளான் நோன்பு கடமையானபோது, அந்த நோன்பு (கட்டாயம் நோற்கப்பட வேண்டும் எனும் விதி) கைவிடப்பட்டது" என்று சொன்னார்கள்.
இதை அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அந்த நோன்பை (அல்லாஹ்வின் தூதர்-ஸல்) அவர்கள் கைவிட்டார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "ரமளான் நோன்பு கடமையானபோது, அந்த (ஆஷூரா) நோன்பை (அல்லாஹ்வின் தூதர் – ஸல்) அவர்கள் கைவிட்டார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

2078 அஷ்அஸ் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) அன்று நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். (என்னைக் கண்டதும்) அவர்கள், "அபூமுஹம்மதே, அருகில் வந்து நீங்களும் உண்ணுங்கள்" என்றார்கள். "நான் நோன்பு நோற்றிருக்கிறேன்" என்று நான் சொன்னேன். அவர்கள், "நாங்கள் (ஆரம்பக் காலத்தில்) அந்நாளில் நோன்பு நோற்றோம். பின்னர் அந்த நோன்பு கைவிடப்பட்டது" என்றார்கள்.
இதைக் கைஸ் பின் சகன் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2079 அஷ்அஸ் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) அன்று அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். நான், "அபூ அப்திர் ரஹ்மான், இன்று முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) ஆயிற்றே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ரமளான் நோன்பு கடமையாவதற்கு முன்பு (ஆஷூரா நாளில்) நோன்பு நோற்கப்பட்டுவந்தது. ரமளான் நோன்பு கடமையானபோது அந்த (ஆஷூரா) நோன்பு

கைவிடப்பட்டது. ஆகவே, நீங்கள் நோன்பை விட்டுவிட விரும்பினால் நீங்களும் (என்னுடன்) சாப்பிடலாம்" என்றார்கள்.
இதை அல்கமா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2080 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஹர்ரம் பத்தாவது நாளில் (ஆஷூரா) நோன்பு நோற்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டு வந்தார்கள்; அந்நோன்பை நோற்குமாறு எங்களை ஊக்குவிக்கவும் செய்வார்கள். அந்த நாளில் (நாங்கள் நோன்பு நோற்கிறோமா என) எங்களைக் கவனித்தும் வந்தார்கள். ரமளான் நோன்பு கடமையாக்கப்பட்டபோது, (ஆஷூரா நோன்பு நோற்குமாறு) எங்களுக்குக் கட்டளையிடவுமில்லை; எங்களுக்குத் தடைவிதிக்கவுமில்லை; அந்த நாளில் எங்களைக் கவனிக்கவுமில்லை.

2081 ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஆவியா பின் அபீசுஃப்யான் (ரலி) அவர்கள் ஒரு முறை (சிரியாவிலிருந்து) மதீனாவிற்கு வந்தபோது, முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) அன்று மக்களுக்கு உரையாற்றினார்கள். அப்போது "மதீனாவாசிகளே, உங்கள் அறிஞர்கள் எங்கே? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது, முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) ஆகும்; இந்நாளில் நோன்பு நோற்பதை அல்லாஹ் உங்களுக்குக் கடமையாக்கவில்லை. நான் நோன்பு நோற்றிருக்கிறேன். உங்களில் நோன்பு நோற்க விரும்புகின்றவர் நோன்பு நோற்கட்டும்; விட்டுவிட விரும்புகின்றவர் விட்டுவிடட்டும்!" என்று கூறியதை நான் செவியுற்றுள்ளேன் என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "இது போன்ற (ஆஷூரா) நாளில் நபி (ஸல்) அவர்கள் "நான் நோன்பு நோற்றுள்ளேன். எனவே, நோன்பு நோற்க விரும்புகின்றவர் நோன்பு நோற்கட்டும்" என்று கூறியதாக இடம் பெற்றுள்ளது. மற்ற தகவல்கள் காணப்படவில்லை.

2082 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நாடு துறந்து) மதீனாவுக்கு வந்தபோது, யூதர்கள் முஹர்ரம் பத்தாவது நாளில் (ஆஷூரா) நோன்பு நோற்பதைக் கண்டார்கள். இது குறித்து யூதர்களிடம் வினவப்பட்டபோது, "இந்த நாளில்தான் (இறைத்தூதர்) மூசா (அலை) அவர்களுக்கும் பனூ இஸ்ராயீல் சமுதாயத்தாருக்கும் பிர்அவ்னுக்கெதிராக இறைவன் வெற்றியளித்தான். எனவே,இந்நாளைக் கண்ணியப்படுத்தும் முகமாகவே நாங்கள் இந்நாளில் நோன்பு நோற்கிறோம்" என யூதர்கள் கூறினர். அப்போது நபி (ஸல்) அவர்கள், "உங்களைவிட மூசாவுக்கு அதிக நெருக்கமுடையவர்கள் நாங்களே" என்று கூறிவிட்டு, ஆஷூரா நோன்பு நோற்குமாறு கட்டளையிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "எனவே யூதர்களிடம் அது பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள்' என இடம்பெற்றுள்ளது.

2083 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனா வந்தபோது, யூதர்கள் முஹர்ரம் பத்தாவது நாளில் (ஆஷூரா) நோன்பு நோற்றிருப்பதைக் கண்டார்கள். "நீங்கள் நோன்பு நோற்றிருக்கும் இது என்ன நாள்?" என்று கேட்டார்கள். அதற்கு யூதர்கள், "இது ஒரு மகத்தான நாள்; இந்த நாளில்தான் மூசாவையும் அவருடைய சமுதாயத்தாரையும் இறைவன் காப்பாற்றி, ஃபிர்அவ்னையும் அவனுடைய சமுதாயத்தாரையும் (செங்கடலில்) மூழ்கடித்தான். எனவே, மூசா (அலை) அவர்கள் (இறைவனுக்கு) நன்றி தெரிவிக்கும் முகமாக (இந்நாளில்) நோன்பு நோற்றார்கள். ஆகவே, நாங்களும் இந்நாளில் நோன்பு நோற்கிறோம்" என்று கூறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களைவிட நாங்களே மூசா (அலை) அவர்களுக்கு மிகவும் உரியவர்களும் நெருக்கமானவர்களும் ஆவோம்" என்று கூறினார்கள். பின்னர், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்நாளில்) தாமும் நோன்பு நோற்று, நோன்பு நோற்குமாறு (மக்களுக்குக்) கட்டளையுமிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2084 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஹர்ரம் பத்தாவது நாளை (ஆஷூரா) யூதர்கள் கண்ணியப்படுத்தியும் பண்டிகை நாளாகக் கொண்டாடியும் வந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "இந்நாளில் நீங்களும் நோன்பு நோறுங்கள்!" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2085 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது:
அபூமூசா (ரலி) அவர்கள் கூறினார்கள்: கைபர்வாசிகள் (யூதர்கள்) முஹர்ரம் பத்தாவது நாளில் (ஆஷூரா) நோன்பு நோற்றுவந்தனர்; அந்நாளை அவர்கள் பண்டிகை நாளாகக் கொண்டாடினர்; தங்களுடைய பெண்களுக்கு அந்நாளில் ஆபரணங்களையும் அழகிய ஆடைகளையும் அவர்கள் அணிவித்தனர். எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்) "இந்நாளில் நீங்களும் நோன்பு நோறுங்கள்!" என்றார்கள்.

2086 உபைதுல்லாஹ் பின் அபீயஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் முஹர்ரம் பத்தாவது நாள் (ஆஷூரா) நோன்பு பற்றி வினவப்பட்டது. அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாட்களிலேயே இந்த (ஆஷூரா) நாளையும் மாதங்களிலேயே இந்த –ரமளான்– மாதத்தையும் தவிர வேறெதையும் சிறப்பாகத் தேர்ந்தெடுத்து நோன்பு நோற்றதாக நான் அறியவில்லை" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 20 ஆஷூரா நோன்பை எந்த நாளில் நோற்க வேண்டும்?

2087 அல்ஹகம் பின் அல்அஃரஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "ஸம்ஸம்' கிணற்றுக்கருகில் தமது மேல்துண்டைத் தலையணையாக வைத்துச் சாய்ந்திருந்தபோது அவர்களிடம் நான் சென்றேன். "ஆஷூரா நோன்பு பற்றி எனக்குச் சொல்லுங்கள்!" என அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், "முஹர்ரம் மாதத்தின் (முதல்) பிறையை நீர் கண்டதும் (அன்றிலிருந்து நாட்களை) எண்ணிக்கொள்வீராக! ஒன்பதாவது நாள் காலையில் நீர் நோன்பாளியாக இருப்பீராக!" என்று சொன்னார்கள். "இவ்வாறுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்த (ஆஷூரா) நோன்பை நோற்றார்களா?" என்று நான் கேட்டேன். அதற்கு, "ஆம்' என்று அவர்கள் விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஸம்ஸம் கிணற்றுக்கருகில் தமது மேல்துண்டைத் தலையணையாக்கிச் சாய்ந்திருந்த இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் நான் ஆஷூரா நோன்பு பற்றிக் கேட்டேன்" என ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2088 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆஷூரா நாளில் தாமும் நோன்பு நோற்று, நோன்பு நோற்குமாறு (மக்களுக்கும்) கட்டளையிட்டார்கள். அப்போது மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! இது யூதர்களும் கிறிஸ்தவர்களும் கண்ணியப்படுத்தும் நாளாயிற்றே?" என்று வினவினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) அடுத்த ஆண்டில் நாம் (முஹர்ரம்) ஒன்பதாவது நாளில் நோன்பு நோற்போம்" என்று கூறினார்கள். ஆனால், அடுத்த ஆண்டு வருவதற்குள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்துவிட்டார்கள்.

2089 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அடுத்த ஆண்டுவரை நான் உயிரோடிருந்தால் ஒன்பதாவது நாளில் நோன்பு நோற்பேன்" என்று இடம்பெற்றுள்ளது. அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில்" அதாவது ஆஷூரா நாளில்' எனும் குறிப்புடன் இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 21 ஆஷூரா நாளில் (நோன்பு நோற்காமல்) சாப்பிட்டுவிட்டவர், அன்றைய தினத்தின் எஞ்சிய பகுதியில் உண்பதைத் தவிர்க்கட்டும்!

2090 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆஷூரா நாளன்று "அஸ்லம்' குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதரை அனுப்பி, "(இன்று) நோன்பு நோற்காமலிருப்பவர், நோன்பு நோற்கட்டும்; சாப்பிட்டுவிட்டவர், இரவுவரை தமது நோன்பை நிறைவு செய்யட்டும்' என்று மக்களிடையே அறிவிக்குமாறு உத்தரவிட்டார்கள்.

2091 ருபய்யிஉ பின்த் முஅவ்வித் பின் அஃப்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆஷூரா (முஹர்ரம் பத்தாவது) நாளன்று காலையில் மதீனா புறநகரிலுள்ள அன்சாரிகளின் கிராமங்களுக்கு ஆளனுப்பி "(இன்று) காலையில் நோன்பாளியாக இருப்பவர், தமது நோன்பைத் தொடரட்டும்;நோன்பு நோற்காமல் காலைப் பொழுதை அடைந்தவர் இன்றைய தினத்தின் எஞ்சிய பொழுதை (நோன்பிருந்து) நிறைவு செய்யட்டும்" என்று அறிவிக்கச்செய்தார்கள்.
நாங்கள் அதன் பின்னர் அந்நாளில் நோன்பு நோற்கலானோம்; எங்கள் சிறுவர்களையும் – அல்லாஹ் நாடினால்– நோன்பு நோற்கச்செய்வோம். நாங்கள் பள்ளிவாசலுக்குச் செல்லும்போது, கம்பளியாலான விளையாட்டுப் பொருட்களை அவர்களுக்காகச் செய்து, அவர்களில் ஒருவன் (பசியால்) உணவு கேட்டு அழும்போது நோன்பு துறக்கும் நேரம்வரை (அவன் பசியை மறந்திருப்பதற்காக) அவனிடம் அந்த விளையாட்டுப் பொருளைக் கொடுப்போம்.

2092 காலித் பின் தக்வான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ருபய்யிஉ பின்த் முஅவ்வித் (ரலி) அவர்களிடம், ஆஷூரா (முஹர்ரம் பத்தாவது நாள்) நோன்பு பற்றிக்கேட்டேன். அப்போது அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிகளின் கிராமங்களுக்குத் தம் தூதுவர்களை அனுப்பினார்கள்' என்று கூறியதாக மேற்கண்ட ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
இருப்பினும், அதில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது: நாங்கள் கம்பளியாலான விளையாட்டுப் பொருட்களை அவர்களுக்காகத் தயார்செய்து, அவற்றை எங்களுடன் எடுத்துச்செல்வோம். சிறுவர்கள் எங்களிடம் உணவு கேட்பார்களானால், விளையாட்டுப் பொருளைக் கொடுத்து, அவர்கள் நோன்பை நிறைவு செய்யும்வரை கவனத்தைத் திசைதிருப்புவோம்.

## பாடம் : 22 நோன்புப் பெருநாள் மற்றும் ஹஜ்ஜுப் பெருநாள் ஆகிய இரு தினங்களில் நோன்பு நோற்பதற்கு வந்துள்ள தடை.

2093 அப்துர் ரஹ்மான் பின் அஸ்ஹர் (ரஹ்) அவர்களின் அடிமையாயிருந்த சஅத் பின் உபைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (ஹஜ்ஜுப்) பெருநாள் தொழுகையில் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களுடன் கலந்துகொண்டேன். அவர்கள் வந்து (முதலில்) தொழுதுவிட்டுப் பின்னர் திரும்பி மக்களுக்கு உரையாற்றினார்கள். அப்போது பின்வருமாறு குறிப்பிட்டார்கள்:
இவ்விரு நாட்களிலும் நோன்பு நோற்கக் கூடாதென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைவிதித்துள்ளார்கள். ஒன்று,உங்கள் நோன்பிலிருந்து நீங்கள் விடுபடும் நோன்புப் பெருநாள் ஆகும். மற்றொன்று உங்கள் குர்பானிப் பிராணிகளின் இறைச்சியை நீங்கள் உண்ணும் (ஹஜ்ஜுப்) பெருநாள் ஆகும்.

2094 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருநாள், நோன்புப் பெருநாள் ஆகிய இரு தினங்களில் நோன்பு நோற்கக் கூடாதெனத் தடைவிதித்தார்கள்.

2095 கஸஆ பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்து ஒரு ஹதீஸை நான் செவியுற்றேன். அது எனக்கு வியப்பூட்டவே, "இதை நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுறாத ஒன்றை அவர்கள் கூறியதாகச் சொல்வேனா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஹஜ்ஜுப் பெருநாள் மற்றும் நோன்புப் பெருநாள் ஆகிய இரு தினங்களில் நோன்பு நோற்பது தகாது' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

2096 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்புப் பெருநாள் மற்றும் குர்பானி செய்யும் (ஹஜ்ஜுப் பெரு)நாள் ஆகிய இரு தினங்களில் நோன்பு நோற்க வேண்டாமெனத் தடை விதித்தார்கள்.
இதை யஹ்யா பின் உமாரா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2097 ஸியாத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் வந்து, "நான் ஒரு நாள் நோன்பு நோற்க நேர்ச்சை செய்துள்ளேன். அது ஹஜ்ஜுப் பெருநாளாக, அல்லது நோன்புப் பெருநாளாக அமைந்துவிட்டது" என்று சொன்னார். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள்,உயர்ந்தோன் அல்லாஹ் நேர்த்திக்கடன்களை நிறைவேற்றுமாறு கட்டளையிட்டுள்ளான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்த நாளில் நோன்பு நோற்பதைத் தடை விதித்துள்ளார்கள்" என்று கூறினார்கள்.

2098 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்புப் பெருநாள் மற்றும் ஹஜ்ஜுப் பெருநாள் ஆகிய இரு தினங்களில் நோன்பு நோற்க வேண்டாமெனத் தடைவிதித்தார்கள்.

**பாடம் : 23 "அய்யாமுத் தஷ்ரீக்' (துல்ஹஜ் 11, 12, 13 ஆகிய) நாட்களில் நோன்பு நோற்பதற்கு வந்துள்ள தடை.**

2099 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"அய்யாமுத் தஷ்ரீக்' (எனும் ஹஜ்ஜுப் பெருநாளுக்கு அடுத்த மூன்று) நாட்கள், உண்பதற்கும் பருகுவதற்கும் உரிய நாட்களாகும்.
இதை நுபைஷா பின் அம்ர் பின் அவ்ஃப் அல்ஹுதலீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் நுபைஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அறிவிப்பாளர் காலித் அல்ஹத்தா (ரஹ்) அவர்கள், நான் எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த அபுல்மலீஹ் (ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது, அவர்களிடம் அதைப் பற்றிக் கேட்டேன். அப்போது மேற்கண்ட ஹதீஸை அவர்கள் எனக்கு அறிவித்தார்கள். மேலும், ("பருகுவதற்கும்' என்பதற்குப் பின்னால்) "இறைவனை நினைவுகூர்(ந்து திக்ர் செய்)வதற்கும்

உரிய நாளாகும்" என்பதை அதிகப்படியாக அறிவித்தார்கள்" என்று கூறியதாக இடம் பெற்றுள்ளது.

2100 கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னையும் அவ்ஸ் பின் அல்ஹதஸான் (ரலி) அவர்களையும் "அய்யாமுத் தஷ்ரீக்' நாட்களில் அனுப்பி, "இறைநம்பிக்கையாளரைத் தவிர வேறெவரும் சொர்க்கத்தில் நுழையமாட்டார்; "மினா'வின் நாட்கள் உண்பதற்கும் பருகுவதற்கும் உரிய நாட்களாகும்" என (மக்களிடையே) அறிவிக்கச் செய்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "எங்கள் இருவரையும் அறிவிக்கச் செய்தார்கள்" எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது.

பாடம் : 24 வெள்ளிக்கிழமை (ஒரு நாள்) மட்டும் நோன்பு நோற்பது விரும்பத்தக்கதன்று.

2101 முஹம்மத் பின் அப்பாத் பின் ஜஅ்ஃபர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வந்துகொண்டிருந்த ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் நான், "வெள்ளிக்கிழமை (ஒரு நாள் மட்டும்) நோன்பு நோற்க வேண்டாமென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைசெய்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு "ஆம், இந்த இல்லத்தின் அதிபதிமீது ஆணையாக!" என்று ஜாபிர் (ரலி) அவர்கள் பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2102 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் வெள்ளிக்கிழமைக்கு முன்பு ஒரு நாள், அல்லது பின்பு ஒரு நாளைச் சேர்க்காமல் (தனியாக) வெள்ளியன்று மட்டும் நோன்பு நோற்கவேண்டாம்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2103 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரவுகளில் வெள்ளிக்கிழமை இரவைமட்டும் இரவுத் தொழுகைக்காகத் தேர்ந்தெடுக்காதீர்கள். தினங்களில் வெள்ளிக்கிழமை தினத்தை மட்டும் நோன்பு நோற்பதற்காகத் தேர்ந்தெடுக்காதீர்கள்; உங்களில் ஒருவர் (வழக்கமாக) நோன்பு நோற்கும் நாள் வெள்ளிக்கிழமையாக அமைந்துவிட்டால் தவிர!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 25 "நோன்பு நோற்கச் சக்தி பெற்றவர்கள் (நோற்காமல் விட்டுவிட்டால்) அதற்குப் பரிகாரமாக ஓர் ஏழைக்கு உணவளிப்பது கடமையாகும்" எனும் (2:184ஆவது) இறைவசன(த்தின் சட்ட)ம், "உங்களில் (ரமளான் எனும்) அந்த மாதத்தை அடைந்தவர் அதில் நோன்பு நோற்கட்டும்" எனும் (2:185ஆவது) வசனத்தின் மூலம் மாற்றப்பட்டுவிட்டது என்பதன் விளக்கம்.**

2104 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
"நோன்பு நோற்பதற்குச் சக்தி உள்ளவர்கள் (நோன்பு நோற்காமல் விட்டுவிட்டால்) அதற்குப் பரிகாரமாக ஓர் ஏழைக்கு உணவளிக்கவேண்டும்" எனும் இந்த (2:184ஆவது) வசனம் அருளப்பெற்றபோது, நாடியவர் நோன்பு நோற்காமல் விட்டுவிட்டுப் பரிகாரம் செய்துவந்தார். பின்னர் இதை மாற்றி இதற்குப் பின்னுள்ள ("உங்களில் அந்த மாதத்தை அடைந்தவர் அதில் நோன்பு நோற்கட்டும்"என்ற 2:185ஆவது) வசனம் அருளப்பெற்றது.

2105 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் ரமளான் மாதத்தில் நாடினால் நோன்பு நோற்போம்; நாடினால் நோன்பு நோற்காமல் விட்டுவிட்டு, அதற்குப் பரிகாரமாக ஓர் ஏழைக்கு உணவளித்து வந்தோம். இறுதியில் (அந்த நடைமுறையை மாற்றுகின்ற) "உங்களில் அந்த மாதத்தை அடைந்தவர் அதில் நோன்பு நோற்கட்டும்" எனும் இந்த (2:185ஆவது) வசனம் அருளப்பெற்றது.

**பாடம் : 26 ரமளானில் விடுபட்ட நோன்பை ஷஅபான் மாதத்தில் "களா'ச் செய்தல்.**

2106 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எனக்கு ரமளானில் சில நோன்புகள் விடுபட்டுவிடும். அவற்றை ஷஅபான் மாதத்தில் தவிர வேறெதிலும் என்னால் (களாவாக) நிறைவேற்றமுடியாது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பணிவிடையில் ஈடுபட்டதே இதற்குக் காரணம்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும் அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உடைய தேவைகளைக் கவனிக்க வேண்டி) இருந்ததே காரணம்" என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் யஹ்யா (ரஹ்) அவர்களிடமிருந்தே இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்களிடம் ஆயிஷா (ரலி) அவர்களுக்கு இருந்த (பணி) நிலையே அதற்குக் காரணம் என நான் எண்ணுகிறேன்" என யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பணிவிடையில் ஈடுபட்டது பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை.

2107 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் (அவர்களுடைய துணைவியரான) எங்களில் ஒருவருக்கு ரமளான் நோன்பு தவறிவிடும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (இருந்ததால்) அதை அவரால் ஷஅபான் மாதம் வராதவரை "களா'ச் செய்ய முடியாது.

**பாடம் : 27 இறந்துபோனவர் சார்பாக (அவர் தவறவிட்ட) நோன்பைக் "களா'ச் செய்வது.**

2108 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நோன்பை நிறைவேற்ற வேண்டிய ஒருவர் இறந்துவிட்டால், அவர் சார்பாக அவருடைய பொறுப்பாளர் (உறவினர்) நோன்பு நோற்பார்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2109 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "என் தாயாருக்கு ஒரு மாத நோன்பு கடமையிருந்த நிலையில் இறந்துவிட்டார். (அவர் சார்பாக நான் நோன்பு நோற்கலாமா?)" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் மீது கடன் ஏதும் இருந்தால் அதை நீ நிறைவேற்றுவாய் அல்லவா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் "ஆம்' என்றார். "அவ்வாறாயின், நிறைவேற்றுவதற்கு மிகவும் தகுதிவாய்ந்தது அல்லாஹ்வின் கடனே" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

2110 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! ஒருமாத நோன்பு கடமையிருந்த நிலையில் என் தாயார் இறந்துவிட்டார். அதை அவர் சார்பாக நான் நிறைவேற்றலாமா?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன் தாயார்மீது கடனேதும் இருந்தால், அவர் சார்பாக அதை நீ நிறைவேற்றுவாயா?" என்று கேட்டார்கள். அவர் "ஆம்' என்றார். "அவ்வாறாயின், நிறைவேற்றப்படுவதற்கு மிகவும் தகுதி வாய்ந்தது அல்லாஹ்வின் கடனே" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுலைமான் அல்அஃமஷ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
முஸ்லிம் பின் இம்ரான் அல்பத்தீன் (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை எங்களுக்கு அறிவித்த போது, அல்ஹகம் பின் உதைபா (ரஹ்) மற்றும் சலமா பின் குஹைல் (ரஹ்) ஆகிய இருவரும், "இந்த ஹதீஸை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்து முஜாஹித் (ரஹ்) அவர்கள் அறிவித்ததை நாங்கள் செவியுற்றுள்ளோம். அப்போது அங்கு நாங்களும் அமர்ந்திருந்தோம்" என்று கூறினர்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஒன்பது அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2111 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! என் தாயார், தம்மீது நேர்ச்சை நோன்பு கடமையாகியிருந்த நிலையில் இறந்துவிட்டார். அவர் சார்பாக நான் நோன்பு நோற்கலாமா?" என்று கேட்டார். அதற்கு "உன் தாயார்மீது ஏதேனும் கடனிருந்த நிலையில் அதை நீ நிறைவேற்றினால், அவர் சார்பாக நிறைவேறி விடாதா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அப்பெண்மணி, "ஆம்' என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன் தாயார் சார்பாக நோன்பு நோற்றுக்கொள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2112 புரைதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அமர்ந்திருந்தேன். அப்போது அவர்களிடம் ஒரு பெண்மணி வந்து, "நான் என் தாயாருக்கு ஓர் அடிமைப்பெண்ணைத் தானமாக வழங்கியிருந்தேன். என் தாயார் இறந்துவிட்டார். (இப்போது அந்த அடிமைப்பெண் எனக்கே கிடைத்துவிட்டார். இந்நிலையில் தானத்திற்குரிய நற்பலன் எனக்கு உண்டா?)" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(தானம் செய்ததற்குரிய) நற்பலன் உனக்கு உறுதியாகிவிட்டது. வாரிசுரிமை, அவ்வடிமைப்பெண்ணை உனக்கே மீட்டுத் தந்துவிட்டது" என்று சொன்னார்கள். அப்பெண்மணி, "என் தாயார்மீது ஒருமாத நோன்பு (கடமையாகி) இருந்தது. அவர் சார்பாக நான் நோன்பு நோற்கலாமா?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் சார்பாக நீ நோன்பு நோற்றுக்கொள்" என்றார்கள். அப்பெண்மணி, "என் தாயார் (இதுவரை) அறவே ஹஜ் செய்யவில்லை. அவர் சார்பாக நான் ஹஜ் செய்யலாமா?" என்று கேட்டதற்கு, "அவருக்காக நீ ஹஜ் செய்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

2113 மேற்கண்ட ஹதீஸ் புரைதா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "(என் தாயார்மீது) இருமாத நோன்பு (கடமையாகி) இருந்தது" என்று அப்பெண்மணி கேட்டதாக இடம்பெற்றுள்ளது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் புரைதா (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "ஒரு பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. இந்த அறிவிப்பில், "(என் தாயார்மீது) ஒருமாத நோன்பு (கடமையாகி) இருந்தது" என்றே இடம்பெற்றுள்ளது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "இரு மாத நோன்பு (கடமையாகி) இருந்தது" என்று இடம்பெற்றுள்ளது.
- இன்னோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது. அதில் "ஒருமாத நோன்பு (கடமையாகி) இருந்தது" என்று காணப்படுகிறது.

**பாடம் : 28 நோன்பு நோற்றிருப்பவர் விருந்துக்கு அழைக்கப்பட்டால் "நான் நோன்பாளி' என்று அவர் சொல்லிவிட வேண்டும்.**

2114 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் நோன்பு நோற்றிருக்கும்போது விருந்துக்கு அழைக்கப்பட்டால் "நான் நோன்பாளி' என்று அவர் கூறிவிடட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 29 நோன்பாளி நாவைக் காப்பது.**

2115 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் நோன்பு நோற்றவராகக் காலைப்பொழுதை அடையும் நாளில் அருவருப்பாக (ஆபாசமாக)ப் பேசவேண்டாம்;அறிவீனமாக நடந்துகொள்ளவேண்டாம். எவரேனும் அவரை ஏசினாலோ அல்லது வம்புக்கு இழுத்தாலோ "நான் நோன்பு நோற்றிருக்கிறேன்; நான் நோன்பு நோற்றிருக்கிறேன்" என்று அவர் கூறிவிடட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 30 நோன்பின் மாண்பு.**

2116 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், "ஆதமின் மைந்தனுடைய (மனிதனுடைய) ஒவ்வொரு செயலும் அவனுக்கே உரியதாகும். ஆனால், நோன்பைத் தவிர! நோன்பு எனக்கு (மட்டுமே) உரியதாகும். அதற்கு நானே நற்பலன் வழங்குவேன்" என்று கூறினான். முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன்மீது சத்தியமாக! நோன்பாளியின் வாயிலிருந்து வீசும் வாடை, அல்லாஹ்விடம் கஸ்தூரி மணத்தைவிட நறுமணமிக்கதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2117 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நோன்பு (பாவங்களிலிருந்து காக்கும்) கேடயமாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2118 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"ஆதமின் மைந்தனுடைய (மனிதனுடைய) ஒவ்வொரு செயலும் அவனுக்கே உரியதாகும்; நோன்பைத் தவிர! நோன்பு எனக்கு உரியதாகும். அதற்கு நானே நற்பலன் வழங்குவேன்" என வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் கூறினான். நோன்பு (பாவங்களிலிருந்து காக்கும்) கேடயமாகும். உங்களில் ஒருவர் நோன்பு நோற்றிருக்கும் நாளில் அருவருப்பாக (ஆபாசமாக)ப் பேசவேண்டாம்; கூச்சலிட்டு சச்சரவு செய்யவேண்டாம். யாரேனும் அவரை ஏசினால் அல்லது வம்புக்கிழுத்தால் "நான் நோன்பு நோற்றிருக்கிறேன்" என்று அவர்

கூறிவிடட்டும்! முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நோன்பாளியின் வாயிலிருந்து வரும் வாடை, மறுமை நாளில் அல்லாஹ்விடம் கஸ்தூரியின் மணத்தைவிட நறுமணமிக்கதாகும். நோன்பாளிக்கு இரண்டு மகிழ்ச்சிகள் உள்ளன. நோன்பு துறக்கும்போது, நோன்பு துறப்பதை முன்னிட்டு அவர் மகிழ்ச்சியடைகிறார். தம் இறைவனைச் சந்திக்கும்போது நோன்பின் காரணமாக அவர் மகிழ்ச்சியடைகிறார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2119 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதமின் மகனுடைய (மனிதனுடைய) ஒவ்வொரு நற்செயலுக்கும் ஒன்றுக்குப் பத்து முதல் எழுநூறு மடங்குகள்வரை நன்மைகள் வழங்கப்படுகின்றன; அல்லாஹ் கூறுகின்றான்: நோன்பைத் தவிர. ஏனெனில், நோன்பு எனக்கு உரியதாகும். அதற்கு நானே நற்பலன் வழங்குகிறேன். அவன் எனக்காகவே தனது உணர்வையும் உணவையும் கைவிடுகிறான் (என அல்லாஹ் கூறுகின்றான்). நோன்பாளிக்கு இரண்டு மகிழ்ச்சிகள் உள்ளன. அவர் நோன்பைத் துறக்கும்போது ஒரு மகிழ்ச்சியும், தம் இறைவனைச் சந்திக்கும் போது மற்றொரு மகிழ்ச்சியும் (அடைகிறார்). நோன்பாளியின் வாயிலிருந்து வரும் வாடை, அல்லாஹ்விடம் கஸ்தூரியின் மணத்தைவிட நறுமணமிக்கதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2120 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"நோன்பு எனக்கு உரியதாகும். அதற்கு நானே நற்பலன் வழங்குவேன்" என அல்லாஹ் கூறுகின்றான். நோன்பாளிக்கு இரண்டு மகிழ்ச்சிகள் உள்ளன. நோன்பு துறக்கும்போது அவர் மகிழ்ச்சி அடைவார்; அல்லாஹ்வைச் சந்திக்கும்போதும் மகிழ்ச்சி அடைவார். முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நோன்பாளியின் வாயிலிருந்து வரும் வாடை, அல்லாஹ்விடம் கஸ்தூரியின் மணத்தைவிட நறுமணமிக்கதாகும்.
இந்த ஹதீஸை அபூஹுரைரா (ரலி) அவர்களும் அபூசயீத் (ரலி) அவர்களும் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், "அவர் அல்லாஹ்வைச் சந்திக்கும்போது, அல்லாஹ் அவருக்கு நற்பலன் வழங்குவான்; அவர் மகிழ்ச்சி அடைவார்" என்று இடம்பெற்றுள்ளது.

2121 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் "ரய்யான்' எனப்படும் ஒரு நுழைவாயில் இருக்கிறது. மறுமை நாளில் அதன் வழியாக நோன்பாளிகளே நுழைவார்கள். அவர்களைத் தவிர வேறெவரும் (அதன் வழியாக) நுழையமாட்டார்கள். "நோன்பாளிகள் எங்கே?" என்று கேட்கப்படும்; உடனே அவர்கள் அதன் வழியாக நுழைவார்கள். அவர்களில் இறுதி நபர் நுழைந்ததும் அந்நுழைவாயில் அடைக்கப்பட்டுவிடும்; அதன் வழியாக வேறெவரும் நுழையமாட்டார்கள்.
இதை சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 31 அல்லாஹ்வின் பாதையில் (அறப்போருக்குச் செல்லும்போது) எந்த வித இடையூறும் கடமைதவறுதலும் ஏற்படாமல் நோன்பு நோற்கச் சக்தி பெற்றிருப்பவர் நோன்பு நோற்பதன் சிறப்பு.**

2122 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் பாதையில் (அறப்போர் புரியச் செல்லும்போது) ஒருநாள் நோன்பு நோற்கும் அடியாரின் முகத்தை, அந்த ஒரு நாளுக்குப் பகரமாக எழுபது ஆண்டுகள் (பயணத்) தொலைவிற்கு நரகத்திலிருந்து அல்லாஹ் அப்புறப்படுத்தாமல் இருப்பதில்லை.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2123 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் பாதையில் (அறப்போருக்குச் செல்லும்) ஒருவர் ஒருநாள் நோன்பு நோற்றால், அவரது முகத்தை அல்லாஹ் நரக நெருப்பைவிட்டு எழுபது ஆண்டுகள் (பயணத்) தொலைவிற்கு அப்புறப்படுத்திவிடுகிறான்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 32 கூடுதலான (நஃபில்) நோன்பு நோற்கும் முடிவை நண்பகலுக்கு முன் செய்தாலும் நோன்பு செல்லும். கூடுதலான நோன்பு நோற்றிருப்பவர் எவ்விதக் காரணமுமின்றி நோன்பை (இடையிலே) விட்டுவிடலாம்.**

2124 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நாள் என்னிடம் (வந்து), "ஆயிஷா! உங்களிடம் (உண்பதற்கு) ஏதேனும் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! எங்களிடம் எதுவுமில்லை" என்றேன். உடனே "அவ்வாறாயின் நான் நோன்பாளியாக இருந்துகொள்கிறேன்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டுச் சென்றார்கள். பின்னர் "எங்களுக்கு ஓர் அன்பளிப்பு வழங்கப்பட்டது' (அல்லது "எங்களைச் சந்திக்கச் சிலர் (அன்பளிப்புடன்) வந்தனர்'). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திரும்பிவந்தபோது, நான் "அல்லாஹ்வின் தூதரே! "நமக்கு ஓர் அன்பளிப்பு வழங்கப்பட்டுள்ளது' (அல்லது "நம்மைச் சந்திக்கச் சிலர் (அன்பளிப்புடன்) வந்தனர்'). (அந்த அன்பளிப்பிலிருந்து) சிறிதளவைத் தங்களுக்காக நான் எடுத்துவைத்துள்ளேன்" என்று சொன்னேன். அதற்கு அவர்கள் "என்ன அது?" என்று கேட்டார்கள். நான் "(பேரீச்சம் பழம், பாலாடைக் கட்டி, நெய் ஆகியவற்றால் தயாரிக்கப்படும்) "ஹைஸ்' எனும் பலகாரம்" என்று சொன்னேன். "அதைக் கொண்டு வா" என்று அவர்கள் சொன்னார்கள். நான் அதைக் கொண்டுவந்தேன். அவர்கள் உண்டார்கள். பிறகு "நான் இன்று காலையில் நோன்பு நோற்றி(ட எண்ணியி)ருந்தேன்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான தல்ஹா பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: நான் இந்த ஹதீஸை முஜாஹித் (ரஹ்) அவர்களிடம் அறிவித்தபோது அவர்கள், இ(வ்வாறு நோற்க எண்ணியிருந்த நோன்பை விட்டுவிடுவதான)து, ஒருவர் தமது செல்வத்திலிருந்து

தர்மப் பொருளை எடுத்துவைப்பதைப் போன்றதுதான். அவர் நாடினால், (எடுத்து வைத்த) அதை வழங்கலாம்; நாடினால் தம்மிடமே அதை வைத்துக்கொள்ளலாம்" என்று கூறினார்கள்.

2125 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு நாள் என்னிடம் வந்து, "உங்களிடம் (உண்பதற்கு) ஏதேனும் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். நாங்கள் "இல்லை' என்றோம். "அப்படியானால் நான் (இன்று) நோன்பாளியாக இருந்துகொள்கிறேன்" என்றார்கள். பிறகு மற்றொரு நாள் அவர்கள் எம்மிடம் வந்தபோது, "அல்லாஹ்வின் தூதரே! நமக்கு "ஹைஸ்' எனும் பலகாரம் அன்பளிப்பாக வழங்கப்பட்டுள்ளது" என்றோம். அதற்கு அவர்கள், "எனக்கு அதைக் காட்டு. நான் இன்று காலை நோன்பு நோற்றிருந்தேன்" என்று கூறிவிட்டு, அதை (வாங்கி)ச் சாப்பிட்டார்கள்.

**பாடம் : 33** **(நோன்பாளி) மறதியாக உண்ணவோ பருகவோ தாம்பத்திய உறவு கொள்ளவோ செய்தால் நோன்பு முறியாது.**

2126 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் நோன்பு நோற்றுக்கொண்டு மறதியாக உண்ணவோ பருகவோ செய்தால் அவர் நோன்பைத் தொடரட்டும். அவரை அல்லாஹ்வே உண்ணவும் பருகவும் வைத்தான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 34** **நபி (ஸல்) அவர்கள் ரமளான் அல்லாத மாதத்தில் நோன்பு நோற்றதும், நோன்பே இல்லாமல் எந்த மாதத்தையும் வெறுமையாக விடாமலிருப்பது விரும்பத்தக்கதாகும் என்பதும்.**

2127 அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் ரமளானைத் தவிர வேறெந்த குறிப்பிட்ட மாதத்திலாவது (மாதம் முழுக்க) நோன்பு நோற்றிருக்கிறார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! நபி (ஸல்) அவர்கள் இறக்கும்வரை ரமளான் அல்லாத வேறெந்த குறிப்பிட்ட மாதத்திலும் (மாதம் முழுக்க) நோன்பு நோற்றதுமில்லை; ஒரு சில நாட்களாவது நோன்பு நோற்காமல் எந்த மாதத்தையும் (அடியோடு) விட்டதுமில்லை" என்று பதிலளித்தார்கள்.

2128 அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ரமளானைத் தவிர வேறு மாதங்களில்) ஒரு மாதம் முழுவதும் நோன்பு நோற்றார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளானைத் தவிர வேறெந்த மாதத்திலும் ஒருமாதம் முழுவதும் நோன்பு நோற்றதில்லை. அவர்கள் இறக்கும்வரை எந்தவொரு மாதத்திலும் ஒரு சில நாட்களேனும் நோன்பு நோற்காமல் இருந்ததில்லை" என்று விடையளித்தார்கள்.

2129 அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்களின் நோன்பு குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் (தொடர்ந்து) நோன்பு நோற்கிறார்களோ, நோன்பு நோற்கிறார்களோ என்று நாங்கள் சொல்லுமளவிற்கு நோன்பு நோற்றுக்கொண்டிருப்பார்கள்; நோன்பே நோற்கமாட்டார்களோ; நோன்பே நோற்கமாட்டார்களோ என்று நாங்கள் சொல்லுமளவிற்கு நோன்பு நோற்காமல் இருந்துவிடவும் செய்வார்கள். மேலும், அவர்கள் மதீனாவிற்கு வந்ததிலிருந்து ரமளானைத் தவிர வேறு எந்த மாதத்திலும் மாதம் முழுக்க நோன்பு நோற்றதை நான் கண்டதில்லை" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2130 இறைநம்பிக்கையார்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இனி) நோன்பை விடவே மாட்டார்களோ என்று நாங்கள் சொல்லுமளவிற்கு அவர்கள் நோன்பு நோற்றுக்கொண்டே இருப்பார்கள்; (இனி) அவர்கள் நோன்பே நோற்கமாட்டார்களோ என்று நாங்கள் சொல்லுமளவிற்கு அவர்கள் நோன்பு நோற்காமல் விட்டுவிடவும் செய்வார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளானைத் தவிர வேறெந்த மாதத்திலும் மாதம் முழுக்க நோன்பு நோற்றதை நான் கண்டதில்லை. ஷஅபானைத் தவிர வேறெந்த மாதத்திலும் அதிகமாக நோன்பு நோற்றதை நான் கண்டதில்லை.

2131 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் நோன்பு குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொடர்ந்து) நோன்பு நோற்கிறார்களோ என்று நாங்கள் சொல்லுமளவிற்கு நோன்பு நோற்றுக்கொண்டே இருப்பார்கள்; நோன்பே நோற்கமாட்டார்களோ என்று நாங்கள் சொல்லுமளவிற்கு நோன்பு நோற்காமல் இருந்துவிடவும் செய்வார்கள். அவர்கள் ஷஅபானைத் தவிர வேறெந்த மாதத்திலும் அதிக நாட்கள் நோன்பு நோற்றதை நான் கண்டதில்லை. ஷஅபான் மாதம் முழுவதும் அவர்கள் நோன்பு நோற்றிருக்கிறார்கள். ஷஅபானில் சில நாட்கள் மட்டும் நோன்பு நோற்றும் இருக்கிறார்கள்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2132 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓராண்டில் ஷஅபான் மாதத்தைவிட அதிகமாக வேறெந்த மாதத்திலும் நோன்பு நோற்றதில்லை. "நற்செயல்களில் உங்களால் இயன்றதையே செய்யுங்கள். நீங்கள் சலிப்படையாதவரை அல்லாஹ் சலிப்படைய மாட்டான்" என்று அவர்கள் கூறுவார்கள். மேலும், "குறைவாக இருந்தாலும் தொடர்ந்து ஒருவர் செய்துவரும் நற்செயலே அல்லாஹ்விற்கு மிக விருப்பமானதாகும்" என்றும் அவர்கள் கூறுவார்கள்.

2133 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளானைத் தவிர வேறெந்த மாதத்திலும் மாதம் முழுக்க நோன்பு நோற்கமாட்டார்கள். நோன்பு நோற்கத் தொடங்கிவிட்டால், "அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் இனி விடாமல் (தொடர்ந்து) நோன்பு நோற்றுக் கொண்டே இருப்பார்களோ' என்று ஒருவர் சொல்லுமளவிற்கு நோன்பு நோற்றுக்கொண்டே இருப்பார்கள். நோன்பை அவர்கள் விடத்தொடங்கினால், "அல்லாஹ்வின் மீதாணையாக! இனிமேல் நோன்பே நோற்கமாட்டார்களோ' என்று ஒருவர் சொல்லுமளவிற்கு நோன்பு நோற்காமலும் இருந்து விடுவார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வந்ததிலிருந்து (ரமளானில் தவிர) தொடர்ந்து ஒரு மாதம் நோன்பு நோற்றதில்லை" என்று ஹதீஸ் தொடங்குகிறது.

2134 உஸ்மான் பின் ஹகீம் அல்அன்சாரி (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்களிடம் ரஜப் மாதத்தில் நோன்பு நோற்பது குறித்துக் கேட்டேன். (அப்போது நாங்கள் ரஜப் மாதத்தில் இருந்தோம்) அதற்கு அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இனி விடாமல்) நோன்பு நோற்றுக்கொண்டே இருப்பார்களோ என்று நாங்கள் சொல்லுமளவிற்கு நோன்பு நோற்றுக்கொண்டே இருப்பார்கள். (இனி) நோன்பே நோற்கமாட்டார்களோ என்று நாங்கள் சொல்லுமளவிற்கு நோன்பு நோற்காமல் இருந்துவிடவும் செய்வார்கள்" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2135 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றுக்கொண்டேயிருப்பார்களோ, நோன்பு நோற்றுக்கொண்டேயிருப்பார்களோ என்று சொல்லப்படும் அளவிற்கு நோன்பு நோற்றுக் கொண்டே இருப்பார்கள். நோன்பே நோற்கமாட்டார்களோ, நோன்பே நோற்கமாட்டார்களோ என்று சொல்லப்படும் அளவிற்கு நோன்பு நோற்காமலும் இருந்து விடுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 35 இடரைச் சந்திப்பவர், கடமையைத் தவறவிடுபவர், இரு பெருநாட்கள் மற்றும் "அய்யாமுத் தஷ்ரீக்' ஆகிய நாட்களில்கூட விடாமல் நோன்பு நோற்பவர் ஆகியோர் காலமெல்லாம் நோன்பு நோற்பதற்கு வந்துள்ள தடையும், ஒரு நாள் விட்டு ஒரு நாள் நோன்பு நோற்பதன் சிறப்பும்.

2136 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"நான் உயிரோடு வாழும்வரை பகலெல்லாம் நோன்பு நோற்பேன்; இரவெல்லாம் நின்று வழி படுவேன்' என்று நான் சொல்லிக்கொண்டிருந்த செய்தி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "நீர்

இவ்வாறு கூறினீரா?" என்று கேட்டார்கள். "நான் அவ்வாறு கூறத்தான் செய்தேன், அல்லாஹ்வின் தூதரே!" என்றேன். அதற்கு அவர்கள், "இது உம்மால் முடியாது; (சில நாட்கள்) நோன்பு நோற்பீராக! (சில நாட்கள் நோன்பை) விட்டுவிடுவீராக! (இரவில் சிறிது நேரம்) உறங்குவீராக! (சிறிது நேரம்) நின்று வழிபடுவீராக! மாதத்தில் மூன்று நாட்கள் நோன்பு நோற்றுக்கொள்வீராக! ஏனெனில், ஒவ்வொரு நற்செயலுக்கும் பிரதியாக அதைப் போன்ற பத்து மடங்கு (நற்பலன்)கள் உண்டு. (இதன்படி மாதத்தில் மூன்று நாட்கள் நோன்பு நோற்பது மாதம் முழுவதும் நோன்பு நோற்பதற்குச் சமமாகும்.) இது வருடமெல்லாம் நோன்பு நோற்றதாக அமையும்" என்று சொன்னார்கள்.

நான், "என்னால் இதைவிடச் சிறப்பாக (கூடுதலாக)ச் செய்யமுடியும்!" என்று கூறினேன். "(அப்படியானால்) ஒரு நாள் நோன்பு நோற்று, இரண்டு நாட்கள் நோன்பை விட்டுவிடுவீராக!" என்று அவர்கள் கூறினார்கள். நான், "என்னால் இதைவிடச் சிறப்பாக (கூடுதலாக)ச் செய்ய முடியும், அல்லாஹ்வின் தூதரே!" என்று சொன்னேன். "(அப்படியானால்) ஒரு நாள் நோன்பு நோற்று, ஒரு நாள் நோன்பை விட்டுவிடுவீராக! இதுதான் (இறைத்தூதர்) தாவூத் (அலை) அவர்களின் நோன்பாகும். நோன்புகளில் இதுவே நடுநிலையானதாகும்" என்று கூறினார்கள். "என்னால் இதைவிடச் சிறப்பாக (கூடுதலாக)ச் செய்ய முடியும்" என்று நான் சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதைவிடச் சிறந்தது எதுவுமில்லை" என்றார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட மூன்று நாட்களை நான் ஏற்றுக் கொண்டிருப்பது, என் மனைவி மக்களையும் என் சொத்து பத்துக்களையும்விட எனக்கு மிகவும் விருப்பானதாகும் (என்பதை முதுமையடைந்துவிட்ட இந்நிலையில் உணர்கிறேன்).

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2137 யஹ்யா பின் அபீகஸீர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நானும் அப்துல்லாஹ் பின் யஸீத் (ரஹ்) அவர்களும் அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்களிடம் சென்றோம். அவர்களை அழைத்துவருமாறு ஆளனுப்பிவிட்டு, அவர்கள் எங்களிடம் வரும்வரை அவர்களது வீட்டுக்கு அருகிலிருந்த ஒரு பள்ளிவாசலில் நாங்கள் (காத்து) இருந்தோம். அவர்கள் எங்களிடம் வந்தபோது, "நீங்கள் நாடினால் (என் வீட்டுக்குள்) வரலாம்; நீங்கள் நாடினால் இங்கேயே அமரலாம்" என்றார்கள். நாங்கள், "இல்லை, இங்கேயே அமருகிறோம். எங்களுக்கு ஹதீஸ் அறிவியுங்கள்" என்றோம். அப்போது அவர்கள் கூறினார்கள்:

என்னிடம் அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்:

நான் பகலெல்லாம் நோன்பு நோற்று, ஒவ்வோர் இரவிலும் குர்ஆன் முழுவதையும் ஓதியும் வந்தேன். அப்போது "என்னைப் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் சொல்லப்பட்டது' அல்லது "(என்னை அழைத்து வருமாறு) அவர்கள் என்னிடம் ஆளனுப்பினார்கள்.' நான் அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் என்னிடம், "நீர் (பகற்)காலமெல்லாம் நோன்பு நோற்று, ஒவ்வோர் இரவிலும் குர்ஆன் முழுவதையும் ஓதிவருவதாக எனக்குச் செய்தி வந்ததே (அது உண்மையா)?" என்று கேட்டார்கள். நான், "ஆம், அல்லாஹ்வின் தூதரே! இதன் மூலம் நான் நன்மையைத் தவிர வேறெதையும் நாடவில்லை" என்றேன். அவர்கள், "ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பது உமக்குப் போதுமே!" என்றார்கள். நான், "அல்லாஹ்வின்

தூதரே! என்னால் இதைவிடக் கூடுதலாகச் செய்ய முடியும்" என்றேன். அவர்கள், "உம் துணைவிக்குச் செய்ய வேண்டிய கடமைகள் உமக்கு இருக்கின்றன. உம் விருந்தினருக்குச் செய்யவேண்டிய கடமைகள் உமக்கு உள்ளன. உமது உடலுக்குச் செய்யவேண்டிய கடமைகளும் உமக்கு உண்டு. எனவே, இறைத்தூதர் தாவூத் (அலை) அவர்களைப் போன்று நோன்பு நோற்பீராக! ஏனெனில், தாவூத் (அலை) அவர்கள் மக்களிடையே மாபெரும் வணக்கசாலியாக இருந்தார்கள்" என்று கூறினார்கள்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! தாவூத் (அலை) அவர்களின் நோன்பு என்ன?" என்று கேட்டேன். "ஒரு நாள் நோன்பு நோற்று ஒரு நாள் நோன்பை விடுவதே அவர்களது நோன்பாகும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும், "மாதத்திற்கு ஒரு தடவை குர்ஆனை ஓதி நிறைவு செய்வீராக!" என்று கூறினார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! என்னால் இதைவிடக் கூடுதலாகச் செய்யமுடியும்" என்றேன். "அவ்வாறாயின் இருபது நாட்களுக்கு ஒரு தடவை குர்ஆனை ஓதி நிறைவு செய்வீராக!" என்றார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! என்னால் இதைவிடக் கூடுதலாகச் செய்ய முடியும்" என்றேன். "அப்படியானால், பத்து நாட்களுக்கு ஒரு தடவை குர்ஆனை ஓதி நிறைவு செய்வீராக!" என்றார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! என்னால் இதைவிடக் கூடுதலாகச் செய்யமுடியும்!" என்றேன். "அவ்வாறாயின் வாரத்துக்கு ஒரு தடவை குர்ஆனை ஓதி நிறைவு செய்வீராக! அதைவிட அதிகமாக்க வேண்டாம். ஏனெனில், உம் துணைவிக்குச் செய்யவேண்டிய கடமைகள் உமக்கு உள்ளன;உம் விருந்தினருக்குச் செய்யவேண்டிய கடமைகளும் உமக்கு உள்ளன; உமது உடலுக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உமக்கு உள்ளன" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
ஆனால், நான் சிரமத்தை வலிந்து ஏற்றுக்கொண்டேன்; அதனால் என்மீது சிரமம் சுமத்தப்பட்டது. என்னிடம் நபி (ஸல்) அவர்கள், "உமக்குத் தெரியாது; உமது வயது நீளக்கூடும் (அப்போது தொடர்நோன்பும் தொடர்வழிபாடும் உம்மால் முடியாமல் போகலாம்)" என்றார்கள். நபி (ஸல்) அவர்கள் கூறியதைப் போன்று நான் ஆனேன். முதுமை அடைந்த பின், நபி (ஸல்) அவர்களின் சலுகையை நான் ஏற்றுக்கொண்டிருந்தால் நன்றாயிருந்திருக்குமே என்று நான் விரும்பினேன். (அந்த அளவிற்கு நான் பலவீனப்பட்டு விட்டேன்).

2138 மேற்கண்ட ஹதீஸ் யஹ்யா பின் அபீகஸீர் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒவ்வொரு மாதமும் மூன்று நோன்புகள் நோற்பீராக' என்பதற்குப் பின், "ஏனெனில் ஒவ்வொரு நற்செயலுக்குப் பிரதியாக அதைப் போன்ற பத்து மடங்கு (நற்பலன்)கள் உமக்கு உண்டு. இது வருடமெல்லாம் நோன்பு நோற்றதாக அமையும்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது. மேலும் அதில், "நபி தாவூத் (அலை) அவர்களின் நோன்பு என்ன?" என்று நான் கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "வருடத்தில் பாதிநாள் (நோன்பு நோற்பது)' என்று கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது. குர்ஆன் ஓதுவதைப் பற்றிய எந்தக் குறிப்பும் இடம்பெறவில்லை. "உம் விருந்தினருக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உமக்கு உள்ளன' என்ற இடத்தில் "உம்

பிள்ளைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உமக்கு உள்ளன' என்றே இடம் பெற்றுள்ளது.

2139 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஒவ்வொரு மாதமும் (ஒருமுறை) குர்ஆனை ஓதி நிறைவு செய்வீராக!" என்றார்கள். அப்போது நான், "(அதைவிடவும் குறைந்த நாட்களில் குர்ஆனை முழுமையாக ஓதி முடிக்கும்) சக்தி எனக்கு உள்ளது" என்று கூறினேன். "அப்படியானால் இருபது இரவுகளில் (ஒருமுறை) ஓதி நிறைவு செய்வீராக!" என்றார்கள். அப்போதும் நான், "(அதை டவும் குறைந்த நாட்களில் குர்ஆனை முழுமையாக ஓதி முடிக்கும்) சக்தி எனக்கு உள்ளது" என்றேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால் ஏழு நாட்களில் (ஒருமுறை) ஓதி நிறைவு செய்வீராக! அதைவிட (ஓதுவதை) அதிகமாக்கிவிடாதீர்!" என்று சொன்னார்கள்.

2140 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "அப்துல்லாஹ்! இரவில் (அதிகமாக) நின்று வணங்கிவிட்டு, இறுதியில் இரவுத்தொழுகையையே கைவிட வேண்டிய நிலைக்கு ஆளான இன்ன மனிதரைப் போன்று நீரும் ஆகிவிட வேண்டாம்" என்று கூறினார்கள்.

2141 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் தொடர்ந்து (பகலெல்லாம்) நோன்பு நோற்பதாகவும் இரவெல்லாம் நின்று வழிபடுவதாகவும் நபி (ஸல்) அவர்களுக்குச் செய்தி எட்டியது. அப்போது "அவர்கள் என்னை அழைத்துவருமாறு ஆளனுப்பினார்கள்' அல்லது "நானாக அவர்களைச் சந்தித்தேன்.' அவர்கள், "நீர், விடாமல் நோன்பு நோற்பதாகவும் (உறங்காமல்) இரவெல்லாம் நின்று தொழுவதாகவும் என்னிடம் கூறப்படுகிறதே! அவ்வாறு செய்யாதீர். ஏனெனில், உமது கண்ணுக்கு (நீர்) அளிக்க வேண்டிய பங்கு உண்டு; உமது உடலுக்கு அளிக்கவேண்டிய பங்கும் உண்டு. உம் வீட்டாருக்கு அளிக்கவேண்டிய பங்கும் உண்டு. எனவே, (சில நாள்) நோன்பு நோற்று, (சில நாள்) நோன்பை விட்டுவிடுவீராக! (சிறிது நேரம்) தொழுவீராக! (சிறிது நேரம்) உறங்குவீராக! பத்து நாட்களுக்கு ஒரு முறை நோன்பு நோற்றுக்கொள்வீராக! (மற்ற) ஒன்பது நாட்களுக்கும் உமக்கு நற்பலன் உண்டு" என்று கூறினார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! இதைவிட அதிகமாகச் செய்வதற்கு நான் சக்தி பெற்றுள்ளேன்" என்றேன். "அவ்வாறாயின் (இறைத்தூதர்) தாவூத் (அலை) அவர்களின் நோன்பை நோற்பீராக!" என்றார்கள். "அல்லாஹ்வின் தூதரே! தாவூத் (அலை) அவர்கள் எவ்வாறு நோன்பு நோற்பார்கள்?" என்று கேட்டேன். அதற்கு "அவர்கள் ஒரு நாள் நோன்பு நோற்று, ஒரு நாள் விட்டுவிடுவார்கள். மேலும், (போர் முனையில்) எதிரிகளைச் சந்திக்கும்போது பின் வாங்கமாட்டார்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! (தாவூத் நபியின் வீரத்தை நான் பெறஇயலுமா?) இந்தக் குணத்திற்காக எனக்கு யார் பொறுப்பேற்றுக்கொள்வார்?" என்று கேட்டேன்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அதாஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

(இந்த உரையாடலுக்கிடையே) ஆயுள் நோன்பு நோற்பது பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எப்படிக் கூறினார்கள் என்பதை நான் அறியமாட்டேன். (ஆயினும், பின்வருமாறு கூறினார்கள் என்று நான் எண்ணுகிறேன்:) "காலமெல்லாம் நோன்பு நோற்றவர், நோன்பு நோற்றவர் அல்லர்; காலமெல்லாம் நோன்பு நோற்றவர், நோன்பு நோற்றவர் அல்லர்; காலமெல்லாம் நோன்பு நோற்றவர், நோன்பு நோற்றவர் அல்லர்" என்று நபியவர்கள் (மூன்று முறை) கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வரும் தகவலும் இடம்பெற்றுள்ளது:

முஸ்லிம் (பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான்) கூறுகிறேன்:

இந்த ஹதீஸை (அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களிடமிருந்து) அறிவிப்பவரான கவிஞர் அபுல்அப்பாஸ் அஸ்ஸாயிப் பின் ஃபர்ரூக் (ரஹ்) அவர்கள் மக்காவாசிகளில் ஒருவராவார்; நம்பத்தகுந்தவரும் நேர்மையானவரும் ஆவார்.

2142 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "அப்துல்லாஹ் பின் அம்ர்! நீர் இரவெல்லாம் நின்று வணங்கி, பகலெல்லாம் நோன்பு நோற்கிறீர் (என்று கேள்விப்பட்டேன்). நீர் இவ்வாறு செய்தால் உமது கண் சொருகிவிடும்; பலவீனமடைந்து விடும். காலமெல்லாம் நோன்பு நோற்றவர், நோன்பு நோற்றவர் அல்லர். மாதத்தில் மூன்று நோன்பு நோற்பது எல்லா மாதங்களிலும் நோன்பு நோற்றதாக அமையும்" என்று சொன்னார்கள். நான், "என்னால் இதைவிட அதிகமாகச் செய்யமுடியும்" என்றேன். "அவ்வாறாயின், (இறைத்தூதர்) தாவூத் (அலை) அவர்களின் நோன்பை நோற்பீராக! அவர்கள் ஒரு நாள் விட்டு ஒரு நாள் நோன்பு நோற்பார்கள்; (போர் முனையில்) எதிரிகளைச் சந்தித்தால் பின்வாங்கமாட்டார்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், ("கண் பலவீனமடைந்துவிடும்' என்பதற்குப் பகரமாக) "உடல் நலிந்துவிடும்' என்று இடம் பெற்றுள்ளது.

2143 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "நீர் இரவெல்லாம் நின்று வணங்கி பகலெல்லாம் நோன்பு நோற்பதாகக் கேள்விப்பட்டேனே (அது உண்மையா?)" என்று கேட்டார்கள். நான், "(உண்மைதான்) நான் அவ்வாறு செய்கிறேன்" என்றேன். அவர்கள், "இவ்வாறு நீர் செய்தால் உம்முடைய கண்கள் சொருகிவிடும்; உமது உடல் நலிந்துவிடும். நீர் உமது கண்ணுக்குச் செய்யவேண்டிய கடமைகளும் உள்ளன. உமது உடலுக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உள்ளன. உம் இல்லத்தாருக்குச் செய்யவேண்டிய கடமைகளும் உள்ளன. எனவே, நீர் (சிறிது நேரம்) தொழுவீராக; (சிறிது நேரம்) உறங்குவீராக! (ஒரு நாள்) நோன்பு நோற்பீராக! (ஒரு நாள்) நோன்பை விட்டுவிடுவீராக!" என்றார்கள்.

2144 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமான நோன்பு தாவூத் (அலை) அவர்களின் நோன்பாகும். அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமான தொழுகை தாவூத் (அலை) அவர்களின் தொழுகையாகும். தாவூத் (அலை) அவர்கள் பாதி இரவுவரை உறங்குவார்கள். இரவில் மூன்றில் ஒரு பகுதி நேரம் நின்று வழிபடுவார்கள். (பிறகு) ஆறில் ஒரு பகுதி நேரம் உறங்குவார்கள். அவர்கள் ஒரு நாள் நோன்பு நோற்பார்கள்; ஒரு நாள் நோன்பை விட்டு விடுவார்கள். – இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2145 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமான நோன்பு தாவூத் (அலை) அவர்களின் நோன்பாகும். அவர்கள் ஆண்டில் பாதி நாட்கள் நோன்பு நோற்பார்கள். வலிவும் மாண்புமிக்க அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமான தொழுகை தாவூத் (அலை) அவர்களின் தொழுகையாகும். அவர்கள் பாதி இரவுவரை உறங்குவார்கள். பிறகு எழுந்து வழிபட்டு விட்டுப் பின்னர் இரவின் இறுதிப் பகுதியில் உறங்குவார்கள். இரவின் பாதி நேரம் கழிந்த பின்னர் இரவின் மூன்றிலொரு பகுதி நேரம் வழிபடுவார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த) அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்களிடம் "அம்ர் பின் அவ்ஸ் (ரஹ்) அவர்களா "தாவூத் (அலை) அவர்கள் இரவில் பாதி நேரம் கழிந்த பின் இரவின் மூன்றிலொரு பகுதி நேரம்வரை நின்று வழிபடுவார்கள்' என்று கூறுவார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள், "ஆம்' என்றார்கள்.

2146 அபூகிலாபா அப்துல்லாஹ் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபுல்மலீஹ் ஆமிர் பின் உசாமா (ரஹ்) அவர்கள் என்னிடம், "நான் உம்முடைய தந்தை (ஸைத் பின் அம்ர் –ரஹ்) அவர்களுடன் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் எங்களிடம் (பின்வருமாறு) கூறினார்கள் என்றார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எனது நோன்பு குறித்துச் சொல்லப்பட்டது. எனவே, அவர்கள் என்னிடம் வந்தார்கள். அவர்களுக்காக நான் ஈச்ச நாரால் நிரப்பப்பட்டிருந்த தோல் தலையணை ஒன்றை எடுத்துவைத்தேன். அவர்கள் (அதில் அமராமல்) தரையில் அமர்ந்தார்கள். தலையணை எனக்கும் அவர்களுக்கும் இடையில் கிடந்தது. அப்போது அவர்கள் என்னிடம், "ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் (நோன்பு நோற்பது) உமக்குப் போதாதா?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! (என்னால் இதைவிட அதிகமாக நோன்பு நோற்க இயலும்)" என்றேன். அவர்கள், "(மாதத்தில்) ஐந்து நாட்கள் (நோற்றுக்கொள்)" என்றார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! (என்னால் இதைவிட அதிகமாக நோன்பு நோற்க இயலும்)" என்றேன். அவர்கள் "ஏழு நாட்கள் (நோற்றுக்கொள்)" என்றார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே....!" என்றேன். அவர்கள், "ஒன்பது நாட்கள்..." என்றார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே...! என்றேன். அவர்கள், "பதினோரு நாட்கள்..." என்றார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! (என்னால் இதைவிட அதிகமாக நோன்பு நோற்க முடியும்)" என்றேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "தாவூத் (அலை) அவர்களின் நோன்புக்கு

மேல் (சிறப்பான) எந்த நோன்பும் கிடையாது. வருடத்தின் பாதி நாட்கள் (நோன்பு நோற்றலே அது). ஒரு நாள் விட்டு ஒரு நாள் நோன்பு நோற்றலாகும்" என்றார்கள்.

2147 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "(மாதத்தில்) ஒரு நாள் நோன்பு நோற்பீராக! எஞ்சிய நாட்கள் நோன்பு நோற்றதற்குரிய நன்மையும் உமக்கு உண்டு" என்றார்கள். நான், "என்னால் இதைவிட அதிகமாகச் செய்யமுடியும்" என்றேன். அவர்கள், "இரண்டு நாட்கள் நோன்பு நோற்பீராக! எஞ்சிய நாட்கள் நோன்பு நோற்றதற்குரிய நன்மையும் உமக்கு உண்டு" என்றார்கள். நான், "என்னால் இதைவிட அதிகமாகச் செய்ய முடியும்" என்றேன். அவர்கள், "மூன்று நாட்கள் நோன்பு நோற்பீராக! எஞ்சிய நாட்கள் நோன்பு நோற்றதற்குரிய நன்மையும் உமக்கு உண்டு" என்றார்கள்.நான், "என்னால் இதைவிட அதிகமாகச் செய்யமுடியும்" என்றேன். அவர்கள், "நான்கு நாட்கள் நோன்பு நோற்பீராக! எஞ்சிய நாட்கள் நோன்பு நோற்றதற்குரிய நன்மையும் உமக்கு உண்டு" என்றார்கள். நான், "என்னால் இதைவிட அதிகமாகச் செய்யமுடியும்" என்றேன். அதற்கு, "அல்லாஹ்விடம் மிகச் சிறந்த நோன்பான தாவூத் (அலை) அவர்களின் நோன்பை நோற்றுக்கொள்வீராக! தாவூத் (அலை) அவர்கள் ஒரு நாள் நோன்பு நோற்று,ஒரு நாள் நோன்பை விட்டு விடுவார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2148 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "அப்துல்லாஹ் பின் அம்ர்! நீர் பகலெல்லாம் நோன்பு நோற்று, இரவெல்லாம் நின்று வழிபடுவதாக எனக்குச் செய்தி எட்டியது. அவ்வாறு நீர் செய்யாதீர். ஏனெனில், உமது உடலுக்கு அளிக்கவேண்டிய பங்கும் உமக்கு உண்டு. உமது கண்ணுக்கு வழங்க வேண்டிய பங்கும் உமக்கு உண்டு. உம் துணைவிக்கு வழங்க வேண்டிய பங்கும் உமக்கு உண்டு. (சில நாட்கள்) நோன்பு நோற்பீராக! (சில நாட்கள்) நோன்பை விட்டுவிடுவீராக! ஒவ்வொரு மாதத்திலும் மூன்று நோன்புகள் நோற்பீராக! இது வருடமெல்லாம் நோன்பு நோற்றதாக அமையும்" என்று சொன்னார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! எனக்குச் சக்தி உள்ளது (என்னால் இதைவிட அதிகமான நோன்புகள் நோற்க முடியும்)" என்றேன். அவர்கள், "அப்படியானால் தாவூத் (அலை) அவர்கள் நோற்றதைப் போன்று நோன்பு நோற்பீராக; ஒரு நாள் நோன்பு நோற்பீராக! ஒரு நாள் நோன்பை விட்டுவிடுவீராக!" என்று சொன்னார்கள்.
இதன் அறிவிப்பாளரான சஅத் பின் மீனாஉ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: (முதுமையடைந்த) பின்னர் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் "(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அறிவித்த) அந்தச் சலுகையைப் பயன்படுத்தியிருந்தால் நன்றாயிருந்திருக்குமே" என்று கூறுவார்கள்.

**பாடம் : 36 மாதந்தோறும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பதும் அரஃபா (துல்ஹஜ் ஒன்பதாவது) நாள், ஆஷூரா (முஹர்ரம் பத்தாவது) நாள், (வாரத்தில்) திங்கட்கிழமை மற்றும் வியாழக்கிழமை ஆகிய நாட்களில் நோன்பு நோற்பதும் விரும்பத்தக்கதாகும்.**

2149 முஆதா அல்அதவிய்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மாதந்தோறும் மூன்று நாட்கள் நோன்பு நோற்றுவந்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஆம்' என்றார்கள். நான், "மாதத்தில் எ(ந்தெ)ந்த நாட்களில் நோன்பு நோற்றுவந்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு "தாம் நோன்பு நோற்பதற்கென மாதத்தில் எந்த நாளுக்கும் அவர்கள் (தனி) முக்கியத்துவம் அளித்ததில்லை" என ஆயிஷா (ரலி) அவர்கள் விடையளித்தார்கள்.

2150 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "என்னிடம்' அல்லது "நான் செவியுற்றுகொண்டிருக்க மற்றொரு மனிதரிடம்' "நீர் இந்த (ஷஅபான்) மாதத்தின் நடுப்பகுதியில் நோன்பு நோற்றீரா?" என்று கேட்டார்கள். நான், "இல்லை' என்றேன். நபி (ஸல்) அவர்கள், "நீர் (ரமளான்) நோன்பை முடித்ததும் இரண்டு நாட்கள் நோன்பு நோற்பீராக!" என்று கூறினார்கள்.
இதை முதர்ரிஃப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2151 அபூகத்தாதா அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "நீங்கள் எவ்வாறு நோன்பு நோற்கின்றீர்கள்?" என்று கேட்டார். (அதைக் கேட்ட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கோபமடைந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கோபத்தைக் கண்ட உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வை இறைவனாகவும், இஸ்லாத்தை மார்க்கமாகவும், முஹம்மத் (ஸல்) அவர்களைத் தூதராகவும் நாங்கள் மனநிறைவுடன் ஏற்றுக் கொண்டோம். நாங்கள் அல்லாஹ்விடம் அவனது கோபத்திலிருந்தும் அவனுடைய தூதரின் கோபத்திலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறோம்" என்று கூறினார்கள். உமர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கோபம் தணியும்வரை இவ்வாறு பல முறை சொல்லிக் கொண்டிருந்தார்கள். பிறகு "அல்லாஹ்வின் தூதரே! காலமெல்லாம் நோன்பு நோற்பவர் குறித்து தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்று உமர் (ரலி) அவர்கள் கேட்டார்கள். அவர் "(முறைப்படி) நோன்பு நோற்றவருமல்லர்; (முறைப்படி) நோன்பை விட்டவருமல்லர்' அல்லது "அவர் (முறைப்படி) நோற்கவுமில்லை; (முறைப்படி) நோன்பை விடவுமில்லை' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விடையளித்தார்கள்.
உமர் (ரலி) அவர்கள், "இரண்டு நாட்கள் நோன்பு நோற்று ஒரு நாள் நோன்பை விட்டு விடுபவர் பற்றித் தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்க, "இவ்வாறு நோன்பு நோற்பதற்கு எவரால் இயலும்?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (திருப்பிக்) கேட்டார்கள். உமர் (ரலி) அவர்கள், "ஒரு நாள் நோன்பு நோற்று ஒரு நாள் நோன்பை விட்டு விடுபவர் குறித்துத் தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு, "அதுதான் தாவூத் (அலை) அவர்களின் நோன்பாகும்" என்று விடையளித்தார்கள்.

உமர் (ரலி) அவர்கள், "ஒரு நாள் நோன்பு நோற்று இரண்டு நாட்கள் நோன்பை விட்டுவிடுபவர் பற்றித் தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்டதற்கு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இ(வ்வாறு நோன்பு நோற்ப)தற்கு எனக்குச் சக்தி அளிக்கப்பட வேண்டும் என நான் விரும்பினேன்" என்று கூறினார்கள். பிறகு, "மாதந்தோறும் மூன்று நோன்பு நோற்பது, ஆண்டுதோறும் ரமளானில் நோன்பு நோற்பது ஆகியன காலமெல்லாம் நோன்பு நோற்றதாக அமையும். துல்ஹஜ் ஒன்பதாவது நாள் (அரஃபா) அன்று நோன்பு நோற்பதை, அதற்கு முந்தைய ஓராண்டிற்கும் அதற்குப் பிந்தைய ஓராண்டிற்கும் பாவப் பரிகாரமாக அல்லாஹ் ஆக்குவான் என்று நான் எதிர்பார்க்கிறேன். முஹர்ரம் பத்தாவது நாளில் (ஆஷூரா) நோன்பு நோற்பதை, அதற்கு முந்தைய ஓராண்டிற்குப் பாவப்பரிகாரமாக அல்லாஹ் ஆக்குவான் என நான் எதிர்பார்க்கிறேன்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2152 அபூகத்தாதா அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அவர்களது நோன்பு பற்றிக் கேட்கப்பட்ட போது, அவர்கள் கோபமுற்றார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வை இறைவனாகவும், இஸ்லாத்தை மார்க்கமாகவும், முஹம்மத் (ஸல்) அவர்களைத் தூதராகவும், எங்கள் உறுதிப் பிரமாணத்தை (முழுமையான) உறுதிமொழிப் பிரமாணமாகவும் நாங்கள் மனநிறைவுடன் ஏற்றுக் கொண்டோம்" என்று கூறினார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், காலமெல்லாம் நோன்பு நோற்பது குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு "அ(வ்வாறு நோன்பு நோற்ப)வர் (முறைப்படி) நோன்பு நோற்றவருமல்லர். (முறைப்படி) நோன்பை விட்டவருமல்லர்' அல்லது "அவர் (முறைப்படி) நோன்பு நோற்கவுமில்லை; (முறைப்படி) நோன்பை விடவுமில்லை" என்று விடையளித்தார்கள்.
இரண்டு நாட்கள் நோன்பு நோற்று ஒரு நாள் நோன்பை விடுவது பற்றிக் கேட்கப்பட்ட போது, "அ(வ்வாறு நோன்பு நோற்ப)தற்கு எவரால் முடியும்?" என்று (திருப்பிக்) கேட்டார்கள். ஒரு நாள் நோன்பு நோற்று இரண்டு நாட்கள் நோன்பை விடுவது பற்றிக் கேட்கப்பட்டதற்கு, "இதற்கான வலிமையை அல்லாஹ் நமக்கு அளித்தால் நன்றாயிருக்கும்!" என்றார்கள். ஒரு நாள் நோன்பு நோற்று ஒரு நாள் நோன்பை விடுவது பற்றிக் கேட்கப்பட்ட போது, "அதுதான் என் சகோதரர் தாவூத் (அலை) அவர்களின் நோன்பாகும்" என்று சென்னார்கள்.
திங்கட்கிழமையன்று நோன்பு நோற்பது பற்றிக் கேட்கப்பட்டதற்கு, "அன்றைய தினத்தில்தான் நான் பிறந்தேன்; அன்றுதான் "நான் நபியாக நியமிக்கப்பட்டேன்' அல்லது "எனக்குக் குர்ஆன் (முதன்முதலில்) அருளப்பெற்றது' என்றார்கள். மேலும், "மாதந்தோறும் மூன்று நோன்புகள் நோற்பதும் ரமளான் தோறும் நோன்பு நோற்பதும் காலமெல்லாம் நோன்பு நோற்பதாகும்" என்றும் கூறினார்கள். அரஃபா (துல்ஹஜ் ஒன்பதாவது) நாளில் நோன்பு நோற்பது பற்றிக் கேட்கப்பட்டதற்கு, "முந்தைய ஓராண்டிற்கும் பிந்தைய ஓராண்டிற்கும் அது பாவப் பரிகாரமாக அமையும்" என்றார்கள். ஆஷூரா (முஹர்ரம் பத்தாவது) நாளில் நோன்பு நோற்பது குறித்து வினவப்பட்டது. அதற்கு "அது கடந்த ஆண்டின் பாவப்பரிகாரமாகும்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (பின்வருமாறு) காணப்படுகிறது: திங்கட்கிழமையும் வியாழக்கிழமையும் நோன்பு நோற்பது குறித்துக் கேட்கப்பட்டது. வியாழக்கிழமை நோன்பு குறித்த செய்தியை நாம் சந்தேகத்திற்கிடமானதாகக் கருதியபோது, அதைப் பற்றி நாம் குறிப்பிடவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், திங்கட்கிழமை நோன்பு குறித்தே கூறப்பட்டுள்ளது; வியாழக்கிழமை பற்றிய குறிப்பு இல்லை.

2153 அபூகத்தாதா அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், திங்கட்கிழமை நோன்பு நோற்பது குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு "அன்றுதான் நான் பிறந்தேன்; அதில்தான் எனக்குக் குர்ஆன் (முதன்முதலில்) அருளப்பெற்றது" என்று கூறினார்கள்.

## பாடம் : 37 ஷஅபான் மாத இறுதியில் நோன்பு நோற்றல்.

2154 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "என்னிடம்' அல்லது "மற்றொரு மனிதரிடம்', "நீர் ஷஅபான் மாதத்தின் இறுதியில் நோன்பு நோற்றீரா?" என்று கேட்டார்கள். நான், "இல்லை' என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீர் (ரமளான்) நோன்பை முடித்ததும் இரண்டு நாட்கள் நோன்பு நோற்பீராக!" என்று கூறினார்கள்.
இதை முதர்ரிஃப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2155 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம், "நீர் இந்த (ஷஅபான்) மாதத்தின் இறுதியில் ஏதேனும் நோன்பு நோற்றீரா?" என்று கேட்டார்கள். அம்மனிதர், "இல்லை' என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் ரமளான் நோன்பை முடித்ததும் அதற்குப் பகரமாக இரண்டு நாட்கள் நோன்பு நோற்பீராக!" என்று கூறினார்கள்.
இதை முதர்ரிஃப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2156 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம், "இந்த மாதத்தின் –அதாவது ஷஅபான்– இறுதியில் ஏதேனும் நோன்பு நோற்றீரா?" என்று கேட்டார்கள். அம்மனிதர் "இல்லை' என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீர் ரமளான் நோன்பை முடித்ததும் "ஒரு நாள்',அல்லது "இரண்டு நாட்கள்' நோன்பு நோற்பீராக!" என்று கூறினார்கள். (இங்கே அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்களே ஐயம் தெரிவிக்கிறார்கள்.) "இரண்டு நாட்கள்' என்று கூறியதாகவே நான் கருதுகிறேன் என்று அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 38 முஹர்ரம் நோன்பின் சிறப்பு.**

2157 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ரமளான் மாத நோன்புக்கு அடுத்தபடியாகச் சிறந்த நோன்பு யாதெனில், அல்லாஹ்வின் மாதமான முஹர்ரம் மாதநோன்பாகும். கடமையாக்கப்பட்ட தொழுகைக்கு அடுத்தபடியாகச் சிறந்த தொழுகை, இரவுத் தொழுகை (தஹஜ்ஜுத்) ஆகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2158 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் "கடமையாக்கப்பட்ட தொழுகைக்கு அடுத்தபடியாகச் சிறந்த தொழுகை எது? ரமளான் மாதநோன்புக்கு அடுத்தபடியாகச் சிறந்த நோன்பு எது?" என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள், "கடமையான தொழுகைக்கு அடுத்தபடியாகச் சிறந்த தொழுகை, நடுநிசியில் தொழுவதாகும். ரமளான் மாதநோன்புக்கு அடுத்தபடியாகச் சிறந்த நோன்பு, அல்லாஹ்வின் மாதமான முஹர்ரம் மாதநோன்பாகும்" என்று விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 39 ரமளான் நோன்பைத் தொடர்ந்து ஷவ்வால் மாதத்தில் ஆறு நோன்பு நோற்பது விரும்பத்தக்கதாகும்.**

2159 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ரமளான் மாதம் நோன்பு நோற்று அதைத் தொடர்ந்து ஷவ்வால் மாதத்தில் ஆறு நோன்பு நோற்றவர், காலமெல்லாம் நோன்பு நோற்றவரைப் போன்றவராவார்.
இதை அபூஅய்யூப் அல்அன்சாரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஅய்யூப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஅய்யூப் (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 40 லைலத்துல் கத்ர் இரவின் சிறப்பும், அதைத் தேடுமாறு வந்துள்ள தூண்டலும், அது எந்த இரவு என்பது பற்றிய விளக்கமும், அதைத் தேடுவதற்கு ஏற்ற நேரமும்.**

2160 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபித்தோழர்களில் சிலர், கனவில் (ரமளானின்) இறுதி ஏழு இரவுகளில் ஒன்றில் "லைலத்துல் கத்ர்' இரவு இருப்பதாகக் காட்டப்பெற்றனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறுதி ஏழு இரவுகளில் ஒன்று என்பதில் உங்கள் கனவுகள் ஒன்றுபட்டிருப்பதை நான் காண்கிறேன். ஆகவே, அதைத் தேடுபவர் (ரமளானின்) இறுதி ஏழு இரவுகளில் தேடிக்கொள்ளட்டும்!"என்று கூறினார்கள்.

2161 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"லைலத்துல் கத்ர்' இரவை (ரமளானின்) இறுதி ஏழு இரவுகளில் (ஒன்றில்) தேடிக் கொள்ளுங்கள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2162 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (தமது கனவில் ரமளானின்) இருபத்தேழாவது இரவில் லைலத்துல் கத்ர் இரவு இருப்பதாகக் கண்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "ரமளானின் இறுதிப் பத்து இரவுகளில் (ஒன்று என்பதில்) உங்கள் கனவுகள் ஒன்றுபட்டிருப்பதைக் காண்கிறேன். எனவே, ரமளானின் இறுதிப்பத்தில் ஒற்றைப்படையான இரவுகளில் (ஒன்றில்) அதைத் தேடிக்கொள்ளுங்கள்!" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2163 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "லைலத்துல் கத்ர்' இரவு தொடர்பாகக் கூறுகையில், "உங்களில் சிலர், (கனவில்) ரமளானின் முந்தைய ஏழு இரவுகளில் (ஒன்றில்) "லைலத்துல் கத்ர்' இரவு இருப்பதாகக் காட்டப்பெற்றனர்; உங்களில் வேறுசிலர் (கனவில்) ரமளானின் பிந்தைய ஏழு இரவுகளில் (ஒன்றில்) "லைலத்துல் கத்ர்' இரவு இருப்பதாகக் காட்டப்பெற்றனர். ஆகவே,நீங்கள் ரமளானின் பிந்தைய பத்தில் (ஒற்றைப்படையான இரவு ஒன்றில்) அதைத் தேடிக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.

2164 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் அந்த (லைலத்துல் கத்ர்) இரவை (ரமளானின்) இறுதிப்பத்து இரவுகளில் (ஒன்றில்) தேடிக்கொள்ளுங்கள். உங்களில் ஒருவருக்குப் பலவீனம், அல்லது இயலாமை ஏற்பட்டால், எஞ்சிய (இறுதி) ஏழு இரவுகளில் (ஒன்றிலாவது அதைத் தேடும் முயற்சியில்) தளர்ச்சிக்கு ஆளாக்கப்பட்டுவிட வேண்டாம்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2165 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அந்த (லைலத்துல் கத்ர்) இரவைத் தேடுபவர் ரமளானின் இறுதிப்பத்து இரவுகளில் (ஒன்றில்) தேடட்டும்!
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2166 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் (ரமளானின்) இறுதிப்பத்து இரவுகளில், அல்லது இறுதி ஒன்பது இரவுகளில் (ஒன்றில்) "லைலத்துல் கத்ர்' இரவைத் தேடிக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2167 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் (உறங்கிக் கொண்டிருந்தபோது கனவில்) "லைலத்துல் கத்ர்' இரவு எனக்குக் காட்டப்பெற்றது. பின்னர் என் வீட்டாரில் ஒருவர் என்னை உறக்கத்திலிருந்து விழிக்கச் செய்தபோது, அதை நான் மறக்கவைக்கப்பட்டேன்.
ஆகவே, (ரமளானின்) இறுதிப்பத்து இரவுகளில் (ஒன்றில்) அதைத் தேடிக்கொள்ளுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் ஹர்மலா பின் யஹ்யா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "பின்னர் அதை நான் மறந்துவிட்டேன்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

2168 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த (ரமளான்) மாதத்தின் நடுப்பத்து நாட்களில் பள்ளிவாசலில் தங்கி (இஃதிகாஃப் வழிபாட்டில்) இருப்பார்கள். இருபதாவது இரவு முடிந்து இருபத்தொன்றாவது இரவு துவங்கியதும் தமது இல்லம் திரும்புவார்கள். அவர்களுடன் "இஃதிகாஃப்' இருப்பவர்களும் (தங்கள் இல்லம்) திரும்புவார்கள். இவ்வழக்கப்படி, ஒரு மாதத்தில் "இஃதிகாஃப்' இருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தாம் வழக்கமாக இல்லம் திரும்பும் இரவில் (இல்லம் திரும்பாமல் பள்ளிவாசலிலேயே) தங்கி மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அல்லாஹ் நாடிய விஷயங்களை அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள். பின்னர் "நான் இந்த (நடு)ப்பத்து நாட்களில் "இஃதிகாஃப்' இருந்தேன். பிறகு இறுதிப்பத்து நாட்களிலும் "இஃதிகாஃப்' இருக்கவேண்டும் என எனக்குத் தோன்றியது. ஆகவே, என்னுடன் இந்த (நடுப்)பத்து நாட்களில் "இஃதிகாஃப்' இருந்தவர் அதே இடத்திலேயே தங்கி ("இஃதிகாஃப்') இருக்கட்டும். இந்த (லைலத்துல் கத்ர்) இரவை நான் (கனவில்) கண்டேன். பின்னர் அது எனக்கு மறக்கவைக்கப்பட்டது. எனவே, (ரமளானின்) இறுதிப்பத்தில் ஒவ்வோர் ஒற்றைப்படை இரவிலும் அதைத் தேடிக்கொள்ளுங்கள். நான் ஈரமான களிமண்ணில் (லைலத்துல் கத்ர் இரவில்) சஜ்தாச் செய்வதைப் போன்று (கனவில்) கண்டேன்" என்று கூறினார்கள்.
இருபத்தொன்றாவது நாள் இரவில் எங்களுக்கு மழை பெய்தது. பள்ளிவாசல் கூரையிலிருந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழும் இடத்தில் மழை நீர் சொட்டியது. அன்று காலை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுது விட்டுத் திரும்பும்போது அவர்களை நான் கண்டேன். அவர்களது முகத்தில் ஈரமான களிமண் படிந்திருந்தது.

2169 மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல் குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தின் நடுப்பத்து நாட்களில் இஃதிகாஃப் இருப்பார்கள்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மேலும் ("அதே இடத்திலேயே தங்கி (இஃதிகாஃப்) இருக்கட்டும்" என்பதைக் குறிக்க "ஃபல்யபித் ஃபீ முஅத கிஃபிஹி' என்பதற்குப் பகரமாக) "ஃபல்யஸ்புத் ஃபீ முஅதகிஃபிஹி' எனும் வாசகம் இடம் பெற்றுள்ளது.

(அவர்களது முகத்தில் ஈரமான களிமண் என்பதற்குப் பதிலாக) "அவர்களது நெற்றியில் ஈரமான களிமண்' என்று காணப்படுகிறது.

2170 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தின் முதல் பத்து நாட்களில் "இஃதிகாஃப்' இருந்தார்கள். பின்னர் நடுப்பத்து நாட்களில் துருக்கி தோல் கூடாரமொன்றில் "இஃதிகாஃப்' இருந்தார்கள். அதன் நுழைவிடத்தில் (மறைப்பாக) பாயொன்று (நிறுத்தி வைக்கப்பட்டு) இருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கரத்தால் அந்தப் பாயை எடுத்துக் கூடாரத்தின் ஓரத்திற்கு நகர்த்தினார்கள். பிறகு தமது தலையை (கூடாரத்திற்கு) வெளியே நீட்டி மக்களிடம் பேசினார்கள். உடனே மக்கள் அவர்களுக்கு அருகில் நெருங்கிவந்தனர். "இந்த (ரமளானில் லைலத்துல் கத்ர்) இரவைத் தேடியவாறு நான் முதல் பத்து நாட்களில் "இஃதிகாஃப்' இருந்தேன். பின்னர் நடுப்பத்து நாட்களிலும் "இஃதிகாஃப்' இருந்தேன். பிறகு "அந்த இரவு இறுதிப் பத்து நாட்களில் உள்ளது' என (வானவர் மூலம்) என்னிடம் வந்து சொல்லப்பட்டது. ஆகவே, உங்களில் (இறுதிப்பத்து நாட்களில்) "இஃதிகாஃப்' இருக்க விரும்புகின்றவர் இஃதிகாஃப் இருக்கட்டும்" என்றார்கள்.
எனவே மக்களும் அவர்களுடன் "இஃதிகாஃப்' இருந்தனர். மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "லைலத்துல் கத்ர் இரவு ரமளான் மாதத்தின் ஓர் ஒற்றைப்படையான இரவில் இருப்பதாக எனக்குக் காட்டப்பட்டது. நான் அன்று காலை களிமண்ணிலும் தண்ணீரிலும் சிரவணக்கம் (சஜ்தா) செய்வதைப் போன்று காட்டப்பட்டது" என்றும் கூறினார்கள். இருபத்தொன்றாவது நாள் காலையில் அவர்கள் சுப்ஹுத் தொழுகைக்காக நின்றபோது மழை பெய்தது. பள்ளிவாசல் கூரை ஒழுகியது. அப்போது நான் களிமண்ணையும் தண்ணீரையும் (பள்ளிவாசலுக்குள்) கண்டேன். சுப்ஹுத் தொழுகையை முடித்துப் புறப்பட்டபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது நெற்றியிலும் மூக்கு நுனியிலும் களிமண்ணும் தண்ணீரும் படிந்திருந்ததை நான் கண்டேன். அந்த "லைலத்துல் கத்ர்' இரவு (ரமளானின்) இறுதிப் பத்தில் இருபத்தொன்றாவது நாள் இரவாகவே அமைந்தது.

2171 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நாங்கள் லைலத்துல் கத்ர் இரவு பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். பின்னர் நான் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்கள் என் நண்பராயிருந்தார்கள். அவர்களிடம், "நீங்கள் எங்களுடன் பேரீச்சந்தோப்புவரை புறப்பட்டுவரக் கூடாதா?" என்று கேட்டேன். உடனே புறப்பட்டார்கள். அப்போது அவர்கள் கறுப்புக் கம்பளியாடை அணிந்திருந்தார்கள். அவர்களிடம் "லைலத்துல் கத்ர் இரவு குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நீங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அவர்கள், "ஆம், நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ரமளான் மாதத்தின் நடுப்பத்து நாட்களில் "இஃதிகாஃப்' இருந்தோம். இருபதாவது நாள் காலையில் நாங்கள் (பள்ளிவாசலில் இருந்து) வெளியேறினோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே உரையாற்றினார்கள்: எனக்கு லைலத்துல் கத்ர் இரவு (கனவில்) காட்டப் பெற்றது. ஆனால், அதை நான் மறந்துவிட்டேன். (அல்லது அதை மறக்கவைக்கப்பட்டேன்.) எனவே, ரமளானின் இறுதிப்பத்து நாட்களில் ஒற்றைப்படையான ஒவ்வோர் இரவிலும் அதை

நீங்கள் தேடிக்கொள்ளுங்கள். நான் (அந்த இரவில்) தண்ணீரிலும் களிமண்ணிலும் சிரவணக்கம் (சஜ்தா) செய்வதைப் போன்று எனக்குக் காட்டப்பெற்றது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "இஃதிகாஃப்' இருந்தவர் மறுபடியும் (பள்ளிவாசலுக்கு) வரட்டும்!" என்றார்கள்.
நாங்கள் மீண்டும் சென்றோம். அப்போது வானில் மழை மேகத்தின் ஒரு துண்டைக்கூட நாங்கள் காணவில்லை. (திடீரென) ஒரு மேகம் (திரண்டு) வந்தது; எங்களுக்கு மழை பெய்தது. பள்ளிவாசலின் கூரையிலிருந்து மழை நீர் சொட்டியது. அப்போதைய கூரை பேரீச்ச மட்டையால் வேயப்பட்டிருந்தது. தொழுகைக்காக "இகாமத்' சொல்லப்பட்ட போது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீரிலும் களிமண்ணிலும் சிரவணக்கம் (சஜ்தா) செய்ததை நான் கண்டேன். அவர்களது நெற்றியில் களிமண் படிந்திருந்ததைக் கண்டேன்.
- அபூசயீத் (ரலி) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்துத் திரும்பிய போது அவர்களை நான் கண்டேன். அவர்களது நெற்றியிலும் மூக்கு நுனியிலும் களி மண்ணின் அடையாளம் இருந்தது" என்று இடம்பெற்றுள்ளது.

2172 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்கு "லைலத்துல் கத்ர்' இரவு பற்றிய குறிப்பு வெளிப்படுத்தப்படுவதற்கு முன்னர் ரமளான் மாதத்தின் நடுப்பத்து நாட்களில் லைலத்துல் கத்ரைத் தேடியவாறு "இஃதிகாஃப்' இருந்தார்கள். நடுப்பத்து நாட்கள் முடிந்ததும் (தாம் வீற்றிருந்த) கூடாரத்தை அகற்றுமாறு உத்தரவிட, அவ்வாறே அது அகற்றப்பட்டது. பின்னர் அவர்களுக்கு "லைலத்துல் கத்ர்' இரவு இறுதிப்பத்து இரவுகளில் இருப்பதாகத் தெரிவிக்கப் பட்டது. எனவே, மீண்டும் கூடாரம் அமைக்குமாறு உத்தரவிட்டார்கள். மீண்டும் கூடாரம் அமைக்கப்பட்ட பிறகு மக்களிடம் புறப்பட்டுவந்து, "மக்களே! லைலத்துல் கத்ர் பற்றிய குறிப்பு எனக்கு அறிவிக்கப்பட்டது. அதைப் பற்றிச் சொல்வதற்காக உங்களிடம் நான் புறப்பட்டுவந்தேன். அப்போது இரண்டு மனிதர்கள் தமது உரிமை குறித்து விவாதித்துக் கொண்டிருந்தனர். அவ்விருவருடன் ஷைத்தானும் இருந்தான். அதனால் அதை(ப் பற்றிய குறிப்பை) நான் மறக்கவைக்கப்பட்டேன். ஆகவே, ரமளானின் இறுதிப் பத்தில் அந்த இரவை நீங்கள் தேடிக்கொள்ளுங்கள்; ஒன்பது, ஏழு, ஐந்து ஆகிய இரவுகளில் அதை நீங்கள் தேடிக்கொள்ளுங்கள்!" என்றார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூநள்ரா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் அபூசயீத் (ரலி) அவர்களிடம் "அதன் எண்ணிக்கை பற்றி எங்களைவிட நீங்களே நன்கறிந்தவர்கள்" என்றேன். அதற்கு அவர்கள், "ஆம். உங்களைவிட நாங்களே அதற்குத் தகுதியானவர்கள்" என்றார்கள். நான், "ஒன்பது, ஏழு, ஐந்து என்பவை எவை?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், இருபத்தொன்றாவது இரவு முடிந்து, அதையடுத்து வரும் இருபத்து இரண்டாவது இரவே "ஒன்பது' ஆகும். இருபத்து மூன்றாவது இரவு முடிந்து அடுத்து வரும் (இருபத்து நான்காவது) இரவே "ஏழு' ஆகும். இருபத்து ஐந்தாவது இரவு முடிந்து அடுத்து வரும் இரவே "ஐந்து' ஆகும்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில், அபூபக்ர் பின் கல்லாத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("இரண்டு மனிதர்கள் தமது உரிமை குறித்து விவாதித்துக் கொண்டிருந்தனர்' என்பதற்குப் பகரமாக) "சச்சரவு செய்துகொண்டிருந்தனர்' என்று இடம்பெற்றுள்ளது.

2173 அப்துல்லாஹ் பின் உனைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "லைலத்துல் கத்ர் (எந்த இரவு என்பது) பற்றி எனக்குக் கனவில் காட்டப்பெற்றது. பின்னர் அதை மறக்கவும் செய்யப்பட்டேன். அன்று காலை நான் தண்ணீரிலும் களிமண்ணிலும் சிரவணக்கம் (சஜ்தா) செய்வதைப் போன்று (கனவில்) கண்டேன்" என்று கூறினார்கள். இருபத்து மூன்றாவது நாள் இரவில் மழை பெய்தது. (அன்று காலையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு (சுப்ஹுத் தொழுகை) தொழுவித்தார்கள். அவர்கள் தொழுகையை முடித்துத் திரும்பியபோது தண்ணீர் மற்றும் களிமண்ணின் அடையாளம் அவர்களது நெற்றியிலும் மூக்கிலும் படிந்திருந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளரான புஸ்ர் பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: அப்துல்லாஹ் பின் உனைஸ் (ரலி) அவர்கள் (இருபத்து மூன்றாவது நாள் இரவில் என்பதைக் குறிக்க) "ஸலாஸின் வ இஷ்ரீன்' எனும் சொற்றொடரையே பயன்படுத்தினார்கள். (சில அறிவிப்புகளில் உள்ளதைப் போன்று "ஸலாஸின் வ இஷ்ரூன்' என்று குறிப்பிடவில்லை.)

2174 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ரமளான் மாதத்தின் இறுதிப்பத்து இரவுகளில் லைலத்துல் கத்ர் இரவைத் தேடிக்கொள்ளுங்கள்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2175 ஸிர்ரு பின் ஹுபைஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் உபை பின் கஅப் (ரலி) அவர்களிடம், "தங்கள் சகோதரர் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் "வருடம் முழுவதும் (இரவில்) நின்று வழிபடுபவர் லைலத்துல் கத்ர் இரவை அடைந்துகொள்வார்' என்று கூறுகிறாரே?" என்று கேட்டேன். அதற்கு உபை (ரலி) அவர்கள், "இப்னு மஸ்ஊதுக்கு அல்லாஹ் அருள்புரிவானாக! மக்கள் (மற்ற நாட்களில் வழி பாடுகளில் ஈடுபடாமல்) அசட்டு நம்பிக்கையோடு இருந்துவிடக்கூடாது என அவர்கள் கருதினார்கள் (போலும்)! லைலத்துல் கத்ர் இரவு ரமளான் மாதத்தின் கடைசிப் பத்தில் இருபத்தேழாவது இரவுதான் என்பதை இப்னு மஸ்ஊத் அறிந்தே உள்ளார்கள்" என்று பதிலளித்தார்கள். பிறகு "அல்லாஹ் நாடினால்' என்று கூறாமல் "அது (ரமளானின்) இருபத்தேழாவது இரவே ஆகும்' என்று சத்தியமிட்டுச் சொன்னார்கள். நான், "அபுல் முன்திரே! எதை வைத்து அவ்வாறு கூறுகிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு உபை (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் "அன்றைய நாளில் (காலையில்) சூரியன் சுடரின்றி உதிக்கும்' என்று கூறினார்கள். அந்த அடையாளத்தின் மூலமே (அறிந்துகொண்டேன்)" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2176 ஸிர்ரு பின் ஹுபைஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உபை பின் கஅப் (ரலி) அவர்கள் "லைலத்துல் கத்ர்' இரவு குறித்துக் கூறுகையில், "அல்லாஹ்வின் மீதாணையாக! அது (எந்த இரவு என்பது) பற்றி நான் நன்கறிவேன்" என்றார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: எனது அறிவுக்கு எட்டியவரையில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்று வழிபடுமாறு எங்களைப் பணித்த அந்த இரவு இருபத்தேழாவது இரவேயாகும் (என்று உபை (ரலி) அவர்கள் தெரிவித்தார்கள்) என்றே கருதுகிறேன்.
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்று வழிபடுமாறு எங்களைப் பணித்த அந்த இரவு' எனும் இந்த வாசகத்தில்தான் ஷுஅபா (ரஹ்) அவர்கள் ஐயம் தெரிவித்தார்கள். அப்தா பின் அபீலுபாபா (ரஹ்) அவர்களிடமிருந்து என் நண்பர் ஒருவரே இதை எனக்கு அறிவித்தார் என ஷுஅபா (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

2177 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் "லைலத்துல் கத்ர்' இரவு பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். அப்போது அவர்கள், "உணவுத் தட்டின் பாதித்துண்டைப் போன்று நிலா தோன்றும் இரவே (லைலத்துல் கத்ர்) ஆகும் என்பதை உங்களில் நினைவில் கொள்பவர் யார்?" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பள்ளிவாசலில் தங்குதல் (இஃதிகாஃப்)

### பாடம் : 1 ரமளான் மாதத்தின் இறுதிப்பத்து நாட்களில் "இஃதிகாஃப்'' இருத்தல்.

2178 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தின் இறுதிப்பத்து நாட்களில் "இஃதிகாஃப்' இருந்து வந்தார்கள்.

2179 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தின் இறுதிப்பத்து நாட்களில் "இஃதிகாஃப்' இருந்துவந்தார்கள்.
இதன் அறிவிப்பாளரான நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் "இஃதிகாஃப்' இருந்துவந்த இடத்தை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் எனக்குக் காட்டினார்கள்.

2180 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளானின் இறுதிப்பத்து நாட்களில் "இஃதிகாஃப்' இருப்பார்கள்.

2181 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளானின் இறுதிப்பத்து நாட்களில் "இஃதிகாஃப்' இருப்பார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2182 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இறக்கும்வரை ரமளானின் இறுதிப்பத்து நாட்களில் "இஃதிகாஃப்' இருந்துவந்தார்கள். அவர்களுக்குப் பின்னர் அவர்களுடைய துணைவியர் "இஃதிகாஃப்' இருந்தனர்.

## பாடம் : 2 இஃதிகாஃப் இருக்க முடிவு செய்தவர், இஃதிகாஃப் இருக்குமிடத்திற்குள் எப்போது நுழைய வேண்டும்?

2183 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஃதிகாஃப்' மேற்கொள்ள நாடினால், ஃபஜ்ர் தொழுகை தொழுதுவிட்டுப் பின்னர் "இஃதிகாஃப்' இருக்குமிடத்திற்குள் நுழைந்துவிடுவார்கள். (ஒருமுறை இஃதிகாஃப் இருப்பதற்காக) தமது கூடாராத்தை அமைக்குமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே கூடாரம் அமைக்கப்பட்டது. அவர்கள் ரமளானின் இறுதிப்பத்து நாட்களில் இஃதிகாஃப் இருக்கவே விரும்பினார்கள். ஸைனப் (ரலி) அவர்கள் (தமக்காக) ஒரு கூடாரம் அமைக்குமாறு உத்தரவிட்டார்கள்; (அவர்களுக்காகவும்) கூடாரம் அமைக்கப்பட்டது. நபி (ஸல்) அவர்களின் மற்றத் துணைவியரும் கூடாரம் அமைக்குமாறு உத்தரவிட்டனர்; அவர்களுக்காகவும் கூடாரம் அமைக்கப்பட்டது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுகையை முடித்தபோது (பள்ளிவாசலுக்குள்) பல கூடாரங்களைக் கண்டார்கள். "(இதன்மூலம்) நீங்கள் நன்மையைத்தான் நாடினீர்களா?" என்று கேட்டுவிட்டு, தமது கூடாரத்தை அகற்றுமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே அது அகற்றப்பட்டது. (அந்த ஆண்டில்) ரமளான் மாதத்தில் இஃதிகாஃப் இருப்பதைக் கைவிட்டு, ஷவ்வால் மாதத்தின் முதல் பத்து நாட்களில் இஃதிகாஃப் இருந்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு உயைனா (ரஹ்), அம்ர் பின் அல்ஹாரிஸ் (ரஹ்), இப்னு இஸ்ஹாக் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "(நபி (ஸல்) அவர்களின் துணைவியரான) ஆயிஷா (ரலி), ஹஃப்ஸா (ரலி), ஸைனப் (ரலி) ஆகியோர் இஃதிகாஃப் இருப்பதற்காகக் கூடாரம் அமைத்தனர்" எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 3 ரமளான் மாதத்தின் இறுதிப்பத்து நாட்களில் (வணக்க வழிபாடுகளில்) அதிக ஈடுபாடு காட்டல்.**

2184 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ரமளான் மாதத்தின்) இறுதிப்பத்து (நாட்கள்) துவங்கிவிட்டால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வணக்க வழிபாட்டின் மூலம்) இரவுகளுக்கு உயிரூட்டுவார்கள்; (வழிபாட்டில் ஈடுபடுவதற்காக) தம் துணைவியரையும் விழிக்கச் செய்வார்கள்; (வழக்கத்தைவிட அதிகமாக வழிபாட்டில்) அதிகக் கவனம் செலுத்துவார்கள்; தமது கீழாடையை இறுக்கிக் கட்டிக் கொள்வார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2185 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வணக்க வழிபாடுகளில்) மற்ற நாட்களில் காட்டாத (அதிக) ஈடுபாட்டை, (ரமளானின்) இறுதிப்பத்து நாட்களில் காட்டுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 துல்ஹஜ் மாதத்தின் பத்து நோன்புகள்.**

2186 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (துல்ஹஜ் மாதம்) பத்து நாட்கள் நோன்பு நோற்று ஒரு போதும் நான் கண்டதில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2187 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (துல்ஹஜ் மாதத்தில்) பத்து நோன்புகள் நோற்றதில்லை.

# அத்தியாயம் : 15 - ஹஜ்

**பாடம் : 1** ஹஜ் அல்லது உம்ராவிற்காக 'இஹ்ராம்' கட்டியவருக்கு அனுமதிக்கப்பட்டவையும் அனுமதிக்கப்படாதவையும்; அவர் நறுமணம் பூசுவது தடை செய்யப்பட்டுள்ளதும்.

2188 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "இஹ்ராம்' கட்டியவர் எந்த ஆடையை அணிய வேண்டும்?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(முழு நீளச்) சட்டைகள், தலைப் பாகைகள், முழுக் கால்சட்டைகள்,முக்காடுள்ள மேலங்கிகள் (புர்னுஸ்), காலுறைகள் (மோஸா) ஆகியவற்றை அணியாதீர்கள். காலணிகள் கிடைக்காதவர் மட்டும் காலுறைகள் அணிந்துகொள்ளட்டும். ஆனால், காலுறை இரண்டும் கணுக்கால்களுக்குக் கீழே இருக்கும்படி கத்தரித்து (அணிந்து)கொள்ளட்டும். குங்குமப்பூ மற்றும் "வர்ஸ்' ஆகிய வாசனைச் செடியின் சாயம் தோய்க்கப்பட்ட எந்த ஆடைகளையும் அணியாதீர்கள்" என்று கூறினார்கள்.

2189 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம், "இஹ்ராம்' கட்டியவர் எந்த ஆடையை அணிய வேண்டும்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "முழுநீளச் சட்டை, தலைப்பாகை, முக்காடுள்ள மேலங்கி, முழுக் கால்சட்டை, வர்ஸ் மற்றும் குங்குமப்பூ ஆகிய வாசனைச் செடிகளின் சாயம் தோய்க்கப்பட்ட ஆடை, காலுறைகள் ஆகியவற்றை "இஹ்ராம்' கட்டியவர் அணிய வேண்டாம். காலணிகள் கிடைக்காவிட்டால், காலுறைகள் அணியலாம். ஆனால், கணுக்கால்களுக்குக் கீழே இருக்கும்படி காலுறைகளைக் கத்தரித்துக்கொள்ள வேண்டும்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2190 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"இஹ்ராம்' கட்டியவர் குங்குமப்பூ மற்றும் "வர்ஸ்' ஆகிய வாசனைச் செடிகளின் சாயம் இடப்பட்ட ஆடையை அணியக் கூடாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். மேலும், "("இஹ்ராம்' கட்டியிருக்கும்போது) காலணிகள் கிடைக்காதவர், காலுறைகள் அணியட்டும்; காலுறைகளைக் கணுக்கால்களுக்குக் கீழே இருக்கும்படி கத்தரித்துக் கொள்ளட்டும்" என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

2191 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது உரையில், "கீழங்கி கிடைக்காத ("இஹ்ராம்' கட்டிய)ஒருவர் முழுக்கால் சட்டை அணிவார்; காலணிகள் கிடைக்காத ஒருவர் காலுறைகள் அணிவார்" என்று குறிப்பிட்டதை நான் செவியுற்றேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், "நபி (ஸல்) அவர்கள் அரஃபா வில் உரையாற்றும்போது மேற்கண்டவாறு குறிப்பிட்டதை நான் செவியுற்றேன்" என இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஷுஅபா (ரஹ்) அவர்களைத் தவிர மற்றவர்களது அறிவிப்பில் "அரஃபா உரையில் அவ்வாறு குறிப்பிட்டார்கள்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

2192 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இஹ்ராமின்போது) காலணிகள் கிடைக்காதவர் காலுறைகளை அணியட்டும்; கீழங்கி கிடைக்காதவர் முழுக் கால்சட்டை அணியட்டும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2193 ஸஃப்வான் பின் யஅலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) யஅலா பின் உமய்யா (ரலி) அவர்கள் கூறினார்கள்: நபி (ஸல்) அவர்கள் (மக்காவிற்கு அருகிலுள்ள) "ஜிஅரானா' எனுமிடத்தில் இருந்தபோது, அவர்களிடம் நறுமணம் (அல்லது மஞ்சள் நிற அடையாளம்) பூசப்பட்ட மேலங்கி அணிந்த ஒரு மனிதர் வந்தார். அவர், "நான் எனது உம்ராவில் என்ன செய்யவேண்டுமென உத்தரவிடுகிறீர்கள்?" என்று கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்களுக்கு வேதஅறிவிப்பு (வஹீ) வந்தது. உடனே அவர்கள் ஒரு துணியால் மறைக்கப்பட்டார்கள். –(என் தந்தை) யஅலா (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்களுக்கு வேதஅறிவிப்பு (வஹீ) அருளப்பெறும்போது நான் அவர்களைப் பார்க்க ஆசைப்படுகிறேன்" என்று கூறுவார்கள். – "நபி (ஸல்) அவர்களுக்கு வேதஅறிவிப்பு (வஹீ) அருளப்பெறும்போது அவர்களைப் பார்க்க நீர் விரும்புகிறீரா?" என உமர் (ரலி) அவர்கள் கேட்டுவிட்டு, (நபியவர்களை மறைத்திருந்த) அந்தத் துணியின் ஓரத்தை விலக்கினார்கள். நபி (ஸல்) அவர்கள் இளம் ஒட்டகம் குறட்டை விடுவதைப் போன்று குறட்டை விட்டுக்கொண்டிருந்ததை அப்போது நான் கண்டேன்.
பிறகு (அந்தச் சிரமநிலை) அவர்களைவிட்டு விலகியபோது, "என்னிடம் உம்ராவைப் பற்றிக் கேட்டவர் எங்கே?" என்றார்கள். (அந்த மனிதர் வந்ததும்), " "உம்மீதுள்ள மஞ்சள் நிற அடையாளத்தை' அல்லது "நறுமணத்தின் அடையாளத்தை' கழுவிக்கொள்க. உமது அங்கியை களைந்துகொள்க. மேலும், நீர் உமது ஹஜ்ஜில் செய்வதைப் போன்றே உமது உம்ராவிலும் செய்க" என்று விடையளித்தார்கள்.

2194 யஅலா பின் உமய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "ஜிஅரானா' எனுமிடத்தில் இருந்தபோது, அதிகமாக நறுமணம் பூசப்பட்ட, தைக்கப்பட்ட அங்கி அணிந்த ஒரு மனிதர் அவர்களிடம் வந்தார். அவர், "(தைக்கப்பட்ட) இந்த அங்கி என்மீதிருக்கும் நிலையிலும், அதிகமாக நறுமணம் பூசியிருக்கும் நிலையிலும் நான் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டிவிட்டேன்" என்று சொன்னார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உமது ஹஜ்ஜில் நீர் என்ன செய்வீர்?" என்று கேட்டார்கள். அவர், "இந்த ஆடையைக் களைந்துவிடுவேன்; என்மீதுள்ள இந்த நறுமணத்தைக் கழுவிக்கொள்வேன்" என்றார். நபி (ஸல்) அவர்கள், "உமது ஹஜ்ஜில் நீர் செய்வதை உம்ராவிலும் செய்துகொள்க" என்று கூறினார்கள்.

2195 ஸஃப்வான் பின் யஅலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) யஅலா பின் உமய்யா (ரலி) அவர்கள் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடம் "நபி (ஸல்) அவர்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) அருளப்பெறும்போது நான் அவர்களைப் பார்க்க வேண்டும் (என ஆசையாக உள்ளது)" என்று கூறுவார்கள்.
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் (மக்காவுக்கு அருகிலுள்ள) "ஜிஅரானா' எனுமிடத்தில் தங்கியிருந்தார்கள். அவர்களுக்கு மேலே துணியொன்று நிழலுக்காகக் கட்டப்பட்டிருந்தது. அவர்களுடன் உமர் (ரலி) அவர்கள் உள்ளிட்ட அவர்களுடைய தோழர்களில் சிலரும் இருந்தனர்.
அப்போது அதிகமாக நறுமணம் பூசிய, கம்பளியாலான அங்கியணிந்த ஒரு மனிதர் வந்தார். அவர், "அல்லாஹ்வின் தூதரே! அதிகமாக நறுமணம் பூசப்பட்ட அங்கியால் "இஹ்ராம்' கட்டியவர் பற்றி தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்டார்.
அவரை நபி (ஸல்) அவர்கள் சிறிது நேரம் உற்றுப் பார்த்துவிட்டு, அமைதியாக இருந்தார்கள். அப்போது அவர்களுக்கு வேதஅறிவிப்பு (வஹீ) அருளப்பெற்றது. உடனே உமர் (ரலி) அவர்கள், "இங்கு வாருங்கள்' என சைகையால் (என் தந்தை) யஅலா (ரலி) அவர்களை அழைத்தார்கள்.
(என் தந்தை யஅலா (ரலி) அவர்கள் கூறினார்கள்:)
நான் சென்று (நபி (ஸல்) அவர்களுக்கு மேலே கட்டப்பட்டிருந்த துணிக்குள்) எனது தலையை நுழைத்தேன். நபி (ஸல்) அவர்கள் முகம் சிவந்த நிலையில் குறட்டை விட்ட நிலையில் சிறிது நேரம் காணப்பெற்றார்கள். பிறகு அவர்களைவிட்டு அந்த (சிரம)நிலை விலகியது. அப்போது நபி (ஸல்) அவர்கள், "சற்று முன்னர் என்னிடம் உம்ராவைப் பற்றிக் கேட்டவர் எங்கே?" என்றார்கள். அந்த மனிதர் தேடப்பட்டு, அழைத்துவரப்பட்டார். அவரிடம் நபி (ஸல்) அவர்கள், "உம்மீதுள்ள நறுமணத்தை மூன்றுமுறை கழுவிக்கொள்க. (தைக்கப்பட்டுள்ள உமது) அங்கியைக் களைந்து விடுக. (தைக்கப்படாத ஆடை அணிந்து கொள்க.) பிறகு உமது ஹஜ்ஜில் செய்வதைப் போன்றே உமது உம்ராவிலும் செய்துகொள்க" என்று கூறினார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2196 யஅலா பின் உமய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "ஜிஅரானா' எனுமிடத்தில் இருந்தபோது, உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டிய ஒரு மனிதர் அவர்களிடம் வந்தார். அவர் தமது தாடியிலும் தலையிலும் மஞ்சள் நிற நறுமணம் பூசியிருந்தார்; (தைக்கப்பட்ட) அங்கி அணிந்திருந்தார். அவர், "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் காணும் இந்த நிலையில் நான் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டியுள்ளேன்" என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "நீர் உமது அங்கியைக் களைந்துகொள்க; மஞ்சள் நிற நறுமணத்தைக் கழுவிக் கொள்க; உமது ஹஜ்ஜில் செய்வதைப் போன்றே உமது உம்ராவிலும் செய்துகொள்க" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2197 யஅலா பின் உமய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்களிடம் மேலங்கி அணிந்த ஒரு மனிதர் வந்தார். அவரது அங்கியில் நறுமணத்தின்

அடையாளம் இருந்தது. அவர், "அல்லாஹ்வின் தூதரே! நான் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டிவிட்டேன். எனவே, நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் பதிலேதும் கூறாமல் அமைதியாக இருந்தார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு வேதஅறிவிப்பு (வஹீ) அருளப்பெறும்போது, (துணி போன்றவற்றால்) அவர்களது தலைக்கு மேல் நிழலிட்டு அவர்களை உமர் (ரலி) அவர்கள் மறைப்பார்கள். நான் உமர் (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்களுக்கு வேதஅறிவிப்பு (வஹீ) அருளப்பெறும் போது அவர்கள்மீது இடப்படும் துணிக்குள் நான் எனது தலையை நுழை(த்துப் பார்)க்க வேண்டுமென ஆசைப்படுகிறேன்" என்று சொல்லியிருந்தேன்.
இந்நிலையில் நபி (ஸல்) அவர்களுக்கு வேதஅறிவிப்பு அருளப்பெற்றபோது, உமர் (ரலி) அவர்கள் துணியால் அவர்களை மறைத்தார்கள். உடனே நான் அவர்களிடம் சென்று அந்தத் துணிக்குள் எனது தலையை நுழைத்து, அவர்களைக் கூர்ந்து நோக்கினேன். நபி (ஸல்) அவர்களுக்கு (வஹியின்போது ஏற்படும் சிரமநிலை அவர்களைவிட்டு) விலகியபோது, "சற்று முன்னர் என்னிடம் உம்ராவைப் பற்றிக் கேட்டவர் எங்கே?" என்றார்கள். உடனே அவர்களிடம் அந்த மனிதர் (வந்து) நின்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "உமது அங்கியைக் களைந்துகொள்க; உம்மீதுள்ள நறுமணத்தின் அடையாளத்தைக் கழுவிக்கொள்க. நீர் உமது ஹஜ்ஜில் செய்வதைப் போன்றே உமது உம்ராவிலும் செய்க" என்று கூறினார்கள்.7

**பாடம் : 2 ஹஜ் மற்றும் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டும் எல்லைகள்.**

2198 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவாசிகளுக்கு துல்ஹுலை∴பாவையும், ஷாம்(சிரியா)வாசிகளுக்கு அல்ஜுஹ்∴பாவையும், நஜ்த்வாசிகளுக்குக் கர்னுல் மனாஸிலையும், யமன்வாசிகளுக்கு யலம்லமையும் "இஹ்ராம்' கட்டும் எல்லைகளாக நிர்ணயித்தார்கள்.
மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்த எல்லைகள், இ(ங்கு குறிப்பிடப்பெற்றுள்ள)வர்களுக்கும் ஹஜ் மற்றும் உம்ராவிற்காக இவ்வழிகளில் வருகின்ற மற்றவர்களுக்கும் பொருந்தும். அவர்கள் இவ்வூர்வாசிகளாக இல்லாவிட்டாலும் சரியே! இந்த எல்லைகளுக்குள் இருப்பவர்கள்,தாம் வசிக்கும் இடத்திலிருந்தே ("இஹ்ராம்' கட்டிக்கொள்வர்); மக்காவாசிகள் மக்காவிலிருந்தே "இஹ்ராம்' கட்டிக்கொள்வர்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2199 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவாசிகளுக்கு துல்ஹுலை∴பாவையும், ஷாம்(சிரியா)வாசிகளுக்கு அல்ஜுஹ்∴பா வையும், நஜ்த்வாசிகளுக்குக் கர்னுல் மனாஸிலையும், யமன்வாசிகளுக்கு யலம்லமையும் "இஹ்ராம்' கட்டும் எல்லைகளாக நிர்ணயித்தார்கள்.
மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இந்த எல்லைகள், இவர்களுக்கும் ஹஜ் மற்றும் உம்ராவிற்காக இவ்வழியே வரக்கூடிய ஒவ்வொருவருக்கும் பொருந்தும்;அவர்கள் இவ்வூர்வாசிகளாக இல்லாவிட்டாலும் சரியே! இந்த எல்லைகளுக்குள் இருப்பவர், தாம் பயணம் புறப்படும் இடத்திலிருந்தே "இஹ்ராம்' கட்டிக்கொள்வார். எனவே, மக்காவாசிகள் மக்காவிலிருந்தே "இஹ்ராம்' கட்டிக்கொள்வர்.

2200 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மதீனாவாசிகள் துல்ஹுலைஃபாவிலும், ஷாம்(சிரியா)வாசிகள் அல்ஜுஹ்ஃபாவிலும், நஜ்த் வாசிகள் கர்னிலும் "இஹ்ராம்' கட்டுவார்கள்.
இதன் அறிவிப்பாளரான அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
(தொடர்ந்து) யமன்வாசிகள் யலம்லமில் "இஹ்ராம்' கட்டுவார்கள் என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என எனக்குச் செய்தி எட்டியது.

2201 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மதீனாவாசிகள் துல்ஹுலைஃபாவிலும், ஷாம்(சிரியா)வாசிகள் அல்ஜுஹ்ஃபாவிலும், நஜ்த் வாசிகள் கர்னிலும் "இஹ்ராம்' கட்டுவார்கள்.
இதன் அறிவிப்பாளரான அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
யமன்வாசிகள் யலம்லமில் "இஹ்ராம்' கட்டுவார்கள் என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என (நபித் தோழர்களால்) எனக்குச் சொல்லப்பட்டது; (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நேரடியாக) நான் அதைச் செவியுறவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2202 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மதீனாவாசிகள் "இஹ்ராம்' கட்டும் இடம் துல்ஹுலைஃபா ஆகும். ஷாம்(சிரியா)வாசிகள் "இஹ்ராம்' கட்டும் இடம் "மஹ்யஆ' ஆகும். அதுவே அல்ஜுஹ்ஃபா எனும் இடமாகும். நஜ்த்வாசிகள் "இஹ்ராம்' கட்டும் இடம் "கர்ன்' ஆகும்.
இதன் அறிவிப்பாளரான அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
"யமன்வாசிகள் "இஹ்ராம்' கட்டும் இடம் யலம்லம் ஆகும்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என நபித்தோழர்கள் (என்னிடம்) கூறினர்; (நேரடியாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் இதைச் செவியுறவில்லை.

2203 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மதீனாவாசிகள் துல்ஹுலைஃபாவிலும், ஷாம்(சிரியா)வாசிகள் அல்ஜுஹ்ஃபாவிலும், நஜ்த்வாசிகள் கர்னிலும் "இஹ்ராம்'கட்டுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.
யமன்வாசிகள் யலம்லமில் "இஹ்ராம்' கட்டுவார்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என எனக்குத் தெரிவிக்கப்பட்டது.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2204 அபுஸ்ஸுபைர் (முஹம்மத் பின் முஸ்லிம் - ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் "இஹ்ராம்' கட்டும் இடம் குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறு கூறியதை நான் செவியுற்றேன். நபி (ஸல்) அவர்கள் கூறியதாகவே ஜாபிர் (ரலி) அவர்கள் அவ்வாறு சொன்னார்கள் என நான் எண்ணுகிறேன்.

2205 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மதீனாவாசிகள் துல்ஹுலைஃபாவிலும், மற்றொரு வழியான அல்ஜுஹ்ஃபாவிலும் "இஹ்ராம்' கட்டுவார்கள். இராக்வாசிகள் தாத்து இர்க்கிலும், நஜ்த்வாசிகள் கர்னிலும், யமன் வாசிகள் யலம்லமிலும் "இஹ்ராம்' கட்டுவார்கள்.
இதன் அறிவிப்பாளரான அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இதை நபி (ஸல்) அவர்கள் கூறியதாகவே ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள் என நான் எண்ணுகிறேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 3 தல்பியாவும், அதன் வழிமுறையும் நேரமும்.

2206 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"லப்பைக் அல்லாஹும்ம லப்பைக், லப்பைக் லா ஷரீக்க லக்க லப்பைக், இன்னல் ஹம்த வந்நிஅமத்த லக்க, வல்முல்க்க, லா ஷரீக்க லக்" என்பது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்ன "தல்பியா' ஆகும்.
(பொருள்: இதோ, உன் அழைப்பை ஏற்று வந்துவிட்டேன். இறைவா! உன் அழைப்பை ஏற்று வந்துவிட்டேன். உனக்கே நான் கீழ்ப்படிகின்றேன். உனக்கு இணை துணை கிடையாது. உனக்கே எல்லாப் புகழும். அருட்கொடையும் ஆட்சியும் உனக்கே உரியன. உனக்கு இணையானவர் எவருமிலர்.)
இதன் அறிவிப்பாளரான நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் "லப்பைக் லப்பைக் வ சஅதைக், வல்கைரு பி யதைக், லப்பைக் வர்ரஃக்பாஉ இலைக்க வல்அமல்" என்று கூடுதலாகக் கூறுவார்கள்.
(பொருள்: இதோ, உன் அழைப்பை ஏற்று வந்துவிட்டேன். இதோ, உன் அழைப்பை ஏற்று வந்துவிட்டேன். உனக்கே நான் கீழ்ப்படிகின்றேன். நன்மைகள் உன் கைகளிலேயே உள்ளன. இதோ வந்துவிட்டேன். வேண்டுதல்கள் உன்னிடமே. நற்செயல்கள் உனக்காகவே.)

2207 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் துல்ஹுலைஃபா பள்ளிவாசல் அருகில் தமது வாகன ஒட்டகம் சரியாக நிலைக்கு வந்த பிறகு "லப்பைக் அல்லாஹும்ம! லப்பைக் லப்பைக், லா ஷரீக்க லக்க லப்பைக், இன்னல் ஹம்த வந்நிஅமத்த லக்க வல்முல்க்க, லா ஷரீக்க லக்" என்று தல்பியா கூறுவார்கள்.
நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.
இதுவே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்ன "தல்பியா' ஆகும் என அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுவார்கள் என மக்கள் கூறினர்.

மேலும், இதனுடன் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் "லப்பைக் லப்பைக் வ சஅதைக். வல்கைரு பியதைக் லப்பைக். வர்ர. ்க்பாஉ இலைக்க வல்அமல்" என்றும் கூறுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வாயிலிருந்து (நேரடியாகவே) தல்பியாவைக் கற்றேன்" என்று ஹதீஸ் தொடங்குகிறது.

2208 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தலையைக் களிம்பு தடவிப் படியவைத்திருந்த நிலையில் "லப்பைக் அல்லாஹும்ம லப்பைக், லப்பைக் லா ஷரீக்க லக்க லப்பைக். இன்னல் ஹம்த வந்நிஅமத்த லக்க, வல் முல்க்க லா ஷரீக்க லக்" என்று கூறியதை நான் கேட்டேன். அவர்கள் (தமது தல்பியாவில்) இதைவிடக் கூடுதலாக வேறெதையும் கூற மாட்டார்கள்.
இதன் அறிவிப்பாளரான சாலிம் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் துல்ஹுலை. ்பாவில் இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். பின்னர் துல்ஹுலை. ்பா பள்ளிவாசல் அருகில் தமது ஒட்டகம் சரியாக நிலைக்கு வந்ததும் இவ்வாறு தல்பியா கூறி "இஹ்ராம்' கட்டுவார்கள்" என்று அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுவார்கள்.
மேலும் (என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியவாறே தல்பியா கூறி "இஹ்ராம்' கட்டுவார்கள். லப்பைக் அல்லாஹும்ம லப்பைக்! லப்பைக் வ சஅதைக். வல்கைரு ்பீ யதைக். லப்பைக். வர்ர. ்க்பாஉ இலைக்க வல்அமல்" எனக் கூறுவார்கள் என்றும் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் குறிப்பிடுவார்கள்.

2209 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இணைவைப்பாளர்கள் (ஹஜ்ஜின்போது) "லப்பைக், லா ஷரீக்க லக்' (உன் அழைப்பை ஏற்றோம். உனக்கு இணை ஏதுமில்லை) என்று கூறுவார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களுக்குக் கேடுதான். போதும்! போதும்! (இத்துடன் நிறுத்திக் கொள்ளுங்கள்)" என்பார்கள். (ஏனெனில்,) அதன் பிறகு இணைவைப்பாளர்கள் "இல்லா ஷரீக்கன் ஹுவ லக்க. தம்லிகுஹு வ மா மலக் (ஆனால், உனக்கு ஓர் இணையாளன் இருக்கின்றான்; அவனுக்கு நீ எசமானன். அவன் எவருக்கும் எசமான் அல்லன்; அல்லது அவனுக்கும் அவனுடைய உடைமைகளுக்கும் நீயே அதிபதி) என்றும் கூறுவார்கள். இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவா. ்ப்) வரும்போது, இவ்வாறு இணைவைப்பாளர்கள் கூறுவார்கள்.

**பாடம் : 4 மதீனாவாசிகள் துல்ஹுலைஃபா பள்ளிவாசலில் "இஹ்ராம்' கட்டவேண்டுமென வந்துள்ள கட்டளை.**

2210 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இந்த "பைதாஉ' எனும் இடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டினார்கள் என நீங்கள் பொய்யுரைத்துக்கொண்டிருக்கிறீர்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தப் பள்ளிவாசல் -அதாவது துல்ஹுலைஃபா பள்ளிவாசலில்தான்- "இஹ்ராம்' கட்டினார்கள்.

2211 சாலிம் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், "பைதாஉ' எனும் இடத்திலிருந்தே "இஹ்ராம்' கட்ட வேண்டும் என்று சொல்லப்பட்டால் அவர்கள், "பைதாஉ எனும் இடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டினார்கள் என நீங்கள் பொய்யுரைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (துல்ஹுலைஃபா பள்ளிவாசலுக்கு அருகிலிருந்த) அந்த மரத்திற்குப் பக்கத்தில் தமது ஒட்டகம் சரியாக நிலைக்கு வந்தபோதே "இஹ்ராம்' கட்டினார்கள்" என்று கூறுவார்கள்.

**பாடம் : 5 வாகனம் புறப்படுவதற்குத் தயாராகி நிற்கும்போது ("இஹ்ராம்' கட்டி) "தல்பியா' கூறல்.**

2212 உபைத் பின் ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், "அபூஅப்திர் ரஹ்மான்! நீங்கள் நான்கு விஷயங்களைச் செய்வதை நான் பார்த்தேன். உங்கள் தோழர்களில் வேறெவரும் அவற்றைச் செய்வதை நான் பார்க்கவில்லை" என்று கூறினேன். அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "அவை யாவை, இப்னு ஜுரைஜே?" என்று கேட்டார்கள். "(கஅபாவைச் சுற்றி வரும்போது அதன் மூலைகளில் "ஹஜருல் அஸ்வத்' மற்றும் "ருக்னுல் யமானீ' ஆகிய) இரு மூலைகளை மட்டுமே நீங்கள் தொடக்கண்டேன். மேலும், பதனிடப்பட்ட (முடி அகற்றப்பட்ட) தோல் காலணிகளை நீங்கள் அணிவதை நான் கண்டேன். நீங்கள் (உங்கள் ஆடைக்கு) மஞ்சள் சாயமிடுவதைக் கண்டேன். மேலும், நீங்கள் மக்காவில் இருக்கும்போது, மக்கள் (துல்ஹஜ் மாத) தலைப் பிறையைக் கண்டவுடன் "இஹ்ராம்' கட்டினாலும், நீங்கள் மட்டும் துல்ஹஜ் எட்டாம் நாள் (யவ்முத் தர்வியா) வரும்வரை "இஹ்ராம்' கட்டாமலிருப்பதை நான் கண்டேன் (இவற்றுக்கெல்லாம் என்ன காரணம்?)" என்று கேட்டேன்.
அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்:
கஅபாவின் மூலைகளைப் பொறுத்தவரை,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹஜருல் அஸ்வத், ருக்னுல் யமானீ ஆகிய) இரு மூலைகளை மட்டுமே தொட்டதை நான் பார்த்தேன் (அதனால்தான் நானும் அவ்வாறு செய்கிறேன்). (முடி அகற்றப்பட்ட) செருப்புகளைப் பொறுத்தவரை,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முடியில்லாத காலணிகளை அணிவதையும் அதனுடன் அங்கத் தூய்மை (உளூ) செய்வதையும் நான் பார்த்திருக்கிறேன். ஆகவே, நானும் அவற்றை அணிவதை விரும்புகிறேன். மஞ்சள் நிறமோ, அல்லாஹ்வின்

தூதர் (ஸல்) அவர்கள் அதனால் (தமது ஆடைக்குச்) சாயமிடுவதை நான் பார்த்திருக்கிறேன். ஆகவே, நானும் அதனால் (எனது ஆடைக்குச்) சாயமிடுவதை விரும்புகிறேன். (துல்ஹஜ் எட்டாவது நாள்) "இஹ்ராம்' கட்டுவதோ, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வாகனம் பயணத்திற்குத் தயாராகி நிற்கும்வரை ("இஹ்ராம்' கட்டி) "தல்பியா' கூறுவதை நான் பார்த்ததில்லை.

2213 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களுடன் ஹஜ் மற்றும் உம்ரா ஆகிய இரண்டையும் பன்னிரண்டு தடவைகள் நிறைவேற்றியுள்ளேன். நான் அவர்களிடம், "அபூஅப்திர் ரஹ்மான்! நீங்கள் நான்கு விஷயங்களைச் செய்வதை நான் பார்த்தேன்"என உபைத் பின் ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என ஹதீஸ் ஆரம்பமாகிறது. ஆனால், "இஹ்ராம்' கட்டுவது தொடர்பான தகவல் வேறுவிதமாகக் காணப்படுகிறது.

2214 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வாகன ஒட்டகத்தின் வளையத்தில் காலை வைத்து, ஒட்டகம் பயணத்திற்குத் தயாராகி நிற்கும்போது, துல்ஹுலைஃபாவில் ("இஹ்ராம்' கட்டி) தல்பியா கூறுவார்கள்.

2215 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தமது ஒட்டகம் நிலைக்கு வந்து பயணத்திற்குத் தயாரான போது "தல்பியா' கூறினார்கள்.

2216 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் துல்ஹுலைஃபாவில் தமது வாகன ஒட்டகத்தில் ஏறி அமர்ந்து, அது நிலைக்கு வந்தபோது "தல்பியா' கூறியதை நான் பார்த்தேன்.

## பாடம் : 6 துல்ஹுலைஃபா பள்ளிவாசலில் தொழுதல்.

2217 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ("இஹ்ராம்' கட்டி ஹஜ் கிரியைகளை) ஆரம்பித்த போது, இரவில் துல்ஹுலைஃபாவில் தங்கினார்கள்; அங்குள்ள பள்ளிவாசலில் தொழுதார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 7 "இஹ்ராம்' கட்டும்போது நறுமணம் பூசுதல்.

2218 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டும்போது, அவர்கள் "இஹ்ராம்' கட்டுவதற்காக அவர்களுக்கு நான் நறுமணம் பூசிவிட்டேன்; அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடும்போது, கஅபாவைச் சுற்றுவதற்கு ("தவாஃபுல் இஃபாளா' செய்வதற்கு) முன்பும் அவர்களுக்கு நான் நறுமணம் பூசிவிட்டேன்.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2219 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டும்போது அவர்கள் "இஹ்ராம்' கட்டுவதற்காக அவர்களுக்கு நான் நறுமணம் பூசிவிட்டேன். அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடும்போது அவர்கள், கஅபாவைச் சுற்றுவதற்கு ("தவாஃபுல் இஃபாளா' செய்வதற்கு) முன்பு அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடுவதற்காகவும் அவர்களுக்கு நான் நறுமணம் பூசிவிட்டேன்.
இதை, காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2220 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டுவதற்கு முன் அவர்கள் "இஹ்ராம்' கட்டுவதற்காக நான் அவர்களுக்கு நறுமணம் பூசுவேன்; அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடும் போதும், அவர்கள் கஅபாவைச் சுற்றுவதற்கு ("தவாஃபுல் இஃபாளா' செய்வதற்கு) முன்பு அவர்களுக்கு நான் நறுமணம் பூசுவேன்.
இதை, காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2221 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டபோதும், அவர்கள் "இஹ்ராம்' கட்டும்போதும் அவர்களுக்கு நான் நறுமணம் பூசிவிட்டேன்.
இதை, காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2222 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜிற்காக "இஹ்ராம்' கட்டிய போதும் இஹ்ராமிலிருந்து விடுபட்டபோதும் நான் எனது கையால் அவர்களுக்கு ("தரீரா' எனும்) வாசனைத் தூளைப் பூசிவிட்டேன்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2223 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியபோது எதனால் அவர்களுக்கு நறுமணம் பூசினீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "மிக நல்ல வாசனைப் பொருளால் (நறுமணம் பூசிவிட்டேன்)" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2224 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டுவதற்கு முன் என்னால் இயன்ற மிக நல்ல வாசனைப் பொருளை அவர்களுக்குப் பூசிவந்தேன். பின்னர் அவர்கள் "இஹ்ராம்' கட்டுவார்கள்.

2225 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியபோது அவர்கள் "இஹ்ராம்' கட்டியதற்காகவும், அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டபோது அவர்கள் "தவாஃபுல் இஃபாளா' செய்வதற்கு முன்பும் எனக்குக் கிடைத்தவற்றில் மிக நல்ல நறுமணத்தை அவர்களுக்கு நான் பூசிவிட்டேன்.

2226 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தபோது, அவர்களது தலை வகிட்டில் நறுமணப் பொருள் ஒளிர்ந்ததை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், கலஃப் பின் ஹிஷாம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தபோது' எனும் சொற்றொடர் இடம்பெறவில்லை. அதற்குப் பகரமாக "அது அவர்கள் "இஹ்ராம்' கட்டியபோது பூசிய நறுமணமாகும்' என்று இடம்பெற்றுள்ளது.

2227 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ("இஹ்ராம்' கட்டி) "தல்பியா' கூறியபோது, அவர்களது தலை வகிட்டில் நறுமணப்பொருள் ஒளிர்ந்ததை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2228 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தல்பியா' கூறியபோது, அவர்களது தலை வகிட்டில் நறுமணப்பொருள் ஒளிர்ந்ததை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2229 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தபோது அவர்களது தலை வகிட்டில் நறுமணப்பொருள் ஒளிர்ந்ததை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2230 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தபோது, அவர்களது தலை வகிட்டில் பூசியிருந்த நறுமணப்பொருள் ஒளிர்ந்ததை நான் பார்த்திருக்கிறேன்.

2231 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்ட விரும்பினால் தம்மிடம் இருப்பவற்றிலேயே மிக நல்ல மணமுடைய வாசனை (எண்ணெ)யைப் பூசிக்கொள்வார்கள். பின்னர் அவர்களின் தலையிலும் தாடியிலும் அந்த எண்ணெய் ஒளிர்வதை நான் காண்பேன்.

2232 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தபோது, அவர்களது தலை வகிட்டில் பூசியிருந்த கஸ்தூரியின் ஒளியை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2233 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டுவதற்கு முன்பும், துல்ஹஜ் பத்தாம் நாளில் அவர்கள் கஅபாவைச் சுற்றுவதற்கு ("தவாஃபுல் இஃபாளா' செய்வதற்கு) முன்பும் கஸ்தூரி கலந்த நறுமணப்பொருளை அவர்களுக்கு நான் பூசிவந்தேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2234 முஹம்மத் பின் அல்முன்தஷிர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், ஒருவர் நறுமணப்பொருளைப் பயன்படுத்திவிட்டுக் காலையில் "இஹ்ராம்' கட்டியவராக இருப்பதைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் நறுமணம் கமழக் கமழக் காலையில் "இஹ்ராம்' கட்டியவனாக இருப்பதை விரும்பவில்லை. இவ்வாறு செய்வதைவிட தாரைப் பூசிக்கொள்வது எனக்கு மிகவும் விருப்பமானதாகும்" என்று கூறினார்கள். பின்னர் நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று இப்னு உமர் (ரலி) அவர்கள் "நான் நறுமணம் கமழக் கமழக் காலையில் "இஹ்ராம்' கட்டியவனாக இருப்பதை விரும்பவில்லை. இவ்வாறு செய்வதைவிட தாரைப் பூசிக்கொள்வது எனக்கு மிகவும் விருப்பமானதாகும்" எனக்கூறினார்கள் என்று தெரிவித்தேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியபோது அவர்களுக்கு நான் நறுமணம் பூசிவிட்டேன். பின்னர் அவர்கள் தம் துணைவியரிடம் சென்றுவிட்டுப் பின்னர் காலையில் "இஹ்ராம்' கட்டியவராக இருந்தார்கள்" என்று கூறினார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2235 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு நறுமணம் பூசிவிடுவேன். அவர்கள் தம் துணைவியரிடம் சென்றுவிட்டுப் பின்னர் நறுமணம் கமழக் கமழ காலையில் "இஹ்ராம்' கட்டியிருப்பார்கள்.

2236 முஹம்மத் பின் அல்முன்தஷிர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள், "நான் "இஹ்ராம்' கட்டியவனாக நறுமணம் கமழக் கமழக் காலை நேரத்தில் இருப்பதைவிட தாரைப் பூசிக்கொள்வது எனக்கு மிகவும் விருப்பமானதாகும்" என்று கூறியதை செவியுற்றேன். ஆகவே, நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதை அவர்களிடம் தெரிவித்தேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு நறுமணம் பூசிவிட்டேன். அவர்கள் தம் துணைவியரிடம் சென்றுவிட்டு வந்து பின்னர் இஹ்ராம் கட்டியவர்களாகக் காலையில் இருந்தார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 8 "இஹ்ராம்' கட்டியவர் வேட்டையாடுவது தடை செய்யப்பட்டுள்ளது.**

2237 ஸஅப் பின் ஜஸ்ஸாமா அல்லைஸீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்காவிற்கும் மதீனாவிற்கும் இடையிலுள்ள) "அல்அப்வா' அல்லது "வத்தான்'எனுமிடத்தில் இருந்தபோது, நான் அவர்களுக்கு ஒரு காட்டுக் கழுதையை அன்பளிப்பாக வழங்கினேன். அவர்கள் அதை ஏற்க மறுத்துவிட்டார்கள். எனது முகத்தில் ஏற்பட்ட (மாற்றத்)தை அவர்கள் கண்டபோது, "நாம் "இஹ்ராம்' கட்டியிருப்பதால்தான் இதை ஏற்க மறுத்தோம்" என்று கூறினார்கள்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2238 மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2239 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குக் காட்டுக் கழுதையின் இறைச்சியை அன்பளிப்பாக வழங்கினேன்"என ஸஅப் பின் ஜஸ்ஸாமா (ரலி) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

2240 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தபோது, அவர்களுக்கு ஸஅப் பின் ஜஸ்ஸாமா (ரலி) அவர்கள் ஒரு காட்டுக் கழுதையை அன்பளிப்பாக வழங்கினார்கள். நபியவர்கள் அதை ஏற்க மறுத்துவிட்டார்கள். மேலும், "நாம் "இஹ்ராம்' கட்டியிருக்காவிட்டால், அதை உம்மிடமிருந்து ஏற்றிருப்போம்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2241 மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மன்ஸூர் பின் அல்முஅதமிர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஸஅப் பின் ஜஸ்ஸாமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்குக் காட்டுக் கழுதையின் ஒரு காலை அன்பளிப்பாக வழங்கினார்கள்" என்று காணப்படுகிறது. ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ரத்தம் சொட்டிக்கொண்டிருந்த காட்டுக் கழுதையின் பின் சப்பையை (அன்பளிப்பாக வழங்கினார்கள்)" என்று இடம் பெற்றுள்ளது. ஷுஅபா (ரஹ்) அவர்களது மற்றோர் அறிவிப்பில் "நபி (ஸல்) அவர்களுக்குக் காட்டுக் கழுதையின் விலாப் பகுதி அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அவர்கள் அதை ஏற்க மறுத்துவிட்டார்கள்" என்று வந்துள்ளது.

2242 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என்னிடம்) ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் வந்தபோது, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்த வேளையில், அவர்களுக்கு வேட்டைப்பிராணியின் இறைச்சி அன்பளிப்பாக வழங்கப்பட்டது குறித்து எனக்கு நீங்கள் எவ்வாறு அறிவித்தீர்கள்?" என நினைவுபடுத்துமாறு கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு வேட்டைப்பிராணியின் இறைச்சியில் ஒரு பகுதி அன்பளிப்பாக

வழங்கப்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நாம் இதை உண்ணமாட்டோம். (ஏனெனில்) நாம் "இஹ்ராம்' கட்டியுள்ளோம்' என்று கூறினார்கள்" என்றார்கள்.

2243 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (ஹஜ்ஜுக்காகப்) புறப்பட்டுச் சென்றோம். எங்களில் "இஹ்ராம்' கட்டியவர்களும் இருந்தனர்; "இஹ்ராம்' கட்டாதவர்களும் இருந்தனர். (நான் "இஹ்ராம்' கட்டியிருக்கவில்லை.) நாங்கள் (மதீனாவிற்கு அருகிலுள்ள) "அல்காஹா' எனுமிடத்தில் இருந்தபோது, என் தோழர்கள் எதையோ உன்னிப்பாகப் பார்த்துக்கொண்டிருப்பதைக் கண்டேன். நான் கூர்ந்து பார்த்தபோது ஒரு காட்டுக் கழுதை தென்பட்டது. உடனே நான் என் குதிரையின் சேணத்தைப் பூட்டி, எனது ஈட்டியை எடுத்துக்கொண்டு (குதிரையில்) ஏறினேன். அப்போது என் (கையிலிருந்து) சாட்டை கீழே விழுந்துவிட்டது. அதை எடுத்துத் தருமாறு என் தோழர்களிடம் நான் கேட்டேன். அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருப்பதால் "அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த விஷயத்தில் உமக்கு எந்த உதவியும் செய்யமாட்டோம்" என்று கூறிவிட்டார்கள். எனவே, நானே இறங்கி அதை எடுத்துக்கொண்டு (குதிரையில்) ஏறி, மணல் மேட்டுக்கு அப்பாலிருந்த அந்தக் கழுதைக்குப் பின்னால் (மறைந்து) சென்று, அதை நோக்கி என் ஈட்டியை எறிந்தேன். பிறகு அதை அறுத்து என் தோழர்களிடம் கொண்டுவந்தேன். அப்போது அவர்களில் சிலர் "உண்ணுங்கள்" என்றனர். வேறு சிலர் "உண்ணாதீர்கள்" என்றனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் எங்களுக்கு முன்னால் (சென்று ஓரிடத்தில் தங்கி) இருந்தார்கள். ஆகவே, நான் எனது குதிரையை முடுக்கி,அவர்களிடம் போ(ய் அதை "இஹ்ராம்' கட்டியவர்கள் உண்பதைப் பற்றி வினவி)னேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அது அனுமதிக்கப்பெற்றதுதான். எனவே, அதை உண்ணுங்கள்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2244 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு பயணத்தில்) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தேன். மக்கா செல்லும் சாலை ஒன்றில் நான் இருந்தபோது, "இஹ்ராம்' கட்டியிருந்த என் தோழர்கள் சிலருடன் பின்தங்கி விட்டேன். அப்போது நான் "இஹ்ராம்' கட்டியிருக்கவில்லை. இந்நிலையில் நான் (வழியில்) காட்டுக் கழுதையொன்றைக் கண்டு, எனது குதிரைமேல் அமர்ந்தேன். அப்போது என் தோழர்களிடம் என் சாட்டையை எடுத்துத் தரும்படி கேட்டேன். அவர்கள் ("இஹ்ராம்' கட்டியிருந்ததால் அதை எடுத்துத்தர) மறுத்துவிட்டார்கள். அவர்களிடம் எனது ஈட்டியை எடுத்துத் தரும்படி கேட்டேன். அதற்கும் அவர்கள் மறுத்துவிட்டார்கள். ஆகவே, நானே (இறங்கி) அதையெடுத்து அந்தக் கழுதையைத் தாக்கிக் கொன்றேன். நபித்தோழர்களில் சிலர் அதிலிருந்து உண்டார்கள். வேறுசிலர் (உண்ண) மறுத்துவிட்டனர். நபித்தோழர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் போய்ச் சேர்ந்தபோது, அதைப் பற்றி அவர்களிடம் கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதுவெல்லாம் அல்லாஹ் உங்களுக்கு உண்ணக் கொடுத்த உணவாகும்" என்று விடையளித்தார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2245 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "உங்களுடன் அதன் இறைச்சியிலிருந்து ஏதேனும் (எனக்கு எஞ்சி) உள்ளதா?" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

2246 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹுதைபியா ஒப்பந்தம் நடந்த ஆண்டில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நானும் சென்றேன். என் தோழர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தனர். நான் "இஹ்ராம்' கட்டியிருக்கவில்லை. "ஃகைகா' எனுமிடத்தில் எதிரிகள் இருப்பதாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குச் செய்தி எட்டியது. எனவே, (எதிரிகளை எதிர்கொள்ள) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (முன்னே) சென்றார்கள். நான் மற்ற நபித்தோழர்களுடன் (சென்றுகொண்டு) இருந்தபோது, அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துச் சிரிக்கலாயினர். நான் கூர்ந்து கவனித்தபோது, ஒரு காட்டுக் கழுதை எனக்குத் தென்பட்டது. உடனே நான் அதை ஈட்டியால் தாக்கி (ஓடவிடாமல்) நிறுத்திவிட்டேன். என் தோழர்களிடம் உதவி கோரினேன். ("இஹ்ராம்' கட்டியிருந்ததால்) அவர்கள் எனக்கு உதவ மறுத்துவிட்டனர். பிறகு அதன் இறைச்சியை நாங்கள் உண்டோம். இந்நிலையில் (எங்களுக்கு முன்னால் சென்று கொண்டிருந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பிரிந்துவிடுவோமோ என்று நாங்கள் அஞ்சினோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைத் தேடி எனது குதிரையைச் சிறிது நேரம் விரைவாகவும் சிறிது நேரம் மெதுவாகவும் ஓட்டிச் சென்றேன். நள்ளிரவில் (வழியில்) நான் "பனூ ஃகிஃபார்' குலத்தைச் சேர்ந்த ஒருவரைச் சந்தித்தபோது, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நீர் எங்கே சந்தித்தீர்?" என்று கேட்டேன். அதற்கு அவர், "அவர்களை "தஅஹின்' எனும் நீர்நிலையருகே (சந்தித்து) விட்டுவந்தேன். அப்போது அவர்கள் "சுக்யா' எனும் சிற்றூரில் மதிய ஓய்வெடுக்கப் போய்க்கொண்டிருந்தார்கள்" என்று கூறினார்.
நான் அவர்களைச் சென்றடைந்து, "அல்லாஹ்வின் தூதரே! உங்கள் தோழர்கள் உங்களுக்கு முகமன் (சலாம்) கூறினர். பயணத்தில் உங்களைப் பிரிந்துவிடுவோமோ என்று அவர்கள் அஞ்சினர். (எனவே, அவர்கள் வந்துசேரும்வரை) அவர்களுக்காக நீங்கள் காத்திருங்கள்" என்றேன். அவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காத்திருந்தார்கள். தொடர்ந்து நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் (ஒரு காட்டுக் கழுதையை) வேட்டையாடினேன். என்னிடம் அதில் சிறிதளவு எஞ்சியுள்ளது" என்று கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம்முடனிருந்த) மக்களிடம், "உண்ணுங்கள்" என்றார்கள். அப்போது அம்மக்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தனர்.

2247 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ் செய்வதற்காகப் புறப்பட்டார்கள். அவர்களுடன் நாங்களும் புறப்பட்டோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களில் சிலரை வேறு வழியில் திருப்பிவிட்டார்கள். அவர்களில் நானும் ஒருவன். அப்போது, "கடற்கரை வழியாகச் செல்லுங்கள்; நாம் சந்திப்போம்" என்று கூறினார்கள். அவ்வாறே நபித்தோழர்கள்

கடற்கரை வழியாகச் செல்லத் தொடங்கினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி அவர்கள் திரும்பி வந்தபோது,என்னைத் தவிர அவர்கள் அனைவரும் "இஹ்ராம்' கட்டியிருந்தனர். நான் "இஹ்ராம்' கட்டியிருக்கவில்லை. இவ்வாறு அவர்கள் சென்று கொண்டிருந்தபோது, காட்டுக்கழுதைகளைக் கண்டனர். அவற்றை நான் தாக்கி, ஒரு பெட்டைக் கழுதையின் காலை வெட்டி (அதை வேட்டையாடி)னேன். பிறகு அவர்கள் (ஓரிடத்தில்) இறங்கி அதன் இறைச்சியைச் சாப்பிட்டனர்; "நாம் "இஹ்ராம்'கட்டிக்கொண்டே (வேட்டைப் பிராணியின்) இறைச்சியைச் சாப்பிட்டுவிட்டோமே" என்று கூறினர்.

பிறகு அந்தக் கழுதையின் இறைச்சியில் எஞ்சியுள்ளதை எடுத்துக்கொண்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தோம்; அபூகத்தாதா "இஹ்ராம்' கட்டியிருக்கவில்லை. இந்நிலையில் நாங்கள் (வழியில்) காட்டுக் கழுதையைக் கண்டோம். அபூகத்தாதா அவற்றைத் தாக்கி, ஒரு பெட்டைக் கழுதையின் காலை வெட்டி (வேட்டையாடி)னார். பின்னர் நாங்கள் (ஓரிடத்தில்) இறங்கி அதன் இறைச்சியிலிருந்து சிறிதளவை உண்டோம். பிறகு "வேட்டையாடப்பெற்ற பிராணியின் இறைச்சியை இஹ்ராம் கட்டிய நிலையில் சாப்பிடுகிறோமே' என்று (எங்களிடையே) பேசிக் கொண்டோம். பிறகு அதன் இறைச்சியில் எஞ்சியதை எடுத்து வந்திருக்கிறோம்" என்று கூறினர்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் எவரேனும் அதைத் தாக்குமாறு அவரைப் பணித்தாரா, அல்லது அதை நோக்கி எப்படியாவது சைகை செய்தாரா?" என்று கேட்டார்கள். அதற்கு நபித்தோழர்கள் "இல்லை' என்றனர். "அப்படியானால் அதன் எஞ்சிய இறைச்சியை நீங்கள் உண்ணுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

2248 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் ஷைபான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உங்களில் யாரேனும் அதைத் தாக்குமாறு அவரைத் தூண்டினாரா, அல்லது தாக்குமாறு சைகை செய்தாரா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள் என இடம்பெற்றுள்ளது.

ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நீங்கள் சைகை செய்தீர்களா, அல்லது (அவருக்கு) உதவி செய்தீர்களா, அல்லது நீங்களே வேட்டையாடினீர்களா?" என்று கேட்டார்கள் எனக் காணப்படுகிறது.

ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீங்கள் (அவருக்கு) உதவி செய்தீர்களா என்று கேட்டார்களா? அல்லது நீங்கள் வேட்டையாடினீர்களா என்று கேட்டார்களா" என்று எனக்குத் தெரியவில்லை.

2249 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சேர்ந்து ஹுதைபியா (ஒப்பந்தப்) போருக்குச் சென்றேன். அப்போது மக்களில் என்னைத் தவிர, மற்ற அனைவரும் உம்ரா விற்காக "இஹ்ராம்' கட்டியிருந்தனர். நான் (வழியில்) ஒரு காட்டுக் கழுதையை வேட்டையாடி என் தோழர்களுக்கு உண்ணக் கொடுத்தேன். அப்போது அவர்கள் அனைவரும் "இஹ்ராம்' கட்டியிருந்தனர். பிறகு நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று

"எங்களிடம் அதன் இறைச்சியில் சிறிதளவு எஞ்சியுள்ளது" என்று சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உண்ணுங்கள்' என்றார்கள். அப்போது அவர்கள் அனைவரும் "இஹ்ராம்' கட்டியிருந்தனர்.

2250 மேற்கண்ட ஹதீஸ் அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "இஹ்ராம்' கட்டியவர்களாகப் புறப்பட்டோம். நான் "இஹ்ராம்' கட்டாதிருந்தேன்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மேலும் அதில், "அ(ந்த மாமிசத்)தில் ஏதேனும் உங்களிடம் உள்ளதா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். நாங்கள், "அதன் கால் எங்களிடம் உள்ளது" என்றோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதை வாங்கி உண்டார்கள்" என்றும் இடம் பெற்றுள்ளது.

2251 மேற்கண்ட ஹதீஸ் அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நான் "இஹ்ராம்' கட்டியிருந்த ஒரு குழுவினருடன் இருந்தேன். அப்போது நான் "இஹ்ராம்' கட்டாதிருந்தேன்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மேலும், "உங்களில் யாரேனும் ஒருவர் (அதைக் கொல்லுமாறு) அவருக்கு சைகை செய்தாரா? அல்லது ஏதேனும் உத்தரவிட்டாரா?" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர்கள், "இல்லை, அல்லாஹ்வின் தூதரே!" என்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின் உண்ணுங்கள்" என்றார்கள் எனவும் இடம்பெற்றுள்ளது.

2252 அப்துர் ரஹ்மான் பின் உஸ்மான் அத்தைமீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு உம்ராப் பயணத்தில்) தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்களுடன் இருந்தோம். அப்போது நாங்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தோம். அப்போது அவர்களுக்கு (வேட்டையாடப்பட்ட) ஒரு பறவை அன்பளிப்பாக வழங்கப்பட்டது. தல்ஹா (ரலி) அவர்கள் உறங்கிக்கொண்டிருந்தார்கள். எனவே, எங்களில் சிலர் அதைச் சாப்பிட்டனர். வேறுசிலர் (சந்தேகம் ஏற்பட்டதால் சாப்பிடாமல்) பேணுதலாக இருந்துவிட்டனர். தல்ஹா (ரலி) அவர்கள் உறக்கத்திலிருந்து விழித்தபோது, அதைச் சாப்பிட்டவர்களின் செயலைச் சரி கண்டார்கள் (குறை கூறவில்லை). மேலும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் இ(வ்வாறு வேட்டையாடப்பட்ட)தைச் சாப்பிட்டிருக்கிறோம்" என்று கூறினார்கள்.

## பாடம் : 9 இஹ்ராம் கட்டியவர்களும் மற்றவர்களும் புனித (ஹரம்) எல்லைக்குள்ளும் வெளியேயும் கொல்வதற்கு அனுமதிக்கப்பட்டுள்ள (தொல்லை தரும்) உயிரினங்கள்.

2253 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான்கு (வகை) உயிரினங்கள் தீங்கிழைப்பவை ஆகும். அவை புனித (ஹரம்) எல்லையிலும் வெளியிலும் கொல்லப்படும். (அவையாவன:) பருந்து, (நீர்க்)காகம், எலி, வெறிநாய்.
இதை நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான உபைதுல்லாஹ் பின் மிக்சம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் அஸ்ஸித்தீக் (ரஹ்) அவர்களிடம், "பாம்பைப் பற்றி தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அது அற்பமாக (அடித்து)க் கொல்லப்படும்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2254 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தீங்கிழைக்கக்கூடிய ஐந்து (வகை) உயிரினங்கள் புனித (ஹரம்) எல்லைக்குள்ளும் வெளியிலும் கொல்லப்படும். பாம்பு, நீர்க்காகம், எலி, வெறிநாய், பருந்து ஆகியவைதாம் அவை. - இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2255 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தீங்கிழைக்கக்கூடிய ஐந்து உயிரினங்கள் புனித (ஹரம்) எல்லைக்கு உள்ளேயும் கொல்லப்படும்.தேள், எலி, பருந்து, (நீர்க்)காகம்,வெறிநாய் ஆகியவைதாம் அவை.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2256 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தீங்கிழைக்கக்கூடிய ஐந்து உயிரினங்கள் புனித (ஹரம்) எல்லைக்கு உள்ளேயும் கொல்லப்படும். எலி, தேள், (நீர்க்)காகம், பருந்து,வெறிநாய் ஆகியவைதாம் அவை.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2257 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தீங்கிழைக்கக்கூடிய ஐந்து உயிரினங்களைப் புனித (ஹரம்) எல்லைக்குள்ளும் வெளியிலும் கொல்ல உத்தரவிட்டார்கள்" என்று ஹதீஸ் தொடங்குகிறது.

2258 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஐந்து உயிரினங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒவ்வொன்றும் தீங்கிழைக்கக் கூடியவையாகும். அவை புனித (ஹரம்) எல்லைக்கு உள்ளேயும் கொல்லப்படும். (நீர்க்)காகம், பருந்து, வெறிநாய், தேள், எலி ஆகியவைதாம் அவை.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2259 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஐந்து உயிரினங்களைப் புனித (ஹரம்) எல்லைக்கு உள்ளே "இஹ்ராம்' கட்டிய நிலையில் ஒருவர் கொன்றுவிட்டாலும் அவர்மீது குற்றமேதும் இல்லை. எலி, தேள், (நீர்க்)காகம், பருந்து, வெறிநாய் ஆகியவைதாம் அவை.

இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் இப்னு அபீ உமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "புனித இடங்களில்' என (பன்மையாக) வந்துள்ளது.

2260 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஐந்து உயிரினங்கள் உள்ளன. அவற்றில் ஒவ்வொன்றும் தீங்கிழைக்கக்கூடியவை ஆகும். அவற்றைக் கொல்பவர்மீது எந்தக் குற்றமும் இல்லை. தேள், (நீர்க்)காகம், பருந்து, எலி, வெறிநாய் ஆகியவைதாம் அவை.
இதை நபி (ஸல்) அவர்களின் துணை வியார் ஹஃப்ஸா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2261 ஸைத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் இப்னு உமர் (ரலி) அவர்களிடம், "இஹ்ராம் கட்டியிருப்பவர் எந்த உயிரினங்களைக் கொல்லலாம்?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவர் "எலி, தேள், பருந்து, வெறிநாய், (நீர்க்)காகம் ஆகியவற்றைக் கொல்ல "உத்தரவிடப்பட்டது' அல்லது "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்' என்று என்னிடம் தெரிவித்தார்" என விடையளித்தார்கள்.

2262 ஸைத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் இப்னு உமர் (ரலி) அவர்களிடம், "இஹ்ராம் கட்டிய ஒருவர் எந்த உயிரினங்களைக் கொல்லலாம்?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், "நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவர் "வெறிநாய், எலி, தேள், பருந்து, (நீர்க்)காகம், பாம்பு ஆகியவற்றைக் கொல்லுமாறு நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டுவந்தார்கள்' என்று என்னிடம் கூறினார்" என்றார்கள்.
இவற்றை ஒருவர் தொழுகையில் இருக்கும்போதும் கொல்லலாம் என்றும் இப்னு உமர் (ரலி) அவர்கள் குறிப்பிட்டார்கள்.

2263 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"இஹ்ராம்' கட்டியிருக்கும் ஒருவர் ஐந்து உயிரினங்களைக் கொல்வது குற்றமாகாது. (நீர்க்)காகம், பருந்து, தேள், எலி, வெறிநாய் ஆகியவைதாம் அவை.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2264 அப்துல் மலிக் பின் அப்தில் அஸீஸ் பின் ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் நாஃபிஉ (ரஹ்) அவர்களிடம், "இஹ்ராம் கட்டியவர் எந்த உயிரினங்களைக் கொல்ல அனுமதி உண்டு என்பது குறித்து இப்னு உமர் (ரலி) அவர்கள் என்ன கூறினார்கள்?" என்று கேட்டேன். அதற்கு நாஃபிஉ (ரஹ்) அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்: "நபி (ஸல்) அவர்கள் ஐந்து உயிரினங்களை ஒருவர் கொன்றுவிட்டாலும் அதைக் கொன்றதற்காக அவர்மீது எந்தக் குற்றமும் இல்லை; (நீர்க்)காகம், பருந்து, தேள், எலி, வெறிநாய் ஆகியவைதாம் அவை என்று கூறியதை நான் செவியுற்றுள்ளேன்" என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஏழு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியுற்றேன் என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள் என இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் ஒருவரது அறிவிப்பில் மட்டுமே இடம்பெற்றுள்ளது. (பின்வரும் ஹதீஸில்) இப்னு இஸ்ஹாக் (ரஹ்) அவர்களும் இப்னு ஜுரைஜ் போன்றே அறிவிக்கிறார்கள்.

2265 மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஐந்து உயிரினங்களில் ஒன்றைப் புனித (ஹரம்) எல்லைக்குள் கொன்றாலும் எந்தக் குற்றமுமில்லை" என நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியுற்றேன் என ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

2266 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஐந்து உயிரினங்களை ஒருவர் இஹ்ராம் கட்டிய நிலையில் கொன்றுவிட்டாலும் அவர் மீது எந்தக் குற்றமுமில்லை. தேள், எலி,வெறி நாய், (நீர்க்)காகம், பருந்து ஆகியவைதாம் அவை.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் காணப்படும் வாசகமே இங்கு இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 10 இஹ்ராம் கட்டியவர்,தமது தலையில் பாதிப்பு ஏதும் இருந்தால் தலை (முடி)யை மழித்துக்கொள்ளலாம்;அதற்காகப் பரிகாரம் அவசியமாகும் என்பதும், பரிகாரத்தின் அளவும்.

2267 கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹுதைபியா உடன்பாடு நடந்த காலகட்டத்தில் (உம்ராவிற்காக நான் "இஹ்ராம்' கட்டியிருந்த போது), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அப்போது நான் எனது (கற்)பாத்திரத்தின் கீழே நெருப்பை மூட்டி (சமைத்து)க் கொண்டிருந்தேன். (அப்போது எனது தலையிலிருந்து) பேன்கள் என் முகத்தின் மீது உதிர்ந்துகொண்டிருந்தன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனது தலையிலுள்ள பேன்கள் உனக்குத் துன்பம் தருகின்றனவா?" என்று கேட்டார்கள். நான், "ஆம்' என்று கூறினேன். அதற்கு, "உனது தலையை மழித்துக்கொள். பின்பு மூன்று நாட்கள் நோன்பு நோற்றுக்கொள். அல்லது ஆறு ஏழைகளுக்கு உணவளி. அல்லது ஒரு குர்பானிப் பிராணியை அறுத்துப் பலியிடு! (இதுவே "இஹ்ராம்' கட்டிய நிலையில் தலையை மழித்ததற்கான பரிகாரமாகும்)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளர்தொடரில் வரும் அய்யூப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (மூன்று நோன்பு நோற்றல், ஆறு ஏழைகளுக்கு உணவளித்தல், குர்பானி கொடுத்தல் ஆகிய இம்மூன்றில்) எதை முதலில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள் என்று எனக்குத் தெரியவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2268 கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"உங்களில் ஒருவர் நோயாளியாக இருந்தாலோ, அல்லது அவரது தலையில் பாதிப்பு ஏதேனும் இருந்தாலோ (அவர் தலையை மழிக்கலாம். ஆனால்,) அதற்குப் பரிகாரமாக நோன்பு நோற்கவேண்டும்; அல்லது தர்மம் செய்ய வேண்டும்; அல்லது பலியிட வேண்டும்" எனும் இந்த (2:196 ஆவது) வசனம் என் தொடர்பாகவே அருளப்பெற்றது.
நான் (ஹுதைபியா நேரத்தில் "இஹ்ராம்' கட்டியிருந்தபோது) நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் "அருகில் வா!" என்றார்கள். நான் அருகில் சென்றேன். "இன்னும் நெருங்கி வா!" என்றார்கள். நான் இன்னும் நெருங்கினேன். பிறகு நபி (ஸல்) அவர்கள், "உனது தலையிலுள்ள பேன்கள் உனக்குத் துன்பம் தருகின்றனவா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். நபி (ஸல்) அவர்கள், (தலைமுடியை மழித்துவிட்டு) அதற்குப் பரிகாரமாக (மூன்று) நோன்பு நோற்க வேண்டும். அல்லது தர்மம் செய்ய வேண்டும். அல்லது (என்னால்) இயன்ற ஒரு குர்பானிப் பிராணியை அறுத்துப் பலியிட வேண்டும் என்று எனக்கு உத்தரவிட்டார்கள்.

2269 கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹுதைபியா பயணத்தில்) என் அருகில் (வந்து) நின்றார்கள். அப்போது எனது தலையிலிருந்து பேன்கள் உதிர்ந்துகொண்டிருந்தன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனது தலையிலுள்ள பேன்கள் உனக்குத் துன்பம் தருகின்றனவா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். "அவ்வாறாயின் நீ உனது தலையை மழித்துக்கொள்"என்றார்கள். இதையடுத்து "உங்களில் ஒருவர் நோயாளியாக இருந்தால், அல்லது அவரது தலையில் பாதிப்பு ஏதேனும் இருந்தால் (அவர் தலையை மழிக்கலாம். ஆனால்,) அதற்குப் பரிகாரமாக நோன்பு நோற்க வேண்டும்; அல்லது தர்மம் செய்ய வேண்டும். அல்லது பலியிட வேண்டும்" எனும் இந்த (2:196ஆவது) வசனம் என் தொடர்பாக அருளப்பெற்றது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் "மூன்று நாட்கள் நோன்பு நோற்றுக் கொள். அல்லது ஆறு ஏழைகளுக்கு ஒரு "ஃபரக்' அளவு தர்மம் செய். அல்லது உன்னால் இயன்ற ஒரு குர்பானிப் பிராணியை அறுத்துப் பலியிடு!" என்று சொன்னார்கள்.40

2270 கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (உம்ராவிற்குச் சென்றபோது) மக்காவிற்குள் நுழைவதற்கு முன் "இஹ்ராம்' கட்டியவனாக ஹுதைபியாவில் ஒரு பாத்திரத்தின் கீழ் தீ மூட்டி (சமைத்து)க் கொண்டிருந்தேன். (எனது தலையிலிருந்த) பேன்கள் என் முகத்தில் உதிர்ந்து கொண்டிருந்தன. அப்போது என்னைக் கடந்து சென்ற நபி (ஸல்) அவர்கள், "உன் தலையிலுள்ள இப்பேன்கள் உனக்குத் துன்பம் தருகின்றனவா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். நபி (ஸல்) அவர்கள், "அப்படியானால், நீ உனது தலையை மழித்துக்கொள். (அதற்குப் பரிகாரமாக) ஒரு "ஃபரக்' உணவை ஆறு ஏழைகளுக்குப் பகிர்ந்தளி. (ஒரு "ஃபரக்' என்பது மூன்று "ஸாஉ'கள் அளவாகும்.) அல்லது மூன்று நாட்கள் நோன்பு நோற்றுக் கொள். அல்லது ஒரு குர்பானிப் பிராணியை அறுத்துப் பலியிடு" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2271 கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹுதைபியா நேரத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைக் கடந்து சென்றார்கள். அப்போது என்னிடம், "உனது தலையிலுள்ள பேன்கள் உனக்குத் துன்பம் தருகின்றனவா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். நபி (ஸல்) அவர்கள், "நீ உனது தலையை மழித்துக்கொள். பிறகு ஓர் ஆட்டை அறுத்துப் பலியிடு. அல்லது மூன்று நாட்கள் நோன்பு நோற்றுக்கொள். அல்லது மூன்று "ஸாஉ' பேரீச்சம் பழத்தை ஆறு ஏழைகளுக்குப் பகிர்ந்தளி!" என்றார்கள்.

2272 அப்துல்லாஹ் பின் மஅகில் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் அருகில் (கூஃபா) பள்ளிவாசலில் அமர்ந்தேன். அவர்களிடம், "..அதற்குப் பரிகாரமாக நோன்பு நோற்கவேண்டும். அல்லது பலியிட வேண்டும" எனும் இந்த (2:196ஆவது) வசனத்தைப் பற்றிக் கேட்டேன். அதற்கு கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள், "இந்த வசனம் என் தொடர்பாகவே அருளப்பெற்றது. எனது தலையில் பிணி ஏற்பட்டிருந்தது. எனவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தூக்கிச் செல்லப்பட்டேன். எனது தலையிலிருந்த பேன்கள் என் முகத்தின் மீது உதிர்ந்து கொண்டிருந்தன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனக்கு இந்த அளவிற்குச் சிரமம் ஏற்பட்டிருக்கும் என்று நான் நினைத்திருக்கவில்லை" என்று கூறிவிட்டு, "உனக்கு ஓர் ஆடு கிடைக்குமா?" என்று கேட்டார்கள். நான், "இல்லை' என்றேன். அப்போதுதான் இந்த (2:196ஆவது) வசனம் அருளப் பெற்றது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மூன்று நாட்கள் நோன்பு நோற்றுக்கொள். அல்லது தலா ஓர் ஏழைக்கு அரை "ஸாஉ' உணவு வீதம், ஆறு ஏழைகளுக்கு உணவளி" என்று சொன்னார்கள். ஆகவே, இந்த வசனம், குறிப்பாக என் விஷயத்தில் அருளப்பெற்றது. ஆனால், அதன் சட்டம் உங்கள் அனைவருக்கும் பொதுவானதாகும்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2273 கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஹுதைபியாவின்போது) "இஹ்ராம்' கட்டியவனாக நபி (ஸல்) அவர்களுடன் (உம்ராவிற்காகச்) சென்றேன். அப்போது எனது தலையிலும் தாடியிலும் பேன்கள் நிறைந்து விட்டன. இத்தகவல் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. உடனே அவர்கள் (என்னை அழைத்து வருமாறு) என்னிடம் நபியவர்கள் ஆளனுப்பினார்கள்; நாவிதரையும் அழைத்தார்கள். அவர் (வந்து) எனது தலையை மழித்தார். பிறகு "உன்னிடம் ஏதேனும் குர்பானிப் பிராணி உண்டா?" என்று என்னிடம் கேட்டார்கள். நான், "எனக்கு அதற்கான வசதி இல்லை" என்றேன். அவ்வாறாயின், மூன்று நாட்கள் நோன்பு நோற்றுக்கொள். அல்லது தலா ஓர் ஏழைக்கு ஒரு "ஸாஉ'வீதம் ஆறு ஏழைகளுக்கு உணவளி" என்று கூறினார்கள். வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் "உங்களில் ஒருவர் நோயாளியாக இருந்தாலோ, அல்லது அவரது தலையில் பாதிப்பு ஏதேனும் இருந்தாலோ (அவர் தலையை மழிக்கலாம். ஆனால்,)அதற்குப் பரிகாரமாக நோன்பு நோற்க வேண்டும். அல்லது தர்மம் செய்ய வேண்டும். அல்லது பலியிட வேண்டும்" எனும் (2:196ஆவது) வசனத்தைக் குறிப்பாக என்

தொடர்பாக அருளினான். பின்னர் முஸ்லிம்கள் அனைவருக்கும் (அதன் சட்டம்) பொதுவானதாக அமைந்தது.

**பாடம் : 11 "இஹ்ராம்' கட்டியவர் குருதி உறிஞ்சி எடுப்பது செல்லும்.**

2274 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்த நிலையில் (தமக்கேற்பட்டிருந்த ஒற்றைத் தலைவலியின் காரணத்தால்) குருதி உறிஞ்சி எடுத்துக்கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2275 அப்துல்லாஹ் பின் புஹைனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மக்கா செல்லும் சாலையில் தமது தலையின் நடுவே குருதி உறிஞ்சி எடுத்துக்கொண்டார்கள். அப்போது அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தார்கள்.

**பாடம் : 12 "இஹ்ராம்' கட்டியவர் தம் கண்களுக்கு மருந்திடலாம்.**

2276 நுபைஹ் பின் வஹ்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு பயணத்தில்) அபான் பின் உஸ்மான் (ரஹ்) அவர்களுடன் புறப்பட்டோம். நாங்கள் "அல்மலல்' எனுமிடத்தை அடைந்த போது, (எங்களுடன் வந்த) உமர் பின் உபைதில்லாஹ் (ரஹ்) அவர்களுக்குக் கண் வலி ஏற்பட்டது. பின்னர் நாங்கள் "அர்ரவ்ஹா' எனுமிடத்தில் இருந்தபோது, அவருக்குக் கண் வலி கடுமையாகிவிட்டது. உடனே உமர் பின் உபைதில்லாஹ் (ரஹ்) அவர்கள் அபான் பின் உஸ்மான் (ரஹ்) அவர்களிடம் ஆளனுப்பி (தாம் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி)க் கேட்டார். அதற்கு அபான் (ரஹ்) அவர்கள், அவருடைய கண்களில் கற்றாழைச் சாற்றைப் பிழிந்து கட்டுமாறு கூறியனுப்பினார்கள். மேலும், "(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில்) "இஹ்ராம்' கட்டியிருந்த ஒருவருக்குக் கண்வலி ஏற்பட்டபோது,இவ்வாறுதான் அவருடைய கண்களில் கற்றாழைச் சாற்றைப் பிழிந்து கட்டுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2277 நுபைஹ் பின் வஹ்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உமர் பின் உபைதில்லாஹ் பின் மஅமர் (ரஹ்) அவர்களுக்குக் கண்வலி ஏற்பட்டது. அப்போது அவர்கள் கண்ணில் அஞ்சனம் (சுருமா) இட்டுக்கொள்ள விரும்பினார்கள். இதை அறிந்த அபான் பின் உஸ்மான் (ரஹ்) அவர்கள் அவ்வாறு செய்ய வேண்டாம் எனத் தடை விதித்துவிட்டு, கண்களில் கற்றாழைச் சாற்றைப் பிழிந்து கட்டுமாறு அவருக்கு உத்தரவிட்டார்கள். மேலும், நபி (ஸல்) அவர்கள் (கண்வலி எற்பட்டோருக்கு) அவ்வாறு செய்தார்கள் என உஸ்மான் (ரலி) அவர்கள் கூறினார்கள் என்றும் அறிவித்தார்கள்.

**பாடம் : 13 "இஹ்ராம்' கட்டியவர் தம் உடலையும் தலையையும் கழுவலாம்.**

2278 அப்துல்லாஹ் பின் ஹுனைன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"அல்அப்வா' எனுமிடத்தில் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி), மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) ஆகிய இருவரும் (ஒரு விஷயத்தில்) கருத்து வேறுபாடு கொண்டனர். அதாவது அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் "இஹ்ராம் கட்டியவர் தமது தலையைக் கழுவலாம்' என்று கூறினார்கள். மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்கள் "இஹ்ராம் கட்டியவர் தலையைக் கழுவக் கூடாது'என்றார்கள்.
இதையடுத்து அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் அதைப் பற்றிக் கேட்பதற்காக அபூ அய்யூப் அல்அன்சாரி (ரலி) அவர்களிடம் என்னை அனுப்பிவைத்தார்கள். நான் சென்றபோது அவர்கள் கிணற்றின் மேல் ஊன்றப்பட்டிருக்கும் இரு மரக்குச்சிகளுக்கிடையே ஒரு துணியால் திரையிட்டுக் குளித்துக்கொண்டிருந்தார்கள். நான் அவர்களுக்கு முகமன் (சலாம்) கூறினேன். அவர்கள், "யார் அது?' என்று கேட்டார்கள். "நான் அப்துல்லாஹ் பின் ஹுனைன் (வந்திருக்கிறேன்). "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்தபோது எவ்வாறு தமது தலையைக் கழுவுவார்கள்?' என்று உங்களிடம் கேட்பதற்காக அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் என்னை உங்களிடம் அனுப்பி வைத்தார்கள்" என்று சொன்னேன். அபூ அய்யூப் (ரலி) அவர்கள் தமது கையைத் திரையின் மீது வைத்து, தமது தலை தென்படும் அளவிற்குத் திரையைக் கீழே இறக்கினார்கள். பிறகு தலைக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்த மனிதரிடம், "தண்ணீர் ஊற்று" என்றார்கள். அவர் தண்ணீர் ஊற்ற, அபூ அய்யூப் (ரலி) அவர்கள், பின்னிருந்து முன்னாகவும் முன்னிருந்து பின்னாகவும் தம் கைகளைக் கொண்டுசென்று தமது தலையைத் தேய்த்துக் கழுவினார்கள். பிறகு, "இவ்வாறே நபி (ஸல்) அவர்கள் செய்வதை நான் பார்த்திருக்கிறேன்" என்று கூறினார்கள். - இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2279 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அப்போது அபூஅய்யூப் (ரலி) அவர்கள் தம் கைகளைப் பின்னிருந்து முன்னாகவும் முன்னிருந்து பின்னாகவும் தலை முழுவதற்கும் கொண்டுசென்றார்கள். (அபூஅய்யூப் (ரலி) அவர்கள் கூறிய செய்தி மிஸ்வர் (ரலி) அவர்களுக்கு எட்டியபோது) மிஸ்வர் (ரலி) அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் "(இனி) ஒருபோதும் நான் உங்களிடம் வழக்காடமாட்டேன்" என்று கூறினார்கள் என்றும் இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 14 "இஹ்ராம்' கட்டியவர் இறந்துவிட்டால் செய்ய வேண்டியவை.**

2280 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(இஹ்ராம் கட்டியிருந்த) ஒருவர் தமது ஒட்டகத்திலிருந்து விழுந்து, கழுத்து முறிக்கப்பட்டு இறந்து போனார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அவரைத் தண்ணீராலும் இலந்தை இலையாலும் நீராட்டுங்கள். அவருடைய இரு ஆடைகளால் அவருக்குப் பிரேத ஆடை (கஃபன்) அணிவியுங்கள். அவரது தலையை மூடாதீர்கள். ஏனெனில், "தல்பியா' கூறியவராக அவரை மறுமை நாளில் அல்லாஹ் எழுப்புவான்" என்று கூறினார்கள்.

2281 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "அரஃபா' பெருவெளியில் தங்கியிருந்த ஒருவர், தமது வாகனத்திலிருந்து விழுந்துவிட்டார். அது அவரது கழுத்தை முறித்துவிட்டது. இதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சொல்லப்பட்டபோது, "அவரைத் தண்ணீராலும் இலந்தை இலையாலும் நீராட்டுங்கள். இரு ஆடைகளில் அவருக்குப் பிரேத ஆடை (கஃபன்) அணிவியுங்கள். அவருக்கு வாசனைத் தூள் போடாதீர்கள். அவரது தலையை மூடாதீர்கள். ஏனெனில், "தல்பியா' சொல்லிக்கொண்டிருப்பவராக மறுமை நாளில் அவரை அல்லாஹ் எழுப்புவான்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2282 மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒரு மனிதர் "இஹ்ராம்' கட்டியவராக நபி (ஸல்) அவர்களுடன் தங்கியிருந்தார்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகின்றன.

2283 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் "இஹ்ராம்' கட்டியவராக நபி (ஸல்) அவர்களுடன் வந்தார். அப்போது தமது ஒட்டகத்திலிருந்து கீழே விழுந்து,கடுமையாகக் கழுத்து முறிக்கப்பட்டு இறந்துவிட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரைத் தண்ணீராலும் இலந்தை இலையாலும் நீராட்டி, அவருடைய இரு ஆடைகளை (பிரேத ஆடையாக) அவருக்கு அணிவியுங்கள். அவரது தலையை மூடாதீர்கள். ஏனெனில், அவர் மறுமை நாளில் "தல்பியா' கூறியவராக வருவார்" என்று கூறினார்கள்.

2284 மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "இஹ்ராம்' கட்டிய ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் வந்தார்" என்று ஹதீஸ் துவங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும், அதில் "ஏனெனில், அவர் மறுமை நாளில் "தல்பியா' சொல்லிக்கொண்டிருப்பவராக எழுப்பப்படுவார்" என்று (சிறிது வித்தியாசத்துடன்) இடம் பெற்றுள்ளது. "அவர் எந்த இடத்தில் விழுந்தார் என்பதைப் பற்றி சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் குறிப்பிடவில்லை" என்று அதிகப்படியாக ஒரு குறிப்பும் அதில் இடம் பெற்றுள்ளது.

2285 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இஹ்ராம் கட்டியிருந்த ஒருவரின் கழுத்தை, அவரது வாகன (ஒட்டக)ம் முறித்து விட்டது. அதனால் அவர் இறந்துவிட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரைத் தண்ணீராலும் இலந்தை இலையாலும் நீராட்டி, அவருடைய இரு ஆடைகளில் அவருக்குப் பிரேத ஆடை (கஃபன்) அணிவியுங்கள். அவரது தலையை மூடாதீர்கள். அவரது முகத்தையும் மறைக்காதீர்கள். ஏனெனில், "தல்பியா'ச் சொல்லிக்கொண்டிருப்பவராக அவர் மறுமை நாளில் எழுப்பப்படுவார்" என்று கூறினார்கள்.

2286 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் "இஹ்ராம்' கட்டியவராக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தார். அப்போது அவரது ஒட்டகம் அவரது கழுத்தை முறித்துவிட்டது. அதனால் அவர் இறந்துவிட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரைத் தண்ணீராலும் இலந்தை இலையாலும் நீராட்டி, அவருடைய இரு ஆடைகளில் அவருக்கு (பிரேத) ஆடை அணிவியுங்கள். அவருக்கு நறுமணம் பூசாதீர்கள். அவரது தலையை மூடாதீர்கள். ஏனெனில், அவர் மறுமை நாளில் தமது தலையைக் களிம்பு தடவிப் படியவைத்த நிலையில் ("இஹ்ராம்' கட்டியவராக) எழுப்பப்படுவார்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2287 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இஹ்ராம் கட்டியிருந்த ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்த போது, அவரது ஒட்டகம் அவரது கழுத்தை முறித்துவிட்டது. (அதனால் அவர் இறந்து விட்டார்.) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரது உடலைத் தண்ணீராலும் இலந்தை இலையாலும் நீராட்டும்படி உத்தரவிட்டார்கள். அவருக்கு எந்த நறுமணமும் பூசக்கூடாது; அவரது தலையை மூடக்கூடாது. ஏனெனில், அவர் மறுமை நாளில் தமது தலையைக் களிம்பு தடவிப் படியவைத்த நிலையில் ("இஹ்ராம்' கட்டியவராக) எழுப்பப்படுவார்" என்று கூறினார்கள்.

2288 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் "இஹ்ராம்' கட்டியவராக நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அவர் தமது ஒட்டகத்திலிருந்து விழுந்துவிட்டார். அவரது ஒட்டகம் (அந்த இடத்திலேயே) அவரைக் கொன்றுவிட்டது. (அதனால் அவர் இறந்துவிட்டார்.) அப்போது நபி (ஸல்) அவர்கள், தண்ணீராலும் இலந்தை இலையாலும் அவருக்கு நீராட்டி, இரு ஆடையால் பிரேத ஆடை (கஃபன்) அணிவிக்கப்பட வேண்டும் என உத்தரவிட்டார்கள். எந்த நறுமணமும் பூசக் கூடாது; அவரது தலை வெளியில் தெரிய வேண்டும் (என்றும் உத்தரவிட்டார்கள்).
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: பின்னர் இந்த ஹதீஸை அபூபிஷ்ர் (ரஹ்) அவர்கள் எனக்கு அறிவித்தார்கள். அப்போது "அவரது தலையும் முகமும் வெளியில் தெரிய வேண்டும். ஏனெனில், அவர் மறுமை நாளில் தமது தலையைக் களிம்பு தடவிப் படியவைத்த நிலையில் ("இஹ்ராம்' கட்டியவராக) எழுப்பப்படுவார்" என்று அறிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2289 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(இஹ்ராம் கட்டியிருந்த) ஒரு மனிதரது கழுத்தை அவரது ஒட்டகம் முறித்துவிட்டது. அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவரைத் தண்ணீராலும் இலந்தை இலையாலும் நீராட்டும்படியும் அவரது முகத்தையும் தலையையும் திறந்து வைக்குமாறும் உத்தரவிட்டார்கள். "ஏனெனில் அவர், மறுமை நாளில் "தல்பியா' சொன்னவராக எழுப்பப்படுவார்" என்று கூறினார்கள்.

2290 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (இஹ்ராம் கட்டி) இருந்தார். அப்போது அவரது ஒட்டகம் அவரது கழுத்தை முறித்துவிட்டது. அதனால் அவர் இறந்துவிட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அவரை நீராட்டுங்கள். ஆனால், எந்த நறுமணத்தையும் அவருக்குப் பூசாதீர்கள். அவரது முகத்தை மூடாதீர்கள். ஏனெனில் அவர், மறுமை நாளில் "தல்பியா' சொல்லிக்கொண்டிருப்பவராக எழுப்பப்படுவார்" என்று கூறினார்கள்.

**பாடம் : 15 "இஹ்ராம்' கட்டுகின்றவர் "நான் நோய் போன்ற காரணங்களால் (ஹஜ்ஜின் கிரியைகளைச் செய்ய முடியாதவாறு தடுக்கப்படும்போது) இஹ்ராமிலிருந்து விடுபட்டு விடுவேன்' என முன் நிபந்தனையிடுவது செல்லும்.**

2291 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் தந்தையின் சகோதரர் புதல்வியான) ளுபாஆ பின்த் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களிடம் சென்று, "நீ ஹஜ் செய்ய விரும்புகிறாயா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இன்னும் நோயாளியாகவே இருக்கிறேன்" என்று சொன்னார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரிடம், "நீ முன் நிபந்தனையிட்டு ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி, "இறைவா, நீ எந்த இடத்தில் (ஹஜ்ஜின் கிரியைகளைச் செய்ய முடியாதவாறு) என்னைத் தடுக்கிறாயோ அதுதான் நான் இஹ்ராமிலிருந்து விடுபடும் இடமாகும்' என்று கூறிவிடு!" என்றார்கள்.
ளுபாஆ (ரலி) அவர்கள் மிக்தாத் பின் அல்அஸ்வத் (ரலி) அவர்களுடைய துணைவியார் ஆவார்.

2292 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ளுபாஆ பின்த் அஸ்ஸுபைர் பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்களிடம் சென்றார்கள். அப்போது அவர், "அல்லாஹ்வின் தூதரே! நான் ஹஜ் செய்ய விரும்புகிறேன். ஆனால், நான் நோயாளி ஆவேன்" என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீ முன் நிபந்தனையிட்டு ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி, "(இறைவா!) நீ எந்த இடத்தில் (ஹஜ்ஜின் கிரியைகளைச் செய்ய முடியாதவாறு) என்னைத் தடுக்கிறாயோ அது தான் நான் இஹ்ராமிலிருந்து விடுபடும் இடமாகும்' என்று கூறிவிடு!" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2293 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ளுபாஆ பின்த் அஸ்ஸுபைர் பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "எனக்கு (நோய் ஏற்பட்டு) உடல் கனத்துவிட்டது. நான் ஹஜ் செய்ய விரும்புகிறேன். தாங்கள் எனக்கு என்ன உத்தரவிடுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ முன் நிபந்தனையிட்டு ஹஜ்ஜுக்காக "தல்பியா'க் கூறி, "(இறைவா!) நீ எந்த இடத்தில் (ஹஜ்ஜின் கிரியைகளைச் செய்ய முடியாதவாறு)

என்னைத் தடுக்கிறாயோ அதுதான் நான் இஹ்ராமிலிருந்து விடுபடும் இடமாகும்' என்று கூறிவிடு!" என்றார்கள்.
பின்னர் ளுபாஆ (ரலி) அவர்கள் (முழுமையாக) ஹஜ்ஜை நிறைவேற்றினார்கள்.
இந்த ஹதீஸ் எட்டு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2294 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ளுபாஆ (ரலி) அவர்கள் ஹஜ் செய்ய விரும்பியபோது, அவருக்கு முன் நிபந்தனையிட்டுக் கொள்ள அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உத்தரவுக்கிணங்க அவ்வாறே அவர் (முன் நிபந்தனையிட்டு ஹஜ்) செய்தார். -இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2295 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ளுபாஆ (ரலி) அவர்களிடம், "நீ முன் நிபந்தனையிட்டு ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி, "(இறைவா!) நீ எந்த இடத்தில் (ஹஜ்ஜின் கிரியைகளைச் செய்ய முடியாதவாறு) என்னைத் தடுக்கிறாயோ அதுதான் நான் இஹ்ராமிலிருந்து விடுபடும் இடமாகும்' என்று கூறிவிடு!" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நபி (ஸல்) அவர்கள் ளுபாஆ (ரலி) அவர்களிடம் (மேற்கண்டவாறு) உத்தரவிட்டார்கள்" என இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 16 பிரசவ இரத்தப்போக்கு அல்லது மாதவிடாய் ஏற்பட்ட பெண் "இஹ்ராம்' கட்டலாம்; இஹ்ராமின்போது அவர் குளிப்பது விரும்பத்தக்கதாகும்.

2296 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்களுக்கு "அஷ்ஷஜரா' எனுமிடத்தில் முஹம்மத் பின் அபீபக்ர் எனும் குழந்தை பிறந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்களைக் குளித்துவிட்டு, தல்பியா கூறச் சொல்லுமாறு (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2297 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்கள் துல்ஹுலைஃபா எனுமிடத்தில் பிரசவித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,அவரைக் குளித்துவிட்டு "தல்பியா' கூறச் சொல்லுமாறு அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள்.

**பாடம் : 17 "இஹ்ராம்' கட்டும் முறைகள்; இஃப்ராத், தமத்துஉ, கிரான் ஆகிய மூன்று முறைகளில் ஹஜ் செய்யலாம்; உம்ராவுடன் ஹஜ்ஜை இணைக்கலாம்; ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்துச் செய்தவர் ("காரின்')தம் கிரியைகளிலிருந்து எப்போது விடுபடுவார்?**

2298 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "விடைபெறும்' ஹஜ் ஆண்டில் புறப்பட்டோம். (முதலில்) உம்ராச் செய்வதற்காக "இஹ்ராம்' கட்டினோம். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எவரிடம் பலிப்பிராணி உள்ளதோ அவர் உம்ராவுடன் ஹஜ்ஜுக்காகவும் இஹ்ராம் கட்டிக்கொள்ளட்டும். அவ்விரண்டையும் நிறைவேற்றிய பிறகே அவர் இஹ்ராமிலிருந்து விடுபடவேண்டும்" என்று சொன்னார்கள். எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருந்த நிலையில் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன்) மக்காவிற்குச் சென்றேன். (மாதவிடாயின் காரணத்தால்) நான் இறையில்லத்தைச் சுற்றி (தவாஃப்) வரவில்லை. ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே (சயீ) ஓடவு மில்லை.
ஆகவே, இதைப் பற்றி நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் முறையிட்டேன். அப்போது அவர்கள், "உன் தலை (முடி)யை அவிழ்த்து வாரிக்கொள். ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டிக்கொள். உம்ராவை விட்டுவிடு" என்று சொன்னார்கள். அவ்வாறே நான் செய்தேன்.
நாங்கள் ஹஜ்ஜை நிறைவேற்றி முடித்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை (என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்களுடன் (இஹ்ராம் கட்டுவதற்காக) "தன்ஈம்' எனும் இடத்திற்கு அனுப்பினார்கள். (அங்கிருந்து புறப்பட்டு) நான் உம்ராச் செய்தேன். "இது (இந்த உம்ரா) உனது (விடுபட்ட) உம்ராவிற்குப் பதிலாகும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.
உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டியவர்கள் இறையில்லத்தைச் சுற்றிவந்து, ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே ஓடவும் (சயீ) செய்தனர்; பிறகு இஹ்ராமிலிருந்து விடுபட்டனர். பின்னர் மினாவிலிருந்து திரும்பிய பின் மற்றொரு முறை ஹஜ்ஜுக்காகச் சுற்றி (தவாஃப்) வந்தனர். ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்து (ஹஜ்ஜுல் கிரான்) செய்தவர்கள் ஒரேயொரு முறைதான் இறையில்லத்தைச் சுற்றி (தவாஃப்) வந்தனர்.

2299 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள், "விடைபெறும்' ஹஜ் ஆண்டில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். எங்களில் உம்ராச் செய்வதற்காக "இஹ்ராம்' கட்டியவர்களும் இருந்தனர். ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டியவர்களும் இருந்தனர். நாங்கள் மக்காவை அடைந்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பலிப்பிராணியைத் தம்முடன் கொண்டுவராமல் உம்ராவிற்காக ("தமத்துஉ') "இஹ்ராம்' கட்டியவர், (உம்ராவை முடித்துவிட்டு) இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொள்ளட்டும். உம்ராவிற்காக ("கிரான்') "இஹ்ராம்' கட்டி, தம்முடன் பலிப் பிராணியைக் கொண்டுவந்திருப்பவர் (துல்ஹஜ் பத்தாம் நாளில்) தமது பலிப் பிராணியை அறுத்துப் பலியிடாத வரை இஹ்ராமிலிருந்து விடுபட வேண்டாம். ஹஜ்ஜுக்காக மட்டும் ("இஃப்ராத்') "இஹ்ராம்' கட்டியிருப்பவர் தமது ஹஜ்ஜை முழுமையாக்கட்டும்" என்று கூறினார்கள்.

அப்போது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. அரஃபா (துல்ஹஜ் ஒன்பதாம்) நாள் வரும்வரை மாதவிடாயுடனேயே நான் இருந்தேன். நானோ உம்ராவிற்காக மட்டுமே "இஹ்ராம்' கட்டியிருந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் தலைமுடியை அவிழ்த்து அதை வாரிவிடுமாறும், உம்ராவிற்காக நான் "இஹ்ராம்' கட்டியதை விட்டுவிட்டு ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டிக்கொள்ளுமாறும் எனக்குக் கட்டளையிட்டார்கள். அவ்வாறே நான் செய்தேன். நான் ஹஜ்ஜை நிறைவேற்றிய பின் என்னுடன் (என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்களை அனுப்பி, எந்த உம்ராவின் இஹ்ராமிலிருந்து விடுபடாமலேயே நான் ஹஜ்ஜை அடைந்து கொண்டேனோ அந்த உம்ராவிற்காக இஹ்ராம் கட்டி வருமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள்.

2300 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள், "விடைபெறும்' ஹஜ் ஆண்டில் நபி (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். (முதலில்) உம்ராச் செய்வதற்காக நான் "இஹ்ராம்' கட்டினேன். நான் பலிப்பிராணியைக் கொண்டு வந்திருக்கவில்லை. அப்போது நபி (ஸல்) அவர்கள், "தம்முடன் பலிப்பிராணியைக் கொண்டு வந்திருப்பவர் உம்ராவுடன் ஹஜ்ஜுக்காகவும் இஹ்ராம் கட்டிக்கொள்ளட்டும். அவ்விரண்டையும் நிறைவேற்றிய பிறகே அவர் இஹ்ராமிலிருந்து விடுபட வேண்டும்" என்று சொன்னார்கள்.
அப்போது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டு விட்டது. அரஃபா (துல்ஹஜ் ஒன்பதாம்) நாள் இரவை நான் அடைந்தபோது, "அல்லாஹ்வின் தூதரே! நான் உம்ராவிற்காக (மட்டும்) "இஹ்ராம்' கட்டியிருந்தேன். (இந்நிலையில் எனக்கு மாதவிடாய் ஏற்பட்டது) நான் எவ்வாறு ஹஜ் செய்வது?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உனது தலைமுடியை அவிழ்த்து அதை வாரிவிட்டுக்கொள். உம்ராவை நிறுத்திவிட்டு, ஹஜ் செய்துகொள்" என்று சொன்னார்கள். அவ்வாறே நான் ஹஜ்ஜை நிறைவேற்றியதும் நபி (ஸல்) அவர்கள் (என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்களுக்கு (என்னை "தன்ஈமு'க்கு அழைத்துச் செல்லுமாறு) உத்தரவிட, அவர் என்னைத் தமக்குப் பின்னால் தமது வாகனத்தில் அமர்த்திக்கொண்டு,நான் நிறுத்திவைத்திருந்த உம்ராவிற்காக "தன்ஈம்' எனும் இடத்தில் "இஹ்ராம்' கட்டச் செய்தார்.

2301 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (விடைபெறும் ஹஜ்ஜுக்காகப்) புறப்பட்டோம். அப்போது அவர்கள், "உங்களில் ஹஜ், உம்ரா ஆகிய இரண்டிற்கும் (கிரான்) "இஹ்ராம்' கட்ட விரும்புகின்றவர், அவ்வாறே செய்யட்டும்! ஹஜ்ஜுக்கு மட்டும் (தமத்துஉ) "இஹ்ராம்' கட்ட விரும்புகின்றவர், அதற்காக "இஹ்ராம்' கட்டட்டும்! உம்ராவிற்கு மட்டும் (இஃப்ராத்) "இஹ்ராம்' கட்ட விரும்புகின்றவர், அதற்காக "இஹ்ராம்' கட்டட்டும்!" என்று சொன்னார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்கு மட்டும் "இஹ்ராம்' கட்டி, "தல்பியா' கூறினார்கள். அவ்வாறே அவர்களுடன் மக்களில் சிலரும் "இஹ்ராம்' கட்டினர். வேறுசிலர் உம்ரா மற்றும் ஹஜ் ஆகிய இரண்டிற்கும் "இஹ்ராம்' கட்டினர். இன்னும் சிலர் உம்ராவிற்கு மட்டும் "இஹ்ராம்' கட்டினர்.

நான் உம்ராவிற்காக மட்டும் "இஹ்ராம்' கட்டியவர்களில் ஒருவராக இருந்தேன்.

2302 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் துல்ஹஜ் மாத தலைப்பிறையை எதிர்பார்த்தவர்களாக, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "விடைபெறும்'ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்ட விரும்புகின்றவர், உம்ராவிற்கு "இஹ்ராம்' கட்டிக்கொள்ளட்டும்; நான் என்னுடன் பலிப் பிராணியைக் கொண்டு வந்திருக்காவிட்டால் உம்ராவிற்காகவே நானும் "இஹ்ராம்' கட்டியிருப்பேன்" என்று சொன்னார்கள். எனவே, மக்களில் சிலர் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டியிருந்தனர். வேறுசிலர் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டியிருந்தனர். நான் உம்ராவிற்காக "இஹ்ராம்'கட்டியவர்களில் ஒருவராக இருந்தேன்.
நாங்கள் புறப்பட்டு மக்காவை அடைந்ததும் அரஃபா (துல்ஹஜ் ஒன்பதாவது) நாளில் எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. நானோ எனது உம்ராவின் கிரியைகளைச் செய்து இஹ்ராமிலிருந்து விடுபட்டிருக்கவில்லை. எனவே, இதைப் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "நீ உனது உம்ராவை விட்டுவிட்டு, உனது தலைமுடியை அவிழ்த்து, அதை வாரிக்கொண்டு ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டிக்கொள்" என்று கூறினார்கள். அவ்வாறே நான் செய்தேன். அல்லாஹ் எங்கள் ஹஜ்ஜை நிறைவேறச் செய்து (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்) "முஹஸ்ஸபி'ல்57 தங்கும் இரவு வந்தபோது, என்னுடன் (என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்களை அனுப்பினார்கள். அவர் என்னைத் தமக்குப் பின்னால் தமது வாகனத்தில் அமர்த்திக்கொண்டு "தன்ஈம்' நோக்கிச் சென்றார். அங்கிருந்து நான் உம்ராவிற்காக "தல்பியா' கூறினேன். அல்லாஹ் எங்களுக்கு ஹஜ்ஜையும் உம்ராவையும் நிறைவேற்ற வாய்ப்பளித்தான்.
(அறிவிப்பாளர் ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:) இதற்கு (பரிகாரமாக) ஏதேனும் பலியிடலோ தர்மமோ நோன்போ (ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து) நிகழவில்லை.

2303 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் துல்ஹஜ் மாதத்தின் தலைப்பிறையை எதிர்பார்த்தவர்களாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். அப்போது நாங்கள் (ஹஜ் மாதத்தில் உம்ராச் செய்யக் கூடாது என்று எண்ணியிருந்ததால்) ஹஜ்ஜை மட்டுமே நிறைவேற்றும் எண்ணத்துடன் சென்றோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்களில் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்ட விரும்புகின்றவர், உம்ராவிற்கு "இஹ்ராம்' கட்டிக்கொள்ளட்டும்" என்று கூறினார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2304 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் துல்ஹஜ் மாதத்தின் தலைப்பிறையை எதிர்பார்த்தவர்களாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். எங்களில் சிலர் உம்ராவிற்காக (தமத்துஉ) "இஹ்ராம்' கட்டியிருந்தனர்; வேறுசிலர் ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து (கிரான்) "இஹ்ராம்' கட்டியிருந்தனர்; வேறுசிலர் ஹஜ்ஜுக்கு மட்டும் (இஃப்ராத்) "இஹ்ராம்' கட்டியிருந்தனர். நான் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டியவர்களில் ஒருவராக இருந்தேன்" என்று ஹதீஸ் துவங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட இரு ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
மேலும், இந்த அறிவிப்பில், "ஆயிஷா (ரலி) அவர்களுக்கு அல்லாஹ் ஹஜ், உம்ரா ஆகிய இரண்டையும் நிறைவேற்றித்தந்தான்"என அறிவிப்பாளர் உர்வா (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என்று இடம்பெற்றுள்ளது. மேலும், அதில் "இதற்கு(ப் பரிகாரமாக)ப் பலியிடலோ, தர்மமோ, நோன்போ (ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து) நிகழவில்லை" என ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என்றும் இடம்பெற்றுள்ளது.

2305 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள், "விடைபெறும்' ஹஜ் ஆண்டில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். எங்களில் சிலர் உம்ராவிற்காக (தமத்துஉ) "இஹ்ராம்' கட்டியிருந்தனர்; வேறுசிலர் ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து (கிரான்) "இஹ்ராம்' கட்டியிருந்தனர்; இன்னும் சிலர் ஹஜ்ஜுக்கு மட்டும் (இஃப்ராத்) "இஹ்ராம்' கட்டியிருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டியிருந்தார்கள். உம்ராவிற்கு மட்டும் "இஹ்ராம்' கட்டியவர்கள் (உம்ராவை முடித்ததும்) இஹ்ராமிலிருந்து விடுபட்டுக் கொண்டார்கள். ஹஜ்ஜுக்கு மட்டுமே "இஹ்ராம்' கட்டியவர்களும் அல்லது ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து "இஹ்ராம்' கட்டியவர்களும் "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாள் வரும் வரை இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை.

2306 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஹஜ்ஜுக்காக) நபி (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். அப்போது நாங்கள் ஹஜ்ஜை மட்டுமே நிறைவேற்றும் எண்ணத்துடன் சென்றோம். நாங்கள் "சரிஃப்' எனுமிடத்தில், அல்லது அதற்கு அருகில் இருந்தபோது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டு விட்டது. நபி (ஸல்) அவர்கள் நானிருந்த இடத்திற்கு வந்தார்கள். அழுதுகொண்டிருந்த என்னிடம், "உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அதற்கு அவர்கள், "இந்த மாதவிடாய் பெண்கள்மீது அல்லாஹ் விதியாக்கிய (இயற்கையான) ஒன்றாகும். எனவே, நீ குளிக்கும்வரை, இறையில்லத்தைச் சுற்றி (தவாஃப்) வருவதைத் தவிர,ஹாஜிகள் செய்கின்ற மற்றெல்லாக் கிரியைகளையும் செய்துகொள்" என்றார்கள். மேலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியர் சார்பாக மாட்டைக் குர்பானி கொடுத்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2307 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஹஜ்ஜை மட்டும் நிறைவேற்றும் எண்ணத்துடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மதீனாவிலிருந்து) புறப்பட்டோம். (மக்காவிற்கு அருகிலுள்ள) "சரி∴ப்' எனும் இடத்திற்கு நாங்கள் வந்தபோது, எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. நானிருந்த இடத்திற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள். அழுதுகொண்டிருந்த என்னிடம் "உன் அழுகைக்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு நான், "அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த ஆண்டு நான் ஹஜ் செய்வதற்காகப் புறப்பட்டு வந்திருக்கக் கூடாது என்று கருதுகிறேன்" என்று கூறினேன். அவர்கள், "உனக்கு என்ன நேர்ந்தது? உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது போலும்!" என்றார்கள். நான், "ஆம்' என்றேன். அப்போது, "இ(ந்த மாதவிடாயான)து பெண்கள்மீது அல்லாஹ் விதியாக்கிய ஒன்றாகும். எனவே, நீ தூய்மையாகும்வரை, இறையில்லத்தைச் சுற்றி (தவா∴ப்) வருவதைத் தவிர, ஹாஜிகள் செய்யும் மற்றெல்லாக் கிரியைகளையும் செய்துகொள்" என்று சொன்னார்கள்.

நான் மக்காவை அடைந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களிடம், "உங்கள் இஹ்ராமை உம்ராவிற்காக மாற்றறிக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். உடனே தம்முடன் பலிப் பிராணியைக் கொண்டுவந்திருந்தவர்களைத் தவிர மற்றவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொண்டனர். அப்போது நபி (ஸல்), அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) மற்றும் வசதி படைத்த இன்னும் சிலரிடம் பலிப் பிராணிகள் இருந்தன. (உம்ராவிற்காக இஹ்ராம் கட்டிய) அவர்கள் (துல்ஹஜ் எட்டாவது நாளில் மினாவிற்குச்) சென்றபோது ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி, "தல்பியா' கூறினர். "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் நான் (மாதவிடாயிலிருந்து) தூய்மையானபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது உத்தரவின் பேரில், நான் "தவா∴புல் இ∴பாளா'செய்தேன். பின்னர் எங்களிடம் மாட்டிறைச்சி கொண்டுவரப்பட்டது. நான் "இது என்ன?" என்று கேட்டேன். அதற்கு மக்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியருக்காகக் குர்பானி கொடுத்தார்கள் (அதுதான் இந்த இறைச்சி)" என்று கூறினர்.

முஹஸ்ஸபில் தங்கும் (துல்ஹஜ் பதினான்காவது) இரவில் நான், "அல்லாஹ்வின் தூதரே! மக்கள் ஹஜ், உம்ரா ஆகிய இரண்டையும் நிறைவேற்றிவிட்டுத் திரும்பிச் செல்ல, நானோ ஹஜ்ஜை மட்டுமே நிறைவேற்றிச் செல்கிறேன்" என்று கூறினேன். நபி (ஸல்) அவர்கள், (என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்களிடம் (என்னைத் தன்ஈமுக்கு அழைத்துச் சென்று, அங்கு உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டுமாறு) உத்தரவிட, அவர் என்னைத் தமக்குப் பின்னால் தமது ஒட்டகத்தில் அமர்த்திக்கொண்டு சென்றார். நான் நினைத்துப் பார்க்கிறேன். அப்போது நான் இளவயதுப் பெண்ணாக இருந்தேன். (ஒட்டகத்தில் அமர்ந்து சென்றபோது) நான் குட்டித்தூக்கம் போடுவேன். அப்போது எனது முகம் (ஒட்டகத்தின் சேணத்திலுள்ள) சாய்வுக் கட்டையில் இடித்துக்கொள்ளும். நாங்கள் இருவரும் தன்ஈமுக்கு வந்து சேர்ந்த போது, அங்கு நான் உம்ராவிற்காக "தல்பியா'கூறினேன். அது, மக்கள் முன்பே நிறைவேற்றிய உம்ராவிற்குப் பகரமாக அமைந்தது.

2308 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நாங்கள் ஹஜ்ஜுக்காக "தல்பியா' கூறி(ப் புறப்பட்டுச் செல்லலா)னோம். நாங்கள் "சரிஃப்' எனுமிடத்தில் இருந்தபோது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. நானிருந்த இடத்திற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது நான் அழுது கொண்டிருந்தேன்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும், ஹம்மாத் பின் சலமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நபி (ஸல்), அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) மற்றும் வசதி படைத்த இன்னும் சிலரிடம் பலிப் பிராணிகள் இருந்தன. (உம்ராவிற்காக இஹ்ராம் கட்டிய) அவர்கள் (துல்ஹஜ் எட்டாவது நாளில் மினாவிற்குச்) சென்றபோது ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி, "தல்பியா' கூறினர்" எனும் குறிப்பும், "நான் இளவயதுப் பெண்ணாக இருந்தேன். (ஒட்டகத்தில் அமர்ந்து சென்றபோது) நான் குட்டித்தூக்கம் போடுவேன். அப்போது எனது முகம் (ஒட்டகத்தின் சேணத்திலுள்ள) சாய்வுக் கட்டையில் இடித்துக்கொள்ளும்" எனும் குறிப்பும் இடம் பெறவில்லை.

2309 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்கு மட்டும் (இஃப்ராத்) "இஹ்ராம்' கட்டினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2310 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஹஜ்ஜுக்கு "இஹ்ராம்' கட்டியவர்களாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹஜ் மாதங்களில், ஹஜ்ஜின் புனிதக் கிரியைகளில், ஹஜ்ஜின் இரவு (பகல்)களில் (பங்கேற்கப்) புறப்பட்டோம். நாங்கள் "சரிஃப்' எனுமிடத்தில் இறங்கித் தங்கினோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (கூடாரத்திலிருந்து புறப்பட்டு) தம் தோழர்களிடம் வந்து, "உங்களில் எவரிடம் பலிப் பிராணி இல்லையோ அவர் தமது இஹ்ராமை உம்ராவிற்காக மாற்றிக்கொள்ள விரும்பினால், அவர் அவ்வாறே செய்துகொள்ளட்டும்; எவரிடம் பலிப்பிராணி உள்ளதோ (அவர் இவ்வாறு செய்ய) வேண்டாம்" என்றார்கள். தம்மிடம் பலிப்பிராணி இல்லாத நபித்தோழர்களில் சிலர் இவ்வாறு செய்தனர். வேறுசிலர் இவ்வாறு செய்யவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமும் அவர்களுடனிருந்த வசதி படைத்த தோழர்களில் சிலரிடமும் பலிப் பிராணிகள் இருந்தன. (எனவே அவர்களால் உம்ரா மட்டும் செய்து இஹ்ராமிலிருந்து விடுபட முடியவில்லை). இந்நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நானிருந்த இடத்திற்கு வந்தார்கள்.
அப்போது நான் அழுதுகொண்டிருந்தேன். என்னிடம், "உன் அழுகைக்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு நான், "நீங்கள் உங்கள் தோழர்களிடம் பேசியதைச் செவியுற்றேன். உம்ராவைப் பற்றித் தாங்கள் கூறியதையும் நான் கேட்டேன். என்னால் உம்ராச் செய்ய முடியாமல் போய்விட்டதே" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனக்கு என்னவாயிற்று?" என்று கேட்டார்கள். "நான் தொழுகை இல்லாமல்

இருக்கிறேன்" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதனால் உனக்கு ஒரு பாதிப்புமில்லை. பெண்களில் நீயும் ஒருத்தி. எனவே, அவர்களுக்கு அல்லாஹ் விதியாக்கியதை உனக்கும் விதியாக்கியுள்ளான். நீ ஹஜ் செய்துகொண்டிரு. அல்லாஹ் உனக்கு உம்ராச் செய்யும் வாய்ப்பையும் தரலாம்" என்று கூறினார்கள்.
ஆகவே, நான் ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டு மினாவில் தங்கியிருந்தபோது, நான் (மாதவிடாயிலிருந்து) தூய்மையானேன். பிறகு நாங்கள் (மினாவிலிருந்து சென்று) இறையில்லத்தைச் சுற்றி (தவா∴ப் செய்யலா)னோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஹஸ்ஸப்' எனுமிடத்தில் தங்கியிருந்தார்கள். (அவர்களிடம் நான் சென்றபோது) அவர்கள் (என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்களை அழைத்து, "உன் சகோதரியை ஹரமுக்கு வெளியே (தன்ஈமுக்கு) அழைத்துச் செல். அவர் உம்ராவிற்கு "இஹ்ராம்' கட்டி, இறையில்லம் கஅபாவைச் சுற்றட்டும்! (உம்ராச் செய்து முடிக்கட்டும்!) நான் இங்கேயே உங்கள் இருவரையும் எதிர்பார்த்துக் காத்திருப்பேன்" என்றார்கள்.
உடனே நாங்கள் புறப்பட்டு (தன்ஈமுக்கு)ச் சென்றோம். நான் (அங்கு) "இஹ்ராம்' கட்டிக் கொண்டு (வந்து) இறையில்லத்தைச் சுற்றி வந்தேன். ஸ∴பா மற்றும் மர்வாவில் சுற்றிவந்தேன். பிறகு (உம்ராவை முடித்து) நாங்கள் நடுநிசி நேரத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்துசேர்ந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் தமது கூடாரத்தில் தங்கியிருந்தார்கள். "(உம்ராவை) முடித்துவிட்டாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்கள் புறப்பட அனுமதியளித்தார்கள்; பின்னர் இறையில்லத்திற்குச் சென்று சுப்ஹுத் தொழுகைக்கு முன் அதைச் சுற்றி (தவா∴ப்) வந்தார்கள். பிறகு மதீனாவை நோக்கிப் புறப்பட்டார்கள்.

2311 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்களில் சிலர் ஹஜ் (இ∴ப்ராது)க்கு மட்டும் "இஹ்ராம்' கட்டினர். வேறுசிலர் ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து (கிரான்) "இஹ்ராம்' கட்டினர். இன்னும் சிலர் உம்ராச் செய்து முடித்துவிட்டு, ஆசுவாசமாக "ஹஜ்(ஜுத் தமத்து)' செய்வதற்காக "இஹ்ராம்'கட்டினர்.
- காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள் ஹஜ்ஜை நிறைவேற்றுவதற்காக வந்தார்கள்... (மற்ற விவரங்கள் மேற் கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.)

2312 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹஜ்ஜை மட்டுமே நிறைவேற்றும் எண்ணத்துடன் துல்கஅதா மாதம் இருபத்தைந்தாவது நாள் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மதீனாவிலிருந்து) புறப்பட்டோம். நாங்கள் மக்காவை நெருங்கியதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பலிப் பிராணியைத் தம்முடன் கொண்டுவந்தவர் இறையில்லத்தைச் சுற்றி (தவா∴ப்) வந்து, ஸ∴பா மற்றும் மர்வாவுக்கிடையே ஓடி முடித்தவுடன் இஹ்ராமிலிருந்து விடுபட்டு விடவேண்டும்" என்று கட்டளையிட்டார்கள். பிறகு துல்ஹஜ் பத்தாவது நாள் எங்களிடம் மாட்டிறைச்சி கொண்டுவரப்பட்டது. நான், "இது என்ன (இறைச்சி)?" என்று கேட்டேன். "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியருக்காக அறுத்துப் பலியிட்டார்கள். (அந்த இறைச்சிதான் இது)" என்று பதிலளிக்கப்பட்டது.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் இந்த ஹதீஸை காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்களிடம் எடுத்துக் கூறினேன். அப்போது அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த ஹதீஸை, உள்ளது உள்ளபடி அம்ரா உமக்கு அறிவித்துள்ளார்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2313 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! மக்கள் எல்லாரும் (ஹஜ், உம்ரா ஆகிய) இரு கிரியைகளையும் நிறைவேற்றிவிட்டுத் திரும்புகின்றனர். நான் மட்டும் (ஹஜ் என்கிற) ஒரேயொரு கிரியையை நிறைவேற்றிவிட்டுத் திரும்புகிறேனே?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீ (சற்றுக்) காத்திருந்து, (மாதவிடாயிலிருந்து) தூய்மையடைந்ததும் "தன்ஈம்'முக்குச் சென்று, அங்கு உம்ராவிற்காக "தல்பியா' கூறிக்கொள். பிறகு நாளை நாம் இன்னின்ன இடத்தில் சந்திப்போம். ஆனால், உம்ராவிற்கான நற்பலன் (நீ ஏற்றுக்கொண்ட) "உனது சிரமத்திற்கு' அல்லது "உனது பொருட்செலவிற்கு' தக்கவாறுதான் கிட்டும்!" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2314 அப்துல்லாஹ் பின் அவ்ன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இறைநம்பிக்கையாளர்களின் அன்னை அறிவித்த மேற்கண்ட ஹதீஸ் காசிம் பின் முஹம்மத் (ரஹ்), இப்ராஹீம் பின் யஸீத் பின் கைஸ் (ரஹ்) ஆகியோர் வழியாக இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் எது யாருடைய அறிவிப்பு என்று எனக்குத் தெரியவில்லை.

2315 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹஜ்ஜை மட்டுமே நிறைவேற்றும் எண்ணத்துடன் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மதீனாவிலிருந்து) புறப்பட்டோம். நாங்கள் மக்கா சென்றடைந்ததும் இறையில்லத்தைச் சுற்றி (தவாஃப்) வந்தோம். அதன் பிறகு, பலிப்பிராணியை (தம்முடன்) கொண்டுவராதவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். அவ்வாறே பலிப்பிராணியைக் கொண்டுவராதவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டனர். நபி (ஸல்) அவர்களின் துணைவியரும் பலிப்பிராணியைக் கொண்டுவராததால் அவர்களும் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொண்டனர்.
எனக்கு மாதவிடாய் ஏற்பட்டதால் நான் இறையில்லத்தைச் சுற்றிவரவில்லை. (ஹஜ் முடிந்து) "அல்முஹஸ்ஸப்' எனுமிடத்தில் தங்கும் (துல்ஹஜ் பதினான்காவது) இரவு வந்தபோது, நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! மக்கள் அனைவரும் ஹஜ்ஜையும் உம்ராவையும் முடித்துத் திரும்புகின்றனர். நான் ஹஜ்ஜை மட்டுமே முடித்து விட்டுத் திரும்புகிறேனே?" என்றேன். அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள், "நாம் மக்கா வந்தடைந்த இரவுகளில் நீ இறையில்லத்தைச் சுற்றி (தவாஃப்) வரவில்லையா?" என்று கேட்டார்கள். நான் "இல்லை' என்றேன். "அவ்வாறாயின், நீ உன் சகோதரர் (அப்துர்

ரஹ்மான்) உடன் "தன்ஈம்'க்குச் சென்று அங்கிருந்து உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டி (உம்ராவை நிறைவேற்றி)க்கொள். பிறகு இன்னின்ன இடத்தில் நாம் சந்திப்போம்" என்று கூறினார்கள்.
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மற்றொரு துணைவியார்) ஸஃபிய்யா (ரலி) அவர்கள் கூறினார்கள்: "நான் உங்களைப் புறப்படவிடாமல் தடுத்துவிடுவேன் என எண்ணுகிறேன்" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (செல்லமாக), "உன் கழுத்தறுந்து போக! உனக்குத் தொண்டை வலி வர! (காரியத்தைக் கொடுத்துவிட்டாயே!) நஹ்ருடைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் நீ (கஅபாவைச்) சுற்றி வரவில்லையா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். (அப்படியானால்) பரவாயில்லை நீ புறப்படு!" என்றார்கள்.
(தொடர்ந்து) ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து புறப்பட்டு ஒரு குன்றில் ஏறிக்கொண்டிருந்தபோது (உம்ராவை முடித்துத் திரும்பிய) என்னைச் சந்தித்தார்கள். அப்போது நான் குன்றிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தேன். அல்லது அவர்கள் இறங்கிக்கொண்டிருந்தார்கள்; நான் ஏறிக்கொண்டிருந்தேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2316 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜை நிறைவேற்றும் எண்ணமோ உம்ராவை நிறைவேற்றும் எண்ணமோ கொள்ளாமல் (பொதுவாக) "தல்பியா' சொன்னவர்களாக (மதீனாவிலிருந்து) புறப்பட்டோம்" என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2317 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் துல்ஹஜ் மாதம் நான்காவது நாள், அல்லது ஐந்தாவது நாள் அன்று (மக்காவிற்கு) வந்தார்கள். அப்போது நானிருந்த இடத்திற்குக் கோபத்துடன் வந்தார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! உங்களைக் கோபப்படுத்தியவர் யார்? அவரை, அல்லாஹ் நரகத்தில் நுழைவிப்பானாக!" என்று சொன்னேன். அதற்கு அவர்கள், "உனக்குத் தெரியுமா? நான் மக்களிடம் (பலிப் பிராணியைக் கொண்டுவராதவர்கள் தமது ஹஜ்ஜை உம்ராவாக ஆக்கிக்கொள்ளட்டும் என) ஓர் உத்தரவு பிறப்பித்தேன். ஆனால், அவர்களோ தயக்கம் காட்டுகிறார்கள். நான் பின்னால் அறிந்துகொண்டதை முன்பே அறிந்திருந்தால், (என்னுடன்) பலிப்பிராணியைக் கொண்டு வந்திருக்கமாட்டேன்; இங்கு வந்த பிறகு வாங்கியிருப்பேன்; பின்னர் மக்கள் (தம் ஹஜ்ஜை உம்ராவாக ஆக்கி) இஹ்ராமிலிருந்து விடுபட்டதைப் போன்று நானும் விடுபட்டிருப்பேன்" என்றார்கள்.
(ஹகம் பின் உதைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் தயக்கம் காட்டுவதைப் போன்றுள்ளது" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று எண்ணுகிறேன் என இடம் பெற்றுள்ளது.)
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2318 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்கள் துல்ஹஜ் மாதம் நான்காவது நாள், அல்லது ஐந்தாவது நாள் (மக்காவிற்கு) வந்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பிக்கிறது. மேலும், அதில் "மக்கள் தயக்கம் காட்டுகிறார்கள்' எனும் வாசகத்தில் ஹகம் பின் உதைபா (ரஹ்) அவர்கள் வெளியிட்ட ஐயம் இடம்பெறவில்லை.

2319 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டி (மக்காவிற்கு) வந்தேன். இறையில்லாம் கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வருவதற்கு முன்பே எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. ஆகவே, (தவாஃபைத் தவிர உம்ராவின்) அனைத்துக் கிரியைகளையும் நிறைவேற்றிவிட்டு, ஹஜ்ஜுக்காக ("இஹ்ராம்' கட்டி) "தல்பியா' கூறினேன். (மினாவிலிருந்து) புறப்படும் (நஃப்ருடைய) நாளில் நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "நீ (கஅபாவைச்) சுற்றி வந்ததே உனது ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் போதுமானதாகும். (எனவே, நீ உம்ராச் செய்ய வேண்டிய தில்லை)" என்று சொன்னார்கள். ஆனால், அதை நான் ஏற்க மறுத்துவிட்டேன். ஆகவே, என்னை (என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களுடன் "தன்ஈம்'க்கு அனுப்பி வைத்தார்கள். நான் ஹஜ் முடிந்த பின் உம்ராச் செய்தேன்.

2320 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மக்காவிற்கு அருகிலுள்ள) "சரிஃப்' எனும் இடத்தில் எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. "அரஃபா'வில் தூய்மை அடைந்தேன். அப்போது என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ ஸஃபா மற்றும் மர்வாவில் சுற்றி (சயீ) வந்ததே உனது ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் போதுமானதாகிவிட்டது" என்றார்கள்.

2321 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! மக்கள் அனைவரும் (ஹஜ், உம்ரா ஆகிய இரண்டையும் நிறைவேற்றிவிட்டு) இரு நற்பலன்களுடன் திரும்பிச் செல்ல, நான் மட்டும் (ஹஜ்ஜை மாத்திரம் நிறைவேற்றி அதற்குரிய) ஒரு நற்பலனுடன் திரும்பிச் செல்வதா?" என்று கேட்டேன். எனவே, நபி (ஸல்) அவர்கள் (என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்களிடம் என்னைத் "தன்ஈம்'க்கு அழைத்துச் செல்லுமாறு உத்தரவிட்டார்கள். அப்துர் ரஹ்மான் (ரலி) என்னைத் தமது ஒட்டகத்தில் தமக்குப் பின்னால் அமர்த்திக்கொண்(டு, தன்ஈமை நோக்கிப் பயணம் மேற்கொண்)டார். அப்போது நான் எனது முகத்திரையை உயர்த்தி, கழுத்து வழியாக அதைக் கழற்றலானேன். உடனே அவர் தமது ஒட்டகத்தை அடிப்பதைப் போன்று எனது காலில் அடித்தார். நான் அவரிடம், "(அந்நிய ஆண்கள்) எவரேனும் (என்னைப் பார்ப்பதைக்) காண்கிறீரா? (பிறகு ஏன் என்னை அடிக்கிறீர்?)" என்று கேட்டேன். பிறகு நான் (தன்ஈமில்) உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டி, "தல்பியா' சொன்னேன். (உம்ரா முடிந்த பிறகு) நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து சேர்ந்தோம். அப்போது அவர்கள் "முஹஸ்ஸபி'ல் தங்கியிருந்தார்கள்.

2322 அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என்னிடம் (என் சகோதரி) ஆயிஷா (ரலி) அவர்களை எனது வாகனத்தில் எனக்குப் பின்னால் உட்காரவைத்து (அழைத்துச் சென்று) "தன்ஈமி'ல் உம்ரா மேற்கொள்ளச் செய்யுமாறு உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2323 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஹஜ்ஜுக்கு மட்டும் "இஹ்ராம்' கட்டியவர்களாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மக்காவை நோக்கி) வந்தோம். ஆயிஷா (ரலி) அவர்கள் உம்ராவிற்காக ("இஹ்ராம்' கட்டியவர்களாக) வந்தார்கள். நாங்கள் (மக்காவிற்கு அருகிலுள்ள) "சரிஃப்' எனுமிடத்திற்கு வந்தபோது, ஆயிஷா (ரலி) அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. நாங்கள் இறையில்லம் கஅபா,ஸஃபா மற்றும் மர்வா ஆகியவற்றைச் சுற்றினோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம், எங்களில் தம்முடன் பலிப்பிராணியைக் கொண்டுவராதவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொள்ளுமாறு உத்தரவிட்டார்கள்.
அப்போது நாங்கள், "(இஹ்ராமிலிருந்து விடுபட்டால் எங்களுக்கு) எதுவெல்லாம் அனுமதிக்கப்பட்டுள்ளது?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "அனைத்துமே அனுமதிக்கப் பெற்றுள்ளன" என்றார்கள். ஆகவே, நாங்கள் (எங்கள்) மனைவி யருடன் தாம்பத்திய உறவு கொண்டோம். நறுமணம் பூசிக்கொண்டோம். (தைக்கப்பெற்ற) எங்கள் ஆடைகளை அணிந்து கொண்டோம். அன்றைய தினத்திற்கும் அரஃபாவுக்குமிடையே நான்கு இரவுகளே இருந்தன. பின்னர் நாங்கள் "தர்வியா' (துல்ஹஜ் எட்டாம்)நாளில் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி, "தல்பியா' சொன்னோம். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிருந்த இடத்திற்குச் சென்றபோது, அவர்கள் அழுதுகொண்டிருப்பதைக் கண்டார்கள். அப்போது, "உனது பிரச்சினை என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் "எனது பிரச்சினை என்னவென்றால், எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. மக்கள் அனைவரும் இஹ்ராமிலிருந்து விடுபட்டிருக்க, நான் மட்டும் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை; இறையில்லத்தைச் சுற்றி (தவாஃப்) வரவுமில்லை. இப்போது மக்கள் அனைவரும் ஹஜ்ஜுக்காகப் போய்க்கொண்டிருக்கின்றனர்" என்றார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இ(ந்த மாதவிடாயான)து, பெண்கள்மீது அல்லாஹ் விதியாக்கியதாகும். ஆகவே, நீ குளித்துவிட்டுப் பின்னர் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி "தல்பியா' சொல்லிக்கொள்" என்றார்கள். அவ்வாறே அவர்கள் செய்துவிட்டு, தங்க வேண்டிய (புனித) இடங்களில் தங்கினார்கள். மாதவிடாயிலிருந்து தூய்மை யடைந்ததும் கஅபாவையும், ஸஃபா மற்றும் மர்வாவையும் சுற்றினார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ உனது ஹஜ்ஜிலிருந்தும் உம்ராவிலிருந்தும் விடுபட்டு விட்டாய்" என்று கூறினார்கள். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நான் இறையில்லத்தைச் சுற்றி (தவாஃப்) வராமலேயே ஹஜ் செய்து முடித்து விட்டேனே எனக் கவலைப்படுகிறேன்" என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (என் சகோதரரிடம்) "அப்துர் ரஹ்மானே! நீ இவரை அழைத்துச் சென்று, "தன்ஈமி'லிருந்து உம்ராச் செய்யவைப்பாயாக!" என்றார்கள். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்) "முஹஸ்ஸபி'ல் தங்கியிருந்த இரவில் இது நடந்தது.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில் லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "நபி (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிருந்த இடத்திற்குச் சென்றார்கள். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் அழுதுகொண்டிருந்தார்கள்..." என்பதிலிருந்தே ஹதீஸ் தொடங்குகிறது.

2324 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஆயிஷா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் செய்த ஹஜ்ஜின்போது உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டினார்கள்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. மேலும் அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இதமாக நடந்துகொள்ளும் மனிதராக இருந்தார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள் ஒன்றை ஆசைப்பட்டபோது, அவரது வழியிலேயே அவரை விட்டுவிட்டார்கள். அதனால்தான், அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்களுடன் ஆயிஷா (ரலி) அவர்களை "தன்ஈமி'ல் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டச் செய்தார்கள்" என அதிகப்படியாகவும் இடம்பெற்றுள்ளது.
அறிவிப்பாளர் அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள், "எனவே, ஆயிஷா (ரலி) அவர்கள் ஹஜ் செய்யும்போது, நபி (ஸல்) அவர்களுடன் அவர்கள் செய்ததைப் போன்றே செய்வார்கள்" என்று கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.

2325 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டி "தல்பியா' சொன்னவர்களாக நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மதீனாவிலிருந்து) புறப்பட்டோம். எங்களுடன் பெண்களும் குழந்தைகளும் இருந்தனர். நாங்கள் மக்காவிற்கு வந்ததும் இறையில்லத்தைச் சுற்றி வந்து, ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே (சயீ) ஓடினோம். அப்போது எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தம்முடன் பலிப்பிராணியைக் கொண்டுவராதவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டு (ஹலால் ஆகி)க்கொள்ளட்டும்" என்றார்கள். நாங்கள், "எந்த வகையில் இஹ்ராமிலிருந்து விடுபட வேண்டும்?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "எல்லா வகையிலும் இஹ்ராமிலிருந்து விடுபடுங்கள்" என்றார்கள். ஆகவே, நாங்கள் மனைவியரிடம் சென்றோம் (தாம்பத்திய உறவு கொண்டோம்); (தைக்கப்பட்ட) ஆடைகளை அணிந்தோம்; நறுமணம் பூசிக்கொண்டோம். துல்ஹஜ் எட்டாவது நாள் (யவ்முத் தர்வியா) வந்தபோது, ஹஜ்ஜுக்காகத் தல்பியா கூறினோம். (ஹஜ் மற்றும் உம்ரா ஆகிய இரண்டிற்கும் சேர்த்து "இஹ்ராம்' கட்டியிருந்த) நாங்கள் ஏற்கெனவே ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே ஓடியதே எங்களுக்குப் போதுமானதாக அமைந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், எங்களில் ஏழு பேர் ஓர் ஒட்டகத்திலும், ஏழு பேர் ஒரு மாட்டிலும் கூட்டுச் சேர்ந்து (பலியிட்டுக்)கொள்ள உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2326 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டு, (துல்ஹஜ் எட்டாவது நாளில்) மினாவை நோக்கிச் செல்லும் போது (ஹஜ்ஜுக்காக) "இஹ்ராம்' கட்டி, தல்பியா சொல்லுமாறு நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். எனவே, நாங்கள் (மக்காவிற்கு அருகிலுள்ள) "அல்அப்தஹ்' எனுமிடத்தில் (ஹஜ்ஜுக்காக) "இஹ்ராம்' கட்டி, "தல்பியா' சொன்னோம்.

2327 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் (ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து (கிரான்) "இஹ்ராம்' கட்டியிருந்ததால் இரண்டுக்கும் சேர்த்து) ஒரேயொரு தடவையே தவிர, ஸ∴பா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றி (சயீ) வரவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் முஹம்மத் பின் பக்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவர்கள் ஆரம்பத்தில் சுற்றிவந்த (ஒரேயொரு தடவையே தவிர)" என்று கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

2328 அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மக்கள் சிலருடன் இருந்தபோது, ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறியதைக் கேட்டேன்:
முஹம்மத் (ஸல்) அவர்களின் தோழர்களான நாங்கள் தனியாக ஹஜ்ஜுக்காக மட்டும் "இஹ்ராம்' கட்டி "தல்பியா' சொன்னோம். நபி (ஸல்) அவர்கள் துல்ஹஜ் மாதம் நான்காவது நாள் காலையில் (ஹஜ்ஜுக்கு "இஹ்ராம்' கட்டியவர்களாக) வந்தார்கள். அப்போது இஹ்ராமிலிருந்து விடுபட்டுக் கொள்ளுமாறு எங்களுக்கு உத்தரவிட்டார்கள்: "இஹ்ராமிலிருந்து விடுபட்டு, (உங்கள்) மனைவியருடன் உடலுறவு கொள்ளுங்கள்" என்றார்கள்.
- அதாஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: ஆனால், இஹ்ராமிலிருந்து விடுபடுவதை நபி (ஸல்) அவர்கள் கட்டாயமாக்கவில்லை. மாறாக, அதை அனுமதிக்கவே செய்தார்கள். –
தொடர்ந்து ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அப்போது நாங்கள், "நமக்கும் அர∴பாவுக்குமிடையே ஐந்து நாட்களே எஞ்சியுள்ள நிலையில், நாம் நம் மனைவியருடன் உறவுகொள்ள வேண்டுமென நபி (ஸல்) அவர்கள் உத்தரவிடுகிறார்களே! நம் இனஉறுப்புகளில் இந்திரியத் துளிகள் சொட்டிக்கொண்டிருக்க, (மனைவியருடன் கூடிய பின் உடனடியாக) நாம் அர∴பாவுக்குச் செல்வதா?" என்று (வியப்புடன்) பேசிக்கொண்டோம்.
- அதாஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இதைக் கூறியபோது ஜாபிர் (ரலி) அவர்கள் தமது கையை அசைத்து சைகை செய்து காட்டியதை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
(ஜாபிர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: நாங்கள் பேசிக்கொண்டதைக் கேள்விப்பட்ட) நபி (ஸல்) அவர்கள் எங்களிடையே எழுந்து, "நான் உங்களையெல்லாம் விட அல்லாஹ்விற்கு மிகவும் அஞ்சுபவனும், மிகவும் உண்மை பேசுபவனும், அதிகமாக நன்மை புரிபவனும் ஆவேன் என்பதை நீங்கள் அறிந்தே உள்ளீர்கள். நான் என்னுடன் பலிப்பிராணியைக் கொண்டு வந்திருக்காவிட்டால்,நீங்கள் இஹ்ராமிலிருந்து விடுபடுவதைப் போன்று நானும்

இஹ்ராமிலிருந்து விடுபட்டிருப்பேன். (ஹஜ்ஜுடைய மாதத்தில் உம்ராச் செய்யலாம் என) நான் பின்னர் அறிந்ததை முன்னரே அறிந்திருந்தால், எனது பலிப்பிராணியை நான் கொண்டுவந்திருக்கமாட்டேன். எனவே, நீங்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொள்ளுங்கள்!" என்றார்கள். நாங்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டோம்; செவியுற்றோம்; கீழ்ப்படிந்தோம்.
அப்போது (யமன் நாட்டில்) ஸகாத் வசூலிக்கும் நிர்வாகப் பொறுப்பில் இருந்த அலீ (ரலி) அவர்கள் (ஹஜ்ஜுக்கு) வந்தார்கள். அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள், "நீர் எதற்காக "இஹ்ராம்' கட்டி, "தல்பியா' சொன்னீர்?" என்று கேட்டார்கள். அலீ (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் எதற்காக "இஹ்ராம்' கட்டியுள்ளார்களோ அதற்காகவே "இஹ்ராம்' கட்டியுள்ளேன்" என்றார்கள். நபி (ஸல்) அவர்கள் "நீர் இஹ்ராமிலேயே நீடித்து, (ஹஜ்ஜையும் உம்ராவையும் முடித்த பின்) குர்பானிப் பிராணியை அறுத்துப் பலியிடுவீராக!" என்று கூறினார்கள். அலீ (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்காக ஒரு குர்பானிப் பிராணியைக் கொண்டு வந்திருந்தார்கள். அப்போது சுராக்கா பின் மாலிக் பின் ஜுஅஷூம் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! (ஹஜ்ஜை உம்ராவாக மாற்றிக்கொள்ளும் இச்சலுகை) இவ்வாண்டிற்கு மட்டுமா? அல்லது என்றைக்குமா?" என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் "என்றைக்கும்தான்" என்று பதிலளித்தார்கள்.

2329 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி, "தல்பியா' சொன்னோம். நாங்கள் மக்காவிற்கு வந்ததும் எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நாங்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டு, எங்களது இஹ்ராமை உம்ராவாக மாற்றிக்கொள்ளுமாறு உத்தரவிட்டார்கள். அது எங்களுக்குச் சிரமமாகத் தோன்றியது; மனவேதனையும் அளித்தது. இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. அவர்களுக்கு வானிலிருந்து ஏதேனும் செய்தி எட்டியதா, அல்லது மக்களின் தரப்பிலிருந்து போய்ச் சேர்ந்ததா என்று எங்களுக்குத் தெரியவில்லை. இந்நிலையில் அவர்கள், "மக்களே! நீங்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொள்ளுங்கள். என்னுடன் பலிப்பிராணி இருந்திராவிட்டால் நீங்கள் செய்ததைப் போன்றே நானும் செய்திருப்பேன்" என்றார்கள். ஆகவே, நாங்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டோம்; மனைவியருடன் தாம்பத்திய உறவு கொண்டோம். (சாதாரணமாக) இஹ்ராமிலிருந்து விடுபட்டவர் செய்வதையெல்லாம் செய்தோம். துல் ஹஜ் எட்டாவது நாளானபோது,மக்காவிலிருந்து (மினாவை நோக்கிப்) புறப்படும் வேளையில் நாங்கள் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி, "தல்பியா' சொன்னோம்.

2330 அபூஷிஹாப் மூசா பின் நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் துல்ஹஜ் பிறை எட்டுக்கு நான்கு நாட்களுக்கு முன்னால் உம்ராவிற்குப் பின் ஹஜ் (தமத்துஉ) செய்ய நாடி மக்காவிற்குச் சென்றேன். அப்போது மக்கள், "(இப்படி உம்ராவிற்குப் பின் ஹஜ்ஜுத் தமத்துஉ செய்தால்) உமது ஹஜ் தற்போது மக்காவாசிகளின் ஹஜ்ஜாக மாறிவிடுகிறது (குறைந்த நன்மையே உமக்குக் கிடைக்கும்)" என்று கூறினர். நான் அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்களிடம் சென்று இது தொடர்பாக விளக்கம் கேட்டேன். அதற்கு அதாஉ (ரஹ்) அவர்கள், ஜாபிர் பின் அப்தில்லாஹ் அல்அன்சாரி (ரலி) அவர்கள் என்னிடம் (பின்வருமாறு) அறிவித்தார்கள் என்றார்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்முடன் பலிப்பிராணியைக் கொண்டுவந்த ஆண்டில் நானும் அவர்களுடன் ஹஜ்ஜுக்குச் சென்றேன். அப்போது (அவர்களுடன் வந்த) மக்கள் அனைவரும் ஹஜ்ஜுக்கு மட்டும் "இஹ்ராம்' கட்டியிருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களிடம்), "நீங்கள் இறையில்லத்தைச் சுற்றிவந்து, ஸஃபா மற்றும் மர்வா இடையே ஓடிவிட்டு,தலைமுடியைக் குறைத்து இஹ்ராமிலிருந்து விடுபட்டு (மக்காவில்) தங்கிக்கொள்ளுங்கள். துல்ஹஜ் பிறை எட்டு அன்று ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டிக்கொள்ளுங்கள். நீங்கள் இதற்கு முன்னால் (ஹஜ்ஜுக்கு எனச்) செய்துவந்த இஹ்ராமை (உம்ராவை நிறைவு செய்து ஹஜ்ஜுக்குச் செய்யும்) "தமத்துஉ' ஆக மாற்றிக் கொள்ளுங்கள்" என்றார்கள்.

அதற்குத் தோழர்கள், "நாங்கள் ஹஜ் எனக் குறிப்பிட்ட இஹ்ராமை எவ்வாறு உம்ராவாக ஆக்கிக்கொள்வது?" என்று கேட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் கட்டளையிடுவதைச் செய்யுங்கள். ஏனெனில், நான் என்னுடன் பலிப்பிராணியைக் கொண்டு வரவில்லையாயின், உங்களுக்கு நான் கட்டளையிட்டதைப் போன்றே நானும் செய்திருப்பேன். பலிப்பிராணி(யைக் கொண்டுவந்ததால் அது) உரிய இடத்தை அடைவதற்கு முன் (பலியிடும்வரை) நான் இஹ்ராமிலிருந்து விடுபடலாகாது" என்றார்கள். உடனே தோழர்கள் அவ்வாறே செய்தனர்.

2331 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டியவர்களாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மக்காவுக்கு) வந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களது இஹ்ராமை உம்ராவாக மாற்றிக்கொண்டு, இஹ்ராமிலிருந்து விடுபடுமாறு உத்தரவிட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பலிப் பிராணியிருந்ததால் தமது இஹ்ராமை உம்ராவாக ஆக்கிக்கொள்ள அவர்களால் இயலவில்லை.

## பாடம் : 18 ஹஜ்ஜுடன் உம்ராவும் செய்து பயனடைதல்.

2332 அபூநள்ரா முன்திர் பின் மாலிக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (ஹஜ் மாதத்தில் முதலில் உம்ராவிற்கு "இஹ்ராம்' கட்டி அதை நிறைவேற்றியவுடன் இஹ்ராமிலிருந்து விடுபட்டு, துல்ஹஜ் பிறை எட்டு அன்று மீண்டும் "இஹ்ராம்' கட்டி) ஹஜ்ஜுத் தமத்துஉ செய்யுமாறு உத்தரவிட்டுவந்தார்கள். அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் அதற்குத் தடை விதித்துவந்தார்கள். எனவே, நான் இதைப்பற்றி ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் கூறி (தீர்ப்புக் கோரி)னேன். அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள், சரியான ஆளிடம்தான் இந்த விஷயம் வந்துள்ளது. நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுத் தமத்துஉ செய்துள்ளோம். பின்னர் உமர் (ரலி) அவர்கள் (ஆட்சிக்கு) வந்தபோது அவர்கள், "அல்லாஹ் தன் தூதருக்கு, தான் நாடியதை தான் நாடிய ஒரு காரணத்திற்காக அனுமதித்து வந்தான். ஆனால், குர்ஆன் அதற்குரிய இடத்தில் உள்ளது. ஆகவே, அல்லாஹ்விற்காக ஹஜ்ஜையும் உம்ராவையும் அவன் உங்களுக்குக் கட்டளையிட்டுள்ளபடி முழுமையாக்குங்கள்.

இப்பெண்களின் திருமணத்தை உத்தரவாதப்படுத்துங்கள். இனி, தவணை முறையில் (குறிப்பிட்ட காலம்வரைக்கும் என்று) ஒரு பெண்ணை மணமுடித்தவர் (என்னிடம்) கொண்டு வரப்பட்டால், அவரைக் கல்லால் அடித்துக் கொல்லாமல் விடமாட்டேன்" என்று கூறினார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது. அதில், "...எனவே, உங்களது உம்ராவிலிருந்து ஹஜ்ஜைத் தனியாகப் பிரித்திடுங்கள். அதுவே உங்கள் ஹஜ்ஜையும் முழுமையாக்கும்; உங்கள் உம்ராவையும் முழுமையாக்கும்" என உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

2333 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "லப்பைக்க பில்ஹஜ்' எனத் தல்பியாச் சொன்னவர்களாக (ஹஜ்ஜுக்குச்) சென்றோம். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்காவிற்கு வந்ததும்) அந்த இஹ்ராமை உம்ராவாக மாற்றிக்கொள்ளுமாறு எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 19 நபி (ஸல்) அவர்கள் செய்த ஹஜ்.

2334 முஹம்மத் பின் அலீ பின் அல் ஹுசைன் பின் அலீ பின் அபீதாலிப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு முறை) ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் சென்றோம். ஜாபிர் (ரலி) அவர்கள் (என்னுடன் வந்த) மக்களைப் பற்றி விசாரித்துவிட்டு இறுதியில் என்னைப் பற்றி விசாரித்தார்கள். "நான் ஹுசைன் பின் அலீ (ரலி) அவர்களின் பேரன் முஹம்மத் பின் அலீ" என்று (என்னை) அறிமுகப்படுத்தினேன். உடனே ஜாபிர் (ரலி) அவர்கள், (அன்பொழுகத்) தமது கையை எனது தலையை நோக்கி நீட்டி, (பிறகு கையைக் கீழே கொண்டு சென்று) எனது அங்கியின் மேல் பொத்தானையும்,அடுத்து கீழ்ப் பொத்தானையும் கழற்றி, எனது நெஞ்சில் கையை வைத்தார்கள். –அப்போது நான் இளவயதுச் சிறுவனாக இருந்தேன்– மேலும், "என் சகோதரர் மகனே, வருக. நீர் விரும்பியதைப் பற்றி என்னிடம் கேள்" என்றார்கள். அவர்களிடம் சில விளக்கங்களைக் கேட்டேன். –அப்போது ஜாபிர் (ரலி) அவர்கள் கண்பார்வையற்றவராய் இருந்தார்கள்.– தொழுகை நேரம் வந்ததும் அவர்கள் தமது மேல் துண்டை போர்த்திக்கொண்டு எழுந்தார்கள். அவர்கள் அதைத் தமது தோள்மீது போடப் போட, அது சிறியதாக இருந்ததால் தோளில் உட்காராமல் அதன் இரு ஓரங்களும் கீழே விழுந்துகொண்டிருந்தன. அப்போது அவர்களது மேல்சட்டை அருகிலிருந்த ஒரு கொக்கியில் மாட்டப்பெற்றிருந்தது. பிறகு அவர்கள் (மேல்சட்டை அணியாமலேயே மேல்துண்டுடன்) எங்களுக்குத் தொழுவித்தார்கள்.

பிறகு அவர்களிடம் நான், "அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்த ஹஜ்ஜைப் பற்றி எனக்குச் சொல்லுங்கள்" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஒன்பது' எனத் தமது விரலால் சைகை செய்து காட்டிவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனாவிற்குச் சென்ற பின்) "ஒன்பது' ஆண்டுகள் ஹஜ் (கடமையாகததால் அதை) நிறைவேற்றாமலேயே தங்கியிருந்தார்கள். பத்தாவது ஆண்டில் மக்களிடையே "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இந்த ஆண்டில்) ஹஜ் செய்யப்போகிறார்கள்" என அறிவிப்புச் செய்யவைத்தார்கள்.
உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பின்பற்றி அவர்களைப் போன்றே தாமும் (ஹஜ்) கிரியைகளைச் செய்யும் நோக்கத்துடன் ஏராளமான மக்கள் மதீனாவிற்கு(த் திரண்டு) வந்தனர்.

பிறகு நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மதீனாவிலிருந்து) புறப்பட்டோம். "துல்ஹுலைஃபா' எனும் இடத்திற்கு நாங்கள் வந்துசேர்ந்தபோது, (அபூபக்ர் (ரலி) அவர்களின் துணைவியார்) அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்களுக்கு முஹம்மத் பின் அபீபக்ர் (ரலி) பிறந்தார். உடனே அஸ்மா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அபூபக்ர் (ரலி) அவர்களை) அனுப்பி "நான் எப்படி ("இஹ்ராம்') கட்ட வேண்டும்?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ குளித்துவிட்டு, (பிரசவப்போக்கு இருப்பதால்) ஒரு துணியால் கச்சை கட்டிக்கொண்டு, "இஹ்ராம்' கட்டிக்கொள்" என்று கூறியனுப்பினார்கள்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கிருந்த (துல்ஹுலைஃபா) பள்ளிவாசலில் தொழுதுவிட்டு, "கஸ்வா' எனும் ஒட்டகத்தில் ஏறினார்கள். (துல்ஹுலைஃபாவிற்கு அருகிலுள்ள) "அல்பைதாஉ' எனுமிடத்தில் அவர்களது ஒட்டகம் நிலைக்கு வந்து பயணத்திற்குத் தயாரானபோது நான் பார்த்தேன்; எனது பார்வையெட்டும் தூரத்திற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னாலும், வலப் பக்கத்திலும், இடப் பக்கத்திலும், பின்னாலும் (ஏராளமான) மக்கள் வாகனத்திலும் கால்நடையாகவும் வந்து குழுமியிருப்பதைக் கண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு நடுவில் இருந்தார்கள். அப்போது அவர்களுக்குக் குர்ஆன் வசனங்கள் அருளப்பெற்றன. அவற்றின் விளக்கத்தை அவர்கள் அறிவார்கள். அவர்கள் எதைச் செய்தாலும் அதை நாங்களும் அப்படியே செய்தோம்.

அவர்கள் "லப்பைக். அல்லாஹும்ம லப்பைக். லப்பைக் லா ஷரீக்க லக்க லப்பைக். இன்னல் ஹம்த வந்நிஅமத்த லக். வல்முல்க லா ஷரீக்க லக் (இதோ, உன் அழைப்பேற்று வந்துவிட்டேன் இறைவா! உன் அழைப்பேற்று வந்துவிட்டேன். உனக்கே நான் கீழ்ப்படிகி றேன். உனக்கு இணை யாருமில்லை. உனக்கே எல்லாப் புகழும். அருட்கொடையும் ஆட்சியும் உனக்கே உரியன. உனக்கு இணையாளர் எவருமில்லை)" என்று ஏகத்துவ உறுதிமொழியுடன் தல்பியாச் சொன்னார்கள். மக்கள், தாம் கூறிவருகின்ற முறையில் (சற்று கூடுதல் குறைவு வாசகங்களுடன்) தல்பியா கூறினர். ஆனால், அதில் எதையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆட்சேபிக்கவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொடர்ந்து தமது தல்பியாவையே சொல்லிக்கொண்டிருந்தார்கள்.
அப்போது நாங்கள் ஹஜ்ஜைத் தவிர வேறெதையும் எண்ணியிருக்கவில்லை. (ஹஜ் காலத்தில் செய்யும்) அந்த உம்ராவை நாங்கள் அறிந்திருக்கவுமில்லை. நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இறையில்லம் கஅபாவுக்கு வந்(து தவாஃப்

செய்)தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கஅபாவில் "ஹஜருல் அஸ்வத்' உள்ள மூலையில் தமது கையை வைத்து முத்தமிட்டார்கள். (தம் தோள்களைக் குலுக்கியவாறு) வேகமாக மூன்று முறையும், (சாதாரணமாக) நடந்தவாறு நான்கு முறையும் சுற்றிவந்தார்கள்.

பிறகு மகாமு இப்ராஹீமை முன்னோக்கிச் சென்று, "இப்ராஹீம் நின்ற இடத்தை நீங்கள் தொழுமிடமாக ஆக்கிக்கொள்ளுங்கள்" (2:125) எனும் வசனத்தை ஓதிக்காட்டினார்கள். அப்போது மகாமு இப்ராஹீம் தமக்கும் கஅபாவிற்கும் இடையே இருக்குமாறு நின்று, இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். குல் ஹுவல்லாஹு அஹத், குல் யாஅய்யுஹல் கா∴பிரூன் ஆகிய இரு அத்தியாயங்களை அவ்விரு ரக்அத்களிலும் ஓதினார்கள்.
- இவ்விரு அத்தியாயங்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தொழுகையில் ஓதினார்கள் என்றே ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்து என் தந்தை முஹம்மத் பின் அலீ பின் ஹுசைன் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என நான் அறிவேன் என்று அறிவிப்பாளர் ஜஅ∴பர் பின் முஹம்மத் பின் அலீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஹஜருல் அஸ்வத்' அமைந்துள்ள மூலைக்குத் திரும்பிச் சென்று, அதில் தமது கையை வைத்து முத்தமிட்டார்கள். பின்னர் (அருகிலிருந்த) அந்த (ஸ∴பா) வாசல் வழியாக "ஸ∴பா' மலைக் குன்றை நோக்கிப் புறப்பட்டார்கள். ஸ∴பாவை நெருங்கியதும் "ஸ∴பாவும், மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்கள்" எனும் (2:158ஆவது) வசனத்தை ஓதிக் காட்டிவிட்டு, "அல்லாஹ் ஆரம்பமாகக் குறிப்பிட்டுள்ள இடத்திலிருந்தே நானும் ஆரம்பிக்கிறேன்" என்று சொன்னார்கள். அவ்வாறே, முதலில் "ஸ∴பா' மலைக் குன்றை நோக்கிச் சென்று, அதன் மீது ஏறினார்கள். அப்போது அவர்களுக்கு இறையில்லம் கஅபா தென்பட்டது. உடனே "லாயிலாஹ இல்லல்லாஹ்' (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை), அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்) என ஓரிறை உறுதிமொழியும் தக்பீரும் சொன்னார்கள்.

மேலும், லா இலாஹ இல்லல்லாஹு, வஹ்தஹு, லா ஷரீக்க லஹு, லஹுல் முல்க்கு, வ லஹுல் ஹம்து. வ ஹுவ அலா குல்லி ஷையின் கதீர். லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு, அன்ஜஸ வஅதஹு, வ நஸர அப்தஹு. வ ஹஸமல் அஹ்ஸாப வஹ்தஹ் (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையாக எவரும் இல்லை. அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. அவனுக்கே புகழனைத்தும். அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் படைத் தவன். (அந்த) அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவன் தனது வாக்குறுதியை நிறைவேற்றித் தந்தான். தன் அடியாருக்கு உதவி செய்துவிட்டான். தன்னந்தனியாக கூட்டணிக்குலங்கள் அனைத்தையும் தோற்கடித்துவிட்டான்)"என்றும் கூறினார்கள்.
பிறகு ஸ∴பா மற்றும் மர்வாவுக்கிடையே (ஓடு பாதையில்) பிரார்த்தித்துவிட்டு, மேற்கண்டவாறு மூன்று முறை கூறினார்கள்.
பிறகு மர்வாவில் இறங்கி, பள்ளத்தாக்கின் நடுப்பகுதியில் கால் பதித்தபோது, அங்கிருந்து (தோள்களைக் குலுக்கியபடி) ஓடலானார்கள். பள்ளத்தாக்கின் நடுப்பகுதியைத் தாண்டியதும்

(சாதாரணமாக) நடக்கலானார்கள். ஸஃபாவில் செய்ததைப் போன்றே மர்வாவிலும் செய்தார்கள்.
மர்வாவில் அவர்கள் தமது இறுதிச் சுற்றை முடித்ததும், "நான் (ஹஜ்ஜுடைய) மாதத்தில் உம்ராச் செய்யலாம் எனப்) பின்னர் அறிந்துகொண்டதை முன்பே அறிந்திருந்தால், நான் பலிப்பிராணிகளை என்னுடன் கொண்டுவந்திருக்கமாட்டேன்; இதை உம்ராவாக மாற்றியிருப்பேன். எனவே, பலிப்பிராணியைத் தம்முடன் கொண்டுவராதவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டு, தமது இஹ்ராமை உம்ராவாக மாற்றிக்கொள்ளட்டும்!" என்று சொன்னார்கள்.
அப்போது சுராக்கா பின் மாலிக் பின் ஜுஅஷும் (ரலி) அவர்கள் எழுந்து(வந்து), "அல்லாஹ்வின் தூதரே! இ(ச்சலுகையான)து, இந்த ஆண்டிற்கு மட்டுமா, அல்லது என்றைக்குமா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் விரல்களில் ஒன்றை மற்றொன்றுடன் கோத்துக்கொண்டு, "ஹஜ்ஜுக்குள் உம்ரா நுழைந்து கொண்டது" என்று இரண்டு முறை கூறினார்கள். பிறகு (சுராக்கா (ரலி) அவர்களுக்கு), "இல்லை; என்றைக்கும் தான் (இச்சலுகை); என்றைக்கும் தான் (இச்சலுகை)" என்று விடையளித்தார்கள்.

(அந்த ஹஜ்ஜின்போது) அலீ (ரலி) அவர்கள் யமன் நாட்டிலிருந்து நபி (ஸல்) அவர்களுக்காகக் குர்பானி ஒட்டகங்களுடன் வந்தார்கள். அப்போது (அலீயின் துணைவியார்) ஃபாத்திமா (ரலி) அவர்கள், சாயமிடப்பட்ட ஆடையணிந்து, கண்களுக்கு அஞ்சனம் தீட்டி இஹ்ராமிலிருந்து விடுபட்டிருப்பவர்களில் ஒருவராகக் காட்சியளித்தார்கள். அதை அலீ (ரலி) அவர்கள் ஆட்சேபித்தார்கள். அப்போது ஃபாத்திமா (ரலி) அவர்கள், "என் தந்தை (நபி) அவர்கள்தாம் இப்படிச் செய்யுமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள்" என்றார்கள்.
- அலீ (ரலி) அவர்கள் இராக்கிலிருந்தபோது (இதைப் பின்வருமாறு) குறிப்பிடுவார்கள்: நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஃபாத்திமா செய்தது குறித்துப் புகார் செய்வதற்காகவும், ஃபாத்திமா கூறியபடி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்தாம் அவ்வாறு செய்யச் சொன்னார்களா என்று கேட்டறிவதற்காகவும் சென்றேன். ஃபாத்திமாமீது ஆட்சேபம் செய்ததை,அவர்களிடம் தெரிவித்தேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எனது குற்றச்சாட்டைக் கேட்டுவிட்டு), "அவர் (ஃபாத்திமா) சொன்னது உண்மையே; அவர் சொன்னது உண்மையே" என்றார்கள்.
பிறகு, "நீர் இஹ்ராம் கட்டி, ஹஜ் செய்ய முடிவு செய்தபோது என்ன (தல்பியா) சொன்னீர்?" என்று கேட்டார்கள். அதற்கு அலீ (ரலி) அவர்கள், "இறைவா! உன் தூதர் எதற்காக "இஹ்ராம்' கட்டியுள்ளார்களோ அதற்காகவே நானும் "இஹ்ராம்' கட்டினேன்"என்று (தல்பியா) சொன்னேன் என்றார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "என்னுடன் பலிப்பிராணிகள் உள்ளன. எனவே, ("என்னைப் போன்றே' எனக்கூறி நீரும் இஹ்ராம் கட்டியுள்ளதால்) நீர் இஹ்ராமிலிருந்து விடுபட வேண்டாம்"என்றார்கள்.–
தொடர்ந்து முஹம்மத் பின் அலீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

அலீ (ரலி) அவர்கள் யமனிலிருந்து கொண்டுவந்த பலிப்பிராணிகளையும் நபி (ஸல்) அவர்கள் (மதீனாவிலிருந்து) கொண்டுவந்த பலிப் பிராணிகளையும் சேர்த்து மொத்தம் நூறு பலிப் பிராணிகள் சேர்ந்தன.
பிறகு மக்கள் அனைவரும் இஹ்ராமிலிருந்து விடுபட்டு, தலைமுடியைக் குறைத்துக் கொண்டனர்; நபி (ஸல்) அவர்களையும், தம்முடன் பலிப்பிராணிகளைக் கொண்டுவந்திருந்த மக்களையும் தவிர! துல்ஹஜ் எட்டாவது நாள் வந்தபோது, மக்கள் மினாவை நோக்கிச் சென்றனர். அப்போது ஹஜ்ஜுக்காக (இஹ்ராம் கட்டி) "தல்பியா' கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வாகனத்தில் ஏறிச்சென்று (மினாவில்) லுஹ்ர், அஸ்ர், மஃக்ரிப், இஷா, ஃபஜ்ர் ஆகிய (ஐவேளைத்) தொழுகைகளைத் தொழுதார்கள். ஃபஜ்ர் தொழுதுவிட்டுச் சூரியன் உதயமாகும் வரை சிறிது நேரம் அங்கேயே தங்கினார்கள். பிறகு (அரஃபா அருகிலுள்ள) "நமிரா' எனுமிடத்தில் தமக்காக முடியினாலான கூடாரம் ஒன்று அமைக்குமாறு உத்தரவிட்டார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள். அவர்கள் (முஸ்தலிஃபாவிலுள்ள) "மஷ்அருல் ஹராம்' எனும் மேட்டுக்கு அருகில் தங்குவார்கள் எனக் குறைஷியர் பெரிதும் நம்பிக்கொண்டிருந்தனர். அறியாமைக் காலத்தில் குறைஷியர் அங்கு தங்குவது வழக்கம். ஆனால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைக் கடந்து அரஃபாவிற்குச் சென்றுவிட்டார்கள். அங்கு "நமிரா'வில் தமக்காக அமைக்கப்பெற்றிருந்த கூடாரத்தைக் கண்டு அங்கு இறங்கித் தங்கினார்கள்.

சூரியன் உச்சி சாய்ந்ததும் "கஸ்வா' எனும் தமது ஒட்டகத்தில் (சேணம் பூட்டுமாறு) உத்தரவிட்டார்கள். சேணம் பூட்டப்பெற்றதும் ("உரனா') பள்ளத்தாக்கின் மத்திய பகுதிக்கு வந்து மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள்:
"உங்களது புனிதமிக்க இந்நகரத்தில் உங்களது புனிதமிக்க இம்மாதத்தில் இன்றைய தினம் எந்த அளவு புனிதமானதோ அந்த அளவிற்கு உங்கள் உயிர்களும் உங்கள் உடைமைகளும் உங்களுக்குப் புனிதமானவை ஆகும். அறிக! அறியாமைக் காலத்தின் அனைத்து விவகாரங்களும் என் பாதங்களுக்குக் கீழே புதைக்கப்பட்டவை ஆகும். அறியாமைக் காலத்தில் நிகழ்ந்துவிட்ட உயிர்க்கொலைகளுக்கான பழிவாங்குதல்கள் அனைத்தும் (என் பாதங்களுக்குக் கீழே) புதைக்கப்பட்டவை ஆகும். (அவற்றை நான் தள்ளுபடி செய்கிறேன்.) முதற்கட்டமாக, நம்மிடையே நடைபெற்ற கொலைகளில் ரபீஆ பின் அல்ஹாரிஸின் மகனது கொலைக்கான பழிவாங்கலை நான் தள்ளுபடி செய்கிறேன். அவன் பனூ சஅத் குலத்தாரிடையே பால்குடிப் பாலகனாக இருந்துவந்தான். அவனை ஹுதைல் குலத்தார் கொன்றுவிட்டனர். அறியாமைக் காலத்தில் இருந்த வட்டியும் என் பாதங்களுக்குக் கீழே புதைக்கப்படுகிறது. (அவற்றையும் நான் தள்ளுபடி செய்கிறேன்.) நம்மவர் கொடுத்திருந்த வட்டிகளில் முதற்கட்டமாக (என் பெரிய தந்தை) அப்பாஸ் பின் அப்தில் முத்தலிபிற்கு வரவேண்டிய வட்டியை நான் தள்ளுபடி செய்கிறேன். அதில் (அசலைத் தவிர) கூடுதலான தொகை அனைத்தும் தள்ளுபடி செய்யப்படுகிறது. பெண்கள் விஷயத்தில் அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள். அல்லாஹ்வின் அடைக்கலத்தால் அவர்களை நீங்கள் (கைப்) பிடித்துள்ளீர்கள். அல்லாஹ்வின் கட்டளையால் அவர்களது கற்பை நீங்கள் அனுமதிக்கப் பெற்றதாக ஆக்கியுள்ளீர்கள். அவர்களிடம் உங்களுக்குள்ள உரிமை என்னவென்றால், நீங்கள்

வெறுக்கும் எவரையும் உங்கள் விரிப்பில் (அதாவது உங்களது வீட்டில்) அவர்கள் அனுமதிக்காமல் இருப்பதாகும். அவ்வாறு அவர்கள் அனுமதித்தால் காயம் ஏற்படாதவகையில் அவர்களை நீங்கள் அடிக்கலாம். உங்களிடம் அவர்களுக்குள்ள உரிமை யாதெனில்,முறையான உணவும் உடையும் அவர்களுக்கு நீங்கள் அளிப்பதாகும்.

உங்களிடையே நான் (மிக முக்கியமான) ஒன்றை விட்டுச் செல்கிறேன். அதை நீங்கள் பலமாகப் பற்றிக்கொண்டால் நீங்கள் ஒருபோதும் வழிதவறவேமாட்டீர்கள். அது அல்லாஹ்வின் வேதமாகும்" என்று கூறிவிட்டு, "(மறுமை நாளில்) உங்களிடம் என்னைப் பற்றி விசாரிக்கப்படும்போது நீங்கள் என்ன சொல்வீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "நீங்கள் (இறைச்செய்திகள் அனைத்தையும் எங்களிடம்) தெரிவித்துவிட்டீர்கள்; (உங்களது நபித்துவப் பொறுப்பை) நீங்கள் நிறைவேற்றி விட்டீர்கள்; (சமுதாயத்தார்மீது) அக்கறையுடன் நடந்துகொண்டீர்கள் என நாங்கள் சாட்சியமளிப்போம்" என்று கூறினர். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது சுட்டுவிரலை வானை நோக்கி உயர்த்தி சைகை செய்துவிட்டுப் பிறகு அதை மக்களை நோக்கித் தாழ்த்தி, "இறைவா! இதற்கு நீயே சாட்சி" என்று மூன்று முறை கூறினார்கள்.
பிறகு தொழுகை அறிவிப்பும் இகாமத்தும் சொல்லச்செய்து, லுஹ்ர் தொழுகை தொழுவித்தார்கள். பிறகு இகாமத் மட்டும் சொல்லச்செய்து, அஸ்ர் தொழுகையும் தொழுவித்தார்கள். அவ்விரண்டுக்குமிடையே (கூடுதலாக) வேறெதுவும் அவர்கள் தொழவில்லை.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது ஒட்டகத்தில் ஏறி, அர·பாவிற்கு வந்து, அங்கிருந்த ("ஜபலுர் ரஹ்மத்' மலை அடிவாரத்தில்) பாறைகள்மீது தமது "கஸ்வா' எனும் ஒட்டகத்தை நிறுத்தினார்கள். கால்நடையாக நடந்துவந்த மக்கள் திரளை தம் முன்னிறுத்தி, கிப்லாவை முன்னோக்கி, சூரியன் மறையத் தொடங்கும்வரை அப்படியே வாகனத்தில் அமர்ந்திருந்தார்கள்.
சூரியனின் பொன்னிறம் சற்று மறைந்து சூரியனின் தலைப்பகுதி மறைந்துவிட்ட பிறகு உசாமா (ரலி) அவர்களைத் தமக்குப் பின்னால் (தமது வாகனத்தில்) அமர்த்திக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டார்கள். "கஸ்வா' எனும் தமது ஒட்டகத்தின் கடிவாளத்தை அவர்கள் இறுக்க, அதன் தலை, (பயணி களைப்படையும்போது) கால் வைக்கும் வளையத்தில் பட்டது. அப்போது தமது வலக் கையால் சைகை செய்து, "மக்களே! நிதானம்! நிதானம்! (மெதுவாகச் செல்லுங்கள்)" என்றார்கள். ஒவ்வொரு மணல் மேட்டையும் அடையும் போது, ஒட்டகம் மேட்டில் ஏறும்வரை கடிவாளத்தைச் சற்றுத் தளர்த்தினார்கள். இவ்வாறு முஸ்தலி·பாவிற்கு வந்ததும் அங்கு ஒரேயொரு "தொழுகை அறிவிப்பு'ம் இரு இகாமத்களும் சொல்லி ம·க்ரிபையும் இஷாவையும் (சேர்த்துத்) தொழுவித்தார்கள். அவ்விரண்டுக்குமிடையே (கூடுதலாக) வேறெதுவும் தொழவில்லை.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒருக்களித்துப் படுத்திருந்துவிட்டு, ·பஜ்ர் உதயமானதும் தொழுகை அறிவிப்பும் இகாமத்தும் சொல்லி ·பஜ்ர் தொழுவித்தார்கள். அப்போது அதிகாலை வெளிச்சம் நன்கு புலப்பட்டது. பிறகு "கஸ்வா' ஒட்டகத்தில்

ஏறி, மஷ்அருல் ஹராமிற்கு ("குஸஹ்' மலைக்கு) வந்து, கிப்லாவை முன்னோக்கி இறைவனிடம் பிரார்த்தித்தார்கள். அல்லாஹ் மிகப்பெரியவன் என்று (தக்பீரு)ம், லா இலாஹ இல்லல்லாஹ் (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை) என்று (தஹ்லீலு)ம், "அவன் தனித்தவன்' என்று (ஓரிறை உறுதிமொழியு)ம் கூறினார்கள். நன்கு விடியும்வரை அங்கேயே தங்கியிருந்தார்கள்.

பிறகு சூரியன் உதயமாவதற்கு முன் அங்கிருந்து புறப்பட்டார்கள். அப்போது ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்களைத் தமக்குப் பின்னால் (வாகனத்தில்) அமர்த்திக்கொண்டு சென்றார்கள். –ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் அழகிய முடியும் தோற்றமும் வெள்ளை நிறமும் உடைய வசீகரமான ஆண் மகனாக இருந்தார்கள்.– அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டபோது,அவர்களைக் கடந்து பெண்கள் சிலர் சென்றனர். ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் அப்பெண்களைக் கூர்ந்து பார்க்கலானார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபள்ல் (ரலி) அவர்களின் முகத்தின் மீது தமது கையை வைத்(து மறைத்)தார்கள். உடனே ஃபள்ல் (ரலி) அவர்கள் தமது முகத்தை வேறு பக்கம் திருப்பி (அப்பெண்களை)ப் பார்க்கலானார்கள். மீண்டும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கையை மறு பக்கமும் கொண்டுசென்று, ஃபள்ல் (ரலி) அவர்களின் முகத்தின் மீது வைத்து, அப்பெண்களைப் பார்க்கவிடாமல் திருப்பினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (முஸ்தலிஃபாவிற்கும் மினாவிற்கும் இடை யிலுள்ள) "பத்னு முஹஸ்ஸிர்' எனும் இடத்துக்கு வந்தபோது, தமது ஒட்டகத்தைச் சிறிது விரைவாகச் செலுத்தினார்கள். பின்னர் "ஜம்ரத்துல் அகபா' செல்லும் சாலையின் நடுவில் பயணம் செய்து, அந்த மரத்திற்கு அருகிலுள்ள "ஜம்ரத்துல் அகபா'விற்குச் சென்று, சுண்டி எறியும் அளவிற்கு ஏழு சிறு கற்களை ஜம்ராவின் மீது எறிந்தார்கள். ஒவ்வொரு கல்லையும் எறியும்போது தக்பீர் கூறினார்கள். அந்தப் பள்ளத்தாக்கின் நடுவே நின்று கற்களை எறிந்தார்கள்.

பின்னர் மினாவிலுள்ள பலியிடும் இடத்திற்குச் சென்று, அறுபத்து மூன்று ஒட்டகங்களைத் தமது கையால் அறுத்துப் பலியிட்டார்கள். பிறகு எஞ்சிய (முப்பத்தேழு) ஒட்டகங்களை அலீ (ரலி) அவர்களிடம் கொடுத்(துப் பலியிடச்செய்)தார்கள். தமது பலி ஒட்டகங்களிலும் அலீ (ரலி) அவர்களை நபியவர்கள் கூட்டாக்கிக்கொண்டார்கள்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட, அறுக்கப்பட்ட ஒவ்வோர் ஒட்டகத்திலிருந்தும் ஓர் இறைச்சித் துண்டு கொண்டுவரப்பட்டு, ஒரு பாத்திரத்திலிட்டுச் சமைக்கப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அலீ (ரலி) அவர்களும் அதன் இறைச்சியை உண்டார்கள்; குழம்பைப் பருகினார்கள்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாகனத்தில் ஏறி, ("தவாஃபுல் இஃபாளா' செய்வதற்காக) இறையில்லம் கஅபாவை நோக்கிச் சென்றார்கள். மக்காவிலேயே லுஹ்ர் தொழுதுவிட்டு, அப்துல் முத்தலிப் மக்களிடம் சென்றார்கள். அப்போது அம்மக்கள் "ஸம்ஸம்' கிணற்றிலிருந்து நீரிறைத்து விநியோகித்துக்கொண்டிருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அப்துல் முத்தலிபின் மக்களே! நீரிறைத்து விநியோகியுங்கள். "ஸம்ஸம்'

கிணற்றில் நீரிறை(த்து விநியோகிக்கும் பொறு)ப்பில் உங்களை மக்கள் மிகைத்து விடுவார்கள் என்று (அச்சம்) இல்லாவிட்டால், உங்களுடன் நானும் நீரிறைப்பேன்" என்று சொன்னார்கள்.அப்போது அவர்கள் ஒரு வாளித் தண்ணீரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொடுக்க, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிலிருந்து சிறிது நீரைப் பருகினார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2335 மேற்கண்ட ஹதீஸ் முஹம்மத் பின் அலீ பின் அல்ஹுசைன் பின் அலீ (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் சென்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஹஜ்ஜைப் பற்றிக் கேட்டேன்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. மேலும் அதில், "(அறியாமைக் காலத்தில்) அபூ சய்யாரா என்பவர் தமது சேணம் பூட்டப்படாத கழுதையில் அரபியரை (முஸ்தலி∴பாவிலிருந்து மினாவிற்கு) அழைத்துச் செல்பவராக இருந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மஷ் அருல் ஹராமை'த் தாண்டிச் சென்றபோது, அந்த இடத்தோடு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பயணத்தைச் சுருக்கிக்கொள்வார்கள்; அதுதான் அவர்கள் தங்கும் இடமாக அமையும் என்பதில் அவர்கள் உறுதியோடு இருந்தனர். ஆனால்,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அ(ங்கு தங்குவ)தற்கு முன்வரவில்லை. நேராக அர∴பா நோக்கிச் சென்று (அதன் அருகிலுள்ள "நமிரா'வில்தான்) தங்கினார்கள்" என்று அதிகப்படியாகவும் இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 20 "அர∴பா' பெருவெளி முழுவதும் தங்குமிடம்தான் என்பது தொடர்பாக வந்துள்ளவை.

2336 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் (மினாவில் மஸ்ஜிதுல் கை∴ப் அருகிலுள்ள) இவ்விடத்தில் அறுத்துப் பலியிட்டேன். ஆனால், மினா முழுவதும் பலியிடும் இடமாகும். எனவே, (மினாவில்) நீங்கள் தங்கியிருக்கும் இடங்களிலேயே பலியிட்டுக்கொள்ளுங்கள். நான் (அர∴பா நடுவிலுள்ள "ஜபலுர் ரஹ்மத்' மலைக்குக் கீழே) தங்கினேன். ஆனால், அர∴பா முழுவதும் தங்குமிடமாகும். நான் (முஸ்தலி∴பாவில் "மஷ்அருல் ஹராம்' குன்றின் அருகில்) தங்கினேன். ஆனால், முஸ்தலி∴பா முழுவதும் தங்குமிடமாகும்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2337 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா(விலுள்ள கஅபா)விற்கு வந்ததும் "ஹஜருல் அஸ்வது'க்குச் சென்று அதைத் தொட்டு முத்தமிட்டார்கள். பின்னர் வலப் புறமாக நடந்துசென்று (கஅபாவைச்) சுற்றலானார்கள். மூன்று சுற்றுகள் (தோள்களைக் குலுக்கியவாறு) வேகமாகவும் நான்கு சுற்றுகள் சாதாரணமாக நடந்தும் சுற்றினார்கள்.

**பாடம் : 21 அர.ஃபா பெருவெளியில் தங்குவதும், "பின்பு மக்கள் திரும்புகிற இடத்திலிருந்து நீங்களும் திரும்புங்கள்' (2:199) எனும் இறைவசனத் தொடரும்.**

2338 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அறியாமைக் காலத்தில் ஹஜ்ஜின்போது) குறைஷியரும் அவர்களுடைய சமயச் சார்புடையோரும் (தங்களை உயர்வாகக் கருதிக்கொண்டு) முஸ்தலி.ஃபாவிலேயே தங்கிவிடுவார்கள் ("ஹரம்' புனித எல்லையைவிட்டு வெளியேறமாட்டார்கள்). அவர்கள் "கடினமான (சமயப் பற்றுடைய)வர்கள்' (ஹும்ஸ்) எனப் பெயரிடப்பட்டுவந்தனர். மற்ற எல்லா அரபியரும் "அர.ஃபா'பெருவெளியில் தங்குவார்கள். இஸ்லாம் வந்தபோது வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், (குறைஷிக் குலத்தவரான) தன் தூதருக்கு (துல்ஹஜ் ஒன்பதாம் நாளில்) "அர.ஃபாத்' சென்று, அங்கே தங்கியிருந்துவிட்டு, அங்கிருந்தே புறப்பட வேண்டும் எனக் கட்டளையிட்டான். அக்கட்டளையே "பின்பு மக்கள் திரும்புகிற இடத்திலிருந்து நீங்களும் திரும்புங்கள்' (2:199) எனும் இறைவசனமாகும்.

2339 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(அறியாமைக் காலத்தில் ஹஜ்ஜின்போது) அரபுகள் இறையில்லம் கஅபாவை நிர்வாணமாகவே சுற்றிவருவார்கள். "ஹும்ஸ்' (கடினமான சமயப் பற்றுடையவர்)களைத் தவிர! "ஹும்ஸ்' என்போர் குறைஷியரும் அவர்கள் பெற்றெடுத்த மக்களும் ஆவர். அரபுகள் நிர்வாணமாகவே (கஅபாவைச்) சுற்றிவருவார்கள். ஹும்ஸ்கள் ஏதேனும் ஆடை வழங்கினால் தவிர! ஆண்கள் ஆண்களுக்கும், பெண்கள் பெண்களுக்கும் ஆடை வழங்குவதுண்டு. கடினமான சமயப்பற்றுடைய ஹும்ஸ்கள் (துல்ஹஜ் ஒன்பதாம் நாளில்) முஸ்தலி.ஃபாவிலிருந்து வெளியேறமாட்டார்கள். மற்ற அரபுகள் அனைவரும் அர.ஃபாத் சென்றடை(ந்து அங்கு தங்கு)வார்கள்.
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஹும்ஸ்களைப் பற்றியே வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் "பின்பு மக்கள் திரும்புகிற இடத்திலிருந்து நீங்களும் திரும்புங்கள்" என்று கூறுகின்றான். (அரபு) மக்கள் அனைவரும் அர.ஃபாவிலிருந்தே திரும்பிச்செல்வார்கள். ஹும்ஸ்கள் மட்டும் முஸ்தலி.ஃபாவிலிருந்து திரும்பிச்செல்வார்கள். அவர்கள், "நாங்கள் "ஹரம்' (புனித) எல்லையிலிருந்தே திரும்பிச்செல்வோம்" என்று கூறுவார்கள். பின்னர் இந்த வசனம் (2:199) அருளப் பெற்றதும் அர.ஃபாத்திலிருந்தே அவர்களும் திரும்பிச்சென்றனர்.

2340 ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (இஸ்லாத்தை ஏற்பதற்கு முன் ஒரு முறை) எனது ஒட்டகம் ஒன்றைத் தொலைத்து விட்டேன். அர.ஃபா நாளன்று நான் எனது ஒட்டகத்தைத் தேடிக்கொண்டு சென்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அர.ஃபா' பெருவெளியில் மக்களுடன் தங்கியிருப்பதைக் கண்டேன். அப்போது நான், "அல்லாஹ்வின் மீதாணையாக! இவர் (முஸ்தலி.ஃபாவில் தங்கும்) "ஹும்ஸ்'களில் ஒருவராயிற்றே! இவருக்கு இங்கு என்ன வேலை?" என்று சொல்லிக் கொண்டேன். குறைஷியர் கடினமான சமயப் பற்றுடையவர் (ஹும்ஸ்)களாகவே கருதப்பட்டனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 22 (மற்றொருவரின் இஹ்ராமுடன்) சம்பந்தப்படுத்தி இஹ்ராம் கட்டுவது செல்லும்.**

2341 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (யமன் நாட்டிலிருந்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தபோது, அவர்கள் (துல்ஹுலைஃபாவில்) "அல்பத்ஹா' பள்ளத்தாக்கில் தங்கியிருந்தார்கள். அவர்கள் என்னிடம், "ஹஜ் செய்வதற்காகவா வந்துள்ளீர்?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். "நீர் எதற்காக "இஹ்ராம்' கட்டியுள்ளீர்?" என்று கேட்டார்கள். நான், "நபி (ஸல்) அவர்கள் எதற்காக "இஹ்ராம்' கட்டியுள்ளார்களோ அதற்காகவே நானும் "இஹ்ராம்' கட்டியுள்ளேன்" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நன்றே செய்தீர். நீர் (சென்று) இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவாஃப் செய்து), ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றி (தொங்கோட்டம் ஓடி)விட்டு, இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொள்க" என்றார்கள்.
அவ்வாறே நான் (சென்று) இறையில்லத்தையும் ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையேயும் சுற்றி விட்டுப் பின்னர் பனூ கைஸ் குலத்தைச் சேர்ந்த (என் நெருங்கிய உறவினரான) ஒரு பெண்ணிடம் சென்றேன். அவர் எனது தலையில் பேன் பார்த்து விட்டார். பின்னர் (துல்ஹஜ் எட்டாவது நாளில்) நான் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி தல்பியாச் சொன்னேன். இவ்வாறே (ஹஜ்ஜுக்காகச் செய்த இஹ்ராமை உம்ராவாக மாற்றிக்கொள்ளலாம் என்றே) நான் மக்களுக்குத் தீர்ப்பும் வழங்கிவந்தேன். உமர் (ரலி) அவர்களின் ஆட்சியின்போது என்னிடம் ஒரு மனிதர், "அபூமூசா!' அல்லது "அப்துல்லாஹ் பின் கைஸ்!' உங்களது ஒரு தீர்ப்பை நிறுத்திவையுங்கள். ஏனெனில், உங்களுக்குப் பின்னர் இறைநம்பிக்கையாளர்களின் தலைவர் (கலீஃபா) ஹஜ்ஜின் கிரியைகளில் செய்துள்ள மாற்றத்தை நீங்கள் அறியமாட்டீர்கள்" என்று கூறினார். அதன் பின்னர் நான், "மக்களே! நாம் யாருக்கேனும் மார்க்கத் தீர்ப்பு ஏதேனும் வழங்கியிருந்தால் (அதை உடனடியாக செயல்படுத்திவிடாமல்) அவர் எதிர்பார்த்திருக்கட்டும். ஏனெனில், இறை நம்பிக்கையாளர்களின் தலைவர் உங்களிடம் வருவார். அவரையே நீங்கள் பின்பற்றுங்கள்" என்று கூறினேன். உமர் (ரலி) அவர்கள் வந்ததும் அவர்களிடம் நான் நடந்ததைச் சொன்னேன். அதற்கு உமர் (ரலி) அவர்கள் "நாம் அல்லாஹ்வின் வேதப்படி செயலாற்றுவதெனில், அல்லாஹ்வின் வேதம் ஹஜ்ஜையும் உம்ராவையும் முழுமையாக்கும்படி கட்டளையிடுகிறது. நாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வழிமுறைப்படி செயலாற்றுவதெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பலிப்பிராணி தனது இடத்தை அடையாத வரை (அதாவது குர்பானி கொடுக்காத வரை) இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2342 அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்பத்ஹா' பள்ளத்தாக்கில் தங்கியிருந்தபோது அவர்களிடம் நான் வந்தேன். அவர்கள் என்னிடம், "நீர் எதற்காக "இஹ்ராம்' கட்டியுள்ளீர்?" என்று கேட்டார்கள். நான், "நபி (ஸல்) அவர்கள் எதற்காக "இஹ்ராம்'கட்டியுள்ளார்களோ அதற்காகவே "இஹ்ராம்' கட்டியுள்ளேன்" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் உம்முடன் பலிப்பிராணியைக் கொண்டுவந்துள்ளீரா?" என்று கேட்டார்கள். நான்

"இல்லை' என்றேன். "அவ்வாறாயின் நீர் இறையில்லத்தையும் ஸஃபா மற்றும் மர்வாவையும் சுற்றிவந்துவிட்டுப் பின்னர் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொள்வீராக"என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அவ்வாறே நான் இறையில்லத்தையும் ஸஃபா மற்றும் மர்வாவையும் சுற்றி விட்டுப் பின்னர் என் கூட்டத்தைச் சேர்ந்த (நெருங்கிய உறவுக்காரப்) பெண் ஒருவரிடம் சென்றேன். அவர் எனக்குத் தலை கழுவி, தலை வாரிவிட்டார்.

நான் இவ்வாறே (ஹஜ்ஜுக்காகச் செய்த இஹ்ராமை உம்ராவாக மாற்றிக்கொள்ளலாம் என்றே) அபூபக்ர் (ரலி) அவர்களது ஆட்சிக் காலத்திலும், உமர் (ரலி) அவர்களது ஆட்சி யி(ன் ஆரம்பக் காலத்தி)லும் மக்களுக்குத் தீர்ப்பளித்துவந்தேன். நான் ஹஜ் காலத்தில் ஓரிடத்தில் நின்றுகொண்டிருந்தபோது என்னிடம் ஒரு மனிதர் வந்து, "இறைநம்பிக்கையாளர்களின் தலைவர் (உமர்) ஹஜ்ஜின் கிரியைகளில் ஏற்படுத்திய புதிய நடைமுறையை நீங்கள் அறியமாட்டீர்கள்" என்று சொன்னார். உடனே நான் "மக்களே! நாம் யாருக்கேனும் ஏதேனும் மார்க்கத் தீர்ப்பு அளித்திருந்தால் அவர்கள் (அதைச் செயல்படுத்திவிடாமல்) நிறுத்தி வைக்கட்டும்! இதோ! இறைநம்பிக்கையாளர்களின் தலைவர் உங்களிடம் வரப்போகிறார். அவரையே நீங்கள் பின்பற்றுங்கள்" என்று கூறினேன். உமர் (ரலி) அவர்கள் வந்தபோது அவர்களிடம் நான், "இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! ஹஜ்ஜின் கிரியைகளில் நீங்கள் ஏற்படுத்திய இந்த நடைமுறை என்ன?" என்று கேட்டேன். அதற்கு உமர் (ரலி) அவர்கள், "நாம் அல்லாஹ்வின் வேதப்படி செயல்படுவதெனில், வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் "அல்லாஹ்விற்காக ஹஜ்ஜையும் உம்ராவையும் முழுமையாக்குங்கள்' (2:196) என்று கூறுகின்றான். நாம் நம் நபி (ஸல்) அவர்களின் வழிமுறைப்படி செயல்படுவதெனில், நபி (ஸல்) அவர்கள் குர்பானிப் பிராணிகளைப் பலியிடாத வரை இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை" என்று கூறினார்கள்.

2343 அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு பணி நிமித்தம்) என்னை யமன் நாட்டுக்கு அனுப்பியிருந்தார்கள். நான் அவர்கள் ஹஜ் செய்த ஆண்டில் அவர்களிடம் சரியாக வந்து சேர்ந்தேன். அப்போது என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அபூமூசா! நீர் "இஹ்ராம்' கட்டியபோது எவ்வாறு (தல்பியா) சொன்னீர்?" என்று கேட்டார்கள். நான், "நபி (ஸல்) அவர்கள் எதற்காக "இஹ்ராம்' கட்டியுள்ளார்களோ அதற்காகவே நான் "இஹ்ராம்' கட்டுகிறேன்" என்று கூறினேன் என்றேன். அதற்கு அவர்கள், "நீர் (உம்முடன்) ஏதேனும் பலிப் பிராணி கொண்டுவந்துள்ளீரா?" என்று கேட்டார்கள். நான் "இல்லை' என்றேன். "அவ்வாறாயின், நீர் சென்று இறையில்லத்தையும் ஸஃபா மற்றும் மர்வாவையும் சுற்றி வந்துவிட்டுப் பின்னர் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொள்க" என்றார்கள். மற்ற விவரங்கள் மேற்கண்ட இரு ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2344 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

"(ஹஜ் பருவத்தில் உம்ராவிற்கு இஹ்ராம் கட்டி, அதை நிறைவேற்றிவிட்டுப் பிறகு துல்ஹஜ் எட்டாவது நாள் ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டிப் பயனடையும் முறையான)

"தமத்துஉ' செல்லும்" என நான் மார்க்கத் தீர்ப்பு வழங்கிவந்தேன். இந்நிலையில் என்னிடம் ஒரு மனிதர் (வந்து), "நீங்கள் உங்களது தீர்ப்பொன்றை நிறுத்திவையுங்கள். இறைநம்பிக்கையாளர்களின் தலைவர் (உமர் -ரலி) அவர்கள் ஹஜ்ஜின் கிரியைகள் விஷயத்தில் புதிதாக ஏற்படுத்தியுள்ளதை நீங்கள் அறியமாட்டீர்கள்" என்று கூறினார். நான் பின்னால் உமர் (ரலி) அவர்களைச் சந்தித்தபோது, அதைப் பற்றிக் கேட்டேன். அதற்கு உமர் (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் ஹஜ் பருவத்தில் உம்ராச் செய்துள்ளனர் என நான் அறிந்துள்ளேன். ஆயினும்,ஹாஜிகள் தம் துணைவியருடன் (அரஃபாவில் உள்ள) "அராக்' பகுதியில் தாம்பத்திய உறவில் ஈடுபட்டு (குளித்து)விட்டு, தம் தலையிலிருந்து நீர் சொட்டிக் கொண்டிருக்க (அரஃபா நோக்கிச்) செல்வதை நான் வெறுத்தேன் (ஆகவேதான், ஹஜ் பருவத்தில் உம்ராச் செய்ய வேண்டாம் என நான் ஆணையிட்டேன்)" என்றார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 23 "தமத்துஉ' முறை ஹஜ் செல்லும்.**

2345 அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் (ரலி) அவர்கள் "தமத்துஉ' செய்ய வேண்டாம் எனத் தடை விதித்துவந்தார்கள். (இதற்கு மாறாக) அலீ (ரலி) அவர்கள் "தமத்துஉ' செய்யுமாறு உத்தரவிட்டுவந்தார்கள். இதையொட்டி உஸ்மான் (ரலி) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம் ஏதோ சொன்னார்கள். பின்னர் அலீ (ரலி) அவர்கள், "நாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "தமத்துஉ' செய்துள்ளோம் என்பதை நீங்கள் அறிவீர்கள் (தாமே!)" என்றார்கள். அதற்கு உஸ்மான் (ரலி) அவர்கள், "ஆம்; ஆயினும் அப்போது நாம் அஞ்சியவர்களாகத்தாமே இருந்தோம்!" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2346 சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(மக்கா செல்லும் வழியில்) "உஸ்ஃபான்' எனுமிடத்தில் அலீ (ரலி) அவர்களும் உஸ்மான் (ரலி) அவர்களும் சந்தித்துக்கொண்டனர். உஸ்மான் (ரலி) அவர்கள் "தமத்துஉ' செய்வதற்கு, அல்லது (ஹஜ் பருவத்தில்) உம்ராச் செய்வதற்குத் தடை விதித்துவந்தார்கள். எனவே, அவர்களிடம் அலீ (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்த ஒரு செயலில் நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்? அதற்கு நீங்கள் தடை விதிக்கிறீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு உஸ்மான் (ரலி) அவர்கள், "(இந்த முடிவில்) நீங்கள் எம்மை விட்டுவிடுங்கள்!" என்று கூற, அதற்கு அலீ (ரலி) அவர்கள் "என்னால் உங்களை விட்டுவிட முடியாது" என்று சொன்னார்கள். தமது நிலையில் உஸ்மான் (ரலி) அவர்கள் (உறுதியாக) இருப்பதைக் கண்ட அலீ (ரலி) அவர்கள் ஹஜ்,உம்ரா ஆகிய இரண்டிற்கும் (கிரான்) சேர்த்து (இஹ்ராம் கட்டி) தல்பியாச் சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2347 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"தமத்துஉ' முறையில் ஹஜ் செய்வதானது, முஹம்மத் (ஸல்) அவர்களின் தோழர்களுக்கு மட்டுமே உரிய சலுகையாக இருந்தது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2348 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அது -அதாவது ஹஜ் காலத்தில் "தமத்துஉ' செய்வது- (நபித்தோழர்களாகிய) எங்களுக்கு மட்டுமே உரிய சலுகையாக இருந்தது.

2349 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
தவணை முறைத் திருமணம் (முத்ஆ), ஹஜ் காலத்தில் "தமத்துஉ' செய்வது ஆகிய இரு "முத்ஆ'க்களும் (நபித்தோழர்களாகிய) எங்களைத் தவிர வேறெவருக்கும் பொருந்தாது.

2350 அப்துர் ரஹ்மான் பின் அபிஷ்ஷஅஸா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) மற்றும் இப்ராஹீம் அத்தைமீ (ரஹ்) ஆகியோரிடம் சென்று, "நான் இவ்வருடம் ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்துச் செய்ய (தமத்துஉ) முடிவு செய்துள்ளேன்" என்றேன்.
அதற்கு இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள், "ஆனால், உங்கள் தந்தை (அபுஷ் ஷஅஸா) அவர்கள் இவ்வாறு (தமத்துஉ செய்ய) முடிவு செய்பவராக இருக்கவில்லை" என்றார்கள்.
இப்ராஹீம் அத்தைமீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
என் தந்தை யஸீத் பின் ஷரீக் (ரஹ்) அவர்கள் (மதீனாவிற்கு அருகிலுள்ள) "அர்ரபதா' எனும் இடத்தில் அபூதர் (ரலி) அவர்களைக் கடந்துசென்றார்கள். அப்போது அவர்கள் அபூதர் (ரலி) அவர்களிடம் இதை (தமத்துஉ) பற்றி வினவியபோது அபூதர் (ரலி) அவர்கள், "தமத்துஉ செய்வது, (நபித்தோழர்களாகிய) எங்களுக்கு மட்டுமே உரிய சலுகையாக இருந்தது. அது உங்களுக்கு உரியதன்று"என விடையளித்தார்கள்.

2351 ஃகுனைம் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடம் "தமத்துஉ' முறையைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் (நபித்தோழர்களாகிய) நாங்கள் அவ்வாறு செய்துள்ளோம். இதோ இவர் (முஆவியா) அன்றைய நாளில் "உருஷில்' அதாவது மக்காவில் இறைமறுப்பாளராக இருந்தார்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட தகவல் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "இதோ இவர் -அதாவது முஆவியா (ரலி) அவர்கள்" என்ற குறிப்பும் இடம் பெற்றுள்ளது.
- மேற்கண்ட தகவல் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் சுஃப்யான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஹஜ் காலத்தில் உம்ராச் செய்வது (தமத்துஉ)' என்று இடம்பெற்றுள்ளது.

2352 முதர்ரிஃப் பின் அப்தில்லாஹ் பின் அஷ்ஷிக்கீர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள், "நான் இன்றைய தினம் உமக்கு ஒரு ஹதீஸை அறிவிக்கப்போகிறேன்;அதன் மூலம் உமக்கு அல்லாஹ் இதற்குப் பின்னாலும் பயனளிப்பான். அறிந்துகொள்க: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் வீட்டாரில் சிலரை, (ஹஜ் மாதத்தின்) பத்தாவது நாளில் உம்ராவிற்கு இஹ்ராம் கட்ட அனுமதித்தார்கள். இந்த நடைமுறையை மாற்றக்கூடிய எந்த இறைவசனமும் அருளப் பெறவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அதைத் தடை செய்யாமலேயே இறந்தும்விட்டார்கள். பின்னர் ஒவ்வொரு மனிதரும் தாம் விரும்பியதைத் தமது சொந்தக் கருத்தாகக் கூறினர்" என்றார்கள்.

2353 மேற்கண்ட தகவல் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் முஹம்மத் பின் ஹாத்திம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பின்னர் ஒரு மனிதர் (அதாவது உமர் (ரலி) அவர்கள்) தாம் விரும்பியதைத் தமது சொந்தக் கருத்தாகக் கூறினார்" என்று இடம்பெற்றுள்ளது.

2354 முதர்ரிஃப் பின் அப்தில்லாஹ் பின் அஷ்ஷிக்கீர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள், "நான் உமக்கு ஒரு ஹதீஸை அறிவிக்கப் போகிறேன். அதன் மூலம் அல்லாஹ் உமக்குப் பயனளிக்கக்கூடும்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்து, (தமத்துஉ) செய்யச் சொன்னார்கள். பின்னர் அவர்கள் இறக்கும்வரை அதற்குத் தடை விதிக்கவில்லை. அதைத் தடை செய்யும் எந்த இறைவசனமும் அருளப்பெறவுமில்லை. நான் (எனக்கு ஏற்பட்ட மூலநோய்க்காகச்) சூடிட்டுக்கொள்ளும்வரை எனக்கு (வானவர்களால்) சலாம் சொல்லப்பட்டுவந்தது. நான் சூடிட்டுக்கொண்டபோது, எனக்கு சலாம் சொல்வது கைவிடப் பட்டது. பின்னர் சூடிட்டுக்கொள்வதை நான் கைவிட்டேன்; (சலாம்) தொடர்ந்தது" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட தகவல் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்களிலும் வந்துள்ளது.

2355 முதர்ரிஃப் பின் அப்தில்லாஹ் பின் அஷ்ஷிக்கீர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் எந்த நோயால் இறந்துபோனார்களோ அந்த நோயின்போது என்னிடம் ஆளனுப்பி (என்னை அழைத்தார்கள். நான் சென்றபோது பின்வருமாறு) கூறினார்கள்:
நான் உமக்குச் சில ஹதீஸ்களை அறிவிக்கப்போகிறேன். எனக்குப் பின்னர் அவற்றின் மூலம் அல்லாஹ் உமக்குப் பயனளிக்கக் கூடும். நான் உயிரோடு வாழ்ந்தால் அவற்றை யாருக்கும் அறிவிக்க வேண்டாம். நான் இறந்துவிட்டால் நீர் விரும்பினால் அவற்றை (மக்களிடம்) அறிவியுங்கள்.
எனக்கு (வானவர்களால்) சலாம் சொல்லப்பட்டுவந்தது. அறிக: நபி (ஸல்) அவர்கள் ஹஜ்ஜையும் உம்ராவையும் (ஹஜ் காலத்தில்) சேர்த்துள்ளார்கள். பின்னர் அந்நடைமுறையை மாற்றக்கூடிய எந்த இறைவசனமும் அருளப் பெறவில்லை. நபி (ஸல்)

அவர்கள் அதைத் தடை செய்யவுமில்லை. பின்னர் ஒரு மனிதர் அவ்(வாறு தமத்துஉ செய்யும்) விஷயத்தில் தாம் விரும்பியதைத் தமது சொந்தக் கருத்தாகக் கூறினார்.

2356 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அறிந்துகொள்க: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்தார்கள். அ(தைத் தடை செய்யும் விதத்)தில் குர்ஆன் வசனம் ஏதும் அருளப் பெறவில்லை. (பின்னர்) ஒரு மனிதர் தாம் விரும்பியதைத் தமது சொந்தக் கருத்தாகக் கூறினார்.

2357 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "தமத்துஉ' செய்துள்ளோம். அ(தைத் தடை செய்யும் விதத்)தில் குர்ஆன் வசனம் ஏதும் அருளப்பெறவில்லை. (பின்னர்) ஒரு மனிதர் தாம் விரும்பியதைத் தமது சொந்தக் கருத்தாகக் கூறினார்.

2358 மேற்கண்ட ஹதீஸ் இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நபி (ஸல்) அவர்கள் "தமத்துஉ' செய்தார்கள்; அவர்களுடன் நாங்களும் "தமத்துஉ' செய்தோம்" என இடம்பெற்றுள்ளது.

2359 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"தமத்துஉ' முறை ஹஜ் பற்றிய வசனம் (2:196) இறைவேதத்தில் அருளப்பெற்றது. அவ்வாறு செய்யுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். "தமத்துஉ' முறை ஹஜ் பற்றிய அந்த வசனத்தைக் காலாவதியாக்கக்கூடிய வேறெந்த வசனமும் பின்னர் அருளப்பெறவு மில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தாம் இறக்கும்வரை அதற்குத் தடை விதிக்கவுமில்லை. பின்னர் ஒரு மனிதர் (மட்டும்) தாம் விரும்பியதைத் தமது சொந்தக் கருத்தாகக் கூறினார்.

2360 மேற்கண்ட தகவல் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆனால், அதில் "அவ்வாறு செய்யுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை. "நாங்கள் அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் செயல்படுத்தினோம்" என்றே இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 24 ஹஜ்ஜுடன் உம்ராவையும் செய்து பயனடைந்தவர் (முத்தமத்திஉ), அதற்காகப் பலிப்பிராணியை அறுப்பது கடமையாகும்; பலிப்பிராணி இல்லாதவர் ஹஜ் நாட்களில் மூன்று நோன்புகளும் வீடு திரும்பியதும் ஏழு நோன்புகளும் நோற்பது அவசியமாகும்.**

2361 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜின்போது உம்ராவுடன் ஹஜ்ஜையும் நிறைவேற்றினார்கள்.அவர்கள் பலிப்பிராணியை (ஹஜ்ஜில்) அறுத்துப் பலியிட்டார்கள். (மதீனாவாசிகள் "இஹ்ராம்' கட்டும் எல்லையான) துல்ஹுலைஃபாவில் இருந்தே தம்முடன் பலிப்பிராணியை நபியவர்கள் கொண்டுவந்தார்கள். முதலில்

உம்ராவிற்காக இஹ்ராம் கட்டி தல்பியா கூறி, பின்னர் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டி தல்பியா கூறினார்கள். மக்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் உம்ராவிற்கும் ஹஜ்ஜுக்குமாக "இஹ்ராம்' கட்டியிருந்தனர். மக்களில் சிலர் பலிப்பிராணியை அறுத்துப் பலியிடுபவர்களாக இருந்தனர். (அதற்காக) அவர்கள் பலிப்பிராணியைத் தம்முடன் கொண்டுவந்திருந்தனர். வேறுசிலரோ அறுத்துப் பலியிடுபவர்களாக இருக்கவில்லை. (ஏனெனில், அவர்கள் தம்முடன் பலிப்பிராணியை கொண்டு வந்திருக்கவில்லை.)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவிற்கு வந்ததும், மக்களிடம் "உங்களில் பலிப் பிராணியைக் கொண்டுவந்தவர்கள்,தமது ஹஜ்ஜை நிறைவு செய்யாதவரை இஹ்ராமிலிருந்து விடுபடக்கூடாது. பலிப்பிராணியைக் கொண்டுவராதவர்கள் இறை யில்லம் கஅபாவையும், ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையேயும் சுற்றி வந்துவிட்டு, தமது தலைமுடியை குறைத்துக்கொண்டு இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொள்ளட்டும். பின்னர் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி அறுத்துப் பலியிடட்டும். பலிப்பிராணி கிடைக்காதவர்கள், ஹஜ்ஜின் நாட்களில் மூன்று நோன்புகளும் (ஹஜ்ஜை முடித்து) தமது வீடு திரும்பியதும் ஏழு நோன்புகளும் நோற்றுக்கொள்ளட்டும்" என்று கூறினார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவிற்கு வந்ததும் (கஅபாவை ஏழு முறை) சுற்றிவந்து விட்டு, முதல் வேலையாக (கஅபாவின்) மூலையை (ஒட்டிப் பதிக்கப்பெற்றுள்ள ஹஜருல் அஸ்வதை)த் தொட்டு முத்தமிட்டார்கள். ஏழில் மூன்று சுற்றுகள் (தோள்களைக் குலுக்கி) வேகமாக நடந்தும், நான்கு சுற்றுகள் மெதுவாக நடந்தும் சுற்றி (தவாஃபுல் குதூம்) வந்தார்கள். இறையில்லத்தைச் சுற்றி முடித்ததும் மகாமு இப்ராஹீமில் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பின்னர் சலாம் கொடுத்துவிட்டு நேராக ஸஃபாவுக்குச் சென்று, ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே ஏழு தடவைச் சுற்றி (சயீ) வந்தார்கள்.

பிறகு ஹஜ்ஜை முடிக்கும்வரை அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடாமலிருந்தார்கள். துல்ஹஜ் பத்தாவது நாள் (யவ்முந் நஹ்ர்) அன்று தமது பலிப்பிராணியை அறுத்துப் பலியிட்டார்கள். பிறகு அங்கிருந்து திரும்பி இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவாஃபுல் இஃபாளா) வந்துவிட்டுப் பின்னர் இஹ்ராமிலிருந்து விடுபட்டார்கள்.

மக்களில் பலிப்பிராணியைக் கொண்டுவந்து அறுத்துப் பலியிட்டவர்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்ததைப் போன்றே செய்தனர்.

2362 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் தோழர்களும் உம்ராவுடன் ஹஜ்ஜை நிறைவேற்றியதைப் பற்றிய மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்கள் வாயிலாகவும் அறிவிக்கப்பெற்றுள்ளது.

## பாடம் : 25 ஹஜ்ஜுக்கு மட்டும் இஹ்ராம் கட்டியவர் (முஃப்ரித்) இஹ்ராமிலிருந்து விடுபடுகின்ற நேரத்தில்தான் ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து "இஹ்ராம்'கட்டியவரும் (காரின்) இஹ்ராமிலிருந்து விடுபட வேண்டும்.

2363 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஹஃப்ஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் (ஹஜ்ஜின்போது நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! மக்களின் நிலை என்ன? நீங்கள் உம்ராவின் இஹ்ராமிலிருந்து விடுபடாமலிருக்கும்போதே, அவர்கள்

இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டார்களே?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நான் என் தலைக்குக் களிம்பு தடவிப் படியவைத்துவிட்டேன். மேலும், எனது பலிப் பிராணிக்கு அடையாள மாலை தொங்கவிட்டுவிட்டேன். ஆகவே, நான் (ஹஜ்ஜை முடித்து அந்தப் பிராணியை) பலியிடாதவரை இஹ்ராமிலிருந்து விடுபடமாட்டேன்" என்று விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஹஃப்ஸா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதரே! உங்கள் நிலை என்ன? நீங்கள் உங்கள் உம்ராவின் இஹ்ராமிலிருந்து விடுபடாமிலிருக்கிறீர்களே?" என்று நான் கேட்டேன் என ஹதீஸ் ஆரம்பமாகிறது.

2364 ஹஃப்ஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம், "மக்களின் நிலை என்ன? நீங்கள் உங்கள் உம்ராவின் இஹ்ராமிலிருந்து விடுபடாமலிருக்கும் போதே, அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டு விட்டார்களே?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நான் எனது பலிப்பிராணிக்கு அடையாள மாலை தொங்கவிட்டுவிட்டேன். மேலும், நான் என் தலைக்குக் களிம்பு தடவிப் படியவைத்துவிட்டேன். ஆகவே, நான் ஹஜ் செய்து முடிக்காத வரை இஹ்ராமிலிருந்து விடு படமாட்டேன்" என்று விடையளித்தார்கள்.

2365 மேற்கண்ட ஹதீஸ் ஹஃப்ஸா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், மேற்கண்ட ஹதீஸில் (2363) உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது.

2366 ஹஃப்ஸா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
நபி (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ் ஆண்டில், (தவாஃபும் சயீயும் செய்துவிட்டு) உம்ராவின் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொள்ளுமாறு தம் துணைவியருக்கு உத்தரவிட்டார்கள். அப்போது நான், "நீங்கள் ஏன் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நான் என் தலைக்குக் களிம்பு தடவிப் படிய வைத்துவிட்டேன். மேலும், எனது பலிப்பிராணிக்கு அடையாள மாலை தொங்க விட்டுவிட்டேன். ஆகவே, நான் (ஹஜ்ஜை முடித்து) எனது பலிப்பிராணியை அறுத்துப் பலியிடாத வரை இஹ்ராமிலிருந்து விடுபடமாட்டேன்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 26 (ஹஜ், உம்ராவை நிறைவேற்ற (முடியாமல் எதிரிகளால்) தடுக்கப்பட்டால் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக்கொள்ளலாம்; ஒரே இஹ்ராமில் ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்து (கிரான்) செய்யலாம் என்பதன் விளக்கம்.

2367 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறிய தாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் (மக்காவில் ஹஜ்ஜாஜ் பின் யூசுஃப் முற்றுகை யிட்டிருந்த) குழப்பமான காலகட்டத்தில் உம்ராவிற்காக (மக்காவிற்கு)ப் புறப்பட்டுச்

சென்றார்கள். அப்போது அவர்கள், "நான் கஅபாவிற்குச் செல்ல முடியாதவாறு தடுக்கப்பட்டால், (ஹுதைபியா சம்பவத்தின்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் செய்ததைப் போன்று செய்வோம்" என்று கூறி விட்டு, உம்ராவிற்காக ("இஹ்ராம்' கட்டி) தல்பியாச் சொல்லிப் புறப்பட்டார்கள். "பைதாஉ' எனும் இடம் வந்ததும் தம் தோழர்களை நோக்கி, "(தடுக்கப்படும்போது இஹ்ராமிலிருந்து விடுபடலாம் என்பதில் ஹஜ், உம்ரா ஆகிய) அவையிரண்டும் ஒன்றுதான். நான் உம்ராவுடன் ஹஜ் செய்ய முடிவு செய்துவிட்டேன் என்பதற்கு உங்களைச் சாட்சியாக்குகிறேன்" என்று கூறினார்கள்.
பிறகு இறையில்லம் கஅபாவிற்கு வந்து, அதை ஏழுமுறை சுற்றி (தவாஃப்) வந்தார்கள்; ஸஃபா மற்றும் மர்வா இடையேயும் ஏழு முறை சுற்றி (சயீ) வந்தார்கள். அதைவிடக் கூடுதலாக்கவில்லை. அதுவே (ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும்) போதுமானதாகும் என்று கருதினார்கள்; பலிப்பிராணியை அறுத்துப் பலியிடவும் செய்தார்கள்.

2368 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களுடன் போரிடுவதற்காக ஹஜ்ஜாஜ் பின் யூசுஃப் (மக்காவை) முற்றுகையிட்டிருந்த காலகட்டத்தில், (ஹஜ்ஜுக்குச் செல்லத் திட்டமிட்டிருந்த) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் (அவர்களின் புதல்வர்களான) அப்துல்லாஹ் பின் அப்தில்லாஹ் (ரஹ்), சாலிம் பின் அப்தில்லாஹ் (ரஹ்) ஆகியோர், "இந்த ஆண்டு நீங்கள் ஹஜ் செய்யாமலிருப்பதால் உங்களுக்கு எந்தத் தீங்கும் ஏற்பட்டு விடப்போவதில்லை. மக்களிடையே (உள்நாட்டுப்)போர் மூண்டு இறையில்லம் கஅபாவிற்குச் செல்ல முடியாமல் நீங்கள் தடுக்கப்படுவீர்கள் என்று நாங்கள் அஞ்சுகிறோம்" என்று கூறினர்.
அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "அங்கு செல்ல முடியாமல் நான் தடுக்கப்பட்டால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நான் இருந்தபோது, குறைஷி இறைமறுப்பாளர்கள் அவர்களைக் கஅபாவிற்குச் செல்லவிடாமல் தடுத்தவேளையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்ததைப் போன்றே நானும் செய்வேன்" என்று கூறிவிட்டு, "நான் உம்ராச் செய்ய முடிவு செய்துள்ளேன் என்பதற்கு உங்களைச் சாட்சியாக்குகிறேன்" என்று கூறினார்கள். பிறகு புறப்பட்டு "துல்ஹுலைஃபா'விற்குச் சென்றதும் உம்ராவிற்காக ("இஹ்ராம்' கட்டி) தல்பியாச் சொன்னார்கள். மேலும், "கஅபாவிற்குச் செல்ல எனக்கு வழி விடப்பட்டால் நான் உம்ராச் செய்து முடிப்பேன். அங்கு செல்ல முடியாமல் நான் தடுக்கப்பட்டால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நான் இருந்தபோது அவர்கள் செய்ததைப் போன்று நானும் செய்வேன்" என்று கூறிவிட்டு, "உங்களுக்கு அல்லாஹ்வின் தூதரிடம் அழகிய முன்மாதிரி இருக்கிறது" எனும் (33:21ஆவது) வசனத்தை ஓதிக்காட்டினார்கள்.
தொடர்ந்து பயணம் செய்து "பைதாஉ' எனும் இடத்தை அடைந்தபோது, "(ஹஜ், உம்ரா ஆகிய) அவ்விரண்டின் நிலையும் ஒன்றே;உம்ராவிற்குச் செல்ல முடியாமல் நான் தடுக்கப்படுவது, ஹஜ்ஜுக்குச் செல்ல முடியாமல் நான் தடுக்கப்படுவதைப் போன்றுதான். நான் உம்ராவுடன் ஹஜ்ஜும் செய்ய முடிவு செய்துள்ளேன் என்பதற்கு உங்களைச் சாட்சியாக்குகிறேன்" என்று கூறிவிட்டுச் சென்று "குதைத்' எனுமிடத்தில் ஒரு பலிப்பிராணியை விலைக்கு வாங்கினார்கள். பிறகு ஹஜ் மற்றும் உம்ரா ஆகிய இரண்டிற்கும் சேர்த்து ஒரேயொரு

தடவை (ஏழுமுறை) கஅபாவையும், (ஏழுமுறை) ஸஃபா மற்றும் மர்வாவுக்குமிடையேயும் சுற்றி (தவாஃப் மற்றும் சயீ) வந்தார்கள். பின்னர் துல்ஹஜ் பத்தாவது நாளன்று ஹஜ்ஜை நிறைவு செய்து, ஹஜ் மற்றும் உம்ரா ஆகிய இரண்டிலிருந்தும் விடுபட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஹஜ்ஜாஜ் பின் யூசுஃப், அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களை முற்றுகையிட்டிருந்தபோது, இப்னு உமர் (ரலி) அவர்கள் ஹஜ் செய்ய விரும்பினார்கள்" என்று இச்செய்தி துவங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன. அதன் இறுதியில், "ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்துச் செய்பவருக்கு ஒரு தவாஃபே போதும்" என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறுவார்கள் என்றும், "(உம்ரா, ஹஜ் ஆகிய) அவ்விரண்டிலிருந்தும் முழுமையாக விடுபடாத வரை அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை" என்றும் இடம்பெற்றுள்ளது.

2369 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களை ஹஜ்ஜாஜ் முற்றுகையிட்டிருந்த போது, இப்னு உமர் (ரலி) அவர்கள் ஹஜ் செய்ய விரும்பினார்கள். அப்போது அவர்களிடம், "மக்களிடையே போர்மூளும் நிலை ஏற்பட்டுள்ளது. எனவே, உங்களை ஹஜ் செய்யவிடாமல் அவர்கள் தடுப்பார்கள் என நாங்கள் அஞ்சுகிறோம்" என்று சொல்லப்பட்டது. அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள், "உங்களுக்கு அல்லாஹ்வின் தூதரிடம் அழகிய முன்மாதிரி இருக்கிறது. (அவ்வாறு நான் தடுக்கப்பட்டால்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்ததைப் போன்று நானும் செய்வேன். நான் உம்ராச் செய்ய முடிவு செய்துவிட்டேன் என்பதற்கு உங்களைச் சாட்சியாக்குகிறேன்" என்று கூறியபடி புறப்பட்டார்கள். "பைதாஉ' எனும் இடத்திற்கு வெளியே வந்ததும், "(தடுக்கப்படும் விஷயத்தில்) ஹஜ் மற்றும் உம்ரா ஆகிய இரண்டின் நிலையும் ஒன்றே. நான் உம்ராவுடன் ஹஜ்ஜும் செய்ய முடிவு செய்துவிட்டேன் என்பதற்கு நீங்கள் சாட்சியாக இருங்கள்" என்று கூறினார்கள். (இப்னு ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உங்களைச் சாட்சியாக்குகிறேன்' என இடம் பெற்றுள்ளது). மேலும், "குதைத்' எனுமிடத்தில் பலிப்பிராணியை விலைக்கு வாங்கி, அதைத் தம்முடன் கொண்டுசென்றார்கள். பின்னர் புறப்பட்டுச் சென்று ஹஜ் மற்றும் உம்ரா இரண்டிற்கும் சேர்த்து இஹ்ராம் கட்டி தல்பியாச் சொன்னார்கள்.

மக்காவிற்கு வந்ததும் கஅபாவையும் ஸஃபா மற்றும் மர்வாவையும் சுற்றி வந்தார்கள். (ஹஜ் மற்றும் உம்ரா இரண்டிற்கும் சேர்த்து ஏழு சுற்று கொண்ட ஒரு தவாஃபே செய்தார்கள்.) அதைவிடக் கூடுதலாகச் செய்யவில்லை. (துல்ஹஜ் பத்தாவது நாள்வரை) பலியிடவுமில்லை; தலையை மழிக்கவு மில்லை; முடியைக் குறைக்கவுமில்லை; இஹ்ராமிலிருந்து விடுபடவுமில்லை. துல்ஹஜ் பத்தாவது நாள் வந்த பிறகே அறுத்துப் பலியிட்டார்கள்; தலையை மழித்துக்கொண்டார்கள். ஆரம்பத்தில் செய்த தவாஃபே ஹஜ் மற்றும் உம்ரா இரண்டிற்கும் போதும் என்று கருதினார்கள். மேலும், "இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்தார்கள்" என்றும் அவர்கள் குறிப்பிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2370 மேற்கண்ட ஹதீஸ் நாஃபிஉ (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "இப்னு உமர் (ரலி) அவர்களிடம் "அவர்கள் உங்களை இறையில்லத்துக்குச் செல்லவிடாமல் தடுப்பார்கள்' என்று சொல்லப்பட்டபோது, "அப்போது நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்ததைப் போன்று செய்வேன்' என்று கூறினார்கள்" என இடம் பெற்றுள்ளது; ஹதீஸின் இறுதியில் "இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்தார்கள்"என இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள் என்ற குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 27 ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்துச் செய்வதும் (கிரான்), ஹஜ்ஜை மட்டும் தனியாகச் செய்வதும் (இஃப்ராத்).

2371 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ("விடைபெறும்' ஹஜ்ஜின்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்கு மட்டும் ("இஹ்ராம்' கட்டி) தல்பியாச் சொன்னோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அப்துல்லாஹ் பின் அவ்ன் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்கு மட்டும் ("இஹ்ராம்' கட்டி) தல்பியாச் சொன்னார்கள்" என இடம் பெற்றுள்ளது.

2372 பக்ர் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து தல்பியாச் சொன்னதை நான் செவியுற்றேன்"என்று கூறினார்கள். நான் அ(வ்வாறு அனஸ் (ரலி) அவர்கள் கூறிய)தை இப்னு உமர் (ரலி) அவர்களிடம் தெரிவித்தேன். அதற்கு அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்கு மட்டுமே தல்பியாச் சொன்னார்கள்" என்றார்கள். பின்னர் நான் அனஸ் (ரலி) அவர்களைச் சந்தித்தபோது இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதை அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அனஸ் (ரலி) அவர்கள், "நம்மை நீங்கள் சிறுவர்களாகவே எண்ணுகிறீர்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "லப்பைக்க உம்ரத்தன் வ ஹஜ்ஜன்' (நான் உம்ராவிற்கும் ஹஜ்ஜுக்கும் தல்பியாச் சொல்கிறேன்) என்று கூறியதை நான் செவியுற்றேன்" என்றார்கள்.

2373 பக்ர் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் ஹஜ், உம்ரா ஆகிய இரண்டையும் சேர்த்துச் செய்ததை நான் கண்டேன்" என்று கூறினார்கள். நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் இதைப் பற்றிக் கேட்டபோது அவர்கள், "நாங்கள் ஹஜ்ஜுக்கு (மட்டுமே) தல்பியாச் சொன்னோம்" என்றார்கள். நான் அனஸ் (ரலி) அவர்களிடம் திரும்பிவந்து, இப்னு உமர் (ரலி) அவர்கள் சொன்னதை அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அனஸ் (ரலி) அவர்கள் "நாங்கள் சிறுவர்களாகவே இருந்தோம் போலும்" என்றார்கள்.

**பாடம் : 28 ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டியவர், மக்காவிற்கு வந்ததும் தவா∴பும் சயீயும் செய்வது அவசியம்.**

2374 வபரா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு முறை) இப்னு உமர் (ரலி) அவர்களுடன் அமர்ந்திருந்தேன். அப்போது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "நான் (ஹஜ்ஜின்போது) அர∴பாவுக்குச் செல்வதற்கு முன் கஅபாவைச் சுற்றிவருவது சரியா?" என்று கேட்டார். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள், "ஆம் (சரிதான்)' என்றார்கள். அதற்கு அந்த மனிதர், "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "நீ அர∴பா செல்வதற்கு முன் கஅபாவைச் சுற்றிவராதே!' எனக் கூறுகின்றாரே?" என்று கேட்டார். இப்னு உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ் செய்துள்ளார்கள். அப்போது அவர்கள் "அர∴பா' செல்வதற்கு முன் கஅபாவைச் சுற்றினார்கள். நீர் (ஒரு முஸ்லிம்;அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பின்பற்றுபவர் என்பதில்) உண்மையாளராய் இருந்தால், நீர் கடைப்பிடிப்பதற்குத் தகுதியானது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் சொல்லா? அல்லது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் சொல்லா?" என்று கேட்டார்கள்.

2375 வபரா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர், "நான் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டியவுடன், இறையில்லம் கஅபாவைச் சுற்றி வரலாமா?" என்று கேட்டார். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள், "(அவ்வாறு கஅபாவைச் சுற்றிவர) உமக்கு என்ன தடை?"என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், "இன்ன மனிதரின் புதல்வர் அவ்வாறு (தவா∴ப்) செய்வதை வெறுப்பதை நான் கண்டேன். ஆனால், அவரைவிட நீங்களே எங்கள் அன்புக்குரியவர்.(பஸ்ராவின் ஆளுநரான) அவரை உலகம் சோதித்துவிட்டிருக்கிறது" என்று கூறினார். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள், "நம்மில் யாரைத்தான்' அல்லது "உங்களில் யாரைத் தான்' இவ்வுலகம் சோதிக்காமல் விட்டது?" என்று கூறிவிட்டுப் பின்னர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டியவுடன் இறையில்லம் கஅபாவைச் சுற்றி வந்ததையும் ஸ∴பா மற்றும் மர்வாவுக்கிடையே ஓடி (சயீ) வந்ததையும் நாங்கள் கண்டோம். நீர் (ஒரு முஸ்லிம்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பின்பற்றுபவர் என்பதில்) உண்மையாளராய் இருந்தால், அல்லாஹ்வின் நெறியையும் அவனுடைய தூதரின் வழிமுறையையும் பின்பற்றுவதே இன்ன மனிதரின் வழிமுறையை நீர் பின்பற்றுவதைவிட மிகவும் தகுதியானதாகும்" என்று கூறினார்கள்.

2376 அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் இப்னு உமர் (ரலி) அவர்களிடம், "ஒருவர் உம்ராவிற்காக (மக்கா நகருக்கு) வந்து இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவா∴ப்) வந்துவிட்டார். ஸ∴பா மற்றும் மர்வாவுக்கிடையே "சயீ' செய்யவில்லை. இந்நிலையில், அவர் தம் மனைவியுடன் தாம்பத்திய உறவில் ஈடுபடலாமா? (அதாவது இஹ்ராமிலிருந்து விடுபடலாமா?)" என்று கேட்டோம். அதற்கு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்காவிற்கு) வந்தபோது இறையில்லம் கஅபாவை ஏழு முறைச் சுற்றிவந்தார்கள். பிறகு மகாமு இப்ராஹீமிற்குப்

பின்னால் (நின்று) இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையேயும் ஏழு முறை (ஓடினார்கள்). உங்களுக்கு அல்லாஹ்வின் தூதரிடம் ஓர் அழகிய முன்மாதிரி இருக்கிறது" என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 29** (ஹஜ்ஜின்போது) கஅபாவைச் சுற்றி வந்து, ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே "சயீ' செய்த பின் (ஹஜ் முடியும்வரை) அந்த இஹ்ராமிலேயே நீடிப்பது, (அதாவது) இஹ்ராமிலிருந்து விடுபடாமல் இருப்பது அவசியமாகும்.

2377 முஹம்மத் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இராக்வாசிகளில் ஒருவர் என்னிடம், "நீங்கள் உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களிடம் "ஒருவர் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்'கட்டி, (மக்காவிற்கு வந்ததும்) இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவாஃபுல் குதூம்) வந்தார். இந்நிலையில் அவர் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக் கொள்ளலாமா, அல்லது கூடாதா?' என்று கேளுங்கள். உர்வா (ரஹ்) அவர்கள் "இஹ்ராமிலிருந்து விடுபடலாகாது' என்று பதிலளித்தால் "விடுபடலாம் என ஒரு மனிதர் கூறுகிறாரே?' என்று கேளுங்கள்" என்றார்.
அவ்வாறே நான் உர்வா (ரஹ்) அவர்களிடம் (சென்று) கேட்டபோது அவர்கள், "ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டியவர் ஹஜ்ஜை முடிக்காமல் இஹ்ராமிலிருந்து விடுபடலாகாது" என்று விடையளித்தார்கள். நான் "அப்படியானால், விடுபடலாம் என ஒருவர் கூறுகிறாரே?" என்று கேட்டேன். அதற்கு உர்வா (ரஹ்) அவர்கள், "அவர் சொன்னது தவறு" என்றார்கள்.
பின்னர் அந்த மனிதர் என் எதிரே வந்து அ(வர் கூறியனுப்பிய)து பற்றி என்னிடம் கேட்டார். அ(ப்போது உர்வா (ரஹ்) அவர்கள் கூறிய)தை நான் அவரிடம் தெரிவித்தேன். அதற்கு அந்த மனிதர் என்னிடம், "உர்வா (ரஹ்) அவர்களிடம் "அப்படியானால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்துள்ளதாக ஒரு மனிதர் தெரிவித்து வந்தாரே? அஸ்மா (ரலி), ஸுபைர் (ரலி) ஆகியோரின் நிலை என்ன? அவர்களும் அவ்வாறு செய்துள்ளனரே?' என்று நீங்கள் கேளுங்கள்" என்றார்.
அவ்வாறே நான் (மீண்டும்) உர்வா (ரஹ்) அவர்களிடம் வந்து அதைத் தெரிவித்தேன். அப்போது உர்வா (ரஹ்) அவர்கள் "யார் அவர்?" என்று கேட்டார்கள். நான் "எனக்குத் தெரியாது" என்றேன். அதற்கு உர்வா (ரஹ்) அவர்கள், "அவருக்கு என்ன நேர்ந்தது? என்னிடமே வந்து நேரடியாகக் கேட்க மறுக்கிறாரே? அவர் (மார்க்க விஷயங்களில் பிடிவாதம் காட்டக்கூடிய) ஓர் இராக்வாசி என்றே நான் கருதுகிறேன்" என்றார்கள். நான் "எனக்குத் தெரியாது" என்று (மீண்டும்) சொன்னேன்.
உர்வா (ரஹ்) அவர்கள், "அவர் பொய்யுரைத்துவிட்டார்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்த ஹஜ்ஜைப் பற்றி ஆயிஷா (ரலி) அவர்கள் என்னிடம் தெரிவித்துள்ளார்கள்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவிற்கு வந்ததும் முதல் வேலையாக அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். பிறகு இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவாஃபுல் குதூம்) வந்தார்கள்.
பின்னர் அபூபக்ர் (ரலி) அவர்கள் ஹஜ்ஜுக்கு வந்தபோது, முதல் வேலையாக இறையில்லம் கஅபாவைச் சுற்றிவந்தார்கள். பின்னர் அதைத் தவிர (ஹஜ்ஜை உம்ராவாக மாற்றுதல்,

ஹஜ்ஜோடு உம்ராவைச் சேர்த்தல் போன்ற) வேறெதுவும் நிகழவில்லை. பின்னர் உமர் (ரலி) அவர்கள் ஹஜ்ஜுக்கு வந்தபோது, அ(பூபக்ர் (ரலி) அவர்கள் செய்த)தைப் போன்றே செய்தார்கள். பின்னர் உஸ்மான் (ரலி) அவர்கள் ஹஜ் செய்தார்கள். அவர்கள் (மக்காவிற்கு வந்ததும்) முதல் வேலையாக இறையில்லம் கஅபாவைச் சுற்றி வருவதையே நான் கண்டேன்; பின்னர் அதைத் தவிர (ஹஜ்ஜை உம்ராவாக மாற்றுதல், ஹஜ்ஜோடு உம்ராவைச் சேர்த்தல் போன்ற) வேறெதுவும் நிகழவில்லை.
பின்னர் முஆவியா (ரலி), அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) ஆகியோரும் (அவ்வாறே செய்தனர்.) பின்னர் என் தந்தை ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி) அவர்களுடன் நான் ஹஜ் செய்தேன். அவர்களின் முதல் வேலையாக இருந்ததும் கஅபாவைச் சுற்றுவதாகத் தான் இருந்தது. அதைத் தவிர வேறொன்றும் நடக்க வில்லை. பின்னர் முஹாஜிர்களும் அன்சாரிகளும் அவ்வாறு செய்வதையே நான் கண்டேன்; பின்னர் அதைத் தவிர வேறெதுவும் நிகழவில்லை.

பின்னர் அவ்வாறு செய்தவர்களில் இறுதியானவராக இப்னு உமர் (ரலி) அவர்களையே நான் கண்டேன். அவர்கள் ஹஜ்ஜை உம்ராவாக மாற்றவில்லை. இதோ அவர்களுடன் இப்னு உமர் (ரலி) அவர்களே இருக்கிறார்கள். அவர்களிடமே மக்கள் கேட்க வேண்டியதுதானே! முன்னோர்களில் எவரும் தம் பாதங்களை (மக்காவில்) பதித்ததும் முதல் வேலையாக இறையில்லம் கஅபாவைச் சுற்றிவராமல் இருந்ததில்லை. பின்னர் (ஹஜ்ஜை முடிக்காமல்) இஹ்ராமிலிருந்து விடுபடமாட்டார்கள். என் தாயார் (அஸ்மா-ரலி), என் சிறிய தாயார் (ஆயிஷா-ரலி) ஆகியோர் (மக்காவிற்கு) வந்ததும் முதல் வேலையாக இறையில்லம் கஅபாவைச் சுற்றிவராமல் வேறெதையும் தொடங்கமாட்டார்கள். பின்னர் (ஹஜ்ஜை முடிக்கும்வரை) இஹ்ராமிலிருந்து விடுபடாமல் இருப்பார்கள்.
என் தாயார் (அஸ்மா-ரலி) அவர்கள் என்னிடம், "நானும் என் சகோதரி (ஆயிஷா-ரலி) அவர்களும் (உன் தந்தை) ஸுபைர் (ரலி) அவர்களும் மற்றும் இன்னின்ன மனிதரும் உம்ராவிற்குச் சென்றபோது ஹஜருல் அஸ்வதைத் தொட்டதும் (அதாவது தவாஃபும் "சயீ'யும் செய்து முடித்ததும்) இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டோம்" என்று தெரிவித்தார்கள். (எனவே இராக்கைச் சேர்ந்த) அந்த மனிதர் பொய்யான தகவலையே குறிப்பிட்டுள்ளார்" என்று உர்வா (ரஹ்) அவர்கள் விடையளித்தார்கள்.

2378 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் "இஹ்ராம்' கட்டியவர்களாக (ஹஜ்ஜுக்கு)ப் புறப்பட்டோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(உங்களில்) தம்முடன் பலிப்பிராணியைக் கொண்டு வந்திருப்பவர் தமது இஹ்ராமிலேயே நீடிக்கட்டும்; பலிப்பிராணியைக் கொண்டுவராதவர் இஹ்ராமிலிருந்து விடுபடட்டும்" என்று சொன்னார்கள். அப்போது என்னுடன் பலிப்பிராணி இல்லாததால் நான் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டேன். (என் கணவர்) ஸுபைர் (ரலி) அவர்களுடன் பலிப்பிராணி இருந்ததால் அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை. அப்போது நான் எனது ஆடையை அணிந்து புறப்பட்டேன்; ஸுபைர் (ரலி) அவர்கள் அருகில் அமர்ந்தேன். உடனே அவர்கள் "என்னிடமிருந்து எழுந்து (சென்று) விடு" என்றார்கள்.

அப்போது நான், "உங்கள் மீது (ஆசையோடு) பாய்ந்துவிடுவேன் என அஞ்சுகிறீர்களா?" என்று கேட்டேன்.
- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2379 மேற்கண்ட தகவல் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டியவர்களாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும் அதில், ("என்னிடமிருந்து எழுந்துவிடு" என்பதற்குப் பதிலாக) "என்னைவிட்டு விலகிச் சென்றுவிடு" என்று ஸுபைர் (ரலி) அவர்கள் கூறினார்கள். அதற்கு நான், "உங்கள்மீது (ஆசையோடு) பாய்ந்துவிடுவேன் என நீங்கள் அஞ்சுகிறீர்களா?" என்று கேட்டேன் என இடம்பெற்றுள்ளது.

2380 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான அப்துல்லாஹ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அஸ்மா (ரலி) அவர்கள் (மக்காவில் "அல்முஅல்லா' பொது மையவாடி அருகிலுள்ள) "அல்ஹுஜூன்' எனும் மலையைக் கடந்து செல்லும்போதெல்லாம் பின்வருமாறு அவர்கள் கூறுவதை நான் கேட்டுள்ளேன்:
அல்லாஹ், தன் தூதர் (ஸல்) அவர்களுக்குக் கருணை புரியட்டும்! சாந்தி அளிக்கட்டும்! நாங்கள் (ஒரு பயணத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இங்கு வந்து தங்கினோம். அப்போது எங்களிடம் (பயணத்திற்கான) மூட்டை முடிச்சுகள் குறைவாகவே இருந்தன; பயண வாகனங்களும் உணவுகளும் குறைவாகவே இருந்தன. அப்போது நானும் என் சகோதரி ஆயிஷாவும் (என் கணவர்) ஸுபைர் (ரலி) அவர்களும் இன்ன மனிதரும் இன்ன மனிதரும் உம்ராவிற்காக "இஹ்ராம்'கட்டி தல்பியாச் சொன்னோம். நாங்கள் கஅபாவைச் சுற்றி ("சயீ'யும் செய்து) வந்ததும் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டோம். பிறகு மாலையில் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டினோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஹாரூன் பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அஸ்மா (ரலி) அவர்களின் முன்னாள் அடிமை கூறியதாவது"என்றே இடம்பெற்றுள்ளது. "அப்துல்லாஹ்' எனும் அவர்களது பெயர் இடம்பெறவில்லை.

**பாடம் : 30 "தமத்துஉ' வகை ஹஜ்.**

2381 முஸ்லிம் அல்குர்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "தமத்துஉ' வகை ஹஜ் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் அனுமதியளித்தார்கள். –இப்னுஸ் ஸுபைர் (ரலி) அவர்கள் அதற்குத் தடை விதித்துவந்தார்கள்– எனவே, இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இதோ இப்னுஸ் ஸுபைர் (ரலி) அவர்களின் தாயார் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தமத்துஉ' செய்யத் தம்மை அனுமதித்தார்கள் எனக் கூறுகிறார்கள். ஆகவே, அவரிடம் சென்று அதைப் பற்றிக் கேளுங்கள்" என்றார்கள்.

அவ்வாறே அவர்களிடம் நாங்கள் சென்றோம். அவர்கள் கனத்த உடலுடைய கண் பார்வையற்ற பெண்மணியாக இருந்தார்கள். அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தமத்துஉ' செய்வதற்கு அனுமதியளித்தார்கள்" எனக் குறிப்பிட்டார்கள்.

2382 மேற்கண்ட தகவல் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அப்துர் ரஹ்மான் பின் மஹ்தீ அல்அம்பரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "தமத்துஉ' எனும் சொல்லே காணப்படுகிறது. "தமத்துஉ முறை ஹஜ்' என இடம்பெற வில்லை. முஹம்மத் பின் ஜஅஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "முத்அத்துல் ஹஜ்' ("தமத்துஉ' ஹஜ்) பற்றிக் கூறினார்களா? அல்லது "முத்அத்துந் நிசா' (தவணை முறைத் திருமணம்) பற்றிக் கூறினார்களா? என எனக்குத் தெரியவில்லை" என்று முஸ்லிம் அல்குர்ரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

2383 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் உம்ராவிற்காக "இஹ்ராம்' கட்டி "தல்பியா'ச் சொன்னார்கள். அவர்களுடைய தோழர்கள் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி "தல்பியா'ச் சொன்னார்கள். எனவே, நபி (ஸல்) அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை; அவர்களுடைய தோழர்களில் தம்முடன் பலிப்பிராணியைக் கொண்டுவந்தவர்களும் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை. மற்றவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டார்கள். பலிப்பிராணியைக் கொண்டுவந்தவர்களில் தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்களும் ஒருவராக இருந்ததால் அவர்களும் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை.

2384 மேற்கண்ட தகவல் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "தம்மிடம் பலிப்பிராணி இல்லாதவர்களில் தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்களும் மற்றொரு மனிதரும் அடங்குவர்; எனவே, அவர்கள் இருவரும் இஹ்ராமிலிருந்து விடுபட்டனர்" என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 31 ஹஜ்ஜுடைய மாதங்களில் உம்ராச் செய்யலாம்.

2385 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அ(றியாமைக் காலத்த)வர்கள், ஹஜ்ஜுடைய மாதங்களில் உம்ராச் செய்வது பூமியில் நடக்கும் பாவங்களிலேயே மிகக் கொடியபாவம் எனக் கருதிவந்தனர். (துல்கஅதா,துல்ஹஜ், முஹர்ரம் என மூன்று மாதங்கள், போர் செய்யத் தடைவிதிக்கப்பட்ட புனித மாதங்களாகத் தொடர்ந்து வந்ததால்) முஹர்ரம் மாதத்திற்கான தடையை ஸஃபருக்கு மாற்றிக் கொள்வார்கள். (ஹஜ் பயணத்திற்கான சுமையைச் சுமந்த ஒட்டகங்களின் முதுகில்)
"வடு மறைந்து
காலடித் தடங்கள் அழிந்து
ஸஃபர் மாதம் கழிந்தால்
உம்ராச் செய்யலாம்; உம்ராச் செய்பவர்"
என்றும் அவர்கள் கூறிவந்தனர்.

நபி (ஸல்) அவர்களும் நபித்தோழர்களும் (துல்ஹஜ் மாதம்) நான்காவது நாள் காலை, ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டியவர்களாக (மக்காவிற்கு) வந்தபோது, (தம் தோழர்களிடம்) அவர்களது இஹ்ராமை உம்ராவாக ஆக்கிக்கொள்ளுமாறு நபியவர்கள் கட்டளையிட்டார்கள். இது நபித்தோழர்களுக்கு மிகக் கடினமாகத் தெரிந்தது. இதனால் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! (இவ்வாறு உம்ராவிற்குப் பிறகு) இஹ்ராமிலிருந்து விடுபடுவதால் எந்தச் செயல்கள் அனுமதிக்கப்படும்?" என்று கேட்டனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "எல்லாமும்தான் அனுமதிக்கப்படும்" என்று விடையளித்தார்கள்.

2386 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி துல்ஹஜ் மாதம் நான்காவது நாள் (காலை மக்காவிற்கு) வந்து, சுப்ஹுத் தொழுகை தொழுவித்தார்கள். சுப்ஹுத் தொழுகையை முடித்ததும், "தமது இஹ்ராமை உம்ராவாக ஆக்கிக்கொள்ள விரும்புபவர் அதை உம்ராவாக ஆக்கிக் கொள்ளட்டும்" என்றார்கள்.

2387 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ரவ்ஹ் பின் உபாதா (ரஹ்), யஹ்யா பின் கஸீர் (ரஹ்) ஆகியோரின் அறிவிப்புகளில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டினார்கள்" என்று நஸ்ர் பின் அலீ (ரஹ்) அவர்களது முந்தைய அறிவிப்பில் இடம் பெற்றதைப் போன்றே உள்ளது.
அபூஷிஹாப் அப்து ரப்பிஹி பின் நா*ஃ*பிஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டினோம்" என்று காணப்படுகிறது.
நஸ்ர் பின் அலீ (ரஹ்) அவர்களைத் தவிர மற்ற அனைவரின் அறிவிப்புகளிலும் "அல்பத்ஹா எனுமிடத்தில் சுப்ஹுத் தொழுதார்கள்" எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

2388 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் (துல்ஹஜ் மாதம் முதல்)பத்தின் நான்காவது நாளில் ஹஜ்ஜுக்காக "இஹ்ராம்' கட்டி, தல்பியாச் சொன்னவர்களாக (மக்காவிற்கு) வந்தார்கள். (தோழர்கள்) தமது இஹ்ராமை உம்ராவாக ஆக்கிக்கொள்ளுமாறு நபியவர்கள் கட்டளையிட்டார்கள்.

2389 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்காவிற்கு அருகிலுள்ள) "தூ தவா' எனும் பள்ளத்தாக்கில் சுப்ஹுத் தொழுகை தொழுதார்கள். துல்ஹஜ் நான்காவது நாள் மக்காவிற்கு வந்து, தம் தோழர்களில் பலிப்பிராணியைத் தம்முடன் கொண்டுவந்தவர்கள் தவிர மற்றவர்கள் தமது இஹ்ராமை உம்ராவாக மாற்றிக்கொள்ளுமாறு கட்டளையிட்டார்கள்.

2390 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இது, நாம் (உம்ராவிற்கும் ஹஜ்ஜுக்குமிடையே இடைவெளிவிட்டுப்) பயனடைந்த உம்ராவாகும். ஆகவே, "(உங்களில்) எவரிடம் பலிப்பிராணி இல்லையோ அவர் முழுமையாக

இஹ்ராமிலிருந்து விடுபட்டு விடட்டும். ஏனெனில், மறுமை நாள்வரை ஹஜ்ஜுடன் உம்ராவும் சேர்ந்திருக்கும்.- இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2391 அபூஜம்ரா அள்ளுபஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் "தமத்துஉ' வகை ஹஜ் செய்தேன். அவ்வாறு செய்யலாகாதென என்னைச் சிலர் தடுத்தனர். நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்று அதைப் பற்றிக் கூறினேன். அதைச் செய்யுமாறு எனக்கு அவர்கள் உத்தரவிட்டார்கள்.
பின்னர் (ஒரு நாள்) நான் இறையில்லம் கஅபாவுக்குச் சென்று (அதன் அருகில்) உறங்கினேன். அப்போது ஒருவர் எனது கனவில் தோன்றி "ஒப்புக்கொள்ளப்பட்ட உம்ராவும் பாவச் செயல் கலவாத ஏற்றுக்கொள்ளப்பட்ட ஹஜ்ஜும் (உமக்குக் கிடைத்துவிட்டன)"என்று கூறினார்.

உடனே நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்று நான் (கனவில்) கண்டதை அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அவர்கள் "அல்லாஹ் மிகப் பெரியவன்; அல்லாஹ் மிகப் பெரியவன். (இந்த ஹஜ் முறை) அபுல்காசிம் (ஸல்) அவர்களின் வழி முறையாகும்" என்று கூறினார்கள்.

## பாடம் : 32 இஹ்ராம் கட்டும்போது, பலி ஒட்டகத்தின் கழுத்தில் மாலை தொங்கவிடுவதும், அதற்கு அடையாளமிடுவதும்.

2392 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ("விடைபெறும்' ஹஜ்ஜுக்காகச் சென்றபோது) "துல்ஹுலைஃபா'வில் லுஹ்ர் தொழுகை தொழுதுவிட்டுத் தமது பலி ஒட்டகத்தைக் கொண்டுவரச் சொல்லி, அதன் வலப்பக்கத்திமில் பகுதியில் கீறி அடையாளமிட்டார்கள்; இரத்தத்தை அதிலிருந்து துடைத்தார்கள்; இரு செருப்புகளை (அதன் கழுத்தில் அடையாளத்திற்காக) தொங்கவிட்டார்கள். பின்னர் தமது வாகன ஒட்டகத்தில் ஏறி அமர்ந்து, "பைதாஉ' எனும் குன்றில் அது நேராக நின்றதும் ஹஜ்ஜுக்காகத் தல்பியாச் சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "துல்ஹுலைஃபா'விற்கு வந்தபோது" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. "அங்கு லுஹ்ர் தொழுதார்கள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
(இறையில்லம் கஅபாவைச் சுற்றியவர் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிடுவார்.)

2393 அபூஹஸ்ஸான் அல்அஃரஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
பனுல் ஹுஜைம் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "ஒருவர் (மக்காவிற்கு வந்து) இறையில்லம் கஅபாவைச் சுற்றி வந்ததும் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிடுவார்" எனும் இந்தத் தீர்ப்பு என்ன (சரிதானா)? இது மக்களைக் "கவர்ந்துள்ளது' அல்லது "குழப்பியுள்ளது' என்று கேட்டார். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "(இது)

உங்கள் நபி (ஸல்) அவர்களின் வழி முறையாகும்; நீங்கள் வெறுத்தாலும் சரியே" என்று விடையளித்தார்கள்.

2394 அபூஹஸ்ஸான் அல்அஃரஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வந்தவர் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிடுவார்;இறையில்லத்தைச் சுற்றி வருதலே உம்ராவாகும் எனும் கருத்தாக்கம் மக்களிடையே பரவலாகிவிட்டிருக்கிறது" என்று சொல்லப்பட்டது. அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "(ஆம்; இது) உங்கள் நபி (ஸல்) அவர்களின் வழிமுறையாகும்; நீங்கள் வெறுத்தாலும் சரியே" என்றார்கள்.

2395 இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அதாஉ (ரஹ்) அவர்கள், "ஹஜ் செய்பவரோ மற்றவரோ (அதாவது உம்ராச் செய்பவரோ) இறையில்லம் கஅபாவைச் சுற்றிவந்துவிட்டால் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிடுவார் என இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறிவந்தார்கள்" என்று அறிவித்தார்கள்.
நான் அதாஉ (ரஹ்) அவர்களிடம், "எந்த ஆதாரத்தை வைத்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இப்படிக் கூறுகிறார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "பின்னர் அவை (பலிப்பிராணிகள் அறுப்பதற்காகச்) சென்றடையும் இடம், பழைமையான அந்த ஆலயமாகும்" எனும் (22:33ஆவது) இறை வசனத்திலிருந்தும், நபி (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜின்போது அவர்(களுடன் வந்தவர்)களுக்கு இஹ்ராமிலிருந்து விடுபடும்படி இட்ட கட்டளையை ஆதாரமாகக் கொண்டும்தான் இப்படிக் கூறினார்கள்" என்றார்கள்.
நான், "இஹ்ராமிலிருந்து விடுபடுவது அரஃபாவில் (போய்த்) தங்கிய பின்புதானே?" என்று கேட்டேன். அதற்கு அதாஉ (ரஹ்) அவர்கள், "அது, அரஃபாவில் தங்கியதற்குப் பின்பும் அதற்கு முன்பும் (அனுமதிக்கப்பட்டதே)" என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறிவந்தார்கள் என விடையளித்தார்கள்.

## பாடம் : 33 உம்ராவில் தலைமுடியைக் குறைத்துக்கொள்வது.

2396 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் முஆவியா (ரலி) அவர்கள், "நீங்கள் அறிவீர்களா? நான் "மர்வா' அருகில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தலைமுடியைக் கத்தரிக்கோலால் (கத்தரித்துக்) குறைத்துள்ளேன்" என்றார்கள். "இதை நான் உங்களுக்கு எதிரான ஆதாரமாகவே அறிகிறேன்" என்று நான் சொன்னேன்.

2397 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஆவியா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தலைமுடியை நான் கத்தரிக்கோலால் (கத்தரித்துக்) குறைத்தேன்; அப்போது அவர்கள் மர்வாவின் மீதிருந்தார்கள்' அல்லது "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தலைமுடி கத்தரிக்கோலால் குறைக்கப்படுவதை நான் கண்டேன்; அப்போது அவர்கள் மர்வாவின் மீதிருந்தார்கள்' என்று கூறினார்கள்.
(ஹஜ்ஜில் தமத்துஉம் கிரானும் செல்லும்.)

2398 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் உரத்த குரலில் ஹஜ்ஜுக்காகத் தல்பியா முழங்கியவர்களாகப் புறப்பட்டோம். நாங்கள் மக்காவிற்கு வந்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், எங்களில் தம்முடன் பலிப்பிராணியைக் கொண்டுவந்திருப்பவரைத் தவிர மற்றவர்கள் தமது இஹ்ராமை உம்ராவாக ஆக்கிக் கொள்ளுமாறு எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். துல்ஹஜ் எட்டாவது நாளன்று நாங்கள் மினாவுக்குச் சென்றபோது (செல்ல நாடிய போது), ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டித் தல்பியாச் சொன்னோம்.

2399 ஜாபிர் (ரலி), அபூசயீத் அல்குத்ரீ (ரலி) ஆகியோர் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்காக உரத்த குரலில் தல்பியா முழங்கியவர்களாகப் புறப்பட்டோம்.
- அபூநள்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் இருந்தேன். அப்போது அவர்களிடம் ஒருவர் வந்து, "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் இப்னுஸ் ஸுபைர் (ரலி) அவர்களும் (தவணை முறைத் திருமணம், "தமத்துஉ' ஹஜ் ஆகிய) இரு "முத்ஆ'க்கள் விஷயத்தில் கருத்து வேறுபாடு கொண்டனர்" என்றார். அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள், "நாங்கள் அவ்விரண்டையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (இருக்கும் காலத்தில்) செய்தோம். பின்னர் உமர் (ரலி) அவர்கள் (தமது ஆட்சியில்) அவ்விரண்டையும் செய்யக் கூடாதென எங்களுக்குத் தடை விதித்தார்கள். எனவே, நாங்கள் அவ்விரண்டையும் திரும்பச் செய்வதில்லை" என்று விடையளித்தார்கள்.

## பாடம் : 34 நபி (ஸல்) அவர்கள் தல்பியாச் சொன்னதும் பலியிட்டதும்.

2400 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அலீ (ரலி) அவர்கள் யமன் நாட்டிலிருந்து (ஹஜ்ஜுக்கு) வந்தபோது அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள், "எதற்காக ("இஹ்ராம்'கட்டி) தல்பியாச் சொன்னீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அலீ (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் எதற்காக ("இஹ்ராம்'கட்டி) தல்பியாச் சொன்னார்களோ அதற்காகவே நானும் தல்பியாச் சொன்னேன்" என்றார்கள். நபி (ஸல்) அவர்கள், "என்னுடன் பலிப்பிராணி இருந்திராவிட்டால் நிச்சயமாக நானும் இஹ்ராமிலிருந்து விடுபட்டிருப்பேன்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2401 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ் மற்றும் உம்ரா இரண்டிற்கும் சேர்த்து, லப்பைக்க உம்ரத்தன் வ ஹஜ்ஜன்; லப்பைக்க உம்ரத்தன் வ ஹஜ்ஜன் (நான் உம்ராவிற்கும் ஹஜ்ஜுக்கும் தல்பியாச் சொல்கிறேன்; நான் உம்ராவிற்கும் ஹஜ்ஜுக்கும் தல்பியாச் சொல்கிறேன்) என்று தல்பியாச் சொன்னதை நான் செவியுற்றுள்ளேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2402 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் யஹ்யா பின் அபீஇஸ்ஹாக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நபி (ஸல்) அவர்கள் "லப்பைக்க உம்ரத்தன் வ ஹஜ்ஜன்'என்று கூறியதை நான் கேட்டேன் என அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
ஹுமைத் அத்தவீல் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "லப்பைக்க பி உம்ரத்தின் வ ஹஜ்ஜின்' (உம்ராவிற்கும் ஹஜ்ஜுக்கும் தல்பியாச் சொல்கிறேன்) என்று கூறியதை நான் கேட்டேன் என அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

2403 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது ஆணையாக! (இறுதி நாட்களில்) மர்யமின் புதல்வர் (ஈசா) அவர்கள் (மக்கா – மதீனா இடையே உள்ள) "ஃபஜ்ஜுர் ரவ்ஹா' எனுமிடத்தில் ஹஜ்ஜுக்காக அல்லது உம்ராவிற்காக அல்லது அவ்விரண்டுக்குமாகத் தல்பியாச் சொல்வார்கள்.
அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துள்ள இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது ஆணையாக!" என ஹதீஸ் ஆரம்பமாகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது ஆணையாக' என்று கூறினார்கள் என ஹதீஸ் துவங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

### பாடம் : 35 நபி (ஸல்) அவர்கள் செய்த உம்ராக்களின் எண்ணிக்கையும் காலமும்.

2404 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நான்கு உம்ராக்கள் செய்தார்கள். தமது ஹஜ்ஜுடன் செய்த உம்ராவைத் தவிர மற்ற அனைத்தையும் துல்கஅதா மாதத்திலேயே அவர்கள் செய்தார்கள்; 1. "ஹுதைபியாவிலிருந்து' அல்லது "ஹுதைபியா ஒப்பந்தம் நடந்தபோது' துல்கஅதா மாதத்தில் செய்த உம்ரா. 2. அடுத்த ஆண்டு துல்கஅதா மாதத்தில் செய்த உம்ரா. 3. ஹுனைன் போரில் கிடைத்த போர்ச் செல்வங்களைப் பங்குவைத்த இடமான ஜிஃரானாவிலிருந்து துல்கஅதா மாதத்தில் செய்த உம்ரா. 4. அவர்கள் தமது ஹஜ்ஜுடன் செய்த உம்ரா (ஆகிய நான்குமே அவை).
- கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எத்தனை ஹஜ் செய்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு, "அவர்கள் ஒரேயொரு ஹஜ் மட்டுமே செய்தார்கள்;

நான்கு உம்ராக்கள் செய்தார்கள்" என்று விடையளித்தார்கள். மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2405 அபூஇஸ்ஹாக் அம்ர் அஸ்ஸபீஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் எத்தனை அறப்போர்களில் நீங்கள் கலந்துகொண்டீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "பதினேழு அறப்போர்களில் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நான் கலந்து கொண்டேன்)" என்று விடையளித்தார்கள்.
தொடர்ந்து அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பத்தொன்பது போர்களில் கலந்துகொண்டார்கள். அவர்கள் (மதீனாவிற்கு) நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்ற பிறகு ஒரேயொரு ஹஜ் -விடைபெறும் ஹஜ்- மட்டுமே செய்தார்கள்" என்றும் கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள், "(நாடு துறந்து செல்வதற்கு முன்) அவர்கள் மக்காவில் இருந்தபோது மற்றொரு ஹஜ் செய்துள்ளார்கள்" என்று குறிப்பிடுகிறார்கள்.

2406 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் இப்னு உமர் (ரலி) அவர்களும் என் (சிற்றன்னை) ஆயிஷா (ரலி) அவர்களின் அறையோடு சாய்ந்து அமர்ந்திருந்தோம். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் பல் துலக்கும் குச்சியால் பல் துலக்கிக்கொண்டிருந்த சப்தத்தை நாங்கள் கேட்டோம். நான் (இப்னு உமர் (ரலி) அவர்களிடம்), "அபூ அப்திர் ரஹ்மான்! நபி (ஸல்) அவர்கள் ரஜப் மாதத்தில் உம்ராச் செய்துள்ளார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்' என்றார்கள். நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அன்னையே! அபூஅப்திர் ரஹ்மான் கூறியதைத் தாங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அவர் என்ன சொல்கிறார்?" என்று கேட்டார்கள். "நபி (ஸல்) அவர்கள் ரஜப் மாதத்தில் உம்ராச் செய்துள்ளார்கள் என்று சொல்கிறார்" என்றேன்.
அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், "அபூஅப்திர் ரஹ்மானுக்கு அல்லாஹ் மன்னிப்பு அளிக்கட்டும்! என் ஆயுள்மீது அறுதியாக! நபி (ஸல்) அவர்கள் ரஜப் மாதத்தில் உம்ராச் செய்யவில்லை. நபியவர்கள் உம்ராச் செய்தபோதெல்லாம் அவர்களுடன் அபூஅப்திர் ரஹ்மானும் இருந்திருக்கிறார் (ஆனால், இப்போது அவர் மறந்துவிட்டார்)" என்று கூறினார்கள்.
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதைக் கேட்டுக்கொண்டிருந்த இப்னு உமர் (ரலி) அவர்கள் "இல்லை' என்றோ, அல்லது "ஆம்'என்றோ சொல்லவில்லை; அமைதியாக இருந்தார்கள்.

2407 முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களும் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்குள் நுழைந்தோம். அங்கே ஆயிஷா (ரலி) அவர்களின் அறையோடு சாய்ந்து அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அமர்ந்திருந்தார்கள். அப்போது மக்கள் பள்ளிவாசலில் முற்பகல் நேரத்தொழுகை (ளுஹா) தொழுதுகொண்டிருந்தனர். நாங்கள் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் மக்களின் அந்தத் தொழுகையைப் பற்றிக் கேட்டோம். அதற்கு அவர்கள்,

"இது (மார்க்க அடிப்படையற்ற) புதிய நடைமுறை (பித்அத்)"என்றார்கள்.122 பிறகு அவர்களிடம், "அபூஅப்திர் ரஹ்மான்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எத்தனை உம்ராக்கள் செய்துள்ளார்கள்?" என்று உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கேட்டார்கள்.
அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "நான்கு உம்ராக்கள் செய்தார்கள்; அவற்றில் ஒன்றை ரஜப் மாதத்தில் செய்தார்கள்" என்றார்கள். நாங்கள் அவர்களது சொல்லைப் பொய்யாக்கவோ அதை மறுக்கவோ விரும்பவில்லை. இதற்கிடையே அறையினுள் ஆயிஷா (ரலி) அவர்கள் பல் துலக்கும் சப்தத்தைக் கேட்டோம். அப்போது உர்வா (ரஹ்) அவர்கள், "இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! அபூஅப்திர் ரஹ்மான் அவர்கள் சொல்வதை நீங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டார்கள்.
அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அவர் என்ன சொல்கிறார்?" என்று கேட்டார்கள். "நபி (ஸல்) அவர்கள் நான்கு உம்ராக்கள் செய்துள்ளார்கள்; அவற்றில் ஒன்று ரஜப் மாதத்தில் நடந்தது என்று சொல்கிறார்" என்று உர்வா (ரஹ்) அவர்கள் கூறினார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள், "அபூஅப்திர் ரஹ்மானுக்கு அல்லாஹ் கருணை புரிவானாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உம்ராச் செய்யும்போதெல்லாம் அவர்களுடன் அவரும் இருந்திருக்கிறார் (இப்போது மறந்துவிட்டார் போலும்!). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒருபோதும் ரஜப் மாதத்தில் உம்ராச் செய்ததே இல்லை" என்று கூறினார்கள்.

## பாடம் : 36 ரமளான் மாதத்தில் உம்ராச் செய்வதன் சிறப்பு.

2408 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் அன்சாரிப் பெண்ணிடம், "நீ எங்களுடன் ஹஜ் செய்வதற்கு என்ன தடை?" என்று கேட்டார்கள். அதற்கு அப்பெண்மணி, "எங்களிடம் நீர் இறைப்பதற்கான இரண்டு ஒட்டகங்கள் மட்டுமே உள்ளன; ஓர் ஒட்டகத்தில் என் கணவரும் மகனும் ஏறி ஹஜ்ஜுக்குச் சென்றுவிட்டனர். மற்றோர் ஒட்டகத்தை எங்களுக்காக அவர் விட்டுச் சென்றுள்ளார். அதன் மூலம் நாங்கள் நீர் இறைத்துக்கொண்டிருக்கிறோம்" என்றார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ரமளான் மாதம் வந்துவிட்டால் அப்போது நீ உம்ராச் செய்துகொள். ஏனெனில், ரமளானில் உம்ராச் செய்வது ஹஜ்ஜுக்கு நிகரான (பலனுடைய)தாகும்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர் அதாஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அப்பெண்ணின் பெயரைக் குறிப்பிட்டார்கள்; ஆனால், அதை நான் மறந்துவிட்டேன்.

2409 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் உம்மு சினான் எனப்படும் ஓர் அன்சாரிப் பெண்ணிடம், "நீ எங்களுடன் ஹஜ் செய்வதற்கு உனக்கு என்ன தடை?" என்று கேட்டார்கள். அதற்கு அப்பெண்மணி, "என் பிள்ளையின் தந்தையிடம் (அதாவது என் கணவரிடம்) தண்ணீர் இறைக்கும் இரு ஒட்டகங்கள் இருந்தன. ஒன்றில் அவரும் அவருடைய மகனும் ஹஜ்ஜுக்குச் சென்றுவிட்டனர்; மற்றொன்றில் எங்களின் அடிமை தண்ணீர் இறைத்துக் கொண்டிருக்கிறார்"

என்றார். நபி (ஸல்) அவர்கள், "ரமளானில் செய்யப்படும் ஓர் உம்ரா ஹஜ்ஜுக்கு நிகரானதாகும்; அல்லது என்னோடு ஹஜ் செய்வதற்கு நிகரானதாகும்" என்றார்கள்.

பாடம் : 37 மக்காவினுள் மேற்புறக்கணவாய் (அஸ்ஸனிய்யத்துல் உல்யா) வழியாக நுழைவதும் கீழ்ப்புறக் கணவாய் (அஸ்ஸனிய்யத்துஸ் ஸுஃப்லா) வழியாக வெளியேறுவதும் விரும்பத் தக்கதாகும்; (பொதுவாக) ஓர் ஊருக்குள் நுழையும் வழி ஒன்றாகவும், வெளியேறும் வழி வேறொன்றாகவும் இருப்பது விரும்பத்தக்கதாகும்.

2410 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அஷ்ஷஜரா" எனும் இடத்தின் வழியாக (மதீனாவிலிருந்து) வெளியேறுவார்கள். (திரும்பும்போது) "அல் முஅர்ரஸ்" எனும் இடத்தின் வழியாக நுழைவார்கள். மக்காவிற்குள் செல்லும்போது மேற்புறக்கணவாய் (அஸ்ஸனிய்யத்துல் உல்யா) வழியாக நுழைந்து, கீழ்ப்புறக் கணவாய் (அஸ்ஸனிய்யத்துஸ் ஸுஃப்லா) வழியாக வெளியேறுவார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்பத்ஹாவிலுள்ள அஸ்ஸனிய்யத்துல் உல்யா வழியாக நுழைவார்கள்" என இடம்பெற்றுள்ளது.

2411 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மக்கா நகருக்கு வந்த போது, அதன் மேற்புறம் (அஸ்ஸனிய்யத்துல் உல்யா) வழியாக நுழைந்து அதன் கீழ்ப்புறம் (அஸ்ஸனிய்யத்துஸ் ஸுஃப்லா) வழியாக வெளியேறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2412 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி ஆண்டில் மக்காவின் மேற்பகுதியிலுள்ள "கதாஉ" (எனும் கணவாய்) வழியாக நுழைந்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹிஷாம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: என் தந்தை உர்வா (ரஹ்) அவர்கள் (மேற்பகுதியிலுள்ள "கதாஉ", கீழ்ப் பகுதியிலுள்ள "குதாஉ" ஆகிய) அவ்விரண்டு வழிகளிலும் நுழைவார்கள்; பெரும்பாலும் "கதாஉ" (எனும் கணவாய்) வழியாகவே நுழைவார்கள்.

பாடம் : 38 மக்காவினுள் நுழைய விரும்புகின்றவர் "தூத் தவா" எனும் இடத்தில் இரவில் தங்குவதும், மக்காவினுள் நுழைவதற்காகக் குளிப்பதும், பகல் நேரத்தில் அதனுள் நுழைவதும் விரும்பத்தக்கவையாகும்.

2413 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தூத் தவா" எனுமிடத்தில் இரவில் தங்கி விட்டுக் காலையில் மக்காவில் நுழைந்தார்கள்.
இதன் அறிவிப்பாளர் நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இப்னு உமர் (ரலி) அவர்களும் அவ்வாறே செய்வார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் உபைதுல்லாஹ் பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "சுப்ஹுத் தொழுகும் வரை தங்கியிருப்பார்கள்' என்று இடம்பெற்றுள்ளது.

2414 நா∴பிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் மக்காவிற்கு வந்தால், "தூத் தவா'வில் இரவில் தங்காமல் இருக்கமாட்டார்கள். காலையில் (சுப்ஹுத் தொழுது) குளித்துவிட்டுப் பின்னர் பகல் நேரத்தில் மக்காவினுள் நுழைவார்கள். நபி (ஸல்) அவர்களும் அவ்வாறே செய்வார்கள் என அவர்கள் குறிப்பிடுவார்கள்.

2415 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனாவிலிருந்து) மக்கா செல்லும்போது "தூத் தவா' எனும் இடத்தில் இறங்குவார்கள்;சுப்ஹுத் தொழும்வரை அங்கேயே இரவில் தங்கியிருப்பார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுத இடம் அங்குள்ள கெட்டியான மேட்டின் மீது அமைந்துள்ளது. அங்கு தற்போது பள்ளிவாசல் கட்டப்பட்டுள்ள இடம் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுத) அந்த இடமன்று. அந்தப் பள்ளி வாசலுக்குக் கீழ்ப்புறமாக அமைந்துள்ள கெட்டியான மேடே (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுத) அந்த இடமாகும்.

2416 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ("தூத் தவா'வில்) கஅபாவின் திசையில் அமைந்த ஓர் உயரமான மலையின் இரு குன்றுகளை நோக்கி (அல்லாஹ்வை வணங்கி)னார்கள். (அதாவது தற்போது) அங்கு கட்டப்பட்டுள்ள பள்ளிவாசலை, மேட்டுப் புறத்தில் அமைந்த தொழும் இடத்திற்கு இடப்பக்கமாக ஆக்கிக்கொண்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுத இடம், கறுப்பு மேட்டிற்குக் கீழே சுமார் பத்து முழம் தள்ளி இருந்தது. உமக்கும் கஅபாவிற்கும் இடையே அமைந்த உயரமான மலையின் இரு குன்றுகளை நோக்கித் தொழுதார்கள். - இதை நா∴பிஉ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 39 உம்ராவின் தவா∴பிலும், ஹஜ்ஜின் முதல் தவா∴பிலும் விரைந்து நடப்பது ("ரமல்' செய்வது) விரும்பத்தக்கதாகும்.

2417 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவில் முதல் தவா∴ப் செய்யும் போது, (முதல்) மூன்று சுற்றுகளில் விரைந்து நடப்பார்கள். (பிந்திய) நான்கு சுற்றுகளில் (சாதரணமாக) நடப்பார்கள். ஸ∴பா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவரும்போது "பத்னுல் மசீல்' பகுதியில் மட்டும் விரைந்து நடப்பார்கள்.
இதன் அறிவிப்பாளரான நா∴பிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இப்னு உமர் (ரலி) அவர்களும் இவ்வாறே செய்வார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2418 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காகவோ அல்லது உம்ராவிற்காகவோ (மக்காவிற்கு) வந்ததும் முதலில் தவாஃப் செய்வார்கள்; அதில் (முதல்) மூன்று சுற்றுகளில் விரைந்து நடப்பார்கள்; (பிந்திய) நான்கு சுற்றுகளில் (சாதராணமாக) நடப்பார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். பிறகு ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றுவார்கள்.

2419 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவிற்கு வந்தபோது அவர்களை நான் பார்த்தேன்; அவர்கள் முதலாவது தவாஃபில் "ஹஜருல் அஸ்வதை'த் தொட்டு முத்தமிட்டார்கள். ஏழு சுற்றுகளில் (முதல்) மூன்று சுற்றுகளில் விரைந்து நடந்தார்கள்.

2420 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (கஅபாவைச் சுற்றிவரும்போது முதல்) மூன்று சுற்றுகளில் "ஹஜருல் அஸ்வத்' முதல் (மறுபடியும்) "ஹஜருல் அஸ்வத்'வரை விரைவாக நடந்தார்கள். (பிந்திய) நான்கு சுற்றுகளில் (சாதரணமாக) நடந்தார்கள்.

2421 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் (கஅபாவைச் சுற்றி வரும்போது) "ஹஜருல் அஸ்வத்' முதல் "ஹஜருல் அஸ்வத்' வரை விரைவாக நடந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறே செய்தார்கள் என்றும் கூறினார்கள்.

2422 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஹஜருல் அஸ்வதி'லிருந்து "ஹஜருல் அஸ் வத்'வரை தவாஃபின் (முதல்) மூன்று சுற்றுகளில் விரைவாக நடந்ததை நான் பார்த்தேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2423 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தவாஃபின்போது) "ஹஜருல் அஸ்வதி'லிருந்து "ஹஜருல் அஸ்வத்'வரை தவாஃபின் (முதல்) மூன்று சுற்றுகளில் விரைந்து நடந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2424 அபுத்துஃபைல் ஆமிர் பின் வாஸிலா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் தவாஃபின்போது (முதல்) மூன்று சுற்றுகளில் விரைந்து நடப்பதும் பிந்திய நான்கு சுற்றுகளில் (சாதாரணமாக) நடப்பதுமான இந்த "ரமல்' பற்றி என்ன கருதுகிறீர்கள்? அது நபிவழியா? ஏனெனில், உங்களுடைய சமூகத்தார் அதை நபிவழியெனக் கூறுகின்றனரே?" என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அவர்கள் சொல்வது உண்மையும் பொய்யுமாகும்" என்றார்கள்.
நான் "அவர்கள் சொல்வது உண்மையும் பொய்யுமாகும் எனும் உங்களுடைய சொல் (லின் பொருள்) என்ன?" என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவிற்கு வந்தபோது இணைவைப்பாளர்கள்,

"முஹம்மதும் அவருடைய தோழர்களும் (மதீனாவிற்குப் போய்) மெலிந்துவிட்டதால் அவர்களால் இறையில்லம் கஅபாவைச் சுற்றி வர முடியாது' என்று கூறினர். நபியவர்கள் மீது இணைவைப்பாளர்கள் பொறாமை கொண்டவர்களாய் இருந்தனர்.
எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களிடம் தவாஃபின்போது (முதல்) மூன்று சுற்றுகளில் விரைந்து நடக்குமாறும் (பிந்திய) நான்கு சுற்றுகளில் (சாதாரணமாக) நடக்குமாறும் கட்டளையிட்டார்கள்" என்றார்கள்.
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் "வாகனத்தில் அமர்ந்தவாறு ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவருவது (சயீ) பற்றி எனக்குக் கூறுங்கள். அது நபிவழியா? ஏனெனில், உங்கள் சமூகத்தார் அதையும் நபிவழியெனக் கூறுகின்றனரே?" என்று கேட்டேன். அதற்கும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அவர்கள் சொல்வது உண்மையும் பொய்யுமாகும்" என்றார்கள். நான், "அவர்கள் சொல்வது உண்மையும் பொய்யுமாகும் எனும் உங்களுடைய சொல்(லின் பொருள்) என்ன?" என்று கேட்டேன்.
அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹஜ்ஜுக்காக மக்கா வந்தபோது) அவர்களைச் சுற்றிலும் ஏராளமான மக்கள் "இதோ முஹம்மத்; இதோ முஹம்மத்' எனக் கூறியவாறு திரண்டுவிட்டனர். இல்லங்களிலிருந்து இளம்பெண்கள்கூட வெளியே வந்து விட்டனர். (பொதுவாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்பாக மக்கள் அடிக்கப்ப(ட்டு விரட்டப்ப)டுவதில்லை. எனவே, ஏராளமான மக்கள் அவர்களைச் சூழ்ந்து கொண்டதால் வாகனத்தில் (அமர்ந்தவாறு ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றி) வந்தார்கள். ஆயினும், (அதனிடையே காலால்) நடப்பதும் ஓடுவதுமே சிறந்ததாகும்"என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "மக்காவாசிகள் பொறாமை கொண்ட சமுதாயத்தாராய் இருந்தனர்" என்று இடம் பெற்றுள்ளது. "அவர்கள் பொறாமை கொண்டவர்களாய் இருந்தனர்" எனும் (வினைச் சொல்) வாசகம் இல்லை.

2425 அபுத்துஃபைல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தவாஃபின் போதும், ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவரும்போதும் விரைந்து நடந்தார்கள். (எனவே) அது நபிவழியாகும் என உங்களுடைய சமூகத்தார் கூறுகின்றனரே?" என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அவர்கள் சொல்வது உண்மையும் பொய்யுமாகும்" என்றார்கள்.

2426 அபுத்துஃபைல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்ததாகவே எண்ணுகிறேன்"என்றேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அதைப் பற்றி எனக்கு விவரமாகச் சொல்லுங்கள்" என்றார்கள். அதற்கு நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மர்வா' அருகில் (அதைச் சுற்றிவரும்போது) ஓர் ஒட்டகத்தின் மீதிருந்ததை நான் கண்டேன். அப்போது அவர்களைச் சுற்றி ஏராளமான மக்கள் திரண்டிருந்தனர்" என்றேன். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அவர்கள்தாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்கள். அவர்களைவிட்டு மக்கள் விரட்டப்படவோ வலுக்கட்டாயப் படுத்தப்படவோ மாட்டார்கள்" என்று கூறினார்கள்.

2427 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் (உம்ரத்துல் களாவிற்காக மக்காவிற்கு) வந்தபோது,யஸ்ரிபின் (மதீனாவின்) காய்ச்சலால் உடல் நலிவுற்றிருந்தனர். அப்போது (மக்கா நகர) இணைவைப்பாளர்கள், "நாளைய தினம் (மதீனாவின்) காய்ச்சலால் நலிவடைந்து, அதனால் சிரமத்தைச் சந்தித்த ஒரு கூட்டத்தார் உங்களிடம் வரப்போகிறார்கள்" என்று (ஏளனமாகப்) பேசிக்கொண்டனர்.
அதன்படி இணைவைப்பாளர்கள் (கஅபாவிற்கு அருகிலுள்ள அரை வட்டப்பகுதியான) ஹிஜ்ரை ஒட்டிய இடத்தில் உட்கார்ந்துகொண்(டு நபித்தோழர்களைப் பார்வையிட்)டனர். அப்போது இணைவைப்பாளர்களுக்குத் தமது பலத்தைக் காட்டுவதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (கஅபாவைச் சுற்றிவரும்போது முதல்) மூன்று சுற்றுகள் விரைந்து நடக்குமாறும்,ஹஜருல் அஸ்வதுக்கும் ருக்னுல் யமானிக்கும் இடையே (மெதுவாக) நடந்து செல்லுமாறும் கட்டளையிட்டார்கள்.
அப்போது இணைவைப்பாளர்கள், "(மதீனாவின்) காய்ச்சலால் இவர்கள் பலவீனமடைந்துள்ளனர் என நீங்கள் கருதினீர்கள். இவர்களோ இன்னின்னதைவிட பலம் வாய்ந்தவர்களாக இருக்கின்றனர்" என்று (தம்மிடையே) பேசிக்கொண்டனர். தவாஃபின் அனைத்துச் சுற்றுகளிலும் விரைந்து நடக்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிடாததற்குக் காரணம்,மக்கள்மீது கொண்ட இரக்கமேயாகும்.

2428 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே) தொங்கோட்டம் ஓடியதும், இறையில்லத்தைச் சுற்றிவரும் போது விரைந்து நடந்ததும் இணைவைப்பாளர்களுக்குத் தமது பலத்தைக் காட்டுவதற்காகத்தான்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 40 (கஅபாவின்) இரு யமனிய மூலைகளைத் தொட்டு முத்தமிடலே விரும்பத் தக்கதாகும்; மற்ற இரு (ஷாமிய) மூலைகளை அல்ல.**

2429 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (ஹஜருல் அஸ்வத், ருக்னுல் யமானீ ஆகிய) இரு யமனிய மூலைகளைத் தவிர,இறையில்லம் கஅபாவில் வேறெந்த இடத்தையும் தொட்டு முத்தமிட்டதை நான் பார்த்ததில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2430 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவில் "ஹஜருல் அஸ்வத்' மூலையையும், அதையொட்டி ஜுமஹியரின் குடியிருப்புகளை நோக்கி அமைந்துள்ள

(ருக்னுல் யமானீ) மூலையையும் தவிர வேறெந்த மூலைகளையும் தொட்டு முத்தமிட மாட்டார்கள்.

2431 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (கஅபாவில்) ஹஜருல் அஸ்வத், ருக்னுல் யமானீ ஆகிய இரு மூலைகளைத் தவிர வேறெந்த இடத்தையும் தொட்டு முத்தமிடமாட்டார்கள்.

2432 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கூட்ட நெரிசலுள்ள நேரத்திலும் கூட்ட நெரிசலற்ற நேரத்திலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ருக்னுல் யமானீ, ஹஜருல் அஸ்வத் ஆகிய இவ்விரு மூலைகளையும் தொட்டு முத்தமிட்டதைப் பார்த்ததிலிருந்து நானும் அவ்விரண்டு மூலைகளையும் முத்தமிடுவதைக் கைவிட்டதில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2433 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் ஹஜருல் அஸ்வதைத் தமது கையால் தொட்டு, பின்னர் தமது கையை முத்தமிட்டதை நான் கண்டேன். மேலும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்ததை நான் பார்த்ததிலிருந்து நானும் அவ்வாறு செய்வதைக் கைவிட்ட தில்லை" என இப்னு உமர் (ரலி) அவர்கள் குறிப்பிடுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2434 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹஜருல் அஸ்வத், ருக்னுல் யமானீ ஆகிய) இவ்விரு யமனிய மூலைகளைத் தவிர (கஅபாவின்) வேறெந்த இடத்தையும் தொட்டு முத்தமிட்டதை நான் கண்டதில்லை.

## பாடம் : 41 தவாஃபின்போது ஹஜருல் அஸ்வத்தை முத்தமிடுவது விரும்பத்தக்கதாகும்.

2435 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் ஹஜருல் அஸ்வதை முத்தமிட்டு விட்டு, "அல்லாஹ்வின் மீதாணையாக! நீ ஒரு கல் என்பதை நான் அறிவேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உன்னை முத்தமிடுவதை நான் கண்டிராவிட்டால் நான் உன்னை முத்தமிட்டிருக்கமாட்டேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2436 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் ஹஜருல் அஸ்வதை முத்தமிட்டுவிட்டு, "நான் உன்னை முத்தமிடுகிறேன். (ஆனால்,) நீ ஒரு கல் என்பதை நான் நன்கு அறிவேன். ஆயினும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உன்னை முத்தமிடுவதை நான் கண்டேன். (எனவே நானும் உன்னை முத்தமிட்டேன்)" என்றார்கள்.

2437 அப்துல்லாஹ் பின் சர்ஜிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முன்தலை வழுக்கையானவர் (அதாவது உமர் (ரலி) அவர்கள்), ஹஜருல் அஸ்வதை முத்தமிடும் போது, "அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உன்னை முத்தமிடுகிறேன். நீ தீங்கோ நன்மையோ செய்ய முடியாத ஒரு கல் என்பதை நான் அறிவேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உன்னை முத்தமிடுவதை நான் கண்டிராவிட்டால் உன்னை முத்தமிட்டிருக்கமாட்டேன்"என்று கூறியதை நான் பார்த்தேன்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் அபீபக்ர் அல்முகத்தமீ, அபூகாமில் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "சின்ன வழுக்கத் தலையரை நான் பார்த்தேன்' என ஹதீஸ் தொடங்குகிறது.

2438 ஆபிஸ் பின் ரபீஆ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உமர் (ரலி) அவர்கள் ஹஜருல் அஸ்வதை முத்தமிட்டுவிட்டு, "நான் உன்னை முத்தமிடுகிறேன்; நீ ஒரு கல் என்பதை நான் அறிவேன்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உன்னை முத்தமிடுவதை நான் கண்டிராவிட்டால் நான் உன்னை முத்தமிட்டிருக்க மாட்டேன்" என்று கூறியதை நான் கண்டேன்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2439 சுவைத் பின் ஃகஃபலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உமர் (ரலி) அவர்கள் ஹஜருல் அஸ்வதை முகம் பதித்து முத்தமிட்டு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உன்னிடம் மிகுந்த ஈடுபாடுகொண்டிருந்ததை நான் கண்டேன். (எனவே உன்னை நான் முத்தமிடுகிறேன்)" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட தகவல் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஆயினும், அபுல்காசிம் (முஹம்மத் – ஸல்) அவர்கள் உன்னிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்ததை நான் கண்டேன்" என உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று இடம் பெற்றுள்ளது; "முகம் பதித்தார்கள்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 42 ஒட்டகம் முதலான வாகனப் பிராணிகள் மீதமர்ந்து தவாஃப் செய்யலாம்; வாகனத்திலிருப்பவர் முனை வளைந்த கைத்தடி போன்றவற்றால் ஹஜருல் அஸ்வதைத் தொ(ட்டு முத்தமி)டலாம்.**

2440 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜின்போது ஒட்டகத்தின் மீதமர்ந்து தவாஃப் செய்தார்கள். அப்போது,முனை வளைந்த கைத்தடியால் ஹஜருல் அஸ்வதைத் தொட்(டு, முத்தமிட்)டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2441 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜின்போது தமது வாகனத்தின் மீதமர்ந்து இறையில்லத்தைச் சுற்றிவந்தார்கள்; அப்போது அவர்கள் தமது முனை வளைந்த

கைத்தடியால் ஹஜருல் அஸ்வதைத் தொட்(டு, முத்தமிட்)டார்கள். மக்கள் தம்மைப் பார்(த்து ஹஜ்ஜின் கிரியைகளைப் படி)க்க வேண்டும்; தம்மிடம் (மார்க்க விளக்கங்கள்) கேட்க வேண்டும்;அதற்கேற்ப தாம் மக்களின் பார்வையில் படவேண்டும் என்பதற்காகவே (வாகனத்தில் அமர்ந்திருந்தார்கள்). ஏனெனில், அப்போது மக்கள் (திரளாக) அவர்களைச் சூழ்ந்துகொண்டிருந்தனர்.

2442 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜின்போது தமது வாகனத்தின் மீதமர்ந்து இறையில்லம் கஅபாவையும் ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையேயும் சுற்றிவந்தார்கள். மக்கள் தம்மைப் பார்(த்து ஹஜ்ஜின் கிரியைகளைப் படி)க்க வேண்டும்; தம்மிடம் (மார்க்க விளக்கங்கள்) கேட்க வேண்டும்; (அதற்கேற்ப) தாம் மக்களின் பார்வையில் பட வேண்டும் என்பதற்காகவே (வாகனத்தில் அமர்ந்திருந்தார்கள்). ஏனெனில், அப்போது மக்கள் (திரளாக) அவர்களைச் சூழ்ந்துகொண்டிருந்தனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அலீ பின் கஷ்ரம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "தம்மிடம் அவர்கள் (மார்க்க விளக்கங்கள்) கேட்க வேண்டும் என்பதற்காக" என்பது மட்டும் இடம்பெறவில்லை.

2443 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜின்போது தமது ஒட்டகத்தின் மீதமர்ந்து கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வந்தார்கள்; அப்போது (கைத்தடியால்) ஹஜருல் அஸ்வதைத் தொட்(டு, முத்தமிட்)டார்கள். (கூட்ட நெரிசலில்) தம்மைவிட்டு மக்கள் விரட்டியடிக்கப்படுவதை அவர்கள் வெறுத்ததே அ(வர்கள் வாகனத்தில் அமர்ந்திருந்த)தற்குக் காரணமாகும்.

2444 அபுத்துஃபைல் அலீ பின் வாஸிலா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவைச் சுற்றிவந்தபோது ஹஜருல் அஸ்வதைத் தம்மிடமிருந்த முனை வளைந்த கைத்தடியால் தொட்டு, அந்தக் கைத்தடியை முத்தமிட்டதை நான் கண்டேன்.

2445 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"நான் உடல் நலிவுற்றுள்ளேன்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (ஹஜ்ஜின்போது) நான் முறையிட்டேன். அதற்கு அவர்கள், "நீ மக்களுக்கப்பாலிருந்து வாகனத்தில் அமர்ந்து (கஅபாவைச்) சுற்றிவருவாயாக!" என்று சொன்னார்கள். அவ்வாறே நான் சுற்றிவந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அத்தூர்' எனும் (52ஆவது) அத்தியாயத்தை ஓதியவாறு கஅபாவின் ஒரு பக்கத்தில் (சுப்ஹுத் தொழுகை) தொழுதுகொண்டிருந்தார்கள்.

**பாடம் : 43 ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே ஓடுவது ("சயீ' செய்வது) முக்கியக் கடமையாகும்; அதைச் செய்யாமல் ஹஜ் நிறைவேறாது.**

2446 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா (ரலி) அவர்களிடம், "ஒருவர் ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவராவிட்டாலும் அவர்மீது குற்றமில்லை என்று நான் கருதுகிறேன்" என்றேன். ஆயிஷா (ரலி) அவர்கள், "ஏன் (எதை வைத்து அப்படிச் சொல்கிறாய்)?" என்று கேட்டார்கள். நான், "ஏனெனில், அல்லாஹ் "ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்களில் உள்ளவை ஆகும். எனவே, யார் அந்த (கஅபா) ஆலயத்தில் ஹஜ்ஜோ உம்ராவோ செய்கிறாரோ, அவர்மீது அவ்விரண்டையும் சுற்றிவருவது குற்றமன்று' (2:158) என்று கூறுகின்றான்" என்றேன்.
அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவராத மனிதரின் ஹஜ்ஜையோ உம்ராவையோ அல்லாஹ் முழுமையாக்கமாட்டான். அவ்விரண்டையும் சுற்றாமல் இருப்பது குற்றமில்லை என்றிருந்தால், நீ கூறும் கருத்து வரும். ("சுற்றுவது குற்றமன்று' என்றே குர்ஆனில் வந்துள்ளது.) இந்த வசனம் ஏன் அருளப்பெற்றதென உனக்குத் தெரியுமா?அறியாமைக் காலத்தில் அன்சாரிகள் கடலோரத்தில் அமைந்திருந்த "இசாஃப்', "நாயிலா' ஆகிய சிலைகளுக்காக "இஹ்ராம்' கட்டிவந்து, ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றுவர்; பின்னர் தலையை மழித்துக் கொள்வர். இஸ்லாம் வந்தபோது அவ்விரண்டுக்குமிடையே சுற்றிவருவதை அன்சாரிகள் வெறுத்தனர். அறியாமைக் காலத்தில் தாம் செய்துவந்த ஒரு காரியம் என்பதால் அவர்கள் அதை வெறுத்தனர். அப்போது வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் "ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்கள்' என்று தொடங்கும் (2:158ஆவது) வசனத்தை இறுதிவரை அருளினான். பின்னர் அன்சாரிகள் (ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே) சுற்றிவந்தனர்" என்று கூறினார்கள்.

2447 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா (ரலி) அவர்களிடம், "நான் ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவராமலிருப்பதில் என்மீது குற்றமேதுமில்லை என்று கருதுகிறேன்" என்றேன். ஆயிஷா (ரலி) அவர்கள், "ஏன் (எதை வைத்து அப்படிச் சொல்கிறாய்)?" என்று கேட்டார்கள். நான், "ஏனெனில் அல்லாஹ் "ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்கள். அவ்விரண்டையும் சுற்றிவருவது குற்றமன்று' (2:158) என்று கூறுகின்றான்" என்றேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: "அவ்விரண்டையும் சுற்றாமலிருப்பது குற்றமில்லை' என்றிருந்தால் நீ கூறும் கருத்து வரும். அன்சாரிகள் சிலர் தொடர்பாகவே இந்த வசனம் அருளப்பெற்றது. அவர்கள் அறியாமைக் காலத்தில் "இஹ்ராம்' கட்டினால் (மதீனாவிற்கு அருகில் "முஷல்லல்'எனும் குன்றிலிருந்த) "மனாத்' எனும் சிலைக்காக "இஹ்ராம்' கட்டுபவர்களாய் இருந்தனர். எனவே, ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவருவதை அவர்கள் அனுமதிக்கப்பட்டதாகக் கருதவில்லை.
நபி (ஸல்) அவர்களுடன் அவர்கள் ஹஜ்ஜுக்காக வந்தபோது அதைப் பற்றி நபியவர்களிடம் தெரிவித்தனர். அப்போதுதான் அல்லாஹ் இந்த (2:158ஆவது) வசனத்தை அருளினான். என்

ஆயுள் மீது அறுதியாக! ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவராதவரின் ஹஜ்ஜை அல்லாஹ் முழுமையாக்குவதில்லை.

2448 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவராத எவர்மீதும் (குற்றம்) ஏதுமிருப்பதாக நான் கருதவில்லை. (எனவே) அவ்விரண்டுக்குமிடையே நான் சுற்றி வராமலிருப்பதை நான் ஒரு பொருட்டாகவே எண்ண மாட்டேன்" என்றேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "என் சகோதரி (அஸ்மாவின்) மகனே! நீ சொல்வது தவறு. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் (ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே) சுற்றிவந்தனர். எனவே, அது ஒரு நபிவழியாக ஆகிவிட்டது. "முஷல்லல்' எனும் இடத்திலிருந்த சிலைகளுக்காக "இஹ்ராம்' கட்டியவர்களே ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றி வராமலிருந்தனர். இஸ்லாம் வந்தபோது, அதைப் பற்றி நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் வினவினோம். அப்போதுதான் வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், "ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்கள். எனவே, யார் அந்த (கஅபா) ஆலயத்தில் ஹஜ்ஜோ, உம்ராவோ செய்கிறாரோ, அவர்மீது அவ்விரண்டையும் சுற்றிவருவது குற்றமில்லை" எனும் (2:158ஆவது) வசனத்தை அருளினான். (இவ்வசனத்தில்) "அவ்விரண்டையும் சுற்றாமலிருப்பது குற்றமில்லை' என்றிருந்தால்தான் நீ சொல்லும் கருத்து வரும்" என்றார்கள்.
இதன் அறிவிப்பாளரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:
இந்த ஹதீஸை நான் அபூபக்ர் பின் அப்திர் ரஹ்மான் பின் அல்ஹாரிஸ் பின் ஹிஷாம் (ரஹ்) அவர்களிடம் சொன்னபோது,அதைக் கேட்டு அவர்கள் வியப்படைந்தார்கள். ("இந்த வசனத்திற்கு) இதுதான் (சரியான) விளக்கமாகும். அறிஞர்களில் பலர் "ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவராத அரபுகள் "இவ்விரு கற்(குன்று)களுக்கிடையே சுற்றிவருவது அறியாமைக் காலச்செயலாகும்' என்றார்கள் என்று கூறியதை நான் கேட்டுள்ளேன். (ஆனால்) அன்சாரிகளில் வேறுசிலரோ "இறையில்லம் கஅபாவைச் சுற்றிவருமாறே நாம் பணிக்கப்பட்டுள்ளோம். ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே அவ்வாறு (சுற்றிவருமாறு) நாம் பணிக்கப்படவில்லை" என்று கூறினர். அப்போதுதான் வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் "ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்கள்...' என்று (2:158ஆவது) தொடங்கும் வசனத்தை அருளினான். இந்த வசனம் இவ்விருசாரார் தொடர்பாகவும் அருளப் பெற்றிருக்கலாம் என நான் கருதுகிறேன்" என்று அபூபக்ர் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2449 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் கேட்டேன்" என்று தொடங்கி, மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது. மேலும் அதில், பின்வருமாறும் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று காணப்படுகிறது:

அன்சாரிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவருவதைப் பாவமாகக் கருதிவந்தோம்" என்று கூறினர். அப்போது வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், "ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்கள். எனவே, யார் அந்த (கஅபா) ஆலயத்தில் ஹஜ்ஜோ உம்ராவோ செய்கிறாரோ, அவர்மீது அவ்விரண்டையும் சுற்றிவருவது குற்றமன்று" (2:158) எனும் வசனத்தை அருளினான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்விரண்டுக்கும் இடையே சுற்றிவருவதை (தமது) வழிமுறையாக்கினார்கள். எனவே, அவ்விரண்டுக்குமிடையே சுற்றுவதைக் கைவிட எவருக்கும் (உரிமை) இல்லை.

2450 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளும் "ஃகஸ்ஸான்' குலத்தாரும் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன் "மனாத்' எனும் சிலைக்காக "இஹ்ராம்' கட்டி "தல்பியா' கூறுபவர்களாய் இருந்தனர். எனவே, ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவருவதை அவர்கள் பாவமாகக் கருதினர். (ஆனால்,) அதுவே அவர்களின் மூதாதையரிடையே நிலவிவந்த மரபாக இருந்தது. அன்சாரிகள் இஸ்லாத்தைத் தழுவியபோது,அதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினர். இதுதொடர்பாகவே அல்லாஹ், "ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்கள். எனவே, யார் அந்த (கஅபா) ஆலயத்தில் ஹஜ்ஜோ உம்ராவோ செய்கிறாரோ, அவர்மீது அவ்விரண்டையும் சுற்றுவது குற்றமன்று. யார் கூடுதலாக நன்மை செய்கிறாரோ (அவருக்கு) அல்லாஹ் நன்றி பாராட்டக்கூடியவனும் நன்கறிந்தவனும் ஆவான்" (2:158) எனும் வசனத்தை அருளினான்.

2451 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகள் (ஆரம்பக் காலத்தில்) ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே சுற்றிவருவதை வெறுப்பவர்களாய் இருந்தனர்; "ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்கள். எனவே, யார் அந்த (கஅபா) ஆலயத்தில் ஹஜ்ஜோ உம்ராவோ செய்கிறாரோ, அவர்மீது அவ்விரண்டையும் சுற்றிவருவது குற்றமன்று" (2:158) எனும் வசனம் அருளப்படும்வரை.

## பாடம் : 44 ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே ஓடுவது (சயீ) ஒரே தடவைதான் என்பது பற்றிய விளக்கம்.

2452 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஹஜ் மற்றும் உம்ராவின்போது) நபி (ஸல்) அவர்களும் நபித்தோழர்களும் ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே ஒரேயொரு தடவை தவிர (கூடுதலாகச்) சுற்றிவரவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஆரம்பத்தில் சுற்றிவந்த ஒரேயொரு தடவை தவிர" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 45 ஹஜ் செய்பவர் துல்ஹஜ் பத்தாவது நாளன்று "ஜம்ரத்துல் அகபா'வில் கல்லெறியத் துவங்கும்வரை தொடர்ந்து தல்பியாச் சொல்லிக்கொண்டிருப்பது விரும்பத் தக்கதாகும்.**

2453 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
("விடைபெறும்' ஹஜ்ஜின்போது) அரஃபாவிலிருந்து திரும்புகையில் நான் வாகனத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் இருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முஸ்தலிஃபாவுக்கு அருகிலுள்ள இடப்புறப் பள்ளத்தாக்கை அடைந்ததும் ஒட்டகத்தை மண்டியிடவைத்துவிட்டுச் சென்று, சிறுநீர் கழித்துவிட்டுத் திரும்பிவந்தார்கள். நான் அவர்களுக்கு அங்கத் தூய்மை (உளூ) செய்யத் தண்ணீர் ஊற்றினேன். அவர்கள் சுருக்கமாக அங்கத் தூய்மை செய்தார்கள். நான், "தொழப்போகிறீர்களா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "தொழுகை உனக்கு முன்னால் (உள்ள முஸ்தலிஃபாவில்)தான்" எனக் கூறி விட்டு, வாகனத்தில் ஏறி முஸ்தலிஃபா வந்ததும் தொழுதார்கள். பின்னர் முஸ்தலிஃபாவிலிருந்து புறப்படும் அதிகாலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வாகனத்தில் அவர்களுக்குப் பின்னால் ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் இருந்தார்கள்.
இந்த ஹதீஸின் அறிவிப்பாளரான குறைப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஜம்ரா'வை அடையும்வரை "தல்பியா' சொல்லிக்கொண்டே இருந்தார்கள் என ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2454 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ("விடைபெறும்' ஹஜ்ஜில்) முஸ்தலிஃபாவிலிருந்து புறப்படும்போது, தமது வாகனத்தில் தமக்குப் பின்னால் (என் சகோதரர்) ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்களை ஏற்றிக்கொண்டார்கள். ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (துல்ஹஜ் பத்தாவது நாளில்) "ஜம்ரத்துல் அகபா'வில் கல்லெறியும்வரை தல்பியாச் சொல்லிக்கொண்டிருந்தார்கள்" என என்னிடம் தெரிவித்தார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2455 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் ("விடைபெறும்' ஹஜ் பயணத்தின் போது) அவர்களது வாகனத்தில் அமர்ந்திருந்தவரான ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அரஃபா நாள்' மாலையிலும் "முஸ்தலிஃபா நாள்' காலையிலும் திரும்பிக்கொண்டிருந்த மக்களிடம், "மெதுவாகச் செல்லுங்கள்" என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது ஒட்டகத்தின் வேகத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு, மினாவிலுள்ள "முஹஸ்ஸிர்' ஓடைக்குள் நுழைந்ததும், "ஜம்ராவில் எறிவதற்காக, சுண்டி எறியப்படும் சிறு கற்களை எடுத்துக்கொள்ளுங்கள்"

என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஜம்ரத்துல் அகபா'வில் கல்லெறியும் வரை தொடர்ந்து தல்பியாச் சொல்லிக் கொண்டேயிருந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஜம்ரத்துல் அகபா'வில் கல்லெறியும்வரை தொடர்ந்து தல்பியாச் சொல்லிக்கொண்டிருந்தார்கள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை. மேலும் அதில், ("சுண்டி எறியப்படும் சிறுகற்கள்' என்று கூறும்போது) "ஒரு மனிதன் கல் சுண்டி விளையாடுவதைப் போன்று தமது கையால் சைகை செய்தார்கள்" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

2456 அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் முஸ்தலிஃபாவில் இருந்தபோது, அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "அல் பகரா அத்தியாயம் யாருக்கு அருளப்பெற்றதோ அவர் (முஹம்மத் – ஸல்) இந்த இடத்தில் "லப்பைக். அல்லாஹும்ம, லப்பைக்" என்று (தல்பியா) கூறியதை நான் செவியுற்றேன்" என்றார்கள்.

2457 அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் முஸ்தலிஃபாவிலிருந்து புறப்படும்போது தல்பியாச் சொன்னார்கள். அப்போது "இவர் ஒரு கிராமவாசியா?" என்று கேட்கப்பட்டது. அப்போது அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "மக்கள் மறந்துவிட்டனரா,அல்லது வழிதவறிவிட்டனரா? "அல்பகரா' அத்தியாயம் யாருக்கு அருளப்பெற்றதோ அவர் (முஹம்மத் – ஸல்) இந்த இடத்தில் "லப்பைக். அல்லாஹும்ம, லப்பைக்' என (தல்பியா)ச் சொன்னதை நான் செவியுற்றுள்ளேன்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2458 அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) மற்றும் அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) ஆகியோர் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், முஸ்தலிஃபாவில் "அல்பகரா அத்தியாயம் யாருக்கு அருளப்பெற்றதோ அவர் (முஹம்மத் – ஸல்) இந்த இடத்தில் "லப்பைக். அல்லாஹும்ம, லப்பைக்' என (தல்பியா)ச் சொன்னதை நான் செவியுற்றுள்ளேன்" என்று கூறினார்கள். பிறகு அவர்கள் தல்பியாச் சொன்னார்கள்; அவர்களுடன் நாங்களும் தல்பியாச் சொன்னோம். – இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 46 அரஃபா நாளில் மினாவிலிருந்து அரஃபாவிற்குப் போகும்போது தல்பியாவும் தக்பீரும் கூறல்.

2459 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (அரஃபா நாள்) காலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மினாவிலிருந்து அரஃபாவிற்குச் சென்றோம். அப்போது எங்களில் சிலர் தல்பியா (லப்பைக்...) கூறிக்கொண்டிருந்தனர். வேறுசிலர் தக்பீர் (அல்லாஹு அக்பர்) கூறிக்கொண்டிருந்தனர்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2460 அப்துல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "நாங்கள் "அர∴பா' தினத்தன்று காலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது எங்களில் சிலர் "தக்பீர்' சொல்லிக்கொண்டிருந்தனர். வேறுசிலர் "தல்பியா'சொல்லிக்கொண்டிருந்தனர். நாங்களோ தக்பீர் சொல்லிக்கொண்டிருந்தோம்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளரான அப்துல்லாஹ் பின் அபீசலமா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் எனக்கு இந்தச் செய்தியை அறிவித்த அப்துல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்களிடம், "அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களைக் கண்டு வியப்படைகிறேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்ன செய்து கொண்டிருந்தார்கள் என்று நீங்கள் உங்கள் தந்தையிடம் எப்படி வினவாமலிருந்தீர்கள்?" என்று கேட்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2461 முஹம்மத் பின் அபீபக்ர் அஸ்ஸகஃபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களும் மினாவிலிருந்து அர∴பாவிற்குப் போகும்போது, நான் அனஸ் (ரலி) அவர்களிடம், "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தபோது இன்றைய தினத்தில் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள், "அன்று எங்களில் சிலர் "தல்பியா' கூறிக்கொண்டிருந்தனர்; அதற்கு ஆட்சேபம் தெரிவிக்கப்பட வில்லை. வேறுசிலர் "தக்பீர்' கூறிக்கொண்டிருந்தனர்; அதற்கும் ஆட்சேபம் தெரிவிக்கப்படவில்லை" என்று விடையளித்தார்கள்.

2462 முஹம்மத் பின் அபீபக்ர் அஸ்ஸகஃபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் "அர∴பா' நாளன்று காலையில் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "இன்றைய தினத்தில் தல்பியா கூறுவதைப் பற்றித் தாங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் நபி (ஸல்) அவர்களுடனும் நபித்தோழர்களுடனும் இவ்வாறு சென்றிருக்கிறேன். அப்போது எங்களில் சிலர் "தக்பீர்' கூறிக்கொண்டிருப்பர். வேறுசிலர் "தல்பியா' கூறிக்கொண்டிருப்பர். எங்களில் யாரும் மற்றவரை குறை கூறமாட்டார்கள்" என்று விடையளித்தார்கள்.

பாடம் : 47 அர∴பாவிலிருந்து முஸ்தலி∴பாவிற்குத் திரும்புவதும், அந்த இரவில் முஸ்தலி∴பாவில் ம∴க்ரிப் மற்றும் இஷா ஆகிய இருதொழுகைகளையும் சேர்த்துத் தொழுவதும்.

2463 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (துல்ஹஜ் 9ஆவது நாள்) அர∴பாவிலிருந்து (முஸ்தலி∴பாவிற்குத்) திரும்பிச் செல்லும்போது, வழியில் ஒரு பள்ளத்தாக்கில் இறங்கி சிறுநீர் கழித்தார்கள். பின்னர் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். அப்போது அவர்கள் (மும்முறை உறுப்புகளைக் கழுவி) முழுமையாக அங்கத் தூய்மை செய்யவில்லை (சுருக்கமாகவே செய்தார்கள்). நான் அவர்களிடம், "(ம∴க்ரிப்) தொழப்போகிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு, "தொழுகை உமக்கு முன்னால் (உள்ள முஸ்தலி∴பாவில்தான் தொழப்பட) உள்ளது" என்று

அவர்கள் கூறி, வாகனத்தில் ஏறிப் புறப்பட்டார்கள். முஸ்தலிஃபா வந்ததும் (தமது வாகனத்திலிருந்து) இறங்கி அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். அப்போது அவர்கள் முழுமையாக அங்கத் தூய்மை செய்தார்கள். தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டதும் மஃக்ரிப் தொழுதார்கள். பிறகு ஒவ்வொருவரும் தமது ஒட்டகத்தைத் தத்தமது கூடாரத்தில் படுக்க வைத்தனர். பிறகு இஷாத் தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டதும் இஷாத் தொழுதார்கள். அவ்விரு தொழுகைகளுக்குமிடையே நபியவர்கள் (கூடுதலாக) வேறெதுவும் தொழவில்லை.

2464 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அரஃபாவிலிருந்து திரும்பிய பின் இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக (வழியில்) ஒரு பள்ளத்தாக்கை நோக்கிச் சென்றார்கள். (அவர்கள் திரும்பிவந்ததும் அவர்கள் அங்கத் தூய்மை செய்வதற்காக) அவர்களுக்கு நான் நீர் ஊற்றினேன். அப்போது "நீங்கள் (மஃக்ரிப்) தொழப்போகிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் தொழுமிடம் உமக்கு முன்னால் (உள்ள முஸ்தலிஃபாவில்)தான் உள்ளது" என்றார்கள்.

2465 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அரஃபாவிலிருந்து திரும்பியபோது, (வழியில்) ஒரு பள்ளத்தாக்கை அடைந்ததும் (வாகனத்திலிருந்து) இறங்கி சிறுநீர் கழித்தார்கள். ("சிறுநீர் கழித்தார்கள்' என்று வெளிப்படையாகவே உசாமா கூறினார்கள்; "நீர் ஊற்றிக் கழுவினார்கள்' என்று சூசகமாகக் கூறவில்லை.) பிறகு தண்ணீர் கொண்டுவரச் சொல்லி அங்கத் தூய்மை செய்தார்கள். (தலா ஒவ்வோர் உறுப்பையும் ஒரு முறையே கழுவினார்கள்.) முழுமையாக அங்கத் தூய்மை செய்யவில்லை. அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! தொழப்போகிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "தொழுகை உமக்கு முன்னால் (உள்ள முஸ்தலிஃபாவில்தான் தொழப்பட) உள்ளது" என்றார்கள். பிறகு பயணத்தைத் தொடர்ந்து முஸ்தலிஃபா வந்ததும் மஃக்ரிபையும் இஷாவையும் (சேர்த்துத்) தொழுதார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2466 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் அடிமையாயிருந்த குறைப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களிடம் "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் (வாகனத்தில்) இருந்தபோது "அரஃபா' நாள் மாலையில் என்ன செய்தீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு, "மக்கள் மஃக்ரிப் தொழுகைக்காக (தங்கள் ஒட்டகங்க ளை)ப் படுக்கவைக்கும் பள்ளத்தாக்கிற்குச் சென்றோம். அங்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது ஒட்டகத்தைப் படுக்க வைத்தார்கள். பிறகு சிறுநீர் கழித்தார்கள். ("நீர் ஊற்றிக் கழுவினார்கள்' என்று சூசகமாக உசாமா கூறவில்லை; சிறுநீர் கழித்தார்கள் என வெளிப்படையாகவே குறிப்பிட்டார்கள்.) பிறகு அங்கத் தூய்மை (உளூ) செய்வதற்காகத் தண்ணீர் கேட்டார்கள். பிறகு அங்கத் தூய்மை செய்தார்கள். அப்போது அவர்கள்

முழுமையாக அங்கத் தூய்மை செய்யவில்லை (ஒவ்வோர் உறுப்பையும் தலா ஒரு முறையே கழுவினார்கள்.)
நான், "அல்லாஹ்வின் தூதரே! (தாங்கள்) தொழப்போகிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "தொழுகை உமக்கு முன்னால் (உள்ள முஸ்தலிஃபாவில்தான் தொழப்பட) உள்ளது" என்றார்கள். பிறகு வாகனத்தில் ஏறிப் புறப்பட்டார்கள். நாங்கள் முஸ்தலிஃபாவிற்கு வந்து சேர்ந்ததும் மஃக்ரிப் தொழுகை தொழுவித்தார்கள். பிறகு மக்கள் தம் ஒட்டகங்களைத் தத்தமது கூடாரங்களில் படுக்கவைத்தார்கள்; இஷாத் தொழுகையை முடிக்கும்வரை அவற்றை அவிழ்த்துவிடவில்லை. இஷாத் தொழுத பிறகே ஒட்டகங்களை அவிழ்த்(துப் பயணத்தைத் தொடர்ந்)தனர்" என்று உசாமா (ரலி) அவர்கள் விடையளித்தார்கள். நான், "மறுநாள் காலையில் நீங்கள் என்ன செய்தீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் (வாகனத்தில்) ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் அமர்ந்தார்கள். நானோ (மினாவிற்கு) முந்திச் சென்ற குறைஷியருடன் நடந்தேசென்றேன்" என்றார்கள்.

2467 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தலைவர்கள் (தமது பயணத்தில்) இறங்கி இயற்கைக் கடன்களை நிறைவேற்றும் பள்ளத்தாக்கு வந்தபோது, (தமது வாகனத்திலிருந்து) இறங்கினார்கள். பிறகு சிறுநீர் கழித்தார்கள். ("நீர் ஊற்றிக் கழுவினார்கள்'என்று உசாமா சூசகமாகக் கூறவில்லை; சிறுநீர் கழித்தார்கள் என்று வெளிப்படையாகவே குறிப்பிட்டார்கள்.) பிறகு தண்ணீர் கொண்டுவரச் சொல்லிச் சுருக்கமாக அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! தொழப்போகிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு தொழுகை உமக்கு முன்னால் (உள்ள முஸ்தலிஃபாவில்தான் தொழப்பட) உள்ளது" என்றார்கள்.

2468 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அரஃபாவிலிருந்து (முஸ்தலிஃபாவிற்குத்) திரும்பியபோது அவர்களுக்குப் பின்னால் நான் வாகனத்தில் அமர்ந்திருந்தேன். அவர்கள் அந்தப் பள்ளத்தாக்கிற்கு வந்துசேர்ந்ததும் தமது வாகன ஒட்டகத்தைப் படுக்கவைத்து விட்டுக் கழிப்பிடம் நோக்கிச் சென்றார்கள். (தமது தேவையை முடித்து) அவர்கள் திரும்பிய போது, அவர்களுக்கு நான் நீர் குவளையிலிருந்து தண்ணீர் ஊற்றினேன். அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். பிறகு வாகனத்தில் ஏறிப் புறப்பட்டார்கள். முஸ்தலிஃபா வந்ததும் அங்கு மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்து (இஷா நேரத்தில்) தொழுதார்கள்.

2469 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அரஃபாவிலிருந்து திரும்பியபோது, அவர்களுக்குப் பின்னால் (வாகனத்தில்) உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் இருந்தார்கள். உசாமா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதே நிலையில் (மிதமான வேகத்தில்) தொடர்ந்து பயணம் மேற்கொண்டு முஸ்தலிஃபா போய்ச்சேர்ந்தார்கள்.

2470 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அர◌ஃபாவிலிருந்து (முஸ்தலி◌ஃபாவிற்குத்) திரும்பும் போது தமக்குப் பின்னால் (தமது வாகனத்தில்) அமரவைத்திருந்த உசாமா (ரலி) அவர்களிடம் (பின்வருமாறு) கேட்கப்பட்டது. அப்போது அவர்களுடன் நான் இருந்தேன். அல்லது உசாமா (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அர◌ஃபாவிலிருந்து திரும்பியபோது எவ்வாறு பயணித்தார்கள்?" என்று நான் கேட்டேன். அதற்கு உசாமா (ரலி) அவர்கள், "நபியவர்கள் மிதமான வேகத்தில் பயணித்தார்கள். (கூட்ட நெரிசல் காணப்படாத) விசாலமான இடத்தை அடைந்தால் அவர்கள் விரைவாகச் சென்றார்கள்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2471 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மேற்கண்ட ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ள "அந்நஸ்' (விரைவு) என்பது "அல் அனக்' (மிதவேகம்) என்பதைவிடக் கூடுதல் வேகமாகும்" என்று இடம்பெற்றுள்ளது.

2472 அபூஅய்யூப் காலித் பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"விடைபெறும்' ஹஜ்ஜின்போது நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் முஸ்தலி◌ஃபாவில் ம◌ஃக்ரிபையும் இஷாவையும் (சேர்த்துத்) தொழுதேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த அப்துல்லாஹ் பின் யஸீத் அல் கத்மீ (ரஹ்) அவர்கள், அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களது ஆட்சியில் கூ◌ஃபாவின் ஆளுநராக இருந்தார்" எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

2473 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது ஹஜ்ஜின்போது) முஸ்தலி◌ஃபாவில் ம◌ஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுதார்கள்.

2474 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முஸ்தலி◌ஃபாவில் ம◌ஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுதார்கள். அவற்றுக்கிடையே (கூடுதலான தொழுகைகள்) வேறெதுவும் தொழவில்லை.
(ம◌ஃக்ரிப்) மூன்று ரக்அத்கள் தொழுது விட்டு, (தொடர்ந்து) இஷாவை இரண்டு ரக்அத்தாக (சுருக்கி)த் தொழுதார்கள்.
இதன் அறிவிப்பாளரான உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(என் தந்தை) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், அல்லாஹ்விடம் சென்றடையும் வரை இவ்வாறு முஸ்தலி◌ஃபாவில் சேர்த்தே தொழுதுவந்தார்கள்.

2475 சலமா பின் குஹைல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் (தமது ஹஜ்ஜின்போது) முஸ்தலிஃபாவில் ஒரே இகாமத்தில் மஃக்ரிபையும் இஷாவையும் (சேர்த்துத்) தொழுதார்கள். பிறகு, "இவ்வாறே இப்னு உமர் (ரலி) அவர்களும் தொழுதார்கள்" என்றும், "அவ்வாறே நபி (ஸல்) அவர்களும் தொழுவார்கள் என இப்னு உமர் (ரலி) அவர் கள் கூறினார்கள்" என்றும் அறிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2476 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "மஃக்ரிபையும் இஷாவையும் ஒரேயோர் இகாமத்தில் (சேர்த்துத்) தொழுதார்கள்" என இடம்பெற்றுள்ளது.

2477 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முஸ்தலிஃபாவில் மஃக்ரிபையும் இஷாவையும் (சேர்த்துத்) தொழுதார்கள். ஒரேயோர் இகாமத்தில் மூன்று ரக்அத்கள் மஃக்ரிபையும் இரண்டு ரக்அத்கள் இஷாவையும் தொழுதார்கள்.

2478 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் இப்னு உமர் (ரலி) அவர்களுடன் (அரஃபாவிலிருந்து) திரும்பி முஸ்தலிஃபாவிற்கு வந்து சேர்ந்தபோது, அவர்கள் ஒரேயோர் இகாமத்தில் மஃக்ரிபையும் இஷாவையும் (சேர்த்துத்) தொழுவித்துவிட்டுத் திரும்பினார்கள். பிறகு, "இவ்வாறே இந்த இடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுவித்தார்கள்" என்றும் கூறினார்கள்.

பாடம் : 48 (ஹாஜிகள்) துல்ஹஜ் பத்தாம் நாளில் முஸ்தலிஃபாவில் சுப்ஹுத் தொழுகையை (அதன் ஆரம்ப நேரத்தில்) அதிக இருட்டிலேயே தொழுவது விரும்பத் தக்கதாகும்; சுப்ஹு நேரம் வந்துவிட்டது என்பதை உறுதி செய்து கொண்ட பின்னரே அவ்வாறு ஆரம்ப நேரத்தில் தொழ வேண்டும்.

2479 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹஜ் பயணத்தில்) எந்தத் தொழுகையையும் அதற்குரிய நேரத்தில் தொழாமல் வேறு நேரத்தில் தொழுததை நான் பார்த்ததில்லை; இரண்டு தொழுகைகளைத் தவிர. ஒன்று: முஸ்தலிஃபாவில் மஃக்ரிபையும் இஷாவையும் (சேர்த்துத்) தொழுதது. மற்றொன்று: அன்றைய (மறு)நாள் ஃபஜ்ர் தொழுகையை அதற்குரிய (வழக்கமான) நேரத்திற்கு முன்னரே (முஸ்தலிஃபாவில்) தொழுதது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "ஃபஜ்ர் தொழுகையை அதற்குரிய (வழக்கமான) நேரத்திற்கு முன் இருட்டிலேயே தொழுதது" என இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 49 பெண்கள் (முதியோர், நோயாளிகள்) உள்ளிட்ட பலவீனர்களை, கூட்ட நெரிசல் ஏற்படுவதற்கு முன்பே இரவின் இறுதியில் முஸ்தலி∴பாவிலிருந்து மினாவிற்குப் புறப்படச் செய்வது விரும்பத்தக்கதாகும்; மற்றவர்கள் சுப்ஹுத் தொழுகையை நிறைவேற்றும்வரை முஸ்தலி∴பாவிலேயே தங்கியிருப்பது விரும்பத்தக்கதாகும்.**

2480 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் கூட்ட நெரிசல் ஏற்படுவதற்கும் முன்பே (முஸ்தலி∴பாவிலிருந்து மினாவிற்குத்) தாம் புறப்பட்டுச் செல்ல சவ்தா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் முஸ்தலி∴பா இரவில் அனுமதி கேட்டார்கள்– (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியார்) சவ்தா கனத்த உடலுடையவராக (மெதுவாக நடப்பவராக) இருந்தார்கள்– அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சவ்தா (ரலி) அவர்களுக்கு அனுமதியளித்தார்கள். எனவே, அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்படுவதற்கு முன்பே புறப்பட்டுச் சென்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களை சுப்ஹுவரை அங்கேயே தங்கியிருக்கச் செய்தார்கள். பிறகு அவர்கள் (சுப்ஹுத் தொழுதுவிட்டுப்) புறப்படவே நாங்களும் புறப்பட்டுச் சென்றோம்.
சவ்தா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி பெற்று முன்பே சென்றதைப் போன்று, நானும் அனுமதி பெற்றிருந்தால் வேறெந்த மகிழ்ச்சியையும்விட அது எனக்கு மிகவும் உவப்பானதாய் இருந்திருக்கும்.
இதன் அறிவிப்பாளரான காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் அஸ்ஸித்தீக் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ள "ஸபிதா' எனும் சொல்லுக்கு "கனத்த உடலுடையவர்' என்று பொருள்.

2481 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
சவ்தா (ரலி) அவர்கள் கனத்த உடலுடைய மெதுவாக நடக்கும் பெண்ணாக இருந்தார். எனவே, அவர் முஸ்தலி∴பாவிலிருந்து இரவிலேயே புறப்பட்டுச் செல்ல அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதிகேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதியளித்தார்கள்.
சவ்தா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி பெற்றதைப் போன்று நானும் அவர்களிடம் அனுமதி பெற்றிருந்தால் நன்றாயிருந்திருக்கும்!
இதன் அறிவிப்பாளரான காசிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
ஆயிஷா (ரலி) அவர்கள் இமாமுடனேயே (முஸ்தலி∴பாவிலிருந்து மினாவிற்குப்) புறப்பட்டுச் செல்வார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2482 காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"சவ்தா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி பெற்றதைப் போன்று, நானும் அவர்களிடம் அனுமதி பெற்றுச் சென்று, மினாவில் சுப்ஹுத் தொழுது விட்டு, மக்கள் வருவதற்கு முன்பே "ஜம்ரா'வில் கல்லெறிந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும் என நான் விரும்பினேன்" என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள். அப்போது ஆயிஷா

(ரலி) அவர்களிடம், "சவ்தா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி பெற்றிருந்தாரா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "ஆம். அவர் கனத்த உடலுடைய பெண்ணாக இருந்ததால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதியளித்தார்கள்" என்று விடையளித்தார்கள்.

2483 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2484 அஸ்மா (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான அப்துல்லாஹ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அஸ்மா (ரலி) அவர்கள் முஸ்தலிஃபா இல்லத்தின் அருகே இருந்தபோது, என்னிடம் "சந்திரன் மறைந்துவிட்டதா?" என்று கேட்டார்கள். நான் "இல்லை' என்றேன். அவர்கள் சிறிது நேரம் தொழுதுவிட்டுப் பிறகு "மகனே! சந்திரன் மறைந்துவிட்டதா?"என்று (மீண்டும்) கேட்டார்கள். நான் "ஆம் (மறைந்துவிட்டது)' என்றேன். "என்னுடன் (மினாவுக்குப்) புறப்படு" என்று கூறினார்கள். அவ்வாறே நாங்கள் புறப்பட்டுச் சென்றோம். (மினா வந்ததும்) அவர்கள் "ஜம்ரா'வில் கல்லெறிந்துவிட்டுப் பின்னர் (திரும்பிவந்து) தமது கூடாரத்தில் தொழுதார்கள். அப்போது அவர்களிடம் நான், "அம்மா! நாம் விடிவதற்கு முன்பே (மினாவுக்கு) வந்து விட்டோம்" என்றேன். அவர்கள், "(இதில் தவறேதும்) இல்லை, மகனே! நபி (ஸல்) அவர்கள் பெண்களுக்கு (விடியலுக்கு முன்பே மினாவிற்கு வர) அனுமதியளித்துள்ளார்கள்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "இல்லை, மகனே! அல்லாஹ்வின் நபி (ஸல்) அவர்கள், பயணத்திலிருந்த தம் பெண்களுக்கு (விடியலுக்கு முன்பே மினாவிற்கு வர) அனுமதியளித்துள்ளார்கள்" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

2485 சாலிம் பின் ஷவ்வால் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) உம்மு ஹபீபா (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் என்னை முஸ்தலிஃபாவிலிருந்து (மினாவிற்கு) இரவி(ன் இருளி)லேயே அனுப்பிவைத்தார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2486 உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களது காலத்தில் இவ்வாறே செய்துவந்தோம். (அதாவது) "ஜம்உ' விலிருந்து மினாவிற்கு இருளிலேயே (விடியலுக்கு முன்பே) புறப்பட்டுச் செல்வோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அம்ர் பின் முஹம்மத் அந்நாகித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("ஜம்உ' என்பதன் மற்றொரு பெயரான) "முஸ்தலிஃபா விலிருந்து..." என்று இடம்பெற்றுள்ளது.

2487 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பலவீனர்(களான பெண்)களுடன்' அல்லது "பயணச் சுமைகளுடன்' என்னையும் "ஜம்உ' (முஸ்தலி∴பா)விலிருந்து (மினாவிற்கு) இரவிலேயே அனுப்பிவைத்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2488 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் குடும்பத்துப் பலவீனர்களை முன்கூட்டியே (மினாவிற்கு) அனுப்பிவைத்தார்கள். அவர்களில் நானும் ஒருவன் ஆவேன்.
இதை உபைதுல்லாஹ் பின் அபீயஸீத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2489 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் குடும்பத்துப் பலவீனர்களை முன்கூட்டியே (மினாவிற்கு) அனுப்பிவைத்தார்கள். அவர்களில் நானும் ஒருவனாயிருந்தேன்.
இதை அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2490 இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிகாலைக்கு முந்தைய (சஹ்ர்) நேரத்திலேயே தம் பயணச்சாமான்களுடன் என்னை (முஸ்தலி∴பாவிலிருந்து மினாவிற்கு) அனுப்பி வைத்தார்கள் என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் சொன்னார்கள் என அதாஉ (ரஹ்) அவர்கள் கூறினார்கள். நான் அதாஉ (ரஹ்) அவர்களிடம், "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இரவு நன்கு இருக்கவே) நீண்ட இரவில் என்னை (மினாவிற்கு) அனுப்பிவைத்தார்கள்' என்று கூறினார்கள் எனும் செய்தி தங்களுக்கு எட்டியதா?" என்று கேட்டேன். அதற்கு அதாஉ (ரஹ்) அவர்கள் "இல்லை; மேற்கண்டவாறு அதிகாலைக்கு முந்தைய (சஹ்ர்) நேரத்திலேயே என்னை அனுப்பிவைத்தார்கள் என்று மட்டுமே கூறினார்கள்" என்றார்கள். நான் அவரிடம், "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "நாங்கள் ∴பஜ்ருக்கு முன்பே ஜம்ராவில் கல்லெறிந்தோம் என்று கூறினார்களா?" என்று கேட்டேன். அதற்கு அதாஉ (ரஹ்) அவர்கள், "இல்லை; மேற்கண்டவாறு மட்டுமே கூறினார்கள்" என்று விடையளித்தார்கள். "∴பஜ்ரை எங்கு தொழுவித்தார்கள்?" என்று நான் கேட்க, "இல்லை; மேற்கண்டவாறு மட்டுமே கூறினார்கள்" என்றார்கள்.

2491 சாலிம் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தமது குடும்பத்திலுள்ள பலவீனர்களை முன் கூட்டியே (∴பஜ்ருக்கு முன்பே மினாவிற்கு) அனுப்பிவிடுவார்கள். அதன்படி, அவர்கள் முஸ்தலி∴பாவில் "மஷ்அருல் ஹராம்' எனுமிடத்தில் இரவில் தங்கியிருந்து, அங்கு தமக்குத் தெரிந்தவகையில் அல்லாஹ்வை நினைவு கூர்வார்கள். பிறகு, இமாம் முஸ்தலி∴பாவில் தங்கித் திரும்புவதற்கு முன்பே இவர்கள் (மினாவிற்குத்) திரும்பிவிடுவர். அவர்களில் சிலர் ∴பஜ்ர் தொழுகைக்காக முன்கூட்டியே மினாவிற்குச் சென்றுவிடுவர். இன்னும் சிலர் அதற்குப் பின் செல்வர். மினாவுக்குச் சென்றதும் "ஜம்ரா'வில் கல்லெறிவர். "(முதியோர், பெண்கள், நோயாளிகள் போன்ற) இத்தகைய (நலிந்த)வர்களுக்கு அல்லாஹ்வின் தூதர்

(ஸல்) அவர்கள் (இவ்வாறு செய்ய) அனுமதி யளித்துள்ளார்கள்"என்று அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 50 "பத்னுல் வாதி' பள்ளத்தில் மக்கா தமக்கு இடப் பக்கமிருக்கும்படி நின்று, "ஜம்ரத்துல் அகபா'வின் மீது கல்லெறிவதும், ஒவ்வொரு கல்லை எறியும்போது தக்பீர் கூறுவதும்.**

2492 அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "பத்னுல் வாதி' பள்ளத்தில் நின்று "ஜம்ரத்துல் அகபா'வின் மீது ஏழு சிறு கற்களை எறிந்தார்கள். ஒவ்வொரு கல்லை எறியும்போதும் தக்பீரும் கூறிக்கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களிடம், "மக்கள் மேற்பரப்பில் நின்றல்லவா கல்லை எறிகின்றனர்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன்மீது ஆணையாக! "அல்பகரா' அத்தியாயம் எவருக்கு அருளப்பெற்றதோ (அந்த அல்லாஹ்வின் தூதர்–ஸல்) அவர்கள் (கல்லை எறிந்தபடி) நின்றிருந்த இடம் இதுதான்" என்று பதிலளித்தார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2493 சுலைமான் பின் மஹ்ரான் அல்அஃமஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) ஹஜ்ஜாஜ் பின் யூசுஃப் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீதிருந்தபடி, "ஜிப்ரீல் (அலை) அவர்கள் தொகுத்தளித்த முறைப்படி குர்ஆனைத் தொகு(த்துப் பதிவு செய்யு)ங்கள். (அல்பகரா அத்தியாயம், அந்நிசா அத்தியாயம், ஆலு இம்ரான் அத்தியாயம் என்றெல்லாம் கூறுவதைத் தவிர்த்து) பசுமாட்டைப் பற்றிக் குறிப்பிடும் அத்தியாயம், மகளிர் பற்றிக் குறிப்பிடும் அத்தியாயம், இம்ரானின் சந்ததியர் பற்றிக் குறிப்பிடும் அத்தியாயம் (எனப் பெயரிட்டு, குர்ஆன் வசனங்களை ஜிப்ரீல் கொண்டுவந்த வரிசை முறைப்படி பதிவு செய்யுங்கள்)" என்றார்.

நான் இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது ஹஜ்ஜாஜ் கூறியதைத் தெரிவித்தேன். அப்போது இப்ராஹீம் (ரஹ்) அவர்கள் ஹஜ்ஜாஜைக் கடிந்துரைத்துவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:
அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் என்னிடம் கூறினார்கள்: நான் (ஹஜ்ஜின் போது) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களுடன் இருந்தேன். அவர்கள் (மினாவில்) "ஜம்ரத்துல் அகபா'விற்குச் சென்று அதனை ஒட்டியுள்ள "பத்னுல் வாதி' பள்ளத்தாக்கில் இறங்கி ஜம்ராவை நோக்கி நின்று அதன் மீது ஏழு சிறு கற்களை எறிந்தார்கள். ஒவ்வொரு கல்லை எறியும்போதும் தக்பீரும் கூறினார்கள். அப்போது அவர்களிடம் நான், "அபூஅப்திர் ரஹ்மான்! மக்கள் இப்பள்ளத்தாக்கின் மேற்பரப்பில் நின்றவாறு கல்லை எறிகின்றனரே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன்மீது சத்தியமாக! "அல் பகரா' அத்தியாயம் எவருக்கு அருளப்பெற்றதோ அவர்கள் (கல்லை எறிந்தபடி) நின்றிருந்த இடம் இதுதான்" என்று விடையளித்தார்கள்.
- மேற்கண்ட செய்தி மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் "ஹஜ்ஜாஜ், "அல்பகரா அத்தியாயம் எனச் சொல்லாதீர்கள்' என்று கூறியதைக் கேட்டேன் என அஃமஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாக அறிவிப்பு ஆரம்பிக்கிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட அறிவிப்பில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2494 அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களுடன் ஹஜ் செய்தேன். அவர்கள் இறையில்லம் கஅபா தமக்கு இடப்பக்கமாகவும், மினா தமக்கு வலப்பக்கமாகவும் இருக்கும்படி (பத்னுல் வாதி பள்ளத்தாக்கில்) நின்று ஜம்ராவின் மீது ஏழு சிறு கற்களை எறிந்தார்கள். மேலும், "அல்பகரா அத்தியாயம் எவருக்கு அருளப்பெற்றதோ அவர்கள் (கல்லை எறிந்தபடி) நின்றிருந்த இடம் இதுதான்" என்றும் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2495 மேற்கண்ட செய்தி மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "ஜம்ரத்துல் அகபா'விற்குச் சென்ற போது..." என்று அறிவிப்பு தொடங்குகிறது.

2496 அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஹஜ்ஜின்போது) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "பத்னுல் வாதி' பள்ளத்தாக்கில் நின்று (ஜம்ராவின் மீது) கல்லை எறிந்துகொண்டிருந்தார்கள். அப்போது அவர்களிடம் "மக்கள் பள்ளத்தாக்கின் மேற்பரப்பில் நின்று ஜம்ராவின் மீது கல்லை எறிகின்றனரே? (ஆனால் தாங்கள் பள்ளத்தில் நின்று கல்லை எறிகின்றீர்களே?)" என்று கேட்கப்பட்டது. அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன்மீது சத்தியமாக! "அல்பகரா' அத்தியாயம் எவருக்கு அருளப்பெற்றதோ அவர்கள் இங்கிருந்துதான் (ஜம்ராவின் மீது) கல்லை எறிந்தார்கள்" என்று பதிலளித்தார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 51 நஹ்ருடைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் வாகனத்தில் அமர்ந்தவாறு "ஜம்ரத்துல் அகபா'வின் மீது கல் எறிவது விரும்பத் தக்கதாகும் என்பதும், "நீங்கள் உங்களது ஹஜ்ஜின் கிரியைகளை (என்னிடமிருந்து) கற்றுக்கொள்ளுங்கள்'' என்ற நபி (ஸல்) அவர்களின் சொல்லின் விளக்கமும்.**

2497 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் நஹ்ருடைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் தமது வாகன ஒட்டகத்தில் அமர்ந்தவாறு (ஜம்ரத்துல் அகபாவின் மீது) கல் எறிவதை நான் கண்டேன். மேலும் அவர்கள், "நீங்கள் உங்களது ஹஜ்ஜின் கிரியைகளை (என்னிடமிருந்து இந்த ஆண்டிலேயே) கற்றுக்கொள்ளுங்கள். ஏனெனில் நான், எனது இந்த ஹஜ்ஜிற்குப் பிறகு ஹஜ் (செய்வேனா,) செய்யமாட்டேனா என்பதை அறியமாட்டேன்" என்று கூறிக்கொண்டிருந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2498 உம்முல் ஹுஸைன் பின்த் இஸ்ஹாக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"விடைபெறும்' ஹஜ்ஜின்போது நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹஜ் செய்தேன். அவர்கள் தமது வாகனத்தில் அமர்ந்தபடி "ஜம்ரத்துல் அகபா'வின் மீது கல் எறிந்துவிட்டுத் திரும்பிச் சென்றதை நான் கண்டேன். அப்போது அவர்களுடன் பிலால் (ரலி) அவர்களும் உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களும் இருந்தனர். அவர்களில் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது ஒட்டகத்தைப் பிடித்து இழுத்துச் சென்றார். மற்றொருவர் வெயில் படாமலிருக்க அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தலைமீது தமது ஆடையை உயர்த்திப் பிடித்து (நிழலிட்டுக்) கொண்டிருந்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நிறைய விஷயங்களைக் கூறினார்கள். "அல்லாஹ்வின் வேதத்தின்படி உங்களை வழி நடத்தக்கூடிய, உறுப்புகள் துண்டிக்கப்பட்ட, கறுப்பு நிற அடிமையொருவர் உங்களுக்குத் தலைவராக ஆக்கப்பட்டாலும் அவரது சொல்லைக் கேளுங்கள்; (அவருக்குக்) கீழ்ப்படியுங்கள்" என்று அவர்கள் கூறியதையும் நான் செவியுற்றேன்.

2499 உம்முல் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"விடைபெறும்' ஹஜ்ஜின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நான் ஹஜ் செய்தேன். உசாமா (ரலி), பிலால் (ரலி) ஆகிய இருவரையும் நான் கண்டேன். அவர்களில் ஒருவர் நபி (ஸல்) அவர்களது ஒட்டகத்தின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டிருந்தார். மற்றவர் வெயில் படாமலிருக்கத் தமது ஆடையை உயர்த்திப் பிடித்து அவர்களை மறைத்துக்கொண்டிருந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஜம்ரத்துல் அகபா'வில் கல் எறியும்வரை (இவ்வாறு செய்துகொண்டிருந்தனர்).169
முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் (ஆகிய நான்) கூறுகிறேன்:
இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூஅப்திர் ரஹீம் (ரஹ்) அவர்களது இயற்பெயர் காலித் பின் அபீயஸீத் என்பதாகும். அவர் முஹம்மத் பின் சலமா (ரஹ்) அவர்களின் தாய்மாமன் ஆவார். அவரிடமிருந்து வகீஉ பின் அல்ஜர்ராஹ் (ரஹ்), ஹஜ்ஜாஜ் அல்அஃவர் (ரஹ்) ஆகி யோர் ஹதீஸ்களை அறிவித்துள்ளனர்.

**பாடம் : 52 சுண்டி விளையாடும் கற்கள் அளவிற்குச் சிறுகற்கள் அமைவது விரும்பத் தக்கதாகும்.**

2500 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், சுண்டி விளையாடும் கற்கள் அளவிலான சிறிய கற்களையே (ஜம்ராக் களில்) எறிந்ததை நான் கண்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 53 கல்லெறிய உகந்த நேரம்.**

2501 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் முற்பகல் நேரத்திலும் அதற்கடுத்த நாட்களில் சூரியன் உச்சியிலிருந்து சாய்ந்ததும் கற்களை எறிந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "நபி (ஸல்) அவர்கள் (அவ்வாறு) செய்வார்கள்' எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 54 ஜம்ராவில் எறியப்படும் சிறு கற்கள் (எண்ணிக்கை) ஏழு என்பதன் விளக்கம்.**

2502 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர் கள் கூறினார்கள்:
இயற்கைக் கடனை நிறைவேற்றிய பின் கற்களால் துப்புரவு செய்வது ஒற்றை எண்ணிக்கை (மூன்று) ஆகும். (ஹஜ்ஜின்போது) கற்களை எறிவதும் ஒற்றை எண்ணிக்கை (ஏழு) ஆகும்; ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே தொங்கோட்டம் ஓடுவதும் ஒற்றை எண்ணிக்கை (ஏழு) ஆகும்; கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வருவதும் ஒற்றை எண்ணிக்கை (ஏழு) ஆகும். உங்களில் ஒருவர் இயற்கைக் கடனை நிறைவேற்றிய பின் கற்களால் துப்புரவு செய்யும் போது ஒற்றை எண்ணிக்கையில் துப்புரவு செய்யட்டும்!
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 55 (ஹஜ் கிரியைகளுக்குப் பின்) தலை(முடியைக் குறைப்பதைவிட முழுமையாக மழிப்பதே சிறந்ததாகும்; குறைத்துக்கொள்ளவும் அனுமதி உண்டு.**

2503 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஹஜ் கிரியைகளுக்குப் பின்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தலையை மழித்தார்கள். அவர்களுடைய தோழர்களில் சிலரும் மழித்துக்கொண்டனர். வேறுசிலர் (சிறிதளவு) முடியைக் குறைத்துக்கொண்டனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மழித்துக்கொள்பவர்களுக்கு அல்லாஹ் அருள் புரிவானாக!" என்று ஓரிரு முறை பிரார்த்தித்தார்கள். பிறகு "முடியை குறைத்துக்கொண்டவர்களுக்கும் (அருள் புரிவானாக)" என்று பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2504 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இறைவா, மழித்துக்கொள்பவர்களுக்கு அருள் புரிவாயாக!" என்று பிரார்த்தித்தபோது மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! குறைத்துக் கொள்பவர்களுக்கும் (சேர்த்துப் பிரார்த்தியுங்கள்)" என்றனர். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இறைவா! மழித்துக்கொள்பவர்களுக்கு அருள் புரிவாயாக!" என்றார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! குறைத்துக்கொள்பவர்களுக்கும்..." என்றனர். அல்லாஹ்வின்

தூதர் (ஸல்) அவர்கள் "முடியைக் குறைத்துக்கொள்பவர்களுக்கும் (இறைவா, அருள் புரிவாயாக!)" என்று பிரார்த்தித்தார்கள்.

2505 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மழித்துக்கொள்பவர்களுக்கு அல்லாஹ் அருள் புரிவானாக!" என்று பிரார்த்தித்ததும் மக்கள், "அல்லாஹ்வின் தூதரே, குறைத்துக் கொள்பவர்களுக்கும் (பிரார்த்தியுங்கள்)" என்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ், மழித்துக்கொள்பவர்களுக்கு அருள் புரிவானாக!" எனப் பிரார்த்தித்தார்கள். மக்கள் (மீண்டும்), "அல்லாஹ்வின் தூதரே! குறைத்துக்கொள்பவர்களுக்கும்..." என்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மறுபடியும்) "அல்லாஹ், மழித்துக்கொள்பவர்களுக்கு அருள்புரிவானாக!" எனப் பிரார்த்தித்தார்கள். மக்கள் (திரும்பவும்) "அல்லாஹ்வின் தூதரே! குறைத்துக்கொள்வர்களுக்கும்..." என்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "குறைத்துக்கொள்பவர்களுக்கும் (அல்லாஹ் அருள் புரிவானாக)" எனப் பிரார்த்தித்தார்கள்.

2506 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், நான்காவது தடவையில் "குறைத்துக்கொள்பவர்களுக்கும் (அல்லாஹ் அருள் புரிவானாக)' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள் என இடம் பெற்றுள்ளது.

2507 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா, மழித்துக்கொள்பவர்களுக்கு மன்னிப்பு அளிப்பாயாக!" எனப் பிரார்த்தித்ததும் மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! "குறைத்துக் கொள்பவர்களுக்கும் (பிரார்த்தியுங்கள்)" என்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா, மழித்துக்கொள்பவர்களுக்கு மன்னிப்பு அளிப்பாயாக!" என்று (மீண்டும்) பிரார்த்தித்தார்கள். மக்கள் (மீண்டும்), "அல்லாஹ்வின் தூதரே! குறைத்துக் கொள்பவர்களுக்கும் (பிரார்த்தியுங்கள்)" என்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா, மழித்துக்கொள்பவர்களுக்கு மன்னிப்பு அளிப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்கள். மக்கள் (மறுபடியும்) "அல்லாஹ்வின் தூதரே! குறைத்துக்கொள்பவர்களுக்கும்..." என்றதும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குறைத்துக்கொள்பவர்களுக்கும் (மன்னிப்பு அளிப்பாயாக)" என்று பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2508 உம்முல் ஹுஸைன் பின்த் இஸ்ஹாக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜின்போது தலையை மழித்துக் கொள்பவர்களுக்காக மூன்று முறையும், முடியைக் குறைத்துக்கொள்பவர்களுக்காக ஒரு முறையும் பிரார்த்தித்ததை நான் செவியுற்றேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் வகீஉ பின் அல்ஜர்ராஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "விடைபெறும் ஹஜ் ஜின்போது' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

2509 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜில் (ஹஜ் கிரியைகளை முடித்ததும்) தமது தலையை மழித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 56 துல்ஹஜ் பத்தாவது நாளில் (முதலில்) கல்லெறிவதும் பிறகு அறுத்துப் பலியிடுவதும் பிறகு தலையை மழிப்பதும் நபிவழி (சுன்னா) ஆகும். மழிக்கும் போது தலையின் வலப்பக்கத்திலிருந்து தொடங்குவதும் நபிவழியாகும்.**

2510 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ("விடைபெறும்' ஹஜ்ஜில்) மினாவிற்குச் சென்ற போது, (முதலில்) ஜம்ர(த்துல் அகப)ôவிற்குச் சென்று கற்களை எறிந்தார்கள். பின்னர் மினாவிலிருந்த தமது கூடாரத்திற்கு வந்து அறுத்துப் பலியிட்டார்கள். பிறகு நாவிதரிடம் தமது தலையின் வலப்பக்கத்தையும் பின்னர் இடப்பக்கத்தையும் காட்டி, "எடு' என்றார்கள். பிறகு அந்த முடியை மக்களிடையே விநியோகிக்க (உத்தரவிடலா)னார்கள்.

2511 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது (தலையின்) வலப்பக்கத்தை நாவிதரிடம் காட்டி "எடு' என்றார்கள். பிறகு அந்த முடியைத் தமக்கு அருகிலிருந்த மக்களிடையே விநியோகிக்கச் செய்தார்கள். பின்னர் தமது (தலையின்) இடப்பக்கத்தை நாவிதரிடம் காட்டினார்கள். அவர் அதை மழித்தார். அந்த முடியை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உம்மு சுலைம் (ரலி) அவர்களுக்குக் கொடுத்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பின்வருமாறு காணப்படுகிறது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முதலில் (தமது தலையின்) வலப்பக்கத்திலிருந்து ஆரம்பித்தார்கள். ஓரிரு முடிகளை மக்களிடையே விநியோகிக்கச் செய்தார்கள். பின்னர் இடப்பக்கத்தைக் காட்டி அவ்வாறே (மழிக்கச்) செய்தார்கள். பிறகு, "அபூதல்ஹா இங்கே இருக்கிறாரா?" என்று கேட்டார்கள். (அவர் வந்ததும்) அவரிடம் அந்த முடியைக் கொடுத்தார்கள்.

2512 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (துல்ஹஜ் பத்தாவது நாளில்) "ஜம்ரத்துல் அகபா'வில் கல்லெறிந்துவிட்டுப் பிறகு பலி ஒட்டகத்தை நோக்கிச் சென்று அதை அறுத்தார்கள். நாவிதரும் அங்கே அமர்ந்திருந்தார். அவரி டம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தலையைக் கையால் சுட்டிக் காட்டினார்கள். வலப் பக்கத்தை அவர் மழித்ததும் முடியைத் தமக்கு அருகிலிருந்தவர்களிடையே விநியோகிக்கச் செய்தார்கள்.

பிறகு நாவிதரிடம் "மறு பக்கத்தை மழி" என்றார்கள். பின்னர் "அபூதல்ஹா எங்கே?" என்று கேட்டு, (அவர்கள் வந்ததும்) அவர்களிடம் அந்த முடியைக் கொடுத்தார்கள்.

2513 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (துல்ஹஜ் பத்தாவது நாளில்) "ஜம்ரத்துல் அகபா'வில் கற்களை எறிந்து, தமது பலிப்பிராணியை அறுத்துப் பலியிட்டதும் தமது தலையை மழித்தார்கள். நாவிதரிடம் தமது தலையின் வலப்பக்கத்தைக் காட்டியபோது, அவர் அதை மழித்தார். அபூதல்ஹா அல்அன்சாரி (ரலி) அவர்களை அழைத்து, அவர்களிடம் அந்த முடியைக் கொடுத்தார்கள். பிறகு நாவிதரிடம் தமது தலையின் இடப்பக்கத்தைக் காட்டி "மழி' என்றார்கள். அவர் மழித்ததும் அதை அபூதல்ஹா (ரலி) அவர்களிடம் கொடுத்து "இதை மக்களிடையே விநியோகிப்பீராக!" என்றார்கள்.

## பாடம் : 57 ஒருவர் பலியிடுவதற்கு முன் தலை முடியை மழித்துவிட்டாலோ, கல் எறிவதற்கு முன் பலியிட்டுவிட்டாலோ (குற்றமில்லை).

2514 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜின்போது மக்களின் கேள்விகளுக்கு விடையளித்தவாறு மினாவில் நின்றுகொண்டிருந்தார்கள். அப்போது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! தெரியாமல் நான் பலியிடுவதற்கு முன்பே தலையை மழித்துவிட்டேன்" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குற்றமில்லை. (இப்போது) பலியிடுவீராக!"என்றார்கள். பின்னர் மற்றொரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! தெரியாமல் நான் கல்லெறிவதற்கு முன்பே அறுத்துப் பலியிட்டு விட்டேன்" என்றார். அதற்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குற்றமில்லை. (இப்போது) கல்லெறிவீராக!"என்றார்கள். அன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் முந்திச் செய்யப்பட்டது என்றோ, அல்லது பிந்திச்செய்யப்பட்டது என்றோ கேட்கப்பட்ட (இத்தகைய) கேள்விகள் அனைத்திற்கும் "குற்றமில்லை. (இப்போது) செய்யுங்கள்" என்றே விடையளித்தார்கள்.

2515 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ("விடைபெறும்' ஹஜ்ஜின்போது) தமது வாகனத்தில் அமர்ந்திருந்தார்கள். அப்போது அவர்களிடம் மக்கள் (சில விளக்கங்களை) கேட்கலாயினர். அவர்களில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! நான் அறுத்துப் பலியிடுவதற்கு முன் கல்லெறிய வேண்டும் என அறிந்திருக்கவில்லை. எனவே, கல்லெறிவதற்கு முன்பே பலியிட்டுவிட்டேன்"என்றார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குற்றமில்லை. (இப்போது) கல்லெறிவீராக!" என்றார்கள். மற்றொருவர், "தலையை மழிப்பதற்கு முன் பலியிட வேண்டும் என்பதை அறியாமல், நான் பலியிடுவதற்கு முன்பாக தலையை மழித்துவிட்டேன்" என்று கேட்கலானார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குற்றமில்லை. (இப்போது) பலியிடுவீராக!" என்றார்கள்.
அன்றைய தினத்தில் மறதியால், அல்லது அறியாமையால் ஒரு மனிதர் சில கிரியைகளைவிடச் சிலவற்றை முந்திச் செய்துவிட்டதாகக் கேட்ட கேள்விகள்

அனைத்திற்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "குற்றமில்லை; (இப்போது) அதைச் செய்யுங்கள்" என்று விடையளிப்பதையே நான் செவியுற்றேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2516 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் உரை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது, அவர்களிடம் ஒரு மனிதர் (வந்து) நின்று, "நான் இன்னின்ன கிரியைகளுக்கு முன் இன்னின்ன கிரியைகளைச் செய்ய வேண்டும் என அறிந்திருக்க வில்லை" என்றார். பிறகு மற்றொரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் இன்னின்ன கிரியைகளுக்கு முன் இன்ன கிரியையைச் செய்ய வேண்டும் என (தவறாக) நினைத்துக் கொண்டுவிட்டேன் எனக்கூறி, (கல்லெறிதல், பலிப்பிராணியை அறுத்தல், தலை(முடி களையுதல் ஆகிய) இம்மூன்று விஷயங்களைக் குறிப்பிட்டார். அவற்றுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குற்றமில்லை. (இப்போது) செய்யுங்கள்" என்றே விடையளித்தார்கள்.

2517 மேற்கண்ட ஹதீஸ் வேறு இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் பக்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மேற்கண்ட ஹதீஸில் இடம்பெற்றுள்ள "இம்மூன்று விஷயங்களை' என்பதைத் தவிர மற்ற விவரங்கள் அனைத்தும் இடம் பெற்றுள்ளன; "இம்மூன்று விஷயங்களை' எனும் வாசகம் அவரது அறிவிப்பில் இடம்பெறவில்லை.
யஹ்யா அல்உமவீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் பலியிடுவதற்கு முன் தலையை மழித்துவிட்டேன். கல்லெறிவதற்கு முன் அறுத்துப் பலியிட்டுவிட்டேன்" என்பன போன்ற வாசகங்கள் இடம்பெற்றுள்ளன.

2518 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "நான் அறுத்துப் பலியிடுவதற்கு முன் தலையை மழித்துவிட்டேன்" என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "குற்றமில்லை; (இப்போது) பலியிடுவீராக!" என்றார்கள். அவர், "நான் கல்லெறிவதற்கு முன் அறுத்துப் பலியிட்டு விட்டேன்" என்றார். அதற்கும் "குற்றமில்லை; (இப்போது) கல்லெறிவீராக!" என்று நபி (ஸல்) அவர்கள் விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2519 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மினாவில் ஓர் ஒட்டகத்தின் மீதிருந்தார்கள். அப்போது அவர்களிடம் ஒரு மனிதர் வந்தார்" என ஹதீஸ் தொடங்குகிறது.

2520 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் "ஜம்ரத்துல் அகபா'விற்கு அருகில் நின்றுகொண்டிருந்தபோது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் கல்லெறிவதற்கு முன் தலையை மழித்துவிட்டேன்"

என்றார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குற்றமில்லை; (இப்போது) கல்லெறிவீராக!"என்றார்கள். மற்றொரு மனிதர் வந்து, "நான் கல்லெறிவதற்கு முன் அறுத்துப் பலியிட்டுவிட்டேன்" என்றார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குற்றமில்லை; (இப்போது) கல்லெறிவீராக!" என்றார்கள். இன்னொரு மனிதர் வந்து, "நான் கல்லெறிவதற்கு முன் கஅபாவுக்குத் திரும்பிச் சென்று (தவா∴புல் இ∴பாளா செய்து) விட்டேன்" என்றார். அதற்கு, "குற்றமில்லை; (இப்போது சென்று) கல்லெறிவீராக!" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விடையளித்தார்கள்.
அன்றைய நாளில் அவர்களிடம் கேட்கப்பட்ட அனைத்துக் கேள்விகளுக்கும் அவர்கள் "குற்றமில்லை. (இப்போது) செய்யுங்கள்"என்றே விடையளித்ததை நான் கண்டேன்.

2521 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் (துல்ஹஜ் பத்தாவது நாளில் நிறைவேற்ற வேண்டிய கிரியைகளான) பலியிடுதல், தலைமுடியை மழித்தல், கல்லெறிதல் ஆகியவற்றை முன் பின்னாகச் செய்வதைப் பற்றிக் கேட்கப்பட்ட போது "குற்றமில்லை (இப்போது செய்யுங்கள்)" என்று விடையளித்தார்கள்.

**பாடம் : 58 துல்ஹஜ் பத்தாவது நாளில் "தவா∴புல் இ∴பாளா' செய்வது விரும்பத்தக்கதாகும்.**

2522 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நஹ்ருடைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் "தவா∴புல் இ∴பாளா'ச் செய்துவிட்டுத் திரும்பிச் சென்று மினாவில் லுஹ்ர் தொழுகையைத் தொழுதார்கள்.
இதன் அறிவிப்பாளரான நா∴பிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இப்னு உமர் (ரலி) அவர்களும் "நஹ்ரு'டைய நாளில் "தவா∴புல் இ∴பாளா'ச் செய்து விட்டுத் திரும்பிச் சென்று மினாவில் லுஹ்ர் தொழுவார்கள். அவ்வாறுதான் நபி (ஸல்) அவர்களும் செய்தார்கள் என்றும் அவர்கள் குறிப்பிடுவார்கள்.

2523 அப்துல் அஸீஸ் பின் ரு∴பைஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் அறிந்த ஏதேனும் ஒரு செய்தியை என்னிடம் கூறுங்கள்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தர்வியா"வுடைய (துல்ஹஜ் எட்டாவது) நாளில் எங்கு லுஹ்ர் தொழுதார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "மினாவில்' என்று பதிலளித்தார்கள். நான், "(கிரியைகளை முடித்து) மினாவிலிருந்து புறப்படும் (துல்ஹஜ் 12 அல்லது 13ஆவது) நாளில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கு அஸ்ர் தொழுதார்கள்?" என்று கேட்டேன். அதற்கு, "அல்அப்தஹ் எனுமிடத்தில்' என்று பதிலளித்துவிட்டு, பிறகு "உன்னுடைய தலைவர்கள் செய்வதைப் போன்று நீயும் செய்து கொள்" என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

**பாடம் : 59 (மினாவிலிருந்து புறப்படும்) "நஃப்ரு'டைய (துல்ஹஜ் 12 அல்லது 13ஆவது) நாளில் "அல்முஹஸ்ஸபி'ல் தங்குவதும், அங்கு தொழுவதும் விரும்பத்தக்கதாகும்.**

2524 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்அப்தஹ்' எனும் இடத்தில் நபி (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோரும் தங்கக்கூடியவர்களாக இருந்தனர்.

2525 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் "அல்முஹஸ் ஸப்' என்ற இடத்தில் தங்குவதை நபிவழியாகக் கருதுவார்கள்; "நஃப்ரு'டைய (துல்ஹஜ் 12 அல்லது 13ஆவது) நாளில் "அல்ஹஸ்பா' வில் (அல்முஹஸ்ஸப்) லுஹ்ர் தொழுவார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவர்களுக்குப் பின் கலீஃபாக்களும் அல்முஹஸ்ஸபில் தங்கினர்.

2526 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்அப்தஹ்' எனும் இடத்தில் தங்குவது நபிவழியன்று. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கு தங்கியதற்குக் காரணம்,அந்த இடம் (மதீனாவிற்குப்) புறப்பட்டுச் செல்வதற்கு வசதியாக அமைந்திருந்ததுதான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2527 சாலிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), இப்னு உமர் (ரலி) ஆகியோர் "அல்அப்தஹ்' எனும் இடத்தில் தங்கக்கூடியவர்களாக இருந்தனர்.
இதன் அறிவிப்பாளரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: உர்வா (ரஹ்) அவர்கள் என்னிடம் பின்வருமாறு தெரிவித்தார்கள்:
ஆயிஷா (ரலி) அவர்கள் அங்கு தங்கமாட்டார்கள். மேலும் அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கு தங்கியதற்குக் காரணம், அது (மதீனாவிற்குப்) புறப்பட்டுச் செல்ல வசதியான இடமாக அமைந்திருந்ததுதான்" என்றும் கூறினார்கள்.

2528 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்முஹஸ்ஸப்' என்ற இடத்தில் தங்குவது (ஹஜ்ஜின் கிரியைகளில்) எதுவுமில்லை. அது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஓய்வெடுப்பதற்காகத்) தங்கிய ஓர் இடம்; அவ்வளவுதான். - இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2529 (நபி (ஸல்) அவர்களின் முன்னாள் அடிமை) அபூராஃபிஉ அஸ்லம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மினாவிலிருந்து புறப்பட்டுச் சென்றபோது "அல்அப்தஹ்' எனுமிடத்தில் இறங்கித் தங்குமாறு என்னைப் பணிக்கவில்லை. நானாகச்

சென்று அந்த இடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கூடாரத்தை அமைத்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து அங்கு தங்கினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், குதைபா பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அபூராஃபிஉ (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் பயணச்சாமான்களைக் கொண்டுசென்றார்கள்" எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

2530 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்கா வெற்றிக்குப் பின் ஹுனைன் செல்லத் திட்டமிட்டபோது) "அல்லாஹ் நாடினால் நாளை நாம் "பனூ கினானா' பள்ளத்தாக்கில் (அல்முஹஸ்ஸபில்) தங்குவோம். அந்த இடத்தில்தான் குறைஷியர் "நாங்கள் இறைமறுப்பில் நிலைத்திருப்போம்' என்று சூளுரைத்தனர்" என்று கூறினார்கள்.

2531 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ("விடைபெறும்' ஹஜ்ஜில்) மினாவில் இருந்தபோது எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நாளை நாம் பனூ கினானா -அதாவது அல்முஹஸ்ஸப்- பள்ளத்தாக்கில் தங்குவோம். அந்த இடத்தில்தான் குறைஷியர் "நாங்கள் இறைமறுப்பில் நிலைத்திருப்போம்' என்று சூளுரைத்தனர்.
அதன் விவரம் வருமாறு: குறைஷியரும் பனூ கினானா குலத்தாரும் பனூ ஹாஷிம் மற்றும் பனுல் முத்தலிப் குலத்தாருக்கெதிராக (அவர்களைச் சமூக பகிஷ்காரம் செய்வதாக) உறுதிமொழி எடுத்துக்கொண்டனர். அவர்கள் தங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை ஒப்படைக்காதவரை அவ்விரு குலத்தாருடன் திருமண உறவோ வணிகரீதியான கொடுக்கல் வாங்கலோ வைத்துக்கொள்ளக் கூடாது என்று தீர்மானம் செய்தனர்.

2532 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ் நமக்கு (மக்கா) வெற்றியளித்தால் இன்ஷா அல்லாஹ் (நாளை) நாம் குறைஷியர் "நாங்கள் இறை மறுப்பில் நிலைத்திருப்போம்' என்று சூளுரைத்துக்கொண்ட ("அல்முஹஸ்ஸப்' எனும்) இடத்தில் தங்குவோம்" என்று கூறினார்கள்.

## பாடம் : 60 "அய்யாமுத் தஷ்ரீக்' (துல்ஹஜ் 11,12,13 ஆகிய) நாட்களின் இரவுகளில் மினாவில் தங்குவது கட்டாயம் ஆகும்; (ஹாஜிகளுக்கு) தண்ணீர் விநியோகிப்போர் அ(ங்கு தங்குவ)தைத் தவிர்க்க அனுமதி உண்டு.

2533 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்கள், (ஹாஜிகளுக்குத்) தண்ணீர் விநியோகிப்பதற்காக மினாவுடைய இரவுகளில் மக்காவில் தங்கிக்கொள்ள, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார்கள். அவர்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2534 பக்ர் பின் அப்தில்லாஹ் அல்முஸனீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுடன் இறையில்லம் கஅபா அருகில் அமர்ந்திருந்தேன். அப்போது அவர்களிடம் ஒரு கிராமவாசி வந்து, "உங்கள் தந்தையின் சகோதரர் மக்கள், (ஹாஜிகளுக்கு) தேனும் பாலும் விநியோகிக்கின்றனர். நீங்களோ (உலர்ந்த திராட்சைப்) பழரசம் விநியோகிப்பதை நான் காண்கிறேனே, ஏன்? உங்களுக்கு வறுமை ஏற்பட்டு விட்டதா, அல்லது கருமித்தனம் செய்கிறீர்களா?" என்று கேட்டார்.
அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. எங்களுக்கு எந்த வறுமையும் ஏற்பட்டுவிடவில்லை; கருமித்தனமும் செய்ய வில்லை. (ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் தமக்குப் பின்னால் (தமது வாகனத்தில்) உசாமா (ரலி) அவர்கள் இருக்க, எங்களிடம் வந்து தண்ணீர் கேட்டார்கள். அவர்களுக்கு ஒரு பாத்திரத்தில் நாங்கள் பழரசம் கொண்டுவந்(து கொடுத்)தோம். அவர்கள் அதைப் பருகிவிட்டு மீதியை உசாமா (ரலி) அவர்களுக்குப் பருகக் கொடுத்தார்கள். பிறகு, "நன்றே செய்தீர்கள்! நன்றே செய்தீர்கள்! இவ்வாறே செய்துவாருங்கள்!" என்று (எங்களைப் பாராட்டிக்) கூறினார்கள். எனவே,நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் (உத்தரவுப்படியே செய்து வருகிறோம். அந்த) உத்தரவிற்கு மாற்றம் செய்ய நாங்கள் விரும்பவில்லை" என்று சொன்னார்கள்.

## பாடம் : 61 (ஹஜ்ஜில் அறுக்கப்படும்) பலிப் பிராணிகளின் இறைச்சி, தோல் மற்றும் சேணம் ஆகியவற்றைத் தர்மம் செய்ய வேண்டும்.

2535 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்முடைய பலி ஒட்டகங்களை (அறுத்துப் பலியிடும் பொறுப்பை)க் கவனிக்க என்னை நியமித்தார்கள். மேலும், அவற்றின் இறைச்சி, தோல் மற்றும் சேணம் ஆகிய அனைத்தையும் தர்மம் செய்யுமாறும், அவற்றில் எதையும் உரிப்பவருக்கான கூலியாகக் கொடுக்கக் கூடாது என்றும் எனக்குக் கட்டளையிட்டார்கள். உரிப்பவருக்குரிய கூலியை நாமே கொடுக்க வேண்டும் என்றும் அவர்கள் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் உரிப்பவருக்குரிய கூலி பற்றிய குறிப்பு இல்லை.

2536 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் நபி (ஸல்) அவர்கள் தம்முடைய பலி ஒட்டகங்களை (அறுத்துப் பலியிடும் பொறுப்பை)க் கவனிக்குமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள். மேலும் அவற்றின் இறைச்சி, தோல் மற்றும் சேணம் ஆகிய அனைத்தையும் ஏழைகளிடையே பங்கிடுமாறும், உரிப்பதற்கான கூலியாக அவற்றில் எதையும் கொடுக்கக் கூடாது என்றும் எனக்குக் கட்டளையிட்டார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 62 பலிப்பிராணியில் கூட்டுச் சேர்வதும், மாடு மற்றும் ஒட்டகம் ஆகிய ஒவ்வொன்றும் ஏழு நபர்களுக்குப் போதுமாகும் என்பதும்.**

2537 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஹுதைபியா ஆண்டில் ஏழு பேருக்காக ஓர் ஒட்டகத்தையும், ஏழு பேருக்காக ஒரு மாட்டையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அறுத்துப் பலியிட்டோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2538 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டிக் கொண்டு புறப்பட்டோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒரு பலிப்பிராணியில் ஏழு பேர் வீதம் ஒட்டகத்திலும் மாட்டிலும் கூட்டுச் சேர்ந்துகொள்ளுமாறு எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2539 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்குச் சென்றபோது, ஏழு பேருக்காக ஓர் ஒட்டகத்தையும், ஏழு பேருக்காக ஒரு மாட்டையும் அறுத்துப் பலியிட்டோம்.

2540 அபுஸ்ஸுபைர் முஹம்மத் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் ஹஜ் மற்றும் உம்ராவில் ஓர் ஒட்டகத்தில் ஏழு பேர் வீதம் கூட்டுச் சேர்த்தோம்" என்று கூறினார்கள். அப்போது ஒரு மனிதர் ஜாபிர் (ரலி) அவர்களிடம், "இஹ்ராமிற்குப் பிறகு வாங்கப்பட்ட பலிப்பிராணியில் ("அல்ஜஸூர்') கூட்டுச் சேர்ந்துகொள்வதைப் போன்று இஹ்ராமின் போது வாங்கப்பட்ட பலிப்பிராணியில் ("அல்பதனத்') கூட்டுச் சேர்ந்து கொள்ளலாமா?" என்று கேட்டார். அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள், "அதுவும் பலிப்பிராணிகளில் உள்ளதே!" என்று கூறினார்கள்.
ஜாபிர் (ரலி) அவர்கள் ஹுதைபியா உடன்படிக்கையில் பங்கேற்றார்கள். அவர்கள், "நாங்கள் அன்றைய தினத்தில் எழுபது ஒட்டகங்களை அறுத்துப் பலியிட்டோம். ஓர் ஒட்டகத்தில் தலா ஏழு பேர் கூட்டுச் சேர்ந்துகொண்டோம்" என்று கூறினார்கள்.

2541 அபுஸ்ஸுபைர் முஹம்மத் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் ஹஜ் பற்றிக் கூறுகையில், "நபி (ஸல்) அவர்கள், நாங்கள் இஹ்ராமிலிருந்து விடுபடும்போது பலிப் பிராணியை அறுத்துப் பலியிடுமாறும், பலிப்பிராணியில் ஒரு குழுவினர் கூட்டுச் சேர்ந்துகொள்ளுமாறும் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். ஹஜ்ஜின் இஹ்ராமைக் களைந்துகொள்ளுமாறு மக்களுக்கு உத்தரவிட்டபோதே இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

2542 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் உம்ராவிற்கு ("இஹ்ராம்' கட்டி) "தமத்துஉ' செய்தபோது, நாங்கள் ஏழு பேர் கூட்டுச் சேர்ந்து ஒரு மாட்டை அறுத்துப் பலியிட்டோம்.

2543 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் ஆயிஷா (ரலி) அவர்கள் சார்பாக ஒரு மாட்டை அறுத்துப் பலியிட்டார்கள்.

2544 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது ஹஜ்ஜின்போது) தம் துணைவியர் சார்பாக அறுத்துப் பலியிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் பக்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "தமது ஹஜ்ஜின் போது ஆயிஷா (ரலி) அவர்கள் சார்பாக ஒரு மாட்டை (அறுத்துப் பலியிட்டார்கள்)" என்று இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 63 ஒட்டகத்தை நிற்கவைத்து, (அதன் இடப்பக்க முன் காலை மடக்கிக்) கட்டிப்போட்டு அறுத்தல்.

2545 ஸியாத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள், ஒரு மனிதர் தமது ஒட்டகத்தைப் படுக்க வைத்து அறுத்துக் கொண்டிருந்தபோது அவரிடம் சென்று, "இதைக் கிளப்பி (அதன் இடப்பக்க முன் காலை மடக்கிக்) கட்டி, நிற்கவைத்து அறுப்பீராக! அதுவே உங்கள் நபி (ஸல்) அவர்களின் வழிமுறையாகும்" என்று கூறினார்கள்.

## பாடம் : 64 புனித (ஹரம்) எல்லைக்குத் தாமே செல்லும் எண்ணம் இல்லாதவர், ஹரமுக்குப் பலிப்பிராணியை (மற்றவர்களுடன்) அனுப்பிவைப்பது விரும்பத்தக்கதாகும். பலிப்பிராணியின் கழுத்தில் அடையாள மாலை தொங்கவிடுவதும் அதற்காக மாலைகள் தொடுப்பதும் விரும்பத்தக்கதாகும். அவ்வாறு அனுப்பிவைப்பவர் "இஹ்ராம்' கட்டியவராக ஆகமாட்டார்; அதை முன்னிட்டு அவருக்கு எதுவும் தடை செய்யப்பட்டதாகவும் ஆகாது.

2546 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்தே பலிப்பிராணியை அனுப்பி வைப்பார்கள். எனவே, அவர்களது பலிப் பிராணியின் கழுத்தில் (அது பலிப் பிராணி என்பதற்கு அடையாளமாகத்) தொங்கவிடப்படும் மாலையை நான் திரிப்பேன். (பிலிப் பிராணியை அனுப்பிய) பின்னர் "இஹ்ராம்' கட்டியவர் தவிர்த்துக்கொள்ளும் எதையும் அவர்கள் தவிர்த்துக்கொள்ளமாட்டார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2547 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது பலிப்பிராணியின் கழுத்தில் தொங்கவிடப்படும் அடையாள மாலையை நான் திரிப்பதை இப்போதும் நான் காண்பதைப் போன்றுள்ளது" என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

2548 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பலிப்பிராணிக்குக் கழுத்தில் தொங்க விடப்படும் அடையாள மாலையை என்னுடைய இவ்விரு கைகளால் திரித்துள்ளேன். (பலிப் பிராணியை அனுப்பிய) பின்னர் ("இஹ்ராம்' கட்டியவரைப் போன்று தாம்பத்திய உறவு போன்ற) எதிலிருந்தும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விலகியிருக்கவுமில்லை; (தைக்கப்பட்ட ஆடை,நறுமணம் போன்ற) எதையும் அவர்கள் கைவிடவுமில்லை.

2549 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பலி ஒட்டகங்களின் அடையாள மாலைகளை நான் என் கைகளாலேயே திரித்தேன். அந்த மாலைகளை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவற்றின் கழுத்தில் போட்டு, அவற்றுக்கு அடையாளச் சின்னமுமிட்டு, இறையில்லம் கஅபாவிற்கு அவற்றை அனுப்பிவைத்தார்கள். அவர்கள் மதீனாவிலேயே தங்கியிருந்தார்கள். அவர்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த எதுவும் ("இஹ்ராம்' கட்டியவரைப் போன்று) தடை செய்யப்பட்டதாக ஆகவில்லை.

2550 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பலிப்பிராணிகளை (வேறொருவர் மூலம்) அனுப்பி வைப்பார்கள். நான் அவற்றுக்கு என் கைகளாலேயே அடையாள மாலைகளைத் திரி(த்துத் தயாரி)ப்பேன். பின்னர் இஹ்ராம் கட்டாதவர் (தமக்குத்) தடுத்துக்கொள்ளாத எதையும் அல்லாஹ்வின் தூதரும் தடுத்துக்கொண்டதில்லை.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2551 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை (ஆயிஷா (ரலி) அவர்கள்) கூறியதாவது:
நான் அந்தப் பலிப் பிராணிகளின் அடையாள மாலைகளை, எங்களிடமிருந்த கம்பளியால் திரித்(துத் தயாரித்)தேன். (பலிப் பிராணிகளை அனுப்பிய பின்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஹ்ராமின் நிலையேதும் இல்லாமல் எங்களிடையே (சாதாரணமாகவே) இருந்தார்கள். "இஹ்ராம் கட்டாதவர் தம் துணைவியிடம் மேற்கொள்ளும்' அல்லது "ஆடவர் தம் துணைவியிடம் மேற்கொள்ளும்' அனைத்தையும் மேற்கொண்டார்கள்.

2552 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பலிப்பிராணியான ஆட்டிற்குரிய அடையாள மாலையைத் திரித்(துத் தயாரித்)தேன். அந்த ஆட்டை (ஹரமிற்கு) அனுப்பிவிட்டு, இஹ்ராமற்ற நிலையிலேயே அவர்கள் எங்களிடையே தங்கியிருந்தார்கள்.

2553 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பலிப்பிராணிகளுக்கான அடையாள மாலைகளைத் திரித்(துத் தயாரித்)ததுண்டு. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவற்றைத் தம் பலிப்பிராணிகளின் கழுத்தில் தொங்கவிட்டு, (ஹரமிற்கு) அனுப்பி வைப்பார்கள். பிறகு "இஹ்ராம்' கட்டியவர் தவிர்த்துக் கொள்ளும் எதையும் தவிர்த்துக் கொள்ளாதவர்களாக (எங்களிடையே) அவர்கள் தங்கியிருப்பார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2554 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு முறை இறையில்லம் கஅபாவிற்குப் பலி ஆட்டை அனுப்பிவைத்தபோது, அதன் கழுத்தில் அடையாள மாலையைத் தொங்க விட்டார்கள். – இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2555 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் பலி ஆடுகளின் கழுத்தில் அடையாள மாலைகளைத் தொங்கவிட்டு அவற்றை (ஹரமிற்கு) அனுப்பிவைப்போம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஹ்ராமற்ற நிலையிலேயே இருந்தார்கள்; ("இஹ்ராம்' கட்டியவரைப் போன்று) அவர்களுக்கு எதுவும் தடை செய்யப்பட்டதாக இருக்கவில்லை.

2556 அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு ஸியாத் (ஸியாத் பின் அபீசுஃப் யான்) அவர்கள், ஆயிஷா (ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதி, "(மக்காவிற்கு) பலிப்பிராணியை அனுப்பி வைக்கின்றவருக்கும் அப்பிராணி அறுக்கப்படும்வரை,ஹாஜிகளுக்குத் தடை செய்யப்பட்டுள்ள அனைத்தும் தடை செய்யப்படும் என இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றார்களே? நானும் எனது பலிப்பிராணியை (மக்காவிற்கு) அனுப்பியுள்ளேன். எனவே, உங்களது தீர்ப்பை எனக்கு எழுதுங்கள்" என்று கேட்டார்.
அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதைப் போன்றல்ல. நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பலிப் பிராணியின் அடையாள மாலைகளை, என் கைகளாலேயே திரித்(துத் தயாரித்)தேன். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கையால் அந்த மாலையைப் பலிப்பிராணியின் கழுத்தில் தொங்கவிட்டார்கள். பிறகு (அந்தப்) பிராணியை என் தந்தை (அபூபக்ர்-ரலி) உடன் அனுப்பிவைத்தார்கள். (மக்காவில்) பலிப் பிராணி பலியிடப்படும்வரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் அனுமதித்திருந்த எதுவும் தடை செய்யப்படவில்லை" என்று (பதில் கடிதத்தில்) குறிப்பிட்டார்கள்.

2557 மஸ்ரூக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(பலிப் பிராணியை அனுப்பிவைத்தவரும் "இஹ்ராம்' கட்டியவரைப் போன்றே நடந்துகொள்ள வேண்டுமா என்று நான் கேட்டதற்கு) ஆயிஷா (ரலி) அவர்கள் (ஆச்சரியப்பட்டு) திரைக்குப் பின்னாலிருந்து கை தட்டுவதை நான் செவியுற்றேன். (தொடர்ந்து) அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பலிப்பிராணிகளின் அடையாள மாலைகளைத் திரி(த்துத் தயாரி)ப்பேன். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பலிப்பிராணிகளை (ஹஜ் காலத்தில் மக்காவிற்கு) அனுப்புவார்கள். "இஹ்ராம்'கட்டியவர் தடுத்துக்கொள்ளக் கூடிய எதையும் – தமது பலிப்பிராணி பலியிடப்படும்வரை – அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமக்காகத்) தடுத்துக்கொள்ளவில்லை" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 65 தேவைப்பட்டால், பலியிடுவதற்காகக் கொண்டுசெல்லப்படும் ஒட்டகத்தில் ஏறிப் பயணம் செய்யலாம்.

2558 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் ஒரு பலி ஒட்டகத்தை இழுத்துக் கொண்டு (நடந்து) செல்வதைக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அவரிடம்), "அதில் ஏறிச் செல்க" என்றார்கள். அவர் "அல்லாஹ்வின் தூதரே! இது, பலி ஒட்டகமாயிற்றே!" என்றார். அதற்கு "அதில் ஏறிச்செல்க" என்று கூறிய அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இரண்டாவது அல்லது மூன்றாவது தடவை "உனக்குக் கேடுதான்" என்று (செல்லமாகக் கண்டித்துச்) சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஒருவர், கழுத்தில் அடையாள மாலை தொங்கவிடப்பட்ட ஒரு பலி ஒட்டகத்தை இழுத்துக்கொண்டு (நடந்து) சென்றபோது..." என்று ஹதீஸ் தொடங்குகிறது.

2559 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஒருவர், கழுத்தில் அடையாள மாலை தொங்க விடப்பட்ட ஒரு பலி ஒட்டகத்தை இழுத்துக்கொண்டு (நடந்து) சென்றுகொண்டிருந்தார். அப்போது அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமக்குக் கேடுதான், அதில் ஏறிச் செல்க" என்றார்கள். அதற்கு அவர், "(இது) பலி ஒட்டகமாயிற்றே, அல்லாஹ்வின் தூதரே?" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமக்குக் கேடுதான், அதில் ஏறிச்செல்க. உமக்குக் கேடுதான், அதில் ஏறிச்செல்க" என்று (மீண்டும் மீண்டும்) கூறினார்கள்.

2560 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பலி ஒட்டகமொன்றை இழுத்துக்கொண்டு (நடந்து) சென்றுகொண்டிருந்த ஒரு மனிதரைக் கடந்து சென்றார்கள். அவரிடம், "அதில் ஏறிச் செல்க" என்றார்கள். அதற்கு அவர், "இது பலி ஒட்டகமாயிற்றே?" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதில் ஏறிச் செல்க" என இரண்டு, அல்லது மூன்று முறை கூறினார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2561 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களைக் கடந்து "ஒரு பலி ஒட்டகம்' அல்லது "ஒரு பலிப்பிராணி' கொண்டு செல்லப்பட்டது. அப்போது (அதை இழுத்துக்கொண்டு நடந்து சென்றுகொண்டிருந்த மனிதரிடம்) நபி (ஸல்) அவர்கள், "அதில் ஏறிச்செல்க" என்றார்கள். அவர், "இது "பலி ஒட்டகம்' அல்லது "பலிப்பிராணி' ஆயிற்றே?" என்றார். நபி (ஸல்) அவர்கள், "இருக்கட்டும் (அதில் ஏறிச் செல்க)"என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நபி (ஸல்) அவர்களைக் கடந்து ஒரு பலி ஒட்டகம் கொண்டுசெல்லப்பட்டது" என்று (ஐயப்பாடின்றி) ஹதீஸ் ஆரம்பிக்கிறது.

2562 அபுஸ்ஸுபைர் முஹம்மத் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் பலிப்பிராணியில் ஏறிச்செல்வதைப் பற்றிக் கேட்கப்பட்டது. அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் "நீங்கள் அதில் ஏறிச்செல்ல வேண்டிய நிலைக்குக் கட்டாயப்படுத்தப்பட்டால் பயண வாகனம் கிடைக்கும்வரை முறையோடு அதில் ஏறிச்செல்க' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இதை இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2563 அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் (ரலி) அவர்களிடம் பலிப்பிராணியில் ஏறிச் செல்வதைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் "பயண வாகனம் கிடைக்கும்வரை அதில் முறையோடு ஏறிச் செல்க' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இதை மஅகில் பின் உபைதில்லாஹ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 66 செல்லும் வழியில் பலிப்பிராணி பாதிப்புக்குள்ளாகிவிட்டால் என்ன செய்ய வேண்டும்?

2564 மூசா பின் சலமா அல்ஹுதலீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் சினான் பின் சலமா (ரஹ்) அவர்களும் உம்ராவிற்குச் சென்றோம். சினான் தம்முடன் ஒரு பலி ஒட்டகத்தை இழுத்துக்கொண்டு (நடந்து)வந்தார். அந்த ஒட்டகம் வழியில் களைத்துப்போய் நின்றுவிட்டது. இது (இப்படியே) செல்ல இயலாமல் நின்றுவிட்டால், இதை எப்படி நான் கொண்டுசெல்வேன் என்று தெரியாமல் அவர் விழித்தார். மேலும், அவர் "நான் ஊர் சென்றதும் இதுதொடர்பாக விரிவாகக் கேட்டறிவேன்" என்று சொல்லிக்கொண்டார். இதற்கிடையில் முற்பகல் நேரம் ஆகிவிட்டது. நாங்கள் "அல்பத்ஹா' எனும் இடத்தில் இறங்கித் தங்கினோம். அப்போது சினான் (ரஹ்) அவர்கள், "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் செல்லுங்கள். அவர்களிடம் இதைப்பற்றி நாம் பேசுவோம்" என்று கூறினார்கள். அவ்வாறே இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் (சென்று) தமது பலி ஒட்டகத்தின் நிலை பற்றிக் கூறினார். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்

கூறினார்கள்: விவரம் தெரிந்தவரிடம்தான் வந்துசேர்ந்திருக்கிறீர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதினாறு பலி ஒட்டகங்களுடன் ஒரு மனிதரை (மக்காவிற்கு) அனுப்பி வைத்தார்கள். அவற்றைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பையும் அவரிடமே ஒப்படைத்தார்கள். அவர் (சிறிது தூரம்) சென்று விட்டுத் திரும்பிவந்து, "அல்லாஹ்வின் தூதரே! பலி ஒட்டகங்களில் ஒன்று களைத்துப் போய் (பயணத்தைத் தொடர முடியாமல்) நின்றுவிட்டால், அதை நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அந்த இடத்திலேயே) அதை அறுத்துவிடுக; அதன் (கழுத்தில் தொங்கவிடப்பட்டுள்ள) செருப்புகளில் அதன் இரத்தத்தைத் தோய்த்து அதை அதன் விலாப்பகுதியில் பதித்துவிடுக. நீயோ உன் பயணக் குழுவினரில் எவருமோ அதை உண்ண வேண்டாம்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்து மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதினெட்டு பலி ஒட்டகங்களுடன் ஒரு மனிதரை அனுப்பிவைத்தார்கள்" என்று ஹதீஸ் தொடங்குகிறது. மேற்கண்ட ஹதீஸின் ஆரம்பத்திலுள்ள குறிப்புகள் அவற்றில் இடம்பெறவில்லை.

2565 துஜப் அபூகபீஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பலி ஒட்டகங்களுடன் என்னை (மக்காவிற்கு) அனுப்பி வைத்தார்கள். அப்போது, "இவற்றில் ஏதேனும் ஒன்று பாதிப்புக்குள்ளாகி இறந்துவிடுமோ என நீர் அஞ்சினால், உடனே அதை அறுத்துவிடுவீராக! பிறகு அதன் (கழுத்தில் கிடக்கும்) செருப்பில் அதன் இரத்தத்தை நனைத்து, அதன் விலாப் புறத்தில் அ(ந்த அடையாளத்)தைப் பதித்துவிடுவீராக! நீரோ உன் பயணக் குழுவினரில் எவருமோ அதை உண்ணாதீர்" என்று கூறினார்கள்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 67 "விடைபெறும்' தவாஃப் ("தவாஃபுல் வதா') கடமையாகும் என்பதும் மாதவிடாய் ஏற்பட்ட பெண்ணுக்கு அந்தக் கடமையில்லை என்பதும்.

2566 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களது காலத்தில் ஹஜ்ஜை முடித்ததும்) மக்கள் பல்வேறு முனைகளில் திரும்பிச் சென்றுகொண்டிருந்தனர். (இதைக் கண்ட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஹஜ் செய்த) எவரும் இறையில்லம் கஅபாவை இறுதியாகச் சந்தித்(து தவாஃப் செய்)திடாமல் மக்காவிலிருந்து புறப்பட்டுச் செல்ல வேண்டாம்!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2567 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இறையில்லம் கஅபாவைத் தரிசித்(து "தவாஃபுல் வதாஉ' செய்)தலே இறுதிச் செயலாக அமைய வேண்டும் என (ஹஜ்ஜுக்கு வந்த) மக்கள் கட்டளையிடப்பட்டனர். ஆயினும், மாதவிடாய் ஏற்பட்ட பெண்ணுக்கு மட்டும் ("தவாஃபுல் வதா'வை விட்டுவிட) சலுகை அளிக்கப்பட்டது. - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2568 தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுடன் இருந்தேன். அப்போது அவர்களிடம் ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள், "மாதவிடாய் ஏற்பட்ட பெண் இறுதியாக இறையில்லம் கஅபாவைச் சந்தித்(து "தவாஃபுல் வதா' செய்)திடாமலேயே புறப்பட்டுச் செல்லலாம் என நீங்கள் தீர்ப்பு வழங்குகின்றீர்களா? (இது சரியா?)" என்று கேட்டார்கள். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அவ்வாறில்லை என நீங்கள் கருதினால், இன்ன அன்சாரிப் பெண்ணிடம் (சென்று) இவ்வாறு அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்களா (இல்லையா) எனக் கேளுங்கள்" என்றார்கள். அவ்வாறே ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் (சென்று,கேட்டுவிட்டுத்) திரும்பிவந்து, "நீங்கள் சொன்னது உண்மை என்றே கண்டேன்" என்று சிரித்துக்கொண்டே சொன்னார்கள்.

2569 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியார்) ஸஃபிய்யா பின்த் ஹுயை (ரலி) அவர்களுக்கு, அவர்கள் (துல்ஹஜ் பத்தாவது நாளில்) "தவாஃபுல் இஃபாளா' செய்த பின்பு மாதவிடாய் ஏற்பட்டது. அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது பற்றி நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறினேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் நம்மை (புறப்பட விடாமல்) தடுத்துவிட்டாரா?" என்று கேட்டார்கள். அதற்கு நான், "அவர் "தவாஃபுல் இஃபாளா' செய்துவிட்டார்,அல்லாஹ்வின் தூதரே!" என்று கூற, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால் (பரவாயில்லை) அவர் புறப்படலாம் ("தவாஃபுல் வதா' செய்ய வேண்டியதில்லை)" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2570 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஸஃபிய்யா பின்த் ஹுயை (ரலி) அவர்களுக்கு, "விடைபெறும்' ஹஜ்ஜின்போது அவர் தூய்மையான நிலையில் "தவாஃபுல் இஃபாளா' செய்த பின்பு மாதவிடாய் ஏற்பட்டது" என்று ஹதீஸ் தொடங்குகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஸஃபிய்யா (ரலி) அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது பற்றிக் கூறினேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2571 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(துல்ஹஜ் பத்தாவது நாளில்) "தவாஃபுல் இஃபாளா' செய்வதற்கு முன்பு ஸஃபிய்யா (ரலி) அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிடுமோ என நாங்கள் அஞ்சிக்கொண்டிருந்தோம். அப்போது எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து, "ஸஃபிய்யா நம்மை (புறப்படவிடாமல்) தடுத்துவிட்டாரா?" என்று கேட்டார்கள். நாங்கள், "அவர் "தவாஃபுல்

இஃபாளா' செய்துவிட்டார்" என்று கூறினோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால் பிரச்சினையில்லை" என்று சொன்னார்கள்.

2572 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
("விடைபெறும்' ஹஜ்ஜின்போது) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! ஸஃபிய்யா பின்த் ஹுயை (ரலி) அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது" என்று கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் நம்மை (புறப்பட விடாமல்) தடுத்துவிடுவார் போலிருக்கிறதே! அவர் உங்களுடன் "தவாஃப்' (இஃபாளா) செய்யவில்லையா?"என்று கேட்டார்கள். நாங்கள் "ஆம் (செய்துவிட்டார்)" என்றோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அப்படியானால் நீங்கள் புறப்படுங்கள்!" என்று சொன்னார்கள்.

2573 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஹஜ்ஜை முடித்த பின்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) ஸஃபிய்யா பின்த் ஹுயை (ரலி) அவர்களிடம், ஓர் ஆண் தன் மனைவியிடம் நாடுகின்ற (தாம்பத்தியத்)தை நாடினார்கள். அப்போது, "அவருக்கு மாதவிடாய் ஏற்பட்டுள்ளது, அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் நம்மை (புறப்பட விடாமல்) தடுத்து விட்டாரா?" என்று கேட்டார்கள். அப்போது மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! அவர் "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் "தவாஃபுஸ் ஸியாரத்' (தவாஃபுல் இஃபாளா) செய்துவிட்டார்" என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின், அவர் உங்களுடன் புறப்படட்டும்!" என்று சொன்னார்கள்.

2574 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (தமது ஹஜ்ஜை முடித்துக்கொண்டு மக்காவிலிருந்து) புறப்பட விரும்பிய போது, ஸஃபிய்யா (ரலி) அவர்கள் (மாதவிடாய் ஏற்பட்டதால்) தமது கூடார வாசலில் கவலை அடைந்தவராகத் துக்கத்துடன் இருந்தார். அப்போது அவரிடம் நபி (ஸல்) அவர்கள் (செல்லமாக), "உன் கழுத்து அறுபட; தொண்டை வலி வர! நீ "நஹ்ரு' டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் "தவாஃபுல் இஃபாளா' செய்தாயா?" என்று கேட்டார்கள். ஸஃபிய்யா (ரலி) அவர்கள் "ஆம்' என்று கூற, நபி (ஸல்) அவர்கள், "அப்படியானால் நீ புறப்படு" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "கவலை அடைந்தவராகத் துக்கத்துடன் இருந்தார்' எனும் குறிப்பு இடம்பெற வில்லை. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

**பாடம் : 68 ஹாஜிகளும் மற்றவர்களும் கஅபாவிற்குள் நுழைவதும், அதனுள் தொழுவதும், அதன் அனைத்துப் பகுதிகளிலும் பிரார்த்திப்பதும் விரும்பத்தக்கவையாகும்.**

2575 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மக்கா வெற்றி நாளில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் உசாமா பின் ஸைத் (ரலி), பிலால் (ரலி), உஸ்மான் பின் தல்ஹா அல்ஹஜபீ (ரலி) ஆகியோரும் இறையில்லம் கஅபாவிற்குள் சென்றனர். உஸ்மான் தாழிட்டார். அவர்கள் (நீண்ட நேரம்) உள்ளே இருந்தார்கள். பின்னர் பிலால் (ரலி) அவர்கள் வெளியே வந்தபோது அவர்களிடம் நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உள்ளே) என்ன செய்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு பிலால் (ரலி) அவர்கள், "இரண்டு தூண்களைத் தமக்கு இடப்பக்கமும் ஒரு தூணைத் தமக்கு வலப் பக்கமும் மூன்று தூண்களைத் தமக்குப் பின்புறமும் இருக்குமாறு (நின்று) தொழுதார்கள்" என்று விடையளித்தார்கள். அன்று இறையில்லம் கஅபாவில் ஆறு தூண்கள் இருந்தன.

2576 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி நாளில் (ஒட்டகத்தின் மீதமர்ந்தபடி) வந்து, இறையில்லம் கஅபாவின் முற்றத்தில் இறங்கினார்கள். பிறகு (கஅபாவின் காவலராயிருந்த) உஸ்மான் பின் தல்ஹா (ரலி) அவர்களிடம் (அவர்களை அழைத்துவரும் படி) ஆளனுப்பினார்கள். உஸ்மான் பின் தல்ஹா (ரலி) அவர்கள் சாவியுடன் வந்து கஅபாவின் கதவைத் திறந்தார்கள். பிறகு நபி (ஸல்) அவர்களும் பிலால் (ரலி), உசாமா பின் ஸைத் (ரலி), உஸ்மான் பின் தல்ஹா (ரலி) ஆகியோரும் கஅபாவிற்குள் நுழைந்தார்கள். உள்ளே நுழைந்ததும் கதவைத் தாழிடும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட,அவ்வாறே தாழிடப்பட்டது. பின்னர் அவர்கள் நீண்ட நேரம் அதனுள் தங்கியிருந்து விட்டுப் பிறகு கதவைத் திறந்தார்கள்.
(இச்செய்தி அறிந்து) நான் மக்களை முந்திக்கொண்டு (கஅபாவிற்குச்) சென்றேன். கஅபாவிலிருந்து வெளியேறிக்கொண்டிருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நான் எதிர்கொண்டேன். அவர்களுக்குப் பின்னால் பிலால் (ரலி) அவர்கள் வந்தார்கள். உடனே நான் பிலால் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கஅபாவினுள் தொழுதார்களா?" என்று கேட்டேன். அவர்கள் "ஆம்' என்றார்கள். நான் "எந்த இடத்தில்?" என்று கேட்க, அதற்கு பிலால் (ரலி) அவர்கள், "இரு தூண்களுக்கிடையே நேராக" என்று கூறினார்கள். நான் பிலால் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எத்தனை ரக்அத்கள் தொழுதார்கள்" என்று கேட்க மறந்துவிட்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2577 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மக்கா வெற்றி ஆண்டில் உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களது ஒட்டகத்தின் மீது (பயணம் செய்து) வந்து, கஅபாவின் முற்றத்தில் தமது ஒட்டகத்தை மண்டியிட்டு அமரச் செய்தார்கள். பிறகு உஸ்மான் பின் தல்ஹா (ரலி) அவர்களை அழைத்(துவரச் செய்)து, "என்னிடம் கஅபாவின் சாவியைக் கொண்டுவாருங்கள்"

என்று கூறினார்கள். (சாவியைப் பெறுவதற்காக) உஸ்மான் பின் தல்ஹா (ரலி) அவர்கள் தம் அன்னையிடம் சென்றபோது, அவர் அதைத் தர மறுத்தார். அப்போது உஸ்மான் பின் தல்ஹா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! அதன் சாவியை என்னிடம் தந்துவிடுங்கள்! இல்லாவிட்டால், என் முதுகந்தண்டிலிருந்து இந்த வாள் வெளியேறும்" என்று கூறினார்கள். பின்னர் அவர் அந்தச் சாவியை உஸ்மான் பின் தல்ஹா (ரலி) அவர்களிடம் கொடுக்க, அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுவந்து அதைக் கொடுத்தார்கள். நபி (ஸல்) அவர்கள் கஅபாவின் கதவைத் திறந்தார்கள்...
மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2578 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்காவெற்றி நாளில்) இறையில்லம் கஅபாவினுள் நுழைந்தார்கள். அப்போது அவர்களுடன் உசாமா (ரலி), பிலால் (ரலி), உஸ்மான் பின் தல்ஹா (ரலி) ஆகியோர் இருந்தனர். அவர்கள் உள்ளே சென்று,தாழிட்டுக்கொண்டு நீண்ட நேரம் தங்கியிருந்தார்கள். பின்னர் கதவு திறக்கப்பெற்றபோது, நானே முதல் ஆளாக உள்ளே நுழைந்தேன். அப்போது வெளியே வந்துகொண்டிருந்த பிலால் (ரலி) அவர்களைச் சந்தித்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கஅபாவினுள் எந்த இடத்தில் தொழுதார்கள்?" என்று கேட்டேன். அதற்கு பிலால் (ரலி) அவர்கள், "அவ்விரு முன் தூண்களுக்கிடையே' என்று பதிலுரைத்தார்கள். நான் பிலால் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எத்தனை (ரக்அத்கள்) தொழுதார்கள்?" என்று கேட்க மறந்துவிட்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2579 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் கஅபாவிற்குப் போய்ச்சேர்ந்தேன். அங்கு நபி (ஸல்) அவர்களும் பிலால் (ரலி), உசாமா (ரலி) ஆகியோரும் கஅபாவிற்குள் நுழைந்திருந்தார்கள். உள்ளே சென்றதும் உஸ்மான் பின் தல்ஹா (ரலி) அவர்கள் கஅபாவின் தலைவாயிலை மூடிவிட்டார்கள். பிறகு நீண்ட நேரம் அதனுள் இருந்தார்கள். பின்னர் கதவு திறக்கப்பெற்றபோது நபி (ஸல்) அவர்கள் வெளியே வந்தார்கள். நான் படியில் ஏறி கஅபாவிற்குள் நுழைந்தேன். (வெளியே வந்து கொண்டிருந்தவர்களிடம்), "நபி (ஸல்) அவர்கள் எந்த இடத்தில் தொழுதார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "இங்கு தான்" என (ஓர் இடத்தைக் காட்டி)க் கூறினார்கள். நான் அவர்களிடம் "நபி (ஸல்) அவர்கள் எத்தனை ரக்அத்கள் தொழுதார்கள்?" என்று கேட்க மறந்துவிட்டேன்.

2580 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் உசாமா பின் ஸைத் (ரலி), பிலால் (ரலி), உஸ்மான் பின் தல்ஹா (ரலி) ஆகியோரும் இறையில்லம் கஅபாவினுள் நுழைந்து தாழிட்டுக்கொண்டனர். அவர்கள் கதவைத் திறந்ததும் முதல் ஆளாக நானே உள்ளே புகுந்தேன். அப்போது (வெளியே வந்த) பிலால் (ரலி) அவர்களைச் சந்தித்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கஅபாவினுள் தொழுதார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,

"ஆம், வலப்பக்கமிருக்கும் இரு தூண்களுக்கிடையே தொழுதார்கள்" என்று பதிலளித்தார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2581 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் உசாமா பின் ஸைத் (ரலி), பிலால் (ரலி), உஸ்மான் பின் தல்ஹா (ரலி) ஆகியோரும் கஅபாவிற்குள் நுழைவதை நான் கண்டேன். அப்போது அந்த நால்வருடன் வேறெவரும் கஅபாவிற்குள் நுழையவில்லை. பின்னர் தாழிடப்பட்டுவிட்டது.
என்னிடம் "பிலால் (ரலி) அவர்கள்' அல்லது "உஸ்மான் பின் தல்ஹா (ரலி) அவர்கள்', "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கஅபாவின் நடுவில் வலப்பக்கமிருக்கும் இரு தூண்களுக்கிடையே தொழுதார்கள்" எனக் குறிப்பிட்டார்கள்.

2582 இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்களிடம், "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "நீங்கள் இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வரும்படியே உத்தரவிடப்பட்டுள்ளீர்கள்; கஅபாவினுள் நுழையுமாறு உங்களுக்கு உத்தரவிடப்படவில்லை' என்று கூறியதைத் தாங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அதாஉ (ரஹ்) அவர்கள், கஅபாவிற்குள் நுழைய வேண்டாம் என இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் தடை விதிக்கவில்லை. ஆயினும், அவர்கள் உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறினார்கள் எனப் பின்வருமாறு கூறியதைச் செவியுற்றேன்:
நபி (ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவிற்குள் நுழைந்ததும் அதன் அனைத்துப் பகுதிகளிலும் பிரார்த்தித்துவிட்டு, உள்ளே தொழாமலேயே வெளியேறிவிட்டார்கள். வெளியே வந்ததும் கஅபாவின் (வாசல்) முன் நின்று இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். மேலும் "இதுவே உங்கள் தொழும் திசை (கிப்லா) ஆகும்" என்றும் கூறினார்கள்.
அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "அதன் பகுதிகள் என்பது என்ன? அதன் ஒவ்வொரு மூலையையுமா குறிப்பிடுகிறீர்கள்?"என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இல்லை; இறையில்லத்தின் ஒவ்வொரு திசையிலும் (பிரார்த்தித்தார்கள்)" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2583 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவிற்குள் நுழைந்தார்கள். அதனுள் ஆறு தூண்கள் இருந்தன. ஒவ்வொரு தூணுக்கு அருகிலும் நின்று அவர்கள் பிரார்த்தித்தார்கள். ஆனால், தொழவில்லை.

2584 இஸ்மாயீல் பின் அபீகாலித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் தமது உம்ர(த்துல் களா)வின்போது இறையில்லம் கஅபாவிற்குள் நுழைந்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "இல்லை' என்றார்கள்.

## பாடம் : 69 இறையில்லம் கஅபாவை இடித்துக் கட்டுதல்.

2585 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஆயிஷா!) உன்னுடைய (குறைஷி) சமுதாயத்தார் இறைமறுப்பிற்கு நெருங்கிய காலத்தவர்கள் (புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்கள்) என்பது மட்டும் இல்லையாயின், கஅபாவை இடித்துவிட்டு இப்ராஹீம் (அலை) அவர்கள் அமைத்த அடித்தளத்தின் மீதே நான் அதைக் கட்டியிருப்பேன். ஏனெனில், குறைஷியர் இந்த ஆலயத்தை (புதுப்பித்து)க் கட்டியபோது, அ(தன் அடித்தளத்)தைவிடச் சுருக்கி (சற்று உள்ளடக்கி)க் கட்டிவிட்டனர். மேலும்,அதற்கு ஒரு பின்புற வாசலையும் நான் அமைத்திருப்பேன்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2586 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன்னுடைய சமுதாயத்தார் கஅபாவை(ப் புதுப்பித்து)க் கட்டியபோது, இப்ராஹீம் (அலை) அவர்கள் இட்ட அடித்தளத்தை (விடச் சற்று)க் குறைத்துவிட்டார்கள் என்பதை நீ அறிவாயா?" என்று கேட்டார்கள். அதற்கு நான், "அல்லாஹ்வின் தூதரே! இப்ராஹீம் (அலை) அவர்கள் இட்ட அடித்தளத்திற்கு அதை நீங்கள் மாற்றிவிடலாமல்லவா?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன்னுடைய சமுதாயத்தார் இறைமறுப்பிற்கு நெருக்கமான காலத்தவர்கள் (புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்கள்) என்பது மட்டும் இல்லையாயின், அவ்வாறே நான் செய்திருப்பேன்" என்றார்கள்.
(இதன் அறிவிப்பாளரான அப்துல்லாஹ் பின் முஹம்மத் பின் அபீபக்ர் அஸ்ஸித்தீக் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:)
(நான் இந்த ஹதீஸை) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) (அவர்களிடம் தெரிவித்தபோது) அவர்கள், "ஆயிஷா (ரலி) அவர்கள் இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து கேட்டிருந்தால் அது சரியே! (இறையில்லம் கஅபாவின்) "ஹிஜ்ர்' பகுதியை அடுத்துள்ள இரு (ஷாமிய) மூலைகளை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முத்தமிடாததற்குக் காரணம், இப்ராஹீம் (அலை) அவர்கள் அமைத்த அடித்தளத்தின் மீது இறையில்லம் முழுமையாக்கப்படாமல் இருந்ததே ஆகும் என்று நான் கருதுகிறேன்"என்றார்கள்.

2587 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என்னிடம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன் சமுதாயத்தார் "அறியாமைக் காலத்திற்கு' அல்லது "இறைமறுப்பிற்கு'நெருக்கமானவர்கள் (புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்கள்) என்பது மட்டும் இல்லையாயின், கஅபாவின் கருவூலங்களை அல்லாஹ்வின் பாதையில் செலவிட்டிருப்பேன். மேலும், "ஹிஜ்ர்' எனும் அரைவட்டப் பகுதியை கஅபாவுடன் இணைத்து,கஅபாவின் தலை வாயிலை (கீழிறக்கி)ப் பூமியோடு சேர்ந்தாற்போல் ஆக்கியிருப்பேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2588 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆயிஷா! உன் சமுதாயத்தார் இணைவைப்புக்கு நெருக்கமான காலத்தவர்கள் என்பது மட்டும் இல்லையாயின், கஅபாவை நான் இடித்துவிட்டு, (உயர்ந்திருக்கும் அதன் தளத்தைத்) தரையோடு சேர்ந்தாற்போல் ஆக்கியிருப்பேன். மேலும், கிழக்கே ஒன்றும் மேற்கே ஒன்றுமாக அதற்கு இரு வாயில்களை அமைத்திருப்பேன். "ஹிஜ்ர்'பகுதியில் ஆறு முழங்களைக் கூடுதலாக்கியிருப்பேன். ஏனெனில், குறைஷியர் கஅபாவை(ப் புதுப்பித்து)க் கட்டியபோது அதைக் குறைத்து (சற்று உள்ளடக்கிக் கட்டி)விட்டனர்" என்றார்கள்.

2589 அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யஸீத் பின் முஆவியா ஆட்சிக்காலத்தில் ஷாம்வாசிகள் (அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களுக்கு எதிராக மக்காவை முற்றுகையிட்டு) போர் தொடுத்தபோது, இறையில்லம் கஅபா தீக்கிரையானது. அப்போது நடந்தவை நடந்து முடிந்தன. அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள், மக்கள் ஹஜ் பருவத்தில் ஒன்றுகூடும் வரை இறையில்லத்தை அதே நிலையிலேயே விட்டு வைத்தார்கள்.(பனூ உமய்யாக்களான) ஷாம்வாசிகளுக்கு எதிராக "மக்களுக்கு எழுச்சியூட்டுவதற்காகவே'அல்லது "அவர்களை ரோஷம்கொள்ளச் செய்வதற்காகவே' அவ்வாறு விட்டுவைத்தார்கள். (ஹஜ்ஜை முடித்து) மக்கள் புறப்பட்டபோது அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள், "மக்களே! கஅபா விஷயத்தில் எனக்கு ஆலோசனை கூறுங்கள். அதை இடித்துவிட்டுப் புதிதாகக் கட்டுவதா, அல்லது அதில் பழுதடைந்த பகுதியை மட்டும் செப்பனிடுவதா?" என்று கேட்டார்கள்.
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "எனக்கு இது தொடர்பாக ஒரு யோசனை தோன்றுகிறது. அதில் பழுதடைந்த பகுதியை மட்டும் நீங்கள் செப்பனிடுங்கள். மக்கள் இஸ்லாத்தை ஏற்றபோதிருந்த அதே நிலையில் கஅபாவை விட்டுவிடுங்கள்; மக்கள் இஸ்லாத்தை ஏற்றபோதும், நபி (ஸல்) அவர்கள் இறைத்தூதராக நியமிக்கப்பெற்றபோதும் இருந்த நிலையில் அதன் கற்களையும் (விட்டுவிடுங்கள்)" என்றார்கள்.
அதற்கு அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள், "உங்களில் ஒருவரது இல்லம் தீக்கிரையானால் அதைப் புதுப்பிக்காத வரை அவரது மனம் திருப்தியடைவதில்லை. இந்நிலையில் இறையில்லத்தின் விஷயத்தில் மட்டும் எப்படி (நீங்கள் இவ்வாறு கூறுவீர்கள்)? நான் (கஅபாவை இடித்துப் புதுப்பிப்பதா, அல்லது பழுதடைந்ததைச் செப்பனிடுவதா எனும் விஷயத்தில்) என் இறைவனிடம் நன்முடிவு வேண்டி மூன்று முறை பிரார்த்திப்பேன். பிறகு ஒரு முடிவுக்கு வருவேன்" என்றார்கள். நன்முடிவு வேண்டி மூன்று முறை பிரார்த்தித்தபோது, இடித்துவிட்டுப் புதுப்பிக்கும் முடிவுக்கு வந்தார்கள். அப்போது மக்கள் முதலில் கஅபாவின் மீது ஏறும் மனிதர்மீது வானத்திலிருந்து ஏதேனும் வேதனை இறங்கி விடும் என அச்சம் தெரிவித்தனர். இறுதியாக ஒரு மனிதர் கஅபாவின் மீதேறி அதிலிருந்து ஒரு கல்லை கீழே தள்ளினார். அவருக்கு எதுவும் நேராததைக் கண்ட மக்கள், ஒவ்வொருவராக (இடிக்கும் பணியில்) ஈடுபட்டு அதைத் தரைமட்டமாக்கினர். பின்னர் அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் கட்டடப் பணி நிறைவடையும்வரை

(இறையில்லத்திற்குத் தாற்காலிகத்) தூண்கள் அமைத்து அவற்றின்மீது திரையும் தொங்கவிட்டார்கள்.

மேலும், அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஆயிஷா (ரலி) அவர்கள் "என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(உன்னுடைய சமுதாய) மக்கள் இறை மறுப்பிற்கு நெருக்கமான காலத்தவர்கள் (புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்கள்) என்றில்லையாயின் - என்னிடம் கஅபாவின் கட்டடத்தை வலுப்படுத்தக்கூடிய அளவு பொருளாதாரம் இல்லை என்பது (ஒருபுறம்) இருக்க - நான் "ஹிஜ்ர்' பகுதியில் ஐந்து முழங்களை கஅபாவுடன் சேர்த்துவிட்டிருப்பேன். பின்னர் மக்கள் நுழைவதற்கு ஒரு வாயிலும் வெளியேறுவதற்கு ஒரு வாயிலுமாக (இரு வாயில்களை) அதற்கு அமைத்திருப்பேன்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன். இன்று என்னிடம் பொருளாதாரமிருப்பதைக் காண்கிறேன். மக்களை அஞ்சும் நிலையிலும் நான் இல்லை" என்று கூறி(விட்டு, கஅபாவைப் புதுப்பிக்கலா)னார்கள்.
பின்னர் கஅபாவில் "ஹிஜ்ர்' பகுதியில் ஐந்து முழங்களைக் கூடுதலாக்கினார்கள்; மக்கள் பார்த்துக்கொண்டிருக்கவே (ஹிஜ்ர் பகுதியை அகழ்ந்து) ஓர் அடித்தளத்தை வெளியாக்கினார்கள். அதன் மீதே கஅபாவை எழுப்பினார்கள். (முடிவில்) கஅபாவின் உயரம் பதினெட்டு முழங்களாக இருந்தது. அதன் உயரத்தை அதிகமாக்கிய பின்பும் அது குறைவாகவே பட்டது. எனவே, மேலும் பத்து முழங்களை அதிகமாக்கினார்கள்; அத்துடன் உள்ளே நுழைவதற்கு ஒரு வாயில்; வெளியேறுவதற்கு ஒரு வாயில் என இறையில்லத்திற்கு இரு வாயில்களை அமைத்தார்கள்.

அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் கொல்லப்பட்டபோது, ஹஜ்ஜாஜ் பின் யூசுஃப் இந்த விவரங்களைத் தெரிவித்து (கலீஃபா) அப்துல் மலிக் பின் மர்வானுக்கு ஒரு கடிதம் வரைந்தார். அதில் அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் (ஹிஜ்ர் பகுதியை அகழ்ந்து அங்கிருந்த) ஓர் அடித்தளத்தின் மீது கஅபாவை எழுப்பியுள்ளார்; அதை மக்காவின் நியாயவான்கள் பலரும் பார்த்துள்ளனர்" என்றும் குறிப்பிட்டிருந்தார். அதற்கு அப்துல் மலிக் பின் மர்வான், "நாம் இப்னுஸ் ஸுபைரை எந்த விஷயத்திலும் களங்கப்படுத்த விரும்பவில்லை, எனவே, அவர் உயர்த்திக்கட்டியதை அப்படியே விட்டுவிடுவீராக! "ஹிஜ்ர்'பகுதியிலிருந்து அவர் அதிகப்படுத்தியதை (மட்டும்) பழையபடியே மாற்றி அமைப்பீராக! அவர் புதிதாகத் திறந்துவிட்ட வாயிலை மூடிவிடுவீராக!" என்று பதில் எழுதினார். எனவே, ஹஜ்ஜாஜ் ("ஹிஜ்ர்' பகுதிச் சுவரை) இடித்து முன்பிருந்த அமைப்பிற்கே மாற்றி அமைத்தார்.

2590 அப்துல்லாஹ் பின் உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல் மலிக் பின் மர்வான் ஆட்சிக் காலத்தில், அவரிடம் ஹாரிஸ் பின் அப்தில்லாஹ் பின் அபீரபீஆ (ரஹ்) அவர்கள் ஒரு தூதுக் குழுவில் சென்றார்கள். அப்போது அப்துல் மலிக் பின் மர்வான், "அபூகுபைப் (இப்னுஸ் ஸுபைர்) ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து தாம் கேட்டதாகக் கூறும் செய்தியை, அவர் அவர்களிடமிருந்து கேட்டிருக்கமாட்டார் என்றே நான் எண்ணுகிறேன்" என்றார். அதற்கு ஹாரிஸ் (ரஹ்) அவர்கள், "ஆம் (அபூகுபைப் உண்மையே

சொல்கிறார்). இதை நானும் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து செவியுற்றுள்ளேன்" என்றார்கள்.
அதற்கு அப்துல் மலிக் பின் மர்வான், "ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து நீங்கள் செவியுற்றதைக் கூறுங்கள்" என்றார். அதற்கு ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: ஆயிஷா (ரலி) அவர்கள் சொன்னார்கள்: என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன்னுடைய சமுதாயத்தார் இறையில்லம் கஅபாவின் கட்டடத்தைச் சுருக்கிவிட்டனர். அவர்கள் இணைவைப்பிற்கு நெருக்கமான காலத்தவர்கள் (புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்கள்) என்றில்லையாயின், அவர்கள் விட்டுவிட்டதை நான் மறுபடியும் இணைத்துக் கட்டியிருப்பேன். எனக்குப் பின் உன் சமுதாயத்தாருக்கு அதை (விரிவாக்கிக்) கட்ட வேண்டுமென்ற எண்ணம் தோன்றினால் (அவ்வாறு செய்யட்டும்!) என் அருகில் வா! அவர்கள் விட்டுவிட்ட (இடத்)தை உனக்கு நான் காட்டித்தருகிறேன்"என்று கூறிவிட்டு, (கஅபா அருகில்) ஏழு முழங்கள் அளவிற்கு இடத்தை எனக்குக் காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் அப்துல்லாஹ் பின் உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்களின் அறிவிப்பிலேயே மேற்கண்டவாறு இடம்பெற்றுள்ளது.

வலீத் பின் அதாஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பின்வருமாறு கூடுதலாக இடம் பெற்றுள்ளது:
நபி (ஸல்) அவர்கள் "நான் பூமியோடு ஒட்டினாற்போல் ஒரு கிழக்கு வாசலையும் ஒரு மேற்கு வாசலையும் அதற்கு அமைத்திருப்பேன்" என்று கூறிவிட்டு, "ஏன் உன் சமுதாயத்தார் கஅபாவின் வாசலை (பூமியோடு ஒட்டினாற்போல் அமைக்காமல்) உயர்த்தினார்கள் என்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள் "இல்லை (தெரியாது)' என்றார்கள். நபி (ஸல்) அவர்கள், "சுய கௌரவத்திற்காகத்தான்; தாம் விரும்பியவரைத் தவிர வேறெவரும் நுழையக் கூடாது என்பதற்காகவே (அவ்வாறு உயர்த்தினர்). எவரேனும் ஒருவர் அதனுள் நுழைய முற்பட்டால், அதில் ஏறும்வரை அவர்கள் அவரை விட்டுவிடுவார்கள். அவர் (மேலே ஏறி) உள்ளே நுழையப்போகும் போது அவரைப் பிடித்துக் கீழே தள்ளிவிடுவார்கள்" என்றார்கள்.
பிறகு ஹாரிஸ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்களிடம் அப்துல் மலிக் பின் மர்வான், "ஆயிஷா (ரலி) அவர்கள் இவ்வாறு கூறியதை நீங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டார். அதற்கு ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் "ஆம்' என்றார்கள். பிறகு அப்துல் மலிக் பின் மர்வான் தம்மிடமிருந்த குச்சியால் தரையைச் சிறிது நேரம் குத்திக் கீறி(யபடி ஆழ்ந்து யோசித்து)விட்டு, "இறையில்லத்தையும் இப்னுஸ் ஸுபைர் மேற்கொண்டதையும் (அதே நிலையில்) விட்டிருக்க வேண்டுமென (இப்போது) விரும்புகிறேன்" என்றார்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2591 அபூகஸஆ சுவைத் பின் ஹுஜைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல் மலிக் பின் மர்வான் இறையில்லம் கஅபாவைச் சுற்றி(தவா∴ப்)வந்து கொண்டிருந்த போது, "அல்லாஹ் இப்னுஸ் ஸுபைரை அழிக்கட்டும்! அவர் இறை நம்பிக்கையாளர்களின் அன்னை (ஆயிஷா (ரலி) அவர்கள்மீது) பொய்யுரைக்கிறார். ஆயிஷா (ரலி) அவர்கள்

"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), ஆயிஷா! உன் சமுதாயத்தார் இறைமறுப்பிற்கு நெருக்கமான காலத்தவர்கள் (புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்கள்) என்றில்லையாயின், நான் இறையில்லம் கஅபாவை இடித்துவிட்டு "ஹிஜ்ர்' பகுதியை அதனுடன் அதிகமாக்கியிருப்பேன். ஏனெனில், உன் சமுதாயத்தார் அதன் கட்டடத்தைச் சுருக்கிவிட்டனர் என்று கூறினார்கள்' என ஆயிஷா (ரலி) அவர்கள் தம்மிடம் கூறியதாக அவர் கூறுகிறார்" என்றார்.
அப்போது ஹாரிஸ் பின் அப்தில்லாஹ் பின் அபீரபீஆ (ரஹ்) அவர்கள், "இவ்வாறு கூறாதீர்கள், இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! ஏனெனில், இறைநம்பிக்கையாளர்களின் அன்னை இப்படிக் கூறியதை நானும் கேட்டுள்ளேன்" என்றார்கள். அப்துல் மலிக் பின் மர்வான், "கஅபாவை இடி(த்துப் புதுப்பி)ப்பதற்கு முன்பே இதை நான் கேட்டிருந்தால், நிச்சயமாக இப்னுஸ் ஸுபைர் கட்டிய அமைப்பிலேயே கஅபாவை நான் விட்டிருப்பேன்" என்றார்.

## பாடம் : 70 கஅபாவின் வளைந்த சுவரும் அதன் தலைவாயிலும்.

2592 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (புனித கஅபாவை ஒட்டியுள்ள ஹிஜ்ர் எனும்) வளைந்த சுவரைப் பற்றி, "இதுவும் கஅபாவில் சேர்ந்ததா?" என்று கேட்டேன். அவர்கள், "ஆம்' என்று விடையளித்தார்கள். நான், "அப்படியானால்,கஅபாவுடன் இதை அவர்கள் ஏன் இணைக்கவில்லை?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "உன் (குறைஷி) சமூகத்தாருக்கு நிதிப்பற்றாக்குறை ஏற்பட்டிருந்தது" என்று பதிலளித்தார்கள். நான், "கஅபாவின் வாயிலை உயரமாக வைத்திருப்பதன் காரணம் என்ன?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தாம் நாடியவர்களை உள்ளே அனுமதிப்பதற்காகவும், தாம் நாடியவர்களை உள்ளே செல்லவிடாமல் தடுப்பதற்காகவுமே உன் சமுதாயத்தார் இவ்வாறு செய்தனர். உன் சமூகத்தார் அறியாமைக் காலத்துக்கு நெருக்கமானவர்கள் (புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்கள்) என்பதால், அவர்களின் மனத்தில் வெறுப்பு தோன்றும் என்ற அச்சம் (மட்டும்) எனக்கு இல்லாதிருந்தால், நான் இந்த வளைந்த சுவரை கஅபாவுடன் இணைத்து அதன் வாயிலை(க் கீழிறக்கி) பூமியுடன் சேர்ந்தாற்போல் ஆக்க முடிவு செய்திருப்பேன்" என்று சொன்னார்கள்.

2593 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஹிஜ்ர் (எனும் வளைந்த சுவரைப்) பற்றிக் கேட்டேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. மேலும் அதில், "ஏணி வைக்காமல் ஏற முடியாத அளவிற்குக் கஅபாவின் தலைவாயில் உயரமாக இருக்கக் காரணம் என்ன என்று கேட்டேன்" என்றும் இடம் பெற்றுள்ளது.

**பாடம் : 71 உடல் ஊனம், முதுமை உள்ளிட்ட காரணங்களால் இயலாதவருக்காகவோ, இறந்து போனவருக்காகவோ பிறர் ஹஜ் செய்தல்.**

2594 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் சகோதரர்) ஃபள்ல் பின் அப்பாஸ், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் வாகனத்தில் இருந்தபோது, "கஸ்அம்' குலத்தைச் சேர்ந்த ஒரு பெண் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் மார்க்க விளக்கம் கேட்க வந்தார். ஃபள்ல் அப்பெண்ணைக் கூர்ந்து நோக்கலானார்; அப்பெண்ணும் ஃபள்லைப் பார்த்தார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபள்லின் முகத்தை வேறு பக்கம் திருப்பி விடலானார்கள். அப்பெண், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் தன் அடியார்களுக்கு விதியாக்கிய ஹஜ் கடமை, முதியவரான என் தந்தைக்கு ஏற்பட்டுள்ளது. அவரால் வாகனத்தில் அமர்ந்து செல்ல இயலாது. அவர் சார்பாக நான் ஹஜ் செய்யலாமா?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம்' என்றார்கள். இது "விடைபெறும்' ஹஜ்ஜின் போது நடைபெற்றது.

2595 ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"கஸ்அம்' குலத்தைச் சேர்ந்த ஒரு பெண் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தை முதியவராக உள்ளார். இந்நிலையில், அவருக்கு அல்லாஹ் விதியாக்கிய ஹஜ் கடமை ஏற்பட்டுள்ளது. அவரால் தமது ஒட்டகத்தின் முதுகில் அமர இயலாது" என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அவர் சார்பாக நீ ஹஜ் செய்யலாம்" என்றார்கள்.

**பாடம் : 72 சிறுவனின் ஹஜ் செல்லும் என்பதும் அவனை ஹஜ்ஜுக்கு அழைத்துச் சென்றவருக்கும் நற்பலன் உண்டு என்பதும்.**

2596 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "அர்ரவ்ஹா' எனும் இடத்தில் ஒரு பயணக் குழுவினரைச் சந்தித்தார்கள். அப்போது "இக்கூட்டத்தினர் யார்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் "முஸ்லிம்கள்' என்றார்கள். அப்போது அக்குழுவினர், "நீங்கள் யார்?" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர்" என்றார்கள். அப்போது (அக்குழுவிலிருந்த) ஒரு பெண், தன் குழந்தையைத் தூக்கி, "இவனுக்கும் ஹஜ் உண்டா?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "ஆம்; (அதற்காக) உனக்கும் நற்பலன் உண்டு" என விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2597 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி தம் குழந்தையை உயர்த்திக்காட்டி, "அல்லாஹ்வின் தூதரே! இவனுக்கும் ஹஜ் உண்டா?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "ஆம்; (அதற்காக) உனக்கும் நற்பலன் உண்டு" என்று விடையளித்தார்கள்.

2598 (இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் முன்னாள் அடிமை) குறைப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி (தம்) குழந்தையை உயர்த்திக்காட்டி, "அல்லாஹ்வின் தூதரே! இவனுக்கும் ஹஜ் உண்டா?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "ஆம்; (அதற்காக) உனக்கும் நற்பலன் உண்டு" என விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 73 ஆயுளில் ஒரு முறையே ஹஜ் கடமையாகும்.

2599 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு முறை) எங்களிடையே உரையாற்றினார்கள். அப்போது, "மக்களே! அல்லாஹ் உங்கள் மீது ஹஜ்ஜை விதியாக்கிவிட்டான். எனவே, ஹஜ் செய்யுங்கள்" என்றார்கள். அப்போது ஒரு மனிதர், "ஒவ்வோர் ஆண்டிலுமா (ஹஜ் செய்ய வேண்டும்), அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பதிலளிக்காமல்) அமைதியாக இருந்தார்கள். அவர் மூன்று முறை அவ்வாறே கேட்டபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் "ஆம்' என்று சொல்லிவிட்டால் அது (ஒவ்வோர் ஆண்டிலும்) கடமையாகிவிடும். பின்னர் உங்களால் அதை நிறைவேற்ற முடியாமலாகிவிடும்" என்று கூறிவிட்டு, "நான் எதை (செய்யுங்கள் என்றோ, செய்ய வேண்டாமென்றோ ஒன்றும் கூறாமல்) உங்களு(டைய முடிவு)க்கு விட்டுவிட்டேனோ அதை(ப் பற்றி எதுவும் கேட்காமல்) நீங்களும் விட்டு விடுங்கள். உங்களுக்கு முன் வாழ்ந்தவர்கள் அழிந்ததெல்லாம், அவர்கள் தங்கள் இறைத்தூதர்களிடம் அதிகமாகக் கேள்வி கேட்டதாலும் அவர்களுடன் கருத்து மாறுபாடு கொண்டதாலும்தான். ஒன்றைச் செய்யுமாறு உங்களுக்கு நான் கட்டளையிட்டால், அதை உங்களால் முடிந்த அளவிற்குச் செய்யுங்கள். ஒன்றைச் செய்ய வேண்டாமென உங்களுக்கு நான் தடை விதித்தால் அதை(ச் செய்யாமல்) விட்டுவிடுங்கள்!" என்றார்கள்.

பாடம் : 74 ஒரு பெண் (மணமுடிக்கத்தகாத) தன் நெருங்கிய உறவினருடன் ஹஜ் முதலான பயணம் மேற்கொள்ளல்.

2600 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எந்தப் பெண்ணும் (மணமுடிக்கத்தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர மூன்று நாட்களுக்கான பயணம் மேற்கொள்ள வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மூன்று நாட்களுக்கு மேல் (பயணம் மேற்கொள்ளக் கூடாது)" என்று இடம்பெற்றுள்ளது. அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மூன்று நாட்களுக்கான பயணம் மேற்கொள்ள வேண்டாம்" என்றே இடம் பெற்றுள்ளது.

2601 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொண்ட ஒரு பெண், (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர மூன்று இரவுகள் தொலைவிற்குப் பயணம் மேற்கொள்ள அனுமதி இல்லை.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2602 கஸஆ பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்து ஒரு ஹதீஸைச் செவியுற்றேன். அது எனக்கு ஆச்சரியத்தைத் தந்தது. நான், "இதைத் தாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் கேட்காததையா அவர்கள் கூறியதாகச் சொல்வேன்? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எனது இந்த (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசல், மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதுல் அக்ஸா ஆகிய மூன்று பள்ளிவாசல்களைத் தவிர மற்ற இடங்களுக்கு (நன்மையை நாடிப் புனிதப்) பயணம் மேற்கொள்ள வேண்டாம்' என்று கூறியதையும், "எந்தப் பெண்ணும் (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன், அல்லது கணவருடன் தவிர இரண்டு நாள் (தொலைவிற்குப்) பயணம் மேற்கொள்ள வேண்டாம்' என்று கூறியதையும் நான் கேட்டேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2603 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான்கு செய்திகளைச் செவியுற்றேன். அவை என்னை வியப்படையச் செய்தன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "எந்தப் பெண்ணும் கணவன், அல்லது (மண முடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர இரண்டு நாள் பயணத் தொலைவிற்குப் பயணம் மேற்கொள்ள வேண்டாம் எனத் தடை விதித்தார்கள். தொடர்ந்து எஞ்சிய ஹதீஸையும் கூறினார்கள்.

2604 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எந்தப் பெண்ணும் (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர மூன்று நாட்கள் பயணம் மேற்கொள்ள வேண்டாம்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2605 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எந்தப் பெண்ணும் (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர மூன்று இரவுகளுக்கு மேல் பயணம் மேற்கொள்ள வேண்டாம்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "(மணமுடிக்கத்தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர மூன்று நாட்களுக்கு அதிகமாக (பயணம் மேற்கொள்ள வேண்டாம்)" என்று இடம்பெற்றுள்ளது.

2606 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முஸ்லிமான எந்தப் பெண்ணும் (மண முடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினர் தன்னுடன் இருந்தே தவிர, ஓரிரவு பயணத் தொலைவிற்குப் பயணம் மேற்கொள்ள அனுமதி இல்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2607 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கைகொண்ட எந்தப் பெண்ணும் (மண முடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர ஒரு நாள் பயணத் தொலைவிற்குப் பயணம் மேற்கொள்ள அனுமதி இல்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2608 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட ஒரு பெண், (மணமுடிக்கத் தகாத) தன் நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர ஒரு பகல் ஓர் இரவு பயணத் தொலைவிற்குப் பயணம் மேற்கொள்ள அனுமதி இல்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2609 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எந்தப் பெண்ணும் (மணமுடிக்கத் தகாத) தன் நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர மூன்று நாட்கள் பயணம் மேற்கொள்ள அனுமதி இல்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2610 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட ஒரு பெண், அவளுடைய தந்தை, அல்லது மகன், அல்லது கணவன்,அல்லது சகோதரன், அல்லது (மண முடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர மூன்று நாட்களோ, அதற்கு மேலாகவோ பயணம் மேற்கொள்வதற்கு அனுமதி இல்லை.
அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கும் இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2611 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஒரு பெண்ணுடன் எந்த (அந்நிய) ஆடவனும் தனிமையில் இருக்கவேண்டாம்; (மண முடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன் அவள் இருக்கும்போது தவிர; ஒரு பெண் (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய ஆணுடன் தவிர பயணம் மேற்கொள்ள வேண்டாம்" என்று நபி (ஸல்) அவர்கள் (தமது) சொற்பொழிவில் குறிப்பிட்டார்கள். அப்போது ஒரு மனிதர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! என் மனைவி ஹஜ் செய்யப் புறப்பட்டுவிட்டாள். இன்னின்ன போரில் என் பெயர் பதிவு செய்யப்பட்டுள்ளது. (இந்நிலையில் நான் என்ன

செய்வது?)" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "நீர் சென்று உம்முடைய மனைவியுடன் ஹஜ் செய்வீராக!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஒரு பெண்ணுடன் எந்த (அந்நிய) ஆடவனும் தனிமையில் இருக்க வேண்டாம்; (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினருடன் தவிர" எனும் (ஆரம்பக்) குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 75 ஹஜ் முதலான பயணத்திற்காக வாகனத்தில் ஏறியதும் ஓத வேண்டிய பிரார்த்தனை.

2612 அலீ பின் அப்தில்லாஹ் அல்அஸ்தீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் மக்களுக்கு (பின்வரும் பிரார்த்தனையை)க் கற்றுத் தந்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கேனும் பயணம் புறப்பட்டால், தமது ஒட்டகத்தில் ஏறி அமர்ந்தவுடன் மூன்று முறை தக்பீர் ("அல்லாஹு அக்பர்') கூறுவார்கள். பிறகு "சுப்ஹானல்லதீ சக்கர லனா ஹாதா, வ மா குன்னா லஹு முக்ரினீன, வ இன்னா இலா ரப்பினா ல முன்கலிபூன். அல்லாஹும்ம, இன்னா நஸ்அலுக ஃபீ சஃபரினா ஹாதா அல்பிர்ர வத்தக்வா, வ மினல் அமலி மா தர்ளா. அல்லாஹும்ம, ஹவ்வின் அலைனா சஃபரனா ஹாதா. வத்வி அன்னா புஅதஹ். அல்லா ஹும்ம அன்த்தஸ் ஸாஹிபு ஃபிஸ்ஸஃபரி, வல்ஃகலீஃபத்து ஃபில்அஹ்ல். அல்லாஹும்ம, இன்னீ அஊது பிக்க மின் வஉஸாயிஸ் ஸஃபரி, வ கஆபத்தில் மன்ழரி, வ சூயில் முன்கலபி ஃபில்மாலி வல்அஹ்ல்" என்று கூறுவார்கள்.

(பொருள்: நாங்கள் இ(ந்த வாகனத்)தைக் கையாளும் திறன் பெற்றிராத நிலையில், எங்களுக்கு இதைப் பணியவைத்த (இறை)வன் தூயவன். நாங்கள் எங்கள் இறைவனிடமே திரும்பிச் செல்லக்கூடியவர்களாய் உள்ளோம். இறைவா, இப்பயணத்தில் நன்மையையும், இறையச்சத்தையும், நீ திருப்தியடையக்கூடிய (நற்)செயல்களையும் உன்னிடம் வேண்டுகிறோம். இறைவா,இப்பயணத்தை எங்களுக்கு எளிதாக்குவாயாக! இப்பயணத்தின் தூரத்தைச் சுருக்குவாயாக! இறைவா, நீயே என் பயணத் தோழனாகவும் என் குடும்பத்தின் பிரதிநிதியாகவும் இருப்பாயாக! இறைவா, பயணத்தின் சிரமங்களிலிருந்தும், நிலைகுலையச் செய்யும் துயரக் காட்சியிலிருந்தும், செல்வத்திலும் குடும்பத்திலும் நிகழ்ந்துவிடும் தீய மாற்றங்களிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.)
திரும்பி வரும்போதும் இவ்வாறே பிரார்த்திப்பார்கள். ஆனால், அவற்றுடன் பின்வரும் வரிகளையும் கூடுதலாக ஓதுவார்கள்: "ஆயிபூன, தாயிபூன, ஆபிதூன லி ரப்பினா ஹாமிதூன" (பாவமன்னிப்புக் கோரி மீண்டவர்களாகவும், எங்கள் இறைவனை வழிபட்டவர்களாகவும் அவனையே போற்றிப் புகழ்ந்தவர்களாகவும் திரும்புகிறோம்).

2613 அப்துல்லாஹ் பின் சர்ஜிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பயணம் புறப்படும்போது பயணத்தின் சிரமங்களிலிருந்தும், துயரத்தோடு திரும்பி வருவதிலிருந்தும், வளர்ச்சியிலிருந்து வீழ்ச்சிக்கு மாறுவதிலிருந்தும், அநீதிக்குள்ளானவனின் (சாபப்) பிரார்த்தனைக்கு உள்ளாவதிலிருந்தும், குடும்பத்திலும் செல்வத்திலும் தீய மாற்றங்கள் நிகழ்ந்துவிடுவதிலிருந்தும் இறைவனிடம் பாதுகாப்புக் கோருவார்கள். (அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மின் வஉஸாயிஸ் ஸஃபரி, வ கஆபத்தில் முன்கலபி, வல்ஹவ்ரி பஅதல் கவ்னி, வ தஅவத்தில் மழ்லூமி, வ சூயில் மன்ழரி ஃபில்அஹ்லி வல்மால்" என்று கூறுவார்கள்.)

2614 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் சர்ஜிஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அப்துல் வாஹித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "செல்வத்திலும் குடும்பத்திலும் (ஃபில்மாலி வல்அஹ்ல்)...' என்று இடம்பெற்றுள்ளது.
முஹம்மத் பின் காஸிம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பயணத்திலிருந்து திரும்பிவரும் போது "குடும்பத்தில்' (ஃபில் அஹ்லி) எனும் சொற்றொடரை முதலில் கூறுவார்கள் என இடம்பெற்றுள்ளது.
மேற்கண்ட இவ்விருவரின் அறிவிப்பிலும் "அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மின் வஉஸாயிஸ் ஸஃபர்" (இறைவா,பயணத்தின் சிரமங்களிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்) எனும் வாசகம் இடம்பெற் றுள்ளது.

## பாடம் : 76 ஹஜ் முதலான பயணங்களிலிருந்து திரும்பும்போது ஓத வேண்டியவை.

2615 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் போர், அல்லது படை, அல்லது ஹஜ், அல்லது உம்ராவிலிருந்து திரும்பும்போது குன்றுகள் அல்லது மேடுகள்மீது ஏறினால், மூன்று முறை தக்பீர் (அல்லாஹு அக்பர்) கூறுவார்கள். பிறகு "லா இலாஹ இல்லல்லாஹு, வஹ்தஹு, லா ஷரீக்க லஹு. லஹுல் முல்க்கு. வ லஹுல் ஹம்து. வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். ஆயிபூன,தாயிபூன, ஆபிதூன, சாஜிதூன, லி ரப்பினா ஹாமிதூன. ஸதகல்லாஹு வஅதஹு; வ நஸர அப்தஹு; வ ஹஸமல் அஹ்ஸாப வஹ்தஹ்" என்று கூறுவார்கள். (பொருள்: அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவர் எவருமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே. புகழும் அவனுக்கே. அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் உள்ளவன். பாவமன்னிப்புக் கோரி மீண்டவர்களாகவும், எங்கள் இறைவனை வழிபட்டவர்களாகவும், சிரம்பணிந்தவர்களாகவும் அவனையே போற்றிப் புகழ்ந்தவர்களாகவும் திரும்புகிறோம். அல்லாஹ் தன் வாக்குறுதியை மெய்யாக்கிவிட்டான்; தன் அடியாருக்கு வெற்றியளித்தான்; கூட்டுப் படைகளைத் தன்னந்தனியாக அவனே தோற்கடித்தான்.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் அய்யூப் பின் அபீதமீமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இரண்டு முறை தக்பீர் (அல்லாஹு அக்பர்) கூறுவார்கள்"என்று இடம்பெற்றுள்ளது.

2616 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் (ஓர் அறப்போரிலிருந்து) திரும்பிக்கொண்டிருந்தோம். அப்போது (நபி (ஸல்) அவர்களுடன்) நானும் அபூதல்ஹா (ரலி) அவர்களும் இருந்தோம். (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) ஸஃபிய்யா (ரலி) அவர்கள் நபியவர்களுக்குப் பின்னால் அவர்களது ஒட்டகத்தில் இருந்தார்கள். மதீனாவின் மேற்புறத்தில் நாங்கள் இருந்தபோது நபி (ஸல்) அவர்கள், "ஆயிபூன, தாயிபூன, ஆபிதூன லி ரப்பினா ஹாமிதூன" (பாவமன்னிப்புக் கோரி மீண்டவர்களாகவும், எங்கள் இறைவனை வழிபட்டவர்களாகவும், அவனையே போற்றிப் புகழ்ந்தவர்களாகவும் திரும்புகிறோம்) என மதீனாவிற்குள் வரும் வரை சொல்லிக்கொண்டேயிருந்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 77 ஹஜ் அல்லது உம்ராவிலிருந்து திரும்பும்போது துல்ஹுலைஃபாவில் இறங்கித் தங்குவதும் அங்கு தொழுவதும்.

2617 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்காவிலிருந்து திரும்பும்போது) "துல்ஹுலைஃபா' விலுள்ள "அல்பத்ஹா' எனும் விசாலமான பள்ளத்தாக்கில் தமது ஒட்டகத்தை மண்டியிடவைத்து, அங்கு தொழுதார்கள். நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இப்னு உமர் (ரலி) அவர்களும் அவ்வாறே செய்வார்கள்.

2618 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது ஒட்டகத்தை மண்டியிடவைத்துத் தொழுது வந்த, "துல்ஹுலைஃபா'விலுள்ள "அல்பத்ஹா' பள்ளத்தாக்கில் இப்னு உமர் (ரலி) அவர்களும் தமது ஒட்டகத்தை மண்டியிடவைப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2619 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் ஹஜ் அல்லது உம்ராவிலிருந்து திரும்பும்போது, "துல்ஹுலைஃபா'வில் "அல்பத்ஹா' பள்ளத்தாக்கில் தமது ஒட்டகத்தை மண்டியிட வைத்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்குதான் தமது ஒட்டகத்தை மண்டியிடச் செய்வார்கள்.

2620 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "துல்ஹுலைஃபா'வில் இரவின் இறுதி நேரத்தில் ஓய்வெடுக்கும் இடத்தில் (உறங்கிக் கொண்டு) இருந்தபோது "வளமிக்க பள்ளத்தாக்கில் நீங்கள் இருக்கிறீர்கள்" என (கனவில்) கூறப்பட்டது.

2621 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "துல்ஹுலைஃபா'வில் (அல்அகீக்) பள்ளத்தாக்கின் நடுவில் இரவின் இறுதி நேரத்தில் ஓய்வெடுக்கும் இடத்தில் (உறங்கிக்கொண்டு) இருந்தபோது, "வளமிக்க பள்ளத்தாக்கில் நீங்கள் இருக்கிறீர்கள்" என (கனவில்) கூறப்பட்டது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான மூசா பின் உக்பா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓய்வெடுக்கும் இடத்தைத் தேடியவராக அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தமது ஒட்டகத்தை மண்டியிடவைத்து, ஓய்வெடுக்கும் பள்ளிவாசலுக்கருகில் உள்ள இடத்தில், சாலிம் (ரஹ்) அவர்களும் எங்கள் ஒட்டகங்களை மண்டியிடவைத்தார்கள். அந்த இடம் பள்ளத்தாக்கின் நடுவில் உள்ள பள்ளி வாசலுக்குக் கீழே இருந்தது. பள்ளிவாசலுக்கும் கிப்லாவுக்குமிடையே நடுவில் (நபி (ஸல்) அவர்கள் ஓய்வெடுத்த) அந்த இடம் இருந்தது.

## பாடம் : 78 இணைவைப்பவர் எவரும் இறையில்லம் கஅபாவில் ஹஜ் செய்யக்கூடாது; நிர்வாணமாக எவரும் கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வரக்கூடாது என்பதும், "பெரிய ஹஜ் நாள்' பற்றிய விவரமும்.

2622 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"விடைபெறும்' ஹஜ்ஜுக்கு முந்தைய ஹஜ்ஜின்போது, அபூபக்ர் (ரலி) அவர்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹஜ் பயணக் குழுவிற்குத்) தலைவராக ஆக்கியிருந்தார்கள். அப்போது துல்ஹஜ் பத்தாவது நாளில் (மினாவில் வைத்து) "இந்த ஆண்டுக்குப் பிறகு இணைவைப்பாளர் எவரும் ஹஜ் செய்யக் கூடாது; இந்த ஆலயத்தை நிர்வாணமாக எவரும் சுற்றி (தவாஃப்) வரக் கூடாது" என்று பொது அறிவிப்புச் செய்யும் குழுவினரில் ஒருவனாக என்னையும் அபூபக்ர் (ரலி) அவர்கள் அனுப்பிவைத்தார்கள்.220
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அபூஹுரைரா (ரலி) அவர்களின் இந்த ஹதீஸை ஆதாரமாகக் கொண்டே ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள், "துல் ஹஜ் பத்தாவது நாளே பெரிய ஹஜ் நாளாகும்" எனக் கூறிவந்தார்கள்.

## பாடம் : 79 ஹஜ், உம்ரா, அரஃபா நாள் ஆகியவற்றின் சிறப்பு.

2623 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், அரஃபா (துல்ஹஜ் 9ஆவது) நாளில் அடியார்களுக்கு நரக விடுதலையளிக்கும் அளவிற்கு வேறெந்த நாளிலும் நரக விடுதலை அளிப்பதில்லை. அன்றைய தினம் அவன் (அரஃபாவிலுள்ளவர்களை) நெருங்கி, வானவர்களிடம் அவர்களைக் குறித்துப் பெருமை பாராட்டுகிறான். "இவர்கள் எதை நாடி (இங்கு குழுமி)யுள்ளார்கள்?" என்று (பெருமிதத்தோடு) கேட்கிறான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2624 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் உம்ராச் செய்வது, மறு உம்ராவரை (ஏற்படும் சிறு) பாவங்களுக்குப் பரிகாரமாகும். (பாவச்செயல் கலவாத) ஒப்புக்கொள்ளப்பட்ட ஹஜ்ஜுக்குச் சொர்க்கத்தை தவிர வேறு கூலி இல்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் எட்டு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2625 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தீய பேச்சுகள் மற்றும் பாவச்செயல்களில் ஈடுபடாமல் இந்த(க் கஅபா) ஆலயத்திற்கு வந்(து ஹஜ் செய்)தவர், அன்று பிறந்த பாலகனைப் போன்று திரும்புகிறார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "தீய பேச்சுகள் மற்றும் பாவச்செயல்களில் ஈடுபடாமல் ஒருவர் ஹஜ் செய்தால்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 80 ஹாஜிகள் மக்காவில் தங்குவதும் அங்குள்ள வீடுகளை வாரிசுரிமையாகப் பெறுவதும்.

2626 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் மக்காவில் தங்கள் (பெரிய தந்தையின்) வீட்டில் தங்குவீர்களா?" என்று கேட்டேன்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(என் பெரிய தந்தையின் புதல்வர்) அகீல், குடியிருப்புகள் அல்லது வீடுகளில் எதையேனும் நமக்காக விட்டுவைத்துள்ளாரா, என்ன?" என்று கேட்டார்கள்.
(நபியவர்களின் பெரிய தந்தையான) அபூதாலிபின் சொத்துக்களுக்கு அகீலும் தாலிபும் வாரிசானார்கள். (அபூதாலிபின் மற்ற இரு புதல்வர்களான) ஜஅஃபர் (ரலி) அவர்களும் அலீ (ரலி) அவர்களும் முஸ்லிம்களாக இருந்ததால் (தம் தந்தையின் சொத்துக்களில்) எதற்கும் வாரிசாக (முடிய)வில்லை. (அப்போது) அகீலும் தாலிபும் இறைமறுப்பாளர்களாக இருந்தனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2627 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் செய்த ஹஜ்ஜின் போது, நாங்கள் மக்காவை நெருங்கிய வேளையில் நான் (நபி (ஸல்) அவர்களிடம்) "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் நாளை எங்கு தங்குவீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "(அபூதாலிபின் மகன்) அகீல் நமக்கு வீடு எதையேனும் விட்டு வைத்துள்ளாரா?" என்று கேட்டார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! இன்ஷா அல்லாஹ் நாளைய தினம் தாங்கள் எங்கு தங்குவீர்கள்?"என்று கேட்டேன். -இது மக்கா வெற்றியின்போது நடந்ததாகும்.- அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அகீல் நமக்கு வீடு எதையேனும் விட்டுவைத்துள்ளாரா?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 81 மக்காவிலிருந்து ஹிஜ்ரத் செய்தவர், ஹஜ்ஜையும் உம்ராவையும் நிறைவேற்றிய பின் மூன்று நாட்களுக்கு மிகாமல் மக்காவில் தங்கியிருக்கலாம்.**

2628 அப்துர் ரஹ்மான் பின் ஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சாயிப் பின் யஸீத் (ரலி) அவர்களிடம் (கலீஃபா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள், (முஹாஜிர் ஹஜ் கிரியைகளை நிறைவேற்றிவிட்டு, மினாவிலிருந்து திரும்பிய பிறகு) மக்காவில் தங்குவது பற்றி (ஹதீஸ்) எதையேனும் செவியுற்றுள்ளீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு சாயிப் (ரலி) அவர்கள், "முஹாஜிர் (மினாவிலிருந்து) திரும்பிய பிறகு மூன்று இரவுகள் மக்காவில் தங்க அனுமதி உண்டு' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அலாஉ பின் அல்ஹள்ரமீ (ரலி) அவர்கள் சொல்ல நான் கேட்டுள்ளேன்" என்றார்கள். "அதைவிட அதிகமாக்கக் கூடாது" என்று சொன்னதைப் போன்று இருந்தது.

2629 அப்துர் ரஹ்மான் பின் ஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(கலீஃபா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் தம் அவையோரிடம், "(முஹாஜிர், ஹஜ் கிரியைகளை நிறைவேற்றிவிட்டு) மக்காவில் தங்குவது பற்றி நீங்கள் என்ன செவியுற்றுள்ளீர்கள்?" என்று கேட்டார்கள். அப்போது (அங்கிருந்த) சாயிப் பின் யஸீத் (ரலி) அவர்கள், "முஹாஜிர் தமது (ஹஜ்) கிரியைகளை நிறைவேற்றிவிட்டு மக்காவில் மூன்று இரவுகள் தங்கலாம்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அலாஉ பின் அல் ஹள்ரமீ (ரலி) அவர்கள் சொல்ல நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.

2630 அப்துர் ரஹ்மான் பின் ஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சாயிப் பின் யஸீத் (ரலி) அவர்களிடம் உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் (முஹாஜிர் மக்காவில் தங்குவதைப் பற்றிக்) கேட்டார்கள். அதற்கு சாயிப் (ரலி) அவர்கள், "முஹாஜிர் (மினாவிலிருந்து) திரும்பிய பிறகு மூன்று இரவுகள் மக்காவில் தங்கியிருக்கலாம் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அலாஉ பின் அல்ஹள்ரமீ (ரலி) அவர்கள் சொல்ல நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2631 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முஹாஜிர், (ஹஜ்) கிரியைகளை நிறை வேற்றிய பிறகு மக்காவில் மூன்று இரவுகள் தங்கியிருக்கலாம்.

இதை அலாஉ பின் அல்ஹள்ரமீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 82 மக்காவும், அதன் வேட்டைப் பிராணிகளும், புற்பூண்டுகளும், மரங்களும், அங்கு கண்டெடுக்கப்படும் பொருளும் -அதை அறிவிப்புச் செய்பவருக்குத் தவிர- என்றென்றும் புனிதமானவை ஆகும்.

2632 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி நிகழ்ந்த நாளில், "இனி ஹிஜ்ரத் (மக்காவைத் துறப்பது) என்பது கிடையாது. ஆயினும், அறப்போர் புரிவதும் (அதற்காகவும் பிற நற்செயல்கள் புரியவும்) நாட்டம் கொள்வதும்தான் உள்ளது. நீங்கள் போருக்குப் புறப்படும்படி அழைக்கப்பட்டால் போருக்குச் செல்லுங்கள்" என்று கூறினார்கள். மேலும் (அதே) மக்காவெற்றி நாளில், "(மக்களே!) அல்லாஹ் வானங்களையும் பூமியையும் படைத்த நாள் முதலாய் இந்த நகரத்தை அவன் புனிதமாக்கியுள்ளான். அல்லாஹ் புனிதமாக்கிய காரணத்தால் இது மறுமை நாள் வரை புனிதமானதாகவே இருக்கும். மேலும், எனக்கு முன்னர் (வாழ்ந்த) யாருக்கும் இங்கு போர் புரிய அனுமதி தரப்படவில்லை. எனக்கும் கூட (இந்த மக்காவெற்றி நாளில்) பகலில் சிறிது நேரம் மட்டுமே (இங்கு போர் புரிய) அனுமதி வழங்கப்பட்டது. அல்லாஹ் இந்த நகரத்தை புனிதமாக்கியுள்ள காரணத்தால் இது மறுமை நாள்வரை புனிதமானதாகவே திகழும். இங்கு அதன் முட்கள் வெட்டப்படக் கூடாது. அதன் வேட்டைப் பிராணி விரட்டப்படக்கூடாது. இங்கே கீழே விழுந்து கிடக்கும் பொருளை, அதை அறிவிப்புச் செய்(து உரியவரிடம் சேர்ப்)பவர் தவிர வேறெவரும் எடுக்கக் கூடாது. இங்குள்ள புற்பூண்டுகளைப் பறிக்கக் கூடாது" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உடனே (என் தந்தை) அப்பாஸ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! "இத்கிர்' புல்லைத் தவிரவா? ஏனெனில், அது அவர்களுடைய உலோகத் தொழிலாளர்களுக்கு (உலை மூட்டவு)ம், அவர்களுடைய வீடுக(ளின் மேல்கூரை)களுக்கும் பயன்படுகிறதே?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஆம்) "இத்கிரை'த் தவிர" என்று விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "வானங்களையும் பூமியையும் படைத்த நாள் முதலாய்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை. "போர் புரிய' என்பதற்குப் பகரமாக "உயிர்ச் சேதம் விளைவிக்க' என்று காணப்படுகிறது. ("இங்கு கீழே விழுந்து கிடக்கும் பொருளை, அதை அறிவிப்புச் செய்பவர் தவிர வேறெவரும் எடுக்கக் கூடாது" என்பதைக் குறிக்க) "லா யல்தகிது லுக்தத்தஹு இல்லா மன் அர்ர.ஃபஹா' எனும் வாசகம் இடம் பெற்றுள்ளது.

2633 சயீத் பின் அபீசயீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(யஸீதின் ஆட்சியில் மதீனாவின் ஆளுநராயிருந்த) அம்ர் பின் சயீத், (அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களுக்கு எதிராக) மக்காவை நோக்கிப் படைப் பிரிவுகளை

அனுப்பியபோது, அவரிடம் அபூ ஷுரைஹ் அல்அதவீ (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: தலைவரே! எனக்கு அனுமதி தாருங்கள்! மக்கா வெற்றிக்கு மறுநாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிய செய்தியை உங்களுக்கு நான் அறிவிக்கிறேன். என் காதுகள் அதைக் கேட்டிருக்கின்றன. எனது உள்ளம் அதை நினைவில் வைத்துள்ளது. அதை அவர்கள் கூறியபோது என் கண்கள் அவர்களைப் பார்த்திருக்கின்றன. அவ்வுரையின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு, "அல்லாஹ்வே மக்கா நகருக்குப் புனிதத்தை வழங்கினான். அதற்குப் புனிதத்தை வழங்கியவர்கள் மனிதர்கள் அல்லர். எனவே, அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பக்கூடிய எவருக்கும் இங்கு (சண்டையிட்டு) இரத்தத்தைச் சிந்துவதற்கோ, இங்குள்ள மரம் செடிகொடிகளை வெட்டுவதற்கோ அனுமதி இல்லை. அல்லாஹ்வின் தூதர் (மக்கா வெற்றி நாளில் ஒரு பகற்பொழுது மட்டும்) இங்கு போரிட்டதால் (அதைக் காரணமாகக் காட்டி) இதைப் பொது அனுமதி என்று யாரேனும் கருதினால், "அல்லாஹ் தன் தூதருக்கு மட்டும்தான் அனுமதியளித்தான். உங்களுக்கு அவன் அனுமதி வழங்கவில்லை' என்று சொல்லிவிடுங்கள். எனக்குக்கூட (நேற்றைய) பகலில் சிறிது நேரம் மட்டுமே இங்கு (போர் புரிய) அல்லாஹ் அனுமதியளித்தான். இன்று அதன் முந்தைய புனிதத் தன்மைக்கு அது மீண்டு வந்துவிட்டது. (நான் சொன்ன விஷயங்கள் யாவற்றையும் இங்கு) வந்திருப்பவர்கள் வராதவர்களுக்குச் சொல்லிவிடுங்கள்"என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது "அதற்கு அம்ர் பின் சயீத் என்ன பதிலளித்தார்?" என்று அபூஷுரைஹ் (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு "அபூஷுரைஹே! உம்மைவிட இதைப் பற்றி நான் நன்கறிவேன். நிச்சயமாக (புனித நகரமான) மக்கா, குற்றவாளிக்கும் மரண தண்டனைக்குப் பயந்து (மக்காவிற்குள்) ஓடிவந்த (கொலைக் குற்றம் புரிந்த)வனுக்கும், திருட்டுக் குற்றம் புரிந்துவிட்டு ஓடிவந்தவனுக்கும் பாதுகாப்பளிக்காது என்று அம்ர் கூறினார்" என்றார்கள்.

2634 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், தன் தூதர் (ஸல்) அவர்களுக்கு மக்கா நகர வெற்றியை அளித்தபோது, அவர்கள் மக்கள் மத்தியில் நின்று அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு, "அல்லாஹ் மக்காவை (துவம்சம் செய்வதை)விட்டும் யானைப் படையைத் தடுத்தான். அதன் மீது (தற்போது) தன் தூதருக்கும் (எனக்கும்) ஓரிறை நம்பிக்கையாளர்களுக்கும் அதிகாரம் வழங்கியுள்ளான். இந்த மக்கா நகரில் எனக்கு முன்பு எவருக்கும் போரிடுவதற்கு அனுமதியளிக்கப்பட்டதில்லை. எனக்கும்கூட (இதில் போரிடுவதற்கு) பகலின் சிறிது நேரம் மட்டுமே அனுமதி வழங்கப்பட்டது. எனக்குப் பின்பும் அது எவருக்கும் ஒருபோதும் அனுமதிக்கப்படாது. ஆகவே, இதன் வேட்டைப் பிராணிகள் விரட்டப்படக் கூடாது. இதன் முட்கள் வெட்டப்படக் கூடாது. இங்கு கீழே விழுந்து கிடக்கும் பொருள், அதை அறிவிப்புச் செய்பவருக்கே தவிர வேறெவருக்கும் அனுமதிக்கப்படாது. எவர்,கொல்லப்பட்ட தன் உறவினர் தொடர்பான உரிமை பெற்றிருக்கிறாரோ அவர் இரண்டு முடிவுகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம். ஒன்று, (சட்டப்படி) இழப்பீட்டுத் தொகை பெற்றுக்கொள்ளலாம்; அல்லது பழிவாங்கிக்கொள்ளலாம்"என்று கூறினார்கள்.

அப்பாஸ் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே! (செடிகொடிகள் பிடுங்கப்படாது என்பதில்) "இத்கிர்' புல்லைத் தவிரவா?ஏனெனில், அதை நாங்கள் எங்கள் சவக்குழிகளுக்கும் வீடுகளுக்கும் பயன்படுத்துகிறோமே?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இத்கிர் புல்லைத் தவிர" என்று விடையளித்தார்கள். அப்போது யமன்வாசிகளில் ஒருவரான அபூஷாஹ் (ரலி) என்பவர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! (இதை) எனக்கு எழுதிக்கொடுங்கள்" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அபூஷாஹுக்கு எழுதிக் கொடுங்கள்" என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) வலீத் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) அவ்ஸாயீ (ரஹ்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! (இதை) எனக்கு எழுதிக் கொடுங்கள் எனும் அபூஷாஹ் (ரலி) அவர்களது சொல் எதைக் குறிக்கிறது?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதரிடமிருந்து அவர் கேட்ட இந்த உரையை (எழுதிக் கொடுக்கச் சொன்னதை)யே குறிக்கிறது" என்று பதிலளித்தார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2635 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

மக்கா வெற்றி ஆண்டில் "குஸாஆ' குலத்தார், "பனூ லைஸ்' குலத்தாரில் ஒருவரைக் கொலை செய்துவிட்டனர். (அறியாமைக் காலத்தில்) தங்களில் ஒருவரை "பனூ லைஸ்' குலத்தார் கொலை செய்ததற்குப் பதிலாகவே "குஸாஆ' குலத்தார் இதைச் செய்தனர். இதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டபோது, அவர்கள் தமது வாகனத்தின் மீதேறி உரையாற்றினார்கள்:

"வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் இந்த(ப் புனித) மக்கா நகரைவிட்டும் யானைப் படையைத் தடுத்து நிறுத்தினான். மக்காவின் மீது தன் தூதருக்கும் இறைநம்பிக்கையாளர்களுக்கும் அல்லாஹ் ஆதிக்கம் அளித்தான். எச்சரிக்கை! மக்காவினுள் போர் செய்வது எனக்கு முன்னர் யாருக்கும் அனுமதிக்கப்பட்டதில்லை. எனக்குப் பின்னரும் எவருக்கும் ஒருபோதும் அனுமதிக்கப்படப்போவதில்லை. கவனத்தில் கொள்க! எனக்குக்கூட பகலில் சிறிது நேரம் போரிடவே அனுமதிக்கப்பட்டது. எச்சரிக்கை! (இங்கு) போர் செய்வது இந்த நிமிடத்திலிருந்து (முற்றாகத்) தடை செய்யப்பட்டுவிட்டது. இங்குள்ள முட்கள் பிடுங்கப்படக் கூடாது. இதன் மரங்கள் வெட்டப்படக் கூடாது. இங்கே கீழே விழுந்து கிடக்கும் பொருட்களை (அவற்றைப் பற்றி) மக்களுக்கு அறிவிப்புச் செய்பவரைத் தவிர வேறு யாரும் எடுக்கக் கூடாது. ஒருவர் கொலை செய்யப்பட்டுவிட்டால், அவருடைய உறவினர்கள் இழப்பீடு பெறுதல், அல்லது பழிவாங்குதல் ஆகிய இரண்டு முடிவுகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கலாம்.

அப்போது யமன்வாசிகளில் அபூஷாஹ் எனப்படும் ஒருவர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! (இந்த உரையை) எனக்கு எழுதித் தரச் சொல்லுங்கள்" என்று கேட்டுக்கொண்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அபூஷாஹிற்கு (என் உரையை) எழுதிக் கொடுங்கள்" என்று சொன்னார்கள்.

அப்போது குறைஷியரில் ஒருவர் (மக்காவின் செடிகொடிகளை வெட்டக்கூடாது என்பதிலிருந்து) "இத்கிர்' புல்லிற்கு விலக்கு அளியுங்கள். ஏனெனில், நாங்கள் அதை எங்கள் வீடுகளி(ன் கூரைகளி)லும் எங்கள் சவக் குழிகளிலும் பயன்படுத்திக்கொண்டிருக்கிறோம்" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இத்கிர் புல்லைத் தவிர" என்றார்கள்.

**பாடம் : 83 அவசியமின்றி (புனித) மக்காவிற்குள் ஆயுதம் எடுததுச் செல்வதற்கு வந்துள்ள தடை.**

2636 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்காவிற்குள் ஆயுதம் எடுத்துச் செல்வதற்கு உங்களில் எவருக்கும் அனுமதி இல்லை.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 84 "இஹ்ராம்' கட்டாமல் மக்காவிற்குள் நுழையலாம்.**

2637 யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி ஆண்டில் தலையில் இரும்புத் தொப்பியுடன் (இஹ்ராம் கட்டாத நிலையில்) மக்காவினுள் நுழைந்தார்கள். அதை அவர்கள் கழற்றியபோது ஒரு மனிதர் வந்து, "இப்னு கத்தல் (அபயம் வேண்டி) கஅபாவின் திரைகளைப் பிடித்துக்கொண்டிருக்கிறான்' என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "அவனைக் கொன்றுவிடுங்கள்' என உத்தரவிட்டார்கள் என அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து இப்னு ஷிஹாப் (ரஹ்) அவர்கள் தங்களுக்கு அறிவித்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு மாலிக் (ரஹ்) அவர்கள் "ஆம்' என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2638 ஜாபிர் பின் அப்தில்லாஹ் அல் அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டாமல் தலையில் கறுப்புத் தலைப்பாகை அணிந்த நிலையில் மக்காவிற்குள் நுழைந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் குதைபா பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "மக்கா வெற்றி நாளில் நுழைந்தார்கள்" என்று இடம் பெற்றுள்ளது.
- ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி நாளில் தலையில் கறுப்புத் தலைப்பாகை அணிந்து கொண்டு (மக்காவினுள்) நுழைந்தார்கள்.

2639 அம்ர் பின் ஹுரைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்கா வெற்றி நாளில்) தலையில் கறுப்புத் தலைப்பாகை கட்டிய நிலையில் மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2640 அம்ர் பின் ஹுரைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்கா வெற்றி நாளில்) தலையில் கறுப்புத் தலைப்பாகை கட்டி, அதன் இரு ஓரங்களையும் தம் தோள்களுக்குமிடையே தொங்கவிட்டவர்களாகச் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீதிருந்ததை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "சொற்பொழிவு மேடை மீதிருந்ததை' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 85 மதீனா நகரின் சிறப்பும், அந்நகரத்திற்காக வளம் வேண்டி நபி (ஸல்) அவர் கள் பிரார்த்தித்ததும், மதீனாவும் அதன் வேட்டைப் பிராணிகளும் மரங்களும் புனிதமானவை என்பதும், அதன் புனித எல்லைகளின் அளவு பற்றிய விவரமும்.**

2641 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவைப் புனித நகரமாக அறிவித்து, மக்காவாசிகளுக்காகப் பிரார்த்தித்தார்கள். இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவைப் புனித நகரமாக அறிவித்ததைப் போன்று நான் மதீனாவைப் புனித நகரமாக அறிவிக்கிறேன். இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவாசிகளுக்காகப் பிரார்த்தித்ததைப் போன்று நான் மதீனாவின் (அளவைகளான) "ஸாஉ'மற்றும் "முத்'து ஆகியவற்றில் இரு மடங்கு (வளம் ஏற்படப்) பிரார்த்திக்கிறேன்.
இதை அப்துல்லாஹ் பின் ஸைத் பின் ஆஸிம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2642 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் ஸைத் பின் ஆஸிம் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் உஹைப் பின் காலித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே "இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவாசிகளுக்காகப் பிரார்த்தித்ததைப் போன்று இரு மடங்கு (வளம் வேண்டி) நான் பிரார்த்திக்கிறேன்" என்று இடம்பெற்றுள்ளது. - சுலைமான் பின் பிலால் (ரஹ்) மற்றும் அப்துல் அஸீஸ் பின் அல்முக்தார் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "இப்ராஹீம் (அலை) அவர்கள் பிரார்த்தித்ததைப் போன்றே' என இடம்பெற்றுள்ளது.

2643 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவைப் புனித நகரமாக அறிவித்தார்கள். நான், இதன் (அதாவது மதீனாவின்) இரு கருங்கல் மலைகளுக்கு இடைப்பட்ட பகுதியைப் புனிதமானதாக அறிவிக்கிறேன்.
இதை ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2644 நாஃபிஉ பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மர்வான் பின் அல்ஹகம் மக்களிடையே உரையாற்றியபோது மக்காவைப் பற்றியும், மக்காவாசிகள் மற்றும் மக்காவின் புனிதம் பற்றியும் குறிப்பிட்டார். மதீனாவைப் பற்றியோ

மதீனாவாசிகள் மற்றும் மதீனாவின் புனிதம் பற்றியோ குறிப்பிடவில்லை. அப்போது ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் மர்வானை அழைத்து, "நீர் மக்காவைப் பற்றியும் மக்காவாசிகள் மற்றும் மக்காவின் புனிதம் பற்றியும் கூறினீர். மதீனாவைப் பற்றியோ மதீனாவாசிகளைப் பற்றியோ மதீனாவின் சிறப்பு பற்றியோ கூறவில்லையே ஏன்? மதீனாவின் இரு கருங்கல் மலைகளுக்கு இடைப்பட்ட பகுதியை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புனிதமானதாக அறிவித்துள்ளார்கள். இந்த விஷயம் எங்களிடமுள்ள ஒரு "கவ்லானீ (குலத்தாரின் மெல்லிய) தோல் ஏட்டில் பதியப்பெற்றுள்ளது. நீர் விரும்பினால் அதை உமக்கு நான் வாசித்துக்காட்டுவேன்" என்று கூறினார்கள். மர்வான் (சிறிது நேரம்) அமைதியாக இருந்தார். பிறகு, "அதில் சிலவற்றை நானும் செவியுற்றுள்ளேன்" என்றார்.

2645 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவைப் புனித நகரமாக அறிவித்தார்கள். நான் மதீனாவின் இரு கருங்கல் மலைகளுக்கு இடைப்பட்ட பகுதியைப் புனிதமானதாக அறிவிக்கிறேன். அதன் முள்மரங்கள் வெட்டப்படக் கூடாது; அதன் வேட்டைப் பிராணிகள் வேட்டையாடப்படக் கூடாது.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2646 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மதீனாவின் இரு கருங்கல் மலைகளுக்கு இடைப்பட்ட பகுதியின் மரங்களை வெட்டுவது, அதன் வேட்டைப் பிராணிகளைக் கொல்வது ஆகியவற்றுக்கு நான் தடை விதிக்கிறேன். மக்கள் அறிந்துகொள்பவர்களாயிருந்தால் மதீனாவே அவர்களுக்குச் சிறந்ததாகும். எவரும் அதை வெறுத்து அதை விட்டுச் சென்றால், அவரை விடச் சிறந்தவரை அதில் அல்லாஹ் குடியமர்த்தாமல் இருப்பதில்லை. அங்கு ஏற்படும் பசி பட்டினியையும் கடினமான வாழ்க்கையையும் சகித்துக்கொண்டு அங்கு நிலைத்திருப்பவருக்கு மறுமை நாளில் நான் பரிந்துரைப்பவனாக அல்லது சாட்சியம் அளிப்பவனாக இருப்பேன்.
இதை சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2647 மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் அபீ வக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "மதீனாவாசிகளுக்குத் தீங்கிழைக்க எவரேனும் விரும்பினால் "நெருப்பில் ஈயம் கரைவதைப் போன்று' அல்லது "தண்ணீரில் உப்பு கரைவதைப் போன்று' அவரை அல்லாஹ் கரைத்துவிடுவான்" என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என) அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

2648 ஆமிர் பின் சஅத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் (மதீனாவிற்கு அருகில்) "அகீக்' எனுமிடத்திலிருந்த தமது பெரிய வீட்டிற்கு வாகனத்தில் புறப்பட்டார்கள். (வழியில்) அடிமையொருவர் "ஒரு மரத்தை வெட்டிக்கொண்டிருப்பதை' அல்லது "இலைகளைப்

பறித்துக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். உடனே (அவரைப் பிடித்து) அவரது மேலாடையைக் கழற்றிக்கொண்டார்கள். சஅத் (ரலி) அவர்கள் திரும்பிவந்தபோது அவர்களிடம் அந்த அடிமையின் வீட்டார் வந்து தங்கள் அடிமையிடமிருந்து கைப்பற்றியதை "அந்த அடிமையிடம்' அல்லது "தங்களிடம்' திரும்பித் தருமாறு கேட்டார்கள். அப்போது சஅத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு வெகுமதியாக வழங்கிய எதையும் திருப்பித் தருவதிலிருந்து நான் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்" எனக் கூறி, அவர்களிடம் அதைத் தர மறுத்துவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2649 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு முறை) அபூதல்ஹா (ரலி) அவர்களிடம், "உங்கள் சிறுவர்களில் ஒரு சிறுவனை எனக்குப் பணிவிடை செய்வதற்காகத் தேடி (அழைத்து)வாருங்கள். (நான் கைபருக்குப் புறப்பட வேண்டும்)" என்று கூறினார்கள். ஆகவே, அபூதல்ஹா (ரலி) அவர்கள் என்னை வாகனத்தில் தமக்குப் பின்னால் அமரவைத்துக்கொண்டு (கைபரை நோக்கிப்) புறப்பட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வழியில்) தங்கும்போதெல்லாம் அவர்களுக்கு நான் பணிவிடைகள் செய்து வந்தேன்.

பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனா நோக்கி) வந்துகொண்டிருந்தபோது, "உஹுத் மலை' அவர்களுக்குத் தென்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இந்த மலை நம்மை நேசிக்கிறது. நாமும் அதை நேசிக்கிறோம்"என்று சொன்னார்கள். பிறகு பார்வையில் மதீனா பட்டபோது, "இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவைப் புனித நகரமாக அறிவித்ததைப் போன்று, இந்த இரு மலைகளுக்கிடையே உள்ள பகுதியைப் புனித (நகர)மாக நான் அறிவிக்கிறேன். இறைவா! மதீனாவாசிகளின் (அளவைகளான) "முத்'து மற்றும் "ஸாஉ' ஆகியவற்றில் நீ வளத்தை ஏற்படுத்துவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், அவற்றில் ("இந்த இரு மலைகளுக்கிடையே உள்ள பகுதியை' என்பதற்குப் பதிலாக) "இந்த இரு கருங்கல் மலைகளுக்கிடையே உள்ள பகுதியை' என்று இடம்பெற்றுள்ளது.

2650 ஆஸிம் பின் சுலைமான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவைப் புனித நகரமாக அறிவித்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்; இங்கிருந்து இதுவரை (மதீனா புனிதமானது என்று நபியவர்கள் அறிவித்தார்கள். மேலும் சொன்னார்கள்:) அதில் யார் (மார்க்கத்தில் இல்லாத செயல்) ஒன்றைப் புதிதாக உருவாக்குகின்றானோ அவன்மீது அல்லாஹ்வின் சாபமும், வானவர்கள் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும் ஏற்படும். (இது ஒரு கடுமையான எச்சரிக்கை) அவன் செய்த

கடமையான வழிபாடு மற்றும் கூடுதலான வழிபாடு எதையுமே அல்லாஹ் ஏற்கமாட்டான்" என்று கூறினார்கள் என விடையளித்தார்கள்.
அப்போது மூசா பின் அனஸ் (ரஹ்) அவர்கள் "("ஒன்றைப் புதிதாக உருவாக்குகின்றவன்') அல்லது புதியவற்றைப் புகுத்துபவனுக்குப் புகலிடம் அளிக்கின்றவன்" என்று (சேர்த்துக் கொள்ளுமாறு) கூறினார்கள்.

2651 ஆஸிம் பின் சுலைமான் அல்அஹ்வல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவைப் புனித (நகர)மாக அறிவித்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்; அது புனித (நகர)மாகும். அதன் மரங்கள் வெட்டப்படக் கூடாது. யார் அவ்வாறு செய்கிறாரோ அவர்மீது அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும் ஏற்படும்" என்று கூறினார்கள்.

2652 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! மதீனாவாசிகளின் முகத்தலளவையில் நீ வளத்தை ஏற்படுத்துவாயாக! (குறிப்பாக) அவர்களது (அளவைகளான) "ஸாஉ' மற்றும் "முத்'து ஆகியவற்றில் நீ வளத்தை ஏற்படுத்துவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

2653 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! மக்காவில் நீ ஏற்படுத்திய வளத்தைப் போன்று இரு மடங்கை மதீனாவில் ஏற்படுத்துவாயாக!" எனப் பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2654 யஸீத் பின் ஷரீக் அத்தைமீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் தமது வாளின் உறையில் ஏடு ஒன்றைத் தொங்கவிட்டவர்களாக எங்களிடையே உரையாற்றினார்கள். அவர்கள் (தமது உரையில்) "நம்மிடம் அல்லாஹ்வின் வேதத்தையும் (நபியவர்களிடமிருந்து கிடைக்கப்பெற்ற) இந்த ஏட்டையும் தவிர நாம் ஓதுகின்ற நூலேதும் உள்ளதெனக் கூறுகின்றவர் பொய்யுரைத்து விட்டார்" என்று கூறி (விட்டு, அதை விரித்துக் காட்டலா)னார்கள். அதில், (உயிரீட்டிற்காகவும் ஸகாத்தாகவும் வழங்கப்படும்) ஒட்டகங்களின் வயது விவரங்களும் காயங்களுக்கான தண்டனை குறித்தும் எழுதப்பெற்றிருந்தன. மேலும், அதில் பின்வருமாறு நபி (ஸல்) அவர்கள் கூறியதாகவும் எழுதப்பட்டிருந்தது: மதீனா நகரமானது, (அங்குள்ள) "அய்ர்' மலையிலிருந்து "ஸவ்ர்' (எனும் சிறிய) மலைவரை புனிதமானதாகும். அதில் யார் (மார்க்கத்தின் பெயரால்) புதிதாக ஒன்றை ஏற்படுத்துகின்றானோ, அல்லது புதியவற்றைப் புகுத்துபவனுக்கு அடைக்கலம் அளிக்கின்றானோ அவனுக்கு அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் உண்டாகும். மேலும், அவன் செய்த கடமையான வழிபாட்டையும் கூடுதலான வழிபாட்டையும் மறுமை நாளில் அவனிடமிருந்து அல்லாஹ் ஏற்கமாட்டான். முஸ்லிம்களில் யார் அடைக்கலம் அளித்தாலும் அது ஒன்றேயாகும். (மற்ற முஸ்லிம்கள் தரும் அடைக்கலத்திற்குச் சமமானதாகும்.) அவர்களில் கீழ்நிலையில் உள்ளவர்கள்கூட அடைக்கலம் அளிக்க முன்வரலாம். தன் தந்தை அல்லாத

ஒருவரைத் தன் தந்தை என வாதிடுபவனுக்கு, அல்லது தன்னை விடுதலை செய்த உரிமையாளர் அல்லாத ஒருவரைத் தன் உரிமையாளர் எனக் கூறுபவனுக்கு அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் ஏற்படும். அவன் செய்த கடமையான வழிபாடு மற்றும் கூடுதலான வழிபாடு எதையுமே மறுமை நாளில் அல்லாஹ் ஏற்கமாட்டான்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) மற்றும் ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "அவர்களில் கீழ்நிலையில் உள்ளவர்கள்கூட அடைக்கலம் அளிக்க முன்வரலாம்' என்பதோடு ஹதீஸ் முடிகிறது. அதற்குப் பின்னுள்ள குறிப்புகள் இடம் பெறவில்லை. இவ்விருவரின் அறிவிப்பில் "அந்த ஏடு அலீ (ரலி) அவர்களது வாளில் தொங்கவிடப்பட்டிருந்தது' எனும் குறிப்பும் காணப்படவில்லை.

2655 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் மேற்கண்ட அறிவிப்பில் உள்ள விவரங்களுடன்,
"ஒரு முஸ்லிம் கொடுத்த அடைக்கலத்தை எவன் முறிக்கிறானோ அவனுக்கு அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் உண்டாகும். மேலும், அவன் செய்த கடமையான வழிபாடு மற்றும் கூடுதலான வழிபாடு எதுவுமே ஏற்கப்படாது" என்பதும் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
இவற்றில் "தன் தந்தை அல்லாத ஒருவரை' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "மறுமை நாளில்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "தன்னை விடுதலை செய்த உரிமையாளர் அல்லாதவரைத் தன் காப்பாளராக ஆக்கிக்கொள்பவருக்கு..." எனும் சொற்றொடரும், சாபம் பற்றிய குறிப்பும் இடம்பெறவில்லை.

2656 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மதீனா புனித நகரமாகும். அதில் யார் (மார்க்கத்தின் பெயரால்) புதிதாக ஒன்றைப் புகுத்துகின்றானோ, அல்லது புதியவற்றைப் புகுத்துபவனுக்கு அடைக்கலம் அளிக்கின்றானோ அவனுக்கு அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் ஏற்படும். அவன் செய்த கூடுதலான வழிபாடு மற்றும் கடமையான வழிபாடு எதையும் மறுமை நாளில் அல்லாஹ் ஏற்கமாட்டான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2657 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "மறுமை நாளில்' எனும் குறிப்பு இடம் பெறவில்லை.
மேலும், "முஸ்லிம்களில் யார் அடைக்கலம் அளித்தாலும் அது ஒன்றேயாகும். (மற்ற முஸ்லிம்கள் தரும் அடைக்கலத்திற்குச் சமமானதாகும்.) அவர்களில் சாமானிய மக்கள்கூட அடைக்கலம் அளிக்க முன்வரலாம். ஒரு முஸ்லிம் கொடுத்த அடைக்கலத்தை எவன் முறிக்கிறானோ அவனுக்கு அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து

மக்களின் சாபமும் ஏற்படும். அவன் செய்த கூடுதலான வழிபாடு மற்றும் கடமையான வழிபாடு எதையுமே மறுமை நாளில் அல்லாஹ் ஏற்கமாட்டான்" என்பதும் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

2658 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மதீனாவில் மான்கள் மேய்ந்துகொண்டிருப்பதை நான் கண்டால் அவற்றை (விரட்டவோ பிடிக்கவோ முயன்று) பீதிக்குள்ளாக்கமாட்டேன். (ஏனெனில்) "மதீனாவின் இரு கருங்கல் மலைகளுக்கு இடைப்பட்ட பகுதி புனிதமானதாகும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

2659 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவின் இரு கருங்கல் மலைகளுக்கு இடைப்பட்ட பகுதியைப் புனிதமானதாக அறிவித்தார்கள். ஆகவே, நான் மதீனாவின் இரு கருங்கல் மலைகளுக்கு இடைப்பட்ட பகுதியில் மான்களைக் கண்டால்,அவற்றைப் பீதிக்குள்ளாக்கமாட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவைச் சுற்றி பன்னிரண்டு மைல் தொலைதூரத்தைப் பாதுகாக்கப்பட்ட (புனித) எல்லையாக அறிவித்தார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2660 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் (பேரீச்சங்கன்றுகளை நட்டு அதில்) முதலாவதாகப் பழுக்கும் கனியைக் காணும்போது, அதை நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுவருவார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைப் பெற்றுக்கொண்டு, "இறைவா! எங்கள் கனிகளில் எங்களுக்கு வளம் அருள்வாயாக! எங்கள் நகரத்தில் வளம் கொழிக்கச் செய்வாயாக! எங்கள் (அளவைகளான) "ஸாஉ' மற்றும் "முத்'து ஆகியவற்றில் வளத்தை ஏற்படுத்துவாயாக! இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்கள் உன் அடியாரும் உன் உற்ற நண்பரும் உன் தூதரும் ஆவார்கள். நான் உன் அடிமையும் தூதரும் ஆவேன். இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்கா நகருக்காக உன்னிடம் பிரார்த்தித்ததைப் போன்று நான் மதீனாவிற்காக உன்னிடம் பிரார்த்திக்கிறேன். அவர்கள் மக்காவிற்காகப் பிரார்த்தித்த அளவிற்கு,அல்லது அதனுடன் மற்றொரு மடங்கும் (வளம் வேண்டி) நான் பிரார்த்திக்கிறேன்" என்பார்கள். பிறகு அ(ங்கு கனியைக் கொண்டு வந்த)வரின் சிறு குழந்தையை அழைத்து அதனிடம் அந்தக் கனியைக் கொடுப்பார்கள்.

2661 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் முதலாவதாகப் பழுக்கும் கனி கொண்டுவரப் பட்டால், "இறைவா! எங்கள் நகரத்தில் எங்களுக்கு வளத்தை ஏற்படுத்துவாயாக! எங்கள் கனிகளிலும் எங்கள் (அளவைகளான) "முத்'து மற்றும் "ஸாஉ' ஆகியவற்றிலும் (தற்போதுள்ள) வளத்துடன் மற்றொரு மடங்கு வளத்தை வழங்குவாயாக" என்று பிரார்த்தித்துவிட்டு, அங்கு வந்திருக்கும் குழந்தைகளில் மிகச் சிறிய குழந்தைக்கு அந்தக் கனியைக் கொடுப்பார்கள்.

**பாடம் : 86 மதீனாவில் குடியிருக்குமாறும் அங்கு ஏற்படும் நெருக்கடிகளைச் சகித்துக் கொள்ளுமாறும் வந்துள்ள ஆர்வமூட்டல்.**

2662 மஹ்ரீயின் முன்னாள் அடிமையான அபூசயீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) மதீனாவில் மக்களுக்குப் பஞ்சமும் கஷ்டமும் ஏற்பட்டன. அப்போது நான் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடம் சென்று "நான் குழந்தை குட்டிகள் அதிகம் உடையவன்; எங்களுக்குக் கடுமை(யான நெருக்கடி) ஏற்பட்டுள்ளது. எனவே, நான் என் குடும்பத்தாருடன் (மதீனாவைவிட்டு) ஏதேனும் ஒரு செழிப்பான ஊருக்கு இடம்பெயர விரும்புகிறேன்" என்று கூறினேன். அதற்கு அபூசயீத் (ரலி) அவர்கள், "அவ்வாறு செய்யாதே! மதீனாவையே (உங்கள் இருப்பிடமாக) வைத்துக்கொள்! ஏனெனில், நாங்கள் (ஒரு முறை) அல்லாஹ்வின் நபி (ஸல்) அவர்களுடன் (மதீனாவிலிருந்து) புறப்பட்டு "உஸ்ஃபான்' எனும் இடத்திற்குச் சென்றோம். அங்கு பல இரவுகள் தங்கினோம். அப்போது மக்களில் சிலர், "அல்லாஹ்வின் மீதாணையாக! நாம் எந்த (நிம்மதியான) நிலையிலும் இல்லை. நம் குடும்பத்தார் தனிமையில் உள்ளனர். அவர்களைக் குறித்து அச்சமற்ற நிலையில் நாம் இல்லை" என்று கூறினர்.
இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, "நீங்கள் சொன்னதாக எனக்கு எட்டியுள்ள இத்தகவல் என்ன? "நான் எவன்மீது சத்தியம் செய்வேனோ' அல்லது "என் உயிர் எவன் கையிலுள்ளதோ' அவன்மீது சத்தியமாக! "நீங்கள் விரும்பினால்' எனது ஒட்டகத்தில் சேணத்தைப் பூட்டுமாறு கட்டளையிட்டு, அதன் முடிச்சுகள் எதையும் அவிழ்க்காமல் (விரைந்து) நான் மதீனாவிற்குச் செல்ல வேண்டும்; அல்லது (அவ்வாறு செல்ல) "நான் எண்ணுகிறேன்' என்று கூறிவிட்டு, "இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவைப் புனித நகரமாக ஆக்கினார்கள். நான் மதீனாவின் இரு கருங்கல் மலைகளுக்கு இடைப்பட்ட பகுதியைப் புனிதமானதாக ஆக்கினேன். மதீனாவிற்குள் இரத்தம் சிந்தப்படக் கூடாது. அங்கு போருக்காக ஆயுதம் ஏந்தப்படக்கூடாது. அங்கு தீனிக்காகத் தவிர எந்தத் தாவரமும் வெட்டப்படக் கூடாது. இறைவா! எங்கள் நகரில் எங்களுக்கு வளம் சேர்ப்பாயாக! இறைவா! எங்கள் (பெரிய அளவையான) "ஸாஉ'வில் எங்களுக்கு வளத்தை ஏற்படுத்துவாயாக! இறைவா! எங்கள் (சிறிய அளவையான) "முத்'துவிலும் எங்களுக்கு வளத்தை ஏற்படுத்துவாயாக! இறைவா! எங்கள் "ஸாஉ'விலும், எங்கள் "முத்'துவிலும், எங்கள் நகரத்திலும் எங்களுக்கு வளம் சேர்ப்பாயாக! இறைவா! இப்போதுள்ள வளத்துடன் இரு(மடங்கு) வளத்தை ஏற்படுத்துவாயாக!" (என்று பிரார்த்தித்தார்கள். பிறகு) "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! மதீனாவின் அனைத்து கணவாய்களிலும் சாலை முனைகளிலும் இரு வானவர்கள் இருந்து அதைக் காவல் புரிந்து கொண்டேயிருக்கின்றனர்; நீங்கள் மதீனா சென்றடையும் வரை (அவ்வாறு காவல் புரிந்து கொண்டிருக்கின்றனர்)" என்று கூறினார்கள்.
பிறகு மக்களிடம், "புறப்படுங்கள்' என்றார்கள். அவ்வாறே நாங்கள் மதீனா நோக்கிப் புறப்பட்டோம். "நாங்கள் எவன்மீது சத்தியம் செய்வோமோ' அல்லது "எவன்மீது சத்தியம் செய்யப்படுமோ' அவன்மீது ஆணையாக! (இங்கு அறிவிப்பாளர் ஹம்மாம் பின் இஸ்மாயீல் (ரஹ்) அவர்களே ஐயத்துடன் அறிவிக்கிறார்கள்.) நாங்கள் மதீனாவிற்குள் நுழைந்து எங்கள் ஒட்டகங்களிலிருந்து சேணங்களை நாங்கள் இறக்கி வைத்திருக்கவில்லை. அதற்குள்

எங்கள்மீது அப்துல்லாஹ் பின் ஃகத்ஃபானின் மக்கள் தாக்குதல் தொடுத்தனர். அதற்கு முன் (தாக்குதல் தொடுக்க) எந்தத் தூண்டுகோலும் அவர்களுக்கு இருக்கவில்லை.

2663 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இறைவா! எங்கள் (அளவைகளான) "ஸாஉ' மற்றும் "முத்'து ஆகியவற்றில் எங்களுக்கு வளத்தை ஏற்படுத்துவாயாக! இப்போதுள்ள வளத்துடன் இன்னும் இரு (மடங்கு) வளத்தைத் தருவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2664 மஹ்ரீயின் முன்னாள் அடிமையான அபூசயீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடம் "அல்ஹர்ரா' (போர் நடந்த) நாட்களில் சென்று, நான் மதீனாவிலிருந்து இடம்பெயர்ந்து செல்வது தொடர்பாக ஆலோசனை கேட்டேன். மேலும், அவர்களிடம் (மதீனாவின்) விலைவாசி (உயர்ந்துள்ளது) பற்றியும், எனது பெரிய குடும்பம் பற்றியும் அவர்களிடம் முறையிட்டேன். மதீனாவின் நெருக்கடியையும் பசி பட்டினியையும் சகித்துக்கொண்டு என்னால் இருக்க முடியாது என்றும் தெரிவித்தேன். அப்போது அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள், "உமக்குக் கேடுதான். அ(வ்வாறு மதீனாவைவிட்டுச் செல்வ)தற்கு உம்மை நான் அனுமதிக்கமாட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மதீனாவின் இடர்பாடுகளைச் சகித்துக்கொண்டு இறந்துபோகும் எந்த மனிதருக்கும் மறுமை நாளில் நான் பரிந்துரைப்பவனாக, அல்லது சான்றுரைப்பவனாக இருப்பேன்; அவர் முஸ்லிமாக இருந்தால்!' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
2665 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவைப் புனித நகரமாக அறிவித்ததைப் போன்று நான் மதீனாவின் இரு கருங்கல் மலைகளுக்கு இடைப்பட்ட பகுதியைப் புனிதமானதாக அறிவிக்கிறேன்.
இதை அபூசயீத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(இதை அறிவிப்பவரான) அப்துர் ரஹ்மான் பின் அபீசயீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: பிறகு (என் தந்தை) அபூசயீத் (ரலி) அவர்கள் எவரது கையிலாவது (மதீனாவின்) பறவை இருக்கக் கண்டால், உடனே அவரது கரத்திலிருந்து அதை விடுவித்துப் பறக்க விட்டுவிடுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2666 சஹ்ல் பின் ஹுனைஃப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கரத்தால் மதீனாவைச் சுட்டிக்காட்டி, "இது பாதுகாப்பான புனித நகரம்" என்று கூறினார்கள்.

2667 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் மதீனாவிற்கு (நாடு துறந்து) வந்த போது, மதீனாவில் பெருநோய் ஏற்பட்டிருந்தது. அபூபக்ர் (ரலி) அவர்களும் பிலால் (ரலி) அவர்களும் நோய்வாய்ப்பட்டனர். தம் தோழர்கள்

நோய்வாய்ப்படுவதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்டபோது, "இறைவா! நீ மக்காவை எங்கள் நேசத்திற்குரியதாக ஆக்கியதைப் போன்று, அல்லது அதைவிட அதிகமாக மதீனாவை எங்கள் நேசத்திற்குரியதாக ஆக்குவாயாக! மேலும், இந்நகரை ஆரோக்கியமானதாகவும் ஆக்குவாயாக! இதன் (அளவைகளான) "ஸாஉ'மற்றும் "முத்'து ஆகியவற்றில் எங்களுக்கு நீ வளத்தை வழங்குவாயாக! இங்குள்ள காய்ச்சலை "ஜுஹ்ஃபா' எனுமிடத்திற்கு இடம்பெயரச் செய்வாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2668 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மதீனாவின் இடர்பாடுகளைச் சகித்துக்கொண்டவருக்காக மறுமை நாளில் நான் பரிந்துரைப்பவனாக, அல்லது சான்றுரைப்பவனாக இருப்பேன்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2669 ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான யுஹன்னஸ் பின் அபீமூசா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(இப்னுஸ் ஸுபைர் (ரலி) அவர்களை ஹஜ்ஜாஜின் ராணுவம் முற்றுகையிட்ட) குழப்பமான காலகட்டத்தில் நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அருகில் அமர்ந்திருந்தேன். அப்போது அவர்களிடம் அவர்களுடைய அடிமைப் பெண்களில் ஒருவர் வந்து சலாம் சொல்லிவிட்டு, "அபூஅப்திர் ரஹ்மான் அவர்களே! நெருக்கடியான ஒரு காலகட்டம் நமக்கு ஏற்பட்டுள்ளது. எனவே,நான் (மதீனாவிலிருந்து) வெளியேற விரும்புகிறேன்" என்று கூறினார். அப்போது அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் "பேதைப் பெண்ணே! உட்கார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மதீனாவின் இடர்பாடுகளையும் கஷ்ட நஷ்டங்களையும் சகித்துக்கொள்ளும் எவருக்கும் மறுமைநாளில் நான் சான்றுரைப்பவனாக, அல்லது பரிந்துரைப்பவனாக இருப்பேன்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

2670 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அதன் (அதாவது மதீனாவின்) இடர்பாடுகளையும் கஷ்ட நஷ்டங்களையும் சகித்துக் கொண்டவருக்காக மறுமை நாளில் நான் சான்றுரைப்பவனாக, அல்லது பரிந்துரைப்பவனாக இருப்பேன்.– இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2671 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் எவர் மதீனாவின் இடர்பாடுகளையும் கஷ்ட நஷ்டங்களையும் சகித்துக் கொள்கிறாரோ அவருக்காக மறுமைநாளில் பரிந்துரைப்பவனாக, அல்லது சான்றுரைப்பவனாக நான் இருப்பேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 87 கொள்ளை நோயும் தஜ்ஜாலும் நுழைய முடியாமல் மதீனா பாதுகாக்கப் பெற்றுள்ளது.**

2672 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மதீனாவின் நுழைவாயில்களில் வானவர்கள் இருப்பர். மதீனாவிற்குள் கொள்ளை நோயும் தஜ்ஜாலும் நுழைய முடியாது.– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2673 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறுதி நாள் நெருங்கும்போது) மஸீஹுத் தஜ்ஜால் கிழக்குத் திசையிலிருந்து மதீனாவைக்குறிவைத்து வந்து, "உஹுத்'மலைக்குப் பின்னால் இறங்குவான். பின்னர் வானவர்கள் அவனது முகத்தை ஷாம் திசை (வடக்கு) நோக்கித் திருப்பிவிடுவார்கள். அங்குதான் அவன் மடிவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 88 மதீனா தன்னிலுள்ள தீயவர்களை அகற்றிவிடும்.**

2674 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களுக்கு ஒரு காலம் வரும். அன்று ஒருவர் தம் தந்தையின் சகோதரர் மகனையும் தம் உறவினரையும் "செழிப்பான இடத்திற்கு வா! செழிப்பான இடத்திற்கு வா!' என அழைப்பார். ஆனால், அவர்கள் (உண்மையை) அறிந்திருப்போராயின் மதீனாவே அவர்களுக்குச் சிறந்ததாகும். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! அவர்களில் எவரேனும் மதீனாவை வெறுத்து அதிலிருந்து வெளியேறினால், அவருக்குப் பதிலாக அவரைவிடச் சிறந்தவரை அங்கு அல்லாஹ் அமர்த்தாமல் இருப்பதில்லை. கவனியுங்கள்: மதீனா, (கொல்லனின்) உலையைப் போன்று அசுத்தங்களை அகற்றிவிடும். இரும்பின் துருவை (கொல்லனின்) உலை நீக்கிவிடுவதைப் போன்று, மதீனா தன்னிலுள்ள தீயவர்களை வெளியேற்றாமல் இறுதி நாள் நிகழாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2675 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எல்லா ஊர்களையும் தூக்கிச் சாப்பிடக்கூடிய, "யஸ்ரிப்' என மக்கள் கூறக்கூடிய ஓர் ஊருக்கு (நாடு துறந்து செல்லுமாறு) நான் கட்டளையிடப்பட்டேன். அதுதான் மதீனாவாகும். இரும்பின் துருவை (கொல்லனின்) உலை நீக்கிவிடுவதைப் போன்று மதீனா (தீய) மனிதர்களை வெளியேற்றிவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "உலை, துருவை நீக்கிவிடுவதைப் போன்று' என்று இடம்பெற்றுள்ளது."இரும்பு' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

2676 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமவாசி ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதாக) விசுவாசப் பிரமாணம் செய்தார். (பின்னர்) அந்தக் கிராமவாசிக்கு மதீனாவில் கடுமையான காய்ச்சல் ஏற்பட்டது. ஆகவே, அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "முஹம்மதே! என் விசுவாசப் பிரமாணத்திலிருந்து என்னை விடுவித்துவிடுங்கள்" என்று சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அதை ஏற்க) மறுத்துவிட்டார்கள். பின்னர் (மீண்டும்) வந்து, "என் விசுவாசப் பிரமாணத்திலிருந்து என்னை நீக்கிவிடுங்கள்" என்றார். அப்போதும் நபி (ஸல்) அவர்கள் மறுத்து விட்டார்கள். பிறகு (மீண்டும்) வந்து, "என் விசுவாசப் பிரமாணத்திலிருந்து என்னை நீக்கிவிடுங்கள்" என்றார். அப்போதும் நபி (ஸல்) அவர்கள் மறுத்துவிடவே, அந்தக் கிராமவாசி (மதீனாவிலிருந்து) வெளியேறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மதீனா, (கொல்லனின்) உலை போன்றதே ஆகும். அது தன்னிலுள்ள தீயவர்களை வெளியேற்றிவிடும்; அதிலுள்ள நல்லவர்கள் தூய்மையாவார்கள்" என்று சொன்னார்கள்.

2677 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அது (அதாவது மதீனா) தூயது (தைபா) ஆகும். நெருப்பு, வெள்ளியின் அழுக்கை நீக்குவதைப் போன்று மதீனா தன்னிலுள்ள தீயவர்களை வெளியேற்றும்.
இதை ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2678 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உயர்ந்தோன் அல்லாஹ்வே மதீனாவுக்கு "தாபா" (தூயது) எனப் பெயரிட்டான்.
இதை ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 89 மதீனாவாசிகளுக்குக் கேடு நினைப்பவர்களை, அல்லாஹ் உருக்குலைத்து விடுவான்.

2679 அபுல்காசிம் (முஹம்மத் -ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்த ஊர் (அதாவது மதீனா)வாசிகளுக்குக் கேடு நினைப்பவர்களை, நீரில் உப்பு கரைவதைப் போன்று அல்லாஹ் கரைந்துபோகச் செய்துவிடுவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2680 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அவ்வூர் (அதாவது மதீனா)வாசிகளுக்குக் கேடு நினைப்பவர்களை, நீரில் உப்பு கரைவதைப் போன்று அல்லாஹ், கரைந்துபோகச் செய்துவிடுவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், முஹம்மத் பின் ஹாத்திம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("கேடு" என்பதைக் குறிக்க) "சூஉ" என்பதற்குப் பகரமாக "ஷர்ரு" (தீங்கு) எனும் சொல் ஆளப்பட்டுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2681 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மதீனாவாசிகளுக்குக் கேடு நினைப்பவனை, நீரில் உப்பு கரைவதைப் போன்று அல்லாஹ், கரைந்துபோகச் செய்துவிடுவான்.
இதை சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் மாலிக் அபீ வக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "அசம்பாவிதம்' அல்லது "கேடு' என (ஐயப்பாட்டுடன்) இடம்பெற்றுள்ளது.

2682 அபூஹுரைரா (ரலி) மற்றும் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) ஆகியோர் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! மதீனாவாசிகளுக்கு (அவர்களது அளவையான) "முத்'துவில் வளம் ஏற்படுத்துவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள். மேலும், "இவ்வூர்வாசிகளுக்குக் கேடு நினைப்பவர்களை, நீரில் உப்பு கரைவதைப் போன்று அல்லாஹ், கரைந்துபோகச் செய்துவிடுவான்" (என்று கூறினார்கள்).

## பாடம் : 90 (செழிப்பான) நகரங்கள் வெற்றிகொள்ளப்படும் போதும் மதீனாவிலேயே தங்கியிருக்குமாறு வந்துள்ள ஆர்வமூட்டல்.

2683 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஷாம் (சிரியா) நாடு வெற்றி கொள்ளப்படும்; உடனே ஒரு கூட்டத்தார் தம் குடும்பத்தாருடன் வாகனங்களை விரட்டிக்கொண்டு மதீனாவிலிருந்து வெளியேறுவர். ஆயினும், மதீனாவே அவர்களுக்குத் சிறந்ததாகும்; அவர்கள் அறிந்திருந்தால்!
பின்னர் யமன் வெற்றி கொள்ளப்படும்; உடனே ஒரு கூட்டத்தார் தம் குடும்பத்தாருடன் வாகனங்களை விரட்டிக்கொண்டு மதீனாவிலிருந்து வெளியேறுவர். ஆயினும், மதீனாவே அவர்களுக்குச் சிறந்ததாகும்; அவர்கள் அறிந்திருந்தால்!
பின்னர் இராக் வெற்றி கொள்ளப்படும்; உடனே ஒரு கூட்டத்தார் தம் குடும்பத்தாருடன் வாகனங்களை விரட்டிக்கொண்டு மதீனாவிலிருந்து வெளியேறுவர். ஆயினும், மதீனாவே அவர்களுக்குச் சிறந்ததாகும்; அவர்கள் அறிந்திருந்தால்!
இதை சுஃப்யான் பின் அபீஸுஹைர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2684 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யமன் நாடு வெற்றி கொள்ளப்படும்; உடனே ஒரு கூட்டத்தார் தம் குடும்பத்தாரையும் தமது கட்டுப்பாட்டில் உள்ளோரையும் ஏற்றிக்கொண்டு வாகனங்களை விரட்டியவர்களாக மதீனாவிலிருந்து வெளியேறிவிடுவர். ஆயினும், மதீனாவே அவர்களுக்குச் சிறந்ததாகும்; அவர்கள் அறிந்திருந்தால்! பின்னர் "ஷாம்' (சிரியா) நாடு வெற்றி கொள்ளப்படும்; உடனே ஒரு கூட்டத்தார் தம் குடும்பத்தாரையும் தமது கட்டுப்பாட்டில் உள்ளோரையும் ஏற்றிக்கொண்டு வாகனங்களை விரட்டியவர்களாக மதீனாவிலிருந்து வெளியேறுவர்; ஆயினும், மதீனாவே அவர்களுக்குச் சிறந்ததாகும்; அவர்கள் அறிந்திருந்தால்! பின்னர் இராக்

வெற்றி கொள்ளப்படும்; உடனே ஒரு கூட்டத்தார் தம் குடும்பத்தாரையும் தமது கட்டுப்பாட்டில் உள்ளோரையும் ஏற்றிக்கொண்டு வாகனங்களை விரட்டியவர்களாக மதீனாவிலிருந்து வெளியேறுவர். ஆயினும், மதீனாவே அவர்களுக்குச் சிறந்ததாகும்; அவர்கள் அறிந்திருந்தால்!
இதை சுஃப்யான் பின் அபீஸுஹைர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 91 மதீனாவாசிகள் மதீனாவை விட்டுச் செல்லும்போது.**

2685 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவைப் பற்றி (பின்வருமாறு) கூறினார்கள்:
மதீனாவாசிகள், மதீனா சிறந்த நிலையில் இருக்கும்போதே, அதை வனவிலங்குகள் மற்றும் பறவைகளின் சரணாலயமாக விட்டுச் செல்வர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் (ஆகிய நான்) கூறுகிறேன்:
(இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களின் ஆசிரியரான) இந்த அபூஸஃப்வான் என்பாரின் பெயர் அப்துல்லாஹ் பின் அப்தில் மலிக் என்பதாகும். அநாதையாயிருந்த அவர், இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்களின் பொறுப்பில் பத்து ஆண்டுகள் வளர்ந்தார்.

2686 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மதீனா சிறந்த நிலையில் இருக்கும்போதே அதைவிட்டு மக்கள் சென்றுவிடுவர். வன விலங்குகளும் பறவைகளும் அதைச் சூழ்ந்து கொண்டிருக்கும். பின்னர் "முஸைனா' குலத்தைச் சேர்ந்த இரு இடையர்கள் தம் ஆடுகளைச் சப்தமிட்டு ஓட்டிக்கொண்டு மதீனாவை நோக்கி வருவர். அங்கு வனவிலங்குகளையே காண்பர். (அல்லது வெறுமையானதாகக் காண்பர்.) அவர்கள் "அல்வதா'மலைக்குன்றை அடைந்ததும் மூர்ச்சையுற்று முகங்குப்புற விழுந்துவிடுவர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 92 (நபியவர்களின்) கப்றுக்கும் மிம்பருக்கும் இடைப்பட்ட பகுதி, சொர்க்கப் பூஞ்சோலைகளில் ஒரு பூஞ்சோலையாகும்.**

2687 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது இல்லத்திற்கும் எனது சொற்பொழிவு மேடை(மிம்பரு)க்கும் இடைப்பட்ட பகுதியானது, சொர்க்கத்துப் பூஞ்சோலைகளில் ஒரு பூஞ்சோலையாகும்.
இதை அப்துல்லாஹ் பின் ஸைத் அல் அன்சாரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2688 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது சொற்பொழிவு மேடை(மிம்பரு)க்கும் எனது இல்லத்திற்கும் இடைப்பட்ட பகுதியானது, சொர்க்கத்துப் பூஞ்சோலைகளில் ஒரு பூஞ்சோலையாகும்.
இதை அப்துல்லாஹ் பின் ஸைத் அல் அன்சாரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2689 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது இல்லத்திற்கும் எனது சொற்பொழிவு மேடை(மிம்பரு)க்கும் இடைப்பட்ட பகுதியானது, சொர்க்கத்துப் பூஞ்சோலைகளில் ஒரு பூஞ்சோலையாகும். எனது சொற்பொழிவு மேடையானது, எனது (அல்கவ்ஸர்) தடாகத்தின் மீது அமைந்துள்ளது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 93 "உஹுத்" மலை நம்மை நேசிக்கிறது; நாமும் அதை நேசிக்கிறோம்.

2690 அபூஹுமைத் அப்துர் ரஹ்மான் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் "தபூக்' போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். பிறகு நாங்கள் (போரை முடித்துக்கொண்டு மதீனாவிற்கும் சிரியாவிற்கும் இடையே உள்ள) "வாதில் குரா' எனும் இடத்திற்கு வந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் விரைந்து மதீனா செல்லப் போகிறேன். எனவே, உங்களில் விரும்பியவர் என்னுடன் விரைந்து வரலாம். விரும்பியவர் (இங்கேயே) தங்கியிருக்கலாம்" என்று சொன்னார்கள். நாங்கள் புறப்பட்டு மதீனாவை நெருங்கியபோது, "இது "தாபா' (தூய நகரம்) ஆகும்; இது உஹுத் மலை; இது நம்மை நேசிக்கிறது. நாமும் அதை நேசிக்கிறோம்" என்று சொன்னார்கள்.

2691 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"உஹுத்' மலை நம்மை நேசிக்கிறது. நாமும் அதை நேசிக்கிறோம்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உஹுத் மலையைக் கூர்ந்து நோக்கி, "உஹுத் மலை நம்மை நேசிக்கிறது; நாமும் அதை நேசிக்கிறோம்" என்றார்கள்.

## பாடம் : 94 மக்கா மற்றும் மதீனாப் பள்ளிவாசல்களில் தொழுவதன் சிறப்பு.

2692 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது இந்த (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் தொழுவதானது, மற்றப் பள்ளிவாசல்களில் தொழும் ஆயிரம் தொழுகைகளைவிடச் சிறந்ததாகும்; (மக்காவிலுள்ள) "மஸ்ஜிதுல் ஹராம்' பள்ளிவாசலைத் தவிர.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2693 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
எனது இந்த (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் தொழுவதானது, மற்றப் பள்ளிவாசல்களில் தொழும் ஆயிரம் தொழுகைகளை விடச் சிறந்ததாகும்; (மக்காவிலுள்ள) "மஸ்ஜிதுல் ஹராம்' பள்ளிவாசலைத் தவிர!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2694 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் தொழுவதானது, மற்றப் பள்ளிவாசல்களில் தொழும் ஆயிரம் தொழுகைகளைவிடச் சிறந்ததாகும்; (மக்காவிலுள்ள) "மஸ்ஜிதுல் ஹராம்' பள்ளிவாசலைத் தவிர! ஏனெனில்,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறைத்தூதர்களில் இறுதியானவர் ஆவார்கள். அவர்கள் எழுப்பிய பள்ளிவாசல், (இறைத் தூதர் எழுப்பிய) பள்ளிவாசல்களில் இறுதியானதாகும்.
(இதை அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கும்) அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) மற்றும் அபூஅப்தில்லாஹ் அல்அஃகர்ரு (ரஹ்) ஆகியோர் கூறினர்:

(பொதுவாக) அபூஹுரைரா (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்தே (ஹதீஸ்களை) அறிவிப்பார்கள் என்பதில் நாங்கள் ஐயம் கொள்ளவில்லை. அதுவே இந்த ஹதீஸை அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து உறுதிப்படுத்திக்கொள்ள நாங்கள் தவறியதற்குக் காரணமாகும். அபூஹுரைரா (ரலி) அவர்கள் இறந்த பிறகு நாங்கள் இந்த ஹதீஸ் குறித்து விவாதித்தோம். அதைப் பற்றி நாம் அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் பேசாமலிருந்தது குறித்து எங்களை நாங்களே நொந்து கொண்டோம். அதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றிருந்தால், அதை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அறிவித்திருப்பார்களே என்று கூறினோம். இந்நிலையில் எங்களிடம் அப்துல்லாஹ் பின் இப்ராஹீம் பின் காரிழ் (ரஹ்) அவர்கள் வந்து அமர்ந்தார்கள். அவர்களிடம் நாங்கள் இந்த ஹதீஸையும் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து நாங்கள் கேட்கத் தவறிய அந்த விஷயத்தையும் தெரிவித்தோம். அப்போது அப்துல்லாஹ் பின் இப்ராஹீம் பின் காரிழ் (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நான் இறைத்தூதர்களில் இறுதியானவன் ஆவேன்; எனது பள்ளிவாசல் (இறைத்தூதர்கள் எழுப்பிய பள்ளிவாசல்களில்) இறுதிப் பள்ளிவாசல் ஆகும் என்று கூறினார்கள் என்றே அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்" என்றார்கள்.

2695 யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூசாலிஹ் தக்வான் (ரஹ்) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பள்ளிவாசலில் தொழுவதன் சிறப்புக் குறித்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதைத் தாங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இல்லை;ஆயினும், அப்துல்லாஹ் பின் இப்ராஹீம் பின் காரிழ் (ரஹ்) அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள் என என்னிடம் தெரிவித்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எனது இந்த (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளி வாசலில் தொழுவதானது, மற்ற பள்ளிவாசல்களில் "ஆயிரம் தொழுகைகள் தொழுவதைவிட' அல்லது "ஆயிரம் தொழுகைகள் தொழுவதைப் போன்று' சிறந்ததாகும். (மக்காவிலுள்ள) "மஸ்ஜிதுல் ஹராம்' பள்ளிவாசலைத் தவிர!
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2696 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது இந்த (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் தொழுவதானது, மற்றப் பள்ளிவாசல்களில் ஆயிரம் தொழுகைகள் தொழுவதை விடச் சிறந்ததாகும். (மக்காவிலுள்ள) "மஸ்ஜிதுல் ஹராம்' பள்ளிவாசலைத் தவிர!
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2697 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண் கடுமையாக நோய்வாய்ப்பட்ட போது, "அல்லாஹ் எனக்கு நிவாரணமளித்தால் நிச்சயம் நான் புறப்பட்டுச் சென்று (ஜெரூசலத்திலுள்ள) "பைத்துல் மக்திஸ்' பள்ளிவாசலில் தொழுவேன்" என்று கூறினார். அவருக்கு உடல் நலம் ஏற்பட்டது. பின்னர் அவர் பயணம் செல்ல ஆயத்தமாகி நபி (ஸல்) அவர்களின் துணைவியார் மைமூனா (ரலி) அவர்களிடம் சென்று சலாம் சொன்னார்; அ(வர்களிடம் தமது பயணத்திற்கான காரணத்)தைத் தெரிவித்தார். அப்போது மைமூனா (ரலி) அவர்கள் "நீ அமர்ந்து, (பயணத்திற்காக) நீ தயார் செய்து வைத்தவற்றை (இங்கேயே) சாப்பிடு. பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பள்ளிவாசலுக்குச் சென்று தொழு. ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இ(ந்த மஸ்ஜிதுந் நபவீ ஆலயத்)தில் தொழுவதானது, மற்ற பள்ளிவாசல்களில் ஆயிரம் தொழுகைகள் தொழுவதைவிடச் சிறந்ததாகும்; கஅபா (அமைந்துள்ள "மஸ்ஜிதுல் ஹராம்') பள்ளிவாசலைத் தவிர' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 95 மூன்று பள்ளிவாசல்களைத் தவிர வேறெதற்கும் (புனிதப்) பயணம் மேற்கொள்ளப்படாது.

2698 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது இந்த (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசல், (மக்காவிலுள்ள) மஸ்ஜிதுல் ஹராம், (ஜெரூசலத்திலுள்ள) மஸ்ஜிதுல் அக்ஸா ஆகிய மூன்று பள்ளிவாசல்களைத் தவிர வேறெதற்கும் (அதிக நன்மையை எதிர்பார்த்து) பயணம் மேற்கொள்ளப்படாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2699 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், அதில் "மூன்று பள்ளிவாசல்களுக்கு மட்டுமே பயணம் மேற்கொள்ளப்படும்" என (நேர்மறை வாசகத்துடன்) இடம்பெற்றுள்ளது.

2700 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கஅபா (அமைந்துள்ள) பள்ளிவாசல், எனது (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசல், (ஜெரூலத்திலுள்ள) ஈலியா (அல்அக்ஸா) பள்ளிவாசல் ஆகிய மூன்று பள்ளிவாசல்களுக்கு மட்டுமே (அதிக நன்மை நாடி) பயணம் மேற்கொள்ளப்ப(ட வேண்)டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 96 "இறையச்சத்தின் மீது நிறுவப்பெற்ற பள்ளிவாசல்' என்பது, மதீனாவிலுள்ள "மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசல் ஆகும்.**

2701 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அப்துர் ரஹ்மான் பின் அபீ சயீத் அல்குத்ரீ (ரஹ்) அவர்கள் என்னைக் கடந்து சென்றார்கள். அவர்களிடம் நான், "இறையச்சத்தின் மீது நிறுவப்பெற்ற பள்ளிவாசல் (என 9:108ஆவது வசனத்தில் கூறப்பெற்றுள்ளது) குறித்து தங்கள் தந்தையிடமிருந்து நீங்கள் எவ்வாறு செவியுற்றீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அப்துர் ரஹ்மான் பின் சயீத் (ரஹ்) அவர்கள், "என் தந்தை (அபூ சயீத் அல்குத்ரீ – ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியரில் ஒருவரது இல்லத்தில் இருந்தபோது அவர்களிடம் நான் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! (மஸ்ஜிதுந் நபவீ மற்றும் மஸ்ஜிதுல் குபா இவ்விரு பள்ளிவாசல்களில் இறையச்சத்தின் மீது நிறுவப்பெற்ற பள்ளிவாசல் (என்று அல்லாஹ் குறிப்பிட்டுள்ளது) எது?' என்று கேட்டேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு கைப்பிடி சிறு கற்களை அள்ளி, அதைப் பூமியில் எறிந்தார்கள். பிறகு இதோ உங்களது இந்தப் பள்ளிவாசல்தான் என்று (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலைக் குறிப்பிட்டுச்) சொன்னார்கள்" என்றார்கள். நான் (அப்துர் ரஹ்மான் பின் அபீ சயீத் (ரஹ்) அவர்களிடம்) "தங்கள் தந்தையிடமிருந்து நானும் இவ்வாறே செவியுற்றேன் என நான் உறுதிமொழிகிறேன்" என்று கூறினேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், அப்துர் ரஹ்மான் பின் அபீசயீத் (ரஹ்) அவர்களைப் பற்றிய குறிப்பு இடம் பெறவில்லை.

**பாடம் : 97 "குபா'ப் பள்ளிவாசலின் சிறப்பும் அதில் தொழுவது மற்றும் அதைத் தரிசிப்பதன் சிறப்பும்.**

2702 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாகனத்திலும் நடந்தும் "குபா'விற்குச் செல்வார்கள்.

2703 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாகனத்திலும் நடந்தும் "குபா'ப் பள்ளிவாசலுக்குச் சென்று அங்கு இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் "அங்கு இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்" எனும் குறிப்பு அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களிடமிருந்து அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில் இடம்பெற்றுள்ளது.

2704 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாகனத்திலும் நடந்தும் "குபா'விற்குச் செல்வார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2705 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாகனத்திலும் நடந்தும் "குபா'விற்குச் செல்வார்கள்.

2706 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாகனத்திலும் நடந்தும் "குபா'விற்குச் செல்வார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2707 அப்துல்லாஹ் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் ஒவ்வொரு சனிக்கிழமையும் "குபா'விற்குச் செல்வார்கள். "நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு சனிக்கிழமையும் அங்கு செல்வதை நான் பார்த்தேன்" என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறுவார்கள்.

2708 அப்துல்லாஹ் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒவ்வொரு சனிக்கிழமையும் "குபா'விற்குச் செல்வார்கள். அங்கு வாகனத்திலும் நடந்தும் செல்வார்கள்" என அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
இவ்வாறே அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களும் செய்துவந்தார்கள்.

2709 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் தீனார் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "ஒவ்வொரு சனிக்கிழமையும்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

# அத்தியாயம் : 16 – திருமணம்

## பாடம் : 1 திருமணத்தை ஆசைப்படும் ஒருவருக்கு அதற்கான வசதி இருந்தால், அவர் மணமுடிப்பது விரும்பத்தக்கதாகும்; வசதி இல்லாதவர் நோன்பு நோற்பதில் ஈடுபட வேண்டும்.

2710 அல்கமா பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களுடன் மினாவில் நடந்துகொண்டிருந்தேன். அப்போது அவர்களை உஸ்மான் (ரலி) அவர்கள் சந்தித்து அவர்களுடன் பேசிக்கொண்டே நடந்தார்கள். அப்போது உஸ்மான் (ரலி) அவர்கள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம், "அபூஅப்திர் ரஹ்மான்! தங்களுக்கு நான் ஓர் இளம் பெண்ணை மணமுடித்து வைக்கட்டுமா? உங்கள் கடந்த கால (இளமை) நிகழ்வுகளை அவள் உங்களுக்கு நினைவு படுத்தக்கூடும்" என்றார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "நீங்கள் இப்படிச் சொல்லிவிட்டீர்கள். ஆனால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வருமாறு அல்லவா கூறினார்கள்:
இளைஞர் சமுதாயமே! உங்களில் தாம்பத்தியம் நடத்த சக்தி பெற்றவர் மணமுடித்துக் கொள்ளட்டும்! ஏனெனில், அது (தகாத) பார்வையைக் கட்டுப்படுத்தும்; கற்பைக் காக்கும். அதற்கு இயலாதோர் நோன்பு நோற்றுக்கொள்ளட்டும். ஏனெனில் நோன்பு, (ஆசையைக்) கட்டுப்படுத்தக்கூடியதாகும். - இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2711 அல்கமா பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களுடன் "மினா'வில் நடந்துகொண்டிருந்தேன். அப்போது அவர்களை உஸ்மான் (ரலி) அவர்கள் சந்தித்து, "அபூஅப்திர் ரஹ்மானே! இங்கே வாருங்கள்" என்று கூறி, தனியான இடத்திற்கு அவர்களை அழைத்துச் சென்றார்கள். (திருமணத்தைப் பற்றிப் பேசுவதைத் தவிர வேறு) தேவை உஸ்மான் (ரலி) அவர்களுக்குக் கிடையாது என்பதை உணர்ந்த அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "அல்கமா இங்கே வா" என என்னை அழைத்தார்கள். நான் சென்றேன். அப்போது அவர்களிடம் உஸ்மான் (ரலி) அவர்கள், "அபூஅப்திர் ரஹ்மான்! தங்களுக்கு நான் ஒரு கன்னிப்பெண்ணை மணமுடித்து வைக்கட்டுமா? நீங்கள் அனுபவித்த இளமைக் காலத்தை அது உங்களுக்கு மீட்டுத் தரக்கூடும்" என்று கூறினார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "நீங்கள் இப்படிச் சொல்லிவிட்டீர்கள்..." என்று மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று குறிப்பிட்டார்கள்.

2712 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம், "இளைஞர் சமுதாயமே! உங்களில் தாம்பத்தியம் நடத்த சக்தி பெற்றோர் திருமணம் செய்துகொள்ளட்டும். அது (தகாத) பார்வையைக் கட்டுப்படுத்தும்; கற்பைக் காக்கும்.அதற்கு இயலாதோர் நோன்பு நோற்றுக் கொள்ளட்டும்! ஏனெனில் நோன்பு, (ஆசையைக்) கட்டுப்படுத்தக்கூடியதாகும்" என்று கூறினார்கள். – இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2713 அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் என் தந்தையின் சகோதரர் அல்கமா (ரஹ்) அவர்களும் அஸ்வத் (ரஹ்) அவர்களும் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் சென்றோம். அன்று நான் இளைஞனாக இருந்தேன்.அப்போது அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என மேற்கண்ட ஹதீஸை அறிவித்தார்கள். அதை எனக்காகவே அவர்கள் அறிவித்தார்கள் என்றே நான் கருதினேன். நான் தாமதியாமல் (உடனடியாக) மணமுடித்துக் கொண்டேன்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "நாங்கள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் சென்றோம். நானே (அங்கு சென்ற) மக்களில் இளவயதினனாக இருந்தேன்" என ஹதீஸ் ஆரம்பிக்கிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட அறிவிப்புகளில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆனால், "நான் தாமதியாமல் (உடனடியாக) மணமுடித்துக்கொண்டேன்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

2714 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் சிலர் நபியவர்களின் துணைவியரிடம் (சென்று), நபியவர்கள் தனிமையில் செய்யும் வழிபாடுகள் குறித்து வினவினர். (அவர்கள் கூறிய மறுமொழியைக் கேட்ட பின் நபியவர்கள் செய்யும் வழிபாடுகளைக் குறைவாக எண்ணிக்கொண்டு) அவர்களில் ஒருவர், "நான் பெண்களை மணமுடிக்கமாட்டேன்" என்று சொன்னார். மற்றொருவர் "நான் புலால் உண்ண மாட்டேன்" என்றார். இன்னொருவர், "நான் படுக்கையில் உறங்கமாட்டேன்" என்றார். (இதை அறிந்த) நபி (ஸல்) அவர்கள் இறைவனை வாழ்த்திப் போற்றிவிட்டு, "சிலருக்கு என்ன நேர்ந்தது? அவர்கள் இப்படியெல்லாம் கூறுகின்றனர். ஆனால், நான் (இரவில்) தொழுகிறேன்; உறங்கவும் செய்கிறேன். நோன்பும் நோற்கிறேன்; நோன்பை விட்டு விடவும் செய்கிறேன். பெண்களை மணந்தும் கொள்கிறேன். என் வழிமுறையை எவர் புறக்கணிக்கிறாரோ அவர் என்னைச் சார்ந்தவர் அல்லர்" என்றார்கள்.

2715 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் பின் மழ்ஊன் (ரலி) அவர்கள் துறவறம் மேற்கொள்ள (விரும்பி, அனுமதி கேட்டபோது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதி மறுத்தார்கள். அவருக்கு மட்டும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளித்திருந்தால் (ஆண்மை நீக்கம் செய்துகொள்வதற்காக) நாங்கள் காயடித்துக் கொண்டிருப்போம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2716 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர் கள் கூறியதாவது:
துறவறம் மேற்கொள்ள உஸ்மான் பின் மழ்ஊன் (ரலி) அவர்களுக்கு அனுமதி மறுக்கப்பட்டது. அவருக்கு மட்டும் அனுமதியளிக்கப்பட்டிருந்தால், (ஆண்மை நீக்கம் செய்துகொள்வதற்காக) நாங்கள் காயடித்துக்கொண்டிருப்போம்.

2717 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் பின் மழ்ஊன் (ரலி) அவர்கள் துறவறம் மேற்கொள்ள விரும்பினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரைத் தடுத்துவிட்டார்கள். அவருக்கு (மட்டும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளித்திருந்தால், (ஆண்மை நீக்கம் செய்து கொள்வதற்காக) நாங்கள் காயடித்துக்கொண்டிருப்போம்.

பாடம் : 2 ஒரு பெண்ணைப் பார்த்த ஒருவருக்குத் தவறான எண்ணம் ஏற்பட்டால், உடனே அவர் தம் மனைவியிடமோ அடிமைப் பெண்ணிடமோ சென்று தமது ஆசையைப் பூர்த்தி செய்து கொள்வது நல்லது.

2718 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு முறை) ஒரு பெண்ணைப் பார்த்தார்கள். (இது போன்ற சமயத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதைக் காட்டுவதற்காக) உடனே அவர்கள் தம் துணைவியார் ஸைனப் (ரலி) அவர்களிடம் சென்றார்கள். அப்போது அவர் தமக்குரிய ஒரு தோலைப் பதனிட்டுக் கொண்டிருந்தார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தேவையை நிறைவேற்றிவிட்டுப் பிறகு தம் தோழர்களிடம் புறப்பட்டு வந்து, "ஒரு பெண் (நடந்து வந்தால்) ஷைத்தான் (தூண்டிவிடும்) கோலத்திலேயே முன்னோக்கி வருகிறாள்; ஷைத்தான் (தூண்டிவிடும்) கோலத்திலேயே திரும்பிச் செல்கிறாள். எனவே, உங்களில் ஒருவரது பார்வை ஒரு பெண்ணின் மீது விழுந்து (இச்சையைக் கிளறி)விட்டால், உடனே அவர் தம் துணைவியிடம் செல்லட்டும். ஏனெனில், அது, அவரது மனத்தில் தோன்றும் (கெட்ட) எண்ணத்தை அகற்றிவிடும்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "நபி (ஸல்) அவர்கள் ஒரு பெண்ணைப் பார்த்தார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மேலும் அதில், "நபியவர்கள் உடனே தம் துணைவியார் ஸைனப் (ரலி) அவர்களிடம் சென்றார்கள். அப்போது அவர் ஒரு தோலைப் பதனிட்டுக் கொண்டிருந்தார்" என்று காணப்படுகிறது. ("தமக்குரிய' எனும் குறிப்பு இல்லை.) அத்துடன், "அவள் ஷைத்தான் (தூண்டிவிடும்) கோலத்திலேயே திரும்பிச் செல்கிறாள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

2719 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவரை ஒரு பெண்(ணின் அழகு) கவர்ந்து, அவரது உள்ளத்தில் தவறான எண்ணம் தோன்றினால், உடனே அவர் தம் மனைவியை நாடிச் சென்று, அவளுடன் உறவு கொள்ளட்டும். ஏனெனில், அது அவரது மனத்தில் தோன்றும் (கெட்ட) எண்ணத்தை அகற்றிவிடும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 3 தவணை முறைத் திருமணம் (இஸ்லாத் தின் ஆரம்பத்தில்) அனுமதிக்கப்பட்டு, பின்னர் காலாவதியாக்கப்பட்டது. பின்னர் (மீண்டும்) அனுமதிக்கப்பட்டு, (மறுபடியும்) காலாவதியாகப்பட்டது. (இறுதியாக) அதற்கு விதிக்கப்பட்ட தடை மறுமை நாள்வரை நீடிக்கும்.**

2720 கைஸ் பின் அபீஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்உத் (ரலி) அவர்கள் "எங்களுடன் துணைவியர் எவரும் இல்லாத நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் ஓர் அறப்போரில் கலந்துகொண்டிருந்தோம். நாங்கள் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்) "நாங்கள் காயடித்து (ஆண்மை நீக்கம் செய்து)கொள்ளலாமா?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள் அப்படிச் செய்ய வேண்டாமென்று எங்களைத் தடுத்தார்கள். அதன் பிறகு துணியை (மணக்கொடையாக)க் கொடுத்துப் பெண்களை ஒரு குறிப்பிட்ட காலம்வரை மணமுடித்துக் கொள்ள எங்களுக்கு அனுமதியளித்தார்கள்" என்று கூறிவிட்டுப் பிறகு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்த தூயவற்றைத் தடை செய்யப்பட்டவையாக ஆக்கிவிடாதீர்கள்! வரம்பு மீறாதீர்கள்! அல்லாஹ் வரம்பு மீறுவோரை நேசிக்க மாட்டான்" (5:87) எனும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "பிறகு அவர்கள் எங்களுக்கு இந்த (5:87ஆவது) வசனத்தை ஓதிக்காட்டினார்கள்" என இடம்பெற்றுள்ளது. "பிறகு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள்" என இடம்பெற வில்லை.

2721 மேற்கண்ட ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நாங்கள் இளைஞர்களாயிருந்தோம். (நபி (ஸல்) அவர்களிடம்) "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் காயடித்து (ஆண்மை நீக்கம் செய்து)கொள்ளலாமா?' என்று கேட்டோம்" என இடம்பெற்றுள்ளது. "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஓர் அறப்போரில் கலந்து கொண்டிருந்தோம்" எனும் (ஆரம்பக்) குறிப்பு இடம்பெறவில்லை.

2722 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) மற்றும் சலமா பின் அல்அக்வஉ (ரலி) ஆகியோர் கூறியதாவது:
(நாங்கள் "ஹுனைன்' அல்லது "அவ்தாஸ்' போரில் இருந்தபோது) எங்களிடம் அல்லாஹ்வின் தூதருடைய அறிவிப்பாளர் ஒருவர் வந்து, "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் செய்து கொள்ள அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களுக்கு (தாற்காலிகமாக) அனுமதியளித்துள்ளார்கள் என்று அறிவிப்புச் செய்தார்.

2723 சலமா பின் அல்அக்வஉ (ரலி) மற்றும் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) ஆகியோர் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து "அல்முத்ஆ' (தவணை முறைத் திருமணம்) செய்துகொள்ள எங்களுக்கு (தாற்காலிகமாக) அனுமதியளித்தார்கள்.

2724 அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் உம்ராவிற்காக வந்தபோது, அவர்கள் தங்கியிருந்த இடத்திற்கு நாங்கள் சென்றோம். அவர்களிடம் மக்கள் பல விஷயங்களைப் பற்றி (விளக்கம்) கேட்டார்கள். பிறகு அவர்களிடம் "அல்முத்ஆ' (தவணைமுறைத் திருமணம்) பற்றியும் பேசினர். அப்போது ஜாபிர் (ரலி) அவர்கள், "ஆம்; நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்திலும் அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோரது காலத்திலும் "அல்முத்ஆ' (தவணை முறைத் திருமணம்) செய்துள்ளோம்" என்றார்கள்.

2725 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்திலும் அபூபக்ர் (ரலி) அவர்களது காலத்திலும் ஒரு கையளவுப் பேரீச்சம் பழம் மற்றும் மாவு ஆகியவற்றைக் கொடுத்து, சில நாட்களுக்காக நாங்கள் "அல்முத்ஆ' (தவணைமுறைத் திருமணம்) செய்துவந்தோம். உமர் (ரலி) அவர்கள் (தமது ஆட்சியில்) அம்ர் பின் ஹுரைஸ் (ரலி) அவர்கள் தொடர்பான விஷயத்தில் அத்திருமணத்திற்குத் தடை விதித்துவிட்டார்கள்.

2726 அபூநள்ரா முன்திர் பின் மாலிக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் இருந்தேன். அப்போது அவர்களிடம் ஒருவர் வந்து, "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் இப்னுஸ் ஸுபைர் (ரலி) அவர்களும் ("தமத்துஉ' வகை ஹஜ் மற்றும் தவணைமுறைத் திருமணம் ஆகிய) இரு "முத்ஆ'க்கள் விஷயத்தில் கருத்து வேறுபாடு கொண்டனர்" என்று கூறினார். அப்போது ஜாபிர் (ரலி) அவர்கள், "நாங்கள் அவ்விரண்டையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (இருக்கும் காலத்தில்) செய்தோம். பின்னர் உமர் (ரலி) அவர்கள் (தமது ஆட்சியில்) அவ்விரண்டையும் செய்யலாகாதென எங்களுக்குத் தடைவிதித்தார்கள். எனவே, நாங்கள் அவ் விரண்டையும் திரும்பச் செய்வதில்லை" என்று விடையளித்தார்கள்.

2727 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவ்தாஸ்' போர் ஆண்டில் மூன்று நாட்களுக்கு "அல்முத்ஆ' (தவணை முறைத் திருமணம்) செய்துகொள்ள அனுமதியளித்தார்கள். பின்னர் அதற்குத் தடைவிதித்தார்கள்.

2728 சப்ரா பின் மஅபத் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்கா வெற்றியின்போது) எங்களுக்கு "அல்முத்ஆ' (தவணை முறைத் திருமணம்) செய்துகொள்ள அனுமதியளித்தார்கள். நானும் மற்றொரு மனிதரும் "பனூ ஆமிர்' குலத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணிடம் சென்றோம். அவள் கழுத்து நீண்ட இளம் ஒட்டகத்தைப் போன்று (அழகாக) இருந்தாள். எங்களில் ஒருவரைத் திருமணம் செய்துகொள்ளுமாறு அவளிடம் நாங்கள் கோரினோம். அவள், "(மணக்கொடையாக) நீங்கள் என்ன கொடுப்பீர்கள்?" என்று கேட்டாள். நான், "எனது மேலாடையை" என்றேன். என்னுடன் வந்திருந்தவர் "எனது மேலாடையை" என்று கூறினார். என்னுடன் வந்திருந்தவரின் மேலாடை எனது மேலாடையைவிடத் தரமானதாக இருந்தது. ஆனால், நான் அவரைவிட (வயது குறைந்த) இளைஞனாயிருந்தேன். அவள் என்னுடன் வந்திருந்தவரின்

மேலாடையைக் கூர்ந்து பார்த்தபோது, அது அவளுக்குப் பிடித்தது. அதே சமயத்தில், அவள் என்னைப் பார்த்த போது, நானும் அவளுக்குப் பிடித்திருந்தேன். பிறகு அவள், (என்னைப் பார்த்து) "நீரும் உமது மேலாடையுமே எனக்குப் போதும்" என்றாள். நான் (அவளை மணமுடித்து) அவளுடன் மூன்று நாட்கள் தங்கியிருந்தேன். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்முத்ஆ முறையில் மணமுடிக்கப்பட்ட பெண்ணைத் தம்மிடம் வைத்திருப்பவர், அப்பெண்ணை அவளது வழியில் விட்டுவிடட்டும்" என்று கூறினார்கள்.

2729 ரபீஉ பின் சப்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என் தந்தை (சப்ரா பின் மஅபத் –ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மக்கா வெற்றிப்போரில் கலந்து கொண்டார்கள். அவர்கள் கூறினார்கள்: நாங்கள் மக்காவில் பதினைந்து நாட்கள் (முப்பது இரவு – பகல்கள்) தங்கியிருந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்முத்ஆ' (தவணைமுறைத் திருமணம்) செய்துகொள்ள எங்களுக்கு அனுமதியளித்தார்கள். ஆகவே, நானும் எனது குடும்பத்தைச் சேர்ந்த (என் தந்தையின் சகோரர் புதல்வர்) ஒருவரும் (பெண் தேடிப்) புறப்பட்டோம். நான் அவரைவிட அழகில் சிறந்தவனாக இருந்தேன். அவர் சுமாரான அழகுடையவராகவே இருந்தார்.
எங்களில் ஒவ்வொருவருடனும் ஒரு போர்வை இருந்தது. எனது போர்வை மிகப் பழையதாயிருந்தது. என் தந்தையின் சகோதரர் புதல்வரது போர்வை புதியதாகவும் மிருதுவாகவும் இருந்தது. நாங்கள் மக்காவிற்குக் "கீழ் புறத்தில்' அல்லது "மேற்புறத்தில்' இருந்தபோது, கழுத்து நீண்ட இளம் ஒட்டகத்தைப் போன்ற (அழகான) கன்னிப்பெண் ஒருத்தி எங்களைச் சந்தித்தாள். அவளிடம் நாங்கள், "எங்களில் ஒருவரை "அல்முத்ஆ' (தவணை முறைத் திருமணம்) செய்துகொள்ள இசைவு உண்டா?" எனக் கேட்டோம். அவள், "நீங்கள் இருவரும் (எனக்காக) என்ன செலவிடுவீர்கள்?" என்று கேட்டாள். எங்களில் ஒவ்வொருவரும் எங்களிடமிருந்த போர்வையை விரித்துக் காட்டினோம். அவள் எங்கள் இருவரையும் கூர்ந்து நோக்கலானாள். என்னுடன் வந்திருந்தவர் அவளது ஒரு பக்கத்தைக் கூர்ந்து நோக்கிவிட்டு, "இவரது போர்வை பழையது; எனது போர்வை புதியது; மென்மையானது" என்று சொன்னார். உடனே அவள், "இவரது போர்வையே பரவாயில்லை (அதுவே போதும்)" என மூன்று முறை, அல்லது இரு முறை கூறினாள். பிறகு அவளை நான் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் செய்துகொண்டேன். நான் (அங்கிருந்து) புறப்படவில்லை. அதற்குள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அத்திருமணத்திற்குத் தடை விதித்துவிட்டார்கள்.

- மேற்கண்ட தகவல் சப்ரா அல்ஜுஹனீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "நாங்கள் மக்கா வெற்றி ஆண்டில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மக்காவை நோக்கிப் புறப்பட்டோம்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. அப்பெண் "அந்த மனிதர் (எனக்கு) ஒத்துவருவாரா?" என்று கேட்டதாகவும் இடம் பெற்றுள்ளது. என்னுடன் வந்திருந்தவர், "இவரது போர்வை இற்றுப்போன பழைய போர்வை எனக் கூறினார்" என்றும் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

2730 சப்ரா பின் மஅபத் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (மக்கா வெற்றியின்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தேன். அப்போது அவர்கள், "மக்களே! நான் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் செய்துகொள்ள உங்களுக்கு அனுமதியளித்திருந்தேன். (இப்போது) அல்லாஹ் அத்திருமணத்திற்கு மறுமை நாள்வரைத் தடை விதித்துவிட்டான். எனவே, "அல்முத்ஆ' திருமணம் செய்த பெண்ணைத் தம்மிடம் வைத்திருப்பவர், அவளை அவளது வழியில் விட்டுவிடட்டும். அவளுக்கு நீங்கள் (மணக்கொடையாகக்) கொடுத்திருந்த எதையும் (திரும்ப) எடுத்துக்கொள்ள வேண்டாம்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜருல் அஸ்வதுக்கும் கஅபாவின் தலைவாயிலுக்கும் நடுவில் நின்று கொண்டிருப்பதை நான் கண்டேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2731 சப்ரா பின் மஅபத் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் மக்கா வெற்றி ஆண்டில் மக்காவிற்குள் நுழைந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் செய்துகொள்ள உத்தரவிட்டார்கள். பின்னர் மக்காவிலிருந்து புறப்படுவதற்குள் அதிலிருந்து எங்களைத் தடுத்துவிட்டார்கள்.

2732 சப்ரா பின் மஅபத் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கா வெற்றி ஆண்டில் நபி (ஸல்) அவர்கள் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் செய்துகொள்ளுமாறு தம் தோழர்களுக்கு உத்தரவிட்டார்கள். ஆகவே, நானும் பனூ சுலைம் குலத்தைச் சேர்ந்த என் நண்பர் ஒருவரும் புறப்பட்டுச் சென்று பனூ ஆமிர் குலத்தைச் சேர்ந்த ஓர் இளம்பெண்ணைச் சந்தித்தோம். அவள் நீண்ட கழுத்துடைய இளம் ஒட்டகத்தைப் போன்று (அழகாக) இருந்தாள். எங்கள் இருவரிடம் இருந்த இரு போர்வைகளைக் காட்டி அவளை நாங்கள் பெண் கேட்டோம். அவள் (எங்களைக்) கூர்ந்து பார்த்தபோது, என் நண்பரைவிட நான் அழகனாக இருப்பதைக் கண்டாள். எனது போர்வையைவிட என் நண்பரின் போர்வை அழகானதாக இருந்ததையும் அவள் கண்டாள். சிறிது நேரம் அவள் மனத்திற்குள் யோசித்துவிட்டு, என் நண்பரை விடுத்து என்னை (கணவராக)த் தேர்ந்தெடுத்தாள்.
அவ்வாறு மணமுடிக்கப்பட்ட பெண்கள் எங்களுடன் மூன்று நாட்கள் இருந்தனர். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்பெண்களைவிட்டுப் பிரிந்துவிடுமாறு கட்டளையிட்டார்கள்.

2733 சப்ரா பின் மஅபத் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் செய்யலாகாதெனத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2734 சப்ரா பின் மஅபத் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி நாளில் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் செய்யலாகாதெனத் தடை விதித்தார்கள்.

2735 சப்ரா பின் மஅபத் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின் காலகட்டத்தில் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணத்திற்குத் தடை விதித்தார்கள். நான் இரு சிவப்புப் போர்வைகளைக் கொடுத்து "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் முடித்திருந்தேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2736 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் சகோதரர்) அப்துல்லாஹ் பின் அஸ் ஸுபைர் (ரலி) அவர்கள் (ஒரு நாள்) மக்காவில் (சொற்பொழிவாற்ற) எழுந்து நின்று, "அல்லாஹ், மக்களில் சிலருடைய கண்களைக் குருடாக்கியதைப் போன்று அவர்களின் உள்ளங்களையும் குருடாக்கிவிட்டான்;அவர்கள் "அல்முத்ஆ' திருமணம் (தற்போதும்) செல்லும் எனத் தீர்ப்பளிக்கின்றனர்" என்று கூறி, ஒரு மனிதரைச் சாடையாக விமர்சித்தார்கள். அப்போது அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களை அந்த மனிதர் அழைத்து, "நீர் ஒரு விவரமற்ற முரடர்; என் ஆயுளின் (அதிபதி) மீதாணையாக! பயபக்தியாளர்களின் தலைவர் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது) காலத்தில் "அல்முத்ஆ' திருமணம் நடைமுறையில் இருந்தது" என்று கூறினார். அதற்கு அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள், "(அது அப்போதே மாற்றப்பட்டுவிட்டது என்பதை அறிந்து) உம்மை நீர் பக்குவப்படுத்திக்கொள்வீராக! (இந்த விவரம் தெரிந்த பின்பும்) அவ்வாறு நீர்("அல்முத்ஆ' திருமணம்) செய்தால், (அது விபசாரக் குற்றம் என்பதால்) உம்மைக் கல்லால் எறிந்து கொல்வேன்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
என்னிடம் காலித் பின் அல்முஹாஜிர் பின் சைஃபில்லாஹ் (ரஹ்) அவர்கள், "நான் ஒரு மனிதருக்கு அருகில் அமர்ந்திருந்தேன். அப்போது அவரிடம் ஒருவர் வந்து "அல் முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் குறித்துத் தீர்ப்புக் கேட்டார். அப்போது அந்த மனிதர் அதற்கு அனுமதியளித்தார். அப்போது (தீர்ப்பளித்த) அந்த மனிதரிடம் இப்னு அபீஅம்ரா அல்அன்சாரி (ரலி) அவர்கள், "நிதானி(த்துத் தீர்ப்பளி)ப்பீராக!" என்றார்கள். அதற்கு அவர், "அவ்வாறில்லை! அல்லாஹ்வின் மீதாணையாக! பயபக்தியாளர்களின் தலைவர் (நபி (ஸல்) அவர்களது) காலத்தில் அது ("அல்முத்ஆ' திருமணம்) நடைபெற்றது" என்று கூறினார்.
அதற்கு இப்னு அபீஅம்ரா (ரலி) அவர்கள், "அல்முத்ஆ (தவணை முறைத்) திருமணம், இஸ்லாத்தின் ஆரம்பத்தில் நிர்ப்பந்தத்திற்குள்ளானவருக்கு மட்டும் செத்த பிராணி, இரத்தம், பன்றி இறைச்சி ஆகியவை அனுமதிக்கப்பட்டதைப் போன்று அனுமதிக்கப்பட்டிருந்தது.பிறகு அல்லாஹ் இந்த மார்க்கத்தை உறுதியாக்கியதும் அத்திருமணத்திற்குத் தடை விதித்துவிட்டான்" என்று கூறினார்கள்.
இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: சப்ரா பின் மஅபத் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறினார்கள் என அவர்களுடைய புதல்வர் ரபீஉ பின் சப்ரா (ரஹ்) அவர்கள் பின்வருமாறு என்னிடம் தெரிவித்தார்கள்:

நான் பனூ ஆமிர் குலத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணை இரு சிவப்புப் போர்வைகளைக் கொடுத்து, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் செய்திருந்தேன். பின்னர், "அல்முத்ஆ' திருமணம் செய்யலாகாதென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தடை விதித்துவிட்டார்கள்.
தொடர்ந்து இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
ரபீஉ பின் சப்ரா (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களிடம் அறிவித்தபோது நான் அங்கு அமர்ந்திருந்தேன்.

2737 சப்ரா பின் மஅபத் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் செய்யலாகாதெனத் தடை செய்தார்கள். "அறிந்துகொள்ளுங்கள். இன்றைய நாளிலிருந்து மறுமை நாள்வரை அதற்குத் தடை விதிக்கப்பெறுகிறது. ஒருவர் (ஏற்கெனவே "அல்முத்ஆ' முறையில் மணமுடிக்கும்போது அப்பெண்களிடம்) எதையேனும் கொடுத்திருந்தால், அதை அவர் (திரும்பப்) பெற வேண்டாம்" என்று கூறினார்கள்.

2738 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் போர்நாளில் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணத்திற்கும் நாட்டுக் கழுதைகளின் இறைச்சியைப் புசிப்பதற்கும் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் இன்ன மனிதரிடம் "நீர் ஒரு நிலைகெட்ட மனிதர்..." என்று கூறிவிட்டு, மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று அறிவித்தார்கள் என இடம்பெற்றுள்ளது.

2739 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் கைபர் போர்நாளில் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணத்திற்கும் நாட்டுக் கழுதைகளின் இறைச்சிக்கும் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2740 முஹம்மத் பின் அலீ பின் அபீதாலிப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் தொடர்பாக மென்மையான தீர்ப்பு வழங்குவதைச் செவியுற்ற (என் தந்தை) அலீ (ரலி) அவர்கள், "இப்னு அப்பாஸே! நிதானம்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், கைபர் போர்நாளில் அதற்கும் ("அல்முத்ஆ'), நாட்டுக்கழுதையின் இறைச்சியை உண்பதற்கும் தடை விதித்துவிட்டார்கள்" என்றார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2741 முஹம்மத் பின் அலீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) அலீ (ரலி) அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், கைபர் போர்நாளில் "அல்முத்ஆ' (தவணைமுறைத்) திருமணத்திற்

கும், நாட்டுக் கழுதையின் இறைச்சியைப் புசிப்பதற்கும் தடை விதித்தார்கள்" என்று கூறியதை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும் (அத்தை), அல்லது ஒரு பெண்ணையும் அவளுடைய தாயின் சகோதரியையும் (காலா) சேர்த்து மண முடிப்பதற்கு வந்துள்ள தடை.**

2742 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(ஒருவர்) ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும் ஒருசேர மனைவியராக்கிக் கொள்ளலாகாது. (இதைப் போன்றே) ஒரு பெண்ணையும் அவளுடைய தாயின் சகோதரியையும் ஒருசேர மனைவியராக்கிக் கொள்ளலாகாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2743 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (பின்வரும்) நான்கு பெண்களை ஒருசேர மனைவியராக்கிக் கொள்ளலாகாதெனத் தடை விதித்தார்கள். ஒரு பெண்ணும் அவளுடைய தந்தையின் சகோதரியும், ஒரு பெண்ணும் அவளுடைய தாயின் சகோதரியுமே அந்த நால்வர்.

2744 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(ஒருவர்) ஒரு பெண்ணையும் அவளுடைய சகோதரனின் மகளையும் ஒருசேர மணக்கலாகாது. (இதைப் போன்றே) ஒரு பெண்ணையும் அவளுடைய சகோதரியின் மகளையும் ஒருசேர மணக்கலாகாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2745 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும், ஒரு பெண்ணையும் அவளுடைய தாயின் சகோதரியையும் (ஒருசேர) மனைவியராக்கிக் கொள்வதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
இதை வைத்து, ஒரு பெண்ணின் தந்தையின் சகோதரியையும் அவளுடைய தாயின் சகோதரியையும் ஒரே தரத்திலேயே நாங்கள் கருதுகிறோம்.

2746 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(ஒருவர்) ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும், அல்லது அவளுடைய தாயின் சகோதரியையும் (ஒருசேர) மணக்கலாகாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2747 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பெண்ணை, தம் சகோதர (இஸ்லாமிய)ன் பெண் பேசிக்கொண்டிருக்கும்போது, எவரும் (இடையில் குறுக்கிட்டுத்) தமக்காகப் பெண் பேசலாகாது. ஒருவர், தம் சகோதர (இஸ்லாமிய)ன் (ஒரு பொருளுக்கு) விலை பேசிக் கொண்டிருக்கும்போது, (அதைவிட அதிகம் தருவதாக) விலை பேசலாகாது. ஒருவர் ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும், அல்லது அவளுடைய தாயின் சகோதரியையும் (ஒருசேர) மணக்கலாகாது. ஒரு பெண் தன் (இஸ்லாமிய) சகோதரியின் பாத்திரத்தைக் கவிழ்த்து(விட்டு அதைத் தனதாக்கி)க்கொள்ளும் பொருட்டு அவளை மணவிலக்குச் செய்யுமாறு (தாம் மணக்கப் போகின்றவரிடம்) கோரலாகாது. அவள், (முதல் மனைவி இருக்கவே) மணந்துகொள்ளட்டும். ஏனெனில், இவளுக்காக அல்லாஹ் விதித்துள்ளது நிச்சயம் இவளுக்குக் கிடைக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2748 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும், அல்லது அவளுடைய தாயின் சகோதரியையும் ஒருசேர மணமுடிப்பதற்கும், (ஒரு பெண்) தன் (இஸ்லாமிய) சகோதரியின் (வாழ்க்கைப்) பாத்திரத்தைக் கவிழ்த்து (அதைத் தனதாக்கி)விடுவதற்காக அவளை மணவிலக்குச் செய்யுமாறு (தாம் மணக்கப்போகின்றவரிடம்) கோருவதற்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். ஏனெனில், வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் இவளுக்கும் வாழ்வாதாரத்தை வழங்குபவன் ஆவான்.

2749 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும், ஒரு பெண்ணையும் அவளுடைய தாயின் சகோதரியையும் ஒருசேர மனைவியாக்கிக் கொள்வதற்குத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் :5 இஹ்ராம் கட்டியிருப்பவர் திருமணம் செய்வதற்கு வந்துள்ள தடையும், அவர் பெண் கேட்பது வெறுக்கத்தக்கதாகும் என்பதும்.

2750 நுபைஹ் பின் வஹ்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உமர் பின் உபைதில்லாஹ் பின் மஅமர் (ரஹ்) அவர்கள் (தம்முடைய புதல்வர்) தல்ஹா பின் உமருக்கு ஷைபா பின் ஜுபைர் (ரஹ்) அவர்களின் மகளைத் திருமணம் செய்ய விரும்பினார். எனவே, (அவ்வாண்டு) ஹாஜிகளின் தலைவராயிருந்த அபான் பின் உஸ்மான் பின் அஃப்பான் (ரஹ்) அவர்களி டம் ஆளனுப்பி (அத்திருமணத்திற்கு) வருமாறு கூறினார்.
அப்போது அபான் (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இஹ்ராம் கட்டியவர் (தாமும்) திருமணம் செய்யக்கூடாது. (பிறரால்) திருமணம் செய்து

வைக்கப்படவும் கூடாது. பெண் கேட்கவும் கூடாது' என்று கூறினார்கள் என (என் தந்தை) உஸ்மான் (ரலி) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்று கூறி (மறுத்து)விட்டார்கள்.

2751 நுபைஹ் பின் வஹ்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உமர் பின் உபைதில்லாஹ் பின் மஅமர் (ரஹ்) அவர்கள், தம் மகனுக்கு ஷைபான் பின் (ஜுபைர் பின்) உஸ்மான் (ரஹ்) அவர்களின் மகளைப் பெண் கேட்டுக்கொண்டிருந்தார். எனவே, அப்போது ஹஜ் காலத்தில் இருந்த அபான் பின் உஸ்மான் (ரஹ்) அவர்களிடம் என்னை அனுப்பி (அத்திருமணத்திற்குச் சாட்சியாக இருந்து நடத்திவைக்க வருமாறு கோரி)னார்கள்.
அதற்கு அபான் (ரஹ்) அவர்கள், "அவரை நான் ஒரு (விவரமற்ற) கிராமவாசியாகவே கருதுகிறேன். நிச்சயமாக இஹ்ராம் கட்டியவர் (தாமும்) திருமணம் செய்யக் கூடாது. (பிறரால்) திருமணம் செய்து வைக்கப்படவும் கூடாது" என்று சொன்னார்கள். இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என (என் தந்தை) உஸ்மான் (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்தார்கள் என்றும் கூறி (மறுத்து)விட்டார்கள்.

2752 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இஹ்ராம் கட்டியவர் (தாமும்) திருமணம் செய்யக் கூடாது. (பிறரால்) திருமணம் செய்து வைக்கப்படவும் கூடாது. பெண் கேட்கவும் கூடாது.
இதை உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2753 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இஹ்ராம் கட்டியவர் மணமுடிக்கவும் கூடாது. பெண் கேட்கவும் கூடாது.
இதை உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2754 நுபைஹ் பின் வஹ்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உமர் பின் உபைதில்லாஹ் பின் மஅமர் (ரஹ்) அவர்கள், ஒரு ஹஜ்ஜின்போது தம்முடைய புதல்வர் தல்ஹாவுக்கு ஷைபா பின் ஜுபைர் (ரஹ்) அவர்களின் புதல்வியைத் திருமணம் செய்ய விரும்பினார். அப்போது ஹாஜிகளின் தலைவராக அபான் பின் உஸ்மான் (ரஹ்) அவர்கள் இருந்தார்கள். எனவே, உமர் பின் உபைதில்லாஹ், "நான் (என் மகன்) தல்ஹா பின் உமருக்குத் திருமணம் செய்ய வேண்டும் என ஆசைப்படுகிறேன்" என்று கூறி அபான் (ரஹ்) அவர்களிடம் ஆளனுப்பினார்கள். அப்போது அபான் (ரஹ்) அவர்கள், "உம்மை நான் ஒரு முரட்டு இராக்கியராகவே கருதுகிறேன். "இஹ்ராம் கட்டியவர் மணமுடிக்கக் கூடாது' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என (என் தந்தை) உஸ்மான் (ரலி) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்று கூறி (மறுத்து)விட்டார்கள்.

2755 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இஹ்ராம் கட்டிய நிலையில் மைமூனா (ரலி) அவர்களைத் திருமணம் செய்தார்கள். - இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில், முஹம்மத் பின் அப்தில்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பின்வருமாறு கூடுதலாக இடம்பெற்றுள்ளது:
இந்த ஹதீஸை நான் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடம் அறிவித்தேன். அப்போது அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களை இஹ்ராம் இல்லாத (ஹலால்) நிலையிலேயே திருமணம் செய்தார்கள்" என யஸீத் பின் அல் அஸம்மு (ரஹ்) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள் என்றார்கள்.

2756 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களை இஹ்ராம் கட்டிய நிலையில் திருமணம் செய்தார்கள்.

2757 மைமூனா பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இஹ்ராம் இல்லாத (ஹலால்) நிலையிலேயே என்னைத் திருமணம் செய்தார்கள்.
இதன் அறிவிப்பாளரான யஸீத் பின் அல்அஸம்மு (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
மைமூனா (ரலி) அவர்கள் என் தாயின் சகோதரியும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் தாயின் சகோதரியும் ஆவார்கள்.

பாடம் : 6 தம் சகோதர (இஸ்லாமிய)ன் கேட்டுக்கொண்டிருக்கும் ஒரு பெண்ணை மற்றவர் பெண் கேட்கலாகாது. ஒன்று முதலில் பெண் கேட்டவர் இவருக்கு அனுமதியளிக்கும் வரை, அல்லது அதைக் கைவிடும்வரை இவர் பொறுத்திருக்க வேண்டும்.

2758 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் வியாபாரம் செய்யும்போது, மற்றவர் (தலையிட்டு) வியாபாரம் செய்ய வேண்டாம். உங்களில் ஒருவர் பெண் பேசும்போது, மற்றவர் (குறுக்கிட்டுத் தமக்காகப்) பெண் பேச வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2759 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர், தம் சகோதர (இஸ்லாமிய)ன் வியாபாரம் செய்துகொண்டிருக்கும் போது (தலையிட்டுத் தமக்காக) வியாபாரம் செய்ய வேண்டாம். தம் சகோதர (இஸ்லாமிய)ன் பெண் பேசிக்கொண்டிருக்கும்போது (குறுக்கிட்டுத்) தமக்காகப் பெண் பேசவேண்டாம். முதலில் பேசியவர் இவருக்கு அனுமதியளித்தால் தவிர!
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2760 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமத்திலிருந்து (விற்பனைச்சரக்கு கொண்டு)வருபவருக்காக உள்ளூர்வாசி விற்றுக் கொடுக்க வேண்டாம் என்றும், அல்லது வாங்கும் நோக்கமின்றி விலையை ஏற்றி விடுவதற்காக அதிக விலைக்குக் கேட்க வேண்டாம் என்றும், அல்லது தம் சகோதர (இஸ்லாமிய)ன் பெண் பேசிக்கொண்டிருக்கும் போது (இடைமறித்துத்) தமக்காகப் பெண் கேட்க வேண்டாம் என்றும், அல்லது தம் சகோதர (இஸ்லாமிய)ன் வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது (தலையிட்டு) விற்பனை செய்ய வேண்டாம் என்றும், தன் சகோதரி (சக்களத்தி)யின் (வாழ்க்கைப்) பாத்திரத்திலுள்ளதைக் கொட்டி (அதைத் தனதாக்கி) விடுவதற்காக ஒரு பெண் (தன் மணாளரிடம்) தம் சகோதரியை மணவிலக்குச் செய்யுமாறு கேட்கவேண்டாம் என்றும் (இவையனைத்திற்கும்) நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், அம்ருந் நாகித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "தம் சகோதர (இஸ்லாமிய)ன் விலை பேசிக்கொண்டிருக்கும்போது அதைவிட (அதிக விலை தருவதாகக் கூறி) விலை பேச வேண்டாம் என்றும் நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்" என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

2761 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வாங்கும் எண்ணமின்றி விலை ஏற்றிவிடுவதற்காக அதிக விலைக்குக் கேட்க வேண்டாம். தம் சகோதர (இஸ்லாமிய)ன் வியாபாரம் செய்துகொண்டிருக்கும்போது, (குறுக்கிட்டு) மற்றவர் வியாபாரம் செய்ய வேண்டாம். கிராமத்திலிருந்து (விற்பனைச் சரக்கு கொண்டு) வருபவருக்காக உள்ளூர்வாசி விற்றுக்கொடுக்க வேண்டாம். தம் சகோதர (இஸ்லாமிய)ன் பெண் பேசிக்கொண்டிருக்கும்போது (இடையில் குறிக்கிட்டுத் தமக்காகப்) பெண் பேச வேண்டாம். ஒரு பெண் தன் சக்களத்தியின் பாத்திரத்திலுள்ளதைக் கொட்டிக் கவிழ்ப்பதற்காக அவளை மணவிலக்குச் செய்யுமாறு (தம் மணாளரிடம்) கேட்க வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2762 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மஅமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "தம் சகோதர (இஸ்லாமிய)ன் வியாபாரம் செய்துகொண்டிருக்கும்போது,எவரும் (குறுக்கிட்டு விலையை) அதிகமாக்கி விடவேண்டாம்" என இடம்பெற்றுள்ளது.

2763 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிம் தம் சகோதர முஸ்லிம் விலை பேசிக்கொண்டிருக்கும்போது (குறுக்கிட்டு அதை விட அதிக விலை தருவதாக) விலை பேச வேண்டாம். (இதைப் போன்றே) அவர் பெண் பேசிக் கொண்டிருக்கும்போது (இடைமறித்துப்) பெண் பேசவேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2764 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "தம் சகோதர (இஸ்லாமிய)னின் விலைமீது விலை பேச வேண்டாம்; அவன் பெண் பேசிக்கொண்டிருக்கும்போது பெண் பேசவேண்டாம்" என (சிறிய வேறுபாட்டுடன்) இடம்பெற்றுள்ளது.

2765 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இறைநம்பிக்கையாளர் மற்றோர் இறை நம்பிக்கையாளரின் சகோதரர் ஆவார். எனவே, தம் சகோதரர் வியாபாரம் செய்துகொண்டிருக்கும்போது தாம் (குறுக்கிட்டு) வியாபாரம் செய்ய ஓர் இறைநம்பிக்கையாளருக்கு அனுமதி இல்லை. தம் சகோதரர் பெண் பேசிக் கொண்டிருக்கும்போது (இடைமறித்துத் தமக்காக) அவர் பெண் பேசமாட்டார். சகோதரர் அதைக் கைவிடும்வரை (பொறுத்திருப்பார்).
இதை உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது (நின்று) அறிவித்தார்கள்.

## பாடம் : 7 மணக்கொடையின்றி பெண் கொடுத்துப் பெண் எடுக்கும் திருமணத்திற்கு ("ஷிஃகார்') வந்துள்ள தடையும் அத்திருமணம் செல்லாது என்பதும்.

2766 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஷிஃகார்' முறைத்திருமணத்திற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைவிதித்தார்கள். ஒருவர் மற்றொருவரிடம் "நான் என் மகளை உனக்குத் திருமணம் செய்து தருகிறேன்; நீ உன் மகளை எனக்குத் திருமணம் செய்து தர வேண்டும்" என்று (முன் நிபந்தனை) விதித்து மணமுடித்து வைப்பதற்கே "ஷிஃகார்' எனப்படும். இதில் இரு பெண்களுக்கும் "மஹ்ர்' (மணக்கொடை) இராது.

2767 மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், உபைதுல்லாஹ் பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் நாஃபிஉ (ரஹ்) அவர்களிடம் "ஷிஃகார்' என்றால் என்ன? என்று கேட்டேன்" (அதற்குத்தான் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறு விளக்கம் கூறினார்கள்) என இடம்பெற்றுள்ளது.

2768 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மஹ்ரின்றி பெண் கொடுத்துப்பெண் எடுக்கும் (ஷிஃகார் முறைத்) திருமணத்திற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.

2769 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மஹ்ரின்றி பெண் கொடுத்துப் பெண் எடுத்தல் ("ஷிஃகார்') இஸ்லாத்தில் இல்லை.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2770 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மஹ்ரின்றி பெண் கொடுத்துப் பெண் எடுக்கும் (ஷிஃகார் முறைத்) திருமணத்திற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஒருவர் மற்றொருவரிடம் நான் என் மகளை உனக்குத் திருமணம் செய்து தருகிறேன்; நீ உன் மகளை எனக்குத் திருமணம் செய்து தர வேண்டும்' என்றோ, அல்லது "நான் என் சகோதரியை உனக்குத் திருமணம் செய்து தருகிறேன்; நீ உன் சகோதரியை எனக்குத் திருமணம் செய்து தர வேண்டும்' என்றோ (முன் நிபந்தனையிட்டுக்) கூறுவதே "ஷிஃகார்' ஆகும்" என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது கூடுதலான தகவல் இடம்பெறவில்லை.

2771 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மஹ்ரின்றி பெண் கொடுத்துப்பெண் எடுக்கும் (ஷிஃகார் முறைத்) திருமணத்திற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 8 திருமண (ஒப்பந்த)த்தின்(போது பேசப்பட்ட) நிபந்தனைகளை நிறைவேற்றல்.**

2772 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நிறைவேற்றப்பட வேண்டிய நிபந்தனைகளில் முதன்மையானது யாதெனில், உங்கள் மனைவியரை உங்களுக்கு அனுமதிக்கப்பட்டவர்களாக ஆக்கிக்கொள்வதற்காக நீங்கள் (அவர்களிடமிருந்து) ஏற்றுக்கொண்ட நிபந்தனையே ஆகும்.
இதை உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 9 கன்னி கழிந்த பெண்ணின் சம்மதத்தைத் திருமணத்தின்போது வாய் மொழியாகப் பெற வேண்டும்; கன்னிப் பெண்ணின் மௌனம் சம்மதமே.**

2773 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கன்னி கழிந்த பெண்ணை, அவளது (வெளிப்படையான) உத்தரவு பெறப்படாமல் மண முடித்துக்கொடுக்க வேண்டாம். கன்னிப் பெண்ணிடம் (ஏதேனும் ஒரு முறையில்) அனுமதி பெறாமல் மணமுடித்துக்கொடுக்க வேண்டாம்" என்று சொன்னார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! கன்னிப் பெண்ணின் அனுமதி(யை) எப்படி(ப் பெறுவது)? (அவள் வெட்கப்படக்கூடுமே?)" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவள் மௌனமாக இருப்பதே (அவளது சம்மதமாகும்)" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஹிஷாம் பின் அபீஅப்தில் லாஹ் (ரஹ்), ஷைபான் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்), முஆவியா பின் சல்லாம் (ரஹ்) ஆகியோரின் வாசகங்கள் ஒன்று போல அமைந்துள்ளன.

2774 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "ஒரு கன்னிப் பெண்ணை அவளுடைய வீட்டார் மணமுடித்துக்கொடுக்கும் போது அவளிடம் அனுமதி பெற வேண்டுமா, இல்லையா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்; அவளிடம் அனுமதி பெற வேண்டும்" என்றார்கள். நான், "அவ்வாறாயின், அவள் வெட்கப்படுவாளே?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவள் மௌனமாக இருந்தால், அதுவே அவளது சம்மதம்தான்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2775 யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர் களிடம், "விதவை, தன் காப்பாளரைவிடத் தனது விஷயத்தில் (முடிவு செய்ய) மிகவும் தகுதி வாய்ந்தவள். கன்னிப் பெண்ணிடமோ, அவள் விஷயத்தில் அனுமதி பெறப்பட வேண்டும். அவளது மௌனமே சம்மதமாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்து நாஃபிஉ பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்க, அவரிடமிருந்து அப்துல்லாஹ் பின் அல்ஃபள்ல் (ரஹ்) அவர்கள் உங்களுக்கு அறிவித்தார்களா என்று கேட்டேன் அதற்கு அவர்கள் "ஆம்' என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2776 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கன்னி கழிந்த பெண், தன் காப்பாளரைவிடத் தனது விஷயத்தில் (முடிவு செய்ய) மிகவும் தகுதி வாய்ந்தவள். கன்னிப் பெண்ணிடம் அனுமதி பெறப்பட வேண்டும். அவளது மௌனம் அவளது அனுமதி ஆகும்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2777 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "கன்னி கழிந்த பெண், தன் காப்பாளரைவிடத் தனது விஷயத்தில் (முடிவு செய்ய) மிகவும் தகுதி வாய்ந்தவள். கன்னிப் பெண்ணிடம் அவளுடைய தந்தை அவள் தொடர்பாக அனுமதி பெற வேண்டும். அவளது மௌனம் அவளது அனுமதி ஆகும்" என்று இடம் பெற்றுள்ளது. அறிவிப்பாளர் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் சில சந்தர்ப்பங்களில் "அவளது மௌனம் அவளது இசைவாகும்' என்று கூறினார்கள்.

**பாடம் : 10 இளவயதுக் கன்னிக்கு அவளுடைய தந்தை மணமுடித்துவைத்தல்.**

2778 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஆறு வயதுடையவளாக இருந்த போது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை மணந்துகொண்டார்கள். நான் (பருவமடைந்து) ஒன்பது வயதுடையவளாக இருந்த போது, அவர்கள் என்னுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள்.
அதாவது நாங்கள் (நாடு துறந்து) மதீனாவிற்கு வந்தபோது, எனக்குக் காய்ச்சல் ஏற்பட்டு (என் தலை முடி உதிர்ந்து)விட்டது. பின்னர் என் தலைமுடி பிடரிவரை வளர்ந்தது. நான் என் தோழியர் சிலருடன் ஏற்றப் பலகையில் விளையாடிக்கொண்டிருந்தபோது, (என் தாயார்) உம்மு ரூமான் (ரலி) அவர்கள் என்னிடம் வந்து என்னைச் சப்தமிட்டு அழைத்தார். நான் அவரிடம் சென்றேன். அவர் என்னை எதற்காக அழைத்தார் என்று எனக்குத் தெரிய வில்லை. அவர் எனது கையைப் பிடித்துக் கொண்டுவந்து, கதவுக்கருகில் என்னை நிறுத்தினார். (அவர் வேகமாக இழுத்துவந்ததால் எனக்கு மூச்சு வாங்கியது.) ஆஹ்... ஆஹ்... என்றேன். பின்னர் மூச்சிறைப்பு நின்றதும் என்னை (எனது) அறைக்குள் அனுப்பினார். அங்கு சில அன்சாரிப் பெண்கள் இருந்தனர். அவர்கள், "நன்மையுடனும் வளத்துடனும் வருக! (இறைவனின்) நற்பேறு உண்டாகட்டும்" என்று (வாழ்த்துக்) கூறினர். என் தாயார் என்னை அப்பெண்களிடம் ஒப்படைக்க, அவர்கள் எனது தலையைக் கழுவி என்னை அலங்கரித்துவிட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முற்பகல் நேரத்தில் திடீரென என்னிடம் வந்தார்கள். அவர்களிடம் அப்பெண்கள் என்னை ஒப்படைத்தனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2779 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஆறு வயதுடையவளாக இருந்தபோது, நபி (ஸல்) அவர்கள் என்னை மணந்து கொண்டார்கள். நான் (பருவமடைந்து) ஒன்பது வயதுடையவளாக இருந்தபோது, என்னுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2780 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஏழு வயதுடையவளாக இருந்த போது, நபி (ஸல்) அவர்கள் என்னை மணந்து கொண்டார்கள். நான் (பருவமடைந்து) ஒன்பது வயதுடையவளாக இருந்தபோது, அவர்களிடம் அனுப்பிவைக்கப்பட்டேன். அப்போது விளையாட்டுப் பொம்மைகள் என்னுடன் இருந்தன. நான் பதினெட்டு வயதுடையவளாக இருந்தபோது, நபி (ஸல்) அவர்கள் என்னை விட்டு இறந்தார்கள்.

2781 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஏழு வயதுடையவளாக இருந்தபோது, நபி (ஸல்) அவர்கள் என்னை மணந்துகொண்டார்கள். நான் (பருவமடைந்து) ஒன்பது வயதுடையவளாக இருந்தபோது, அவர்கள் என்னுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள். நான் பதினெட்டு வயதுடையவளாக இருந்தபோது, நபி (ஸல்) அவர்கள் என்னைவிட்டு இறந்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 11 ஷவ்வால் மாதத்தில் மணமுடிப்பதும் மணமுடித்துவைப்பதும் தாம்பத்திய உறவைத் தொடங்குவதும் விரும்பத்தக்கவையாகும்.**

2782 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை ஷவ்வால் மாதத்தில் மணந்து கொண்டார்கள்; ஷவ்வால் மாதத்திலேயே என்னுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியரில் அவர்களுடன் என்னைவிட அதிக நெருக்கத்திற்குரியவர் யார்?
இதன் அறிவிப்பாளரான உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
ஆயிஷா (ரலி) அவர்கள் தங்கள் (குடும்பப்) பெண்களை ஷவ்வால் மாதம் (மணமுடித்து) அனுப்பிவைப்பதையே விரும்புவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் ஆயிஷா (ரலி) அவர்களின் செயல் குறித்த (இறுதிக்) குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 12 ஒருவர் தாம் மணமுடிக்க விரும்பும் பெண்ணின் முகத்தையும் இரு முன் கைகளையும் பார்ப்பது விரும்பத்தக்கதாகும்.**

2783 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் அருகில் இருந்தேன். அப்போது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, தாம் அன்சாரிகளில் ஒரு பெண்ணை மணமுடிக்கப்போவதாகத் தெரிவித்தார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் அந்தப் பெண்ணைப் பார்த்துவிட்டீரா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் "இல்லை' என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின், நீர் சென்று அவளைப் பார்த்துக்கொள்ளும்! ஏனெனில், அன்சாரிகளின் கண்களில் சிறிது (குறை) உண்டு" என்று சொன்னார்கள்.

2784 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் அன்சாரிகளில் ஒரு பெண்ணை மணமுடிக்கப்போகிறேன்" என்றார். அவரிடம் நபி (ஸல்) அவர்கள், "நீர் அந்தப் பெண்ணைப் பார்த்துவிட்டீரா? ஏனெனில், அன்சாரிகளின் கண்களில் சிறிது (குறை)உள்ளது"என்றார்கள். அதற்கு அந்த மனிதர், "அந்தப் பெண்ணைப் பார்த்து விட்டேன்" என்றார். "எவ்வளவு மணக்கொடையில் (மஹ்ர்) அவளை மணக்கப்போகிறீர்?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர், "நான்கு ஊக்கியாக்கள்" என்றார். நபி (ஸல்) அவர்கள் "(ஓ!) நான்கு ஊக்கியாக்களா? வெள்ளியை நீங்கள் இந்த மலைப்பகுதியிலிருந்து குடைந்தெடுக்கிறீர்கள் போலும். உமக்கு (உதவித் தொகையாக)க் கொடுப்பதற்கு எம்மிடம் எதுவுமில்லை. ஆயினும், நாம் உம்மை ஒரு படைப்பிரிவுக்கு அனுப்புவோம். அப்போது, நீர் போர்ச் செல்வத்திலிருந்து அதைப் பெற்றுக்கொள்ளக்கூடும்" என்றார்கள்.
அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் "பனூ அப்ஸ்' குலத்தாரை நோக்கி ஒரு படைப்பிரிவை அனுப்பியபோது அவர்களுடன் அந்த மனிதரையும் அனுப்பிவைத்தார்கள்.

**பாடம் : 13 மணக்கொடையும், அது குர்ஆனைக் கற்பித்தலாகவோ இரும்பு மோதிரமாகவோ அளவில் குறைந்ததாகவோ கூடியதாகவோ இருக்கலாம் என்பதும்; சக்திக்கு மீறாதிருப்பின் ஐநூறு திர்ஹங்கள் கொடுப்பது விரும்பத்தக்கதாகும் என்பதும்.**

2785 சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! என்னைத் தங்களுக்கு அன்பளிப்பாக வழங்க (மஹ்ரின்றி என்னைத் தாங்கள் மணந்து கொள்ளுமாறு கோரி) வந்துள்ளேன்" என்று சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரை நோக்கிப் பார்வையை உயர்த்தி நேராகப் பார்த்துவிட்டுப் பார்வையைத் தாழ்த்திக்கொண்டார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தலையைத் தொங்கவிட்டுக்கொண்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது விஷயத்தில் எந்த முடிவுக்கும் வரவில்லை என்பதைக் கண்ட அந்தப் பெண்மணி (அந்த இடத்திலேயே) அமர்ந்துகொண்டார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! தங்களுக்கு அவர் தேவையில்லையென்றால், அவரை எனக்கு மணமுடித்துவையுங்கள்" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(மணக்கொடையாகச் செலுத்த) உம்மிடம் ஏதேனும் பொருள் உண்டா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! என்னிடம் ஏதுமில்லை, அல்லாஹ்வின் தூதரே!" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உம் குடும்பத்தாரிடம் சென்று ஏதாவது கிடைக்குமா என்று பார்" என்றார்கள். அவர் போய்ப் பார்த்து விட்டுத் திரும்பிவந்து, "அல்லாஹ்வின் மீதாணையாக! ஏதும் கிடைக்கவில்லை, அல்லாஹ்வின் தூதரே!" என்று சொன்னார். "இரும்பாலான ஒரு மோதிரமாவது கிடைக்குமா என்று பார்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொல்லியனுப்பினார்கள். அவர் (மீண்டும்) சென்றுவிட்டுத் திரும்பிவந்து, "அல்லாஹ்வின் மீதாணையாக! இரும்பு மோதிரம்கூடக் கிடைக்கவில்லை, அல்லாஹ்வின் தூதரே! ஆனால், இதோ இந்த எனது வேட்டி உள்ளது; அதில் பாதி அவளுக்கு" என்று சொன்னார்.
-அறிவிப்பாளர் சஹ்ல் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: அவரிடம் ஒரு மேல் துண்டு கூட இல்லை. (அதனால்தான் தனது வேட்டியில் பாதியை அவளுக்குத் தருவதாகச் சொன்னார்.)–

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமது (ஒரு) வேட்டியை வைத்துக் கொண்டு நீர் என்ன செய்வீர்? இந்த வேட்டியை நீர் அணிந்துகொண்டால், அவள்மீது ஏதும் இருக்காது. அவள் அணிந்துகொண்டால், உம்மீது ஏதும் இருக்காது" என்றார்கள்,
பிறகு அந்த மனிதர் நீண்ட நேரம் அங்கேயே அமர்ந்துவிட்டு எழுந்தார். அவர் திரும்பிச்செல்வதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பார்த்தபோது, அவரை அழைத்து வரும்படி உத்தரவிட்டார்கள். அவர் அழைக்கப்பட்டார். அவர் வந்தபோது, "உம்முடன் குர்ஆனில் என்ன (அத்தியாயம் மனப்பாடமாக) உள்ளது?" என்று கேட்டார்கள். அவர், "இன்ன அத்தியாயம், இன்ன அத்தியாயம் என்னிடம் உள்ளது" என்று எண்ணி எண்ணிச் சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவற்றை நீர் மனப்பாடமாக ஓதுவீரா?" என்று கேட்டார்கள். அவர், "ஆம் (ஓதுவேன்)" என்று சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்கள், "உம்முடன் உள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக இப்பெண் உமக்குரியவளாக ஆக்கப்பட்டுவிட்டாள்; நீர் செல்லலாம்!" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2786 மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் சில அறிவிப்பாளர்கள் வேறு சிலரைவிடக் கூடுதலாக அறிவித்துள்ளனர். ஆயினும், ஸாயிதா பின் குதாமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இப்பெண்ணை உமக்குத் திருமணம் முடித்துக் கொடுத்துவிட்டேன். நீர் சென்று அவளுக்குக் குர்ஆனைக் கற்றுக் கொடுப்பீராக!" என்று கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

2787 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களின் துணைவி யார் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியருக்குக்) கொடுத்த மணக்கொடை (மஹ்ர்) எவ்வளவு?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியருக்கு வழங்கிய மணக்கொடை, பன்னிரண்டு ஊக்கியாவும் ஒரு நஷ்ஷுமாகும்" என்று கூறிவிட்டு, "நஷ்ஷு என்றால் என்னவென்று தெரியுமா?" என்று கேட்டார்கள். நான் "இல்லை' என்றேன். அவர்கள், "அரை ஊக்கியாவாகும்; (ஆகமொத்தம்) அது ஐநூறு திர்ஹங்கள் ஆகும். இதுவே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியருக்கு வழங்கிய மணக்கொடையாகும்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2788 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் (ஆடையின்) மீது மஞ்சள் நிற(முள்ள வாசனைத் திரவிய)த்தின் அடையாளத்தைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், "இது என்ன?" என்று கேட்டார்கள். அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! ஒரு பேரீச்சங் கொட்டையின் எடையளவு தங்கத்தை (மணக்கொடையாக)க் கொடுத்து ஒரு பெண்ணை மணமுடித்துக்கொண்டேன்" என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள், "பாரக்கல்லாஹு லக்க" (அல்லாஹ் உங்களுக்கு வளத்தை வழங்குவானாக) என்று (வாழ்த்துக்) கூறிவிட்டு, "ஓர் ஆட்டையாவது (அறுத்து) மணவிருந்து (வலீமா) அளியுங்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2789 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் ஒரு போரீச்சங்கொட்டையின் எடையளவு தங்கத்தை (மணக்கொடையாக)க் கொடுத்து (ஒரு பெண்ணை) மணமுடித்துக் கொண்டார்கள். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஓர் ஆட்டையாவது (அறுத்து) மணவிருந்து (வலீமா) அளியுங்கள்" என்று சொன்னார்கள்.

2790 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் ஒரு பேரீச்சங்கொட்டையின் எடையளவு தங்கத்தை (மணக்கொடையாக)க் கொடுத்து ஒரு பெண்ணை மணமுடித்துக் கொண்டார்கள். அவரிடம் நபி (ஸல்) அவர்கள், "ஓர் ஆட்டையாவது (அறுத்து)மண விருந்து (வலீமா) அளியுங்கள்" என்று சொன னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் வஹ்ப் பின் ஜரீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நான் ஒரு பெண்ணை மண முடித்துக்கொண்டேன்" என அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

2791 அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் திருமணத்தின் மகிழ்ச்சி (ரேகை)யைக் கண்டார்கள். அப்போது நான், "ஓர் அன்சாரிப் பெண்ணை மணமுடித்துக் கொண்டேன்" என்றேன். அவர்கள், "அவளுக்கு எவ்வளவு மஹ்ர் கொடுத்தீர்கள்?" என்று கேட்டார்கள். நான் "ஒரு பேரீச்சங்கொட்டை (எடையளவு)" என்றேன்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஒரு பேரீச்சங்கொட்டை(யின் எடையளவு) தங்கத்தை" என இடம்பெற்றுள்ளது.

2792 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் ஒரு பேரீச்சங்கொட்டையின் எடையளவு தங்கத்தை (மணக்கொடையாக)க் கொடுத்து ஒரு பெண்ணை மணமுடித்துக் கொண்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களுடைய பிள்ளைகளில் ஒருவர் "தங்கத்தில் (ஒரு பேரீச்சங்கொட்டையின் எடையளவை மணக் கொடையாகக் கொடுத்தார்கள்)" என்று கூறினார் என இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 14 ஒருவர் தம் அடிமைப் பெண்ணை விடுதலை செய்து, பின்னர் அவளை மணமுடித்துக் கொள்வதன் சிறப்பு.

2793 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹிஜ்ரீ ஏழாவது ஆண்டு) கைபர்மீது போர் தொடுத்தார்கள். அப்போது கைபருக்கு அருகில் (ஓரிடத்தில்) நாங்கள் (இறுதி இரவின்) இருட்டிலேயே வைகறைத் தொழுகையைத் தொழுதோம்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வாகனத்தில் ஏறிப் பயணமானார்கள். (என் வளர்ப்புத் தந்தை) அபூதல்ஹா (ரலி) அவர்களும் வாகனத்தில் ஏறிப் பயணமானார்கள். நான் அபூதல்ஹா அவர்களுக்குப் பின்னால் வாகனத்தில் அமர்ந்துகொண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் சாலையில் (தமது வாகனத்தைச்) செலுத்தினார்கள். அப்போது எனது முழங்கால், (அருகில் சென்றுகொண்டிருந்த)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தொடையைத் தொட்டுக் கொண்டிருந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வேட்டி தொடையிலிருந்து விலகியது; நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தொடையின் வெண்மையைப் பார்த்தேன்.

அந்த (கைபர்) ஊருக்குள் அவர்கள் பிரவேசித்தபோது, "அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்); கைபர் பாழா(வது உறுதியா)கிவிட்டது. நாம் ஒரு சமுதாயத்தாரின் களத்தில் (அவர்களுடன் போரிட) இறங்குவோமாயின், எச்சரிக்கப்பட்ட அவர்களுக்கு அது மிகக் கெட்ட காலையாகவே அமையும்" என்று மூன்று முறை கூறினார்கள். (அந்த ஊர்) மக்கள் தங்கள் அலுவல்களுக்காகப் புறப்பட்டு வந்தபோது (எங்களைக் கண்டதும்), "அல்லாஹ்வின் மீதாணையாக, முஹம்மத் (வந்துவிட்டார்)"என்று கூறினர்.

- (இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துல் அஸீஸ் பின் ஸுஹைப் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: எம்முடைய நண்பர்களில் சிலர் "முஹம்மதும் (அவரது) ஐந்து அணிகள் கொண்ட படையும் (வந்துவிட்டனர்) என்று அந்த மக்கள் கூறினர்"என அறிவித்தனர்.–

பிறகு தாக்குதல் மூலம் கைபரை நாங்கள் கைப்பற்றினோம். (போருக்குப் பின்) போர்க் கைதிகள் திரட்டப்பட்டபோது, திஹ்யா (அல்கல்பீ–ரலி) அவர்கள் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! கைதிகளில் ஓர் அடிமைப் பெண்ணை எனக்கு (போர்ச் செல்வமாக)த் தாருங்கள்" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் சென்று ஓர் அடிமைப் பெண்ணைப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்றார்கள். திஹ்யா (ரலி) அவர்கள், (கணவனை இழந்திருந்த) ஸஃபிய்யா பின்த் ஹுயை அவர்களைப் பெற்றுக்கொண்டார்கள்.

இந்நிலையில் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! குறைழா, நளீர் குலத்தாரின் தலைவரான ஹுயையின் மகள் ஸஃபிய்யாவை திஹ்யாவுக்கு வழங்கிவிட்டீர்களே! ஸஃபிய்யா, உங்களுக்குத் தவிர வேறெவருக்கும் பொருத்தமாகமாட்டார்" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், திஹ்யாவையும் அப்பெண்ணையும் அழைத்துவாருங்கள்" என்றார்கள். ஸஃபிய்யாவுடன் திஹ்யா (ரலி) அவர்கள் வந்தார்கள். ஸஃபிய்யாவைக் கண்டதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (திஹ்யா (ரலி) அவர்களிடம்), "கைதிகளில் இவரல்லாத மற்றோர் அடிமைப் பெண்ணை நீங்கள் பெற்றுக்கொள்ளுங்கள்" என்று சொன்னார்கள். பிறகு நபி (ஸல்) அவர்கள் ஸஃபிய்யாவை விடுதலை செய்து தாமே மணந்துகொண்டார்கள்.

-(இந்த ஹதீஸின் அறிவிப்பாளரான) அனஸ் (ரலி) அவர்களிடம் ஸாபித் பின் அஸ்லம் அல்புனானீ (ரஹ்) அவர்கள், "அபூ ஹம்ஸா! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸஃபிய்யா (ரலி) அவர்களுக்கு மணக்கொடையாக (மஹ்ர்) என்ன கொடுத்தார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள், "அவரையே மணக்கொடையாக ஆக்கினார்கள்; (அதாவது) அவரை விடுதலை செய்து (அதையே மணக்கொடையாக ஆக்கி) அவரை மணந்துகொண்டார்கள்" என்று பதிலளித்தார்கள்.–

பிறகு, நாங்கள் (கைபரிலிருந்து திரும்பி வரும்) வழியில் ("சத்துஸ் ஸஹ்பா' எனுமிடத்தில்) இருந்தபோது, (புது மணப்பெண்) ஸஃபிய்யா (ரலி) அவர்களை (என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்கள் (அலங்கரித்துத்) தயார்படுத்தி, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இரவில் ஒப்படைத்தார்கள். காலையில் புது மாப்பிள்ளையாக இருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தம்மிடம் ஏதேனும் (உணவுப் பொருட்கள்)

வைத்திருப்பவர், அதை (நம்மிடம்) கொண்டுவாருங்கள்" என்று கூறி, தோல் விரிப்பொன்றையும் விரித்தார்கள். அப்போது (அங்கிருந்தவர்களில்) ஒருவர் பாலாடைக் கட்டியைக் கொண்டுவரலானார்; மற்றொருவர் பேரீச்சம் பழங்களைக் கொண்டு வரலானார்; இன்னொருவர் நெய்யைக் கொண்டுவரலானார். அவற்றை ஒன்றாகக் கலந்து "ஹைஸ்' எனும் ஒரு வகைப் பலகாரத்தைத் தயார் செய்தனர். அதுவே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அளித்த மணவிருந்தாக (வலீமா) அமைந்தது.

2794 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பதினோரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நபி (ஸல்) அவர்கள் (போர்க் கைதியான) ஸஃபிய்யாவை விடுதலை (செய்து திருமணம்) செய்தார்கள்; மேலும்,அவரது விடுதலையையே மணக்கொடையாக (மஹ்ர்) ஆக்கினார்கள்" என இடம்பெற்றுள்ளது.
ஹிஷாம் பின் அபீஅப்தில்லாஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்கள் ஸஃபிய்யா (ரலி) அவர்களை மணந்து கொண்டார்கள்; அவரது விடுதலையையே மஹ்ராக ஆக்கினார்கள்" என்று இடம்பெற் றுள்ளது.

2795 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
"தம்முடைய அடிமைப் பெண்ணை (அடிமைத்தளையிலிருந்து) விடுதலை செய்து, தாமே அவளை மணந்துகொண்ட ஒருவருக்கு இரட்டை நன்மைகள் உண்டு" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

2796 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் கைபர் போர் நாளில் அபூதல்ஹா (ரலி) அவர்களுக்குப் பின்னால் வாகனத்தில் அமர்ந்திருந்தேன். எனது பாதம், (பக்கத்து ஒட்டகத்தில் பயணம் செய்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது பாதத்தைத் தொட்டது. சூரியன் உதிக்கத் துவங்கிய நேரத்தில் நாங்கள் கைபர்வாசிகளிடம் சென்றடைந்தோம். அப்போது அவர்கள் தம் கால்நடைகளை ஓட்டிக்கொண்டு கோடரிகள்,பேரீச்சங்கூடைகள் மற்றும் மண்வெட்டிகளுடன் (தோட்டந்துரவுகளை நோக்கிப்) புறப்பட்டுவந்தனர். (எங்களைக் கண்டதும்) "முஹம்மதும் (அவருடைய) ஐந்து அணிகள் கொண்ட படையினரும் (வந்து விட்டனர்)" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கைபர் பாழா(வது உறுதியா)கிவிட்டது. நாம் ஒரு சமுதாயத்தாரின் களத்தில் இறங்கிவிட்டோமாயின் எச்சரிக்கப்பட்ட அம்மக்களுக்கு அது கெட்ட காலையாகவே அமையும்" என்று கூறினார்கள்.
வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் கைபர்வாசிகளைத் தோற்கடித்தான். (போர்ச் செல்வங்களில்) திஹ்யா அல்கல்பீ (ரலி) அவர்களது பங்கில் ஓர் அழகிய இளம் பெண் போய்ச்சேர்ந்தார். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏழு அடிமைகளைக் கொடுத்து அப்பெண்ணை (திஹ்யா (ரலி) அவர்களிடமிருந்து) வாங்கிக்கொண்டார்கள். பிறகு அப்பெண்ணை (என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம் ஒப்படைத்து, தமக்காக அலங்காரமும் ஆயத்தமும் செய்யவைத்தார்கள்.

-அறிவிப்பாளர் ஸாபித் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அனஸ் (ரலி) அவர்கள், "உம்மு சுலைம் (ரலி) அவர்களது இல்லத்திலேயே அப்பெண்ணைக் காத்திருப்புக் காலத்தில் (இத்தா) தங்கவைத்(துப் பரிசோதித்)தார்கள்" என்று கூறினார்கள் என நான் கருதுகிறேன்.–

ஸஃபிய்யா பின்த் ஹுயை (ரலி) அவர்களே அப்பெண் ஆவார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேரீச்சம் பழம், பாலாடைக் கட்டி, நெய் ஆகியவற்றை(க் கலந்து தயாரித்த "ஹைஸ்' எனும் பலகாரத்தை)யே மணவிருந்தாக (வலீமா) ஆக்கினார்கள். (முன்னதாக) பூமியில் நன்கு மண்ணைப் பறித்து (குழியாக்கி), தோல் விரிப்பொன்று கொண்டு வரப்பட்டு, அதனுள் அவ்விரிப்பு (விரித்து) வைக்கப்பட்டது. பாலாடைக் கட்டியும் நெய்யும் கொண்டுவரப்(பட்டு, அதில் கொட்டப்)பட்டது. மக்கள் அதிலிருந்து எடுத்து வயிராற உண்டனர். மக்கள், "அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மணந்து மனைவியாக்கிக்கொண்டார்களா, அல்லது குழந்தை பெற்றுத்தரும் அடிமைப் பெண்ணாக (உம்முல் வலத்) ஆக்கிக்கொண்டார்களா என்று எங்களுக்குத் தெரியவில்லை. அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பர்தா இட்டு மறைத்தால், அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மனைவி ஆவார்; பர்தா இட்டு மறைக்காவிட்டால், அவர் அடிமைப் பெண் (உம்முல் வலத்) ஆவார்" என்று பேசிக்கொண்டனர்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாகனத்தில் ஏறிப் புறப்பட நாடியபோது, அவருக்குத் திரையிட்டு மறைத்தார்கள். அவர் ஒட்டகத்தின் கடைக்கோடியில் அமர்ந்திருந்தார். அப்போது மக்கள் அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியார்தாம் என்று அறிந்துகொண்டனர். அவர்கள் மதீனா நெருங்கியபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வாகனத்தை விரைவாகச் செலுத்தினார்கள்; நாங்களும் (எங்கள் வாகனங்களை) விரைவாகச் செலுத்தினோம். அப்போது (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது) "அல்அள்பா' எனும் அந்த ஒட்டகத்திற்குக் கால் இடறியது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒட்டகத்திலிருந்து) விழுந்துவிட்டார்கள்; ஸஃபிய்யா (ரலி) அவர்களும் விழுந்துவிட்டார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து ஸஃபிய்யா (ரலி) அவர்களை (திரையிட்டு) மறைத்தார்கள். அப்போது பெண்கள் எட்டிப் பார்த்து, "அந்த யூதப் பெண்ணை அல்லாஹ் (தனது அருளிலிருந்து) அப்புறப்படுத்துவானாக!" என்று கூறினர்.

அறிவிப்பாளர் ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் (அனஸ் (ரலி) அவர்களிடம்), "அபூ ஹம்ஸா! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விழுந்துவிட்டார்களா?" என்று கேட்டேன். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள், "ஆம், அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விழுந்து விட்டார்கள்" என விடையளித்தார்கள்.

2796-ஆ தொடர்ந்து அனஸ் (ரலி) அவர் கள் கூறினார்கள்:

(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியார்) ஸைனப் (ரலி) அவர்களின் மணவிருந்திலும் (வலீமா) நான் கலந்துகொண்டேன். அவ்விருந்தில் ரொட்டியையும் இறைச்சியையும் வயிறு நிரம்ப உண்ணக் கொடுத்தார்கள். (முன்னதாக) மக்களை அழைப்பதற்காக என்னை அனுப்பிக்கொண்டிருந்தார்கள். (விருந்து) முடிந்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து செல்ல நானும் அவர்களைப் பின்தொடர்ந்து

சென்றேன். இரண்டு மனிதர்கள் எழுந்து செல்லாமல் சுவாரசியமாகப் பேசிக்கொண்டிருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் (மற்ற) துணைவியரிடம் சென்று, அவர்களில் ஒவ்வொருவருக்கும் "சலாமுன் அலைக்கும்' என முகமன் சொல்லிவிட்டு, "வீட்டாரே! எப்படி இருக்கிறீர்கள்?" என (குசலம்) விசாரிக்கலானார்கள். அதற்கு அவர்கள் "நலமுடன் உள்ளோம், அல்லாஹ்வின் தூதரே! தங்களின் (புதிய) துணைவி எப்படி?"என்று கேட்கலாயினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நன்று' என்றார்கள்.

பேசி முடிந்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திரும்பிச் செல்ல, அவர்களுடன் நானும் திரும்பினேன். (புது மணப்பெண் தங்கியிருந்த வீட்டின்) வாசலை அடைந்ததும், அப்போதும் அவ்விருவரும் சுவாரசியமாகப் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திரும்பிச் செல்வதைக் கண்ட அவ்விருவரும் எழுந்து வெளியேறிவிட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அந்த இருவரும் வெளியேறிவிட்டார்கள் என்று "நான் அவர்களுக்குத் தெரிவித்தேனா' அல்லது "இறையறிவிப்பின் மூலம் தெரிவிக்கப்பட்டதா' என்று எனக்குத் தெரியவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (புது மணப்பெண்ணிருந்த வீட்டுக்குத்) திரும்பி வந்தார்கள். அவர்களுடன் நானும் திரும்பிவந்தேன். அவர்கள் தமது காலை வாசற்படியில் வைத்ததும் எனக்கும் தமக்குமிடையே திரையைத் தொங்கவிட்டார்கள். உயர்ந்தோன் அல்லாஹ், "நம்பிக்கை கொண்டோரே! நபியின் வீடுகளில் அனுமதிக்கப்பட்டால் தவிர உணவுண்ணச் செல்லாதீர்கள்..." எனும் இந்த (33:53ஆவது) வசனத்தை அருளினான்.

2797 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(கைபர் போருக்குப் பின்) திஹ்யா அல் கல்பீ (ரலி) அவர்களது (போர்ச் செல்வத்தின்) பங்கில் ஸஃபிய்யா அவர்கள் போய்ச்சேர்ந்தார்கள். மக்கள் ஸஃபிய்யா அவர்களைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பாராட்டிப் பேசினர். "கைதிகளில் அவரைப் போன்று (அழகான) வேறெவரையும் நாங்கள் பார்க்கவில்லை" என்று (கூறி, அவரை மணந்துகொள்ளுமாறு) கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திஹ்யா (ரலி) அவர்களிடம் ஆளனுப்பி (அவர்களை வர வழைத்து) ஸஃபிய்யாவுக்குப் பகரமாக திஹ்யா (ரலி) அவர்கள் விரும்பியவற்றைக் கொடுத்தார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸஃபிய்யா அவர்களை என் தாயாரிடம் ஒப்படைத்து, "இவரை அலங்காரம் செய்க" என்றார்கள்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபரிலிருந்து (மதீனா நோக்கிப்) புறப்பட்டார்கள். கைபரைக் கடந்துவந்ததும் (ஓரிடத்தில்) இறங்கி, ஸஃபிய்யாவுக்காகக் கூடாரம் அமைத்தார்கள். (அங்கு இரவில் தங்கினார்கள்.) விடிந்ததும், "உணவுப் பொருட்களில் ஏதேனும் எஞ்சியவற்றை வைத்திருப்பவர், அவற்றை நம்மிடம் கொண்டு வரவும்" என்றார்கள்.

அப்போது ஒரு மனிதர் தமது தேவைபோக எஞ்சிய பேரீச்சம் பழங்களையும் மாவையும் கொண்டுவந்தார். (மற்றவர்கள் அவரவரிடமிருந்த உணவுப் பொருட்களைக் கொண்டு வந்தனர்.) அதில் "ஹைஸ்' பலகாரத்தின் ஒரு குவியலையே உருவாக்கி,அதிலிருந்து உண்ணத் தொடங்கினர். பிறகு அவர்களுக்கு அருகிலிருந்த மழை நீர் குட்டையிலிருந்து

தண்ணீர் அருந்தினர். அதுவே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸஃபிய்யா (ரலி) அவர்களை மணந்ததற்காக அளித்த மண விருந்தாக (வலீமா) அமைந்தது.
பிறகு நாங்கள் பயணத்தைத் தொடர்ந்து, மதீனாவின் சுவர்களைக் கண்டதும் அதற்காக நாங்கள் குதூகலித்தோம். நாங்கள் எங்கள் வாகனத்தை விரைவாகச் செலுத்தினோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் தமது வாகனத்தை விரைவாகச் செலுத்தினார்கள். அப்போது ஸஃபிய்யா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் வாகனத்தில் இருந்தார்கள். தமக்குப் பின்னால் (இருக்கையமைத்து) அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமரவைத்திருந்தார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது ஒட்டகம் கால் இடறி விழுந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் ஸஃபிய்யா (ரலி) அவர்களும் ஒட்டகத்திலிருந்து விழுந்துவிட்டனர். மக்களில் யாரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களையோ ஸஃபிய்யா (ரலி) அவர்களையோ பார்க்கவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தாமே எழுந்து,ஸஃபிய்யா (ரலி) அவர்களை (திரையிட்டு) மறைத்தார்கள். பிறகு நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நமக்கு எந்தப் பாதிப்பும் நேரவில்லை" என்றார்கள். பின்னர் நாங்கள் மதீனாவுக்குள் நுழைந்தோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் இளம் துணைவியர் புதுமணப்பெண்ணைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டு வந்தனர். அவர் கீழே விழுந்ததைக் குறித்து அகமகிழ்ந்தனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 15 ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களின் திருமணமும், பர்தா பற்றிய வசனம் அருளப்பெற்றதும், மணாளர் மணவிருந்து (வலீமா) அளிப்பதற்கான சான்றும்.**

2798 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்கள் மணவிலக்குச் செய்ததையடுத்து) ஸைனப் (ரலி) அவர்களது காத்திருப்புக் காலம் (இத்தா) முடிந்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸைத் (ரலி) அவர்களிடம், "ஸைனபிடம் என்னை (மணந்துகொள்வதை)ப் பற்றிப் பேசு" என்றார்கள். எனவே, ஸைத் (ரலி) அவர்கள் ஸைனப் (ரலி) அவர்களிடம் சென்றார்கள். அப்போது அவர் மாவு பிசைந்து கொண்டிருந்தார்.
ஸைத் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
ஸைனபைக் கண்டதும் என் மனத்தில் அவரைப் பற்றி மரியாதை ஏற்பட்டது. அவரை ஏறெடுத்துப் பார்க்கவும் என்னால் இயலவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரை(த் தாம் மணந்துகொள்வது) பற்றிக் கூறியதே அதற்குக் காரணம்.
எனவே, அவ்வாறே திரும்பி அவருக்கு எனது முதுகைக் காட்டியபடி நின்று, "ஸைனப்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உன்னை (மணக்க விரும்புவது) பற்றி உன்னிடம் கூறுவதற்காக (என்னை) அனுப்பிவைத்துள்ளார்கள்" என்றேன். அதற்கு அவர், "நான் என் இறைவனிடம் (முடிவு வேண்டிப் பிரார்த்தித்து) அனுமதி பெறாமல் ஏதும் செய்வதற்கில்லை" என்று கூறிவிட்டுத் தாம் தொழுமிடத்திற்குச் சென்று (தொழ) நின்றுவிட்டார்.

அப்போது (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு) குர்ஆன் வசனம் (33:37) அருளப்பெற்றது. (அதில், "(நபியே! ஸைத், தம் மனைவியான ஸைனபை விவாகரத்துச் செய்துவிட்ட பின்னர், உமக்கு நாம் அவரை மணமுடித்து வைத்தோம் என்று அல்லாஹ் அறிவித்தான்.) அதையடுத்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து அனுமதி பெறாமலேயே ஸைனபின் இல்லத்திற்குள் நுழைந்தார்கள்.
அனஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நண்பகல் வேளையில் எங்களுக்கு ரொட்டியும் இறைச்சியும் (மணவிருந்தாக) உண்ணக் கொடுத்தது எனக்கு நினைவில் உள்ளது.

அப்போது மக்கள் (விருந்து) உண்டுவிட்டுப் புறப்பட்டுச் சென்றனர். சிலர் மட்டும் உண்ட பின்பும் அவ்வீட்டிலேயே பேசிக்கொண்டு அமர்ந்திருந்தனர். எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெளியில் புறப்பட்டுச் சென்றார்கள். நானும் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றேன். அவர்கள் தம் துணைவியரின் அறைகளுக்குச் சென்று அவர்களுக்கு சலாம் (முகமன்) கூறலானார்கள். அப்போது துணைவியர், "அல்லாஹ்வின் தூதரே! தங்கள் (புது) மனைவியை எவ்வாறு கண்டீர்கள்?" என்று கேட்டார்கள். பிறகு மக்கள் (ஸைனப் (ரலி) அவர்கள் இருந்த) வீட்டிலிருந்து புறப்பட்டு விட்டனர் என்ற செய்தியை நான் அவர்களிடம் தெரிவித்தேனா,அல்லது அவர்கள் (வஹீ மூலம் அறிந்து) என்னிடம் தெரிவித்தார்களா என்று எனக்குத் தெரியவில்லை. அந்த வீட்டிற்குச் சென்று நுழைந்தார்கள். அவர்களுடன் நானும் நுழையப்போனேன். அப்போது அவர்கள் தமக்கும் எனக்குமிடையே திரையிட்டு விட்டார்கள். அப்போது பர்தா பற்றிய இறைவசனமும் அருளப்பெற்று, மக்களுக்குக் கிடைக்க வேண்டிய அறிவுரை கிடைத்தது.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ராஃபிஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் கூடுதலாக இடம்பெற்றிருப்பதாவது: "இறைநம்பிக்கை கொண்டவர்களே! நபியின் இல்லங்களில் (அழைப்பின்றி) நுழையாதீர்கள். அவ்வாறு (நபியின் இல்லத்தில் நடக்கும்) விருந்துக்காக உங்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டாலும், அப்போதும்கூட உணவு தயாராவதை எதிர்பார்த்து (அங்கே காத்து)இராதீர்கள்" என்று தொடங்கும் (33:53ஆவது) வசனமே பர்தா பற்றிய அந்த வசனமாகும்.

2799 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸைனப் (ரலி) அவர்களை மணந்துகொண்ட போது அளித்த மணவிருந்தைப் போன்று தம் துணைவியரில் வேறெவரை மணந்தபோதும் அளித்ததை நான் பார்க்கவில்லை; ஏனெனில், (ஸைனப் (ரலி) அவர்களை மணந்தபோது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் ஆட்டை அறுத்(து மணவிருந்தளித்)தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2800 அப்துல் அஸீஸ் பின் ஸுஹைப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸைனப் (ரலி) அவர்களை மணந்துகொண்டபோது அளித்த மணவிருந்தைவிட "அதிகமாக' அல்லது

"சிறப்பாக'த் தம் துணைவியரில் வேறெவரை மணந்தபோதும் மணவிருந்தளிக்கவில்லை' என்று கூறியதை நான் கேட்டேன். அப்போது ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள், (அனஸ் (ரலி) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மணவிருந்தாக என்ன அளித்தார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள், "மக்களுக்கு ரொட்டியையும் இறைச்சியையும் உண்ணக்கொடுத்தார்கள்; (உண்ண முடியாமல்) மக்கள் அதை விட்டுச்சென்றனர்" என விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2801 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களை மணமுடித்தபோது மக்களை (வலீமா விருந்துக்கு) அழைத்தார்கள். மக்கள் (விருந்து) உண்டுவிட்டு, பிறகு அமர்ந்து பேசிக்கொண்டே இருந்தனர். நபி (ஸல்) அவர்கள் எழுந்துபோகத் தயாராவதைப் போன்று காட்டலானார்கள். ஆனால், மக்கள் எழுந்தபாடில்லை. அதைக் கண்டபோது நபி (ஸல்) அவர்கள் (ஒரேயடியாக) எழுந்துவிட்டார்கள். அவர்கள் எழுந்துவிடவே (அவர்களுடன்) மற்றவர்களும் எழுந்துவிட்டனர்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஆஸிம் (ரஹ்) மற்றும் இப்னு அப்தில் அஃலா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் கூடுதலாகப் பின்வரும் தகவல் இடம்பெற்றுள்ளது:
ஆனால், மூன்று பேர் மட்டும் அமர்ந்து (பேசிக்)கொண்டேயிருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் (ஸைனப் (ரலி) அவர்கள் இருந்த வீட்டுக்குள்) செல்லப்போனார்கள். அப்போதும் அவர்கள் (மூவரும்) அமர்ந்து (பேசிக்) கொண்டேயிருந்தார்கள். பிறகு அவர்கள் (மூவரும்) எழுந்து சென்றுவிட்டார்கள்.
நான் சென்று, அவர்கள் எழுந்து சென்றுவிட்டார்கள் என நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தேன். மீண்டும் (வெளியே) வந்து பார்த்துவிட்டு நபி (ஸல்) அவர்கள் உள்ளே சென்றார்கள். நானும் அவர்களுடன் உள்ளே நுழையப்போனேன். அதற்குள் நபி (ஸல்) அவர்கள் எனக்கும் தமக்குமிடையே திரையைப் போட்டுவிட்டார்கள்.
அப்போதுதான் வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், "இறைநம்பிக்கை கொண்டோரே! நபியின் இல்லங்களில் (அழைப்பின்றி) நுழையாதீர்கள்" என்று தொடங்கும் (33:53ஆவது) வசனத்தை அருளினான்.

2802 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பர்தாவின் சட்டத்தை (எடுத்துரைக்கும் வசனம் இறங்கிய சூழ்நிலை குறித்து) மக்களிலேயே அதிகமாக அறிந்தவன் நான்தான். உபை பின் கஅப் (ரலி) அவர்கள் என்னிடம் அதைப் பற்றிக் கேட்டுவந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களின் மணாளராக ஆனார்கள். ஸைனப் (ரலி) அவர்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனா நகரில் மணமுடித்திருந்தார்கள். அப்போது அவர்கள் உச்சிப் பொழுதுக்குப் பின் மக்களை மணவிருந்துக்காக (வலீமா) அழைத்திருந்தார்கள். (விருந்து முடிந்து) மக்கள் எழுந்து சென்ற பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சற்று நேரம்) அமர்ந்திருந்தார்கள். அவர்களுடன் வேறுசிலரும் அமர்ந்திருந்தனர். இறுதியில்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து சென்றுவிட்டார்கள். அவர்களுடன் நானும் சென்றேன். அவர்கள் (தம் துணைவியார்) ஆயிஷா (ரலி) அவர்களின் அறை வாசலை அடைந்தார்கள். பிறகு (விருந்து நடந்த வீட்டில்) அமர்ந்திருந்தவர்கள் வெளியேறியிருப்பர் எனக் கருதித் திரும்பிவந்தார்கள். நானும் அவர்களுடன் திரும்பினேன். அப்போதும் அந்தச் சில பேர் அங்கேயே அமர்ந்திருந்தனர்.
எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திரும்பிவிட, அவர்களுடன் நானும் இரண்டாவது முறையாகத் திரும்பினேன். ஆயிஷா (ரலி) அவர்களின் அறையை அடைந்தார்கள். மீண்டும் (புதுமணப் பெண்ணிருந்த) வீட்டிற்குத் திரும்பினார்கள். அவர்களுடன் நானும் திரும்பினேன். இப்போது அந்தச் சிலர் எழுந்து சென்றுவிட்டிருந்தனர். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கும் தமக்குமிடையே திரையொன்றை இட்டார்கள். அப்போதுதான், அல்லாஹ் பர்தா(வின் சட்டத்தைக் கூறும்) வசனத்தை அருளினான்.

2803 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களை) மணமுடித்துத் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள். அப்போது என் தாயார் உம்மு சுலைம் (ரலி) அவர்கள் "ஹைஸ்' எனும் பலகாரத்தைச் செய்து, அதை ஒரு (கல்) பாத்திரத்தில் வைத்து, "அனஸே! இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டு சென்று, இதை என் தாயார் உங்களுக்காகக் கொடுத்தனுப்பியுள்ளார். அவர் உங்களுக்கு சலாம் சொல்லச் சொன்னார்; அல்லாஹ்வின் தூதரே! இது உங்களுக்கு எங்களால் (முடிந்த) சிறிதளவு (அன்பளிப்பு) ஆகும் என்றும் கூறினார் எனச் சொல்" என்றார்கள்.
அவ்வாறே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அதைக் கொண்டுசென்று, "என் தாயார் உங்களுக்கு சலாம் கூறுகிறார். அல்லாஹ்வின் தூதரே! இது உங்களுக்கு எங்களால் முடிந்த சிறிதளவு (அன்பளிப்பு) ஆகும் என்று கூறினார்" என்றேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதை (ஓரிடத்தில்) வை" என்று கூறிவிட்டு, "நீ சென்று எனக்காக இன்ன மனிதரையும் இன்ன மனிதரையும் இன்ன மனிதரையும் மற்றும் நீ சந்திப்பவர்களையும் அழைப்பாயாக!" என்று கூறி, சிலரது பெயரைக் குறிப்பிட்டார்கள். அவ்வாறே அவர்கள் பெயர் குறிப்பிட்டவர்களையும் நான் சந்தித்தவர்களையும் அழைத்தேன்.
-இதை அறிவிப்பவரான அபூஉஸ்மான் அல்ஜஅத் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் அனஸ் (ரலி) அவர்களிடம், "அவர்கள் எத்தனை பேர் இருந்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு, "ஏறக்குறைய முன்னூறு பேர் இருந்தார்கள்" என அனஸ் (ரலி) அவர்கள் விடையளித்தார்கள்.
(தொடர்ந்து அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்:) என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அனஸ்! அந்தப் பாத்திரத்தை எடு" என்றார்கள். அப்போது மக்கள் வந்து நுழைந்தனர். (வீட்டின்) திண்ணையும் அறையும் நிரம்பியது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பத்துப் பத்துப் பேராக வட்டமாக அமர்ந்து, ஒவ்வொருவரும் தமது கைக்கு அருகிலிருக்கும் பகுதியிலிருந்து (எடுத்து) உண்ணட்டும்" என்றார்கள். அவ்வாறே அவர்கள் (பத்துப் பேர் வந்து) வயிறு நிரம்ப உண்டனர். ஒரு குழுவினர் சாப்பிட்டுவிட்டுச் சென்றதும் மற்றொரு குழுவினர் வந்தனர். இவ்வாறு அவர்கள் அனைவரும் உண்டனர்.

அப்போது, "அனஸ்! அந்தப் பாத்திரத்தைத் தூக்கு" என்றார்கள். நான் அந்தப் பாத்திரத்தைத் தூக்கியபோது, நான் அதைக் கீழே வைத்த நேரத்தில் அதிகமாக இருந்ததா, அல்லது தூக்கிய நேரத்தில் அதிகமாக இருந்ததா என எனக்குத் தெரியவில்லை.
(எல்லாரும் புறப்பட்டுச் சென்ற பிறகு) மக்களில் ஒரு குழுவினர் மட்டும் (எழுந்து செல்லாமல்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வீட்டில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அமர்ந்திருந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியார் (ஸைனப் (ரலி) அவர்கள்) தமது முகத்தைச் சுவர் பக்கம் திருப்பிக்கொண்டிருந்தார். அ(ங்கு அமர்ந்திருந்த)வர்கள் (எழுந்து செல்லாமல்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குச் சுமையாக இருந்தனர்.
எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டுத் தம்முடைய மற்றத் துணைவியரிடம் சென்று சலாம் (முகமன்) சொல்லி (நலம் விசாரித்து)விட்டுத் திரும்பி வந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திரும்பிவந்ததைக் கண்டபோது, அக்குழுவினர் நாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குச் சுமையாக இருந்துவிட்டோம் என்று எண்ணினர். ஆகவே, வீட்டு வாசலை நோக்கி விரைந்துவந்து அனைவரும் வெளியேறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து திரையைத் தொங்க விட்டுவிட்டு வீட்டிற்குள் நுழைந்துகொண்டார்கள். நான் அந்த அறையில் அமர்ந்துகொண்டிருந்தேன். சிறிது நேரம்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருந்திருப்பார்கள். அதற்குள் வெளியேறி என்னிடம் வந்தார்கள். அப்போது (அவர்களுக்கு) இந்த (33:53ஆவது) வசனம் அருளப்பெற்றிருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டுவந்து மக்களுக்கு அவ்வசனங்களை ஓதிக் காட்டினார்கள். "இறைநம்பிக்கை கொண்டவர்களே! நபியின் இல்லங்களில் (அழைப்பின்றி) நுழையாதீர்கள். அவ்வாறு (அங்கு நடக்கும்) விருந்திற்காக உங்களுக்கு அனுமதியளிக்கப்பட்டாலும், அப்போதும்கூட உணவு தயாராவதை எதிர்பார்த்து (அங்கே காத்து)இராதீர்கள். மாறாக, (உணவு தயார்;வாருங்கள் என) நீங்கள் அழைக்கப்படும்போது நுழையுங்கள். சாப்பிட்டு முடிந்ததும் கலைந்து சென்றுவிடுங்கள். பேசிக்கொண்டிருப்பதில் ஆர்வமாய் இருந்து விடாதீர்கள். நிச்சயமாக, உங்களது இச்செயல் நபிக்கு வேதனை அளிக்கிறது" என்பதே அந்த வசனமாகும்.
அறிவிப்பாளர் அபூஉஸ்மான் அல்ஜஅத் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: "இந்த வசனம் இறங்கிய சூழ்நிலை குறித்தும்,நபி (ஸல்) அவர்களின் துணைவியர் பர்தாவில் இருந்தது குறித்தும் மக்களிலேயே நன்கறிந்தவன் நானே ஆவேன்" என்று அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

2804 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஸைனப் (ரலி) அவர்களை மணந்துகொண்டபோது. (என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்கள் ஒரு கல் பாத்திரத்தில் "ஹைஸ்' எனும் பலகாரத்தை வைத்து அதை (என்னிடம் கொடுத்து) நபி (ஸல்) அவர்களிடம் அன்பளிப்பாக அனுப்பி வைத்தார்கள். (அவ்வாறே நான் கொண்டுசென்று கொடுத்தேன்.) அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ சென்று, நீ சந்திக்கின்ற முஸ்லிம்களை எனக்காக அழை(த்து

வா)" என்றார்கள். அவ்வாறே நான் சந்தித்தவர்களை அழைத்(து வந்)தேன். அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து சாப்பிட்டுவிட்டுப் புறப்பட்டுச் சென்றனர். நபி (ஸல்) அவர்கள் தமது கையை அந்தப் பலகாரத்தின் மீது வைத்துப் பிரார்த்தித்தார்கள். அப்போது அல்லாஹ் நாடிய சில பிரார்த்தனையை அவர்கள் கூறினார்கள்.
நான் சந்தித்த அனைவரையும் ஒருவர் விடாமல் அழைத்தேன். அவர்கள் அனைவரும் (வந்து) வயிறு நிரம்பச் சாப்பிட்டுவிட்டுச் சென்றனர். அவர்களில் ஒரு குழுவினர் மட்டும் நபி (ஸல்) அவர்கள் இருக்க, நீண்ட நேரம் பேசிக்கொண்டே (அமர்ந்து) இருந்தனர். அவர்களிடம் (எழுந்து செல்லுமாறு) ஏதேனும் கூற நபி (ஸல்) அவர்கள் வெட்கப் பட்டார்கள். எனவே, அவர்களை நபியவர்கள் அப்படியே வீட்டில் விட்டுவிட்டு (தாம் மட்டும் எழுந்து) வெளியே சென்றார்கள். அப்போது வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், "இறைநம்பிக்கை கொண்டவர்களே! நபியின் இல்லங்களில் (அழைப்பின்றி) நுழையாதீர்கள்" என்று தொடங்கும் (33:53ஆவது) வசனத்தை அருளினான்.
கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"அவரது பாத்திரத்தைப் பார்த்துக்கொண்டிராதீர்கள் (ஃகைர நாழிரீன இனாஹு)" என்பதன் பொருள், "உணவு தயாராவதை எதிர்பார்த்து இராதீர்கள்" என்பதாகும்.

## பாடம் : 16 விருந்துக்கான அழைப்பை ஏற்பது தொடர்பாக வந்துள்ள கட்டளை.

2805 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் மணவிருந்துக்கு (வலீமா) அழைக்கப்பட்டால், அதை ஏற்றுச் செல்லட்டும்!
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2806 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் விருந்துக்கு (வலீமா) அழைக்கப்பட்டால், அதை ஏற்றுச் செல்லட்டும்!
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான காலித் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள், "வலீமா என்பது மணவிருந்தையே குறிக்கும் என உபைதுல்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்" என்றார்கள்.

2807 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் மணவிருந்துக்கு (வலீமா) அழைக்கப்பட்டால், அதை ஏற்றுச் செல்லட்டும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2808 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் விருந்துக்கு அழைக்கப்பட்டால் செல்லுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2809 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் சகோதரரை விருந்துக்கு அழைத்தால், அதை ஏற்று அவர் செல்லட்டும். அது மணவிருந்தாக இருந்தாலும் சரி, மற்ற விருந்தாக இருந்தாலும் சரி.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2810 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மணவிருந்துக்கோ, மற்ற விருந்துக்கோ அழைக்கப்பட்டவர் அதை ஏற்றுச் செல்லட்டும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2811 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் விருந்துக்கு அழைக்கப்பட்டால் செல்லுங்கள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2812 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்த (மண)விருந்துக்கு நீங்கள் அழைக்கப்பட்டால் அதை ஏற்றுக்கொள்ளுங்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான நா:ஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை அறிவித்த அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், (நஃபில் எனும் கூடுதல்) நோன்பு நோற்றிருந்த நிலையில்கூட மணவிருந்துக்கும் மற்ற விருந்துகளுக்கும் சென்றுவந்தார்கள்.

2813 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆட்டுக்கால் விருந்துக்கு நீங்கள் அழைக்கப்பட்டாலும், ஏற்றுக்கொள்ளுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2814 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் உணவு உண்ண அழைக்கப்பெற்றால், ஏற்றுக்கொள்ளட்டும்.(அங்கு சென்று) விரும்பினால் உண்ணட்டும். இல்லையேல் (உண்பதை) விட்டுவிடட்டும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) அவர்களது அறிவிப்பில்"உணவு உண்ண' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2815 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் (விருந்துக்கு) அழைக்கப்பெற்றால் ஏற்றுக்கொள்ளட்டும்.அவர் நோன்பு நோற்றிருந்தால் (அழைத்தவருக்காகப்) பிரார்த்திக்கட்டும்; நோன்பு நோற்காமலிருந்தால் உண்ணட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2816 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஏழைகளை விட்டுவிட்டு, செல்வர்கள் மட்டுமே அழைக்கப்படும் மணவிருந்து (வலீமா) உணவே, கெட்ட உணவாகும். (அழைப்பை ஏற்று) விருந்துக்குச் செல்லாதவர் அல்லாஹ்விற்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்துவிட்டார்.

2817 சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடம் "அபூபக்ர் அவர்களே! செல்வர்களின் உணவே உணவுகளில் தீயதாகும்" எனும் இந்த ஹதீஸ் எப்படி (சரிதானா)? என்று கேட்டேன். அதைக் கேட்டு அவர்கள் சிரித்துவிட்டு, " "செல்வர்களின் உணவே உணவுகளில் மிகத் தீயதாகும்' என்றில்லை அந்த ஹதீஸ்" என்றார்கள்.
என் தந்தையும் செல்வராயிருந்ததால் அந்த ஹதீஸைக் கேட்டு நான் பதற்றமடைந்திருந்தேன். எனவே, ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடம் அந்த ஹதீஸைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் அப்துர் ரஹ்மான் அல்அஃரஜ் (ரஹ்) அவர்கள் தம்மிடம் கூறினார்கள் என மேற்கண்ட அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் ஹதீஸில் உள்ளதைப் போன்றே (அதாவது எழைகளை விட்டுவிட்டு, செல்வர்கள் மட்டுமே அழைக்கப்படும் மணவிருந்து உணவே, கெட்ட உணவாகும் என்று) அறிவித்தார்கள்.

2818 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது.

2819 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வருபவர்கள் (ஏழைகள்) தடுக்கப்பட்டு, மறுப்பவர்கள் (செல்வர்கள்) அழைக்கப்படும் மணவிருந்து (வலீமா) உணவே, கெட்ட உணவாகும். விருந்து அழைப்பை ஏற்காதவர் அல்லாஹ்விற்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்துவிட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 17 மூன்று முறை மணவிலக்கு அளிக்கப்பட்ட பெண் வேறொரு கணவனை மணந்து, அவன் அவளுடன் தாம்பத்திய உறவுகொண்டு,பின்னர் அவனும் மணவிலக்குச் செய்து, அவளது காத்திருப்புக் காலம் (இத்தா) முடியாத வரை அவள் முதல் கணவனுக்கு (வாழ்க்கைப்பட) அனுமதிக்கப்படமாட்டாள்.

2820 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
ரிஃபாஆ அல்குறழீ (ரலி) அவர்களின் துணைவியார் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் ரிஃபாஆவிடம் (மனைவியாக) இருந்தேன். அவர் என்னை ஒட்டுமொத்தமாக மணவிலக்குச் செய்துவிட்டார். ஆகவே, நான் (அவருக்குப் பிறகு) அப்துர் ரஹ்மான் பின் அஸ்ஸபீர் அவர்களை மணமுடித்துக்கொண்டேன். அவருடன் (இன உறுப்பு என்று) இருப்பது (இந்த முகத்திரைத்) துணியின் குஞ்சத்தைப் போன்றதுதான்" என்று கூறினார். இதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்தார்கள். பின்னர், "நீ (உன் முதல் கணவர்)

ரிஃபாஆவிடம் திரும்பிச்செல்ல விரும்புகிறாயா? நீ (உன் இரண்டாவது கணவரான) இவரிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்காத வரையிலும், இவர் உன்னிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்காத வரையிலும் அது முடியாது" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அப்போது (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அமர்ந்துகொண்டிருந்தார்கள். காலித் பின் சயீத் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் (தமக்கு உள்ளே நுழைய அனுமதிக்கப்படுவதை) எதிர்பார்த்தவராக வாசலில் இருந்தார். அவர், "அபூபக்ரே! இந்தப் பெண் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பகிரங்கமாகச் சொல்லிக்கொண்டிருப்பதை நீங்கள் செவியுறவில்லையா? (நீங்கள் இவரைத் தடுக்கக் கூடாதா?" என்று கேட்டார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2821 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ரிஃபாஆ அல்குறழீ (ரலி) அவர்கள் தம் துணைவியாரை ஒட்டுமொத்தமாக மணவிலக்குச் செய்துவிட்டார்கள். அவருக்குப் பிறகு அப்துர் ரஹ்மான் பின் அஸ்ஸபீர் (ரலி) அவர்களை அவர் மணமுடித்துக்கொண்டார். அப்போது அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் ரிஃபாஆ (ரலி) அவர்களிடம் (மனைவியாக) இருந்தேன். என்னை அவர் மூன்று தலாக்குகளில் இறுதித் தலாக்கும் சொல்லிவிட்டார். அவருக்குப் பிறகு நான் அப்துர் ரஹ்மான் பின் அஸ்ஸபீர் என்பாரை மணந்துகொண்டேன். அல்லாஹ்வின் மீதாணையாக! (இரண்டாவது கணவரான) அவருக்கு (இனஉறுப்பு என்று) இருப்பதெல்லாம் இதோ இந்த முகத்திரையின் குஞ்சத்தைப் போன்றதுதான்" என்று கூறித் தமது முகத்திரையின் குஞ்சத்தைப் பிடித்துக் காட்டினார். இதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்தார்கள்.பிறகு, "நீ (முதல் கணவர்) ரிஃபாஆவிடமே திரும்பச் செல்ல விரும்புகிறாய் போலும். (இரண்டாவது கணவரான) இவர் உன்னிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்காத வரையிலும், நீ அவரிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்காத வரையிலும் அது முடியாது" என்றார்கள்.
அப்போது (என் தந்தை) அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் அமர்ந்திருந்தார்கள். காலித் பின் சயீத் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் தமக்கு உள்ளே வர அனுமதி கிடைக்காததால் அறையின் வாசலில் உட்கார்ந்திருந்தார். அபூபக்ர் (ரலி) அவர்களை காலித் (ரலி) அவர்கள் அழைத்து, "அபூபக்ரே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முன்னிலையில் பகிரங்கமாக இப்படிப் பேசக்கூடாதென நீங்கள் இப்பெண்ணைக் கண்டிக்கக் கூடாதா?" என்று கேட்கலானார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2822 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ரிஃபாஆ அல்குறழீ (ரலி) அவர்கள் தம் மனைவியை மணவிலக்குச் செய்து விட்டார்கள். பின்னர் அவரை அப்துர் ரஹ்மான் பின் அஸ்ஸபீர் மணந்துகொண்டார். இந்நிலையில் அப்பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! ரிஃபாஆ

அவர்கள் என்னை மூன்று தலாக்குகளில் இறுதித் தலாக்கும் சொல்லிவிட்டார்" என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2823 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "ஒரு பெண் ஒருவருக்கு வாழ்க்கைப் பட்டிருந்தாள். பின்னர் அவளை அவர் மணவிலக்குச் செய்துவிட்டார். எனவே, அவள் வேறொருவரை மணந்துகொண்டாள். அக்கணவன் அவளுடன் தாம்பத்திய உறவு கொள்வதற்கு முன் அவளை மணவிலக்குச் செய்துவிடுகிறான். இந்நிலையில் அவள் முந்தைய கணவருக்கு அனுமதிக்கப்பட்டவளாக ஆவாளா?" என்று கேட்கப்பட்டது.
அதற்கு அவர்கள் "இ(ரண்டாவது கண)வர் அவளிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்காத வரை அது முடியாது" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2824 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் தம் மனைவியை மூன்று தலாக் சொல்லிவிட்டார். ஆகவே, அவளை இன்னொருவர் மணந்துகொண்டார். பின்னர் அவளிடம் தாம்பத்திய உறவு கொள்வதற்கு முன் அவரும் தலாக் சொல்லிவிட்டார். இந்நிலையில் அவளை அவளுடைய முந்தைய கணவர் மணமுடித்துக்கொள்ள விரும்பினார். ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (இது குறித்துக்) கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை; முந்தைய கணவர் (தாம்பத்திய இன்பம்) அனுபவித்ததைப் போன்றே (அவளுடைய இரண்டாவது கணவரான) இவரும் அவளிடம் இன்பம் அனுபவிக்காத வரை அது முடியாது" என்று கூறிவிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 18 தாம்பத்திய உறவின்போது ஓத வேண்டிய விரும்பத்தகுந்த பிரார்த்தனை.

2825 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொள்ள விழையும்போது "பிஸ்மில்லாஹி; அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான வ ஜன்னிபிஷ் ஷைத்தான மா ரஸக்த்தனா' (அல்லாஹ்வின் திருப்பெயரால்; இறைவா! எங்களைவிட்டு ஷைத்தானை விலக்கிவைப்பாயாக! எங்களுக்கு நீ வழங்கும் (குழந்தைச்) செல்வத்தைவிட்டும் ஷைத்தானை விலக்கிவைப்பாயாக!") என்று பிரார்த்தித்து, அதன் பின் அந்தத் தம்பதியருக்குக் குழந்தை விதிக்கப்பட்டால், அக்குழந்தைக்கு ஒரு போதும் ஷைத்தான் தீங்கிழைப்பதில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பிஸ்மில்லாஹி' ("அல்லாஹ்வின் திருப் பெயரால்') எனும் குறிப்பு இடம்பெறவில்லை. சுஃப்யான் அஸ்ஸவ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்து அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில் "பிஸ்மில்லாஹ்' இடம்பெற்றுள்ளது; மன்ஸூர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பிஸ்மில்லாஹ் கூறியதாகவே கருதுகிறேன்' என இடம் பெற்றுள்ளது.

**பாடம் : 19 ஒருவர் தம் மனைவியிடம் முன்புறமாகவும் பின்புறமாகவும் பெண் உறுப்பில் புணரலாம்; ஆசனவாயில் புணரலாகாது.**

2826 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் தம் மனைவியிடம் பின்புறத்திலிருந்து பிறவி உறுப்பில் உடலுறவு கொண்டால் (பிறக்கும்) குழந்தை மாறுகண் கொண்டதாக இருக்கும் என்று யூதர்கள் சொல்லிவந்தார்கள். எனவே, "உங்கள் மனைவியர் உங்களுக்கு விளைநிலம் (போன்றவர்கள்). எனவே, நீங்கள் விரும்பும் வகையில் உங்களது விளைநிலத்திற்குச் செல்லுங்கள்" எனும் (2:223ஆவது) இறை வசனம் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2827 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பின்புறத்திலிருந்து பிறவி உறுப்பில் புணரப்பட்ட பெண் கருவுற்றால் அவள் (பெற்றெடுக்கும்) குழந்தை மாறுகண் கொண்டதாக இருக்கும் என்று யூதர்கள் சொல்லி வந்தார்கள். அப்போதுதான் "உங்கள் மனைவியர் உங்களின் விளைநிலம் (போன்றவர்கள்). எனவே, நீங்கள் விரும்பும் வகையில் உங்களது விளைநிலத்திற்குச் செல்லுங்கள்" எனும் (2:223ஆவது) வசனம் அருளப்பெற்றது.

2828 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் எட்டு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்து நுஅமான் பின் ராஷித் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில், "விரும்பினால் அவள் கவிழ்ந்து படுத்திருக்கும் நிலையில்; விரும்பினால் மல்லாந்து படுத்திருக்கும் நிலையில். ஆயினும், பெண் உறுப்பில்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 20 ஒரு பெண், தன் கணவனின் படுக்கைக்குச் செல்ல மறுப்பது தடை செய்யப்பட்டுள்ளது.**

2829 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பெண் (தாம்பத்தியத்தைப் பகிர்ந்து கொள்ள மறுத்து) தன் கணவனின் படுக்கையை வெறுத்து (தனியாக) இரவைக் கழித்தால், பொழுது விடியும்வரை அவளை வானவர்கள் சபித்துக்கொண்டிருக்கின்றனர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அவள்(கணவனின் படுக்கைக்குத்) திரும்பும்வரை (சபிக்கின்றனர்)" என இடம் பெற்றுள்ளது.

2830 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! ஒருவர் தம் மனைவியை அவளது படுக்கைக்கு அழைத்து, அவள் அவருக்கு (உடன்பட) மறுத்தால் வானிலுள்ளவன் அவள் மீது கோபம் கொண்டவனாகவே இருக்கிறான்; அவள்மீது கணவன் திருப்தி கொள்ளும்வரை.

2831 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் தம் மனைவியைப் படுக்கைக்கு அழைத்து, அவரிடம் அவள் செல்லாமலிருக்க, அதை முன்னிட்டு அவள்மீது கோபம் கொண்ட நிலையில் அவர் இரவைக் கழிப்பாராயின், விடியும்வரை அவளை வானவர்கள் சபித்துக்கொண்டேயிருக்கின்றனர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 21 மனைவியின் (தாம்பத்திய) இரகசியத்தை வெளியிடுவது தடை செய்யப் பட்டுள்ளது.

2832 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கணவனும் மனைவியும் பரஸ்பரம் தாம்பத்திய உறவில் ஈடுபட்டுப் பின்னர் மனைவியின் (தாம்பத்திய) இரகசியத்தை (பிறரிடம்) பரப்புகின்ற மனிதனே அல்லாஹ்விடம் மறுமை நாளில் தகுதியால் மிகவும் மோசமானவன் ஆவான்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2833 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் அல்லாஹ்விடம் மாபெரும் நம்பிக்கை(த் துரோகம்) யாதெனில், கணவனும் மனைவியும் பரஸ்பரம் தாம்பத்திய உறவில் ஈடுபட்டுவிட்டுப் பின்னர் அவளது இரகசியத்தை அவன் (மக்களிடையே) பரப்புவதேயாகும்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 22 புணர்ச்சி இடைமுறிப்பின் ("அஸ்ல்') சட்டம்.

2834 அப்துல்லாஹ் பின் முஹைரீஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் அபூஸிர்மா (ரஹ்) அவர்களும் (பள்ளிவாசலில் அமர்ந்திருந்த) அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது அபூஸிர்மா அவர்கள், "அபூசயீத் அவர்களே! "அஸ்ல்' பற்றித் தாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதைச்

செவியுற்றுள்ளீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அபூசயீத் (ரலி) அவர்கள், "ஆம்' என்று கூறிவிட்டு(ப் பின்வருமாறு) அறிவித்தார்கள்:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பனூ முஸ்தலிக் ("முரைசீஉ') போரில் கலந்து கொண்டோம். அப்போது,உயர்ந்த அரபு இனப் பெண்களைப் போர்க்கைதிகளாகப் பிடித்தோம். நீண்ட காலம் நாங்கள் திருமணம் செய்துகொள்ளாதவர்களாக (இருந்ததால், தாம்பத்திய உறவில் நாட்டம் கொண்டவர்களாக) இருந்தோம். அதே நேரத்தில், (போர்க் கைதிகளை விடுதலை செய்து) நஷ்டஈடு பெறுவதற்கு ஆசையும்பட்டோம், ஆகவே, (போர்க் கைதிகளான பெண்களிடம்) தாம்பத்திய சுகம் அடையவும், (அதே சமயம் அவர்கள் கருவுற்றுவிடக் கூடாது என்பதற்காக) "அஸ்ல்' செய்து கொள்ளவும் விரும்பினோம்.

இந்நிலையில் "நம்மிடையே அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் இருக்க, அவர்களிடம் கேட்காமல் நாம் "அஸ்ல்'செய்வதா?" என்று நாங்கள் பேசிக்கொண்டோம். பின்னர் அது தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நாங்கள் கேட்டோம். அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவ்வாறு நீங்கள் (அஸ்ல்) செய்யாமலிருப்பதால் உங்கள் மீது (குற்றம்) இல்லை. படைக்க வேண்டுமென அல்லாஹ் எழுதிவிட்ட எந்த ஓர் உயிரும் மறுமை நாள்வரை உருவாகியே தீரும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2835 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஏனெனில், அல்லாஹ் மறுமை நாள்வரை தான் படைக்கவிருப்பவற்றை எழுதி (முடித்து)விட்டான்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

2836 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (பனூ முஸ்தலிக் போரில்) சில போர்க் கைதிகளைப் பெற்றோம். (எங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்ட பெண் கைதிகளுடன் உடலுறவு கொள்ளவும்) "அஸ்ல்' செய்து கொள்ளவும் விரும்பினோம். அது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினோம். அப்போது அவர்கள், "நீங்கள் (அஸ்ல்) செய்துகொண்டுதான் இருக்கிறீர்களா? நீங்கள் (அஸ்ல்) செய்துகொண்டு தான் இருக்கிறீர்களா? நீங்கள் (அஸ்ல்) செய்துகொண்டு தான் இருக்கிறீர்களா?" என்று கேட்டுவிட்டு, "மறுமை நாள்வரை உருவாக வேண்டிய எந்த உயிரும் கட்டாயம் உருவாகியே தீரும்" என்று கூறினார்கள்.

2837 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் அதை (அஸ்லை)ச் செய்யாமலிருப்பதால் உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. ஏனெனில், அதுவெல்லாம் (அதாவது கருத்தரிப்பதும் கருத்தரிக்காமல் இருப்பதும்) விதி யாகும்" என்றார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அனஸ் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) மஅபத் பின் சீரீன் (ரஹ்) அவர்களிடம், "இதை நீங்கள் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஆம்' என்றார்கள்.

2838 மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அவ்வாறு நீங்கள் (அஸ்ல்) செய்யாமலிருப்பதால் உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. ஏனெனில், அதுவெல்லாம் விதியாகும்" என்று கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.
பஹ்ஸ் பின் அசத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ஷுஅபா (ரஹ்) அவர்கள் "நான் அனஸ் பின் சீரீன் (ரஹ்) அவர்களிடம் "நீங்கள் இதை அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஆம்' என்றார்கள்" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

2839 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் "அஸ்ல்' (புணர்ச்சி இடைமுறிப்பு) குறித்து வினவப்பட்டது. அதற்கு அவர்கள், "அவ்வாறு (அஸ்ல்) செய்யாமலிருப்பதால் உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. அதுவெல்லாம் விதியாகும்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
(அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களின் அடிமையாயிருந்த) முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் "உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை' என்பது, தடையுத்தரவுக்கு நெருக்கமான சொல்லாட்சி என்று கூறினார்கள்.

2840 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் அருகில் "அஸ்ல்' (புணர்ச்சி இடைமுறிப்பு) பற்றிப் பேசப்பட்டது. அப்போது அவர்கள், "என்ன அது?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "பாலூட்டும் தம் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொள்ள விரும்பும் ஒருவர், அதனால் அவள் கருவுற்று விடுவதை விரும்பாமல் இருக்கலாம். (அவ்வாறே) தம் அடிமைப்பெண்ணோடு உறவு கொள்ள விரும்பும் ஒருவர்,அதனால் அவள் கருவுற்றுவிடுவதை விரும்பாமல் இருக்கலாம். (அப்போது "அஸ்ல்' செய்துகொள்வார்)" என்று விடையளித்தனர். நபி (ஸல்) அவர்கள், "அவ்வாறு செய்யாமலிருப்பதால் உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. அதுவெல்லாம் விதியாகும்" என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல் லாஹ் பின் அவ்ன் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை நான் ஹசன் பின் அபில் ஹசன் யசார் (ரஹ்) அவர்களிடம் அறிவித்தேன். அப்போது அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! இது ஒரு கண்டனத்தைப் போன்றுள்ளது" என்று கூறினார்கள்.
- அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்து அப்துர் ரஹ்மான் பின் பிஷ்ர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், மஅபத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள், "நாங்கள் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடம் "அஸ்ல் தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிய ஹதீஸ் எதையேனும் நீங்கள் செவியுற்றுள்ளீர்களா?' என்று கேட்டோம். அதற்கு அவர்கள் மேற்கண்ட ஹதீஸில்

உள்ளதைப் போன்று "அதுவெல்லாம் விதியாகும்' என்பதுவரை அறிவித்தார்கள்" என இடம்பெற்றுள்ளது.

2841 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "புணர்ச்சி இடைமுறிப்பு' (அஸ்ல்) குறித்துப் பேசப்பட்டது. அப்போது அவர்கள், "அதை உங்களில் ஒருவர் ஏன் செய்கிறார்?" என்று கேட்டுவிட்டு, -(கவனிக்கவும்: "உங்களில் எவரும் அவ்வாறு செய்ய வேண்டாம்"என்று அவர்கள் குறிப்பிடவில்லை)– "படைக்கப்பட உள்ள எந்த உயிரையும் அல்லாஹ் படைத்தே தீருவான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2842 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "புணர்ச்சி இடைமுறிப்பு' (அஸ்ல்) செய்வதைப் பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "விந்தின் அனைத்து (உயிரணு)க் கூறுகளிலிருந்தும் குழந்தை உருவாவதில்லை. (ஒரே உயிரணு போதும்.) அல்லாஹ் ஒன்றைப் படைக்க நாடிவிட்டால் அவனை எதுவும் தடுக்க முடியாது" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2843 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "என்னிடம் ஓர் அடிமைப் பெண் இருக்கிறாள். அவளே எங்களுக்குப் பணிவிடை செய்பவளாகவும் தண்ணீர் சுமப்பவளாகவும் உள்ளாள். அவளிடம் நான் சென்றுவருகிறேன். (அதே சமயம்) அவள் கருவுற்றுவிடுவதை நான் விரும்பவில்லை" என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீ விரும்பினால் "புணர்ச்சி இடை முறிப்பு' (அஸ்ல்) செய்துகொள். ஆயினும், அவளுக்கு விதிக்கப்பட்டுள்ளது அவளிடம் நிச்சயம் வந்துசேரும்"என்றார்கள். அம்மனிதர் சில நாட்கள் கழிந்த பின் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அந்த அடிமைப் பெண் கருவுற்றுவிட்டாள்" என்று கூறினார். அதற்கு அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவளுக்கு விதிக்கப்பட்டது நிச்சயம் அவளிடம் வந்துசேரும் என உம்மிடம் நான் ஏற்கெனவே கூறிவிட்டேனே!" என்றார்கள்.

2844 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம், "என்னிடம் ஓர் அடிமைப் பெண் இருக்கிறாள். நான் அவளிடம் "புணர்ச்சி இடைமுறிப்பு'ச் செய்துவருகிறேன்" என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அ(வ்வாறு அஸ்ல் செய்வ)து அல்லாஹ் நாடியுள்ள எதையும் தடுத்து விடப்போவதில்லை" என்றார்கள். அந்த மனிதர் (சில நாட்களுக்குப் பின்) வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் உங்களிடம் குறிப்பிட்ட அந்த அடிமைப் பெண் கருவுற்று விட்டாள்" என்றார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் அல்லாஹ்வின் அடிமையும் அவனுடைய தூதரும் ஆவேன்" என்றார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.

2845 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
குர்ஆன் அருளப்பெறும் காலத்தில் நாங்கள் "புணர்ச்சி இடைமுறிப்பு' (அஸ்ல்) செய்து கொண்டிருந்தோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அது தடை செய்யப்பட வேண்டிய ஒன்றாக இருந்தால் அவ்வாறு செய்யக் கூடாதெனக் குர்ஆனே நமக்குத் தடை விதித்திருக்கும்" என சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறினார்கள் எனக் கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

2846 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் "புணர்ச்சி இடைமுறிப்பு' (அஸ்ல்) செய்துகொண்டிருந்தோம்.

2847 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் "புணர்ச்சி இடை முறிப்பு'ச் செய்துகொண்டிருந்தோம். இதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குத் தகவல் எட்டியபோது, அவ்வாறு செய்ய வேண்டாம் என எங்களுக்கு அவர்கள் தடை விதிக்கவில்லை.

## பாடம் : 23 கருவுற்றிருக்கும் பெண்போர்க் கைதியைப் புணருவது தடை செய்யப்பட்டுள்ளது.

2848 அபுத்தர்தா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு கூடாரத்தின் வாசலில் நின்றுகொண்டிருந்த, மகப்பேறு காலத்தை நெருங்கிய ஒரு (கைதிப்) பெண்ணைக் கடந்து நபி (ஸல்) அவர்கள் சென்றார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அவ(ளைச் சிறைப்பிடித்தவ)ர் அவளுடன் உறவுகொள்ள விரும்புகிறார் போலும்!" என்றார்கள். அதற்கு மக்கள் "ஆம்' என்ற(ஆமோதித்த)னர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நான் அவரைக் கடுமையாகச் சபிக்க விரும்பினேன். அ(ந்தச் சாபமான)து, அவருடன் அவரது சவக்குழிக்குள்ளும் நுழையும். அவர் தமக்கு அனுமதிக்கப்படாத ஒருவனை எவ்வாறு தம் வாரிசாக ஆக்கிக்கொள்ள முடியும்? அவர் தமக்கு அனுமதிக்கப்படாத ஒருவனைத் தம்முடைய ஊழியனாக எவ்வாறு பயன்படுத்த முடியும்?' என்று கேட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபுத்தர்தா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 24 பாலூட்டிக்கொண்டிருக்கும் காலத்தில் மனைவியுடன் தாம்பத்திய உறவு ("அல்ஃகீலா") கொள்ளலாம்; அப்போது "புணர்ச்சி இடைமுறிப்பு'ச் செய்வது வெறுக்கத் தக்கதாகும்.**

2849 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பாலூட்டிக்கொண்டிருக்கும் காலத்தில் மனைவியுடன் தாம்பத்திய உறவுகொள்ள ("அல்ஃகீலா") வேண்டாமென நான் தடை விதிக்க விரும்பினேன். ரோமர்களும் பாரசீகர்களும் அவ்வாறு செய்தும், அவர்களுடைய குழந்தைகளுக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படாமலிருப்பதை நான் நினைவுகூர்ந்தேன் (எனவே, தடை விதிக்கும் எண்ணத்தைக் கைவிட்டு விட்டேன்).
இதை ஜுதாமா பின்த் வஹ்ப் அல் அசதிய்யா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். இவரது பெயர் ஜுஃதாமா என்று அறிவிப்பாளர் கலஃப் (ரஹ்) கூறுகிறார். ஆனால், யஹ்யா (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ளபடி "ஜுதாமா' ("ஃதால்' ங அல்ல; "தால்'கு) என்பதே சரி.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2850 உக்காஷா (ரலி) அவர்களின் சகோதரி ஜுதாமா பின்த் வஹ்ப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் மக்களில் சிலருடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அவைக்குச் சென்றேன். அப்போது அவர்கள், "பாலூட்டிக்கொண்டிருக்கும் காலத்தில் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொள்ள ("அல்ஃகீலா") வேண்டாமென நான் தடை விதிக்க விரும்பினேன். பிறகு ரோமர்களும் பாரசீகர்களும் தம் குழந்தைகள் பால் அருந்திக்கொண்டிருக்கும்போதே, அவர்கள் தம் மனைவியருடன் தாம்பத்திய உறவு கொண்டும் அதனால் அவர்களுடைய குழந்தைகளுக்கு எந்தப்பாதிப்பும் நேராமலிருப்பது குறித்து நான் யோசித்தேன். (எனவே, தடை விதிக்கும் எண்ணத்தைக் கைவிட்டு விட்டேன்)" என்று கூறிக்கொண்டிருந்தார்கள். பின்னர் அவர்களிடம் "புணர்ச்சி இடைமுறிப்பு' (அஸ்ல்) செய்வதைப் பற்றி வினவினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது மறைமுகமான சிசுக்கொலை யாகும்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் உபைதுல்லாஹ் பின் சயீத் (ரஹ்) அவர்கள் அப்துல்லாஹ் பின் யஸீத் அல்முக்ரீ (ரஹ்) அவர்கள் வழியாக அறிவிக்கும் அறிவிப்பில், "என்ன பாவத்திற்காகக் கொல்லப்பட்டாள் என உயிருடன் புதைக்கப்பட்டவள் விசாரிக்கப்படும்போது" எனும் (81:8,9 ஆவது) வசனத்தில் கூறப்பட்டுள்ள சிசுக் கொலைக்கு "அஸ்ல்' ஒத்திருக்கிறது என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

2851 மேற்கண்ட ஹதீஸ் ஜுதாமா பின்த் வஹ்ப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் ("பாலூட்டிக்கொண்டிருக்கும் காலத்தில் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொள்வது' என்பதைக் குறிக்க "ஃகீலா'என்பதற்குப் பகரமாக) "ஃகியால்' எனும் சொல் ஆளப்பட்டுள்ளது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2852 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடம் கூறியதாவது:

ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் என் மனைவியுடன் (உறவு கொள்ளும்போது) "புணர்ச்சி இடைமுறிப்பு' (அஸ்ல்) செய்கிறேன்" என்றார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஏன் (அவ்வாறு) செய்கிறாய்?"என்று கேட்டார்கள். அதற்கு அம்மனிதர், "அவளது குழந்தையின் மீது' அல்லது "அவளுடைய குழந்தைகள் மீது'பரிவுகாட்டு(வதற்காகவே அவ்வாறு செய்)கிறேன் என்றார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அ(வ்வாறு பாலூட்டும் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொள்வ)து குழந்தைக்குப் பாதிப்பை ஏற்படுத்துவதாயிருந்தால், பாரசீகர்களுக்கும் ரோமர்களுக்கும் பாதிப்பை ஏற்படுத்தியிருக்குமே!" என்றார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இக்காரணத்திற்காகவே நீ அவ்வாறு செய்கிறாய் எனில்,அவ்வாறு செய்யலாகாது. அது பாரசீகர்களுக்கும் ரோமர்களுக்கும் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தவில்லையே!" என்று கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

# அத்தியாயம் : 17 - பால்குடி (சட்டம்)

**பாடம் : 1 பிறப்பால் ஏற்பட்ட (இரத்த) உறவால் மணமுடிக்கத் தடை விதிக்கப்பட்டவர்கள், பால்குடி உறவாலும் தடை விதிக்கப்படுவர்.**

2853 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் இருந்தார்கள். அப்போது நான் ஹஃப்ஸா (ரலி) அவர்களது வீட்டில் (யாரோ) ஒரு மனிதர் உள்ளே செல்ல அனுமதி கேட்கும் குரலைக் கேட்டேன். உடனே நான், "அல்லாஹ்வின் தூதரே! இதோ உங்கள் (துணைவியார் ஹஃப்ஸாவின்) வீட்டுக்குள் செல்ல ஒருவர் அனுமதி கேட்கிறார்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் இன்ன மனிதர் என நான் கருதுகிறேன்" என்று ஹஃப்ஸாவின் பால்குடித் தந்தையின் சகோதரர் குறித்துச் சொன்னார்கள். நான் "அல்லாஹ்வின் தூதரே! இன்ன மனிதர் உயிருடன் இருந்தால் அவர் என்னைத் திரையின்றி சந்தித்திருக்க முடியும்தானே!" என்று என்னுடைய பால்குடித் தந்தையின் சகோதரர் குறித்துக் கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம் (முடியும்); பிறப்பு எந்த உறவுகளையெல்லாம் (மணமுடிக்கத்தகாத) நெருங்கிய உறவுகளாக்குமோ அந்த உறவுகளையெல்லாம் பால்குடியும் நெருங்கிய உறவுகளாக்கி விடும்" என்று சொன்னார்கள்.

2854 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "பிறப்பால் ஏற்பட்ட (இரத்த) உறவால் மணமுடிக்கக்கூடாதவர்களை, பால்குடி உறவாலும் மணமுடிக்கக்கூடாது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 2 பால்குடித் தந்தையின் (இரத்த) உறவினரும் (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவினர்தாம்.**

2855 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபுல்குஐஸின் சகோதரர் அஃப்லஹ் (ரலி) அவர்கள் வந்து என் வீட்டில் நுழைவதற்கு அனுமதி கேட்டார். அவர் என் பால்குடித் தந்தையின் சகோதரர் ஆவார். பர்தா (ஹிஜாப்) சட்டம் அருளப்பட்ட பின் இந்தச் சம்பவம் நடைபெற்றது. அப்போது நான் அவருக்கு அனுமதியளிக்க மறுத்துவிட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்ததும் நான் செய்தது குறித்து அவர்களிடம் தெரிவித்தேன். நான் அவருக்கு அனுமதியளிக்க வேண்டும் என அப்போது அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு உத்தரவிட்டார்கள்.

2856 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அபூகுஐஸின் புதல்வர் அஃப்லஹ் (ரலி) அவர்கள் என்னிடம் வந்தார். அவர் என் பால்குடித் தந்தையின் சகோதரர் ஆவார்"என்று இடம்பெற்றுள்ளது. மேலும், ஆயிஷா (ரலி) அவர்கள் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்), "(அவருடைய) மனைவிதான் எனக்குப் பாலூட்டினார்; அவர் எனக்குப் பாலூட்டவில்லை. (எனவே அஃப்லஹ் அவர்களுக்கு நான் அனுமதியளிக்கமாட்டேன்)" என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன் இரு கைகளும் அல்லது உனது வலக்கை மண்ணைக் கவ்வட்டும்" என்று கூறினார்கள் என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

2857 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபுல்குஐஸின் சகோதரர் அஃப்லஹ் (ரலி) அவர்கள் வந்து, என் வீட்டில் நுழைவதற்கு அனுமதி கேட்டார். –அபுல்குஐஸ் ஆயிஷா (ரலி) அவர்களின் பால்குடித் தந்தை ஆவார்.– பர்தா (ஹிஜாப்) சட்டம் அருளப்பட்ட பின் இச்சம்பவம் நடைபெற்றது. அப்போது நான், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்காமல் அஃப்லஹ் (ரலி) அவர்களுக்கு அனுமதியளிக்கமாட்டேன். ஏனெனில், அபுல்குஐஸ் எனக்குப் பாலூட்டவில்லை; அவருடைய துணைவிதான் எனக்குப் பாலூட்டினார்" என்று கூறினேன். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்ததும் நான் அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! (என் பால்குடித் தந்தை) அபுல் குஐஸின் சகோதரர் அஃப்லஹ் வந்து என் வீட்டில் நுழைவதற்கு அனுமதி கேட்டார். உங்களிடம் அனுமதி கேட்காமல் அவருக்கு அனுமதியளிக்க எனக்கு விருப்பமில்லை. (எனவே, அவருக்கு நான் அனுமதியளிக்க வில்லை)" என்று தெரிவித்தேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அவருக்கு அனுமதியளி" என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான உர்வா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இதன் அடிப்படையில்தான் ஆயிஷா (ரலி) அவர்கள், "இரத்த உறவால் எந்த உறவுகளையெல்லாம் (மணமுடிக்கத்தகாத) நெருங்கிய உறவுகளாக நீங்கள் ஆக்குவீர்களோ அந்த உறவுகளைப் பால்குடி உறவின் மூலமும் நெருங்கிய உறவுகளாக ஆக்கிவிடுங்கள்" என்று கூறுவார்கள்.

2858 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "உனது வலக்கை மண்ணைக் கவ்வட்டும். அவர் (அஃப்லஹ்) உன் (பால்குடித்) தந்தையின் சகோதரர் ஆவார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது. மேலும், "அபுல்குஐஸ் ஆயிஷா (ரலி) அவர்களுக்குப் பாலூட்டிய செவிலித் தாயின் கணவர் ஆவார்' என்றும் காணப்படுகிறது.

2859 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் பால்குடித் தந்தையின் சகோதரர் (அஃப்லஹ் (ரலி) அவர்கள்) வந்து, என் வீட்டில் நுழைவதற்கு அனுமதி கேட்டார். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இது குறித்து ஆலோசனை கேட்காமல் அவருக்கு அனுமதியளிக்க முடியாது' என்று மறுத்துவிட்டேன். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்ததும் நான்,

"என் பால்குடித் தந்தையின் சகோதரர் வந்து என் வீட்டில் நுழைவதற்கு அனுமதி கேட்டார். நான் அவருக்கு அனுமதி மறுத்துவிட்டேன்" என்று தெரிவித்தேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன் (பால்குடித்) தந்தையின் சகோதரர் உன் வீட்டிற்குள் வரட்டும்" என்று கூறினார்கள். அப்போது நான், "(அவருடைய) மனைவி தான் எனக்குப் பாலூட்டினார்; அவர் எனக்குப் பாலூட்டவில்லையே?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மீண்டும்) என்னிடம், "அவர் உன்னுடைய (பால்குடித்) தந்தையின் சகோதரர் ஆவார். எனவே, அவர் உன் வீட்டிற்குள் வரட்டும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் அபுல்குஜஸின் சகோதரர் ஆயிஷா (ரலி) அவர்களது வீட்டில் நுழைவதற்கு அனுமதி கேட்டார்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், (ஆயிஷா (ரலி) அவர்களின் பால்குடித் தந்தை) அபுல்குஜஸ் (ரலி) அவர்களே ஆயிஷா (ரலி) அவர்களிடம் அனுமதிகேட்டார் என வந்துள்ளது.

2860 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள் என்னிடம், "என் பால்குடித் தந்தையின் சகோதரர் அபுல்ஜஅத் (ரலி) அவர்கள் வந்து என் வீட்டிற்குள் நுழைய அனுமதி கேட்டார். நான் அதை மறுத்துவிட்டேன். பின்னர் நபி (ஸல்) அவர்கள் வந்ததும் இது குறித்து அவர்களிடம் தெரிவித்தேன்" என்று கூறினார்கள்.
- ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்கள் "அபுல்குஜஸ்தான் அவர் (அதாவது ஆயிஷா (ரலி) அவர்களின் பால்குடித் தந்தையின் சகோதரர்) ஆவார்" என்று கூறினார்கள்.–
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உனது வலக் கை, அல்லது உனது கை மண்ணைக் கவ்வட்டும்! நீ அவருக்கு அனுமதியளித்திருக்க வேண்டாமா?" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2861 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள் என்னிடம், "என் பால்குடித் தந்தையின் சகோதரர் அஃப்லஹ் (ரலி) அவர்கள் என் வீட்டிற்குள் நுழைவதற்கு அனுமதி கேட்டார். நான் அவருக்கு (அனுமதி அளிக்காமல்) திரையிட்டுக் கொண்டேன். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இதைத் தெரிவித்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "நீ அவரிடம் திரையிட்டு (மறைத்து)க்கொள்ள வேண்டாம். ஏனெனில், இரத்த உறவால் எந்த உறவுகளெல்லாம் (மணமுடிக்கத்தகாத) நெருங்கிய உறவுகளாக ஆகுமோ, அந்த உறவுகளெல்லாம் பால்குடி உறவாலும் நெருங்கிய உறவுகளாகிவிடும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2862 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் பால்குடித் தந்தையின் சகோதரர்) அஃப்லஹ் பின் குஜஸ் (ரலி) அவர்கள் என்னிடம் எனது வீட்டிற்குள் நுழைவதற்கு அனுமதி கேட்டார். அவருக்கு நான் அனுமதியளிக்க

மறுத்துவிட்டேன். பின்னர் அவர் (ஒருவரை என்னிடம்) அனுப்பி, "என் சகோதரரின் மனைவி உங்களுக்குப் பாலூட்டியிருக்கிறார்; நான் உங்களுக்குப் பால்குடித் தந்தையின் சகோதரர் ஆவேன் (எனவே நீங்கள் எனக்கு அனுமதியளியுங்கள்)" என்று கூறினார். அப்போதும் அவருக்கு நான் அனுமதியளிக்க மறுத்துவிட்டேன். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்ததும் இதைத் தெரிவித்தேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "அவர் உன் வீட்டிற்குள் வரட்டும்; ஏனெனில், அவர் உன் (பால்குடித்) தந்தையின் சகோதரர் ஆவார்" என்று கூறினார்கள்.

## பாடம் : 3 பால்குடிச் சகோதரரின் மகளை மணப்பது தடை செய்யப்பட்டுள்ளது.

2863 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! நம் (பனூ ஹாஷிம் குடும்பத்துப் பெண்கள் தம்)மை விட்டுவிட்டு, குறைஷியரில் (வேறு பெண்களை மணப்பதில்) நீங்கள் ஆர்வம் காட்டுவது ஏன்?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "உங்களிடம் (நம் குடும்பத்துப் பெண்) யாரும் இருக்கிறாரா?" என்று கேட்டார்கள். அப்போது நான், "ஆம்! (என் பெரிய தந்தை) ஹம்ஸா (ரலி) அவர்களின் புதல்வி இருக்கிறார்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவர் எனக்கு (திருமணம் செய்ய) அனுமதிக்கப்பட்டவர் அல்லர். ஏனெனில், அவர் என்னுடைய பால்குடிச் சகோதரரின் புதல்வி ஆவார்"என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2864 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹம்ஸா (ரலி) அவர்களின் புதல்வியை மணமுடித்துக்கொள்ளும்படி நபி (ஸல்) அவர்களிடம் கருத்துத் தெரிவிக்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள் "அவர் எனக்கு (திருமணம் செய்ய) அனுமதிக்கப்பட்டவர் அல்லர். ஏனெனில், அவர் என் பால்குடிச் சகோதரரின் மகளாவார். மேலும், இரத்த உறவால் எந்த உறவுகளெல்லாம் (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவுகளாக ஆகுமோ, அந்த உறவுகளெல்லாம் பால்குடி உறவாலும் நெருங்கிய உறவுகளாக ஆகிவிடும்" என்று கூறினார்கள்.

2865 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவர் என் பால்குடிச் சகோதரரின் புதல்வியாவார்" என்பதுடன் ஹதீஸ் முடிவடைகிறது. சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இரத்த உறவு' என்பதைக் குறிக்க "ரஹிம்' எனும் சொல்லுக்குப் பதிலாக "நசப்' எனும் சொல் ஆளப்பட்டுள்ளது.

2866 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! ஹம்ஸா (ரலி) அவர்களின் மகள் விஷயத்தில் உங்களது நிலை என்ன?" அல்லது, "ஹம்ஸா பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்களின் மகளை நீங்கள் பெண் கேட்கக் கூடாதா?" என்று கேட்கப்பட்டது.

அதற்கு நபி (ஸல்) அவர்கள், "ஹம்ஸா என் பால்குடிச் சகோதரர் ஆவார். (எனவே, நான் அவருடைய மகளை மணப்பது எனக்கு அனுமதிக்கப்பட்டதன்று)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 மனைவியின் மகளையும் மனைவியின் சகோதரியையும் மணப்பதற்கு வந்துள்ள தடை.**

2867 (நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான) அபூசுஃப்யானின் புதல்வி உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் வீட்டிற்கு வந்தபோது, நான் அவர்களிடம், "என் சகோதரியான அபூசுஃப்யானின் புதல்வி விஷயத்தில் தங்களுக்கு நாட்டம் உண்டா?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார்கள். நான் "அவளை நீங்கள் மணந்துகொள்ள வேண்டும்" என்றேன். அவர்கள், "இதை நீயே விரும்புகிறாயா?" என்று கேட்டார்கள். நான், "(ஆம்! மனைவியென்று) தங்களுக்கு நான் ஒருத்தி மட்டும் இல்லையே! (தங்களுக்குத் துணைவியாகும்)பாக்கியத்தில் என்னுடன் என் சகோதரிக்கும் பங்கு கிடைப்பதை நான் பெரிதும் விரும்புகிறேன்" என்று சொன்னேன்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அ(வளை மணப்ப)து எனக்கு அனுமதிக்கப் பட்டதன்று" என்றார்கள். (சகோதரிகளை ஒரே நேரத்தில் மணப்பது கூடாது என்பதே காரணம்.)நான், "தாங்கள் அபூசலமாவின் மகள் "துர்ரா'வைப் பெண் கேட்பதாகக் கேள்விப் பட்டேனே!"என்று கூறினேன். அதற்கு அவர்கள், "(அதாவது என் துணைவியார்) உம்மு சலமாவுக்கு (முந்தைய கணவன் மூலம்) பிறந்த மகளையா?" என்று கேட்க, நான் "ஆம்' என்றேன். அவர்கள், "அவள் (உம்மு சலமாவின் மகள்) எனது மடியில் வளர்ப்பு மகளாக (இருந்து வருகிறாள். அப்படி) இல்லாவிட்டாலும் கூட, அவளை நான் மணக்க முடியாது. (ஏனெனில்,) அவள் என் பால்குடிச் சகோதரரின் புதல்வியாவாள். எனக்கும் அவளுடைய தந்தை (அபூசலமாவு)க்கும் "ஸுவைபா' (எனும் அடிமைப் பெண்) பாலூட்டியிருக்கிறார். ஆகவே, உங்கள் பெண் மக்களையோ உங்கள் சகோதரிகளையோ (மணந்து கொள்ளும்படி) என்னிடம் கோராதீர்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்படியே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2868 நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! (அபூசுஃப்யானின் புதல்வியான) என் சகோதரி "அஸ்ஸா'வைத் தாங்கள் மணந்து கொள்ளுங்கள்" என்று கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை நீயே விரும்புகிறாயா?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! ஆம். (மனைவியென்று) தங்களுக்கு நான் ஒருத்தி மட்டும் இல்லையே! (தங்களுக்குத் துணைவியாகும்) பாக்கியத்தில் என்னுடன் என் சகோதரிக்கும் பங்கு கிடைப்பதை நான் பெரிதும் விரும்புகிறேன்" என்று சொன்னேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(சகோதரிகளை ஒரே நேரத்தில் மணமுடிப்பது கூடாது என்பதால்) அ(வளை மணப்ப)து எனக்கு அனுமதிக்கப்பட்டதன்று" என்றார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் அபூசலமாவின் மகள் "துர்ரா'வை மணந்துகொள்ள விரும்புகிறீர்கள் என்று நாங்கள் பேசிக்கொண்டிருக்கிறோமே!" என்று சொன்னேன். அதற்கு அவர்கள், "(அதாவது என் துணைவியார் உம்மு சலமாவின் முந்தைய கணவர்) அபூசலமாவின் மகளையா?" என்று கேட்க, நான் "ஆம்' என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவள் (அபூ சலமாவின் மகள்) எனது மடியில் வளர்ப்பு மகளாக (இருந்துவருகிறாள். அப்படி) இல்லாவிட்டாலும்கூட, அவளை நான் மணக்க முடியாது. (ஏனெனில்,) அவள் என் பால்குடிச் சகோதரரின் புதல்வியாவாள். எனக்கும் (அவளுடைய தந்தை) அபூசலமாவிற்கும் "ஸுவைபா' (எனும் அடிமைப் பெண்) பாலூட்டியிருக்கிறார். ஆகவே, உங்கள் பெண் மக்களையோ உங்கள் சகோதரிகளையோ (மணந்துகொள்ளும்படி) என்னிடம் கோராதீர்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் (உம்மு ஹபீபா (ரலி) அவர்களுடைய சகோதரியின் பெயர்) "அஸ்ஸா' என்ற குறிப்பு காணப்படவில்லை. யஸீத் பின் அபீஹபீப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டுமே அது இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 5 (ஒரு குழந்தை செவிலித் தாயிடம்) ஓரிரு முறை பால் உறிஞ்சிக் குடிப்பது தொடர்பான சட்டம்.

2869 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஒரு குழந்தை செவிலித்தாயிடம்) ஒரு தடவையோ, இரு தடவைகளோ மட்டும் பால் உறிஞ்சிக் குடிப்பதால் (அவ்விருவருக்கு மிடையே) பால்குடி உறவு ஏற்பட்டுவிடாது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2870 (நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்களின் துணைவியாரான) உம்முல் ஃபள்ல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் என் வீட்டில் இருந்தபோது, ஒரு கிராமவாசி வந்தார். அவர் நபி (ஸல்) அவர்களிடம்,அல்லாஹ்வின் தூதரே! எனக்கு ஏற்கெனவே ஒரு மனைவி இருக்கும் நிலையில் நான் மற்றொரு பெண்ணை மணந்துகொண்டேன். என்னுடைய முதல் மனைவி, "நான் உம்முடைய புதிய மனைவிக்கு ஒரு தடவையோ அல்லது இரு தடவைகளோ பாலூட்டியிருக்கிறேன். (எனவே, இந்தத் திருமணம் செல்லாது) என்று கூறுகிறார்" எனத் தெரிவித்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒரு தடவையோ இரு தடவைகளோ மட்டும் (உறிஞ்சிக் குடிக்கும் வகையில்) பாலூட்டுவதால் (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவு ஏற்பட்டுவிடாது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2871 (நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்களின் துணைவியாரான) உம்முல் ஃபள்ல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பனூ ஆமிர் பின் ஸஃஸஆ குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! ஒரு தடவை மட்டும் உறிஞ்சிப் பால் குடிப்பதால் (மணமுடிக்கத்தகாத) நெருங்கிய உறவு ஏற்படுமா?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "இல்லை' என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2872 (நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்களின் துணைவியாரான) உம்முல் ஃபள்ல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒரு தடவையோ அல்லது இரு தடவைகளோ மட்டும் பால் குடிப்பதால் (மணமுடிக்கத்தகாத) நெருங்கிய உறவு ஏற்படாது. அல்லது ஒரு தடவையோ அல்லது இரு தடவைகளோ மட்டும் உறிஞ்சிப் பால் குடிப்பதால் (மண முடிக்கத் தகாத) நெருங்கிய உறவு ஏற்படாது" என்று கூறினார்கள்.

2873 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இரு தடவைகள் மட்டும் பால் குடிப்பது' "இரு தடவைகள் மட்டும் உறிஞ்சிப் பால் குடிப்பது' என்ற வாக்கியத்திற்கு முன் "அல்லது' )ரீ ணூ( என்பதற்குப் பதிலாக "மற்றும்' )ணூ( எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

2874 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு தடவையோ இரு தடவைகளோ மட்டும் (உறிஞ்சிப் பால் குடிக்கும் வகையில்) பாலூட்டுவது, (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவை ஏற்படுத்தாது.
இதை உம்முல் ஃபள்ல் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2875 (நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்களின் துணைவியார்) உம்முல் ஃபள்ல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம், "ஒரு தடவை மட்டும் உறிஞ்சிப் பால் குடிப்பதால் (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவு ஏற்படுமா?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இல்லை' என்றார்கள்.

## பாடம் : 6 ஐந்து முறை அருந்தினால்தான் பால்குடி உறவு உண்டாகும்.

2876 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"குறிப்பிட்ட பத்து தடவைகள் பால் அருந்தினால்தான் பால்குடி உறவு உண்டாகும்" என்ற வசனம் (முதலில்) குர்ஆனில் அருளப்பட்டிருந்தது.
பின்னர் பத்து தடவைகள் என்பது, குறிப்பிட்ட ஐந்து தடவைகள் என மாற்றப்பட்டது. இவ்வசனம் மக்கள் சிலரால் ஓதப்பட்டுவந்த காலத்தில்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்தார்கள்.

2877 அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள், எத்தனை முறை பால் குடித்தால் பால்குடி உறவு உண்டாகும் என்பதைப் பற்றிக் கூறுகையில் பின்வருமாறு கூறினார்கள்: குறிப்பிட்ட பத்து தடவைகள் பால் அருந்தினால்தான் (பால்குடி உறவு உண்டாகும்) என்ற சட்டம் குர்ஆனில் இடம் பெற்றிருந்தது. பின்னர் குறிப்பிட்ட ஐந்து தடவைகள் என்ற சட்டம் அருளப்பெற்றது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 7 பருவ வயதை அடைந்தவருக்குப் பாலூட்டுவது தொடர்பான சட்டம்.

2878 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) சஹ்லா பின்த் சுஹைல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! சாலிம் பின் மஅகில் (ரலி) அவர்கள் என் வீட்டிற்குள் வரும்போது (என்னைத் திரையின்றி பார்க்க நேரிடும் என்பதால் என் கணவர்) அபூஹுதைஃபா வின் முகத்தில் அதிருப்தியை நான் காண்கிறேன்" என்று கூறினார்கள். சாலிம் (ரலி) அவர்கள் அபூஹுதைஃபாவின் அடிமை(யும் வளர்ப்பு மகனும்) ஆவார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீ அவருக்குப் பால் கொடுத்துவிடு. (அதனால் செவிலித்தாய் – மகன் உறவு ஏற்பட்டு விடும்)" என்று கூறினார்கள். சஹ்லா (ரலி) அவர்கள், "அவர் (சாலிம்) பருவ வயதை அடைந்த மனிதராயிற்றே, அவருக்கு எவ்வாறு நான் பாலூட்டுவேன்?" என்று கேட்டார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்தவாறு, "அவர் பருவவயதை அடைந்த மனிதர் என்பது எனக்கும் தெரியும். (உன்னிடமிருந்து பாலைக் கறந்து அவரைக் குடிக்கச் செய்வாயாக)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அம்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர் (சாலிம்) பத்ருப் போரில் கலந்து கொண்டவராவார்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
இப்னு அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (புன்னகைத்தார்கள் என்பதற்குப் பதிலாக) சிரித்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

2879 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூஹுதைஃபாவின் அடிமை(யும் வளர்ப்பு மகனுமான) சாலிம் (ரலி) அவர்கள் அபூஹுதைஃபா மற்றும் அவருடைய மனைவியுடன் அவர்களது வீட்டில் இருந்து வந்தார். அப்போது (அபூஹுதைஃபாவின் மனைவி சஹ்லா) பின்த் சுஹைல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "சாலிம் ஆண்கள் அடையும் பருவவயதை அடைந்துவிட்டார். மற்ற ஆண்கள் அறிவதை அவரும் அறிகிறார். இந்நிலையில் அவர் எங்கள் வீட்டிற்குள் வருகிறார். இதனால் (அவர் என்னைத் திரையின்றி பார்க்க நேரிடும் என்பதால் என் கணவர்) அபூஹுதைஃபாவின் மனத்தில் அதிருப்தி நிலவுகிறது என்று நான் எண்ணுகிறேன்" என்று கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் சஹ்லாவிடம், "நீ அவருக்குப் பால் கொடுத்துவிடு. இதனால் அவருக்குச் செவிலித் தாய் ஆகிவிடுவாய். (உன்னுடைய கணவர்) அபூஹுதைஃபாவின் மனத்தில் நிலவும் அதிருப்தியும் மறைந்துவிடும்" என்று கூறினார்கள்.

அவர் (திரும்பிச் சென்று) மீண்டும் (நபி (ஸல்) அவர்களிடம்) வந்து, "நான் அவருக்குப் பால் கொடுத்துவிட்டேன். இதனால் என் கணவர் அபூஹுதைஃபாவின் மனத்தில் நிலவிய அதிருப்தியும் மறைந்துவிட்டது" என்று கூறினார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2880 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) சஹ்லா பின்த் சுஹைல் பின் அம்ர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! சாலிம் (ரலி) அவர்கள் எங்களுடன் எங்கள் வீட்டில்தான் இருக்கிறார். -அவர் (சஹ்லாவின் கணவர்) அபூ ஹுதைஃபாவின் அடிமை(யும் வளர்ப்பு மகனும்) ஆவார்.- அவர் ஆண்கள் அடையும் பருவ வயதை அடைந்துவிட்டார்; மற்ற ஆண்கள் அறிகின்றவற்றை அவரும் அறிகிறார்" என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீ அவருக்குப் பால் கொடுத்துவிடு. இதனால் நீ அவருக்குச் செவிலித் தாய் ஆகிவிடுவாய்" என்று கூறினார்கள்.
இதை அறிவிக்கும் அறிவிப்பாளர் இப்னு அபீமுலைக்கா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
ஓர் ஆண்டு காலமாக, அல்லது சுமார் ஓராண்டு காலமாக இந்த ஹதீஸை நான் (யாரிடமும்) அறிவிக்கவில்லை. அதை அறிவிக்க நான் அஞ்சினேன். பின்னர் (ஒரு முறை) காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது நான் அவர்களிடம், "நீங்கள் என்னிடம் ஒரு ஹதீஸை அறிவித்தீர்கள். அதை இதுவரை நான் (யாரிடமும்) அறிவிக்கவில்லை" என்று கூறினேன். காசிம் (ரஹ்) அவர்கள், "அந்த ஹதீஸ் என்ன?" என்று (என்னிடம்) கேட்க, நான் அதைத் தெரிவித்தேன். அப்போது அவர்கள், "என்னிடமிருந்து நீங்கள் அதை (தாராளமாக) அறிவியுங்கள்; ஆயிஷா (ரலி) அவர்கள் என்னிடம் அதை அறிவித்தார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2881 ஸைனப் பின்த் உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
உம்மு சலமா (ரலி) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "விரைவில் பருவ வயதை அடையவிருக்கும் அந்தச் சிறுவன் உங்களுடைய வீட்டிற்குள் வருகிறானே! ஆனால், அவன் என் வீட்டிற்குள் வருவதை நான் விரும்பமாட்டேன்" என்று கூறினார். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (இதற்கான) முன்மாதிரி உங்களுக்குக் கிடைக்க வில்லையா?" என்று கேட்டுவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:
அபூஹுதைஃபாவின் மனைவி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! சாலிம் என் வீட்டிற்குள் வருகிறார்; அவர் பருவ வயதையடைந்த மனிதர். இதனால் (அவர் என்னைத் திரையின்றி பார்க்க நேரிடும் என்பதால் என் கணவர்) அபூஹுதைஃபாவின் மனத்தில் அதிருப்தி நிலவுகிறது" என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ சாலிமுக்குப் பால் கொடுத்துவிடு. (அதனால் செவிலித் தாய் – மகன் உறவு ஏற்பட்டு) அவர் உனது வீட்டிற்குள் வரலாமே!" என்று கூறினார்கள்.

2882 ஸைனப் பின்த் அபீசலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு சலமா (ரலி) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் மீதாணையாக! (பால்குடிப் பருவத்தைக் கடந்துவிட்ட) பால் குடிக்கும் அவசியமில்லாத நிலையில் உள்ள சிறுவன் (திரையின்றி) என்னைப் பார்ப்பதை என் மனம் விரும்பவில்லை" என்று சொன்னார்கள். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "எதற்காக (நீங்கள் அவ்வாறு கூற வேண்டும்)?" என்று கேட்டுவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:

சஹ்லா பின்த் சுஹைல் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! சாலிம் (என்) வீட்டிற்குள் வருவதால் (அவர் என்னைத் திரையின்றிப் பார்க்க நேரிடுகிறது. அதனால் என் கணவர்) அபூஹுதைஃபாவின் முகத்தில் அதிருப்தியைக் காண்கிறேன்" என்று கூறினார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ சாலிமுக்குப் பால் கொடுத்துவிடு. (அதனால் செவிலித் தாய் – மகன் என்ற உறவு ஏற்பட்டுவிடும்)" என்று கூறினார்கள்.
அதற்கு சஹ்லா (ரலி) அவர்கள், "அவர் (சாலிம்) தாடி உள்ளவராயிற்றே (அவருக்கு எப்படி பாலூட்ட முடியும்)?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் (மீண்டும்), "நீ அவருக்குப் பாலூட்டிவிடு. அதனால், அபூஹுதைஃபாவின் முகத்திலுள்ள அதிருப்தி மறைந்துவிடும்" என்று கூறினார்கள்.
பின்னர் சஹ்லா (ரலி) அவர்கள், "(நபி (ஸல்) அவர்கள் சொன்னதைப் போன்று நான் செய்தேன்.) அல்லாஹ்வின் மீதாணையாக! (அதற்குப் பின்) அபூஹுதைஃபாவின் முகத்தில் அதிருப்தியை நான் அறியவில்லை" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2883 ஸைனப் பின்த் அபீசலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாயாரும் நபி (ஸல்) அவர்களின் துணைவியாருமான உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறுவார்கள்: (ஆயிஷா (ரலி) அவர்களைத் தவிர) நபி (ஸல்) அவர்களுடைய மற்றத் துணைவியர் எவரும் பால்குடிப் பருவத்தைக் கடந்த ஒருவருக்குப் பால் கொடுத்து ("செவிலித் தாய் – மகன்' என்ற) உறவை ஏற்படுத்தி, அவரைத் தங்களது வீட்டிற்குள் நுழைய அனுமதிக்க மறுத்துவிட்டனர்.
மேலும், நபி (ஸல்) அவர்களுடைய மற்றத் துணைவியர் ஆயிஷா (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சாலிம் (ரலி) அவர்களுக்கு மட்டுமே இந்த முறையை அனுமதித்தார்கள் என்றே நாங்கள் கருதுகிறோம். (பால்குடிப் பருவத்தைக் கடந்த பின்) பால்குடி உறவை ஏற்படுத்தும் இந்த முறைப்படி யாரும் எங்களது வீட்டிற்குள் வந்ததுமில்லை; எங்களை(த்திரையின்றி)ப் பார்த்துமில்லை" என்று கூறினர்.

**பாடம் : 8 பால்குடி உறவு என்பதெல்லாம், பசிக்காகப் பால் அருந்(தும் பருவத்தில் அருந்)தினால்தான் ஏற்படும்.**

2884 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு முறை) என் வீட்டிற்கு வந்தார்கள். அப்போது ஒரு மனிதர் என்னிடம் அமர்ந்திருந்தார். அ(ந்த மனிதர் என் வீட்டிற்குள் அமர்ந்திருந்த)து நபி (ஸல்) அவர்களுக்குக் கோபத்தை ஏற்படுத்திவிட்டது. கோபத்தை அவர்களது முகத்தில் கண்ட நான், "அல்லாஹ்வின் தூதரே! அவர் என் பால்குடிச் சகோதரர் ஆவார்" என்று கூறினேன். நபி (ஸல்) அவர்கள், "(ஆயிஷா!) உங்கள் பால்குடிச் சகோதரர்கள் யார் என ஆராய்ந்து பாருங்கள். ஏனெனில், பசியால் (பால் அருந்தினால்)தான் பால்குடி உறவு ஏற்படும்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 9 கருச்சோதனை நடத்திய பின், பெண் போர்க்கைதியுடன் தாம்பத்திய உறவு கொள்ளலாம். அவளுக்கு (ஏற்கெனவே) கணவன் இருந்தாலும், (போரில்) சிறை பிடிக்கப்பட்டதால் அத்திருமணம் முறிந்துவிடும்.**

2885 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹுனைன் போரின்போது (ஹவாஸின் குலத்தார் வசிக்கும்) "அவ்தாஸ்' என்ற பகுதிக்கு ஒரு படையை அனுப்பினார்கள். அவர்கள் எதிரிகளை எதிர்கொண்டு, போரிட்டு அவர்களை வெற்றி கொண்டனர். (ஹவாஸின் குலத்தைச் சேர்ந்த) அவர்களின் சில பெண்களையும் அவர்கள் சிறை பிடித்தனர். (போரில் சிறை பிடிக்கப்பட்டு அடிமையாக்கப்பட்ட) அப்பெண்களுக்கு இணைவைப்பாளர்களான கணவர்கள் இருக்கிறார்கள் என்பதால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தோழர்களில் சிலர் அப்பெண்களுடன் தாம்பத்திய உறவு கொள்வதைத் தவறாகக் கருதினர். இது தொடர்பாகவே பின்வரும் வசனத்தை அல்லாஹ் அருளினான்:
மேலும், கணவனுள்ள பெண்களும் (மணமுடிக்க தடை செய்யப்பட்டுள்ளனர். ஆனால், போரில்) உங்களுக்கு உடைமையாகிவிட்ட பெண்களைத் தவிர. (இது) அல்லாஹ் உங்களுக்கு விதித்த சட்டமாகும். (4:24)
அதாவது, (போரில் சிறை பிடிக்கப்பட்டு அடிமையாக்கப்பட்ட) அப்பெண்களின் காத்திருப்பு (இத்தா)க் காலம் முடிந்துவிட்டால்,அவர்கள் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டவர்களாக ஆகிவிடுவர். (அவர்களுடன் நீங்கள் தாம்பத்திய உறவு கொள்ளலாம்.)

2886 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும், அவற்றில் "அப்பெண்களின் காத்திருப்பு (இத்தா)க் காலம் முடிந்துவிட்டால்' என்ற குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2887 அபூசயீத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அவ்தாஸ்' போர் நாளில் அவர்கள் சில பெண்களைச் சிறை பிடித்தனர். அப்பெண்களுக்கு (ஏற்கெனவே) கணவர்கள் இருந்த காரணத்தால் (மற்றொருவரின் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொள்ள)அஞ்சினர். இது தொடர்பாகவே "மேலும், கணவனுள்ள பெண்களும் (மணமுடிக்க தடை செய்யப்பட்டுள்ளனர். ஆனால், போரில்) உங்களுக்கு உடைமையாகி விட்ட பெண்களைத் தவிர. (இது) அல்லாஹ் உங்களுக்கு விதித்த சட்டமாகும்" எனும் (4:24ஆவது) வசனம் அருளப்பெற்றது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 10 பெண் யாருடைய அதிகாரத்தின் கீழ் இருக்கிறாளோ அவருக்கே குழந்தை உரியது. (இருப்பினும், சாயலை வைத்து) சந்தேகங்களைத் தவிர்க்க வேண்டும்.**

2888 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களும் அப்து பின் ஸம்ஆ (ரலி) அவர்களும் ஓர் இளைஞன் விஷயத்தில் (நபி (ஸல்) அவர்களிடம்) வழக்காடினர்.
சஅத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இந்த இளைஞன் என் சகோதரர் உத்பா பின் அபீவக்காஸின் மகன் ஆவான். என் சகோதரர் (தமது இறப்பின்போது) இந்த இளைஞன் தம்முடைய மகன் என்று என்னிடம் வலியுறுத்திக் கூறினார். இந்த இளைஞன் அவரது சாயலில் இருப்பதை நீங்கள் கவனியுங்கள்" என்று கூறினார்கள்.
அதற்கு அப்து பின் ஸம்ஆ (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இந்த இளைஞன் என் சகோதரன் ஆவான். என் தந்தைக்குச் சொந்தமான அடிமைப் பெண்ணுக்கு இவன் பிறந்தான்" எனக் கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவ்விளைஞனிடம் உத்பாவின் தெளிவான சாயலைக் கண்ட பிறகும் (அப்து பின் ஸம்ஆ (ரலி) அவர்களிடம்), "அப்தே! அவன் உமக்குரியவனே. (ஒரு பெண் பெற்றெடுத்த) குழந்தை, (அப்)பெண் யாருடைய அதிகாரத்தின் கீழ் இருக்கிறாளோ அவருக்கே உரியது. விபசாரம் செய்தவருக்கு இழப்புதான் ஏற்படும்" எனக் கூறினார்கள்.

பிறகு (தம் மனைவி சவ்தா (ரலி) அவர்களிடம்), "சவ்தாவே! இந்த இளைஞனிடத்தில் பர்தாவைப் பேணிக்கொள்" என்று கூறினார்கள். "அதற்குப் பிறகு சவ்தா (ரலி) அவர்களை அந்த இளைஞன் ஒருபோதும் கண்டதில்லை" என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் முஹம்மத் பின் ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்கள் (அப்து பின் ஸம்ஆ (ரலி) அவர்களை) "அப்தே!' என்று அழைத்தது இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் மஅமர் மற்றும் இப்னு உயைனா (ரஹ்) ஆகியோரது அறிவிப்புகளில் "விபசாரம் செய்தவருக்கு இழப்புதான் ஏற்படும்" என்ற குறிப்பு இடம்பெறவில்லை.

2889 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஒரு பெண் பெற்றெடுத்த) குழந்தை, (அப்)பெண் யாருடைய அதிகாரத்தின் கீழ் இருக்கிறாளோ அவருக்கே உரியது. விபச்சாரம் செய்தவருக்கு இழப்புதான் ஏற்படும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 11 அங்க அடையாளங்களை வைத்து உறவு முறையைக் கண்டறியும் நிபுணர், ஒரு குழந்தை யாருக்குரியதென்று தீர்மானிக்கிறாரோ அதன்படி செயல்படுதல்.**

2890 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் நெற்றிக்கோடுகள் ஒளிர்ந்த வண்ணம் மகிழ்ச்சியுடன் என்னிடம் வந்தார்கள். அப்போது "உனக்குத் தெரியுமா? சற்று முன் (அங்க அடையாளங்களைக் கொண்டு தந்தை பிள்ளையைக் கண்டறியும்) முஜஸ்ஸிஸ் என்பார், ஸைத் பின் ஹாரிஸாவையும் (அவருடைய புதல்வர்) உசாமா பின் ஸைதையும் (அவர்கள் படுத்திருந்தபோது) அவர்களின் பாதங்களைப் பார்த்தார். மேலும், "இந்தப் பாதங்களில் ஒன்று மற்றொன்றிலிருந்து உருவானது'என்று சொன்னார்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2891 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மகிழ்ச்சியுடன் என்னிடம் வந்தார்கள். அப்போது "ஆயிஷா! "பனூ முத்லிஜ்'குலத்தைச் சேர்ந்த முஜஸ்ஸிஸ் என்பவர், என்னிடம் வந்தார். அப்போது உசாமாவும் (அவருடைய தந்தை) ஸைதும் ஒரு துணியைப் போர்த்தி(க்கொண்டு படுத்து) இருப்பதைக் கண்டார். அவர்களிருவரும் தம் தலைகளை மூடியிருந்தனர்; (ஆனால்) அவர்களின் பாதங்கள் வெளியே தெரிந்தன. அப்போது முஜஸ்ஸிஸ் "இந்தப் பாதங்களில் ஒன்று மற்றொன்றிலிருந்து உருவானது என்று சொன்னார்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2892 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பார்த்துக்கொண்டிருக்க, அங்க அடையாளங்களைக் கொண்டு உறவு முறையைக் கண்டறியும் நிபுணர் ஒருவர் (என் வீட்டிற்கு) வந்தார். உசாமா பின் ஸைத் அவர்களும், ஸைத் பின் ஹாரிஸா அவர்களும் அப்போது ஒருக்களித்துப் படுத்திருந்தார்கள். அந்த நிபுணர் (இருவரின் பாதங்களையும் பார்த்து), "இந்தப் பாதங்களில் ஒன்று மற்றொன்றிலிருந்து உருவானது" என்று சொன்னார். அதனால் நபி (ஸல்) அவர்கள் மகிழ்ச்சி யடைந்து, அவரைக் கண்டு வியந்தார்கள். மேலும், அதை எனக்குத் தெரிவித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் யூனுஸ் பின் யஸீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "முஜஸ்ஸிஸ், அங்க அடையாளங்களைக் கொண்டு உறவு முறையைக் கண்டறியும் நிபுணராக இருந்தார்" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 12 (புதிதாக மணந்துகொண்ட) கன்னிப் பெண்ணுக்கும் கன்னி கழிந்த பெண்ணுக்கும், திருமணத்திற்குப் பின் கணவன் ஒதுக்க வேண்டிய நாட்களின் அளவு.**

2893 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை மணந்துகொண்டபோது, என்னுடன் மூன்று நாட்கள் தங்கினார்கள். நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "(புதுமணப் பெண்ணான உன்னுடன் மூன்று நாட்கள் மட்டும் தங்குவதால்) உனக்கு உன் கணவரால் எந்த அவமரியாதையும் கிடையாது. நீ விரும்பினால் உன்னிடம் ஏழு நாட்கள் தங்குகிறேன். ஆனால், உன்னிடம் ஏழு நாட்கள் தங்கினால், என்னுடைய மற்றத் துணைவியரிடமும் ஏழு நாட்கள் தங்குவேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2894 அப்துல் மலிக் பின் அபீபக்ர் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உம்மு சலமா (ரலி) அவர்களை மணந்து கொண்டபோது, (மறுநாள்) காலையில் தம்முடன் இருந்த உம்மு சலமாவிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(புதுமணப் பெண்ணான உன்னுடன் மூன்று நாட்கள் மட்டும் தங்குவதால்) உனக்கு உன் கணவரால் எந்த அவமரியாதையும் கிடையாது. நீ விரும்பினால் உன்னிடம் ஏழு நாட்கள் தங்குகிறேன். நீ விரும்பினால் உன்னிடம் மூன்று நாட்கள் தங்கிவிட்டு, (மற்றத் துணைவியர்) ஒவ்வொருவரின் வீட்டுக்கும் செல்கிறேன்" என்று கூறினார்கள். அதற்கு உம்மு சலமா (ரலி) அவர்கள், "என்னிடம் மூன்று நாட்கள் தங்கியிருங்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வருமாறு காணப்படுகிறது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உம்மு சலமா (ரலி) அவர்களை மணந்து அவர்களுடன் தங்கியிருந்தார்கள். (மூன்று நாட்களுக்குப்) பின்னர் (மற்றத் துணைவியரின் வீட்டுக்குச் செல்வதற்காக) நபி (ஸல்) அவர்கள் புறப்பட முற்பட்டபோது, உம்மு சலமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் ஆடையைப் பிடித்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ விரும்பினால் மேலும் சில நாட்கள் (உன்னுடன்) தங்குகிறேன். (ஆனால்,) அதை உனது கணக்கில் (கழித்து) வைத்துக்கொள்வேன். ஏழு நாட்கள் கன்னிப் பெண்ணுக்கும், மூன்று நாட்கள் கன்னி கழிந்த பெண்ணுக்கும் உரியவையாகும்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2895 அப்துல் வாஹித் பின் அய்மன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூபக்ர் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்து பல விஷயங்களை அறிவித்துள்ளார்கள். அவற்றில் (பின்வரக்கூடிய) இதுவும் ஒன்று: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உம்மு சலமா (ரலி) அவர்களை மணந்தார்கள். (அப்போது) அவர்களிடம், "நீ விரும்பினால் நான் உன்னிடமும் ஏழு நாட்கள் தங்குகிறேன்; (அதைப் போன்று) என்னுடைய மற்றத் துணைவியரிடமும் ஏழு நாட்கள் தங்குவேன்" என்று கூறினார்கள்.

2896 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் கன்னி கழிந்த பெண் (ஒருத்தி மனைவியாக) இருக்க, மற்றொரு கன்னிப் பெண்ணை மணந்துகொண்டால், (முதலில்) கன்னிப் பெண்ணிடம் ஏழு நாட்கள் தங்குவார். ஒருவர் கன்னிப்பெண் (ஒருத்தி மனைவியாக) இருக்க, கன்னி கழிந்த பெண்ணை மணந்தால் (முதலில்) கன்னி கழிந்த பெண்ணிடம் மூன்று நாட்கள் தங்குவார்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான காலித் பின் மஹ்ரான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: "இதை அனஸ் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவிக்கிறார்கள்' என்று நான் சொன்னால், அது (தவறாகாது) சரிதான். ஆயினும், அனஸ் (ரலி) அவர்கள், "இதுவே நபிவழியாகும்" என்று (மட்டுமே) கூறினார்கள்.

2897 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் (தாம் மணந்த) கன்னிப் பெண்ணிடம் ஏழு நாட்கள் தங்குவதே நபிவழியாகும்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான காலித் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் நினைத்தால் "இதை அனஸ் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவிக்கிறார்கள்" என்று சொல்ல முடியும்.(அது தவறில்லை.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 13 மனைவியருக்கு (இரவுகளை) ஒதுக்கீடு செய்வதும், ஒவ்வொரு மனைவிக்கும் (குறைந்தது) ஓர் இரவு ஒரு பகலை ஒதுக்குவதே நபிவழியாகும் என்பதன் விளக்கமும்.

2898 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்கு ஒன்பது துணைவியர் இருந்தனர். அவர்களிடையே (இரவுகளைப்) பங்கிட்டு (ஒவ்வொருவரிடமும் ஓர் இரவு வீதம் தங்கிவந்ததால்), முதலாவது மனைவியிடம் ஒன்பது நாட்களுக்குப் பிறகே நபியவர்கள் திரும்பச் செல்வார்கள். எனவே, யாருடைய வீட்டில் நபியவர்கள் தங்குவார்களோ அவரது வீட்டில் எல்லாத் துணைவியரும் ஒவ்வோர் இரவிலும் ஒன்றுகூடுவர். (ஓர் இரவில்) ஆயிஷா (ரலி) அவர்களது வீட்டில் இருந்தபோது, ஸைனப் (ரலி) அவர்கள் அங்கு வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் (ஆயிஷா என்று நினைத்து) ஸைனபிடம் கையை நீட்டினார்கள்.

அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் "இவர் ஸைனப்" என்றார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் தமது கையை விலக்கிக்கொண்டார்கள். இதனால் ஆயிஷா (ரலி) அவர்களும் ஸைனப் (ரலி) அவர்களும் வாக்குவாதம் செய்தனர். தொழுகைக்காக "இகாமத்' சொல்லப்பட்டும்கூட அவர்கள் சப்தமிட்டுக்கொண்டிருந்தனர். அப்போது அவ்வழியே சென்று கொண்டிருந்த அபூபக்ர் (ரலி) அவர்கள் அவ்விருவரின் சப்தத்தைக் கேட்டு (கோபமுற்று, நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! அவர்களின் வாயில் மண்ணைத் தூவிவிட்டு, நீங்கள் தொழச் செல்லுங்கள்" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்களும் (தொழச்) சென்றார்கள். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், "இப்போது நபி (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும், (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள் வருவார்கள்; என்னைக் கடுமையாகக் கண்டிப்பார்கள்" என்று கூறினார்கள். (அதைப் போன்றே) நபி (ஸல்) அவர்கள் தொழுது

முடித்ததும், அபூபக்ர் (ரலி) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம் வந்து கடுஞ்சொற்களால் அவரைக் கண்டித்தார்கள். மேலும், "இப்படியா நீ நடந்து கொள்கிறாய்?" என்று கேட்டார்கள்.

**பாடம் : 14 மனைவியரில் ஒருவர், தனது முறை நாளை மற்றவருக்கு விட்டுக்கொடுக்கலாம்.**

2899 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கூர்மையான அறிவும் திடமான மனமும் கொண்ட சவ்தா பின்த் ஸம்ஆ (ரலி) அவர்களைத் தவிர, வேறு எந்தப் பெண்ணைப் பார்த்தும் "அவராக நான் இருக்க வேண்டும்' என்று நான் விரும்பியதில்லை. சவ்தா (ரலி) அவர்கள் முதுமை அடைந்தபோது,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களால் ஒதுக்கப்பட்ட தமக்குரிய முறை நாளை சவ்தா (ரலி) அவர்கள் எனக்கு விட்டுக் கொடுத்தார்கள். "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் எனக்கு ஒதுக்கிய (முறை) நாளை நான் ஆயிஷாவிற்கு விட்டுக்கொடுத்துவிட்டேன்" என்று நபி (ஸல்) அவர்களிடம் சவ்தா கூறினார்கள். எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்குரிய முறைநாளையும் சவ்தா (ரலி) அவர்களுக்குரிய முறை நாளையும் சேர்த்து இரண்டு நாட்களை எனக்கு ஒதுக்கினார்கள்.

2900 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் ஷரீக் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "எனக்குப் பின் நபி (ஸல்) அவர்கள் மணந்துகொண்டவர்களில் சவ்தா (ரலி) அவர்களே முதல் பெண்மணி ஆவார் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்" என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

2901 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குத் தங்களையே (மஹ்ரின்றி) கொடையாக வழங்க முன்வந்த பெண்களைப் பற்றி நான் ரோஷம் கொண்டிருந்தேன். நான், "ஒரு பெண் தன்னைத் தானே (ஓர் ஆணுக்கு) அன்பளிப்பாக வழங்கவும் செய்வாளா?" என்று சொல்லிக் கொண்டேன்."(நபியே! உம் துணைவியரான) அவர்களில் நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம்வரை) ஒதுக்கிவைக்கலாம். நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம்வரை) உங்களுடன் இருக்கவைக்கலாம். நீங்கள் ஒதுக்கிவைத்தவர்களில் யாரை விரும்புகின்றீர்களோ அவர்களை (மறுபடியும்) உங்களுடன் சேர்த்துக்கொள்ளலாம். இதனால் உங்கள் மீது குற்றம் ஏதுமில்லை" (33:51) எனும் இறைவசனத்தை அல்லாஹ் அருளியபோது, நான் நபியவர்களிடம் "உங்கள் இறைவன் உங்கள் விருப்பத்தை விரைவாகப் பூர்த்தி செய்வதையே நான் பார்க்கிறேன்" என்று சொன்னேன்.

2902 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், "ஒரு பெண் தன்னைத் தானே ஓர் ஆணுக்குக் கொடையாக வழங்க வெட்கப்பட மாட்டாளா?" என்று கூறிவந்தேன். பின்னர் "(நபியே! உங்கள் துணைவியராகிய) அவர்களில் நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம்வரை) ஒதுக்கிவைக்கலாம். நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம்வரை) உங்களுடன் இருக்கவைக்கலாம்" எனும் (33:51ஆவது) வசனத்தை அல்லாஹ் அருளிய போது, நான் நபியவர்களிடம் "உங்கள் இறைவன் உங்கள் விருப்பத்தை விரைவாகப் பூர்த்தி செய்கிறான்" என்று சொன்னேன்.

2903 அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுடைய துணைவியார் மைமூனா (ரலி) அவர்களின் ஜனாஸாவில் (இறுதித் தொழுகையில்) நாங்கள் "சரிஃப்"எனும் இடத்தில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுடன் கலந்து கொண்டோம். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
இவர் நபி (ஸல்) அவர்களுடைய துணைவியார் ஆவார். இவரது (உடல் வைக்கப்பட்டுள்ள) கட்டிலைத் தூக்கும்போது குலுக்கவோ அசைக்கவோ செய்யாதீர்கள்; மென்மையுடன் (எடுத்துச்) செல்லுங்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஒன்பது துணைவியர் இருந்தனர். எட்டுப் பேருக்கு அவர்கள் (இரவைப்) பங்கிட்டுவந்தார்கள்; ஒரேயொருவருக்கு மட்டும் பங்கிட்டுத் தரவில்லை.
அறிவிப்பாளர் அதாஉ (ரஹ்) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் இரவைப் பங்கிட்டுக் கொடுக்காத அந்தத் துணைவியார் ஸஃபிய்யா பின்த் ஹுயை பின் அக்தப் ஆவார்" என்று குறிப்பிடுகிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2904 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மதீனாவில் இறந்த நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் அவர்தாம் இறுதியானவர் என அதாஉ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 15 மார்க்க (நல்லொழுக்க)ம் உடைய பெண்ணை மணப்பது விரும்பத்தக்கதாகும்.

2905 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான்கு (நோக்கங்களு)க்காக ஒரு பெண் மணமுடிக்கப்படுகிறாள்:
1. அவளது செல்வத்திற்காக. 2. அவளது குடும்பப் பாரம்பரியத்திற்காக. 3. அவளது அழகிற்காக. 4. அவளது மார்க்க (நல்லொழுக்க)த்திற்காக. ஆகவே, மார்க்க (நல்லொழுக்க)ம் உடையவளை (மணந்து)கொண்டு வெற்றி அடைந்துகொள்! (இல்லையேல்) உன்னிரு கரங்களும் மண்ணாகட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2906 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் ஒரு பெண்ணை மணந்தேன். பின்னர் நபி (ஸல்) அவர்களை நான் சந்தித்தபோது அவர்கள் என்னிடம், "ஜாபிரே! நீ மணமுடித்து விட்டாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம், (மணமுடித்துவிட்டேன்)" என்று கூறினேன். நபி (ஸல்) அவர்கள், "(அவள்) கன்னிப் பெண்ணா? அல்லது கன்னி கழிந்த பெண்ணா?"என்று கேட்டார்கள். நான் "(அவள்) கன்னி கழிந்த பெண்" என்று கூறினேன். (அப்போது) நபி (ஸல்) அவர்கள் "கன்னிப் பெண்ணை மணந்து கொண்டு நீ அவளுடன் கொஞ்சிக் குலவி மகிழ்ந்திருக்கலாமே!" என்று கேட்டார்கள். அதற்கு நான், "அல்லாஹ்வின் தூதரே! எனக்குச் சகோதரிகள் சிலர் உள்ளனர்.எனவே, (வயதில் சிறியவளான

அனுபவமில்லாத கன்னிப் பெண்ணை மணப்பதால்) அவள் எனக்கும் என் சகோதரிகளுக்குமிடையே பிரச்சினையாக இருந்துவிடுவாள் என்று நான் அஞ்சினேன். (எனவேதான், கன்னி கழிந்த பெண்ணை மணந்துகொண்டேன்)" என்று கூறினேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அப்படியென்றால், இ(வ்வாறு நீ செய்த)து சரிதான்!" என்று கூறிவிட்டு, (பின்வருமாறு) சொன்னார்கள்:
(மூன்று நோக்கங்களுக்காக) ஒரு பெண் மணமுடிக்கப்படுகிறாள்:
1. அவளது மார்க்க (நல்லொழுக்க)த்திற்காக. 2. அவளது செல்வத்திற்காக. 3. அவளது அழகிற்காக. ஆகவே, மார்க்க (நல்லொழுக்க)ம் உடைய பெண்ணை மணந்துகொள்! (இல்லையேல்) உன்னிரு கரங்களும் மண்ணாகட்டும்.

## பாடம் : 16 கன்னிப் பெண்ணை மணப்பது விரும்பத்தக்கதாகும்.

2907 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொண்டேன். பின்னர் என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ மணமுடித்துவிட்டாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். நபி (ஸல்) அவர்கள், "கன்னிப் பெண்ணை மணந்துகொண்டாயா? அல்லது கன்னி கழிந்த பெண்ணை மணந்துகொண்டாயா?" என்று கேட்டார்கள். நான் "கன்னிகழிந்த பெண்ணை மணந்து கொண்டேன்" என்று பதிலளித்தேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "கன்னிப் பெண்களைவிட்டும்,அவர்களுடன் (கொஞ்சிக் குலவி) விளையாடுவதைவிட்டும் நீ எங்கே விலகிச் சென்றுவிட்டாய்?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் ஓர் அறிவிப்பில் ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது: நான் இந்த ஹதீஸை (அறிவிப்பாளர்) அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்களிடம் கூறியபோது அவர்கள், "நான் இந்த ஹதீஸை ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்து பின்வருமாறு கேட்டிருக்கிறேன் என்று கூறினார்கள்: நபி (ஸல்) அவர்கள் (ஜாபிர் (ரலி) அவர்களிடம்), "கன்னிப் பெண்ணை மணந்துகொண்டு அவளோடு நீயும் உன்னோடு அவளுமாகக் கொஞ்சிக் குலவி மகிழ்ந்திருக்கலாமே!" என்று கேட்டார்கள்.

2908 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் (உஹுதுப் போரில்) இறந்துவிட்டார்கள். (இறக்கும்போது) ஒன்பது பெண் மக்களை (அல்லது ஏழு பெண் மக்களை) விட்டுச் சென்றார்கள். ஆகவே, (கன்னி கழிந்த) ஒரு பெண்ணை நான் மணமுடித்துக்கொண்டேன். அப்போது என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஜாபிரே! நீ மணமுடித்துக் கொண்டாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அதற்கு "கன்னிப் பெண்ணையா, கன்னி கழிந்த பெண்ணையா (யாரை மணந்தாய்)?" என்று கேட்டார்கள். நான் "இல்லை; கன்னி கழிந்த பெண்ணைத்தான் (மணந்தேன்), அல்லாஹ்வின் தூதரே!" என்று பதிலளித்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கன்னிப் பெண்ணை மணந்து "நீ அவளுடனும் அவள் உன்னுடனும் கொஞ்சிக் குலவி விளையாடலாமே' அல்லது "நீ அவளுக்கும் அவள் உனக்கும் மகிழ்வூட்டலாமே' " என்று கேட்டார்கள்.

அதற்கு நான், "(என் தந்தை) அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் "ஒன்பது' அல்லது "ஏழு' பெண் மக்களை விட்டுவிட்டு இறந்துவிட்டார்கள். (வயதில்) அவர்களையொத்த ஒரு (இளவயதுப்) பெண்ணை (மணமுடித்து) அவர்களிடம் அழைத்துச் செல்வதை நான் விரும்பவில்லை; அவர்களைப் பராமரித்துச் சீராகப் பேணி நிர்வகிக்கும் (பக்குவமுள்ள) ஒரு பெண்ணையே (அவர்களிடம்) அழைத்துச் செல்ல நான் விரும்பினேன்" என்றேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அல்லாஹ் உனக்கு "வளத்தை அளிப்பானாக' என்று, அல்லது "நல்ல வார்த்தையை' என்னிடம் கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபுர்ரபீஉ அஸ்ஸஹ்ரானீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நீ அவளுடனும் அவள் உன்னுடனும் கொஞ்சிக் குலவி விளையாடலாமே; நீ அவளுக்கும் அவள் உனக்கும் மகிழ்வூட்டலாமே!" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என (ஐயப்பாடின்றி) இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "திருமணம் முடித்துக் கொண்டாயா, ஜாபிரே?' என்று கேட்டார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகி, "மாறாக, அவர்களுக்குத் தலை வாரிவிட்டு, அவர்களை(க் கருத்தாக)ப் பராமரித்துவரும் ஒரு பெண்ணை (திருமணம் செய்ய நினைத்தே கன்னி கழிந்த பெண்ணைத் தேர்ந்தெடுத்தேன்)" என்று கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ செய்தது சரிதான்" என்று கூறினார்கள் என்று ஹதீஸ் முடிகிறது.

2909 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒரு போரில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். நாங்கள் (போரை முடித்து) திரும்பிக்கொண்டிருந்தபோது, நான் மெதுவாகச் செல்லக்கூடிய என் ஒட்டகத்தின் மீது இருந்துகொண்டு அவசரப்பட்டுக்கொண்டிருந்தேன். அப்பொழுது ஒருவர் எனக்குப் பின்னால் வாகனம் ஒன்றில் வந்துசேர்ந்து, தம்மிடமிருந்த கைத்தடியால் எனது ஒட்டகத்தைக் குத்தினார். உடனே எனது ஒட்டகம் நீ காணுகின்ற ஒட்டகங்களிலேயே மிக உயர்தரமானது போன்று ஓடலாயிற்று. நான் திரும்பிப் பார்த்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருந்தார்கள். அவர்கள் (என்னிடம்), "ஜாபிரே! என்ன அவசரம் உனக்கு?" என்று கேட்டார்கள். அதற்கு, "அல்லாஹ்வின் தூதரே! நான் புதிதாகத் திருமணம் செய்துகொண்டவன்" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ மணந்தது கன்னிப் பெண்ணையா, அல்லது கன்னி கழிந்த பெண்ணையா?" என்று கேட்டார்கள். நான் "இல்லை; கன்னி கழிந்த பெண்ணையே (மணந்தேன்)" என்றேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கன்னிப் பெண்ணை மணந்துகொண்டு, அவளோடு நீயும் உன்னோடு அவளுமாகக் கொஞ்சிக் குலவி மகிழ்ந்திருக்கலாமே?" என்று கேட்டார்கள்.
பிறகு மதீனாவிற்கு வந்து (ஊருக்குள்) நுழையப்போனபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நீங்கள் ஊர் வந்து சேர்ந்துவிட்ட தகவல் வீட்டுப் பெண்களைச் சென்றடைய) இரவு (இஷா) நேரம் வரும்வரை சற்றுப் பொறுத்திருங்கள். தலைவிரி கோலமாயிருக்கும் பெண்கள் தலைவாரிக் கொள்ளட்டும். (கணவனைப்) பிரிந்திருந்த பெண்கள் சவரக்கத்தியைப்

பயன்படுத்தி(த் தங்களை ஆயத்தப்படுத்தி)க்கொள்ளட்டும்" என்று சொன்னார்கள். மேலும், "நீ (ஊருக்குச்) சென்றால் புத்திசாலித்தனமாக நடந்து (குழந்தையைத் தேடிக்)கொள்; புத்திசாலித்தனமாக நடந்து கொள்" என்றும் சொன்னார்கள்.

- ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஓர் அறப்போருக்குப் புறப்பட்டுச் சென்றேன். (போரை முடித்து நாங்கள் திரும்பியபோது) எனது ஒட்டகம் களைத்து பலமிழந்து போனதால் என்னைத் தாமதப்படுத்திவிட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்து "ஜாபிர்(தானா)?' என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். "என்ன விஷயம் (ஏன் தாமதம்)?" என்று கேட்டார்கள். "எனது ஒட்டகம் களைத்துப் பலமிழந்து போனதால் நான் பின்தங்கிவிட்டேன்" என்று சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வாகனத்திலிருந்து) கீழே இறங்கி, முனைப்பகுதி வளைந்த தமது கைத்தடியால் எனது ஒட்டகத்தைக் குத்திவிட்டார்கள். பிறகு "ஒட்டகத்தில் ஏறு" என்றார்கள். நான் ஒட்டகத்தில் ஏறினேன். (அது விரைந்தோடியது.) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைவிட எனது ஒட்டகம் முந்திவிடாதவாறு அதைக் கட்டுப்படுத்தினேன்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ திருமணம் செய்து கொண்டாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அதற்கு, "கன்னிப் பெண்ணையா, கன்னி கழிந்த பெண்ணையா (யாரை மணந்தாய்)?" என்று கேட்டார்கள். நான் "இல்லை; கன்னி கழிந்த பெண்ணைத்தான் (மணந்து கொண்டேன்)" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கன்னிப் பெண்ணை மணந்து கொண்டு அவளோடு நீயும் உன்னோடு அவளுமாகக் கொஞ்சிக் குலவி மகிழ்ந்திருக்கலாமே?" என்று கேட்டார்கள். நான், "எனக்குச் சகோதரிகள் சிலர் உள்ளனர். அவர்களை அரவணைத்து, அவர்களுக்குத் தலைவாரி, அவர்களைப் பராமரிக்கக்கூடிய ஒரு பெண்ணை மணக்க வேண்டும் என்று விரும்பினேன்" என்று பதிலளித்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இப்போது நீ ஊருக்குச் செல்லப்போகிறாய். ஊர் சென்றதும் புத்திசாலித்தனமாக நடந்துகொள்; புத்திசாலித்தனமாக நடந்துகொள்" என்று கூறிவிட்டு, "உனது ஒட்டகத்தை (எனக்கு) விற்றுவிடுகிறாயா?" என்று கேட்டார்கள். நான் "சரி' என்றேன். அவர்கள் என்னிடமிருந்து ஓர் "ஊக்கியா' விலை பேசி அதை வாங்கிக்கொண்டார்கள். (தொடர்ந்து ஊர் வந்து சேரும்வரை அதிலேயே நான் வந்தேன்.)

(எனக்கு முன்பே) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனாவிற்குச்) சென்றுவிட்டார்கள். நான் மறுநாள்தான் சென்றடைந்தேன். நான் பள்ளிவாசலுக்கு வந்தபோது அதன் நுழைவாயிலில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருப்பதைக் கண்டேன். "இப்போது தான் வருகிறாயா?" என்று என்னிடம் கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். "உனது ஒட்டகத்தை விட்டுவிட்டு உள்ளே சென்று இரண்டு ரக்அத்கள் தொழு" என்று சொன்னார்கள். அவ்வாறே நான் உள்ளே சென்று தொழுது விட்டுத் திரும்பிவந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்காக ஓர் "ஊக்கியா' எடை போடுமாறு பிலால் (ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். எனக்காக பிலால் (ரலி) அவர்கள் எடை போட்டுச் சற்று தாராளமாகவே நிறுத்(துத் தந்)தார்கள். பிறகு நான் திரும்பிச் சென்றபோது "ஜாபிரை எனக்காக அழைத்துவா" என்றார்கள். அவ்வாறே நான் அழைக்கப்பட்டேன். நான் (என் மனதிற்குள்) "இப்போது எனது ஒட்டகத்தை எனக்கே

திரும்பத் தந்துவிடுவார்களோ! அ(வ்வாறு ஒட்டகத்தையும் வாங்கிக்கொண்டு விலையையும் பெற்றுக்கொண்டு நபியவர்களைச் சிரமப்படுத்துவ)தைவிட வெறுப்பானது எனக்கு வேறொன்றுமில்லை" என்று கூறிக்கொண்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனது ஒட்டகத்தை நீயே எடுத்துக்கொள்; அதன் கிரயமும் உனக்கே" என்றார்கள்.

2910 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒரு (போரை முடித்துத் திரும்பும்) பயணத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது நான் எனது நீர் இறைக்கும் ஒட்டகத்தில் இருந்தேன். அது மக்களின் பின்வரிசையில் வந்துகொண்டிருந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்மிடமிருந்த ஒரு பொருளால் அதை "அடித்தார்கள்' அல்லது "குத்தினார்கள்'. பின்னர் அது எனக்கு அடங்காமல் மக்களை முந்திக்கொண்டு ஓடத் துவங்கியது. பின்னர் அதை நான் கட்டுப்படுத்த வேண்டியதாயிற்று. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் உன்னை மன்னிக்கட்டும்! இ(ந்த ஒட்டகத்)தை இன்னின்ன விலைக்கு எனக்கு நீ விற்றுவிடுகிறாயா?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! இது உங்களுக்குரியது" என்றேன். அவர்கள், "அல்லாஹ் உன்னை மன்னிக்கட்டும்! இன்னின்ன விலைக்கு இதை நீ எனக்கு விற்றுவிடுகிறாயா?" என்று (மீண்டும்) கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! இது உங்களுக்குரியது" என்றேன். அவர்கள் என்னிடம், "உன் தந்தை(யின் மறைவு)க்குப் பின் நீ மணமுடித்தாயா?' என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அவர்கள், "கன்னி கழிந்த பெண்ணையா, அல்லது கன்னிப் பெண்ணையா (யாரை மணந்தாய்)?" என்று கேட்டார்கள். நான், "கன்னி கழிந்த பெண்ணைத்தான் (மணந்தேன்)"என்றேன். "ஏன், கன்னிப் பெண்ணை மணந்து அவள் உனக்கும் நீ அவளுக்கும் மகிழ்வூட்டலாமே; அவள் உன்னுடனும் நீ அவளுடனும் கொஞ்சிக் குலவி விளையாடலாமே?" என்று கேட்டார்கள்.
இதன் அறிவிப்பாளரான அபூநள்ரா முன்திர் பின் மாலிக் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
பின்னர் ("அல்லாஹ் உன்னை மன்னிக்கட்டும்; இதை நீ இன்னின்ன விலைக்கு எனக்கு விற்றுவிடுகிறாயா?' எனும்) இச்சொல்லே, "அல்லாஹ் உன்னை மன்னிக்கட்டும்; இன்னின்னதைச் செய்" என்று முஸ்லிம்கள் கூறுகின்ற சொல்வழக்காக அமைந்தது.

## பாடம் : 17 பயன் தரும் இவ்வுலகச் செல்வங்களில் மிகவும் மேலானது, நல்ல மனைவியே.

2911 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இவ்வுலகம் (முழுவதும்) பயனளிக்கும் செல்வங்களே; பயனளிக்கும் இவ்வுலகச் செல்வங்களில் மிகவும் மேலானது, நல்ல மனைவியே.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 18 பெண்களுக்கு நலம் நாடுதல்.

2912 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பெண் (வளைந்த) விலா எலும்பைப் போன்றவள் ஆவாள். அவளை நீ (ஒரேயடியாக) நிமிர்த்தப்போனால் அவளை ஒடித்தே விடுவாய். அவளை நீ அப்படியே விட்டு விட்டால், அவளில் கோணல் இருக்கவே அவளை அனுபவிக்க வேண்டியதுதான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2913 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பெண் (வளைந்த) விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டிருக்கிறாள். ஒரே (குண) வழியில் உனக்கு அவள் ஒருபோதும் இணங்க மாட்டாள். அவளை நீ அனுபவித்துக் கொண்டே இருந்தால், அவளில் கோணல் இருக்கவே அனுபவிக்க வேண்டியதுதான். அவளை நீ (ஒரேயடியாக) நிமிர்த்தப்போனால் அவளை ஒடித்தேவிடுவாய். அவளை "ஒடிப்பது' என்பது, அவளை மணவிலக்குச் செய்வதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2914 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொண்டவர் ஏதேனும் பிரச்சினையில் பங்கெடுத்தால் ஒன்று, நல்லதையே பேசட்டும்; அல்லது வாய்மூடி (மௌனமாக) இருக்கட்டும். பெண்களுக்கு நன்மையே நாடுங்கள். (அவர்களிடம் நல்ல விதமாக நடந்துகொள்ளும்படி கூறும் எனது அறிவுரையை ஏற்றுக்கொள்ளுங்கள்.) ஏனெனில், பெண், விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டிருக்கிறாள். விலா எலும்பிலேயே அதன் மேற்பகுதி மிகவும் கோணலானதாகும். நீ அதை (ஒரேயடியாக) நிமிர்த்தப்போனால் அதை நீ உடைத்தே விடுவாய். அதை அப்படியே விட்டுவிட்டால், கோணலுள்ளதாகவே அது நீடிக்கும். ஆகவே,பெண்களுக்கு நன்மையே நாடுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2915 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைநம்பிக்கைகொண்ட ஓர் ஆண் இறை நம்பிக்கையுள்ள ஒரு பெண்ணை (முழுமையாக) வெறுத்து ஒதுக்க வேண்டாம். அவளிடமிருந்து அவர் ஒரு குணத்தை வெறுத்தாலும், மற்றொரு குணத்தைக் கண்டு திருப்திகொள்ளட்டும்" என்றோ, அல்லது (இதைப் போன்று) வேறொரு முறையிலோ கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 19 "ஹவ்வா' இருந்திராவிட்டால் எந்தப் பெண்ணும் ஒருபோதும் தன் கணவனை ஏமாற்றியிருக்கமாட்டாள்.

2916 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர் கள் கூறினார்கள்:
ஹவ்வா (ஆதிமனிதர் ஆதம் (அலை) அவர்களின் துணைவி ஏவாள்) இருந்திறாவிட்டால், எந்தப் பெண்ணும் தன் கணவனை ஒருபோதும் ஏமாற்றியிருக்கமாட்டாள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

2917 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இஸ்ரவேலர்கள் இருந்திராவிட்டால் உணவு கெட்டுப்போயிருக்காது; இறைச்சி துர்நாற்றமடித்திருக்காது. ஹவ்வா இருந்திராவிட்டால் எந்தப் பெண்ணும் ஒருபோதும் தன் கணவனை ஏமாற்றியிருக்கமாட்டாள்.

# அத்தியாயம் : 18 - மணவிலக்கு

**பாடம் : 1 மாதவிடாயிலிருக்கும் பெண்ணை அவளது சம்மதமின்றி மணவிலக்குச் செய்வது தடை செய்யப்பட்டுள்ளது; ஆயினும், (மாதவிடாய் காலத்தில்) கணவன் மணவிலக்குச் செய்தால் மணவிலக்கு நிகழவே செய்யும். எனினும், மனைவியைத் திரும்ப அழைத்துக் கொள்ளுமாறு அவன் கட்டளையிடப்படுவான்.**

2918 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் என் மனைவியை (மாதவிடாய் காலத்தில்) மணவிலக்குச் செய்துவிட்டேன். ஆகவே, (என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் இதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் தந்தையிடம், "உங்கள் புதல்வருக்குக் கட்டளையிடுங்கள்; அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும்! பிறகு அவள் மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்து, அடுத்து மீண்டும் அவளுக்கு மாதவிடாய் ஏற்பட்டுப் பின்னர் அதிலிருந்து அவள் தூய்மையடையும்வரை அவளை (தம்மிடமே) விட்டுவைக்கட்டும். பிறகு அவர் விரும்பினால், (இரண்டாவது மாதவிடாயிலிருந்து தூய்மையான) பின்னர் தம்மிடமே (தம் மனைவியாக) வைத்திருக்கட்டும். அவர் விரும்பினால் அவளுடன் தாம்பத்திய உறவு கொள்வதற்கு முன்பாக அவளை மணவிலக்குச் செய்யட்டும். (மாதவிடாயிலிருந்து தூய்மையான) இந்தக் காலகட்டமே மனைவியரை மணவிலக்குச் செய்ய அல்லாஹ் (2:228ஆவது வசனத்தில்) அனுமதித்துள்ள ("இத்தா' எனும் காத்திருப்புக் காலத்தைக் கணக்கிட்டுக்கொள்வதற்கு ஏற்ற) கால கட்டமாகும்" என்று சொன்னார்கள்.

- நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தம் மனைவியை, அவர் மாதவிடாயிலிருந்த சமயத்தில் ஒரு தலாக் சொல்லிவிட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் பின் உமர் அவர்களுக்கு(ப் பின்வருமாறு) கட்டளையிட்டார்கள்:
அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ள வேண்டும். பிறகு மனைவி மாதவிடாயிலிருந்து தூய்மையாகும்வரை தம்மிடமே வைத்துக்கொள்ள வேண்டும். பிறகு தம்மிடம் இருக்கும் அவளுக்கு இரண்டாவது முறை மாதவிடாய் ஏற்பட்டு, அதன் பிறகு அந்த மாதவிடாயிலிருந்து அவள் தூய்மையடையும்வரை காத்திருக்க வேண்டும். பின்னர் அவளைத் தலாக் சொல்ல விரும்பினால் அவளுடன் தாம்பத்திய உறவு கொள்வதற்கு முன் அவள் (மாதவிடாய் காலத்தில் இல்லாமல்) தூய்மையானவளாய் இருக்கும்போது தலாக் சொல்லிக்கொள்ளட்டும்! இதுவே,பெண்களை மணவிலக்குச் செய்ய அல்லாஹ் உத்தரவிட்டுள்ள காலமாகும்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் இது தொடர்பாகக் கேட்கப்பட்டபோது "நீ உன் மனைவியை ஒரு முறை அல்லது இரு முறை தலாக் சொல்லிக்கொள்! (அப்போதுதான் அவளை நீ திரும்ப

அழைத்துக்கொள்ளலாம்.) இவ்வாறு (நிகழ்ந்தபோது)தான், (திரும்ப அழைத்துக்கொள்ளுமாறு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு உத்தரவிட்டார்கள். நீ உன் மனைவியை மூன்று தலாக் சொல்லியிருந்தால், அவள் வேறொரு கணவனை மணக்காத வரை அவள் உனக்குத் தடை செய்யப்பட்டவளாக ஆகிவிடுவாள். மேலும், உன் மனைவியை மணவிலக்குச் செய்யும்போது, அல்லாஹ் உனக்கிட்ட உத்தரவிற்கு நீ மாறு செய்தவனாகவும் ஆகிவிடுவாய்" என்று ஒருவரிடம் கூறினார்கள் என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

2919 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் என் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டேன். அப்போது அவள் மாதவிடாய் காலத்தில் இருந்தாள். ஆகவே, (என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் இதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என் தந்தையிடம்), "உங்கள் புதல்வருக்குக் கட்டளையிடுங்கள்; அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும்! பிறகு அவள் மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்து, அடுத்து மறுபடியும் அவளுக்கு மாதவிடாய் ஏற்படும்வரை அவளை(த் தம்மிடமே) விட்டு வைக்கட்டும். பிறகு அவள் மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்ததும் அவளுடன் தாம்பத்திய உறவு கொள்வதற்கு முன் அவளை மணவிலக்குச் செய்யட்டும். அல்லது அவளைத் தம்மிடமே (தம் மனைவியாக) வைத்திருக்கட்டும். (மாதவிடாயிலிருந்து தூய்மையடையும்) இந்தக் காலகட்டமே மனைவியரை மணவிலக்குச் செய்ய அல்லாஹ் உத்தரவிட்டுள்ள காலகட்டமாகும்" என்று சொன்னார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான உபைதுல்லாஹ் பின் உமர் பின் ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) நாஃபிஉ (ரஹ்) அவர்களிடம், "(மாதவிடாயின் போது சொன்ன) அந்த ஒரு தலாக் என்னவாகும்? (அது நிகழுமா, நிகழாதா?)" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அதை ஒரு தலாக்காகக் கணித்துக்கொள்ள வேண்டும்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் உபைதுல்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் நாஃபிஉ (ரஹ்) அவர்களிடம் கேட்ட வினாவைப் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை.

2920 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தம் மனைவியை, அவர் மாதவிடாயிலிருந்த சமயத்தில் தலாக் சொல்லிவிட்டார்கள். ஆகவே, (அவர்களின் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் (இதைப் பற்றி) நபி (ஸல்) அவர்களிடம் வினவினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களுக்கு (பின்வருமாறு) கட்டளையிட்டார்கள்.
அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ள வேண்டும்.பிறகு இரண்டாவது முறை மாதவிடாய் ஏற்பட்டுப் பின்னர் அந்த மாதவிடாயிலிருந்து அவள் தூய்மையடையும் வரை

காத்திருக்க வேண்டும். பிறகு அவளுடன் தாம்பத்திய உறவு கொள்வதற்கு முன்னால் (அவள் மாதவிடாய் காலத்தில் இல்லாமல் தூய்மையானவளாய் இருக்கும் போது) தலாக் சொல்லிக்கொள்ளட்டும்! இதுவே, பெண்களை மணவிலக்குச் செய்ய அல்லாஹ் உத்தரவிட்டுள்ள காலமாகும்.
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், மாதவிடாயிலிருக்கும் தம் மனைவியை ஒருவர் தலாக் சொல்வதைப் பற்றி வினவப்பட்டால் பின்வருமாறு பதிலளிப்பார்கள்:
நீ ஒரு முறை, அல்லது இரு முறை அவளைத் தலாக் சொல்லியிருந்தால், உன் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொண்டு, பிறகு இரண்டாவது முறை அவளுக்கு மாதவிடாய் ஏற்பட்டுப் பிறகு அந்த மாதவிடாயிலிருந்து அவள் தூய்மையடையும்வரை நீ காத்திருக்க வேண்டும். பிறகு அவளுடன் தாம்பத்திய உறவு கொள்வதற்கு முன்னால் (அவள் மாதவிடாயுடன் இல்லாமல் தூய்மையுடன் இருக்கும்போது) தலாக் சொல்ல வேண்டும். இவ்வாறே எனக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். ஆனால், நீ அவளை மூன்று தலாக் சொல்லியிருந்தால், நீ உன் மனைவியை மணவிலக்குச் செய்யும் விஷயத்தில் அல்லாஹ் பிறப்பித்த கட்டளைக்கு மாறுசெய்துவிட்டாய். ஆனால், அவள் உன்னிடமிருந்து பிரிந்துவிட்டாள் (தலாக் நிகழ்ந்துவிட்டது).

2921 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்தபோது தலாக் சொல்லிவிட்டேன். ஆகவே, (என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் இதைப் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தார்கள். இதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கோபப்பட்டார்கள். பிறகு (என் தந்தையிடம்,) "நீங்கள் உங்கள் புதல்வருக்குக் கட்டளையிடுங்கள்; அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக் கொள்ளட்டும்! அவளை அவர் மணவிலக்குச் செய்த மாதவிடாய் நாட்களை விடுத்து, அதற்கடுத்த மாதவிடாய்வரை (காத்திருக்கட்டும்). பிறகு அவளை மணவிலக்குச் செய்ய வேண்டுமென அவருக்குத் தோன்றினால், அவள் அந்த மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்ததும் அவளுடன் தாம்பத்திய உறவு கொள்வதற்கு முன் அவளைத் தலாக் சொல்லிக்கொள்ளட்டும்! இதுவே அல்லாஹ் கட்டளையிட்டுள்ளதைப் போன்று "இத்தா'வுக்குரிய தலாக் ஆகும்.

இதன் அறிவிப்பாளரான சாலிம் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(என் தந்தை) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தம் மனைவியை (அவர் மாதவிடாயிலிருந்தபோது) ஒரு தலாக் சொல்லியிருந்தார்கள். அது தலாக்காகவே கருதப் பட்டது. பின்னர் அவரை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கட்டளைக்கேற்ப திரும்ப அழைத்துக்கொண்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "எனவே, நான் என் மனைவியை திரும்ப அழைத்துக்கொண்டேன். நான் அவளக்குச் சொன்ன தலாக்கைத் தலாக்காகவே கணித்தேன்" என்று அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

2922 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்தபோது தலாக் சொல்லிவிட்டேன். ஆகவே, (என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் இதைப் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் (என் தந்தையிடம்), "உங்கள் புதல்வருக்குக் கட்டளையிடுங்கள்; அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும்! பின்னர் அவள் மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்திருக்கும்போது, அல்லது ("இத்தா'வைக் கணக்கிடுவதற்கு வசதியாக) அவள் கர்ப்பமுற்றிருக்கும்போது அவளைத் தலாக் சொல்லிக் கொள்ளட்டும்!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2923 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்தபோது தலாக் சொல்லிவிட்டேன். ஆகவே, (என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் இதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என் தந்தையிடம்) "உங்கள் புதல்வருக்குக் கட்டளையிடுங்கள்; அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக் கொள்ளட்டும்! அவள் மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்து, பிறகு இரண்டாவது மாதவிடாய் ஏற்பட்டுப் பிறகு அதிலிருந்தும் தூய்மையடையட்டும்! பின்னர் அவர் (விரும்பினால்) தலாக் சொல்லிக்கொள்ளட்டும். அல்லது தம்மிடம் (மனைவியாக) வைத்துக்கொள்ளட்டும்!" என்று சொன்னார்கள்.

2924 முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னால் சந்தேகிக்க முடியாத சிலர் என்னிடம் "அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தம் மனைவியை, அவர் மாதவிடாயிலிருந்த போது மூன்று தலாக் சொல்லிவிட்டார்கள்; பின்னர் திரும்ப அழைத்துக்கொள்ளுமாறு பணிக்கப்பட்டார்கள்" என இருபது வருடங்களாக அறிவித்துவந்தனர். நான் அவர்களைச் சந்தேகிக்க முடியாமலும், (மூன்று தலாக் சொன்னவர் தம் மனைவியை எப்படித் திரும்ப அழைக்க முடியும் என்பதால்) அந்த ஹதீஸை(ப் பற்றிய உண்மையை) அறியாதவனாகவும் இருந்துவந்தேன்.
இந்நிலையில், அபூ ஃகல்லாப் யூனுஸ் பின் ஜுபைர் அல்பாஹிலீ (ரஹ்) அவர்களைச் சந்தித்தேன். யூனுஸ் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் நம்பத்தகுந்தவராய் இருந்தார்கள். அவர்கள் என்னிடம் (பின்வருமாறு) கூறினார்கள்: நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் (அதைப் பற்றிக்) கேட்டேன். அப்போது அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் என்னிடம் "நான் என் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்தபோது ஒரு தலாக் சொல்லிவிட்டேன். அப்போது அவளைத் திரும்ப அழைத்துக்கொள்ளுமாறு எனக்குக் கட்டளையிடப்பட்டது" என்று கூறினார்கள்.
நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் "(மாதவிடாய் காலத்தில் செய்யப்பட்ட இந்த மணவிலக்கு,)மணவிலக்காகக் கருதப்பட்டதா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "(மண விலக்காகக் கருதப்படாமல்) வேறென்ன?ஒருவன் (தனது கடமையை நிறைவேற்ற) இயலாமலும், அதை அறிந்துகொள்ளாமலும் இருந்துவிட்டால் (மணவிலக்கு நிகழாமல் போய்விடுமா) என்ன?" என்று கேட்டார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் அவற்றில், "ஆகவே, உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் அதைப் பற்றிக் கேட்டார்கள். அப்போது அவர்களிடம் ("உங்கள் புதல்வருக்குக் கட்டளையிடுங்கள்; அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும்!' என) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

2925 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஆகவே உமர் (ரலி) அவர்கள் அதைப் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் வினவினார்கள். அப்போது, "உங்கள் புதல்வருக்குக் கட்டளையிடுங்கள்; அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும்! பிறகு தாம்பத்திய உறவு நடைபெறாத தூய்மையான நிலையில் அவளை மணவிலக்குச் செய்யட்டும்!" என்றும், "இத்தாவை எதிர்கொள்வதற்கு ஏற்ற நாட்களில் அவளை அவர் மணவிலக்குச் செய்யட்டும்!" என்றும் நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள் என இடம்பெற்றுள்ளது.

2926 யூனுஸ் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், "ஒருவர் மாதவிடாயிலிருக்கும் தம் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டால் (சட்டம் என்ன)?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அப்துல்லாஹ் பின் உமரை (அதாவது என்னை) உங்களுக்குத் தெரியுமா? நான் மாதவிடாயிலிருந்த என் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டேன். ஆகவே, (என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்று இது குறித்துக் கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உங்கள் புதல்வர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ள வேண்டும்; பின்னர் அவள் தனது "இத்தா'வை எதிர்பார்த்திருக்க வேண்டும் (பிறகு விரும்பினால் மணவிலக்குச் செய்துகொள்ளட்டும்!) என உத்தரவிடுங்கள்" என்று கூறினார்கள்.
தொடர்ந்து யூனுஸ் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், "ஒருவர் மாதவிடாயிலிருந்த தம் மனைவியைத் தலாக் சொல்லிவிட்டால், அதை மணவிலக்காக நீங்கள் கருதுவீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "(அதை மணவிலக்காகக் கருதாமல்) வேறென்ன? ஒருவன் (தனது கடமையை நிறைவேற்ற) இயலாமலும், (அதை) அறிந்துகொள்ளாமலும் இருந்து விட்டால் (மணவிலக்கு நிகழாமல் போய்விடுமா) என்ன?" என்று கேட்டார்கள்.

2927 யூனுஸ் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: நான் என் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்தபோது மணவிலக்குச் செய்துவிட்டேன். ஆகவே, (என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் அது குறித்துத் தெரிவித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "(உங்கள் புதல்வர்) தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும்! அவள் (மாதவிடாயிலிருந்து) தூய்மையடைந்ததும் விரும்பினால் அவர் மணவிலக்குச் செய்து கொள்ளட்டும்! (என்று உத்தரவிடுங்கள்)" என்று கூறினார்கள்.

நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், "(மாதவிடாய் காலத்தில் சொல்லப்பட்ட) அந்த மணவிலக்கை நீங்கள் மணவிலக்காகக் கருதினீர்களா?" என்று கேட்டேன். அதற்கு "ஒருவன் (தனது கடமையை நிறைவேற்ற) இயலாமலும், (அதை) அறிந்துகொள்ளாமலும் இருந்துவிட்டால் மணவிலக்கைத் தடுக்க என்ன உள்ளது?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2928 அனஸ் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், அவர்களால் மணவிலக்குச் செய்யப்பட்ட அவர்களுடைய மனைவியைப் பற்றிக் கேட்டேன். அப்போது அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "நான் என் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்தபோது மணவிலக்குச் செய்துவிட்டேன். இது பற்றி (என் தந்தை) உமர் (ரலி) அவர்களிடம் தெரிவிக்கப் பட்டபோது, அவர்கள் அதை நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் (என் தந்தையிடம்), "நீங்கள் உங்கள் புதல்வருக்குக் கட்டளையிடுங்கள்; அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும்! அவள் (மாதவிடாயிலிருந்து) தூய்மையடைந்ததும், அவள் தூய்மையாக இருக்கும்போது அவளை மணவிலக்குச் செய்து கொள்ளட்டும்!" என்று கூறினார்கள். ஆகவே, நான் என் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொண்டேன். பிறகு அவள் தூய்மையுடனிருந்த போது அவளை நான் மணவிலக்குச் செய்தேன்" என்று கூறினார்கள்.
நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், "(உங்கள் மனைவி) மாதவிடாயிலிருந்த போது நீங்கள் சொன்ன தலாக்கை மணவிலக்காகக் கருதினீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் (எனது கடமையை நிறைவேற்ற) இயலாமலும் அதை அறிந்துகொள்ளாமலும் இருந்தாலும்கூட, அதை நான் மணவிலக்காகக் கருதாமல் எப்படி இருக்க முடியும்?" என்று கேட்டார்கள்.

2929 அனஸ் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: மாதவிடாயிலிருந்த என் மனைவியை நான் மணவிலக்குச் செய்துவிட்டேன். ஆகவே, (என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்று இதைத் தெரிவித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், (என் தந்தையிடம்), "உங்கள் புதல்வருக்குக் கட்டளையிடுங்கள்; அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும்! பிறகு (மாதவிடாயிலிருந்து) அவள் தூய்மையடைந்ததும் மணவிலக்குச் செய்யட்டும்!" என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் அனஸ் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் தொடர்ந்து கூறுகிறார்கள்:
நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், "(மாதவிடாயின்போது சொல்லப்பட்ட அந்தத் தலாக்கை) மணவிலக்காக நீங்கள் கருதினீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "(தலாக்காகக் கருதாமல்) வேறென்ன?"என்று கேட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், (மாதவிடாயின்போது நீங்கள் சொன்ன தலாக்கை) மணவிலக்காகக் கருதுகிறீர்களா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,

(தலாக்காகக் கருதாமல்) வேறென்ன? எனக் கேட்டார்கள்" என்று (சிறு வித்தியாசத்துடன்) இடம்பெற்றுள்ளது.

2930 தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"ஒருவர் தம் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்தபோது மணவிலக்குச் செய்துவிட்டால் (சட்டம் என்ன)?" என்று அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் "அப்துல்லாஹ் பின் உமர் (அதாவது நான்) யார் என்று உமக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அதற்கு அவர்கள், "நான் என் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்தபோது மணவிலக்குச் செய்துவிட்டேன். ஆகவே, (என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்று இச்செய்தியைத் தெரிவித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் "உங்கள் புதல்வர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும் என்று கூறினார்கள்" என்றார்கள்.
இதன் அறிவிப்பாளரான அப்துல்லாஹ் பின் தாவூஸ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(இந்த அளவு மட்டுமே நான் இந்த ஹதீஸை என் தந்தை தாவூஸ் (ரஹ்) அவர்களிடமிருந்து செவியுற்றேன்.) அவர்கள் இதை விடக் கூடுதலாக வேறொன்றும் கூறியதை நான் கேட்கவில்லை.

2931 அபுஸ் ஸுபைர் முஹம்மத் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"அஸ்ஸா' என்பாரின் முன்னாள் அடிமையாயிருந்த அப்துர் ரஹ்மான் பின் அய்மன் (ரஹ்) அவர்கள் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம், "ஒருவர் தம் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்தபோது மணவிலக்குச் செய்துவிட்டார். இது குறித்து தாங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டார். –அப்போது (அங்கிருந்த) நான் அதைச் செவியுற்றுக் கொண்டிருந்தேன்.– அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் என் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்தபோது மணவிலக்குச் செய்துவிட்டேன். ஆகவே, (என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அப்துல்லாஹ் பின் உமர்,மாதவிடாயிலிருந்த தம் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டார்" என்று கூறி, அது குறித்துக் கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "உங்கள் புதல்வர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும்!" என்று சொன்னார்கள். அவ்வாறே நான் அவளைத் திரும்ப அழைத்துக்கொண்டேன். மேலும், நபி (ஸல்) அவர்கள், "மனைவி மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்ததும் அவர் மணவிலக்குச் செய்து கொள்ளட்டும்; அல்லது தம்மிடமே (மனைவியாக) வைத்துக்கொள்ளட்டும்!" என்றார்கள்.
மேலும், அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் "நபி (ஸல்) அவர்கள் "நபியே! பெண்களை நீங்கள் மணவிலக்குச் செய்தால், அவர்கள் "இத்தா'வைக் கடைப்பிடிப்பதற்கேற்ப அதன் ஆரம்பப் பகுதியில் மணவிலக்குச் செய்யுங்கள்' (65:1)என்ற வசனத்தை (ஓர் ஓதல் முறைப்படி) ஓதிக் காட்டினார்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "உர்வா' என்பாரின் முன்னாள் அடிமையாயிருந்த அப்துர் ரஹ்மான் பின் அய்மன் (ரஹ்) அவர்கள், அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப்

போன்று கேட்டார்கள். அப்போது நான் அதைச் செவியுற்றுக்கொண்டிருந்தேன் என அபுஸ் ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என ஹதீஸ் ஆரம்பமாகிறது.
முஸ்லிம் (பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான்) கூறுகிறேன்:
"உர்வா என்பாரின் முன்னாள் அடிமையாயிருந்த' என்று அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்கள் அறிவித்திருப்பது தவறாகும். அப்துர் ரஹ்மான் பின் அய்மன் (ரஹ்) அவர்கள், "அஸ்ஸா' என்பாரின் முன்னாள் அடிமையே ஆவார்.

## பாடம் : 2 முத்தலாக்.

2932 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மற்றும் அபூபக்ர் (ரலி) அவர்கள் ஆட்சிக் காலத்திலும், உமர் (ரலி) அவர்களது ஆட்சியின் (முதல்) இரண்டு ஆண்டுகளிலும் முத்தலாக் ஒரு தலாக்காகவே (நடைமுறையில்) இருந்தது. பின்னர் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், "நிதானமாகச் செயல்பட்டு (மீட்டுக் கொள்வதற்கான வாய்ப்பைப் பெற்று) வந்த ஒரு விஷயத்தில் மக்கள் (இப்போது) அவசரம் காட்டுகிறார்கள். எனவே, அதை (முத்தலாக்கை) அவர்களுக்கெதிராக (மீட்டுக்கொள்ள இயலாதவாறு) நாம் செயல்படுத்தினால் என்ன?" என்று கூறி, அவ்வாறே அதைச் செயல்படுத்தினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2933 தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபுஸ்ஸஹ்பா (ரஹ்) அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) மற்றும் அபூபக்ர் (ரலி) ஆகியோரது காலத்திலும் உமர் (ரலி) அவர்களது ஆட்சியில் (முதல்) மூன்று வருடங்களிலும் முத்தலாக் ஒரு தலாக்காகவே கருதப்பட்டுவந்ததை நீங்கள் அறிவீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "ஆம்'என்றார்கள்.
இந்தத் தகவல் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

2934 தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபுஸ்ஸஹ்பா (ரஹ்) அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "உங்களிடமுள்ள அரிய தகவல்களைக் கூறுங்கள்; முத்தலாக், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்திலும் அபூபக்ர் (ரலி) அவர்களது காலத்திலும் ஒரு தலாக்காக இருக்கவில்லையா?" என்று கேட்டார்கள். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "ஆம்;அவ்வாறுதான் இருந்தது. பின்னர் உமர் (ரலி) அவர்களது காலத்தில் மக்கள் தலாக்கை மலிவாக்கி அவசரக் கோலத்தில் செய்ய ஆரம்பித்தபோது, உமர் (ரலி) அவர்கள் முத்தலாக்கை அவர்கள்மீது செல்லுபடியாக்கினார்கள்" என்று கூறினார்கள்.

**பாடம் : 3 ஒருவர் தம் மனைவியிடம் "நீ எனக்குத் தடை செய்யப்பட்டவள் (ஹராம்)' என்று மணவிலக்குச் செய்யும் நோக்கமின்றி கூறினால், (அது மணவிலக்கு ஆகாது; எனினும், சத்திய முறிவுக்கான) பரிகாரம் செய்வது கடமையாகும்.**

2935 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"(ஒருவர் தம் மனைவியை நோக்கி "நீ எனக்குத் தடை செய்யப்பட்டவள்' எனக் கூறித் தமக்கு அனுமதிக்கப்பட்ட ஒன்றை) விலக்கிக்கொள்வதானது, பரிகாரம் செய்ய வேண்டிய சத்தியம் ஆகும்" என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறிவிட்டு, "உங்களுக்கு அல்லாஹ்வின் தூதரிடம் ஓர் அழகிய முன்மாதிரி இருக்கிறது" எனும் (33:21ஆவது) இறைவசனத்தை ஓதினார்கள்.

2936 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "ஒருவர் தம் மனைவியை நோக்கி "நீ எனக்குத் தடை செய்யப்பட்டவள்' எனக் கூறி(த் தமக்கு அனுமதிக்கப்பட்ட ஒன்றைத் தடை செய்யப்பட்டதாக ஆக்கி)னால், அது பரிகாரம் செய்ய வேண்டிய சத்தியமாகும்" என்று கூறிவிட்டு, "உங்களுக்கு அல்லாஹ்வின் தூதரிடம் ஓர் அழகிய முன்மாதிரி இருக்கிறது" என்றும் கூறினார்கள்.

2937 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களிடம் (அவர்களது அறையில் அதிகநேரம்) தங்கியிருந்து தேன் சாப்பிடுவது வழக்கம். ஆகவே, (இது பிடிக்காமல் நபியவர்களின் துணைவியரான) நானும் ஹஃப்ஸாவும் எங்களுக்குள் "நபி (ஸல்) அவர்கள் (ஸைனபின் அறைக்குச் சென்றுவிட்டு) நம்மில் யாரிடம் முதலில் வந்தாலும் "தங்களிடமிருந்து கருவேலம் பிசினின் துர்வாடை வருகிறதே! பிசின் சாப்பிட்டீர்களா?' என்று கேட்க வேண்டும்" எனக் கூடிப் பேசி முடிவு செய்துகொண்டோம்.
அவ்வாறே எங்களில் ஒருவரிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தபோது, முன்பு பேசி வைத்திருந்தபடி கேட்டோம். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(அப்படியெல்லாம் இல்லை.) மாறாக, ஸைனப் பின்த் ஜஹ்ஷிடம் (அவரது அறையில்) தேன் அருந்தினேன். (அவ்வளவு தான். சத்தியமாக) இனிமேல் ஒருபோதும் இவ்வாறு செய்யமாட்டேன்" என்று கூறினார்கள். ஆகவே, "நபியே! உங்களுடைய துணைவியரின் திருப்தியை எதிர்பார்த்து, அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்த ஒன்றை நீங்கள் ஏன் விலக்கிக்கொள்கிறீர்கள்?" என்று தொடங்கி "நீங்கள் இருவரும் இதற்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரினால் (அது உங்களுக்கே நன்று)" என முடியும் (66:1-4) வசனங்கள் அருளப்பெற்றன.
(இந்த 66:4ஆவது வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ள) "நீங்கள் இருவரும்' என்பது ஆயிஷா (ரலி) அவர்களையும் ஹஃப்ஸா (ரலி) அவர்களையுமே குறிக்கிறது.
(66:3ஆவது வசனத்தில்) "நபி தம் துணைவியரில் ஒருவரிடம் ஒரு விஷயத்தை இரகசியமாகச் சொல்லியிருந்தார்"என்று அல்லாஹ் கூறியிருப்பது, "இல்லை. நான் தேன்தான் அருந்தினேன். (சத்தியமாக ஒருபோதும் அதை நான் அருந்தமாட்டேன். இது குறித்து யாரிடமும் சொல்லிவிடாதே)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதையே குறிக்கிறது.

2938 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இனிப்பும் தேனும் விருப்பமானவையாக இருந்தன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகையை முடித்ததும் தம் துணைவியரிடம் சென்று அவர்களுடன் நெருக்கமாக இருப்பார்கள். (ஒரு நாள்) ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம் சென்ற அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வழக்கத்திற்கு மாறாக அதிக நேரம் இருந்துவிட்டார்கள். அது குறித்து நான் விசாரித்தபோது, ஹஃப்ஸாவின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண் அவருக்கு (தாயிஃப் நகர சுத்த)த் தேன் உள்ள ஒரு தோல் பையை அன்பளிப்பாக வழங்கினாள் என்றும்,அதிலிருந்து தயாரித்த பானத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஹஃப்ஸா புகட்டினார் என்றும் என்னிடம் கூறப்பட்டது.
உடனே நான் "அல்லாஹ்வின் மீதாணையாக! இ(தை நிறுத்துவ)தற்காக இதோ ஒரு தந்திரம் செய்வோம்" என்று கூறிக்கொண்டு, (நபியவர்களின் துணைவியரில் ஒருவரான) சவ்தா (ரலி) அவர்களிடம் அதைப் பற்றிக் கூறி, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களிடம் வரும்போது உங்களை நெருங்குவார்கள். அப்போது,அல்லாஹ்வின் தூதரே! கருவேலம் பிசின் சாப்பிட்டீர்களா? என்று கேளுங்கள். "இல்லை' என்று உங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுவார்கள். உடனே "இது என்ன வாடை?' என்று அவர்களிடம் கேளுங்கள். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்மிடமிருந்து (துர்)வாடை வீசுவதைக் கடுமையானதாகக் கருதுவார்கள்.) அப்போது அவர்கள், "எனக்கு ஹஃப்ஸா தேன்(கலந்த) பானம் புகட்டினார்' என்று உங்களிடம் கூறுவார்கள். உடனே நீங்கள் "இதன் தேனீக்கள் கருவேல மரத்தில் அமர்ந்து (அதன் பிசினை உட்கொண்டு)விட்டு வந்திருக்கலாம். (அதனால் தான் வாடை வருகிறது)' என்று சொல்லுங்கள். நானும் இவ்வாறே சொல்வேன். ஸஃபிய்யாவே! நீங்களும் இவ்வாறே சொல்லுங்கள் என்று (மற்றொரு துணைவியாரான ஸஃபிய்யாவிடமும்) சொன்னேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சவ்தா (ரலி) அவர்களிடம் சென்றபோது, (நான் சொன்ன படி செய்துவிட்டு) சவ்தா (என்னிடம்) கூறினார்: எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் வீட்டு வாசலுக்கு வந்தபோதே, உனக்குப் பயந்து நீ என்னிடம் சொன்னபடி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சொல்ல முனைந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை நெருங்கியதும் அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் கருவேலம் பிசினைச் சாப்பிட்டீர்களா?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இல்லை' என்று பதிலளித்தார்கள். "அப்படியானால் இது என்ன வாடை?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஹஃப்ஸா எனக்குத் தேன் (கலந்த) பானம் புகட்டினார்" என்று சொன்னார்கள். நான், "அதன் தேனீக்கள் கருவேல மரத்தில் அமர்ந்து (அதன் பிசினை உட்கொண்டு)விட்டு வந்திருக்கலாம். (அதனால்தான் தேனில் வாடை ஏற்பட்டுவிட்டது போலும்)" என்று கூறினேன்.
(தொடர்ந்து ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தபோது,அவர்களிடம் நானும் அவ்வாறே கூறினேன். பிறகு அவர்கள் ஸஃபிய்யா (ரலி) அவர்களிடம் சென்றபோது, அவரும் அவ்வாறே கூறினார். பின்னர்

ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்றபோது, "அல்லாஹ்வின் தூதரே! தங்களுக்குச் சிறிதளவு தேன் தரட்டுமா?" என்று கேட்டார். அவர்கள் "அது எனக்குத் தேவையில்லை" என்றார்கள்.
(இது குறித்து) சவ்தா (ரலி) அவர்கள், "அல்லாஹ் தூயவன்! அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை (அதை அருந்தவிடாமல்) நாம் தடுத்து விட்டோமே!" என்று (வருத்தத்துடன்) கூறுவார்கள். நான் அவரிடம், "சும்மா இருங்கள்! (விஷயம் பரவிவிடப் போகிறது)" என்று சொல்வேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
-இதே ஹதீஸ் மேலும் ஓர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 4 ஒருவர் தம் மனைவிக்கு (தம்முடன் சேர்ந்து வாழவும் பிரிந்துவிடவும்) விருப்ப உரிமை அளிப்பதானது, அவரது எண்ணத்தைப் பொறுத்தே தவிர மணவிலக்கு ஆகாது.**

2939 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய துணைவியருக்கு (அவர்கள் விரும்பினால் தம்முடன் சேர்ந்து வாழலாம்; அல்லது பிரிந்துவிடலாம் என) உரிமையளிக்குமாறு அல்லாஹ்வின் தூதருக்கு (இறைவனால்) கட்டளையிடப்பட்டது. அப்போது அவர்கள் என்னிடம்தான் முதன்முதலாக விஷயத்தைச் சொன்னார்கள்: "(ஆயிஷா!) நான் உனக்கு ஒரு விஷயத்தைச் சொல்கிறேன்" (என்று அதைச் சொல்லிவிட்டு,) "நீ உன் பெற்றோரிடம் அனுமதி கேட்காதவரை அவசரப்பட வேண்டாம்" என்று சொன்னார்கள். என் பெற்றோர் நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பிரிந்துவிடும்படி உத்தரவிடப் போவதில்லை என்பது நபியவர்களுக்குத் தெரிந்திருந்தது.
பிறகு அவர்கள் "நபியே! உங்கள் துணைவியரிடம் கூறுங்கள்: நீங்கள் இவ்வுலக வாழ்க்கையையும் அதன் அலங்காரத்தையும் விரும்பினால், வாருங்கள்! உங்களுக்கு வாழ்க்கைக்கு உரியதைக் கொடுத்து நல்ல முறையில் விடுவித்துவிடுகிறேன். நீங்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறு உலகையும் விரும்பினால்,உங்களிலுள்ள (இத்தகைய) நல்லவர்களுக்காக மகத்தான நற்பலனை அல்லாஹ் தயார்செய்துள்ளான்" (33:28,29)எனும் வசனங்களை ஓதினார்கள். அப்போது நான், "இது தொடர்பாக என் பெற்றோரிடம் நான் எதற்காக அனுமதி கேட்கவேண்டும்? நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறு உலகையுமே விரும்புகிறேன்" என்று சொன்னேன். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மற்றத் துணைவியரும் என்னைப் போன்றே நடந்துகொண்டனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2940 முஆதா பின்த் அப்தில்லாஹ் அல்அதவிய்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள் "(நபியே! உங்கள் துணைவியரான) அவர்களில் நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம்வரை) ஒதுக்கிவைக்கலாம். நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம் வரை) உங்களுடன் இருக்கவைக்கலாம்" (33:51) எனும் இறைவசனம் அருளப்பெற்ற பின்னரும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களில் ஒரு

மனைவியின் நாளில் (மற்றொரு மனைவியிடம் செல்ல விரும்பினால் அந்நாளை விட்டுக் கொடுக்கும்படி) எங்களிடம் அனுமதி கேட்பார்கள்" என்று சொன்னார்கள்.
அதற்கு நான், "அவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களிடம் அனுமதி கேட்கும்போது நீங்கள் என்ன சொல்வீர்கள்?" என்று ஆயிஷா (ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், "(அல்லாஹ்வின் தூதரே!) வேறொரு மனைவிக்காக எனது நாளை விட்டுக் கொடுக்கும்படி) நீங்கள் என்னிடம் அனுமதி கேட்பதாயிருந்தால், நான் யாருக்காக வேண்டியும் தங்களை விட்டுக் கொடுக்கமாட்டேன்' என்று சொல்வேன்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் முஆதா பின்த் அப்தில் லாஹ் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2941 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியரான) எங்களுக்கு (தமது மணப் பந்தத்திலிருந்து விலகிக்கொள்ள) விருப்ப உரிமை அளித்தார்கள். அ(வ்வாறு அவர்கள் உரிமை அளித்த)தை நாங்கள் மணவிலக்காகக் கருதவில்லை.

2942 மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் என் மனைவிக்கு விருப்பஉரிமை அளித்து, அவள் என்னையே தேர்ந்தெடுத்துக் கொண்டுவிட்டால், அவளுக்கு (ஆரம்பத்தில்) ஒன்றென்ன! நூறு அல்லது ஆயிர(ம் விவாகர) த்திற்கு நான் உரிமை அளித்திருந்தாலும் அதை நான் பொருட்படுத்தமாட்டேன். நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் (இது குறித்துக்) கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியரான) எங்களுக்கு (தமது மணப் பந்தத்திலிருந்து விலகிக்கொள்ள) விருப்பஉரிமை அளித்தார்கள். அதுவென்ன தலாக்காகவா ஆகிவிட்டது?" என்று கேட்டார்கள்.

2943 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியருக்கு (தமது மணப் பந்தத்திலிருந்து விலகிக்கொள்ள) விருப்பஉரிமை அளித்தார்கள். அ(வ்வாறு அவர்கள் உரிமை அளித்த)து மணவிலக்காக இருக்கவில்லை.

2944 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியரான) எங்களுக்கு (தமது மணப் பந்தத்திலிருந்து விலகிக்கொள்ள) விருப்பஉரிமை அளித்தார்கள். அப்போது நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை(ச் சார்ந்து வாழ்வதை)யே தேர்ந்தெடுத்தோம். இ(வ்வாறு உரிமை அளித்த)தை அவர்கள் தலாக் எனக் கருதவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2945 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியரான) எங்களுக்கு (விரும்பினால் தம்முடன் சேர்ந்து வாழலாம்; அல்லது பிரிந்துவிடலாம் என) விருப்பஉரிமை அளித்தார்கள். அப்போது நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை(ச் சார்ந்து வாழ்வதை)யே

தேர்ந்தெடுத்தோம். அ(வ்வாறு அவர்கள் உரிமை அளித்த)தை, (மணவிலக்கில்) எதுவாகவும் கருதவில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2946 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அபூபக்ர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவர்களது வீட்டுக்கு) வந்து, உள்ளே வர அனுமதி கேட்டார்கள். அப்போது மக்கள் பலர், தங்களில் எவருக்கும் உள்ளே செல்ல அனுமதி கிடைக்காமல் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வீட்டு வாசலிலேயே அமர்ந்திருப்பதைக் கண்டார்கள். அனுமதி கிடைத்ததும் அபூபக்ர் (ரலி) அவர்கள் உள்ளே நுழைந்தார்கள். பிறகு உமர் (ரலி) அவர்கள் வந்து உள்ளே நுழைய அனுமதி கேட்டார்கள். அவர்களுக்கும் அனுமதி கிடைத்தது. (அவர்களும் உள்ளே நுழைந்தார்கள்.) அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்மைச் சுற்றி தம் துணைவியர் இருக்க, பேச முடியாத அளவிற்குத் துக்கம் மேலிட்டவர்களாக மௌனமாக அமர்ந்திருப்பதைக் கண்டார்கள்.
அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் "நபி (ஸல்) அவர்களைச் சிரிக்க வைக்க எதையேனும் நான் சொல்லப்போகிறேன்" என்று (மனதிற்குள்) சொல்லிக்கொண்டு, "அல்லாஹ்வின் தூதரே! என் மனைவி (ஹபீபா) பின்த் காரிஜா என்னிடத்தில் குடும்பச் செலவுத் தொகையை (உயர்த்தித் தருமாறு) கேட்க, நான் அவரை நோக்கி எழுந்து அவரது கழுத்தில் அடித்து விட்டேன் என்றால், நீங்கள் என்ன சொல்வீர்கள்?" என்று கேட்டார்கள். (இதைக் கேட்டு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்தார்கள். "இதோ நீங்கள் காண்கிறீர்களே இவர்களும் என்னிடம் செலவுத் தொகையை (உயர்த்தித் தருமாறு) கோரியே என்னைச் சுற்றிக் குழுமியுள்ளனர்" என்று கூறினார்கள். உடனே அபூபக்ர் (ரலி) அவர்கள் (தம்முடைய புதல்வி) ஆயிஷா (ரலி) அவர்களை நோக்கி, அவர்களது கழுத்தில் அடிக்க எழுந்தார்கள். அடுத்து உமர் (ரலி) அவர்கள் (தம் புதல்வி) ஹஃப்ஸாவை நோக்கி, அவர்களது கழுத்தில் அடிப்பதற்காக எழுந்தார்கள். "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இல்லாததை நீங்கள் கேட்கிறீர்களா?" என்று அவர்களிருவருமே கூறினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியர், "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இல்லாத எதையும் ஒருபோதும் நாங்கள் கேட்கமாட்டோம்" என்று கூறினர்.

பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மாதம் அல்லது இருபத்தொன்பது நாட்கள் தம் துணைவியரிடமிருந்து விலகியிருந்தார்கள். பிறகு "நபியே! உங்கள் துணைவியரிடம் கூறுங்கள்" என்று தொடங்கி, "உங்களிலுள்ள நல்லவர்களுக்காக மகத்தான நற்பலனை அல்லாஹ் தயார் செய்துள்ளான்" என்று முடியும் (33:28,29)இந்த வசனங்கள் அவர்களுக்கு அருளப்பெற்றன.
இதையடுத்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆரம்பமாக ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, "ஆயிஷா! நான் உன்னிடம் ஒரு விஷயத்தை முன்வைக்க

விரும்புகிறேன். அது தொடர்பாக நீ உன் பெற்றோரிடம் ஆலோசனை கேட்காத வரை அவசரப்பட்டு (எந்த முடிவுக்கும் வந்து)விடக் கூடாது என விரும்புகிறேன்" என்று கூறினார்கள்.
அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அது என்ன, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்த (33:28ஆவது) வசனத்தை ஓதிக் காட்டினார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! உங்கள் (உறவைத் துண்டிக்கும்) விஷயத்திலா நான் என் பெற்றோரிடம் ஆலோசனை கேட்க வேண்டும்? இல்லை! நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறு உலகத்தையுமே தேர்ந்தெடுக்கிறேன்"என்று சொல்லிவிட்டு, "நான் கூறியதைத் தாங்கள் மற்றத் துணைவியரில் எவரிடமும் தெரிவிக்க வேண்டாமென உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்" என்றார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்களில் எவரேனும் என்னிடம் (நீ சொன்னதைப் பற்றிக்) கேட்டால் நான் அவர்களிடம் அதைத் தெரிவிக்காமல் இருக்கமாட்டேன். அல்லாஹ் என்னைக் கடினமான போக்கு உள்ளவனாகவோ, எவரையும் வழிதவறச் செய்பவனாகவோ அனுப்பவில்லை. மாறாக, (இறைநெறியை) எளிதாக்கிச் சொல்லும் ஆசானாகவே என்னை அனுப்பியுள்ளான்"என்றார்கள்.

**பாடம் :5 "ஈலா'ச் செய்வது, மனைவியரிடமிருந்து விலகியிருப்பது, அவர்களுக்கு விருப்ப உரிமை அளிப்பது மற்றும் "அவருக்கெதிராக நீங்கள் இருவரும் ஒருவருக்கு ஒருவர் உதவினால்' (66:4) எனும் இறைவசனத் தொடர்.**

2947 உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு மாத காலம் தம் துணைவியரிடம் நெருங்கமாட்டேன் எனச் சத்தியம் செய்து) தம் துணைவியரிடமிருந்து விலகியிருந்தபோது, நான் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்குச் சென்றேன். அங்கு மக்கள் (கவலையோடு) சிறு கற்களைத் தரையில் எறிந்து கொண்டு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியரை மணவிலக்குச் செய்துவிட்டார்கள்" என்று கூறிக்கொண்டிருந்தனர். – இது பர்தா பற்றிய சட்டம் அருளப்பெறுவதற்கு முன்பு நடந்த நிகழ்ச்சியாகும்.– "அன்று என்ன நடந்தது என்பதை நான் அறிந்தே தீருவேன்" என்று (எனக்குள்) நான் கூறிக்கொண்டேன்.
பிறகு நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, "அபூபக்ர் (ரலி) அவர்களின் புதல்வியே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை மன வேதனைப்படுத்தும் அளவிற்கு உங்களது தகுதி உயர்ந்துவிட்டதா?" என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "கத்தாபின் புதல்வரே! உங்களுக்கும் எனக்கும் என்ன பிரச்சினை? (முதலில்) நீங்கள் உங்களது பெட்டகத்தை (வீட்டை)க் கவனியுங்கள் (உங்கள் புதல்வி ஹஃப்ஸாவிற்கு அறிவுரை கூறுங்கள்)" என்று கூறினார்கள். ஆகவே, நான் (என் புதல்வி)ஹஃப்ஸா பின்த் உமரிடம் சென்று, "ஹஃப்ஸா! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை மன வேதனைப்படுத்தும் அளவிற்கு உனது தகுதி உயர்ந்துவிட்டதா? அல்லாஹ்வின் மீதாணையாக! (நீ இவ்வாறு செய்தால்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உன்னை நேசிக்கமாட்டார்கள் என்பதை நீ அறிந்தே உள்ளாய். நான் மட்டும் இல்லையென்றால், உன்னை அவர்கள் மணவிலக்குச் செய்திருப்பார்கள்" என்று கூறினேன்.

இதைக் கேட்டு ஹஃப்ஸா கடுமையாக அழுதார். நான் ஹஃப்ஸாவிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இப்போது) எங்கே இருக்கிறார்கள்?" என்று கேட்டேன். அதற்கு ஹஃப்ஸா, "மாடியிலுள்ள அவர்களது தனி அறையில் அவர்கள் இருக்கிறார்கள்" என்றார்கள். உடனே நான் அங்கு சென்றேன். அங்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பணியாளர் ரபாஹ், அந்த மாடியறையின் வாசற்படியில், செதுக்கப்பட்ட மரக்கட்டையின் மீது கால்களைத் தொங்கவிட்டபடி அமர்ந்திருந்தார். அது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏறுவதற்கும் இறங்கு வதற்கும் பயன்படுத்திய பேரீச்ச மரக்கட்டையாகும்.

நான் (அவரைக்) கூப்பிட்டு, "ரபாஹே! எனக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி கேள்" என்றேன். அப்போது ரபாஹ் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருந்த) அந்த அறையை உற்றுப் பார்த்தார். பிறகு என்னையும் பார்த்தார். ஆனால், பதிலேதும் சொல்ல வில்லை. பின்னர் (மீண்டும்) நான், "ரபாஹே! எனக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (உள்ளே வர) அனுமதி கேள்" என்றேன்.
ரபாஹ் அந்த அறையைப் பார்த்தார். பிறகு என்னையும் பார்த்தார். ஆனால், பதிலேதும் சொல்லவில்லை. பின்னர் நான் குரலை உயர்த்தி, "ரபாஹே! எனக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (உள்ளே வர) அனுமதி கேள். நான் (என் மகள்) ஹஃப்ஸா வுக்(குப் பரிந்து பேசுவதற்)காக வந்துள்ளேன் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எண்ணிவிட்டார்கள் என நான் நினைக்கிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! என் மகளின் கழுத்தை வெட்டுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டால் கூட நிச்சயமாக அவரது கழுத்தை வெட்டி விடுவேன்" என்று உரத்த குரலில் சொன்னேன்.
அப்போது ரபாஹ் என்னை ஏறிவரச் சொல்லி சைகை செய்தார். உடனே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அவர்கள் ஒரு பாயில் சாய்ந்து படுத்திருந்தார்கள். நான் அமர்ந்தவுடன் அவர்கள் தமது கீழாடையைச் சுருட்டி (ஒழுங்குபடுத்தி)னார்கள். அப்போது அவர்கள் உடலில் அந்த ஆடையைத் தவிர வேறெதுவும் இருக்கவில்லை. அந்தப் பாய் அவர்களது விலாப் புறத்தில் அடையாளம் பதித்திருந்தது. அப்போது நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தனி அறையை நோட்டமிட்டேன். அங்கு ஒரு "ஸாஉ' அளவு தொலி நீக்கப்படாத கோதுமையும், அறையின் ஒரு மூலையில் அதே அளவு கருவேல இலையும் இருந்தன. நன்கு பதனிடப்படாத ஒரு தோல் அங்கு தொங்கவிடப்பட்டிருந்தது.

(இதைக் கண்ட) என் கண்கள் (என்னையும் அறியாமல்) கண்ணீர் சொரிந்தன. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கத்தாபின் புதல்வரே! ஏன் அழுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் நபியே! என்னால் எவ்வாறு அழாமலிருக்க முடியும்? இந்தப் பாய் உங்களது விலாப் புறத்தில் அடையாளப்படுத்தியுள்ளதே. (இதோ) இதுதான் உங்களது தனிஅறை. இதில் நான் காணுகின்ற (விலை மலிவான) சில பொருட்களைத் தவிர வேறெதையும் நான் காண வில்லை. அந்த (பாரசீகம் மற்றும் இத்தாலி அரசர்களான) குஸ்ருவும் சீசரும் கனி வர்க்கங்களிலும் நதிகளிலும் (உல்லாசமாக) இருக்கின்றனர். நீங்களோ அல்லாஹ்வின் தூதரும் அவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவரும் ஆவீர்கள். ஆனால், உங்களது தனி அறை இவ்வாறு இருக்கிறதே!" என்றேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கத்தாபின் புதல்வரே! நமக்கு மறுமையும் அ(ம்மன்ன)வர்களுக்கு இம்மையும் இருப்பது உங்களுக்குத் திருப்தி இல்லையா?" என்று கேட்டார்கள். நான் "ஆம் (திருப்திதான்)" என்றேன்.
அந்த அறைக்குள் நுழைந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகத்தில் கோபத்தைக் கண்டிருந்தேன். ஆகவே, "அல்லாஹ்வின் தூதரே! தங்கள் துணைவியரைப் பற்றித் தங்களுக்கு என்ன சஞ்சலம்? நீங்கள் அவர்களை மணவிலக்குச் செய்திருந்தாலும் (நீங்கள் சஞ்சலப்பட வேண்டியதில்லை. ஏனெனில்,) தங்களுடன் (தங்களுக்கு உதவி புரிவதற்கு) அல்லாஹ் இருக்கின்றான். அவனுடைய வானவர்களும் ஜிப்ரீலும் மீக்காயீலும் நானும் அபூபக்ரும் இதர இறைநம்பிக்கையாளர்களும் தங்களுடன் இருக்கின்றோம்" என்று சொன்னேன்.

நான் ஒரு சிறு விஷயத்தைக் கூறினாலும் -நான் அல்லாஹ்வைப் புகழுகிறேன்- நான் கூறிய சொல்லை அல்லாஹ் மெய்யாக்கி வைப்பான் எனும் நம்பிக்கை எனக்கு இருக்கவே செய்தது. அப்போது "உங்களை அவர் மணவிலக்குச் செய்துவிட்டால் உங்களுக்குப் பதிலாக உங்களைவிடவும் சிறந்த துணைவியரை அவருடைய இறைவன் அவருக்கு வழங்க முடியும்" (66:5) என்ற விருப்ப உரிமை அளிக்கும் இந்த வசனமும், "அவருக்கு எதிராக நீங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் உதவிக்கொண்டால் அல்லாஹ் அவருடைய அதிபதி ஆவான். ஜிப்ரீலும் நம்பிக்கை கொண்டோரில் நல்லவர்களும் வானவர்களும் அதன் பின் (அவருக்கு) உதவுவார்கள்" (66:4) எனும் இறைவசனமும் அருளப்பெற்றன. அபூபக்ர் (ரலி) அவர்களின் புதல்வி ஆயிஷா (ரலி) அவர்களும் (என் புதல்வி) ஹஃப்ஸாவுமே நபி (ஸல்) அவர்களின் மற்றத் துணைவியரை மிகைத்தவர்களாக இருந்தனர்.
ஆகவே, நான், "அல்லாஹ்வின் தூதரே! (உங்கள் துணைவியரான) இவர்களை நீங்கள் மணவிலக்குச் செய்துவிட்டீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "இல்லை' என்றார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் பள்ளிவாசலுக்குள் நுழைந்தேன். (அங்கு) முஸ்லிம்கள் சிறு கற்களைத் தரையில் எறிந்துகொண்டு (ஆழ்ந்த கவலையுடன்) இருந்தனர்; "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியரை மணவிலக்குச் செய்து விட்டார்கள்" என்று கூறிக்கொண்டுமிருந்தனர். நான் இங்கிருந்து இறங்கிச்சென்று, "தாங்கள் தங்கள் துணைவியரை மணவிலக்குச் செய்யவில்லை என அவர்களிடம் தெரிவித்துவிடவா?" என்று கேட்டேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்; நீங்கள் விரும்பினால் (அவ்வாறு செய்யுங்கள்)" என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகத்திலிருந்து கோபம் விலகும் வரையிலும், பற்கள் தெரியுமளவிற்கு அவர்கள் சிரிக்கும்வரையிலும் அவர்களிடம் நான் பேசிக்கொண்டேயிருந்தேன். -அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடையே அழகான பற்கள் உடையவராக இருந்தார்கள்.- பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்த மாடியறையிலிருந்து) இறங்கினார்கள். நானும் இறங்கினேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தப் பேரீச்ச மரக்கட்டையைத் தமது கரத்தால் பற்றாமலேயே தரையில் நடப்பதைப் போன்று (சாதாரணமாக) நடந்தார்கள். (ஆனால்,) நான் அந்த மரக்கட்டையைப் பிடித்துக்கொண்டே இறங்கினேன். நான், "அல்லாஹ்வின் தூதரே!

நீங்கள் இந்த அறையில் இருபத்தொன்பது நாட்கள் மட்டுமே தங்கியுள்ளீர்கள் (ஆனால், ஒரு மாதம் மனைவியரிடமிருந்து விலகியிருக்கப்போவதாக சத்தியம் செய்திருந்தீர்களே?)!"என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "மாதம் என்பது இருபத்தொன்பது நாட்களாகவும் இருக்கும்" என்று சொன்னார்கள்.

பின்னர் நான் பள்ளிவாசலின் தலைவாயிலில் நின்றுகொண்டு உரத்த குரலில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியரை மணவிலக்குச் செய்யவில்லை" என்று கூறினேன். அப்போது, "பாதுகாப்பு அல்லது பயம் பற்றிய செய்தி அவர்களுக்குக் கிடைத்தால் அதை அவர்கள் (உடனே) பரப்பிவிடுகின்றனர். அதை இறைத்தூதரிடமும் தங்களில் அதிகாரமுள்ளோரிடமும் கொண்டுசென்றிருந்தால் அதை ஆய்வு செய்வோர் அறிந்துகொண்டிருப்பர்" (4:83) எனும் இந்த வசனம் அருளப்பெற்றது. நானே அச்செய்தியை ஆய்வு செய்தவனாக இருந்தேன்.

ஆக, மனைவியருக்கு விருப்ப உரிமை அளிப்பது தொடர்பான (33:28ஆவது) வசனத்தை, வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் அருளினான்.

2948 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் ஓராண்டு காலமாக ஒரு வசனத்தைப் பற்றி உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடம் (விளக்கம்) கேட்க வேண்டுமென்று காத்துக்கொண்டிருந்தேன். ஆனால், அவர்கள் மீதிருந்த (மரியாதை கலந்த) அச்சம் காரணமாகக் கேட்பதற்குத் துணிவு வரவில்லை.

(ஒரு முறை) உமர் (ரலி) அவர்கள் ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டுச் சென்றபோது நானும் அவர்களுடன் புறப்பட்டேன். அவர்கள் (ஹஜ்ஜை முடித்துக்கொண்டு) திரும்பி வரும் வழியில் நாங்கள் (மர்ருழ் ழஹ்ரான் எனும்) ஒரு சாலையில் இருந்தோம். அப்போது உமர் (ரலி) அவர்கள் தமது இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக "அராக்' (மிஸ்வாக்) மரத்தை நோக்கி ஒதுங்கிச் சென்றார்கள். அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்றிவிட்டு வரும்வரை நான் (அவர்களை எதிர்பார்த்தபடி) அவர்களுக்காக நின்று கொண்டிருந்தேன். பிறகு அவர்களுடன் செல்லலானேன்.

அப்போது அவர்களிடம் நான், "இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியரில் (நபியவர்களைச் சஞ்சலப்படுத்தும் வகையில்) ஒருவருக்கொருவர் (கூடிப் பேசி) உதவி புரிந்தவர்கள் யார்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஹஃப்ஸாவும் ஆயிஷா (ரலி) அவர்களும்தாம்" என்று பதிலளித்தார்கள்.

உடனே நான், "அல்லாஹ்வின் மீதாணையாக! ஓராண்டு காலமாக இது குறித்து உங்களிடம் நான் கேட்க வேண்டுமென எண்ணியிருந்தேன். ஆனால், உங்கள்மீது (எனக்கு) உள்ள (மரியாதை கலந்த) அச்சம் காரணமாக எனக்குத் துணிவு வரவில்லை" என்று சொன்னேன். அதற்கு "(இப்படிச்) செய்யாதீர்கள். என்னிடம் ஓர் அறிவு இருப்பதாக நீங்கள் எண்ணினால், என்னிடம் அது குறித்துக் கேட்டுவிடுங்கள். (உண்மையிலேயே) அதை நான் அறிந்திருந்தால், உங்களுக்கு நான் தெரிவிக்கிறேன்" என்று கூறிய உமர் (ரலி) அவர்கள், பிறகு (பின்வருமாறு) கூறினார்கள்:

அல்லாஹ்வின் மீதாணையாக! அறியாமைக் காலத்தில் பெண்களுக்கு எந்த உரிமையும் இருப்பதாக நாங்கள் கருதியதில்லை. அவர்(களின் உரிமை)கள் தொடர்பாக, தான் அருளிய

(சட்டத்)தை அல்லாஹ் அருளும் வரையிலும்,அவர்களுக்குரிய (செலவுத் தொகை, சொத்துரிமை ஆகிய)வற்றின் பங்குகளை அவன் நிர்ணயிக்கும் வரையிலும் (இந்நிலை நீடித்தது).
இந்நிலையில் (ஒரு நாள்) நான் ஒரு விவகாரம் குறித்து ஆலோசித்துக்கொண்டிருந்தேன். அப்போது என் மனைவி, "நீங்கள் இப்படி இப்படிச் செய்யலாமே!" என்று என்னிடம் (ஆலோசனை) கூறினார். அவரிடம் நான், "உனக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? நான் தீர்மானிக்க வேண்டிய ஒரு விஷயத்தில் உன் தலையீடு எதற்கு?" என்று கேட்டேன். அதற்கு அவர் என்னிடம், "கத்தாபின் புதல்வரே! (இப்படிச் சொல்கின்ற) உங்களைப் பார்த்து நான் வியப்படைகிறேன். உங்களுடன் விவாதிக்கப்படுவதை நீங்கள் விரும்பவில்லை. ஆனால், உங்களுடைய புதல்வி (ஹஃப்ஸாவோ தம் கணவர்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் விவாதித்ததால் அன்றைய நாள் முழுக்க அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கோபமாக இருந்தார்கள்" என்று சொன்னார்.
உடனே நான் எழுந்து, எனது மேலங்கியை எடுத்துக்கொண்டு, அப்படியே அங்கிருந்து புறப்பட்டு ஹஃப்ஸாவிடம் சென்றேன். "என் அருமை மகளே! நீ அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் வாதம் புரிந்து, அதனால் அவர்கள் அன்றைய தினம் முழுக்கக் கோபத்துடன் இருந்தார்களாமே (அது உண்மையா)?" என்று ஹஃப்சாவிடம் கேட்டேன். அதற்கு ஹஃப்ஸா, "அல்லாஹ்வின் மீதாணையாக! (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியரான) நாங்கள் அவர்களுடன் விவாதிப்பதுண்டு" என்றார். அதற்கு நான், "அல்லாஹ்வின் தண்டனையையும் அவனுடைய தூதரின் கோபத்தையும் பற்றி உனக்கு நான் எச்சரிக்கிறேன் என்பதை அறிவாயாக! அருமை மகளே! தம்முடைய அழகும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்மீது கொண்டுள்ள அன்பும் எவரைப் பூரிப்படைய வைத்துள்ளதோ அவரை (ஆயிஷாவை)ப் பார்த்து நீயும் துணிந்துவிடாதே!" என்று (அறிவுரை) சொன்னேன்.

பிறகு நான் நேராக (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மற்றொரு துணைவியான) உம்மு சலமாவிடம் (அவருக்கு அறிவுரை கூறச்) சென்றேன். ஏனெனில், அவர் என் (தாய்வழி) உறவினராவார். இது குறித்து அவரிடமும் நான் பேசினேன். அப்போது உம்மு சலமா என்னிடம், "கத்தாபின் புதல்வரே! உம்மைக் கண்டு நான் வியப்படைகிறேன். எல்லா விஷயங்களிலும் தலையிட்டுவந்த நீங்கள், இப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் அவர்களுடைய துணைவியருக்கும் இடையேயும் தலையிடும் அளவிற்கு வந்துவிட்டீர்களே!" என்று கூறினார். உம்மு சலமா தம் பேச்சால் என்னை ஒரு பிடி பிடித்துவிட்டார். எனக்கு ஏற்பட்டிருந்த பாதி (கோப உணர்ச்சி)யை உடைத்தெறிந்துவிட்டார். ஆகவே, நான் அவரிடமிருந்து வெளியேறி (வந்து)விட்டேன்.
அன்சாரிகளில் எனக்கொரு நண்பர் இருந்தார். நான் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது அவையில்) இல்லாதபோது கிடைக்கும் செய்திகளை அவர் எனக்குத் தெரிவிப்பதும், அவர் இல்லாத போது கிடைக்கும் செய்திகளை நான் அவருக்குத் தெரிவிப்பதும் வழக்கம்.

(அந்தக் கால கட்டத்தில் சிரியா நாட்டு) "ஃகஸ்ஸான்' வமிச மன்னர்களில் ஒருவனைப் பற்றிய அச்சம் எங்களுக்கு இருந்துவந்தது. அவன் எங்கள் (மதீனா)மீது படையெடுக்கத் திட்டமிட்டிருப்பதாக எங்களிடம் சொல்லப்பட்டிருந்தது. இதனால் அவனைக் குறித்த அச்சம் எங்கள் நெஞ்சங்களில் நிரம்பியிருந்தது.
இந்நிலையில் (ஒரு நாள்) அந்த அன்சாரி நண்பர் வந்து (என் வீட்டுக்) கதவைத் தட்டினார். "திறங்கள்; திறங்கள்'என்றார். (கதவைத் திறந்த) உடன் நான், "ஃகஸ்ஸானிய (மன்னன்)ன் வந்துவிட்டானா?" என்று கேட்டேன். அதற்கு அவர், "அதைவிடப் பெரியது நடந்துவிட்டது; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியரிடமிருந்து விலகிவிட்டார்கள்" என்றார்.

உடனே நான், "ஹஃப்ஸா, ஆயிஷா ஆகியோரின் மூக்கு மண்ணைக் கவ்வட்டும்!" என்று கூறிவிட்டு, எனது உடையை எடுத்து (அணிந்து)கொண்டு புறப்பட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தபோது, அவர்கள் தமக்குரிய மாடியறையொன்றில் (தங்கி) இருந்தார்கள். ஏணிப்படி வழியாகவே அந்த அறைக்குச் செல்ல முடியும். அங்கே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய கறுப்புநிறப் பணியாளர் ஒருவர் (ரபாஹ்), ஏணியின் முதற்படியில் இருந்தார். அவரிடம் நான், "இதோ உமர் (வந்துள்ளார் என அல்லாஹ்வின் தூதரிடம் கூறி அனுமதி கேள்)" என்றேன்.
எனக்கு அனுமதி கிடைத்தபோது (அந்த அறைக்குச் சென்று) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (எனக்கும் அவர்களுடைய துணைவியருக்குமிடையே நடைபெற்ற) இந்த உரையாடல்களை எடுத்துரைத்தேன். உம்மு சலமாவின் பேச்சு வந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்தார்கள்.
அப்போது அவர்கள் ஓர் ஈச்சம் பாயில் இருந்தார்கள். அவர்களுக்கும் அந்தப் பாய்க்குமிடையே (விரிப்பு) எதுவும் இருக்கவில்லை. அவர்களது தலைக்குக் கீழே ஈச்ச நார்கள் நிரப்பப்பெற்ற தோல் தலையணை ஒன்றிருந்தது. அவர்களின் கால்களுக்கு அருகில் கருவேல இலைகள் குவிக்கப்பட்டிருந்தன. அவர்களது தலைமாட்டில் பதனிடப்படா தோல்கள் தொங்கிக்கொண்டிருந்தன. அப்போது அவர்களின் விலாப்புறத்தில் ஈச்சம் பாயின் சுவடு (பதிந்து) இருப்பதைக் கண்டு நான் அழுது விட்டேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஏன் அழுகிறீர்கள்?" என்றார்கள். அதற்கு நான், "அல்லாஹ்வின் தூதரே! (பாரசீக மற்றும் இத்தாலி மன்னர்களான) குஸ்ருவும் சீசரும் இருக்கும் நிலையே வேறு! (தாராளமான உலகச்செல்வங்களுடன் உல்லாசமாக வாழ்கின்றனர்.) தாங்களோ அல்லாஹ்வின் தூதராயிற்றே?" என்றேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அ(ம்மன்ன)வர்களுக்கு இம்மையும் நமக்கு மறுமையும் இருப்பதை நீங்கள் திருப்திப்படவில்லையா?" என்று கேட்டார்கள்.

2949 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நான் உமர் (ரலி) அவர்களுடன் (ஹஜ்ஜுக்குச் சென்றுவிட்டு மதீனா நோக்கி) வந்தேன். நாங்கள் "மர்ருழ் ழஹ்ரான்' எனுமிடத்தில் இருந்தபோது" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்

பெற்றுள்ளன. மேலும், அதில் "அவ்விரு பெண்களைப் பற்றி நான் கேட்டேன். அதற்கு "ஹஃப்ஸாவும் உம்மு சலமாவுமே அவ்விருவரும்' என உமர் (ரலி) அவர்கள் விடையளித்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. மேலும் "நான் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியரின்) அறைகளுக்குச் சென்றேன். ஒவ்வொரு வீட்டிலும் அழுகைச் சப்தம் கேட்டது என்று உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்" என்றும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியரை ஒரு மாத காலம்வரை நெருங்கமாட்டேன்" எனச் சத்தியம் (ஈலா) செய்திருந்தார்கள்; இருபத்தொன்பதாவது நாளானதும் (அந்த அறையிலிருந்து) இறங்கித் தம் துணைவியரிடம் சென்றார்கள்" என்றும் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

2950 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் (அவர்களைச் சங்கடப்படுத்தும் வகையில்) கூடிப் பேசிச் செயல்பட்ட இரு துணைவியர் யார் என்பது பற்றி உமர் (ரலி) அவர்களிடம் கேட்க வேண்டும் என்று (நீண்ட நாட்களாக) எண்ணியிருந்தேன். இவ்வாறு ஓராண்டு காலத்தைக் கடத்தி விட்டேன். அதற்கான சந்தர்ப்பம் எனக்கு வாய்க்கவில்லை. (இந்நிலையில் ஹஜ்ஜுக்காக) அவர்களுடன் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது. (திரும்பிவரும் வழியில்) நாங்கள் "மர்ருழ் ழஹ்ரான்' எனுமிடத்தில் இருந்தபோது உமர் (ரலி) அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்றச் சென்றார்கள். அப்போது "(அங்கத் தூய்மை செய்வதற்காக) நீர்குவளையை என்னிடம் கொண்டுவாருங்கள்" என்று கூறினார்கள். அதை எடுத்துக்கொண்டு அவர்களிடம் நான் சென்றேன். அவர்கள் இயற்கைக் கடனை முடித்துத் திரும்பியதும் அவர்களுக்குத் தண்ணீரை ஊற்றலானேன். அப்போது நான் (கேட்க நினைத்திருந்த விஷயத்தை) நினைவுகூர்ந்தேன். உடனே நான், "இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சஞ்சலப் படுத்தும் வகையில் கூடிப் பேசிச் செயல்பட்ட) அவ்விரு துணைவியர் யார்?"என்று கேட்டேன். நான் கேட்டு முடிப்பதற்குள், "ஆயிஷாவும் ஹஃப்ஸாவும்தாம் (அவ்விருவரும்)" என விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2951 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நீண்ட நாட்களாக நபி (ஸல்) அவர்களுடைய துணைவியரில் இருவரைப் பற்றி உமர் (ரலி) அவர்களிடம் கேட்க வேண்டும் என்று பேராவல் கொண்டிருந்தேன். (ஏனெனில், அவ்விருவரைப் பற்றித்தான்) உயர்ந்தோன் அல்லாஹ் (குர்ஆனில்), "நீங்கள் இருவரும் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரினால் (அதுவே நல்லது). உங்கள் இருவரின் உள்ளங்களும் நேரிய வழியிலிருந்து பிறழ்ந்துவிட்டிருக்கின்றன" (66:4) என்று கூறியிருந்தான்.
(ஒரு முறை) உமர் (ரலி) அவர்கள் ஹஜ்ஜுக்குச் சென்றார்கள். நானும் (அந்த ஆண்டு) அவர்களுடன் ஹஜ் செய்தேன். (ஹஜ்ஜை முடித்துக்கொண்டு திரும்பும் வழியில்) உமர் (ரலி) அவர்கள் (இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக) ஒதுங்கினார்கள். அவர்களுடன் நானும் நீர்குவளையுடன் சென்றேன். அவர்கள் இயற்கைக் கடனை முடித்துவிட்டு என்னிடம்

திரும்பிவந்தார்கள். நான் அவர்களின் கைகளில் (குவளையிலிருந்த) தண்ணீரை ஊற்றினேன். அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். அப்போது நான் அவர்களிடம் "இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! நபி (ஸல்) அவர்களுடைய துணைவியரில் இருவரைக் குறித்து, "நீங்கள் இருவரும் அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோரினால் (அதுவே நல்லது). உங்கள் இருவரின் உள்ளங்களும் நேரிய வழியிலிருந்து பிறழ்ந்து விட்டிருக்கின்றன' (66:4) என்று அல்லாஹ் கூறியுள்ளானே, அந்த இருவர் யார்?" என்று கேட்டேன். அதற்கு உமர் (ரலி) அவர்கள், "இப்னு அப்பாஸே! உங்களைக் கண்டு நான் வியப்படைகிறேன். ஹஃப்ஸாவும் ஆயிஷா (ரலி) அவர்களும்தாம் அந்த இருவர்"என்று விடையளித்தார்கள்.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் தம்மிடம் தம் புதல்வி தொடர்பான ஒரு வசனத்தைக் குறித்துக் கேட்டதை உமர் (ரலி) அவர்கள் விரும்பவில்லை. ஆகவேதான், "உங்களைக் கண்டு வியப்படைகிறேன்" என்றார்கள். ஆயினும், அதற்குரிய பதிலை உமர் (ரலி) அவர்கள் மறைக்கவில்லை.)

பிறகு உமர் (ரலி) அவர்கள் நடந்த நிகழ்ச்சி முழுவதையும் கூறலானார்கள். அப்போது அவர்கள் கூறியதாவது:
குறைஷிக் குலத்தாராகிய நாங்கள் (மக்காவில் இருந்தபோது) பெண்களை மிகைத்தவர்களாகவே இருந்துவந்தோம். (எங்களை எதிர்த்துப் பேசாத அளவிற்கு அவர்களை அடக்கிவைத்திருந்தோம்.) நாங்கள் (மக்காவைத் துறந்து) மதீனாவிற்கு வந்தபோது, அங்கு ஒரு சமுதாயத்தைக் கண்டோம். அங்கு ஆண்களைப் பெண்கள் மிகைக்கக்கூடியவர்களாக இருந்தனர். இதை எங்களுடைய பெண்களும் அப்பெண்களிடமிருந்து கற்றுக்கொள்ளத் தொடங்கினர்.
எனது வீடு (மதீனாவின்) மேட்டுப் பகுதி கிராமங்களில் பனூ உமய்யா பின் ஸைத் குலத்தாரிடையே இருந்தது. (ஒரு நாள்) நான் என் மனைவிமீது கோபப்பட்டேன். அவர் என்னை எதிர்த்துப் பேசினார். அவர் என்னை எதிர்த்துப் பேசிய(து எனக்குப் பிடிக்கவில்லை; அ)தை நான் வெறுத்தேன். அப்போது அவர், "நான் உங்களை எதிர்த்துப் பேசியதற்காக நீங்கள் ஏன் (என்னை) வெறுக்கிறீர்கள்? அல்லாஹ்வின் மீதாணையாக! நபி (ஸல்) அவர்களுடைய துணைவியர்கூட (நபிகளாரின் பேச்சுக்கு) மறுபேச்சு பேசத்தான் செய்கிறார்கள். அவர்களில் சிலர் நபியவர்களிடம் பகலில் இருந்து இரவுவரை பேசுவதில்லை" என்று கூறினார்.
உடனே நான் அங்கிருந்து புறப்பட்டு (என் புதல்வி) ஹஃப்ஸாவிடம் சென்று, "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பேச்சுக்கு மறுபேச்சு பேசுகிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு ஹஃப்ஸா "ஆம்' என்று பதிலளித்தார். நான் "உங்களில் சிலர் அல்லாஹ்வின் தூதரிடம் பகலில் இருந்து இரவுவரை கோபமாக இருக்கிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கும் ஹஃப்ஸா "ஆம்' என்றார். நான், "அவர்களில் இப்படிச் செய்தவர் நஷ்டமடைந்துவிட்டார்; இழப்புக்குள்ளாகிவிட்டார். உங்களில் ஒருவர்மீது இறைத்தூதருக்குக் கோபம் ஏற்பட்டால் அவர்மீது அல்லாஹ்வும் கோபமடைந்துவிடுவான் எனும் அச்சம் அவருக்கில்லையா? அவ்வாறாயின் அவர் அழிந்துபோய்விடுவார். (எனவே,)அல்லாஹ்வின்

தூதர் (ஸல்) அவர்களை நீ எதிர்த்துப் பேசாதே! அவர்களிடம் (அதிகமாக உன் தேவைகள்) எதையும் கேட்டுக்கொண்டிராதே! உனக்கு (அவசியத் தேவையெனத்) தோன்றியதை என்னிடம் கேள். உன் அண்டை வீட்டுக்காரர் (ஆயிஷா) உன்னை விட அழகு மிக்கவராகவும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பிரியமானவராகவும் இருப்பதை வைத்து (அவர் நபியவர்களிடம் நடந்துகொள்வதைப் பார்த்து) நீ ஏமாந்து போய் (அவரைப் போல நடந்துகொள்ளத் துணிந்து)விடாதே!" என்று நான் (என் மகளுக்கு அறிவுரை) கூறினேன்.
எனக்கு அன்சாரிகளில் அண்டை வீட்டார் ஒருவர் இருந்தார். நாங்கள் இருவரும் (மேட்டுப் பாங்கான எங்கள் கிராமத்திலிருந்து) முறை வைத்துக்கொண்டு (அங்கிருந்து) இறங்கிவந்து, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இருப்போம். அவர் ஒரு நாள் நபியவர்களுடன் இருப்பார். நான் ஒரு நாள் நபியவர்களுடன் இருப்பேன். அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருக்கும் அன்றைய நாளின் வேத அறிவிப்புகள் (நபியவர்களின் சொல், செயல்) முதலானவற்றை என்னிடம் வந்து தெரிவிப்பார். அதைப் போன்றே நானும் செய்வேன்.

அந்தக் கால கட்டத்தில் நாங்கள் (சிரியா நாட்டில் வாழும்) "ஃகஸ்ஸான்' குலத்தார் எங்கள் (மதீனா) மீது போர் தொடுப்பதற்காக (தங்கள்) குதிரைகளுக்கு லாடம் அடித்து(த் தயாராகி)க்கொண்டிருக்கின்றனர் என்று ஒரு செய்தியைப் பேசிக்கொண்டிருந்தோம். (இவ்வாறிருக்க ஒரு நாள்) என் நண்பர் (தமது முறை நாளில் எங்கள் பகுதியிலிருந்து) இறங்கி (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றுவிட்டு) இஷா நேரத்தில் என்னிடம் வந்தார்; என் வீட்டுக் கதவை (பலமாகத்) தட்டி, என்னை அழைத்தார். நான் வெளியே வந்தபோது "(இன்று) மிகப்பெரிய சம்பவமொன்று நடந்துவிட்டது" என்று கூறினார். நான், "என்ன அது? ஃகஸ்ஸானியர் (படையெடுத்து) வந்துவிட்டனரா?" என்று கேட்டேன். "இல்லை; அதைவிடப் பெரிய, அதைவிடக் கடுமையான சம்பவம் நடந்துவிட்டது; நபி (ஸல்) அவர்கள் தம் துணைவியரை மணவிலக்குச் செய்துவிட்டார்கள்" என்று சொன்னார்.
உடனே நான் "(என் மகள்) ஹஃப்ஸா நஷ்டமடைந்து இழப்புக்குள்ளாகிவிட்டார். (கூடிய விரைவில்) இப்படி நடக்கத்தான்போகிறது என்று நான் எண்ணியிருந்தேன்" என்று கூறிவிட்டு, சுப்ஹுத் தொழுகை தொழுததும் எனது ஆடையை எடுத்து அணிந்துகொண்டு (அங்கிருந்து) இறங்கி என் மகள் ஹஃப்ஸாவிடம் சென்றேன்; அவர் அழுதுகொண்டிருந்தார். அவரிடம் நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களை மணவிலக்குச் செய்து விட்டார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர் "எனக்குத் தெரியாது; அதோ அவர்கள் அந்த மாடி அறையில் தனியாக இருக்கிறார்கள்" என்று கூறினார். உடனே நான் (அங்கு இருந்த) நபியவர்களின் கறுப்புநிறப் பணியாளரிடம் (ரபாஹ்) சென்று, "உமருக்காக (நபியவர்களின் அறைக்குள் வர) அனுமதி கேள்" என்றேன்.அவர் உள்ளே சென்றுவிட்டு என்னிடம் வந்து, "அவர்களிடம் உங்களைப் பற்றிச் சொன்னேன். அவர்கள் மௌனமாக இருந்துவிட்டார்கள்" என்று கூறினார்.
உடனே நான் அங்கிருந்து புறப்பட்டு சொற்பொழிவு மேடை (மிம்பர்) அருகே சென்று அமர்ந்துவிட்டேன். அங்கு ஒரு கூட்டத்தார் அமர்ந்திருந்தார்கள். அவர்களில் சிலர் (கேள்விப்பட்ட செய்தியை எண்ணி) அழுதுகொண்டிருந்தனர். நான் சிறிது நேரம்

அமர்ந்திருந்தேன். பிறகு துக்கம் தாளாமல் (மீண்டும்) அந்தப் பணியாளரிடம் நான் வந்து, "உமருக்காக (நபியவர்களின் அறைக்குள் வர) அனுமதி கேள்" என்று சொன்னேன். அவர் உள்ளே சென்றுவிட்டுப் பிறகு என்னிடம் வந்து "நான் நபியவர்களிடம் உங்களைப் பற்றிச் சொன்னேன். அவர்கள் மௌனமாக இருந்துவிட்டார்கள்" என்று கூறினார். எனவே, நான் திரும்பினேன். அப்போது அந்தப் பணியாளர் என்னை அழைத்து, "உள்ளே செல்லுங்கள்! உங்களுக்கு நபியவர்கள் அனுமதியளித்துவிட்டார்கள்" என்று கூறினார். உடனே நான் (அந்த அறைக்குள்) நுழைந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு சலாம் சொன்னேன். அங்கு அவர்கள் நெய்யப்பட்ட பாய் ஒன்றில் சாய்ந்து படுத்திருந்தார்கள். அவர்களது விலாப் பகுதியில் அந்தப் பாய் அடையாளம் பதித்திருந்தது.

பிறகு, "அல்லாஹ்வின் தூதரே! தங்கள் துணைவியரைத் தாங்கள் மணவிலக்குச் செய்துவிட்டீர்களா?" என்று கேட்டேன். நபியவர்கள் என்னை நோக்கி தமது தலையை உயர்த்தி "இல்லை (மண விலக்குச் செய்யவில்லை)" என்று கூறினார்கள். உடனே நான், "அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்)" என்று சொன்னேன்.
பிறகு (அவர்களது கோபத்தைத் தணிக்கப் பின்வருமாறு கூறினேன்:) "அல்லாஹ்வின் தூதரே! குறைஷிக் குலத்தாராகிய நாங்கள் பெண்களை அடக்கிவைத்திருந்தோம். நாங்கள் மதீனாவுக்கு வந்த போது, ஆண்கள்மீது பெண்கள் ஆதிக்கம் செலுத்தும் ஒரு கூட்டத்தாரை (அன்சாரிகளை)க் கண்டோம். எங்கள் பெண்களும் அப்பெண்களைப் பார்த்து (ஆண்களை எதிர்த்துப் பேசும் பழக்கத்தைக்) கற்றுக்கொள்ளத் தொடங்கிவிட்டனர். நான் ஒரு நாள் என் மனைவிமீது கோபம் கொண்டேன். அவர் அப்போது என்னை எதிர்த்துப் பேசிக் கொண்டிருந்தார். அவர் என்னிடம் எதிர்த்துப் பேசிய(தை நான் விரும்பவில்லை; அ)தை நான் வெறுத்தேன். அப்போது அவர், "நான் உங்களை எதிர்த்துப் பேசுவதை வெறுக்கிறீர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! நபி (ஸல்) அவர்களின் துணைவியரும்கூட நபியவர்களின் பேச்சுக்கு மறுபேச்சு பேசத் தானே செய்கின்றனர். அவர்களில் ஒருவர் நபியவர்களுடன் கோபித்துக்கொண்டு அன்றைய தினத்தில் இரவுவரை பேசுவதில்லை" என்று கூறினார். நான் "அவர்களில் இப்படிச் செய்தவர் நஷ்டமடைந்துவிட்டார்; இழப்புக்குள்ளாகிவிட்டார். அவர்களில் ஒருவர்மீது இறைத்தூதருக்குக் கோபம் ஏற்பட்டால் அவர்மீது அல்லாஹ்வும் கோபமடைந்து விடுவான் எனும் அச்சம் அவருக்கில்லையா? அவ்வாறாயின் அவர் அழிந்துபோய்விடுவார் என்று சொன்னேன்" என்று கூறினேன். இதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்தார்கள்.

பிறகு நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் (என் மகள்) ஹஃப்ஸாவிடம் சென்று, "உன் அண்டை வீட்டுக்காரர் (ஆயிஷா) உன்னைவிட அழகானவராகவும் அல்லாஹ்வின் தூதருக்குப் பிரியமான வராகவும் இருப்பதை வைத்து (அவர் நபியவர்களிடம் அதிக உரிமை எடுத்துக்கொள்வதைக் கண்டு) நீ ஏமாந்துவிடாதே!" என்று கூறியதைச் சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இன்னொரு முறை புன்னகைத்தார்கள்.
நான் "அல்லாஹ்வின் தூதரே! (தங்களுடன் அமர்ந்து தங்களது) வெறுமையைப் போக்கட்டுமா?" என்று கேட்டேன். அவர்கள் "ஆம்' என்றார்கள். உடனே நான் அமர்ந்துகொண்டேன். பிறகு எனது தலையை உயர்த்தி அந்த அறையை நோட்டமிட்டேன்.

அல்லாஹ்வின் மீதாணையாக! கண்ணைக் கவருகின்ற எந்தப் பொருளையும் நான் காணவில்லை;மூன்றே மூன்று தோல்களைத் தவிர! அப்போது நான் "தங்கள் சமுதாயத்தாருக்கு (உலகச் செல்வங்களை)த் தாராளமாக வழங்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள், அல்லாஹ்வின் தூதரே! ஏனெனில், பாரசீகர்களுக்கும் இத்தாலியர்களுக்கும் –அவர்கள் (ஏக இறைவன்) அல்லாஹ்வை வழிபடாதவர்களாக இருந்தும்– உலகச் செல்வங்களை அல்லாஹ் தாராளமாக வழங்கியுள்ளானே?" என்று கூறினேன்.

உடனே (தலையணையில் சாய்ந்து அமர்ந்திருந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிமிர்ந்து அமர்ந்துகொண்டு, "உங்களுக்கு இன்னும் (இத்தகைய) சந்தேகம் உண்டா, கத்தாபின் புதல்வரே? அவர்கள், தமக்குரிய இன்பங்களை இவ்வுலக வாழ்விலேயே (மறுமைக்கு) முன்னதாகவே வழங்கப்பட்டுவிட்ட மக்கள் ஆவர்" என்று கூறினார்கள். உடனே நான், "அல்லாஹ்வின் தூதரே! (அவசரப்பட்டுக் கேட்டுவிட்ட) எனக்காக பாவமன்னிப்புக் கோரிப் பிரார்த்தியுங்கள்"என்று சொன்னேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம் துணைவியர்மீது ஏற்பட்ட கடும் கோபத்தின் காரணமாக "(என் மனைவியரான) அவர்களிடம் ஒரு மாத காலத்திற்கு நான் செல்ல மாட்டேன்' எனச் சத்தியம் செய்திருந்தார்கள். இறுதியில் (66:1ஆவது வசனத்தை இறக்கி) நபியவர்களை அல்லாஹ் கண்டித்தான்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2952 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

இருபத்தொன்பது இரவுகள் கழிந்த பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆரம்பமாக என்னிடமே வந்தார்கள். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! எங்களிடம் ஒரு மாத காலத்திற்கு வரப்போவதில்லை என்று நீங்கள் சத்தியம் ("ஈலா') செய்திருந்தீர்களே! நீங்கள் இருபத்தொன்பதாவது நாளே வந்துவிட்டீர்களே! நாட்களை நான் எண்ணிக் கணக்கிட்டு வருகின்றேன்!" என்று கூறினேன். அதற்கு அவர்கள், "இந்த மாதம் இருபத்தொன்பது நாட்கள்தாம்" என்று பதில் கூறினார்கள்.

பிறகு என்னிடம், "ஆயிஷா! உன்னிடம் நான் ஒரு விஷயத்தைச் சொல்கிறேன். அதைப் பற்றி நீ உன் பெற்றோரிடம் ஆலோசனை கேட்காத வரை அவசரப்பட்டு (எந்த முடிவுக்கும் வந்து) விடாதே!" என்று கூறிவிட்டு, "நபியே! உங்கள் துணைவியரிடம் கூறுங்கள்" என்று தொடங்கி "உங்களிலுள்ள நல்லவர்களுக்காக அல்லாஹ் மகத்தான நன்மையை தயார் செய்துள்ளான்" என்று முடியும் (33:28,29) வசனங்களை எனக்கு அவர்கள் ஓதிக்காட்டினார்கள்.

அல்லாஹ்வின் மீதாணையாக! என் பெற்றோர் நிச்சயமாக நபி (ஸல்) அவர்களிடமிருந்து பிரிந்து விடுமாறு எனக்கு ஆலோசனை கூறமாட்டார்கள் என்பதை நபி (ஸல்) அவர்கள் அறிந்திருந்தார்கள். எனவே, நான் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்), "(உங்கள் உறவை முறித்துக்கொள்ளும்) இந்த விஷயத்திலா நான் என் பெற்றோரிடம் ஆலோசனை கேட்கப்போகிறேன்? நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறு உலகத்தையுமே விரும்புகிறேன்" என்று சொன்னேன். மேலும், நான் "உங்களையே தேர்ந்தெடுத்துக் கொண்டேன் என்ற தகவலை,உங்களுடைய மற்ற மனைவியரிடம் தெரிவித்துவிடாதீர்கள்" என்று கூறினேன்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹ் என்னை எடுத்துரைப்பவனாகவே அனுப்பியுள்ளான்; அவன் என்னைக் கடினப்போக்கு உள்ளவனாக அனுப்பவில்லை" என்று கூறினார்கள். இவ்வாறு அய்யூப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் இடம்பெற்றுள்ளது.
கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(66:4ஆவது) வசனத்தின் மூலத்தில் உள்ள "ஃபகத் ஸஃகத் குலூபுகுமா" என்பதற்கு "உங்கள் இருவரின் உள்ளங்களும் நேரிய வழியிலிருந்து பிறழ்ந்துவிட்டிக்கின்றன" என்று பொருளாகும்.

**பாடம் : 6 மூன்று தலாக் சொல்லப்பட்ட பெண்ணுக்கு (காத்திருப்புக் கால) ஜீவனாம்சம் கிடையாது.**

2953 ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் கணவர்) அபூஅம்ர் பின் ஹஃப்ஸ் (ரலி) அவர்கள் என்னை (மூன்றாவதாக) ஒட்டுமொத்த தலாக் சொல்லிவிட்டார். அப்போது அவர் வெளியூரில் இருந்தார். பின்னர் அவருடைய பிரதிநிதி, தொலி நீக்கப்படாத சிறிதளவு கோதுமையை எனக்கு அனுப்பி வைத்தார். அதைக் கண்டு நான் எரிச்சலடைந்தேன். அதற்கு அந்தப் பிரதிநிதி, "அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் உனக்கு (ஜீவனாம்சம், தங்கும் வசதி) எதையும் தர வேண்டியதில்லை (இது ஒரு உதவியாகத் தரப்பட்டதுதான்)" என்று கூறிவினார். எனவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, நடந்ததை அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும், "அவர் உனக்கு (ஜீவனாம்சம், தங்கும் வசதி) எதையும் தர வேண்டியதில்லை" என்று கூறிவிட்டு, உம்மு ஷரீக் என்ற பெண்ணின் இல்லத்தில் என்னை "இத்தா' இருக்குமாறு பணித்தார்கள். பிறகு (யோசித்துவிட்டு), "அவர் (உம்மு ஷரீக்) என் தோழர்கள் (அடிக்கடி) சந்திக்கும் பெண்மணி ஆவார். நீ (உன் தந்தையின் சகோதரர் புதல்வர்) இப்னு உம்மி மக்தூம் அவர்களிடம் (அவர்களது இல்லத்தில்) "இத்தா' இருந்துகொள். ஏனெனில், அவர் கண் பார்வையற்ற மனிதர் ஆவார். நீ உன் (துப்பட்டா) துணியை கழற்றிக்கொள்ளலாம். நீ "இத்தா'வை முழுமையாக்கியதும் எனக்குத் தெரிவிப்பாயாக!" என்று கூறினார்கள்.
அவ்வாறே நான் "இத்தா'வை முழுமையாக்கியதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (வந்து), முஆவியா பின் அபீசுஃப்யான் (ரலி) அவர்களும் அபூஜஹ்ம் பின் ஹுதைஃபா (ரலி) அவர்களும் என்னைப் பெண் கேட்கின்றனர்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அபூஜஹ்ம் தமது கைத்தடியைத் தோளிலிருந்து கீழே வைக்கமாட்டார். (கோபக்காரர்; மனைவியரைக் கடுமையாக அடித்துவிடுபவர்). முஆவியோ, அவர் ஓர் ஏழை;அவரிடம் எந்தச் செல்வமும் இல்லை. நீ உசாமா பின் ஸைதை மணந்துகொள்" என்று கூறினார்கள். நான் உசாமாவை விரும்பவில்லை. பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீ உசாமாவை மணந்துகொள்" என்று (மீண்டும்) கூறினார்கள். ஆகவே, நான் அவரை மணந்துகொண்டேன். அவரிடம் (எனக்கு) அல்லாஹ் நன்மையை வைத்திருந்தான்; நான் பெருமிதம் அடைந்தேன்.

2954 ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களது காலத்தில் என் கணவர் (மூன்றாவதாக) என்னைத் தலாக் சொல்லிவிட்டார். ("இத்தா'க் காலத்தில்) அவர் எனக்குக் குறைந்த அளவே ஜீவனாம்சம் வழங்கினார். அதை நான் கண்டதும், "அல்லாஹ்வின் மீதாணையாக! (இதைப் பற்றி) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவிப்பேன்; எனக்கு ஜீவனாம்சம் இருக்குமாயின், எனக்குத் தகுதியான (ஜீவனாம்சத்)தை நான் பெறுவேன். எனக்கு ஜீவனாம்சம் எதுவும் கிடையாதெனில் அவரிடமிருந்து நான் எதையும் பெற்றுக் கொள்ளமாட்டேன்" என்று கூறிவிட்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அது குறித்துத் தெரிவித்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனக்கு ஜீவனாம்சமும் இல்லை; உறைவிடமும் இல்லை" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களிடம் (அவர்கள் தலாக் சொல்லப்பட்டு "இத்தா' இருந்தபோது என்ன நடந்தது என்று) கேட்டேன். அதற்கு அவர், "மக்ஸூமி குலத்தைச் சேர்ந்தவரான என் கணவர் என்னைத் தலாக் சொல்லிவிட்டார். எனக்கு ("இத்தா'க் கால) ஜீவனாம்சம் வழங்க மறுத்தார். எனவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து (அதைப் பற்றி) அவர்களிடம் தெரிவித்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனக்கு ஜீவனாம்சம் கிடையாது; நீ இடம்மாறி, (உன் தந்தையின் சகோதரர் புதல்வர்) இப்னு உம்மி மக்தூம் அவர்களிடம் சென்று, அவரது இல்லத்தில் (இத்தா முடியும்வரை) இரு! ஏனெனில், அவர் கண் பார்வையற்ற மனிதர் ஆவார். அவர் அருகில் உனது (துப்பட்டா) துணியைக் கழற்றிக்கொள்ளலாம்" என்றார்கள்.

2955 அள்ளஹ்ஹாக் பின் கைஸ் (ரலி) அவர்களின் சகோதரி ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் கணவர்) அபூஅம்ர் பின் ஹஃப்ஸ் பின் அல்முஃகீரா அல்மக்ஸூமீ என்னை மூன்று (அதாவது மூன்றாவது முறையாக) தலாக் சொல்லிவிட்டார்; பின்னர் யமன் நாட்டுக்குச் சென்றுவிட்டார். அப்போது என் கணவரின் குடும்பத்தார் என்னிடம், "உனக்கு ஜீவனாம்சம் எதையும் நாங்கள் தர வேண்டியதில்லை" என்று கூறினர். அப்போது (என் கணவருடைய தந்தையின் சகோதரர் புதல்வர்) காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்கள், சிலருடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களது இல்லத்தில் இருந்தார்கள். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்) "அபூஹஃப்ஸ் தம் துணைவியை (ஃபாத்திமா பின்த் கைஸை) மூன்று (அதாவது மூன்றாவது முறையாக) தலாக் சொல்லிவிட்டார். ("இத்தா'விலிருக்கும்) அப்பெண்ணுக்கு ஜீவனாம்சம் உண்டா?" என்று கேட்டனர்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவருக்கு ஜீவனாம்சம் கிடையாது; ஆனால் "இத்தா' உண்டு"என்றார்கள். மேலும், எனக்கு ஆளனுப்பி, "உன் விஷயத்தில் என் உத்தரவுக்கு முன் நீயாக முந்தி(க்கொண்டு முடிவெடுத்து)விடாதே" என்று கூறியனுப்பினார்கள். மேலும், என்னை (என் கணவரின் இல்லத்திலிருந்து) இடம்மாறி உம்மு ஷரீக் (ரலி) அவர்களது வீட்டிற்குச் செல்லுமாறு உத்தரவிட்டார்கள். பிறகு (அந்த உத்தரவைத் திரும்பப்

பெற்றுக்கொள்ளும் விதமாக) "உம்மு ஷரீக்கின் வீட்டிற்கு ஆரம்பக் காலத்து முஹாஜிர்கள் (விருந்தாளிகளாக) வருவார்கள். எனவே, நீ கண் பார்வையற்ற (உன் தந்தையின் சகோதரர் புதல்வரான) இப்னு உம்மி மக்தூம் அவர்களின் வீட்டிற்குச் செல்! ஏனெனில், நீ உன் துப்பட்டாவைக் கழற்றினாலும் அவர் உன்னைப் பார்க்க முடியாது" என்று கூறியனுப்பினார்கள். ஆகவே, நான் இப்னு உம்மி மக்தூமிடம் சென்றேன். எனது "இத்தா'க் காலம் முடிந்ததும் என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உசாமா பின் ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்களுக்குத் திருமணம் செய்துவைத்தார்கள்.

2956 மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் "இந்த ஹதீஸை நான் ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களது வாயிலிருந்து (நேரடியாக) செவியுற்று எழுதிவைத்துக்கொண்டேன்' என்று கூறினார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மேலும் "நான் பனூ மக்ஸூம் குலத்தைச் சேர்ந்த ஒருவரிடம் (மனைவியாக) இருந்தேன். அவர் என்னை ஒட்டுமொத்த தலாக் சொல்லி விட்டார். அப்போது நான் என் கணவரின் குடும்பத்தாரிடம் ஆளனுப்பி எனது ஜீவனாம்சத்தைக் கோரினேன்" என்று ஹதீஸ் தொடருகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
முஹம்மத் பின் அம்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உனது (மறுமணம்) விஷயத்தில் நம்மைவிட்டு (நீயாக முடிவெடுத்து)விடாதே என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என இடம்பெற்றுள்ளது.

2957 ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர் கள் கூறியதாவது:
நான் அபூஅம்ர் பின் ஹஃப்ஸ் பின் அல் முஃகீரா (ரலி) அவர்களிடம் (மனைவியாக) இருந்தேன். அவர் என்னை (இரு தலாக் சொல்லி திரும்ப அழைத்துக்கொண்டு) இறுதி(யாக எஞ்சியிருந்த) மூன்றாவது தலாக் சொல்லிவிட்டார்.
அப்போது நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, என் (கணவரின்) இல்லத்திலிருந்து வெளியேறி (வேறு இடத்தில் "இத்தா' இருந்து)கொள்வது தொடர்பாகத் தீர்ப்புக் கேட்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், கண் தெரியாதவரான இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்களது இல்லத்திற்கு இடமாறிக்கொள்ள உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸை அறிவிப்பவரான அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(மூன்று) தலாக் சொல்லப்பட்டுவிட்ட ஒரு பெண், தனது இல்லத்திலிருந்து வெளியேறுவது தொடர்பான இந்த ஹதீஸை மர்வான் பின் அல்ஹகம் நம்ப மறுத்தார்.
உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: ஆயிஷா (ரலி) அவர்கள், ஃபாத்திமா பின்த் கைஸ் அவ்வாறு (செய்யலாம் என்று) கூறிவந்ததை நிராகரித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், ஆயிஷா (ரலி) அவர்கள், ஃபாத்திமா பின்த் கைஸ் அவ்வாறு கூறிவந்ததை நிராகரித்தார்கள் என்கிற உர்வா (ரஹ்) அவர்களின் குறிப்பும் இடம்பெற்றுள்ளது.

2958 உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உத்பா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஅம்ர் பின் ஹஃப்ஸ் பின் அல் முஃகீரா (ரலி) அவர்கள் அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களுடன் யமன் நாட்டிற்குச் சென்றிருந்தார்கள். அப்போது அபூஅம்ர் பின் ஹஃப்ஸ் (ரலி) அவர்கள் தம் மனைவியின் தலாக்கில் எஞ்சியிருந்த ஒரு தலாக்கையும் சொல்லியனுப்பினார். தம் மனைவிக்கு ஜீவனாம்சத்தைக் கொடுக்க ஹாரிஸ் பின் ஹிஷாம் (ரலி) அவர்களையும் அய்யாஷ் பின் அபீரபீஆ (ரலி) அவர்களையும் பணித்தார். அவர்கள் இருவரும் அவருடைய மனைவியிடம், "அல்லாஹ்வின் மீதாணையாக! நீ கர்ப்பமுற்றவளாக இருந்தால்தான் உனக்கு ஜீவனாம்சம் கிடைக்கும்" என்று கூறிவிட்டனர்.
உடனே அப்பெண் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, அவர்கள் இருவரும் கூறியதைத் தெரிவித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "உனக்கு ஜீவனாம்சம் இல்லை" என்று கூறினார்கள். அப்போது அவர் (தம் கணவரின் இல்லத்திலிருந்து) இடம் மாறிக்கொள்ள அனுமதி கோரினார். நபி (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள். அப்போது அவர், "அல்லாஹ்வின் தூதரே! நான் எங்கே (தங்குவேன்)?" என்று கேட்டார். அதற்கு, "இப்னு உம்மி மக்தூமின் வீட்டிற்குச் செல்" என்றார்கள். அவர் கண் பார்வையற்றவராக இருந்தார். (எனவே) அப்பெண் அவர் அருகில் உடைமாற்றினாலும் அவரால் பார்க்க முடியாத நிலையில் இருந்தார். (இப்னு உம்மி மக்தூமின் வீட்டில்) அப்பெண்ணின் "இத்தா'க் காலம் முடிந்ததும் அவரை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் திருமணம் செய்துவைத்தார்கள்.
பின்னர் (மதீனாவின் அப்போதைய ஆட்சியராயிருந்த) மர்வான் அப்பெண்ணிடம் கபீஸா பின் துவைப் (ரஹ்) அவர்களை அனுப்பி அந்த ஹதீஸைக் குறித்துக் கேட்டார். அவர் மர்வானுக்கு அந்த ஹதீஸைத் தெரிவித்தார். அதற்கு மர்வான், "ஒரேயொரு பெண்ணிடமிருந்துதான் நாம் இந்த ஹதீஸைக் கேள்விப்படுகிறோம். மக்கள் எந்த நடைமுறையை வலுவாகக் கடைப்பிடித்துவருவதை நாம் காண்கிறோமோ அதையே நாம் (தொடர்ந்து) செயல்படுத்துவோம்" என்று கூறினார். "எனக்கும் உங்களுக்குமிடையே குர்ஆன் உள்ளது. (அதில்) அல்லாஹ், "அவர்களை அவர்களின் வீடுகளிலிருந்து வெளியேற்றாதீர்கள்' (65:1) என்று கூறியுள்ளான்" என மர்வான் கூறிய தகவல், ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களுக்கு எட்டியபோது, "இது திரும்ப அழைத்துக்கொள்ளும் உரிமையுடைய கணவர்களுக்கு உரியதாகும். மூன்று தலாக்கிற்குப் பிறகு (திரும்ப அழைத்தல் போன்ற) என்ன மாற்றம் ஏற்பட்டுவிடப்போகிறது? அவள் கர்ப்பமுற்றவளாக இல்லாவிடில் அவளுக்கு ஜீவனாம்சம் இல்லை என நீங்கள் எப்படிக் கூறுகிறீர்கள்? பிறகு (ஜீவனாம்சம் பெறாத) அந்தப் பெண்ணை எந்த அடிப்படையில் தடுத்து வைத்துக்கொள்கிறீர்கள்?" என்று கேட்டார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2959 ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களிடம் சென்று, அவர்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அளித்த தீர்ப்பைக் குறித்துக் கேட்டேன். அதற்கு ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள், "என்னை என் கணவர் ஒட்டுமொத்த தலாக் சொல்லிவிட்டார். ("இத்தா'க் கால) ஜீவனாம்சம் மற்றும் உறைவிடம் விஷயத்தில் அவர்மீது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நான் வழக்கு தொடுத்தேன். ஆனால், அல்லாஹ்வின் தூதர்

(ஸல்) அவர்கள் எனக்கு உறைவிடமோ ஜீவனாம்சமோ வழங்கச் செய்யவில்லை. என்னை (என் தந்தையின் சகோதரர் புதல்வர்) இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்களது இல்லத்தில் "இத்தா' மேற்கொள்ளுமாறு உத்தரவிட்டார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் ஏழு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட தகவல் ஷஅபீ (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2960 ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்திற்குச்) சென்றோம். எங்களுக்கு அவர்கள் (மதீனாவின்) "ருதப் இப்னு தாப்' (எனும் வகை) பேரீச்சம் பழத்தை விருந்தாகக் கொடுத்தார்கள். ஒரு வகை தானிய மாவுக் கஞ்சியை எங்களுக்கு அருந்தக் கொடுத்தார்கள். அவர்களிடம் நான் "மூன்று தலாக்(கும்) சொல்லப்பட்டுவிட்ட பெண் எங்கு "இத்தா' இருப்பாள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "என் கணவர் என்னை மூன்று தலாக்(கும்) சொல்லிவிட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், என் குடும்பத்தாரிடமே நான் "இத்தா' இருக்க எனக்கு அனுமதியளித்தார்கள்" என்று கூறினார்கள்.

2961 ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மூன்று தலாக்(கும்) சொல்லப்பட்டுவிட்ட பெண் குறித்து நபி (ஸல்) அவர்கள், "அவளுக்கு உறைவிடமும் இல்லை;ஜீவனாம்சமும் இல்லை" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2962 ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னை என் கணவர் மூன்று தலாக்(கும்) சொல்லிவிட்டார். அப்போது வேறு இடத்திற்கு இடம்மாறிச் செல்ல நான் விரும்பினேன். ஆகவே, நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். (அதற்காக அனுமதி கோரினேன்.) நபி (ஸல்) அவர்கள் "நீ இடம்பெயர்ந்து, உன் தந்தையின் சகோதரர் புதல்வர் அம்ர் பின் உம்மி மக்தூம் அவர்களின் இல்லத்திற்குச் சென்று அங்கு "இத்தா' இரு" என்று கூறி னார்கள்.

2963 அபூஇஸ்ஹாக் அம்ர் பின் அப்தில்லாஹ் பின் உபைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்களுடன் (கூஃபாவின்) பெரிய பள்ளிவாசலில் அமர்ந்திருந்தேன். எங்களுடன் ஷஅபீ (ரஹ்) அவர்களும் இருந்தார்கள். அப்போது ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் தொடர்பான ஹதீஸை ஷஅபீ (ரஹ்) அவர்கள் எங்களுக்கு அறிவித்தார்கள்: "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களுக்கு உறைவிடமும் இல்லை; ஜீவனாம்சமும் இல்லை" என அறிவித்தார்கள் (என்பதுதான் அந்த ஹதீஸ்). (அங்கிருந்த) அஸ்வத் (ரஹ்) அவர்கள் ஒரு கையளவு சிறு கற்களை அள்ளி அவர்மீது எறிந்துவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்: "உமக்குக் கேடுதான்! இது போன்ற செய்திகளை அறிவிக்கிறீரே? உமர் (ரலி) அவர்கள், "ஒரு பெண்ணின் சொல்லுக்காக நாம் அல்லாஹ்வின் வேதத்தையும் நம் நபியின் வழிமுறையையும் கைவிடமாட்டோம். ஃபாத்திமா பின்த் கைஸ் (உண்மையிலேயே) நினைவில் வைத்துள்ளாரா, அல்லது மறந்துவிட்டாரா என்று நமக்குத் தெரியவில்லை. மூன்று

தலாக்(கும்) சொல்லப்பட்ட பெண்ணுக்கு உறைவிடமும் ஜீவனாம்சமும் உண்டு. வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், "பகிரங்கமான வெட்கக்கேடான செயலை அப்பெண்கள் செய்தாலே தவிர அவர்களை அவர்களின் வீடுகளிலிருந்து வெளியேற்றாதீர்கள்' (65:1) என்று கூறியுள்ளான்" என்றார்கள்.
- மேற்கண்ட தகவல் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2964 ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னை என் கணவர் மூன்று தலாக்(கும்) சொல்லிவிட்டார். எனக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என் கணவர் மூலம்) உறைவிடமும் ஏற்படுத்தவில்லை; ஜீவனாம்சமும் ஏற்படுத்தவில்லை. என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீ உன் "இத்தா'க் காலத்தை முழுமையாக்கியதும் எனக்குத் தெரிவிப்பாயாக" என்றார்கள். அவ்வாறே நான் அவர்களிடம் தெரிவித்தேன். என்னை முஆவியா (ரலி), அபூஜஹ்ம் (ரலி), உசாமா பின் ஸைத் (ரலி) ஆகியோர் பெண் கேட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "முஆவியாவோ, ஓர் ஏழை; அவரிடம் எந்தச் செல்வமும் இல்லை. அபூஜஹ்மோ மனைவியரை அதிகமாக அடிக்கக்கூடியவர். மாறாக, உசாமா பின் ஸைதே (உனக்குப் பொருத்த மானவர்)" என்றார்கள். உடனே நான் "உசாமா; (பெரிய) உசாமா' என கையால் சைகை செய்(து அதிருப்தி தெரிவித்)தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுவதும் அவனுடைய தூதருக்குக் கட்டுப்படுவதும் உனக்கு நல்லது" என்றார்கள். பின்னர் உசாமாவையே நான் மணந்துகொண்டேன். நான் பெருமிதம் அடைந்தேன்.

2965 ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் கணவர் அபூஅம்ர் பின் ஹஃப்ஸ் பின் அல்முஃகீரா அவர்கள், அய்யாஷ் பின் அபீரபீஆ மூலம் எனக்குத் தலாக் சொல்லி அனுப்பினார். அவருடன் ஐந்து "ஸாஉ' பேரீச்சம் பழமும் ஐந்து "ஸாஉ' தொலி நீக்கப்படாத கோதுமையும் கொடுத்தனுப்பினார். நான் அவரிடம், "எனக்கு இதைத் தவிர வேறெதுவும் ஜீவனாம்சம் இல்லையா? நான் உங்கள் வீட்டில் "இத்தா' இருக்கமாட்டேன்" என்று சொன்னேன். அதற்கு அய்யாஷ் அவர்கள், "இல்லை (வேறெதுவும் ஜீவனாம்சம் கிடையாது)" என்று சொல்லிவிட்டார். உடனே நான் எனது ஆடையை எடுத்து அணிந்துகொண்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் உனக்கு எத்தனை தலாக் சொன்னார்?" என்று கேட்டார்கள். நான் "மூன்று (தலாக்)" என்றேன். (அவ்வாறாயின்) அவர் சொன்னது உண்மையே. உனக்கு ஜீவனாம்சம் இல்லை. நீ உன் தந்தையின் சகோதரர் புதல்வர் இப்னு உம்மி மக்தூம் அவர்களது இல்லத்தில் "இத்தா' இருந்துகொள். ஏனெனில், அவர் கண் பார்வையற்றவர். நீ உனது (துப்பட்டா) துணியை அவர் அருகில் கழற்றிவைக்கலாம். உன் "இத்தா'க் காலம் முடிந்ததும் எனக்குத் தெரிவி" என்று சொன்னார்கள். பின்னர் என்னைப் பலர் பெண் கேட்டார்கள். அவர்களில் முஆவியா (ரலி), அபூஜஹ்ம் (ரலி) ஆகியோரும் அடங்குவர். (நான் நபியவர்களிடம் அது குறித்து தெரிவித்தபோது) நபி (ஸல்) அவர்கள், "முஆவியா வசதி குறைந்தவர்; ஏழை. அபூஜஹ்மிடம், பெண்களிடம் கடுமையாக

நடந்துகொள்ளும் சுபாவம் உள்ளது. (அல்லது பெண்களை அடித்து விடுபவர் என்பதைப் போன்று.) மாறாக, நீ உசாமா பின் ஸைதைப் பிடித்துக்கொள்" என்றார்கள்.

2966 அபூபக்ர் பின் அபில்ஜஹ்ம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களும் ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களிடம் சென்று (அவர்களது நிகழ்ச்சி குறித்து) கேட்டோம். அவர், "நான் அபூஅம்ர் பின் ஹஃப்ஸ் பின் அல்முஃகீரா (ரலி) அவர்களிடம் (மனைவியாக) இருந்தேன். அப்போது அவர் நஜ்ரான் போருக்குப் புறப்பட்டார்" என்று கூறினார் என ஹதீஸ் ஆரம்பமாகிறது. தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ள தகவல்கள் இடம்பெற்றுள்ளன.
இறுதியில் "எனவே, நான் (அபூஸைத்) உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களை மணந்து கொண்டேன். அபூஸைத் (ரலி) அவர்களின் மூலம் அல்லாஹ் என்னை மேன்மைப் படுத்தினான்; அபூஸைத் (ரலி) அவர்களின் மூலம் அல்லாஹ் என்னைக் கண்ணியப் படுத்தினான்" என ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

2967 அபூபக்ர் பின் அபில்ஜஹ்ம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்களும் அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களது (ஆட்சிக்) காலத்தில் ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள், "என் கணவர் என்னை முற்றாகத் தலாக் சொல்லி, அதை முடிவுக்குக் கொண்டுவந்தார்" என்று கூறினார்கள் என ஹதீஸ் தொடங்குகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

2968 ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னை என் கணவர் மூன்று தலாக்(கும்) சொல்லிவிட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், எனக்கு (என் கணவர் மூலம் "இத்தா'க் காலத்தில்) உறைவிடத்தையோ ஜீவனாம்சத்தையோ ஏற்படுத்தவில்லை.

2969 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யஹ்யா பின் சயீத் பின் அல்ஆஸ் (ரஹ்) அவர்கள் அப்துர் ரஹ்மான் பின் அல்ஹகம் (ரஹ்) அவர்களின் புதல்வியைத் திருமணம் செய்திருந்தார். பின்னர் அவரை (மூன்று) தலாக் சொல்லி, தம் வீட்டிலிருந்து வெளியேற்றிவிட்டார். நான் அவர்களை (அவருடைய குடும்பத்தாரை) இது குறித்துக் கண்டித்தேன். அதற்கு அவர்கள், "ஃபாத்திமா பின்த் கைஸ் ("இத்தா'க் காலத்தில் தமது கணவரின் இல்லத்திலிருந்து) வெளியேறினாரே?" என்று கூறினார்கள். ஆகவே, நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று அதைப் பற்றிக் கூறினேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "இந்த ஹதீஸைக் கூறுவதால் ஃபாத்திமா பின்த் கைஸுக்கு எந்த நன்மையும் இல்லை" என்று சொன்னார்கள்.

2970 ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! என் கணவர் என்னை மூன்று தலாக்(கும்) சொல்லிவிட்டார். நான் (என் கணவர் வீட்டில் "இத்தா' மேற்கொண்டால்) அத்துமீறி யாரும் புகுந்துவிடலாம் என அஞ்சுகிறேன்" என்று சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அங்கிருந்து இடம் மாறிக்கொள்ள) எனக்கு உத்தரவிட்டார்கள். ஆகவே, நான் இடமாறி ("இத்தா' மேற்)கொண்டேன்.

2971 காசிம் பின் முஹம்மத் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"இதைக் கூறுவதால் –அதாவது (மூன்று தலாக்(கும்) சொல்லப்பட்டுவிட்ட பெண்ணுக்கு) உறைவிடமும் இல்லை;ஜீவனாம்சமும் இல்லை என்று கூறிவருவதால்– ஃபாத்திமா பின்த் கைஸுக்கு எந்த நன்மையும் இல்லை" என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.23
- உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அப்துர் ரஹ்மான் பின் அல்ஹகமுடைய புதல்வியான இன்ன பெண்ணைப் பார்த்தீர்களா? அவரை அவருடைய கணவர் ஒட்டுமொத்த தலாக் சொல்லிவிட்டார். (தம் கணவர் வீட்டில் இத்தா இருக்காமல்) அவர் வெளியேறி (மற்றோர் இடத்திற்குச் சென்று)விட்டாரே?" என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அவர் செய்தது தவறு" என்றார்கள். நான், "ஃபாத்திமா பின்த் கைஸ், (தான், மற்றோர் இடத்தில் "இத்தா' இருந்தது பற்றிக்) கூறிவருவதை நீங்கள் கேள்விப்படவில்லையா?" என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "இந்தச் செய்தியைக் கூறிவருவதில் ஃபாத்திமாவுக்கு எந்த நன்மையுமில்லை" என்று கூறினார்கள்.

## பாடம் : 7 முற்றாக மணவிலக்குச் செய்யப்பட்டுவிட்ட பெண்ணும் கணவன் இறந்துபோன பெண்ணும் "இத்தா'விலிருக்கும்போது தம் தேவைக்காக வெளியே செல்லலாம்.

2972 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாயின் சகோதரி மணவிலக்குச் செய்யப்பட்டார். அவர் ("இத்தா'வில் இருந்தபோது) தமது பேரீச்சமரத்தின் கனிகளைப் பறிக்க விரும்பினார். (இத்தருணத்தில்) நீ வெளியே செல்லக்கூடாதென அவரை ஒருவர் கண்டித்தார். ஆகவே, என் தாயின் சகோதரி, நபி (ஸல்) அவர்களிடம் வந்(து, அது குறித்துத் தெரிவித்)தபோது நபி (ஸல்) அவர்கள், "ஆம்; நீ (சென்று) உமது போரீச்சமரத்தின் கனிகளைப் பறித்துக்கொள் ஏனெனில், (அதில் கிடைக்கும் வருமானத்தில்) நீ தர்மம் செய்யக்கூடும்; அல்லது ஏதேனும் நல்லறம் புரியக் கூடும்" என்றார்கள்.- இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 8 கணவன் இறந்துபோன பெண் உள்ளிட்டோர் (கர்ப்பமுற்றிருந்தால் அவர்களது) "இத்தா'க் காலம், பிரசவத்துடன் முடிந்துவிடும்.

2973 உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உத்பா பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என் தந்தை அப்துல்லாஹ் பின் உத்பா பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்கள், உமர் பின் அப்தில்லாஹ் பின் அல்அர்கம் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களுக்குக் கடிதம் எழுதினார்கள்.

அதில் சுபைஆ பின்த் அல்ஹாரிஸ் அல்அஸ்ல மிய்யா (ரலி) அவர்களிடம் சென்று, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சுபைஆ மார்க்கத் தீர்ப்புக் கேட்டதைப் பற்றியும், அதற்கு அவர்கள் அளித்த பதில் பற்றியும் கேட்டு எழுதுமாறு பணித்திருந்தார்கள். (அதன்படி சுபைஆ (ரலி) அவர்களிடம் சென்று) உமர் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் (கேட்டறிந்து என் தந்தை) அப்துல்லாஹ் பின் உத்பா (ரஹ்) அவர்களுக்கு(ப் பின்வருமாறு பதில்) செய்தி அனுப்பினார்கள்:
சுபைஆ பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் பனூ ஆமிர் பின் லுஅய் குலத்தைச் சேர்ந்த சஅத் பின் கவ்லா (ரலி) அவர்களுக்கு வாழ்க்கைப்பட்டிருந்தார். –சஅத் (ரலி) அவர்கள் பத்ருப் போரில் கலந்துகொண்டவராவார்.– "விடைபெறும்' ஹஜ்ஜின்போது சஅத் (ரலி) அவர்கள் இறந்துவிட்டார்கள். அப்போது சுபைஆ கர்ப்பமுற்றிருந்தார். சஅத் (ரலி) அவர்கள் இறந்து நீண்ட நாட்கள் ஆகியிருக்கவில்லை; (அதற்குள்) சுபைஆ பிரசவித்துவிட்டார். (பிரசவத்திற்குப் பின் ஏற்படும்) உதிரப்போக்கிலிருந்து சுபைஆ தூய்மையானபோது, பெண் கேட்க வருபவர்களுக்காகத் தன்னை அவர் அலங்கரித்துக்கொண்டார். அப்போது பனூ அப்தித்தார் குலத்தில் ஒருவரான அபுஸ் ஸனாபில் பின் பஅகக் (ரலி) அவர்கள் சுபைஆவிடம் வந்து, திருமணம் செய்யும் ஆசையில் (பெண் கேட்க வருபவர்களுக்காக) உங்களை நீங்கள் அலங்கரித்திருப்பதை நான் காண்கிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! (கணவன் இறந்த ஒரு பெண் அவனது இறப்புக்குப் பின் மேற்கொள்ள வேண்டிய "இத்தா'க் காலமாகிய) நான்கு மாதம் பத்து நாட்கள் முடியும் வரையில் நீங்கள் (மறு)மணம் செய்துகொள்ள முடியாது" என்று சொன்னார்கள்.

சுபைஆ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
இதை அபுஸ்ஸனாபில் என்னிடம் சொன்னதையடுத்து நான் மாலை நேரத்தில் எனது உடையை உடுத்திக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இது பற்றிக் கேட்டேன். அதற்கு, "நீ பிரசவித்துவிட்டபோதே (மணம் செய்துகொள்ள) அனுமதிக்கப்பட்டவளாக ஆகிவிட்டாய்"என்று தீர்ப்பு வழங்கிய அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ விரும்பினால் (மறு)மணம் செய்துகொள்" என உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(கணவன் இறந்த) ஒரு பெண் பிரசவித்தவுடன் –பிரசவ இரத்தப்போக்கு இருக்கும் போதே– (மறு)மணம் செய்துகொள்வதில் தவறிருப்பதாக நான் கருதவில்லை; ஆயினும், அவள் தூய்மையடையும்வரை அவளுடைய (புதிய) கணவன் அவளை (தாம்பத்திய உறவுக்காக) நெருங்கக் கூடாது.

2974 சுலைமான் பின் யசார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்களும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் ஒன்றுகூடினர். கணவன் இறந்துவிட்ட பெண் ஒரு சில இரவுகளில் பிரசவித்துவிடுவது பற்றி(யும்,அவ்வாறு பிரசவித்துவிட்டால் அவளது

"இத்தா' அத்துடன் முடிந்துவிடுமா, இல்லையா என்பது பற்றியும்) அவர்களிருவரும் பேசிக் கொண்டனர்.
அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இரு தவணைகளில் பிந்தியதே அவளது இத்தாவாகும்" என்றார்கள்.அபூசலமா (ரஹ்) அவர்கள், "(பிரசவித்தவுடன்) அவள் (மறுமணம் செய்து கொள்ள) அனுமதிக்கப்பட்டவளாக ஆகிவிட்டாள்" என்று கூறினார்கள்.
இது குறித்து இருவரும் விவாதித்துக்கொண்டிருந்தபோது, அபூஹுரைரா (ரலி) அவர்கள், "(இந்த விஷயத்தில்) நான் என் சகோதரர் மகன் (அபூசலமா) உடன் (ஒத்து) இருக்கிறேன்" என்று சொன்னார்கள். அப்போது அவர்கள் அது குறித்துக் கேட்பதற்காக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் பணியாளர் குறைப் (ரஹ்) அவர்களை (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) உம்மு சலமா (ரலி) அவர்களிடம் அனுப்பிவைத்தனர். அவர் (சென்றுவிட்டுத்) திரும்பிவந்து உம்மு சலமா (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள் எனத் தெரிவித்தார்:
சுபைஆ பின்த் அல்ஹாரிஸ் அல்அஸ்லமிய்யா (ரலி) அவர்கள், தம் கணவர் (சஅத் பின் கவ்லா) இறந்த சில இரவுகளில் குழந்தை பெற்றெடுத்தார். அவர் அதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்தபோது,அவரை (மறு)மணம் செய்துகொள்ளுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் லைஸ் பின் சஅத் (ரஹ்) அவர் களது அறிவிப்பில், உடனே அவர்கள் (மூவரும்) உம்மு சலமா (ரலி) அவர்களிடம் ஆளனுப்பினார்கள் என (பொதுவாக) இடம் பெற்றுள்ளது. குறைபின் பெயரைக் குறிப்பிட வில்லை.

## பாடம் : 9 கணவன் இறந்து "இத்தா'விலிருக்கும் பெண் துக்கம் கடைப்பிடிப்பது கட்டாயமாகும்; மற்ற நேரங்களில் மூன்று நாட்கள் தவிர துக்கம் கடைப்பிடிப்பது தடை செய்யப்பட்டதாகும்.

2975 ஸைனப் பின்த் அபீசலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான உம்மு ஹபீபா (ரலி) அவர்களிடம் நான் சென்றேன். அது அவருடைய தந்தை அபூசுஃப்யான் (ரலி) அவர்கள் (சிரியா நாட்டில்) இறந்த நேரம். (மூன்றாவது நாளில்) உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் மஞ்சள் நிறமுள்ள கலவையான நறுமணப்பொருளை, அல்லது வேறொன்றைக் கொண்டுவருமாறு கூறி, அதை (அங்கிருந்த) ஒரு சிறுமியின் மீது தடவினார்கள். பிறகு தம் இரு கன்னங்களிலும் தடவிக்கொண்டார்கள். பிறகு "அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்கு இந்த நறுமணம் தேவையே இல்லை. ஆயினும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடையின் மீதிருந்தபடி "அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டிருக்கும் எந்தப் பெண்ணும், இறந்துபோன ஒருவருக்காக மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிப்பதற்கு அனுமதியில்லை. ஆனால், கணவருக்காக நான்கு மாதம் பத்து நாட்கள் தவிர' என்று கூறக்கேட்டுள்ளேன். (ஆதலால்தான் இப்போது நறுமணம் பூசினேன்)" என்றார்கள்.

- பின்னர் ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களிடம் நான் சென்றேன். அது அவருடைய சகோதரர் இறந்த நேரம். அப்போது அவர்கள் நறுமணப் பொருள் ஒன்றைக் கொண்டுவரச் சொல்லி பூசிக்கொண்டார்கள்.
பின்னர், "அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்கு இந்த நறுமணம் தேவையே இல்லை. ஆயினும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி "அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட எந்தப் பெண்ணும் இறந்துபோன ஒருவருக்காக மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்க அனுமதியில்லை. ஆனால், தன் கணவருக்காக நான்கு மாதம் பத்து நாட்கள் தவிர' என்று கூறக் கேட்டுள்ளேன்"என்றார்கள்.
- என் தாயார் உம்மு சலமா (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறக் கேட்டுள்ளேன்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி வந்து, "அல்லாஹ்வின் தூதரே! என் மகளுடைய கணவர் இறந்துவிட்டார். (இத்தாவிலிருக்கும்) என் மகளின் கண்ணில் வலி ஏற்பட்டுவிட்டது. அவளுக்கு நாங்கள் அஞ்சனம் (சுர்மா) தீட்டிவிடலாமா?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வேண்டாம்' என்று –இரண்டு அல்லது மூன்று முறை– கூறினார்கள். ஒவ்வொரு முறையும் "வேண்டாம்' என்றே கூறினார்கள். பிறகு, "(கணவனை இழந்த ஒரு பெண்ணின்) "இத்தா'க் காலம் நான்கு மாதங்களும் பத்து நாட்களும்தாம். (ஆனால்,)அறியாமைக் காலத்தில் உங்களில் (கணவனை இழந்த) ஒரு பெண் (ஒரு வருடம் இத்தா இருப்பாள்.) ஆண்டின் முடிவில் ("இத்தா' நிறைவுற்றதன் அடையாளமாக) ஒட்டகச்சாணத்தை எறிவாள். (அந்த நிலை இப்போது இல்லையே)" என்றார்கள்.

- ஹுமைத் பின் அபீஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஸைனப் பின்த் அபீசலமா (ரலி) அவர்களிடம், "ஆண்டின் முடிவில் ஒட்டகச் சாணத்தை எறிவாள் என்றால் என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
(அறியாமைக் காலத்தில்) ஒரு பெண்ணின் கணவன் இறந்துவிட்டால், அவள் ஒரு சிறிய குடிசைக்குள் நுழைந்துகொண்டு, தன் ஆடைகளிலேயே மிகவும் மோசமானதை அணிந்து கொள்வாள். ஒரு வருடம் கழியும்வரை எந்த நறுமணத்தையும் வேறு எதையும் தொடமாட்டாள். (ஓராண்டு கழிந்த) பிறகு கழுதை, ஆடு போன்ற கால்நடை ஒன்று, அல்லது பறவை ஒன்று (அவளிடம்) கொண்டுவரப்படும். அதன் மீது (அழுக்குத் திரண்ட தனது உடலைக்) கடுமையாகத் தேய்த்துக்கொள்வாள். அவ்வாறு அவள் தேய்க்கும் எந்த உயிரினமும் (அந்த முடை நாற்றத்தால்) சாகாமல் பிழைத்தல் அரிது. பிறகு அவள் (அந்தக் குடிசையிலிருந்து) வெளியே வருவாள். அப்போது (அவளிடம்) ஒட்டகச் சாணம் கொடுக்கப்படும். உடனே அவள் அதை (தனக்கெதிரே) தூக்கி எறிந்துவிடுவாள். (இதுவே "இத்தா'முடிந்ததற்கு அடையாளமாகும்.) பிறகு அவள் தான் விரும்பிய நறுமணத்தையோ மற்ற பொருட்களையோ பழையபடி உபயோகித்துக்கொள்வாள்.
மேற்கண்ட மூன்று ஹதீஸ்களையும் ஸைனப் பின்த் அபீசலமா (ரலி) அவர்களே அறிவித்தார்கள்.

2976 ஸைனப் பின்த் உம்மி சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது
உம்மு ஹபீபா (ரலி) அவர்களின் நெருங்கிய உறவினர் ஒருவர் இறந்து (இரண்டு நாட்கள் கழிந்து)விட்டபோது,அவர்கள் மஞ்சள் நிறமுடைய ஒரு வகை நறுமணப் பொருளைக் கொண்டுவருமாறு கூறி, அதைத் தமது முன்கையில் தடவிக்கொண்டார்கள். பிறகு "நான் இவ்வாறு செய்வதற்குக் காரணம், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டிருக்கும் எந்தப் பெண்ணும் (இறந்துபோன ஒருவருக்காக) மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிப்பதற்கு அனுமதியில்லை; ஆனால், கணவருக்காக நான்கு மாதம் பத்து நாட்கள் தவிர!' என்று கூறக் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

- மேற்கண்ட ஹதீஸை, ஸைனப் பின்த் அபீ சலமா (ரலி) அவர்கள் தம் தாயார் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்தும், நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அல்லது வேறொரு துணைவியாரிடமிருந்தும் அறிவித்துள்ளார்கள்.

2977 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களது காலத்தில்) ஒரு பெண்ணின் கணவர் இறந்துவிட்டார். ("இத்தா' வில் இருந்த அவளது கண்ணில் வலி ஏற்பட்டதால்) அவளது கண் குறித்து அவ(ளுடைய உறவின)ர்கள் அஞ்சினர். ஆகவே, அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, அப்பெண் அஞ்சனம் (சுர்மா) இட்டுக் கொள்ள அனுமதி கேட்டனர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அறியாமைக் காலத்தில் கணவன் இறந்த பின்) மனைவி அவளுடைய ஆடைகளிலேயே மிக மோசமானதை அணிந்துகொண்டு, அற்பமான ஒரு குடிலுக்குள் ஒரு வருடம் தங்கியிருப்பாள். பின்னர் (அவ்வழியாகக்) கடந்துசெல்லும் ஏதேனும் ஒரு நாய்மீது ஒட்டகச்சாணத்தை அவள் வீசியெறிவாள். பின்னர் அக்குடிலை விட்டும் வெளியேறுவாள். (இஸ்லாம் வந்த பின் இழிவு நிலையுடன்கூடிய ஒரு வருட "இத்தா' என்பது மாறி) நான்கு மாதம் பத்து நாட்கள் (மட்டும் கண்ணியத்துடன் தங்கும் நிலை) ஏற்படவில்லையா?" என்று கேட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

2978 உம்மு சலமா (ரலி) மற்றும் உம்மு ஹபீபா (ரலி) ஆகியோர் கூறியதாவது:
ஒரு பெண் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "என் புதல்வியின் கணவர் இறந்து விட்டார். (அவள் தற்போது "இத்தா' இருக்கும் நிலையில்) அவளது கண்ணில் வலி ஏற்பட்டுள்ளது. எனவே, அவளுக்கு நான் அஞ்சனம் தீட்டிவிட விரும்புகிறேன்" என்று தெரிவித்தார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அறியாமைக் காலத்தில் கணவன் இறந்த பின்) மனைவி ஓராண்டு நிறைவடையும்போது ஒட்டகச் சாணத்தை விட்டெறிவாள். (ஓராண்டு காலம் துக்கம் கடைப்பிடித்து "இத்தா' இருந்துவந்தாள். இந்த அவலம் நீங்கி,) "இத்தா' நான்கு மாதம் பத்து நாட்கள் மட்டுமே (என்றாகிவிட்டதே)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2979 ஸைனப் பின்த் அபீசலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
தம் தந்தை அபூசுஃப்யான் (ரலி) அவர்களின் இறப்புச் செய்தி வந்தபோது, உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் மூன்றாவது நாளில் மஞ்சள் நிற (நறுமண)ப் பொருளைக் கொண்டு வரச் சொல்லி, அதைத் தம் முன்கைகளிலும் கன்னங்களிலும் தடவிக்கொண்டார்கள். மேலும், "இந்த நறுமணப் பொருளின் தேவையற்றவளாகவே நான் இருந்தேன். (ஆயினும்) நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட எந்தப் பெண்ணும் (இறந்துபோன ஒருவருக்காக) மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்க அனுமதியில்லை; ஆனால், கணவருக்காக நான்கு மாதம் பத்து நாட்கள் தவிர' என்று சொல்லக் கேட்டேன் (எனவே தான், இப்போது நறுமணம் தடவிக்கொண்டேன்)"என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2780 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட' அல்லது "அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நம்பிக்கை கொண்ட' எந்தப் பெண்ணும் இறந்துபோன ஒருவருக்காக மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்க அனுமதியில்லை; ஆனால், தன் கணவனுக்காக (நான்கு மாதம் பத்து நாட்கள்) தவிர!
இதை ஹஃப்ஸா (ரலி) அவர்கள், அல்லது ஆயிஷா (ரலி) அவர்கள், அல்லது அவ்விருவரும் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2981 மேற்கண்ட ஹதீஸ் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஹஃப்ஸா பின்த் உமர் (ரலி) அவர்களிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அவள் தன் கணவனுக்காக நான்கு மாதம் பத்து நாட்கள் துக்கம் கடைப்பிடிப்பாள்" என அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவரிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2982 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட எந்தப் பெண்ணும் இறந்து போன ஒருவருக்காக மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்க அனுமதியில்லை; தன் கணவனுக்காக (நான்கு மாதம் பத்து நாட்கள்) தவிர!
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2983 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எந்தப் பெண்ணும் இறந்துபோன ஒருவருக்காக மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்கக் கூடாது;கணவனுக்காக நான்கு மாதம் பத்து நாட்கள் தவிர! (அந்நாட்களில்) அவள் சாயமிடப்பட்ட ஆடையை அணியமாட்டாள்;நெய்வதற்கு முன் நூலில் சாயமேற்றப்பட்டு, பின்பு நெய்யப்பட்ட ஆடையைத் தவிர! மேலும், அவள் அஞ்சனம் தீட்டிக்

கொள்ளமாட்டாள்; நறுமணம் பூசிக்கொள்ளமாட்டாள்; ஆனால் (மாதவிடாயிலிருந்து) அவள் தூய்மையடைந்த பின்னர் தவிர! அப்போது "குஸ்த்' மற்றும் "அழ்ஃபார்' ஆகிய ஜாதிக் கோஷ்டக் கட்டைத் துண்டால் நறுமணப் புகையிட்டுக்கொள்வாள்.
இதை உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "அவள் தூய்மையடையும் சமயத்தில் தவிர!" என இடம்பெற்றுள்ளது.

2984 உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
இறந்துபோன எவருக்காகவும் மூன்று நாட்களுக்கு மேல் (பெண்களாகிய) நாங்கள் துக்கம் கடைப்பிடிக்கலாகாது எனத் தடை விதிக்கப்பட்டிருந்தோம்; ஆனால், கணவனுக்காக நான்கு மாதம் பத்து நாட்கள் தவிர! (அதாவது "இத்தா'வில் இருக்கும்போது) நாங்கள் அஞ்சனம் தீட்டிக்கொள்ளக்கூடாது; நறுமணம் பூசிக்கொள்ளக் கூடாது; சாயமிடப்பட்ட ஆடையை அணியக் கூடாது (என்று எங்களுக்குத் தடை விதிக்கப்பட்டது); (பெண்களாகிய) எங்களில் ஒருவர் மாதவிடாயிலிருந்து குளித்துத் தூய்மையடையும்போது "குஸ்த்' மற்றும் "அழ்ஃபார்' ஆகிய ஜாதிக் கோஷ்டக் கட்டையால் நறுமணப் புகையிட்டுக்கொள்ள அனுமதிக்கப்பட்டது.

## அத்தியாயம் : 19 - சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்)

2985 சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
உவைமிர் அல்அஜ்லானீ (ரலி) அவர்கள் ஆஸிம் பின் அதீ அல்அன்சாரி (ரலி) அவர்களிடம் வந்து, "ஆஸிமே! ஒரு மனிதன் தன் மனைவியுடன் அந்நிய ஆணொருவன் (தகாத உறவு கொண்டபடி) இருப்பதைக் கண்டால், அவனை இந்த மனிதன் கொன்றுவிடலாமா? அவ்வாறு கொன்றுவிட்டால், பழிவாங்கும் சட்டப்படி அவனை நீங்கள் கொன்றுவிடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்ய வேண்டும், சொல்லுங்கள்? ஆஸிமே! எனக்காக இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டுச் சொல்லுங்கள்" என்றார்கள். ஆகவே, ஆஸிம் (ரலி) அவர்கள் (இது குறித்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இத்தகைய) கேள்விகளை விரும்பவில்லை; அவற்றை அசிங்கமாகக் கருதினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து வந்த (கண்டன) வார்த்தைகள் ஆஸிம் (ரலி) அவர்களுக்குப் பெருத்த மன வேதனை அளித்தன.

ஆஸிம் (ரலி) அவர்கள் தம் வீட்டாரிடம் திரும்பிவந்தபோது, அவர்களிடம் உவைமிர் (ரலி) அவர்கள் வந்து, "ஆஸிமே! உங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்ன சொன்னார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு ஆஸிம் (ரலி) அவர்கள் உவைமிரை நோக்கி, "நீ எனக்கு நன்மை செய்யவில்லை. (என்னைச் சிக்க வைத்துவிட்டாய்;) நான் கேட்ட கேள்வி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பிடிக்கவில்லை" என்றார்கள். அதற்கு உவைமிர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! இது குறித்து நானே (நேரடியாக) அவர்களிடம் கேட்காமல் ஓயமாட்டேன்" என்று கூறிவிட்டு, மக்களுக்கு மத்தியில் இருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கிச் சென்றார்கள்.
பிறகு, "அல்லாஹ்வின் தூதரே! ஒரு மனிதன் தன் மனைவியுடன் அந்நிய ஆடவன் ஒருவன் (தகாத உறவு கொண்ட நிலையில்) இருக்கக் கண்டால், அவன் அந்த ஆடவனைக் கொன்றுவிடலாமா? (அவ்வாறு கொன்றுவிட்டால் பழிவாங்கும் சட்டப்படி) அவனை நீங்கள் கொன்றுவிடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்ய வேண்டும்,சொல்லுங்கள்?" என்று கேட்டார்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமது விஷயத்திலும் உம்முடைய மனைவி விஷயத்திலும் (வசனம்) அருளப்பெற்றுவிட்டது. ஆகவே, நீர் சென்று உம்முடைய மனைவியை அழைத்துவாரும்" என்றார்கள்.
(பிறகு அவர்கள் இருவரும் வந்தனர்.) நான் மக்களுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருகில் இருந்தபோது,அவர்கள் இருவரும் பரஸ்பரம் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்தனர். அவர்கள் "லிஆன்" செய்து முடித்தபோது, உவைமிர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நான் இவளை (மணவிலக்குச் செய்யாமல் மனைவியாகவே இனியும்) வைத்திருந்தால், இவள் மீது நான் பொய்(யான குற்றச்சாட்டு) சொன்னவனாக

ஆகிவிடுவேன்" என்று கூறிவிட்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு ஆணையிடுவதற்கு முன்பே அவளை மூன்று தலாக் சொல்லிவிட்டார்.
இதன் அறிவிப்பாளரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
பிறகு இதுவே சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்யும் தம்பதியருக்கு முன்மாதிரி ஆனது.

2986 மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், பனூ அஜ்லான் குலத்தைச் சேர்ந்த உவைமிர் அல்அன்சாரி (ரலி) அவர்கள் ஆஸிம் பின் அதீ (ரலி) அவர்களிடம் வந்தார்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
மேலும், அதில் "உவைமிர் (ரலி) அவர்கள் தம் மனைவியைவிட்டுப் பிரிந்துகொண்டதே பின்னர் பரஸ்பரம் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்துகொள்ளும் தம்பதியருக்கு முன்மாதிரி ஆயிற்று" என்பது விளக்க இடைச்சேர்ப்பாக இடம்பெற்றுள்ளது. மேலும், "லிஆன் நடந்தபோது அப்பெண் கர்ப்பமுற்றிருந்தார். அவருக்குப் பிறந்த ஆண் குழந்தை அதன் தாயோடு இணைத்துத்தான் (இன்ன பெண்ணின் மகன் என்று) அழைக்கப்படலாயிற்று. பின்னர் அப்பெண்ணிடமிருந்து மகனும் மகனிடமிருந்து அப்பெண்ணும் அவர்களுக்கு அல்லாஹ் நிர்ணயித்த முறையில் வாரிசாவார்கள் என்ற நடைமுறையும் வந்தது" என்று அதிகப்படியாகவும் இடம்பெற்றுள்ளது.

2987 மேற்கண்ட ஹதீஸ் பனூ சாஇதா குலத்தவரான சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அன்சாரிகளில் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! ஒரு மனிதன் தன் மனைவியுடன் வேறொரு (அந்நிய) ஆடவன் (தகாத உறவு கொண்ட நிலையில்) இருக்கக் கண்டால்..." என்று கேட்டார்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே தொடருகின்றன.
இந்த அறிவிப்பில், "எனவே, அவர்கள் இருவரும் பள்ளிவாசலில் வைத்துச் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்து கொண்டார்கள். அப்போது அங்கு நானும் இருந்தேன்" என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது. மேலும், "(லிஆன் பிரமாணம் முடிந்ததும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிடுவதற்கு முன்பே அவளை அவர் மூன்று தலாக் சொல்லிவிட்டார். நபி (ஸல்) அவர்கள் முன்னிலையிலேயே அவளை விட்டும் அவர் பிரிந்துகொண்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "இதுவே "லிஆன்" செய்யும் ஒவ்வொரு தம்பதியரைப் பிரித்துவைக்கும் வழிமுறையாகும்" என்று கூறினார்கள் என்பதும் இடம் பெற்றுள்ளது.

2988 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஸ்அப் பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களது ஆட்சிக்காலத்தில் என்னிடம் "சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்துகொண்ட தம்பதியர் பிரித்துவைக்கப்படுவார்களா? (அல்லது "லிஆன்" பிரமாணத்தை மொழிந்ததும் தானாக மணவிலக்கு ஏற்பட்டுவிடுமா?)"

என்று கேட்கப்பட்டது. அதற்கு என்ன பதில் சொல்வது என்று எனக்குத் தெரியவில்லை. ஆகவே, நான் (கூஃபாவிலிருந்து) புறப்பட்டு மக்காவிலிருந்த இப்னு உமர் (ரலி) அவர்களது இல்லத்திற்குச் சென்றேன். அவர்களுடைய பணியாளிடம், "எனக்காக (உள்ளே வர) அனுமதி கேள்"என்றேன். "அவர்கள் மதிய ஓய்வு மேற்கொண்டிருக்கிறார்கள்" என அவர் பதிலளித்தார். எனது குரலைக் கேட்ட இப்னு உமர் (ரலி) அவர்கள், "இப்னு ஜுபைரா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்" என்றேன். "உள்ளே வாருங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! ஏதோ அலுவல்தான் உங்களை இந்த நேரத்தில் (என்னிடம்) கொண்டுவந்து சேர்த்திருக்க வேண்டும்" என்று கூறினார்கள்.

நான் உள்ளே சென்றேன். அப்போது அவர்கள் ஒட்டகத்தின் மேல் விரிக்கப்படும் விரிப்பொன்றை விரித்து, பேரீச்சநார் நிரப்பப்பட்ட ஒரு தலையணையில் சாய்ந்திருந்தார்கள். நான், "அபூ அப்திர் ரஹ்மான்! பரஸ்பரம் சாப அழைப்புப் பிரமாணம் செய்துகொண்ட தம்பதியர் பிரித்து வைக்கப்படுவார்களா?" என்று கேட்டேன். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்)! ஆம். (அவர்கள் "லிஆன்" செய்த பிறகு பிரித்துவைக்கப்படுவார்கள்); இதைப் பற்றி (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்) முதன் முதலில் கேட்டவர் இன்ன மனிதரின் புதல்வர் இன்ன மனிதர் ஆவார். அவர், "அல்லாஹ்வின் தூதரே! எங்களில் ஒருவர் தம் மனைவி (அந்நிய ஆடவனுடன்) மானக்கேடான செயலில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதைக் கண்டால் என்ன செய்ய வேண்டும்? (அதை) அவர் (வெளியே) சொன்னால், ஒரு பெரிய விஷயத்தைச் சொன்னவராகி விடுவார். மௌனமாக இருந்தாலும்,அதைப் போன்ற ஒரு விஷயத்தில் மௌனமாக இருந்தவராகிவிடுவாரே?" என்று கேட்டார். அதற்குப் பதிலேதும் சொல்லாமல் நபி (ஸல்) அவர்கள் அமைதியாக இருந்தார்கள். அதன் பின்னர் அவர் கேட்டது (போன்றே ஒரு நிகழ்ச்சி) நடந்தபோது, அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் எதைப் பற்றித் தங்களிடம் கேட்டேனோ அதன் மூலம் நானே சோதிக்கப்பட்டுள்ளேன்" என்று கூறினார். அப்போது வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், "தம்மைத் தவிர வேறு சாட்சிகள் இல்லாத நிலையில் தம் மனைவியர்மீது பழி சுமத்துவோர், தாம் உண்மையாளர் என்று அல்லாஹ்வின் மீது நான்கு தடவை (சத்தியம் செய்து) சாட்சியமளிக்க வேண்டும்" என்று தொடங்கி, "தன்மீது அல்லாஹ்வின் கோபம் ஏற்படட்டும் என்று ஐந்தாவதாக (கூறுவாள்)" (24:6-9) என்பது வரையிலான வசனங்களை அருளினான்.

அவற்றை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த மனிதருக்கு ஓதிக் காட்டி, அவருக்கு அறிவுரை கூறினார்கள்; (அல்லாஹ்வின் தண்டனைகளை) நினைவூட்டினார்கள்; "இம்மையின் தண்டனை மறுமையின் தண்டனையைவிட மிக எளிதானதாகும்" என்றும் தெரிவித்தார்கள். அதற்கு அந்த மனிதர் "இல்லை; தங்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீதாணையாக! நான் அவள்மீது பொய்(யான குற்றச்சாட்டைச்) சொல்லவில்லை" என்றார்.

பிறகு நபி (ஸல்) அவர்கள் அப்பெண்ணை அழைத்து அவளுக்கு அறிவுரை கூறினார்கள்; (அல்லாஹ்வின் தண்டனையை) நினைவூட்டினார்கள்; "இம்மையின் தண்டனை மறுமையின் தண்டனையைவிட மிக எளிதானதாகும்" என்றும் தெரிவித்தார்கள். அதற்கு அப்பெண்,

"இல்லை; தங்களைச் சத்தியத்துடன் அனுப்பியவன் மீதாணையாக! அவர் பொய்யர்" என்று கூறினாள். எனவே, முதலில் அந்த ஆணிடமிருந்து (சாப அழைப்புப் பிரமாணத்தை) நபியவர்கள் ஆரம்பித்தார்கள். அவர் (தமது குற்றச்சாட்டில்) தாம் உண்மையாளர் என அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டு நான்கு முறை உறுதிமொழிந்தார். ஐந்தாவது முறையில், (தனது குற்றச்சாட்டில்) தான் பொய்யராக இருந்தால் "அல்லாஹ்வின் சாபம் என்மீது உண்டாகட்டும்" என்று அவர் கூறினார்.

இரண்டாவதாக அந்தப் பெண்ணை அழைத்தார்கள். அவள் (தன்மீது கூறப்பட்ட குற்றச்சாட்டை மறுக்கும் வகையில்) "அவர் பொய்யர் ஆவார்" என நான்கு முறை அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டு உறுதிமொழிந்தாள். ஐந்தாவதாக "அவர் (தமது குற்றச்சாட்டில்) உண்மையாளராக இருந்தால் என்மீது அல்லாஹ்வின் கோபம் உண்டாகட்டும்" என்று அவள் கூறினாள். பிறகு இருவரையும் நபி (ஸல்) அவர்கள் பிரித்துவைத்தார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "பரஸ்பரம் சாப அழைப்புப் பிரமாணம் செய்துகொண்ட தம்பதியர் பற்றி முஸ்அப் பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களது (ஆட்சிக்) காலத்தில் என்னிடம் வினவப்பட்டது. அதற்கு என்ன பதிலளிப்பது என்று எனக்குத் தெரியவில்லை" என ஹதீஸ் தொடங்குகிறது.

2989 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்துகொண்ட தம்பதியரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் இருவரின் விசாரணையும் அல்லாஹ்விடம் உள்ளது. உங்கள் இருவரில் ஒருவர் பொய்யர். (இனி) அவள்மீது (கணவராகிய) உமக்கு எந்த அதிகாரமும் இல்லை" என்று சொன்னார்கள். உடனே அவர், "அல்லாஹ்வின் தூதரே! (நான் இவளுக்கு மணக்கொடையாக அளித்த) எனது பொருள் (என்ன ஆவது? அதைத் திரும்பப்பெற்றுக் கொள்ளலாமா)?" என்று கேட்டார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமக்கு (அந்தப்) பொருள் கிடைக்காது. நீர் அவள் விஷயத்தில் (சொன்ன குற்றச்சாட்டில்) உண்மையாளராய் இருந்தால், அவளது கற்பை நீர் பயன்படுத்திக்கொள்வதற்காகப் பெற்ற அனுமதிக்கு அந்தப் பொருள் பகரமாகிவிடும். அவள்மீது நீர் பொய் சொல்லியிருந்தால் (அவளை அனுபவித்துக்கொண்டு அவதூறும் கற்பித்த காரணத்தால்) அப்பொருள் உம்மைவிட்டு வெகுதூரத்தில் உள்ளது" என்று சொன்னார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2990 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறிய தாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பனூ அஜ்லான் குலத்தைச் சேர்ந்த (தம்பதியரான) இருவரை (சாப அழைப்புப் பிரமாணத்திற்குப் பின்) பிரித்துவைத்தார்கள். பிறகு, "உங்கள் இருவரில் ஒருவர் பொய்யர் என்பதை அல்லாஹ் நன்கு அறிவான். ஆகவே, உங்களில் பாவமன்னிப்புக் கோருபவர் உண்டா?" என்று கேட்டார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின் வருமாறு ஹதீஸ் ஆரம்பமாகிறது:
சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) பற்றிக் கேட்டேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறு அறிவித்தார்கள்.

2991 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஸ்அப் பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள், சாப அழைப்புப் பிரமாணம் செய்து கொண்ட தம்பதியரைப் பிரித்து வைக்கவில்லை. ஆகவே, இது குறித்து அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. அப்போது அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் பனூ அஜ்லான் குலத்தைச் சேர்ந்த (தம்பதியர்) இருவரைப் பிரித்து வைத்தார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

2992 யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் ஒரு மனிதர் தம் மனைவியிடம் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்தார்; பின்னர் அவ்விருவரையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரித்து வைத்தார்கள்; மேலும், குழந்தையைத் தாயிடம் சேர்த்தார்கள்" என இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று நாஃபிஉ (ரஹ்) அவர்கள் தங்களுக்கு அறிவித்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு மாலிக் (ரஹ்) அவர்கள் "ஆம்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

2993 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிகளில் ஒரு மனிதரையும் அவருடைய மனைவியையும் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்யவைத்தார்கள். பின்னர் அவர்கள் இருவரையும் பிரித்துவைத்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2994 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒரு வெள்ளிக்கிழமை இரவில் பள்ளிவாசலில் இருந்தோம். அப்போது அன்சாரிகளில் ஒரு மனிதர் வந்து, "தம் மனைவியுடன் (அந்நிய) ஆடவன் ஒருவன் (தகாத உறவில்) இருப்பதைக் கண்ட ஒருவர், (அது குறித்துப்) பேசினால் அவருக்கு நீங்கள் (அவதூறுச் சட்டப்படி) சாட்டையடி வழங்குவீர்களா? அல்லது அவனை அவர் கொன்றுவிட்டால், (பழிவாங்கல் சட்டப்படி) அவரை நீங்கள் கொன்றுவிடுவீர்களா? அவர் மௌனமாக இருந்துவிட வேண்டும் என்றால்,ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு மௌனமாக இருக்க வேண்டுமா? அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்பேன்" என்று சொன்னார்.

மறுநாள் அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து அது குறித்து வினவினார்: "தம் மனைவியுடன் (அந்நிய) ஆண் ஒருவன் (தகாத உறவில்) இருப்பதைக் கண்ட ஒருவர், (அது தொடர்பாகப்) பேசினால் அவருக்கு நீங்கள் சாட்டையடி வழங்குவீர்களா? அல்லது அவனை அவர் கொன்றுவிட்டால், நீங்கள் அவரைக் கொன்றுவிடுவீர்களா?அல்லது அவர் மௌனமாக இருப்பதானால், ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு மௌனமாக இருந்துவிட வேண்டியதுதானா?" என்று கேட்டார்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இறைவா! (இந்தப் பிரச்சினையில் தெளிவின் வாசலைத்) திறந்திடுவாயாக!" என்று பிரார்த்திக்கலானார்கள். அப்போதுதான் "தம்மைத் தவிர வேறு சாட்சிகள் இல்லாத நிலையில் தம் மனைவியர்மீது பழி சுமத்துவோர், தாங்கள் உண்மையாளர்கள் என்று அல்லாஹ்வின் மீது நான்கு தடவை (சத்தியம் செய்து) சாட்சியமளிக்க வேண்டும்" (24:6-9) என்று தொடங்கும் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) தொடர்பான வசனங்கள் அருளப்பெற்றன.

பின்னர் மக்களில் அந்த மனிதரே (தமது சொந்த வாழ்வில்) அந்தப் பிரச்சினையின் மூலம் சோதிக்கப்பட்டார். எனவே,அவரும் அவருடைய மனைவியும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து சாப அழைப்புப் பிரமாணத்தை மொழிந்தனர். அந்த ஆண், தாம் உண்மையாளர் என அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டு நான்கு தடவைகள் சாட்சியமளித்தார். பிறகு ஐந்தாவது தடவையில் அவர் "நான் பொய்யனாயிருந்தால் என்மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்” என்று சாபமிட்டார்.

பின்னர் அந்தப் பெண் சாப அழைப்புப் பிரமாணத்தைச் சொல்லப்போனாள். அப்போது அவளிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "சற்று பொறு!” என்றார்கள். ஆனால், அவள் மறுத்துவிட்டு, சாப அழைப்புப் பிரமாணத்தை மொழிந்தாள். பின்னர் அவர்கள் இருவரும் திரும்பிச் சென்றபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவள் தொங்கும் முடிகள் கொண்ட கறுப்பு நிறக்குழந்தையைப் பெற்றெடுக்கக்கூடும்" என்றார்கள். அவ்வாறே அப்பெண் தொங்கிய முடியுடைய கறுப்பு நிறக் குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

2995 முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் (லிஆன் பற்றிக்) கேட்டேன். (ஏனெனில்,) அதைப் பற்றிய அறிவு அவர்களிடம் இருப்பதாக நான் கருதினேன். அப்போது அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்:

ஹிலால் பின் உமய்யா (ரலி) அவர்கள், (கர்ப்பவதியான) தம் மனைவிக்கு ஷரீக் பின் சஹ்மா என்பாருடன் தொடர்பு இருப்பதாகக் குற்றம் சாட்டினார்கள். ஷரீக் பின் சஹ்மா, பராஉ பின் மாலிக் (ரலி) அவர்களின் (பால்குடி) தாய்வழிச் சகோதரராய் இருந்தார். ஹிலால் பின் உமய்யா (ரலி) அவர்களே இஸ்லாத்தில் ஆரம்பமாக "லிஆன்” செய்தவர் ஆவார்கள். ஹிலால் பின் உமய்யா (ரலி) அவர்கள் சாப அழைப்புப் பிரமாணம் செய்த போது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்தப் பெண்ணைக் கவனித்துவாருங்கள்; இவள் (சுருள் சுருளாக இல்லாமல்) படிந்த தொங்கலான முடியுடைய, கலங்கிய கண்களுடைய

வெள்ளை நிறக்குழந்தையைப் பெற்றெடுத்தால், அது ஹிலால் பின் உமய்யாவுக்கு உரியதாகும்; சுருட்டை முடியுடைய, மெலிந்த கணைக் கால்கள் கொண்ட கறுப்பு நிறக் குழந்தையைப் பெற்றெடுத்தால், அது ஷரீக் பின் சஹ்மாவுக்கு உரியதாகும்" என்றார்கள். பின்னர் அப்பெண் சுருட்டை முடியுடைய மெலிந்த கணைக் கால்கள் கொண்ட கறுப்பு நிறக் குழந்தையையே பெற்றெடுத்தாள் என எனக்குத் தகவல் எட்டியது.

2996 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
சாப அழைப்புப் பிரமாணம் (நடைமுறையில் வருவதற்கு முன் ஒரு முறை மனைவிமீது கணவன் விபசாரக்குற்றம் சாட்டுவது) தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருகில் பேசப்பட்டது. அப்போது ஆஸிம் பின் அதீ (ரலி) அவர்கள் அது தொடர்பாக ஏதோ (ஆவேசமாகப்) பேசிவிட்டுத் திரும்பிச்சென்றார். (சிறிது நேரத்தில்) ஆஸிம் (ரலி) அவர்களின் குலத்தைச் சேர்ந்த ஒருவர் அவரிடம் சென்று, தம் மனைவியுடன் (அந்நிய) ஆடவன் ஒருவன் (தகாத உறவு கொண்டு) இருந்ததைத் தாம் கண்டதாகச் சொன்னார். அதற்கு ஆஸிம் (ரலி) அவர்கள், "நான் (ஆவேசமாகப்) பேசியதாலேயே இப்படி (என் குலத்தாரிடையே நடந்து) நானே சோதிக்கப்பட்டுள்ளேன்" என்று சொன்னார்கள்.
பின்னர் ஆஸிம் (ரலி) அவர்கள் அவரை அழைத்துக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று அவர் தம் மனைவியை எந்த நிலையில் கண்டார் என்பதைப் பற்றித் தெரிவித்தார்கள்.
(குற்றச்சாட்டைக் கொண்டுவந்த) அந்த மனிதர் நல்ல மஞ்சள் நிறமுடையவராகவும், சதைப் பிடிப்புக் குறைவானராகவும், படிந்த முடிகளைக் கொண்டவராகவும் இருந்தார். தம் மனைவியுடன் இருக்கக் கண்டதாக அவர் வாதிட்ட அந்த அந்நிய மனிதரோ மாநிறம் உடையவராகவும், அதிகச் சதைப்பிடிப்பு உள்ளவராகவும், கணைக்கால் புடைத்தவராகவும் இருந்தார்.

(இந்தக் குற்றச்சாட்டைக் கேட்ட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! (இந்தப் பிரச்சினையில் ஒரு) தெளிவைக் தருவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள். பிறகு, தம் மனைவியுடன் கண்டதாக அவர் குறிப்பிட்ட அந்த (அந்நிய) ஆடவரின் சாயலில் அவள் குழந்தை பெற்றெடுத்தாள். (அதற்கு முன்பே) இந்தத் தம்பதியரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்ய வைத்தார்கள்.
(இந்த ஹதீஸ் அறிவிக்கப்பட்ட) அவையில் இருந்த ஒரு மனிதர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "சாட்சி இல்லாமலேயே ஒருவருக்கு நான் கல்லெறி தண்டனை அளிப்பவனாயிருந்தால் இவளுக்கு அளித்திருப்பேன்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னது இந்தப் பெண் குறித்தா? என்று கேட்டார். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இல்லை; (அவள் வேறொரு பெண்ணாவாள்.) அந்தப் பெண் இஸ்லாத்தில் இருந்து கொண்டே தகாத உறவு கொண்டுவந்தாள் எனப் பரவலாகப் பேசப்பட்டவள். (ஆனால், அவள் குற்றத்தை ஒப்புக்கொள்ளவுமில்லை; தகுந்த சாட்சியும் இல்லை. அவள் குறித்தே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு குறிப்பிட்டார்கள்)" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "அதிகச் சதைப்பிடிப்பு உள்ளவராகவும்" என்பதற்குப் பின் "கடும் சுருள் முடியுடையவராகவும் இருந்தார்" என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

2997 காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
பரஸ்பரம் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்துகொண்ட அந்தத் தம்பதியர் குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அருகில் பேசப்பட்டது. அப்போது அப்துல்லாஹ் பின் ஷத்தாத் (ரஹ்) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் "நான் சாட்சியல்லாமல் (ஒருவருக்குக்) கல்லெறி தண்டனை நிறைவேற்றுபவனாயிருந்தால் இதோ இவளுக்கு நிறை வேற்றியிருப்பேன்" என்று கூறியது அவ்விருவர் தொடர்பாகத்தானா?" என்று கேட்டார்கள். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இல்லை; அவள் தகாத உறவில் ஈடுபட்டாள் எனப் பகிரங்கமாகப் பேசப்பட்டுவந்த பெண் ஆவாள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "(பரஸ்பரம் சாப அழைப்புப் பிரமாணம் செய்துகொண்ட அந்தத் தம்பதியர் குறித்து) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதைக் கேட்டேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது.

2998 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் உபாதா அல்அன்சாரி (ரலி) அவர்கள் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! ஒரு மனிதன் தன் மனைவியுடன் (அந்நிய) ஆடவன் ஒருவன் (தகாத உறவு கொண்ட நிலையில்) இருப்பதைக் கண்டால், அவன் அந்த ஆடவனைக் கொன்று விடலாமா, சொல்லுங்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை (கொல்லக் கூடாது)" என்று பதிலளித்தார்கள். அதற்கு சஅத் (ரலி) அவர்கள், "இல்லை (அவனைக் கொல்லத்தான் தோன்றும்); சத்திய (மார்க்க)த்தால் தங்களைக் கண்ணியப்படுத்தியவன் மீது ஆணையாக!" என்றார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களிடம்), "உங்கள் தலைவர் என்ன சொல்கிறார் கேளுங்கள்" என்றார்கள்.

2999 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நான் என் மனைவியுடன் (அந்நிய) ஆடவன் ஒருவன் (தகாத உறவு கொண்ட நிலையில்) இருப்பதைக் கண்டால் நான்கு சாட்சிகளைக் கொண்டுவரும்வரை நான் அவனுக்காகக் காத்திருக்க வேண்டியது தானா?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம்' என்றார்கள்.

3000 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நான் என் மனைவியுடன் (அந்நிய) ஆடவன் ஒருவன் (தகாத உறவு கொண்ட நிலையில்) இருப்பதைக் கண்டால், நான்கு சாட்சிகளைக் கொண்டு வரும்வரை நான் அவனைத் தொடக்கூடாதா?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்' என்றார்கள். அதற்கு

சஅத் (ரலி) அவர்கள், "இல்லை; தங்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீதாணையாக! நானாக இருந்தால்,அதற்கு முன்பே வாளால் அவனை வெட்டிவிடுவேன்" என்றார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் தலைவர் என்ன சொல்கிறார் கேளுங்கள்! அவர் ரோஷக்காரர். ஆனால், நான் அவரை விட ரோஷக்காரன்; அல்லாஹ் என்னைவிட ரோஷக்காரன்" என்றார்கள்.

3001 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள், "என் மனைவியுடன் (அந்நிய) ஆடவன் ஒருவன் (தவறான உறவு கொண்ட நிலையில்) இருக்க நான் கண்டால், வாளின் முனையாலேயே அவனை நான் வெட்டுவேன்" என்று சொல்ல, இந்தச்செய்தி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியது. அப்போது அவர்கள், "சஅத் அவர்களின் ரோஷத்தைக் கண்டு நீங்கள் வியக்கின்றீர்களா? அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவரைவிட அதிக ரோஷமுள்ளவன்; அல்லாஹ் என்னைவிடவும் அதிக ரோஷமுள்ளவன். அல்லாஹ்வின் ரோஷம் காரணமாகவே அவன் வெளிப்படையான மற்றும் மறைவான எல்லா மானக் கேடான செயல்களையும் தடை செய்துள்ளான். அல்லாஹ்வைவிட ரோஷக்காரர் வேறெவருமில்லை; (திருந்துவதற்கு வாய்ப்பளித்து) விட்டுப்பிடிப்பதை மிகவும் விரும்புகின்றவர் அல்லாஹ்வைவிட வேறெவரும் இல்லை. ஆகவேதான், (தன்) தூதர்களை நற்செய்தி கூறுபவர்களாகவும் எச்சரிக்கை செய்பவர்களாகவும் (இவ்விரு அம்சங்களுடன்) அல்லாஹ் அனுப்பிவைத்தான். அல்லாஹ்வைவிட மிகவும் புகழை விரும்புகின்றவர் வேறெவருமிலர். அதனால்தான், அல்லாஹ் சொர்க்கத்தை அளிப்பதாக வாக்களித்துள்ளான்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் வந்துள்ளது.

3002 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
பனூ ஃபஸாரா குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "(வெள்ளை நிறத்தவனான எனக்கு) என் மனைவி கறுப்பான குழந்தையைப் பிரசவித்துள்ளாள் (அது என் குழந்தையா என்பதில் எனக்குச் சந்தேகம் உள்ளது)" என்று சொன்னார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உன்னிடம் ஒட்டகங்கள் உள்ளனவா?" என்று கேட்டார்கள். அவர், "ஆம்' என்று பதிலளித்தார். நபி (ஸல்) அவர்கள், "அவற்றின் நிறம் என்ன?" என்று கேட்டார்கள். அவர், "சிவப்பு' என்றார். "அவற்றில் சாம்பல் நிற ஒட்டகங்களும் உள்ளனவா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்க, அவர், "(ஆம்) அவற்றில் சாம்பல் நிற ஒட்டகங்கள் இருக்கவே செய்கின்றன" என்று பதிலளித்தார். "(தாயிடம் இல்லாத) அந்த (சாம்பல்) நிறம் அவற்றுக்கு மட்டும் எப்படி வந்தது?" என்று நபியவர்கள் கேட்க, அவர் "அந்த ஒட்டகத்தின் பரம்பரை காரணமாக வந்திருக்கலாம்" என்று சொன்னார். நபி (ஸல்) அவர்கள், "(உன்னுடைய) இந்தக் குழந்தையும் அதன் பரம்பரையிலுள்ள (மூதாதையரின்) நிறத்தைக் கொண்டிருக்கக்கூடும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3003 மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் மஅமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவர் "அல்லாஹ்வின் தூதரே! என் மனைவி கறுப்பான மகனைப் பிரசவித்துள்ளாள்" என்று, அது தனது குழந்தை அல்ல என்பதைப் போன்று சாடையாகக் கேட்டார்" என்று இடம்பெற்றுள்ளது. ஹதீஸின் இறுதியில் "அவன் தம்முடையவன் அல்லன் என்று மறுக்க அவரை நபி (ஸல்) அவர்கள் அனுமதிக்க வில்லை" என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

3004 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு கிராமவாசி வந்து, "(வெள்ளை நிறத்தவனான எனக்கு) என் மனைவி கறுப்பான மகனைப் பெற்றெடுத்துள்ளாள்; அவனை நான் (என் மகன் என ஏற்க மனத்தளவில்) மறுத்துவிட்டேன்" என்று சொன்னார். அதற்கு அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன்னிடம் ஒட்டகங்கள் உள்ளனவா?" என்று கேட்டார்கள். அந்தக் கிராமவாசி "ஆம்" என்று பதிலளித்தார். நபி (ஸல்) அவர்கள் "அவற்றின் நிறம் என்ன?" என்று கேட்டார்கள். அவர் "சிவப்பு" என்று சொன்னார். "அவற்றில் சாம்பல் நிற ஒட்டகங்களும் உள்ளனவா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்க, அவர் "ஆம்' என்று பதிலளித்தார். "(தாயிடம் இல்லாத) அந்த (சாம்பல்) நிறம் அவற்றுக்கு எப்படி வந்தது?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அந்தக் கிராமவாசி, "அந்த ஒட்டகத்தின் பரம்பரை காரணமாக வந்திருக்கலாம், அல்லாஹ்வின் தூதரே!" என்று சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(உன்னுடைய) இந்த மகனும் அவன் பரம்பரையிலுள்ள (மூதாதையரின்) நிறத்தைக் கொண்டிருக்கக்கூடும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

# அத்தியாயம் : 20 - அடிமையை விடுதலை செய்தல்

**பாடம் : 1 (பலருக்குச் சொந்தமான) ஓர் அடிமையி(ன் விலையி)ல் தமக்குரிய பங்கை மட்டும் ஒருவர் விடுதலை செய்தல்.**

3005 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஓர் அடிமையில் தமக்குரிய பங்கை விடுதலை செய்கிறாரோ அவரிடம் அந்த அடிமையின் (முழு) விலையையும் எட்டுகின்ற அளவுக்குச் செல்வம் இருந்தால், அந்த அடிமையை ஒத்த மற்றோர் அடிமையின் விலையை மதிப்பிட்டு,தம் கூட்டாளிகளுக்கு அவர்களுக்குரிய பங்குகளின் விலையைக் கொடுத்து, அந்த அடிமையை (முழுமையாக) விடுதலை செய்துவிட வேண்டும். இல்லையெனில், அவர் எந்த அளவுக்கு விடுதலை செய்தாரோ, அந்த (தமது பங்கின்) அளவுக்குத்தான் விடுதலை செய்தவர் ஆவார்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பத்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 2 அடிமை (தனது முழு விடுதலைக்காக) உழைப்பது பற்றிய குறிப்பு.**

3006 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இருவருக்குச் சொந்தமான ஓர் அடிமையை அவர்களில் ஒருவர் விடுதலை செய்தால், அவர் (வசதியுள்ளவராக இருக்கும்போது தம் கூட்டாளியின் பங்கிற்குப்) பொறுப்பேற்பார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3007 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஓர் அடிமையி(ன் விலையி)ல் தமக்குரிய ஒரு பங்கை விடுதலை செய்கிறாரோ அவரிடம் (போதிய) செல்வம் இருக்குமாயின், அவரது செல்வத்திலிருந்து அவ்வடிமையை (முழுவதுமாக) விடுதலை செய்வது அவர்மீது கடமையாகும்.
அவரிடம் (போதிய) செல்வம் இல்லையாயின், (நியாயமான விலை மதிப்பிடப்பட்டு மீதிப்பங்குகளின் விலையைத் தருவதற்காக) அந்த அடிமை உழைத்துச் சம்பாதிக்க அனுமதிக்கப்பட வேண்டும். அவனுக்கு அதிகச் சிரமத்தைத் தரலாகாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3008 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வரும் தகவல் கூடுதலாக இடம்பெற்றுள்ளது:
அவரிடம் (போதிய) செல்வம் இல்லையென்றால், அந்த அடிமையின் விலை, (அவனை) ஒத்த (அடிமையின்) விலையைக் கொண்டு மதிப்பிடப்படும். பின்னர், விடுதலை அளிக்காதவரின் பங்கிற்காக அவன் உழைக்க அனுமதிக்கப்பட வேண்டும்; அவனுக்கு அதிகச் சிரமத்தைத் தரலாகாது.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "அவனை ஒத்த (அடிமையின்) விலையைக் கொண்டு மதிப்பிடப்படும்" என்று கூறப்பட்டுள்ளது. ("அந்த அடிமையின் விலை' எனும் சொற்றொடர் காணப்படவில்லை.)

**பாடம் : 3 விடுதலை செய்தவருக்கே வாரிசுரிமை உரியது.**

3009 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள், ஓர் அடிமைப் பெண்ணை விலைக்கு வாங்கி விடுதலை செய்ய விரும்பினார்கள். அப்பெண்ணின் உரிமையாளர்கள் "இவளுக்கு வாரிசாகும் உரிமை எங்களுக்கே இருக்கவேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் உங்களுக்கு இவளை விற்கிறோம்" என்று கூறினர். இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்தபோது, "அ(வர்களின் நிபந்தனையான)து உனக்குத் தடையாக இராது. ஏனெனில், விடுதலை செய்தவருக்கே (அடிமையின் சொத்துக்கான) வாரிசுரிமை உரியதாகும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

3010 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
பரீரா(எனும் அடிமைப் பெண்), தமது விடுதலைப் பத்திரத்தின் தொகையைச் செலுத்துவதற்கு உதவிகோரி என்னிடம் வந்தார். (அப்போது) அவர் தமது விடுதலைத் தொகையில் எதையும் செலுத்தியிருக்கவில்லை. நான் அவரிடம், "நீ உன் உரிமையாளர்களிடம் திரும்பிச்செல். (நான் உன் சார்பாக) உன் விடுதலைப் பத்திரத்தின் தொகையைச் செலுத்திவிடுகிறேன். (ஆனால்,) உனது வாரிசுரிமை எனக்கே உரியதாகும். இதற்கு அவர்கள் சம்மதித்தால், நானே அதைச் செலுத்திவிடுகிறேன்" என்று கூறினேன்.
அவ்வாறே, பரீரா தம் உரிமையாளர்களிடம் கேட்க, அவர்கள் (சம்மதிக்க) மறுத்து, "உன்(னை வாங்கி விடுதலை செய்வதன்) வாயிலாக, அவர் இறைவனிடம் நன்மையைப் பெற விரும்புவாராயின் அவ்வாறே செய்யட்டும்! ஆனால்,உனது வாரிசுரிமை எங்களுக்கே உரியதாக இருக்கும்" என்று கூறிவிட்டார்கள்.
இதை நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ அவரை விலைக்கு வாங்கி விடுதலை செய்துவிடு. ஏனெனில், விடுதலை செய்பவருக்கே வாரி சுரிமை உரியதாகும்"என்று கூறினார்கள்.
பிறகு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்று (உரையாற்றுகையில்), "சிலருக்கு என்ன ஆயிற்று?அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத நிபந்தனையை விதிக்கிறார்களே! அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத நிபந்தனையை ஒருவர் விதித்தால் அது செல்லத் தக்கதன்று; அவர் நூறு முறை நிபந்தனை விதித்தாலும் சரியே! அல்லாஹ்வின் நிபந்தனையே (ஏற்று) பின்பற்றத்தகுந்ததும் உறுதி வாய்ந்ததும் ஆகும்" என்று கூறினார்கள்.

3011 மேற்கண்ட ஹதீஸ் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "பரீரா என்னிடம் வந்து, "ஆயிஷா (ரலி) அவர்களே! நான் என் உரிமையாளர்களிடம், ஆண்டுக்கு ஓர் "ஊக்கியா' வீதம் ஒன்பது ஊக்கியாக்கள் செலுத்த

வேண்டும் எனும் நிபந்தனையை ஒப்புக்கொண்டு விடுதலைப் பத்திரம் எழுதி வாங்கியுள்ளேன்' என்று கூறினார்" என ஹதீஸ் ஆரம்பிக்கிறது.
மேலும் அதில், "அ(ந்நிபந்தனையான)து அவரிடமிருந்து (வாரிசுரிமை பெறுவதில்) உனக்குத் தடையாக இராது. நீ அவரை விலைக்கு வாங்கி விடுதலை செய்துவிடு" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்பதும் கூடுதலாக இடம் பெற்றுள்ளது.
இந்த அறிவிப்பில், "பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து நின்று அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து விட்டு "இறைவாழ்த்துக்குப் பின்' (அம்மா பஅத்)" என்று கூறி (மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி சொன்)னார்கள் என்றும் காணப் படுகிறது.

3012 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
பரீரா (ரலி) என்னிடம் வந்து, நான் என் உரிமையாளர்களிடம் ஆண்டுக்கு ஓர் "ஊக்கியா' வீதம் ஒன்பது ஆண்டுகளில் ஒன்பது "ஊக்கியா'க்களை (விடுதலைத் தொகையாக)ச் செலுத்திவிட வேண்டும் எனும் நிபந்தனையை ஒப்புக்கொண்டு விடுதலைப் பத்திரம் எழுதி வாங்கியுள்ளேன்; ஆகவே, நீங்கள் எனக்கு உதவுங்கள்" என்று கேட்டார்.
நான், "உன் உரிமையாளர்களுக்கு அந்த "ஊக்கியா'க்களை நான் ஒரே தடவையில் கொடுத்து உன்னை விடுதலை செய்கிறேன். (ஆனால்,) உன் வாரிசுரிமை எனக்கே உரியதாக இருக்கும். இதற்கு அவர்கள் இசைந்தால், நான் அவ்வாறே செய்கிறேன்" என்று சொன்னேன்.
பரீரா தன் உரிமையாளர்களிடம் அதைக் கூறியபோது, (பரீராவின்) வாரிசுரிமை தங்களுக்குக் கிடைத்தால் தவிர அதற்கு ஒப்புக்கொள்ள முடியாது என அவர்கள் மறுத்துவிட்டனர். பரீரா என்னிடம் வந்து அதைத் தெரிவித்தார். நான் "அல்லாஹ்வின் மீதாணையாக! அவ்வாறாயின் முடியாது" என்று கூறி, பரீராவைத் துரத்திவிட்டேன்.
இதைச் செவியுற்ற அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (அதைப் பற்றி) என்னிடம் வினவ, நான் அவர்களுக்கு விவரத்தைச் சொன்னேன். அப்போது, "அவளை விலைக்கு வாங்கி விடுதலை செய்துவிடு. அவர்களுக்கே வாரிசுரிமை உரியது என அறிவித்துவிடு. (பின்னர் பார்த்துக்கொள்ளலாம்.) ஏனெனில், (சட்டப்படி) விடுதலை செய்தவருக்கே வாரிசுரிமை உரியதாகும்" என்று கூறினார்கள்.
பிறகு (அன்று) மாலை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடையே) உரையாற்றினார்கள். அப்போது அல்லாஹ்வை அவனது தகுதிக்கேற்ப போற்றிப் புகழ்ந்து விட்டு, "இறைவாழ்த்துக்குப் பின்! மக்களில் சிலருக்கு என்ன நேர்ந்தது? அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத நிபந்தனைகளை அவர்கள் விதிக்கிறார்களே! அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத எந்த ஒரு நிபந்தனையும் செல்லாததாகும்; அது நூறு (முறை மொழியப்பட்ட) நிபந்தனையாயினும் சரியே! அல்லாஹ்வின் சட்டமே (ஏற்று) பின்பற்றத் தகுந்ததாகும். அல்லாஹ்வின் நிபந்தனையே உறுதி வாய்ந்ததாகும். உங்களில் சில மனிதர்களுக்கு என்ன நேர்ந்தது? அவர்களில் ஒருவர், (என் அடிமையாகிய) இன்ன மனிதனை விடுதலை செய்துவிடு! ஆனால், (அவனுக்கு) வாரிசாகும் உரிமை எனக்கே உரியது" என்று கூறுகிறாரே! (உண்மையில்) விடுதலை செய்தவருக்கே வாரிசுரிமை உரியதாகும்" என்று கூறினார்கள்.

3013 மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் ஜரீர் பின் அப்தில் ஹமீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பின்வருமாறு இடம் பெற்றுள்ளது: பரீராவின் கணவரும் அடிமையாக இருந்தார். (விடுதலையடைந்த) பரீராவுக்கு (அவர் தம் கணவருடன் சேர்ந்து வாழ, அல்லது பிரிந்துவிட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விருப்பஉரிமை அளித்தார்கள். அப்போது பரீரா தம்மையே (அதாவது தனித்து வாழ்வதையே) தேர்ந்தெடுத்தார். பரீராவின் கணவர் (அடிமையாக இல்லாமல்) சுதந்திரமானவராக இருந்திருப்பின், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பரீராவுக்கு விருப்ப உரிமை வழங்கியிருக்கமாட்டார்கள்.
இந்த அறிவிப்புகளில், "இறைவாழ்த்துக்குப் பின்' ("அம்மா பஅத்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்) எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

3014 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அடிமையாயிருந்து விடுதலை பெற்ற) பரீராவால் மூன்று தீர்வுகள் (நமக்கு) கிட்டின:
1. அவருடைய உரிமையாளர்கள் அவருடைய வாரிசுரிமை தமக்கே உரியது என நிபந்தனையிட்டு, அவரை விற்பதற்கு முன் வந்தனர். அதை நான் நபி (ஸல்) அவர்களிடம் கூறியபோது "நீ அவரை விலைக்கு வாங்கி விடுதலை செய்துவிடு. ஏனெனில், விடுதலை செய்தவருக்கே (அவ்வடிமையின்) வாரிசுரிமை உரியதாகும்" என்று கூறினார்கள்.
2. அவர் விடுதலை செய்யப்பட்டபோது, (தம் அடிமைக் கணவருடனான உறவைத் தொடரவும் முறித்துக்கொள்ளவும்) அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விருப்பஉரிமை வழங்கினார்கள். அப்போது அவர் தம்மையே (அதாவது தனித்து வாழ்வதையே) தேர்ந்தெடுத்துக்கொண்டார்.
3. மக்கள் அவருக்கு தர்மப்பொருட்களை வழங்குவார்கள்; (அவற்றை) அவர் எங்களுக்கு அன்பளிப்பாக வழங்குவார். அது குறித்து நான் நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தபோது, "இது அவருக்குத் தர்மமாகும்; உங்களுக்கு அது அன்பளிப்பாகும். எனவே, அதை நீங்கள் உண்ணலாம்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3015 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அன்சாரிகளில் சிலரிடமிருந்து (அவர்களின் அடிமையாக இருந்த) பரீராவை விலைக்குக் கேட்டேன். அப்போது அவர்கள் அவருக்கு வாரிசாகும் உரிமை தங்களுக்கே இருக்க வேண்டும் என நிபந்தனை விதித்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(விடுதலை எனும்) உபகாரம் செய்தவருக்கே வாரிசாகும் உரிமை உண்டு"என்று கூறினார்கள்.
(விடுதலையடைந்த) பரீராவுக்கு (அவர் தம் கணவருடன் சேர்ந்து வாழ, அல்லது பிரிந்துவிட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விருப்ப உரிமை அளித்தார்கள். அவருடைய கணவரும் அடிமையாகவே இருந்தார்.
பரீரா (ஒரு முறை) எனக்கு அன்பளிப்பாக இறைச்சியை வழங்கினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்த இறைச்சியிலிருந்து நமக்கு (உணவு) தயாரித்திருந்தால் நன்றாயிருக்குமே!" என்று சொன்னார்கள். நான், "இது பரீராவுக்குத்

தர்மமாக வழங்கப்பட்டதாயிற்றே?" என்றேன். அதற்கு "இது அவருக்குத் தர்மமாகும்; நமக்கு (பரீராவின்) அன்பளிப்பாகும்" என்றார்கள்.

3016 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் பரீராவை விலைக்கு வாங்கி விடுதலை செய்ய விரும்பினேன். (அவருடைய உரிமையாளர்கள்) அவருக்கு வாரிசாகும் உரிமை தங்களுக்கே உரியது என நிபந்தனையிட்டார்கள். அது குறித்து நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ அவரை விலைக்கு வாங்கி விடுதலை செய்துவிடு. ஏனெனில், (ஓர் அடிமையை) விடுதலை செய்தவருக்கே (அவ்வடிமைக்கு) வாரிசாகும் உரிமை உரியதாகும்" என்று கூறினார்கள்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இறைச்சி அன்பளிப்பாக வழங்கப் பட்டது. அப்போது மக்கள், "இது பரீராவுக்குத் தர்மமாகக் கிடைத்தது" என்று கூறினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது அவருக்குத் தர்மமாகும்; நமக்கு (பரீராவின்) அன்பளிப்பாகும்" என்று சொன்னார்கள்.
மேலும், பரீரா (தம் கணவருடன் சேர்ந்து வாழ, அல்லது பிரிந்துவிட) விருப்பஉரிமை அளிக்கப்பட்டார்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அப்துர் ரஹ்மான் பின் அல்காசிம் (ரஹ்) அவர்கள் (இந்த ஹதீஸை எனக்கு அறிவிக்கையில்) "பரீராவின் கணவர் சுதந்திரமான மனிதராக இருந்தார்" என்றார்கள். பின்னர் அவர்களிடம் பரீராவின் கணவரைப் பற்றிக்கேட்டபோது "எனக்குத் தெரியாது" என்று சொல்லி விட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3017 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
பரீரா (ரலி) அவர்களின் கணவர் அடிமையாக இருந்தார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3018 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அடிமையாயிருந்து விடுதலை பெற்ற) பரீராவால் மூன்று முன்மாதிரிகள் (நமக்கு) கிட்டின:
1. அவர் விடுதலை பெற்றபோது தம் (அடிமைக்) கணவர் விஷயத்தில் (அவருடன் சேர்ந்து வாழ, அல்லது பிரிந்துவிட) விருப்பஉரிமை அளிக்கப்பட்டார்.
2. எனக்கு அன்பளிப்பாக இறைச்சி வழங்கப்பட்டது. நெருப்பின் மேல் சமையல் பாத்திரம் இருக்கும் நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்து உணவு கேட்டார்கள். அப்போது அவர்களுக்கு முன்னால் ரொட்டியும் வீட்டிலிருந்த குழம்பும் கொண்டுவரப்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் நெருப்பின் மீது இறைச்சியுள்ள பாத்திரத்தைக் கண்டேனே?" என்று கேட்டார்கள். அ(தற்கு அங்கிருந்த)வர்கள், "ஆம்;அல்லாஹ்வின் தூதரே! (உண்மைதான்); (ஆயினும்,) அது பரீராவுக்குத் தர்மமாக வழங்கப்பட்ட இறைச்சி. தர்மப் பொருளைத் தங்களுக்கு உண்ணத்

தருவதை நாங்கள் வெறுத்தோம்" என்று கூறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது பரீராவிற்குத்தான் தர்மம்; நமக்கு அது (பரீராவின்) அன்பளிப்பு" என்று கூறினார்கள். மேலும்,பரீரா (ரலி) அவர்கள் தொடர்பான விஷயத்தில்தான் "விடுதலை செய்தவருக்கே (அடிமையின் சொத்தில்) வாரிசுரிமை உரியதாகும்" என்றும் கூறினார்கள்.

3019 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள், ஓர் அடிமைப் பெண்ணை விலைக்கு வாங்கி விடுதலை செய்ய விரும்பினார்கள். அப்பெண்ணின் உரிமையாளர்கள், அவளுக்கு வாரிசாகும் உரிமை தங்களுக்கு இருந்தால் தவிர (விற்க மாட்டோம்) என மறுத்துவிட்டனர். இதைப் பற்றி ஆயிஷா அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சொன்னபோது, "அ(வர்களின் நிபந்தனையான)து உனக்குத் தடையாக இராது. ஏனெனில், விடுதலை செய்தவருக்கே வாரிசுரிமை உரியதாகும்" என்று சொன்னார்கள்.

**பாடம் : 4 (முன்னாள் அடிமைக்கு) வாரிசாகும் உரிமையை விற்பதற்கும் அன்பளிப்பாக வழங்குவதற்கும் வந்துள்ள தடை.**

3020 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (முன்னாள் அடிமைக்கு) வாரிசாகும் உரிமையை விற்பதற்கும் அதை அன்பளிப்பாக வழங்குவதற்கும் தடை விதித்தார்கள்.
முஸ்லிம் (பின் அல்ஹஜ்ஜாஜ்) ஆகிய நான் கூறுகிறேன்:
இந்த ஹதீஸை மக்கள் அனைவரும் அப்துல்லாஹ் பின் தீனார் (ரஹ்) அவர்களிடமிருந்தே அறிவிக்கின்றனர்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், அப்துல் வஹ்ஹாப் பின் அப்தில் மஜீத் அஸ்ஸகஃபீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் விற்பதற்குத் தடை விதித்தார்கள் என்பது மட்டுமே இடம்பெற்றுள்ளது. "அன்பளிப்பாக வழங்குவதற்கும் தடை விதித்தார்கள்' எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

**பாடம் : 5 விடுதலை செய்த உரிமையாளர்கள் அல்லாத மற்றவர்களை ஓர் அடிமை தன் உரிமையாளர்கள் எனக் கூறலாகாது.**

3021 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், ஒவ்வொரு குலத்தாரின் மீதும், (அவர்களில் ஒருவர் தவறுதலாகச் செய்துவிட்ட கொலைக் குற்றத்திற்கு) உரிய இழப்பீட்டை வழங்க வேண்டும் என விதியாக்கினார்கள். பிறகு "எந்த ஒரு முஸ்லிமும் மற்றொரு முஸ்லிமான மனிதரால் விடுதலை செய்யப்பட்ட அடிமைக்கு, அவரது அனுமதியின்றி வாரிசாகிக்கொள்வது சட்டப்படி கூடாது" என்றும் விதியாக்கினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அவ்வாறு செய்பவரை நபி (ஸல்) அவர்கள் (பல்வேறு குலங்களுக்கு எழுதிய) தமது கடிதத்தில் சபித்திருந்தார்கள் என்றும் எனக்குத் தெரிவிக்கப்பட்டது.

3022 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் தம்மை விடுதலை செய்த உரிமையாளர்களின் அனுமதியின்றி, தமக்கு வாரிசாகும் உரிமையை வேறொரு கூட்டத்தாருக்கு வழங்குகிறாரோ அந்த அடிமைமீது அல்லாஹ்வின் சாபமும் வானவர்களின் சாபமும் உண்டாகும். மேலும், அவர் புரிந்த கடமையான மற்றும் கூடுதலான வழிபாடுகள் எதுவும் அவரிடமிருந்து ஏற்கப்படாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3023 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் தம்மை விடுதலை செய்த உரிமையாளர்களின் அனுமதியின்றி, தமக்கு வாரிசாகும் உரிமையை வேறொரு கூட்டத்தாருக்கு வழங்குகிறாரோ அந்த அடிமைமீது அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் உண்டாகும். அவர் புரிந்த கடமையான மற்றும் கூடுதலான வழிபாடுகள் எதுவும் மறுமை நாளில் அவரிடமிருந்து ஏற்கப்படாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "யார் தம்மை விடுதலை செய்த உரிமையாளர்களின் அனுமதியின்றி, அவர்கள் அல்லாதவர்களை உரிமையாளர்களாக ஆக்கிக்கொள்கிறாரோ" என இடம்பெற்றுள்ளது.

3024 யஸீத் பின் ஷரீக் பின் தாரிக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் எங்களுக்கு உரையாற்றினார்கள். அப்போது அவர்கள் கூறினார்கள்:
நாம் ஓதிவருகின்ற இறைவேதத்தையும் (நபியவர்களிடமிருந்து கிடைக்கப்பெற்ற) இந்த ஏட்டையும் தவிர (எழுத்து வடிவிலான மார்க்கச் சட்டம்) வேறெதுவும் (நபியின் குடும்பத்தாரான) எங்களிடம் இருப்பதாக யார் கூறுகிறாரோ அவர் பொய்யுரைத்து விட்டார். (அப்போது அலீ (ரலி) அவர்களது வாள் உறை வைக்கும் பை ஒன்றில் ஓர் ஏடு மாட்டப்பட்டிருந்தது.) அந்த ஏட்டில் (உயிரீட்டிற்காகவும் ஸகாத்தாகவும் வழங்கப்படும்) ஒட்டகங்களின் வயது குறித்தும், காயங்களுக்கான தண்டனை குறித்தும் எழுதப்பட்டிருந்தது.
மேலும், அதில் நபி (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள் என (எழுதப்பட்டு) இருந்தது: மதீனா நகரம் "அய்ர்'எனும் மலையிலிருந்து "ஸவ்ர்' மலைவரை புனிதமானதாகும். அதில் யார் (மார்க்கத்தின் பெயரால்) புதிதாக ஒன்றை உருவாக்குகிறாரோ, அல்லது (அவ்வாறு) புதிதாக ஒன்றை உருவாக்குபவருக்கு அடைக்கலம் அளிக்கிறாரோ அவர்மீது அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் உண்டாகும். மேலும், அவர் புரிந்த கடமையான வழிபாட்டையோ கூடுதலான வழிபாட்டையோ அவரிடமிருந்து மறுமை நாளில் அல்லாஹ் ஏற்கமாட்டான்.
முஸ்லிம்களில் எவர் அடைக்கலம் கொடுத்தாலும் அது ஒன்றேயாகும். (மற்ற முஸ்லிம்கள் தரும் அடைக்கலத்திற்குச் சமமானதாகும்.) அவர்களில் கடை நிலையில் உள்ளவர்கள்கூட அடைக்கலம் தர முன்வரலாம். யார் தம் தந்தை அல்லாத ஒருவரை தந்தை என்று வாதிடுகிறாரோ, அல்லது விடுதலை செய்த உரிமையாளர்கள் அல்லாத வேறு யாரையேனும் வாரிசாக ஆக்கிக்கொள்கிறரோ அவர்மீது அல்லாஹ்வின் சாபமும்

வானவர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் உண்டாகும். மேலும், அவர் புரிந்த கடமையான வழிபாட்டையோ கூடுதலான வழிபாட்டையோ அவரிடமிருந்து மறுமை நாளில் அல்லாஹ் ஏற்கமாட்டான்.

## பாடம் : 6 அடிமையை விடுதலை செய்வதன் சிறப்பு.

3025 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையுள்ள (முஃமினான) ஓர் அடிமையை யார் விடுதலை செய்கிறாரோ (விடுதலை செய்யப்பட்ட) அந்த அடிமையின் ஒவ்வோர் உறுப்புக்கும் பகரமாக (விடுதலை செய்தவரின்) ஓர் உறுப்பை நரகத்திலிருந்து அல்லாஹ் விடுதலை செய்வான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3026 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் அடிமையை யார் விடுதலை செய்கிறாரோ (விடுதலை செய்யப்பட்ட) அந்த அடிமையின் ஒவ்வோர் உறுப்புக்கும் பகரமாக (விடுதலை செய்தவரின்) உறுப்புகளில் ஒன்றை நரகத்திலிருந்து அல்லாஹ் விடுதலை செய்வான்;அவருடைய மர்ம உறுப்புக்குப் பதிலாக இவருடைய மர்ம உறுப்பையும் (விடுதலை செய்வான்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3027 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையுள்ள (முஃமினான) ஓர் அடிமையை யார் விடுதலை செய்கிறாரோ (விடுதலை செய்யப்பட்ட) அந்த அடிமையின் ஒவ்வோர் உறுப்புக்கும் பகரமாக (விடுதலை செய்தவரின்) உறுப்புக்களில் ஒன்றை நரகத்திலிருந்து அல்லாஹ் விடுதலை செய்வான்; அவருடைய மர்ம உறுப்புக்குப் பகரமாக இவருடைய மர்ம உறுப்பையும் விடுதலை செய்வான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3028 அலீ பின் ஹுசைன் (ரஹ்) அவர்களின் தோழரான சயீத் பின் அப்தில்லாஹ் இப்னு மர்ஜானா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"ஒரு முஸ்லிமான மனிதர் மற்றொரு முஸ்லிமான (அடிமை) மனிதரை விடுதலை செய்தால், (விடுதலை செய்யப்பட்ட) அந்த முஸ்லிமின் ஒவ்வோர் உறுப்புக்கும் பகரமாக (விடுதலை செய்தவரின்) ஓர் உறுப்பை அல்லாஹ் நரகத்திலிருந்து காப்பாற்றுவான்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்ததை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸை அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து செவியுற்ற நான், அதை அலீ பின் ஹுசைன் (ரஹ்) அவர்களிடம் தெரிவித்தேன். இதைக் கேட்ட அலீ (ரஹ்) அவர்கள், உடனே தம் அடிமை ஒருவரை விடுதலை செய்துவிட்டார்கள். அந்த அடிமைக்கு (விலையாக) அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் பத்தாயிரம் திர்ஹம்களை, அல்லது ஆயிரம் தீனாரை அலீ பின் ஹுசைன் (ரஹ்) அவர்களிடம்

கொடுத்திருந்தார்கள். (ஆயினும், அந்த விலைக்குப் பொறுப்பேற்றுக்கொண்டு அந்த அடிமையை விடுதலை செய்துவிட்டார்கள்.)

பாடம் : 7 (அடிமையாக இருக்கும்) தந்தையை விடுதலை செய்வதன் சிறப்பு.

3029 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தன்) தந்தை அடிமையாக இருப்பதைக் கண்ட தனயன், அவரை விலைக்கு வாங்கி விடுதலை செய்யாத வரை தந்தைக்குச் செய்ய வேண்டிய கடமையை நிறைவேற்றியவனாக ஆகமாட்டான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீ ஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "தன் தந்தைக்குச் செய்ய வேண்டிய கடமையை' என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் "தன் தந்தைக்குச் செய்ய வேண்டிய கடமையை' என்றே இடம்பெற்றுள்ளது.

# அத்தியாயம் : 21 - வியாபாரம்

**பாடம் : 1 "முலாமசா' மற்றும் "முனாபதா' ஆகிய வியாபாரங்கள் செல்லாது.**

3030 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொடுமுறை வியாபாரம் ("முலாமசா'), எறிமுறை வியாபாரம் ("முனாபதா')ஆகியவற்றைத் தடை செய்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3031 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"முலாமசா' மற்றும் "முனாபதா' ஆகிய வியாபார முறைகள் இரண்டுக்கும் தடைவிதிக்கப் பட்டது."முலாமசா' என்பது, (விற்பவர் வாங்குபவர் ஆகிய இருவரில்) ஒவ்வொருவரும் மற்றவரின் (விற்பனைக்கான) துணியை யோசிக்காமல் தொட்டு(விட்டாலே வியாபார ஒப்பந்தம் முடிந்துவிட்டதாக ஆகி)விடுவதாகும். "முனாபதா' என்பது, இருவரில் ஒவ்வொருவரும் மற்றவரை நோக்கித் தமது துணியை எறிய, அவர்களில் எவரும் மற்றவரின் துணியை(ப் பிரித்து)ப் பார்க்காமலேயே (வியாபாரத்தை முடித்து) விடுவதாகும்.

3032 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வியாபார முறைகள் இரண்டையும் ஆடை அணியும் முறைகள் இரண்டையும் எங்களுக்குத் தடை செய்தார்கள்.
வியாபாரத்தில் தொடுமுறை வியாபாரம் (முலாமசா), எறிமுறை வியாபாரம் (முனாபதா) ஆகிய இரண்டையும் தடை செய்தார்கள். தொடுமுறை வியாபாரம் ("முலாமசா') என்பது, இரவிலோ பகலிலோ (துணி வாங்கும்) ஒருவர் (விற்கும்) மற்றொருவரின் துணியைத் தமது கரத்தால் தொடுவதாகும். விரித்துப் பார்க்காமலேயே தொட்டதோடு வியாபாரத்தை முடித்துக் கொள்வதாகும். எறிமுறை வியாபாரம் (முனாபதா) என்பது, ஒருவர் மற்றொருவரை நோக்கித் தமது துணியை எறிய, மற்றவர் இவரை நோக்கித் தமது துணியை எறிய (துணியைப் பிரித்துப்) பார்க்காமலும் பரஸ்பர திருப்தி இல்லாமலும் இருவருக்குமிடையிலான வியாபார (ஒப்பந்த)மாக அதுவே ஆகிவிடுவதாகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 2 கல்லெறி வியாபாரம் ("பைஉல் ஹஸாத்') மற்றும் மோசடி வியாபாரம் ("பைஉல் ஃகரர்') ஆகியவை செல்லாது.**

3033 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கல்லெறி வியாபாரத்திற்கும் மோசடி வியாபாரத்திற்கும் தடைவிதித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 3 சினை ஒட்டகத்தின் வயிற்றிலுள்ள (குட்டியை, அல்லது சினை ஒட்டகத்தின் வயிற்றிலுள்ள) குட்டி ஈனும் குட்டியை விற்பது தடை செய்யப்பட்டுள்ளது.**

3034 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சினை ஒட்டகத்தின் வயிற்றிலுள்ள குட்டி ஈனும் குட்டியை விற்பதற்குத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3035 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அறியாமைக் கால மக்கள் ஹபலுல் ஹபலாவுக்காக – சினை ஒட்டகம் குட்டி ஈன்று, அந்தக் குட்டி சினையாகிப் பெறவிருக்கும் குட்டிக்காக – ஒட்டகத்தின் இறைச்சிகளை விற்கவும் வாங்கவும் செய்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இத்தகைய வியாபாரம் செய்யக் கூடாது என மக்களுக்குத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 ஒருவர் தம் சகோதரர் வியாபாரம் செய்துகொண்டிருக்கும்போது இடையில் குறுக்கிட்டு வியாபாரம் செய்வதும், அவர் விலை பேசும் அதே பொருளைத் தாமும் விலை பேசுவதும், வாங்கும் நோக்கமின்றி விலையை ஏற்றிவிடுவதும் தடை செய்யப்பட்டுள்ளன; கால்நடைகளின் (பாலைக் கறக்காமல் அவற்றின்) மடியைக் கனக்கச் செய்வதும் தடை செய்யப்பட்டுள்ளது.**

3036 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது மற்றவர் குறுக்கிட்டு வியாபாரம் செய்ய வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3037 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் தம் (முஸ்லிம்) சகோதரர் வியாபாரம் செய்துகொண்டிருக்கும்போது இடையில் குறுக்கிட்டு வியாபாரம் செய்ய வேண்டாம்; தம் (முஸ்லிம்) சகோதரர் பெண் பேசிக் கொண்டிருக்கும்போது இடையில் குறுக்கிட்டுப் பெண் பேசவேண்டாம். அந்தச் சகோதரர் இவருக்கு அனுமதியளித்தால் தவிர!
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3038 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிம் தம் (முஸ்லிம்) சகோதரர் விலை பேசும்போது, அதே பொருளைத் தாமும் விலை பேச வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3039 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் தம் (முஸ்லிம்) சகோதரர் விலைபேசும் அதே பொருளைத் தாமும் விலை பேசுவதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3040 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(சரக்குகளை ஏற்றிக்கொண்டு) வாகனத்தில் வருபவர்களை எதிர்கொண்டு (வழியிலேயே சந்தித்து சரக்குகளை) வாங்கலாகாது. ஒருவர் வியாபாரம் செய்துகொண்டிருக்கும்போது மற்றவர் குறுக்கிட்டு வியாபாரம் செய்ய வேண்டாம். வாங்கும் நோக்கமின்றி விலையை ஏற்றிவிட வேண்டாம். கிராமத்திலிருந்து சரக்குகளைக் கொண்டுவருபவருக்காக உள்ளூர்வாசி விற்றுக் கொடுக்க வேண்டாம். ஒட்டகங்கள் மற்றும் ஆடுகளின் (பாலைக் கறக்காமல் அவற்றின்) மடியை கனக்கச் செய்ய வேண்டாம். அவ்வாறு ஒருவர் அவற்றை வாங்கிப் பால் கறந்து திருப்தியடைந்தால் தம்மிடமே வைத்துக் கொள்ளலாம். திருப்தியடையாவிட்டால் அவற்றை ஒரு "ஸாஉ' பேரீச்சம் பழத்துடன் திருப்பிக் கொடுத்து விடலாம். இவ்விரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க அவருக்கு உரிமை உண்டு.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3041 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"(சரக்குகளை ஏற்றிக்கொண்டு) வாகனத்தில் வருபவர்களை எதிர்கொண்டு (வழியிலேயே சந்தித்து சரக்குகளை) வாங்குவதற்கும், கிராமத்திலிருந்து (சரக்குகளைக் கொண்டு) வருபவர்களுக்காக உள்ளூர்வாசிகள் விற்றுக் கொடுப்பதற்கும், ஒரு பெண் தன் சகக்கிழத்தியை மணவிலக்குச் செய்யுமாறு (தன் கணவரிடம்) கோருவதற்கும்,வாங்கும் நோக்கமின்றி விலையை ஏற்றிவிடுவதற்கும், கால்நடைகளின் (பாலைக் கறக்காமல் கூடுதல் விலைக்கு விற்பதற்காக) மடி கனக்கச் செய்வதற்கும், தம் (முஸ்லிம்) சகோதரர் விலை பேசும் அதே பொருளை மற்றவர் விலை பேசுவதற்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஃகுன்தர் மற்றும் வஹ்ப் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "(மேற்கண்டவற்றுக்கு) தடை விதிக்கப்பட்டது'என இடம்பெற்றுள்ளது. அப்துஸ் ஸமத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்' என்று காணப்படுகிறது.

3042 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், வாங்கும் நோக்கமின்றி (ஒரு பொருளை அதிக விலைக்குக் கேட்டு) விலையை ஏற்றிவிடுவதற்குத் தடை விதித்தார்கள்.

**பாடம் : 5 வெளியூரிலிருந்து சரக்குகளைக் கொண்டுவரும் வியாபாரியை எதிர்கொண்டு (வழியிலேயே சந்தித்து அப்பொருட்களை) வாங்குவது தடை செய்யப்பட்டுள்ளது.**

3043 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
வியாபாரப் பொருட்கள் சந்தைக்கு வந்து சேருவதற்கு முன் வழியிலேயே வியாபாரிகளைச் சந்தித்துச் சரக்குகளை வாங்குவதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் இப்னு நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டுமே "சந்தைக்கு வந்து சேர்வதற்கு முன்' எனும் குறிப்பு காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3044 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (சந்தைக்கு வரும்) வியாபாரிகளை எதிர்கொண்டு (வழியிலேயே சந்தித்து) சரக்குகளை வாங்குவதற்குத் தடை விதித்தார்கள்.

3045 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
வெளியூரிலிருந்து சரக்குகளைக் கொண்டுவரும் வியாபாரிகளைச் சந்தித்து சரக்குகள் வாங்கப்படுவதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.

3046 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெளியூரிலிருந்து சரக்குகளைக் கொண்டு வரும் வியாபாரிகளைச் சந்தித்து, சரக்குகளை வாங்காதீர்கள். அவ்வாறு எவரேனும் அவர்களைச் சந்தித்து, சரக்குகளை விலைக்கு வாங்கிய பின் அந்தச் சரக்குகளின் உரிமையாளர் சந்தைக்கு வந்தால், அவருக்கு (அந்த பேரத்திலிருந்து விலகிக்கொள்ள) உரிமை உண்டு.

**பாடம் : 6 கிராமவாசிக்காக நகரவாசி விற்றுக் கொடுப்பது தடை செய்யப்பட்டுள்ளது.**

3047 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கிராமவாசிக்காக நகரவாசி விற்றுக் கொடுக்கவேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "கிராமவாசிக்காக நகரவாசி விற்றுக்கொடுப்பதற்கு நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்" என இடம்பெற்றுள்ளது.

3048 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(சந்தைக்கு வரும்) வணிகர்களை இடை மறித்து வாங்குவதற்கும், கிராமவாசிக்காக நகரவாசி விற்றுக்கொடுப்பதற்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "கிராமவாசிக்காக நகரவாசி விற்றுக்கொடுக்கக் கூடாது என்பதன் பொருள் என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இடைத் தரகராக ஆகக் கூடாது (என்பதுதான் அதன் பொருள்)" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3049 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கிராமவாசிக்காக நகரவாசி விற்றுக்கொடுக்க வேண்டாம். மக்களில் சிலருக்குச் சிலர் மூலம் அல்லாஹ் வாழ்வாதாரம் அளிக்கும் நிலையில் மக்களை விட்டுவிடுங்கள்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் யஹ்யா பின் யஹ்யா அத்தமீமீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மக்களில் சிலருக்குச் சிலர் மூலம் வாழ்வாதாரம் வழங்கப்படும் நிலையில்" என இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3050 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமவாசிக்காக நகரவாசி விற்றுக்கொடுக்கக் கூடாதென நாங்கள் தடைவிதிக்கப் பெற்றிருந்தோம்; இவருக்கு அவர் சகோதரராய் இருந்தாலும் சரி; தந்தையாக இருந்தாலும் சரி.

3051 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமவாசிக்காக நகரவாசி விற்றுக்கொடுக்கக் கூடாதென நாங்கள் தடை விதிக்கப் பெற்றோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 7 மடி கனக்கச் செய்யப்பட்ட (ஒட்டகம், ஆடு ஆகிய)வற்றை விற்பனை செய்வது பற்றிய சட்டம்.

3052 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மடி கனக்கச் செய்யப்பட்ட ஆட்டை விலைக்கு வாங்கியவர், அதை ஓட்டிச் சென்று பால் கற(ந்து பார்)க்கட்டும்! அதன் பால் (அளவு) திருப்தியளித்தால், அதை அவர் தம்மிடமே வைத்துக்கொள்ளட்டும்! திருப்தியளிக்காவிட்டால், ஒரு "ஸாஉ' பேரீச்சம் பழத்துடன் அதை (வாங்கியவரிடமே) திருப்பிக் கொடுத்துவிடட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3053 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மடி கனக்கச் செய்யப்பட்ட ஆட்டை வாங்கியவர் மூன்று நாட்கள் விருப்ப உரிமை பெறுவார். அவர் நாடினால், அதைத் தம்மிடமே வைத்துக்கொள்ளலாம்; நாடினால் அதைத் திருப்பிக் கொடுத்து விடலாம். ஆனால், ஒரு "ஸாஉ' பேரீச்சம் பழத்துடன் அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3054 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மடி கனக்கச் செய்யப்பட்ட ஆட்டை வாங்கியவருக்கு மூன்று நாட்கள் விருப்ப உரிமை உண்டு. அதைத் திருப்பிக் கொடுப்பதானால், ஒரு "ஸாஉ' உணவுப் பொருளுடன் அதைத் திருப்பிக் கொடுக்கட்டும். (உணவு என்பது) கோதுமையாகத்தான் இருக்க வேண்டும் என்பதல்ல. (பேரீச்சம் பழமாகக் கூட இருக்கலாம்.)
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3055 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மடி கனக்கச் செய்யப்பட்ட ஆட்டை வாங்கியவர் (பின்வரும்) இரண்டில் சிறந்ததைத் தேர்ந்தெடுக்க உரிமை பெறுவார். நாடினால் அதைத் தம்மிடம் அவர் வைத்துக் கொள்ளலாம். நாடினால் அந்த ஆட்டை ஒரு "ஸாஉ' பேரீச்சம் பழத்துடன் திருப்பிக் கொடுத்து விடலாம். கோதுமையைத்தான் கொடுக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3056 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஆட்டை வாங்கியவருக்கு விருப்ப உரிமை உண்டு' என இடம்பெற்றுள்ளது.

3057 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் இந்த ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் மடி கனக்கச் செய்யப்பட்ட ஒட்டகத்தையோ அல்லது ஆட்டையோ வாங்கிய பின் பால்கறந்து பார்க்கும்போது, (பின்வரும்) இரண்டில் சிறந்ததைத் தேர்ந்தெடுக்க உரிமை பெறுவார். ஒன்று அதைத் தம்மிடம் வைத்துக்கொள்ளலாம். இல்லாவிட்டால் ஒரு "ஸாஉ' பேரீச்சம் பழத்துடன் அதைத் திருப்பிக் கொடுத்துவிடலாம்.

## பாடம் : 8 விற்கப்பட்ட பொருள் கைக்கு வந்து சேர்வதற்கு முன் அதை (மற்றவருக்கு) விற்பனை செய்வது கூடாது.

3058 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உணவுப் பொருளை விலைக்கு வாங்கிய ஒருவர், அது தமது கைக்கு வந்து சேர்வதற்கு முன் (மற்றவருக்கு) அதை விற்க வேண்டாம்.
இதன் அறிவிப்பாளரான இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

உணவுப் பொருளைப் போன்றே எல்லாப் பொருட்களையும் நான் கருதுகிறேன். (கைக்கு வந்து சேர்வதற்கு முன் எதையும் விற்கலாகாது.)
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3059 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உணவுப் பொருளை விலைக்கு வாங்கிய ஒருவர், அது தமது கைக்கு வந்து சேர்வதற்கு முன் (மற்றவருக்கு) அதை விற்க வேண்டாம்.
இதன் அறிவிப்பாளரான இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
உணவுப் பொருளைப் போன்றே எல்லாப் பொருட்களையும் நான் கருதுகிறேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3060 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உணவுப் பொருளை விலைக்கு வாங்கிய ஒருவர், அதை அளந்து பார்ப்பதற்கு முன் விற்க வேண்டாம்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "ஏன்?' என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "உணவுப்பொருள் இன்னும் வந்து சேராத நிலையில், அவர்கள் தங்கத்துக்குத் தங்கத்தை (ஏற்றத்தாழ்வாக) விற்கிறார்கள் என்பதை நீர் கவனிக்கவில்லையா?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் அபூகுரைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "வந்து சேராத நிலையில்' எனும் குறிப்பு இல்லை.

3061 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உணவுப் பொருளை விலைக்கு வாங்கிய ஒருவர், அது தமது கைக்கு வந்து சேர்வதற்கு முன் (மற்றவருக்கு) விற்க வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3062 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் உணவுப் பொருட்களை விலைக்கு வாங்குவோம். அப்போது அவர்கள் எங்களிடம் ஆளனுப்பி, அதை (மற்றவருக்கு) விற்பதற்கு முன் வாங்கிய இடத்திலிருந்து வேறு இடத்திற்குக் கொண்டு சென்றுவிடுமாறு எங்களுக்கு உத்தரவிடுவார்கள்.

3063 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உணவுப் பொருளை விலைக்கு வாங்கிய ஒருவர், அது தமது கைக்கு வந்து சேர்வதற்கு முன் (மற்றவருக்கு) அதை விற்க வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
நாங்கள் வணிகர்களிடமிருந்து உணவுப் பொருட்களைக் குத்துமதிப்பாக விலைக்கு வாங்கி வந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அதை அங்கிருந்து வேறு இடத்திற்குக் கொண்டுசெல்வதற்கு முன் விற்க வேண்டாமென எங்களுக்குத் தடை விதித்தார்கள்.

3064 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உணவுப் பொருளை விலைக்கு வாங்கிய ஒருவர், அது தமது கைக்கு வந்து சேர்ந்து, அதைக் கைப்பற்றிக்கொள்வதற்கு முன் (மற்றவருக்கு) அதை விற்க வேண்டாம்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3065 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உணவுப் பொருளை விலைக்கு வாங்கிய ஒருவர், அதைக் கைப்பற்றிக்கொள்வதற்கு முன் (மற்றவருக்கு) விற்க வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3066 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் குத்துமதிப்பாக உணவுப் பொருட்களை வாங்கிக்கொண்டிருந்த மக்கள், அவற்றை(க் கைப்பற்றி) அங்கிருந்து வேறு இடத்திற்குக் கொண்டுசெல்லாமல் அங்கேயே விற்றதற்காக அடிக்கப்பட்டனர்.

3067 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் மக்கள் குத்துமதிப்பாக உணவுப் பொருட்களை விலைக்கு வாங்கியபோது, அவற்றைத் தம் இருப்பிடங்களுக்குக் கொண்டு போய்ச் சேர்க்காமல் அதே இடத்தில் விற்றதற்காக அடிக்கப்பட்டதை நான் பார்த்திருக்கிறேன்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் என்னிடம் பின்வருமாறு தெரிவித்தார்கள்:
என் தந்தை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் குத்துமதிப்பாக உணவுப் பொருளை வாங்குவார்கள். பின்னர் அதை (அங்கேயே விற்றுவிடாமல்) தம் வீட்டாரிடம் எடுத்துச் சென்று விடுவார்கள்.

3068 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உணவுப் பொருளை விலைக்கு வாங்கிய ஒருவர், அதை அளந்து பார்ப்பதற்கு முன் (மற்றவருக்கு) விற்க வேண்டாம். - இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3069 சுலைமான் பின் யசார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள், மர்வான் பின் அல்ஹகமிடம், "வட்டி வியாபாரத்திற்கு நீங்கள் அனுமதியளித்துவிட்டீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு மர்வான், "நான் (அவ்வாறு) செய்யவில்லையே!" என்றார். அதற்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள், "(அரசாங்கம் வழங்கும்) உணவு அட்டைகளை விற்பதற்கு நீங்கள் அனுமதியளித்துவிட்டீர்களே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உணவுப்பொருள் கைக்கு வந்து சேர்வதற்கு முன் அதை (மற்றவரிடம்) விற்பதற்குத் தடை விதித்துள்ளார்களே!" என்று கூறினார்கள். பின்னர் மர்வான் மக்களுக்கு உரையாற்றுகையில், உணவு அட்டையை விற்பதற்குத் தடை விதித்தார்.
உடனே காவலர்கள் மக்களின் கரங்களிலிருந்து அந்த உணவு அட்டைகளைப் பறித்ததை நான் பார்த்தேன்.

3070 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஓர் உணவுப் பொருளை நீ விலைக்கு வாங்கினால், அது உன் கைக்கு வந்து சேர்வதற்கு முன் (மற்றவருக்கு) அதை விற்காதே" என்று கூறுவார்கள்.

## பாடம் : 9 அளவு தெரிந்த பேரீச்சம் பழத்திற்குப் பதிலாக அளவு தெரியாத பேரீச்சம் பழக் குவியலை விற்பது தடை செய்யப்பட்டுள்ளது.

3071 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அளவு தெரிந்த பேரீச்சம் பழத்திற்குப் பகரமாக அளவு தெரியாத பேரீச்சம் பழக் குவியலை விற்பதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், ஹதீஸின் இறுதியில் "பேரீச்சம் பழத்திற்கு' எனும் குறிப்பு இல்லை. ("அளவு தெரிந்த பொருளுக்கு' என்று பொதுவாகவே இடம்பெற்றுள்ளது.)

## பாடம் : 10 விற்பவரும் வாங்குபவரும் (வியாபார ஒப்பந்தம் நடக்கும்) இடத்திலிருந்து பிரிவதற்கு முன் வியாபாரத்தை முறித்துக்கொள்ளும் உரிமை அவ்விருவருக்கும் உண்டு.

3072 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(வியாபார ஒப்பந்தம் நடந்த இடத்திலேயே ஒப்பந்தம் நடைமுறைக்கு வந்து விட்டதென) முடிவு செய்யப்பட்ட வியாபாரத்தைத் தவிர மற்ற வியாபாரங்களில் விற்பவரும் வாங்குபவரும் பிரியாத வரை அவ்விருவரில் ஒவ்வொருவருக்கும் (வியாபாரத்தை முறித்துக்கொள்ள) உரிமை உண்டு.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பதினோரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3073 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரண்டு பேர் தமக்கிடையே வியாபாரம் செய்துகொள்ளும்போது, இருவரும் பிரியாமல் ஒரே இடத்தில் இருக்கும்வரை,அல்லது இருவரில் ஒருவர் மற்றவருக்கு (வியாபாரத்தை உடனே நடைமுறைப்படுத்த) உரிமை அளிக்கும்வரை (வியாபாரத்தை முறித்துக்கொள்ள) அவர்களில் ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. அவ்வாறு இருவரில் ஒருவர் மற்றவருக்கு (வியாபாரத்தை உடனே நடைமுறைப்படுத்த) உரிமை அளித்து, அதன் பேரில் இருவரும் வியாபார ஒப்பந்தம் செய்துகொண்டால், உடனே வியாபாரம் ஏற்பட்டுவிடும். அவ்வாறே, வியாபார ஒப்பந்தம் ஆன பிறகு,இருவரில் யாரும் வியாபார (ஒப்பந்த)த்தைக் கைவிடாமல் பிரிந்துவிட்டாலும் வியாபாரம் ஏற்பட்டுவிடும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3074 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரண்டு பேர் தமக்கிடையே வியாபாரம் செய்துகொள்ளும்போது, அவ்விருவரும் பிரியாமல் இருக்கும்வரை அவர்களில் ஒவ்வொருவருக்கும் (வியாபாரத்தை முறித்துக்கொள்ள) உரிமை உண்டு. அல்லது அவர்களின் வியாபாரம் (உடனே நடைமுறைப்படுத்தப்படும் என்ற) முடிவோடு இருக்கலாம். அத்தகைய முடிவோடு இருந்தால், உடனே வியாபாரம் ஏற்பட்டுவிடும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் யஹ்யா பின் அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் நா∴பிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாக (பின் வரும் தகவல்) அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் ஒருவரிடம் விற்கவோ வாங்கவோ செய்யும்போது, அந்த வியாபாரத்தை முறித்துக்கொள்ளும் எண்ணம் இல்லாவிட்டால் எழுந்து சிறிது தூரம் நடந்து சென்றுவிட்டு, பிறகு அவரிடம் திரும்பிவருவார்கள்.

3075 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
விற்பவரும் வாங்குபவரும் (அங்கிருந்து) பிரிந்து செல்லாத வரை அவர்களிடையே வியாபாரம் ஏற்படாது; (வியாபார ஒப்பந்தம் நடந்த இடத்திலேயே ஒப்பந்தம் நடைமுறைக்கு வந்துவிட்டதென) முடிவு செய்யப்பட்ட வியாபாரத்தைத் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 11 வியாபாரத்தில் உண்மை பேசுவதும் குறைகளைத் தெளிவுபடுத்துவதும்.

3076 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
விற்பவரும் வாங்குபவரும் (அவ்விடத்திலிருந்து) பிரியாத வரை (வியாபாரத்தை முறித்துக் கொள்ளும்) உரிமை இருவருக்கும் உண்டு. அவ்விருவரும் உண்மை பேசி, குறைகளைத் தெளிவுபடுத்தியிருந்தால் அவர்களுடைய வியாபாரத்தில் வளம் வழங்கப்படும்; இருவரும்

பொய் பேசி, குறைகளை மறைத்திருந்தால் அவர்களது வியாபாரத்தில் உள்ள வளம் அகற்றப்படும்.
இதை ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் (ஆகிய நான்) கூறுகிறேன்:
ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் இறையில்லம் கஅபாவிற்குள் பிறந்தார்கள்; நூற்று இருபது ஆண்டுகள் வாழ்ந்தார்கள்.

## பாடம் : 12 வியாபாரத்தில் ஏமாற்றப்படுபவர்.

3077 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், தாம் வியாபாரங்களின்போது ஏமாற்றப்படுவதாகத் தெரிவித்தார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ யாரிடம் வியாபாரம் செய்தாலும் "ஏமாற்றுதல் கூடாது' என்று கூறிவிடு" என்று சொன்னார்கள். எனவே, அவர் விற்கவோ வாங்கவோ செய்யும்போது "ஏமாற்றுதல் கூடாது' என்று கூறிவந்தார்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "எனவே, அவர் விற்கவோ வாங்கவோ செய்யும்போது "ஏமாற்றுதல் கூடாது' என்று கூறிவந்தார்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 13 பலன் உறுதிப்படுவதற்கு முன், மரத்திலுள்ள பழங்களை விற்பது கூடாது; (வாங்குபவர் உடனே) அவற்றைப் பறித்துக்கொள்ள வேண்டும் என நிபந்தனை விதிக்கப்பட்டால் தவிர.

3078 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மரத்திலுள்ள கனிகளின் பலன் உறுதிப்படும் நிலையை அடையாதவரை அவற்றை விற்பதற்குத் தடை விதித்தார்கள்; விற்பவர் வாங்குபவர் ஆகிய இருவருக்கும் (இவ்வாறு) தடை விதித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3079 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பேரீச்ச மரத்திலுள்ள கனிகள் (உண்பதற்கேற்ப) சிவக்காத வரை அவற்றை விற்பதற்குத் தடை விதித்தார்கள்; கதிர்கள் (முற்றி) வெண்ணிறமாகி, அவை பாழாகிவிடும் எனும் அச்சம் விலகாதவரை அவற்றை விற்பதற்கும் தடை விதித்தார்கள் விற்பவர் வாங்குபவர் ஆகிய இருவருக்கும் (இவ்வாறு) தடை விதித்தார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3080 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மரத்திலுள்ள) கனிகள், பலன் உறுதிப்படும் நிலையை அடைந்து, அவை பாழாகும் நிலையைக் கடக்காத வரை அவற்றை விற்காதீர்கள்.
இதன் அறிவிப்பாளரான இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: பலன் உறுதிப்படும் நிலையை அடைதல் என்பது, (உண்பதற்கு ஏற்றவாறு) சிவப்பாகவோ மஞ்சளாகவோ அது மாறுவதைக் குறிக்கும்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "பலன் உறுதிப்படும் நிலையை அடையாத வரை' என்பதுடன் ஹதீஸ் முடிவடைகிறது. அதற்குப் பின்னுள்ள குறிப்புகள் இடம் பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3081 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பலன் உறுதிப்படும் நிலையை அடையாத வரை (மரத்திலுள்ள) கனிகளை விற்காதீர்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இப்னு உமர் (ரலி) அவர்களிடம் "பலன் உறுதிப்படுதல் என்றால் என்ன?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "(அப்பழங்கள்) பாழாகும் நிலையைக் கடந்துவிடுவதாகும்' என விடையளித்தார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3082 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மரத்திலுள்ள) பழங்கள், (கனிந்து) நல்ல நிலையை அடையாத வரை அவற்றை விற்க வேண்டாம் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தடைவிதித்தார்கள்'. அல்லது "எங்களுக்குத் தடைவிதித்தார்கள்'.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3083 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (மரத்திலுள்ள) கனிகள், பலன் உறுதிப்படும் நிலையை அடையாத வரை அவற்றை விற்பதற்குத் தடைவிதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3084 அபுல் பக்த்தரீ சயீத் பின் ஃபைரூஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், பேரீச்ச மர(த்திலுள்ள பழ)ங்களை விற்பது குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், "பேரீச்ச மரத்திலுள்ள கனிகள் உண்ணப்படும் பக்குவத்தை அடையும் முன்பும் எடை போடப்படுவதற்கு முன்பும் அவற்றை விற்பதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைவிதித்தார்கள்" என்று கூறினார்கள். நான்,

"(மரத்திலுள்ளதை) எடை போடுதல் எப்படி?" என்று கேட்டேன். அப்போது அங்கிருந்த ஒரு மனிதர் "(அதன் எடை இவ்வளவு இருக்கும் என) மதிப்பிடப்படுவதற்கு முன்பு' என்று கூறினார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3085 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மரத்திலுள்ள கனிகளை, பலன் உறுதிப்படும் நிலையை அடையாதவரை விற்காதீர்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3086 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், பலன் உறுதிப்படும் நிலையை அடையாத வரை (மரத்திலுள்ள) பழங்களை விற்பதற்குத் தடை விதித்தார்கள்; உலர்ந்த பேரீச்சப்பழத்திற்குப் பதிலாக (உலராத) பச்சைப் பழத்தை விற்பதற்கும் தடைவிதித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அராயா' வியாபாரத்தில் அ(வ்வாறு விற்ப)தற்கு அனுமதியளித்தார்கள்.
இப்னு நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அராயா வியாபாரத்தில் (அவ்வாறு) விற்கப்படுவதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்" என்று சில கூடுதலான சொற்றொடர் இடம்பெற்றுள்ளது.

3087 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பலன் உறுதிப்படும் நிலையை அடையாத வரை (மரத்திலுள்ள) கனிகளை விற்காதீர்கள். உலர்ந்த (கொய்யப்பட்ட) பழங்களுக்குப் பதிலாக (மரத்திலுள்ள) உலராத பழங்களை விற்காதீர்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களும் இவ்வாறே அறிவித்துள்ளார்கள்.
இந்த ஹதீஸ் (மொத்தம்) ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 14 உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக (மரத்திலுள்ள) உலராத பேரீச்சம் பழங்களை விற்பது தடை செய்யப்பட்டுள்ளது; "அராயா'வில் தவிர!**

3088 சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஸாபனா' மற்றும் "முஹாகலா' ஆகிய வியாபாரங்களைத் தடை செய்தார்கள்.
"முஸாபனா' என்பது, பேரீச்ச மரத்திலுள்ள (உலராத) கனிகளை உலர்ந்த (கொய்யப்பட்ட) பேரீச்சம் கனிகளுக்குப் பதிலாக (பண்டமாற்று முறையில்) விற்பதாகும். "முஹாகலா' என்பது, (அறுவடை செய்யப்பட்ட) கோதுமைக் கதிரிலுள்ள (தானியத்)தை விற்பதும் (அறுவடை செய்யப்பட்ட) கோதுமைக்குப் பதிலாக நிலத்தைக் குத்தகைக்குக் கொடுப்பதும் ஆகும்.

சாலிம் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மரத்திலுள்ள கனிகள் பலன் உறுதிப்படும் நிலையை அடையாதவரை அவற்றை விற்காதீர்கள்; உலர்ந்த பேரீச்சம் பழத்திற்குப் பதிலாக (மரத்திலுள்ள) உலராத பழத்தை விற்காதீர்கள்" என்று சொன்னார்கள்.
மேலும், சாலிம் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் (தம் தந்தை) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் வழியாக ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறினார்கள் எனப் பின்வருமாறு அறிவித்தார்கள்:
அதன் பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மரத்திலுள்ள) உலராத கனிகளுக்குப் பதிலாக உலர்ந்த அல்லது செங்காயான பேரீச்சங்கனிகளை விற்பதற்கு "அராயா'வில் (மட்டும்) அனுமதியளித்தார்கள்; 'அராயா' அல்லாதவற்றில் அனுமதியளிக்கவில்லை.

3089 ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (மரத்திலுள்ள) உலராத கனிகளைக் குத்துமதிப்பாகக் கணக்கிட்டு விற்பதற்கு "அராயா'க்காரர்களுக்கு மட்டும் அனுமதியளித்தார்கள்.

3090 ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அராயா'வில் (மட்டும் மரத்திலுள்ள) உலராத கனிகளைக் குத்துமதிப்பாகக் கணக்கிட்டு வீட்டுக்காரர்கள் (தோட்ட உரிமையாளர்கள்) எடுத்துக்கொள்ளவும், அவற்றைச் செங்காய்களாக அவர்கள் உட்கொள்ளவும் அனுமதித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3091 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும், அதில் "("அராயா'வின் ஒருமையான) "அரிய்யா' என்பது, (ஏழை) மக்களுக்காக ஒதுக்கப்படும் பேரீச்ச மரங்களாகும். அவற்றிலுள்ள கனிகளை அவர்கள் குத்துமதிப்பாகக் கணக்கிட்டு விற்றுக்கொள்வார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

3092 ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மரத்திலுள்ள) பேரீச்சங்கனிகளைக் குத்துமதிப்பாகக் கணக்கிட்டு விற்பதற்கு "அராயா' வியாபாரத்தில் அனுமதியளித்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"அரிய்யா' என்பது, ஒருவர் தம் வீட்டாரின் உணவுக்காக மரத்திலுள்ள செங்காய்களைக் குத்துமதிப்பாகக் கணக்கிட்டு, உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக வாங்குவதாகும்.

3093 ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அராயா'வில் (மட்டும் மரத்திலுள்ள) உலராத கனிகளைக் குத்துமதிப்பாகக் கணக்கிட்டு, அவற்றுக்குப் பதிலாக உலர்ந்த கனிகளை அளந்து விற்க அனுமதியளித்தார்கள்.

3094 மேற்கண்ட ஹதீஸ் ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "குத்துமதிப்பாகக் கணக்கிட்டு எடுத்துக்கொள்ள அனுமதித்தார்கள்" என இடம் பெற்றுள்ளது.

3095 மேற்கண்ட ஹதீஸ் ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அராயா' வியாபாரத்தில் (மட்டும் மரத்திலுள்ள) உலராத கனிகளைக் குத்துமதிப்பாகக் கணக்கிட்டு விற்பதற்கு அனுமதியளித்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

3096 சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) உள்ளிட்ட நபித்தோழர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மரத்திலுள்ள) உலராத கனிகளை உலர்ந்த (கொய்யப்பட்ட) பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக விற்பதற்குத் தடை விதித்தார்கள். மேலும், "அது வட்டியாகும்; அதுவே "முஸாபனா' ஆகும்"என்றும் கூறினார்கள். ஆயினும், "அராயா'வில் மட்டும் அதற்கு அனுமதியளித்தார்கள். "அராயா' என்பது, (ஏழைகளுக்கு வழங்கப்பட்ட) ஓரிரு பேரீச்சமரங்களிலுள்ள உலராத கனிகளை வீட்டுக்காரர்கள் (தோட்ட உரிமையாளர்கள்) குத்துமதிப்பாகக் கணக்கிட்டு உலர்ந்த பழங்களுக்குப் பதிலாக எடுத்துக் கொண்டு, அந்தச் செங்காய்களை உண்பதாகும்.
இந்த ஹதீஸை புஷைர் பின் யசார் (ரஹ்) அவர்கள் தமது தெருவில் வசித்த (பனூ ஹாரிஸா குடும்பத்தைச் சேர்ந்த) சில நபித்தோழர்களிடமிருந்து அறிவித்தார்கள். சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) அவர்களும் அவர்களில் ஒருவர் ஆவார்கள்.

3097 புஷைர் பின் யசார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அராயா'வில் (மட்டும் மரத்திலுள்ள) உலராத கனிகளைக் குத்துமதிப்பாகக் கணக்கிட்டு விற்பதற்கு அனுமதியளித்தார்கள் என நபித்தோழர்கள் கூறினர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3098 புஷைர் பின் யசார் (ரஹ்) அவர்கள் தம் தெருவாசிகளான நபித்தோழர்கள் சிலரிடமிருந்து அறிவித்த மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும், அவற்றில் இஸ்ஹாக் பின் இப்ராஹீம் மற்றும் முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "வட்டி' ("ரிபா") என்பதற்குப் பதிலாக "பறித்தல்' ("ஸப்ன்") எனும் சொல் இடம்பெற்றுள்ளது. இப்னு அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "வட்டி' என்றே காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் அபீ ஹஸ்மா (ரலி) அவர்களிடமிருந்து புஷைர் பின் யசார் (ரஹ்) அவர்கள் வாயிலாக மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3099 ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) மற்றும் சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) ஆகியோர் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஸாபனா'வைத் தடை செய்தார்கள். (அதாவது) மரத்திலுள்ள உலராத கனிகளை உலர்ந்த (பறிக்கப்பட்ட) கனிகளுக்குப் பதிலாக விற்பதைத் தடை செய்தார்கள்; "அராயா'க்காரர்களைத் தவிர. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அராயா'க்காரர்களுக்கு மட்டும் (இந்த வியாபாரம் செய்து கொள்ள) அனுமதியளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3100 யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்களிடம், "இப்னு அபீஅஹ்மத் (ரஹ்) அவர்களின் முன்னாள் அடிமையான அபூசுஃப்யான் (ரஹ்) அவர்களிடமிருந்து தாவூத் பின் அல்ஹுஸைன் (ரஹ்) அவர்கள், பின்வரும் நபிமொழியை உங்களுக்கு அறிவித்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள். (அந்த ஹதீஸாவது:) அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
"அராயா' வணிகத்தில், (மரத்திலுள்ள) உலராத பேரீச்சங்கனிகளை உலர்ந்த பேரீச்சங் கனிகளுக்குப் பதிலாக "ஐந்து வஸ்க்குகளுக்கும் குறைவாகவோ' அல்லது "ஐந்து வஸ்க்குகளுக்காகவோ' விற்பனை செய்துகொள்ள அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்.
"ஐந்து வஸ்க்குகளுக்குக் குறைவாக, அல்லது ஐந்து வஸ்க்குகளுக்கு' என அறிவிப்பாளர் தாவூத் பின் அல்ஹுஸைன் (ரஹ்) அவர்களே ஐயப்பாட்டுடன் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3101 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஸாபனா' வியாபாரத்திற்குத் தடை விதித்தார்கள். "முஸாபனா' என்பது (மரத்திலுள்ள) உலராத பேரீச்சம் பழங்களை அளக்கப்பட்ட உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக விற்பதும், (கொடியிலுள்ள) திராட்சைக் கனிகளை அளக்கப்பட்ட உலர்ந்த திராட்சைக் கனிகளுக்குப் பகரமாக விற்பதும் ஆகும்.

3102 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "முஸாபனா' எனும் வியாபாரத்திற்குத் தடை விதித்தார்கள். (அதாவது:) (மரத்திலுள்ள) உலராத பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக அளக்கப்பட்ட உலர்ந்த பேரீச்சம் பழங்களை விற்பதையும், உலர்ந்த அளக்கப்பட்ட திராட்சைக் கனிகளுக்குப் பதிலாக (கொடியிலுள்ள) உலராத திராட்சைக் கனிகளை விற்பதையும், அளக்கப்பட்ட தொலி நீக்கப்பட்ட கோதுமைக்குப் பதிலாக (அறுவடை செய்யப்படாத) பயிரிலுள்ள கோதுமையை விற்பதையும் தடை செய்தார்கள்.இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3103 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஸாபனா' எனும் வியாபாரத்திற்குத் தடை விதித்தார்கள். "முஸாபனா'என்பது, (மரத்திலுள்ள) உலராத பேரீச்சம் பழங்களை

அளக்கப்பட்ட உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக விற்பதும், (கொடியிலுள்ள) உலராத திராட்சைப் பழங்களை அளக்கப்பட்ட உலர்ந்த திராட்சைப் பழங்களுக்குப் பதிலாக விற்பதும், மரத்திலுள்ள எந்தக் கனியையும் குத்துமதிப்பாகக் கணக்கிட்டு விற்பதும் ஆகும்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3104 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஸாபனா' எனும் வியாபாரத்திற்குத் தடை விதித்தார்கள். "முஸாபனா'என்பது, மரத்தின் மேலுள்ள பேரீச்சங்கனிகளைக் குறிப்பிட்ட அளவைக் கொண்ட (பறிக்கப்பட்ட) பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக விற்பதாகும். (அவ்வாறு)விற்கும்போது, (அளக்கப்பட்ட) இந்தப் பழங்கள், (மரத்திலுள்ள பழங்களைவிட) அதிகமாக இருந்தால், அந்த அதிகம் எனக்குரியது. குறைவாக இருந்தால் அதற்கு நானே பொறுப்பாளி ஆவேன் என்று (விற்பவர்) கூறுவார்.
அல்லது "(மரத்திலுள்ள) இந்தப் பழங்கள், (அளக்கப்பட்ட கனிகளைவிட) அதிகமாக இருந்தால், அந்த அதிகம் எனக்குரியது. குறைந்துவிட்டால் அந்தக் குறைவுக்கு நானே பொறுப்பாளி ஆவேன்" என்று (வாங்குபவர்) கூறுவார்.
இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3105 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஸாபனா' எனும் வியாபாரத்திற்குத் தடை விதித்தார்கள். (அதாவது:) ஒருவரது தோட்டத்திலுள்ள பேரீச்ச மரங்களின் (உலராத) கனிகளை அளக்கப்பட்ட உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக விற்பதற்கும், கொடியிலுள்ள (உலராத) திராட்சைகளை அளக்கப்பட்ட உலர்ந்த திராட்சைகளுக்குப் பதிலாக விற்பதற்கும், கதிர்களிலுள்ள தானியங்களை அளக்கப்பட்ட உணவுப் பொருளுக்குப் பதிலாக விற்பதற்கும் தடை விதித்தார்கள்; இவை அனைத்துக்குமே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். -இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 15 கனிகள் உள்ள பேரீச்ச மரத்தை விற்பது.

3106 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மகரந்தச் சேர்க்கை செய்யப்பட்ட பேரீச்சமரத்தை யாரேனும் விற்றால் (தற்போதுள்ள) அதன் கனிகள் விற்றவருக்கே சேரும்; வாங்கியவர் (தமக்கே சேர வேண்டுமென) முன்நிபந்தனையிட்டிருந்தால் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3107 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மகரந்தச் சேர்க்கை செய்யப்பட்ட பேரீச்சமரம் வேரோடு விலைக்கு வாங்கப்பட்டால், (தற்போதுள்ள) அதன் கனிகள் மகரந்தச் சேர்க்கை செய்த(விற்ற)வருக்கே சேரும்; (தமக்கே சேர வேண்டுமென) வாங்கியவர் முன்நிபந்தனை விதித்திருந்தால் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3108 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் பேரீச்சமரத்திற்கு மகரந்தச் சேர்க்கை செய்து, அதை வேரோடு விற்றால் மகரந்தச் சேர்க்கை செய்த அவருக்கே (தற்போதுள்ள) அதன் கனிகள் சேரும்; விலைக்கு வாங்கியவர் (அதன் கனிகள் தமக்கே சேர வேண்டுமென) முன்நிபந்தனை விதித்திருந்தால் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3109 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மகரந்தச் சேர்க்கை செய்யப்பட்ட பேரீச்சமரத்தை ஒருவர் விலைக்கு வாங்கினால், (தற்போதுள்ள) அதன் கனிகள் விற்றவருக்கே சேரும்; விலைக்கு வாங்கியவர் (தமக்கே சேர வேண்டுமென) முன்நிபந்தனை விதித்திருந்தால் தவிர. (செல்வம் வைத்திருக்கும்) ஓர் அடிமையை ஒருவர் விலைக்கு வாங்கினால், அவ்வடிமையின் செல்வம் விற்றவருக்கே சேரும்; (அச்செல்வம் தமக்கே சேர வேண்டுமென) வாங்கியவர் நிபந்தனை விதித்திருந்தால் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 16 முஹாகலா, முஸாபனா, முகாபரா ஆகிய வியாபாரங்களும், பலன் உறுதிப்படாத நிலையில் மரத்திலுள்ள கனிகளை விற்பதும், மரத்திலுள்ள கனிகளின் பல ஆண்டு விளைச்சலை விற்பதும் (முஆவமா) தடை செய்யப்பட்டுள்ளன.**

3110 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "முஹாகலா', "முஸாபனா' மற்றும் "முகாபரா' ஆகிய வியாபாரங்களையும்,பலன் உறுதிப்படாத நிலையில் மரத்திலுள்ள கனிகளை விற்பதையும் தடை செய்தார்கள். பொற்காசு மற்றும் வெள்ளிக்காசுக்காக மட்டுமே (மரத்திலுள்ள) உலராத பழங்களை விற்கலாம்; மற்றபடி "அராயா'வில் தவிர (மற்ற முறைகளில்) அதற்கு அனுமதியில்லை (என்றும் உத்தரவிட்டார்கள்).

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3111 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "முகாபரா', "முஹாகலா', "முஸாபனா' ஆகிய வியாபாரங்களையும், உண்ணும் பக்குவத்தை அடையாத (மரத்திலுள்ள) பழங்களை விற்பதையும் தடைசெய்தார்கள். பொற்காசு மற்றும் வெள்ளிக்காசுக்காக மட்டுமே அந்தப் பழங்களை விற்கலாம்; மற்றபடி "அராயா'வில் தவிர (மற்ற முறைகளில்) அதற்கு அனுமதியில்லை (என்றும் உத்தரவிட்டார்கள்).
இதன் அறிவிப்பாளரான அதாஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: ஜாபிர் (ரலி) அவர்கள் (முகாபரா, முஸாபனா, முஹாகலா ஆகியவற்றுக்குப் பின்வருமாறு) எங்களிடம் விளக்கமளித்தார்கள்:
"முகாபரா' என்பது, ஒருவர் தரிசு நிலத்தை மற்றொருவருக்குக் கொடுக்க, அவர் செலவு செய்து (மரம் நட்டு) அதன் கனிகளில் சிலவற்றை எடுத்துக்கொள்வதாகும்.
"முஸாபனா' என்பது, மரத்திலுள்ள பேரீச்சம் செங்காயை, அளக்கப்பெற்ற உலர்ந்த பேரீச்சங் கனிகளுக்குப் பதிலாக விற்பதாகும்.
வேளாண்மையில் "முஹாகலா' என்பது, "முஸாபனா'வைப் போன்றதாகும்; பயிரில் நிற்கும் தானியக் கதிர்களை,அளக்கப்பெற்ற தானியங்களுக்குப் பதிலாக விற்பதாகும்.

3112 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "முஹாகலா', "முஸாபனா', "முகாபரா' ஆகிய வியாபாரங்களையும்,கனிவதற்கு முன் மரத்(திலுள்ள பழ)த்தை (உலர்ந்த பழத்திற்குப் பதிலாக) விற்பதையும் தடை செய்தார்கள். "கனிதல்' ("இஷ்காஹ்') என்பது, பழம் சிவப்பாகவோ மஞ்சளாகவோ உண்பதற்கு ஏற்றதாகவோ மாறுவதாகும். "முஹாகலா' என்பது, (அறுவடை செய்யப்படாத) பயிர்களை அளவு அறியப்பட்ட (அறுவடை செய்யப்பட்ட) உணவுப் பொருளுக்குப் பதிலாக விற்பதாகும்.
"முஸாபனா' என்பது, பேரீச்ச மரத்(திலுள்ள பழத்)தை (பறிக்கப்பட்ட) குறிப்பிட்ட அளவிலான உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக விற்பதாகும். "முகாபரா' என்பது, விளைச்சலில் மூன்றில் ஒரு பாகத்தை அல்லது நான்கில் ஒரு பாகத்தை அல்லது அது போன்றதை (தனக்குத் தந்துவிடவேண்டும் எனும் நிபந்தனையின் பேரில் ஒரு நிலத்தை)க் கொடுப்பதாகும்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான ஸைத் பின் அபீ உனைஸா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்களிடம், "இந்த ஹதீஸை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அறிவித்ததை நீங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அதாஉ (ரஹ்) அவர்கள் "ஆம்' என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3113 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஸாபனா', "முஹாகலா', "முகாபரா' ஆகியவற்றையும் கனிவதற்கு முன் (மரத்திலுள்ள) கனிகளை விற்பதையும் தடை செய்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சலீம் பின் ஹய்யான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் சயீத் பின் மீனா (ரஹ்) அவர்களிடம், "கனிதல் ("இஷ்காஹ்') என்றால் என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "உண்பதற்கு ஏற்றவாறு சிவப்பாக, மஞ்சளாக மாறுவது" என விடையளித்தார்கள்.

3114 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஹாகலா', "முஸாபனா', "முஆவமா', "முகாபரா' ஆகியவற்றையும், "ஒரு பகுதியைத் தவிர' என்று கூறி விற்பதையும் தடை செய்தார்கள்.56 "அராயா'வில் மட்டும் (இவற்றுக்கு) அனுமதியளித்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் அபுஸ் ஸுபைர் (ரஹ்), சயீத் பின் மீனா ஆகிய இருவரில் ஒருவர் "முஆவமா' என்பது, (மரத்திலுள்ள) பழங்களின் பல்லாண்டு விளைச்சலை விற்பதாகும்" என்று கூறினார்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "முஆவமா என்பது, (மரத்திலுள்ள) பழங்களின் இரண்டு போக விளைச்சலை விற்பதாகும்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

3115 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதற்கும், பல்லாண்டு விளைச்சலை விற்பதற்கும் (முஆவமா), மரத்திலுள்ள கனிகள் (கனிந்து) நல்ல நிலையை அடைவதற்கு முன் விற்பதற்கும் தடை விதித்தார்கள்.

## பாடம் : 17 நிலக் குத்தகை.

3116 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதவாது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதைத் தடை செய்தார்கள்.58

3117 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யாரிடம் நிலம் இருக்கிறதோ அவர் அதில் தாமே பயிரிடட்டும்; தாம் பயிரிட (விரும்பா)விட்டால், அதை தம் (முஸ்லிம்) சகோதரருக்குப் பயிரிடக் கொடுத்து விடட்டும்!

3118 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களில் சிலரிடம், தமது தேவைக்குப் போக எஞ்சிய நிலங்கள் இருந்தன. ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யாரிடம் நிலம் இருக்கிறதோ அவர் அதைத் தாமே பயிரிடட்டும்; அல்லது அதைத் தம் (முஸ்லிம்)

சகோதரர் எவருக்காவது (பிரதிபலன் எதிர்பாராமல் இலவசமாகப் பயிர் செய்யக்) கொடுத்து விடட்டும்; இவ்வாறு செய்ய அவர் மறுத்தால் தமது நிலத்தை அப்படியே (பயிரிடாமல்) வைத்துக்கொள்ளட்டும்!
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3119 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிலத்தை வாடகைக்கு விடுவதை, அல்லது (நிலத்தைக் கொடுத்துப்) பிரதிபலன் பெறுவதைத் தடை செய்தார்கள்.

3120 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யாரிடம் நிலம் உள்ளதோ அவர், அதில் தாமே பயிர் செய்யட்டும்! அவரால் பயிர் செய்ய இயலாவிட்டால், அதைத் தம் (முஸ்லிம்) சகோதரர் எவருக்காவது (பிரதி பலன் எதிர்பாராமல்) இலவசமாக(ப் பயிர் செய்ய)க் கொடுத்துவிடட்டும்! அதற்காக அவரிடம் கூலி எதையும் பெற வேண்டாம்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3121 ஹம்மாம் பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சுலைமான் பின் மூசா (ரஹ்) அவர்கள் அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்களிடம் "நபி (ஸல்) அவர்கள், "யாரிடம் நிலம் உள்ளதோ அவர் அதில் தாமே பயிரிடட்டும்! அல்லது தம் சகோதரருக்குப் பயிரிடக் கொடுத்துவிடட்டும்;அதற்காக (குத்தகை) தொகை பெற வேண்டாம்' என்று கூறினார்கள் என ஜாபிர் (ரலி) அவர்கள் உங்களுக்கு அறிவித்தார்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அதாஉ (ரஹ்) அவர்கள் "ஆம்' என்றார்கள்.

3122 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "முகாபரா' எனும் வியாபாரத்தைத் தடைசெய்தார்கள்.

3123 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தமது தேவை போக எஞ்சிய நிலத்தை வைத்திருப்பவர், அதில் தாமே பயிரிடட்டும்; அல்லது தம் (முஸ்லிம்) சகோதரருக்குப் பயிரிடக் கொடுத்துவிடட்டும்! அதை விற்க வேண்டாம்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சலீம் பின் ஹய்யான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் சயீத் பின் மீனா (ரஹ்) அவர்களிடம், " "அதை விற்க வேண்டாம்' என்பதன் பொருள் என்ன, குத்தகைக்கு விடவேண்டாம் என்பதா?"என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஆம்' என்றார்கள்.

3124 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் "முகாபரா' முறையில் விவசாயம் செய்துவந்தோம். அப்போது (குத்தகைதாரரிடம்) சூடடித்த பின் கதிர்களில் எஞ்சியுள்ள தானியத்தையும் (நீரோட்டம் நன்றாக உள்ள பகுதியின்) இன்ன விளைச்சலையும் பெற்றுவந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,

"யாரிடம் நிலம் உள்ளதோ அவர் அதில் தாமே பயிரிடட்டும். அல்லது தம் சகோதரருக்கு (இலவசமாகப்) பயிரிடக் கொடுத்து விடட்டும். இல்லாவிட்டால் அதை அப்படியே வைத்திருக்கட்டும்!" என்று கூறினார்கள்.

3125 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் "நீர் நிலையோரம் விளையும் பயிர்களில் மூன்றில் ஒரு பாகம் அல்லது நான்கில் ஒரு பாகம் கொடுத்துவிடுகிறோம்' எனும் நிபந்தனையின் பேரில் நிலத்தை (குத்தகைக்கு)ப் பெற்றுவந்தோம். இது தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து நின்று, "யாரிடம் நிலம் உள்ளதோ அவர் அதில் தாமே பயிரிடட்டும். அவ்வாறு பயிர் செய்யாவிட்டால் தம் (முஸ்லிம்) சகோதரருக்கு (பிரதிபலன் எதிர்பாராமல் பயிர் செய்ய) இலவசமாகக் கொடுத்துவிடட்டும். அவ்வாறு இலவசமாகக் கொடுக்க (விரும்பா)விட்டால் அதை (பயிரிடாமல் அப்படியே) வைத்திருக்கட்டும்!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3126 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யாரிடம் நிலம் உள்ளதோ அவர் (அதில் தாமே பயிர் செய்யட்டும்! அல்லது) அதை (சகோதரர் எவருக்காவது) அன்பளிப்பாக வழங்கட்டும். அல்லது இரவலாகக் கொடுக்கட்டும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3127 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் அதில், "தாமே பயிரிடட்டும்! அல்லது வேறு யாருக்கேனும் பயிரிடக் கொடுக்கட்டும்!" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

3128 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதற்குத் தடை விதித்தார்கள்.
நா:பிஉ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
"(நபி (ஸல்) அவர்களது காலத்திலும் மூன்று கலீ:பாக்களின் காலத்திலும்) நாங்கள் எங்கள் நிலங்களைக் குத்தகைக்கு விட்டுவந்தோம். பின்னர் ரா:பிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸைச் செவியுற்றபோது அதை நாங்கள் விட்டுவிட்டோம்" என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

3129 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தரிசு நிலத்தை இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு (மட்டும் பயிரிடுவதற்காக) விற்பதைத் தடைசெய்தார்கள்.

3130 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், பல்லாண்டு விளைச்சலை (முன்கூட்டியே) விற்பதற்கு ("முஆவமா' அல்லது "பைஉஸ் ஸினீன்') தடைவிதித்தார்கள்.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "(மரத்தில் விளையும்) கனிகளைப் பல்லாண்டுகளுக்கு விற்பதைத் தடைசெய்தார்கள்" என இடம்பெற்றுள்ளது.

3131 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யாரிடம் நிலம் உள்ளதோ அவர் அதில் தாமே பயிரிடட்டும்! அல்லது அதைத் தம் (முஸ்லிம்) சகோதரருக்கு (பிரதிபலன் கருதாமல்) இலவசமாக(ப் பயிர் செய்ய)க் கொடுத்து விடட்டும். இவ்வாறு செய்ய மனமில்லாவிட்டால்,தமது நிலத்தை அப்படியே (பயிரிடாமல்) வைத்திருக்கட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3132 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஸாபனா'வையும் "ஹுகூலை'யும் தடை செய்தார்கள்.
"முஸாபனா' என்பது, (மரத்திலுள்ள) உலராத பேரீச்சங்கனிக்குப் பதிலாக (கொய்து அளக்கப்பட்ட) கனிகளை விற்பதாகும்."ஹுகூல்' என்பது, நிலத்தைக் குத்தகைக்கு விடுவதாகும்.

3133 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஹாகலா'வையும் "முஸாபனா'வையும் தடை செய்தார்கள்.

3134 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "முஸாபனா'வையும் "முஹாகலா'வையும் தடை செய்தார்கள். "முஸாபனா'என்பது, பேரீச்சமரத்தின் உச்சியிலுள்ள (உலராத) கனிகளுக்குப் பதிலாக, உலர்ந்த கனிகளை வாங்குவதாகும். "முஹாகலா' என்பது, நிலத்தைக் குத்தகைக்கு விடுவதாகும்.

3135 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
((முஆவியா (ரலி) அவர்களது ஆட்சி யின்) முதலாண்டுவரை "முகாபரா' முறையில் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை நாங்கள் குற்றமாகக் கருதாமல் இருந்தோம். பின்னர் (முஆவியா (ரலி) அவர்களது ஆட்சியின் இறுதிக் கட்டத்தில்) ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் அதற்குத் தடைவிதித்துள்ளார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3136 மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அதனால், நாங்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை விட்டுவிட்டோம்" எனக் கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

3137 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள், (குத்தகைக்கு விட்டு) நம் நிலங்களிலிருந்து பயனடைய விடாமல் நம்மைத் தடுத்துவிட்டார்கள்.

3138 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்திலும் அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), உஸ்மான் (ரலி) ஆகியோரது ஆட்சிக் காலங்களிலும் முஆவியா (ரலி) அவர்களது ஆட்சியில் ஆரம்பக் கட்டத்திலும் இப்னு உமர் (ரலி) அவர்கள் தம் விளைநிலங்களைக் குத்தகைக்கு விட்டு வந்தார்கள். முஆவியா (ரலி) அவர்களது ஆட்சியின் இறுதி நாட்களில் "நபி (ஸல்) அவர்கள் (நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை) தடை செய்தார்கள்' என ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் அறிவித்துவரும் செய்தி இப்னு உமர் (ரலி) அவர்களுக்கு எட்டியது.
உடனே அவர்கள் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடம் சென்றார்கள். அப்போது அவர்களுடன் நானும் இருந்தேன். இப்னு உமர் (ரலி) அவர்கள், ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடம் அது குறித்து வினவினார்கள். ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விளைநிலங்களைக் குத்தகைக்கு விடுவதைத் தடை செய்தார்கள்" என்று கூறினார்கள்.
இதையடுத்து, இப்னு உமர் (ரலி) அவர்கள் தமது நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை கைவிட்டார்கள். பின்னர் அவர்களிடம் நிலத்தைக் குத்தகைக்கு விடுவது குறித்துக் கேட்கப்பட்டால் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதற்குத் தடை விதித்துள்ளார்கள் என ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கருதுகிறார்கள்" என விடையளிப்பார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இஸ்மாயீல் இப்னு உலய்யா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "எனவே, அதன் பின்னர் இப்னு உமர் (ரலி) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதைக் கைவிட்டு விட்டார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3139 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு உமர் (ரலி) அவர்களுடன் (மஸ்ஜிதுந் நபவீ அருகில்) "பலாத்' எனும் இடத்திலிருந்த ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விளைநிலங்களைக் குத்தகைக்கு விடுவதைத் தடைசெய்துள்ளார்கள்" என்று தெரிவித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "இப்னு உமர் (ரலி) அவர்கள் ராஃபிஉ (ரலி) அவர்களிடம் சென்றார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது.

3140 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறிய தாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் நிலத்தை (குத்தகை) வாடகைக்கு விட்டுவந்தார்கள். அப்போது ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதாக அவர்களிடம் ஒரு ஹதீஸ் தெரிவிக்கப் பட்டது. உடனே அவர்கள் ராஃபிஉ (ரலி) அவர்களை நோக்கி நடந்தார்கள். அப்போது அவர்களுடன் நானும் இருந்தேன். ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள், தம் தந்தையின்

சகோதரர்கள் சிலர், "நபி (ஸல்) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதைத் தடை செய்தார்கள்" என்று கூறியதாகத் தெரிவித்தார்கள். எனவே, இப்னு உமர் (ரலி) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை நிறுத்திவிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3141 சாலிம் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது
(என் தந்தை) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் தம் நிலங்களைக் குத்தகைக்கு விட்டுவந்தார்கள். இந்நிலையில், ராஃபிஉ பின் கதீஜ் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதைத் தடை செய்துவருகிறார்கள் எனும் செய்தி அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களுக்கு எட்டியது.
உடனே அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களைச் சந்தித்து, "இப்னு கதீஜ்! நிலக்குத்தகை விஷயத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகத் தாங்கள் என்ன அறிவித்துவருகிறீர்கள்?"என்று கேட்டார்கள். அதற்கு ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள், "என் தந்தையின் இரு சகோதரர்கள் –அவர்கள் இருவரும் பத்ருப் போரில் கலந்துகொண்டவர்கள் ஆவர்– (தம்) குடும்பத்தாரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதைத் தடை செய்தார்கள் எனக் கூறிவந்ததை நான் செவியுற்றேன்"என்றார்கள்.
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் நிலம் குத்தகைக்கு விடப்பட்டு வந்ததை நான் அறிந்திருந்தேன்" என்று கூறினார்கள். (ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதைக் கேட்ட) பின் நிலக்குத்தகை தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அது கூடாது என்று) புதிய சட்டம் ஏதேனும் பிறப்பித்து, அதை நாம் அறியாமல் இருந்துவிட்டோமோ என்று அஞ்சி, நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் நிறுத்திவிட்டார்கள்.

## பாடம் : 18 உணவுப் பொருளுக்குப் பதிலாக நிலத்தைக் குத்தகைக்கு விடுவது.

3142 ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் (விளைச்சலில்) மூன்றில் ஒரு பாகம் அல்லது நான்கில் ஒரு பாகம் அல்லது குறிப்பிட்ட உணவுப் பொருட்களை எங்களுக்குக் கொடுத்துவிட வேண்டும் எனும் நிபந்தனையின் பேரில் விளைநிலத்தைக் குத்தகைக்கு விட்டுவந்தோம்.
இந்நிலையில் ஒரு நாள் என் தந்தையின் சகோதரர்களில் ஒருவர் எங்களிடம் வந்து, "நமக்குப் பயனளித்துக்கொண்டிருந்த ஒரு காரியத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நமக்குத் தடை விதித்துவிட்டார்கள். அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கட்டுப்படுவதே அதைவிட மிகவும் நமக்குப் பயனளிக்கக்கூடியதாகும். நிலத்தைக் குத்தகைக்கு விட்டு, (விளைச்சலில்) மூன்றில் ஒரு பாகத்தையோ, நான்கில் ஒரு பாகத்தையோ, குறிப்பிட்ட உணவுப் பொருளையோ பெற்றுக்கொள்ள தடை விதித்தார்கள். நிலத்தின் உரிமையாளர் அதில் தாமே பயிரிட வேண்டும்; அல்லது (யாருக்கேனும்) பயிரிடக்

கொடுத்துவிட வேண்டும் எனக் கட்டளையிட்டார்கள்; நிலத்தைக் குத்தகைக்கு விடுவதையும் அது அல்லாத முறையில் பயனடைவதையும் வெறுத்தார்கள்" என்றார்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "(விளைச்சலில்) மூன்றில் ஒரு பாகம் அல்லது நான்கில் ஒரு பாகத்தை எங்களுக்குத் தந்துவிட வேண்டும் எனும் நிபந்தனையின் பேரில் விளைநிலத்தைக் குத்தகைக்கு விட்டு வந்தோம்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

- மேற்கண்ட ஹதீஸ் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடமிருந்து மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என ராஃபிஉ (ரலி) அவர்கள் தெரிவித்ததாகவே இடம்பெற்றுள்ளது. ராஃபிஉ (ரலி) அவர்கள் தம் தந்தையின் சகோதரர்கள் சிலரிடமிருந்து அறிவித்ததாக இடம்பெறவில்லை.

3143 ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(என் தந்தையின் சகோதரர்) ழுஹைர் பின் ராஃபிஉ (ரலி) அவர்கள் என்னிடம் வந்து, "எங்களுக்கு உதவியாக இருந்த ஒன்றைச் செய்யக்கூடாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தடை விதித்தார்கள் என்று கூறினார். நான், "அது என்ன? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னதே சரியானது" என்று கூறினேன்.

அதற்கு அவர் சென்னார்: என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் உங்கள் வயல்களை என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். "வாய்க்காலை ஒட்டிய பகுதியில் விளைபவற்றை எங்களுக்குக் கொடுத்துவிட வேண்டும்; அல்லது பேரீச்சம் பழத்திலிருந்தோ கோதுமையிலிருந்தோ குறிப்பிட்ட அளவை எங்களுக்குக் கொடுத்துவிட வேண்டும் எனும் நிபந்தனையின் பேரில் அவற்றைக் குத்தகைக்கு விடுகின்றோம்" என்று நான் பதிலளித்தேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறு செய்யாதீர்கள். (ஒன்று) நீங்களே பயிர் செய்யுங்கள்;அல்லது பிறரிடம் (கைமாறு பெறாமல்) பயிரிடக் கொடுத்துவிடுங்கள்; அல்லது பயிரிடாமல் அப்படியே விட்டுவிடுங்கள்" என்று சொன்னார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தாக (மட்டுமே) இடம்பெற்றுள்ளது;அவர் தம் தந்தையின் சகோதரர் ழுஹைர் (ரலி) அவர்கள் கூறினார்கள் எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 19 பொன் மற்றும் வெள்ளி (நாயணங்களு)க்குப் பதிலாக நிலத்தைக் குத்தகைக்கு விடுவது.**

3144 ஹன்ழலா பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடம் நிலத்தைக் குத்தகைக்கு விடுவது பற்றிக் கேட்டேன். அவர்கள், "நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்" என்று பதிலளித்தார்கள். உடனே நான், "தங்கம் மற்றும் வெள்ளிக் (காசுகளுக்)குப் பதிலாக நிலத்தைக் குத்தகைக்கு விடலாமா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "தங்கம் மற்றும் வெள்ளிக் (காசுகளுக்)குப் பதிலாக நிலத்தைக் குத்தகைக்கு விடுவதில் குற்றமில்லை" என்றார்கள்.

3145 ஹன்ழலா பின் கைஸ் அல்அன்சாரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடம் தங்கம் மற்றும் வெள்ளிக் (காசுகளுக்)குப் பதிலாக நிலத்தைக் குத்தகைக்கு விடுவது குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்: குற்றமில்லை; நபி (ஸல்) அவர்களது காலத்தில் நீரோடை ஓரத்தில் விளைபவற்றை, அல்லது வாய்க்கால் முனையில் விளைபவற்றை, அல்லது விளைச்சலில் (குறிப்பிட்ட) சிலவற்றை எங்களுக்குக் கொடுத்துவிட வேண்டும் எனும் நிபந்தனையின் பேரிலேயே நிலத்தை வாடகைக்கு விட்டுவந்தனர். இதில் இவர் பாதிப்படைவார்; அவர் தப்பித்துக்கொள்வார். அல்லது இவர் தப்பித்துக்கொள்வார்; அவர் பாதிப்படைவார். இந்தக் குத்தகை முறையைத் தவிர வேறெதுவும் அவர்களிடம் இருக்கவில்லை.
ஆதலால்தான், அது கண்டிக்கப்பட்டது. அறியப்பட்ட ஒரு பொருள் பிணையாக்கப்படுமானால் அ(தற்காக நிலத்தைக் குத்தகைக்கு விடுவ)தில் குற்றமில்லை.

3146 ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளிலேயே நாங்கள்தாம் வயல்கள் அதிகம் உடையவர்களாக இருந்தோம். நாங்கள் விளைநிலத்தில் இ(ந்தப் பகுதியில் விளைவ)து எங்களுக்குரியது; அ(ந்தப் பகுதியில் விளைவ)து அவர்களுக்குரியது என நிபந்தனையிட்டு நிலத்தைக் குத்தகைக்கு விட்டுவந்தோம். சில வேளைகளில் இந்தப்பகுதி விளைச்சலைத் தரும்; அந்தப் பகுதி விளைச்சலைத் தராது. இவ்விதம் நிபந்தனையிட்டு குத்தகைக்கு விட வேண்டாம் என்று நபி (ஸல்) அவர்கள் எங்களைத் தடுத்தார்கள்; வெள்ளிக் (காசுகளுக்)குப் பதிலாக நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை அவர்கள் தடை செய்யவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 20 விளைச்சலில் ஒரு பகுதிக்குப் பதிலாக நிலத்தைக் குத்தகைக்கு விடுவதும் ((முஸாரஆ) பணத்திற்குப் பதிலாக நிலத்தை வாடகைக்கு விடுவதும் ((முஆஜரா).**

3147 அப்துல்லாஹ் பின் அஸ்ஸாயிப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் மஅகில் (ரஹ்) அவர்களிடம் நிலத்தைக் குத்தகைக்கு விடுவது (முஸாரஆ) பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், "என்னிடம் ஸாபித் பின் அள்ளஹ்ஹாக்

(ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை (முஸாரஆ) தடை செய்தார்கள்' எனத் தெரிவித்தார்கள்" என விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதற்குத் தடைவிதித்தார்கள்' என்று (பிரதிப் பெயர்ச்சொல்லுடன்) இடம்பெற்றுள்ளது. மேலும், "நான் இப்னு மஅகில் (ரஹ்) அவர்களிடம் கேட்டேன்" என்றே (குறிப்புப் பெயருடனேயே) இடம்பெற்றுள்ளது. அப்துல்லாஹ் எனும் (அவர்களது இயற்) பெயர் இடம்பெறவில்லை.

3148 அப்துல்லாஹ் பின் அஸ்ஸாயிப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அப்துல்லாஹ் பின் மஅகில் (ரஹ்) அவர்களிடம் சென்று நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை (முஸாரஆ) பற்றிக் கேட்டோம். அதற்கு அவர்கள் கூறினார்கள்: "ஸாபித் பின் அள்ளஹ்ஹாக் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை (முஸாரஆ) தடை செய்தார்கள். பணத்திற்குப் பதிலாக நிலத்தை வாடகைக்கு விடுமாறு (முஆஜரா) உத்தரவிட்டார்கள். மேலும் "அதனால் குற்றமில்லை' என்றும் கூறினார்கள்" என்றார்கள்.

## பாடம் : 21 (பயிரிட்டுக்கொள்ள) நிலத்தை இரவலாக வழங்கல்.

3149 முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்களிடம், "என்னை ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களின் புதல்வரிடம் அழைத்துச் செல்லுங்கள். அவர்களிடம் அவர்களுடைய தந்தை ராஃபிஉ (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து (நிலக்குத்தகை கூடாது என) அறிவித்த ஹதீஸைப் பற்றிக் கேளுங்கள் (அல்லது நான் கேட்க வேண்டும்)" என்றேன். இதைக் கேட்ட தாவூஸ் (ரஹ்) அவர்கள் என்னைக் கடிந்துகொண்டார்கள்.
மேலும், அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பொதுவாக) அ(வ்வாறு நிலத்தைக் குத்தகைக்கு விடுவ)தைத் தடை செய்தார்கள் என நான் அறிந்திருந்தால், அதை நான் செய்திருக்க மாட்டேன். இது இவ்வாறிருக்க, இதைப் பற்றி மக்களில் நன்கு அறிந்தவர் (இப்னு அப்பாஸ்) என்னிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒருவர் தமது நிலத்தைக் குத்தகைக்கு விட்டு, அதிலிருந்து குறிப்பிட்ட குத்தகைத் தொகையை வாங்கிக்கொள்வதைவிட, தம் சகோதரருக்கு இரவலாக (பயன்படுத்திக் கொள்ளுமாறு அதை)க் கொடுத்துவிடுவது சிறந்ததாகும்' என்று கூறினார்கள்" என்றார்கள்.

3150 அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள், விளைச்சலில் ஒரு பகுதியைத் தமக்குத் தந்துவிட வேண்டும் எனும் நிபந்தனையின் பேரில் நிலத்தைக் குத்தகைக்கு (முகாபரா) விட்டு வந்தார்கள். நான் தாவூஸ் (ரஹ்) அவர்களிடம், "அபூஅப்திர் ரஹ்மான்! இந்த "முகாபரா'வை நீங்கள் விட்டுவிட்டால் நன்றாயிருக்கும். ஏனெனில், நபி (ஸல்) அவர்கள் "முகாபரா'வைத் தடை செய்தார்கள் என மக்கள் எண்ணுகிறார்கள்" என்று சொன்னேன்.

இதைக் கேட்ட தாவூஸ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: அம்ரே! மக்களில் இதைப் பற்றி நன்கறிந்தவர் (இப்னு அப்பாஸ்) என்னிடம், "நபி (ஸல்) அவர்கள் அதைத் தடை செய்யவில்லை. உங்களில் ஒருவர் தமது நிலத்தைக் குத்தகைக்கு விட்டு, அதிலிருந்து குறிப்பிட்ட தொகையைப் பெறுவதைவிட, தம் சகோதரருக்கு அதை இரவலாகத் தருவதே சிறந்ததாகும் என்றே கூறினார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3151 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தமது நிலத்தைக் குத்தகைக்குவிட்டு இன்னின்ன (குறிப்பிட்ட பணத்)தைப் பெறுவதைவிட, தம் சகோதரருக்கு இரவலாகத் தருவதே சிறந்ததாகும்.
இதன் அறிவிப்பாளரான இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இதுவே "ஹக்ல்' ஆகும்; அன்சாரிகளின் பேச்சு வழக்கில் இதையே "முஹாகலா' என்பர்" என்றும் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3152 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யாரிடம் (உபரியாக) நிலம் உள்ளதோ அவர் (கைமாறு கருதாமல்) தம் சகோதரருக்கு இரவலாக அதை(ப் பயிரிட)க் கொடுப்பதே சிறந்ததாகும்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

# அத்தியாயம் : 22 - கனிகள்

**பாடம் : 1 விளையும் கனிகள் மற்றும் தானியங்களில் ஒரு பகுதியைக் கொடுத்துவிட வேண்டும் எனும் நிபந்தனையின் பேரில் தோப்பைக் குத்தகைக்கு விடுவது.**

3153 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபரில் உள்ள மரங்களையும் நிலங்களையும் "அவற்றின் விளைச்சலான பழங்கள் மற்றும் தானியங்களில் பாதியை (இஸ்லாமிய அரசுக்கு)க் கொடுத்துவிட வேண்டும்' எனும் நிபந்தனையின் பேரில் கைபர்வாசிகளுடன் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3154 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபரில் உள்ள மரங்களையும் நிலங்களையும் "அவற்றின் விளைச்சலான பழங்கள் மற்றும் தானியங்களில் பாதியை (தமது அரசுக்கு)க் கொடுத்துவிட வேண்டும்' எனும் நிபந்தனையின் பேரில் கைபர்வாசிகளுக்கு வழங்கினார்கள். (இந்த வருமானத்திலிருந்தே) தம் துணைவியருக்கு வருடாந்திரச் செலவுத் தொகையாக பேரீச்சம் பழத்தில் எண்பது "வஸ்க்'குகளும் தொலி நீக்கப்படாத கோதுமையில் இருபது "வஸ்க்'குகளும் வழங்கிவந்தார்கள்.

உமர் (ரலி) அவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றபோது, (யூதர்களை நாடு கடத்திவிட்டு) கைபர் நிலங்களை (மக்களிடையே) பங்கிட்டுக் கொடுத்தார்கள்; நபி (ஸல்) அவர்களின் துணைவியருக்குத் தாம் (கைபரில்) நிலங்களையும் பாசன நீரையும் ஒதுக்கீடு செய்யவோ, அல்லது (வழக்கம் போலவே பேரீச்ச பழங்களிலும் கோதுமையிலும்) குறிப்பிட்ட "வஸ்க்'கு களுக்கு ஒவ்வோர் ஆண்டும் பொறுப்பேற்றுக்கொள்ளவோ தயார் என அறிவித்து உமர் (ரலி) அவர்கள் விருப்பமளித்தார்கள்.
(இதில்) நபியவர்களின் துணைவியர் இரு வேறு நிலைகளை மேற்கொண்டனர். அவர்களில் சிலர், நிலத்தையும் பாசன நீரையும் பெற்றுக்கொள்வதைத் தேர்ந்தெடுத்தனர். வேறுசிலர், ஒவ்வோர் ஆண்டும் குறிப்பிட்ட "வஸ்க்'குகளைப் பெற்றுக்கொள்வதைத் தேர்ந்தெடுத்தனர். நிலத்தையும் பாசன நீரையும் தேர்ந்தெடுத்தவர்களில் ஆயிஷா (ரலி) அவர்களும் ஹஃப்ஸா (ரலி) அவர்களும் அடங்குவர்.

3155 மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபரில் உள்ள மரங்களையும் நிலங்களையும் "அவற்றின் விளைச்சலான தானியங்கள் மற்றும் பழங்களில் பாதியை (இஸ்லாமிய அரசுக்கு)க் கொடுத்துவிட வேண்டும்' எனும் நிபந்தனையின் பேரில் கைபர்வாசிகளுடன் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

ஆயினும், இந்த அறிவிப்பில், "ஆயிஷா (ரலி) அவர்களும் ஹஃப்ஸா (ரலி) அவர்களும் நிலத்தையும் பாசன நீரையும் தேர்ந்தெடுத்தவர்களில் அடங்குவர்" எனும் குறிப்பு இடம் பெறவில்லை. மேலும், இதில் "உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் துணைவியருக்குத் தாம் நிலங்களை ஒதுக்கீடு செய்யத் தயார் என அறிவித்து விருப்பமளித்தார்கள்" என இடம்பெற்றுள்ளது. பாசன நீரைப் பற்றிய குறிப்பு இல்லை.

3156 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் வெற்றி கொள்ளப்பட்டபோது, யூதர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "நாங்கள் இங்கேயே தங்கி,இந்த நிலத்தில் பயிரிட்டு உழைக்கிறோம். இவற்றின் விளைச்சலான பழங்கள், தானியங்கள் ஆகியவற்றில் பாதியைப் பெற்றுக்கொள்கிறோம் (மீதிப்பாதியை அரசுக்குத் தந்துவிடுகிறோம்); இதற்கு எங்களை அனுமதிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள். அவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதன்படி நாம் விரும்பும் (காலம்)வரை நீங்கள் இங்கேயே தங்கிப் பயிரிட அனுமதிக்கிறோம்" என்று கூறினார்கள்.
மற்ற விவரங்கள் மேற்கண்ட இரு ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. மேலும், இந்த அறிவிப்பில், "கைபர் விளைச்சலில் கிடைத்த பழங்கள் (ஐந்து பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, போர்வீரர்களின்) பங்குகளுக்கேற்ப பங்கிடப்பட்டுவந்தன. ஐந்தில் ஒரு பாகத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எடுத்துவந்தார்கள்" எனும் தகவல் கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

3157 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(கைபர் வெற்றிக்குப் பின்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், கைபர் வாழ் யூதர்களிடம் "அவர்கள் தம் நிலங்களில் தமது சொந்தச் செலவில் பயிரிட்டு உழைக்க வேண்டும்; விளையும் கனிகளில் பாதியை அல்லாஹ்வின் தூதரிடம் (பொது நிதியத்துக்காக) வழங்க வேண்டும்" எனும் நிபந்தனையின் பேரில் கைபரின் பேரீச்சமரங்களையும் நிலங்களையும் ஒப்படைத்தார்கள்.

3158 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் யூதர்களையும் கிறித்தவர்களையும் "ஹிஜாஸ்' மாநிலத்திலிருந்து நாடு கடத்தினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபரை வெற்றி கொண்டபோதே அங்கிருந்த யூதர்களை வெளியேற்றிவிட விரும்பினார்கள். ஏனெனில், அந்தப் பிரதேசம் வெற்றிகொள்ளப்பட்ட பின் அது அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் முஸ்லிம்களுக்கும் உரியதாகிவிட்டிருந்தது. ஆகவேதான், யூதர்களை அங்கிருந்து வெளியேற்ற விரும்பினார்கள். இந்நிலையில், யூதர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "நாங்கள் இங்கேயே தங்கி, இந்த நிலங்களில் பயிரிட்டு உழைக்கும் பொறுப்பை ஏற்கிறோம். இவற்றின் விளைச்சலில் பாதியைப் பெற்றுக் கொள்கிறோம் (மீதியை மதீனா அரசுக்குச் செலுத்திவிடுகிறோம்); இதற்கு எங்களை அனுமதிக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்கள்.

அவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதன்படி நாம் விரும்பும்வரை நீங்கள் இங்கே தங்கிப் பயிரிட அனுமதிக்கிறோம்" என்று கூறினார்கள். ஆகவே, உமர் (ரலி) அவர்கள் தமது ஆட்சிக் காலத்தில் அந்த யூதர்களை "தைமா" "அரீஹா" (ஜெரிக்கோ) ஆகிய பகுதிகளுக்கு நாடுகடத்தி அனுப்பும்வரை அவர்கள் அங்கேயே (நிலங்களைப் பயிரிட்டு, வரி செலுத்தி) வசித்துவந்தார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 2 மரம் நடுதல், பயிர் செய்தல் ஆகியவற்றின் சிறப்பு.

3159 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முஸ்லிம் ஒருவர் ஒரு மரத்தை நட்டு வைத்து, அதிலிருந்து (அதன் இலைகள், கனிகள் ஆகியவை பறவைகளாலும் கால் நடைகளாலும்) உண்ணப்பட்டால், அதுவும் அவருக்கு ஒரு தர்மமாக அமையாமல் இருப்பதில்லை. அதிலிருந்து களவாடப்பட்டதும் அவருக்கு ஒரு தர்மமாக அமையும்; அதிலிருந்து வன விலங்குகள் உண்பதும் அவருக்கு ஒரு தர்மமாகவே அமையும். அதிலிருந்து பறவைகள் கொத்தித் தின்றதும் அவருக்கு ஒரு தர்மமாகவே அமையும்; அதில் எவரேனும் சேதம் விளைவித்தால் அதுவும் அவருக்கு ஒரு தர்மமாகவே அமையும். - இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3160 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் உம்மு முபஷ்ஷிர் அல்அன்சாரிய்யா (ரலி) அவர்களது பேரீச்சந்தோப்பிற்குச் சென்றார்கள். உம்மு முபஷ்ஷிர் (ரலி) அவர்களிடம், "இந்தப் பேரீச்ச மரங்களை நட்டுவைத்தது யார்? முஸ்லிமா அல்லது இறைமறுப்பாளரா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "இல்லை; ஒரு முஸ்லிம்தாம் (நட்டுவைத்தார்)" என்று விடையளித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "முஸ்லிம் ஒருவர் மரமொன்றை நட்டுவைத்து, அல்லது விதையொன்றை விதைத்துப் பயிர் செய்து அதிலிருந்து (வரும் விளைச்சலை அல்லது கனிகளை) ஒரு மனிதனோ கால்நடையோ அல்லது (உயிரினம்) ஏதேனும் ஒன்றோ உண்டால், அது அவருக்கு ஒரு தர்மமாகவே அமையும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3161 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமான மனிதர் ஒரு மரத்தை நட்டுவைத்து, அல்லது விதை விதைத்து விவசாயம் செய்து, அதிலிருந்து ஒரு வனவிலங்கோ அல்லது ஒரு பறவையோ அல்லது வேறு ஏதேனும் ஒன்றோ உண்டால், அதனால் அவருக்கு ஒரு (தர்மம் செய்ததற்கான) நன்மை கிடைக்காமல் இருப்பதில்லை.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3162 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் உம்மு மஅபத் (ரலி) அவர்களது பேரீச்சந்தோப்புக்குச் சென்றார்கள். அவரிடம், "உம்மு மஅபதே! இந்தப் பேரீச்சமரங்களை நட்டு வைத்தது யார்? முஸ்லிமா அல்லது இறை மறுப்பாளரா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "இல்லை;

ஒரு முஸ்லிம்தாம் (நட்டு வைத்தார்)" என்று விடையளித்தார். நபி (ஸல்) அவர்கள், "முஸ்லிம் ஒரு மரத்தை நட்டுவைத்து, அதிலிருந்து ஒரு மனிதனோ அல்லது ஒரு கால்நடையோ அல்லது ஒரு பறவையோ உண்டால், மறுமைநாள்வரை அது அவருக்கு ஒரு தர்மமாகவே அமையும்" என்று கூறினார்கள்.

3163 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அம்ருந் நாகித் (ரஹ்) அவர்கள், அம்மார் (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் அறிவிப்பிலும், அபூகுறைப் (ரஹ்) அவர்கள் அபூமுஆவியா (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் அறிவிப்பிலும் "உம்மு முபஷ்ஷிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்" என்று இடம் பெற்றுள்ளது.
முஹம்மத் பின் ஃபுளைல் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்களின் துணைவியார் கூறினார்" என இடம்பெற்றுள்ளது.
அபூமுஆவியா (ரஹ்) அவர்களிடமிருந்து இப்னு இஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில் சில நேரங்களில் "உம்மு முபஷ்ஷிர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து கூறினார்கள்" எனவும், வேறு சில நேரங்களில் அவ்வாறு (உம்மு முபஷ்ஷிர் பெயர்) கூறாமலும் இடம்பெற்றுள்ளது.
இவர்கள் அனைவருமே மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே அறிவித்துள்ளனர்.

3164 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முஸ்லிம் ஒருவர் ஒரு மரத்தை நட்டு வைத்து, அல்லது விதை விதைத்து விவசாயம் செய்து, அதிலிருந்து (அதன் விளைச்சலை அல்லது கனிகளை) ஒரு பறவையோ அல்லது ஒரு மனிதனோ அல்லது ஒரு பிராணியோ உண்டால்,அதன் காரணத்தால் ஒரு தர்மம் (செய்ததற்கான பிரதிபலன்) அவருக்குக் கிடைக்காமல் இராது.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3165 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிப் பெண்களில் ஒருவரான உம்மு முபஷ்ஷிர் (ரலி) அவர்களது பேரீச்சந் தோப்பிற்குச் சென்றார்கள். "இந்தப் பேரீச்ச மரங்களை நட்டவர் யார்? முஸ்லிமா, அல்லது இறைமறுப்பாளரா?" என்று கேட்டார்கள். மக்கள், "ஒரு முஸ்லிம்தான் (நட்டுவைத்தார்)" என்று கூறினர்.
மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 3 சேதமடைந்த பழங்களுக்கான கிரயத்தைத் தள்ளுபடி செய்தல்.

3166 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீ உன் சகோதரரிடம் (உனது மரத்திலுள்ள) பழங்களை விற்றுவிட, (அவர் பழங்களைப் பறிப்பதற்கு முன்) அவற்றுக்குச் சேதம் ஏதும் ஏற்பட்டால், அவரிடமிருந்து (கிரயம்) எதையும்

பெறுவதற்கு உனக்கு அனுமதி இல்லை;எந்த உரிமையுமின்றி உன் சகோதரரின் பொருளை நீ எந்த அடிப்படையில் எடுத்துக்கொள்ள முடியும்?
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3167 ஹுமைத் பின் அபீஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள், மரத்திலுள்ள பேரீச்சங்கனிகள் பக்குவம் அடையாதவரை அவற்றை விற்பதற்குத் தடை விதித்தார்கள்" என்று கூறினார்கள். நாங்கள் அனஸ் (ரலி) அவர்களிடம் "பக்குவமடைதல் என்றால் என்ன?" என்று கேட்டோம். "அது சிவப்பு நிறத்தையும் மஞ்சள் நிறத்தையும் அடைவதாகும்" என்று கூறிவிட்டு, "அல்லாஹ் மரத்திலுள்ள கனிகளைத் தடுத்துவிட்டால், நீ எந்த அடிப்படையில் உன் சகோதரரின் பொருளை எடுத்துக்கொள்ள முடியும் சொல்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மரத்திலுள்ள கனிகள் பக்குவமடையாத வரை அவற்றை விற்பதற்குத் தடை விதித்தார்கள். மக்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "பக்குவமடைதல் என்றால் என்ன?" என்று கேட்டார்கள். "அது சிவப்பு நிறத்தை அடைவதாகும்" என்றார்கள். மேலும், "அல்லாஹ் மரத்திலுள்ள கனிகளைத் தடுத்துவிட்டால், உன் சகோதரரின் பொருள் எந்த அடிப்படையில் உனக்கு அனுமதிக்கப்பட்டதாக ஆகும்?" என்று கேட்டார்கள்.

3168 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ் அம்மரங்களில் கனிகளைத் தராவிட்டால், எந்த அடிப்படையில் உங்களில் ஒருவர், தம் சகோதரரின் பொருளை அனுமதிக்கப்பட்டதாக ஆக்கிக்கொள்வார்?" என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

3169 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், சேதமடைந்த பழங்களுக்கான கிரயத்தைத் தள்ளுபடி செய்துவிடுமாறு உத்தரவிட்டார்கள். - இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 4 (சிரமப்படுவோரின்) கடனைத் தள்ளுபடி செய்வது விரும்பத்தக்கதாகும்.

3170 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் பழங்களை விலைக்கு வாங்கிய ஒருவர் (நஷ்டமடைந்து) பாதிக்கப்பட்டார். அவருக்குக் கடன் அதிகமாகிவிட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவருக்குத் தர்மம் செய்யுங்கள்" என்று கூறினார்கள். அவ்வாறே மக்கள் அவருக்குத் தர்மம் செய்தனர். அது அவரது கடனை அடைக்கப் போதுமான அளவுக்குத் தேறவில்லை. எனவே, அவருக்குக் கடன்

கொடுத்தவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அவரிடமிருந்து) கிடைப்பதைப் பெற்றுக்கொள்ளுங்கள். அதைத் தவிர உங்களுக்கு வேறெதுவுமில்லை" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3171 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது வீட்டின்) வாசலருகே சச்சரவிட்டுக்கொள்ளும் (இருவரின்) சப்தத்தைக் கேட்டார்கள். அவ்விருவரின் குரல்கள் உயர்ந்தன. ஒருவர் மற்றவரிடம் ஏதோ ஒரு (கடன்) விஷயத்தில் தள்ளுபடி செய்யுமாறும் மென்மையாக நடந்துகொள்ளுமாறும் கேட்டுக்கொண்டிருந்தார். அதற்கு மற்றவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (அவ்வாறு) செய்யமாட்டேன்" என்று கூறிக் கொண்டிருந்தார். அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்து, "நல்லறத்தைச் செய்யமாட்டேன் என அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுச் சொன்னவர் எங்கே?" என்று கேட்டார்கள். அந்த மனிதர், "நான்தான் அல்லாஹ்வின் தூதரே! (நான் என் சத்தியத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்கிறேன்;) அவர் விரும்பியது எதுவானாலும் (அது) அவருக்குக் கிடைக்கும்" என்று கூறினார்.

3172 கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் எனக்கு அப்துல்லாஹ் பின் அபீ ஹத்ரத் (ரலி) அவர்கள் தர வேண்டியிருந்த ஒரு கடனை (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் வைத்துத் திருப்பிச் செலுத்தும்படி கேட்டேன். அப்போது (எங்கள்) இருவரின் குரல்களும் உயர்ந்தன. எங்கள் குரலைத் தமது வீட்டிலிருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டுவிட்டார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் இருவரையும் நோக்கிப் புறப்பட்டுவந்தார்கள். தமது அறையின் திரையை விலக்கி என்னை "கஅபே!' என்று அழைத்தார்கள்.
நான், "இதோ வந்தேன், அல்லாஹ்வின் தூதரே!" என்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை நோக்கி, "பாதிக் கடனைத் தள்ளுபடி செய்துவிடு" என்று தமது கரத்தால் சைகை செய்தார்கள். "அவ்வாறே செய்துவிட்டேன், அல்லாஹ்வின் தூதரே!" என்று நான் கூற, (அப்துல்லாஹ் பின் அபீஹத்ரத் (ரலி) அவர்களைப் பார்த்து) "நீங்கள் எழுந்து சென்று அவரது (மீதி) கடனை அடையுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

3173 மேற்கண்ட ஹதீஸ் கஅப் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "எனக்கு இப்னு அபீஹத்ரத் (ரலி) அவர்கள் தர வேண்டிய கடனைத் திருப்பிச் செலுத்தும்படி கேட்டேன்' என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
- கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அபீஹத்ரத் அல் அஸ்லமீ (ரலி) அவர்கள் எனக்குப் பணம் தர வேண்டியிருந்தது. எனவே, அவரைச் சந்தித்து அவரை (நகரவிடாமல்) பிடித்துக்

கொண்டேன். எங்கள் குரல்கள் உயரும் அளவிற்கு நாங்கள் பேசிக்கொண்டோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களைக் கடந்து சென்றார்கள். அப்போது அவர்கள் "கஅபே!' என்று என்னை அழைத்து, பாதிக்கடனைத் தள்ளுபடி செய்துவிடு என்பதைப் போன்று தமது கரத்தால் சைகை செய்தார்கள். ஆகவே, அவர் தர வேண்டியிருந்த கடனில் பாதியை மட்டும் பெற்றுக்கொண்டு, மீதிப்பாதியை (தள்ளுபடி செய்து)விட்டேன்.

## பாடம் : 5 ஒரு பொருளை (கடனாக) வாங்கியவர் திவாலாகிவிட்ட நிலையில், அவரிடம் அப்பொருள் இருப்பதைக் கண்டால் விற்றவர் அதைத் திரும்பப் பெற உரிமை உண்டு.

3174 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர், திவாலாகிவிட்ட ஒரு மனிதரிடம் (ஏற்கெனவே தாம் கடனாக விற்ற) தமது பொருள் அப்படியே இருப்பதைக் காண்பாராயின், அதை எடுத்துக்கொள்ள அவருக்கே அதிக உரிமை உண்டு.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "எந்த மனிதர் திவாலானவர் என அறிவிக்கப்பட்டு விட்டாரோ...' என ஹதீஸ் தொடங்குகிறது.

3175 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
திவாலாகிவிட்ட மனிதரிடம் ஏற்கெனவே விற்கப்பட்ட பொருள் பயன்படுத்தப்படாமல் அப்படியே காணப்பெற்றால், அது அதை விற்ற அதன் உரிமையாளருக்கே உரியதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3176 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர், திவாலான ஒரு மனிதரிடம் (தாம் ஏற்கெனவே கடனாக விற்ற) தமது பொருளை அப்படியே காண்பாராயின்,அவரே அதற்கு அதிக உரிமை உடையவர் ஆவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அவரே மற்ற கடன்காரர்களை விட அதிக உரிமை உடையவர் ஆவார்" என்று இடம்பெற்றுள்ளது.

3177 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் திவாலான ஒரு மனிதரிடம் (தாம் ஏற்கெனவே கடனாக விற்ற) தமது விற்பனைச் சரக்கை அப்படியே காண்பாராயின், (மற்றவர்களைவிட) அவரே அதற்கு அதிக உரிமை உடையவர் ஆவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 6 கடனை அடைக்கச் சிரமப்படுபவருக்கு அவகாசம் அளிப்பதன் சிறப்பு.

3178 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுக்கு முன் வாழ்ந்த மக்களில் ஒரு மனிதரின் உயிரை வானவர்கள் வரவேற்று, அவரிடம், "நீர் (உமது வாழ்நாளில்) ஏதேனும் நற்செயல் புரிந்திருக்கிறீரா?" என்று கேட்டார்கள்.அதற்கு அந்த மனிதர் "இல்லை' என்றார். வானவர்கள் "நன்கு நினைவு படுத்திப்பார்" என்று கூறினர். அவர் (யோசித்துவிட்டு) "நான் மக்களுக்குக் கடன் கொடுத்து வந்தேன். அப்போது (கடனை அடைக்க முடியாமல்) சிரமப்படுவோருக்கு அவகாசம் அளிக்கும்படியும், வசதியுடையோருக்கு (அவர்கள் கடனைத் திருப்பிச் செலுத்த தாமதம் ஏற்பட்டால்) கண்டுகொள்ளாமல் விட்டுவிடும்படியும் என் ஊழியர்களுக்குக் கட்டளையிட்டு வந்தேன்" என்று கூறினார். அல்லாஹ், "அந்த மனிதரின் குற்றங்குறைகளை கண்டு கொள்ளாமல் (மன்னித்து)விடுங்கள்" என்று (வானவர்களிடம்) கூறினான்.
இதை ஹுதைஃபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3179 ரிப்ஈ பின் ஹிராஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(நபித்தோழர்களான) ஹுதைஃபா (ரலி) அவர்களும் அபூமஸ்ஊத் (ரலி) அவர்களும் ஓரிடத்தில் சந்தித்துக்கொண்டனர். அப்போது ஹுதைஃபா (ரலி) அவர்கள், "(முந்தைய காலத்தில் வாழ்ந்த) ஒரு மனிதர் (இறந்த பின்) தம் இறைவனைச் சந்தித்தார். அப்போது அவரிடம் இறைவன், "நீ (ஏதேனும்) நற்செயல் புரிந்திருக்கிறாயா?" என்று கேட்டான். அவர் "எந்த நல்லறமும் செய்ய வில்லை. எனினும், நான் பொருளாதார வசதியுடைய ஒரு மனிதனாக இருந்தேன். எனவே, (மக்களுக்கு நான் கொடுத்துவந்த) பணத்தை (திருப்பித் தருமாறு) மக்களிடம் கோருவேன். அப்போது (என்னிடமிருந்து கடன் வாங்கியவர் கொடுக்கும், அவரால்) இயன்ற தொகையைப் பெற்றுக்கொள்வேன்; இயலாத தொகையைத் தள்ளுபடி செய்துவிடுவேன்' என்று கூறினார்.
உடனே இறைவன், "என் அடியானின் தவறுகளைத் தள்ளுபடி செய்துவிடுங்கள்' என்று (வானவர்களிடம்) கூறினான்"என்றார்கள். அதற்கு அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் "இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3180 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் இறந்த பின் சொர்க்கத்திற்குச் சென்றார். அப்போது அவரிடம், "நீ என்ன நற்செயல் புரிந்துள்ளாய்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "நான் மக்களிடம் கொடுக்கல் வாங்கல் செய்துவந்தேன். அப்போது சிரமப்படுவோருக்கு அவகாசம் அளிப்பேன். காசு விஷயத்தில் பெருந்தன்மையுடன் நடந்து கொள்வேன்" என்று கூறினார். அவருடைய பாவங்கள் மன்னிக்கப்பட்டன.
இதை ஹுதைஃபா (ரலி) அவர்கள் அறிவித்தார்கள். அப்போது அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் "இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நானும் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

3181 ஹுதைஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் அடியார்களில் ஒருவர் (இறந்த பின்) அல்லாஹ்விடம் கொண்டு வரப்பட்டார். அவரிடம் அல்லாஹ், "உலகத்தில் நீ என்ன நற்செயல் புரிந்தாய்?" என்று கேட்டான். (அல்லாஹ்விடம் அவர்கள் எந்தச் செய்தியையும் மறைக்க முடியாது.) அதற்கு அந்த அடியார், "இறைவா! உன் செல்வத்தை எனக்கு நீ வழங்கினாய். அதை வைத்து நான் மக்களிடம் கொடுக்கல் வாங்கல் செய்துவந்தேன். அப்போது பெருந்தன்மையுடன் நடந்து கொள்வதே எனது இயல்பாக இருந்தது. வசதியுடையவரிடம் மென்மையாக நடந்து கொள்வேன்: சிரமப்படுபவருக்கு அவகாசம் அளிப்பேன்" என்று சொன்னார்.
அதற்கு அல்லாஹ், "இ(வ்வாறு பெருந்தன்மையுடன் நடப்ப)தற்கு உன்னைவிட நானே மிகவும் தகுதியுடையவன். (எனவே,) என் அடியானின் தவறுகளைத் தள்ளுபடி செய்யுங்கள்" என்று (வானவர்களிடம்) கூறினான்.
(ஹுதைஃபா (ரலி) அவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்ட) உக்பா பின் ஆமிர் அல்ஜுஹனீ (ரலி) அவர்களும் அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) அவர்களும், "இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வாயிலிருந்து நாங்கள் செவியுற்றோம்" என்று கூறினர்.

3182 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுக்கு முன் வாழ்ந்த மக்களில் ஒரு மனிதர் (இறந்த பின்) விசாரணை செய்யப்பட்டார். அவரிடம் (அவரது வினைச்சீட்டில்) எந்த நற்செயலும் காணப்படவில்லை. எனினும், அவர் மக்களுடன் கலந்துறவாடுபவராய் இருந்தார். அவர் வசதியுடையவராக இருந்தார். தம் பணியாட்களிடம், சிரமப்படுவோரின் கடனைத் தள்ளுபடி செய்துவிடுமாறு கூறிவந்தார். அல்லாஹ், "இ(வ்வாறு தள்ளுபடி செய்வ)தற்கு அவரை விட நாமே மிகவும் தகுதியுடையோர். (எனவே,)அவருடைய தவறுகளைத் தள்ளுபடி செய்துவிடுங்கள்" என்று (வானவர்களிடம்) கூறினான்.-இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3183 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
((முற்காலத்தில்) ஒரு மனிதர் மக்களுக்குக் கடன் கொடுத்து (உதவி) வந்தார். (அதை வசூலிக்கச் சென்ற)தம் ஊழியரிடம், "(வசதியின்றிச்) சிரமப்படுபவரிடம் நீர் சென்றால் (அவரைக் கண்டுகொள்ளாமல்) மன்னித்து(க் கடனைத் தள்ளுபடி செய்து)விடு. அல்லாஹ்வும் நம்மை(க் கண்டுகொள்ளாமல்) மன்னித்துவிடக்கூடும்" என்று சொல்லி வந்தார். அவர் (இறந்த பின்) அல்லாஹ்வைச் சந்தித்தபோது (அவருடைய பிழைகளைப் பொறுத்து) அவரை அல்லாஹ் மன்னித்துவிட்டான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3184 அப்துல்லாஹ் பின் அபீகத்தாதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) அபூகத்தாதா (ரலி) அவர்கள், தமக்குக் கடன் தர வேண்டிய ஒருவரைத் தேடினார்கள். அவர் தலைமறைவாகிவிட்டார். பின்னர் அவரைக் கண்டபோது அவர், "நான்

(வசதியின்றி) சிரமப்படுபவன்" என்று கூறினார். அதற்கு அபூகத்தாதா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீது சத்தியமாகவா?" என்று கேட்டார்கள். அவர் "அல்லாஹ்வின் மீது சத்தியமாகத்தான்" என்றார். அபூகத்தாதா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மறுமை நாளின் துயரங்களிலிருந்து அல்லாஹ் தம்மைக் காப்பாற்ற வேண்டுமென விரும்புகின்றவர், (கடனை அடைக்க முடியாமல்) சிரமப்படுபவருக்கு அவகாசம் அளிக்கட்டும். அல்லது கடனைத் தள்ளுபடி செய்துவிடட்டும்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 7 வசதியுள்ளவர் கடனை இழுத்தடிப்பது தடை செய்யப்பட்டுள்ளது; கடனை மாற்றிவிடுவது செல்லும்; செல்வரிடம் கடன் மாற்றிவிடப்பட்டால் அதை ஏற்பது விரும்பத்தக்கதாகும்.**

3185 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வசதியுள்ளவர் கடனை இழுத்தடிப்பது அநியாயமாகும். உங்களில் ஒருவரது கடன் வசதியுள்ள (மற்றொரு)வர்மீது மாற்றிவிடப்பட்டால், அவர் அதை ஏற்கட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 8 காடுகளில் உள்ள உபரி நீரை – அது புல் மேய்ச்சலுக்குத் தேவைப்படும் நிலையில் –விற்பதும், அதைப் பிறருக்கு வழங்க மறுப்பதும் தடை செய்யப்பட்டுள்ளன; பொலி காளைக்குக் கட்டணம் பெறுவதும் தடை செய்யப்பட்டுள்ளது.**

3186 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தேவைக்கு மேல் எஞ்சியுள்ள தண்ணீரை விற்பதற்குத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3187 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பொலி ஒட்டகத்தை வாடகைக்கு விடுவதற்கும், விவசாயம் செய்வதற்காகத் தண்ணீரையும் நிலத்தையும் (அக்கால முறைப்படி) குத்தகைக்கு விடுவதற்கும் இவ்விரண்டுக்குமே தடை விதித்தார்கள்.

3188 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தேவைக்கு மேல்) எஞ்சியுள்ள தண்ணீரைத் தடுக்கலாகாது. (அவ்வாறு தடுத்தால், அதைச் சுற்றியுள்ள) புற்பூண்டுகளை (மேயவிடாமல் கால்நடைகளை)த் தடுத்ததாகிவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3189 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தேவைக்கு மேல்) எஞ்சியுள்ள தண்ணீரைத் தடுக்காதீர்கள். (அவ்வாறு தடுத்தால், அப்பகுதியில் தேவைக்கு மேல்) எஞ்சியுள்ள புற்பூண்டுகளைத் தடுத்தவர்களாக நீங்கள் ஆகிவிடுவீர்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3190 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(தேவைக்கு மேல்) எஞ்சியுள்ள தண்ணீரை விற்கலாகாது. (அவ்வாறு விற்றால், அதைச் சுற்றியுள்ள) புற்பூண்டுகளை (கால்நடைகளுக்குத் தராமல்) விற்றதாக ஆகிவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 9 நாய் விற்ற காசு, சோதிடரின் தட்சணை, விபசாரியின் வருமானம் ஆகியவை தடை செய்யப்பட்டுள்ளன; மேலும்,பூனையை விற்பதும் தடை செய்யப்பட்டுள்ளது.**

3191 அபூமஸ்ஊத் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாய் விற்ற காசு, விபசாரியின் வருமானம், சோதிடரின் தட்சணை ஆகியவற்றுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3192 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சம்பாத்தியங்களிலேயே மோசமானவை, விபசாரியின் வருமானம், நாய் விற்ற காசு, குருதி உறிஞ்சி எடுப்பவர் பெறும் கூலி ஆகியவையே ஆகும்.
இதை ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3193 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நாய் விற்ற காசு அசுத்தமானதாகும்; விபசாரியின் வருமானம் அசுத்தமானதாகும்; குருதி உறிஞ்சி எடுப்பவரின் சம்பாத்தியம் அசுத்தமானதாகும்.
இதை ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3194 அபுஸ்ஸுபைர் முஹம்மத் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் (ரலி) அவர்களிடம் நாய் மற்றும் பூனை விற்ற காசைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் "நபி (ஸல்) அவர்கள் அவற்றைக் கண்டித்தார்கள்" என விடையளித்தார்கள்.

**பாடம் : 10 நாய்களைக் கொன்றுவிடுமாறு வந்துள்ள கட்டளையும், பின்னர் அது மாற்றப்பட்ட விவரமும், வேட்டைக்காகவோ விவசாயப் பண்ணை அல்லது கால்நடைப் பாதுகாப்புக் காகவோ அல்லாமல் வேறு நோக்கங்களுக்காக நாய் வளர்ப்பது கூடாது என்ற விவரமும்.**

3195 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாய்களைக் கொல்லும்படி உத்தரவிட்டார்கள்.

3196 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாய்களைக் கொல்லும்படி உத்தரவிட்டார்கள். அதற்காக மதீனாவின் பல பகுதிகளுக்கு ஆட்களை அனுப்பினார்கள்.

3197 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாய்களைக் கொல்லும்படி உத்தரவிட்டார்கள்; உடனே நாங்கள் மதீனாவிற்குள்ளேயும் அதன் சுற்று வட்டாரங்களிலும் பரவிச் சென்று, ஒரு நாயையும் விடாமல் அனைத்தையும் கொன்றோம். கிராமவாசிப் பெண்ணைப் பின்தொடர்ந்து செல்லும் நாயையும் நாங்கள் கொன்றோம்.

3198 அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், வேட்டை நாயையும் ஆடுகள் மற்றும் கால்நடைகளைக் காவல் காக்கும் காவல் நாயையும் தவிர மற்ற நாய்களைக் கொல்லும்படி உத்தரவிட்டார்கள்" என்றார்கள். அப்போது இப்னு உமர் (ரலி) அவர்களிடம், "அபூ ஹுரைரா (ரலி) அவர்கள், "விவசாயப் பண்ணைகளைப் பாதுகாக்கும் நாய்களையும் தவிர' என்று கூறிவருகிறார்களே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள், "அபூஹுரைரா (ரலி) அவர்களுக்குப் பண்ணை நிலம் இருக்கிறது (எனவே, அதைப் பற்றி அவர் நன்கறிவார்)" என்று கூறினார்கள்.

3199 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாய்களைக் கொல்லும்படி எங்களுக்கு உத்தரவிட்டார்கள். அதையடுத்து,கிராமத்திலிருந்து ஒரு பெண் (மதீனாவை நோக்கி) தனது நாயுடன் வந்தால், அதையும் நாங்கள் கொன்றோம். பின்னர் நபி (ஸல்) அவர்கள் நாய்களைக் கொல்வதற்குத் தடை விதித்தார்கள். மேலும், "கண்களுக்கு மேலே இரு வெண் புள்ளிகள் உள்ள கன்னங்கரிய நாயை (மட்டும்) கொல்லுங்கள். ஏனெனில், அது ஷைத்தான் ஆகும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3200 அப்துல்லாஹ் பின் அல்முஃகஃப்பல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஆரம்பத்தில்) நாய்களைக் கொல்லும்படி உத்தரவிட்டார்கள். பின்பு, "அவர்களுக்கும் நாய்களுக்கும் என்ன நேர்ந்தது (அவற்றைக் கொல்கிறார்களே)?" என்று கூறினார்கள். பின்னர் வேட்டை நாய்களுக்கும் ஆடுகளைக் காவல்காக்கும் நாய்களுக்கும் அனுமதியளித்தார்கள்.

3201 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அல்முஃகஃப்பல் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், முஹம்மத் பின் ஹாத்திம் (ரஹ்) அவர்கள், யஹ்யா பின் சயீத் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கும் அறிவிப்பில், "ஆடுகளைக் காவல் காக்கும் நாய்களுக்கும் வேட்டை நாய்களுக்கும் விவசாயப் பண்ணைகளைக் காவல் காக்கும் நாய்களுக்கும் அனுமதியளித்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

3202 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் நாய் வளர்க்கிறாரோ அவருடைய நற்செயல்களி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் இரண்டு "கீராத்'கள் (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்; கால் நடைகளைக் காவல் காக்கும் நாயையும் வேட்டைக்கான பயிற்சி அளிக்கப்பட்ட நாயையும் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3203 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் நாய் வளர்க்கிறாரோ அவருடைய (நற்செயல்களின்) நன்மையிலிருந்து ஒவ்வொரு நாளும் இரண்டு "கீராத்'கள் (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்; வேட்டை நாயையும் கால்நடைகளைக் காவல் காக்கும் நாயையும் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3204 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் நாய் வளர்க்கிறாரோ அவருடைய நற்செயல்களி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் இரண்டு "கீராத்'கள் (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்; வேட்டை நாயையும் கால்நடைகளைக் காவல் காக்கும் நாயையும் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3205 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் நாய் வளர்க்கிறாரோ அவருடைய நற்செயல்களி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு "கீராத்' (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்; கால்நடைகளைக் காவல் காக்கும் நாயையும் வேட்டை நாயையும் தவிர.
இதன் அறிவிப்பாளரான அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் "விளைநிலங்களைப் பாதுகாக்கும் நாயைத் தவிர" என்றும் கூறினார்கள்.- இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3206 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் நாய் வளர்க்கிறாரோ அவருடைய நற்செயல்களி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் இரண்டு "கீராத்'கள் (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்; வேட்டை நாயையும் கால்நடைகளைக் காவல் காக்கும் நாயையும் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இதை இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கும் சாலிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் "விளைநிலங்களைப் பாதுகாக்கும் நாயையும் தவிர' என்று கூறிவந்தார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்கள் விளைநிலங்கள் உடையவராய் இருந்தார்கள்.

3207 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எந்த வீட்டார் (தமது இல்லத்தில்) நாய் வளர்க்கின்றனரோ அவர்களுடைய நற்செயல்களி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் இரண்டு "கீராத்'கள் (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்; கால்நடைகளைக் காவல் காக்கும் நாயையும் வேட்டை நாயையும் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3208 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் நாய் வளர்க்கிறாரோ அவருடைய (நற்செயல்களின்) நன்மையிலிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு "கீராத்' (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்; விளைநிலங்கள், ஆடுகள் ஆகியவற்றைக் காவல் காக்கும் நாய்களையும் வேட்டை நாய்களையும் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3209 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் நாய் வளர்க்கிறாரோ அவருடைய (நற்செயல்களின்) நன்மையிலிருந்து ஒவ்வொரு நாளும் இரண்டு "கீராத்'கள் (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்; வேட்டை நாயினாலோ அல்லது கால்நடைகளைக் காவல்காக்கும் நாயினாலோ (விளை) நிலங்களைப் பாதுகாக்கும் நாயினாலோ அல்ல.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபுத்தாஹிர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "(விளை)நிலங்களைப் பாதுகாக்கும் நாயினாலோ' என்பது இடம்பெறவில்லை.

3210 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் நாய் வளர்க்கிறாரோ அவருடைய நன்மையிலிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு "கீராத்' (கணிசமான) அளவுக்குக் குறைந்து விடும்; கால்நடைகளைக் காவல் காக்கும் நாயையும், வேட்டை நாயையும், விவசாயப் பண்ணைகளைக் காவல் காக்கும் நாயையும் தவிர.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இப்னு உமர் (ரலி) அவர்களிடம் அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் கூற்று எடுத்துரைக்கப்பட்டபோது அவர்கள், "அபூ ஹுரைரா (ரலி) அவர்களுக்கு அல்லாஹ் அருள்புரிவானாக! அவர்கள் விளைநிலங்கள் உடையவராக இருந்தார்கள். (எனவே, அதைப் பற்றி அவர்களுக்கு நன்கு தெரியும்)" என்றுரைத்தார்கள்.

3211 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் நாய் வளர்க்கிறாரோ அவருடைய நற்செயல்களி(ன் நன்மைகளி)லிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு "கீராத்' (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்; விளைநிலங்களையும் கால்நடைகளையும் காவல் காக்கும் நாய்களைத் தவிர.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3212 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் வேட்டை நாய், ஆடுகளைக் காவல்காக்கும் நாய் அல்லாமல் வேறு நாய்களை வளர்க்கிறாரோ அவருடைய நற்செயல்களி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு "கீராத்' (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3213 சாயிப் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஷனூஆ குலத்தைச் சேர்ந்த நபித் தோழர்களில் ஒருவரான சுஃப்யான் பின் அபீஸுஹைர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "விளைநிலங்கள் மற்றும் கால்நடைகளைக் காவல்காக்கும் தேவையேதுமின்றி யார் நாய் வளர்க்கிறாரோ அவருடைய நற்செயல்களி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு "கீராத்' (கணிசமான) அளவுக்குக் குறைந்துவிடும்' என்று கூறியதை நான் கேட்டேன்" என்றார்கள்.
நான், "இதை நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்; இந்தப் பள்ளிவாசலின் அதிபதி மீதாணையாக!" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சாயிப் பின் யஸீத் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "எங்களிடம் ஷனூஆ குலத்தைச் சேர்ந்த சுஃப்யான் பின் அபீஸுஹைர் (ரலி) அவர்கள் ஒரு தூதுக்குழுவில் வந்திருந்தார்கள். அப்போது அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்..." என (மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று) அறிவித்தார்கள் என்று காணப்படுகிறது.

## பாடம் : 11 குருதி உறிஞ்சி எடுப்பதற்காக ஊதியம் பெறுவது அனுமதிக்கப்பட்டதாகும்.

3214 ஹுமைத் அத்தவீல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் குருதி உறிஞ்சி எடுப்பவரின் வருமானம் பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குருதி உறிஞ்சி எடுக்கச் செய்துள்ளார்கள். அவர்களுக்கு ("பனூ பயாளா' குலத்தாரின் அடிமையான) அபூதைபா (நாஃபிஉ) என்பவர் குருதி உறிஞ்சி எடுத்தார். அவருக்கு ஊதியமாக இரண்டு "ஸாஉ' உணவுப் பொருட்கள் கொடுக்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்

உத்தரவிட்டார்கள். மேலும், அபூதைபாவின் உரிமையாளர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேசியதையடுத்து (அவர்களுக்கு அவர் செலுத்த வேண்டிய வரியை) உரிமையாளர்கள் தள்ளுபடி செய்தனர்.
மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(அரபுகளே!) நீங்கள் எவற்றால் சிகிச்சை பெறுகிறீர்களோ அவற்றிலெல்லாம் சிறந்தது, குருதி உறிஞ்சி எடுப்பதாகும் என்றோ, அது உங்களின் சிறந்த சிகிச்சைகளில் உள்ளதாகும்" என்றோ கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3215 மேற்கண்ட ஹதீஸ் ஹுமைத் அத்தவீல் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அனஸ் (ரலி) அவர்களிடம் குருதி உறிஞ்சி எடுப்பவரின் வருமானம் பற்றிக் கேட்கப் பட்டது" என்று ஹதீஸ் ஆரம்பமாகி, "மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீங்கள் எவற்றால் சிகிச்சை பெறுகிறீர்களோ அவற்றிலெல்லாம் சிறந்தது குருதி உறிஞ்சி எடுப்பதும் வெண்கோஷ்டமும்தான். உங்கள் குழந்தைகளை (அவர்களது அடிநாக்கு அழற்சியைப் போக்க தொண்டையில்) குத்தித் துன்புறுத்தாதீர்கள் என்று கூறினார்கள்" என ஹதீஸ் முடிகிறது.

3216 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் குருதி உறிஞ்சி எடுக்கும் எங்கள் அடிமை (ஊழியர்) ஒருவரை அழைத்து வரச்செய்து, தமக்குக் குருதி உறிஞ்சி எடுக்கச் செய்தார்கள். அவருக்கு ஒரு "ஸாஉ' அல்லது ஒரு "முத்'து அல்லது இரண்டு "முத்'து (அளவுக்கு உணவுப் பொருட்களை ஊதியமாகக்) கொடுக்குமாறு உத்தரவிட்டார்கள்; அவர் சம்பந்தமாக (அவருடைய உரிமையாளர்களிடம்) பேசினார்கள். அதையடுத்து அவர் செலுத்த வேண்டியிருந்த வரி குறைக்கப்பட்டது.

3217 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குருதி உறிஞ்சி எடுத்துக்கொண்டார்கள். குருதி உறிஞ்சி எடுப்பவருக்கு அவருடைய ஊதியத்தைக் கொடுத்தார்கள். மேலும், தமது மூக்கில் (சொட்டு) மருந்து விட்டுக்கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3218 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"பனூ பயாளா' குலத்தாரின் அடிமை ஒருவர் நபி (ஸல்) அவர்களுக்குக் குருதி உறிஞ்சி எடுத்தார். அவருக்குரிய ஊதியத்தை நபி (ஸல்) அவர்கள் கொடுத்தார்கள். அவருடைய உரிமையாளரிடம் பேசி, அவர் செலுத்த வேண்டியிருந்த வரியையும் குறைக்கச் செய்தார்கள். அது (அதாவது குருதி உறிஞ்சி எடுப்பதற்குக் கூலி பெறுவது), தடை செய்யப்பட்டதாக இருந்தால், அவருக்கு நபி (ஸல்) அவர்கள் (ஊதியம்) கொடுத்திருக்கமாட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 12 மதுபான வியாபாரம் தடை செய்யப்பட்டுள்ளது.

3219 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
((முழு மதுவிலக்கு வருவதற்கு முன்பு ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவில் (மக்களுக்கு) உரையாற்றினார்கள். அப்போது "மக்களே! அல்லாஹ் மது(விலக்கு) குறித்து மறைமுகமாகக் குறிப்பிடுகின்றான். விரைவில் அது தொடர்பாக ஓர் ஆணையை அல்லாஹ் அருளக்கூடும். எனவே, தம்மிடம் மதுவில் ஏதேனும் வைத்திருப்பவர் அதை (இப்போதே) விற்று, அதன் மூலம் பயனடைந்துகொள்ளட்டும்!" என்று கூறினார்கள்.
சிறிது காலம்கூடக் கழிந்திருக்கவில்லை. அதற்குள் நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ் மதுவைத் தடை செய்துவிட்டான். எனவே, தம்மிடம் மதுவில் ஏதேனும் வைத்திருப்பவரை இந்த வசனம் அடைந்தால், மதுவை அவர் அருந்தவும் வேண்டாம்; விற்கவும் வேண்டாம்" என்று சொன்னார்கள். உடனே, மக்கள் தங்களிடமிருந்த மதுவுடன் மதீனாவின் சாலையை நோக்கிச் சென்று அவற்றைக் கொட்டி விட்டனர்.

3220 ஸைத் பின் அஸ்லம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
எகிப்தியரான அப்துல்லாஹ் பின் வஅலா அஸ்ஸபயீ (ரஹ்) அவர்கள் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடம் (வந்து), திராட்சையிலிருந்து பிழியப்படும் (மது)பானம் குறித்துக் கேட்டார். அதற்கு அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) விடையளித்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஒரு தோல்பை (நிரம்ப) மதுவை அன்பளிப்பாக வழங்கினார் ஒருவர். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் மதுவைத் தடை செய்துவிட்டது உமக்குத் தெரியுமா?"என்று கேட்டார்கள். அதற்கு அவர், "இல்லை' என்று கூறிவிட்டு, பிறகு (தம் அருகிலிருந்த) ஒரு மனிதரிடம் இரகசியமாக ஏதோ சொன்னார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரிடம் இரகசியமாக என்ன சொன்னீர்?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், "அதை விற்றுவிடச் சொன் னேன்" என்றார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மதுவை அருந்துவதற்குத் தடை விதித்த (இறை)வனே அதை விற்பதற்கும் தடை விதித்துள்ளான்" என்றார்கள். உடனே அம்மனிதர் தோல்பையைத் திறந்துவிட, அதிலுள்ளது (வழிந்தோடிப்) போனது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3221 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்பகரா' அத்தியாயத்தின் (வட்டி தொடர்பான) இறுதி வசனங்கள் (2:275 - 281) அருளப்பெற்ற போது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டுச் சென்று அவற்றை மக்களுக்கு ஓதிக்காட்டினார்கள். பிறகு மதுபான வியாபாரத்தைத் தடை செய்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3222 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்பகரா' அத்தியாயத்தின் இறுதி வசனங்கள் (2:275 - 281) வட்டி தொடர்பாக அருளப்பெற்ற சமயம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலை நோக்கிப் புறப்பட்டுச் சென்று, (அவற்றை ஓதிக்காட்டி,) மதுபான வியாபாரத்தை(யும்) தடை செய்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 13 மது, செத்தவை, பன்றி மற்றும் சிலைகள் ஆகியவற்றை விற்பது தடை செய்யப்பட்டுள்ளது.**

3223 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது மக்காவில் வைத்து "அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் மதுபானம், செத்தவை, பன்றி மற்றும் சிலைகள் ஆகியவற்றை விற்பனை செய்வதைத் தடை செய்துள்ளனர்"என்று கூறினார்கள். அப்போது, "அல்லாஹ்வின் தூதரே! செத்தவற்றின் கொழுப்புகள் பற்றி என்ன சொல்கிறீர்கள்?அவை கப்பல்களுக்குப் பூசப்படுகின்றன; தோல்களுக்கு அவற்றின் மூலம் மெருகேற்றப்படுகிறது; மக்கள் விளக்கெரிக்க அவற்றைப் பயன்படுத்துகின்றனரே?" என்று கேட்கப்பட்டது.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை; அது தடை செய்யப்பட்டதுதான்" எனக் கூறிவிட்டு, "அல்லாஹ் யூதர்களைத் தனது அருளிலிருந்து அப்புறப்படுத்துவானாக! அல்லாஹ் யூதர்களுக்குச் செத்தவற்றின் கொழுப்பைத் தடை செய்தபோது, அவர்கள் அதை உருக்கி விற்று, அதன் கிரயத்தை உண்டார்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3224 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
சமுரா பின் ஜுன்தப் (ரலி) அவர்கள் மதுவை விற்றதாக உமர் (ரலி) அவர்களுக்குத் தகவல் கிடைத்தபோது, "அல்லாஹ் சமுராவைச் சபிப்பானாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "யூதர்களுக்குக் கொழுப்பு தடை செய்யப்பட்டபோது, அவர்கள் அதை உருக்கி விற்றனர். அல்லாஹ் யூதர்களைச் சபிப்பானாக!' என்று கூறியதை அவர் அறியவில்லையா?" என வினவினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3225 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யூதர்களை அல்லாஹ் சபிப்பானாக! அவர்களுக்கு அல்லாஹ் கொழுப்பைத் தடை செய்திருந்தான். ஆனால், அவர்கள் அதை விற்று, அதன் கிரயத்தை உண்டனர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3226 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யூதர்களை அல்லாஹ் சபிப்பானாக! அவர்களுக்குக் கொழுப்பு தடை செய்யப்பட்டிருந்தது. ஆனால், அவர்கள் அதை விற்று அதன் கிரயத்தை உண்டனர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 14 வட்டி.

3227 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(எடையில்) சரிக்குச் சரியாகவே தவிர, தங்கத்திற்குத் தங்கத்தை விற்காதீர்கள். அவற்றில் ஒன்றைவிட மற்றொன்றைக் கூட்டி(யோ, குறைத்தோ)விடாதீர்கள். சரிக்குச் சரியாகவே தவிர, வெள்ளிக்கு வெள்ளியை விற்காதீர்கள். அவற்றில் ஒன்றைவிட மற்றொன்றைக் கூட்டி(யோ குறைத்தோ)விடாதீர்கள். அவற்றில் ஒன்று ரொக்கமாகவும் மற்றொன்று தவணையாகவும் இருக்கும் நிலையில் விற்காதீர்கள்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3228 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களும் பனூலைஸ் குலத்தாரில் ஒருவரும் நானும் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது பனூலைஸ் குலத்தைச் சேர்ந்த அம்மனிதர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் 'சரிக்குச் சரியாகவே தவிர, வெள்ளிக்கு வெள்ளியை விற்பதையும், சரிக்குச் சரியாகவே தவிர தங்கத்திற்குத் தங்கத்தை விற்பதையும் தடைசெய்தார்கள்' எனத் தாங்கள் தெரிவித்ததாக இதோ இவர் (இப்னு உமர்) என்னிடம் கூறினாரே (அது உண்மையா?)" என்று கேட்டார்.
அதற்கு அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள், தம்மிரு கண்களையும் காதுகளையும் நோக்கி சைகை செய்து "என்னிரு கண்களும் பார்த்தன; என்னிரு காதுகளும் கேட்டன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் 'சரிக்குச் சரியாகவே தவிர, தங்கத்தைத் தங்கத்திற்கும் வெள்ளியை வெள்ளிக்கும் விற்காதீர்கள்; அவற்றில் ஒன்றைவிட மற்றொன்றைக் கூட்டி(யோ குறைத்தோ)விடாதீர்கள். அவற்றில் ரொக்கமாகவுள்ள ஒன்றைத் தவணைக்குப் பகரமாக விற்காதீர்கள்;உடனுக்குடன் மாற்றிக்கொண்டாலே தவிர' என்று கூறியதை நான் செவியுற்றேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "பனூலைஸ் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் அபூசயீத் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து பின்வரும் ஹதீஸை அறிவித்தார்கள்" என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3229 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எடைக்கு எடையாகவே தவிர, அளவுக்கு அளவாகவே தவிர, சரிக்குச் சரியாகவே தவிர தங்கத்தைத் தங்கத்திற்கு விற்காதீர்கள்; வெள்ளியை வெள்ளிக்கு விற்காதீர்கள்.

இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3230 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு தங்க நாணயத்தை இரண்டு தங்க நாணயங்களுக்கு (ஒரு தீனாரை இரு தீனார்களுக்கு) விற்காதீர்கள்; ஒரு வெள்ளி நாணயத்தை இரண்டு வெள்ளி நாணயங்களுக்கு (ஒரு திர்ஹமை இரு திர்ஹங்களுக்கு) விற்காதீர்கள்.
இதை உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 15 நாணயமாற்று வியாபாரமும் வெள்ளிக்குத் தங்கத்தை ரொக்கமாக விற்பதும்.

3231 மாலிக் பின் அவ்ஸ் பின் அல்ஹதஸான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் "(எம்மிடமுள்ள தங்கத்தை) வெள்ளி நாணயத்திற்கு மாற்றித் தருபவர் யார்?" என்று கேட்டபடி வந்தேன். அப்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களுக்கு அருகிலிருந்த தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்கள், "(எங்கே) உமது தங்கத்தைக் காட்டும். அதைக் கொண்டுவாரும்! எம் ஊழியர் (வெளியூரிலிருந்து) வந்ததும் அதற்குரிய வெள்ளியைத் தருகிறோம்" என்று கூறினார்கள்.
அப்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! அவருக்கு வெள்ளியை (உடனடியாக)க் கொடுத்துவிடு. அல்லது அவரது தங்கத்தை அவரிடமே திருப்பிக் கொடுத்துவிடு. ஏனெனில்,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உடனுக்குடன் அல்லாமல் (தவணை முறையில்) தங்கத்திற்கு வெள்ளியை மாற்றிக் கொள்வது வட்டியாகும்; உடனுக்குடன் அல்லாமல் (தவணை முறையில்) தொலி நீக்கப்பட்ட கோதுமைக்குத் தொலி நீக்கப்பட்ட கோதுமையை மாற்றிக் கொள்வதும் வட்டியாகும்; உடனுக்குடன் அல்லாமல் (தவணை முறையில்) தொலி நீக்கப்படாத கோதுமைக்குத் தொலி நீக்கப்படாத கோதுமையை மாற்றிக்கொள்வதும் வட்டியாகும்; உடனுக்குடன் அல்லாமல் (தவணை முறையில்) பேரீச்சம் பழத்திற்குப் பேரீச்சம் பழத்தை மாற்றிக்கொள்வதும் வட்டியாகும்' என்று கூறினார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3232 அபூகிலாபா அப்துல்லாஹ் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஷாம் (சிரியா) நாட்டில் ஓர் அவையில் இருந்தேன். அங்கு முஸ்லிம் பின் யசார் (ரஹ்) அவர்களும் இருந்தார்கள். அப்போது அபுல் அஷ்அஸ் (ரஹ்) அவர்கள் வந்தார்கள். மக்கள், "அபுல் அஷ்அஸ் (வந்துவிட்டார்) அபுல் அஷ்அஸ் (வந்துவிட்டார்)" என்றனர். அவர்கள் (வந்து) அமர்ந்ததும் அவர்களிடம் நான், "எங்கள் சகோதர(ர் முஸ்லிம் பின் யசா)ருக்கு உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸைச் சொல்லுங்கள்" என்றேன். அதற்கு அவர்கள், "ஆம்' எனக் கூறிவிட்டுப் பின்வருமாறு அறிவித்தார்கள்:
நாங்கள் ஒரு போருக்காகச் சென்றிருந்தோம். (அப்போரில்) மக்களுக்கு முஆவியா (ரலி) அவர்கள் தளபதியாக இருந்தார்கள். போரின் முடிவில் நாங்கள் ஏராளமான போர்ச் செல்வங்களைப் பெற்றோம். நாங்கள் பெற்ற போர்ச்செல்வத்தில் ஒரு வெள்ளிப் பாத்திரமும்

இருந்தது. மக்கள் போர்ச்செல்வங்களைப் பெறுவதற்காக வரும் நாள்வரை (தவணை சொல்லி, வெள்ளி நாணயங்களுக்குப் பதிலாக) அ(ந்தப் பாத்திரத்)தை விற்று விடுமாறு முஆவியா (ரலி) அவர்கள் கூறினார்கள். மக்கள் அதைப் பெறுவதற்காக விரைந்தனர்.
இச்செய்தி உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்களுக்கு எட்டியபோது அவர்கள் எழுந்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தங்கத்தைத் தங்கத்திற்கு விற்பதையும் வெள்ளியை வெள்ளிக்கும், தொலி நீக்கப்பட்ட கோதுமையைத் தொலி நீக்கப்பட்ட கோதுமைக்கும், தொலி நீக்கப்படாத கோதுமையைத் தொலி நீக்கப்படாத கோதுமைக்கும், பேரீச்சம் பழத்தைப் பேரீச்சம் பழத்திற்கும், உப்பை உப்பிற்கும் விற்பதைத் தடை செய்தார்கள்; உடனுக்குடன் சரிக்குச் சரியாக மாற்றிக்கொண்டால் தவிர. யார் அதைவிடக் கூடுதலாகக் கொடுக்கிறாரோ அல்லது கூடுதலாகக் கேட்கிறாரோ அவர் வட்டியைப் பெற்றவர் ஆவார் என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

உடனே மக்கள் தாம் பெற்றதை திருப்பிக் கொடுத்துவிட்டனர். இச்செய்தி முஆவியா (ரலி) அவர்களுக்கு எட்டியபோது,அவர்கள் (மக்களிடையே) நின்று உரையாற்றினார்கள். அப்போது, "சிலருக்கு என்ன நேர்ந்தது? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அவர்கள் பல ஹதீஸ்களை அறிவிக்கின்றனர். நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அவர்களது தோழமையில் இருந்திருக்கிறோம். ஆனால், இத்தகைய ஹதீஸ்களை அவர்களிடமிருந்து நாங்கள் கேட்டதில்லை" என்றார்கள்.
உடனே உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் எழுந்து, மீண்டும் அந்த ஹதீஸைக் கூறினார்கள். பிறகு "முஆவியா அவர்கள் வெறுத்தாலும் சரி; (அல்லது அவரது மூக்கு மண்ணைக் கவ்வினாலும் சரி) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றதை நிச்சயமாக நாம் அறிவிப்போம். இருள் கப்பிய ஓர் இரவில் முஆவியா அவர்களது படையில் அவர்களுடன் நான் இல்லாமறபோவது குறித்து நான் பொருட்படுத்தவில்லை" என்று சொன்னார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் "இவ்வாறுதான் அய்யூப் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்; அல்லது இதைப் போன்று அறிவித்தார்கள்" என (தன்னடக்கத்துடன்) கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3233 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தங்கத்தைத் தங்கத்திற்கும், வெள்ளியை வெள்ளிக்கும், தொலி நீக்கப்பட்ட கோதுமையைத் தொலி நீக்கப்பட்ட கோதுமைக்கும், தொலி நீக்கப்படாத கோதுமையைத் தொலி நீக்கப்படாத கோதுமைக்கும், பேரீச்சம் பழத்தைப் பேரீச்சம் பழத்திற்கும், உப்பை உப்பிற்கும் சரிக்குச் சரியாக உடனுக்குடன் விற்கலாம். இந்த இனங்கள் மாறுபட்டிருக்கும்போது உடனுக்குடன் மாற்றிக்கொண்டால் நீங்கள் விரும்பியபடி விற்றுக்கொள்ளுங்கள்.
இதை உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3234 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தங்கத்தைத் தங்கத்திற்கும், வெள்ளியை வெள்ளிக்கும், தொலி நீக்கப்பட்ட கோதுமையைத் தொலி நீக்கப்பட்ட கோதுமைக்கும், தொலி நீக்கப்படாத கோதுமையைத் தொலி நீக்கப்படாத கோதுமைக்கும், பேரீச்சம் பழத்தைப் பேரீச்சம் பழத்திற்கும், உப்பை உப்புக்கும் சரிக்குச் சரியாக உடனுக்குடன் விற்கலாம். யாரேனும் கூடுதலாகக் கொடுத்தாலோ, அல்லது கூடுதலாகக் கேட்டாலோ அவர் வட்டி வாங்கிவிட்டார். இ(ந்தப் பாவத்)தில் வாங்கிய வரும் கொடுத்தவரும் சமமானவர்கள் ஆவர்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "தங்கத்தைத் தங்கத்திற்குச் சரிக்குச் சரியாக விற்கலாம்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3235 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பேரீச்சம் பழத்தைப் பேரீச்சம் பழத்திற்கும், தொலி நீக்கப்பட்ட கோதுமையைத் தொலி நீக்கப்பட்ட கோதுமைக்கும்,தொலி நீக்கப்படாத கோதுமையைத் தொலி நீக்கப்படாத கோதுமைக்கும், உப்பை உப்புக்கும் சரிக்குச் சரியாக உடனுக்குடன் விற்கலாம். யாரேனும் கூடுதலாகக் கொடுத்தாலோ, அல்லது கூடுதலாகக் கேட்டாலோ அவர் வட்டி வாங்கி விட்டார். அவற்றின் இனங்கள் வேறுபட்டிருந்தால் தவிர.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "உடனுக்குடன்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

3236 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தங்கத்தைத் தங்கத்திற்குச் சரிக்குச் சரியான எடைக்கு (விற்கலாம்). வெள்ளியை வெள்ளிக்குச் சரிக்குச் சரியான எடைக்கு (விற்கலாம்). ஒருவர் கூடுதலாகக் கொடுத்தாலோ, அல்லது கூடுதலாகக் கேட்டாலோ அது வட்டியாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3237 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தங்க நாணயத்தைத் தங்க நாணயத்திற்கு, அவற்றுக்கிடையே ஏற்றத்தாழ்வின்றி விற்கலாம்; வெள்ளி நாணயத்தை வெள்ளி நாணயத்திற்கு, அவற்றுக்கிடையே ஏற்றத்தாழ்வின்றி விற்கலாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 16 தங்கத்திற்கு வெள்ளியைக் கடனாக விற்பது தடை செய்யப்பட்டுள்ளது.

3238 அபுல் மின்ஹால் அப்துர் ரஹ்மான் பின் முத்இம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என் கூட்டாளி ஒருவர், (தங்கத்திற்கு) வெள்ளியை ஹஜ் பருவம்வரை கடனாகச் சொல்லி (நாணயமாற்று முறையில்)விற்றார். பின்னர் என்னிடம் வந்து அதைப் பற்றித் தெரிவித்தார். நான், "இது தகாத செயலாகும்" என்றேன். அவர், "அவ்வாறாயின் நான் கடைத் தெருவில் அதை விற்றபோது என்னிடம் யாரும் ஆட்சேபம் தெரிவிக்கவில்லையே?"என்று கேட்டார். ஆகவே, நான் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடம் சென்று அதைப் பற்றிக் கேட்டேன்.
அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் (நாடு துறந்து) மதீனாவுக்கு வந்தபோது, நாங்கள் இந்த வியாபாரம் செய்து கொண்டிருந்தோம். அப்போது அவர்கள், "உடனுக்குடன் (நாணயமாற்று) ஏற்பட்டால் அதனால் குற்றமில்லை; கடனாக (தங்கத்தை வெள்ளிக்கோ, வெள்ளியைத் தங்கத்திற்கோ) மாற்றினால்தான் அது வட்டியாகும்' என்று கூறினார்கள். நீர் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடம் போ(ய் இதைப் பற்றி வினா எழுப்பு)வீராக! ஏனெனில், அவர் என்னைவிட பெரிய வணிகர் ஆவார்" என்றார்கள். அவ்வாறே நான் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடம் சென்று கேட்டபோது, பராஉ (ரலி) அவர்கள் கூறியதைப் போன்றே அவர்களும் கூறினார்கள்.

3239 அபுல் மின்ஹால் அப்துர் ரஹ்மான் பின் முத்இம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடம் நாணயமாற்று வியாபாரம் குறித்துக் கேட்டேன். அவர்கள், "நீர் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடம் கேளும். அவர் (என்னைவிட) நன்கு அறிந்தவர்" என்றார்கள். அவ்வாறே நான் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடம் கேட்டதற்கு அவர்கள், "நீர் பராஉ (ரலி) அவர்களிடமே கேளும். அவரே (என்னை விட) நன்கு அறிந்தவர்" என்றார்கள். பின்னர் இருவரும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தங்கத்திற்கு வெள்ளியைக் கடனாக விற்பதற்குத் தடை விதித்தார்கள்" என்று கூறினர்.

3240 அபூபக்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளிக்கு வெள்ளியை, தங்கத்திற்குத் தங்கத்தைச் சரிக்குச் சரியாகவே தவிர (வேறு முறையில்) விற்கக் கூடாது எனத் தடை விதித்தார்கள். தங்கத்திற்கு வெள்ளியை நாங்கள் விரும்பியவாறு வாங்குவதற்கும், வெள்ளிக்குத் தங்கத்தை நாங்கள் விரும்பியவாறு வாங்குவதற்கும் அனுமதித்தார்கள்.
இந்த ஹதீஸை அபூபக்ரா (ரலி) அவர்கள் அறிவித்தபோது அவர்களிடம் ஒரு மனிதர், "உடனுக்குடன் (மாற்றிக்கொண்டால்தானே)!" என்று கேட்டார். அதற்கு அபூபக்ரா (ரலி) அவர்கள் "அவ்வாறே நான் செவியுற்றேன்"என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூபக்ரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "..... எங்களுக்குத் தடை விதித்தார்கள்" என இடம்பெற்றுள்ளது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

**பாடம் : 17 பொன்னும் மணியும் உள்ள மாலையை விற்பது.**

3241 ஃபளாலா பின் உபைத் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபரில் இருந்தபோது, அவர்களிடம் கழுத்து மாலை ஒன்று கொண்டுவரப்பட்டது. அதில் பொன்னும் மணியும் இருந்தன. அது போர்ச் செல்வங்களுடன் விற்கப்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த மாலையில் இருந்த பொன்னைத் தனியே கழற்றி எடுத்துவிடுமாறு உத்தரவிட்டார்கள். பிறகு மக்களிடம் "எடைக்கு எடை தங்கத்தைத் தங்கத்திற்கு விற்கலாம்" என்றார்கள்.

3242 ஃபளாலா பின் உபைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் கைபர்போர் நாளில் பன்னிரண்டு "தீனாரு'க்கு ஒரு கழுத்து மாலையை வாங்கினேன். அதில் பொன்னும் மணிகளும் இருந்தன. உடனே அவற்றை நான் தனித்தனியே பிரித்தெடுத்தேன். அவை பன்னிரண்டு தீனாரைவிடக் கூடுதல் மதிப்புடையவையாக இருப்பதைக் கண்டேன். ஆகவே, இது குறித்து நான் நபி (ஸல்) அவர்களிடம் சொன்னபோது, தனியே பிரித்தெடுக்கப்படாத வரை (பொன்னும் மணியும் உள்ள ஆபரணங்கள்) விற்கப்படக் கூடாது"என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஃபளாலா பின் உபைத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3243 ஃபளாலா பின் உபைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் கைபர்போர் நாளில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தபோது, (பொன்னும் மணியும் சேர்க்கப்பட்டிருந்த) தங்க "ஊக்கியா'வை இரண்டு மூன்று பொற்காசு (தீனார்)களுக்கு யூதர்களிடம் விற்றோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எடைக்கு எடை சரியாகவே தவிர (வேறு முறையில்) தங்கத்திற்குத் தங்கத்தை விற்காதீர்கள்" என்று கூறினார்கள்.

3244 ஹனஷ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஃபளாலா பின் உபைத் (ரலி) அவர்களுடன் ஒரு போரில் இருந்தோம். எனக்கும் என் தோழர்களுக்கும் (போர்ச் செல்வத்தின் பங்காக) மாலை ஒன்று கிடைத்தது. அதில் பொன், வெள்ளி, முத்து ஆகியன சேர்க்கப்பட்டிருந்தன. அதை நான் விலைக்கு வாங்க விரும்பினேன். எனவே, ஃபளாலா பின் உபைத் (ரலி) அவர்களிடம் அதைப் பற்றிக் கேட்டேன்.
அப்போது அவர்கள், மாலையிலுள்ள தங்கத்தைத் தனியே எடுத்து, அதைத் தராசின் ஒரு தட்டிலும், உனது தங்கத்தை மற்றொரு தட்டிலும் வைப்பீராக. பிறகு சரிக்குச் சரியாகவே தவிர (வேறு முறையில்) நீ (தங்கத்தைத் தங்கத்திற்கு) பெற்றுக்கொள்ள வேண்டாம். ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் சரிக்குச் சரியாகவே தவிர (வேறு முறையில் தங்கத்தைத் தங்கத்திற்கும் வெள்ளியை வெள்ளிக்கும்) பெற வேண்டாம்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 18 சரிக்குச் சரியாக உணவுப் பொருளை விற்றல்.**

3245 புஸ்ர் பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மஅமர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் ஒரு "ஸாஉ' தொலி நீக்கப்பட்ட கோதுமையைத் தம் அடிமையிடம் கொடுத்து, "இதை விற்றுவிட்டு அந்தக் காசைக் கொண்டு தொலி நீக்கப்படாத கோதுமை வாங்கி வா" என்று அனுப்பினார்கள். அந்த அடிமை சென்று, அதைக் கொடுத்து ஒரு "ஸாஉ' கோதுமையும் சற்று கூடுதலாகவும் பெற்றுவந்தார். அவர் மஅமர் (ரலி) அவர்களிடம் வந்து நடந்ததைத் தெரிவித்தார்.
அதற்கு மஅமர் (ரலி) அவர்கள், "ஏன் அவ்வாறு செய்தாய்? நீ சென்று அதைத் திருப்பிக் கொடுத்துவிடு. சரிக்குச் சரியாகவே தவிர (வேறு முறையில் உணவுப் பொருளை) வாங்காதே. ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "சரிக்குச் சரியாகவே உணவுப் பொருளை உணவுப் பொருளுக்கு (விற்கப்படும்)' என்று கூறியதை நான் செவியுற்றுள்ளேன்" என்றார்கள்.
மேலும் மஅமர் (ரலி) அவர்கள், "அன்றைய நாளில் தொலி நீக்கப்படாத கோதுமையே எங்கள் உணவாக இருந்தது"என்று கூறினார்கள். அப்போது அவர்களிடம் "இது (தொலி நீக்கப்படாத கோதுமை), அதைப் போன்று (தொலி நீக்கப்பட்ட கோது மையைப் போன்று ஒரே இனமாக) இல்லையே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அது ஒன்றுக்கொன்று ஒப்பானதாக இருக்குமோ என நான் அஞ்சுகிறேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3246 அபூஹுரைரா (ரலி) மற்றும் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) ஆகியோர் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பனூ அதீ அல்அன்சாரீ குலத்தைச் சேர்ந்த ஒருவரை கைபர் பகுதியின் அதிகாரியாக நியமித்து அனுப்பிவைத்தார்கள். அவர் (சென்றுவிட்டு கைபரிலிருந்து) உயர் ரகப் பேரீச்சம் பழங்களைக் கொண்டுவந்தார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கைபரின் பேரீச்சம் பழங்கள் அனைத்துமே இப்படித்தான் (உயர் ரகமானதாக) இருக்குமா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் மட்டமான பேரீச்சம் பழத்தில் இரண்டு "ஸாஉ'களைக் கொடுத்து விட்டு, (இந்த உயர்ரகப் பேரீச்சம் பழத்தில்) ஒரு "ஸாஉ' வாங்குவோம்" என்று சொன்னார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறு செய்யாதீர்கள். (உணவுப் பொருளை) சரிக்குச் சமமாகவே வாங்குங்கள். அல்லது (உங்களிடமுள்ள) இந்த (மட்டமான) பேரீச்சம் பழத்தை விற்றுவிட்டு, அந்தத் தொகைக்கு அ(ந்த உயர்ரகப் பேரீச்சம் பழத்)தை வாங்குங்கள். இவ்வாறுதான் நிறுக்கப்படும் பொருட்களின் சட்டமும்" என்று சொன்னார்கள்.

3247 அபூஹுரைரா (ரலி) மற்றும் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) ஆகியோர் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதரை கைபர் பகுதியின் அதிகாரியாக நியமித்(து அனுப்பிவைத்)தார்கள். அவர் (சென்றுவிட்டு) உயர்ரகப் பேரீச்சம் பழங்களைக் கொண்டுவந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கைபரின் பேரீச்சம் பழங்கள் எல்லாமே இப்படித்தான் (உயர் ரகமானதாக) இருக்குமா?" என்று கேட்டார்கள். அவர்,

"இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் மட்டரகப் பேரீச்சம் பழங்களில் இரண்டு "ஸாஉ'கள் கொடுத்து ஒரு "ஸாஉ' இந்த (உயர் ரகப் பேரீச்சம்) பழம் வாங்குகிறோம்; அல்லது மட்டரகப் பேரீச்சம் பழங்களில் மூன்று "ஸாஉ'கள் கொடுத்து, (இந்த உயர்ரகப் பேரீச்சம் பழங்களில்) இரண்டு "ஸாஉ'கள் வாங்குகிறோம்" என்று கூறினார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவ்வாறு செய்யாதீர்! மட்டரகமான பேரீச்சம் பழங்களை வெள்ளிக் காசுகளுக்கு விற்றுவிட்டு, அந்த வெள்ளிக் காசுகளுக்கு உயர் ரகப் பேரீச்சம் பழங்களை வாங்குவீராக!" என்று சொன்னார்கள்.

3248 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
பிலால் (ரலி) அவர்கள் ("பர்னீ எனப்படும்) உயர்ரகப் பேரீச்சம் பழங்களுடன் வந்தார்கள். அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது எங்கிருந்து கிடைத்தது?" என்று கேட்டார்கள். அதற்கு பிலால் (ரலி) அவர்கள், "என்னிடம் மட்ட ரகப் பேரீச்சம் பழங்கள் இருந்தன; நபி (ஸல்) அவர்களின் உணவுக்காக அதில் இரண்டு "ஸாஉ'கள் கொடுத்து இ(ந்த உயர் ரகப் பேரீச்சம் பழத்)தில் ஒரு "ஸாஉ' வாங்கினேன்" என்றார்.
அந்த நேரத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆ! இது வட்டியேதான்! இவ்வாறு செய்யாதீர்கள். நீங்கள் இந்த (உயர் ரக)ப் பேரீச்சம் பழத்தை வாங்க விரும்பினால் உங்களிடமுள்ள அ(ந்த மட்டரகப் பேரீச்சம் பழத்)தைத் தனியாக விற்றுவிட்டு, பிறகு அந்தத் தொகையின் மூலம் (உயர் ரகப் பேரீச்சம் பழத்தை) வாங்கிக்கொள்ளுங்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் முஹம்மத் பின் சஹ்ல் அத்தமீமீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அந்த நேரத்தில்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

3249 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பேரீச்சம் பழங்கள் கொண்டுவரப்பட்டன. அப்போது அவர்கள், "இது என்ன?நம் பேரீச்சம் பழங்களுக்கு வேறுபடுகிறதே!" என்று கேட்டார்கள். அதற்கு (பேரீச்சம் பழங்களைக் கொண்டுவந்த) அந்த மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! நம் பேரீச்சம் பழங்களில் இரண்டு "ஸாஉ'கள் கொடுத்துவிட்டு, இ(ந்த உயர் ரகப் பேரீச்சம் பழத்)தில் ஒரு "ஸாஉ' வாங்கினோம்" என்றார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதுதான் வட்டியாகும். இதைத் திருப்பிக் கொடுத்துவிடுங்கள்; பிறகு நமது பேரீச்சம் பழத்தை (தனியே) விற்றுவிட்டு, (அந்தத் தொகையின் மூலம்) நமக்காக இந்த (உயர் ரகப்) பேரீச்சம் பழத்தை வாங்குங்கள்" என்று கூறினார்கள்.

3250 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் மட்டரகப் பேரீச்சம் பழங்கள் எங்களுக்கு வழங்கப்படும். அவை கலப்புப் பேரீச்சம் பழங்களாகும். அவற்றில் இரண்டு "ஸாஉ'களுக்கு ஒரு "ஸாஉ' (உயர் ரகப் பேரீச்சம்பழம்) என்ற அடிப்படையில் நாங்கள் விற்பனை செய்து வந்தோம். இச்செய்தி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, "ஒரு "ஸாஉ'க்கு இரண்டு "ஸாஉ'கள் பேரீச்சம் பழங்கள் கூடாது; ஒரு

ஸாஉக்கு இரண்டு "ஸாஉ'கள் தொலி நீக்கப்பட்ட கோதுமையும் கூடாது; இரண்டு வெள்ளி திர்ஹங்களுக்கு ஒரு வெள்ளி திர்ஹமும் கூடாது" என்று கூறினார்கள்.

3251 அபூநள்ரா முன்திர் பின் மாலிக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் நாணயமாற்று வணிகம் பற்றி வினவினேன். அப்போது அவர்கள் "உடனுக்குடன் மாற்றிக்கொள்கிறீர்களா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அதற்கு அவர்கள், "அவ்வாறாயின் குற்றமில்லை" என்றார்கள்.
பிறகு அபூசயீத் (ரலி) அவர்களிடம் நான் இதைத் தெரிவித்தேன்; "நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் நாணயமாற்று வணிகம் குறித்துக் கேட்டேன். அவர்கள் "உடனுக்குடன் மாற்றிக்கொள்கிறீர்களா' என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அவ்வாறாயின் குற்றமில்லை' என்று அவர்கள் கூறினார்கள்" என்றேன். அபூசயீத் (ரலி) அவர்கள், "அவ்வாறா சொன்னார்கள். நாம் அவருக்குக் கடிதம் எழுதுகிறோம். இனி அவ்வாறு உங்களுக்குத் தீர்ப்பளிக்கமாட்டார்" என்று கூறிவிட்டுப் பின்வருமாறு தெரிவித்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஊழியர்களில் ஒருவர், ஒருவகைப் பேரீச்சம் பழத்தைக் கொண்டுவந்தார். அந்தப் பழங்களை அந்நியமாகக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது நமது மண்ணில் விளையும் பேரீச்சம் பழங்கள் இல்லை போலிருக்கிறதே?" என்று கேட்டார்கள். அவர், "இந்த ஆண்டு நமது மண்ணில் அல்லது நமது பேரீச்சம் பழங்களில் சில (மட்டரகமான பழங்கள்) இருந்தன. எனவே, அவற்றையும் அவற்றுடன் இன்னும் சிறிதளவு கூடுதல் பழத்தையும் கொடுத்து, இ(வ்வகைப் பேரீச்சம் பழத்)தைப் பெற்றேன்" என்று கூறினார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கூடுதலாகக் கொடுத்துவிட்டாய்; வட்டியாக்கிவிட்டாய். இதை நமக்கு அருகில் கொண்டுவர வேண்டாம். உம்முடைய பேரீச்சம் பழங்களில் ஒன்று உமக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தினால் அதை விற்றுவிட்டு, பின்னர் (அந்தத் தொகையை வைத்து) நீ விரும்புகின்ற (பேரீச்சம் பழ இனத்)தை வாங்கிக்கொள்"என்று கூறினார்கள்.

3252 அபூநள்ரா முன்திர் பின் மாலிக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு உமர் (ரலி) மற்றும் இப்னு அப்பாஸ் (ரலி) ஆகிய இருவரிடமும் நாணயமாற்று வணிகம் பற்றிக் கேட்டேன். அவ்விருவரும் அதைக் குற்றமாகக் கருத வில்லை. பின்னர் நான் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடம் அமர்ந்திருந்தபோது, நாணயமாற்று பற்றி அவர்களிடம் கேட்டேன். அதற்கு அபூசயீத் (ரலி) அவர்கள், "கூடுதலாக வருபவை வட்டியாகும்" என்றார்கள். (இப்னு உமர் (ரலி) இப்னு அப்பாஸ் (ரலி) ஆகிய) இருவரும் (வேறு விதமாக) கூறியிருந்ததால், நான் அபூசயீத் (ரலி) அவர்களது கருத்தை ஆட்சேபித்தேன்.
அப்போது அபூசயீத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றதையே நான் உம்மிடம் அறிவிக்கிறேன்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அவர்களின் பேரீச்ச மரத்தோட்டக்காரர் ஒரு "ஸாஉ' உயர் ரகப் பேரீச்சம் பழத்துடன் வந்தார். நபி (ஸல்) அவர்களது பேரீச்சம் பழம் இந்த (மட்டரக) இனத்தைச் சேர்ந்ததாக இருந்தது.

ஆகவே, நபி (ஸல்) அவர்கள் தம் தோட்டக்காரரிடம், "இது எங்கிருந்து கிடைத்தது?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "நான் (நம்மிடமிருந்த மட்டரகப் பேரீச்சம் பழங்களில்) இரண்டு "ஸாஉ'களுடன் சென்று, அதற்குப் பதிலாக இந்த (உயர்ரகப் பேரீச்சம் பழத்தின்) ஒரு "ஸாஉ'வை வாங்கி வந்தேன். கடைத்தெருவில் இந்தப் பேரீச்சம் பழத்தின் விலை இவ்வளவு; இந்தப் பேரீச்சம் பழத்தின் விலை இவ்வளவு" என்று கூறினார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனக்குக் கேடுதான்; நீ வட்டி வியாபாரம் செய்துவிட்டாய். இ(வ்வாறு உயர் ரகப் பேரீச்சம் பழத்)தை நீ விரும்பினால், உமது பேரீச்சம் பழத்தை (வேறு) ஏதேனும் ஒரு பொருளுக்காக விற்றுவிட்டு, பிறகு அந்தப் பொருளுக்குப் பதிலாக நீ விரும்பும் எந்தப் பேரீச்சம் பழத்தை வேண்டுமானாலும் வாங்கிக்கொள்" என்றார்கள்.

அபூசயீத் (ரலி) அவர்கள் "பேரீச்சம் பழத்தைப் பேரீச்சம் பழத்திற்கு (ஏற்றத்தாழ்வுடன் விற்பது) வட்டியாக இருக்க அதிகத் தகுதியுடையதா, அல்லது வெள்ளியை வெள்ளிக்கு (ஏற்றத் தாழ்வுடன்) விற்பது வட்டியாக இருக்க அதிகத் தகுதியுடையதா?" என்று கேட்டார்கள். பின்னர் நான் இப்னு உமர் (ரலி) அவர்களிம் சென்றபோது, அவ்வாறு விற்க வேண்டாம் என அவர்கள் என்னைத் தடுத்தார்கள். பிறகு நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் செல்லவில்லை; (ஆயினும்,) அபுஸ்ஸஹ்பா (ரஹ்) அவர்கள், "நான் மக்காவில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் இதைப் பற்றிக் கேட்டேன். அப்போது அவர்கள் அதை வெறுக்கத் தக்கதாகக் கருதினார்கள்" என்று என்னிடம் கூறினார்கள்.

3253 அபூசாலிஹ் அஸ்ஸய்யாத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் "தங்க நாணயத்திற்குத் தங்க நாணயத்தையும் வெள்ளி நாணயத்திற்கு வெள்ளி நாணயத்தையும் சரிக்குச் சமமாக விற்கலாம். கூடுதலாகக் கொடுத்தாலோ, கூடுதலாகக் கேட்டாலோ அவர் வட்டி வாங்கிவிட்டார்" என்று கூறியதை நான் செவியுற்றேன். அவர்களிடம் நான் "இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் வேறு விதமாகக் கூறுகிறார்களே?" என்று கேட்டேன். அதற்கு அபூசயீத் (ரலி) அவர்கள் "நான் இப்னு அப்பாஸ் அவர்களைச் சந்தித்தபோது, நீங்கள் கூறிவருவதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா, அல்லது இறைவேதத்தில் கண்டீர்களா?" என்று கேட்டேன்.

அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அவ்வாறு நான் செவியுறவுமில்லை; இறைவேதத்தில் அதை நான் காணவுமில்லை. மாறாக, "வட்டி என்பது கடனுக்கு (நாணயமாற்று செய்யும்போது)தான்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களே என்னிடம் கூறினார்கள்" என்றார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3254 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

வட்டி என்பதே கடனில்தான்.

இதை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3255 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உடனுக்குடன் நிகழ்ந்த (நாணயமாற்று வணிகத்)தில் வட்டி கிடையாது.
இதை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3256 அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களைச் சந்தித்து, "நாணயமாற்று விஷயத்தில் தாங்கள் சொல்லிவருவதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் செவியுற்றீர்களா? அல்லது இறைவேதத்தில் கண்டதைக் கூறுகிறார்களா?" என்று கேட்டார்கள்.
அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இல்லை; அவ்வாறு நான் சொல்லவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பற்றி நீங்கள் நன்கு அறிவீர்கள். அல்லாஹ்வின் வேதத்தில் உள்ளதாகவும் எனக்குத் தெரியவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அறிக; வட்டி என்பதே கடனில்தான்' என்று கூறினார்கள் என உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள்தாம் என்னிடம் சொன்னார்கள்" என்று விடையளித்தார்கள்.

## பாடம் : 19 வட்டி வாங்குபவருக்கும் வட்டி கொடுப்பவருக்கும் வந்துள்ள சாபம்.

3257 அல்கமா பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வட்டி வாங்குபவரையும் வட்டி கொடுப்பவரையும் சபித்தார்கள்" என்று கூறினார்கள். நான் "அதற்குக் கணக்கு எழுதுபவரையும் அதன் இரு சாட்சிகளையும் (சபித்தார்கள் என்று சேர்த்துக் கூறுங்கள்)" என்றேன். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "நாம் (அல்லாஹ்வின் தூதரிடமிருந்து) செவியுற்றதையே அறிவிக்கிறோம்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3258 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், வட்டி வாங்குபவரையும் வட்டி கொடுப்பவரையும், அதற்குக் கணக்கு எழுதுபவரையும் அதன் இரு சாட்சிகளையும் சபித்தார்கள். மேலும், "இவர்கள் அனைவரும் (பாவத்தில்) சமமானவர்கள் ஆவர்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 20 அனுமதிக்கப்பட்டதைக் கையாள்வதும் சந்தேகத்திற்கிடமானவற்றைக் கைவிடுவதும்.

3259 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அனுமதிக்கப்பட்டதும் (ஹலால்) தெளிவானது; தடை செய்யப்பட்டதும் (ஹராம்) தெளிவானது. இவ்விரண்டிற்கும் இடையில் சந்தேகத்திற்கிடமானவையும் (முஷ்தபிஹாத்) இருக்கின்றன. மக்களில் பெரும்பாலோர் அவற்றை அறியமாட்டார்கள்.

எனவே, யார் சந்தேகத்திற்கிடமானவற்றைத் தவிர்த்துக்கொள்கிறாரோ அவர் தமது மார்க்கத்தையும் தமது மானத்தையும் காப்பாற்றிக்கொள்கிறார். யார் சந்தேகத்திற்கிடமானவற்றில் தலையிடுகிறாரோ அவர் அனுமதிக்கபடாதவற்றில் தலையிடுகிறார். வேலியோரங்களில் (கால்நடைகளை) மேய்ப்பவர், வேலிக்குள்ளேயே (கால்நடைகளை) மேயவிட நேரும். அறிக! ஒவ்வொரு மன்னனுக்கும் ஓர் எல்லை உண்டு. அல்லாஹ்வின் எல்லை அவனால் தடை விதிக்கப்பெற்றவையே. அறிக! உடலில் ஒரு சதைத் துண்டு இருக்கிறது. அது சீரடைந்துவிட்டால் உடல் முழுவதும் சீரடைந்துவிடும். அது சீரழிந்துவிட்டால் முழு உடலும் சீரழிந்துவிடும். அறிக! அதுவே இதயம்.
இதை நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதை அவர்கள் அறிவிக்கும்போது தம்மிரு காதுகளை நோக்கி இரு விரல்களால் சைகை செய்து (இந்தக் காதுகளால்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மேற்கண்டவாறு) கூறியதைக் கேட்டேன் என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், மேற்கண்ட ஹதீஸே மற்றதை விட முழுமையானதும் பெரியதும் ஆகும்.

3260 ஆமிர் அஷ்ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நபித்தோழர்களில் ஒருவரான நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் ஹிம்ஸ் (சிரியா) நகரில் மக்களுக்கு உரையாற்றும்போது, "அனுமதிக்கப்பெற்றதும் தெளிவானது; தடைசெய்யப் பட்டதும் தெளிவானது..." என்று தொடங்கும் மேற்கண்ட ஹதீஸை அறிவித்தார்கள். இந்த அறிவிப்பில் "வேலிக்குள்ளேயே மேயவிட நேரும்" என்பதுவரையே இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 21 ஒட்டகத்தை விற்பதும், (விற்றவர் குறிப்பிட்ட தூரம்வரை) அதில் பயணம் செய்துகொள்வேன் என நிபந்தனை விதிப்பதும்.

3261 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு பயணத்திலிருந்து திரும்பு கையில்) நன்றாக இயங்காதிருந்த எனது ஒட்டகத்தில் சென்றுகொண்டிருந்தேன். அதற்கு ஓய்வு கொடுக்க நான் எண்ணியிருந்தேன். அப்போது என்னிடம் வந்து சேர்ந்த நபி (ஸல்) அவர்கள் எனக்காகப் பிரார்த்தித்தார்கள்; எனது ஒட்டகத்தை அடித்தார்கள். அது முன்னெப்போதும் இல்லாத அளவுக்கு (மிக வேகமாக) ஓடியது. பிறகு நபி (ஸல்) அவர்கள் "இ(ந்த ஒட்டகத்)தை ஓர் "ஊக்கியா'வுக்கு எனக்கு விற்றுவிடு" என்று கேட்டார்கள். நான் "இல்லை' என்றேன். பிறகு (மீண்டும்) "இதை எனக்கு விற்றுவிடு" என்று கேட்டார்கள். நான் ஓர் "ஊக்கியா'வுக்கு அதை விற்றேன்; ஆனால், என் வீட்டாரிடம் போய்ச் சேரும்வரை அதில் பயணம் செய்துகொள்வதற்கு என்னை அனுமதிக்க வேண்டும் என்று நிபந்தனையிட்டேன். (அவர்களும் அந்த நிபந்தனையை ஏற்றார்கள்.)
நான் (மதீனாவுக்கு) வந்து சேர்ந்தபோது, அந்த ஒட்டகத்தை நபி (ஸல்) அவர்களிடம் (ஒப்படைக்க) கொண்டுசென்றேன். அவர்கள் அதன் விலையை எனக்குக் கொடுத்தார்கள். பிறகு நான் திரும்பிச் சென்றபோது, எனக்குப் பின்னாலேயே நபி (ஸல்) அவர்கள் ஆளனுப்பி

(என்னை மீண்டும் அழைத்து), "உனது ஒட்டகத்தை நான் எடுத்துக்கொள்வதற்காக அதன் விலையை நான் குறைத்து விடுவேன் என நீ எண்ணிக்கொண்டாயா? (என்னிடம் தர வேண்டிய) உனது ஒட்டகத்தையும், உனக்குச் சேர வேண்டிய வெள்ளிக் காசுகளையும் நீயே எடுத்துக்கொள். அது உனக்குரியதுதான்"என்றார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3262 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஓர் அறப்போருக்குச் சென்றேன். நன்றாக இயங்காதிருந்த, நடக்க முடியாமல் நடந்துகொண்டிருந்த, தண்ணீர் சுமக்கும் எனது ஒட்டகம் ஒன்றின் மீது அமர்ந்து நான் சென்றுகொண்டிருந்தபோது (வழியில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை வந்தடைந்தார்கள். என்னிடம், "உனது ஒட்டகத்திற்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். நான் "நோய் கண்டுள்ளது' என்றேன்.

அதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சற்று பின்வாங்கி அதை அதட்டினார்கள்; அதற்காகப் பிரார்த்தனையும் செய்தார்கள். உடனே அது (வேகமாக ஓடி) எல்லா ஒட்டகங்களுக்கும் முன்னே சென்றுகொண்டிருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "உனது ஒட்டகத்தை (இப்போது) எப்படிக் காண்கிறாய்?" என்று கேட்டார்கள். நான் "நல்ல நிலையில் காண்கிறேன். தங்களது (பிரார்த்தனையின்) வளம் அதற்குக் கிடைத்து விட்டது" என்றேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ அதை எனக்கு விற்றுவிடுகிறாயா?" என்று கேட்டார்கள். நான் (நபியவர்களுக்கு விலைக்கு விற்க) வெட்கப்பட்டேன். (அத் துடன்) எங்களிடம் அதைத் தவிர தண்ணீர் சுமக்கும் ஒட்டகம் வேறெதுவும் இருக்க வில்லை. பின்னர் நான், "சரி (விற்றுவிடுகிறேன்) என்றேன். ஆயினும், மதீனா சென்றடையும்வரை அதன் மீது பயணம் செய்துகொள்ள என்னை அனுமதிக்க வேண்டும் எனும் நிபந்தனையின் பேரில் அவர்களுக்கு அந்த ஒட்டகத்தை விற்றுவிட்டேன்.

பின்னர், "அல்லாஹ்வின் தூதரே! நான் புது மாப்பிள்ளை" என்று சொல்லி (ஊருக்கு விரைவாகச் செல்ல) அனுமதி கேட்டேன். அவர்கள் எனக்கு அனுமதியளித்தார்கள். ஆகவே, நான் மக்களைவிட முன்னதாகச் சென்று மதீனாவை அடைந்துவிட்டேன். அப்போது என் தாய் மாமன் (ஜத்து பின் கைஸ் அவர்கள் என்னைச்) சந்தித்து ஒட்டகத்தைப் பற்றிக் கேட்டார். நான் அதை என்ன செய்தேன் என்பதை அவரிடம் தெரிவித்தேன். அதற்காக அவர் என்னைக் கடிந்துகொண்டார்.

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (நான் புது மாப்பிள்ளை என்று சொல்லி) மதீனாவுக்கு விரைவாக செல்ல அனுமதி கேட்டபோது அவர்கள் என்னிடம், "நீ யாரை மணந்து கொண்டாய்? கன்னிப் பெண்ணையா, கன்னி கழிந்த பெண்ணையா?" என்று கேட்டார்கள். நான், "கன்னி கழிந்த பெண்ணைத்தான் மணந்துகொண்டேன்" என்றேன். "கன்னிப் பெண்ணை மணந்து கொண்டு, அவளோடு நீயும் உன்னோடு அவளுமாகக் கூடிக்குலவி மகிழ்ந்திருக்கலாமே?"என்று கூறினார்கள்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! எனக்குச் சிறு வயது சகோதரிகள் பலர் இருக்கும் நிலையில் என் தந்தை (உஹுதுப் போரில்) "இறந்துவிட்டார்கள்' அல்லது "கொல்லப்பட்டு விட்டார்கள்'.

ஆகவே, அவர்களுக்கு ஒழுக்கம் கற்பிக்கவோ, அவர்களைப் பராமரிக்கவோ முன்வராத, அவர்களைப் போன்றே (அனுபவமற்ற இளவயதுப் பெண்) ஒருத்தியை மணந்து, அவர்களிடம் அழைத்துச் செல்ல நான் விரும்பவில்லை. ஆகவே, அவர்களைப் பராமரிப்பதற்காகவும் அவர்களுக்கு ஒழுக்கம் கற்பிப்பதற்காகவும் (வாழ்ந்து பக்குவப்பட்ட) கன்னி கழிந்த ஒரு பெண்ணையே நான் மணந்துகொண்டேன்" என்று விடையளித்தேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்து சேர்ந்தபோது, காலையில் ஒட்டகத்துடன் அவர்களிடம் சென்றேன். எனக்கு அதன் விலையைக் கொடுத்தார்கள். பிறகு அந்த ஒட்டகத்தையும் என்னிடமே திருப்பிக் கொடுத்துவிட்டார்கள் (அன்பளிப்பாக).
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3263 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மக்காவிலிருந்து மதீனா நோக்கி வந்துகொண்டிருந்தோம். அப்போது எனது ஒட்டகத்திற்கு நோய் ஏற்பட்டுவிட்டது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி, மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது. பின்வரும் தகவலும் அதில் இடம்பெற்றுள்ளது: என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனது இந்த ஒட்டகத்தை எனக்கு விற்றுவிடு" என்று கேட்டார்கள். நான், "இல்லை; அது உங்களுக்கே உரியது (விலை வேண்டாம்)" என்றேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை; அதை எனக்கு விலைக்கு விற்றுவிடு" என்றார்கள். நான், "இல்லை (விலை வேண்டாம்) இது உங்களுக்கு உரியது, அல்லாஹ்வின் தூதரே!" என்றேன். அவர்கள், "இல்லை, அதை நீ எனக்கு விற்றுவிடு" என்றார்கள். "அவ்வாறாயின் நான் ஒருவருக்கு ஓர் "ஊக்கியா' தங்கம் கடனாகக் கொடுக்க வேண்டியுள்ளது. அந்தக் கடனுக்குப் பகரமாக இதை உங்களுக்குக் கொடுத்துவிடுகிறேன்" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் இதை வாங்கிக்கொண்டேன். (உன் கோரிக்கைப்படி) மதீனா வரை இதன் மீது அமர்ந்துகொண்டு வந்துசேர்' என்றார்கள்.
நான் மதீனாவுக்கு வந்தபோது, பிலால் (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவருக்கு ஓர் "ஊக்கியா' தங்கத்தையும் இன்னும் கூடுதலாகவும் கொடுங்கள்" என்றார்கள். பிலால் (ரலி) அவர்கள் என்னிடம் ஓர் "ஊக்கியா' தங்கமும் கொடுத்தார்கள். மேலும், கூடுதலாக ஒரு "கீராத்'தும் கொடுத்தார்கள். "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூடுதலாகத் தந்த (கீராத்தான)து என்னைவிட்டு ஒருபோதும் பிரியாது" என்று நான் கூறிக்கொண்டேன். அந்த ஒரு "கீராத்' எனது பணப்பையிலேயே இருந்துவந்தது. பின்னர் "ஹர்ரா'ப் போர்நாளில் சிரியாவாசிகள் அதை எடுத்துக்கொண்டு விட்டார்கள்.

3264 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் ஒரு பயணத்தில் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது எனது ஒட்டகம் பின்தங்கிவிட்டது..."என ஹதீஸ் ஆரம்பமாகிறது. அதில், "பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அ(ந்த ஒட்டகத்)தைக் குத்தினார்கள். பிறகு என்னிடம், அல்லாஹ்வின் பெயரால் இதில் ஏறிச்செல் என்றார்கள்" என்றும் இடம்பெற்றுள்ளது.

மேலும், "எனக்கு அதிகமாகக் கொடுத்துக்கொண்டே "அல்லாஹ் உன்னை மன்னிப்பானாக!' எனப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள்" என அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

3265 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(பயணத்தில்) எனது ஒட்டகம் நன்றாக இயங்காதிருந்த நிலையில் நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். பிறகு எனது ஒட்டகத்தைக் குத்தினார்கள். அது குதித்தோடலாயிற்று. பின்னர் நபி (ஸல்) அவர்கள் சொல்வதைக் கேட்பதற்காக அதன் கடிவாளத்தைப் பிடித்து அதன் வேகத்தை மட்டுப்படுத்திக்கொண்டிருந்தேன். ஆனால், என்னால் முடியவில்லை. பிறகு நபி (ஸல்) அவர்கள் என்னை வந்தடைந்த போது, "அதை எனக்கு விற்றுவிடு" என்றார்கள். நான் அதை ஐந்து "ஊக்கியா'க்களுக்கு அவர்களுக்கு விற்றுவிட்டேன்.
அப்போது "மதீனா சென்றடையும்வரை அதன் மீது பயணம் செய்துகொள்ள என்னை அனுமதிக்க வேண்டும் எனும் நிபந்தனையின்பேரில்" என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள் "மதீனா சென்றடையும்வரை அதன் மீது நீ பயணம் செய்துகொள்ளலாம்" என்றார்கள். நான் மதீனா வந்து சேர்ந்தபோது, அந்த ஒட்டகத்தை அவர்களிடம் (ஒப்படைக்க) கொண்டுசென்றேன். (அதன் விலையையும்) கூடுதலாக ஓர் "ஊக்கியா'வும் அவர்கள் எனக்குக் கொடுத்தார்கள். பின்னர் அந்த ஒட்டகத்தையும் எனக்கு அன்பளிப்பாகத் தந்துவிட்டார்கள்.

3266 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் –("அறப்போர் வீரனாக' என்றும் கூறினார்கள் என்றே எண்ணுகிறேன்)– கலந்துகொண்டேன். மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. மேலும், பின்வருமாறு கூடுதலாகவும் இடம்பெற்றுள்ளது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஜாபிர்! (ஒட்டகத்தின்) விலை முழுவதையும் பெற்றுக் கொண்டாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "விலையும் உனக்கே உரியது; ஒட்டகமும் உனக்கே உரியது. விலையும் உனக்கே உரியது; ஒட்டகமும் உனக்கே உரியது" என்றார்கள்.

3267 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு முறை) இரண்டு "ஊக்கியா'க்களுடன் ஒரு திர்ஹம் அல்லது இரண்டு திர்ஹங்களைக் கொடுத்து என்னிடமிருந்து ஓர் ஒட்டகத்தை வாங்கினார்கள். (மதீனாவிற்கு அருகிலுள்ள) "ஸிரார்'எனுமிடத்திற்கு அவர்கள் வந்தபோது, ஒரு மாட்டை அறுக்கும்படி உத்தரவிட்டார்கள். அதன்படி அறு(த்து சமை)க்கப்பட்டது. அதை அனைவரும் உண்டார்கள்.
மதீனாவுக்கு வந்தபோது, பள்ளிவாசலுக்குச் சென்று இரண்டு ரக்அத்கள் தொழும்படி எனக்கு உத்தரவிட்டார்கள். (பின்னர்) ஒட்டகத்தின் விலையை எனக்குக் கொடுத்தார்கள். சற்று தாராளமாகவே நிறுத்தார்கள்.

3268 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் அதில், "ஒரு தொகையைக் குறிப்பிட்டு என்னிடமிருந்து அ(ந்த ஒட்டகத்)தை வாங்கிக்கொண்டார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. இரண்டு "ஊக்கியா'க்களுடன் ஒரு திர்ஹம் அல்லது இரண்டு திர்ஹங்களைக் கொடுத்து எனும் (ஐயப்பாட்டுடனான) குறிப்பு இல்லை. மேலும் அதில், "ஒரு மாட்டை அறுக்கும்படி உத்தரவிட்டார்கள். அவ்வாறே அது அறுக்கப்பட்டது. பின்னர் அதன் இறைச்சியைப் பங்கிட்டார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

3269 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "நான்கு தீனார்களுக்காக உனது ஒட்டகத்தை நான் வாங்கிக்கொண்டேன்; நீ மதீனா சென்றடையும்வரை அதன் மீது நீ பயணிக்கலாம்" என்றார்கள்.

## பாடம் : 22 ஒருவர் தாம் கடனாகப் பெற்றதை விடச் சிறந்ததைத் திருப்பிச் செலுத்துவதும், "வாங்கிய கடனை அழகிய முறையில் திருப்பிச் செலுத்துபவரே உங்களில் சிறந்தவர்' எனும் நபி மொழியும்.

3270 அபூராஃபிஉ அஸ்லம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம் இளம் வயது ஆண் ஒட்டகம் ஒன்றைக் கடன் வாங்கியிருந்தார்கள். தர்ம ஒட்டகங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்த போது, (அவற்றிலிருந்து விலைக்கு வாங்கி) அம்மனிதருக்குரிய இளம் வயது ஒட்டகத்தைக் கொடுத்துவிடுமாறு எனக்கு உத்தரவிட்டார்கள். நான் சென்றுவிட்டுத் திரும்பிவந்து, "அவற்றில் ஆறுவயது முழுமையடைந்த (கடைவாய்ப் பற்கள் முளைத்து விட்ட) ஒட்டகங்களைத் தவிர வேறெதையும் நான் காணவில்லை" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அ(ந்த ஒட்டகத்)தையே அவருக்குக் கொடுத்து விடுங்கள் (ஏனெனில்,) அழகிய முறையில் திருப்பிச் செலுத்துபவரே சிறந்தவர் ஆவார்" என்று கூறினார்கள்.

3271 மேற்கண்ட ஹதீஸ் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முன்னாள் அடிமையாயிருந்த அபூராஃபிஉ (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இளம்வயது ஆண் ஒட்டகம் ஒன்றை, அதைப் போன்றதைத் திருப்பித் தருவதாகக் கூறி கடன் வாங்கியிருந்தார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. எனினும் அதில், "ஏனெனில், அழகிய முறையில் திருப்பிச் செலுத்துபவரே அல்லாஹ்வின் அடியார்களில் சிறந்தவர் ஆவார்" என்று (சிறிது மாற்றத்துடன்) இடம் பெற்றுள்ளது.

3272 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதருக்குக் கடன் கொடுக்க வேண்டியிருந்தது. (அதைத் திருப்பிச் செலுத்தும்படி கேட்டுவந்தபோது) அவர்

கடுஞ்சொற்களை பயன்படுத்தினார். நபித்தோழர்கள் அவரை(ப் பிடித்து)க் கண்டிக்கத் தயாராயினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அவரை விட்டுவிடுங்கள்.) கடன்காரருக்கு (இவ்வாறு) பேச உரிமை உண்டு" என்று கூறிவிட்டு, "அவருக்குக் கொடுக்க வேண்டிய ஒட்டகத்தின் வயதுடைய ஒட்டகமொன்றை வாங்கி வாருங்கள்" என்றார்கள். மக்கள் (சென்றுவிட்டு வந்து) அவருக்குக் கொடுக்க வேண்டிய ஒட்டகத்தைவிட அதிக வயதுடைய ஒட்டகங்களைத் தவிர வேறெதையும் நாங்கள் காணவில்லை" என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதையே வாங்கி அவருக்குக் கொடுத்து விடுங்கள். ஏனெனில், அழகியமுறையில் திருப்பிச் செலுத்துபவரே "உங்களில் சிறந்தவர்களில் உள்ளவர்' அல்லது "உங்களில் சிறந்தவர்' ஆவார்"என்று சொன்னார்கள்.

3273 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட வயதுடைய ஒட்டகமொன்றை கடன் வாங்கினார்கள். அதைவிட அதிக வயதுடைய ஒட்டகத்தைத் திருப்பிச் செலுத்தினார்கள். மேலும், "அழகிய முறையில் திருப்பிச் செலுத்துபவரே உங்களில் சிறந்தவர் ஆவார்" என்று கூறினார்கள்.

3274 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (கடனாகக்) கொடுத்திருந்த ஒட்டகத்தைக் கேட்டு ஒரு மனிதர் வந்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவருக்குக் கொடுக்க வேண்டிய ஒட்டகத்தைவிட அதிக வயதுடைய ஒட்டகத்தை அவருக்குக் கொடுங்கள்" என்றும் "அழகிய முறையில் திருப்பிச் செலுத்துபவரே உங்களில் சிறந்தவர்" என்றும் கூறினார்கள்.

## பாடம் : 23 ஓர் உயிரினத்தை அதே இன உயிரினத்திற்குப் பதிலாக ஏற்றத்தாழ்வோடு விற்பது செல்லும்.

3275 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஓர் அடிமை நபி (ஸல்) அவர்களிடம் வந்து, நாடு துறந்து (ஹிஜ்ரத்) செல்ல உறுதிமொழி அளித்தார். அவர் ஓர் அடிமை என்பது நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. பின்னர் அவருடைய உரிமையாளர் நபி (ஸல்) அவர்களைத் தேடிவந்(து, அது பற்றி முறையீடு செய்)தார். நபி (ஸல்) அவர்கள் அவரிடம், "அவரை எனக்கு விற்றுவிடு"என்று கூறி விட்டு, இரு கறுப்பு அடிமைகளைக் கொடுத்து அவரை வாங்கிக் கொண்டார்கள். பின்னர் "ஒருவர் அடிமையா?" என்று கேட்காத வரை (தம்மிடம் உறுதிமொழி அளிக்க வருபவர்) எவரிடமும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உறுதிமொழி பெறவில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 24 அடைமானமும், அது உள்ளூரிலும் பயணத்திலும் செல்லும் என்பதும்.

3276 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு யூதரிடமிருந்து உணவுப் பொருளைக் கடனாக வாங்கினார்கள். அதற்காகத் தமது (இரும்புக்) கவசத்தை அவரிடம் அடகு வைத்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3277 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு யூதரிடமிருந்து உணவுப் பொருளை (கடனாக) வாங்கினார்கள். (அதற்காக) இரும்புக் கவசத்தை அடகு வைத்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3278 சுலைமான் பின் மிஹ்ரான் அல் அஃமஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்களிடம் முன்பண வணிகத்தில் (சலம்) அடைமானம் பற்றிப் பேசினோம். அப்போது இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் யூதர் ஒருவரிடமிருந்து ஒரு குறிப்பிட்ட தவணைக்கு உணவுப் பொருளை (கடனாக) வாங்கினார்கள்; அதற்காகத் தமது இரும்புக் கவசத்தை அடைமானம் வைத்தார்கள் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் என நமக்கு அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. - அதில், "இரும்பு' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 25 முன்பண வணிகம் (சலம்).

3279 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்த போது, மக்கள் ஓராண்டு அல்லது ஈராண்டுகளில் பெற்றுக்கொள்வதாகக் கூறி,பேரீச்சம் பழத்திற்காக முன்பணம் கொடுத்துவந்தனர். நபி(ஸல்) அவர்கள், "ஒருவர் (இவ்வாறு) பின்னால் பெற்றுக்கொள்வதாகக் கூறி, பேரீச்சம் பழத்திற்காக முன்பணம் கொடுப்பதானால், குறிப்பிட்ட எடைக்காகவும் அளவுக்காகவும் குறிப்பிட்ட தவணைக்கு மட்டுமே கொடுக்கட்டும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3280 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு) வந்தபோது, (பின்னர் பொருளைப் பெற்றுக்கொள்வதாகக் கூறி) மக்கள் முன்பணம் செலுத்திவந்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(பொருளைப் பின்னர் பெற்றுக் கொள்வதாகக் கூறி) முன்பணம் கொடுப்பவர், குறிப்பிட்ட அளவுக்காகவும் குறிப்பிட்ட எடைக்காகவுமே முன்பணம் கொடுக்கட்டும்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் "குறிப்பிட்ட தவணைக்கு' எனும் குறிப்பு இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "குறிப்பிட்ட தவணைக்கு' எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 26 உணவுப் பொருட்களைப் பதுக்குவது தடை செய்யப்பட்டுள்ளது.

3281 யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பதுக்கல் செய்பவன் பாவியாவான்' என்று சொன்னார்கள் என மஅமர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்" என்றார்கள். அப்போது சயீத் பின் அல் முசய்யப் (ரஹ்) அவர்களிடம், "நீங்கள் பதுக்குகிறீர்களே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு சயீத் (ரஹ்) அவர்கள், "இந்த ஹதீஸை அறிவித்துவந்த மஅமர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களும் பதுக்குபவராகவே இருந்தார்கள்"என்றார்கள்.

3282 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பாவியே பதுக்கல் செய்வான்.
இதை மஅமர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் பனூ அதீ பின் கஅப் குலத்தைச் சேர்ந்த மஅமர் பின் அப்தில்லாஹ் பின் நாஃபிஉ பின் அபீமஅமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 27 வியாபாரத்தில் (தேவையில்லாமல்) சத்தியம் செய்வது விலக்கப்பட்டுள்ளது.

3283 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சத்தியம் செய்வது பொருளை விலை போகச் செய்யும்; இலாபத்தை அழித்துவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3284 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வியாபாரத்தில் அதிகமாகச் சத்தியம் செய்ய வேண்டாம் என உங்களை நான் எச்சரிக்கிறேன். ஏனெனில், அது (பொருளை) விலைபோகச் செய்யும்; பின்னர் (வளத்தை) அழித்துவிடும்.
இதை அபூகத்தாதா அல்அன்சாரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 28 விலைக்கோள் உரிமை (அஷ் ஷுஃப்ஆ).

3285 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இருவருக்குக் கூட்டாக உள்ள குடியிருப்பு அல்லது தோட்டத்தில் தம்முடைய (பங்கை விற்க நாடுபவர்) பங்காளிக்கு அறிவிப்பதற்கு முன் விற்பதற்கு உரிமை இல்லை. பங்காளி விரும்பினால் அதை வாங்கிக்கொள்வார்;விரும்பாவிட்டால் விட்டுவிடுவார்.

இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3286 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பிரிக்கப்படாத குடியிருப்பு, அல்லது தோட்டத்தில் விலைக்கோள் உரிமை உள்ளது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள். பங்காளிக்கு அறிவிப்புச் செய்வதற்கு முன்னர் (தமது பங்கை) விற்க ஒருவருக்கு அனுமதி இல்லை. பங்காளி விரும்பினால் அதை வாங்கிக்கொள்வார்; விரும்பாவிட்டால் விட்டுவிடுவார். அவரிடம் அறிவிக்காமல் விற்றுவிட்டாலும் அவரே அதிக உரிமையுடையவர் ஆவார்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3287 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நிலம், வீடு, தோட்டம் ஆகிய (பிரிக்கப்படாத) கூட்டுச் சொத்துகள் ஒவ்வொன்றிலும் விலைக்கோள் உரிமை உள்ளது. எனவே, பங்காளிக்கு அறிவிப்பதற்கு முன் விற்பது தகாது. ஒன்று அவரே வாங்கிக் கொள்வார்; அல்லது விட்டுவிடுவார். அவர் (தம் பங்காளிக்கு அறிவிக்க) மறுத்தாலும் பங்காளியே அதற்கு மிகவும் உரிமையுடையவர் ஆவார்; அவரிடம் அறிவிக்கும்வரை.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 29 அண்டை வீட்டாரின் சுவரில் மரக்கட்டையைப் பதிப்பது.

3288 அப்துர் ரஹ்மான் பின் ஹுர்முஸ் அல்அஃரஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஒருவர் தமது வீட்டுச் சுவரில் தம் அண்டை வீட்டுக்காரர் மரக்கட்டை (சாரம்) பதிப்பதைத் தடுக்க வேண்டாம்' என்று கூறினார்கள்" என்று சொல்லிவிட்டு, "என்ன இது? (நபியவர்களின்) இ(ந்த உபதேசத்)தைப் புறக்கணிப்பவர்களாகவே உங்களை நான் காண்கிறேனே! அல்லாஹ்வின் மீதாணையாக! (உங்களுக்குப் பிடிக்காவிட்டாலும்) இதை நான் உங்களுக்கு வலியுறுத்திக் கொண்டுதான் இருப்பேன்"என்று கூறுவார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 30 அநீதியிழைத்தல், பிறர் நிலத்தை அபகரித்தல் உள்ளிட்டவை தடை செய்யப் பட்டுள்ளன.

3289 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஒரு சாண் அளவு நிலத்தை அநியாயமாக அபகரிக்கிறாரோ, அவரது கழுத்தில் அல்லாஹ் மறுமை நாளில் அந்த நிலத்தி(ன் மேற்பகுதியி)லிருந்து ஏழு பூமிகள்வரை (செல்லும் பகுதியை) மாலையாக மாட்டுவான்.
இதை சயீத் பின் ஸைத் பின் அம்ர் பின் நுஃபைல் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3290 சயீத் பின் ஸைத் பின் அம்ர் பின் நு ஃபைல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அர்வா பின்த் உவைஸ் என்ற பெண், எனக்குரிய வீட்டின் ஒரு பகுதி தொடர்பாக வழக்காடினாள். அப்போது நான், "அவளையும் அந்த வீட்டையும் விட்டுவிடுங்கள். ஏனெனில், "யார் நியாயமின்றி (பிறருக்குச் சொந்தமான) ஒரு சாண் நிலத்தைக் கைப்பற்றிக் கொள்கிறாரோ, அவரது கழுத்தில் மறுமை நாளில் அந்த நிலத்தி(ன் மேற்பகுதியி)லிருந்து ஏழு பூமிகள்வரை (செல்லும் பகுதி) மாலையாக மாட்டப்படும்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன். இறைவா! அவள் (தனது வாதத்தில்) பொய் சொல்பவளாக இருந்தால், அவளது பார்வையைப் பறித்துவிடு. அவளது சவக்குழியை அந்த வீட்டிலேயே அமைத்துவிடு" என்று கூறினேன்.
இந்த ஹதீஸை சயீத் பின் ஸைத் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கும் முஹம்மத் பின் ஸைத் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
பின்னர் நான் அந்தப் பெண்ணைப் பார்வையற்றவளாகப் பார்த்தேன். அவள் சுவர்களைத் தடவிக்கொண்டு இருந்தாள். "சயீத் பின் ஸைதின் பிரார்த்தனை எனது விஷயத்தில் பலித்துவிட்டது" என்று கூறுவாள். இந்நிலையில் அவள் (ஒரு நாள்) தனது வீட்டில் நடந்துகொண்டிருந்தபோது, வீட்டுக்குள்ளிருந்த கிணறு ஒன்றை அவள் கடந்து சென்றாள். அப்போது அதில் அவள் (தவறி) விழுந்துவிட்டாள். அதுவே அவளது சவக்குழியாக அமைந்தது.

3291 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சயீத் பின் ஸைத் (ரலி) அவர்கள் தமது நிலத்தில் ஒரு பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டார் என அர்வா பின்த் உவைஸ் (அல்லது உனைஸ்) என்ற பெண் குற்றம் சாட்டினார். (அப்போதைய மதீனாவின் ஆளுநர்) மர்வான் பின் அல்ஹகமிடம் சயீதுக்கு எதிராக அவர் வழக்குத் தொடுத்தார். (விசாரணையின்போது) சயீத் பின் ஸைத் (ரலி) அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து (ஒரு ஹதீஸை) செவியுற்ற பிறகும் அவளது நிலத்தில் ஒரு பகுதியை அபகரிப்பேனா?" என்று கேட்டார்கள்.
அதற்கு மர்வான் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் என்ன செவியுற்றீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு சயீத் (ரலி) அவர்கள், "யார் ஒரு சாண் நிலத்தை அநியாயமாகக் கைப்பற்றிக்கொள்கிறாரோ அவரது கழுத்தில் அந்த நிலத்தி(ன் மேற்பகுதியி)லிருந்து ஏழு பூமிகள்வரை (செல்லும் பகுதி) மாலையாக மாட்டப்படும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.அதற்கு மர்வான், "இதற்குப் பின் உங்களிடம் நான் ஆதாரம் கேட்கமாட்டேன்" என்றார்கள்.
அப்போது சயீத் பின் ஸைத் (ரலி) அவர்கள் "இறைவா! இவள் பொய் சொல்லியிருந்தால் அவளது பார்வையைப் பறித்துவிடு. அந்த நிலத்திலேயே அவளைக் கொன்றுவிடு" என்று பிரார்த்தித்தார்கள்.
பிறகு பார்வை பறிபோனவளாகவே அவள் இறந்தாள். அவள் தனது நிலத்தில் நடந்து கொண்டிருந்தபோது ஒரு குழியில் (தவறி) விழுந்து மாண்டுபோனாள்.

3292 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஒரு சாண் நிலத்தை அநியாயமாகக் கைப்பற்றிக்கொள்கிறாரோ, அவரது கழுத்தில் மறுமை நாளில் அந்த நிலத்தி(ன் மேற்பகுதி யி)லிருந்து ஏழு பூமிகள்வரை (செல்லும் பகுதி) மாலையாக மாட்டப்படும்.
இதை சயீத் பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3293 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் முறையின்றி ஒரு சாண் நிலத்தைக் கைப்பற்றிக்கொள்கிறாரோ அவரது கழுத்தில் அல்லாஹ் மறுமை நாளில் அந்த நிலத்தி(ன் மேற்பகுதியி)லிருந்து ஏழு பூமிகள்வரை (செல்லும் பகுதியை) மாலையாக மாட்டாமல் விடுவதில்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3294 அபூசலமா அப்துல்லாஹ் பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
எனக்கும் என் கூட்டத்தாருக்குமிடையே ஒரு நிலம் தொடர்பாகத் தகராறு இருந்துவந்தது. நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று அதைப் பற்றிக் கூறினேன். ஆயிஷா (ரலி) அவர்கள், "அபூசலமா! மண்ணாசையைத் தவிர்த்துக் கொள்க! ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், 'யார் அநியாயமாக ஒரு சாண் அளவு நிலத்தை ஆக்கிரமித்துக் கொள்கிறாரோ அவரது கழுத்தில் அந்த நிலத்தி(ன் மேற்பகுதியி)லிருந்து ஏழு பூமிகள்வரை (செல்லும் பகுதி) மாலையாக மாட்டப்படும்' என்று கூறியுள்ளார்கள்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 31 பாதை விஷயத்தில் பிரச்சினை ஏற்படும்போது, பாதைக்காக ஒதுக்கப்பட வேண்டிய நிலத்தின் அளவு.

3295 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பாதை விஷயத்தில் நீங்கள் கருத்து வேறுபாடு கொண்டால், ஏழு முழங்கள் அகலமுள்ள நிலத்தைப் பொதுவழியாக ஆக்கப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 32 ஒரு முஸ்லிம், இறைமறுப்பாளருக்கு வாரிசாகமாட்டார்.

3296 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிம் இறைமறுப்பாளருக்கு வாரிசாகமாட்டார்.ஓர் இறைமறுப்பாளர் முஸ்லிமுக்கு வாரிசாகமாட்டார்.
இதை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 23 - வாரிசு உரிமை சட்டம்

**பாடம் : 1 (குர்ஆனில் குறிப்பிடப்பட்ட) பாகங்களை அவற்றுக்கு உரியோரிடம் சேர்த்து விடுங்கள். எஞ்சிய பாகம், இறந்தவரின் நெருங்கிய ஆண் உறவினருக்கு உரியதாகும்.**

3297 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(பாகப் பிரிவினை தொடர்பாகக் குர்ஆனில்) நிர்ணயிக்கப்பெற்றுள்ள பாகங்களை, (முதலில்) அவற்றுக்கு உரியவர்களிடம் சேர்த்துவிடுங்கள். பிறகு எஞ்சியிருப்பது (இறந்தவரின்) மிக நெருக்கமான ஆண் உறவினருக்கு உரியதாகும்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3298 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(பாகப் பிரிவினை தொடர்பாகக் குர்ஆனில்) நிர்ணயிக்கப்பெற்றுள்ள பாகங்களை, (முதலில்) அவற்றுக்கு உரியவர்களிடம் சேர்த்துவிடுங்கள். பாகம் நிர்ணயிக்கப்பெற்றவர்கள் (எடுத்தது போக) விட்டுவைப்பது, (இறந்தவரின்) மிக நெருக்கமான ஆண் உறவினருக்கு உரியதாகும்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3299 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறந்தவர் விட்டுச்செல்லும்) சொத்தை, (முதலில்) அல்லாஹ்வின் வேதத்தில் உள்ளபடி பாகம் நிர்ணயிக்கப் பெற்றவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுங்கள். பாகம் நிர்ணயிக்கப் பெற்றவர்கள் எடுத்ததுபோக விட்டுவைப்பது, (இறந்தவரின்) மிக நெருக்கமான ஆண் உறவினருக்கு உரியதாகும்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 2 மூல வாரிசுகளோ கிளை வாரிசுகளோ இல்லாதவரின் ("கலாலா") சொத்துரிமை.**

3300 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நோயுற்றிருந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் நடந்தே வந்து என்னை உடல்நலம் விசாரித்தார்கள். அப்போது எனக்கு மயக்கமேற்பட்டது. பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கத் தூய்மை (உளூ) செய்துவிட்டு எஞ்சிய தண்ணீரை என்மீது ஊற்றினார்கள். உடனே நான் மயக்கம் தெளிந்(து கண் விழித்)தேன். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! என் செல்வத்தின் விஷயத்தில் நான் என்ன முடிவு செய்ய வேண்டும்?" என்று கேட்டேன். அப்போது அவர்கள் எனக்குப் பதிலேதும் கூறவில்லை. முடிவில் வாரிசுரிமை தொடர்பான "(நபியே!) உம்மிடம் ("கலாலா' குறித்து) அவர்கள் மார்க்கத் தீர்ப்புக் கேட்கின்றனர்" (4:176)என்று தொடங்கும் வாரிசுரிமை தொடர்பான இறைவசனம் அருளப்பெற்றது.

3301 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் பனூ சலிமா எனும் (என்) குலத்தாரிடையே நான் (நோயுற்றுத் தங்கி) இருந்தபோது, நடந்தே வந்து என்னை உடல்நலம் விசாரித்தார்கள். நபி (ஸல்) அவர்கள், நான் (நோயின் கடுமையால்) சுயநினைவு இழந்தவனாக இருந்த நிலையில் என்னைக் கண்டார்கள். ஆகவே, சிறிது தண்ணீரைக் கொண்டுவரச் சொல்லி, அதிலிருந்து அங்கத் தூய்மை (உளூச்) செய்து, எஞ்சிய தண்ணீரை என்மீது தெளித்தார்கள். நான் மயக்கம் தெளிந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் என் செல்வத்தின் விஷயத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டும்?" என்று கேட்டேன். அப்போதுதான் "ஓர் ஆணுக்கு இரண்டு பெண்களின் பாகத்திற்குச் சமமானது கிடைக்கும் என உங்கள் பிள்ளைகள் விஷயத்தில் உங்களுக்கு அல்லாஹ் அறிவுறுத்துகின்றான்" (4:11) என்று தொடங்கும் இறைவசனம் அருளப்பெற்றது.

3302 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நோயுற்றிருந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள் தம்முடனிருக்க நடந்தே வந்து என்னை உடல்நலம் விசாரித்தார்கள். அப்போது நான் (நோயின் கடுமையால்) மயக்கமுற்ற நிலையில் இருப்பதைக் கண்டார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கத் தூய்மை (உளூச்) செய்து, எஞ்சிய தண்ணீரை என்மீது ஊற்றினார்கள். நான் மயக்கம் தெளிந்து கண் விழித்தபோது, என்னருகில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருப்பதைக் கண்டேன். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! எனது செல்வத்தின் விஷயத்தில் நான் எப்படி நடந்துகொள்ள வேண்டும்?" என்று கேட்டேன். அப்போது அவர்கள் எனக்குப் பதிலேதும் கூறவில்லை. முடிவில் வாரிசுரிமை தொடர்பான (4:11ஆவது) இறைவசனம் அருளப்பெற்றது.

3303 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நோய்வாய்ப்பட்டு சுயநினைவில்லாமல் இருந்தபோது, (என்னை உடல்நலம் விசாரிப்பதற்காக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் வீட்டுக்கு வந்தார்கள். பின்னர் அங்கத் தூய்மை செய்துவிட்டு, எஞ்சிய தண்ணீரை என்மீது ஊற்றினார்கள். உடனே எனக்குச் சுயநினைவு திரும்பியது. அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! நேரடி ஆண் வாரிசுகள் அல்லாதவர்கள் ("கலாலா')தாம் எனக்கு வாரிசாகிறார்கள் (இந்நிலையில் சொத்துப் பங்கீடு எவ்வாறு அமையும்?)" என்று கேட்டேன். அப்போதுதான் வாரிசுரிமை தொடர்பான (4:11ஆவது) இறைவசனம் அருளப் பெற்றது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த முஹம்மத் பின் அல்முன்கதிர் (ரஹ்) அவர்களிடம், "(நபியே!) உம்மிடம் ("கலாலா' குறித்து) அவர்கள் மார்க்கத் தீர்ப்புக் கேட்கின்றனர் (4:176) எனும் இறைவசனமா (ஜாபிர் (ரலி) அவர்கள் தொடர்பாக அருளப் பெற்றது)?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இந்த விஷயத்தில்தான் அருளப்பெற்றது" என்று விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் வஹ்ப் பின் ஜரீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அப்போதுதான் பாகப் பிரிவினை (ஃபராயிள்) தொடர்பான வசனம் அருளப்பெற்றது" என்றும், நள்ர் பின் ஷுமைல் மற்றும் அபூஆமிர் அல்அகதீ (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "பாகப் பிரிவினை (ஃபர்ள்) வசனம்' என்றும் இடம் பெற்றுள்ளது. இந்த அறிவிப்புகளில் எவற்றிலும் முஹம்மத் பின் அல்முன்கதிர் (ரஹ்) அவர்களிடம் ஷுஅபா (ரஹ்) அவர்கள் கேட்டதைப் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை.

3304 மஅதான் பின் அபீதல்ஹா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் ஒரு வெள்ளிக்கிழமை (ஜுமுஆ) தினத்தன்று உரை நிகழ்த்தினார்கள். அவர்கள் (தமது உரையில்) நபி (ஸல்) அவர்களையும் அபூபக்ர் (ரலி) அவர்களையும் நினைவுகூர்ந்தார்கள். பிறகு கூறினார்கள்: நான் எனக்குப் பின்னால் "கலாலா'வைவிட ஒரு முக்கியமான விஷயத்தை விட்டுச்செல்லவில்லை. இந்த "கலாலா' குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நான் விவாதித்ததைப் போன்று வேறு எதற்காகவும் விவாதித்ததில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் இது தொடர்பாக என்னிடம் கடிந்து கொண்டதைப் போன்று வேறு எதற்காகவும் என்னிடம் கடிந்துகொண்டதில்லை. எந்த அளவிற்கு (அவர்கள் என்னைக் கடிந்துகொண்டார்கள்) எனில், அவர்கள் தமது விரலால் என் நெஞ்சில் குத்தினார்கள். "உமரே! அந்நிசா அத்தியாயத்தின் இறுதியிலுள்ள கோடைக்கால(த்தில் அருளப்பெற்ற) வசனம் (4:176) உமக்குப் போதுமானதாக இல்லையா?" என்று கேட்டார்கள்.
நான் இன்னும் (சிறிது காலம்) வாழ்ந்தால் இந்த "கலாலா' தொடர்பாகக் குர்ஆனைக் கற்றோரும் கல்லாதோரும் தீர்ப்பளிக்கும் விதத்தில் தெளிவான ஒரு தீர்ப்பை வழங்குவேன்" என்றும் (உமர் (ரலி) அவர்கள் தமது உரையில்) கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 3 "கலாலா' பற்றிய வசனமே இறுதியாக அருளப்பெற்ற வசனமாகும்.

3305 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
குர்ஆனில் இறுதியாக அருளப்பெற்ற வசனம் "(நபியே!) உம்மிடம் ("கலாலா' குறித்து) அவர்கள் மார்க்கத் தீர்ப்புக் கேட்கின்றனர்" (4:176) என்று தொடங்கும் வசனமாகும்.

3306 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(குர்ஆனில்) இறுதியாக அருளப்பெற்ற வசனம், கலாலா பற்றிய (4:176ஆவது) இறை வசனமாகும். இறுதியாக அருளப்பெற்ற அத்தியாயம் "பராஅத்' (அல்லது "அத்தவ்பா') எனும் (9ஆவது) அத்தியாயமாகும். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3307 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களுக்கு) முழுமையாக அருளப்பெற்ற அத்தியாயங்களில் இறுதியானது "அத்தவ்பா' எனும் (9ஆவது) அத்தியாயமாகும். இறுதியாக அருளப்பெற்ற வசனம் "கலாலா' பற்றிய (4:176ஆவது) வசனமாகும்.

- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "முழுமையாக' என்பதைக் குறிக்க ("தாம்மத்தன்' என்பதற்குப் பகரமாக) "காமி லத்தன்' எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

3308 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களுக்கு) இறுதியாக அருளப்பெற்ற இறைவசனம் "(நபியே!) உம்மிடம் மார்க்கத் தீர்ப்பு கேட்கின்றனர்" என்று தொடங்கும் (4:176ஆவது) வசனமாகும்.

## பாடம் : 4 ஒருவர் ஒரு செல்வத்தை விட்டுச்சென்றால், அது அவருடைய வாரிசுகளுக்கே உரியதாகும்.

3309 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கடன் உள்ள நிலையில் இறந்துவிட்ட ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்படுவார். அப்போது "தம்மீதுள்ள கடனை அடைக்க ஏதேனும் அவர் ஏற்பாடு செய்துள்ளாரா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்பார்கள். அவர் அத்தகைய ஏற்பாடுகளைச் செய்துவிட்டுச் சென்றிருப்பதாகத் தெரிவிக்கப்பட்டால்,அவருக்கு (ஜனாஸாத் தொழுகை) தொழுவிப்பார்கள். அவ்வாறில்லை எனில், (முஸ்லிம்களிடம்) "உங்கள் தோழருக்கு நீங்களே தொழுதுகொள்ளுங்கள்" என்று கூறிவிடுவார்கள்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் பல வெற்றிகளை அளித்(து மதீனா அரசில் நிதி குவிந்)த போது, "இறைநம்பிக்கையாளர்களுக்கு, அவர்களின் உயிர்களை விட நானே நெருக்கமான (உரிமையுடைய)வன் ஆவேன். ஆகவே, யார் தம்மீது கடன் இருக்கும் நிலையில் (அதை அடைப்பதற்காக ஒன்றையும் விட்டுச்செல்லாமல்) இறந்து விடுகிறாரோ, அந்தக் கடனை அடைப்பது எனது பொறுப்பாகும். யார் இறக்கும்போது செல்வத்தை விட்டுச்சென்றுள்ளாரோ, அது அவருடைய வாரிசுகளுக்கு உரியதாகும்" என்று கூறுவார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3310 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! பூமியின் மீதுள்ள எந்த இறைநம்பிக்கையாளருக்கும் மற்றெல்லா மக்களையும்விட நானே நெருக்கமான (உரிமையுடைய)வன் ஆவேன். ஆகவே, உங்களில் யார் ஏதேனும் கடனையோ அல்லது திக்கற்ற மனைவி மக்களையோ விட்டுச்செல்கிறாரோ,அவருக்கு நானே பொறுப்பாளன் ஆவேன். உங்களில் யார் ஒரு செல்வத்தை விட்டுச்செல்கிறாரோ, அது அவருடைய நெருங்கிய ஆண் உறவினருக்கு உரியதாகும்; அவர் யாராக இருப்பினும் சரியே!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3311 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த நபிமொழிகளாகும். அவற்றில் பின்வரும் நபிமொழியும் ஒன்றாகும்: அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் வேதத்தில், நானே இறை நம்பிக்கையாளர்களுக்கு அனைத்து மக்களையும்விட நெருக்கமான (உரிமையுடைய)வன் ஆவேன் (எனக் குறிப்பிடப்பட்டுள்ளது). ஆகவே, உங்களில் யார் கடனையோ திக்கற்ற மனைவி மக்களையோ விட்டுச்செல்கிறாரோ, (அவருக்காக ஆட்சித் தலைவராகிய) என்னை அழையுங்கள். நானே அவருடைய பொறுப்பாளன் ஆவேன். உங்களில் யார் செல்வத்தை விட்டுச்செல்கிறாரோ,அவருடைய நெருங்கிய ஆண் உறவினருக்கே அவரது சொத்தில் முன்னுரிமை அளிக்கப்பட வேண்டும்; அவர் யாராக இருப்பினும் சரியே!

3312 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறந்துவிட்ட) ஒருவர் ஒரு செல்வத்தை விட்டுச்சென்றால், அது அவருடைய வாரிசுகளுக் குரியதாகும். ஒருவர் (திக்கற்ற) மனைவி மக்களை விட்டுச்சென்றால், அவர்களைப் பராமரிப்பது (ஆட்சித் தலைவரான) எமது பொறுப்பாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், (முஹம்மத் பின் ஜஅ்ஃபர்) ஃகுன்தர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஒருவர் திக்கற்ற மனைவி மக்களை விட்டுச்சென்றால், அவருக்கு நானே பொறுப்பேற்றுக் கொண்டேன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

# அத்தியாயம் : 24 - அன்பளிப்புகள்

**பாடம் : 1** ஒருவர் தானமாகக் கொடுத்ததைத் தானம் பெற்றவரிடமிருந்து அவரே விலைக்கு வாங்குவது விரும்பத்தகாத செயலாகும்.

3313 உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஒருவரை அல்லாஹ்வின் பாதையில் (பயணம் மேற்கொள்வதற்காக) உயர்ரகக் குதிரையொன்றில் (அவருக்கே அதைத் தானமாகக் கொடுத்து) அனுப்பிவைத்தேன். அந்தக் குதிரைக்காரர் அதை (சரியாகப் பராமரிக்காமல்) பாழாக்கிவிட்டார். அவர் அதை மலிவான விலைக்கு (கேட்டால்கூட) விற்றுவிடுவார் என்று நான் எண்ணினேன். ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அது குறித்துக் கேட்டேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதை விலைக்கு வாங்காதீர். உமது தானத்தைத் திரும்பப்பெறாதீர். தனது தானத்தைத் திரும்பப் பெறுபவன் நாய்க்கு நிகரானவன் ஆவான். தான் எடுத்த வாந்தியைத் தானே தின்கிறது நாய்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அதை அவர் உமக்கு ஒரு வெள்ளிக் காசுக்குக் கொடுத்தாலும் சரி, அதை விலைக்கு வாங்காதீர்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3314 அஸ்லம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உமர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் பாதையில் (பயணம் மேற்கொள்வதற்காக ஒருவரை) குதிரையொன்றில் ஏற்றி (அதை அவருக்குத் தானமாகக் கொடுத்து) அனுப்பினார்கள். அந்தக் குதிரை அந்த மனிதரிடம் (சரியாகப் பராமரிக்கப்படாததால்) பாழாகி விட்டிருப்பதைக் கண்டார்கள். அவர் வசதி குறைந்த (ஏழை) மனிதராக இருந்தார். ஆகவே, அவரிடமிருந்து அதைத் தாமே விலைக்கு வாங்கிக்கொள்ள உமர் (ரலி) அவர்கள் விரும்பினார்கள். எனவே,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, அது குறித்துக் கேட்டார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதை விலைக்கு வாங்காதீர். அதை ஒரு வெள்ளிக் காசுக்கு அவர் உமக்குத் தந்தாலும் சரியே! தனது தானத்தைத் திரும்பப் பெற்றவனின் நிலை, நாயின் நிலையை ஒத்திருக்கிறது. நாய்தான், தான் எடுத்த வாந்தியைத் தானே தின்கிறது" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், மேற்கண்ட ஹதீஸ்களே முழுமையானவையும் மிகுதியானவையும் ஆகும்.

3315 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் (ஒருவரை) அல்லாஹ்வின் பாதையில் (பயணிக்க) குதிரையொன்றில் ஏற்றி (அதை அவருக்குத் தானமாகத் தந்து) அனுப்பினார்கள். பிறகு அந்தக் குதிரை விற்கப்படுவதைக் கண்டு, அதைத் தாமே வாங்கிக்கொள்ள விரும்பினார்கள். ஆகவே, இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உமர்

கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதை விலைக்கு வாங்காதீர். உமது தானத்தைத் திரும்பப்பெறாதீர்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3316 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் (ஒருவரை) அல்லாஹ்வின் பாதையில் (பயணிக்க) ஒரு குதிரையின் மீதேற்றி (அதை அவருக்குத் தானமாக வழங்கி) அனுப்பி வைத்தார்கள். பின்னர் அந்தக் குதிரை விற்கப்படுவதைக் கண்டார்கள். அதைத் தாமே விலைக்கு வாங்கிக்கொள்ள விரும்பினார்கள். ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அது குறித்துக் கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமரே, உமது தானத்தைத் திரும்பப்பெறாதீர்"என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 2 கொடுத்த தானத்தையும் அன்பளிப்பையும் அது (உரியவரின்) கைக்குப் போய்ச் சேர்ந்த பின் திரும்பப்பெறுவது தடை செய்யப்பட்டுள்ளது. ஒருவர் தம் மகன், மகனின் மகன் ஆகியோருக்கு அன்பளிப்பாக வழங்கியதைத் தவிர!

3317 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தான் கொடுத்த அன்பளிப்பைத் திரும்பப் பெற்றுக்கொள்பவனின் நிலையானது, நாயின் நிலையை ஒத்திருக்கிறது. வாந்தி எடுத்துவிட்டுப் பின்னர் தான் எடுத்த வாந்தியை நோக்கிச் சென்று அதைத் தின்கிறது நாய்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அறிவிப்பாளர் முஹம்மத் பின் அலீ பின் ஹுசைன் பின் அலீ (ரஹ்) அவர்களின் பெயர் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்களின் புதல்வர் (அதாவது கொள்ளுப்பேரர்) முஹம்மத் (பாகிர்)' என இடம்பெற்றுள்ளது.

3318 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தர்மம் செய்துவிட்டுப் பின்னர் தனது தர்மத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்பவனின் நிலையானது, நாயின் நிலையை ஒத்திருக்கிறது. வாந்தி எடுத்துவிட்டுப் பின்னர் எடுத்த வாந்தியைத் தின்கிறது நாய்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3319 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தான் கொடுத்த அன்பளிப்பைத் திரும்பப் பெற்றுக்கொள்பவன், தான் எடுத்த வாந்தியைத் தானே திரும்ப உண்பவனைப் போன்றவன் ஆவான்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3320 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தான் கொடுத்த அன்பளிப்பைத் திரும்பப் பெற்றுக்கொள்பவன் நாயைப் போன்றவன் ஆவான். வாந்தியெடுத்த பிறகு எடுத்த வாந்தியைத் தின்கிறது நாய்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 3 அன்பளிப்பு வழங்குவதில் பிள்ளைகளிடையே பாகுபாடு காட்டுவது விரும்பத்தகாத செயலாகும்.

3321 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நான் சிறுவனாக இருந்தபோது) என்னை என் தந்தை (பஷீர் பின் சஅத் – ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று, "நான் என்னுடைய இந்த மகனுக்கு என்னிடமிருந்த ஓர் அடிமையை அன்பளிப்பாக வழங்கியுள்ளேன்" என்று சொன்னார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் பிள்ளைகள் அனைவருக்கும் இதைப் போன்றே அன்பளிப்பு வழங்கியுள்ளீரா?" என்று கேட்டார்கள். என் தந்தை "இல்லை' என்று பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின், அதை (உங்கள் அன்பளிப்பை)த் திரும்பப் பெற்றுக்கொள்க" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3322 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நான் சிறுவனாக இருந்தபோது) என்னை என் தந்தை (பஷீர் பின் சஅத் – ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று, "நான் என்னுடைய இந்த மகனுக்கு ஓர் அடிமையை அன்பளிப்பாக வழங்கியுள்ளேன்" என்று சொன்னார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் மகன்கள் அனைவருக்கும் அன்பளிப்பு வழங்கினீர்களா?" என்று கேட்டார்கள். என் தந்தை "இல்லை' என்று பதிலளித்தார்கள். "அப்படியானால், அதைத் திரும்பப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3323 மேற்கண்ட ஹதீஸ் மேலும் எட்டு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், யூனுஸ் மற்றும் மஅமர் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "உங்கள் மகன்கள் அனைவருக்கும்' என்று இடம்பெற்றுள்ளது. லைஸ் மற்றும் இப்னு உயைனா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "உங்கள் பிள்ளைகள் அனைவருக்கும்' என இடம்பெற்றுள்ளது.
முஹம்மத் பின் நுஅமான் (ரஹ்) மற்றும் ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) ஆகியோரிடமிருந்து லைஸ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில் "பஷீர் பின் சஅத் (ரலி) அவர்கள் (தம் புதல்வர்) நுஅமான் (ரலி) அவர்களுடன் வந்தார்கள்' என்று இடம் பெற்றுள்ளது.

3324 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தந்தை (பஷீர் பின் சஅத் - ரலி)) அவர்கள் (சிறுவனாக இருந்த) எனக்கு ஓர் அடிமையை (அன்பளிப்பாக) வழங்கியிருந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் என் தந்தையிடம், "இது என்ன அடிமை?" என்று கேட்டார்கள். அதற்கு நான் "என் தந்தை எனக்கு அன்பளிப்பாக வழங்கினார்கள்" என்றேன். நபி (ஸல்) அவர்கள், (என் தந்தையிடம்) "இவருடைய சகோதரர்கள் அனைவருக்கும் இவருக்கு வழங்கியதைப் போன்று வழங்கினீரா?" என்று கேட்டார்கள். என் தந்தை "இல்லை' என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் "அவ்வாறாயின், அந்த அடிமையைத் திரும்பப் பெற்றுக்கொள்வீராக!" என்று கூறினார்கள்.

3325 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நான் சிறுவனாக இருந்தபோது) என் தந்தை தமது செல்வத்தில் ஒன்றை எனக்குத் தானமாக வழங்கினார்கள். அப்போது என் தாயார் அம்ரா பின்த் ரவாஹா (ரலி) அவர்கள் என் தந்தையிடம் "நீங்கள் இதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சாட்சியாக ஆக்காத வரை நான் இதை ஒப்புக்கொள்ளமாட்டேன்" என்று கூறினார். ஆகவே, என் தந்தை எனக்குத் தானமாக வழங்கியதற்கு நபி (ஸல்) அவர்களைச் சாட்சியாக்குவற்காக அவர்களிடம் சென்றார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் தந்தையிடம், "உங்கள் பிள்ளைகள் அனைவருக்கும் இதைச் செய்தீர்களா?" என்று கேட்டார்கள். என் தந்தை, "இல்லை' என்று பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்; உங்கள் பிள்ளைகளிடையே நீதியாக நடந்துகொள்ளுங்கள்" என்று கூறினார்கள். உடனே என் தந்தை (வீட்டுக்குத்) திரும்பிவந்து, அந்தத் தானத்தைத் திரும்ப வாங்கிக்கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3326 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாயார் (அம்ரா) பின்த் ரவாஹா (ரலி) அவர்கள் என் தந்தையிடம் அவரது செல்வத்திலிருந்து சில அன்பளிப்புகளை எனக்கு வழங்குமாறு கேட்டார். என் தந்தை ஒரு வருடம் இழுத்தடித்தார். பிறகு (எனக்கு அன்பளிப்பு வழங்க வேண்டும் என்று) அவருக்குத் தோன்றியது. (ஓர் அடிமையை அன்பளிப்பாக வழங்கினார்.) அப்போது என் தாயார் "என் மகனுக்கு அன்பளிப்பாக (இந்த அடிமையை) வழங்கியதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நீங்கள் சாட்சியாக்காத வரை இதை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன்" என்று கூறினார்.
ஆகவே, என் தந்தை சிறுவனாயிருந்த எனது கையைப் பிடித்துக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! இவனுடைய தாயாரான (அம்ரா) பின்த் ரவாஹா, தன் மகனுக்கு நான் அன்பளிப்பாக வழங்கிய ஒன்றுக்குத் தங்களைச் சாட்சியாக்க வேண்டும் என விரும்புகிறார்" என்று கூறினார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பஷீர்! இவரைத் தவிர வேறு குழந்தை உமக்கு உண்டா?" என்று கேட்டார்கள். என் தந்தை "ஆம்' என்றார்கள். அல்லாஹ்வின் தூதர்

(ஸல்) அவர்கள், "அவர்கள் அனைவருக்கும் இதைப் போன்ற அன்பளிப்பை வழங்கினீரா?" என்று கேட்டார்கள். என் தந்தை "இல்லை' என்று சொன்னார்கள். "அப்படியானால் என்னை (இதற்குச்) சாட்சியாக்காதீர். ஏனெனில், நான் அநீதிக்குச் சாட்சியாக இருக்கமாட்டேன்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3327 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என் தந்தையிடம்) "உமக்கு இவரைத் தவிர வேறு மகன்கள் உண்டா?" என்று கேட்டார்கள். என் தந்தை "ஆம்' என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்கள் அனைவருக்கும் இதைப் போன்று (அன்பளிப்பு) கொடுத்தீரா?" என்று கேட்டார்கள். அதற்கு என் தந்தை "இல்லை' என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால், நான் அநீதிக்குச் சாட்சியாக இருக்கமாட்டேன்" என்று கூறினார்கள்.

3328 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் தந்தையிடம், "என்னை அநீதிக்குச் சாட்சியாக்காதீர்" என்று கூறினார்கள்.

3329 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தந்தை (பஷீர் பின் சஅத் – ரலி) அவர்கள் (சிறுவனாயிருந்த) என்னைத் தூக்கிக் கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! நான் (என் மகன்) நுஅமானுக்கு என் செல்வத்திலிருந்து இன்னின்ன பொருட்களை அன்பளிப்பாக வழங்கிவிட்டேன் என்பதற்குத் தங்களைச் சாட்சியாக்குகிறேன்" என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நுஅமானுக்கு அன்பளிப்பாக வழங்கியதைப் போன்று உங்கள் மகன்கள் அனைவருக்கும் அன்பளிப்பு வழங்கிவிட்டீர்களா?" என்று கேட்டார்கள். என் தந்தை "இல்லை' என்றார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின், இதற்கு வேறு யாரையாவது சாட்சியாக்கிக்கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டு, "அவர்கள் அனைவரும் உங்களுக்குச் சம அளவில் நன்மை செய்ய வேண்டுமென எதிர்பார்க்கிறீர்களா?" என்று கேட்டார்கள். என் தந்தை "ஆம்' என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால் இப்படிச் செய்யாதீர்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3330 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தந்தை எனக்கு ஓர் அன்பளிப்புப் பொருளை வழங்கினார்கள். பிறகு அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சாட்சியாக்குவதற்காக என்னை அவர்களிடம் அழைத்துச் சென்றார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உம்முடைய பிள்ளைகள் அனைவருக்கும் இதை வழங்கினீரா?" என்று கேட்டார்கள். என் தந்தை "இல்லை' என்றார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவரிடமிருந்து நீர் நன்மையை எதிர்பார்ப்பதைப் போன்று அவர்கள் அனைவரிடமிருந்தும் எதிர்பார்க்க

வில்லையா?'' என்று கேட்டார்கள். என் தந்தை "ஆம்' (எதிர் பார்க்கிறேன்) என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின், நான் (இதற்குச்) சாட்சியாக இருக்க மாட்டேன்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல்லாஹ் பின் அவ்ன் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இதை நான் முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்களிடம் அறிவித்தபோது, "உங்கள் பிள்ளைகளை (இயன்றவரை)ச் சமமாக நடத்துங்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றே நாம் அறிவித்துவருகிறோம் என்றார்கள்.

3331 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பஷீர் பின் சஅத் (ரலி) அவர்களின் துணைவியார் பஷீர் (ரலி) அவர்களிடம் "என்னுடைய இந்த மகனுக்கு (நுஅமான் பின் பஷீருக்கு) உங்களுடைய அடிமையை அன்பளிப்பாக வழங்கிவிடுங்கள்" என்று கூறிவிட்டு, அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சாட்சியாக்குங்கள்" என்றார். அவ்வாறே பஷீர் பின் சஅத் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, இன்ன மனிதரின் புதல்வி(யும், என் மனைவியுமான அம்ரா பின்த் ரவாஹா) தன் புதல்வருக்கு என்னுடைய அடிமையை அன்பளிப்பாக வழங்குமாறு என்னிடம் கேட்டுவிட்டு, அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சாட்சியாக்கும்படி கூறுகிறாள்" என்றார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அ(வளுடைய புதல்)வருக்குச் சகோதரர்கள் இருக்கிறார்களா?" என்று கேட்டார்கள். பஷீர் "ஆம்' என்றார்கள். "அவருக்கு அன்பளிப்புச் செய்ததைப் போன்று அவர்கள் அனைவருக்கும் அன்பளிப்புச் செய்தீரா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். பஷீர் "இல்லை' என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது தகாத செயலாகும். நான் நியாயத்திற்கு மட்டுமே சாட்சியாக இருப்பேன்"என்று கூறிவிட்டார்கள்.

## பாடம் : 4 ஆயுட்கால அன்பளிப்பு (உம்றா).

3332 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இது உமக்கும் உம்முடைய சந்ததியினருக்கும் உரியது என ஆயுட்கால அன்பளிப்பாக வழங்கப்பட்ட ஒரு பொருள் (உம்றா), எவருக்கு (அன்பளிப்பாக) வழங்கப்பட்டதோ அவருக்கே உரியதாகும். (அவரது ஆயுட்காலத்திற்குப் பின்) வழங்கியவரிடம் அது திரும்பப் போய்ச்சேராது. ஏனெனில், (அன்பளிப்பு வழங்கப்பட்டவரின்) வாரிசுகளுக்குப் போய்ச்சேரும் வகையிலேயே அவர் நன்கொடை வழங்கியுள்ளார்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3333 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இது, உனக்கும் உன் சந்ததிகளுக்கும் உரியது என ஒரு பொருளை ஒருவர் ஆயுட்கால அன்பளிப்பாக வழங்கினால்,அவரது சொல்லே (அந்தப் பொருளில்) அவருக்குரிய உரிமையை நிறுத்திவிடுகிறது. அது யாருக்கு ஆயுட்கால அன்பளிப்பாக வழங்கப்பட்டதோ அவருக்கும் அவருடைய சந்ததிகளுக்குமே உரியதாகும்.

இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஒரு பொருளை ஒருவருக்கு ஆயுட்கால அன்பளிப்பாக வழங்கப்பட்டால், அது அந்த மனிதருக்கும் அவருடைய சந்ததிகளுக்குமே உரியதாகும்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.

3334 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் மற்றொருவருக்கு ஆயுட்கால அன்பளிப்பு வழங்கினால், அது அன்பளிப்பு வழங்கப்பட்ட மனிதருக்கும் அவருடைய சந்ததிகளுக்குமே உரியதாகும். அவர், "நான் இ(ந்தச் சொத்)தை உமக்கும் உம்முடைய சந்ததிகளுக்கும்,உங்களில் ஒருவர் உயிரோடிருக்கும்வரை வழங்கிவிட்டேன்" என்று கூறி அன்பளிப்பாக வழங்கினாலும் அது அன்பளிப்பு வழங்கப் பட்டவருக்கே உரியதாகும். அது (அவரது ஆயுட் காலத்திற்குப் பின்), அன்பளிப்பு வழங்கியவரிடம் திரும்பாது. காரணம், (அன்பளிப்பு வழங்கப்பட்டவரின்) வாரிசுகளுக்குப் போய்ச் சேரும் வகையிலேயே அவர் நன்கொடை வழங்கியுள்ளார்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3335 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இது உனக்கும் உன் சந்ததிக்கும் உரியதாகும்' என்று கூறி வழங்கப்படும் ஆயுட்கால அன்பளிப்புக்கே அனுமதியளித்தார்கள். "உன் ஆயுள் முழுவதும் இது உனக்குரியதாகும்' என்று (மட்டும்) கூறினால், அது (அன்பளிப்பு பெற்றவரின் ஆயுட்காலத்திற்குப் பின்) அன்பளிப்பு வழங்கியவருக்கே திரும்பிவிடும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அறிவிப்பாளர்களில் ஒருவரான மஅமர் பின் ராஷித் (ரஹ்) அவர்கள், "இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களும் இவ்வாறே தீர்ப்பளித்துவந்தார்கள்" என்று கூறினார்கள்.

3336 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"இது உனக்கும் உன் சந்ததிக்கும் ஆயுட்கால அன்பளிப்பாகும்' என்று கூறி அன்பளிப்பு வழங்கப்பட்ட ஒரு செல்வத்தின் விஷயத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது அன்பளிப்பு வழங்கப்பட்டவருக்கே உரியதாகிவிடும். அதில் நிபந்தனை விதிப்பதற்கோ விதிவிலக்குப் பெறுவதற்கோ அன்பளிப்பு வழங்கியவருக்கு அனுமதி கிடையாது"என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளரான அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள், "ஏனெனில், அவர் (அன்பளிப்பு வழங்கப்பட்டவரின்) வாரிசுகளுக்குப் போய்ச்சேரும் வகையிலேயே நன்கொடை வழங்கியுள்ளார். அந்த வாரிசுரிமை அவரது நிபந்தனையைத் துண்டித்துவிட்டது" என்று கூறினார்கள்.

3337 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆயுட்கால அன்பளிப்பாக வழங்கப் பட்ட ஒரு பொருள், அன்பளிப்பாக வழங்கப்பட்டவருக்கே உரியதாகும்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

-மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
-மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே இன்னோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3338 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(ஆயுட்கால அன்பளிப்பு வழங்கப்படும் பொருள் திரும்பக் கிடைக்காது என்பதை உணர்ந்து) உங்கள் செல்வங்களை உங்களிடமே வைத்துக்கொள்ளுங்கள்; அவற்றை வீணாக்கி விடாதீர்கள். ஒருவர் ஆயுட்கால அன்பளிப்பு (உம்றா) வழங்கினால் அது யாருக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டதோ அவருக்கே உரியதாகும்; அவர் உயிரோடிருந்தாலும் சரி,இறந்துவிட்டாலும் சரி. பிறகு அவருடைய சந்ததிகளுக்கு உரியதாகும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3339 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அய்யூப் அஸ்ஸக்தியானீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், பின்வரும் தகவல் கூடுதலாக இடம்பெற்றுள்ளது: அன்சாரிகள் முஹாஜிர்களுக்கு ஆயுட்கால அன்பளிப்பு (உம்றா) வழங்கலாயினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் செல்வங்களை உங்களிடமே வைத்துக்கொள்ளுங்கள். (அவசரப்பட்டு ஆயுட்கால அன்பளிப்பு வழங்கி விடாதீர்கள்)" என்று கூறினார்கள்.

3340 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மதீனாவிலிருந்த ஒரு பெண்மணி தம் புதல்வர் ஒருவருக்குத் தமது தோட்டமொன்றை ஆயுட்கால அன்பளிப்பாக (உம்றா) வழங்கினார். பிறகு அந்தப் புதல்வர் இறந்துவிட்டார். அதன் பிறகு அந்தப் பெண்ணும் இறந்துவிட்டார். அந்தப் புதல்வர் குழந்தைகளை விட்டுச்சென்றிருந்தார். அந்தப் புதல்வருக்குச் சகோதரர்களும் இருந்தனர். அவர்கள் ஆயுட்கால அன்பளிப்பு வழங்கிய அப்பெண்ணின் மைந்தர்கள் ஆவர். (அந்தப் புதல்வரின் இறப்புக்குப் பின்,) அன்பளிப்பு வழங்கிய அப்பெண்ணின் மைந்தர்கள் "தோட்டம் திரும்ப எங்களுக்கே கிடைக்கும்" என்று கூறினர். அன்பளிப்புப் பெற்ற அப்புதல்வரின் மகன்கள், "இல்லை; அதன் உரிமை. வாழ்ந்த போதும் இறந்த பின்பும் எங்கள் தந்தைக்கே உரியது"என்று கூறினர்.
பின்னர் இவ்வழக்கை (மதீனாவின் அன்றைய ஆளுநராயிருந்த) உஸ்மான் (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான தாரிக் பின் அம்ர் (ரஹ்) அவர்களிடம் கொண்டு சென்றனர். தாரிக் பின் அம்ர், (தம்மிடம்) ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களை வரவழைத்(து அதைப் பற்றி விசாரித்)தார். அப்போது ஜாபிர் (ரலி) அவர்கள் "ஆயுட்கால அன்பளிப்பு,அன்பளிப்பு பெற்றவருக்கே உரியதாகும்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் எனச் சாட்சியமளித்தார்கள்.
இதன்படியே தாரிக் பின் அம்ரும் தீர்ப்பு வழங்கினார். பிறகு தாரிக், (கலீஃபா) அப்துல் மலிக் பின் மர்வானுக்குக் கடிதம் எழுதி விவரத்தைத் தெரிவித்தார். ஜாபிர் (ரலி) அவர்களின்

சாட்சியத்தையும் தெரிவித்தார். அப்போது அப்துல் மலிக் பின் மர்வான் "ஜாபிர் சொன்னது உண்மையே' என்று கூறினார். பின்னர் இதையே தாரிக் நடைமுறைப்படுத்தினார். அந்தத் தோட்டம் ஆயுட்கால அன்பளிப்புப் பெற்ற அப்புதல்வரின் மகன்களிடமே இன்றுவரை இருந்துவருகிறது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3341 சுலைமான் பின் யசார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸை அடிப்படையாகக் கொண்டே தாரிக் பின் அம்ர் (ரஹ்) அவர்கள் "ஆயுட்கால அன்பளிப்பு, (அன்பளிப்புப் பெற்றவரின் ஆயுட்காலத்திற்குப் பிறகு அவருடைய) வாரிசுகளுக்கே உரியதாகும்" என்று தீர்ப்பளித்தார்கள்.
இத்தகவல் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3342 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆயுட்கால அன்பளிப்பு (உம்றா) செல்லும்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3343 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆயுட்கால அன்பளிப்பு (உம்றா), அன்பளிப்பு பெற்றவரின் வாரிசுரிமையாகும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3344 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆயுட்கால அன்பளிப்பு செல்லும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அன்பளிப்புப் பெற்றவரின் வாரிசுரிமையாகும்' என்றோ, அல்லது "அது செல்லும்' என்றோ கூறினார்கள்" என (ஐயப்பாட்டுடன்) இடம்பெற்றுள்ளது.

## அத்தியாயம் : 25 - வசியத் - இறுதி விருப்பம்

3345 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமான மனிதர் தமது செல்வம் ஒன்றில் இறுதி விருப்பம் தெரிவிக்க விரும்பினால், அவர் தமது இறுதி விருப்பத்தை எழுதித் தம்மிடம் (தயாராக) வைத்துக் கொள்ளாமல் இரண்டு இரவுகளைக்கூட கழிப்பதற்கு அனுமதியில்லை.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3346 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், அப்துல்லாஹ் பின் நுமைர் மற்றும் முஹம்மத் பின் நுமைர் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "இறுதி விருப்பம் தெரிவிக்க ஏதேனும் செல்வத்தைப் பெற்றிருந்தால்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. "இறுதி விருப்பம் தெரிவிக்க விரும்பினால்...' என இடம் பெறவில்லை.

3347 மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் அய்யூப் (ரஹ்) அவர்களது அறிவிப்பைத் தவிர மற்ற அனைவரது அறிவிப்பிலும் "இறுதி விருப்பம் தெரிவிக்க ஏதேனும் ஒரு செல்வத்தைப் பெற்றிருந்தால்' என்றே இடம்பெற்றுள்ளது. அய்யூப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டும் "இறுதி விருப்பம் தெரிவிக்க விரும்பினால்...' என்று இடம்பெற்றுள்ளது.

3348 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமான மனிதர் இறுதி விருப்பம் தெரிவிக்க ஏதேனும் ஒரு பொருளைப் பெற்றிருந்தால், அவர் தமது இறுதி விருப்பத்தை எழுதித் தம்மிடம் வைத்திருக்காமல் மூன்று இரவுகளைக்கூடக் கழிப்பதற்கு அனுமதியில்லை.
இதன் அறிவிப்பாளரான அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து இதைச் செவியுற்றதிலிருந்து எனது இறுதி விருப்பத்தை எழுதி என்னிடம் வைத்திருக்காமல் ஓர் இரவைக்கூட நான் கழித்ததில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

### பாடம் : 1 மூன்றில் ஒரு பாகத்திலேயே இறுதி விருப்பம் செல்லும்.

3349 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜின்போது (நான் மக்காவிலிருந்த சமயம் எனக்கு ஏற்பட்ட) ஒரு நோய்க்காக என்னை உடல்நலம் விசாரிக்க வந்தார்கள். அந்த நோயின் காரணத்தால் நான் மரணத்தை எதிர்நோக்கியிருந்தேன். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! செல்வந்தனாகிய எனக்கு, என் ஒரே மகளைத் தவிர வேறு வாரிசு எவரும் இல்லாத நிலையில், நீங்கள் காணும் நோய் என்னைப் பீடித்துள்ளது. ஆகவே, நான் என் செல்வத்தில் மூன்றில் இரண்டு பாகங்களைத் தர்மம் செய்துவிடட்டுமா?" என்று கேட்டேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "வேண்டாம்' என்றார்கள். நான், "அவ்வாறாயின், என் சொத்தில் பாதியைத் தர்மம் செய்யட்டுமா?" என்று கேட்டேன். அதற்கும் "வேண்டாம்' என்று சொன்ன அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மூன்றில் ஒரு பாகம் (வேண்டுமானால் தர்மம் செய்யலாம்). மூன்றில் ஒரு பாகமேகூட அதிகம்தான். நீங்கள் உங்களுடைய வாரிசுகளை மக்களிடம் கையேந்தும் நிலையில் விட்டுச்செல்வதைவிட அவர்களைத் தன்னிறைவுடையவர்களாக விட்டுச்செல்வதே சிறந்ததாகும். நீங்கள் அல்லாஹ்வின் திருப்தியை விரும்பிச் செய்கின்ற தர்மம் எதுவாயினும் அதற்குப் பதிலாக உங்களுக்குப் பிரதிபலன் வழங்கப்படும். எந்த அளவிற்கென்றால், நீங்கள் உங்கள் மனைவியின் வாய்க்குள் இடுகின்ற ஒரு கவளம் உணவுக்கும்கூட (உங்களுக்குப் பிரதிபலன் அளிக்கப்படும்)"என்று கூறினார்கள்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! (என் தோழர்கள் அனைவரும் மதீனாவுக்குச் சென்று விடுவார்கள்) நான் மட்டும் இங்கு (மக்காவில்) என் தோழர்களைவிட்டுப் பின்தங்கியவனாக ஆகி விடுவேனா?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் இங்கு இருந்தபோதிலும் அல்லாஹ்வின் உவப்பை நாடி நல்லறங்கள் செய்து கொண்டே இருந்தால் உங்கள் தகுதியும் மேன்மையும் அதிகரித்துக்கொண்டேயிருக்கும்" எனக் கூறிவிட்டு, "உங்களை வைத்துச் சில கூட்டத்தார் நன்மையடைவதற்காகவும் வேறுசிலர் துன்பமடைவதற்காகவும் நீங்கள் இங்கேயே தங்க வைக்கப்படலாம்" என்று கூறினார்கள்.
மேலும், "இறைவா! என் தோழர்களின் ஹிஜ்ரத்தை முழுமையாக்குவாயாக! தங்கள் அடிச்சுவடுகளின் வழியே (முந்திய இணை வைக்கும் மார்க்கத்திற்கே) இவர்களைத் திரும்பிச் செல்லும்படி செய்துவிடாதே" எனப் பிரார்த்தித்தார்கள். (நோயாளியாயிருந்த மற்றொருவரான) சஅத் பின் கவ்லா (ரலி) அவர்கள் மக்காவிலேயே இறந்து விட்டதற்காக, "பாவம் சஅத் பின் கவ்லா! (அவர் மீண்டும் ஹிஜ்ரத் பூமிக்கே திரும்பிச் செல்ல விரும்பினார். ஆனால்,நடக்கவில்லை)" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுதாபம் தெரிவித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது.
அதில், "என்னை உடல்நலம் விசாரிப்பதற்காக என்னிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. அதில் சஅத் பின் கவ்லா (ரலி) அவர்கள் தொடர்பாக நபி (ஸல்) அவர்கள் தெரிவித்த அனுதாபம் இடம்பெறவில்லை. ஆயினும் அதில், "நான் எந்த மண்ணை விட்டு நாடு துறந்து சென்றேனோ அதே மண்ணிலேயே இறப்பதை வெறுத்தேன்" என்று சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

3350 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் உடல் நலிவுற்றிருந்தபோது நபி (ஸல்) அவர்களிடம் ஆளனுப்பினேன். (அவர்கள் வந்தபோது,) "நான் விரும்பிய முறையில் என் செல்வத்தைப் பங்கிட்டுக் கொடுக்க என்னை அனுமதியுங்கள்" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள் அதற்கு மறுத்துவிட்டார்கள்.

"அவ்வாறாயின் பாதியாவது (அறவழியில் செலவிட அனுமதியுங்கள்)" என்று கேட்டேன். அதற்கும் மறுப்புத் தெரிவித்தார்கள். நான் "(என் செல்வத்தில்) மூன்றில் ஒரு பாகத்தை (தர்மம் செய்ய அனுமதியுங்கள்)" என்று கேட்டபோது அமைதியாக இருந்தார்கள். இதன் பின்னரே மூன்றில் ஒரு பாகம் (இறுதி விருப்பம் தெரிவிக்க) அனுமதிக்கப்பட்டதாயிற்று.
- மேற்கண்ட தகவல் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "இதன் பின்னரே மூன்றில் ஒரு பாகம் (இறுதி விருப்பம் தெரிவிக்க) அனுமதிக்கப் பட்டதாயிற்று" எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

3351 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நான் நோயுற்றிருந்தபோது) என்னை உடல்நலம் விசாரிப்பதற்காக நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது நான், "என் செல்வங்கள் அனைத்திலும் இறுதி விருப்பம் தெரிவித்து விடட்டுமா?" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள் "வேண்டாம்' என்றார்கள். நான், "அவ்வாறாயின் (என் செல்வத்தில்) பாதியில் (இறுதி விருப்பம் தெரிவித்து விடட்டுமா)?" என்று கேட்டேன். அதற்கும் "வேண்டாம்' என்றார்கள். நான் "மூன்றில் ஒரு பாகத்திலாவது (இறுதி விருப்பம்) தெரிவிக்கட்டுமா)?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "ஆம்; மூன்றில் ஒரு பாகம்கூட அதிகம்தான்" என்றார்கள்.

3352 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், மக்காவில் (உடல் நலிவுற்றிருந்த) என்னை நலம் விசாரிப்பதற்காக என்னிடம் வந்தார்கள். அப்போது நான் அழுதேன். நபி (ஸல்) அவர்கள், "ஏன் அழுகிறீர்?" என்று கேட்டார்கள். "நான் சஅத் பின் கவ்லா இறந்ததைப் போன்று நாடு துறந்து சென்ற இந்த மண்ணிலேயே (மக்காவிலேயே) இறந்துவிடுவேனோ என அஞ்சுகிறேன்" என்று நான் சொன்னேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இறைவா! சஅதுக்குக் குணமளிப்பாயாக! இறைவா! சஅதுக்குக் குணமளிப்பாயாக!" என மூன்று முறை பிரார்த்தித்தார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதரே! என்னிடம் ஏராளமான செல்வங்கள் உள்ளன. எனக்கு என் ஒரே மகள் மட்டுமே (இப்போது) வாரிசாக வருகிறாள். ஆகவே, என் செல்வங்கள் அனைத்திலும் (அவை அறவழியில் செலவிடப்பட) இறுதி விருப்பம் தெரிவித்துவிடட்டுமா?" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், "வேண்டாம்' என்றார்கள். நான் "மூன்றில் இரண்டு பாகங்களில் (இறுதி விருப்பம் தெரிவித்துவிடட்டுமா)?" என்று கேட்டேன்.
அதற்கும் "வேண்டாம்' என்றார்கள். "அவ்வாறாயின் பாதியிலாவது (இறுதி விருப்பம் தெரிவித்துவிடட்டுமா)?" என்று கேட்டேன். அதற்கும் "வேண்டாம்' என்று சொன்னார்கள். "அவ்வாறாயின் மூன்றில் ஒரு பாகத்திலேனும் (இறுதி விருப்பம் தெரிவித்துவிடட்டுமா)?" என்று கேட்டேன்.
நபி (ஸல்) அவர்கள், "மூன்றில் ஒரு பாகமா! மூன்றில் ஒரு பாகம்கூட அதிகம்தான். நீர் உமது செல்வத்திலிருந்து (பிறருக்கு) ஈவதும் ஈகைதான். நீர் உம்முடைய குடும்பத்தாருக்கு வழங்கும் செலவுத் தொகையும் ஈகைதான். உமது செல்வத்திலிருந்து உம்முடைய துணைவி உண்பதும் ஈகைதான். நீர் உம்முடைய வீட்டாரை மக்களிடம் கையேந்தும் நிலையில் விட்டுச்செல்வதைவிட (பொருளாதார) நலத்துடன் (அல்லது நல்ல நிலையில்)

விட்டுச்செல்வதே சிறந்ததாகும்" என்று கூறினார்கள். ("கையேந்தும் நிலையில்' என்று கூறும்போது) தமது கரத்தால் சைகை செய்து காட்டினார்கள்.
இதை (பின்னாளில் பிறந்த) சஅத் (ரலி) அவர்களின் மூன்று புதல்வர்கள் அறிவித்துள்ளனர்.

3353 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர் களின் மூன்று புதல்வர்கள் கூறியதாவது:
(எங்கள் தந்தை) சஅத் (ரலி) அவர்கள் மக்காவில் உடல் நலிவுற்றிருந்தபோது அவர்களை உடல்நலம் விசாரிப்பதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள். மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட தகவல் சஅத் பின் அபீவக் காஸ் (ரலி) அவர்களின் மூன்று புதல்வர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3354 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் (தமது இறுதி விருப்பங்களை) மூன்றில் ஒரு பாகத்திலிருந்து நான்கில் ஒரு பாகமாகக் குறைத்துக்கொண்டால் நன்றாயிருக்கும். ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மூன்றில் ஒரு பாகமா? மூன்றில் ஒரு பாகமே அதிகம்தான்" என்று கூறியுள்ளார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "மூன்றில் ஒரு பாகமே பெரிதுதான் அல்லது அதிகம்தான்" என (ஐயப்பாட்டுடன்) இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 2 இறந்துவிட்ட ஒருவருக்காகச் செய்யப்படும் தானதர்மங்களின் நன்மை அவரைச் சென்றடையும்.

3355 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம், "என் தந்தை சொத்துகளை விட்டுவிட்டு இறந்துபோனார். அவர் இறுதி விருப்பம் எதுவும் தெரிவிக்கவுமில்லை. இந்நிலையில் அவருக்காக நான் தர்மம் செய்தால், அவருக்கு அது பரிகாரம் ஆகுமா?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "ஆம்' என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3356 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம், "என் தாயார் திடீரென இறந்துவிட்டார். அவர் (இறப்பதற்கு முன்பு) பேச முடிந்திருந்தால் தர்மம் செய்(யச் சொல்லியிருந்)திருப்பார் என்று நான் கருதுகிறேன். அவருக்காக நான் தர்மம் செய்தால் எனக்கு நன்மை உண்டா?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "ஆம்' என்று விடையளித்தார்கள்.
- ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! இறுதி விருப்பம் தெரிவிக்காமலேயே என் தாயார் திடீரென இறந்துவிட்டார். அவர் (இறப்பதற்கு முன்பு) பேச முடிந்திருந்தால் தர்மம் செய்(யச் சொல்லியிருந்)திருப்பார் என்று நான் கருதுகிறேன். அவர்

சார்பாக நான் தர்மம் செய்தால் அவருக்கு நன்மை உண்டா?"என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள் "ஆம்' என்றார்கள்.

3357 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அபூஉசாமா (ரஹ்) மற்றும் ரவ்ஹ் பின் அல்காசிம் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "எனக்கு நன்மை உண்டா?" என்று அம்மனிதர் கேட்டார் என இடம் பெற்றுள்ளது; மேற்கண்ட (இரண்டாவது) ஹதீஸில் உள்ளதைப் போன்று.
ஷுஜப் பின் இஸ்ஹாக் (ரஹ்) மற்றும் ஜஅ்ஃபர் பின் அவ்ன் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "என் தாயாருக்கு நன்மை உண்டா?" என்று அந்த மனிதர் கேட்டதாக இடம்பெற்றுள்ளது; மேற்கண்ட மற்றோர் அறிவிப்பில் உள்ளதைப் போன்று.

## பாடம் : 3 மனிதன் இறந்த பின்பும் அவனைப் போய்ச்சேரும் நன்மைகள்.

3358 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மனிதன் இறந்துவிட்டால் அவனுடைய மூன்று செயல்களைத் தவிர மற்ற அனைத்தும் நின்றுவிடுகின்றன; 1.நிலையான அறக்கொடை 2. பயன்பெறப்படும் கல்வி. 3. அவனுக்காகப் பிரார்த்திக்கும் (அவனுடைய) நல்ல குழந்தை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 4 அறக்கொடை (வக்ஃப்).

3359 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் கைபரில் ("ஸம்ஃக்' எனும்) ஒரு நிலத்தைப் பெற்றிருந்தார்கள். அந்த நிலம் தொடர்பாக ஆலோசனை பெறுவதற்காக நபி (ஸல்) அவர்களிடம் சென்றார்கள். "அல்லாஹ்வின் தூதரே! நான் கைபரில் ஒரு நிலத்தைப் பெற்றுள்ளேன். அதைவிடச் சிறந்த ஒரு செல்வத்தை (இதுவரை) நான் அடைந்ததே இல்லை. ஆகவே, அதை நான் என்ன செய்ய வேண்டும் என்று தாங்கள் கட்டளையிடுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் விரும்பினால் அந்த நிலத்தை (அசலை) நீங்களே வைத்துக்கொண்டு, அதன் விளைச்சலை தர்மம் செய்துவிடுங்கள்" என்று கூறினார்கள்.
அவ்வாறே உமர் (ரலி) அவர்கள் "அந்த நிலம் விற்கப்படக் கூடாது; வாங்கப்படவும் கூடாது; வாரிசுரிமையாக்கப்படாது;அன்பளிப்பாக வழங்கப்படக் கூடாது" என்ற நிபந்தனைகளை விதித்து அறக்கொடையாக (வக்ஃபாக) வழங்கினார்கள். (அதன் வருமானத்தை) ஏழைகளுக்கும், (தம்) உறவினர்களுக்கும், அடிமைகளை விடுதலை செய்வதற்கும், அல்லாஹ்வின் பாதையி(ல் அறப்போர் புரிவோர் வகையி)லும், வழிப்போக்கருக்கும், விருந்தினர்களுக்கும் உரியதாக்கித் தர்மம் (வக்ஃப்) செய்தார்கள். அதைப் பராமரிக்கும் பொறுப்பேற்றிருப்பவர், (அதிலிருந்து எடுத்துத் தமக்கென்று) சேமித்து வைக்காமல்

நியாயமான அளவில் உண்பதும் தம் தோழருக்கு உணவளிப்பதிலும் குற்றமில்லை (என்றும் எழுதிவைத்தார்கள்).
அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல்லாஹ் பின் அவ்ன் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நா∴பிஉ (ரஹ்) அவர்கள் அறிவித்த இந்த ஹதீஸை நான் முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்களிடம் சொன்னேன். "(அதிலிருந்து எடுத்துத் தமக்கென்று) சேமித்து வைக்காமல்' எனும் இடத்தை நான் அடைந்ததும் "அதைத் தமது சொத்தாக ஆக்கிக் கொள்ளாமல்' என்று (திருத்திக்) கூறினார்கள்.
மேலும், இது தொடர்பாக எழுதப்பட்ட ஓர் ஆவணத்தை வாசித்த ஒருவர் "அதைத் தமது சொத்தாக ஆக்கிக்கொள்ளாமல் என்றே காணப்பட்டது' என்று கூறினார்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீஸாயிதா (ரஹ்) மற்றும் அஸ்ஹர் அஸ்ஸம்மான் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "(அதிலிருந்து எடுத்துத் தமக்கென்று) சேமித்து வைக்காமல் தம் தோழருக்கு உணவளிப்பதில்' என்பதோடு ஹதீஸ் முடிவடைகிறது. அதற்குப் பின்னுள்ள குறிப்புகள் இடம்பெறவில்லை.
இப்னு அபீஅதீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மேற்கண்ட ஹதீஸில் இடம்பெற்றுள்ள "இந்த ஹதீஸை நான் முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்களிடம் சொன்னேன்..." எனத் தொடங்கும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நான் கைபர் பகுதியில் ஒரு நிலத்தைப் பெற்றிருந்தேன். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று "நான் கைபரில் ஒரு நிலத்தைப் பெற்றுள்ளேன். அதைவிட மிக விருப்பமானதையோ, அதைவிட மிகச் சிறந்ததையோ நான் அடைந்து கொண்டதேயில்லை...' என்று உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே தொடருகின்றன.
இந்த அறிவிப்பில், அப்துல்லாஹ் பின் அவ்ன் (ரஹ்) அவர்கள் முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்களிடம் இந்த ஹதீஸைச் சொன்னதைப் பற்றியும் அதற்குப் பின்னுள்ள தகவலும் இடம்பெறவில்லை.

**பாடம் : 5 இறுதி விருப்பம் தெரிவிப்பதற்கு வசதியற்றவர் இறுதி விருப்பம் தெரிவிக்கலாகாது.**

3360 தல்ஹா பின் முஸர்ரி∴ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் அபீஅவ்∴பா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறுதி விருப்பம் (வஸிய்யத்) தெரிவித்தார்களா?" என்று கேட்டேன். அவர்கள் "இல்லை' என்று பதிலளித்தார்கள். "அவ்வாறாயின் இறுதி விருப்பம் முஸ்லிம்களுக்கு ஏன் கடமையாக்கப்பட்டது?' அல்லது "அவ்வாறாயின் இறுதி விருப்பம் தெரிவிக்குமாறு மக்கள் ஏன் கட்டளையிடப்பட்டனர்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் வேதத்தின்படி செயல்படுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அறிவுறுத்தினார்கள்" என்று பதிலளித்தார்கள்.

3361 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் வகீஉ பின் அல்ஜர்ராஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இறுதி விருப்பம் தெரிவிக்குமாறு எவ்வாறு மக்களுக்குக் கட்டளையிடப்பட்டது?" என்று தல்ஹா பின் முஸர்ரிஃப் (ரஹ்) அவர்கள் கேட்டார்கள் என இடம்பெற்றுள்ளது.
முஹம்மத் பின் அப்தில்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இறுதி விருப்பம் தெரிவிப்பது முஸ்லிம்கள்மீது எப்படிக் கடமையாக்கப்பட்டது?" என்று கேட்டார்கள் என இடம்பெற்றுள்ளது.

3362 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இறக்கும்போது) பொற்காசையோ (தீனார்), வெள்ளிக் காசையோ (திர்ஹம்),ஆட்டையோ, ஒட்டகத்தையோ விட்டுச்செல்லவில்லை. (எதையும் யாருக்கும் கொடுக்கும்படி) இறுதி விருப்பம் எதுவும் தெரிவிக்கவுமில்லை.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3363 அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்களிடம் மக்கள், "(நபி (ஸல்) அவர்கள் தமக்குப் பின் ஆட்சித் தலைமை ஏற்கும்படி) அலீ (ரலி) அவர்களிடம் இறுதி விருப்பம் (வஸிய்யத்) தெரிவித்தார்களாமே?" என்று சொன்னார்கள்.
அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் எப்போது அவரிடம் இறுதி விருப்பம் தெரிவித்தார்கள்? (நபியவர்கள் இறுதிப் படுக்கையில் இருந்தபோது) நான்தானே அவர்களை என் நெஞ்சோடு (அல்லது மடியில் தாங்கி) அணைத்துக்கொண்டிருந்தேன்! அவர்கள் (எச்சில் துப்புவதற்காக) பாத்திரம் ஒன்றைக் கொண்டு வரும்படி கேட்டார்கள். பிறகு எனது மடியில் மூர்ச்சையுற்றுச் சரிந்தார்கள். அவர்கள் இறந்து விட்டார்கள் என்பதைக்கூட நான் உணரவில்லை. அவ்வாறிருக்க, அவர்கள் எப்போது அவரிடம் (ஆட்சிப் பொறுப்பேற்கும் படி) இறுதி விருப்பம் தெரிவித்தார்கள்?" என்று கேட்டார்கள்.
இது இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3364 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "(அன்று) வியாழக்கிழமை! எந்த வியாழக்கிழமை (தெரியுமா)?" என்று கேட்டு விட்டு, சரளைக்கல் பூமியை நனைத்து விடுமளவுக்குக் கண்ணீர்விட்டு அழுதார்கள். நான் "இப்னு அப்பாஸ் அவர்களே! அது எந்த வியாழக்கிழமை?" என்று கேட்டேன். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
(ஒரு வியாழக்கிழமையன்று) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது (நோயின்) வேதனை கடுமையாயிற்று. அப்போது அவர்கள், "என்னிடம் (ஓர் ஏட்டைக்) கொண்டு வாருங்கள். உங்களுக்கு ஒரு மடலை நான் எழுதித்தருகிறேன். எனக்குப் பிறகு (குறிப்பிட்ட அந்த விஷயங்களில்) நீங்கள் வழி தவறமாட்டீர்கள்" என்று கூறினார்கள். அப்போது மக்கள்

(கருத்து வேறுபாடு கொண்டு) சச்சரவிட்டுக்கொண்டனர். ஆனால், ஓர் இறைத்தூதர் அருகில் சச்சரவிட்டுக்கொள்ளல் தகாதசெயலாகும்.
மக்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு என்ன நேர்ந்தது? அவர்கள் பலவீனத்தில் பேசுகிறார்களா?அவர்களிடமே விளக்கம் கேளுங்கள்" என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "என்னை விட்டுவிடுங்கள். நான் இப்போதுள்ள நிலையே சிறந்தது" என்று சொல்லிவிட்டார்கள். (எதையும் எழுதித் தரவில்லை.) மேலும், மூன்று விஷயங்களை நான் எனது இறுதி விருப்பமாக வலியுறுத்துகிறேன்: அரபு தீபகற்பத்திலிருந்து இணைவைப்பாளர்களை அப்புறப்படுத்துங்கள். (அயல் நாடுகள் மற்றும் குலங்களின்) தூதுக் குழுவினருக்கு நான் வழங்கிவந்ததைப் போன்று நீங்களும் பரிசுப்பொருட்களை வழங்குங்கள்" என்று கூறினார்கள்.
(எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "மூன்றாவது விருப்பத்தைச் சொல்லாமல் மௌனமாயிருந்துவிட்டார்கள்' அல்லது "அதை அவர்கள் கூறியிருக்க, நான் அதை மறந்துவிட்டேன்'.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3365 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "(அன்று) வியாழக்கிழமை! எந்த வியாழக்கிழமை (தெரியுமா)?" என்று கேட்டு விட்டுக் கண்ணீர் விட்டு அழலானார்கள். எந்த அளவிற்கென்றால், அவர்களின் கன்னங்களில் முத்துச் சரங்களைப் போன்று (கண்ணீர் திவலைகள் தாரை தாரையாக வழியக்) கண்டேன். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இறுதிப் படுக்கையில் இருந்தபோது) "எலும்பையும் மைக்கூட்டையும் (அல்லது பலகையையும் மைக்கூட்டையும்) கொண்டுவாருங்கள். உங்களுக்கு நான் ஒரு மடலை எழுதித் தருகிறேன். அதன் பின்னர் (குறிப்பிட்ட அந்த விஷயங்களில்) ஒருபோதும் நீங்கள் வழிதவறவேமாட்டீர்கள்" என்று கூறினார்கள். அப்போது மக்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பலவீனத்தில் பேசுகிறார்கள்" என்று கூறினர்.

3366 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது இல்லத்தில் மக்கள் பலரும் இருக்க, அவர்களிடையே உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களும் இருந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இறப்பு நெருங்கிவிட அவர்கள், "வாருங்கள். நான் உங்களுக்கு ஒரு மடலை எழுதித் தருகிறேன். அதன் பிறகு நீங்கள் (குறிப்பிட்ட அந்த விஷயங்களில்) ஒருபோதும் வழி தவறமாட்டீர்கள்" என்று சொன்னார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு (நோயின்) வேதனை மிகைத்துவிட்டது. (அவர்களுக்கு எந்த வேலையும் கொடுத்துத் தொந்தரவு செய்யாதீர்கள்.) உங்களிடம்தான் குர்ஆன் இருக்கிறதே! நமக்கு இறைவேதம் போதும்" என்று சொன்னார்கள்.
அப்போது வீட்டிலிருந்தோரிடையே கருத்து வேறுபாடு எழுந்து சச்சரவிட்டுக்கொண்டனர். அவர்களில் சிலர், "(அல்லாஹ்வின் தூதர் – ஸல்) அவர்(கள் கேட்ட எழுதுபொருளை அவர்)களிடம் கொண்டுபோய்க் கொடுங்கள். உங்களுக்கு அவர்கள் ஒரு மடலை எழுதித் தருவார்கள். அதன் பின்னர் நீங்கள் ஒருபோதும் வழி தவறவேமாட்டீர்கள்" என்று கூறினர்.

வேறுசிலர் உமர் (ரலி) அவர்கள் கூறியதைப் போன்றே கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன் மக்கள் அதிகமாகக் கூச்சலிட்டுச் சச்சரவு செய்த போது, "(இங்கிருந்து) எழுந்து செல்லுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.
அறிவிப்பாளர் உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"அவர்கள் கருத்து வேறுபாடு கொண்டு கூச்சலிட்டுக்கொண்டதால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களால் அந்த மடலை எழுத முடியாமல் போனதுதான் சோதனையிலும் பெரும் சோதனையாகும்" என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறிவந்தார்கள்.

# அத்தியாயம் : 26 - நேர்த்திக்கடன் - நேர்ச்சை

## பாடம் : 1 நேர்த்திக்கடனை நிறைவேற்றுமாறு வந்துள்ள கட்டளை.

3367 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் உபாதா அல்அன்சாரீ (ரலி) அவர்கள், தம் தாயார் நேர்ந்துகொண்டு விட்டு, அதை நிறைவேற்றுவதற்கு முன்பே இறந்துபோய்விட்ட நேர்த்திக்கடன் குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் விளக்கம் கேட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவர் சார்பாக நீங்கள் நேர்த்திக்கடனை நிறைவேற்றுங்கள்"என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் எட்டு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 2 நேர்த்திக்கடன் செய்வதற்கு வந்துள்ள தடையும் அது (விதியில்) எதையும் மாற்றிவிடாது என்பதும்.

3368 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நேர்த்திக்கடன் செய்ய வேண்டாம் என்று எங்களுக்குத் தடை விதிக்கலானார்கள். மேலும் "நேர்த்திக்கடன் (விதியிலுள்ள) எதையும் மாற்றிவிடாது. நேர்த்திக்கடன் மூலம் கஞ்சனிடமிருந்து (செல்வம்) வெளிக் கொணரப்படுகிறது (அவ்வளவுதான்)" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3369 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நேர்த்திக்கடன் (விதியில்) எதையும் துரிதப்படுத்தவும் செய்யாது; தாமதப்படுத்தவும் செய்யாது. நேர்த்திக்கடன் மூலம் கஞ்சனிடமிருந்து (செல்வம் ஏழைக்கு) வெளிக் கொணரப்படுகிறது (அவ்வளவுதான்).
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3370 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் நேர்த்திக்கடன் செய்ய வேண்டாமெனத் தடை விதித்தார்கள். மேலும், "அது (விதியில் இல்லாத) எந்த நன்மையையும் கொண்டுவந்துவிடாது. நேர்த்திக்கடன் மூலம் கஞ்சனிடமிருந்து (செல்வம்) வெளிக்கொணரப்படுகிறது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3371 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நேர்த்திக்கடன் செய்யாதீர்கள். ஏனெனில், நேர்த்திக்கடன் விதியிலுள்ள எதையும் தடுத்து விடாது. அதன் மூலம் கஞ்சனிடமிருந்து (செல்வம் ஏழைக்கு) வெளிக்கொணரப்படுகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3372 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் நேர்த்திக்கடன் செய்ய வேண்டாமெனத் தடை விதித்தார்கள். மேலும், "அது விதியில் எதையும் மாற்றிவிடாது. அதன் மூலம் கஞ்சனிடமிருந்து (செல்வம்) வெளிக்கொணரப்படுகிறது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3373 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதமின் மகனுக்கு (மனிதனுக்கு) இறைவன் விதியாக்காத எதையும் நேர்த்திக் கடன் அவனுக்குக் கொண்டுவந்து சேர்க்காது. மாறாக, விதியை ஒத்ததாகவே நேர்த்திக் கடன் அமையும். அதன் மூலம் கஞ்சனிடமிருந்து அவன் வெளிக்கொணர விரும்பாதது வெளிக்கொணரப்படுகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 3 இறைவனுக்கு மாறு செய்வதிலும் உடைமையில்லாத ஒன்றிலும் நேர்ந்து கொண்டால் அதை நிறைவேற்றக் கூடாது.

3374 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஸகீஃப் குலத்தார், பனூ உகைல் குலத்தாருக்கு நட்புக் குலத்தினராய் இருந்தனர். இந்நிலையில் ஸகீஃப் குலத்தார் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களில் இருவரை சிறைபிடித்துச் சென்றனர். (பதிலுக்கு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்கள் பனூ உகைல் குலத்தாரில் ஒருவரை சிறைபிடித்து வந்தனர். அவருடன் "அல்அள்பா' எனும் ஒட்டகத்தையும் பிடித்துக்கொண்டு வந்தனர். அந்தக் கைதி கட்டிவைக்கப்பட்டிருந்த இடத்திற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள். அவர், "முஹம்மதே!' என்று அழைத்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரிடம் வந்து, "(என்ன விஷயம்) உமக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர், "ஏன் என்னை (சிறை) பிடித்தீர்கள்? ஹாஜிகளை முந்திச் செல்லும் ("அள்பா') ஒட்டகத்தையும் ஏன் பிடித்தீர்கள்?" என்று கேட்டார். (அவருக்கு மதிப்புக் கொடுத்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன்னுடைய நட்புக் குலத்தார் "ஸகீஃப்' செய்த குற்றத்திற்காகவே உன்னைச் சிறைபிடித்தேன்" என்று கூறிவிட்டு திரும்பிச் சென்றார்கள்.
பிறகு (மீண்டும்) அவர் "முஹம்மதே! முஹம்மதே!' என்று அழைத்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரக்கமும் கருணையும் உடையவராக விளங்கினார்கள். எனவே, அவரிடம் திரும்பிவந்து, "என்ன விஷயம்?" என்று கேட்டார்கள். அவர், "நான் ஒரு முஸ்லிம்" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (அவர் உண்மையிலேயே முஸ்லிமாகவில்லை என்பதை அறிந்து) "நீ (சிறை பிடிக்கப்படுவதற்கு முன்) சுதந்திரமாக முடிவெடுக்கும் நிலையில் இருந்தபோது, இதை நீ சொல்லியிருந்தால் முழு வெற்றி

பெற்றிருப்பாய் (சிறைபிடிக்கப்பட்டிருக்கமாட்டாய்)" என்று கூறிவிட்டுத் திரும்பிச் சென்றார்கள்.
(மறுபடியும்) அவர், "முஹம்மதே! முஹம்மதே!' என்று அழைத்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரிடம் வந்து, "என்ன விஷயம்?" என்று கேட்டார்கள். அவர் "நான் பசியுடன் இருக்கிறேன். எனக்கு உணவளியுங்கள். தாகத்துடன் இருக்கிறேன். தண்ணீர் புகட்டுங்கள்" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது உன் (அடிப்படைத்) தேவை. (இதை நாம் நிறைவேற்றுவோம்)" என்று பதிலளித்தார்கள். பின்னர் அந்தக் கைதி, (சிறைபிடிக்கப்பட்ட) அந்த இரு (முஸ்லிம்) மனிதர்களுக்குப் பகரமாக விடுதலை செய்யப்பட்டார்.

பின்னர் அன்சாரிகளில் ஒரு பெண்மணி (எதிரிகளால்) சிறைபிடிக்கப்பட்டார். அந்த "அள்பா' எனும் ஒட்டகம் (எதிரிகளால்) ஓட்டிச்செல்லப்பட்டது. (எதிரிகளால் சிறைபிடிக்கப்பட்ட) அந்தப் பெண் கட்டிவைக்கப்பட்டிருந்தார். அந்த எதிரிகள் (இரவில்) தம் கால்நடைகளைத் தம் வீடுகளுக்கு முன்னால் ஓய்வெடுக்க விட்டிருப்பார்கள். ஓர் இரவில் அந்தப் பெண் கட்டை அவிழ்த்துக்கொண்டு, (அங்கிருந்த) ஒட்டகங்களிடம் (அவற்றில் ஒன்றில் ஏறித் தப்பிக்க) வந்தார். ஒவ்வோர் ஒட்டகத்தை அவர் நெருங்கும்போதும் அது கத்தியது. உடனே அதை விட்டு விடுவார். இறுதியில் "அள்பா'எனும் அந்த ஒட்டகத்திடம் அவர் வந்தபோது, அது கத்தவில்லை. அவர் "ஒடுங்கி நடக்கும் ஒட்டகம்" என்று கூறிக்கொண்டார். அதன் முதுகின் ஓரப்பகுதியில் அமர்ந்து அதை விரட்டினார். அது நடக்கலாயிற்று. எதிரிகளுக்கு (அவர் தப்பிச் செல்லும்) விவரம் தெரியவே, அவர்கள் அவரைத் தேடினர். ஆனால், அவர்களிடமிருந்து அவர் தப்பிவிட்டார்.
அப்போது அந்தப் பெண்மணி "என்னை அல்லாஹ் இந்த ஒட்டகத்தின் மூலம் காப்பாற்றிவிட்டால், இதை அல்லாஹ்வுக்காக அறுத்துப் பலியிடுவேன்" என்று நேர்ந்து கொண்டார். (அது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஒட்டகம் என்பது அவருக்குத் தெரியாது.) அவர் மதீனா வந்து சேர்ந்தபோது, அதை (அடையாளம்) கண்டுகொண்ட மக்கள், "அள்பா; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஒட்டகம் (கிடைத்துவிட்டது)" என்று கூறினர்.

அப்போது அப்பெண்மணி "இதன் மூலம் அல்லாஹ் என்னை (எதிரிகளிடமிருந்து) காப்பாற்றினால், இதை நான் அறுத்துப் பலியிடுவேன் என நேர்ந்துள்ளேன்" என்று தெரிவித்தார். ஆகவே, மக்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, அது குறித்துத் தெரிவித்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் தூயவன்! அவள் காட்டிய நன்றிக் கடன் மிக மோசமானது. இதன் மூலம் அல்லாஹ் என்னைக் காப்பாற்றினால்,இதையே நான் அறுத்துப் பலியிடுவேன் என்று நேர்ந்துள்ளார். (ஆனால்,) பாவச் செயலிலும் தனக்கு உடைமையில்லாத ஒன்றிலும் ஓர் அடியார் நேர்ந்துகொண்டால் அதை நிறைவேற்றுதல் கிடையாது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அலீ பின் ஹுஜ்ர் அஸ்ஸஅதீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வுக்கு மாறு செய்வதில் நேர்த்திக்கடன் கிடையாது" என்று கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அள்பா எனும் ஒட்டகம் பனூ உகைல் குலத்தைச் சேர்ந்த ஒருவருக்குச் சொந்தமாக இருந்தது. ஹஜ் யாத்ரீகர்களை முந்திச் செல்லும் ஒட்டகமாகவும் அது இருந்தது"என்று காணப்படுகிறது. மேலும் அதில், "நல்ல அனுபவமுள்ள பணிந்து செல்லும் ஒட்டகத்திடம் அப்பெண்மணி வந்தார்" என்றும் இடம்பெற்றுள்ளது. அப்துல் வஹ்ஹாப் அஸ்ஸகஃபீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அது பயிற்சி அளிக்கப்பட்ட ஒட்டகமாகும்" என்று காணப்படுகிறது.

## பாடம் : 4 கஅபாவரை நடைப்பயணம் செல்வதாக நேர்ந்துகொண்ட ஒருவர்.

3375 அனஸ் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
ஒரு முதியவர் தம் இரு புதல்வர்களுக்கிடையே தொங்கியபடி நடந்துவந்ததைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், "இவருக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். மக்கள், "இவர் (கஅபாவரை) நடந்துசெல்வதாக நேர்ந்திருக்கிறார்"என்று கூறினர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இவர் தம்மை (இவ்விதம்) வேதனை செய்துகொள்வது அல்லாஹ்வுக்கு அநாவசியமானது" என்று கூறிவிட்டு, அவரை வாகனத்தில் ஏறிச் செல்லுமாறு பணித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3376 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு முதியவர் தம் இரு புதல்வர்களுக்கிடையே சாய்ந்தபடி நடந்துவருவதைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், "இவருக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். அதற்கு அப்புதல்வர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இவர் (கஅபாவிற்கு நடைப்பயணம் மேற்கொள்வதாக) நேர்த்திக் கடன் செய்துள்ளார்" என்று கூறினர். நபி (ஸல்) அவர்கள், "பெரியவரே,வாகனத்தில் ஏறிச் செல்வீராக! (தம்மைத் தாமே வேதனை செய்துகொள்ளும்) நீரோ உமது நேர்த்திக் கடனோ அல்லாஹ்வுக்குத் தேவையில்லை" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாக வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3377 உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் சகோதரி காலணி அணியாமல் இறையில்லம் கஅபாவிற்கு நடைப்பயணம் மேற்கொள்வதாக நேர்ந்துகொண்டார். இது பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் விளக்கம் கேட்குமாறு என்னைப் பணித்தார். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவர் (சிறிது தூரம்) நடந்துவிட்டு, வாகனத்தில் ஏறிச் செல்லட்டும்!" என்றார்கள்.

3378 மேற்கண்ட ஹதீஸ் உக்பா பின் ஆமிர் அல்ஜுஹனீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "காலணி அணியாமல்' எனும் குறிப்பு இல்லை. "(உக்பா (ரலி) அவர்களிடமிருந்து இந்த ஹதீஸை அறிவிக்கும்) அபுல்கைர் (ரஹ்) அவர்கள் உக்பா (ரலி) அவர்களைவிட்டுப் பிரியாதவராக இருந்தார்" எனும் தகவல் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 5 நேர்ச்சை ((முறிவு)க்கான பரிகாரம்.

3379 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சத்திய முறிவுக்கான பரிகாரமே நேர்ச்சை முறிவுக்கான பரிகாரமாகும்.
இதை உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 27 - சத்தியம் செய்தல்

## பாடம் : 1 அல்லாஹ் அல்லாதவற்றின் பெயரால் சத்தியம் செய்வது தடை செய்யப் பட்டுள்ளது.

3380 உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களின் தந்தையர் பெயரால் நீங்கள் சத்தியம் செய்ய வேண்டாமென அல்லாஹ் உங்களுக்குத் தடை விதிக்கின்றான்" என்று சொன்னார்கள். இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டது முதல் நானாகப் பேசும்போதும் சரி, பிறர் பேச்சை எடுத்துரைக்கும்போதும் சரி, நான் தந்தை பெயரால் சத்தியம் செய்ததில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3381 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் உகைல் பின் காலித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்வதைக் கேட்டது முதல் நான் இவ்விதம் (தந்தையின் பெயரால்) சத்தியமிட்டுப் பேசியதில்லை" என்று இடம்பெற்றுள்ளது. "நானாகப் பேசும்போதும் சரி, பிறர் பேச்சை எடுத்துரைக்கும்போதும் சரி' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "உமர் (ரலி) அவர்கள் தம் தந்தையின் பெயரால் சத்தியம் செய்வதை நபி (ஸல்) அவர்கள் செவியுற்றார்கள். (அப்போது மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி கூறினார்கள்)" என இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகின்றன.

3382 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் பயணிகள் சிலரிடையே இருந்தபோது, அவர்களை நான் அடைந்தேன். அப்போது உமர் (ரலி) அவர்கள் (தமது பேச்சினூடே) தம் தந்தையின் மீது சத்தியம் செய்தார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களை அழைத்து, "கவனியுங்கள். உங்கள் தந்தையர் பெயரால் நீங்கள் சத்தியம் செய்வதை வல்லமையும் மாண்பும் உடைய அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்கிறான். ஆகவே, யார் சத்தியம் செய்ய விழைகிறாரோ அவர் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்யட்டும்! அல்லது அமைதியாக இருந்துவிடட்டும்!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3383 மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"யாரேனும் சத்தியம் செய்வதாக இருந்தால், அவர் அல்லாஹ்வின் மீதே தவிர (வேறெவர் மீதும்) சத்தியம் செய்ய வேண்டாம்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஏனெனில்,) குறைஷியர் தம் முன்னோர் மீது சத்தியம் செய்து வந்தனர்.

எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்கள் முன்னோர் மீது சத்தியம் செய்யாதீர்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 2 (அறியாமைக் கால தெய்வச் சிலைகளான) "லாத்' மற்றும் "உஸ்ஸா'வின் மீது சத்தியம் செய்துவிட்டவர் (பரிகாரமாக) "லா இலாஹ இல்லல்லாஹ்' என்று சொல்லட்டும்.**

3384 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யார் சத்தியம் செய்யும்போது (அறியாமைக் கால தெய்வச்சிலையான) "லாத்தின் மீது சத்தியமாக!' என்று கூறிவிட்டாரோ, அவர் (இந்தப் பாவத்திற்குப் பரிகாரமாக) "லா இலாஹ இல்லல்லாஹ்' (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை) என்று சொல்லட்டும்! யார் தம் நண்பரிடம் "வா, சூதாடலாம்' என்று கூறிவிட்டாரோ அவர் (அதற்குப் பரிகாரமாக) தர்மம் செய்யட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மஅமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர் எதையேனும் தர்மம் செய்யட்டும்' என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. அவ்ஸாஈ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "லாத் மற்றும் உஸ்ஸாவின் மீது சத்தியம் செய்துவிட்டாரோ" என இடம்பெற்றுள்ளது.
அபுல்ஹுசைன் முஸ்லிம் (பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய) நான் கூறுகிறேன்:
"யார் "வா, சூதாடலாம்' என்று கூறிவிட்டாரோ அவர் தர்மம் செய்யட்டும்" எனும் நபிமொழித் தொடர் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் வழியாக மட்டுமே வந்துள்ளது. ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் இதைப் போன்ற உயர்தரமான அறிவிப்பாளர்தொடரில் ஏறத்தாழ தொண்ணூறு ஹதீஸ்களை அறிவித்துள்ளார்கள். அவர்களுக்கு இணையாக வேறெந்த அறிவிப்பாளரும் இதைப் போன்று அறிவிக்கவில்லை.

3385 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தெய்வச் சிலைகள் பெயராலும் உங்கள் தந்தையரின் பெயராலும் சத்தியம் செய்யாதீர்கள்.
இதை அப்துர் ரஹ்மான் பின் சமுரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 3 ஒரு சத்தியம் செய்துவிட்ட ஒருவர், அதைவிடச் சிறந்ததாக மற்றொன்றைக் காணும்போது, அந்தச் சிறந்ததையே செய்துவிட்டுச் சத்திய முறிவுக்கான பரிகாரம் செய்வதே விரும்பத்தக்கதாகும்.**

3386 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (என்) அஷ்அரீ குலத்தாரில் ஒரு குழுவினருடன் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, (எங்களையும் எங்கள் பயணச் சுமைகளையும்) ஏற்றிச் செல்ல (ஒட்டகங்கள்) ஏற்பாடு செய்யும்படி கேட்டேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக!

நான் உங்களை (ஒட்டகத்தில்) ஏற்றியனுப்ப முடியாது. ஏனெனில், உங்களை ஏற்றியனுப்பத் தேவையான (வாகன) ஒட்டகங்கள் என்னிடம் (தற்போது கைவசம்) இல்லை" என்று சொன்னார்கள்.
பின்னர் அல்லாஹ் நாடிய நேரம் வரை நாங்கள் (அங்கேயே) இருந்தோம். பின்பு நபியவர்களிடம் ஒட்டகங்கள் கொண்டுவரப்பட்டன. அவற்றில் வெள்ளைத் திமில்கள் கொண்ட மூன்று ஒட்டக மந்தைகளை (மூன்று ஜோடி ஒட்டகங்களை) எங்களுக்குத் தருமாறு நபியவர்கள் உத்தர விட்டார்கள்.

நாங்கள் (அங்கிருந்து விடைபெற்றுச்) சென்றுகொண்டிருந்தபோது "நாங்கள் எங்களுக்குள்' அல்லது "எங்களில் சிலர் வேறுசிலரிடம்' "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் நமக்கு வளம் (பரக்கத்) வழங்கமாட்டான். நாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று நம்மை ஏற்றியனுப்ப ஒட்டகங்கள் ஏற்பாடு செய்யும்படி கேட்டோம். அவர்கள் நம்மை ஏற்றியனுப்ப ஒட்டகங்கள் தரமாட்டேன் என்று (அல்லாஹ்வின் மீது) சத்தியம் செய்து கூறினார்கள். பிறகு நமக்கு ஒட்டகங்கள் வழங்கினார்கள்" என்று கூறிவிட்டு, நபி (ஸல்) அவர்களிடம் சென்று (அவர்கள் செய்த சத்தியத்தை) தெரிவித்தோம்.
அப்போது அவர்கள், "உங்களை ஏற்றியனுப்ப நான் ஒட்டகம் தரவில்லை. மாறாக, அல்லாஹ்வே உங்களை ஏற்றியனுப்ப ஒட்டகம் வழங்கினான். அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் நாடினால், இனிமேல் நான் ஏதேனும் ஒரு சத்தியம் செய்து, பிறகு அஃதல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாகக் கருதும்பட்சத்தில், சத்திய முறிவுக்காகப் பரிகாரம் செய்துவிட்டு அந்தச் சிறந்ததையே செய்வேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வற்துள்ளது.

3387 அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் நண்பர்கள் என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, தமக்காக (பயண) வாகனம் கேட்கும்படி அனுப்பிவைத்தார்கள். அப்போது அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சிரமப்போர் படையுடன் செல்லவிருந்தனர். (தபூக் போர்தான் அது) அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! என் நண்பர்கள் தமக்காக வாகனம் கேட்கும் படி என்னைத் தங்களிடம் அனுப்பிவைத்துள்ளனர்" என்று சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களுக்கு எந்த வாகனத்தையும் என்னால் தர இயலாது" என்று சொன்னார்கள். நான் அங்கு போன நேரத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கோபத்திலிருந்தார்கள். (அது) எனக்குத் தெரியவில்லை.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வாகனம் தர) மறுத்ததாலும் என்மீது அவர்கள் வருத்தம் கொண்டிருப்பார்களோ என்ற அச்சத்தாலும் நான் கவலை கொண்டவனாகத் திரும்பினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை என் நண்பர்களிடம் வந்து தெரிவித்தேன். இது நடந்து சிறிது நேரம் தான் கழிந்திருக்கும். அதற்குள், "அப்துல்லாஹ் பின் கைஸே!' என்று பிலால் (ரலி) அவர்கள் (என்னை) அழைப்பதைக் கேட்டேன். உடனே நான் அவரது அழைப்புக்குப் பதிலளித்தேன். அப்போது பிலால் (ரலி) அவர்கள், "உங்களை

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அழைக்கிறார்கள். அவர்களது அழைப்பை ஏற்றுச் செல்லுங்கள்" என்று சொன்னார்கள்.
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றபோது அவர்கள், "(இணைத்துக் கட்டப்பட்டிருக்கும்) இவ்விரு ஒட்டகங்களையும் இவ்விரு ஒட்டகங்களையும் இவ்விரு ஒட்டகங்களையும்" என்று ஆறு ஒட்டகங்களைக் காட்டி "பிடித்துக்கொள்ளுங்கள்' என்று சொன்னார்கள். அவற்றை அப்போதுதான் சஅத் பின் உபாதா (ரலி) அவர்களிடமிருந்து விலைக்கு வாங்கியிருந்தார்கள். "உங்கள் நண்பர்களிடம் இவற்றைக் கொண்டுசென்று, "அல்லாஹ்' அல்லது "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்' (அறிவிப்பாளரின் ஐயம்) இந்த ஒட்டகங்களை உங்கள் பயணத்திற்காக அளித்துள்ளார்கள். எனவே, இவற்றில் ஏறிப் புறப்படச் சொன்னார்கள்' எனத் தெரிவியுங்கள்" என்றார்கள்.

அவ்வாறே நான் என் தோழர்களிடம் அவற்றைக் கொண்டுசென்று, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவற்றில் ஏறிப் பயணம் செல்லும்படி கூறினார்கள். எனினும், அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் சிலர் என்னுடன் வந்து,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நான் (வாகனம்) கேட்டதையும், முதலில் அவர்கள் அதற்கு மறுப்புத் தெரிவித்ததையும், பின்னர் அவற்றை வழங்கியதையும் அறிந்த மக்களிடம் விசாரிக்கும் வரையில் நான் உங்களை விடமாட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொல்லாத ஒன்றை நான் உங்களிடம் சொல்லி விட்டதாக நீங்கள் நினைத்துவிடக் கூடாது" என்று சொன்னேன்.

அதற்கு என் தோழர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! "(அதற்கெல்லாம் அவசியமில்லை) உங்களை நாங்கள் உண்மையாளர் என்றே உறுதியாக நம்புகிறோம். (இருப்பினும், நீங்கள் விரும்புகிறீர்கள் என்பதால்) உங்கள் விருப்பப்படி நாங்கள் செய்கிறோம்" என்று கூறினர். நான் அவர்களில் சிலரை அழைத்துக் கொண்டு "நான் அவர்களுக்குத் தரமாட்டேன்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (முதலில்) மறுத்ததையும், பிறகு அவர்களே வழங்கியதையும் அறிந்த சிலரிடம் சென்றேன். அப்போது அந்தச் சிலர், நான் மக்களிடம் தெரிவித்ததைப் போன்றே தெரிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3388 ஸஹ்தம் பின் முளர்ரிப் அர்ஜர்மீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள் தமது உணவுத்தட்டைக் கொண்டு வரச்சொன்னார்கள். அதில் கோழி இறைச்சி இருந்தது. அப்போது "பனூ தைமுல்லாஹ்' எனும் குலத்தைச் சேர்ந்த சிவப்பான ஒரு மனிதர் உள்ளே வந்தார். அவர் விடுதலை செய்யப்பட்ட அடிமைகளில் ஒருவர் போன்றிருந்தார். அவரை அபூமூசா (ரலி) அவர்கள் "நீ(யும்) வா (சாப்பிடு)" என்றழைத்தார்கள். ஆனால், அவர் தயங்கினார்.
அப்போது அபூமூசா (ரலி) அவர்கள், "இங்கே வா! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்தக் கோழி இறைச்சியை உண்பதை நான் பார்த்திருக்கிறேன்" என்று கூறினார்கள். அதற்கு அந்த மனிதர் "இந்தக் கோழி (இனம் அசுத்தம்) எதையோ தின்பதைக் கண்டு அதனால்

அருவருப்படைந்து அதை உண்ணமாட்டேன் என்று நான் சத்தியம் செய்துவிட்டேன்" என்று சொன்னார். இதைக் கேட்ட அபூமூசா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
இங்கே வா! நான் உனக்கு இதைப் பற்றி (விவரமாக)த் தெரிவிக்கிறேன்: நான் என் "அஷ்அரீ' குலத்தார் சிலருடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், எங்கள் பயணத்திற்கு வேண்டிய வாகனம் கேட்டுச் சென்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்கள் பயணத்திற்கு வேண்டிய வாகனம் தரமாட்டேன். நீங்கள் பயணம் செய்வதற்கு என்னிடம் வாகனம் ஏதுமில்லை" என்று கூறிவிட்டார்கள்.

நாங்கள் அல்லாஹ் நாடிய நேரம்வரை அங்கேயே இருந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் போரில் கிடைத்த ஒட்டகங்கள் சில கொண்டுவரப்பட்டன. உடனே எங்களை அழைத்து, வெள்ளைத் திமில்கள் கொண்ட ஐந்து ஒட்டக மந்தைகளை (ஐந்து ஜோடி ஒட்டகங்களை) எங்களுக்கு வழங்கும்படி உத்தரவிட்டார்கள்.
நாங்கள் (ஒட்டகங்களை ஓட்டிக்கொண்டு திரும்பிச்) சென்றபோது, நாங்கள் எங்களுக்குள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அவர்களது சத்தியத்திலிருந்து கவனத்தைத் திருப்பிவிட்டோம். இதில் நமக்கு வளம் வழங்கப்படாது" என்று பேசிக்கொண்டோம். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் திரும்பிச்சென்று, "அல்லாஹ்வின் தூதரே! எங்கள் பயணத்திற்கு வேண்டிய ஒட்டகங்கள் கேட்டு உங்களிடம் நாங்கள் வந்தோம். நீங்கள் ஒட்டகங்கள் தரமாட்டேன் எனச் சத்தியம் செய்தீர்கள். பிறகு எங்களுக்கு ஒட்டகங்கள் வழங்கினீர்கள். (உங்களது சத்தியத்தை) மறந்துவிட்டீர்களா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டோம்.
அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் நாடினால் நான் ஒரு சத்தியம் செய்து, அஃதல்லாத வேறொன்றை அந்தச் சத்தியத்தைவிடச் சிறந்ததாக நான் கருதினால், அந்த வேறொன்றையே செய்வேன். சத்தியத்தை முறித்து அதற்காகப் பரிகாரமும் செய்து விடுவேன். நீங்கள் செல்லுங்கள். வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வே உங்களுக்கு ஒட்டகங்களை வழங்கினான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், பின்வருமாறு ஹதீஸ் ஆரம்பமாகிறது: "ஜர்ம்' குலத்தைச் சேர்ந்த இந்தக் குடும்பத்தாருக்கும் "அஷ்அரீ' குலத்தாருக்குமிடையே நட்பும் சகோதரத்துவமும் இருந்து வந்தது. நாங்கள் அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்களுக்குக் கோழி இறைச்சியுடன் உணவு பரிமாறப்பட்டது.
மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஸஹ்தம் அல்ஜர்மீ (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் அபூமூசா (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் கோழி இறைச்சி உண்டு கொண்டிருந்தார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மேலும் அதில், "அல்லாஹ்வின்

மீதாணையாக! அ(ந்தச் சத்தியத்)தை நான் மறக்கவில்லை" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்ற தகவல் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3389 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எங்கள் பயணத்திற்கு வேண்டிய ஒட்டகங்கள் கேட்டுச் சென்றோம். அப்போது அவர்கள், "உங்களை ஏற்றியனுப்ப என்னிடம் ஒட்டகங்கள் எதுவுமில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் பயணத்திற்குரிய ஒட்டகங்களை நான் தரமாட்டேன்" என்று கூறிவிட்டார்கள். பிறகு எங்களிடம் வெள்ளைத் திமில்கள் கொண்ட மூன்று ஒட்டக மந்தைகளை (மூன்று ஜோடி ஒட்டகங்களை) அனுப்பி வைத்தார்கள். அப்போது நாங்கள் "நாம் நமது பயணத்திற்குத் தேவையான ஒட்டகங்கள் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றோம். அவர்கள் நமக்கு ஒட்டகம் தரமாட்டேன் எனச் சத்தியம் செய்தார்களே!" என்று கூறிவிட்டு, அவர்களிடம் (திரும்பிச் சென்று) அதைப் பற்றித் தெரிவித்தோம்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் ஒரு சத்தியம் செய்து, அஃதல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாக நான் கருதினால், அந்த வேறொன்றையே செய்வேன்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் (தபூக் போரின்போது) நடைப்பயணமாகவே சென்றோம். எனவே, நாங்கள் ஏறிச் செல்ல அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒட்டகம் கேட்டுச் சென்றோம்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.

3390 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் இரவு (நேரத் தொழுகையைத் தாமதமாகத் தொழுதுவிட்டு) நீண்ட நேரம் நபி (ஸல்) அவர்களிடம் இருந்து விட்டுப் பிறகு தம் வீட்டாரிடம் திரும்பிச் சென்றார். (காலம் தாழ்ந்து சென்றதால்) குழந்தைகள் அனைவரும் உறங்கிவிட்டிருப்பதைக் கண்டார். அப்போது அவருடைய மனைவி அவருக்கு உணவு கொண்டுவந்தார். அப்போது அவர் உண்ண மாட்டேன் எனச் சத்தியம் செய்துவிட்டார். அவருடைய குழந்தைகள் (உறங்கிவிட்டது)தான் அதற்குக் காரணம். பிறகு அவருக்கு ஏதோ தோன்ற, உணவு உட்கொண்டார். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று அது குறித்துத் தெரிவித்தார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒருவர் ஒரு சத்தியம் செய்து விட்டு, அந்தச் சத்தியத்தைவிடச் சிறந்ததாக வேறொன்றைக் கருதினால், அந்த வேறொன்றையே அவர் செய்யட்டும். சத்திய முறிவுக்காகப் பரிகாரமும் செய்யட்டும்" என்றார்கள்.

3391 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் ஒரு சத்தியம் செய்துவிட்டு, அஃதல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாகக் கருதும்பட்சத்தில் தனது சத்தியத்தை முறித்துப் பரிகாரம் செய்துவிட்டு, (அந்த வேறொன்றையே) செய்யட்டும்!

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3392 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் ஒரு சத்தியம் செய்துவிட்டு, அஃதல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாகக் கருதும்பட்சத்தில் அந்தச் சிறந்ததையே அவர் செய்யட்டும்; சத்திய முறிவுக்காகப் பரிகாரமும் செய்யட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3393 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "சத்தியத்தை முறித்து அதற்காகப் பரிகாரம் செய்துவிட்டு, அந்தச் சிறந்ததையே அவர் செய்யட்டும்" என்று இடம் பெற்றுள்ளது.

3394 தமீம் பின் தரஃபா அத்தாயீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்களிடம் உதவி கேட்டு வந்தார். "ஒரு பணியாளரை விலைக்கு வாங்கும் கிரயத் தொகையை' அல்லது "ஒரு பணியாளரை விலைக்கு வாங்கும் கிரயத் தொகையில் ஒரு பகுதியை'த் தரும்படி கேட்டார். அப்போது அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள், "உமக்குத் தர என்னிடம் (இப்போது) எனது கவச ஆடையையும் எனது தலைக் கவசத்தையும் தவிர வேறொன்றுமில்லை. எனவே, நான் என் குடும்பத்தாருக்குக் கடிதம் எழுதுகிறேன். அவர்கள் உமக்கு அந்தத் தொகையைத் தருவார்கள்" என்று கூறினார்கள்.
ஆனால், அந்த மனிதர் அதற்குச் சம்மதிக்கவில்லை. அதீ (ரலி) அவர்கள் கோபமடைந்து, "கேட்டுக்கொள்: அல்லாஹ்வின் மீதாணையாக! உமக்கு ஒன்றுமே நான் தரமாட்டேன்" என்று கூறினார்கள். பிறகு அந்த மனிதர் சம்மதித்தார். அப்போது அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள், "கேட்டுக்கொள்: "ஒருவர் ஒரு சத்தியம் செய்துவிட்டு,அஃதல்லாத வேறொன்றை அதைவிட இறையச்சத்திற்குரிய செயலாகக் கருதும்பட்சத்தில் அந்த இறையச்சத்திற்குரிய செயலையே அவர் செய்யட்டும்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை (மட்டும்) நான் கேட்டிராவிட்டால், நான் எனது சத்தியத்தை முறித்திருக்கமாட்டேன்" என்று கூறினார்கள்.

3395 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் ஒரு சத்தியம் செய்துவிட்டு, அஃதல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாகக் கருதும்பட்சத்தில் அந்தச் சிறந்ததையே அவர் செய்யட்டும்; தமது சத்தியத்தைக் கைவிடட்டும்.
இதை அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3396 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் ஒரு சத்தியம் செய்து விட்டு, அஃதல்லாத வேறொன்றை அதை விடச் சிறந்ததாகக் கருதும்பட்சத்தில் சத்தியத்தை முறித்துப் பரிகாரம் செய்துவிட்டு, அந்தச் சிறந்ததையே அவர் செய்யட்டும்.

இதை அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3397 தமீம் பின் தரஂபா அத்தாயீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர் நூறு திர்ஹங்கள் கேட்டார். அப்போது அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் "ஹாத்திம் அத்தாயீயின் மகனான என்னிடம் (மிகக் குறைந்த தொகையான) நூறு திர்ஹங்கள் கேட்கிறாயே! அல்லாஹ்வின் மீதாணையாக! உமக்கு நான் தரமாட்டேன்" என்று கூறிவிட்டார்கள். பிறகு (சத்தியத்தை முறித்து அவர் கேட்டதைக் கொடுத்துவிட்டு) "ஒருவர் ஒரு சத்தியம் செய்துவிட்டு, அஃதல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாக அவர் கருதும்பட்சத்தில் அந்தச் சிறந்ததையே அவர் செய்யட்டும்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டிராவிட்டால், (நான் எனது சத்தியத்தை முறித்திருக்கமாட்டேன்)" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் தமீம் பின் தரஂபா (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "உமக்கு எனது நன்கொடையில் நானூறு திர்ஹங்கள் கிடைக்கும்" என்று அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறினார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3398 அப்துர் ரஹ்மான் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "அப்துர் ரஹ்மான் பின் சமுரா! ஆட்சிப் பொறுப்பை நீயாக (ஆசைப்பட்டு)க் கேட்காதே! ஏனெனில், (நீ) கேட்டதால் அது உனக்கு அளிக்கப்பட்டால், அதோடு நீ (தனிமையில்) விடப்படுவாய் (இறையுதவி கிட்டாது). கேட்காமல் அது உனக்கு அளிக்கப்பட்டால், அந்தப் பொறுப்பில் (இறைவனின்) உதவி நல்கப்படுவாய். நீ ஒரு சத்தியம் செய்து, அஃதல்லாத வேறொன்றை அதை விடச் சிறந்ததாக நீ கண்டால், உனது சத்தியத்(தை முறித்துவிட்டு, முறித்த)துக்கான பரிகாரத்தைச் செய்துவிடு. சிறந்தது எதுவோ அதைச் செயல்படுத்து" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் எட்டு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஅதமிர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ஆட்சிப் பொறுப்பு தொடர்பான குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 4 சத்தியம் செய்யச் சொல்பவரின் எண்ணப்படியே ஒருவருடைய சத்தியம் அமையும்.

3399 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உன் தோழன் (பிரதிவாதி) எந்த விஷயத்தில் உன்னை மெய்யாக்குவானோ அந்த விஷயத்தின் மீதே உனது சத்தியம் அமையும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

3400 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சத்தியம் செய்யச் சொன்னவரின் எண்ணப்படியே சத்தியம் அமையும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 5 (சத்தியத்தின்போது) "இன்ஷா அல்லாஹ்' கூறுதல்.

3401 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:) (இறைத்தூதர்) சுலைமான் (அலை) அவர்களுக்கு அறுபது துணைவியர் இருந்தனர். (ஒரு நாள்) அவர்கள், "நான் இன்றிரவு அவர்கள் அனைவரிடமும் சென்று (தாம்பத்திய உறவு கொண்டு) வருவேன். அவர்களில் ஒவ்வொருவரும் கர்ப்பமுற்று, அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரியும் (குதிரை) வீரன் ஒருவனைப் பெற்றெடுப்பார்கள்" என்று கூறினார்கள். (அவ்வாறே சென்று தாம்பத்தியத்தில் ஈடுபட்டார்கள்.) ஆனால், துணைவியரில் ஒரே ஒருவரைத் தவிர வேறெவரும் கர்ப்பமடையவில்லை. அந்த ஒருவரும்கூட (ஒரு தோளுடைய) அரை மனிதனையே பெற்றெடுத்தார்.
சுலைமான் (அலை) அவர்கள் "இன்ஷா அல்லாஹ்' ("அல்லாஹ் நாடினால்' அவ்வாறு பெற்றெடுப்பர்) என்று கூறியிருந்தால், அவர்களில் ஒவ்வொருவரும் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரியும் (குதிரை) வீரன் ஒருவனைப் பெற்றெடுத்திருப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3402 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(ஒரு முறை) இறைத்தூதர் சுலைமான் பின் தாவூத் (அலை) அவர்கள் "நான் இன்றிரவு (என்னுடைய) எழுபது துணைவியரிடமும் சென்று (தாம்பத்திய உறவு கொண்டு) வருவேன். அவர்களில் ஒவ்வொருவரும் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரியும் (குதிரை) வீரன் ஒருவனைப் பெற்றெடுப்பார்கள்" என்று கூறினார்கள். அப்போது சுலைமான் நபியின் "தோழர் ஒருவர்' அல்லது "வானவர் ஒருவர்' "இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்,அவ்வாறு பெற்றெடுப்பார்கள்) என்று சொல்லுங்கள்' என சுலைமான் (அலை) அவர்களிடம் கூறினார்.
சுலைமான் (அலை) அவர்கள் "இன்ஷா அல்லாஹ்' என்று கூற மறந்துவிட்டார்கள். அதனால் அவர்களுடைய துணைவியரில் ஒரே ஒருவரைத் தவிர வேறெவரும் கர்ப்பமடையவில்லை. அந்த ஒருவரும் ஒரு தோளுடைய அரைக் குழந்தையையே பெற்றெடுத்தார்.

சுலைமான் (அலை) அவர்கள் "இன்ஷா அல்லாஹ்' (அல்லாஹ் நாடினால்) என்று கூறியிருந்தால் தமது சத்தியத்தை அடையாமல் இருந்திருக்கமாட்டார்கள்; தமது தேவையைப் பூர்த்தி செய்திருப்பார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3403 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:) (ஒரு முறை) சுலைமான் பின் தாவூத் (அலை) அவர்கள், "நான் இன்றிரவு (என்னுடைய) எழுபது துணைவியரிடமும் சென்று (தாம்பத்திய உறவு கொண்டு) வருவேன். அவர்களில் ஒவ்வொருவரும் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரியும் ஆண் குழந்தையைப் பெற்றெடுப்பார்கள்" என்று கூறினார்கள். அப்போது அவர்களிடம் "இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) எனச் சொல்லுங்கள்' என்று கூறப்பட்டது.
ஆனால், அவர்கள் அவ்வாறு கூறாமல் தம் துணைவியர் அனைவரிடமும் சென்று வந்தார்கள். அவர்களுடைய துணைவியரில் எவரும் குழந்தை பெற்றெடுக்கவில்லை; ஒரே ஒருவரைத் தவிர. அந்த ஒருவரும் (ஒரு தோளுடைய) அரை மனிதரையே பெற்றெடுத்தார். சுலைமான் (அலை) அவர்கள் "இன்ஷா அல்லாஹ்' என்று கூறியிருந்தால் தமது சத்தியத்தை அடையாமல் இருந்திருக்கமாட்டார்கள்; தமது தேவையைப் பூர்த்தி செய்திருப்பார்கள்.

3404 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(ஒரு முறை) சுலைமான் பின் தாவூத் (அலை) அவர்கள், "நான் இன்றிரவு (என்னுடைய) தொண்ணூறு துணைவியரிடமும் சென்று (தாம்பத்திய உறவு கொண்டு) வருவேன். அவர்களில் ஒவ்வொருவரும் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரியும் (குதிரை) வீரன் ஒருவனைப் பெற்றெடுப்பார்கள்" என்று கூறினார்கள்.
அப்போது அவர்களுடைய தோழர் ஒருவர், "இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) எனச் சொல்லுங்கள்" என்றார். சுலைமான் (அலை) அவர்கள் "இன்ஷா அல்லாஹ்' என்று கூறாமல், தம் துணைவியர் அனைவரிடமும் சென்று வந்தார்கள். அவர்களில் ஒரே ஒருவரைத் தவிர வேறெவரும் கர்ப்பமடையவில்லை. அந்த ஒருவரும் ஒரு தோளுடைய (அரை) மனிதரையே பெற்றெடுத்தார்.
முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! சுலைமான் (அலை) அவர்கள் "இன்ஷா அல்லாஹ்' என்று கூறியிருந்தால், (அவர்கள் ஒவ்வொருவரும் வீரர்களைப் பெற்றெடுத்து) அவர்கள் அனைவரும் அல்லாஹ்வின் பாதையில் குதிரை வீரர்களாக அறப்போர் புரிந்திருப்பார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அவர்கள் ஒவ்வொருவரும் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரியும் (வீர) மகனைக் கருக்கொண்டிருப்பார்கள்" என்று (சிறு வித்தியாசத்துடன்) இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 6 தடை செய்யப்படாத ஒன்றாகவே இருந்தாலும், குடும்பத்தாரைப் பாதிக்கும் வகையில் ஒருவர் செய்த சத்தியத்தில் பிடிவாதமாக இருக்கலாகாது.**

3405 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து எங்களுக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் இதுவும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் ஒருவர் தம் குடும்பத்தார் (துன்புறும் வகையில் அவர்கள்) தொடர்பாகத் தாம் செய்த சத்தியத்தில் பிடிவாதமாக இருப்பதானது, (அந்தச் சத்தியத்தை முறித்துவிட்டு) அதற்காக அவர்மீது அல்லாஹ் கடமையாக்கியுள்ள பரிகாரத்தைச் செய்வதைவிட அல்லாஹ்விடம் பெரிய பாவமாகும்.

**பாடம் : 7 இறைமறுப்பாளரின் நேர்த்திக்கடனும் அவர் இஸ்லாத்தை ஏற்ற பின் அந்த விஷயத்தில் நடந்துகொள்ள வேண்டிய முறையும்.**

3406 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! "மஸ்ஜிதுல் ஹராம்' புனிதப் பள்ளிவாசலில் ஓர் இரவு "இஃதிகாஃப்' வழிபாடு மேற்கொள்வதாக அறியாமைக் காலத்தில் நான் நேர்ந்துகொண்டேன். (இப்போது அதை நிறைவேற்றலமா?)" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களது நேர்த்திக்கடனை நிறைவேற்றுங்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அபூஉசாமா (ரஹ்) மற்றும் அப்துல் வஹ்ஹாப் அஸ்ஸகஃபீ (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "ஓர் இரவு இஃதிகாஃப்' என்று இடம்பெற்றுள்ளது. ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஒரு பகல் இஃதிகாஃப் இருப்பதாக நேர்ந்துகொண்டார்கள்' என்று காணப்படுகிறது. ஹஃப்ஸ் பின் ஃகியாஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ஒரு பகல் என்றோ ஓர் இரவு என்றோ குறிப்பு இல்லை. (இஃதிகாஃப் இருப்பதாக நேர்ந்துகொண்டார்கள் என்று பொதுவாகவே இடம் பெற்றுள்ளது.)

3407 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தாயிஃப்" போரிலிருந்து திரும்பிய பின் "அல்ஜிஃரானா' எனும் இடத்திலிருந்தபோது அவர்களிடம் (என் தந்தை) உமர் பின் அல் கத்தாப் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அறியாமைக் காலத்தில் (இஸ்லாத்தைத் தழுவும் முன்பு) "மஸ்ஜிதுல் ஹராம்' புனிதப் பள்ளிவாசலில் ஒரு நாள் "இஃதிகாஃப்' இருப்பதாக நான் நேர்ந்துகொண்டேன். அது பற்றி தாங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் சென்று ஒரு நாள் "இஃதிகாஃப்' இருப்பீராக!" என்று கூறினார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களுக்கு (ஹுனைன் போர்ச் செல்வத்தின்) ஐந்தில் ஒரு பாகம் (குமுஸ்) நிதியிலிருந்து ஓர் அடிமைப் பெண்ணைக் கொடுத்திருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,மக்களிடமிருந்த கைதிகளை விடுதலை செய்தபோது அக்கைதிகள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடமிருந்த கைதிகளை விடுதலை செய்துவிட்டார்கள்" என்று கூறிய சப்தத்தை உமர் (ரலி) அவர்கள் செவியுற்றார்கள்.

உடனே உமர் (ரலி) அவர்கள், "என்ன இது?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடமிருந்த கைதிகளை விடுதலை செய்து விட்டார்கள்" என்று கூறினர். ஆகவே, உமர் (ரலி) அவர்கள் (என்னிடம்), "அப்துல்லாஹ்! அந்த அடிமைப் பெண்ணிடம் சென்று அவளது வழியில் அவளை விட்டுவிடு" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "நபி (ஸல்) அவர்கள் "ஹுனைன்' போரிலிருந்து திரும்பியபோது, (என் தந்தை) உமர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், தாம் அறியாமைக் காலத்தில் ஒரு பகல் "இஃதிகாஃப்' இருப்பதாக நேர்ந்துகொண்டிருந்ததைப் பற்றி வினவினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

- மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது.

அதில் பின்வருமாறு ஹதீஸ் ஆரம்பமாகிறது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்ஜிஃரானா' எனுமிடத்திலிருந்து நிறைவேற்றிய உம்ரா பற்றி இப்னு உமர் (ரலி) அவர்கள் முன்னிலையில் பேசப்பட்டது.

அப்போது இப்னு உமர் (ரலி) அவர்கள், (அதைப் பற்றி அறியாதிருந்த காரணத்தால்) "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்ஜிஃரானா'விலிருந்து உம்ரா செய்யவில்லை" என்று விடையளித்தார்கள். மேலும், "உமர் (ரலி) அவர்கள் அறியாமைக் காலத்தில் ஓர் இரவு "இஃதிகாஃப்' மேற்கொள்வதாக நேர்ந்துகொண்டிருந்தார்கள்" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றிலும் "ஒரு பகல் "இஃதிகாஃப்' இருப்பதாக நேர்ந்திருந்தார்கள்" என்றே இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 8 அடிமைகளுடனான நல்லுறவும் அடிமையின் கன்னத்தில் அறைந்துவிட்டவர் செய்ய வேண்டிய பரிகாரமும்.

3408 ஸாதான் அபீஉமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் தம் அடிமையை விடுதலை செய்திருந்தார்கள். பின்னர் தரையிலிருந்து ஒரு குச்சியை, அல்லது வேறு ஏதோ ஒரு பொருளை எடுத்துக்காட்டி, "இதற்குச் சமமான நற்பலன்கூட இ(ந்த அடிமையை விடுதலை செய்த)தில் எனக்குக் கிடைக்காது. ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒருவர் தம் அடிமையை அறைந்துவிட்டால், அல்லது அடித்துவிட்டால், அவரை

விடுதலை செய்து விடுவதே அதற்குரிய பரிகாரமாகும்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

3409 ஸாதான் அபீஉமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் தம் அடிமை ஒருவரை அழைத்து, அவரது முதுகில் ஏற்பட்டிருந்த வடுவைப் பார்த்தார்கள். அவரிடம், "வலிக்கும்படி அடித்து விட்டேனா?" என்று கேட்டார்கள். அவர் "இல்லை' என்றார். இப்னு உமர் (ரலி) அவர்கள், "நீ விடுதலை செய்யப்பட்டவன் ஆவாய்" என்று கூறிவிட்டார்கள். பிறகு தரையிலிருந்து ஏதோ ஒரு பொருளை எடுத்துக்காட்டி, இதன் எடைக்குச் சமமான நன்மைகூட எனக்கு இதில் கிடைக்காது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஒருவர் தம்முடைய அடிமையை அவர் செய்யாத குற்றத்திற்காகத் தண்டித்துவிட்டால், அல்லது அறைந்துவிட்டால் அவரை விடுதலை செய்துவிடுவதே அதற்குரிய பரிகாரமாகும்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அவர் செய்யாத குற்றத்திற்காகத் தண்டித்துவிட்டால்' எனும் குறிப்பு இடம் பெற்றுள்ளது. வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஒருவர் தம் அடிமையை அறைந்துவிட்டால்' என்றே இடம்பெற்றுள்ளது. "அவர் செய்யாத குற்றத்திற்காக' எனும் குறிப்பு அதில் இடம்பெறவில்லை.

3410 முஆவியா பின் சுவைத் பின் முகர்ரின் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் எங்களுடைய அடிமை ஒருவரின் கன்னத்தில் அறைந்துவிட்டு ஓடிவிட்டேன். பிறகு "லுஹர்' தொழுகைக்கு சற்று நேரத்திற்கு முன்னர் வந்து என் தந்தைக்குப் பின்னால் நின்று தொழுதேன். என் தந்தை அந்த அடிமையையும் என்னையும் அழைத்து, "இவனிடமிருந்து நீ பழி தீர்த்துக்கொள்" என்று (அடிமையிடம்) கூறினார்கள். ஆனால், அந்த அடிமை என்னை மன்னித்துவிட்டார்.
பிறகு என் தந்தை (சுவைத் பின் முகர்ரின் (ரலி) அவர்கள்) கூறினார்கள்: பனூ முகர்ரின் குடும்பத்தாராகிய எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் ஒரே ஓர் அடிமைப் பெண் மட்டுமே இருந்தாள். எங்களில் ஒருவர் அவளது கன்னத்தில் அறைந்துவிட்டார். இத்தகவல் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது அவர்கள், "அவளை விடுதலை செய்துவிடுங்கள்" என்று கூறினார்கள். எங்கள் குடும்பத்தார், "இவளைத் தவிர வேறு வேலைக்காரிகள் எங்களிடம் இல்லை" என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவளிடமே அவர்கள் வேலை வாங்கிக் கொள்ளட்டும்! அவளிடம் அவர்களுடைய தேவை முடிந்ததும் அவளது வழியில் அவளை (சுதந்திரமாக) விட்டுவிடட்டும்!" என்று கூறினார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3411 ஹிலால் பின் யசாஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு முதியவர் அவசரப்பட்டு தம் அடிமைப் பெண்ணின் முகத்தில் அறைந்துவிட்டார். அவரிடம் சுவைத் பின் முகர்ரின் (ரலி) அவர்கள், "அடிப்பதற்கு அவளது மென்மையான

முகம்தான் கிடைத்ததா? பனூ முகர்ரின் குடும்பத்தின் ஏழு உறுப்பினர்களில் நானும் ஒருவன் ஆவேன். எங்களிடம் ஒரே ஓர் அடிமைப் பெண் மட்டுமே இருந்தாள். அவளை எங்களது குடும்பத்துச் சிறியவர் ஒருவர் அடித்துவிட்டார். அப்போது அவளை விடுதலை செய்துவிடுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு உத்தரவிட்டார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் பின்வருமாறு ஹிலால் பின் யசா.்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது:
நாங்கள் நுஅமான் பின் முகர்ரின் (ரலி) அவர்களின் சகோதரர் சுவைத் பின் முகர்ரின் (ரலி) அவர்களது வீட்டில் துணி வியாபாரம் செய்துவந்தோம். (ஒரு நாள்) ஓர் அடிமைப் பெண் வந்து எங்களில் ஒருவரிடம் ஏதோ ஒரு (கடுமையான) வார்த்தையைக் கூறினாள். உடனே அவர் அவளது கன்னத்தில் அறைந்துவிட்டார். இதைக் கண்டு சுவைத் பின் முகர்ரின் (ரலி) அவர்கள் கோபப்பட்டார்கள். மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3412 சுவைத் பின் முகர்ரின் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னுடைய அடிமைப் பெண்ணின் முகத்தில் ஒருவர் அறைந்துவிட்டார். அப்போது அவரிடம் நான், "முகம் தடைசெய்யப்பட்டுள்ளது என்பது உனக்குத் தெரியாதா?" என்று கேட்டேன். பிறகு "நான் ஏழு சகோதரர்களில் ஒருவனாயிருந்தேன். எங்களிடம் ஒரே ஒரு பணியாளர் மட்டுமே இருந்தார். எங்களில் ஒருவர் அவரை அவரது முகத்தில் அறைந்துவிட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரை விடுதலை செய்துவிடுமாறு உத்தர விட்டார்கள்" என்று நான் கூறினேன்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா பின் அல்ஹஜ்ஜாஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
என்னிடம் முஹம்மத் பின் அல்முன்கதிர் (ரஹ்) அவர்கள் "உங்கள் பெயரென்ன?" என்று கேட்டார்கள். "ஷுஅபா' என்றேன். பின்னர் அபூஷுஅபா அல்இராக்கீ (ரஹ்) அவர்கள் தமக்கு இந்த ஹதீஸை அறிவித்ததாகக் கூறி, இதைத் தெரிவித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3413 அபூமஸ்ஊத் அல்அன்சாரீ அல்பத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் அடிமையைச் சாட்டையால் அடித்துக்கொண்டிருந்தேன். அப்போது எனக்குப் பின்னால் யாரோ, "நினைவிருக்கட்டும், அபூமஸ்ஊத்!" என்று கூறியதைக் கேட்டேன். அப்போது நான் கோபத்தில் இருந்ததால், அந்தக் குரலை (நன்கு) விளங்கிக்கொள்ளவில்லை. அவர் என்னை நெருங்கி வந்தபோது (பார்த்தால்) அங்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருந்தார்கள். அப்போது அவர்கள் "நினைவிருக்கட்டும். அபூமஸ்ஊத்! நினைவிருக்கட்டும். அபூ மஸ்ஊத்!" என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.
உடனே நான் என் கையிலிருந்த சாட்டையைக் கீழே போட்டேன். அப்போது அவர்கள் "நினைவிருக்கட்டும். அபூமஸ்ஊத்! உமக்கு இந்த அடிமையின் மீதிருக்கும்

அதிகாரத்தைவிடப் பன்மடங்கு அதிகாரம் உம்மீது அல்லாஹ்வுக்கு இருக்கிறது" என்று சொன்னார்கள். நான், "இதன் பின்னர் ஒருபோதும் நான் எந்த அடிமையையும் அடிக்கமாட்டேன்" என (உறுதி) மொழிந்தேன்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் ஜரீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அதைக் கேட்டவுடன் அவர்கள்மீது கொண்ட அச்சத்தால் எனது கையிலிருந்த சாட்டை கீழே விழுந்துவிட்டது" என அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

3414 அபூமஸ்ஊத் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் (ஒரு முறை) என் அடிமையை அடித்துக்கொண்டிருந்தேன். அப்போது எனக்குப் பின்னாலிருந்து யாரோ, "அபூ மஸ்ஊதே நினைவிருக்கட்டும்! இவர்மீது உமக்கிருக்கும் அதிகாரத்தைவிடப் பன்மடங்கு அதிகாரம் உம்மீது அல்லாஹ்வுக்கு இருக்கிறது" என்று கூறுவதை நான் செவியுற்றேன். நான் திரும்பிப் பார்த்தேன். அங்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருந்தார்கள். உடனே நான், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் உவப்புக்காக (இவரை நான் விடுதலை செய்துவிட்டேன்) இவர் சுதந்திரமானவர்" என்று கூறினேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அறிந்துகொள்! நீ இவ்வாறு செய்திருக்காவிட்டால் "நரகம் உம்மை எரித்திருக்கும்' அல்லது "நரகம் உம்மைத் தீண்டியிருக்கும்" என்று கூறினார்கள்.

3415 அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் (ஒரு முறை) என் அடிமையை அடித்துக்கொண்டிருந்தேன். அவர், "அல்லாஹ்விடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்" என்றார். நான் (தொடர்ந்து) அவரை அடிக்கலானேன். உடனே அவர், (எனக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்த அல்லாஹ்வின் தூதரைக் கண்டு) "நான் அல்லாஹ்வின் தூதரிடம் பாதுகாப்புக் கோருகிறேன்" என்றார். உடனே அவரை நான் விட்டு விட்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! (இவரைத் தண்டிப்பதற்கு) இவர்மீது உனக்குள்ள ஆற்றலைவிட (உன்னைத் தண்டிப்பதற்கு) அல்லாஹ் உன்மீது அதிக ஆற்றல் படைத்தவன்" என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "நான் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன். அல்லாஹ்வின் தூதரிடம் பாதுகாப்புக் கோருகிறேன்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 9 ஒருவர் தம் அடிமை விபசாரம் புரிந்து விட்டதாக அவதூறு கூறுவதற்கு வந்துள்ள கண்டனம்.

3416 அபுல்காசிம் (முஹம்மத் – ஸல்) அவர்கள் கூறினார்கள்:

யார் (நிரபராதியான) தம் அடிமைமீது விபசாரம் புரிந்துவிட்டதாக அவதூறு கூறுகிறாரோ, அவருக்கு மறுமை நாளில் (சாட்டையடி) தண்டனை வழங்கப்படும்; அவர் சொன்னதைப் போன்று அந்த அடிமை இருந்தால் தவிர.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "(மனந்திருந்தி பாவமன்னிப்புக் கோரினாலே போதும்; பாவமன்னிப்புக் கிட்டும் எனும் நற்செய்தியுடன் வந்த) "தவ்பா'வின் நபி அபுல்காசிம் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது.

**பாடம் : 10 ஒருவர் தம் அடிமைக்குத் தாம் உண்பதிலிருந்து உணவளிப்பதும், தாம் அணிவதிலிருந்து ஆடையளிப்பதும், அவனது சக்திக்கு மீறிய பணியைக் கொடுத்து அவனைச் சிரமப்படுத்தாமலிருப்பதும்.**

3417 மஅரூர் பின் சுவைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (மதீனாவுக்கு அருகிலுள்ள) "ரபதா' எனுமிடத்தில் அபூதர் (ரலி) அவர்களைக் கடந்து சென்றோம். அப்போது அவர்கள்மீது ஒரு (புதிய) மேலங்கியும், அவர்களுடைய அடிமையின் மீது அதே போன்ற ஒரு (புதிய) மேலங்கியும் இருந்தன. நாங்கள், "அபூதர் அவர்களே! (அவர் அணிந்திருக்கும் மேலங்கியையும் வாங்கி) இரண்டையும் சேர்த்து நீங்களே அணிந்து கொண்டால் (உங்களுக்கு) ஒரு ஜோடி (புதிய) ஆடையாக இருக்குமே?" என்று கேட்டோம். அதற்கு அபூதர் (ரலி) அவர்கள் பின்வருமாறு விடையளித்தார்கள்:
எனக்கும் என் சகோதரர்களில் ஒருவருக்குமிடையே வாய்த் தகராறு ஏற்பட்டது. அம்மனிதரின் தாய் அரபுப்பெண் அல்லர். எனவே, நான் அவருடைய தாயைக் குறிப்பிட்டுத் தரக் குறைவாகப் பேசிவிட்டேன். உடனே அம்மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் (சென்று) என்னைப் பற்றி முறையிட்டார். நான் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தபோது, "அபூதர்ரே! நீர் அறியாமைக் காலத்துக் கலாசாரம் உள்ள மனிதராகவே (இன்னும்) இருக்கின்றீர்" என்று சொன்னார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதரே! ஒருவர் மற்ற மனிதர்களை ஏசும்போது பதிலுக்கு அவர்கள் அவருடைய தந்தையையும் தாயையும் ஏசத்தானே செய்கிறார்கள்?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அபூதர்! நீர் அறியாமைக் காலத்துக் கலாசாரம் உள்ள மனிதராகவே (இன்னும்) இருக்கின்றீர்" என்று கூறிவிட்டு, "(பணியாளர்களான) அவர்கள் உங்கள் சகோதரர்கள் ஆவர். அவர்களை அல்லாஹ் உங்கள் ஆதிக்கத்தின் கீழ் வைத்துள்ளான். ஆகவே, நீங்கள் உண்பதிலிருந்து அவர்களுக்கு உணவளியுங்கள். நீங்கள் அணிவதிலிருந்து அவர்களுக்கு அணியக் கொடுங்கள். அவர்களது சக்திக்கு மீறிய பணியை அவர்களுக்குக் கொடுத்து அவர்களைச் சிரமப்படுத்தாதீர்கள். அவ்வாறு சக்திக்கு மீறிய பணியை அவர்களுக்குக் கொடுத்தால் அவர்களுக்கு நீங்களும் ஒத்துழைப்புத் தாருங்கள்" என்று கூறினார்கள்.

3418 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், ஸுஹைர் பின் முஆவியா (ரஹ்) மற்றும் அபூமுஆவியா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "நீர் அறியாமைக் காலத்துக் கலாசாரம் உள்ள மனிதராகவே (இன்னும்) இருக்கின்றீர்" என்பதற்குப் பின் "நான் வயோதிகத்தை அடைந்துவிட்ட இந்தக்கால கட்டத்திலுமா (அறியாமைக்காலக் கலாசாரம் கொண்டவனாய் உள்ளேன்)?" என்று கேட்டேன்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள் "ஆம்' என்று கூறினார்கள் என அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (இன்னும் சற்றுக் கூடுதலாக) "ஆம். நீர் வயோதிகத்தை அடைந்துவிட்ட இந்த காலக்கட்டத்திலும் (அறியாமைக் காலக் கலாசாரம் கொண்டவராய் இருக்கின்றீர்)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் எனக் காணப்படுகிறது.
ஈசா பின் யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவரது சக்திக்கு மீறிய பணியைக் கொடுத்து அவரைச் சிரமப்படுத்திவிட்டால், (அதற்குப் பரிகாரமாக) அவரை விற்றுவிடட்டும்" என்று இடம்பெற்றுள்ளது. ஸுஹைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அப்பணியில் அவருக்கு ஒத்துழைக்கட்டும்" என இடம்பெற்றுள்ளது.
அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பு, "அவரது சக்திக்கு மீறிய பணியை அவருக்குக் கொடுத்து அவரைச் சிரமப்படுத்தாதீர்கள்" என்பதோடு முடிவடைந்துவிடுகிறது. "அவரை விற்றுவிடட்டும்" என்பதோ, "அவருக்கு ஒத்துழைக்கட்டும்" என்பதோ அவரது அறிவிப்பில் இடம் பெறவில்லை.

3419 மஅரூர் பின் சுவைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூதர் அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்கள்மீது ஒரு மேலங்கியும் அவர்களுடைய அடிமை யின் மீது அதே மாதிரியான மேலங்கியும் இருப்பதைக் கண்டேன். நான் அது குறித்து அவர் களிடம் வினவியபோது அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் ஒரு (அடிமை) மனிதரை ஏசும் போது, அவருடைய தாயைக் குறிப்பிட்டு இழிவாகப் பேசிவிட்டேன். உடனே அம்மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் சென்று அதைப் பற்றிக் கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள் (என்னிடம்), "நீர் அறியாமைக் காலத்துக் கலாசாரம் உள்ள மனிதராகவே இருக்கின்றீர். (அடிமைகளான) அவர்கள் உங்கள் சகோதரர்களும் ஊழியர்களும் ஆவர். அவர்களை அல்லாஹ் உங்கள் ஆதிக்கத்தின் கீழ் வைத்துள்ளான். யாருடைய ஆதிக்கத்தின் கீழ் அவருடைய சகோதரர் இருக்கிறாரோ அவர் தாம் உண்பதிலிருந்து அவருக்கு உணவளிக்கட்டும். தாம் அணிவதிலிருந்து அவருக்கு அணியத் தரட்டும். அவர்களது சக்திக்கு மீறிய பணியைக் கொடுத்து அவர்களைச் சிரமப்படுத்தாதீர்கள். அவ்வாறு அவர்களது சக்திக்கு மீறிய பணியை அவர்களுக்குக் கொடுத்தால் அப்பணியில் அவர்களுக்கு நீங்களும் ஒத்துழையுங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3420 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அடிமைக்கு உணவும் உடையும் அளிக்கப்பட வேண்டும். அவரது சக்திக்கு மீறிய பணியைக் கொடுத்து அவர் சிரமப்படுத்தப்படக்கூடாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3421 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருடைய பணியாளர் வெப்பத்தையும் புகையையும் தாங்கிக்கொண்டு உணவு சமைத்துக் கொண்டுவந்தால், அவரையும் தம்முடன் அமரச் செய்து அவர் உண்ணட்டும். உணவு குறைவானதாக இருந்தால் அதில் ஓரிரு கவளங்களையாவது அவரது கையில் வைக்கட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான தாவூத் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"ஓரிரு கவளங்கள்' என்பதைக் குறிக்க ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ள "உக்லத்தன் அவ் உக்லத்தைனி' என்பதற்கு "லுக்மத்தன் அவ் லுக்மத்தைனி' என்று பொருள். (இரண்டுக்கும் பொருள் ஒன்றே.)

**பாடம் : 11 தன் உரிமையாளருக்கும் விசுவாசமாக நடந்து, இறைவழிபாட்டையும் அழகுபடச் செய்யும் அடிமைக்குக் கிடைக்கும் நன்மையும் பிரதிபலனும்.**

3422 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அடிமை, தம் உரிமையாளருக்கு விசுவாசமாக நடந்து, அல்லாஹ்வையும் நன்முறையில் வழிபடுவாராயின் அவருக்கு இரு முறை(யினாலும்) நன்மை உண்டு.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3423 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவருக்குச் சொந்தமான நல்ல அடிமைக்கு இரண்டு நன்மைகள் உண்டு.
இதன் அறிவிப்பாளரான அபூஹுரைரா (ரலி) அவர்கள் இந்த ஹதீஸை அறிவித்துவிட்டு, "அபூஹுரைராவின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவதும், ஹஜ்ஜும், என் தாய்க்குச் செய்ய வேண்டிய கடமையும் இல்லாமலிருந்தால் நான் (ஒருவரின்) அடிமையாக இருக்கும் நிலையில் இறப்பதையே விரும்பியிருப்பேன்" என்றார்கள்.

சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
தம் தாயாரு(க்குச் செய்யவேண்டிய கடமைகளை நிறைவேற்ற அவரு)டனேயே இருந்ததால், தாயார் இறக்கும்வரை அபூஹுரைரா (ரலி) அவர்கள் (கூடுதலான) ஹஜ்ஜுக்குக் கூடச் செல்லவில்லை என நமக்குச் செய்தி எட்டியது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபுத்தாஹிர் அஹ்மத் பின் அம்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நல்ல அடிமைக்கு' என்று இடம்பெற்றுள்ளது. "ஒருவருக்குச் சொந்தமான' எனும் குறிப்பு இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் குறிப்பிட்ட அபூஹுரைரா (ரலி) அவர்களைப் பற்றிய குறிப்பும் அதற்குப் பின்னுள்ளவையும் இடம்பெறவில்லை.

3424 அபூசாலிஹ் தக்வான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஓர் அடிமை அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய கடமையையும் தம் உரிமையாளருக்குச் செய்ய வேண்டிய கடமையையும் நிறைவேற்றினால், அவருக்கு இரு நன்மைகள் உண்டு" என்று சொன்னார்கள் என அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.
நான் இந்த ஹதீஸை கஅப் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் எடுத்துரைத்தேன். அப்போது கஅப் (ரலி) அவர்கள், "(மறுமை நாளில்) அவருக்கும் வசதியற்ற இறை நம்பிக்கையாளருக்கும் விசாரணை ஏதுமில்லை" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3425 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைவழிபாட்டிலும் தம் உரிமையாளரின் உறவிலும் செம்மையாகச் செயல்பட்ட நிலையில் மரணிப்பதே ஓர் அடிமைக்கு நன்று; மிகவும் நன்று.

## பாடம் : 12 பலருக்குச் சொந்தமான ஓர் அடிமையில் தமது பங்கை மட்டும் ஒருவர் விடுதலை செய்தல்.

3426 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஓர் அடிமையில் தமக்குரிய பங்கை விடுதலை செய்கிறாரோ, அவரிடம் அந்த அடிமையின் (முழு) விலையையும் எட்டுகின்ற அளவுக்குச் செல்வம் இருந்தால், அந்த அடிமையை ஒத்த மற்றோர் அடிமையின் விலையை மதிப்பிட்டு,தம் கூட்டாளிகளுக்கு அவர்களுக்குரிய பங்குகளின் விலையைக் கொடுத்து, அந்த அடிமையை (முழுமையாக) விடுதலை செய்துவிடவேண்டும். இல்லையெனில், அவர் எந்த அளவுக்கு விடுதலை செய்தாரோ, அந்த (தமது பங்கின்) அளவுக்குத்தான் விடுதலை செய்தவர் ஆவார்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3427 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஓர் அடிமையில் தமக்குள்ள பங்கை விடுதலை செய்தாரோ, அவரிடம் அந்த அடிமையின் (முழு) விலையையும் எட்டுகின்ற அளவுக்குச் செல்வம் இருந்தால், அந்த அடிமையை முழுமையாக விடுதலை செய்வது அவர்மீது கடமையாகும். அவரிடம் (அந்த அளவுக்குச்) செல்வம் இல்லாவிட்டால், அவர் எந்த அளவுக்கு அவ்வடிமையை விடுதலை செய்தாரோ அந்த அளவுக்கே அவர் விடுதலை செய்தவர் ஆவார்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3428 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஓர் அடிமையில் தமக்குள்ள பங்கை விடுதலை செய்தாரோ, அவருக்கு அந்த அடிமையின் விலையை எட்டுகின்ற அளவுக்குச் செல்வமிருந்தால், அவ்வடிமையை ஒத்த மற்றோர் அடிமையின் விலையை மதிப்பிட்டு (தமது செல்வத்திலிருந்து அதைச் செலுத்தி அவனை முழுமையாக விடுதலை செய்து)விட வேண்டும். இல்லையெனில்,அவர் எந்த அளவுக்கு அவ்வடிமையை விடுதலை செய்தாரோ அந்த அளவுக்கே அவர் விடுதலை செய்தவர் ஆவார்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அய்யூப் மற்றும் யஹ்யா பின் சயீத் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் மட்டுமே "அவரிடம் அந்த அளவுக்குச் செல்வம் இல்லாவிட்டால், அவர் எந்த அளவுக்கு விடுதலை செய்தாரோ அந்த அளவுக்கே அவர் விடுதலை செய்தவர் ஆவார்" எனும் குறிப்பு இடம் பெற்றுள்ளது. மற்றவர்களின் அறிவிப்பில் இக்குறிப்பு காணப்படவில்லை. அவ்விருவரும், "இக்குறிப்பு ஹதீஸிலேயே உள்ளதா, அல்லது அறிவிப்பாளர் நாஃபிஉ (ரஹ்) அவர்களின் கூற்றா என்பது எங்களுக்குத் தெரியவில்லை" என்று கூறினர். இவற்றில் லைஸ் பின் சஅத் (ரஹ்) அவர்களது அறிவிப்பைத் தவிர வேறு எந்த அறிவிப்பிலும் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்" எனும் வாசகம் இடம்பெறவில்லை.

3429 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தமக்கும் மற்றொருவருக்கும் சொந்தமான ஓர் அடிமையை (அவ்விருவரில்) ஒருவர் விடுதலை செய்தால்,அவ்வடிமையின் (சந்தை) விலையைக் கூட்டவோ குறைக்கவோ செய்யாமல் மதிப்பிட்டு, வசதியுடையவராக அவர் இருந்தால், (மீதி விலையையும் செலுத்தி) அவனை முழுமையாக விடுதலை செய்துவிட வேண்டும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3430 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஓர் அடிமையில் தமக்குள்ள பங்கை விடுதலை செய்தாரோ, அவரிடம் அந்த அடிமையின் முழு விலையையும் எட்டுகின்ற அளவுக்குச் செல்வம் இருந்தால், அதன் மூலம் அவர் அவ்வடிமையின் மற்ற பங்குகள் முழுவதையும் விடுதலை செய்துவிட வேண்டும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3431 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தமக்கும் மற்றொருவருக்கும் சொந்தமான ஓர் அடிமையை அவர்களில் ஒருவர் விடுதலை செய்தால், (தம் கூட்டாளிக்குச் சேர வேண்டிய பங்கிற்கும்) அவரே பொறுப்பாளியாவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3432 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "யார் ஓர் அடிமையில் தமக்குள்ள பங்கை விடுதலை செய்தாரோ, அவரது செல்வத்திலிருந்தே அந்த அடிமை(யின் மீதிப்பங்கும்) விடுதலை செய்யப்பட வேண்டும்" என்று இடம்பெற்றுள்ளது.

3433 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் ஓர் அடிமையில் தமக்குள்ள பங்கை விடுதலை செய்தாரோ, அவரிடம் (போதிய) செல்வம் இருந்தால் அவரது செல்வத்திலிருந்தே அவ்வடிமையின் முழு விடுதலை அமையும். அவரிடம் (போதிய) செல்வம் இல்லையெனில்,அவ்வடிமை(யின் நியாய விலை மதிப்பிடப்பட்டு மீதி பங்குகளின் விலையைத் தருவதற்காக) உழைத்துச் சம்பாதிக்க (அவன்) அனுமதிக்கப்பட வேண்டும். அவனுக்கு அதிகச் சிரமத்தை அளித்து விடக்கூடாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3434 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஈசா பின் யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர் விடுதலையளிக்காத பங்கிற்காக அந்த அடிமை உழைத்துச் சம்பாதிக்க அனுமதிக்கப்பட வேண்டும். அவனுக்கு அதிகச் சிரமத்தை அளித்துவிடக் கூடாது" என்று இடம்பெற்றுள்ளது.

3435 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் தமது மரணத் தறுவாயில் தமக்குச் சொந்தமான ஆறு அடிமைகளை விடுதலை செய்துவிட்டார். அந்த அடிமைகளைத் தவிர வேறு செல்வங்கள் எதுவும் அவரிடம் இருக்க வில்லை. (இச்செய்தி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது) அந்த அடிமைகளை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அழைத்து, அவர்களை மூன்றில் ஒரு பாகங்களாகப் பிரித்தார்கள். பின்னர் அவர்களிடையே சீட்டுக் குலுக்கிப் போட்டு, அவர்களில் இருவருக்கு மட்டுமே விடுதலையளித்தார்கள்; நால்வரை அடிமைகளாகவே நீடிக்கச் செய்தார்கள். (இறக்கும் தறுவாயில் ஆறு அடிமைகளையும் விடுதலை செய்த) அந்த மனிதரைப் பற்றிக் கடுமையாக (சாடி)ப் பேசினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3436 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஹம்மாத் (ரஹ்) அவர்களது அறிவிப்பிலுள்ள வாசகங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. அப்துல் வஹ்ஹாப் அஸ்ஸகஃபீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அன்சாரிகளில் ஒருவர் தமது மரணத் தறுவாயில் தமக்குரிய ஆறு அடிமைகளை விடுதலை செய்யுமாறு இறுதிவிருப்பம் தெரிவித்தார்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 13 பின் விடுதலையளிக்கப்பட்ட அடிமையை விற்கலாம்.**

3437 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் ஒருவர் (தம்) அடிமை ஒருவரைத் தமது இறப்புக்குப் பின் விடுதலை பெற்றவராவார் (முதப்பர்) என்று அறிவித்திருந்தார். அவரிடம் அந்த அடிமையைத் தவிர வேறு செல்வம் எதுவுமிருக்கவுமில்லை. இந்த விஷயம் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, "என்னிடமிருந்து இந்த அடிமையை (விலைக்கு) வாங்குபவர் யார்?" என்று கேட்டார்கள். அப்போது அந்த அடிமையை நுஜம் பின் அப்தில் லாஹ் (ரலி) அவர்கள் எண்ணூறு திர்ஹங்களுக்கு (வெள்ளிக் காசுகளுக்கு) வாங்கிக் கொண்டார்கள். அவற்றை நபி (ஸல்) அவர்கள் அந்த அன்சாரியிடம் ஒப்படைத்தார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் "அந்த அடிமை (எகிப்து நாட்டு) "கிப்தீ' அடிமையாவார். அவர் கடந்த ஆண்டுதான் இறந்தார்" என்றும் கூறக் கேட்டேன்.

3438 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் ஒருவர் தம் அடிமை ஒருவரைத் தமது இறப்புக்குப் பின் விடுதலை பெற்றவராவார் (முதப்பர்) என்று அறிவித்திருந்தார். அவரிடம் அந்த அடிமையைத் தவிர வேறு செல்வம் எதுவும் இருக்கவில்லை. (இச்செய்தி அறிந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த அடிமையை விற்றார்கள். அவரை இப்னு நஹ்ஹாம் (ரலி) அவர்கள் விலைக்கு வாங்கிக் கொண்டார்கள். அவர் (எகிப்து நாட்டு) "கிப்தீ' அடிமை ஆவார். அவர் அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களது ஆட்சியில் கடந்த ஆண்டுதான் இறந்தார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

# அத்தியாயம் : 28 - "அல்கஸாமா' சத்தியம், வன்முறையாளர்களுக்கு எதிரான நடவடிக்கை, பழிக்கு பழி வாங்குதல், மற்றும் இழப்பீடு

## பாடம் : 1 "அல்கஸாமா' சத்தியம்.

3439 சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) மற்றும் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) ஆகியோர் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் சஹ்ல் பின் ஸைத் (ரலி) அவர்களும் முஹய்யிஸா பின் மஸ்ஊத் பின் ஸைத் (ரலி) அவர்களும் (மதீனாவிலிருந்து) புறப்பட்டு கைபர் சென்றடைந்தனர். அங்கு ஓரிடத்தில் தனித்தனியாகப் பிரிந்துவிட்டனர். பிறகு அப்துல்லாஹ் பின் சஹ்ல் (ரலி) அவர்கள் (ஓரிடத்தில்) கொல்லப்பட்டுக் கிடப்பதை முஹய்யிஸா (ரலி) அவர்கள் கண்டு, அவரை (எடுத்து) அடக்கம் செய்தார். பின்னர் அவரும் அவருடைய (சகோதரர்) ஹுவய்யிஸா பின் மஸ்ஊத் (ரலி) அவர்களும் (கொல்லப்பட்டவரின் சகோதரர்) அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் (ரலி) அவர்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்கள்.

(அம்மூவரில்) அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் (ரலி) அவர்கள் வயதில் சிறியவராக இருந்தார்கள். அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் (ரலி) அவர்கள் தம்முடன் வந்த (வயதில் பெயரி)வர்களை முந்திக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பேசப்போனார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பெரியவர்களைப் பேசவிடு" என்று சொன்னார்கள். உடனே அப்துர் ரஹ்மான் அமைதியாகிவிட்டார். பிறகு முஹய்யிஸா (ரலி) அவர்களும் ஹுவய்யிஸா (ரலி) அவர்களும் பேசினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவ்விருவருடனும் பேசினார்கள்.

அப்போது அவர்கள் அப்துல்லாஹ் பின் சஹ்ல் (ரலி) அவர்கள் கொல்லப்பட்டதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்தனர். அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அப்துல்லாஹ் பின் சஹ்லை இன்ன மனிதர்தாம் கொலை செய்தார் என உங்களில்) ஐம்பது பேர் சத்தியம் செய்து, நீங்கள் "உங்கள் (உயிரிழந்த) தோழருக்காக (பழிவாங்கும்) உரிமையை' அல்லது "உங்கள் கொலையாளியிடமிருந்து (இழப்பீடு பெறும்) உரிமையை' எடுத்துக்கொள்கிறீர்களா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர்கள், "(கொலை நடந்த இடத்தில்) நாங்கள் இருக்கவில்லையே! நாங்கள் எப்படிச் சத்தியம் செய்வோம்?"என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியென்றால் யூதர்களில் ஐம்பது பேர் (தாங்கள் அப்துல்லாஹ்வைக் கொல்லவில்லை என்று) சத்தியம் செய்து, உங்களிடம் தாம் நிரபராதிகள் என்பதை நிரூபிக்கட்டும்" என்று கூறினார்கள். அதற்கு அவர்கள், "நிராகரிக்கும் சமுதாயத்தாரின் சத்தியங்களை நாம் எப்படி (நம்பி) ஏற்க முடியும்?" என்று கேட்டார்கள். இதைக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தாமே அப்துல்லாஹ் பின் சஹ்ல் (ரலி) அவர்களின் கொலைக்கான உயிரீட்டுத் தொகையை வழங்கினார்கள்.

3440 சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) மற்றும் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) ஆகியோர் கூறியதாவது:
முஹய்யிஸா பின் மஸ்ஊத் (ரலி) அவர்களும் அப்துல்லாஹ் பின் சஹ்ல் (ரலி) அவர்களும் கைபர் பகுதியை நோக்கிச் சென்றபோது, அங்கிருந்த ஒரு பேரீச்சந்தோட்டத்தில் தனித்தனியாகப் பிரிந்துவிட்டனர். அப்போது அப்துல்லாஹ் பின் சஹ்ல் (ரலி) அவர்கள் கொலை செய்யப்பட்டு விட்டார்கள். யூதர்கள்மீது (அவர்கள்தாம் கொன்றிருப்பார்கள் என) சந்தேகம் ஏற்பட்டது.
ஆகவே, அப்துல்லாஹ் பின் சஹ்ல் (ரலி) அவர்களின் சகோதரர் அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் (ரலி) அவர்களும் அவருடைய தந்தையின் சகோதரரின் புதல்வர்களான ஹுவய்யிஸா (ரலி) மற்றும் முஹய்யிஸா (ரலி) ஆகியோரும் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். தம் சகோதரர் (கொலை) தொடர்பாக அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் (ரலி) அவர்கள் (நபியவர்களிடம்) பேசினார்கள். அம்மூவரில் அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் அவர்கள் வயதில் சிறியவராக இருந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் "பெரியவர்களைப் பேசவிடு' அல்லது "வயதில் பெரியவர் முதலில் பேசட்டும்' என்று கூறினார்கள்.
அவர்கள் இருவரும் (கொல்லப்பட்ட) தம் உறவினர் தொடர்பாகப் பேசியதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஐம்பது பேர் யூதர்களில் (கொலை செய்த) மனிதருக்கெதிராகச் சத்தியம் செய்ய வேண்டும். அதையடுத்துக் கொலையாளியின் கழுத்தில் கயிற்றை மாட்டி அவன் ஒப்படைக்கப்படுவான்" என்று சொன்னார்கள். அதற்கு அவர்கள், "சம்பவம் நடந்த இடத்தில் இல்லாத நாங்கள் எப்படிச் சத்தியம் செய்ய முடியும்?" என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், "அப்படியென்றால், யூதர்களில் ஐம்பது பேர் (நாங்கள் அப்துல்லாஹ்வைக் கொல்லவில்லை எனச்) சத்தியம் செய்து, தாம் நிரபராதிகள் என்பதை உங்களிடம் நிரூபிக்கட்டும்" என்று கூறினார்கள்.
அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அவர்கள் நிராகரிக்கும் சமுதாயத்தார் ஆயிற்றே? (அவர்களுடைய சத்தியங்களை நாம் எப்படி ஏற்க முடியும்?)" என்று கேட்டார்கள். ஆகவே, நபி (ஸல்) அவர்கள், தாமே அப்துல்லாஹ் பின் சஹ்ல் அவர்களின் கொலைக்கான உயிரீட்டுத் தொகையை வழங்கினார்கள்.

சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
பின்னர் ஒரு நாள் நான் அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் (ரலி) அவர்களது ஒட்டகத் தொழுவத்திற்குச் சென்றேன். (நபி (ஸல்) அவர்கள் ஈட்டுத் தொகையாக வழங்கிய) அந்த ஒட்டகங்களில் ஒன்று தனது காலால் என்னை உதைத்துவிட்டது.
அறிவிப்பாளர் ஹம்மாம் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: "இவ்வாறு(தான் சஹ்ல் (ரலி) அவர்கள் கூறினார்கள்.) அல்லது இதைப் போன்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே கொல்லப்பட்டவருக்கான உயிரீட்டுத் தொகையை வழங்கினார்கள்" என இடம்பெற்றுள்ளது. "ஒட்டகம் என்னை உதைத்து விட்டது" எனும் குறிப்பு அதில் இல்லை.

- மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3441 புஷைர் பின் யசார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில், அன்சாரிகள் என்றும் பின்னர் பனூ ஹாரிஸா குலத்தார் என்றும் அறியப்பட்டவர்களான அப்துல்லாஹ் பின் சஹ்ல் பின் ஸைத் (ரலி) அவர்களும், முஹய்யிஸா பின் மஸ்ஊத் பின் ஸைத் (ரலி) அவர்களும் கைபரை நோக்கிப் புறப்பட்டார்கள். கைபர், அன்று சமாதான ஒப்பந்தம் கையெழுத்தான பகுதியாயிருந்தது. யூதர்களே அங்கு வசித்துவந்தார்கள். (அங்கு சென்றதும்) அவர்கள் இருவரும் தம் தேவைக்காகத் தனித்தனியே பிரிந்துசென்றனர்.

அப்போது அப்துல்லாஹ் பின் சஹ்ல் (ரலி) அவர்கள் கொல்லப்பட்டு (அத்தோட்டத்திலுள்ள) ஒரு தண்ணீர் தொட்டியில் கிடப்பதைக் கண்டார்கள். உடனே முஹய் யிஸா (ரலி) அவர்கள் அவரை (எடுத்து) அடக்கம் செய்துவிட்டு, மதீனாவை நோக்கி வந்தார்கள். கொல்லப்பட்டவரின் சகோதரர் அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் (ரலி) அவர்களும் (உறவினர்களான) முஹய்யிஸா (ரலி) மற்றும் ஹுவய்யிஸா (ரலி) ஆகியோரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று அப்துல்லாஹ் (ரலி) அவர்களது நிலை குறித்தும் அவர் கொல்லப்பட்டுக் கிடந்த இடத்தைப் பற்றியும் தெரிவித்தனர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அப்துல்லாஹ்வை இன்ன மனிதர்தாம் கொலை செய்தார் என்று) உங்களில் ஐம்பது பேர் சத்தியம் செய்து, நீங்கள் "உங்கள் கொலையாளியிடமிருந்து (இழப்பீடு) பெறும் உரிமையை'அல்லது "உங்கள் தோழருக்காக (பழிவாங்கும்) உரிமையை' எடுத்துக்கொள்கிறீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! சம்பவம் நடந்த இடத்தில் நாங்கள் இருக்கவுமில்லை; சம்பவத்தைப் பார்க்கவும் இல்லையே!" என்று கேட்டார்கள்.
"அப்படியானால், யூதர்களில் ஐம்பது பேர் சத்தியம் செய்து, தாம் நிரபராதிகள் என்பதை உங்களிடம் நிரூபிப்பார்கள்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நிராகரிக்கும் சமுதாயத்தாரின் சத்தியத்தை எப்படி நாங்கள் ஏற்க முடியும்?" என்று கேட்டார்கள். எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தாமே அப்துல்லாஹ்வின் கொலைக்கான உயிரீட்டுத் தொகையை வழங்கினார்கள்.

3442 மேற்கண்ட ஹதீஸ் புஷைர் பின் யசார் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அன்சாரிகளில் பனூ ஹாரிஸா குடும்பத்தைச் சேர்ந்த அப்துல்லாஹ் பின் சஹ்ல் பின் ஸைத் (ரலி) எனக் கூறப்படும் ஒரு மனிதரும் முஹய்யிஸா பின் மஸ்ஊத் பின் ஸைத் எனக் கூறப்படும் அவருடைய தந்தையின் சகோதரர் ஒருவரும் (கைபர் பகுதியை நோக்கிச்) சென்றார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்று, "ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தாமே

கொல்லப்பட்டவருக்கான உயிரீட்டுத் தொகையை வழங்கினார்கள்" என்பதுவரை இடம் பெற்றுள்ளது.
யஹ்யா பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (பின்வருமாறு கூடுதலாக) இடம் பெற்றுள்ளது:
சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) அவர்கள் கூறினார்கள்: உயிரீட்டுத் தொகையாக வழங்கப்பட்ட அந்த ஒட்டகங்களில் ஒன்று ஒட்டகத் தொழுவத்தில் வைத்து என்னை உதைத்து விட்டது.

3443 சஹ்ல் பின் அபீஹஸ்மா அல் அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்(கள் அன்சாரி)களில் சிலர் கைபர் பகுதியை நோக்கிச் சென்றபோது, அங்கு அவர்கள் தனித் தனியாகப் பிரிந்துவிட்டார்கள். இந்நிலையில் அவர்களில் ஒருவர் கொல்லப்பட்டுக் கிடப்பதைக் கண்டார்கள். மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. இந்த அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கொலையுண்டவரின் உயிரிழப்பை வீணாக்க விரும்பாமல், தாமே நூறு தர்ம ஒட்டகங்களை உயிரீட்டுத் தொகையாக வழங்கினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

3444 சஹ்ல் பின் அபீஹஸ்மா (ரலி) அவர்கள் தம் குலத்தாரில் பெரியவர்கள் சிலரிடமிருந்து (கேட்டுக்) கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் சஹ்ல் (ரலி) அவர்களும் முஹய்யிஸா (ரலி) அவர்களும் தங்களுக்கு ஏற்பட்ட கடுமையான வறுமையின் காரணத்தால் (பேரீச்சம் பழங்கள் பறிப்பதற்காக) கைபரை நோக்கிப் புறப்பட்டார்கள். பின்னர் முஹய்யிஸா (ரலி) அவர்கள் வந்து தெரிவித்தார்கள்: அப்துல்லாஹ் பின் சஹ்ல் (ரலி) அவர்கள் கொல்லப்பட்டு ஒரு "நீர் நிலையில்' அல்லது "குழியில்' கிடந்தார். பிறகு யூதர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள்தாம் அவரைக் கொலை செய்தீர்கள்" என்று நான் கூறினேன். யூதர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் கொல்லவில்லை" என்று கூறினர்.
பிறகு முஹய்யிஸா (ரலி) அவர்கள் தம் குலத்தாரை நோக்கி வந்து அவர்களிடமும் அதைப் பற்றித் தெரிவித்தார்கள். பின்னர் அவரும் அவரைவிட வயதில் மூத்தவரான அவருடைய சகோதரர் ஹுவய்யிஸா (ரலி) அவர்களும் மற்றும் அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் (ரலி) அவர்களும் (நபியவர்களிடம்) வந்தார்கள். அப்போது கைபரில் அப்துல்லாஹ்வுடன் இருந்த முஹய்யிஸா (ரலி) அவர்கள் (அவர்கள் இருவரையும் முந்திக் கொண்டு) பேச ஆரம்பித்தார்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முஹய்யிஸா (ரலி) அவர்களிடம், "வயதில் மூத்தவரை (முதலில்) பேசவிடு; வயதில் மூத்தவரை (முதலில்) பேசவிடு" என்று கூறினார்கள். எனவே, (முதலில்) ஹுவய்யிஸா (ரலி) அவர்கள் பேசினார்கள். பிறகு முஹய்யிஸா பேசினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நீங்கள் ஐம்பது பேர் சத்தியம் செய்வதன் மூலம் யூதர்களே கொலை செய்தார்கள் என்பது நிரூபணமானால்,) ஒன்று அவர்கள் (கொல்லப்பட்ட) உங்கள் நண்பருக்கான உயிரீட்டுத்

தொகையை வழங்கட்டும்! அல்லது (நம்முடன் நடந்த சமாதான உடன்படிக்கையை முறித்துக்கொண்டு) அவர்கள் போர்ப் பிரகடனம் செய்யட்டும்!" என்று கூறினார்கள்.
பிறகு இது தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் யூதர்களுக்குக் கடிதம் எழுதினார்கள். அதற்கு யூதர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் அவரைக் கொலை செய்யவில்லை" எனப் பதில் எழுதினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹுவய்யிஸா (ரலி), முஹய்யிஸா (ரலி), அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் (ரலி) அகியோரிடம், "(அப்துல்லாஹ் பின் சஹ்ல் அவர்களை யூதர்கள்தாம் கொலை செய்தார்கள் என்று) சத்தியம் செய்து,நீங்கள் உங்கள் கொலையாளிக்கு (தண்டனையளித்து பழிவாங்கிக்கொள்ளும்) உரிமையை பெற்றுக்கொள்கிறீர்களா?"என்று கேட்டார்கள்.
அதற்கு அம்மூவரும் "இல்லை' என்றனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால் உங்கள் குற்றச்சாட்டுக்கு (மறுப்புத் தெரிவித்து) யூதர்கள் சத்தியம் செய்வர்" என்றார்கள். அதற்கு அவர்கள் மூவரும், "அவர்கள் முஸ்லிம்கள் இல்லையே (யூதர்கள் பொய் சத்தியம் செய்வதற்குக்கூட தயங்கமாட்டார்கள்)" என்று கூறினர்.
ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தாமே அப்துல்லாஹ் பின் சஹ்ல் அவர்களின் கொலைக்கான உயிரீட்டுத் தொகையை கொடுத்துவிட்டார்கள். அவருடைய குடும்பத்தாருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நூறு ஒட்டகங்களை அனுப்பினார்கள். அவை அவர்களது வீட்டுக்குக் கொண்டுவரப்பட்டன.
சஹ்ல் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
அந்த ஒட்டகங்களில் சிவப்பு ஒட்டகம் ஒன்று தனது காலால் என்னை உதைத்து விட்டது.

3445 அன்சாரீ நபித்தோழர்களில் ஒருவர் கூறினார்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அறியாமைக் காலத்தில் இருந்துவந்த "அல்கஸாமா' சத்திய முறையை நீடிக்கச் செய்தார்கள்.
இதை நபி (ஸல்) அவர்களின் துணைவியார் மைமூனா (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான சுலைமான் பின் யசார் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3446 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அன்சாரிகளில் சிலர் "யூதர்கள் தங்களில் ஒருவரைக் கொலை செய்துவிட்டதாக' குற்றம் சாட்டியபோது இவ்வாறே (சத்தியம் செய்யுமாறு) தீர்ப்பளித்தார்கள்" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 2 வன்முறையாளர்களுக்கும் மதம் மாறியோருக்கும் உரிய (தண்டனைச்) சட்டம்.

3447 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"உரைனா' குலத்தைச் சேர்ந்த சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் மதீனாவுக்கு வந்(து தங்கியிருந்)தபோது, அவர்களுக்கு மதீனாவின் தட்பவெப்ப நிலை ஒத்துக் கொள்ளவில்லை. எனவே, அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் விரும்பினால் தர்ம ஒட்டகங்களிடம் சென்று, அவற்றின் பாலையும் சிறுநீரையும் அருந்தி

(நிவாரணமடைந்து) கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். அவ்வாறே அவர்கள் செய்து குணமடைந்தனர். பிறகு (நபியவர்களின்) ஒட்டக மேய்ப்பாளர்களைத் தாக்கிக் கொலை செய்தனர்; இஸ்லாத்திலிருந்து வெளியேறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அந்த ஒட்டக மந்தையை ஓட்டிச் சென்றுவிட்டனர்.
இச்செய்தி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, உடனே அவர்களைப் பின்தொடர்ந்து (அவர்களைப் பிடித்துவர) ஆட்களை அனுப்பினார்கள். அவர்கள் பிடித்துக் கொண்டுவரப்பட்டதும் (பல கொடுஞ்செயல்கள் புரிந்த) அவர்களது (இடக்) கையையும் (வலக்) காலையும் துண்டித்தார்கள்; அவர்களது கண்களில் சூடிட்டார்கள்; பிறகு சாகும்வரை அவர்களை "ஹர்ரா'ப் பகுதியில் போட்டுவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3448 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"உக்ல்' குலத்தைச் சேர்ந்த எட்டுப்பேர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டதாக உறுதிமொழி அளித்(து மதீனாவில் தங்கியிருந்)தனர். அவர்களுக்கு மதீனாவின் தட்ப வெப்பநிலை ஒத்துக்கொள்ளாமல் அவர்களது உடல் நோய் கண்டது. எனவே, அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அதைப்பற்றி முறையிட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நம் ஒட்டக மேய்ப்பருடன் ஒட்டகங்களிருக்கும் இடத்திற்குச் சென்று, அவற்றின் பாலையும் சிறுநீரையும் பயன்படுத்தி (நிவாரணம் பெற்று)க் கொள்கிறீர்களா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர்கள் "சரி' என்று கூறி, புறப்பட்டுச் சென்று ஒட்டகங்களின் பாலையும் சிறுநீரையும் அருந்தி நிவாரணம் பெற்றனர். பிறகு அந்த ஒட்டக மேய்ப்பரைக் கொலை செய்துவிட்டு, ஒட்டகங்களை ஓட்டிச் சென்று விட்டனர்.

இவ்விஷயம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, உடனே அவர்களைப் பின்தொடர்ந்து ஆட்களை அனுப்பினார்கள். அவர்கள் பிடிக்கப்பட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டனர். அப்போது அவர்களின் கை கால்களைத் துண்டித்து, அவர்களின் கண்களில் சூடிடுமாறு நபியவர்கள் உத்தரவிட்டார்கள். பிறகு அவர்கள் சாகும்வரை ("ஹர்ரா'ப் பகுதியில்) வெயிலில் போடப்பட்டனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் முஹம்மத் பின் அஸ்ஸப்பாஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "கால்நடைகளை அவர்கள் ஓட்டிச் சென்று விட்டனர்; அவர்களின் கண்களுக்குச் சூடிடப்பட்டது"என இடம்பெற்றுள்ளது.

3449 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "உக்ல் மற்றும் உரைனா குலத்தைச் சேர்ந்த சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தனர். அவர்களுக்கு மதீனாவின் தட்பவெப்ப நிலை ஒத்துக் கொள்ளவில்லை. (அவர்கள் உடல் நலிவுற்றனர்.) எனவே,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பால் ஒட்டகங்களிடம் சென்று, அவற்றின் பாலையும் சிறுநீரையும் அருந்துமாறு

அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
இந்த அறிவிப்பில் "அவர்களின் கண்களுக்குச் சூடு போடப்பட்டு, அவர்கள் "ஹர்ரா'ப் பகுதியில் போடப்பட்டனர். அவர்கள் குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டும் வழங்கப்படவில்லை" என்று இடம்பெற்றுள்ளது.

3450 அபூகிலாபா அப்துல்லாஹ் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நான் (கலீஃபா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களுக்குப் பின்னால் அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள் மக்களிடம், "அல்கஸாமா சத்தியம் குறித்து என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். அப்போது அன்பஸா பின் சயீத் (ரஹ்) அவர்கள், "அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் நம்மிடம் இன்னின்னவாறு கூறினார்கள்" என்றார்கள். நான், என்னிடமும் அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று கூறிவிட்டு "உரைனா' குலத்தார் பற்றிய ஹதீஸை (மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளதைப் போன்று) அறிவித்தேன்.
நான் அந்த ஹதீஸை அறிவித்து முடித்ததும் அன்பஸா (ரஹ்) அவர்கள், "அல்லாஹ் தூயவன்!" என (வியப்புடன்) கூறினார்கள். நான், "அன்பஸா அவர்களே! என்மீது சந்தேகப் படுகிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இல்லை; இவ்வாறுதான் எம்மிடமும் அனஸ் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்" என்று கூறிவிட்டு, "சிரியாவாசிகளே! "இவர்' (அபூ கிலாபா) அல்லது "இவரைப் போன்றவர்' உங்களிடையே இருக்கும்வரை நீங்கள் நன்மையில் நீடிப்பீர்கள்"என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "உக்ல் குலத்தாரில் எட்டுப்பேர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. இந்த அறிவிப்பில் "அவர்க(ளது காயத்திலிருந்து வழிந்த இரத்தத்தை நிறுத்துவதற்காகக் கை, கால் நரம்புக)ளுக்குச் சூடிடவில்லை" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3451 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"உரைனா' குலத்தைச் சேர்ந்த சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து இஸ்லாத்தை ஏற்று உறுதிமொழியும் அளித்தனர். அப்போது மதீனாவில் நுரையீரல் சவ்வு அழற்சி நோய் ஏற்பட்டிருந்தது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
இந்த அறிவிப்பில், "அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் சுமார் இருபது அன்சாரி இளைஞர்கள் இருந்தனர். அவர்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உரைனா' கூட்டத்தாரைப் பிடித்து வர அனுப்பினார்கள். அவர்களுடன் காலடித் தடங்களை அறியும் தடய நிபுணர் ஒருவரையும் அனுப்பினார்கள்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் ஹம்மாம் பின் யஹ்யா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உரைனா குலத்தாரில் ஒரு குழுவினர்' என்று இடம்பெற்றுள்ளது. சயீத் பின் அபீஅரூபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உக்ல் மற்றும் உரைனா குலத்தாரில் சிலர்'என்று காணப்படுகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3452 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அந்த ஒட்டக மேய்ப்பர்களின் கண்களில் அவர்கள் சூடிட்டதால்தான் அவர்களுடைய கண்களில் நபி (ஸல்) அவர்கள் சூடிடச் செய்தார்கள்.

பாடம் : 3 கல் போன்ற கனரகப் பொருட்களாலும் கூராயுதங்களாலும் கொலை செய்தால், பழிக்குப்பழி உண்டு என்பதற்கான ஆதாரமும் பெண்ணைக் கொன்றதற்காக ஆண் கொல்லப்படுவதும்.

3453 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
யூதனொருவன் ஒரு சிறுமியை, அவளது வெள்ளி நகைக்காகக் கல் எறிந்து கொன்று விட்டான். உயிர் ஊசலாடிக்கொண்டிருந்த அந்தச் சிறுமி நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டாள். அவளிடம் நபி (ஸல்) அவர்கள், "இன்ன மனிதரா உன்னைத் தாக்கினார்?" என்று கேட்டார்கள். அவள் "இல்லை' என்று தலையால் சைகை செய்தாள். மீண்டும் அவர்கள், "இன்ன மனிதரா உன்னைத் தாக்கினார்?" என்று கேட்டார்கள். அவள் அப்போதும் "இல்லை' என்று தலையாட்டினாள்.

தொடர்ந்து மூன்றாவது முறையாக அவளிடம், "இன்ன மனிதரா உன்னைத் தாக்கினார்?" என்று (ஒரு மனிதரது பெயரைக் குறிப்பிட்டுக்) கேட்டபோது அவள் "ஆம்' என்று தலையால் சைகை செய்தாள். ஆகவே, அந்த யூதனை (அழைத்து வந்து விசாரித்து, அவன் ஒப்புக்கொண்டதும்) இரு கற்களுக்கிடையே வைத்து அவ(னது தலையி)னை (நசுக்கி)க் கொல்லுமாறு நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அப்துல்லாஹ் பின் இத்ரீஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இரு கற்களுக்கிடையே அவனது தலையை வைத்து நசுக்கிக் கொல்லுமாறு உத்தரவிட்டார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

3454 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
யூதர்களில் ஒருவன் அன்சாரிகளில் ஒரு சிறுமியை, அவள் அணிந்திருந்த நகைக்காகக் கொலை செய்து, அவளை ஒரு பாழடைந்த கிணற்றில் போட்டு, அவளது தலையைக் கல்லால் நசுக்கினான். அவன் பிடிக்கப்பட்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டான். சாகும்வரை அவனைக் கல்லால் அடிக்குமாறு (மரண தண்டனை விதித்து) அவர்கள் உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவன் கல்லால் எறிந்து கொல்லப்பட்டான்.

- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3455 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு சிறுமி இரு கற்களுக்கிடையே தலை நசுக்கப்பட்ட நிலையில் கிடந்தாள். மக்கள் அவளிடம், "உன்னை இப்படிச் செய்தவர் யார்? இன்ன மனிதனா? இன்ன மனிதனா?" என்று கேட்டார்கள். யூதன் ஒருவனின் பெயரை அவர்கள் கூறியதும், அச்சிறுமி ("ஆம் அவன்தான்' என்று) தலையால் சைகை செய்தாள். அந்த யூதன் பிடிக்கப்பட்டு (விசாரிக்கப்பட்டதில்), குற்றத்தை ஒப்புக்கொண்டான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவனது தலையில் கல்லைப் போட்டு நசுக்குமாறு உத்தரவிட்டார்கள்.

**பாடம் : 4 ஒரு மனிதன், தனது உயிரையோ உறுப்பையோ தாக்க வந்தவனிடமிருந்து தற்காத்துக்கொள்வதற்காக அவனைப் பிடித்துத் தள்ளியதில் அவனது உயிருக்கோ உறுப்புக்கோ சேதம் ஏற்பட்டால், (பிடித்துத் தள்ளிய) அந்த மனிதன் அதற்குப் பொறுப்பாளி அல்லன்.**

3456 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
யஅலா பின் முன்யா (அல்லது யஅலா பின் உமய்யா – ரலி) அவர்களுக்கும் மற்றொரு மனிதருக்குமிடையே சண்டை ஏற்பட்டது. அப்போது அவர்களில் ஒருவர் இன்னொருவரைக் கடித்தார். அப்போது (கடிபட்டவர்) தமது கையை அவரது வாயிலிருந்து இழுத்தார். இதனால் கடித்தவரின் முன்பல் ஒன்று விழுந்துவிட்டது. இதையொட்டி அவர்கள் இருவரும் நபி (ஸல்) அவர்களிடம் வழக்கைக் கொண்டுவந்தனர்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் "உங்களில் ஒருவர் தம் சகோதரனின் கையைக் கடா ஒட்டகம் கடிப்பதைப் போன்று கடிப்பாரா? (அவர் கடித்துக் கொண்டிருக்கும்வரை கடிபட்டவன் தனது கையை அப்படியே வைத்துக்கொண்டிருப்பானா? "பல்லிழந்த) இவருக்கு இழப்பீட்டுத் தொகை கிடையாது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "கடித்தவரின் முன்பற்கள் இரண்டு விழுந்துவிட்டன" என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் யஅலா பின் உமய்யா (ரலி) அவர்கள் வாயிலாக இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3457 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் இன்னொரு மனிதரின் முன்கையைக் கடித்தார். அந்த மனிதர் தமது கையை இழுக்க, (கடித்த) அவரது முன்பல் ஒன்று விழுந்துவிட்டது. இவ்வழக்கு நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்ட போது, அந்த வழக்கை தள்ளுபடி செய்து விட்டார்கள். "நீ அவரது இறைச்சியை உண்ணப் பார்த்தாய் (அதனால் அவர் கையை இழுத்தார். எனவே, உனது பல்லுக்கு இழப்பீடு இல்லை)" என்று கூறினார்கள்.

3458 ஸஃப்வான் பின் யஅலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யஅலா பின் உமய்யா (ரலி) அவர்களு டைய ஊழியர் ஒருவரின் முன்கையை ஒரு மனிதர் கடித்துவிட்டார். ஊழியர் தனது கையை இழுக்க, (கடித்த) அந்த மனிதரது முன்பல் ஒன்று (கழன்று) விழுந்துவிட்டது. இவ்வழக்கு நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டபோது, அவ்வழக்கை நபியவர்கள் தள்ளுபடி செய்தார்கள். மேலும், "கடா ஒட்டகம் கடிப்பதைப் போன்று அவரது கரத்தை நீ கடிக்கப் பார்த்தாய். (எனவே, உனக்கு இழப்பீடு இல்லை)" என்று கூறினார்கள்.

3459 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் மற்றொரு மனிதரின் கையைக் கடித்தார். அவர் தமது கையை இழுக்க, (கடித்த) அவருடைய "முன்பல் ஒன்று' அல்லது "முன்பற்கள்' விழுந்துவிட்டன. அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உதவியை நாடினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்னை என்ன செய்யச் சொல்கிறாய்? கடா ஒட்டகம் கடிப்பதைப் போன்று நீ கடித்துக் கொண்டிருக்கும்வரை அவர் தமது கையை உனது வாய்க்குள் வைத்திருக்க வேண்டும் என உத்தரவிடச் சொல்கிறாயா? நீ உனது கையை அவர் கடித்து முடிக்கும்வரை அவரது வாய்க்குள் விட்டுவை. பிறகு இழுத்துப் பார் (தெரியும்)" என்று சொன்னார்கள்.

3460 யஅலா பின் முன்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அவர் மற்றொரு மனிதரின் கையைக் கடித்தபோது, (கடிபட்ட) அவர் தமது கையை இழுக்க, அவரது (அதாவது கடித்தவரது) முன்பற்கள் இரண்டு விழுந்து விட்டன. அப்போது நபி (ஸல்) அவர்கள் (இதற்கு இழப்பீடு தரத் தேவையில்லை என) அவரது வழக்கைத் தள்ளுபடி செய்தார்கள். மேலும் "நீ அவரை, கடா ஒட்டகம் கடிப்பதைப் போன்று கடிக்கப் பார்த்தாய்" என்றும் கூறினார்கள்.

3461 யஅலா பின் உமய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுடன் தபூக் போரில் கலந்துகொண்டேன். – என்னைப் பொறுத்தவரை என் செயல்களிலேயே அந்த அறப்போர்தான் என்னிடம் மிகவும் வலுவானதாகும் –என்னிடம் கூலித் தொழிலாளி ஒருவர் இருந்தார். அவர் ஒரு மனிதருடன் சண்டையிட்டார். அவ்விருவரில் ஒருவர் மற்றொருவரின் கையைக் கடித்துவிட்டார்.
(யஅலா (ரலி) அவர்களிடமிருந்து இந்த ஹதீஸை அறிவிக்கும் அவர்களுடைய புதல்வர் ஸஃப்வான் (ரஹ்) அவர்கள் "கடித்தவர் யார் என்று என்னிடம் அறிவித்தார்கள் (நான்தான் மறந்துவிட்டேன்)' என்று அறிவிப்பாளர் அதாஉ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.)
கடிபட்டவர் கடித்தவரின் வாயிலிருந்து தமது கையை இழுத்தார். அப்போது அவருடைய முன்பற்களில் இரண்டில் ஒன்று கழன்று (விழுந்து)விட்டது. பிறகு இருவரும் நபி (ஸல்) அவர்களிடம் (வழக்கைக் கொண்டு) வந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் அவரது முன்பல்லுக்கு இழப்பீடு தரத் தேவையில்லை என்று கூறிவிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 5 பற்கள் போன்றவற்றில் பழிக்குப்பழி உண்டு என்பதற்கான ஆதாரம்.

3462 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ருபய்யிஉ (ரலி) அவர்களின் சகோதரி உம்மு ஹாரிஸா (ரலி) அவர்கள் ஒரு மனிதரை(த் தாக்கி)க் காயப்படுத்திவிட்டார்கள். இதையொட்டி அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வழக்கைக் கொண்டுவந்தனர். (வழக்கை விசாரித்த) நபி (ஸல்) அவர்கள், "பழிக்குப்பழி (வாங்கிக் கொள்க) பழிக்குப்பழி (வாங்கிக்கொள்க)" என்று கூறினார்கள்.
அப்போது உம்முர் ரபீஉ (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே! இன்ன பெண் பழி வாங்கப்படுவாரா, அல்லாஹ்வின் மீதாணையாக! அவள் பழிவாங்கப்படக் கூடாது" என்றார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்லாஹ் தூயவன். உம்முர் ரபீஉவே! (காயங்களில்) பழிவாங்குதல் அல்லாஹ்வின் வேத(ச் சட்ட)மாகும்" என்று சொன்னார்கள். அதற்கு உம்முர் ரபீஉ (ரலி) அவர்கள், "அப்படி நடக்காது. அல்லாஹ்வின் மீதாணையாக! ஒருபோதும் அவள் பழிவாங்கப்படலாகாது" என்று கூறினார்கள். அப்படியே பேச்சு தொடர்ந்து, இறுதியில் (பாதிக்கப்பட்டவர்கள் மன்னித்து) இழப்பீட்டுத் தொகையை ஏற்றுக்கொண்டனர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் அடியார்களில் சிலர் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டு (எதையேனும் கூறி) விடுவார்களாயின், அதை அல்லாஹ் உண்மையாக்கிவிடுகின்றான்" என்று கூறினார்கள்.

## பாடம் : 6 ஒரு முஸ்லிமுக்கு மரண தண்டனை விதிக்கப்படுவதற்கான காரணங்கள்.

3463 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. நான் அல்லாஹ்வின் தூதராவேன்' என உறுதிமொழி கூறிய முஸ்லிமான எந்த மனிதரையும் மூன்று காரணங்களில் ஒன்றை முன்னிட்டே தவிர வேறெதற்காகவும் கொலை செய்ய (மரண தண்டனையளிக்க) அனுமதி இல்லை.
அவை: 1. திருமணமானவன் விபசாரம் செய்வது. 2. ஒரு மனிதரைக் கொலை செய்ததற்குப் பதிலாகக் கொலை செய்வது. 3. "ஜமாஅத்' எனும் சமூகக் கூட்டமைப்பை விட்டு வெளியேறி, தமது மார்க்கத்தைக் கைவிட்ட (தேசதுரோகமும் மார்க்க விரோதமும் செய்த)வன்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3464 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே நின்று (ஆற்றிய உரையில் பின்வருமாறு) கூறினார்கள்: எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அ(ந்த ஓரிறை)வன் மீதாணையாக! "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. நான் அல்லாஹ்வின் தூதராவேன்' என உறுதிமொழி கூறிய எந்த முஸ்லிமான மனிதரையும் கொலை செய்ய அனுமதி இல்லை. (அவர்களில்) மூன்று பேரைத் தவிர: 1. "ஜமாஅத்' எனும் கூட்டமைப்பைவிட்டு வெளியேறி இஸ்லாத்தைக் கைவிட்டவன்.

2. திருமணமாகியும் விபசாரம் செய்தவன். 3. ஒரு மனிதனைக் கொலை செய்ததற்குப் பகரமாக கொல்லப்பட வேண்டியவன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இந்த ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்கள் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ' எனும் (பிரமாண) வாசகம் இடம்பெறவில்லை.

பாடம் : 7 கொலையை ஆரம்பித்துவைத்தவர் மீதுள்ள குற்றம்.

3465 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(உலகில்) அநியாயமாக ஒரு கொலை நடைபெறும்போது அந்தக் கொலையின் பாவத்தில் (ஆதி மனிதர்) ஆதம் (அலை) அவர்களுடைய முதலாவது மகனுக்கு ஒரு பங்கு இருக்கவே செய்யும். ஏனெனில், அவர்தாம் கொலையை ஆரம்பித்துவைத்த முதல் மனிதர் ஆவார்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், ஜரீர் பின் அப்தில் ஹமீத் மற்றும் ஈசா பின் யூனுஸ் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "ஏனெனில், அவர்தாம் கொலையை ஆரம்பித்துவைத்தவர்" என்று இடம் பெற்றுள்ளது. "முதல் மனிதர்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

பாடம் : 8 மறுமையில் வழங்கப்படும் கொலைக்கான தண்டனையும், மறுமை நாளில் மனிதர்களிடையே முதலாவதாக அளிக்கப்படும் தீர்ப்பு கொலை தொடர்பானதாகவே இருக்கும் என்பதும்.

3466 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் (மனித உரிமைகள் தொடர்பான வழக்குகளில்) முதன் முதலாக மனிதர்களிடையே வழங்கப்படும் தீர்ப்பு, கொலைகள் தொடர்பானதாகவே இருக்கும்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், சிலரது அறிவிப்பில் ("தீர்ப்பு வழங்கப்படும்' என்பதைக் குறிக்க) "யுக்ளா' எனும் சொல்லும், வேறுசிலரது அறிவிப்பில் "யுஹ்கமு' எனும் சொல்லும் இடம்பெற்றுள்ளது.

பாடம் : 9 மனிதர்களின் உயிர், சுயமரியாதை, செல்வம் ஆகியவற்றுக்கு ஊறு விளைவிப்பது வன்மையாகத் தடை செய்யப்பட்டுள்ளது.

3467 அபூபக்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "வானங்களும் பூமியும் படைக்கப்பட்ட நாளில் இருந்த (பழைய) நிலைக்குக் காலம் திரும்பிவிட்டது. ஆண்டு என்பது பன்னிரண்டு மாதங்களாகும். அவற்றில்

நான்கு மாதங்கள் புனிதமானவை. (அவற்றில்) மூன்று மாதங்கள் தொடர்ந்து வரக்கூடியவை. அவை: துல்கஅதா, துல் ஹிஜ்ஜா மற்றும் முஹர்ரம் ஆகியவையாகும். (மற்றொன்று) ஜுமாதல் ஆகிராவுக்கும் ஷஅபான் மாதத்திற்கும் இடையேயுள்ள "முளர்' குலத்தாரின் ரஜப் மாதமாகும்" என்று சொன்னார்கள்.

பிறகு "இது எந்த மாதம்?" என்று கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்" என்றோம். அவர்கள் அந்த மாதத்திற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவுக்கு மௌனமாக இருந்துவிட்டு, "இது துல்ஹஜ் இல்லையா?" என்று கேட்டார்கள். நாங்கள் "ஆம்' என்றோம்.

பிறகு "இது எந்த நகரம்?' என்று கேட்டார்கள். அதற்கு நாங்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்" என்று கூறினோம். அப்போதும் அவர்கள் அதற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவுக்கு மௌனமாக இருந்துவிட்டு, "இது "அல்பல்தா' (மக்காவின் பெயர்களில் ஒன்று) அல்லவா?" என்று கேட்க, நாங்கள் "ஆம்' என்றோம். மேலும் "இது எந்த நாள்?" என்று கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்" என்றோம். அதற்கு அவர்கள் வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவுக்கு மௌனமாக இருந்துவிட்டு, "இது நஹ்ருடைய (துல்ஹஜ் பத்தாவது) நாளல்லவா?" என்று கேட்க, நாங்கள், "ஆம், அல்லாஹ்வின் தூதரே!" என்றோம்.

பிறகு "உங்களது புனிதமிக்க இந்த நகரத்தில், உங்களின் புனிதமிக்க இந்த மாதத்தில் இன்றைய தினம் எந்த அளவுக்குப் புனிதமானதோ அந்த அளவுக்கு உங்கள் உயிர்களும் உங்கள் உடைமைகளும் உங்களின் மானமும் உங்களுக்குப் புனிதமானவையாகும். (அவற்றுக்கு ஊறு விளைவிப்பதற்கு உங்களுக்கு அனுமதியில்லை.) நீங்கள் மறுமையில் உங்களுடைய இறைவனைச் சந்திப்பீர்கள். அப்போது அவன் உங்களிடம் உங்கள் செயல்கள் குறித்து விசாரணை செய்வான். அறிந்துகொள்ளுங்கள்: எனக்குப் பின் ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக்கொள்ளும் "நிராகரிப்பாளர்களாய்' அல்லது "வழிகெட்டவர்களாய்' நீங்கள் மாறிவிடாதீர்கள்.

இதோ! இங்கு வந்தவர்கள் வராதவர்களுக்கு (என் கட்டளைகளை) அறிவித்துவிடுங்கள். ஏனெனில், இந்தச் செய்தி எவரிடம் தெரிவிக்கப்படுகிறதோ அவர், தாம் யாரிடமிருந்து இதைக் கேட்டாரோ அவரைவிட (அதாவது தமக்குச் சொன்னவரைவிட) நன்கு (புரிந்து) பாதுகாப்பவராயிருக்கலாம்" என்று கூறினார்கள். பிறகு "நான் (இறைச் செய்திகள் அனைத்தையும்) சேர்த்துவிட்டேனா?" என்று கேட்டார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3468 அபூபக்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நஹ்ருடைய) அந்நாளில் தமது ஒட்டகத்தின் மீது அமர்ந்திருக்க, ஒரு மனிதர் ஒட்டகத்தின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டிருந்தார். அப்போது "இது எந்த நாள் என்று உங்களுக்குத் தெரியுமா?"என்று கேட்டார்கள். மக்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்" என்று கூறினார்கள். அதற்கு அவர்கள் வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவுக்கு (மௌனமாக இருந்துவிட்டு,) "இது

நஹ்ருடைய (துல்ஹஜ் பத்தாவது) நாளல்லவா?" என்று கேட்க, நாங்கள், "ஆம், அல்லாஹ்வின் தூதரே!" என்றோம்.
மேலும் "இது எந்த மாதம்?" என்று கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்" என்று சொன்னோம். அவர்கள் "இது துல்ஹிஜ்ஜா மாதம் அல்லவா?" என்று கேட்டார்கள். நாங்கள் "ஆம், அல்லாஹ்வின் தூதரே!" என்றோம்.
மேலும், "இது எந்த நகரம்?" என்று கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்"என்றோம். அதற்கு அவர்கள் வேறு பெயர் சூட்டுவார்களோ என நாங்கள் எண்ணுமளவுக்கு (மௌனமாக இருந்துவிட்டு), "இது "அல்பல்தா' (புனித நகரம் மக்கா) அல்லவா?" என்று கேட்க, நாங்கள், "ஆம், அல்லாஹ்வின் தூதரே!' என்று விடையளித்தோம்.

அப்போது அவர்கள், "உங்களது புனிதமிக்க இந்த நகரத்தில், உங்களின் புனிதமிக்க இந்த மாதத்தில் இன்றைய தினம் எந்த அளவுக்குப் புனிதமானதோ அந்த அளவுக்கு உங்கள் உயிர்களும் உடைமைகளும் மானமும் உங்களுக்குப் புனிதமானவையாகும். (இதை) இங்கு வந்தவர்கள் வராதவர்களுக்கு அறிவித்துவிடுங்கள்" என்று கூறினார்கள்.
பிறகு கறுப்பு கலந்த இரு வெள்ளை செம்மறியாட்டுக் கடாக்கள் பக்கம் திரும்பி, அவற்றை அறுத்தார்கள். மேலும்,ஆட்டிறைச்சியில் சிறிதளவு எடுத்து எங்களிடையே பங்கிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூபக்ரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "(நஹ்ருடைய) நாள் வந்தபோது நபி (ஸல்) அவர்கள் ஓர் ஒட்டகத்தின் மீது அமர்ந்தார்கள். ஒரு மனிதர் அதன் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டிருந்தார்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3469 மேற்கண்ட ஹதீஸ் அபூபக்ரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நஹ்ருடைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் எங்களுக்கு உரையாற்றினார்கள். அப்போது "இது எந்த நாள்?' என்று கேட்டார்கள்..." என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும், அவற்றில் "உங்கள் மானம்' என்பதும் "பிறகு இரு செம்மறியாட்டு கடாக்களின் பக்கம் திரும்பினார்கள்" என்பதும் அதற்குப் பின்னுள்ள குறிப்புகளும் இடம் பெறவில்லை.
அவற்றில் "உங்களது புனிதமிக்க இந்த நகரத்தில் உங்களின் புனிதமிக்க இந்த மாதத்தில் இந்த நாள் எந்த அளவுக்குப் புனிதமானதோ அதைப் போன்றே (உங்கள் உயிர்களும் உடைமைகளும்) நீங்கள் உங்கள் இறைவனைச் சந்திக்கும் நாள்வரை உங்களுக்குப் புனிதமானவையாகும்" என்று கூறிவிட்டு "நான் (இறைச்செய்திகளை உங்களிடம்) சேர்த்துவிட்டேனா?" என்று கேட்டார்கள். நாங்கள் "ஆம்' என்றோம். அவர்கள் "இறைவா! நீயே இதற்குச் சாட்சியாக இரு" என்று கூறினார்கள் என்றும் இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 10 கொலையாளி கொலைக்குற்றத்தை ஒப்புக்கொள்வதும், கொலையாளியைப் பழி வாங்குவதற்குக் கொலையுண்டவனின் பொறுப்பாளிக்கு வாய்ப்புத் தருவதும் செல்லும். ஆனால், கொலையாளியை மன்னிக்குமாறு கோருவது விரும்பத்தக்கதாகும்.**

3470 வாயில் பின் ஹுஜ்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தேன். அப்போது ஒரு மனிதர் மற்றொரு மனிதரைத் தோல்வாரினால் (கழுத்தில் போட்டு) இழுத்துக்கொண்டு வந்தார். "அல்லாஹ்வின் தூதரே! இவர் என் சகோதரனைக் கொலை செய்துவிட்டார்" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்த மனிதரிடம்), "நீ அவரைக் கொலை செய்தாயா?" என்று கேட்டார்கள். (அப்போது அவரை இழுத்துக்கொண்டு வந்தவர், இவர் கொலையை ஒப்புக்கொள்ளாவிட்டால் இவருக்கெதிரான ஆதாரத்தை நான் நிலை நிறுத்துவேன்" என்றும் கூறினார்). அதற்கு அந்த மனிதர், "ஆம், நான் அவரைக் கொலை செய்தேன்" என்று (ஒப்புதல் வாக்குமூலம்) சென்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எப்படி (இக்கொலையை) நீ செய்தாய்?" என்று கேட்டார்கள்.
அதற்கு அந்த மனிதர், "நானும் அவரும் ஒரு மரத்தில் (தடியால் அடித்து) இலை உதிர்த்துக்கொண்டிருந்தோம். அப்போது அவர் என்னை ஏசினார். எனக்குக் கோபம் ஏற்பட்டது. உடனே நான் (என் கையிலிருந்த) கோடரியால் அவரது உச்சந்தலையில் அடித்துவிட்டேன். அவர் இறந்துவிட்டார். (திட்டமிட்டு இந்தக் கொலையை நான் செய்யவில்லை)" என்று சொன்னார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவருக்கு இழப்பீடு வழங்க உம்மிடம் ஏதேனும் (பொருள்) உண்டா?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர் "என்னிடம் எனது போர்வையையும் எனது கோடரியையும் தவிர வேறொன்றுமில்லை" என்று கூறினார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன்னுடைய கூட்டத்தார் உனக்காக (இழப்பீடு) திரட்டித் தருவார்கள் என்று நீ கருதுகிறாயா?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், "நான் என் கூட்டத்தாரிடம் அந்த அளவுக்கு மதிப்புடையவன் அல்லன்" என்று சொன்னார். எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரது (கழுத்தில் கிடந்த) தோல் வாரை, அ(வரை இழுத்துவ)ந்த மனிதரிடம் தூக்கிப் போட்டு, "உம்முடைய ஆளைப் பிடித்துக்கொள்க" என்று சொன்னார்கள். உடனே அந்த மனிதர் அவரை (இழுத்து)க்கொண்டு சென்றார். அவர் திரும்பிச் சென்றதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவரை அவர் கொன்றுவிட்டால், அவரும் இவரைப் போன்றவரே ஆவார்" என்று கூறினார்கள்.
அந்த மனிதர் திரும்பிவந்து, "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் "இவரை அவர் கொன்று விட்டால் அவரும் இவரைப் போன்றவரே ஆவார்' என்று கூறியதாக எனக்குச் செய்தி எட்டியதே! உங்களது கட்டளைப்படிதானே நான் இவரை பிடித்துச்சென்றேன்" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவர் உமது பாவத்துடனும் (கொல்லப்பட்ட) உன் உறவினரின் பாவத்துடனும் திரும்புவதை நீர் விரும்புகிறீரா?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! ஆம். அது அவ்வாறே ஆகட்டும்" என்று கூறிவிட்டு, அவரது (கழுத்தில் கிடந்த) தோல் வாரைத் தூக்கியெறிந்து, அவரை அவரது வழியிலேயே செல்ல விட்டுவிட்டார்.

3471 வாயில் பின் ஹுஜ்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் கொண்டுவரப்பட்டார். அவர் மற்றொரு மனிதரைக் கொலை செய்திருந்தார். அப்போது கொலையுண்டவரின் பொறுப்பாளர் கொலையாளியைப் பழிக்குப்பழி வாங்கிக்கொள்ள அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதித்தார்கள். அவரும் அக்கொலையாளியின் கழுத்தில் ஒரு தோல் வாரைப் போட்டு இழுத்துக்கொண்டு சென்றார்.
அவர் திரும்பிச் சென்றபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கொலையாளியும் கொலையுண்டவரும் நரகவாசிகள் ஆவர்" என்று சொன்னார்கள். (அதைச் செவியுற்ற) ஒரு மனிதர் (கொலையுண்டவரின்) பொறுப்பாளரிடம் சென்று, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதைத் தெரிவித்தார். எனவே, அவர் அக்கொலையாளியை (மன்னித்து) விட்டுவிட்டார்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான இஸ்மாயீல் பின் சாலிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் இந்த ஹதீஸை ஹபீப் பின் அபீஸாபித் (ரஹ்) அவர்களிடம் குறிப்பிட்டேன். அப்போது அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் (தவறுதலாகக் கொலை செய்த) அவரை மன்னித்துவிடுமாறு (கொலையுண்டவரின்) பொறுப்பாளரிடம் கேட்டார்கள். அவர் மறுத்துவிட்டார். (எனவேதான், அவ்வாறு கூறினார்கள்)" என்று சயீத் பின் அம்ர் பின் அஷ்வஉ (ரஹ்) அவர்கள் என்னிடம் கூறினார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 11 சிசுக்கொலைக்கான இழப்பீடும், தவறுதலாக நடந்த கொலையிலும் திட்டமிட்ட கொலையைப் போன்ற கொலையிலும் வழங்க வேண்டிய இழப்பீடு குற்றவாளியின் தந்தைவழி உறவினர் மீதே கடமையாகும் என்பதும்.

3472 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹுதைல் குலத்தைச் சேர்ந்த இரண்டு பெண்களில் ஒருத்தி மற்றொருத்தியின் மீது கல்லை எறிய, அப்பெண்ணின் (வயிற்றில் பட்டு வயிற்றிலிருந்த) சிசு இறந்து பிறந்தது. இந்த வழக்கில் உயிரீட்டுத் தொகையாக ஓர் ஆண் அடிமையை அல்லது ஒரு பெண் அடிமையைத் தர வேண்டுமென நபி (ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள்.

3473 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"பனூ லஹ்யான்' (ஹுதைல்) குலத்தைச் சேர்ந்த (கர்ப்பிணி) பெண் ஒருத்தியின் சிசு (மற்றொரு பெண் அடித்ததால்) இறந்து பிறந்தது. அது தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஓர் ஆண் அடிமையை, அல்லது ஓர் அடிமைப் பெண்ணை (இழப்பீடாக) வழங்க வேண்டுமென்று தீர்ப்பளித்தார்கள். பின்னர், இழப்பீடு வழங்கும்படி தீர்ப்பளிக்கப்பட்ட அ(ந்தக் குற்றவாளி)ப் பெண் இறந்துவிட்டாள். ஆகவே, (அவள் சார்பாக) அவளுடைய தந்தைவழி உறவினர்கள் (அஸபா) இழப்பீடு வழங்க வேண்டுமென்றும், அவளது சொத்து அவளுடைய ஆண் மக்களுக்கும் கணவருக்கும் உரியதென்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள்.

3474 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹுதைல் குலத்தைச் சேர்ந்த இரண்டு பெண்கள் சண்டையிட்டுக்கொண்டனர். அவர்களில் ஒருத்தி மற்றொருத்திமீது கல் எறிந்து, அவளையும் அவளுடைய வயிற்றிலிருந்த சிசுவையும் கொன்றுவிட்டாள். இதையொட்டி மக்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வழக்கைக் கொண்டுவந்தனர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவளுடைய சிசுவிற்கான இழப்பீடாக ஓர் ஆண் அடிமை, அல்லது ஓர் அடிமைப் பெண்ணை வழங்க வேண்டும் என்றும், (கொல்லப் பட்ட) அந்தப் பெண்ணிற்கான இழப்பீட்டுத் தொகை கொலை செய்த பெண்ணின் தந்தைவழி உறவினர்கள்மீது கடமையாகுமென்றும் தீர்ப்பளித்தார்கள். அவளது சொத்து அவளுடைய குழந்தைகளுக்கும் அவர்களுடன் இருப்பவர்களுக்கும் உரியதென்றும் கூறினார்கள்.
அப்போது (குற்றம் புரிந்த அப்பெண்ணின் கணவர்) ஹமல் பின் அந்நாபி்கா அல்ஹுதலீ (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே! உண்ணவோ பருகவோ மொழியவோ அழவோ இயலாத ஒரு சிசுவிற்காக நான் எப்படி அபராதம் செலுத்துவது? இதைப் போன்றது தள்ளுபடி செய்யப்பட வேண்டுமல்லவா?" என்று கேட்டார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவரெல்லாம் குறிகாரர்களின் குடும்பத்தில் ஒருவர்தாம்" என்று சொன்னார்கள். (குற்றவாளிக்குச் சாதகமாகச் சாதுரியமான முறையில்) அவர் எதுகை மோனையோடு பேசியதால்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரைக் குறித்து அவ்வாறு கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஹுதைல் குலத்தைச் சேர்ந்த இரண்டு பெண்கள் சண்டையிட்டுக்கொண்டனர்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
இந்த அறிவிப்பில், "அவளது சொத்து அவளுடைய குழந்தைகளுக்கும் அவர்களுடன் இருப்பவர்களுக்கும் உரியது என்று கூறினார்கள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை. மேலும், "அப்போது ஒருவர் எப்படி நாங்கள் இழப்பீடு வழங்க முடியும்?" என்று கேட்டார் என்றே (பொதுவாக) இடம்பெற்றுள்ளது. "ஹமல் பின் மாலிக் பின் அந் நாபி்கா அல் ஹுதலீ என்பவர் கேட்டார்" என அவரது பெயரை அறிவிப்பாளர் குறிப்பிடவில்லை.

3475 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண் கர்ப்பிணியாயிருந்த தன் சகக்கிழத்தியைக் கூடாரக் குச்சியால் தாக்கிக் கொன்றுவிட்டாள். அவர்களில் ஒருத்தி "பனூ லிஹ்யான்' கோத்திரத்தைச் சேர்ந்தவளாக இருந்தாள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கொல்லப்பட்டவளுக்குரிய இழப்பீட்டைக் கொன்றவரின் தந்தைவழி உறவினர்கள் வழங்கவேண்டும்; அவளது வயிற்றிலிருந்த சிசுவைக் கொன்றதற்காக ஓர் அடிமையை விடுதலை செய்ய வேண்டும்" என்று (தீர்ப்புக்) கூறினார்கள்.
அப்போது கொலை செய்தவளின் தந்தைவழி உறவினர்களில் ஒருவர், "உண்ணவோ பருகவோ அழவோ இயலாத சிசுவிற்காக நாங்கள் எப்படி அபராதம் செலுத்துவது? இதைப்

போன்றது தள்ளுபடி செய்யப்பட வேண்டுமல்லவா?" என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கிராமப்புற அரபியரின் எதுகைமோனையைப் போன்ற எதுகை மோனையா?" என்று (கடிந்து) கூறினார்கள். மேலும், இழப்பீட்டை அவர்கள்தாம் வழங்க வேண்டுமென்றும் தீர்ப்பளித்தார்கள்.

3476 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண் தன் சகக்கிழத்தியைக் கூடாரக் குச்சியால் தாக்கிக் கொன்றுவிட்டாள். இது தொடர்பான வழக்கிற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அழைத்துவரப்பட்டார்கள். கொலை செய்தவளின் தந்தைவழி உறவினர்கள் கொல்லப்பட்டவளுக்கான இழப்பீட்டை வழங்க வேண்டுமென்றும், கொல்லப்பட்டவள் கர்ப்பிணியாக இருந்தபடியால் கொல்லப்பட்ட அவளது சிசுவிற்காக ஓர் அடிமையை வழங்க வேண்டுமென்றும் தீர்ப்பளித்தார்கள்.
அப்போது கொலை செய்தவளின் தந்தைவழி உறவினர்கள் சிலர், "உண்ணவோ பருகவோ வீறிட்டழவோ இயலாத சிசுவிற்காக நாங்கள் இழப்பீடு செலுத்த வேண்டுமா? இதைப் போன்றது தள்ளுபடி செய்யப்பட வேண்டுமல்லவா?"என்று கூறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கிராமப்புற அரபியரின் எதுகைமோனையைப் போன்ற எதுகைமோனையா?" என்று (கடிந்து) பேசினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அவள் வயிற்றிலிருந்த சிசுவை விழுகட்டியாக்கி (வீழ்த்தி)விட்டாள். இவ்வழக்கு நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுசெல்லப்பட்டபோது, ஓர் அடிமையை இழப்பீடாக வழங்க வேண்டும்; இழப்பீட்டிற்கான பொறுப்பைக் கொலை செய்த பெண்ணின் காப்பாளர்கள் செலுத்த வேண்டும் என்று தீர்ப்பளித்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. கொல்லப்பட்ட அந்தப் பெண்ணிற்கான இழப்பீடு குறித்த குறிப்பு இல்லை.

3477 மிஸ்வர் பின் அல்மக்ரமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு (கர்ப்பிணிப்) பெண்ணை (அடித்துக்) குறைப்பிரசவம் (கருச்சிதைவு) ஏற்படவைத்தால், (அதற்குரிய இழப்பீடு) என்ன என்பது தொடர்பாக (கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் மக்களிடம் கருத்துக் கேட்டார்கள். அப்போது முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் ஓர் ஆண் அடிமையை, அல்லது ஓர் அடிமைப் பெண்ணை அந்த சிசுவிற்காக (இழப்பீடாக) வழங்குமாறு தீர்ப்பளித்தபோது நான் அங்கு இருந்தேன்" என்று கூறினார்கள்.
உமர் (ரலி) அவர்கள், "(நீங்கள் கூறிய) இதற்கு உம்முடன் சாட்சியம் அளிக்கும் ஒருவரை என்னிடம் அழைத்து வாருங்கள்" என்றார்கள். அப்போது முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள் (முஃகீரா (ரலி) அவர்கள் கூறியது உண்மையென) அதற்குச் சாட்சியம் அளித்தார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 29 - குற்றவியல் தண்டனைகள்

## பாடம் : 1 திருட்டுக் குற்றத்திற்கான தண்டனையும், திருட்டின் குறைந்தபட்ச அளவும்.

3478 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், கால் தீனார் (பொற்காசு) அல்லது அதற்கு மேல் திருடியதற்காகத் திருடனின் கையைத் துண்டித்துவந்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3479 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கால் தீனார் அல்லது அதற்கு மேற்பட்டதற்காகவே தவிர (அதைவிடக் குறைவானதைத் திருடியதற்காக ஒரு) திருடனின் கை வெட்டப்படமாட்டாது.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3480 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கால் தீனார் அல்லது அதற்கு மேற்பட்டதற்காகவே தவிர (அதைவிடக் குறைவானதைத் திருடிய ஒருவனுடைய) கை வெட்டப்படமாட்டாது.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3481 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கால் தீனார் அல்லது அதற்கு மேற்பட்டதற்காகவே தவிர (அதைவிடக் குறைவானதைத் திருடியதற்காக ஒரு) திருடனின் கை வெட்டப்படமாட்டாது.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3482 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் தோல் கேடயம் அல்லது தோல் கவசத்தின் விலையைவிடக் குறைவான பொருளுக்காகத் திருடனின் கை துண்டிக்கப் பட்டதில்லை. இவை ஒவ்வொன்றும் விலை மதிப்புடையவை ஆகும்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அப்துர் ரஹீம் பின் சுலைமான் (ரஹ்), அபூஉசாமா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "அன்று அப்பொருட்கள் (ஒவ்வொன்றும்) விலை மதிப்புடையவை ஆகும்" என்று இடம்பெற்றுள்ளது.

3483 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மூன்று திர்ஹங்கள் விலை மதிப்புள்ள ஒரு தோல் கேடயத்தைத் திருடியவரின் கையைத் துண்டித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இருபத்தோரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
இவற்றில், சில அறிவிப்புகளில் "விலை' என்பதைக் குறிக்க "கீமத்" எனும் சொல்லும், வேறுசில அறிவிப்புகளில் "ஸமன்" எனும் சொல்லும் ஆளப்பட்டுள்ளன.

3484 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் சாபம் திருடன்மீது உண்டாகட்டும்! அவன் (விலை மதிப்புள்ள) தலைக் கவசத்தைத் திருடுகிறான்;அதற்காக அவனது கை துண்டிக்கப்படுகிறது. (விலை மலிவான) கயிற்றையும் அவன் திருடுகிறான். அதற்காகவும் அவனது கை துண்டிக்கப்படுகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அஃமஷ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவன் கயிற்றைத் திருடினாலும் சரி, தலைக்கவசத்தைத் திருடினாலும் சரி (அவனது கை துண்டிக்கப்படுகிறது)" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 2 உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பாகுபாடின்றி யார் திருடினாலும் கை துண்டிக்கப்படுவதும், தண்டனையிலிருந்து விலக்கு அளிக்குமாறு பரிந்துரைப்பதற்கு வந்துள்ள தடையும்.**

3485 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"மக்ஸூமி" குலத்தைச் சேர்ந்த ஒரு பெண் திருடிவிட்டாள் என்ற செய்தி குறைஷியருக்குக் கவலையளித்தது. அப்போது அவர்கள், "அந்தப் பெண் தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (பேசி, தண்டனையிலிருந்து விலக்கு அளிக்கச்) சொல்வது யார்?" என்று கேட்டுக்கொண்டார்கள். பிறகு "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் செல்லப் பிள்ளையான உசாமா பின் ஸைதைத் தவிர வேறு யார் துணிந்து பேச முடியும்?" என்று சொன்னார்கள்.
அவ்வாறே உசாமா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (பரிந்து) பேசினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் விதித்த தண்டனைகளில் ஒன்றின் விஷயத்திலா (அதை நிறைவேற்றாமல் விட்டுவிடுமாறு) நீ பரிந்துரைக்கிறாய்?" என்று கேட்டுவிட்டுப் பிறகு எழுந்து நின்று பின்வருமாறு உரையாற்றினார்கள்:
மக்களே! உங்களுக்கு முன்னால் வாழ்ந்த (பனூ இஸ்ராயீல்) மக்கள் அழிந்துபோனதற்குக் காரணமே, (அவர்களிடையே உள்ள) உயர் குலத்தார் திருடிவிட்டால், அவர்கள் அவரை (தண்டிக்காமல்) விட்டுவிடுவார்கள். அவர்களிலுள்ள பலவீனர்கள் திருடிவிட்டால்

அவர்கள்மீது தண்டனையை நடைமுறைப்படுத்துவார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! (இந்த) முஹம்மதின் மகள் ஃபாத்திமா திருடியிருந்தாலும், நான் அவரது கையைத் துண்டித்தே இருப்பேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3486 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களது காலத்தில் மக்கா வெற்றிப்போரின்போது, ("மக்ஸூமி" எனும் குலத்தைச் சேர்ந்த) ஒரு பெண் திருடிவிட்டாள். இந்த விஷயம் குறைஷியருக்குக் கவலையளித்தது. அவர்கள், "அவளுக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (பரிந்து) பேசுபவர் யார்?" என்று பேசிக் கொண்டார்கள். பிறகு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் செல்லப்பிள்ளையான உசாமா பின் ஸைதைத் தவிர வேறு யார் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் துணிந்து பேச முடியும்?" என்று (தங்களுக்குள்) பேசிக்கொண்டனர். பின்னர் அந்தப் பெண் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டாள். அப்போது உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் அவளுக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (பரிந்து) பேசினார்கள்.
உடனே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகம் (கோபத்தால்) நிறம் மாறியது. அப்போது, "அல்லாஹ் விதித்த தண்டனைகளில் ஒன்றின் விஷயத்திலா நீ பரிந்துரைக்கிறாய்?" என்று கேட்டார்கள். அதற்கு உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! எனக்காக (அல்லாஹ்விடம்) பாவமன்னிப்புக் கோருங்கள்" என்றார்கள்.

அன்று மாலை நேரத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடையே) எழுந்து நின்று அல்லாஹ்வை,அவனது தகுதிக்கேற்ப போற்றிப் புகழ்ந்துவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:
இறைவாழ்த்துக்குப் பின்! உங்களுக்கு முன்னால் வாழ்ந்த மக்கள் அழிந்துபோனதற்குக் காரணமே, அவர்களில் உயர் குலத்தார் திருடிவிட்டால் அவரை (தண்டிக்காமல்) விட்டு விடுவார்கள். அவர்களிலுள்ள பலவீனர்கள் திருடிவிட்டால் அவர்கள்மீது தண்டனையை நடை முறைப்படுத்துவார்கள். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! (என் புதல்வி) ஃபாத்திமா பின்த் முஹம்மதே திருடியிருந்தாலும் அவரது கையையும் நான் துண்டித்தே இருப்பேன்"என்று கூறிவிட்டு, திருடிய அப்பெண்ணின் கையைத் துண்டிக்குமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவளது கை துண்டிக்கப்பட்டது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் யூனுஸ் பின் யஸீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "பின்னர் அந்தப் பெண் அழகிய முறையில் பாவமன்னிப்புக் கோரி திருந்தினார்; திருமணமும் செய்து கொண்டார். அதன் பின்னரும் அவர் என்னிடம் வந்துகொண்டிருந்தார். நான் அவரது தேவையை(ப் பூர்த்தி செய்யும்படி) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கவனத்திற்குக் கொண்டு செல்வேன்" என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாகக் காணப்படுகிறது.

3487 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"மக்ஸூமி" குலத்தைச் சேர்ந்த ஒரு பெண் மக்களிடம் (வீட்டுப்) பொருட்களை இரவல் வாங்குவாள். பிறகு அவற்றைத் தர மறுப்பாள். (இந்நிலையில் அவள் ஒரு பொருளைத் திருடிவிட்டாள்.) எனவே, அவளது கையை வெட்டுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.
அவளுடைய குடும்பத்தார் உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களிடம் வந்து (அவளுக்காகப் பரிந்துரைக்குமாறு) பேசினார்கள். அவ்வாறே உசாமா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (பரிந்து) பேசினார்கள். மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3488 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பனூ மக்ஸூம் குலத்தைச் சேர்ந்த ஒரு பெண் திருடிவிட்டாள். அந்தப் பெண் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டாள். அப்பெண் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு சலமா (ரலி) அவர்களிடம் (தண்டனையிலிருந்து) காப்பாற்றும்படி கோரினாள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! (என் புதல்வி) ஃபாத்திமாவே (இக்குற்றத்தைச்) செய்திருந்தாலும் அவரது கையை நான் துண்டித்தே இருப்பேன்" என்று கூறினார்கள். பிறகு அப்பெண்ணின் கை துண்டிக்கப்பட்டது.

## பாடம் : 3 விபச்சாரத்திற்கான தண்டனை.

3489 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(விபச்சாரக் குற்றத்திற்கான தண்டனைச் சட்டத்தை) என்னிடமிருந்து பெற்றுக் கொள்வீர்; என்னிடமிருந்து பெற்றுக் கொள்வீர். அல்லாஹ் (வாக்களித்திருந்ததைப் போன்று), பெண்களுக்கு ஒரு வழியை ஏற்படுத்திவிட்டான். மணமாகாத பெண்ணுடன் மணமாகாத ஆண் விபச்சாரம் செய்துவிட்டால் நூறு சாட்டையடிகள் வழங்கி, ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தப்பட வேண்டும். மணமான பெண்ணுடன் மணமான ஆண் விபச்சாரம் செய்துவிட்டால், நூறு சாட்டையடிகள் வழங்கி கல்லெறி தண்டனை வழங்கப்பட வேண்டும்.
இதை உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3490 உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) அருளப்படும்போது, அவர்கள் மிகுந்த சிரமத்திற்கு உள்ளாவார்கள். அவர்களது முகம் (கறுத்து) நிறம் மாறிவிடும். ஒரு நாள் அவர்களுக்கு வேத அறிவிப்பு அருளப்படவே அவர்கள் இந்நிலையைச் சந்தித்தார்கள்.
பின்னர் அவர்களைவிட்டு அந்நிலை விலகியதும், "(விபச்சாரத்திற்கான தண்டனைச் சட்டத்தை) என்னிடமிருந்து பெற்றுக்கொள்ளுங்கள். (விபச்சாரம் செய்த) பெண்கள் தொடர்பாக அல்லாஹ் ஒரு வழியை ஏற்படுத்திவிட்டான். மணமான பெண் மணமான ஆணுடன் விபச்சாரம் செய்துவிட்டால் (அதற்குத் தனிச் சட்டமாகும்). மணமாகாத பெண் மணமாகாத ஆணுடன் விபச்சாரம் செய்துவிட்டால் (அதற்குத் தனிச்சட்டமாகும்).

மணமானவர்களுக்கு நூறு சாட்டையடிகளும் கல்லெறி தண்டனையும் வழங்கப்பட வேண்டும். மணமாகாதவர்களுக்கு நூறு சாட்டையடிகளும் ஓராண்டு காலத்திற்கு நாடு கடத்தலும் தண்டனையாக வழங்கப்பட வேண்டும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3491 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "மணமாகாதவர்களுக்குச் சாட்டையடியும் நாடு கடத்தலும் வழங்கப்படும்; மணமானவர்களுக்குச் சாட்டையடியும் கல்லெறி தண்டனையும் வழங்கப்படும்" என்று இடம் பெற்றுள்ளது. அவற்றில் ஓராண்டு (நாடு கடத்தல்) என்றோ நூறு (சாட்டையடிகள்) என்றோ (எண்ணிக்கை குறிப்பு) இடம்பெறவில்லை.

## பாடம் : 4 மணமானவர்கள் விபச்சாரம் புரிந்தால் (சாகும்வரை) கல்லெறி தண்டனை வழங்குதல்.

3492 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதமர்ந்தபடி (பின்வருமாறு) கூறினார்கள்:
முஹம்மத் (ஸல்) அவர்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அல்லாஹ் அனுப்பினான். அவர்களுக்கு (குர்ஆன் எனும்) வேதத்தையும் அருளினான். அல்லாஹ் அருளிய (வேதத்)தில் கல்லெறி தண்டனை (ரஜ்ம்) குறித்த வசனம் இருந்தது. அதை நாங்கள் ஓதியிருக்கிறோம். அதை மனனமிட்டிருக்கிறோம். அதை விளங்கியுமிருக்கிறோம்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (மணமானவர்கள் விபச்சாரம் செய்தால் அவர்களுக்குக்) கல்லெறி தண்டனை (ரஜ்ம்) நிறை வேற்றியுள்ளார்கள். அவர்களுக்குப் பிறகு நாமும் அந்தத் தண்டனையை நடைமுறைப்படுத்தினோம். காலப்போக்கில் மக்களில் சிலர் "இறைவேதத்தில் கல்லெறி தண்டனை குறித்த வசனத்தை நாங்கள் காணவில்லை' என்று கூறி, இறைவன் அருளிய விதியொன்றைக் கைவிடுவதன் மூலம் வழிதவறிவிடுவார்களோ என நான் அஞ்சுகிறேன். மணமுடித்த ஆணோ, பெண்ணோ விபச்சாரம் செய்து, அதற்குச் சாட்சி இருந்தாலோ, அல்லது கர்ப்பம் ஏற்பட்டாலோ, அல்லது ஒப்புதல் வாக்குமூலம் அளித்தாலோ அவருக்குக் கல்லெறி தண்டனை உண்டு என்பது இறைச்சட்டத்தில் உள்ளதாகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 5 விபச்சாரம் புரிந்துவிட்டதாக ஒருவர் ஒப்புதல் வாக்குமூலம் அளித்தல்.

3493 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இருந்தபோது முஸ்லிம்களில் ஒருவர் வந்து அவர்களை அழைத்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் விபச்சாரம் செய்துவிட்டேன்" என்று சொன்னார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது

முகத்தை (வேறு பக்கம்) திருப்பிக்கொண்டார்கள். உடனே அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முகத்துக்கு நேராக வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் விபச்சாரம் செய்துவிட்டேன்" என்று கூறினார்.

அப்போதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முகத்தை (வேறு பக்கம்) திருப்பிக் கொண்டார்கள். அவர் திரும்பத் திரும்ப அதையே நான்கு தடவை சொல்லித் தமக்கெதிராகத் தாமே ஒப்புதல் வாக்குமூலம் அளித்தபோது, அவரை அழைத்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமக்குப் பைத்தியமா?" என்று கேட்டார்கள். அவர், "(எனக்குப் பைத்தியம்) இல்லை" என்று சொன்னார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமக்குத் திருமணமாகிவிட்டதா?" என்று கேட்டார்கள். அவர், "ஆம் (திருமணமாகிவிட்டது)" என்று சொன்னார். எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவரைக் கொண்டுசென்று கல்லெறி தண்டனை நிறைவேற்றுங்கள்" என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள், "அவருக்குக் கல்லெறி தண்டனை வழங்கியவர்களில் நானும் ஒருவனாயிருந்தேன். அப்போது அவரை (பொது மைய வாடியிலுள்ள) தொழுகைத் திடலில் வைத்து நாங்கள் கல்லெறிந்தோம். கற்கள் அவர்மீது விழுந்தபோது, (வலி தாங்க முடியாமல்) அவர் வெருண்டோட ஆரம்பித்தார். அவரை நாங்கள் (விரட்டிச் சென்று பாறைகள் நிறைந்த) "அல்ஹர்ரா'ப் பகுதியில் பிடித்து அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றினோம்" என்று கூறினார்கள் என அவர்களிடம் செவியுற்ற ஒருவர் என்னிடம் தெரிவித்தார்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதிலும் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ள குறிப்பு இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது.

3494 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

மாஇஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்ட போது அவர்களை நான் பார்த்தேன். அவர் உயரம் குறைந்த மனிதராகவும் கட்டுடல் கொண்டவராகவும் இருந்தார். அவரது உடலில் மேல்துண்டு இருக்கவில்லை. அவர், தாம் விபச்சாரம் செய்துவிட்டதாகத் தமக்கெதிராகத் தாமே நான்கு முறை சாட்சியம் (ஒப்புதல் வாக்குமூலம்) அளித்தார்.

அப்போது நபி (ஸல்) அவர்கள், "நீர் இப்படிச் செய்திருக்கலாம் (முத்தமிட்டிருக்கலாம், அணைத்திருக்கலாம்)' என்று கூறினார்கள். மாஇஸ் (ரலி) அவர்கள், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த அற்பன் விபச்சாரம் செய்துவிட்டான்" என்று கூறினார். ஆகவே, அவருக்குக் கல்லெறி தண்டனை வழங்குமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

பிறகு நபி (ஸல்) அவர்கள் (எங்களிடையே) உரையாற்றுகையில், "அறிந்துகொள்ளுங்கள். நாம் அல்லாஹ்வின் பாதையில் (அறப்போருக்கு) புறப்படும்போதெல்லாம் மக்களில் சிலர் ஊரிலேயே தங்கிவிடுகின்றனர். அவர்கள் மலை ஆடு (புணரும்போது) சப்தமிடுவதைப் போன்று சப்தமிட்டுக்கொண்டு, (பால் போன்ற) குறைவான பொருளை(ப் பெண்களுக்குக் கெட்ட எண்ணத்துடன்) வழங்குகிறார்கள். அறிந்துகொள்ளுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களில் ஒருவர் என்னிடம் அகப்பட்டால் மற்றவர்களுக்குப் பாடமாக அமையும் விதத்தில் (மிகக் கடுமையாக) அவரைத் தண்டிப்பேன்" என்று கூறினார்கள்.

3495 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
விபச்சாரம் செய்துவிட்ட ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டார். அவர் உயரம் குறைந்தவராகவும் தலைவிரி கோலத்துடனும் கட்டுடலுடனும் காணப்பட்டார். அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரண்டு முறை திருப்பி அனுப்பினார்கள். பிறகு அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றுமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றப்பட்டது.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நாம் அல்லாஹ்வின் பாதையில் (அறப் போருக்குப்) புறப்படும்போதெல்லாம் உங்களில் சிலர் ஊரிலேயே தங்கிவிடுகின்றனர். அவர்கள் மலை ஆடு (புணரும்போது) சப்தமிடுவதைப் போன்று சப்தமிட்டுக்கொண்டு, (பால் போன்ற) குறைவான பொருளைப் பெண்களில் சிலருக்கு(க் கெட்ட எண்ணத்தோடு) வழங்குகிறார்கள். அவர்களில் யாரையேனும் அல்லாஹ் என்னிடம் அகப்படச் செய்தால் "அவரை நான் பிறருக்குப் பாடமாக ஆக்கிவிடுவேன்' அல்லது "அவரை மற்றவர்களுக்குப் பாடம் புகட்டும் வகையில் தண்டித்துவிடுவேன்' என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அறிவிப்பாளர்களில் ஒருவரான சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை நான் சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்களிடம் கூறினேன். அப்போது அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரை (மாஇஸ் (ரலி) அவர்களை) நான்கு முறை திருப்பியனுப்பினார்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஷபாபா பின் சவார் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இரண்டு முறை திருப்பியனுப்பினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. அபூஆமிர் அல்அகதீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவரை இரண்டு முறை அல்லது மூன்று முறை திருப்பியனுப்பினார்கள்" என்று (ஐயப்பாட்டுடன்) காணப்படுகிறது.

3496 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மாஇஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் "உம்மைப் பற்றி எனக்குக் கிடைத்த செய்தி உண்மையா?" என்று கேட்டார்கள். மாஇஸ் (ரலி) அவர்கள், "என்னைப் பற்றி தங்களுக்கு என்ன செய்தி கிட்டியது?" என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், "நீர் இன்ன

குடும்பத்து இளம் பெண்ணுடன் தவறான உறவு கொண்டுவிட்டதாக எனக்குச் செய்தி எட்டியது" என்றார்கள்.
அதற்கு மாஇஸ் (ரலி) அவர்கள், "ஆம்' என்று கூறி, தமக்கெதிராக நான்கு முறை சாட்சியம் (கூறி ஒப்புதல் வாக்குமூலம்) அளித்தார்கள். பின்னர் (அவரைக் கொண்டுசென்று கல்லெறி தண்டனை நிறைவேற்றுமாறு) நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட, அவ்வாறே அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றப்பட்டது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3497 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
மாஇஸ் பின் மாலிக் எனப்படும் அஸ்லம் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் மானக்கேடான ஒரு செயலைச் செய்துவிட்டேன். ஆகவே, எனக்குத் தண்டனையை நிலைநாட்டுங்கள்"என்று கூறினார். அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பலமுறை திருப்பி அனுப்பினார்கள்.
பிறகு அவருடைய குலத்தாரிடம் விசாரித்தார்கள். அதற்கு அம்மக்கள், "அவரைப் பற்றித் தவறாக எதையும் நாங்கள் அறியவில்லை. ஆயினும், அவர் ஒரு செயலைச் செய்துவிட்டு, "தம்மீது தண்டனை நிறைவேற்றப்பட்டால் தவிர அக்குற்றத்திலிருந்து தம்மால் வெளியேற முடியாது' என்று கருதுகிறார்" என்று கூறினர்.
பிறகு மாஇஸ் (ரலி) அவர்கள் மீண்டும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார். அப்போது அவருக்குக் கல்லெறி தண்டனையை நிறைவேற்றுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு உத்தரவிட்டார்கள். ஆகவே, நாங்கள் அவரை "பகீஉல் ஃகர்கத்' பொது மையவாடிக்கு அழைத்துச் சென்றோம். (கல்லெறியும்போது தப்பி ஓடாமலிருப்பதற்காக) அவரை நாங்கள் கட்டி வைக்கவுமில்லை. (அவரை நிறுத்துவதற்காக) நாங்கள் குழியும் தோண்டவில்லை.
அவரை எலும்பு, மண் கட்டி, சுட்ட செங்கல் ஆகியவற்றால் அடித்தோம். அடி தாங்க முடியாமல் அவர் ஓடினார். அவருக்குப் பின்னால் நாங்களும் ஓடினோம். இறுதியில் அவர் (பாறைகள் நிறைந்த) "அல்ஹர்ரா'ப் பகுதியின் முனைக்குச் சென்று எங்களுக்காக நிமிர்ந்து நின்றார். நாங்கள் அவர்மீது "ஹர்ரா'வின் பெருங்கற்களை எறிந்தோம். அவர் அமைதியாகிவிட்டார்.
பின்னர் அன்று மாலை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடையே) நின்று உரையாற்றினார்கள். அப்போது, "அல்லாஹ்வின் பாதையில் அறப்போருக்காக நாம் புறப்படும்போதெல்லாம் சிலர் (போருக்குச் செல்லாமல்) நம்முடைய குடும்பத்தாரிடையே தங்கிவிடுகின்றனர். அவர்கள் மலை ஆடு (புணரும்போது) சப்தமிடுவதைப் போன்று சப்தமிட்டுக்கொண்டு இருந்துவிடுகிறார்கள். இத்தகைய (இழி)செயலை செய்யும் மனிதர் எவரேனும் என்னிடம் கொண்டுவரப்பட்டால் அவருக்குத் தக்க தண்டனை வழங்குவது என்மீது கடமையாகும்" என்று கூறினார்கள்.
(அன்றைய நாளில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மாஇஸ் (ரலி) அவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோரவுமில்லை; (தண்டனையை நிறைவேற்றிய பின் அவரை) இழித்துப் பேசவுமில்லை.

3498 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அன்று மாலை நபி (ஸல்) அவர்கள் (எங்களிடையே) நின்று அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு, "இறைவாழ்த்துக்குப் பின்! சிலருக்கு என்ன நேர்ந்தது? நாம் அறப் போருக்குப் புறப்பட்டுச் சென்றால் மக்களில் சிலர் நம்முடன் வந்து சேராமல் (இங்கேயே) தங்கி விடுகின்றனர். அவர்கள் மலை ஆடு (புணரும்போது) சப்தமிடுவதைப் போன்று சப்தமிடுகிறார்கள் என்று கூறினார்கள்" எனக் காணப்படுகிறது. அதில் "நம்முடைய குடும்பத்தாரிடையே'எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், தாவூத் பின் அபீஹிந்த் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மேற்கண்ட ஹதீஸின் ஒரு பகுதியே இடம்பெற்றுள்ளது. சுஃப்யான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மாஇஸ் (ரலி) அவர்கள் தாம் விபச்சாரம் செய்ததை மூன்று முறை ஒப்புக்கொண்டார்" என்று இடம்பெற்றுள்ளது.

3499 புரைதா பின் அல்ஹுசீப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மாஇஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! (விபச்சாரக் குற்றத்திற்குரிய தண்டனையை நிறைவேற்றி) என்னைத் தூய்மைப் படுத்துங்கள்" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், "உமக்குக் கேடுதான்! நீர் திரும்பிச் சென்று அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி அவனிடம் மீளுவாயாக" என்று கூறினார்கள்.
அவ்வாறே மாஇஸ் (ரலி) அவர்கள் திரும்பிச் சென்றுவிட்டு, அதிக நாள் தாமதிக்காமல் திரும்பிவந்து, "அல்லாஹ்வின் தூதரே! என்னைத் தூய்மைப்படுத்துங்கள்" என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உமக்குக் கேடுதான். நீர் திரும்பிச் சென்று அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி மீளுவீராக" என்று கூறினார்கள். மாஇஸ் (ரலி) அவர்கள் மறுபடியும் திரும்பிச் சென்றுவிட்டு அதிக நாள் தாமதிக்காமல் திரும்பிவந்து, "அல்லாஹ்வின் தூதரே! என்னைத் தூய்மைப்படுத்துங்கள்" என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் முன்பு போன்றே பதிலுரைத்தார்கள். நான்காவது முறை அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எதிலிருந்து உம்மைத் தூய்மைப்படுத்த வேண்டும்?" என்று கேட்டார்கள். அவர், "விபச்சாரக் குற்றத்திலிருந்து" என்று விடையளித்தார். அப்போது அவர்கள், "இவருக்குப் பைத்தியம் பிடித்துள்ளதா?" என்று கேட்டார்கள். அவர் பைத்தியக்காரர் அல்லர் எனத் தெரிவிக்கப்பட்டது.
நபி (ஸல்) அவர்கள், "இவர் மது அருந்தியுள்ளாரா?" என்று கேட்டார்கள். உடனே ஒரு மனிதர் எழுந்து, அவரது வாயை (ஊதச் சொல்லி) முகர்ந்து பார்த்தார். மதுவின் வாடை வரவில்லை.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "நீர் விபச்சாரம் செய்தீரா?" என்று கேட்டார்கள். அவர் "ஆம்" என்று (வாக்குமூலம்) கூறினார். அவரைக் கொண்டுசென்று கல்லெறி தண்டனை நிறைவேற்றுமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றப்பட்டது.
அவர் தொடர்பாக மக்க(ளிடையே கருத்து வேறுபாடு தோன்றி அவர்க)ள் இரு பிரிவினராக ஆயினர். சிலர், "அவர் அழிந்தார். அவரை அவருடைய குற்றம் சுற்றிவளைத்துக்

கொண்டுவிட்டது" என்று கூறினர். வேறு சிலர், "மாஇஸின் பாவமன்னிப்பை விஞ்சிய பாவ மன்னிப்பு இல்லை. அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து தமது கையை நபியின் கையில் வைத்து, "என்னைக் கல்லால் அடித்துக்கொல்லுங்கள்' என்று கூறினார்" என்றனர். இவ்வாறே இரண்டு அல்லது மூன்று நாட்கள் நகர்ந்தன.

பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்திருந்தபோது மக்கள் வந்து, சலாம் சொல்லிவிட்டு அமர்ந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் (மக்களிடம்) "மாஇஸ் பின் மாலிக்குக்காக நீங்கள் பாவமன்னிப்புக் கோருங்கள்" என்று கூறினார்கள். மக்கள், "அல்லாஹ், மாஇஸ் பின் மாலிக்கின் பிழையைப் பொறுப்பானாக!" என்று வேண்டினர்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் அழகிய முறையில் பாவமன்னிப்புக் கோரினார். அது ஒரு சமுதாயத்துக்கே பங்கிடப்பட்டாலும் அவர்கள் அனைவருக்கும் அது போதுமானதாகும்" என்று கூறினார்கள்.

பிறகு "அஸ்த்" குலத்தின் ஒரு கிளையான "ஃகாமித்" கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பெண்மணி வந்து, "அல்லாஹ்வின் தூதரே! என்னைத் தூய்மைப்படுத்துங்கள்" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், "உனக்குக் கேடுதான்! நீ திரும்பிச் சென்று அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி மீளுவாயாக" என்று கூறினார்கள்.

அதற்கு அப்பெண், "மாஇஸ் பின் மாலிக்கைத் திருப்பி அனுப்பியதைப் போன்று என்னையும் திருப்பி அனுப்பப் பார்க்கிறீர்கள் என்றே நான் கருதுகிறேன்" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் "என்ன அது?" என்று கேட்டார்கள். அப்பெண், "நான் விபச்சாரத்தால் கர்ப்பமுற்றவள்" என்றார்.

நபி (ஸல்) அவர்கள், "நீயா (அது)?" என்று கேட்டார்கள். அப்பெண் "ஆம்' என்றார். நபி (ஸல்) அவர்கள், "உமது வயிற்றிலுள்ள மகவைப் பெற்றெடுக்கும்வரை (பொறுமையாக இரு; பிறகு வா!)" என்றார்கள். பிரசவிக்கும்வரை அவளைப் பராமரிக்கும் பொறுப்பை அன்சாரிகளில் ஒருவர் ஏற்றுக்கொண்டார். பிறகு அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "ஃகாமிதிய்யா குலத்தாளுக்குக் குழந்தை பிறந்துவிட்டது' என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், "நாம் இப்போது அவளுக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றப்போவதில்லை. பாலூட்டும் அன்னையின்றி நிற்கும் சிறு வயதுக் குழந்தையாக அவளது பிள்ளையை விட்டுவிடவும் நாம் விரும்பவில்லை" என்று கூறினார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர் எழுந்து, "அவனுக்குப் பாலூட்டும் பொறுப்பு என்னைச் சேர்ந்தது, அல்லாஹ்வின் தூதரே!" என்றார். பின்னர் அந்தப் பெண்ணுக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றுமாறு நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.

3500 புரைதா பின் அல்ஹசீப் (ரலி) அவர்கள் கூறியதாவது:

மாஇஸ் பின் மாலிக் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! எனக்கு நானே அநீதி இழைத்துக்கொண்டேன். நான் விபச்சாரம் செய்துவிட்டேன். என்னைத் தாங்கள் தூய்மைப்படுத்த வேண்டும் என்று நான் விரும்புகிறேன்" என்று கூறினார். (அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திருப்பி அனுப்பிவிட்டார்கள்.) மறு நாளும் அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் விபச்சாரம் செய்துவிட்டேன்" என்று கூறினார். அப்போதும் அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திருப்பியனுப்பிவிட்டார்கள்.

பிறகு அவருடைய குலத்தாரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆளனுப்பி, "அவருடைய அறிவில் ஏதேனும் கோளாறு ஏற்பட்டுள்ளதாக நீங்கள் அறிகிறீர்களா? அவரிடம் ஏதேனும் ஆட்சேபகரமான நடவடிக்கையைக் காணுகிறீர்களா?" என்று விசாரித்தார்கள். அதற்கு அம்மக்கள், "முழுமையான அறிவோடுதான் அவர் உள்ளார் என்றே நாங்கள் அறிகிறோம். எங்களைப் பொறுத்தவரை அவர் எங்களில் நல்ல மனிதர்களில் ஒருவராக உள்ளார்" என்று கூறினர்.

பிறகு மூன்றாவது முறையாக அவர் வந்தபோதும் அவருடைய குலத்தாரிடம் மீண்டும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆளனுப்பி அவரைப் பற்றி விசாரித்தார்கள். அப்போதும் அவர்கள், "அவருக்கு எந்தக் கோளாறுமில்லை. அவரது அறிவிலும் எந்தக் குறையுமில்லை" என்று தெரிவித்தனர். நான்காவது முறை அவர் வந்து முன்பு போன்றே கூறியபோது, அவருக்காகக் குழியொன்றைத் தோண்டும்படி பணித்தார்கள். பிறகு அவரைக் கொண்டுசென்று கல்லெறி தண்டனை நிறைவேற்றுமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றப்பட்டது.

அடுத்து "ஃகாமிதிய்யா" குலத்தைச் சேர்ந்த ஒரு பெண் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்) வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் விபச்சாரம் செய்துவிட்டேன். (உரிய தண்டனையை நிறைவேற்றி) என்னைத் தூய்மைப்படுத்துங்கள்" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்பெண்ணை திருப்பியனுப்பிவிட்டார்கள். அப்பெண் மறு நாள் (வந்து), "அல்லாஹ்வின் தூதரே! ஏன் என்னைத் திருப்பியனுப்புகிறீர்கள்? மாஇஸ் அவர்களைத் திருப்பி அனுப்பியதைப் போன்று என்னையும் தாங்கள் திருப்பியனுப்புகிறீர்கள் போலும். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (தகாத உறவில் ஈடுபட்டு) கர்ப்பமுற்றுள்ளேன்" என்று கூறினார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை, நீ சென்று குழந்தை பெற்றெடு (பிறகு திரும்பி வா)" என்று சொன்னார்கள். குழந்தை பெற்றெடுத்த பின் அந்தப் பெண் ஒரு துணியில் குழந்தையை எடுத்துக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "இது நான் பெற்றெடுத்த குழந்தை" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ சென்று குழந்தைக்குப் பாலூட்டு! பால்குடி மறந்த பின் திரும்பி வா" என்றார்கள்.

பால்குடி மறக்கடித்த பின் அப்பெண் அச்சிறுவனுடன் வந்தார். அவனது கையில் ரொட்டித் துண்டு ஒன்று இருந்தது. அப்பெண், "அல்லாஹ்வின் தூதரே! இவனுக்குப் பால்குடி மறக்கடித்து விட்டேன். இப்போது உணவு உட்கொள்கிறான்"என்று கூறினார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அச்சிறுவனை முஸ்லிம்களில் ஒருவரிடம் ஒப்படைத்தார்கள். பிறகு அந்தப் பெண்ணுக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றுமாறு உத்தரவிட்டார்கள். ஆகவே, அவருக்காக நெஞ்சளவு குழி தோண்டப்பட்டது. (பின்னர் அக்குழிக்குள் அப்பெண்ணை நிறுத்திய பின்) மக்களுக்குக் கட்டளையிட, அவருக்குக் கல்லெறி தண்டனையை மக்கள் நிறைவேற்றினார்கள். காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்கள் கல் ஒன்றை எடுத்துக் கொண்டுவந்து, அப்பெண்ணின் தலைமீது எறிந்தார்கள். இரத்தம் காலித் (ரலி) அவர்களின் முகத்தில் தெரித்தது.

அப்போது அவரை காலித் ஏசினார்கள். காலித் (ரலி) அவர்கள் ஏசியதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செவியுற்றபோது, "காலிதே! நிறுத்துங்கள். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! அவர் அழகிய முறையில் பாவமன்னிப்புத்

தேடிக்கொண்டார். பொது நிதியை மோசடி செய்த ஒருவன் இப்படி பாவமன்னிப்புக் கோரினால் அவனுக்கும்கூட பாவமன்னிப்பு வழங்கப்பட்டிருக்கும்" என்று கூறினார்கள். பிறகு அப்பெண்ணுக்கு இறுதித்தொழுகை நடத்த ஏற்பாடு செய்யுமாறு பணித்து, அவருக்காகத் தொழுகை நடத்தினார்கள். பின்னர் அவர் அடக்கமும் செய்யப்பட்டார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3501 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
விபச்சாரத்தால் கர்ப்பமுற்றிருந்த ஜுஹைனா குலத்தைச் சேர்ந்த ஒரு பெண் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! தண்டனைக்குரிய ஒரு குற்றத்தை நான் செய்துவிட்டேன். என்மீது தண்டனையை நிலைநாட்டுங்கள்" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்பெண்ணின் காப்பாளரை அழைத்துவரச் செய்து, "இவளை நல்ல முறையில் கவனித்துவாருங்கள். குழந்தை பிறந்ததும் இவளை என்னிடம் அழைத்து வாருங்கள்" என்று கூறினார்கள். காப்பாளர் அவ்வாறே செய்தார்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட அவள்மீது அவளுடைய துணிகள் சுற்றப்பட்டன. பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட அவளுக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றப்பட்டது. பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவளுக்காக இறுதித் தொழுகை நடத்தினார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இவளுக்காகத் தாங்கள் தொழவைக்கிறீர்களா? இவள் விபச்சாரம் புரிந்தவள் ஆயிற்றே?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவள் அழகிய முறையில் மன்னிப்புத் தேடிவிட்டாள். மதீனாவாசிகளில் எழுபது பேரிடையே அது பங்கிடப்பட்டாலும் அவர்கள் அனைவருக்கும் போதுமானதாக அமையும். உயர்ந்தோன் அல்லாஹ்வுக்காகத் தன் உயிரையே அர்ப்பணித்த இப்பெண்ணின் பாவமன்னிப்பைவிடச் சிறந்ததை நீர் கண்டுள்ளீரா?" என்று கேட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3502 அபூஹுரைரா (ரலி) மற்றும் ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) ஆகியோர் கூறியதாவது:
கிராமவாசிகளில் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வை முன்வைத்துக் கேட்கிறேன். அல்லாஹ்வின் சட்டப்படியே எனக்குத் தீர்ப்பளிக்க வேண்டும்" என்று சொன்னார். அப்போது அவரைவிட விளக்கமுடையவராக இருந்த அவருடைய எதிரி, "ஆம் எங்களிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்" என்று கூறினார். பின்னர் அந்தக் கிராமவாசி "என்னைப் பேச அனுமதியுங்கள்" என்று கூற, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பேசு" என்றார்கள்.
அவர், "என் மகன் இவரிடம் பணியாளனாக இருந்தான். அப்போது இவருடைய மனைவியுடன் விபச்சாரம் செய்துவிட்டான். என் மகனைக் கல்லால் அடித்துக் கொன்றுவிட வேண்டும் என்று என்னிடம் தெரிவிக்கப்பட்டது. ஆகவே, நான் (இந்தத் தண்டனையிலிருந்து என் மகனைக் காப்பாற்றுவதற்காக) அதற்குப் பதில் நூறு ஆடுகளையும் ஓர் அடிமைப் பெண்ணையும் ஈட்டுத் தொகையாக வழங்கினேன். பிறகு நான் கல்வியாளர்களிடம்

விசாரித்தபோது, என் மகனுக்கு நூறு சாட்டையடிகளும் ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தலும்தான் தண்டனையாகத் தரப்பட வேண்டும் என்றும், இந்த மனிதரின் மனைவிக்குக் கல்லெறி தண்டனை (ரஜ்ம்) வழங்கப்பட வேண்டும் என்றும் என்னிடம் அவர்கள் தெரிவித்தார்கள்" என்று கூறினார்.

இதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! உங்கள் இருவருக்கிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிக்கிறேன். அடிமைப் பெண்ணும் நூறு ஆடுகளும் (உம்மிடமே) திருப்பித் தரப்பட வேண்டும். உம்முடைய மகனுக்கு நூறு சாட்டையடிகளும் ஓராண்டுக் காலம் நாடு கடத்தும் தண்டனையும் வழங்கப்பட வேண்டும்" என்று கூறிவிட்டு, (அருகிலிருந்த உனைஸ் (ரலி) அவர்களை நோக்கி), "உனைஸே! நீங்கள் இந்த மனிதரின் மனைவியிடம் சென்று அவள் (விபச்சாரக் குற்றத்தை) ஒப்புக் கொண்டால் அவளுக்குக் கல்லெறி தண்டனை வழங்குங்கள்" என்று சொன்னார்கள்.

அவ்வாறே உனைஸ் (ரலி) அவர்கள் அவளிடம் செல்ல, அவளும் தனது குற்றத்தை ஒப்புக் கொண்டாள். ஆகவே,அவளுக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட அவ்வாறே தண்டனை நிறைவேற்றப்பட்டது.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 6 இஸ்லாமிய அரசின் கீழ் வாழும் யூதர்கள் விபச்சாரத்தில் ஈடுபட்டாலும் கல்லெறி தண்டனை உண்டு.

3503 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

விபச்சாரம் புரிந்துவிட்ட ஒரு யூத ஆணும் யூதப் பெண்ணும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டனர். யூதர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து "விபச்சாரம் செய்துவிட்டவனுக்கு (அளிக்கப்படும் தண்டனை குறித்து) நீங்கள் (உங்களுடைய) "தவ்ராத்" (வேதத்)தில் என்ன காண்கிறீர்கள்?" என்று கேட்டார்கள்.

அதற்கு யூதர்கள், "அவர்கள் இருவர் முகத்திலும் கரி பூசி, அவர்களிருவரையும் ஒட்டகத்தில் ஏற்றி, முகம் திருப்பி அமரவைப்போம். பின்னர் அவ்விருவரும் (ஊரைச்) சுற்றிக் கொண்டு வரப்படுவர்" என்றார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் உண்மையாளர்களாயின் 'தவ்ராத்'தைக் கொண்டுவாருங்கள்" என்று சொன்னார்கள். அவ்வாறே அவர்கள் 'தவ்ராத்'தைக் கொண்டுவந்து வாசித்துக்காட்டினர். கல்லெறி தண்டனை குறித்த வசனம் வந்தபோது, அதை வாசித்துக் கொண்டிருந்த (யூத) இளைஞர் அந்த வசனத்தின் மீது தமது கையை வைத்து (மறைத்து)க் கொண்டு, அதற்கு முன்பும் பின்பும் உள்ள வசனங்களை வாசித்தார்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (யூதமத அறிஞராயிருந்து இஸ்லாத்தை ஏற்றிருந்த) அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்களும் இருந்தார்கள். அவர்கள், (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்), "அவரைக் கையை எடுக்கச் சொல்லுங்கள்" என்று கூறினார்கள். உடனே அந்த இளைஞர் தமது கையை எடுத்தார். அங்கே (விபச்சாரக் குற்றத்திற்கு) கல்லெறி தண்டனை நிறைவேற்றும்படி கூறும் வசனம்

இருந்தது. ஆகவே,அவ்விருவரையும் சாகும்வரை கல்லால் அடிக்கும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தர விட்டார்கள். அவ்வாறே அவ்விருவருக்கும் கல்லெறி தண்டனை வழங்கப்பட்டது.
அவர்கள்மீது கல்லெறிந்தவர்களில் நானும் ஒருவனாயிருந்தேன். அந்தப் பெண்ணைக் கல்லடியிலிருந்து காப்பதற்காக அந்த யூதர் தமது உடலால் அவளை மறைத்துக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன்.

3504 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "விபச்சாரம் செய்துவிட்ட ஒரு யூத ஆணுக்கும் யூதப் பெண்ணுக்கும் கல்லெறி தண்டனை நிறைவேற்றுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அவ்விருவரையும் யூதர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டு வந்திருந்தனர்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் யூதர்கள் தம் சமுதாயத்தாரில் விபச்சாரம் செய்துவிட்டிருந்த ஓர் ஆணையும் ஒரு பெண்ணையும் அழைத்து வந்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3505 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(விபச்சாரக் குற்றத்திற்காக யூதர்களால்) முகத்தில் கரி பூசப்பட்டு, சாட்டையடி தண்டனை நிறைவேற்றப்பட்ட யூதனொருவன் நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் கொண்டு செல்லப்பட்டான். அப்போது நபி (ஸல்) அவர்கள் யூதர்களை அழைத்து, "விபச்சாரக் குற்றம் புரிந்தவனுக்கு உங்களது வேதத்தில் இதுதான் தண்டனை என்று காண்கிறீர்களா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர்கள் "ஆம்' என்று (பொய்) சொன்னார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் யூத அறிஞர்களில் ஒருவரை அழைத்து, "மூசா (அலை) அவர்களுக்குத் 'தவ்ராத்'தை அருளிய அல்லாஹ்வை முன்வைத்துக் கேட்கிறேன். விபச்சாரக் குற்றம் புரிந்தவனுக்கு உங்களது வேதத்தில் இதுதான் தண்டனை என்று காண்கிறீர்களா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர், "இல்லை; நீங்கள் இவ்வாறு (அல்லாஹ்வை முன்வைத்துக்) கேட்டிராவிட்டால், நான் உங்களிடம் (உண்மையைச்) சொல்லமாட்டேன். அவனுக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றப்படும் என்றே நாங்கள் அதில் காண்கிறோம். எனினும், எங்கள் மேன்மக்களிடையே விபச்சாரம் அதிகமாகிவிட்டது. (விபச்சாரம் செய்துவிட்ட மேன்மக்களில் ஒருவரை) நாங்கள் பிடித்துவிட்டால், அந்தத் தண்டனையை விட்டுவிடுவோம். (அதே குற்றத்திற்காக) சாமானிய மக்களைப் பிடித்தால், அவர்கள்மீது தண்டனையை நாங்கள் நிலைநாட்டுவோம். ஆகவே, நாங்கள் (கலந்து பேசி) உயர்ந்தவர், தாழ்ந்தவர் அனைவருக்கும் பொதுவான ஒரு தண்டனையை நிறைவேற்றுவோம் என

முடிவு செய்தோம். அதனடிப்படையில் கல்லெறி தண்டனைக்குப் பகரமாக முகத்தில் கரி பூசி, கசையடி வழங்கும் தண்டனையை நிறைவேற்றலானோம்" என்று கூறினார்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! இவர்கள் உனது சட்டமொன்றைச் சாகடித்துவிட்டிருந்த நிலையில் அதை (மீண்டும் நடைமுறைப்படுத்தி) உயிர்ப்பித்த முதல் ஆள் நானாவேன்" என்று கூறிவிட்டு, சாகும்வரை கல்லால் அடிக்கும்படி உத்தரவிட்டார்கள்.

அவ்வாறே அந்த யூதர் சாகும்வரை கல்லால் அடிக்கப்பட்டார். அப்போதுதான் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "தூதரே! (இறை)மறுப்பை நோக்கி விரைந்து செல்வோர் குறித்து நீர் கவலைப்படாதீர்..." என்று தொடங்கும் வசனத்தை "அது (சாதகமானது) உங்களுக்கு வழங்கப் பெற்றால் அதை எடுத்துக்கொள்ளுங்கள் என்று கூறுகின்றனர்" (5:41) என்பதுவரை அருளினான். அதாவது முஹம்மதிடம் செல்லுங்கள். (விபச்சாரம் புரிந்தவனுக்கு) முகத்தில் கரி பூசி,கசையடி தண்டனை நிறைவேற்றுமாறு அவர் உத்தரவிட்டால், அதை ஏற்றுக் கொள்ளுங்கள். சாகும்வரை கல்லால் அடிக்கும்படி அவர் உத்தரவிட்டால் அதைத் தவிர்த்துவிடுங்கள் என்று யூதர்கள் கூறினர்.

மேலும் பின்வரும் மூன்று வசனங்களையும் அல்லாஹ் அருளினான்:

அல்லாஹ் அருளியதன் அடிப்படையில் யார் தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள்தாம் (ஏக இறைவனை) மறுப்பவர்கள் ஆவர். (5:44)

அல்லாஹ் அருளியதன் அடிப்படையில் யார் தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள்தாம் அநீதியாளர்கள் ஆவர். (5:45)

அல்லாஹ் அருளியதன் அடிப்படையில் யார் தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள்தாம் பாவிகள் ஆவர். (5:47)

இந்த (5:47ஆவது) வசனம் (ஏக இறைவனை) மறுப்பவர்கள் அனைவருக்கும் பொதுவானதாகும். (முந்தைய இரு வசனங்களும் யூதர்கள் தொடர்பாக அருளப்பெற்றவை ஆகும்.)

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், "நபி (ஸல்) அவர்கள் அந்த யூதரைச் சாகும்வரை கல்லால் அடிக்கும்படி உத்தர விட்டார்கள்" என்பதுவரையே இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னர் வசனங்கள் அருளப் பெற்றது தொடர்பான குறிப்பு இடம்பெறவில்லை.

3505-ஆ ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(விபச்சாரம் புரிந்த) "அஸ்லம்" குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதருக்கும், யூதர் ஒருவருக்கும், அவருடன் விபச்சாரத்தில் ஈடுபட்ட பெண்ணுக்கும் சாகும்வரை கல்லால் அடிக்கும் தண்டனையை நபி (ஸல்) அவர்கள் நிறைவேற்றினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "மற்றொரு பெண்ணுக்கும்" என இடம்பெற்றுள்ளது.

3506 அபூஇஸ்ஹாக் சுலைமான் அஷ் ஷைபானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்களிடம், "(சாகும்வரை) கல்லால் அடிக்கும் தண்டனையை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நிறைவேற்றினார்களா?" என்று கேட்டேன். அவர்கள், "ஆம் (நிறைவேற்றினார்கள்)" என்று பதிலளித்தார்கள். நான், குர்ஆனில் 'அந்நூர்' எனும் (24 ஆவது) அத்தியாயம் அருளப்பெறுவதற்கு முன்பா? அல்லது அதற்குப் பின்பா (எப்போது அந்தத் தண்டனையை நிறைவேற்றினார்கள்)?" என்று கேட்டேன். அவர்கள் "எனக்குத் தெரியாது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3507 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவரின் அடிமைப் பெண் விபச்சாரம் செய்து, அது வெளிப்பட்டுவிட்டால், அவளுக்கு (உரிமையாளர் ஐம்பது) சாட்டையடி வழங்கட்டும். (அதற்கு மேல் அவளிடம்) கடுமை காட்டவேண்டாம். பிறகு (மறுபடியும்) அவள் விபச்சாரம் செய்தால் அவளுக்கு (ஐம்பது) சாட்டையடி கொடுக்கட்டும். (அதற்கு மேல் அவளிடம்) கடுமை காட்டவேண்டாம். மூன்றாவது முறையும் அவள் விபச்சாரம் செய்து அது வெளிப்பட்டுவிட்டால், அவளை ஒரு முடிக்கற்றைக்காவது (அற்ப விலைக்காவது) விற்றுவிடட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3508 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் இஸ்ஹாக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மூன்று முறை அவளுக்குச் சாட்டையடி வழங்க வேண்டும். நான்காவது முறை அவள் விபச்சாரம் செய்துவிட்டால், அவளை விற்று விடட்டும்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

3509 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"கணவனில்லாத ஓர் அடிமைப் பெண் விபச்சாரம் செய்துவிட்டால் (அவளுக்கு என்ன தண்டனை வழங்க வேண்டும்)?"என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அவள் விபச்சாரம் செய்தால் அவளைச் சாட்டையால் அடியுங்கள். பின்னரும் விபச்சாரம் செய்தால் மீண்டும் சாட்டையால் அடியுங்கள். பின்னரும் விபச்சாரம் செய்தால் மறுபடியும் சாட்டையால் அடியுங்கள். அதன் பின்னர் (அவள் விபச்சாரம் செய்தால்) அவளை ஒரு கயிற்றுக்காவது விற்றுவிடுங்கள்" என்று கூறினார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (அவளை விற்றுவிட வேண்டும் என்பது) மூன்றாவது தடவைக்குப் பிறகா அல்லது நான்காவது தடவைக்குப் பிறகா என்பது எனக்குத் தெரியாது" என்று கூறினார்கள்.
அப்துல்லாஹ் பின் மஸ்லமா அல்கஅனபீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள "ளஃபீர்' எனும் சொல்லுக்கு "கயிறு' என்பது பொருள் என இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் பொருள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3510 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) மற்றும் ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) ஆகியோரிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஓர் அடிமைப் பெண் விபச்சாரம் செய்துவிட்டால் (அவளுக்கு என்ன தண்டனை வழங்க வேண்டும்)? என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. அவற்றில் "ளஃபீர்' என்பதற்கு 'கயிறு' என்பது பொருள் என இப்னு ஷிஹாப் (ரஹ்) அவர்கள் கூறிய சொற்பொருள் இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) மற்றும் ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) ஆகியோர் வழியாக (தலா இரு அறிவிப்பாளர்தொடர்களில்) நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. இந்த அறிவிப்புகளிலும் "அவளை விற்றுவிட வேண்டும் என்பது, மூன்றாவது தடவைக்குப் பிறகா, அல்லது நான்காவது தடவைக்குப் பிறகா" என்பதில் ஐயப்பாடு எழுப்பப்பட்டுள்ளது.

## பாடம் : 7 மகப்பேறு ஏற்பட்டுள்ள பெண்ணின் தண்டனையைத் தள்ளிவைத்தல்

3511 அபூஅப்திர் ரஹ்மான் அப்துல்லாஹ் பின் ஹபீப் பின் ரபீஆ (ரஹ்) அவர்கள் கூறிய தாவது:
(ஒரு நாள்) அலீ (ரலி) அவர்கள் (எங்களிடையே) உரையாற்றினார்கள். அப்போது, "மக்களே! உங்கள் அடிமைகள்மீதும் குற்றவியல் தண்டனையை நிறைவேற்றுங்கள். அவர்கள் திருமணமானவர்களாக இருக்கட்டும்; திருமணமாகாதவர்களாக இருக்கட்டும். ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அடிமைப்பெண் ஒருவர் விபச்சாரம் செய்து விட்டார். எனவே, அவருக்குச் சாட்டையடிகள் வழங்குமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு உத்தரவிட்டார்கள்.
ஆனால், அவருக்கு அப்போதுதான் மகப்பேறு இரத்தப்போக்கு ஏற்பட்டிருந்தது. அவருக்குச் சாட்டையடி தண்டனையை நிறைவேற்றினால் (எங்கே) அவரை நான் கொன்றுவிடுவேனோ என அஞ்சினேன். (எனவே, தண்டனையைத் தள்ளிவைத்தேன்.) இது பற்றி நான் நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தபோது, "நீங்கள் செய்தது சரிதான்" என்று அவர்கள் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அவர் திருமணம் முடித்தவராக இருக்கட்டும்; திருமணம் முடிக்காதவராக இருக்கட்டும்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை. இந்த ஹதீஸில், "அவள் குணமடை(ந்து இயல்பு நிலையை அடை)யும்வரை அவளை விட்டுவிடுங்கள்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றும் இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 8 மது அருந்திய குற்றத்திற்கான தண்டனை

3512 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மது அருந்திய ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டபோது, அவரை இரு பேரீச்ச மட்டைகளால் ஏறக்குறைய நாற்பது முறை அடிக்குமாறு உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அபூபக்ர் (ரலி) அவர்களும் (தமது ஆட்சிக் காலத்தில்) அவ்வாறே செய்தார்கள். உமர் (ரலி) அவர்கள் ஆட்சிக்கு வந்தபோது, மக்களிடம் ஆலோசனை கேட்டார்கள். அப்போது அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் "(குர்ஆனில் கூறப்பட்டுள்ள) குற்றவியல் தண்டனைகளிலேயே குறைந்தபட்ச தண்டனையான எண்பது (சாட்டையடிகள் வழங்கலாம்)" என்று கூறினார்கள். அவ்வாறே உமர் (ரலி) அவர்கள் கட்டளையிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "(மது அருந்திய) ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டபோது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3513 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மது அருந்திய குற்றத்திற்குத் தண்டனையாக பேரீச்ச மட்டையாலும் காலணியாலும் அடிக்கும்படி நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள் (தமது ஆட்சிக்காலத்தில்) நாற்பது சாட்டையடிகள் கொடு(க்குமாறு உத்தரவு பிறப்பி)த்தார்கள். உமர் (ரலி) அவர்கள் ஆட்சிக்கு வந்த வேளையில், (சிரியா, இராக் போன்ற பகுதிகள் வெற்றி கொள்ளப்பட்டு) மக்கள் கிராமப்புறங்களிலும் செழிப்பான பகுதிகளிலும் குடியேறியபோது (வாழ்க்கை வசதிகள் பெருகி,குடிப்பழக்கம் அதிகரித்தது. அப்போது), "மது அருந்திய குற்றத்திற்கான தண்டனை விஷயத்தில் நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று மக்களிடம் கேட்டார்கள்.
அப்போது அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள், "(குர்ஆனில் கூறப்பட்ட) குற்றவியல் தண்டனைகளிலேயே மிகவும் குறைந்தபட்ச தண்டனையை (எண்பது கசையடி) அதற்குரிய தண்டனையாக நீங்கள் ஆக்க வேண்டுமென நான் கருதுகிறேன்" என்றார்கள். இதன்படி உமர் (ரலி) அவர்கள் எண்பது சாட்டையடிகள் வழங்கினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3514 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "மது அருந்திய குற்றத்திற்குத் தண்டனையாகக் காலணியாலும் பேரீச்ச மட்டையாலும் நபி (ஸல்) அவர்கள் நாற்பது முறை அடிக்குமாறு உத்தரவிட்டுவந்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. அதில் "மக்கள் கிராமப்புறங்களிலும் செழிப்பான பகுதிகளிலும் குடியேறியபோது' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

3515 அபூசாசான் ஹுளைன் பின் அல்முன்திர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (கலீஃபா) உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்களிடம் இருந்தேன். அப்போது வலீத் பின் உக்பா (ரலி) அவர்கள் (அங்கு) கொண்டுவரப்பட்டார். அவர் சுப்ஹுத் தொழுகை இரண்டு ரக்அத் தொழுவித்துவிட்டு, "உங்களுக்கு நான் இத்தொழுகையைக் கூடுதலாக்கப் போகிறேன்" என்று கூறியிருந்தார்.

அப்போது அவருக்கெதிராக இருவர் சாட்சியமளித்தனர். அவர்களில் ஒருவரான ஹும்ரான் பின் அபான், "அவர் (வலீத்) மது அருந்தியிருந்தார்" என்று சாட்சியம் அளித்தார். மற்றொருவர் வலீத் வாந்தியெடுத்ததைத் தாம் கண்டதாகச் சாட்சியமளித்தார். உஸ்மான் (ரலி) அவர்கள், "அவர் மது அருந்தியதாலேயே வாந்தியெடுத்தார்" என்று கூறிவிட்டு, "அலீயே! நீங்கள் எழுந்து அவருக்கு (மது அருந்திய குற்றத்திற்காக)ச் சாட்டையடி வழங்குங்கள்" என்று கூறினார்கள்.

உடனே அலீ (ரலி) அவர்கள் (தம் புதல்வரிடம்) "ஹசனே! நீர் எழுந்து அவருக்குச் சாட்டையடி வழங்கு" என்று கூறினார்கள். அதற்கு ஹசன் (ரலி) அவர்கள், (உஸ்மான் (ரலி) அவர்கள்மீது கோபம் கொண்டவரைப் போன்று) "ஆட்சியின் குளிர்ச்சிக்குப் பொறுப்பேற்றவர்களையே அதன் வெப்பத்துக்கும் பொறுப்பேற்கச் செய்யுங்கள்" என்று கூறிவிட்டார்கள். உடனே அலீ (ரலி) அவர்கள் (தம் சகோதரரின் புதல்வரிடம்) "அப்துல்லாஹ் பின் ஜஅ்ஃபரே! நீர் எழுந்து அவருக்குச் சாட்டையடி வழங்குவீராக" என்று சொன்னார்கள். அவ்வாறே அப்துல்லாஹ் பின் ஜஅ்ஃபர் அவர்கள், வலீதுக்குச் சாட்டையடி வழங்கினார்கள். அப்போது அலீ (ரலி) அவர்கள் (அப்துல்லாஹ் எத்தனை முறை அடிக்கிறார் என்பதை) எண்ணிக்கொண்டிருந்தார்கள். நாற்பது அடியானதும் "போதும் நிறுத்து" என்றார்கள்.

பிறகு, "(மது அருந்திய குற்றத்திற்குத் தண்டனையாக) நபி (ஸல்) அவர்கள் நாற்பது சாட்டையடிகள் வழங்கினார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களும் (தமது ஆட்சிக் காலத்தில்) நாற்பது சாட்டையடிகள் வழங்கினார்கள். உமர் (ரலி) அவர்கள் (தமது ஆட்சிக் காலத்தில்) எண்பது சாட்டையடிகள் வழங்கினார்கள். எல்லாம் (பின்பற்றத் தகுந்த) வழிமுறைகளே. ஆயினும், இ(றைத்தூதர் (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் வழங்கிய நாற்பது சாட்டையடிகளான)து எனக்கு மிகவும் விருப்பமானதாகும்" என்று அலீ (ரலி) அவர்கள் கூறினார்கள்.

மேற்கண்ட ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் அலீ பின் ஹுஜ்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் இந்த ஹதீஸை அப்துல்லாஹ் அத்தானாஜ் (ரஹ்) அவர்களிடமிருந்தே (நேரடியாகக்) கேட்டிருந்தேன். ஆனால், அதை மனனம் செய்ய வில்லை. (பின்னர் இப்னு அபீஅரூபா (ரஹ்) அவர்களிடம் கேட்டே இப்போது அறிவிக்கிறேன்) என இஸ்மாயீல் பின் உலய்யா (ரஹ்) அவர்கள் கூடுதலாகக் கூறினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

3516 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் தண்டனை நிறைவேற்றியதால் எவரேனும் இறந்துபோனால் (அதற்காக) நான் கவலை அடையப்போவதில்லை. குடிகாரனைத் தவிர! ஏனெனில், (தண்டனை வழங்கப்பட்டதால்) குடிகாரன் இறந்துபோனால் அவனுக்காக நான் உயிரீட்டுத் தொகை வழங்கிவிடுவேன். இதற்குக் காரணம், (மது அருந்திய குற்றத்திற்குத் தண்டனையாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (குறிப்பிட்ட தண்டனை எதையும்) வழிமுறையாக்கவில்லை.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 9 (குற்றவியல் தண்டனை அல்லாமல்) கண்டிப்புக்காக வழங்கப்படும் சாட்டையடிகளின் (அதிகபட்ச) அளவு.

3517 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் விதியாக்கியுள்ள (குற்றவியல்) தண்டனைகளில் ஒன்றில் தவிர வேறு எதற்காகவும் பத்து சாட்டையடிகளுக்கு மேல் வழங்கப்படமாட்டாது.
இதை அபூபுர்தா அல்அன்சாரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 10 தண்டனைகள் குற்றங்களுக்கான பரிகாரமாகும்.

3518 உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஓர் அவையில் இருந்தோம். அப்போது அவர்கள், "அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிப்பதில்லை; விபச்சாரம் செய்வதில்லை; திருடுவதில்லை; கொல்லக் கூடாதென அல்லாஹ் தடை செய்துள்ள எந்த உயிரையும் முறையின்றிக் கொல்வதில்லை" என்று என்னிடம் உறுதிமொழி அளியுங்கள்" என்று கூறினார்கள்.
மேலும், "இந்த உறுதிமொழியை உங்களில் யார் நிறைவேற்றுகிறாரோ அவருக்குரிய பிரதிபலன் இறைவனிடம் உண்டு. மேற்கூறப்பட்ட (குற்றங்களில்) எதையேனும் ஒருவர் செய்து. அதற்காக அவர் (இவ்வுலகில்) தண்டிக்கப்பட்டுவிட்டால். அது அவருக்குப் பரிகாரமாகிவிடும். மேற்கூறப்பட்டவற்றில் எதையேனும் ஒருவர் செய்து,பின்னர் அல்லாஹ் அதை (யாருக்கும் தெரியாமல்) மறைத்துவிட்டால், அவரது விவகாரம் அல்லாஹ்வின் பொறுப்பில் விடப்படும். அவன் நாடினால் அவரை மன்னிப்பான்; நாடினால் அவரைத் தண்டிப்பான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3519 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவர்கள் அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைப்பதில்லை..." எனத்தொடங்கும் பெண்கள் தொடர்பான (60:12ஆவது) இறைவசனத்தை ஓதிக்காட்டினார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3520 உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெண்களிடம் உறுதிமொழி வாங்கியதைப் போன்றே, (ஆண்களாகிய) எங்களிடமும் "அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்கமாட்டோம்; திருட மாட்டோம்; விபச்சாரம் செய்யமாட்டோம்;எங்கள் குழந்தைகளைக் கொல்லமாட்டோம்; எங்களில் சிலர் வேறுசிலர் மீது அவதூறு கூறமாட்டோம்" என உறுதிமொழி வாங்கினார்கள்.
மேலும், "இந்த உறுதிமொழியை உங்களில் யார் நிறைவேற்றுகின்றாரோ அவருக்குரிய பிரதிபலன் இறைவனிடம் உண்டு. தண்டனைக்குரிய குற்றத்தை உங்களில் எவரேனும் செய்து, அதற்காக அவர் தண்டிக்கப்பட்டால் அது அவருக்குப் பரிகாரமாகிவிடும். யாருடைய குற்றத்தை அல்லாஹ் மறைத்துவிட்டானோ அவர் அல்லாஹ்வின் பொறுப்பில் விடப்படுகிறார். அவன் நாடினால் அவரைத் தண்டிப்பான்; நாடினால் அவரை மன்னிப்பான்.

3521 உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வுக்கு நாங்கள் எதையும் இணை கற்பிக்கமாட்டோம்; விபச்சாரம் செய்ய மாட்டோம்; திருடமாட்டோம்;கொல்லக்கூடாதென அல்லாஹ் தடைசெய்துள்ள எந்த உயிரையும் முறையின்றி கொலை செய்யமாட்டோம்;கொள்ளையடிக்க மாட்டோம்; (இறைவனுக்கோ இறைத்தூதருக்கோ) மாறுசெய்யமாட்டோம். இவற்றின்படி நாங்கள் செயல்பட்டால் (எங்களுக்கு) சொர்க்கம் உண்டு. இவற்றில் எதையேனும் நாங்கள் செய்து, அதை அல்லாஹ் மூடி மறைத்துவிட்டால், அதைப் பற்றிய தீர்ப்பு அல்லாஹ்விடமே உள்ளது" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி அளித்த தலைவர்களில் நானும் ஒருவன் ஆவேன்.

## பாடம் : 11 வாயில்லாப் பிராணிகள், சுரங்கம், கிணறு ஆகியவற்றால் ஏற்படும் விபத்துகளுக்கு இழப்பீடு இல்லை.

3522 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வாயில்லாப் பிராணிகளால் சேதம் ஏற்பட்டால் இழப்பீடு கிடையாது. கிணற்று (விபத்து)க்கும் இழப்பீடு கிடையாது. சுரங்க (விப)த்துக்கும் இழப்பீடு கிடையாது. புதையலில் ஐந்தில் ஒரு பாகம் (ஸகாத்தாக) வசூலிக்கப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3523 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கிணற்றால் ஏற்படும் சேதத்திற்கு இழப்பீடு கிடையாது. சுரங்கத்தால் ஏற்படும் சேதத்திற்கும் இழப்பீடு கிடையாது. வாயில்லாப் பிராணிகளால் ஏற்படும் சேதத்திற்கும் இழப்பீடு கிடையாது. புதையலில் ஐந்தில் ஒரு பாகம் (ஸகாத்தாக) வசூலிக்கப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

# அத்தியாயம் : 30 - நீதித்துறை தீர்ப்புகள் - இஸ்லாமிய தீர்ப்புகள்

## பாடம் : 1 சத்தியம் செய்வது பிரதிவாதிமீது கடமையாகும்.

3524 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களின் வாதத்தை மட்டும் வைத்து அவர்களுக்கு (சாதகமாகத் தீர்ப்பு) அளிக்கப்பட்டால், மக்களில் சிலர் வேறுசிலருடைய உயிர்களையும் உடைமைகளையும் (பலி கொள்ள வேண்டுமென) கோருவார்கள். ஆயினும்,பிரதிவாதி (தன்மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டை மறுத்தால்) சத்தியம் செய்வது கடமையாகும்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3525 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(வாதி ஆதாரத்தை நிலைநிறுத்தாதபோது) பிரதிவாதி சத்தியம் செய்ய வேண்டும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள்.

## பாடம் : 2 சத்தியம் மற்றும் சாட்சியத்தின் அடிப்படையில் தீர்ப்பளித்தல்.

3526 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சத்தியம் மற்றும் சாட்சியத்தின் அடிப்படையில் தீர்ப்பளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 3 வெளிப்படையான நிலையையும் சாதுரியமாக ஆதாரம் காட்டுவதையும் வைத்துத் தீர்ப்பளித்தல்.

3527 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மக்களே!) நீங்கள் என்னிடம் உங்கள் வழக்குகளைக் கொண்டுவருகிறீர்கள். உங்களில் ஒருவர் மற்றொருவரைவிடத் தமது ஆதாரத்தை எடுத்துவைப்பதில் வாக்கு சாதுரியமிக்கவராக இருக்கக்கூடும். இந்நிலையில் நான் அவரிடம் கேட்ட (திறமையான வாதத்)துக்கு ஏற்ப அவருக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்துவிடுகிறேன். (அதனால் அவர் அடையும் ஆதாயம் அவருக்கு அனுமதிக்கப்பட்டதெனக் கருதிவிட வேண்டாம்.)
எனவே, யாருக்கு (அவரது சொல்லை வைத்து) அவருடைய சகோதரனின் உரிமையில் ஒன்றை அவருக்குரியது என்று (உண்மை நிலை அறியாமல்) நான் தீர்ப்பளித்து விடுகிறேனோ, அவர் அதை எடுத்துக்கொள்ள வேண்டாம். ஏனெனில், அவருக்கு நான் (நரக) நெருப்பின் ஒரு துண்டையே ஒதுக்கித் தருகிறேன்.
இதை உம்மு சலமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3528 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது அறையின் வாசலில் சிலர் கூச்சலிட்டுத் தகராறு செய்துகொள்வதைச் செவியுற்றார்கள். உடனே வெளியே வந்து அவர்களிடம் சென்று, "நான் மனிதன்தான். வழக்காடுபவர்கள் என்னிடம் வருகிறார்கள். அப்படி வருபவர்களில் சிலர் சிலரைவிட வாக்கு சாதுரியமிக்கவர்களாக இருக்கக்கூடும். அதனடிப்படையில் அவர் உண்மை சொல்வதாக எண்ணி அவருக்குச் சாதகமாக நான் தீர்ப்பளித்துவிடுகிறேன். (அந்தரங்கத்தை அறியாமல் வெளிப்படையான வாதப் பிரதிவாதத்தை வைத்து) ஒரு முஸ்லிமின் உரிமையை வேறொருவருக்கு உரியதென்று நான் தீர்ப்பளித்துவிட்டால், (அது தமக்கு உரிமையான பொருள் என அவர் எண்ணிக்கொள்ள வேண்டாம்.) அது நரக நெருப்பின் ஒரு துண்டேயாகும் (என்பதை நினைவில் கொண்டு, விரும்பினால்) அதை அவர் எடுத்துச் செல்லட்டும். (இல்லையேல்) அதை விட்டுவிடட்டும்" என்று கூறினார்கள்.

3529 மேற்கண்ட ஹதீஸ் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மஅமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்கள் (தம் துணைவி) உம்மு சலமா (ரலி) அவர்களது அறையின் வாசலில் சிலர் கூச்சலிட்டுத் தகராறு செய்து கொள்வதைச் செவியுற்றார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 4 ஹிந்த் பின்த் உத்பா (ரலி) அவர்களின் வழக்கு.**

3530 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூசுஃப்யான் (ரலி) அவர்களின் துணைவியார் ஹிந்த் பின்த் உத்பா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! (என் கணவர்) அபூசுஃப்யான் கருமியான ஒரு மனிதர். எனக்கும் என் மகன்களுக்கும் போதுமான (பணத்)தை அவர் என்னிடம் தருவதில்லை. நான் அவருக்குத் தெரியாமல் அவரது செல்வத்திலிருந்து எடுத்துக்கொள்வதைத் தவிர (போதுமான தொகையை அவராகத் தரமாட்டார்). அவ்வாறெனில்,அ(வருக்குத் தெரியாமல் எடுத்துக்கொள்வ)தனால் என்மீது குற்றமேதும் உண்டா?" என்று கேட்டார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவருடைய செல்வத்திலிருந்து உனக்கும் உன் மகன்களுக்கும் போதுமானதை நியாயமான அளவுக்கு எடுத்துக்கொள் (அதனால் உன்மீது குற்றமேதுமில்லை)" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3531 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹிந்த் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த பூமியின் மேலுள்ள வீட்டார்களிலேயே உங்களுடைய வீட்டாரை இறைவன் இழிவடையச் செய்வதே (அன்று) எனக்கு

விருப்பமானதாக இருந்தது. இந்த பூமியின் மேலுள்ள வீட்டார்களில் உங்கள் வீட்டாரை இறைவன் மேன்மையடையச் செய்வதே (இன்று) எனக்கு விருப்பமானதாய் இருக்கிறது" என்று கூறினார்.
நபி (ஸல்) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த ஏக இறை)வன்மீது சத்தியமாக! உனது இந்த விருப்பம் மேன்மேலும் அதிகரிக்கும்" என்று கூறினார்கள்.
பிறகு ஹிந்த் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! (என் கணவர்) அபூசுஃப்யான் கருமியான மனிதர் ஆவார். அவருக்குரிய செல்வத்திலிருந்து அவரது அனுமதியில்லாமல் (எடுத்து) என் பிள்ளைகளுக்குச் செலவழித்தால், அது என்மீது குற்றமாகுமா?" என்று கேட்டார்.
நபி (ஸல்) அவர்கள், "நியாயமான அளவுக்கு எடுத்து அவர்களுக்குச் செலவழிப்பதால் உன்மீது குற்றமில்லை" என்று பதிலளித்தார்கள்.

3532 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
(ஒரு முறை) ஹிந்த் பின்த் உத்பா பின் ரபீஆ (ரலி) அவர்கள் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் மீதாணையாக! (நான் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்) இப்பூமியின் மேலுள்ள வேறெந்த வீட்டார் இழிவடைவதையும்விட உங்கள் வீட்டார் இழிவடைவதே எனக்கு மிகவும் விருப்பமானதாக இருந்துவந்தது. (நான் இஸ்லாத்தை ஏற்ற பிறகு) இன்று இப்பூமியின் மேலுள்ள வேறெந்த வீட்டார் கண்ணியம் அடைவதையும்விட உங்கள் வீட்டார் கண்ணியம் அடைவதே எனக்கு மிகவும் விருப்பமானதாக மாறிவிட்டது" என்று கூறினார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த ஏக இறை)வன் மீதாணையாக! உனது இந்த விருப்பம் மேன்மேலும் அதிகரிக்கும்" என்று கூறினார்கள்.
பிறகு ஹிந்த் பின்த் உத்பா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! (என் கணவர்) அபூ சுஃப்யான் கருமியான மனிதர். அவருக்குரிய (செல்வத்)திலிருந்து (அவருக்குத் தெரியாமல்) எங்கள் பிள்ளைகளுக்கு நான் உணவளித்தால் அது என்மீது குற்றமாகுமா?" என்று கேட்டார்.
அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(குற்றம்) இல்லை;நியாயமான அளவுக்கு எடுத்தால்" என்று பதிலளித்தார்கள்.

## பாடம் : 5 தேவையின்றி அதிகமாகக் கேள்வி கேட்பது, தர வேண்டிய உரிமையைத் தர மறுப்பது, உரிமையில்லாததைத் தருமாறு கோருவது ஆகியவற்றுக்கு வந்துள்ள தடை.

3533 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் உங்களுக்கு மூன்று விஷயங்களை விரும்புகின்றான்; உங்களுக்கு மூன்று விஷயங்களை வெறுக்கின்றான். 1,2. அல்லாஹ் ஒருவனையே வணங்குவதையும் அவனுக்கு இணை கற்பிக்காமலிருப்பதையும் விரும்புகின்றான். 3. நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் கயிற்றைப் பற்றிப் பிடிப்பதையும் பிரிந்துவிடாமலிருப்பதையும் விரும்புகின்றான். (இவ்வாறு) சொல்லப்பட்டது, அவர் சொன்னார் என (ஊர்ஜிதமில்லாததை)ப் பேசுவதையும், (தேவையின்றி) அதிகமாகக் கேள்விகள் கேட்பதையும், செல்வத்தை வீணாக்குவதையும் அவன் வெறுக்கின்றான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3534 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், (வெறுக்கின்றான் என்பதைக் குறிக்க "யக்ரஹு' என்பதற்குப் பகரமாக) "யஸ்க(த்)து' என இடம்பெற்றுள்ளது. "பிரிந்துவிடாமலிருப்பதையும்' எனும் சொற்றொடர் இடம் பெறவில்லை.

3535 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அன்னையரைப் புண்படுத்துவது, பெண் சிசுக்களை உயிருடன் புதைப்பது, (அடுத்தவருக்குத் தர வேண்டியதை) மறுப்பது, (அடுத்தவருக்குரியதை) தருமாறு கேட்பது ஆகியவற்றை அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்துள்ளான். மேலும், (இவ்வாறு) சொல்லப்பட்டது, அவர் சொன்னார் என (ஊர்ஜிதமற்றதை)ப் பேசுவது, அதிகமாகக் கேள்வி கேட்பது,செல்வத்தை வீணாக்குவது ஆகிய மூன்றையும் உங்களுக்கு அல்லாஹ் வெறுத்துள்ளான்.
இதை முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களுக்குத் தடை செய்துள்ளார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. "அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்துள்ளான்' என்று இல்லை.

3536 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களின் எழுத்தர் (வர்ராத் (ரஹ்) அவர்கள்) கூறியதாவது:
முஆவியா (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் செவியுற்ற (ஹதீஸ்) ஒன்றை எனக்கு எழுதி அனுப்புங்கள்" என முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதினார்கள்.
அதற்கு முஃகீரா (ரலி) அவர்கள், "அல்லாஹ் உங்களுக்கு மூன்று விஷயங்களை வெறுத்துள்ளான். (இவ்வாறு) சொல்லப்பட்டது, அவர் சொன்னார் என (ஊர்ஜிதமில்லாததை)ப் பேசுவது, செல்வங்களை வீணாக்குவது, (தேவையின்றி) அதிகமாகக் கேள்விகள் கேட்பது ஆகியவையே அவை" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியுற்றுள்ளேன் என்று பதில் எழுதினார்கள்.

3537 வர்ராத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"சலாமுன் அலைக்க (உங்களுக்குச் சாந்தி உண்டாகட்டும்); இறைவாழ்த்துக்குப் பின்! அல்லாஹ் மூன்று விஷயங்களைத் தடை செய்துள்ளான்; மூன்றை (வெறுத்து) விலக்கியுள்ளான். பெற்றோரைப் புண்படுத்துவது, பெண் சிசுக்களை உயிருடன் புதைப்பது, (அடுத்தவருக்குரியதை) தருமாறு கேட்பது ஆகியவற்றைத் தடை செய்துள்ளான். (இவ்வாறு) சொல்லப்பட்டது, அவர் சொன்னார் என (ஊர்ஜிதமற்றதை)ப் பேசுவதையும், (தேவையின்றி) அதிகமாகக் கேள்வி கேட்பதையும், செல்வத்தை வீணாக்குவதையும் (வெறுத்து) விலக்கியுள்ளான் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்" என முஃகீரா (ரலி) அவர்கள் முஆவியா (ரலி) அவர்களுக்கு (பதில்) எழுதினார்கள்.

**பாடம் : 6 நீதிபதி (தீர்ப்பின்போது) செய்த ஆய்வு சரியாக இருந்தாலும் தவறாக இருந்தாலும் அவருக்கு நன்மை உண்டு.**

3538 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீதிபதி தீர்ப்பளிப்பதற்காக ஆய்வு செய்து சரியான தீர்ப்பு வழங்குவாராயின், அவருக்கு இரண்டு நன்மைகள் உண்டு. அவர் தீர்ப்பளிப்பதற்காக ஆய்வு செய்து தவறான தீர்ப்பு வழங்குவாராயின், அவருக்கு ஒரு நன்மை உண்டு.
இதை அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "இந்த ஹதீஸை நான் அபூபக்ர் பின் முஹம்மத் பின் அம்ர் பின் ஹஸ்ம் (ரஹ்) அவர்களிடம் கூறினேன். அப்போது அவர்கள் "இவ்வாறே அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து அபூசலமா (ரஹ்) அவர்கள் எனக்கு அறிவித்தார்கள்' என்று யஸீத் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்" என ஹதீஸின் இறுதியில் இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 7 நீதிபதி கோபமாக இருக்கும்போது தீர்ப்பளிப்பது விரும்பத்தக்கதன்று.**

3539 அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) அபூபக்ரா (ரலி) அவர்கள் (தம் புதல்வரும் என் சகோதரருமான) உபைதுல்லாஹ் பின் அபீபக்ரா (ரஹ்) அவர்களுக்குக் கடிதம் எழுதினார்கள். (அதை நானே எழுதிக் கொடுத்தேன்) –அப்போது அவர் (ஈரான் –ஆப்கானிஸ்தான் எல்லையிலிருந்த) "சிஜிஸ்தான்' பகுதியில் நீதிபதியாக இருந்தார்.– அந்தக் கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்கள்:
(மகனே!) நீ கோபமாக இருக்கும்போது இருவரிடையே தீர்ப்பளிக்காதே. ஏனெனில், "கோபமாக இருக்கும்போது, இருவரிடையே யாரும் தீர்ப்பளிக்கவேண்டாம்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியுற்றுள்ளேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 8 தவறான தீர்ப்புகளைத் தள்ளுபடி செய்வதும் (மார்க்கத்தில் இல்லாத) புதுமைகளை நிராகரிப்பதும்.**

3540 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நம்முடைய இந்த (மார்க்க) விஷயத்தில், அதில் இல்லாத ஒன்றை யார் புதிதாகப் புகுத்துகின்றாரோ அது நிராகரிக்கப்பட வேண்டியதாகும்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3541 சஅத் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்களிடம் "ஒருவருக்கு மூன்று வீடுகள் இருந்தன. அவர் அவற்றில் ஒவ்வொன்றிலும் மூன்றில் ஒரு பாகத்தைத் தர்மம் செய்வதாக இறுதி விருப்பம் (வஸிய்யத்) தெரிவித்து விட்டார்"என்று கூறி (விளக்கம் கோரி)னேன்.
அதற்குக் காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள், "அதை அனைத்தையும் சேர்த்து ஒரே வீட்டில் கணக்கிட்டு இறுதி விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்" என்று கூறிவிட்டு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், 'நம்முடைய மார்க்கத்தில் இல்லாத ஒரு செயலை யார் புதிதாகச் செய்கிறாரோ அது (இறைவனிடம்) நிராகரிக்கப்பட்டதாகும்'என்று கூறினார்கள் என ஆயிஷா (ரலி) அவர்கள் எனக்கு அறிவித்தார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 9 சாட்சிகளில் சிறந்தவர்.

3542 ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "சாட்சிகளில் சிறந்தவர் யாரென உங்களுக்கு நான் சொல்லட்டுமா? சாட்சியளிக்கும்படி கோராமலேயே தாமாக முன்வந்து சாட்சியமளிப்பவரே அவர்" என்று கூறினார்கள்.

## பாடம் : 10 சட்ட ஆய்வாளர்களிடையே கருத்து வேறுபாடு ஏற்படுதல்.

3543 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறைத்தூதர் தாவூத் (அலை) அவர்களது காலத்தில்) இரண்டு பெண்கள் வாழ்ந்தனர். அவர்களில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு புதல்வர்கள் இருந்தனர். (ஒரு நாள்) ஓநாய் ஒன்று வந்து அவ்விருவரின் புதல்வர்களில் ஒருவரைக் கொண்டுசென்று விட்டது. அவர்களில் ஒருத்தி தன் தோழியிடம் "உன் மகனைத்தான் ஓநாய் கொண்டுசென்று விட்டது" என்று கூற, அதற்கு மற்றவள் "உன் மகனைத்தான் ஓநாய் கொண்டு சென்றுவிட்டது" என்று சொன்னாள்.
ஆகவே, இருவரும் தாவூத் (அலை) அவர்களிடம் தீர்ப்புக் கேட்டுச் சென்றார்கள். தாவூத் (அலை) அவர்கள் அவ்விரு பெண்களில் மூத்தவளுக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தார்கள். (இந்தத் தீர்ப்பின்மீது கருத்து வேறுபாடு கொண்ட) அப்பெண்கள் இருவரும் தாவூத் (அலை) அவர்களின் புதல்வர் சுலைமான் (அலை) அவர்களிடம் (தீர்ப்புக் கேட்க) புறப்பட்டுச் சென்றனர். அவர்களிடம் அவ்விருவரும் விஷயத்தைத் தெரிவித்தனர்.
அப்போது சுலைமான் (அலை) அவர்கள், "என்னிடம் ஒரு கத்தியைக் கொண்டுவாருங்கள். நான் உங்களிருவருக்குமிடையே (மீதியுள்ள ஒரு மகனை ஆளுக்குப் பாதியாக) பிளந்து (பங்கிட்டு)விடுகிறேன்" என்று கூறினார்கள். உடனே இளையவள், (பதறிப்போய்) "அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரியட்டும். அவ்வாறு செய்துவிடாதீர்கள். இவன் அவளுடைய மகன் தான்" என்று கூறினாள். (இவ்வாறு தீர்ப்பளித்தபோதும் மூத்தவள் எந்தச் சலனமும் இல்லாமல் இருந்தாள்.) ஆகவே, சுலைமான் (அலை) அவர்கள் (தாயுள்ளத்தை அறிந்துகொண்டு) குழந்தை இளையவளுக்குரியது எனத் தீர்ப்பளித்தார்கள்.

இதை அறிவித்த அபூஹுரைரா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! அன்றுதான் நான் (கத்திக்கு) "சிக்கீன்'எனும் சொல்லை (நபியவர்கள் வாயிலாக)ச் செவியுற்றேன். (கத்தியைக் குறிக்க) "முத்யா' எனும் சொல்லையே நாங்கள் பயன்படுத்திவந்தோம்" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 11 வழக்காடும் இருவருக்கிடையே நீதிபதி சமரசம் செய்துவைப்பது விரும்பத் தக்கதாகும்.**

3544 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(பனூ இஸ்ராயீல் சமுதாயத்தில்) ஒரு மனிதர் மற்றொரு மனிதரிடமிருந்து அவருக்குச் சொந்தமான நிலம் ஒன்றை விலைக்கு வாங்கினார். நிலத்தை வாங்கிய அந்த மனிதர் தமது நிலத்தில் தங்கம் நிரம்பிய (களிமண்) ஜாடி ஒன்றைக் கண்டெடுத்தார். நிலத்தை வாங்கியவர் நிலத்தை விற்றவரிடம், "என்னிடமிருந்து உன் தங்கத்தை வாங்கிக்கொள். உன்னிடமிருந்து நான் நிலத்தைத்தான் விலைக்கு வாங்கினேன்; இந்தத் தங்கத்தை வாங்க வில்லை" என்று கூறினார்.

நிலத்தை விற்றவரோ, "நிலத்தையும் அதில் உள்ளவற்றையும் சேர்த்துத்தான் உனக்கு நான் விற்றேன். (ஆகவே, இந்தத் தங்கம் உனக்கு உரியதே)" என்று கூறினார்.

(இருவருக்குமிடையே தகராறு முற்றி) மற்றொரு மனிதரிடம் வழக்கைக் கொண்டு சென்றனர். அவர்கள் இருவரும் தீர்ப்புக் கேட்டுச் சென்ற அந்த மனிதர், "உங்கள் இருவருக்கும் பிள்ளைகள் இருக்கின்றனரா?" என்று கேட்டார். அவ்விருவரில் ஒருவர், "எனக்கு மகன் ஒருவன் இருக்கிறான்" என்று சொன்னார். மற்றொருவர், "எனக்கு மகள் ஒருத்தி இருக்கிறாள்" என்று சொன்னார். தீர்ப்புச் சொன்னவர், "அந்தப் பையனுக்கு அந்தப் பெண்ணை மணமுடித்து வையுங்கள். அவர்கள் இருவருக்காகவும் அதிலிருந்து செலவழியுங்கள். தர்மமும் செய்யுங்கள்" என்று தீர்ப்பளித்தார்.

# அத்தியாயம் : 31 - தவறவிட்ட பொருட்கள்

## பாடம் : 1 ஹாஜிகள் தவறவிட்ட பொருட்கள்.

3555 அப்துர் ரஹ்மான் பின் உஸ்மான் அத்தைமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஹாஜிகள் தவறவிட்ட பொருளை எடுக்க வேண்டாமெனத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3556 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கண்டெடுக்கப்பட்ட பொருளைப் பற்றி அறிவிப்புச் செய்யாமல் அதைத் தம்மிடம் வைத்துக் கொண்டிருக்கும் ஒருவர் வழிகேட்டிலேயே உள்ளார்.
இதை ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 2 உரிமையாளரின் அனுமதியின்றி கால்நடையில் பால் கறப்பதற்கு வந்துள்ள தடை.

3557 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவரது கால்நடையில் அவரது அனுமதியின்றி வேறெவரும் பால் கறக்கவேண்டாம். உங்களில் எவரும் அவரது சரக்குப் பெட்டகத்திற்கு ஒருவர் வந்து, அவரது உணவுக் கருவூலத்தை உடைத்து, அவரது உணவை எடுத்துச் சென்றுவிடுவதை விரும்புவாரா? கால் நடைகளின் மடிகள், கால்நடை உரிமையாளர்களுடைய உணவையே சேகரித்துப் பாதுகாத்து வைத்திருக்கின்றன. ஆகவே, எவரும் உரிமையாளரின் அனுமதியின்றி எவரது கால்நடையிலும் பால் கறக்க வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பத்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் லைஸ் பின் சஅத் (ரஹ்) அவர்களைத் தவிர மற்ற அனைவரது அறிவிப்புகளிலும் "எடுத்துச் சென்றுவிடுவதை' என்பதைக் குறிக்க "ஃபயுன்தஸல' எனும் சொல் (மூலத்தில்) இடம்பெற்றுள்ளது. லைஸ் பின் சஅத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஃபயுன்தகல தஆமுஹு' என்றே இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 3 விருந்து உள்ளிட்ட உபசாரம்.

3558 அபூஷுரைஹ் அல்அதவீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேசியபோது என் காதுகளால் கேட்டேன்; என் கண்களால் பார்த்தேன். அப்போது அவர்கள், "அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்டவர் தம் விருந்தாளிக்குத் தமது கொடையைக் கண்ணியமாக

வழங்கட்டும்" என்று கூறினார்கள். மக்கள், "அவருடைய கொடை என்ன, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர்கள், "(அவருடைய கொடை) ஒரு பகல் ஓர் இரவு (உபசரிப்பு) ஆகும். விருந்துபசாரம் மூன்று தினங்களாகும். அவற்றுக்குப் பின்னால் (அளிக்கும் உணவும் உபசரிப்பும்) அவருக்குத் தர்மமாக அமையும். மேலும்,அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும். அல்லது மௌனமாக இருக்கட்டும்" என்று கூறினார்கள்.

3559 அபூஷுரைஹ் அல்குஸாயீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "விருந்துபசாரம் மூன்று தினங்களாகும். ஒரு பகல் ஓர் இரவு (விருந்துபசாரம்) அவருடைய கொடையாகும். ஒரு முஸ்லிமான மனிதர், தம் சகோதரரிடம் அவரைப் பாவத்தில் தள்ளும் அளவுக்குத் தங்கியிருப்பதற்கு அனுமதி இல்லை" என்று கூறினார்கள்.
மக்கள், "அவரைப் பாவத்தில் தள்ளுதல் எப்படி, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "அவ(ர் தம் சகோதர)ரிடம் தங்கி இருப்பார். ஆனால், விருந்துபசாரம் செய்யுமளவுக்கு அவரிடம் எதுவுமே இருக்காது" என்று கூறினார்கள்.

3560 மேற்கண்ட ஹதீஸ் அபூஷுரைஹ் அல்குஸாயீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேசியபோது என் காதுகளால் கேட்டேன். என் கண்ணால் பார்த்தேன்;எனது உள்ளம் மனனமிட்டது" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. அதில், "உங்களில் ஒருவர் தம் சகோதரரைப் பாவத்தில் தள்ளும் அளவுக்குத் தங்கியிருப்பதற்கு அனுமதி இல்லை" என்று மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று இடம் பெற்றுள்ளது.

3561 உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (நபியவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் எங்களை ஒரு சமூகத்தாரிடம் அனுப்பிவைக்கிறீர்கள். நாங்கள் (அங்கு) சென்று அவர்களிடம் தங்குகிறோம். ஆனால், அவர்கள் எங்களை உபசரிக்க மறுக்கின்றனர். அவ்வாறெனில் (அது குறித்து) தாங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டோம். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் ஒரு சமூகத்தாரிடம் செல்ல, அவர்கள் விருந்தினர்களுக்கு வேண்டிய வசதிகளை உங்களுக்குச் செய்து தர ஏற்பாடு செய்தால், அதை ஏற்றுக்கொள்ளுங்கள். அவர்கள் அப்படிச் செய்யவில்லையென்றால்,அவர்களிடமிருந்து விருந்தினர்க(ளான உங்க)ளுக்குத் தேவை யான விருந்தினர் உரிமையை (நீங்களே) எடுத்துக்கொள்ளுங்கள்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 தேவைக்கு மேல் எஞ்சியுள்ள செல்வத்தால் பிறருக்கு உதவுவது விரும்பத் தக்கதாகும்.**

3562 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தோம். அப்போது ஒரு (ஏழை) மனிதர் தமக்குரிய (பலவீனமான) ஓர் ஒட்டகத்தில் வந்து, வலப்பக்கமும் இடப்பக்கமும் தமது பார்வையைச் செலுத்தி (பார்வையாலேயே உதவி கேட்டு)க்கொண்டிருந்தார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தம்மிடம் தேவைக்கு அதிகமான வாகனம் வைத்திருப்பவர் வாகனமில்லாதவருக்கு அதைக் கொடுத்து உதவட்டும்! தம்மிடம் தேவைக்கு அதிகமான உணவு வைத்திருப்பவர் உணவில்லாதவருக்கு அதைக் கொடுத்து உதவட்டும்" என்று கூறினார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் பல்வேறு செல்வங்களைப் பற்றி (தேவைக்கு அதிகமாக இருந்தால் இல்லாதவருக்கு அவற்றைக் கொடுக்கட்டும் என்று) கூறினார்கள். எந்த அளவுக்கென்றால், தேவைக்கு அதிகமாக எஞ்சியிருக்கும் பொருளில் எங்களில் எவருக்கும் உரிமையில்லையோ என்று நாங்கள் கருதினோம்.

**பாடம் : 5 பயணத்தில் உணவு குறைவாக இருந்தால், அதை மற்ற உணவுகளுடன் கலந்து பிறருக்கு உதவுவது விரும்பத்தக்கதாகும்.**

3563 சலமா பின் அம்ர் பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ("ஹவாஸின்' எனும்) ஒரு போருக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். அப்போது எங்களுக்கு உணவுத் தட்டுப்பாடு ஏற்பட்டது. எனவே, நாங்கள் எங்கள் வாகன ஒட்டகங்களில் சிலவற்றை அறுக்க முடிவு செய்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடமிருந்த (எஞ்சிய) உணவுப் பொருட்களைத் திரட்டும்படி உத்தரவிட்டார்கள்.

நாங்கள் அவ்வாறே செய்தோம். அதற்காக நாங்கள் தோல்விரிப்பு ஒன்றை விரித்துப் போட்டோம். அந்த விரிப்பின் மீது மக்கள் உணவுப் பொருட்களைச் சேகரித்தனர். அதில் எந்த அளவு உணவுப் பொருட்கள் சேர்ந்துள்ளன என்பதை மதிப்பிடுவதற்காக நான் எட்டிப் பார்த்தேன். ஓர் ஆடு படுத்திருக்கும் இடம் அளவுக்கு உணவுப் பொருட்கள் குவிந்திருப்பதாக நான் மதிப்பிட்டேன். அப்போது நாங்கள் ஆயிரத்து நானூறு பேர் இருந்தோம். நாங்கள் அனைவரும் வயிறு நிரம்பும் அளவுக்கு அதிலிருந்து உண்டோம். பிறகு எங்கள் தோல் பைகளிலும் நிரப்பிக்கொண்டோம்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "அங்கத் தூய்மை (உளூ) செய்வதற்குத் தண்ணீர் உள்ளதா?" என்று கேட்டார்கள். அப்போது ஒரு மனிதர் தமது நீர்க் குவளையைக் கொண்டுவந்தார். அதில் சிறிதளவு தண்ணீர் இருந்தது. அவர் அதை ஒரு பாத்திரத்தில் ஊற்றினார். அந்தத் தண்ணீரில் நாங்கள் அனைவரும் அங்கத் தூய்மை (உளூ) செய்தோம். நாங்கள் ஆயிரத்து நானூறு பேரும் தாராளமாக ஊற்றிக் கழுவினோம்.

அதன் பிறகு எட்டுப் பேர் வந்து "அங்கத் தூய்மை செய்வதற்குத் தண்ணீர் உள்ளதா?" என்று கேட்டனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(அங்கத் தூய்மை செய்வதற்குரிய) தண்ணீர் தீர்ந்துவிட்டது" என்று கூறிவிட்டார்கள்.

# அத்தியாயம் : 32 - அறப்போரும் வழிகாட்டு நெறிகளும்

பாடம் : 1 இஸ்லாமிய அழைப்புச் செய்தி எட்டிய பிறகும் அதை ஏற்க மறு(த்து தாக்குதல் தொடுக்க ஆயத்தமாக இரு)ப்போர்மீது முன்னறிவிப்பின்றி தாக்குதல் தொடுப்பது செல்லும்.

3564 இப்னு அவ்ன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(எதிரிகள்மீது) தாக்குதல் தொடுப்பதற்கு முன் அவர்களுக்கு இஸ்லாமிய அழைப்பு விடுப்பது பற்றிக் கேட்டு நான் நா:பிஉ (ரஹ்) அவர்களுக்குக் கடிதம் எழுதினேன்; அவர்கள் எனக்கு பதில் எழுதினார்கள்.
அதில் அவர்கள், "இஸ்லாத்தின் ஆரம்பத்தில்தான் இவ்வாறு (அழைப்பு விடுக்கும் வழக்கம்) இருந்தது. (பிறகு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பனுல் முஸ்தலிக்' குலத்தார் அசட்டையாக (எச்சரிக்கையின்றி) இருந்தபோது அவர்கள்மீது (திடீர்) தாக்குதல் நடத்தினார்கள். அப்போது அவர்களின் கால்நடைகள் நீர்நிலை ஒன்றில் தண்ணீர் புகட்டப்பட்டுக் கொண்டிருந்தன. அவர்களில் போர் வீரர்களைக் கொன்றார்கள்; (பெண்கள், சிறார்கள் ஆகியோரைக்) கைதிகளாகப் பிடித்தார்கள்.
அன்றுதான் ஜுவைரியா (ரலி) அவர்களை, அல்லது பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்களை உரிமையாக்கிக் கொண்டார்கள்.

இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் எனக்கு அறிவித்தார்கள். அவர்களும் அப்போது (நபியவர்களின்) அப்படையில் இருந்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த சுலைம் பின் அக்ளர் (ரஹ்) அவர்கள் "நபி (ஸல்) அவர்கள் அன்றுதான் ஜுவைரியாவை உரிமையாக்கிக்கொண்டார்கள்" என்று சொன்னதாகவே நான் எண்ணுகிறேன். ஆனால், "பின்துல் ஹாரிஸை' என்று அவர் சொன்னது உறுதி.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அவ்ன் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஜுவைரியா பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்களை உரிமையாக்கிக்கொண்டார்கள்" என்று ஐயப்பாடின்றி இடம்பெற்றுள்ளது.

பாடம் : 2 தலைவர், படைப்பிரிவுகளுக்குத் தளபதிகளை நியமிப்பதும், போர் நெறிகள் குறித்து அவர்களுக்கு அவர் அறிவுறுத்துவதும்.

3565 சு:ப்யான் அஸ்ஸவ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(அடுத்து வரும் ஹதீஸை) எனக்கு அறிவித்த அல்கமா பின் மர்ஸத் (ரஹ்) அவர்கள், இதை எங்களுக்கு அறிவித்து,நன்கு எழுதி வைத்துக்கொள்ளுமாறு கூறினார்கள்.
இது இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3566 புரைதா பின் அல்ஹுசீப் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு படைக்கோ அல்லது படைப் பிரிவுக்கோ தளபதி ஒருவரை நியமித்தால்,தனியாக அவரை அழைத்து இறைவனை அஞ்சுமாறும் அவருடன் இருக்கும் முஸ்லிம்களின் நலனைப் பேணுமாறும் அறிவுறுத்துவார்கள்.
பிறகு, பின்வருமாறு அறிவுரை கூறுவார்கள்: இறைவனின் பெயரால், இறைவனின் பாதையில் போரிடுங்கள். இறைவனை மறு(த்து உண்மைக்கு எதிராக நட)ப்பவர்களுடன் போராடுங்கள்; அறப்போர் புரியுங்கள்; போர்ச் செல்வங்களில் கையாடல் செய்யாதீர்கள்; ஒப்பந்தங்களை முறிக்காதீர்கள்; அங்ககீனம் செய்யாதீர்கள்; குழந்தைகளைக் கொல்லாதீர்கள்; உம்முடைய எதிரிகளான இணைவைப்பாளர்களை நீர் சந்தித்தால் மூன்று அம்சங்களின் பக்கம் அவர்களை அழைப்பீராக.
அவற்றில் எந்த ஒன்றை ஏற்றுக்கொள்ள அவர்கள் முன்வந்தாலும் அவர்களிடமிருந்து அதை ஏற்பீராக; நடவடிக்கையை நிறுத்தி விடுவீராக. பிறகு அவர்களுக்கு இஸ்லாத்தின் பக்கம் அழைப்பு விடுப்பீராக! அதை அவர்கள் ஏற்றுக்கொண்டால், அவர்களிடமிருந்து அதை ஏற்று, அவர்கள்மீது நடவடிக்கையை நிறுத்திவிடுவீராக.
பிறகு அவர்களை (அவர்கள் வசிக்கும்) அந்த ஊரிலிருந்து முஹாஜிர்கள் (நாடு துறந்தோர்) வசிக்கும் பகுதிக்கு வந்து குடியேறுமாறு அழைப்பீராக. மேலும், அவர்களிடம் "இவ்வாறு நீங்கள் செய்தால் முஹாஜிர்களுக்குக் கிடைக்கும் சாதகங்களும் முஹாஜிர்களுக்கு ஏற்படும் பாதகங்களும் உங்களுக்கும் உண்டு" என்று தெரிவித்துவிடுவீராக.

அங்கிருந்து இடம்பெயர அவர்கள் மறுத்தால் அவர்களிடம் கூறிவிடுங்கள்: முஸ்லிம்களில் நாட்டுப்புறத்தாரைப் போன்றுதான் நீங்களும் இருக்க வேண்டும்; மற்ற இறைநம்பிக்கையாளர்களுக்குப் பொருந்தும் அனைத்து இறைச்சட்டங்களும் உங்களுக்கும் பொருந்தும்.போர்ச் செல்வங்கள் (ஃகனீமத்) மற்றும் போரிடாமல் கிடைத்த (ஃபய்உ) சொத்துகள் எதுவும் உங்களுக்குக் கிடைக்காது; முஸ்லிம்களுடன் இணைந்து அறப்போர்களில் ஈடுபட்டால் தவிர (அப்போது மட்டுமே அவர்களுக்கு அச்செல்வங்கள் கிடைக்கும் என்று கூறிவிடுங்கள்). அதற்கும் அவர்கள் மறுத்தால் அவர்களிடம் "ஜிஸ்யா' (இராணுவக்) காப்புவரியைக் கோருக.
அதையேற்று அவர்கள் உமக்கு இணங்கினால் அவர்களிடமிருந்து அதை ஒப்புக்கொண்டு அவர்கள்மீது நடவடிக்கை எடுப்பதை நிறுத்திவிடுவீராக. அதற்கும் அவர்கள் மறுத்தால், அல்லாஹ்விடம் உதவி கோரிவிட்டு, அவர்கள்மீது போர் தொடுப்பீராக. ஒரு கோட்டையை நீர் முற்று கையிடும்போது, அல்லாஹ்வின் பொறுப்பையும் அவனுடைய தூதரின் பொறுப்பையும் நீங்கள் தர வேண்டுமென அவர்கள் விரும்பினால், அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் பொறுப்பை அவர்களுக்குத் தந்துவிடாதீர்.

மாறாக, அவர்களுக்கு உமது பொறுப்பையும் உம்முடைய தோழர்களின் பொறுப்பையுமே தருவீராக. ஏனெனில்,நீங்கள் உங்களது பொறுப்பையும் உங்களுடைய தோழர்களின் பொறுப்பையும் முறித்துக் கொள்வதானது,அல்லாஹ்வின் பொறுப்பையும் அவனுடைய தூதருடைய பொறுப்பையும் முறித்துக்கொள்வதைவிட எளிதானதாகும்.

நீங்கள் ஒரு கோட்டைவாசிகளை முற்றுகையிடும்போது, அல்லாஹ்வின் தீர்ப்பின் மீது இறங்கிவருவதற்கு அவர்கள் விரும்பினால், அல்லாஹ்வின் தீர்ப்பிற்கு அவர்கள் இறங்கிவர உடனே அவர்களுக்கு அனுமதியளிக்காதீர். மாறாக,உம்முடைய தீர்ப்புக்கு இணங்கிவர அவர்களுக்கு அனுமதியளிப்பீராக. ஏனெனில், அவர்கள் விஷயத்தில் அல்லாஹ்வின் தீர்ப்பைச் சரியாக நீர் நிறை வேற்றுவீரா என்பது உமக்குத் தெரியாது.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துர் ரஹ்மான் பின் மஹ்தீ (ரஹ்) அவர்கள் (இதை அறிவித்துவிட்டு), "இவ்வாறுதான் சுஃப்யான் (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை அறிவித்தார்கள். அல்லது இதைப்போன்று (வேறு வார்த்தைகளில்) அறிவித்தார்கள்" என்று கூறினார்கள்.

3567 மேற்கண்ட ஹதீஸ் புரைதா பின் அல்ஹுசீப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒருவரது தலைமையில் படையை அனுப்பி னால், அல்லது படைப்பிரிவை அனுப்பினால் அவரை அழைத்து அறிவுரை கூறுவார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3568 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 3 மக்களிடம் எளிதாக நடந்துகொள்ள வேண்டும்; வெறுப்பேற்றக் கூடாது எனும் கட்டளை.

3569 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களில் எவரையேனும் தமது (அரசியல் அல்லது மார்க்கப்)பணிக்காக அனுப்பும்போது, "(மக்களுக்கு) நற்செய்திகளை(யே அதிகமாக)க் கூறுங்கள்; (அவர்களுக்கு) வெறுப்பேற்றிவிடாதீர்கள்; (அவர்களிடம்) எளிதாக நடந்து கொள்ளுங்கள்; (அவர்களைச்) சிரமப்படுத்திவிடாதீர்கள்"என்று கூறுவார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3570 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் என்னையும் முஆத் பின் ஜபல் (ரலி) அவர்களையும் யமன் நாட்டுக்கு அனுப்பிவைத்தார்கள். அப்போது, "(மக்களிடம்) எளிதாக நடந்துகொள்ளுங்கள்; (மக்களைச்) சிரமப்படுத்திவிடாதீர்கள்; நற்செய்தி(களை அதிகம்) கூறுங்கள்; (எச்சரிக்கை செய்யும் போதுகூட) வெறுப்பேற்றிவிடாதீர்கள். நீங்கள் இருவரும் (தீர்ப்பளிக்கும்போது) இணக்கமாக நடந்துகொள்ளுங்கள். முரண்பட்டுக்கொள்ளாதீர்கள்" என்று (அறிவுரை) கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் ஷைபா பின் அபீஉனைசா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நீங்கள் இருவரும் (தீர்ப்பளிக்கும்போது) இணக்கமாக நடந்துகொள்ளுங்கள்; முரண்பட்டுக்கொள்ளாதீர்கள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

3571 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மக்களிடம்) எளிதாக நடந்துகொள்ளுங்கள்; (அவர்களைச்) சிரமப்படுத்திவிடாதீர்கள்; (நற்செய்திகளைக் கூறி) அமைதிப்படுத்துங்கள்; (எச்சரிக்கும்போதுகூட) வெறுப்பேற்றி விடாதீர்கள்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 4 மோசடி செய்வது தடை செய்யப்பட்டதாகும்.

3572 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் மறுமை நாளில் (விசாரணைக்காக மக்களில்) முன்னோர் பின்னோர் அனைவரையும் ஒன்றுதிரட்டும்போது, (உலகில்) மோசடி செய்த ஒவ்வொருவனுக்கும் (அவன் செய்த மோசடிக்கு அடையாளமாகக்) கொடி ஒன்று ஏற்றப்படும். பிறகு "இது இன்ன மனிதருடைய மகன் இன்ன மனிதரின் மோசடி(யைக் குறிக்கும் கொடி)"என்று கூறப்படும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3573 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மோசடி செய்பவனுக்கு மறுமை நாளில் (அவன் செய்த மோசடிக்கு அடையாளமாகக்) கொடி ஒன்று நடப்படும். அப்போது "அறிந்துகொள்ளுங்கள்: இது இன்ன மனிதரின் மகன் இன்ன மனிதரின் மோசடி (யைக் குறிக்கும் கொடி)"என்று கூறப்படும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3574 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மோசடி செய்பவன் ஒவ்வொருவனுக்கும் மறுமை நாளில் ஒரு (அடையாளக்) கொடி இருக்கும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3575 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மோசடி செய்பவன் ஒவ்வொருவனுக்கும் மறுமை நாளில் (அடையாளக்) கொடி ஒன்று இருக்கும். "இது இன்ன மனிதனின் மோசடி(யைக் குறிக்கும் கொடி)" என்று கூறப்படும்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் "இது இன்ன மனிதனின் மோசடி(யைக் குறிக்கும் கொடி) என்று கூறப்படும்" எனும் குறிப்பு இல்லை.

3576 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மோசடிக்காரன் ஒவ்வொருவனுக்கும் மறுமை நாளில் (அடையாளக்) கொடி ஒன்று இருக்கும். அதன் மூலம் அவன் அடையாளம் காணப்படுவான். "இது இன்ன மனிதனின் மோசடி(யைக் குறிக்கும் கொடி)" என்று கூறப்படும்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3577 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மோசடி செய்பவன் ஒவ்வொருவனுக்கும் மறுமை நாளில் (அடையாளக்) கொடி ஒன்று இருக்கும். அதன் மூலம் அவன் அடையாளம் காணப்படுவான்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3578 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மோசடி செய்பவன் ஒவ்வொருவனுடைய பின்புறத்திலும் மறுமை நாளில் (அடையாளக்) கொடி ஒன்று இருக்கும்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3579 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மோசடி செய்பவன் ஒவ்வொருவனுக்கும் மறுமை நாளில் (அடையாளக்) கொடி ஒன்று இருக்கும். அது அவனது மோசடியின் அளவுக்கு (உயரமாக) ஏற்றப்படும். அறிந்து கொள்ளுங்கள்: பொதுமக்களுக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்று, மோசடி செய்தவனைவிட மாபெரும் மோசடிக்காரன் வேறெவருமில்லை.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 5 போரின்போது சூழ்ச்சி செய்வது அனுமதிக்கப்பட்டதே.

3580 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
போர் என்பது சூழ்ச்சியாகும்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3581 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
போர் என்பது சூழ்ச்சியாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 6 எதிரியை (போர்க் களத்தில்) சந்திக்க ஆசைப்படுவது வெறுக்கத் தக்கதாகும் என்பதும், அவ்வாறு சந்திக்க நேர்ந்தால் (நிலை குலைந்துவிடாமல்) பொறுமையாக இருக்குமாறு வந்துள்ள கட்டளையும்.**

3582 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எதிரிகளை (போர்க்களத்தில்) சந்திக்க ஆசைப்படாதீர்கள். அவர்களை நீங்கள் (போர்க் களத்தில்) சந்திக்க நேர்ந்தால், (போரின் துன்பங்களைக் கண்டு நிலை குலைந்துவிடாமல்) பொறுமையாக இருங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3583 அபுந்நள்ர் சாலிம் பின் உமய்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் முன்னாள் உரிமையாளர்) உமர் பின் உபைதில்லாஹ் (ரஹ்) அவர்களுக்கு, அவர்கள் ஹரூரிய்யாக்களை (காரிஜிய்யாக்கள்) நோக்கிப் போருக்குச் சென்றபோது அஸ்லம் குலத்தைச் சேர்ந்த நபித்தோழரான அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கடிதம் எழுதினார்கள். அதில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எதிரிகளைச் சந்தித்த நாட்களில் ஒன்றில் (நண்பகல் நேரம்வரை) காத்திருந்தார்கள். சூரியன் (உச்சியிலிருந்து) சாய்ந்ததும் மக்களிடையே நின்று, "மக்களே! எதிரிகளை(ப் போர்க்களத்தில்) சந்திக்க ஆசைப்படாதீர்கள். அல்லாஹ்விடம் (போர் அழிவுகளிலிருந்து) பாதுகாப்புக் கோருங்கள். அவ்வாறு எதிரிகளைச் சந்திக்க நேர்ந்துவிட்டால், (போரின் துன்பங்களைக் கண்டு துவண்டுவிடாமல்) பொறுமையாக இருங்கள். அறிந்துகொள்ளுங்கள்: (அநீதிக்கெதிராக உயர்த்தப்படும்) வாட்களின் நிழலில்தான் சொர்க்கம் உள்ளது" என்று கூறினார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்றுகொண்டு, "இறைவா! வேதத்தை அருள்பவனே! மேகத்தை நகர்த்துபவனே! கூட்டுப் படையினரைத் தோற்கடித்தவனே! இவர்களையும் தோற்கடிப்பாயாக. இவர்களுக்கெதிராக எங்களுக்கு உதவி செய்வாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

**பாடம் : 7 எதிரிகளைச் சந்திக்கும்போது இறையுதவி வேண்டிப் பிரார்த்திப்பது விரும்பத் தக்கதாகும்.**

3584 அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அகழ்ப் போரின்போது) கூட்டுப் படையினருக் கெதிராகப் பிரார்த்தித்தார்கள். அப்போது, "இறைவா! வேதத்தை அருள்பவனே! விரைவாகக் கணக்கெடுப்பவனே! இக்கூட்டுப் படையினரைத் தோற்கடிப்பாயாக. இறைவா! இவர்களைத் தோல்வியுறச் செய்து, நடுக்கத்திற்குள்ளாக்குவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

3585 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதிலும் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி) பிரார்த்தித்தார்கள்" என்றே ஹதீஸ் ஆரம்பமாகி, அதிலுள்ள மற்ற விவரங்கள் இடம் பெறுகின்றன.
"(இக்கூட்டுப் படையினரைத் தோற்கடிப்பாயாக எனும் இடத்தில்) கூட்டுப்படையினரைத் தோற்கடிப்பவனே!" என்று இடம் பெற்றுள்ளது. இறுதியில் இடம்பெற்றுள்ள "இறைவா!' எனும் சொல் இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "மேகத்தை நகர்த்துபவனே!' என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3586 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உஹுதுப் போர் நாளில் "இறைவா! நீ (இந்த முஸ்லிம் படையை அழிக்க) நாடினால் (இனி) உன்னை மட்டுமே வழிபடுவோர் யாரும் இப்புவியில் இருக்கமாட்டார்கள்" என்று பிரார்த்தித்துக்கொண்டிருந்தார்கள்.

## பாடம் : 8 போரில் பெண்கள் மற்றும் குழந்தைகளைக் கொல்வது தடை செய்யப்பட்டுள்ளது.

3587 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட அறப்போர்களில் ஒன்றில் பெண்ணொருத்தி கொல்லப்பட்ட நிலையில் கண்டெடுக்கப்பட்டாள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெண்களையும் குழந்தைகளையும் கொல்வதைக் கண்டித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3588 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட அறப்போர்களில் ஒன்றில் பெண்ணொருத்தி கொல்லப்பட்ட நிலையில் கண்டெடுக்கப்பட்டாள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெண்களையும் குழந்தைகளையும் கொல்வதற்குத் தடைவிதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 9 (போர்ச் சூழலில் எதிரிகளின்) பெண்களையும் குழந்தைகளையும் இரவு நேரங்களில் தற்செயலாகக் கொன்றுவிட்டால் குற்றமாகாது.

3589 ஸஅப் பின் ஜஸ்ஸாமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் "இணைவைப் போ(ரான எதிரிநாட்டின)ரின் பெண்களும் குழந்தைகளும் (போரில் சிக்கிச்) சேதமடையும் (வாய்ப்பு உண்டு என்னும்) பட்சத்தில்

அவர்கள்மீது இரவு நேரத்தில் தாக்குதல் நடத்தலாமா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள் "அவர்களும் (எதிரிகளான) அவர்களைச் சேர்ந்தவர்களே" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3590 ஸஅப் பின் ஜஸ்ஸாமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் (எதிரிகளான) இணைவைப்பாளர்களின் பெண்களையும் குழந்தைகளையும் இரவு நேரத்தில் தாக்க வேண்டிய நிலை (சில சந்தர்ப்பங்களில்) ஏற்பட்டுவிடுகிறதே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அவர்களும் எதிரிகளைச் சேர்ந்தவர்கள்தாம்" என்று விடையளித்தார்கள்.

3591 ஸஅப் பின் ஜஸ்ஸாமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம், "குதிரைப் படையினர் இரவு நேரத்தில் திடீர்த் தாக்குதல் நடத்தும்போது (எதிரிகளான) இணைவைப்பாளர்களின் குழந்தைகளும் பாதிக்கப்பட்டுவிடுகிறார்களே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் "அக்குழந்தைகளும் அவர்களின் தந்தையரைச் சேர்ந்தவர்களே" என்று விடையளித்தார்கள்.

**பாடம் : 10 (போர் நடவடிக்கையாக எதிரிகளான) இறைமறுப்பாளர்களின் மரங்களை வெட்டுவதும் எரிப்பதும் அனுமதிக்கப்பட்டதாகும்.**

3592 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பயங்கரவாதிகளான) பனூ நளீர் குலத்தாரின் பேரீச்ச மரங்களை (போர்க்கால நடவடிக்கையாக) எரித்தார்கள்; இன்னும் (சிலவற்றை) வெட்டிவிட்டார்கள். அது "புவைரா' எனும் இடமாகும்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னு குதைபா (ரஹ்) மற்றும் இப்னு ரும்ஹ் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "எனவேதான்,வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் "நீங்கள் (அவர்களுடைய) பேரீச்ச மரங்களை வெட்டியதோ, அல்லது அவற்றின் அடிமரங்கள்மீது அவற்றை நிற்கும்படி விட்டுவிட்டதோ எல்லாமே அல்லாஹ்வின் அனுமதியுடனேயே நடந்தன. தீயோரை அவன் இழிவுபடுத்தவே (இவ்வாறு அனுமதித்தான்)' (59:5) எனும் வசனத்தை அருளினான்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3593 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பயங்கரவாதச் செயல்களில் ஈடுபட்ட) பனூ நளீர் குலத்தாரின் பேரீச்ச மரங்களை வெட்டினார்கள்; (சில மரங்களை) எரித்தார்கள். இந்தச் சம்பவம் குறித்தே (கவிஞர்) ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி) அவர்கள் பின்வருமாறு பாடினார்கள்:
புவைராவில்
கொழுந்துவிட்டெரிந்த நெருப்பு
பனூ லுஅய் குலத்தாரின்

(கையாலாகாத) தலைவர்களுக்கு
எளிதாகிவிட்டது.
இந்தச் சம்பவம் தொடர்பாகவே "நீங்கள் (அவர்களுடைய) பேரீச்ச மரங்களை வெட்டியதோ, அல்லது அவற்றின் அடிமரங்கள்மீது அவற்றை நிற்கும்படி விட்டுவிட்டதோ எல்லாமே அல்லாஹ்வின் அனுமதியுடனேயே நடந்தன" (59:5) எனும் இறைவசனம் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3594 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பயங்கரவாதச் செயல்களில் ஈடுபட்ட) பனூ நளீர் குலத்தாரின் பேரீச்ச மரங்களை எரித்தார்கள்.

## பாடம் : 11 போர்ச் செல்வங்கள் இந்தச் சமுதாயத்திற்கு மட்டுமே அனுமதிக்கப்பட்டவை ஆகும்.

3595 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் நமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைத்தூதர்களில் ஒருவர் (யூஷஉ பின் நூன் (அலை) அவர்கள்) ஓர் அறப்போருக்குச் சென்றார். அப்போது அவர் தம் சமுதாயத்தாரிடம் "ஒரு பெண்ணிடம் இல்லற உரிமையைப் பெற்ற ஒருவர், அவளுடன் தாம்பத்திய உறவைத் தொடங்க விரும்பி, இன்னும் தாம்பத்திய உறவைத் தொடங்காமலிருப்பின் என்னைப் பின்பற்றி (போருக்கு) வர வேண்டாம். (அவ்வாறே,) வீடு கட்டி முடித்து, அதன் மேற்கூரையை (இன்னும்) உயர்த்தாமலிருப்பவரும் என்னைப் பின்பற்றி (போருக்கு) வர வேண்டாம். ஆட்டையோ, சினை ஒட்டகங்களையோ வாங்கிவிட்டு, அவை குட்டிகள் ஈனுவதை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவரும் என்னைப் பின்பற்றி (போருக்கு) வர வேண்டாம்" என்று கூறிவிட்டுப் போருக்குப் புறப்பட்டார்.
ஓர் ஊரை (ஜெரிக்கோ நகரை வெள்ளிக்கிழமை) அஸ்ர் தொழுகையின் நேரத்தில் அல்லது சற்றேறக்குறைய அந்த வேளையில் அவர் நெருங்கினார். (சற்று நேரத்தில் சூரியன் மறையத் தொடங்க, சனிக்கிழமை போரிடுவது அவர்களுக்குத் தடை செய்யப்பட்டிருந்த காரணத்தால் தோற்றுப்போக நேரிடுமே என்றஞ்சி) சூரியனை நோக்கி, "நீ,இறைவனின் கட்டளைப்படி இயங்குகின்றாய். நானும் இறைக்கட்டளைப்படி நடக்க வேண்டியவன் ஆவேன்" என்று கூறிவிட்டு, "இறைவா! சூரியனை (உடனே மறையவிடாமல்) தடுத்துவிடு" என்று பிரார்த்தித்தார். எனவே, அவருக்கு அல்லாஹ் வெற்றியை வழங்கும்வரை சூரியன் (மறையாமல்) தடுத்து நிறுத்தப்பட்டது.
(வெற்றிபெற்ற) பின்னர் அம்மக்கள் போரில் கிடைத்த செல்வங்களை ஒன்று சேர்த்தனர். அப்போது அவற்றை (எரித்துச் சாம்பலாக்கி)ப் புசிப்பதற்கு வானிலிருந்து நெருப்பு வந்தது. (ஆனால்) அவற்றைப் புசிக்க அது மறுத்துவிட்டது. அந்த இறைத்தூதர் "உங்களில் கையாடல் நடந்துள்ளது. ஆகவே, ஒவ்வொரு குலத்திலிருந்தும் ஒரு மனிதர் என்னிடம் சத்தியப் பிரமாணம் அளிக்கட்டும்" என்று கூறினார்.

அவ்வாறே அவர்களும் அவரிடம் சத்தியப் பிரமாணம் அளித்தனர். அப்போது, ஒரு மனிதரின் கை, இறைத்தூதரின் கையோடு ஒட்டிக்கொண்டது. அப்போது இறைத்தூதர், "உங்களிடையே தான் கையாடல் செய்யப்பட்ட பொருள் உள்ளது. ஆகவே, உன்னுடைய குலத்தார் என்னிடம் சத்தியப் பிரமாணம் அளிக்கட்டும்" என்று கூறினார்.

அவ்வாறே, அவர்கள் சத்தியப் பிரமாணம் அளிக்க, இரண்டு மனிதர்களின் கை அல்லது மூவருடைய கை இறைத்தூதருடைய கையுடன் ஒட்டிக்கொண்டது. அப்போது அவர், "உங்களிடையேதான் கையாடல் செய்யப்பட்ட அந்தப் பொருள் உள்ளது. நீங்கள்தாம் அதைக் கையாடல் செய்துள்ளீர்கள்" என்று கூறினார்.

ஆகவே, அக்குலத்தார் பசுமாட்டின் தலை அளவுக்குத் தங்கத்தைக் கொண்டு வந்து, மண் தரையில் இருந்த பொருட்களுடன் வைத்தனர். உடனே (வானிலிருந்து) நெருப்பு வந்து அதைப் புசித்தது. (முற்காலங்களில் போர்ச் செல்வங்கள் இப்படித்தான் செய்யப்பட்டன.)

நமக்கு முன்னால் யாருக்கும் போர்ச்செல்வங்கள் (எடுத்துப் பயன்படுத்திக்கொள்ள) அனுமதிக்கப்படவில்லை. (பின்னர் நமக்கு அப்பொருட்களைப் பயன்படுத்த அல்லாஹ் அனுமதியளித்தான்). வளமும் உயர்வும் உள்ள அல்லாஹ் நமது பலவீனத்தையும் இயலாமையையும் கண்டு, அவற்றை நமக்கு அனுமதிக்கப்பட்டவையாக ஆக்கினான்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 12 எதிரிகளிடமிருந்து கைப்பற்றப்படும் செல்வங்கள்.

3596 முஸ்அப் பின் சஅத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

என் தந்தை (சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள்), "குமுஸ்' (ஐந்திலொரு பங்கு) நிதியிலிருந்து ஒரு வாளை எடுத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் சென்று, "இதை எனக்கு அன்பளிப்பாகத் தாருங்கள்" என்று கேட்டார்கள்.

அப்போதுதான் வல்லமையும் மாண்பும்மிக்க அல்லாஹ், "(நபியே!) போர்க்களத்தில் எதிரிகளிடமிருந்து கைப்பற்றப்படும் செல்வங்கள் குறித்து அவர்கள் உம்மிடம் வினவுகின்றனர். அந்தச் செல்வங்கள் (பற்றி முடிவு செய்யும் அதிகாரம்) அல்லாஹ்வுக்கும் இத் தூதருக்கும் உரியது' என்று கூறுவீராக!" (8:1) எனும் வசனத்தை அருளினான்.

3597 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

என் விஷயத்தில் நான்கு இறைவசனங்கள் அருளப்பெற்றன. நான் (குமுஸ் நிதியிலிருந்து) வாள் ஒன்றை எடுத்துக்கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! இதை எனக்கு அன்பளிப்பாகத் தாருங்கள்"என்று கேட்டேன்.

நபியவர்கள் "அதை வைத்துவிடு" என்றார்கள். பிறகு நான் (அதை அன்பளிப்பாகத் தருமாறு கேட்டு) எழுந்து நின்றேன். நபியவர்கள் "எடுத்த இடத்திலேயே அதை வைத்துவிடு" என்று சொன்னார்கள்.

பிறகு மீண்டும் எழுந்து நின்று, "அல்லாஹ்வின் தூதரே! அதை எனக்கு அன்பளிப்பாகத் தாருங்கள்" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், "(இல்லை) அதை வைத்துவிடு" என்றார்கள். பிறகும் நான் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! இதை எனக்கு அன்பளிப்பாகத்

தந்துவிடுங்கள். போதுமென்ற மனமில்லாத ஒருவனாக நான் கருதப்படுகிறேனா?" என்று கூறினேன்.
அப்போதும் நபி (ஸல்) அவர்கள், "எடுத்த இடத்திலேயே அதை வைத்துவிடு" என்று கூறினார்கள். அப்போதுதான் "(நபியே!) போர்க் களத்தில் எதிரிகளிடமிருந்து கைப்பற்றப்படும் செல்வங்களைப் பற்றி உம்மிடம் அவர்கள் கேட்கின்றனர். போர்க்களத்தில் எதிரிகளிடம் கைப்பற்றப்படும் செல்வங்கள் (பற்றி முடிவு செய்யும் அதிகாரம்) அல்லாஹ்வுக்கும் இத்தூதருக்கும் உரியது எனறு கூறுவீராக!" (8:1) எனும் இந்த வசனம் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3598 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு படைப் பிரிவை நஜ்துப் பகுதிக்கு அனுப்பிவைத்தார்கள். அதில் நானும் இடம்பெற்றிருந்தேன். நாங்கள் நிறைய ஒட்டகங்களைப் போர்ச்செல்வமாகப் பெற்றோம்.
எங்கள் பங்குகள், (ஒவ்வொருவருக்கும்) பன்னிரண்டு ஒட்டகங்கள் அல்லது பதினோரு ஒட்டகங்களாக இருந்தன. எங்கள் ஒவ்வொரு வருக்கும் ஒவ்வோர் ஒட்டகம் அதிகப்படியாகவும் (நஃபல்) தரப்பட்டது.

3599 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு படைப்பிரிவை நஜ்துப் பகுதிக்கு அனுப்பி வைத்தார்கள். அதில் நானும் இடம் பெற்றிருந்தேன். (போருக்குப் பின் எதிரிகளிடம் கைப்பற்றப்பட்டச் செல்வங்களில்) எங்கள் பங்குகள்,ஒவ்வொருவருக்கும் பன்னிரண்டு ஒட்டகங்கள்வரை எட்டின.
இது போக (ஒவ்வொருவருக்கும்) ஓர் ஒட்டகம் அதிகப்படியாகவும் (நஃபல்) தரப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தப் பங்கீட்டை மாற்றவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3600 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நஜ்துப் பகுதிக்கு படைப் பிரிவு ஒன்றை அனுப்பி வைத்தார்கள். அந்தப் படையில் நானும் புறப்பட்டுச் சென்றேன். (அப்போருக்குப் பின்) நிறைய ஒட்டகங்களையும் ஆடுகளையும் நாங்கள் (போர்ச் செல்வமாகப்) பெற்றோம்.
எங்கள் பங்குகள், ஒவ்வொருவருக்கும் பன்னிரண்டு ஒட்டகங்களாக இருந்தன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் ஒட்டகத்தை அதிகப்படியாகவும் (நஃபல்) தந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அவ்ன் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் நாஃபிஉ (ரஹ்) அவர்களிடம் போர்ச் செல்வங்களைப் பற்றிக் கேட்டு கடிதம் எழுதினேன். அப்போது நாஃபிஉ (ரஹ்)

அவர்கள் "இப்னு உமர் (ரலி) அவர்கள் ஒரு படைப்பிரிவில் இருந்தார்கள்...' என்று தொடங்கி மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறு பதில் எழுதினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

3601 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் போர்ச் செல்வத்தில் எங்கள் பங்குகளைத் தந்ததோடு "குமுஸ்' நிதியிலிருந்து அதிகப்படியாகவும் (நஃபல்) தந்தார்கள். அந்த வகையில் ஒரு வயது பூர்த்தியான பெரிய ஒட்டகம் ஒன்று எனக்குக் கிடைத்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3602 மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு படைப் பிரிவுக்குப் போர்ச் செல்வத்தில் (பங்கிட்டுக் கொடுத்ததுபோக) அதிகமாகவும் (நஃபல்) கொடுத்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3603 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அறப்போருக்காகத் தாம் அனுப்பிவைக்கும் படைப் பிரிவினரில் சிலருக்கு மட்டும் பொதுப் படையினருடன் சேர்ந்து பெறுகின்ற பங்குக்கு மேல் தனிப்பட்ட முறையில் (குமுஸ் நிதியிலிருந்து) அதிகப்படியாகவும் (நஃபல்) கொடுத்து வந்தார்கள்.

## பாடம் : 13 போரில் கொல்லப்பட்ட எதிரியின் உடைமைகள் அவனை வீழ்த்தியவருக்கே உரியவை ஆகும்.

3604 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹுனைன் போர் நடந்த ஆண்டில் (அப்போருக்காக) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். (எதிரிகளைப் போர்க்களத்தில்) நாங்கள் சந்தித்தபோது, (ஆரம்பத்தில்) முஸ்லிம்களுக்குத் தோல்வி பயம் ஏற்பட்டது.
அப்போது இணைவைப்பாளர்களில் ஒருவன் ஒரு முஸ்லிமின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டு, அவரைக் கொல்ல முயல்வதை நான் கண்டேன். நான் அவனிடம் சுற்றிவந்து, அவனுக்குப் பின்பக்கம் சென்று, அவனது பிடரி நரம்பில் வெட்டிவிட்டேன்.
உடனே அவன் (அந்த முஸ்லிமை விட்டுவிட்டு) என்னைத் தாவியணைத்து ஓர் இறுக்கு இறுக்கினான். பிராண வாயு பிரியும் நிலைக்கு நான் உள்ளானேன். பின்னர் மரணம் அவனைப் பிடித்துக்கொள்ளவே அவன் என்னை விட்டுவிட்டான்.
பின்னர் நான் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களைச் சென்றடைந்தேன். அப்போது அவர்கள் "மக்களுக்கு என்ன நேர்ந்தது? (ஏன் சிதறி ஓடுகிறார்கள்?)" என்று கேட்டார்கள். அதற்கு நான், "(எல்லாம்) அல்லாஹ்வின் ஏற்பாடு" என்று பதிலளித்தேன். பிறகு (பின்வாங்கி ஓடிய) மக்கள் (போர்க்களத்திற்கு) திரும்பி வந்தார்கள். (தீரத்துடன் போராடி வென்றார்கள்.)

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்துகொண்டு, "போரில் எதிரி ஒருவனைக் கொன்றதற்கான ஆதாரம் எவரிடம் இருக்கிறதோ அவருக்கே அந்த எதிரியின் (உடலில் கிடந்த ஆடை, ஆயுதம் போன்ற) உடைமைகள் உரியவை" என்று கூறினார்கள்.
அப்போது நான் எழுந்து நின்று, "(நான் எதிரி ஒருவனை வீழ்த்தியதற்கு) எனக்குச் சாட்சியம் கூறுபவர் யார்?" என்று கேட்டு விட்டு உட்கார்ந்துகொண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மீண்டும் ("போரில் எதிரி ஒருவனைக் கொன்றதற்கான ஆதாரம் எவரிடம் இருக்கிறதோ அவருக்கே அந்த எதிரியின் உடைமைகள் உரியவை" என்று) கூறினார்கள்.
உடனே நான் (மறுபடியும்) எழுந்து "(நான் எதிரி ஒருவனை வீழ்த்தியதற்கு) எனக்குச் சாட்சியம் கூறுபவர் யார்?" என்று கேட்டேன்; பிறகு உட்கார்ந்துகொண்டேன். பிறகு, மூன்றாவது தடவையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்பு கூறியதைப் போன்றே கூறினார்கள்.
உடனே நான் எழுந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னைப் பார்த்து), "உங்களுக்கு என்ன வேண்டும், அபூகத்தாதா?" என்று கேட்டார்கள். நடந்ததை அவர்களிடம் நான் எடுத்துரைத்தேன்.

அப்போது மக்களில் ஒருவர், "இவர் சொல்வது உண்மைதான், அல்லாஹ்வின் தூதரே! (இவரால்) கொல்லப்பட்டவரின் உடலிலிருந்து எடுக்கப்பட்ட பொருட்கள் என்னிடம் உள்ளன. அவர் தமது உரிமையை (எனக்கு) விட்டுக்கொடுக்கச் சொல்லுங்கள்" என்று கூறினார்.
அப்போது அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்கள், "இல்லை, அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் சிங்கங்களில் ஒரு சிங்கம் அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவும் போரிட்டு (எதிரி ஒருவனை வீழ்த்திவிட்டு) வர, அவரால் கொல்லப்பட்ட எதிரியின் உடலிலிருந்து எடுத்த பொருளை உனக்குக் கொடுக்கும் முடிவுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செல்லமாட்டார்கள்" என்று கூறினார்கள்.
இதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உண்மைதான். (எதிரியை வீழ்த்திய) இவரிடமே அந்தப் பொருட்களைக் கொடுத்துவிடு" என்று சொன்னார்கள்.
அவ்வாறே அவர் அதை என்னிடம் கொடுத்தார். (அந்த வகையில் எனக்குக் கவச உடையொன்று கிடைத்தது.) அந்தக் கவச உடையை விற்றுவிட்டு பனூ சலமா குலத்தார் வாழும் பகுதியில் ஒரு பேரீச்சந்தோட்டத்தை வாங்கினேன். அதுதான் இஸ்லாத்தைத் தழுவிய பின் நான் சேகரித்த முதல் சொத்தாகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் லைஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அபூபக்ர் (ரலி) அவர்கள் "இல்லை, அல்லாஹ்வின் சிங்கங்களில் ஒரு சிங்கத்தை விட்டுவிட்டு, குறைஷியரில் உள்ள குழிமுயல் குட்டிக்கு அதைக் கொடுக்க மாட்டார்கள்' என்று கூறினார்கள்" என இடம் பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3605 அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பத்ருப் போரின்போது நான் (படை) அணியில் நின்றுகொண்டிருந்த நேரத்தில் என் வலப் பக்கமும் இடப்பக்கமும் பார்த்தேன். என்னருகே (இருபக்கங்களிலும்) இளம் வயது அன்சாரிச் சிறுவர்கள் இருவர் நின்றுகொண்டிருந்தனர்."(இவர்களுக்கிடையே வந்து நிற்கிறோமே!) இவர்களைவிட வலுவானவர்களுக்கிடையே நான் இருந்திருக்கக் கூடாதா!'என்று நான் எண்ணினேன்.
அப்போது அவர்களில் ஒருவர் என்னைத் தொட்டுணர்த்தி "என் தந்தையின் சகோதரரே! (என மரியாதை நிமித்தம் அழைத்து) நீங்கள் அபூஜஹ்லை அறிவீர்களா?" என்று கேட்டார்.
நான், "ஆம் (அறிவேன்). உமக்கு அவனிடம் என்ன வேலை, என் சகோதரர் மகனே!" என்று கேட்டேன்.
அதற்கு அந்த இளவல், "அவன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை ஏசுகிறான் என்று எனக்குத் தகவல் கிடைத்தது. என் உயிர் யார் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! நான் அவனைப் பார்த்தால், எங்களில் ஒருவர் இறக்கும்வரை அவனது உடலைவிட்டு எனது உடல் பிரியாது (ஒன்று நான், அல்லது அவன் மரணிக்கும்வரை அவனுடன் போரிட்டுக்கொண்டேயிருப்பேன்)" என்று கூறினார்.
இதைக் கேட்டு நான் வியந்துபோனேன். அப்போது மற்றோர் இளவலும் என்னைத் தொட்டுணர்த்தி முதலாமவர் கூறியதைப் போன்றே கூறினார். சிறிது நேரம்தான் கழிந்திருக்கும். அதற்குள் அபூஜஹ்ல் மக்களிடையே (பம்பரமாகச்) சுற்றி வருவதைக் கண்டு, "அதோ தெரிகிறானே? அவன்தான் நீங்கள் விசாரித்த உங்கள் ஆசாமி" என்று கூறினேன். உடனே அவர்கள் இருவரும் போட்டி போட்டுக்கொண்டு அவனை நோக்கிச் சென்று தம்மிடமிருந்த வாட்களால் அவனை வெட்டிக் கொன்றார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று அபூஜஹ்லைக் கொன்று விட்ட செய்தியைத் தெரிவித்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் யார் அவனைக் கொன்றார்?" என்று கேட்டார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் "நான்தான் கொன்றேன்" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் வாட்க(ளில் படிந்த இரத்தக் கறைக)ளைத் துடைத்துவிட்டீர்களா?" என்று கேட்டார்கள். அவர்கள் இருவரும் "இல்லை' என்று பதிலுரைத்தனர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்விரு வாட்களையும் கூர்ந்து பார்த்துவிட்டு, "நீங்கள் இருவருமே அவனை வெட்டிக்கொண்டிருக்கிறீர்கள்" என்று கூறினார்கள்.
(முதலில் வெட்டியவர் என்ற அடிப்படையில்) "முஆத் பின் அம்ர் பின் அல்ஜமூஹுக்கே அபூஜஹ்லின் உடலிலிருந்து எடுக்கப்பட்ட பொருட்கள் (சலப்) உரியவை" என்று தீர்ப்பளித்தார்கள். முஆத் பின் அம்ர் பின் அல்ஜமூஹ் (ரலி) மற்றும் முஆத் பின் அஃப்ரா (ரலி) ஆகிய இருவருமே அந்த இளவல்கள் ஆவர்.

3606 அவ்ஃப் பின் மாலிக் அல்அஷ்ஜஈ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மூத்தா போரின்போது யமன் பழங்குடி இனத்தாரான) "ஹிம்யர்' குலத்தாரில் ஒருவர் (ரோம பைஸாந்திய) எதிரிகளில் ஒருவரைக் கொன்றுவிட்டு, தம்மால் கொல்லப்பட்டவரின் உடைமைகளை எடுத்துக்கொள்ள விரும்பினார்.

ஆனால், காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்கள் (அவற்றை முழுமையாகத்) தர மறுத்து விட்டார்கள். அப்போது காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்களே அவர்களுக்குத் தளபதியாக இருந்தார்கள்.
எனவே, நான் (மதீனா திரும்பியதும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று நடந்ததைத் தெரிவித்தேன். அவர்கள் காலிதிடம் "அவர், தாம் கொன்ற எதிரியின் உடைமைகளை எடுத்துக்கொள்ளவிடாமல் நீர் தடுக்கக் காரணமென்ன?" என்று வினவினார்கள். அதற்கு "அவை அதிகமாக இருப்பதாக நான் கருதினேன், அல்லாஹ்வின் தூதரே! (ஒரே ஆளுக்கு அவ்வளவையும் கொடுப்பது பொருத்தமாக இராது)" என்று காலித் (ரலி) அவர்கள் பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவற்றை அவரிடமே கொடுத்துவிடுங்கள்" என்று கூறினார்கள்.

பிறகு காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்கள் (அங்கு அமர்ந்திருந்த) என்னைக் கடந்து சென்றார்கள். உடனே நான் காலித் (ரலி) அவர்களது மேல்துண்டைப் பிடித்து இழுத்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உம்மைப் பற்றிக் கூறுவேன் என்று நான் கூறியபடி செய்துவிட்டேன் அல்லவா!" என்று கூறினேன்.
இதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கோபமடைந்தார்கள். "காலிதே! அவருக்குக் கொடுக்காதீர். காலிதே! அவருக்குக் கொடுக்காதீர். என்னால் நியமிக்கப்பெற்ற தளபதிகளை எனக்காக விட்டுவைக்கமாட்டீர்களா? உங்களது நிலையும் (உங்களுக்குத் தளபதிகளாக நியமிக்கப்பட்ட) அவர்களது நிலையும் ஒட்டகங்களையோ ஆடுகளையோ மேய்க்குமாறு நியமிக்கப்பட்ட (இடையன்) ஒருவனின் நிலையைப் போன்றதாகும். அவன் அவற்றை (ஓட்டிச் சென்று) மேய்த்தான். பிறகு தண்ணீர் புகட்டும் நேரம் வரும்வரை காத்திருந்து, நீர்நிலை ஒன்றுக்கு அவற்றை ஓட்டிச் சென்றான்.
அவை அதில் தண்ணீர் குடிக்கத் துவங்கின. அப்போது (நீர்நிலையின் மேற்பகுதியில் உள்ள) தெளிந்த நீரை அவை குடித்துவிட்டு, கலங்கலான நீரை விட்டுவைத்தன. (அவ்வாறுதான்) தெளிந்த நீர் உங்களுக்கும் கலங்கலான நீர் உங்கள் தளபதிகளுக்கும் உரியவையா?" என்று கேட்டார்கள்.

3607 மேற்கண்ட ஹதீஸ் அவ்ஃப் பின் மாலிக் அல்அஷ்ஜஈ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "மூத்தா போரின்போது ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்களுடன் புறப்பட்டுச் சென்றவர்களில் நானும் இருந்தேன். படையினருக்கு உதவி செய்ய யமனிலிருந்து ஒருவர் என்னுடன் வந்திருந்தார்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
ஆயினும், அதில் "அவ்ஃப் பின் மாலிக் (ரலி) அவர்கள் "காலித் (ரலி) அவர்களே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எதிரியைக் கொன்றவருக்கே அவரால் கொல்லப்பட்டவரின் உடைமைகள் உரியவை எனத் தீர்ப்பளித்துள்ளதை நீங்கள் அறியவில்லையா?' என்று கேட்டார்கள். அதற்கு காலித் (ரலி) அவர்கள் "ஆம்; ஆயினும், நான் அதை அதிகமாகக் கருதுகிறேன்' என்று விடையளித்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

3608 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "ஹவாஸின்' குலத்தாருடன் போரிடப் புறப்பட்டோம். நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் காலை உணவு உண்டு கொண்டு இருந்தபோது, சிவப்பு ஒட்டகம் ஒன்றில் (உளவு பார்ப்பதற்காக எதிரிகளில்) ஒரு மனிதர் வந்து, ஒட்டகத்தை மண்டியிட வைத்தார். பிறகு ஒட்டகத்திலிருந்த பையிலிருந்து கயிறு ஒன்றை எடுத்து ஒட்டகத்தைக் கட்டிப்போட்டார்.
பிறகு மக்களுடன் சேர்ந்து காலை உணவு உட்கொள்ள வந்தார்; எங்களை நோட்டமிட ஆரம்பித்தார். எங்களிடையே பலவீனமும் வாகனப் பற்றாக்குறையும் இருந்தன. எங்களில் சிலர் நடைப்பயணிகளாக இருந்தனர். பிறகு அவர் (அங்கிருந்து) வேகமாகப் புறப்பட்டு தமது ஒட்டகத்திடம் சென்று, அதன் கயிற்றை அவிழ்த்துவிட்டு, அதை மண்டியிடச் செய்து அதிலேறி அமர்ந்தார்.
பிறகு ஒட்டகத்தைக் கிளப்பி அங்கிருந்து வேகமாகப் புறப்பட்டார். (அவர் உளவு பார்க்க வந்தவர் என்பதை அறிந்த (முஸ்லிம்களில்) ஒருவர் சாம்பல் நிற ஒட்டகத்தில் ஏறி அவரைப் பின்தொடர்ந்தார்.
நானும் வேகமாகப் புறப்பட்டுச் சென்று, (பின்னால் சென்ற அம்மனிதரின்) ஒட்டகத்திற்கு அருகில் சென்றேன். பிறகு முன்னேறிச் சென்று, அந்தச் சிவப்பு ஒட்டகத்திற்கு அருகில் இருந்தேன். பிறகு இன்னும் சற்று முன்னேறிச் சென்று,அந்தச் சிவப்பு ஒட்டகத்தின் கடிவாளத்தைப் பிடித்து, அதை மண்டியிடச் செய்தேன்.
அவ்வொட்டகம் முழங்காலை மடித்து பூமியில் அமர்ந்ததும் எனது உறையிலிருந்த வாளை உருவி அந்த மனிதரின் தலையில் செலுத்தினேன். அந்த மனிதர் சரிந்து விழுந்தார். பிறகு அந்த ஒட்டகத்தை அதன் சிவிகையுடனும் மற்ற ஆயுதங்களுடனும் ஓட்டிக்கொண்டு வந்தேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவர்களுடனிருந்த மக்களும் என்னை எதிர்கொண்டார்கள். "அவனைக் கொன்றவர் யார்?" என்று நபியவர்கள் கேட்டார்கள். மக்கள் "(சலமா) இப்னுல் அக்வஉதாம் (அவனைக் கொன்றார்)" என்று பதிலளித்தனர். "இவருக்கே அவனுடைய உடைமைகள் அனைத்தும் உரியவை" என்று நபியவர்கள் கூறினார்கள்.

## பாடம் : 14 போர்ச் செல்வங்களில் சிலருக்குக் கூடுதலாக வழங்குவதும், போர்க் கைதிகளை ஒப்படைத்துவிட்டு முஸ்லிம்களை (எதிரிகளிடமிருந்து) விடுவிப்பதும்.

3609 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் "(பனூ) ஃபஸாரா' குலத்தார்மீது போரிடப் புறப்பட்டோம். எங்களுக்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் தளபதியாக இருந்தார்கள். அவர்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே எங்களுக்குத் தளபதியாக நியமித்தார்கள்.
எங்களுக்கும் (ஃபஸாரா குலத்தாரின்) நீர் நிலைக்குமிடையே ஒரு மணி நேரப்பயணத் தொலைவு இருந்தபோது,இரவின் இறுதி நேரத்தில் அபூபக்ர் (ரலி) அவர்கள் எங்களை ஓய்வெடுக்கச் சொன்னார்கள்.

பின்னர் (காலைத் தொழுகைக்குப் பின்) பல்வேறு திசைகளிலிருந்து அதிரடித் தாக்குதல் தொடுத்தோம். அப்போது (ஹவாஸின் குலத்தாரின்) நீர்நிலைக்கு வந்த அபூபக்ர் (ரலி) அவர்கள் அங்கு சிலரை வெட்டி வீழ்த்தினார்கள்;வேறுசிலரைச் சிறைப்பிடித்தார்கள்.
அப்போது நான் (எதிரிகளில்) ஒரு கூட்டத்தைப் பார்த்தேன். அவர்களில் பெண்களும் குழந்தைகளும் இருந்தனர். அவர்கள் என்னை முந்திக்கொண்டு (என்னிடமிருந்து தப்பி) மலைக்குச் சென்றுவிடுவார்களோ என்று நான் அஞ்சினேன். உடனே அவர்களுக்கும் அந்த மலைக்குமிடையே ஓர் அம்பைப் பாய்ச்சினேன். அந்த அம்பைப் பார்த்ததும் அவர்கள் நின்றுவிட்டனர்.

உடனே அவர்களைப் பிடித்துக் கொண்டுவந்தேன். அவர்களிடையே பனூ ஃபஸாரா குலத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தியும் இருந்தாள். அவளது உடலில் தோலினாலான "கஷ்உ' ஒன்று இருந்தது. ("கஷ்உ' என்பதற்கு "விரிப்பு' என்று பொருள்.) அவளுடன் அவளுடைய மகளும் இருந்தாள். அவள் அரபியரிலேயே அழகிய பெண் ஆவாள். அவர்களைப் பிடித்துக்கொண்டு அபூபக்ர் (ரலி) அவர்களிடம் வந்தேன். அபூபக்ர் (ரலி) அவர்கள் அவளுடைய மகளை எனக்குக் கூடுதல் பங்காக வழங்கினார்கள்.
இந்நிலையில் நாங்கள் (மதீனாவுக்கு) வந்தோம். நான் அவளுக்காக ஆடையைக்கூடக் களைந்திருக்கவில்லை. (தாம்பத்திய உறவு கொள்ளவில்லை. மதீனாவின்) கடைத் தெருவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைச் சந்தித்தபோது, "சலமா! அப்பெண்ணை என்னிடம் கொடுத்துவிடு" என்று கூறினார்கள். நான் "அல்லாஹ்வின் தூதரே! அவள் என்னைக் கவர்ந்துவிட்டாள். நான் அவளுக்காக ஆடையைக்கூட களைந்திருக்க வில்லை" என்று கூறிவிட்டேன்.
பிறகு மறுநாள் கடைத் தெருவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைச் சந்தித்த போதும் "சலமா! அப்பெண்ணை என்னிடம் ஒப்படைத்துவிடுவாயாக! உன் தந்தை (உன்னைப் போன்ற மகனைப் பெற்றெடுத்ததற்காக) அல்லாஹ்வுக்கே (நன்றி)" என்று கூறினார்கள்.
நான் "அல்லாஹ்வின் தூதரே! அவள் உங்களுக்கே உரியவள் (அவளை உங்களிடம் ஒப்படைத்துவிட்டேன்). அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவளுக்காக ஆடையைக்கூட களைந்திருக்கவில்லை" என்று கூறினேன்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவளை மக்காவாசிகளிடம் அனுப்பிவைத்து, மக்காவில் கைதிகளாகப்பிடித்துவைக்கப்பட்டிருந்த முஸ்லிம்களில் சிலரை விடுவித்தார்கள்.

## பாடம் : 15 போரிடாமல் கிடைத்த செல்வங்களின் சட்டம்.

3610 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஓர் ஊருக்கு நீங்கள் சென்று, அங்கு நீங்கள் தங்கி (போரிடாமல் அவர்களின் செல்வங்களைக் கைப்பற்றி)னால், அதிலுள்ள உங்களின் பங்கு (நன்கொடையாக உங்களுக்கே) வந்துசேரும்.

ஓர் ஊரார் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்தால் (அவர்கள்மீது தாக்குதல் தொடுத்து அவர்களின் செல்வங்களைக் கைப்பற்றினால்), அதில் ஐந்தில் ஒரு பாகம் (குமுஸ்) அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் சேரும். பின்னர் அ(வற்றில் மிஞ்சுவ)து உங்களுக்கு உரியதாகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3611 உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பனூ நளீர் (யூதக்) குலத்தாரின் செல்வங்கள், அல்லாஹ் தன் தூதருக்கு அளித்தவை ஆகும். அதற்காக முஸ்லிம்கள் குதிரைகளையோ ஒட்டகங்களையோ ஓட்டிச் செல்லவில்லை (போர் செய்திருக்கவில்லை). அவை நபி (ஸல்) அவர்களுக்கு மட்டுமே உரியவையாக இருந்தன. அதிலிருந்துதான் நபியவர்கள் தம் வீட்டாருக்கு ஆண்டுச் செலவுக்குக் கொடுத்துவந்தார்கள். பிறகு மீதியை அல்லாஹ்வின் பாதையில் போரிடுவதற்கான ஆயத்தப் பொருட்கள் வாங்க,ஆயுதங்களுக்காகவும் குதிரைகளுக்காகவும் செலவிட்டுவந்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3612 மாலிக் பின் அவ்ஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் (கலீஃபா) உமர் பின் அல்கத் தாப் (ரலி) அவர்கள் ஆளனுப்பினார்கள். நண்பகல் நேரத்தில் நான் அவர்களிடம் சென்றேன். அவர்கள் தமது இல்லத்தில் ஒரு கட்டிலில் விரிப்பு ஏதுமின்றி ஈச்சம் பாயில் ஒரு தோல் தலையணையின் மீது சாய்ந்தபடி அமர்ந்திருந்தார்கள்.
அப்போது அவர்கள் என்னிடம் (என் பெயரைச் சுருக்கி) "மால்! உங்கள் குலத்தாரிலுள்ள சில குடும்பத்தார் (என்னிடம்) விரைந்து வந்தனர். அவர்களுக்குச் சிறிதளவு நன்கொடைகளை வழங்குமாறு உத்தரவிட்டேன். அதை நீங்கள் பெற்றுச் சென்று, அவர்களிடையே பங்கிட்டுக் கொடுங்கள்" என்று கூறினார்கள்.
நான், "இந்தப் பொறுப்பை வேறெவரிடமாவது நீங்கள் ஒப்படைத்தால் நன்றாயிருக்குமே!" என்று சொன்னேன். அதற்கு "மாலே! நீங்களே அதைப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.
அப்போது (உமர் (ரலி) அவர்களின் மெய்க்காவலர்) யர்ஃபஉ என்பார் வந்து, "இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! உஸ்மான் (ரலி), அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி), ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி), சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) ஆகியோர் (தங்களைச் சந்திக்க வந்துள்ளனர். தாங்கள் அவர்களைச்) சந்திக்க அனுமதியளிக்கிறீர்களா?" என்று கேட்டார். அதற்கு உமர் (ரலி) அவர்கள் "ஆம்' என அவர்களுக்கு அனுமதியளித்தார்கள். அவர்கள் அனைவரும் உள்ளே வந்(து, அமர்ந்)தனர்.
பிறகு (சற்று நேரம் கழித்து) யர்ஃபஉ வந்து, "அப்பாஸ் (ரலி) அவர்களும் அலீ (ரலி) அவர் களும் (தங்களைச் சந்திக்க அனுமதி கேட்கிறார்கள். அவர்களைச்) சந்திக்க அனுமதிக்கிறீர்களா?" என்று கேட்டார். உமர் (ரலி) அவர்கள் "ஆம்'என்று கூறி அவ்விருவருக்கும் அனுமதி அளித்தார்கள்.

அப்பாஸ் (ரலி) அவர்கள், "இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! எனக்கும் பொய்யரும் பாவியும் நாணயமற்றவரும் மோசடிக்காரருமான (என் சகோதரர் மகனான) இவருக்கும் (அலீக்கும்) இடையே தீர்ப்பளியுங்கள்" என்று சொன்னார்கள்.

அப்போது (உஸ்மான் (ரலி) அவர்களும் உடன்வந்திருந்த அவர்களுடைய நண்பர்களும் அடங்கிய) அக்குழுவினர், "ஆம்;இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! (இந்த) இருவருக்கு மிடையே தீர்ப்பளித்து ஒருவரது பிடியிலிருந்து மற்றவரை விடுவித்துவிடுங்கள்" என்று கூறினார்கள். (இதற்காகத்தான் இவ்விருவரும் அக்குழுவினரை முன்கூட்டியே அனுப்பி வைத்திருந்தனர் என்று எனக்குத் தோன்றியது.)

அதற்கு உமர் (ரலி) அவர்கள், "இருவரும் பொறுமையாக இருங்கள். எந்த அல்லாஹ்வின் கட்டளையால் வானமும் பூமியும் நிலைபெற்றிருக்கின்றனவோ அவன் பொருட்டால் உங்களிடம் கேட்கிறேன்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நபிமார்களான எங்களுக்கு) யாரும் வாரிசாகமாட்டார். நாங்கள் விட்டுச்செல்வதெல்லாம் தர்மமே' என்று சொன்னதை நீங்கள் அறிவீர்களா?" என்று (அக்குழுவினரிடம்) கேட்டார்கள். அக்குழுவினர் "ஆம் (அவ்வாறு சொன்னதை நாங்கள் அறிவோம்)" என்று பதிலளித்தனர்.

பிறகு உமர் (ரலி) அவர்கள் (வாதியும் – பிரதிவாதியுமான) அலீ (ரலி) அவர்களையும் அப்பாஸ் (ரலி) அவர்களையும் நோக்கி, "எந்த அல்லாஹ்வின் கட்டளையால் வானமும் பூமியும் நிலைபெற்றிருக்கின்றனவோ அவன் பொருட்டால் உங்கள் இருவரிடமும் கேட்கிறேன்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(நபிமார்களான எங்களுக்கு) யாரும் வாரிசாகமாட்டார். நாங்கள் விட்டுச்செல்வதெல்லாம் தர்மமே' என்று சொன்னதை நீங்கள் அறிவீர்களா?" என்று கேட்டார்கள்.

அவ்விருவரும் "ஆம் (அவ்வாறு அவர்கள் சொன்னதை நாங்கள் அறிவோம்)" என்று விடையளித்தனர். உமர் (ரலி) அவர்கள், "(போரிடாமல் கைப்பற்றப்பட்ட) இந்த "ஃபைஉ'ச் செல்வத்தை தன் தூதருக்கு மட்டுமே உரியதாக அல்லாஹ் ஆக்கியிருந்தான். அவர்களைத் தவிர வேறெவருக்கும் அவன் அதைச் சொந்தமாக்கவில்லை" (என்று கூறிவிட்டு,) "(பல்வேறு) ஊராரிடமிருந்து எதைத் தன் தூதர் கைப்பற்றுமாறு அல்லாஹ் செய்தானோ அது அல்லாஹ்வுக்கும் இத்தூதருக்கும்... உரியது" (59:7) எனும் இறைவசனத்தை ஓதிக்காட்டினார்கள். (இதற்கு முந்தைய வசனத்தையும் அப்போது ஓதினார்களா இல்லையா என்பது எனக்குத் தெரியாது.)

தொடர்ந்து "எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பனூ நளீர் குலத்தாரின் செல்வங்களை (அவர்கள் நாடு கடத்தப்பட்டபின்) உங்களிடையே பங்கிட்டுக் கொடுத்தார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களைவிட தம்மைப் பெரிதாகக் கருதவுமில்லை; உங்களை விட்டுவிட்டுத் தமக்காக அதை எடுத்துக்கொள்ளவுமில்லை. இறுதியாக (இறைத்தூதருக்கு மட்டுமே இறைவன் ஒதுக்கிய அந்நிதியிலிருந்து) இந்த (ஃபதக்) செல்வம் மட்டுமே எஞ்சியது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்தச் செல்வத்திலிருந்து தம் வீட்டாரின் ஆண்டுச் செலவை எடுத்து(ச் செலவிட்டு)வந்தார்கள். அப்படிக் கொடுத்த பிறகு மீதியுள்ளதைப் பொதுச் சொத்தாக ஆக்கினார்கள். எந்த அல்லாஹ்வின் கட்டளையால் வானமும் பூமியும் நிலைபெற்றிருக்கின்றனவோ அந்த அல்லாஹ்வின் பொருட்டால் உங்களை நான் கேட்கிறேன்: இதை நீங்கள் அறிவீர்களா?" என்று கேட்டார்கள்.

அதற்கு அக்குழுவினர் "ஆம் (அறிவோம்)" என்று பதிலளித்தனர். பிறகு அல்லாஹ்வைப் பொருட்டாக்கி அக்குழுவினரிடம் கேட்டதைப் போன்றே அப்பாஸ் (ரலி) அவர்களிடமும் அலீ (ரலி) அவர்களிடமும் "அதை நீங்கள் இருவரும் அறிவீர்களா?' என்று கேட்டார்கள். அவர்கள் இருவரும் "ஆம் (அறிவோம்)' என்று பதிலளித்தனர்.

தொடர்ந்து உமர் (ரலி) அவர்கள், "பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்த போது (ஆட்சித் தலைவராக வந்த) அபூபக்ர் (ரலி) அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய (ஆட்சிக்குப்) பிரதிநிதியாவேன்' என்று கூறினார்கள். (அச்செல் வத்தை தமது பொறுப்பில் வைத்துக் கொண்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செயல்பட்டதைப் போன்றே தாமும் செயல்பட்டார்கள்.) அப்போதும் நீங்கள் இருவரும் (அபூபக்ர் (ரலி) அவர்களிடம்) சென்றீர்கள். (அப்பாஸே!) நீங்கள் உம்முடைய சகோதரரின் புதல்வரிடமிருந்து (நபியிடமிருந்து) உங்களுக்குச் சேர வேண்டிய வாரிசுச் சொத்தைக் கேட்டீர்கள். இதோ இவரும் (அலீயும்) தம் மனைவிக்கு அவருடைய தந்தை (ஆகிய நபி)யிடமிருந்து சேர வேண்டிய வாரிசுச் சொத்தைக் கேட்டார்.

அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நபிமார்களான) எங்களுக்கு யாரும் வாரிசாகமாட்டார். நாங்கள் விட்டுச் செல்வதெல்லாம் தர்மமே! என்று கூறினார்கள்' என்று பதிலளித்து (அதைத்தர மறுத்து)விட்டார்கள். அப்போது நீங்கள் இருவரும் அபூபக்ர் (ரலி) அவர்களைப் பொய்யராகவும் பாவியாகவும் நாணயமற்ற மோசடிக்காரராகவுமே பார்த்தீர்கள். ஆனால், அபூபக்ர் (ரலி) அவர்கள் அந்த விஷயத்தில் உண்மையே உரைத்தார்கள்; நல்லவிதமாகவே நடந்துகொண்டார்கள்; நேர்வழி நின்று வாய்மையையே பின்பற்றினார்கள் என்பதை அல்லாஹ் அறிவான்.

பிறகு அபூபக்ர் (ரலி) அவர்கள் இறந்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கும் நான் பிரதிநிதியானேன்; அந்தச் செல்வத்துக்குப் பொறுப்பேற்றேன். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் செயல்பட்டதைப் போன்றே நானும் செயல்பட்டேன்.) அப்போது என்னையும் நீங்கள் இருவரும் பொய்யனாகவும் பாவியாகவும் நாணயமற்ற மோசடிக்காரனாகவுமே பார்த்தீர்கள். ஆனால், இந்த விஷயத்தில் நான் உண்மையே உரைத்தேன்; நல்ல விதமாகவே நடந்து கொண்டேன்; நேர்வழி நின்று,வாய்மையையே பின்பற்றினேன் என்பதை அல்லாஹ் அறிவான்.

பிறகு நீங்களும் (இதோ) இவரும் சேர்ந்து வந்தீர்கள். நீங்கள் இருவரும் ஒரே நிலைப் பாட்டில்தான் இருந்தீர்கள். நீங்கள் இருவருமே, அதை எங்கள் இருவரிடமும் ஒப்படைத்து விடுங்கள் என்று கூறினீர்கள். அப்போது உங்கள் இருவரிடமும் நான் "நீங்கள் இருவரும் விரும்பினால் இச்செல்வத்தை ஒப்படைக்கிறேன். ஆனால், இந்த விஷயத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எவ்வாறு செயல்பட்டார்களோ அவ்வாறே நீங்கள் இருவரும் செயல்பட வேண்டும் எனும் நிபந்தனையின் பேரில் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு வாக்குறுதியளிக்க வேண்டும்' என்று நான் கூறினேன்.

நீங்கள் இருவரும் அதன் பேரில் (என் நிபந்தனையை ஏற்று) அச்செல்வத்தைப் பெற்றுச் சென்றீர்கள். அவ்வாறுதானே?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் இருவரும் "ஆம்' என்று பதிலளித்தனர். தொடர்ந்து உமர் (ரலி) அவர்கள், "பின்னர் நீங்கள் இருவரும் உங்களிருவர் இடையே தீர்ப்பளிக்கும்படி கோரி என்னிடம் வந்துள்ளீர்கள். இல்லை, அல்லாஹ்வின்

மீதாணையாக! நான் இந்த விஷயத்தில் இதைத் தவிர வேறெந்தத் தீர்ப்பையும் மறுமை நாள் நிகழும்வரை அளிக்கமாட்டேன். உங்கள் இருவராலும் இதைப் பராமரிக்க முடியாவிட்டால், என்னிடமே அதைத் திரும்ப ஒப்படைத்துவிடுங்கள் (அதை நானே பராமரித்துக் கொள்கிறேன்)" என்று சொன்னார்கள்.

3613 மேற்கண்ட ஹதீஸ், மாலிக் பின் அவ்ஸ் பின் அல்ஹதஸான் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது:
அவற்றில், "உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் என்னிடம் ஆளனுப்பினார்கள். (நான் சென்றேன்.) அப்போது அவர்கள் உங்கள் குலத்தாரில் சில குடும்பத்தார் (என்னிடம்) வந்தார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மேலும் அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த (ஃபைஉ)ச் செல்வத்திலிருந்தே தம் வீட்டாருக்கு ஓராண்டிற்குச் செலவிட்டுவந்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
மஅமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அச்செல்வத்திலிருந்து தம் வீட்டாருக்கு ஓராண்டிற்கு வேண்டிய உணவை சேமித்து வைப்பார்கள். பிறகு மீதியை எடுத்து, அல்லாஹ்வின் (பாதையில் செலவிடும்) செல்வத்தை எந்த இனங்களில் செலவிடுவார்களோ அவற்றில் (நல நிதியாக வைத்துச்) செலவிட்டு வந்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 16 "(இறைத்தூதர்களாகிய) எங்களுக்கு யாரும் (சொத்தில்) வாரிசாக முடியாது. நாங்கள் விட்டுச்செல்பவையெல்லாம் தர்மம் ஆகும்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.**

3614 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்தபோது, அவர்களின் துணைவியர் உஸ்மான் (ரலி) அவர்களை (என் தந்தை கலீஃபா) அபூபக்ர் (ரலி) அவர்களிடம் அனுப்பிவைத்து, (அல்லாஹ்வின் தூதரிடமிருந்து) தங்களுக்குச் சேர வேண்டிய சொத்தை அபூபக்ர் (ரலி) அவர்களிடம் கேட்க விரும்பினர்.
அப்போது நான் அவர்களைப் பார்த்து, "(இறைத்தூதர்களான) எங்களுக்கு யாரும் (சொத்தில்) வாரிசாக முடியாது. நாங்கள் விட்டுச்செல்பவையெல்லாம் தர்மமே' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொல்லியிருக்கவில்லையா?" என்று கேட்டேன்.

3615 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்கள் (அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்த பிறகு), (கலீஃபா) அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்களிடம் ஆளனுப்பி, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் ஒதுக்கித் தந்திருந்த மதீனா(விலிருந்த பனூ நளீர் குலத்தாரின்) சொத்து, 'ஃபதக்' (ஃபைஉச்) சொத்து, கைபர் சொத்தில் ஐந்தில் ஒரு பகுதியில் எஞ்சியிருப்பது ஆகியவற்றில் தமக்குச் சேர வேண்டிய வாரிசுரிமையைக் கேட்டார்கள்.
அதற்கு (கலீஃபா) அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(இறைத்தூதர்களான) எங்களுக்கு யாரும் (சொத்தில்) வாரிசாக முடியாது. நாங்கள்

விட்டுச்செல்பவையெல்லாம் தர்மம் ஆகும். இந்தச் செல்வத்திலிருந்தே முஹம்மதின் குடும்பத்தார் சாப்பிடுவார்கள்' என்று சொல்லியிருக்கிறார்கள். (எனவே,)அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தர்மமாக விட்டுச்சென்ற இந்தச் சொத்தில் நான் சிறிதும் மாற்றம் செய்யமாட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் எந்நிலையில் இந்தச் சொத்துகள் இருந்துவந்தனவோ, அதே நிலையில் அவை நீடிக்கும். இ(ந்தச் சொத்துகளைப் பங்கிடும் விஷயத்)தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செயல்பட்ட படியே நானும் செயல்படுவேன்" என்று கூறி, ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் (அவற்றில்) எதையும் ஒப்படைக்க மறுத்துவிட்டார்கள்.

இதனால் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் கோபித்துக்கொண்டு, இறக்கும்வரை அவர்களுடன் ஃபாத்திமா (ரலி) அவர்கள் பேசவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்த பின் ஆறு மாதகாலம்தான் ஃபாத்திமா (ரலி) அவர்கள் உயிர் வாழ்ந்தார்கள்.

ஃபாத்திமா (ரலி) அவர்கள் இறந்தபோது, அவர்களின் கணவர் அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் (இறப்பதற்கு முன் ஃபாத்திமா அவர்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க) இரவிலேயே அவர்களை அடக்கம் செய்துவிட்டார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களுக்குக்கூட இது குறித்துத் தெரிவிக்கவில்லை.

அலீ (ரலி) அவர்களே ஃபாத்திமா (ரலி) அவர்களுக்கு இறுதி (ஜனாஸா)த் தொழுகை தொழுவித்தார்கள். ஃபாத்திமா (ரலி) அவர்கள் வாழ்ந்தவரையில், அலீ (ரலி) அவர்கள்மீது மக்களுக்கு ஒரு தனிக்கவனம் இருந்து வந்தது.

ஃபாத்திமா (ரலி) அவர்கள் இறந்துவிட்ட பின் மக்களின் முகங்களில் (மரியாதையில்) மாற்றத்தை அலீ (ரலி) அவர்கள் கண்டார்கள்.

எனவே, (கலீஃபா) அபூபக்ரிடம் சமரசம் பேசவும் வாக்களிப்புப் பிரமாணம் (பைஅத்) செய்துகொள்ளவும் விரும்பினார்கள். அந்த (ஆறு) மாதங்களில் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு அலீ (ரலி) அவர்கள் வாக்களிப்புப் பிரமாணம் செய்து கொடுத்திருக்கவில்லை.

ஆகவே, "(கலீஃபா அவர்களே!) நீங்கள் மட்டும் எங்களிடம் வாருங்கள். தங்களுடன் வேறெவரும் வர வேண்டாம்"என்று கூறி அலீ (ரலி) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு ஆளனுப்பினார்கள். (அபூபக்ர் (ரலி) அவர்களுடன் உமர் (ரலி) அவர்கள் வருவதை அலீ (ரலி) அவர்கள் விரும்பாததால்தான் அலீ (ரலி) அவர்கள் இவ்வாறு கூறினார்கள்.)

(இச்செய்தி அறிந்த) உமர் (ரலி) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் மட்டும் தனியாக அவர்களிடம் செல்லாதீர்கள். (உங்களுக்குரிய கண்ணியத்தை அவர்கள் கொடுக்காமல் இருந்துவிடலாம்)"என்று கூறினார்கள்.

அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள், "என் விஷயத்தில் அவர்கள் அப்படி நடந்துகொள்ள மாட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களிடம் நான் சென்றே தீருவேன்" என்று கூறிவிட்டு, அவ்வாறே அவர்களிடம் சென்றார்கள்.

அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் ஏகத்துவ உறுதிமொழி கூறி, இறைவனை வாழ்த்தினார்கள். பிறகு, (அபூபக்ர் (ரலி) அவர்களை நோக்கி) "உங்கள் சிறப்பையும் உங்களுக்கு அல்லாஹ் வழங்கிய (பாக்கியத்)தையும் நாங்கள் அறிவோம். அல்லாஹ் உங்களிடம் ஒப்படைத்துள்ள இந்த (ஆட்சித்தலைமை எனும்) நன்மையைக் குறித்து நாங்கள் பொறாமைப்படவில்லை. ஆயினும், இந்த (ஆட்சிப் பொறுப்பு) விஷயத்தில் (எங்களிடம் ஆலோசனை கலக்காமல்) தன்னிச்சையாகச் செயல்பட்டுவிட்டீர்கள். ஆனால்,

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் எங்களுக்குள்ள உறவு முறையின் காரணத்தால் (ஆட்சித் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில்) எங்களுக்கு ஓர் உரிமை உண்டு என நாங்கள் கருதிவந்தோம்" என்று கூறினார்கள்.
அலீ (ரலி) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் பேசிக்கொண்டிருக்க, அபூபக்ர் (ரலி) அவர்களின் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன. அபூபக்ர் (ரலி) அவர்கள் பேசத் துவங்கியபோது, "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன்மீது சத்தியமாக! என்னுடைய உறவினர்களின் உறவைப் பேணுவதைவிட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உறவினர்களே எனக்கு மிகவும் உவப்பானவர்கள். இந்தச் செல்வங்கள் தொடர்பாக எனக்கும் உங்களுக்குமிடையே ஏற்பட்ட (கருத்து வேறுபாட்டின்) விவகாரத்தில் நான் நியாயமாக நடந்துகொள்வதில் சிறிதும் குறைவைக்கவில்லை. இந்த விஷயத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்யக் கண்ட எதையும் செய்யாமல் நான் விட்டுவிடவுமில்லை" என்று கூறினார்கள்.
அப்போது அபூபக்ர் (ரலி) அவர்களிடம் அலீ (ரலி) அவர்கள் "தங்களுக்கு வாக்களிப்புப் பிரமாணம் (பைஅத்) செய்து கொடுப்பதற்காக நான் நண்பகலுக்குப் பின் (கட்டாயம்) வருவேன்" என்று கூறினார்கள்.

(அன்று) அபூபக்ர் (ரலி) அவர்கள் லுஹ்ர் தொழுகையை முடித்ததும் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதேறி, ஏகத்துவ உறுதிமொழி கூறி, இறைவனை வாழ்த்திய பிறகு அலீ (ரலி) அவர்கள் குறித்தும், அவர் தமக்கு வாக்களிப்புப் பிரமாணம் (பைஅத்) செய்து கொடுக்கத் தாமதமானது குறித்தும், அதற்கு அலீ (ரலி) அவர்கள் தம்மிடம் கூறிய காரணம் குறித்தும் எடுத்துரைத்தார்கள். பின்னர் (அல்லாஹ்விடம்) பாவமன்னிப்புக் கோரினார்கள்.
பிறகு அலீ (ரலி) அவர்கள் (எழுந்து), ஏகத்துவ உறுதிமொழி கூறி இறைவனை வாழ்த்திய பின் அபூபக்ர் (ரலி) அவர்களின் தகுதியைக் கண்ணியப்படுத்திப் பேசினார்கள். "தாம் இவ்வாறு (ஆறு மாதம்) நடந்துகொள்ளக் காரணம்,அபூபக்ர் (ரலி) அவர்கள்மீது கொண்ட பொறாமையோ அல்லது அவர்களுக்கு அல்லாஹ் வழங்கிய சிறப்பை நிராகரித்ததோ அல்ல. மாறாக, (ஆட்சித் தலைமையைத் தேர்ந்தெடுக்கும்) இந்த விஷயத்தில் எங்களுக்குப் பங்கு உண்டு என (நபியின் குடும்பத்தாராகிய) நாங்கள் கருதிவந்ததேயாகும். ஆனால், (எங்களிடம் ஆலோசிக்காமல்) தன்னிச்சையாகச் செயல்படும் நிலை ஏற்பட்டுவிட்டது. அதனால் எங்களுக்கு மனவருத்தம் ஏற்பட்டது" என்று கூறினார்கள்.
இதைக் கேட்டு முஸ்லிம்கள் மகிழ்ச்சியடைந்து (அலீ (ரலி) அவர்களைப் பார்த்து) "நீங்கள் சரியாகவே நடந்துகொண்டீர்கள்" என்று கூறினர். இயல்பு நிலைக்கு அலீ (ரலி) அவர்கள் திரும்பியபோது, முஸ்லிம்கள் அலீ (ரலி) அவர்களிடம் நெருக்கமானவர்களாக ஆகிவிட்டனர்.

3616 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஃபாத்திமா (ரலி) அவர்களும் அப்பாஸ் (ரலி) அவர்களும் (கலீஃபா) அபூபக்ர் (ரலி) அவர்களிடம் சென்று,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து தங்களுக்குச் சேர வேண்டிய வாரிசுச் சொத்தைக் கேட்டனர்.

அப்போது அவர்களிருவரும் "ஃபதக்' பகுதியிலிருந்த நபியவர்களின் நிலத்தையும் கைபரில் அவர்களுக்குக் கிடைத்த பங்கையுமே அவ்வாறு கோரினர். அப்போது அவர்கள் இருவரிடமும் (மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி) அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.

மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன.

மேலும், இந்த அறிவிப்புகளில் பின்வருமாறு காணப்படுகிறது: பிறகு அலீ (ரலி) அவர்கள் எழுந்து அபூபக்ர் (ரலி) அவர்களின் தகுதிகளில் சிலவற்றைக் கண்ணியப்படுத்திப் பேசினார்கள்; அவர்களின் சிறப்பையும் முதலிடத்தையும் பற்றிக் கூறினார்கள். பிறகு அபூபக்ர் (ரலி) அவர்களை நோக்கிச் சென்று அவர்களிடம் வாக்களிப்புப் பிரமாணம் (பைஅத்) செய்தார்கள்.

அப்போது மக்கள் அலீ (ரலி) அவர்களை நோக்கி வந்து "நீங்கள் சரியாகவே நடந்து கொண்டீர்கள்; நன்முறையில் நடந்து கொண்டீர்கள்" என்று கூறினர். அலீ (ரலி) அவர்கள் நிலைமையை இயல்புக்குக் கொண்டு வந்தபோது முஸ்லிம்கள் அலீ (ரலி) அவர்களுக்கு நெருக்கமானவர்களாக ஆகிவிட்டனர்.

3617 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்துவிட்ட பிறகு, அவர்களின் புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்கள், அல்லாஹ் தன் தூதருக்கு ஒதுக்கித்தந்திருந்த ("ஃபைஉ'ச்) செல்வத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விட்டுச்சென்றதிலிருந்து தமக்குச் சேர வேண்டிய வாரிசுச் சொத்தைப் பங்கிட்டுத் தருமாறு (கலீஃபா) அபூபக்ர் (ரலி) அவர்களிடம் கேட்டார்கள். அப்போது ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(இறைத்தூதர்களான எங்களுக்கு) யாரும் (சொத்தில்) வாரிசாக முடியாது. நாங்கள் விட்டுச்செல்பவை எல்லாம் தர்மம் ஆகும் என்று சொல்லியிருக்கிறார்கள்" எனக் கூறி (அதிலிருந்து பங்கு தர மறுத்து)விட்டார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பிறகு ஃபாத்திமா (ரலி) அவர்கள் ஆறு மாதங்களே உயிர் வாழ்ந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது தனி நிதியாக) விட்டுச் சென்ற கைபர், ஃபதக் ஆகிய பகுதிகளின் சொத்துகளிலிருந்தும் மதீனாவில் அவர்கள் தர்மமாக விட்டுச்சென்ற சொத்திலிருந்தும் தமக்குப் பங்கு தரும்படியே அபூபக்ர் (ரலி) அவர்களிடம் ஃபாத்திமா (ரலி) அவர்கள் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் ஃபாத்திமாவின் கோரிக்கையை ஏற்க மறுத்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்துவந்த எந்த ஒன்றையும் நான் செய்யாமல் விடமாட்டேன். அதை நான் செய்தே தீருவேன். அவர்களுடைய செயல்களில் எதையேனும் நான் விட்டுவிட்டால் நான் வழி தவறிவிடுவேனோ என அஞ்சுகிறேன்" என்று சொன்னார்கள்.

(அபூபக்ர் (ரலி) அவர்களின் மறைவுக்குப் பின்,) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவில் தர்மமாக விட்டுச் சென்ற சொத்தை (கலீஃபா) உமர் (ரலி) அவர்கள், அலீ (ரலி) அவர்களிடமும் அப்பாஸ் (ரலி) அவர்களிடமும் ஒப்படைத்தார்கள். அந்தச் சொத்தி(ன் பராமரிப்பி)ல் அப்பாஸ் (ரலி) அவர்களை அலீ (ரலி) அவர்கள் மிகைத்து (ஓரங்கட்டி) விட்டார்கள்.

கைபர் மற்றும் ஃபதக்கில் இருந்த சொத்துகளை (கலீஃபா) உமர் (ரலி) அவர்கள் (யாரிடமும் ஒப்படைக்காமல்) தமது பொறுப்பிலேயே வைத்துக்கொண்டார்கள். மேலும், "இவ்விரண்டும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தர்மமாக விட்டுச்சென்றவை. அவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட கடமைகளையும் அவசரத் தேவைகளையும் நிறைவேற்றுவதற்காக (ஒதுக்கப்பட்டு) இருந்தன. அவ்விரண்டின் அதிகாரமும் ஆட்சிக்குப் பொறுப்பேற்பவரிடம் இருக்க வேண்டும்" என்று சொன்னார்கள்.
இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் (இந்த ஹதீஸை அறிவித்தபோது), "அந்த இரு சொத்துகளும் இன்றுவரை அவ்வாறே (ஆட்சியாளரின் பொறுப்பிலேயே) இருந்து வருகின்றன" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3618 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் வாரிசுகள் ஒரு தீனாரைக்கூட (வாரிசுப்) பங்காகப் பெறமாட்டார்கள். என் மனைவிமார்களுக்குச் சேர வேண்டிய வாழ்க்கைச் செலவும் என் உதவியாளரின் ஊதியமும் போக நான் விட்டுச்செல்பவையெல்லாம் தர்மம் ஆகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3619 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறைத்தூதர்களான) எங்களுக்கு யாரும் (சொத்தில்) வாரிசாக முடியாது. நாங்கள் விட்டுச் செல்பவையெல்லாம் தர்மம் ஆகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 17 போரில் கலந்துகொண்டவர்களிடையே போர்ச்செல்வத்தை பங்கிடும் முறை.

3620 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், போரில் கிடைத்த செல்வத்தைப் பங்கிட்டார்கள். (போரில் கலந்துகொண்ட ஒரு மனிதருடன் குதிரையிருந்தால் அவருக்கு ஒரு பாகமும்) குதிரைக்காக இரு பாகங்களும் காலாட்படை வீரருக்கு ஒரு பாகமும் கொடுத்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "போரில் கிடைத்த செல்வத்தை' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 18 பத்ருப் போரில் வானவர்கள் மூலம் (இறைவன்) உதவி செய்ததும் போர்ச் செல்வங்கள் அனுமதிக்கப்பட்டதும்.

3621 உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பத்ருப் போர் நாளில் (எதிரிகளான) இணை வைப்பாளர்கள் (எண்ணிக்கை) ஆயிரம் பேராக இருப்பதையும், (முஸ்லிம்களான) தம்

தோழர்கள் முன்னூற்றுப் பத்தொன்பது பேராக இருப்பதையும் கண்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (தொழுகையின் திசையான) "கிப்லா'வை முன்னோக்கித் தம் கரங்களை நீட்டித் தம் இறைவனை உரத்த குரலில் (அழைத்துப்) பிராத்தித்தார்கள்.
"இறைவா! எனக்கு நீ அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவாயாக. இறைவா! எனக்கு அளித்த வாக்குறுதியை வழங்குவாயாக. இறைவா! இஸ்லாமியரில் இக்குழுவினரை நீ அழித்துவிட்டால், இந்தப் பூமியில் உன்னை (மட்டுமே) வழிபட (இனி) யாரும் இருக்க மாட்டார்கள்" என்று தம் கரங்களை நீட்டி, கிப்லாவை முன்னோக்கி இறைவனிடம் பிரார்த்தித்துக்கொண்டேயிருந்தார்கள். எந்த அளவுக்கென்றால், (கைகளை உயர்த்தியதால்) அவர்களுடைய தோள்களிலிருந்து அவர்களின் மேல்துண்டு நழுவி கீழே விழுந்துவிட்டது.
அப்போது அவர்களிடம் அபூபக்ர் (ரலி) அவர்கள் வந்து, அத்துண்டை எடுத்து அவர்களின் தோள்கள்மீது போட்டுவிட்டு,பின்னாலிருந்து அவர்களைக் கட்டியணைத்துக்கொண்டு, "அல்லாஹ்வின் தூதரே! உங்கள் இறைவனிடம் வேண்டியது போதும். அவன் உங்களுக்கு அளித்த வாக்குறுதியை நிச்சயம் நிறைவேற்றுவான்" என்று கூறினார்கள்.
அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "நீங்கள் உங்கள் இறைவனிடம் பாதுகாப்புக் கோரியபோது "உங்களுக்குப் பின்னால் அணிவகுக்கும் ஆயிரம் வானவர்களைக் கொண்டு உங்களுக்கு நான் உதவி செய்வேன்' என்று அவன் உங்களுக்குப் பதிலளித்தான்" (8:9) எனும் வசனத்தை அருளினான்.

அவ்வாறே நபி (ஸல்) அவர்களுக்கு வானவர்களைக் கொண்டு அல்லாஹ் உதவியளித்தான். இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூஸுமைல் சிமாக் பின் அல்வலீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடமிருந்து எனக்கு அறிவித்த இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அன்றைய தினத்தில் முஸ்லிம்களில் ஒருவர் தமக்கு முன் சென்றுகொண்டிருந்த இணைவைப்பாளர்களில் ஒருவரை விரட்டிச் சென்றுகொண்டிருந்தார். அப்போது தமக்கு மேலே சாட்டையைச் சுழற்றி அடிக்கும் சப்தத்தையும், ஒரு குதிரை வீரர் "ஹைஸூம்! முன்னேறிச் செல்" என்று கூறியதையும் செவியுற்றார்.

உடனே தமக்கு முன்னால் சென்றுகொண்டிருந்த அந்த இணைவைப்பாளர் மல்லாந்து வீழ்ந்து கிடப்பதைக் கண்டார். அந்த இணைவைப்பாளரின் (அருகில் சென்று) அவர் பார்த்த போது, அவனது மூக்கில் காயமேற்பட்டிருப்பதையும் சாட்டையால் அடிபட்டது போல் அவனது முகம் கிழிந்து முகமெல்லாம் பச்சையாகக் கன்றிப் போயிருப்பதையும் கண்டார்.
உடனே அந்த அன்சாரீ அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, அதைப் பற்றித் தெரிவித்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீர் சொன்னது உண்மையே. இது மூன்றாவது வானிலிருந்து இறங்கிய (வானவர்களின்) உதவியாகும்" என்று கூறினார்கள்.(முஸ்லிம்கள்) அன்றைய தினத்தில் (இணைவைப்பாளர்களில்) எழுபது பேரைக் கொன்றனர்; எழுபது பேரைச் சிறைப்பிடித்தனர்.

முஸ்லிம்கள் எதிரிகளைச் சிறைப்பிடித்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடமும் உமர் (ரலி) அவர்களிடமும் "இந்தக் கைதிகள் விஷயத்தில் நீங்கள் என்ன கருதுகிறீர்கள் (இவர்களை என்ன செய்யலாம்)?" என்று (ஆலோசனை) கேட்டார்கள்.

அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! (எதிரிகளாயினும்) அவர்கள் (நம்) தந்தையின் சகோதரர் புதல்வர்களே; நம் குலத்தாரே. அவர்களிடமிருந்து ஏதேனும் பிணைத் தொகையைப் பெற்றுக்கொள்ளுங்கள்; அது இறைமறுப்பாளர்களுக்கெதிரான பலமாக நமக்கு அமையும். அவர்களுக்கு அல்லாஹ் இஸ்லாத்திற்கு வழிகாட்டக்கூடும். இவ்வாறே நான் கருதுகிறேன்" என்றார்கள்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீங்கள் என்ன கருதுகிறீர்கள், கத்தாபின் புதல்வரே?" என்று கேட்டார்கள்.

உமர் (ரலி) அவர்கள், "இல்லை, அல்லாஹ்வின் மீதாணையாக! (இவ்வாறு செய்யாதீர்கள்), அல்லாஹ்வின் தூதரே! எனது கருத்து அபூபக்ர் அவர்களின் கருத்தைப் போன்ற தன்று. மாறாக, அவர்களை எங்களிடம் ஒப்படைத்துவிடுங்கள். அவர்களின் கழுத்துகளை நாங்கள் துண்டித்துவிடுகிறோம். அக்கீலை அலீ அவர்களிடம் ஒப்படைத்துவிடுங்கள்; அவரது கழுத்தை அலீ துண்டிக்கட்டும்! (உமர் (ரலி) அவர்கள் தம் குலத்தாரில் ஒருவரின் பெயரைக் குறிப்பிட்டு) இன்ன மனிதரை என்னிடம் ஒப்படையுங்கள். நான் அவரது கழுத்தைத் துண்டித்துவிடுகிறேன். ஏனெனில், இவர்கள் இறைமறுப்பின் தலைவர்கள்; அதன் முன்னோடிகள். (எனவே, பிணைத் தொகை பெற்று இவர்களை விடுவிக்க வேண்டாம்)" என்று (ஆலோசனை) கூறினார்கள்.

உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அபூபக்ர் (ரலி) அவர்களின் கருத்தையே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விரும்பினார்கள். எனது கருத்தை அவர்கள் ஆதரிக்கவில்லை. மறுநாள் சென்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் அமர்ந்து அழுதுகொண்டிருந்தனர்.

நான் "அல்லாஹ்வின் தூதரே! நீங்களும் உங்கள் நண்பரும் ஏன் அழுகிறீர்கள்? உங்கள் அழுகைக்கான காரணத்தை அறிந்தால் நானும் அழுவேன். அழுகை வராவிட்டாலும் உங்கள் இருவரது அழுகையைக் கண்டு அழுவது போன்றாவது இருப்பேனே!" என்று கூறினேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கைதிகளிடமிருந்து பிணைத் தொகையைப் பெற்றுக்கொண்டு அவர்களை விடுவித்துவிடலாம் என உங்களுடைய நண்பர்கள் எனக்குக் கூறிய ஆலோசனைக்காகவே நான் அழுகிறேன். ஆனால், (இதோ) இந்த மரத்திற்கு அருகில் அந்த எதிரிகள் வேதனை செய்யப்படுவது எனக்கு எடுத்துக் காட்டப்பட்டது என்று (தமக்கு அருகிலிருந்த ஓர் மரத்தைக் காட்டி) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது அல்லாஹ், "பூமியில் எதிரிகளை வேரறுக்கும்வரை சிறைப்பிடித்தல் எந்த நபிக்கும் தகாது" என்று தொடங்கி, "நீங்கள் அடைந்த போர்ச் செல்வங்களை அனுமதிக்கப்பட்ட தூய்மையானவையாகவே (கருதி) உண்ணுங்கள்" (8:67-69) என்பது வரை (மூன்று வசனங்களை) அருளினான். அப்போதுதான் போர்ச் செல்வங்களை அவர்களுக்கு அல்லாஹ் அனுமதித்தான்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 19 கைதியைக் கட்டிவைப்பது, அடைத்து வைப்பது, அல்லது பெருந்தன்மையுடன் விட்டுவிடுவது செல்லும்.**

3622 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நஜ்த்' பகுதிக்குக் குதிரைப் படையொன்றை அனுப்பினார்கள். அந்தப் படையினர் யமாமாவாசிகளின் தலைவரும் "பனூ ஹனீஃபா' குலத்தைச் சேர்ந்தவருமான ஸுமாமா பின் உஸால் எனப்படும் மனிதரை (கைது செய்து) கொண்டுவந்தார்கள்; (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் அவரைக் கட்டிப்போட்டார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரிடம் வந்து, "(உம்முடைய விஷயத்தில் நான் சொல்லப்போகும் தீர்ப்பைப் பற்றி) நீர் என்ன கருதுகிறீர், ஸுமாமா?" என்று கேட்டார்கள். அவர், "நல்லதே கருதுகிறேன், முஹம்மதே! நீங்கள் என்னைக் கொன்றால் இரத்தப் பழிவாங்க வேண்டிய ஒருவனையே கொல்கிறீர்கள். நீங்கள் (என்னை மன்னித்து) உபகாரம் செய்தால், நன்றி பாராட்டக்கூடிய ஒருவனுக்கே உபகாரம் செய்கிறீர்கள். நீங்கள் செல்வத்தை விரும்பினால் கேளுங்கள். நீங்கள் விரும்புவது கொடுக்கப்படும்" என்றார்.
அன்றைய தினம் அவரை (அந்நிலையிலேயே) விட்டுவிட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்றார்கள். மறுநாள் வந்தபோது அவரிடம், "ஸுமாமா, (உம்முடைய விஷயத்தில் நான் சொல்லப்போகும் தீர்ப்பைப் பற்றி) நீர் என்ன கருதுகிறீர்?" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர், "உங்களிடம் நான் (ஏற்கெனவே) கூறியதுதான்: நீங்கள் உபகாரம் செய்தால் நன்றி பாராட்டக்கூடிய ஒருவனுக்கே உபகாரம் செய்கிறீர்கள். நீங்கள் (என்னைக்) கொன்றால் இரத்தப் பழிவாங்க வேண்டிய ஒருவனையே கொல்கிறீர்கள். நீங்கள் செல்வத்தை விரும்பினால் கேளுங்கள்; நீங்கள் விரும்புவது கொடுக்கப்படும்" என்றார்.
அன்றும் அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விட்டுவிட்டார்கள். மூன்றாவது நாள் வந்தபோது, "ஸுமாமா! என்ன கருதுகிறீர்?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர், "நான் (ஏற்கெனவே) உங்களிடம் சொன்னதைத்தான் கருதுகிறேன். நீங்கள் உபகாரம் செய்தால் நன்றி பாராட்டும் ஒருவனுக்கே உபகாரம் செய்கிறீர்கள். நீங்கள் என்னைக் கொன்றால் இரத்தப் பழிவாங்க வேண்டிய ஒருவனையே கொல்கிறீர்கள். நீங்கள் செல்வத்தை விரும்பினால் கேளுங்கள். அதில் நீங்கள் விரும்புவது கொடுக்கப்படும்" என்று சொன்னார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஸுமாமாவை அவிழ்த்துவிடுங்கள்" என்று கூறிவிட்டார்கள். உடனே, ஸுமாமா பள்ளிவாசலுக்கு அருகிலிருந்த பேரீச்சந்தோட்டத்திற்குச் சென்று குளித்துவிட்டுப் பள்ளிவாசலுக்கு வந்தார். "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்று உறுதிமொழிகிறேன். முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் உறுதிமொழிகிறேன்" என்று கூறி (முஸ்லிம் ஆ)னார்.
பிறகு "முஹம்மதே! அல்லாஹ்வின் மீதாணையாக! (இன்றுவரை) உங்கள் முகத்தைவிட எனக்கு மிகவும் வெறுப்புக்குரிய முகம் வேறெதுவும் இருக்கவில்லை. ஆனால், (இன்று)

உங்களுடைய முகம் மற்றெல்லா முகங்களையும்விட எனக்கு மிகவும் பிரியமானதாக ஆகிவிட்டது. அல்லாஹ்வின் மீதாணையாக! (இன்றுவரை) உங்கள் மார்க்கத்தைவிட என் வெறுப்புக்குரிய மார்க்கம் வேறெதுவும் இருக்கவில்லை. ஆனால், (இன்று) உங்களுடைய மார்க்கம் மற்றெல்லா மார்க்கங்களையும்விட எனக்கு மிகவும் பிரியமானதாக ஆகிவிட்டது. அல்லாஹ்வின் மீதாணையாக! (இன்றுவரை) உங்கள் ஊரைவிட எனக்கு வெறுப்பான ஊர் வேறெதுவும் இருக்கவில்லை. ஆனால், (இன்று) உங்கள் ஊரே மற்றெல்லா ஊர்களையும் விட எனக்கு மிகவும் பிரியமானதாக ஆகிவிட்டது. உங்கள் குதிரைப்படையினர் என்னைப் பிடித்து(வந்து)விட்டனர். நான் "உம்ரா'ச் செய்ய விரும்புகிறேன். நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு நற்செய்தி கூறி, "உம்ரா'ச் செய்ய அவருக்கு அனுமதியளித்தார்கள். அவர் மக்காவிற்குச் சென்றபோது அவரிடம் ஒருவர், "நீர் மதமாறிவிட்டீரா?" என்று கேட்டார். அதற்கு ஸுமாமா (ரலி) அவர்கள், "இல்லை, அல்லாஹ்வின் மீதாணையாக! (நான் மதம் மாறவில்லை) அல்லாஹ்வின் தூதருடன் இணைந்து இறைவனுக்குக் கீழ்ப்படியும் முஸ்லிமாக மாறிவிட்டேன். இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளிக்காத வரை (எனது பகுதியான) யமாமாவிலிருந்து ஒரு கோதுமை தானியம் கூட (மக்காவாசிகளான) உங்களுக்கு வராது" என்று சொன்னார்கள்.

3623 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நஜ்த்' பகுதியை நோக்கி குதிரைப் படையொன்றை அனுப்பினார்கள். அந்தப் படையினர் யமாமாவாசிகளின் தலைவரான ஸுமாமா பின் உஸால் அல்ஹனஃபீ எனப்படும் ஒருவரை (கைது செய்து) கொண்டு வந்தார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. எனினும், அதில் "என்னை நீங்கள் கொன்றால், இரத்தப் பழிவாங்க வேண்டிய ஒருவனையே கொல்கிறீர்கள்" என இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 20 யூதர்களை ஹிஜாஸ் பகுதியிலிருந்து நாடு கடத்தியது.

3624 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் பள்ளிவாசலில் இருந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் புறப்பட்டுவந்து, "யூதர்களை நோக்கிச் செல்லுங்கள்" என்று கூறினார்கள். உடனே நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டு யூதர்களிடம் சென்றோம்.
அங்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்றுகொண்டு, "யூதச் சமுதாயத்தாரே! இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்; பாதுகாப்புப் பெறுவீர்கள்" என்று அவர்களுக்கு அழைப்பு விடுத்தார்கள்.

அதற்கு யூதர்கள், "அபுல்காசிமே! நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டீர்கள்" என்று பதிலளித்தார்கள்.
உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இ(வ்வாறு, 'நான் சொல்ல வேண்டியதை சொல்லிவிட்டேன்' என நீங்கள் ஒப்புக்கொள்வ)தைத்தான் நான் எதிர்பார்க்கிறேன். நீங்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்; பாதுகாப்புப் பெறுவீர்கள்" என்று சொன்னார்கள்.
அப்போதும் யூதர்கள் "அபுல்காசிமே! நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டீர்கள்" என்று சொன்னார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இதைத்தான் நான் எதிர்பார்க்கிறேன்" என்று கூறிவிட்டுப் பிறகு மூன்றாவது முறையாக (முன்பு போலவே) சொன்னார்கள்.
பின்னர் "இந்தப் பூமி அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரியது. நான் உங்களை இந்தப் பூமியிலிருந்து நாடு கடத்த விரும்புகிறேன். உங்களில் யார் தமது (அசையாச்) சொத்துக்குப் பதிலாக ஏதேனும் (விலையைப்) பெறுகிறாரோ அவர் அந்தச் சொத்தை விற்று விடட்டும். இல்லையென்றால், இந்தப் பூமி அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரியது என்பதை நீங்கள் தெரிந்துகொள்ளுங்கள்" என்று சொன்னார்கள்.

3625 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மதீனா யூதர்களான) பனூ நளீர் மற்றும் பனூ குறைழா குலத்தார் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்மீது போர் தொடுத்தனர். எனவே, பனூ நளீர் குலத்தாரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாடு கடத்தினார்கள். பனூ குறைழா குலத்தாரை, (அவர்கள் வருத்தம் தெரிவித்ததால்) பெருந்தன்மையுடன் மன்னித்து, அவர்களை (மதீனாவிலேயே) வசிக்க விட்டுவிட்டார்கள்.
அதன் பின்னர் பனூ குறைழா குலத்தாரும் போர் தொடுத்தபோது, அவர்களில் ஆண்களைக் கொன்றார்கள். அவர்களுடைய பெண்களையும் குழந்தைகளையும் அவர்களுடைய உடைமைகளையும் முஸ்லிம்களுக்கு மத்தியில் (போர்ச்செல்வமாகப்) பங்கிட்டுக் கொடுத்தார்கள்.
இருப்பினும், அவர்களில் சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து சேர்ந்துகொண்டனர். அந்த (பனூ குறைழா குலத்தாரில்) சிலருக்குப் பாதுகாப்பு வழங்கினார்கள். அவர்கள் முஸ்லிம்களாக மாறிவிட்டனர். (அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்களின் குலத்தாரான) "பனூ கைனுகா' கூட்டத்தாரையும் பனூ ஹாரிஸா குலத்து யூதர்களையும், மதீனா நகரத்தைச் சேர்ந்த யூதர்கள் அனைவரையும் (ஆக) மதீனாவிலிருந்த எல்லா யூதர்களையும் நாடு கடத்திவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், மேற்கண்ட ஹதீஸே அதிகமான (தகவலைக் கொண்ட)தும் முழுமையானதும் ஆகும்.

**பாடம் : 21 அரபு தீபகற்பத்திலிருந்து யூதர்களும் கிறித்தவர்களும் வெளியேற்றப்படல்.**

3626 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் அரபு தீபகற்பத்திலிருந்து யூதர்களையும் கிறித்தவர்களையும் நிச்சயம் வெளியேற்றியே தீருவேன். முஸ்லிம்களைத் தவிர வேறெவரையும் (அங்கு) நான் விட்டு வைக்கமாட்டேன்.
இதை உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 22 ஒப்பந்தத்தை முறித்துவிட்ட (பகைவர்)களுடன் போர் செய்யலாம்; கோட்டை வாசி(களான பகைவர்)களைத் தகுதியுடைய நேர்மையான ஒரு நீதிபதியின் தீர்ப்புக்கு இணங்கச் செய்வது செல்லும்.**

3627 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(யூதர்களான) பனூ குறைழா குலத்தார் (தமது கோட்டையிலிருந்து இறங்கிவந்து தம் நட்புக் குலத் தலைவரான) சஅத் பின் முஆத் (ரலி) அவர்களின் தீர்ப்பை ஏற்றுக்கொள்ள சம்மதித்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சஅத் (ரலி) அவர்களை அழைத்து வரும்படி ஆளனுப்பினார்கள்.
(அப்போது சஅத் (ரலி) அவர்கள் அகழ்ப்போரில் ஏற்பட்ட காயத்தால் மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலில் தங்கவைக்கப்பட்டிருந்தார்கள்.) சஅத் (ரலி) அவர்கள் ஒரு கழுதையின் மீதமர்ந்து வந்தார்கள்.
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அக்கோட்டையை ஒட்டித் தாற்காலிகமாக அமைத்திருந்த) பள்ளிவாசலுக்கு அருகில் சஅத் (ரலி) அவர்கள் வந்தபோது, அன்சாரிகளை நோக்கி "உங்கள் தலைவரை' அல்லது "உங்களில் சிறந்தவரை' (வரவேற்பதற்காக அவரை) நோக்கி எழுந்து செல்லுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
பிறகு "(சஅதே!) இவர்கள் உங்களது தீர்ப்பை ஏற்றுக்கொள்ள(ச் சம்மதித்து) இறங்கி வந்திருக்கிறார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
சஅத் (ரலி) அவர்கள், "இவர்களிலுள்ள போர் வீரர்களைக் கொன்றுவிடுங்கள். இவர்களின் பெண்களையும் குழந்தைகளையும் போர்க் கைதிகளாக ஆக்கிக்கொள்ளுங்கள்" என்று (தீர்ப்புக்) கூறினார்கள்.
நபி (ஸல்) அவர்கள், ""நீங்கள் அல்லாஹ்வின் தீர்ப்பை' அல்லது "அரசனின் தீர்ப்பை'யே (இவர்களின் விஷயத்தில்) வழங்கினீர்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அரசனின் தீர்ப்பை' எனும் குறிப்பு இடம்பெற வில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "(சஅதே!) நீங்கள் இவர்களின் விஷயத்தில் அல்லாஹ்வின் தீர்ப்பையே அளித்திருக்கிறீர்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. மற்றோர் தடவை "நீங்கள் அரசனின் தீர்ப்பை அளிந்திருக்கிறீர்கள்" என்று கூறியதாக இடம் பெற்றுள்ளது.

3628 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அகழ்ப் போரின்போது சஅத் பின் முஆத் (ரலி) அவர்கள் தாக்கப்பட்டார்கள். அவர்களது கை நரம்பில் குறைஷியரில் ஒருவனான இப்னுல் அரிகா எனப்படுபவன் அம்பெய்துவிட்டான். அருகில் இருந்து, அவரது உடல் நலத்தை விசாரித்து அறிவதற்கு வசதியாக, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலிலேயே (அவருக்காகக்) கூடாரமொன்றை அமைத்தார்கள்.
அகழ்ப் போரை முடித்துவிட்டு வந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டுக் குளித்தார்கள்.
அப்போது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் தமது தலையிலிருந்த புழுதியைத் தட்டிய வண்ணம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (மனித உருவில்) வந்து, "நீங்கள் ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டீர்களா? அல்லாஹ்வின் மீதாணையாக! (வானவர்களாகிய) நாங்கள் ஆயுதத்தைக் கீழே வைக்கவில்லை. அவர்களை நோக்கிப் புறப்படுங்கள்"என்று கூறினார்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(இப்போது) எங்கே?" என்று கேட்டார்கள். உடனே ஜிப்ரீல் (அலை) அவர்கள் பனூ குறைழா குலத்தார் (உடைய வசிப்பிடம்) நோக்கி சைகை செய்தார்கள்.
ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பனூ குறைழா குலத்தாரை நோக்கிச் சென்று) அவர்களுடன் போரிட்டார்கள். (பல நாட்கள் முற்றுகைக்குப் பின்) பனூ குறைழா குலத்தார் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தீர்ப்பை ஏற்க இறங்கிவந்தனர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பனூ குறைழா தொடர்பான முடிவை (பனூ குறைழா குலத்தாரின் நட்புக் குலத் தலைவரான) சஅத் (ரலி) அவர்களிடம் ஒப்படைத்தார்கள்.
சஅத் (ரலி) அவர்கள், "பனூ குறைழாக்களில் போர் வீரர்கள் கொல்லப்பட வேண்டும்; குழந்தைகளும் பெண்களும் போர்க் கைதிகளாக ஆக்கப்பட வேண்டும்; அவர்களின் சொத்துக்கள் பங்கிடப்பட வேண்டும் என்று தீர்ப்பளிக்கிறேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3629 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் இவர்கள் விஷயத்தில் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் தீர்ப்பையே அளித்திருக்கிறீர்கள்" என்று (சஅத் (ரலி) அவர்களிடம்) கூறினார்கள் என என்னிடம் தெரிவிக்கப்பட்டது.

3630 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் முஆத் (ரலி) அவர்களின் (கை நரம்பில் பட்ட அம்புக்) காயம், ஆறும் நிலையை அடைந்தபோது அவர்கள், "இறைவா! உன் தூதரை நம்ப மறுத்து, அவர்களை (ஊரைவிட்டு) வெளியேற்றிய சமுதாயத்தாரை எதிர்த்து உன் பாதையில் போர்புரிவதே மற்ற எதையும்விட எனக்கு மிகவும் விருப்பமானது என்பதை நீ அறிவாய். இறைவா! குறைஷியருடனான போர் ஏதேனும் எஞ்சியிருந்தால் நான் உன் வழியில் போர் செய்ய என்னை உயிருடன் இருக்கச் செய். இறைவா! எங்களுக்கும் (குறைஷியரான) அவர்களுக்கும் இடையிலான போரை (இத்துடன்) நீ முடிவுக்குக் கொண்டு வந்துவிட்டாய் என்றே நான் எண்ணுகிறேன். அவ்வாறு எங்களுக்கும் அவர்களுக்கும் இடையிலான போரை நீ முடிவுக்குக் கொண்டுவந்திருந்தால், (ஆறும் நிலையிலிருக்கும் எனது) காயத்திலிருந்து மீண்டும் குருதி கொப்புளிக்கச் செய்து, அதிலேயே எனக்கு (வீர)மரணத்தை அளிப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
அவ்வாறே அவரது நெஞ்செலும்பிலிருந்து குருதி கொப்புளித்தது. அவரது கூடாரத்தை ஒட்டி பனூ ஃகிஃபார் குலத்தாரின் கூடாரம் ஒன்றும் பள்ளிவாசலில் அமைக்கப்பெற்றிருந்தது.
பனூ ஃகிஃபார் குலத்தாருக்கு, சஅத் (ரலி) அவர்களது கூடாரத்திலிருந்து தங்களை நோக்கி வழிந்தோடி வந்த இரத்தம் அச்சத்தை ஏற்படுத்தியது. அப்போது அக்குலத்தார் "கூடாரவாசிகளே! உங்கள் பகுதியிலிருந்து எங்களை நோக்கிப் பாய்ந்து வருகிறதே, இது என்ன?" என்று கேட்டுக்கொண்டு, அங்கு பார்த்தபோது காயத்திலிருந்து இரத்தம் வழியும் நிலையில் சஅத் (ரலி) அவர்கள் இருந்தார்கள். அந்தக் காயத்தாலேயே அவர்கள் இறந்தார்கள்.

3631 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அன்றிரவே அவரது காயத்திலிருந்து குருதி கொப்புளித்தது. குருதி வழிந்தோடிக் கொண்டே இருந்து, முடிவில் அவர் இறந்துவிட்டார்" என்று இடம்பெற்றுள்ளது.
மேலும், அந்த அறிவிப்பில் பின்வரும் தகவலும் இடம்பெற்றுள்ளது: இது குறித்தே ஒரு கவிஞர் பாடினார்.
சஅதே!
பனூ முஆதின் வழித்தோன்றலே!
குறைழாவும் நளீரும்
என்ன ஆனார்கள்?
உன் வாழ்நாள் மீதாணை!
குறைழாவும் நளீரும்
நாட்டைவிட்டு
வெளியேறியபோது,
சஅத் பின் முஆத்
(அளவுக்கதிகமாக) பொறுமை காத்தார்
(அவ்ஸே!) நீங்கள் உங்கள்
பாத்திரங்களைக் காலி
செய்துவிட்டீர்கள்.

(உதவ முன்வரவில்லை.)
ஆனால், அந்த (கஸ்ரஜ்) குலத்தாரின்
பாத்திரமோ (பனூ கைனுகா),
சுடச் சுடக் கொதிக்கிறது
(காப்பாற்றப்பட்டுவிட்டனர்).
மாண்பமை அபூஹுபாப்
(அப்துல்லாஹ் பின் உபை),
"இங்கேயே தங்குவீர்,
கைனுகாவினரே!
எங்கும் சென்றுவிடாதீர்' என்றார்.
அவர்கள் இன்று
சொந்த ஊரிலேயே
திடமாக அமர்ந்துவிட்டனர்.
"மைத்தான்' (ஹிஜாஸ்) மலைமீது
கற்பாறைகள் அமர்ந்தது போல்.

பாடம் : 23 போருக்கு விரைந்து செல்வதும், (நம்மை) எதிர்நோக்கியுள்ள இரு விஷயங்களில் மிகவும் முக்கியமானதற்கு முன்னுரிமை அளிப்பதும்.

3632 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அகழ்ப் போரை முடித்துத் திரும்பிய நாளன்று, "பனூ குறைழா குலத்தார் வசிக்குமிடத்தை நீங்கள் அடையாத வரை உங்களில் எவரும் லுஹர் தொழுகையைத் தொழ வேண்டாம்" என்று எங்களிடம் (கூறி, பனூ குறைழா குலத்தாரை நோக்கி விரைவாகப் புறப்படுமாறு) அறிவித்தார்கள்.
அவ்வாறு சென்றவர்கள் (வழியிலேயே அஸ்ர் தொழுகையின் நேரத்தை அடைந்தனர்.) சிலர் (அஸ்ர் தொழுகையின்) நேரம் தவறிவிடுமோ என அஞ்சினர். எனவே, பனூ குறைழா குலத்தார் வசிக்குமிடத்திற்கு முன்பே தொழுதுவிட்டனர். வேறுசிலர் தொழுகையின் நேரம் நமக்குத் தவறினாலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்ட இடத்திலேயே தொழுவோம் என்று கூறி (தொழுகையைத் தாமதப்படுத்தி)னர்.
பின்னர் (இரு பிரிவினர் குறித்தும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டபோது) அவ்விரு பிரிவினரில் எவரையும் அவர்கள் குறை கூறவில்லை.

பாடம் : 24 முஹாஜிர்களுக்கு அன்சாரிகள் இரவலாகக் கொடுத்திருந்த மரங்கள் மற்றும் கனிகளை, வெற்றிக(ளில் கிடைத்த செல்வங்க)ளால் தன்னிறைவு பெற்ற போது முஹாஜிர்கள் திருப்பிக் கொடுத்தது.

3633 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஹாஜிர்கள் (மக்கா முஸ்லிம்கள்) மதீனாவுக்கு வந்தபோது, தங்களுடைய கரங்களில் (செல்வம்) எதுவும் இல்லாத நிலையிலேயே வந்தனர். (மதீனாவாசிகளான) அன்சாரிகளோ

நிலங்களும் (பேரீச்சந்தோப்புகள் போன்ற) அசையாச் சொத்துகளும் உடையவர்களாக இருந்தார்கள்.

எனவே, ஒவ்வோர் ஆண்டும் தம் நிலங்களின் விளைச்சல்களில் (குறிப்பிட்ட) பாகங்களை முஹாஜிர்கள் தமக்குக் கொடுத்துவிட வேண்டும் என்றும், தம் பங்கிற்கு அவர்கள் பாடுபட்டு உழைக்க வேண்டும் என்றும் பேசி முஹாஜிர்களுக்கு அன்சாரிகள் தம் நிலங்களைப் பிரித்துக் கொடுத்தார்கள்.

என் தாயார் உம்மு சுலைம் (ரலி) அவர்கள், என் தாய்வழிச் சகோதரர் அப்துல்லாஹ் பின் அபீதல்ஹாவின் தாயாராகவும் இருந்தார். என் தாயார் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குச் சில பேரீச்ச மரங்களை (அவற்றின் கனிகளை மட்டும் பயன்படுத்திக் கொள்ளும்படி அன்பளிப்பாகக்) கொடுத்திருந்தார்கள்.

அவற்றை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம் அடிமைப் பெண்ணாயிருந்த உசாமா பின் ஸைதுடைய தாயார் உம்மு அய்மனுக்கு (அன்பளிப்பாக)க் கொடுத்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர்வாசிகள்மீது போர் தொடுத்து முடித்து மதீனாவுக்கு (வெற்றியோடு) திரும்பியபோது முஹாஜிர்கள், தங்களுக்கு அன்சாரிகள் இரவலாக வழங்கியிருந்த கனிக(ள் தரும் மரங்க)ளை அவர்களிடமே திருப்பிக் கொடுத்துவிட்டார்கள்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் என் தாயாரிடம் அவருடைய பேரீச்ச மரங்களைத் திரும்பத் தந்துவிட்டு, அவற்றுக்குப் பதிலாக உம்மு அய்மன் (ரலி) அவர்களுக்குத் தமது தோட்டத்திலிருந்து (சில மரங்களை அன்பளிப்பாகக்) கொடுத்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

உம்மு அய்மன் (ரலி) அவர்கள் உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களின் தாயார் ஆவார். அவர் (நபியவர்களின் தந்தை) அப்துல்லாஹ் பின் அப்துல் முத்தலிபின் அடிமையாக இருந்தார்; அபிசீனிய இனத்தைச் சேர்ந்தவராகவும் இருந்தார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தந்தை இறந்த பிறகே ஆமினா அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பெற்றெடுத்தார்கள். இந்நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை உம்மு அய்மன் அவர்களே வளர்த்துவந்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வளர்ந்து பெரியவரானதும் உம்மு அய்மனை விடுதலை செய்துவிட்டார்கள். பின்னர் (தமது பொறுப்பில் வளர்ந்த) ஸைத் பின் ஹாரிஸாவுக்கு அவரைத் திருமணம் செய்துவைத்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்து ஐந்து மாதங்களுக்குப் பின்னர் உம்மு அய்மன் (ரலி) அவர்கள் இறந்தார்கள். இதுவே உம்மு அய்மன் (ரலி) அவர்களின் (வாழ்க்கையின்) சில குறிப்புகளாகும்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3634 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

பனூ குறைழா மற்றும் பனூ நளீர் குலத்தார் வெற்றி கொள்ளப்படும்வரை (இரவலாகப் பயன்படுத்திக்கொள்ளும்படி) தமது நிலத்திலிருந்து பேரீச்ச மரங்களில் சிலவற்றை ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் கொடுத்து வைத்திருந்தார். (பனூ குறைழா, பனூ நளீர் குலத்தாரை

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெற்றி கொண்ட) பின்னர் அவரிடமே அம்மரங்களை அவர்கள் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள்.
இந்நிலையில், என் குடும்பத்தார் என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, அல்லாஹ்வின் தூதருக்குத் தாங்கள் கொடுத்திருந்த மரங்கள் அனைத்தையும் அல்லது அவற்றில் சிலவற்றை (திரும்பத் தரும்படி) கேட்குமாறு என்னைப் பணித்தனர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த மரங்களை(ப் பராமரித்து பயன்பெற்றுக்கொள்ளுமாறு தம் வளர்ப்புத்தாய்) உம்மு அய்மன் (ரலி) அவர்களிடம் (இரவலாகக்) கொடுத்திருந்தார்கள். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று கேட்டபோது, அவர்கள் அம்மரங்களை என்னிடம் திரும்பத் தந்துவிட்டதாகக் கூறினார்கள்.
அப்போது அங்கு உம்மு அய்மன் (ரலி) அவர்கள் வந்து, எனது கழுத்தில் துணியைப் போட்டுப் பிடித்து "அல்லாஹ்வின் மீதாணையாக! (முடியாது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்குத் தந்துவிட்டவற்றை உன்னிடம் நான் கொடுக்கமாட்டேன்" என்று கூறலானார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உம்மு அய்மன்! அவரை விட்டு விடுங்கள். இன்னின்ன பொருட்களை உங்களுக்கு நான் தருகிறேன்" என்று கூறினார்கள். அவர் "இல்லை (முடியாது). எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அ(ந்த ஏக இறை)வன் மீதாணையாக! (அவற்றைத் தர முடியாது)" என்று கூறினார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இன்னின்னதைத் தருகிறேன் என்று கூறிக்கொண்டே வந்து, இறுதியில் அதைப் போன்று பத்து மடங்கு அல்லது ஏறக்குறைய அதைப் போன்ற அளவு கொடுத்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 25 போர்ச் செல்வமாகக் கிடைத்த உணவுப் பொருட்களை (நாடு திரும்புவதற்கு முன்) பகை நாட்டில் இருக்கும் போதே உண்ணலாம்.

3635 அப்துல்லாஹ் பின் முஃகஃப்பல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் போர் தினத்தன்று கொழுப்பு இருந்த தோல் பை ஒன்றை நான் பெற்றேன். அதை நான் இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு "இன்று இதிலிருந்து ஒரு சிறிதளவைக்கூட யாருக்கும் நான் கொடுக்கமாட்டேன்" என்று கூறினேன். பிறகு திரும்பிப் பார்த்தேன். அங்கே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்த வண்ணம் இருந்தார்கள்.

3636 அப்துல்லாஹ் பின் முஃகஃப்பல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் போர் தினத்தன்று எங்களை நோக்கி ஒரு தோல் பை வீசப்பட்டது. அதில் உணவுப் பொருளும் கொழுப்பும் இருந்தன. அதை எடுப்பதற்காக நான் குதித்தோடினேன். பிறகு திரும்பிப் பார்த்தேன். அங்கே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருந்தார்கள். அவர்களைக் கண்டு நான் வெட்கமடைந்தேன்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் முஃகஃப்பல் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "கொழுப்பு அடங்கிய தோல் பை ஒன்று' என இடம்பெற்றுள்ளது. "உணவுப் பொருள்' பற்றிய குறிப்பு இல்லை.

**பாடம் : 26 இஸ்லாத்திற்கு அழைப்பு விடுத்து ஹெராக்ளியஸ் மன்னருக்கு நபி (ஸல்) அவர்கள் எழுதிய கடிதம்.**

3637 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூசுஃப்யான் (ரலி) அவர்கள் என்னிடம் நேரடியாகக் கூறினார்கள்: (குறைஷியரின் தலைவனாயிருந்த) எனக்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் இடையே (ஹுதைபியா) ஒப்பந்தம் ஏற்பட்டிருந்த காலகட்டத்தில் (குறைஷியரின் வணிகக் குழுவில்) சென்று ஷாம் (சிரியா) நாட்டில் நான் இருந்தேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து ரோமப் பைஸாந்திய மன்னர் ஹெராக்ளியஸுக்குக் கடிதம் வந்தது. அக்கடிதத்தை (நபித்தோழர்) திஹ்யா அல்கல்பீ (ரலி) அவர்கள் கொண்டுவந்து, புஸ்ரா (ஹூரான்) சிற்றரசரிடம் கொடுக்க, அவர் அதை ஹெராக்ளியஸிடம் ஒப்படைத்திருந்தார்.
அப்போது ஹெராக்ளியஸ் "தம்மை இறைத்தூதர் எனக் கூறும் அந்த மனிதரின் குலத்தாரில் யாரேனும் இங்கு (நம் நாட்டில்) உள்ளனரா?" என்று கேட்டார். அ(வையிலிருந்த)வர்கள் "ஆம்' என விடையளித்தனர்.
குறைஷி (வணிக)க் குழுவினருடன் இருந்த என்னை அழைத்து வரும்படி ஆளனுப்பப்பட்டது. நாங்கள் அனைவரும் ஹெராக்ளியஸிடம் சென்றோம். எங்கள் அனைவரையும் தமக்கு முன்னால் உட்காரச் சொன்னார் ஹெராக்ளியஸ். பிறகு, "தம்மை இறைத்தூதர் எனச் சொல்லிக்கொண்டிருக்கும் இந்த (முஹம்மத் எனும்) மனிதருக்கு உங்களில் நெருங்கிய உறவினர் யார்?" என்று கேட்டார்.
நான் "நானே (அவருக்கு நெருங்கிய உறவினர் ஆவேன்)" என்று பதிலளித்தேன். எனவே, என்னை அவருக்கு எதிரில் (நெருக்கமாக) உட்காரவைத்தனர். என் நண்பர்களை எனக்குப் பின்னால் உட்காரவைத்தனர்.

பிறகு ஹெராக்ளியஸ் தம் மொழி பெயர்ப்பாளரை அழைத்து, "தம்மை இறைத்தூதர் எனச் சொல்லிக்கொண்டிருக்கும் அந்த (முஹம்மத் எனும்) மனிதரைப் பற்றி நான் இவரிடம் கேட்பேன். இவர் பொய் (ஏதும்) சொன்னால் உடனே "அவர் பொய் சொல்கிறார்' என்று கூறிவிட வேண்டும்" என அவருடைய நண்பர்களிடம் (மொழிபெயர்த்துச்) சொல் என்றார்.
"நான் பொய் பேசினேன்' என என்னைப் பற்றி என் நண்பர்கள் (ஊரில் வந்து) பேசுவார்களே என்ற அச்சம் மட்டும் எனக்கு இல்லாதிருந்தால், அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (நபியவர்களைப் பற்றி) பொய்யான தகவல்களைச் சொல்லியிருப்பேன்.
பிறகு ஹெராக்ளியஸ் தம் மொழிபெயர்ப்பாளரிடம், "இவரிடம் "அந்த (முஹம்மத் எனும்) மனிதரின் குலம் எப்படிப்பட்டது?' எனக் கேள்" என்றார். நான் "அவர் எங்களில் சிறந்த குலத்தைச் சேர்ந்தவர்" என்றேன். "அடுத்து அந்த மனிதருடைய முன்னோரில் அரசர் எவரேனும் இருந்திருக்கின்றனரா?" என்று கேட்டார். நான் "இல்லை' என்றேன்.

அவர், "அந்த மனிதர் இவ்வாறு (தம்மை இறைத்தூதர் என) வாதிப்பதற்கு முன் அவர் மக்களிடம் பொய்(யேதும்) சொன்னார் என நீங்கள் அவரைக் குற்றம் சாட்டியதுண்டா?" என்று கேட்டார். நான் "இல்லை' என்றேன். "அந்த மனிதரை யார் பின்பற்றுகின்றனர்? மேட்டுக்குடி மக்களா, அல்லது நலிந்த பிரிவினரா?" என்று கேட்டார். நான் "அல்ல. நலிந்த பிரிவினரே (அவரைப் பின்பற்றுகின்றனர்)" என்றேன்.

"அவரைப் பின்பற்றுவோர் கூடிக்கொண்டே செல்கின்றனரா, அல்லது குறைந்துவருகின்றனரா?" என்று கேட்டார். நான் "குறைவதில்லை. (நாளுக்கு நாள்) அதிகரித்துக்கொண்டே செல்கின்றனர்" என்றேன்.

"அவரது மார்க்கத்தில் இணைந்த பிறகு அதன் மீது அதிருப்தியடைந்து எவரேனும் அதிலிருந்து வெளியேறிச் செல்வதுண்டா?" என்று கேட்டார். நான் "இல்லை (யாரும் பழைய மதத்திற்குத் திரும்புவதில்லை)' என்றேன்.

"அந்த மனிதருடன் நீங்கள் போர் புரிந்ததுண்டா?" என்று கேட்டார். நான் "ஆம்' என்றேன். "அவருடன் நீங்கள் நடத்திய போர்(களின் முடிவு)கள் எவ்வாறு அமைந்தன?" என்று கேட்டார். நான் "எங்களுக்கிடையேயான போர், (வெற்றியும் தோல்வியும் சுழல் முறையில் வரும்) கிணற்று வாளியாக உள்ளது. ஒரு முறை அவர் எங்களை வெல்கிறார்;மறுமுறை நாங்கள் அவரை வெல்கிறோம்" என்றேன்.

"அந்த மனிதர் ஒப்பந்த மீறல் செய்கின்றாரா?" என்று கேட்டார். நான் "இல்லை (தற்போது நடைமுறையிலுள்ள இந்த ஹுதைபியா சமாதான உடன்படிக்கையின்) இந்தக் கால கட்டத்தில் நாங்களும் அவரும் இருந்துவருகிறோம். இதில் அவர் எப்படி நடந்துகொள்வார் என்று எங்களுக்குத் தெரியாது" என்று சொன்னேன்.

அல்லாஹ்வின் மீதாணையாக! இதைத் தவிர (நபியவர்களைக் குறை சொல்வதற்கு) வேறு எந்த வார்த்தையையும் திணிக்க எனக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை.

தொடர்ந்து அவர், "(உங்களில்) எவரேனும் இவருக்கு முன் இப்படி(த் தம்மை இறைத்தூதர் என) எப்போதாவது வாதித்ததுண்டா?" என்று கேட்டார். நான் "இல்லை' என்று கூறினேன்.

பிறகு ஹெராக்ளியஸ் தம் மொழிபெயர்ப்பாளரிடம் பின்வருமாறு கூறினார்:

அவரிடம் (அபூசுஃப்யானிடம்) கூறிவிடு: நான் உம்மிடம் அந்த மனிதருடைய குலத்தைப் பற்றிக் கேட்டேன். அதற்கு நீர் "அவர் எங்களில் சிறந்த குலத்தை உடையவர்' என்று கூறினீர். இவ்வாறே இறைத்தூதர்கள் ஒரு சமுதாயத்தின் நற்குடியில்தான் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

நான் உம்மிடம் "அவருடைய முன்னோர்களில் அரசர் எவரேனும் இருந்திருக்கின்றனரா?' என்று கேட்டேன். அதற்கு நீர் "இல்லை' என்று விடையளித்தீர். அவருடைய முன்னோர்களில் அரசர் எவரேனும் இருந்(ததாக நீர் கூறியிருந்)தால், "தம் முன்னோரின் ஆட்சியதிகாரத்தை(த் தாமும்) அடைய விரும்பும் ஒரு (சராசரி) மனிதர்தாம் இவர்' என்று நான் கூறியிருப்பேன்.

நான் உம்மிடம் அவரைப் பின்பற்றுவோர் பற்றி, "மக்களில் மேட்டுக்குடியினர் அவரைப் பின்பற்றுகின்றனரா, அல்லது நலிந்த பிரிவினரா?' என்று கேட்டேன். அதற்கு நீர் "நலிந்த பிரிவினரே அவரைப் பின்பற்றுகின்றனர்' என்று பதிலளித்தீர். (பெரும்பாலும்) நலிந்த பிரிவினர்தாம் இறைத்தூதர்களைப் பின்பற்றுவோர் ஆவர்.

நான் உம்மிடம் "அவர் இவ்வாறு (தம்மை இறைத்தூதர் என) வாதிப்பதற்கு முன்பு, (அவர் மக்களிடம்) பொய் பேசினார் என நீங்கள் குற்றம் சாட்டியதுண்டா' என்று கேட்டேன். அதற்கு நீர் "இல்லை' என்று பதிலளித்தீர். இதிலிருந்து மக்களிடம் பொய் பேச(த் துணிய)ôத அவர் அல்லாஹ்வின் மீது பொய் சொல்லமாட்டார் என்று நான் புரிந்துகொண்டேன்.
நான் உம்மிடம் "அவரது மார்க்கத்தில் இணைந்த பின் எவரேனும் அதன் மீது அதிருப்தி கொண்டு அதிலிருந்து வெளியேறிச் செல்வதுண்டா?' என்று கேட்டேன். அதற்கு நீர் "இல்லை' என்று விடையளித்தீர். இறைநம்பிக்கை (ஈமான்) இத்தகையதே; அதன் மலர்ச்சி மனங்களில் கலந்துவிடும்போது (அதைக் குறித்து எவருமே அதிருப்தியடையமாட்டார்).
நான் உம்மிடம் "அவ(ரைப் பின்பற்றுபவ)ர்கள் (நாளுக்கு நாள்) அதிகரித்துவருகின்றனரா, அல்லது குறைந்துவருகின்றனரா' என்று கேட்டேன். அதற்கு நீர் "அவர்கள் அதிகரித்தே வருகின்றனர்' என்று பதிலளித்தீர். இறைநம்பிக்கை என்பது, அது முழுமையடையும்வரை அவ்வாறுதான் (வளர்ச்சியை நோக்கியே செல்லும்).
நான் உம்மிடம் "அவருடன் நீங்கள் போர் புரிந்ததுண்டா?' என்று கேட்டேன். அதற்கு நீர் "அவருடன் நீங்கள் போர் செய்துள்ளதாகவும் உங்களுக்கும் அவருக்கும் இடையே நடைபெறும் போரில் (வெற்றியும் தோல்வியும்) கிணற்று வாளிகள் போன்று சுழல் (முறையில் அமை)கின்றன. ஒரு முறை உங்களை அவர் வெல்வார். மறுமுறை அவரை நீங்கள் வெல்கிறீர்கள்' என்று கூறினீர். இறைத்தூதர்கள் இத்தகையோரே. முதலில் அவர்கள் சோதிக்கப்படுவார்கள். பிறகு இறுதி முடிவு அவர்களுக்கே (சாதகமாக) அமையும்.
நான் உம்மிடம் "அவர் ஒப்பந்த மீறல் செய்கிறாரா?' என்று கேட்டேன். அதற்கு நீர் "அவர் ஒப்பந்த மீறல் செய்வதில்லை' என்று பதிலளித்தீர். இறைத்தூதர்கள் இத்தகையோரே. அவர்கள் வாக்கு மீறமாட்டார்கள்.

நான் உம்மிடம் "இவருக்கு முன்னர் (உங்களில்) எவரேனும் இவ்வாதத்தை முன்வைத்த துண்டா?' என்று கேட்டேன். அதற்கு நீர் "இல்லை' என்று பதிலளித்தீர். இவருக்கு முன்னர் எவரேனும் இவ்வாதத்தை முன்வைத்திருந்(ததாக நீர் கூறியிருந்)தால், "தமக்கு முன்னர் (சிலரால்) முன்வைக்கப்பட்ட ஒரு வாதத்தைப் பின் பற்றிச் செல்கின்ற ஒரு (சராசரி) மனிதரே இவர்' என்று நான் சொல்லியிருப்பேன்.
பிறகு ஹெராக்ளியஸ், "அந்த மனிதர் உங்களுக்கு என்ன கட்டளையிடுகிறார்?" என்று கேட்டார். "தொழுகையை நிறைவேற்றுமாறும் ஸகாத் கொடுக்குமாறும் உறவுகளைப் பேணுமாறும் சுயக்கட்டுப்பாட்டுடன் வாழுமாறும் எங்களுக்குக் கட்டளையிடுகிறார்' என்று நான் கூறினேன்.
அதற்கு ஹெராக்ளியஸ், "நீர் சொல்வது உண்மையாயிருப்பின், நிச்சயமாக அவர் ஓர் இறைத்தூதர்தாம். (இறைத்தூதரான) அவர் வரவிருப்பதாக நான் அறிந்திருந்தேன். ஆனால், அவர் (குறைஷியரான) உங்களிலிருந்து வருவார் என்று நான் நினைத்திருக்க வில்லை. நான் அவரைச் சென்றடைவேன் என அறிந்தால், அவரைச் சந்திப்பதில் எனக்கு விருப்பம் உண்டு. நான் அவருக்கு அருகில் இருந்திருந்தால் அவருடைய பாதங்களைக் கழுவியிருப்பேன். அவரது ஆட்சி(யின் எல்லை) என் பாதங்களுக்குக் கீழ்வரை வந்து சேரும்" என்று கூறினார்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுதிய கடிதத்தைக் கொண்டுவந்து வாசிக்கச் சொன்னார் ஹெராக்ளியஸ். அக்கடிதத்தில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:
அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...
இது அல்லாஹ்வின் தூதர் முஹம்மதிடமிருந்து ரோமாபுரியின் அதிபர் ஹெராக்ளியஸுக்கு (எழுதப்படும் கடிதம்): நேர்வழியைப் பின்பற்றியவர்மீது சாந்தி (சலாம்) நிலவட்டும். இறை வாழ்த்துக்குப் பின்!
இஸ்லாத்தின் (ஏகத்துவ) அழைப்பை ஏற்குமாறு உங்களை நான் அழைக்கிறேன். இஸ்லாத்தை ஏற்றுக்கொள்க. (ஏற்றுக்கொண்டால் ஈருலகிலும்) பாதுகாப்புப் பெறுவீர். நீங்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டால் அல்லாஹ் உங்களுக்குச் சேர வேண்டிய நற்பலனை இரு மடங்காகத் தருவான்.
நீங்கள் புறக்கணித்தால் குடி(யானவர்)களின் பாவமும் (அவர்கள் இஸ்லாத்தை ஏற்காமல் போனதற்கான குற்றமும்) உங்களையே சேரும். "வேதக்காரர்களே! எங்களுக்கும் உங்களுக்கும் இடையே பொதுவானதொரு கொள்கையின்பால் நீங்கள் வாருங்கள். (அதாவது) நாம் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும் வழிபடக் கூடாது; அவனுக்கு எதையும் இணை கற்பிக்கக் கூடாது; அல்லாஹ்வை விடுத்து நம்மில் சிலர் வேறு சிலரைக் கடவுள்களாக ஆக்கிக்கொள்ளக் கூடாது என்று (நபியே!) நீர் கூறுவீராக. (இதற்குப் பிறகும்) அவர்கள் புறக்கணித்தால், நாங்கள் (அல்லாஹ்வுக்கு அடிபணிந்த) முஸ்லிம்கள்தாம் என்பதற்கு நீங்கள் சாட்சிகளாக இருங்கள் என்று சொல்லிவிடுங்கள். (3:64)
ஹெராக்ளியஸ் அந்தக் கடிதத்தைப் படித்து முடித்தபோது, அவர் அருகிலிருந்த (மதகுருமார்கள் மற்றும் ரோம பைஸாந்திய ஆட்சியாளர்களின்) குரல்கள் உயர்ந்தன. கூச்சல் அதிகரித்தது. ஹெராக்ளியஸின் உத்தரவின்பேரில் நாங்கள் (அவையிலிருந்து) வெளியேற்றப்பட்டோம்.
நாங்கள் வெளியே வந்தபோது நான் என் நண்பர்களிடம் "இப்னு அபீகப்ஷா (முஹம்மது)வின் விவகாரம் (மார்க்கம்) வலிமை பெற்றுவிட்டது. மஞ்சள் நிற இனத்தாரான (ரோமானிய) மன்னரே அவருக்கு (முஹம்மதுக்கு) அஞ்சுகிறாரே!"என்று சொன்னேன்.
அன்று தொட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் விவகாரம் (மார்க்கம்) விரைவில் வெற்றிபெறும் என உறுதிபூண்டவனாக நான் இருக்கலானேன். முடிவில் அல்லாஹ் என் உள்ளத்தில் இஸ்லாத்தைப் புகுத்தினான்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "பாரசீகப் படையை (ரோமாபுரி மன்னர்) கைஸர் (சீசர்) மூலம் அல்லாஹ் விரட்டியடித்தபோது, தமக்கு அல்லாஹ் வழங்கிய அருட்கொடைக்கு நன்றி தெரிவிக்கும் முகமாக "ஹிம்ஸி'லிருந்து பைத்துல் மக்திஸுக்கு (ஈலியா) கைஸர் (ஹெராக்ளியஸ்) வந்தார்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
இந்த அறிவிப்புகளில் "அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமான (முஹம்மத் எழுதிய கடிதம்)" என்று காணப்படுகிறது. "குடி(யானவர்)கள்' என்பதைக் குறிக்க ("அரீசிய்யீன்' என்பதற்குப் பதிலாக) "யரீசிய்யீன' என்ற சொல்லும் "இஸ்லாத்தின் அழைப்பு' என்பதைக் குறிக்க ("திஆயத்துல் இஸ்லாம்' என்பதற்குப் பகரமாக) "தாஇயத்துல் இஸ்லாம்' எனும் சொற்றொடரும் ஆளப்பெற்றுள்ளன.

**பாடம் : 27 (ஏக இறை) அல்லாஹ்வை ஏற்குமாறு இறைமறுப்பாளர்களான அரசர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் எழுதிய கடிதங்கள்.**

3638 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (பாரசீக மன்னர்) கிஸ்ரா (குஸ்ரூ), (ரோம பைஸாந்திய மன்னர்) கைசர் (சீசர்), (அபிசீனிய அரசர்) நஜாஷீ (நீகஸ்) மற்றும் ஒவ்வொரு சர்வாதிகார ஆட்சியாளருக்கும் (ஏக இறை) அல்லாஹ்வை ஏற்குமாறு அழைப்பு விடுத்துக் கடிதம் எழுதினார்கள். நபி (ஸல்) அவர்கள் ஜனாஸாத் தொழுகை தொழுவித்த நஜாஷீ இவரல்லர்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்கள் ஜனாஸாத் தொழுகை தொழுவித்த நஜாஷீ இவரல்லர்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதிலும் "நபி (ஸல்) அவர்கள் ஜனாஸாத் தொழுகை தொழுவித்த நஜாஷீ இவரல்லர்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 28 ஹுனைன் போர்.**

3639 அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹுனைன் போரில் கலந்துகொண்டேன். (போர் உக்கிரமாக நடந்தபோது) நானும் அபூசுஃப்யான் பின் அல்ஹாரிஸ் பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்களும் மட்டுமே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைவிட்டுப் பிரியாமல் அவர்களுடனேயே இருந்தோம்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்குரிய வெள்ளைக் கோவேறு கழுதையின் மீதிருந்தார்கள். அந்தக் கழுதையை ஃபர்வா பின் நுஃபாஸா அல்ஜுதாமீ என்பார் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக வழங்கியிருந்தார்.
இறைமறுப்பாளர்களும் முஸ்லிம்களும் மோதிக்கொண்டபோது முஸ்லிம்கள் புறமுதுகிட்டு ஓடினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களோ (நிலைகுலையாமல்) தமது கோவேறு கழுதையை இறைமறுப்பாளர்களை நோக்கி விரட்டினார்கள். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கழுதையின் கடிவாளத்தைப் பிடித்து, அது விரைவாகச் சென்று விடக் கூடாது என்பதற்காக அதைக் கட்டுப்படுத்திக்கொண்டிருந்தேன்.
அபூசுஃப்யான் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வாகனத்தின் சேணத்தைப் பிடித்துக்கொண்டிருந்தார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்பாஸ்! கருவேல மரத்தின் (கீழ் "ரிள்வான்' உடன்படிக்கை செய்த) தோழர்களை அழையுங்கள்" என்று கூறினார்கள். நான் உரத்த குரலில் "கருவேல மரத்தின் (கீழ் "ரிள்வான்' ஒப்பந்தம் செய்த) நண்பர்கள் எங்கே?" என்று அழைத்தேன். (அப்பாஸ் (ரலி) அவர்கள் உரத்த குரலுடையவராக இருந்தார்கள்.)

அல்லாஹ்வின் மீதாணையாக! (பிரிந்தோடிய) முஸ்லிம்கள், எனது குரலைக் கேட்டவுடன் பசு தன் கன்றுகளை நோக்கித் தாவிவருவதைப் போன்று "இதோ வந்துவிட்டோம்; இதோ வந்துவிட்டோம்' என்று கூறியவாறு தாவிவந்து இறைமறுப்பாளர்களுடன் போரிட்டனர்.
அன்சாரிகளிடையே "அன்சாரிகளே! அன்சாரிகளே!" என்று அழைப்பு விடுக்கப்பட்டது. பிறகு பனுல் ஹாரிஸ் பின் அல்கஸ்ரஜ் குலத்தாருக்கு மட்டுமே அழைப்பு விடுக்க வேண்டியிருந்தது. அப்போது அவர்கள், "பனுல் ஹாரிஸ் பின் அல்கஸ்ரஜ் குலத்தாரே! பனுல் ஹாரிஸ் பின் அல்கஸ்ரஜ் குலத்தாரே!" என்று அழைத்தனர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கோவேறுகழுதையில் அமா்ந்தவாறு தலையை உயர்த்தி சண்டையைக் கவனித்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கல் அடுப்பு கனன்றுகொண்டிருக்கும் நேரமிது" என்று கூறினார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு கைப்பிடி சிறு கற்களை அள்ளி இறைமறுப்பாளர்களின் முகத்தில் எறிந்தார்கள். பிறகு "முஹம்மதின் இறைவன் மீதாணையாக! அவர்கள் தோற்றனர்" என்று கூறினார்கள்.
நான் பார்த்துக்கொண்டே போனேன். அப்போது போர் தனது போக்கில் (உக்கிரமாக) நடந்துகொண்டிருந்தது. அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறு கற்களை எறிந்ததுதான் தாமதம்; இறைமறுப்பாளர்களின் பலம் குன்றிக்கொண்டே செல்வதையும் அவர்களின் கதை முடிவுக்கு வருவதையுமே நான் காணலானேன்.

3640 மேற்கண்ட ஹதீஸ் அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "(அக்கழுதையை அன்பளிப்பாக அளித்தவரின் பெயர்) ஃபர்வா பின் நுஆமா அல்ஜுதாமீ" என்று இடம்பெற்றுள்ளது. (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறு கற்களை அள்ளி எறிந்துவிட்டு) "அவர்கள் தோற்றனர்;கஅபாவின் அதிபதி மீதாணையாக! அவர்கள் தோற்றனர்; கஅபாவின் அதிபதி மீதாணையாக என்று கூறினார்கள்"என்றும் காணப்படுகிறது.
மேலும் "முடிவில் அல்லாஹ் இறைமறுப்பாளர்களைத் தோற்கடித்தான்" என்று கூடுதலாகவும் இடம்பெற்றுள்ளது.
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களுக்குப் பின்னால் தமது கோவேறு கழுதையிலிருந்தவாறு விரட்டிக்கொண்டிருந்ததை நான் இப்போதும் பார்ப்பதைப் போன்றுள்ளது" என்றும் இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்து.
அதில் "நான் ஹுனைன் போரில் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தேன்' என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும், மேற்கண்ட ஹதீஸே இந்த அறிவிப்பைவிட அதிகத் தகவல் உள்ளதும் முழுமையானதும் ஆகும்.

3641 அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர், "அபூஉமாரா! நீங்கள் ஹுனைன் போர் நாளில் வெருண்டு ஓடினீர்களா?" என்று கேட்டார். அதற்கு பராஉ (ரலி) அவர்கள் கூறினார்கள்: இல்லை, அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறமுதுகிட்டுச் செல்லவில்லை. ஆயினும், அவர்களுடைய தோழர்களில் சில இளைஞர்கள் ஆயுதமின்றி, அல்லது அதிகமான ஆயுதமின்றி அவசரப்பட்டு நிராயுதபாணிகளாக (போருக்கு)ப் புறப்பட்டு வந்துவிட்டார்கள்.
அவர்கள் ஹவாஸின் மற்றும் பனூ நஸ்ர் குலத்தாரில் அம்பெய்யும் வீரர்களைச் சந்தித்தனர். அந்தக் குலத்தாரின் ஒரு அம்பு கூட குறி தவறாது. அவர்கள் கூட்டாகச் சேர்ந்து குறி தவறாமல் ஒரே நேரத்தில் அம்பெய்தார்கள். எனவே, அங்கு நபித்தோழர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கிவந்தனர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு வெள்ளைக் கோவேறுகழுதையில் அமர்ந்துகொண்டிருக்க, அதை அபூசுஃப்யான் பின் அல்ஹாரிஸ் பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்கள் ஓட்டிக்கொண்டு வந்தார்கள். (நபித்தோழர்களின் நிலையைக் கண்டதும் தமது கழுதையிலிருந்து) இறங்கி (அல்லாஹ்விடம்) உதவி கோரிப் பிரார்த்தித்தார்கள்.
மேலும், "நான் இறைத்தூதர்தாம்; (இதில்) பொய் இல்லை. நான் அப்துல் முத்தலிபின் (மகனின்) மகன் ஆவேன்" என்று கூறினார்கள். பிறகு தம் தோழர்களை அணிவகுக்கச் செய்தார்கள்.

3642 அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடம் வந்து, "நீங்கள் (அனைவரும்) ஹுனைன் போர் நாளில் பின்வாங்கி ஓடிக்கொண்டிருந்தீர்களா, அபூஉமாரா?" என்று கேட்டார். அதற்கு பராஉ (ரலி) அவர்கள் கூறினார்கள்: நான் அறுதியிட்டுச் சொல்கிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறமுதுகிட்டுச் செல்லவில்லை. ஆயினும். மக்களில் அவசரப்பட்டு வந்த சில நிராயுதபாணிகள் (எதிரிகளான) இந்த ஹவாஸின் குலத்தாரை நோக்கிச் சென்றனர். அவர்களோ வில்வீரர்களாய் இருந்தனர். அவர்கள் கூட்டமாகச் சேர்ந்து ஒரே நேரத்தில் அம்புக் கூட்டிலிருந்து அம்புகளை எடுத்து எய்தனர்.
அந்த அம்புகள் வெட்டுக்கிளி கூட்டங்களைப் போன்று (பறந்துவந்தன). இதனால், (முஸ்லிம்கள்) சிதறி ஓடினர். பிறகு மக்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி வந்தனர். அப்போது அபூசுஃப்யான் பின் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கோவேறுகழுதையை ஓட்டிக்கொண்டு (நடந்து) வந்தார்கள்.
உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது கழுதையிலிருந்து) இறங்கி அல்லாஹ்விடம் உதவி கோரிப் பிரார்த்தித்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் இறைத்தூதர்தாம்; (இதில்) பொய் இல்லை;நான் அப்துல் முத்தலிபின் (மகனின்) மகன் ஆவேன்" என்றும், "இறைவா! உன் உதவியை இறக்குவாயாக!" என்றும் கூறிக்கொண்டிருந்தார்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! போர் (உச்சகட்டமடைந்து) சிவந்து (கனன்று) கொண்டிருந்த போது நபியவர்களையே கேடயமாக்கி நாங்கள் தப்பித்துக்கொண்டிருந்தோம். எங்களில்

வீரர்கள்கூட நபியவர்களுக்கு நேராக (அவர்களுக்குப் பின்னாலேயே) நின்று கொண்டிருந்தனர்.

3643 அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
கைஸ் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடம், "ஹுனைன் போர் நாளில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை விட்டுவிட்டு நீங்கள் வெருண்டு ஓடினீர்களா?" என்று கேட்டார். அதற்கு பராஉ (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஆனால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெருண்டோடவில்லை. ஹவாஸின் குலத்தார் அன்றைய தினம் வில்வீரர்களாய் இருந்தனர்.
(முதலில்) நாங்கள் அவர்கள்மீது தாக்குதல் நடத்தியபோது அவர்கள் சிதறியோடினர். எனவே, நாங்கள் குனிந்து போர்ச் செல்வங்களைச் சேகரிப்பதில் மும்முரமாய் ஈடுபட்டோம். அப்போது (சிதறியோடிய) எதிரிகள் எங்களை முன்னோக்கி அம்புகளை (கூட்டமாக நின்று) எய்தனர். (எனவே, நிலைகுலைய வேண்டிய நிலை எங்களுக்கு ஏற்பட்டது.)
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வெருண்டோடாமல்) தமது வெள்ளைக் கோவேறுகழுதையில் அமர்ந்திருந்ததை நான் பார்த்தேன். அபூசுஃப்யான் பின் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் அதன் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் இறைத்தூதர்தாம். (இதில்) பொய் இல்லை. நான் அப்துல் முத்தலிபின் (மகனின்) மகன் ஆவேன்" என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "பராஉ (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர் அபூஉமாரா!" என்று அழைத்து மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி கேட்டதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. மேற்கண்ட ஹதீஸில் குறைந்த தகவல்களே இடம்பெற்றுள்ளன. இவர்களின் அறிவிப்பில் முழுமையான தகவல்கள் காணப்படுகின்றன.

3644 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சேர்த்து ஹுனைன் போரில் கலந்து கொண்டோம். நாங்கள் எதிரிகளை எதிர்கொண்டபோது, நான் முன்னேறிச் சென்றேன். அப்போது நான் ஒரு மலைக் கணவாய்மீது ஏறினேன்;எதிரிகளில் ஒருவன் என்னை எதிர்கொண்டான். உடனே நான் ஓர் அம்பை எடுத்து அவன்மீது எய்தேன். அவன் என்னைவிட்டு மறைந்து (தப்பித்துக்)கொண்டான். பிறகு அவன் என்ன ஆனான் என்று எனக்குத் தெரியவில்லை.
அப்போது எதிரிகளை நான் பார்த்தேன். அவர்கள் மற்றொரு கணவாய்மீது ஏறி விட்டிருந்தார்கள். அவர்களும் நபித்தோழர்களும் மோதிக்கொண்டனர். பிறகு நபித்தோழர்கள் பின்வாங்க வேண்டிய நிலைக்கு ஆளாயினர். நானும் தோல்வி கண்டு திரும்பினேன். அப்போது என்மீது இரு போர்வைகள் இருந்தன. ஒன்றை நான் கீழங்கியாகவும் மற்றொன்றை மேலங்கியாகவும் போர்த்திக்கொண்டிருந்தேன்.
(நான் திரும்பிக்கொண்டிருந்தபோது) எனது கீழங்கி அவிழ்ந்துவிட்டது. உடனே நான் மேலங்கியையும் கீழங்கியையும் சேர்த்து (சுருட்டிப்) பிடித்துக்கொண்டேன். அப்போது நான்

தோற்றுப்போனவனாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கடந்து சென்றேன். அப்போது அவர்கள் தமது வெள்ளைக் கோவேறுகழுதையில் (நிலைகுலையாமல்) இருந்தார்கள்.
அப்போது அவர்கள், "இப்னுல் அக்வஉ திடுக்கிடும் நிகழ்வெதையோ கண்டுள்ளார்" என்று கூறினார்கள். எதிரிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சூழ்ந்துகொண்டதும் அவர்கள் தமது கோவேறுகழுதையிலிருந்து இறங்கி,பூமியிலிருந்து ஒரு கைப்பிடி மண் அள்ளி, அவர்களது முகங்களை நோக்கி எறிந்தார்கள்.
அப்போது "இம்முகங்கள் இழிவடைந்தன" என்று கூறினார்கள். எதிரிகளில் ஒருவரது முகம் கூட விடுபடாமல் அனைவருடைய கண்களையும் அந்த ஒரு பிடி மண்ணால் அல்லாஹ் நிரப்பாமல் விடவில்லை. பிறகு அவர்கள் புறமுதுகிட்டு ஓடினர்.
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் எதிரிகளைத் தோற்கடித்தான். அவர்கள் விட்டுச் சென்ற போர்ச்செல்வங்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முஸ்லிம்களுக்கிடையே பங்கிட்டுக் கொடுத்தார்கள்.

## பாடம் : 29 தாயிஃப் போர்.

3645 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தாயிஃப் நகரத்தாரை முற்றுகையிட்டபோது அவர்களால் அந்நகரத்தாரை ஒன்றும் செய்ய முடியவில்லை. எனவே, "இறைவன் நாடினால், நாம் (நாளை மதீனாவுக்குத்) திரும்பிச் செல்வோம்"என்று கூறினார்கள். நபித்தோழர்கள், "இ(ந்நகரத்)தை வெல்லாமல் நாம் திரும்புவதா?" என்று கேட்டார்கள்.
(தோழர்களின் தயக்கத்தைக் கண்ட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "காலையில் போருக்குப் புறப்படுங்கள்"என்றார்கள். அவ்வாறே அவர்கள் (மறு நாள்) காலை போருக்குச் சென்று பலத்த காயங்களுக்கு ஆளானார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நாளை நாம் (மதீனாவுக்குத்) திரும்பிச் செல்வோம்" என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இப்படிச் சொன்னது நபித் தோழர்களுக்கு (இப்போது) மகிழ்ச்சி (தரும் செய்தி)யாக அமைந்தது. (அவர்களின் மகிழ்ச்சியைக் கண்டு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 30 பத்ருப் போர்.

3646 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூசுஃப்யான் (தலைமையில் வணிகக் குழு) வரும் தகவல் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது (தம் தோழர்களிடம்) ஆலோசனை கேட்டார்கள்.
அபூபக்ர் (ரலி) அவர்கள் (தமது கருத்தைச்) சொன்னபோது, அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்டுகொள்ளவில்லை. பின்னர் உமர் (ரலி) அவர்கள் (தமது கருத்தைச்) சொன்னபோதும் கண்டுகொள்ளவில்லை.

அப்போது (அன்சாரிகளில் கஸ்ரஜ் கூட்டத்தாரின்) தலைவர் சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள் எழுந்து, "எங்(கள் அன்சாரிகளின் கருத்து)களையா நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள், அல்லாஹ்வின் தூதரே? என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! எங்கள் குதிரைகளைக் கடலுக்குள் செலுத்துமாறு நீங்கள் உத்தரவிட்டாலும் நிச்சயமாக நாங்கள் செலுத்துவோம். எங்கள் குதிரைகளின் பிடரிகளில் அடித்து (தொலைவில் உள்ள) "பர்குல் ஃகிமாத்' நோக்கி (விரட்டிச்) செல்லுமாறு நீங்கள் உத்தரவிட்டாலும் நாங்கள் அவ்வாறே செய்வோம்" என்று கூறினார்கள்.

பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களைப் புறப்படச்செய்தார்கள். மக்கள் புறப்பட்டுச் சென்று பத்ர் எனும் இடத்தில் தங்கினர். அப்போது அவர்களிடம் குறைஷியரின் தண்ணீர் சுமக்கும் ஒட்டகக்குழாம் ஒன்று வந்தது. அவர்களில் பனுல் ஹஜ்ஜாஜ் குலத்தாரின் கறுப்பு அடிமை ஒருவனும் இருந்தான்.

நபித்தோழர்கள், அவனைப் பிடித்துக்கொண்டனர். அவனிடம் அபூசுஃப்யானைப் பற்றியும் அவருடைய சக பயணிகள் பற்றியும் விசாரித்தனர். அவன் "அபூசுஃப்யானைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. ஆனால், இதோ அபூஜஹ்ல், உத்பா,ஷைபா, உமய்யா பின் கலஃப் (ஆகியோர் உங்களை நோக்கிப் படைதிரட்டி வந்துகொண்டிருக்கின்றனர்)" என்று சொன்னான். அவன் இவ்வாறு சொன்னதும் (அவன் பொய் சொல்வதாக எண்ணிக்கொண்டு) அவனை நபித் தோழர்களை அடித்தனர். அப்போது அவன் "ஆம் (எனக்குத் தெரியும்); நான் சொல்கிறேன். இதோ அபூசுஃப்யான் வந்துகொண்டிருக்கிறார்" என்று (பொய்) சொன்னான்.

அடிப்பதை நிறுத்திவிட்டு அவனிடம் கேட்டால் "அபூசுஃப்யான் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. ஆனால், இதோ அபூஜஹ்ல், உத்பா, ஷைபா, உமய்யா பின் கலஃப் மக்களுடன் (வந்துகொண்டிருக்கின்றனர்)" என்று சொன்னான். மீண்டும் அவன் இவ்வாறு சொன்னதும் அவனை நபித்தோழர்கள் அடித்தனர்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அங்கு) நின்று தொழுது கொண்டிருந்தார்கள். இ(வ்வாறு அவர்கள் நடந்து கொள்வ)தை அவர்கள் கண்டதும் தொழுகையை (சுருக்கமாக) முடித்துத் திரும்பினார்கள். மேலும், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! அவன் உண்மையைச் சொல்லும்போது அடிக்கிறீர்கள். பொய் சொல்லும்போது அடிப்பதை நிறுத்து விடுகிறீர்களே!" என்று கூறினார்கள்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இது இன்ன மனிதர் மாண்டு விழும் இடம்" என்று கூறி, பூமியில் தமது கையை வைத்து "இவ்விடத்தில் இவ்விடத்தில்' என்று காட்டினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கை வைத்துக் காட்டிய இடத்தைவிட்டு அவர்களில் எவரும் தள்ளி விழவில்லை. (சரியாக அதே இடத்தில் போரில் மாண்டு கிடந்தனர்).

## பாடம் : 31 மக்கா வெற்றி .

3647 அப்துல்லாஹ் பின் ரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

ஒரு ரமளான் மாதத்தில் (சிரியா நாட்டிலிருந்த) முஆவியா (ரலி) அவர்களைச் சந்திக்க சில தூதுக் குழுக்கள் சென்றன. (அத்தூதுக் குழுவில் நானும் அபூஹுரைரா (ரலி) அவர்களும்

இருந்தோம்.) அப்போது எங்களில் சிலர் வேறுசிலருக்கு (முறைவைத்து) உணவு சமைத்(து விருந்தளித்)தனர். அபூஹுரைரா (ரலி) அவர்கள் தமது கூடாரத்திற்கு மக்களை அதிகமாக (விருந்திற்கு) அழைப்பவராக இருந்தார்கள்.
அப்போது நான், "நான் உணவு சமைத்து மக்களை என் கூடாரத்திற்கு அழைக்கக்கூடாதா?" என்று கூறிவிட்டு, உணவு தயாரிக்க உத்தரவிட்டேன். பிறகு அபூஹுரைரா (ரலி) அவர்களை மாலையில் சந்தித்து, "இன்றிரவு என்னிடம்தான் விருந்து" என்றேன். அதற்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள், "நீ என்னை முந்திக்கொண்டாய்" என்று கூறினார்கள். நான் "ஆம்' என்று கூறிவிட்டு, மக்களை (எனது கூடாரத்திற்கு) அழைத்தேன்.

அப்போது அபூஹுரைரா (ரலி) அவர்கள் (நான் கேட்டுக்கொண்டதற்கிணங்க) "அன்சாரிக் கூட்டத்தாரே! உங்கள் செய்திகளில் ஒன்றைக் குறித்து உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா?" என்று கேட்டார்கள். பிறகு மக்கா வெற்றியைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்போது அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்து புறப்பட்டு மக்காவுக்கு வந்து சேர்ந்தார்கள். அப்போது ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி) அவர்களை, (தமது படையின்) இரு பக்கவாட்டுப் படைகளில் ஒன்றுக்குத் தளபதியாக நியமித்தார்கள்.
காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்களை மற்றொரு பக்கவாட்டுப் படைக்குத் தளபதியாக நியமித்தார்கள். அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்களை நிராயுதபாணி(களான காலாட் படை)யினருக்குத் தளபதியாக நியமித்தார்கள்.

அவர்கள் அனைவரும் பள்ளத்தாக்கின் மையப்பகுதிக்கு வந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் படையின் முக்கியப்பகுதியில் இருந்தார்கள். அப்போது அவர்களது பார்வையில் நான் பட்டபோது, "அபூஹுரைரா நீயா?" என்று கேட்டார்கள். நான், "(ஆம்) இதோ, வந்தேன் அல்லாஹ்வின் தூதரே!" என்றேன். அப்போது அவர்கள், "ஓர் அன்சாரித் தோழரே (இப்போது) என்னிடம் வருவார் (என்றே நான் எதிர்பார்த்தேன்)" என்றார்கள்.
ஷைபான் பின் ஃபர்ரூக் (ரஹ்) அல்லாதோரின் அறிவிப்பில், "அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,எனக்காக அன்சாரிகளைச் சப்தமிட்டு அழைப்பீராக! என்றார்கள். உடனே அன்சாரிகள் வந்து குழுமினர்" என இடம்பெற்றுள்ளது.
(எதிரிகளான) குறைஷியர் தம்முடைய பல்வேறு குலத்தாரையும் ஆதரவாளர்களையும் ஒன்றுகூட்டி, "இவர்களை நாம் (முதலில் போருக்கு) அனுப்பிவைப்போம். இவர்களுக்கு (வெற்றி) ஏதேனும் கிடைத்தால், (குறைஷியரான) நாமும் இவர்களுடன் சேர்ந்துகொள்வோம். இவர்களுக்குத் தோல்வி ஏற்பட்டால், நம்மிடம் (முஸ்லிம்களால்) கோரப்படுவதை நாம் வழங்கிவிடுவோம்" என்று கூறினர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீங்கள் (ஒற்றுமையாக உள்ள) குறைஷியரின் பல்வேறு குலத்தாரையும் ஆதரவாளர்களையும் காண்கிறீர்கள் (அல்லவா?)" என்று கூறிவிட்டு, தம்முடைய ஒரு கையின் மீது மற்றொரு கையை வைத்து (அவர்களது ஒற்றுமையை) சைகை செய்து காட்டினார்கள்.
பிறகு "நீங்கள் (வெற்றி அடைந்த பின்) என்னை "ஸஃபா' மலைக்கருகில் வந்து சந்தியுங்கள்" என்று கூறி(விட்டுப் போ)னார்கள்.

அவ்வாறே நாங்கள் நடந்து சென்றோம். எங்களில் ஒருவர் எதிரிகளில் ஒருவரைத் தாக்கி வீழ்த்த நினைத்தால், (தடையின்றித்) தாக்கி வீழ்த்தினார். ஆனால், எதிரிகளில் யாரும் எங்களை நோக்கி எதையும் வீச இயலவில்லை.
அப்போது (இஸ்லாத்தைத் தழுவியிருந்த) அபூசுஃப்யான் (ரலி) அவர்கள் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! குறைஷிக் குலமே அடியோடு அழிக்கப்படுகிறது. இன்றைக்குப் பிறகு குறைஷியரே இருக்கமாட்டார்கள்" என்று கூறினார்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் அபூசுஃப்யானின் இல்லத்தினுள் நுழைந்துகொள்கிறாரோ, அவர் அபயம் பெற்றவராவார்" என்று அறிவித்தார்கள்.
அப்போது அன்சாரிகள் ஒருவருக்கொருவர் "இந்த மனிதருக்கு (நபியவர்களுக்கு) தமது ஊர்மீது பற்றும், தம் குலத்தார்மீது பரிவும் ஏற்பட்டுவிட்டது" என்று பேசிக்கொண்டனர்.
அப்போது இறைவனிடமிருந்து செய்தி (வஹீ) வந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு "வஹீ' வந்தால், அது எங்களுக்குத் தெரியாமல் போகாது. அப்போது "வஹீ' முடிவடையும் வரை எங்களில் யாரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கிப் பார்வையைச் செலுத்தமாட்டார்.
அவ்வாறே "வஹீ' வந்து முடிந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அன்சாரி சமுதாயமே!' என்று அழைத்தார்கள். அம்மக்கள் "இதோ வந்தோம், அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினர். "இம்மனிதருக்குத் தமது ஊர்மீது பற்று ஏற்பட்டுவிட்டது என்று நீங்கள் சொன்னீர்கள்(தானே)?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் "ஆம்;அவ்வாறு கூறவே செய்தோம்" என்று (உண்மை) சொன்னார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறன்று; நான் அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவேன். நான் அல்லாஹ்வை நோக்கியும் உங்களிடமும் (நாடு துறந்து) ஹிஜ்ரத் வந்தேன். என் வாழ்வு உங்கள் வாழ்வோடுதான்; என் இறப்பு உங்கள் இறப்போடுதான்" என்று கூறினார்கள்.
அப்போது அன்சாரிகள் அழுதுகொண்டே வந்து, "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதரின் மீதும் கொண்ட பேராசையின் காரணத்தாலேயே அவ்வாறு நாங்கள் கூறினோம்" என்று சொன்னார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உங்களது சொல்லை உண்மை என ஏற்று, நீங்கள் கூறிய காரணத்தையும் ஏற்கின்றனர்' என்று சொன்னார்கள்.
அப்போது மக்களில் சிலர், அபூசுஃப்யானின் வீட்டை நோக்கிச் சென்றனர். வேறுசிலர் தங்கள் (வீட்டுக்) கதவுகளைப் பூட்டிக்கொண்டனர். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஹஜருல் அஸ்வத்' எனும் கல் இருக்குமிடத்தை நோக்கி வந்து, அதைத் தமது கையால் தொட்டு முத்தமிட்டார்கள். பிறகு இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வந்தார்கள்.
அப்போது இறையில்லம் கஅபாவுக்கு அருகிலிருந்த ஒரு சிலையை நோக்கி வந்தார்கள். அதை மக்கள் வழிபட்டுவந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கையில் வில்லொன்று இருந்தது. அவர்கள் அந்த வில்லின் வளைவுப் பகுதியை பிடித்திருந்தார்கள். அந்தச் சிலைக்கு அருகில் வந்ததும், அந்த வில்லால் அதன் கண்ணில் குத்திக்கொண்டே "உண்மை வந்துவிட்டது. பொய்மை அழிந்துவிட்டது" என்று கூறலானார்கள்.

இறையில்லத்தைச் சுற்றி (தவாஃப்) வந்ததும் "ஸஃபா' குன்றுக்கு வந்து, அதன் மீது ஏறி, இறையில்லம் கஅபாவைப் பார்த்தார்கள். அப்போது அல்லாஹ்வைப் போற்றிப் புகழவும், அவன் நாடிய சிலவற்றை வேண்டிப் பிரார்த்திக்கவும் ஆரம்பித்தார்கள்.

3648 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்முடைய ஒரு கையை மற்றொரு கைமீது வைத்து இரு கைகளையும் இணைத்துக் காட்டியபடி "அவர்களை அறுவடை செய்துவிடுங்கள்' என்று கூறினார்கள்" என இடம்பெற்றுள்ளது.
மேலும் இந்த அறிவிப்பில், "அன்சாரிகள் அவ்வாறு நாங்கள் கூறத்தான் செய்தோம், அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவ்வாறாயின் (முஹம்மத் - புகழப்பட்டவர் எனும்) என் பெயருக்கு என்ன அர்த்தம்? அவ்வாறன்று; நான் அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவேன்' என்று கூறினார்கள்" என்றும் இடம்பெற்றுள்ளது.

3649 அப்துல்லாஹ் பின் ரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (சிரியாவிலிருந்த) முஆவியா பின் அபீசுஃப்யான் (ரலி) அவர்களைச் சந்திக்க ஒரு தூதுக் குழுவில் சென்றோம். எங்களிடையே அபூஹுரைரா (ரலி) அவர்களும் இருந்தார்கள்.
எங்களில் ஒவ்வொருவரும் தம் சக பயணிகளுக்கு ஒரு நாளைக்கு ஒருவர் என்ற முறையில் உணவு தயாரித்தோம். என்னுடைய முறைநாள் வந்தபோது நான், "அபூஹுரைரா (ரலி) அவர்களே! இன்று எனது முறைநாள். மக்கள் (எனது) இருப்பிடத்திற்கு வந்துவிட்டனர். ஆனால், உணவு இன்னும் வந்து சேரவில்லை. உணவு வரும்வரை நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பற்றி(ய ஹதீஸ்) கூறினால் நன்றாயிருக்குமே!" என்று கூறினேன். அப்போது அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்:

மக்கா வெற்றி நாளில் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்களை வலப் பக்க அணியினருக்குத் தளபதியாக நியமித்தார்கள்; ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி) அவர்களை இடப் பக்க அணியினருக்கும் அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்களை (நிராயுதபாணிகளாயிருந்த) காலாட்படையினர் மற்றும் பள்ளத்தாக்கின் மையப் பகுதியில் இருந்தோர் ஆகியோருக்கும் தளபதியாக நியமித்தார்கள்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அபூஹுரைரா! அன்சாரிகளை எனக்காக அழையுங்கள்!" என்று கூறினார்கள். அவ்வாறே நான் அவர்களை அழைத்தேன். அப்போது அன்சாரிகள் விரைந்து வந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அன்சாரி சமுதாயத்தாரே! (எதிரிக்) குறைஷியரின் பல்வேறு குலத்தாரை நீங்கள் காண்கிறீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் "ஆம்' என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தமது கையை வெளியிலெடுத்து வலக் கையை இடக் கையின் மீது வைத்து சைகை செய்து காட்டியபடி, "நாளைய தினம் (களத்தில்) அவர்களை நீங்கள் சந்தித்தால் அவர்களை அறுவடை செய்துவிடுங்கள்" என்று கூறினார்கள். பிறகு, "ஸஃபாவில் சந்திப்போம்" என்று கூறி(விட்டுச் செல்லலா)னார்கள். அவ்வாறே

முஸ்லிம்கள் கண்ணில் தென்பட்ட (எதிரிகள்) எவரையும் (ஒரேயடியாகத்) தூங்க வைக்காமல் விடவில்லை.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஸஃபா மலைமீது ஏறினார்கள். அன்சாரிகள் வந்து ஸஃபா மலையைச் சுற்றி நின்றுகொண்டனர். அப்போது அபூசுஃப்யான் (ரலி) அவர்கள் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! குறைஷிக் கூட்டத்தார் முற்றாகத் துடைத்தெறியப் படுகின்றனர். இன்றைய தினத்திற்குப் பிறகு குறைஷியர் எவரும் இருக்கமாட்டார்கள்" என்று கூறினார்கள்.
அபூசுஃப்யான் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் அபூசுஃப்யானின் இல்லத்தினுள் நுழைந்துகொள்கிறாரோ அவர் அபயம் பெற்றவராவார். யார் ஆயுதத்தைக் கீழே போட்டுவிட்டாரோ அவரும் அபயம் பெற்றவராவார். யார் தமது வீட்டுக் கதவை பூட்டிக்கொண்டாரோ அவரும் அபயம் பெற்றவராவார்"என்று கூறினார்கள். அப்போது அன்சாரிகள், "இம்மனிதரை (நபி (ஸல்) அவர்களை) குலப் பாசமும் ஊர்ப் பற்றும் பற்றிக்கொண்டுவிட்டன" என்று கூறினர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இறைச்செய்தி (வஹீ) வந்தது. (அன்சாரிகள் தம்மைப் பற்றிப் பேசிக் கொண்டதை நபியவர்கள் அறிந்துகொண்டார்கள்). பிறகு "இம்மனிதரை குலப்பாசமும் ஊர்ப்பற்றும் பற்றிக்கொண்டுவிட்டன' என்று கூறினீர்களா? நன்றாக அறிந்துகொள்ளுங்கள்: அப்படியானால் எனது (முஹம்மத் – புகழப்பட்டவர் எனும்) பெயருக்கு என்ன அர்த்தமிருக்க முடியும்?" என்று (மூன்று முறை) கூறிவிட்டு, "நான் அல்லாஹ்வின் அடிமையும் அவனுடைய தூதருமான முஹம்மத் ஆவேன். நான் அல்லாஹ்வின் பக்கமும் உங்களிடமும் (நாடு துறந்து) ஹிஜ்ரத் வந்தேன். இனி என் வாழ்வு உங்கள் வாழ்வோடுதான்; என் இறப்பு உங்கள் இறப்போடுதான்" என்று கூறினார்கள்.
அதற்கு அன்சாரிகள், "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதரின் மீதும் கொண்ட பேராசையின் காரணத்தாலேயே நாங்கள் அவ்வாறு சொன்னோம்" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால், அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உங்களது சொல்லை ஏற்று, நீங்கள் கூறிய காரணத்தையும் ஏற்கின்றனர்" என்று கூறினார்கள்.

## பாடம் : 32 கஅபாவைச் சுற்றியிருந்த சிலைகளை அப்புறப்படுத்தியது.

3650 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் கஅபாவைச் சுற்றிலும் முன்னூற்று அறுபது சிலைகள் இருக்க, மக்கா நகருக்குள் நுழைந்தார்கள். அப்போது அவர்கள், தமது கையிலிருந்த குச்சியால் அவற்றைக் குத்தி (அடிக்கத் தொடங்கி)னார்கள். மேலும் "உண்மை வந்துவிட்டது. பொய் அழிந்துவிட்டது. பொய் அழியக்கூடியதாகவே உள்ளது" (17:81) என்றும் "உண்மை வந்துவிட்டது. பொய் புதிதாக ஒன்றும் செய்துவிடவில்லை; இனியும் செய்யப்போவதில்லை" (34:49) என்றும் கூறிக் கொண்டிருந்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் இப்னு அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி நாளில் மக்காவினுள் நுழைந்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அழியக்கூடியதாகவே உள்ளது" என்பது வரையில்தான் இடம்பெற்றுள்ளது. இரண்டாவது வசனம் இடம்பெறவில்லை. மேலும் (சிலைகள் என்பதைக் குறிக்க "நுஸுப்' என்பதற்குப் பகரமாக) "ஸனம்' எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 33 மக்கா வெற்றிக்குப் பின் எந்தக் குறைஷியும் கட்டிவைத்துத் தாக்கப்படும் நிலை வராது.**

3651 முதீஉ பின் அல்அஸ்வத் பின் ஹாரிஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி நாளில், "இன்றைய தினத்துக்குப் பிறகு மறுமை நாள்வரை குறைஷியர் எவரும் கட்டிவைத்துத் தாக்கப்படும் நிலை ஏற்படாது" என்று கூறியதை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3652 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அன்றைய தினம் குறைஷியரில் "அல்ஆஸ்' எனும் பெயர் பெற்றிருந்தவர்களில் முதீஉ (ரலி) அவர்களைத் தவிர வேறெவரும் இஸ்லாத்தை ஏற்றிருக்கவில்லை.
அப்போது முதீஉ அவர்களுடைய பெயர் "அல்ஆஸீ' (மாறு செய்பவர்) என்றிருந்தது. அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே "முதீஉ' (கீழ்ப்படிந்தவர்) என்று பெயர் சூட்டினார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 34 "ஹுதைபியா' எனுமிடத்தில் நடந்த "ஹுதைபியா சமாதான ஒப்பந்தம்'.**

3653 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்கும் (குறைஷி) இணைவைப்பாளர்களுக்கும் இடையே ஹுதைபியா நாளில் நடைபெற்ற சமாதான ஒப்பந்தப் பத்திரத்தை அலீ (ரலி) அவர்களே எழுதினார்கள். அப்போது அலீ (ரலி) அவர்கள், "இது அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் எழுதிக்கொண்டது" என எழுத, இணைவைப்பாளர்கள் "அல்லாஹ்வின் தூதர் முஹம்மத்' என எழுதாதீர்கள்" (என்று கூறிவிட்டு நபியவர்களை நோக்கி), "நீர் அல்லாஹ்வின் தூதர்தாம் என நாங்கள் அறிந்திருந்தால் உம்முடன் போரிட்டிருக்கவே மாட்டோம்" என்று கூறினர்.
ஆகவே, நபி (ஸல்) அவர்கள் (அலீ (ரலி) அவர்களிடம்), "அ(ந்த வாசகத்)தை அழித்துவிடுங்கள்" என்று கூறினார்கள். அலீ (ரலி) அவர்கள், "நான் அதை (ஒரு போதும்) அழிக்கப்போவதில்லை" என்று கூறிவிட்டார்கள். ஆகவே, நபி (ஸல்) அவர்களே தமது கரத்தால் அதை அழித்தார்கள்.

"முஸ்லிம்கள் (அடுத்த ஆண்டு) மக்கா நகருக்குள் நுழைந்து மூன்று நாட்கள் மட்டும் தங்கியிருக்கலாம். நகருக்குள் எந்த ஆயுதத்தையும் உறையிலிட்டுத்தான் ("ஜுலுப்பானுஸ் ஸிலாஹ்') எடுத்துவர வேண்டும்" என இணைவைப்பாளர்கள் நிபந்தனை விதித்திருந்தனர்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்களிடம் "ஜுலுப் பானுஸ் ஸிலாஹ் என்றால் என்ன?" என்று கேட்டேன். அதற்கு அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் "உறையும் அதிலுள்ள ஆயுதமும்" என்று பதிலளித்தார்கள்.

3654 மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹுதைபியாக்காரர்களுடன் (மக்கா குறைஷியருடன் ஹுதைபியா எனுமிடத்தில்) சமாதான ஒப்பந்தம் செய்துகொண்டபோது, அலீ (ரலி) அவர்களே அவர்களுக்கிடையிலான ஒப்பந்தப்பத்திரத்தை எழுதினார்கள். அப்போது "அல்லாஹ்வின் தூதர் முஹம்மத்' என்று அவர்கள் எழுத..." என ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும், இந்த அறிவிப்புகளில் "இது எழுதிக்கொண்டது' ("ஹாதா மா காத்தப அலய்ஹி') எனும் வாக்கியம் இடம்பெறவில்லை.

3655 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவுக்குச் செல்ல முடியாமல் தடுக்கப்பட்டபோது, "முஸ்லிம்கள் (அடுத்த ஆண்டு) மக்காவிற்குள் நுழைந்து மூன்று நாட்கள் தங்கலாம்; நகருக்குள் உறையிலிட்ட வாளுடன்தான் நுழைய வேண்டும்; மக்காவிலிருந்து திரும்பிச் செல்லும்போது மக்காவாசிகளில் யாரையும் தம்முடன் அழைத்துச் செல்லக் கூடாது. அவர்களுடன் வந்திருப்பவர்களில் மக்காவிலேயே தங்கிக்கொள்ள விரும்பும் யாரையும் தடுக்கக்கூடாது' ஆகிய நிபந்தனைகளின் பேரில் மக்காவாசிகள் நபி (ஸல்) அவர்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்துகொண்டனர்.
நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம், "நமக்கிடையிலான சமாதான ஒப்பந்தத்தின் நிபந்தனைகளைப் பின்வருமாறு எழுதுவீராக:
"அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...
இது அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் எழுதிக்கொண்ட ஒப்பந்த பத்திரம்...' என்று கூறினார்கள். உடனே இணைவைப்பாளர்கள், "நீர் அல்லாஹ்வின் தூதர்தாம் என நாங்கள் அறிந்திருப்போமாயின், நாங்கள் உம்மைப் பின்தொடர்ந்திருப்போமே! மாறாக, "அப்துல்லாஹ்வின் புதல்வர் முஹம்மத்' என்று எழுதுங்கள்" என்று கூறினார்கள்.
ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம் அ(ந்த வாசகத்)தை அழித்துவிடுமாறு கூறினார்கள். அதற்கு அலீ (ரலி) அவர்கள், "இல்லை, அல்லாஹ்வின் மீதாணையாக! அதை நான் அழிக்கமாட்டேன்"என்று கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அந்த இடத்தை எனக்குக் காட்டுவீராக!" என்று கூறினார்கள். அலீ (ரலி) அவர்கள் அந்த (வாசகம் இருந்த) இடத்தைக் காட்டினார்கள்.

உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதை (தமது கரத்தால்) அழிந்துவிட்டார்கள். மேலும், "அப்துல்லாஹ்வின் புதல்வர்' என்று எழுதச் செய்தார்கள்.
(அடுத்த ஆண்டு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவில் மூன்று நாட்கள் தங்கியிருந்தார்கள். மூன்றாவது நாளானபோது மக்காவாசிகள் அலீ (ரலி) அவர்களிடம், "உம்முடைய தோழர் நிபந்தனையில் குறிப்பிட்டிருந்த இறுதிநாள் இதுதான். எனவே, அவரை இந்நகரைவிட்டு வெளியேறச் சொல்லுங்கள்" என்று கூறினர். அலீ (ரலி) அவர்கள் இதை நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தபோது "ஆம்' என்று கூறிவிட்டு நபி (ஸல்) அவர்கள் புறப்பட்டு விட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அஹ்மத் பின் ஜனாப் அல் மிஸ்ஸீஸீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("உம்மை நாங்கள் பின்தொடர்ந்திருப்போமே!' என்பதற்குப் பகரமாக) "நாங்கள் (இஸ்லாத்தை ஏற்பதாக) உம்மிடம் உறுதிமொழி அளித்திருப்போமே!' என்று (மக்காவாசிகள் கூறினார்கள் என) இடம்பெற்றுள்ளது.

3656 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
குறைஷியர் தம்முடன் சுஹைல் பின் அம்ர் இருக்க, நபி (ஸல்) அவர்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்தனர். நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம் "(ஒப்பந்தப் பத்திரத்தில் முதலில்) பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் (அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...) என எழுதுவீராக!" என்று கூறினார்கள்.
அப்போது சுஹைல், "பிஸ்மில்லாஹ்' (அல்லாஹ்வின் பெயரால்) என்பது சரி (அதை நாங்கள் அறிவோம்); அது என்ன பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்? அதை நாங்கள் அறியவில்லையே? எனவே, நாங்கள் அறிந்துள்ள "பிஸ்மிக்கல்லாஹும்ம' (அல்லாஹ்வே! உன் பெயரால்) எனும் வாசகத்தை எழுதுங்கள்" என்று கூறினார். (அவ்வாறே எழுதும்படி உத்தரவிட்டார்கள்.) பிறகு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் முஹம்மதிடமிருந்து... என எழுதுவீராக!" என்று (அலீயிடம்) கூறினார்கள்.
அப்போது குறைஷியர், "நீர் இறைவனின் தூதர்தாம் என நாங்கள் அறிந்திருப்போமாயின் நாங்கள் உம்மைப் பின்தொடர்ந்திருப்போம். மாறாக, உமது பெயரையும் உம் தந்தையின் பெயரையும் (ஒப்பந்தத்தில்) எழுதுக" என்று கூறினர். ஆகவே, நபி (ஸல்) அவர்கள் (அலீ (ரலி) அவர்களிடம்) "அப்துல்லாஹ்வின் புதல்வர் முஹம்மதிடமிருந்து என எழுதுவீராக" என்று கூறினார்கள்.
அப்போது குறைஷியர் பின்வருமாறு நபிகளாரிடம் நிபந்தனையிட்டனர்: உங்களிடமிருந்து யாரேனும் (எங்களிடம்) வந்துவிட்டால் அவரை நாங்கள் திருப்பியனுப்பமாட்டோம். எங்களிடமிருந்து யாரேனும் (உங்களிடம்) வந்துவிட்டால் அவரை எங்களிடம் நீங்கள் திருப்பியனுப்ப வேண்டும்.
முஸ்லிம்கள், "அல்லாஹ்வின் தூதரே! (பாதகமான நிபந்தனைகள் கொண்ட) இதை நாம் எழுத வேண்டுமா?" என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், "ஆம்' என்று கூறிவிட்டு, "யாரேனும் நம்மிடம் வந்துவிட்டு (மதமாறிச்) சென்றால் அவரை அல்லாஹ் (தனது அருளிலிருந்து) அப்புறப்படுத்தி விடுவான். அவர்களிடமிருந்து யாரேனும் நம்மிடம் வந்தால்

(அவர் திருப்பியனுப்பப் பெற்றாலும்) அவருக்கு மகிழ்வையும் (நெருக்கடியிலிருந்து) விடுபடுவதற்கான வழியையும் நிச்சயமாக அல்லாஹ் ஏற்படுத்துவான்" என்றார்கள்.

3657 அபூவாயில் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"ஸிஃப்பீன்' போர் நாளில் சஹ்ல் பின் ஹுனைஃப் (ரலி) அவர்கள் (மக்களிடையே) எழுந்து நின்று பின்வருமாறு கூறினார்கள்:
மக்களே! (இந்தப் போரில் ஈடுபாடு காட்டாததைக் குறித்து யாரையும் நீங்கள் குற்றம் சாட்டாதீர்கள்; மாறாக,) உங்களை நீங்களே குற்றம் சாட்டிக்கொள்ளுங்கள். நாங்கள் ஹுதைபியா நாளில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம்.
போர் புரிவது சரியானதென்று நாங்கள் கருதியிருந்தால் போர் புரிந்திருப்போம். ஆனால், அது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் இணைவைப்பாளர்களுக்கும் இடையே சமாதான உடன்பாட்டில் முடிந்தது.
(ஹுதைபியாவில் இணைவைப்பாளர்கள் முஸ்லிம்களுக்குப் பாதகமான நிபந்தனைகளை விதித்தபோதும் நபியவர்கள் ஏற்றுக்கொண்டார்கள்.) அப்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நாம் சத்தியத்திலும் அவர்கள் (எதிரிகள்) அசத்தியத்திலும் இல்லையா?" என்று கேட்டார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம் (நாம் சத்தியத்தில் இருக்கிறோம்; அவர்கள் அசத்தியத்தில் இருக்கிறார்கள்)" என்று பதிலளித்தார்கள். உமர் (ரலி) அவர்கள், "போரில் கொல்லப்படும் நம் வீரர்கள் சொர்க்கத்திலும் அவர்களுடைய வீரர்கள் நரகத்திலும் இருப்பார்கள் இல்லையா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம்' என்று விடையளித்தார்கள்.

அதற்கு உமர் (ரலி) அவர்கள், "அப்படியிருக்க, நாம் ஏன் நமது மார்க்க விஷயத்தில் பணிந்து போக வேண்டும்? அல்லாஹ் நமக்கும் அவர்களுக்கும் இடையே தீர்ப்பளிக்காமலிருக்கும் நிலையில் நாம் ஏன் திரும்ப வேண்டும்?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கத்தாபின் புதல்வரே! நான் அல்லாஹ்வுடைய தூதராவேன். என்னை அல்லாஹ் ஒருபோதும் வீணாக்கமாட்டான்" என்று பதிலளித்தார்கள்.
உமர் (ரலி) அவர்கள் கோபத்தை அடக்க முடியாமல் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் சென்று, "அபூபக்ர் அவர்களே! நாம் சத்தியத்திலும் அவர்கள் அசத்தியத்திலும் இல்லையா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் "ஆம் (நாம் சத்தியத்தில் இருக்கிறோம். அவர்கள் அசத்தியத்தில் இருக்கிறார்கள்)" என்று விடையளித்தார்கள்.
உமர் (ரலி) அவர்கள், "போரில் கொல்லப்படும் நம் வீரர்கள் சொர்க்கத்திலும் அவர்களுடைய வீரர்கள் நரகத்திலும் இருப்பார்கள் இல்லையா?" என்று கேட்டார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள்.
உமர் (ரலி) அவர்கள், "அப்படியிருக்க, நாம் ஏன் நமது மார்க்க விஷயத்தில் பணிந்து போக வேண்டும்? அல்லாஹ் நமக்கும் அவர்களுக்கும் இடையே தீர்ப்பளிக்காமலிருக்கும் நிலையில் நாம் ஏன் திரும்ப வேண்டும்?" என்று கேட்டார்கள்.

அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள், "கத்தாபின் புதல்வரே! நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவார்கள். அவர்களை அல்லாஹ் ஒருபோதும் வீணாக்கமாட்டான்" என்று கூறினார்கள்.
அப்போதுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ("உமக்கு நாம் தெளிவான வெற்றியை அளித்துவிட்டோம்" என்று தொடங்கும்) "அல்ஃபத்ஹ்' எனும் (48ஆவது) அத்தியாயம் அருளப்பெற்றது.
உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களுக்கு ஆளனுப்பி அந்த வசனத்தை ஓதிக்காட்டினார்கள். உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இது வெற்றியா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம் (வெற்றிதான்)" என்று பதிலளித்தார்கள். பிறகு உமர் (ரலி) அவர்கள் மனச்சாந்தியடைந்து திரும்பிச் சென்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3658 அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"ஸிஃப்பீன்' போரின்போது சஹ்ல் பின் ஹுனைஃப் (ரலி) அவர்கள் "மக்களே! (நான் இந்தப் போரில் ஈடுபாடு காட்டாததைக் குறித்து என்னைக் குற்றம் சாட்டாதீர்கள்) உங்களது கருத்தையே குறை காணுங்கள்.
அபூஜந்தல் (அபயம் தேடிவந்த ஹுதைபியா உடன்படிக்கை) நாளில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கட்டளையை மறுப்பதற்கு என்னால் முடிந்திருந்தால் நான் மறுத்திருப்பேன். (அத்தகைய மன நிலையில் அன்று நான் இருந்தேன்.) (அன்று) நாங்கள் எங்கள் வாட்களை எங்கள் தோள்களில் (முடக்கி) வைத்துக்கொண்டது, ஒருபோதும் போருக்கு அஞ்சியல்ல. நாங்கள் அறிந்த ஓர் எளிய விஷய(மான சமாதான)த்திற்காகத்தான். ஆனால், உங்களது இந்த விவகாரம் (ஸிஃப்பீன் போர் அவ்வாறன்று)" எனக் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் முஹம்மத் பின் அப்தில்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஒருபோதும் போருக்கு' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "எங்கள் தோள்களில் நாங்கள் வாட்களை (முடக்கி) வைத்துக்கொண்டது, எங்களுக்குச் சிரமம் தரும் போருக்கு அஞ்சி அல்ல" என்று சஹ்ல் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

3659 அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"ஸிஃப்பீன்' போரின்போது சஹ்ல் பின் ஹுனைஃப் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறியதை நான் கேட்டேன்: (நான் இந்தப் போரில் ஈடுபாடு காட்டாதது குறித்து என்னைக் குற்றம் சாட்டாதீர்கள்) உங்கள் மார்க்க விஷயத்தில் நீங்கள் எடுத்துள்ள முடிவையே குறை காணுங்கள்.
அபூஜந்தல் (அபயம் தேடி வந்த ஹுதைபியா) நாளில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கட்டளையை ஏற்க மறுப்பதற்கு என்னால் முடிந்திருந்தால் (ஏற்க மறுத்திருப்பேன். அத்தகைய மனோ நிலையில்தான் நான் அன்று இருந்தேன்.)

(ஆனால், இன்று உங்கள்) பிரச்சினையில் ஒரு மூலையை (அடைத்து)ச் சீராக்கும்போது, மற்றொரு மூலை நம் முன்னே வெடித்துத் திறந்துகொள்கிறது.

3660 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (உம்ரா வழிபாட்டை நிறைவேற்ற முடியாமல் போனதால்) ஹுதைபியா எனுமிடத்திலேயே பலிப்பிராணியை அறுத்துவிட்டு, அங்கிருந்து (மதீனா நோக்கி) திரும்பிக் கொண்டிருந்தார்கள். அப்போது நபித்தோழர்களைக் கவலையும் சோகமும் தழுவியிருந்தன.
இந்நிலையில்தான் (அவர்களுக்கு), "(நபியே!) உமக்குத் தெளிவானதொரு வெற்றியை நாம் அளித்தோம். உமது பாவத்தில் முந்தியதையும் பிந்தியதையும் உமக்காக அல்லாஹ் மன்னித்து, அவன் தனது அருட்கொடையை உமக்கு முழுமைப்படுத்தி, உமக்கு நேரான பாதையைக் காட்டுவதற்காகவும், அல்லாஹ் மகத்தான உதவியை உமக்குச் செய்வதற்காகவும் (இந்த வெற்றியை அவன் அளித்தான்)" என்று தொடங்கி, "இது அல்லாஹ்விடம் மகத்தான வெற்றியாக இருக்கிறது" என்பதுவரை (48:1-5) இறைவசனங்கள் அருளப்பெற்றன.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "எனக்கு ஓர் இறைவசனம் அருளப்பெற்றுள்ளது. அது இவ்வுலகிலுள்ள அனைத்தையும்விட எனக்கு மிகவும் உவப்பானதாகும்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 35 (போரிலும்) வாக்குறுதியை நிறைவேற்றல்.

3661 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் பத்ருப் போரில் கலந்துகொள்ளாததற்குக் காரணம் யாதெனில், நானும் என் தந்தை ஹுசைல் (எனும் அல்யமான்) அவர்களும் (பத்ர் நோக்கிப்) புறப்பட்டோம். அப்போது குறைஷி இறைமறுப்பாளர்கள் எங்களைப் பிடித்துக்கொண்டனர். "நீங்கள் முஹம்ம(துடன் சேர்ந்து எங்களுக்கெதிராகப் போர் செய்வ)தை நாடித்தானே செல்கிறீர்கள்?" என்று கேட்டார்கள்.
நாங்கள் "(இல்லை) மதீனாவை நோக்கியே செல்கிறோம்" என்று (பேச்சை மாற்றிச்) சொன்னோம். அப்போது குறைஷியர் "நாங்கள் மதீனாவுக்கே திரும்பிவிட வேண்டும்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சேர்ந்து (குறைஷியருக்கெதிராக) போரிடக் கூடாது' என அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு எங்களிடம் வாக்குறுதி பெற்றுக் கொண்டனர்.
நாங்கள் இருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று நடந்ததைத் தெரிவித்தோம். அப்போது அவர்கள், "நீங்கள் இருவரும் (மதீனாவுக்கே) திரும்பிச் செல்லுங்கள். நாம் அவர்களுக்கு ஆதரவாக அவர்களது வாக்குறுதியை நிறைவேற்றுவோம். அவர்களுக்கெதிராக அல்லாஹ்விடம் உதவி கோருவோம்" என்று சொன்னார்கள்.

பாடம் : 36 அகழ்ப் போர்.

3662 யஸீத் பின் ஷரீக் அத்தைமீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நாங்கள் ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது ஒரு மனிதர், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் வாழ்ந்திருந்தால், அவர்களுடன் சேர்ந்து போர்களில் ஈடுபட்டிருப்பேன்; கடுமையாக உழைத்திருப்பேன்" என்று கூறினார்.
அதற்கு ஹுதைஃபா (ரலி) அவர்கள் கூறினார்கள்: நீ அவ்வாறு செய்திருக்கவாபோகிறாய்? அகழ்ப் போர் இரவில் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். கடுமையான காற்றும் குளிரும் எங்களை வாட்டிக்கொண்டிருந்தன.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "எதிரிகள் பற்றிய செய்தியை (உளவறிந்து) என்னிடம் கொண்டுவருபவர் யார்? அவரை மறுமை நாளில் அல்லாஹ் என்னுடன் இருக்கச் செய்வான்" என்று கூறினார்கள். நாங்கள் மௌனமாக இருந்தோம். எங்களில் யாரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பதிலளிக்கவில்லை.
பிறகு மீண்டும் "எதிரிகள் பற்றிய செய்தியை (உளவறிந்து) நம்மிடம் கொண்டுவருபவர் யார்? அவரை மறுமை நாளில் அல்லாஹ் என்னுடன் இருக்கச் செய்வான்" என்று கூறினார்கள். அப்போதும் நாங்கள் அமைதியாக இருந்தோம். எங்களில் யாரும் அவர்களுக்குப் பதிலளிக்கவில்லை.

பிறகு (மூன்றாவது முறையாக), "எதிரிகள் பற்றிய செய்தியை (உளவறிந்து) நம்மிடம் கொண்டுவருபவர் யார்? அவரை மறுமை நாளில் அல்லாஹ் என்னுடன் இருக்கச் செய்வான்" என்று கூறினார்கள். அப்போதும் நாங்கள் அமைதியாகவே இருந்தோம். எங்களில் யாரும் அவர்களுக்குப் பதிலளிக்கவில்லை.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஹுதைஃபா! எதிரிகளைப் பற்றிய செய்தியை (உளவறிந்து) என்னிடம் கொண்டுவா" என்று கூறினார்கள். எனது பெயரைக் குறிப்பிட்டு அவர்கள் என்னை அழைத்துவிட்டதால் என்னால் மறுக்க முடியவில்லை. நான் எழுந்தேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், " நீ சென்று எதிரிகளைப் பற்றிய செய்தியை (உள வறிந்து) என்னிடம் கொண்டுவா! எதிரிகளை எனக்கெதிராக விழிப்படையச் செய்துவிடாதே" என்று கூறினார்கள்.

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து விடைபெற்று (எதிரிகளை நோக்கி)ச் சென்றபோது, நான் வெந்நீரில் நடப்பதைப் போன்றிருந்தது (குளிரே எனக்குத் தெரிய வில்லை). இந்நிலையில் நான் எதிரிகளிடம் வந்துசேர்ந்தேன். அப்போது (எதிரிகளின் தலைவர்) அபூசுஃப்யான் தமது முதுகை நெருப்பில் காட்டி, குளிர் காய்ந்துகொண்டிருந்தார்.
நான் எனது வில்லின் நடுவே ஓர் அம்பைப் பொருத்தி அவர்மீது எய்யப்போனேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் "எனக்கெதிராக எதிரிகளை விழிப்படையச் செய்துவிடாதே' என்று கூறியதை நான் நினைவுகூர்ந்தேன். அப்போது மட்டும் நான் அம்பை எய்திருந்தால், அவரை நிச்சயமாக நான் தாக்கியிருப்பேன்.

பிறகு நான் வெண்ணீரில் நடப்பதைப் போன்றே, (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்) திரும்பி வந்தேன். அவர்களிடம் சென்று எதிரிகளைப் பற்றிய செய்திகளைத் தெரிவித்தேன். நான் செய்திகளைச் சொல்லி முடித்ததும் குளிர் என்னைத் தாக்கத் தொடங்கியது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்மீது இருந்த போர்வையின் ஒரு கூடுதலான பகுதியை எனக்கு அணி வித்தார்கள். அந்தப் போர்வையைப் போர்த்திக்கொண்டுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அப்போது) தொழுது கொண்டிருந்தார்கள். அதிகாலைவரை நான் (அப்போர்வையில்) உறங்கிக்கொண்டேயிருந்தேன். அதிகாலையானதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தூங்கு மூஞ்சி! எழுந்திரு" என்றார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 37 உஹுதுப் போர்.

3663 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உஹுதுப் போர் நாளில் (ஒரு கட்டத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிகளில் எழுவரும் குறைஷியரில் (முஹாஜிர்களில்) இருவரும் மட்டுமே தம்முடனிருக்க தனித்து விடப்பட்டார்கள். (மற்ற தோழர்கள் சிதறி ஓடிவிட்டனர்.)
இந்நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை எதிரிகள் நெருங்கிய போது, "நம்மிடமிருந்து இவர்களை விரட்டியடிப்பவர் யார்? "அவருக்குச் சொர்க்கம் கிடைக்கும்'; அல்லது "அவர் சொர்க்கத்தில் என்னுடன் இருப்பார்"என்று கூறினார்கள்.
அப்போது அன்சாரிகளில் ஒருவர் முன்னேறிச் சென்று போரிட்டார். இறுதியில் அவர் கொல்லப்பட்டார். பிறகு மீண்டும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை எதிரிகள் நெருங்கினார்கள். அப்போது "நம்மிடமிருந்து இவர்களை விரட்டியடிப்பவர் யார்? "அவருக்குச் சொர்க்கம் கிடைக்கும்'; அல்லது "அவர் சொர்க்கத்தில் என்னுடன் இருப்பார்" என்று கூறினார்கள்.
அப்போது அன்சாரிகளில் மற்றொரு மனிதர் முன்னேறிச் சென்று எதிரிகளுடன் போரிட்டார். அவரும் கொல்லப்பட்டார். இவ்வாறே (ஒருவர் பின் ஒருவராகச்) சென்று அன்சாரிகள் எழுவரும் கொல்லப்பட்டனர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உடனிருந்த) தம்மிரு (குறைஷித்) தோழர்களிடம், "நாம் நம்முடைய (அன்சாரித்) தோழர்களிடம் நியாயமாக நடந்துகொள்ள வில்லை" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3664 அபூஹாஸிம் சலமா பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு உஹுதுப் போர் நாளில் ஏற்பட்ட காயங்கள் குறித்துக் கேட்கப்பட்டது. அப்போது அவர்கள் கூறினார்கள்: (அன்றைய தினத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகம் காயப்படுத்தப்பட்டது. அவர்களின் முன்வாய்ப்பற்களில் (கீழ் வரிசையில் வலப்புறப் பல்) ஒன்று உடைக்கப்பட்டது. தலைக் கவசம் அவர்களது தலையில் வைத்தே நொறுக்கப்பட்டது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்கள் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய முகத்திலிருந்து வழிந்த) இரத்தத்தைக் கழுவிக்கொண்டிருந்தார்கள். அலீ பின் அபீ தாலிப் (ரலி) அவர்கள் (தமது) கேடயத்தில் தண்ணீர் (நிரப்பி வந்து அந்தக் காயத்தைக் கழுவுவதற்காக) ஊற்றிக்கொண்டிருந்தார்கள்.
தண்ணீர் மேன்மேலும் இரத்தத்தை அதிகமாக்குவதையே கண்ட ஃபாத்திமா (ரலி) அவர்கள், ஒரு பாய்த் துண்டை எடுத்து வந்து சாம்பலாகும்வரை அதைக் கரித்து, அதைக் காயத்தில் வைத்து அழுத்தினார்கள். இரத்தம் (வழிவது) நின்றுவிட்டது.

3665 மேற்கண்ட ஹதீஸ் அபூஹாஸிம் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வருமாறு ஹதீஸ் ஆரம்பமாகிறது:
சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு (உஹுதுப் போரில்) ஏற்பட்ட காயங்கள் குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு சஹ்ல் (ரலி) அவர்கள், "இதோ! அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் காயத்தைக் கழுவிவிட்டவரையும், (கழுவுவதற்காகத்) தண்ணீரை ஊற்றிக் கொண்டிருந்தவரையும், மருந்துக்குப் பயன்படுத்தப்பட்ட பொருளையும் நான் அறிவேன்" என்று கூறிவிட்டுத் தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி கூறினார்கள்.
ஆயினும், இந்த அறிவிப்பில் "அவர்களது முகம் காயப்படுத்தப்பட்டது' எனும் தகவல் (ஹதீஸின் இறுதியில்) இடம்பெற்றுள்ளது. ("உடைக்கப்பட்டது' என்பதைக் குறிக்க) "ஹுஷிமத்' என்பதற்குப் பதிலாக "குசிரத்' எனும் சொல் ஆளப்பட்டுள்ளது.

3666 மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் சயீத் பின் அபீஹிலால் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவர்களுடைய முகம் தாக்கப்பட்டது" என்றும், முஹம்மத் பின் முதர்ரிஃப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவர்களுடைய முகம் காயப்படுத்தப்பட்டது" என்றும் இடம்பெற்றுள்ளது.

3667 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உஹுதுப் போர் நாளில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய முன்வாய்ப் பற்களில் (கீழ் வரிசையில் வலப்புறப் பல்) ஒன்று உடைக்கப்பட்டது. அவர்களது முகம் காயப்படுத்தப்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காயத்திலிருந்து வழிந்த இரத்தத்தைத் துடைத்தபடியே, "தங்களுடைய நபியைக் காயப்படுத்தி, அவரது பல்லை உடைத்த ஒரு சமுதாயம் எப்படி உருப்படும்? அவரோ அவர்களை அல்லாஹ்வின் பக்கம் அழைத்துக்கொண்டிக்கிறார்" என்று கூறலானார்கள்.
அப்போதுதான் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "(நபியே!) அதிகாரத்தில் உமக்கு எந்தப் பங்கும் இல்லை" (3:128) எனும் வசனத்தை அருளினான்.

3668 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(முற்கால) இறைத்தூதர்களில் ஒருவரின் நிலையை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எடுத்துரைத்துக்கொண்டிருந்ததை நான் இப்போதும் பார்ப்பதைப் போன்றுள்ளது. அந்த இறைத்தூதரை அவருடைய சமுதாயத்தார் அடித்தனர். அவரோ தமது முகத்திலிருந்து இரத்தத்தைத் துடைத்தபடி, "இறைவா! என் சமுதாயத்தாரை மன்னித்துவிடு.

ஏனெனில், அவர்கள் அறியாதவர்களாக இருக்கிறார்கள்" என்று சொல்லிக்கொண்டிருந்தார் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும் அவற்றில், "அவர் தமது நெற்றியிலிருந்து இரத்தத்தை வழித்துக்கொண்டிருந்தார்' என்று இடம் பெற்றுள்ளது.

**பாடம் : 38 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களால் கொல்லப்பட்ட ஒருவன்மீது அல்லாஹ்வின் கோபம் கடுமையாதல்.**

3669 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

இவை அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உஹுதுப் போரில் உடைபட்ட) தமது (முன் வாய்ப்பற்களில் கீழ் வரிசையில் வலப்புறம் இருந்த) பல்லைச் சுட்டிக்காட்டி, "அல்லாஹ்வின் தூதரை இப்படிச் செய்துவிட்ட சமுதாயத்தின் மீது அல்லாஹ்வின் கோபம் மிகக் கடுமையாகிவிட்டது" என்றும், "அல்லாஹ்வின் பாதையில் அல்லாஹ்வின் தூதர் யாரைக் கொன்றுவிடுவாரோ அவர்மீதும் அல்லாஹ்வின் கோபம் மிகக் கடுமையாகி விட்டது" என்றும் கூறினார்கள்.

**பாடம் : 39 நபி (ஸல்) அவர்கள் இணைவைப்பாளர்களிடமிருந்தும் நயவஞ்சகர்களிடமிருந்தும் சந்தித்த துன்பங்கள்.**

3670 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபா அருகில் தொழுது கொண்டிருந்தார்கள். அபூஜஹ்லும் அவனுடைய நண்பர்களும் (அங்கு) அமர்ந்திருந்தனர். அதற்கு முந்தையநாள் (இறைச்சிக்காக மக்காவில்) ஓர் ஒட்டகம் அறுக்கப்பட்டிருந்தது.

அபூஜஹ்ல், "உங்களில் யார், இன்ன குடும்பத்தார் (நேற்று) அறுத்த ஒட்டகத்தின் கருப்பையைச் சுற்றியுள்ள சவ்வுகளைக் கொண்டுவந்து முஹம்மத் (தொழுகையில்) சிரவணக்கத்திற்குச் செல்லும்போது, அவருடைய தோள்கள்மீது வைப்பவர்?" என்று கேட்டான். அங்கிருந்தவர்களில் மாபாதகன் ஒருவன் கிளம்பிச் சென்று, அதைக் கொண்டுவந்தான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரவணக்கம் செய்தபோது, அவர்களுடைய தோள்களுக்கு மத்தியில் அதை(த் தூக்கி) வைத்தான். அதைக் கண்டு அவனுடைய சகாக்கள் ஒருவர்மீது ஒருவர் விழுந்து சிரிக்கலாயினர். நான் நின்று பார்த்துக்கொண்டிருந்தேன். எனக்குச் சக்தி இருந்திருந்தால் அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய முதுகிலிருந்து அப்புறப்படுத்தியிருப்பேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரவணக்கத்திலிருந்து தலையை உயர்த்தாமல் (அப்படியே) இருந்தார்கள்.

இதற்கிடையில், யாரோ ஒருவர் சென்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் புதல்வி) ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் விஷயத்தைத் தெரிவித்துவிட்டார். உடனே சிறுமியாயிருந்த ஃபாத்திமா (ரலி) அவர்கள் வந்து அதை அப்புறப்படுத்தினார்.

பிறகு அ(ந்தக் கய)வர்களை நோக்கிச் சென்று அவர்களை ஏசினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் உரத்த குரலில் எதிரிகளுக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்.
-பொதுவாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தால் ஒவ்வொரு வாக்கியத்தையும் மூன்று முறை கூறுவார்கள்.–
பிறகு "இறைவா! குறைஷியரை நீயே கவனித்துக்கொள்" என்று மூன்று முறை பிரார்த்தித்தார்கள். நபியவர்களது குரலைக் கேட்டதும் எதிரிகளின் சிரிப்பு அடங்கிவிட்டது. அல்லாஹ்வுடைய தூதரின் பிரார்த்தனையைக் குறித்து அவர்கள் அஞ்சினர்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! அபூஜஹ்ல் பின் ஹிஷாம், உத்பா பின் ரபீஆ, ஷைபா பின் ரபீஆ, வலீத் பின் உக்பா, உமய்யா பின் கலஃப், உக்பா பின் அபீமுஐத் (ஏழாவதாக மற்றொருவரையும் குறிப்பிட்டார்கள். ஆனால், அது என் நினைவில் இல்லை.) ஆகியோரை நீயே கவனித்துக்கொள்" என்று பிரார்த்தித்தார்கள்.
முஹம்மத் (ஸல்) அவர்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன்மீது ஆணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இந்தப் பிரார்த்தனையில்) பெயர் குறிப்பிட்ட அனைவரும் பத்ருப் போர்க்களத்தில் மாண்டு கிடந்ததை நான் கண்டேன். பின்னர் அவர்கள் அனைவரும் இழுத்துச் செல்லப்பட்டு, பத்ரிலிருந்த ஒரு பாழுங்கிணற்றில் தள்ளப்பட்டனர்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸில் வலீத் பின் உக்பாவின் பெயர் தவறுதலாகவே இடம்பெற்றுள்ளது. (வலீத் பின் உத்பா என்பதே சரி.)

3671 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இறையில்லம் கஅபா அருகில்) தொழுகையில் சிரவணக்கத்தில் (சஜ்தாவில்) இருந்தார்கள். அவர்களைச் சுற்றி குறைஷியர் சிலர் இருந்தனர். அப்போது உக்பா பின் அபீமுஐத் என்பான் அறுக்கப்பட்ட ஓர் ஒட்டகத்தின் கருவைச் சுற்றியுள்ள சவ்வுகளுடன் வந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய முதுகில் அதைப் போட்டான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சஜ்தாவிலிருந்து) தமது தலையை உயர்த்தவில்லை.
பின்னர் (அவர்களுடைய புதல்வி) ஃபாத்திமா (ரலி) அவர்கள் வந்து அவர்களது முதுகிலிருந்தவற்றை அப்புறப்படுத்திவிட்டு, அவ்வாறு செய்தோருக்கெதிராகப் பிரார்த்தித்தார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! குறைஷிப் பிரமுகர்களான அபூஜஹ்ல் பின் ஹிஷாம், உத்பா பின் ரபீஆ, உக்பா பின் அபீமுஐத், ஷைபா பின் ரபீஆ, "உமய்யா பின் கலஃப்” அல்லது "உபை பின் கலஃப்” (அறிவிப்பாளர் ஷுஅபாவின் ஐயப்பாடு) ஆகியோரை நீயே கவனித்துக்கொள்" என்று பிரார்த்தித்தார்கள்.
அவர்கள் அனைவரும் பத்ருப் போரில் கொல்லப்பட்டு, ஒரு கிணற்றில் போடப்பட்டனர். உமய்யா அல்லது உபையின் மூட்டுகள் தனித்தனியே கழன்றுகொண்டதால் அவன் (இழுத்துச் சென்று) கிணற்றில் போடப்படவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3672 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஏதேனும் பிரார்த்தித்தால்) மூன்று முறை கோருவதையே விரும்புவார்கள். "இறைவா! குறைஷியரை நீயே கவனித்துக்கொள். இறைவா! குறைஷியரை நீயே கவனித்துக்கொள். இறைவா! குறைஷியரை நீயே கவனித்துக்கொள்' என்று மூன்று முறை பிரார்த்தித்தார்கள்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
மேலும் வலீத் பின் உத்பா, உமய்யா பின் கலஃப் ஆகியோர் பெயரையும் குறிப்பிட்டதாகவும் இடம்பெற்றுள்ளது. அந்த அறிவிப்பிலுள்ள ஐயப்பாடு இதில் இல்லை. "ஏழாமவர் பெயரை நான் மறந்துவிட்டேன்" என்று அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாகவும் காணப்படுகிறது.

3673 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவை முன்னோக்கி, குறைஷிக் குலத்தைச் சேர்ந்த அறுவருக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்.
அவர்களில் அபூஜஹ்ல், உமய்யா பின் கலஃப், உத்பா பின் ரபீஆ, ஷைபா பின் ரபீஆ, உக்பா பின் அபீமுஐத் ஆகியோர் இடம்பெற்றனர். (ஆறாவது நபரின் பெயர் இடம்பெறவில்லை.) அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்: அவர்கள் (அறுவரும்) சூரிய வெப்பத்தால் (உடல் உப்பி, நிறம் மாறி,) உருமாறி (பத்ருப் போர்க்களத்தில்) மாண்டு கிடந்ததை நான் கண்டேன். அன்றைய தினம் வெப்பம் நிறைந்த நாளாக இருந்தது.

3674 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! (தாங்கள் காயமடைந்த) உஹுதுப் போர் நாளைவிடக் கடுமையானதொரு நாளைத் தாங்கள் சந்தித்ததுண்டா?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நான் உன் சமுதாயத்தாரால் (நிறையத் துன்பங்களைச்) சந்தித்துவிட்டேன். அவர்களால் நான் சந்தித்த துன்பங்களிலேயே மிகக் கடுமையானது, (தாயிஃபில் உள்ள) "அகபா' நாளில் சந்தித்த துன்பமேயாகும்.
ஏனெனில், அன்று நான் என்னை (இறைவனின் தூதராக) ஏற்றுக்கொள்ளும்படி (தாயிஃப் நகரத் தலைவரான கினானா) இப்னு அப்தி யாலீல் பின் அப்தி குலால் என்பவரிடம் எடுத்துரைத்தேன். எனக்கு இசைவான பதிலை அவர் அளிக்கவில்லை.
ஆகவே, நான் கவலையோடு எதிர்ப்பட்ட திசையில் நடந்தேன். "கர்னுஸ் ஸஆலிப்' எனும் இடத்தை அடையும்வரை நான் சுயஉணர்வுக்குத் திரும்பவில்லை. அங்கு வந்து சேர்ந்தவுடன் என் தலையை உயர்த்தினேன். அப்போது அங்கே (வானத்தில்) ஒரு மேகம் என்மீது நிழலிட்டுக்கொண்டிருந்தது. நான் கூர்ந்து கவனித்தபோது, அதில் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் இருந்தார்கள்.
அவர்கள் என்னை அழைத்து, "உங்கள் சமுதாயத்தாரிடம் நீங்கள் சொன்னதையும் அவர்கள் உங்களுக்கு அளித்த பதிலையும் அல்லாஹ் செவியுற்றான். அவர்களை நீங்கள் விரும்பியபடி (தண்டிப்பதற்கு) ஆணையிடுவதற்காக மலைகளுக்கான வானவரை அல்லாஹ் உங்களிடம் அனுப்பியுள்ளான்" என்று கூறினார்கள்.

உடனே மலைகளை நிர்வகிக்கும் வானவர் என்னை அழைத்து, எனக்கு முகமன் (சலாம்) கூறினார். பிறகு "முஹம்மதே! உங்கள் சமுதாயத்தார் உங்களிடம் பேசியதை அல்லாஹ் கேட்டான். நான் மலைகளுக்கான வானவர். (இந்த மக்கள் விஷயத்தில்) நீங்கள் விரும்பியபடி கட்டளையிடுவதற்காக உங்களிடம் என்னை அல்லாஹ் அனுப்பியுள்ளான். உங்கள் விருப்பம் என்ன? (இந்த நகரத்தின் இரு மருங்கிலுமுள்ள) இந்த இரு மலைகளையும் அவர்கள்மீது நான் புரட்டிப் போட்டுவிட வேண்டுமென்று நீங்கள் விரும்பினாலும் (உங்கள் கட்டளைப்படி செயல்பட நான் தயாராக உள்ளேன்)" என்று கூறினார்.
உடனே நான் அவரிடம், "வேண்டாம். இந்த (நகரத்து) மக்களின் வழித்தோன்றல்களில் அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காமல் அவனை மட்டுமே வழிபடுவோரை அல்லாஹ் உருவாக்குவான் என்று நான் நம்புகிறேன் (ஆகவே, அவர்களைத் தண்டிக்க வேண்டாம்)" என்று கூறிவிட்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3675 ஜுன்துப் பின் அப்தில்லாஹ் பின் சுஃப்யான் அல்பஜலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பங்குபெற்ற ஒரு போரில் அவர்களது (கால்) விரலில் (காயம் ஏற்பட்டு) இரத்தம் சொட்டியது. அப்போது அவர்கள்,
நீ இரத்தம் சொட்டுகின்ற
ஒரு விரல்தானே
நீ பட்டதெல்லாம்
இறைவழியில்தானே
என்று (ஈரடிச் சீர்பாடல் வடிவில்) கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3676 மேற்கண்ட ஹதீஸ் ஜுன்துப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு படையில் இருந்தபோது, அவர்களது (கால்) விரலில் கல் பட்டு (காயமேற்பட்டு)விட்டது" என்று இடம்பெற்றுள்ளது.

3677 ஜுன்துப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (சில நாட்கள்) தாமதமாக வந்தார்கள். அப்போது இணைவைப்பாளர்கள், "முஹம்மத் விடை கொடுக்கப்பட்டு விட்டார்" என்று கூறினர்.
அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "முற்பகலின் மீது சத்தியமாக! இருண்டுவிட்ட இரவின் மீது சத்தியமாக! (நபியே!) உம்முடைய இறைவன் உம்மைக் கைவிடவுமில்லை; கோபங்கொள்ளவுமில்லை" (93:1-3) எனும் வசனங்களை அருளினான்.

3678 ஜுன்துப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டு "இரண்டு இரவுகள்" அல்லது "மூன்று இரவுகள்" (இரவுத் தொழுகைக்காகக்கூட) எழவில்லை. அவர்களிடம் ஒரு

பெண் வந்து, "முஹம்மதே! உம்முடைய ஷைத்தான் உம்மைக் கைவிட்டு விட்டான் என்றே நான் கருதுகிறேன். அதனால்தான் "இரண்டு இரவுகளாக' அல்லது "மூன்று இரவுகளாக" உம்மை அந்த ஷைத்தான் நெருங்கி வரவில்லை" என்று கூறினாள்.
அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் "முற்பகலின் மீது சத்தியமாக! இருண்டுவிட்ட இரவின் மீது சத்தியமாக! (நபியே!) உங்கள் இறைவன் உங்களைக் கைவிடவுமில்லை; கோபங் கொள்ளவுமில்லை" எனும் (93: 1-3)வசனங்களை அருளினான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜுன்துப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 40 நபி (ஸல்) அவர்கள் (மக்களை) இறைவன்பால் அழைத்ததும் நயவஞ்சகர்கள் அளித்த துன்பங்களைப் பொறுத்ததும்.

3679 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் கழுதையொன்றில் சேணம் விரித்து, அதில் "ஃபதக்' நகர் குஞ்சம் வைத்த முரட்டுத் துணி விரித்து, அதில் அமர்ந்தவாறு பயணம் செய்தார்கள். என்னைத் தமக்குப் பின்னால் அமர்த்திக்கொண்டார்கள். ஹாரிஸ் பின் அல்கஸ்ரஜ் குலத்தாரிடையே (உடல் நலமில்லாமல்) இருந்த சஅத் பின் உபாதா (ரலி) அவர்களை உடல்நலம் விசாரிக்கச் சென்றார்கள்.

இது பத்ருப் போர் நிகழ்ச்சிக்கு முன்னால் நடந்தது. (வழியில்) நபியவர்கள் ஓர் அவையைக் கடந்துசென்றார்கள். அந்த அவையில் முஸ்லிம்களும் சிலை வழிபாட்டாளர்களான இணைவைப்போரும் யூதர்களும் கலந்து இருந்தார்கள்.
அவர்களிடையே (நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் பின் உபை பின் சலூலும் இருந்தார். அதே அவையில் (கவிஞர்) அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலி) அவர்களும் இருந்தார்கள். (எங்கள் வாகனப்) பிராணியின் (காலடிப்) புழுதி அந்த அவையைச் சூழ்ந்தபோது, அப்துல்லாஹ் பின் உபை தனது மேல்துண்டால் தனது முகத்தைப் பொத்திக்கொண்டு, "எங்கள்மீது புழுதியைக் கிளப்பாதீர்கள்" என்று சொன்னார்.

நபி (ஸல்) அவர்கள் அந்த அவையோருக்கு முகமன் (சலாம்) கூறினார்கள். பிறகு, தமது வாகனத்தை நிறுத்தி இறங்கி,அவர்களை அல்லாஹ்வின் (மார்க்கத்தின்)பால் அழைத்தார்கள். அவர்களுக்குக் குர்ஆன் வசனங்களை ஓதிக்காட்டினார்கள். அப்போது அப்துல்லாஹ் பின் உபை பின் சலூல், "மனிதரே! நீர் கூறுகின்ற விஷயம் உண்மையாயிருப்பின், அதைவிட அழகியது வேறொன்றுமில்லை. ஆனாலும், அதை எங்களுடைய (இத்தகைய) அவைகளில் கூறி எங்களுக்குத் தொல்லை கொடுக்காதீர். உமது இருப்பிடத்திற்குச் செல்லும். எங்களில் யார் உம்மிடம் வருகிறார்களோ அவர்களுக்கு எடுத்துச் சொல்லும்" என்றார்.
(இதைக் கேட்ட) அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலி) அவர்கள், "(ஆம்; அல்லாஹ்வின் தூதரே! இதை) எங்கள் அவைகளில் வெளிப்படுத்துங்கள். ஏனெனில், நாங்கள் அதை விரும்புகிறோம்" என்று சொன்னார்கள்.

இதற்கிடையே முஸ்லிம்களும் இணைவைப்போரும் யூதர்களும் ஒருவரையொருவர் ஏசிக் கொண்டே ஒருவர் மீதொருவர் பாய்ந்து (தாக்கிக்)கொள்ள முற்பட்டனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் மக்களை அமைதிப்படுத்திக் கொண்டேயிருந்தார்கள்.
பின்னர் தமது வாகனத்தில் ஏறி (உடல்நலமில்லாமல் இருந்த) சஅத் பின் உபாதா (ரலி) அவர்களிடம் சென்று, "சஅதே! (உங்கள் குலத்தாரான) அபூஹுபாப் –அப்துல்லாஹ் பின் உபை– சொன்னதை நீங்கள் கேள்விப்படவில்லையா?" என்று கூறி, "அப்துல்லாஹ் பின் உபை இப்படி இப்படிக் கூறினார்" என்று தெரிவித்தார்கள்.
அதற்கு சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள், "அவரை மன்னித்து விட்டுவிடுங்கள், அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த (மதீனா) நகரத்தார் அவருக்குக் கிரீடம் அணிவித்து அவருக்கு முடிசூட்ட முடிவு செய்திருந்த நிலையில்தான், அல்லாஹ் தங்களுக்கு இ(ந்த நபித்துவம் மற்றும் தலைமைத்துவத்)தை வழங்கினான். அல்லாஹ் தங்களுக்கு வழங்கிய சத்திய (மார்க்க)த்தின் மூலம் அவர்களின் முடிவை நிராகரித்தபோது, அதனால் அவர் பொருமினார். அதுதான் தாங்கள் பார்த்தபடி அவர் நடந்துகொண்டதற்குக் காரணம்" என்று கூறினார்கள். ஆகவே, நபி (ஸல்) அவர்கள் அப்துல்லாஹ்வை மன்னித்துவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "இது அப்துல்லாஹ் தம்மை ஒரு முஸ்லிம் என்று கூறிக்கொள்வதற்கு முன்னர் (இறைமறுப்பாளராக இருந்தபோது) நடந்ததாகும்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

3680 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம், "தாங்கள் அப்துல்லாஹ் பின் உபையிடம் சென்றால் நன்றாயிருக்குமே!" என்று கூறப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் அப்துல்லாஹ்விடம் செல்ல ஒரு கழுதையில் ஏறினார்கள். முஸ்லிம்களும் நடந்து சென்றார்கள். அவர்கள் சென்ற பாதை உவர் நிலமாக இருந்தது.
அப்துல்லாஹ்வை நபி (ஸல்) அவர்கள் சென்றடைந்தபோது, அவர், "தூர விலகிப்போ! அல்லாஹ்வின் மீதாணையாக! உன் கழுதையின் துர்நாற்றம் என்னைத் துன்புறுத்திவிட்டது" என்று கூறினார்.
அப்போது அன்சாரி(த் தோழர்)களில் ஒருவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதருடைய கழுதை உன்னைவிட நல்ல வாசனையுடையதுதான்" என்று கூறினார். அப்துல்லாஹ்வுக்காக அவரது (கஸ்ரஜ்) குலத்தைச் சேர்ந்த ஒருவர் ஆத்திரப்பட்டார்.
அவ்விருவருக்காகவும் அவரவருடைய நண்பர்கள் கோபமடைந்தார்கள். ஈச்ச மட்டையாலும் கைகளாலும் செருப்பாலும் அடித்துக்கொண்டார்கள்.
அப்போது, "இறைநம்பிக்கையாளர்களில் இரு குழுவினர் தம்மிடையே சண்டையிட நேர்ந்தால் அவர்களிடையே சமாதானம் செய்துவையுங்கள்" (49:9) எனும் வசனம் அவர்கள் குறித்து அருளப்பட்டது எனும் செய்தி எங்களுக்கு எட்டியது.

**பாடம் : 41 அபூஜஹ்ல் கொல்லப்படுதல்.**

3681 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(பத்ருப் போர்க் களத்தில்) "அபூஜஹ்ல் என்ன ஆனான் எனப் பார்த்து வருபவர் யார்?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். உடனே இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் (அவனைப் பார்த்துவரச்) சென்றார்கள். அவனை (அன்சாரியான) அஃப்ரா என்பவருடைய இரு புதல்வர்கள் (முஆத், முஅவ்வித் ஆகிய இருவரும் பலமாகத்) தாக்கிவிடவே அவன் (குற்றுயிராக) வீழ்ந்து கிடப்பதைக் கண்டார்கள்.
இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் அவனது தாடியைப் பிடித்துக்கொண்டு, "அபூஜஹ்ல் நீதானே!" என்று கேட்டார்கள். அதற்கு அபூஜஹ்ல், "நீங்கள் கொன்றுவிட்ட ஒரு மனிதனுக்கு மேலாக" அல்லது "தன்னுடைய (சமுதாயத்து) மக்களாலேயே கொல்லப்பட்டுவிட்ட ஒரு மனிதனுக்கு மேலாக" ஒருவன் உண்டா?" என்று (தன்னைத்தானே பெருமைப்படுத்திய) அவன் கேட்டான்.
அபூமிஜ்லஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "விவசாயக் குடியில் பிறக்காத ஒருவன் (அன்சாரி அல்லாதவன்) என்னைக் கொன்றிருந்தால் நன்றாயிருந்திருக்குமே!" என அபூஜஹ்ல் கூறினான் என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அபூஜஹ்ல் என்ன செய்கிறான் என எனக்காக அறிந்துவருபவர் யார்?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள் என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. அபூமிஜ்லஸ் (ரஹ்) அவர்களின் குறிப்பும் இதில் இடம்பெறுகிறது.

**பாடம் : 42 யூதர்களின் தலைவன் கஅப் பின் அல்அஷ்ரஃப் கொல்லப்படுதல்.**

3682 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கஅப் பின் அல்அஷ்ரஃபை வீழ்த்துவதற்கு (தயாராயிருப்பவர்) யார்? அவன் அல்லாஹ்வுக்கும் அல்லாஹ்வின் தூதருக்கும் தொல்லை கொடுத்துவிட்டான்" என்று சொன்னார்கள்.
உடனே முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நான் அவனைக் கொல்வதை தாங்கள் விரும்புகிறீர்களா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம்' என்று விடையளித்தார்கள்.
முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள், "நான் (அவனைக் குதூகலப்படுத்தி நம்பவைப்பதற்காக உங்களைக் குறை கூறிப்) பேச என்னை அனுமதியுங்கள்" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பேசு" என அனுமதியளித்தார்கள்.
முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள் கஅப் பின் அல்அஷ்ரஃபிடம் சென்று, "இந்த மனிதர் (முஹம்மத் –ஸல்), எங்களிடம் (மக்களுக்குத் தருவதற்காக) தான தர்மத்தை விரும்புகிறார். எங்களுக்குக் கடும் சிரமம் தந்துவிட்டார்" என்று (நபி (ஸல்) அவர்களைக் குறை கூறி சலித்துக்கொள்ளும் விதத்தில்) கூறினார்கள். இதைக் கேட்ட கஅப் பின்

அல்அஷ்ரஃப், "அல்லாஹ்வின் மீதாணையாக! இன்னும் அதிகமாக நீங்கள் அவரிடம் சலிப்படைவீர்கள்" என்று கூறினான்.
அதற்கு முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள், "நாங்கள் (தெரிந்தோ தெரியாமலோ) அவரை இப்போது பின்பற்றிவிட்டோம். அவரது விவகாரம் எதில் முடிவடைகிறது என்பதைப் பார்க்காமல் அவரைவிட்டு (விலகி)விட நாங்கள் விரும்பவில்லை. (அதனால்தான் அவருடன் இருந்துகொண்டிருக்கிறோம்)" என்று (சலிப்பாகப் பேசுவதைப் போன்று) கூறிவிட்டு, நீர் எனக்குச் சிறிதளவு கடன் தர வேண்டும் என நான் விரும்புகிறேன்" என்று கூறினார்கள்.
அதற்கு கஅப், "இதற்காக நீ எதை அடைமானம் வைக்கப்போகிறாய்?" என்று கேட்டான். அதற்கு முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள், "நீ என்ன விரும்புகிறாய்?" என்று கேட்டார்கள். அதற்கு கஅப், "உங்கள் பெண்களை என்னிடம் அடைமானம் வையுங்கள்" என்று சொன்னான். முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள், "நீர் அரபுகளிலேயே மிகவும் அழகானவர். எங்கள் பெண்களை அடைமானம் வைக்க வேண்டுமா? (அடைமானம் மூலம்தான் பெண்களை அடைய வேண்டிய அவசியம் உமக்கு இல்லை)" என்று சொன்னார்கள்.

"(அப்படியானால்) உங்கள் குழந்தைகளை என்னிடம் அடைமானம் வையுங்கள்" என்று கஅப் கேட்டான். அதற்கு முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள், "(எங்கள் குழந்தைகளை எப்படி அடைமானம் வைப்பது?) எங்கள் புதல்வர்களில் ஒருவர் ஏசப்பட்டால், அப்போது "இவன் இரண்டு "வஸ்க்" பேரீச்சம் பழங்களுக்காக அடைமானம் வைக்கப்பட்டவன்' என்றல்லவா ஏசப்படுவான்? (இது எங்களுக்கு அவமானமாயிற்றே?) எனவே, உன்னிடம் (எங்கள்) ஆயுதங்களை அடைமானம் வைக்கிறோம்" என்று கூறினார்கள். "அப்படியானால் சரி' என கஅப் (சம்மதம்) தெரிவித்தான்.
பிறகு முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள், ஹாரிஸ் பின் அவ்ஸ், அபூஅப்ஸ் பின் ஜப்ர், அப்பாத் பின் பிஷ்ர் (ரலி) ஆகியோருடன் பிறகு வருவதாக வாக்களித்துவிட்டுச் சென்றார்கள்.
அவ்வாறே அவர்கள் ஓரிரவில் வந்து அவனை அழைத்தார்கள். கஅப் (தனது கோட்டையிலிருந்து) அவர்களிடம் இறங்கிவந்தான்.
-(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: எனக்கு இதை அறிவித்த அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் அல்லாத மற்றொருவரது அறிவிப்பில் "கஅபின் மனைவி அவனிடம், "நான் ஒரு சப்தத்தைக் கேட்கிறேன். அது இரத்தப் பலி கோருபவனின் குரலைப் போன்றுள்ளது" என்று கூறினாள்.
அதற்கு கஅப் "அவர் (வேறு யாருமல்லர்) முஹம்மத் பின் மஸ்லமாவும் அவருடைய பால்குடிச் சகோதரர் அபூநாயிலாவும் தாம். மேன்மக்களில் ஒருவன் ஈட்டி எறிய இரவு நேரத்தில் அழைக்கப்பட்டாலும் அவன் அந்த அழைப்பை ஏற்றுக்கொள்ளவே செய்வான்" என்று கூறினான் என இடம்பெற்றுள்ளது.
அப்போது முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள் (தம் சகாக்களிடம்), "கஅப் பின் அல் அஷ்ரஃப் வந்தால் நான் அவனது தலையை நோக்கி (அவனது தலையிலுள்ள நறுமணத்தை நுகருவதற்காக) எனது கையை நீட்டுவேன். அவனது தலையை எனது பிடிக்குள் நான்

கொண்டு வந்துவிட்டதும் அவனைப் பிடித்து (வாளால் வெட்டி)விடுங்கள்" என்று கூறினார்கள்.

கஅப் பின் அல்அஷ்ரஃப் (தனது ஆடை அணிகலன்களை) அணிந்துகொண்டு நறுமணம் கமழ இறங்கிவந்தான். அப்போது முஹம்மத் பின் மஸ்லமாவும் சகாக்களும், "உம்மிடமிருந்து நல்ல நறுமணத்தை நாங்கள் நுகருகிறோம்" என்று கூறினர். அதற்கு கஅப் "ஆம்; என்னிடம் இன்ன பெண் (மனைவியாக) இருக்கிறாள். அவள் அரபுப் பெண்களிலேயே மிகவும் வாசனையுடைய நறுமணத்தைப் பாவிக்கக்கூடியவள்" என்று கூறினான்.

முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள், "உமது தலையிலுள்ள நறுமணத்தை நுகர எனக்கு அனுமதியளிப்பீரா?" என்று கேட்டார்கள். அதற்கு கஅப் "ஆம்; நுகர்ந்து கொள்' என அனுமதியளித்தான்.

அவ்வாறே முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள் அவனது தலையைப் பிடித்துக் கொண்டு நுகர்ந்தார்கள். பிறகு, "மீண்டும் ஒருமுறை நுகர என்னை அனுமதிப்பீரா?" என்று கேட்டார்கள். இவ்வாறு முஹம்மத் பின் மஸ்லமா (ரலி) அவர்கள் அவனைத் தம் வசம் கொண்டு வந்தபோது "பிடியுங்கள்" என்று கூறினார்கள். உடனே அவர்கள் அனைவரும் (சேர்ந்து) அவனைக் கொன்றுவிட்டனர்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 43 கைபர் போர்.

3683 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் போருக்குப் புறப்பட்டுச் சென்றபோது, கைபருக்கு அருகில் இரவின் இருட்டு இருக்கவே சுப்ஹுத் தொழுகையை நாங்கள் தொழுதோம். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது) வாகனத்தில் ஏறி (கைபரை நோக்கி)ப் பயணம் செய்தார்கள். அபூதல்ஹா (ரலி) அவர்களும் தமது வாகனத்தில் ஏறிப் பயணம் செய்தார்கள். நான் அபூதல்ஹா (ரலி) அவர்களுக்குப் பின்னால் வாகனத்தில் இருந்தேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் செல்லும் சாலையில் தமது வாகனத்தை (விரைவாகச்) செலுத்தினார்கள். எனது முழங்கால், (அருகில் வாகனத்தில் சென்ற) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தொடையைத் தொட்டுக்கொண்டிருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வேட்டி அவர்களது தொடையிலிருந்து விலகியது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தொடையின் வெண்மையை நான் பார்த்தேன்.

நகருக்குள் நுழைந்தபோது, "அல்லாஹ் மிகப் பெரியவன். கைபர் பாழா(வது உறுதியா)கி விட்டது. நாம் ஒரு சமுதாயத்தின் முற்றத்தில் (போரிட) இறங்குவோமாயின், எச்சரிக்கப்பட்டோரின் காலைப் பொழுது கெட்டதாக ஆகிவிடும்" என்று மூன்று முறை கூறினார்கள்.

அப்போது (யூத) மக்கள் தம் வேலைகளுக்காகப் புறப்பட்டுவந்தனர். (எங்களைப் பார்த்ததும்), "முஹம்மத் வந்துவிட்டார்" என்று கூறினர். நாங்கள் கைபரைப் போர் செய்தே கைப்பற்றினோம் (சமாதான ஒப்பந்தத்தின் மூலம் கைப்பற்றவில்லை).

இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல் அஸீஸ் பின் ஸுஹைப் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: "முஹம்மதும் அவருடைய ஐந்து அணிகள் கொண்ட படையும் வந்துவிட்டனர்" என யூதர்கள் சொல்லிக்கொண்டார்கள் என என் சகாக்களில் சிலர் கூறினர்.

3684 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் போர் நாளில் நான் அபூதல்ஹா (ரலி) அவர்களுக்குப் பின்னால் (வாகனத்தில்) இருந்தேன். எனது பாதம், (அருகில் வாகனத்தில் சென்ற) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது பாதத்தைத் தொட்டுக்கொண்டிருந்தது. நாங்கள் கைபர்வாசிகளிடம் சூரியன் உதிக்கும் நேரத்தில் சென்றடைந்தோம். அப்போது அவர்கள் தங்களுடைய கால்நடைகள், கோடரிகள், (பேரீச்ச ஓலைகளாலான) கூடைகள் மற்றும் மண் வெட்டிகள் ஆகியவற்றுடன் (வயல்வெளிகளை நோக்கி) வெளியேறி வந்தனர்.
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்ததும்) "முஹம்மதும் அவருடைய (ஐந்து அணிகள் கொண்ட) படையும் (வருகின்றனர்)" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கைபர் பாழா(வது உறுதியா)கிவிட்டது. நாம் ஒரு சமுதாயத்தின் முற்றத்தில் (போரிட) இறங்குவோமாயின், எச்சரிக்கப்பட்டோரின் காலைப் பொழுது கெட்டதாக ஆகிவிடும்" என்று கூறினார்கள். அவ்வாறே வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், அவர்களைத் தோற்கடித்தான்.

3685 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபருக்கு வந்தபோது, "நாம் ஒரு சமுதாயத்தின் முற்றத்தில் (போரிட) இறங்குவோமாயின், எச்சரிக்கப்பட்டோரின் காலைப்பொழுது கெட்டதாக ஆகிவிடும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3686 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் கைபரை நோக்கி(ப் போருக்காக)ப் புறப்பட்டோம். இரவு நேரத்தில் நாங்கள் சென்றுகொண்டிருந்தபோது மக்களில் ஒருவர், (என் தந்தையின் சகோதரர்) ஆமிர் பின் அல்அக்வஉ (ரலி) அவர்களிடம், "உங்கள் கவிதைகளில் சிலவற்றை எங்களுக்குப் பாடமாட்டீர்களா?" என்று கேட்டார்.
ஆமிர் (ரலி) அவர்கள் கவிஞராக இருந்தார்கள். அவர்கள் தமது வாகனத்திலிருந்து இறங்கி மக்களுக்காக (பின்வரும் யாப்பு வகைக் கவிதையை)ப் பாடி அவர்களுடைய ஒட்டகங்களைப் பாய்ந்தோடச் செய்தார்கள்:
இறைவா!
நீ இல்லையென்றால்
நாங்கள்
நேர்வழி பெற்றிருக்கமாட்டோம்.
தர்மமும் செய்திருக்கமாட்டோம்.
தொழுதிருக்கவுமாட்டோம்.
நாங்கள் புரிந்துவிட்ட

பாவங்களுக்காக
எங்களை மன்னிப்பாயாக.
உனக்கே நாங்கள் அர்ப்பணம்.
(போர்முனையில் எதிரியை)
நாங்கள் சந்திக்கும்போது
எங்கள் பாதங்களை
உறுதிப்படுத்துவாயாக.
எங்கள்மீது அமைதியைப்
பொழிவாயாக. (அறவழியில் செல்ல)
நாங்கள் அழைக்கப்பட்டால்
நாங்கள் (தயாராக) வந்துவிடுவோம்.
எங்களிடம்
மக்கள் (அபயக்) குரல்
எழுப்பினால்
(உதவிக்கு வருவோம்).

என்று பாடிக்கொண்டிருந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் இந்த ஒட்டகவோட்டி?" என்று கேட்டார்கள். "ஆமிர் பின் அல்அக்வஉ" என்று மக்கள் பதிலளித்தனர். அப்போது, "அவருக்கு அல்லாஹ் அருள் புரிவானாக" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள்.

அங்கிருந்த மக்களில் ஒருவர், "இறைத்தூதரே! (அவருக்கு வீரமரணமும் அதையடுத்துச் சொர்க்கமும்) உறுதியாகிவிட்டது. அவர் (நீண்ட காலம் உயிர் வாழ்வதன்) மூலம் எங்களுக்குப் பயன் கிடைக்க (பிரார்த்தனை) செய்யக்கூடாதா?" என்று கேட்டார்.

பிறகு நாங்கள் கைபருக்குச் சென்று, கைபர்வாசிகளை முற்றுகையிட்டோம். அப்போது எங்களுக்குக் கடுமையான பசி ஏற்பட்டது. பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் உங்களுக்குக் கைபரை வெற்றியாக்கிவிட்டான்"என்று கூறினார்கள். வெற்றியளிக்கப்பட்ட அன்று மாலை, மக்கள் நிறைய நெருப்புகளை (ஆங்காங்கே) மூட்டினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இது என்ன நெருப்பு? எதற்காக இவற்றை மூட்டியிருக்கிறீர்கள்?"என்று கேட்டார்கள். "இறைச்சி சமைப்பதற்காக" என்று மக்கள் விடையளித்தனர். "எந்த இறைச்சி?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "நாட்டுக் கழுதைகளின் இறைச்சி" என்று மக்கள் கூறினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவற்றைக் கொட்டிவிட்டு, பாத்திரங்களை உடைத்து விடுங்கள்" என்று கூறினார்கள்.

அப்போது ஒருவர், "இறைச்சிகளைக் கொட்டிவிட்டு, பாத்திரங்களைக் கழுவிக் கொள்ளலாமா?" என்று கேட்டார். "அப்படியே ஆகட்டும்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(அன்றைய தினம் போருக்காக) மக்கள் அணிவகுத்து நின்றபோது, ஆமிர் (ரலி) அவர்களின் வாள் குட்டையாக இருந்தது. குனிந்து ஒரு யூதனின் காலை அவர்கள் வெட்டப் போனபோது, ஆமிர் அவர்களின் வாளின் மேற்பகுதி அவர்களது முழங்காலையே திருப்பித் தாக்கிவிட்டது. அதனால் அவர்கள் இறந்துவிட்டார்கள்.

(கைபர் வெற்றிக்குப் பின் மதீனாவை நோக்கி) மக்கள் திரும்பியபோது –சலமா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்– அமைதியாக இருந்த என்னைக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது கையைப் பிடித்துக்கொண்டு, "உமக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள்.
நான், "என் தந்தையும் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! (என் தந்தையின் சகோதரர்) ஆமிரின் நற்செயல்கள் அழிந்துவிட்டன. (அவர் தமது வாளால் தம்மைத் தாமே குத்திக் கொண்டு தற்கொலை செய்துகொண்டார்) என்று மக்கள் கூறுகிறார்கள்" எனத் தெரிவித்தேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதைச் சொன்னவர் யார்?" என்று கேட்டார் கள். "இன்ன மனிதரும் இன்ன மனிதரும் உசைத் பின் ஹுளைர் அல்அன்சாரீ (ரலி) அவர்களுமே இவ்வாறு கூறினர்" என்று நான் பதிலளித்தேன். "இதைச் சொன்னவர் பொய்யுரைத்து விட்டார். நிச்சயமாக ஆமிருக்கு (நற்செயல் புரிந்த நன்மை,அறப்போர் புரிந்த நன்மை ஆகிய) இரண்டு நன்மைகள் உண்டு" என்று கூறியவாறு, தம் இரு விரல்களையும் இணைத்துக் காட்டினார்கள்.
தொடர்ந்து, "அவர் துன்பங்களைத் தாங்கினார். (இறைவழியில்) அறப்போரும் புரிந்தார். (துன்பங்களைத் தாங்கியதுடன் அறவழியில் போரும் புரிந்து) பூமியில் உலவிய இவரைப் போன்ற அரபியர் மிகவும் அரிதே" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் அப்பாத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ("எங்கள்மீது அமைதியைப் பொழிவாயாக' என்பதைக் குறிக்க "வ அல்கியன் சகீனத்தன் அலைனா" என்பதற்குப் பகரமாக) "வ அல்கீ சகீனத்தன் அலைனா' என்று இடம்பெற்றுள்ளது (பொருள் ஒன்றே).

3687 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் போர் தினத்தன்று என் (தந்தையின்) சகோதரர் (ஆமிர்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சேர்ந்து (யூதர்களுடன்) கடுமையாகப் போரிட்டார். அப்போது அவருடைய வாள் முனை அவரையே திருப்பித் தாக்கிவிட்டது. அதனால் அவர் இறந்துவிட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தோழர்கள் (சிலர்) இது தொடர்பாக (பல விதமாக)ப் பேசிக் கொண்டனர். அவர் (மரணம்) தொடர்பாக சந்தேகம் வெளியிட்டனர். "அவர் தமது ஆயுதத்தாலேயே இறந்துவிட்ட மனிதர்" என்றும், அவருடைய நடவடிக்கைகளில் இன்னும் சிலவற்றைக் குறித்தும் சந்தேகமாகப் பேசினர்.
கைபரிலிருந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திரும்பிச் சென்றபோது (அவர்களிடம்) நான், "அல்லாஹ்வின் தூதரே! தங்களுக்காகச் சில யாப்பு வகைக் கவிதையைப் பாட எனக்கு அனுமதி அளியுங்கள்" என்று கேட்டேன். எனக்கு அவர்கள் அனுமதியளித்தார்கள். அப்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், "நீ சொல்லவிருப்பதை நான் அறிவேன்" என்று கூறினார்கள். அப்போது நான் பின்வரும் யாப்பு வகைக் கவிதைகளைப் பாடினேன்:
"அல்லாஹ்வின் மீதாணை!
அல்லாஹ் இல்லாவிட்டால்
நாங்கள் நேர்வழி பெற்றிருக்கமாட்டோம்

தர்மமும் செய்திருக்கமாட்டோம்.
தொழுதிருக்கவும் மாட்டோம்"
என்று பாடினேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீ உண்மையுரைத்தாய்' என்று கூறினார்கள். பிறகு நான்,
"எங்கள் மீது
அமைதியைப் பொழிவாயாக.
(போர் முனையில் எதிரிகளை)
நாங்கள் சந்திக்கும்போது
எங்கள் பாதங்களை
உறுதிப்படுத்துவாயாக.
இணைவைப்பாளர்கள்
எங்கள்மீது வரம்புமீறிவிட்டார்கள்"
என்று பாடினேன்.
நான் பாடி முடித்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை யாத்தவர் யார்?" என்று கேட்டார்கள். நான் "என் (தந்தையின்) சகோதரர் (ஆமிர்)" என்றேன். "அவருக்கு அல்லாஹ் அருள்புரிவானாக" என்று நபியவர்கள் பிரார்த்தித்தார்கள்.
அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! சிலர், என் சகோதரருக்கு (இறுதித் தொழுகை) தொழுவதற்கு அஞ்சுகின்றனர். அவர் தமது ஆயுதத்தாலேயே தற்கொலை செய்துகொண்ட ஒரு மனிதர் என்று கூறுகின்றனர்" என்றேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவர் துன்பங்களைத் தாங்கி, (இறை வழியில்) அறப்போரும் புரிந்து இறந்தார்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
பிறகு நான் சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்களின் புதல்வர் ஒருவரிடம் (இந்த ஹதீஸைப் பற்றிக்) கேட்டேன். அவரும் தம் தந்தையாரிடமிருந்து இதைப் போன்றே எனக்கு அறிவித்தார்.
ஆயினும், "மக்களில் சிலர் ஆமிருக்காக (இறுதித் தொழுகை) தொழுவதற்கு அஞ்சுகின்றனர்" என்று நான் கூறியபோது "அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவர்கள் பொய்யுரைத்துவிட்டனர். அவர் துன்பங்களைத் தாங்கி (இறைவழியில்) அறப்போரும் புரிந்து இறந்தார். அவருக்கு (நற்செயல் புரிந்த நன்மை, அறப்போர் புரிந்த நன்மை ஆகிய) இரண்டு நன்மைகள் உண்டு' என்று கூறியபடி, தம் இரு விரல்களை இணைத்துக் காட்டினார்கள்" என்று அவர் கூறினார்.

## பாடம் : 44 "அஹ்ஸாப்' எனும் அகழ்ப் போர்.

3688 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அகழ்ப் போரின்போது (அகழ் வெட்டும் பணியில் ஈடுபட்டிருந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுடன் மண்ணைச் சுமந்து எடுத்துச் சென்றுகொண்டு இருந்தார்கள்.

மண், அவர்களது வயிற்றின் வெண்மையை மறைத்துவிட்டிருந்தது. அப்போது அவர்கள் இவ்வாறு (பாடிய வண்ணம்) கூறிக்கொண்டு இருந்தார்கள்:
அல்லாஹ்வின் மீதாணை!
அல்லாஹ் இல்லாவிட்டால், நாங்கள்
நேர்வழி அடைந்திருக்கமாட்டோம்
தர்மமும் செய்திருக்கமாட்டோம்
தொழுதிருக்கவுமாட்டோம்.
எங்கள்மீது அமைதியைப்
பொழிவாயாக! இவர்கள்
(கூட்டுப் படையினர்) எங்களுக்கு
அக்கிரமம் இழைத்துவிட்டனர்.
சில வேளை இவ்வாறு கூறினார்கள்:
இந்தப் பிரமுகர்கள்
எங்களை நிராகரித்துவிட்டனர்.
இவர்கள் எங்களைச்
சோதனையில் ஆழ்த்த விரும்பினால்
நாங்கள் இடம் தரமாட்டோம்.
"(நாங்கள் இடம் தரமாட்டோம்; நாங்கள் இடம் தரமாட்டோம் என) இந்த (இறுதி) வாசகத்தை உரத்த குரலில் கூறிக்கொண்டு இருந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், ("இவர்கள் எங்களை நிராகரித்து விட்டனர்" என்பதற்குப் பகரமாக) "இவர்கள் எங்கள்மீது எல்லை மீறிவிட்டனர்" என்று இடம்பெற்றுள்ளது.

3689 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அகழ் தோண்டிக்கொண்டும் எங்கள் தோள்களின் மீது மண்ணைச் சுமந்து எடுத்துச் சென்றுகொண்டும் இருந்தபோது, எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது அவர்கள்,
"இறைவா! மறுமை வாழ்வைத் தவிர
வேறு (நிரந்தர) வாழ்வு எதுவுமில்லை
ஆகவே, (அதற்காகப் பாடுபடும்)
முஹாஜிர்களுக்கும் அன்சாரிகளுக்கும் மன்னிப்பருள்வாயாக!"
என்று (பாடியபடி) கூறினார்கள்.

3690 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (அகழ் தோண்டிக்கொண்டிருந்தபோது),
"இறைவா! மறுமை வாழ்வைத் தவிர
வேறு (நிரந்தர) வாழ்வு எதுவுமில்லை

ஆகவே, (அதற்காகப் பாடுபடும்)
அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் மன்னிப்பருள்வாயாக!"
என்று (பாடியபடி) கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3691 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அகழ் தோண்டிக்கொண்டிருந்தபோது),
"இறைவா! மறுமை வாழ்வே
(நிரந்தரமான) வாழ்வாகும்'
அல்லது "இறைவா!
மறுமை வாழ்வைத் தவிர
வேறு (நிரந்தர) வாழ்வு
வேறெதுவுமில்லை'
ஆகவே, (அதற்காகப் பாடுபடும்
அன்சாரிகளையும் முஹாஜிர்களையும்
நீ கண்ணியப்படுத்துவாயாக"
என்று (பாடியபடி) கூறினார்கள். "அல்லது' எனும் ஐயப்பாட்டுடன் ஷுஅபா (ரஹ்) அவர்களே அறிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3692 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (அகழ் தோண்டிக்கொண்டு) இருந்த போது பின்வரும் யாப்பு வகைக் கவிதையைப் பாடிக்கொண்டிருந்தார்கள்:
இறைவா!
மறுமையின் நன்மையைத் தவிர
வேறு (நிலையான) நன்மை
எதுவுமில்லை.
ஆகவே, (அதற்காகப் பாடுபடும்)
அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும்
நீ உதவி செய்வாயாக.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஷைபான் பின் ஃபர்ரூக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உதவி செய்வாயாக' என்பதற்குப் பகரமாக "மன்னிப்பருள்வாயாக' என்று இடம்பெற்றுள்ளது.

3693 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அகழ்ப் போர் நாளில் முஹம்மத் (ஸல்)
அவர்களின் தோழர்கள்,
"நாங்கள் (எத்தகையோர் எனில்)
உயிரோடிருக்கும் காலம்வரை

நாங்கள் "இஸ்லாத்தில் நிலைப்போம்”
அல்லது "அறப்போர் புரிவோம்”
என முஹம்மத் (ஸல்) அவர்களிடம்
உறுதிமொழி கொடுத்திருக்கிறோம்"
என்று (பாடியபடி) கூறிக்கொண்டிருந்தனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,
"இறைவா! மறுமையின் நன்மையே
(நிலையான) நன்மையாகும்.
ஆகவே, (அதற்காகப் பாடுபடும்)
அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும்
நீ மன்னிப்பருள்வாயாக!"
என்று (பாடியபடியே) சொன்னார்கள்.

**பாடம் : 45 "தூ கரத்' உள்ளிட்ட போர்கள்.**

3694 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
முதல் தொழுகை(யான ஃபஜ்ரு)க்கு அழைப்புக் கொடுப்பதற்கு முன்பாகவே நான் (மதீனாவிலிருந்து சிரியா வழியிலுள்ள ஃகாபாவை நோக்கிப்) புறப்பட்டேன். "தூ கரத்” எனும் இடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் (பால் தரும்) ஒட்டகங்கள் மேய்ந்துகொண்டிருந்தன.
அப்போது அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களுடைய ஓர் அடிமை (வந்து) என்னைச் சந்தித்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பால் ஒட்டகங்கள் பிடித்துச் செல்லப்பட்டுவிட்டன" என்று கூறினார். நான், "அவற்றை யார் பிடித்துச் சென்றனர்?" என்று கேட்டேன். அதற்கு அந்த அடிமை, "ஃகத்ஃபான் குலத்தார்" என்று பதிலளித்தார்.
உடனே நான் உரக்கச் சப்தமிட்டு "உதவி! உதவி! அதிகாலை ஆபத்து!” (யா ஸபாஹா!) என்று மதீனாவின் இரு மலைகளுக்கிடையிலிருந்த அனைவருக்கும் கேட்கும்படி மூன்று முறை கத்தினேன். பிறகு முகத்தைத் திருப்பாமல் நேராக விரைந்து சென்று "தூ கரத்” எனும் இடத்தில் அவர்களை அடைந்தேன். அவர்கள் (அங்கிருந்த நீர்நிலையில்) தண்ணீர் புகட்டத் தலைப்பட்டிருந்தனர்.
"அக்வஇன் மகன் நான்! இன்று அற்பர்கள் (அழியும்) நாள்"
என்று பாடியபடி கூறிக்கொண்டே அவர்கள்மீது அம்பெய்யத் தொடங்கினேன். நான் அம்பெய்வதில் தேர்ச்சி பெற்றவனாக இருந்தேன். மேலும், நான் "ரஜ்ஸ்' எனும் யாப்பு வகைக் கவிதையைப் பாடிக்கொண்டே அவர்களிடமிருந்து (சில) ஒட்டகங்களை விடுவித்தேன்.
(அவர்களை நான் விரட்டிச் சென்றபோது) அவர்கள் விட்டுவிட்டுப்போன முப்பது சால்வை களை நான் எடுத்துக்கொண்டேன். அப்போது நபி (ஸல்) அவர்களும் மக்களும் (அங்கு) வந்து சேர்ந்தனர்.
நான், "அல்லாஹ்வின் தூதரே! அந்தக் கூட்டத்தார் தாகத்துடன் இருந்தபோதும் அவர்களை தண்ணீர் குடிக்கவிடாமல் நான் தடுத்துவிட்டேன். எனவே, (அவர்கள் ஓட்டிச்சென்ற மற்ற

ஒட்டகங்களையும் விடுவிக்க) அவர்களை நோக்கி ஒரு படைப்பிரிவை இப்போதே அனுப்புங்கள்" என்று கூறினேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அக்வஉ உடைய மகனே! (அவர்களை) நீ தோற்கடித்துவிட்டாய். ஆகவே, மென்மையாக நடந்துகொள்" என்று கூறினார்கள். பிறகு நாங்கள் (மதீனாவுக்குத்) திரும்பிவந்தோம்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவிற்குள் நுழையும் வரையில் என்னைத் தமக்குப் பின்னே தமது ஒட்டகத்தின் மீது அமர்த்திக்கொண்டார்கள்.

3695 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹுதைபியாவை நோக்கிச் சென்றோம். அப்போது நாங்கள் ஆயிரத்து நானூறு பேர் இருந்தோம். அங்கு (தண்ணீர் குறைவாக இருந்ததால் எங்களுடைய) ஐம்பது (குர்பானி) ஆடுகள் நீர் புகட்டப் படாமல் (தாகத்துடன்) இருந்தன.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கிருந்த கிணற்றின் சுற்றுச் சுவர்மீது அமர்ந்துகொண்டு பிரார்த்தித்தார்கள். அல்லது அதனுள் உமிழ்ந்தார்கள். உடனே கிணற்றில் நீர் மட்டம் உயர்ந்தது. உடனே நாங்கள் நீர் அருந்தினோம். எங்கள் கால் நடைகளுக்கும் நீர் புகட்டினோம்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கிருந்த மரத்துக்குக் கீழே உறுதிமொழிப் பிரமாணம் (பைஅத்) வாங்குவதற்காக எங்களை அழைத்தார்கள். மக்கள் அனைவருக்கும் முன்பாக (முதலில்) நானே அவர்களிடம் உறுதிமொழி அளித்தேன். பிறகு ஒவ்வொருவராக (வந்து) உறுதிமொழி அளித்தனர்.
மக்களில் பாதிப்பேரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உறுதிமொழி வாங்கி) இருந்தபோது "சலமா! உறுதிமொழி அளிப்பாயாக!" என்று (என்னிடம்) கூறினார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் மக்கள் அனைவருக்கும் முன்பாக தங்களிடம் உறுதிமொழி அளித்துவிட்டேன்" என்று சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மீண்டும் (ஒரு முறை உறுதிமொழி அளிப்பாயாக)" என்று கூறினார்கள்.
அப்போது என்னிடம் ஆயுதம் எதுவும் இல்லாமலிருப்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்டார்கள். எனக்கு "சிறிய தோல் கேடயம் ஒன்றை" அல்லது "தோல் கேடயம் ஒன்றை" அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வழங்கினார்கள். பிறகு என்னிடம் உறுதிமொழி பெற்றார்கள்.

மக்களில் இறுதி நபரிடம் அவர்கள் (உறுதிமொழி பெற்றுக்கொண்டு) இருந்தபோது, "சலமா! என்னிடம் நீ உறுதிமொழி அளிக்கக் கூடாதா?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் மக்கள் அனைவருக்கும் முன்பாகவும் மக்களில் பாதிப்பேராகவும் தங்களிடம் உறுதிமொழி அளித்துவிட்டேன்" என்று சொன்னேன்.
"மீண்டும் (ஒரு தடவை உறுதிமொழி அளிப்பாயாக)" என்று சொன்னார்கள். நான் மூன்றாவது தடவையாக உறுதிமொழி அளித்தேன்.
பிறகு என்னிடம், "சலமா! உனக்கு நான் வழங்கிய உனது "சிறிய தோல் கேடயம்" அல்லது "தோல் கேடயம்' எங்கே?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! என்

தந்தையின் சகோதரர் ஆமிர் (ரலி) அவர்கள் என்னைச் சந்தித்தார். அவரிடம் ஆயுதம் எதுவும் இல்லாமலிருப்பதை நான் கண்டேன். எனவே, அதை அவருக்குக் கொடுத்துவிட்டேன்" என்று சொன்னேன்.
அதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்தார்கள். மேலும், "நீர் முற்காலத்தில் வாழ்ந்த ஒரு மனிதரைப் போன்றவர் ஆவீர். அவர் "இறைவா! எனக்காக ஒரு நண்பரைக் கிடைக்கச் செய்வாயாக! அவர் என் உயிரைவிட எனக்கு மிகவும் பிரியமானவராக இருக்க வேண்டும்' என்று பிரார்த்தித்தார். (அவரைப் போன்றே நீரும் உம்மைவிட உம் தந்தையின் சகோதரருக்கு முன்னுரிமை அளித்துள்ளீர்)" என்று கூறினார்கள்.
பிறகு (மக்கா) இணைவைப்பாளர்கள் சமாதான ஒப்பந்தம் செய்துகொள்வதாக எங்களுக்குத் தூது விட்டார்கள். இதனால், (நாங்களும் அவர்களும்) ஒருவர் பகுதிக்கு மற்றவர் சென்றுவர முடியும். நாங்கள் சமாதான ஒப்பந்தம் செய்துகொண்டோம்.
நான் தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்களுக்கு உதவியாளராக இருந்தேன். அவரது குதிரைக்குத் தண்ணீர் புகட்டுவேன். அதைத் துடைத்துத் துப்புரவு செய்வேன். அவருக்கு ஊழியமும் செய்வேன். அவர் தரும் உணவை உண்டுகொள்வேன். அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவும் எனது குடும்பம், சொத்து (சுகங்)கள் அனைத்தையும் விட்டுவிட்டு, நான் நாடு துறந்து (மதீனாவுக்கு) வந்திருந்தேன்.

நாங்களும் மக்காவாசிகளும் சமாதான ஒப்பந்தம் செய்து, எங்களில் ஒருவர் மற்றொருவருடன் கலந்துறவாடிக்கொண்டபோது, நான் ஒரு மரத்தை நோக்கி வந்து, அதன் (அடிப்பாகத்தில் இருந்த) முற்களை அகற்றிவிட்டு அதற்குக் கீழே படுத்துக்கொண்டேன்.
அப்போது மக்காவாசிகளான நான்கு இணைவைப்பாளர்கள் என்னிடம் வந்து, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை இழிவாகப் பேசத் தொடங்கினர். அவர்கள் மீது எனக்குக் கோபம் வந்தது. உடனே மற்றொரு மரத்துக்கு நான் மாறிக்கொண்டேன். அந்த நால்வரும் தம் ஆயுதங்களை (அந்த மரத்தில்) தொங்கவிட்டுவிட்டு அவர்களும் படுத்துக்கொண்டனர்.
இந்நிலையில், யாரோ ஒருவர் அந்தப் பள்ளத்தாக்கின் கீழேயிருந்து "முஹாஜிர்களுக்கு ஏற்பட்ட நாசமே! (நம் தோழர்) இப்னு ஸுனைம் கொல்லப்பட்டுவிட்டார் (ஒப்பந்த மீறல் நடைபெற்றுவிட்டது)" என்று உரக்க அறிவித்தார். உடனே நான் எனது வாளை உருவிக் கொண்டு, படுத்திருந்த அந்நால்வரைத் தாக்கினேன். அவர்களின் ஆயுதங்களை எடுத்து ஒரே கட்டாக என் கையில் வைத்துக்கொண்டேன்.

பிறகு "முஹம்மத் (ஸல்) அவர்களது முகத்தைக் கண்ணியப்படுத்திய (இறை)வன் மீதாணையாக! உங்களில் யாரேனும் தலையைத் தூக்கிப் பார்த்தால் அவரது கண் உள்ள பகுதியிலேயே அடிப்பேன்" என்று கூறினேன்.
பின்னர் அவர்களை இழுத்துக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தேன். என் தந்தையின் சகோதரர் ஆமிர் (ரலி) அவர்கள் "அபலாத்" குலத்தைச் சேர்ந்த "மிக்ரஸ்" எனப்படும் ஒரு மனிதரை பிடித்துக்கொண்டு, துணி விரிக்கப்பட்ட குதிரையொன்றில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார். அவருடன் எழுபது இணைவைப்பாளர்களும் இருந்தார்கள்.

அவர்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பார்த்துவிட்டு "அவர்களை விட்டு விடுங்கள். (ஒப்பந்த மீறல்) குற்றம் அவர்களிடமிருந்தே தொடங்கி மீண்டும் ஏற்பட்டதாக இருக்கட்டும்" என்று கூறி, அவர்களை மன்னித்து விட்டுவிட்டார்கள்.

அல்லாஹ் (இது தொடர்பாகவே), "மக்காவின் மையப் பகுதியில் அவர்களுக்கு எதிராக அவன் உங்களுக்கு வெற்றி அளித்த பின் உங்கள் கைகளை அவர்களிடமிருந்தும், அவர்கள் கைகளை உங்களிடமிருந்தும் அவனே தடுத்தான். அல்லாஹ் நீங்கள் செய்து கொண்டிருப்பதை உற்றுநோக்குபவனாக இருக்கின்றான்" (48:24) எனும் வசனத்தை அருளினான்.

பிறகு நாங்கள் மதீனாவை நோக்கித் திரும்பினோம். அப்போது ஓரிடத்தில் நாங்கள் இறங்கித் தங்கினோம். (அந்த இடத்திலிருந்த) எங்களுக்கும் இணைவைப்பாளர்களான "பனூ லஹ்யான்" குலத்தாருக்கும் இடையே ஒரு மலை மட்டுமே இருந்தது.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(எதிரிகளைக் கண்காணிப்பதற்காக) இன்றிரவு இம்மலைமீது ஏறுபவரின் பாவங்களை அல்லாஹ் மன்னிப்பானாக!" எனப் பிரார்த்தித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் அவர்களுடைய தோழர்களுக்கும் உளவாளி போன்று (அவர் இருக்க வேண்டும் என்பதே நோக்கம்). அன்றிரவு நான் இரண்டு அல்லது மூன்று முறை அம்மலைமீது ஏறினேன்.

பிறகு நாங்கள் மதீனாவுக்கு வந்தோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் (பால்) ஒட்டகங்களைத் தம் அடிமையான ரபாஹ் (ரலி) அவர்களுடன் அனுப்பிவைத்தார்கள். அவருடன் நானும் இருந்தேன். தல்ஹா (ரலி) அவர்களின் குதிரையை ஓட்டிக்கொண்டு, ஒட்டகங்களுடன் அந்தக் குதிரைக்கும் தண்ணீர் புகட்டி மேய்ச்சல் நிலத்துக்கு அனுப்புவதற்காக நானும் புறப்பட்டுச் சென்றேன்.

காலையில் அப்துர் ரஹ்மான் அல்ஃபஸாரீ என்பான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஒட்டகங்களைத் திடீரெனத் தாக்கி, அவை அனைத்தையும் ஓட்டிச் சென்றுவிட்டான். அவற்றின் மேய்ப்பாளரையும் கொன்றுவிட்டான்.

உடனே நான், "ரபாஹே! (இதோ) இந்தக் குதிரையைப் பிடித்துச் சென்று, தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்களிடம் சேர்த்துவிடு. மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், அவர்களின் கால்நடைகளை எதிரிகள் தாக்கிக் கொள்ளையடித்துச் சென்று விட்டனர் எனத் தெரிவித்துவிடு" என்று கூறினேன்.

பிறகு ஒரு மலையின் உச்சியில் ஏறி மதீனாவை முன்னோக்கி நின்றுகொண்டு, "உதவி! உதவி! அதிகாலை ஆபத்து! (யா ஸபாஹா!)" என மூன்று முறை உரத்த குரலில் கூவினேன். பிறகு அந்தக் (கொள்ளைக்) கூட்டத்தைப் பின்தொடர்ந்து சென்று, அவர்கள்மீது அம்பெய்தவனாக விரட்டிச் சென்றேன். அப்போது நான்,

"அக்வஇன் மகன் நான்
இன்று அற்பர்களின் (அழிவு) நாள்"

என யாப்புக் கவிதை பாடினேன். பிறகு அவர்களில் ஒருவனை நெருங்கி அவனது ஒட்டகச் சேணத்தின் மீது அம்பெய்தேன். அதன் கூர்முனை சேணத்தில் நுழைந்து அவனது தோளில் பாய்ந்தது. நான்,

"இதோ வாங்கிக்கொள்;
அக்வஇன் மகன் நான்;

இன்று அற்பர்களின் (அழிவு) நாள்"
என்று (பாடியபடி) கூறினேன்.
அல்லாஹ்வின் மீதாணையாக! இவ்வாறு அவர்கள்மீது அம்பெய்துகொண்டும் அவர்களின் குதிரைகளை வெட்டி வீழ்த்திக்கொண்டும் நான் இருந்தேன். என்னை நோக்கிக் குதிரை வீரர் எவரேனும் திரும்பி வந்தால், நான் ஏதேனும் மரத்தை நோக்கிச் சென்று அதற்குக் கீழே அமர்ந்துகொண்டு, அவன்மீது அம்பைப் பாய்ச்சினேன். அவனது குதிரையை வெட்டி வீழ்த்தினேன். குறுகிய மலையிடுக்கு தென்பட்டபோது, அதன் இடுக்கில் அவர்கள் நுழைந்து கொண்டனர். நானும் அம்மலை மீதேறிக்கொண்டு, கல்லால் அவர்களை விரட்டியடித்தேன்.
இவ்வாறு (விரட்டியடித்த வண்ணம்) அவர்களை நான் பின்தொடர்ந்து சென்று கொண்டிருந்தேன். இறுதியில் அல்லாஹ் படைத்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஒட்டகங்கள் அனைத்தையும் என் முதுகுக்குப் பின்னால் கொண்டு வந்துவிட்டேன். அவர்கள் அவற்றை என்னிடமே விட்டுவிட்டு விரைந்துகொண்டிருந்தனர்.
பிறகு மீண்டும் அவர்கள்மீது அம்பெய்த வண்ணம் அவர்களைப் பின்தொடர்ந்தேன். அவர்கள் (ஓடிய வேகத்தில்) முப்பது சால்வைகளையும் முப்பது ஈட்டிகளையும் விட்டு விட்டு ஓடினர். அவர்கள் விட்டுச் சென்ற ஒவ்வொரு பொருள்மீதும் அல்லாஹ்வின் தூதரும் அவருடைய தோழர்களும் அறியும் விதத்தில் ஓர் அடையாளக் கல்லை வைத்துக் கொண்டேபோனேன்.
பிறகு ஒரு குறுகலான மலைக் கணவாய்க்கு அவர்கள் சென்றனர். அங்கு பத்ர் அல்ஃபஸாரீ என்பவனின் மகனிடம் அவர்கள் போய்ச்சேர்ந்து, அமர்ந்து காலை உணவை உட்கொள்ளலாயினர். நான் ஒரு மலை உச்சியில் அமர்ந்துகொண்டேன்.
அப்போது அந்த ஃபஸாரீ, "நான் காணும் இந்தக் காட்சிகள் என்ன?" என்று கேட்டான். அதற்கு அவர்கள், "இதோ இவனிடமிருந்து கடும்துயரத்தை நாங்கள் சந்தித்துவிட்டோம். அல்லாஹ்வின் மீதாணையாக! அதிகாலை இருளிலிருந்து அவன் எங்களை விட்டு விலகவே இல்லை. எங்களை நோக்கி அம்பெய்து எங்கள் கையிலிருந்த எல்லாவற்றையும் பறித்துக்கொண்டான்" என்று கூறினர்.
அதற்கு அந்த ஃபஸாரீ, "உங்களில் நான்கு பேர் அவனை நோக்கிச் செல்லட்டும்" என்று கூறினான்.
அவர்களில் நான்கு பேர் நானிருந்த மலைமீது ஏறினர். அவர்கள் எனது பேச்சைக் கேட்கும் இடத்திற்கு வந்தபோது,நான், "என்னை உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டேன்.
அவர்கள் "இல்லை, நீ யார்?" என்று கேட்டார்கள். "நான் சலமா பின் அல்அக்வஉ. முஹம்மத் (ஸல்) அவர்களது முகத்தைக் கண்ணியப்படுத்திய (இறை)வன் மீதாணையாக! உங்களில் யாரேனும் ஒருவரை நான் தேடிப் புறப்பட்டால் அவரை நான் பிடிக்காமல் விடமாட்டேன். (அதே சமயத்தில்) உங்களில் யாரேனும் ஒருவர் என்னைத் தேடிப் புறப்பட்டால் அவரால் என்னைப் பிடிக்க முடியாது" என்று நான் கூறினேன். அவர்களில் ஒருவன், "நானும் (அவ்வாறே) கருதுகிறேன்" என்றான்.
பிறகு அவர்கள் அனைவரும் திரும்பிச் சென்றனர். நான் அந்த இடத்திலிருந்து நகர்ந்திருக்கக்கூட இல்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் குதிரைப் படையினர் மரங்களிடையே புகுந்து வருவதை நான் பார்த்தேன். அவர்களில முதல் ஆளாக அக்ரம் அல்அசதீ (ரலி) அவர்கள் இருந்தார்கள். அவருக்குப் பின்னால் அபூகத்தாதா அல்அன்சாரீ

(ரலி) அவர்கள் இருந்தார்கள். அவரைத் தொடர்ந்து மிக்தாத் பின் அல்அஸ்வத் அல்கிந்தீ (ரலி) அவர்கள் இருந்தார்கள்.

நான் அக்ரம் (ரலி) அவர்களது குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டேன். அவர்கள் நால்வரும் புறமுதுகிட்டு ஓடிக் கொண்டிருந்தனர். நான் "அக்ரமே! அவர்களிடம் எச்சரிக்கையாக இருந்துகொள்ளுங்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் வந்து சேர்வதற்கு முன் (தனியாக வரும்) உம்மை இவர்கள் பிடித்துவிட வேண்டாம்" என்று கூறினேன்.

அதற்கு அக்ரம் (ரலி) அவர்கள், "சலமா! நீங்கள் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்டவராயிருந்தால், சொர்க்கம் உண்மை; நரகம் உண்மை என நீர் அறிந்திருந்தால் எனக்கும் வீர மரணத்துக்குமிடையே குறுக்கிடாதீர்!" என்று கூறினார்.

ஆகவே, அவரை நான் விட்டுவிட்டேன். அவரும் அப்துர் ரஹ்மான் அல்ஃபஸாரியும் (வாள் முனையில்) சந்தித்துக்கொண்டனர். அக்ரம் (ரலி) அவர்கள் அப்துர் ரஹ்மானின் குதிரையை வெட்டிவிட்டார்கள். அப்துர் ரஹ்மான்,அக்ரம் (ரலி) அவர்கள்மீது ஈட்டியைப் பாய்ச்சி அவர்களைக் கொன்றுவிட்டான்.

முஹம்மத் (ஸல்) அவர்களின் முகத்தைக் கண்ணியப்படுத்திய (இறை)வன் மீதாணையாக! பிறகு நான் காலால் நடந்தே அவர்களைப் பின்தொடர்ந்தேன். எனக்குப் பின்னால் வந்த முஹம்மத் (ஸல்) அவர்களின் தோழர்களையோ,அவர்களது (குதிரை கிளப்பிய) புழுதியையோ நான் பார்க்கவில்லை.

இறுதியில் அ(ந்தப் பகை)வர்கள் சூரியன் மறைவதற்கு முன் ஒரு கணவாயை அடைந்தனர். அங்கு ஒரு நீர்நிலை இருந்தது. அதற்கு "தூ கரத்" எனப் பெயர் சொல்லப்பட்டது. அவர்கள் தாகத்துடன் இருந்ததால் அதில் நீர் அருந்தச் சென்றனர். தங்களுக்குப் பின்னால் நான் ஓடி வருவதை அவர்கள் கண்டதும் அந்த இடத்தைவிட்டு வெளியேறும் நிலைக்கு அவர்கள் உள்ளாயினர். அவர்கள் ஒரு துளி நீரைக்கூட சுவைக்கவில்லை.

அவர்கள் அங்கிருந்து கிளம்பி ஒரு மலைக் குன்றில் விரைந்து சென்றனர். நான் வேகமாக ஓடி அவர்களில் ஒருவனைச் சென்றடைந்தேன். அவனது தோள் பட்டையிலுள்ள மெல்லிய எலும்பின் மீது,

"இதோ இதை வாங்கிக்கொள்
அக்வஇன் மகன் நான்
இன்று அற்பர்களின் (அழிவு) நாள்"

என்று கூறியவாறு ஓர் அம்பைப் பாய்ச்சினேன். அவன், "உன் தாய் உன்னை இழக்கட்டும்! காலையில் வந்த அக்வஆ நீ?" என்று கேட்டான். நான் "ஆம். தனக்குத் தானே பகைவன் ஆகிவிட்டவனே! காலையில் சந்தித்த உன் அக்வஉதான் நான்" என்றேன்.

அக்கூட்டத்தார் ஒரு மலைக் குன்றின் மீது இரு குதிரைகளை விட்டுவிட்டு ஓடி விட்டனர். நான் அவ்விரு குதிரைகளையும் பிடித்து, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஓட்டி வந்தேன்.

அப்போது (என் தந்தையின் சகோதரர்) ஆமிர் (ரலி) அவர்கள் தோல் அடுக்குப் பாத்திரம் ஒன்றை என்னிடம் கொண்டுவந்தார். அதில் தண்ணீர் கலந்த பால் சிறிதளவு இருந்தது. இன்னொரு தோல் அடுக்குப் பாத்திரமும் அவரிடம் இருந்தது. அதில் தண்ணீர் இருந்தது. நான் அங்கத் தூய்மை (உளூ) செய்தேன்; அருந்தினேன்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தேன். அக்கூட்டத்தாரை நான் விரட்டியடித்த நீர்நிலை அருகில் அவர்கள் இருந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த ஒட்டகங்களையும் அந்த இணைவைப்பாளர்களிடமிருந்து நான் கைப்பற்றிய ஈட்டிகள், சால்வைகள் உள்ளிட்ட அனைத்துப் பொருட்களையும் எடுத்து வைத்திருந்தார்கள்.

அப்போது பிலால் (ரலி) அவர்கள், அக்கூட்டத்தாரிடமிருந்து நான் விடுவித்த ஒட்டகங்களில் ஒன்றை அறுத்து அதன் ஈரலையும் திமிலையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காகப் பொரித்துக்கொண்டிருந்தார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! என்னை விடுங்கள். நான் (நம்) மக்களில் நூறு பேரைத் தேர்ந்தெடுத்து (அழைத்துக்கொண்டு) அக்கூட்டத்தாரைப் பின் தொடர்ந்து செல்கிறேன். அவர்களில் இறப்புச் செய்தி அறிவிக்கக்கூட ஒருவரையும் விட்டு வைக்காமல் அவர்கள் அனைவரையும் கொன்றுவிடுகிறேன்" என்று கூறினேன்.

அதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்தார்கள். அங்கிருந்த நெருப்பின் வெளிச்சத்தில் அவர்களின் கடைவாய்ப் பற்கள் தெரிந்தன. அப்போது அவர்கள், "சலமா! உன்னால் அதைச் செய்ய முடியும் என நீ கருதுகிறாயா?"என்று கேட்டார்கள். நான் "ஆம் (செய்வேன்), தங்களைக் கண்ணியப்படுத்திய (இறை)வன் மீதாணையாக!" என்று கூறினேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தற்போது அக்கூட்டத்தார் ஃகத்ஃபான் பகுதியில் விருந்து அளிக்கப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள்" என்று (இறையறிவிப்பின் மூலம்) கூறினார்கள்.

அப்போது ஃகத்ஃபான் பகுதியிலிருந்து ஒரு மனிதர் வந்தார். அவர் "அக்கூட்டத்தாருக்காக இன்ன மனிதர் இறைச்சி ஒட்டகமொன்றை அறுத்(து விருந்தளித்)தார். அவர்கள் அந்த ஒட்டகத்தின் தோலை உரித்துக்கொண்டிருந்தபோது (பாலைவன வெளியில்) புழுதி கிளம்புவதைக் கண்டனர். உடனே "அக்(குதிரைப் படைக்) கூட்டம் வந்துவிட்டது" என்று கூறியவாறு வெருண்டோடிவிட்டனர்" என்று கூறினார்.

காலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்றைய தினத்தில் நம் குதிரைப் படையில் மிகச் சிறந்த வீரர் அபூகத்தாதா ஆவார். நம் காலாட் படையில் மிகச் சிறந்த வீரர் சலமா ஆவார்" என்று (பாராட்டிக்) கூறினார்கள்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், குதிரைப்படை வீரருக்கான ஒரு (பரிசுப்) பங்கும், காலாட்படை வீரருக்கான ஒரு பங்குமாக இரு பங்குகள் சேர்த்து (போர்ச் செல்வமாக) எனக்கு வழங்கினார்கள்.

பிறகு தமது "அள்பா" எனும் ஒட்டகத்தில் தமக்குப் பின்னால் என்னை அமரச் செய்து மதீனா நோக்கித் திரும்பினார்கள்.

நாங்கள் வந்துகொண்டிருந்தபோது (ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது.) அன்சாரிகளில் ஒருவர் இருந்தார். அவரை ஓட்டப்பந்தயத்தில் யாராலும் வெல்ல முடியாது. அவர், "மதீனாவரை என்னுடன் போட்டியிட்டு ஓடுபவர் யார்? போட்டியிட்டு ஓடுபவர் யார்?" என்று திரும்பத் திரும்பக் கூறலானார்.

அவரது குரலைக் கேட்ட நான் (அவரிடம்), "மரியாதைக்குரியவர்களை நீ மதிக்கமாட்டாயா? சிறப்புக்குரியவர்களை நீ அஞ்சமாட்டாயா?" என்று கேட்டேன். அவர் "இல்லை, அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களாக இருந்தால் தவிர" என்று கூறினார்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தையும் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! என்னை விடுங்கள்; அந்த மனிதரை நான் வெல்கிறேன்" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உன் விருப்பம்' என்றார்கள்.

நான், "முதலில் நீ ஓடு" என்று கூறிவிட்டு, என் கால்களை உதறிவிட்டு, குதித்து ஓடினேன். ஓடிக்கொண்டிருந்தபோது ஒன்றிரண்டு மேடுகளில் ஏறியபோது, ஓட்டத்தைக் கட்டுப்படுத்தி மூச்சு வாங்கி ஓய்வெடுத்தேன். பிறகு அவருக்குப் பின்னால் ஓடினேன். மறுபடியும் ஒன்றிரண்டு மேடுகளில் ஏறியபோது ஓட்டத்தை மட்டுப்படுத்தினேன்.

பிறகு அவரைச் சென்றடைவதற்காக (மேட்டில்) ஏறினேன். அப்போது அவருடைய தோள்களுக்கிடையே அடித்து, "நீ தோற்கடிக்கப்பட்டாய், அல்லாஹ்வின் மீதாணையாக!" என்றேன். அவர், "நானும் (அவ்வாறே) எண்ணுகிறேன்" என்று கூறினார். மதீனாவரை அவருக்கு முன்பாகவே நான் ஓடிவந்தேன்.

அல்லாஹ்வின் மீதாணையாக! (மதீனாவிற்கு வந்த பின்) நாங்கள் மூன்று இரவுகள் மட்டுமே தங்கியிருந்தோம். (நான்காம் நாள்தான்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் கைபரை நோக்கி(ப் போருக்காக)ப் புறப்பட்டோம். அப்(பயணத்தின்)போது, என் தந்தையின் சகோதரர் ஆமிர் (ரலி) பின்வரும் யாப்புக் கவிதையைப் பாடினார்கள்:

அல்லாஹ்வின் மீதாணையாக!
அல்லாஹ் மட்டும் இல்லாவிட்டால்
நாங்கள்
நேர்வழி பெற்றிருக்கமாட்டோம்
தானதர்மம் செய்திருக்கவுமாட்டோம்
தொழுதிருக்கவுமாட்டோம்
(இறைவா!) நாங்கள்
உன் கருணையிலிருந்து
தேவையற்றவர்கள் அல்லர்.
(போர் முனையில் எதிரிகளை)
நாங்கள் சந்திக்கும்போது
எங்கள் பாதங்களை
உறுதிப்படுத்துவாயாக!
எங்கள்மீது
அமைதியைப் பொழிவாயாக!

இதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இவர் யார்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் "நான் ஆமிர்" என்றார்கள். "உம்முடைய இறைவன் உமக்கு மன்னிப்பருள்வானாக" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(பொதுவாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதருக்காக (போரில் தனிப்பட்ட முறையில்) அவரது பெயர் குறிப்பிட்டுப் பாவமன்னிப்பு வேண்டுவார்களேயானால், அவர் (அப்போரில்) வீர மரணம் அடையாமல் இருந்ததில்லை.

ஆகவே, உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், தமது ஒட்டகத்தின் மீதிருந்தவாறு, "அல்லாஹ்வின் தூதரே! ஆமிர் (நீண்ட நாள் உயிர் வாழ்வதன்) மூலம் எங்களைப்

பயனடையச் செய்யக்கூடாதா?" என்று கேட்டார்கள். பிறகு நாங்கள் கைபர் சென்றடைந்ததும் கைபர்வாசிகளின் மன்னன் மர்ஹப் தனது வாளை மேலும் கீழுமாக அசைத்துக்கொண்டே,
"கைபருக்குத் தெரியும்
நான்தான் மர்ஹப் என்று
(போருக்கு ஆயத்தமாய் என்றும்)
முழு ஆயுதங்கள் தரித்த பண்பட்ட வீரன் என்று.
போர்கள் மூண்டு
கொழுந்துவிட்டு எரியும்போது
(சில நேரம் நான் ஈட்டியெறிவேன்
சில நேரம் வாள் வீசுவேன்)"
என்று பாடினான்.
அப்போது என் தந்தையின் சகோதரர் ஆமிர் (ரலி) அவர்கள் முன்னே வந்து,
"கைபருக்குத் தெரியும் நான் ஆமிர் என்று
போர்த் துன்பங்களை எதிர்கொள்ளும்
ஆயுதங்கள் தரித்த சரியான வீரன் என்று"
என்று பாடினார்கள். பிறகு இருவரும் மோதிக்கொண்டனர். அப்போது மர்ஹபின் வாள், ஆமிர் (ரலி) அவர்களின் கேடயத்தைத் தாக்கியது. ஆமிர் (ரலி) அவர்கள் (குனிந்து) அவனது கீழ் பகுதியில் (தமது வாளால்) வெட்டப்போனார்கள். அப்போது அவரது வாள் அவரையே திருப்பித் தாக்கிவிட்டது; அவரது கை நரம்பைத் துண்டித்துவிட்டது. அதிலேயே அவரது இறப்பும் ஏற்பட்டது.
பிறகு நான் புறப்பட்டுச் சென்றேன். அப்போது நபித்தோழர்களில் சிலர் "ஆமிரின் நற்செயல்கள் அழிந்துவிட்டன. அவர் தற்கொலை செய்துகொண்டார்" என்று பேசிக் கொண்டிருந்தனர்.
உடனே நான் அழுதுகொண்டே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! ஆமிரின் நற்செயல்கள் அழிந்துவிட்டனவா?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அவ்வாறு) யார் சொன்னது?" என்று கேட்டார்கள். "தங்கள் தோழர்களில் சிலர்" என்று பதிலளித்தேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவ்வாறு சொன்னவர் பொய்யுரைத்துவிட்டார். அவருக்கு அவரது நன்மை இருமுறை கிடைக்கும்" என்று கூறினார்கள்.
பிறகு கண்வலியுடன் இருந்த அலீ (ரலி) அவர்களிடம் (அவர்களை அழைத்துவர) என்னை அனுப்பிவைத்தார்கள்.
(என்னை அனுப்புவதற்கு முன்) "நான் (நாளை) இஸ்லாமிய(ச் சேனையின்) கொடியை ஒரு மனிதரிடம் கொடுப்பேன். அவர் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறார்; அவரை அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நேசிக்கின்றனர்" என்று கூறினார்கள்.
நான் அலீ (ரலி) அவர்களிடம் சென்று கண் வலியுடனிருந்த அவர்களை அழைத்துக் கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தேன். அப்போது அலீ (ரலி) அவர்களின் கண்களில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உமிழ்ந்தார்கள். அவர்கள் கண் குணமடைந்தார்கள். பிறகு அலீ (ரலி) அவர்களிடம் இஸ்லாமிய(ச் சேனையின்) கொடியைக் கொடுத்தார்கள். கைபரின் மன்னன் மர்ஹப் புறப்பட்டு வந்து,

"கைபருக்குத் தெரியும் நான்தான் மர்ஹப் என்று
(போருக்கு ஆயத்தமாய் என்றும்)
ஆயுதங்கள் தரித்த பண்பட்ட வீரன் என்று.
போர்கள் மூண்டு கொழுந்துவிட்டு எரியும்போது
(சில வேளை நான் ஈட்டியெறிவேன்
சில வேளை நான் வாள் வீசுவேன்)"
என்று பாடினான்.
அதற்கு அலீ (ரலி) அவர்கள்,
என் தாயாரால் ஹைதர் (சிங்கம்)
எனப் பெயர் சூட்டப்பட்டவன் நான்
அருவருப்பான தோற்றமுடைய
அடர்வனத்தின் சிங்கம் நான்
சந்தர் எனும் பேரளவையால்
அளப்பதைப் போன்று
அவர்களைத் தாராளமாக அளந்திடுவேன்
(ஏராளமான எதிரிகளை
வெட்டி வீழ்த்துவேன்)"
என்று பாடிக்கொண்டே மர்ஹபின் தலையில் ஓங்கி அடித்து, அவனை வீழ்த்தினார்கள். பிறகு அலீ (ரலி) அவர்களின் கரங்களாலேயே (கைபரின்) வெற்றியும் கிட்டியது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 46 "அவனே அவர்கள் கைகளை உங்களிடமிருந்து தடுத்தான்" (48:24) எனும் வசனம்.**

3696 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்காவாசிகளில் எண்பது பேர் நபி (ஸல்) அவர்கள்மீதும் நபித்தோழர்கள்மீதும் திடீர்த் தாக்குதல் தொடுப்பதற்காக "தன்ஈம்" மலையிலிருந்து ஆயுதங்களோடு இறங்கிவந்தனர். அப்போது சரணடைந்த அவர்களை நபி (ஸல்) அவர்கள் பிடித்து, (அவர்களை மன்னித்து) உயிரோடு விட்டுவிட்டார்கள்.
அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "மக்காவின் மையப் பகுதியில் அவர்களுக்கு எதிராக அவன் உங்களுக்கு வெற்றி அளித்த பின், உங்கள் கைகளை அவர்களை விட்டும், அவர்கள் கைகளை உங்களைவிட்டும் அவனே தடுத்தான்" (48:24) எனும் வசனத்தை அருளினான்.

**பாடம் : 47 அறப்போரில் ஆண்களுடன் பெண்களும் கலந்துகொள்வது.**

3697 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்கள் ஹுனைன் போர் தினத்தன்று பிச்சுவாக் கத்தி ஒன்றை எடுத்து, தம்முடன் வைத்திருந்தார். அதைப் பார்த்த (என் தாயாரின் கணவர்)

அபூதல்ஹா (ரலி) அவர்கள் (நபி (ஸல்) அவர்களிடம் சென்று), "அல்லாஹ்வின் தூதரே! உம்மு சுலைம் தம்முடன் பிச்சுவாக் கத்தி ஒன்றை வைத்திருக்கிறார்" என்று கூறினார்கள்.
அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்தப் பிச்சுவாக் கத்தி எதற்கு?" என்று கேட்டார்கள். அதற்கு உம்மு சுலைம் (ரலி) அவர்கள், "இணைவைப்பாளர்களில் யாரேனும் என்னை நெருங்கினால் அவரது வயிற்றை நான் பிளந்துவிடுவேன். அதற்காகத்தான் அதை வைத்துள்ளேன்" என்று கூறினார். அதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரிக்கலானார்கள்.
உம்மு சுலைம் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நம்மவரைத் தவிர (மக்கா வெற்றியின்போது) தங்களிடம் சரணடைந்து தங்களால் (பொது மன்னிப்பளிக்கப்பட்டு) விடுவிக்கப்பட்டவர்களைத் தாங்கள் கொன்றுவிடுங்கள்" என்று கூறினார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் போதுமானவனாக ஆகிவிட்டான். அவன் உபகாரமும் செய்துவிட்டான். (இந்த ஹுனைன் போரில் நமக்குச் சரிவு ஏற்பட்டாலும் பெருத்த பாதிப்பு ஏதுமில்லாமல் அல்லாஹ் காப்பாற்றிவிட்டான்)" என்று கூறினார்கள்.
- உம்மு சுலைம் (ரலி) அவர்கள் தொடர்பான மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3698 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் போருக்குப் புறப்பட்டுச் செல்லும்போது, அவர்களுடன் (என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்களும் இன்னும் சில அன்சாரிப் பெண்மணிகளும் கலந்துகொள்வர். அப்பெண்கள் (அறப்போர் வீரர்களுக்கு) தண்ணீர் கொடுப்பார்கள்; காயமுற்றவர்களுக்குச் சிகிச்சை அளிப்பார்கள்.

3699 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உஹுதுப் போரின்போது நபி (ஸல்) அவர்களை(த் தனியே) விட்டுவிட்டு மக்கள் சிலர் தோற்று (ஓடி)விட்டனர். அபூதல்ஹா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களை ஒரு தோல் கேடயத்தால் மறைத்துக்கொண்டு பாதுகாத்தபடி நின்றார்கள்.
அபூதல்ஹா (ரலி) அவர்கள் அதிவேகமாக அம்பெடுத்து எய்யக்கூடியவர்களாக இருந்தார்கள். (வேகவேகமாக இழுத்து அம்பெய்கையில்) இரண்டு அல்லது மூன்று விற்களை உடைத்து விட்டார்கள். யாரேனும் ஒருவர் அம்புக்கூட்டுடன் செல்வதைக் கண்டால் நபி (ஸல்) அவர்கள், "அதை அபூதல்ஹாவிடம் தூக்கிப்போடு" என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள்.
அந்த நேரத்தில் நபி (ஸல்) அவர்கள் (அபூதல்ஹா (ரலி) அவர்களுக்குப் பின்னாலிருந்து) தலையை உயர்த்தி எதிரிகளை எட்டிப் பார்க்க, அபூதல்ஹா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! தங்களுக்கு என் தந்தையும் தாயும் அர்ப்பணமாகட்டும். எட்டிப் பார்க்காதீர்கள். எதிரிகளின் அம்புகளில் ஏதேனும் ஓர் அம்பு தங்களைத் தாக்கிவிடலாம். என் மார்பு தங்கள் மார்புக்குக் கீழே இருக்கும் (தாங்கள் எட்டிப் பார்க்காமல் இருந்தால் என் மார்பு தங்கள் மார்புக்கு நேராகக் கேடயம் போன்று இருக்கும்)" என்று சொன்னார்கள்.
(அன்று) நான் அபூபக்ர் (ரலி) அவர்களின் புதல்வி ஆயிஷா (ரலி) அவர்களையும் உம்மு சுலைம் (ரலி) அவர்களையும் ஆடையை வரிந்து கட்டிக்கொண்டவர்களாகப் பார்த்தேன். அவர்கள் கால் கொலுசுகளைக் கண்டேன். அவர்கள் இருவரும் (தண்ணீர் உள்ள) தோல்

பைகளை முதுகின் மீது சுமந்துவந்து, (காயம் பட்டுக்கிடந்த) வீரர்களின் வாயில் ஊற்றுவார்கள். பின்னர் திரும்பிப்போய், தண்ணீர் நிரப்பிக்கொண்டு வந்து, வீரர்களின் வாயில் ஊற்றுவார்கள். அபூதல்ஹா (ரலி) அவர்களின் சிற்றுறக்கத்தால் அவர்கள் கரங்களிலிருந்து இரண்டு, அல்லது மூன்று முறை வாள் (நழுவி) விழுந்துவிட்டது.

**பாடம் : 48 அறப்போரில் கலந்துகொண்ட பெண்களுக்குப் போர்ச் செல்வத்தில் (வீரர்களுக்கான) பங்கு வழங்காமல் சிறிதளவு (ஊக்கத் தொகை) வழங்கப்படும் என்பதும், எதிரிகளின் குழந்தைகளைக் கொல்வதற்கு வந்துள்ள தடையும்.**

3700 யஸீத் பின் ஹுர்முஸ் அல்லைஸீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(காரிஜிய்யாக் கூட்டத்தைச் சேர்ந்த) நஜ்தா பின் ஆமிர் என்பவர் ஐந்து விஷயங்களைப் பற்றிக் கேட்டு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதினார். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "நான் ஒரு கல்வியை மறைத்த குற்றத்திற்கு ஆளாகிவிடுவேன் என்ற அச்சம் எனக்கு இல்லையாயின் அவருக்கு நான் பதில் கடிதம் எழுதமாட்டேன்" என்று கூறி (அவருக்குப் பதில் எழுதி)னார்கள்.
நஜ்தா தமது கடிதத்தில் பின்வருமாறு எழுதியிருந்தார்:
இறைவாழ்த்துக்குப் பின்! அறப்போர்களில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பெண்களும் கலந்துகொண்டார்களா?
அவ்வாறு கலந்துகொண்ட பெண்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் போர்ச் செல்வத்தில் பங்கு கொடுத்தார்களா? (போரில்) எதிரிகளின் குழந்தைகளைக் கொன்றார்களா? அநாதை எனும் பெயர் எந்தப் பருவத்தில் முற்றுப்பெறும்? போரில் கைப்பற்றப்படும் செல்வங்களில் ஐந்தில் ஒரு பாகம் (குமுஸ்) நிதி யாருக்குரியது? இந்த ஐந்து விஷயங்கள் குறித்து எனக்கு அறிவியுங்கள்.
அவருக்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் பின்வருமாறு பதில் எழுதினார்கள்:
நீர் என்னிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பெண்களும் அறப்போர்களில் கலந்துகொண்டார்களா?" எனக்கேட்டிருந்தீர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அறப்போர்களில் பெண்களும் கலந்து கொண்டார்கள். போரில் காயமடைந்தவர்களுக்கு மருந்திட்டு சிகிச்சை அளித்தார்கள். போர்ச்செல்வத்திலிருந்து சிறிதளவு அவர்களுக்கு (ஊக்கத் தொகையாக) வழங்கப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் போர்ச் செல்வத்தில் பெண்களுக்கு (குறிப்பிட்ட) பங்கு எதையும் நிர்ணயிக்கவில்லை.
போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குழந்தைகளைக் கொல்ல மாட்டார்கள். எனவே, நீரும் குழந்தைகளைக் கொல்லாதீர்.
மேலும், நீர் "அநாதை எனும் பெயர் எந்தப் பருவத்தோடு முற்றுப்பெறுகிறது?" எனக் கேட்டிருந்தீர்.என் ஆயுளின் (அதிபதி)மீதாணையாக! சிலருக்குத் தாடி கூட முளைத்துவிடும். ஆனால், தமக்குரிய ஒன்றைப் பெறுவதிலும் தமக்குரிய ஒன்றைக் கொடுப்பதிலும் பலவீனத்துடனேயே அவர்கள் இருப்பர். (ஒன்றைப் பெறும்போது) மற்றவர்களைப் போன்று சரியான பொருளைப் பெறுகின்ற பக்குவத்தை ஒருவன் அடைந்துவிட்டால் அவனைவிட்டு அநாதை எனும் பெயர் நீங்கிவிடும்.

மேலும், நீர் என்னிடம் "போர்ச்செல்வத்தில் ஐந்தில் ஒரு பாகம் (குமுஸ்) யாருக்குரியது?" எனக் கேட்டிருந்தீர். (நபியவர்களின் குடும்பத்தாராகிய) நாங்கள் அது எங்களுக்கே உரியது எனக் கூறிவந்தோம். ஆனால், எங்கள் மக்களே (பனூ உமைய்யா) அதை எங்களுக்குத் தர மறுத்துவிட்டனர். (ஆகவே, குமுஸ் நிதி ஆட்சியாளராக வரும் அனைவரின் குடும்பத்தாருக்கும் உரியதாகும்.)

3701 மேற்கண்ட ஹதீஸ் யஸீத் பின் ஹுர்முஸ் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நஜ்தா என்பவர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு (ஐந்து விஷயங்கள் குறித்துக் கேட்டு)க் கடிதம் எழுதினார்" என்றே ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும், ஹாத்திம் பின் இஸ்மாயீல் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குழந்தைகளைக் கொல்லமாட்டார்கள். எனவே, நீரும் குழந்தைகளைக் கொல்லாதீர். "களிர்" (அலை) அவர்கள், தாம் கொன்ற சிறுவனிடமிருந்து அறிந்து கொண்டதைப் போன்று நீரும் அறிந்தால் தவிர (அது உம்மால் இயலாத காரியமாகும்)" என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் குறிப்பிட்டார்கள் என இடம் பெற்றுள்ளது.
ஹாத்திம் பின் இஸ்மாயீல் (ரஹ்) அவர்களிடமிருந்து இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில் "இறைநம்பிக்கையாளரை நீர் பாகுபடுத்தி அறிந்து கொள்ள முடிந்தால் தவிர. அப்போதுதான் இறைமறுப்பாளனைக் கொல்வதற்கும் இறைநம்பிக்கையாளரை விட்டுவிடுவதற்கும் உமக்கு முடியும் (ஆனால்,சிறுவன் பிற்காலத்தில் எப்படி மாறுவான் என்பதை, "களிரை"ப் போன்று அறிந்துகொள்ள உம்மால் முடியாது)" என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் குறிப்பிட்டார்கள் என இடம் பெற்றுள்ளது.

3702 யஸீத் பின் ஹுர்முஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(காரிஜிய்யாக்களில் ஒருவரான) நஜ்தா பின் ஆமிர் அல்ஹரூரீ என்பவர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதி, அடிமைகளும் பெண்களும் போர்ச்செல்வங்கள் பங்கிடப் படும் இடத்திற்கு வந்தால் அவர்களுக்கும் போர்ச்செல்வத்தில் பங்கு கொடுக்கப்படுமா? (எதிரிகளின்) குழந்தைகளைக் கொல்லலாமா? அநாதை எனும் பெயர் எந்தப் பருவத்தோடு முற்றுப் பெறும்? (குமுஸைப் பற்றிக் கூறும் 8:41ஆவது வசனத்திலுள்ள) "உறவினர்கள்" யார் ஆகியவை பற்றி விளக்கம் கேட்டார்.
அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் என்னிடம், "அவருக்காகப் பதில் கடிதம் எழுது" என்று கூறிவிட்டு, "அவர் முட்டாள்தனமான ஒரு முடிவை எடுத்துவிடுவார் என்ற அச்சம் எனக்கில்லையாயின் அவருக்கு நான் பதில் கடிதம் எழுதமாட்டேன்" என்று கூறினார்கள். பிறகு பின்வருமாறு எழுதச் சொன்னார்கள்: "நீர் என்னிடம் போர்ச் செல்வம் பங்கிடப்படும் இடத்திற்குப் பெண்களும் அடிமைகளும் வந்தால் அவர்களுக்கும் போர்ச் செல்வத்தில் பங்கு கொடுக்கப்படுமா?' எனக் கேட்டிருந்தீர். போர்ச்செல்வத்தில் அந்த இரு பிரிவினருக்கும் ஏதேனும் (ஊக்கத் தொகையாக) வழங்கப்பட்டால் தவிர (குறிப்பிட்ட) பங்கேதும் இல்லை.

(போரில் எதிரிகளின்) குழந்தைகளைக் கொல்வதைப் பற்றி என்னிடம் கேட்டிருந்தீர். (போரில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குழந்தைகளைக் கொல்லமாட்டார்கள். எனவே, நீரும் அவர்களைக் கொல்ல வேண்டாம். மூசா (அலை) அவர்களின் நண்பர் (களிர்), தாம் கொன்ற சிறுவனைப் பற்றி (இறைவன் மூலம்) அறிந்துகொண்டதைப் போன்று நீரும் அக்குழந்தைகளைப் பற்றி அறிந்தால் தவிர. (அது உம்மால் இயலாது.)
நீர் என்னிடம் அநாதைகளைப் பற்றி "அநாதை எனும் பெயர் எந்தப் பருவத்தோடு முற்றுப்பெறும்?" எனக் கேட்டிருந்தீர். அவன் பருவ வயதை அடைந்து, அவனிடம் பக்குவ நிலை தென்படாத வரை "அநாதை" எனும் பெயர் அவனிடமிருந்து நீங்காது.
மேலும், நீர் என்னிடம் "(8:41ஆவது வசனத்திலுள்ள) "உறவினர்' என்போர் யார்?" எனக் கேட்டிருந்தீர். (நபியவர்களின் உறவினர்களான) நாங்கள்தாம் அவர்கள் என நாங்கள் கூறினோம். ஆனால், அதை எங்கள் மக்கள் மறுத்துவிட்டனர் (எனவே ஆட்சியாளர்களின் உறவினர்களையும் அது குறிக்கும்).
- இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்து யஸீத் பின் ஹுர்முஸ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3703 யஸீத் பின் ஹுர்முஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(காரிஜிய்யாவான) நஜ்தா பின் ஆமிர் என்பவர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு (ஐந்து விஷயங்களைப் பற்றிக் கேட்டு)க் கடிதம் எழுதினார். அவரது கடிதத்தை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் வாசித்தபோதும் அவருக்குப் பதில் எழுதியபோதும் நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுடன் இருந்தேன்.
அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் மீதாணையாக! முடைநாற்றத்தில் வீழ்ந்துவிடாமல் அவரைக் காக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கு இல்லையாயின் அவருக்கு நான் பதில் கடிதம் எழுதவுமாட்டேன்; அவரைக் கண்குளிரச் செய்திருக்கவுமாட்டேன்" என்று கூறிவிட்டு, (பின்வருமாறு) அவருக்குக் கடிதம் எழுதச் சொன்னார்கள்:
"அல்லாஹ் (8:41ஆவது வசனத்தில்) குறிப்பிட்டுள்ள (குமுஸில்) பங்கு பெறுகின்ற உறவினர்கள் யார்?" என்பது குறித்து நீர் என்னிடம் கேட்டிருந்தீர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உறவினர்களாகிய நாங்கள்தாம் அவர்கள் என நாங்கள் கருதினோம். ஆனால், அதை மக்கள் மறுத்துவிட்டனர்.
நீர் என்னிடம் "ஓர் அநாதைக்கு "அநாதை" எனும் பெயர் எப்போது முற்றுப்பெறும்?" எனக் கேட்டிருந்தீர். அவன் திருமண வயதை அடைந்து, அவனிடம் பக்குவம் தென்பட்டு, அவனது செல்வம் அவனிடம் ஒப்படைக்கப்படும் பருவத்தை அவன் அடையும்போது அவனிடமிருந்து "அநாதை" எனும் பெயர் முற்றுப்பெற்றுவிடும்.
நீர் என்னிடம் "(அறப்போரில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இணைவைப்பாளர்களின் குழந்தைகளில் எதையேனும் கொன்றிருக்கிறார்களா?" என்று கேட்டிருந்தீர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எதிரிகளின் குழந்தைகள் எதையும் கொன்றதில்லை. நீரும் அவர்களின் குழந்தைகள் எதையும் கொன்றுவிடாதீர்; களிர், தாம் கொன்ற சிறுவனிடமிருந்து அறிந்துகொண்டதை நீரும் அறிந்துகொள்ள முடிந்தால் தவிர. (ஆனால், அது உம்மால் முடியாது.)

மேலும், நீர் என்னிடம் "பெண்களும் அடிமைகளும் போரில் கலந்துகொண்டால் அவர்களுக்கும் போர்ச்செல்வத்தில் குறிப்பிட்ட அளவு பங்கு உண்டா?" எனக் கேட்டிருந்தீர். அவர்களுக்கு மக்களின் போர்ச்செல்வங்களிலிருந்து சிறிதளவு (ஊக்கத் தொகையாக) வழங்கப்படுவதைத் தவிர குறிப்பிட்ட அளவு பங்கேதும் அவர்களுக்குக் கிடையாது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3704 மேற்கண்ட ஹதீஸின் ஒரு பகுதி மட்டும் யஸீத் பின் ஹுர்முஸ் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் முழுத் தகவல்களுடன் ஹதீஸ் இடம்பெறவில்லை.

3705 உம்மு அத்திய்யா அல்அன்சாரிய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஏழு அறப்போர்களில் கலந்துகொண்டேன். மக்கள் (போரிடச்) சென்ற பிறகு அவர்களின் இருப்பிடங்களில் அவர்களுக்குப் பின்துணையாக இருந்து நான் செயல்படுவேன்; அவர்களுக்காக உணவு சமைப்பேன். போரில் காயமுற்றவர்களுக்கு மருந்திட்டுச் சிகிச்சை செய்வேன். நோயாளிகளைக் கவனித்துக் கொள்வேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 49 நபி (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட அறப்போர்களின் எண்ணிக்கை.

3706 அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களது ஆட்சியில் கூஃபாவின் ஆளுநராயிருந்த) அப்துல்லாஹ் பின் யஸீத் அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்திப்பதற்காக மக்களுடன் புறப்பட்டுச் சென்றார். அப்போது அவர் இரண்டு ரக்அத்கள் தொழுவித்துவிட்டு மழை வேண்டிப் பிரார்த்தித்தார்.
அப்போது நான் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களைச் சந்தித்தேன். எனக்கும் அவர்களுக்குமிடையே ஒரு மனிதர் மட்டுமே இருந்தார். அப்போது நான் ஸைத் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட போர்கள் எத்தனை?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "பத்தொன்பது' என விடையளித்தார்கள்.
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நீங்கள் கலந்துகொண்ட போர்கள் எத்தனை?" என்று வினவியபோது, "பதினேழு' என்றார்கள். "அவர்கள் கலந்துகொண்ட முதல் போர் எது?" என்று கேட்டதற்கு "தாத்துல் உசைர், அல்லது உஷைர்' என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3707 ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பத்தொன்பது அறப்போர்களில் கலந்து கொண்டார்கள். மேலும், அவர்கள் (மதீனாவுக்கு) நாடு துறந்து சென்ற பிறகு ஒரேயொரு ஹஜ் மட்டுமே செய்தார்கள். "விடைபெறும்" ஹஜ் எனும் அந்த ஹஜ்ஜைத் தவிர வேறெந்த ஹஜ்ஜையும் அவர்கள் செய்யவில்லை.
இதை அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3708 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பத்தொன்பது அறப்போர்களில் கலந்து கொண்டேன். நான் பத்ருப் போரிலோ உஹுதுப் போரிலோ கலந்துகொள்ளவில்லை. (அப்போருக்குச் செல்லவிடாமல்) என் தந்தை (அப்துல்லாஹ் (ரலி) அவர்கள்) என்னைத் தடுத்துவிட்டார்கள்.
(என் தந்தை) அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் உஹுதுப் போர் நாளில் கொல்லப்பட்டுவிட்ட பின் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நான் ஒருபோதும் எந்தப் போரிலும் கலந்துகொள்ளாமல் இருந்ததில்லை.

3709 புரைதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பத்தொன்பது அறப்போர்களில் கலந்து கொண்டார்கள். அவற்றில் எட்டுப் போர்களில் அவர்கள் (நேரடியாகப்) போரிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அவற்றில்" எனும் சொல் இடம்பெறவில்லை.

3710 புரைதா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பதினாறு போர்களில் கலந்து கொண்டேன்.

3711 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஏழு அறப்போர்களில் கலந்துகொண்டேன். அவர்கள் அனுப்பிக்கொண்டிருந்த படைப்பிரிவுகளில் பங்கேற்று ஒன்பது அறப்போர்களுக்குச் சென்றுள்ளேன். (அவற்றில்) ஒருமுறை எங்களுக்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் தளபதியாக நியமிக்கப்பட்டிருந்தார்கள். ஒருமுறை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் தளபதியாக நியமிக்கப்பட்டிருந்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், (சலமா (ரலி) அவர்கள் கலந்து கொண்ட அறப்போர் மற்றும் படைப்பிரிவு ஆகிய) அவ்விரண்டின் எண்ணிக்கையும் ஏழு என்றே இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 50 "தாத்துர் ரிக்காஉ" போர்.

3712 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒரு போருக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். எங்களில் ஆறு பேருக்கு ஓர் ஒட்டகம்தான் இருந்தது. அதில் நாங்கள் ஒருவர் பின் ஒருவராக (முறை வைத்து) பயணம் செய்தோம். (வாகனம் இல்லாமல் நடந்தே செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டதால்) எங்களுடைய பாதங்கள் தேய்ந்து (கொப்புளங்கள் வெடித்து)விட்டன. என்னுடைய இரண்டு பாதங்களும் தேய்ந்து என் கால் நகங்கள் விழுந்துவிட்டன.

அப்போது நாங்கள் எங்கள் கால்களில் துண்டுத் துணிகளைச் சுற்றிக்கொள்பவர்களாக இருந்தோம். இவ்வாறு துண்டுத் துணிகளை நாங்கள் கால்களில் சுற்றிக் கட்டிக்கொண்டதால் தான் அந்தப் போருக்கு "தாத்துர் ரிக்காஉ"(ஒட்டுத் துணிப் போர்) எனப்பெயர் சூட்டப்பெற்றது.
இதன் அறிவிப்பாளரான அபூபுர்தா பின் அபீமூசா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை அறிவித்த பின் (என் தந்தை) அபூமூசா (ரலி) அவர்கள், தம்மைப் பற்றித் தாமே இவ்வாறு அறிவித்ததை விரும்பவில்லை. தமது நற்செயல் ஒன்றைத் தாமே வெளியே சொல்லிவிட்டதை அவர்கள் விரும்பவில்லை போலும்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூஉசாமா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
புரைத் (ரஹ்) அவர்கள் அல்லாத மற்றொருவரது அறிவிப்பில் "அல்லாஹ் அதற்குரிய நற்பலனை அவர்களுக்கு வழங்குவானாக" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

## பாடம் : 51 அறப்போர்களில் இறைமறுப்பாளரிடம் உதவி கோருவது வெறுக்கத்தக்கதாகும்.

3713 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பத்ரை நோக்கி (போருக்கு)ப் புறப்பட்டார்கள். (மதீனாவுக்கு அருகில்) "ஹர்ரத்துல் வபரா" எனும் இடத்தில் அவர்கள் இருந்தபோது அவர்களை ஒரு மனிதர் அணுகினார். அவரது வீரதீரமும் விவேகமும் (மக்களால் பெரிதும்) பேசப்பட்டு வந்தது. அவரைப் பார்த்ததும் நபித்தோழர்கள் மகிழ்ச்சியுற்றனர்.
அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அணுகி, "உம்மைப் பின்பற்றி, உம்முடன் சேர்ந்து (எதிரிகளோடு) போரிட நான் வந்துள்ளேன்" என்று கூறினார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நம்புகிறாயா?" என்று கேட்டார்கள். அவர் "இல்லை" என்றார். "அப்படியானால் நீ திரும்பிச் செல். ஓர் இணைவைப்பாளரிடம் நான் உதவி கோரமாட்டேன்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிவிட்டார்கள்.

பிறகு சிறிது தூரம் சென்று, நாங்கள் "அஷ்ஷஜரா" எனும் இடத்தில் இருந்தபோது, அந்த மனிதர் மீண்டும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அணுகி, முன்பு கூறியதைப் போன்றே கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்பு கூறியதைப் போன்றே கூறிவிட்டு, "நீ திரும்பிச் சென்றுவிடு. நான் ஓர் இணைவைப்பாளரிடம் உதவி கோர மாட்டேன்" என்று கூறினார்கள்.
பிறகு அந்த மனிதர் திரும்பிச் சென்றுவிட்டு, "அல்பைதா' எனும் இடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அணுகியபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், முன்பு கேட்டதைப் போன்றே "நீ அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நம்புகிறாயா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் "ஆம்' என்றார்.
ஆகவே, அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால், நீர் (நம்முடன்) வரலாம்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 33 - ஆட்சியதிகாரம்

**பாடம் : 1 மக்கள் அனைவரும் (ஆட்சியதிகாரத்தில்) குறைஷியரைப் பின்பற்றுபவர் ஆவர்; இந்த ஆட்சியதிகாரம் குறைஷியரிடையேதான் இருந்துவரும்.**

3714 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்கள் அனைவரும் இந்த (ஆட்சியதிகாரம்) விஷயத்தில் குறைஷியரைப் பின்பற்றுபவர் ஆவர்; அவர்களில் முஸ்லிமாயிருப்பவர் குறைஷியரில் முஸ்லிமாயிருப்பவரைப் பின்பற்றுபவர் ஆவார். அவர்களில் இறைமறுப்பாளராயிருப்பவர் குறைஷியரில் இறை மறுப்பாளராயிருப்பவரைப் பின்பற்றுபவர் ஆவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3715 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மக்கள் அனைவரும் இந்த (ஆட்சியதிகாரம்) விஷயத்தில் குறைஷியரைப் பின்பற்றுபவர்கள் ஆவர். அவர்களில் முஸ்லிமாயிருப்பவர் குறைஷியரில் முஸ்லிமாயிருப்பவரைப் பின்பற்றுபவர் ஆவார். மக்களில் இறை மறுப்பாளராயிருப்பவர் குறைஷியரில் இறைமறுப்பாளராயிருப்பவரைப் பின்பற்றுபவர் ஆவார்.

3716 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நன்மையிலும் தீமையிலும் (இஸ்லாத்திலும், அறியாமைக்காலத்திலும்) மக்கள் அனைவரும் குறைஷியரைப் பின்பற்றுபவர்கள் ஆவர்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3717 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்த ஆட்சியதிகாரம் குறைஷியரிடையேதான் இருந்துவரும்; அவர்களில் இருவர் எஞ்சியிருக்கும் வரை. - இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3718 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் தந்தை (சமுரா -ரலி) அவர்களுடன் நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "பன்னிரண்டு கலீஃபாக்கள் மக்களை ஆளாதவரை இந்த ஆட்சியதிகாரம் முடிவடையாது" என்று கூறிவிட்டு, பிறகு எனக்குக் கேட்காமல் இரகசியமாக ஏதோ (என் தந்தையிடம்) சொன்னார்கள்.
அப்போது நான் என் தந்தையிடம், "நபி (ஸல்) அவர்கள் என்ன சொன்னார்கள்?" என்று கேட்டேன். அதற்கு என் தந்தை "அவர்கள் அனைவரும் குறைஷியர் ஆவர் (என்று கூறினார்கள்)" என்றார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3719 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள், "பன்னிரண்டு ஆட்சித் தலைவர்கள் மக்களை ஆளும்வரை இந்த ஆட்சியமைப்பு நீடிக்கும்" என்று சொல்லக் கேட்டேன். பிறகு எனக்குக் கேட்காத விதத்தில் ஏதோ (என் தந்தையிடம்) நபி (ஸல்) அவர்கள் இரகசியமாகக் கூறினார்கள். நான் என் தந்தையிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்ன சொன்னார்கள்?" என்று கேட்டேன். அதற்கு "அவர்கள் அனைவரும் குறைஷியராக இருப்பார்கள் என்று (நபி (ஸல்) அவர்கள்) கூறினார்கள்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், அதில் "இந்த ஆட்சியமைப்பு நீடிக்கும்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

3720 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இஸ்லாம், பன்னிரண்டு ஆட்சித் தலைவர்கள்வரை வலிமையானதாக இருந்துவரும்" என்று சொல்லக் கேட்டேன். பிறகு ஏதோ சொன்னார்கள். அதை நான் புரிந்துகொள்ளவில்லை. எனவே, நான் என் தந்தை (சமுரா –ரலி) அவர்களிடம், "என்ன சொன்னார்கள்?" என்று கேட்டேன். அதற்கு என் தந்தை, "அவர்கள் அனைவரும் குறைஷியராக இருப்பார்கள் என்று கூறினார்கள்" என்றார்கள்.

3721 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "இந்த ஆட்சியதிகாரம் பன்னிரண்டு ஆட்சித் தலைவர்கள்வரை வலிமையானதாக இருந்துவரும்" என்று கூறிவிட்டுப் பிறகு ஏதோ சொன்னார்கள். அதை நான் புரிந்துகொள்ளவில்லை. எனவே, நான் என் தந்தையிடம், "என்ன சொன்னார்கள்?" என்று கேட்டேன். அதற்கு, "அவர்கள் அனைவரும் குறைஷியராக இருப்பார்கள் என்று கூறினார்கள்" என்றார்கள்.

3722 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் தந்தை (சமுரா –ரலி) அவர்களுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்த மார்க்கம், பன்னிரண்டு ஆட்சித் தலைவர்கள் வரை வலிமையானதாகவும் பாதுகாப்போடும் இருந்துவரும்" என்று சொல்லக் கேட்டேன். பிறகு ஏதோ சொன்னார்கள். மக்கள் (பேசிக் கொண்டிருந்ததால்) அதைக் கேட்கவிடாமல் என்னைச் செவிடாக்கிவிட்டார்கள். எனவே, நான் என் தந்தையிடம், "நபி (ஸல்) அவர்கள் என்ன சொன்னார்கள்?" என்று கேட்டேன். அதற்கு "அவர்கள் அனைவரும் குறைஷியராக இருப்பார்கள் என்று கூறினார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3723 ஆமிர் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதி, அதை என் அடிமை நாஃபிஉ இடம் கொடுத்தனுப்பினேன். அதில் "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்ற ஹதீஸ் எதையேனும் எனக்குத் தெரிவியுங்கள்" என்று கேட்டிருந்தேன். அவர்கள் எனக்குப் பதில் கடிதம் எழுதினார்கள். (அதில் பின்வருமாறு தெரிவித்திருந்தார்கள்:)

ஒரு வெள்ளிக்கிழமை தினத்தன்று மாஇஸ் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் (விபசாரக் குற்றத்திற்காக) கல்லெறிந்து கொல்லப்பட்ட மாலைப் பொழுதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மறுமைநாள் நிகழ்வதற்கு முன் உங்களைப் பன்னிரண்டு ஆட்சித் தலைவர்கள் ஆளும்வரை இந்த மார்க்கம் (வலிமையுடன்) நிலைபெற்றிருக்கும். அவர்கள் அனைவரும் குறைஷியராக இருப்பார்கள்" என்று கூறினார்கள்.
மேலும், முஸ்லிம்களில் ஒரு சிறு குழுவினர் (பாரசீக மன்னன்) குஸ்ரூவின் அல்லது குஸ்ரூ குடும்பத்தாரின் கோட்டையான வெள்ளை மாளிகையை வெற்றிகொள்வார்கள்.
மேலும், மறுமை நிகழ்வதற்கு முன் பெரும் பெரும் பொய்யர்கள் தோன்றுவார்கள். அவர்கள் விஷயத்தில் எச்சரிக்கையாக இருந்துகொள்ளுங்கள்.
மேலும், அல்லாஹ் உங்களில் ஒருவருக்குச் செல்வத்தை வழங்கினால் முதலில் தமக்கும் தம் குடும்பத்தாருக்கும் செலவழிக்கட்டும்! மேலும், நான் உங்களை ("அல் கவ்ஸர்' தடாகத்தின் அருகில்) எதிர்பார்த்துக் காத்திருப்பேன் என்று கூறியதை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நான் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களுக்கு ஆளனுப்பி "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்ற ஹதீஸை எனக்கு அறிவியுங்கள்' என்று கேட்டேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது.

## பாடம் : 2 ஆட்சித் தலைவரை நியமிப்பதும் நியமிக்காமல் விடுவதும்.

3724 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தந்தை (கலீஃபா உமர் (ரலி) அவர்கள்) தாக்கப்பட்டு (படுக்கையில்) இருந்தபோது அவர்கள் அருகில் நான் இருந்தேன். அப்போது அவர்களை மக்கள் பாராட்டிப் பேசினர். மேலும், "அல்லாஹ் உங்களுக்கு நற்பலனை வழங்கட்டும்" என்று கூறினர். அதற்கு என் தந்தை "(என்னைப்) பிடித்தோ பிடிக்காமலோ (பாராட்டுகிறீர்கள்)" என்று கூறினார்கள். அப்போது மக்கள், "நீங்கள் உங்களுக்குப் பின் யாரையாவது உங்கள் பிரதிநிதியாக (ஆட்சித் தலைவராக) நியமியுங்கள்" என்று கூறினர்.
அதற்கு, "நான் உயிரோடு இருக்கும்போதும் இறந்த பிறகும் உங்கள் விவகாரத்திற்குப் பொறுப்பேற்க வேண்டுமா? நான் வகித்த இந்தப் பதவியில் (இறைவனிடம்) எனது பங்கு எனக்குச் சாதகமாகவும் வேண்டாம்; பாதகமாகவும் வேண்டாம்; சரிக்குச் சமமாக அமைந்தால் போதும். நான் எவரையேனும் எனக்குப் பின் ஆட்சித் தலைவராக நியமித்தால் (அதற்கும் முன்மாதிரி உண்டு). ஏனென்றால், (எனக்கு முன்பு) என்னைவிடச் சிறந்தவர் (அதாவது அபூபக்ர் (ரலி) அவர்கள்) அவ்வாறு ஆட்சித் தலைவரை (என்னை) நியமித்துச் சென்றார்கள். (ஆட்சித் தலைவரை நியமிக்காமல்) அப்படியே நான் உங்களை விட்டுவிட்டால், (அதற்கும் முன்மாதிரி உண்டு). ஏனெனில், என்னைவிடச் சிறந்தவரான அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறுதான் (உங்களுக்கு யாரையும் நியமிக்காமல்) உங்களை விட்டுச் சென்றார்கள்" என்று உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

என் தந்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நினைவுகூர்ந்தபோது, என் தந்தை யாரையும் தமக்குப் பின் ஆட்சித் தலைவராக நியமிக்கமாட்டார்கள் என்பதை நான் அறிந்துகொண்டேன்.

3725 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (என் சகோதரி) ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம் சென்றபோது அவர், "உனக்குத் தெரியுமா? உன்னுடைய தந்தை தமக்குப் பின் வேறு யாரையும் ஆட்சித் தலைவராக நியமிக்கமாட்டார்கள்" என்று கூறினார். நான் "அவ்வாறு அவர்கள் செய்துவிடக்கூடாது" என்று கூறினேன். அதற்கு அவர், "(இல்லை) அவ்வாறுதான் செய்வார்கள்" என்றார். நான், "இது தொடர்பாக அவர்களிடம் நான் பேசுவேன்" எனச் சத்தியமிட்டேன்.
பிறகு காலைவரை அமைதியாக இருந்துவிட்டேன். (இது தொடர்பாக) அவர்களிடம் நான் பேசவில்லை. (அது குறித்து அவர்களிடம் பேசுவேன் என நான் சத்தியம் செய்திருந்ததால்) எனது வலக்கையில் ஒரு மலையை நான் சுமந்துகொண்டிருந்ததைப் போன்று எனக்கு இருந்தது. திரும்ப அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் மக்களின் நிலை குறித்து என்னிடம் விசாரித்தார்கள். அதைப் பற்றி அவர்களிடம் நான் தெரிவித்தேன்.
பிறகு அவர்களிடம், "மக்கள் ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசிக்கொள்வதை நான் கேள்விப் பட்டேன். அதைத் தங்களிடம் நான் சொல்வேன் எனச் சத்தியம் செய்துவிட்டேன். தாங்கள் தங்களுக்குப் பிறகு யாரையும் ஆட்சித் தலைவராக நியமிக்கமாட்டீர்கள் எனப் பேசிக் கொண்டனர். (உங்கள்) ஒட்டகத்தையோ ஆட்டையோ மேய்க்கின்ற ஒருவன் உங்களுக்கு இருந்து அவன் அவற்றை (மேய்க்கப்போன இடத்திலேயே) விட்டுவிட்டு, பின்னர் உங்களிடம் வந்தால், அவன் (அவற்றைப்) பாழாக்கிவிட்டான் என்றே நீங்கள் கருதுவீர்கள். அப்படியானால், மக்களை மேய்ப்பது அதைவிடக் கடினமானது (அல்லவா?)" என்று நான் சொன்னேன்.
அப்போது எனது கருத்துக்கு என் தந்தை உடன்பட்டார்கள். தமது தலையைச் சிறிது நேரம் தாழ்த்திக்கொண்டிருந்தார்கள். பிறகு தலையை என் பக்கமாக உயர்த்தி, "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் தனது மார்க்கத்தைப் பாதுகாப்பான். நான் எனக்குப் பின் ஓர் ஆட்சித் தலைவரை நியமிக்காவிட்டால் (அது தவறல்ல); ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்குப் பிறகு யாரையும் ஆட்சித் தலைவராக நியமிக்கவில்லை. நான் எனக்குப் பின் யாரையேனும் ஆட்சித் தலைவராக நியமித்தால் (அதுவும் தவறாகாது. ஏனெனில்,) அபூபக்ர் (ரலி) அவர்கள் தமக்குப் பின் (என்னை) ஆட்சித் தலைவராக நியமித்தார்கள்" என்று கூறினார்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களையும் அபூபக்ர் (ரலி) அவர்களையும் நினைவு கூர்ந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு நிகராக யாரையும் அவர்கள் ஆக்கமாட்டார்கள்; தமக்குப் பின் யாரையும் ஆட்சித் தலைவராக நியமிக்கமாட்டார்கள் என நான் அறிந்துகொண்டேன்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 3 பதவியைத் தேடுவதற்கும் அதன் மீது பேராசைப்படுவதற்கும் வந்துள்ள தடை.

3726 அப்துர் ரஹ்மான் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "அப்துர் ரஹ்மானே! ஆட்சிப் பொறுப்பை (நீங்களாக)க் கேட்காதீர்கள். ஏனெனில், நீங்கள் கேட்டு அது உங்களுக்கு அளிக்கப்பட்டால் அதோடு நீங்கள் (தனியாக) விடப்படுவீர்கள். கேட்காமல் அது உங்களுக்கு அளிக்கப்பட்டால் அது தொடர்பாக உங்களுக்கு (அல்லாஹ்வின்) உதவி கிடைக்கும்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துர் ரஹ்மான் பின் சமுரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஏழு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3727 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் என் தந்தையின் சகோதரர் புதல்வர்களில் இருவரும் நபி (ஸல்) அவர்களிடம் சென்றோம். அப்போது அவ்விருவரில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் தங்களுக்கு அளித்துள்ள பொறுப்புகளில் சிலவற்றுக்கு எங்களை அதிகாரிகளாக நியமியுங்கள்" என்று சொன்னார். மற்றொருவரும் அவ்வாறே கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இந்த ஆட்சியதிகாரத்தைக் கேட்கின்ற ஒருவருக்கோ ஆசைப்படுகின்ற ஒருவருக்கோ நாம் அதை வழங்கமாட்டோம்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3728 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு முறை) நபி (ஸல்) அவர்களை நோக்கிச் சென்றேன். என்னுடன் (என்) அஷ்அரீ குலத்தைச் சேர்ந்த இருவரும் இருந்தனர். அவர்களில் ஒருவர் என் வலப்பக்கத்திலும் மற்றொருவர் என் இடப்பக்கத்திலும் இருந்தனர். அவ்விருவரும் (நபி (ஸல்) அவர்களிடம் அரசாங்கப்) பதவி அளிக்குமாறு கோரினர். அப்போது நபி (ஸல்) அவர்கள் பல் துலக்கிக் கொண்டிருந்தார்கள்.
நபியவர்கள், "அபூமூசா!' அல்லது "அப்துல்லாஹ் பின் கைஸ்!' நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். நான், "சத்திய (மார்க்க)த்துடன் தங்களை அனுப்பியவன் மீதாணையாக! இவர்கள் இருவரும் தமது மனதில் இருந்ததை என்னிடம் தெரிவிக்கவுமில்லை. இவர்கள் பதவி கேட்பார்கள் என்று எனக்குத் தெரியவும் செய்யாது" என்று சொன்னேன். அப்போது நபி (ஸல்) அவர்களின் இதழுக்குக் கீழ் துருத்திக்கொண்டிருந்த பல் துலக்கும் குச்சியை இப்போதும்கூட நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
நபி (ஸல்) அவர்கள், "யார் பதவியை விரும்புகிறாரோ, அவருக்கு நாம் பதவியை "ஒருபோதும் கொடுக்கமாட்டோம்' அல்லது "கொடுப்பதில்லை'. ஆகவே, "அபூமூசா!' அல்லது "அப்துல்லாஹ் பின் கைஸ்!' நீங்கள் (ஆளுநராகச்) செல்லுங்கள்" என்று கூறி, என்னை யமன் நாட்டிற்கு அனுப்பிவைத்தார்கள். பிறகு என்னைப் பின்தொடர்ந்து முஆத் பின் ஜபல் (ரலி) அவர்களை யமன் நாட்டிற்கு அனுப்பிவைத்தார்கள்.
முஆத் (ரலி) அவர்கள் என்னிடம் வந்தபோது "வாகனத்திலிருந்து இறங்குங்கள் (இதில் அமருங்கள்)" என்று கூறிவிட்டு, (அவர்களைக் கண்ணியப்படுத்தும் விதமாக) அவர்களுக்குத் தலையணை ஒன்றை எடுத்து வைத்தேன்.

அப்போது எனக்கு அருகில் ஒரு மனிதர் கட்டப்பட்டிருப்பதைக் கண்ட முஆத் (ரலி) அவர்கள், "இவர் யார்?" என்று கேட்டார்கள். நான், "இவர் யூதராயிருந்து இஸ்லாத்தைத் தழுவினார். அதற்குப் பிறகு (இஸ்லாத்தை விட்டு வெளியேறி) தமது பழைய துன்மார்க்கத்திற்கே திரும்பிச் சென்றுவிட்டார்; யூதராகிவிட்டார்" என்று சொன்னேன்.

அதற்கு முஆத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வுடையவும் அவனுடைய தூதருடையவும் தீர்ப்புப்படி இவருக்கு மரண தண்டனை அளிக்கப்படாதவரை நான் அமரமாட்டேன்" என்று கூறினார்கள். பிறகு மீண்டும் "சரி, அமருங்கள்" என்றேன். முஆத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வுடையவும் அவனுடைய தூதருடையவும் தீர்ப்புப்படி இவருக்கு மரண தண்டனை அளிக்கப்படாத வரை நான் அமரமாட்டேன்" என்று கூறினார்கள்.

இவ்வாறு மூன்று முறை நடந்தது. எனவே, அவருக்கு மரணதண்டனை அளிக்கும்படி நான் உத்தரவிட அவ்வாறே அவர் கொல்லப்பட்டார்.

பிறகு நாங்கள் இருவரும் இரவுத்தொழுகை குறித்துப் பேசிக்கொண்டோம். அப்போது எங்களில் ஒருவர், (அதாவது) முஆத் (ரலி) அவர்கள், "நான் இரவில் சிறிது நேரம் உறங்குகிறேன். சிறிது நேரம் நின்று வணங்குகிறேன். நின்று வணங்குவதற்கு (இறைவனிடம்) நான் பிரதிபலனை எதிர்பார்ப்பதைப் போன்றே என் உறக்கத்திற்கும் நான் பிரதிபலனை எதிர்பார்க்கிறேன்" என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 அவசியமின்றி ஆட்சிப் பொறுப்பை ஏற்பது விரும்பத்தக்கதன்று.**

3729 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! எனக்கு ஏதேனும் (அரசுப்) பதவி வழங்கக் கூடாதா?" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், தமது கையால் எனது தோள்மீது அடித்துவிட்டு, "அபூதர்! நீர் பலவீனமானவர். அது (பதவி) ஒரு கையடைப் பொருளாகும். அதை முறைப்படி அடைந்து, அதில் தமக்குரிய பொறுப்புகளை நிறைவேற்றியவரைத் தவிர மற்றவர்களுக்கு அது (மறுமையில்) இழிவும் துயரமும் ஆகும்" என்று கூறினார்கள்.

3730 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "அபூதர்! உம்மை நான் பலவீனமானவராகவே காண்கிறேன். எனக்கு நான் விரும்புவதையே உமக்கும் விரும்புகிறேன். இருவருக்குக்கூட நீர் தலைமை ஏற்காதீர். அநாதையின் சொத்துக்கு நீர் பொறுப்பேற்காதீர்" என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 5 நேர்மையான ஆட்சியாளரின் சிறப்பும், கொடுமைக்கார ஆட்சியாளன் அடையும் தண்டனையும், குடிமக்களிடம் நளினமாக நடந்துகொள்ளுமாறு வந்துள்ள தூண்டுதலும், அவர்களைச் சிரமத்திற்குள்ளாக்குவதற்கு வந்துள்ள தடையும்.**

3731 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நேர்மையான ஆட்சியாளர்கள், வல்லமையும் மாண்பும் மிக்க அளவற்ற அருளாளன் அல்லாஹ்வின் வலப்பக்கத்தில் ஒளியாலான மேடைகளில் இருப்பார்கள். அவனுடைய இரு கைகளுமே வலக்கரமே (வளமிக்கதே). அவர்கள் தமது நிர்வாகத்திலும், குடும்பத்திலும், தாம் பொறுப்பேற்றுக்கொண்ட (அனைத்)திலும் நியாயமாக நடந்துகொண்டனர் (என்பதே இச்சிறப்புக்குக் காரணம்).
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3732 அப்துர் ரஹ்மான் பின் ஷுமாசா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் சில விஷயங்களைப் பற்றிக் கேட்பதற்காக ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள், "நீங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்?" என்று கேட்டார்கள். நான், "எகிப்தியரில் ஒருவன்" என்று பதிலளித்தேன். அவர்கள், "உங்கள் ஆட்சியாளர் இந்தப் போரில் உங்களிடம் எப்படி நடந்துகொண்டார்?" என்று கேட்டார்கள்.
அதற்கு நான், "வெறுக்கத்தக்க அம்சங்கள் எதையும் நாங்கள் அவரிடம் காணவில்லை. எங்களில் ஒருவரது ஒட்டகம் செத்துவிட்டால், அவருக்கு அவர் ஒட்டகம் வழங்கினார். அடிமை இறந்துவிட்டால், அவருக்கு அடிமை தந்தார். செலவுக்குப் பணம் தேவைப்பட்டால் பணம் தந்தார்" என்று விடையளித்தேன்.
அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், "அவர் என் சகோதரர் முஹம்மத் பின் அபீபக்ர் விஷயத்தில் நடந்துகொண்ட விதம், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்ற ஒரு செய்தியைக் கூறவிடாமல் என்னைத் தடுக்காது" என்று கூறிவிட்டுப் பின்வருமாறு சொன்னார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னுடைய இந்த இல்லத்தில் வைத்து, "இறைவா! என் சமுதாயத்தாரின் விவகாரங்களில் ஒன்றுக்குப் பொறுப்பேற்றுக்கொண்ட ஒருவர், அவர்களைச் சிரமத்திற்குள்ளாக்கினால், அவரை நீயும் சிரமத்திற்குள்ளாக்குவாயாக! என் சமுதாயத்தாரின் விவகாரங்களில் ஒன்றுக்குப் பொறுப்பேற்றுக்கொண்ட ஒருவர், அவர்களிடம் மென்மையாக நடந்து கொண்டால், நீயும் அவரிடம் மென்மையாக நடந்து கொள்வாயாக!" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3733 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நினைவில் கொள்க! நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே. உங்களில் ஒவ்வொருவரும் தத்தமது பொறுப்பிலுள்ளவை பற்றி (மறுமையில்) விசாரிக்கப்படுவீர்கள். ஆட்சித் தலைவர் மக்களின் பொறுப்பாளர் ஆவார். அவர் தம் குடிமக்கள் குறித்து விசாரிக்கப்படுவார். ஓர் ஆண், தன் குடும்பத்தாருக்குப் பொறுப்பாளன் ஆவான். அவன் தன் பொறுப்புக்குட்பட்டவர்கள்

குறித்து விசாரிக்கப்படுவான்.ஒரு பெண், தன் கணவனின் இல்லத்துக்கும், அவனுடைய குழந்தைக்கும் பொறுப்பாளி ஆவாள். அவள் அவர்கள் குறித்து விசாரிக்கப்படுவாள். பணியாள் தன் உரிமையாளரின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான். அவன் அது குறித்து விசாரிக்கப்படுவான். நினைவில் கொள்க! உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே. உங்களில் ஒவ்வொருவரும் தத்தமது பொறுப்புக்குட்பட்டவை குறித்து விசாரிக்கப்படுவீர்கள். இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஒன்பது அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஆண் (மகன்) தன் தந்தையின் செல்வத்துக்குப் பொறுப்பாளியாவான். அவன் தனது பொறுப்புக்கு உட்பட்டவை குறித்து விசாரிக்கப்படுவான்" என்று (எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த) சாலிம் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என நான் எண்ணுகிறேன்" என்று கூறியதாக அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3734 ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

(நபித்தோழர்) மஅகில் பின் யசார் (ரலி) அவர்கள் இறப்பதற்கு முன் நோய்வாய்ப்பட்டிருந்த போது, அவர்களை(ச் சந்தித்து) உடல்நலம் விசாரிப்பதற்காக (அன்றைய பஸ்ரா நகர ஆட்சியாளர்) உபைதுல்லாஹ் பின் ஸியாத் சென்றார்.

அவரிடம் மஅகில் (ரலி) அவர்கள் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து கேட்ட (ஹதீஸ்) செய்தி ஒன்றை உமக்கு அறிவிக்கிறேன். நான் இன்னும் சில நாட்கள் உயிர் வாழ்வேன் என அறிந்திருந்தால் அதை உமக்கு அறிவிக்கமாட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "குடிமக்களில் சிலரை நிர்வகிக்கும் பொறுப்பை அல்லாஹ் ஓர் அடியாருக்கு வழங்கியிருக்க, அவர் அந்த மக்களை ஏமாற்றி மோசடி செய்த நிலையிலேயே இறந்துபோனால், அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தைத் தடைசெய்யாமல் இருப்பதில்லை" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "மஅகில் பின் யசார் (ரலி) அவர்கள் உடல் நலிவுற்றிருந்தபோது (அவர்களை உடல்நலம் விசாரிப்பதற்காக) இப்னு ஸியாத் சென்றார்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மேலும், இப்னு ஸியாத் "இதற்கு முன்பு இதை நீங்கள் எனக்கு அறிவிக்கவில்லையே?" என்று கேட்க, மஅகில் (ரலி) அவர்கள் "நான் உமக்கு (காரணத்தோடுதான்) அறிவிக்க

வில்லை" அல்லது "உம்மிடம் நான் (காரணத்தோடுதான்) அறிவித்திருக்கவில்லை" என்று பதிலளித்தார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3735 அபுல்மலீஹ் ஆமிர் பின் உசாமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நபித்தோழர் மஅகில் பின் யசார் (ரலி) அவர்கள் (இறப்பதற்கு முன்) நோய்வாய்ப்பட்டிருந்த போது, (அவர்களை உடல்நலம் விசாரிப்பதற்காக) உபைதுல்லாஹ் பின் ஸியாத் சென்றார். அவரிடம் மஅகில் (ரலி) அவர்கள், "உமக்கு நான் ஒரு ஹதீஸை அறிவிக்கப்போகிறேன். நான் மரணத்தருவாயில் இருந்திராவிட்டால் அதை உமக்கு நான் அறிவிக்கமாட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஓர் ஆட்சியாளர் முஸ்லிம்களை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பின்னர், அவர்களுக்காக உழைக்காமலும் (அவர்கள்மீது) அக்கறைகாட்டாமலும் இருந்தால், அவர்களுடன் அவர் சொர்க்கத்துக்குச் செல்லவே மாட்டார்" என்று சொல்ல நான் கேட்டேன் எனக் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடரிலும் வந்துள்ளது.
அதில், "மஅகில் பின் யசார் (ரலி) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தபோது, அவர்களை உடல்நலம் விசாரிப்பதற்காக உபைதுல்லாஹ் பின் ஸியாத் சென்றார்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.

3736 ஹசன் பின் அபில்ஹசன் யசார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவரான ஆயித் பின் அம்ர் (ரலி) அவர்கள் (அன்றைய பஸ்ராவின் ஆட்சியராயிருந்த) உபைதுல்லாஹ் பின் ஸியாதிடம் சென்று, "அன்புக் குழந்தாய்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நிர்வாகிகளில் மிகவும் மோசமானவர், இரக்கமற்ற கல்நெஞ்சக்காரர்தாம்' என்று கூறியதை நான் கேட்டேன். அவர்களில் ஒருவராக நீ ஆகிவிட வேண்டாம் என உன்னை நான் எச்சரிக்கிறேன்" என்று கூறினார்கள்.
அதற்கு உபைதுல்லாஹ், "(நீர் போய்) உட்காரும். நீர் முஹம்மத் (ஸல்) அவர்களின் தோழர்களில் மட்டமான ஒருவர்தாம்" என்று கூறினார். அதற்கு ஆயித் பின் அம்ர் (ரலி) அவர்கள், "(நபியின் தோழர்களான) அவர்களில் மட்டமானவர்களும் இருந்தார்களா? அவர்களுக்குப் பின்னர் வந்தவர்களிலும் மற்றவர்களிலும்தாம் மட்டமானவர்கள் தோன்றினர்" என்று கூறினார்கள்.

## பாடம் : 6 (போர்ச்செல்வங்கள் உள்ளிட்ட) பொதுச் சொத்துகளில் மோசடி செய்வது வன்மையாகத் தடை செய்யப்பட்டுள்ளது.

3737 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே நின்று (போர்ச் செல்வங்கள் உள்ளிட்ட) பொதுச் சொத்துகளில் மோசடி செய்வது குறித்துக் கூறினார்கள். அது கடுங்குற்றம் என்பதையும் அதன் தண்டனை கொடியது என்பதையும் எடுத்துரைத்தார்கள்.

பிறகு (பின்வருமாறு) கூறினார்கள்: மறுமை நாளில் கத்திக்கொண்டிருக்கும் ஒட்டகத்தைத் தமது கழுத்தில் சுமந்து கொண்டுவந்து, "அல்லாஹ்வின் தூதரே! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று (அபயம் தேடி) அலறும் நிலையில் உங்களில் யாரையும் நான் காணவேண்டாம். ஏனெனில், அப்போது நான் "உனக்கு எந்த உதவியும் என்னால் செய்ய முடியாது. உனக்கு நான் (சொல்ல வேண்டியதை உலகத்திலேயே) சொல்லிவிட்டேன்' என்று கூறிவிடுவேன்.
இவ்வாறே, மறுமை நாளில் கனைத்துக் கொண்டிருக்கும் குதிரையைத் தமது கழுத்தில் சுமந்து வந்து, "அல்லாஹ்வின் தூதரே! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று (அபயம் தேடி) அலறும் நிலையில் உங்களில் யாரையும் நான் காணவேண்டாம். ஏனெனில், அப்போது நான் "உனக்கு எந்த உதவியும் என்னால் செய்ய இயலாது. உனக்கு நான் (சொல்ல வேண்டியதை உலகத்திலேயே) சொல்லிவிட்டேன்' என்று கூறிவிடுவேன்.
இவ்வாறே, மறுமை நாளில் கத்திக்கொண்டிருக்கும் ஆட்டைத் தமது கழுத்தில் சுமந்து வந்து, "அல்லாஹ்வின் தூதரே! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று (அபயம் தேடி) அலறும் நிலையில் உங்களில் யாரையும் நான் காணவேண்டாம். ஏனெனில், அப்போது நான் "உனக்கு எந்த உதவியும் என்னால் செய்ய முடியாது. உனக்கு நான் (சொல்ல வேண்டியதை உலகிலேயே) சொல்லி விட்டேன்' என்று கூறிவிடுவேன்.
இவ்வாறே, மறுமை நாளில் கத்திக்கொண்டிருக்கும் ஓர் உயிரினத்தைத் தமது கழுத்தில் சுமந்து கொண்டுவந்து "அல்லாஹ்வின் தூதரே! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று (அபயம் தேடி) அலறும் நிலையில் உங்களில் யாரையும் நான் காணவேண்டாம். ஏனெனில், அப்போது நான் "உனக்கு எந்த உதவியும் என்னால் செய்யமுடியாது; உனக்கு நான் (சொல்ல வேண்டியதை உலகிலேயே) சொல்லிவிட்டேன்' என்று கூறிவிடுவேன்.
இவ்வாறே, மறுமை நாளில் (காற்றில்) அசையும் துணிகளைத் தமது கழுத்தில் சுமந்து கொண்டுவந்து, "அல்லாஹ்வின் தூதரே! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று கூறி (அபயம் தேடி) அலறும் நிலையில் உங்களில் யாரையும் நான் காணவேண்டாம்.ஏனெனில், அப்போது நான் "உனக்கு எந்த உதவியும் என்னால் செய்ய இயலாது. உனக்கு (சொல்ல வேண்டியதை உலகி லேயே) சொல்லிவிட்டேன்' என்று கூறிவிடுவேன்.
இவ்வாறே, மறுமை நாளில் பொன்னையும் வெள்ளியையும் தமது கழுத்தில் சுமந்து கொண்டுவந்து, "அல்லாஹ்வின் தூதரே! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று கூறி (அபயம் தேடி) அலறும் நிலையில் உங்களில் யாரையும் நான் காணவேண்டாம்.ஏனெனில், அப்போது நான் "என்னால் உனக்கு எந்த உதவியும் செய்ய முடியாது. உனக்கு நான் (சொல்ல வேண்டியதை உலகிலேயே) சொல்லிவிட்டேன்" என்று கூறிவிடுவேன்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3738 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (போர்ச் செல்வங்கள் உள்ளிட்ட) பொதுச் சொத்துகளில் மோசடி செய்வது குறித்துக் கூறினார்கள். அதன் தண்டனை கொடியது என்பதையும் எடுத்துரைத்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 7 அதிகாரிகளுக்கு அன்பளிப்புகள் வழங்குவதற்கு வந்துள்ள தடை.**

3739 அபூஹுமைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்அஸ்த்' குலத்தாரில் ஒருவரை (பனூ சுலைம் குலத்தாரின்) "ஸகாத்'களை வசூலிக்கும் அதிகாரியாக நியமித்தார்கள். அவர் இப்னுல் லுத்பிய்யா என அழைக்கப்பட்டார். அவர் ("ஸகாத்'களை வசூலித்துவிட்டு) வந்து (கணக்கு ஒப்படைத்தபோது), "இது உங்களுக்குரியது. இது எனக்குரியது. இது எனக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது" என்று கூறினார்.
உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து, சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது நின்று அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு, "நாம் அனுப்பும் அதிகாரியின் நிலை என்ன? அவர் (பணியை முடித்துத் திரும்பிவந்து) "இது உங்களுக்குரியது. இது எனக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது' என்று கூறுகிறார். அவர் (மட்டும்) தம் தந்தையின் வீட்டிலோ அல்லது தாயின் வீட்டிலோ உட்கார்ந்துகொண்டு, தமக்கு அன்பளிப்பு வழங்கப்படுகிறதா இல்லையா என்று பார்க்கட்டுமே! முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது ஆணையாக! உங்களில் யாரேனும் அ(ந்தப் பொதுச் சொத்)திலிருந்து (முறைகேடாக) எதையேனும் பெற்றால் மறுமை நாளில் அதைத் தமது கழுத்தில் சுமந்துகொண்டு வருவார். அது ஒட்டகமாக இருந்தால் கனைத்துக்கொண்டிருக்கும். மாடாகவோ ஆடாகவோ இருந்தால் அது கத்திக்கொண்டிருக்கும்" என்று கூறினார்கள்.
பிறகு அவர்களுடைய அக்குள்களின் வெண்மையை நாங்கள் பார்க்கும் அளவுக்குத் தம் கைகளை உயர்த்திவிட்டு, "இறைவா! (உன் கட்டளையை) எடுத்துரைத்துவிட்டேனா?" என்று இரண்டு முறை கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுமைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நபி (ஸல்) அவர்கள் "அல்அஸ்த்' குலத்தைச் சேர்ந்த இப்னுல் லுத்பிய்யா என்பவரை ஸகாத் வசூலிக்கும் அதிகாரியாக நியமித்தார்கள். அவர் (ஸகாத் வசூலித்து விட்டுத் திரும்பி)வந்து, "இது உங்களுக்குரிய செல்வம். இது எனக்கு வழங்கப்பட்ட அன்பளிப்பு' என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள் அவரிடம், "நீர் உம்முடைய தாய் தந்தையின் வீட்டில் உட்கார்ந்திரும்! உமக்கு அன்பளிப்பு வழங்கப்படுகிறதா இல்லையா என்று பார்ப்போம்' என்று கூறினார்கள். பிறகு எழுந்து நின்று (எங்களுக்கு) உரையாற்றினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. பிறகு மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது.

3740 அபூஹுமைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பனூ சுலைம் குலத்தாரின் "ஸகாத்'களை வசூலிக்கும் அதிகாரியாக "இப்னுல் உத்பிய்யா' எனப்படும் ஒருவரை நியமித்தார்கள். அவர்

(ஸகாத் வசூலித்துக்கொண்டு) வந்தபோது அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கணக்குக் கேட்டார்கள். அவர், "இது உங்களுக்குரிய செல்வம். இது (எனக்கு வந்த) அன்பளிப்பு" என்று கூறினார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் உண்மையாளராக இருந்தால், உம்முடைய தந்தை வீட்டில் அல்லது தாய் வீட்டில் உட்கார்ந்திரும்! உம்மிடம் அன்பளிப்புகள் வருகின்றனவா பார்ப்போம்" என்று கூறினார்கள்.
பிறகு எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அப்போது இறைவனைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு, "அல்லாஹ் என்னைப் பொறுப்பாளியாக்கிய ஒரு பணிக்காக உங்களில் ஒருவரை நான் அதிகாரியாக்கினேன். அவர் (சென்றுவிட்டு) வந்து, "இது உங்களுக்குரிய செல்வம். இது எனக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது' என்று சொல்கிறார். அவர் சொல்வது உண்மையாயிருந்தால், அவர் தம் தந்தை வீட்டிலோ அல்லது தாய் வீட்டிலோ உட்கார்ந்திருக்கலாமே! அன்பளிப்புகள் வருகின்றனவா என்று பார்ப்போம்.
அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் எவரும் உரிமையின்றி (முறைகேடாக) எந்த ஒன்றை அடைந்துகொண்டாலும் மறுமை நாளில் அதை (தமது தோளில்) சுமந்தவண்ணமே அல்லாஹ்வை அவர் சந்திப்பார். இந்த வகையில் கனைத்துக்கொண்டிருக்கும் ஒட்டகத்தையோ, அல்லது கத்திக்கொண்டிக்கும் மாட்டையோ ஆட்டையோ (தமது தோளில்) சுமந்துகொண்டு அல்லாஹ்வைச் சந்திக்கும் எவரையும் நான் உறுதியாக அறிவேன்"என்று கூறினார்கள்.
பிறகு, தம் அக்குள்களின் வெண்மை தெரியும் அளவுக்குத் தம் இரு கைகளையும் உயர்த்தி, "இறைவா! (உன் கட்டளையை) நான் எடுத்துரைத்துவிட்டேன் அல்லவா?" என்று அவர்கள் கூறியதை என் கண் கண்டது; காது கேட்டது.

3741 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுமைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அப்தா பின் சுலைமான் மற்றும் அப்தில்லாஹ் பின் நுமைர் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "அவர் (ஸகாத் வசூலித்துவிட்டுத் திரும்பி) வந்தபோது, அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கணக்குக் கேட்டார்கள்" என இடம்பெற்றுள்ளது. அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் மீதாணையாக! என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நிச்சயம் நீங்கள் அறிந்து கொள்வீர்கள். அ(ந்தப் பொதுச்சொத்)திலிருந்து எவரேனும் எதையாவது (முறைகேடாகப்) பெற்றால்..." என்று இடம்பெற்றுள்ளது.
சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "என் கண் கண்டது. காதுகள் கேட்டன. வேண்டுமானால் நீங்கள் ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்களிடம் கேட்டுப் பாருங்கள். ஏனெனில், அப்போது அவர்களும் என்னுடன் இருந்தார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3742 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஸகாத்'களை வசூலிக்கும் அதிகாரியாக ஒருவரை நியமித்தார்கள். அவர் (ஸகாத்களை வசூலித்துவிட்டு) ஏராளமான செல்வங்களுடன் வந்து,

"இது உங்களுக்குரியது. இது எனக்கு அன்பளிப்பாக வழங்கப்பெற்றது' என்று கூறலானார். பிறகு மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது.
உர்வா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் அபூஹுமைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்களிடம், "இதை நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வாயிலிருந்து என் காதுகள் (நேரடியாகக்) கேட்டன" என்றார்கள்.

3743 அதீ பின் அமீரா அல்கிந்தீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நாம் உங்களில் எவரையேனும் ஒரு பணிக்கு அதிகாரியாக நியமித்திருந்து, பின்னர் அவர் ஓர் ஊசியையோ அதை விடச் சிறியதையோ நம்மிடம் (கணக்குக் காட்டாமல்) மறைத்துவிட்டால் அது மோசடியாகவே அமையும். அவர் மறுமை நாளில் அந்தப் பொருளுடன் வருவார்" என்று கூறியதை நான் கேட்டேன்.
அப்போது அன்சாரிகளில் ஒரு கறுப்பு நிற மனிதர் எழுந்து, -அவரை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது- "அல்லாஹ்வின் தூதரே! என்னிடம் தாங்கள் ஒப்படைத்திருந்த பணியை நீங்கள் (திரும்ப) ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறினார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். அவர், "தாங்கள் இன்னின்னவாறு கூறியதை நான் கேட்டேன்" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் இப்போதும் அவ்வாறே கூறுகிறேன். நாம் உங்களில் எவரையேனும் ஒரு பணிக்கு அதிகாரியாக நியமித்தால், அவர் அதில் கிடைக்கும் சிறியதையும் அதிகத்தையும் (நம்மிடம்) கொண்டுவந்து சேர்க்கட்டும். பிறகு எது அவருக்கு வழங்கப்படுகிறதோ அதை அவர் பெற்றுக்கொள்ளட்டும். எது அவருக்கு மறுக்கப்படுகிறதோ அதிலிருந்து அவர் விலகிக்கொள்ளட்டும்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அதீ பின் அமீரா அல்கிந்தீ (ரலி) அவர்களிடமிருந்து மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அதீ பின் அமீரா அல்கிந்தீ (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 8 பாவமற்ற விஷயங்களில் தலைவர்களுக்குக் கட்டுப்படுவது கடமையாகும். பாவமான செயலில் கட்டுப்படுவது தடை செய்யப்பட்டதாகும்.

3744 இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"இறைநம்பிக்கை கொண்டோரே! நீங்கள் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படியுங்கள்; அவனுடைய தூதருக்கும் உங்களில் அதிகாரம் உடையோருக்கும் கீழ்ப்படியுங்கள்" (4:59) எனும் இறைவசனம், நபி (ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் பின் ஹுதாஃபா அஸ்ஸஹ்மீ (ரலி) அவர்களை (தளபதியாக்கி) ஒரு படைப்பிரிவினருடன் அனுப்பியபோது அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்களிடமிருந்து யஅலா பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இவ்வாறு அறிவித்தார்கள் என இடம்பெற்றுள்ளது.

3745 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனக்குக் கீழ்ப்படிந்தவர் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்தவர் ஆவார். எனக்கு மாறுசெய்தவர் அல்லாஹ்வுக்கு மாறுசெய்தவர் ஆவார். (என்னால் நியமிக்கப்பட்ட) தலைவருக்குக் கீழ்ப்படிந்தவர் எனக்குக் கீழ்ப்படிந்தவர் ஆவார்; தலைவருக்கு மாறுசெய்தவர் எனக்கு மாறு செய்தவர் ஆவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "தலைவருக்கு மாறுசெய்தவர் எனக்கு மாறுசெய்தவர் ஆவார்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

3746 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனக்குக் கீழ்ப்படிந்தவர் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்தவர் ஆவார். எனக்கு மாறுசெய்தவர் அல்லாஹ்வுக்கு மாறுசெய்தவர் ஆவார். என்னால் நியமிக்கப்பெற்ற தலைவருக்குக் கீழ்ப்படிந்தவர் எனக்குக் கீழ்ப்படிந்தவர் ஆவார். என்னால் நியமிக்கப்பெற்ற தலைவருக்கு மாறுசெய்தவர் எனக்கு மாறுசெய்தவர் ஆவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3747 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "தலைவருக்குக் கீழ்ப்படிந்தவர்' என்றே இடம்பெற்றுள்ளது. "என்னால் நியமிக்கப்பெற்ற தலைவருக்கு' என்று இடம்பெறவில்லை. இச்சொல் ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பிலும் இடம்பெறவில்லை.

3748 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்பத்திலும் துன்பத்திலும் விருப்பிலும் வெறுப்பிலும் உம்மைவிடப் பிறருக்கு முன்னுரிமை அளிக்கப்படும்போதும் (கட்டளையைச்) செவியுற்று (தலைமைக்குக்) கீழ்ப்படிந்து நடப்பீராக!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3749 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் உற்ற தோழர் (நபி –ஸல்) அவர்கள், "தலைவரின் சொல்லைச் செவியுற்றுக் கீழ்ப் படிந்து நடப்பாயாக! அவர் உடலுறுப்புகள் துண்டிக்கப்பட்ட அடிமையாக இருந்தாலும் சரியே!" என எனக்கு அறிவுறுத்தினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூதர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அவர் உடலுறுப்புகள் துண்டிக்கப்பட்ட அபிசீனிய (கறுப்பு நிற) அடிமையாக இருந்தாலும் சரியே!" என இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூதர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அவர் உடலுறுப்புகள் துண்டிக்கப்பட்ட அடிமையாக இருந்தாலும் சரியே" என்றே இடம்பெற்றுள்ளது.

3750 உம்முல் ஹுஸைன் பின்த் இஸ்ஹாக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "விடைபெறும்' ஹஜ்ஜின்போது ஆற்றிய உரையில், "அல்லாஹ்வின் வேதப்படி உங்களை வழி நடத்துகின்ற அடிமையொருவர் உங்களுக்குத் தலைவராக்கப் பட்டாலும் அவரது சொல்லையேற்று அவருக்குக் கீழ்ப்படியுங்கள்" என்று கூறியதை நான் கேட்டேன்.
- மேற்கண்ட ஹதீஸ் உம்முல் ஹுஸைன் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அபிசீனிய அடிமையொருவர் (உங்களுக்குத் தலைவராக்கப்பட்டாலும்)" என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உம்முல் ஹுஸைன் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "உடலுறுப்புகள் துண்டிக்கப்பட்ட அபிசீனிய அடிமையொருவர்" என்று காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் உம்முல் ஹுஸைன் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "உடலுறுப்புகள் துண்டிக்கப்பட்ட அபிசீனியர்" எனும் குறிப்பு இல்லை. ("அடிமை' என்று மட்டுமே இடம்பெற்றுள்ளது.) மேலும், "மினாவில் அல்லது அர·பாத்தில் உரையாற்றும்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்டேன்" எனக் கூடுதல் குறிப்புடன் இடம்பெற்றுள்ளது.
- உம்முல் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
விடைபெறும் ஹஜ்ஜுக்காக நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சென்றேன். அவர்கள் ஏராளமான அறிவுரைகளைக் கூறினார்கள். பிறகு "அல்லாஹ்வின் வேதப்படி உங்களை வழி நடத்துகின்ற, உடலுறுப்புகள் துண்டிக்கப்பட்ட கறுப்பு நிற அடிமையொருவர் உங்களுக்குத் தலைவராக்கப்பட்டாலும் அவரது சொல்லையேற்று அவருக்குக் கீழ்ப்படிந்து நடங்கள்" என்று கூறியதை நான் கேட்டேன்.

3751 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைவனுக்கு மாறு செய்யும்படி கட்டளையிடப்படாதவரை, ஒரு முஸ்லிம் தமக்கு விருப்பமான விஷயத்திலும் விருப்பமில்லாத விஷயத்திலும் (தலைமையின் கட்ட ளையைச்) செவியுறுவதும் (அதற்குக்) கீழ்ப்படிவதும் கடமையாகும். இறைவனுக்கு மாறு செய்யும்படி கட்டளையிடப்பட்டால் (அதைச்) செவியுறுவதோ (அதற்குக்) கட்டுப்படுவதோ கூடாது.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3752 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு படைப்பிரிவை அனுப்பி, அவர்களுக்கு ஒரு மனிதரைத் தளபதியாக்கினார்கள். (ஒரு கட்டத்தில் அவர் படைவீரர்கள் மீது கோபம் கொண்டு) நெருப்பை மூட்டி, அதில் குதிக்கச் சொன்னார். சிலர் அதில் குதிக்க முன்வந்தனர். வேறுசிலர் "(நரக) நெருப்பிலிருந்து (தப்பிக்கத்)தானே நாம் வெருண்டோடி (நபிகளாரிடம்) வந்தோம்" என்றனர்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இந்தச் செய்தி தெரிவிக்கப்பட்டபோது, நெருப்பில் குதிக்க முற்பட்டவர்களிடம் "அதில் மட்டும் நீங்கள் குதித்திருந்தால் மறுமை நாள் வரை அதிலேயே நீங்கள் கிடந்திருப்பீர்கள்" என்றும், மற்றவர்களிடம் நல்லபடியாகவும் பேசினார்கள். மேலும் "அல்லாஹ்வுக்கு மாறுசெய்யும் விஷயத்தில் கீழ்ப்படிதல் கிடையாது. கீழ்ப்படிதல் என்பதெல்லாம் நன்மையில்தான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3753 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு படைப்பிரிவை அனுப்பி, அவர்களுக்கு அன்சாரிகளில் ஒருவரைத் தளபதியாக்கி, அவரது கட்டளையைச் செவியுற்றுக் கட்டுப்பட்டு நடக்கும்படி படைவீரர்களுக்கு உத்தரவிட்டார்கள். (ஒரு கட்டத்தில்) ஏதோ ஒரு விஷயத்தில் படைவீரர்கள் அவரைக் கோபப்படுத்திவிட்டனர். அப்போது அவர், "விறகைச் சேகரியுங்கள்" என்று கூறினார். அவ்வாறே அவர்கள் விறகைச் சேகரித்ததும் "நெருப்பை மூட்டுங்கள்" என்று உத்தரவிட்டார்.
அவ்வாறே அவர்கள் நெருப்பை மூட்டிய பின், "நீங்கள் எனது சொல்லைச் செவியுற்று, அதற்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களுக்குக் கட்டளையிடவில்லையா?" என்று கேட்டார். படைவீரர்கள், "ஆம்' என்றனர். "அவ்வாறாயின் நெருப்பில் குதியுங்கள்" என்று அவர் உத்தரவிட்டார்.
அப்போது படைவீரர்கள் ஒருவரையொருவர் பார்த்தபடி, "(நரக) நெருப்பிலிருந்து தப்பிக்கத் தானே நாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி வெருண்டோடி வந்தோம்!" என்று கூறினர். அவ்வாறே அவர்கள் (சிறிது நேரம்) இருந்துகொண்டிருக்க, அவருடைய கோபம் தணிந்தது; நெருப்பும் அணைந்தது.

பிறகு (மதீனா திரும்பியதும்) நபி (ஸல்) அவர்களிடம் நடந்ததைத் தெரிவித்தனர். நபி (ஸல்) அவர்கள், "அதில் (மட்டும்) அவர்கள் குதித்திருந்தால் அதிலிருந்து அவர்கள் (ஒருபோதும்) வெளியேறியிருக்கமாட்டார்கள். கீழ்ப்படிதல் என்பதெல்லாம் நன்மையில்தான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3754 உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இன்பத்திலும் துன்பத்திலும் விருப்பிலும் வெறுப்பிலும் எங்களைவிடப் பிறருக்கு முன்னுரிமை அளிக்கப்படும்போதும் (தலைமையின் கட்டளையைச்) செவியுற்றுக் கீழ்ப் படிந்து நடப்போம் என்றும், அதிகாரத்திலிருப்போருடன் அவருடைய அதிகாரம் தொடர்பாகச் சண்டையிடமாட்டோம் என்றும், நாங்கள் எங்கிருந்தாலும் உண்மையே பேசுவோம் என்றும், அல்லாஹ்வின் விஷயத்தில் பழிப்போரின் பழிப்புக்கு அஞ்சமாட்டோம் என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நாங்கள் உறுதிமொழி அளித்தோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உபாதா பின் அஸ் ஸாமித் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3755 ஜுனாதா பின் அபீஉமய்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தபோது நாங்கள் அவர்களிடம் (உடல்நலம் விசாரிக்கச்) சென்றோம். நாங்கள், "அல்லாஹ் உங்களுக்குக் குணமளிக்கட்டும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் கேட்ட ஒரு ஹதீஸை (செய்தியை) எங்களுக்கு அறிவியுங்கள். அதனால் அல்லாஹ் பயன் அளிப்பான்" என்று சொன்னோம்.
அதற்கு உபாதா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களை அழைத்தார்கள். நாங்கள் அவர்களிடம் (சென்று இஸ்லாத்தில் நிலைத்திருப்பதாக) உறுதிமொழி அளித்தோம். எங்களுக்கு விருப்பமான விஷயத்திலும் எங்களுக்கு விருப்பமில்லாத விஷயத்திலும் நாங்கள் சிரமத்திலிருக்கும்போதும் வசதியாயிருக்கும் போதும் எங்களைவிட மற்றவர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்போதும்கூட (தலைமையின் கட்டளையைச்) செவியுற்றுக் கீழ்ப்படிந்து நடப்போம் என்றும், ஆட்சியதிகாரத்தில் இருப்போருடன் அவருடைய அதிகாரம் தொடர்பான விஷயத்தில் நாங்கள் சண்டையிடமாட்டோம் என்றும் உறுதிமொழி அளித்தோம்.
"எந்த விஷயம் பகிரங்கமான இறை மறுப்பு என்பதற்கு அல்லாஹ்விடமிருந்து உங்களுக்கு ஆதாரம் கிடைத்துள்ளதோ அத்தகைய விஷயத்தை ஆட்சியாளர்களிடம் நீங்கள் கண்டாலே தவிர" என்று எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உறுதிமொழி வாங்கியதும் அவர்கள் எங்களிடம் பெற்ற பிரமாணங்களில் அடங்கும்.

**பாடம் : 9 ஆட்சித் தலைவர் ஒரு கேடயம்; அவரோடுதான் எதிரிகள் போரிடுகின்றனர்; அவர் மூலமே மக்கள் பாதுகாக்கப்படுகின்றனர்.**

3756 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆட்சித் தலைவர் ஒரு கேடயமே ஆவார். அவருடன் போரிடப்படுகிறது. அவர் மூலம் பாதுகாப்புப் பெறப்படுகிறது. அவர் (தமது தலைமையின் கீழுள்ள குடிமக்களுக்கு) இறையச்ச உணர்வைக் கைகொள்ளும்படி கட்டளையிட்டு நீதியுடன் நடந்துகொண்டால், அவருக்கு அதன் காரணமாக (பெரும்) நற்பலன் உண்டு. அதற்கு மாற்றமாக (தீமையானவற்றை) அவர் கட்டளையிட்டால் அதனால் ஏற்படும் பாவம் அவர்மீது(ம்) சாரும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 10 கலீஃபாக்களில் முதலாவதாக வருபவருக்கே முன்னுரிமை அளித்து உறுதிப் பிரமாணம் (பைஅத்) அளிப்பது கடமையாகும்.**

3757 அபூஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூஹுரைரா (ரலி) அவர்களுடன் ஐந்தாண்டுகள் (தொடர்பை ஏற்படுத்திக் கொண்டு கல்வி கற்பதற்காக) அமர்ந்திருந்தேன். (ஒரு முறை) அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
"பனூ இஸ்ராயீல் மக்களை நிர்வகிப்பவர்களாக இறைத்தூதர்கள் இருந்தனர். ஓர் இறைத்தூதர் இறக்கும்போது மற்றோர் இறைத்தூதர் அவருக்குப் பதிலாக வருவார். (ஆனால்,) எனக்குப் பின் எந்த இறைத்தூதரும் (வரப்போவது) இல்லை. ஆயினும், எனக்குப் பின் கலீஃபாக்கள் (பிரதிநிதிகள்) பலர் தோன்றுவார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "(அவர்கள் வரும்போது) நாங்கள் என்ன செய்ய வேண்டுமெனத் தாங்கள் உத்தரவிடுகிறீர்கள்?" என்று நபித்தோழர்கள் கேட்டனர்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அவர்களில் முதலாவதாக வருபவரிடம் உறுதிப் பிரமாணம் (அளிக்க வேண்டிய உங்கள் கடமையை) நிறைவேற்றுங்கள். பிறகு அடுத்து வருபவரிடம் (அந்தக் கடமையை நிறைவேற்றுங்கள்). அவர்களுக்கு அவர்களின் உரிமையைக் கொடுத்துவிடுங்கள். ஏனெனில், அவர்கள் நிர்வகித்தவை பற்றி அவர்களிடமே அல்லாஹ் கேட்கவிருக்கின்றான்" என்று விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3758 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை அன்சாரிகளிடம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எனக்குப் பின் விரைவில் உங்களைவிடப் பிறருக்கு (ஆட்சியதிகாரம் மற்றும் போர் நிதிகளைப் பங்கிடுதல் ஆகியவற்றில்) முன்னுரிமை வழங்கப்படுதலும் நீங்கள் வெறுக்கின்ற சில நிகழ்வுகளும் நடக்கும்" என்று கூறினார்கள். அன்சாரிகள், "அல்லாஹ்வின் தூதரே! எங்களில் அவற்றைச் சந்திக்கக்கூடியவர் என்ன செய்ய வேண்டும் என்று தாங்கள் கட்டளையிடுகிறீர்கள்?" என்று கேட்க, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஆட்சியாளர்களான) அவர்களுக்குச் செய்ய

வேண்டிய கடமையைச் செய்துவிடுங்கள். உங்கள் உரிமையை அல்லாஹ்விடம் கேளுங்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் எட்டு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3759 அப்துர் ரஹ்மான் பின் அப்தி ரப்பில் கஅபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இறையில்லம் கஅபாவுக்குச் சென்றேன். கஅபாவின் நிழலில் அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அமர்ந்திருந்தார்கள். அவர்களைச் சுற்றிலும் மக்கள் கூடியிருந்தனர். நான் அங்கு சென்று அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களிடம் அமர்ந்துகொண்டேன். அப்போது அவர்கள் கூறினார்கள்:
நாங்கள் ஒரு பயணத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது ஓர் இடத்தில் இறங்கித் தங்கினோம். எங்களில் சிலர் தம் கூடாரங்களைச் சீரமைத்துக்கொண்டிருந்தனர். வேறுசிலர் அம்பெய்து (பயிற்சி எடுத்துக்)கொண்டிருந்தனர். மேலும் சிலர் தம் கால்நடைகள் மேயுமிடத்தில் இருந்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அறிவிப்பாளர்களில் ஒருவர் "கூட்டுத் தொழுகை நடைபெறப் போகிறது' என அறிவித்தார்.
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒன்றுகூடினோம். அப்போது அவர்கள் கூறினார்கள்: எனக்கு முன்னர் வாழ்ந்த ஒவ்வோர் இறைத்தூதரும் தம் சமுதாயத்தாருக்கு எது நன்மை என்பதை அறிந்திருந்தாரோ அதை அவர்களுக்கு அறிவித்துவிடுவதும் அவர்களுக்கு எது தீமையென்பதை அறிந்திருந்தாரோ அது குறித்து அவர்களை எச்சரிப்பதும் அவர்மீது கடமையாகவே இருந்தது.
உங்களுடைய இந்தச் சமுதாயத்தின் நிம்மதியான வாழ்வு அதன் ஆரம்பக்காலத்தில் அமைக்கப்பட்டுள்ளது. இந்தச் சமுதாயத்தில் இறுதியானவர்களுக்குச் சோதனைகளும் நீங்கள் வெறுக்கின்ற பல விஷயங்களும் ஏற்படும். ஒரு குழப்பம் தோன்றும். அது இன்னொரு குழப்பத்தை எளிதானதாகக் காட்டும்.
பிறகு மற்றோரு குழப்பம் தோன்றும். அப்போது இறைநம்பிக்கையாளர், "இதில்தான் என் அழிவு உள்ளது" என்று கூறுவார். பிறகு அந்தக் குழப்பம் விலகிவிடும். பிறகு மற்றொரு குழப்பம் தோன்றும். அப்போது இறைநம்பிக்கையாளர், "இதுதான்; இதுதான்" என்பார்.
ஆகவே, (நரக) நெருப்பிலிருந்து ஒதுக்கப்பட்டு, சொர்க்கத்தில் அனுமதிக்கப்பட யார் விரும்புகிறாரோ அவர் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்டிருக்கும் நிலையிலேயே இறப்பு அவரைத் தழுவட்டும். தமக்கு எது கிடைக்க வேண்டும் என்று விரும்புவாரோ அதையே மக்களுக்கும் அவர் விரும்பட்டும். ஓர் ஆட்சித் தலைவருக்கு வாக்குறுதிப் பிரமாணம் (பைஅத்) அளித்தவர், அவருடன் தமது கரத்தை இணைப்பதுடன் உளப்பூர்வமான ஆதரவையும் அவருக்கு வழங்கட்டும்; தம்மால் இயன்ற வரை அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கட்டும். அவரு(டைய ஆட்சி)க்கெதிராக அவருடன் சண்டையிடுவதற்காக மற்றொருவர் வந்தால் அவருடைய கழுத்தை வெட்டிவிடுங்கள்.
இவ்வாறு அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதும் நான் அவர்களை நெருங்கி, அல்லாஹ்வின் பெயரால் நான் உங்களிடம் கேட்கிறேன். "இதைத் தாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் தம் கரங்களால் தம் காதுகளையும்

உள்ளத்தையும் நோக்கி சைகை செய்துகாட்டி, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை என் காதுகள் கேட்டன; என் உள்ளம் அதை மனனமிட்டது" என்று கூறினார்கள்.
நான் அவர்களிடம், "இதோ! உங்கள் தந்தையின் சகோதரர் புதல்வர் முஆவியா (ரலி) அவர்கள் (கலீஃபா அலீ (ரலி) அவர்களுக்கெதிராக நிதியும் படையும் திரட்டி) எங்கள் பொருட்களை எங்களுக்கிடையே தவறான முறையில் உண்ணும்படியும் நம்மை நாமே கொலை செய்யும்படியும் எங்களுக்கு உத்தரவிடுகிறார். ஆனால், அல்லாஹ்வோ, "இறைநம்பிக்கை கொண்டோரே! உங்களின் பரஸ்பரத் திருப்தியுடன் நடக்கும் வணிகமாக இருந்தால் தவிர, (வேறு வழிகளில்) உங்களுக்கிடையே உங்கள் செல்வங்களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள். உங்களை நீங்களே கொலை செய்யாதீர்கள். அல்லாஹ் உங்களிடம் மிகவும் கருணை உடையவனாக இருக்கின்றான் (4:29) என்று கூறுகின்றானே?" என்று கேட்டேன்.
அதற்கு (பதிலளிக்காமல்) அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் சிறிது நேரம் அமைதியாக இருந்தார்கள். பிறகு அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படியும் விஷயத்தில் அவருக்கு நீ கட்டுப்படு! அல்லாஹ்வுக்கு மாறுசெய்யும் விஷயத்தில் அவருக்கு மாறுசெய்துவிடு" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துர் ரஹ்மான் பின் அப்தி ரப்பில் கஅபா (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3760 மேற்கண்ட ஹதீஸ் அப்துர் ரஹ்மான் பின் அப்தி ரப்பில் கஅபா அஸ்ஸாஇதீ (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நான் இறையில்லம் கஅபா அருகில் ஒரு கூட்டத்தைக் கண்டேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 11 அதிகாரத்திலிருப்போர் அநீதியிழைக்கும்போதும் (உரியவர்களை விட்டுவிட்டு மற்றவர்களுக்கு) முன்னுரிமை அளிக்கும்போதும் பொறுமைகாக்குமாறு வந்துள்ள கட்டளை.

3761 உசைத் பின் ஹுளைர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைத் தனியாகச் சந்தித்து, "தாங்கள் இன்ன மனிதரை அதிகாரியாக நியமித்ததைப் போன்று என்னையும் அதிகாரியாக நியமிக்கமாட்டீர்களா?" என்று கேட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அன்சாரிகளே!) எனக்குப் பிறகு (உங்களைவிட) மற்றவர்களுக்கு (ஆட்சியதிகாரத்தில்) முன்னுரிமை வழங்கப்படுவதை நீங்கள் காண்பீர்கள். ஆகவே, (மறுமையில் எனக்குச் சிறப்புப் பரிசாக வழங்கப்படும் "ஹவ்ளுல் கவ்ஸர்' எனும்) தடாகத்தின் அருகே என்னைச் சந்திக்கும் வரை நீங்கள் பொறுத்திருங்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உசைத் பின் ஹுளைர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் உசைத் பின் ஹுளைர் (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைத் தனியாகச் சந்தித்து' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 12 உரிமைகளைத் தர மறுத்தாலும் தலைமைக்குக் கட்டுப்படுதல்.

3762 வாயில் பின் ஹுஜ்ர் அல்ஹள்ரமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
சலமா பின் யஸீத் அல்ஜுஅஃபீ (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! எங்களை நிர்வகிக்கும் ஆட்சித் தலைவர்கள், அவர்களுக்கு நாங்கள் செலுத்த வேண்டிய உரிமைகளைக் கோருகின்றவர்களாகவும், எங்களுக்கு அவர்கள் செலுத்த வேண்டிய உரிமைகளை மறுப்பவர்களாகவும் அமைந்துவிட்டால், அப்போது நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று தாங்கள் கட்டளையிடுகிறீர்கள், கூறுங்கள்?" என்று கேட்டார்கள். ஆனால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சலமா (ரலி) அவர்களைவிட்டுத் தமது முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள்.
பிறகு மீண்டும் சலமா (ரலி) அவர்கள் கேட்டபோதும் அவர்களைவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள். இரண்டாவது தடவையோ அல்லது மூன்றாவது தடவையோ (அவ்வாறு) சலமா (ரலி) அவர்கள் கேட்டபோது,அவர்களை அல்அஷ்அஸ் பின் கைஸ் (ரலி) அவர்கள் இழுத்தார்கள். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,) "நீங்கள் (உங்கள் தலைமையின் கட்டளையைச்) செவியுற்று, (அதற்குக்) கீழ்ப்படியுங்கள். ஏனெனில், அவர்கள்மீது சுமத்தப்பட்டது அவர்களைச் சாரும். உங்கள்மீது சுமத்தப்பட்டது உங்களைச் சாரும்" என்று சொன்னார்கள்.

3763 மேற்கண்ட ஹதீஸ் வாயில் பின் ஹுஜ்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அல்அஷ்அஸ் பின் கைஸ் (ரலி) அவர்கள் சலமா (ரலி) அவர்களை இழுத்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(உங்கள் தலைமையின் கட்டளையைச்) செவியுற்று, (அதற்குக்) கீழ்ப்படியுங்கள். ஏனெனில், அவர்கள்மீது சுமத்தப்பட்டது அவர்களைச் சாரும். உங்கள்மீது சுமத்தப்பட்டது உங்களைச் சாரும்" என்று கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 13 (அரசியல்) குழப்பங்கள் தோன்றும்போதும் மற்ற சமயங்களிலும் முஸ்லிம்களின் கூட்டமைப்போடு (ஜமாஅத்) சேர்ந்திருப்பது கடமையாகும்; தலைமைக்குக் கட்டுப்பட மறுப்பதும் கூட்டமைப்பிலிருந்து விலகுவதும் தடை செய்யப்பட்டவை ஆகும்.

3764 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் மக்கள் நன்மையைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தீமையைப் பற்றிக் கேட்டுக்கொண்டிருந்தேன். அது என்னைத் தீண்டிவிடுமோ என்று அஞ்சியதே காரணம்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அறியாமைக் கால மாச்சரியத்திலும் தீமையிலும் மூழ்கிக்கிடந்தோம். அப்போது அல்லாஹ் (இஸ்லாம் எனும்) இந்த நன்மையை எங்களிடம் கொண்டுவந்தான். இந்த நன்மைக்குப் பிறகு ஒரு தீமை (குழப்பம்) இருக்கிறதா?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம் (இருக்கிறது)' என்று பதிலளித்தார்கள்.

நான், "அந்தத் தீமைக்குப் பிறகு நன்மை ஏதும் இருக்கிறதா?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம். ஆனால், அதில் சற்று கலங்கலான நிலை (குழப்பம்) இருக்கும்" என்று பதிலளித்தார்கள். நான், "அந்தக் கலங்கலான நிலை என்ன?" என்று கேட்டேன்.

அதற்கு அவர்கள், "ஒரு கூட்டத்தார் எனது வழிமுறை (சுன்னா) அல்லாததைக் கடைப்பிடிப்பார்கள். எனது நேர்வழியல்லாததைக் கொண்டு வழிகாட்டுவார்கள். அவர்களில் நீ நன்மையையும் காண்பாய்; தீமையையும் காண்பாய்" என்று பதிலளித்தார்கள்.

நான், "அந்த நன்மைக்குப் பிறகு தீமை உண்டா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம். நரகத்தின் வாசல்களில் நின்றுகொண்டு (அங்கு வருமாறு) அழைப்பவர்கள் சிலர் தோன்றுவார்கள். அவர்களின் அழைப்பை ஏற்பவரை நரகத்தில் அவர்கள் எறிந்து விடுவார்கள்" என்று பதிலளித்தார்கள்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! அவர்க(ளுடைய அடையாளங்)களை எங்களுக்குத் தெரிவியுங்கள்" என்று கேட்க,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்கள் நம் (அரபு) இனத்தைச் சேர்ந்தவர்களாகவே இருப்பார்கள். நம் மொழிகளையே பேசுவார்கள்" என்று பதிலளித்தார்கள்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! இத்தகைய கால கட்டத்தை நான் அடைந்தால் என்ன செய்ய வேண்டும் என எனக்குக் கட்டளையிடுகிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ முஸ்லிம்களின் ஜமாஅத்தை (கூட்டமைப்பை)யும் அதன் ஆட்சியாளரையும் பற்றிக்கொள்" என்று பதிலளித்தார்கள்.

அதற்கு நான், "அவர்களுக்கு ஒரு கூட்டமைப்போ ஆட்சியாளரோ இல்லை (என்ற நிலையில் பல பிரிவுகளாக பிரிந்து கிடக்கிறார்கள்) என்றால் (என்ன செய்வது)?" என்று கேட்டேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அந்தப் பிரிவுகள் அனைத்தையும் விட்டு (விலகி) ஒதுங்கிவிடு. (ஒதுங்கி வாழும் சூழலுக்கு முட்டுக்கட்டையாகப் பல்வேறு சிரமங்கள் நேர்ந்தாலும்) ஒரு மரத்தின் வேர் பாகத்தைப் பற்களால் நீ கவ்விப் பிடித்திருக்க நேர்ந்து, இறுதியில் அதே நிலையில் நீ இருக்கவே இறப்பு உன்னைத் தழுவினாலும் சரி (எந்தப் பிரிவினரோடும் நீ சேர்ந்துவிடாதே)" என்று விடையளித்தார்கள்.

3765 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் (மாச்சரியங்கள் நிறைந்த அறியாமைக் காலத்) தீமையில் மூழ்கிக்கிடந்தோம். அப்போது அல்லாஹ் (இஸ்லாம் எனும்) இந்த நன்மையை எங்களிடம் கொண்டுவந்தான். அதில் நாங்கள் இருந்துகொண்டிருக்கிறோம். இந்த நன்மைக்கு அப்பால் தீமை (அரசியல் குழப்பம்) ஏதும் உண்டா?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்' என்று பதிலளித்தார்கள்.

நான், "அந்தத் தீமைக்கு அப்பால் நன்மை (நல்லாட்சி) ஏதும் உண்டா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்' என்று விடையளித்தார்கள். நான், "அந்த நன்மைக்கு அப்பால் தீமை (அரசியல் குழப்பம்) ஏதும் உண்டா?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்' என்று பதிலளித்தார்கள். நான், "அது எப்படி?" என்று கேட்டேன்.

அதற்கு அவர்கள், "எனக்குப் பிறகு சில தலைவர்கள் தோன்றுவார்கள். அவர்கள் எனது நேர்வழி அல்லாத வழியில் நடப்பார்கள். எனது வழிமுறையை (சுன்னா) கடைப் பிடிக்கமாட்டார்கள். அவர்களிடையே சிலர் தோன்றுவார்கள். அவர்கள் மனித உடலில் ஷைத்தான்களின் உள்ளம் படைத்தவர்களாய் இருப்பார்கள்" என்று கூறினார்கள்.

நான், "அந்தக் கால கட்டத்தை அடைந்தால் நான் என்ன செய்ய வேண்டும், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். அதற்கு "அந்த ஆட்சியாளரின் கட்டளையைச் செவியுற்று அவருக்குக் கட்டுப்பட்டு நடந்துகொள். நீ முதுகில் தாக்கப்பட்டாலும் சரியே! உன் செல்வங்கள் பறிக்கப்பட்டாலும் சரியே! (அந்த ஆட்சித்தலைவரின் கட்டளையைச்) செவியுற்றுக் கட்டுப்பட்டு நடந்துகொள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

3766 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(ஆட்சித் தலைமைக்குக்) கட்டுப்படாமல், (ஓர் ஆட்சித் தலைமையின் கீழ் ஒன்றுபட்ட) கட்டமைப்பிலிருந்து பிரிந்து, அதே நிலையில் ஒருவர் இறந்துவிட்டால், அறியாமைக் கால மரணத்தையே அவர் சந்திப்பார். ஒருவர் (கொள்கையோ இலக்கோ இல்லாத) மௌடீகத்தின் கொடிக்குக் கீழே நின்று போரிடுகிறார்; இன மாச்சரியத்திற்காகக் கோபப்படுகிறார். அல்லது இன மாச்சரியத்துக்கு அழைப்பு விடுக்கிறார். அல்லது இன மாச்சரியத்திற்கு உதவி செய்கிறார். இந்நிலையில் அவர் கொல்லப்பட்டுவிட்டால், அவரது மரணம் அறியாமைக் கால மரணமே ஆகும்.

யார் என் சமுதாயத்தாருக்கெதிராகப் புறப்பட்டு, அவர்களில் இறைநம்பிக்கையாளர்களைப் பொருட்படுத்தாமல் அவர்களில் நல்லவர்களையும் கெட்டவர்களையும் கொன்று, ஒப்பந்தம் செய்துள்ளவர்களின் ஒப்பந்தத்தை நிறைவேற்றத் தவறுகிறாரோ அவர் என்னைச் சேர்ந்தவருமில்லை. நான் அவரைச் சேர்ந்தவனுமில்லை.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3767 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

யார் (ஆட்சித் தலைமைக்குக்) கட்டுப்படாமல் (ஓர் ஆட்சித் தலைமையின் கீழ் ஒன்றுபட்ட) கட்டமைப்பிலிருந்து பிரிந்து, பின்னர் (அதே நிலையில்) இறந்துபோகிறாரோ அவர் அறியாமைக்கால மரணத்தையே சந்திப்பார். (கொள்கையோ இலக்கோ இல்லாத) மௌடீகக் கொடிக்குக் கீழே நின்று ஒருவர் போரிட்டு இன மாச்சரியத்திற்காகக் கோபப்படுகிறார்; அல்லது இன மாச்சரியத்திற்கு அழைப்பு விடுக்கிறார். அல்லது இன மாச்சரியத்திற்காகப் போரிடுகிறார் எனில், அவர் என் சமுதாயத்தைச் சேர்ந்தவர் அல்லர்.

யார் என் சமுதாயத்திலிருந்து என் சமுதாயத்திற்கெதிராகப் புறப்பட்டு அவர்களில் இறை நம்பிக்கையாளர்கள் என்றுகூடப் பார்க்காமல் அவர்களில் நல்லவர்களையும் கெட்டவர்களையும் கொன்று, அவர்களில் ஒப்பந்தம் செய்தவர்களிடம் அவர்களது ஒப்பந்தத்தை நிறைவேற்றவில்லையோ அவர் என்னைச் சேர்ந்தவர் அல்லர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" எனும் குறிப்பு இல்லை. முஹம்மத் பின் பஷ்ஷார் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

3768 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தம் (ஆட்சித்) தலைவரிடம் (மார்க்க விஷயத்தில் குறை) எதையேனும் கண்டு அதை வெறுப்பவர், பொறுமையைக் கடைப்பிடிக்கட்டும். ஏனெனில், ஒருவர் (ஒன்றுபட்டக்) கட்டமைப்பிலிருந்து ஒரு சாண் அளவுக்குப் பிரிந்து இறந்துபோனாலும் அவர் அறியாமைக் கால மரணத்தையே தழுவுகிறார்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3769 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தம் (ஆட்சித்) தலைவரிடமிருந்து (மார்க்க விஷயத்தில் குறை) எதையேனும் (கண்டு அதை) வெறுப்பவர், பொறுமையாக இருக்கட்டும். ஏனெனில், ஆட்சியாள(ருக்குக் கட்டுப்படாமல் அவ)ரிடமிருந்து யார் ஒரு சாண் அளவு வெளியேறி, அதே நிலையில் இறந்துபோகிறாரோ, அவர் அறியாமைக் கால மரணத்தையே எய்துவார்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3770 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மௌடீகத்தின் கொடிக்குக் கீழே இன மாச்சரியத்திற்கு அழைப்பு விடுக்கவோ, இன மாச்சரியத்திற்காக ஒத்துழைக்கவோ செய்து அதற்காகக் கொல்லப்படுபவர் அறியாமைக் கால மரணத்தையே சந்திப்பார்.
இதை ஜுன்தப் பின் அப்தில்லாஹ் அல்பஜலீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3771 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யஸீத் பின் முஆவியாவின் ஆட்சிக் காலத்தில் நடந்த "அல்ஹர்ரா'ப் போரினால் பிரச்சினை ஏற்பட்டபோது, (யஸீத் பின் முஆவியாவின் ஆட்சிக்கெதிராக மக்களைத் திரட்டியிருந்த) அப்துல்லாஹ் பின் முதீஉ அல்குறஷீ (ரலி) அவர்களிடம் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் சென்றார்கள்.
அப்போது அப்துல்லாஹ் பின் முதீஉ (ரலி) அவர்கள் "அபூஅப்திர் ரஹ்மானுக்குத் தலையணையை எடுத்துப் போடுங்கள்" என்று கூறினார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "நான் உட்காருவதற்காக உங்களிடம் வரவில்லை. அல்லாஹ்வின்

தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்ற ஒரு ஹதீஸை உங்களுக்கு அறிவிப்பதற்காகவே உங்களிடம் நான் வந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(தலைமைக்குக்) கட்டுப்படுகின்ற செயலிலிருந்து கையை விலக்கிக்கொண்டவர், தம(து செயல்பாடுகளு)க்கு(ம் அதற்கான சாக்குப் போக்குகளுக்கும்) எந்தச் சான்றும் இல்லாமலேயே மறுமை நாளில் இறைவனைச் சந்திப்பார். தமது கழுத்தில் (தம் ஆட்சியாளரிடம் அளித்திருந்த) உறுதிமொழிப் பிரமாணம் இல்லாத நிலையில் யார் இறக்கிறாரோ, அவர் அறியாமைக் கால மரணத்தையே தழுவுவார்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

- இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் நாஃபிஉ (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ஸல்) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 14 முஸ்லிம்களின் (அரசியல்) நிலை (ஒரே தலைமையின் கீழ்) ஒன்றுபட்டிருக்கும் போது, அவர்களிடையே பிளவை ஏற்படுத்துகின்றவருக்குரிய சட்டம்.

3772 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(எனக்குப் பிறகு) விரைவில் குழப்பங்களும் பிரச்சினைகளும் தோன்றும். இந்தச் சமுதாயத்தின் (அரசியல்) நிலை (ஒரே தலைமையின் கீழ்) ஒன்றுபட்டிருக்கும்போது, அவர்களிடையே பிளவை ஏற்படுத்த விரும்புகின்றவரை வாளால் வெட்டிக் கொல்லுங்கள். அவர் யாராக இருந்தாலும் சரியே!

இதை அர்ஃபஜா பின் ஷுரைஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அர்ஃபஜா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

ஆயினும், இந்த அறிவிப்புகள் அனைத்திலும், "அவரைக் கொல்லுங்கள்" என்றே இடம் பெற்றுள்ளது. (வாளால் வெட்டிக் கொல்லுங்கள்" என்று இடம்பெறவில்லை.)

3773 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

ஒரு மனிதரின் (தலைமையின்) கீழ் உங்கள் (அரசியல்) நிலை ஒன்றுபட்டிருக்கும்போது, உங்கள் ஐக்கியத்தை உடைக்கும் அல்லது உங்கள் கட்டமைப்பைக் குலைக்கும் நோக்கத்தோடு உங்களிடம் யாரேனும் வந்தால் அவரைக் கொன்றுவிடுங்கள்.

இதை அர்ஃபஜா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 15 (அடுத்தடுத்து) இரு ஆட்சியாளர்களுக்கு வாக்களிப்புப் பிரமாணம் (பைஅத்) அளிக்கப்பட்டால்...**

3774 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(ஒருவர் பின் ஒருவராக) இரு ஆட்சியாளர்களுக்கு வாக்களிப்புப் பிரமாணம் (பைஅத்) அளிக்கப்பட்டால், அவர்களில் இறுதியானவரைக் கொன்றுவிடுங்கள்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 16 ஆட்சித் தலைவர்கள் மார்க்கத்திற்கு முரணாகச் செயல்படும்போது, எதிர்ப்புத் தெரிவிப்பது கடமையாகும். தொழுகை உள்ளிட்ட கடமைகளை அவர்கள் நிறைவேற்றும் வரை அவர்களுடன் போரிடலாகாது.**

3775 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(எனக்குப் பின்) சில தலைவர்கள் வருவார்கள். அவர்களிடம் நீங்கள் நன்மையையும் காண்பீர்கள்; தீமையையும் காண்பீர்கள். யார் (தீமையைத் தெளிவாக) அறிந்துகொண்டாரோ அவர் பிழைத்தார். யார் வெறுத்தாரோ அவர் தப்பித்தார். (இதற்கு மாறாக,) யார் (தீமையைக் கண்டு) திருப்தி அடைந்து (அதற்குத்) துணைபோனாரோ (அவருக்குக் குற்றத்தில் பங்கு உண்டு)" என்று கூறினார்கள்.
மக்கள், "அவர்களுடன் நாங்கள் போரிடலாமா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை; அவர்கள் தொழுகையை நிறைவேற்றும்வரை (வேண்டாம்)" என்று கூறினார்கள்.

3776 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸ) அவர்கள், "உங்களுக்குச் சில ஆட்சித் தலைவர்கள் நியமிக்கப்படுவார்கள். அவர்களிடம் நீங்கள் நன்மையையும் காண்பீர்கள்; தீமையையும் காண்பீர்கள். தீமையை (மனதால்) வெறுத்தவர் பிழைத்தார்; (மனதால்) மறுத்தவர் தப்பித்தார். (இதற்கு மாறாக,) யார் (தீமையைக் கண்டு) திருப்தி அடைந்து (அதற்குத்) துணை போனாரோ (அவருக்குக் குற்றத்தில் பங்கு உண்டு)" என்று கூறினார்கள்.
மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! அவர்களுடன் நாங்கள் போரிடலாமா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை. அவர்கள் தொழுகையை நிறைவேற்றும் வரை (வேண்டாம்)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3777 மேற்கண்ட ஹதீஸ் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "(தீமையை மனதால்) மறுத்தவர் பிழைத்தார்; வெறுத்தவர் தப்பித்தார்" என்று இடம் பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "(இதற்கு மாறாக,) யார் (தீமையைக் கண்டு) திருப்தி அடைந்து (அதற்குத்) துணை போனாரோ (அவருக்குக் குற்றத்தில் பங்கு உண்டு)" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

பாடம் : 17 ஆட்சித் தலைவர்களில் நல்லவர்களும் தீயவர்களும்.

3778 அவ்ஃப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் தலைவர்களில் நல்லவர்கள் யாரெனில், அவர்களை நீங்கள் நேசிப்பீர்கள். உங்களை அவர்கள் நேசிப்பார்கள். உங்களுக்காக அவர்கள் பிரார்த்திப்பார்கள். அவர்களுக்காக நீங்கள் பிரார்த்திப்பீர்கள். உங்கள் தலைவர்களில் தீயவர்கள் யாரெனில், நீங்கள் அவர்களை வெறுப்பீர்கள்: உங்களை அவர்கள் வெறுப்பார்கள். நீங்கள் அவர்களைச் சபிப்பீர்கள். அவர்கள் உங்களைச் சபிப்பார்கள்" என்று கூறினார்கள்.
அப்போது, "அல்லாஹ்வின் தூதரே! அவர்களுக்கெதிராக நாங்கள் வாள் ஏந்தலாமா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வேண்டாம்; உங்களிடையே அவர்கள் தொழுகையை நிலைநாட்டும்வரை (வேண்டாம்). உங்கள் ஆட்சியாளர்களிடம் நீங்கள் வெறுக்கும் (மார்க்கத்திற்கு முரணாண செயல்கள்) எதையேனும் கண்டால், அந்த ஆட்சியாளரின் செயல்பாட்டை வெறுப்பீர்களாக! கட்டுப்படுதலில் இருந்து உங்கள் கையை விலக்கிவிடாதீர்கள்" என்று கூறினார்கள்.

3779 அவ்ஃப் பின் மாலிக் அல்அஷ்ஜஈ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் தலைவர்களில் நல்லவர்கள் யாரெனில், நீங்கள் அவர்களை நேசிப்பீர்கள். அவர்களும் உங்களை நேசிப்பார்கள். நீங்கள் அவர்களுக்காகப் பிரார்த்திப்பீர்கள். அவர்களும் உங்களுக்காகப் பிரார்த்திப்பார்கள். உங்கள் தலைவர்களில் தீயவர்கள் யாரெனில், நீங்கள் அவர்களை வெறுப்பீர்கள். அவர்களும் உங்களை வெறுப்பார்கள். நீங்கள் அவர்களைச் சபிப்பீர்கள் அவர்களும் உங்களைச் சபிப்பார்கள்" என்று கூறினார்கள்.
மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! அத்தகைய சூழலில் அ(ந்தத் தலை)வர்களுடன் நாங்கள் போரிடலாமா?" என்று கேட்டார்கள். அதற்கு, "வேண்டாம். உங்களிடையே அவர்கள் தொழுகையை நிலைநாட்டும்வரை (வேண்டாம்). அறிந்துகொள்ளுங்கள். ஒருவர், தம்மை நிர்வாகம் செய்கின்ற ஆட்சியாளரிடம் இறைவனுக்கு மாறுசெய்யும் செயல் எதையேனும் கண்டால், அவர் செயல்படுத்தும் அந்தப் பாவச்செயலை அவர் வெறுக்கட்டும். ஆனால், கட்டுப்படுவதிலிருந்து (தமது) கையை விலக்கிக்கொள்ள வேண்டாம்" என்று சொன்னார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துர் ரஹ்மான் பின் யஸீத் பின் ஜாபிர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை ருஸைக் பின் ஹய்யான் (ரஹ்) அவர்கள் எனக்கு அறிவித்தபோது அவர்களிடம் நான், "அபுல்மிக்தாமே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைத் தாம் கேட்டதாக அவ்ஃப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறினார்கள் என முஸ்லிம் பின் கறழா (ரஹ்) அவர்கள் உங்களுக்கு அறிவித்தார்களா?" என்று கேட்டேன்.
உடனே ருஸைக் (ரஹ்) அவர்கள், முழந்தாளிட்டு நின்று கிப்லாத் திசையை முன்னோக்கி, "ஆம், எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அ(ந்த ஏக இறை)வன் மீதாணை!

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைத் தாம் கேட்டதாக அவ்ஃப் பின் மாலிக் (ரலி) அவர்கள் சொல்ல நான் செவியுற்றேன்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "பனூ ஃபஸாரா குலத்தாரால் விடுதலை செய்யப்பட்ட அவர்களின் அடிமையான ருஸைக் (ரஹ்) அவர்கள்' என்று இடம்பெற்றுள்ளது.
இந்த ஹதீஸ் முஸ்லிம் பின் கறழா (ரஹ்) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 18 ஆட்சித் தலைவர் போருக்குச் செல்ல உத்தேசிக்கும்போது படையினரிடம் உறுதி மொழி பெற்றுக்கொள்வது விரும்பத்தக்கதாகும் என்பதும், (நபி (ஸல்) அவர்கள் காலத்தில்) அந்த மரத்தின் கீழ் நடந்த "பைஅத்துர் ரிள்வான்' உறுதிப் பிரமாண நிகழ்ச்சி பற்றிய விவரமும்.

3780 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஹுதைபியா உடன்படிக்கை நாளில் ஆயிரத்து நானூறு பேர் இருந்தோம். அப்போது அங்கிருந்த ஒரு மரத்தின் கீழ் நபி (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி அளித்தோம். அப்போது உமர் (ரலி) அவர்கள் நபியவர்களின் கையைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அது ஒரு கருவேல மரமாகும். நாங்கள் (எந்தச் சூழ்நிலையிலும்) புறமுதுகிட்டு ஓடமாட்டோம் என அவர்களிடம் உறுதிமொழி அளித்தோம். மரணத்திற்கு (தயாராயிருப்பதாக) நாங்கள் அவர்களிடம் உறுதிமொழி அளிக்கவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3781 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஹுதைபியா நாளில்) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் மரணத்திற்கு(த் தயாராயிருப்பதாக) உறுதிமொழி அளிக்கவில்லை; (எந்த நிலையிலும்) புறமுதுகிட்டு ஓடமாட்டோம் என்றே அவர்களிடம் உறுதிமொழி அளித்தோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3782 அபுஸ்ஸுபைர் முஹம்மத் பின் முஸ்லிம் அல்அசதீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் (ரலி) அவர்களிடம், "ஹுதைபியா தினத்தன்று நீங்கள் எத்தனை பேர் இருந்தீர்கள்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "(அன்று) நாங்கள் ஆயிரத்து நானூறு பேர் இருந்தோம். அங்கிருந்த ஒரு மரத்தின் கீழ் நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி அளித்தோம். அது ஒரு கருவேல மரமாகும். அப்போது உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் கையைப் பிடித்துக்கொண்டிருந்தார்கள்.
அப்போது ஜத்து பின் கைஸ் அல்அன்சாரீ அவர்களைத் தவிர மற்ற அனைவரும் நபியவர்களிடம் உறுதிமொழி அளித்தோம். ஜத்து பின் கைஸ் அவர்கள் தமது ஒட்டகத்தின் வயிற்றுக்குக் கீழே ஒளிந்துகொண்டார்.

3783 அபுஸ்ஸுபைர் முஹம்மத் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் துல்ஹுலைஃபாவில் உறுதிமொழி வாங்கினார்களா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள், "இல்லை. ஆனால், அந்த இடத்தில் தொழுதார்கள். ஹுதைபியாவிலுள்ள மரத்தைத் தவிர வேறெந்த மரத்திற்கு அருகிலும் அவர்கள் உறுதிமொழி வாங்கவில்லை" என்று விடையளித்தார்கள்.
இதன் அறிவிப்பாளரான இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"நபி (ஸல்) அவர்கள் ஹுதைபியா கிணற்றருகில் (நீர் வளத்துக்காகப்) பிரார்த்தித்தார்கள்" என ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதைத் தாம் கேட்டதாக அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள்.

3784 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது
நாங்கள் ஹுதைபியா தினத்தன்று ஆயிரத்து நானூறு பேர் இருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் எங்களிடம், "பூமியிலிருப்பவர்களில் நீங்களே சிறந்தவர்கள்" என்று கூறினார்கள். இப்போது (மட்டும்) எனக்குக் கண்பார்வை தெரியுமானால் அந்த (ரிள்வான் உறுதிப்பிரமாணம் நடைபெற்ற) மரத்தின் இடத்தைக் காண்பித்திருப்பேன்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3785 சாலிம் பின் அபில்ஜஅத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் அந்த மரத்தின் கீழ் (பைஅத்துர் ரிள்வான்) உறுதிமொழி அளித்தவர்களைப் பற்றி (அவர்கள் எத்தனை பேர் என்று) கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்: நாங்கள் ஒரு லட்சம் பேர் இருந்திருந்தாலும்கூட (நபியவர்களின் விரல்களுக்கிடையிலிருந்து பொங்கிவந்த நீர்) எங்களுக்குப் போதுமானதாயிருக்கும். நாங்கள் ஆயிரத்து ஐநூறு பேர்தாம் இருந்தோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3786 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றிலும் "நாங்கள் ஒரு லட்சம் பேர் இருந்திருந்தாலும் அ(ந்த நீரான)து எங்களுக்குப் போதுமானதாயிருந்திருக்கும். நாங்கள் ஆயிரத்து ஐநூறு பேர்தாம் இருந்தோம்" என்றே இடம் பெற்றுள்ளது.

3787 சாலிம் பின் அபில்ஜஅத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் (ரலி) அவர்களிடம், "அன்றைய தினத்தில் நீங்கள் எத்தனை பேர் இருந்தீர்கள்?" என்று கேட்டேன். அவர்கள், "ஆயிரத்து நானூறு பேர்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3788 அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அந்த மரத்தின் கீழ் (பைஅத்துர் ரிள்வான்) உறுதிமொழி அளித்தவர்கள் (சுமார்) ஆயிரத்து முன்னூறு பேர் ஆவர். (இதில்) அஸ்லம் குலத்தார் (மட்டும்) முஹாஜிர்களில் எட்டில் ஒரு பகுதியினராக இருந்தனர்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3789 மஅகில் பின் யசார் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அந்த மரத்தின் கீழ் (பைஅத்துர் ரிள்வான்) உறுதிப் பிரமாணம் நடைபெற்ற நாளில் நபி (ஸல்) அவர்கள் மக்களிடம் உறுதிமொழி பெற்றுக்கொண்டிருந்தபோது, நபி (ஸல்) அவர்களது தலைக்கு மேலிருந்த ஒரு மரக்கிளையை நான் உயர்த்திப் பிடித்துக் கொண்டிருந்தேன். அப்போது நாங்கள் ஆயிரத்து நானூறு பேர் இருந்தோம். அவர்களிடம் நாங்கள் மரணத்திற்கு(த் தயாராயிருப்பதாக) உறுதிமொழி அளிக்கவில்லை. மாறாக, (எந்தச் சூழ்நிலையிலும்) நாங்கள் புறமுதுகிட்டு ஓடமாட்டோம்" என்றே உறுதிமொழி அளித்தோம்.
- மேற்கண்ட ஹதீஸ் மஅகில் பின் யசார் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3790 சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என் தந்தை (முசய்யப் பின் ஹஸன் – ரலி) அவர்கள் அந்த மரத்தின் கீழ் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி அளித்தவர்களில் ஒருவர் ஆவார். என் தந்தை கூறினார்கள்: (உறுதிப் பிரமாணம் நடந்து முடிந்த) மறு ஆண்டு நாங்கள் ஹஜ்ஜுக்குச் சென்றோம். அப்போது அந்த (மரம் இருந்த) இடம் எங்களுக்கு (அடையாளம்) தெரியாமல் போய்விட்டது. அப்படியிருக்க, உங்களுக்கு அந்த இடம் (தெரிந்திருக்க வாய்ப்பில்லை. அவ்வாறு உங்களுக்குத்) தெளிவாகத் தெரிந்தால் நீங்களே மெத்தவும் அறிந்தவர்கள்.

3791 முசய்யப் பின் ஹஸன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அந்த மரத்தின் (கீழ் உறுதிப் பிரமாணம் நடைபெற்ற) ஆண்டில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருகில் இருந்தோம். (உறுதிப் பிரமாணம் நடந்து முடிந்த) மறு ஆண்டில் அந்த இடத்தை நாங்கள் மறந்து விட்டோம்.

3792 முசய்யப் பின் ஹஸன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(பைஅத்துர் ரிள்வான் எனும் உறுதிப் பிரமாணம் நடைபெற்ற) அந்த மரத்தை நான் பார்த்திருந்தேன். பின்பு (ஒரு முறை) அங்கு நான் சென்றேன். அப்போது என்னால் அதை அறிய முடியவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3793 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அவர்களின் அடிமையான யஸீத் பின் அபீஉபைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் சலமா (ரலி) அவர்களிடம், "ஹுதைபியா தினத்தன்று (நபித்தோழர்களான) நீங்கள் எந்த விஷயத்திற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழியளித்தீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "(வீர) மரணத்திற்கு(த் தயாராயிருப்பதாக நாங்கள் உறுதி மொழியளித்தோம்)" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் யஸீத் பின் அபீஉபைத் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3794 அப்துல்லாஹ் பின் ஸைத் அல் அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
("அல்ஹர்ராப் போரின்போது) என்னிடம் ஒருவர் வந்து, "இதோ அப்துல்லாஹ் பின் ஹன்ழலா (ரலி) அவர்கள் மக்களிடம் உறுதிமொழி வாங்கிக்கொண்டிருக்கிறார்" என்று கூறினார். அவரிடம் நான், "எதற்காக அவர் உறுதிமொழி வாங்குகிறார்?" என்று கேட்டேன். அதற்கு அவர், "மரணத்தைச் சந்திக்கவும் தயாராயிருக்கும்படி (உறுதிமொழி வாங்குகிறார்)" என்று கூறினார். அதற்கு நான், "இதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு (பைஅத்துர் ரிள்வானில் உறுதிமொழி அளித்த) பின்னர் வேறு யாரிடமும் நான் உறுதிமொழி அளிக்கமாட்டேன்" என்று கூறினேன்.

பாடம் : 19 நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்றவர் மறுபடியும் தமது தாயகத்தில் குடியேறுவது தடை செய்யப்பட்டதாகும்.

3795 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு முறை ஹிஜாஸ் மாகாண ஆளுநர்) ஹஜ்ஜாஜ் பின் யூசுஃபிடம் சென்றேன். அவர், "இப்னுல் அக்வஉ! நீங்கள் (மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்த பின் அங்கிருந்து) உங்கள் குதிகால்களின் வழியே (கிராமத்திற்குத்) திரும்பிச் சென்றதன் மூலம் கிராமவாசியாக மாறி விட்டீர்களா?" என்று கேட்டார். நான், "இல்லை. ஆயினும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கிராமத்தில் வசிக்க எனக்கு (மட்டும்) அனுமதியளித்தார்கள்" என்று சொன்னேன்.

பாடம் : 20 மக்கா வெற்றிக்குப் பின் இஸ்லாத்தின் படி வாழ்வதாகவும், அறப்போர் புரிவதாகவும், நற்செயல்கள் செய்வதாகவும் ஒருவர் உறுதிமொழி (பைஅத்) அளிப்பதும், "மக்கா வெற்றிக்குப் பின் ஹிஜ்ரத் கிடையாது' எனும் நபிமொழியின் விளக்கமும்.

3796 முஜாஷிஉ பின் மஸ்ஊத் அஸ்ஸுலமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹிஜ்ரத் செய்தவற்கான உறுதிமொழி (பைஅத்) அளிப்பதற்காக நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "ஹிஜ்ரத், (மக்கா வெற்றிக்கு முன்) அதற்குரியவர்களுக்குக் கடமையாகி (நிறைவேறி) முடிந்துவிட்டது. இனி இஸ்லாத்தின்படி வாழவும், (தேவைப்பட்டால்) அறப்போர் புரியவும், (பிற) நற்செயல்களைச் செய்யவும் (உறுதி மொழி வாங்குவேன்)" என்று பதிலளித்தார்கள்.

3797 முஜாஷிஉ பின் மஸ்ஊத் அஸ்ஸுலமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கா வெற்றிக்குப் பின் நான் என் சகோதரர் அபூமஅபத் (முஜாலித் பின் மஸ்ஊத் – ரலி) அவர்களை அழைத்துக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! ஹிஜ்ரத் செய்வதற்கான உறுதிமொழியை இவரிடமிருந்து பெறுங்கள்" என்று கூறினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஹிஜ்ரத் (மக்கா வெற்றிக்கு முன்) அதற்குரியவர்களோடு முடிந்துவிட்டது" என்று கூறினார்கள். நான், "அவ்வாறாயின் (இனி) எதற்காக உறுதிமொழி பெறுவீர்கள்?" என்று கேட்டேன். "இஸ்லாத்தின்படி வாழ்ந்திடவும், (தேவைப்பட்டால்) அறப்போர் புரிந்திடவும், (பிற) நற்செயல்கள் செய்திடவும்தான் (உறுதிமொழி பெறுவேன்)" என்று பதிலளித்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: பின்னர் நான் அபூமஅபத் (ரலி) அவர்களைச் சந்தித்தபோது, அவர்களிடம் முஜாஷிஉ (ரலி) அவர்கள் சொன்ன செய்தியைத் தெரிவித்தேன். அதற்கு அபூ மஅபத் "முஜாஷிஉ சொன்னது உண்மையே" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் முஜாஷிஉ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், பின்னர் நான் முஜாஷிஉ (ரலி) அவர்களின் சகோதரரைச் சந்தித்(து முஜாஷிஉ சொன்ன செய்தியைத் தெரிவித்)தபோது, "முஜாஷிஉ சொன்னது உண்மையே" என்று அவர் கூறினார் என இடம்பெற்றுள்ளது. அதில் "அபூமஅபத்' எனும் பெயர் இடம்பெறவில்லை.

3798 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது "(இனி) ஹிஜ்ரத் (மக்காவைத் துறப்பது) என்பது கிடையாது. ஆயினும், அறப்போர் புரிவதும் (அதற்காகவும் பிற நற்செயல்கள் புரியவும்) எண்ணம் கொள்வதும்தான் உள்ளது. நீங்கள் அறப்போருக்குப் புறப்படும்படி அழைக்கப்பட்டால், போருக்குப் புறப்படுங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3799 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மக்கா வெற்றியின்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஹிஜ்ரத் (மக்காவைத் துறப்பது) பற்றிக் கேட்கப்பட்டது. அவர்கள் "மக்கா வெற்றிக்குப் பின் ஹிஜ்ரத் (மக்காவைத் துறப்பது) என்பது கிடையாது. ஆயினும், அறப்போர் புரிவதும் (அதற்காகவும் பிற நற்செயல்கள் புரியவும்) எண்ணம் கொள்வதும்தான் உள்ளது. நீங்கள் போருக்குப் புறப்படும்படி அழைக்கப்பட்டால் புறப்பட்டுச் செல்லுங்கள்" என்று பதிலளித்தார்கள்.

3800 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமவாசி ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நாடு துறப்பது (ஹிஜ்ரத்) பற்றிக் கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனக்கு நாசம்தான்! ஹிஜ்ரத்தின் நிலை மிகவும் கடினமானது. உன்னிடம் ஒட்டகங்கள் இருக்கின்றனவா?" என்று கேட்டார்கள். அவர், "ஆம்' என்று விடையளித்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவற்றுக்குரிய ஸகாத்தை நீ கொடுத்துவருகிறாயா?" என்று கேட்டார்கள். அவர், "ஆம்' என்றார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியென்றால், நீ பல ஊர்களுக்கு அப்பால் சென்றுகூட வேலை செய்(து வாழலாம்). ஏனெனில், அல்லாஹ் உன் நற்செயல்க(ளின் பிரதி பலன்க)ளிலிருந்து எதையும் குறைக்கமாட்டான்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "அல்லாஹ் உன் நற்செயல்க(ளின் பிரதிபலன்க)ளிலிருந்து எதையும் குறைக்க மாட்டான்" என்று இடம்பெற்றுள்ளது. ("ஏனெனில்' எனும் சொற்றொடர் இடம்பெறவில்லை.) மேலும் அந்த அறிவிப்பில், "அவ்வொட்டகங்கள் (நீர்நிலைகளுக்கு) நீரருந்தச் செல்லும் (முறை) நாளில் அவற்றின் பாலைக் கற(ந்து ஏழைகளுக்கு கொடு)க்கிறாயா?" என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர் "ஆம்' என்று பதிலளித்தார்" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 21 பெண்களிடம் உறுதிப் பிரமாணம் (பைஅத்) வாங்கிய முறை.

3801 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
இறைநம்பிக்கை கொண்ட பெண்கள் (மக்காவிலிருந்து மதீனாவுக்கு) நாடு துறந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தால், பின்வரும் இறைவசனத்துக்கேற்ப அவர்களுக்குத் தேர்வு நடத்தப்படும். "நபியே! இறைநம்பிக்கை கொண்ட பெண்கள் உம்மிடம் வந்து, தாம் அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்கமாட்டோம்; திருடமாட்டோம்; விபச்சாரம் புரியமாட்டோம்... என்றெல்லாம் உறுதிப் பிரமாணம் அளித்தால், அதை ஏற்று, அவர்களுக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருவீராக!" (60:12) என்பதே அந்த வசனமாகும்.
இறைநம்பிக்கை கொண்ட அப்பெண்களில் ("இணை வைக்கமாட்டோம், திருடமாட்டோம், விபச்சாரம் புரியமாட்டோம்'என்ற) இந்த நிபந்தனைகளுக்கு யார் ஒப்புதல் அளிக்கிறாரோ அவர் தேர்வில் வென்றுவிட்டார் என்று முடிவு செய்வார்கள். இந்த உறுதிமொழியை அப்பெண்கள் வாய்மொழியாக ஒப்புக்கொண்டுவிட்டால், அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களிடம் உறுதிப் பிரமாணம் வாங்கிவிட்டேன். நீங்கள் செல்லலாம்" என்று கூறுவார்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! (உறுதிப் பிரமாணம் வாங்கும்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கை எந்தப் பெண்ணின் கையையும் ஒருபோதும் தொட்டதில்லை. வாய் மொழியாகவே அப்பெண்களிடம் உறுதிமொழி வாங்கினார்கள்.
அல்லாஹ் ஆணையிட்ட நிபந்தனை (வாசகங்களைத்) தவிர வேறெதையும் அப்பெண்களிடமிருந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உறுதிமொழியாகப்) பெறவில்லை. (உறுதிமொழி வாங்கியபோது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கை, எந்தப் பெண்ணின் கையையும் ஒரு போதும் தொட்டதில்லை. அவர்களிடம் உறுதிமொழி வாங்கியதும் "உங்களிடம் உறுதிப் பிரமாணம் பெற்றுக்கொண்டேன்" என்று வார்த்தையால் மட்டுமே கூறுவார்கள். (பொதுவாக ஆண்களிடம் உறுதிமொழி வாங்கும்போது கரம் பற்றுவதைப் போன்று பெண்களின் கரம் பற்றவில்லை.)

3802 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள், பெண்களின் உறுதிப் பிரமாணம் (பைஅத்) தொடர்பாகக் கூறினார்கள்:
(பெண்களிடம் உறுதிமொழி வாங்கியபோது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கை, எந்தப் பெண்ணையும் ஒருபோதும் தொட்டதில்லை. வாய்மொழியாகவே பெண்களிடம்

உறுதிமொழி வாங்கினார்கள். அவ்வாறு உறுதிமொழி வாங்கியதும், "உன்னிடம் உறுதிமொழி பெற்றுக்கொண்டேன். நீ செல்லலாம்" என்று கூறுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 22 இயன்றவரை செவியுற்றுக் கட்டுப்பட்டு நடப்பதாக உறுதிமொழி அளித்தல்.

3803 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவர்களின் கட்டளைகளைச்) செவியுற்றுக் கீழ்ப்படிந்து நடப்போம் என உறுதிமொழி அளிக்கும்போது அவர்கள், "என்னால் முடிந்த விஷயங்களில்' என்று (சேர்த்துச் சொல்லுமாறு) கூறுவது வழக்கம்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 23 பருவ வயது எது என்பது பற்றிய விளக்கம்.

3804 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் பதினான்கு வயதினனாக இருந்தபோது, உஹுதுடைய நாளில் போருக்காக (ஆட்கள் தேர்வு நடந்த சமயம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் நின்றேன். ஆனால், (போரில் கலந்துகொள்ள) எனக்கு அவர்கள் அனுமதியளிக்கவில்லை. (அடுத்த ஆண்டு நடந்த) அகழ்ப்போரின் போது, நான் அவர்களுக்கு முன் நின்ற சமயம் நான் பதினைந்து வயதினனாக இருந்தேன். அப்போது (போரில் கலந்துகொள்ள) எனக்கு அனுமதியளித்தார்கள்.
இதன் அறிவிப்பாளர் நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் கலீஃபாவாக இருந்தபோது அவர்களிடம் சென்று, (இப்னு உமர் (ரலி) அவர்களின்) இந்த ஹதீஸை அவர்களுக்கு அறிவித்தேன். அவர்கள், "(அப்படியென்றால்) இதுதான் சிறியவருக்கும் பெரியவருக்கும் இடையே (வேறுபடுத்திக் காட்டும்) எல்லைக் கோடாகும்" என்று கூறிவிட்டு, பதினைந்து வயதை அடைந்தவர்களுக்கு (இராணுவப் பணிக்கான ஊதியத் தொகையை) நிர்ணயிக்கும்படியும் அதைவிடக் குறைந்த வயது உடையவர்களைச் சிறுவர்களின் கணக்கில் சேர்த்துவிடும் படியும் தம் ஆளுநர்களுக்குக் கடிதம் எழுதினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நான் பதினான்கு வயதினனாக இருந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைச் சிறுவனாகவே கருதினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 24 இறைமறுப்பாளர்களின் கைகளில் சிக்கி (இழிவுபடுத்தப்பட்டு)விடக்கூடும் என்ற அச்சம் இருக்கும்போது, குர்ஆனை இறைமறுப்பாளர்களின் நாட்டுக்கு எடுத்துச் செல்லக் கூடாது.**

3805 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
குர்ஆன் பிரதியுடன் எதிரியின் நாட்டுக்குப் பயணம் செய்வதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைசெய்தார்கள்.

3806 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
குர்ஆன் பிரதியுடன் எதிரியின் நாட்டுக்குப் பயணம் செய்வதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைசெய்தார்கள். அது எதிரிகளின் கையில் அகப்(பட்டு இழிவுபடுத்தப்)படும் என்ற அச்சமே அதற்குக் காரணம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3807 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குர்ஆன் பிரதியுடன் (எதிரியின் நாட்டுக்குப்) பயணம் செய்யாதீர்கள். ஏனெனில், அது எதிரிகளின் கையில் அகப்(பட்டு இழிவுபடுத்தப்)படுவதை என்னால் அஞ்சாமல் இருக்க முடியவில்லை.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அய்யூப் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: (அப்படித் தான்) அதை எதிரிகள் எடுத்து வைத்துக்கொண்டு, உங்களுடன் அவர்கள் குதர்க்கவாதம் செய்தனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், இஸ்மாயீல் பின் உலய்யா மற்றும் அப்துல் வஹ்ஹாப் அஸ்ஸகஃபீ (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "அது எதிரிகளின் கையில் அகப்(பட்டு இழிவு படுத்தப்)படுவதை நான் அஞ்சுகிறேன்" என்று இடம்பெற்றுள்ளது.
சுஃப்யான் பின் உயைனா மற்றும் அள்ளஹ்ஹாக் பின் உஸ்மான் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "எதிரிகளின் கையில் அது அகப்(பட்டு இழிவுபடுத்தப்)படும் என்ற அச்சமே இதற்குக் காரணம்" என்று இடம் பெற்றுள்ளது.

**பாடம் : 25 குதிரைப் பந்தயமும் அதற்காகக் குதிரையை மெலிய வை(த்துப் பயிற்சியளி)ப்பதும்.**

3808 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மெலிய வைக்கப்பட்ட (பயிற்சியளிக்கப்பட்ட) குதிரைகளுக்கிடையே "அல்ஹஃப்யா' எனுமிடத்திலிருந்து பந்தயம் வைத்தார்கள். "ஸனிய்யத்துல் வதா' மலைக் குன்றே அதன் பந்தய எல்லையாக இருந்தது. (அவ்வாறே) மெலிய வைக்கப்படாத (பயிற்சியளிக்கப்படாத) குதிரைகளுக்கிடையே "ஸனிய்யத்துல்

வதா'விலிருந்து பனூ ஸுரைக் பள்ளிவாசல்வரை பந்தயம் வைத்தார்கள். இந்தப் போட்டியில் கலந்துகொண்டவர்களில் நானும் ஒருவன் ஆவேன்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பதினாறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இஸ்மாயீல் பின் உலய்யா மற்றும் ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "நான் அந்தப் பயணத்தில் முந்தி வந்தேன். அப்போது நானிருந்த குதிரை அந்தப் பள்ளிவாசலைத் தாவிக் குதித்தது" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

பாடம் : 26 குதிரைகளின் நெற்றிகளில் மறுமை நாள்வரை நன்மை பிணைக்கப்பட்டிருக்கிறது.

3809 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறைவழியில் செலுத்தப்படும்) குதிரைகளின் நெற்றிகளில் மறுமை நாள்வரை நன்மை உள்ளது.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஏழு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3810 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், குதிரையொன்றின் நெற்றி ரோமத்தைத் தம் விரலால் சுருட்டிவிட்டபடி "குதிரைகளின் நெற்றிகளில் மறுமை நாள்வரை போர்ச் செல்வமும் (மறுமையில் கிடைக்கும்) பிரதிபலன் என்ற நன்மையும் பிணைக்கப் பட்டிருக்கின்றன" என்று கூறியதை நான் கண்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3811 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குதிரைகளின் நெற்றிகளில் மறுமை நாள் வரை நன்மை பிணைக்கப்பட்டிருக்கிறது. அவை: (அவற்றில் ஏறி அறப்போர் புரிவதால் கிடைக்கும்) போர்ச்செல்வமும் (மறுமையில் கிடைக்கும்) பிரதிபலனும் ஆகும்.
இதை உர்வா பின் அல்ஜஅத் அல்பாரிக்கீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3812 உர்வா அல்பாரிக்கீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குதிரைகளின் நெற்றிகளில் நன்மை பிணைக்கப்பட்டிருக்கிறது" என்று கூறினார்கள். அப்போது, "அல்லாஹ்வின் தூதரே! அது எப்படி?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "(அவற்றில் ஏறி அறப்போர் புரிவதால்) நன்மையும் போர்ச்செல்வமும் மறுமை நாள்வரை கிடைக்குமே!" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் (உர்வா அல்பாரிக்கீ (ரலி) அவர்களின் தந்தை பெயருடன் இணைத்து) உர்வா பின் அல்ஜஅத் (ரலி) என இடம் பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் உர்வா அல்பாரிக்கீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "(அவற்றில் ஏறி அறப்போர் புரிவதால்) பிரதிபலனும் போர்ச்செல்வமும் கிடைக்குமே!" எனும் குறிப்பு இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் உர்வா அல்பாரிக்கீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றிலும் "(அவற்றில் ஏறி அறப்போர் புரிவதால்) பிரதிபலனும் போர்ச்செல்வமும் கிடைக்குமே!" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

3813 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குதிரைகளின் நெற்றிகளில் அருள்வளம் (பரக்கத்) உள்ளது.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 27 குதிரையின் தன்மைகளில் விரும்பத்தகாத அம்சம்.

3814 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குதிரைகளில் "ஷிகால்' வகையை விரும்பாதவர்களாக இருந்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3815 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அப்துர் ரஸ்ஸாக் பின் ஹம்மாம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஷிகால் என்பது குதிரையின் வலப்பக்கப் பின் காலிலும் இடப்பக்க முன் காலிலும் வெள்ளை நிறம் இருப்பதாகும். அல்லது வலப்பக்க முன் காலிலும் இடப்பக்கப் பின் காலிலும் வெள்ளை நிறம் காணப்படுவதாகும்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 28 அறப்போர் புரிதல் மற்றும் அல்லாஹ்வின் பாதையில் புறப்படுதல் ஆகியவற்றின் சிறப்பு.

3816 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் பாதையில் போராடுவதற்காகவும், அவன்மீது கொண்ட நம்பிக்கையாலும் அவனுடைய தூதர்களை மெய்ப்படுத்துவதற்காகவும் என்றே யார் அவனுடைய பாதையில் புறப்படுகிறாரோ அவரைச் சொர்க்கத்தில் நுழைய வைக்க அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொண்டுள்ளான். அல்லது அவர் பெற்ற நன்மையுடன் அல்லது போர்ச்செல்வத்துடன் அவர்

புறப்பட்ட வீட்டுக்கே அவரைத் திரும்பக் கொண்டுபோய்ச் சேர்க்க அல்லாஹ் பொறுப்பேற்றுள்ளான்.
முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன் மீதாணையாக! அல்லாஹ்வின் வழியில் (அறப்போரில்) காயப்படுத்தப்பட்டவர், அவர் காயப்பட்ட அதே நிலையில் மறுமை நாளில் வருவார். அவரது (விழுப்புண்ணிலிருந்து வழியும் திரவத்தின்) நிறம் இரத்தத்தின் நிறத்திலிருக்கும். அதன் மணமோ கஸ்தூரி மணமாயிருக்கும்.
முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன் மீதாணையாக! முஸ்லிம்களுக்குச் சிரமம் ஏற்பட்டுவிடும் என்ற நிலை இல்லையாயின், அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிய புறப்படும் அனைத்துப் படைப்பிரிவுகளிலும் கலந்து கொள்ளாமல் நான் ஒருபோதும் பின்தங்கமாட்டேன். (ஒன்று விடாமல் அனைத்திலும் கலந்திருப்பேன்.) ஆயினும், அவர்கள் அனைவரையும் ஏற்றிச் செல்வதற்கு என்னிடமும் வாகன வசதிகள் இல்லை. அவர்களிடமும் வாகன வசதிகள் இல்லை. இந்நிலையில் என்னுடன் வராமல் பின்தங்கிவிடுவது அவர்களுக்கு மனவேதனையை உண்டாக்கும் (ஆகவேதான், அனைத்துப் படைப்பிரிவுகளிலும் நான் கலந்துகொள்ளவில்லை).
முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நான் அல்லாஹ்வின் பாதையில் போரிட்டுக் கொல்லப்பட்டுப் பிறகு (உயிர் கொடுக்கப்பட்டு) மீண்டும் போரிட்டுக் கொல்லப்பட்டுப் பிறகு (உயிர்க் கொடுக்கப்பட்டு) மீண்டும் போரிட்டுக் கொல்லப்படுவதையே நான் விரும்புகிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3817 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், தனது பாதையில் அறப்போர் புரியச் சென்றவரைச் சொர்க்கத்தில் நுழைவிப்பேன்; அல்லது (மறுமையின்) நற்பலன் அல்லது அவர் அடைந்துகொண்ட போர்ச் செல்வம் ஆகியவற்றுடன் அவர் புறப்பட்ட அவரது இல்லத்திற்கே அவரைத் திருப்பி அனுப்புவேன் என்று பொறுப்பேற்றுக்கொண்டான். அவர் அல்லாஹ்வின் பாதையில் போரிடவும் அவனுடைய வார்த்தையை மெய்ப்பிக்கவுமே புறப்பட்டுச் சென்றிருக்க வேண்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3818 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) காயப்படுத்தப்பட்ட ஒருவர் –தனது பாதையில் காயப்படுத்தப்பட்டவர் யார் என்பதை அல்லாஹ் அறிவான்– தமது (விழுப்புண்ணிலிருந்து) குருதி கொப்புளிக்கின்ற நிலையிலேயே மறுமை நாளில் வருவார். அவரது (காயத்திலிருந்து வழியும் திரவத்தின்) நிறம் இரத்தத்தின் நிறத்திலிருக்கும். அதன் மணமோ கஸ்தூரி மணமாயிருக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3819 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் இந்த ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் பாதையில் ஒரு முஸ்லிமுக்கு ஏற்படுத்தப்பட்ட ஒவ்வொரு காயங்களும், தாக்கப்பட்ட நேரத்தில் இருந்ததைப் போன்று குருதி கொப்புளிக்கும் நிலையிலேயே மறுமை நாளில் காணப்படும். (அவரது காயத்திலிருந்து வழியும் திரவத்தின்) நிறம் இரத்தத்தின் நிறத்திலிருக்கும். மணம் கஸ்தூரி மணமாயிருக்கும். முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன் மீதாணையாக! இறைநம்பிக்கையாளர்களுக்குச் சிரமம் ஏற்பட்டுவிடும் என்ற அச்சம் (மட்டும்) எனக்கில்லையாயின், அல்லாஹ்வின் பாதையில் அறப்போரிட புறப்பட்டுச் செல்லும் அனைத்துப் படைப்பிரிவுகளிலும் கலந்துகொள்ளாமல் நான் அமர்ந்திருக்க மாட்டேன். (ஒன்று விடாமல் அனைத்திலும் கலந்திருப்பேன்).
ஆயினும், அவர்கள் அனைவரையும் ஏற்றிச் செல்வதற்கு என்னிடமும் வாகன வசதி இல்லை. என்னைப் பின்பற்றி வருவதற்கு அவர்களிடமும் எந்த வசதியும் இல்லை. நான் சென்ற பிறகு போரில் கலந்து கொள்ளாமல் அமர்ந்துகொண்டிருக்க அவர்களது மனமும் இடம் கொடுக்காது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "இறைநம்பிக்கையாளர்களுக்குச் சிரமம் ஏற்பட்டுவிடும் என்ற அச்சம் (மட்டும்) எனக்கில்லையாயின் நான் (அனுப்பிவைக்கும்) எந்தப் படைப்பிரிவிலும் கலந்துகொள்ளாமல் நான் பின்தங்கியிருக்கமாட்டேன்..." என்று இடம்பெற்றுள்ளது.
மேலும், அதில் "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நான் அல்லாஹ்வின் பாதையில் (போரிட்டுக்) கொல்லப்பட்டு, மீண்டும் உயிர்ப்பிக்கப்(பட்டு, மீண்டும் மீண்டும் கொல்லப்)பட வேண்டும் என நான் விரும்புகிறேன்" என்று காணப்படுகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "என் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்பட்டுவிடும் என்ற அச்சம் (மட்டும்) எனக் கில்லையாயின், நான் அனுப்பிவைக்கும் எந்தப் படைப்பிரிவிலும் நானும் கலந்து கொள்ளாமல் பின் தங்கியிருக்கமாட்டேன்..." என்று இடம்பெற்றுள்ளது.

3820 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், தனது பாதையில் புறப்பட்டுச் சென்றவரை (சொர்க்கத்தில் நுழைவிப்பதற்கு, அல்லது மறுமையின் பிரதிபலனுடனோ, போர்ச் செல்வத்துடனோ அவரது இல்லத்திற்குத் திருப்பியனுப்புவதற்கு) அல்லாஹ் பொறுப்பேற்றுக்கொண்டுள்ளான்" என்று ஹதீஸ் ஆரம்பமாகி, "அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிய புறப்பட்டுச் செல்லும் எந்தப்

படைப்பிரிவிலும் கலந்துகொள்ளாமல் நான் பின்தங்கியிருக்க மாட்டேன்" என்பதோடு முடிவடைகிறது.

## பாடம் : 29 அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) வீரமரணம் அடைவதன் சிறப்பு.

3821 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்விடம் நன்மை கிடைக்கும் நிலையில் இறந்துபோகின்ற எவரும் உலகமும் உலகத்திலுள்ள செல்வங்களும் கிடைப்பதாக இருந்தாலும் (மீண்டும்) உலகத்துக்குத் திரும்பிவர விரும்பமாட்டார். (இறைவழியில் கொல்லப்பட்ட) உயிர்த்தியாகியைத் தவிர. அவர் வீரமரணத்திற்குக் கிடைக்கும் மேன்மையைக் கண்டுவிட்ட காரணத்தால் உலகத்துக்கு மீண்டும் வந்து (இறைவழியில் போரிட்டு) கொல்லப்பட வேண்டும் என்றே ஆசைப்படுவார்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3822 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் நுழையும் எவரும் உலகத்திலுள்ள செல்வங்கள் அனைத்தும் அவருக்குக் கிடைப்பதாக இருந்தாலும் உலகத்துக்குத் திரும்பிவர விரும்பமாட்டார். உயிர்த் தியாகியைத் தவிர! அவர் தமக்கு (இறைவனிடத்தில்) கிடைக்கும் கண்ணியத்தைக் கண்டுவிட்ட காரணத்தால் உலகத்துக்குத் திரும்பிவந்து (இறைவழியில் போரிட்டு) பத்து முறைகள் கொல்லப்பட வேண்டும் என்று ஆசைப்படுவார்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3823 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் வழியில் அறப்போர் புரிவதற்கு நிகரான அறச்செயல் எது?" என்று கேட்கப்பட்டது. "அதற்கு நிகரான அறத்தைச் செய்ய நீங்கள் சக்தி பெறமாட்டீர்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் விடையளித்தார்கள். முன்பு போன்றே மீண்டும் இரண்டு அல்லது மூன்று முறை (மக்கள்) கேட்டனர். ஒவ்வொரு முறையும் "அதைச் செய்ய நீங்கள் சக்தி பெறமாட்டீர்கள்" என்றே நபியவர்கள் பதிலளித்தார்கள்.
மூன்றாவது முறை, "அல்லாஹ்வின் வழியில் அறப்போர் புரிகின்றவரின் நிலை, (இடைவிடாது) நோன்பு நோற்று, (இடைவிடாது) நின்று வணங்கி, அல்லாஹ்வின் வசனங்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்தவரின் நிலையைப் போன்றதாகும். அல்லாஹ்வின் வழியில் அறப்போரில் ஈடுபட்டவர் திரும்பி வருகின்றவரை (இதே நிலையில் உள்ளார்)" என்று கூறினார்கள.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3824 நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது சொற்பொழிவு மேடை (மிம்பர்) அருகில் இருந்தேன். அப்போது ஒரு மனிதர், "நான் இஸ்லாத்தைத் தழுவிய பின்னர் எந்த ஒரு நற்செயலையும் செய்யாமலிருப்பதை ஒரு பொருட்டாகவே கருதமாட்டேன்;

ஹாஜிகளுக்குக் குடிநீர் வழங்குவதைத் தவிர" என்று கூறினார். மற்றொருவர், "நான் இஸ்லாத்தைத் தழுவிய பின்னர் எந்த ஒரு நற்செயலையும் செய்யாமலிருப்பதை ஒரு பொருட்டாகவே நான் கருதமாட்டேன்; "மஸ்ஜிதுல் ஹராம்' (புனிதப்) பள்ளிவாசலை நிர்வகிப்பதை தவிர" என்று சொன்னார். இன்னொருவர், "நீங்கள் சொல்வதையெல்லாம்விட அல்லாஹ்வின் வழியில் அறப்போர் புரிவதே மிகவும் சிறந்ததாகும்" என்று கூறினார்.
அப்போது அவர்கள் மூவரையும் உமர் (ரலி) அவர்கள் கண்டித்தார்கள். "நீங்கள் உங்கள் குரல்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது சொற்பொழிவு மேடைக்கு அருகில் உயர்த்தாதீர்கள். இது ஒரு வெள்ளிக்கிழமை தினமாகும். நான் ஜுமுஆ தொழுகையை தொழுததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று நீங்கள் கருத்து வேறுபாடு கொண்ட விஷயத்தில் விளக்கம் கேட்பேன்" என்று கூறினார்கள்.
அப்போதுதான் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "ஹாஜிகளுக்குக் குடிநீர் வழங்கி, மஸ்ஜிதுல் ஹராமை நிர்வகிப்போரை அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பி, அல்லாஹ்வின் பாதையில் போரிடுவோரைப் போன்று கருதுகிறீர்களா?" (9:19) எனும் வசனத்தை இறுதிவரை அருளினான்.
- மேற்கண்ட ஹதீஸ் நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதிலும் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது சொற்பொழிவு மேடை (மிம்பர்) அருகில் இருந்தேன்..." என்றே ஹதீஸ் துவங்குகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகின்றன.

## பாடம் : 30 இறைவழியில் (போரிட) காலையிலும் மாலையிலும் செல்வதன் சிறப்பு.

3825 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் பாதையில் காலையில் அல்லது மாலையில் (போர் புரியச்) செல்வதானது, இந்த உலகத்தையும் அதிலுள்ளவற்றையும்விடச் சிறந்ததாகும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3826 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் அடியார் அல்லாஹ்வின் பாதையில் (அறப்போர் புரியச்) செல்கின்ற காலை நேரம் அல்லது மாலை நேரமானது, இவ்வுலகத்தைவிடவும் அதிலுள்ளவற்றை விடவும் சிறந்ததாகும்.
இதை சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3827 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் பாதையில் காலையில் அல்லது மாலையில் (போர் புரியச்) செல்வதானது, இவ்வுலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்ததாகும்.
இதை சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3827-ஆ அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் சிலருக்குச் சிரமம் ஏற்பட்டுவிடும் என்ற அச்சம் எனக்கில்லையாயின், நான் அனுப்பிவைக்கின்ற எந்தப் படைப்பிரிவிலும் நான் கலந்துகொள்ளாமல் பின்தங்க மாட்டேன். அல்லாஹ்வின் பாதையில் காலையில் அல்லது மாலையில் (போர் புரியச்) செல்வதானது, இவ்வுலகத்தையும் அதிலுள்ளவற்றையும்விடச் சிறந்ததாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3828 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் பாதையில் காலையில் அல்லது மாலையில் (போர் புரியச்) செல்வதானது, சூரியன் எதன் மீது உதித்து மறைகின்றதோ அந்த உலகத்தைவிடச் சிறந்ததாகும்.
இதை அபூஅய்யூப் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஅய்யூப் அல் அன்சாரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 31 அல்லாஹ் (தனது பாதையில்) அறப்போர் புரிந்தவர்களுக்காகச் சொர்க்கத்தில் தயாரித்து வைத்துள்ள படித்தரங்கள்.

3829 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (என்னிடம்) "அபூசயீத்! அல்லாஹ்வை இறைவனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்கள் இறைத்தூதர் எனவும் மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டவருக்குச் சொர்க்கம் உறுதியாகிவிட்டது" என்று கூறினார்கள்.
இதைக் கேட்டு வியப்படைந்த நான், "மீண்டும் ஒரு முறை சொல்லுங்கள் அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். (மீண்டும்) அவ்வாறே அவர்கள் சொல்லிவிட்டு, இன்னொன்றும் சொல்கிறேன். சொர்க்கத்தில் ஓர் அடியார் நூறு படித்தரங்களுக்கு உயர்த்தப்படுவார். ஒவ்வோர் இரு படித்தரங்களுக்கிடையே வானத்திற்கும் பூமிக்கும் இடையிலுள்ளதைப் போன்ற தொலைவு இருக்கும்" என்று கூறினார்கள்.
நான், "அது என்ன (நற்செயலுக்குக் கிடைக்கும் வெகுமதி), அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். அதற்கு "அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிதல், அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிதல்" என்று விடையளித்தார்கள்.

## பாடம் :32 அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்டவரின் அனைத்துப் பாவங்களும் மன்னிக்கப்படுகின்றன; கடனைத் தவிர!

3830 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒருமுறை) எங்களிடையே நின்று, "அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவதும் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்வதும் நற்செயல்களிலேயே மிகவும் சிறந்ததாகும்" என்று கூறினார்கள். அப்போது ஒரு மனிதர்

எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) கொல்லப்பட்டால், என் பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுமா, கூறுங்கள்?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம், நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் பொறுமையுடனும் (இறைவனுக்காக எனும்) தூய எண்ணத்துடனும் புறமுதுகிட்டு ஓடாமல் முன்னோக்கிச் சென்று கொல்லப்பட்டால், (உங்கள் அனைத்துப் பாவங்களும் மன்னிக்கப்படும்)" என்று பதிலளித்தார்கள்.
பிறகு (சிறிது நேரம் கழித்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எப்படிக் கேட்டீர்கள் (மீண்டும் சொல்லுங்கள்)?" என்று கேட்டார்கள். அந்த மனிதர், "நான் அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) கொல்லப்பட்டால், என் பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுமா, கூறுங்கள்?" என்று கேட்டார்.
மீண்டும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம், நீங்கள் பொறுமையுடனும் (இறைவனுக்காக எனும்) தூய எண்ணத்துடனும் புறமுதுகிட்டு ஓடாமல் முன்னோக்கிச் செல்லும்போது (கொல்லப்பட்டுவிட்டால் உங்கள் பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்பட்டு விடுகின்றன.) ஆனால், கடனைத் தவிர! ஏனெனில், (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னிடம் (இப்போதுதான்) இவ்வாறு கூறினார்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, நான் அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) கொல்லப்பட்டால்...?" என்று கேட்டார் என மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி இடம்பெற்றுள்ளது.

3831 மேற்கண்ட ஹதீஸ் அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஒருவர் மற்றொருவரைவிடக் கூடுதலாக அறிவிக்கிறார். "நபி (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை மீதிருந்தபோது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து மேற்கண்டவாறு கேட்டார்" என இடம்பெற்றுள்ளது.

3832 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(அறப்போரில் கொல்லப்பட்ட) உயிர்த்தியாகியின் அனைத்துப் பாவங்களும் மன்னிக்கப்பட்டு விடுகின்றன; கடனைத் தவிர.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3833 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் பாதையில் வீரமணமடைவது அனைத்துப் பாவங்களையும் அழித்துவிடும்; கடனைத் தவிர.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 33 (அறப்போரில்) வீரமரணம் அடைந்தவர்களின் உயிர்கள் சொர்க்கத்தில் உள்ளன. அவர்கள் தம் இறைவனிடம் உயிரோடு உள்ளனர்; உணவளிக்கப்படுகின்றனர்.**

3834 மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம், "(நபியே!) அல்லாஹ்வின் வழியில் கொல்லப்பட்டோரை இறந்தோர் என நீர் எண்ண வேண்டாம். மாறாக, (அவர்கள்) உயிருடன் உள்ளனர்; தம் இறைவனிடம் (நெருக்கமாக) உள்ளனர்; உணவளிக்கப் பெறுகின்றனர்" (3:169) எனும் இந்த இறைவசனத்தைப் பற்றிக் கேட்டோம். அதற்கு அவர்கள் கூறினார்கள்: தெரிந்து கொள்க. இந்த வசனம் குறித்து முன்பே நாங்கள் (நபியவர்களிடம்) கேட்டுவிட்டோம்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அவர்களின் உயிர்கள் பச்சை நிறப் பறவைகளின் வயிறுகளில் (செலுத்தப்பட்டு) இருக்கும். அவற்றுக்கென இறைஅரியணையின் (அர்ஷின்) கீழ் மாட்டப்பட்டுள்ள கண்ணாடிக் கூண்டுகள் இருக்கும். அவை சொர்க்கத்தில் விரும்பியவாறு உண்டு களித்துவிட்டுப் பின்பு அந்தக் கூண்டுக்குள் வந்து அடையும்.
அப்போது அவர்களின் இறைவன் அவர்களிடம் ஒரு முறை தோன்றி, "நீங்கள் எதையேனும் ஆசைப்படுகிறீர்களா?" என்று கேட்பான். அதற்கு அவர்கள், "நாங்கள் ஆசைப்படுவதற்கு என்ன உள்ளது? நாங்கள்தாம் சொர்க்கத்தில் விரும்பியவாறு உண்டு களித்துக் கொண்டிருக்கிறோமே!" என்று கூறுவர்.
இவ்வாறே மூன்று முறை (கேள்வியும் பதிலும்) நடைபெறுகிறது. எதையேனும் கேட்காமல் நாம் விடப்படமாட்டோம் என்பதை அவர்கள் காணும்போது, "இறைவா! எங்கள் உயிர்களை எங்கள் உடல்களுக்குள் திரும்பவும் செலுத்துவாயாக! நாங்கள் உனது பாதையில் மீண்டும் ஒருமுறை கொல்லப்படவேண்டும்" என்று கூறுவர். அவர்களுக்கு (இதைத் தவிர) வேறெந்தத் தேவையும் இல்லையென்பதை இறைவன் காணும்போது, அவர்கள் (அதே நிலையில்) விடப்படுவார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 34 அறப்போர் மற்றும் எல்லையைக் காவல் புரிவதன் சிறப்பு.**

3835 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "மக்களில் சிறந்தவர் யார்?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் பாதையில் தம் பொருளாலும் உயிராலும் போராடுபவரே (மக்களில் சிறந்தவர்)" என்று பதிலளித்தார்கள். அந்த மனிதர், "பிறகு யார்?" என்று கேட்டார்.
நபி (ஸல்) அவர்கள், "(குழப்பம், போர் போன்ற சூழல்களில்) மலைக் கணவாய்களில் ஒன்றில் வசித்துக்கொண்டு, தம் இறைவனான அல்லாஹ்வை வழிபட்டவாறு தம்மால் மக்களுக்குத் தீங்கு நேராமல் தவிர்த்துவருகின்ற இறைநம்பிக்கையாளர்" என்று விடையளித்தார்கள்.

3836 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! மக்களில் சிறந்தவர் யார்?" என்று கேட்டார். அதற்கு, "அல்லாஹ்வின் பாதையில் தம் உயிராலும் பொருளாலும் போராடுகின்ற இறை நம்பிக்கையாளரே (மக்களில் சிறந்தவர்)" என்று பதிலளித்தார்கள். "பிறகு யார்?" என்று அந்த மனிதர் கேட்டார். அதற்கு, "பிறகு (மக்களில் சிறந்தவர் யாரெனில், குழப்ப நேரங்களில்) மலைக் கணவாய்களில் ஒன்றில் ஒதுங்கி, தம் இறைவனை வழிபட்டவாறு தம்மால் மக்களுக்குத் தீங்கு நேராமல் தவிர்த்துவருகின்ற இறைநம்பிக்கையாளர் ஆவார்" என்று விடையளித்தார்கள்.

3837 மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "மேலும் (மக்களில் சிறந்தவர் யாரெனில்)" என்றே இடம்பெற்றுள்ளது. "பிறகு (மக்களில் சிறந்தவர் யாரெனில்)"என்று காணப்படவில்லை.

3838 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் பாதையில் (செலுத்துவதற்குத் தயாராக) தமது குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தவண்ணம் இருப்பதும் மனித வாழ்வின் நலமான அம்சமேயாகும். அவர் எதிரியின் ஆர்ப்பரிப்பையோ ஆவேசக் குரலையோ செவியுறும்போதெல்லாம், வீரமரணமும் இறப்பும் உள்ள இடங்களைத் தேடி அந்தக் குதிரையில் அமர்ந்து பறப்பார். அல்லது ஒரு மனிதர் (குழப்ப நேரங்களில்) தமது சிறிய ஆட்டு மந்தையுடன் இந்த மலைகளின் உச்சிகளில் ஒன்றில், அல்லது இந்தப் பள்ளத்தாக்குகளில் ஒன்றின் நடுவில் தொழுகையை நிலைநாட்டி, ஸகாத்தை வழங்கி, மரணம் வரும்வரையில் தம் இறைவனை வழிபட்ட வண்ணம் வசித்து வருகிறார். மக்களில் இவரும் நன்மையிலேயே உள்ளார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3839 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ("இந்த மலைகளின் உச்சிகளில் ஒன்றில்' என்பதற்குப் பகரமாக) "இந்த மலைக் கணவாய்களில் ஒன்றில்'என இடம்பெற்றுள்ளது.

3840 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றிலும் "மலைக் கணவாய்கள் ஒன்றில்' என்றே இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 35 (அறப்போரில் கலந்துகொண்ட) இருவரில் ஒருவர் மற்றவரைக் கொன்று விடுகிறார். பிறகு அவ்விருவருமே சொர்க்கத்தில் நுழைகின்றனர் (அது எவ்வாறு?) என்பது பற்றிய விளக்கம்.**

3841 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ், இரண்டு மனிதர்களைப் பார்த்துச் சிரிக்கின்றான். அவ்விருவரில் ஒருவர் மற்றவரைக் கொன்றுவிடுகின்றார். இருவருமே சொர்க்கத்தில் நுழையவும் செய்கின்றனர்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். "அது எவ்வாறு, அல்லாஹ்வின் தூதரே?" என்று மக்கள் கேட்டனர்.
அதற்கு, "இவர் அல்லாஹ்வின் பாதையில் போரிட்டு, வீரமரணம் அடைந்துவிடுகிறார். பிறகு (அவரைக்) கொன்றவர் இஸ்லாத்தை ஏற்று பாவமன்னிப்புக் கோர, அதை ஏற்று அல்லாஹ் அவரை மன்னித்துவிடுகிறான். பிறகு அவரும் அறப்போரில் (கொல்லப்பட்டு) உயிர்த்தியாகி ஆகிவிடுகிறார் (எனவே இருவருமே சொர்க்கத்தில் நுழைகின்றனர்)" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3842 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் இதுவும் ஒன்றாகும்.
"அல்லாஹ் இரண்டு மனிதர்களைப் பார்த்துச் சிரிக்கின்றான். அவ்விருவரில் ஒருவர் மற்றொருவரைக் கொன்றுவிடுகிறார். அவ்விருவருமே சொர்க்கத்தில் நுழைந்தும் விடுகின்றனர்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள், "அது எப்படி, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டனர். இவர் (இறைவழியில் போரிட்டுக்) கொல்லப்படுகிறார்; சொர்க்கத்தில் நுழைந்து விடுகிறார். பின்னர் (அவரைக் கொன்ற) மற்றொருவர் பாவமன்னிப்புக் கோர, அல்லாஹ் அவரை மன்னித்து, இஸ்லாத்திற்கு வழிகாட்டுகிறான். பின்னர் அவர் இறைவழியில் போரிட்டுக் கொல்லப்படுகிறார் (சொர்க்கம் செல்கிறார்)" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

**பாடம் : 36 இறைமறுப்பாளனை (போரில்) கொன்ற பின்னர் (மார்க்கத்தில்) உறுதியோடு இருத்தல்.**

3843 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இறைமறுப்பாளனும் (அறப்போரில்) அவனைக் கொன்ற (இறைநம்பிக்கை கொண்ட) வரும் ஒருபோதும் நரகத்தில் ஒன்றுசேரமாட்டார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3844 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இரண்டு பேர், ஒருவர் மற்றொருவருக்கு இடையூறு செய்யும் வகையில் நரகத்தில் ஒருபோதும் ஒன்றுசேரமாட்டார்கள்" என்று கூறினார்கள்.

"அவர்கள் யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு "ஓர் இறை நம்பிக்கையாளர் இறைமறுப்பாளனை (அறப்போரில்) கொன்றுவிடுகிறார். பின்னர் அவர் (வழி பிறழ்ந்துவிடாமல் மார்க்கத்தில்) உறுதியோடு நிலைத்திருக்கிறார். (இவரும் இவரால் கொல்லப்பட்ட இறைமறுப்பாளனும் நரகத்தில் ஒருபோதும் இணையமாட்டார்கள்)" என்று பதிலளித்தார்கள்.

**பாடம் : 37 அல்லாஹ்வின் பாதையில் தர்மம் செய்வதன் சிறப்பும் அதற்குக் கிடைக்கும் பன்மடங்கு நன்மைகளும்.**

3845 அபூமஸ்ஊத் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் கடிவாளமிடப்பட்ட ஒட்டகமொன்றைக் கொண்டுவந்து, "இது அல்லாஹ்வின் பாதையில் (தர்மமாகும்)" என்று சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமக்கு மறுமை நாளில் இதற்குப் பகரமாக எழுநூறு ஒட்டகங்கள் கிடைக்கும். அவற்றில் ஒவ்வொன்றும் கடிவாளமிடப்பட்டதாக இருக்கும்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 38 அல்லாஹ்வின் பாதையில் புறப்படும் அறப்போர் வீரருக்கு வாகனம் உள்ளிட்ட உதவிகள் அளிப்பதன் சிறப்பும் அவர் சென்ற பின் அவரது குடும்பத்தை நல்ல விதமாகக் கவனித்துக்கொள்வதும்.**

3846 அபூமஸ்ஊத் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "என் வாகனப்பிராணி மடிந்துவிட்டது. எனவே, நான் ஏறிச்செல்வதற்கு எனக்கு வாகனப்பிராணி தாருங்கள்" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "என்னிடம் (வாகனப்பிராணி) இல்லை" என்று கூறினார்கள். அப்போது மற்றொரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! இவரை வாகனத்தில் ஏற்றியனுப்பும் ஒருவரை நான் இவருக்கு அறிவித்துக் கொடுக்கிறேன்" என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நன்மைக்கு வழிகாட்டியவருக்கும் அதைச் செய்தவருக்குக் கிடைப்பதைப் போன்ற நற்பலன் கிடைக்கும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3847 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அஸ்லம்' குலத்தைச் சேர்ந்த ஓர் இளைஞர், "அல்லாஹ்வின் தூதரே! நான் போருக்குச் செல்ல விரும்புகிறேன். ஆனால், என்னிடம் பயணத்துக்குத் தேவையான எந்த வசதியும் இல்லை" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ இன்ன மனிதரிடம் செல். ஏனெனில், அவர் போருக்குச் செல்வதற்காக எல்லா ஏற்பாடுகளையும் செய்திருந்தார். பிறகு அவர் நோய்வாய்ப்பட்டு விட்டார்" என்று கூறினார்கள்.

அவ்வாறே அவரிடம் அந்த இளைஞர் சென்று, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களுக்கு முகமன் (சலாம்) சொல்கிறார்கள். மேலும், நீங்கள் உங்கள் பயணத்துக்காக ஏற்பாடு செய்திருந்தவற்றை என்னிடம் கொடுக்கும்படி கூறினார்கள்" என்றார். அந்த மனிதர், (தம் வீட்டிலிருந்த பெண்ணிடம்) "இன்ன பெண்ணே! என் பயணத்திற்காக நான் ஏற்பாடு செய்திருந்தவற்றை இவருக்குக் கொடுத்துவிடு. அவற்றில் எதையும் தர மறுக்காதே. அல்லாஹ்வின் மீதாணையாக! அவற்றில் எதையேனும் நீ தர மறுத்தால் அதில் உனக்கு அருள்வளம் (பரக்கத்) அளிக்கப்படாது" என்று கூறினார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3848 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் அல்லாஹ்வின் பாதையில் போர்புரியும் ஒருவருக்குப் பயண வசதி செய்து கொடுக்கிறாரோ அவரும் அறப்போரில் பங்கு பெற்றுவிட்டார். யார் அறப்போர் வீரர் புறப்பட்டுச் சென்ற பின் அவருடைய வீட்டாரின் நலன் காக்கிறாரோ அவரும் அறப்போரில் பங்கு பெற்றுவிட்டார்.
இதை ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3849 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் அறப்போர் வீரர் ஒருவருக்குப் பயண வசதி செய்து கொடுக்கிறாரோ அவரும் அறப்போரில் பங்கு பெற்றுவிட்டார். யார் அறப்போர் வீரர் புறப்பட்டுச் சென்ற பின் அவருடைய குடும்பத்தாரைக் கவனித்துக் கொள்கிறாரோ, அவரும் அறப்போரில் பங்கு பெற்றுவிட்டார்.
இதை ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3850 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஹுதைல்' குலத்தாரில் பனூ லஹ்யான் குடும்பத் தாரை நோக்கிப் படைப் பிரிவொன்றை அனுப்பினார்கள். அப்போது, "உங்களில் ஒவ்வோர் இரண்டு பேரில் ஒருவர் (ஒவ்வொரு குலத்தாரிலும் பாதிப்பேர் படைப்பிரிவுக்காகப்) புறப்படட்டும். அவர்கள் இருவருக்கும் (சமமான) நற்பலன் கிடைக்கும்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் படைப்பிரிவொன்றை அனுப்பினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸின் கருத்துப்படியே வந்துள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3851 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பனூ லஹ்யான்' குலத்தாரை நோக்கிப் படைப் பிரிவொன்றை அனுப்பியபோது, "உங்களில் ஒவ்வோர் இரண்டு பேரிலும் ஒருவர் புறப்படட்டும்" என்று கூறினார்கள். பிறகு, (படைப்பிரிவில் செல்லாமல் ஊரில்) தங்கியவரிடம்

"உங்களில் யார் படை வீரர் புறப்பட்டுச் சென்ற பின் அவருடைய குடும்பத்தார் விஷயத்திலும் அவரது செல்வம் விஷயத்திலும் நலம் பேணி நடந்துகொள்கிறாரோ அவருக்கும் புறப்பட்டுச் சென்ற படைவீரருக்குக் கிடைக்கும் நற்பலனில் பாதியளவைப் போன்றது கிடைக்கும்" என்று கூறினார்கள்.

**பாடம் : 39 அறப்போர் வீரர்களின் துணைவியருக்குள்ள மதிப்பும் அத்துணைவியர் விஷயத்தில் வீரர்களுக்குத் துரோகமிழைப்பவர் அடையும் தண்டனையும்.**

3852 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
போருக்குச் செல்லாமல் (ஊரில்) இருப்போர், போருக்குச் சென்ற வீரர்களின் துணைவியரைத் தம் தாயை மதிப்பதைப் போன்று மதிக்க வேண்டும். அறப்போர் வீரர் புறப்பட்டுச் சென்ற பின் அவருடைய குடும்பத்தாரின் நலம் காக்கும் ஒருவர், துணைவியர் விஷயத்தில் அவருக்குத் துரோகமிழைத்தால் அவ்வீரருக்காக அவர் மறுமை நாளில் நிறுத்தப்பட்டே தீருவார். அப்போது அவருடைய நற்செயல்(களின் நன்மை)களில் தாம் நாடிய அளவுக்கு எடுத்துக்கொள்வார். (அப்போது அவருடைய நன்மைகள் அனைத்தையுமே அவர் எடுத்துக் கொள்வதைப் பற்றி) நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?
இதை புரைதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் புரைதா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3853 மேற்கண்ட ஹதீஸ் புரைதா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அவ்வீரரிடம், "இவருடைய நற்செயல்களிலிருந்து நீங்கள் விரும்பிய அளவுக்கு எடுத்துக்கொள்ளுங்கள்' என்று சொல்லப்படும் என்று கூறிவிட்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களை நோக்கித் திரும்பி, "நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?' எனக் கேட்டார்கள்" என்று காணப்படுகிறது.

**பாடம் : 40 (உடல் ஊனம் போன்ற) தகுந்த காரணம் உள்ளவர்களுக்கு அறப்போரில் கலந்து கொள்ளும் கடமை கிடையாது.**

3854 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"இறைநம்பிக்கையாளர்களில் (போருக்குச் செல்லாமல் வீட்டில்) தங்கிவிடுவோரும் அல்லாஹ்வின் பாதையில் தம் செல்வங்களாலும் உயிர்களாலும் அறப்போர் புரிவோரும் சமமாக மாட்டார்" (4:95) எனும் இந்த இறைவசனம் அருளப்பெற்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்களிடம் அகலமான எலும்பு ஒன்றைக் கொண்டுவரச் சொன்னார்கள். அவ்வாறே அவர்கள் எலும்பைக் கொண்டுவந்து அந்த வசனத்தை எழுதிக் கொண்டார்கள்.
அப்போது (அங்கிருந்த கண் பார்வையற்ற) அப்துல்லாஹ் பின் உம்மி மக்த்தூம் (ரலி) அவர்கள், தமது (கண் பார்வையற்ற) குறை குறித்து முறையிட்டார்கள். அப்போது, "இறை

நம்பிக்கையாளர்களில் தக்க காரணமின்றி (போருக்குச் செல்லாமல் வீட்டில்) தங்கி விடுவோரும்..." என்ற (விதிவிலக்குடன் கூடிய) முழு வசனம் அருளப்பெற்றது.
இந்த (4:95ஆவது) வசனம் தொடர்பாக ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்களும் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதைப் போன்றே அறிவித்துள்ளார்கள்.
இந்த ஹதீஸ் பராஉ (ரலி) மற்றும் ஸைத் பின் ஸாபித் (ரலி) ஆகியோர் வழியாக மொத்தம் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3855 பராஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
"இறைநம்பிக்கையாளர்களில் (போருக்குச் செல்லாமல் வீட்டில்) தங்கிவிடுவோரும் அல்லாஹ்வின் பாதையில் தம் செல்வங்களாலும் உயிர்களாலும் அறப்போர் புரிவோரும் சமமாக மாட்டார்" (4:95) எனும் வசனம் அருளப்பெற்றபோது, அப்துல்லாஹ் பின் உம்மி மக்த்தூம் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் (அது குறித்துப்) பேசினார்கள். அப்போது "தக்க காரணமின்றி' என்பது அருளப்பெற்றது.

## பாடம் : 41 உயிர்த் தியாகிக்குச் சொர்க்கம் நிச்சயம்.

3856 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (நபி (ஸல்) அவர்களிடம்), "நான் கொல்லப்பட்டால் எங்கே இருப்பேன், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "சொர்க்கத்தில்' என்று பதிலளித்தார்கள். அந்த மனிதர் தமது கையிலிருந்த பேரீச்சங்கனிகளை உடனே தூக்கி எறிந்துவிட்டு (களத்தில் குதித்து), தாம் கொல்லப்படும்வரை போரிட்டார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் சுவைத் பின் சஈத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உஹுதுப் போரின்போது ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் (மேற்கண்டவாறு) கேட்டார்" என இடம்பெற்றுள்ளது.

3857 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் "பனுந் நபீத்' எனும் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. நீங்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவீர்கள் என நான் உறுதிமொழிகிறேன்" என்று கூறிவிட்டு, (களத்தில்) முன்னேறிச் சென்று கொல்லப்படும்வரை போரிட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இவர் குறைவாக நற்செயல் புரிந்தார்; நிறைவாக நற்பலன் வழங்கப்பெற்றார்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் அபூபக்ர் பின் அபீ ஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பனுந் நபீத் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது.

3858 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சிரியாவுக்குப் புறப்பட்டுச் சென்ற) அபூ சுஃப்யானின் வணிகக் குழு என்ன ஆயிற்று எனக் கண்டறிய புசைசா பின் அம்ர் அல்அன்சாரீ (ரலி) அவர்களை உளவாளியாக அனுப்பிவைத்தார்கள். அவர் சென்றுவிட்டு (திரும்பி) வந்தபோது, என்னையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களையும் தவிர வேறெவரும் வீட்டில்

இருக்கவில்லை. ("அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியரில் சிலரையும் தவிர' என்று கூறினார்களா என எனக்குத் தெரியவில்லை என்று ஸாபித் பின் அஸ்லம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் உள்ளது.) அவர் வந்து (அபூசுஃப்யானின் வணிகக் குழு மக்காவை நோக்கிப் புறப்பட்டுவிட்டது' என்ற) தகவலைச் சொன்னார்.

உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்து (எங்களிடம்) பேசினார்கள். "நமக்கு ஒரு முக்கிய அலுவல் உண்டு. யாரிடம் வாகனம் (ஒட்டகம்) உள்ளதோ அவர் நம்முடன் பயணமாகட்டும்" என்று சொன்னார்கள். உடனே சிலர் மதீனாவின் மேட்டுப் பகுதி கிராமத்துக்குச் சென்று தம் ஒட்டகங்களுடன் வர அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி கோரலாயினர்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை, (இங்கு) யாரிடம் ஒட்டகம் தயாராக உள்ளதோ அவரைத் தவிர (வேறெவரும் புறப்பட வேண்டாம்)" என்று கூறிவிட்டு. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் (சில) நபித்தோழர்களும் புறப்பட்டனர். அவர்கள் இணைவைப்பாளர்களை முந்திக்கொண்டு "பத்ர்' வந்துசேர்ந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நான் முன்னிலை வகிக்காமல் (என்னிடம் கேட்காமல்) உங்களில் யாரும் எதற்காகவும் முந்த வேண்டாம்" என்று கூறினார்கள்.

இணைவைப்பாளர்கள் நெருங்கிவந்தவுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வானங்கள் மற்றும் பூமியின் பரப்பளவு கொண்ட சொர்க்கத்திற்கு எழு(ந்து தயாராகு)ங்கள்" என்று கூறினார்கள். உடனே உமைர் பின் அல்ஹுமாம் அல்அன்சாரீ (ரலி) அவர்கள், "வானங்கள் மற்றும் பூமியின் பரப்பளவு கொண்ட சொர்க்கமா?" என்று கேட்டார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம்' என்று பதிலுரைக்க, "ஆஹா, ஆஹா" என்று உமைர் (ரலி) அவர்கள் சொன்னார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆஹா, ஆஹா என்று நீர் கூறக் காரணமென்ன?" என்று கேட்டார்கள். உமைர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! வேறொன்றுமில்லை, அல்லாஹ்வின் தூதரே! சொர்க்கவாசிகளில் நானும் ஒருவனாக இருக்கவேண்டும் என்ற ஆசைதான் (அவ்வாறு நான் சொல்லக் காரணம்)" என்றார்.

அதற்கு "சொர்க்கவாசிகளில் நீரும் ஒருவர்தாம்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். உமைர் (ரலி) அவர்கள் தமது அம்புக் கூட்டிலிருந்து பேரீச்சம் பழங்களை எடுத்து, அவற்றில் சிலவற்றை உண்ணத் தொடங்கினார்கள். பிறகு, "இந்தப் பேரீச்சம் பழங்களை உண்டு முடிக்கும்வரை நான் உயிர் வாழ்ந்தால் அது ஒரு நீண்ட நெடிய வாழ்க்கையாகிவிடுமே!" என்று கூறியபடி தம்மிடமிருந்த அந்தப் பேரீச்சம் பழங்களைத் தூக்கி எறிந்துவிட்டு, எதிரி(களை நோக்கிச் சென்று அவர்)களுடன் போரிட்டு வீரமரணம் அடைந்தார்கள்.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3859 அபூபக்ர் பின் அப்தில்லாஹ் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

என் தந்தை (அபூமூசா அல்அஷ்அரீ – ரலி) அவர்கள் (ஒரு போரில்) எதிரிகளின் முன்னிலையில் இருந்தார்கள். அப்போது "சொர்க்கத்தின் வாசல்கள் வாட்களின் நிழலுக்குக் கீழே உள்ளன என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

உடனே நலிந்த தோற்றத்தில் இருந்த ஒரு மனிதர் எழுந்து, "அபூமூசா! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதை நீர் கேட்டீரா?" என்று வினவினார். அதற்கு அபூமூசா (ரலி) அவர்கள் "ஆம்' என்றார்கள். உடனே அந்த மனிதர் தம் தோழர்களிடம் திரும்பிச் சென்று, "உங்களுக்கு நான் என் (இறுதி) சலாமைத் தெரிவித்துக்கொள்கிறேன்" என்று கூறினார். பிறகு தமது வாள் உறையைக் கிழித்துப் போட்டுவிட்டு, எதிரிகளை நோக்கி நடந்தார். அந்த வாளால் போரிட்டு வீரமணமும் அடைந்தார்.

3860 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்களில் சிலர் (ரிஅல், தக்வான், உஸய்யா, பனூ லஹ்யான் ஆகிய கூட்டத்தார்) நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "எங்களுக்குக் குர்ஆனையும் "சுன்னா'வையும் கற்பிப்பதற்காக எங்களுடன் சிலரை அனுப்பிவையுங்கள்" என்று கேட்டுக்கொண்டனர். அதற்கிணங்க அன்சாரிகளில் எழுபது பேரை அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் அனுப்பிவைத்தார்கள். அவர்கள் குர்ஆன் அறிஞர்கள் (அல்குர்ராஉ) எனப்படுவர். அவர்களில் என் தாய்மாமா ஹராம் பின் மில்ஹான் (ரலி) அவர்களும் ஒருவர் ஆவார்.
அவர்கள் (எழுபது பேரும்) இரவில் குர்ஆனை ஓதுவார்கள்; ஒருவருக்கொருவர் கற்றுக் கொடுக்கவும் கற்றுக்கொள்ளவும் செய்வார்கள். பகல் நேரங்களில் (அருந்துவோருக்காகவும், அங்கத்தூய்மை செய்வோருக்காகவும்) தண்ணீர் கொண்டுவந்து (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் வைப்பார்கள். விறகு சேகரித்து வந்து அதை விற்றுக் காசாக்கி அதன் மூலம் திண்ணைவாசிகளுக்கும் ஏழைகளுக்கும் உணவு வாங்கிக் கொடுப்பார்கள்.
நபி (ஸல்) அவர்கள் இவர்களை அனுப்பியபோது, அவர்கள் (குறிப்பிட்ட) அந்த இடத்திற்குப் போய்ச் சேர்வதற்கு முன்பே அவர்களை இடைமறித்து, ("பிஃரு மஊனா' எனும் இடத்தில்) அனைவரையும் அக்கூட்டத்தார் கொன்றுவிட்டனர்.
(இறக்கும் தருவாயில்) அவர்கள், "இறைவா! நாங்கள் உன்னிடம் வந்து சேர்ந்துவிட்டோம். உன்னை நாங்கள் உவந்துகொண்டோம்; எங்களை நீயும் உவந்துகொண்டாய் என்று எங்களைப் பற்றி எங்கள் நபியிடம் தெரிவித்துவிடுவாயாக!" என்று கூறினர்.
என் தாய்மாமா ஹராம் (ரலி) அவர்களுக்குப் பின்னால் ஒரு மனிதன் வந்து ஈட்டியால் குத்திவிட்டான். அது அவர்களை ஊடுருவிச் சென்றது. அப்போது ஹராம் (ரலி) அவர்கள், "கஅபாவின் அதிபதிமீது சத்தியமாக! நான் வெற்றி பெற்றுவிட்டேன்" என்று கூறினார்கள்.
(இறையறிவிப்பின் மூலம் இது குறித்து அறிந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம் தோழர்களிடம், "உங்கள் சகோதரர்கள் கொல்லப்பட்டுவிட்டனர். அவர்கள் (இறக்கும் தருவாயில்) "இறைவா! நாங்கள் உன்னிடம் வந்து சேர்ந்துவிட்டோம். உன்னை நாங்கள் உவந்து கொண்டோம்; எங்களை நீயும் உவந்துகொண்டாய்' என எங்கள் நபியிடம் தெரிவித்துவிடுவாயாக என்று கூறினர்" எனத் தெரிவித்தார்கள்.

3861 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
எனக்கு யாருடைய பெயர் சூட்டப்பெற்றுள்ளதோ அந்த என் தந்தையின் சகோதரர் (அனஸ் பின் அந்நள்ர் -ரலி) அவர்கள் பத்ருப் போரில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் கலந்துகொள்ளவில்லை. அது அவர்களுக்கு மனவேதனையை அளித்தது.

"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட முதல் போரில் கலந்து கொள்ளாமல் எங்கோ சென்றுவிட்டேனே! இனிவரும் காலத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் களம் காணும் ஒரு வாய்ப்பை அல்லாஹ் எனக்குத் தந்தால் நான் செய்யப்போவதை (என் வீரத்தையும் தியாகத்தையும்) அல்லாஹ் பார்த்துக்கொள்வான்" என்று கூறினார். (இதைத் தவிர விளக்கமாக வேறெதையும் அவர் கூறவில்லை.) இதைத் தவிர வேறெதையும் சொல்ல அவர் அஞ்சினார். (சொல்லிவிட்டுச் செய்ய முடியாமற் போய்விட்டால் என்னாவது என்ற பயமே அதற்குக் காரணம்.)

பின்னர் அவர் உஹுதுப் போரில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் கலந்து கொண்டார். (போர்க்களத்தை நோக்கி அவர் சென்றபோது) எதிரில் சஅத் பின் முஆத் (ரலி) அவர்கள் (பின்வாங்கி) வர(க் கண்டு), "அபூஅம்ரே! எங்கே (செல்கிறீர்)?" என்று கேட்டுவிட்டு, "இதோ! சொர்க்கத்தின் நறுமணத்தை உஹுத் மலையிலிருந்து நான் பெறுகிறேன்" என்று கூறினார்.

பிறகு எதிரிகளுடன் போரிட்டு அனஸ் பின் அந்நள்ர் (ரலி) அவர்கள் வீரமரணமடைந்தார்கள். அவரது உடலில் வாளால் வெட்டப்பட்டும், ஈட்டியால் குத்தப்பட்டும், அம்பால் துளைக்கப் பட்டும் எண்பதுக்கும் மேற்பட்ட காயங்கள் காணப்பட்டன. அவர்களுடைய சகோதரியும் என்னுடைய அத்தையுமான ருபய்யிஉ பின்த் அந்நள்ர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: என்னுடைய சகோதரரை, நான் அவருடைய விரல் (நுனி)களை வைத்தே என்னால் அடையாளம் காண முடிந்தது. (அந்த அளவுக்கு அவரது உடல் எதிரிகளால் சிதைக்கப்பட்டிருந்தது.)

"அல்லாஹ்விடம் எதைப் பற்றி உறுதிமொழி எடுத்தார்களோ அதை உண்மைப்படுத்தியோரும் இறைநம்பிக்கை கொண்டோரில் உள்ளனர். அவர்களில் சிலர் (இறந்து "வீரமரணம்' எனும்) தமது இலட்சியத்தை அடைந்துவிட்டனர். (அதை) எதிர்பார்த்துக் கொண்டிருப்போரும் அவர்களில் உள்ளனர். அவர்கள் சிறிதளவும் (வாக்கை) மாற்றிக்கொள்ளவில்லை" (33:23) எனும் இந்த வசனம் அனஸ் பின் அந்நள்ர் (ரலி) அவர்கள் விஷயத்திலும் அவர்களுடைய தோழர்களின் விஷயத்திலுமே அருளப்பெற்றது என்றே மக்கள் கருதிவந்தனர்.

## பாடம் : 42 அல்லாஹ்வின் மார்க்கம் மேலோங்க வேண்டும் என்பதற்காகப் போரிட்டவரே அல்லாஹ்வின் பாதையில் போரிட்டவர் ஆவார்.

3862 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

ஒரு கிராமவாசி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! ஒரு மனிதர் போரில் கிடைக்கும் செல்வங்களுக்காகப் போரிடுகிறார். மற்றொரு மனிதர் புகழப்படுவதற்காகப் போரிடுகிறார். இன்னொரு மனிதர் தமது தகுதியைப் பிறர் பார்க்கட்டும் என்பதற்காகப் போரிடுகிறார் -இவர்களில் யார் அல்லாஹ்வின் பாதையில் போரிடுபவர் ஆவார்?" என்று கேட்டார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் மார்க்கம் மேலோங்க வேண்டும் என்பதற்காகப் போரிட்டவரே அல்லாஹ்வின் பாதையில் போரிட்டவர் ஆவார்" என விடையளித்தார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3863 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "ஒரு மனிதர் வீரத்தை வெளிக்காட்டப் போரிடுகிறார். மற்றொருவர் இனமாச்சரியத்திற்காகப் போரிடுகிறார். இன்னொருவர் பிறருக்குக் காட்டிக் கொள்வதற்காகப் போரிடுகிறார். -இவர்களில் இறைவழியில் போரிடுகின்றவர் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் மார்க்கம் மேலோங்க வேண்டும் என்பதற்காகப் போரிட்டவரே அல்லாஹ்வின் பாதையில் போரிடுபவர் ஆவார்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா அல் அஷ்அரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! ஒரு மனிதர் வீரத்தை வெளிக்காட்டப் போரிடுகிறார்' என்று கேட்டோம் என ஹதீஸ் துவங்குகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3864 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், அல்லாஹ்வின் பாதையில் போரிடுவதைப் பற்றிக் கேட்டார். ஒருவர் (தனிப்பட்ட) கோபதாபத்திற்காகப் போரிடுகிறார். மற்றொருவர் இனமாச்சர்யத்துடன் போரிடுகிறார் (இவற்றில் அல்லாஹ்வின் பாதையில் செய்யப்படும் போர் எது?)" என்று கேட்டார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரை நோக்கித் தமது தலையை உயர்த்தினார்கள் -அவர் நின்றுகொண்டிருந்ததால்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தலையை உயர்த்தினார்கள்-. பிறகு, "அல்லாஹ்வின் மார்க்கம் மேலோங்க வேண்டும் என்பதற்காகப் போரிடுகின்றவரே அல்லாஹ்வின் பாதையில் போரிட்டவர் ஆவார்" என்று பதிலளித்தார்கள்.

## பாடம் : 43 பிறருக்குக் காட்டிக்கொள்வதற்காகவும் விளம்பரத்திற்காகவும் போரிட்டவர் நரகத்திற்கே உரியவர் ஆவார்.

3865 சுலைமான் பின் யசார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் மக்கள் (கூடி, அவை) கலைந்தபோது, சிரியாவாசியான நாத்தில் பின் கைஸ் என்பவர், "பெரியவரே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் செவியுற்ற ஹதீஸ் எதையேனும் எங்களுக்குத் தெரிவியுங்கள்" என்று கேட்டார். அதற்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள், "ஆம் (தெரிவிக்கிறேன்). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறியதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்:
மறுமை நாளில் மக்களில் முதல் முதலில் தீர்ப்பு வழங்கப்படுபவர் யாரெனில், இறைவழியில் உயிர்த் தியாகம் செய்தவரே ஆவார். அவர் இறைவனிடம் கொண்டுவரப் படும்போது, அவருக்குத் தான் வழங்கியிருந்த அருட்கொடைகளை இறைவன்

எடுத்துரைப்பான். அவற்றை அவர் அறிந்துகொள்வார். பிறகு, "அந்த அருட்கொடைகளில் நீ எவ்விதம் செயல்பட்டாய்?" என்று இறைவன் கேட்பான். அவர், "(இறைவா!) உனக்காக நான் அறப்போரில் ஈடுபட்டு என் உயிரையே தியாகம் செய்தேன்" என்று பதிலளிப்பார்.

இறைவன், "(இல்லை) நீ பொய் சொல்கிறாய். (நீ எனக்காக உயிர்த் தியாகம் செய்யவில்லை.) மாறாக, 'மாவீரன்' என்று (மக்களிடையே) பேசப்படுவதற்காகவே நீ போரிட்டாய். அவ்வாறு சொல்லப்பட்டுவிட்டது. (உனது நோக்கம் நிறைவேறிவிட்டது)" என்று கூறுவான். பிறகு இறைவனின் கட்டளைப்படி முகம் குப்புற இழுத்துச் செல்லப்பட்டு, அவர் நரகத்தில் எறியப்படுவார்.

பிறகு கல்வியைத் தாமும் கற்று அதைப் பிறருக்கும் கற்பித்தவரும் குர்ஆனைக் கற்றுணர்ந்தவருமான (மார்க்க அறிஞர்) ஒருவர் (இறைவனிடம்) கொண்டுவரப்படுவார். அவருக்குத் தான் வழங்கியிருந்த அருட்கொடைகளை இறைவன் எடுத்துரைப்பான். அவற்றை அவர் அறிந்து கொள்வார். பிறகு "அந்த அருட்கொடைகளில் நீ எவ்விதம் செயல்பட்டாய்?" என்று இறைவன் கேட்பான். அவர், "(இறைவா!) கல்வியை நானும் கற்று, பிறருக்கும் அதை நான் கற்பித்தேன். உனக்காகவே குர்ஆனை ஓதினேன்" என்று பதிலளிப்பார்.

அதற்கு இறைவன், "(இல்லை) நீ பொய் சொல்கிறாய். (எனக்காக நீ கல்வியைக் கற்கவுமில்லை; கற்பிக்கவுமில்லை.)"'அறிஞர்' என்று சொல்லப்பட வேண்டும் என்பதற்காகவே நீ கல்வி கற்றாய்; "குர்ஆன் அறிஞர்' என (மக்களிடையே) பேசப்படுவதற்காகவே நீ குர்ஆனை ஓதினாய். அவ்வாறு சொல்லப்பட்டுவிட்டது (உனது நோக்கம் நிறைவேறி விட்டது)" என்று கூறுவான். பிறகு இறைவனின் கட்டளைப்படி முகம் குப்புற இழுத்துச் செல்லப்பட்டு, அவர் நரகத்தில் எறியப்படுவார்.

பிறகு இறைவன் தாராளமான வாழ்க்கை வசதிகளும் அனைத்து விதமான செல்வங்களும் வழங்கியிருந்த பெரிய செல்வர் ஒருவர் இறைவனிடம் கொண்டுவரப்படுவார். அவருக்குத் தான் வழங்கியிருந்த அருட்கொடைகளை இறைவன் எடுத்துரைப்பான். அவற்றை அவர் அறிந்துகொள்வார். பிறகு, "அந்த அருட்கொடைகளில் நீ எவ்விதம் செயல்பட்டாய்?" என்று இறைவன் கேட்பான். அதற்கு அவர், "நீ எந்தெந்த வழிகளில் எல்லாம் பொருள் செலவழிக்கப்படுவதை விரும்புகிறாயோ, அந்த வழிகளில் எதையும் விட்டுவிடாமல் அனைத்திலும் நான் உனக்காக எனது பொருளைச் செலவிட்டேன்" என்று பதிலளிப்பார்.

அதற்கு இறைவன், "(இல்லை) நீ பொய் சொல்கிறாய் "இவர் ஒரு புரவலர்' என (மக்களிடையே) பேசப்படுவதற்காகவே நீ இவ்வாறு (செலவு) செய்தாய். (உன் எண்ணப்படி) அவ்வாறு சொல்லப்பட்டுவிட்டது. (உனது எண்ணம் நிறைவேறிவிட்டது)" என்று கூறிவிடுவான். பிறகு இறைவனின் கட்டளைப்படி முகம் குப்புற இழுத்துச் செல்லப்பட்டு, அவர் நரகத்தில் எறியப்படுவார்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மக்கள் கலைந்து சென்றபோது சிரியா நாட்டைச் சேர்ந்த "நாத்தில் பின் கைஸ்' என்பவர் அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் கேட்டார்..." என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

பாடம் : 44 அறப்போரில் கலந்துகொண்டு போர்ச்செல்வங்களைப் பெற்றோரும் பெறாதோரும் அடைந்துகொள்ளும் (மறுமை) நன்மைகளின் அளவு பற்றிய விளக்கம்.

3866 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் பாதையில் போர்புரியச் சென்று, போர்ச்செல்வங்களை அடைந்து கொண்டோர் மறுமையின் நன்மைகளில் மூன்றில் இரண்டு பாகங்களை முன்கூட்டியே (இவ்வுலகிலேயே) பெற்றுக்கொண்டுவிட்டனர். (மீதியுள்ள) மூன்றில் ஒரு பாகமே (மறுமையில்) அவர்களுக்கு எஞ்சியிருக்கும். (அறப்போரில் கலந்துகொண்டு) போர்ச் செல்வம் எதையும் அடைந்துகொள்ளாதோர் முழு நன்மையையும் (மறுமையில்) பெற்றுக் கொள்வர்.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3867 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(அல்லாஹ்வின் பாதையில்) அறப்போரில் அல்லது படைப்பிரிவில் பங்கேற்றுப் போர் செய்து, போர்ச்செல்வங்களுடனும் உடல் நலத்துடனும் திரும்புவோர், தங்களுடைய மறுமை நன்மைகளில் மூன்றில் இரண்டு பாகத்தை முன்கூட்டியே (இவ்வுலகிலேயே) அடைந்து கொண்டுவிட்டனர். அறப்போரில் அல்லது படைப்பிரிவில் கலந்து, போர் செய்து, போர்ச் செல்வமும் பெறாமல் உடலும் பாதிக்கப்பட்ட நிலையில் திரும்புவோர், (மறுமையில்) முழுமையான நன்மைகளை அடைந்துகொள்வர்.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 45 "எண்ணங்களைப் பொறுத்தே செயல்கள் அமைகின்றன" எனும் நபிமொழியும், அதில் அறப்போர் உள்ளிட்ட அனைத்து நல்லறங்களும் அடங்கும் என்பதும்.

3868 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எண்ணத்தைப் பொறுத்தே செயல்கள் அமைகின்றன. ஒவ்வொரு மனிதனுக்கும் அவர் எண்ணியதுதான் கிடைக்கிறது. எனவே, எவரது ஹிஜ்ரத் (நாடு துறத்தல்) அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நோக்கமாகக் கொண்டு அமைகிறதோ, அவரது ஹிஜ்ரத்(தின் பலனும் அவ்வாறே) அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் அமையும். எவரது ஹிஜ்ரத் அவர் அடைய விரும்பும் உலக (ஆதாய)த்தை, அல்லது அவர் மணக்க விரும்பும் பெண்ணை நோக்கமாகக் கொண்டுள்ளதோ, அவரது ஹிஜ்ரத்(தின் பலனும்) அதுவாகத்தான் இருக்கும்.
இதை உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் எட்டு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் சுஃப்யான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தவாறு இவ்வாறு கூறியதை நான் கேட்டேன்" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 46 அல்லாஹ்வின் பாதையில் வீரமரணம் அடையும் வாய்ப்பை வழங்குமாறு வேண்டுவது விரும்பத்தக்கதாகும்.**

3869 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் உண்மையான மனதுடன் இறை வழியில் வீரமரணம் அடைவதை வேண்டுகிறாரோ, அவர் அ(தற்குரிய அந்தஸ்)தை அடைந்துகொள்வார்; அவரை வீரமரணம் தழுவாவிட்டாலும் சரியே!
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3870 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் உண்மையான மனதுடன் இறைவனிடம் வீரமரணத்தை வேண்டுவாரோ, அவரை உயிர்த் தியாகிகளின் தகுதிகளுக்கு அல்லாஹ் உயர்த்துவான்; அவர் தமது படுக்கையில் (இயற்கை) மரணமடைந்தாலும் சரியே!
இதை சஹ்ல் பின் ஹுனைஃப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபுத்தாஹிர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உண்மையான மனதுடன்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 47 அறப்போரில் கலந்துகொள்ளாமலும் அது குறித்து மனதில் எந்த விதமான ஆசையும் இல்லாமலும் இறந்துபோனவர் குறித்து வந்துள்ள பழிப்புரை.**

3871 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அறப்போரில் கலந்துகொள்ளாமலும் அது குறித்து மனதில் எந்த விதமான ஆசையும் இல்லாமல் இறந்துபோனவர் நயவஞ்சகத்தின் ஓர் அம்சத்திலேயே இறந்து போகிறார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த நிலை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் இருந்தது என்றே நாம் கருதுகிறோம்.

**பாடம் : 48 நோய் அல்லது வேறு தகுந்த காரணத்தால் போரில் கலந்துகொள்ள முடியாமல் போனவருக்கும் நன்மை கிடைக்கும்.**

3872 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஓர் அறப்போரில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள், "மதீனாவில் (நம் தோழர்கள்) சிலர் இருக்கின்றனர். நீங்கள் ஒரு பாதையில் நடக்கும்போதும் ஒரு பள்ளத்தாக்கைக் கடக்கும்போதும் உங்களுடனேயே அவர்களும் இருக்கின்றனர். நோய்தான் அவர்களை (போருக்கு வரவிடாமல்) தடுத்து விட்டது" என்று சொன்னார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நன்மையில் உங்களுடன் அவர்களும் இணைந்துகொள்ளாமல் இருப்பதில்லை" என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 49 கடல்வழிப் போரின் சிறப்பு

3873 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு அருகிலுள்ள "குபா'வுக்குச் சென்றால், தம் பால்குடி அன்னையான) உம்மு ஹராம் பின்த் மில்ஹான் (ரலி) அவர்களது வீட்டிற்குச் செல்வதும் அவர்களுக்கு அவர் உணவளிப்பதும் வழக்கம் –அவர் (பிற்காலத்தில்) உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்களுக்கு வாழ்க்கைப்பட்டிருந்தார்– அவ்வாறே ஒரு நாள் (பகலில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உம்மு ஹராம் (ரலி) அவர்களின் வீட்டிற்குச் சென்ற போது, அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு உணவளித்தார். பின்னர் அவர்களுக்கு அவர் பேன் பார்த்துக்கொண்டு உட்கார்ந்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உறங்கிவிட்டார்கள். பிறகு சிரித்தபடி விழித்தார்கள்.
தொடர்ந்து உம்மு ஹராம் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
அப்போது நான், "ஏன் சிரிக்கிறீர்கள், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் சமுதாயத்தாரில் சிலர் அல்லாஹ்வின் பாதையில் இந்தக் கடல் மேல் பயணம் செய்யும் அறப்போர் வீரர்களாக எனக்குக் காட்டப்பட்டனர். அவர்கள் கட்டில்களில் வீற்றிருக்கும் "மன்னர்களாக' அல்லது "மன்னர்களைப் போன்று' இருந்தார்கள்" என்று கூறினார்கள். (இவ்விரு வார்த்தைகளில் எந்த வார்த்தையை அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் என அறிவிப்பாளர் இஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் சந்தேகத்துடன் அறிவிக்கிறார்.) உடனே நான், "அல்லாஹ்வின் தூதரே! என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று சொன்னேன். அப்போது எனக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள்.
பிறகு (மீண்டும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தலையைக் கீழே வைத்து உறங்கிவிட்டுப் பிறகு சிரித்தபடி விழித்தெழுந்தார்கள். அப்போதும் நான், "ஏன் சிரிக்கிறீர்கள், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "என் சமுதாயத்தாரில் சிலர் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிபவர்களாக எனக்குக் காட்டப்பட்டார்கள்" என்று முன்பு போலவே பதிலளித்தார்கள்.
அதைக் கேட்டு நான், "அல்லாஹ்வின் தூதரே! என்னையையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் (கடல்வழி அறப்போருக்குச் செல்லும்) முதலாவது குழுவில் ஒருவராக இருப்பீர்கள்" என்று கூறினார்கள்.
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்னறிவிப்புச் செய்தபடியே) உம்மு ஹராம் (ரலி) அவர்கள் முஆவியா பின் அபீசுஃப்யான் (ரலி) அவர்களது காலத்தில் கடற்பயணம் மேற்கொண்டார்கள். பின்பு அவர்கள் கடலிலிருந்து புறப்பட்டு (கரைக்கு) வந்தபோது, தமது வாகனத்திலிருந்து கீழே விழுந்து இறந்துபோனார்கள்.

3874 அனஸ் (ரலி) அவர்களின் சிற்றன்னை உம்மு ஹராம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து, எங்கள் வீட்டில் மதிய ஓய்வு மேற்கொண்டார்கள். பிறகு உறக்கத்திலிருந்து சிரித்தபடியே விழித்தெழுந்தார்கள். அப்போது நான், "என் தந்தையும் தாயும் தங்களுக்கு அர்ப்பணம்! ஏன் சிரிக்கிறீர்கள், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர் கடல் முதுகில் பயணிப்பவர்களாக எனக்குக் காட்டப்பட்டனர். அவர்கள் கட்டில்களில் வீற்றிருக்கும் மன்னர்களைப் போன்று இருந்தார்கள்" என்று கூறினார்கள். உடனே நான், "என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று சொன்னேன்.
அதற்கு, "நீங்களும் அவர்களில் ஒருவராக இருப்பீர்கள்" என்று கூறினார்கள். பிறகு (மீண்டும்) உறங்கிவிட்டு மறுபடியும் சிரித்தபடியே விழித்தொழுந்தார்கள். அப்போது நான் (அதற்கான காரணத்தை) அவர்களிடம் கேட்டேன். அவர்கள் முன்பு கூறியதைப் போன்றே கூறினார்கள்.
அப்போதும் நான், "என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் (கடல்வழிப்போரில் செல்லும்) முதலாவது குழுவினரில் ஒருவராக இருப்பீர்கள்" என்று கூறினார்கள்.
அனஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
பின்னர் உம்மு ஹராம் (ரலி) அவர்கள் உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்களுக்கு வாழ்க்கைப்பட்டபோது, உபாதா (ரலி) அவர்கள் கடலில் பயணம் செய்து அறப்போருக்குச் சென்றார்கள். அப்போது தம்முடன் (தம் துணைவி) உம்மு ஹராம் (ரலி) அவர்களையும் (கப்பலில்) அழைத்துச் சென்றார்கள். (போர் முடிந்து) வந்தபோது, உம்மு ஹராம் (ரலி) அவர்களுக்கு அருகில் கோவேறு கழுதையொன்று கொண்டுவரப்பட்டது. அதில் அவர்கள் ஏறியபோது, அது கீழே தள்ளிவிட்டது. அதனால் அவர்களது கழுத்து முறிந்துவிட்டது. (அவர்கள் இறந்துவிட்டார்கள்.)

3875 மேற்கண்ட ஹதீஸ் உம்மு ஹராம் பின்த் மில்ஹான் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஒரு நாள் (பகலில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என் வீட்டிற்கு வந்து) எனக்கு அருகில் உறங்கினார்கள். பிறகு புன்னகைத்தவர்களாக விழித்தெழுந்தார்கள். நான், "ஏன் சிரிக்கிறீர்கள், அல்லாஹ்வின் தூதரே?' என்று கேட்டேன். அதற்கு, "என் சமுதாயத்தாரில் சிலர் இந்தப் பசுமைக் கடல் மேல் பயணிப்பவர்களாக எனக்குக் காட்டப்பட்டார்கள்...' என்று கூறினார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெறுகின்றன.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் சிற்றன்னை மில்ஹானின் புதல்வி (உம்மு ஹராம் – ரலி) அவர்களின் வீட்டுக்கு வந்து, அவர் அருகில் தமது தலையைக் கீழே வைத்து உறங்கினார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

பாடம் : 50 அல்லாஹ்வின் பாதையில் எல்லைக் காவல் புரிவதன் சிறப்பு.

3876 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"ஒரு பகல் ஓர் இரவு (நாட்டின்) எல்லையைக் காக்கும் பணியில் ஈடுபடுவதானது, ஒரு மாதம் (பகலெல்லாம்) நோன்பு நோற்று (இரவெல்லாம்) நின்று வழிபடுவதைவிடச் சிறந்ததாகும். அ(வ்வாறு காவல் காப்ப)வர் இறந்துவிட்டாலும் அவர் செய்துவந்த நற்செயல் (களுக்குரிய நன்மை)கள் (அவரது கணக்கில்) அவருக்குப் போய்க்கொண்டிருக்கும். (இறைவனிடம்) அவர் உணவளிக்கவும்படுகிறார். மேலும், (சவக்குழியில்) வேதனை செய்பவரிடமிருந்து பாதுகாப்பும் பெறுவார்.
இதை சல்மான் அல்ஃபாரிசீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சல்மானுல் கைர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 51 (பல வகை) உயிர்த் தியாகிகள் பற்றிய விளக்கம்.

3877 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் சாலையில் நடந்து சென்று கொண்டிருந்தார். அப்போது சாலையில் முட்கிளை ஒன்றைக் கண்டு அதை அப்புறப்படுத்தினார். (அவரது இந்த நற்செயலை) அல்லாஹ் பெருமனதுடன் ஏற்று, அவருக்கு (அவர் செய்த பாவங்களிலிருந்து) மன்னிப்பு வழங்கினான். உயிர்த் தியாகிகள் ஐவர் ஆவர்:
1. கொள்ளை நோயால் இறந்தவர் 2. வயிற்றுப்போக்கால் இறந்தவர் 3. வெள்ளத்தில் மூழ்கி இறந்தவர் 4.இடிபாடுகளில் சிக்கி இறந்தவர் 5. அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) உயிர்த் தியாகம் செய்தவர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3878 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடம்), "உங்களில் உயிர்த்தியாகி (ஷஹீத்) குறித்து உங்கள் கருத்து என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) கொல்லப்பட்டவர் உயிர்த்தியாகி ஆவார்" என்று பதிலளித்தனர்.
"அப்படியானால், என் சமுதாயத்தில் உயிர்த் தியாகம் செய்தவர்கள் (எண்ணிக்கையில்) குறைந்துவிடுவார்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள், "அவ்வாறாயின், உயிர்த்தியாகிகள் யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) கொல்லப்பட்டவர் உயிர்த்தியாகி ஆவார். அல்லாஹ்வின் பாதையில் இறந்தவர் உயிர்த் தியாகி ஆவார். கொள்ளை நோயால் இறந்தவரும் உயிர்த்தியாகி ஆவார். வயிற்றோட்டத்தால் இறந்தவரும் உயிர்த்தியாகி ஆவார்" என்று விடையளித்தார்கள்.
(இந்த ஹதீஸ் இதன் அறிவிப்பாளர் தொடரில் இடம்பெற்றுள்ள சுஹைல் பின் அபீசாலிஹ் (ரஹ்) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் வரிசையிலும் வந்துள்ளது. அதில்

இடம்பெற்றுள்ள) உபைதுல்லாஹ் பின் மிக்சம் (ரஹ்) அவர்கள் (தமக்கு இதை அறிவித்த) சுஹைல் (ரஹ்) அவர்களிடம், "இந்த ஹதீஸின் தொடரில் "வெள்ளத்தில் மூழ்கி இறந்தவரும் உயிர்த்தியாகி ஆவார்' என உங்கள் தந்தை (அபூ சாலிஹ் -ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள் என நான் உறுதிமொழிகிறேன்" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது: சுஹைல் பின் அபீசாலிஹ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: (என்னிடம்) உபைதுல்லாஹ் பின் மிக்சம் (ரஹ்) அவர்கள், இந்த ஹதீஸின் தொடரில் உங்கள் தந்தை (அபூசாலிஹ் -ரஹ்) அவர்கள் "வெள்ளத்தில் மூழ்கி இறந்தவரும் உயிர்த்தியாகி ஆவார்' என்று அறிவித்தார் என நான் உறுதிமொழிகிறேன்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதிலும் அபூசாலிஹ் (ரஹ்) அவர்கள் "வெள்ளத்தில் மூழ்கி இறந்தவர் உயிர்த் தியாகி ஆவார்" என்று கூறினார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

3879 ஹஃப்ஸா பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் என்னிடம், "(உங்கள் சகோதரர்) யஹ்யா பின் அபீஅம்ரா எதனால் இறந்தார்?" என்று கேட்டார்கள். நான், "கொள்ளை நோயால் இறந்தார்" என்று பதிலளித்தேன். அவர்கள், "கொள்ளை நோய் (மரணம்), ஒவ்வொரு முஸ்லிமுக்கும் வீரமரணமாகும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகச் சொன்னார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 52 அம்பெய்வதன் சிறப்பும் அதற்காக ஆர்வமூட்டுவதும் அதைப்பயின்று மறந்துவிட்டவர் குறித்து வந்துள்ள பழிப்புரையும்.

3880 உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி "நீங்கள் அவர்களுக்கெதிராக உங்களால் இயன்ற அளவுக்குப் பலத்தைத் தயார்படுத்தி வைத்துக் கொள்ளுங்கள்" (8:60) எனும் இறைவசனத்தை ஓதிவிட்டு, "அறிந்து கொள்க: பலம் என்பது அம்பெய்வதாகும். அறிக! பலம் என்பது அம்பெய்வதாகும். அறிக! பலம் என்பது அம்பெய்வதாகும்" என்று கூறினார்கள்.

3881 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

விரைவில் பல நாடுகள் உங்களால் வெற்றிகொள்ளப்படும். அதற்கு இறைவனே உங்களுக்குப் போதுமானவன். எனவே, உங்களில் ஒருவர் தம் அம்புகளால் விளையாட இயலாமல் போய்விட வேண்டாம்.

இதை உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3882 அப்துர் ரஹ்மான் பின் ஷுமாசா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஃபுகைம் அல்லக்மீ என்பவர் உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்களிடம் "(முதியவரான) தாங்கள் (அம்பெய்வதற்காக) இவ்விரு இலக்குகளுக்கிடையே உங்களைச் சிரமப்படுத்திக் கொள்கிறீர்களே!" என்று கேட்டார். அதற்கு உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து ஒரு செய்தியை நான் செவியுற்றிராவிட்டால் இதற்காக நான் சிரமம் எடுத்துக்கொள்ளமாட்டேன்" என்று பதிலளித்தார்கள்.
இதன் அறிவிப்பாளரான ஹாரிஸ் பின் யஅகூப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் அப்துர் ரஹ்மான் பின் ஷுமாசா (ரஹ்) அவர்களிடம், "அது என்ன (செய்தி)?" என்று கேட்டேன். அதற்கு அப்துர் ரஹ்மான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், யார் அம்பெய்வதைப் பயின்ற பின் அதைக் கைவிட்டுவிடுகிறாரோ அவர் "நம்மைச் சேர்ந்தவர் அல்லர்' அல்லது "(நமக்கு) மாறுசெய்துவிட்டார்' என்று கூறினார்கள்" என விடையளித்தார்கள்.

## பாடம் : 53 "என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர் எப்போதுமே உண்மைக்கு ஆதரவாளர்களாக இருப்பார்கள். அவர்களை எதிர்ப்பவர்களால் அவர்களுக்குத் தீங்கு செய்ய முடியாது'' என நபி (ஸல்) அவர்கள் கூறியது.

3883 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர் உண்மைக்கு ஆதரவாளர்களாக இருந்துகொண்டே இருப்பார்கள். அவர்களுக்குத் துரோகம் இழைப்பவர்களால் அவர்களுக்குத் தீங்கு செய்ய முடியாது. இறுதியில் அவர்கள் இதே நிலையில் இருக்கும்போதே இறைக்கட்டளை (மறுமைக்கு நெருக்கமான நிலை) வந்துவிடும்.
இதை ஸவ்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் குதைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் இதே நிலையில் இருக்கும்போதே' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

3884 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர் (உண்மையை மறுக்கும்) மக்களை மிகைத்தவர்களாகவே இருந்துகொண்டிருப்பார்கள். இறுதியில் அவர்கள் மிகைத்தவர்களாக இருக்கும்போதே அவர்களிடம் இறைக்கட்டளை (மறுமைக்கு நெருக்கமான நிலை) வந்துவிடும்.
இதை முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3885 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்த மார்க்கத்திற்காக முஸ்லிம்களில் ஒரு குழுவினர் போராடிக்கொண்டிருக்கும் நிலையிலேயே மறுமை நிகழும். அதுவரை இந்த மார்க்கம் நிலைத்திருக்கும்.
இதை ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3886 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர் இறுதி நாள்வரை உண்மைக்கு ஆதரவாகப் போராடிக்கொண்டே இருப்பார்கள்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3887 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர் இறைக்கட்டளையை நிலைநாட்டிய வண்ணமே இருப்பார்கள். அவர்களுக்குத் துரோகம் இழைப்பவர்களோ அவர்களை எதிர்ப்பவர்களோ அவர்களுக்கு எந்தத் தீங்கும் இழைக்க முடியாது. அவர்கள் (உண்மையை மறுக்கும்) மக்களை மிகைத்தவர்களாக இருக்கும் நிலையிலேயே அவர்களிடம் இறைக் கட்டளை வரும். -இதை முஆவியா (ரலி) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி அறிவித்தார்கள்.

3888 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் யாருக்கு நன்மையை நாடுகின்றானோ அவரை மார்க்க (விளக்கமுடைய) அறிஞராக்குகிறான். முஸ்லிம்களில் ஒரு குழுவினர் உண்மைக்கு ஆதரவாகப் போராடிய வண்ணம் தம் எதிரிகளைவிட மேலோங்கியவர்களாகவே யுகமுடிவு நாள்வரை நீடித்திருப்பார்கள்.
இதை முஆவியா பின் அபீசுஃப்யான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளரான யஸீத் பின் அல்அஸம்மு (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
முஆவியா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவித்த இந்த ஒரு ஹதீஸை (மட்டுமே) நான் செவியுற்றேன். நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இந்த ஹதீஸைத் தவிர வேறெதையும் முஆவியா (ரலி) அவர்கள் மிம்பர் மீதிருந்தபடி குறிப்பிட்டதை நான் கேட்டதில்லை.

3889 அப்துர் ரஹ்மான் பின் ஷுமாசா அல்மஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மஸ்லமா பின் முகல்லத் (ரலி) அவர்களிடம் இருந்தேன். அங்கு மஸ்லமா (ரலி) அவர்களுக்கு அருகில் அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களும் இருந்தார்கள்.
அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள், "படைப்பினங்களிலேயே மிகவும் தீயவர்கள் மீதே யுகமுடிவு நாள் சம்பவிக்கும். அவர்கள் அறியாமைக் கால மக்களைவிட தீயவர்களாக இருப்பர். அவர்கள் அல்லாஹ்விடம் எதை வேண்டினாலும் இறைவன் அதை நிராகரித்துவிடுவான்" என்று சொன்னார்கள்.

இவ்வாறு அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் அங்கு வந்தார்கள். அப்போது மஸ்லமா (ரலி) அவர்கள், "உக்பா (ரலி) அவர்களே! அப்துல்லாஹ் சொல்வதைக் கேளுங்கள்" என்றார்கள். அதற்கு உக்பா (ரலி) அவர்கள், "அவரே நன்கறிந்தவர். நானோ, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறியதைக் கேட்டுள்ளேன் என்றார்கள்:

என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர் அல்லாஹ்வின் கட்டளைக்கேற்ப போராடியவண்ணம் தம் எதிரிகளை அடக்கிவைத்தபடியே இருப்பார்கள். அவர்களை எதிர்ப்பவர்களால் அவர்களுக்குத் தீங்கு செய்யமுடியாது. அவர்கள் இவ்வாறு இருந்துகொண்டிருக்கும் நிலையிலேயே யுகமுடிவு நாள் ஏற்படும்.

அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள், "ஆம் (நீங்கள் சொன்னதும் சரியே!) பிறகு கஸ்தூரி போன்ற மணமுடைய ஒரு காற்றை அல்லாஹ் அனுப்புவான். அது பட்டு போல மேனியை வருடும். பிறகு எந்த உள்ளத்தில் கடுகளவு இறைநம்பிக்கை உள்ளதோ அத்தகைய எந்த உயிரையும் அது கைப்பற்றாமல் விடாது. பிறகு மக்களிலேயே மிகவும் தீயவர்களே எஞ்சியிருப்பர். அவர்கள்மீதே யுக முடிவு நாள் ஏற்படும்" என்று கூறினார்கள்.

3890 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

மேற்குவாசிகள் (சிரியாவாசிகள்) யுகமுடிவு நாள்வரை உண்மைக்கு ஆதரவாகவே இருந்துகொண்டிருப்பார்கள்.

## பாடம் : 54 பயணத்தில் கால்நடைகளின் நலன் காப்பதும் சாலையி(ன் நடுவி)ல் இரவில் இறங்கி ஓய்வெடுப்பதற்கு வந்துள்ள தடையும்.

3891 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நீங்கள் செழிப்பான காலத்தில் பயணம் செய்தால், (பசுமையான) பூமியில் ஒட்டகங்களுக்குரிய பங்கை (மேய்ச்சலை)க் கொடுத்துவிடுங்கள். வறட்சியான காலத்தில் பயணம் செய்தால், ஒட்டகங்களைத் துரிதமாகச் செலுத்துங்கள். நீங்கள் இரவில் இறங்கி ஓய்வெடுத்தால், (போக்குவரத்துச்) சாலையைத் தவிர்த்துவிடுங்கள். ஏனெனில், அது இரவில் விஷஜந்துகள் உலவும் இடமாகும்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நீங்கள் செழிப்பான காலத்தில் பயணம் செய்தால், (பசுமையான) பூமியில் ஒட்டகங்களுக்குரிய பங்கை (மேய்ச்சலை)க் கொடுத்துவிடுங்கள். வறட்சியான காலத்தில் பயணம் மேற்கொண்டால், ஒட்டகங்களின் உடலில் எலும்பு மஜ்ஜை (பலம்) இருக்கவே விரைவாகச் சென்றுவிடுங்கள். (பயணத்தில்) நீங்கள் இரவில் இறங்கி ஓய்வெடுத்தால், போக்குவரத்துச் சாலைகளைத் தவிர்த்து விடுங்கள். ஏனெனில், அவை கால்நடைகளின் பாதைகளும் இரவில் விஷஜந்துகள் உலவும் இடமும் ஆகும்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 55 பயணம் வேதனையின் ஒரு துண்டாகும். பயணி தம் பணிகளை முடித்த பின் விரைவாகத் தம் வீட்டாரிடம் திரும்பிவிடுவது நல்லதாகும்.**

3892 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பயணம் வேதனையின் ஒரு துண்டாகும். உங்கள் தூக்கத்தையும் உணவையும் பானத்தையும் அது தடுத்துவிடுகிறது. ஆகவே, உங்களில் ஒருவர், தாம் நாடிச்சென்ற பயண நோக்கத்தை முடித்துவிட்டால், உடனே அவர் தம் வீட்டாரை நோக்கி விரைந்து செல்லட்டும்.
இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்களிடம், "இந்த ஹதீஸை அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து அபூசாலிஹ் (ரஹ்) அவர்களும், அவரிடமிருந்து சுமய்யு (ரஹ்) அவர்களும் உங்களுக்கு அறிவித்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "ஆம்' என்றார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 56 (நீண்ட) பயணத்திலிருந்து திரும்புகின்றவர் இரவில் (எந்த முன்னறிவிப்புமின்றி) திடீரெனத் தமது வீட்டினுள் நுழைவது (துரூக்) வெறுக்கத்தக்கதாகும்.**

3893 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பயணத்தை முடித்து) இரவு நேரத்தில் திடீரெனத் தம் வீட்டாரிடம் செல்லமாட்டார்கள். அவர்களிடம் காலையிலோ அல்லது மாலையிலோ தான் செல்வர்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நுழையமாட்டார்கள்' என்றே இடம்பெற்றுள்ளது. ("திடீரென' எனும் குறிப்பு இல்லை.)

3894 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒரு போரில் (தபூக்கில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். பிறகு நாங்கள் மதீனா வந்து (ஊருக்குள்) நுழையப்போனபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நீங்கள் வந்து சேர்ந்துவிட்ட தகவல் வீட்டுப் பெண்களைச் சென்றடைய) இரவாகும்வரை பொறுத்திருங்கள். தலைவிரி கோலமாயிருக்கும் பெண்கள் தலைவாரிக் கொள்ளட்டும்.(கணவனைப்) பிரிந்திருந்த பெண்கள் சவரக்கத்தியைப் பயன்படுத்தி(த் தங்களை ஆயத்தப் படுத்தி)க்கொள்ளட்டும்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3895 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் (வெளியூரிலிருந்து) இரவு நேரத்தில் வந்தால் (எந்த முன்னறிவிப்புமின்றி) திடீரென அவர் தம் வீட்டாரிடம் செல்ல வேண்டாம். (கணவனைப்) பிரிந்திருந்த பெண் சவரக்கத்தியைப் பயன்படுத்தி(த் தம்மை ஆயத்தப் படுத்தி)க்கொள்ளும்

வரையிலும், தலைவிரி கோலமாயிருக்கும் பெண்கள் தலைவாரிக் கொள்ளும்வரையிலும் (அவர் தாமதிக்கட்டும்!)
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3896 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது
நீண்டநாட்கள் கழித்து ஊர் திரும்புகின்ற ஒருவர் (எந்த முன்னறிவிப்புமின்றி) இரவு நேரத்தில் திடீரெனத் தம் வீட்டாரிடம் செல்ல வேண்டாம் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3897 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(வெளியூரிலிருந்து திரும்புகின்ற) ஒருவர் இரவு நேரத்தில் திடீரெனத் தம் வீட்டாரிடம் செல்வதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைவிதித்தார்கள். வீட்டார் மோசடி செய்கிறார்களா என்று நோட்டமிடவும் அவர்களின் குற்றங்குறைகளைக் கண்டுபிடிக்கவும் (அவ்வாறு செல்வது முறையாகாது).
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், சுஃப்யான் அஸ்ஸவ்ரீ (ரஹ்) அவர்கள், "வீட்டார் மோசடி செய்கிறார்களா என்று நோட்டமிடவும் அவர்களின் குற்றங்குறைகளைக் கண்டுபிடிக்கவும்" எனும் இந்த வாசகம் ஹதீஸில் உள்ளதா, அல்லது இல்லையா (அறிவிப்பாளர் முஹாரிப் அவர்களின் வாசகமா) என எனக்குத் தெரியவில்லை" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

3898 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஒருவர் (பயணத்திலிருந்து திரும்பி) இரவில் திடீரென வீட்டாரிடம் செல்வதை நபி (ஸல்) அவர்கள் வெறுத்து வந்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
"வீட்டார் மோசடி செய்கிறார்களா என்று நோட்டமிடவும் அவர்களின் குற்றங்குறைகளைக் கண்டுபிடிக்கவும்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

# அத்தியாயம் : 34 - வேட்டைப் பிராணிகளும்,அறுக்கப்படும் பிராணிகளும், உண்ணத்தக்க பிராணிகளும்.

பாடம் : 1 பயிற்சியளிக்கப்பட்ட நாய்கள் மூலம் வேட்டையாடுதல்.

3899 அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! நான் பயிற்சியளிக்கப்பட்ட நாய்களை அல்லாஹ்வின் பெயர் (பிஸ்மில்லாஹ்...) சொல்லி அனுப்புகிறேன். அவை எனக்காக (வேட்டையாடி)க் கவ்விப் பிடிக்கின்றன (அவற்றை நான் உண்ணலாமா?)" என்று கேட்டேன்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் பயிற்சி அளிக்கப்பட்ட உங்கள் நாயை அல்லாஹ்வின் பெயர் சொல்லி அனுப்பியிருந்தால் (அது வேட்டையாடிக் கொண்டு வருவதை) நீங்கள் உண்ணுங்கள்" என்று பதிலளித்தார்கள்.
நான், "(வேட்டைப் பிராணியை) அவை கொன்றுவிட்டாலுமா?" என்று கேட்டேன். "(வேட்டைப் பிராணியை) அவை கொன்றுவிட்டாலும் சரியே (அதை நீங்கள் உண்ணுங்கள்); நீங்கள் அனுப்பாத மற்றொரு நாய் அவற்றுடன் கூட்டுச் சேராதவரை (உண்ணலாம்)" என்றார்கள்.
நான், "இறகு இல்லாத அம்பை ("மிஅராள்') வேட்டைப் பிராணியின் மீது நான் எய்கிறேன். அது வேட்டைப் பிராணியைத் தாக்கிவிடுகிறது (அதை நான் உண்ணலாமா)?" என்று கேட்டேன். "நீங்கள் இறகு இல்லாத அம்பை எய்ய,அது (தனது கூர்முனையால்) குத்தி (வீழ்த்தி)யதை உண்ணுங்கள். அம்பின் பக்கவாட்டுப் பகுதியால் தாக்குண்டதை உண்ணாதீர்கள்" என்று சொன்னார்கள்.

3900 அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"நாங்கள் இந்த (வேட்டை) நாய்களின் மூலம் வேட்டையாடும் ஒரு சமுதாயத்தார் ஆவோம்" என்று நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறி (அதன் சட்டம் என்னவென்று) வினவினேன்.
அதற்கு அவர்கள், "பயிற்சியளிக்கப்பட்ட உங்கள் (வேட்டை) நாய்களை, அல்லாஹ்வின் பெயர் சொல்லி (வேட்டையாட) நீங்கள் அனுப்பியிருந்தால், உங்களுக்காக அவை கவ்விப் பிடித்து வைத்திருப்பவற்றை நீங்கள் உண்ணலாம்;அவற்றை அவை கொன்றுவிட்டாலும் சரியே! (ஆனால்,) அந்த நாயே தின்றுவிட்டதை மட்டும் உண்ணாதீர்கள்! ஏனென்றால், அது தனக்காகவே கவ்வி வைத்திருக்குமோ என நான் அஞ்சுகிறேன். இவ்வாறே வேறு நாய்கள் உங்கள் நாய்களுடன் கூட்டுச்சேர்ந்திருந்தாலும் (அவை வேட்டையாடியவற்றை) உண்ணாதீர்கள்" என்று சொன்னார்கள்.

3901 அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், இறகு இல்லாத அம்பைக் குறித்து (அதன் மூலம் வேட்டையாடப்பட்ட பிராணியை உண்ணலாமா என)க் கேட்டேன். அதற்கு அவர்கள், "அம்பின் முனைப் பகுதி பிராணியைத் தாக்கியிருந்தால் அதை உண்ணுங்கள். அம்பின்

பக்கவாட்டுப் பகுதி தாக்கிச் செத்திருந்தால், அது தடியால் அடித்துக் கொல்லப்பட்டது (போல்) தான். எனவே, அதை உண்ணாதீர்கள்" என்று சொன்னார்கள்.
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், (பயிற்சியளிக்கப்பட்ட) நாய் (மூலம் வேட்டையாடப்பட்ட பிராணியைக்) குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், "நீங்கள் அல்லாஹ்வின் பெயர் சொல்லி அந்த நாயை அனுப்பியிருந்தால் (அது வேட்டையாடிக் கொண்டுவருவதை) நீங்கள் உண்ணலாம். அந்தப் பிராணியிலிருந்து சிறிதளவை அந்த நாய் தின்றுவிட்டிருந்தால், அதை உண்ணாதீர்கள். ஏனென்றால், அது தனக்காகவே கவ்விப் பிடித்திருக்கிறது" என்று பதிலளித்தார்கள்.
"நான் அனுப்பிய நாயுடன் மற்றொரு நாயைக் கண்டேன். அவற்றில் எது அந்தப் பிராணியைக் கவ்விப் பிடித்தது என்று எனக்குத் தெரியவில்லை (அப்போது நான் என்ன செய்வது?)" என்று கேட்டேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால் அதை உண்ணாதீர்கள். ஏனெனில், நீங்கள் உங்கள் நாயை மட்டுமே அல்லாஹ்வின் பெயர் சொல்லி அனுப்பினீர்கள். மற்றொரு நாயை அல்லாஹ்வின் பெயர் சொல்லி நீங்கள் அனுப்பவில்லை" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், இறகு இல்லாத அம்பு (மூலம் வேட்டையாடப்பட்ட பிராணி) குறித்துக் கேட்டேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதிலும் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், இறகு இல்லாத அம்பு (மூலம் வேட்டையாடப்பட்ட பிராணி) குறித்துக் கேட்டேன்" என்றே ஹதீஸ் ஆரம்பமாகிறது.

3902 அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், இறகு இல்லாத அம்பின் மூலம் வேட்டையாடப்பட்ட பிராணி குறித்துக் கேட்டேன். அவர்கள், "பிராணி அம்பின் கூர்முனையால் தாக்கப்பட்டிருந்தால் அதை உண்ணுங்கள். அம்பின் பக்கவாட்டுப் பகுதியால் தாக்குண்டு செத்திருந்தால் அது தடியால் அடித்துக் கொல்லப்பட்ட(து போன்ற)தேயாகும். (எனவே, அதை உண்ணாதீர்கள்)" என்று பதிலளித்தார்கள்.
(பயிற்சியளிக்கப்பட்ட) நாய்கள் மூலம் வேட்டையாடப்பட்ட பிராணி குறித்தும் அவர்களிடம் நான் கேட்டேன். அவர்கள், "உங்களுக்காக அவை கவ்விப் பிடித்துவைத்து, அதிலிருந்து எதையும் தின்னாமல் இருந்தால் நீங்கள் உண்ணுங்கள். ஏனெனில், (பழக்கப்படுத்தப்பட்ட) நாய் கவ்விப் பிடிப்பதே, (முறைப்படி) அறுப்பதாகிவிடும்.
உங்களது நாயுடன் வேறொரு நாயை நீங்கள் கண்டு, அந்த வேறொரு நாய் உங்கள் நாயுடன் அந்தப் பிராணியைப் பிடித்துக் கொன்றிருக்குமோ என்று நீங்கள் அஞ்சினால், அதை உண்ணாதீர்கள். ஏனெனில், நீங்கள் உங்கள் நாயை மட்டுமே அல்லாஹ்வின் பெயர் சொல்லி

அனுப்பினீர்கள். வேறொரு நாயை அவ்வாறு கூறி நீங்கள் அனுப்பவில்லை" என்று சொன்னார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3903 ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

(இராக்கில் உள்ள) "நஹ்ரைன்' எனும் இடத்தில் எங்கள் அண்டை வீட்டாராகவும், உற்ற நண்பராகவும், (வழிபாடுகளில்) மிகுந்த ஈடுபாடு கொண்டவராகவும் இருந்த அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறினார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களிடம், "நான் எனது (வேட்டை) நாயை (அல்லாஹ்வின் பெயர் சொல்லி) அனுப்புகிறேன். எனது நாயுடன் வேறொரு நாயை, (வேட்டைப் பிராணியைப்) பிடித்த நிலையில் நான் காண்கிறேன். அவற்றில் எது வேட்டைப் பிராணியைப் பிடித்தது என்பது எனக்குத் தெரியவில்லை (இந்த நிலையில் நான் என்ன செய்வது)?" என்று கேட்டேன்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அதை உண்ணாதீர்கள். ஏனெனில், நீங்கள் அல்லாஹ்வின் பெயர் சொல்லி அனுப்பியது உங்கள் நாயைத்தான். வேறொரு நாயை நீங்கள் அல்லாஹ்வின் பெயர் சொல்லி அனுப்பவில்லை" என்று சொன்னார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஷஅபீ (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3904 அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள்: நீங்கள் அல்லாஹ்வின் பெயர் கூறி, உங்களது (வேட்டை) நாயை அனுப்ப, அது வேட்டைப் பிராணியைப் பிடித்து உயிருடன் வைத்திருப்பதை நீங்கள் கண்டால், அதை (முறைப்படி) நீங்கள் அறுத்து உண்ணலாம். அது வேட்டைப் பிராணியைப் பிடித்துத் தின்றுவிடாமல் கொன்று விட்டிருப்பதை நீங்கள் கண்டால் அதையும் நீங்கள் உண்ணலாம்.

உங்கள் நாயுடன் வேறொரு நாயும் (வேட்டைப் பிராணியைக்) கொன்றுவிட்ட நிலையில் இருப்பதை நீங்கள் கண்டால்,அதை உண்ணாதீர்கள். ஏனெனில், அவற்றில் எது அந்தப் பிராணியைக் கொன்றது என்பது உங்களுக்குத் தெரியாது.

நீங்கள் உங்கள் அம்பை அல்லாஹ்வின் பெயர் கூறி (வேட்டைப் பிராணியை நோக்கி) எய்ய, அது ஒரு நாள் அளவுக்கு உங்களை விட்டு மறைந்துவிட்டது. ஒரு நாள் கழித்து உங்கள் அம்பின் அடையாளம் அதில் இருக்க நீங்கள் கண்டால்,விரும்பினால் அதை நீங்கள் உண்ணலாம். அந்தப் பிராணி தண்ணீரில் மூழ்கிக் கிடப்பதை நீங்கள் கண்டால் அதை உண்ணாதீர்கள்.

3905 அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வேட்டைப் பிராணிகள் குறித்து வினவினேன். அவர்கள், "நீங்கள் அல்லாஹ்வின் பெயர் கூறி, உங்கள் அம்பை எய்ய, அது சென்று பிராணியைத் தாக்கிக் கொன்றுவிட்டால், அதை நீங்கள் உண்ணலாம்; அந்தப் பிராணி

தண்ணீரில் விழுந்து கிடக்கும் நிலையில் அதை நீங்கள் கண்டால் தவிர! (அப்போது அதை உண்ணாதீர்கள்.) ஏனெனில், தண்ணீரில் விழுந்ததால் அது செத்ததா, அல்லது உங்கள் அம்பு தாக்கி அது செத்ததா என்பது உங்களுக்குத் தெரியாது" என்று கூறினார்கள்.

3906 அபூஸஅலபா அல்குஷனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் வேதம் வழங்கப்பெற்ற ஒரு சமுதாயத்தாரின் நாட்டில் வசிக்கிறோம். அவர்களுடைய பாத்திரத்தில் சாப்பிடுகிறோம். மேலும், வேட்டைப் பிராணிகள் நிறைந்த ஒரு பகுதியில் வசிக்கிறோம். நான் எனது வில்லாலும் வேட்டையாடுகிறேன். பயிற்சியளிக்கப்பட்ட எனது நாயாலும் வேட்டையாடுகிறேன். பயிற்சியளிக்கப்படாத நாயாலும் வேட்டையாடுகிறேன். இவற்றில் எது எங்களுக்கு அனுமதிக்கப்பட்டது என்பதை எனக்குத் தெரிவியுங்கள்?" என்று கேட்டேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்:
வேதம் வழங்கப்பெற்றவர்களின் நாட்டில் நீங்கள் வசிப்பதாகவும் அவர்களுடைய பாத்திரங்களில் உண்பதாகவும் நீங்கள் சொன்னதைப் பொறுத்தமட்டில், அவர்களுடைய பாத்திரமல்லாத வேறு பாத்திரம் உங்களுக்குக் கிடைத்தால்,அவர்களின் பாத்திரத்தில் நீங்கள் உண்ணாதீர்கள். (வேறு பாத்திரம்) உங்களுக்குக் கிடைக்காவிட்டால், அதைக் கழுவிவிட்டு, பின்னர் அதில் உண்ணுங்கள்.
வேட்டைப் பிராணிகள் நிறைந்த பகுதியில் நீங்கள் வசிப்பதாகச் சொன்னதைப் பொறுத்தவரை, உங்கள் வில்லால் வேட்டையாடியதை நீங்கள் அல்லாஹ்வின் பெயர் கூறி (அறுத்து) உண்ணலாம். (அவ்வாறே) பயிற்சியளிக்கப்பட்ட உங்கள் நாயின் மூலம் வேட்டையாடியதையும் அல்லாஹ்வின் பெயர் கூறி நீங்கள் உண்ணலாம்.
பயிற்சியளிக்கப்படாத உங்கள் நாயின் மூலம் நீங்கள் வேட்டையாடியது அறுப்பதற்கு ஏதுவாக (உயிர் பிரியாத நிலையில்) உங்களுக்குக் கிடைத்தால், அதை (முறைப்படி அறுத்து) நீங்கள் உண்ணலாம்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு வஹ்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், வில்லால் வேட்டையாடப்பட்ட பிராணியைப் பற்றிய குறிப்பு இல்லை.

## பாடம் : 2 (அம்பு எய்த பின்) மறைந்துபோன வேட்டைப் பிராணி பிறகு கிடைத்தால்...?

3907 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்கள் அம்பினால் நீங்கள் எய்த பின் வேட்டைப்பிராணி மறைந்து, பின்னர் (இறந்த நிலையில்) அதை நீங்கள் கண்டால், நாற்றமடிக்காமல் இருக்கும்வரை அதை நீங்கள் உண்ணலாம்.
இதை அபூஸஅலபா அல்குஷனீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3908 அபூஸஅலபா அல்குஷனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
"(காயமடைந்த) வேட்டைப் பிராணி (இறந்த நிலையில்) மூன்று நாட்கள் கழித்து கிடைத்தால், நாற்றமடிக்காமல் இருக்கும் வரை அதை நீங்கள் புசிக்கலாம்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

3909 மேற்கண்ட ஹதீஸ் அபூஸஅலபா அல்குஷனீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ஹாத்திம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நாற்றமடிக்காமல் இருக்கும்வரை' எனும் குறிப்பு இடம்பெறவில்லை. "நாய் வேட்டையாடிய பிராணி, மூன்று நாட்கள் கழித்துக் காணப்பட்டால், நாற்றமடிக்காமல் இருக்கும்வரை அதை நீங்கள் உண்ணலாம். அவ்வாறு நாற்றமடித்துவிட்டால் அதை (உண்ணாதீர்கள்.) விட்டுவிடுங்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 3 கோரைப் பற்கள் உடைய விலங்குகளையும் கோரை நகங்கள் உடைய பறவைகளையும் உண்பதற்கு வந்துள்ள தடை.

3910 அபூஸஅலபா அல்குஷனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், விலங்குகளில் கோரைப்பற்கள் உள்ள எதையும் உண்ணக் கூடாதெனத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: நாங்கள் ஷாம் (சிரியா) நாட்டை சென்றடையும்வரை இந்த ஹதீஸைக் கேள்விப்படவில்லை.

3911 அபூஸஅலபா அல்குஷனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், விலங்குகளில் கோரைப்பற்கள் உள்ள எதையும் உண்ணக்கூடாதெனத் தடை விதித்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் இந்த ஹதீஸை ஹிஜாஸில் உள்ள நம் அறிஞர்களிடமிருந்து செவியுறவில்லை. பின்னர் ஷாம் (சிரியா)வாசிகளின் மார்க்கச்சட்ட அறிஞர்களில் ஒருவரான அபூஇத்ரீஸ் அல்கவ்லானீ (ரஹ்) அவர்களே எனக்கு இதை அறிவித்தார்கள்.

3912 அபூஸஅலபா அல்குஷனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், விலங்குகளில் கோரைப்பற்கள் உள்ள எதையும் உண்ணக்கூடாதெனத் தடை விதித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஸஅலபா அல்குஷனீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், யூனுஸ் பின் யஸீத் மற்றும் அம்ர் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) ஆகியோ ரைத் தவிர மற்றவர்களின் அறிவிப்பில் "உண்ணக்கூடாதென' எனும் சொற்றொடர்

இடம்பெற்றுள்ளது. அவ்விருவரின் அறிவிப்பில் "விலங்குகளில் கோரைப்பற்கள் உள்ள அனைத்துக்கும் தடை விதித்தார்கள்" என்ற வாசகமே இடம்பெற்றுள்ளது.

3913 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
விலங்குகளில் கோரைப்பற்கள் உள்ள எதையும் உண்பது தடை செய்யப்பட்டதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3914 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், விலங்குகளில் கோரைப்பற்கள் உள்ள ஒவ்வொன்றையும், பறவைகளில் கோரை நகங்கள் உள்ள ஒவ்வொன்றையும் (உண்ணக் கூடாதெனத்) தடை செய்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், விலங்குளில் கோரைப்பற்கள் உள்ள ஒவ்வொன்றையும், பறவைகளில் கோரை நகங்கள் உள்ள ஒவ்வொன்றையும் (உண்ணக் கூடாதெனத்) தடை செய்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 4 கடல்வாழ் உயிரினங்களில் செத்தவற்றை உண்பதற்கு வந்துள்ள அனுமதி.

3915 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறைஷியரின் வணிகக் குழுவொன்றை எதிர்கொள்ள படைப் பிரிவு ஒன்றில் எங்களை அனுப்பினார்கள்.
எங்களுக்கு அபூஉபைதா பின் அல்ஜர் ராஹ் (ரலி) அவர்களைத் தளபதியாக நியமித்தார்கள். ஒரு பை பேரீச்சம் பழத்தை எங்களுக்குப் பயண உணவாகக் கொடுத்தார்கள். எங்களுக்குக் கொடுக்க வேறெதையும் அவர்கள் பெற்றிருக்கவில்லை. அபூஉபைதா (ரலி) அவர்கள் அதிலிருந்து ஒவ்வொரு பேரீச்சம் பழமாக எங்களுக்குக் கொடுத்துவந்தார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான அபுஸ்ஸுபைர் முஹம்மத் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (ஜாபிர் (ரலி) அவர்களிடம்) "அதை வைத்துக்கொண்டு என்ன செய்தீர்கள்? (அது உங்களுக்குப் போதுமானதாக இருந்திருக்காதே?)" என்று கேட்டேன்.
அதற்கு அவர்கள் கூறினார்கள்: குழந்தை வாயிலிட்டுச் சுவைப்பதைப் போன்று நாங்களும் அந்தப் பேரீச்சம் பழத்தைச் சுவைப்போம். அதற்கு மேல் தண்ணீரும் அருந்திக்கொள்வோம். அன்றைய பகலிலிருந்து இரவு வரை அதுவே எங்களுக்குப் போதுமானதாயிருக்கும்.

நாங்கள் எங்களிடமிருந்த தடிகளால் கருவேல மரத்தில் அடி(த்து இலை பறி)ப்போம். பிறகு அதைத் தண்ணீரில் நனைத்து அதையும் உண்டோம்.
பிறகு நாங்கள் கடற்கரையோரமாக நடந்தோம். அப்போது கடலோரத்தில் பெரிய மணல் திட்டைப் போன்று ஏதோ ஒன்று எங்களுக்குத் தென்பட்டது. அங்கு நாங்கள் சென்றோம். அங்கே "கொழுப்புத் தலை திமிங்கலம்' (அம்பர்) எனப்படும் ஒரு பிராணி கிடந்தது.
(தளபதி) அபூஉபைதா (ரலி) அவர்கள் "செத்ததாயிற்றே?" என்று கூறினார்கள். பிறகு "இல்லை, நாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தூதர்கள் ஆவோம். அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) உள்ளோம். நீங்கள் நிர்ப்பந்தத்திற்கும் உள்ளாக்கப்பட்டிருக்கிறீர்கள். எனவே, (இதை) உண்ணுங்கள்" என்று கூறினார்கள்.

அந்தத் திமிங்கலத்தை வைத்துக்கொண்டு நாங்கள் ஒரு மாதம் கழித்தோம். எங்கள் முந்நூறு பேரின் உடலும் வலிமையாகிவிட்டது. நாங்கள் அந்தத் திமிங்கலத்தின் விழிப் பள்ளத்திலிருந்து பெரிய பாத்திரங்கள் மூலம் எண்ணெய் எடுத்தோம். அதன் உடலைக் காளை மாட்டின் அளவுக்குத் துண்டு போட்டோம். அபூஉபைதா (ரலி) அவர்கள் எங்களில் பதிமூன்று பேரைத் தேர்ந்தெடுத்து, அதன் விழிப் பள்ளத்தில் உட்காரவைத்தார்கள்.
மேலும், அதன் விலாஎலும்புகளில் ஒன்றை எடுத்து, அதை (பூமியில்) நட்டுவைத்தார்கள். பிறகு எங்களிடமிருந்த ஒரு பெரிய ஒட்டகத்தில் சிவிகை பூட்டி அதில் ஏறி அந்த எலும்பிற்குக் கீழே கடந்துபோனார்கள். (அந்த எலும்பு தலையைத் தொடவில்லை. அந்த அளவுக்குப் பெரியதாக இருந்து.) பிறகு அந்த மீனை (அரை வேக்காட்டில்) வேகவைத்து, பயண உணவாக எடுத்துக்கொண்டோம்.
நாங்கள் மதீனா வந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று நடந்ததை அவர்களிடம் தெரிவித்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது அல்லாஹ் உங்களுக்கு வெளிப்படுத்திய உணவாகும். அதில் ஏதேனும் உங்களிடம் மீதியிருந்தால் நமக்கும் உண்ணக் கொடுங்களேன்!" என்று கேட்டார்கள்.
உடனே நாங்கள் அதிலிருந்து சிறிதளவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குக் கொடுத்தனுப்பினோம். அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3916 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களில் முந்நூறு பேரை ஒரு படைப்பிரிவில் வாகனங்களில் அனுப்பினார்கள். அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்கள் எங்கள் (படைக்குத்) தளபதியாக இருந்தார்கள்.
நாங்கள் குறைஷியரின் வணிகக் குழுவொன்றை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். ஆகவே, நாங்கள் கடற்கரையில் அரை மாதம் தங்கினோம். (இந்நாட்களில் உணவுப் பற்றாக் குறையால்) எங்களுக்குக் கடுமையான பசி ஏற்பட்டது. எனவே,நாங்கள் கருவேல மரத்தின் இலைகளைப் புசித்தோம். ஆகவேதான், அந்தப் படைப்பிரிவு "கருவேலஇலை படைப்பிரிவு' எனப் பெயர் பெற்றது.
இந்த (இக்கட்டான சூழ்)நிலையில் கடல் எங்களுக்கு "அல்அம்பர்' (கொழுப்புத் தலைத் திமிங்கலம்) எனப்படும் (ஒரு வகைக் கடல்வாழ்) உயிரினத்தை ஒதுக்கியது. நாங்கள் அதன்

கொழுப்பிலிருந்து எண்ணெய் எடுத்துக்கொண்டோம். அ(ந்த மீனைப் புசித்த)தனால் (வலிமையான) உடல்கள் எங்களுக்குத் திரும்பக் கிடைத்தன.
அபூஉபைதா (ரலி) அவர்கள் அந்த மீனின் விலாஎலும்புகளில் ஒன்றை எடுத்து அதை (பூமியில்) நட்டுவிட்டுப் பிறகு,படையிலிருந்த உயரமான மனிதரையும், உயரமான ஒட்டகம் ஒன்றையும் கண்டு(பிடித்து), அவரை அந்த ஒட்டகத்தில் ஏற்றி அனுப்ப, அவர் அந்த எலும்பிற்குக் கீழே (தலை முட்டாமல்) கடந்து சென்றார்.
அந்த மீனுடைய கண்ணின் எலும்புக்குள் ஒருவர் உட்கார்ந்திருந்தார். அதன் விழிப் பள்ளத்திலிருந்து நாங்கள் இப்படி இப்படி பெரிய பாத்திரத்தில் கொழுப்பை எடுத்தோம்.
(அந்தப் பயணத்தின் துவக்கத்தில்) எங்களுடன் ஒரு பை நிறைய பேரீச்சம் பழங்கள் இருந்தன. அபூஉபைதா (ரலி) அவர்கள் எங்களில் ஒவ்வொருவருக்கும் ஒரு கைப் பிடி பேரீச்சம் பழம் கொடுத்துவந்தார்கள். பிறகு (நாட்கள் செல்லச் செல்ல) ஒவ்வொரு பேரீச்சம் பழம் தந்தார்கள். அதுவும் தீர்ந்து விட்டபோதுதான் அதன் அருமையை நாங்கள் உணர்ந்தோம்.

3917 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"கருவேல இலை'ப் படைப்பிரிவின் போது, ஒரு மனிதர் (கைஸ் பின் சஅத் (ரலி) அவர்கள்) மூன்று ஒட்டகங்கள் அறு(த்து உணவளி)த்தார். பிறகு மூன்று ஒட்டகங்கள் அறுத்தார். பிறகு மூன்று ஒட்டகங்கள் அறுத்தார். பிறகு (அவர் அறுக்க முற்பட்டபோது) அவரை அபூஉபைதா (ரலி) அவர்கள் தடுத்துவிட்டார்கள்.

3918 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் எங்களில் முந்நூறு பேரை ஒரு படைப்பிரிவில் அனுப்பினார்கள். நாங்கள் எங்கள் பயண உணவை எங்கள் தோள்களில் சுமந்து எடுத்துச் சென்றோம்.

3919 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முந்நூறு பேர் கொண்ட படைப்பிரிவொன்றை அபூ உபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்கள் தலைமையில் அனுப்பினார்கள்.
அவர்களிடமிருந்த பயண உணவுகள் தீர்ந்துவிட்டபோது, அபூஉபைதா (ரலி) அவர்கள் படைப் பிரிவினரிடமிருந்த உணவுகளை ஒரு பையில் சேகரித்தார்கள். அதையே எங்களுக்கு உணவாக விநியோகித்தார்கள். இறுதியில் நாள் ஒன்றுக்கு ஒரு பேரீச்சம் பழம் மட்டுமே எங்களுக்குக் கிடைத்தது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கடற்கரைக்கு (சீஃபுல் பஹ்ர்) அனுப்பினார்கள். அப்படையில் நானும் ஒருவனாயிருந்தேன்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட அறிவிப்புகளில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
இதில் வஹ்ப் பின் கைசான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "படைப் பிரிவினர் அந்த (மீன்) உணவைப் பதினெட்டு இரவுகள் உண்டனர்" எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஜுஹைனா' குலத்தார் வசிக்கும் பகுதியை நோக்கிப் படைப்பிரிவொன்றை அனுப்பினார்கள். அவர்களுக்கு ஒரு மனிதரைத் தளபதியாக நியமித்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 5 நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்பதற்கு வந்துள்ள தடை.

3920 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் போர் தினத்தன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தவணைமுறைத் திருமணத்திற்கும் ("முத்ஆ'),நாட்டுக் கழுதைகளின் இறைச்சிக்கும் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் எட்டு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ண வேண்டாம் என்றும் தடை விதித்தார்கள்" என இடம்பெற்றுள்ளது.

3921 அபூஸஅலபா அல்குஷனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாட்டுக் கழுதைகளின் இறைச்சிக்குத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3922 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ணக் கூடாதெனத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3923 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் போர் நாளன்று நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ணக் கூடாதெனத் தடை விதித்தார்கள். (அன்றைய தினத்தில்) மக்களுக்கு அந்த இறைச்சியின் தேவை இருக்கவே செய்தது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3924 சுலைமான் அஷ்ஷைபானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்களிடம் நாட்டுக் கழுதைகளின் இறைச்சி(யை உண்பது) குறித்துக் கேட்டேன். அவர்கள், "கைபர் போர் நாளன்று எங்களுக்குப் பசி ஏற்பட்டது. அப்போது நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அந்த நகரிலிருந்து வெளியேறிக்கொண்டிருந்த, அந்த ஊர் மக்களுக்குச் சொந்தமான

(நாட்டுக்) கழுதைகளை நாங்கள் (போர்ச் செல்வமாகப்) பெற்றோம். அவற்றை நாங்கள் அறுத்தோம். எங்கள் பாத்திரங்களில் கழுதைகளின் இறைச்சி வெந்துகொண்டிருந்தது.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அறிவிப்பாளர்களில் ஒருவர் "பாத்திரங்களைக் கவிழ்த்துவிடுங்கள். கழுதைகளின் இறைச்சிகளில் சிறிதும் உண்ணாதீர்கள்" என்று அறிவித்தார் எனத் தெரிவித்தார்கள்.
அப்போது நான், "எதற்காக அதற்குத் தடை விதித்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள், "(இந்த அறிவிப்பைச் செவியுற்ற) எங்களில் சிலர் "முற்றாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைத் தடை செய்துவிட்டார்கள்' என்றும், வேறுசிலர் "(அப்படியல்ல போர்ச்செல்வமாகக் கைப்பற்றிய) அந்தக் கழுதைகளிலிருந்து ஐந்தில் ஒரு பாகம் (குமுஸ்) செலுத்தப்படாததால்தான் (தாற்காலிகமாகத்) தடை செய்தார்கள்'என்றும் பேசிக்கொண்டோம்" என்று பதிலளித்தார்கள்.

3925 அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் (முற்றுகை) நாட்களில் எங்களுக்கு(க் கடுமையான) பசி ஏற்பட்டிருந்தது. கைபர் போர் (தொடங்கிய) நாளன்று நாங்கள் நாட்டுக் கழுதைகளை (போர்ச் செல்வமாக)க் கைப்பற்றி அவற்றை அறுத்(துச் சமைத்)தோம்.
பாத்திரங்கள் கொதிக்கத் தொடங்கிய போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அறிவிப்பாளர், "பாத்திரங்களைக் கவிழ்த்துவிடுங்கள். கழுதைகளின் இறைச்சியில் சிறிதும் உண்ணாதீர்கள்" என்று (உரக்கக் கூவி) அறிவித்தார்.
அப்போது மக்களில் சிலர், "(போர்ச்செல்வமாகப் பிடிக்கப்பட்ட) அக்கழுதைகளிலிருந்து ஐந்தில் ஒரு பாகம் (குமுஸ்) செலுத்தப்படாததால்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்துள்ளார்கள்" என்று கூறினர். வேறுசிலர், "(அப்படியல்ல;) முற்றாக அதற்குத் தடை விதித்து விட்டார்கள்" என்று கூறினர்.

3926 பராஉ பின் ஆஸிப் (ரலி) மற்றும் அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) ஆகியோர் கூறியதாவது:
நாங்கள் (கைபர் போரின்போது நாட்டுக்) கழுதைகளை (போர்ச் செல்வமாக)க் கைப்பற்றி அவற்றைச் சமைத்துக்கொண்டிருந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அறிவிப்பாளர் ஒருவர் "பாத்திரங்களைக் கவிழ்த்துவிடுங்கள்" என்று அறிவிப்புச் செய்தார்.

3927 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் போர் நாளன்று (நாட்டுக்) கழுதைகளை நாங்கள் (போர்ச் செல்வமாகக்) கைப்பற்றி (சமைக்கலா)னோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அறிவிப்பாளர் ஒருவர் "பாத்திரங்களைக் கவிழ்த்துவிடுங்கள்"என்று அறிவிப்புச் செய்தார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3928 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ணக் கூடாதென எங்களுக்குத் தடை விதிக்கப்பட்டது.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3929 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (கைபர் போரின்போது) நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை, அது பச்சையாயிருந்தாலும் சமைக்கப்பட்டிருந்தாலும் எறிந்துவிடுமாறு எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். அதற்குப் பின்பு அதை உண்ணும்படி (அனுமதியளித்து) எங்களுக்கு அவர்கள் உத்தரவிடவே யில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3930 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ணக் கூடாதென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்ததற்குக் காரணம், நாட்டுக் கழுதை மக்களின் பொதிகளைச் சுமந்து செல்லும் வாகனமாக இருப்பதால், (உண்ணப்படும் பட்சத்தில்) அவர்களுக்கு வாகனம் இல்லாமல் போய்விடும் என நபியவர்கள் அஞ்சியதா? அல்லது கைபர் நாளன்று நாட்டுக் கழுதைகளின் இறைச்சிக்கு (நிரந்தரமாக)த் தடை விதித்தார்களா என்பது எனக்குத் தெரியாது.

3931 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் கைபரை நோக்கி (போருக்காக)ப் புறப்பட்டோம். பிறகு கைபர்வாசிகளுக்கு எதிராக எங்களுக்கு அல்லாஹ் வெற்றியளித்தான். வெற்றி பெற்ற அன்றைய மாலை வேளையில் மக்கள் அதிகமான நெருப்புகளை (ஆங்காங்கே) மூட்டினர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது என்ன நெருப்பு? எதற்காக மூட்டியிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். "இறைச்சி சமைப்பதற்காக" என்று மக்கள் கூறினர். "எந்த இறைச்சி?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்க, "நாட்டுக் கழுதைகளின் இறைச்சி" என்று மக்கள் கூறினர்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவற்றைக் கொட்டிவிட்டு, அந்தப் பாத்திரங்களை உடைத்துவிடுங்கள்"என்று கூறினார்கள். அப்போது ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே, இறைச்சிகளைக் கொட்டிவிட்டு, பாத்திரங்களைக் கழுவிக்கொள்ளலாமா?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அப்படியே ஆகட்டும்!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3932 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபரை வெற்றிகொண்டபோது, அந்த ஊரிலிருந்து வெளியே வந்த நாட்டுக் கழுதைகளை நாங்கள் கைப்பற்றி, அவற்றை அறுத்துச் சமைத்துக் கொண்டிருந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அறிவிப்பாளர்களில் ஒருவர், "அறிந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நீங்கள் நாட்டுக்

கழுதைகளின் இறைச்சியை உண்ணக் கூடாதெனத் தடைசெய்கிறார்கள். அவை அசுத்தமானவையும் ஷைத்தானின் நடவடிக்கையும் ஆகும்" என்று அறிவிப்புச் செய்தார். உடனே பாத்திரங்கள் அவற்றில் உள்ளவற்றோடு கவிழ்க்கப்பட்டன. அப்போது அப்பாத்திரங்களில் இறைச்சி வெந்து கொதித்துக்கொண்டிருந்தது.

3933 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் போர் நாளன்று ஒருவர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! கழுதைகள் (அறுத்து) உண்ணப்படுகின்றன" என்று கூறினார். பிறகு மற்றொருவர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! கழுதைகள் (உண்டு) தீர்க்கப்பட்டுவிட்டன" என்று சொன்னார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களுக்கு அறிவிப்புச் செய்யும்படி) அபூதல்ஹா (ரலி) அவர்களுக்குக் கட்டளையிட, அவர் மக்களிடையே, "அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நீங்கள் நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ணக் கூடாதெனத் தடைசெய்கிறார்கள். ஏனெனில், அவை அசுத்தமானவையாகும்"என்று அறிவிப்புச் செய்தார். உடனே பாத்திரங்கள் அவற்றிலிருந்தவற்றோடு கவிழ்க்கப்பட்டன.

## பாடம் : 6 குதிரைகளின் இறைச்சியை உண்பது.

3934 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் போர் நாளன்று நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ண வேண்டாமெனத் தடை செய்தார்கள்; குதிரையின் இறைச்சியை உண்ண அனுமதியளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3935 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கைபர் போர் நடந்த கால கட்டத்தில் நாங்கள் குதிரைகளையும்,காட்டுக் கழுதைகளையும் உண்டோம். நபி (ஸல்) அவர்கள் (கைபர் போர் நாளில்) நாட்டுக் கழுதையின் இறைச்சியை உண்ண வேண்டாமென எங்களுக்குத் தடை விதித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில் லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3936 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் ஒரு குதிரையை (அதன் கழுத்து நரம்பை) அறுத்து ("நஹ்ர்' செய்து) உண்டோம்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 7 உடும்பு உண்ணலாம்.**

3937 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் உடும்பு (இறைச்சி உண்பது) குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அதை நான் உண்ணக்கூடியவனாகவும் இல்லை; அதை (உண்ண வேண்டாமெனத்) தடை செய்பவனாகவும் இல்லை" என விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

3938 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உடும்பை உண்பதைப் பற்றிக் கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உடும்பை நான் உண்ணவுமாட்டேன்; அதை (உண்ண வேண்டாமெனத்) தடை செய்யவுமாட்டேன்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3939 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபோது ஒரு மனிதர் உடும்பை உண்பதைப் பற்றிக் கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அதை நான் உண்ணவுமாட்டேன்; அதை (உண்ண வேண்டாமெனத்) தடை செய்யவுமாட்டேன்" என விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஏழு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அய்யூப் பின் அபீதமீமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உடும்புக் கறி கொண்டுவரப்பட்டது. அதை அவர்கள் உண்ணவுமில்லை; அதை உண்ண வேண்டாமெனத் தடை செய்யவுமில்லை" என்று இடம்பெற்றுள்ளது.
உசாமா பின் ஸைத் அல்லைஸீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபோது, பள்ளிவாசலில் இருந்த ஒரு மனிதர் எழுந்தார்..." என்று இடம்பெற்றுள்ளது.

3940 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் உள்ளிட்ட நபித்தோழர்களில் சிலர் இருந்தனர். அப்போது அவர்களிடம் உடும்புக் கறி கொண்டு வரப்பட(்டு பரிமாறப்பட்)டது. உடனே நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவர் அழைத்து "அது உடும்பு இறைச்சி' என்று கூறினார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களிடம்) "நீங்கள் உண்ணுங்கள். ஏனெனில், அது அனுமதிக்கப்பட்டது (ஹலால்)தான். ஆயினும், அது என் (பரிச்சியமான) உணவு இல்லை" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், பின்வருமாறு இடம்பெற்றுள்ளது. தவ்பா பின் அபில்அசத் கைசான் அல்அம்பரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
என்னிடம் ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் தொடர்பாக (நிறைய) ஹதீஸ்களை அறிவிப்பதைப் பார்த்தீர்களா? நான் இப்னு உமர் (ரலி) அவர்களுடன் ஏறத்தாழ இரண்டு அல்லது ஒன்றரை ஆண்டுகள் அமர்ந்து (ஹதீஸ்களைக் கற்று)ள்ளேன். ஆனால், அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து இதைத் தவிர வேறெதையும் அறிவித்து நான் கேட்டதில்லை. அதாவது சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) உள்ளிட்ட நபித்தோழர்களில் சிலர் (நபி (ஸல்) அவர்களிடம்) இருந்தனர்... என்று (மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று) அறிவித்தார்கள்.

3941 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (அவர்களின் துணைவியார்) மைமூனா (ரலி) அவர்களது இல்லத்திற்குச் சென்றோம். அப்போது பொரிக்கப்பட்ட உடும்புக் கறி கொண்டுவரப்பட்டது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதன் பக்கம் தமது கரத்தை நீட்ட, மைமூனா (ரலி) அவர்களது இல்லத்திலிருந்த பெண்களில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எதை உண்ணப் போகிறார்கள் என்பதை அவர்களுக்கு (முன்பே) தெரிவித்துவிடுங்கள்" என்று சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கரத்தை (உடும்பிலிருந்து) எடுத்துவிட்டார்கள்.
அப்போது நான், "உடும்பு தடை செய்யப்பட்டதா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். அவர்கள், "இல்லை (தடை செய்யப்பட்டதன்று); ஆயினும், அது என் சமுதாயத்தாரின் பூமியில் இல்லை. ஆதலால், என் மனம் அதை விரும்பவில்லை" என்று பதிலளித்தார்கள்.
காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்கள் கூறினார்கள்: நான் அதை (என் பக்கம்) இழுத்து வைத்து உண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னைப்) பார்த்துக்கொண்டு தானிருந்தார்கள்.

3942 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் வாள்' எனப்படும் காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள்: நான் (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அவர்களின் துணைவியார் மைமூனா (ரலி) அவர்களின் இல்லத்திற்குச் சென்றேன். அவர் என் தாயின் சகோதரியும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் தாயின் சகோதரியும் ஆவார்.
மைமூனா (ரலி) அவர்கள் அருகில் பொரிக்கப்பட்ட உடும்பு இறைச்சி இருப்பதைக் கண்டேன். அதை மைமூனா (ரலி) அவர்களின் சகோதரி ஹுஃபைஃபா பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் நஜ்துப் பகுதியிலிருந்து கொண்டுவந்திருந்தார். அவர் அந்த உடும்புக் கறியை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் வைத்தார்.
-பொதுவாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் ஏதேனும் உணவு வைக்கப்பட்டால் அதைப் பற்றிச் சொல்லாமலும் அதன் பெயரைத் தெரிவிக்காமலும் அதை அவர்கள் உண்பது அரிதாகும்-

எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கரத்தை அந்த உடும்பை நோக்கி நீட்ட, அங்கிருந்த பெண்களில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் எதை வைத்துள்ளீர்கள் என்பதை (முன்னதாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்துவிடுங்கள்" என்று சொன்னார். அப்பெண்கள், "இது உடும்பு, அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினர். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கரத்தை (உடும்பிலிருந்து) எடுத்துவிட்டார்கள்.
உடனே நான், "உடும்பு தடை செய்யப்பட்டதா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இல்லை (தடை செய்யப்பட்டதன்று); எனினும், அது என் சமுதாயத்தாரின் பூமியில் இல்லை. ஆதலால், என் மனம் அதை விரும்பவில்லை" என்று பதிலளித்தார்கள்.
நான் அதை (என் பக்கம்) இழுத்து வைத்து உண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னைப்) பார்த்துக்கொண்டுதானிருந்தார்கள். (உண்ண வேண்டாமென) என்னை அவர்கள் தடை செய்யவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3943 காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் என் தாயின் சகோதரி மைமூனா (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன் உடும்புக் கறி வைக்கப்பட்டது. அதை (மைமூனா (ரலி) அவர்களின் சகோதரி) உம்மு ஹுஃபைத் பின்த் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் நஜ்துப் பகுதியிலிருந்து கொண்டு வந்திருந்தார். உம்மு ஹுஃபைத் (ரலி) அவர்கள் பனூ ஜஅஃபர் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதரின் துணைவியராய் இருந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எதையும் அது என்னவென்று அறியாமல் உண்ணமாட்டார்கள்.
பிறகு மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது. ஹதீஸின் இறுதியில் "இதை யஸீத் பின் அல்அஸம்மு (ரஹ்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள். அவர் மைமூனா (ரலி) அவர்களது மடியில் வளர்ந்தவர் ஆவார்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நாங்கள் மைமூனா (ரலி) அவர்களது இல்லத்தில் இருந்தபோது, நபி (ஸல்) அவர்களிடம் பொரிக்கப்பட்ட இரு உடும்புகள் கொண்டுவரப்பட்டன" என்று இடம் பெற்றுள்ளது. அதில் "யஸீத் பின் அல்அஸம்மு (ரஹ்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்" எனும் குறிப்பு இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களது இல்லத்தில் இருந்தபோது அவர்களிடம் உடும்புக் கறி கொண்டுவரப்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்களும் இருந்தார்கள்"

என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3944 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாயாரின் சகோதரி உம்மு ஹுஃபைத் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு நெய்யும் பாலாடைக் கட்டியும் உடும்புகளும் அன்பளிப்பாக வழங்கினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நெய்யையும் பாலாடைக் கட்டியையும் உட்கொண்டார்கள். உடும்பை அவர்களின் மனம் விரும்பாததால் அதை உண்ணாமல் விட்டுவிட்டார்கள்.
ஆனால், உடும்புகள் (சமைக்கப்பட்டு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய உணவு விரிப்பின் மீது உண்ணப்பட்டன. உடும்புகள் தடை செய்யப்பட்டவையாக இருந்திருந்தால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய உணவு விரிப்பில் அவை உண்ணப்பட்டிருக்க மாட்டா.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3945 யஸீத் பின் அல்அஸம்மு (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மதீனாவில் புதிதாக மணமுடித்த (மணமகன்) ஒருவர் எங்களை விருந்துக்காக அழைத்தார். அவர் எங்களிடம் (சமைக்கப்பட்ட) பதிமூன்று உடும்புகளைக் கொண்டுவந்து வைத்தார். மக்களில் சிலர் உண்டனர். வேறுசிலர் உண்ணவில்லை.
மறுநாள் நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களைச் சந்தித்து, அதைப் பற்றித் தெரிவித்தேன். அவர்களைச் சுற்றி இருந்தவர்கள் அதிகமாகப் பேசினர். எந்த அளவுக்கென்றால், அவர்களில் சிலர் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உடும்பை உண்ணவுமாட்டேன்; உண்பதைத் தடுக்கவுமாட்டேன்; அதை உண்ண வேண்டாமெனத் தடை செய்யவுமாட்டேன்" எனக் கூறியுள்ளார்கள் என்று (நபியவர்கள் எந்த விளக்கமும் சொல்லாமலேயே சென்று விட்டார்கள் என்பதைப் போன்று) பேசினார்கள்.
இதைக் கேட்ட இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "நீங்கள் சொல்வது தவறு. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதிக்கப்பட்டவற்றையும் தடை செய்யப்பட்டவற்றையும் அறிவிப்பதற்காகவே அனுப்பப்பட்டார்கள். (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) மைமூனா (ரலி) அவர்களது இல்லத்தில் இருந்தார்கள்.
அப்போது அவர்களுக்கு அருகில் (என் சகோதரர்) ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்களும் காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்களும் மற்றொரு பெண்ணும் இருந்தார்கள். அப்போது அவர்களிடம் ஓர் உணவுவிரிப்பில் இறைச்சி வைக்கப்பட்டது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உண்ணமுற்பட்டபோது அவர்களிடம் மைமூனா (ரலி) அவர்கள், "இது உடும்புக் கறி" என்று சொன்னார்கள். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கரத்தை எடுத்துக்கொண்டார்கள்.
மேலும் "இந்த இறைச்சியை நான் ஒருபோதும் உண்டதில்லை" என்று கூறிவிட்டு, அங்கிருந்தவர்களிடம், "நீங்கள் உண்ணுங்கள்" என்றார்கள்.
எனவே, அதை ஃபள்ல் (ரலி) அவர்களும் காலித் பின் அல்வலீத் (ரலி) அவர்களும் அந்தப் பெண்ணும் உண்டனர். மைமூனா (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்

எதை உண்பார்களோ அதைத் தவிர வேறெதையும் நான் உண்ணமாட்டேன்" என்று கூறிவிட்டார்கள்.

3946 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உடும்பு (இறைச்சி) கொண்டுவரப்பட்டது. அதை அவர்கள் உண்ண மறுத்துவிட்டார்கள். மேலும், "எனக்குத் தெரியவில்லை. இது, ((முந்தைய சமுதாயத்தார்) உருமாற்றப்பட்ட தலைமுறைகளில் உள்ளவையாக இருக்கலாம்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3947 அபுஸ்ஸுபைர் முஹம்மத் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் (ரலி) அவர்களிடம் உடும்பைப் பற்றிக் கேட்டேன். அவர்கள் "அதை உண்ணாதீர்கள்" என்று கூறியதுடன் அதை அருவருப்பாகவும் கருதினார்கள். மேலும் "நபி (ஸல்) அவர்கள் அதைத் தடை செய்யவில்லை. வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் அதன் மூலம் பலருக்குப் பயனளிக்கிறான். ஏனெனில், பொதுவாக இடையர்களின் உணவு அதுதான். அது என்னிடம் இருந்திருந்தால் அதை நானும் உண்பேன்" என உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறினார்கள் என்றார்கள்.

3948 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் உடும்புகள் நிறைந்த ஒரு பகுதியில் வசிக்கிறோம். எனவே, அதைப் பற்றி எங்களுக்கு என்ன "கட்டளையிடுகிறீர்கள்?' அல்லது "தீர்ப்பளிக்கிறீர்கள்?' என்று கேட்டார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பனூ இஸ்ராயீல் சமுதாயத்தாரில் சிலர் (உயிர்ப் பிராணிகளாக) உருமாற்றப்பெற்றனர் என என்னிடம் கூறப்பட்டது" என்று கூறினார்கள். அதை உண்ணும்படி கட்டளையிடவுமில்லை;உண்ண வேண்டாமெனத் தடை செய்யவுமில்லை.
அதன் பின்னர் உமர் (ரலி) அவர்கள், "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் அதன் மூலம் பலருக்குப் பயனளிக்கிறான். இது இந்த இடையர்களில் பெரும்பாலோரின் உணவாகும். அது என்னிடம் இருந்திருந்தால் அதை நான் உண்டிருப்பேன். (தனிப்பட்ட முறையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மனம் அதை விரும்பவில்லை" என்று கூறினார்கள்.

3949 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு கிராமவாசி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் உடும்புகள் நிறைந்த பள்ளமான பகுதியில் வசிக்கிறேன். உடும்புதான் என் குடும்பத்தாரின் பொதுவான உணவாகும்" என்று கூறினார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிலளிக்கவில்லை. நாங்கள் அந்தக் கிராமவாசியிடம், "நபியவர்களிடம் மறுபடியும் கேள்" என்று சொன்னோம். அவர் மறுபடியும் கேட்டார். அப்போதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிலளிக்கவில்லை. இவ்வாறு மூன்று முறை நடந்தது.

மூன்றாவது முறை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த மனிதரை அழைத்து, "கிராமவாசியே! அல்லாஹ், பனூ இஸ்ராயீல் சமுதாயத்தாரில் ஒரு கூட்டத்தாரைச் சபித்தான்; அல்லது கோபப்பட்டான். அவர்களைப் பூமியில் ஊர்ந்து செல்லும் பிராணிகளாக மாற்றிவிட்டான். எனவே, இது (உடும்பு) அவர்களாயிருக்குமோ என்பது எனக்குத் தெரியாது. எனவே, அதை நான் உண்ணவுமாட்டேன்; அதை (உண்ண வேண்டாமென)த் தடை செய்யவுமாட்டேன்" என்று கூறினார்கள்.

## பாடம் : 8 வெட்டுக்கிளியை உண்ணலாம்.

3950 அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஏழு போர்களில் கலந்துகொண்டோம். (அப்போது) நாங்கள் வெட்டுக்கிளிகளை உண்டோம்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஏழு போர்களில் (கலந்துகொண்டோம்)" என்று இடம்பெற்றுள்ளது.
இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஆறு (போர்களில் கலந்து கொண்டோம்)" என்று இடம்பெற்றுள்ளது.
இப்னு அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஆறு அல்லது ஏழு (போர்களில் கலந்துகொண்டோம்)" என்று இடம் பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "ஏழு போர்களில்" என்றே இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 9 முயலை உண்ணலாம்.

3951 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் "மர்ருழ் ழஹ்ரான்' எனும் இடத்தைக் கடந்து சென்றபோது முயல் ஒன்றைத் துரத்திச் சென்றோம்.மக்கள் அதைப் பிடிக்க முயன்று களைத்துவிட்டனர். நான் அதை விரட்டிச் சென்று பிடித்துவிட்டேன். அதை (என் தாயின் கணவர்) அபூதல்ஹா (ரலி) அவர்களிடம் கொண்டுவந்தேன். அவர்கள் அதை அறுத்து அதன் சப்பையையும் இரு தொடைகளையும் (அன்பளிப்பாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (கொடுக்குமாறு) அனுப்பிவைத்தார்கள். அதை நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுசென்றேன். அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அதன் சப்பையை அல்லது இரு தொடைகளை (அனுப்பிவைத்தார்கள்)" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 10 வேட்டையாடுவதற்கும், எதிரிகளை எதிர்கொள்வதற்கும், வேண்டிய பயிற்சிகளை மேற்கொள்வது அனுமதிக்கப்பட்டதாகும். கல்சுண்டு விளையாட்டு வெறுக்கப்பட்டதாகும்.**

3952 அப்துல்லாஹ் பின் அல்முகஃப்பல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் சிறிய கற்களைச் சுண்டி (விளையாடி)க்கொண்டிருந்த என் தோழர் ஒருவரைக் கண்டேன். அவரிடம், "கற்களைச் சுண்டி விளையாடாதே! ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "சிறிய கற்களைச் சுண்டியெறிவதை வெறுத்து வந்தார்கள்' அல்லது "சிறிய கற்களைச் சுண்டியெறிய வேண்டாமெனத் தடுத்து வந்தார்கள்'. அவ்வாறு சிறிய கற்களைச் சுண்டியெறிவதால் வேட்டைப் பிராணிகள் வேட்டையாடப்படுவதோ எதிரிகள் வீழ்த்தப் படுவதோ கிடையாது. மாறாக, அது பல்லை உடைக்கலாம்; கண்ணைப் பறித்து விடலாம். (அவ்வளவுதான் அதனால் முடியும்)" என்று சொன்னேன்.

அதன் பிறகு ஒரு முறை அதே தோழர் சிறிய கற்களைச் சுண்டியெறிந்து விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டேன். அவரிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறிய கற்களைச் சுண்டியெறிந்து "விளையாடுவதை வெறுத்து வந்தார்கள்' அல்லது "அதைத் தடை செய்துவந்தார்கள்' என்று நான் உன்னிடம் சொல்கிறேன். பிறகு (மறுபடியும்) நீ சிறிய கற்களைச் சுண்டியெறிந்து விளையாடுவதைக் காண்கிறேனே! நான் உன்னிடம் இவ்வளவு இவ்வளவு காலம் பேசமாட்டேன்" என்று கூறினேன்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அல்முகஃப்பல் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

3953 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அல்முகஃப்பல் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறிய கற்களைச் சுண்டியெறிந்து விளையாட வேண்டாமெனத் தடை விதித்தார்கள்" என்று அப்துல்லாஹ் பின் அல் முகஃப்பல் (ரலி) அவர்கள் கூறியதாக இடம் பெற்றுள்ளது.
முஹம்மத் பின் ஜஅஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவ்வாறு சிறிய கற்களைச் சுண்டியெறிவதால் அது எதிரியை வீழ்த்திவிடவோ வேட்டைப் பிராணியை வேட்டையாடிவிடவோ செய்வதில்லை. மாறாக, அது பல்லை உடைக்கலாம்; கண்ணைப் பறித்துவிடலாம்' என்று கூறினார்கள்" என்றும் அப்துல்லாஹ் பின் அல்முகஃப்பல் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.
அப்துர் ரஹ்மான் பின் மஹ்தீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அது எதிரியை வீழ்த்தி விடாது" என்பது மட்டுமே இடம்பெற்றுள்ளது. "கண்ணைப் பறித்துவிடலாம்" எனும் குறிப்பு இல்லை.

3954 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
தம் நண்பர் ஒருவர் சிறிய கற்களைச் சுண்டி விளையாடிக்கொண்டிருப்பதைக் கண்ட அப்துல்லாஹ் பின் முகஃப்பல் (ரலி) அவர்கள், அவ்வாறு விளையாட வேண்டாமெனத் தடுத்தார்கள். மேலும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறிய கற்களைச் சுண்டியெறிந்து விளையாட வேண்டாமெனத் தடைசெய்தார்கள். அவ்வாறு

சுண்டியெறிவதால் எந்தப் பிராணியையும் வேட்டையாடவும் முடியாது; எந்த எதிரியையும் வீழ்த்தவும் முடியாது. மாறாக, அது பல்லை உடைக்கலாம்; கண்ணைப் பறித்துவிடலாம் என்று கூறினார்கள்" என்றார்கள்.

பிறகு மறுபடியும் அந்த நண்பர் சிறிய கற்களைச் சுண்டியெறிந்து விளையாடினார். அப்போது அப்துல்லாஹ் பின் முகஃப்பல் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறிய கற்களைச் சுண்டியெறிந்து விளையாட வேண்டாமெனத் தடை செய்தார்கள் என்று நான் உனக்குச் சொல்கிறேன். நீ மறுபடியும் சிறிய கற்களைச் சுண்டியெறிகிறாயே! (இனி) நான் உன்னிடம் ஒருபோதும் பேசமாட்டேன்" என்று கூறிவிட்டார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 11 பிராணிகளை அறுக்கும்போதும், (மரண தண்டனைக் கைதிகளுக்கு) மரண தண்டனை நிறைவேற்றும் போதும் எளிய முறையைக் கையாளுமாறும், கத்தியை கூர்மையாகத் தீட்டிக் கொள்ளுமாறும் வந்துள்ள கட்டளை.**

3955 ஷத்தாத் பின் அவ்ஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் இரண்டு விஷயங்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து மனனமிட்டுள்ளேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ் எல்லாவற்றிலும் எளிய முறையை விதியாக்கியுள்ளான். எனவே,கொல்லும்போதும் எளிய முறையில் கொல்லுங்கள். அறுக்கும்போதும் எளிய முறையில் அறுங்கள். உங்களில் ஒருவர் அறுப்பதற்கு முன் கத்தியைத் தீட்டிக்கொள்ளட்டும். அறுக்கப்படும் பிராணியை ஆசுவாசப்படுத்தட்டும்.

- மேற்கண்ட ஹதீஸ் ஷத்தாத் பின் அவ்ஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 12 விலங்குகளைக் கட்டிவைத்து அம்பெய்து கொல்வது தடை செய்யப்பட்டதாகும்.**

3956 ஹிஷாம் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் (ஒரு தடவை) என் பாட்டனார் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களுடன் (பஸ்ராவின் துணை ஆளுநரான) ஹகம் பின் அய்யூபின் இல்லத்திற்குச் சென்றேன். அங்கு சிலர், கோழியொன்றைக் கட்டி வைத்து அதன்மீது அம்பெய்துகொண்டிருந்தனர். இதைக் கண்ட அனஸ் (ரலி) அவர்கள், "விலங்குகளைக் கட்டிவைத்து அம்பெய்து கொல்வதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3956-ஆ நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(அம்பெய்து பயிற்சி பெறுவதற்காக) எந்த உயிரினத்தையும் இலக்காக ஆக்காதீர்கள்.

இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3957 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள், கோழி ஒன்றைக் கட்டிவைத்து அதன்மீது அம்பெய்து கொண்டிருந்த சிலரைக் கடந்து சென்றார்கள். இப்னு உமர் (ரலி) அவர்களைக் கண்டவுடன் அதை அப்படியே விட்டுவிட்டு அவர்கள் சிதறியோடிவிட்டனர். இப்னு உமர் (ரலி) அவர்கள், "இதைச் செய்தவர் யார்? இவ்வாறு செய்பவர்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சபித்தார்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

- சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) இப்னு உமர் (ரலி) அவர்கள், பறவையொன்றைக் கட்டிவைத்து அதன்மீது அம்பெய்துகொண்டிருந்த குறைஷி இளைஞர்கள் சிலரைக் கடந்து சென்றார்கள். அவர்கள் (குறி) தவறவிடும் அம்புகள் ஒவ்வொன்றும் பறவையின் உரிமையாளருக்கு உரியவை என முடிவு செய்திருந்தனர்.
இப்னு உமர் (ரலி) அவர்களைக் கண்டவுடன் அவர்கள் சிதறியோடிவிட்டனர். அப்போது இப்னு உமர் (ரலி) அவர்கள், "இதைச் செய்தவர் யார்? இவ்வாறு செய்பவர்களை அல்லாஹ் சபித்துள்ளான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அம்பெய்து பயிற்சி பெறுவதற்காக) எந்த உயிரினத்தையும் இலக்காக ஆக்கியவனைச் சபித்தார்கள்" என்று சொன்னார்கள்.

3958 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அம்பெய்து பயிற்சி பெறுவதற்காக) எந்த உயிர் பிராணியும் கட்டிவைத்துக் கொல்லப்படுவதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 35 - குர்பானிப் பிராணிகள்

## பாடம் : 1 குர்பானி கொடுக்கப்படும் நேரம்.

3959 ஜுன்தப் பின் (அப்தில்லாஹ் பின்) சுஃப்யான் அல்பஜலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் துல்ஹஜ் பத்தாவது நாளன்று (பெருநாள் தொழுகையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் கலந்துகொண்டேன். அவர்கள் (பெருநாள்) தொழுகையைத் தொழுது சலாம் கொடுத்தார்களோ இல்லையோ, அங்கு குர்பானிப் பிராணிகளின் இறைச்சியைக் கண்டார்கள். நபியவர்கள் தொழுது முடிப்பதற்கு முன்பே அவை அறுக்கப்பட்டிருந்தன. எனவே, "தாம் தொழுவதற்கு முன்பே குர்பானிப் பிராணியை அறுத்துவிட்டவர்' அல்லது "நாம் தொழுவதற்கு முன்பே (குர்பானியை அறுத்துவிட்டவர்)' அதற்குப் பதிலாக மற்றொரு பிராணியை அறுக்கட்டும். (தொழுகை முடியும்வரை) அறுக்காமலிருந்தவர் தொழுகைக்குப் பின் அல்லாஹ்வின் பெயர் ("பிஸ்மில்லாஹ்...')சொல்லி அறுக்கட்டும்!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3960 ஜுன்தப் பின் சுஃப்யான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஈதுல் அள்ஹா அன்று (பெருநாள் தொழுகையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் கலந்துகொண்டேன். அவர்கள் மக்களுக்குத் தொழுவித்து முடித்ததும் குர்பானி கொடுக்கப்பட்ட ஆடுகளைக் கண்டார்கள்.
அப்போது "தொழுகைக்கு முன்பே குர்பானிப் பிராணியை அறுத்துவிட்டவர், அதற்குப் பதிலாக மற்றோர் ஆட்டை அறுக்கட்டும். (தொழுகை முடியும்வரை) அறுக்காமலிருந்தவர், இப்போது (தொழுகை முடிந்தபின்) அல்லாஹ்வின் பெயர் சொல்லி அறுக்கட்டும்!" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜுன்தப் பின் சுஃப்யான் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அல்லாஹ்வின் பெயர் சொல்லி' எனும் சொற்றொடர் இடம்பெற்றுள்ளது.

3961 ஜுன்தப் பின் சுஃப்யான் அல்பஜலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுப் பெருநாளன்று (தொழுகையில்) கலந்துகொண்டேன். அவர்கள் (குத்பா-உரை நிகழ்த்துவதற்கு முன்பே) தொழுதுவிட்டுப் பிறகு உரை நிகழ்த்தினார்கள். அப்போது, "தொழுவதற்கு முன்பே (குர்பானிப் பிராணியை) அறுத்துவிட்டவர், அதனிடத்தில் (அதற்குப் பதிலாக) வேறொன்றை (தொழுகைக்குப் பின்) அறுக்கட்டும். (தொழுகைக்கு முன்பே) அறுக்காமலிருந்தவர் (தொழுகை முடிந்தவுடன்) அல்லாஹ்வின் பெயர் சொல்லி அறுக்கட்டும்!" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜுன்தப் பின் சுஃப்யான் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3962 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாய்மாமா அபூபுர்தா (ரலி) அவர்கள் (பெருநாள்) தொழுகைக்கு முன்பே குர்பானி கொடுத்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது இறைச்சி(க்காக

அறுக்கப்பட்ட) ஆடுதான். (குர்பானி ஆடன்று)" என்று சொன்னார்கள். உடனே அபூபுர்தா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என்னிடம் ஒரு வயதுக்குட்பட்ட வெள்ளாடு (குட்டி) ஒன்று உள்ளது. (அதை நான் குர்பானி கொடுக்கட்டுமா?)" என்று வினவினார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதை அறுத்து (குர்பானி) கொடுங்கள். (ஆனால்,) இது மற்ற மக்களுக்குப் பொருந்தாது" என்று சொல்லிவிட்டு, "தொழுகைக்கு முன்பே (குர்பானிப் பிராணியை) அறுப்பவர்,தமக்காகவே அதை அறுக்கிறார். தொழுகைக்குப் பிறகு (அதை) அறுப்பவரின் வழிபாடு முழுமையடைந்துவிட்டது. அவர் முஸ்லிம்களின் வழிமுறையைப் பின்பற்றிவிட்டார்" என்று கூறினார்கள்.

3963 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாய்மாமா அபூபுர்தா பின் நியார் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள், குர்பானி கொடுப்பதற்கு முன்பே குர்பானி கொடுத்துவிட்டு, "அல்லாஹ்வின் தூதரே! இது, (பிறரிடம்) இறைச்சி (கேட்பது) விரும்பத்தகாத நாளாகும். நான் என் குடும்பத்தாருக்கும் அண்டை வீட்டாருக்கும் என் வீட்டாருக்கும் உணவளிப்பதற்காக (தொழுகைக்கு) முன்பே அறுத்துவிட்டேன்" என்று கூறினார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மீண்டும் ஒரு பிராணியை அறுத்து (குர்பானி) கொடுப்பீராக!" என்று சொன்னார்கள். அபூபுர்தா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என்னிடம் ஒரு வயதுடைய பால்குடி மறவாத பெட்டை வெள்ளாட்டுக் குட்டி உள்ளது. அது இறைச்சி ஆடுகள் இரண்டைவிடச் சிறந்தது (அதை இப்போது குர்பானி கொடுக்கட்டுமா?)" என்று வினவினார்கள். அதற்கு "அது (தொழுகைக்கு முன்பும், தொழுகைக்குப் பின்பும் கொடுத்த) உம்முடைய இரு குர்பானிகளில் சிறந்ததாகும். ஒரு வயதுக்குட்பட்ட வெள்ளாடு உமக்குப் பிறகு வேறெவருக்கும் செல்லாது" என்று சொன்னார்கள்.
- பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளில் எங்களிடையே உரையாற்றினார்கள். அப்போது "(பெருநாள் தொழுகை) தொழாத வரை உங்களில் யாரும் அறுத்துப் பலியிடவேண்டாம்" என்று கூறினார்கள். அப்போது என் தாய்மாமா (அபூபுர்தா (ரலி) அவர்கள்), "அல்லாஹ்வின் தூதரே! இது, (பிறரிடம்) இறைச்சி (கேட்பது) விரும்பத்தகாத நாளாகும்..." என்று கூறிவிட்டு, மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று வினவினார்கள்.

3964 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஈதுல் அள்ஹா பெருநாளன்று நிகழ்த்திய உரையில்), "யார் நமது தொழுகையைத் தொழுது, நமது தொழும் திசையை (கிப்லா) முன்னோக்கி, நமது குர்பானி வழிபாட்டைச் செய்கிறாரோ அவர் தொழுவதற்கு முன் (குர்பானிப் பிராணியை) அறுக்க வேண்டாம்" என்று சொன்னார்கள்.
அப்போது என் தாய்மாமா (அபூபுர்தா (ரலி) அவர்கள்), "அல்லாஹ்வின் தூதரே! நான் என் மகனுக்காக (தொழுகைக்கு) முன்பே குர்பானி கொடுத்துவிட்டேனே?" என்று கேட்க,

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது நீங்கள் உங்களுடைய வீட்டாருக்காக அவசரப்பட்டு அறுத்துவிட்ட ஒன்றாகும். (அது குர்பானியாகாது)" என்று கூறினார்கள்.
அதற்கு என் தாய்மாமா, "என்னிடம் இரண்டு ஆடுகளைவிடச் சிறந்த ஆடொன்று உள்ளது (அதை நான் அறுக்கலாமா?)" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதை அறுத்து குர்பானி கொடுப்பீராக! அது (உமது) குர்பானிப் பிராணியில் சிறந்ததாகும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3695 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (ஈதுல் அள்ஹா பெருநாளன்று) "இன்றைய தினம் நாம் முதலாவதாகச் செய்ய வேண்டியது யாதெனில், முதலில் நாம் (பெருநாள் தொழுகை) தொழுவோம். பிறகு தொழுகையிலிருந்து திரும்பிச் சென்று குர்பானிப் பிராணிகளை அறுப்போம். இதை யார் செய்கிறாரோ அவர் நமது வழியை அடைந்து கொண்டவர் ஆவார். (பெருநாள் தொழுகைக்கு முன்பே) யார் குர்பானிப் பிராணியை அறுக்கிறாரோ அவர் தம் குடும்பத்தாருக்காக முன்கூட்டியே தயார் செய்த (சாதாரண) இறைச்சியாகவே அது அமையும். அது (குர்பானி) வழிபாட்டில் எதிலும் சேராது" என்று சொன்னார்கள்.
(என் தாய்மாமா) அபூபுர்தா பின் நியார் (ரலி) அவர்கள் தொழுகைக்கு முன்பே குர்பானிப் பிராணியை அறுத்துவிட்டிருந்தார். அவர் (எழுந்து), "என்னிடம் ஒரு வயதுக்குட்பட்ட (வெள்ளாட்டு) குட்டி ஒன்று இருக்கிறது. அது ஒரு வயது பூர்த்தியான ஆட்டைவிடச் சிறந்ததாகும் (அதைக் குர்பானி கொடுக்கலாமா?)" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதை அறுத்து (குர்பானி கொடுத்து)விடுவீராக! உமக்குப் பின்னர் வேறெவருக்கும் அது செல்லாது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளன்று தொழுகைக்குப் பிறகு எங்களிடையே உரையாற்றினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3966 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளன்று எங்களிடையே உரையாற்றினார்கள். அப்போது அவர்கள், "தொழுவதற்கு முன்பே யாரும் குர்பானி கொடுக்க வேண்டாம்" என்று கூறினார்கள். ஒரு மனிதர், "என்னிடம் ஒரு வயதுக்குட்பட்ட பால்குடி மறவாத வெள்ளாட்டுக் குட்டி ஒன்று உள்ளது. அது இரு இறைச்சி ஆடுகளைவிடச் சிறந்ததாகும்" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அதையே நீர் குர்பானி கொடுப்பீராக! ஒரு வயதுக்குட்பட்ட வெள்ளாட்டுக் குட்டி உமக்குப் பிறகு வேறெவருக்கும் செல்லாது"என்று கூறினார்கள்.

3967 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தாய்மாமா) அபூபுர்தா (ரலி) அவர்கள் (பெருநாள்) தொழுகைக்கு முன்பே (குர்பானிப் பிராணியை) அறுத்து விட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், "அதற்குப் பதிலாக வேறொன்றை அறு(த்துக் குர்பானி கொடு)ப்பீராக!" என்று கூறினார்கள். உடனே அபூ புர்தா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என்னிடம் ஒரு வயதுடைய வெள்ளாடு ஒன்றைத் தவிர வேறெதுவுமில்லை.
-அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: "அது ஒரு வயது பூர்த்தியான ஆட்டைவிடச் சிறந்ததாகும்"என்று அபூபுர்தா (ரலி) அவர்கள் சொன்னதாக (எனக்கு அறிவிக்கப்பட்டது என்று) நான் எண்ணுகிறேன்.–
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதையே அதற்குப் பதிலாக அறுத்துக் கொள்வீராக! உமக்குப் பிறகு வேறெவருக்கும் இது செல்லாது" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அது ஒரு வயது பூர்த்தியான ஆட்டைவிடச் சிறந்ததாகும் (என்று அபூபுர்தா (ரலி) அவர்கள் சொன்னதாக எனக்கு அறிவிக்கப்பட்டது என்று நான் எண்ணுகிறேன்)" என ஷுஅபா (ரஹ்) அவர்கள் ஐயப்பாட்டுடன் கூறியுள்ள குறிப்பு இடம்பெறவில்லை.

3968 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நஹ்ரு'டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளன்று, "(பெருநாள்) தொழுகைக்கு முன்பே குர்பானி கொடுத்துவிட்டவர் மறுபடியும் குர்பானி கொடுக்கட்டும்!" என்று கூறினார்கள். உடனே ஒரு மனிதர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! இது இறைச்சி விரும்பி உண்ணப்படும் நாள்" என்று கூறி, தம் (வீட்டார் மற்றும்) அண்டை அயலாரின் தேவை பற்றி(யும் அதனாலேயே தாம் தொழுகைக்கு முன்பே அறுத்தது பற்றியும்) குறிப்பிட்டார். மேலும், தம்மிடம் ஒரு வயதுக்குட்பட்ட வெள்ளாடு ஒன்று இருப்பதாகவும், அது இறைச்சி ஆடுகள் இரண்டைவிடச் சிறந்தது என்றும் அதை இப்போது குர்பானி கொடுக்கலாமா என்றும் கேட்டார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதியளித்தார்கள். இந்த அனுமதி அவரல்லாத மற்றவருக்கும் பொருந்துமா, அல்லது பொருந்தாதா என்பது எனக்குத் தெரியாது.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இரு செம்மறியாட்டுக் கடாக்களின் பக்கம் சென்று அவ்விரண்டையும் அறுத்தார்கள். மக்கள் ஒரு சிறிய ஆட்டு மந்தைக்குச் சென்று (அதிலிருந்த) ஆடுகளைத் தமக்குள் பிரித்துக்கொண்ட(பின் குர்பானி கொடுத்த)னர்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3969 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஈதுல் அள்ஹா பெருநாள் அன்று) தொழுதுவிட்டுப் பிறகு உரையாற்றினார்கள். அப்போது தொழுகைக்கு முன்பே குர்பானிப் பிராணியை அறுத்து விட்டவர்களை மீண்டும் குர்பானி கொடுக்குமாறு கட்டளையிட்டார்கள். மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3970 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஈதுல் அள்ஹா பெருநாளன்று எங்களிடையே உரையாற்றினார்கள். அப்போது இறைச்சி மணம் வருவதைக் கண்டு குர்பானிப் பிராணிகளை (தொழுகைக்கு முன்பே) அறுக்க வேண்டாமெனத் தடை விதித்தார்கள். "யார் (தொழுகைக்கு முன்பே) குர்பானிப் பிராணியை அறுத்தாரோ அவர் மறுபடியும் குர்பானி கொடுக்கட்டும்!" என்று கூறினார்கள். மற்ற விவரங்கள் மேற்கண்ட இரு ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 2 குர்பானிப் பிராணியின் வயது.

3971 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓராண்டு பூர்த்தியான ஆட்டையே அறுத்துக் குர்பானி கொடுங்கள். அது கிடைக்காவிட்டால் செம்மறியாட்டில் (ஆறு மாதத்திற்கு மேல்) ஒரு வயதுக்குட்பட்டதை அறுத்துக் குர்பானி கொடுங்கள்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3972 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மதீனாவில் "நஹ்ரு' டைய (துல்ஹஜ் பத்தாவது) நாளன்று எங்களுக்கு (பெருநாள்) தொழுகை நடத்தினார்கள். அப்போது சிலர், நபி (ஸல்) அவர்கள் குர்பானிப் பிராணியை அறுத்துவிட்டார்கள் என எண்ணி,முன்பே சென்று (தங்களுடைய குர்பானிப் பிராணிகளை) அறுத்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் தாம் அறுப்பதற்கு முன்பே அறுத்துவிட்டவர் அதற்குப் பதிலாக மீண்டும் ஒரு பிராணியை அறுக்க வேண்டும். தாம் அறுப்பதற்கு முன் எவரும் அறுக்க வேண்டாமென்று உத்தரவிட்டார்கள்.

3973 உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்குமாறு சில குர்பானிப் பிராணிகளை என்னிடம் கொடுத்தார்கள். (அவ்வாறே நான் பங்கிட்டு முடித்த பின்) ஒரு வயதுக்குட்பட்ட வெள்ளாட்டுக்குட்டி ஒன்று எஞ்சியது. அது பற்றி நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறியபோது, "அதை நீரே (அறுத்து) குர்பானி கொடுப்பீராக!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
குதைபா பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ("தம் தோழர்களுக்கு' என்பதைக் குறிக்க "அலா அஸ்ஹாபிஹி'என்பதற்குப் பதிலாக) "அலா ஸஹாபத்திஹி' எனும் சொற்றொடர் (மூலத்தில்) இடம்பெற்றுள்ளது.

3974 உக்பா பின் ஆமிர் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே குர்பானிப் பிராணிகளைப் பங்கிட்டார்கள். அப்போது எனக்கு (எனது பங்காக) ஒரு வயதுக்குட்பட்ட வெள்ளாட்டுக்

குட்டி ஒன்று கிடைத்தது. நான், "அல்லாஹ்வின் தூதரே! ஒரு வயதுக்குட்பட்ட வெள்ளாடு தான் எனக்குக் கிடைத்தது" என்று சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதை (அறுத்து) நீர் குர்பானி கொடுப்பீராக!" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களிடையே குர்பானிப் பிராணிகளைப் பங்கிட்டார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

**பாடம் : 3 குர்பானிப் பிராணியை அறுக்கும் பொறுப்பை வேறெவரிடமும் ஒப்படைக்காமல் நேரடியாகத் தாமே (தமது கையால்) அறுத்துக் குர்பானி கொடுப்பதும் பிராணியை அறுக்கும்போது அல்லாஹ்வின் பெயரும் தக்பீரும் கூறுவதும் விரும்பத்தக்கவை ஆகும்.**

3975 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், கொம்புள்ள கறுப்பு வெள்ளை கலந்த இரண்டு செம்மறியாட்டுக் கடாக்களைக் குர்பானி கொடுத்தார்கள். அவ்விரண்டையும் தமது கரத்தால் அறுத்தார்கள். அப்போது அல்லாஹ்வின் பெயர் ("பிஸ்மில்லாஹ்') கூறினார்கள். தக்பீரும் ("அல்லாஹு அக்பர்') சொன்னார்கள். மேலும், தமது காலை அவற்றின் பக்கவாட்டில் வைத்(துக்கொண்டு அறுத்)தார்கள்.

3976 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், கொம்புள்ள கறுப்பு வெள்ளை கலந்த இரு செம்மறியாட்டுக் கடாக்களைக் குர்பானி கொடுத்தார்கள். அவர்கள் தமது பாதத்தை அவற்றின் பக்கவாட்டின் மீது வைத்ததையும் அல்லாஹ்வின் பெயர் கூறி, தக்பீர் (அல்லாஹு அக்பர்) சொல்லி அவற்றைத் தமது கையால் அறுத்ததையும் நான் பார்த்தேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறியதாக இடம் பெற்றுள்ளது: நான் கத்தாதா (ரஹ்) அவர்களிடம் "நீங்கள் இதை அனஸ் (ரலி) அவர்களிடம் செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு கத்தாதா (ரஹ்) அவர்கள் "ஆம்' என்று விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பிஸ்மில்லாஹி வல்லாஹு அக்பர்' (அல்லாஹ்வின் பெயரால்,அல்லாஹ் பெரியவன்) என்று கூறியதையும் நான் பார்த்தேன்" என்று இடம்பெற்றுள்ளது.

3977 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கறுப்பில் நடக்கின்ற, கறுப்பில் படுக்கின்ற, கறுப்பில் பார்க்கின்ற (கால்கள்,வயிறு, கண் ஆகிய பகுதிகள் கறுப்பு நிறத்தில் அமைந்த) கொம்புள்ள

செம்மறியாட்டுக் கடா ஒன்றைக் கொண்டுவருமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே குர்பானிக்காக அது கொண்டுவரப்பட்டபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "ஆயிஷா! அந்தக் கத்தியை எடு" என்றார்கள். பிறகு "அதை ஒரு கல்லில் நன்றாகத் தீட்டு" என்றார்கள். அவ்வாறே நான் செய்தேன்.
பிறகு அந்தக் கத்தியை வாங்கி, அந்தச் செம்மறியாட்டைப் பிடித்து, சரித்துப் படுக்கவைத்து அறுத்தார்கள். (அறுப்பதற்கு முன்) "பிஸ்மில்லாஹ். அல்லாஹும்ம தகப்பல் மின் முஹம்மதின் வ ஆலி முஹம்மதின் வமின் உம்மத்தி முஹம்மதின்' (அல்லாஹ்வின் பெயரால்! இறைவா! முஹம்மதிடமிருந்தும் முஹம்மதின் குடும்பத்தாரிடமிருந்தும் முஹம்மதின் சமுதாயத்தாரிடமிருந்தும் இதை ஏற்றுக் கொள்வாயாக!)' என்று கூறி, அதை அறுத்தார்கள்.

**பாடம் : 4 பல், நகம் மற்றும் எலும்பு ஆகியவை தவிர இரத்தத்தை வழிந்தோடச் செய்யும் வேறு எந்தப் பொருளாலும் பிராணியை அறுக்கலாம்.**

3978 ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்) "அல்லாஹ்வின் தூதரே! (ஒட்டகங்களை அறுக்கக் கத்திகளைப் பயன்படுத்திவிட்டால்) நாளை (கூரிய) கத்திகள் இல்லாத நிலையில் நாங்கள் எதிரிகளைச் சந்திக்க நேரிடுமே?" என்று கேட்டேன்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(பிராணி சாவதற்கு முன்பாகக் கூர்மையான ஏதேனும் ஒரு பொருளால்) "விரைவாக அறுத்துவிடுங்கள்' அல்லது "உயிரிழக்கச் செய்துவிடுங்கள்'. இரத்தத்தை வழிந்தோடச் செய்யும் எதைக் கொண்டும் அறுக்கும்போது அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டால், அதை நீங்கள் உண்ணலாம். பல்லாலும் நகத்தாலும் (அறுத்தல்) கூடாது. (இந்த இரண்டாலும் ஏன் அறுக்கலாகாது என்பதற்கான காரணத்தை) நான் உங்களுக்குத் தெரிவிக்கிறேன். பற்களோ எலும்பு இனமாகும். நகங்களோ (இறைமறுப்பாளர்களான) அபிசீனியர்களின் கத்திகளாகும்" என்று கூறினார்கள்.
(அந்தப் போரில்) எங்களுக்குச் சில ஒட்டகங்களும் ஆடுகளும் போர்ச்செல்வமாகக் கிடைத்தன. அவற்றிலிருந்து ஓர் ஒட்டகம் மிரண்டு ஓடிவிட்டது. உடனே (நபித்தோழர்களில்) ஒருவர் அந்த ஒட்டகத்தைக் குறிவைத்து அம்பெய்து, அதை ஓடவிடாமல் தடுத்து நிறுத்தினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வனவிலங்குகளில் கட்டுக்கடங்காதவை இருப்பதைப் போன்றே, இந்தப் பிராணிகளிலும் கட்டுக்கடங்காதவை சில உள்ளன. இவற்றில் உங்களை மீறிச் செல்பவற்றை இவ்வாறே (அம்பெய்து நிற்கச்) செய்யுங்கள்" என்று கூறினார்கள்.

3979 மேற்கண்ட ஹதீஸ் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் "திஹாமா' பகுதியிலுள்ள "துல்ஹுலைஃபா' வில் இருந்தோம். அப்போது நாங்கள் (போர்ச் செல்வத்திலிருந்து) சில ஆடுகளையும் ஒட்டகங்களையும் பெற்றோம். மக்கள் அவசரப்பட்டு (அவற்றைப் பங்கிடுவதற்கு

முன்பாகவே அறுத்து)ப் பாத்திரங்களை (அடுப்புகளில்) ஏற்றி (சமைக்கத் தொடங்கி) விட்டார்கள்.
(இதையறிந்த) நபி (ஸல்) அவர்கள் பாத்திரங்களைக் கவிழ்த்துவிடும்படி உத்தரவிட, அவ்வாறே அவை கவிழ்க்கப்பட(டு அவற்றிலிருந்த இறைச்சிகள் வெளியே கொட்டப்பட்)டன. பிறகு பத்து ஆடுகளை ஓர் ஒட்டகத்திற்குச் சமமாக்கி (பங்கிடலா)னார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

3980 ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் (ஒட்டகங்களை அறுக்க வாட்களை இன்று பயன்படுத்திவிட்டால்) நாளை எங்களிடம் வாட்களே இல்லாத நிலையில் எதிரிகளைச் சந்திக்க நேரிடுமே! ஆகவே, (கூர்மையான) மூங்கில் கழியால் (ஒட்டகங்களை) அறுக்கலாமா?" என்று கேட்டோம். மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
"அப்போது (போர்ச் செல்வமாக நாங்கள் பெற்ற) ஒட்டகங்களிலிருந்து ஒன்று மிரண்டு ஓடியது. நாங்கள் அம்பெய்து அதை (ஓடவிடாமல்) தடுத்து நிறுத்தினோம்" என்றும் இந்த அறிவிப்பில் இடம்பெற்றுள்ளது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "எங்களிடம் (கூரான) வாட்கள் இல்லாத நிலையில் (நாங்கள் எதிரிகளைச் சந்திக்க நேரிடுமே!) நாங்கள் (கூரான) மூங்கில் கழியால் (ஒட்டகங்களை) அறுக்கலாமா?" என்று கேட்டதாக இடம்பெற்றுள்ளது.

3981 மேற்கண்ட ஹதீஸ் ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நான் (நபி (ஸல்) அவர்களிடம்) "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் (இன்று ஒட்டகங்களை அறுக்க வாட்களைப் பயன்படுத்திவிட்டால்) நாளை எங்களிடம் (கூரான) வாட்கள் இல்லாத நிலையில் எதிரிகளைச் சந்திக்க நேரிடுமே!"என்று கேட்டேன் என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
அதில் "மக்கள் அவசரப்பட்டு (அவற்றைப் பங்கிடுவதற்கு முன்பாகவே அறுத்து)ப் பாத்திரங்களை (அடுப்புகளில்) ஏற்றி (சமைக்கத் தொடங்கி)விட்டனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் பாத்திரங்களைக் கவிழ்க்கும்படி உத்தரவிட அவ்வாறே அவை கவிழ்க்கப்பட்டன" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 5 இஸ்லாத்தின் ஆரம்பத்தில் குர்பானி இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேல் சேமித்து வைக்கக் கூடாது என விதிக்கப்பெற்றிருந்த தடையும், பின்னர் அது மாற்றப்பட்டு எத்தனை நாட்களுக்கு வேண்டுமானாலும் சேமித்துவைக்கலாம் என்ற (புதிய) அனுமதி வந்த விவரமும்.**

3982 அபூஉபைத் சஅத் பின் உபைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (கலீஃபா) அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களுடன் பெருநாள் தொழுகையில் கலந்துகொண்டேன். அவர்கள் உரை நிகழ்த்துவதற்கு முன்பே பெருநாள் தொழுகை தொழுவித்தார்கள். (தமது உரையில்) "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நாம் நமது குர்பானி இறைச்சிகளை மூன்று நாட்களுக்கு மேல் (சேமித்துவைத்து) உண்பதற்குத் தடை விதித்தார்கள்" என்று கூறினார்கள்.

3983 அபூஉபைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களுடன் பெருநாள் தொழுகையில் கலந்துகொண்டுள்ளேன். பிறகு (கலீஃபா) அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களுடனும் தொழுதிருக்கிறேன். அலீ (ரலி) அவர்கள் உரையாற்றுவதற்கு முன் எங்களுக்குப் பெருநாள் தொழுகை தொழுவித்தார்கள்.
பிறகு மக்களிடையே உரையாற்றினார்கள். அப்போது, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மூன்று நாட்களுக்கு மேலாக உங்கள் குர்பானி இறைச்சிகளை நீங்கள் உண்பதற்குத் தடை விதித்தார்கள். எனவே, (மூன்று நாட்களுக்கு மேலாகக் குர்பானி இறைச்சிகளை) உண்ணாதீர்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3984 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யாரும் தமது குர்பானி இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேல் உண்ண வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3985 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மூன்று நாட்களுக்கு மேலாகக் குர்பானி இறைச்சி உண்ணப்படுவதைத் தடைசெய்தார்கள்.
இதன் அறிவிப்பாளரான சாலிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இப்னு உமர் (ரலி) அவர்கள், குர்பானி இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேலாக உண்ணமாட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

3986 அப்துல்லாஹ் பின் அபீபக்ர் பின் முஹம்மத் பின் அம்ர் பின் ஹஸ்ம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் வாகித் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குர்பானி இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேலாக உண்பதற்குத் தடை விதித்துள்ளார்கள்" என்று கூறினார்கள். இதை நான் அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அம்ரா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: அப்துல்லாஹ் பின் வாகித் சொன்னது உண்மையே. ஆயிஷா (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறியதை நான் கேட்டுள்ளேன்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் ஈதுல் அள்ஹா பெருநாள் சமயத்தில் கிராமப்புற ஏழை மக்களில் சிலர் (மதீனாவுக்கு) வந்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களிடம்), "(குர்பானி இறைச்சிகளை) மூன்று நாட்களுக்கு மட்டுமே சேமித்துவையுங்கள். பிறகு எஞ்சியதை தர்மம் செய்யுங்கள்" என்று கூறினார்கள். அதன் பின் (அடுத்த ஆண்டு) ஆனபோது மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! மக்கள் தங்களது குர்பானிப் பிராணியி(ன் தோலி)லிருந்து தோல் பை தயாரித்துக் கொள்கின்றனர். அவற்றின் இறைச்சியிலிருந்து கொழுப்பை உருக்கி எடுத்துக்கொள்கின்றனர்" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதனால் என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "குர்பானிப் பிராணியின் இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேலாக உண்ண வேண்டாம் எனத் தாங்கள் தடை செய்தீர்களே?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நம்மை நாடி) வந்திருந்த (ஏழை) மக்களுக்காகவே (மூன்று நாட்களுக்கு மேலாகக் குர்பானி இறைச்சியை உண்ண வேண்டாமென) உங்களைத் தடுத்தேன். இனி, நீங்கள் குர்பானி இறைச்சியை உண்ணுங்கள். சேமித்துவையுங்கள். தான தர்மமும் செய்யுங்கள்" என்று கூறினார்கள்.

3987 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் குர்பானி இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேலாக உண்ண வேண்டாம் என (முதலில்) தடை விதித்தார்கள். பின்னர் (அந்தத் தடையை நீக்கி) "நீங்களும் உண்ணலாம். பயணத்திலும் எடுத்துச் செல்லலாம். சேமித்தும்வைக்கலாம்" என்று கூறினார்கள்.

3988 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் மினாவில் தங்கும் நாளிலிருந்து மூன்று நாட்களுக்கு மேல் குர்பானிப் பிராணிகளின் இறைச்சியை உண்ணாமல் இருந்தோம். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இப்போது நீங்கள் உண்ணலாம்;சேமித்தும்வைக்கலாம்" என்று கூறி, எங்களுக்கு அனுமதி வழங்கினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் அதாஉ (ரஹ்) அவர்களிடம் "நாங்கள் மதீனா வரும்வரை (சேமித்துவைத்தோம்)" என்று ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்' என்று விடையளித்தார்கள்.

3989 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் குர்பானிப் பிராணிகளின் இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேல் சேமித்து வைக்காமல் இருந்துவந்தோம். பின்னர் அதை (மூன்று நாட்களுக்கு மேல்) பயண உணவாக எடுத்துச் சென்று, அதை உண்ணுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.

3990 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் மதீனாவுக்குச் செல்லும்போது, குர்பானிப் பிராணியின் இறைச்சியைப் பயண உணவாக எடுத்துச் செல்வோம்.

3991 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "மதீனாவாசிகளே! குர்பானிப் பிராணிகளின் இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேல் உண்ணாதீர்கள்" என்று கூறினார்கள்.
அப்போது மதீனாவாசிகள், தங்களுக்குக் குழந்தை குட்டிகளும் (இன்பம் துன்பங்களில் பங்கெடுக்கும்) உதவியாளர்களும் ஊழியர்களும் இருப்பதாக(வும் அவர்களுக்குக் கொடுப்பதற்கு இறைச்சி வேண்டும் எனவும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் முறையிட்டனர். எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்களும் உண்ணுங்கள். (பிறருக்கும்) உண்ணக் கொடுங்கள். சேமித்தும் வையுங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னுல் முஸன்னா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "சேமித்தும் வையுங்கள்' என்பதைக் குறிக்க "இஹ்பிஸூ' அல்லது "இத்தகிரூ' என்று ஐயப்பாட்டுடன் அப்துல் அஃலா (ரஹ்) அவர்களே அறிவித்தார்கள் என இடம்பெற்றுள்ளது.

3992 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (ஓர் ஆண்டில்) "உங்களில் குர்பானி கொடுத்தவர், மூன்று நாட்களுக்குப் பின் தமது வீட்டில் (குர்பானி இறைச்சியில்) எதையும் வைத்திருக்க வேண்டாம்" என்று கூறினார்கள். அடுத்த ஆண்டு வந்தபோது மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! கடந்த ஆண்டில் நாங்கள் செய்ததைப் போன்றே இந்த ஆண்டும் செய்ய வேண்டுமா?" என்று கேட்டார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை (அவ்வாறு செய்ய வேண்டியதில்லை); அந்த ஆண்டில் மக்களுக்கு (பஞ்சத்தால்) சிரமம் ஏற்பட்டிருந்தது. (குர்பானி இறைச்சி மூலம்) பரவலாக மக்கள் அனைவரும் பயனடைய வேண்டும் என நான் விரும்பினேன் (எனவே, மூன்று நாட்களுக்கு மேல் உண்ணவேண்டாம் எனத் தடை விதித்தேன்)" என்று பதிலளித்தார்கள்.

3993 ஸவ்பான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது குர்பானிப் பிராணியை அறுத்துவிட்டு, "ஸவ்பான்! இந்த இறைச்சியை (பயணத்தில் கொண்டுசெல்வதற்கேற்ப) தயார் செய்" என்று கூறினார்கள். நான் (அவ்வாறே தயார் செய்து) மதீனா வரும்வரை அதிலிருந்து அவர்களுக்கு உண்ணக் கொடுத்துக்கொண்டேயிருந்தேன்.

- மேற்கண்ட ஹதீஸ் ஸவ்பான் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

3994 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அவர்களின் முன்னாள் அடிமையான ஸவ்பான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
விடைபெறும் ஹஜ்ஜின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "இந்த இறைச்சியை (பயணத்தில் கொண்டு செல்வதற்கேற்ப) தயார் செய்" என்று கூறினார்கள். அவ்வாறே நான் தயார் செய்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனா சென்றடையும்வரை அதை உண்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஸவ்பான் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "விடைபெறும் ஹஜ்ஜின்போது' எனும் குறிப்பு இல்லை.

3995 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அடக்கத்தலங்களைச் சந்திக்க வேண்டாம் என உங்களுக்கு நான் தடை விதித்திருந்தேன். இனி நீங்கள் அடக்கத்தலங்களைச் சந்தியுங்கள். குர்பானிப் பிராணிகளின் இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேல் உண்ண வேண்டாமென உங்களுக்குத் தடை விதித்திருந்தேன். இனி, உங்களுக்கு எவ்வாறு தோன்றுகிறதோ அவ்வாறு அதைச் சேமித்துவையுங்கள்.
தோல் பையில் தவிர வேறெதிலும் பழச்சாறுகளை ஊற்றிவைக்க வேண்டாம் என உங்களுக்குத் தடை விதித்திருந்தேன். இனி, நீங்கள் எல்லாப் பாத்திரங்களிலும் பருகுங்கள். ஆனால், போதை தரக்கூடிய எதையும் பருகாதீர்கள்.
இதை புரைதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் புரைதா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 6 ஆடு அல்லது ஒட்டகத்தின் முதலாவது குட்டியைப் பலியிடுவதும் (அல் ஃபரஉ), ரஜப் மாதத்தின் முதல் பத்து நாட்களில் பிராணிகளைப் பலியிடுவதும் (அல்அத்தீரா).

3996 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இனி,) தலைக் குட்டி(யைப் பலியிடும் அறியாமைக் காலச் செய்கை)யும் இல்லை; (ரஜப் மாதத்தின் முதல் பத்து நாட்களில்) பிராணிகளைப் பலியிடுதலும் இல்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ராஃபிஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "(ஆடு மற்றும் ஒட்டகம் ஆகியவை ஈனும்) முதலாவது குட்டி "ஃபரஉ' ஆகும். அதை (அறியாமைக் கால) மக்கள் பலியிட்டுவந்தனர்" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 7 குர்பானி கொடுக்க எண்ணியிருப்பவர் துல்ஹஜ் மாதத்தின் (முதல்) பத்து நாட்களில் தலைமுடியையோ நகங்களையோ களைவதற்கு வந்துள்ள தடை.**

3997 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(துல்ஹஜ் மாதத்தின் முதல்) பத்து நாட்கள் வந்து, உங்களில் ஒருவர் குர்பானி கொடுப்பதற்கு எண்ணினால், அவர் தமது தலைமுடியிலிருந்தும் மேனியிலிருந்தும் (நகம், ரோமம் ஆகிய) எதையும் வெட்ட வேண்டாம்.
இதை உம்மு சலமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களிடம், "இது நபி (ஸல்) அவர்கள் கூறியதன்று எனச் சிலர் கூறுகிறார்களே!" என வினவப்பட்டது. அதற்கு அவர்கள் "இது நபி (ஸல்) அவர்கள் கூறியதுதான் என்று நான் அறிவிக்கிறேன்" என்றார்கள்.

3998 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தம்மிடம் குர்பானிப் பிராணி உள்ள ஒருவர், குர்பானி கொடுக்க விரும்பியுள்ளபோது, (துல் ஹஜ் மாதம் முதல்) பத்து நாட்கள் ஆரம்பித்துவிட்டால், அவர் முடியையோ நகங்களையோ களைய வேண்டாம்.
இதை உம்மு சலமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

3999 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் துல்ஹஜ் பிறையைக் கண்டு, உங்களில் ஒருவர் குர்பானி கொடுக்க எண்ணினால், அவர் தமது முடியையும் நகங்களையும் அகற்றாமல் இருக்கட்டும்!
இதை உம்மு சலமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4000 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யாரிடம் அவர் அறுப்பதற்கான குர்பானிப் பிராணி இருந்து, துல்ஹஜ் பிறை காணப்பட்டு விட்டால், அவர் குர்பானி கொடுக்காத வரை தமது தலைமுடியையோ நகங்களையோ சிறிதும் வெட்ட வேண்டாம்.
இதை உம்மு சலமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- அம்ர் பின் முஸ்லிம் பின் அம்மார் அல்லைஸீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஈதுல் அள்ஹா பெருநாளுக்குச் சில நாட்களுக்கு முன் நாங்கள் வெண்ணீர் குளியல் அறையில் இருந்தபோது, சிலர் தம் மறைவிடத்திலிருந்த ரோமங்களை அகற்றினர்.
அப்போது குளியலறையில் இருந்த ஒருவர், "(குர்பானி கொடுக்க எண்ணியிருப்பவர் துல்ஹஜ் முதல் பத்துநாட்களில்) இ(வ்வாறு ரோமங்களை அகற்றுவ)தை சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் வெறுக்கிறார்கள்; அல்லது அவ்வாறு அகற்ற வேண்டாமெனத் தடை செய்கிறார்கள்" என்று கூறினார்.
ஆகவே, நான் சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்களைச் சந்தித்து அதைப் பற்றி அவர்களிடம் கூறினேன். அப்போது சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள், "என் சகோதரர் மகனே! இந்த ஹதீஸ் மறக்கப்பட்டுக் கைவிடப்பட்டுவிட்டது. நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு சலமா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்

கூறியதாக மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று எனக்கு அறிவித்தார்கள்" என்று கூறி னார்கள்.
- அம்ர் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 8 அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறிப் பிராணிகளை அறுப்பது தடை செய்யப் பட்டதாகும் என்பதும் அவ்வாறு செய்பவர் சாபத்திற்குரியவர் என்பதும்.**

4001 அபுத்துஃபைல் ஆமிர் பின் வாஸிலா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (கலீஃபா) அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களிடம் இருந்தபோது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "உங்களிடம் நபி (ஸல்) அவர்கள் இரகசியமாக என்ன கூறி வந்தார்கள்?" என்று கேட்டார். இதைக் கேட்டு அலீ (ரலி) அவர்கள் கோபமுற்றார்கள். மேலும், "நபி (ஸல்) அவர்கள் மக்களிடம் மூடி மறைக்கும் விதமாக எதையும் என்னிடம் இரகசியமாகக் கூறவில்லை. எனினும், நான்கு செய்திகளை என்னிடம் கூறினார்கள்" என்றார்கள். நான், "அவை யாவை, இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே?" என்று கேட்டேன்.
அலீ (ரலி) அவர்கள், "தன் தந்தையைச் சபித்தவனை அல்லாஹ் சபிக்கின்றான். அல்லாஹ் அல்லாத மற்றவர் பெயரில் (பிராணிகளை) அறுத்தவனை அல்லாஹ் சபிக்கின்றான். (மார்க்கத்தில் இல்லாத) புதிய விஷயங்களை (மார்க்கத்தின் பெயரால்) உருவாக்கியவனுக்கு அடைக்கலம் அளித்தவனை அல்லாஹ் சபிக்கின்றான். பூமியின் (எல்லைக்கல்,மைல் கல், வரப்பு உள்ளிட்ட) அடையாளங்களை மாற்றியமை(த்து பிறர் நிலத்தை அபகரி)ப்பவனை அல்லாஹ் சபிக்கின்றான்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4002 அபுத்துஃபைல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (கலீஃபா) அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உங்களுக்கு இரகசியமாகச் சொன்ன ஏதேனும் விஷயத்தை எங்களுக்குச் சொல்லுங்கள்" என்று கேட்டோம்.
அதற்கு அலீ (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடம் மறைத்து விட்டு எதையும் என்னிடம் மட்டும் இரகசியமாகச் சொல்லவில்லை. ஆயினும் அவர்கள், "அல்லாஹ் அல்லாத மற்றவர் பெயரில் (பிராணியை) அறுத்தவனை அல்லாஹ் சபிக்கின்றான். (மார்க்கத்தில் இல்லா) புதிய விஷயங்களை (மார்க்கத்தின் பெயரால்) உருவாக்கியவனுக்கு அடைக்கலம் அளித்தவனை அல்லாஹ் சபிக்கின்றான். தம் பெற்றோரைச் சபித்தவனை அல்லாஹ் சபிக்கின்றான். பூமியின் (எல்லைக்கல், மைல் கல், வரப்பு உள்ளிட்ட) அடையாளங்களை மாற்றியமை(த்து பிறர் நிலத்தை அபகரி)ப்பவனை அல்லாஹ் சபிக்கின்றான்" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.

4003 அபுத்துஃபைல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அலீ (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களிடம் மட்டும் தனிப்பட்ட முறையில் ஏதேனும் விஷயத்தை (இரகசியமாகச்) சொன்னார்களா?" என்று

கேட்கப்பட்டது. அலீ (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கள் அனைவருக்கும் பொதுவாகச் சொல்லாத எந்த விஷயத்தையும் எங்களிடம் தனிப்பட்ட முறையில் (இரகசியமாகச்) சொல்லவில்லை; இதோ இந்த வாளுறையில் இருப்பதைத் தவிர" என்று கூறிவிட்டு, ஓர் ஏட்டை வெளியில் எடுத்தார்கள். அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

அல்லாஹ் அல்லாத மற்றவர் பெயரில் (பிராணியை) அறுத்தவனை அல்லாஹ் சபிக்கின்றான். பூமியின் அடையாளச் சின்னங்களைத் திருடியவனை அல்லாஹ் சபிக்கின்றான். தன் தந்தையைச் சபித்தவனை அல்லாஹ் சபிக்கின்றான். (மார்க்கத்தில் இல்லாத) புதுமைகளை (மார்க்கத்தின் பெயரால்) ஏற்படுத்தியவனுக்கு அடைக்கலம் அளித்தவனை அல்லாஹ் சபிக்கின்றான்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 36 - குடிபானங்கள்

## பாடம் : 1 மதுவிலக்கும் திராட்சைப் பழச்சாறு, பேரீச்சங்கனி, பேரீச்சச் செங்காய், உலர்ந்த திராட்சை உள்ளிட்டவற்றிலிருந்து தயாரிக்கப்படும் போதையூட்டும் ஒவ்வொன்றும் மதுவே என்பதன் விளக்கமும்.

4004 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பத்ருப் போரில் கிடைத்த செல்வங்களில் (எனது பங்காக) வயதான ஒட்டகம் ஒன்றை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சேர்ந்து பெற்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது பொறுப்பில் வந்த ஐந்தில் ஒரு பாகத்திலிருந்து) வயதான மற்றோர் ஒட்டகத்தையும் எனக்கு வழங்கினார்கள்.
ஒரு நாள் நான் அவ்விரண்டு ஒட்டகங்களையும் அன்சாரி ஒருவரின் வீட்டுவாசலருகே படுக்கவைத்திருந்தேன். "இத்கிர்' எனும் புல்லை அவற்றின் மீது ஏற்றிச் சென்று, விற்க வேண்டுமென நான் நினைத்திருந்தேன். அப்போது "பனூ கைனுகா' குலத்தைச் சேர்ந்த பொற்கொல்லர் ஒருவர் என்னுடன் (அதற்கு உதவியாக வர) இருந்தார். ஃபாத்திமா(வை மணம் புரிந்த) "வலீமா' விருந்துக்காக அந்தப் புல் விற்ற பணத்தைப் பயன்படுத்த நான் நாடியிருந்தேன்.

(நான் ஒட்டகத்தைப் படுக்கவைத்திருந்த) அந்த வீட்டில் (என் சிறிய தந்தை) ஹம்ஸா பின் அப்தில் முத்தலிப் (மது) அருந்திக்கொண்டிருந்தார். அவருடன் ஓர் அடிமைப் பாடகியும் இருந்தாள். அவள் "ஹம்ஸா! கொழுத்த இந்தக் கிழம் ஒட்டகங்களுக்கு (நீரே போதும். ஒரு கை பார்ப்பீராக!)" என்று (யாப்பு வகைப் பாடலைப்) பாடினாள்.
உடனே ஹம்ஸா (ரலி) அவர்கள் வாளுடன் அவ்விரு ஒட்டகங்களை நோக்கிப் பாய்ந்து அவற்றின் திமில்களை வெட்டிச் சாய்த்தார்; அவற்றின் இடுப்பைப் பிளந்து, பின்னர் ஈரக்குலைகளை வெளியே எடுத்தார்.
- இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் எனக்கு இதை அறிவித்த இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடம் "திமில்களையுமா அவர் வெளியே எடுத்தார்?" என்று கேட்டேன். அதற்கு அவர் "ஆம்; அவற்றின் திமில்களையும் பிளந்து எடுத்துக்கொண்டே அவர் சென்றார்" என்று கூறினார்கள்.

(தொடர்ந்து அலீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:)
என்னை அதிர்ச்சியடையச் செய்த அந்தக் காட்சியை கண்ட நான், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்களுடன் ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்களும் இருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நான் நடந்ததைத் தெரிவித்தேன். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்களுடன் புறப்பட்டார்கள். அவர்களுடன் நானும் நடந்தேன். ஹம்ஸா (ரலி) அவர்களிடம் சென்று தமது கோபத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெளிப்படுத்தினார்கள்.

அப்போது ஹம்ஸா தமது பார்வையை உயர்த்தி, "நீங்களெல்லாம் என் மூதாதையரின் அடிமைகள்தாமே?" என்று கூறினார். இதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (ஹம்ஸா போதையில் இருக்கிறார் என்பதைப் புரிந்துகொண்டு திரும்பாமல்) அப்படியே பின்வாக்கில் நடந்துவந்து அவர்களைவிட்டு வெளியேறிவிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4005 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
பத்ருப் போரின்போது போர் செல்வத்திலிருந்து எனது பங்காக வயதான ஒட்டகம் ஒன்று கிடைத்திருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அன்றைய தினத்தில் (தமது பொறுப்பில் வந்த) ஐந்தில் ஒரு பாகத்திலிருந்து வயதான மற்றோர் ஒட்டகத்தை எனக்கு வழங்கியிருந்தார்கள்.
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் புதல்வி பாத்திமா(வை மணந்து) அவர்களுடன் தாம்பத்திய உறவைத் தொடங்க விரும்பியபோது, "பனூ கைனுகா' குலத்தைச் சேர்ந்த பொற்கொல்லர் ஒருவரிடம், அவர் என்னுடன் வந்து "இத்கிர்' புல்லை நாங்கள் கொண்டுவருவோம் எனச் சொல்லியிருந்தேன். அந்தப் புல்லைப் பொற்கொல்லர்களுக்கு விற்று அந்தப் பணத்தை என் மணவிருந்துக்குப் பயன்படுத்திக்கொள்ள விரும்பியிருந்தேன். அதற்காக நான் என் ஒட்டகங்களுக்கான சேண இருக்கைகளையும், தீவனப் பைகள் மற்றும் கயிறுகளையும் சேகரிக்கலானேன்.

அப்போது என் இரு ஒட்டகங்களும் அன்சாரீ ஒருவரது அறையின் அருகே படுக்கவைக்கப் பட்டிருந்தன. நான் சேகரிக்க விரும்பியவற்றைச் சேகரித்துவிட்டபோது (திரும்பிவந்தேன். அப்போது) என் இரு ஒட்டகங்களின் திமில்களும் பிளக்கப்பட்டிருந்தன. அவற்றின் இடுப்புப் பகுதியும் பிளக்கப்பட்டு, அதன் ஈரக்குலைகள் வெளியே எடுக்கப்பட்டிருந்தன. அவற்றின் இந்த (அவலக்) காட்சியைக் கண்டபோது என்னால் என் கண்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. (அழுதுவிட்டேன்.)
நான், "இதைச் செய்தவர் யார்?" என்று கேட்டேன். மக்கள், "ஹம்ஸா பின் அப்தில் முத்தலிப்'தாம் இப்படிச் செய்துவிட்டார். அவர் இந்த வீட்டில் அன்சாரிகளின் மது அருந்தும் குழுவினருடன் இருக்கிறார். அவருக்காக அவருடைய நண்பர்களும் அடிமைப் பாடகி ஒருத்தியும் பாட்டுப் பாடுகின்றனர்.

அவள் தமது பாடலில் "ஹம்ஸா! இந்தக் கிழம் ஒட்டகங்களுக்கு (நீரே போதும்! ஒரு கை பார்ப்பீராக!)" என்று பாடினாள். உடனே வாளுடன் எழுந்த ஹம்ஸா, அவ்விரு ஒட்டகங்களின் திமில்களைப் பிளந்தார். அதன் இடுப்புப் பகுதியைப் பிளந்து, அவற்றின் ஈரக்குலைகளை வெளியே எடுத்துக்கொண்டார்" என்று பதிலளித்தனர்.
உடனே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்களுடன் ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்களும் இருந்தார்கள். எனது முகத்தைப் பார்த்து நான் சந்தித்த (துயரத்)தை அறிந்துகொண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் மீதாணையாக! இன்று (நடந்ததைப்) போன்று (ஓர் அவலத்தை) நான் ஒருபோதும் கண்டதில்லை. ஹம்ஸா என் ஒட்டகங்களிடம் எல்லை மீறி நடந்துவிட்டார். அவற்றின் திமில்களை வெட்டித் துண்டாடிவிட்டார். அவற்றின் இடுப்பைப் பிளந்துவிட்டார். இதோ அவர் இப்போது ஒரு வீட்டில் மது அருந்தும் குழுவினருடன் இருக்கிறார்" என்று சொன்னேன்.

உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது மேலங்கியைக் கொண்டுவரச் சொல்லி அதை அணிந்துகொண்டு நடந்துசென்றார்கள். அவர்களை நானும் ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்களும் பின்தொடர்ந்தோம். ஹம்ஸா இருந்த (வீட்டு)வாசல் வந்தவுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உள்ளே செல்ல) அனுமதி கேட்டார்கள். அவர்கள் அனுமதி தந்தனர். அவர்கள் அனைவரும் குடிபோதையில் இருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹம்ஸாவை அவர் செய்த காரியத்திற்காகக் கண்டிக்கலானார்கள்.

அப்போது ஹம்ஸாவின் கண்கள் சிவந்திருந்தன. ஹம்ஸா (தலையை உயர்த்தி) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்தார். பிறகு தமது பார்வையைத் தாழ்த்தி அவர்களின் இரு முழங்கால் பகுதிகளைப் பார்த்தார். பிறகு மீண்டும் பார்வையை உயர்த்தி வயிற்றுப் பகுதியைப் பார்த்தார். பிறகு இன்னும் சற்று தலையை உயர்த்தி முகத்தைப் பார்த்தார். பிறகு, "நீங்களெல்லாம் என் தந்தையின் அடிமைகள்தாமே?" என்று கூறினார்.

அவர் போதையில் இருக்கிறார் என்பதைப் புரிந்துகொண்டு, (திரும்பாமல்) அப்படியே பின்வாக்கில் எட்டுவைத்து, வந்த வழியே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெளியேறினார்கள். நாங்களும் அவர்களுடன் வெளியேறினோம்.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4006 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

மது தடைசெய்யப்பட்ட நாளன்று நான் அபூதல்ஹா (ரலி) அவர்களது இல்லத்தில் மக்களுக்கு மது பரிமாறிக்கொண்டிருந்தேன். அந்நாட்களில் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்கள், கனிந்த பேரீச்சம் பழங்கள் ஆகியவற்றால் தயாரிக்கப்பட்ட பேரீச்ச மதுவையே (ஃபளீக்) அவர்கள் அருந்தினர்.

(மதுவைத் தடைசெய்யும் இறைவசனம் அருளப்பெற்றதும்) ஒரு பொது அறிவிப்பாளர் "(மக்களே!) மது தடைசெய்யப்பட்டுவிட்டது" என்று அறிவிப்புச் செய்தார். அபூதல்ஹா (ரலி) அவர்கள் (என்னிடம்), "வெளியே போய் பார்(த்து வா)" என்று கூறினார்கள். அவ்வாறே நான் வெளியில் சென்றேன். அங்கு பொது அறிவிப்பாளர் ஒருவர் "அறிந்துகொள்ளுங்கள். மது தடைசெய்யப்பட்டுவிட்டது" என்று அறிவிப்புச் செய்துகொண்டிருந்தார்.

(இந்த அறிவிப்பைக் கேட்ட அனைவரும் மதுவை வீட்டுக்கு வெளியே ஊற்றினர்.) மதீனாவின் தெருக்களில் மது ஓடியது. அப்போது அபூதல்ஹா (ரலி) அவர்கள் என்னிடம், "வெளியே சென்று இதையும் ஊற்றிவிடு" என்று (தம்மிடமிருந்த மதுவைக் கொடுத்து) கூறினார். அவ்வாறே நான் அதை ஊற்றிவிட்டேன்.

அப்போது மக்கள் (அல்லது மக்களில் சிலர்) "மது, தம் வயிறுகளில் இருக்கும் நிலையில் இன்ன மனிதர் கொல்லப்பட்டார். இன்ன மனிதர் கொல்லப்பட்டார் (அவர்களின் நிலை என்னவாகுமோ!)" என்று கூறினர்.

(இந்த வாசகம் அனஸ் (ரலி) அவர்களின் அறிவிப்பிலேயே உள்ளதா என்பது எனக்குத் தெரியவில்லை என அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார்).

அப்போதுதான் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "(இறைவனை) அஞ்சி, இறைநம்பிக்கை கொண்டு,நல்லறங்கள் செய்து, பிறகு அஞ்சி, இறைநம்பிக்கை கொண்டு, பின்னரும் அஞ்சி, நன்மைகளைச் செய்வார்களானால் (தடுக்கப்பட்டவற்றை முன்னர்) உட்கொண்டதற்காக இறைநம்பிக்கை கொண்டு நல்லறங்கள் செய்தோர்மீது எந்தக் குற்றமுமில்லை" (5:93) எனும் வசனத்தை அருளினான்.

4007 அப்துல் அஸீஸ் பின் ஸுஹைப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

மக்கள் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் பேரீச்சங்காய் மது (ஃபளீக்) குறித்துக் கேட்டனர். அப்போது அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்: நீங்கள் "ஃபளீக்' எனக் குறிப்பிடும் இந்தப் பேரீச்சங்காய் மதுவைத் தவிர வேறெந்த மதுவும் (நபி (ஸல்) அவர்களது காலத்தில்) எங்களிடம் இருக்கவில்லை.

(ஒரு நாள்) நான் எங்கள் வீட்டில் (என் தாயாரின் இளைய கணவர்) அபூதல்ஹா (ரலி) அவர்களுக்கும் அபூஅய்யூப் (ரலி) அவர்களுக்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களில் வேறுசிலருக்கும் மது பரிமாறுவதில் ஈடுபட்டிருந்தேன். அப்போது ஒரு மனிதர் வந்து, "உங்களுக்கு அச்செய்தி எட்டியதா?' என்று கேட்டார். நாங்கள் "இல்லை' என்றோம். அவர், "மது தடைசெய்யப்பட்டுவிட்டது" என்று தெரிவித்தார்.

அப்போது அபூதல்ஹா (ரலி) அவர்கள், "அனஸே! இந்த மதுப்பீப்பாயைக் கீழே கொட்டிவிடு' என்று கூறினார்கள். அந்த மனிதர் செய்தி தெரிவித்த பிறகு நபித்தோழர்கள் மதுவைத் திரும்பிப் பார்க்கவுமில்லை. (உறுதி செய்துகொள்வதற்காக) மதுவைப் பற்றி (வேறு யாரிடமும்) கேட்கவுமில்லை.

4008 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் எங்கள் உறவினரிடையே நின்று என் தந்தையின் சகோதரர்களுக்கு, அவர்களுக்குரிய பேரீச்சங்காய் மதுவைப் பரிமாறிக்கொண்டிருந்தேன். நானே அவர்களில் (வயதில்) சிறியவனாயிருந்தேன். அப்போது ஒரு மனிதர் வந்து "மது தடைசெய்யப்பட்டுவிட்டது" என்று தெரிவித்தார். உடனே என் தந்தையின் சகோதரர்கள், "அனஸே! இதைக் கவிழ்த்துவிடு" என்று கூறினார்கள். அவ்வாறே நான் அதைக் கவிழ்த்துவிட்டேன்.

இதன் அறிவிப்பாளரான சுலைமான் பின் தர்கான் அத்தைமீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் அனஸ் (ரலி) அவர்களிடம், "அ(வர்களுடைய ம)து எ(த்தகைய)து?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களிலிருந்தும் பேரீச்சச் செங்காய்களிலிருந்தும் தயாரிக்கப்பட்டதாகும்" என்று பதிலளித்தார்கள். அப்போது அபூபக்ர் பின் அனஸ் (ரஹ்) அவர்கள் "அதுவே அன்றைய நாட்களில் அவர்களின் மதுபானமாக இருந்தது" என்று (விளக்கிக்) கூறினார். சுலைமான் அத்தைமீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இவ்வாறு அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களே கூறியதாக மற்றொரு மனிதர் எனக்கு அறிவித்தார்.

4009 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் என் உறவினரிடையே நின்று (மது) பரிமாறிக்கொண்டிருந்தேன்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. மேலும், அதில் பின்வருமாறு காணப்படுகிறது:
அப்போது அபூபக்ர் பின் அனஸ் (ரஹ்) அவர்கள் "அதுவே அன்றைய நாளில் அவர்களின் மதுபானமாக இருந்தது" என்று கூறினார்கள். அந்த இடத்தில் அனஸ் (ரலி) அவர்களும் இருந்தார்கள். அ(பூபக்ர் அவ்வாறு கூறிய)தை அனஸ் (ரலி) அவர்கள் மறுக்கவில்லை.
முஅதமிர் பின் சுலைமான் பின் தர்கான் (ரஹ்) அவர்கள் தம் தந்தையிடமிருந்து அறிவிக்கும் அறிவிப்பில், "அன்றைய நாளில் அதுவே அவர்களின் மதுபானமாக இருந்தது" என அனஸ் (ரலி) அவர்களே கூறியதை நான் கேட்டேன் என என்னுடனிருந்த ஒருவர் எனக்கு அறிவித்தார்" என்று இடம்பெற்றுள்ளது.

4010 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நான் அன்சாரிகளில் ஒரு குழுவில் அபூதல்ஹா (ரலி), அபூதுஜானா (ரலி) மற்றும் முஆத் பின் ஜபல் (ரலி) ஆகியோருக்கு மது பரிமாறிக்கொண்டிருந்தேன். அப்போது ஒருவர் உள்ளே வந்து, "புதிதாக ஒரு செய்தி வந்துள்ளது. மதுவைத் தடைசெய்யும் இறை வசனம் அருளப்பெற்றுள்ளது" என்று கூறினார்.
அன்றைய தினத்தில் நாங்கள் மதுவைக் கவிழ்த்துவிட்டோம். அ(ப்போதைய ம)து, நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காயிலிருந்தும் கனிந்த பேரீச்சம் பழங்களிலிருந்தும் கலந்து தயாரிக்கப்பட்டதாகவே இருந்தது.
இதன் அறிவிப்பாளரான கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
"மது தடைசெய்யப்பட்டபோது மக்களின் மதுபானங்களில் பெரும்பாலனவை நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களிலிருந்தும் கனிந்த பேரீச்சம் பழங்களிலிருந்தும் கலந்து தயாரித்தவையாகவே இருந்தன" என்று அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நான் தோல் பையிலிருந்து நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காயிலிருந்தும் கனிந்த பேரீச்சம் பழத்திலிருந்தும் கலந்து தயாரித்த மது பானத்தை அபூதல்ஹா (ரலி), அபூ துஜானா (ரலி) மற்றும் சுஹைல் பின் பைளா (ரலி) ஆகியோருக்குப் பரிமாறிக்கொண்டிருந்தேன்" என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4011 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கனிந்த பேரீச்சம் பழத்தையும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காயையும் கல(ந்து ஊறவை)க்க வேண்டாம் என்றும் பின்னர் அதை அருந்த வேண்டாம் என்றும் தடை விதித்தார்கள். மது தடைசெய்யப்பட்ட நாளில் அவர்களுடைய பொதுவான மதுபானம் அதுவாகவே இருந்தது.

4012 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி), அபூதல்ஹா (ரலி) மற்றும் உபை பின் கஅப் (ரலி) ஆகியோருக்கு நிறம் மாறிய பேரீச்சங்காய்களாலும் பேரீச்சங்கனிகளாலும் தயாரித்த மதுபானத்தை நான் பரிமாறிக் கொண்டிருந்தேன். அப்போது அவர்களிடம் ஒருவர் வந்து "மது தடைசெய்யப்பட்டுவிட்டது" என்று கூறினார்.
உடனே அபூதல்ஹா (ரலி) அவர்கள், "அனஸே! எழுந்து இந்தப் பாத்திரங்களை உடைத்துவிடு" என்று கூறினார்கள். அவ்வாறே நான் எங்களது கல்பாத்திரம் ஒன்றை நோக்கி எழுந்து, அதன் அடிப்பாகத்தில் அடித்தேன். அது உடைந்துவிட்டது.

4013 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ் மதுவைத் தடைசெய்யும் வசனத்தை அருளியபோது, மதீனாவில் கனிந்த பேரீச்சங்கனிகளில் தயாரிக்கப்படும் மதுபானத்தைத் தவிர வேறெந்த மதுபானமும் இருக்கவில்லை.

## பாடம் : 2 மதுபானத்தை (சமையல்) காடியாக மாற்றுவது தடைசெய்யப்பட்டதாகும்.

4014 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் மதுவை (சமையல்) காடியாக மாற்றுவதைப் பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள் "இல்லை (மாற்றக் கூடாது)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 3 மதுவை மருந்தாகப் பயன்படுத்துவதற்கு வந்துள்ள தடை.

4015 வாயில் பின் ஹுஜ்ர் அல்ஹள்ரமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் தாரிக் பின் சுவைத் அல்ஜுஅஃபீ (ரலி) அவர்கள் மது (தயாரிப்பதைப்) பற்றிக் கேட்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் அ(வ்வாறு மது தயாரிப்ப)தைத் தடை செய்தார்கள்; அல்லது அதை வெறுத்தார்கள். அப்போது தாரிக் (ரலி) அவர்கள், "மருந்துக்காகவே அதைத் தயாரிக்கிறேன்" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், "அது மருந்தல்ல; நோய்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 4 பேரீச்சம் பழம், திராட்சை ஆகியவற்றை ஊறவைத்துத் தயாரிக்கப்படும் எல்லாப் பழச்சாறுகளும் (போதை தருமானால்) "மதுபானம்' ("கம்ர்') என்றே அழைக்கப்படும்.

4016 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மது (கம்ர்), இவ்விரு மரங்களிலிருந்தே தயாரிக்கப்படுகிறது. அவை: 1. பேரீச்சை 2. திராட்சை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4017 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
மது, இவ்விரு மரங்களிலிருந்தே தயாரிக்கப்படுகிறது. அவை: 1. பேரீச்சை 2. திராட்சை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4018 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மது, இவ்விரு மரங்களிலிருந்தே தயாரிக்கப்படுகிறது. அவை: 1. திராட்சை 2. பேரீச்சை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (திராட்சை, பேரீச்சை என்பதைக் குறிக்க அல்கர்மத், அந்நக்லத் என்பதற்குப் பதிலாக) அல்கர்ம், அந்நக்ல் எனும் சொற்கள் ஆளப்பட்டுள்ளன.

**பாடம் : 5 பேரீச்சம் பழங்களையும் உலர்ந்த திராட்சைகளையும் கலந்து ஊறவைப்பது வெறுக்கத்தக்கதாகும்.**

4019 ஜாபிர் பின் அப்தில்லாஹ் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், உலர்ந்த திராட்சைகளும், பேரீச்சம் பழங்களும் கலந்து ஊறவைக்கப் படுவதற்கும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களும், பேரீச்சச் செங்காய்களும் கலந்து ஊறவைக்கப்படுவதற்கும் தடைவிதித்தார்கள்.

4020 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பேரீச்சங்கனிகளும் உலர்ந்த திராட்சைகளும் ஒன்றுசேர்த்து ஊறவைக்கப்படுவதைத் தடைசெய்தார்கள். (அவ்வாறே) பேரீச்சச் செங்காய்களும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களும் ஒன்றுசேர்த்து ஊறவைக்கப்படுவதையும் தடைசெய்தார்கள்.

4021 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பேரீச்சச் செங்காய்களையும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களையும் ஒன்று சேர்(த்து ஊறவை)க்காதீர்கள். உலர்ந்த திராட்சைகளையும் பேரீச்சங்கனிகளையும் ஒன்றுசேர்த்து ஊறவைக்காதீர்கள்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4022 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உலர்ந்த திராட்சைகளும் பேரீச்சம் பழங்களும் கல(ந்து ஊறவை)க்கப்படுவதைத் தடைசெய்தார்கள். (அவ்வாறே) நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களும் பேரீச்சச் செங்காய்களும் ஒன்று சேர்த்து ஊறவைக்கப் படுவதையும் தடைசெய்தார்கள்.

4023 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், பேரீச்சங்கனிகளும் உலர்ந்த திராட்சைகளும் கல(ந்து ஊற வை)க்கப்படுவதைத் தடை செய்தார்கள். (அவ்வாறே) கனிந்த பேரீச்சம் பழங்களும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களும் கல(ந்து ஊறவை)க்கப்படுவதையும் தடை செய்தார்கள்.

4024 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உலர்ந்த திராட்சைகளையும் பேரீச்சம் பழங்களையும் கல(ந்து ஊறவை)க்க வேண்டாமென எங்களுக்குத் தடைவிதித்தார்கள். (அவ்வாறே) நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களையும் கனிந்த பேரீச்சம் பழங்களையும் கல(ந்து ஊறவை)க்க வேண்டாமென்றும் தடைவிதித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4025 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் பழச்சாற்றை அருந்துகின்றவர், உலர்ந்த திராட்சையைத் தனியாக (ஊறவைத்து) அருந்தட்டும். அல்லது பேரீச்சம் பழத்தைத் தனியாக (ஊறவைத்து) அருந்தட்டும். அல்லது நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காயைத் தனியாக (ஊறவைத்து) அருந்தட்டும்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4026 மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களை கனிந்த பேரீச்சம் பழங்களுடன், அல்லது உலர்ந்த திராட்சைகளைப் பேரீச்சம் பழங்களுடன், அல்லது உலர்ந்த திராட்சைகளை நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களுடன் கல(ந்து ஊறவை)க்க வேண்டாமென எங்களுக்குத் தடை விதித்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. பிறகு "உங்களில் பழச்சாற்றை அருந்துகின்றவர்..." எனத் தொடரும் மேற்கண்ட ஹதீஸில் உள்ள இதர தகவல்களும் இடம் பெற்றுள்ளன.

4027 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களையும் பேரீச்சச் செங்காய்களையும் ஒன்றாகச் சேர்த்து ஊறவைக்காதீர்கள். (அவ்வாறே) உலர்ந்த திராட்சைகளையும் பேரீச்சம் பழங்களையும் ஒன்றாகச் சேர்த்து ஊறவைக்காதீர்கள். (வேண்டுமானால்) அவை ஒவ்வொன்றையும் தனித்தனியாக ஊறவைத்துக்கொள்ளுங்கள்.
இதை அபூகத்தாதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4028 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களையும் பேரீச்சச் செங்காய்களையும் ஒன்றாகச் சேர்த்து ஊறவைக்காதீர்கள். (அவ்வாறே) பேரீச்சச் செங்காய்களையும் உலர்ந்த திராட்சைகளையும் ஒன்றுசேர்த்து ஊறவைக்காதீர்கள். மாறாக, அவை ஒவ்வொன்றையும் தனித்தனியாக ஊற வைத்துக்கொள்ளுங்கள்.
இதை அபூகத்தாதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், மேற்கண்ட ஹதீஸை அபூசலமா (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் யஹ்யா பின் அபீகஸீர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் அப்துல்லாஹ் பின் அபீ கத்தாதா (ரஹ்) அவர்களை (நேரடியாகச்) சந்தித்தேன். அப்போது தம் தந்தை அபூ கத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாக மேற்கண்ட ஹதீஸை என்னிடம் அவர்கள் அறிவித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "பேரீச்சச் செங்காய்களையும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காய்களையும் (ஒன்றுசேர்த்து ஊறவைக்க வேண்டாம்) என்றும், பேரீச்சம் பழங்களையும் உலர்ந்த திராட்சைகளையும் (ஒன்றுசேர்த்து ஊறவைக்க வேண்டாம்)" என்றும் இடம்பெற்றுள்ளது.

4029 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "பேரீச்சம் பழங்களையும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காய்களையும் கல(ந்து ஊறவை)க்க வேண்டாம் என்றும், உலர்ந்த திராட்சைகளையும் பேரீச்சம் பழங்களையும் கல(ந்து ஊறவை)க்க வேண்டாம் என்றும், நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காய்களையும் பேரீச்சச் செங்காய்களையும் கல(ந்து ஊறவை)க்க வேண்டாம் என்றும் தடைசெய்தார்கள். "(வேண்டுமானால்) அவை ஒவ்வொன்றையும் தனித்தனியாக ஊறவைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4029-ஆ அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உலர்ந்த திராட்சைகளையும் பேரீச்சம் பழங்களையும், (அவ்வாறே) நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களையும் பேரீச்சம் பழங்களையும் (ஒன்றாகச் சேர்த்து) ஊறவைக்க வேண்டாமெனத் தடைசெய்தார்கள். "(வேண்டுமானால்) அவை ஒவ்வொன்றும் தனித்தனியாக ஊறவைக்கப்படலாம்"என்று கூறினார்கள். –இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4030 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், பேரீச்சம் பழங்களும் உலர்ந்த திராட்சைகளும் ஒன்று சேர்(த்து ஊறவை)க்கப்படுவதற்கும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களும் பேரீச்சம்

பழங்களும் ஒன்றுசேர்த்து ஊற வைக்கப்படுவதற்கும் தடைவிதித்தார்கள். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (யமன் நாட்டிலுள்ள) "ஜுரஷ்'வாசிகளுக்குப் பேரீச்சம் பழங்களையும் உலர்ந்த திராட்சைகளையும் கல(ந்து ஊறவை)க்க வேண்டாம் எனத் தடைசெய்து கடிதம் எழுதினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "பேரீச்சம் பழங்களையும் உலர்ந்த திராட்சைகளையும் கலந்து ஊறவைக்க வேண்டாம்" என்பது மட்டுமே இடம்பெற்றுள்ளது. நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சம் பழங்களையும் பேரீச்சம் பழங்களையும் கலந்து ஊறவைப்பது பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை.

4031 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களும் பேரீச்சச் செங்காய்களும் ஒன்றுசேர்த்து ஊறவைக்கப்படுவதற்கும் பேரீச்சம் பழங்களும் உலர்ந்த திராட்சைகளும் ஒன்றுசேர்த்து ஊற வைக்கப்படுவதற்கும் தடை விதிக்கப்பட்டுவிட்டது.

4032 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களும் பேரீச்சச் செங்காய்களும் ஒன்றாகச் சேர்த்து ஊறவைக்கப்படுவதற்கும் பேரீச்சம் பழங்களும் உலர்ந்த திராட்சைகளும் ஒன்றுசேர்த்து ஊறவைக்கப்படுவதற்கும் தடை விதிக்கப்பட்டுவிட்டது.

**பாடம் : 6 தார் பூசப்பட்ட பாத்திரம், சுரைக்காய் குடுவை, மண் சாடி, பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் பானங்களை ஊற்றிவைப்பதற்கு விதிக்கப்பெற்றிருந்த தடையும், பின்னர் அச்சட்டம் காலாவதியாக்கப் பட்டதும், போதையூட்டக்கூடியதாக மாறாத வரை எல்லாப் பாத்திரங்களும் தற்போது அனுமதிக்கப்பட்டவையே என்பது பற்றிய விளக்கமும்.**

4033 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமெனத் தடைவிதித்தார்கள்.
இதை இப்னு ஷிஹாப் அஸ்ஸஹ்ரீ (ரஹ்) அவர்கள் லைஸ் (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கிறார்கள்.

4034 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமெனத் தடைவிதித்தார்கள்.
இதை இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கிறார்கள்.
மேற்கண்ட ஹதீஸை அபூஹுரைரா (ரலி) அவர்கள் வழியாகவும் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ளார்கள். அதில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சுரைக்காய் குடுவையில் பானங்களை ஊற்றிவைக்காதீர்கள். தார் பூசப்பட்ட பாத்திரத்திலும் ஊற்றிவைக்காதீர்கள்.
பிறகு அபூஹுரைரா (ரலி) அவர்கள், "மண்சாடிகளையும் தவிர்த்துவிடுங்கள்" என்று கூறினார்கள்.

4035 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், தார் பூசப்பட்ட பாத்திரம், "ஹன்த்தம்', பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை செய்தார்கள்.
அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் "ஹன்த்தம் என்பது என்ன?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "சுட்ட களிமண்ணாலான பச்சைநிறச் சாடிகள்' என்று பதிலளித்தார்கள்.

4036 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் அப்துல் கைஸ் தூதுக்குழுவினரிடம், "சுரைக்காய் குடுவை, மண் சாடி (ஹன்த்தம்), பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம், தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றை உங்களுக்குத் தடைவிதிக்கிறேன். வேண்டுமானால், தோல் பைகளில் (அனுமதிக்கப்பட்ட பானங்களை) அருந்திக்கொள்க. அதன் வாய்ப்பகுதியில் சுருக்கிட்டுக்கொள்க" என்று கூறினார்கள்.
"ஹன்த்தம்' என்பது, கழுத்துப் பகுதி துண்டிக்கப்பட்ட தோல் பை ஆகும்.

4037 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமெனத் தடைசெய்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஜரீர் பின் அப்தில் ஹமீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மேற்கண்டவாறு இடம்பெற்றுள்ளது. அப்ஸர் பின் அல்காசிம் (ரஹ்) மற்றும் ஷுஅபா பின் அல்ஹஜ்ஜாஜ் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "நபி (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடைசெய்தார்கள்" என்று இடம் பெற்றுள்ளது.

4038 இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்களிடம் "எந்தப் பாத்திரத்தில் பானங்களை ஊற்றி வைப்பது வெறுக்கப்பட்டது எனத் தாங்கள் இறைநம்பிக்கையாளர்களின் அன்னை (ஆயிஷா–ரலி) அவர்களிடம் கேட்டீர்கள்?" என்று வினவினேன். அதற்கு அவர்கள் "ஆம்; நான் "இறை நம்பிக்கையாளர்களின் அன்னையே! எந்தப் பாத்திரங்களில் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைசெய்தார்கள்?' என்று கேட்டேன்.
அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் தம் இல்லத்தாராகிய எங்களிடம் சுரைக்காய் குடுவை, தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமெனத் தடைசெய்தார்கள் என்று விடையளித்தார்கள்" என்றார்கள்.

(அறிவிப்பாளர் இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:)
"மண்சாடியையும் சுட்ட களிமண் பாத்திரத்தையும் ஆயிஷா (ரலி) அவர்கள் குறிப்பிட வில்லையா?" என நான் அஸ்வத் (ரஹ்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அஸ்வத் (ரஹ்) அவர்கள், "நான் கேட்டதைத்தான் உங்களுக்கு அறிவிக்கிறேன். நான் கேட்காததை உங்களுக்கு அறிவிக்கவேண்டுமா?" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4039 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடைசெய்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4040 ஸுமாமா பின் ஹஸ்ன் அல் குஷைரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களைச் சந்தித்துப் பழச்சாறுகள் பற்றிக் கேட்டேன். அப்போது அவர்கள், "நபி (ஸல்) அவர்களிடம் அப்துல் கைஸ் தூதுக்குழுவினர் வந்து பழச்சாறுகள் பற்றிக் கேட்டனர். நபி (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை,பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம், தார் பூசப்பட்ட பாத்திரம், மண் சாடி ஆகியவற்றில் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமெனத் தடைவிதித்தார்கள்' என்று பதிலளித்தார்கள்" என்றார்கள்.

4041 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, மண் சாடி, பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம், தார் பூசப்பட்ட பாத்திரம் ("முஸஃப்பத்') ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடைசெய்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் (தார் பூசப்பட்டப்பட்ட பாத்திரம் என்பதைக் குறிக்க) "முஸஃப்பத்' என்பதற்குப் பதிலாக "முகய்யர்' என இடம்பெற்றுள்ளது.

4042 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் அப்துல் கைஸ் தூதுக்குழுவினர் வந்தபோது, "சுரைக்காய் குடுவை, மண் சாடி, பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம், தார் பூசப்பட்ட பாத்திரம் (முகய்யர்) ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமென உங்களுக்குத் தடைசெய்கிறேன்" என்று நபியவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ("தார் பூசப்பட்ட பாத்திரம்' என்பதைக் குறிக்க) "முகய்யர்' என்பதற்குப் பதிலாக "முஸஃப்பத்' எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

4043 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, மண் சாடி, தார் பூசப்பட்ட பாத்திரம், பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயார் செய்யப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை செய்தார்கள்.

4044 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, மண் சாடி, தார் பூசப்பட்ட பாத்திரம் மற்றும் பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாம் என்றும்,பழுக்காத பச்சை நிறமுள்ள பேரீச்சம் பழங்களை நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காய்களுடன் ஒன்றாகச் சேர்த்து ஊறவைக்க வேண்டாம் என்றும் தடை செய்தார்கள்.

4045 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, பேரீச்சமரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம் மற்றும் தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாம் எனத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4046 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், சுட்ட களிமண் பாத்திரத்தில் பானங்களை ஊற்றி வைக்கவேண்டாம் எனத் தடை செய்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4047 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, மண் சாடி, பேரீச்சமரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம் மற்றும் தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடைசெய்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்கள், (மேற்கண்ட பாத்திரங்களில் பானங்களை) ஊற்றிவைக்க வேண்டாமெனத் தடை செய்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

4048 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மண் சாடி, சுரைக்காய் குடுவை மற்றும் பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் (பானங்களை) அருந்த வேண்டாமெனத் தடை செய்தார்கள்.

4049 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, மண் சாடி, தார் பூசப்பட்ட பாத்திரம் மற்றும் பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம்

ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடைசெய்தார்கள் என நான் சாட்சியம் அளிக்கிறேன்" என்று இப்னு உமர் (ரலி) அவர்களும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் கூறியதாக நான் சாட்சியம் அளிக்கிறேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4050 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடம், சுட்ட களிமண் பாத்திரத்தில் ஊறவைக்கப்பட்ட பானங்கள் பற்றிக் கேட்டேன். இப்னு உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுட்ட களிமண் பாத்திரத்தில் ஊறவைக்கப்பட்ட பானத்திற்குத் தடை விதித்தார்கள்" என்று பதிலளித்தார்கள்.
பின்னர் நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்று, "இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறுவதைத் தாங்கள் செவியுறவில்லையா?" என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இப்னு உமர் என்ன கூறுகிறார்?" என்று கேட்டார்கள். நான் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுட்ட களிமண் பாத்திரத்தில் ஊறவைக்கப்பட்ட பானத்திற்குத் தடை விதித்தார்கள் என்று கூறினார்கள்" என்றேன்.
அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இப்னு உமர் சொன்னது உண்மையே. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நபீதுல் ஜர்ரு'க்குத் தடைவிதித்தார்கள்" என்று கூறினார்கள். உடனே நான், "நபீதுல் ஜர் என்பது என்ன?" என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "சுட்ட களிமண்ணில் தயாரிக்கப்படும் (பாத்திரங்கள்) ஒவ்வொன்றுமே (நபீதுல் ஜர்) ஆகும்" என்று பதிலளித்தார்கள்.

4051 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தாம் கலந்துகொண்ட போர் ஒன்றில் மக்களிடையே உரையாற்றினார்கள். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இருந்த பகுதியை நோக்கிச் சென்றேன். நான் அங்கு சென்றடைவதற்குள் (அவர்கள் உரையை முடித்துத்) திரும்பிவிட்டார்கள்.
எனவே நான் (மக்களிடம்), "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்ன சொன்னார்கள்?" என்று கேட்டேன். மக்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை, தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் (பானங்களை) ஊற்றிவைக்க வேண்டாம் எனத் தடை விதித்தார்கள்" என்று பதிலளித்தனர்.

4052 மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பத்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மாலிக் பின் அனஸ் (ரஹ்) மற்றும் உசாமா பின் ஸைத் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பைத் தவிர மற்ற அறிவிப்புகளில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட போர்களில் ஒன்றில்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

4053 ஸாபித் பின் அஸ்லம் அல்புனானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுட்ட களிமண் பாத்திரத்தில் ஊறவைக்கப்பட்ட பானங்களைத் தடை செய்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "அவ்வாறே மக்கள் கூறுகிறார்கள்" என்று பதிலளித்தார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதற்குத் தடை விதித்தார்களா?" என்று (மீண்டும்) கேட்டேன். இப்னு உமர் (ரலி) அவர்கள் "அவ்வாறே மக்கள் கூறுகிறார்கள்" என்று பதிலளித்தார்கள்.
- தாவூஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுட்ட களிமண் பாத்திரத்தில் பானங்களை ஊற்றி வைக்க வேண்டாமெனத் தடைசெய்தார்களா?" என்று கேட்டார். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள்.
இதன் அறிவிப்பாளரான சுலைமான் அத்தைமீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
பிறகு தாவூஸ் (ரஹ்) அவர்கள் "அல்லாஹ்வின் மீதாணையாக! இவ்வாறே நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்து செவியுற்றேன்" என்று கூறினார்கள்.

4054 தாவூஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுட்ட களிமண் பாத்திரம்,சுரைக்காய் குடுவை ஆகியவற்றில் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமெனத் தடை செய்தார்களா?" என்று கேட்டார். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள்.

4055 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுட்ட களிமண் பாத்திரம், சுரைக்காய் குடுவை ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை செய்தார்கள்.

4056 தாவூஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் அமர்ந்திருந்தேன். அப்போது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுட்ட களிமண் பாத்திரம், சுரைக்காய் குடுவை மற்றும் தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமெனத் தடைசெய்தார்களா?" என்று கேட்டார்கள். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள்.

4057 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மண் சாடி, சுரைக்காய் குடுவை, தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை செய்தார்கள்.
அறிவிப்பாளர் முஹாரிப் பின் திஸார் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இதை நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்து (ஓரிரு முறை அல்ல) பலமுறை செவியுற்றுள்ளேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், இப்னு உமர் (ரலி) அவர்கள் பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரத்தையும் குறிப்பிட்டார்கள் என்றே நான் கருதுகிறேன் என முஹாரிப் பின் திஸார் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

4058 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுட்ட களிமண் பாத்திரம், சுரைக்காய் குடுவை மற்றும் தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாம் எனத் தடை செய்தார்கள். (மாறாக) "தோல் பைகளில் பானங்களை ஊற்றிவைத்துக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.-இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4059 ஜபலா பின் சஹீம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஹன்த்தமா'வைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை செய்தார்கள்" என்று கூறினார்கள். நான் "ஹன்த்தமா என்பது என்ன?" என்று கேட்டேன். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள், "சுட்ட களிமண் பாத்திரம்' என்று பதிலளித்தார்கள்.

4060 ஸாதான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் "நபி (ஸல்) அவர்கள் தடை செய்துள்ள குடிபானங்களைப் பற்றி உங்களது (வட்டார) மொழியில் கூறி, அதற்கு எங்களது (வட்டார) மொழியில் எனக்கு விளக்கமளியுங்கள். ஏனெனில், எங்களது மொழி வழக்கு அல்லாத வேறொரு மொழி வழக்கு உங்களுக்கு உள்ளது" என்று கூறினேன்.
அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஹன்த்தமை'ப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை செய்தார்கள். அது சுட்ட களிமண் பாத்திரமாகும். மேலும், அவர்கள் "துப்பா'வையும் தடை செய்தார்கள். அது சுரைக்காய் குடுவையாகும். "முஸஃப்பத்'தையும் தடை செய்தார்கள். அதுவே தார் பூசப்பட்ட பாத்திரமாகும்."நக்கீரை'யும் தடை செய்தார்கள். அது பேரீச்ச மரத்தின் மேற்பட்டை உரிக்கப்பட்டு பின்னர் நன்கு குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரமாகும்" என்று கூறிவிட்டு, "(இவற்றை விடுத்து) தோல் பைகளில் பானங்களை ஊற்றிவைக்குமாறு உத்தரவிட்டார்கள்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4061 சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் இந்தச் சொற்பொழிவு மேடை –அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மிம்பரை நோக்கி சைகை செய்கிறார்– அருகில், "அப்துல் கைஸ் தூதுக் குழுவினர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து குடிபானங்கள் பற்றிக் கேட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவை,பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம் மற்றும் மண் சாடி ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமென அவர்களுக்குத் தடை விதித்தார்கள்" என்று கூறியதை நான் கேட்டேன்.

இந்த ஹதீஸின் அறிவிப்பாளரான அப்துல் காலிக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்களிடம், "அபூமுஹம்மதே! தார் பூசப்பட்ட பாத்திரத்தையுமா (பயன்படுத்தவேண்டாம் எனத் தடை செய்தார்கள்)?" என்று கேட்டேன். அதை அவர்கள் மறந்துவிட்டார்கள் என்று நாங்கள் கருதினோம். (அதனால்தான் அவ்வாறு கேட்டோம்).
அதற்கு சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள், "அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அன்று அவ்வாறு கூறியதை நான் கேட்கவில்லை. (எனினும்,) அவர்கள் (தார் பூசப்பட்ட பாத்திரத்தை) வெறுத்துவந்தார்கள்" என்று பதிலளித்தார்கள்.

4062 ஜாபிர் (ரலி) மற்றும் இப்னு உமர் (ரலி) ஆகியோர் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேரீச்சமரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம், தார் பூசப்பட்ட பாத்திரம் மற்றும் சுரைக்காய் குடுவை ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை செய்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4063 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுட்ட களிமண் பாத்திரம், சுரைக்காய் குடுவை மற்றும் தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை செய்ததை நான் செவியுற்றுள்ளேன்.
- ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுட்ட களிமண் பாத்திரம், தார் பூசப்பட்ட பாத்திரம் மற்றும் பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை செய்தார்கள். மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பானங்கள் ஊற்றிவைப்பதற்கு (பாத்திரம்) எதுவும் கிடைக்காவிட்டால், கல் தொட்டியில் அவர்களுக்காகப் பானங்கள் ஊற்றிவைக்கப்பட்டு வந்தது.

4064 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்காகக் கல் தொட்டி ஒன்றில் பானங்கள் ஊற்றிவைக்கப்பட்டுவந்தது.

4065 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காகத் தோல் பாத்திரத்தில் பானங்கள் ஊற்றி வைக்கப்பட்டுவந்தது. தோல் பாத்திரம் எதுவும் கிடைக்காவிட்டால், கல் தொட்டியொன்றில் அவர்களுக்காகப் பானங்கள் ஊற்றிவைக்கப்பட்டன.
இதன் அறிவிப்பாளரான அபுஸ் ஸுபைர் (ரஹ்) அவர்களிடம் மக்களில் சிலர் "கல் தொட்டியிலா (ஊற்றிவைத்தனர்)?"என்று கேட்டார்கள். அதற்கு அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் "கல் தொட்டியில்தான்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4066 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தோல் பாத்திரம் தவிர வேறெதிலும் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமென உங்களுக்கு நான் தடைவிதித்திருந்தேன். இனி, எல்லாப் பாத்திரங்களிலும் (ஊற்றி வைத்து) அருந்திக் கொள்ளுங்கள். போதை தரக்கூடியதை அருந்தாதீர்கள்.
இதை புரைதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4067 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(சில குறிப்பிட்ட) பாத்திரங்களைப் பயன்படுத்த வேண்டாமென உங்களுக்கு நான் தடை விதித்திருந்தேன். (இப்போது கூறுகிறேன்.) பாத்திரங்கள் -அல்லது பாத்திரம்- எந்த ஒன்றையும் அனுமதிக்கப்பட்டதாக ஆக்குவதுமில்லை; எந்த ஒன்றையும் தடை செய்யப்பட்டதாக ஆக்குவதுமில்லை. (பாத்திரத்தில் உள்ள பானமே முக்கியம். எனவே,) போதை தரும் எல்லாமே தடை செய்யப்பட்டதாகும்.
இதை புரைதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4068 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தோல் பாத்திரங்களில் ஊற்றிவைக்கப்பட்ட பானங்களை(த் தவிர வேறெந்த பானத்தையும்) அருந்த வேண்டாமென உங்களுக்கு நான் தடைவிதித்திருந்தேன். இனி எல்லாப் பாத்திரங்களிலும் அருந்திக்கொள்ளுங்கள். எனினும், போதை தரக்கூடியதை அருந்தாதீர்கள்.
இதை புரைதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4069 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தோல் பாத்திரங்(களைத் தவிர மற்றவை)களில் (பானங்களை) ஊற்றிவைப்பதற்குத் தடைவிதித்தபோது, "மக்கள் அனைவருமே தோல் பாத்திரங்களைப் பெற்றிருப்பதில்லையே?" என்று மக்கள் கேட்டனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தார் பூசப்படாத சுட்ட களிமண் பாத்திரத்தைப் பயன்படுத்திக் கொள்ள மக்களுக்கு அனுமதியளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 7 போதை தரும் ஒவ்வொரு பானமும் மதுவேயாகும். அனைத்து மதுபானமும் தடைசெய்யப்பட்டதாகும் என்பதன் விளக்கம்.

4070 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தேனிலிருந்து தயாரிக்கப்படும் பானம் (பித்உ) குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் "போதை தரும் ஒவ்வொரு பானமும் தடை செய்யப்பட்டதாகும்" என்று பதிலளித்தார்கள்.
இதை இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்து மாலிக் பின் அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4071 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தேனிலிருந்து தயாரிக்கப்படும் பானம் (பித்உ) குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "போதை தரும் ஒவ்வொரு பானமும் தடை செய்யப்பட்டதாகும்" என்று பதிலளித்தார்கள்.
இதை இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்து யூனுஸ் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4072 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஒன்பது அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் சுஃப்யான் மற்றும் சாலிஹ் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "தேனிலிருந்து தயாரிக்கப்படும் பானம் (பித்உ) பற்றிக் கேட்கப்பட்டது' எனும் குறிப்பு இடம்பெறவில்லை. மஅமர் (ரஹ்) மற்றும் சாலிஹ் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "போதை தரும் ஒவ்வொரு பானமும் தடை செய்யப்பட்டதாகும்' என்று கூறியதை நான் கேட்டேன்" என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

4073 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என்னையும் முஆத் பின் ஜபல் (ரலி) அவர்களையும் யமன் நாட்டுக்கு அனுப்பிவைத்தபோது நான், "அல்லாஹ்வின் தூதரே! எங்கள் நாட்டில் தோல் நீக்கப்படாத கோதுமையிலிருந்து ஒருவகை பானம் தயாரிக்கப்படுகிறது. அதற்கு "அல்மிஸ்ர்' என்று பெயர் சொல்லப்படுகிறது. மேலும், தேனிலிருந்து "பித்உ' எனப்படும் ஒரு பானமும் தயாரிக்கப்படுகிறது. (அவற்றை நாங்கள் அருந்தலாமா?)" என்று கேட்டேன்.
அதற்கு அவர்கள், "போதை தரும் ஒவ்வொன்றும் தடை செய்யப்பட்டதாகும்" என்று (பொது விதி) கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என்னையும் முஆத் (ரலி) அவர்களையும் யமன் நாட்டுக்கு அனுப்பி வைத்தபோது எங்கள் இருவரிடமும், "நீங்கள் (மக்களுக்கு) நற்செய்திகளை(யே அதிகமாக)ச் சொல்லுங்கள். (அவர்களிடம்) எளிதாக நடந்துகொள்ளுங்கள். கற்றுக்கொடுங்கள். (அவர்களுக்கு) வெறுப்பேற்றிவிடாதீர்கள்" என்று கூறினார்கள்.
"நீங்கள் இருவரும் இணக்கமாக நடந்து கொள்ளுங்கள்" என்றும் (அறிவுரை) கூறினார்கள் என்றே நான் கருதுகிறேன். நான் திரும்பிச் சென்றபோது மீண்டும் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! யமன்வாசிகளிடம் தேன் சுண்டக்காய்ச்சப்பட்டுத் தயாரிக்கப்படும் ஒரு வகை பானம் உண்டு. மேலும், தோல் நீக்கப்படாத கோதுமையிலிருந்து தயாரிக்கப்படும் "மிஸ்ர்' எனும் பானமும் உண்டு (அவற்றை அருந்தலாமா?)" என்று கேட்டேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தொழுகையிலிருந்து தடுக்கக்கூடிய போதை தரும் ஒவ்வொன்றும் தடை செய்யப்பட்டதாகும்" என்று பதிலளித்தார்கள்.

4074 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னையும் முஆத் பின் ஜபல் (ரலி) அவர்களையும் யமன் நாட்டுக்கு அனுப்பிவைத்தபோது, மக்களுக்கு (இஸ்லாமிய) அழைப்பு விடுங்கள். நற்செய்திகளை(யே அதிகமாக)க் கூறுங்கள். (எச்சரிக்கை விடுக்கும்போது) வெறுப்பேற்றி விடாதீர்கள். (அவர்களிடம்) எளிதாக நடந்துகொள்ளுங்கள். (அவர்களைச்) சிரமப்படுத்தி விடாதீர்கள்" என்று (அறிவுரை) கூறினார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் யமன் நாட்டில் தயாரித்துவரும் இரு பானங்களைப் பற்றி எங்களுக்குத் தீர்ப்பு வழங்குங்கள். அவை: கட்டியாகும்வரை ஊறவைக்கப்படும் தேனிலிருந்து தயாரிக்கப்படும் "பித்உ' எனும் பானமும்,அவ்வாறே கட்டியாகும்வரை ஊறவைக்கப்படும் சோளம், தோல் நீக்கப்படாத கோதுமை ஆகியவற்றிலிருந்து தயாரிக்கப்படும் "மிஸ்ர்' எனும் பானமும் ஆகும்" என்று கூறினேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (ஆரம்பம் முதல்) முடிவுவரை அனைத்தும் செறிவுடன் அமைந்த ஒருங்கிணைந்த சொற்கள் வழங்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் கூறினார்கள்: தொழுகையிலிருந்து தடுக்கக்கூடிய போதை தரும் ஒவ்வொன்றையும் நான் தடை செய்கிறேன். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4075 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் யமன் நாட்டிலுள்ள "ஜைஷான்' எனுமிடத்திலிருந்து வந்து, தம் நாட்டினர் சோளத்திலிருந்து தயாரித்துப் பருகிவருகின்ற ஒருவகை பானம் குறித்து நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அது போதையளிக்கக்கூடியதா?" என்று கேட்டார்கள். அவர் "ஆம் (போதையளிக்கக்கூடியதே)" என்று பதிலளித்தார். நபி (ஸல்) அவர்கள், "போதையளிக்கக்கூடிய ஒவ்வொன்றும் தடை செய்யப்பட்டதாகும். (இவ்வுலகில்) போதைப் பொருட்களை உட்கொள்பவருக்கு (மறுமையில்) "தீனத்துல் கபாலை' நிச்சயமாக நான் புகட்டுவேன் என அல்லாஹ் உறுதிமொழி எடுத்துள்ளான்" என்று கூறினார்கள்.
மக்கள் "அல்லாஹ்வின் தூதரே! "தீனத்துல் கபால்' என்பது என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நரகவாசிகளின் வியர்வை அல்லது நரகவாசிகளின் சீழ்" என்று விடையளித்தார்கள்.

4076 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
போதை தரும் ஒவ்வொன்றும் மதுவாகும். போதை தரும் ஒவ்வொன்றும் தடை செய்யப் பட்டதாகும். யார் இவ்வுலகில் தொடர்ந்து மது அருந்தி, பாவமன்னிப்புத் தேடாமல் (திருந்தாமல்) குடிகாரராகவே இறந்துவிடுகிறாரோ அவர் மறுமையில் (சொர்க்க) மதுவை அருந்தமாட்டார். – இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4077 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
போதை தரும் ஒவ்வொன்றும் மதுவாகும். போதை தரும் ஒவ்வொன்றும் தடை செய்யப் பட்டதாகும். –இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4078 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
போதை தரும் ஒவ்வொன்றும் மதுவாகும். ஒவ்வொரு மதுவும் தடை செய்யப்பட்டதாகும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்தே அறிவிக்கிறார்கள் என்றே நான் அறிகிறேன் என அறிவிப்பாளர் நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 8 குடிகாரன் பாவமன்னிப்புக் கோரி திருந்தாவிட்டால் மறுமையில் (சொர்க்கத்தின்) மது மறுக்கப்படுவதன் மூலம் தண்டிக்கப்படுவான்.

4079 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உலகில் மது அருந்தியவருக்கு மறுமையில் (சொர்க்கத்தின்) மது அருந்தும் வாய்ப்பு மறுக்கப்படும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4080 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"உலகில் மது அருந்திவிட்டு அதற்காகப் பாவமன்னிப்புக் கோராதவருக்கு மறுமையில் (சொர்க்கத்தின்) மது அருந்தும் வாய்ப்பு மறுக்கப்படும். அது அவருக்குப் புகட்டப்பட மாட்டாது" என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல்லாஹ் பின் மஸ்லமா பின் கஅனப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த) மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்களிடம் "நாஃபிஉ (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை நபி (ஸல்) அவர்கள் கூறியதாகக் குறிப்பிட்டார்களா?" என்று கேட்கப்பட்டது.
அதற்கு மாலிக் (ரஹ்), அவர்கள், "ஆம்' என்றார்கள்.

4081 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உலகில் மது அருந்தியவர் மறுமையில் அதை அருந்தமாட்டார்; பாவமன்னிப்புக் கோரி (திருந்தி)னால் தவிர.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 9 கெட்டித்தன்மையும் போதையும் உள்ளதாக மாறாவிட்டால், பழச்சாறுகள் அனுமதிக்கப்பட்டவையே ஆகும்.**

4082 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காக இரவின் ஆரம்பநேரத்தில் பழச்சாறு ஊற்றி வைக்கப்படும். காலையில் அதை அவர்கள் அருந்துவார்கள். அன்றைய பகல் முழுவதும், அடுத்த இரவும், அடுத்த நாள் பகலிலும், மற்றோர் இரவிலும், அதற்கடுத்த பகலில் அஸ்ர் நேரம் வரையிலும் அதை அருந்துவார்கள்.
பிறகு (அதில்) ஏதேனும் எஞ்சியிருந்தால் (தம்) பணியாளருக்கு அதை அருந்தக் கொடுப்பார்கள். அல்லது (அதைக் கொட்டிவிடுமாறு) உத்தரவிடுவார்கள். அவ்வாறே அது கொட்டப்படும்.

4083 யஹ்யா பின் உபைத் அல்பஹ்ரானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மக்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் பழச்சாறுகள் பற்றிக் குறிப்பிட்டனர். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காகத் தோல் பையொன்றில் பழச்சாறு ஊற்றிவைக்கப்பட்டுவந்தது.
திங்கட்கிழமை இரவு அவ்வாறு ஊற்றி வைக்கப்பட்டால், திங்கட்கிழமையும் செவ்வாய் கிழமை அஸ்ர் வரையும் அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருந்துவார்கள். பிறகு அதில் ஏதேனும் எஞ்சியிருந்தால் பணியாளருக்கு அருந்தக் கொடுப்பார்கள்; அல்லது கொட்டிவிடுவார்கள்.

4084 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காக உலர்ந்த திராட்சை (தண்ணீரில்) ஊறவைக்கப் படும். அதை அன்றைய தினமும் மறுநாளும் அதற்கடுத்த மூன்றாம் நாளின் மாலை வரையும் அவர்கள் அருந்துவார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கட்டளைக்கிணங்க அது (யாருக்கேனும்) அருந்தக் கொடுக்கப்படும்; அல்லது கொட்டப்பட்டுவிடும்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4085 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காகத் தோல் பையில் உலர்ந்த திராட்சை ஊறவைக்கப்படும். அதை அன்றைய தினமும் மறுநாளும் அதற்கடுத்த நாளும் அவர்கள் அருந்துவார்கள். மூன்றாவது நாள் மாலையில் தாமும் அருந்துவார்கள்; (யாருக்கேனும்) அருந்தவும் கொடுப்பார்கள். பிறகு (அதில்) ஏதேனும் எஞ்சியிருந்தால் அதைக் கொட்டி விடுவார்கள்.

4086 யஹ்யா பின் உபைத் அபூஉமர் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சிலர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், மதுவை விற்பது, வாங்குவது, வியாபாரம் செய்வது ஆகியவற்றைப் பற்றிக் கேட்டனர். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்,

"நீங்களெல்லாம் முஸ்லிம்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் "ஆம்' என்று கூறினர்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "மதுவை விற்பதும் கூடாது; வாங்குவதும் கூடாது; அது தொடர்பான வியாபாரங்களில் ஈடுபடுவதும் கூடாது" என்று கூறினார்கள். பிறகு மக்கள், பழச்சாறுகள் பற்றிக் கேட்டபோது, இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் பின்வருமாறு பதிலளித்தார்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்திற்காகப் புறப்பட்டுச் சென்றுவிட்டுத் திரும்பிக்கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களுடைய தோழர்களில் சிலர் மண் சாடிகளிலும் பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட பாத்திரத்திலும் சுரைக்காய் குடுவையிலும் பழச்சாறுகளை ஊறவைத்திருந்தனர். அவற்றைக் கொட்டிவிடுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட அவ்வாறே அவை கொட்டப்பட்டன.

பிறகு தோல் பையொன்றைக் கொண்டுவரச் சொல்லி உத்தரவிட்டார்கள். (அதைக் கொண்டு வந்ததும்) அதில் உலர்ந்த திராட்சைகளும் சிறிது தண்ணீரும் ஊற்றப்பட்டது. பிறகு அது அந்த இரவு முழுவதும் அப்படியே (ஊற) விடப்பட்டது. காலையானதும் அன்றைய தினம் முழுவதிலும் அடுத்த இரவிலும் அதற்கடுத்த நாள் மாலைவரையிலும் அதில் தாமும் அருந்தினார்கள்; (பிறருக்கும்) அருந்தக் கொடுத்தார்கள். (அடுத்த நாள்) காலையில் அதில் எஞ்சியிருந்ததைக் கொட்டிவிடுமாறு அவர்கள் உத்தரவிட அவ்வாறே அது கொட்டப்பட்டது.

4087 ஸுமாமா பின் ஹஸ்ன் அல்குஷைரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் ஆயிஷா (ரலி) அவர்களைச் சந்தித்து, பழச்சாறுகள் பற்றிக் கேட்டேன். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள்,அபிசீனியாவைச் சேர்ந்த (கறுப்பு நிற) அடிமைப்பெண் ஒருவரை அழைத்து, "இவரிடம் கேளுங்கள். இவர்தாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காகப் பழச்சாறுகளை ஊறவைப்பவராக இருந்தார்" என்று கூறினார்கள்.

அப்போது அந்த அபிசீனிய (அடிமைப்)பெண், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காக இரவில் தண்ணீர் தோல் பையில் பழச்சாற்றை ஊற்றிவைத்து, அதன் வாய்ப் பகுதியை சுருக்கிட்டுக் கட்டி, அதை தொங்க விட்டுவிடுவேன். மறுநாள் காலையில் அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருந்துவார்கள்" என்று கூறினார்.

4088 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காகத் தண்ணீர் தோல் பையொன்றில் பழச்சாறுகளை ஊற்றிவைப்போம். பையின் வாய்ப்பகுதி சுருக்கிட்டுக் கட்டப்படும். அதன் கீழ்ப்பகுதியில் துவாரம் இருக்கும். பழச் சாற்றை நாங்கள் காலையில் ஊற்றிவைத்தால் இரவில் அதை நபியவர்கள் அருந்துவார்கள்; இரவில் ஊற்றிவைத்தால் காலையில் அதை அருந்துவார்கள்.

4089 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அபூஉசைத் (மாலிக் பின் ரபீஆ) அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் தமது திருமணத்திற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அழைத்தார்கள். அதில் (அல்லாஹ்வின் தூதர்

(ஸல்) அவர்கள் கலந்துகொண்டார்கள்.) அபூஉசைத் (ரலி) அவர்களின் துணைவியார் (சலாமா பின்த் உஹைப் - ரலி) அவர்களே -அவர்தாம் மணப்பெண்- அன்றைய தினம் மக்களுக்குப் பணிவிடைகள் செய்தார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பருகுவதற்கு மணப்பெண் என்ன வழங்கினார் தெரியுமா? அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கென்றே இரவில் பேரீச்சம் பழங்களைக் கல் தொட்டியொன்றில் ஊறப்போட்டுவைத்திருந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வலீமா விருந்தை) உண்டு முடித்ததும் அந்தப் பேரீச்சம் பழச்சாற்றை அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பருகத்தந்தார்.
- மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அபூஉசைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து அவர்களை (மணவிருந்துக்கு) அழைத்தார்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வலீமா விருந்தை) உண்டு முடித்ததும் அந்தப் பேரீச்சம் பழச்சாற்றை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அவர் பருகத் தந்தார்" எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

4090 மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அவர் கல் தொட்டியொன்றில் (பேரீச்சம் பழங்களை ஊறவைத்திருந்தார்). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உணவருந்தி முடித்ததும் அந்தப் பேரீச்சம் பழங்களை மணப்பெண் தமது கரத்தால் பிசைந்து சாறு எடுத்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பருகத்தந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு மட்டுமே அதை அவர் வழங்கினார்" என இடம்பெற்றுள்ளது.

4091 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஓர் அரபுப் பெண்ணைப் பற்றி (அவளை மணந்து கொள்ளுமாறு) கூறப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்பெண்ணை அழைத்து வருவதற்கு ஆளனுப்புமாறு அபூஉசைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்களுக்கு உத்தரவிட, அவ்வாறே அவர்கள் ஆளனுப்பினார்கள்.
அந்தப் பெண் வந்து, (மதீனாவிலுள்ள) பனூ சாஇதா குலத்தாரின் கோட்டை ஒன்றில் தங்கினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டு அப்பெண்ணிடம் வந்து, அவள் இருந்த இடத்தில் நுழைய, அங்கே அப்பெண் தலையைக் கவிழ்த்தபடி இருந்தாள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்பெண்ணிடம் (தம்மை மணந்துகொள்ள சம்மதம் கேட்டுப்) பேசியபோது அவள், "உங்களிடமிருந்து நான் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்" என்று சொன்னாள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "என்னிடமிருந்து உனக்குப் பாதுகாப்பு அளித்துவிட்டேன்" என்று கூறினார்கள். மக்கள் அந்தப் பெண்ணிடம், "இவர்கள் யார் என்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்க, அவள் "தெரியாது" என்று பதிலளித்தாள்.

மக்கள் "இவர்கள்தாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள். உன்னைப் பெண் பேசுவதற்காக வந்தார்கள்" என்று கூறினர். அந்தப் பெண், "அவர்களை மணந்துகொள்ளும் நற்பேற்றை நான் இழந்து துர்பாக்கியசாலி ஆகிவிட்டேனே!" என்று (வருத்தத்துடன்) கூறினாள்.
அன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் தோழர்களும் முன்னே சென்று பனூ சாஇதா சமுதாயக் கூடத்தில் அமர்ந்துகொண்டனர். பிறகு "எங்களுக்குக் குடிக்க தண்ணீர் கொடுங்கள்' என்று என்னிடம் சொன்னார்கள். ஆகவே,நான் அவர்களுக்காக இந்தக் கிண்ணத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டுச் சென்று அதில் அவர்களுக்குத் தண்ணீர் (கொண்டு வந்து) புகட்டினேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(பின்னர்) சஹ்ல் (ரலி) அவர்கள் அந்தக் கிண்ணத்தை வெளியில் எடுத்தார்கள். அதில் நாங்களும் பருகினோம். பிறகு (கலீஃபா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் அதைத் தமக்கு அன்பளிப்பாகத் தரும்படி கேட்க, சஹ்ல் (ரலி) அவர்கள் அதை அவர்களுக்கு அன்பளிப்பாக வழங்கிவிட்டார்கள்.
அபூபக்ர் பின் இஸ்ஹாக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "எங்களுக்குக் குடிக்கத் தண்ணீர் கொடுங்கள், சஹ்லே!" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

4092 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இந்தக் கிண்ணத்தில் தேன், பழச்சாறு, தண்ணீர் மற்றும் பால் ஆகிய எல்லாப் பானங்களையும் அருந்தக் கொடுத்திருக்கிறேன்.
இதை ஸாபித் பின் அஸ்லம் அல்புனானீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 10 பால் அருந்தலாம்.

4093 அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் மக்காவிலிருந்து மதீனா நோக்கி (ஹிஜ்ரத்) சென்ற போது, ஆட்டு இடையன் ஒருவனை நாங்கள் கடந்துசென்றோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குத் தாகம் ஏற்பட்டிருந்தது. அப்போது நான் (அந்த இடையனிடமிருந்த ஆட்டிலிருந்து) சிறிதளவு பால் கறந்து அதை நபியவர்களிடம் கொண்டுவ(ந்து கொடு)த்தேன். நான் திருப்தியடையும் அளவுக்கு அதை நபி (ஸல்) அவர்கள் அருந்தினார்கள்.
இதை பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4094 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து மதீனாவிற்கு (ஹிஜ்ரத் செய்து) வந்தபோது, அவர்களைப் பின்தொடர்ந்து (அவர்களைப் பிடிப்பதற்காக) சுராக்கா பின் மாலிக்

பின் ஜுஅஷும் என்பவர் வந்தார். ஆகவே,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுராக்காவிற்கு எதிராகப் பிரார்த்தித்தார்கள். உடனே அவரது குதிரை பூமியில் அழுந்திவிட்டது.
சுராக்கா (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்), "எனக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று சொன்னார். அவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்காகப் பிரார்த்தித்தார்கள்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தாகத்துடன் இருக்க, ஓர் ஆட்டு இடையனை அவர்கள் கடந்துசென்றார்கள்.
(பின்னர் நடந்தவை பற்றி) அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் ஒரு கிண்ணத்தை எடுத்து (ஆடு ஒன்றிலிருந்து) சிறிதளவு பாலை அதில் கறந்து, அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவந்(து கொடுத்)தேன். நான் திருப்தியடையும் அளவுக்கு அதிலிருந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருந்தினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4095 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஜெரூசலத்திற்கு அழைத்துச் செல்லப்பட்ட (இஸ்ரா மற்றும் விண்ணுலகப் பயண) இரவில் அவர்களிடம் இரு கிண்ணங்கள் கொண்டுவரப்பட்டன. ஒன்றில் மதுவும் மற்றொன்றில் பாலும் இருந்தன. நபி (ஸல்) அவர்கள் அவ்விரண்டையும் உற்றுப் பார்த்துவிட்டு, பால் கிண்ணத்தை எடுத்துக்கொண்டார்கள்.
அப்போது அவர்களிடம் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் "தங்களுக்கு இயற்கை வழியைக் காட்டிய இறைவனுக்கே எல்லாப் புகழும். நீங்கள் மதுக் கிண்ணத்தை எடுத்திருந்தால் உங்கள் சமுதாயம் தறிகெட்டுப் போயிருக்கும்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரவில் அழைத்துச் செல்லப்பட்டபோது அவர்களிடம் இரு கிண்ணங்கள் கொண்டுவரப்பட்டன" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. அதில் "ஜெரூசலத்திற்கு' எனும் குறிப்பு இல்லை.

## பாடம் : 11 பழச்சாறுகளைப் பருகுவதும் பாத்திரங்களை மூடிவைப்பதும்.

4096 அபூஹுமைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம் "அந்நகீஉ' எனுமிடத்திலிருந்து ஒரு கோப்பைப் பாலை மூடாமல் கொண்டுவந்தேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இதன்மீது ஒரு குச்சியைக் குறுக்காக வைத்தாவது இதை நீங்கள் மூடிக் கொண்டுவந்திருக்கக் கூடாதா?" என்று (என்னிடம்) கேட்டார்கள்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

"தண்ணீர் தோல் பைகளின் வாய்ப்பகுதியைச் சுருக்கிட்டு வைக்குமாறும் கதவுகளை இரவில் தாழிட்டு வைக்குமாறும் கட்டளையிடப்பட்டுள்ளது" என்றும் அபூ ஹுமைத் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- அபூஹுமைத் (ரலி) அவர்களிடமிருந்து ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் நபி (ஸல்) அவர்களிடம் ஒரு கோப்பை பால் கொண்டுவந்தேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.
ஸகரிய்யா பின் இஸ்ஹாக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இரவில்' எனும் குறிப்பு இல்லை.

4097 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தபோது குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டார்கள். அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! குடிப்பதற்குப் பழச்சாறு தரட்டுமா?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "சரி" என்றார்கள்.
உடனே அந்த மனிதர் விரைந்து சென்று ஒரு கோப்பையில் பழச்சாறு கொண்டு வந்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதன்மீது ஒரு குச்சியைக் குறுக்காக வைத்தாவது இதை நீங்கள் மூடிக் கொண்டுவந்திருக்கக்கூடாதா?" என்று கேட்டு விட்டு, பிறகு அதை அருந்தினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4098 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூஹுமைத் எனப்படும் ஒரு மனிதர் "நகீஉ' எனும் இடத்திலிருந்து ஒரு கோப்பை பால் கொண்டுவந்தார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதன்மீது ஒரு குச்சியைக் குறுக்காக வைத்தாவது இதை நீங்கள் மூடிக் கொண்டுவந்திருக்கக்கூடாதா?" என்று கேட்டார்கள். – இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

**பாடம் : 12 பாத்திரங்களை மூடிவைத்தல், தண்ணீர் தோல் பையின் வாயைச் சுருக்கிட்டு வைத்தல், கதவைத் தாழிடுதல்,இவற்றின்போது அல்லாஹ்வின் பெயர் கூறல், உறங்கச் செல்கையில் விளக்கையும் நெருப்பையும் அணைத்துவிடுதல், மஃக்ரிபுக்குப் பின் (இரவின் சிறிது நேரம் கழியும்வரை) குழந்தைகளையும் கால்நடைகளையும் (வெளியே திரியவிடாமல்) தடுத்துவிடல் ஆகியவற்றைச் செய்யுமாறு வந்துள்ள கட்டளை.**

4099 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பாத்திரங்களை மூடிவையுங்கள்; தண்ணீர் தோல் பையின் வாயைச் சுருக்கிட்டுக் கட்டி விடுங்கள்; கதவைத் தாழிட்டுவிடுங்கள்; விளக்கை அணைத்துவிடுங்கள்; ஏனெனில்,

ஷைத்தான் (சுருக்கிட்டு மூடிவைக்கப்பட்ட) எந்தப் பையையும் அவிழ்ப்பதில்லை; மூடப்பட்ட எந்தக் கதவையும் திறப்பதில்லை; (மூடிவைக்கப்பட்ட) எந்தப் பாத்திரத்தையும் திறப்பதில்லை.

உங்களில் ஒருவர் தமது பாத்திரத்தின் மீது ஒரு குச்சியைக் குறுக்காக வைத்தாவது அல்லாஹ்வின் பெயர் சொல்லி மூடிவைக்க முடியுமானால் அவ்வாறே அவர் செய்து கொள்ளட்டும். ஏனென்றால், எலி (விளக்கின் திரியை இழுத்துச் சென்று) வீட்டாரோடு சேர்த்து வீட்டை எரித்துவிடும்.

இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் குதைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "கதவைத் தாழிட்டுவிடுங்கள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "பாத்திரத்தைக் கவிழ்த்து(க் கொட்டி)விடுங்கள்; அல்லது பாத்திரத்தை மூடிவையுங்கள்" என்று இடம்பெற்றுள்ளது. "பாத்திரத்தின் மீது குச்சியைக் குறுக்காக வைப்பது' தொடர்பான குறிப்பு இல்லை.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "கதவைத் தாழிட்டுவிடுங்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகி மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளது. இந்த அறிவிப்பில் "பாத்திரத்தை மூடிவையுங்கள்" என்றும், "(எலி) வீட்டாரின் உடைகளை எரித்துவிடும்" என்றும் இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், மேற்கண்ட ஹதீஸில் உள்ள விவரங்களுடன் "எலி வீட்டாரோடு சேர்த்து வீட்டை எரித்துவிடும்" என்று இடம்பெற்றுள்ளது.

4100 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

"இரவின் இருள் பரவத் தொடங்கிவிட்டால்' அல்லது "அந்திப் பொழுதாகிவிட்டால்' உங்கள் குழந்தைகளை (வெளியே திரியவிடாமல்) தடுத்துவிடுங்கள். ஏனெனில், ஷைத்தான்கள் அப்போதுதான் (புத்தெழுச்சியுடன் பூமியெங்கும்) பரவுகின்றனர். இரவின் சிறிது நேரம் கழிந்துவிட்டால் குழந்தைகளை (வெளியே செல்ல) விட்டுவிடுங்கள். மேலும், (வீட்டின்) கதவுகளைத் தாழிட்டுவிடுங்கள். அப்போது அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள். ஏனெனில், ஷைத்தான் மூடப்பட்ட எந்தக் கதவையும் திறப்பதில்லை.

உங்கள் தண்ணீர் பையின் வாய்ப் பகுதியைச் சுருக்கிட்டு மூடிவிடுங்கள். (அப்போதும்) அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள். உங்களுடைய பாத்திரங்களை மூடி வையுங்கள். (அப்போதும்) அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள். (அவற்றை முழுவதும் மூட முடியாவிட்டாலும்) அவற்றின் மீது எதையாவது குறுக்காக வைத்தேனும் மூடிவிடுங்கள். உங்கள் விளக்குகளை அணைத்துவிடுங்கள்.

இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
எனினும், அதில் "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட இரு ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4101 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சூரியன் மறைந்துவிட்டால் இரவின் (ஆரம்பநேர) இருள் விலகும்வரை உங்கள் கால்நடைகளையும் குழந்தைகளையும் வெளியே விடாதீர்கள். ஏனெனில், ஷைத்தான்கள் சூரியன் மறைந்துவிட்டால் இரவின் (ஆரம்பநேர) இருள் விலகும்வரை கிளம்பிச் செல்கின்றனர்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4102 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பாத்திரங்களை மூடிவையுங்கள்; தண்ணீர் தோல் பையின் வாய்ப்பகுதியைச் சுருக்கிட்டு மூடிவையுங்கள். ஏனெனில்,ஆண்டின் ஓர் இரவில் கொள்ளை நோய் இறங்குகிறது. மூடியில்லாத பாத்திரத்தையும் சுருக்கிட்டு மூடிவைக்காத தண்ணீர் பையையும் கடந்து செல்லும் அந்த நோயில் சிறிதளவாவது அதில் இறங்காமல் இருப்பதில்லை.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஆண்டில் ஒரு நாள் உண்டு. அந்நாளில் கொள்ளை நோய் இறங்குகிறது" என்று இடம்பெற்றுள்ளது. ஹதீஸின் இறுதியில் "நமக்கு அருகிலுள்ள அரபியர் அல்லாதோர் டிசம்பர் மாதத்தில் அந்த நாள் வருவதாகக் கருதி அஞ்சுகின்றனர்" என்று லைஸ் பின் சஅத் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4103 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் உறங்கச் செல்லும்போது உங்கள் வீட்டிலுள்ள நெருப்பை (அணைக்காமல்) விட்டுவிடாதீர்கள்.- இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4104 அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மதீனாவில் ஒரு வீடு இரவில் (தீ விபத்துக்குள்ளாகி) வீட்டாரோடு எரிந்துவிட்டது. அவர்களின் நிலை குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்ட போது, "இந்த நெருப்பு உங்களுக்கு ஆபத்தானதே ஆகும். ஆகவே, நீங்கள் உறங்கச் செல்லும்போது நெருப்பை அணைத்து விடுங்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 13 உண்பது, அருந்துவது ஆகியவற்றின் ஒழுங்குமுறைகளும் விதிமுறைகளும்.**

4105 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் (சேர்ந்து) உணவு உண்பதற்கு அமர்ந்தால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முதலில் கை வைப்பதற்கு முன் எங்கள் கைகளை (உணவில்) நாங்கள் வைக்கமாட்டோம். ஒருமுறை நாங்கள் உணவு உண்பதற்கு அவர்களுடன் அமர்ந்தோம். அப்போது ஒரு சிறுமி, (யாராலோ) தள்ளிவிடப்பட்டவளைப் போன்று (விரைந்து) வந்து, (பிஸ்மில்லாஹ் சொல்லாமல்) உணவில் கை வைக்கப்போனாள்.
உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவளது கையைப் பிடித்துக்கொண்டார்கள். பிறகு ஒரு கிராமவாசி, (யாராலோ) தள்ளிவிடப்பட்டவரைப் போன்று (விரைந்து வந்து பிஸ்மில்லாஹ் சொல்லாமல் உணவில் கை வைக்க) வந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரது கையையும் பிடித்துக் கொண்டார்கள்.
அப்போது, "அல்லாஹ்வின் பெயர் சொல்லப்படாத உணவில் ஷைத்தான் பங்கேற்கிறான். அவன் இச்சிறுமியுடன் வந்து, அவள் மூலமே இந்த உணவில் பங்கேற்கப் பார்த்தான். ஆகவே, அவளது கையை நான் பிடித்து (அதைத் தடுத்து)விட்டேன். பிறகு இந்தக் கிராமவாசியுடன் வந்து அவர் மூலம் இந்த உணவில் பங்கேற்கப் பார்த்தான். ஆகவே,இவரது கையைப் பிடித்து (அதைத் தடுத்து)விட்டேன். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! ஷைத்தானின் கை அச்சிறுமியின் கையுடன் எனது கைக்குள் சிக்கிக்கொண்டது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் உணவு உண்ண (விருந்துக்கு) அழைக்கப்பெற்றால்..."என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
இதில் ("தள்ளிவிடப்பட்டவரைப் போன்று' என்பதற்குப் பதிலாக) "துரத்தப்பட்டவரைப் போன்று' என்றும், முதலில் கிராமவாசி வந்தார்; பிறகு அச்சிறுமி வந்தாள் என்றும் இடம்பெற்றுள்ளது. மேலும், ஹதீஸின் இறுதியில் "பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் பெயர் (பிஸ்மில்லாஹ்) சொல்லி உணவு உண்டார்கள்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள் ளது.
அதில் "கிராமவாசிக்கு முன் அச்சிறுமி வந்தாள்" என்று காணப்படுகிறது.

4106 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர் தமது இல்லத்திற்குள் நுழையும் போதும் உணவு உண்ணும்போதும் அல்லாஹ்வை நினைவுகூர்ந்தால், ஷைத்தான் (தன் கூட்டத்தாரிடம்), "இன்றைய இரவில் உங்களுக்கு (இங்கே) தங்குமிடமும் இல்லை; உண்ண உணவுமில்லை" என்று கூறுகிறான். ஒருவர் இல்லத்திற்குள் நுழையும் போது அல்லாஹ்வை நினைவுகூராவிட்டால் ஷைத்தான் (தன்

கூட்டத்தாரிடம்), "இன்றைய இரவில் உங்களுக்குத் தங்குமிடம் கிடைத்துவிட்டது" என்று சொல்கிறான்.
அவர் உணவு உண்ணும்போது அல்லாஹ்வின் பெயர் கூறாவிட்டால் ஷைத்தான் "இன்றைய இரவில் நீங்கள் தங்கும் இடத்தையும் உணவையும் அடைந்துகொண்டீர்கள்" என்று சொல்கிறான்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அவர் உணவு உண்ணும்போது அல்லாஹ்வின் பெயர் கூறாவிட்டால், அவர் இல்லத்திற்குள் நுழையும்போது அல்லாஹ்வின் பெயர் கூறாவிட்டால் (ஷைத்தான் "இந்த இரவில் நீங்கள் தங்குமிடத்தையும் உணவையும் அடைந்துகொண்டீர்கள்' என்று கூறுகிறான்)" என இடம்பெற்றுள்ளது.

4107 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இடக்கையால் உண்ணாதீர்கள். ஏனெனில், ஷைத்தான் இடக்கையால்தான் உண்கிறான்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4108 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் உணவு உண்ணும் போது வலக்கையால் உண்ணட்டும்; பருகும் போது வலக்கையால் பருகட்டும். ஏனெனில், ஷைத்தான் இடக்கையால்தான் உண்கிறான்; இடக் கையால்தான் பருகுகிறான்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிபபாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4109 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யாரும் இடக் கையால் உண்ண வேண்டாம்; இடக் கையால் பருக வேண்டாம். ஏனெனில், ஷைத்தான் இடக் கையால்தான் உண்கிறான்; இடக்கையால் தான் பருகுகிறான்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
நாஃபிஉ (ரஹ்) அவர்கள் தமது அறிவிப்பில் "இடக் கையால் வாங்காதீர்கள். இடக் கையால் கொடுக்காதீர்கள்" என்று கூடுதலாக அறிவித்துள்ளார்கள். அபுத்தாஹிர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உங்களில் ஒருவர் (இடக் கையால்) உண்ண வேண்டாம்" என்று இடம்பெற்றுள்ளது.

4110 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் இடக் கையால் உணவு உண்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "வலக் கையால்

உண்பீராக!" என்று சொன்னார்கள். அவர், "என்னால் முடியாது" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உம்மால் முடியாமலே போகட்டும்!" என்று சொன்னார்கள். அகம்பாவமே அவரை (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குக் கட்டுப்படாமல்) தடுத்தது. அவ்வாறே, அவரால் தமது வாய்க்குக் கையை உயர்த்த முடியாமல் போனது.

4111 உமர் பின் அபீசலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மடியில் வளர்ந்தேன். (ஒருமுறை) எனது கை, உணவுத் தட்டில் (இங்கும் அங்குமாக) அலைந்துகொண்டிருந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குழந்தாய்! (உண்ணும்போது) அல்லாஹ்வின் பெயரைச் சொல்வாயாக! உன் வலக்கரத்தால் உண்பாயாக! உன(து கை)க்கு அருகிலிருக்கும் பகுதியிலிருந்து எடுத்து உண்பாயாக!" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4112 உமர் பின் அபீசலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் உணவு அருந்தினேன். தட்டின் மூலைகளிலிருந்து இறைச்சியை எடுக்கலானேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன(து கை)க்கு அருகிலிருந்து எடுத்து உண்பாயாக!" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4113 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தண்ணீர் தோல் பைகளை, அவற்றின் வாய்ப்பகுதியை வெளிப் பக்கமாகச் சுருட்டிவிட்டு அதிலிருந்து நீரருந்த வேண்டாமென ("இக்தினாஸ்') தடை விதித்தார்கள்.

4114 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் தோல் பைகளை, அவற்றின் வாய்ப் பகுதியி(னை வெளிப்பக்கமாகச் சுருட்டிவிட்டு அதி)லிருந்து நீர் பருக வேண்டாமெனத் தடை செய்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "இக்தினாஸ்' என்பது, அவற்றின் வாய்ப்பகுதியை வெளிப்பக்கமாகத் திருப்பிவிட்டு, அதிலிருந்து நீர் பருகுவதாகும்" என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 14 நின்றுகொண்டு நீர் அருந்துவது வெறுக்கத்தக்கதாகும்.

4115 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், நின்றுகொண்டு நீர் அருந்துவதைக் கண்டித்தார்கள்.

4116 கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறிய தாவது:
அனஸ் (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள், ஒருவர் நின்றுகொண்டு நீர் அருந்த வேண்டாம் எனத் தடை செய்தார்கள்" என்று கூறினார்கள். உடனே நாங்கள், "அவ்வாறாயின் (நின்றுகொண்டு) உண்ணலாமா?" என்று கேட்டோம். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள், "அது அதைவிட மோசமானது; அருவருப்பானது" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் கத்தாதா (ரஹ்) அவர்களின் கூற்று இடம்பெறவில்லை.

4117 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், நின்றுகொண்டு நீர் அருந்துவதைக் கண்டித்தார்கள்.

4118 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நின்றுகொண்டு நீர் அருந்த வேண்டாமெனத் தடை செய்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4119 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யாரும் நின்றுகொண்டு அருந்தவேண்டாம். யாரேனும் மறந்து(போய் நின்று கொண்டு அருந்தி)விட்டால் அவர் வாந்தி எடுத்துவிடட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 15 ஸம்ஸம் தண்ணீரை நின்றுகொண்டு அருந்துவது.

4120 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு, அருந்துவதற்கு ஸம்ஸம் தண்ணீரைக் கொடுத்தேன். அதை அவர்கள் நின்றுகொண்டு அருந்தினார்கள்.

4121 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஸம்ஸம் (கிணற்றின்) தண்ணீரை ஒரு வாளியில் எடுத்து, அதை நின்றுகொண்டு அருந்தினார்கள்.

4122 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்றுகொண்டு ஸம்ஸம் தண்ணீரை அருந்தினார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4123 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு, அருந்துவதற்கு ஸம்ஸம் தண்ணீர் கொடுத்தேன். அதை அவர்கள் நின்றுகொண்டு அருந்தினார்கள். இறையில்லம் கஅபா அருகில் இருந்தபோதுதான் அவர்கள் தண்ணீர் கேட்டார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஆகவே, அவர்களுக்கு ஒரு வாளியில் தண்ணீர் கொண்டுவந்தேன்" என இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 16 (பருகும்) பாத்திரத்தினுள் மூச்சு விடுவது வெறுக்கத்தக்கதாகும். பாத்திரத்திற்கு வெளியே மூன்று முறை மூச்சு விட்டுப் பருகுவது விரும்பத்தக்கதாகும்.**

4124 அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
நபி (ஸல்) அவர்கள் (பருகும்) பாத்திரத்தினுள் மூச்சு விட வேண்டாமெனத் தடை செய்தார்கள்.

4125 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பருகும்போது) மூன்று முறை பாத்திரத்தி(ற்கு வெளியி)ல் மூச்சு விட்டு(ப் பருகி)வந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4126 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பருகும்போது மூன்று முறை மூச்சு விட்டு(ப் பருகி)வந்தார்கள். மேலும், "இதுவே நன்கு தாகத்தைத் தணிக்கக்கூடியதும் (உடல்நலப்) பாதுகாப்பிற்கு ஏற்றதும் அழகிய முறையில் செரிக்கச் செய்யக்கூடியதும் ஆகும்" என்று கூறினார்கள்.
ஆகவேதான், நானும் பருகும்போது மூன்று முறை மூச்சு விட்டு(ப் பருகி) வருகிறேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "பாத்திரத்தில் (பருகும்போது)' என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 17 (ஓர் அவையில் பரிமாறப்படும்) தண்ணீர், பால் உள்ளிட்ட பானங்களை (பரிமாறுகின்ற) முதல் நபர், தமது வலப்பக்கத்திலிருந்து கொடுத்துவருவது விரும்பத்தக்கதாகும்.**

4127 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தண்ணீர் கலந்த பால் கொண்டுவரப்பட்டது. அப்போது அவர்களுக்கு வலப்பக்கம் கிராமவாசி ஒருவரும் இடப்பக்கம் அபூபக்ர் (ரலி) அவர்களும் இருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பாலைப்) பருகிய பின் (மீதியை வலப்பக்கமிருந்த) அந்தக் கிராமவாசிக்குக் கொடுத்துவிட்டு, "(பரிமாறும்போது முதலில்) வலப்பக்கம் இருப்பவருக்கும், அடுத்து (அவருக்கு) வலப்பக்கமிருப்பவருக்கும் (கொடுக்கவேண்டும்)" என்று சொன்னார்கள்.

4128 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது நான் பத்து வயதுடையவனாக இருந்தேன். நான் இருபது வயதுடையவனாக இருந்தபோது அவர்கள் இறந்தார்கள். என் (தாய், தாயின் சகோதரி உள்ளிட்ட) அன்னையர்கள், நபி (ஸல்) அவர்களுக்குப் பணிவிடை செய்யுமாறு என்னைத் தூண்டிக்கொண்டேயிருந்தார்கள்.
இந்நிலையில் (ஒரு நாள்) நபி (ஸல்) அவர்கள் எங்கள் வீட்டுக்கு வந்தார்கள். அவர்களுக்காக (எங்கள்) வீட்டில் வளர்ந்த ஓர் ஆட்டிலிருந்து நாங்கள் பால் கறந்து, வீட்டிலிருந்த கிணறு ஒன்றிலிருந்து நீரெடுத்து அதில் கலந்து (அடர்த்தி நீக்கி, குளுமையாக்கி) அவர்களுக்குக் கொடுத்தோம். அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பருகினார்கள். அப்போது அவர்களிடம் உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அபூபக்ருக்குக் கொடுங்கள்" என்று சொன்னார்கள்.
அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இடப்பக்கத்தில் இருந்தார்கள். ஆனால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமக்கு வலப் பக்கத்திலிருந்த) கிராமவாசி ஒருவருக்கே கொடுத்தார்கள். மேலும், "(பானங்கள் உள்ளிட்டவற்றைப் பரிமாறும்போது முதலில்) வலப்பக்கம் இருப்பவருக்கும் அடுத்து (அவருக்கு) வலப்பக்கத்தில் இருப்பவருக்கும் (கொடுக்க வேண்டும்)" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4129 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் வீட்டுக்கு வந்தபோது, அருந்துவதற்குத் தண்ணீர் கேட்டார்கள். ஆகவே,அவர்களுக்காக நாங்கள் ஓர் ஆட்டின் பாலைக் கறந்தோம். பிறகு எனது இந்தக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து, அதில் கலந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொடுத்தேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருந்தினார்கள். அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் நபியவர்களின் இடப் பக்கத்திலும், உமர் (ரலி) அவர்கள் நபியவர்களின் முன் பக்கத்திலும், ஒரு கிராமவாசி நபியவர்களுக்கு வலப் பக்கத்திலும் இருந்தனர். அப்போது உமர் (ரலி) அவர்கள், "இதோ அபூபக்ர் (அவருக்கு மீதியுள்ள பாலைக் கொடுங்கள்) அல்லாஹ்வின் தூதரே!" என்று (இடப்பக்கத்திலிருந்த) அபூபக்ர் (ரலி) அவர்களைக் காட்டிக் கூறினார்கள். எனினும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வலப்பக்கமிருந்த) அந்தக் கிராமவாசிக்குக் கொடுத்தார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களுக்கும் உமர் (ரலி) அவர்களுக்கும் கொடுக்கவில்லை.
மேலும், "(பரிமாறும்போது முதலில்) வலப்பக்கத்தில் இருப்பவர்களே (முன்னுரிமையுடையவர்கள்). வலப்பக்கத்தில் இருப்பவர்களே (முன்னுரிமையுடையவர்கள்). வலப்பக்கத்தில் இருப்பவர்களே (முன்னுரிமையுடையவர்கள்)" என்று கூறினார்கள்.
(இறுதியில்) அனஸ் (ரலி) அவர்கள், "இதுவே நபிவழியாகும்; இதுவே நபிவழியாகும்; இதுவே நபிவழியாகும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4130 சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஏதோ பானம் கொண்டு வரப்பட்டது. அவர்கள் அதை அருந்தினார்கள். அப்போது அவர்களுக்கு வலப்பக்கம் சிறுவர் ஒருவரும் இடப்பக்கத்தில் முதியோர் சிலரும் இருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அச்சிறுவரிடம், "இ(ந்தப் பானத்தை இம்முதிய)வர்களுக்கு அளிக்க என்னை நீ அனுமதிப்பாயா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அச்சிறுவர், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! தங்களிடமிருந்து எனக்குக் கிடைக்கும் இந்த நற்பேற்றை வேறெவருக்கும் நான் விட்டுத்தரமாட்டேன்" என்று பதிலளித்தார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,அதை அச்சிறுவனின் கையிலேயே அழுத்தி வைத்துவிட்டார்கள்.

4131 மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் குதைபா மற்றும் யஅகூப் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதை (அச்சிறுவனின் கையிலேயே) அழுத்தி வைத்துவிட்டார்கள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை. ஆயினும், யஅகூப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "எனவே, அ(ச் சிறு)வருக்கே அதைக் கொடுத்தார்கள்" என்று இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 18 (உணவு உண்டு முடித்ததும்) விரல்களைச் சூப்புவதும், உணவுத் தட்டை வழித்து உண்பதும், கீழே தவறிவிழுந்த உணவுக் கவளத்தில் படும் தூசைத் துடைத்துவிட்டு அதை உண்பதும் விரும்பத்தக்கவை ஆகும். விரல்களைச் சூப்புவதற்கு முன் கையைத் துடைப்பது வெறுக்கத்தக்கதாகும்.

4132 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் உணவு உட்கொண்டால், அவர் தமது கையைத் தாமே உறிஞ்சாமல் அல்லது (மனைவி போன்றவரிடம்) உறிஞ்சத்தராமல் அதை அவர் துடைத்துக்கொள்ள வேண்டாம்.- இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4133 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் உணவு உட்கொண்டால், அவர் தமது கையைத் தாமே உறிஞ்சாமல் அல்லது (மனைவி போன்றவரிடம்) உறிஞ்சத்தராமல் கையைத் துடைத்துக் கொள்ள வேண்டாம். - இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4134 கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் உணவு உண்ட பின் தம்முடைய மூன்று விரல்களை உறிஞ்சுவதை நான் பார்த்திருக்கிறேன்.- இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ஹாத்திம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "மூன்று' எனும் குறிப்பு இல்லை.

- கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மூன்று விரல்களால் உணவு உண்பார்கள். (உண்டு முடித்த பின்) கையைத் துடைப்பதற்கு முன் கையை உறிஞ்சுவார்கள்.

4135 கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மூன்று விரல்களால் உணவு உட்கொள்வார்கள். உண்டு முடித்ததும் அவ்விரல்களை உறிஞ்சுவார்கள்.
இதை அப்துர் ரஹ்மான் பின் கஅப் (ரஹ்) அவர்கள், அல்லது அப்துல்லாஹ் பின் கஅப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4136 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், (உணவு உண்டு முடித்தவர் தம்) விரல்களை உறிஞ்சுமாறும் தட்டை வழித்து உண்ணுமாறும் உத்தரவிட்டார்கள். மேலும், "உணவின் எந்தப் பகுதியில் வளம் (பரக்கத்) உள்ளது என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள்" என்றும் கூறினார்கள்.

4137 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவரது உணவுக்கவளம் (உண்ணும்போது தவறி) விழுந்துவிட்டால் அவர் அதை எடுத்து, அதில் ஒட்டியிருப்பதை அகற்றி(ச் சுத்தம் செய்து)விட்டு அதை உண்ணட்டும். அதை ஷைத்தானுக்கு விட்டுவிட வேண்டாம். மேலும், (உண்ட பின்) தம் விரல்களை உறிஞ்சுவதற்கு முன் கைக்குட்டையால் கையைத் துடைத்துவிட வேண்டாம். ஏனெனில், தமது உணவில் எந்தப் பகுதியில் வளம் (பரக்கத்) உள்ளது என்பதை அவர் அறியமாட்டார்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "தமது கையைத் தாமே உறிஞ்சாமல் அல்லது (மனைவி போன்றவரிடம்) உறிஞ்சத் தராமல் அதைக் கைக்குட்டையால் துடைத்துவிட வேண்டாம்" என்பதும் அதற்குப் பின்னுள்ள தகவல்களும் இடம்பெற்றுள்ளன.

4138 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருடைய ஒவ்வொரு அலுவலிலும் ஷைத்தான் பங்கேற்கிறான். மனிதன் உணவு உண்ணும்போதும் அவன் பங்கேற்கிறான். (உண்ணும்போது) உங்களில் ஒருவரிடமிருந்து உணவுக் கவளம் கீழே விழுந்துவிட்டால், அதில் படுவதை சுத்தப்படுத்தி விட்டு, பிறகு அதை உண்ணட்டும். அதை ஷைத்தானுக்கு விட்டுவிட வேண்டாம்.
உண்டு முடித்ததும் அவர் தம் விரல்களை உறிஞ்சிக்கொள்ளட்டும். ஏனெனில், அவரது எந்த உணவில் வளம் (பரக்கத்) இருக்கும் என்பதை அவர் அறியமாட்டார்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் "உங்களில் ஒருவரிடமிருந்து உணவுக்கவளம் விழுந்துவிட்டால்" என்பதிலிருந்தே ஹதீஸ் ஆரம்பமாகிறது. "உங்களில் ஒருவருடைய ஒவ்வொரு அலுவலிலும் ஷைத்தான் பங்கேற்கிறான்" எனும் ஆரம்பக் குறிப்பு அவற்றில் இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "கை விரல்களை உறிஞ்சிக் கொள்வது' தொடர்பாக இடம்பெற்றுள்ளது. அபூசுஃப்யான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உணவுக் கவளம் விழுந்துவிடுவது' தொடர்பான குறிப்பு இடம்பெற்றுள்ளது.

4139 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏதேனும் உணவை உண்டால் (இறுதியில்) மூன்று விரல்களை உறிஞ்சிக்கொள்வார்கள். மேலும், "உங்களில் ஒருவரது உணவுக்கவளம் (உண்ணும் போது) கீழே விழுந்துவிட்டால், அதில் படுவதை நீக்கி (சுத்தப்படுத்தி)விட்டு, அதை உண்ணட்டும். அதை ஷைத்தானுக்கு விட்டுவிட வேண்டாம்" என்றும் அவர்கள் கூறினார்கள்.
இறுதியில் உணவுத் தட்டையும் வழித்து உண்ணுமாறு எங்களுக்கு உத்தரவிட்டார்கள். "ஏனெனில் உங்களின் எந்த உணவில் வளம் (பரக்கத்) உள்ளது என்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள்" என்றும் கூறுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4140 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் உணவு உண்டால், அவர் தம் விரல்களை உறிஞ்சிக்கொள்ளட்டும். அவற்றில் எதில் வளம் (பரக்கத்) உள்ளது என்பதை அவர் அறியமாட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "உங்களில் ஒருவர் உணவு உண்டால் (இறுதியில்) உணவுத் தட்டை வழித்து உண்ணட்டும்" என்றும், உங்களின் "எந்த உணவில் வளம் (பரகத்) உள்ளது" அல்லது "(உங்களின் எந்த உணவில்) உங்களுக்கு வளம் வழங்கப்படும்' (என்பதை அவர் அறியமாட்டார்)" என்றும் இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 19 விருந்துக்கு அழைக்கப்பட்டவரைத் தொடர்ந்து, அழைக்கப்படாத மற்றொருவரும் வந்துவிட்டால் விருந்தாளி என்ன செய்யவேண்டும் என்பதும், அவ்வாறு பின் தொடர்ந்து வந்தவருக்கு விருந்து கொடுப்பவர் அனுமதி அளிப்பது விரும்பத்தக்கதாகும் என்பதும்.**

4141 அபூமஸ்ஊத் உக்பா பின் ஆமிர் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் அபூஷுஐப் எனப்படும் ஒருவர் இருந்தார். அவரிடம் இறைச்சி விற்கும் பணியாளர் ஒருவர் இருந்தார். (ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முகத்தில் பசி(யின் குறி)யைக் கண்ட அபூஷுஐப் (ரலி) அவர்கள் தம் பணியாளிடம்,

"உமக்குக் கேடுதான். ஐந்து பேருக்கு வேண்டிய உணவை நமக்காக நீ தயார் செய்(து வை). ஏனெனில், ஐவரில் ஒருவராக நபி (ஸல்) அவர்களை நான் (விருந்துக்கு) அழைக்கப் போகிறேன்" என்று கூறினார். அவ்வாறே அந்த அடிமையும் உணவு தயாரித்தார்.
பிறகு அபூஷுஐப் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, ஐவரில் ஒருவராக நபியவர்களையும் விருந்துண்ண அழைத்தார். அவர்களைப் பின்தொடர்ந்து மற்றொரு மனிதரும் வந்தார்.
(அபூஷுஐபின்) வீட்டுவாசலுக்கு வந்த நபி (ஸல்) அவர்கள், "இவர் எங்களைப் பின் தொடர்ந்து வந்துவிட்டார். எனவே,இவருக்கு அனுமதியளிக்க நீங்கள் விரும்பினால் (அவர் விருந்தில் கலந்துகொள்வார்; விருந்தில் கலந்துகொள்ளக்கூடாது என) நீங்கள் விரும்பினால் அவர் திரும்பிச் சென்றுவிடுவார்" என்று கூறினார்கள். அபூஷுஐப் (ரலி) அவர்கள், "இல்லை. அவருக்கு நான் அனுமதியளிக்கிறேன், அல்லாஹ்வின் தூதரே! என்று கூறினார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமஸ்ஊத் அல் அன்சாரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமஸ்ஊத் அல்அன்சாரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4142 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அண்டை வீட்டுக்காரர் ஒருவர் இருந்தார். பாரசீகரான அவர் நன்கு (மணம் கமழ) குழம்பு சமைக்கக்கூடியவராக இருந்தார். அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காக உணவு சமைத்துவிட்டு அவர்களை அழைப்பதற்காக வந்தார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் அருகில் பசியோடு இருந்த தம் துணைவி) ஆயிஷா (ரலி) அவர்களை சைகை செய்து காட்டி "இவரும் (வரலாமா)?" என்று கேட்டார்கள், அவர் (உணவு குறைவாக இருந்ததால்), "இல்லை (வேண்டாம்)" என்று கூறிவிட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இல்லை (அவ்வாறாயின் நானும் வரமாட்டேன்)" என்று கூறிவிட்டார்கள்.
அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அழைப்பதற்காக மறுபடியும் வந்தார். அப்போதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவரும் (வரலாமா)?" என்று (ஆயிஷா (ரலி) அவர்களை சைகை செய்து) கேட்டார்கள். அப்போதும் அவர் "இல்லை (வேண்டாம்)" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் "(அவ்வாறாயின் நானும்) இல்லை" என்று கூறிவிட்டார்கள்.
அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அழைப்பதற்காக மறுபடியும் வந்தார். அப்போதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இவரும் (வரலாமா)?" என்று (ஆயிஷா (ரலி) அவர்களை சைகை செய்து) கேட்டார்கள். அவர் மூன்றாவது முறை "சரி (வரலாம்)" என்றார். பின்னர் இருவரும் ஒருவரையொருவர் பின்தொடர்ந்து அவரது வீட்டுக்குப் போய்ச்சேர்ந்தனர்.

**பாடம் : 20 வீட்டுக்காரரின் சம்மதம் கிடைக்கும் என்ற நம்பிக்கை இருந்தால், அதை நன்கு உறுதி செய்துகொண்டு மற்றொருவரையும் அழைத்துச் செல்லலாம் என்பதும், பலர் சேர்ந்து உணவு உண்பது விரும்பத்தக்கதாகும் என்பதும்.**

4143 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) "ஒரு பகல்' அல்லது "ஓர் இரவு' (தமது இல்லத்திலிருந்து) வெளியே புறப்பட்டு வந்தார்கள். அப்போது அபூபக்ர் (ரலி) அவர்களும் உமர் (ரலி) அவர்களும் வெளியே இருந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்த நேரத்தில் நீங்கள் இருவரும் உங்கள் வீடுகளிலிருந்து புறப்பட்டு வர என்ன காரணம்?" என்று கேட்டார்கள். அதற்கு, "பசிதான் (காரணம்), அல்லாஹ்வின் தூதரே!" என்று அவ்விருவரும் பதிலளித்தனர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நானும் (புறப்பட்டு வந்தது அதனால்)தான். உங்கள் இருவரையும் வெளியேவரச் செய்ததே என்னையும் வெளியேவரச் செய்தது" என்று கூறிவிட்டு, "எழுங்கள்" என்று கூறினார்கள். அவ்வாறே அவர்கள் இருவரும் எழுந்தனர். பிறகு (மூவரும்) அன்சாரிகளில் ஒருவரிடம் (அவரது வீட்டுக்குச்) சென்றனர்.
அப்போது அந்த அன்சாரி வீட்டில் இருக்கவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அந்தத் தோழரின் துணைவியார் கண்டதும், "வாழ்த்துகள்! வருக" என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்பெண்ணிடம், "அவர் எங்கே?" என்று கேட்டார்கள். அதற்கு அப்பெண், "எங்களுக்காக நல்ல தண்ணீர் கொண்டுவருவதற்காக (வெளியே) சென்றுள்ளார்" என்று பதிலளித்தார்.
அப்போது அந்த அன்சாரி வந்துவிட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களையும் அவர்களுடைய இரு தோழர்களையும் (தமது வீட்டில்) கண்டார். பிறகு "எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! இன்றைய தினம் மிகச் சிறந்த விருந்தினரைப் பெற்றவர் என்னைத் தவிர வேறெவரும் இல்லை" என்று கூறிவிட்டு, (திரும்பிச்) சென்று ஒரு பேரீச்சங்குலையுடன் வந்தார். அதில் நன்கு கனியாத நிறம் மாறிய காய்களும் கனிந்த பழங்களும் செங்காய்களும் இருந்தன. அவர், "இதை உண்ணுங்கள்" என்று கூறிவிட்டு, (ஆடு அறுப்பதற்காக) கத்தியை எடுத்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பால் தரும் ஆட்டை அறுக்க வேண்டாம் என உம்மை நான் எச்சரிக்கிறேன்"என்று கூறினார்கள்.
அவ்வாறே அவர்களுக்காக அவர் ஆடு அறுத்(து விருந்து சமைத்)தார். அவர்கள் அனைவரும் அந்த ஆட்டையும் அந்தப் பேரீச்சங்குலையிலிருந்தும் உண்டுவிட்டு (தண்ணீரும்) அருந்தினர். வயிறு நிரம்பி தாகம் தணிந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) மற்றும் உமர் (ரலி) ஆகியோரிடம், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! இந்த அருட்கொடை பற்றி மறுமை நாளில் நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள். பசி உங்களை உங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றியது. பின்னர் இந்த அருட்கொடையை அனுபவித்த பிறகே நீங்கள் திரும்பிச் செல்கிறீர்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "அபூபக்ர் (ரலி) அவர்களுடன் உமர் (ரலி) அவர்கள் (ஓரிடத்தில்) அமர்ந்திருந்தபோது, அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து, "இங்கு நீங்கள் இருவரும் அமர்ந்திருப்பதற்கு என்ன காரணம்?' என்று கேட்டார்கள். அதற்கு அவ்விருவரும், "தங்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீதாணையாக! பசிதான் எங்களை எங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றியது' என்று கூறினர்" என ஹதீஸ் துவங்குகிறது. மற்ற நிகழ்வுகள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4144 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அகழ் (போருக்காகக் குழி) தோண்டப்பட்டுக்கொண்டிருந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வயிறு (பசியால்) ஒட்டியிருப்பதைக் கண்டேன். உடனே நான் என் மனைவியிடம் திரும்பிவந்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வயிறு மிகவும் ஒட்டியிருந்ததை நான் கண்டேன். உன்னிடம் ஏதேனும் (உணவு) இருக்கிறதா?" என்று கேட்டேன்.
உடனே என் மனைவி என்னிடம் ஒரு பையைக் கொண்டுவந்தார். அதில் ஒரு "ஸாஉ' அளவு தொலி நீக்கப்படாத கோதுமை இருந்தது. வீட்டில் வளரும் ஆட்டுக் குட்டி ஒன்றும் எங்களிடம் இருந்தது. அதை நான் அறுத்தேன். என் மனைவி அந்தக் கோதுமையை அரைத்தார். நான் (அறுத்து) முடித்தபோது அவரும் (அரைத்து) முடித்துவிட்டார். மேலும், அதைத் துண்டுகளாக்கி அதற்கான பாத்திரத்தில் இட்டேன்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் திரும்பிச் சென்றேன். என் மனைவி, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் அவர்களுடன் இருப்பவர்களுக்கும் முன்னால் என்னை நீங்கள் கேவலப்படுத்திவிட வேண்டாம் ("நம்மிடம் உணவு குறைவாகவே இருக்கிறது' என்று கூறிவிடுங்கள்)" என்று சொல்லியிருந்தார்.
எனவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று இரகசியமாக "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் எங்களுக்குச் சொந்தமான ஆட்டுக் குட்டியொன்றை அறுத்தோம். எங்களிடம் இருந்த ஒரு "ஸாஉ' அளவு தொலி நீக்கப்படாத கோதுமையை (என் மனைவி) அரைத்து வைத்துள்ளார். எனவே, தாங்களும் தங்களுடன் ஒரு சிலரும் (என் இல்லத்திற்கு) வாருங்கள்" என்று அழைத்தேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உரத்த குரலில், "அகழ்வாசிகளே! ஜாபிர் உங்களுக்காக உணவு தயாரித்துள்ளார். எனவே, விரைந்து வாருங்கள்" என்று கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "நான் வரும்வரை நீங்கள் பாத்திரத்தை (அடுப்பிலிருந்து) இறக்க வேண்டாம். குழைத்துவைத்துள்ள மாவில் ரொட்டி சுடவும் வேண்டாம்" என்று கூறினார்கள். நான் என் இல்லத்திற்கு வந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களை அழைத்துக்கொண்டு முன்னால் வந்துகொண்டிருந்தார்கள்.
நான் என் மனைவியிடம் வந்துசேர்ந்தேன். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நூற்றுக்கணக்கான மக்களுடன் வருவதைப் பார்த்து என் மனைவி கோபமுற்று) "(எல்லாம்) உங்களால்தான்; உங்களால்தான்" என என்னைக் கடிந்துகொண்டார். உடனே நான் "நீ அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சொன்ன விஷயத்தை நான் அவர்களிடம் தெரிவித்துவிட்டேன்" என்று சொன்னேன்.

பிறகு என் மனைவி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் குழைத்த மாவைக் கொண்டு வந்து கொடுத்தார். அதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இலேசாக உமிழ்ந்து, பெருக்கம் (பரக்கத்) ஏற்பட பிரார்த்தித்தார்கள். பிறகு (இறைச்சிப்) பாத்திரத்தை நோக்கிச் சென்று, அதில் இலேசாக உமிழ்ந்து பெருக்கம் (பரக்கத்) ஏற்படப் பிரார்த்தித்தார்கள். பிறகு (என் மனைவியிடம்), "ரொட்டி சுடுபவள் ஒருத்தியை (உதவிக்கு) அழைத்துக்கொள். உன்னுடன் (சேர்ந்து) அவளும் ரொட்டி சுடட்டும்! உங்கள் (இறைச்சிப்) பாத்திரத்திலிருந்து நீ அள்ளிக்கொண்டிரு. பாத்திரத்தை இறக்கி வைத்துவிடாதே" என்று கூறினார்கள். அ(ங்கு வந்த)வர்கள் ஆயிரம் பேர் இருந்தனர்.

அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் அனைவரும் உண்டுவிட்டு, அந்த உணவை (சிறிதும் குறையாமல்) அப்படியே விட்டுவிட்டுத் திரும்பிச் சென்றனர். அப்போது எங்கள் பாத்திரம் முன்பு போலவே (சிறிதும் குறையாமல்) சப்தத்துடன் கொதித்துக்கொண்டிருந்தது. மேலும், நாங்கள் குழைத்த மாவும் (சிறிதும் குறைந்துவிடாமல்) முன்பு போலவே ரொட்டியாகச் சுடப்பட்டுக்கொண்டிருந்தது.

4145 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அபூதல்ஹா (ரலி) அவர்கள் (தம் துணைவியும் என் தாயாருமான) உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது குரலைப் பலவீனமானதாகக் கேட்டேன். அதில் நான் (அவர்களுக்கு இருக்கும்) பசியைப் புரிந்து கொண்டேன். உன்னிடம் (உணவு) ஏதேனும் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். அதற்கு உம்மு சுலைம் (ரலி) அவர்கள், "ஆம் (இருக்கிறது)" என்று கூறிவிட்டு, தொலி நீக்கப்படாத கோதுமை(யில் தயாரித்த) ரொட்டிகள் சிலவற்றை எடுத்தார்கள்.

பிறகு அவர்கள் தமது துப்பட்டா ஒன்றை எடுத்து, அதன் ஒரு பகுதியில் அந்த ரொட்டிகளைச் சுற்றி எனது ஆடைக்குள் திணித்துவிட்டு, அதன் மற்றொரு பகுதியை எனக்கு மேல்துண்டாகப் போர்த்திவிட்டார்கள். பிறகு என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுப்பினார்கள்.

நான் அதைக் கொண்டுசென்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் அமர்ந்திருப்பதைக் கண்டேன். அவர்களுடன் மக்களும் இருந்தனர். நான் (சென்று) அவர்களுக்கு முன்னால் நின்றேன்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "உன்னை அபூதல்ஹா அனுப்பினாரா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். "உணவு உண்ணவா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்முடன் இருந்தவர்களிடம் "எழுந்திருங்கள்" என்று சொல்லிவிட்டு, (என் இல்லம் நோக்கி) நடக்கலானார்கள். நான் அவர்களுக்கு முன்னால் நடந்தேன். அபூதல்ஹா (ரலி) அவர்களிடம் நான் சென்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களுடன் வந்துகொண்டிருக்கும்) விவரத்தைத் தெரிவித்தேன்.

உடனே அபூதல்ஹா (ரலி) அவர்கள் (என் தாயாரிடம்), "உம்மு சுலைம்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களுடன் வந்துவிட்டார்கள். ஆனால், அவர்களுக்கு வேண்டிய உணவு நம்மிடம் இல்லையே!" என்று சொன்னார்கள். உம்மு சுலைம் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே அறிந்தவர்கள்" என்று கூறினார்கள்.

அபூதல்ஹா (ரலி) அவர்கள் (தாமே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை வரவேற்பதற்காக) நடந்து சென்று, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூதல்ஹா (ரலி) அவர்களுடன் வீட்டுக்குள் நுழைந்தார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உம்மு சுலைம்! உம்மிடம் இருப்பதைக் கொண்டுவா" என்று சொல்ல, உம்மு சுலைம் (ரலி) அவர்கள் அந்த ரொட்டியைக் கொண்டுவந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அதைத் துண்டு துண்டாகப் பிய்க்கும்படி) உத்தரவிட, அவ்வாறே அது பிய்க்கப்பட்டது.
உம்மு சுலைம் (ரலி) அவர்கள், தம்மிடமிருந்த தோல் பையிலிருந்து வெண்ணெய் எடுத்துப் பிழிந்து அதை (உருக்கி)க் குழம்பு செய்தார்கள். பிறகு அதில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறைவன் நாடிய (பிரார்த்தனை வரிகள் சில)வற்றைச் சொன்னார்கள்.
பிறகு "பத்துப் பேருக்கு (உள்ளே வர) அனுமதி அளியுங்கள்" என்று (அபூதல்ஹா (ரலி) அவர்களிடம்) சொன்னார்கள். அவ்வாறே அவர்களுக்கு அபூதல்ஹா (ரலி) அவர்கள் அனுமதி அளித்தார்கள். அவர்கள் (பத்துப் பேர்) வந்து வயிறார உண்டுவிட்டு வெளியேறினார்கள்.
பின்னர், "இன்னும் பத்துப் பேருக்கு அனுமதி அளியுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூற,அபூதல்ஹா (ரலி) அவர்களும் அனுமதியளித்தார்கள். அவர்களும் வயிறார உண்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு "இன்னும் பத்துப் பேருக்கு அனுமதி அளியுங்கள்" என்றார்கள். (இவ்வாறு வந்திருந்த) மக்கள் அனைவரும் வயிறார உண்டார்கள். அப்படி உண்ட மக்கள் எழுபது அல்லது எண்பது பேர் ஆவர்.

4146 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூதல்ஹா (ரலி) அவர்கள் உணவு தயாரித்துவிட்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அழைப்பதற்காக என்னை அனுப்பினார்கள். நான் வந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களுடன் இருந்தார்கள். அவர்கள் என்னைப் பார்த்த போது நான் கூச்சப்பட்டேன். நான், "அபூதல்ஹா (ரலி) அவர்கள் (தங்களை விருந்துண்ண அழைக்கிறார்கள். அந்த) அழைப்பை ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறினேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம்முடனிருந்த) மக்களிடம், "எழுந்திருங்கள்" என்று சொன்னார்கள். பிறகு (அவர்கள் எங்கள் இல்லத்திற்கு வந்து சேர்ந்தபோது) "அல்லாஹ்வின் தூதரே! தங்களுக்கு மட்டுமே நான் சிறிதளவு (உணவு) தயாரித்துள்ளேன்" என்று அபூதல்ஹா (ரலி) அவர்கள் கூறினார்கள். அப்போது அல்லாஹவின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த உணவைத் தொட்டு, அதில் பெருக்கம் (பரக்கத்) ஏற்படப் பிரார்த்தித்தார்கள்.
பிறகு, "என் தோழர்களில் பத்துப் பேரை உள்ளே அனுப்புங்கள்" என்று கூறினார்கள். (அவர்கள் உள்ளே வந்ததும்) "உண்ணுங்கள்" என்று கூறிவிட்டு, தம் விரல்களுக்கிடையிலிருந்து எதையோ வெளியாக்கினார்கள். உள்ளே வந்தவர்கள் வயிறார உண்டுவிட்டு வெளியேறிச் சென்றனர். பிறகு "இன்னும் பத்துப் பேரை உள்ளே அனுப்புங்கள்"என்று கூறினார்கள். அவர்களும் வந்து வயிறார உண்டனர்.
இவ்வாறே பத்துப் பேர் உள்ளே வர, பத்துப் பேர் வெளியே போக அவர்களில் ஒருவர்கூட மிஞ்சாமல் அனைவரும் உள்ளே வந்து வயிறார உண்டனர். பிறகு எஞ்சியிருந்த உணவை

ஒருங்கிணைத்துப் பார்த்தபோது, அவர்கள் சாப்பிட்டபோது இருந்த அதே அளவில் (சிறிதும் குறையாமல்) அது இருந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அபூதல்ஹா (ரலி) அவர்கள் என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுப்பினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன. இறுதியில் "பிறகு எஞ்சியிருந்த உணவை எடுத்து ஒன்றுசேர்த்து அதில் பெருக்கம் (பரக்கத்) ஏற்படப் பிரார்த்தித்தார்கள். அது முன்பிருந்ததைப் போன்றே மாறிவிட்டது. பிறகு "இதை வைத்துக்கொள்ளுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அபூதல்ஹா (ரலி) அவர்கள் உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்களுக்காக மட்டும் உணவு தயாரிக்கும் படி கூறிவிட்டு, என்னை நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பினார்கள்" என்று ஹதீஸ் துவங்குகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி தொடருகின்றன.
அதில், நபி (ஸல்) அவர்கள் தமது கரத்தை (உணவின் மீது) வைத்து அல்லாஹ்வின் பெயர் கூறினார்கள். பிறகு (அபூதல்ஹா (ரலி) அவர்களிடம்) "பத்துப் பேருக்கு அனுமதி அளியுங்கள்" என்று கூறினார்கள். அவ்வாறே அபூதல்ஹா (ரலி) அவர்கள் அனுமதியளித்ததும் அவர்கள் (இல்லத்திற்குள்) நுழைந்தனர்.
அப்போது "அல்லாஹ்வின் பெயர் (பிஸ்மில்லாஹ்) சொல்லி உண்ணுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூற, அவ்வாறே அவர்கள் உண்டனர். இவ்வாறு எண்பது பேரிடமும் கூறினார்கள். பிறகு நபி (ஸல்) அவர்களும் (அபூதல்ஹா (ரலி) அவர்களின்) வீட்டாரும் உண்டுவிட்டு, (மீதி) உணவையும் விட்டுச்சென்றனர் என்று இடம்பெற்றுள்ளது.
- அபூதல்ஹா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு விருந்தளித்த இந்த நிகழ்ச்சி அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அபூதல்ஹா (ரலி) அவர்கள் (தம்) வீட்டுவாசலில் நின்றுகொண்டிருக்க அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்துசேர்ந்தார்கள். அப்போது அபூதல்ஹா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! சிறிதளவே (உணவுப்) பொருள் இருக்கிறது" என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதைக் கொண்டுவாருங்கள். அதில் அல்லாஹ் வளத்தை ஏற்படுத்துவான்" என்று கூறினார்கள் எனக் காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் சாப்பிட்டு, வீட்டாரும் சாப்பிட்டு தங்கள் அண்டை வீட்டாருக்கும் கொடுத்தனுப்பும் அளவுக்கு மீதி வைத்தனர்" என்று இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், (ஒருமுறை) அபூதல்ஹா (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் படுத்திருப்பதைக் கண்டார்கள். அப்போது அவர்கள் புரண்டு புரண்டு படுத்தார்கள். (இதைக் கண்ட) அபூ தல்ஹா (ரலி) அவர்கள் (தம் துணைவி) உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் படுத்திருப்பதை நான் கண்டேன். அவர்கள் புரண்டு புரண்டு படுத்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் பசியோடு இருப்பதாக நான் எண்ணுகிறேன்" என்று கூறியதாக ஹதீஸ் துவங்குகிறது.
மேலும் அதில் "பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அபூதல்ஹா (ரலி), உம்மு சுலைம் (ரலி) மற்றும் அனஸ் (ரலி) ஆகியோரும் உண்டனர். மீதி உணவும் இருந்தது. அதை நாங்கள் எங்கள் அண்டை வீட்டாருக்கு அன்பளிப்பாக வழங்கினோம்" என்று இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் பிறிதோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் பின்வருமாறு அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது:
நான் ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தேன். அப்போது அவர்கள் தம் தோழர்களுடன் பேசிக்கொண்டு அமர்ந்திருப்பதைக் கண்டேன். அப்போது அவர்கள் தமது வயிற்றில் ஒரு துணியைக் கட்டியிருந்தார்கள்.
-அறிவிப்பாளர்களில் ஒருவரான உசாமா பின் ஸைத் (ரஹ்) அவர்கள் "கல்லை வைத்து ஒரு துணியால் கட்டியிருந்தார்கள் (என்று கூறியதாகவே) நான் சந்தேகத்துடன் கருதுகிறேன்" என்று கூறுகிறார்கள்–
உடனே நான் நபித்தோழர்கள் சிலரிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏன் தமது வயிற்றைத் துணியால் கட்டியிருக்கிறார்கள்?" என்று கேட்டேன். தோழர்கள், "பசியால்' என்று பதிலளித்தனர்.
ஆகவே, நான் அபூதல்ஹா (ரலி) அவர்களிடம் சென்று, - அபூதல்ஹா (ரலி) அவர்கள் (என் தாயார்) உம்மு சுலைம் பின்த் மில்ஹானின் கணவர் ஆவார் – "தந்தையே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வயிற்றை ஒரு துணியால் கட்டியிருப்பதை நான் கண்டேன். எனவே, அவர்களுடைய தோழர்களில் சிலரிடம் (அதைப் பற்றிக்) கேட்டேன். அதற்கு "பசியால்தான்' என்று அவர்கள் பதிலளித்தனர் என்று சொன்னேன்.
உடனே அபூதல்ஹா (ரலி) அவர்கள் என் தாயாரிடம் சென்று "(உன்னிடம் உணவு) ஏதேனும் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். என் தாயார் "ஆம். என்னிடம் சில ரொட்டித் துண்டுகளும் பேரீச்சம் பழங்களும் இருக்கின்றன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மட்டும் நம்மிடம் வந்தால் அவர்களுக்கு நம்மால் வயிறார உணவளிக்க முடியும். அவர்களுடன் வேறு யாரேனும் வந்தால் எல்லாருக்கும் போதாது..." என்று கூறினார். மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறு தொடருகின்றன.
- அபூதல்ஹா (ரலி) அவர்கள் அளித்த விருந்து தொடர்பான மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் மேற்கண்ட ஹதீஸ்களில் காணப்படும் தகவல்கள் இடம்பெற்றுள்ளன.

**பாடம் : 21 குழம்பு சாப்பிடலாம்; சுரைக்காயை உண்பது விரும்பத்தக்கதாகும்; பந்தியில் அமர்ந்திருப்பவர்கள் அனைவரும் விருந்தினராய் இருந்தாலும், விருந்தளிப்பவர் வெறுக்க மாட்டார் என்றால் அவர்களில் சிலர் வேறுசிலருக்கு முன்னுரிமை அளிக்கலாம்.**

4147 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
தையற்காரர் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைத் தாம் தயாரித்த உணவி(னை உண்பத)ற்காக அழைத்தார். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அந்த உணவை உண்ணச் சென்றேன். அந்தத் தையற்காரர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அருகே தொலி நீக்கப்படாத (வாற்)கோதுமை ரொட்டியையும், சுரைக்காயும் உப்புக்கண்டமும் உள்ள குழம்பையும் வைத்தார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தட்டைச் சுற்றிலும் சுரைக்காயைத் துழாவுவதை நான் கண்டேன். அன்றிலிருந்து சுரைக்காயை நானும் விரும்பி(ச் சாப்பிட்டு)க் கொண்டே இருக்கிறேன்.

4148 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை (விருந்துக்கு) அழைத்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நானும் சென்றேன். அப்போது சுரைக்காய் உள்ள குழம்பு கொண்டுவரப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த சுரைக்காயை உண்ணலானார்கள். அது அவர்களுக்கு விருப்பமானதாயிருந்தது. அதன் பின்னர் சுரைக்காயை நானும் விரும்பி(ச் சாப்பிட்டு)க்கொண்டே இருக்கிறேன்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "தையற்காரர் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை (விருந்துக்கு) அழைத்தார்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. அவற்றில் பின்வருமாறு அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது:
அதன் பின்னர் எனக்காகத் தயாரிக்கப்படும் எந்த ஓர் உணவிலும் சுரைக்காயைச் சேர்த்துக் கொள்ள என்னால் முடியுமானால் (அவ்வாறே) சேர்த்துக்கொள்ளப்படாமல் இருந்ததில்லை.

**பாடம் : 22 பேரீச்சம் பழ(ம் உள்ள பாத்திர)த்துக்கு வெளியே கொட்டையைப் போடுவதும், விருந்தளிப்பவருக்காக விருந்தாளி பிரார்த்திப்பதும் விரும்பத்தக்கவை ஆகும். நல்ல மனிதருக்கு விருந்தளிக்கும்போது அவரிடம் பிரார்த்திக்குமாறு கோருவதும் அதையேற்று அவர் பிரார்த்திப்பதும் விரும்பத்தக்கவை ஆகும்.**

4149 அப்துல்லாஹ் பின் புஸ்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் தந்தை (புஸ்ர் பின் அபீபுஸ்ர்–ரலி) அவர்களிடம் (விருந்தாளியாகத்) தங்கினார்கள். அப்போது அவர்களுக்கு அருகே உணவும் (பேரீச்சம் பழம், பாலாடை, நெய் ஆகியவற்றால் செய்யப்பட்ட "வத்பா" எனும்) ஒரு வகைப் பலகாரமும் வைத்தோம். அதிலிருந்து அவர்கள் உண்டார்கள்.

பிறகு பேரீச்சம் பழங்கள் கொண்டுவரப்பட்டன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேரீச்சம் பழத்தைச் சாப்பிட்டுவிட்டு, அவற்றின் கொட்டைகளை (பாத்திரத்தினுள்ளே போடாமல்) தம்மிரு விரல்களுக்கிடையே வைத்திருந்(துவிட்டு பிறகு வீசியெறிந்)தார்கள்.
- இதைக் கூறியபோது அறிவிப்பாளர் தம் ஆட்காட்டி விரலையும் நடு விரலையும் இணைத்து சைகை செய்கிறார்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஷுஅபா (ரஹ்) அவர்கள் "இன்ஷா அல்லாஹ், "இரு விரல்களுக்கிடையே கொட்டையை வைத்திருந்தார்கள்' என்பது ஹதீஸிலேயே உள்ளதாகும் என்பதே என் எண்ணமாகும்" என்று (ஐயத்துடன்) கூறினார்கள்.–

பிறகு ஒரு பானம் கொண்டுவரப்பட்டபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதையும் அருந்தினார்கள். பிறகு மீதியிருந்ததைத் தமக்கு வலப்பக்கத்திலிருந்தவருக்குக் கொடுத்தார்கள். பிறகு (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்படத் தயாரானபோது) என் தந்தை, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வாகனத்தின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு, "எங்களுக்காகப் பிரார்த்தியுங்கள்" என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இறைவா! நீ இவர்களுக்கு வழங்கிய உணவில் அருள்வளம் (பரக்கத்) புரிவாயாக! இவர்களை மன்னித்து, இவர்களுக்குக் கருணை புரிவாயாக!" (அல்லாஹும்ம, பாரிக் லஹும் ஃபீமா ரஸக்த்தஹும்,, வஃக்ஃபிர் லஹும், வர்ஹம்ஹும்) எனப் பிரார்த்தித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் புஸ்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "இரு விரல்களுக்கிடையே பேரீச்சம் பழக் கொட்டைகளை வைத்திருந்(துவிட்டுப் பிறகு வீசியெறிந்)தார்கள்" என்பது ஐயத்திற்கிடமின்றி (ஹதீஸில் உள்ளதாகவே) அறிவிக்கப் பட்டுள்ளது.

## பாடம் : 23 பேரீச்சச் செங்காய்களுடன் வெள்ளரிக்காயையும் சேர்த்து உண்பது.

4150 அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பேரீச்சச் செங்காய்களுடன் (சேர்த்து) வெள்ளரிக் காய்களை உண்பதை நான் கண்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 24 உணவு உண்பவர் பணிவோடு அமர்வது விரும்பத்தக்கதாகும் என்பதும் அவர் அமரும் முறையும்.

4151 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் குத்துக் காலிட்டு அமர்ந்து பேரீச்சம் பழத்தை உண்பதை நான் கண்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4152 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவர்களுக்குரிய) பேரீச்சம் பழங்கள் கொண்டு வரப்பட்டன. (அவை கிடைத்தவுடன் சரியாக உட்காராமல்கூட) அவற்றை அவர்கள் விரைவாகப் பங்கிட்டுக் கொடுக்கவும் அவற்றை விரைவாக உண்ணவும் ஆரம்பித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 25 பலருடன் சேர்ந்து உண்பவர், மற்றவர்கள் அனுமதித்தால் தவிர, ஒரே தடவையில் இரண்டு பேரீச்சம் பழங்களைச் சேர்த்து உண்ணக்கூடாது.**

4153 ஜபலா பின் சுஹைம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஹிஜாஸ் பகுதியில்) மக்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டிருந்த நாளில் அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் எங்களுக்குப் பேரீச்சம் பழங்களை வழங்கிவந்தார்கள். அவற்றை நாங்கள் உண்ணும்போது, அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் எங்களைக் கடந்து செல்வார்கள்.
அப்போது அவர்கள், "பேரீச்சம் பழங்களை இரண்டிரண்டாக எடுக்காதீர்கள். ஏனெனில், ஒரே தடவையில் இரண்டு பழங்களை எடுத்து உண்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள்; ஒருவர் தம் சகோதரரிடம் (அவ்வாறு சேர்த்து எடுக்க) அனுமதி பெற்றிருந்தால் தவிர" என்று சொல்வார்கள்.
இதன் அறிவிப்பாளரான ஷுஅபா (ரஹ்) அவர்கள், "அனுமதி பெறுதல் தொடர்பான இக்கூற்று, இப்னு உமர் (ரலி) அவர்களின் சொந்தக் கருத்து என்றே நான் கருதுகிறேன்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜபலா பின் சுஹைம் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஷுஅபா (ரஹ்) அவர்களின் (இறுதிக்) கூற்றோ, "அன்றைய நாளில் மக்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டிருந்தது" எனும் விளக்கமோ இடம்பெறவில்லை.

4154 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(பலர் கூடியுள்ள ஓர் அவையில்) ஒருவர், தம் சகாக்களிடம் அனுமதி பெறாதவரை இரு பேரீச்சம் பழங்களைச் சேர்த்து உண்ணுவதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.– இதை ஜபலா பின் சுஹைம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 26 குடும்பத்தாருக்காகப் பேரீச்சம் பழங்கள் உள்ளிட்ட உணவுகளைச் சேமித்து வைத்தல்.**

4155 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எந்தக் குடும்பத்தாரிடம் பேரீச்சம் பழங்கள் (சேமித்துவைக்கப்பட்டு) உள்ளனவோ அவர்கள் பசித்திருக்கமாட்டார்கள்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4156 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "ஆயிஷா! பேரீச்சம்பழம் இல்லாத வீட்டாரே பட்டினி கிடக்கும் வீட்டார். ஆயிஷா! பேரீச்சம் இல்லாத வீட்டாரே "பட்டினி கிடக்கும் வீட்டார்' அல்லது "பட்டினிக்குள்ளாகும் வீட்டார்' என்று இரண்டு அல்லது மூன்று தடவை கூறினார்கள்.

## பாடம் : 27 மதீனா பேரீச்சம் பழங்களின் சிறப்பு

4157 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் காலையில் இந்த (மதீனாவின்) இரு மலைகளுக்கிடையே உள்ள பழங்களில் ஏழு பேரீச்சம் பழங்களை உண்கிறாரோ அவருக்கு (அன்று) மாலைவரை எந்த விஷமும் தீங்களிக்காது.- இதை சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4158 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் காலையில் ஏழு "அஜ்வா' (ரகப்) பேரீச்சம் பழங்களை உண்கிறாரோ அவருக்கு அன்றைய தினத்தில் (மாலைவரை) எந்த விஷமும் சூனியமும் இடையூறு செய்யாது.
இதை சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4159 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மதீனாவின்) மேட்டுப் பகுதியில் விளையும் "அஜ்வா' (ரகப்) பேரீச்சம் பழத்தை அதிகாலை உண்பதில் "நிவாரணம்' அல்லது "விஷமுறிவு' உள்ளது.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 28 சமையல் காளானின் சிறப்பும் அதைக் கொண்டு கண்ணுக்கு மருந்திடுவதும்.

4160 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சமையல் காளான் "மன்னு' வகையைச் சேர்ந்ததாகும். அதன் சாறு கண்ணுக்கு நிவாரணமாகும்.
இதை சயீத் பின் ஸைத் பின் அம்ர் பின் நுஃபைல் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4161 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சமையல் காளான் "மன்னு' வகையைச் சேர்ந்ததாகும். அதன் சாறு கண்ணுக்கு நிவாரணமாகும்.
இதை சயீத் பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சயீத் பின் ஸைத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்: இந்த ஹதீஸை ஹகம் பின் உதைபா (ரஹ்) அவர்கள் எனக்கு அறிவித்தபோது, அப்துல் மலிக் பின் உமைர் (ரஹ்) அவர்கள் வழியாக எனக்கு வந்த (முந்தைய) அறிவிப்பை நான் மறுக்கவில்லை.

4162 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சமையல் காளான் பனூ இஸ்ராயீல் சமுதாயத்தாருக்கு அல்லாஹ் இறக்கிவைத்த "மன்னு' வகையைச் சேர்ந்ததாகும். அதன் சாறு கண்ணுக்கு நிவாரணமாகும்.
இதை சயீத் பின் ஸைத் பின் அம்ர் பின் நுஃபைல் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4163 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சமையல் காளான், மூசா (அலை) அவர்களு(டைய சமுதாயத்தாரு)க்கு அல்லாஹ் இறக்கி வைத்த "மன்னு' வகையைச் சேர்ந்ததாகும். அதன் சாறு கண்ணுக்கு நிவாரணமாகும்.
இதை சயீத் பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4164 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சமையல் காளான் பனூ இஸ்ராயீல் சமுதாயத்தாருக்கு அல்லாஹ் இறக்கிவைத்த "மன்னு' வகையைச் சேர்ந்ததாகும். அதன் சாறு கண்ணுக்கு நிவாரணமாகும்.
இதை சயீத் பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4165 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சமையல் காளான் "மன்னு' வகையைச் சேர்ந்ததாகும். அதன் சாறு கண்ணுக்கு நிவாரணமாகும்.– இதை சயீத் பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 29 "அல்கபாஸ்' எனும் (மிஸ்வாக்) மரத்தின் கறுப்பு நிற பழத்துடைய சிறப்பு.

4166 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "மர்ருழ் ழஹ்ரான்' எனுமிடத்தில் "அல்கபாஸ்' மரத்தின் பழத்தைப் பறித்துக்கொண்டிருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இதில் கறுப்பு நிறத்தைப் பறியுங்கள்" என்று சொன்னார்கள்.
நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் ஆடு மேய்த்துள்ளீர்கள் போலிருக்கிறதே?" என்று கேட்டோம். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "ஆம், ஆடு மேய்க்காத இறைத்தூதரும் உண்டா?" என்றோ அது போன்றோ (திருப்பிக்) கேட்டார்கள்.

## பாடம் : 30 சமையல் காடியின் சிறப்பும் அதைக் குழம்பாகப் பயன்படுத்துவதும்.

4167 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"குழம்புகளில்' அல்லது "குழம்பில்' அருமையானது (சமையல்) காடியாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

4168 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "குழம்புகளில் அருமையானது' என ஐயப்பாடின்றி அறிவிக்கப்பட்டுள்ளது.

4169 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள் தம் வீட்டாரிடம் குழம்பு கேட்டார்கள். அதற்கு வீட்டார், "நம்மிடம் காடி மட்டுமே உள்ளது" என்று கூறினர். நபி (ஸல்) அவர்கள் காடியைக் கொண்டுவரச் சொல்லி அதைத்(த் தொட்டு)க்கொண்டு உண்ணலானார்கள். மேலும், "குழம்புகளில் அருமையானது காடியாகும்" என்று சொன்னார்கள்.

4170 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது கையைப் பிடித்துத் தமது இல்லத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களிடம், (அங்குள்ள ஒருவர்) ரொட்டித் துண்டைக் கொடுத்தார். நபி (ஸல்) அவர்கள், "குழம்பேதும் இல்லையா?" என்று கேட்டார்கள். வீட்டார், "இல்லை, சிறிது காடியைத் தவிர வேறெதுவுமில்லை" என்று கூறினர். நபி (ஸல்) அவர்கள், "காடிதான் குழம்புகளில் அருமையானது" என்று கூறினார்கள்.
ஜாபிர் (ரலி) அவர்கள், "இறைவனின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு கூறியதைக் கேட்டதிலிருந்து நான் காடியை விரும்பி(ச் சாப்பிட்டு)க்கொண்டிருக்கிறேன்" என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர் தல்ஹா பின் நா..பிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
ஜாபிர் (ரலி) அவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்டதிலிருந்து நானும் காடியை விரும்பி(ச் சாப்பிட்டு)க்கொண்டிருக்கிறேன்.

4171 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது கையைப் பிடித்துத் தமது இல்லத்திற்கு அழைத்துச் சென்றார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. தொடர்ந்து "குழம்புகளில் அருமையானது காடியாகும்" என்பதுவரை இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின் உள்ளவை இடம்பெறவில்லை.

4172 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நான் என் வீட்டில் அமர்ந்திருந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைக் கடந்து சென்றார்கள். அப்போது (தம்மருகே வருமாறு) என்னை நோக்கி சைகை செய்தார்கள். நான் அவர்களிடம் எழுந்து சென்றேன். அவர்கள் எனது கையைப் பிடித்துக்கொண்டார்கள்.
பிறகு நாங்கள் இருவரும் நடந்தோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவரது அறை வந்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உள்ளே நுழைந்தார்கள். பிறகு எனக்கும் (உள்ளே வர) அனுமதியளித்தார்கள். நான் வீட்டாருக்காக இடப்பட்டிருந்த திரைவரை சென்றேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஏதேனும் உணவு உள்ளதா?" என்று கேட்டார்கள். வீட்டார், "ஆம்' என்றனர். பிறகு மூன்று ரொட்டிகள் கொண்டுவரப்பட்டு, அவர்களுக்கு முன்னால் வைக்கப்பட்டன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ரொட்டியை எடுத்துத் தமக்கு முன்னால் வைத்தார்கள்.
பிறகு மற்றொரு ரொட்டியை எடுத்து எனக்கு முன்னால் வைத்தார்கள். பிறகு மூன்றாவது ரொட்டியை எடுத்து அதை (இரண்டாக)ப் பிட்டு, ஒரு பாதியைத் தமக்கு முன்னாலும் மற்றொரு பாதியை எனக்கு முன்னாலும் வைத்தார்கள்.
பிறகு (தம் வீட்டாரிடம்), "குழம்பேதும் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். வீட்டார், "இல்லை; சிறிதளவு காடியைத் தவிர வேறெதுவுமில்லை" என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதைக் கொண்டுவாருங்கள். குழம்புகளில் அருமையானது அதுவே" என்று சொன்னார்கள்.

**பாடம் : 31 வெள்ளைப் பூண்டு சாப்பிடலாம்; பெரியவர்களைச் சந்தித்துப் பேசுபவர், அதையும் அதைப் போன்றதையும் தவிர்த்துக்கொள்வது அவசியமாகும்.**

4173 அபூஅய்யூப் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஏதேனும் உணவு கொண்டுவரப்பட்டால், அதை உண்டுவிட்டு அதில் எஞ்சியதை எனக்குக் கொடுத்தனுப்புவார்கள். ஒரு நாள் (அவ்வாறு) எஞ்சியதை எனக்குக் கொடுத்தனுப்பினார்கள். அதிலிருந்து அவர்கள் உண்ணவில்லை. ஏனெனில், அதில் வெள்ளைப் பூண்டு இருந்தது.
எனவே, அது குறித்து நான் "அது (வெள்ளைப் பூண்டு) தடைசெய்யப்பட்டதா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இல்லை. அதிலிருந்து வரும் வாடை காரணமாக அதை நான் விரும்பவில்லை" என்று சொன்னார்கள். நான், "அவ்வாறாயின் தாங்கள் விரும்பாததை நானும் விரும்பமாட்டேன்" என்று சொன்னேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஅய்யூப் அல்அன்சாரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4174 அபூஅய்யூப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (மக்காவிலிருந்து மதீனாவுக்கு வந்தபோது) எனது வீட்டிலேயே தங்கினார்கள். நபி (ஸல்) அவர்கள் கீழ்த்தளத்திலும் நான் மேல்தளத்திலும் தங்கியிருந்தோம். ஓர் இரவில் நான் உணர்வு பெற்று, "நாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தலைக்கு மேலே நடமாடுவதா?" என்று சொல்லிக்கொண்டு, (தலைக்கு நேரான பகுதியிலிருந்து) விலகி மற்றொரு பகுதியில் (நானும் வீட்டாரும்) இரவைக் கழித்தோம்.
பிறகு நபி (ஸல்) அவர்களிடம் (இது குறித்துச்) சொன்னபோது அவர்கள், "கீழ்த்தளமே மிகவும் வசதியானது" என்று கூறினார்கள். நான், "நீங்கள் கீழேயிருக்க நான் மேல்தளத்தில் இருக்கமாட்டேன்" என்று சொன்னேன். எனவே, நபி (ஸல்) அவர்கள் மேல் தளத்துக்கும் நான் கீழ்த் தளத்துக்கும் இடம் மாறிக்கொண்டோம்.

நான் நபி (ஸல்) அவர்களுக்காக உணவு தயாரித்துவந்தேன். அது (நபி (ஸல்) அவர்களிடம் சென்றுவிட்டு) என்னிடம் கொண்டுவரப்பட்டால், (உணவுப் பாத்திரத்தில்) நபி (ஸல்) அவர்களின் விரல்கள்பட்ட இடத்தைப் பற்றிக் கேட்பேன். அவர்களின் விரல்கள் பட்ட இடத்தைக் கண்டறி(ந்து அந்த இடத்தில் நான் சாப்பிடு)வேன்.
இவ்வாறே (ஒரு நாள்) வெள்ளைப் பூண்டு உள்ள ஓர் உணவு தயாரித்தேன். (நபி (ஸல்) அவர்களிடம் சென்றுவிட்டு) அது திருப்பிக் கொண்டுவரப்பட்டபோது, நபி (ஸல்) அவர்களின் விரல்கள் பட்ட இடத்தைப் பற்றிக் கேட்டேன். அப்போது "நபி (ஸல்) அவர்கள் அதை உண்ணவில்லை" என்று என்னிடம் சொல்லப்பட்டது. அதைக் கேட்டு நான் பதறினேன்.
மேல் தளத்திற்கு ஏறிச்சென்று "அது (வெள்ளைப் பூண்டு) தடைசெய்யப்பட்டதா?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இல்லை. ஆயினும், அதை நான் விரும்பவில்லை" என்று பதிலளித்தார்கள்.
நான், "அவ்வாறாயின், தாங்கள் வெறுப்பதை அல்லது தாங்கள் வெறுத்ததை நானும் வெறுக்கிறேன்" என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்களிடம் (வானவர்களும் வேத அறிவிப்பும்) வந்துகொண்டிருந்தன.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 32 விருந்தினரை உபசரிப்பதும் அவர்களுக்கு முன்னுரிமை வழங்குவதன் சிறப்பும்.

4175 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "எனக்கு (கடுமையான பசி)த் துன்பம் ஏற்பட்டுள்ளது" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியரில் ஒருவரிடம் ஆளனுப்பி (அவர்களிடம் உணவு ஏதேனும் இருக்கிறதா என்று கேட்டுவரச் சொன்)னார்கள். அதற்கு அத்துணைவியார், "தங்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீதாணையாக! என்னிடம் தண்ணீரைத் தவிர வேறெதுவும் இல்லை" என்று பதிலளித்தார்.
பிறகு (தம் துணைவியரில்) மற்றொருவரிடம் ஆளனுப்பியபோது, அவரும் அதைப் போன்றே பதிலளித்தார். முடிவில் ஒவ்வொரு துணைவியரிடமிருந்தும் அதே பதிலே வந்தது. "இல்லை; தங்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீதாணையாக! என்னிடம் தண்ணீரைத் தவிர வேறெதுவும் இல்லை" என்றே கூறினர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களை நோக்கி), "இன்றிரவு இவருக்கு விருந்தளிப்பவர் யார்? அவருக்கு அல்லாஹ் அருள்புரிவான்" என்று கேட்டார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர் எழுந்து, "நான் (இவருக்கு விருந்தளிக்கிறேன்), அல்லாஹ்வின் தூதரே!" என்று சொல்லி, (அவரை அழைத்துக்கொண்டு) தம் வீட்டுக்குச் சென்றார். அங்கு தம் மனைவியிடம், "உன்னிடம் (உணவு) ஏதேனும் இருக்கிறதா?" என்று கேட்டார். அதற்கு அவர் மனைவி "நம் குழந்தைகளின் உணவைத் தவிர வேறெதுவுமில்லை" என்றார்.
அவர், "(நம் குழந்தைகள் உணவு கேட்டால்) ஏதாவது காரணம் சொல்லி (தூங்கவைத்து) விடு; நம் விருந்தாளி நமது வீட்டுக்குள் நுழைந்ததும் (வீட்டிலுள்ள உணவைத் தயாராக எடுத்து வைத்துவிட்டு, விளக்கை ஏற்றிவிடுவதுபோல் பாவனை செய்து) விளக்கை

அணைத்துவிடு. நாமும் சாப்பிட்டுக்கொண்டிருப்பதைப் போன்று அவருக்குக் காட்டிக்கொள். (மறக்காமல் விருந்தாளி வந்து) சாப்பிடக் கையை நீட்டும்போது விளக்கை நோக்கிச் சென்று அதை அணைத்துவிடு" என்று கூறினார்.
அவ்வாறே (விருந்தாளி வந்ததும்) அவர்கள் அனைவரும் அமர்ந்தனர். விருந்தாளி சாப்பிட்டார். பிறகு (விருந்தளித்த) அந்தத் தோழர் காலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இன்றிரவு நீங்கள் இருவரும் உங்கள் விருந்தாளியிடம் நடந்து கொண்ட முறையைக் கண்டு அல்லாஹ் வியப்படைந்தான்" என்று சொன்னார்கள்.

4176 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஓர் அன்சாரித் தோழரிடம் இரவில் விருந்தாளி ஒருவர் வந்தார். அத்தோழரிடம் தமக்கும் தம் குழந்தைகளுக்கும் தேவையான உணவைத் தவிர வேறெதுவும் இருக்கவில்லை. எனவே, அவர் தம் துணைவியாரிடம், "குழந்தைகளை (எப்படியாவது சமாதானப்படுத்தி) தூங்கவைத்துவிடு; விளக்கை (ஏற்றிவிடுவதைப் போன்று பாவனை செய்து அதை) அணைத்துவிடு. உன்னிடம் உள்ள உணவை விருந்தாளிக்கு அருகில் வைத்துவிடு" என்று கூறினார். இது தொடர்பாகவே, "தமக்கே தேவையிருந்தும் கூட தம்மைவிடப் பிறருக்கே அவர்கள் முன்னுரிமை வழங்குவார்கள்" (59:9) எனும் இறை வசனம் அருளப்பெற்றது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் விருந்தாளியாக வந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அவருக்கு விருந்தளிப்பதற்கு எதுவும் இருக்க வில்லை. எனவே, (தம் தோழர்களை நோக்கி), "இவருக்கு விருந்தளிக்கும் ஆள் யாரேனும் உண்டா? அவருக்கு அல்லாஹ் அருள்புரிவான்' என்று கேட்டார்கள். அப்போது அன்சாரிகளில் அபூதல்ஹா (ரலி) எனப்படும் ஒரு மனிதர் எழுந்து, அந்த விருந்தாளியை தம் இல்லத்திற்கு அழைத்துச் சென்றார்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. அதில் (59:9 ஆவது) இறைவசனம் இறங்கியது தொடர்பான குறிப்பும் காணப்படுகிறது.

4177 மிக்தாத் பின் அல்அஸ்வத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் என்னிரு நண்பர்களும் பசியால் காதும் கண்ணும் (அடைபட்டுப்) போய்விட்ட நிலையில் வந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தோழர்களுக்கு முன்னால் தலை காட்டினோம். (வறுமை சூழ்ந்திருந்த அந்த நிலையில்) அவர்களில் எவரும் எங்களை (விருந்தாளிகளாக) ஏற்றுக்கொள்ளவில்லை.
எனவே, நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்றோம். நபி (ஸல்) அவர்கள் எங்களைத் தம் வீட்டாரிடம் அழைத்துச் சென்றார்கள். அங்கு மூன்று பெட்டை வெள்ளாடுகள் இருந்தன. நபி (ஸல்) அவர்கள், "இவற்றிலிருந்து பால் கறந்து நம்மிடையே பகிர்ந்துகொள்வோம்" என்று சொன்னார்கள்.
அவ்வாறே நாங்கள் பால் கறந்து எங்களில் ஒவ்வொருவரும் தமக்குரிய பங்கைப் பருகினோம். நபி (ஸல்) அவர்களுக்குரிய பங்கை அவர்களுக்காக எடுத்துவைத்தோம். நபி

(ஸல்) அவர்கள் இரவில் (எங்களிடம்) வந்து,உறங்கிக்கொண்டிருப்பவரை விழிக்கச் செய்யாமல், விழித்திருப்பவர்களுக்குக் கேட்கும் விதமாக (மெதுவாக) முகமன் (சலாம்) சொல்வார்கள். பிறகு பள்ளிவாசலுக்குச் சென்று தொழுவார்கள். பிறகு தமது பானத்தை நோக்கி வந்து (அதை) அருந்துவார்கள்.

இந்நிலையில், எனது பங்கை நான் அருந்திவிட்ட நிலையில் ஓர் இரவில் என்னிடம் ஷைத்தான் வந்து, "முஹம்மத் அவர்கள் அன்சாரிகளிடம் செல்லும்போது அவர்களுக்கு அன்சாரிகள் அன்பளிப்புகள் வழங்குகிறார்கள். நபி (ஸல்) அவர்களும் அதைப் பெற்று (புசித்து)க்கொள்கிறார்கள். இந்த ஒரு மிடறு(ப்பால்) அவர்களுக்குத் தேவையே இருக்காது" என்று சொன்னான்.

எனவே, நான் அந்தப் பாலை நோக்கிச் சென்று அதைப் பருகிவிட்டேன். என் வயிற்றுக்குள் பால் இறங்கியதும், (அருந்திய) அந்தப் பாலை(த் திருப்பி)க் கொடுக்க வழியில்லை என்பதை நான் உணர்ந்தேன். பிறகு ஷைத்தான் "உனக்குக் கேடு நேரட்டும்! என்ன காரியம் செய்துவிட்டாய்! முஹம்மத் அவர்களுக்குரிய பானத்தைப் பருகிவிட்டாயே? அவர் (வீட்டுக்கு) வரும் போது, பால் இல்லாததைக் கண்டு உனக்கெதிராகப் பிரார்த்தித்துவிட்டால் நீ அழிந்துபோவாய். உனது இம்மையும் மறுமையும் (பாழாகிப்) போய்விடுமே!" என்று என்னைச் சஞ்சலப்படுத்தினான்.

அப்போது என்மீது ஒரு சால்வை இருந்தது. அதை என் பாதங்கள்மீது போர்த்தினால் தலை வெளியே தெரியும். தலைமீது போர்த்தினால் என் பாதங்கள் வெளியே தெரியும். (உடல் முழுவதும் போர்த்தி மூடிக்கொள்ளும் அளவுக்கு அது இருக்கவில்லை.) எனக்கு (அன்றிரவு குற்றஉணர்வால்) தூக்கமே வராமலாயிற்று. என்னிரு தோழர்களோ (நிம்மதியாகத்) தூங்கிவிட்டனர். நான் செய்த தவறை அவர்களிருவரும் செய்யவில்லை.

பிறகு நபி (ஸல்) அவர்கள் வந்து வழக்கம்போல் சலாம் சொன்னார்கள். பிறகு பள்ளிவாசலுக்குச் சென்று தொழுதார்கள். பிறகு தமது பானத்தை நோக்கி வந்து, அதைத் திறந்தார்கள். அதில் எதுவும் இருக்கவில்லை. அப்போது வானத்தை நோக்கித் தமது தலையை உயர்த்தினார்கள். "இப்போது எனக்கெதிராக அவர்கள் பிரார்த்திப்பார்கள். நான் அழிந்துபோய்விடுவேன்" என்று நான் (எனக்குள்ளே) கூறிக்கொண்டேன்.

ஆனால் அவர்கள், "இறைவா! எனக்கு உண்ண உணவளித்தவருக்கு நீ உணவளிப்பாயாக! எனக்குப் பருகப்பானம் புகட்டியவருக்கு நீ புகட்டுவாயாக!" (அல்லாஹும்ம அத்இம் மன் அத்அமனீ வஸ்கி மன் சகானீ) என்று பிரார்த்தித்தார்கள்.

நான் அந்தச் சால்வையை எடுத்து அதை இறுக்கமாக என்மீது கட்டிக்கொண்டு, கத்தியை எடுத்துக்கொண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குரிய அந்த வெள்ளாடுகளை நோக்கிச் சென்று, அவற்றில் கொழுத்த ஆடு எது என்பதைப் பார்த்து, அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காக அறுக்கலாம் என நினைத்தேன். ஆனால்,அவற்றின் பால்மடிகள் திரண்டு காணப்பட்டன. அவற்றில் ஒவ்வொன்றும் பால் சுரந்து காணப்பட்டன.

உடனே நான் முஹம்மத் (ஸல்) அவர்களின் குடும்பத்தார் பால் கறப்பதற்குப் பயன்படுத்தும் ஒரு பாத்திரத்தை நோக்கிச் சென்று அதில் பால் கறந்தேன். அதில் நுரை ததும்பும் அளவுக்குக் கறந்தேன். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தேன்.

அப்போது அவர்கள், "இன்றிரவு நீங்கள் உங்களுக்குரிய பானத்தைப் பருகினீர்களா?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் பருகுங்கள்" என்றேன். அவர்கள் பருகி விட்டுப் பிறகு (மீதியை) என்னிடம் கொடுத்தார்கள். பிறகு (மீண்டும்) நான், "அல்லாஹ்வின் தூதரே! (இன்னும்) பருகுங்கள்" என்றேன். அவர்கள் பருகிவிட்டுப் பிறகு (மீதியை மீண்டும்) என்னிடம் கொடுத்தார்கள். நபி (ஸல்) அவர்களின் தாகம் தணிந்துவிட்டது;அவர்களது பிரார்த்தனை எனக்குக் கிடைத்துவிட்டது என்பதை நான் அறிந்துகொண்டபோது, (மகிழ்ச்சியால்) பூமியில் விழுமளவுக்குச் சிரித்தேன்.

அப்போது நபி (ஸல்) அவர்கள், "மிக்தாதே! ஏதோ ஒரு குறும்பு செய்துள்ளீர்! அது என்ன?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! இன்னின்னவாறு நடந்தது. இப்படி நான் செய்தேன்" என்று சொன்னேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இது அல்லாஹ்விடமிருந்து வந்துள்ள கருணையே ஆகும். இதை (முன்பே) என்னிடம் தெரிவித்திருக்கக் கூடாதா? நம் தோழர்கள் இருவரையும் நாம் எழுப்பி, அவர்களுக்கும் அதைக் கிடைக்கச் செய்திருக்கலாமே!" என்று கூறினார்கள்.

அப்போது நான், "தங்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீதாணையாக! அதைத் தாங்களும் தங்களுடன் நானும் அடைந்துகொண்ட பின் மக்களில் வேறு யாருக்குக் கிடைத்தாலும் (கிடைக்காவிட்டாலும்) அதை நான் பொருட்படுத்த மாட்டேன்" என்று கூறினேன்.

- மேற்கண்ட ஹதீஸ் மிக்தாத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4178 அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நாங்கள் நூற்று முப்பது பேர் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள், "உங்களில் யாரிடமாவது உணவு இருக்கிறதா?" என்று கேட்டார்கள். அப்போது ஒரு மனிதரிடம் ஒரு "ஸாஉ' அல்லது "கிட்டத்தட்ட அந்த அளவு' உணவு(க்கு வேண்டிய மாவு) இருந்தது. அது தண்ணீர் விட்டுக் குழைக்கப்பட்டது.

(சற்று நேரத்திற்குப்) பின் பரட்டைத் தலையுடைய உயரமான இணைவைப்பாளரான மனிதர் ஒருவர் ஆடுகளை ஓட்டியபடி வந்தார். அவரிடம் நபி (ஸல்) அவர்கள், "(இவை) விற்பனைக்கா? அல்லது அன்பளிக்கவா?" என்று கேட்டார்கள். அவர், "இல்லை. விற்பனைக்குத்தான்" என்றார்.

அவரிடமிருந்து நபி (ஸல்) அவர்கள் ஓர் ஆட்டை விலைக்கு வாங்கினார்கள். அது அறு(த்துச் சமை)க்கப்பட்டது. அதன் ஈரலைப் பொரிக்கும்படி நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! எங்கள் நூற்று முப்பது பேரில் ஒருவர் விடாமல் ஆளுக்கொரு துண்டை நபி (ஸல்) அவர்கள் வெட்டித் தந்தார்கள். அங்கிருந்தவருக்கு (அப்போதே) அவரிடமே கொடுத்தார்கள். அங்கில்லாதவருக்காக எடுத்து வைத்(துப் பிறகு கொடுத்)தார்கள்.

பிறகு இரு அகன்ற தட்டுக(ளில் அந்த இறைச்சி)களை வைத்தார்கள். அவற்றிலிருந்து நாங்கள் அனைவரும் வயிறார உண்டோம். அப்படியிருந்தும் அவ்விரு தட்டுகளிலும் மீதி இருந்தது. எனவே, அதை நான் ஒட்டகத்தின் மீது ஏற்றிக்கொண்டேன்.

4179 அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
திண்ணைத் தோழர்கள் (அஸ்ஹாபுஸ் ஸுஃப்பா) ஏழைகளாக இருந்தார்கள். ஒரு முறை நபி (ஸல்) அவர்கள், "யாரிடம் இரண்டு பேருக்கான உணவு உள்ளதோ அவர், மூன்றாம(வராகத் திண்ணைத் தோழர்களில் ஒரு)வரை அழைத்துச் செல்லட்டும். யாரிடம் நான்கு பேருக்கான உணவு இருக்கிறதோ அவர் ஐந்தாவது அல்லது ஆறாவது பேரை அழைத்துச் செல்லட்டும்" என்று கூறினார்கள். (இவ்வாறே நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்) அல்லது நபி (ஸல்) அவர்கள் எப்படிச் சொன்னார்களோ அதைப் போல.
(என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள் மூன்று பேரை அழைத்து வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் பத்துப் பேருடன் (தம் வீட்டுக்குச்) சென்றார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள் மூன்று பேருடன் வந்தபோது, வீட்டில் நானும் என் தந்தையும் என் தாயார் (உம்மு ரூமான்) அவர்களும் தாம் இருந்தோம்.
-"என் மனைவியும் எங்கள் வீட்டிற்கும் (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்களின் வீட்டிற்கும் சேர்ந்து பணிபுரிந்துவந்த பணிப்பெண்ணும்...' என அவர்கள் குறிப்பிட்டார்களா என எனக்குத் தெரியவில்லை என்கிறார்கள் அறிவிப்பாளர் அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள்.–
அபூபக்ர் (ரலி) அவர்கள் (விருந்தினருக்கு உணவளிக்குமாறு தம் வீட்டாரிடம் கூறிவிட்டு) நபி (ஸல்) அவர்களிடம் (சென்று) இரவு உணவு அருந்தினார்கள். பிறகு (நபியவர்களுடன்) இஷா தொழுகை தொழும்வரை (அவர்களுடன்) தங்கினார்கள். நபி (ஸல்) அவர்கள் உறங்கச் செல்லும்வரை அவர்களுடன் தங்கியிருந்துவிட்டு, இரவில் அல்லாஹ் நாடிய நேரம் கழிந்த பின்னர் வீட்டுக்குத் திரும்பிவந்தார்கள்.

அப்போது அவர்களுடைய துணைவியார் (அதாவது என் தாயார்), "உங்கள் விருந்தாளிகளை' அல்லது "உங்கள் விருந்தாளியை' உபசரிக்க வராமல் தாமாதமானதற்கு என்ன காரணம்?" என்று கேட்டார். அபூபக்ர் (ரலி) அவர்கள், "அவர்களுக்கு நீ இரவு உணவு அளிக்க வில்லையா?" என்று கேட்டார்கள். அதற்குத் துணைவியார், "நீங்கள் வராமல் உண்ண முடியாதென அவர்கள் மறுத்துவிட்டனர். நாங்கள் (உண்ணும்படி) கேட்டுக் கொண்டபோதும் (அவர்கள் சம்மதிக்காமல்) எங்களை மிகைத்துவிட்டனர்" என்று பதிலளித்தார்.
(என் தந்தை விருந்தாளிகளைக் கவனிக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்துச் சென்றிருந்ததால் என்னைக் கண்டிப்பார்களோ என்றஞ்சி) நான் சென்று ஒளிந்துகொண்டேன். அவர்கள், "தடியா!' என்று (கோபத்துடன்) அழைத்து, "உன் மூக்கறுந்து போக!" என்று (என்னை) ஏசினார்கள்.
(விருந்தாளிகளை நோக்கி) "மகிழ்ச்சியாக இல்லை; நீங்கள் உண்ணுங்கள்" என்று கூறினார்கள். (தம் வீட்டாரை நோக்கி, "என்னை எதிர்பார்த்துத்தானே விருந்தாளிகளுக்குச் சிரமம் கொடுத்துவிட்டீர்கள்! இதற்குத் தண்டனையாக) அல்லாஹ்வின் மீதாணையாக! நான் ஒருபோதும் இதை உண்ணமாட்டேன்" என்று சொன்னார்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் ஒரு கவள உணவை எடுக்கும்போதெல்லாம் அதன் கீழ்ப் பகுதியிலிருந்து அதைவிட அதிகமாகப் பெருகியது. இறுதியில் நாங்கள் அனைவரும் வயிறார உண்டோம். அந்த உணவு முன்பிருந்ததைவிடக் கூடுதலாகிவிட்டிருந்தது. அது முன்பிருந்த அளவிலோ, அல்லது அதைவிடக் கூடுதலாகவோ மாறியிருப்பதைக் கண்ட அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் துணைவியாரிடம், "பனூ ஃபிராஸ் குலமகளே! என்ன இது?"

என்று (வியப்புடன்) கேட்க, என் தாயார், "என் கண்குளிர்ச்சியின் மீதாணையாக! இந்த உணவு முன்பிருந்ததைவிட மூன்று மடங்கு அதிகமாகிவிட்டிருக்கிறது" என்று சொன்னார்.

பிறகு அபூபக்ர் (ரலி) அவர்கள் (தமது சத்தியத்தை முறித்துவிட்டு) அதிலிருந்து உண்டார்கள். மேலும், "அதுவெல்லாம் (நான் ஒருபோதும் இதை உண்ணமாட்டேன் என நான் சத்தியம் செய்ததெல்லாம்) ஷைத்தானால் ஏற்பட்டதே" என்று கூறிவிட்டு, பிறகு அதிலிருந்து மேலும் ஒரு கவளம் உண்டார்கள். பிறகு அதை நபி (ஸல்) அவர்களிடம் எடுத்துச் சென்றார்கள்.

பிறகு அந்த உணவு நபி (ஸல்) அவர்களிடம் இருக்கலாயிற்று. (அப்போது) எங்களுக்கும் ஒரு கூட்டத்தாருக்குமிடையே சமாதான ஒப்பந்தம் இருந்துவந்தது. ஒப்பந்தக் காலம் முடிவுக்கும் வந்தது. (இனி அவர்கள் போருக்கு வந்தால் அவர்களை எதிர்கொள்வதற்காக) நபி (ஸல்) அவர்கள் எங்களில் பன்னிரண்டு பேரைத் தளபதிகளாக்கி ஒவ்வொருவருடனும் சில வீரர்களை ஒப்படைத்தார்கள்.

ஒவ்வொரு தளபதியுடனும் எத்தனை பேர் இருந்தனர் என்பதை அல்லாஹ்வே அறிவான். எனினும், அப்படையினரிடம் அந்த உணவைக் கொடுத்தனுப்பினார்கள். அவர்கள் அனைவரும் அதிலிருந்து உண்டனர். (இவ்வாறே அவர்கள் அறிவித்தார்கள்) அல்லது அவர்கள் எப்படி அறிவித்தார்களோ அதைப் போல.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4180 அப்துர் ரஹ்மான் பின் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

எங்கள் (வீட்டுக்கு) விருந்தாளிகள் சிலர் வந்தனர். அந்த இரவில் என் தந்தை (அபூபக்ர்-ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பேசுவதற்காகச் சென்றுவிட்டார்கள். (அவர்கள் செல்வதற்கு முன் என்னிடம்,) "அப்துர் ரஹ்மானே! உன் விருந்தாளிகளை (இரவு உணவு கொடுத்து) கவனித்துக்கொள்" என்று கூறினார்கள்.

மாலை நேரமானதும் நாங்கள் விருந்தாளிகளுக்கு உணவு கொண்டுவந்து கொடுத்தோம். ஆனால் அவர்கள், "குடும்பத் தலைவர் வந்து எங்களுடன் உண்ணாத வரை நாங்கள் உண்ண மாட்டோம்" என்று கூறி, மறுத்துவிட்டனர்.

அப்போது அவர்களிடம் நான், "அவர் (என் தந்தை) ஓர் இரும்பு மனிதர். நீங்கள் விருந்து உண்ணவில்லையானால்,நான்தான் அவரிடம் அவஸ்தைப்பட வேண்டியிருக்கும் என அஞ்சுகிறேன்" என்று சொன்னேன். அப்படியிருந்தும் அவர்கள் மறுத்துவிட்டனர்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் வீட்டுக்கு வந்ததும் முதல் வேலையாக விருந்தாளிகளைப் பற்றியே கேட்டார்கள். "உங்கள் விருந்தாளிகளுக்கு உணவு கொடுத்துவிட்டீர்களா?" என்று கேட்டார்கள். வீட்டார், "இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களுக்கு இன்னும் நாங்கள் உணவு கொடுக்கவில்லை" என்று பதிலளித்தனர். அபூபக்ர் (ரலி) அவர்கள், "நான் அப்துர் ரஹ்மானிடம் (அவர்களுக்கு உணவு கொடுக்குமாறு) கட்டளையிடவில்லையா?" என்று கேட்டார்கள்.

உடனே நான் அங்கிருந்து நகர்ந்தேன். அப்போது அவர்கள், "அப்துர் ரஹ்மான்!' என அழைத்தார்கள். நான் ஒளிந்துகொண்டேன். அவர்கள் "தடியா! உன்மீது அறுதியிட்டுச் சொல்கிறேன். என் குரல் உன் காதில் விழுந்தால் இங்கு வந்துவிடு" என்று கூறினார்கள். நான் வந்து, "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என்மீது எந்தக் குற்றமும் இல்லை. இதோ!

உங்கள் விருந்தாளிகளிடமே கேட்டுப் பாருங்கள். நான் அவர்களிடம் உணவைக் கொண்டுவந்து வைத்தேன். நீங்கள் வரும்வரை நாங்கள் உண்ணமாட்டோம் என அவர்கள்தாம் மறுத்துவிட்டனர்" என்று சொன்னேன்.

அபூபக்ர் (ரலி) அவர்கள், "எங்கள் விருந்தை ஏற்காமலிருக்க உங்களுக்கு என்ன வந்தது?" என்று கேட்டார்கள். மேலும், (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! இன்றிரவு இதை நான் உண்ணமாட்டேன்" என்று கூறிவிட்டார்கள். அதற்கு விருந்தாளிகள், "அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் உண்ணாத வரை நாங்களும் இதை உண்ணமாட்டோம்" என்று கூறினர்.

அபூபக்ர் (ரலி) அவர்கள், "இன்றிரவைப் போன்று தர்மசங்கடமான ஓர் இரவை நான் ஒரு போதும் கண்டதில்லை" என்று கூறிவிட்டு, "உங்களுக்கு என்ன கேடு! உங்கள் விருந்தை எங்களிடமிருந்து ஏன் நீங்கள் மறுக்கிறீர்கள்?" என்று கூறிவிட்டு, "(நான் உண்ணமாட்டேன் எனச் சத்தியம் செய்த) முந்தைய நிலைப்பாடு ஷைத்தானால் விளைந்ததாகும்"என்றார்கள். பிறகு "உங்கள் உணவைக் கொண்டுவாருங்கள்" என்று கூறினார்கள். உணவு கொண்டுவரப் பட்டதும் அல்லாஹ்வின் பெயர் (பிஸ்மில்லாஹ்) சொல்லி உண்டார்கள். விருந்தினரும் உண்டனர்.

காலையில் நபி (ஸல்) அவர்களிடம் அபூபக்ர் (ரலி) அவர்கள் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! இவர்கள் (தமது சத்தியத்தில்) உறுதியாக இருந்தனர். நான்தான் சத்தியத்தை முறித்து விட்டேன்" என்று கூறி நடந்ததைத் தெரிவித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இல்லை. அவர்களில் நீரே நன்மை புரிந்தவர். அவர்களில் நீரே சிறந்தவர்" என்று கூறினார்கள்.– அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார்:

அபூபக்ர் (ரலி) அவர்கள், சத்திய முறிவுக்குப் பரிகாரம் செய்தார்களா என்பது தொடர்பாக எனக்குத் தகவல் கிடைக்கவில்லை.

## பாடம் : 33 உணவு குறைவாக இருக்கும்போது அனுசரித்து நடந்துகொள்வதன் சிறப்பும், இருவருடைய உணவு மூவருக்குப் போதுமானதாகும் என்பதும்.

4181 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இருவருடைய உணவு மூவருக்குப் போதுமானதாகும். மூவரின் உணவு நால்வருக்குப் போதுமானதாகும்.– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4182 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒருவருடைய உணவு இருவருக்குப் போதுமானதாகும். இருவரின் உணவு மூவருக்குப் போதுமானதாகும். நால்வரின் உணவு எண்மருக்குப் போதுமானதாகும்" என்று கூறியதைக் கேட்டேன்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்றே இடம்பெற்றுள்ளது. "நான் கேட்டேன்" என ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாகக் குறிப்பு இல்லை.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4183 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவருடைய உணவு இருவருக்குப் போதுமானதாகும். இருவரின் உணவு நால்வருக்குப் போதுமானதாகும். –இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4184 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதருடைய உணவு இரு மனிதருக்குப் போதுமானதாகும். இரு மனிதரின் உணவு நால்வருக்குப் போதுமானதாகும். நால்வரின் உணவு எண்மருக்குப் போதுமானதாகும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 34 இறைநம்பிக்கையாளர் ஒரே குடலில் உண்பார். இறைமறுப்பாளன் ஏழு குடல்களில் உண்பான்.

4185 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைமறுப்பாளன் ஏழு குடல்களில் உண்பான். இறைநம்பிக்கையாளர் ஒரே குடலில் உண்பார்.– இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4186 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் ஓர் ஏழை(க்கு விருந்தளித்தபோது அவர் உண்ணும் முறை)யைக் கவனித்தார்கள். அவருக்கு முன் உணவை வைக்கலானார்கள். (மீண்டும் மீண்டும்) அவருக்கு முன் வைத்துக்கொண்டே இருந்தார்கள். அவர் (அளவுக்கு மீறி) நிறைய உண்டுகொண்டிருந்தார். அப்போது இப்னு உமர் (ரலி) அவர்கள் (என்னிடம்), "இவரை என்னிடம் அழைத்து வராதே. ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைமறுப்பாளன் ஏழு குடல்களில் உண்பான்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

4187 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளர் ஒரே குடலில் உண்பார். இறைமறுப்பாளன் ஏழு குடல்களில் உண்பான்.– இதை ஜாபிர் (ரலி) மற்றும் இப்னு உமர் (ரலி) ஆகியோர் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் இப்னு உமர் (ரலி) அவர்களும் அறிவிக்கிறார்கள் என்பது பற்றிய குறிப்பு இல்லை.

4188 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளர் ஒரே குடலில் உண்பார். இறைமறுப்பாளன் ஏழு குடல்களில் உண்பான்.– இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வாயிலாக மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4189 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இறைமறுப்பாளர் ஒருவர் விருந்தாளியாக வந்து தங்கினார். அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் ஆட்டிலிருந்து பால் கறந்து கொடுக்கும்படி உத்தரவிட்டார்கள். அவ்வாறே கற(ந்து அவரிடம் கொடு)க்கப்பட்டது. அவர் அந்தப் பாலைப் பருகினார்.
பிறகு மற்றோர் ஆட்டில் பால் கறக்கப்பட்டது. அதையும் பருகினார். பிறகு மீண்டும் ஓர் ஆட்டில் கறக்கப்பட்டது. அதையும் பருகினார். இவ்வாறாக ஏழு ஆடுகளிலிருந்து கறக்கப்பட்ட பாலை அவர் பருகினார்.
மறுநாள் காலையில் அவர் இஸ்லாத்தைத் தழுவினார். அப்போது ஓர் ஆட்டில் பால் கறந்து அவருக்கு வழங்கும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட, அவர் அந்தப் பாலைப் பருகினார். மற்றோர் ஆட்டில் பால் கறந்து கொடுக்கும்படி உத்தரவிட்டபோது, அவரால் அதை முழுவதுமாகப் பருக முடியவில்லை.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இறை நம்பிக்கையாளர் ஒரே குடலில் பருகுவார். இறைமறுப்பாளன் ஏழு குடல்களில் பருகுவான்" என்று கூறினார்கள்.

## பாடம் : 35 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உணவைக் குறை சொல்லமாட்டார்கள்.

4190 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்த உணவையும் ஒருபோதும் குறை சொன்னதில்லை. ஒரு பொருள் பிடித்தால் அதை உண்பார்கள்; பிடிக்காவிட்டால் (உண்ணாமல்) விட்டுவிடுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர், மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4191 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்த உணவையும் ஒருபோதும் குறை சொன்னதை நான் கண்டதில்லை. உணவு பிடித்திருந்தால் உண்பார்கள்; பிடிக்காவிட்டால் (உண்ணாமல்) அமைதியாக இருந்துவிடுவார்கள். -இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

# அத்தியாயம் : 37 - ஆடையும் அலங்காரமும்

**பாடம் : 1 பொன் மற்றும் வெள்ளிப் பாத்திரங்களை, பருகுவதற்காகவோ மற்ற நோக்கங்களுக்காகவோ பயன்படுத்துவது ஆண்களுக்கும், பெண்களுக்கும் தடை செய்யப்பட்டதாகும்.**

4192 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெள்ளிப் பாத்திரங்களில் (பானங்களை) அருந்துகின்றவர், தமது வயிற்றில் மிடறு மிடறாக நரக நெருப்பையே விழுங்குகிறார்.
இதை நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு சலமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் உபைதுல்லாஹ் பின் உமர் பின் ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களிடமிருந்து அலீ பின் முஸ்ஹிர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில், "வெள்ளி மற்றும் பொன் பாத்திரங்களில் உண்ணவோ பருகவோ செய்கின்றவர்..." என்று கூடுதலாக இடம் பெற்றுள்ளது.
ஆனால், மற்றவர்களின் அறிவிப்புகளில் "உண்பது' தொடர்பாகவோ "பொன் பாத்திரம்' பற்றியோ குறிப்பு இல்லை.

4193 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பொன் அல்லது வெள்ளிப் பாத்திரத்தில் (பானங்களைப்) பருகியவர், தமது வயிற்றில் மிடறு மிடறாக நரக நெருப்பையே விழுங்குகிறார்.
இதை உம்மு சலமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 2 பொன் மற்றும் வெள்ளிப் பாத்திரத்தைப் பயன்படுத்துவது ஆண், பெண் இரு பாலருக்கும் தடை செய்யப்பட்டுள்ளது. பொன் மோதிரம் மற்றும் பட்டாடை அணிவது ஆண்களுக்குத் தடை செய்யப்பட்டுள்ளது; பெண்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது. பட்டுக் கரை போன்றவற்றை, நான்கு விரல்கள் அளவுக்கு மிகாமல் பயன்படுத்துவது ஆண்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது.**

4194 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏழு விஷயங்களைக் கடைப்பிடிக்கும்படி எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். ஏழு செயல்களைச் செய்ய வேண்டாமென எங்களுக்குத் தடை விதித்தார்கள்.
எங்களுக்கு அவர்கள் கட்டளையிட்ட ஏழு விஷயங்களாவன:
1. நோயாளிகளை நலம் விசாரிப்பது. 2. ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்வது. 3. தும்மிய(வர் "அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்' என்று கூறினால் அ)வருக்கு ("அல்லாஹ், உங்களுக்குக் கருணை புரிவானாக!' என்று) மறுமொழி கூறுவது. 4. சத்தியத்தை

நிறைவேற்றுவது அல்லது (உன்னோடு தொடர்புடைய ஒரு விஷயத்தில்) சத்தியம் செய்தவருக்கு அதை நிறைவேற்ற உதவுவது. 5. அநீதியிழைக்கப்பட்டவருக்கு உதவுவது. 6. விருந்தழைப்பை ஏற்றுக்கொள்வது. 7. (மக்களிடையே) சலாமைப் பரப்புவது.
எங்களுக்கு அவர்கள் தடை விதித்த ஏழு விஷயங்களாவன:
1. (ஆண்கள்) "பொன் மோதிரம் அணிவது' அல்லது "மோதிரங்கள் அணிவது' 2. வெள்ளிப் பாத்திரத்தில் பருகுவது. 3.மென்பட்டுத் திண்டு பயன்படுத்துவது. 4. (ஆண்கள் எகிப்தியப்) பட்டு கலந்த பஞ்சாடை அணிவது. 5. (ஆண்கள்) சாதாரணப் பட்டு அணிவது. 6. (ஆண்கள்) கெட்டிப் பட்டு அணிவது. 7. (ஆண்கள்) அலங்காரப் பட்டு அணிவது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "சத்தியத்தை நிறைவேற்றுவது, அல்லது சத்தியம் செய்தவருக்கு அதை நிறைவேற்ற உதவுவது' என்பது இடம்பெறவில்லை. அதற்குப் பகரமாக "கண்டெடுக்கப்பட்ட பொருள் பற்றி அறிவிப்புச் செய்வது' என இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "சத்தியத்தை நிறைவேற்றுவது' என ஐயப்பாடின்றி அறிவிக்கப்பட்டுள்ளது. மேலும் அவற்றில் "வெள்ளிப் பாத்திரத்தில் பருகுவது; ஏனெனில், இம்மையில் அதில் பருகியவர் மறுமையில் அதில் பருகமாட்டார்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஏழு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
இவற்றிலும் மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ள தகவல்களே இடம்பெற்றுள்ளன. ஆனால், "(மக்களிடையே) சலாமைப் பரப்புவது' என்பதற்குப் பகரமாக "சலாமுக்குப் பதிலுரைப்பது' என இடம்பெற்றுள்ளது. மேலும் "(ஆண்கள்) தங்க மோதிரம் அணிவது அல்லது "தங்க வளையம் அணிவது' என்று (ஐயத்துடன்) காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "சலாமைப் பரப்புவது' என்றும் "தங்க மோதிரம் அணிவது' என்றும் சந்தேகமின்றி இடம்பெற்றுள்ளது.

4195 அப்துல்லாஹ் பின் உகைம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்களுடன் "மதாயின்' (இராக்) நகரில் இருந்தபோது, அவர்கள் பருகுவதற்குத் தண்ணீர் கேட்டார்கள். அப்போது அவர்களிடம் (மஜூசி மதத்தவரான) ஊர்த் தலைவர் வெள்ளிப் பாத்திரத்தில் பானம் கொண்டுவந்தார். ஹுதைஃபா (ரலி) அவர்கள் அதை அவர்மீது வீசியெறிந்து விட்டு (அங்கிருந்தவர்களிடம்) பின்வருமாறு கூறினார்கள்:
நான் (ஏன் அவர்மீது வீசியெறிந்தேன் என்பதற்கான காரணத்தை) உங்களிடம் தெரிவிக்கிறேன். நான் அவரிடம் இ(ந்த வெள்ளிப் பாத்திரத்)தில் பருகத் தரவேண்டாம் எனக் கட்டளையிட்டிருந்தேன். (அவர் அதைக் கேட்காமல் அதிலேயே மீண்டும் பருகத்தந்தார்). அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பொன் மற்றும் வெள்ளிப் பாத்திரத்தில் பருக

வேண்டாம்; அலங்காரப் பட்டையோ சாதாரணப் பட்டையோ பயன்படுத்த வேண்டாம். ஏனெனில், அவை இம்மையில் (இறைமறுப்பாளர்களான) அவர்களுக்கும் மறுமை நாளில் (இறைநம்பிக்கையாளர்களான) உங்களுக்கும் உரியவை ஆகும்" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உகைம் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "நாங்கள் "மதாயின்' நகரில் ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் அருகில் இருந்தோம்..." என்று ஹதீஸ் துவங்குகிறது. அதில் "மறுமை நாளில்' எனும் சொற்றொடர் இடம்பெறவில்லை. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகின்றன.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களது ஓர் அறிவிப்பில் ஹுதைஃபா (ரலி) அவர்களிடமிருந்து இப்னு அபீலைலா (ரஹ்) அவர்கள் அறிவித்தார் என்றும், மற்றோர் அறிவிப்பில் அபூஃபர்வா (ரஹ்) அவர்கள் "நான் அப்துல்லாஹ் பின் உகைம் (ரலி) அவர்களிடமிருந்து கேட்டேன்' என்றும் இடம்பெற்றுள்ளது.

சுஃப்யான் (ரஹ்) அவர்கள், "இப்னு அபீ லைலா (ரஹ்) அவர்கள் அப்துல்லாஹ் பின் உகைம் (ரலி) அவர்களிடமிருந்தே செவியுற்றார்கள் என்றே நான் எண்ணுகிறேன்" என்று கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "மதாயின் நகரில் ஹுதைஃபா (ரலி) அவர்கள் பருகுவதற்குத் தண்ணீர் கேட்டபோது நான் அங்கிருந்தேன். அப்போது ஒருவர் வெள்ளிப் பாத்திரமொன்றைக் கொண்டுவந்தார்..." என்று இப்னு அபீ லைலா (ரஹ்) அவர்கள் கூறியதாகச் செய்தி ஆரம்பிக்கிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் எந்த அறிவிப்பிலும் "நான் அங்கிருந்தேன்" எனும் வாசகம் இடம்பெறவில்லை. முஆத் பின் முஆத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டுமே அவ்வாறு இடம்பெற்றுள்ளது. மற்றவர்களின் அறிவிப்பில் "ஹுதைஃபா (ரலி) அவர்கள் பருகுவதற்குத் தண்ணீர் கேட்டார்கள்" என்பதாகவே இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஹுதைஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4196 அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

ஹுதைஃபா (ரலி) அவர்கள் பருகுவதற்குத் தண்ணீர் கேட்டபோது, அக்னி ஆராதனையாளர் (மஜூசி) ஒருவர் ஒரு வெள்ளிப்பாத்திரத்தில் தண்ணீர் கொண்டுவந்தார். அப்போது ஹுதைஃபா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், சாதாரணப் பட்டையோ அலங்காரப் பட்டையோ அணியவேண்டாம். பொன் மற்றும் வெள்ளிப் பாத்திரங்களில் பருக வேண்டாம். பொன் மற்றும் வெள்ளித் தட்டுகளில் உண்ணவேண்டாம். ஏனெனில், அவை இம்மையில் (இறைமறுப்பாளர்களான) அவர்களுக்கு உரியவை ஆகும்" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.

4197 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் பள்ளிவாசலின் நுழைவாயில் அருகே கோடுபோட்ட பட்டாடை ஒன்று விற்கப்படுவதைக் கண்டார்கள்.
அப்போது "அல்லாஹ்வின் தூதரே! இதைத் தாங்கள் வாங்கிக்கொண்டால், வெள்ளிக்கிழமையன்று மக்களுக்காக (உரையாற்ற) நிற்கும்போதும், தங்களிடம் தூதுக் குழுக்கள் வரும்போதும் அணிந்துகொள்ளலாமே?" என்று சொன்னார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மறுமை நாளில் எந்த நற்பேறும் இல்லாதவர்தாம் இதை (இம்மையில்) அணிவார்" என்று கூறினார்கள்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அத்தகைய சில பட்டாடைகள் வந்தன. அவற்றில் ஓர் ஆடையை உமர் (ரலி) அவர்களுக்கு வழங்கினார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இதை எனக்கு அணியத் தருகிறீர்கள். ஆனால், (பள்ளிவாசலின் நுழைவாயில் அருகே விற்றுக்கொண்டிருந்த) "உத்தாரித் (பின் ஹாஜிப்)' என்பாரின் பட்டாடை விஷயத்தில் தாங்கள் வேறுவிதமாகக் கூறினீர்களே?" என்று கேட்டார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை நீங்கள் அணிந்துகொள்வதற்காக நான் உங்களுக்குத் தரவில்லை" என்று சொன்னார்கள்.
ஆகவே, உமர் (ரலி) அவர்கள் அதை மக்காவிலிருந்த இணைவைப்பாளரான தம் சகோதரர் ஒருவருக்கு அணியக் கொடுத்துவிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4198 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"தமீம்' குலத்தைச் சேர்ந்த உத்தாரித் (பின் ஹாஜிப்) என்பவர் கடைத்தெருவில் நின்று, கோடுபோட்ட பட்டு அங்கி விற்பதை உமர் (ரலி) அவர்கள் கண்டார்கள்.
-உத்தாரித் (பன்னாட்டு) மன்னர்களுடன் தொடர்புள்ளவராகவும், அவர்களிடமிருந்து (பல்வேறு பொருட்களைப்) பெற்றுவருபவராகவும் இருந்தார்.–
பிறகு உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! கடைத்தெருவில் நின்று, கோடு போட்ட பட்டு அங்கியை உத்தாரித் விற்பதைக்கண்டேன். அதைத் தாங்கள் வாங்கி, அரபுத் தூதுக் குழுக்கள் தங்களிடம் வரும்போது தாங்கள் அணிந்துகொண்டால் நன்றாயிருக்குமே!" என்று சொன்னார்கள். "வெள்ளிக்கிழமையின்போதும் அணிந்து கொண்டால் நன்றாயிருக்குமே" என்றும் அவர்கள் கூறியதாக நான் எண்ணுகிறேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மறுமையில் எந்த நற்பேறும் இல்லாதவரே இம்மையில் இந்தப் பட்டாடைகளை அணிவார்" என்று சொன்னார்கள்.
பின்னர் (ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கோடு போட்ட பட்டாடைகள் சில கொண்டுவரப்பட்டன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவற்றில் ஓர் பட்டாடையை உமர் (ரலி) அவர்களுக்கும் மற்றொன்றை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களுக்கும் அனுப்பி வைத்தார்கள். இன்னொன்றை அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களுக்குக் கொடுத்து, "இதை முக்காடுகளாக வெட்டி உங்கள் பெண்களிடையே பங்கிட்டுவிடுங்கள்" என்று கூறினார்கள்.

உமர் (ரலி) அவர்கள் தமது பட்டாடையை எடுத்துக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! இதை எனக்குக் கொடுத்தனுப்பியுள்ளீர்கள். ஆனால், உத்தாரித் விற்ற பட்டாடை குறித்து நேற்று தாங்கள் வேறுவிதமாகக் கூறினீர்களே?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை நீங்கள் அணிந்துகொள்வதற்காக உங்களுக்கு நான் கொடுத்தனுப்பவில்லை. மாறாக, இதை நீங்கள் (விற்றுப் பணம்) பெறுவதற்காகவே கொடுத்தனுப்பினேன்" என்று சொன்னார்கள்.
உசாமா (ரலி) அவர்களோ அதை அணிந்துகொண்டு வந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உசாமாவை உற்றுப் பார்த்தார்கள். (அவர்கள் பார்த்த பார்வையிலிருந்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குத் தாம் (இவ்வாறு) செய்தது பிடிக்கவில்லையென்பதை உசாமா உணர்ந்து கொண்டார்.
உடனே "அல்லாஹ்வின் தூதரே! ஏன் (இப்படி) என்னை உற்றுப் பார்க்கிறீர்கள்? தாங்கள் தாமே இதை எனக்குக் கொடுத்தனுப்பினீர்கள்?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை நீ அணிந்துகொள்வதற்காக உனக்கு நான் கொடுத்தனுப்பவில்லை. மாறாக, இதை முக்காடுகளாக வெட்டி, உன் (வீட்டுப்) பெண்களுக்குப் பங்கிடுவதற்காகவே உனக்குக் கொடுத்தனுப்பினேன்" என்று சொன்னார்கள்.

4199 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கெட்டிப் பட்டாடை ஒன்று கடைத் தெருவில் விற்கப்படுவதைக் கண்டு, அதை வாங்கிக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். "அல்லாஹ்வின் தூதரே! இதைத் தாங்கள் வாங்கி பெருநாள், தூதுக்குழுக்கள் சந்திப்பு ஆகியவற்றின்போது தங்களை அலங்கரித்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது (மறுமையில்) எந்த நற்பேறும் இல்லாதவர் (இம்மையில் அணியும்) ஆடையாகும்" என்று சொன்னார்கள். பின்னர் உமர் (ரலி) அவர்கள், அல்லாஹ் நாடிய சில நாட்கள் (எதுவும் நடக்காமல்) கழித்தார்கள்.
பின்னர் அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அலங்காரப் பட்டு அங்கி ஒன்றை அனுப்பிவைத்தார்கள். உடனே அதை எடுத்துக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! "இது (மறுமையில்) எந்த நற்பேறும் இல்லாதவர் (இம்மையில் அணியும்) ஆடையாகும்'. அல்லது "(மறுமையில்) எந்த நற்பேறும் இல்லாதவரே (இம்மையில்) இதை அணிவார்' என்று தாங்கள் கூறினீர்களே? பிறகு தாங்களே இதை எனக்குக் கொடுத்தனுப்பியுள்ளீர்களே?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை விற்று நீங்கள் உங்களது தேவையைப் பூர்த்தி செய்துகொள்ளுங்கள் (அதற்காகவே இதைக் கொடுத்தனுப்பினேன்)" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4200 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உமர் (ரலி) அவர்கள் "உத்தாரித்' குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதரிடம் "கெட்டியான' அல்லது "சாதாரண' பட்டு மேலங்கி ஒன்றைக் கண்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (வந்து), "இதைத் தாங்கள் வாங்கிக்கொண்டால் நன்றாயிருக்குமே?" என்று கூறினார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(மறுமையில்) எந்த நற்பேறும் இல்லாதவர் தாம் இதை (இம்மையில்) அணிவார்" என்று சொன்னார்கள்.
பிறகு (ஒரு சந்தர்ப்பத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குக் கோடுபோட்ட பட்டாடை ஒன்று அன்பளிப்பாக வழங்கப்பட்டபோது, அதை உமர் (ரலி) அவர்களுக்குக் கொடுத்தனுப்பினார்கள். அதைப் பெற்ற உமர் (ரலி) அவர்கள், "இதை எனக்குக் கொடுத்தனுப்பியுள்ளீர்கள். ஆனால், இதைப் பற்றித் தாங்கள் வேறுவிதமாகக் கூறியதைக் கேட்டேனே?" என்றார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இதை விற்று) இதன் மூலம் நீங்கள் பயனடைந்து கொள்ளவேண்டும் என்பதற்காகவே இதை உங்களுக்குக் கொடுத்தனுப்பினேன்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் "உத்தாரித்' குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதரிடம் (கெட்டியான அல்லது சாதாரண பட்டு மேலங்கி) ஒன்றைக் கண்டார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

எனினும் அதில், "(இதை விற்று) இதன் மூலம் நீங்கள் பயனடைந்துகொள்ள வேண்டும் என்பதற்காகவே உங்களுக்கு இதைக் கொடுத்தனுப்பினேன். இதை நீங்கள் அணிந்து கொள்வதற்காக உங்களுக்கு நான் கொடுத்தனுப்பவில்லை" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.
- யஹ்யா பின் அபீஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் சாலிம் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் "அல்இஸ்தப்ரக்' பட்டு குறித்துக் கேட்டார்கள். நான் "கெட்டியான முரட்டுப் பட்டு" என்று பதிலளித்தேன். அப்போது அவர்கள் கூறினார்கள்:
(என் தந்தை) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறக்கேட்டுள்ளேன்:
என் தந்தை உமர் (ரலி) அவர்கள் ஒரு மனிதர் கெட்டிப் பட்டாடை ஒன்றை அணிந்திருப்பதைக் கண்டார்கள். உடனே நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள்... என்று தொடங்கி, மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளவாறு குறிப்பிட்டார்கள்.
எனினும், இந்த அறிவிப்பில், "(இதை விற்று) இதன் மூலம் ஏதேனும் செல்வத்தை நீங்கள் அடைந்துகொள்வதற்காகவே இதை உங்களுக்கு நான் கொடுத்தனுப்பினேன்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று காணப்படுகிறது.

4201 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையும் அதாஉ (ரஹ்) அவர்களின் பிள்ளைக்குத் தாய்மாமாவுமான அப்துல்லாஹ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அஸ்மா (ரலி) அவர்கள் என்னை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் அனுப்பி, "ஆடைகளில் (சிறிது) பட்டு வேலைப்பாடுகள் உள்ளதையும், சிவப்பு நிற மென்பட்டுத் திண்டுகளை(ப் பயன்படுத்துவதை)யும், ரஜப் மாதம் முழுவதும் நோன்பு நோற்பதையும், தாங்கள் தடை செய்துவருவதாக எனக்குச் செய்தி எட்டியுள்ளதே (அது உண்மையா?)" என்று கேட்கச் சொன்னார்கள்.
அதற்கு என்னிடம் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "ரஜப் மாதத்தில் நோன்பு நோற்பதைப் பற்றி நீங்கள் குறிப்பிட்டதைப் பொறுத்தவரையில், (நீங்கள் கேள்விப்பட்டது பொய்யாகும்.) எல்லாக் காலங்களிலும் நோன்பு நோற்கும் ஒருவ(னான என்)னைப் பற்றி எப்படி (இதைச் சொல்ல முடியும்)?
ஆடைகளில் பட்டு வேலைப்பாடுகள் உள்ளதைப் பொறுத்தவரையில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக (என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் "(மறுமையில்) எந்த நற்பேறும் இல்லாதவர்தாம் (இம்மையில்) பட்டாடை அணிவார்" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன். பட்டு வேலைப்பாடுகள் உள்ளதும் இத்தடைக்குள் அடங்கும் என்று நான் அஞ்சினேன்.
சிவப்பு நிறத்தில் அமைந்த மென்பட்டுத் திண்டைப் பொறுத்தவரையில், இதுதான் அப்துல்லாஹ் பின் உமரின் திண்டாகும். இதுவும் சிவப்பு நிறத்தில் அமைந்த திண்டுதான்" என்று கூறினார்கள்.
நான் அஸ்மா (ரலி) அவர்களிடம் திரும்பி வந்து, இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதைத் தெரிவித்தேன். அப்போது அஸ்மா (ரலி) அவர்கள், "இதுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் நீளங்கியாகும்" எனக் கூறி, கோடுபோட்ட பாரசீக (மன்னர்கள் அணியும்) பட்டு நீளங்கி ஒன்றை வெளியே எடுத்தார்கள். அதன் கழுத்துப் பகுதியில் அலங்காரப் பட்டு வேலைப்பாடு இருந்தது. அதன் முன், பின் திறப்புகள் அலங்காரப் பட்டினால் வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.
அஸ்மா (ரலி) அவர்கள், "இது, ஆயிஷா (ரலி) அவர்களிடம் அவர்கள் இறக்கும்வரை இருந்துவந்தது. அவர்கள் இறந்த பின்னர் அதை நான் எடுத்துவைத்துக்கொண்டேன். இதை நபி (ஸல்) அவர்கள் அணிந்துவந்தார்கள். பின்னர் நாங்கள் (அருள்வளம் கருதி) இதைத் தண்ணீரில் கழுவி, அதைக்கொண்டு நோயாளிகளுக்குச் சிகிச்சை அளித்துவருகிறோம்" என்று கூறினார்கள்.

4202 கலீஃபா பின் கஅப் அபீதிப்யான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் உரை நிகழ்த்துகையில் "நீங்கள் உங்கள் (வீட்டுப்) பெண்களுக்குப் பட்டாடைகள் அணிவிக்காதீர்கள். ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பட்டாடை அணியாதீர்கள். யார் இம்மையில் அதை அணிகிறாரோ, அவர் மறுமையில் அதை அணியமாட்டார்' என்று கூறியதாக உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் சொல்ல நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

4203 அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஈரானிலுள்ள) ஆதர்பைஜானில் (ஓர் படையில்) இருந்தபோது எங்களுக்கு (வாசித்துக் காட்டுமாறு எங்கள் தளபதி உத்பா (ரலி) அவர்களுக்கு) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கடிதம் ஒன்று எழுதினார்கள். (அதில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்கள்:)
(தளபதி) உத்பா பின் ஃபர்கதே! இது (உமது பொறுப்பிலுள்ள செல்வம்.) நீர் பாடுபட்டுச் சம்பாதித்ததுமல்ல; உம்முடைய தந்தையோ தாயோ பாடுபட்டுச் சம்பாதித்ததுமல்ல. எனவே, நீர் உமது இருப்பிடத்தில் இருந்துகொண்டு அனுபவிப்பதைப் போன்றே, முஸ்லிம்கள் தம் இருப்பிடங்களில் இருந்தவாறே அனுபவிக்கச் செய்வீராக. உல்லாச வாழ்க்கை, இணைவைப்பாளர்களின் நாகரிகம், பட்டாடை ஆகியவற்றிலிருந்து உங்களை நான் எச்சரிக்கிறேன்.
ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பட்டாடைக்குத் தடை விதித்தார்கள்; இந்த அளவைத் தவிர: (அந்த அளவை விவரிக்கையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது நடு விரலையும் ஆட்காட்டி விரலையும் உயர்த்தி, அவ்விரண்டையும் இணைத்துக் காட்டினார்கள்.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸுஹைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"(கைகளால் சைகை செய்து காட்டியது தொடர்பான) இந்தச் செய்தியும் அந்தக் கடிதத்தில் காணப்பட்டது" என அறிவிப்பாளர் ஆஸிம் (ரஹ்) அவர்கள் கூறினார்கள். இதைக் கூறுகையில் அறிவிப்பாளர் ஸுஹைர் (ரஹ்) அவர்களும் தம்மிரு விரல்களை உயர்த்திக் காட்டினார்கள்.

4204 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (எங்கள் படைத் தளபதி உத்பா பின் ஃபர்கத் (ரலி) அவர்களுடன் ஆதர்பைஜானில் இருந்தபோது) எங்களுக்கு (கலீஃபா) உமர் (ரலி) அவர்களின் கடிதம் வந்தது. (அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:)
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மறுமையில் இந்தப் பட்டாடையில் ஒரு சிறிது(ம் அணிகின்ற பாக்கிய)மற்றவரே இம்மையில் அதை அணிவார்; இந்த அளவைத் தவிர: –(அந்த அளவை விவரிக்கும் வகையில் அபூஉஸ்மான் (ரஹ்) அவர்கள்) பெருவிரலுக்கு அடுத்துள்ள இரு விரல்களால் சைகை செய்து காட்டினார்கள்.– அது கோடுபோட்ட கெட்டி ஆடைகளின் பித்தான்களின் அளவு என அந்த ஆடைகளைக் கண்டபோது கருதினேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் உத்பா பின் ஃபர்கத் (ரலி) அவர்களுடன் இருந்தோம்..." என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4205 மேற்கண்ட ஹதீஸ் அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது: நாங்கள் உத்பா பின் ஃபர்கத் (ரலி) அவர்களுடன் ஆதர்பைஜானில் அல்லது சிரியாவில் இருந்தபோது, எங்களுக்கு உமர் (ரலி) அவர்களின் கடிதம் வந்தது. (அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:)
இறைவாழ்த்துக்குப் பின்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பட்டு அணிவதை (ஆண்களுக்கு)த் தடை செய்தார்கள்;இந்த இரு விரல்களின் அளவைத் தவிர.
அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: "(உமர் (ரலி) அவர்கள் குறிப்பிட்ட "இந்த அளவு' என்பது,ஆடைகளின் கரைகளில் செய்யப்படும்) வேலைப்பாட்டையே குறிக்கிறது என அறிந்து கொள்ள எங்களுக்கு அவகாசம் தேவைப்படவில்லை.
- மேற்கண்ட தகவல் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அபூஉஸ்மான் (ரஹ்) அவர்களின் (இறுதிக்) கூற்று இடம்பெறவில்லை.

4206 சுவைத் பின் ஃகஃபலா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் (டமாஸ்கஸிலுள்ள) "ஜாபியா' எனுமிடத்தில் உரை நிகழ்த்துகையில், "நபி (ஸல்) அவர்கள் பட்டு அணிவதைத் தடைசெய்தார்கள்; இரு விரல்கள் அல்லது மூன்று விரல்கள் அல்லது நான்கு விரல்கள் வைக்குமிடத்தின் அளவைத் தவிர" என்று குறிப்பிட்டார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4207 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் தமக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்ட அலங்காரப் பட்டு நீளங்கி ஒன்றை அணிந்தார்கள். பின்னர் விரைவாக அதைக் கழற்றி உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களுக்குக் கொடுத்தனுப்பினார்கள். அப்போது அவர்களிடம், "ஏன் விரைவாக அதைக் கழற்றிவிட்டீர்கள், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்கப்பட்டது.
அதற்கு அவர்கள், "அதை அணியவேண்டாம் என (வானவர்) ஜிப்ரீல் என்னைத் தடுத்துவிட்டார்" என்று பதிலளித்தார்கள். பிறகு உமர் (ரலி) அவர்கள் அழுதுகொண்டே வந்து, "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் வெறுத்த ஒன்றை எனக்குக் கொடுத்துள்ளீர்களே? எனக்கு மட்டும் என்னவாம்?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை நீங்கள் அணிந்து கொள்வதற்காக உங்களுக்கு நான் இதை வழங்கவில்லை. இதை நீங்கள் விற்று(க் காசாக்கி)க் கொள்வதற்காகவே உங்களுக்கு வழங்கினேன்" என்று சொன்னார்கள். எனவே, அதை உமர் (ரலி) அவர்கள் இரண்டாயிரம் திர்ஹங்களுக்கு விற்று விட்டார்கள்.-இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4208 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குக் கோடுபோட்ட பட்டுஅங்கி ஒன்று அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அவர்கள் அதை எனக்குக் கொடுத்தனுப்பினார்கள். அதை நான் அணிந்துகொண்டேன்.

(அதைக் கண்டபோது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகத்தில் நான் கோபத்தைக் கண்டேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை நீங்கள் அணிந்து கொள்வதற்காக உங்களுக்கு நான் கொடுத்தனுப்பவில்லை. (மாறாக,) இதை முக்காடுகளாக வெட்டி (உங்கள் வீட்டுப்) பெண்களிடையே பங்கிடுவதற்காகவே உங்களுக்கு நான் கொடுத்தனுப்பினேன்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஆத் பின் முஆத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உத்தரவுக்கிணங்க அதை(த் துண்டாக்கி) என் (வீட்டுப்) பெண்களிடையே பங்கிட்டுக் கொடுத்துவிட்டேன்" என்று அலீ (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.
முஹம்மத் பின் ஜஅஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உத்தரவுக்கிணங்க' எனும் குறிப்பு இல்லை. "அதை நான் என் (வீட்டுப்) பெண்களிடையே பங்கிட்டுவிட்டேன்" என்பது மட்டுமே காணப்படுகிறது.

4209 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
"தூமத்துல் ஜந்தல்' பகுதியின் மன்னர் உகைதிர் என்பவர், நபி (ஸல்) அவர்களுக்குப் பட்டுத் துணி ஒன்றை அன்பளிப்பாக வழங்கினார். அதை நபி (ஸல்) அவர்கள் எனக்கு அன்பளிப்பாக வழங்கி, இதை முக்காடுகளாக வெட்டி, ஃபாத்திமாக்களிடையே பங்கிட்டுவிடுங்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா மற்றும் அபூகுறைப் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "(உங்கள் வீட்டுப்) பெண்களிடையே பங்கிட்டுவிடுங்கள்" என்றே இடம்பெற்றுள்ளது.

4210 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கோடுபோட்ட பட்டுஅங்கி ஒன்றை எனக்குக் கொடுத்தார்கள். நான் (அதை அணிந்துகொண்டு அவர்களிடம்) புறப்பட்டு வந்தபோது, அவர்களது முகத்தில் கோபத்தை நான் கண்டேன். எனவே,அதை வெட்டி என் (வீட்டுப்) பெண்களிடையே பங்கிட்டுவிட்டேன்.

4211 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மென்பட்டு நீளங்கியொன்றை உமர் (ரலி) அவர்களுக்குக் கொடுத்தனுப்பினார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள் "இதை எனக்குக் கொடுத்தனுப்பியுள்ளீர்களே! (முன்பு) இந்த ஆடை குறித்து வேறுவிதமாகக் கூறினீர்களே?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை நீங்கள் அணிந்துகொள்வதற்காக உங்களுக்கு நான் கொடுத்தனுப்பவில்லை. (மாறாக, இதை விலைக்கு விற்று,) அந்தக் காசின் மூலம் நீங்கள் பயனடைந்து கொள்வதற்காகவே உங்களுக்கு இதை நான் கொடுத்தனுப்பினேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4212 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் இம்மையில் பட்டு அணிகிறாரோ, அவர் மறுமையில் அதை அணியமாட்டார்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4213 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இம்மையில் பட்டு அணிந்தவர், மறுமையில் அதை அணியமாட்டார்.
இதை அபூஉமாமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4214 உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஆண்கள் பட்டு அணிவது தடைசெய்யப்படுவதற்கு முன்பு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ("ஃபர்ரூஜ்'எனும்) நீண்ட பட்டு அங்கி ஒன்று அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அதை அவர்கள் அணிந்து கொண்டார்கள். பிறகு அதை அணிந்தபடியே (மஃக்ரிப் தொழுகை) தொழுதார்கள்.
தொழுகை முடிந்து திரும்பியதும் அதை வெறுப்பவர்களைப் போன்று பலமாக (உருவிக்) கழற்றினார்கள். பிறகு, "இது இறையச்சமுடையவர்களுக்கு உகந்ததன்று" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 3 சொறிசிரங்கு உள்ளிட்டவை இருந்தால் ஆண்கள் பட்டாடை அணியலாம்.**

4215 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி), ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி) ஆகியோருக்குப் பயணத்தில் சொறிசிரங்கு அல்லது (வேறு) நோய் ஏற்பட்டிருந்ததால் பட்டு முழு நீளங்கி அணிந்துகொள்ள அவ்விருவருக்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "பயணத்தில்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

4216 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது
ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி), அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) ஆகியோருக்குச் சொறிசிரங்கு ஏற்பட்டிருந்த காரணத்தால் பட்டாடை அணிந்துகொள்ள அவர்கள் இருவருக்கும் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்.' அல்லது "அனுமதியளிக்கப்பட்டது.'
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4217 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களும் ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி) அவர்களும் புறப்பட்டுச் சென்ற ஒரு போர் பயணத்தில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (தமது உடலில் சிரங்கு உண்டாக்கிய) ஒட்டுண்ணிகளைக் குறித்து முறையிட்டனர். ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்விருவருக்கும் பட்டு முழு நீளங்கி அணிய அனுமதியளித்தார்கள்.

**பாடம் : 4 செம்மஞ்சள் நிறச் சாயமிடப்பட்ட ஆடையை ஆண்கள் அணிவதற்கு வந்துள்ள தடை.**

4218 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நான் செம்மஞ்சள் நிறச் சாயமிடப்பட்ட இரு ஆடைகளை அணிந்திருப்பதைக் கண்டபோது, "இவை இறைமறுப்பாளர்களின் ஆடைகளில் உள்ளவையாகும். எனவே, இதை நீர் அணியாதீர்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4219 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் செம்மஞ்சள் நிறச் சாயமிடப்பட்ட இரு ஆடைகளை அணிந்திருப்பதைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், "உன் தாயாரா இவ்வாறு (செம்மஞ்சள் நிறச் சாயமிடுமாறு) உமக்குக் கட்டளையிட்டார்?" என்று கேட்டார்கள். நான், "அவ்விரண்டையும் கழுவி (செம்மஞ்சள் நிறச் சாயத்தை அகற்றி)க் கொள்கிறேன்" என்றேன். நபி (ஸல்) அவர்கள் "இல்லை, அவ்விரண்டையும் எரித்துவிடு" என்று சொன்னார்கள்.

4220 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பட்டு கலந்த (எகிப்திய) பஞ்சாடை, செம்மஞ்சள் நிறச் சாயமிடப்பட்ட ஆடை ஆகியவற்றை அணியவேண்டாம் என்றும், பொன் மோதிரம் அணிய வேண்டாமென்றும், (தொழுகையில்) ருகூஉவில் குர்ஆனை ஓத வேண்டாமென்றும் தடை செய்தார்கள்.– இதை அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4221 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், (தொழுகையில்) ருகூஉவிலிருக்கும்போது குர்ஆனை ஓத வேண்டாமென்றும், தங்கம் அணிய வேண்டாமென்றும், செம்மஞ்சள் நிறச் சாயமிடப்பட்ட ஆடையை அணிய வேண்டாமென்றும் என்னைத் தடுத்தார்கள்.

4222 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைத் தங்கமோதிரம் அணிய வேண்டாமென்றும், பட்டு கலந்த (எகிப்திய) பஞ்சாடை அணிய வேண்டாமென்றும், ருகூஉ மற்றும் சஜ்தாவில் குர்ஆனை ஓத வேண்டாமென்றும், செம்மஞ்சள் நிறச் சாயமிடப்பட்ட ஆடையை அணிய வேண்டாமென்றும் தடைசெய்தார்கள்.

**பாடம் : 5 பருத்தி ஆடை அணிவதன் சிறப்பு.**

4223 கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் "எந்த ஆடை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு மிகவும் விருப்பமானதாக இருந்தது?" என்று கேட்டோம். "(பருத்தியாலான) யமன் நாட்டுச் சால்வை' என்று பதிலளித்தார்கள்.

4224 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(பருத்தியாலான) யமன் நாட்டுச் சால்வையே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு மிகவும் பிரியமான துணியாக இருந்தது.

**பாடம் : 6 ஆடையில் (எளிமையும்) பணிவு(ம்) மேற்கொள்வதும்; ஆடை, விரிப்பு உள்ளிட்டவற்றில் கெட்டியானதையும் எளிமையானதையும் வைத்துப் போதுமாக்கிக் கொள்வதும்; முடியாலான ஆடை, கரை வேலைப்பாடுகள் செய்யப்பட்டவை ஆகியவற்றை அணியலாம் என்பதும்.**

4225 அபூபுர்தா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்கள் எங்களிடம் யமன் நாட்டில் தயாரிக்கப்பட்ட கெட்டியான கீழங்கி ஒன்றையும் "அல்முலப்பதா' (ஒட்டாடை) எனப் பெயர் பெற்ற மற்றோர் ஆடையையும் எடுத்துக்காட்டி, "அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த இரண்டு ஆடைகளையும் அணிந்திருந்த நிலையில்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உயிர் பிரிந்தது" என்று சொன்னார்கள்.

4226 அபூபுர்தா (ரலி) அவர்கள் கூறியதா வது:
ஆயிஷா (ரலி) அவர்கள் எங்களிடம் கீழங்கி ஒன்றையும் (இரண்டை ஒன்றாகச் சேர்த்து) ஒட்டப்பட்ட மற்றொரு கெட்டியான ஆடையையும் எடுத்துக்காட்டி, "இவற்றை அணிந்திருந்த நிலையில்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உயிர் பிரிந்தது" என்று சொன்னார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ஹாத்திம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "கெட்டியான கீழங்கியொன்றையும்' என்று இடம்பெற்றுள்ளது.- மேற்கண்ட ஹதீஸ் அபூபுர்தா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "கெட்டியான கீழங்கியொன்றையும்' என்றே இடம்பெற்றுள்ளது.

4227 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் காலை நபி (ஸல்) அவர்கள், கோடுபோட்ட கறுப்பு முடியாலான ஆடை அணிந்து வெளியே புறப்பட்டார்கள்.இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4228 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சாய்ந்துகொள்ளும் தலையணை, பதனிடப்பட்ட தோலால் அமைந்திருந்தது. அது ஈச்ச நாரினால் நிரப்பப்பெற்றிருந்தது.

4229 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உறங்கும் விரிப்பு, ஈச்ச நாரால் நிரப்பப்பெற்ற பதனிடப்பட்ட தோலால் அமைந்திருந்தது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ("விரிப்பு' என்பதைக் குறிக்க "ஃபிராஷ்' என்பதற்குப் பதிலாக) "ளிஜாஉ' எனும் சொல் இடம்பெற்றுள்ளது. அபூ முஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உறங்கும் (விரிப்பு)' எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 7 படுக்கை விரிப்புகளைப் பயன்படுத்தலாம்.

4230 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
எனக்குத் திருமணமானபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "படுக்கை விரிப்புகள் அமைத்துவிட்டாயா?" என்று கேட்டார்கள். நான், "எங்களிடம் எவ்வாறு படுக்கை விரிப்புகள் இருக்கும்?" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தெரிந்துகொள். விரைவில் அவை (உங்களிடம்) இருக்கும்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4231 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
எனக்கு மணமானபோது என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "படுக்கை விரிப்புகள் அமைத்துவிட்டாயா?" என்று கேட்டார்கள். நான் "எங்களிடம் எவ்வாறு படுக்கை விரிப்புகள் இருக்கும்?" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தெரிந்துகொள். விரைவில் அவை (உங்களிடம்) இருக்கும்" என்றார்கள்.
(பின்னாளில் ஒரு சமயம்) என் துணைவியிடம் படுக்கை விரிப்பொன்று இருந்தது. நான் அவரிடம் "அதை என்னிடமிருந்து அப்புறப்படுத்து (என்னிடம் அதைக் கொண்டுவராதே)" என்று சொல்ல, அதற்கு என் துணைவி, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், விரைவில் அவை (உங்களிடம்) இருக்கும் என்று சொன்னார்களே?" என்று கேட்டார்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "(என் துணைவி அவ்வாறு பதிலளித்ததும்) அவ்வாறாயின், அவற்றை நான் (அப்படியே) விட்டுவிடுகிறேன்"என்று ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 8 தேவைக்கு அதிகமான விரிப்புகளும் ஆடைகளும் இருப்பது விரும்பத்தக்கதன்று.

4232 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "ஒரு விரிப்பு ஆணுக்குரியது. மற்றொரு விரிப்பு அவன் துணைவிக்குரியது. மூன்றாவது விரிப்பு விருந்தாளிக்குரியது. நான்காவது விரிப்பு ஷைத்தானுக்குரியது" என்று சொன்னார்கள்.

**பாடம் : 9 பெருமைக்காக ஆடையைத் தரையில் படும்படி இழுத்துச் செல்வது தடை செய்யப்பட்டதாகும் என்பதும், அணியும் ஆடை எந்த அளவுக்குக் கீழே இறங்கலாம், அதில் விரும்பத்தக்க அளவு என்ன என்பது பற்றிய விளக்கமும்.**

4233 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆடையை (தரையில் படும்படி) தற்பெருமையுடன் இழுத்துக்கொண்டு சென்றவனை அல்லாஹ் (மறுமையில்) ஏறெடுத்துப் பார்க்கமாட்டான்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பதினோரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "மறுமை நாளில் ஏறெடுத்துப் பார்க்கமாட்டான்" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன.

4234 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தற்பெருமையால் தனது ஆடையை(த் தரையில் படும்படி) இழுத்துக்கொண்டு செல்பவனை அல்லாஹ் மறுமை நாளில் ஏறெடுத்துப் பார்க்கமாட்டான்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4235 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தற்பெருமையால் தனது ஆடையை(த் தரையில் படும்படி) இழுத்துக்கொண்டு சென்றவனை அல்லாஹ் மறுமை நாளில் ஏறெடுத்துப் பார்க்கமாட்டான்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "தன் ஆடைகளை' என்று (பன்மையாக) இடம்பெற்றுள்ளது.

4236 முஸ்லிம் பின் யந்நாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், ஒரு மனிதர் தமது ஆடையைத் தரையில் இழுபடும்படி இழுத்துச் செல்வதைக் கண்டார்கள். அப்போது, "நீர் யார்?" என்று கேட்டார்கள். அவர் தமது குடும்பத்தைப் பற்றித் தெரிவித்தார். அவர் பனூ லைஸ் குலத்தைச் சேர்ந்தவராயிருந்தார். அவரை யாரென அறிந்து கொண்ட பின், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தற்பெருமையடிக்கும் நோக்கத்துடனே தனது கீழாடையை (தரையில்படும் படி) இழுத்துச் சென்றவனை அல்லாஹ் மறுமையில் ஏறெடுத்துப் பார்க்கமாட்டான்' என்று கூறியதை நான் இந்த என் இரு காதுகளால் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், "தனது கீழாடையை' என்றே இடம்பெற்றுள்ளது. "தனது ஆடையை' என (பொதுவாக) இல்லை. அபூயூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ("முஸ்லிம் பின் யந்நாக்' என்ற அறிவிப்பாளரின் பெயர்) "முஸ்லிம் அபில்ஹசன்' என (குறிப்புப் பெயருடன்) இடம்பெற்றுள்ளது.

4237 முஹம்மத் பின் அப்பாத் பின் ஜஅஃபர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) நான் நாஃபிஉ பின் அப்தில் ஹாரிஸ் (ரஹ்) அவர்களின் முன்னாள் அடிமையான முஸ்லிம் பின் யசார் (ரஹ்) அவர்களுக்கும் இப்னு உமர் (ரலி) அவர்களுக்கும் நடுவே அமர்ந்திருந்தேன்.
அப்போது முஸ்லிம் பின் யசார் (ரஹ்) அவர்களிடம் "தற்பெருமையுடன் தனது ஆடையைத் தரையில் படும்படி இழுத்துக்கொண்டு செல்பவன் குறித்துத் தாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் ஏதேனும் செவியுற்றீர்களா?" என்று இப்னு உமர் (ரலி) அவர்களிடம் கேட்கச் சொன்னேன். (அவ்வாறே அவர் கேட்டார்.)
அப்போது இப்னு உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ் மறுமை நாளில் அவனை ஏறெடுத்துப் பார்க்கமாட்டான் என நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4238 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கடந்து சென்றேன். அப்போது எனது கீழாடை (கணுக்காலுக்குக்) கீழே இருந்தது. அப்போது அவர்கள், "அப்துல்லாஹ்! உமது கீழாடையை உயர்த்திக் கட்டு" என்றார்கள். நான் உயர்த்திக் கட்டினேன். பிறகு "இன்னும் சிறிது (உயர்த்து)" என்றார்கள். அவ்வாறே நான் இன்னும் சிறிது உயர்த்தினேன். பின்னர் அதையே நான் வழக்கமாகக் கொண்டிருக்கிறேன்.
(இவ்வாறு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதைக் கேட்ட) மக்கள் சிலர், "எதுவரை உயர்த்த வேண்டும்?" என்று கேட்டார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "கணைக்கால்களின் பாதியளவுக்கு" என்று பதிலளித்தார்கள்.

4239 முஹம்மத் பின் ஸியாத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் பஹ்ரைன் நாட்டின் (ஸகாத் வசூலிக்கும்) அதிகாரியாக இருந்தபோது, ஒரு மனிதர் தமது கீழாடையைத் தரையில் படும்படி இழுத்துக்கொண்டு செல்வதைக் கண்டார்கள். அப்போது தமது காலால் பூமியில் தட்டியவாறு "(இதோ! பெரிய) தலைவர் வருகிறார். (பெரிய) தலைவர் வருகிறார்" என்று (இடித்துக்) கூறலானார்கள்.
பிறகு "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அகம்பாவத்துடன் தனது ஆடையை (தரையில் படும்படி) இழுத்துச் செல்பனை அல்லாஹ் மறுமையில் ஏறெடுத்துப் பார்க்கமாட்டான்" என்று கூறினார்கள்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ஜஅஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "மர்வான் பின் அல்ஹகம், அபூஹுரைரா (ரலி) அவர்களை (இடைக்கால) ஆட்சியராக நியமித்திருந்தார்" என்று காணப்படுகிறது. முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) அவர்களது அறிவிப்பில்,

"அபூஹுரைரா (ரலி) அவர்கள் மதீனாவின் (இடைக்கால) ஆட்சியராக நியமிக்கப் பட்டிருந்தார்கள்" என இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 10 தம் ஆடைகளைக் கண்டு ஒருவர் பெருமிதம் கொண்டு, கர்வத்தோடு நடப்பது தடை செய்யப்பட்டதாகும்.

4240 நபி (ஸல்) அவர்கள் கூறியதாவது:
(முற்காலத்தில்) ஒரு மனிதன் தோள்கள் வரை தொங்கும் தனது தலை முடியையும் தான் அணிந்திருந்த இரு ஆடைகளையும் எண்ணிப் பெருமிதத்தோடு நடந்து சென்று கொண்டிருந்தான். அப்போது பூமிக்குள் அவன் புதையுண்டு போனான். அவன் மறுமை நாள் நிகழும்வரை பூமிக்குள் குலுங்கியபடி அழுந்திச் சென்றுகொண்டே இருப்பான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4241 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(முற்காலத்தில்) ஒரு மனிதன் தற்பெருமை கொண்டவனாகத் தன் ஆடைகளை அணிந்து கொண்டு கர்வத்தோடு நடந்து சென்று கொண்டிருந்தான். திடீரென அவனை அல்லாஹ் பூமிக்குள் புதையச் செய்துவிட்டான். அவன் மறுமை நாள் நிகழும்வரை (அவ்வாறே) பூமிக்குள் குலுங்கியபடியே அழுந்திச் சென்றுகொண்டே இருப்பான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஒரு மனிதன் தன்னிரு ஆடைகளை அணிந்து கர்வப்பட்டுக்கொண்டிருந்த போது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "உங்களுக்கு முன்னால் வாழ்ந்த மக்களில் ஒருவன் தனது ஆடையை அணிந்து கர்வம் கொண்டான்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே முடிகிறது.

## பாடம் : 11 ஆண்கள் தங்கமோதிரம் அணிவது தடை செய்யப்பட்டதாகும்; இஸ்லாத்தின் ஆரம்பத்தில் அதற்கு வழங்கப்பட்டிருந்த அனுமதி மாற்றப்பட்டுவிட்டது.

4242 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், தங்கமோதிரம் அணிய வேண்டாமென (ஆண்களுக்கு)த் தடை விதித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4243 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒரு மனிதர் தமது கையில் தங்கமோதிரம் அணிந்திருப்பதைக் கண்டபோது, அதைக் கழற்றச்செய்து தூக்கியெறிந்தார்கள். பிறகு "உங்களில் ஒருவர் (நரக) நெருப்பின் கங்கை எடுத்து, அதைத் தமது கையில் வைத்துக் கொள்கிறார்" என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்ற பிறகு அந்த மனிதரிடம், "உமது மோதிரத்தை(க் கழற்றி) எடுத்து நீ (வேறு வகையில்) பயனடைந்துகொள்" என்று கூறப்பட்டது. அவர், "இல்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வீசியெறிந்துவிட்டதை அல்லாஹ்வின் மீதாணையாக ஒருபோதும் நான் எடுக்க மாட்டேன்" என்று சொல்லிவிட்டார்.

4244 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தங்கமோதிரம் ஒன்றைத் தயாரித்து வைத்திருந்தார்கள். அதை அணியும்போது அதன் குமிழ் பகுதி தமது உள்ளங்கை பக்கமாக அமையும்படி அணிவார்கள். (இதைக் கண்ட) மக்களும் (அதைப் போன்ற) மோதிரங்களைச் செய்துகொண்டனர்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடையில் (மிம்பரில்) அமர்ந்து அந்த மோதிரத்தைக் கழற்றிவிட்டு, "நான் இந்த மோதிரத்தை அதன் குமிழ் பகுதி உள்ளங்கை பக்கமாக அமையும்படி வைத்தே அணிந்துகொண்டிருந்தேன்" என்று கூறி, அதை எறிந்துவிட்டார்கள்.
பிறகு "அல்லாஹ்வின் மீதாணையாக! இதை ஒருபோதும் நான் அணியமாட்டேன்" என்று சொன்னார்கள். உடனே மக்களும் தங்களின் மோதிரங்களை (கழற்றி) எறிந்தனர்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் உக்பா பின் காலித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அ(ந்த மோதிரத்)தைத் தமது வலக்கையில் அணிந்திருந்தார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 12 நபி (ஸல்) அவர்கள் "முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' எனும் இலச்சினை பொறிக்கப்பட்ட வெள்ளி மோதிரத்தை அணிந்திருந்ததும் அதை நபியவர்களுக்குப் பின் (மூன்று) கலீஃபாக்களும் அணிந்திருந்ததும்.

4245 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றைத் தயாரித்து அணிந்து கொண்டார்கள். அது (அவர்களின் வாழ்நாளில்) அவர்களது கையில் இருந்தது. பிறகு (முதலாவது கலீஃபா) அபூபக்ர் (ரலி) அவர்களின் கையில் இருந்தது. பிறகு (இரண்டாவது கலீஃபா) உமர் (ரலி) அவர்களின் கையில் இருந்தது.

பிறகு (மூன்றாவது கலீஃபா) உஸ்மான் (ரலி) அவர்களின் கையில் இருந்தது. இறுதியில் அது உஸ்மான் (ரலி) அவர்களிடமிருந்து "அரீஸ்" எனும் கிணற்றில் (தவறி)விழுந்துவிட்டது. அதில் பொறிக்கப்பட்டிருந்த இலச்சினை "முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' (அல்லாஹ்வின் தூதர் முஹம்மத்) என்றிருந்தது.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உஸ்மான் (ரலி) அவர்களிடமிருந்து' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

4246 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் (முதலில்) தங்கமோதிரம் ஒன்றைத் தயாரித்து (அணிந்து) கொண்டார்கள். பிறகு அதை(க் கழற்றி) எறிந்தார்கள். பிறகு வெள்ளி மோதிரம் ஒன்றைத் தயாரித்து (அணிந்து)கொண்டார்கள். அதில் "முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' எனும் இலச்சினை பொறித்தார்கள். மேலும், "எனது மோதிரத்தில் பொறிக்கப்பட்டிருப்பதைப் போன்று வேறு யாரும் (அரசு) இலச்சினை பொறிக்க வேண்டாம்" என்று சொன்னார்கள்.

அவர்கள் அதை அணியும்போது அதன் குமிழ் பகுதி உள்ளங்கை பக்கமாக அமையும்படி அணிவார்கள். அந்த மோதிரம் தான் "அரீஸ்" எனும் கிணற்றில், முஐகீப் (பின் அபீஃபாத்திமா – ரலி) அவர்களின் கையிலிருந்து விழுந்துவிட்டது.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

- அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றைச் செய்து, அதில் "முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' எனும் இலச்சினை பொறித்தார்கள். மேலும், மக்களிடம் "நான் வெள்ளி மோதிரம் ஒன்றைச் செய்து, அதில் "முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' எனும் இலச்சினை பொறித்துள்ளேன். ஆகவே, வேறு யாரும் அதைப் போன்று (அரசு) இலச்சினை பொறிக்க வேண்டாம்" என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், "முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' (எனும் இலச்சினை அமைந்திருந்தது) எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 13 நபி (ஸல்) அவர்கள் அரபியரல்லாத (வெளிநாட்ட)வருக்குக் கடிதம் எழுத விரும்பியபோது (முத்திரையிடுவதற்காக) மோதிரம் ஒன்றைத் தயாரித்துக் கொண்டது.

4247 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பைஸாந்திய) ரோமர்களுக்குக் கடிதம் எழுத விரும்பியபோது மக்கள், "ரோமர்கள் முத்திரையிடப்படாத எந்தக் கடிதத்தையும் வாசிக்கமாட்டார்கள்" என்று கூறினர்.

எனவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றைச் செய்து, அதில் "முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' எனும் இலச்சினை பொறித்தார்கள். அல்லாஹ்வின் தூதர்

(ஸல்) அவர்களின் கையில் (ஒளிர்ந்த) அந்த மோதிரத்தின் வெண்மையை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4248 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அரபியர் அல்லாதோருக்குக் கடிதம் எழுத விரும்பியபோது, "அரபியர் அல்லாதோர் முத்திரை இல்லாத கடிதம் எதையும் ஏற்கமாட்டார்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டது, எனவே,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றைத் தயார் செய்துகொண்டார்கள்.
அவர்களது கையில் (ஒளிர்ந்த) அந்த மோதிரத்தின் வெண்மையை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.

4249 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சீசர், குஸ்ரூ, நீகஸ் (கிஸ்ரா, கைசர், நஜாஷீ) ஆகிய மன்னர்களுக்குக் கடிதம் எழுத விரும்பியபோது, "இ(ம்மன்ன)வர்கள் முத்திரை இல்லாத எந்தக் கடிதத்தையும் ஏற்கமாட்டார்கள்" என்று கூறப்பட்டது. ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெள்ளி வளைய மோதிரம் ஒன்றை வார்த்து அதில் "முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' எனும் இலச்சினை பொறித்துக்கொண்டார்கள்.

## பாடம் : 14 மோதிரங்களை(க் கழற்றி) எறிதல்.

4250 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கையில் வெள்ளி மோதிரம் ஒன்றைக் கண்டேன். (அதைக் கண்ட) மக்களும் வெள்ளி மோதிரங்களைச் செய்து அணிந்துகொண்டனர். ஆகவே, நபி (ஸல்) அவர்கள் (முன்பு அணிந்திருந்த) தமது (பொன்) மோதிரத்தை (கழற்றி) எறிந்துவிடவே, மக்களும் தம் (பொன்) மோதிரங்களை (கழற்றி) எறிந்துவிட்டனர்.

4251 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கையில் வெள்ளி மோதிரத்தைக் கண்டேன். பிறகு மக்களும் வெள்ளி மோதிரங்களை வார்த்து, அவற்றை அணிந்து கொண்டனர். ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (முன்பு அணிந்திருந்த) தமது (தங்க) மோதிரத்தை எறிந்துவிட்டார்கள். எனவே, மக்களும் தம் (தங்க) மோதிரங்களை எறிந்துவிட்டனர்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 15 அபிசீனியக் குமிழ் உள்ள வெள்ளி மோதிரம்.**

4252 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வெள்ளி மோதிரம் அபிசீனியக் குமிழ் (அல்லது கறுப்புக் கல்) உள்ளதாக இருந்தது.

4253 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வலக்கரத்தில் வெள்ளி மோதிரம் ஒன்றை அணிந்திருந்தார்கள். அதன் குமிழ் அபிசீனியாவைச் சேர்ந்ததாயிருந்தது. அதன் குமிழ் பகுதியைத் தமது உள்ளங்கை பக்கம் அமையும்படி அணிந்திருப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 16 கையின் சுண்டுவிரலில் மோதிரம் அணிவது.**

4254 ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது
அனஸ் (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் இந்த விரலில் மோதிரம் அணிந்திருந்தார்கள்" என்று கூறி, தமது இடக்கையின் சுண்டுவிரலை நோக்கி சைகை செய்தார்கள்.

**பாடம் : 17 நடு விரலிலும் அதற்கடுத்துள்ள ஆட்காட்டி விரலிலும் மோதிரம் அணிவதற்கு வந்துள்ள தடை.**

4255 அபூபுர்தா ஆமிர் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அலீ (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் இந்த விரலில் அல்லது அதற்கடுத்த விரலில் மோதிரம் அணிய வேண்டாம் என என்னைத் தடை செய்தார்கள்" என்று கூறினார்கள்.
-அது எந்த இரு விரல்கள் என அறிவிப்பாளர் ஆஸிம் பின் குலைப் (ரஹ்) அவர்களுக்குத் தெரியவில்லை.–
மேலும், "கஸ்' வகைத் துணியை அணியவேண்டாம் என்றும் (சிவப்பு) மென்பட்டு விரிப்புகளில் (மீஸரா) அமர வேண்டாமென்றும் எனக்குத் தடை செய்தார்கள்.
மேலும், அலீ (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்:
"கஸ்' வகைத் துணி என்பது, எகிப்து அல்லது சிரியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட ஒரு வகைத் துணியாகும். அதில் விலா எலும்புகளைப் போல வரிவரியாகக் கோடுகள் இருக்கும். இன்னவற்றுக்கு அது ஒப்பாயிருக்கும். "மீஸரா' என்பது, பெண்கள் தம் கணவர்களுக்காக ஒட்டகச் சேணத்தில் அமைக்கும் சிவப்பு நிற மென்பட்டுத் திண்டுகளைப் போன்ற விரிப்புகளாகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "அபூமூசாவின் புதல்வர் (அபூபுர்தா) கூறினார்" என அறிவிப்பாளர்தொடரில் இடம் பெற்றுள்ளது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நபி (ஸல்) அவர்கள் தடைசெய்தார்கள். அல்லது நபி (ஸல்) அவர்கள் என்னைத் தடை செய்தார்கள்" என்று இடம் பெற்றுள்ளது.

4256 அபூபுர்தா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அலீ (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்த விரலில் அல்லது இந்த விரலில் மோதிரம் அணியவேண்டாம் என்று என்னைத் தடை செய்தார்கள்" என்று கூறி, நடுவிரலையும் அதற்கடுத்த (ஆட்காட்டி) விரலையும் சுட்டிக் காட்டினார்கள்.

**பாடம் : 18 காலணி அல்லது அது போன்றதை அணிவது விரும்பத்தக்கதாகும்.**

4257 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் மேற்கொண்ட ஒரு போர் பயணத்தில் நபி (ஸல்) அவர்கள், "காலணியை அணிந்துகொள்ளுங்கள். ஏனெனில்,ஒரு மனிதர் காலணி அணிந்திருக்கும்வரை அவர் வாகனத்திலேயே இருக்கிறார்" என்று கூறினார்கள்.

**பாடம் : 19 காலணி அணியும்போது முதலில் வலக் காலில் அணிவதும் கழற்றும்போது முதலில் இடக்காலில் இருந்து கழற்றுவதும் விரும்பத்தக்கதாகும்; ஒரேயொரு காலணியில் நடப்பது வெறுக்கத்தக்கதாகும்.**

4258 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் காலணி அணியும் போது முதலில் வலக் காலில் அணியட்டும். அதைக் கழற்றும்போது முதலில் இடக் காலில் இருந்து கழற்றட்டும். ஒன்று, இரு காலணிகளையும் ஒருசேர அவர் அணிந்து கொள்ளட்டும். அல்லது இரண்டையும் ஒருசேரக் கழற்றிவிடட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4259 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் ஒரேயொரு காலணியில் நடக்கவேண்டாம். ஒன்று, இரு காலணிகளையும் ஒருசேர அவர் அணிந்துகொள்ளட்டும். அல்லது இரண்டையும் ஒருசேர கழற்றிவிடட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4260 அபூரஸீன் மஸ்ஊத் பின் மாலிக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களிடம் புறப்பட்டு வந்து, தமது கையால் தமது நெற்றியில் அடித்துவிட்டு, "அறிந்துகொள்ளுங்கள்: நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மீது (அவர்கள் சொல்லாததைச் சொன்னதாகப்) பொய்யுரைக்கிறேன் என நீங்கள் பேசிக் கொள்கிறீர்கள். நீங்கள் நேர்வழியில் செல்ல, நான் (மட்டும்) வழிகெட்டுவிட வேண்டுமா?

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவரின் செருப்பு வார் அறுந்துவிட்டால், அதைச் சீராக்காத வரை மற்றொரு செருப்பில் நடந்து செல்லவேண்டாம்' என்று கூறினார்கள் என நான் உறுதியளிக்கிறேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 20 ஒரேயொரு துணியை உடலில் சுற்றிக் கொண்டு, அதன் ஒரு மூலையை ஒரு தோளில் போட்டுக்கொண்டு, மற்றொரு தோள் பகுதியைத் திறந்த நிலையில் விட்டுவிடுவதும் (இஷ்திமாலுஸ் ஸம்மாஉ), ஒரே துணியைப் போர்த்திக்கொண்டு குத்துக்காலிட்டு அமர்வதும் (இஹ்திபா) தடை செய்யப்பட்டவை ஆகும்.**

4261 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒருவர் தமது இடக் கையால் உணவு உண்பது, அல்லது ஒரேயொரு காலணியில் நடப்பது, ஒரேயொரு துணியை உடலில் சுற்றிக்கொண்டு, அதன் ஒரு மூலையை ஒரு தோளில் போட்டுக்கொண்டு மற்றொரு தோளைத் திறந்த நிலையில் விட்டுவிடுவது (இஷ்திமாலுஸ் ஸம்மாஉ), ஒரே துணியால் (தம் முதுகையும் முழங்கால்களையும்) போர்த்திக் கொண்டு மர்ம உறுப்பு வெளியே தெரியுமாறு (குத்துக்காலிட்டு) அமர்வது (இஹ்திபா) ஆகியவற்றுக்குத் தடை விதித்தார்கள்.

4262 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"உங்களில் ஒருவரது செருப்பு வார் அறுந்துவிட்டால்' அல்லது "தமது செருப்பு வார் அறுந்து விட்ட ஒருவர்' அதைச் சீராக்காத வரை ஒரேயொரு காலணியில் நடக்க வேண்டாம். ஒரேயொரு காலுறை அணிந்தும் நடக்க வேண்டாம். இடக் கையால் சாப்பிட வேண்டாம்.
ஒரே துணியால் (தம் முதுகையும் முழங்கால்களையும்) போர்த்திக்கொண்டு (மர்ம உறுப்பு வெளியே தெரியுமாறு குத்துக்காலிட்டு) அமர வேண்டாம். ஒரே துணியை உடலில் சுற்றிக்கொண்டு, அதன் ஒரு மூலையை ஒரு தோளில் போட்டுக்கொண்டு மற்றொரு தோளைத் திறந்த நிலையில் விட்டுவிட வேண்டாம்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 21 மல்லாந்து படுத்துக்கொண்டு ஒரு கால்மீது மற்றொரு காலைப் போட்டுக் கொள்வதற்கு வந்துள்ள தடை.**

4263 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒரே துணியை உடலில் சுற்றிக்கொண்டு, அதன் ஒரு மூலையை ஒரு தோளில் போட்டுக்கொண்டு மற்றொரு தோளைத் திறந்த நிலையில் விட்டுவிட வேண்டாம் என்றும், ஒரே துணியைப் போர்த்திக்கொண்டு (மர்ம உறுப்பு வெளியே தெரியுமாறு குத்துக்காலிட்டு) அமர வேண்டாம் என்றும், ஒரு மனிதர் மல்லாந்து

படுத்திருக்கும்போது கால்மீது கால் போட்டுக்கொள்ள வேண்டாம் என்றும் தடை செய்தார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4264 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (என்னிடம்), "ஒரேயொரு காலணியில் நடக்காதே. ஒரே கீழாடையால் (உன் முதுகையும் முழங்கால்களையும்) போர்த்திக்கொண்டு குத்துக்காலிட்டு அமராதே. இடக் கையால் சாப்பிடாதே. ஒரே துணியை உடலில் சுற்றிக்கொண்டு அதன் ஒரு மூலையை ஒரு தோளில் போட்டுக்கொண்டு, மற்றொரு தோள் பகுதியைத் திறந்தவாறு விட்டுவிடாதே. நீ மல்லாந்து படுத்திருக்கும்போது ஒரு காலை மற்றொரு கால்மீது போடாதே" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4265 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் மல்லாந்து படுத்துக்கொண்டு ஒரு காலை மற்றொரு கால்மீது போட்டுக்கொள்ள வேண்டாம்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 22 மல்லாந்து படுத்துக்கொண்டு ஒரு காலை மற்றொரு கால்மீது போட்டுக் கொள்வதற்கு வந்துள்ள அனுமதி.

4266 அப்துல்லாஹ் பின் ஸைத் பின் ஆஸிம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு காலின் மீது மற்றொரு காலைப் போட்டுக்கொண்டு பள்ளிவாசலில் மல்லாந்து படுத்திருப்பதை நான் கண்டேன்.

4267 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் ஸைத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஒன்பது அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 23 ஆண்கள் (மேனியில்) குங்குமப்பூச் சாயமிட்டுக்கொள்வது தடை செய்யப் பட்டதாகும்.

4268 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், குங்குமப்பூச் சாயமிட்டுக்கொள்வதைத் தடை செய்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
ஹம்மாத் பின் ஸைத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அதாவது ஆண்களுக்குத் தடை செய்தார்கள்" என (விளக்கத்துடன்) இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆண்கள் குங்குமப்பூச் சாயமிட்டுக் கொள்ளக்கூடாது எனத் தடை விதித்தார்கள்" என இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 24 நரைமுடியில் மஞ்சள் நிறத்திலோ, சிவப்பு நிறத்திலோ சாயமிடுவது விரும்பத் தக்கதாகும். கறுப்பு நிறச் சாயமிடுவது தடை செய்யப்பட்டதாகும்.**

4269 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அபூபக்ர் (ரலி) அவர்களின் தந்தை) அபூகுஹாஃபா அவர்கள் மக்கா "வெற்றி ஆண்டில்' அல்லது "வெற்றி நாளில்' (நபி (ஸல்) அவர்களிடம்) "வந்தார்கள்'. அல்லது "கொண்டுவரப் பட்டார்கள்'. அவர்களது தலை முடியும் தாடியும் தும்பைப் பூவைப் போன்று (தூய வெள்ளை நிறத்தில்) இருந்தன. அவருடைய துணைவியரிடம் நபி (ஸல்) அவர்கள், "இ(ந்த வெள்ளை நிறத்)தை ஏதேனும் (சாயம்) கொண்டு மாற்றுங்கள்" என்று உத்தரவிட்டார்கள்.

4270 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கா வெற்றி நாளில் (அபூபக்ர் (ரலி) அவர்களின் தந்தை) அபூகுஹாஃபா, (நபி (ஸல்) அவர்களிடம்) கொண்டுவரப்பட்டார். அவரது தலை முடியும் தாடியும் தும்பைப் பூவைப் போன்று வெள்ளை நிறத்தில் இருந்தன. அப்போது நபி (ஸல்) அவர்கள் இ(ந்த வெள்ளை நிறத்)தை ஏதேனும் (சாயம்) கொண்டு மாற்றுங்கள். கறுப்பு நிறத்தை தவிர்த்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.

**பாடம் : 25 (நரைமுடிக்கு) சாயமிட்டுக்கொள்வதில் யூதர்களுக்கு மாறுசெய்தல்.**

4271 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யூதர்களும் கிறித்தவர்களும் (நரைமுடிக்கு) சாயமிட்டுக்கொள்வதில்லை. ஆகவே, நீங்கள் (உங்கள் நரைமுடிகளுக்குச் சாயமிட்டு) அவர்களுக்கு மாறுசெய்யுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 26 உயிரினங்களின் உருவப்படங்களை வரைவதும், விரிப்புகள் போன்ற மதிப்பில்லாப் பொருட்கள் தவிர, உருவப்படமுள்ள இதரப் பொருட்களை வைத்துக் கொள்வதும் தடை செய்யப்பட்டவை ஆகும். உருவப்படமோ நாயோ உள்ள வீட்டில் வானவர்கள் நுழையமாட்டார்கள்.**

4272 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு (குறிப்பிட்ட) நேரத்தில் வருவதாக வாக்களித்திருந்தார்கள். ஆனால், அந்த நேரம் வந்தும் ஜிப்ரீல் வரவில்லை.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கையில் குச்சியொன்று இருந்தது. அதை அவர்கள் தூக்கியெறிந்துவிட்டு, "அல்லாஹ் தனது வாக்குறுதிக்கு மாறுசெய்யமாட்டான். அவனுடைய தூதர்களும் வாக்குறுதிக்கு மாறுசெய்யமாட்டார்கள்" என்று கூறினார்கள். பின்னர் திரும்பிப் பார்த்தபோது, தமது கட்டிலுக்குக் கீழே நாய்க்குட்டியொன்று இருப்பதைக் கண்டார்கள்.
உடனே "ஆயிஷா! இந்த நாய் இங்கு எப்போது நுழைந்தது?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்குத் தெரியவில்லை" என்றேன். உடனே அதை

அப்புறப்படுத்துமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே அது அப்புறப்படுத்தப்பட்ட பின் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்தார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் வருவதாகச் சொன்னீர்கள். உங்களுக்காக நான் (எதிர்பார்த்து) அமர்ந்திருந்தேன். ஆனால், நீங்கள் வரவில்லையே (ஏன்)?" என்று கேட்டார்கள்.
அதற்கு ஜிப்ரீல் (அலை) அவர்கள், "உங்கள் வீட்டினுள்ளிருந்த நாயே என(து வருகை)க்குத் தடையாக அமைந்துவிட்டது. (வானவர்களாகிய) நாங்கள், நாயும் உருவப்படமும் உள்ள வீட்டிற்குள் நுழையமாட்டோம்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வருவதாக வாக்களித்திருந்தார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி (சுருக்கமாக முடிகி)றது. மேற்கண்ட அறிவிப்பில் உள்ளதைப் போன்று விரிவாக இடம்பெறவில்லை.

4273 (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) மைமூனா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் காலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வழக்கத்திற்கு மாறாகக்) கவலையோடு அமைதியாக இருந்தார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! இன்றைய தினம் தங்களது தோற்றத்தில் ஏதோ மாற்றத்தை நான் காண்கிறேனே (ஏன்)?" என்று கேட்டேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(வானவர்) ஜிப்ரீல் இன்றிரவில் என்னை வந்து சந்திப்பதாக வாக்களித்திருந்தார். ஆனால், அவர் வரவில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் என்னிடம் வாக்கு மாறி நடந்ததில்லை" என்று சொன்னார்கள். அந்நாள் முழுவதும் அதே நிலையிலேயே அவர்கள் காணப்பட்டார்கள்.
பிறகு அவர்களது மனதில், எங்கள் வீட்டிலிருந்த கூடாரமொன்றுக்குக் கீழே நாய்க்குட்டி இருக்கும் நினைவு வந்தது. உடனே அதை அப்புறப்படுத்துமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே அது அப்புறப்படுத்தப்பட்டவுடன் தமது கையில் தண்ணீர் அள்ளி அந்த இடத்தில் தெளித்து விட்டார்கள்.
அன்று மாலை நேரமானதும் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து அவர்களைச் சந்தித்தார்கள். அப்போது "நீங்கள் நேற்றிரவு என்னிடம் வருவதாக வாக்களித்திருந்தீர்களே?" என்று நபியவர்கள் கேட்டார்கள். அதற்கு ஜிப்ரீல் (அலை) அவர்கள் "ஆம். ஆயினும், (வானவர்களாகிய) நாங்கள் நாயும் உருவப்படமும் உள்ள வீட்டில் நுழையமாட்டோம்" என்று கூறினார்கள்.அன்றைய பொழுது புலர்ந்ததும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நாய்களைக் கொல்லுமாறு கட்டளையிட்டார்கள். சிறிய தோட்டங்களில் உள்ள நாய்களைக் கொல்லுமாறும் கட்டளையிட்டார்கள். பெரிய தோட்டங்களில் உள்ள நாய்களை விட்டுவிட்டார்கள். (அவற்றைக் கொல்லுமாறு உத்தரவிடவில்லை.)

4274 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நாயும் (உயிரினங்களின்) உருவப்படமும் உள்ள வீட்டில் (அருள்) வானவர்கள் நுழையமாட்டார்கள்.-இதை அபூதல்ஹா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4275 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நாயும் (உயிரினங்களின்) உருவப்படமும் உள்ள வீட்டில் (அருள்) வானவர்கள் நுழைய மாட்டார்கள்.
இதை அபூதல்ஹா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூதல்ஹா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4276 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர் அபூதல்ஹா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உருவப்படம் உள்ள வீட்டில் (அருள்) வானவர்கள் நுழையமாட்டார்கள்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான புஸ்ர் பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் பின்னர் நோய்வாய்ப்பட்டபோது, அவர்களை உடல்நலம் விசாரிக்க நாங்கள் சென்றோம். அப்போது அவர்களது வீட்டுக் கதவில் உருவப்படம் உள்ள திரைச் சீலையொன்று தொங்கிக்கொண்டிருந்தது.
நான் (இந்த ஹதீஸை ஸைத் (ரலி) அவர்கள் எனக்கு அறிவித்தபோது என்னுடனிருந்த) நபி (ஸல்) அவர்களின் துணைவியார் மைமூனா (ரலி) அவர்களின் மடியில் வளர்ந்த உபைதுல்லாஹ் அல்கவ்லானீ (ரஹ்) அவர்களிடம், "உருவப்படங்களைப் பற்றி முன்பொரு நாள் ஸைத் (ரலி) அவர்கள் நமக்கு (ஒரு ஹதீஸ்) அறிவிக்கவில்லையா?"என்று கேட்டேன். அதற்கு உபைதுல்லாஹ் (ரஹ்) அவர்கள், "துணியில் வரையப்பட்ட (உயிரற்றவையின் உருவத்)தைத் தவிர என்று அவர்கள் சொன்னதை நீர் கேட்கவில்லையா?" என்று கேட்டார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4277 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(உயிரினங்களின்) உருவப்படம் உள்ள வீட்டில் (அருள்) வானவர்கள் நுழையமாட்டார்கள்.
இதை அபூதல்ஹா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) புஸ்ர் பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) ஸைத் பின் காலித் (ரலி) அவர்கள் நோய் வாய்ப்பட்டபோது, நாங்கள் அவர்களை உடல்நலம் விசாரிக்கச் சென்றோம். அங்கு அவர்களது வீட்டி(ன் வாசலி)ல் உருவப்படங்கள் உள்ள திரையை நாங்கள் கண்டோம். நான் (என்னுடனிருந்த) உபைதுல்லாஹ் அல் கவ்லானீ (ரஹ்) அவர்களிடம் "உருவப் படங்களைப் பற்றி (முன்பு ஒரு நாள்) ஸைத் பின் காலித் (ரலி) அவர்கள் நமக்கு (ஒரு) ஹதீஸ் அறிவிக்கவில்லையா?" என்று கேட்டேன்.
அதற்கு உபைதுல்லாஹ் (ரஹ்) அவர்கள், "துணியில் வரையப்பட்ட (உயிரற்றவையின் படத்)தைத் தவிர என்று அவர்கள் சொன்னதை நீர் செவியேற்கவில்லையா?" என்று கேட்டார்கள். நான் "இல்லை' என்றேன். அதற்கு உபைதுல்லாஹ் அல்கவ்லானீ (ரஹ்) அவர்கள், "ஆம், அவ்வாறு சொல்லத்தான் செய்தார்கள்" என்றார்கள்.

4278 ஸைத் பின் காலித் அல்ஜுஹனீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நாயும் உருவச் சிலைகளும் உள்ள வீட்டில் (அருள்) வானவர்கள் நுழையமாட்டார்கள்" என்று கூறியதை நான் கேட்டேன் என அபூதல்ஹா (ரலி) அவர்கள் கூறினார்கள்.
ஆகவே, நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, "இவர் (ஸைத் பின் காலித்), "நாயும் உருவச்சிலைகளும் உள்ள வீட்டில் வானவர்கள் நுழையமாட்டார்கள்' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என என்னிடம் தெரிவிக்கிறாரே? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு கூறியதை நீங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டேன்.
அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், கூறினார்கள்: இல்லை. ஆயினும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்த ஒரு செயல் குறித்து உங்களுக்கு நான் அறிவிக்கிறேன்.
(ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு போருக்காகப் புறப்பட்டுச் சென்றார்கள். பிறகு நான் திரைச் சீலையொன்றை எடுத்து அதை (எனது வீட்டு) வாசலில் தொங்கவிட்டேன். அவர்கள் (போரை முடித்துத் திரும்பி) வந்தபோது அந்தத் திரைச் சீலையைப் பார்த்தார்கள். அவர்களது முகத்தில் அதிருப்தியை நான் அறிந்துகொண்டேன். அவர்கள் வேகமாக அதைப் பிடித்து இழுத்துக் கிழித்துவிட்டார்கள்.
மேலும், "அல்லாஹ், கல்லுக்கும் களி மண்ணுக்கும் ஆடையணிவிக்குமாறு நமக்குக் கட்டளையிடவில்லை" என்று கூறினார்கள். ஆகவே, அந்தத் திரையை நாங்கள் துண்டாக்கி, அவற்றில் பேரீச்ச நார்களை நிரப்பி, இரு தலையணைகள் செய்துகொண்டோம். அதை அவர்கள் ஆட்சேபிக்கவில்லை.

4279 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்களிடம் திரைச் சீலையொன்று இருந்தது. அதில் பறவையின் உருவம் இருந்தது. ஒருவர் வீட்டுக்குள் நுழையும்போது அந்தத் திரையே அவரை வரவேற்கும். என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதை அப்புறப்படுத்து. நான் வீட்டுக்குள் நுழையும் போதெல்லாம் இவ்வுலக(த்தின் ஆடம்பர)ம்தான் என் நினைவுக்கு வருகிறது" என்று கூறினார்கள்.
மேலும், எங்களிடம் குஞ்சம் வைத்த துணியொன்றும் இருந்தது. அதன் கரைவேலைப்பாடுகள் பட்டினால் ஆனவை என்றே நாங்கள் கூறிவந்தோம். அதை நாங்கள் அணிந்துவந்தோம்.

4280 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அப்துல் அஃலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஆயினும், அத்துணியைக் கிழித்துவிடுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு உத்தரவிடவில்லை" என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

4281 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்திலிருந்து திரும்பி வந்தபோது, எனது வீட்டுவாசலில் நான் குஞ்சம் உள்ள திரைச் சீலையொன்றைத் தொங்கவிட்டிருந்தேன்.

அதில் இறக்கைகள் கொண்ட குதிரைகளின் உருவங்கள் இருந்தன. உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதை (அகற்றுமாறு) உத்தரவிட, அவ்வாறே அதை நான் அகற்றிவிட்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அப்தா பின் சுலைமான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஒரு பயணத்திலிருந்து திரும்பி வந்தபோது' எனும் குறிப்பு இல்லை.

4282 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு பயணத்தை முடித்துக்கொண்டு) என்னிடம் வந்தார்கள். அப்போது நான் (வீட்டுவாசலை) உருவப்படம் உள்ள திரைச் சீலையால் மறைத்திருந்தேன். அதைக் கண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகம் நிறம் மாறிவிட்டது. அந்தத் திரைச் சீலையை எடுத்துக் கிழித்துவிட்டார்கள்.
பிறகு "மறுமை நாளில் மக்களிலேயே மிகக் கடுமையான வேதனைக்குள்ளாவோரில், அல்லாஹ்வின் படைப்புகளுக்கு ஒப்பாகப் படைக்(க நினைக்)கின்றவர்களும் அடங்குவர்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி, மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறு முடிகிறது. ஆயினும், அதில் "பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தத் திரைச் சீலையை நோக்கிச் சென்று, தமது கையாலேயே அதைக் கிழித்துவிட்டார்கள்" என்று (கூடுதலாக) இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இஸ்ஹாக் பின் இப்ராஹீம் மற்றும் அப்து பின் ஹுமைத் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "மிகக் கடுமையான வேதனைக்குள்ளாவோர்' என்றே இடம்பெற்றுள்ளது. "வேதனைக்குள்ளாவோரில்...' என்று இடம்பெறவில்லை.

4283 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு பயணத்திலிருந்து திரும்பி) என்னிடம் வந்தார்கள். அப்போது நான் எனது அலமாரியை, உருவச் சித்திரங்கள் பொறித்த திரைச் சீலையொன்றால் மறைத்திருந்தேன். அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பார்த்தபோது, அதைக் கிழித்து விட்டார்கள். அவர்களது முகம் நிறம் மாறியிருந்தது.
மேலும், "ஆயிஷா! மறுமை நாளில் மக்களிலேயே மிகக் கடுமையான வேதனைக்குள்ளாவோர் அல்லாஹ்வின் படைப்புகளுக்கு ஒப்பாகப் படை(க்க நினை)ப்பவர்கள் தாம்" என்று கூறினார்கள்.
பிறகு நாங்கள் அந்தத் திரைச் சீலையைக் கிழித்து ஓரிரு தலையணை (இருக்கை)களாக ஆக்கிக்கொண்டோம்.–இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4284 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் உருவப்படங்கள் உள்ள (திரைத்) துணியொன்று இருந்தது. அது வாசலிலிருந்து (எனது) அலமாரிவரை நீண்டிருந்தது. நபி (ஸல்) அவர்கள் அதை நோக்கியே தொழும் நிலை ஏற்பட்டிருந்தது. எனவே, "அதை என்னைவிட்டு அப்புறப்படுத்து" என்று கூறினார்கள். ஆகவே, அதை நான் அப்புறப்படுத்தி அதைத் தலையணை (இருக்கை)களாக ஆக்கிவிட்டேன்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4285 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். நான் (எனது வீட்டில்) உருவப்படங்கள் உள்ள திரைச் சீலையைத் தொங்கவிட்டிருந்தேன். நபி (ஸல்) அவர்கள் அதை அப்புறப்படுத்தினார்கள். ஆகவே, அதை நான் இரு தலையணை (இருக்கை)களாக ஆக்கிக் கொண்டேன்.

4286 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (எனது வீட்டில்) உருவப்படங்கள் உள்ள திரைச் சீலையொன்றைத் தொங்க விட்டிருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வீட்டுக்கு) வந்தபோது, அதை அப்புறப்படுத்திவிட்டார்கள். அதை நான் துண்டித்து இரு தலையணை (இருக்கை)களாக ஆக்கிக்கொண்டேன்.
(இதை அப்துர் ரஹ்மான் பின் அல்காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள் அறிவித்த) அந்த வேளையில், அங்கு அவையில் இருந்த பனூ ஸுஹ்ரா குலத்தாரின் முன்னாள் அடிமையான ரபீஆ பின் அதாஉ (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்விரு தலையணைகளில் தலை சாய்த்துக்கொள்வார்கள் என ஆயிஷா (ரலி) அவர்கள் சொன்னதாக (உங்கள் தந்தை) அபூமுஹம்மத் காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள் கூறியதை நீங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டார்.
அதற்கு அப்துர் ரஹ்மான் பின் அல்காசிம் (ரஹ்) அவர்கள் "இல்லை' என்று பதிலளித்தார்கள். அந்த மனிதர், "ஆயினும், காசிம் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள் அவ்வாறு கூறியதை நான் செவியுற்றேன்" என்று கூறினார்.

4287 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (உயிரினங்களின்) உருவப்படங்கள் உள்ள திண்டு ஒன்றை விலைக்கு வாங்கினேன். (வீட்டுக்கு வந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைக் கண்டதும் வாசற்படியிலேயே நின்றுவிட்டார்கள்; உள்ளே வரவில்லை. அவர்களது முகத்தில் அதிருப்தியை "நான் அறிந்துகொண்டேன்'. அல்லது "அறியப்பட்டது'. உடனே நான், "அல்லாஹ்வின் தூதரே! நான் அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் மன்னிப்புக் கோருகிறேன். நான் என்ன குற்றம் செய்துவிட்டேன்?" என்று கேட்டேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்தத் திண்டின் நிலை என்ன?" என்று கேட்டார்கள். நான், "இதில் தாங்கள் அமர்ந்துகொள்வதற்காகவும் தலை சாய்த்துக் கொள்வதற்காகவும் தங்களுக்காகவே இதை நான் விலைக்கு வாங்கினேன்" என்றேன்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்த உருவப்படங்களை வரைந்தவர்கள் (மறுமை நாளில்) வேதனை செய்யப்படுவார்கள். மேலும், அவர்களிடம் "நீங்கள் படைத்தவற்றுக்கு நீங்களே உயிர் கொடுங்கள்' எனக் கூறப்படும்" என்று சொல்லிவிட்டு, "(உயிரினங்களின்) உருவப்படங்கள் உள்ள வீட்டில் (அருள்) வானவர்கள் நுழைவதில்லை" என்று சொன்னார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் சிலரது அறிவிப்பைவிட வேறுசிலரது அறிவிப்பு முழுமையானதாக உள்ளது. அவற்றில் அப்துல் அஸீஸ் பின் அப்தில்லாஹ் அல்மாஜிஷூன் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அதை எடுத்து இரு தலையணைகளாக நான் ஆக்கிக்கொண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வீட்டில் இருக்கும்போது அவற்றில் தலை சாய்த்துக்கொள்வார்கள்" என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4288 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

உயிரினங்களின் உருவங்களைத் தயாரித்தவர்கள் மறுமை நாளில் வேதனை செய்யப் படுவார்கள். அவர்களிடம் "நீங்கள் படைத்தவற்றுக்கு நீங்களே உயிர் கொடுங்கள்" என்று கூறப்படும்.

இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4289 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

திண்ணமாக மறுமை நாளில் (இறைவனிடம்) மிகக் கடுமையான வேதனைக்கு உள்ளாவோர் உருவங்களைப் படைப்போர் தாம்.

இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் அபூசயீத் அல்அஷஜ்ஜு (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "திண்ணமாக' எனும் சொல் இடம்பெறவில்லை.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) மற்றும் அபூகுறைப் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "உருவங்களைப் படைப்போர் மறுமை நாளில் நரகவாசிகளில் மிகக் கடுமையான வேதனைக்கு உள்ளாவோரில் அடங்குவர்" என இடம்பெற்றுள்ளது. சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகிறது.– முஸ்லிம் பின் ஸுபைஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் (ஒருமுறை) மஸ்ரூக் (ரஹ்) அவர்களுடன் ஓர் இல்லத்தில் இருந்தேன். அங்கு மர்யம் (அலை) அவர்களின் உருவச்சிலைகள் இருந்தன. அப்போது மஸ்ரூக் (ரஹ்) அவர்கள்,

"இவை (ரோமப் பேரரசர்) சீசரின் உருவச்சிலைகள்" என்றார்கள். "நான் இல்லை, இவை மர்யம் (அலை) அவர்களின் உருவச்சிலைகள்" என்றேன்.
அப்போது மஸ்ரூக் (ரஹ்) அவர்கள், "கவனி. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மறுமை நாளில் மிகக் கடுமையான வேதனைக்கு உள்ளாவோர் உருவங்களைப் படைப்போரே' என்று கூறினார்கள் என அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதை நான் செவியுற்றுள்ளேன்" என்றார்கள்.

4290 சயீத் பின் அபில்ஹசன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "நான் இந்த உருவங்களை வரை(யும் தொழில் செய்துவரு)கிறேன். இதைப் பற்றி எனக்கு மார்க்கத் தீர்ப்பு அளியுங்கள்" என்று கேட்டார். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "எனக்கு அருகில் வா" என்றார்கள். அவர் அருகில் வந்தார்.
பிறகு (மீண்டும்) "இன்னும் அருகில் வா" என்றார்கள். அவர் இன்னும் அருகில் வந்தபோது, அவரது தலைமீது கையை வைத்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்ற ஒரு செய்தியை உமக்குச் சொல்கிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உருவங்களைப் படைக்கும் ஒவ்வொருவரும் நரகத்திற்கே செல்வர். அவர் படைத்த ஒவ்வோர் உருவத்திற்கும் அல்லாஹ் உயிர் கொடுப்பான். அதுவே அவரை நரகத்தில் வேதனை செய்யும்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
மேலும் "நீர் வரைந்துதான் ஆக வேண்டும் என்றால் மரங்கள், உயிரற்ற (இயற்கைக் காட்சிகள் உள்ளிட்ட)வற்றின் படங்களை வரைந்துகொள்" என்று கூறினார்கள்.
முஸ்லிம் (பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான்) கூறுகிறேன்:
நான் (இந்த அறிவிப்பாளர்தொடரில் கிடைத்த இந்த ஹதீஸை) நஸ்ர் பின் அலீ (ரஹ்) அவர்கள் (முன்னிலையில் வாசித்துக் காட்டியபோது அவர்கள்) அதை (உண்மையான ஹதீஸ் என) ஏற்றுக்கொண்டார்கள்.

4291 நள்ர் பின் அனஸ் பின் மாலிக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு முறை) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள் (மக்களுக்கு) மார்க்கத் தீர்ப்புகள் வழங்கலானார்கள். அப்போது அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என (எதைப் பற்றியும்) குறிப்பிட வில்லை. இந்நிலையில் இறுதியாக ஒரு மனிதர் வந்து, அவர்களிடம், "நான் இந்த உருவங்களைப் படைக்கும் (தொழில் புரிகின்ற) ஒரு மனிதன் ஆவேன்" என்று கூறி (அது குறித்துத் தீர்ப்புக் கோரி)னார்.
அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அருகில் வா" என்று கூற, அந்த மனிதர் அருகில் வந்ததும் "உலகில் ஓர் உருவப்படத்தை வரைந்தவர், மறுமை நாளில் அந்த உருவத்தினுள் உயிரை ஊதும்படி பணிக்கப்படுவார். ஆனால்,அவரால் ஊதமுடியாது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்" எனக் கூறினார்கள்.
- இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவித்துள்ள மேற்கண்ட ஹதீஸ் நள்ர் பின் அனஸ் பின் மாலிக் (ரஹ்) அவர்கள் வாயிலாகவே வேறு இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4292 அபூஸுர்ஆ பின் அம்ர் பின் ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூஹுரைரா (ரலி) அவர்களுடன் (மதீனாவின் ஆளுநர்) மர்வான் பின் அல்ஹகமின் வீட்டுக்குச் சென்றேன். அங்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள் உருவப்படங்கள் சிலவற்றைக் கண்டார்கள்.
அப்போது "எனது படைப்பைப் போன்று படைக்கத் தயாராகிவிட்டவனை விட அக்கிரமக்காரன் வேறு யார் இருக்க முடியும்? அவ்வாறாயின் அவர்கள் ஓர் உயிரணுவைப் படைத்துக் காட்டட்டும்! அல்லது ஒரு தானிய வித்தைப் படைத்துக் காட்டட்டும்! அல்லது கோதுமை வித்தைப் படைத்துக் காட்டட்டும் என்று வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் கூறினான் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொல்ல நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- அபூஸுர்ஆ பின் அம்ர் பின் ஜரீர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மதீனாவில் கட்டப்பட்டுக்கொண்டிருந்த மர்வான் அல்லது சயீத் பின் அல்ஆஸுக்கு உரிய புது மனையொன்றுக்கு நானும் அபூஹுரைரா (ரலி) அவர்களும் சென்றோம். அந்த மனையில் ஓவியர் ஒருவர் உருவப்படங்களை வரைந்துகொண்டிருந்தார்.
அப்போது அபூஹுரைரா (ரலி) அவர்கள் மேற்கண்ட நபிமொழியை அறிவித்தார்கள். அதில் "அல்லது கோதுமை வித்தைப் படைத்துக் காட்டட்டும்!" எனும் வாசகம் இடம்பெறவில்லை.

4293 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உருவச் சிலைகளோ உருவப்படங்களோ உள்ள வீட்டில் (அருள்) வானவர்கள் நுழைய மாட்டார்கள்.– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 27 பயணத்தில் நாயும் (ஒலியெழுப்பும்) மணியும் வெறுக்கத்தக்கவை ஆகும்.

4294 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நாயும் மணியோசையும் உள்ள பயணிகளுடன் (அருள்) வானவர்கள் வரமாட்டார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4295 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒலியெழுப்பும் மணி, ஷைத்தானின் இசைக் கருவியாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 28 ஒட்டகத்தின் கழுத்தில் (திருஷ்டிக்காக) கயிற்று மாலை அணிவிப்பது வெறுக்கத் தக்கதாகும்.**

4296 அபூபஷீர் கைஸ் பின் உபைத் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மேற்கொண்ட பயணமொன்றில் அவர்களுடன் இருந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அறிவிப்பாளர் ஒருவரை அனுப்பி, "எந்த ஒட்டகத்தின் கழுத்திலும் (கண்ணேறு கழிவதற்காகக் கட்டப்படுகின்ற) கயிற்று மாலையோ அல்லது வேறெந்த மாலையோ இருக்கக்கூடாது. இருந்தால் அவை துண்டிக்கப்பட வேண்டும்" என்று அறிவிக்கச் செய்தார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துல்லாஹ் பின் அபீபக்ர் (ரஹ்) அவர்கள், "அப்போது நபித்தோழர்கள் இரவில் ஓய்வெடுக்கும் இடங்களில் இருந்தார்கள்" என்று அபூபஷீர் (ரலி) அவர்கள் (கூறியதாக அப்பாத் பின் தமீம் (ரஹ்) அவர்கள் என்னிடம்) சொன்னதாகவே நான் கருதுகிறேன்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: கண் திருஷ்டிக்காக இவ்வாறு கட்டப்படுவதையே (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள் என) நான் கருதுகிறேன்.

**பாடம் : 29 உயிரினங்களின் முகத்தில் அடிப்பதும் முகத்தில் அடையாளச் சூடிடுவதும் தடை செய்யப்பட்டவை ஆகும்.**

4297 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், முகத்தில் அடிக்கவேண்டாம் என்றும், முகத்தில் அடையாளச் சூடிட வேண்டாம் என்றும் தடை செய்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4298 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களை, முகத்தில் அடையாளச் சூடிடப்பட்ட கழுதையொன்று கடந்து சென்றது. அப்போது அவர்கள், "இதற்கு அடையாளச் சூடிட்டவனை அல்லாஹ் சபிப்பானாக!" என்று கூறினார்கள்.

4299 உம்மு சலமா (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான அபூஅப்தில்லாஹ் நாஇம் பின் உஜைல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், முகத்தில் சூடு போட்டு அடையாளமிடப்பட்டிருந்த கழுதையொன்றைக் கண்டு அதைக் கண்டித்தார்கள்" என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்.
மேலும், (அவர்களின் தந்தை அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப் – ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் மீதாணையாக! அதன் முகத்திலிருந்து தள்ளியுள்ள (உடம்பின்) ஒரு பகுதியிலேயே நான் அடையாளமிடுவேன்" என்று கூறிவிட்டு, தமது கழுதைக்கு அதன்

பின்கால் சப்பையின் ஓர் ஓரத்தில் அடையாளமிடுமாறு கட்டளையிட்டார்கள். அவர்கள்தாம் பின்கால் சப்பையின் ஓரத்தில் சூடு போட்டு அடையாளமிட்ட முதல் ஆள் ஆவார்கள்.

பாடம் : 30 மனிதனல்லா பிற உயிரினங்களில் முகமல்லா மற்ற உறுப்புகளில் சூடிட்டு அடையாளமிடலாம் என்பதும், ஸகாத் மற்றும் ஜிஸ்யா கால்நடைகளில் அவ்வாறு செய்யுமாறு வந்துள்ள தூண்டலும்.

4300 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்களுக்குக் குழந்தை பிறந்தபோது என்னிடம் அவர்கள், "அனஸே! இந்தக் குழந்தையை நன்கு கவனித்துக்கொள். நபி (ஸல்) அவர்கள் (பேரீச்சம் பழத்தை) மென்று இவன் வாயிலிடுவதற்காக இவனை அவர்களிடம் நீ எடுத்துச் செல்லாத வரை இவன் எதையும் உட்கொண்டுவிட வேண்டாம்" என்று சொன்னார்கள்.
அவ்வாறே, நான் அவனை நபி (ஸல்) அவர்களிடம் எடுத்துச் சென்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் ஒரு தோட்டத்தில் "ஹுரைத்' (அல்லது ஜவ்ன்) குலத் தயாரிப்பான கோடு போட்ட கம்பளியாடை அணிந்து, மக்கா வெற்றியின்போது தம்மிடம் வந்த வாகன ஒட்டகத்துக்குச் சூடிட்டு அடையாளமிட்டுக்கொண்டிருந்தார்கள்.

4301 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்களுக்குக் குழந்தை பிறந்தபோது, நபி (ஸல்) அவர்கள் (பேரீச்சம் பழத்தை) மென்று அச்சிறுவனின் வாயிலிடுவதற்காக நபியவர்களிடம் அவனை (எங்கள் குடும்பத்தார்) கொண்டுசென்றனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் ஒட்டகத்தொழுவமொன்றில் ஓர் ஆட்டிற்குச் சூடிட்டு அடையாளமிட்டுக் கொண்டிருந்தார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(இதை எனக்கு அறிவித்த) ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்கள் "அதன் காதுகளில் (அடையாளமிட்டுக் கொண்டிருந்தார்கள்)" என்று கூறியதாகவே நான் பெரும்பாலும் கருதுகிறேன்.

4302 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒட்டகத்தொழுவமொன்றில் ஓர் ஆட்டிற்குச் சூடிட்டு அடையாளமிட்டுக்கொண்டிருந்தபோது நாங்கள் அவர்களிடம் சென்றோம்.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"அதன் காதுகளில் (அடையாளமிட்டுக்கொண்டிருந்தார்கள்)" என்று ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்கள் கூறியதாகவே நான் கருதுகிறேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4303 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கரத்தில் சூடிடும் கருவி இருந்தது. (அதன் மூலம்) அவர்கள் "ஸதக்கா' (ஸகாத்) ஒட்டகங்களுக்கு அடையாளமிட்டுக்கொண்டிருந்ததை நான் கண்டேன்.

**பாடம் : 31 குழந்தையின் தலை முடியில் சிறிதளவு மழித்துவிட்டு, சிறிதளவு மழிக்காமல் விட்டுவிடுவது (குடுமி வைப்பது) வெறுக்கத்தக்கதாகும்.**

4304 நா∴பிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "கஸஉ' வைத்துக் கொள்ளக் கூடாதெனத் தடை விதித்தார்கள்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளரான உமர் பின் நா∴பிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (என் தந்தை) நா∴பிஉ (ரஹ்) அவர்களிடம் "கஸஉ என்றால் என்ன?" என்று கேட்டேன். "சிறுவனின் தலைமுடியில் சில பகுதியை மழித்துவிட்டு, வேறுசில பகுதிகளை மழிக்காமல் விட்டுவிடுவதாகும்" என்று விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அபூஉசாமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "கஸஉ' பற்றி அறிவிப்பாளர்களில் ஒருவரான உபைதுல்லாஹ் பின் உமர் பின் ஹ∴ப்ஸ் (ரஹ்) அவர்கள் விளக்கம் அளித்ததாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
இவ்விரு அறிவிப்புகளிலும் (கஸஉ தொடர்பான) விளக்கக் குறிப்பு இணைக்கப்பட்டுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 32 சாலைகளில் அமர்வதற்கு வந்துள்ள தடையும் (அவ்வாறு அமர்ந்தால்) சாலைக்குரிய உரிமைகளைப் பேணுவதும்.**

4305 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் சாலைகளில் அமர்வதைத் தவிர்த்து விடுங்கள்" என்று கூறினார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அங்கு அமராமல் இருக்க இயலாது. அங்கு (அமர்ந்து தான் பல விஷயங்களை) நாங்கள் பேசிக் கொள்கிறோம்" என்று கூறினார்கள்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(அங்கு) நீங்கள் அமர்ந்துதான் ஆக வேண்டும் என்றிருந்தால், சாலைக்கு அதன் உரிமையைக் கொடுத்துவிடுங்கள்" என்று கூறினார்கள்.
மக்கள், "சாலையின் உரிமை என்ன?" என்று வினவினர். நபி (ஸல்) அவர்கள், "(அந்நியப் பெண்களைப் பார்க்காமல்) பார்வையைத் தாழ்த்திக்கொள்வதும், (பாதசாரிகளுக்குச் சொல்லாலோ செயலாலோ) துன்பம் தராமலிருப்பதும்,முகமனுக்கு (சலாம்) பதிலுரைப்பதும், நன்மை புரியும் படி கட்டளையிடுவதும், தீமையிலிருந்து தடுப்பதும் (அதன் உரிமை) ஆகும்" என்று பதிலளித்தார்கள்.-
மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 33 பெண்கள் ஒட்டுமுடி வைத்துவிடுவது, வைத்துக்கொள்வது; பச்சை குத்திவிடுவது, குத்திக்கொள்வது; (அழகிற்காக) முகத்தில் முளைத்திருக்கும் முடிகளை நீக்கிவிடுவது, நீக்கிக்கொள்வது; (அழகிற்காக) பல் வரிசையை அரத்தால் தேய்த்துப் பிரித்துக்கொள்வது, (மொத்தத்தில்) அல்லாஹ்வின் (இயற்கையான) படைப்பு முறையை மாற்றுவது தடை செய்யப்பட்டதாகும்.**

4306 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! என் மகள் (தாம்பத்திய உறவுக்குச் செல்லவிருக்கும்) மணப்பெண்ணாக இருக்கிறாள். அவளுக்குத் தட்டம்மை நோய் ஏற்பட்டு அதன் காரணத்தால் அவளது தலைமுடி கொட்டிவிட்டது. அவளது தலையில் நான் ஒட்டுமுடி வைத்துவிடட்டுமா?" என்று கேட்டார்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "ஒட்டுமுடி வைத்துவிடுபவளையும் ஒட்டுமுடி வைத்துக் கொள்பவளையும் அல்லாஹ் சபிக்கின்றான் (தன் கருணையிலிருந்து அப்புறப் படுத்துகின்றான்)" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், வகீஉ மற்றும் ஷுஅபா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் ("அதனால் அவளது தலைமுடி கொட்டிவிட்டது' என்பதைக் குறிக்க "ஃப தமர்ரக ஷஅருஹா' என்பதற்குப் பகரமாக) "ஃப தமர்ரத்த ஷஅருஹா' என இடம்பெற்றுள்ளது.

4307 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் என் மகளுக்கு மணமுடித்து வைத்தேன். பிறகு (அவளுக்கு ஏற்பட்ட நோயால்) அவளது தலைமுடி கொட்டிவிட்டது. அவளுடைய கணவரோ அவளை அழகுபடுத்தி (அனுப்பி)விடுமாறு கூறுகிறார். ஆகவே, அவளுக்கு ஒட்டுமுடி வைத்துவிடட்டுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வேண்டாமென அவளைத் தடுத்துவிட்டார்கள்.

4308 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் ஒரு பெண் மணமுடித்தார். பின்னர் அவர் உடல் நலிவுற்றுவிடவே அவரது தலைமுடி கொட்டிவிட்டது. ஆகவே, (அவருடைய குடும்பத்தார்) அவருக்கு ஒட்டுமுடி வைத்துவிட விரும்பினர். எனவே, இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒட்டுமுடி வைத்துவிடுபவளையும் ஒட்டுமுடி வைத்துக்கொள்பவளையும் சபித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4309 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் ஒரு பெண் தன்னுடைய மகளுக்கு மணமுடித்துவைத்தார். பிறகு அவள் நோய்வாய்ப்பட்டு அதன் காரணத்தால் அவளது தலைமுடி உதிர்ந்துவிட்டது. அப்போது அப்பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, தன் மகளின் கணவர் விருப்பத்திற்கிணங்க அவளது தலையில் ஒட்டுமுடி வைத்துவிடட்டுமா? என்று கேட்டார். அப்போது

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஒட்டுமுடி வைக்கும் பெண்கள் சபிக்கப் பட்டுள்ளனர்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒட்டுமுடி வைத்துவிடும் பெண்கள் சபிக்கப்பட்டுள்ளனர்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

4310 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒட்டுமுடி வைத்துவிடுபவளையும், ஒட்டுமுடி வைத்துக்கொள்பவளையும், பச்சை குத்திவிடுபவளையும், பச்சை குத்திக்கொள்பவளையும் சபித்தார்கள். - இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4311 அல்கமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "பச்சை குத்திவிடும் பெண்கள், பச்சை குத்திக் கொள்ளும் பெண்கள், (அழகிற்காக) முகத்தில் முளைத்திருக்கும் முடிகளை அகற்றிவிடும் பெண்கள், முகத்தில் முளைத்திருக்கும் முடிகளை அகற்றக்கோரும் பெண்கள், அழகிற்காக அரத்தால் தேய்த்து, தம் முன்பற்களைப் பிரித்துக்கொள்ளும் பெண்கள், (ஆக) அல்லாஹ்வின் (இயற்கை) படைப்பு முறையை மாற்றிக்கொள்ளும் பெண்கள்மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்!" என்று கூறினார்கள்.
இந்தச் செய்தி பனூ அசத் குலத்தைச் சேர்ந்த "உம்மு யஅகூப்' எனப்படும் ஒரு பெண்மணிக்கு எட்டியது. அந்தப் பெண் குர்ஆனை ஓதிய(றிந்த)வராக இருந்தார். அவர் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் வந்து, "நீங்கள் பச்சை குத்திவிடும் பெண்கள், பச்சைக் குத்திக்கொள்ளும் பெண்கள், முகத்தில் முளைத்திருக்கும் முடிகளை அகற்றக்கோரும் பெண்கள், அழகிற்காக அரத்தால் தேய்த்து தம் முன்பற்களைப் பிரித்துக் கொள்ளும் பெண்கள், அல்லாஹ்வின் (இயற்கையான) படைப்பு முறையை மாற்றிக் கொள்ளும் பெண்களைச் சபித்ததாக எனக்கு எட்டிய செய்தி என்ன (அது உண்மையா)?" என்று கேட்டார்.
அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் யாரைச் சபித்தார்களோ அவர்களை நான் ஏன் சபிக்கக் கூடாது? அவர்கள் அல்லாஹ்வின் வேதத்திலும் சபிக்கப்பட்டுள்ளனரே?" என்று கூறினார்கள். அதற்கு அந்தப் பெண், "குர்ஆன் பிரதியில் இரு அட்டைகளுக்கிடையிலுள்ள அனைத்தையும் நான் வாசித்திருக்கிறேன். அதில் (தாங்கள் குறிப்பிட்டதை) நான் காணவில்லையே?" என்று கேட்டார்.
அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "நீ குர்ஆனை (சரியாக) வாசித்திருந்தால் அதில் (நான் கூறியதை) நீ கண்டிருப்பாய். வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் "இறைத்தூதர் எதை உங்களுக்குக் கொடுத்தாரோ அதைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

அவர் எதிலிருந்து உங்களைத் தடுத்தாரோ அதிலிருந்து நீங்கள் விலகி இருங்கள்' (59:7) என்று கூறுகின்றானா?" என்றார்கள்.
அதற்கு அந்தப் பெண், "இவற்றில் சிலவற்றை தற்போது உங்கள் மனைவியிடமே நான் காண்கிறேனே?" என்று கேட்டார். அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "நீயே சென்று (என் மனைவியைப்) பார்" என்று கூறினார்கள். அப்பெண் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களின் மனைவியிடம் சென்றார். ஆனால், எதையும் அவர் காணவில்லை.
பிறகு அவர் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் (திரும்பி)வந்து "எதையும் நான் காணவில்லை" என்று சொன்னார். அப்போது அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "கவனி. அவ்வாறு (நீ கூறியபடி ஏதேனும் என் மனைவியிடம்) இருந்திருக்குமானால், அவளுடன் நாம் சேர்ந்து வாழமாட்டோம்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ("பச்சை குத்திவிடும் பெண்கள், பச்சை குத்திக்கொள்ளும் பெண்கள்' என்பதைக் குறிக்க) சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்வாஷி மாத்தி, வல் முஸ்தவ்ஷிமாத்' எனும் சொற்றொடரும் முஃபள்ளல் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்வாஷிமாத்தி வல்மவ்ஷூ மாத்தி' எனும் சொற்றொடரும் ஆளப்பட்டுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் நபி (ஸல்) அவர்களின் கூற்று மட்டுமே இடம்பெற்றுள்ளது. உம்மு யஅகூப் தொடர்பான எந்தச் செய்தியும் இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4312 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், பெண்கள் தமது தலையில் எதையும் ஒட்டுச்சேர்க்கை செய்வதைக் கண்டித்தார்கள். –இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4313 ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஆவியா பின் அபீசுஃப்யான் (ரலி) அவர்கள் ஹஜ் செய்த ஆண்டில் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி (மெய்க்) காவலர் ஒருவரது கையிலிருந்த முடிக்கற்றை (சவுரி முடி) ஒன்றை வாங்கி, "மதீனாவாசிகளே! உங்கள் மார்க்க அறிஞர்கள் எங்கே? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இது போன்றதைத் தடைசெய்து, "பனூ இஸ்ராயீல் சமுதாயத்தார் அழிந்துபோனதெல்லாம் அவர்களுடைய பெண்கள் இதைப் பயன்படுத்தியபோதுதான்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" எனக் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மஅமர் பின் ராஷித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ("பனூ இஸ்ராயீல் சமுதாயத்தார் அழிந்துபோனதெல்லாம்' என்பதற்குப் பகரமாக) "வேதனை செய்யப் பட்டதெல்லாம்' என்று காணப்படுகிறது.

4314 சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஆவியா (ரலி) அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது எங்களிடையே உரை நிகழ்த்தினார்கள். அப்போது முடிக்கற்றை ஒன்றை (கையில்) எடுத்து, "இதை (ஒட்டுமுடி வைத்துக் கொள்ளும் செயலை) யூதர்களைத் தவிர வேறெவரும் செய்வதை நான் பார்த்ததில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இது பற்றிய செய்தி எட்டியபோது, இதை "போலித்தனம்' என அவர்கள் வர்ணித்தார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4315 சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் முஆவியா (ரலி) அவர்கள் (எங்களிடையே உரையாற்றுகையில்), "நீங்கள் ஒரு மோசமான கலாசாரத்தை உருவாக்கிவிட்டிருக்கிறீர்கள். அல்லாஹ்வின் நபி (ஸல்) அவர்கள் போலித்தனத்திற்குத் தடைவிதித்தார்கள்" என்று கூறினார்கள். (அப்போது) ஒரு மனிதர் தடியொன்றைக் கொண்டுவந்தார். அதன் முனையில் துண்டுத் துணியொன்று இருந்தது. முஆவியா (ரலி) அவர்கள் "கவனியுங்கள்! இதுவும் போலியானதுதான்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளரான கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: பெண்கள் துண்டுத் துணிகளைச் சேர்த்து தங்களுடைய தலை முடிகளை அதிகமாக்கிக் காட்டுவதையே அவ்வாறு முஆவியா (ரலி) அவர்கள் குறிப்பிட்டார்கள்.

## பாடம் : 34 மெல்லிய உடையணிந்து, பிறரைத் தம்பால் ஈர்க்கும் வண்ணம் தோள்களைச் சாய்த்து (கர்வத்தோடு) நடக்கும் பெண்கள்.

4316 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரு பிரிவினர் நரகவாசிகளில் அடங்குவர். அந்த இரு பிரிவினரையும் நான் பார்த்ததில்லை. (முதலாவது பிரிவினர் யாரெனில்,) மக்களில் சிலர், பசு மாட்டின் வாலைப் போன்ற (நீண்ட) சாட்டைகளைத் தம்மிடம் வைத்துக்கொண்டு,மக்களை அடி(த்து இம்சி)ப்பார்கள்.
(இரண்டாவது பிரிவினர் யாரெனில்,) மெல்லிய உடையணிந்து, தம் தோள்களைச் சாய்த்து (கர்வத்துடன்) நடந்து, (அந்நிய ஆடவர்களின் கவனத்தை) தன்பால் ஈர்க்கக்கூடிய பெண்கள் ஆவர். அவர்களது தலை(முடி), கழுத்து நீண்ட ஒட்டகங்களின் (இரு பக்கம்) சாயக்கூடிய திமில்களைப் போன்றிருக்கும்.
அவர்கள் சொர்க்கத்தில் நுழையமாட்டார்கள்; (ஏன்) சொர்க்கத்தின் வாடையைக்கூட நுகர மாட்டார்கள். சொர்க்கத்தின் நறுமணமோ இவ்வளவு இவ்வளவு பயணத் தொலைவிலிருந்தே வீசிக்கொண்டிருக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 35 ஆடை முதலியவற்றில் போலித்தனம் காட்டுவதும் தனக்குக் கிடைக்கப்பெறாத ஒன்று நிறைய கிடைத்துவிட்டதாகக் காட்டிக்கொள்வதும் தடை செய்யப்பட்டவை ஆகும்.**

4317 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! நான் என் கணவர் எனக்கு வழங்காத ஒன்றை வழங்கியதாகக் காட்டிக்கொள்ளலாமா?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கிடைக்கப்பெறாத ஒன்றைக் கிடைத்ததாகக் காட்டிக்கொள்கிறவர், போலியான இரு ஆடைகளை அணிந்து கொண்டவர் போலாவார்" என்று கூறினார்கள்.

4318 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "எனக்குச் சகக்கிழத்தி ஒருவர் இருக்கிறார். நான் (அவரிடம்) என் கணவர் எனக்கு வழங்காத ஒன்றை வழங்கியதாகக் காட்டிக் கொண்டால், அது குற்றமாகுமா?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "கிடைக்கப்பெறாத ஒன்றைக் கிடைத்ததாகக் காட்டிக்கொள்கிறவர், போலியான இரு ஆடைகளை அணிந்துகொண்டவர் போலாவார்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

# அத்தியாயம் : 38 - நற்பண்புகள்

**பாடம் : 1 "அபுல்காசிம்' எனக் குறிப்புப் பெயர் சூட்டிக்கொள்வதற்கு விதிக்கப்பட்டிருந்த தடையும், விரும்பத்தகுந்த பெயர்கள் பற்றிய விவரமும்.**

4319 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மதீனாவிலுள்ள) "அல்பகீஉ' பொது மையவாடியில் ஒரு மனிதர் மற்றொருவரை "அபுல்காசிம்!' என்று அழைத்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். அப்போது அவர், "அல்லாஹ்வின் தூதரே! உங்களை எண்ணி நான் அழைக்கவில்லை. இன்ன மனிதரையே நான் அழைத்தேன்" என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் பெயரை நீங்கள் சூட்டிக்கொள்ளுங்கள். ஆனால், ("அபுல்காசிம்' எனும்) என் குறிப்புப் பெயரை நீங்கள் சூட்டிக்கொள்ளாதீர்கள்" என்று கூறினார்கள். -இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4320 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்கள் பெயர்களில் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானது, அப்துல்லாஹ் (அல்லாஹ்வின் அடிமை) மற்றும் அப்துர் ரஹ்மான் (அருளாளனின் அடிமை) ஆகியவையாகும். - இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்பாத் பின் அப்பாத் (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை உபைதுல்லாஹ் பின் உமர் (ரஹ்) மற்றும் அப்துல்லாஹ் பின் உமர் (ரஹ்) ஆகிய சகோதரர்களிடம் (ஹிஜ்ரீ) 144 ஆம் ஆண்டில் செவியுற்றார்.

4321 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்க(ள் அன்சாரிக)ளில் ஒருவருக்கு ஆண் குழந்தையொன்று பிறந்தது. அதற்கு அவர் "முஹம்மத்' எனப் பெயர் சூட்டினார். அவருடைய குடும்பத்தார், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பெயரை வைக்க உம்மை நாங்கள் விடமாட்டோம்" என்று கூறினர்.
ஆகவே, அந்த மனிதர் தம் மகனை முதுகில் சுமந்துகொண்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! எனக்கு ஆண் குழந்தையொன்று பிறந்தது. அவனுக்கு நான் "முஹம்மத்" எனப் பெயரிட்டேன். என்னுடைய சமுதாயத்தார் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பெயர் வைக்க உம்மை நாங்கள் விடமாட்டோம்' என்று கூறினர்" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் (இயற்)பெயரைச் சூட்டிக்கொள்ளுங்கள். (ஆனால் "அபுல்காசிம் எனும்) எனது குறிப்புப்பெயரைச் சூட்டிக்கொள்ளாதீர்கள். ஏனெனில், நானே பங்கீடு செய்பவன் (காசிம்) ஆவேன். உங்களிடையே நான் பங்கீடு செய்கிறேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4322 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்க(ள் அன்சாரிக)ளில் ஒரு மனிதருக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அதற்கு அவர் "முஹம்மத்' எனப் பெயர் சூட்டினார். அப்போது நாங்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்களிடம் இதற்கு அனுமதிபெறாத வரை உம்மை நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் குறிப்புப் பெயரால் ("அபூமுஹம்மத்' என) அழைக்கமாட்டோம்" என்று சொன்னோம்.
அந்த மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, "எனக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அதற்கு நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பெயரைச் சூட்டினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நான் அனுமதிபெறாத வரை என் சமுதாயத்தார் அக்குறிப்புப் பெயரால் என்னை அழைக்கமாட்டோம் என மறுத்துவிட்டனர்" என்று சொன்னார்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "என் பெயரைச் சூட்டிக்கொள்ளுங்கள்; (அபுல்காசிம் எனும்) என் குறிப்புப் பெயரைச் சூட்டிக்கொள்ளாதீர்கள்.ஏனெனில், உங்களிடையே பங்கிடுபவனாகவே நான் அனுப்பப்பட்டுள்ளேன்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.-அதில் "உங்களிடையே பங்கிடுபவனாகவே நான் அனுப்பப் பட்டுள்ளேன்" எனும் குறிப்பு இல்லை.

4323 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் பெயரைச் சூட்டிக்கொள்ளுங்கள். (அபுல்காசிம் எனும்) என் குறிப்புப் பெயரைச் சூட்டிக்கொள்ளாதீர்கள். ஏனெனில்,நானே உங்களிடையே பங்கீடு செய்கின்ற "அபுல்காசிம்' ஆவேன்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("குறிப்புப் பெயரைச் சூட்டிக்கொள்ளாதீர்கள்' என்பதைக் குறிக்க "வலா தகன்னவ்' என்பதற்குப் பகரமாக) "வலா தக்தனூ' எனும் சொற்றொடர் இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் உங்களிடையே பங்கீடு செய்பவனாகவே ஆக்கப்பட்டுள்ளேன்" என்று இடம்பெற்றுள்ளது.

4324 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் ஒருவருக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அதற்கு "முஹம்மத்' என்று பெயர் சூட்ட அவர் விரும்பினார். அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து அதைப் பற்றிக் கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அன்சாரிகள் செய்தது நன்றே. என் பெயரைச் சூட்டிக்கொள்ளுங்கள். என் குறிப்புப் பெயரைச் சூட்டிக்கொள்ளாதீர்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4325 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பதிமூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஹுஸைன் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) மற்றும் சுலைமான் பின் மிஹ்ரான் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் (சற்று) கூடுதலான தகவல்களும் இடம்பெற்றுள்ளன. ஹுஸைன் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உங்களிடையே பங்கிடுபவனாகவே நான் அனுப்பப்பட்டுள்ளேன்" என்றும், சுலைமான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "ஏனெனில், உங்களிடையே நான் பங்கீடு செய்பவனாகவே உள்ளேன்" என்றும் இடம்பெற்றுள்ளது.
- ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அன்சாரிகளான) எங்களில் ஒருவருக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அதற்கு அவர் "காசிம்' எனப் பெயர் சூட்டினார். நாங்கள், "உம்மை அபுல்காசிம் (காசிமின் தந்தை) எனும் குறிப்புப் பெயரால் அழைக்கவுமாட்டோம்; (அவ்வாறு அழைத்து) உம்மை மகிழ்விக்கவு மாட்டோம்" என்று கூறினோம்.
ஆகவே, அவர் நபி (ஸல்) அவர்களிடம் சென்று அதைப் பற்றித் தெரிவித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "உம்முடைய மகனுக்கு அப்துர் ரஹ்மான் எனப்பெயரிட்டுக் கொள்வீராக" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும், அவற்றில் "உம்மை நாங்கள் மகிழ்விக்கவுமாட்டோம்' எனும் சொற்றொடர் இடம்பெறவில்லை.

4326 அபுல்காசிம் (முஹம்மத் – ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் பெயரைச் சூட்டிக்கொள்ளுங்கள். என் குறிப்புப் பெயரைச் சூட்டிக்கொள்ளாதீர்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4327 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உத்தரவுக்கிணங்க) "நஜ்ரான்' எனும் ஊருக்கு (யமன்) சென்றபோது அ(ந்நாட்டுக் கிறித்த)வர்கள், "நீங்கள் (குர்ஆனில் அன்னை மர்யம் (அலை) அவர்களைப் பற்றி) "ஹாரூனின் சகோதரியே!' என்று ஓதுகிறீர்கள். (ஆனால், ஹாரூன் மூசாவின் காலத்தில் வாழ்ந்தவர்.) மூசாவோ ஈசா (அலை) அவர்களுக்கு இவ்வளவு இவ்வளவு ஆண்டுகளுக்கு முந்தையவர் ஆயிற்றே! (அப்படியிருக்க, மர்யம் ஹாரூனின் சகோதரியாக எப்படி இருக்க முடியும்?)" என்று கேட்டார்கள்.
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தபோது அதைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்கள் (இஸ்ரவேலர்கள்) தங்களுக்கு முந்தைய நபிமார்கள் மற்றும் நல்லவர்களின் பெயர்களைச் சூட்டிக்கொண்டனர் (அந்த வகையில் ஹாரூன் என்ற பெயரில் மர்யம் அவர்களுக்கு ஒரு சகோதரர் இருந்தார்)" என்றார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 2 அருவருப்பான பெயர்களையும், "நா∴பிஉ' (பயனளிப்பவர்) மற்றும் அதைப் போன்ற (பொருள் உள்ள) பெயர்களையும் சூட்டிக்கொள்வது வெறுக்கத்தக்கதாகும்.**

4328 சமுரா பின் ஜுன்தப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் அடிமைகளுக்கு அ∴ப்லஹ் (வெற்றியாளன்), ரபாஹ் (இலாபம்), யசார் (சுலபம்), மற்றும் நா∴பிஉ (பயனளிப்பவன்) ஆகிய நான்கு பெயர்களைச் சூட்ட வேண்டாமென எங்களுக்குத் தடை விதித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4329 சமுரா பின் ஜுன்தப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் அடிமைக்கு ரபாஹ் (இலாபம்) என்றோ, யசார் (சுலபம்) என்றோ,அ∴ப்லஹ் (வெற்றியாளன்) என்றோ, நா∴பிஉ (பயனளிப்பவன்) என்றோ பெயர் சூட்ட வேண்டாம்" என்று சொன்னார்கள்.

4330 சமுரா பின் ஜுன்தப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான (துதிச்) சொற்கள் நான்கு ஆகும். 1.சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்) 2. அல்ஹம்து லில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) 3. லா இலாஹ இல்லல்லாஹ் (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை) 4. அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகவும் பெரியவன்).
இவற்றில் எதை நீர் முதலில் கூறினாலும் உம்மீது குற்றமில்லை" என்று கூறிவிட்டு, "உம்முடைய அடிமைக்கு யசார் (சுலபம்) என்றோ, ரபாஹ் (இலாபம்) என்றோ, நஜீஹ் (வெற்றியாளன்) என்றோ, அ∴ப்லஹ் (வெற்றியாளன்) என்றோ பெயர் சூட்ட வேண்டாம். ஏனெனில், (அந்தப் பெயர் சொல்லி) "அவன் அங்கு இருக்கிறானா' என்று நீர் கேட்கும்போது, அவன் அங்கு இல்லாவிட்டால் "இல்லை' என்று பதில் வரும். (அது திருப்தியளிப்பதற்குப் பகரமாக நற்குறியற்ற பதிலாக உங்கள் மனதுக்குப் படலாம்)" என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர் சமுரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: இவை நான்கு பெயர்கள் மட்டுமே ஆகும். இவற்றைவிடக் கூடுதலாக வேறெதையும் என்னிடமிருந்து நீங்கள் அறிவிக்க வேண்டாம். - மேற்கண்ட ஹதீஸ் சமுரா பின் ஜுன்தப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அடிமைகளுக்குப் பெயர் சூட்டுவது தொடர்பாகவே இடம்பெற்றுள்ளது. நான்கு (துதிச்) சொற்கள் பற்றிய குறிப்பு இல்லை.

4331 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் யஅலா (உயர்வு), பரக்கத் (வளம்), அ∴ப்லஹ் (வெற்றி), யசார் (சுலபம்), நா∴பிஉ (பயனளிப்பவன்) போன்ற பெயர்களைச் சூட்ட வேண்டாம் எனத் தடை விதிக்க விரும்பினார்கள். பின்னர் அதைப் பற்றி எதுவும் கூறாமல் அமைதியாக இருந்துவிட்டார்கள்; அதைப் பற்றி எதுவும் கூறவில்லை.
பின்னர் அவற்றுக்குத் தடைவிதிக்காத நிலையிலேயே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்துவிட்டார்கள். பிறகு (கலீ∴பா) உமர் (ரலி) அவர்கள் அவற்றுக்குத் தடை

விதிக்க விரும்பினார்கள். பின்னர் அவர்களும் (அவற்றுக்குத் தடைவிதிக்காமல்) விட்டுவிட்டார்கள்.

**பாடம் : 3 அருவருப்பான பெயரை அழகான பெயராகவும் "பர்ரா' எனும் பெயரை ஸைனப், ஜுவைரியா போன்ற பெயர்களாகவும் மாற்றியமைப்பது விரும்பத்தக்கதாகும்.**

4332 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆஸியா' (பாவி) எனும் பெயரை மாற்றிவிட்டு, "நீ (பாவியல்ல), ஜமீலா (அழகி)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4333 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) உமர் (ரலி) அவர்களுக்கு "ஆஸியா' (பொருள்:பாவி) எனப்படும் புதல்வியொருவர் இருந்தார். அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஜமீலா (பொருள்: அழகி) என (மாற்று)ப் பெயர் சூட்டினார்கள்.

4334 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான) ஜுவைரியா (ரலி) அவர்களுக்கு (முதலில்) "பர்ரா' என்ற பெயர் இருந்தது. அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஜுவைரியா' (இளையவள்) எனப் பெயர் மாற்றினார்கள். "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பர்ரா'விடமிருந்து (நல்லவளிடமிருந்து) புறப்பட்டு விட்டார்கள்' என்று சொல்லப் படுவதை அவர்கள் வெறுத்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4335 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஸைனப் (ரலி) அவர்களுக்கு (முதலில்) "பர்ரா' (நல்லவள்) என்ற பெயர் இருந்தது. அப்போது "அவர் தம்மைத் தாமே பரிசுத்தப்படுத்திக் கொள்கிறார்" என்று (மக்களால்) சொல்லப்பட்டது. ஆகவே, அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸைனப் (அழகிய தோற்றமுடைய நறுமணச் செடி) என்று பெயர் சூட்டினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4336 ஸைனப் பின்த் உம்மி சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(முதலில்) எனக்கு "பர்ரா' (நல்லவள்) என்ற பெயரே இருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே எனக்கு ஸைனப் (அழகான தோற்றமுள்ள நறுமணச்செடி) எனப் பெயர் சூட்டினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவர்களுடைய துணைவியார்) ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் வந்தார். அவருக்கும் பர்ரா (நல்லவர்) என்ற பெயரே இருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே அவருக்கும் "ஸைனப்' எனப் பெயர் சூட்டினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4337 முஹம்மத் பின் அம்ர் பின் அதாஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் என் புதல்விக்கு "பர்ரா' (நல்லவள்) எனப் பெயர் சூட்டினேன். அப்போது ஸைனப் பின்த் அபீசலமா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்தப் பெயரைச் சூட்ட வேண்டாமெனத் தடை செய்தார்கள். (முதலில்) எனக்கு "பர்ரா' என்ற பெயரே சூட்டப் பெற்றது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களை நீங்களே பரிசுத்தப்படுத்திக் கொள்ளாதீர்கள். உங்களில் நல்லவர் யார் என அல்லாஹ்வே நன்கறிந்தவன்" என்று சொன்னார்கள். மக்கள், "அவருக்கு நாங்கள் என்ன பெயர் சூட்ட வேண்டும்?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவருக்கு "ஸைனப்' எனப் பெயர் சூட்டுங்கள்" என்றார்கள்.

**பாடம் : 4 "மன்னாதி மன்னன்' ("மலிக்குல் அம்லாக்' அல்லது "மலிக்குல் முலூக்') எனப் பெயர் சூட்டிக்கொள்வது தடை செய்யப்பட்டதாகும்.**

4338 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மறுமை நாளில்) அல்லாஹ்விடம் மிகவும் கேவலமான பெயர், (உலகில்) ஒரு மனிதன் "மன்னாதி மன்னன்' (மலிக்குல் அம்லாக்) என்று பெயர் சூட்டிக்கொண்டதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வைத் தவிர (சர்வ வல்லமை படைத்த) வேறு அரசனில்லை" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சயீத் பின் அம்ர் அல்அஷ்அஸீ (ரஹ்) அவர்கள், "("மலிக்குல் அம்லாக்' என்பதற்கு) "ஷாஹான் ஷாஹ்' (மன்னாதி மன்னன்) என்று (பாரசீக மொழியில்) சுஃப்யான் (ரஹ்) அவர்கள் (பொருள்) கூறினார்கள்" என்றார்கள். மற்றோர் அறிவிப்பாளரான அஹ்மத் பின் ஹன்பல் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
நான் (மொழியியல் வல்லுநர்) அபூஅம்ர் இஸ்ஹாக் பின் மிரார் (ரஹ்) அவர்களிடம் ("மிகவும் கேவலமான' என்பதைக் குறிக்க இந்த ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ள) "அக்னஉ' எனும் சொல் குறித்துக்கேட்டேன். அதற்கு அபூஅம்ர் (ரஹ்) அவர்கள், இதற்கு "அவ்ளஉ' (மிகவும் கீழ்த்தரமானது) என்று பொருள் என விடையளித்தார்கள்.

4339 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் அல்லாஹ்வின் கோபத்துக்குரிய, அவனிடம் மிகவும் கேவலமான மனிதர் யாரெனில், (உலகில்) "மன்னாதி மன்னன்' எனப் பெயரிடப்பட்ட மனிதர்தாம். அல்லாஹ்வைத் தவிர (சர்வ வல்லமை படைத்த) மன்னன் வேறு யாருமில்லை.

**பாடம் : 5 குழந்தை பிறந்தவுடன் இனிப்பான பொருளைமென்று அதன் வாயிலிடுவதும் அதற்காக நல்ல மனிதர் ஒருவரிடம் குழந்தைகளைக் கொண்டுசெல்வதும் விரும்பத் தக்கதாகும். அது பிறந்த நாளன்றே பெயர் சூட்டுவது செல்லும். அப்துல்லாஹ் எனும் பெயரையும் இப்ராஹீம் உள்ளிட்ட நபிமார்களின் பெயர்களையும் சூட்டுவது விரும்பத் தக்கதாகும்.**

4340 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தாய்வழிச் சகோதரர்) அப்துல்லாஹ் பின் அபீதல்ஹா அல்அன்சாரீ பிறந்தபோது அவரை(த் தூக்கிக்கொண்டு) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் நீளங்கி அணிந்து, தமது ஒட்டகத்திற்கு (சிகிச்சைக்காகத்) தார் பூசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் "உன்னிடம் பேரீச்சம் பழம் இருக்கிறதா?" என்று கேட்டார்கள்.
நான் "ஆம்" என்று கூறி, அவர்களிடம் பேரீச்சம் பழங்கள் சிலவற்றை எடுத்துக்கொடுத்தேன். அவற்றை வாங்கி அவர்கள் தமது வாயிலிட்டு மென்று, பிறகு குழந்தையின் வாயைத் திறந்து, அதில் சிறிதளவை உமிழ்ந்தார்கள்.
குழந்தை அதை நாவைச் சுழற்றி சுவைக்கலாயிற்று. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அன்சாரிகளுக்கு மிகவும் விருப்பமானது பேரீச்சம் பழங்கள் ஆகும்" என்று கூறிவிட்டு, குழந்தைக்கு "அப்துல்லாஹ்' எனப் பெயர் சூட்டினார்கள்.

4341 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தாயார் உம்មு சுலைம் (ரலி) அவர்களின் இரண்டாவது கணவரான) அபூ தல்ஹா (ரலி) அவர்களின் புதல்வர் ஒருவர் நோய்வாய்ப்பட்டிருந்தார். அபூதல்ஹா (ரலி) அவர்கள் (வெளியூருக்குப்) புறப்பட்டுச் சென்றிருந்தபோது,அக்குழந்தை இறந்து விட்டது. அபூதல்ஹா (ரலி) அவர்கள் திரும்பி வந்தபோது "என் மகன் என்ன ஆனான்?" என்று கேட்டார்கள்.
(அவருடைய துணைவியார்) உம்மு சுலைம் (ரலி) அவர்கள் (துக்கத்தை வெளிக் காட்டாமல்) "அவன் முன்பைவிட நிம்மதியாக இருக்கிறான்" என்று பதிலளித்துவிட்டு, கணவருக்கு முன்னால் இரவு உணவை வைத்தார்.
அபூதல்ஹா (ரலி) அவர்கள் இரவு உணவை அருந்தினார்கள். பிறகு (அன்றிரவு) மனைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டார்கள். உறவு கொண்ட பின், உம்மு சுலைம் (ரலி) அவர்கள் (தம் கணவரிடம்), "குழந்தையை அடக்கம் செய்(ய ஏற்பாடு செய்)யுங்கள்" என்று கூறினார்கள்.
(அப்போதுதான் அபூதல்ஹா (ரலி) அவர்களுக்குக் குழந்தை இறந்த விவரமே தெரிந்தது.) விடிந்ததும் அபூதல்ஹா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று (நடந்ததைத்) தெரிவித்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்றிரவு தாம்பத்திய உறவில் ஈடுபட்டீர்களா?" என்று கேட்டார்கள். அபூதல்ஹா (ரலி) அவர்கள், "ஆம்' என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! அவர்கள் இருவருக்கும் வளம் (பரக்கத்) வழங்குவாயாக!" எனப் பிரார்த்தித்தார்கள்.
பின்னர் உம்மு சுலைம் (ரலி) அவர்கள் ஆண் மகவொன்றைப் பெற்றெடுத்தார்கள். அப்போது அபூதல்ஹா (ரலி) அவர்கள் என்னிடம், "குழந்தையை எடுத்துக்கொண்டு (நேராக) நபி (ஸல்)

அவர்களிடம் செல்" என்று கூறினார்கள். அவ்வாறே நான் குழந்தையை நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுசென்றேன்.
(அப்போது) என்னிடம் உம்மு சுலைம் (ரலி) அவர்கள் பேரீச்சம் பழங்கள் சிலவற்றைக் கொடுத்தனுப்பினார்கள். நபி (ஸல்) அவர்கள் என்னிடமிருந்து குழந்தையை வாங்கிக்கொண்டு, "இக்குழந்தையுடன் ஏதேனும் (இனிப்புப்) பொருள் உள்ளதா?" என்று கேட்டார்கள். (அங்கிருந்த) மக்கள், "ஆம், பேரீச்சம் பழங்கள் உள்ளன" என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் அவற்றை வாங்கி (தமது வாயால்) மென்று, பிறகு தமது வாயிலிருந்து அதை எடுத்துக் குழந்தையின் வாயில் வைத்து அதைத் தடவலானார்கள். குழந்தைக்கு "அப்துல்லாஹ்' எனப் பெயர் சூட்டினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4342 அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எனக்கு ஆண் குழந்தையொன்று பிறந்தது. அக்குழந்தையை நான் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுசென்றேன். நபி (ஸல்) அவர்கள் அக்குழந்தைக்கு "இப்ராஹீம்' எனப் பெயர் சூட்டிப் பேரீச்சம் பழத்தை மென்று குழந்தையின் வாயில் அதைத் தடவினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4343 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) மற்றும் ஃபாத்திமா பின்த் அல்முன்திர் பின் அஸ்ஸுபைர் (ரஹ்) ஆகியோர் கூறியதாவது:
அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் புலம்பெயர்ந்து (மதீனாவுக்குச்) சென்றபோது, அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களைக் கருவுற்றிருந்தார்கள். அவர்கள் "குபா' வந்தடைந்தபோது, அங்கு அப்துல்லாஹ்வைப் பெற்றெடுத்தார்கள். குழந்தை பிறந்தவுடன் பேரீச்சம் பழத்தை மென்று, அதைக் குழந்தையின் வாயில் தடவுவதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் புறப்பட்டுச்சென்றார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அஸ்மா (ரலி) அவர்களிடமிருந்து குழந்தையை வாங்கி, தமது மடியில் வைத்தார்கள். பிறகு பேரீச்சம் பழத்தைக் கொண்டுவரச் சொன்னார்கள்.
ஆயிஷா (ரலி) அவர்கள் (இது தொடர்பாகப் பின்வருமாறு) கூறினார்கள்: பேரீச்சம் பழம் கிடைக்காமல் நாங்கள் சிறிது நேரம் அதை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். பேரீச்சம் பழம் கிடைத்ததும் அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வாயிலிட்டு மென்றார்கள். பிறகு குழந்தையின் வாயில் அதை உமிழ்ந்தார்கள். குழந்தையின் வயிற்றுக்குள் சென்ற முதல் பொருள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உமிழ்நீராகத்தான் இருந்தது.
அஸ்மா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குழந்தையைத் தடவிக்கொடுத்து,குழந்தைக்காகப் பிரார்த்தித்தார்கள். பிறகு அதற்கு "அப்துல்லாஹ்' எனப் பெயர் சூட்டினார்கள்.
பிறகு அப்துல்லாஹ் (ரலி) அவர்களுக்கு ஏழு அல்லது எட்டு வயதானபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் (பிரார்த்தனை வேண்டி) உறுதிப் பிரமாணம் செய்தவற்காக

அவர்களிடம் வந்தார். அவ்வாறு செல்லுமாறு (அப்துல்லாஹ்வின் தந்தை) ஸுபைர் (ரலி) அவர்களே அப்துல்லாஹ்வுக்கு உத்தரவிட்டிருந்தார்கள்.
அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் தம்மை நோக்கி வருவதைக் கண்டபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புன்னகை புரிந்தார்கள். பிறகு உறுதிமொழி வாங்கினார்கள்.- இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4344 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்காவில் (என் புதல்வர்) அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைரை நான் கருவுற்றேன். கர்ப்ப காலம் முழுமையடைந்துவிட்ட நிலையில் நான் (புலம்பெயர்ந்து) மதீனா சென்றேன். (வழியில்) "குபா'வில் நான் தங்கினேன். "குபா'விலேயே அவரை நான் பெற்றெடுத்தேன். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (குழந்தையைக் கொண்டு)சென்று அவர்களது மடியில் வைத்தேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேரீச்சம் பழத்தைக் கொண்டுவரச் சொல்லி, அதை மென்று, குழந்தையின் வாயில் உமிழ்ந்தார்கள். அப்துல்லாஹ்வின் வயிற்றுக்குள் சென்ற முதல் உணவு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உமிழ் நீராகத்தான் இருந்தது.
பிறகு (மீண்டும்) அந்தப் பேரீச்சம் பழத்தை மென்று குழந்தையின் வாயில் தடவலானார்கள். பின்னர் குழந்தைக்காகப் பிரார்த்தித்தார்கள். அதற்காக அருள்வளம் (பரக்கத்) வேண்டினார்கள். (என் குழந்தை) அப்துல்லாஹ்தான் இஸ்லாத்தில் (முஹாஜிர்களுக்குப்) பிறந்த முதல் குழந்தை ஆவார்.
- மேற்கண்ட ஹதீஸ் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நான் (என் புதல்வர்) அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைரைக் கருவுற்றிருந்த நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (மதீனாவுக்கு) நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்றேன்..." என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4345 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், (பிறந்த) குழந்தைகள் கொண்டுவரப்படுவதுண்டு. அப்போது அவற்றுக்காக அவர்கள் அருள்வளம் (பரக்கத்) வேண்டிப் பிராத்திப்பார்கள். பேரீச்சம் பழத்தை மென்று, அதைக் குழந்தையின் வாயில் தடவிவிடுவார்கள்.

4346 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (அஸ்மாவின் புதல்வர்) அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைரை, அவரது வாயில் பேரீச்சம் பழத்தை மென்று தடவுவதற்காக நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு சென்றோம். அப்போது பேரீச்சம்பழம் ஒன்றைத் தேடினோம். அது கிடைப்பதற்குள் பெரும்பாடாகிவிட்டது.

4347 சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூஉசைத் மாலிக் பின் ரபீஆ (ரலி) அவர்களின் புதல்வர் "முன்திர்' என்பார் பிறந்தவுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அக்குழந்தையைத் தமது மடியில் வைத்துக்கொண்டார்கள்.

அப்போது (குழந்தையின் தந்தை) அபூஉசைத் (ரலி) அவர்களும் அமர்ந்திருந்தார்கள். எதேச்சையாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் நிகழ்ந்த (சம்பவம்) ஒன்றினால் அவர்களின் கவனம் (வேறு பக்கம்) திரும்பியது. எனவே, அபூஉசைத் (ரலி) அவர்கள் தம் மகனை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து எடுத்துவருமாறு கூற, அவ்வாறே குழந்தையை அவர்களது மடியிலிருந்து எடுத்து, (வீட்டுக்குக்) கொடுத்தனுப்பி விட்டனர்.

சிறிது நேரத்தில் முந்தைய நிலைக்குத் திரும்பிய அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அந்தக் குழந்தை எங்கே?"என்று கேட்டார்கள். அதற்கு அபூஉசைத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! குழந்தையை (வீட்டுக்கு)க் கொடுத்தனுப்பிவிட்டோம்" என்று கூறினார்கள். அப்போது "அக்குழந்தையின் பெயரென்ன?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்க, "இன்னது, அல்லாஹ்வின் தூதரே!' என அபூஉசைத் கூறினார்கள்.

(அப்பெயரை விரும்பாததால்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை, (இனி) அவர் பெயர் "முன்திர்' (எச்சரித்து நல்வழிப்படுத்துபவர்) ஆகும்" என்று கூறினார்கள். "முன்திர்' என்று அக்குழந்தைக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே அன்றைக்குப் பெயர் சூட்டினார்கள்.-இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4348 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிலேயே மிகவும் நற்குணம் வாய்ந்தவர்களாய் இருந்தார்கள். எனக்கு (என் தாய் வழியில்) "அபூஉமைர்' எனப்படும் ஒரு சகோதரர் இருந்தார். அவர் பால்குடி மறந்தவராக இருந்தார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்கள் வீட்டுக்கு) வந்தால் என் சகோதரரைப் பார்த்து, "அபூஉமைர்! பாடும் (உனது) சின்னக் குருவி என்ன செய்கிறது?" என்று கேட்பார்கள். என் சகோதரர் அந்தக் குருவியை வைத்து விளையாடிக்கொண்டிருப்பார்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 6 ஒருவர் தம் மகனல்லாத வேறொரு வரைப் பார்த்து "அருமை மகனே!' என்று கூறலாம். அன்பு பாராட்டுவதற்காக அவ்வாறு கூறுவது விரும்பத்தக்கதாகும்.

4349 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "என் அருமை மகனே!" என்று என்னை அழைத்தார்கள்.

4350 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (மகா பொய்யனான) தஜ்ஜாலைப் பற்றி நான் வினவியதைவிட அதிகமாக வேறெவரும் வினவியதில்லை. அவர்கள் என்னிடம் "மகனே! அவனைப் பற்றி உனக்கென்ன கவலை? அவன் உனக்கு எந்தத் தீங்கும் செய்யமாட்டான்" என்று சொன்னார்கள்.

நான், "அவனுடன் நதியளவு நீரும் மலையளவு ரொட்டியும் இருக்கும் என்று மக்கள் கூறுகிறார்களே!" என்று சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அவன் மூலம்

அல்லாஹ் எதையெல்லாம் காட்ட விரும்புகிறானோ) அவற்றைவிட இது அல்லாஹ்வுக்கு மிகவும் எளிதானதே" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், யஸீத் பின் ஹாரூன் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டுமே நபி (ஸல்) அவர்கள் முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களை "மகனே!' என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது. வேறெந்த அறிவிப்பிலும் அவ்வாறு இல்லை.

## பாடம் : 7 அனுமதி கோருதல்.

4351 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் மதீனாவில் அன்சாரிகளின் அவையொன்றில் அமர்ந்திருந்தேன். அப்போது அபூமூசா (ரலி) அவர்கள் பதற்றமடைந்தவர்களாக எங்களிடம் வந்தார்கள். நாங்கள் (அவரிடம்) "உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "(கலீஃபா) உமர் (ரலி) அவர்கள் என்னைத் தம்மிடம் வரச் சொல்லி ஆளனுப்பியிருந்தார்கள்.
நான் அவர்களது வீட்டுவாசலுக்குச் சென்று (வீட்டுக்குள் நுழைய அனுமதி கேட்டு) மூன்று முறை முகமன் (சலாம்) கூறினேன். ஆனால், அவர்கள் எனக்குப் பதில் (சலாம்) சொல்லவில்லை. ஆகவே, நான் திரும்பிவிட்டேன்.
பிறகு அவர்கள் (என்னிடம்) "நீங்கள் என்னிடம் வராததற்கு என்ன காரணம்?" என்று கேட்டார்கள். அதற்கு, "நான் தங்களிடம் வந்து தங்கள் வீட்டுவாசலில் நின்று, மூன்று முறை முகமன் (சலாம்) கூறினேன். எனக்கு யாரும் பதில் சலாம் சொல்லவில்லை. ஆகவே, நான் திரும்பி வந்துவிட்டேன். (ஏனெனில்,) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்களில் ஒருவர் மூன்று முறை அனுமதி கேட்டும் அவருக்கு அனுமதி வழங்கப்படாவிட்டால் அவர் திரும்பி விடட்டும்' என்று கூறியுள்ளார்கள்" என்றேன்.
அதற்கு உமர் (ரலி) அவர்கள், "இ(வ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்ப)தற்கு நீங்கள் சாட்சியைக் கொண்டுவர வேண்டும். இல்லாவிட்டால் உங்களைத் தண்டிக்க வேண்டியதிருக்கும்" என்று கூறினார்கள். (இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றவர் உங்களில் யாரேனும் உள்ளாரா என்று கேட்டார்கள்.)
அதற்கு (அங்கிருந்த) உபை பின் கஅப் (ரலி) அவர்கள், "மக்களில் மிகச் சிறியவரே இவருடன் (இப்போது சாட்சியம் சொல்ல) எழுவார்" என்று சொன்னார்கள். நான் (அபூசயீத்), "நான்தான் மக்களிலேயே மிகச் சிறியவன்" என்று சொன்னேன். உபை பின் கஅப் (ரலி) அவர்கள் "இவரை அழைத்துச் செல்வீராக!" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், இப்னு அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "எனவே, நான் அபூ மூசா (ரலி) அவர்களுடன் எழுந்து, உமர் (ரலி) அவர்களிடம் சென்று சாட்சியமளித்தேன்" என்று அபூசயீத் (ரலி) கூறியதாக அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

4352 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் உபை பின் கஅப் (ரலி) அவர்களுடன் ஓர் அவையில் இருந்தோம். அப்போது அபூமூசா (ரலி) அவர்கள் கோபத்துடன் வந்து நின்று, "அல்லாஹ்வை முன்வைத்து நான் கேட்கிறேன்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதி கோருதல் மூன்று முறையாகும். (மூன்று முறை அனுமதிகோரி) உங்களுக்கு அனுமதி வழங்கப்பட்டால் சரி! (வீட்டுக்குள் செல்லுங்கள்.) இல்லாவிட்டால் திரும்பிவிடுக" என்று கூறியதைக் கேட்டவர் உங்களில் யாரேனும் உள்ளாரா?" என்று கேட்டார்கள். உபை பின் கஅப் (ரலி) அவர்கள், "என்ன அது (என்ன நடந்தது)?" என்று கேட்டார்கள்.
அதற்கு அபூமூசா (ரலி) அவர்கள், "நேற்று நான் (கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடம் மூன்று முறை அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதி வழங்கப்படவில்லை. பிறகு இன்று அவர்களிடம் வந்து, அவர்களிடம் (அவர்களது வீட்டுக்குள்) சென்று, அவர்களிடம் நேற்று நான் வந்து (அனுமதி கேட்டு) மூன்று முறை சலாம் சொன்னேன். (பதில் வராததால்) பிறகு நான் திரும்பிவிட்டேன்" என்று கூறினேன்.
அதற்கு உமர் (ரலி) அவர்கள், "உமது குரலை நாம் செவியுற்றோம். அப்போது நாம் ஒரு (முக்கிய) அலுவலில் ஈடுபட்டிருந்தோம். அனுமதி வழங்கப்படும்வரை நீங்கள் அனுமதி கேட்டிருந்தால் நன்றாயிருந்திருக்குமே!" என்றார்கள். நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்றதைப் போன்றே அனுமதி கேட்டேன்"என்றேன்.
உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! இ(வ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்ப)தற்கு உமக்குச் சாட்சியம் அளிப்பவர் ஒருவரை நீர் கொண்டுவர வேண்டும். இல்லாவிட்டால் உமது முதுகிலும் வயிற்றிலும் நாம் தண்டிக்க வேண்டியதிருக்கும்" என்று கூறினார்கள் என்றார்கள்.
அப்போது உபை பின் கஅப் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் மீதாணையாக! எங்களில் வயதில் சிறியவரே உங்களுடன் (இப்போது சாட்சியம் சொல்ல) எழுவார்" என்று கூறிவிட்டு, "அபூசயீதே! எழுந்திரும்" என்று சொன்னார்கள். அவ்வாறே நான் எழுந்து உமர் (ரலி) அவர்களிடம் சென்று, "இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியுற்றேன்" என்று (சாட்சியம்) சொன்னேன்.

4353 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூமூசா (ரலி) அவர்கள் (கலீஃபா) உமர் (ரலி) அவர்களின் (வீட்டு) வாசலுக்குச் சென்று (உள்ளே நுழைய) அனுமதி கேட்டார்கள். உமர் (ரலி) அவர்கள் "ஒன்று' என்றார்கள். பிறகு அபூமூசா (ரலி) அவர்கள் இரண்டாவது முறை அனுமதி கேட்டார்கள். உமர் (ரலி) அவர்கள் "இரண்டு' என்றார்கள். பிறகு அபூமூசா (ரலி) அவர்கள் மூன்றாவது முறை அனுமதி கேட்ட போது, உமர் (ரலி) அவர்கள் "மூன்று' என்றார்கள்.
பிறகு அபூமூசா (ரலி) அவர்கள் திரும்பி வந்துவிட்டார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள் அபூமூசா (ரலி) அவர்களைப் பின்தொடர்ந்து வந்து தம்மிடம் திரும்பிவரச் செய்து, "இவ்வாறு நீர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து மனனமிட்டிருந்தால் அதற்கு ஆதாரம் கொண்டுவாருங்கள். இல்லாவிட்டால் உம்மை (மற்றவர்களுக்கு) ஒரு பாடமாக ஆக்கி விடுவேன்" என்று கூறினார்கள்.

அப்போது அபூமூசா (ரலி) அவர்கள் எங்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அனுமதி கோருதல் மூன்று முறையாகும்' என்று கூறியதை நீங்கள் அறிவீர்களா?" என்று கேட்டார்கள். அதைக் கேட்டு மக்கள் சிரிக்கலாயினர். உடனே நான், "உங்களுடைய முஸ்லிம் சகோதரர் பீதிக்குள்ளாக்கப்பட்ட நிலையில் உங்களிடம் வந்துள்ளார். (அவரைக் கண்டு) நீங்கள் சிரிக்கிறீர்களே?" என்று கூறிவிட்டு, (அபூமூசா (ரலி) அவர்களிடம்) "நீங்கள் வாருங்கள். இந்தத் தண்டனையில் உங்களுக்கு நான் பங்காளியாவேன்" என்று கூறிவிட்டு, உமர் (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அபூமூசா (ரலி) அவர்கள், "இதோ அபூசயீத் (சாட்சி)" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4354 உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூமூசா (ரலி) அவர்கள் (கலீஃபா) உமர் (ரலி) அவர்களிடம் (சென்று அவர்களது இல்லத்திற்குள் நுழைய) மூன்று முறை அனுமதி கேட்டார்கள். (ஆனால், அவர்களுக்கு அனுமதியளிக்கப்படவில்லை. அப்போது) உமர் (ரலி) அவர்கள் ஏதோ அலுவலில் ஈடுபட்டிருந்ததைக் கண்டார்கள் போலும். எனவே, அபூமூசா (ரலி) அவர்கள் திரும்பிவிட்டார்கள்.
(அலுவலை முடித்த) பிறகு உமர் (ரலி) அவர்கள், "அப்துல்லாஹ் பின் கைஸ் (ரலி) அவர்களின் (அபூமூசா) குரலை நீங்கள் கேட்கவில்லையா? அவருக்கு அனுமதி அளியுங்கள்" என்றார்கள். பிறகு அபூமூசா (ரலி) அவர்கள் அழைக்கப்பட்டார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், "இவ்வாறு நீங்கள் செய்ததற்கு என்ன காரணம் (ஏன் மூன்று முறை அனுமதி கோரி விட்டுத் திரும்பிச் சென்றுவிட்டீர்கள்)?" என்று கேட்டார்கள்.
அபூமூசா (ரலி) அவர்கள், "இவ்வாறே நாங்கள் கட்டளையிடப்பட்டிருந்தோம்" என்று பதிலளித்தார்கள். உமர் (ரலி) அவர்கள், "நீங்கள் இதற்குரிய சான்றை நிலைநிறுத்த வேண்டும். அல்லது நான் (இன்னின்னவாறு) நடவடிக்கை எடுப்பேன்" என்றார்கள்.
எனவே, அபூமூசா (ரலி) அவர்கள் அன்சாரிகளின் அவையொன்றை நோக்கிப் புறப்பட்டார்கள். அன்சாரிகள், "எங்களில் சிறியவர் ஒருவரே இதற்காக உமக்குச் சாட்சியமளிப்பார்" என்று கூறினர். ஆகவே, அபூசயீத் (ரலி) அவர்கள் எழுந்து (உமர் (ரலி) அவர்களிடம் சென்று), "இவ்வாறே நாங்கள் கட்டளையிடப்பட்டிருந்தோம்" என்று கூற, உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் இந்த விவரம் எனக்குத் தெரியாமல் போய் விட்டதே! (நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறிய நாளில்) கடைவீதிகளில் நான் வணிகத்தில் ஈடுபட்டிருந்தது எனது கவனத்தைத் திசை திருப்பிவிட்டது (போலும்)" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் நள்ர் பின் ஷுமைல் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "கடைவீதிகளில் நான் வணிகத்தில் ஈடுபட்டிருந்தது எனது கவனத்தைத் திசை திருப்பிவிட்டது" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

4355 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடம் வந்து, "அஸ்ஸலாமு அலைக்கும். இதோ! அப்துல்லாஹ் பின் கைஸ் வந்துள்ளேன்" என்று கூறி (அனுமதி கோரி)னேன். அவர்கள் எனக்கு அனுமதி வழங்கவில்லை. பிறகு (மீண்டும்) நான், "அஸ்ஸலாமு அலைக்கும். இதோ! அபூமூசா (வந்துள்ளேன்). அஸ்ஸலாமு அலைக்கும். இதோ! அஷ்அரீ (வந்துள்ளேன்)" என்று (இன்னும் இரண்டு முறை) அனுமதி கோரினேன். (அனுமதி கிடைக்காததால்) பிறகு நான் திரும்பி வந்துவிட்டேன்.
அப்போது உமர் (ரலி) அவர்கள் "அவரை என்னிடம் அழைத்து வாருங்கள். அவரை என்னிடம் அழைத்து வாருங்கள்"என்று கூறினார்கள். நான் (மீண்டும்) வந்தபோது, "அபூமூசா! ஏன் திரும்பிச் சென்றீர்? நாம் ஓர் அலுவலில் ஈடுபட்டிருந்தோம்" என்று கூறினார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அனுமதி கோருதல் மூன்று முறையாகும். (மூன்று முறைக்குள்) உமக்கு அனுமதி வழங்கப்பட்டால் சரி. இல்லாவிட்டால் நீர் திரும்பிவிடுக' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்"என்றேன்.
உமர் (ரலி) அவர்கள் "இ(வ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்ப)தற்கு நீங்கள் சாட்சி கொண்டுவர வேண்டும். இல்லாவிட்டால் இப்படி இப்படிச் செய்து விடுவேன்" என்று கூறினார்கள். ஆகவே, நான் (அன்சாரிகளின் அவைக்குச்) சென்றேன்.
உமர் (ரலி) அவர்கள், "அவருக்குச் சாட்சி கிடைத்தால் மாலையில் அவரைச் சொற்பொழிவு மேடைக்கு அருகில் நீங்கள் காண்பீர்கள். சாட்சி கிடைக்காவிட்டால் அவரை நீங்கள் காணமாட்டீர்கள்" என்று கூறினார்கள்.

மாலை நேரமானபோது என்னைக் கண்ட மக்கள், "அபூமூசா! நீர் என்ன சொல்கிறீர்? சாட்சி கிடைத்துவிட்டாரா?" என்று உமர் (ரலி) அவர்கள் கேட்டார்கள். நான் "ஆம், உபை பின் கஅப் (ரலி) அவர்களே (சாட்சி)" என்றேன். உமர் (ரலி) அவர்கள் "அவர் நேர்மையானவர்தாம்" என்று கூறி விட்டு, "அபுத்துஃபைல்! இவர் என்ன சொல்கிறார்?" என்று கேட்டார்கள்.
அதற்கு உபை பின் கஅப் (ரலி) அவர்கள், "கத்தாபின் புதல்வரே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதை நான் கேட்டுள்ளேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களுக்கு நீரே ஒரு வேதனையாக ஆகிவிடாதீர்" என்று கூறினார்கள்.
அதற்கு உமர் (ரலி) அவர்கள், "சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்). இதைக் குறித்து ஒன்றைக் கேள்விப்பட்டேன். அதை உறுதி செய்துகொள்ளவே விரும்பினேன்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், உமர் (ரலி) அவர்கள், "அபுல்முன்திர்! நீங்கள் இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று உமர் (ரலி) அவர்கள் கேட்டார்கள். அதற்கு உபை பின் கஅப் (ரலி) அவர்கள், "ஆம், கத்தாபின் புதல்வரே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களுக்கு நீரே ஒரு வேதனையாக ஆகிவிடாதீர்" என்று கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது. அதில் உமர் (ரலி) அவர்கள் "சுப்ஹானல்லாஹ்' என்று கூறியதும் அதற்குப் பின் உள்ளவையும் இடம்பெறவில்லை.

**பாடம் : 8 "யார் அது?' என்று கேட்கப்படும்போது (பெயரைச் சொல்லாமல்) "நான்' என்று அனுமதி கேட்பவர் பதிலளிப்பது வெறுக்கத்தக்கதாகும்.**

4356 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று (அவர்களை) அழைத்தேன். நபி (ஸல்) அவர்கள், "யார் அது?" என்று கேட்டார்கள். நான் "நான்தான்" என்று பதிலளித்தேன். அப்போது அவர்கள் "நான்... நான் (என்றால்...?)" என்று கூறியபடி வெளியே வந்தார்கள்.

4357 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் நபி (ஸல்) அவர்களிடம் உள்ளேவர அனுமதி கேட்டேன். அவர்கள், "யார் அது?" என்று கேட்டார்கள். அதற்கு நான் "நான்தான்" என்று பதிலளித்தேன். நபி (ஸல்) அவர்கள் "நான்... நான் (என்றால்...?)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அவ்வாறு கூறியதை அவர்கள் வெறுத்ததைப் போன்றிருந்தது" என இடம் பெற்றுள்ளது.

**பாடம் : 9 பிறர் வீட்டில் எட்டிப்பார்ப்பது தடை செய்யப்பட்டதாகும்.**

4358 சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் கதவில் ஒரு துவாரத்தின் வழியாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது அறையினுள் எட்டிப்பார்த்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஈர்வலி (பேன் சீப்பு) ஒன்றிருந்தது. அதன் மூலம் அவர்கள் தமது தலையைக் கோதிக்கொண்டிருந்தார்கள்.
அவரைக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீ என்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய் என்று எனக்கு (முன்பே) தெரிந்திருந்தால், இந்த ஈர்வலியால் உன் கண்ணைக் குத்தியிருப்பேன்" என்று கூறிவிட்டு, "(வீட்டுக்குள் நுழைய) அனுமதி கேட்க வேண்டும் என்று சட்டமாக்கப்பட்டதே, பார்வை (எல்லை மீறி வீட்டிலிருப்பவர்கள்மீது விழக்கூடும் என்ற) காரணத்தால்தான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4359 சஹ்ல் பின் சஅத் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் கதவில் ஒரு துவாரத்தின் வழியாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அறையினுள் எட்டிப்பார்த்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஈர்வலி (பேன் சீப்பு) ஒன்றிருந்தது. அதன் மூலம் அவர்கள் தமது தலையைச் சீவிக்கொண்டிருந்தார்கள்.
அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ பார்த்துக்கொண்டிருக்கிறாய் என நான் (முன்பே) அறிந்திருந்தால்,இந்த ஈர்வலியால் உன் கண்ணைக் குத்தியிருப்பேன். (வீட்டுக்குள் நுழைய) அனுமதி கேட்கவேண்டும் என்று அல்லாஹ் சட்டமாக்கியிருப்பதே, பார்வை

(எல்லை மீறி வீட்டிலிருப்பவர்கள்மீது விழக்கூடும் என்ற) காரணத்தால்தான்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4360 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களின் அறைகளில் ஒன்றின் வழியாக எட்டிப்பார்த்தார். (இதைக் கண்ட) நபி (ஸல்) அவர்கள் நீளமான அம்பின் "கூர்முனையுடன்' அல்லது "கூர்முனைகளுடன்' அவருக்குத் தெரியாமல் அவரை நோக்கிச் சென்று (அவரது கண்ணில்) குத்தப் போனதை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4361 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு குடும்பத்தாரின் அனுமதியின்றி அவர்களது வீட்டினுள் யாரேனும் எட்டிப்பார்த்தால், அவரது கண்ணைப் பறிக்கவும் அவர்களுக்கு அனுமதி உண்டு.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4362 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உன் அனுமதியின்றி ஒரு மனிதர் உன்னை எட்டிப் பார்த்தபோது, அவர்மீது நீ சிறு கல்லைச் சுண்டியெறிய, அது அவரது கண்ணைப் பறித்துவிட்டால் உன்மீது எந்தக் குற்றமுமில்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 10 எதேச்சையாகப் பார்வை விழுவது.

4363 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எதேச்சையாக (அந்நியப் பெண்மீது) பார்வை விழுவதைப் பற்றிக்கேட்டேன். அப்போது எனது பார்வையை (உடனடியாகத்) திருப்பிக்கொள்ள வேண்டுமென அவர்கள் எனக்குக் கட்டளையிட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே வேறு இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

# அத்தியாயம் : 39 - முகமன்

**பாடம்: 1 வாகனத்தில் செல்பவர் நடந்து செல்பவருக்கும், (எண்ணிக்கையில்) குறைந்தவர்கள் அதிகமானவர்களுக்கும் (முதலில்) முகமன் (சலாம்) சொல்ல வேண்டும்.**

4364 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வாகனத்தில் செல்பவர் நடந்து செல்பவருக்கும், நடந்து செல்பவர் அமர்ந்திருப்பவருக்கும், (எண்ணிக்கையில்) குறைந்தவர்கள் அதிகமானவர்களுக்கும் (முதலில்) முகமன் (சலாம்) சொல்லட்டும். - இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 2 முகமனுக்குப் பதிலுரைப்பது சாலையில் அமர்வதன் ஒழுங்கு முறைகளில் ஒன்றாகும்.**

4365 அபூதல்ஹா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் வீட்டு முற்றங்களில் அமர்ந்து பேசிக்கொண்டிருப்போம். (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து எங்களிடையே நின்று, "சாலையோரங்களில் அமர்ந்து (பேசிக்) கொண்டிருப்பதற்கு உங்களுக்கு என்ன (அவசியம்) நேர்ந்தது? சாலையோரங்களில் அமர்வதைத் தவிர்த்துவிடுங்கள்" என்று கூறினார்கள். நாங்கள் "அவசியத்தை முன்னிட்டே அமர்கிறோம். (இங்கு அமர்ந்துதான் பல விஷயங்கள் குறித்து) நாங்கள் பேசிக்கொள்கிறோம்;கலந்துரையாடுகிறோம்" என்று கூறினோம்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதைத் தவிர்க்க முடியாது என்றிருந்தால், சாலைகளுக்கு அவற்றின் உரிமையை வழங்கிவிடுங்கள். (அந்நியப் பெண்களைப் பார்க்காமல்) பார்வையைத் தாழ்த்திக்கொள்வதும், முகமனுக்குப் பதிலுரைப்பதும், நல்ல பேச்சுக்களைப் பேசுவதும் (அவற்றின் உரிமை) ஆகும்" என்று சொன்னார்கள்.

4366 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் சாலைகளில் அமர்வதைத் தவிர்த்துவிடுங்கள்" என்று கூறினார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அங்கு அமராமல் இருக்க இயலாது. அங்கு (அமர்ந்துதான் பல விஷயங்களை) நாங்கள் பேசிக்கொள்கிறோம்" என்று கூறினர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(அங்கு) நீங்கள் அமர்ந்துதான் ஆகவேண்டும் என்றிருந்தால், சாலைக்கு வழங்க வேண்டிய உரிமையை வழங்கிவிடுங்கள்" என்று கூறினார்கள். மக்கள், "சாலையின் உரிமை என்ன?" என்று வினவினர். நபி (ஸல்) அவர்கள், "(அந்நியப் பெண்களைப் பார்க்காமல்) பார்வையைத் தாழ்த்திக்கொள்வதும், (பாதசாரிகளுக்குச் சொல்லாலோ செயலாலோ) துன்பம் தராமலிருப்பதும், முகமனுக்குப் பதிலுரைப்பதும், நன்மை புரியும்படி கட்டளையிடுவதும், தீமையிலிருந்து தடுப்பதும் (அதன் உரிமை) ஆகும்" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 3 முகமனுக்குப் பதிலுரைப்பது, ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்குச் செய்ய வேண்டிய கடமைகளில் ஒன்றாகும்.

4367 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிம் தம் (கொள்கைச்) சகோதரருக்குச் செய்ய வேண்டிய கடமைகள் ஐந்தாகும். 1. முகமனுக்குப் பதிலுரைப்பது 2. தும்மி ("அல்ஹம்துலில்லாஹ்' என்று கூறி)யவருக்கு ("யர்ஹமுகல்லாஹ்' என்று) மறுமொழி கூறுவது 3. விருந்தழைப்பை ஏற்பது. 4. நோயாளியை நலம் விசாரிப்பது 5. ஜனாஸாவில் கலந்து கொள்வது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(பொதுவாக) இந்த ஹதீஸை மஅமர் (ரஹ்) அவர்கள், ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடமிருந்து "முர்சலா'கவே அறிவிப்பார்கள்.
ஒரு முறை மஅமர் (ரஹ்) அவர்கள், "ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்களிடமிருந்தும்,சயீத் அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தும் கூறியதாவது" என்று (முஸ்னதாக) அறிவித்தார்கள்.

4368 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் ஆறாகும்" என்று கூறினார்கள். "அவை யாவை, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்கப்பட்டது.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரைச் சந்திக்கும்போது முகமன் கூறுவாயாக. அவர் உன்னை விருந்துக்கு அழைத்தால் அவருக்குப் பதிலளிப்பாயாக. அவர் உன்னிடத்தில் அறிவுரை கூறச்சொன்னால் அவருக்கு அறிவுரை கூறுவாயாக. அவர் தும்மி "அல்ஹம்துலில்லாஹ்' என்று கூறினால் (யர்ஹமு கல்லாஹ் என்று) அவருக்கு மறுமொழி கூறுவாயாக. அவர் நோய்வாய்ப்பட்டால் அவரை உடல்நலம் விசாரிப்பாயாக. அவர் இறந்துவிட்டால் அவரது ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்வாயாக" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 4 வேதக்காரர்களுக்கு (நாம்) முதலில் முகமன் கூறுவது தடை செய்யப்பட்டதாகும் என்பதும் அவர்களுக்கு எவ்வாறு பதில் முகமன் கூற வேண்டும் என்பதும்.

4369 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வேதக்காரர்கள் உங்களுக்கு முகமன் (சலாம்) கூறினால், "வ அலைக்கும்' (நீங்கள் சொன்னது உங்களுக்கும் நேரட்டும்) என்று (பதில்) கூறுங்கள்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4370 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபித்தோழர்கள் நபி (ஸல்) அவர்களிடம், "வேதக்காரர்கள் எங்களுக்கு முகமன் (சலாம்) கூறினால், நாங்கள் அவர்களுக்கு எவ்வாறு பதில் (முகமன்) கூற வேண்டும்?" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "வ அலைக்கும்' (நீங்கள் சொன்னது உங்களுக்கும் நேரட்டும்) என்று (பதில்) கூறுங்கள் என விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4371 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யூதர்கள் உங்களுக்கு முகமன் (சலாம்) கூறினால் அவர்களில் சிலர் "அஸ்ஸாமு அலைக்க' (உங்களுக்கு மரணம் உண்டாகட்டும்) என்றே கூறுவர். ஆகவே, (அவர்களுக்குப் பதிலாக) "அலைக்க' (நீ சொன்னது உனக்கு உண்டாகட்டும்) என்று கூறுவீராக.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4372 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஆகவே, (அவர்களுக்குப் பதிலாக) "வ அலைக்க' (நீ சொன்னது உனக்கும் உண்டாகட்டும்) என்று கூறுவீராக"என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

4373 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
யூதர்களில் ஒரு குழுவினர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து (உள்ளே வர) அனுமதி கேட்டு "அஸ்ஸாமு அலைக்கும்' (உங்களுக்கு மரணம் உண்டாகட்டும்) என்று (சற்றே மாற்றி முகமன்) கூறினர். உடனே நான் "அலைக்குமுஸ் ஸாமு வல்லஅனா' (உங்களுக்கு மரணமும் சாபமும் உண்டாகட்டும்) என்று பதில் சொன்னேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆயிஷா! (நிதானம்!) அல்லாஹ் எல்லாக் காரியங்களிலும் நளினத்தைக் கையாள்வதையே விரும்புகிறான்" என்று கூறினார்கள்.
நான் "அவர்கள் சொன்னதை நீங்கள் செவியுறவில்லையா?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான்தான் "வ அலைக்கும்' (நீங்கள் சொன்னது உங்களுக்கும் உண்டாகட்டும்) என்று (நளினமாகச்) சொல்லிவிட்டேனே (அதை நீ கவனிக்க வில்லையா)?" என்று (திருப்பிக்) கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நான்தான் "அலைக்கும்' (நீங்கள் சொன்னது உங்களுக்கு உண்டாகட்டும்) என்று (நளினமாகச்) சொல்லிவிட்டேனே என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (திருப்பிக்) கேட்டார்கள்" என இடம்பெற்றுள்ளது. அவற்றில் ("அலைக்கும்' என்பதற்கு முன்) "வ' எனும் (இடைச்)சொல் இடம்பெறவில்லை.

4374 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
யூதர்களில் சிலர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அபுல்காசிமே! அஸ்ஸாமு அலைக்க" (உமக்கு மரணம் உண்டாகட்டும்) என்று (சற்றே மாற்றி முகமன்) கூறினர். நபி (ஸல்) அவர்கள் "வ அலைக்கும்' (நீங்கள் சொன்னது உங்களுக்கும் உண்டாகட்டும்) என்று (பதில்) சொன்னார்கள். நான் "அலைக்குமுஸ் ஸாமு வத்தாமு" (உங்களுக்கு மரணமும் இழிவும் உண்டாகட்டும்) என்று பதில் (முகமன்) கூறினேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆயிஷா! அருவருப்பாகப் பேசுபவளாக இராதே" என்று கூறினார்கள். நான், "அவர்கள் சொன்னதை நீங்கள் செவியுறவில்லையா?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான்தான் அவர்கள் சொன்னதற்கு "வ அலைக்கும்' (நீங்கள் சொன்னது உங்களுக்கும் உண்டாகட்டும்) என்று (நளினமாக) பதில் சொல்லி விட்டேனே (அதை நீ கவனிக்கவில்லையா)?" என்று (திருப்பிக்) கேட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் அதில், "ஆயிஷா (ரலி) அவர்கள், யூதர்கள் கூறியதைப் புரிந்துகொண்டு (பதிலுக்கு) அவர்களை ஏசினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆயிஷா! நிதானம்! ஏனெனில், அல்லாஹ் இயற்கையாகவோ செயற்கையாகவோ அருவருப்பாகப் பேசுவதை விரும்புவதில்லை" என்று கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.
மேலும், அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் "(நபியே!) அவர்கள் உம்மிடம் வரும்போது அல்லாஹ் எதை உமக்கு முகமனாக ஆக்கவில்லையோ அதை உமக்கு முகமனாகக் கூறுகின்றனர்" (58:8) எனும் வசனத்தை முழுமையாக அருளினான் என்று கூடுதலாகக் காணப்படுகிறது.

4375 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
யூதர்களில் சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு "அபுல்காசிமே! அஸ்ஸாமு அலைக்க" (உங்களுக்கு மரணம் உண்டாகட்டும்) என்று முகமன் கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "வ அலைக்கும்' (நீங்கள் சொன்னது உங்களுக்கும் உண்டாகட்டும்) என்று (நளினமாக பதில்) கூறினார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள் கோபப்பட்டு, "அவர்கள் சொன்னதை நீங்கள் செவியுறவில்லையா?" என்று கேட்டார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்; நான் கேட்டுவிட்டு அவர்களுக்கு (நளினமாக) பதில் சொல்லிவிட்டேனே! அவர்களுக்கு எதிராக நாம் செய்த பிரார்த்தனை ஏற்கப்படும். நமக்கெதிராக அவர்கள் செய்த பிரார்த்தனை ஏற்கப்படாது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4376 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யூதர்களுக்கும் கிறித்தவர்களுக்கும் நீங்கள் முதலில் முகமன் கூறாதீர்கள். அவர்களில் ஒருவரை நீங்கள் சாலையில் சந்தித்தால், சாலையின் நெருக்கடியான பகுதியில் அவரை ஒதுங்கிப்போகச் செய்யுங்கள். - இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "யூதர்களை நீங்கள் சந்தித்தால்' என்றும், முஹம்மத் பின் ஜஅஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "வேதக்காரர்கள் தொடர்பாக ஷுஅபா (ரஹ்) அவர்கள் (மேற் கண்ட ஹதீஸில் உள்ளபடி) கூறினார்கள்" என்றும் இடம்பெற்றுள்ளது.
ஜரீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்களை நீங்கள் சந்தித்தால்' என்று அந்த இணைவைப்பாளர்களில் யாருடைய பெயரும் குறிப்பிடாமல் அறிவிக்கப்பெற்றுள்ளது.

## பாடம்: 5 (பெரியவர்கள்) சிறாருக்கு முகமன் கூறுவது விரும்பத்தக்கதாகும்.

4377 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறுவர்களைக் கடந்து சென்றபோது, அவர்களுக்கு முகமன் (சலாம்) கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4378 சய்யார் பின் அபீசய்யார் வர்தான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்களுடன் நடந்து சென்றேன். அப்போது அவர்கள் சிறுவர்கள் சிலரைக் கடந்து சென்றபோது அவர்களுக்கு முகமன் (சலாம்) கூறினார்கள்.
"(ஒரு முறை) நான் அனஸ் (ரலி) அவர்களுடன் நடந்து சென்றேன். அப்போது அனஸ் (ரலி) அவர்கள் சிறுவர்கள் சிலரைக் கடந்து சென்றார்கள். அப்போது அவர்கள் அச்சிறுவர்களுக்கு முகமன் (சலாம்) கூறினார்கள். மேலும், அனஸ் (ரலி) அவர்கள், "(ஒரு முறை) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நடந்து சென்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறுவர்கள் சிலரைக் கடந்து சென்றார்கள். அப்போது அச்சிறுவர்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முகமன் (சலாம்) கூறினார்கள் என்றும் கூறினார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 6 வீட்டுவாசலில் திரையை விலக்கிவைத்திருப்பது போன்ற அடையாளங்களை, உள்ளே செல்ல அனுமதியாகக் கருதலாம்.

4379 இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "(என் வீட்டுவாசலில்) திரை விலக்கப்படுவதும், எனது அரவத்தை நீ செவியுறுவதும் என்னிடம் (வீட்டுக்குள்) நீ வரலாம் என்பதற்கான அனுமதியாகும். நானாக (வரவேண்டாம் எனத்) தடுக்காதவரை" என்று கூறினார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 7 இயற்கைத் தேவையை நிறைவேற்றுவதற்காகப் பெண்கள் வெளியே செல்லலாம்.

4380 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"பர்தா" அணிவது சட்டமாக்கப்பட்ட பின்னர் (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) சவ்தா (ரலி) அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக (இரவு நேரத்தில்) வெளியே சென்றார்கள். சவ்தா (ரலி) அவர்கள் பெண்களிலேயே நல்ல உயரமும் (உயரத்துக்கு ஏற்ற) பருமனும் உள்ளவராக இருந்தார்கள். அவரை அறிந்தவர்களுக்கு அவர் (பர்தா அணிந்து சென்றாலும் அவர்) யார் என்று (அடையாளம்) தெரியாமலிருக்காது.
அப்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் சவ்தா (ரலி) அவர்களைப் பார்த்து (அறிந்து) விட்டு, "சவ்தாவே! அல்லாஹ்வின் மீதாணையாக! (பர்தா அணிந்திருந்தாலும்) நீங்கள் யார் என்று எங்களுக்குத் தெரியாமலில்லை. நீங்கள் (யார் என்று அறிந்து கொள்ளப்படுகிற நிலையில்) எப்படி வெளியே வருகிறீர்கள் என்பது குறித்து யோசித்துப் பாருங்கள்" என்று சொன்னார்கள்.
சவ்தா (ரலி) அவர்கள் உடனே அங்கிருந்து திரும்பிவந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் வீட்டில் இரவு உணவு அருந்திக்கொண்டிருந்தார்கள். அவர்களது கையில் இறைச்சி கலந்த எலும்புத்துண்டு ஒன்று இருந்தது. சவ்தா (ரலி) அவர்கள் வீட்டினுள் நுழைந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் (இயற்கைக் கடனை நிறைவேற்ற) வெளியே சென்றேன். அப்போது உமர் (ரலி) அவர்கள் இப்படி இப்படிச் சொன்னார்கள்" என்று கூறினார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இறைச்செய்தி (வஹீ) வந்தது. பின்னர் அந்நிலை விலக்கப்பட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கையில் அந்த எலும்புத்துண்டு (அப்படியே) இருந்தது; அதை அவர்கள் (கீழே) வைத்திருக்கவில்லை. மேலும், அவர்கள் "(பெண்களே!) நீங்கள் உங்கள் (அடிப்படைத்) தேவைகளுக்காக வெளியே செல்ல அனுமதி வழங்கப்பட்டுள்ளது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் அபூபக்ர் பின் அபீ ஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "சவ்தா (ரலி) அவர்கள் பெண்களிலேயே நல்ல உயரமான உடல்வாகு கொண்டவராயிருந்தார்" என்று இடம்பெற்றுள்ளது. மேலும் அவர்களது அறிவிப்பில் "அதாவது கழிப்பிடங்களுக்கு(ச் செல்ல அனுமதி வழங்கப்பட்டுள்ளது)" என்று ஹிஷாம் பின் உர்வா (ரஹ்) அவர்கள் (விளக்கம்) கூறியதாகக் கூடுதலாக இடம் பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "சவ்தா (ரலி) அவர்கள் மக்களிலேயே நல்ல உயரமான உடல்வாகு கொண்ட பெண்ணாக இருந்தார்கள்" என இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4381 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியர் (மதீனாவின்) புறநகர்ப் பகுதிகளுக்கு இயற்கைக் கடனை நிறைவேற்ற இரவு வேளைகளில் புறப்பட்டுச் செல்வார்கள். ("புற நகர்ப் பகுதிகள்' என்பதைக் குறிக்க ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ள) "மனாஸிஉ' எனும் சொல், விசாலமான இடங்களைக் குறிக்கும். உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "தங்கள் துணைவியரைத் திரைக்குள்ளிருக்குமாறு கூறுங்கள்" என்று சொல்வார்கள்.
ஆனால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்யவில்லை. இந்நிலையில் ஒரு நாள் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் சவ்தா பின்த் ஸம்ஆ (ரலி) அவர்கள் ஓர் இரவில் இஷா நேரத்தில் வெளியே சென்றார்கள்.
சவ்தா (ரலி) அவர்கள் உயரமான பெண்ணாக இருந்தார்கள். உமர் (ரலி) அவர்கள் சவ்தா (ரலி) அவர்களை நோக்கி, "சவ்தாவே! (நீங்கள் பர்தா அணிந்திருந்தாலும்) நாங்கள் உம்மை யார் என்று அடையாளம் தெரிந்துகொண்டோம்" என்று கூறினார்கள். பர்தா தொடர்பான சட்டம் அருளப்பட வேண்டுமென்ற பேராவலிலேயே இவ்வாறு கூறினார்கள். வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் அவ்வாறே பர்தா தொடர்பான வசனத்தை அருளினான்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 8 அந்நியப் பெண்ணுடன் தனிமையில் இருப்பதும் அவளிடம் செல்வதும் தடை செய்யப்பட்டதாகும்.

4382 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கவனத்தில் வையுங்கள்! கன்னிகழிந்த எந்தப் பெண்ணுடனும் எந்த ஆணும் இரவில் (தனியாகத்) தங்க வேண்டாம்;அவர் அவளை மணந்துகொண்டவராகவோ (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவினராகவோ இருந்தால் தவிர!
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4383 உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அந்நியப்) பெண்கள் இருக்குமிடத்திற்குச் செல்ல வேண்டாம் என உங்களை நான் எச்சரிக்கிறேன்" என்று கூறினார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! கணவருடைய (சகோதரன் போன்ற) உறவினர் (அவள் இருக்குமிடத்திற்குச் செல்வது) குறித்துத் தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்டார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கணவருடைய (சகோதரன் போன்ற) உறவினர் ("அல்ஹம்வு') மரணத்திற்கு நிகரானவர்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4384 லைஸ் பின் சஅத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"அல்ஹம்வு' என்பது கணவருடைய சகோதரர், கணவருடைய தந்தையின் சகோதரரின் புதல்வர் போன்ற உறவினர்களைக் குறிக்கும்.

4385 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பனூ ஹாஷிம் குலத்தைச் சேர்ந்த (ஆண்கள்) சிலர் அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) (அவர்கள் தனிமையில் இருந்தபோது) அவர்களிடம் வந்தனர். அப்போது அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்கள் வீட்டினுள் நுழைந்தார்கள். அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்கள் அப்போது அபூபக்ர் (ரலி) அவர்களின் மனைவியாக இருந்தார்கள். (தனிமையிலிருந்த தம் துணைவியாரிடம்) அவர்களைக் கண்ட அபூபக்ர் (ரலி) அவர்கள் வெறுப்படைந்தார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அது குறித்துத் தெரிவித்துவிட்டு, "(ஆயினும்) நான் (என் துணைவி விஷயத்தில்) நல்லதையே கருதுகிறேன்" என்று அபூபக்ர் கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரை அல்லாஹ் நிரபராதியாக்கிவிட்டான்" என்று கூறிவிட்டு, பிறகு சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது நின்று, "இன்றைய தினத்திற்குப்பின் எந்த ஆணும் தனிமையில் இருக்கும் எந்தப் பெண்ணிடமும் செல்ல வேண்டாம்;அவனுடன் மற்ற ஓர் ஆணோ, இரு ஆண்களோ இருந்தால் தவிர" என்று கூறினார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 9 ஒருவர் தம் மனைவியுடனோ அல்லது மணமுடிக்கத் தகாத நெருங்கிய பெண் உறவினர் ஒருவருடனோ தனிமையில் இருப்பதை யாரேனும் பார்த்தால் "இவர் (எனக்கு) இன்ன (உறவுடைய) பெண்'' என்று கூறி, கெட்ட எண்ணத்தை அகற்றுவது விரும்பத் தக்கதாகும்.**

4386 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் தம் துணைவியார் ஒருவருடன் இருந்தார்கள். அப்போது அவர்களைக் கடந்து ஒரு மனிதர் சென்றார். நபி (ஸல்) அவர்கள் அந்த மனிதரை அழைத்தார்கள். அவர் வந்ததும், "இன்ன மனிதரே! இவர் என்னுடைய இன்ன துணைவி ஆவார்" என்று கூறினார்கள். அப்போது அந்த மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! நான் யாரைச் சந்தேகித்தாலும் தங்களைச் சந்தேகிக்கப்போவதில்லை" என்று கூறினார்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "ஷைத்தான், மனிதனின் இரத்த நாளங்களில் எல்லாம் ஓடுகிறான்" என்று கூறினார்கள்.

4387 (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) ஸஃபிய்யா பின்த் ஹுயை (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ரமளானின் இறுதிப் பத்து நாட்களில்) "இஃதிகாஃபி'ல் இருந்தபோது, அவர்களைச் சந்திப்பதற்காக இரவு நேரத்தில் நான் சென்றேன். அவர்களிடம் பேசிவிட்டு நான் திரும்பிச் செல்வதற்காக எழுந்தபோது, என்னை வீட்டுக்கு அனுப்புவதற்காக நபி (ஸல்)

அவர்களும் எழுந்தார்கள். அப்போது உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களது இல்லத்திலேயே என் வசிப்பிடம் இருந்தது.
அப்போது அன்சாரிகளில் இருவர் (எங்களைக்) கடந்து சென்றனர். அவ்விருவரும் நபி (ஸல்) அவர்களைக் கண்டதும் விரைவாக நடந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், "சற்று நில்லுங்கள். இவர் (என் துணைவி) ஸஃபிய்யா பின்த் ஹுயை ஆவார்" என்று சொன்னார்கள். அதற்கு அவர்கள் இருவரும், "அல்லாஹ் தூயவன்! அல்லாஹ்வின் தூதரே! (தங்களையா நாங்கள் சந்தேகிப்போம்!)" என்று கூறினர்.
நபி (ஸல்) அவர்கள், "ஷைத்தான், மனிதனின் இரத்த நாளங்களில் எல்லாம் ஓடுகிறான். அவன் உங்கள் உள்ளங்களில் தீய எண்ணத்தைப் போட்டுவிடுவானோ என்று நான் அஞ்சினேன்" என்றோ, அல்லது "எதையேனும் போட்டுவிடுவான்" என்றோ சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4388 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஸஃபிய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தின் இறுதிப்பத்து நாட்களில் பள்ளிவாசலில் "இஃதிகாஃப்' இருந்தபோது,அவர்களைச் சந்திப்பதற்காக நான் (பள்ளிவாசலுக்குச்) சென்றேன். (அந்த இரவில்) சிறிது நேரம் பேசிவிட்டு நான் திரும்பிச் செல்வதற்காக எழுந்தேன். என்னை வீட்டுக்கு அனுப்புவதற்காக நபி (ஸல்) அவர்களும் எழுந்தார்கள்... பிறகு மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளது.
ஆயினும், அதில் "ஷைத்தான், மனிதனின் இரத்த நாளங்களை எல்லாம் சென்றடைகிறான்" என்று இடம்பெற்றுள்ளது. "ஓடுகிறான்" எனும் வாசகம் இடம்பெறவில்லை.

## பாடம் : 10 ஓர் அவைக்குச் செல்பவர், அங்கு இடைவெளி ஏதேனும் இருக்கக் கண்டால் அதில் அமர்ந்துகொள்ளலாம். இல்லாவிட்டால், பின்வரிசையிலேயே அமர வேண்டும்.

4389 அபூவாகித் அல்ஃலைஸீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களுடன் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் அமர்ந்திருந்தபோது மூன்றுபேர் வந்தனர். அவர்களில் இருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி வந்தனர். மற்றொருவர் (கண்டுகொள்ளாமல்) சென்றுவிட்டார்.
(உள்ளே வந்த) அவ்விருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வீற்றிருந்த அவைக்கு) முன்னால் வந்து நின்றார்கள். அவர்களில் ஒருவர் வட்டமான அந்த அவையில் இடைவெளி இருப்பதைக் கண்டு அதில் அமர்ந்துகொண்டார். மற்றொருவர் பின்வரிசையில் அமர்ந்துகொண்டார். மூன்றாமவரோ திரும்பிப் போய்க்கொண்டிருந்தார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடம் பேசி) முடித்ததும், "இம்மூவரைப் பற்றி உங்களுக்கு நான் சொல்லட்டுமா? அவர்களில் ஒருவரோ, அல்லாஹ்விடம் ஒதுங்கினார். அல்லாஹ்வும் அவரை அரவணைத்துக் கொண்டான். மற்றவரோ (மக்களைத் தாண்டிச் செல்ல) வெட்கப்பட்டார். அல்லாஹ்வும் அவர் விஷயத்தில் (அவரைத் தண்டிக்க) வெட்கப் பட்டான். மூன்றாமவரோ அலட்சியப்படுத்தினார். எனவே, அல்லாஹ்வும் அவரை அலட்சியப் படுத்தினான்" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூவாகித் அல்லைஸீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 11 ஒரு மனிதர் முந்திச் சென்று தமக்கு அனுமதிக்கப்பட்ட இடத்தில் அமர்ந்திருக்கும்போது, அவ்விடத்திலிருந்து அவரை எழுப்பிவிடுவது தடை செய்யப்பட்டதாகும்.**

4390 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒரு மனிதர் இன்னொரு மனிதரை, அவர் அமர்ந்திருக்கும் இடத்திலிருந்து எழுப்பிவிட்டுப் பிறகு அந்த இடத்தில் அமரவேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4391 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் இன்னொரு மனிதரை, அவர் அமர்ந்திருந்த இடத்திலிருந்து எழுப்பிவிட்டு, பிறகு அந்த இடத்தில் அமரவேண்டாம். மாறாக, நகர்ந்து உட்கார்ந்து மற்றவர்களுக்கு இடமளியுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஏழு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "மாறாக, நகர்ந்து உட்கார்ந்து மற்றவர்களுக்கு இடமளியுங்கள்" என்பது இடம் பெறவில்லை. அவற்றில் இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் (நாஃபிஉ (ரஹ்) அவர்களிடம்) வெள்ளிக்கிழமை அன்றா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "வெள்ளிக்கிழமை அன்றும் அது அல்லாத மற்ற சமயங்களிலும்தான் என்று விடையளித்தார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4392 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் சகோதரரை எழுப்பிவிட்டு, அவர் அமர்ந்திருக்கும் இடத்தில் அமர வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சாலிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:) இப்னு உமர் (ரலி) அவர்கள் தமக்காக யாரேனும் அவரது இடத்திலிருந்து எழுந்(து இடமளித்)தால் அங்கு அவர்கள் அமரமாட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4393 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வெள்ளிக்கிழமை அன்று உங்களில் ஒருவர், தம் சகோதரர் அமர்ந்த இடத்தில் தாம் அமர்வதற்காக அவரை எழுப்பிவிட்டு அங்கு அமர வேண்டாம். மாறாக, "(நகர்ந்து) இடமளியுங்கள்" என்று கூறட்டும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 12 ஒருவர் தாம் அமர்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்து சென்றுவிட்டுத் திரும்பி வந்தால், அவரே அந்த இடத்திற்கு உரியவர் ஆவார்.

4394 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தாம் அமர்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்து சென்றுவிட்டுத் திரும்பி வந்தால், அவரே அந்த இடத்திற்கு உரியவர் ஆவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூஅவானா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஒருவர் தாம் அமர்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்து சென்றுவிட்டு..." என்று இடம்பெற்றுள்ளது. (அதில் "உங்களில் ஒருவர்' எனும் குறிப்பு இல்லை.)

## பாடம் : 13 அந்நியப் பெண்கள் உள்ள இடத்திற்கு அலிகள் செல்ல வந்துள்ள தடை.

4395 (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஆணோ பெண்ணோ அல்லாத) அலி ஒருவர் என் அருகில் இருந்துகொண்டிருந்தார். அப்போது வீட்டில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் இருந்தார்கள். அப்போது அந்த அலி என் சகோதரரிடம், "அப்துல்லாஹ் பின் அபீஉமய்யாவே! நாளை உங்களுக்கு "தாயிஃப்' நகரத்தின் மீது அல்லாஹ் வெற்றியளித்தால், ஃகைலானின் மகளை உனக்கு நான் காட்டுகிறேன். (அவளை மணந்துகொள்.) ஏனெனில், அவள் முன்பக்கம் நாலு (சதை மடிப்புகளு)டனும் பின்பக்கம் எட்டு (சதை மடிப்புகளு)டனும் வருவாள்" என்று சொன்னார்.
அதைச் செவியுற்ற அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அலிகளான) இவர்கள் (அந்நியப் பெண்களான) உங்களிடம் வர வேண்டாம்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4396 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் துணைவியரிடம் (ஆணுமல்லாத பெண்ணுமல்லாத) அலி ஒருவர் வருவார். அவர் பாலுறவு வேட்கையில்லாதவர்களில் ஒருவர் என்றே கருதிவந்தார்கள். ஒரு நாள் அவர் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஒருவரிடம் இருந்தபோது, அங்கு நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். அந்த அலி ஒரு பெண்ணைப் பற்றி வர்ணித்துக் கொண்டிருந்தார். "அவள் வந்தால் நாலு (சதை மடிப்புகளு)டன் வருவாள். போனால் எட்டு (சதை மடிப்புகளு)டன் போவாள்" என்று அவர் சொன்னார்.

நபி (ஸல்) அவர்கள், "இவர் இங்குள்ள (பெண்களின்) நிலைமை பற்றியும் அறிவார் என்று நான் ஏன் கருதக்கூடாது? (அலிகளான) இவர்கள் உங்களிடம் ஒருபோதும் வர வேண்டாம்" என்று கூறினார்கள். எனவே, அவரை(ப் பெண்களைவிட்டு)த் தடுத்துவிட்டார்கள்.

## பாடம் : 14 சாலையில் களைப்புற்றுவிட்ட அந்நியப் பெண்ணை, ஒருவர் வாகனத்தில் அமர்த்திக்கொள்வது செல்லும்.

4397 அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

என்னை ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி) அவர்கள் (மக்காவிலிருந்தபோதே) மணந்துகொண்டார். இந்தப் பூமியில் அவருக்கு அவரது குதிரையை(யும் தண்ணீர் இறைக்கும் ஓர் ஒட்டகத்தையும்) தவிர வேறு எந்தச் சொத்துகளும் அடிமைகளும் உடைமைகளும் இருக்கவில்லை.

அந்தக் குதிரைக்கு நான் தீனி போடுவேன்; அதைப் பராமரிக்கும் பொறுப்புகளை நானே கவனித்துக்கொள்வேன்; (அதற்குத்) தண்ணீர் புகட்டுவேன்; அதை ஓட்டிச் செல்வேன்; தண்ணீர் இரைக்கும் அவரது ஒட்டகத்துக்காகப் பேரீச்சங் கொட்டைகளை இடித்து, அதற்கு ஊட்டுவேன்; தண்ணீர் இறைப்பேன்; அவரது தோல் கமலையைத் தைப்பேன்; மாவு குழைப்பேன். ஆனால், எனக்கு நன்றாக ரொட்டி சுடத்தெரியாது. என் அண்டை வீட்டு அன்சாரிப் பெண்களே எனக்கு ரொட்டி சுட்டுத்தருவார்கள். அப்பெண்கள் உண்மையாளர்களாயிருந்தனர்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் கணவருக்கு வருவாய் மானியமாக ஒதுக்கிய நிலத்திலிருந்து நானே பேரீச்சங் கொட்டைகளை(ப் பொறுக்கி) என் தலைமீது வைத்துச் சுமந்து வருவேன். அந்த நிலம் (என் வீட்டிலிருந்து) இரண்டு மைல் (3.5 கி.மீ) தொலைவில் இருந்தது.

ஒரு நாள் நான் பேரீச்சங் கொட்டைகளை என் தலைமீது சுமந்து வந்துகொண்டிருந்தேன். (வழியில்) நான், (என் சகோதரி ஆயிஷாவின் கணவரான) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சந்தித்தேன். அவர்களுடன் அவர்களுடைய தோழர்கள் சிலரும் இருந்தனர்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை அழைத்தார்கள். என்னைத் தமக்குப் பின்னால் (வாகனத்தில்) அமர்த்திக்கொள்வதற்காக "இஃக், இஃக்" என்று சொல்லித் தமது ஒட்டகத்தை மண்டியிட வைத்தார்கள். (ஆனால், நான் அவர்களது ஒட்டகத்தில் ஏறிக்கொள்ளவில்லை.)

(நான் வீட்டுக்கு வந்து என் கணவர் ஸுபைர் (ரலி) அவர்களிடம் நடந்ததைத் தெரிவித்துவிட்டு) "நான் வெட்கப்பட்டேன். மேலும், உங்களின் ரோஷத்தை நான் அறிந்துள்ளேன்" என்று கூறினேன். அதற்கு என் கணவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நீ வாகனத்தில் வருவதைவிடப் பேரீச்சங்கொட்டைகளை நீ சுமந்து வந்ததுதான் எனக்குக் கடினமானதாக இருக்கிறது" என்று கூறினார்.

(இவ்வாறாக வீட்டுப் பணிகளில் பெரும்பகுதியை நானே மேற்கொண்டுவந்தேன்.) இறுதியாக (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள் எனக்கு ஓர் (அடிமைப் பெண்) ஊழியரை

அனுப்பிவைத்தார்கள். அந்த ஊழியர் குதிரையைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். என்னவோ எனக்கு விடுதலை கிடைத்தது போல் இருந்தது.

4398 அஸ்மா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (என் கணவர்) ஸுபைர் (ரலி) அவர்களின் வீட்டுப் பணிகளைக் கவனித்துவந்தேன். என் கணவரிடம் குதிரையொன்று இருந்தது. அந்தக் குதிரையைப் பராமரிக்கும் பொறுப்பைப் போன்று வேறெந்தப் பணியும் எனக்குக் கடினமானதாக இருக்கவில்லை. அதற்காக நானே புற்பூண்டுகள் திரட்டுவேன்; அதைப் பராமரிப்பேன்; அதை நானே மேய்ப்பேன்.
பிறகு எனக்கு (என் தந்தை அபூபக்ர் மூலம், பெண்) ஊழியர் ஒருவர் கிடைத்தார். நபி (ஸல்) அவர்களிடம் போர்க் கைதிகள் சிலர் வந்தபோது, அவர்களில் (பெண்) ஊழியர் ஒருவரை எனக்கு (என் தந்தை வழியாகக்) கொடுத்தார்கள். அந்தப் பெண் (ஊழியர்) குதிரையைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, அதைப் பராமரிக்கும் பொறுப்பிலிருந்து என்னை விடுவித்தார்.
(இந்நிலையில்) ஒரு மனிதர் என்னிடம் வந்து, "அப்துல்லாஹ்வின் அன்னையே! நான் ஓர் ஏழை. நான் தங்கள் வீட்டு நிழலில் வியாபாரம் செய்ய விரும்புகிறேன்" என்று கூறி (அனுமதி கோரி)னார். நான் "உங்களுக்கு அனுமதி அளித்தால் (என் கணவர்) ஸுபைர் (ரலி) அவர்கள் அதை மறுப்பார். எனவே, (என் கணவர்) ஸுபைர் (ரலி) அவர்கள் (வீட்டில்) இருக்கும்போது நீங்கள் வந்து (இது போன்று) அனுமதி கேளுங்கள்" என்று கூறினேன்.
அவ்வாறே அம்மனிதர் வந்து, "அப்துல்லாஹ்வின் அன்னையே! நான் ஓர் ஏழை. நான் தங்கள் வீட்டு நிழலில் வியாபாரம் செய்ய விரும்புகிறேன்" என்று கேட்டார். உடனே நான் (அவருக்கு மறுப்புத் தெரிவிப்பது போல்) மதீனாவில் உமக்கு என் வீட்டைத் தவிர வேறிடம் கிடைக்கவில்லையா?" என்று கேட்டேன்.
அப்போது (என் கணவர்) ஸுபைர் (ரலி) அவர்கள் என்னிடம், "உனக்கு என்ன ஆயிற்று? ஓர் ஏழை வியாபாரி (நமது வீட்டு நிழலில்) வியாபாரம் செய்வதை நீ ஏன் தடுக்கிறாய்?" என்று கேட்டார். பிறகு அவர் வியாபாரம் செய்து (நல்ல) வருமானத்தைத் தேடிக் கொண்டார்.
அவருக்கே (எனது) அந்த அடிமைப் பெண்ணை நான் விற்றேன். அந்தக் காசை நான் எனது மடியில் வைத்துக்கொண்டிருந்த போது (என் கணவர்) ஸுபைர் (ரலி) அவர்கள் என்னிடம் வந்து, "அதை எனக்கு அன்பளிப்பாக வழங்கு" என்று கேட்டார். நான் "இதை ஏற்கெனவே தர்மமாக அளி(க்கத் தீர்மானி)த்து விட்டேன்" என்று கூறினேன்.

## பாடம் : 15 (மூவர் உள்ள இடத்தில் அவர்களில்) ஒருவரை விட்டுவிட்டு, அவரது சம்மதமின்றி இருவர் மட்டும் இரகசியம் பேசுவது தடை செய்யப்பட்டதாகும்.

4399 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மூவர் இருக்கும்போது ஒருவரை விட்டுவிட்டு இருவர் மட்டும் இரகசியம் பேச வேண்டாம்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பத்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4400 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் மூன்று பேர் இருக்கும்போது மூன்றாமவரை விட்டுவிட்டு, இரண்டுபேர் மட்டும் இரகசியம் பேச வேண்டாம்;நீங்கள் (மூவரும்) மக்களுடன் கலக்கும்வரை. (அவ்வாறு மூன்றாமவரை விட்டுவிட்டு இருவர் மட்டும் பேசுவது) அ(ந்த மூன்றாம)வரை வருத்தமடையச் செய்யும்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4401 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் மூன்று பேர் இருக்கும்போது உங்கள் நண்ப(ர் ஒருவ)ரை விட்டுவிட்டு, இரண்டுபேர் மட்டும் இரகசியம் பேச வேண்டாம். அ(வ்வாறு பேசுவ)து அவரை வருத்தமடையச் செய்யும்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 16 மருத்துவமும் நோயும் ஓதிப்பார்த்தலும்.

4402 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டால் அவர்களுக்கு (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள், "பிஸ்மில்லாஹி யுப்ரீக்க, வ மின் குல்லி தாயின் யஷ்ஃபீக்க, வ மின் ஷர்ரி ஹாசிதின் இதா ஹசத, வ ஷர்ரி குல்லி தீ அய்னின்" என்று ஓதிப்பார்ப்பார்கள்.
(பொருள்: அல்லாஹ்வின் பெயரால் (ஓதிப் பார்க்கிறேன்). அவன் உங்களுக்கு குணமளிப்பானாக! அனைத்து நோயிலிருந்தும் உங்களுக்குச் சுகமளிப்பானாக. பொறாமைக்காரன் பொறாமைப்படும்போது ஏற்படும் தீமையிலிருந்தும் கண்ணேறு உள்ள ஒவ்வொருவரின் தீமையிலிருந்தும் (காப்பானாக!).

4403 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்(கள் உடல் நலிவுற்றிருந்தபோது அவர்)களிடம் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து, "முஹம்மதே! உடல்நலம் பாதிக்கப்பட்டுள்ளதா?" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள். அப்போது, "பிஸ்மில்லாஹி அர்கீக்க, மின் குல்லி ஷைஇன் யுஃதீக்க, மின் ஷர்ரி குல்லி நஃப்சின் அவ் அய்னின் ஹாசிதின், அல்லாஹு யஷ்ஃபீக்க, பிஸ்மில்லாஹி அர்கீக்க" என்று ஓதிப்பார்த்தார்கள்.
(பொருள்: அல்லாஹ்வின் பெயரால் உமக்கு ஓதிப்பார்க்கிறேன். உமக்குத் தொல்லை தரும் அனைத்து அம்சங்களிலிருந்தும், பொறாமை கொள்ளக்கூடிய அனைவரின் அல்லது கண்களின் தீமையிலிருந்தும் உமக்கு அல்லாஹ் நிவாரணமளிப்பானாக. அல்லாஹ்வின் பெயரால் உமக்கு ஓதிப்பார்க்கிறேன்.)

4404 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின் வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கண்ணேறு உண்மையாகும்.

4405 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கண்ணேறு உண்மையாகும். தலைவிதியை ஏதேனும் ஒன்று வெல்ல முடியுமானால், கண்ணேறு அதை வென்றிருக்கும். (கண்ணேறுக்குக் காரணமான) உங்களிடம் குளித்துக் கொள்ளுமாறு கோரப்பட்டால் குளித்துக்கொள்ளுங்கள்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 17 சூனியம்.

4406 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
பனூ ஸுரைக் குலத்தைச் சேர்ந்த லபீத் பின் அல்அஃஸம் எனப்படும் யூதன் ஒருவன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குச் சூனியம் செய்துவிட்டான். இதையடுத்து தாம் செய்யாத ஒன்றைச் செய்வது போன்ற பிரமை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஏற்பட்டது. ஒரு நாள் அல்லது ஓர் இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். பிறகு (மீண்டும்) பிரார்த்தித்தார்கள். பிறகு (மீண்டும்) பிரார்த்தித்தார்கள்.
பிறகு கூறினார்கள்: ஆயிஷா! (விஷயம்) தெரியுமா? நான் எந்த விஷயத்தில் தெளிவைத் தரும்படி அல்லாஹ்விடம் கேட்டுக் கொண்டிருந்தேனோ அந்த விஷயத்தில் அல்லாஹ் எனக்குத் தெளிவை வழங்கிவிட்டான். (கனவில் வானவர்கள்) இரண்டு பேர் என்னிடம் வந்து, ஒருவர் என் தலைமாட்டிலும் இன்னொருவர் என் கால்மாட்டிலும் அமர்ந்து கொண்டனர்.

என் தலைமாட்டில் இருந்தவர் என் கால்மாட்டில் இருந்தவரிடம், அல்லது கால்மாட்டில் இருந்தவர் என் தலைமாட்டில் இருந்தவரிடம் "இந்த மனிதருக்கு என்ன நோய்?" என்று கேட்டார். மற்றவர், "சூனியம் செய்யப்பட்டுள்ளார்" என்று சொன்னார். அதற்கு அவர், "யார் அவருக்குச் சூனியம் வைத்தார்?" என்று கேட்டார். மற்றவர், "லபீத் பின் அல்அஃஸம்' என்று பதிலளித்தார். அவர், "எதில் (சூனியம் வைக்கப்பட்டுள்ளது)?" என்று கேட்க, மற்றவர், "சீப்பிலும் சிக்கு முடியிலும்" என்று பதிலளித்தார். மேலும், ஆண் பேரீச்சம்பாளையின் உறையில் என்றும் கூறினார்.
அவர், "எங்கே அ(ந்தச் சூனியம் வைக்கப்பட்டுள்ள)து?" என்று கேட்க, மற்றவர், "தூ அர்வான்' குலத்தாரின் கிணற்றி(லுள்ள கல் ஒன்றின் அடியி)ல் என்று பதிலளித்தார்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்கள் சிலருடன் அங்கு சென்றார்கள்.

பிறகு (என்னிடம்), "ஆயிஷா! அல்லாஹ்வின் மீதாணையாக! அந்தக் கிணற்றின் தண்ணீர் மருதாணிச் சாற்றைப் போன்று (கலங்கலாக) இருந்தது. அதன் பேரீச்ச மரங்கள் ஷைத்தான்களின் தலைகளைப் போன்று இருந்தன" என்று சொன்னார்கள். உடனே நான், "அல்லாஹ்வின் தூதரே? அதைத் தாங்கள் (வெளியில் எடுத்துக்காட்டி) எரித்திருக்கக் கூடாதா?" என்று கேட்டேன்.
அதற்கு அவர்கள், "இல்லை; அல்லாஹ் என்னைக் குணப்படுத்திவிட்டான். மக்களிடையே தீமையைப் பரப்ப நான் விரும்பவில்லை. எனவே, அதை நான் புதைத்துவிடும் படி கட்டளையிட்டுவிட்டேன். அவ்வாறே புதைக்கப்பட்டுவிட்டது" என்று பதிலளித்தார்கள்.

4407 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்று அந்தக் கிணற்றைப் பார்த்தார்கள். கிணற்றருகில் பேரீச்ச மரங்கள் இருந்தன" என்று இடம்பெற்றுள்ளது. மேலும் நான், "அல்லாஹ்வின் தூதரே! அந்தக் கட்டைத் தாங்கள் பிரித்துக் காட்டுங்கள்" எனக் கேட்டேன் என்றே காணப்படுகிறது. "அதைத் தாங்கள் எரித்திருக்கக் கூடாதா?" என்று கேட்டதாகவோ, "அதை நான் புதைத்துவிடும்படி கட்டளையிட்டேன். அவ்வாறே அது புதைக்கப்பட்டு விட்டது" என்று கூறியதாகவோ இடம்பெறவில்லை.

## பாடம் : 18 விஷம்.

4408 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
யூதப் பெண் ஒருத்தி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் விஷம் தோய்க்கப்பட்ட ஓர் ஆட்டை (அன்பளிப்பாக)க் கொண்டுவந்தாள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிலிருந்து (சிறிது) உண்டார்கள். பிறகு அவள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டாள். அவளிடம் அது பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விசாரித்தார்கள்.
அப்போது அவள், "நான் உங்களைக் கொல்ல விரும்பினேன்" என்றாள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதற்காக, அல்லது எனக்கெதிராக அல்லாஹ் உன்னைச் சாட்டியிருக்க வில்லை" என்று கூறினார்கள். மக்கள், "அவளை நாங்கள் கொன்றுவிடலாமா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "வேண்டாம்' என்று கூறிவிட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உள்நாக்குச் சதையில் அ(ந்த விஷத்தின் அடையாளத்)தை நான் தொடர்ந்து பார்த்துவந்தேன்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "யூதப் பெண் ஒருத்தி இறைச்சியில் விஷத்தை வைத்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவந்தாள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.

## பாடம் : 19 நோயாளிக்கு ஓதிப்பார்ப்பது விரும்பத்தக்கதாகும்.

4409 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்களில் ஒரு மனிதர் நோய்வாய்ப்பட்டால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வலக் கரத்தால் அவரைத் தடவிவிட்டுப் பிறகு, "அத்ஹிபில் பாஸ ரப்பந் நாஸ். வஷ்ஃபி அன்த்தஷ் ஷாஃபீ. லா ஷிஃபாஅ இல்லா ஷிஃபாஉக்க ஷிஃபாஅன் லா யுஃகாதிரு சகமன்" (மனிதர்களைப் படைத்துப் பராமரிப்பவனே! நோயைப் போக்கி அறவே நோயில்லாதவாறு குணமளிப்பாயாக. நீயே குணமளிப்பவன். உன் நிவாரணத்தைத் தவிர வேறு நிவாரணம் இல்லை) என்று பிரார்த்திப்பார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டு அவர்களது உடல் கனத்து விட்டபோது, அவர்கள் செய்துவந்ததைப் போன்றே செய்வதற்காக அவர்களது கையை நான் பிடித்தேன். உடனே அவர்கள் எனது கையிலிருந்து தமது கையை உருவிக்கொண்டு விட்டுப் பிறகு, "இறைவா! எனக்கு மன்னிப்பளிப்பாயாக! மிக்க மேலான தோழர்களுடன் (சொர்க்கத்தில்) என்னைச் சேர்த்தருள்வாயாக" என்று கூறினார்கள். நான் அவர்களை உற்றுப் பார்த்தபோது அவர்களது உயிர் பிரிந்துவிட்டிருந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஏழு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஹுஷைம், ஷுஅபா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், (அவர்களது "வலக் கரத்தால்' தடவினார்கள் என்பதற்குப் பதிலாக) "அவர்கள் தமது கரத்தால் தடவினார்கள்" என்று (பொதுவாக) இடம்பெற்றுள்ளது. சுஃப்யான் அஸ்ஸவ்ரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் தமது வலக் கரத்தால் தடவினார்கள்" என்று காணப்படுகிறது.

4410 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நோயாளியை உடல்நலம் விசாரிக்கச் சென்றால், "அத்ஹிபில் பாஸ, ரப்பந் நாஸ். இஷ்ஃபிஹி. அன்த்தஷ் ஷாஃபீ. லா ஷிஃபாஅ இல்லா ஷிஃபாஉக்க, ஷிஃபாஅன் லா யுஃகாதிரு சகமன்" என்று பிரார்த்திப்பார்கள். (பொருள்: மனிதர்களைப் படைத்துப் பராமரிப்பவனே! நோயைப் போக்கி அறவே நோயில்லாதவாறு குணமளிப்பாயாக. நீயே குணமளிப்பவன். உன் நிவாரணத்தை தவிர வேறு நிவாரணம் இல்லை.)

4411 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோயாளி ஒருவரிடம் சென்றால், "அத்ஹிபில் பாஸ, ரப்பந் நாஸ், வஷ்ஃபி அன்த்தஷ் ஷாஃபீ, லா ஷிஃபாஅ இல்லா ஷிஃபாஉக்க, ஷிஃபாஅன் லா யுஃகாதிரு சகமன்" என்று அவருக்காகப் பிரார்த்திப்பார்கள்.
(பொருள்: மனிதர்களைப் படைத்துப் பராமரிப்பவனே! நோயைப் போக்கி அறவே நோயில்லாதவாறு குணமளிப்பாயாக. நீயே குணமளிப்பவன். உன் நிவாரணத்தைத் தவிர வேறு நிவாரணம் இல்லை.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவருக்காகப் பிரார்த்தித்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. அதில் ("அன்த்தஷ் ஷாஃபீ" என்பதற்குப் பதிலாக) "வ அன்த்தஷ் ஷாஃபீ" என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4412 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அத்ஹிபில் பாஸ, ரப்பந் நாஸ். பி யதிகஷ் ஷிஃபாஉ. லா காஷிஃப லஹூ இல்லா அன்த்த" (மனிதர்களைப் படைத்துப் பராமரிப்பவனே! நோயைப் போக்குவாயாக. உன் கரத்திலேயே நிவாரணம் உள்ளது. உன்னைத் தவிர நோயை நீக்குபவர் வேறெவரும் இல்லை) என்று ஓதிப்பார்ப்பார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 20 பாதுகாப்புக் கோரும் அத்தியாயங்களால் ஓதிப்பார்ப்பதும் ஓதி ஊதுவதும்.

4413 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் வீட்டாரில் யாரேனும் நோய்வாய்ப்பட்டு விட்டால், அவருக்காகப் பாதுகாப்புக் கோரும் அத்தியாயங்களை ("அல்முஅவ்விதாத்") ஓதி ஊதுவார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்துபோனார்களோ அந்த நோயின்போது, நான் அவர்கள்மீது ஊதி அவர்களது கையாலேயே அவர்கள்மேல் தடவிவிட்டேன். ஏனெனில், அவர்களது கரம் எனது கரத்தைவிட வளம் (பரக்கத்) வாய்ந்ததாக இருந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4414 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டால் பாதுகாப்புக் கோரும் அத்தியாயங்களை ஓதித் தம்மீது ஊதிக்கொள்வார்கள். அவர்களது (இறப்புக்கு முன்) நோய் கடுமையானபோது, நான் அவற்றை ஓதி அவர்களின் (கையில் ஊதி அந்தக்) கையாலேயே (அவர்களின் உடல்மீது) தடவிக் கொண்டிருந்தேன். நபியவர்களின் கரத்திற்குள்ள வளத்தை (பரக்கத்தை) நாடியே அவ்வாறு செய்தேன்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் எந்த அறிவிப்பிலும் "அவர்களது கரத்திற்குள்ள வளத்தை (பரக்கத்தை) நாடியே அவ்வாறு செய்தேன்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை. மாலிக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டுமே அவ்வாறு இடம்பெற்றுள்ளது.

யூனுஸ், ஸியாத் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "நபி (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டால் பாதுகாப்புக் கோரும் அத்தியாயங்களைத் தமது கையில் ஓதி ஊதி, அதைத் தம்மீது தடவிக்கொள்வார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 21 கண்ணேறு, சின்னம்மை, விஷக்கடி, பார்வை ஆகியவற்றுக்காக ஓதிப்பார்ப்பது விரும்பத்தக்கதாகும்.**

4415 அஸ்வத் பின் யஸீத் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் ஓதிப்பார்ப்பது பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிகளில் ஒரு வீட்டாருக்கு ஒவ்வொரு விஷக்கடிக்கும் ஓதிப்பார்ப்பதற்கு அனுமதியளித்தார்கள்" என்று பதிலளித்தார்கள்.

4416 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிகளில் ஒரு வீட்டாருக்கு விஷக்கடிக்கு (நிவாரணம் பெற்றிட) ஓதிப்பார்ப்பதற்கு அனுமதியளித்தார்கள்.

4417 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (யாரேனும் ஒரு) மனிதருக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டால், அல்லது கொப்புளமோ காயமோ ஏற்பட்டால், தமது ஆட்காட்டி விரலைப் பூமியில் வைத்து (மண்ணைத் தொட்டு) விட்டு அதை உயர்த்தி, "அல்லாஹ்வின் பெயரால்! எங்களில் சிலரது உமிழ்நீரோடு எமது இந்தப் பூமியின் மண் (இணைந்தால் அது) எங்கள் இறைவனின் ஆணையின் பேரில் எங்களில் நோயுற்றிருப்பவரைக் குணப்படுத்தும்" என்று கூறுவார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ("குணப்படுத்தும்' என்பதைக் குறிக்க) "யுஷ்ஃபா' எனும் சொல் ஆளப்பட்டுள்ளது. ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "லி யுஷ்ஃபா சகீமுனா' எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

4418 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்ணேறுக்காக ஓதிப்பார்த்துக் கொள்ளும்படி எனக்குக் கட்டளையிட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4419 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்ணேறுக்காக ஓதிப்பார்த்துக் கொள்ளும்படி எனக்குக் கட்டளையிட்டுவந்தார்கள்.

4420 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் ஓதிப்பார்த்தல் குறித்துக் கூறியதாவது:
விஷக்கடி, சின்னம்மை, கண்ணேறு ஆகியவற்றுக்காக (ஓதிப்பார்ப்பதற்கு) அனுமதியளிக்கப் பட்டுள்ளது.

4421 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்ணேறு, விஷக்கடி, சின்னம்மை ஆகியவற்றுக்காக ஓதிப்பார்ப்பதற்கு அனுமதியளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4422 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என் வீட்டில் இருந்த ஒரு சிறுமியின் முகத்தில் படர்தாமரை இருப்பதைப் பார்த்துவிட்டு, "இவளுக்குக் கண்ணேறுபட்டிருக்கிறது. எனவே, இவளுக்கு ஓதிப்பாருங்கள்" என்று சொன்னார்கள். அதாவது அவள் முகத்தில் மஞ்சள் நிறத்தில் படர்தாமரை இருப்பதைக் கண்டார்கள்.

4423 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பாம்புக்கடிக்கு ஓதிப் பார்த்துக்கொள்ள "ஹஸ்ம்' குடும்பத்தாருக்கு அனுமதியளித்தார்கள். மேலும்,அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்களிடம், "என் சகோதரர் (ஜஅஃபரின்) மக்களுடைய உடல்களை நான் மெலிந்திருக்கக் காண்கிறேனே ஏன்? அவர்கள் வறுமையில் வாடுகின்றனரா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அஸ்மா (ரலி) அவர்கள், "இல்லை; கண்ணேறு அவர்களை வேகமாகப் பாதிக்கிறது" என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அவர்களுக்கு ஓதிப்பார்ப்பீராக" என்று கூறினார்கள். நான் அவர்களிடம் (ஒரு துஆவை) எடுத்துரைத்தேன். நபி (ஸல்) அவர்கள் "(அதையே) அவர்களுக்கு ஓதிப்பார்ப்பீராக" என்று கூறினார்கள்.

4424 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பாம்புக்கடிக்கு ஓதிப் பார்ப்பதற்கு "பனூ அம்ர்' குலத்தாருக்கு அனுமதியளித்தார்கள்.
இதன் அறிவிப்பாளரான அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: மேலும் ஜாபிர் (ரலி) அவர்கள், "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தபோது எங்களில் ஒருவரைத் தேள் கொட்டிவிட்டது. அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! நான் ஓதிப்பார்க்கட்டுமா?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவர் தம் சகோதரருக்குப் பயனளிக்க முடிந்தால் அவ்வாறே செய்யட்டும்" என்றார்கள் என்றும் கூறியதை நான் கேட்டேன்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "மக்களில் ஒருவர் "அல்லாஹ்வின் தூதரே! அவருக்கு நான் ஓதிப்பார்க்கட்டுமா (அர்கீஹி)?' என்று கேட்டார்"என்று இடம்பெற்றுள்ளது. "நான் ஓதிப்பார்க்கட்டுமா (அர்கீ)' எனும் வாசகம் இல்லை.

4425 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாய் மாமன் ஒருவர் தேள்கடிக்காக ஓதிப்பார்த்துவந்தார். இந்நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓதிப்பார்ப்பதற்குத் தடை விதித்துவிட்டார்கள். எனவே, அவர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் ஓதிப்பார்க்க வேண்டாமெனத் தடை செய்தீர்கள். நான் தேள்கடிக்காக ஓதிப்பார்த்துவருகிறேன்" என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவரால் தம் சகோதரருக்குப் பயனளிக்க முடிந்தால் அவ்வாறே செய்யட்டும்!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4426 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓதிப்பார்க்க வேண்டாமெனத் தடை விதித்தார்கள். அப்போது அம்ர் பின் ஹஸ்ம் குடும்பத்தார் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! தேள்கடிக்காக ஓதிப்பார்க்கும் வழக்கம் எங்களிடம் இருந்தது. (ஆனால்,) தாங்களோ ஓதிப்பார்க்க வேண்டாமெனத் தடை விதித்துவிட்டீர்கள்!" என்று கூறினார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அ(வர்கள் ஓதிப்பார்த்துவ)ந்த வாசகத்தைக் கூறுமாறு கேட்டார்கள். அவர்கள் அ(ந்த வாசகத்)தைக் கூறியபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் (இதில்) குறையெதையும் காணவில்லை. உங்களில் ஒருவரால் தம் சகோதரருக்குப் பயனளிக்க முடியுமானால் அவ்வாறே பயனளிக்கட்டும்!"என்று கூறினார்கள்.

## பாடம் : 22 (இறைவனுக்கு) இணை கற்பிக்கும் வாசகம் இல்லாத வரை ஓதிப்பார்ப்பதில் குற்றமில்லை.

4427 அவ்ஃப் பின் மாலிக் அல்அஷ்ஜஈ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அறியாமைக் காலத்தில் ஓதிப் பார்த்துவந்தோம். எனவே (நபியவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! இது குறித்து தாங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டோம். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "நீங்கள் ஓதிப்பார்ப்பதை என்னிடம் சொல்லிக்காட்டுங்கள். (இறைவனுக்கு) இணை கற்பிக்கும் வாசகம் இல்லையானால் ஓதிப்பார்த்தலில் எந்தக் குற்றமும் இல்லை" என்று கூறினார்கள்.

## பாடம் : 23 குர்ஆன், அல்லாஹ்வைத் துதிக்கும் சொற்கள் ஆகியவற்றால் ஓதிப்பார்ப்பதற்கு ஊதியம் பெறலாம்.

4428 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தோழர்களில் சிலர் ஒரு பயணத்தின் போது ஓர் அரபுக் குலத்தாரைக் கடந்துசென்றார்கள். அவர்கள் அக்குலத்தாரிடம் விருந்தளிக்குமாறு கோரியும் அவர்கள் விருந்தளிக்க முன்வரவில்லை. இந்நிலையில் (அக்குலத்தாரின் தலைவனுக்குத் தேள் கொட்டிவிட்டது). அப்போது அவர்கள் (நபித்தோழர்களிடம்)

"உங்களிடையே ஓதிப்பார்ப்பவர் எவரும் இருக்கிறாரா? ஏனெனில், (எங்கள்) குலத்தின் தலைவர் தேள்கடிக்கு உள்ளாகி இருக்கிறார்" என்று கூறினர்.
அப்போது நபித்தோழர்களில் ஒருவர், "ஆம்' என்று கூறிவிட்டு, அவரிடம் சென்று அவருக்கு "அல்ஃபாத்திஹா' அத்தியாயத்தின் மூலம் ஓதிப்பார்த்தார். உடனே அவர் குணமடையவும் செய்தார். (ஓதிப்பார்த்த நபித்தோழருக்கு) ஓர் ஆட்டு மந்தை (சன்மானமாகக்) கொடுக்கப்பட்டது. அத்தோழர் அதை ஏற்க மறுத்துவிட்டார். நபி (ஸல்) அவர்களிடம் இது பற்றிக் கூ(றி அனுமதிபெ)றாத வரை (நான் ஏற்கமாட்டேன்)" என்று கூறிவிட்டார்.
அவ்வாறே அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து தெரிவித்தார். "அல்லாஹவின் தூதரே! அல்லாஹ்வின் மீதாணையாக! "அல்ஃபாத்திஹா' மூலமாகத்தான் நான் ஓதிப்பார்த்தேன்" என்று கூறினார்.
அதைக் கேட்டு நபி (ஸல்) அவர்கள் புன்னகைத்தார்கள். மேலும், "அது (அந்த அத்தியாயம்) ஓதிப்பார்க்கத் தகுந்தது என்பது உமக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டுவிட்டு, "அவர்களிடமிருந்து அ(ந்தச் சன்மானத்)தைப் பெற்றுக்கொள்ளுங்கள். உங்களுடன் எனக்கும் அதில் ஒரு பங்கு கொடுங்கள்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அந்த நபித்தோழர் "குர்ஆனின் அன்னை' எனப்படும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை ஊதித் தமது எச்சிலைக் கூட்டி (கடிபட்ட இடத்தில்) உமிழ்ந்தார். உடனே அந்த மனிதர் வலி நீங்கி குணமடைந்தார்" என்று அபூபிஷ்ர் (ரஹ்) அவர்கள் கூறியதாக இடம் பெற்றுள்ளது.

4429 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு பயணத்தில்) ஓரிடத்தில் இறங்கித் தங்கினோம். அப்போது ஒரு பெண் எங்களிடம் வந்து, "எங்கள் கூட்டத் தலைவரை தேள் கொட்டிவிட்டது. அவர் உடல் நலிவுற்றுள்ளார். ஓதிப் பார்ப்பவர் எவரேனும் உங்களிடையே இருக்கிறாரா?" என்று கேட்டாள். அவளுடன் எங்களில் ஒரு மனிதர் சென்றார். அவருக்கு ஓதிப்பார்க்கத் தெரியும் என்று நாங்கள் நினைத்துக்கூட ("நழுன்னுஹு") பார்த்ததில்லை. அவர் "அல்ஃபாத்திஹா' அத்தியாயத்தைக் கொண்டு ஓதிப்பார்க்க, அந்தத் தலைவர் குணமடைந்து விட்டார். ஆகவே, அவருக்குச் சில ஆடுகளை வழங்கியதோடு எங்களுக்குப் பருகுவதற்குப் பாலும் கொடுத்தனர்.
(அந்த நண்பர் திரும்பி வந்தபோது) அவரிடம், "உமக்கு நன்றாக ஓதிப்பார்க்கத் தெரியுமா?" என்று கேட்டோம். அவர், "அவருக்கு நான் "அல்ஃபாத்திஹா' அத்தியாயத்தைத்தான் ஓதிப் பார்த்தேன்" என்று சொன்னார். அவரிடம் நான், "நபி (ஸல்) அவர்களிடம் செல்லும்வரை இதை அசைத்துவிடாதீர்கள்" என்று சொன்னேன்.
நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்றபோது, அதைப் பற்றி அவர்களிடம் சொன்னோம். அப்போது அவர்கள் "அது (அல்ஃபாத்திஹா அத்தியாயம்) ஓதிப்பார்க்கத் தக்கது என்று உமக்கு எப்படித் தெரியும்? அந்த ஆடுகளைப் பங்கிட்டுக்கொள்ளுங்கள்; அதில் ஒரு பங்கை எனக்கும் ஒதுக்குங்கள்" என்று சொன்னார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் அதில், "அவளுடன் எங்களில் ஒரு மனிதர் எழுந்து சென்றார். அவருக்கு ஓதிப்பார்க்கத் தெரியும் என்று நாங்கள் நினைத்ததுகூட ("ந∴பின்ஹு") இல்லை" என இடம் பெற்றுள்ளது.

**பாடம் : 24 (நோய்க்காகப்) பிரார்த்திக்கும்போது வலியுள்ள இடத்தில் கையை வைப்பது விரும்பத்தக்கதாகும்.**

4430 நா∴பிஉ பின் ஜுபைர் பின் முத்இம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் பின் அபில்ஆஸ் அஸ்ஸக∴பீ (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், தாம் இஸ்லாத்தைத் தழுவியது முதல் தமது உடலில் வலி ஏற்பட்டுள்ளதாக முறையிட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் உமது உடலில் வலியுள்ள இடத்தில் கையை வைத்து, 'பிஸ்மில்லாஹ்' என மூன்று தடவை கூறிவிட்டு, ஏழு தடவை "அவூது பில்லாஹி வ குத்ரத்திஹி மின் ஷர்ரி மா அஜிது வ உஹாதிரு' என்று சொல்வீராக" என்றார்கள்.
(பொருள்: நான் அல்லாஹ்விடம் அவனது ஆற்றலை முன்வைத்து, நான் (தற்போது) உணர்கின்ற தீமையிலிருந்தும் (எதிர்காலத்தில் ஏற்பட்டுவிடக்கூடாது என) நான் அஞ்சுகின்ற தீமையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 25 தொழுகையில் ஊசலாட்டங்களை ஏற்படுத்தக்கூடிய ஷைத்தானிடமிருந்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரல்.**

4431 அபுல்அலாஉ அல்ஆமிரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உஸ்மான் பின் அபில்ஆஸ் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! (நான் தொழுது கொண்டிருக்கும்போது) எனக்கும் எனது தொழுகைக்கும் எனது ஓதலுக்குமிடையே ஷைத்தான் தடையாய் நின்று எனக்குக் குழப்பத்தை ஏற்படுத்துகிறான்" என்று கூறினார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவன்தான் "கின்ஸப்' எனப்படும் ஷைத்தான் ஆவான். அவனை நீங்கள் உணர்ந்தால் அவனிடமிருந்து காக்குமாறு அல்லாஹ்விடம் கோரி, உங்கள் இடப் பக்கத்தில் மூன்று முறை துப்பிவிடுங்கள்" என்று கூறினார்கள். அவ்வாறே நான் செய்தபோது, என்னிடமிருந்து அவனை அல்லாஹ் அப்புறப்படுத்திவிட்டான்.
- மேற்கண்ட ஹதீஸ் உஸ்மான் பின் அபில்ஆஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அதில் "மூன்று தடவை' எனும் குறிப்பு இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் உஸ்மான் பின் அபில்ஆஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 26 ஒவ்வொரு நோய்க்கும் நிவாரணம் ஒன்று உண்டு என்பதும் மருத்துவ சிகிச்சை செய்துகொள்வது விரும்பத்தக்கதாகும் என்பதும்.**

4432 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வொரு நோய்க்கும் நிவாரணம் ஒன்று உண்டு. நோய்க்குரிய நிவாரணம் சரியாக அமைந்துவிட்டால், வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் அனுமதியால் குணம் ஏற்படும்.- இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4433 ஆஸிம் பின் உமர் பின் கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் முகன்னஉ பின் சினான் (ரஹ்) அவர்களை உடல்நலம் விசாரிக்கச் சென்றார்கள். பிறகு "நீங்கள் குருதி உறிஞ்சி எடுத்துக்கொள்ளாத வரை நான் விடமாட்டேன். ஏனெனில்,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், 'அதில் நிவாரணம் உள்ளது' என்று சொல்வதை நான் கேட்டுள்ளேன்"என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4434 ஆஸிம் பின் உமர் பின் கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் எங்கள் வீட்டாரிடம் வந்தார்கள். அப்போது (எங்கள் வீட்டில்) ஒருவருக்குக் கொப்புளம் அல்லது காயம் ஏற்பட்டிருந்தது. ஜாபிர் (ரலி) அவர்கள், "உமது உடம்புக்கு என்ன?" என்று கேட்டார்கள். அவர், "கொப்புளம் ஏற்பட்டு எனக்குக் கடுமையான சிரமம் ஏற்பட்டுள்ளது" என்றார்.

உடனே அவர்கள், "இளைஞரே! குருதி உறிஞ்சி எடுப்பவரை அழைத்துவருவீராக" என்றார்கள். அதற்கு அவர், "அபூஅப்தில்லாஹ் அவர்களே! குருதி உறிஞ்சி எடுப்பவரை வைத்து என்ன செய்யப்போகிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள் "குருதி உறிஞ்சும் கருவியை இ(ந்தக் கொப்புளத்)தில் பொருத்தப்போகிறேன்"என்றார்கள்.
அதற்கு அவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! ஈக்கள் என்னைத் துன்புறுத்துகின்றன; அல்லது ஆடை அதில் பட்டு என்னை வேதனைப்படுத்துகிறது. அதுவே என்னைச் சிரமப்படுத்துகிறது. (இந்நிலையில் குருதி உறிஞ்சும் கருவியைப் பொருத்தினால் என்னால் தாங்க முடியாது)" என்றார்.
அவர் சடைந்துபோவதைக் கண்ட ஜாபிர் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்கள் மருந்துகளில் ஒன்றில் நன்மை ஏதேனும் இருக்கிறதென்றால், (நோயின் தன்மைக்கு ஏற்றபடி) குருதி உறிஞ்சும் கருவியால் (உடலில்) கீறுவது, அல்லது தேன் அருந்துவது, அல்லது நெருப்பால் சூடிடுவதில்தான் அது உள்ளது" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன். மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(ஆயினும்) சூடிடுவதை நான் விரும்பவில்லை"என்று கூறினார்கள் என்றார்கள்.
அவ்வாறே குருதி உறிஞ்சி எடுப்பவர் வந்து காயத்தைக் கீறி குருதி உறிஞ்சி எடுத்தார். அந்த இளைஞருக்கு ஏற்பட்டிருந்த வலி நீங்கியது.

4435 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) உம்மு சலமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் குருதி உறிஞ்சி எடுத்துக்கொள்ள அனுமதி கேட்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் அவருக்குக் குருதி உறிஞ்சி எடுக்குமாறு அபூதைபாவுக்குக் கட்டளையிட்டார்கள்.
இதன் அறிவிப்பாளரான அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அபூதைபா, உம்மு சலமா (ரலி) அவர்களுக்குப் பால்குடிச் சகோதரராக, அல்லது பருவ வயதை அடையாத இளவலாக இருந்தார் என்றும் ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாக நான் கருதுகிறேன்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4436 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உபை பின் கஅப் (ரலி) அவர்களிடம் மருத்துவர் ஒருவரை அனுப்பிவைத்தார்கள். அவர் உபை பின் கஅப் (ரலி) அவர்களின் நரம்பு ஒன்றைத் துண்டித்து (குருதியை வடியச் செய்து,பின்னர்) அதன்மீது சூடிட்டார்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அவர், உபை பின் கஅப் (ரலி) அவர்களின் நரம்பு ஒன்றைத் துண்டித்தார்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

4437 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அகழ்ப்போரின்போது உபை பின் கஅப் (ரலி) அவர்களின் நாடி நரம்பில் அம்பு பாய்ந்து விட்டது. (இரத்தம் நிற்பதற்காகக் காயத்தின்மீது) அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சூடிட்(டுக் கொள்ளுமாறு உத்தரவிட்)டார்கள்.

4438 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அகழ்ப்போரின்போது) சஅத் பின் முஆத் (ரலி) அவர்களின் நாடி நரம்பில் அம்பு பாய்ந்து விட்டது. (இரத்தம் நிற்பதற்காக) நபி (ஸல்) அவர்கள் தமது கையிலிருந்த கத்தியால் அதன்மீது சூடிட்டார்கள். பிறகு அந்தக் காயம் வீங்கிவிட்டது. எனவே, மீண்டும் அதன்மீது சூடிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4439 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (நாவிதர் ஒருவர் மூலம்) குருதி உறிஞ்சி எடுத்துக்கொண்டார்கள். நாவிதருக்கு அதற்குரிய கூலியைக் கொடுத்தார்கள். மேலும், மூக்கில் சொட்டு மருந்து இட்டுக்கொண்டார்கள்.

4440 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குருதி உறிஞ்சி எடுத்துக்கொண்டார்கள். எவரது கூலியிலும் அவர்கள் அநீதி இழைத்ததில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4441 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காய்ச்சல் நரகத்தின் கடும் வெப்பத்தால் உண்டாகிறது. ஆகவே, அதைத் தண்ணீரால் (குளிர்வித்துத்) தணித்துக்கொள்ளுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கடுமையான காய்ச்சல் நரகத்தின் கடும் வெப்பத்தால் உண்டாகிறது. ஆகவே, அதைத் தண்ணீரால் (குளிர்வித்துத்) தணித்துக்கொள்ளுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4442 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காய்ச்சல் நரகத்தின் கடும் வெப்பத்தால் உண்டாகிறது. ஆகவே, அதைத் தண்ணீரால் அணைத்து விடுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4443 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காய்ச்சல் நரகத்தின் கடும் வெப்பத்தால் உண்டாகிறது. ஆகவே, அதைத் தண்ணீரால் அணைத்து விடுங்கள்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4444 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காய்ச்சல் நரகத்தின் கடும் வெப்பத்தால் உண்டாகிறது. ஆகவே, அதைத் தண்ணீரால் தணித்துக் கொள்ளுங்கள்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4445 ஃபாத்திமா பின்த் முன்திர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களிடம் காய்ச்சல் ஏற்பட்ட பெண் கொண்டுவரப்பட்டால், தண்ணீர் கொண்டுவரச் சொல்லி, அவளது சட்டையின் கழுத்துப் பகுதியில் ஊற்றி விடுவார்கள். மேலும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "காய்ச்சலைத் தண்ணீரால் தணியுங்கள். (ஏனெனில்) காய்ச்சல் நரகத்தின் கடும் வெப்பத்தால் உண்டாகிறது' என்று கூறினார்கள்" என்றும் சொல்வார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "தண்ணீரை எடுத்து அவளது ஆடையின் உட்பகுதியில் ஊற்றினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. அபூஉசாமா (ரஹ்)

அவர்களது அறிவிப்பில், "காய்ச்சல், நரகத்தின் கடும் வெப்பத்தால் உண்டாகிறது" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

4446 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காய்ச்சல், நரகத்தின் கடுமையான கொதிப்பால் உண்டாகிறது. ஆகவே, அதைத் தண்ணீரால் (குளிர்வித்துத்) தணித்துக்கொள்ளுங்கள்.
இதை ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4447 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காய்ச்சல் நரகத்தின் கடுமையான கொதிப்பால் உண்டாகிறது. ஆகவே, அதைத் தண்ணீரால் உங்களைவிட்டுத் தணித்துக் கொள்ளுங்கள்.
இதை ராஃபிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "உங்களைவிட்டு" எனும் சொற்றொடர் இடம்பெறவில்லை.

## பாடம் : 27 (நோயாளியை வற்புறுத்தி, அல்லது அவர் மயக்கத்திலிருக்கும்போது) வாய் ஓரத்தில் மருந்தூற்றி சிகிச்சையளிப்பது வெறுக்கத் தக்கதாகும்.

4448 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோயுற்று (அரை மயக்கத்தில்) இருந்தபோது, அவர்களது வாய் ஓரத்தில் மருந்தூற்றினோம். உடனே அவர்கள் "மருந்து ஊற்ற வேண்டாம்" என்று எங்களுக்குச் சைகை செய்தார்கள். "நோயாளி மருந்தை வெறுப்பது போன்று தான் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் வெறுக்கிறார்கள்; ஊற்ற வேண்டாமெனத் தடை செய்யவில்லை)" என்று நாங்கள் சொல்லிக்கொண்டோம்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு மயக்கம் தெளிந்தபோது, "ஒருவரும் விடுபடாமல் (வீட்டிலுள்ள) அனைவரது வாயிலும் மருந்தூற்றப்பட வேண்டும்; அப்பாஸ் அவர்களைத் தவிர! ஏனெனில், (என் வாயில் மருந்து ஊற்றும்போது) உங்களுடன் அவர் இருக்கவில்லை" என்று சொன்னார்கள்.

## பாடம் : 28 இந்தியக் குச்சியால் சிகிச்சையளிப்பது; அதுவே கோஷ்டக் குச்சி (அல்லது அகில்) ஆகும்.

4449 உக்காஷா பின் மிஹ்ஸன் (ரலி) அவர்களின் சகோதரி உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (பாலைத் தவிர வேறு திட) உணவு சாப்பிடாத என்னுடைய ஆண் குழந்தையுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். (அவர்கள் குழந்தையைத் தமது மடியில் உட்காரவைத்தார்கள்.) அப்போது குழந்தை அவர்கள்மீது சிறுநீர் கழித்துவிட்டது. உடனே அவர்கள் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி (சிறுநீர் பட்ட) அந்த இடத்தில் தெளித்தார்கள்.

உம்முகைஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் என்னுடைய ஆண் குழந்தையுடன் சென்றேன். அப்போது (அவனுக்கு ஏற்பட்டிருந்த) அடிநாக்கு அழற்சியைப் போக்க (அக்கால முறைப்படி) தொண்டையில் திரியைத் திணித்து விரலால் அழுத்தியிருந்தேன்.
(இதைக் கண்ணுற்ற) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்தச் சிகிச்சை முறையால் உங்கள் குழந்தைகளை (அடிநாக்கைக் குத்தி) ஏன் துன்புறுத்துகிறீர்கள்? இந்த இந்திய (கோஷ்ட)க் குச்சியைப் பயன்படுத்துங்கள். அதில் ஏழு (நோய்களுக்கு) நிவாரணங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று (மார்புத் தசை வாதத்தால் ஏற்படும்) விலா வலியாகும். அடிநாக்கு அழற்சிக்காக அதை(த் தூளாக்கி எண்ணெயில் குழைத்து) மூக்கில் சொட்டு மருந்தாக இடப்படும். (மார்புத் தசை வாதத்தால் ஏற்படும்) விலா வலிக்காக அதை வாயின் ஓரத்தில் சொட்டு மருந்தாகக் கொடுக்கப்படும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4450 உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உத்பா பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி அளித்த முதலாம் கட்ட ஹிஜ்ரத் மேற்கொண்டவர்களில் ஒருவரும் பனூ அசத் பின் குஸைமா குலத்தாரில் ஒருவரும் உக்காஷா பின் மிஹ்ஸன் (ரலி) அவர்களின் சகோதரியுமான உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன் (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள்:
நான் (பாலைத் தவிர வேறு திட) உணவு சாப்பிடும் பருவத்தை அடையாத என்னுடைய ஆண் குழந்தையுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். (அவனுக்கு ஏற்பட்டிருந்த) அடிநாக்கு அழற்சியைப் போக்க (அக்கால முறைப்படி) தொண்டையில் திரியைத் திணித்து விரலால் அழுத்தியிருந்தேன்.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான யூனுஸ் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: குழந்தைக்கு அடிநாக்கு அழற்சி ஏற்பட்டிருக்குமோ என்று அஞ்சி தொண்டையில் திரியை அழுத்திவைத்திருந்தார்).
(இதைக் கண்ணுற்ற) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்தச் சிகிச்சை முறையால் உங்கள் குழந்தைகளை ஏன் துன்புறுத்துகிறீர்கள்? இந்த இந்தியக் குச்சியை (அதாவது கோஷ்டக் குச்சியை)ப் பயன்படுத்துங்கள். அதில் ஏழு நிவாரணங்கள் உள்ளன. அவற்றில் (மார்புத் தசை வாதத்தால் ஏற்படும்) விலா வலியும் ஒன்றாகும்" என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர் உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
உம்மு கைஸ் (ரலி) அவர்கள், "அந்த ஆண் குழந்தைதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மடியில் சிறுநீர் கழித்தது. உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் கொண்டு வரச் சொல்லி, அந்தச் சிறுநீர் மீது தெளித்துவிட்டார்கள். நன்கு (தண்ணீர் ஊற்றிக்) கழுவவில்லை" என்றும் என்னிடம் தெரிவித்தார்கள்.

**பாடம் : 29 கருஞ்சீரகத்தால் சிகிச்சையளிப்பது.**

4451 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கருஞ்சீரகத்தில் "சாமை'த் தவிர, அதாவது மரணத்தைத் தவிர அனைத்து நோய்களுக்கும் நிவாரணம் உள்ளது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் எட்டு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் சுஃப்யான் பின் உயைனா, யூனுஸ் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் கருஞ்சீரகத்துக்கு (பாரசீக மொழியில் அளிக்கப்பட்டுள்ள) "ஷூனீஸ்' எனும் விளக்கம் இடம்பெறவில்லை.

4452 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எந்த நோயானாலும் அதற்குக் கருஞ்சீரகத்தில் நிவாரணம் இருந்தே தீரும்; மரணத்தைத் தவிர! – இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 30 "தல்பீனா' (எனும் பால் பாயசம்) நோயாளியின் மனதுக்கு ஆறுதல் அளிக்கக் கூடியதாகும்.**

4453 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்களுடைய குடும்பத்தாரில் யாரேனும் இறந்துவிட்டால்,அதற்காகப் பெண்கள் ஒன்றுகூடுவர். பிறகு ஆயிஷா (ரலி) அவர்களின் குடும்பத்தாரும் நெருங்கிய உறவினர்களும் தவிர மற்றப் பெண்கள் அனைவரும் கலைந்து சென்றுவிடுவார்கள்.
அப்போது ஒரு பாத்திரத்தில் "தல்பீனா' (எனும் பால் பாயசம்) தாயரிக்கும்படி ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுவார்கள். அவ்வாறே அது தயாரிக்கப்படும். பிறகு "ஸரீத்' எனும் (ரொட்டித் துண்டுகளைக் கறிக்குழம்பில் இட்டுத் தயாரிக்கப்படும் "தக்கடி' எனும்) உணவு தயாரிக்கப்படும். அதில் "தல்பீனா' ஊற்றப்படும்.
அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், "இதைச் சாப்பிடுங்கள்; ஏனெனில், தல்பீனா (எனும் பாயசம்) நோயாளியின் மனதுக்கு ஆறுதல் அளிக்கும்; கவலைகளில் சிலவற்றைப் போக்கும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்" என்று சொல்வார்கள்.

**பாடம் : 31 தேனூட்டி சிகிச்சையளிப்பது.**

4454 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து "என் சகோதரருக்கு வயிற்றுப்போக்கு ஏற்பட்டிருக்கிறது" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் "அவருக்குத் தேன் ஊட்டுங்கள்" என்று சொன்னார்கள். அவ்வாறே அவர் தேனூட்டிவிட்டுப் பிறகு (மீண்டும்) வந்து, "அவருக்கு

நான் தேனூட்டினேன். ஆனால், வயிற்றுப்போக்கு அதிகரிக்கவே செய்தது" என்று சொன்னார். இவ்வாறே (தேனூட்டுமாறு) மூன்று தடவை அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
நான்காவது தடவை அவர் வந்தபோது "அவருக்குத் தேன் ஊட்டுங்கள்" என்று கூறினார்கள். அப்போதும் அவர், "அவருக்கு நான் தேனூட்டவே செய்தேன்; வயிற்றுப்போக்கு அதிகரிக்கவே செய்தது" என்றார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(தேனில் நிவாரணம் இருப்பதாகக் குர்ஆனில்) அல்லாஹ் உண்மையே கூறியுள்ளான்; உங்கள் சகோதரரின் வயிறுதான் பொய் சொல்கிறது. (அவருக்குத் தேன் ஊட்டுங்கள்)"என்று சொன்னார்கள். அம்மனிதர் மீண்டும் தம் சகோதரருக்குத் தேன் ஊட்டினார். அதையடுத்து அவர் குணமடைந்தார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "என் சகோதரரின் இரைப்பை கெட்டுவிட்டது' என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் அவருக்குத் தேன் ஊட்டுங்கள்' என்று கூறினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 32 கொள்ளைநோய், பறவை சகுனம், சோதிடம் போன்றவை.

4455 ஆமிர் பின் சஅத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து கொள்ளைநோயைப் பற்றி நீங்கள் என்ன செவியுற்றுள்ளீர்கள்?" என்று கேட்டார்கள்.
அதற்கு உசாமா (ரலி) அவர்கள், "கொள்ளைநோய் என்பது "பனூ இஸ்ராயீல் சமுதாயத்தி(ல் ஒரு பிரிவினரி)ன் மீது'அல்லது "உங்களுக்கு முன்னிருந்தவர்கள்மீது' (அவர்களின் குற்றங்கள் அதிகரித்துவிட்டபோது) அனுப்பப்பட்ட ஒரு (வகை) "தண்டனை' அல்லது "வேதனை' ஆகும். அது ஒரு பிரதேசத்தில் இருப்பதாக நீங்கள் கேள்விப்பட்டால் அங்கு நீங்கள் செல்லாதீர்கள். நீங்கள் இருக்கின்ற பகுதியில் வந்துவிட்டால் அதிலிருந்து தப்புவதற்காக அங்கிருந்து வெளியேறிச் செல்லாதீர்கள்' என்று சொன்னார்கள்" எனப் பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபுந்நள்ர் (ரஹ்) அவர்கள் தமது அறிவிப்பில் பின்வருமாறு கூறியுள்ளார்கள்:
அதிலிருந்து தப்பியோடும் நோக்கத்துடன் மட்டுமே நீங்கள் அங்கிருந்து வெளியேறக் கூடாது. (வேறு ஏதாவது காரணத்திற்காக அங்கிருந்து நீங்கள் வெளியேறினால் அதற்குத் தடையில்லை.)

4456 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கொள்ளைநோய் என்பது தண்டனையின் அடையாளமாகும். அதன் மூலம் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் தன் அடியார்களில் (தான் நாடிய) சிலரைச் சோதிக்கின்றான். அது (ஓர் ஊரில் இருப்பது) குறித்து நீங்கள் கேள்விப்பட்டால், அங்கு நீங்கள் செல்லாதீர்கள். நீங்கள் இருக்கின்ற பகுதியில் அது ஏற்பட்டுவிட்டால், அங்கிருந்து வெருண்டோடாதீர்கள்.
இதை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இது அப்துல்லாஹ் பின் மஸ்லமா பின் கஅனப் (ரஹ்), குதைபா (ரஹ்) உள்ளிட்டோரின் அறிவிப்பில் இடம்பெற்றுள்ள வாசகமாகும்.

4457 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்தக் கொள்ளைநோய் "உங்களுக்கு முன்னிருந்தவர்கள்மீது' அல்லது "பனூ இஸ்ராயீல் சமுதாயத்தி(ல் ஒரு பிரிவினரி)ன் மீது' சாட்டப்பட்ட தண்டனையாகும். (நீங்கள் வசிக்கும்) ஓர் ஊரில் அது ஏற்பட்டிருந்தால், அதிலிருந்து தப்பிப்பதற்காக அங்கிருந்து வெளியேறாதீர்கள். ஓர் ஊரில் அது ஏற்பட்டிருந்தால் அங்கு நீங்கள் செல்லாதீர்கள்.
இதை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4458 ஆமிர் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர் கொள்ளைநோய் பற்றிக் கேட்டார்.
அப்போது (அங்கிருந்த) உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அதைப் பற்றி உமக்கு நான் தெரிவிக்கிறேன்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது "பனூ இஸ்ராயீல் சமுதாயத்தில் ஒரு கூட்டத்தார்மீது' அல்லது "உங்களுக்கு முன்னர் இருந்த சிலர்மீது' அல்லாஹ் அனுப்பிய "வேதனை'அல்லது "தண்டனை' ஆகும். அது ஓர் ஊரில் இருப்பதாக நீங்கள் கேள்விப்பட்டால், அங்கு நீங்கள் செல்லாதீர்கள். அது உங்களிடம் (உங்கள் ஊருக்குள்) வந்துவிட்டால் (அதிலிருந்து) தப்பிப்பதற்காக அங்கிருந்து வெளியேறாதீர்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4459 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்த (கொள்ளை) நோய் ஒரு தண்டனையாகும். அதன்மூலம் உங்களுக்கு முன்னிருந்த சில சமுதாயத்தார் வேதனை செய்யப்பட்டனர். பின்னர் அதில் சிறிதளவு பூமியில் எஞ்சிவிட்டது. எனவே, அது ஒருமுறை வரும். ஒருமுறை போகும். ஆகவே, அது ஓர் ஊரில் இருப்பதாகக் கேள்விப்படுபவர், அங்கு செல்லவே வேண்டாம். அது ஏற்பட்டிருக்கும் ஊரில் வசிப்பவர், அதிலிருந்து தப்பிப்பதற்காக (அங்கிருந்து) வெளியேறவே வேண்டாம்.
இதை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4460 ஹபீப் பின் அபீஸாபித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் மதீனாவில் இருந்தபோது கூஃபாவில் கொள்ளைநோய் பரவியிருப்பதாக எனக்குச் செய்தி கிடைத்தது. அப்போது அதாஉ பின் யசார் (ரஹ்) உள்ளிட்டோர் என்னிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நீ ஓர் ஊரில் இருக்கும்போது அங்கு கொள்ளைநோய் ஏற்பட்டுவிட்டால் அங்கிருந்து நீ வெளியேறாதே! அது ஓர் ஊரில் ஏற்பட்டிருப்பதாக உனக்குச் செய்தி கிடைத்தால், அங்கு நீ செல்லாதே' எனக் கூறினார்கள்" என்றனர்.
நான், "யாரிடமிருந்து (இதை நீங்கள் செவியுற்றீர்கள்)?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆமிர் பின் சஅத் பின் அபீவக் காஸ் (ரஹ்) அவர்கள் இதை அறிவிக்கிறார்" என்று பதிலளித்தார்கள். உடனே நான் ஆமிர் (ரஹ்) அவர்களிடம் சென்றேன். அவர் வெளியூர் சென்றிருப்பதாகக் கூறினர்.
ஆகவே, நான் ஆமிரின் சகோதரர் இப்ராஹீம் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்களைச் சந்தித்து அது குறித்துக் கேட்டேன். அப்போது இப்ராஹீம் பின் சஅத் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
(என் தந்தை) சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களுக்கு உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் பின்வருமாறு அறிவித்தார்கள். அங்கு நானுமிருந்தேன். உசாமா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்த (கொள்ளை)நோய் ஒரு தண்டனை, அல்லது வேதனை, அல்லது வேதனையின் மிச்சமாகும். அதன்மூலம் உங்களுக்கு முன்னிருந்த சிலர் வேதனை செய்யப்பட்டனர். நீங்கள் ஓர் ஊரில் இருக்க, அங்கு கொள்ளைநோய் ஏற்பட்டு விட்டால், அங்கிருந்து நீங்கள் வெளியேறிச் செல்லாதீர்கள். அது ஓர் ஊரில் ஏற்பட்டிருப்பதாக உங்களுக்குச் செய்தி கிடைத்தால், அங்கு நீங்கள் செல்லாதீர்கள்" என்று கூறினார்கள்.
தொடர்ந்து அறிவிப்பாளர் ஹபீப் பின் அபீஸாபித் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
உடனே நான் இப்ராஹீம் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்களிடம், "உசாமா (ரலி) அவர்கள் (உங்கள் தந்தை) சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடம் இதை அறிவித்தபோது நீங்கள் கேட்டீர்களா? சஅத் (ரலி) அவர்கள் அதை மறுக்கவில்லையா?" என்று கேட்டேன்.
அதற்கு இப்ராஹீம் (ரஹ்) அவர்கள், "ஆம் (சஅத் (ரலி) அவர்கள் அதை மறுக்கவில்லை)" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும் அதில் ஹதீஸின் ஆரம்பத்தில் உள்ள அதாஉ பின் யசார் (ரஹ்) அவர்கள் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் மாலிக் (ரலி), குஸைமா பின் ஸாபித் (ரலி), உசாமா பின் ஸைத் (ரலி) ஆகிய மூன்று நபித்தோழர்கள் வழியாகவும் (மூன்று அறிவிப்பாளர் தொடர்களில்) வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களும் சஅத் (ரலி) அவர்களும் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தனர். அப்போது அவர்கள் இருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்கள் கூறினார்கள் என (மேற்கண்ட ஹதீஸில் உள்ளதை) அறிவித்தனர்" என்று இப்ராஹீம் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்ராஹீம் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4461 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் (மக்களின் நிலையை ஆராய்வதற்காக) ஷாம் (சிரியா) நாட்டை நோக்கிப் புறப்பட்டார்கள். "சர்ஃக்' எனும் இடத்தை அடைந்த போது, (மாகாண) படைத்தளபதிகளான அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்களும் அவர்களின் நண்பர்களும் உமர் (ரலி) அவர்களைச் சந்தித்து ஷாம் நாட்டில் கொள்ளைநோய் பரவியுள்ளது எனறு தெரிவித்தனர்.
அதற்கு உமர் (ரலி) அவர்கள், "ஆரம்பக்கால முஹாஜிர்களை என்னிடம் அழைத்து வாருங்கள்" என்று சொல்ல,அவர்களை நான் (உமர் (ரலி) அவர்களிடம்) அழைத்துவந்தேன். அவர்களிடம் ஷாம் நாட்டில் கொள்ளைநோய் பரவியுள்ளது என்று தெரிவித்து (அங்கு போகலாமா? மதீனாவுக்கே திரும்பிச் சென்றுவிடலாமா? என்று) ஆலோசனை கேட்டார்கள்.
இது தொடர்பாக முஹாஜிர்களிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அவர்களில் சிலர், "தாங்கள் ஒரு நோக்கத்திற்காகப் புறப்பட்டுவிட்டீர்கள். அதிலிருந்து பின்வாங்குவதை நாங்கள் உசிதமாகக் கருதவில்லை" என்று சொன்னார்கள்.
வேறுசிலர், "உங்களுடன் (மற்ற) மக்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களும் உள்ளனர். அவர்களையெல்லாம் இந்தக் கொள்ளைநோயை நோக்கிக் கொண்டுசெல்வதை நாங்கள் சரியென்று கருதவில்லை" என்று சொன்னார்கள்.
உமர் (ரலி) அவர்கள் "நீங்கள் போகலாம்" என்று சொல்லிவிட்டுப் பிறகு, "என்னிடம் (மதீனாவாசிகளான) அன்சாரிகளை அழைத்து வாருங்கள்" என்று சொல்ல, நான் அவர்களை அழைத்துவந்தேன். அவர்களிடமும் உமர் (ரலி) அவர்கள் ஆலோசனை கேட்டார்கள். அவர்களும் முஹாஜிர்களைப் போன்றே கருத்துத் தெரிவித்துக் கருத்து வேறுபாடு கொண்டனர். உமர் (ரலி) அவர்கள் "நீங்களும் போகலாம்" என்று கூறினார்கள்.
பிறகு, "மக்கா வெற்றி ஆண்டில் (மதீனாவுக்குப்) புலம்பெயர்ந்துவந்த குறைஷிப் பெரியவர்களில் யார் இங்கு உள்ளனரோ அவர்களை என்னிடம் அழைத்துவாருங்கள்" என்று சொல்ல, நான் அவர்களை அழைத்துவந்தேன். அவர்களில் எந்த இருவருக்கிடையேயும் கருத்து வேறுபாடு எழவில்லை. அவர்கள் (அனைவரும்) மக்களுடன் நீங்கள் (மதீனாவுக்குத்) திரும்பிவிட வேண்டும்; அவர்களை இந்தக் கொள்ளைநோயை நோக்கிக் கொண்டுசெல்லக் கூடாது என நாங்கள் கருதுகிறோம்" என்று கூறினர்.
ஆகவே, உமர் (ரலி) அவர்கள் மக்களிடையே "நான் காலையில் (என்) வாகனத்தில் (மதீனா) புறப்படப்போகிறேன்;நீங்களும் காலையில் பயணத்திற்குத் தயாராகுங்கள்" என்று அறிவிப்புச் செய்தார்கள்.
அப்போது அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் விதியிலிருந்து வெருண்டோடுவதற்காகவா (ஊர் திரும்புகிறீர்கள்)?" என்று கேட்க, உமர் (ரலி) அவர்கள், "அபூ உபைதா! உங்களைத் தவிர வேறு எவரேனும் இவ்வாறு கூறியிருந்தால் நான் ஆச்சரியப்பட்டிருக்க மாட்டேன். (உமர் (ரலி) அவர்கள், தமக்கு மாறாகக் கருத்துக் கூறுவதை

வெறுப்பார்கள்.) ஆம். நாம் அல்லாஹ்வின் ஒரு விதியிலிருந்து இன்னொரு விதியின் பக்கமே வெருண்டோடுகிறோம். உங்களிடம் ஓர் ஒட்டகம் இருந்து, அது ஒரு பக்கம் செழிப்பானதாகவும் மறு பக்கம் வறண்டதாகவும் உள்ள இருகரைகள் கொண்ட ஒரு பள்ளத்தாக்கில் இறங்கிவிட்டால், செழிப்பான கரையில் நீங்கள் அதை மேய்த்தாலும் அல்லாஹ்வின் விதிப்படிதான் அதை நீங்கள் மேய்க்கிறீர்கள். வறண்ட கரையில் அதை நீங்கள் மேய்த்தாலும் அல்லாஹ்வின் விதிப்படிதான் நீங்கள் மேய்க்கிறீர்கள், அல்லவா?" என்று கேட்டார்கள்.

அப்போது தமது தேவையொன்றுக்காக வெளியே சென்றிருந்த அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் (அங்கு) வந்து, "இது தொடர்பாக என்னிடம் ஒரு விளக்கம் உள்ளது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஓர் ஊரில் கொள்ளைநோய் பரவியிருப்பதாக நீங்கள் கேள்விப்பட்டால், அந்த ஊருக்கு நீங்கள் செல்லாதீர்கள். நீங்கள் ஓர் ஊரில் இருக்கும் போது அங்கு கொள்ளைநோய் பரவினால் அதிலிருந்து தப்புவதற்காக (அங்கிருந்து) வெளியேறாதீர்கள்' என்று சொல்ல நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

உடனே உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் (தமது முடிவை நபி (ஸல்) அவர்களின் வழிகாட்டுதலுக்கேற்ப அமையச் செய்ததற்காக) அல்லாஹ்வைப் புகழ்ந்துவிட்டு (மதீனாவுக்கு)த் திரும்பிச் சென்றார்கள்.

4462 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் மஅமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மேலும், உமர் (ரலி) அவர்கள் அபூஉபைதா (ரலி) அவர்களிடம் "ஒருவர் செழிப்பான கரையை விட்டுவிட்டு வறண்ட கரையில் தமது ஒட்டகத்தை மேயவிட்டால் அவரைக் கையாலாகாதவர் என்று நீங்கள் கருதுவீர்களா, சொல்லுங்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு அபூஉபைதா (ரலி) அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள். உமர் (ரலி) அவர்கள் "அவ்வாறாயின் செல்லுங்கள்' என்று கூறிய அவர்கள்,பயணம் மேற்கொண்டு மதீனா வந்தடைந்தார்கள். பிறகு "அல்லாஹ் நாடினால் இதுதான் நமது தங்குமிடம்' என்று சொன்னார்கள்" என்று கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4463 அப்துல்லாஹ் பின் ஆமிர் பின் ரபீஆ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

(கலீஃபா) உமர் (ரலி) அவர்கள் ஷாம் (சிரியா) நாட்டை நோக்கிப் புறப்பட்டார்கள். "சர்ஃக்' எனுமிடத்தை அவர்கள் அடைந்த போது ஷாம் நாட்டில் கொள்ளைநோய் பரவியிருப்பதாக அவர்களுக்குச் செய்தி கிடைத்தது. அப்போது அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள், "ஓர் ஊரில் கொள்ளைநோய் பரவியிருப்பதாக நீங்கள் கேள்விப்பட்டால்,அங்கு நீங்கள் செல்லாதீர்கள். நீங்கள் ஓர் ஊரில் இருக்கும்போது அங்கு கொள்ளை நோய் பரவிவிட்டால், அதிலிருந்து தப்புவதற்காக அங்கிருந்து நீங்கள் வெளியேறாதீர்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக உமர் (ரலி) அவர்களிடம் தெரிவித்தார்கள். உடனே உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் "சர்ஃக்' எனுமிடத்திலிருந்து திரும்பினார்கள்.

இந்த ஹதீஸ், சாலிம் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் வழியாக மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.
அதில் "அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களிடமிருந்து செவியுற்ற நபிமொழியின் காரணத்தாலேயே உமர் (ரலி) அவர்கள் மக்களுடன் (மதீனாவுக்குத்) திரும்பிச் சென்றார்கள்" என்று சாலிம் (ரஹ்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

பாடம் : 33 தொற்றுநோய், பறவை சகுனம், ஆந்தை பற்றிய நம்பிக்கை, "ஸஃபர்' எனும் வயிற்று நோய் (தொற்று நோய் என்பது) பற்றிய எண்ணம், நட்சத்திர இயக்கத்தால்தான் மழை பொழிகிறது எனும் நம்பிக்கை, வர்ணஜாலம் காட்டும் சாத்தான் பற்றிய நம்பிக்கை ஆகியன கிடையாது என்பதும், நோய் கண்ட ஒட்டகத்தை ஆரோக்கியமான ஒட்டகத்திடம் கொண்டுசெல்லக் கூடாது என்பதும்.

4464 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தொற்றுநோய் கிடையாது; ஸஃபர் (தொற்று நோய்) என்பது கிடையாது;ஆந்தையால் சகுனம் பார்ப்பதும் கிடையாது" என்று சொன்னார்கள். அப்போது கிராமவாசி ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! (பாலை) மணலில் மான்களைப் போன்று (ஆரோக்கியத்துடன் துள்ளித்திரியும்) ஒட்டகங்களிடம், சிரங்கு பிடித்த ஒட்டகம் வந்து, அவற்றுக்கிடையே கலந்து அவை அனைத்தையும் சிரங்கு பிடித்தவையாக ஆக்கிவிடுகின்றனவே! அவற்றின் நிலையென்ன (தொற்று நோயில்லையா)?" என்று கேட்டார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியென்றால் முதல் (முதலில் சிரங்கு பிடித்த) ஒட்டகத்திற்கு (அந்த நோயைத்) தொற்றச்செய்தது யார்?" என்று திருப்பிக் கேட்டார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4465 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தொற்றுநோய் கிடையாது; பறவை சகுனம் கிடையாது; ஸஃபர் (தொற்றுநோய்) என்பது கிடையாது; ஆந்தையால் சகுனம் பார்ப்பதும் கிடையாது என்று கூறினார்கள். அப்போது ஒரு கிராமவாசி மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி கேட்டார்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன.

4466 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நபி (ஸல்) அவர்கள், "தொற்றுநோய் கிடையாது' என்று சொன்னார்கள். உடனே கிராமவாசி ஒருவர் எழுந்து மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளபடி கேட்டார்" என்று இடம் பெற்றுள்ளது.
மேற்கண்ட ஹதீஸ் சாயிப் பின் யஸீத் (ரலி) அவர்கள் வழியாகவும் வந்துள்ளது. அதில், "நபி (ஸல்) அவர்கள் தொற்று நோய் கிடையாது; ஸஃபர் (தொற்று நோய்) என்பது

கிடையாது; ஆந்தையால் சகுனம் பார்ப்பதும் கிடையாது என்று கூறினார்கள்" என இடம் பெற்றுள்ளது.

4467 இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தொற்றுநோய் கிடையாது' என்று கூறினார்கள் என்றும், "நோய் கண்ட கால்நடையை ஆரோக்கியமான கால்நடையிடம் கொண்டுசெல்லக் கூடாது' என்றும் கூறினார்கள்" என்றார்கள்.
இவ்விரு ஹதீஸ்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்தார்கள். பிறகு "தொற்றுநோய் கிடையாது" எனும் ஹதீஸை அறிவிப்பதை நிறுத்திவிட்டு, "நோய் கண்ட கால்நடையை ஆரோக்கியமான கால்நடையிடம் கொண்டுசெல்லக் கூடாது" என்பதை மட்டும் அறிவிக்கலானார்கள்.
அப்போது (அபூஹுரைரா (ரலி) அவர்களின் தந்தையின் சகோதரரின் புதல்வர்) ஹாரிஸ் பின் அபீதுபாப் (ரஹ்) அவர்கள், "அபூஹுரைரா! இந்த ஹதீஸுடன் மற்றொரு ஹதீஸையும் நீங்கள் அறிவிப்பதை நான் கேட்டிருக்கிறேனே! ஆனால், அதை நீங்கள் அறிவிக்காமல் அமைதியாகிவிடுகிறீர்களே? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தொற்றுநோய் கிடையாது' என்று கூறினார்கள் என நீங்கள் அறிவித்து வந்தீர்களே?" என்று கேட்டார்.
அபூஹுரைரா (ரலி) அவர்கள் அது பற்றி தமக்குத் தெரியாது என்று மறுத்தார்கள். "நோய் கண்ட கால்நடையை ஆரோக்கியமான கால்நடையிடம் கொண்டுசெல்லக் கூடாது" என்பதை மட்டுமே கூறினார்கள்.
ஹாரிஸ், தாம் கூறுவதை ஏற்காததைக் கண்ட அபூஹுரைரா (ரலி) அவர்கள் கோபமுற்று அபிசீனிய மொழியில் ஏதோ சொன்னார்கள். "நான் என்ன சொன்னேன் என்று நீ அறிவாயா?" என்று கேட்டார்கள். அதற்கு ஹாரிஸ் "இல்லை"என்றார். அபூஹுரைரா (ரலி) அவர்கள் "நான் (அதை) மறுக்கிறேன்" என்றார்கள்.
அபூசலமா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: என் ஆயுளின் (அதிபதி) மீதாணையாக! (முன்னர்) அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொற்றுநோய் கிடையாது என்று கூறினார்கள்" என அறிவித்துவந்தார்கள். (அதை) அபூஹுரைரா (ரலி) அவர்கள் மறந்து விட்டார்களா? அல்லது நபிகளாரின் ஒரு ஹதீஸ் மற்றொரு ஹதீஸை மாற்றிவிட்டதா என்பது எனக்குத் தெரியவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4468 மேற்கண்ட ஹதீஸ் அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அபூஹுரைரா (ரலி) அவர்கள் "தொற்றுநோய் கிடையாது' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அறிவித்துவிட்டு, "நோய் கண்ட கால்நடையை ஆரோக்கியமான கால்நடையிடம் கொண்டுசெல்லக் கூடாது' என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அறிவித்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4469 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொற்றுநோய் கிடையாது; ஆந்தை பற்றிய (மூட)நம்பிக்கையும் (உண்மை) இல்லை; நட்சத்திர இயக்கத்தால்தான் மழை பொழிகிறது என்பதும் (உண்மை) இல்லை; ஸஃபர் (தொற்று நோய்) என்பதும் கிடையாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4470 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொற்றுநோய் கிடையாது; பறவை சகுனம் கிடையாது; வர்ணஜாலம் காட்டும் சாத்தானும் கிடையாது.– இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4471 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொற்றுநோய் கிடையாது; வர்ணஜாலம் காட்டும் சாத்தானும் கிடையாது; ஸஃபர் (தொற்றுநோய்) என்பதும் கிடையாது.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4472 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொற்றுநோய் கிடையாது; ஸஃபர் (தொற்றுநோய்) என்பதும் கிடையாது; வர்ணஜாலம் காட்டும் சாத்தானும் கிடையாது.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: ஜாபிர் (ரலி) அவர்கள் "ஸஃபர் கிடையாது' என்பதற்கு விளக்கமளிக்கையில், "ஸஃபர் என்பது வயிறாகும்" என்று கூறினார்கள். ஜாபிர் (ரலி) அவர்களிடம், "(அது) எப்படி?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "வயிற்றில் உருவாகும் ஒரு புழுவாகும் என்று சொல்லப் படுவதுண்டு" என்றார்கள்.
ஆனால், ஜாபிர் (ரலி) அவர்கள், ("வர்ண ஜாலம் காட்டும் சாத்தான்' என்பதைக் குறிக்க மூலத்தில் ஆளப்பட்டுள்ள) "ஃகூல்' என்பதற்கு விளக்கமளிக்கவில்லை. ஆயினும், பல வண்ணம் காட்டுவதே இந்த "ஃகூல்' என்பதாகும்.
இதை அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாக இப்னு ஜுரைஜ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 34 பறவை சகுனமும் நற்குறியும் அபசகுனம் எதில் உள்ளது என்பதும்.

4473 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "பறவை சகுனம் ஏதும் கிடையாது. சகுனங்களில் சிறந்தது நற்குறியாகும்" என்று கூறியதை நான் செவியுற்றேன். அப்போது, "நற்குறி என்பது என்ன, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "நீங்கள் செவியுறுகின்ற நல்ல (மங்கலகரமான) சொல்தான்" என்று பதிலளித்தார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் உகைல் பின் காலித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "செவியுற்றேன்" என்ற குறிப்பு இடம்பெறவில்லை. ஷுஐப் பின் அல்லைஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்கள் கூறியதைச் செவியுற்றேன்" என இடம்பெற்றுள்ளது.

4474 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொற்றுநோய் கிடையாது; பறவை சகுனம் ஏதும் கிடையாது; நற்குறி எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது. (மங்கலகரமான) நல்ல, அழகான சொல்லே நற்குறி ஆகும்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4475 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "தொற்றுநோய் கிடையாது; பறவை சகுனம் ஏதும் கிடையாது. ஆனால், நற்குறி எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது" என்று சொன்னார்கள். அப்போது "நற்குறி என்றால் என்ன?" என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள், "(மங்கலகரமான) நல்ல சொல்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4476 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொற்றுநோய் கிடையாது; பறவை சகுனம் ஏதும் கிடையாது; (ஆனால்) நற்குறியை நான் விரும்புகிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4477 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொற்றுநோய் கிடையாது; ஆந்தை பற்றிய (மூட)நம்பிக்கை (உண்மை) இல்லை; பறவை சகுனம் ஏதும் கிடையாது. (ஆனால்,) நான் நற்குறியை விரும்புகிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4478 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அபசகுனம் (இருப்பதென்றால்) மனை, மனைவி, புரவி (குதிரை) ஆகிய மூன்றில்தான் இருக்கும். – இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4479 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தொற்றுநோய் கிடையாது; பறவை சகுனம் கிடையாது; சகுனம் பார்ப்பது (இருப்பதென்றால்) மூன்று விஷயங்களில்தான். மனைவியிலும் குதிரையிலும் (குடியிருக்கும்) வீட்டிலும்தான்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- அபசகுனம் தொடர்பான மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பத்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் யூனுஸ் பின் யஸீத் (ரஹ்) அவர்களைத் தவிர வேறெவரது அறிவிப்பிலும் தொற்றுநோய், பறவை சகுனம் ஆகியவை பற்றிய குறிப்பு இல்லை.

4480 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அபசகுனத்தில் ஏதேனும் உண்மை இருக்குமானால், குதிரையிலும் மனைவியிலும் வீட்டிலும்தான் இருக்கும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "உண்மை' எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

4481 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அபசகுனம் எதிலேனும் இருக்குமானால், குதிரையிலும் வீட்டிலும் மனைவியிலும்தான் இருக்கும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4482 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அது –அதாவது அபசகுனம்– (எதிலேனும்) இருக்குமானால், மனைவியிலும் குதிரையிலும் வீட்டிலும்தான் இருக்கும்.
இதை சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4483 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அ(பசகுனமான)து எதிலேனும் இருக்கு மானால், வீட்டிலும் பணியாளரிலும் குதிரையிலும் தான் இருக்கும்.– இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 35 சோதிடம் பார்ப்பதும் சோதிடர்களிடம் செல்வதும் தடை செய்யப்பட்டவை ஆகும்.

4484 முஆவியா பின் அல்ஹகம் அஸ்ஸுலமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அறியாமைக் காலத்தில் பல (பாவ) காரியங்களைச் செய்துவந்தோம்; சோதிடர்களிடம் சென்று (குறி கேட்டுக்) கொண்டிருந்தோம்" என்று கூறினேன். அதற்கு அவர்கள், "சோதிடர்களிடம் நீங்கள் செல்லாதீர்கள்" என்றார்கள். மேலும், "நாங்கள் பறவையை வைத்துக் குறி பார்த்துக் கொண்டிருந்தோம்" என்று நான் கூறினேன். அதற்கு நபியவர்கள், "இது உங்களில் சிலர் தம் உள்ளங்களில் காணும் (ஐதிகம் சார்ந்த) விஷயமாகும். இது உங்களை (செயலாற்றுவதிலிருந்து) தடுத்துவிட வேண்டாம்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் முஆவியா பின் அல் ஹகம் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் மாலிக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பறவை சகுனம் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது; சோதிடர்கள் பற்றிய குறிப்பு இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் முஆவியா பின் அல்ஹகம் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் யஹ்யா பின் அபீகஸீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான், "எங்களில் சிலர் (நற்குறி அறிய மணலில்) கோடு வரை(யும் பழங்கால கணிப்பு முறையை மேற்கொள்)கின்றனர்' என்றேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நபிமார்களில் ஒருவர் (இவ்வாறு) கோடு வரைந்துவந்தார். யார் அவரைப் போன்று கோடு வரைகிறாரோ அது (சாத்தியம்)தான்' என்று பதிலளித்தார்கள்" என முஆவியா பின் அல்ஹகம் (ரலி) அவர்கள் கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4485 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! சோதிடர்கள் (சில வேளைகளில்) எங்களுக்கு ஒன்றை அறிவிக்க, அது உண்மையாகிவிடுவதைக் காண்கிறோமே (அது எப்படி)?" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், "அது ஜின்னிடமிருந்து சோதிடன் எடுத்துக் கொண்ட உண்மையான சொல்லாகும். அ(ந்த உண்மையான கருத்)தை ஜின் தனது சோதிட நண்பனின் காதில் போட, அதனுடன் அவன் நூறு பொய்களைக் கூட்டி(ச் சொல்லி) விடுகிறான்" என்று பதிலளித்தார்கள்.

4486 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் மக்களில் சிலர் சோதிடர்களைப் பற்றிக் கேட்டனர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்கள் (பொருட்படுத்தத்தக்க) ஒரு பொருள் அல்லர்" என்று சொன்னார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! இந்தச் சோதிடர்கள் (சில வேளைகளில்) ஒன்றை அறிவிக்கிறார்கள்; அது உண்மையாகிவிடுகிறதே?" என்று கேட்டார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அந்த உண்மையான சொல் (வானவர்களிடமிருந்து) ஜின் (கள்ளத்தனமாக) எடுத்துக்கொண்டதாகும். அது தன் சோதிட நண்பனின் காதில் கோழி கொக்கரிப்பதைப் போன்று கொக்கரிக்க, அவன் அதனுடன் நூற்றுக்கும் அதிகமான பொய்களைக் கலந்துவிடுகிறான்" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4487 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரி நபித்தோழர்களில் ஒருவர் என்னிடம் (பின்வருமாறு) கூறினார்:
ஒரு நாள் இரவில் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது (வானிலிருந்து) ஒரு நட்சத்திரம் எறியப்பட்டு ஒளிர்ந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடம் "இதைப் போன்று (வானிலிருந்து) நட்சத்திரம் எறியப்பட்டால், நீங்கள் அறியாமைக் காலத்தில் என்ன சொல்லிக் கொண்டிருந்தீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "அல்லாஹ்வும் அவனுடைய

தூதருமே நன்கறிந்தவர்கள். (அறியாமைக் காலத்தில் இவ்வாறு நட்சத்திரம் எறியப்பட்டால்) இன்றிரவு ஒரு மாமனிதர் பிறந்திருக்கிறார்; ஒரு மாமனிதர் இறந்திருக்கிறார் என்று சொல்லிக் கொண்டிருந்தோம்" என்று பதிலளித்தனர்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யாருடைய பிறப்புக்காகவோ யாருடைய இறப்புக்காகவோ அது எறியப்படுவதில்லை. மாறாக, வளமும் புகழும் கொண்ட நம் இறைவன் ஒரு விஷயத்தைத் தீர்மானித்துவிட்டால், அரியணையை (அர்ஷ்) சுமக்கும் வானவர்கள் இறைவனை(ப் போற்றி)த் துதிக்கின்றனர். பிறகு (அதைக் கேட்டு) அதற்கடுத்த வானிலுள்ள (வான)வர்களும் (இறைவனைப் போற்றித்) துதிக்கின்றனர். (இவ்வாறே ஒவ்வொரு வானிலுள்ள வானவர்கள் துதிக்கின்றனர்.) இறுதியில் அத்துதி பூமிக்கு அருகிலுள்ள வானவர்களை வந்தடைகிறது.

பின்னர் அரியணையைச் சுமக்கும் வானவர்களுக்கு அருகிலிருப்பவர்கள், அரியணையைச் சுமக்கும் வானவர்களிடம், "உங்கள் இறைவன் என்ன சொன்னான்?" என்று வினவுகின்றனர். அதற்கு அரியணையைச் சுமக்கும் வானவர்கள் இறைவன் என்ன சொன்னான் என்பதை அவர்களிடம் தெரிவிக்கின்றனர். உடனே வானிலிருப்போரில் சிலர் வேறுசிலரிடம் அது குறித்து விசாரித்துக் கொள்கின்றனர்.

முடிவில் அச்செய்தி பூமிக்கு அருகிலுள்ள வானத்தை வந்தடைகிறது. உடனே அதை ஜின்கள் ஒட்டுக்கேட்டு, அதைத் தம் (சோதிட) நண்பர்களிடம் போடுகின்றனர். (அப்போது) அவர்கள்மீது நட்சத்திரங்கள் எறியப்படுகின்றன. உள்ளது உள்ளபடி சோதிடர்கள் தெரிவிப்பது உண்மையாகும். ஆயினும், அவர்கள் அதில் பொய்யைக் கலந்து கூடுதலாக (மக்களிடம்) கூறுகின்றனர்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

ஆயினும், அவற்றில் யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அன்சாரி நபித்தோழர்கள் சிலர் கூறினர் என அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது.

அவ்ஸாஈ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஆயினும், சோதிடர்கள் அதில் பொய்யைக் கலந்து கூடுதலாக (மக்களிடம்) அறிவிக்கின்றனர்" என்று இடம்பெற்றுள்ளது.

யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஆயினும், சோதிடர்கள் அதில் சேர்த்துக் கூடுதலாக அறிவிக்கின்றனர்" என்று காணப்படுகிறது. மேலும், அவர்களது அறிவிப்பில், "அ(வ்வான)வர்களது அச்சம் விலகியதும் அவர்கள் "உங்கள் இறைவன் என்ன சொன்னான்?' என்று கேட்கின்றனர். அதற்கு அவர்கள் "உண்மையே சொன்னான்' என்று பதிலளிக்கின்றனர் (34:23)" என்று இடம்பெற்றுள்ளது.

மஅகில் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அவ்ஸாஈயின் அறிவிப்பில் உள்ளதைப் போன்றே "ஆயினும், சோதிடர்கள் அதில் பொய்யைக் கலந்து கூடுதலாக அறிவிக்கின்றனர்" என்று இடம்பெற்றுள்ளது.

4488 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

ஒருவர் சோதிடனிடம் சென்று, எதைப் பற்றியாவது கேட்டால், அ(வ்வாறு கேட்ட)வருடைய நாற்பது நாட்களின் தொழுகை அங்கீகரிக்கப்படுவதில்லை.

இதை நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் சிலரிடமிருந்து ஸஃபிய்யா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 36 தொழுநோயாளிகள் போன்றோரிடமிருந்து விலகியிருப்பது.

4489 ஷரீத் பின் சுவைத் அஸ்ஸகஃபீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஸகீஃப் தூதுக்குழுவில் தொழுநோயாளி ஒருவர் இருந்தார். அவரிடம் நபி (ஸல்) அவர்கள், "நாம் உம்மிடம் உறுதிமொழி பெற்றுவிட்டோம். நீர் திரும்பிச் செல்லலாம்" என்று கூறியனுப்பினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 37 பாம்பு உள்ளிட்டவற்றைக் கொல்வது.

4490 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் உள்ள ("துத் துஃப்யத்தைன்' எனும்) பாம்பைக் கொல்லுங்கள். ஏனெனில், அது (கண்) பார்வையைப் பறித்துவிடும்; கர்ப்பத்தைக் கலைத்துவிடும்" என்று உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "குட்டை வால் (அல்லது வால் இல்லாத) பாம்பையும், முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் உள்ள பாம்பையும் கொல்லும் படி உத்தரவிட்டார்கள்" என இடம்பெற்றுள்ளது.

4491 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "பாம்புகளை(க் கொல்லுங்கள். குறிப்பாக) முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் உள்ள பாம்பையும் குட்டைவால் (அல்லது வால் இல்லாத) பாம்பையும் கொல்லுங்கள். ஏனெனில், அவை இரண்டும் கர்ப்பத்தைக் கலைத்துவிடும்; பார்வையைப் பறித்துவிடும்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளரான சாலிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(என் தந்தை) இப்னு உமர் (ரலி) அவர்கள் கண்ணில்படும் ஒவ்வொரு பாம்பையும் கொன்றுவந்தார்கள். (ஒரு நாள்) அவர்கள் பாம்பொன்றைக் விரட்டிக்கொண்டிருப்பதைக் கண்ட அபூலுபாபா பின் அப்தில் முன்திர் (ரலி), அல்லது ஸைத் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், "வீடுகளில் வசிக்கும் பாம்புகளைக் கொல்வது தடை செய்யப்பட்டுள்ளது" என்று கூறினார்கள்.

4492 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நாய்களைக் கொல்லும்படி உத்தரவிடுவதை நான் கேட்டுள்ளேன். அவர்கள், "பாம்புகளையும் நாய்களையும் கொல்லுங்கள்; (குறிப்பாக) முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் உள்ள பாம்பையும் குட்டைவால் (அல்லது வால் இல்லாத) பாம்பையும் கொல்லுங்கள். ஏனெனில், அவை இரண்டும் (கண்) பார்வையைப் பறித்துவிடும்; கர்ப்பத்தைக் கலைத்துவிடும்" என்று கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அவை இரண்டின் விஷத்தன்மை காரணமாகவே அவற்றைக் கொல்லும்படி உத்தரவிட்டுள்ளார்கள் என்றே நாம் கருதுகிறோம். அல்லாஹ் மிகவும் அறிந்தவன்.
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
நான் என் கண்ணில் படும் எந்தப் பாம்பையும் கொன்றுவந்தேன். இந்நிலையில் ஒரு நாள் வீட்டில் வசிக்கும் பாம்பொன்றை நான் விரட்டிக்கொண்டிருந்தேன். அப்போது என்னை ஸைத் பின் அல்கத்தாப் (ரலி), அல்லது அபூ லுபாபா (ரலி) அவர்கள் கடந்து சென்றார்கள். நான் அந்தப் பாம்பைத் தேடிக்கொண்டிருந்தேன்.
அப்போது அவர்கள், "அப்துல்லாஹ்வே, நிறுத்துங்கள் (அதைக் கொல்லாதீர்கள்)" என்று கூறினார்கள். நான் "அவற்றைக் கொல்லும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தர விட்டுள்ளார்கள்" என்று சொன்னேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வீடுகளில் வசிக்கும் பாம்புகளைக் கொல்ல வேண்டாம் எனத் தடை செய்துள்ளார்கள்" என்று கூறினார்கள்.

4493 மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் சாலிஹ் பின் கைசான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இந்நிலையில் என்னைக் கண்ட அபூலுபாபா பின் அப்தில் முன்திர் (ரலி), ஸைத் பின் அல்கத்தாப் (ரலி) ஆகிய இருவரும், "வீடுகளில் வசிக்கும் பாம்புகளைக் கொல்ல வேண்டாமெனத் தடை செய்துள்ளார்கள் என்று கூறினர்" என இடம்பெற்றுள்ளது.
யூனுஸ் பின் யஸீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "பாம்புகளைக் கொல்லுங்கள்" என்பது மட்டுமே இடம்பெற்றுள்ளது. "முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் உள்ள பாம்பையும் குட்டைவால் (அல்லது வால் இல்லாத) பாம்பையும் கொல்லுங்கள்" என்பது இடம் பெறவில்லை.

4494 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூலுபாபா (ரலி) அவர்கள், இப்னு உமர் (ரலி) அவர்களது வீட்டில் பள்ளிவாசலுக்குச் சமீபமாகச் செல்லும் வகையில் ஒரு வாசல் அமைப்பது குறித்து இப்னு உமர் (ரலி) அவர்களிடம் பேசினார்கள். (வாசலமைக்கும் பணி நடைபெற்றபோது) பணியாளர்கள் பாம்பின் சட்டையொன்றைக் கண்டனர். அப்போது இப்னு உமர் (ரலி) அவர்கள், "பாம்பைத் தேடிப் பிடித்துக் கொல்லுங்கள்" என்று கூறினார்கள். அதற்கு அபூலுபாபா (ரலி) அவர்கள், "அதைக் கொல்லாதீர்கள்; ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வீட்டிலுள்ள (மெல்லிய வெண்ணிறப்) பாம்புகளைக் கொல்ல வேண்டாமெனத் தடை செய்துள்ளார்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4495 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் எல்லாப் பாம்புகளையும் கொன்றுவந்தார்கள். அபூ லுபாபா பின் அப்தில் முன்திர் அல்பத்ரீ (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்

வீடுகளிலுள்ள பாம்புகளைக் கொல்ல வேண்டாமெனத் தடை செய்துள்ளார்கள்" என்று கூறியதும் (அவற்றைக் கொல்வதை) நிறுத்திவிட்டார்கள்.

4496 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூலுபாபா (ரலி) அவர்கள் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வீடுகளில் வசிக்கும் (மெல்லிய வெண்ணிறப்) பாம்புகளைக் கொல்ல வேண்டாமெனத் தடை செய்துள்ளார்கள்" என்று கூறியதை நான் கேட்டேன்.

4497 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூலுபாபா (ரலி) அவர்கள் என்னிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வீடுகளில் வசிக்கும் (மெல்லிய வெண்ணிறப்) பாம்புகளைக் கொல்ல வேண்டாமெனத் தடை செய்துள்ளார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4498 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூலுபாபா பின் அப்தில் முன்திர் அல்அன்சாரீ (ரலி) அவர்களது இல்லம் "குபா'வில் இருந்தது. பின்னர் அவர்கள் மதீனாவுக்குக் குடிபெயர்ந்தார்கள். (ஒரு நாள்) அவர்களுடன் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அமர்ந்திருந்த போது, இப்னு உமர் (ரலி) அவர்கள் (தமது வீட்டில்) வாசல் ஒன்றை அமைத்துக்கொண்டிருந்தார்கள். அப்போது வீட்டில் வசிக்கும் பாம்பு ஒன்று வெளிப்பட்டது.
அங்கிருந்தவர்கள் அதைக் கொல்ல முற்பட்டனர். அப்போது அபூலுபாபா (ரலி) அவர்கள் அவற்றை (அதாவது வீடுகளில் வசிக்கும் பாம்புகளை)க் கொல்வது தடை செய்யப்பட்டுள்ளது. குட்டைவால் (அல்லது வால் இல்லாத) பாம்பையும் முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் உள்ள பாம்பையும் கொல்லும்படி உத்தரவிடப்பட்டுள்ளது. அவையிரண்டும் பார்வையைப் பறித்துவிடும்; பெண்களின் (வயிற்றிலுள்ள) சிசுக்களைக் கலைத்துவிடும் என்று சொல்லப்பட்டுள்ளது"என்று கூறினார்கள்.

4499 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், ஒரு நாள் தமது கட்டட இடிபாடுகளுக்கு அருகிலிருந்த போது (மெல்லிய வெண்ணிறப்) பாம்பு ஒன்று மின்னுவதைக் கண்டார்கள். உடனே "இந்தப் பாம்பை விரட்டிப் பிடித்துக் கொல்லுங்கள்"என்று கூறினார்கள். (அங்கிருந்த) அபூலுபாபா அல்அன்சாரீ (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வீட்டிலிருக்கும் (மெல்லிய வெண்ணிறப்) பாம்புகளைக் கொல்ல வேண்டாமெனத் தடை செய்துள்ளார்கள்; குட்டைவால் (அல்லது வால் இல்லாத) பாம்பையும் முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் உள்ள பாம்பையும் தவிர. ஏனெனில், அவையிரண்டும் (கண்) பார்வையைப் பறித்துவிடும்; பெண்களின் வயிற்றிலுள்ளதைக் கலைத்துவிடும் என்று கூறினார்கள்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் நாஃபிஉ (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "இப்னு உமர் (ரலி) அவர்கள் (தம் தந்தை) உமர் (ரலி) அவர்களது வீட்டிற்கு அருகிலுள்ள கோட்டையொன்றின் அருகில் பாம்பொன்றைத் தேடிக்கொண்டிருந்தபோது, அவர்களைக் கடந்து அபூலுபாபா (ரலி) அவர்கள் சென்றார்கள்..."என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.

4500 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள் மினாவிலுள்ள) ஒரு குகையில் நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அவர்களுக்கு "வல்முர்சலாத்தி உர்ஃபன்" (ஒன்றன்பின் ஒன்றாக அனுப்பப்படுகின்றவை மீது சத்தியமாக!) என்று தொடங்கும் (77ஆவது) அத்தியாயம் அருளப்பெற்றது. அதை நாங்கள் நபி (ஸல்) அவர்களின் வாயிலிருந்து புத்தம் புதிதாகச் செவியுற்றுக்கொண்டிருந்தோம்.
அப்போது பாம்பு ஒன்று (புற்றிலிருந்து) வெளியேறி எங்களிடையே வந்தது. அப்போது நபி (ஸல்) அவர்கள், "அதைக் கொல்லுங்கள்" என்றார்கள். உடனே அதைக் கொல்ல போட்டியிட்டுக் கொண்டு நாங்கள் விரைந்தோம். அது எங்களை முந்திக்கொண்டு (தனது புற்றுக்குள் நுழைந்து)விட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள், "உங்களை அதன் தீங்கிலிருந்து அல்லாஹ் காப்பாற்றியதைப் போன்று, அதையும் உங்கள் தீங்கிலிருந்து அல்லாஹ் காப்பாற்றிவிட்டான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4501 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இஹ்ராம்' கட்டியிருந்த ஒருவருக்கு "மினா'வில் பாம்பு ஒன்றைக் கொல்ல உத்தரவிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் (ஒரு நாள் மினாவிலுள்ள) ஒரு குகையில் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தபோது..."என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

4502 ஹிஷாம் பின் ஸுஹ்ரா (ரஹ்) அவர்களின் முன்னாள் அடிமை அபுஸ்ஸாயிப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களது இல்லத்திற்குச் சென்றேன். அப்போது அவர்கள் தொழுதுகொண்டிருப்பதைக் கண்டேன். ஆகவே, அவர்கள் தொழுகையை முடிக்கும்வரை அவர்களை எதிர்பார்த்துக் காத்திருந்தேன். அப்போது வீட்டின் மூலையிலிருந்த பேரீச்சமர காய்ந்த குச்சிகளுக்கு இடையிலிருந்து ஏதோ அசையும் சப்தத்தை நான் கேட்டேன். உடனே நான் திரும்பிப் பார்த்தேன். அங்கே ஒரு பாம்பு இருந்தது. அதைக் கொல்வதற்காக நான் துள்ளிக் குதித்து எழுந்தேன்.
உடனே அபூசயீத் (ரலி) அவர்கள் அமருமாறு எனக்குச் சைகை செய்தார்கள். ஆகவே, நான் அமர்ந்துகொண்டேன். அவர்கள் தொழுகையை முடித்துத் திரும்பியபின் அவ்வீட்டிலிருந்த

ஓர் அறையை எனக்குச் சுட்டிக்காட்டி, "இந்த அறையை நீர் காண்கிறீரா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அப்போது அபூசயீத் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
இந்த அறையில் புதிதாகத் திருமணமான எங்கள் இளைஞர் ஒருவர் இருந்தார். நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அகழ்ப்போருக்குப் புறப்பட்டுச் சென்றபோது, அந்த இளைஞர் நண்பகல் நேரங்களில் தம் வீட்டாரிடம் திரும்பிச் செல்ல அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டுக்கொண்டிருந்தார்.
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதியளித்தார்கள். (அவர் திரும்பிச் செல்லப்போனபோது) அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமது ஆயுதத்தை உம்முடனேயே வைத்துக்கொள். ஏனெனில், பனூ குறைழா யூதர்களை உம்முடைய விஷயத்தில் நான் அஞ்சுகிறேன்" என்று சொன்னார்கள். அவ்வாறே அந்த மனிதர் (தம்முடன்) ஆயுதத்தை எடுத்துக்கொண்டார்.
பிறகு அவர் திரும்பி வந்தபோது அவரது (புது) மனைவி வீட்டு வாசலில் இரு நிலைக் கால்களுக்கிடையே நின்றுகொண்டிருந்தாள். உடனே அவர் அவள்மீது எறிவதற்காக ஈட்டியை நோக்கித் தமது கையைக் கொண்டு சென்றார். உடனே அவருடைய மனைவிக்கு ரோஷம் ஏற்பட்டு, "ஈட்டி எறிவதை நிறுத்துங்கள். (முதலில்) வீட்டுக்குள் நுழைந்து,நான் வெளியே வந்து நின்றதற்கு என்ன காரணம் என்பதைப் பாருங்கள்" என்று கூறினாள். அவ்வாறே அவர் வீட்டுக்குள் நுழைந்து பார்த்த போது, அங்கு மிகப் பெரிய பாம்பு ஒன்று படுக்கை விரிப்பின் மீது சுருண்டு கிடந்தது.
உடனே அவர் அதன் அருகில் ஈட்டியைக் கொண்டுசென்று (அதன் மீது ஈட்டியைச் செலுத்தி) அதன் உடலுக்குள் ஈட்டியைச் செருகினார். பிறகு அறையிலிருந்து வெளியே வந்து வீட்டி(ன் வளாகத்தி)ல் அந்த ஈட்டியை நட்டு வைத்தார். அந்த ஈட்டியில் கிடந்து பாம்பு துடித்தது. பிறகு அவ்விருவரில் யார் முதலில் இறந்தார்கள். அந்த பாம்பா? அல்லது அந்த இளைஞரா என்பது தெரியவில்லை. (பாம்பும் இளைஞரும் இருவருமே இறந்துவிட்டனர்.)
உடனே நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து தகவல் தெரிவித்தோம்; "அவரை (மீண்டும்) உயிர்ப்பிக்குமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று கூறினோம். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்கள் நண்பருக்காக நீங்கள் பாவமன்னிப்புக் கோருங்கள்" என்று சொன்னார்கள்.
பிறகு "மதீனாவில் ஜின்கள் சில இஸ்லாத்தைத் தழுவியுள்ளன. அவற்றில் எதையேனும் நீங்கள் (பாம்பு வடிவத்தில்) கண்டால், அதற்கு நீங்கள் (வெளியேறுமாறு) மூன்று நாட்கள் அறிவிப்புச் செய்யுங்கள். அதற்குப் பின்னரும் அது உங்களுக்குத் தென்பட்டால், அதைக் கொன்றுவிடுங்கள். ஏனெனில், அது ஷைத்தான்தான்" என்றார்கள்.

4503 மேற்கண்ட ஹதீஸ் அபுஸ்ஸாயிப் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களது இல்லத்திற்குச் சென்றோம். நாங்கள் அமர்ந்திருந்தபோது அவர்களது கட்டிலுக்குக் கீழே ஏதோ அசையும் சப்தத்தைக் கேட்டோம். நாங்கள் உற்றுப் பார்த்தபோது அங்கு பாம்பு ஒன்று இருந்தது..." என்று ஹதீஸ்

ஆரம்பமாகிறது. மற்ற நிகழ்வுகள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
மேலும் அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இந்த வீடுகளில் வசிப்பவை சில உள்ளன. அவற்றில் எதையேனும் நீங்கள் கண்டால் அவற்றுக்கு மூன்று நாட்கள் நெருக்கடி கொடுங்கள். (மூன்று நாட்களுக்குள்) சென்றுவிட்டால் சரி. இல்லாவிட்டால் அதைக் கொன்றுவிடுங்கள். ஏனெனில், அது ஷைத்தான் ஆகும்" என்றும்,மக்களிடம் "நீங்கள் சென்று உங்கள் நண்பரை அடக்கம் செய்யுங்கள்" என்றும் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

4504 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மதீனாவில் இஸ்லாத்தைத் தழுவிய ஜின்கள் சில உள்ளன. உங்களில் ஒருவர், அவற்றில் எதையேனும் இந்தக் குடியிருப்புகளில் (பாம்பின் உருவில்) கண்டால் மூன்று நாட்கள் அவற்றுக்கு அவர் அறிவிப்புச் செய்யட்டும். அதற்குப் பின்னரும் அது அவருக்குத் தென்பட்டால், அதைக் கொன்றுவிடட்டும்! ஏனெனில், அது ஷைத்தான் ஆகும்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 38 பல்லியைக் கொல்வது நல்லது.

4505 உம்மு ஷரீக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பல்லிகளை (அடித்து)க் கொல்லுமாறு எனக்கு உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4506 உம்மு ஷரீக் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
நான் நபி (ஸல்) அவர்களிடம் பல்லிகளைக் கொல்வதற்கு அனுமதி கேட்டேன். நபியவர்கள் அவற்றைக் கொல்லுமாறு உத்தரவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
உம்மு ஷரீக் (ரலி) அவர்கள் பனூ ஆமிர் பின் லுஅய் குலத்தைச் சேர்ந்த பெண்மணி ஆவார்கள்.

4507 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பல்லியைக் கொல்லும்படி உத்தரவிட்டார்கள். அதற்கு "தீங்கிழைக்கக்கூடிய பிராணி' (ஃபுவைசிக்) எனப் பெயரிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4508 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பல்லிக்கு "ஃபுவைசிக்' ("தீங்கிழைக்கக்கூடியது') என்று (பெயர்) குறிப்பிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஹர்மலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைக் கொல்லும்படி உத்தரவிட்டதை நான் கேட்டதில்லை" என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4509 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பல்லியை முதலாவது அடியிலேயே கொன்றவருக்கு இவ்வளவு இவ்வளவு நன்மைகள் உண்டு. இரண்டாவது அடியில் கொன்றவருக்கு முதலாவது அடியில் கொன்ற வரைவிடக் குறைவாக இவ்வளவு இவ்வளவு நன்மைகள் உண்டு; மூன்றாவது அடியில் கொன்றவருக்கு இரண்டாவது அடியில் கொன்றவரைவிடக் குறைவாக நன்மை உண்டு.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4510 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அனைவரது அறிவிப்பிலும் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளது. ஆனால், ஜரீர் பின் ஹாஸிம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டும் பின்வருமாறு காணப்படுகிறது:
முதலாவது அடியிலேயே கொன்றவருக்கு நூறு நன்மைகள் எழுதப்படுகின்றன. இரண்டாவது அடியில் கொன்றவருக்கு அதைவிடக் குறைவான நன்மையும், மூன்றாவது அடியில் கொன்றவருக்கு அதைவிடக் குறைவான நன்மையும் எழுதப்படும்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "முதலாவது அடியில் கொன்றவருக்கு எழுபது நன்மைகள் (எழுதப்படும்)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 39 எறும்புகளைக் கொல்வதற்கு வந்துள்ள தடை.

4511 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைத்தூதர்களில் ஒருவரை எறும்பு ஒன்று கடித்துவிட்டது. உடனே அந்த எறும்புப் புற்றையே எரித்துவிடும்படி அவர் கட்டளையிட்டார். அவ்வாறே அது எரிக்கப்பட்டது. (இதைக் கண்ட) அல்லாஹ், "ஓர் எறும்பு உம்மைக் கடித்துவிட்ட காரணத்தால் (எனது) தூய்மையைப் போற்றும் சமுதாயங்களில் ஒரு சமுதாயத்தையே எரித்துவிட்டீரே!" என்று (அவரைக் கண்டிக்கும் விதத்தில்) அவருக்கு அறிவித்தான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4512 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைத்தூதர்களில் ஒருவர் ஒரு (பயணத்தில்) மரத்திற்குக் கீழே தங்கினார். அப்போது அவரை எறும்பு ஒன்று கடித்துவிட்டது. உடனே அவர் மரத்திற்குக் கீழேயிருந்து தமது மூட்டை முடிச்சுகளை அப்புறப்படுத்துமாறு கட்டளையிட்டார். அவ்வாறே அப்புறப்படுத்தப்பட்டதும் அந்த எறும்புப் புற்றை எரித்துவிடும்படி கட்டளையிட்டார். அவ்வாறே அது எரிக்கப்பட்டது. (இதைக் கண்ட) அல்லாஹ் "(அந்த) ஒரே ஓர் எறும்பை நீர் தண்டித்திருக்கக் கூடாதா?" என்று (அவரைக் கண்டிக்கும் விதத்தில்) அவருக்கு அறிவித்தான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4513 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதிஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைத்தூதர்களில் ஒருவர் ஒரு (பயணத்தில்) மரத்திற்குக் கீழே தங்கினார். அப்போது அவரை எறும்பு ஒன்று கடித்துவிட்டது. உடனே அவர் மரத்திற்குக் கீழேயிருந்த தமது மூட்டை முடிச்சுகளை அப்புறப்படுத்துமாறு உத்தரவிட்டார். அவ்வாறே செய்யப்பட்டது. பிறகு அந்த எறும்புப் புற்றையே நெருப்பால் எரித்துவிடுமாறு கட்டளையிட்டார். அவ்வாறே செய்யப்பட்டது. அப்போது அல்லாஹ், "(அந்த) ஒரே ஓர் எறும்பை நீர் தண்டித்திருக்கக் கூடாதா?" என்று (அவரைக் கண்டிக்கும் விதத்தில்) அவருக்கு அறிவித்தான்.

## பாடம் : 40 பூனையைக் கொல்வதற்கு வந்துள்ள தடை.

4514 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பூனையை, அது சாகும்வரை சிறைவைத்த காரணத்தால் பெண் ஒருத்தி (நரகத்தில்) வேதனை செய்யப்பட்டாள். அதை அடைத்துவைத்தபோது, அவள் அதற்கு உண்பதற்கும் கொடுக்கவில்லை; பருகுவதற்கும் கொடுக்கவில்லை;பூமியின் புழு பூச்சிகளைத் தின்ன (அதை அவிழ்த்து) விடவுமில்லை. அதனால் அவள் நரகத்தில் நுழைந்தாள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்கள் வழியாகவும் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வழியாகவும் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4515 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பூனைக்கு உண்ணவும் கொடுக்காமல், பருகவும் கொடுக்காமல், பூமியின் புழு பூச்சிகளைத் தின்னவும் விடாமல் (சாகும்வரை அதைத் துன்புறுத்திக்கொண்டு) இருந்த காரணத்தால் பெண் ஒருத்தி (நரகத்தில்) வேதனை செய்யப்பட்டாள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அவள் அதைக் கட்டிவைத்திருந்தாள்' எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது. மேலும், (புழு பூச்சிகள் என்பதைக் குறிக்க "கஷாஷ்' என்பதற்குப் பதிலாக) "ஹஷராத்' எனும் சொல் ஆளப்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஓர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 41 வாயில்லாப் பிராணிகளுக்கு நீர் புகட்டுவது, உணவளிப்பது ஆகியவற்றின் சிறப்பு.

4516 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஒரு மனிதர் ஒரு பாதை வழியே நடந்து சென்றுகொண்டிருந்தபோது அவருக்குக் கடுமையான தாகம் ஏற்பட்டது. அவர் (வழியில்) கிணறு ஒன்றைக் கண்டார். உடனே அதில் இறங்கித் தண்ணீர் குடித்தார். பிறகு (கிணற்றிலிருந்து) அவர் வெளியே வந்தார். அப்போது நாய் ஒன்று தாகத்தால் (தவித்து) நாக்கைத் தொங்கவிட்டபடி ஈரமண்ணை நக்கிக்கொண்டிருப்பதைக் கண்டார்.
அந்த மனிதர் (தமது மனதுக்குள்) "எனக்கு ஏற்பட்டதைப் போன்ற அதே (கடுமையான) தாகம் இந்த நாய்க்கும் ஏற்பட்டிருக்கின்றது போலும்!" என்று சொல்லிக்கொண்டார். உடனே (மீண்டும்) அக்கிணற்றில் இறங்கித் (தண்ணீரைத் தோலால் ஆன) தனது காலுறையில் நிரப்பிக்கொண்டு, அதைத் தமது வாயால் கவ்விய படி மேலேறி வந்து அந்த நாய்க்குப் புகட்டினார். அல்லாஹ் இதற்கு நன்றியாக அவரை (அவருடைய பாவங்களை) மன்னித்தான்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
(இதைச் செவியுற்ற) மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! இந்த மிருகங்கள் விஷயத்திலும் (அவற்றுக்கு உதவுவதால்) எங்களுக்கு (மறுமையில்) நற்பலன் கிடைக்குமா?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(ஆம்;) உயிர் பிராணிகள் ஒவ்வொன்றின் விஷயத்திலும் (அதற்கு உதவி செய்யும்பட்சத்தில் மறுமையில்) அதற்கான நற்பலன் கிடைக்கும்" என்று சொன்னார்கள்.

4517 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
விபசாரியான ஒரு பெண், கடும் வெப்பம் நிறைந்த ஒரு நாளில் நாயொன்று ஒரு கிணற்றைச் சுற்றி வந்துகொண்டிருப்பதைக் கண்டாள். அது தாகத்தால் தனது நாக்கை வெளியே தொங்கவிட்டுக் கொண்டிருந்தது. உடனே அப்பெண் தனது காலுறையைக் கழற்றி (அதில் தண்ணீரை நிரப்பி வந்து அதற்குப் புகட்டி)னாள். அதன் காரணமாக அவளுக்குப் பாவமன்னிப்பு வழங்கப்பட்டது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4518 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
((முன்னொரு காலத்தில்) ஒரு நாய் கிணறு ஒன்றைச் சுற்றிச்சுற்றி வந்துகொண்டிருந்தது. அது தாகத்தால் செத்துவிடும் நிலையில் இருந்தது. அப்போது பனூ இஸ்ராயீல் சமுதாயத்தின் விபசாரிகளில் ஒருத்தி அதைப் பார்த்தாள். உடனே அவள் தனது காலுறையைக் கழற்றி (அதில் தண்ணீரை எடுத்து) அந்த நாய்க்குப் புகட்டினாள். அதன் காரணமாக அவளுக்குப் பாவமன்னிப்பு வழங்கப்பட்டது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

# அத்தியாயம் : 40 - சொல்லொழுக்கம்

## பாடம் : 1 காலத்தை ஏசுவதற்கு வந்துள்ள தடை.

4519 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் உடைய அல்லாஹ் கூறினான்: ஆதமின் மகன் (மனிதன்) காலத்தை ஏசுகிறான். நானே காலம் (படைத்தவன்). என் கையில்தான் இரவும் பகலும் உள்ளன.– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4520 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் உடைய அல்லாஹ் கூறினான்: ஆதமின் மகன் (மனிதன்) என்னைப் புண்படுத்துகிறான்;காலத்தை ஏசுகிறான். நானே காலம் (படைத்தவன்). நானே இரவு பகலை மாறி மாறி வரச்செய்கிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4521 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் உடைய அல்லாஹ் சொன்னான்: ஆதமின் மகன் (மனிதன்) என்னைப் புண்படுத்துகிறான்; "காலத்தின் கைசேதமே!' என்று அவன் கூறுகிறான். ஆகவே, உங்களில் ஒருவர் "காலத்தின் கைசேதமே!' என்று கூற வேண்டாம். ஏனெனில், நானே காலம் (படைத்தவன்). அதில் இரவையும் பகலையும் நானே மாறி மாறி வரச்செய்கிறேன். நான் நாடினால் அவ்விரண்டையும் (மாறாமல்) பிடித்து (நிறுத்தி) விடுவேன். (பூமியைச் சுழலவிடாமல் நிறுத்திவிடுவேன்.)
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4522 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் "காலத்தின் கைசேதமே!' என்று கூற வேண்டாம். ஏனெனில், அல்லாஹ்வே காலம் (படைத்தவன்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4523 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காலத்தை ஏசாதீர்கள். ஏனெனில், அல்லாஹ்வே காலம் (படைத்து இயக்குபவன்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 2 திராட்சையை ("கண்ணியமானது' எனும் பொருள் கொண்ட) "கர்ம்' என்று பெயரிட்டழைப்பது விரும்பத்தக்கதன்று.**

4524 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யாரும் காலத்தை ஏச வேண்டாம். ஏனெனில், அல்லாஹ்வே காலம் (படைத்து இயக்குபவன்). உங்களில் யாரும் திராட்சையை ("கண்ணியம்' எனும் பொருள் கொண்ட) "அல்கர்ம்' என்று பெயரிட்டு அழைக்க வேண்டாம். உண்மையில் கண்ணியம் (எனும் பெயருக்குத் தகுதியானவர்) முஸ்லிமான மனிதரே ஆவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4525 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
திராட்சையை "கர்ம்' (கண்ணியமானது) என்று கூறாதீர்கள். ஏனெனில், கண்ணியத்திற்குரியது (எனும் பெயருக்குத் தகுதியானது) இறைநம்பிக்கையாளரின் இதயமே ஆகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4526 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
திராட்சையை ("கண்ணியம்' எனும் பொருள் கொண்ட) "அல்கர்ம்' என்று பெயரிட்டழைக்காதீர்கள். உண்மையில் கண்ணியம் (எனும் பெயருக்குத் தகுதியானவர்) முஸ்லிமான மனிதரே ஆவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4527 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் (திராட்சையை) "அல்கர்ம்' (கண்ணியம்) என்று கூற வேண்டாம். உண்மையில் கண்ணியம் (எனும் பெயருக்குத் தகுதியானது) இறைநம்பிக்கையாளரின் இதயமே ஆகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4528 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் திராட்சையை "அல்கர்ம்' (கண்ணியமானது) என்று கூறாதீர்கள். உண்மையில் கண்ணியம் (எனும் பெயருக்குத் தகுதியானவர்) முஸ்லிமான மனிதரே ஆவார்.

4529 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(திராட்சைக்கு) "அல்கர்ம்' என்று கூறாதீர்கள். மாறாக "அல்ஹப்லா' என்று சொல்லுங்கள்.
இதை வாயில் பின் ஹுஜ்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4530 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(திராட்சைக்கு) "அல்கர்ம்' (கண்ணியமானது) என்று (பெயர்) கூறாதீர்கள். மாறாக, "அல்இனப்' என்றோ "அல்ஹப்லா'என்றோ கூறுங்கள்.
இதை வாயில் பின் ஹுஜ்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 3 (அடிமைக்கும் அடிமைப் பெண்ணுக்கும் முறையே) "அப்த்', "அமத்' ஆகிய சொற்களையும் (அடிமையின் உரிமையாளருக்கு) "மவ்லா', "சய்யித்' ஆகிய சொற்களையும் ஆள்வது தொடர்பான சட்டம்.**

4531 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யாரும் (தம் அடிமையை அடிமையே, அடிமைப் பெண்ணே எனும் பொருள் கொண்ட) அப்தீ, அமத்தீ எனும் சொல்லால் அழைக்க வேண்டாம். (ஏனெனில்,) உங்களில் ஒவ்வொருவரும் அல்லாஹ்வின் அடிமை (அப்து)களே;உங்களில் ஒவ்வொரு பெண்ணும் அல்லாஹ்வின் அடிமை (அமத்)களே. மாறாக, ஃகுலாமீ, ஜாரியத்தீ, ஃபத்தாய,ஃபத்தாத்தீ ஆகிய சொற்களால் அழைக்கட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4532 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யாரும் (தம் அடிமையை) "அப்தீ' என்று கூற வேண்டாம். உங்களில் ஒவ்வொருவரும் அல்லாஹ்வின் அடிமை(அப்து)களே! மாறாக, "ஃபத்தாய' (என் பணியாளரே) என்று அழைக்கட்டும். அடிமை தன் (உரிமையாளரை) "ரப்பீ' (என் அதிபதியே!) என்று சொல்ல வேண்டாம். மாறாக, "சய்யிதீ' (என் தலைவரே!) என்று அழைக்கட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அபூமுஆவியா (ரஹ்), அஃமஷ் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "அடிமை தன் உரிமையாளரை "மவ்லாய' (எசமானே!) என்று அழைக்க வேண்டாம்" என்று காணப்படுகிறது.
அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஏனெனில், அல்லாஹ்வே உங்கள் "மவ்லா' (எசமான்) ஆவான்" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4533 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாரும் (ஓர் அடிமையிடம்) "உன் "ரப்பு'க்கு (அதிபதிக்கு) பருகத் தண்ணீர் கொடு. உன் "ரப்பு'க்கு உணவு கொடு. உன் "ரப்பு'க்கு அங்கத் தூய்மை (உளூ) செய்ய உதவு" என்று கூற வேண்டாம். உங்களில் யாரும் (தம் உரிமையாளரை) "ரப்பீ' என்று கூற வேண்டாம். மாறாக, "சய்யிதீ', "மவ்லாய' என்று கூறட்டும். உங்களில் யாரும் (என் அடிமை, என் அடிமைப் பெண் என்று கூற) அப்தீ, அமத்தீ

என்று கூற வேண்டாம். மாறாக, "ஃபத்தாய' (என் பணியாள்) "ஃபத்தாத்தீ' (என் பணிப்பெண்) என்று கூறட்டும்.

**பாடம் : 4 (மனக் குழப்பத்திலுள்ள) ஒரு மனிதர் ("என் மனம் அசுத்தமாகிவிட்டது' எனும் பொருள் பொதிந்த) "கபுஸத் நஃப்சீ'எனும் சொல்லை ஆள்வது வெறுக்கத்தக்கதாகும்.**

4534 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் (மனக் குழப்பத்திலிருக்கும்) ஒருவர் ("என் மனம் அசுத்தமாகிவிட்டது' எனும் பொருள் பொதிந்த) "கபுஸத் நஃப்சீ' எனும் சொல்லைக் கூற வேண்டாம். மாறாக, ("என் மனம் கனத்துவிட்டது' எனும் பொருள் கொண்ட) "லகிசத் நஃப்சீ' எனும் சொல்லையே கூறட்டும்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "மாறாக' எனும் சொல் இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4535 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் (மனக் குழப்பத்திலிருக்கும்) ஒருவர் ("என் மனம் அசுத்தமாகிவிட்டது' எனும் பொருள் பொதிந்த) "கபுஸத் நஃப்சீ' எனும் சொல்லைக் கூற வேண்டாம். ("என் மனம் கனத்துவிட்டது' எனும் பொருள் கொண்ட) "லகிசத் நஃப்சீ'எனும் சொல்லையே கூறட்டும்.
இதை சஹ்ல் பின் ஹுனைஃப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 5 கஸ்தூரியை உபயோகப்படுத்துவதும், அது நறுமணப் பொருட்களில் மிகவும் சிறந்ததாகும் என்பதும், நறுமணச் செடிகளையும் (மலர்களையும்) வாசனைத் திரவியங்களையும் (யாரேனும் அளித்தால் அதை) ஏற்க மறுப்பது வெறுக்கத்தக்கதாகும் என்பதும்.**

4536 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பனூ இஸ்ராயீல் சமுதாயத்தில் குட்டையான பெண் ஒருத்தி இருந்தாள். அவள் உயரமான இரு பெண்களுடன் நடந்து செல்லக்கூடியவளாய் இருந்தாள். (அவளைப் பார்த்து மக்கள் பரிகசிப்பார்கள்.) ஆகவே, அவள் மரக்கட்டையாலான கால்களை(ப் பொருத்தி உயரமான அவ்விரு பெண்களுக்குச் சமமாக தன்னை) ஆக்கிக் கொண்டாள்.
மேலும், தங்கத்தாலான மோதிரம் ஒன்றையும் அவள் அணிந்துகொண்டாள். அது (ஒரேயொரு உட்குழி கொண்டு) மூடப்பட்டதாக இருந்தது. (அந்தக் குழியைத் தவிர வேறு துவாரங்கள் எதுவும் அதில் இருக்கவில்லை.) பிறகு அவள் அக்குழிக்குள் கஸ்தூரியை இட்டு நிரப்பினாள். –கஸ்தூரி நறுமணப் பொருட்களில் மிகவும் சிறந்ததாகும்.– (இவ்வாறு செய்து கொண்ட) பின்னர் அவள் அவ்விரு பெண்களுக்கிடையே நடந்து சென்றாள்.

ஆகவே, அவளை மக்கள் (அடையாளம்) அறிந்து கொள்ளவில்லை. அப்போது அவள் (மோதிரத்திலிருந்து கஸ்தூரியை கமழச் செய்வதற்காக) தமது கையை இவ்வாறு அசைத்து சைகை செய்தாள்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் இதை அறிவிக்கும்போது, தமது கையை உதறி சைகை செய்து காட்டினார்கள்.

4537 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பனூ இஸ்ராயீல் சமுதாயத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணைப் பற்றிக் கூறினார்கள். அப்போது "அவள் தனது மோதிரத்தி(ன் நடுக்குழியி)ல் கஸ்தூரியை இட்டு நிரப்பியிருந்தாள். கஸ்தூரி,நறுமணப் பொருட்களிலேயே மிகவும் சிறந்ததாகும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4538 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவரிடம் வாசனைத் திரவியம் எடுத்துக்கொள்ளுமாறு கோரப்பட்டால், அதை அவர் மறுக்க வேண்டாம். ஏனெனில்,அது எடுத்துச் செல்வதற்கு எளிதானதும் சிறந்த நறுமணமும் ஆகும்.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4539 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு உமர் (ரலி) அவர்கள் நறுமணப் புகையிட்டால், அகில் கட்டையால் நறுமணப் புகையிடுவார்கள். அதில் வேறெந்த நறுமணப் பொருளையும் சேர்க்கமாட்டார்கள். (சில வேளைகளில்) அகிலுடன் கற்பூரத்தையும் போடுவார்கள். பிறகு "இவ்வாறுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நறுமணப் புகையிடுவார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 41 - கவிதை

4540 ஷரீத் பின் சுவைத் அஸ்ஸகஃபீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் (அவர்களது வாகனத்தில்) அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள், "உமய்யா பின் அபிஸ்ஸல்த்தின் கவிதைகளில் ஏதேனும் உமக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். நான் "ஆம் (தெரியும்)" என்றேன். "பாடு" என்றார்கள். உடனே நான் ஒரு பாடலைப் பாடினேன். "இன்னும் பாடு" என்றார்கள். பிறகு இன்னொரு பாடலைப் பாடினேன். "இன்னும் பாடு"என்றார்கள். இவ்வாறே அல்லாஹ்வின் தூதருக்காக நூறு பாடல்களைப் பாடிக்காட்டினேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஷரீத் பின் சுவைத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைத் தமக்குப் பின்னால் தமது வாகனத்தில் அமரச்செய்தார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

- மேற்கண்ட ஹதீஸ் ஷரீத் பின் சுவைத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், என்னிடம் உமய்யா பின் அபிஸ் ஸல்த்தின் கவிதைகளைப் பாடுமாறு கூறினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. மேலும் "உமய்யா பின் அபிஸ்ஸல்த் இஸ்லாத்தைத் தழுவும் அளவுக்கு வந்துவிட்டார்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
அப்துர் ரஹ்மான் பின் மஹ்தீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர் தமது கவிதையி(ன் கருத்துகளா)ல் இஸ்லாத்தைத் தழுவும் அளவுக்கு வந்துவிட்டார்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகக் காணப்படுகிறது.

4541 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அரபியர் சொன்ன சொற்களிலேயே மிகவும் சிறந்தது (கவிஞர்) லபீத் சொன்ன...
"அறிக!
அல்லாஹ்வைத் தவிர
அனைத்துப் பொருட்களுமே
அழியக்கூடியவையே"
எனும் சொல்தான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4542 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கவிஞர் சொன்ன சொற்களிலேயே மிகவும் உண்மையான சொல், (கவிஞர்) லபீத் சொன்ன...
"அறிக!
அல்லாஹ்வைத் தவிர
அனைத்துப் பொருட்களுமே
அழியக்கூடியவையே"
எனும் சொல்தான்.
(கவிஞர்) உமய்யா பின் அபிஸ்ஸல்த் இஸ்லாத்தைத் தழுவும் அளவுக்கு வந்துவிட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4543 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கவிஞர் சொன்ன பாடல்களிலேயே மிகவும் உண்மையான பாடல்,
"அறிக!
அல்லாஹ்வைத் தவிர
அனைத்துப் பொருட்களுமே
அழியக்கூடியவையே"
எனும் பாடல்தான்.
(கவிஞர்) இப்னு அபிஸ்ஸல்த் இஸ்லாத்தைத் தழுவும் அளவுக்கு வந்துவிட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4544 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கவிஞர்கள் யாத்த பாடல்களிலேயே மிக உண்மையானது,
"அறிக!
அல்லாஹ்வைத் தவிர
அனைத்துப் பொருட்களுமே
அழியக்கூடியவையே"
எனும் பாடல்தான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4545 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கவிஞர் சொன்ன சொற்களிலேயே மிக உண்மையான சொல் (கவிஞர்) லபீத் சொன்ன "அறிக! அல்லாஹ்வைத் தவிர அனைத்துப் பொருட்களுமே அழியக்கூடியவையே" எனும் சொல்தான். – இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த அறிவிப்பில், இதைவிடக் கூடுதலான தகவல் இல்லை.

4546 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதரின் வயிற்றில், புரையோடும் அளவுக்குச் சீழ் சலம் நிரம்பியிருப்பது, கவிதையால் நிரம்பியிருப்பதைவிடச் சிறந்ததாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "புரையோடும் அளவுக்கு' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

4547 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருடைய வயிறு கவிதையால் நிரம்பியிருப்பதைவிடப் புரையோடும் அளவுக்குச் சீழ் சலத்தால் நிரம்பியிருப்பது நன்று.
இதை சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4548 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "அல்அர்ஜ்' எனுமிடத்தில் பயணம் செய்துகொண்டிருந்தோம். அப்போது கவிஞர் ஒருவர் கவிதைகளைப் பாடிக்கொண்டு எதிரில் வந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அந்த ஷைத்தானைப் பிடியுங்கள். ஒரு மனிதருடைய வயிறு கவிதையால் நிரம்பியிருப்பதை விடச் சீழ் சலத்தால் நிரம்பியிருப்பது நன்று" என்று கூறினார்கள்.

# அத்தியாயம் : 42 - கனவுகள்

**பாடம் : 1 பகடைக்காய் விளையாட்டு ("நர்த ஷீர்') தடை செய்யப்பட்டதாகும்.**

4549 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பகடைக்காய் ஆட்டம் (நர்தஷீர்) விளையாடியவர், தமது கையைப் பன்றி இறைச்சியிலும் இரத்தத்திலும் தோய்த்தவரைப் போன்றவர் ஆவார்.
இதை புரைதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4550 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (உறக்கத்தில்) பல கனவுகளைக் கண்டுவந்தேன். அதனால் எனக்குக் குளிர் காய்ச்சல் ஏற்பட்டது. இருந்தாலும்,அதற்காக நான் போர்வையைப் போர்த்திக்கொண்டிருக்கவில்லை.
இறுதியில் (ஒரு நாள்) நான் அபூகத்தாதா (ரலி) அவர்களைச் சந்தித்து அவர்களிடம் அதைப் பற்றித் தெரிவித்தேன். அப்போது அபூகத்தாதா (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நல்ல கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும். கெட்ட கனவு ஷைத்தானி டமிருந்து வருவதாகும். உங்களில் ஒருவர் தாம் விரும்பாத (தீய கனவு) ஒன்றைக் கண்டால் அவர் தமது இடப் பக்கத்தில் மூன்று முறை துப்பட்டும்; அதிலிருந்து காக்குமாறு அல்லாஹ்விடம் அவர் பாதுகாப்புக் கோரட்டும். (இப்படிச் செய்தால்) அவருக்கு அது எந்தத் தீங்கும் இழைத்திட இயலாது" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- அபூகத்தாதா (ரலி) அவர்களிடமிருந்து அபூ சலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் "நான் பல கனவுகளைக் கண்டுவந்தேன். அதனால் எனக்குக் குளிர் காய்ச்சல் ஏற்பட்டது. இருந்தாலும்,அதற்காக நான் போர்வையைப் போர்த்திக்கொண்டிருக்கவில்லை" என்று அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் கூறிய குறிப்பு (ஆரம்பத்தில்) இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் யூனுஸ் (ரஹ்), மஅமர் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "அதனால் எனக்குக் குளிர் காய்ச்சல் ஏற்பட்டது"எனும் குறிப்பு இல்லை. யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர் உறக்கத்திலிருந்து விழித்தெழுந்ததும் தமது இடப் பக்கத்தில் மூன்று முறை துப்பட்டும்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4551 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"நல்ல கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும். கெட்ட கனவு ஷைத்தானிடமிருந்து வருவதாகும். ஆகவே,உங்களில் ஒருவர் தாம் விரும்பாத ஒரு விஷயத்தை (கனவில்) கண்டால் (கண் விழிக்கும்போது) தமது இடப் பக்கத்தில் மூன்று முறை துப்பிவிட்டு, அதன் தீங்கிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரட்டும். (இப்படிச் செய்தால்) அதனால்

அவருக்கு எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்த முடியாது" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ கத்தாதா (ரலி) அவர்கள் சொன்னதை நான் செவியுற்றேன். இந்த ஹதீஸை நான் கேட்(டு அறிந்து விட்)ட காரணத்தால், மலையைவிடக் கனமான ஒரு கனவை நான் கண்டாலும்கூட அதை நான் பொருட்படுத்துவதில்லை.

- மேற்கண்ட ஹதீஸ் அபூசலமா (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் லைஸ், அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், அபூ சலமா (ரஹ்) அவர்களின் (இறுதிக்) கூற்று இடம்பெறவில்லை. முஹம்மத் பின் ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மேலும், அவர் முன்பு படுத்திருந்த பக்கத்திலிருந்து திரும்பிப் படுத்துக்கொள்ளட்டும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4552 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நல்ல கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும். கெட்ட கனவு ஷைத்தானிடமிருந்து வருவதாகும். ஒருவர் கனவு ஒன்றைக் கண்டு அதில் எதையேனும் அவர் வெறுத்தால், அவர் தமது இடப் பக்கத்தில் மூன்று முறை துப்பிவிட்டு,ஷைத்தானிடமிருந்து (காக்குமாறு) அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரட்டும். அப்படிச் செய்தால் அவருக்கு அது எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தாது. மேலும், அதைப் பற்றி யாரிடமும் அவர் தெரிவிக்க வேண்டாம். அழகிய கனவு ஒன்றை அவர் கண்டால், அவர் ஆனந்தமடையட்டும். அதைப் பற்றி தமது நேசத்திற்குரியவரைத் தவிர வேறு யாரிடமும் தெரிவிக்க வேண்டாம்.

இதை அபூகத்தாதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4553 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் பல கனவுகளைக் கண்டு, அதனால் உடல்நலம் பாதிக்கப்பட்டுவந்தேன். இந்நிலையில் நான் அபூகத்தாதா (ரலி) அவர்களைச் சத்தித்(து அது குறித்து தெரிவித்)தேன்.

அப்போது அவர்கள் கூறினார்கள்: நானும் பல கனவுகளைக் கண்டு உடல்நலம் பாதிக்கப் பட்டுவந்தேன். இறுதியில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நல்ல கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும். ஆகவே, உங்களில் ஒருவர் தாம் விரும்புகின்ற கனவொன்றைக் கண்டால் தமது நேசத்துக்குரியவரைத் தவிர வேறு யாரிடமும் அதைப் பற்றித் தெரிவிக்க வேண்டாம். அவர், தாம் விரும்பாததைக் கண்டால் தமது இடப் பக்கத்தில் மூன்று முறை துப்பிவிட்டு,ஷைத்தானின் தீங்கிலிருந்தும் அந்தக் கனவின் தீங்கிலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரட்டும். அந்தக் கனவைப் பற்றி யாரிடமும் தெரிவிக்க வேண்டாம். அவ்வாறு செய்தால் அது அவருக்கு எந்தப் பாதிப்பையும் ஒருபோதும் ஏற்படுத்த முடியாது" என்று கூறியதைக் கேட்டேன்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4554 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தாம் விரும்பாத கனவொன்றைக் கண்டால் தமது இடப் பக்கத்தில் மூன்று முறை துப்பிவிட்டு,ஷைத்தானிடமிருந்து (காக்குமாறு) அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரிவிட்டு, வேறு பக்கத்தில் திரும்பிப் படுத்துக்கொள்ளட்டும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4555 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காலம் சுருங்கும்போது ஒரு முஸ்லிம் காணும் கனவு பொய்யாகப் போவதில்லை. உங்களில் (நல்ல) உண்மையான கனவு காண்பவரே உண்மை பேசுகின்றவர் ஆவார். ஒரு முஸ்லிம் காணும் (நல்ல) கனவு நபித்துவத்தின் நாற்பத்தைந்து பாகங்களில் ஒன்றாகும்.
கனவுகள் மூன்று வகையாகும். நல்ல கனவு அல்லாஹ்விடமிருந்து வரும் நற்செய்தியாகும். கவலையளிக்கக்கூடிய கனவு ஷைத்தானிடமிருந்து வருவதாகும். இன்னொரு வகை ஒரு மனிதரின் உள்ளத்தில் தோன்றுகின்ற பிரமையாகும். ஆகவே, உங்களில் ஒருவர் தாம் விரும்பாத கனவொன்றைக் கண்டால், உடனே அவர் எழுந்து (இறைவனைத்) தொழட்டும். அதைப் பற்றி மக்களிடம் தெரிவிக்க வேண்டாம். நான் காலில் விலங்கிடப்படுவதைப் போன்று கனவு காண்பதை விரும்புகிறேன். கழுத்தில் விலங்கிடப்படுவதைப் போன்று காண்பதை வெறுக்கிறேன். கால் விலங்கு, மார்க்கத்தில் நிலைத்திருப்பதைக் குறிக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல் வஹ்ஹாப் அஸ்ஸகஃபீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (கால் விலங்கு மற்றும் கழுத்து விலங்கு பற்றிய) இறுதிக் குறிப்பு ஹதீஸிலேயே உள்ளதா, அல்லது அறிவிப்பாளர் இப்னு சீரீன் (ரஹ்) அவர்களின் கூற்றா என்பது எனக்குத் தெரியவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அறிவிப்பாளர் மஅமர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: காலில் விலங்கிடப்படுவதைப் போன்று காண்பதை என் மனம் விரும்புகிறது. கழுத்தில் விலங்கிடப்படுவதைப் போன்று காண்பதை நான் வெறுக்கிறேன். கால் விலங்கு மார்க்கத்தில் உறுதியுடன் இருப்பதைக் குறிக்கும். நபி (ஸல்) அவர்கள், "இறை நம்பிக்கையாளர் காணும் நல்ல கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்" என்று கூறினார்கள் என அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "காலம் சுருங்கிவிட்டால்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. அதில் நபி (ஸல்) அவர்கள் கூறியதாகக் குறிப்பு இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "கழுத்தில் விலங்கிடப்படுவதைப் போன்று காண்பதை நான் வெறுக்கிறேன்" என்பது, இறுதிவரையுள்ள தகவலை விளக்க இடைச்சேர்ப்பாக ("இத்ராஜ்') அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாகக் காணப்படுகிறது. அதில் "நல்ல கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்" எனும் நபி (ஸல்) அவர்களின் கூற்று இடம் பெறவில்லை.

4556 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளர் காணும் (நல்ல) கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்.– இதை உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் வாயிலாக நேரடியாகவும் வந்துள்ளது.

4557 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளர் காணும் (நல்ல) கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்.– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு "முஸ்லிம் காணும்' அல்லது "அவருக்குக் காட்டப்படும்' நல்ல கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு நல்ல மனிதரின் கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4558 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நல்ல கனவு நபித்துவத்தின் எழுபது பாகங்களில் ஒன்றாகும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் லைஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நபித்துவத்தின் எழுபது பாகங்களில் ஒன்றாகும்" என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாக நான் கருதுகிறேன் என நா..பிஉ (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டதாகக் காணப்படுகிறது.

**தொடர்ச்சி:-**

**பாடம் : 1 "கனவில் யார் என்னைக் கண்டாரோ நிச்சயமாக அவர் என்னையே கண்டார்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.**

4559 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கனவில் யார் என்னைக் கண்டாரோ நிச்சயமாக அவர் என்னையே கண்டார். ஏனெனில், ஷைத்தான் என் உருவத்தில் காட்சியளிக்கமாட்டான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4560 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கனவில் என்னை யார் காண்கிறாரோ அவர் "விழிப்பிலும் என்னைக் காண்பார்'. அல்லது "விழிப்பில் என்னைக் கண்டவரைப் போன்றவர் ஆவார்'. (ஏனெனில்,) ஷைத்தான் என் உருவத்தில் காட்சியளிக்கமாட்டான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(கனவில்) யார் என்னைக் கண்டாரோ அவர் நிஜத்தையே நிச்சயமாக கண்டார்.
இதை அபூகத்தாதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட இரு ஹதீஸ்களும் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளன.

4561 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உறக்கத்தில் யார் என்னைக் கண்டாரோ நிச்சயமாக அவர் என்னையே கண்டார். என்ன விஷயம் என்றால், என் உருவில் காட்சியளிக்க ஷைத்தானுக்குத் தகுதியில்லை" என்றும், "உங்களில் ஒருவர் தீய கனவொன்றைக் கண்டால் உறக்கத்தில் தம்முடன் ஷைத்தான் விளையாடியது குறித்து எவரிடமும் தெரிவிக்க வேண்டாம்" என்றும் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4562 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உறக்கத்தில் யார் என்னைக் கண்டாரோ நிச்சயமாக அவர் என்னையே கண்டார். ஏனெனில், என்னைப் போன்று காட்சியளிக்க ஷைத்தானுக்குத் தகுதியில்லை.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 2 கனவில் ஷைத்தான் தம்மிடம் விளையாடியது குறித்து யாரிடமும் அறிவிக்கலாகாது.**

4563 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கிராமவாசி ஒருவர் வந்து, "எனது தலை துண்டிக்கப்படுவதைப் போன்றும் நான் அதைப் பின்தொடர்ந்து செல்வதைப் போன்றும் கனவு கண்டேன்" என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரைக் கண்டித்துவிட்டு, "கனவில் உம்மிடம் ஷைத்தான் விளையாடியது குறித்து (யாரிடமும்) தெரிவிக்காதே" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4564 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமவாசி ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! எனது தலை வெட்டப்பட்டு அது உருண்டோடிச் செல்வதைப் போன்றும் அதைப் பின்தொடர்ந்து நான் வேகமாகச் செல்வதைப் போன்றும் கனவு கண்டேன்" என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உமது கனவில் ஷைத்தான் உம்மிடம் விளையாடியது குறித்து நீர் மக்களிடம் தெரிவிக்காதே" என்று கூறினார்கள்.
பிறகு நபி (ஸல்) அவர்கள் (மக்களிடையே) உரை நிகழ்த்தியபோது, "உங்களில் ஒருவரது கனவில் ஷைத்தான் அவரிடம் விளையாடியதைப் பற்றி (யாரிடமும்) தெரிவிக்க வேண்டாம்" என்று கூறியதையும் நான் கேட்டேன்.

4565 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! கனவில் எனது தலை துண்டிக்கப்படுவதைப் போன்று நான் கண்டேன்" என்று கூறினார். அதைக் கேட்டு நபி (ஸல்) அவர்கள் சிரித்துவிட்டு, "உங்களில் ஒருவருடைய கனவில் ஷைத்தான் அவரிடம் விளையாடினால், அதைப் பற்றி அவர் மக்களிடம் தெரிவிக்க வேண்டாம்" என்று கூறினார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உங்களில் ஒருவரிடம் கனவில் விளையாடப்பட்டால்" என்று இடம்பெறுகிறது. "ஷைத்தான் விளையாடினால்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 3 கனவுக்கு விளக்கமளித்தல்.**

4566 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் நேற்றிரவு கனவில் மேகம் ஒன்றைக் கண்டேன். அந்த மேகத்திலிருந்து நெய்யும் தேனும் சொட்டிக்கொண்டிருந்தன. உடனே மக்கள் தம் கைகளைக் காட்டி அவற்றைப் பிடித்துக்கொண்டிருக்கக் கண்டேன். (அவர்களில்) அதிகம் பிடித்தவர்களும் உண்டு; குறைவாகப் பிடித்தவர்களும் உண்டு.

அப்போது ஒரு கயிறு வானத்திலிருந்து பூமிவரை வந்து சேர்ந்ததையும் நான் கண்டேன். உடனே (அல்லாஹ்வின் தூதரே!) நீங்கள் அந்தக் கயிற்றைப் பற்றிக்கொண்டு மேலே சென்றுவிடக் கண்டேன். பிறகு உங்களுக்குப்பின் மற்றொரு மனிதர் அதைப் பற்றிக்கொண்டு அவரும் மேலே சென்று விட்டார்.

பிறகு (மூன்றாவதாக) இன்னொரு மனிதரும் அதைப் பற்றிக்கொண்டு அவரும் மேலே சென்றுவிட்டார். பிறகு (நான்காவதாக) இன்னொரு மனிதர் அதைப் பற்றிக்கொள்ள கயிறு அறுந்துவிட்டது. பிறகு மறுபடியும் அக்கயிறு அவருக்காக இணைக்கப்பட்டபோது, அந்த மனிதர் (அதைப் பற்றிக்கொண்டு) மேலே சென்றுவிட்டார்" என்று சொன்னார்.

அப்போது (அங்கிருந்த) அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! அல்லாஹ்வின் மீதாணையாக! என்னை விடுங்கள்; இந்தக் கனவுக்கு நான் விளக்கமளிக்கிறேன்" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(சரி) இதற்கு விளக்கம் சொல்லுங்கள்" என்று சொன்னார்கள்.

அபூபக்ர் (ரலி) அவர்கள், "அந்த மேகம் "இஸ்லாம்' எனும் மேகமாகும். அதிலிருந்து சொட்டிக் கொண்டிருந்த நெய்யும் தேனும் குர்ஆனின் இனிமையும் மென்மையும் ஆகும். மக்கள் (தங்கள் கைகளைக் காட்டி) அதிலிருந்து பிடித்ததானது, குர்ஆனிலிருந்து அதிகம் கற்றவர்களையும் குறைவாகக் கற்றவர்களையும் குறிக்கிறது. வானிலிருந்து பூமிவரை வந்துசேர்ந்த அந்தக் கயிறானது, நீங்கள் இருந்துவருகின்ற சத்திய (மார்க்க)மாகும். அதை நீங்கள் (பின்)பற்றுகிறீர்கள். அல்லாஹ் உங்களை (வானளவுக்கு) உயர்த்திவிடுகிறான். பிறகு உங்களுக்குப் பின்னால் இன்னொரு மனிதர் அதைப் பற்றுகிறார். அதன்மூலம் அவரும் உயர்ந்துவிடுகிறார். அதன் பின்னர் இன்னொரு மனிதர் அதைப் பற்றிக்கொண்டு அவரும் உயர்ந்துவிடுகிறார். அதை (நான்காவதாக) மற்றொருவர் பற்றுகிறார். (முதலில்) அக்கயிறு அறுந்துவிடுகிறது. பிறகு அவருக்காக மீண்டும் அக்கயிறு இணைக்கப்பட்டவுடன் அதைப் பற்றிக்கொண்டு அவரும் உயர்ந்துவிடுகிறார்"என்று கூறிவிட்டு, "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! சொல்லுங்கள்! (நான் சொன்ன விளக்கம்) சரியா? அல்லது தவறா?" என்று கேட்டார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சிலவற்றைச் சரியாகச் சொன்னீர்கள்; சிலவற்றைத் தவறாகச் சொல்லிவிட்டீர்கள்" என்றார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் தவறாகக் கூறியதைத் தாங்கள் எனக்குத் தெரிவிக்க வேண்டும்" என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இதை) சத்தியம் செய்து கேட்காதீர்கள் (நான் இதைப் பற்றிச் சொல்லப் போவதில்லை)" என்றார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. (மேற்கண்ட அறிவிப்பு அல்லாத) மற்ற அறிவிப்புகளில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், அல்லது அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிப்பதாகத் துவங்குகிறது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், நபி (ஸல்) அவர்கள் உஹுதுப் போரை முடித்துக்கொண்டு திரும்பியபோது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் நேற்றிரவு கனவில் மேகம்

ஒன்றைக் கண்டேன். அதிலிருந்து நெய்யும் தேனும் சொட்டிக்கொண்டிருந்தது..." என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி), அல்லது அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் அறிவிப்பாளர் அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்கள் பின்வரும் குறிப்பையும் தெரிவித்துள்ளார்கள்:

மஅமர் (ரஹ்) அவர்கள் சில வேளைகளில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தும் வேறுசில வேளைகளில் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தும் அறிவிக்கிறார்கள். அதில் "ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, நான் நேற்றிரவு (கனவில்) மேகம் ஒன்றைக் கண்டேன்..." என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களிடம் "உங்களில் எவரேனும் கனவு கண்டிருந்தால் அதை என்னிடம் கூறுங்கள்; அதற்கு நான் விளக்கம் சொல்கிறேன்' என்று கேட்பது வழக்கம். அப்போது ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் மேகமொன்றைக் கண்டேன்...' என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 4 நபி (ஸல்) அவர்கள் கண்ட கனவு.

4567 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் ஒரு நாள் இரவில் கனவு ஒன்றைக் கண்டேன். நாம் (தோழர்) உக்பா பின் ராஃபிஉ அல் அன்சாரீ அவர்களது இல்லத்தில் இருந்தோம். அப்போது நம்மிடம் "ருதப் பின் தாப்' (எனும் உயர்) வகை பேரீச்சம் பழங்கள் கொண்டுவரப்பட்டதைப் போன்றிருந்தது. அதற்கு நான், இம்மையில் நமக்கு கிடைக்கும் உயர்வையும் மறுமையில் கிடைக்கும் நல்ல முடிவையும் நமது மார்க்கம் (பலமான அடித்தளத்தைக் கொண்டு) முழுமையாகிவிட்டது என்பதையும் விளக்கமாகக் கண்டேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4568 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் கனவில் ஒரு குச்சியால் பல் துலக்குவதைப் போன்று கண்டேன். அப்போது (என் அருகிலிருந்த) இரு மனிதர்கள் (அந்தக் குச்சிக்காகப் போட்டியிட்டுக்கொண்டு) என்னை இழுத்தனர். அவர்களில் ஒருவர் மற்றவரைவிட வயதில் பெரியவராக இருந்தார். அவர்களில் வயதில் சிறியவரிடம் பல் துலக்கும் அந்தக் குச்சியை நான் கொடுத்தேன். அப்போது என்னிடம் "வயதில் மூத்தவருக்கு முன்னுரிமை தருவீராக" என்று சொல்லப் பட்டது. ஆகவே, நான் பெரியவரிடம் அந்தக் குச்சியைக் கொடுத்தேன்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4569 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் மக்கா நகரிலிருந்து புலம்பெயர்ந்து பேரீச்சந்தோட்டங்கள் நிறைந்த ஒரு பூமிக்குச் செல்வதாகக் கனவு கண்டேன். அந்தப் பூமி "யமாமா"வாகவோ அல்லது "ஹஜரா"கவோ இருக்கும் என்றுதான் நான் எண்ணினேன். ஆனால், நான் கண்ட அந்த நகரம் யஸ்ரிப் – மதீனா– ஆகிவிட்டது. மேலும், அக்கனவில் நான் (என்) வாள் ஒன்றை அசைக்க, அதன் முனை முறிந்துவிட்டதாகக் கண்டேன். அது உஹுதுப் போரின்போது இறை நம்பிக்கையாளர்களுக்கு ஏற்பட்ட இழப்பைக் குறித்தது.
பிறகு (அதே கனவில்) மற்றொரு முறை அந்த வாளை நான் அசைக்க, அது முன்பிருந்ததைவிட மிக அழகாக மாறிவிட்டது. அது அல்லாஹ் (அதே உஹுதுப் போரில்) கொணர்ந்த மறுமலர்ச்சியையும் (சிதறி ஓடிய) முஸ்லிம்கள் மீண்டும் ஒன்றுதிரண்டதையும் குறிக்கும்.
மேலும், அக்கனவில் காளை மாடுகள் சிலவற்றை (அறுக்கப்படுவதைப் போன்று) நான் கண்டேன். அல்லாஹ் நன்மையளிப்பவன். (அதாவது "வல்லாஹு கைர்' எனும் சப்தத்தைக் கேட்டேன்.) காளை மாடுகள் என்பது உஹுதுப் போர் நாளில் கொல்லப்பட்ட இறைநம்பிக்கையாளர்களைக் குறிப்பதாகும். நன்மை (கைர்) என்பது (உஹுதுப் போருக்குப்) பின்னர் அல்லாஹ் நமக்குக் கொணர்ந்த நன்மையும் (இரண்டாம்) பத்ருப் போருக்குப் பிறகு அல்லாஹ் நமக்களித்த வாய்மைக்கான பரிசும் (அதாவது கைபர் மற்றும் மக்கா வெற்றிகளும்) ஆகும்.
இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4570 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களது காலத்தில் மகா பொய்யன் முசைலிமா (யமாமாவிலிருந்து) மதீனாவுக்கு வந்தான். அவன், "முஹம்மத், தமக்குப் பிறகு (தூதுத்துவம் மற்றும் ஆட்சித் தலைமையின்) பொறுப்பை எனக்கு அளி(ப்பதாக வாக்குறுதியளி)த்தால்தான் நான் அவரைப் பின்பற்றுவேன்" என்று கூறலானான். அவன் தன் சமுதாயமக்கள் பலருடன் மதீனா வந்திருந்தான்.
நபி (ஸல்) அவர்கள், (தம் பேச்சாளர்) ஸாபித் பின் கைஸ் பின் ஷம்மாஸ் (ரலி) அவர்கள் தம்முடன் இருக்க,அவனை நோக்கி வந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களது கையில் பேரீச்ச மட்டைத் துண்டு ஒன்று இருந்தது. முசைலிமா தன் தோழர்களுடனிருக்க நபி (ஸல்) அவர்கள் அவனருகே (வந்து) நின்றுகொண்டு, இந்த(ப் பேரீச்ச மட்டை)த் துண்டை நீ கேட்டால்கூட நான் இதை உனக்குக் கொடுக்கமாட்டேன். அல்லாஹ் உன் விஷயத்தில் முடிவு செய்திருப்பதை மீறிச் செல்ல என்னால் முடியாது. நீ (எனக்குக் கீழ்ப்படிய மறுத்து) முதுகைக் காட்டினால், அல்லாஹ் உன்னை அழித்துவிடுவான். மேலும், (என் கனவில்) எனக்குக் காட்டப்பட்ட அதே ஆளாகத்தான் உன்னை நான் காண்கிறேன். இதோ, இவர்தான் ஸாபித். இவர் என் சார்பாக உனக்குப் பதிலளிப்பார்" என்று சொல்லிவிட்டு,அவனிடமிருந்து திரும்பிவிட்டார்கள். – இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(என் கனவில்) எனக்குக் காட்டப்பட்ட அதே ஆளாகத்தான் உன்னை நான் காண்கிறேன்" என்று (முசைலமாவிடம்) சொன்னதைப் பற்றி நான் கேட்டபோது, அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
நபி (ஸல்) அவர்கள், "நான் தூங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) என் இரு கைகளிலும் இரு தங்கக் காப்புகளைக் கண்டேன். அவற்றின் (விளக்கம் எனக்குத் தெரியாமல் இருந்த) நிலை என்னைக் கவலையில் ஆழ்த்தியது. அதே கனவில் அவ்விரண்டையும் ஊதிவிடும்படி எனக்குக் கட்டளையிடப்பட்டது. அவ்வாறே நான் ஊதிவிட்டேன். உடனே அவ்விரண்டு (காப்புகளு)ம் பறந்துவிட்டன. எனவே, நான் அவ்விரண்டுக்கும் "எனக்குப்பின் வெளிப் படவிருக்கின்ற மகாபொய்யர்கள் இருவர்' என்று விளக்கம் கண்டேன். அவ்விருவரில் ஒருவன் "ஸன்ஆ'வாசியான அன்ஸீ;மற்றொருவன் "யமாமா'வாசியான முசைலிமா" என்று சொன்னார்கள்.

4571 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் தூங்கிக்கொண்டிருக்கும்போது (கனவில்) பூமியின் கருவூலங்கள் எனக்கு வழங்கப்பட்டன. அப்போது என் கையில் தங்கக் காப்புகள் இரண்டு வைக்கப்பட்டன. அவை எனக்குப் பெரும் சுமையாகத் தென்பட்டன; அவற்றின் (விளக்கம் தெரியாத) நிலை என்னைக் கவலையில் ஆழ்த்தியது. அப்போது அவ்விரண்டையும் ஊதிவிடும்படி எனக்குக் கட்டளையிடப்பட்டது. அவ்விரண்டையும் நான் ஊதிவிட்டேன். அவ்விரண்டும் (பறந்து) சென்றுவிட்டன. "அவ்விரண்டும் எந்த இரு மகாபொய்யர்களுக்கிடையே நான் இருக்கிறேனோ அவர்களைக் குறிக்கும்' என்று நான் விளக்கம் கண்டேன். அவ்விரு பொய்யர்கள் (அன்ஸீ என்ற) "ஸன்ஆ'வாசியும் (முசைலிமா என்ற) "யமாமா'வாசியும் ஆவர்.

4572 சமுரா பின் ஜுன்தப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகையை முடித்ததும் எங்களை நோக்கித் திரும்பி, "உங்களில் யாரேனும் இன்றிரவு கனவு ஏதேனும் கண்டீர்களா?" என்று கேட்பார்கள்.

# அத்தியாயம் : 43 - நபிமார்களின் சிறப்புகள்

**பாடம் : 1** நபி (ஸல்) அவர்களின் வமிசாவளியின் சிறப்பும் அவர்கள் நபியாக நியமிக்கப்படுவதற்கு முன் அவர்களுக்கு "கல்' சலாம் சொன்னதும்.

4573 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், இஸ்மாயீல் (அலை) அவர்களின் வழித்தோன்றல்களில் "கினானா'வைத் தேர்ந்தெடுத்தான்; "கினானா'வின் வழித்தோன்றல்களில் குறைஷியரைத் தேர்ந்தெடுத்தான்; குறைஷியரிலிருந்து பனூ ஹாஷிம் குலத்தாரைத் தேர்ந்தெடுத்தான். பனூ ஹாஷிம் குலத்தாரிலிருந்து என்னைத் தேர்ந்தெடுத்தான்.
இதை வாஸிலா பின் அல்அஸ்கஉ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4574 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் மக்காவிலுள்ள கல் ஒன்றை அறிவேன். நான் நபியாக நியமிக்கப்படுவதற்கு முன் அது எனக்கு முகமன் (சலாம்) சொல்லி வந்தது. நிச்சயமாக இப்போதும் அதை நான் அறிவேன்.
இதை ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 2** எல்லாப் படைப்புகளையும்விட நம் நபி (ஸல்) அவர்களுக்குள்ள சிறப்பு.

4575 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் ஆதமின் மக்கள் (மனிதர்கள்) அனைவருக்கும் தலைவன் நானே. முதன் முதலில் மண்ணறை பிளந்து (உயிர்த்து) எழுபவனும் நானே. முதன்முதலில் பரிந்துரை செய்பவனும் நானே. முதன்முதலில் பரிந்துரை ஏற்கப்படுபவனும் நானே.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 3** நபி (ஸல்) அவர்களின் அற்புதங்கள்.

4576 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் தண்ணீர் (பாத்திரத்தைக்) கொண்டுவரச் சொன்னபோது, (உட்பகுதி குறுகலான) வாயகன்ற (சிறிய) பாத்திரம் ஒன்று கொண்டுவரப்பட்டது. (நபி (ஸல்) அவர்கள் பாத்திரத்திற்குள் தம் விரல்களை நுழைத்தார்கள்.) மக்கள் அதிலிருந்து அங்கத் தூய்மை (உளூ) செய்யலாயினர். நான் எண்ணிக் கணக்கிட்டுப் பார்த்தேன். அவர்கள் அறுபதிலிருந்து எண்பது பேர் இருந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்களுடைய விரல் களுக்கிடையிலிருந்து தண்ணீர் சுரப்பதை நான் பார்க்கலானேன்.

4577 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அஸ்ர் தொழுகையின் நேரம் நெருங்கிவிட்டபோது, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்தேன். அங்கத் தூய்மை (உளூ) செய்ய மக்கள் தண்ணீரைத் தேடினர். அவர்களுக்கு தண்ணீர் கிடைக்கவில்லை. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்களிடம் அங்கத் தூய்மை (உளூ) செய்ய சிறிது தண்ணீர் கொண்டுவரப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தப் பாத்திரத்தினுள் தமது கையை வைத்தார்கள். பிறகு அதிலிருந்து அங்கத் தூய்மை செய்யும்படி மக்களுக்குக் கட்டளையிட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய விரல்களுக்கிடையிலிருந்து தண்ணீர் சுரந்து வருவதை நான் கண்டேன். மக்கள் அதிலிருந்து அங்கத் தூய்மை செய்தனர். எந்த அளவுக்கென்றால், அவர்களில் கடைசி ஆள்வரை அனைவரும் (அதிலேயே) அங்கத் தூய்மை செய்து முடித்தனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4578 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் "அஸ்ஸவ்ரா' எனுமிடத்தில் இருந்தார்கள். (அஸ்ஸவ்ரா என்பது மதீனாவின் கடைத்தெருவுக்கும் மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலுக்கும் அருகில் இருந்த ஓர் இடமாகும்.) அப்போது நபி (ஸல்) அவர்கள் (அங்கத் தூய்மை செய்வதற்காகப்) பாத்திரத்தைக் கொண்டுவரச் சொன்னார்கள். அதில் சிறிது தண்ணீர் இருந்தது. பிறகு அப்பாத்திரத்தினுள் தமது கையை வைத்தார்கள். அப்போது அவர்களுடைய விரல்களுக்கிடையிலிருந்து தண்ணீர் சுரக்கலாயிற்று. (அங்கிருந்த) நபித்தோழர்கள் அனைவரும் அதிலிருந்து அங்கத் தூய்மை (உளூ) செய்தனர்.
இந்த ஹதீஸின் அறிவிப்பாளரான கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் அனஸ் (ரலி) அவர்களிடம் "அபூஹம்ஸா அவர்களே! அவர்கள் (மொத்தம்) எத்தனை பேர் இருந்தனர்?" என்று கேட்டேன். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள் "சுமார் முந்நூறு பேர் இருந்தனர்" என்று பதிலளித்தார்கள்.

4579 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்கள் (மதீனாவிலுள்ள) "அஸ்ஸவ்ரா' எனுமிடத்தில் இருந்தார்கள். அப்போது அவர்களிடம் அவர்களின் விரல்களை (முக்கினால் அவற்றை)க்கூட மறைக்காத அளவுக்கு, அல்லது விரல்களை மட்டுமே மறைக்கும் அளவுக்கு (சிறிது) தண்ணீர் இருந்த (சிறிய) பாத்திரம் ஒன்று கொண்டுவரப்பட்டது" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4580 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உம்மு மாலிக் அல்அன்சாரிய்யா (ரலி) அவர்கள், தமது நெய் பை ஒன்றில் நபி (ஸல்) அவர்களுக்கு நெய்யை அன்பளிப்பா(கக் கொடுத்தனுப்புவா)ர். பிறகு அவரிடம் அவருடைய மக்கள் வந்து (ரொட்டிக்காகக்) குழம்பு கேட்பார்கள். அப்போது அவர்களிடம் எதுவும் இருக்காது. உடனே உம்மு மாலிக் (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களுக்கு நெய் கொடுத்தனுப்பும் (அந்தப் பையில் ஏதேனும் மீதி இருக்கும் என்று எண்ணி) அந்தப் பையை நோக்கிச் செல்வார்கள். அதில் நெய் இருக்கும். இவ்வாறே அவர் அந்தப் பையைப் பிழியும்வரை வீட்டுக்குத் தேவையான குழம்பு அதில் இருந்து கொண்டே இருந்தது.

(இறுதியில் அந்தப் பையைப் பிழிந்தபோது நெய் இல்லாமற் போய்விட்டதால்) அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்(து நடந்ததைத் தெரிவித்)தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அந்தப் பையை நீ பிழிந்தாயா?" என்று கேட்டார்கள். அவர் "ஆம்' என்று பதிலளித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அதை அப்படியே நீ விட்டிருந்தால் அதில் எப்போதும் நெய் இருந்துகொண்டே இருந்திருக்கும்" என்று சொன்னார்கள்.

4581 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து உணவுப் பொருட்கள் வழங்குமாறு கோரினார். அவரது உணவுக்காக நபி (ஸல்) அவர்கள் அரை "வஸ்க்' தொலி நீக்கப்படாத கோதுமை வழங்கினார்கள். அதிலிருந்து அவரும் அவருடைய துணைவியும் அவர்களுடைய விருந்தினரும் உண்டுகொண்டே வந்தனர். இறுதியில் ஒரு நாள் அவர் அந்தக் கோதுமையை நிறுத்துப்பார்த்தார்.
(பிறகு அதிலிருந்த கோதுமை தீர்ந்துவிட்டது.) ஆகவே, அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்(து நடந்ததைத் தெரிவித்)தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அதை நீ நிறுத்துப் பார்த்திருக்காவிட்டால் அதிலிருந்து நீங்கள் சாப்பிட்டுக்கொண்டே இருந்திருப்பீர்கள். உங்களுக்காக அதில் எப்போதும் கோதுமை இருந்திருக்கும்" என்று சொன்னார்கள்.

4582 முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "தபூக்' போரின்போது புறப்பட்டுச் சென்றோம். அப்போது அவர்கள் (இரு நேரத்) தொழுகைகளை (ஒரே நேரத்தில்) சேர்த்துத் தொழுதுவந்தார்கள்; லுஹ்ரையும் அஸ்ரையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள். மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள்.
பின்பொரு நாள் தொழுகையைத் தாமதப்படுத்திவிட்டு, பிறகு வந்து லுஹ்ரையும் அஸ்ரையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள். பிறகு உள்ளே சென்றுவிட்டுப் பிறகு வந்து மஃக்ரிபையும் இஷாவையும் சேர்த்து ஒரே நேரத்தில் தொழுதார்கள்.

பிறகு, "அல்லாஹ் நாடினால், நாளை நீங்கள் தபூக் ஊற்றுக்குச் செல்வீர்கள். முற்பகலுக்கு முன் நீங்கள் அங்கு சென்றுவிடாதீர்கள். நான் வருவதற்குமுன் உங்களில் எவரும் அங்கு சென்றுவிட்டால், அங்குள்ள தண்ணீரில் கை வைத்துவிட வேண்டாம்" என்று கூறினார்கள்.
அவ்வாறே நாங்கள் அங்கு சென்றோம். அப்போது இரு மனிதர்கள் எங்களை முந்திக்கொண்டு அந்த ஊற்றை நோக்கிச் சென்றனர். செருப்பு வார் அளவுக்கு அந்த ஊற்றில் தண்ணீர் சிறிதளவே சுரந்துகொண்டிருந்தது. பிறகு (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்துசேர்ந்தார்கள்.) அவர்கள் இருவரிடமும் "அதன் தண்ணீரில் கை வைத்தீர்களா?" என்று கேட்டார்கள். அவர்கள் இருவரும் "ஆம்' என்று பதிலளித்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்விருவரையும் கண்டித்தார்கள். அவர்கள் சொல்ல வேண்டுமென அல்லாஹ் நாடியதையெல்லாம் அவ்விருவரிடமும் சொன்னார்கள்.
பிறகு மக்கள் தம் கைகளால் அந்த ஊற்றிலிருந்து சிறிது சிறிதாகத் தண்ணீர் அள்ளி ஓரிடத்தில் சேர்த்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தத் தண்ணீரில் தமது கையையும் முகத்தையும் கழுவி அந்த ஊற்றிலேயே அந்தத் தண்ணீரை விட்டார்கள்.

அப்போது ஊற்றிலிருந்து ஏராளமான தண்ணீர் "பீறிட்டு' அல்லது "நிறைந்து' ஓடியது. (அறிவிப்பாளர் அபூஅலீ (ரஹ்) அவர்களே இவ்வாறு ஐயத்துடன் அறிவிக்கிறார்கள்.) மக்கள் அனைவரும் தண்ணீர் அருந்தினர்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "முஆதே! (எனக்குப் பிறகு) நீங்கள் நீண்ட நாட்கள் வாழ்ந்தால்,இவ்விடத்தில் தோட்டங்கள், குடியிருப்புகள் ஆகியவை நிறைந்திருப்பதைக் காண்பீர்கள்" என்று (முன்னறிவிப்பாகக்) கூறினார்கள்.

4583 அபூஹுமைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தபூக் போருக்குப் புறப்பட்டுச் சென்றோம். அப்பயணத்தில் நாங்கள் "வாதில் குரா' எனுமிடத்திலிருந்த ஒரு பெண்மணிக்குச் சொந்தமான ஒரு (பேரீச்சந்)தோட்டத்தை அடைந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மரத்திலுள்ள கனிகளை மதிப்பிடுங்கள்" என்று கூறினார்கள். அவ்வாறே நாங்கள் மதிப்பிட்டோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதில் பத்து "வஸ்க்' கனிகள் இருப்பதாக மதிப்பிட்டார்கள். மேலும் அப்பெண்ணிடம், "இன்ஷாஅல்லாஹ், நாங்கள் திரும்பி வருவதற்குள் இக்கனிகளை நீ எண்ணிவை" என்று சொன்னார்கள்.
பிறகு நாங்கள் நடந்து தபூக்கிற்குச் சென்றோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்றிரவு உங்கள்மீது கடுமையான காற்று வீசும். அப்போது உங்களில் எவரும் எழுந்திருக்க வேண்டாம். உங்களில் ஒட்டகம் வைத்திருப்பவர் அதைக் கயிற்றால் கட்டிவைக்கட்டும்" என்று கூறினார்கள்.
அவ்வாறே அன்றிரவு கடுங்காற்று வீசியது. அப்போது எங்களில் ஒருவர் எழுந்தார். அக்காற்று அவரைத் தூக்கிச் சென்று, "தய்யி' குலத்தாரின் ("அஜா' மற்றும் "சல்மா' ஆகிய) இரு மலைகளுக்கிடையே போட்டுவிட்டது.
பின்னர் "அய்லா' நாட்டின் அரசர் இப்னுல் அல்மாவின் தூதுவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு கடிதத்துடன் வந்தார். மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு (அய்லா அரசர் சார்பாக) வெள்ளைக் கோவேறு கழுதையொன்றையும் அன்பளிப்பாக வழங்கினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அய்லா அரசருக்கு) பதில் கடிதம் எழுதினார்கள்; மேலும், போர்வையொன்றை அவருக்கு அன்பளிப்பாகக் கொடுத்த(னுப் பின)ôர்கள்.
பிறகு நாங்கள் திரும்பி "வாதில் குரா' சென்றடைந்தோம். அங்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தப் பெண்ணிடம் அவளது தோட்டத்திலிருந்த பேரீச்சங்கனிகளைப் பற்றிக் கேட்டார்கள். "அதில் எவ்வளவு கனிகள் உள்ளன?" என்று கேட்டார்கள். அதற்கு அப்பெண் "பத்து வஸ்க்குகள்" என்று பதிலளித்தாள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நான் விரைவாக (மதீனாவுக்குச்) செல்லப் போகிறேன். உங்களில் விரும்பியவர் என்னுடன் விரைவாக வரலாம்; விரும்பியவர் இங்கு தங்கியிருக்கலாம்" என்று சொன்னார்கள். பிறகு நாங்கள் புறப்பட்டு மதீனா அருகில் வந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது தாபா (தூய நகரம்);இதோ உஹுத் மலை; அது நம்மை நேசிக்கிறது; நாமும் அதை நேசிக்கிறோம்" என்று கூறினார்கள்.
பிறகு "அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது "பனுந் நஜ்ஜார்' குடும்பமாகும். பிறகு "பனூ அப்தில் அஷ்ஹல்' குடும்பமாகும். பிறகு "பனூ அப்தில் ஹாரிஸ் பின் அல்கஸ்ரஜ்'

குடும்பமாகும். பிறகு "பனூ சாஇதா'குடும்பமாகும். அன்சாரி கிளைக்குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை உண்டு" என்று சொன்னார்கள்.
பிறகு (பனூ சாஇதா குடும்பத்தைச் சேர்ந்த) சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அப்போது அபூஉசைத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரி கிளைக் குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை இருப்பதாகச் சொல்லிவிட்டு, (பனூ சாஇதா குடும்பத்தாரான) நம்மை இறுதியாகவே குறிப்பிட்டுள்ளதை நீங்கள் பார்க்க வில்லையா?" என்று கேட்டார்கள்.
உடனே சஅத் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! அன்சாரி கிளைக்குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை இருப்பதாகத் தாங்கள் குறிப்பிட்டுவிட்டு, இறுதியில் எங்களைக் குறிப்பிட்டுள்ளீர்களே?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் மிகச் சிறந்(த குடும் பத்)தவர்களில் இடம்பெற்றிருப்பதே உங்களுக்குப் போதுமானதல்லவா?" என்று கேட்டார்கள்.

4584 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுமைத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அன்சாரிகளின் கிளைக்குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை உள்ளது" என்பதுவரையே இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னுள்ள சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள் தொடர்பான சம்பவம் இடம்பெறவில்லை.
உஹைப் பின் காலித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அய்லா அரசருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதில் கடிதம் எழுதினார்கள்" என்று இடம்பெறவில்லை. மாறாக, "அவர்களின் ஊருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கடிதம் எழுதினார்கள்" என்றே இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 4 நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருந்ததும் எதிரிகளிடமிருந்து அவர்களை அல்லாஹ் காப்பாற்றியதும்.

4585 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ("தாத்துர் ரிகாஉ' எனும்) போருக்காக "நஜ்த்' நோக்கிப் புறப்பட்டுச் சென்றோம். (போரை முடித்துக்கொண்டு திரும்பும் வழியில்) கருவேல முள்மரங்கள் நிறைந்த ஒரு பள்ளத்தாக்கில் இருந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்துசேர்ந்தார்கள். (மதிய ஓய்வு கொள்ளும் நண்பகல் நேரத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மரத்திற்குக் கீழே இறங்கி ஓய்வெடுத்தார்கள். அப்போது அவர்கள் தமது வாளை அந்த மரத்தின் கிளையொன்றில் தொங்கவிட்டார்கள். (ஆங்காங்கே இருந்த) மரங்களின் கீழே மக்கள் பிரிந்து சென்று, நிழல் பெற்று (ஓய்வெடுத்து)க்கொண்டிருந்தனர்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களை அழைத்துக்) கூறினார்கள்: நான் உறங்கிக்கொண்டிருந்தபோது, ஒரு மனிதர் என்னிடம் வந்து (எனது) வாளை (தமது கையில்) எடுத்துக்கொண்டார். உடனே நான் விழித்துக்கொண்டேன். அப்போது அவர் என் தலைமாட்டில் நின்றிருந்தார். (உறையிலிருந்து) உருவப்பட்ட வாள் அவரது கையில்

இருப்பதை உடனே உணர்ந்தேன். அப்போது அவர், "என்னிடமிருந்து உன்னைக் காப்பவர் யார்?" என்று என்னிடம் கேட்டார்.
நான், "அல்லாஹ்' என்று பதிலளித்தேன். பிறகு மீண்டும் அவர், "என்னிடமிருந்து உன்னைக் காப்பவர் யார்?" என்று கேட்டார். நான் "அல்லாஹ்' என்றேன். உடனே அவர் வாளை உறையிலிட்டுவிட்டார். இதோ அவர் இங்கே அமர்ந்திருக்கிறார்.
பிறகு அவர் விஷயத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தலையிடவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4586 மேற்கண்ட ஹதீஸ் நபித்தோழர் ஜாபிர் பின் அப்தில்லாஹ் அல்அன்சாரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நான் நபி (ஸல்) அவர்களுடன் போருக்காக "நஜ்த்' நோக்கிப் புறப்பட்டுச் சென்றேன். (போரை முடித்து) நபி (ஸல்) அவர்கள் திரும்பியபோது அவர்களுடன் நானும் திரும்பினேன். ஒரு நாள் மதிய ஓய்வு கொள்ளும் நேரம் வந்தது" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (நஜ்தை நோக்கிப்) புறப்பட்டுச் சென்றோம். "தாத்துர் ரிகாஉ' எனுமிடத்தில் நாங்கள் இருந்தபோது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. அதில், "பிறகு அவர் விஷயத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தலையிடவில்லை" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

## பாடம் : 5 நபி (ஸல்) அவர்கள் எந்த நல்வழியுடனும் ஞானத்துடனும் அனுப்பப்பெற்றார்களோ அதற்கான உவமை பற்றிய விளக்கம்.

4587 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் என்னை நல்வழியுடனும் ஞானத்துடனும் அனுப்பியுள்ளதற்கு உதாரணம், நிலத்தில் விழுந்த பெருமழையின் நிலையைப் போன்றதாகும். அவற்றில் சில நிலங்கள், நீரை ஏற்றுக்கொண்டு ஏராளமான புற்பூண்டுகளையும் செடிகொடிகளையும் முளைக்கச் செய்யும் நல்ல நிலங்களாகும்.
வேறுசில தண்ணீரைத் தேக்கி வைத்துக்கொள்ளும் தரிசு நிலங்களாகும். அதை இறைவன் மக்களுக்குப் பயன்படச்செய்தான். அதிலிருந்து மக்களும் அருந்தினர்; (தம் கால்நடைகளுக்கும்) புகட்டினர்; (பயிரிட்டுக் கால்நடைகளை) மேய்க்கவும் செய்தனர்.
அந்தப் பெருமழை இன்னொரு வகை நிலத்திலும் விழுந்தது. அது (ஒன்றுக்கும் உதவாத) வெறும் கட்டாந்தரை. அது தண்ணீரைத் தேக்கிவைத்துக்கொள்ளவும் இல்லை; புற்பூண்டுகளை முளைக்கச் செய்யவுமில்லை.

இதுதான், இறைமார்க்கத்தில் விளக்கம் பெற்று, நான் கொண்டுவந்த தூதால் பயனடைந்து, கற்றுத் தெரிந்து பிறருக்கும் கற்றுக் கொடுத்தவருக்கும், நான் கொண்டுவந்த தூதை ஏறிட்டுப் பாராமலும் நான் கொண்டுவந்த அல்லாஹ்வின் நல்வழியை ஏற்றுக்கொள்ளாமலும் வாழ்கின்றவனுக்கும் உதாரணமாகும்.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 6 நபி (ஸல்) அவர்கள் தம் சமுதாயத்தார்மீது கொண்டிருந்த பரிவும் பாசமும் சமுதாயத்தாருக்குத் தீங்கிழைப்பவை குறித்து அவர்கள் அதிகமாக எச்சரித்ததும்.**

4588 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனக்கும் என்னை அல்லாஹ் எ(ந்த மார்க்கத்)தைக் கொண்டு அனுப்பியுள்ளானோ அதற்கும் எடுத்துக்காட்டாகிறது,ஒரு மனிதரின் நிலையைப் போன்றதாகும். அவர் தம் சமூகத்தாரிடம் சென்று, "என் சமுதாயமே! நான் (இன்ன பெரும்) படையை என் கண்களால் பார்த்தேன். (அப்படை எந்நேரமும் உங்களைத் தாக்கலாம். அதை எதிர்கொள்ளும் ஆற்றல் உங்களிடம் இல்லை.) நான் நிர்வாணமாக (ஓடி)வந்து எச்சரிக்கை செய்ப(வனைப் போன்ற)வன். ஆகவே,தப்பித்துக்கொள்ளுங்கள்" என்று கூறினார்.
அப்போது அவருடைய சமூகத்தாரில் ஒரு பிரிவினர் அவருக்குக் கீழ்ப்படிந்து இரவோடு இரவாக மெல்ல நடந்து தப்பிவிட்டனர். ஆனால், அவர்களில் மற்றொரு பிரிவினர் அவரை நம்ப மறுத்து காலையிலும் அங்கேயே தங்கியிருந்தனர். ஆகவே, அதிகாலையில் அப்படையினர் வந்து அவர்களைத் தாக்கிப் பூண்டோடு அழித்தனர்.
இதுதான் எனக்குக் கீழ்ப்படிந்து, நான் கொண்டுவந்த (மார்க்கத்)தைப் பின்பற்றி நடந்தவருக்கும், எனக்கு மாறுசெய்து,நான் கொண்டுவந்த சத்தியத்தை ஏற்க மறுத்தவருக்கும் உதாரணமாகும்.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4589 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது நிலையும் என் சமுதாயத்தாரின் நிலையும் ஒரு மனிதரின் நிலையை ஒத்திருக்கிறது. அவர் தீ மூட்டினார். விட்டில் பூச்சிகளும் இதர பூச்சிகளும் அந்தத் தீயில் விழலாயின. (நரக நெருப்பில் விழுவதிலிருந்து உங்களைத் தடுக்க) உங்கள் இடுப்புகளை நான் பிடித்துக் கொண்டிருக்கிறேன். (ஆனால்), நீங்களோ (என்னையும் மீறி) நரகத்தில் நுழைந்து கொண்டிருக்கிறீர்கள். – இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4590 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது நிலை ஒரு மனிதரின் நிலையை ஒத்திருக்கிறது. அவர் தீ மூட்டினார். அவரைச் சுற்றிலும் அது ஒளி வீசியபோது நெருப்பைச் சுற்றும் விட்டில் பூச்சிகளும் இதர பூச்சிகளும் அந்தத் தீயில் விழலாயின. அந்த மனிதரோ அவற்றை(த் தீயில் விழவிடாமல்) தடுத்துக் கொண்டிருந்தார். ஆனால், அவரையும் மீறி அவை தீயில் விழுகின்றன.
இதுதான் எனது நிலையும் உங்களது நிலையும் ஆகும். (நரக) நெருப்பி(ல் விழுவதி)லிருந்து உங்களைத் தடுக்க உங்கள் இடுப்புகளை நான் பிடித்துக்கொண்டிருக்கிறேன். "நெருப்பிலிருந்து விலகி வாருங்கள். நெருப்பிலிருந்து விலகி வாருங்கள்' என்று சொல்கிறேன். ஆனால், நீங்களோ என்னையும் மீறி நரகத்தில் நுழைந்துகொண்டிருக்கிறீர்கள்.

4591 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது நிலையும் உங்களின் நிலையும் ஒரு மனிதரின் நிலையை ஒத்திருக்கிறது. அவர் தீ மூட்டினார். அதில் வெட்டுக்கிளிகளும் விட்டில் பூச்சிகளும் விழலாயின. அவர் அதி(ல் விழுவதி)லிருந்து அவற்றைத் தடுத்துக்கொண்டிருந்தார். (இவ்வாறுதான்) நரக நெருப்பி(ல் விழுவதி)லிருந்து (உங்களைத் தடுக்க) உங்கள் இடுப்புகளை நான் பிடித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால், எனது கையிலிருந்து நீங்கள் நழுவிக்(கொண்டு நெருப்பை நோக்கி ஓடிக்)கொண்டிருக்கிறீர்கள்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 7 நபி (ஸல்) அவர்கள் இறுதி இறைத்தூதர் என்பது பற்றிய குறிப்பு.

4592 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது நிலையும் (எனக்கு முன்பிருந்த) இதர இறைத்தூதர்களின் நிலையும் ஒரு மனிதரின் நிலையை ஒத்திருக்கிறது. அவர் ஒரு கட்டடத்தை நேர்த்தியாகவும் அழகாகவும் கட்டினார். மக்கள் அதைச் சுற்றிப் பார்த்து விட்டு "இதைவிட அழகான கட்டடத்தை நாங்கள் கண்டதேயில்லை. இதோ இந்த (மூலையில் வைக்கப்படாமலிருக்கும்) செங்கலைத் தவிர" என்று கூறினர். நான்தான் அந்தச் செங்கலாக இருக்கிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4593 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும். அபுல்காசிம் (முஹம்மத் – ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது நிலையும் எனக்கு முன்பிருந்த இறைத்தூதர்களின் நிலையும் ஒரு மனிதரின் நிலையை ஒத்திருக்கிறது. அவர் நேர்த்தியாகவும் அழகாகவும் முழுமையாகவும் (பல அறைகள் கொண்ட) இல்லம் ஒன்றைக் கட்டினார். இல்லத்தின் ஒரு மூலையில் ஒரு செங்கல் அளவிற்குள்ள இடத்தை மட்டும் விட்டுவைத்தார். மக்கள் (வந்து) அதைச் சுற்றிப் பார்க்கலாயினர். அந்த இல்லம் அவர்களைக் கவர்ந்தது. அப்போது அவர்கள், "நீர் இந்த

இடத்தில் ஒரு செங்கல் வைத்திருக்கக்கூடாதா? (வைத்திருந்தால்) உமது கட்டடம் முழுமையடைந்திருக்குமே!" என்று கூறினர்.
நான்தான் அந்தச் செங்கல் என்று முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

4594 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது நிலையும் எனக்கு முன்பிருந்த இறைத்தூதர்கள் நிலையும் ஒரு மனிதரின் நிலையை ஒத்திருக்கிறது. அவர் ஒரு கட்டடத்தை அழகாகவும் எழிலாகவும் கட்டினார். அதன் ஒரு மூலையில் ஒரு செங்கல் வைக்குமளவுக்கான இடத்தை மட்டும் விட்டு வைத்தார். மக்கள் வந்து அதைச் சுற்றிப் பார்த்துவிட்டு அவரிடம் (அதன் அழகு குறித்து) வியப்புத் தெரிவித்தனர்; "(இந்த இடத்தில்) இந்தச் செங்கல் வைக்கப்பட்டிருந்தால் நன்றாயிருக்குமே!" என்று கூறினர். நானே அந்தச் செங்கல். நானே இறுதி இறைத்தூதர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் வாயிலாகவும் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் "எனது நிலையும் இதர இறைத்தூதர்களின் நிலையும்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

4595 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது நிலையும் இதர இறைத்தூதர்களின் நிலையும் ஒரு வீட்டைக் கட்டிய மனிதரின் நிலையை ஒத்திருக்கிறது. அவர் ஒரு செங்கல் அளவிற்குள்ள இடத்தை மட்டும் விட்டுவிட்டு முழுமையாகவும் நிறைவாகவும் அந்த வீட்டைக் கட்டி முடித்தார். மக்கள் அதனுள் நுழைந்து (பார்வையிட்டுவிட்டு) வியப்படைந்து, "இந்தச் செங்கல்லின் இடம் மட்டும் (காலியாக) இல்லாதிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!" என்று கூறலாயினர். நானே அந்தச் செங்கல்லின் இடத்தில் இருக்கிறேன். நானே நபிமார்களில் இறுதியாக வந்தேன். – இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "முழுமையாகவும்' என்பதற்குப் பகரமாக "அழகாகவும்' என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 8 உயர்ந்தோன் அல்லாஹ் ஒரு சமுதாயத்தின்மீது அருள்புரிய விரும்பினால், அதற்கு முன்பே அதன் தூதரைக் கைப்பற்றிக்கொள்வான்.

4596 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் உடைய அல்லாஹ் தன் அடியார்களில் ஒரு சமுதாயத்தாருக்கு அருள்புரிய நாடினால்,அதற்கு முன்னரே அதன் தூதரைக் கைப்பற்றி, அவரை அந்தச் சமுதாயத்தாருக்கு முன்பே சென்று (தக்க ஏற்பாடுகளுடன்) காத்திருக்கச் செய்கிறான். அல்லாஹ் ஒரு சமுதாயத்தாரை அழிக்க நாடினால், அந்தச் சமுதாயத்தாரின் தூதர்

உயிருடனிருந்து பார்த்துக்கொண்டிருக்கும்போதே அச்சமுதாயத்தாரை வேதனைக்குள்ளாக்கி அழிக்கிறான். அவரை நம்ப மறுத்து அவரது கட்டளைக்கு மாறுசெய்யும்போது, அவர்களை அழிப்பதன் மூலம் அவரைக் கண் குளிர்ச்சி அடையச் செய்கிறான்.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 9 நம் நபி (ஸல்) அவர்களுக்கு (மறுமையில் "அல்கவ்ஸர்' எனும்) நீர்த் தடாகம் உண்டு என்பதும் அதன் சிறப்புத் தன்மைகளும்.**

4597 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் உங்களுக்கு முன்பே ("அல்கவ்ஸர்') தடாகத்திற்குச் சென்று (உங்களுக்கு நீர் புகட்டக்) காத்திருப்பேன்.
இதை ஜுன்தப் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜுன்தப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4598 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் உங்களுக்கு முன்பே ("அல்கவ்ஸர்') தடாகத்திற்குச் சென்று (உங்களுக்கு நீர் புகட்டக்) காத்திருப்பேன். யார் (என்னிடம்) வருகிறாரோ அவர் (அத்தடாகத்தின் நீரை) அருந்துவார். யார் (அதை) அருந்துகிறாரோ அவருக்கு ஒருபோதும் தாகமே ஏற்படாது. (அத்தடாகத்தினருகில்) என்னிடம் சிலர் வருவார்கள். அவர்களை நான் அறிந்துகொள்வேன். என்னையும் அவர்கள் அறிந்துகொள்வார்கள். பிறகு எனக்கும் அவர்களுக்கும் இடையே தடை ஏற்படுத்தப்படும்.
இதை சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸை சஹ்ல் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கும் அபூஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் இந்த ஹதீஸை அறிவித்துக்கொண்டிருந்தபோது, அதைச் செவியுற்றுக்கொண்டிருந்த நுஅமான் பின் அபீஅய்யாஷ் (ரஹ்) அவர்கள் "இவ்வாறு சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதை நீங்கள் செவியுற்றீர்களா?"என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். அப்போது நுஅமான் (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: அபூசயீத் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூடுதலாக அறிவித்ததையும் நான் செவியுற்றேன்:
அப்போது நபி (ஸல்) அவர்கள், "இவர்கள் என்னைச் சேர்ந்தவர்கள் (என் தோழர்கள்)" என்று சொல்வார்கள். அப்போது "உங்களுக்குப் பின்னால் அவர்கள் செய்ததை நீங்கள் அறியமாட்டீர்கள்" என்று கூறப்படும். "அப்போது நான், எனக்குப் பின்னர் (தமது மார்க்கத்தை) மாற்றிக்கொண்டவர்கள் தொலைந்து போகட்டும்; தொலைந்து போகட்டும்" என்று கூறுவேன் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சஹ்ல் (ரலி) அவர்கள் வழியாக மற்றோர் அறிவிப்பாளர்தொடரிலும் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் வழியாக இன்னோர் அறிவிப்பாளர்தொடரிலும் வந்துள்ளது.

4599 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
("அல்கவ்ஸர்") எனும் எனது தடாகம் (பரப்பளவில்) ஒரு மாத காலப் பயணத் தொலைவு கொண்டதாகும். அதன் அனைத்து மூலைகளும் சமஅளவு கொண்டவையாகும். அதன் நீர் வெள்ளியைவிட வெண்மையானதாகும். அதன் மணம் கஸ்தூரியைவிட நறுமணம் வாய்ந்ததாகும். அதன் (விளிம்பிலிருக்கும்) கூஜாக்கள், (எண்ணிக்கையில்) விண்மீன்கள் போன்றவையாகும். யார் அதன் நீரை அருந்துகிறாரோ அவர் அதன்பின் ஒருபோதும் தாகமடையமாட்டார்.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு அபீமுலைக்கா (ரஹ்) அவர்கள் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் கூறியதாகப் பின்வருமாறு சொன்னார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான் (எனது "அல்கவ்ஸர்' எனும்) தடாகத்தினருகில் இருந்தவாறு உங்களில் யார் என்னிடம் வருகிறார்கள் என்பதை உற்றுப் பார்த்துக்கொண்டிருப்பேன். அப்போது என்னை நெருங்கவிடாமல் சிலர் பிடிக்கப்படுவார்கள்.
உடனே நான் "இறைவா! (இவர்கள்) என்னைச் சேர்ந்தவர்கள்; என் சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள்" என்பேன். அதற்கு "உமக்குப் பின்னால் இவர்கள் செய்ததை நீர் அறிவீரா? அல்லாஹ்வின் மீதாணையாக! இவர்கள் தம் குதிகால்கள்மீது (தமது பழைய மதத்திற்கே) திரும்பிச் சென்றுகொண்டேயிருந்தார்கள்" என்று கூறப்படும்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான நாஃபிஉ பின் உமர் அல்ஜுமஹீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இதனால்தான் இப்னு அபீமுலைக்கா (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வே! நாங்கள் எங்கள் குதிகால்கள்மீது திரும்பிச் செல்வதிலிருந்தும், நாங்கள் எங்கள் மார்க்கம் தொடர்பாகக் குழப்பத்தில் ஆழ்த்தப்படுவதிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறோம்" என்று பிரார்த்திப்பார்கள்.

4600 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்கள் முன்னிலையில் இருந்தபடி கூறினார்கள்: நான் எனது ("அல்கவ்ஸர்' எனும்) தடாகத்தினருகில் உங்களில் என்னிடம் வருபவர் யார் என்று எதிர்பார்த்துக் காத்திருப்பேன். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் சிலர் என்னிடம் நெருங்கவிடாமல் தடுக்கப்படுவர். அப்போது நான் "இறைவா! (இவர்கள்) என்னைச் சேர்ந்தவர்கள்; என் சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள்" என்று கூறுவேன். அதற்கு இறைவன், "இவர்கள் உமக்குப் பின்னால் செய்ததை நீர் அறியமாட்டீர். இவர்கள் தம் குதிகால்கள்மீது (தம் பழைய மதத்திற்கே) திரும்பிச் சென்றுகொண்டேயிருந்தனர்" என்று கூறுவான்.

4601 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் ("அல்கவ்ஸர்' எனும் சிறப்புத்) தடாகம் குறித்துக் கூறுவதை நான் கேள்விப் பட்டுவந்தேன். ஆனால், அதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து எதையும் நான் செவியுறவில்லை. இந்நிலையில் ஒரு நாள் என் அடிமைப் பெண் எனக்குத் தலைவாரிக்கொண்டிருந்தாள்.

அப்போது (பள்ளிவாசலின் சொற்பொழிவு மேடையிலிருந்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மக்களே!' என்று அழைத்தார்கள். உடனே நான் அந்த அடிமைப் பெண்ணிடம், " என்னைவிட்டு (சிறிது) விலகிக்கொள்" என்று சொன்னேன். அதற்கு அவள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆண்களைத்தான் அழைத்தார்கள். பெண்களை அழைக்கவில்லை" என்று சொன்னாள். அதற்கு நான் "நானும் மக்களில் ஒருவரே" என்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நான் (எனது "அல்கவ்ஸர்' எனும்) தடாகத்தினருகில் உங்களை எதிர்பார்த்துக் காத்திருப்பேன். அங்கு என்னிடம் வருவோருக்கு ஓர் எச்சரிக்கை! உங்களில் எவரும் வழி தவறிவந்த ஒட்டகம் விரட்டப்படுவதைப் போன்று (என்னை நெருங்கவிடாமல்) என்னிடமிருந்து விரட்டப்பட வேண்டாம்.

அப்போது நான், "ஏன் இவ்வாறு (விரட்டுகிறீர்கள்)?" என்று கேட்பேன். அதற்கு, "உங்களுக்குப் பின்னால் இவர்கள் புதிது புதிதாக (மார்க்கத்தில்) எதையெல்லாம் உருவாக்கினார்கள் என்பது உங்களுக்குத் தெரியாது" என்று சொல்லப்படும். அப்போது நான், "தொலையட்டும்! (அவர்கள்)" என்பேன்.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் உம்மு சலமா (ரலி) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி "மக்களே!'என்று கூறியதை நான் கேட்டேன். அப்போது நான் தலைவாரிக்கொண்டிருந்தேன். உடனே நான் எனக்குத் தலைவாரிவிட்டுக்கொண்டிருந்த அடிமைப் பெண்ணிடம், தலை முடியைச் சேர்த்து (கொண்டை போட்டு)விடு என்று சொன்னேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4602 உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நாள் புறப்பட்டு வந்து இறந்தவர்களுக்காகத் தொழுவிப்பதைப் போன்று உஹுதுப் போர் உயிர்த் தியாகிகளுக்காகத் தொழுதார்கள்.

பிறகு சொற்பொழிவு மேடை (மிம்பரு)க்குத் திரும்பிவந்து "உங்களுக்காக நிச்சயம் நான் (மறுமையில்) காத்திருப்பேன். உங்களுக்கு நான் சாட்சியும் ஆவேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இப்போது ("அல்கவ்ஸர்' எனும்) என் தடாகத்தைக் காண்கிறேன். எனக்கு "பூமியின் கருவூலத் திறவுகோல்கள்' அல்லது "பூமியின் திறவுகோல்கள்' கொடுக்கப் பட்டுள்ளன. அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்குப் பின்னால் நீங்கள் (ஏக இறைவனுக்கு) இணை கற்பிப்பவர்களாக ஆகிவிடுவீர்களோ என்று நான் அஞ்சவில்லை. ஆனால், உலகச் செல்வங்களுக்காக நீங்கள் ஒருவரோடொருவர் போட்டியிட்டு (மோதி)க்கொள்வீர்களோ என்றுதான் அஞ்சுகிறேன்" என்று சொன்னார்கள்.

4603 உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உஹுதுப் போர் உயிர்த்தியாகிகளுக்காக (ஜனாஸாத் தொழுகை) தொழுவித்தார்கள். பிறகு சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதேறி (உரை நிகழ்த்தி)னார்கள். அ(வ்வுரையான)து உயிரோடுள்ளவர்களிடமும் இறந்தவர்களிடமும் (மறுமைப் பயணத்திற்கு) விடைபெறுவது போலிருந்தது.

அவ்வுரையில் அவர்கள், "நான் ("அல்கவ்ஸர்' எனும் எனது) தடாகத்தினருகில் உங்களுக்(கு நீர் புகட்டுவதற்)காகக் காத்திருப்பேன். அத்தடாகத்தின் பரப்பளவு "அய்லா'விலிருந்து "ஜுஹ்ஃபா' வரையுள்ள தொலைதூரத்தைப் போன்றதாகும். எனக்குப் பின்னால் நீங்கள் இணைவைப்பவர்களாக ஆகிவிடுவீர்களோ என்று நான் அஞ்சவில்லை. ஆனால், உலகத்திற்காக நீங்கள் ஒருவரோடொருவர் போட்டியிட்டு, சண்டையிட்டுக்கொண்டு, உங்களுக்கு முன்னிருந்தோர் அழிந்ததைப் போன்று நீங்களும் அழிந்துவிடுவீர்களோ என்றே நான் அஞ்சுகிறேன்" என்று சொன்னார்கள்.

இதுவே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை இறுதியாகச் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது பார்த்த நிகழ்வாக அமைந்தது.

4604 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நான் உங்களுக்கு முன்பே ("அல்கவ்ஸர்' எனும்) தடாகத்திற்குச் சென்று (உங்களுக்கு நீர் புகட்டக்) காத்திருப்பேன். அப்போது மக்களில் சிலருக்காக நான் வாதாடுவேன். ஆனால், அதில் நான் தோற்றுவிடுவேன். அப்போது நான் "இறைவா! (இவர்கள்) என் தோழர்கள்; என் தோழர்கள்" என்பேன். அதற்கு "உமக்குப் பின்னர் இவர்கள் (மார்க்கத்தில்) புதிது புதிதாக என்னென்ன செய்தார்கள் என்பதை நீர் அறியமாட்டீர்" என்று சொல்லப்படும்.

இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் "(இவர்கள்) என் தோழர்கள்; என் தோழர்கள் (என்பேன்)" எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் வழியாகவும் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4605 ஹாரிஸா பின் வஹ்ப் (ரலி) அவர்கள் கூறியதாவது:

"("அல்கவ்ஸர்' எனும்) எனது தடாக(த்தின் விசால)மானது, (யமனிலுள்ள) "ஸன்ஆ'விற்கும் மதீனாவிற்கும் இடையேயான தொலைதூரம் கொண்டதாகும்" என நபி (ஸல்) அவர்கள் கூறக்கேட்டேன் என்று சொன்னேன்.

அப்போது முஸ்தவ்ரித் பின் ஷத்தாத் (ரலி) அவர்கள் என்னிடம் "அதன் கோப்பைகள் குறித்து நீங்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து செவியுறவில்லையா?" என்று கேட்டார்கள். நான் "இல்லை' என்றேன். அதற்கு முஸ்தவ்ரித் (ரலி) அவர்கள், "(அல்கவ்ஸர்) தடாகத்தில் வைக்கப்பட்டுள்ள கோப்பைகள் (எண்ணிக்கையில்) நட்சத்திரங்களைப் போன்று காணப்படும்" என நபி (ஸல்) அவர்கள் தெரிவித்ததாகச் சொன்னார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் ஹாரிஸா பின் வஹ்ப் அல்குஸாஈ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "அல்கவ்ஸர்' தடாகத்தைப் பற்றி மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி அறிவித்தார்கள் என்று இடம்பெற்றுள்ளது. முஸ்த்தவ்ரித் (ரலி) அவர்களின் கூற்றும் அவர்களுக்கு ஹாரிஸா (ரலி) அவர்கள் அளித்த பதிலும் இடம்பெறவில்லை.

4606 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுக்கு எதிரில் (மறுமையில்) ஒரு தடாகம் உள்ளது. (அதை நீங்கள் காண்பீர்கள்.) அதன் இரு மூலைகளுக்கு இடையேயுள்ள தொலைதூரம் (அன்றைய "ஷாம்' நாட்டின்) "ஜர்பா' மற்றும் "அத்ருஹ்' ஆகிய நகரங்களுக்கிடையே உள்ள தூரத்தைப் போன்றதாகும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுக்கு எதிரில் (மறுமை நாளில்) ஒரு தடாகம் உள்ளது. (அதை நீங்கள் காண்பீர்கள்). அது (அன்றைய "ஷாம்'நாட்டின்) "ஜர்பா' மற்றும் "அத்ருஹ்' ஆகியவற்றுக்கு இடையே உள்ளதைப் போன்ற (தொலைதூரத்தைக் கொண்ட)தாகும்.
இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "எனது தடாகம்' எனும் வாசகம் இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் உபைதுல்லாஹ் பின் உமர் பின் ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள், பின்வருமாறு கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது:
நான் நாஃபிஉ (ரஹ்) அவர்களிடம் (அவ்விரு ஊர்களின் தூரத்தைப் பற்றிக்) கேட்டேன். அதற்கு நாஃபிஉ (ரஹ்) அவர்கள், "(அவ்விரண்டும்) "ஷாம்' நாட்டிலுள்ள இரு ஊர்களாகும். அவ்விரண்டுக்குமிடையே மூன்று இரவு பயணத்தொலைவு உள்ளது" என்று பதிலளித்தார்கள்.
இப்னு பிஷ்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மூன்று நாட்கள் பயணத்தொலைவு உள்ளது" என்று நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாகக் காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4607 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுக்கு எதிரில் (மறுமை நாளில்) தடாகம் ஒன்று உள்ளது. (அதை நீங்கள் காண்பீர்கள். அதன் நீளம், அன்றைய ஷாம் நாட்டிலுள்ள) "ஜர்பா' மற்றும் "அத்ருஹ்' ஆகியவற்றுக்கிடையே உள்ள (தொலைதூரத்)தைப் போன்றதாகும். அதில் விண்மீன்களைப் போன்று கோப்பைகள் உள்ளன. யார் அங்கு வந்து அதிலிருந்து அருந்துகிறாரோ அவருக்கு அதற்குப் பின்னர் ஒருபோதும் தாகமே ஏற்படாது.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4608 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! (அல்கவ்ஸர் எனும்) அத்தடாகத்தின் கோப்பைகள் என்ன?"என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! அதன் கோப்பைகள் (எண்ணிக் கையானது), மேகமோ நிலவோ இல்லாத இரவில் காட்சியளிக்கும் விண்மீன்களின் எண்ணிக்கையைவிட அதிகமானதாகும். அவையே சொர்க்கத்தின் கோப்பைகளாகும்.
யார் அ(த்தடாகத்)தில் அருந்துகிறாரோ அவருக்கு இறுதிவரை தாகமே ஏற்படாது. அதில் சொர்க்கத்திலிருந்து இரு வடிகுழாய்கள் வழியாக நீர் வந்துசேருகிறது. அதில் அருந்துபவருக்குத் தாகமே ஏற்படாது. அத்தடாகத்தின் அகலம் அதன் நீளத்தைப் போன்று (சமஅளவில்) இருக்கும். அதன் தொலைதூரம் (அன்றைய ஷாம் நாட்டிலிருந்த) "அம்மானு'க்கும் "அய்லா'வுக்கும் இடையேயுள்ள தொலைதூரத்தைக் கொண்டதாகும். அதன் நீர் பாலைவிட வெண்மையானது; தேனைவிட மதுரமானது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4609 ஸவ்பான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "நான் எனது ("அல் கவ்ஸர்') தடாகத்தில் நீர் அருந்தும் பகுதியில் நின்றுகொண்டு யமன்வாசிகளுக்(கு முன்னுரிமை அளிப்பதற்)காக மற்றவர்களை விரட்டுவேன். யமன்வாசிகளுக்குத் தண்ணீர் கிடைப்பதற்காக எனது (கையிலுள்ள) தடியின் மூலம் மற்றவர்களை அடிப்பேன்" என்று சொன்னார்கள்.
அப்போது நபியவர்களிடம் அத்தடாகத்தின் அகலம் குறித்து வினவப்பட்டது. அதற்கு அவர்கள், "அது, எனது வசிப்பிட(மான மதீனா நகர)த்திலிருந்து "அம்மான்'வரை உள்ள தொலைவிற்கு அகலமானதாகும்" என்றார்கள்.
அத்தடாகத்தின் பானம் குறித்து வினவப்பட்டபோது, "அது, பாலைவிட வெண்மையானது; தேனைவிட இனிமையானது. சொர்க்கத்திலிருந்து நீளுகின்ற இரு வடிகுழாய்கள் அத்தடாகத்திற்குள் தொடர்ச்சியாகத் தண்ணீரைப் பாய்ச்சிக்கொண்டிருக்கும். அக்குழாய்களில் ஒன்று தங்கத்தாலானது; மற்றொன்று வெள்ளியாலானது" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஸவ்பான் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் மறுமை நாளில் (அல்கவ்ஸர்) தடாகத்தில் நீர் அருந்தும் பகுதியில் இருப்பேன்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.
-(அல்கவ்ஸர்) தடாகம் தொடர்பான மேற்கண்ட ஹதீஸ், ஸவ்பான் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் முஹம்மத் பின் பஷ்ஷார் (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறியதாக இடம்பெற்றுள்ளது:
நான் எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த யஹ்யா பின் ஹம்மாத் (ரஹ்) அவர்களிடம், "நீங்கள் இந்த ஹதீஸை அபூஅவானா (ரஹ்) அவர்களிடமிருந்தே செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு யஹ்யா (ரஹ்) அவர்கள், "இதை நான் ஷுஅபா (ரஹ்) அவர்களிடமிருந்தும் செவியுற்றுள்ளேன்" என்று பதிலளித்தார்கள். உடனே நான், "அது

குறித்து நன்கு சிந்தித்துச் சொல்லுங்கள்" என்று கேட்டேன். அப்போது அவர்கள் நன்கு சிந்தித்துவிட்டு, அவ்வாறே (ஷுஅபா (ரஹ்) அவர்களிடமிருந்தே) எனக்கு அறிவித்தார்கள்" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

4610 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் ("அல்கவ்ஸர்' எனும்) எனது தடாகத்தைவிட்டு, ஒட்டகங்களிடமிருந்து அந்நிய ஒட்டகங்களை விரட்டுவதைப் போன்று சில மனிதர்களை விரட்டுவேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4611 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் தடாகத்தின் (பரப்பு) அளவு, யமனிலுள்ள "ஸன்ஆ' நகரத்திற்கும் (ஷாம் நாட்டை ஒட்டியிருந்த) "அய்லா'நகரத்திற்கும் இடையேயான (தொலைதூரத்)தைப் போன்றதாகும். மேலும், அதில் விண்மீன்களின் எண்ணிக்கையைப் போன்று (எண்ணற்ற) கோப்பைகள் இருக்கும். – இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4612 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என்னுடனிருந்த என் தோழர்களில் சிலர் (மறுமையில் "அல்கவ்ஸர்') தடாகத்துக்கு என்னிடம் வருவார்கள். நான் அவர்களைப் பார்க்கும்போது அவர்கள் (நானிருக்கும் பகுதிக்கு) ஏறிவருவர். அப்போது என்னைவிட்டு அவர்கள் அப்புறப்படுத்தப்படுவார்கள். அப்போது நான், "இறைவா! (இவர்கள்) என் அருமைத் தோழர்கள்; என் அருமைத் தோழர்கள்" என்பேன். அதற்கு, "உமக்குப் பின்னால் இவர்கள் (புதிது புதிதாக) என்னென்ன உருவாக்கினார்கள் என்பதை நீர் அறியமாட்டீர்" என்று என்னிடம் கூறப்படும்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அதன் கோப்பைகள் விண்மீன்களின் (கணக்கிலடங்கா) எண்ணிக்கையில் அமைந்ததாகும்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4613 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது (அல்கவ்ஸர்) தடாகத்தின் இரு கரைகளுக்கிடையிலான தொலைதூரம், (யமனிலுள்ள) "ஸன்ஆ'வுக்கும் மதீனாவுக்கும் இடையேயுள்ள தொலைதூரம் போன்றதாகும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4614 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், (ஸன்ஆவுக்கும் மதீனாவுக்கும் இடையேயுள்ள தொலைதூரம் போன்றதாகும்.) அல்லது மதீனாவுக்கும் அம்மானுக்கும் இடையேயுள்ள தொலைதூரம் போன்றதாகும் என ஐயப்பாட்டுடன் அறிவிக்கப்பட்டுள்ளது. அபூ அவானா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "எனது

(அல்கவ்ஸர்) தடாகத்தின் இருகரைகளுக்கும் இடையேயுள்ள தொலைதூரம்...'என்று காணப்படுகிறது.

4615 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அத்தடாகத்தில் விண்மீன்களின் எண்ணிக்கை அளவுக்குப் பொன்னாலும் வெள்ளியாலுமான கோப்பைகள் காணப்படும்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அதன் கோப்பைகள் விண்மீன்களின் எண்ணிக்கையைவிட அதிகமானவையாகும்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4616 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் உங்களுக்கு முன்பே ("அல்கவ்ஸர்' எனும்) அத்தடாகத்தினருகில் உங்களுக்காகக் காத்திருப்பேன். அதன் இரு ஓரங்களுக்கு இடையேயுள்ள தூரம், (யமனிலுள்ள) "ஸன்ஆ'வுக்கும் "அய்லா'வுக்கும் இடையே உள்ள தூரத்தைப் போன்றதாகும். அதிலுள்ள கோப்பைகள் (எண்ணிக்கையில்) விண்மீன்களைப் போன்றவையாகும்.
இதை ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4617 ஆமிர் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் என் அடிமை நாஃபிஉ மூலம் ஜாபிர் பின சமுரா (ரலி) அவர்களுக்கு "தாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்ற ஹதீஸ் ஒன்றை எனக்குத் தெரிவியுங்கள்" என்று கடிதம் எழுதினேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் உங்களுக்கு முன்பே சென்று (உங்களுக்கு நீர் புகட்டக்) காத்திருப்பேன்' என்று கூறியதைக் கேட்டுள்ளேன்" என்று பதில் கடிதம் எழுதினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 10 உஹுதுப் போர் நாளில் நபி (ஸல்) அவர்களுக்காக (வானவர்கள்) ஜிப்ரீல் (அலை), மீக்காயீல் (அலை) ஆகியோர் (எதிரிகளுடன்) போரிட்டது.

4618 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உஹுதுப் போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வலப் பக்கமும் இடப் பக்கமும் வெண்ணிற ஆடைகள் அணிந்த இரு மனிதர்களை –அதாவது ஜிப்ரீல் (அலை), மீக்காயீல் (அலை) ஆகியோரை– நான் பார்த்தேன். அதற்கு முன்போ அதற்குப் பின்போ அவ்விருவரையும் நான் பார்த்ததில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4619 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உஹுதுப் போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வலப் பக்கமும் இடப் பக்கமும் வெண்ணிற ஆடைகள் அணிந்த இரு மனிதர்களை நான் பார்த்தேன். அவ்விரு மனிதர்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காகக் கடுமையாகப் போரிட்டுக் கொண்டிருந்தார்கள். அதற்கு முன்போ அதற்குப் பின்போ அவ்விருவரையும் நான் பார்த்ததில்லை.

## பாடம் : 11 நபி (ஸல்) அவர்களின் வீரமும் அறப்போருக்காக அவர்கள் முன்னே சென்றதும்.

4620 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (குணத்திலும் தோற்றத்திலும்) மக்களிலேயே மிகவும் அழகானவர்களாகவும் மக்களிலேயே அதிகக் கொடைகுணம் கொண்டவர்களாகவும் மக்களிலேயே அதிக வீரமுடையவர்களாகவும் இருந்தார்கள்.
ஒரு (நாள்) இரவு மதீனவாசிகள், (எதிரிகள் படையெடுத்து வருவதாகக் கேள்விப்பட்டு) பீதியுற்றார்கள். சப்தம் வந்த திசையை நோக்கி மக்களில் சிலர் நடந்தனர். (உண்மை நிலை அறிய) அத்திசையை நோக்கி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்பே சென்று விட்டிருந்தார்கள். பிறகு அவர்கள் தமது கழுத்தில் வாளைத் தொங்கவிட்டபடி அபூதல்ஹா (ரலி) அவர்களது (சேணம் பூட்டப்படாத) வெற்றுடலான குதிரையின்மீது அமர்ந்தவண்ணம் திரும்பி வந்து மக்களைச் சந்தித்து, "பீதியடையாதீர்கள்; பீதியடையாதீர்கள்" என்று (மக்களைப் பார்த்துச்) சொன்னார்கள்.
பிறகு "(அலை வீசும்) கடலாகவே (தங்கு தடையின்றி ஓடக்கூடியதாகவே) இக்குதிரையை நாம் கண்டோம்" அல்லது "இக்குதிரை ஒரு கடலாகும்" என்று சொன்னார்கள். (அதற்கு முன்னர்) அக்குதிரை மெதுவாக ஓடக்கூடியதாகவே இருந்தது.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4621 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மதீனாவில் (எதிரிகள் படையெடுத்து வருவதாக வதந்தி பரவி மக்களிடையே) பீதி ஏற்பட்டது. நபி (ஸல்) அவர்கள் அபூதல்ஹா (ரலி) அவர்களுக்குரிய "மன்தூப்' எனப்படும் குதிரை ஒன்றை இரவல் வாங்கி, (உண்மை நிலையைக் கண்டறிய எதிரிகள் வருவதாகச் சொல்லப்பட்ட திசையில்) அக்குதிரையிலேறிச் சென்றார்கள்.
பிறகு திரும்பி வந்து "பீதியூட்டும் எதையும் நாம் காணவில்லை. இக்குதிரையை (தொடர்ந்து அலை வீசும்) கடலாகவே (தங்குதடையின்றி ஓடக்கூடியதாகவே) நாம் கண்டோம்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு ஜஅஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அபூதல்ஹா (ரலி) அவர்களுக்குரிய' என்பதற்குப் பதிலாக "எங்களுக்குரிய குதிரை' ஒன்றை இரவல் வாங்கினார்கள் என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 12 மக்களிலேயே நபி (ஸல்) அவர்கள், தொடர்ந்து வீசும் (மழைக்) காற்றை விட அதிகமாகச் செல்வங்களை வாரி வழங்கக்கூடியவர்களாக இருந்தார்கள்.**

4622 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிலேயே செல்வங்களை அதிகமாக வாரி வழங்கக்கூடியவர்களாக இருந்தார்கள். அவர்கள் ரமளான் மாதத்தில் மேன்மேலும் அதிகமாக வாரி வழங்குவார்கள். (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் ஒவ்வோர் ஆண்டும் ரமளான் மாதத்தில் (ஒவ்வோர் இரவிலும்) அந்த மாதம் முடியும்வரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சந்திப்பது வழக்கம். அப்போது அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குர்ஆனை ஓதிக்காட்டுவார்கள். அவ்வாறு ஜிப்ரீல் தம்மைச் சந்திக்கும்போது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொடர்ந்து வீசும் (மழைக்) காற்றைவிட அதிகமாகச் செல்வங்களை வாரி வழங்குவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 13 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மக்களிலேயே மிகவும் அழகான பண்புகள் கொண்டவர்களாகத் திகழ்ந்தார்கள்.**

4623 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பத்து ஆண்டுகள் பணிவிடை செய்தேன். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் என்னை (மனம் வேதனைப்படும்படி) "ச்சீ' என்றோ "இதை ஏன் செய்தாய்?" என்றோ, "நீ இப்படிச் செய்திருக்கக் கூடாதா?" என்றோ எதற்காகவும் அவர்கள் (கடிந்து) சொன்னதில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபுர்ரபீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பணிவிடை செய்பவர் செய்ய வேண்டிய ஒரு செயலில் ("ச்சீ"என்றோ, "இதை ஏன் செய்தாய்?" என்றோ அவர்கள் கேட்டதில்லை)" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது. மேலும், "அல்லாஹ்வின் மீதாணையாக!' எனும் குறிப்பு அதில் இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4624 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது (என் தாயாரின் இரண்டாம் கணவர்) அபூதல்ஹா (ரலி) அவர்கள், எனது கையைப் பிடித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! அனஸ் புத்திசாலிப் பையன்; அவன் தங்களுக்குப் பணிவிடை செய்யட்டும்" என்று சொன்னார்கள்.
அதன்படி நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஊரிலிருக்கும்போதும் பயணத்தில் இருக்கும்போதும் அவர்களுக்குப் பணிவிடை செய்துவந்தேன். அல்லாஹ்வின்

மீதாணையாக! நான் செய்த எதைப் பற்றியும் "இதை நீ ஏன் இப்படிச் செய்தாய்?" என்றோ, நான் செய்யாமல் விட்ட எதைப் பற்றியும் "இதை நீ ஏன் இப்படிச் செய்யவில்லை?" என்றோ அவர்கள் என்னிடம் கேட்டதில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4625 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஒன்பது ஆண்டுகள் பணிவிடை செய்துள்ளேன். அவர்கள் ஒருபோதும் என்னிடம் "இன்னின்னதை நீ ஏன் செய்தாய்?" என்று கேட்டதாக எனக்குத் தெரியவில்லை; அவர்கள் எதற்காகவும் என்னை ஒருபோதும் குறை கூறியதுமில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4626 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிலேயே மிக அழகிய நற்குணம் கொண்டவராகத் திகழ்ந்தார்கள். அவர்கள் ஒரு நாள் அலுவல் ஒன்றுக்காக என்னை அனுப்பினார்கள். அப்போது நான் "அல்லாஹ்வின் மீதாணையாக! நான் போகமாட்டேன்" என்று சொன்னேன். ஆனால், என் மனத்தில் நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்ட அந்த அலுவலுக்குச் செல்ல வேண்டும் என்றே இருந்தது.

நான் புறப்பட்டுச் சென்றபோது, கடைத்தெருவில் விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்கள் சிலரைக் கடந்து சென்றேன். (அவர்களுடன் சேர்ந்து நானும் விளையாடலானேன்.) அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்குப் பின்பக்கம் (வந்து) எனது பிடரியைப் பிடித்தார்கள். அவர்களை நான் பார்த்தபோது அவர்கள் சிரித்துக்கொண்டிருந்தார்கள். "அருமை அனஸே! நான் உத்தரவிட்ட இடத்திற்கு நீ சென்றாயா?" என்று கேட்டார்கள். நான், "ஆம்; செல்கிறேன், அல்லாஹ்வின் தூதரே!" என்று சொன்னேன்.
மேலும் அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஒன்பது ஆண்டுகள் பணிவிடை செய்துள்ளேன். நான் செய்த எதைப் பற்றியும் "இன்னின்னதை நீ ஏன் செய்தாய்?' என்றோ, நான் செய்யாமல் விட்டுவிட்ட எதைப் பற்றியும் "நீ இன்னின்னதைச் செய்திருக்கக் கூடாதா?' என்றோ அவர்கள் என்னிடம் கேட்டதாக எனக்குத் தெரியவில்லை.

4627 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிலேயே மிக அழகிய பண்புகள் கொண்டவர்களாய்த் திகழ்ந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 14 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எது கேட்கப்பட்டாலும் ஒருபோதும் அவர்கள் "இல்லை' என்று சொன்னதில்லை என்பதும், அவர்கள் தாராளமாக நன்கொடைகள் வழங்கியதும்.**

4628 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எது கேட்கப்பட்டாலும் ஒருபோதும் அவர்கள் "இல்லை' என்று சொன்னதில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்படியே ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4629 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இஸ்லாத்தை முன்வைத்து எது கேட்கப் பட்டாலும் அவர்கள் அதைக் கொடுக்காமல் இருந்ததில்லை.
இந்நிலையில் அவர்களிடம் ஒரு மனிதர் வந்து (கேட்டபோது), இரு மலைகளுக்கு இடையே இருக்கும் (அளவுக்கு அதிகமான) ஆடுகளை அவருக்கு வழங்கினார்கள். அந்த மனிதர் தம் சமுதாயத்தாரிடம் திரும்பிச் சென்று, "என் மக்களே! நீங்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். ஏனெனில், முஹம்மத் வறுமையை அஞ்சாமல் தாராளமாக நன்கொடைகள் வழங்குகிறார்" என்று சொன்னார்.

4630 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் (வந்து) இரு மலைகளுக்கிடையே இருக்கும் (அளவுக்கு அதிகமான) ஆடுகளை (நன்கொடையாகக்) கேட்டார். நபி (ஸல்) அவர்கள் அவற்றைக் கொடுத்தார்கள். அவர் தம் சமுதாயத்தாரிடம் சென்று, "என் மக்களே! நீங்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! முஹம்மத் அவர்கள் வறுமையை அஞ்சாமல் தாராளமாக நன்கொடைகள் வழங்குகிறார்" என்று கூறினார்.
ஒரு மனிதர் உலக ஆதாயத்திற்காக இஸ்லாத்தை ஏற்றிருந்தாலும், இஸ்லாத்தைத் தழுவிய சிறிது காலத்திற்குள் அவருக்கு இஸ்லாம் இந்த உலகத்தையும் அதிலிருப்பவற்றையும்விட மிகவும் உவப்பானதாக ஆகிவிடும்.

4631 இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றிப் போருக்குப் புறப்பட்டுச் சென்றார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவர்களுடனிருந்த முஸ்லிம்களும் புறப்பட்டுச் சென்று ஹுனைன் எனுமிடத்தில் ("ஹவாஸின்' குலத்தாருடன்) போரிட்டனர். அப்போது அல்லாஹ் தனது மார்க்கத்திற்கும் முஸ்லிம்களுக்கும் வெற்றியளித்தான்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்றைய தினத்தில் ஸஃப்வான் பின் உமய்யாவுக்கு (முதலில்) நூறு ஒட்டகங்கள் கொடுத்தார்கள். பிறகு இன்னும் நூறு ஒட்டகங்கள் கொடுத்தார்கள். பிறகு மேலும் நூறு ஒட்டகங்கள் கொடுத்தார்கள்.

(முந்நூறு ஒட்டகங்களைப் பெற்றுக்கொண்ட) ஸஃப்வான் பின் உமய்யா, "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அன்று தாராளமாக) எனக்கு வழங்கினார்கள். அப்போது அவர்கள் எனக்கு மக்களிலேயே மிகவும் வெறுப்பானவர்களாய் இருந்தார்கள். அவர்கள் எனக்கு நன்கொடைகள் வழங்கிக்கொண்டே வந்து மக்களிலேயே எனக்கு மிகவும் உவப்பானவர்களாய் ஆகிவிட்டார்கள்" என்று கூறியதாக சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள்.

4632 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "பஹ்ரைனின் நிதி நம்மிடம் வந்தால், நான் உனக்கு இவ்வளவு இவ்வளவு இவ்வளவு தருவேன்" என்று கூறி, இரு கைகளையும் அள்ளித் தருவதைப் போன்று (மூன்று முறை) சேர்த்துக்காட்டினார்கள். ஆனால், அந்த நிதி வருவதற்குள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்துவிட்டார்கள்.
பின்னர் (ஆட்சித் தலைவராக வந்த) அபூபக்ர் (ரலி) அவர்களிடம் அந்த நிதி வந்தது. அப்போது பொது அறிவிப்பாளர் ஒருவரிடம் "எவருக்காவது நபி (ஸல்) அவர்கள் ஏதேனும் வாக்களித்திருந்தால், அல்லது எவருக்காவது அவர்கள் கடன் தர வேண்டியிருந்தால் அவர் நம்மிடம் வரட்டும்" என்று பொது அறிவிப்புச் செய்யும்படி கட்டளையிட்டார்கள். (அவ்வாறே அவர் பொது அறிவிப்புச் செய்தபோது) நான் (அபூபக்ர் (ரலி) அவர்களிடம்) சென்று, "பஹ்ரைனின் நிதி நம்மிடம் வந்தால், நான் இவ்வளவு இவ்வளவு தருவேன் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் கூறியிருந்தார்கள்" என்றேன்.
அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் இரு கை நிறைய ஒரு தடவை அள்ளிக்கொடுத்து "எண்ணிப்பார்" என்று சொன்னார்கள். நான் எண்ணிப்பார்த்தபோது ஐநூறு (நாணயங்கள்) இருந்தன. பிறகு மீண்டும் "இதைப் போன்றே,இன்னும் இரு மடங்குகளும் பெற்றுக்கொள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4633 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்கள் இறந்தபோது (பஹ்ரைனின் ஆளுநர்) அலாஉ பின் அல்ஹள்ரமீ (ரலி) அவர்களிடமிருந்து (கலீஃபா) அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு (சிறிது) நிதி வந்தது. அபூபக்ர் (ரலி) அவர்கள், "யாருக்காவது நபி (ஸல்) அவர்கள் கடன் தர வேண்டியிருந்தால், அல்லது நபியவர்களின் தரப்பிலிருந்து யாருக்காவது வாக்குறுதி தரப்பட்டிருந்தால் அவர் நம்மிடம் வரட்டும். (அவரது உரிமையை நாம் நிறைவேற்றுவோம்)" என்று கூறினார்கள் என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

**பாடம் : 15 நபி (ஸல்) அவர்கள் குழந்தைகள் மீதும் குடும்பத்தார்மீதும் காட்டிய அன்பும், அவர்களது பணிவும், பணிவின் சிறப்பும்.**

4634 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எனக்கு இன்றிரவு ஓர் ஆண் குழந்தை பிறந்தது; அவனுக்கு நான் என் தந்தை இப்ராஹீம் (அலை) அவர்களின் பெயரைச் சூட்டினேன்" என்று கூறிவிட்டு, அக்குழந்தையை அபூ சைஃப் எனப்படும் கொல்லரின் மனைவியான உம்மு சைஃப் எனும் பெண்மணியிடம் (பாலூட்டுவதற்காக) ஒப்படைத்தார்கள்.
பின்னர் (குழந்தைக்கு உடல்நலக்குறைவு என அறிந்து அதைப் பார்ப்பதற்காகக்) குழந்தையிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்ற போது அவர்களைப் பின்தொடர்ந்து நானும் சென்றேன். அபூசைஃபிடம் நாங்கள் சென்றடைந்த போது, அவர் தமது உலையை ஊதிக்கொண்டிருந்தார். வீடு முழுவதும் புகை நிரம்பியிருந்தது. நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்பாக விரைவாகச் சென்று "அபூசைஃபே! (உலையை ஊதுவதை) நிறுத்துங்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்துள்ளார்கள்" என்றேன்.
உடனே அபூசைஃப் (உலையை ஊதுவதை) நிறுத்திவிட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குழந்தையை வாங்கித் தம்மோடு அணைத்துக்கொண்டுவிட்டு, (பிரார்த்தனைகளில்) அல்லாஹ் நாடிய சிலவற்றைச் சொன்னார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்னிலையில் குழந்தை (இப்ராஹீம்) மூச்சு வாங்கிக்கொண்டிருந்ததை நான் கண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன. அப்போது அவர்கள், "கண் அழுகின்றது; உள்ளம் கவலைப்படுகின்றது. நம் இறைவன் விரும்புவதைத் தவிர வேறெதையும் நாம் கூறமாட்டோம். அல்லாஹ்வின் மீதாணையாக! இப்ராஹீமே! உம(து பிரிவு)க்காக நாம் கவலைப்படுகிறோம்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4635 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை விட அதிகமாகத் தம் குடும்பத்தாரை நேசிக்கும் ஒருவரை நான் பார்த்ததில்லை. (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் குழந்தை) இப்ராஹீம் மதீனாவின் மேட்டுப் பாங்கான கிராமப்பகுதியில் பாலூட்டி வளர்க்கப்பட்டு வந்தார்.
(அங்கிருந்த குழந்தையைப் பார்ப்பதற்காக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செல்லும் போது அவர்களுடன் நாங்களும் செல்வோம். அவர்கள் வீட்டுக்குள் நுழைவார்கள். அப்போது வீட்டுக்குள் புகை மூட்டப்பட்டிருக்கும். குழந்தையின் பால்குடித் தந்தை (அபூசைஃப்) கொல்லராக இருந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குழந்தையை வாங்கி முத்தமிட்டுவிட்டுத் திரும்புவார்கள்.
இதன் அறிவிப்பாளரான அம்ர் பின் சயீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: குழந்தை இப்ராஹீம் இறந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இப்ராஹீம் என் புதல்வர். பால்குடிப் பருவத்திலேயே இறந்துவிட்டார். அவருக்கு அவரது பால்குடித் தவணையை

முழுமையாக்கும் செவிலித் தாய்மார்கள் இருவர் சொர்க்கத்தில் இருக்கிறார்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4636 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமவாசிகள் சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்திருந்தனர். அப்போது அவர்கள் (மக்களிடம்), "நீங்கள் உங்கள் குழந்தைகளை முத்தமிடுகிறீர்களா?" என்று கேட்டனர். மக்கள் "ஆம்' என்று பதிலளித்தனர். அதற்கு அந்தக் கிராமவாசிகள் "ஆனால், நாங்கள் அல்லாஹ்வின் மீதாணையாக! (குழந்தைகளை) முத்தமிடுவதில்லை" என்று கூறினர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் உங்களிடமிருந்து கருணையைப் பறித்துவிட்டால்,என்னால் என்ன செய்ய முடியும்?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் இப்னு நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உமது உள்ளத்திலிருந்து கருணையைப் பறித்துவிட்டால், (என்னால் என்ன செய்ய முடியும்)" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டதாக இடம்பெற்றுள்ளது.

4637 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (தம் பேரர்) ஹசன் (ரலி) அவர்களை முத்தமிடுவதைக் கண்ட அக்ரஉ பின் ஹாபிஸ் (ரலி) அவர்கள், "எனக்குப் பத்து குழந்தைகள் இருக்கிறார்கள். அவர்களில் எவரையும் நான் முத்தமிட்டதில்லை" என்று சொன்னார்கள்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "விஷயம் தெரியுமா? கருணை காட்டாதவன் கருணை காட்டப்படமாட்டான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4638 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்கள்மீது கருணை காட்டாதவருக்கு அல்லாஹ் கருணை காட்டமாட்டான்.
இதை ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஏழு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 16 நபி (ஸல்) அவர்கள் அதிகமாக வெட்கப்பட்டது.

4639 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திரைக்குள் இருக்கும் கன்னிப் பெண்ணை விடவும் அதிக வெட்கமுடையவர்களாயிருந்தார்கள். அவர்கள் ஏதேனுமொன்றை வெறுத்தால், அந்த வெறுப்பை அவர்களது முகத்திலிருந்தே நாங்கள் அறிந்துவிடுவோம்.
மேற்கண்ட ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4640 மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஆவியா (ரலி) அவர்கள் (இராக்கில் உள்ள) கூஃபாவுக்கு வந்தபோது நாங்கள் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நினைவுகூர்ந்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இயற்கையாகவும் அருவருப்பாகப் பேசுபவராக இருக்கவில்லை; செயற்கையாகவும் அருவருப்பாகப் பேசுபவராக இருக்கவில்லை" என்று கூறிவிட்டு, "நற்குணங்கள் வாய்ந்தவரே உங்களில் மிகவும் சிறந்தவர்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள் என்றும் தெரிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் உஸ்மான் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் முஆவியா (ரலி) அவர்களுடன் (இராக்கிலுள்ள) கூஃபா நகருக்கு வந்திருந்தபோது (அவர்களிடம் நாங்கள் சென்றோம்)"என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 17 நபி (ஸல்) அவர்களின் புன்னகையும் அழகிய உறவாடலும்.

4641 சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களிடம், "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது அவையில் அமர்ந்திருக்கிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்; அதிகமாகவே (அமர்ந்திருக்கிறேன்). அவர்கள் சுப்ஹுத் தொழுகையை முடித்தபின் சூரியன் உதயமாவதற்குமுன் தாம் தொழுத இடத்திலிருந்து எழுந்திருக்கமாட்டார்கள். சூரியன் உதயமான பின்பே (அங்கிருந்து) எழுவார்கள். அப்போது மக்கள் அறியாமைக் காலத்தில் நடந்த விஷயங்கள் பற்றிப் பேசிச் சிரித்துக்கொண்டிருப்பார்கள். (அதைக் கேட்டு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்துக்கொண்டிருப்பார்கள்" என்று கூறினார்கள்.

## பாடம் : 18 பெண்கள் மீது நபி (ஸல்) அவர்கள் காட்டிய அன்பும், பெண்களின் வாகனங்களை மெதுவாகச் செலுத்துமாறு ஒட்டகவோட்டிக்கு நபியவர்கள் கட்டளையிட்டதும்.

4642 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தார்கள். அவர்களுடன் அவர்களுடைய கறுப்பு நிற அடிமையான "அன்ஜஷா" எனப்படுபவரும் இருந்தார். அவர் பாட்டுப் பாடி (ஒட்டகத்தை விரைந்தோடச் செய்து)கொண்டிருந்தார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அன்ஜஷா! நிதானமாக ஓட்டிச் செல். (ஒட்டகத்தின் மேலுள்ள) கண்ணாடிக் குடுவைகளை (பெண்களை) உடைத்துவிடாதே" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4643 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு பயணத்தில்) நபி (ஸல்) அவர்கள் தம் துணைவியரிடம் வந்தார்கள். அப்போது "அன்ஜஷா' எனப்படும் ஒட்டகவோட்டி ஒருவர், துணைவியர் அமர்ந்திருந்த ஒட்டகங்களை (பாட்டுப்பாடி விரைவாக) ஓடச்செய்து கொண்டிருந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "உமக்குக் கேடுதான் அன்ஜஷா! நிதானமாக ஓட்டிச் செல். (ஒட்டகச் சிவிகைக்குள் இருக்கும்) கண்ணாடிக் குடுவைகளை (பெண்களை) உடைத்துவிடாதே" என்று சொன்னார்கள். இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூகிலாபா (ரஹ்) அவர்கள் (இராக்வாசிகளிடம்), "(இங்கு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு வார்த்தையைக் கூறியுள்ளார்கள். அதையே உங்களில் ஒருவர் சொல்லியிருந்தால்,அதற்காக அவரை நீங்கள் நையாண்டி செய்திருப்பீர்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4644 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் துணைவியருடன் (ஒரு பயணத்தில்) இருந்தார்கள். அப்போது அவர்கள் அமர்ந்திருந்த ஒட்டகங்களை ஒட்டகவோட்டி ஒருவர் (பாட்டுப்பாடி விரைவாக) ஓட்டிக்கொண்டிருந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள் (அந்த ஒட்டகவோட்டியிடம்), "அன்ஜஷா! மெதுவாக ஓட்டிச் செல். கண்ணாடிக் குடுவைகளை (பெண்களை) உடைத்துவிடாதே" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4645 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு (அன்ஜஷா எனப்படும்) "அழகிய குரல் வளத்துடன் பாட்டுப்பாடி ஒட்டகமோட்டுபவர்' ஒருவர் இருந்தார். (அவர் ஒரு முறை ஒட்டகத்தில் பெண்கள் இருக்க, பாடிக்கொண்டிருந்த போது) அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நிதானம், அன்ஜஷா! கண்ணாடிக் குடுவைகளை –அதாவது மென்மையான பெண்களை– உடைத்துவிடாதே" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அழகிய குரல் வளத்துடன் பாட்டுப்பாடி ஒட்டகமோட்டுபவர்' எனும் குறிப்பு இல்லை.

## பாடம் : 19 நபி (ஸல்) அவர்கள் மக்களுடன் நெருங்கிப்பழகியதும் மக்கள் அவர்களிடமிருந்து வளம் ("பரக்கத்') பெற்றதும்.

4646 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிகாலைத் தொழுகையை தொழுது முடித்ததும் மதீனாவின் பணியாளர்கள் தண்ணீருள்ள பாத்திரங்களைக் கொண்டுவருவார்கள். கொண்டுவரப்படும் ஒவ்வொரு பாத்திரத்தினுள்ளும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கையை மூழ்கச் செய்வார்கள். சில வேளைகளில் குளிரான காலை நேரங்களிலும் அதைக் கொண்டு வருவார்கள். அப்போதும் அதனுள்ளே கையை மூழ்கச் செய்வார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4647 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தலையை நாவிதர் ஒருவர் மழித்துக் கொண்டிருக்கும் போது நான் பார்த்துள்ளேன். அப்போது நபித்தோழர்கள், ஒரு முடியாயினும் (தங்களில்) ஒருவரது கையில்தான் விழ வேண்டும் என்ற நோக்கத்துடன் அவர்களைச் சுற்றி வந்துகொண்டிருந்தார்கள்.

4648 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மனநிலை பாதிக்கப்பட்ட ஒரு பெண் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! எனக்குத் தங்களிடம் ஒரு தேவை உள்ளது. (ஒரு விஷயம் பற்றி கேட்க வேண்டும்)" என்று கூறினாள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்ன மனிதரின் தாயே! எந்தத் தெருவுக்கு நான் வரவேண்டும் என நீ விரும்புகிறாய்; சொல். உனது தேவையை நான் நிறைவேற்றிவைக்கிறேன்" என்று கூறிவிட்டு, அவள் தமது தேவையை முடித்துக் கொள்ளும் வரை (மக்கள் நடமாட்டமுள்ள ஒரு தெருவில்) அவளுடன் தனியாக(ப் பேசிக்கொண்டு) நின்றிருந்தார்கள்.

**பாடம் : 20 நபி (ஸல்) அவர்கள் குற்றங்களிலிருந்து வெகு தொலைவில் விலகியிருந்ததும், அனுமதிக்கப்பெற்ற செயல்களில் எளிதானதையே அவர்கள் தேர்வு செய்ததும், அல்லாஹ்வின் புனிதச் சட்டங்கள் சீர்குலைக்கப்படும்போது அல்லாஹ்வின் சார்பாக மக்களை அவர்கள் தண்டித்ததும்.**

4649 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
இரண்டு விஷயங்களில் விரும்பியதைத் தேர்வு செய்துகொள்ளும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு விருப்ப உரிமை வழங்கப்பெற்றால், அவர்கள் அவ்விரண்டில் எளிதானதையே –அது பாவமான விஷயமாக இல்லாதிருக்கும்பட்சத்தில் (எப்போதும்) தேர்வு செய்வார்கள்.
அது பாவமான விஷயமாக இருந்தால், மக்களிலேயே அவர்கள்தான் அதிலிருந்து (விலகி) வெகு தொலைவில் நிற்பார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்காக (எதிலும் யாரையும் ஒரு போதும்) பழி வாங்கியதில்லை;இறைவனின் புனித(ச் சட்ட)ம் ஏதும் சீர்குலைக்கப்பட்டு, அதற்குப் பதிலாக அல்லாஹ்வின் சார்பாகத் தண்டிக்க வேண்டுமென்று இருந்தாலே தவிர (அப்போது மட்டுமே பழிவாங்குவார்கள்).
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4650 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒன்றைவிட மற்றொன்று எளிதானதாக இருக்கும் இரண்டு விஷயங்களில் விரும்பியதைத் தேர்வு செய்துகொள்ளும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு விருப்ப உரிமை வழங்கப் பெற்றால், அவர்கள் அவ்விரண்டில் எளிதானதையே –அது பாவமான விஷயமாக இல்லாதிருக்கும் பட்சத்தில் (எப்போதும்) தேர்வு செய்வார்கள். அது பாவமான விஷயமாக இருந்தால், மக்களிலேயே அவர்கள்தான் அதிலிருந்து (விலகி) வெகு தொலைவில் நிற்பார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "அவ்விரண்டில் எளிதானதையே தேர்வு செய்வார்கள்" என்பதுவரையே இடம் பெற்றுள்ளது. அதற்குப் பிறகுள்ள குறிப்புகள் இடம்பெறவில்லை.

4651 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கையால் எதையும் எப்போதும் அடித்த தில்லை; எந்தப் பெண்ணையும் எந்த ஊழியரையும் அடித்ததில்லை; அல்லாஹ்வின் பாதையில் (போர் செய்யும்போதே) தவிர.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (சொல்லாலோ செயலாலோ) தம்மைப் புண்படுத்திய எவரையும் அவர்கள் எப்போதும் பழிவாங்கியதில்லை; இறைவனின் புனித(ச் சட்ட)ம் ஏதும் சீர்குலைக்கப்பட்டு, அதற்குப் பதிலாக இறைவனின் சார்பாக அவர்கள் நடவடிக்கை எடுத்தாலே தவிர (அப்போது மட்டுமே பழிவாங்குவார்கள்).
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அந்த அறிவிப்பாளர்களில் சிலர் வேறுசிலரைவிடக் கூடுதலான தகவல்களை அறிவித்துள்ளனர்.

## பாடம் : 21 நபி (ஸல்) அவர்களின் மேனியில் கமழ்ந்த நறுமணமும், அவர்களது உள்ளங்கையின் மென்மையும், அவர்கள் தொட்டுத் தடவியதால் ஏற்பட்ட வளமும்.

4652 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் முதல்தொழுகை (லுஹ்ர்) தொழுதேன். பிறகு அவர்கள் தம் வீட்டாரிடம் சென்றார்கள். அவர்களுடன் நானும் சென்றேன். அப்போது அவர்களுக்கு எதிரே சிறுவர்கள் சிலர் வந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அச்சிறுவர்களின் கன்னங்களை ஒவ்வொருவராகத் தடவினார்கள். என் கன்னங்களிலும் தடவினார்கள். அவர்களது கரத்திலிருந்து "குளிர்ச்சியை' அல்லது "நறுமணத்தை' நான் உணர்ந்தேன். அவர்கள் தமது கையை நறுமணப் பையிலிருந்து அப்போதுதான் எடுத்ததைப் போன்றிருந்தது.

4653 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது (உடல்) வாசனையைவிட நறுமணமிக்க "அம்பரை'யோ கஸ்தூரியையோ வேறெந்த நறுமணப் பொருளையோ நுகர்ந்ததேயில்லை;

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உள்ளங்கையைவிட மென்மையான அலங்காரப் பட்டையோ சாதாரணப் பட்டையோ நான் தொட்டதில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4654 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒளிரும் வெண்ணிறம் கொண்டவர்களாக இருந்தார்கள். அவர்களின் வியர்வைத் துளிகள் முத்துகளைப் போன்றிருந்தன. அவர்கள் நடந்தால் (பள்ளத்தில் இறங்குவதைப் போன்று முன்பக்கம்) சாய்ந்து நடப்பார்கள். அவர்களது உள்ளங்கையைவிட மென்மையான அலங்காரப் பட்டையோ சாதாரணப் பட்டையோ நான் தொட்டதில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது (உடல்) வாசனையைவிட சுகந்தமான கஸ்தூரியையோ "அம்பரை'யோ நான் நுகர்ந்ததேயில்லை.

## பாடம் : 22 நபி (ஸல்) அவர்களது வியர்வையின் நறுமணமும் அதன்மூலம் வளம் (பரக்கத்) ஏற்பட்டதும்.

4655 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், எங்களது வீட்டுக்கு வந்து மதிய ஓய்வெடுத்தார்கள். அப்போது அவர்களது உடலில் வியர்வை ஏற்பட்டது. என் தாயார் (உம்மு சுலைம் (ரலி)) அவர்கள் ஒரு கண்ணாடிக் குடுவையுடன் வந்து வியர்வைத் துளிகளை அந்தக் குடுவையில் சேகரிக்கலானார்கள். நபி (ஸல்) அவர்கள் உறக்கத்திலிருந்து விழித்தெழுந்து, "உம்மு சுலைமே! என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்கள். என் தாயார், "இது தங்களது வியர்வை. இதை எங்கள் நறுமணப் பொருளில் சேர்க்கிறோம். இது நல்ல வாசனைப் பொருட்களில் ஒன்றாகும்" என்று சொன்னார்கள்.

4656 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்களின் இல்லத்துக்கு வந்து, அங்கு உம்மு சுலைம் (படுத்து) இராதபோது அவர்களது விரிப்பில் படுத்து உறங்குவார்கள். ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் வந்து உம்மு சுலைமின் விரிப்பில் படுத்துறங்கினார்கள். அப்போது அங்கு வந்த உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம், "இதோ நபி (ஸல்) அவர்கள் உங்கள் வீட்டில் உங்கள் விரிப்பில் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்" என்று சொல்லப்பட்டது.

உடனே உம்மு சுலைம் (ரலி) அவர்கள் வந்(து பார்த்)தார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு வியர்த்திருந்தது. அவர்களது வியர்வை, படுக்கையில் ஒரு துண்டுத் தோலில் திரண்டிருந்தது. உடனே உம்மு சுலைம், தமது நறுமணப் பெட்டியைத் திறந்து, அந்த வியர்வைத் துளிகளைத் துடைத்து தமது கண்ணாடிக் குடுவையொன்றில் அதைப் பிழிந்து சேகரிக்கலானார்கள். நபி (ஸல்) அவர்கள் திடுக்கிட்டு விழித்து, "உம்மு சுலைமே! என்ன செய்கிறாய்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "அல்லாஹ்வின் தூதரே! அதன் வளத்தை எங்கள் குழந்தைகளுக்காக எதிர்பார்க்கிறோம். (அதனால் தான் அதைச் சேகரிக்கிறோம்)" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் "நீ செய்தது சரிதான்" என்று சொன்னார்கள்.

4657 உம்மு சுலைம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் எங்கள் வீட்டுக்கு மதிய ஓய்வெடுப்பதற்காக வருவார்கள். அப்போது அவர்களுக்காக நான் தோல் விரிப்பு ஒன்றை விரிப்பேன். அந்த விரிப்பில் நபி (ஸல்) அவர்கள் மதிய ஓய்வெடுப்பார்கள். நபி (ஸல்) அவர்களது உடலில் அதிகமாக வியர்வை ஏற்படும். அப்போது நான் அவர்களது வியர்வைத் துளிகளை எடுத்து வாசனைப் பொருட்களிலும் கண்ணாடிக் குடுவைகளிலும் சேகரிப்பேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "உம்மு சுலைமே! என்ன இது?" என்று கேட்டார்கள். அதற்கு நான் "தங்களது வியர்வைத் துளிகளை எனது நறுமணப் பொருளில் சேர்க்கிறேன்"என்று கூறுவேன்.

## பாடம் : 23 நபி (ஸல்) அவர்களுக்கு வேதஅறிவிப்பு (வஹீ) வரும்போது குளிர் காலத்திலும் வியர்வை ஏற்பட்டது.

4658 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குக் குளிரான காலை நேரங்களிலும் வேத அறிவிப்பு (வஹீ) அருளப்படும். பிறகு (அவர்களை விட்டு அந்நிலை விலகும்போது) அவர்களது நெற்றியிலிருந்து வியர்வைத் துளிகள் வழியும்.

4659 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹாரிஸ் பின் ஹிஷாம் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம், "தங்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) எப்படி வருகின்றது?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "சில நேரங்களில் மணியோசையைப் போன்று எனக்கு வேத அறிவிப்பு வரும். அவ்வாறு வருவது எனக்கு மிகவும் கடினமாக இருக்கும். பிறகு அச்செய்தியை நான் மனனமிட்டுக்கொண்ட நிலையில் அந்நிலை என்னை விட்டு விலகிவிடும். இன்னும் சில நேரங்களில், வானவர் ஒருவர் மனித உருவில் என்னிடம் வ(ந்து செய்திகளைத் த)ருவார். அவர் கூறுவதை நான் நினைவிலிருத்திக்கொள்வேன்"என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4660 உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்கு வேதஅறிவிப்பு (வஹீ) அருளப்பெறும்போது, அவர்களுக்கு மிகுந்த சிரமம் ஏற்படும்;அவர்களது முகம் சாம்பல் நிறத்திற்கு மாறிவிடும்.

4661 உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தமக்கு வேதஅறிவிப்பு (வஹீ) அருளப்பெறும்போது, தமது தலையைத் தாழ்த்திக்கொள்வார்கள். நபித் தோழர்களும் தம் தலையைத் தாழ்த்திக்கொள்வார்கள். அந்நிலை விலக்கப்பட்டதும் தமது தலையை உயர்த்துவார்கள்.

**பாடம் : 24 நபி (ஸல்) அவர்கள் தமது தலைமுடியை வகிடெடுக்காமல் நெற்றியில் தொங்க விட்டதும், வகிடெடுத்து வாரிவிட்டதும்.**

4662 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
வேதக்காரர்கள் (யூத, கிறித்தவர்கள்) தமது தலைமுடியை (வகிடெடுத்து வாரிவிடாமல் நெற்றியில்) தொங்கவிட்டுவந்தனர். இணைவைப்பாளர்கள் தம் தலைமுடியை வகிடெடுத்துப் பிரித்துவந்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்கு இறைக்கட்டளை விதிக்கப்படாத விஷயங்களில் வேதக்காரர்களுக்கு ஒத்துப் போவதையே விரும்பி வந்தார்கள். ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (முதலில்) முன்தலை முடியை நெற்றியில் தொங்கவிட்டுவந்தார்கள். பிறகாலத்தில் அதை வகிடெடுத்து (வாரி)விட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னுஅப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 25 நபி (ஸல்) அவர்களின் உருவத் தோற்றமும் அவர்கள் அழகிய முகஅமைப்புக் கொண்டவர்களாய் இருந்தார்கள் என்பதும்.**

4663 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நடுத்தர உயரமுள்ள மனிதராகவும் (பரந்த முதுகும், விரிந்த மார்பும் அமைந்து) இரு தோள்களுக்கிடையே அதிக இடைவெளி உள்ளவர்களாகவும் இருந்தார்கள். இரு காதுகளின் சோனையை எட்டும் அளவுக்குத் தலைமுடி கொண்டவர்களாகவும் இருந்தார்கள். அவர்கள் சிவப்பு நிற அங்கி அணிந்திருந்தார்கள். (அந்த ஆடையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைவிட அழகான எவரையும் எப்போதும் நான் கண்டதேயில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4664 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைவிட நீண்ட முடிவைத்து, சிவப்பு நிற அங்கி அணிந்திருந்த அழகான ஒருவரை நான் கண்டதேயில்லை. அவர்களது தலைமுடி தோள்களைத் தொட்டுக்கொண்டிருந்தது. (விரிந்த முதுகும் பரந்த மார்பும் கொண்டு) அவர்கள் இருதோள்களுக்கிடையே அதிக இடைவெளி உள்ளவர்களாக இருந்தார்கள். அவர்கள் அதிக உயரமுடையவராகவும் இருக்கவில்லை; குட்டையானவராகவும் இருக்கவில்லை. (நடுத்தர உயரமுடையவராகவே இருந்தார்கள்).
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூகுரைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு (அதிகமான) தலைமுடி இருந்தது" என்று காணப்படுகிறது.

4665 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிலேயே மிக அழகான முகம் உடையவர்களாகவும் அழகான உருவ அமைப்புக் கொண்டவர்களாகவும் இருந்தார்கள்.

அவர்கள் ஒரேயடியாக உயரமானவராகவும் இருக்கவில்லை;குட்டையானவராகவும் இருக்கவில்லை.

**பாடம் : 26 நபி (ஸல்) அவர்களது தலைமுடியின் நிலை.**

4666 கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தலைமுடி எப்படி இருந்தது?"என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அவர்களது தலைமுடி, அலையலையானதாக இருந்தது. சுருள் முடியாகவும் இல்லை; படிந்த முடியாகவும் இல்லை. அது அவர்களது காது மடல்களுக்கும் தோளுக்கும் இடையே தொங்கிக்கொண்டிருந்தது" என்று பதிலளித்தார்கள்.

4667 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தலைமுடி (சில வேளைகளில்) அவர்களின் தோள்களைத் தொட்டுக்கொண்டிருந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4668 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது தலைமுடி (சில வேளைகளில்) இரு காது மடல்களின் பாதிவரை இருந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 27 நபி (ஸல்) அவர்களின் வாய், கண்கள், குதிகால்கள் ஆகியவற்றின் நிலை.**

4669 ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விசாலமான வாயும் விரிந்த கண்ணும் மெலிந்த குதிகால்களும் உடையவர்களாக இருந்தார்கள்" என்று ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதைத் தாம் கேட்டதாக சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் தெரிவித்தார்கள்.
நான் சிமாக் (ரஹ்) அவர்களிடம், "விசாலமான வாய் ("ளலீஉல் ஃபம்') என்றால் என்ன?" என்று கேட்டேன். அவர்கள் "பெரிய வாய்" என்றார்கள். "விரிந்த கண் ("அஷ்கலுல் ஐன்') என்றால் என்ன?" என்று கேட்டதற்கு "நீளமான கண் பிளவு" என்றார்கள்.
"மெலிந்த குதிகால்கள் ("மன்ஹூசுல் அகிப்') என்றால் என்ன?" என்று கேட்டதற்கு, "குதிகாலில் சிறிதளவு சதைப்பற்று காணப்படுவது' என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 28 நபி (ஸல்) அவர்கள் வெண்ணிறம் கொண்டவராகவும் கலையான முகமுடையவராகவும் இருந்தார்கள்.**

4670 சயீத் பின் இயாஸ் அல்ஜுரைரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபுத்துஃபைல் (ரலி) அவர்களிடம், "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்திருக்கிறீர்களா?"என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்; அவர்கள் வெண்ணிறம் கொண்டவர்களாகவும் களையான முகமுடையவராகவும் இருந்தார்கள்" என்று பதிலளித்தார்கள்.
முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் (ஆகிய நான்) கூறுகிறேன்:
அபுத்துஃபைல் (ரலி) அவர்கள் (ஹிஜ்ரீ) நூறாம் ஆண்டில் இறந்தார்கள்; அவர்களே நபித்தோழர்களில் இறுதியாக இறந்தவர் ஆவார்.

4671 சயீத் பின் இயாஸ் அல்ஜுரைரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(நபித்தோழர்களில் இறுதியாக உயிர் வாழ்ந்த) அபுத்துஃபைல் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நான் பார்த்திருக்கிறேன்; இந்தப் பூமியின்மீது அவர்களைப் பார்த்தவர் என்னைத் தவிர வேறெந்த மனிதரும் (இப்போது உயிருடன்) இல்லை" என்று கூறினார்கள்.
அவர்களிடம் நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை எவ்வாறு கண்டீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெண்ணிறம் கொண்டவர்களாகவும் கலையான தோற்றமுடையவராகவும் நடுத்தரமான உடல்வாகு கொண்டவராகவும் இருந்தார்கள்" என்று பதிலளித்தார்கள்.

**பாடம் : 29 நபி (ஸல்) அவர்களின் தலையிலிருந்த நரைமுடி.**

4672 முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது நரை முடிக்குச்) சாயம் பூசியதுண்டா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது தலையில் நரை எதையும் பார்க்கவில்லை; இவ்வளவு தவிர" என்று கூறினார்கள். (அவை மிகவும் குறைவானவை என்பதைப் போன்று அறிவிப்பாளர் சைகை செய்தார் என இப்னு இத்ரீஸ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.)
மேலும் அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோர் தம் நரைமுடிக்கு மருதாணி இலையாலும் "கத்தம்' (யமன் நாட்டு மூலிகைச்) செடியின் இலையாலும் சாயமிட்டுவந்தனர்" என்றும் அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4673 முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தலைமுடிக்குச்) சாயம் பூசியிருந்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "சாயம் பூசுகின்ற அளவுக்கு (நரை முடிகள்) அவர்களுக்கு இல்லை. அவர்களது தாடியில் மட்டுமே சில வெள்ளை முடிகள் இருந்தன" என்று கூறினார்கள்.

அவர்களிடம், "அபூபக்ர் (ரலி) அவர்கள் சாயம் பூசியிருந்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு, "ஆம்; மருதாணி இலையாலும் "கத்தம்' (யமன் நாட்டு மூலிகைச்) செடியின் இலையாலும் (சாயம் பூசியிருந்தார்கள்)" என்று பதிலளித்தார்கள்.

4674 முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சாயம் பூசியிருந்தார்களா?"என்று கேட்டேன். அதற்கு, "ஒரு சில நரைமுடிகளையே கண்டார்கள். (எனவே, சாயம் பூசவில்லை)" என்று அனஸ் பதிலளித்தார்கள்.

4675 ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் (தமது நரைமுடிக்குச்) சாயம் பூசியதுண்டா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "நபி (ஸல்) அவர்களது தலையிலிருந்த வெள்ளை முடிகளை நான் நினைத்திருந்தால் எண்ணிக் கணக்கெடுத்திருக்க முடியும். நபி (ஸல்) அவர்கள் சாயம் பூசியதில்லை. (ஆனால்,) அபூபக்ர் (ரலி) அவர்கள் மருதாணி இலையாலும் "கத்தம்' (யமன் நாட்டு மூலிகைச்) செடியின் இலையாலும் சாயம் பூசியிருந்தார்கள். உமர் (ரலி) அவர்களும் மருதாணி இலையால் நன்கு சாயம் பூசியிருந்தார்கள்" என்று கூறினார்கள்.

4676 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் தம் தலையிலும் தாடியிலும் உள்ள நரைமுடிகளைப் பிடுங்குவது வெறுக்கப்பட்டதாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நரைமுடிக்குச்) சாயம் பூசியதில்லை. அவர்களது (கீழுதட்டின் அடியிலுள்ள) குறுந்தாடியிலும் நெற்றிப் பொட்டுகளிலுள்ள முடியிலும்தான் வெண்மை இருந்தது. தலையில் ஆங்காங்கே ஒரு சில முடிகளே நரைத்திருந்தன.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

4677 அபூஇயாஸ் முஆவியா பின் குர்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்களது (தலையில்) நரைமுடி இருந்ததா?" என்பது பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அவர்களை அல்லாஹ் நரைமுடியால் அலங்கோலப்படுத்தவில்லை" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4678 அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஜுஹைஃபா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது (முகத்தில்) இந்த இடத்தில் வெள்ளை முடி இருந்ததை நான் கண்டேன்" என்று கூறினார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸுஹைர் பின் முஆவியா (ரஹ்) அவர்கள் தமது விரல் ஒன்றைத் தமது கீழுதட்டிலுள்ள குறுந்தாடியின் மீது வைத்து சைகை செய்து காட்டினார்கள்.
அப்போது அவர்களிடம், "அன்றைய தினம் நீங்கள் யாரைப் போன்று இருந்தீர்கள்? (அன்று உங்களுக்கு என்ன வயதிருக்கும்)?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அபூஜுஹைஃபா (ரலி)

அவர்கள், "அப்போது நான் அம்புக்கு இறகு பொருத்துவேன். (இது போன்றவற்றைச் செய்யும் அளவுக்கு விவரமுடைய வயதுள்ளவனாக இருந்தேன்)" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4679 அபூஜுஹைஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் வெண்ணிறமுடையவர்களாகவும் முதுமை அடைந்தவர்களாகவும் இருந்தார்கள். (நபியவர்களின் பேரர்) ஹசன் பின் அலீ (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களுக்கு (தோற்றத்தில்) ஒத்திருப்பார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஜுஹைஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "வெண்ணிறமுடையவர்களாகவும் முதுமை அடைந்தவர்களாகவும் இருந்தார்கள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

4680 சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்களின் நரைமுடி பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "நபியவர்கள் தமது தலையில் எண்ணெய் தேய்த்திருந்தால் அவர்களது தலையிலிருந்து ஒருசில நரைமுடிகூடத் தென்படாது; அவர்கள் எண்ணெய் தேய்த்திருக்காவிட்டால் சில நரைமுடி தென்படும்" என்று சொன்னார்கள்.

4681 சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தலை மற்றும் தாடியின் முன்பகுதி பழுப்பேறி (வெண்மையாகி) இருந்தது. அவர்கள் தலைக்கு எண்ணெய் தேய்த்திருந்தால் அந்த வெண்மை தென்படாது. அவர்கள் (எண்ணெய் தேய்க்காமல்) பரட்டை தலையுடன் இருந்தால் அந்த வெண்மை தென்படும். அவர்களது தாடியில் அதிகமான முடிகள் இருந்தன" என்று கூறினார்கள்.
அப்போது (அங்கிருந்த) ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகம் வாளைப் போன்று (மின்னிக்கொண்டு நீண்டதாக) இருந்ததா?" என்று கேட்டார். ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் (அதை மறுத்து), "இல்லை; அவர்களது முகம் சூரியனைப் போன்றும் சந்திரனைப் போன்றும் இருந்தது; வட்டமானதாக இருந்தது. அவர்களது முதுகில் தோள்பட்டை அருகில் நபித்துவ முத்திரையை நான் கண்டேன். அது புறா முட்டை போன்று அவர்களது உடலின் நிறத்திலேயே இருந்தது" என்று கூறினார்கள்.

## பாடம் : 30 நபி (ஸல்) அவர்களது உடலில் நபித்துவ முத்திரை இருந்தது என்பதற்கான சான்றும், அதன் தன்மையும், அவர்களது உடலில் அது அமைந்திருந்த இடமும்.

4682 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முதுகில் (நபித்துவ) முத்திரை இருந்ததை நான் பார்த்தேன். அது புறா முட்டை போன்று இருந்தது.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4683 சாயிப் பின் யஸீத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னை என் தாயின் சகோதரி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! என் சகோதரி மகன் (பாதங்களில்) நோய் கண்டுள்ளான்" என்று சொன்னார்கள்.
உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அன்புடன்) என் தலையை வருடிக் கொடுத்து, என் வளத்திற்காகப் பிரார்த்தித்தார்கள். பின்னர் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். அவர்கள் அங்கத் தூய்மை செய்(து மிச்சம் வைத்)த தண்ணீரில் நான் சிறிது குடித்தேன்.
பிறகு நான் அவர்களுடைய முதுகுக்குப் பின்னே நின்றேன். அப்போது அவர்களுடைய தோள்களுக்கிடையே இருந்த நபித்துவ முத்திரையை நான் பார்த்தேன். அது மணவறைத் திரையில் பொருத்தப்படுகின்ற பித்தானைப் போன்றிருந்தது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4684 ஆஸிம் பின் சுலைமான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் சர்ஜிஸ் (ரலி) அவர்கள், "நான் நபி (ஸல்) அவர்களைப் பார்த்தேன். அவர்களுடன் "ரொட்டி இறைச்சி' அல்லது "தக்கடி உணவு' சாப்பிட்டேன்" என்று கூறினார்கள்.
அவர்களிடம் நான், "உங்களுக்காக நபி (ஸல்) அவர்கள் பாவமன்னிப்பு வேண்டிப் பிரார்த்தித்தார்களா?" என்று கேட்டேன். அதற்கு அப்துல்லாஹ் பின் சர்ஜிஸ் (ரலி) அவர்கள், "ஆம்; உங்களுக்கும்தான் (பாவமன்னிப்பு வேண்டிப் பிரார்த்தித்தார்கள்)" என்று கூறிவிட்டு, "(நபியே!) உம்முடைய பாவத்திற்காகவும் இறைநம்பிக்கை கொண்ட ஆண்களுக்காகவும் பெண்களுக்காகவும் நீர் பாவமன்னிப்புக் கோருவீராக" (47:19) எனும் இந்த வசனத்தை ஓதிக்காட்டினார்கள்.
மேலும் கூறினார்கள்: பிறகு நான் நபி (ஸல்) அவர்க(ளுடைய முதுகு)க்குப் பின்னே சுற்றிவந்தேன். அப்போது அவர்களுடைய இரு தோள்பட்டைகளுக்கிடையே இடப் பக்கத் தோளின் மேற்புறத்தில் கை முஷ்டியைப் போன்று (துருத்திக்கொண்டும்) கொப்புளங்களைப் போன்று தழும்பாகவும் உள்ள நபித்துவ முத்திரையைக் கண்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 31 நபி (ஸல்) அவர்களின் உடலமைப்பும் அவர்கள் நபியாக அனுப்பப்பெற்றதும் அவர்களின் வயதும்.

4685 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெளிப்படையாகத் தெரியும் அளவுக்கு மிக உயரமானவர்களாகவும் இல்லை;குட்டையானவர்களாகவும் இல்லை. சுத்த வெள்ளை நிறமுடையவர்களாகவும் இல்லை; மாநிறம் கொண்டவர்களாகவும் இல்லை; கடும் சுருள்

முடியுடையவர்களாகவும் இல்லை; (தொங்கலான) படிந்த முடிவுடையவர்களாகவும் இல்லை.
நாற்பதாவது வயதின் தொடக்கத்தில் அவர்களை அல்லாஹ் தன் தூதராக அனுப்பினான். அதன் பிறகு, அவர்கள் மக்கா நகரில் பத்து ஆண்டுகளும் மதீனா நகரில் பத்து ஆண்டுகளும் தங்கியிருந்தார்கள்.
அறுபதாம் வயதின் தொடக்கத்தில் அவர்களை இறைவன் இறக்கச் செய்தான். அப்போது அவர்களுடைய தலையிலும் தாடியிலும் இருபது வெள்ளை முடிகள்கூட இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் "அவர்கள் ஒளிரக்கூடியவர்களாக இருந்தார்கள்" என்று கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 32 நபி (ஸல்) அவர்கள் இறந்தபோது அவர்களுக்கு வயது எத்தனை?

4686 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது அறுபத்து மூன்றாம் வயதில் இறந்தார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களும் அறுபத்து மூன்றாம் வயதில் இறந்தார்கள். உமர் (ரலி) அவர்களும் அறுபத்து மூன்றாம் வயதில் இறந்தார்கள்.

4687 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது அறுபத்து மூன்றாம் வயதில் இறந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 33 நபி (ஸல்) அவர்கள் மக்காவிலும் மதீனாவிலும் எத்தனை ஆண்டுகள் தங்கியிருந்தார்கள்?

4688 அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் (நபியாக்கப்பட்ட பின்னர்) மக்காவில் எத்தனை ஆண்டுகள் தங்கியிருந்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "பத்து ஆண்டுகள்' என்று பதிலளித்தார்கள். நான், "ஆனால், பதிமூன்று ஆண்டுகள் தங்கியிருந்தார்கள் என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்" என்று சொன்னேன்.
- அம்ர் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் உர்வா (ரஹ்) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் (நபியாக்கப்பட்ட பின்பு) மக்காவில் எத்தனை ஆண்டுகள் தங்கியிருந்தார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "பத்து ஆண்டுகள்' என்று பதிலளித்தார்கள். "ஆனால்,பத்துக்கும் மேற்பட்ட ஆண்டுகள்

தங்கியிருந்தார்கள் என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்களே?" என்று நான் கேட்டேன்.
அப்போது உர்வா (ரஹ்) அவர்கள், "அவர்களை அல்லாஹ் மன்னிப்பானாக!" என்று பாவ மன்னிப்பு வேண்டிப் பிரார்த்தித்துவிட்டு, "இப்னு அப்பாஸ், அந்த (அபூகைஸ் என்ற) கவிஞரின் வரிகளிலிருந்தே அதை எடுத்துரைக்கிறார்"என்று சொன்னார்கள்.

4689 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவில் பதிமூன்று ஆண்டுகள் வாழ்ந்தார்கள். தமது அறுபத்து மூன்றாம் வயதில் இறந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4690 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்கு வேதஅறிவிப்பு (வஹீ) அருளப்பட்டுக் கொண்டிருந்த நிலையில் மக்காவில் பத்தாண்டுகள் தங்கியிருந்தார்கள். (புலம் பெயர்ந்தபின்) மதீனாவில் பத்தாண்டுகள் இருந்தார்கள். தமது அறுபத்து மூன்றாம் வயதில் இறந்தார்கள்.

4691 அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் அப்துல்லாஹ் பின் உத்பா பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்களுடன் அமர்ந்திருந்தேன். அப்போது அ(ங்கிருந்த)வர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வயது பற்றிப் பேசிக்கொண்டனர். சிலர், "அபூபக்ர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைவிட அதிக வயதுடையவராக இருந்தார்கள்" என்று கூறினர். அப்துல்லாஹ் பின் உத்பா (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் அறுபத்து மூன்றாம் வயதில் இறந்தார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களும் அறுபத்து மூன்று வயதில் இறந்தார்கள். உமர் (ரலி) அவர்கள் அறுபத்து மூன்றாம் வயதில் கொல்லப் பட்டார்கள்" என்று கூறினார்கள்.
அப்போது அங்கிருந்த மக்களில் ஆமிர் பின் சஅத் (ரஹ்) எனப்படும் ஒருவர் கூறினார்: ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் பின்வருமாறு எங்களிடம் கூறினார்கள்:
(ஒரு முறை) நாங்கள் முஆவியா (ரலி) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது அ(ங்கிருந்த)வர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய வயது பற்றிப் பேசிக் கொண்டனர். அப்போது முஆவியா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது அறுபத்து மூன்றாம் வயதில் இறந்தார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களும் அறுபத்து மூன்று வயதில் இறந்தார்கள். உமர் (ரலி) அவர்கள் அறுபத்து மூன்று வயதில் கொல்லப் பட்டார்கள்" என்று கூறினார்கள்.

4692 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஆவியா (ரலி) அவர்கள் (மக்களிடையே) உரையாற்றும்போது, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது அறுபத்து மூன்றாம் வயதில் இறந்தார்கள். அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோரும் அறுபத்து மூன்றாம் வயதிலேயே இறந்தனர். நானும் அறுபத்து மூன்றாம் வயதிலேயே (இறக்கவேண்டும் என எதிர்பார்க்கிறேன்)" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4693 பனூ ஹாஷிம் குலத்தாரின் முன்னாள் அடிமையான அம்மார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறக்கும்போது அவர்களுக்கு எத்தனை வயது நடந்துகொண்டிருந்தது?" என்று கேட்டேன். "ஒரு கூட்டத்தில் உள்ள உம்மைப் போன்ற ஒருவருக்கு இந்த விவரம்கூட தெரியாமலிருக்கும் என்று நான் கருதவில்லை" என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள். நான், "இதைப் பற்றி மக்களிடம் நான் கேட்டு விட்டேன். ஆனால், அவர்கள் மாறுபட்ட கருத்தை என்னிடம் தெரிவித்தார்கள். ஆகவே, அதில் தங்களது கருத்தை அறிய விரும்பினேன்" என்று சொன்னேன்.
உடனே இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "நீர் எண்ணிக் கணக்கிடுவாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்" என்றேன். "நாற்பது வயதிலிருந்து தொடங்குவீராக. நாற்பதாவது வயதில் அவர்கள் நபியாக அனுப்பப்பெற்றார்கள். பதினைந்து ஆண்டுகள் மக்காவில் (சில வேளை எதிரிகளைப் பற்றிய) பயமின்றியும் (சில வேளை) பயத்துடனும் இருந்தார்கள். மதீனாவிற்குப் புலம்பெயர்ந்ததிலிருந்து பத்தாண்டுகள் தங்கியிருந்தார்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4694 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது அறுபத்து ஐந்தாம் வயதில் இறந்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4695 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நபித்துவத்துக்குப்பின்) மக்காவில் பதினைந்து ஆண்டுகள் தங்கினார்கள். (அங்கு வானவர்) யாரையும் (நேரடியாகப்) பார்க்காமல் வெறும் (அசரீரி) சப்தத்தைக் கேட்டுக்கொண்டும் (வானவரின்) ஒளியைப் பார்த்துக்கொண்டும் ஏழு ஆண்டுகள் இருந்தார்கள். மேலும், எட்டு ஆண்டுகள் வேதஅறிவிப்பு (குர்ஆன்) அருளப்பட்டுக் கொண்டிருந்த நிலையில் இருந்தார்கள். (புலம்பெயர்ந்தபின்) மதீனாவில் பத்தாண்டுகள் தங்கியிருந்தார்கள்.

## பாடம் : 34 நபி (ஸல்) அவர்களின் பெயர்கள்.

4696 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் "முஹம்மத்' (புகழப்பட்டவர்) ஆவேன். நான் "அஹ்மத்' (இறைவனை அதிகமாகப் புகழ்பவர்) ஆவேன். நான் "மாஹீ' (அழிப்பவர்) ஆவேன்; என் மூலம் (ஏக) இறைமறுப்பு அழிக்கப்படுகிறது. நான் "ஹாஷிர்' (ஒன்றுதிரட்டுபவர்) ஆவேன்; மக்கள் எனக்குப் பின்னால்

ஒன்றுதிரட்டப்படுவார்கள். நான் "ஆகிப்' (இறுதியானவர்) ஆவேன்; எனக்குப் பின் எந்த இறைத்தூதரும் இல்லை.
இதை ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4697 ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எனக்கு (ஐந்து) பெயர்கள் உள்ளன. நான் "முஹம்மத்' (புகழப்பட்டவர்) ஆவேன். நான் "அஹ்மத்' (இறைவனை அதிகமாகப் புகழ்பவர்) ஆவேன். நான் "மாஹீ' (அழிப்பவர்) ஆவேன்; என் மூலம் அல்லாஹ் (ஏக) இறைமறுப்பை அழிக்கின்றான். நான் "ஹாஷிர்' (ஒன்றுதிரட்டுபவர்) ஆவேன்; மக்கள் என் பாதங்களுக்குக் கீழே (என் தலைமையில்) ஒன்றுதிரட்டப்படுவார்கள். நான் "ஆகிப்' (இறுதியானவர்) ஆவேன்; எனக்குப் பிறகு வேறெந்த இறைத்தூதரும் இல்லை" என்று கூறினார்கள்.
அவர்களுக்கு அல்லாஹ் "ரஊஃப்' (பேரன்புடையவர்) என்றும் "ரஹீம்' (இரக்கமுடையவர்) என்றும் பெயர் சூட்டியுள்ளான்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் உகைல் பின் காலித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடம் "ஆகிப்' என்றால் என்ன? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "தமக்குப் பிறகு வேறெந்த இறைத்தூதரும் இல்லாதவர்' என்று பதிலளித்தார்கள்" என இடம்பெற்றுள்ளது.
மஅமர், உகைல் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "(என் மூலம் ஏக இறை)மறுப்பாளர்களை (அல்லாஹ் அழிக்கிறான்)"என்று இடம்பெற்றுள்ளது. ஷுஐப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "இறைமறுப்பை (அழிக்கிறான்)" என்று இடம்பெற்றுள்ளது.

4698 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்குப் பல பெயர்கள் இருப்பதாகக் குறிப்பிட்டார்கள். "நான் "முஹம்மத்' (புகழப்பட்டவர்), "அஹ்மத்' (இறைவனை அதிகமாகப் போற்றுபவர்), "முகஃப்பீ' (இறுதியானவர்), "ஹாஷிர்' (ஒன்றுதிரட்டுபவர்), "நபிய்யுத் தவ்பா' (பாவமன்னிப்புடன் வந்த தூதர்), "நபிய்யுர் ரஹ்மத்' (இரக்கத்துடன் நடந்துகொள்ளுமாறு போதிக்க வந்த தூதர்) ஆவேன்" என்று கூறினார்கள்.

## பாடம் : 35 நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வை மிகவும் அறிந்திருந்ததும் அவனை மிகவும் அஞ்சி நடந்ததும்.

4699 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு செயலைத் தாமும் செய்துவிட்டு (மற்றவர் களுக்கும்) அதைச் செய்ய அனுமதி அளித்தார்கள். இச்செய்தி நபித்தோழர்களில் சிலருக்கு எட்டியபோது, அதை விரும்பாததைப் போன்று அதைச் செய்வதிலிருந்து அவர்கள் தவிர்ந்து கொண்டனர்.

இச்செய்தி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது (மக்களிடையே) நின்று உரையாற்றினார்கள்.
அப்போது "சிலருக்கு என்ன நேர்ந்தது? நான் ஒன்றைச் செய்வதற்கு அனுமதியளித்த செய்தி அவர்களுக்கு எட்டியும்கூட அதை அவர்கள் வெறுத்து, அதைச் செய்வதிலிருந்து தவிர்ந்துகொள்கிறார்களாமே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவர்களையெல்லாம் விட அல்லாஹ்வை மிகவும் அறிந்தவன்; அவனை மிகவும் அஞ்சி நடப்பவன் ஆவேன்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4700 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒன்றைச் செய்வதற்கு (மக்களுக்கு) அனுமதி யளித்தார்கள். மக்களில் சிலர் அதைச் செய்வதிலிருந்து தவிர்ந்துகொண்டனர். (அதைச் செய்வதை வெறுத்தனர்.) இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, அவர்கள் கோபப்பட்டார்கள். எந்த அளவுக்கென்றால் கோபம் அவர்களது முகத்தில் வெளிப்பட்டது.
பிறகு, "சிலருக்கு என்ன நேர்ந்தது? எனக்கு அனுமதியளிக்கப்பட்டுள்ள ஒரு விஷயத்தை வெறுக்கிறார்களாமே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவர்களையெல்லாம்விட அல்லாஹ்வை மிகவும் அறிந்தவன்; அவனை மிகவும் அஞ்சி நடப்பவன் ஆவேன்" என்று சொன்னார்கள்.

## பாடம் : 36 நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றி நடப்பது கடமையாகும்.

4701 அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மதீனாவாசிகள், தம் பேரீச்சந்தோப்புகளுக்கு நீர் பாய்ச்ச பயன்படுத்திவந்த "ஷிராஜுல் ஹர்ரா' எனும் கால்வாய் தொடர்பாக அன்சாரிகளில் ஒருவர் (என் தந்தை) ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி) அவர்களுடன் தகராறு செய்தார். அந்த அன்சாரித் தோழர், "மடையைத் திறந்துவிடுங்கள்; தண்ணீர் பாயட்டும்!" என்று சொன்னார். ஸுபைர் (ரலி) அவர்கள், (மடையைத் திறந்துவிட) மறுத்து விட்டார்கள். (இதையடுத்து) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வழக்கைக் கொண்டுசென்றனர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸுபைர் (ரலி) அவர்களிடம், "ஸுபைரே! (உங்கள் தோப்புக்கு) நீர் பாய்ச்சிவிட்டு, பிறகு உங்கள் பக்கத்துத் தோப்புக்காரருக்குத் தண்ணீரைத் திறந்துவிடுங்கள்" என்று சொன்னார்கள்.
உடனே அந்த அன்சாரித் தோழர் கோபம் கொண்டு, "அவர் உங்கள் அத்தை மகன் என்பதாலா (அவர் முதலில் நீர் பாய்ச்சிக்கொண்டு, பிறகு எனக்குத் திறந்துவிடும்படி அவருக்குச் சாதகமாகத் தீர்ப்புக் கூறுகிறீர்கள்)?" என்று கேட்டார்.
இதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முகம் (கோபத்தால்) நிறம் மாறிவிட்டது. அவர்கள் (என் தந்தையிடம்), "ஸுபைரே! நீங்கள் உங்கள் மரங்களுக்கு நீர் பாய்ச்சுங்கள். பிறகு வரப்புகள் எட்டும்வரை தண்ணீரை (மடை கட்டி)த் தேக்கி நிறுத்தி விடுங்கள்" என்று சொன்னார்கள்.

ஸுபைர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! "உம்முடைய இறைவன் மீதாணையாக! அவர்கள் தமக்கிடையே ஏற்பட்ட வழக்கில் உம்மை நீதிபதியாக்கி, பின்னர் நீர் வழங்குகின்ற தீர்ப்பால் தம் உள்ளங்களில் அவர்கள் எந்த அதிருப்தியும் கொள்ளாமல் (அதற்கு) முழுமையாகக் கட்டுப்படாத வரை நம்பிக்கை கொண்டவர்களாக ஆகமாட்டார்கள்" (4:65) எனும் இறைவசனம் இந்த விவகாரத்தில்தான் அருளப்பெற்றது என்று நான் எண்ணுகிறேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 37 நபி (ஸல்) அவர்களைக் கண்ணியப்படுத்துவதும், அவர்களிடம் தேவையற்ற விஷயங்கள் அல்லது மார்க்க விதிகளுக்குத் தொடர்பில்லாதவை மற்றும் நிகழாத விஷயங்கள் உள்ளிட்டவை குறித்து அதிகமாகக் கேள்விகள் கேட்காமலிருப்பதும்.**

4702 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் எதை(ச் செய்ய வேண்டாமென) உங்களுக்குத் தடை செய்துள்ளேனோ அதிலிருந்து நீங்கள் விலகிக்கொள்ளுங்கள். நான் எதை(ச்செய்யுமாறு) உங்களுக்குக் கட்டளையிட்டுள்ளேனோ அதை உங்களால் இயன்ற வரை செய்யுங்கள். ஏனெனில், உங்களுக்குமுன் வாழ்ந்தவர்களை அழித்ததெல்லாம் அவர்கள் தம் இறைத்தூதர்களிடம் அதிகமாகக் கேள்வி கேட்டதும் அவர்களுடன் கருத்து வேறுபாடு கொண்டதும்தான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4703 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஏழு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நான் எதை(ச் செய்யுங்கள் என்றோ செய்ய வேண்டாமென்றோ ஒன்றும் கூறாமல்) உங்களு(டைய முடிவு)க்கு விட்டு விட்டேனோ அதை(ப் பற்றி எதுவும் கேட்காமல்) நீங்களும் விட்டுவிடுங்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உங்களிடம் (உங்களது முடிவுக்கு) எது விடப்பட்டுள்ளதோ (அதைப் பற்றி எதுவும் கேட்காமல் நீங்களும் விட்டு விடுங்கள்). ஏனெனில், உங்களுக்குமுன் வாழ்ந்தவர்கள் அழிந்ததெல்லாம்..." என்று (சிறிது வேறுபாட்டுடன்) காணப்படுகிறது.

4704 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் முஸ்லிம்களுக்குத் தடை விதிக்கப்படாத ஒன்றைப் பற்றி (என்னிடம்) கேள்வி கேட்டு, அவர் கேள்வி கேட்ட காரணத்தாலேயே அது முஸ்லிம்களுக்குத் தடை செய்யப்பட்டு விடுமானால், அவர்தான் முஸ்லிம்களிலேயே முஸ்லிம்களுக்குப் பெரும் குற்றம் இழைத்தவர் ஆவார்.
இதை சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4705 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் தடை விதிக்கப்படாத ஒன்றைப் பற்றிக் கேள்விகேட்டு, அவர் கேள்வி கேட்ட காரணத்தாலேயே மக்களுக்கு அது (இறைவனால்) தடை செய்யப்பட்டுவிடுமானால், அவர் தான் முஸ்லிம்களிலேயே முஸ்லிம்களுக்குப் பெருங்குற்றம் இழைத்தவர் ஆவார்.
இதை சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் (இந்த ஹதீஸை அறிவிக்கும்போது,) "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்பதை நான் மனனமிட்டுள்ளதைப் போன்று இந்த ஹதீஸை நான் (நன்கு) மனனமிட்டுள்ளேன்" என்று கூறியதாகவும் காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மஅமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அந்த மனிதர் (தடை செய்யப்படாத) ஒன்றைப் பற்றிக் கேட்டார்;அதைப் பற்றி துருவித் துருவி வினவினார்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4706 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு, தம் தோழர்கள் (ஒன்றைக் குறித்து அதிருப்தியாகப்) பேசியது தொடர்பாகத் தகவல் கிடைத்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உரை நிகழ்த்தினார்கள். (அதில்) அவர்கள், "(சற்று முன்னர்) எனக்குச் சொர்க்கமும் நரகமும் காட்டப்பட்டன. இந்த நாளைப் போன்று வேறெந்த நாளிலும் நல்லதையும் கெட்டதையும் நான் கண்டதேயில்லை. நான் அறிகின்றவற்றை நீங்கள் அறிந்தால், நீங்கள் குறைவாகச் சிரிப்பீர்கள்;அதிகமாக அழுவீர்கள்" என்று குறிப்பிட்டார்கள்.
அதைவிட (மனவேதனை அளித்த) கடினமான ஒரு நாள் நபித்தோழர்களுக்கு வந்ததில்லை. அவர்கள் தம் முகங்களை மூடிக்கொண்டு சப்தமிட்டு அழுதனர்.
உடனே உமர் (ரலி) அவர்கள் எழுந்து, "அல்லாஹ்வை (மட்டுமே) இறைவனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்களை இறைத்தூதராகவும் நாங்கள் மனப்பூர்வமாக ஏற்றோம்" என்று கூறினார்கள்.
அ(ங்கிரு)ந்த மனிதர் (ஒருவர்) எழுந்து, "என் தந்தை யார்?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்ன மனிதர்தான் உம்முடைய தந்தை" என்று சொன்னார்கள். அப்போதுதான் "இறைநம்பிக்கை கொண்டோரே! நீங்கள் சில விஷயங்கள் குறித்துக் கேள்வி எழுப்பாதீர்கள். அவை உங்களுக்கு வெளிப்படுத்தப்பட்டால் உங்களுக்கு வருத்தம் தரும்" (5:101) எனும் இறைவசனம் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4707 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தை யார்?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்ன மனிதர்தான் உம்முடைய தந்தை" என்று கூறினார்கள். மேலும், (அதையொட்டியே) "இறைநம்பிக்கை கொண்டோரே! நீங்கள் சில விஷயங்கள்

குறித்துக் கேள்வி எழுப்பாதீர்கள். அவை உங்களுக்கு வெளிப்படுத்தப்பட்டால் உங்களுக்கு வருத்தம் தரும்" (5:101) எனும் இறைவசனம் முழுமையாக அருளப்பெற்றது.

4708 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) சூரியன் (நடுவானிலிருந்து) சாய்ந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது இல்லத்திலிருந்து) புறப்பட்டு வந்து மக்களுக்கு லுஹர் தொழுகை தொழுவித்தார்கள்.
(தொழுகை முடிந்து) சலாம் கொடுத்ததும் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதேறி யுக முடிவு நாள் பற்றிக் குறிப்பிட்டார்கள். அந்த நாளுக்கு முன்பாக பயங்கரமான சம்பவங்கள் பல நிகழும் என்றும் குறிப்பிட்டார்கள். பிறகு "எதைப் பற்றியேனும் யாரேனும் என்னிடம் கேட்க விரும்பினால் அவர் என்னிடம் கேட்கலாம். அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த இடத்தில் நான் இருக்கும்வரை நீங்கள் எதைப் பற்றிக் கேட்டாலும் அதைப் பற்றி உங்களுக்கு நான் தெரிவிக்காமலிருக்கமாட்டேன்" என்றும் சொன்னார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்டு மக்கள் அதிகமாக அழுதனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "கேளுங்கள் என்னிடம்" என்று அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்தார்கள். அப்போது அப்துல்லாஹ் பின் ஹுதாஃபா (ரலி) அவர்கள் எழுந்து, "என் தந்தை, யார்?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உம்முடைய தந்தை ஹுதாஃபாதான்" என்று கூறிவிட்டு, "கேளுங்கள் என்னிடம்" எனத் திரும்பத் திரும்பச் சொன்னார்கள்.
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் இந்நிலையைக் கண்ட) உமர் (ரலி) அவர்கள் மண்டியிட்டு அமர்ந்து, "அல்லாஹ்வை இறைவனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்களை இறைத்தூதர் எனவும் நாங்கள் மனப்பூர்வமாக ஏற்றோம்" என்று கூறினார்கள்.
இவ்வாறு உமர் (ரலி) அவர்கள் கூறியபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மௌனமானார்கள். பின்னர், "(நீங்கள் விரும்பாததை நிகழும் நாள்) நெருங்கிவிட்டது. முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! சற்று முன்னர் (நான் தொழுதுகொண்டிருந்தபோது) இந்தச் சுவரி(ன் திசையி)ல் எனக்குச் சொர்க்கமும் நரகமும் காட்டப்பட்டன. இந்த நாளைப் போன்று (வேறெந்த நாளிலும்) நல்லதையும் கெட்டதையும் நான் கண்டதேயில்லை" என்று சொன்னார்கள்.
உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உத்பா (ரஹ்) அவர்கள் தம்மிடம் கூறியதாக இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்:
அப்துல்லாஹ் பின் ஹுதாஃபா (ரலி) அவர்கள் (தம் தந்தை யார் என்று வினவியதால் அவருடைய) தாயார், அப்துல்லாஹ் பின் ஹுதாஃபா (ரலி) அவர்களிடம், "உன்னைவிட பெற்ற தாயைப் புண்படுத்திய ஒரு மகனைப் பற்றி ஒருபோதும் நான் கேள்விப்பட்டதேயில்லை. அறியாமைக் காலப்பெண்கள் செய்யும் பாவச்செயல்களில் ஒன்றை உன் தாயும் செய்திருக்க, அவளை நீ மக்கள்முன் அம்பலப்படுத்தினால் (அவளுக்கு அவமானம் ஏற்படாது என) நீ அச்சமற்று இருப்பாயா?" என்று கேட்டார்கள்.

அதற்கு அப்துல்லாஹ் பின் ஹுதாஃபா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னை ஒரு கறுப்பு அடிமையுடன் இணைத்து (அவர்தான் உன் தந்தை என்று) கூறியிருந்தாலும் நிச்சயமாக அவரோடு என்னை நான் இணைத்துக்கொண்டிருப்பேன். (அவருடைய பிள்ளை என்று என்னைப் பற்றிச் சொல்லிக் கொள்ளவே செய்வேன்)" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4709 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்களில் சிலர் நபி (ஸல்) அவர்களிடம் (அவர்களுக்குப் பிடிக்காத) சில விஷயங்கள் குறித்து வற்புறுத்தி கேள்வி கேட்டுவந்தனர். ஆகவே, ஒரு நாள் அவர்கள் (தமது இல்லத்திலிருந்து) புறப்பட்டு வந்து சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதேறி, "கேளுங்கள் என்னிடம்; (இன்று) நீங்கள் என்னிடம் எதைப் பற்றிக் கேட்டாலும் அதைப் பற்றி நான் உங்களுக்குத் தெளிவுபடுத்தாமல் இருக்கப்போவதில்லை" என்று (கோபத்துடன்) கூறினார்கள். இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் கூறியதைக் கேட்டு மக்கள் வாய்மூடி அமைதியாகி விட்டனர். நபியவர்கள் ஏதோ அசாதாரண நிலையில் இருக்கலாம் என்று மக்கள் பயந்து விட்டனர்.
அப்போது நான் வலப் பக்கமும் இடப் பக்கமும் திரும்பிப் பார்க்கத் தலைப்பட்டபோது, (அங்கிருந்த) ஒவ்வொருவரும் தமது ஆடையால் தலையைச் சுற்றிப் போர்த்தியபடி அழுதுகொண்டிருந்தனர். அப்போது அந்தப் பள்ளிவாசலில் இருந்த ஒரு மனிதர் பேசத் தொடங்கினார். அம்மனிதர் பிறருடன் வழக்காடும்போது, அவருடைய தந்தையல்லாத மற்றொருவரின் மகன் என அழைக்கப்பட்டுவந்தார்.
அவர், "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தை யார்?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உன் தந்தை ஹுதாஃபாதான்" என்று சொன்னார்கள். பிறகு (நபியவர்களின் நிலையைக் கண்ட) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், குழப்பங்களின் தீமையிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரியபின் "நாங்கள் அல்லாஹ்வை (மட்டுமே) இறைவனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்களை இறைத்தூதர் எனவும் மனநிறைவுடன் ஏற்றோம்" என்று கூறலானார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "நன்மையிலும் தீமையிலும் இன்றைய தினத்தைப் போன்று எந்த நாளையும் ஒருபோதும் நான் கண்டதில்லை. எனக்கு (இன்று) சொர்க்கமும் நரகமும் காட்டப்பட்டன. அவற்றை (மிஹ்ராபின்) இந்தச் சுவருக்கு அப்பால் நான் கண்டேன்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4710 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்குப் பிடிக்காத சில விஷயங்கள் குறித்து அவர்களிடம் வினவப்பட்டது. இவ்வாறு அதிகமாக வினவப்பட்ட போது நபி (ஸல்) அவர்கள்

கோபமடைந்து விட்டார்கள். பிறகு மக்களிடம், "நீங்கள் விரும்பிய எதைப் பற்றி வேண்டுமானாலும் என்னிடம் கேளுங்கள்" என்று சொன்னார்கள்.
அப்போது ஒரு மனிதர் "என் தந்தை யார்?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உம்முடைய தந்தை ஹுதா∴பா தான்" என்று கூறினார்கள். மற்றொருவர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தை யார்?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "ஷைபாவின் முன்னாள் அடிமையாயிருந்த சாலிம்தான் உம்முடைய தந்தை"என்று சொன்னார்கள். (இக்கேள்வியால்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகத்தில் தென்பட்ட கோபத்தைக் கண்ட உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருகிறோம்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 38 நபி (ஸல்) அவர்கள் (விவசாயம் போன்ற) உலக நடைமுறைகள் தொடர்பாக ஆலோசனை என்ற முறையில் குறிப்பிட்டவை தவிர, மார்க்க விஷயங்களில் அவர்கள் கூறிய அனைத்துக்கும் கட்டுப்படுவது கடமையாகும்.**

4711 தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
பேரீச்ச மரங்களின் உச்சியில் இருந்து கொண்டிருந்த (மதீனாவாசிகள்) சிலரைக் கடந்து சென்ற அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நானும் சென்றேன். அப்போது, "இவர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்?" என்று கேட்டார்கள்.
அதற்கு மக்கள், "பெண் மரங்களுடன் ஆண் மரங்களை இணைத்து ஒட்டுச் சேர்க்கை செய்து (பெண் மரங்களை) சூல் கொள்ளச் செய்கின்றனர்" என்று கூறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதனால் பயனேதும் ஏற்படும் என்று நான் கருதவில்லை" என்று சொன்னார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைப் பற்றி (மதீனா விவசாயிகளிடம்) தெரிவிக்கப்பட்டபோது,அவர்கள் ஒட்டுச் சேர்க்கை செய்வதை விட்டுவிட்டனர். (அந்த ஆண்டில் அவர்களுக்கு மகசூல் பாதிக்கப்பட்டது.)
இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. அப்போது, "அ(வ்வாறு செய்வ)தனால் அவர்களுக்குப் பயன் ஏற்படுமானால் அவ்வாறு செய்து கொள்ளட்டும். நான் எனது யூகத்தையே தெரிவித்தேன். யூகத்தை தெரிவித்ததை வைத்து என்மீது குற்றம் சாட்டாதீர்கள். ஆயினும், நான் உங்களிடம் அல்லாஹ்வைப் பற்றி ஏதேனும் சொன்னால் அதை நீங்கள் கடைப்பிடியுங்கள். ஏனெனில், நான் வல்லமையும் மாண்பும் உடைய அல்லாஹ்வைப் பற்றி பொய்யுரைக்கமாட்டேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4712 ரா∴பிஉ பின் கதீஜ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்த போது மதீனாவாசிகள் பேரீச்ச மரங்களை ஒட்டுச் சேர்க்கை செய்துகொண்டிருந்தனர். தாங்கள் பேரீச்ச மரங்களை சூல் கொள்ளச் செய்வதாக அவர்கள் கூறினர்.

நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். மக்கள் "(வழக்கமாக) இவ்வாறே நாங்கள் செய்துவருகிறோம்" என்று கூறினர். நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் இவ்வாறு செய்யாவிட்டால் நன்றாயிருந்திருக்கலாம்" என்று சொன்னார்கள். ஆகவே, அவர்கள் அ(வ்வாறு செய்வ)தை விட்டுவிட்டனர். அந்த வருடத்தில் கனிகள் "உதிர்ந்துவிட்டன' அல்லது "குறைந்து விட்டன'.

அதைப் பற்றி மக்கள் நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தனர். அப்போது அவர்கள், "நான் ஒரு மனிதனே; உங்கள் மார்க்க விஷயத்தில் நான் உங்களுக்கு ஏதேனும் கட்டளையிட்டால் அதை நீங்கள் கடைப்பிடியுங்கள். (உலக விவகாரத்தில்) சொந்தக் கருத்தாக உங்களுக்கு நான் ஏதேனும் கட்டளையிட்டால் நானும் ஒரு மனிதனே" என்று சொன்னார்கள்.

(இவ்வாறே சொன்னார்கள்) அல்லது இதைப் போன்று சொன்னார்கள் என அறிவிப்பாளர் இக்ரிமா (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் அஹ்மத் பின் ஜஅஃபர் அல்மஅகரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஆகவே, (அந்த ஆண்டில்) கனிகள் உதிர்ந்துவிட்டன" என்று ஐயப்பாடின்றி உறுதியாக இடம்பெற்றுள்ளது.

4713 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் பேரீச்ச மரங்களுக்கு மகரந்தச் சேர்க்கை செய்துகொண்டிருந்த மக்களைக் கடந்து சென்றார்கள். அப்போது, "நீங்கள் (இவ்வாறு) செய்யாமலிருந்தால் நன்றாயிருக்குமே!" என்று சொன்னார்கள். ஆகவே, (அவர்கள் மகரந்தச் சேர்க்கை செய்வதை விட்டுவிட்டனர். அதனால் அந்த மகசூலில்) நன்றாகக் கனியாத தாழ்ந்த ரகக் காய்களே காய்த்தன.

அப்போது அவர்களைக் கடந்து நபி (ஸல்) அவர்கள் சென்றபோது, "உங்கள் (பேரீச்ச) மரங்களுக்கு என்ன நேர்ந்தது?"என்று கேட்டார்கள். மக்கள், "நீங்கள் இப்படி இப்படிச் சொன்னீர்கள். (அதனால் நாங்கள் மகரந்தச் சேர்க்கை செய்வதை விட்டுவிட்டோம். அதனால் இந்த நிலை ஏற்பட்டுவிட்டது)" என்று கூறினர்.

நபி (ஸல்) அவர்கள், "உங்கள் உலக விவகாரங்கள் பற்றி (என்னைவிட) நீங்களே நன்கு அறிந்தவர்கள்" என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

இதே ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்கள் வழியாகவும் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 39 நபி (ஸல்) அவர்களைப் பார்த்தல், அவர்களைப் பார்க்க வேண்டுமென ஆசைப்படல் ஆகியவற்றின் சிறப்பு.

4714 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நிச்சயமாக உங்களிடம் ஒரு நாள் வரும். (அன்று)

என்னை நீங்கள் காண இயலாது. (நான் இறந்துபோயிருப்பேன்.) ஆனால், உங்களில் ஒருவர் (அன்று சிறிது நேரம்) என்னைப் பார்ப்ப(தற்கு வாய்ப்புக் கிடைப்ப)தானது, அவருடைய குடும்பத்தாரையும் செல்வங்கள் அனைத்தையும்விட அவருக்கு மிகவும் விருப்பமானதாக இருக்கும்.
அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
என்னைப் பொறுத்தவரை இந்த ஹதீஸின் பொருளாவது: அவர்களுடன் என்னையும் அவர் பார்ப்பதானது, அவருடைய குடும்பத்தாரையும் செல்வங்களையும்விட அவருக்கு மிகவும் விருப்பமானதாக இருக்கும். இந்த ஹதீஸின் வாசகங்கள், முன் பின்னாக இடம்பெற்றுள்ளது என்பதே என் கருத்தாகும்.

## பாடம் : 40 (இறைத்தூதர்) ஈசா (அலை) அவர்களின் சிறப்புகள்.

4715 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் மர்யமின் மைந்தருக்கு (ஈசாவுக்கு) மிகவும் நெருக்கமானவன் ஆவேன். நபிமார்கள் அனைவரும் தந்தைவழிச் சகோதரர்கள் ஆவர். எனக்கும் ஈசா அவர்களுக்குமிடையே வேறு எந்த இறைத்தூதரும் இல்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4716 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் ஈசா (அலை) அவர்களுக்கு மிகவும் நெருக்கமானவன் ஆவேன். நபிமார்கள் அனைவரும் தந்தைவழிச் சகோதரர்கள் ஆவர். எனக்கும் ஈசா அவர்களுக்குமிடையே வேறெந்த இறைத்தூதரும் இல்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4717 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் இம்மையிலும் மறுமையிலும் மர்யமின் மைந்தர் ஈசா அவர்களுக்கு மக்களிலேயே மிகவும் நெருக்கமானவன் ஆவேன்" என்று கூறினார்கள்.
அப்போது "அது எப்படி, அல்லாஹ்வின் தூதரே?" என்று மக்கள் கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நபிமார்களின் அன்னையர்கள் (வேறுபட்ட) பலராய் இருந்தாலும் அவர்கள் அனைவரும் தந்தைவழிச் சகோதரர்கள் ஆவர். அவர்கள் அனைவரது மார்க்கமும் ஒன்றே. எங்கள் (இருவர்) இடையே எந்த இறைத்தூதரும் இல்லை" என்று சொன்னார்கள்.

4718 சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"(புதிதாகப்) பிறக்கும் குழந்தை எதுவாயினும் அதை ஷைத்தான் தீண்டாமல் இருப்பதில்லை. ஷைத்தான் தீண்டுவதால் குழந்தை வீறிட்டழுகிறது; மர்யமின் புதல்வரையும் அவருடைய

தாயார் மர்யமையும் தவிர" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் சொன்னார்கள்.
பிறகு அபூஹுரைரா (ரலி) அவர்கள், "நீங்கள் விரும்பினால், "இந்தக் குழந்தையையும் இதன் வழித்தோன்றல்களையும் விரட்டப்பட்ட ஷைத்தானிடமிருந்து பாதுகாக்குமாறு உன்னிடம் நான் கோருகிறேன் (என இம்ரானின் துணைவியார் இறைவனை வேண்டினார்)' (3:36) எனும் இறைவசனத்தை ஓதிக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "குழந்தை பிறக்கும்போதே ஷைத்தான் அதைத் தீண்டுகிறான். ஷைத்தான் தீண்டுவதால் குழந்தை வீறிட்டழுகிறது" என்று (சிறு வித்தியாசத்துடன்) இடம்பெற்றுள்ளது.
ஷுஐப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ("ஷைத்தான் தீண்டுவதால்' என்பதைக் குறிக்க "மிம் மஸ்ஸத்திஷ் ஷைத்தான்"என்பதற்குப் பகரமாக) "மிம் மஸ்ஸிஷ் ஷைத்தான்' என்று (சிறிய மாற்றத்துடன்) காணப்படுகிறது.

4719 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதமின் மகன் (மனிதன்) ஒவ்வொருவரையும், தாய் வயிற்றிலிருந்து அவன் பிறக்கும் நாளில் ஷைத்தான் தீண்டவே செய்கிறான்; மர்யமையும் அவருடைய புதல்வரையும் தவிர.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4720 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஷைத்தான் தீண்டுவதாலேயே குழந்தை பிறக்கும்போது வீறிட்டழுகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4721 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மர்யமின் புதல்வர் (ஈசா (அலை) அவர்கள்), ஒரு மனிதர் திருடிக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். அவனிடம், "நீ திருடினாயா?" என்று கேட்டார்கள். அதற்கு அவன், "யாரைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அ(ந்த ஏக இறை)வன் மீதாணையாக! இல்லை (நான் திருடவில்லை)" என்றான்.
உடனே ஈசா (அலை) அவர்கள், "அல்லாஹ்வை (முன்னிறுத்தி சத்தியமிட்டு அவன் கூறுவதால் அவன் கூறியதை) நான் நம்பினேன். (திருடுவதைப் போன்று நானாகவே எண்ணிக்கொண்டதால்) என்னை நான் நம்ப மறுக்கிறேன்" என்று கூறினார்கள்.

**பாடம் : 41 இறையன்பர் இப்ராஹீம் (அலை) அவர்களின் சிறப்புகள்..**

4722 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "படைப்பினங்களிலேயே மிகவும் சிறந்தவரே!" என்று அழைத்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அது இப்ராஹீம் (அலை) அவர்கள்தான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே...' என்று கூறினார்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.
- மேற்கண்ட அதே ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4723 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் தமது எண்பதாவது வயதில் வாய்ச்சியினால் விருத்த சேதனம் செய்துகொண்டார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4724 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறந்துவிட்டவற்றுக்கு அல்லாஹ் எப்படி உயிரூட்டுகிறான் என்ற சந்தேகம் இறைத்தூதர்களுக்கு வருவதாயிருந்தால்) நாமே இப்ராஹீம் (அலை) அவர்களைவிடவும் சந்தேகம் கொள்ள அதிகத் தகுதியுடையவர்கள் ஆவோம். (ஆகவே,சந்தேகப்பட்டு அவர்கள் அப்படிக் கேட்கவில்லை.) இப்ராஹீம் (அலை) அவர்கள், "என் இறைவா! இறந்தோரை நீ எவ்வாறு உயிர்ப்பிக்கிறாய் என்பதை எனக்குக் காண்பிப்பாயாக" என்று கேட்ட போது, "(அதை) நீர் நம்பவில்லையா?"என (அல்லாஹ்) கேட்டான். அதற்கு அவர் "அவ்வாறன்று (நம்பியிருக்கிறேன்); எனினும், எனது உள்ளம் நிம்மதியடைவதற்காகவே (கேட்கிறேன்)" என்று கூறினார். (2:260)
லூத் (அலை) அவர்களுக்கு அல்லாஹ் கருணை காட்டுவானாக! அவர்கள் வலுவான ஓர் ஆதரவாளனிடமே தஞ்சம் புகுபவர்களாக இருந்தார்கள்.
யூசுஃப் (அலை) அவர்கள் சிறையில் கழித்த அளவுக்கு நீண்ட காலத்தை நான் கழிக்க நேர்ந்திருந்தால், (விடுதலையளிக்க) அழைத்தவரிடம் (அவரது அழைப்பை ஏற்று விடுதலையாகிச் செல்ல) நான் ஒப்புக்கொண்டிருப்பேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4725 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"லூத் (அலை) அவர்களுக்கு அல்லாஹ் பாவமன்னிப்பு அருள்வானாக. வலுவான ஓர் ஆதரவாளனிடமே அவர்கள் தஞ்சம் புகுந்தார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

4726 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைத்தூதர் இப்ராஹீம் (அலை) அவர்கள் மூன்று பொய்களைத் தவிர வேறு பொய் எதுவும் ஒருபோதும் பேசியதில்லை. அவற்றில் இரண்டு அல்லாஹ்வின் (மார்க்கத்தின் நலன் காக்கும்) விஷயத்தில் சொன்னவையாகும். அவை:
1. (இணைவைக்கும் திருவிழாவுக்கு இப்ராஹீம் (அலை) அவர்களை மக்கள் அழைத்தபோது) "நான் நோயுற்றிருக்கிறேன்" என்று (அதில் கலந்துகொள்ளாமல் தவிர்ப்பதற்காகக்) கூறியது.
2. (சிலைகளை உடைத்துப் பெரிய சிலையின் தோளில் கோடரியை மாட்டிவிட்டு, மக்கள் "இப்படிச் செய்தது யார்?'என்று கேட்டபோது) "ஆயினும், இவர்களில் பெரியதான சிலைதான் இதைச் செய்தது" என்று கூறியது.
3. இன்னொரு பொய் (தம் துணைவி) சாரா விஷயத்தில் அவர்கள் சொன்னதாகும்: (அதன் விவரம் வருமாறு:)
(ஒரு நாள்) இப்ராஹீம் (அலை) அவர்கள் (தம் துணைவியார்) சாரா (அலை) அவர்களுடன் கொடுங்கோல் மன்னர்களில் ஒருவனுடைய நாட்டுக்குச் சென்றார்கள். சாரா (அலை) அவர்கள் மக்களிலேயே மிகவும் அழகிய பெண்மணியாக இருந்தார்கள். அப்போது இப்ராஹீம் (அலை) அவர்கள் சாரா அவர்களிடம், "இந்தக் கொடுங்கோல் மன்னன், நீ என் துணைவி என அறிந்து கொண்டால் உன்னை என்னிடமிருந்து கைப்பற்றிக்கொள்வான். (நீ யார் என) அவன் உன்னிடம் கேட்டால் "நீ என் சகோதரி' என்று கூறிவிடு. ஏனெனில், இஸ்லாத்தில் நீ என் சகோதரிதான். மேலும், பூமியில் உன்னையும் என்னையும் தவிர முஸ்லிம்கள் வேறெவரும் இருப்பதாக நான் அறியவில்லை" என்று கூறினார்கள்.
பிறகு அவர்கள் அந்த நாட்டுக்குள் நுழைந்தபோது, அந்த மன்னனுக்கு வேண்டியவர்களில் ஒருவன் சாரா அவர்களைப் பார்த்து விட்டு மன்னனிடம் சென்று, "(மன்னா!) உங்கள் நாட்டுக்குப் பெண்ணொருத்தி வந்துள்ளாள். உங்களுக்குரியவளாக இருப்பதைத் தவிர வேறெதுவும் அவளுக்குத் தகாது" என்று சொன்னான். ஆகவே, மன்னன்,சாரா அவர்களிடம் ஆளனுப்பினான். சாரா அவனிடம் கொண்டுசெல்லப்பட்டார்கள்.
அப்போது இப்ராஹீம் (அலை) அவர்கள் தொழுவதற்காக நின்றுகொண்டார்கள். சாரா மன்னனிடம் சென்றபோது,அவன் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ளாமல் சாராவை நோக்கித் தனது கையை நீட்டினான். உடனே அவனது கை (வலிப்பு நோயால்) கடுமையாக இழுத்துக்கொண்டது. உடனே அவன் சாரா அவர்களிடம், "அல்லாஹ்விடம் (என் கைகளை) விடுவிக்கும்படி எனக்காகப் பிரார்த்தனை செய். நான் உனக்குத் தீங்கிழைக்கமாட்டேன்" என்று சொன்னான்.
அவ்வாறே அவர்கள் பிரார்த்தித்தார்கள். (அவன் குணமடைந்ததும்) மீண்டும் அவன் (அவர்களை நோக்கி) கையை நீட்டினான். அப்போது முன்பைவிடக் கடுமையாக அவனுடைய கை இழுத்துக்கொண்டது. அவன் முன்பு போன்றே மீண்டும் (பிரார்த்திக்கும்படி) கூறினான். அவ்வாறே சாராவும் பிரார்த்தித்தார்கள்.

(குணமடைந்ததும்) மறுபடியும் அவன் கையை நீட்டியபோது முந்தைய இரு தடவைகள் இழுத்துக்கொண்டதைவிட மிகக் கடுமையாக அவனது கை இழுத்துக்கொண்டது. அப்போது அவன் எனது கையை விடும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய். உனக்கு அல்லாஹ்வே சாட்சி. (இனி) உனக்கு நான் தீங்கிழைக்கமாட்டேன்" என்று கூறினான்.
அவ்வாறே சாரா அவர்கள் பிரார்த்தித்தார்கள். அவனது கை விடுவிக்கப்பட்டது. சாராவை அழைத்து வந்தவனை மன்னன் அழைத்து, "நீ ஒரு மனுஷியை என்னிடம் கொண்டுவரவில்லை. ஒரு ஷைத்தானையே என்னிடம் கொண்டுவந்துள்ளாய். இவளை எனது நாட்டிலிருந்து வெளியேற்றி விடு. இவளுக்கு ஹாஜர் எனும் (அடிமைப்) பெண்ணை அன்பளிப்பாகக் கொடுத்துவிடு" என்று கூறினான்.
சாரா தம்மை நோக்கி நடந்துவருவதை இப்ராஹீம் (அலை) அவர்கள் கண்டபோது (தொழுகையை முடித்துத்) திரும்பினார்கள். அவரிடம் "என்ன நடந்தது?" என்று கேட்டார்கள். சாரா அவர்கள், "நல்லதே நடந்தது. அத் தீயவனின் கையை இறைவன் தடுத்துவிட்டான். ஒரு பணியாளரையும் கொடுத்தான்" என்று சொன்னார்கள்.
இதன் அறிவிப்பாளரான அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்:
"மாஉஸ் ஸமாஉ' (வான் மழை) குலத்தாரே! அவர் (ஹாஜர்)-தான் உங்கள் தாயார்.

## பாடம் : 42 மூசா (அலை) அவர்களின் சிறப்புகள்..

4727 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பனூ இஸ்ராயீல் சமுதாயத்தார் ஒருவர் மற்றவரது வெட்கத்தலத்தைப் பார்த்துக்கொண்டு நிர்வாணமாகவே குளிப்பார்கள்; மூசா (அலை) அவர்கள் தனியாகவே குளிப்பார்கள். ஆகவே, இஸ்ர வேலர்கள், "இறைவன் மீதாணையாக! மூசாவுக்கு விரைவீக்கம் உள்ளது. எனவேதான், அவர் நம்முடன் சேர்ந்து குளிப்பதில்லை" என்று (குறை) கூறினர்.
ஒரு முறை மூசா (அலை) அவர்கள் குளிப்பதற்குச் சென்றார்கள்; அப்போது ஆடையை(க் கழற்றி) ஒரு கல்மீது வைத்தார்கள். அவர்களது ஆடையோடு அந்தக் கல் ஓடியது. மூசா (அலை) அவர்கள் அந்தக் கல்லைப் பின்தொடர்ந்து "கல்லே! எனது ஆடை! கல்லே! எனது ஆடை! என்று சப்தமிட்டுக்கொண்டு வேகமாக ஓடினார்கள்.
இறுதியில் இஸ்ரவேலர்கள் (இருந்த பகுதிக்கு வந்தபோது அவர்கள்) மூசா (அலை) அவர்களின் வெட்கத்தலத்தைப் பார்த்துவிட்டு, "இறைவன் மீதாணையாக! மூசாவுக்கு எந்தக் குறையுமில்லை" என்று கூறினர்.
பின்னர் அந்தக் கல் அப்படியே நின்றது. அதற்குள் அனைவரும் மூசா (அலை) அவர்களை (நன்கு) பார்த்துவிட்டனர். பின்னர் மூசா (அலை) அவர்கள் தமது ஆடையை எடுத்துக் கொண்டு (தமது கையிலிருந்த தடியால்) கல்லை அடிக்கலானார்கள்.
அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
அல்லாஹ்வின் மீதாணையாக! மூசா (அலை) அவர்கள் அந்தக் கல்மீது அடித்ததால் அதன்மீது ஆறோ ஏழோ வடுக்கள் ஏற்பட்டன.

4728 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மூசா (அலை) அவர்கள் மிகவும் வெட்கப்படுகின்ற மனிதராக இருந்தார்கள். ஆகவே, நிர்வாணமாக அவர்கள் காணப்படவேமாட்டார்கள். எனவே, பனூ இஸ்ராயீல் சமுதாயத்தார் "மூசாவுக்கு விரைவீக்கம் உள்ளது" என்று கூறிக்கொண்டனர்.
இந்நிலையில் மூசா (அலை) அவர்கள் ஒரு குட்டையில் குளித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் தமது ஆடையை ஒரு கல்மீது வைத்தார்கள். அந்தக் கல் (ஆடையோடு) விரைந்தோடலாயிற்று. மூசா (அலை) அவர்கள் தமது தடியால் அதை அடித்துக்கொண்டு, "கல்லே! எனது ஆடை!' "கல்லே! எனது ஆடை!' என்று கூறிக்கொண்டே அதை விரட்டிக்கொண்டு ஓடினார்கள்.
இறுதியில் அந்தக் கல் பனூ இஸ்ராயீல் சமுதாயத்தின் பிரமுகர்கள் இருக்குமிடத்திற்குச் சென்று நின்றது. (இது குறித்தே) "நம்பிக்கை கொண்டோரே! மூசாவுக்குத் தொல்லை தந்தவர்களைப் போன்று நீங்கள் ஆகிவிடாதீர்கள். அவர்கள் (இட்டுக்கட்டிக்) கூறியவற்றிலிருந்து மூசா தூய்மையானவர் என்று அல்லாஹ் நிரூபித்துவிட்டான். மேலும், அவர் அல்லாஹ்விடம் கண்ணியத்திற்குரியவராக இருந்தார்" (33:69) எனும் இறைவசனம் அருளப்பெற்றது.

4729 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"மலக்குல் மவ்த்' (உயிரை எடுத்துச்செல்ல வரும் வானவர்) மூசா (அலை) அவர்களிடம் அனுப்பப்பட்டார். தம்மிடம் வானவர் வந்த போது, மூசா (அலை) அவர்கள் அவரை (முகத்தில்) அறைந்து, அவரது கண்ணைப் பறித்துவிட்டார்கள். உடனே அந்த வானவர் தம் இறைவனிடம் திரும்பிச் சென்று "மரணத்தை விரும்பாத ஓர் அடியாரிடம் என்னை நீ அனுப்பிவிட்டாய்!" என்று கூறினார்.
அந்த வானவருக்கு மீண்டும் கண்ணைக் கொடுத்த இறைவன், "நீர் அவரிடம் திரும்பிச் சென்று அவரது கையை ஒரு காளை மாட்டின் முதுகின்மேல் வைக்கச் சொல்வீராக. (அதன் முதுகிலுள்ள முடிகளில் எந்த அளவுக்கு) அவரது கை மறைக்கின்றதோ அதில் ஒவ்வொரு முடிக்குப் பகரமாக ஓர் ஆண்டு இந்த உலகில் வாழ அவருக்கு அனுமதி உண்டு'என்று சொல்வீராக" என்றான்.
(அவ்வாறே அந்த வானவர் மூசா (அலை) அவர்களிடம் கூறியபோது) மூசா (அலை) அவர்கள், "இறைவா! (அத்தனை காலம் வாழ்ந்து முடித்த) பிறகு என்ன நடக்கும்?" என்று கேட்டார்கள். இறைவன் "மரணம்தான்" என்று பதிலளித்தான்.
மூசா (அலை) அவர்கள், "அப்படியென்றால், இப்போதே (என் உயிரை எடுத்துக்கொள்)" என்று கூறிவிட்டு, (பைத்துல் மக்திஸ் எனும்) புனித பூமிக்கு நெருக்கமாக, அங்கிருந்து கல்லெறி தூரத்தில் தமது அடக்கத்தலம் அமைய வேண்டுமென அல்லாஹ்விடம் வேண்டினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இதை எடுத்துரைத்தபோது), "நான் அந்த இடத்தில் இருந்தால் செம்மணற்குன்றின் கீழே சாலையோரத்தில் அவர் அடக்கப்பட்டிருக்கும் இடத்தை உங்களுக்குக் காட்டியிருப்பேன்"என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4730 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"மலக்குல் மவ்த்' (உயிரை எடுத்துச்செல்லவரும் வானவர்) மூசா (அலை) அவர்களிடம் வந்து, உங்கள் இறைவன் (உங்கள் உயிரை எடுத்து வருமாறு உத்தரவிட்டுள்ளான். அவனது) உத்தரவுக்குப் பணியுங்கள்" என்று கூறினார்.
உடனே மூசா (அலை) அவர்கள் வானவரை (முகத்தில்) அறைந்து, அவரது கண்ணைப் பெயர்த்துவிட்டார்கள். அந்த வானவர் இறைவனிடம் திரும்பிச் சென்று, "மரணத்தை விரும்பாத உன் அடியார் ஒருவரிடம் என்னை நீ அனுப்பிவிட்டாய்! அவர் எனது கண்ணைப் பறித்துவிட்டார்" என்று கூறினார்.
அவருக்கு மீண்டும் கண்ணை வழங்கிய இறைவன், "நீர் என் அடியாரிடம் திரும்பிச் சென்று, நீங்கள் உயிர்வாழத்தானே விரும்புகிறீர்கள்? அவ்வாறு நீங்கள் (இன்னும் நீண்ட நாட்கள்) உயிர்வாழ விரும்பினால், ஒரு காளை மாட்டின் முதுகின்மேல் கையை வையுங்கள்; (அதன் முதுகிலுள்ள முடிகளில்) உங்களது கை மறைக்கும் அளவுக்கு ஒவ்வொரு முடிக்குப் பகரமாக ஓர் ஆண்டு (இந்த உலகில்) நீங்கள் வாழலாம்" என்று சொல்வீராக என்று கூறினான்.
(அவ்வாறே அந்த வானவர் திரும்பிச் சென்று மூசா (அலை) அவர்களிடம் கூறியபோது) மூசா (அலை) அவர்கள், "(அத்தனை காலம் வாழ்ந்து முடிந்த) பிறகு என்ன நடக்கும்?" என்று கேட்டார்கள். வானவர், "பிறகு நீங்கள் மரணிக்கத்தான் வேண்டும்" என்றார்.
மூசா (அலை) அவர்கள், "அப்படியானால் இப்போதே விரைவாக (என் உயிரை எடுத்துக் கொள். இறைவா! பைத்துல் மக்திஸ் எனும் புனித பூமியிலிருந்து கல்லெறி தூரத்தில் என்னை இறக்கச் செய்து (அங்கேயே அடக்கம் செய்து)விடு"என்று வேண்டினார்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (இப்போது) அந்த இடத்தில் இருந்தால், செம்மணற்குன்றின் கீழே சாலையோரமாக அவர் அடக்கப்பட்டிருக்கும் இடத்தை உங்களுக்குக் காட்டியிருப்பேன்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4731 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
யூதர் ஒருவர் (சந்தையில்) தமது சரக்கை எடுத்துக் காட்டியபோது, அவருக்குப் "பிடிக்காத' அல்லது "அவர் விரும்பாத' (குறைந்த) விலை அவருக்குக் கொடுக்கப்பட்டது. (அறிவிப்பாளர் அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்களின் ஐயம்.)
அப்போது அந்த யூதர், "மனிதர்கள் அனைவரையும்விட (சிறந்தவராக) மூசாவைத் தேர்ந்தெடுத்தவன் மீதாணையாக! இல்லை (இந்த விலை கட்டுப்படியாகாது)" என்று கூறினார். இதை அன்சாரி (முஸ்லிம்)களில் ஒருவர் கேட்டுவிட்டார். உடனே அந்த யூதரை முகத்தில் அறைந்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நமக்கிடையே வாழ்ந்து கொண்டிருக்க, "மனிதர்கள் அனைவரையும் விட மூசாவைத் தேர்ந்தெடுத்தவன்மீது சத்தியமாக! என்றா நீ கூறுகிறாய்?" என்று கேட்டார்.

உடனே அந்த யூதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, "அபுல்காசிமே! (சிறுபான்மை மக்களான எங்கள் உயிர், உடைமை, மானத்தைப் பாதுகாப்பதாக எங்களிடம் நீங்கள் வாக்குறுதி அளித்திருக்கும் அடிப்படையில்) எனக்கு நீங்கள் பொறுப்பேற்று ஒப்பந்தம் செய்து தந்திருக்கிறீர்கள். இன்ன மனிதர் எனது முகத்தில் அறைந்துவிட்டார்" என்று கூறினார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்த முஸ்லிமிடம்), "நீ ஏன் இவரது முகத்தில் அறைந்தாய்?" என்று கேட்டார்கள். "(அல்லாஹ்வின் தூதரே!), தாங்கள் எங்களிடையே வாழ்ந்து கொண்டிருக்கவே இவர் மனிதர்கள் அனைவரையும்விட மூசாவைத் தேர்ந்தெடுத்தவன் மீதாணையாக!' என்று (மூசா (அலை) அவர்களைச் சிறப்பித்துக்) கூறினார்" என்றார்.

உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கோபப்பட்டார்கள். எந்த அளவுக்கென்றால், கோபக்குறி அவர்களது முகத்தில் தென்பட்டது. பிறகு கூறினார்கள்: இறைத் தூதர்களுக்கிடையே ("ஒருவர் மற்றவரைவிடச் சிறந்தவர்' என்று) ஏற்றத்தாழ்வு பாராட்டாதீர்கள். ஏனெனில், (மறுமை நாளில்) எக்காளம் ("ஸூர்') ஊதப்படும். உடனே வானங்களில் இருப்பவர்களும் பூமியில் இருப்பவர்களும் மூர்ச்சையடைந்துவிடுவார்கள்; அல்லாஹ் நாடியவர்களைத் தவிர.

பிறகு மற்றொரு முறை எக்காளம் ஊதப்படும். அப்போது (உயிர் கொடுத்து) எழுப்பப்படுபவர்களில் நான்தான் முதல் ஆளாக இருப்பேன். அந்த வேளையில் மூசா (அலை) அவர்கள் இறை அரியணையைப் பிடித்துக்கொண்டிருப்பார்கள். அவர்கள் "தூர் சினாய்' (மலையில் இறைவனைச் சந்தித்த) நாளில் மூர்ச்சையாகி விழுந்தது கணக்கி லெடுக்கப்(பட்டு,அங்கு அவருக்கு விதிவிலக்கு அளிக்கப்)பட்டதா? அல்லது எனக்கு முன்பே அவர் (மயக்கம் தெளிவிக்கப்பட்டு) எழுப்பப்பட்டுவிட்டாரா?' என்பது எனக்குத் தெரியாது. மேலும், யூனுஸ் பின் மத்தா (அலை) அவர்களைவிட ஒருவர் சிறந்தவர் என்று நான் ஒருபோதும் கூற மாட்டேன்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4732 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

ஒரு யூதரும் ஒரு முஸ்லிமும் ஒருவரையொருவர் திட்டிக்கொண்டனர். அந்த முஸ்லிம், "உலகத்தார் அனைவரைவிடவும் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு மேன்மை அளித்தவன் மீதாணையாக!" என்று (ஏதோ ஒரு விஷயத்தில் சத்தியமிட்டுக்) கூறினார். அதற்கு (பதிலாக) அந்த யூதர், "உலகத்தார் அனைவரைவிடவும் மூசா (அலை) அவர்களுக்கு மேன்மை அளித்தவன் மீதாணையாக!" என்று கூறினார்.

அதைக் கேட்டு (கோபம் கொண்ட) அந்த முஸ்லிம் கையை ஓங்கி யூதரின் முகத்தில் அறைந்து விட்டார். உடனே அந்த யூதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, தமக்கும் அந்த முஸ்லிமுக்கும் இடையே நடந்ததைத் தெரிவித்தார்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்த முஸ்லிமை வரவழைத்து), "மூசாவைவிட என்னைச் சிறப்பாக்கி (உயர்த்திப் பேசி)விடாதீர்கள். ஏனெனில், மக்கள் அனைவரும் (மறுமை நாளில்) மூர்ச்சையாகிவிடுவார்கள். நானே முதலாவதாக மயக்கம்

தெளிந்து எழுவேன். அப்போது மூசா (அலை) அவர்கள் இறை அரியணையின் ஓரத்தைப் பிடித்துக்கொண்டிருப்பார்கள். மக்களோடு சேர்ந்து அவரும் மூர்ச்சையாகி, பிறகு எனக்கு முன்பாகவே மயக்கம் தெளிந்துவிட்டிருப்பாரா? அல்லது அவருக்கு மட்டும் இறைவன் (மூர்ச்சையடை வதிலிருந்து) விதிவிலக்கு அளித்திருப்பானா என்பது எனக்குத் தெரியாது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4733 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஒரு முஸ்லிமும் ஒரு யூதரும் ஒருவரையொருவர் திட்டிக்கொண்டனர்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4734 மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் வாயிலாக மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "யூதர் ஒருவர் (ஒரு முஸ்லிமிடம்) முகத்தில் அறை வாங்கிக்கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்"என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகின்றன.
ஆயினும், அதில் "மூர்ச்சையடைந்துவிட்டவர்களில் மூசா (அலை) அவர்கள் (முதலாவதாக) மூர்ச்சை தெளிந்து (எழுந்து)விட்டார்களா? அல்லது தூர்சினாய் மலையில் (இறைவனைப் பார்க்க முற்பட்டபோது) அடைந்த மூர்ச்சைக்குக் பகரமாக அத்தோடு போதுமென விடப்பட்டார்களா என்பது எனக்குத் தெரியாது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக (சிறு வேறுபாட்டுடன்) காணப்படுகிறது.

4735 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைத்தூதர்களுக்கிடையே ("ஒருவர் மற்றவரைவிடச் சிறந்தவர்' என) ஏற்றத்தாழ்வு கற்பிக்காதீர்கள்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

4736 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் (மக்காவிலிருந்து பைத்துல் மக்திஸுக்கு) அழைத்துச் செல்லப்பட்ட இரவில் செம்மணற்குன்றின் அருகில் மூசா (அலை) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் தமது அடக்கத்தலத்தினுள் நின்று தொழுதுகொண்டிருந்தார்கள்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஹத்தாப் பின் காலித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மூசா (அலை) அவர்களைக் கடந்து சென்றேன்" என்று இடம்பெற்றுள்ளது.

4737 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நான் மூசா (அலை) அவர்களைக் கடந்து சென்றேன். அப்போது அவர்கள் தமது அடக்கத்தலத்தினுள் தொழுதுகொண்டிருந்தார்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.
ஈசா பின் யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் (மக்காவிலிருந்து பைத்துல் மக்திஸுக்கு) அழைத்துச்செல்லப்பட்ட இரவில் கடந்து சென்றேன்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 43 யூனுஸ் (அலை) அவர்கள் பற்றிய குறிப்பும், "நான் யூனுஸ் பின் மத்தா அவர்களைவிடச் சிறந்தவன்'' என்று (என்னைப் பற்றிக்) கூறுவது எந்த அடியாருக்கும் தகாது'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதும்.**

4738 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"என் அடியார் ஒருவர் (தம்மைப் பற்றி) நான் யூனுஸ் பின் மத்தா அவர்களைவிடச் சிறந்தவன் என்று கூறுவது அவருக்குத் தகாது" என்று அல்லாஹ் கூறினான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4739 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "யூனுஸ் பின் மத்தா அவர்களைவிட நான் சிறந்தவன் என்று (என்னைப் பற்றிக் கூறுவது) எந்த அடியாருக்கும் தகாது" என்று கூறினார்கள். இவ்வாறு யூனுஸ் (அலை) அவர்களை, அவர்களுடைய தந்தையுடன் இணைத்து (மத்தாவின் மகன் யூனுஸ் என்று) நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 44 யூசுஃப் (அலை) அவர்களின் சிறப்புகள்.**

4740 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! மக்களில் மிகவும் கண்ணியத்திற்குரியவர் யார்?" என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள், "மனிதர்களிலேயே இறைவனை அதிகமாக அஞ்சுபவர்தான்" என்று பதிலளித்தார்கள். உடனே மக்கள், "நாங்கள் தங்களிடம் இதைப் பற்றிக் கேட்கவில்லை" என்று கூறினர்.
நபி (ஸல்) அவர்கள், "அப்படியென்றால், இறைவனின் உற்ற நண்பர் (இப்ராஹீம்) உடைய புதல்வரான இறைத்தூதர் (இஸ்ஹாக்) உடைய புதல்வரான இறைத்தூதர் (யஅகூப்) உடைய புதல்வரான இறைத்தூதர் யூசுஃப் (அலை) அவர்கள்தான்" என்று பதிலளித்தார்கள். மக்கள், "இதைப் பற்றியும் நாங்கள் தங்களிடம் கேட்கவில்லை" என்று கூறினர்.
உடனே நபி (ஸல்) அவர்கள், "அரபியரின் மூலகங்கள் (எனப்படும் அரபியர் பரம்பரைகள்) குறித்தா என்னிடம் கேட்கிறீர்கள்? அறியாமைக் காலத்தில் மக்களில்

சிறந்தவர்களாயிருந்தவர்கள் தான் இஸ்லாத்தை ஏற்ற பின்பும் சிறந்தவர்களாயிருப்பார்கள்; அவர்கள் மார்க்க ஞானத்தைப் பெற்றுக்கொண்டால்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 45 ஸகரிய்யா (அலை) அவர்களின் சிறப்புகள்..

4741 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஸகரிய்யா (அலை) அவர்கள் தச்சுத் தொழில் செய்பவராக இருந்தார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

## பாடம் : 46 களிர் (அலை) அவர்களின் சிறப்புகள்..

4742 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "(களிர் (அலை) அவர்களைச் சந்தித்த) மூசா, இஸ்ரவேலர்களுக்கு நபியாக அனுப்பப்பெற்ற மூசா (அலை) அவர்கள் அல்லர்; அவர் வேறு ஒரு மூசா என்று நவ்ஃப் அல்பிகாலீ கூறுகிறாரே?" என்று கேட்டேன்.
அதற்கு அவர்கள், "இறைவனின் விரோதி (யான அவர்) பொய்யுரைக்கிறார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதைத் தாம் கேட்டதாக உபை பின் கஅப் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறியதை நான் கேட்டுள்ளேன்"என்றார்கள்:
(ஒரு முறை) மூசா (அலை) அவர்கள் பனூ இஸ்ராயீல் மக்களிடையே நின்று உரையாற்றிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களிடம் "மக்களிலேயே மிகவும் அறிந்தவர் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு மூசா (அலை) அவர்கள் "(என்னைப் பொறுத்தவரையில்) நானே அறிந்தவன்" என்று கூறிவிட்டார்கள். "இது பற்றி அல்லாஹ்வே நன்கறிந்தவன்" என்று அவர்கள் (கூறியிருக்க வேண்டும்; ஆனால், அவ்வாறு அவர்கள்) கூறவில்லை.
இதனால் அல்லாஹ், மூசா (அலை) அவர்களைக் கண்டித்து, "இரு கடல்கள் சங்கமிக்கும் இடத்தில் என் அடியார்களில் ஒருவர் இருக்கிறார். அவர் உம்மைவிட அதிகமாக அறிந்தவர்" என்று அவர்களுக்கு (வஹீ) அறிவித்தான்.
அதற்கு மூசா (அலை) அவர்கள், "என் இறைவா! அவரைச் சந்திப்பதற்கு எனக்கு வழி எப்படி?" என்று கேட்டார்கள். "நீங்கள் ஒரு கூடையில் ஒரு மீனை எடுத்துக்கொள்ளுங்கள். (அப்படியே கடலோரமாக நடந்து பயணம் செய்யுங்கள்.) நீங்கள் எங்கே அந்த மீனைத் தவறவிடுகிறீர்களோ அங்குதான் அவர் இருப்பார்" என்று அல்லாஹ் சொன்னான்.
(அவ்வாறே) மூசா (அலை) அவர்களும் அவர்களுடைய உதவியாளர் யூஷஉ பின் நூன் அவர்களும் நடந்தனர். மூசா (அலை) அவர்கள் ஒரு கூடையில் மீனை எடுத்துக்கொண்டு தம் உதவியாளருடன் நடந்து (இரு கடல்கள் சங்கமிக்கும் இடத்திற்கு அருகிலிருந்த) அந்தப் பாறைக்கு வந்து சேர்ந்தனர். அங்கு இருவரும் உறங்கினர்.
கூடையிலிருந்த அந்த மீன், கூடையிலிருந்து குதித்து வெளியேறிக் கடலில் விழுந்தது. அப்போது மீனுக்காக நீரோட்டத்தை அல்லாஹ் தடுத்துவிடவே, மீனைச் சுற்றி ஒரு

வளையம் போல் நீர் ஆகிவிட்டது. அது அந்த மீனுக்குச் சுரங்கம் போல் ஆனது. அது மூசா (அலை) அவர்களுக்கும் அவர்களுடைய உதவியாளருக்கும் பெரும் வியப்பாக அமைந்தது.

பிறகு எஞ்சிய பகலிலும் இரவிலும் அவர்கள் இருவரும் நடந்தனர். மூசா (அலை) அவர்களின் (பயணத்) தோழர் மீனைப் பற்றி மூசா (அலை) அவர்களுக்குத் தெரிவிக்க மறந்துவிட்டார்.

(இரண்டாம் இரவு முடிந்து) காலை வேளையானபோது மூசா (அலை) அவர்கள் தம் உதவியாளரிடம், "நமது காலை உணவைக் கொண்டுவருக. நாம் இந்தப் பயணத்தில் மிகவும் களைப்பு அடைந்துவிட்டோம்" (18:62) என்று சொன்னார்கள்.

தமக்குக் கட்டளையிடப்பட்ட இடத்தைக் கடக்கும்வரை மூசா (அலை) அவர்களுக்குக் களைப்பு ஏற்படவில்லை. யூஷஉ பின் நூன், "நாம் அப்பாறையில் ஒதுங்கியபோது கவனித்தீர்களா? (அங்கு தான்) நான் மீனை மறந்துவிட்டேன். அதை (உங்களிடம்) கூறவிடாமல் ஷைத்தான் என்னை மறக்கச் செய்துவிட்டான். அது கடலில் தனது பாதையை ஆச்சரியமான முறையில் அமைத்துக்கொண்டது" (18:63) என்று கூறினார்.

அதற்கு மூசா (அலை) அவர்கள் "அதுதான் நாம் தேடிவந்த இடம்" என்று கூறினார்கள். உடனே அவர்கள் இருவரும் தம் அடிச்சுவடுகளைப் பின்பற்றி வந்த வழியே திரும்பினார்கள். இறுதியில் அந்தப் பாறைக்கு இருவரும் வந்துசேர்ந்தார்கள்.

அங்கு தம்மை முழுவதுமாக ஆடையால் மூடிக்கொண்ட ஒரு மனிதரை (களிரை)க் கண்டார்கள். அவருக்கு மூசா (அலை) அவர்கள் முகமன் (சலாம்) கூற, அம்மனிதர், "உங்களுடைய (இந்த) வட்டாரத்தில் (அறியப்படாத) சலாம் (உங்களுக்கு மட்டும்) எவ்வாறு (தெரியும்? நீங்கள் யார்)?" என்று கேட்டார்.

அதற்கு மூசா (அலை) அவர்கள், "நான்தான் மூசா" என்று பதிலளித்தார்கள். அம்மனிதர், "இஸ்ரவேலர்களின் (இறைத்தூதரான) மூசாவா?" என்று கேட்டார். மூசா (அலை) அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள். அவர், "அல்லாஹ் உங்களுக்குக் கற்றுக் கொடுத்த ஓர் அறிவு உங்களிடம் உள்ளது. அதை நான் அறியமாட்டேன். அல்லாஹ் எனக்குக் கற்றுத் தந்த ஓர் அறிவு என்னிடம் உள்ளது. அதை நீங்கள் அறியமாட்டீர்கள்" என்று கூறினார்.

அதற்கு மூசா (அலை) அவர்கள், "உமக்குக் கற்றுத் தரப்பட்டுள்ள நல்லறிவை நீர் எனக்குக் கற்றுத் தருவதற்காக நான் உம்மைப் பின்தொடரலாமா?" என்று அவரிடம் கேட்டார்கள்.

அதற்கு அம்மனிதர், "என்னுடன் பொறுமையாக இருக்க உங்களால் முடியாது; உங்களுக்குத் தெரியாத விஷயத்தில் உங்களால் எவ்வாறு பொறுமையாக இருக்க இயலும்?" என்று கேட்டார்.

அதற்கு மூசா (அலை) அவர்கள், "அல்லாஹ் நாடினால் என்னைப் பொறுமையாளனாகக் காண்பீர். உமது எந்தக் கட்டளைக்கும் நான் மாறுசெய்யமாட்டேன்" என்று கூறினார்கள்.

அதற்கு களிர் அவர்கள், "நீங்கள் என்னைப் பின்தொடர்வதானால், நானாக எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும் உங்களுக்குச் சொல்லாதவரையில் நீங்கள் என்னிடம் (அதைப் பற்றி ஏன், எதற்கு என்று விளக்கம்) கேட்கக் கூடாது"என்று சொன்னார். மூசா (அலை) அவர்கள் "ஆம் (அப்படியே செய்கிறேன்)" என்று (சம்மதம்) தெரிவித்தார்கள்.

பிறகு களிர் (அலை) அவர்களும் மூசா (அலை) அவர்களும் கடலோரமாக நடந்தனர். அப்போது மரக்கலம் ஒன்று அவர்களைக் கடந்துசென்றது. அப்போது அவர்கள் இருவரும் தங்களை ஏற்றிச் செல்லுமாறு மரக்கலக்காரர்களிடம் கோரினர். (ஏழைகளான மரக்கல

உரிமையாளர்கள்) களிர் (அலை) அவர்களை அடையாளம் கண்டுகொண்டு,கட்டணம் ஏதுமின்றி அவர்களிரு வரையும் மரக்கலத்தில் ஏற்றிக்கொண்டனர்.

(அவர்களிருவரும் ஏறியமர்ந்ததும்) களிர் அவர்களின் கவனம் மரக்கலத்தின் (அடித்தளப்) பலகைகளில் ஒன்றை நோக்கிச் சென்றது. உடனே அதைக் கழற்றி (அந்த இடத்தில் முளைக்குச்சி ஒன்றை அறைந்து)விட்டார்கள்.

உடனே மூசா (அலை) அவர்கள், "கட்டணம் இல்லாமலேயே நம்மை ஏற்றிக்கொண்ட மக்களின் மரக்கலத்தை வேண்டுமென்றே ஓட்டை போடுகிறீர்களே? இதில் உள்ளவர்களை மூழ்கடிக்கவா (இப்படிச் செய்தீர்கள்)? நீங்கள் பெரியதோர் (அபாயமான) காரியத்தைச் செய்துவிட்டீர்கள்" என்று கூறினார்கள்.

அதற்கு களிர் "என்னுடன் உங்களால் பொறுமையாக இருக்க முடியாது என்று உங்களிடம் நான் கூறவில்லையா?"என்று கேட்டார். அதற்கு மூசா (அலை) அவர்கள், "நான் மறந்ததற்காக என்னைத் தண்டித்துவிடாதீர்கள். என் விஷயத்தில் சிரமத்தை ஏற்படுத்திவிடாதீர்கள்" என்று சொன்னார்கள்.

பிறகு இருவரும் மரக்கலத்திலிருந்து இறங்கி, கடலோரமாக நடந்துகொண்டிருந்த போது, சிறுவன் ஒருவன் மற்றச் சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்தான். உடனே களிர் (அலை) அவர்கள் அச்சிறுவனின் தலையைப் பிடித்துத் தமது கரத்தால் திருகிக் கொன்றுவிட்டார்கள். உடனே மூசா (அலை) அவர்கள் களிர் அவர்களிடம், "எந்த உயிரையும் கொல்லாத, ஒரு பாவமும் அறியாத உயிரைக் கொன்றுவிட்டீரே! தகாத காரியத்தைச் செய்துவிட்டீரே!" என்று கூறினார்கள்.

அதற்கு களிர், "நீங்கள் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது என்று (முன்பே) உங்களிடம் நான் கூறவில்லையா?" என்று கேட்டார்.

(அறிவிப்பாளர்) கூறுகிறார்: இம்முறை களிர் (அலை) அவர்கள் சொன்னது, முதல் முறை சொன்னதைவிடக் கடுமையானதாகும்.

பிறகு மூசா (அலை) அவர்கள், "இதற்குப் பிறகு நான் உங்களிடம் ஏதாவது (விளக்கம்) கேட்டால் என்னை உம்முடன் சேர்த்துக்கொள்ள வேண்டாம். (இரு முறை) நான் கூறிய சமாதானத்தை ஏற்றுக் கொண்டுவிட்டீர்" என்று சொன்னார்கள்.

தொடர்ந்து இருவரும் நடந்து, முடிவில் ஒரு கிராமத்தாரிடம் வந்து அவர்களிடம் உணவு கேட்டார்கள். அவ்விருவருக்கும் விருந்தளிக்க அவர்கள் மறுத்துவிட்டனர். அங்கு கீழே விழலாமா என யோசித்துக்கொண்டிருந்த -சாய்ந்த நிலையில் இருந்த- ஒரு சுவரைக் கண்டார்கள். உடனே அம்மனிதர் இவ்வாறு தமது கரத்தால் அதை(த் தூக்கி) நிறுத்தினார்.

அப்போது மூசா (அலை) அவர்கள், "இவர்களிடம் நாம் வந்து (உணவு கேட்டு)ம் இவர்கள் நம்மை உபசரிக்கவில்லை;உணவளிக்கவுமில்லை. (அவ்வாறிருந்தும் விழவிருந்த அவர்களது சுவரைத் தூக்கி நிறுத்திவிட்டீர்கள்.) நீங்கள் நினைத்திருந்தால் இதற்குக் கூலி பெற்றிருக்கலாமே!" என்றார்கள்.

களிர் (அலை) அவர்கள், "இதுவே நானும் நீங்களும் பிரிய வேண்டிய நேரம். உங்களால் பொறுமையாக இருக்க முடியாத (இம்மூன்று) செயல்களுக்கான விளக்கத்தை உங்களுக்கு (இப்போது) கூறுகிறேன்" என்று கூறினார்கள்.

(இந்நிகழ்ச்சியை கூறிக்கொண்டிருந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மூசா (அலை) அவர்களுக்கு அல்லாஹ் கருணை புரியட்டும். அவர் பொறுமையாக

இருந்திருப்பாரானால், அவ்விருவர் பற்றிய (இன்னும்) பல தகவல்கள் நமக்கு எடுத்துரைக்கப்பட்டிருக்குமே என்று நான் ஆசைப்பட்டதுண்டு" என்று கூறினார்கள்.
மேலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "முதல் தடவை மூசா (அலை) அவர்கள் பொறுமையிழந்தது மறதியினாலாகும்" என்றும் கூறினார்கள்.
(தொடர்ந்து அந்த நிகழ்ச்சியைக்) கூறினார்கள்:
(அப்போது) சிட்டுக் குருவியொன்று வந்து மரக்கலத்தின் விளிம்பின்மீது விழுந்தது. பிறகு (தனது அலகால்) கடலில் ஒரு முறை கொத்தி (நீர் அருந்தி)யது. அப்போது மூசா (அலை) அவர்களிடம் களிர், "உம்முடைய அறிவும் என்னுடைய அறிவும் அல்லாஹ்வின் அறிவோடு ஒப்பிடுகையில், இந்தச் சிட்டுக் குருவி (தனது அலகால்) இந்தக் கடலிலிருந்து எடுத்த (நீரின்) அளவுதான் (நம் அறிவு உள்ளது)" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளரான சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், (இந்நிகழ்ச்சி பற்றிக் கூறும் 18:79ஆவது வசனத்தின் மூலத்தை) "வ கான அமாமஹும் மலிக்குன் யஃகுது குல்ல சஃபீனத்தின் ஸாலிஹத்தின் ஃகஸ்பா" என்று ஓதுவார்கள். (பொருள்: அவர்களுக்கு முன்னே ஒரு மன்னன் ஆளும் பகுதி இருந்தது. அவன் பழுதில்லாத நல்ல மரக்கலங்கள் ஒவ்வொன்றையும் அபகரித்துக் கொண்டிருந்தான்.) மேலும், (18:80ஆவது வசனத்தின் மூலத்தை) "வ அம்மல் ஃகுலாமு ஃப கான காஃபிரன்" என்று ஓதுவார்கள். (பொருள்: அச்சிறுவன் இறைமறுப்பாளனாக இருந்தான்.)
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4743 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "(பேச்சாளர்) நவ்ஃப் அல்பிகாலீ என்பார் கல்வியைத் தேடிச் சென்ற மூசா, பனூ இஸ்ராயீல் சமுதாயத்தின் (இறைத்தூதராக நியமிக்கப் பெற்ற) மூசா அல்லர் என்று கூறுகிறாரே?" எனக் கேட்கப்பட்டது.
அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் என்னிடம், "சயீதே! அவ்வாறு அவர் கூறியதை நீங்கள் செவியுற்றீர்களா?"என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "நவ்ஃப் பொய்யுரைக்கிறார்" என்று கூறிவிட்டு, உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாகப் பின் வருமாறு கூறினார்கள்:

4744 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மூசா (அலை) அவர்கள் தம் (பனூ இஸ்ரா யீல் சமுதாய) மக்களுக்கு அல்லாஹ் வழங்கிய அருட்கொடைகளையும் சோதனைகளையும் நினைவூட்டி (அறிவுரை கூறி)க் கொண்டிருந்தார்கள்.
அப்போது "இந்தப் பூமியில் என்னைவிடச் "சிறந்த' அல்லது "நன்கறிந்த' மனிதர் வேறெவரும் இல்லை" என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ், "உம்மைவிடச் சிறந்தவரை, அல்லது உம்மை விட அதிக ஞானம் உள்ளவரை நான் அறிவேன்" என அறிவித்தான்; "இந்தப் பூமியில் ஒரு மனிதர் இருக்கிறார். அவர் உம்மைவிட அதிகம் அறிந்தவர்" என்று கூறினான்.
மூசா (அலை) அவர்கள் "இறைவா! அவரை எனக்கு அறிவித்துக்கொடு" என்று கேட்டார்கள். அப்போது அவர்களிடம், "உப்பிட்ட மீனொன்றைப் பயண உணவாக எடுத்துக்கொண்டு

(கடலோரமாகச்) செல்வீராக. அந்த மீனை எந்த இடத்தில் நீங்கள் தவறவிடுவீர்களோ அங்கு அவர் இருப்பார்" என்று கூறப்பட்டது.

அவ்வாறே மூசா (அலை) அவர்களும் அவர்களுடைய உதவியாளரும் (கடலோரமாக) நடந்து சென்று அந்தப் பாறையை அடைந்தனர். மூசா (அலை) அவர்கள் பாதை மாறி (தம் உதவியாளரை) விட்டுச் சென்றுவிட்டார்கள்.

அப்போது (உதவியாளரின் கூடையிலிருந்த) மீன் குதித்துத் தண்ணீரில் விழுந்துவிட்டது. அது சென்ற நீர்த்தடம் இணையாமல் வளையம் போன்று மாறிவிட்டது.

அப்போது அவர்களுடைய உதவியாளர், "நான் இறைத்தூதரிடம் சென்று, இதைப் பற்றி தெரிவிக்க வேண்டாமா?" என்று கூறிக்கொண்டு, (மூசா (அலை) அவர்களிடம்) சென்றார். ஆனால், (அதைக் கூறவிடாமல்) அவருக்கு மறதி ஏற்படுத்தப்பட்டது.

அந்த இடத்தைவிட்டு அவர்கள் இருவரும் கடந்து சென்றதும், மூசா (அலை) அவர்கள் "நமது காலை உணவைக் கொண்டுவாரும்! இந்தப் பயணத்தில் நாம் களைப்படைந்து விட்டோம்" என்று கூறினார்கள்.

அந்த இடத்தைக் கடக்கும்வரை அவர்கள் இருவருக்கும் களைப்பு ஏற்படவில்லை. அந்த இடத்தைக் கடந்ததும் உதவியாளர் (மீன் தப்பிச் சென்றுவிட்டதைப் பற்றி) நினைத்தார். "கவனித்தீர்களா? நாம் அந்தப் பாறை அருகில் ஒதுங்கியபோது அந்த மீனை நான் மறந்து விட்டேன். அதைப் பற்றிக் கூறவிடாமல் ஷைத்தான் என்னை மறக்கவைத்துவிட்டான். அது கடலில் ஆச்சரியமான முறையில் தனது வழித்தடத்தை அமைத்துச் சென்றது" என்று கூறினார்.

மூசா (அலை) அவர்கள், "அதுதான் நாம் தேடிவந்த இடம்" என்று கூறியபடி, தம் அடிச் சுவடுகளைப் பின்பற்றி வந்த வழியே அவ்விருவரும் திரும்பினர். அப்போது அந்த மீன் குதித்தோடிய இடத்தை உதவியாளர் காண்பித்தார். மூசா (அலை) அவர்கள், "இதுதான் எனக்குச் சொல்லப்பட்ட இடமாகும்" என்று கூறிவிட்டு, அவரைத் தேடிக்கொண்டு சென்றார்கள்.

அங்கு ஆடையால் போர்த்தியபடி "பிடரியின் மீது' அல்லது "நடுப் பிடரியின் மீது' மல்லாந்து களிர் (அலை) அவர்கள் படுத்திருந்தார்கள். மூசா (அலை) அவர்கள் "உங்களுக்குச் சாந்தி உண்டாகட்டும்" என்று சொன்னார்கள். உடனே களிர் அவர்கள் தமது முகத்திலிருந்து ஆடையை விலக்கி "வ அலைக்குமுஸ் ஸலாம்' என்று பதில் சலாம் சொல்லிவிட்டு, "நீங்கள் யார்?" என்று கேட்டார்கள். அதற்கு மூசா (அலை) "நான்தான் மூசா" என்றார்கள்.

களிர் அவர்கள், "எந்த மூசா?" என்று கேட்டார்கள். மூசா (அலை) அவர்கள், "பனூ இஸ்ராயீல் (சமுதாய மக்களுக்கு இறைத்தூதராக நியமிக்கப்பெற்ற) மூசா" என்று பதிலளித்தார்கள். "எதற்காக வந்துள்ளீர்கள்?" என்று களிர் அவர்கள் கேட்க, "உங்களுக்குக் கற்றுத் தரப்பட்டுள்ள அறிவிலிருந்து எனக்கும் (சிறிது) நீங்கள் கற்றுத் தருவதற்காக நான் (உங்களிடம்) வந்துள்ளேன்" என்று மூசா (அலை) அவர்கள் கூறினார்கள்.

அதற்கு களிர் (அலை) அவர்கள், "என்னுடன் உங்களால் பொறுமையாக இருக்க இயலாது. உங்களுக்கு ஞானமில்லாத ஒரு விஷயத்தில் உங்களால் எவ்வாறு பொறுமையாக இருக்க முடியும்? எதைச் செய்ய வேண்டுமென எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளதோ அதை நான் செய்வதை நீங்கள் கண்டால், உங்களால் பொறுமையாக இருக்க முடியாது"என்று கூறினார்.

அதற்கு மூசா (அலை) அவர்கள், "அல்லாஹ் நாடினால் என்னைப் பொறுமையாளனாக நீங்கள் காண்பீர்கள். உங்களின் எந்தக் கட்டளைக்கும் நான் மாறுசெய்யமாட்டேன்" என்று கூறினார்கள். "நீங்கள் என்னைப் பின்தொடர்ந்து வருவதாயிருந்தால், எதைப் பற்றியும் நானாக (விளக்கம்) சொல்லாத வரை அதைப் பற்றி என்னிடம் நீங்கள் (விளக்கம்) கேட்கக் கூடாது" என்று களிர் (அலை) அவர்கள் சொன்னார்கள்.

பிறகு இருவரும் (கடலோரமாக) நடந்து சென்று ஒரு மரக்கலத்தில் ஏறினர். அப்போது களிர் (அலை) அவர்கள் வேண்டுமென்றே அந்த மரக்கலத்தில் ஓட்டை போட்டார்கள். உடனே மூசா (அலை) அவர்கள், "இதில் உள்ளவர்களை மூழ்கடிக்கவா ஓட்டை போடுகிறீர்? நீங்கள் மாபெரும் (அபாயமான) செயலையன்றோ செய்து விட்டீர்கள்?" என்று களிரிடம் கேட்டார்கள்.

அதற்கு களிர் அவர்கள், "உங்களால் என்னுடன் பொறுமையாக இருக்க இயலாது என்று நான் சொல்லவில்லையா?"என்று கேட்டார்கள்.

மூசா (அலை) அவர்கள், "நான் மறந்துவிட்டதை வைத்து என்னைத் தண்டித்துவிடாதீர்கள். என் விஷயத்தில் சிரமத்தைக் கொடுத்துவிடாதீர்கள்" என்று கூறினார்கள்.

தொடர்ந்து இருவரும் நடந்தார்கள்; விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்களைச் சந்தித்தார்கள். உடனே களிர் அவர்கள் யோசிக்காமல் சென்று, அவர்களில் ஒரு சிறுவனைக் கொன்று விட்டார்கள். அதைக் கண்டு மூசா (அலை) அவர்கள்,பெரிதும் திடுக்குற்றார்கள்; வெறுப்படைந்தார்கள். எந்தப் பாவமும் அறியாத, எந்த உயிரையும் கொல்லாத உயிரைக் கொன்றுவிட்டீர்களே? தகாத காரியத்தைச் செய்துவிட்டீர்களே?" என்று கேட்டார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நிகழ்ச்சியைச் சொல்லிக்கொண்டே) இந்த இடத்திற்கு வந்தபோது "நம்மீதும் மூசா அவர்கள் மீதும் அல்லாஹ்வின் கருணை பொழியட்டும். மூசா (அலை) அவர்கள் மட்டும் அவசரப்பட(்டுக் கேள்வி கேட்)டிருக்காவிட்டால் இன்னும் (அரிய) விந்தை(யான பல காட்சி)களைக் கண்டிருப்பார். ஆயினும், (இவ்வாறு கேட்ட) மூசா (அலை) அவர்களை, தம் தோழர் (களிர்) முன்பாக நாணம் கவ்விக்கொண்டது" என்றார்கள்.

மூசா (அலை) அவர்கள் "இதற்குப் பிறகு ஏதேனும் உங்களிடம் நான் கேட்டால் உங்களுடன் என்னைச் சேர்த்துக்கொள்ளாதீர். என்னிடமிருந்து (இரு முறை) சமாதானத்தை ஏற்றுக் கொண்டீர்" என்று கூறினார்கள்.

மூசா (அலை) அவர்கள் பொறுமையாக இருந்திருந்தால், ஆச்சரியமானவற்றைக் கண்டிருப்பார்கள். -(பொதுவாகவே) நபி (ஸல்) அவர்கள் நபிமார்கள் எவரைப் பற்றியாவது பேச்செடுத்தால் "நம்மீதும் என்னுடைய இன்ன சகோதரர்மீதும் அல்லாஹ்வின் கருணை பொழியட்டும்" என்று முதலில் தமக்காகவும் பிறகு அந்த நபிக்காகவும் பிரார்த்திப்பார்கள்– நம் மீதும் அல்லாஹ்வின் கருணை பொழியட்டும்.

தொடர்ந்து அவர்கள் இருவரும் நடந்து, அற்பக் குணமுடைய ஒரு கிராமவாசிகளிடம் வந்தனர். அந்த மக்கள் கூடும் இடங்களுக்குச் சென்று உணவு கேட்டுச் சுற்றிவந்தனர். அவ்விருவருக்கும் விருந்தளிக்க அவர்கள் மறுத்து விட்டனர்.

அப்போது அங்கு விழுந்துவிடலாமா என்று யோசித்துக்கொண்டிருந்த ஒரு சுவரைக் கண்டனர். உடனே களிர் அதைத் தூக்கி நிறுத்தினார்கள். அதைக் கண்ட மூசா (அலை)

அவர்கள், "நீர் நினைத்திருந்தால் இதற்குக் கூலியைப் பெற்றிருக்கலாமே?" என்று கூறினார்கள்.
களிர், "இதுவே எனக்கும் உமக்குமிடையே பிரியும் நேரமாகும்" என்று கூறி, மூசாவின் ஆடையைப் பிடித்தார். மேலும்,உம்மால் பொறுமையாக இருக்க முடியாதவற்றுக்கான விளக்கத்தை உமக்குக் கூறுகிறேன். அந்த மரக்கலம் கடலில் தொழில் செய்யும் ஏழைகள் சிலருக்குரியது..." என்று தொடங்கி, வசனத்தின் (18:79) இறுதிவரை சொல்லிக்காட்டினார்கள்.
அந்த மரக்கலத்தை அபகரித்துக்கொள்பவன் வந்து, ஓட்டையான நிலையில் மரக்கலத்தைக் கண்டால் அதை விட்டுவிடுவான். பிறகு அவர்கள் மூங்கில் கழியால் (ஓட்டையை அடைத்து) அதைப் பழுது பார்த்துவிடுவார்கள்.
அந்தச் சிறுவனோ, படைக்கும்போதே "இறைமறுப்பாளன்' என (இறைவனால்) தீர்மானிக்கப்பட்டு படைக்கப்பட்டான். அவனுடைய பெற்றோர் அவன்மீது மிகுந்த பாசம் வைத்திருந்தனர். அவன் பருவ வயதை அடைந்தால் அவ்விருவரையும் தவறான வழியிலும் இறைமறுப்பிலும் தள்ளிவிடுவான். (இறைவன் கூறுகிறான்:) "அவ்விருவரின் இறைவன் அவனுக்குப் பதிலாக அவனைவிடச் சிறந்த தூய்மையான நெருங்கி உறவாடக்கூடிய குழந்தையை மாற்றாக வழங்குவான்" என நினைத்தோம். (18:81)
அந்தச் சுவர், அந்நகரத்தில் உள்ள இரண்டு அநாதைச் சிறுவர்களுக்கு உரியதாகும். அதற்குக் கீழே அவ்விருவருக்கும் உரிய புதையல் இருந்தது என்று அந்த வசனத்தின் (18:82) இறுதிவரை சொல்லிக்காட்டினார்கள்.
இதை உபை பின் கஅப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4745 உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் 18:77ஆவது வசனத்தின் மூலத்தில் ("லத்தகத்த அலைஹி அஜ்ரா' என்பதற்குப் பகரமாக) "லதகித்த அலைஹி அஜ்ரா' என்று ஓதினார்கள். (ஓதல் மாறுபட்டாலும் பொருள் ஒன்றே: இதற்குக் கூலியைப் பெற்றிருக்கலாமே!)

4746 உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உத்பா பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"மூசா (அலை) (அவர்கள் சில ஞானங்களைக் கற்றுக்கொள்வதற்காக ஓர் அடியாரைத் தேடிச் சென்றார்கள் என அல்லாஹ் குறிப்பிடுகின்ற) அவர்களுடைய அந்தத் தோழர் யார்? அவர் "களிர்' அவர்கள்தானா என்பது தொடர்பாக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் ஹுர்ரு பின் கைஸ் பின் ஹிஸ்ன் அல்ஃபஸாரீ என்பாரும் கருத்து வேறுபாடு கொண்டு வழக்காடிக் கொண்டனர். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "அவர் களிர் (அலை) அவர்கள்தான்" என்றார்கள்.
அப்போது உபை பின் கஅப் அல்அன் சாரீ (ரலி) அவர்கள் அவ்வழியாகச் சென்றார்கள். அவர்களை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அழைத்து, "அபுத்துஃபைல் அவர்களே! இங்கே வாருங்கள். நானும் என்னுடைய இந்தத் தோழரும் மூசா (அலை) அவர்கள் யாரைச் சந்திக்கச் செல்வதற்கு இறைவனிடம் வழி கேட்டார்களோ அந்தத் தோழர் யார் என்பது

தொடர்பாக வழக்காடிக்கொண்டோம். அவரது நிலை குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொல்ல நீங்கள் கேட்டிருக்கிறீர்களா?" என்று வினவினார்கள்.

உபை பின் கஅப் (ரலி) அவர்கள் (பின் வருமாறு) பதிலளித்தார்கள்:

(ஆம்;) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொல்ல நான் கேட்டிருக்கிறேன்: பனூ இஸ்ராயீல் மக்களின் ஒரு கூட்டத்தாரிடையே மூசா (அலை) அவர்கள் இருந்தபோது, அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "உங்களைவிட அறிந்தவர் எவரும் இருப்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்க, மூசா (அலை) அவர்கள், "இல்லை (என்னைவிட அறிந்தவர் எவரும் இருப்பதாகத் தெரியவில்லை)" என்று சொன்னார்கள்.

உடனே மூசா (அலை) அவர்களுக்கு, "இருக்கிறார்; அவர்தான் நம் அடியார் களிர் ஆவார்" என்று அல்லாஹ் (வஹீ) அறிவித்தான்.

அப்போது மூசா (அலை) அவர்கள் களிர் அவர்களைச் சந்திக்க வழி கேட்டார்கள். அப்போது அல்லாஹ் மீன் ஒன்றை அவர்களுக்கு அடையாளமாக ஆக்கி, "நீர் எந்த இடத்தில் மீனைத் தவற விடுகிறீரோ அந்த இடத்திலிருந்து (வந்த வழியே) திரும்பிச் செல்லும். அங்கு களிரைச் சந்திப்பீர்" என்று அவரிடம் கூறப்பட்டது.

அவ்வாறே மூசா (அலை) அவர்கள் அல்லாஹ் நாடிய தூரம்வரை (தம் உதவியாளருடன்) நடந்தார்கள். பிறகு தம் ஊழியரிடம் "நமது காலை உணவைக் கொண்டுவாரும்" என்று கூறினார்கள்.

அதற்கு மூசா (அலை) அவர்களின் உதவியாளர், "கவனித்தீர்களா! நாம் அந்தப் பாறையில் ஒதுங்கியபோது அந்த மீனை நான் மறந்துவிட்டேன். அதைக் கூறவிடாமல் ஷைத்தான்தான் என்னை மறக்கச் செய்துவிட்டான்" என்று கூறினார்.

மூசா (அலை) அவர்கள், "அதுதான் நாம் தேடிவந்த இடம்" என்று தம் உதவியாளரிடம் சொல்ல, இருவரும் தம் அடிச்சுவடுகளைப் பின்பற்றி வந்தவழியே திரும்பிச் சென்றார்கள். அங்கே களிர் (அலை) அவர்களைக் கண்டார்கள் (18:63-65). பின்னர் அவ்விருவர் தொடர்பாக அல்லாஹ் தனது வேதத்தில் எடுத்துரைத்த நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மூசா (அலை) அவர்கள் கடலில் அந்த மீன் ஏற்படுத்திச் சென்ற வழித்தடத்தைப் பின்தொடர்ந்து சென்றுகொண்டிருந்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

# அத்தியாயம் : 44 - நபித்தோழர்களின் சிறப்புகள்

## பாடம் : 1 அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4747 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூபக்ர் (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள்: நாங்கள் (இருவரும் "ஸவ்ர்' எனும்) குகையில் (ஒளிந்துகொண்டு) இருந்தபோது, (எங்களைத் தேடிக்கொண்டிருந்த) இணைவைப்பாளர்களின் கால் பாதங்களை எங்கள் தலைக்கு அருகில் நான் கண்டேன்.
உடனே நான், "அல்லாஹ்வின் தூதரே! இவர்களில் ஒருவன் தன் கால் பாதங்களைக் கண்டால் அவற்றுக்குக் கீழே (ஒளிந்திருக்கும்) நம்மைப் பார்த்துவிடுவான்" என்று (அச்சத்துடன்) சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அபூபக்ர் அவர்களே! தம்முடன் மூன்றாமவனாக அல்லாஹ்வே இருக்கும் இருவரைப் பற்றி என்ன கருதுகின்றீர்?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4748 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இறப்பதற்குமுன் நோய்வாய்ப்பட்டிருந்த போது) சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதமர்ந்து (உரையாற்றுகையில் பின்வருமாறு) தெரிவித்தார்கள்:
"அல்லாஹ் தன் அடியார் ஒருவருக்கு அலங்காரமான இவ்வுலக வாழ்வு, அல்லது தன்னிடமுள்ள (மறுமைப் பெரு)வாழ்வு ஆகிய இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வாய்ப்பளித்தான். அந்த அடியார் அல்லாஹ்விடமிருப்பதையே தேர்ந்தெடுத்து விட்டார்" என்று கூறினார்கள்.
இதைக் கேட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள் மீண்டும் மீண்டும் அழுதார்கள். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி) "தங்களுக்கு எங்கள் தந்தையரும் அன்னையரும் அர்ப்பணமாகட்டும்" என்று சொன்னார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தான் இப்படி வாய்ப்பு வழங்கப்பட்டவராவார். அபூபக்ர் (ரலி) அவர்கள்தான் எங்களில் அல்லாஹ்வின் தூதரைப் பற்றி அதிகம் அறிந்தவராக இருந்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தமது செல்வத்தாலும் தோழமையாலும் எனக்குப் பேருபகாரம் செய்தவர் அபூபக்ர் அவர்கள்தான். நான் (என் சமுதாயத்தாரில் ஒருவரை) உற்ற நண்பராக ஆக்கிக்கொள்வதாக இருந்தால்,அபூபக்ரையே உற்ற நண்பராக ஆக்கிக்கொண்டிருப்பேன்; எனினும், இஸ்லாமிய சகோதரத்துவமே போதுமானதாகும். (எனது) இந்தப் பள்ளிவாசலில் உள்ள வாசல்களில் அபூபக்ர் வாசலைத் தவிர மற்றவை விட்டுவைக்கப்பட வேண்டாம்"என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் "ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடையே உரையாற்றினார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4749 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவரை (என்) உற்ற தோழராக ஆக்கிக் கொள்வதாயிருந்தால் அபூபக்ர் அவர்களையே (என்) உற்ற தோழராக ஆக்கிக்கொண்டிருப்பேன்; எனினும், அவர் என் (கொள்கைச்) சகோதரரும் என் தோழரும் ஆவார். வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் உங்கள் தோழரை (அதாவது என்னைத் தனது) உற்ற தோழராக ஆக்கிக்கொண்டான்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4750 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் என் சமுதாயத்தாரில் ஒருவரை (என்) உற்ற தோழராக ஆக்கிக்கொள்வதாயிருந்தால், அபூபக்ர் (ரலி) அவர்களையே (என்) உற்ற தோழராக ஆக்கிக்கொண்டிருப்பேன்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4751 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் ஒருவரை (என்) உற்ற தோழராக ஆக்கிக்கொள்வதாயிருந்தால், அபூகுஹாஃபாவின் புதல்வர் (அபூபக்ர்) அவர்களையே (என்) உற்ற தோழராக ஆக்கிக்கொண்டிருப்பேன்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4752 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்த பூமியில் உள்ளோரில் ஒருவரை (என்) உற்ற தோழராக ஆக்கிக்கொள்வதாயிருந்தால், அபூகுஹாஃபாவின் புதல்வரையே என் உற்ற தோழராக ஆக்கிக்கொண்டிருப்பேன். எனினும், உங்கள் தோழர் (ஆகிய நான்) அல்லாஹ்வின் உற்ற தோழன் ஆவேன்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4753 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கவனியுங்கள்! நான் ஒவ்வொரு நண்பனின் நட்பிலிருந்தும் விலகிக்கொள்கிறேன் (இறைவனுக்கு மட்டுமே உற்ற தோழனாக இருக்க விரும்புகிறேன்). (யாரேனும்) ஒருவரை நான் (என்) உற்ற தோழராக ஆக்கிக்கொள்வதாயிருந்தால்,அபூபக்ர் அவர்களையே என் உற்றத் தோழராக ஆக்கியிருப்பேன். உங்கள் தோழர் (ஆகிய நான்) அல்லாஹ்வின் உற்ற தோழன் ஆவேன்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4754 அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தாத்துஸ் ஸலாஸில்' எனும் படைப் பிரிவுக்கு (தளபதியாக்கி) என்னை அனுப்பிவைத்தார்கள். அப்போது அவர்களிடம் நான் சென்று, "மக்களிலேயே உங்களுக்கு மிகவும் பிரியமானவர் யார்?"என்று கேட்டேன்.
அதற்கு அவர்கள், "ஆயிஷா' என்று பதிலளித்தார்கள். நான், "ஆண்களில் (மிகவும் பிரியமானவர் யார்)?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆயிஷாவின் தந்தை (அபூபக்ர்)' என்று பதிலளித்தார்கள். "பிறகு யார்?" என்று கேட்டதற்கு, "(பிறகு) உமர்" என்று கூறிவிட்டு, மேலும் பலருடைய பெயர்களைக் குறிப்பிட்டார்கள்.

4755 இப்னு அபீமுளைக்கா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் பிரதிநிதியாக ஒருவரை ஆக்குவதாயிருந்தால் யாரை ஆக்கியிருப்பார்கள்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அபூபக்ர் (ரலி) அவர்களை (ஆக்கியிருப்பார்கள்)" என்று பதிலளித்தார்கள். "அபூபக்ருக்குப் பிறகு யாரை?" என்று கேட்கப்பட்டது. அதற்கு "உமர் (ரலி) அவர்களை" என்று பதிலளித்தார்கள். "உமருக்குப் பிறகு யாரை?" என்று கேட்கப் பட்டபோது, "ஆபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்களை" என்று கூறிவிட்டு அத்தோடு நிறுத்திக் கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4756 ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண்மணி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எதையோ கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தப் பெண்ணைத் திரும்பவும் தம்மிடம் வரும்படி கட்டளையிட்டார்கள். அந்தப் பெண், "நான் வந்து தங்களைக் காண (முடிய)வில்லையென்றால்...?" என்று கேட்டார். –அறிவிப்பாளர் முஹம்மத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: என் தந்தை கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்துவிட்டால் (என்ன செய்வது?) என்பதுபோல் அப்பெண் கேட்டார்– அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்னைக் காண முடியாவிட்டால் அபூபக்ரிடம் செல்" என்று பதில் சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி வந்து, எதைப் பற்றியோ பேசினார். அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏதோ கட்டளையிட்டார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்ற விஷயங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4757 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் இறுதி நாட்களில்) நோயுற்றிருந்தபோது, "உன் தந்தை (அபூபக்ர்) அவர்களையும் உன் சகோதரரையும் என்னிடம் அழைத்துவா. நான் மடல் ஒன்றை எழுதித்தருகிறேன். ஏனென்றால், (தாமே கலீஃபாவாக ஆக வேண்டுமென) எவரும்

ஆசைப்படவோ, "நானே (அதற்குத்) தகுதியானவன்' என்று யாரும் சொல்லிவிடவோகூடும் என நான் அஞ்சுகிறேன். (ஆனாலும், அவ்வாறு வேறொருவர் முன்னிறுத்தப்பட்டாலும்) அபூபக்ரைத் தவிர வேறெவரையும் அல்லாஹ்வும் இறைநம்பிக்கையாளர்களும் மறுத்துவிடுவர்" என்று சொன்னார்கள்.

4758 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "இன்று உங்களில் நோன்பு நோற்றிருப்பவர் யார்?"என்று கேட்டார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள், "நான்' என்றார்கள். "இன்றைய தினம் உங்களில் ஜனாஸாவை (பிரேதம்) பின்தொடர்ந்து சென்றவர் யார்?" என்று கேட்டார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள், "நான்' என்றார்கள். "இன்றைய தினம் ஓர் ஏழைக்கு உணவளித்தவர் உங்களில் யார்?" என்று அவர்கள் கேட்க, அதற்கும் அபூபக்ர் (ரலி) அவர்கள் "நான்'என்றார்கள். "இன்றைய தினம் ஒரு நோயாளியை உடல் நலம் விசாரித்தவர் உங்களில் யார்?" என்று கேட்க, அதற்கும் அபூபக்ர் (ரலி) அவர்களே "நான்' என்றார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவை அனைத்தும் ஒரு மனிதரில் ஒன்று சேர்ந்தால், அவர் சொர்க்கத்தில் நுழையாமல் இருப்பதில்லை" என்றார்கள்.

4759 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"(இஸ்ரவேலர்களில்) ஒரு மனிதர் தமது மாட்டின் மீது சுமைகளை ஏற்றிவிட்டு, அதை ஓட்டிக்கொண்டு சென்றார். அப்போது அது அவரைத் திரும்பிப் பார்த்துப் பேசியது. "நான் இதற்காக (சுமை சுமப்பதற்காக)ப் படைக்கப்படவில்லை;மாறாக, நான் (நிலத்தை) உழுவதற்காகத்தான் படைக்கப்பட்டுள்ளேன்" என்று கூறிற்று என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே மக்கள், "அல்லாஹ் தூயவன்" என்று வியப்புடனும் அதிர்ச்சியுடனும் கூறிவிட்டு, "மாடு பேசுமா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நானும் அபூபக்ரும் உமரும் இதை நம்புகிறோம்" என்று சொன்னார்கள்.
மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இஸ்ரவேலர்களில்) ஓர் ஆட்டு இடையர் தம் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தார். அப்போது ஓநாய் ஒன்று அவற்றின் மீது பாய்ந்து ஓர் ஆட்டைக் கவ்விச் சென்றது. உடனே அந்த இடையர் அதைத் துரத்திச் சென்று ஓநாயிடமிருந்து அந்த ஆட்டை விடுவித்தார். அப்போது அந்த ஓநாய் அவரைத் திரும்பிப் பார்த்து, "கொடிய விலங்குகள் ஆதிக்கம் செலுத்தும் (யுக முடிவு) நாளில் இந்த ஆட்டுக்கு (பொறுப்பாளர்) யார்? அன்று என்னைத் தவிர வேறெந்தப் பொறுப்பாளனும் இருக்க மாட்டானே!" எனக் கூறிற்று என்று சொன்னார்கள்.
உடனே மக்கள் "அல்லாஹ் தூயவன்" என்று (வியந்து) கூறினர். அப்போதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நானும் அபூபக்ரும் உமரும் இதை நம்புகிறோம்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் ஆடு மற்றும் ஓநாய் பற்றிய நிகழ்ச்சி இடம்பெற்றுள்ளது. மாட்டைப் பற்றிய நிகழ்ச்சி காணப்படவில்லை.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் மாடு, ஆடு ஆகியவை பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது. மேலும், "நானும் அபூபக்ரும் உமரும் இதை நம்புகிறோம் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அவர்கள் இருவரும் அந்த இடத்தில் இருக்கவில்லை" என்று (சற்று கூடுதலான தகவலு)ம் காணப்படுகிறது.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 2 உமர் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4760 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் (இறந்தவுடன்) கட்டிலில் கிடத்தப் பட்டிருந்தார்கள். அப்போது மக்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு பிரார்த்திக்கவும் பாராட்டவும் செய்தனர். பிரேதம் எடுக்கப்படுவதற்கு முன்பாக அவருக்காக இறுதித் தொழுகை (ஜனாஸா தொழுகை) தொழுதனர். அவர்களிடையே நானும் இருந்தேன்.

அப்போது ஒரு மனிதர் எனக்குப் பின்னாலிருந்து என் தோளைப் பிடித்து என்னைத் திடுக்கிடச் செய்தார். (யாரென்று) நான் திரும்பிப் பார்த்தபோது, அவர் அலீ (ரலி) அவர்கள்தான்.

அவர்கள் "உமர் அவர்களுக்கு அல்லாஹ் கருணை புரிவானாக!" என்று பிரார்த்தித்துவிட்டு, "(உமரே!) உயரிய நற்செயலுடன் நான் அல்லாஹ்வைச் சந்திப்பதற்கு முன்மாதிரியாக, நான் விரும்பி ஏற்கத்தக்கவர் யாரும் உங்களுக்குப் பின்னால் இல்லை. (நீங்கள்தான் அதற்குத் தகுதியான மனிதர்.) அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களை உங்களுடைய இரு தோழர்களுடன்தான் அல்லாஹ் இருக்கச் செய்வான் (அதாவது நபி (ஸல்), அபூபக்ர் (ரலி) ஆகியோருடன் நீங்கள் அடக்கம் செய்யப்படுவீர்கள்) என்றே நான் எண்ணியிருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், 'நானும் அபூபக்ரும் உமரும் வந்தோம்'. என்றும், 'நானும் அபூபக்ரும் உமரும் உள்ளே சென்றோம்' என்றும், 'நானும் அபூபக்ரும் உமரும் வெளியில் புறப்பட்டோம்' என்றும் சொல்வதை நான் அதிகமாகச் செவியுற்றிருக்கிறேன். அதனால்தான் உங்களை உங்கள் இரு தோழர்களுடன்தான் (அல்லாஹ்) அடங்கச் செய்வான் என்று நான் எதிர்பார்க்கிறேன் அல்லது எண்ணுகிறேன்" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4761 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் தூங்கிக்கொண்டிருந்தபோது, (கனவில்) மக்கள் (பல விதமான) சட்டைகளை அணிந்தவர்களாக எனக்குக் காட்டப்பட்டார்கள். அவற்றில்

மார்பை எட்டக்கூடிய அளவு (சட்டைகளு)ம் இருந்தன; மார்பை எட்டாதவையும் இருந்தன. உமர் பின் அல்கத்தாப் (தரையில்) இழுத்துக் கொண்டே செல்லும் அளவுக்குகு முழுநீளச் சட்டையொன்றை அணிந்தவராக என்னைக் கடந்து சென்றார்" என்று கூறினார்கள்.
மக்கள், "இதற்குத் தாங்கள் என்ன விளக்கம் கண்டீர்கள், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அந்தச் சட்டைகள்) அவர்களது மார்க்கத்தை (மார்க்க உணர்வையும் செயல்பாடுகளையும்) குறிக்கும்" (என விளக்கம் கண்டேன்) என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4762 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் உறங்கிக்கொண்டிருந்தபோது (கனவில்) கோப்பை ஒன்று என்னிடம் கொண்டுவரப்படுவதைப் போன்று கண்டேன். அதில் பால் இருந்தது. நான் அதிலிருந்த பாலை (தாகம் தணியும் அளவுக்கு) அருந்தினேன். எந்த அளவுக்கென்றால், (வயிறு நிறைந்து) அது என் நகக்கண்கள் வழியே வெளியேறி வருவதைக் கண்டேன். பின்னர் மீதியை உமர் பின் அல்கத்தாபுக்குக் கொடுத்தேன்" என்று கூறினார்கள்.
மக்கள், "இதற்குத் தாங்கள் என்ன விளக்கம் கண்டீர்கள், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்க, அதற்கு அவர்கள், "அறிவு' என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4763 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் உறங்கிக்கொண்டிருந்தபோது (கனவில்) என்னை, வாளி தொங்கிக்கொண்டிருந்த ஒரு கிணற்றின் அருகில் கண்டேன். அதிலிருந்து அல்லாஹ் நாடிய அளவுக்கு(த் தண்ணீர்) இறைத்தேன்.
பிறகு அபூகுஹாஃபாவின் புதல்வர் (அபூபக்ர்) அவர்கள் அதை வாங்கி அதன் மூலம் "ஒரு வாளி நீரை' அல்லது "இரண்டு வாளிகள் நீரை' இறைத்தார். அவர் இறைத்தபோது சோர்வு தெரிந்தது. -அல்லாஹ் அவருக்கு மன்னிப்பருள்வானாக.– பிறகு அது மிகப் பெரிய வாளியாக மாறியது.

அப்போது அதை கத்தாபின் புதல்வர் (உமர்) அவர்கள் வாங்கினார். உமர் பின் அல்கத்தாப் இறைத்ததைப் போன்று இறைக்கின்ற (வலிமை மிக்க) அபூர்வத் தலைவர் ஒருவரை நான் மக்களில் பார்க்கவில்லை. மக்கள் (தங்கள் ஒட்டகங்களுக்கு நீர் புகட்டி, நீர்நிலையருகே அவற்றின்) ஓய்விடத்தில் கட்டிவைக்கும் அளவுக்கு (அவர் நீர் இறைத்தார்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், "அபூகுஹாஃபாவின் புதல்வர் (அபூபக்ர்) நீர் இறைப்பதைக் கண்டேன்" என்று இடம்பெற்றுள்ளது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4764 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் உறங்கிக்கொண்டிருக்கையில் (கனவில்) ஒரு நீர்த் தடாகத்தின் அருகில் நான் இருந்துகொண்டு, நீர் இறைத்து மக்களுக்குப் புகட்டிக்கொண்டிருக்கக் கண்டேன். அப்போது அபூபக்ர் என்னிடம் வந்து எனக்கு ஓய்வளிப்பதற்காக என் கரத்திலிருந்த அந்த வாளியை வாங்கி, இரண்டு வாளிகள் தண்ணீர் இறைத்தார். அவர் இறைத்தபோது (சற்று) சோர்வு தென்பட்டது. –அவருக்கு அல்லாஹ் மன்னிப்பு அருள்வானாக–
பிறகு கத்தாபின் புதல்வர் (உமர்) வந்தார். அவர் அபூபக்ர் அவர்களிடமிருந்து (அந்த வாளியை) வாங்கி, மக்கள் (தாகம் தீரத் தாங்களும் அருந்தி, தம் ஒட்டகங்களுக்கும் புகட்டிவிட்டுத்) திரும்பிச் செல்லும்வரை இறைத்துக்கொண்டேயிருந்தார். அவரைப் போன்று இறைக்கின்ற பலசாலியான ஒரு மனிதரை நான் ஒருபோதும் பார்க்கவில்லை. அப்போதும் தடாகம் நிரம்பி வழிந்துகொண்டிருந்தது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4765 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(கனவில்) நான் சுற்றுச் சுவர் இல்லாத ஒரு கிணற்றுக்கு அருகிலிருந்த வாளியால் தண்ணீர் இறைப்பதைப் போன்று எனக்குக் காட்டப்பட்டது. அப்போது அபூபக்ர் அவர்கள் வந்து ஒரு வாளி நீரை அல்லது இரண்டு வாளிகள் நீரை (சற்று) சோர்வான நிலையில் இறைத்தார். அவருக்கு அல்லாஹ் மன்னிப்பு அருள்வானாக. பிறகு உமர் பின் அல்கத்தாப் வந்து இறைத்தார்.
உடனே அந்த வாளி மிகப் பெரிய வாளியாக மாறியது. (அவர் வலுவுடன் பல வாளிகள் தண்ணீர் இறைத்தார்.) அவரைப் போன்று செம்மையாகவும் உறுதியாகவும் செயல்படக் கூடிய புத்திசாலியான ஒரு (அபூர்வத்) தலைவரை நான் கண்டதில்லை. மக்கள் தாகம் தீர்ந்து, (தம் ஒட்டகங்களுக்கும் நீர் புகட்டி, நீர் நிலையருகே அவற்றின்) ஓய்விடத்தில் கட்டி வைக்கும் அளவுக்கு (அவர் நீர் இறைத்தார்).
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- அபூபக்ர் (ரலி), உமர் பின் அல்கத்தாப் (ரலி) ஆகியோரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கனவில் கண்டதாகக் கூறிய மேற்கண்ட ஹதீஸ், அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4766 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள், "(கனவில்) நான் சொர்க்கத்தினுள் நுழைந்தேன். அங்கு ஒரு "வீட்டை' அல்லது "மாளிகையைக்' கண்டேன். "இது யாருக்குரியது?" என்று கேட்டேன். அவர்கள் (வானவர்கள்), "(இது) உமர் பின் அல்கத்தாப் அவர்களுக்குரியது" என்று பதிலளித்தார்கள். அந்த மாளிகைக்குள் நான் செல்ல நினைத்தேன். ஆனால், (உமரே!) உமது

தன்மான உணர்வு என் நினைவுக்கு வந்தது. (ஆகவே, உள்ளே செல்லாமல் திரும்பி வந்துவிட்டேன்)"என்று கூறினார்கள்.
அதைக் கேட்டு உமர் (ரலி) அவர்கள் அழுதார்கள். "அல்லாஹ்வின் தூதரே! தங்களிடமா தன்மானத்தைக் காட்டுவது?"என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4767 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் தூங்கிக்கொண்டிருந்தபோது (கனவில்) என்னைச் சொர்க்கத்தில் கண்டேன். அங்கிருந்த மாளிகை ஒன்றின் ஓரத்தில் ஒரு பெண் அங்கத் தூய்மை (உளூ) செய்துகொண்டிருந்தாள். அப்போது நான், "இந்த மாளிகை யாருக்குரியது?" என்று கேட்டேன். அவர்கள் (வானவர்கள்), "உமர் பின் அல்கத்தாபுக்குரியது" எனப் பதிலளித்தனர். (அந்த மாளிகைக்குள் நான் செல்ல நினைத்தேன்.) உமரின் தன்மான உணர்வு என் நினைவுக்கு வந்தது. உடனே அங்கிருந்து திரும்பிவந்துவிட்டேன்.
இதன் அறிவிப்பாளரான அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
இ(வ்வாறு அவர்கள் கூறிய)தைக் கேட்டு உமர் (ரலி) அவர்கள் அழுதார்கள். அந்த அவையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் அனைவரும் இருந்தோம். பிறகு உமர் (ரலி) அவர்கள், "என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! தங்களிடமா நான் தன்மான உணர்வைக் காட்டுவேன், அல்லாஹ்வின் தூதரே!" என்று கேட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4768 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களி(ன் வீட்டுக்குள் செல்ல அவர்களி)டம் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அனுமதி கேட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவர்களுடைய துணைவியரான) குறைஷிப் பெண்கள் உரத்த குரலில் (குடும்பச் செலவுத் தொகையை உயர்த்தித் தரும்படி கேட்டு) பேச்சை வளர்த்துக் கொண்டிருந்தனர்.
உமர் (ரலி) அவர்கள் அனுமதி கேட்ட போது அப்பெண்கள் அவசர அவசரமாகத் தம் பர்தாக்களை அணிந்துகொண்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதி அளித்தவுடன் உமர் (ரலி) அவர்கள் உள்ளே சென்றார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்துக்கொண்டிருந்தார்கள். உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! தங்களை அல்லாஹ் (வாழ்நாள் முழுவதும்) சிரித்தபடி (மகிழ்ச்சியுடன்) இருக்கச் செய்வானாக" என்று சொன்னார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(உமரே!) இந்தப் பெண்களைக் கண்டு நான் வியப்படைகிறேன். என்னிடம் (சகஜமாக) இருந்த இவர்கள் உம்முடைய குரலைக் கேட்டதும் அவசர அவசரமாகப் பர்தா அணிந்துகொண்(டு உள்ளே சென்றுவிட்)டார்கள்" என்று சொன்னார்கள்.

அதற்கு உமர் (ரலி) அவர்கள், "இவர்கள் (எனக்கு அஞ்சுவதைவிட) அதிகமாக அஞ்சத் தாங்கள் தான் தகுதியுடையவர்கள், அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறிவிட்டுப் பிறகு, "தமக்குத் தாமே பகைவர்களாகிவிட்ட பெண்களே! அல்லாஹ்வின் தூதருக்கு அஞ்சாமல் எனக்கா நீங்கள் அஞ்சுகிறீர்கள்?" என்று உமர் (ரலி) அவர்கள் கேட்டார்கள். அப்பெண்கள், "ஆம்; அல்லாஹ்வின் தூதருடன் ஒப்பிடும்போது நீங்கள் கடின சித்தமுடையவராகவும் கடுமை காட்டக்கூடியவராகவும் இருக்கிறீர்கள்" என்று பதிலளித்தனர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! (உமரே!) நீங்கள் ஓர் அகன்ற பாதையில் சென்றுகொண்டிருக்கையில் உங்களை ஷைத்தான் எதிர்கொண்டால், நீங்கள் வரும் பாதையல்லாத வேறு பாதையில் அவன் சென்றுவிடுவான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வாயிலாக மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.
அதில், "உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தபோது, அவர்களுக்கு அருகில் (அவர்களுடைய துணைவியரான) பெண்கள் அவர்களிடம் உரத்த குரலில் பேசிக்கொண்டிருந்தனர். உமர் (ரலி) அவர்கள் அனுமதி கேட்டபோது அவர்கள் அவசர அவசரமாகப் பர்தா அணிந்து (எழுந்து)கொண்டார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4769 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"உங்களுக்கு முன்பிருந்த சமுதாயங்களில் அகத்தூண்டல் மூலம் (உண்மைகள்) அறிவிக்கப் பட்டவர்கள் இருந்துள்ளார்கள். என் சமுதாயத்தாரில் அத்தகையவர் யாரேனும் இருந்தால், அவர்களில் உமர் பின் அல்கத்தாப் ஒருவராக இருப்பார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவந்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல்லாஹ் பின் வஹ்ப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(இந்த ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ள) "முஹத்தஸூன்' எனும் சொல்லுக்கு "அகத்தூண்டல் மூலம் அறிவிக்கப்பட்டவர்கள்' என்பது பொருளாகும்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4770 உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மூன்று விஷயங்களில் நான் என் இறைவனுக்கு இசைவான கருத்துக் கொண்டேன்.
அவை: 1. மகாமு இப்ராஹீம் விஷயத்தில், 2. பர்தா விஷயத்தில், 3. பத்ருப் போரில் பிடிக்கப்பட்ட கைதிகள் விஷயத்தில்.

4771 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் பின் உபை இறந்தபோது, அவருடைய புதல்வர் அப்துல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உபை (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, தம் தந்தைக்குப் பிரேத ஆடை (கஃபன்) அணிவிப்பதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் சட்டையைத் தருமாறு கோரினார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது சட்டையை அவரிடம் கொடுத்தார்கள். பிறகு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் தம் தந்தைக்கு இறுதித் தொழுகையை முன்னின்று நடத்தும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வேண்டினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு (ஜனாஸாத் தொழுகை)த் தொழுவிக்க எழுந்தார்கள்.
உடனே உமர் (ரலி) அவர்கள் எழுந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஆடையைப் பிடித்துக்கொண்டு, "அல்லாஹ்வின் தூதரே! (நயவஞ்சகரான) இவருக்குத் தொழுகை நடத்த வேண்டாமென அல்லாஹ் உங்களுக்குத் தடை விதித்திருக்க, இவருக்கா தொழுவிக்கப் போகிறீர்கள்!" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(பாவமன்னிப்புக் கோரவும் கோராமலிருக்கவும்) எனக்கு அல்லாஹ் உரிமையளித்துள்ளான்" என்று கூறிவிட்டு, "(நபியே!) அவர்களுக்காக நீர் பாவமன்னிப்புக் கோரும்! அல்லது அவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோராமல் இரும்! அவர்களுக்காக நீர் எழுபது தடவை பாவமன்னிப்புக் கோரினாலும் அவர்களை அல்லாஹ் ஒருபோதும் மன்னிக்க மாட்டான்' (9:80) என்று கூறுகின்றான்.
நான் எழுபது தடவையைவிட அதிகமாக (இவருக்காகப்) பாவமன்னிப்புக் கோருவேன்" என்று சொன்னார்கள்.
உமர் (ரலி) அவர்கள், "இவர் நயவஞ்சகராயிற்றே!" என்று சொன்னார்கள். இருந்தும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு (ஜனாஸாத்) தொழுகையை முன்னின்று நடத்தினார்கள்.
அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் "அவர்களில் இறந்துவிட்ட எவருக்காகவும் ஒருபோதும் நீர் தொழுகை நடத்தாதீர்! அவரது சமாதி அருகிலும் நிற்காதீர்" (9:84) எனும் வசனத்தை அருளினான்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "ஆகவே, அவர்களுக்காக ஜனாஸாத் தொழுவிப்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விட்டுவிட்டார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 3 உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4772 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது வீட்டில் தமது "தொடைகளிலிருந்து' அல்லது "கணைக்கால்களிலிருந்து' (சற்று துணி) விலகியிருந்த நிலையில் ஒருக்களித்துப் படுத்திருந்தார்கள். அப்போது (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள் உள்ளே வர அனுமதி கேட்டார்கள். அப்படியே படுத்திருந்த நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூபக்ர் அவர்களுக்கு அனுமதியளித்தார்கள்.

அவர்கள் (வந்து) பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு உமர் (ரலி) அவர்கள் உள்ளே வர அனுமதி கேட்டார்கள். அவர்களுக்கும் உள்ளே வர அனுமதியளித்தார்கள். அப்போதும் அதே நிலையிலேயே (படுத்துக்கொண்டு) இருந்தார்கள். உமர் அவர்களும் (வந்து) பேசிக் கொண்டிருந்தார்கள். பிறகு உஸ்மான் (ரலி) அவர்கள் உள்ளே வர அனுமதி கேட்டபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எழுந்து) உட்கார்ந்து தமது ஆடையை ஒழுங்குபடுத்தினார்கள்.
- (இந்த இடத்தில்) அறிவிப்பாளர் முஹம்மத் பின் அபீஹர்மலா, "(இதுவெல்லாம்) ஒரே நாளில் நடந்தது என நான் சொல்ல (வர)வில்லை" என்று கூறுகிறார்கள்.–
உஸ்மான் (ரலி) அவர்கள் உள்ளே வந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் புறப்பட்டுச் சென்றதும் நான், "அபூபக்ர் (ரலி) அவர்கள் உள்ளே வந்தபோது அவருக்காக நீங்கள் அசைய வில்லை; அவர்களைப் பொருட்படுத்தவில்லை. (சகஜமாகவே இருந்தீர்கள்.) பிறகு உமர் அவர்கள் உள்ளே வந்தார்கள். அப்போதும் நீங்கள் அவர்களுக்காக அசையவில்லை; பொருட்படுத்தவில்லை. பிறகு உஸ்மான் (ரலி) அவர்கள் உள்ளே வந்தபோது (மட்டும்) நீங்கள் (எழுந்து) உட்கார்ந்து உங்கள் ஆடையைச் சரி செய்துகொண்டீர்கள். (ஏன் அவ்வாறு செய்தீர்கள்?)" என்று கேட்டேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எவரைக் கண்டு வானவர்கள் நாணம் கொள்கிறார்களோ அவரைக் கண்டு நான் நாணம் கொள்ள வேண்டாமா!" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் பன்னிரெண்டு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4773 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) மற்றும் உஸ்மான் (ரலி) ஆகியோர் கூறியதாவது:
(ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:) (ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது கம்பளியாடையைப் போர்த்தியபடி தமது விரிப்பில் ஒருக்களித்துப் படுத்திருந்தபோது, அபூபக்ர் (ரலி) அவர்கள் உள்ளே வர அனுமதி கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதே நிலையில் (படுத்துக்கொண்டு) அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு உள்ளே வர அனுமதியளித்தார்கள். அவர்கள் உள்ளே வந்து தமது அலுவலை(ப் பற்றி பேசி) முடித்துக்கொண்டு பிறகு திரும்பிச் சென்றார்கள்.
பிறகு உமர் (ரலி) அவர்கள் உள்ளே வர அனுமதி கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதே நிலையில் (படுத்துக்கொண்டே) உமர் (ரலி) அவர்களுக்கு உள்ளே வர அனுமதியளித்தார்கள். உமர் (ரலி) அவர்கள் உள்ளே வந்து தமது அலுவலை(ப் பற்றி பேசி) முடித்துக்கொண்டு பிறகு திரும்பிச் சென்றார்கள்.
உஸ்மான் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: பிறகு நான் வந்து உள்ளே நுழைய அவர்களிடம் அனுமதி கேட்டேன். உடனே அவர்கள் (எழுந்து) அமர்ந்துகொண்டார்கள். மேலும் (தம் துணைவியார்) ஆயிஷா (ரலி) அவர்களிடம், "உனது ஆடையை எடுத்து நன்கு அணிந்து கொள்" என்று கூறினார்கள். நான் அவர்களிடம் எனது அலுவலை முடித்துக்கொண்டு திரும்பிச் சென்றேன்.
அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அபூபக்ர், உமர் ஆகியோருக்காக அசையாத நீங்கள் உஸ்மான் அவர்களுக்காக ஆடிப்போய்விட்டீர்களே!" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உஸ்மான் நாணம் மிகுந்த மனிதர். நான்

அதே நிலையில் இருந்துகொண்டு அவருக்கு உள்ளே வர அனுமதியளித்தால், அவர் தமது தேவையை என்னிடம் தெரிவிக்காமலேயே போய்விடுவாரோ என்று நான் அஞ்சினேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- ஆயிஷா (ரலி) மற்றும் உஸ்மான் (ரலி) ஆகியோர் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், "அபூபக்ர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உள்ளே வர அனுமதி கேட்டார்கள்..."என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

4774 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவின் தோட்டங்களில் ஒன்றில், தம்மிடமிருந்த குச்சியைத் தண்ணீரிலும் களிமண்ணிலும் ஊன்றியபடி சாய்ந்து அமர்ந்திருந்தார்கள். அப்போது ஒரு மனிதர் (வந்து தோட்டத்தின் வாயிற்கதவைத்) திறக்கும்படி கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவருக்காகக் கதவைத் திறப்பீராக;அவருக்குச் சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று நற்செய்தி சொல்வீராக" என்று சொன்னார்கள். (நான் வாயிற்கதவைத் திறந்தேன்.) அங்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு வாயிற்கதவைத் திறந்துவிட்டு,அவர்களுக்குச் சொர்க்கம் கிடைக்கவிருப்பதாக நற்செய்தி சொன்னேன்.

பிறகு மற்றொரு மனிதர் (வந்து வாயிற்கதவைத்) திறக்கும்படி கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அவருக்குக்) கதவைத் திறப்பீராக; அவருக்குச் சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று நற்செய்தி கூறுவீராக" என்று சொன்னார்கள். நான் சென்று பார்த்தபோது, அங்கு உமர் (ரலி) அவர்கள் இருந்தார்கள். அவர்களுக்குக் கதவைத் திறந்துவிட்டு, அவர்களுக்குச் சொர்க்கம் கிடைக்கவிருப்பதாக நற்செய்தி சொன்னேன்.
பிறகு இன்னொரு மனிதர் (வந்து கதவைத்) திறக்கும்படி கேட்டார். அப்போது (சாய்ந்து கொண்டிருந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எழுந்து நேராக) அமர்ந்து, "அவருக்கு வாயிற்கதவைத் திறப்பீராக; (அவருக்கு) நேரவிருக்கும் துன்பத்தையடுத்து அவருக்குச் சொர்க்கம் கிடைக்கவிருப்பதாக நற்செய்தி கூறுவீராக" என்று சொன்னார்கள். நான் சென்று (பார்த்தபோது) அங்கு உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் இருந்தார்கள்.
நான் கதவைத் திறந்துவிட்டு, அவருக்குச் சொர்க்கம் கிடைக்கவிருப்பதாக நற்செய்தி சொன்னேன். மேலும்,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அவருக்குத் துன்பம் நேர விருப்பதாகவும் அதையடுத்து அவருக்குச் சொர்க்கம் கிடைக்கவிருப்பதாகவும்) கூறியதையும் சொன்னேன்.
அப்போது உஸ்மான் (ரலி) அவர்கள், "இறைவா! எனக்குப் பொறுமையை வழங்குவாயாக!" அல்லது "(எனக்கு நேரவிருக்கும் அத்துன்பத்தின்போது) அல்லாஹ்வே உதவி புரிபவன் ஆவான்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு தோட்டத்திற்குள் நுழைந்துவிட்டு, அதன் வாசலில் காவலுக்கு நிற்கும்படி என்னைப் பணித்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4775 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் என் வீட்டில் அங்கத் தூய்மை (உளூ) செய்துவிட்டுப் புறப்பட்டேன். (அப்போது எனக்குள்) "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை விட்டுப் பிரியாமல் அவர்களுடனேயே இன்று (முழுவதும்) இருப்பேன்" என்று சொல்லிக்கொண்டேன். நான் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்கு வந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறித்துக் கேட்டேன். அப்போது மக்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்தப் பக்கம்தான் போனார்கள்" என்று கூறினர்.
நான் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்ற திசையில்) அவர்களைப் பின் தொடர்ந்து (இந்த வழியாகச் சென்றார்களா என்று) விசாரித்தபடி சென்றேன். இறுதியில் ("குபா'வுக்கு அருகிலுள்ள ஒரு தோட்டமான) "பிஃரு அரீசு'க்குச் சென்று அதன் தலை வாசலில் அமர்ந்தேன். அதன் கதவு பேரீச்ச மட்டையால் தயாரிக்கப்பட்டிருந்தது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது இயற்கைக் கடனை நிறைவேற்றிக் கொண்டு அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். உடனே நான் அவர்களிடம் எழுந்து சென்றேன். அவர்கள் (பிஃரு) அரீஸ் (எனும் அத்தோட்டத்திலுள்ள) கிணற்றின் மீது அதன் சுற்றுச் சுவருக்கு நடுவே தம் கணைக்கால்கள் இரண்டையும் திறந்து கிணற்றுக்குள் தொங்க விட்டபடி அமர்ந்திருந்தார்கள்.
நான் அவர்களுக்கு முகமன் (சலாம்) சொல்லிவிட்டுத் திரும்பிச் சென்று வாசலருகே அமர்ந்து கொண்டேன். நான் (எனக்குள்) "இன்று நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வாயிற்காவலனாக இருப்பேன்" என்று சொல்லிக்கொண்டேன். அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் வந்து கதவைத் தள்ளினார்கள். நான் "யார் அது?" என்று கேட்டேன். அவர்கள், "(நான்தான்) அபூபக்ர் (வந்துள்ளேன்)" என்று பதிலளித்தார்கள். உடனே நான் "சற்றுப் பொறுங்கள்"என்று சொல்லிவிட்டு (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்) சென்று, "அல்லாஹ்வின் தூதரே! இதோ அபூபக்ர் அவர்கள் (வந்து தங்களிடம் உள்ளே வர) அனுமதி கேட்கிறார்கள்" என்று சொன்னேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவருக்கு அனுமதி கொடுங்கள். மேலும், அவர் சொர்க்கவாசி என்று நற்செய்தி சொல்லுங்கள்" என்று கூறினார்கள். நான் அபூபக்ர் (ரலி) அவர்களை நோக்கிச் சென்று அவர்களிடம் "உள்ளே வாருங்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நீங்கள் சொர்க்கவாசி என்று நற்செய்தி அறிவிக்கிறார்கள்" என்று சொன்னேன். அபூபக்ர் (ரலி) அவர்கள் உள்ளே வந்து, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு வலப் பக்கத்தில் அவர்களுடன் கிணற்றின் சுற்றுச் சுவரில் அமர்ந்துகொண்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்ததைப் போன்றே, தம் கால்கள் இரண்டையும் கிணற்றில் தொங்கவிட்டு, கணைக்கால்களைத் திறந்துகொண்டார்கள்.
பிறகு நான் திரும்பிச் சென்று (வாசலில்) அமர்ந்துகொண்டேன். நான் (முன்பே) என் சகோதர(ர் ஒருவ)ரை அங்கத் தூய்மை (உளூ) செய்துகொண்டு என்னுடன் வந்து சேர்ந்து கொள்ளும்படி சொல்லி, விட்டுவிட்டு வந்திருந்தேன். ஆகவே (எனக்குள்), "அல்லாஹ் இன்ன

மனிதருக்கு (அதாவது என் சகோதரருக்கு) நன்மையை நாடியிருந்தால் அவரை (இங்கு) வரச்செய்வான்" என்று சொல்லிக்கொண்டேன்.
அப்போது ஒரு மனிதர் கதவை அசைக்கிறார். நான் "யார் அது?" என்று கேட்டேன். வந்தவர், "(நான்தான்) உமர் பின் அல்கத்தாப் (வந்துள்ளேன்)" என்று சொன்னார். நான் "சற்றுப் பொறுத்திருங்கள்" என்று கூறிவிட்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று அவர்களுக்கு முகமன் (சலாம்) கூறி, "இதோ, உமர் அவர்கள் வந்து (தங்களிடம் உள்ளே வர) அனுமதி கேட்கிறார்கள்" என்று சொன்னேன். "அவருக்கு அனுமதி தாருங்கள்; அவர் சொர்க்கவாசி என்று நற்செய்தி கூறுங்கள்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

நான் உமர் (ரலி) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளித்து விட்டார்கள்; நீங்கள் சொர்க்கவாசி என்று உங்களுக்கு நற்செய்தி கூறுகிறார்கள்" என்று சொன்னேன். அவர்கள் உள்ளே வந்து கிணற்றின் சுற்றுச்சுவரில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இடப் பக்கம் அமர்ந்துகொண்டு தம் இரு கால்களையும் கிணற்றுக்குள் தொங்கவிட்டுக்கொண்டார்கள்.
பிறகு நான் திரும்பிச் சென்று (வாசலருகே) அமர்ந்துகொண்டேன். "அல்லாஹ் இன்ன மனிதருக்கு (என் சகோதரருக்கு) நன்மையை நாடியிருந்தால் அவரை (இங்கு) வரச் செய்வான்" என்று (முன்பு போலவே எனக்குள்) கூறிக்கொண்டேன்.
அப்போது ஒரு மனிதர் வந்து கதவை அசைத்தார். நான் "யார் அது?" என்று கேட்டேன். அவர், "(நான்தான்) உஸ்மான் பின் அஃப்பான் (வந்திருக்கிறேன்)" என்று பதிலளித்தார். அப்போது நான், "சற்றுப் பொறுங்கள்" என்று சொல்லிவிட்டு,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று (உஸ்மான் (ரலி) அவர்கள் வந்திருக்கும்) செய்தியை அறிவித்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவருக்கு அனுமதிகொடுங்கள். அவர் சொர்க்கவாசி என்ற நற்செய்தியை அவரிடம் கூறுங்கள். அத்துடன் அவருக்குத் துன்பம் நேரவிருக்கிறது (என்ற செய்தியையும் சொல்லுங்கள்)" என்று சொன்னார்கள்.
அவ்வாறே நான் (உஸ்மான் (ரலி) அவர்களிடம்) சென்று அவர்களிடம், "உள்ளே வாருங்கள். உங்களுக்குச் சொர்க்கம் கிடைக்கவிருப்பதாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நற்செய்தி கூறுகிறார்கள். அத்துடன் உங்களுக்குத் துன்பம் நேரவிருக்கிறது என்ற செய்தியையும் சொன்னார்கள்" என்று கூறினேன்.
அவர்கள் உள்ளே வந்து (பார்த்தபோது) சுற்றுச் சுவர் நிரம்பிவிட்டிருப்பதைக் கண்டார்கள். ஆகவே, மற்றொரு பக்கத்தில் அவர்கள் (மூவருக்கும்) எதிரே அமர்ந்துகொண்டார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷரீக் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள், "நான் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் உமர் (ரலி) அவர்களும்) ஒரே சுவரில் அடுத்தடுத்து அமர்ந்திருந்த நிலையையும் உஸ்மான் (ரலி) அவர்கள் எதிர் சுவரில் தனியே அமர்ந்திருந்த நிலையையும் (தற்போது) அவர்களின் அடக்கத்தலங்கள் அமைந்திருக்கும் நிலையைக் குறிப்பதாக விளக்கம் கண்டேன்" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நாடி நான் புறப்பட்டேன். அவர்கள் தோட்டங்கள் உள்ள பகுதிக்குச் சென்றுள்ளதாக அறிந்தேன். அவர்களைப் பின்தொடர்ந்து சென்றதில், ஒரு தோட்டத்திற்குள் அவர்கள் சென்றிருப்பதைக் கண்டேன். அங்கு கிணற்றின் சுற்றுச் சுவரில் அமர்ந்து, தம் கணைக்கால்களைத் திறந்து, கிணற்றுக்குள் தொங்க விட்டிருந்தார்கள்" என அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. அவர்களின் அடக்கத்தலங்கள் பற்றிய குறிப்பு அதில் இடம்பெறவில்லை.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷரீக் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது: எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள், "அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் இந்த இடத்தில்தான் எனக்கு இதை அறிவித்தார்கள்" என்று கூறிவிட்டு, அங்கிருந்த கோட்டையின் ஓர் ஓரத்தைச் சுட்டிக்காட்டினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்களிடமிருந்தே வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவில் இருந்த ஒரு தோட்டத்துக்குத் தமது (இயற்கைத்) தேவைக்காகச் சென்றார்கள். அப்போது அவர்களைப் பின்தொடர்ந்து சென்றேன்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
மேலும், "அவர்கள் மூவருடைய அடக்கத் தலங்கள் இந்த இடத்தில் ஒன்றாக இருப்பதையும் உஸ்மான் (ரலி) அவர்களின் அடக்கத் தலம் தனியாக (மற்றோர் இடத்தில்) அமைந்திருப்பதையும் குறிப்பதாக விளக்கம் கண்டேன்"எனும் குறிப்பும் இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 4 அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4776 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம், "(நபி) மூசாவிடம் (நபி) ஹாரூனுக்கு இருந்த அந்தஸ்தில் என்னிடம் நீங்கள் இருக்கிறீர்கள். எனினும், எனக்குப் பிறகு எந்த நபியும் இல்லை" என்று சொன்னார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (சஅத் (ரலி) அவர்கள் கூறியதாக ஆமிர் பின் சஅத் (ரஹ்) அவர்கள் எனக்கு அறிவித்த) இந்த ஹதீஸை நான் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே நேரடியாகச் செவியுற விரும்பினேன்.
ஆகவே, நான் சஅத் (ரலி) அவர்களைச் சந்தித்து, எனக்கு ஆமிர் (ரஹ்) அவர்கள் அறிவித்த ஹதீஸை அவர்களிடம் எடுத்துரைத்தேன். அப்போது சஅத் (ரலி) அவர்கள் "நான் இதை (நபியவர்களிடமிருந்து) செவியுற்றேன்" என்று கூறினார்கள். "நீங்கள் இதைச் செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அப்போது சஅத் (ரலி) அவர்கள் தம் இரு விரல்களைத் தம் காதுக்குள் வைத்து "ஆம் (நான்தான் செவியுற்றேன்); இல்லாவிட்டால் இவ்விரண்டும் செவிடாகப் போகட்டும்!" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் எட்டு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4777 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
தபூக் போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களை (தாம் திரும்பிவரும்வரை தமக்குப்) பிரதிநிதியாக நியமித்தார்கள். அப்போது அலீ (ரலி) அவர்கள், "குழந்தைகளையும் பெண்களையும் கவனித்துக்கொள்வதற்காகவா என்னை விட்டுச்செல்கிறீர்கள்?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மூசாவிடம் ஹாரூனுக்கு இருந்த அந்தஸ்தில் என்னிடம் நீங்கள் இருப்பதை விரும்பவில்லையா? ஆயினும், (ஒரு வேறுபாடு யாதெனில்) எனக்குப் பிறகு எந்த நபியும் இல்லை" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4778 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஆவியா பின் அபீசுஃப்யான் (ரலி) அவர்கள் (அலீ (ரலி) அவர்களை விமர்சிக்குமாறு) எனக்கு உத்தரவிட்டார்கள். "நீர் அபுத்துராப் (அலீ) அவர்களை ஏச மறுப்பதற்கு என்ன காரணம்?" என்று முஆவியா (என்னிடம்) கேட்டார்கள். அதற்கு நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களைப் பார்த்துச் சொன்ன மூன்று விஷயங்களை நான் (இன்றும்) நினைத்துப்பார்க்கிறேன். எனவே, அலீ (ரலி) அவர்களை நான் ஒருபோதும் ஏசமாட்டேன். அந்த மூன்றில் ஒன்று என்னிடம் இருப்பதுகூட, (அரிய செல்வமான) சிவப்பு ஒட்டகம் எனக்குக் கிடைப்பதைவிட மிகவும் உவப்பானதாகும். (அந்த மூன்று விஷயங்கள் வருமாறு:)
1. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தபூக் எனும்) ஒரு போருக்காகப் புறப்பட்டுச் சென்ற போது, (மதீனாவில்) அலீ (ரலி) அவர்களைத் தம் பிரதிநிதியாக விட்டுச்சென்றார்கள். அப்போது அலீ (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! பெண்களையும் குழந்தைகளையும் கவனித்துக் கொள்வதற்காகவா என்னை விட்டுச்செல்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இறைத்தூதர்) மூசாவிடம் ஹாரூனுக்கு இருந்த அந்தஸ்தில் என்னிடம் நீங்கள் இருப்பதை விரும்பவில்லையா? ஆயினும், (ஒரு வேறுபாடு யாதெனில்,) எனக்குப்பின் நபித்துவம் இல்லை" என்று கூறினார்கள்.
2. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் போர் நாளில், "நான் (இஸ்லாமியச் சேனையின்) கொடியை ஒரு மனிதரிடம் கொடுக்கப்போகிறேன். அவர் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறார்; அவரை அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நேசிக்கிறார்கள்" என்று கூறினார்கள். (அந்த மனிதர் நாமாக இருக்க வேண்டும் என்ற ஆசையில்) நாங்கள் எங்கள் தலையை (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால்) உயர்த்திக்காட்டினோம்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அலீ அவர்களை என்னிடம் அழைத்து வாருங்கள்" என்று சொன்னார்கள். அப்போது அலீ (ரலி) அவர்கள் அழைத்து வரப்பட்டார்கள். அப்போது அவர்களுக்குக் கண்வலி ஏற்பட்டிருந்தது. அவர்களது கண்ணில் அல்லாஹ்வின்

தூதர் (ஸல்) அவர்கள் உமிழ்ந்து (கண்வலியைக் குணப்படுத்திவிட்டு), கொடியை அவர்களிடம் கொடுத்தார்கள். அவர்களுக்கு அந்தப் போரில் அல்லாஹ் வெற்றியளித்தான்.
3. "வாருங்கள். எங்கள் பிள்ளைகளையும் உங்கள் பிள்ளைகளையும் அழைப்போம்..." (3:61) எனும் இந்த வசனம் அருளப்பெற்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அலீ (ரலி), ஃபாத்திமா (ரலி), ஹசன் (ரலி), ஹுசைன் (ரலி) ஆகியோரை அழைத்து, "இறைவா! இவர்கள்தான் என் குடும்பத்தார்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம், "மூசாவிடம் ஹாரூனுக்கு இருந்த அந்தஸ்தில் என்னிடம் நீங்கள் இருப்பதை விரும்பவில்லையா?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4779 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் போர் நாளில், "நான் (இஸ்லாமியச் சேனையின்) இந்தக் கொடியை ஒரு மனிதரிடம் தரப்போகிறேன். அவர் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறார். அவருடைய கரங்களில் அல்லாஹ் (இந்தப் போரில்) வெற்றியை அளிப்பான்" என்று சொன்னார்கள்.
உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அன்றைய நாளைத் தவிர வேறெப்போதும் நான் தலைமைப் பொறுப்பை விரும்பியதில்லை. அதற்காக நான் அழைக்கப்பட வேண்டும் என்று எதிர்ப்பார்த்தவனாக நான் தலையை உயர்த்திக்காட்டினேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களை அழைத்து, அவர்களிடம் அந்தக் கொடியைக் கொடுத்தார்கள்.
மேலும், "திரும்பிப் பார்க்காமல் செல்லுங்கள் அல்லாஹ் உங்கள் மூலம் வெற்றியளிப்பான்" என்று சொன்னார்கள்.
உடனே அலீ (ரலி) அவர்கள் சிறிது தூரம் சென்று நின்றுகொண்டு திரும்பிப் பார்க்காமலேயே, "அல்லாஹ்வின் தூதரே! எந்த அடிப்படையில் நான் மக்களுடன் போரிட வேண்டும்?" என்று உரத்த குரலில் கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்றும் முஹம்மத் (ஆகிய நான்) அல்லாஹ்வின் தூதர் ஆவேன் என்றும் அவர்கள் உறுதியளிக்கும்வரை அவர்களுடன் போரிடுவீராக. அதற்கு அவர்கள் இணங்கிவிட்டால், உரிய காரணம் இருந்தால் தவிர அவர்கள் உங்களிடமிருந்து தம் உயிர்களையும் உடைமைகளையும் காத்துக்கொள்வார்கள். (மனத்தைப் பொறுத்தவரை) அவர்களது விசாரணை அல்லாஹ்விடமே உள்ளது" என்று சொன்னார்கள்.

4780 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபர் போர் நாளில் "நான் (இஸ்லாமியச் சேனையின்) இந்தக் கொடியை ஒரு மனிதரிடம் தரப்போகிறேன். அவருடைய கரங்களால் அல்லாஹ் வெற்றியளிப்பான். அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் அவர் நேசிக்கிறார்; அவரை அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நேசிக்கின்றனர்" என்று

கூறினார்கள். அந்தக் கொடி தம்மில் யாரிடம் தரப்படும் என்ற யோசனையில் மக்கள் அந்த இரவெல்லாம் மூழ்கியிருந்தனர்.
மறுநாள் காலையில் அவர்களில் ஒவ்வொருவரும் அது தம்மிடமே தரப்பட வேண்டுமென்று ஆசைப்பட்டவர்களாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அலீ பின் அபீதாலிப் எங்கே?" என்று கேட்டார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! அவருக்குக் கண் வலி ஏற்பட்டுள்ளது" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்புங்கள்" என்று கூறினார்கள். அலீ (ரலி) அவர்கள் அழைத்து வரப்பட்டபோது, அவருடைய கண்களில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது உமிழ்நீரை உமிழ்ந்து அவருக்காகப் பிரார்த்தித்தார்கள்.
உடனே அவரது கண் அதற்குமுன் வலி எதுவுமே இல்லாதிருந்ததைப் போன்று குணமாகி விட்டது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அலீ (ரலி) அவர்களிடம் அந்தக் கொடியைக் கொடுத்தார்கள்.
அப்போது அலீ (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நம்மைப் போன்று அவர்களது (ஒரே இறைவனை ஏற்றுப் பணிபவர்களாய்) ஆகும்வரை நான் அவர்களுடன் போரிடுவேன்" என்று சொன்னார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் நிதானமாகச் சென்று அவர்களுடைய களத்தில் இறங்குங்கள். பிறகு அவர்களை இஸ்லாத்திற்கு அழைத்து, (அதை அவர்கள் ஏற்கும்பட்சத்தில்) அவர்கள்மீது விதியாகின்ற, இறைவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை அவர்களுக்கு எடுத்துரையுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள்மூலம் ஒரேயொருவருக்கு அல்லாஹ் நல்வழியளிப்பது, (அரிய செல்வமான) சிவப்பு ஒட்டகங்கள் உமக்குக் கிடைப்பதைவிடச் சிறந்ததாகும்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4781 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அலீ (ரலி) அவர்கள் கைபர் போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (போருக்குச்) செல்லாமல் பின்தங்கிவிட்டிருந்தார்கள். அவர்களுக்குக் கண் வலி ஏற்பட்டிருந்தது.
அப்போது அவர்கள் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (போருக்குச்) செல்லாமல் பின்தங்கிவிட்டேனே!" என்று (வருத்தத்துடன்) கூறிவிட்டுப் புறப்பட்டுச் சென்று, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சேர்ந்துகொண்டார்கள்.
எந்த நாளின் காலைப் பொழுதில் கைபரை அல்லாஹ் வெற்றிகொள்ளச்செய்தானோ அதற்கு முந்தைய மாலை நேரம் வந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நாளை "(முஸ்லிம்களின்) கொடியை ஒரு மனிதரிடம் தரப்போகிறேன்'; அல்லது "ஒரு மனிதர் (முஸ்லிம்களின்) கொடியைப் பிடித்திருப்பார்'. "அவரை அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நேசிக்கிறார்கள்'; அல்லது "அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் அவர் நேசிக்கிறார்'. அவருக்கு அல்லாஹ் வெற்றியளிப்பான்" என்று கூறினார்கள்.
நாங்கள் எதிர்பார்க்காத நிலையில் அலீ (ரலி) அவர்கள் (வந்து) எங்களுடன் இருந்தார்கள். அப்போது மக்கள், "இதோ அலீ (வந்துவிட்டார்)" என்று சொன்னார்கள். அல்லாஹ்வின் தூதர்

(ஸல்) அவர்கள் அந்தக் கொடியை அலீ (ரலி) அவர்களிடமே கொடுத்தார்கள். அவர்களுக்கே அல்லாஹ் வெற்றியளித்தான்.

4782 யஸீத் பின் ஹய்யான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் ஹுஸைன் பின் சப்ரா (ரஹ்), உமர் பின் முஸ்லிம் (ரஹ்) ஆகியோரும் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடம் சென்றோம். நாங்கள் அவர்கள் அருகில் அமர்ந்தபோது, அவர்களிடம், ஹுஸைன் பின் சப்ரா (ரஹ்) அவர்கள், "ஸைத் அவர்களே! தாங்கள் பல்வேறு நன்மைகளைச் சந்தித்துள்ளீர்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கண்டுள்ளீர்கள். அவர்களிடமிருந்து ஹதீஸ்களைக் கேட்டுள்ளீர்கள். அவர்களுடன் சேர்ந்து அறப்போர்களில் கலந்துகொண்டுள்ளீர்கள். அவர்களுக்குப் பின்னால் தொழுதுள்ளீர்கள். ஸைதே! தாங்கள் பல்வேறு நன்மைகளைச் சந்தித்துள்ளீர்கள். ஸைதே! தாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்ற ஹதீஸை எங்களுக்கு அறிவியுங்கள்" என்று கேட்டார்கள்.
அதற்கு ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள், "என் சகோதரர் புதல்வரே! அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்கு வயது அதிகமாகிவிட்டது; எனது காலம் கழிந்துவிட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் மனனமிட்ட சில ஹதீஸ்களை நான் மறந்துவிட்டேன். ஆகவே, நான் உங்களுக்கு அறிவிப்பதை ஏற்றுக்கொள்ளுங்கள். நான் அறிவிக்காதவற்றைப் பற்றி என்னிடம் கேட்டு என்னைச் சிரமப்படுத்தாதீர்கள்" என்று கூறிவிட்டுப் பின்வருமாறு சொன்னார்கள்:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடையிலுள்ள "கும்மு' எனும் நீர்நிலையருகே எங்களிடையே நின்று உரையாற்றிக் கொண்டிருந்தார்கள்.
அப்போது அவர்கள் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து, (இறைவனையும் இறுதி நாளையும்) நினைவூட்டி அறிவுரை கூறினார்கள். பிறகு, "இறைவாழ்த்துக்குப்பின்! மக்களே! கவனியுங்கள். நானும் ஒரு மனிதனே. (என் உயிரைக் கைப்பற்றும்) என் இறைவனின் தூதர் வரும் காலம் நெருங்கிவிட்டது. அவரது அழைப்பை நான் ஏற்றுக்கொள்வேன். நான் உங்களிடையே கனமான இரண்டு பொருட்களை விட்டுச்செல்கிறேன். அவற்றில் ஒன்று அல்லாஹ்வின் வேதமாகும். அதில் நல்வழியும் பேரொளியும் உள்ளது. ஆகவே, அல்லாஹ்வின் வேதத்தை ஏற்று அதைப் பலமாக பற்றிக்கொள்ளுங்கள்" என்று கூறி, அல்லாஹ்வின் வேதத்தின்படி வாழுமாறு தூண்டினார்கள்; அதில் ஆர்வமும் ஊட்டினார்கள்.
பிறகு, "(மற்றொன்று) என் குடும்பத்தார் ஆவர். என் குடும்பத்தார் விஷயத்தில் (அவர்களின் உரிமைகளையும் கண்ணியத்தையும் பேணுமாறு) உங்களுக்கு நான் அல்லாஹ்வின் பெயரால் நினைவூட்டுகிறேன்.என் குடும்பத்தார் விஷயத்தில் (அவர்களின் உரிமைகளையும் கண்ணியத்தையும் பேணுமாறு) உங்களுக்கு நான் அல்லாஹ்வின் பெயரால் நினைவூட்டுகிறேன். என் குடும்பத்தார் விஷயத்தில் (அவர்களுடைய உரிமைகளையும் கண்ணியத்தையும் பேணுமாறு) உங்களுக்கு நான் அல்லாஹ்வின் பெயரால் நினைவூட்டுகிறேன்" என்று (மூன்று முறை) கூறினார்கள்.
அப்போது ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடம் ஹுஸைன் பின் சப்ரா (ரஹ்) அவர்கள், "ஸைதே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய குடும்பத்தார் யார்? நபியவர்களின் துணைவியர் அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் இல்லையா?" என்று கேட்டார்கள்.

அதற்கு ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள், "நபியவர்களின் துணைவியரும் அவர்களின் குடும்பத்தாரில் அடங்குவர். ஆயினும், நபியவர்களுக்குப்பின் யாருக்குத் தர்மம் கொடுப்பது தடை செய்யப்பட்டுள்ளதோ அவர்களே அவர்களுடைய குடும்பத்தார் ஆவர்" என்று கூறினார்கள்.

அதற்கு ஹுஸைன் பின் சப்ரா (ரஹ்) அவர்கள் "அவர்கள் யார்?" என்று கேட்டார்கள். அதற்கு ஸைத் (ரலி) அவர்கள், "அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களின் குடும்பத்தாரும், அகீல் பின் அபீதாலிப் (ரலி) அவர்களின் குடும்பத்தாரும்,ஜஅஃபர் பின் அபீதாலிப் (ரலி) அவர்களின் குடும்பத்தாரும், அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப் (ரலி) அவர்களின் குடும்பத்தாருமே (நபியவர்களின் குடும்பத்தார் ஆவர்)" என்று பதிலளித்தார்கள்.

ஹுஸைன் பின் சப்ரா (ரஹ்) அவர்கள், "தர்மம் பெறுவது இவர்கள் அனைவருக்கும் தடை செய்யப்பட்டுள்ளதா?" என்று கேட்டார்கள். அதற்கு ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள், "ஆம்" என்று பதிலளித்தார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் ஜரீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "(அவற்றில் ஒன்று) அல்லாஹ்வின் வேதமாகும். அதில் நல்வழியும் பேரொளியும் உள்ளது. யார் அதைப் பெற்று அதனைக் கடைப்பிடிக்கிறாரோ அவர் நேர்வழியில் இருப்பார். யார் அதைத் தவறவிடுகிறாரோ அவர் வழிதவறிவிட்டார்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இடம் பெற்றுள்ளது.

4783 மேற்கண்ட ஹதீஸ் யஸீத் பின் ஹய்யான் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "நாங்கள் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடம் சென்று, 'தாங்கள் பல நன்மைகளைக் கண்டுள்ளீர்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழமையைப் பெற்றீர்கள். அவர்களுக்குப் பின்னால் தொழுதுள்ளீர்கள்'என்று கூறினோம்" என ஹதீஸ் ஆரம்பமாகி, மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே தொடர்கிறது.

ஆயினும் அதில், "கவனியுங்கள். நான் உங்களிடையே கனமான இரண்டு பொருட்களை விட்டுச்செல்கிறேன். அவற்றில் ஒன்று வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் வேதமாகும். அது அல்லாஹ்வின் கயிறாகும். அதைப் பின்பற்றுபவர் நல்வழியில் இருப்பார். அதைக் கைவிடுபவர் தவறான வழியில் இருப்பார்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

மேலும் இதில், "நபியவர்களின் குடும்பத்தார் யார்? அவர்களுடைய துணைவியரா?" என்று நாங்கள் கேட்டோம். அதற்கு ஸைத் (ரலி) அவர்கள், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! ஒரு பெண் ஓர் ஆணுடன் குறிப்பிட்ட சில காலம் (மனைவியாக) இருப்பாள். பின்னர் அவளை அவன் மணவிலக்குச் செய்துவிட்டால், அவள் தன் தந்தையிடமோ அல்லது தன் குடும்பத்தாரிடமோ திரும்பிச் சென்றுவிடுவாள். நபியவர்களுடைய

குடும்பத்தார் அவர்களுடைய மூல உறவினரும் அவர்களுக்குப்பின் தர்மம் பெறுவது தடை செய்யப்பட்ட அவர்களுடைய தந்தை வழி உறவினர்களுமே ஆவர் என்று பதிலளித்தார்கள்" என்றும் இடம்பெற்றுள்ளது.

4784 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மர்வான் பின் ஹகம் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் மதீனாவின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். அவர் என்னை அழைத்து அலீ (ரலி) அவர்களை ஏசுமாறு உத்தரவிட்டார். ஆனால், நான் மறுத்துவிட்டேன். அவர் என்னிடம், "நீர் (இதற்கு உடன்படாமல்) மறுப்பதாயிருந்தால், "அல்லாஹ் அபுத் துராபை சபிக்கட்டும்! என்று கூறுவீராக" என்று சொன்னார்.
அதற்கு நான், "(தம் பெயர்களில்) "அபுத் துராப்' (மண்ணின் தந்தை) எனும் பெயரைவிட வேறெந்தப் பெயரும் அலீ (ரலி) அவர்களுக்கு விருப்பமானதாக இருக்கவில்லை; அப்பெயர் கூறி அழைக்கப்படும்போது அவர்கள் பெரிதும் மகிழ்வார்கள்" என்று சொன்னேன். அதற்கு அந்த ஆளுநர், "அந்தக் கதையை எமக்குச் சொல்வீராக. ஏன் அபுத்துராப் என (அலீ) பெயர் சூட்டப்பெற்றார்?" என்று என்னிடம் கேட்டார்.
நான் பின்வருமாறு பதிலளித்தேன்: (ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் புதல்வி) ஃபாத்திமா (ரலி) அவர்களின் இல்லத்துக்கு வந்தார்கள். அப்போது (மருமகன்) அலீ அவர்கள் வீட்டில் இல்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன் பெரிய தந்தையின் புதல்வர் (உன் கணவர்) எங்கே?" என்று கேட்டார்கள்.
அதற்கு ஃபாத்திமா (ரலி) அவர்கள் "எனக்கும் அவருக்குமிடையே ஒரு சின்ன பிரச்சினை ஏற்பட்டுவிட்டது. ஆகவே,அவர் கோபித்துக்கொண்டு என்னிடம் மதிய ஓய்வு எடுத்துக் கொள்ளாமல் வெளியே சென்றுவிட்டார்" என்று பதிலளித்தார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம், "அவர் எங்கே என்று பார்" என்று சொன்னார்கள். அவர் (சென்று தேடிவிட்டு) வந்து, "அல்லாஹ்வின் தூதரே! அவர் பள்ளிவாசலில் உறங்கிக்கொண்டிருக்கிறார்" என்று சொன்னார்.
உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அலீயிடம் (பள்ளிவாசலுக்கு) வந்தார்கள். அப்போது அலீ (ரலி) அவர்கள் தமது மேனியிலிருந்து மேல்துண்டு கீழே விழுந்து கிடக்க, உடம்பில் மண் படிந்த நிலையில் ஒருக்களித்துப் படுத்திருந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த மண்ணை அவர்களின் உடலிலிருந்து துடைத்துக்கொண்டே, "அபுத்துராப்! (மண்ணின் தந்தையே!) எழுங்கள். அபுத்துராப்! (மண்ணின் தந்தையே!) எழுங்கள்"என்று (இரண்டு முறை) கூறினார்கள்.

## பாடம் : 5 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களின் சிறப்பு.

4785 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு வந்த புதிதில்) ஓர் இரவில் கண் விழித்திருந்தார்கள். பின்னர் (ஒரு நாள்), "இரவில் என்னைக் காவல் காப்பதற்கு என் தோழர்களில் தகுதியான ஒருவர் வேண்டுமே?" என்று கூறினார்கள்.

அப்போது நாங்கள் ஆயுதத்தின் ஓசையைக் கேட்டோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் அது?" என்று கேட்டார்கள். வந்தவர், "அல்லாஹ்வின் தூதரே! (நான்தான்) சஅத் பின் அபீவக் காஸ், தங்களைக் காவல் காப்பதற்காக வந்தேன்" என்று கூறினார். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நான் அவர்களது குறட்டைச் சப்தத்தைக் கேட்குமளவுக்கு (நிம்மதியாக) உறங்கினார்கள்.

4786 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்த புதிதில் ஓர் இரவில் கண் விழித்திருந்தார்கள். பின்னர் (ஒரு நாள்), "இரவில் எனக்குக் காவல் இருப்பதற்கு என் தோழர்களில் தகுதியான ஒருவர் இருக்க வேண்டுமே!" என்று கூறினார்கள்.
இவ்வாறே நாங்கள் இருக்கும்போது ஆயுதத்தின் ஓசையைக் கேட்டோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் அது?" என்று கேட்டார்கள். வந்தவர், "(நான் தான்) சஅத் பின் அபீவக்காஸ்" என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எதற்காக வந்தீர்?" என்று கேட்டார்கள்.
அதற்கு சஅத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஏதும் (ஆபத்து) நேர்ந்துவிடுமோ என்று நான் அஞ்சினேன். அவர்களைக் காவல் காப்பதற்காக வந்தேன்" என்று பதிலளித்தார்கள். அவருக்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். பிறகு (நிம்மதியாக) உறங்கினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ரும்ஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "யார் அது?" என்று நாங்கள் கேட்டோம் எனக் காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஓர் இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உறங்காமல்) கண் விழித்திருந்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4787 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் பெற்றோர் இருவரையும் ஒன்றுசேர்த்து சஅத் பின் மாலிக் (ரலி) அவர்களைத் தவிர வேறு யாருக்காகவும் (அர்ப்பணிப்பதாகக்) கூறிய தில்லை. ஏனெனில், உஹுதுப் போர் நாளில் "சஅதே! அம்பெய்யுங்கள். என் தந்தையும் தாயும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்" என்று சஅத் (ரலி) அவர்களிடம் கூறலானார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4788 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உஹுதுப் போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், எனக்காகத் தம் பெற்றோர் இருவரையும் ஒன்று சேர்த்து ("என் தந்தையும் என் தாயும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்" என்று) கூறி (போர்புரிய உற்சாக மூட்டி)னார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் உஹுதுப் போரின் போது எனக்காகத் தம் பெற்றோர் இருவரையும் ஒன்றுசேர்த்து (அர்ப்பணிப்பதாக)க் கூறினார்கள். இணைவைப்பாளர்களில் ஒருவன் முஸ்லிம்களை (நெருப்பு போல) தாக்கிக் கொண்டிருந்தான். அப்போது நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "அம்பெய்யுங்கள். என் தந்தையும் தாயும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்!" என்று கூறி (உற்சாகமூட்டி)னார்கள்.
நான் முனை பொருத்தப்படாத அம்பொன்றை எடுத்து அவனது விலாப்புறத்தில் தாக்கினேன். அவன் கீழே விழுந்தான். அவனது (ஆடை விலகி) மறைவிடங்கள் வெளியே தெரிந்தன. (எதிரி வீழ்த்தப்பட்டதைக் கண்ட) நபி (ஸல்) அவர்கள்,தம் கடை வாய்ப்பற்கள் தெரிய சிரித்ததை நான் கண்டேன்.

4789 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் விஷயத்தில் குர்ஆனின் சில வசனங்கள் அருளப்பெற்றன. (அவை வருமாறு:)
(என் தாயார்) உம்மு சஅத், நான் எனது (இஸ்லாமிய) மார்க்கத்தை நிராகரிக்காத வரை என்னுடன் பேசமாட்டேன்;உண்ணமாட்டேன்; பருகமாட்டேன் என்று சத்தியம் செய்துவிட்டார். மேலும், அவர் "உன் பெற்றோரிடம் நீ நல்ல முறையில் நடந்துகொள்ளுமாறு அல்லாஹ் உன்னை அறிவுறுத்தியுள்ளான் என்று நீ கூறுகிறாய். நான் உன் தாய். நான்தான் இவ்வாறு (மார்க்கத்தைக் கைவிடுமாறு) கட்டளையிடுகிறேன். (அதற்கு நீ கட்டுப்பட வேண்டும்)" என்று கூறினார்.
இவ்வாறு என் தாயார் மூன்று நாட்கள் (உண்ணாமலும் பருகாமலும்) இருந்து பசியால் மயக்கமுற்று விட்டார். அப்போது அவருடைய உமாரா எனப்படும் ஒரு மகன் எழுந்து அவருக்குக் குடிப்பதற்குத் தண்ணீர் கொடுத்தார். அப்போது என் தாயார் எனக்கெதிராகப் பிரார்த்தித்தார். அப்போதுதான், வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் குர்ஆனில், "மனிதனுக்கு, அவனுடைய பெற்றோர் குறித்து நாம் அறிவுறுத்தியுள்ளோம்" என்று தொடங்கி, "உனக்கு அறிவு இல்லாத ஒன்றை எனக்கு இணையாக ஆக்கும்படி அவ்விருவரும் உன்னைக் கட்டாயப்படுத்தினால் அவர்களுக்குக் கட்டுப்படாதே. இவ்வுலகில் அவர்களிடம் அழகிய முறையில் தோழமையோடு நடந்துகொள்" (31:14,15) என்பதுவரையிலான வசனங்களை அருளினான்.
அடுத்து (ஒரு போரில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு மிகப் பெரிய அளவில் போர்ச் செல்வங்கள் கிடைத்தன. அவற்றில் வாள் ஒன்றும் இருந்தது. அதை நான் எடுத்துக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "இந்த வாளை எனக்குப் போர்ச் செல்வத்தின் சிறப்புப் பரிசாகத் தாருங்கள். எனது நிலை குறித்துத் தாங்கள் அறிந்தே உள்ளீர்கள்" என்று சொன்னேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்) "அதை எடுத்த இடத்திலேயே மறுபடியும் வைத்துவிடுவீராக" என்று சொன்னார்கள். நான் சென்று போர்ச்செல்வக் குவியலில் அதை வைக்க முற்பட்டபோது, என் மனம் என்னை இடித்துப் பேசியது. அதை (அங்கு வைக்காமல்) மறுபடியும் நானே எடுத்துக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்களிடம் வந்து, "இதை எனக்குக் கொடுத்துவிடுங்கள்" என்று சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கடுமையான குரலில் என்னிடம், "எடுத்த இடத்திலேயே மறுபடியும் அதை வைத்து விடுங்கள்" என்று சொன்னார்கள்.

அப்போதுதான் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் "போர்க்களத்தில் எதிரிகளிடம் கைப்பற்றப்படும் பொருட்களைப் பற்றி (நபியே!) உம்மிடம் அவர்கள் கேட்கின்றனர்..." (8:1) என்று தொடங்கும் வசனத்தை அருளினான்.

அடுத்து ("விடைபெறும்' ஹஜ்ஜின்போது) நான் நோய்வாய்ப்பட்டிருந்தேன். அப்போது நபி (ஸல்) அவர்களிடம் (அவர்களை அழைத்து வருமாறு) ஆளனுப்பினேன். அவர்கள் என்னிடம் வந்த போது நான், "என் செல்வங்கள் முழுவதையும் நான் நாடிய விதத்தில் (அறவழியில்) பங்கிட்டுவிட என்னை அனுமதியுங்கள்" என்று கேட்டேன்.

நபி (ஸல்) அவர்கள் (வேண்டாமென்று) மறுத்துவிட்டார்கள். "அவ்வாறாயின், (அதில்) பாதியையாவது (தர்மம் செய்கிறேன்)?" என்று நான் கேட்டேன். அதற்கும் நபி (ஸல்) அவர்கள் மறுத்து விட்டார்கள். "அவ்வாறாயின், மூன்றில் ஒரு பகுதியை (தர்மம் செய்து விடுகிறேன்)?" என்று கேட்டேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் அமைதியாக இருந்(து அரை மனதுடன் சம்மதித்)தார்கள். அதன் பின்னரே மூன்றில் ஒரு பகுதி(யை மரண சாசனம் செய்வது) அனுமதிக்கப்பட்டது.

அடுத்து (ஒரு முறை) நான் அன்சாரிகள் மற்றும் முஹாஜிர்கள் சிலர் இருந்த இடத்திற்கு வந்தேன். அப்போது அவர்கள், "வாரும்! நாங்கள் உமக்கு உண்பதற்கு உணவும் பருகுவதற்கு மதுவும் தருகிறோம்" என்று கூறினர். –இது மது தடை செய்யப்படுவதற்குமுன் நடைபெற்ற நிகழ்வாகும்.– அவ்வாறே நான் ஒரு தோட்டத்திற்கு அவர்களிடம் சென்றேன்.

அங்கு அவர்களுக்கு அருகில் பொரிக்கப்பட்ட ஒட்டக இறைச்சியும் ஒரு தோல் பையில் மதுவும் இருந்தது. அவர்களுடன் சேர்ந்து நான் அந்த இறைச்சியை உண்டேன்; (மதுவைப்) பருகினேன்.

அப்போது அவர்களிடையே முஹாஜிர்கள் மற்றும் அன்சாரிக(ளின் சிறப்புக)ள் குறித்துப் பேசப்பட்டது. அப்போது நான் "அன்சாரிகளைவிட முஹாஜிர்களே சிறந்தவர்கள்" என்று சொன்னேன். அப்போது ஒருவர் ஒட்டகத்தின் தாடையெலும்பு ஒன்றை எடுத்து என்னை அடித்துவிட்டார்; எனது மூக்கில் காயமேற்படுத்திவிட்டார். உடனே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து நடந்ததை அவர்களிடம் தெரிவித்தேன்.

அப்போதுதான் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் என் விஷயத்தில் மது தொடர்பாக "இறைநம்பிக்கை கொண்டோரே! மது, சூது, நட்டுவைக்கப்பட்ட (சிலை போன்ற)வை, (குறி பார்க்கும்) அம்புகள் ஆகியவை ஷைத்தானின் அருவருக்கத்தக்க செயலாகும்" (5:90) என்று தொடங்கும் வசனத்தை அருளினான்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4790 மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் "என் தொடர்பாக நான்கு இறைவசனங்கள் அருளப்பெற்றன..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி, மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது. இவற்றில் ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மக்கள் என் தாயாருக்கு உணவளிக்க

விரும்பினால், ஒரு குச்சியை அவரது வாய்க்குள் நுழைத்து (அவரை வாய் மூடாமல் தடுத்து) அதில் உணவைப் போடுவார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
மேலும், அவரது அறிவிப்பில், "(விருந்தின் போது கோபமுற்ற அந்த மனிதர்) தாடையெலும்பை எடுத்து எனது மூக்கில் அடித்து மூக்கைக் கிழித்துவிட்டார்" என்று சஅத் (ரலி) அவர்கள் கூறியதாகவும், "சஅத் (ரலி) அவர்களின் மூக்கு பிளவுற்றதாகவே இருந்தது" என்றும் இடம்பெற்றுள்ளது.

4791 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் விஷயத்திலேயே, "(நபியே!) தம் இறைவனின் உவப்பை நாடி காலையிலும், மாலையிலும் அவனை அழைப்பவர்களை நீர் விரட்டாதீர்" (6:52) எனும் இறைவசனம் அருளப்பெற்றது.
ஆறு பேர் தொடர்பாகவே மேற்கண்ட வசனம் அருளப்பெற்றது. அவர்களில் நானும் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களும் அடங்குவோம். இணைவைப்பாளர்(களில் தம்மை உயர்வாகக் கருதிக்கொண்டவர்)கள் நபி (ஸல்) அவர்களிடம், "இ(ந்தச் சாமானிய எளிய)வர்களையா நீர் நெருக்கத்தில் வைத்திருக்கிறீர்?" என்று கேட்டனர்.

4792 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஆறு பேர் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது இணைவைப்பாளர்கள் நபி(ஸல்) அவர்களிடம் "இவர்களை விரட்டிவிடுங்கள்; எங்கள்மீது அவர்களுக்குத் துணிச்சல் ஏற்பட்டுவிடக் கூடாது" என்று கூறினர். நானும் இப்னு மஸ்ஊதும் ஹுதைல் குலத்தாரில் ஒருவரும் பிலாலும் நான் பெயர் குறிப்பிட (விரும்பா)த இன்னும் இரு மனிதர்களுமே அந்த ஆறு பேர்.
(இணைவைப்பாளர்கள் இவ்வாறு கூறியதும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது மனதில் (இணைவைப்பாளர்களின் கூற்றுக்கு ஆதரவான) அல்லாஹ் நாடிய ஓர் எண்ணம் ஏற்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்குள் (அவர்கள் சொல்வது சரியாயிருக்குமோ) என்று நினைத்தார்கள்.
அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் "(நபியே!) தம் இறைவனின் உவப்பை நாடி காலையிலும் மாலையிலும் அவனை அழைப்பவர்களை நீர் விரட்டாதீர்..." (6:52) எனும் வசனத்தை அருளினான்.

## பாடம் : 6 தல்ஹா (ரலி), ஸுபைர் (ரலி) ஆகியோரின் சிறப்புகள்.

4793 தல்ஹா (ரலி) அவர்களும் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களும் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இணைவைப்பாளர்களுடன்) போரிட்ட அந்த நாட்களில் ஒன்றில் அவர்களுடன் எங்கள் இருவரையும் தவிர வேறெவரும் இருக்கவில்லை.
இதை அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள் தல்ஹா (ரலி), சஅத் (ரலி) ஆகிய இருவரிடமே நேரடியாகக் கேட்டு அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4794 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அகழ்ப் போரின்போது ("இன்றைய இரவில் தனியாகச் சென்று எதிரிகள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என உளவு பார்ப்பதற்கு முன்வருபவர் யார்?' என்று தம் தோழர்களுக்கு) அழைப்பு விடுத்தார்கள். ஸுபைர் (ரலி) அவர்கள் அதற்கு முன்வந்தார்கள். மீண்டும் மக்களிடையே அழைப்பு விடுத்த போது (மீண்டும்) ஸுபைர் (ரலி) அவர்களே முன்வந்தார்கள். மீண்டும் மக்களிடையே அழைப்பு விடுத்தபோது அப்போதும் ஸுபைர் (ரலி) அவர்களே முன்வந்தார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒவ்வோர் இறைத்தூதருக்கும் (தனிப்பட்ட) உதவியாளர் ஒருவர் உண்டு; எனது (தனிப்பட்ட) உதவியாளர் ஸுபைர் ஆவார்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4795 அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அகழ்ப் போரின்போது நானும் உமர் பின் அபீசலமா (ரலி) அவர்களும் பெண்களுடன் (அவர்களுக்குப் பாதுகாப்பாக) "ஹஸ்ஸான்' கோட்டையில் இருந்தோம். அப்போது உமர் பின் அபீசலமா ஒருமுறை எனக்காகத் தலையைத் தாழ்த்துவார். நான் (எதிரிகளின் திசையில்) பார்ப்பேன். மறுமுறை நான் தலையைத் தாழ்த்திக்கொள்வேன். உமர் பின் அபீசலமா (எதிரிகளின் திசையில்) பார்ப்பார். என் தந்தை (ஸுபைர்) அவர்கள் குதிரை மீதமர்ந்து பனூ குறைழா (யூதர்களை) நோக்கி ஆயுதத்துடன் கடந்து சென்றபோது, அவர்களை நான் அறிந்துகொண்டேன்.
அப்துல்லாஹ் பின் உர்வா பின் அஸ் ஸுபைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பின்வருமாறு காணப்படுகிறது:
பின்னர் (ஒரு முறை) அதைப் பற்றி நான் என் தந்தையிடம் பேசியபோது, "அன்பு மகனே! அப்போது என்னை நீ பார்த்தாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்' என்றேன். கவனமாகக் கேள்: அல்லாஹ்வின் மீதாணையாக! அன்றைய தினம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்காகத் தம் பெற்றோர் இருவரையும் ஒன்றுசேர்த்து, "என் தந்தையும் என் தாயும் உங்களுக்கு அர்ப்பணம்" என்று கூறினார்கள் என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அஸ் ஸுபைர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அகழ்ப்போர் தினத்தன்று நானும் உமர் பின் அபீசலமா (ரலி) அவர்களும் பெண்கள் – அதாவது நபி (ஸல்) அவர்களின் துணைவியர்– இருந்த கோட்டையில் இருந்தோம்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
அதில் அப்துல்லாஹ் பின் உர்வா (ரஹ்) அவர்கள் தெரிவித்த செய்தி இடம்பெறவில்லை. ஹிஷாம் பின் உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பிலேயே அந்தக் குறிப்பு இடையில் சேர்க்கப்பட்டுள்ளது.

4796 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), உஸ்மான் (ரலி), அலீ (ரலி),தல்ஹா (ரலி), ஸுபைர் (ரலி) ஆகியோரும் "ஹிரா' மலைமீது இருந்தார்கள். அப்போது அந்தப் பாறை அசைந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அமைதியாக இரு. உன்மீது நபியும் ஸித்தீக்கும் ஷஹீது(களு)மே இருக்கின்றனர்" என்று கூறினார்கள். - அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஹிரா' மலைமீது இருந்தபோது மலை அசைந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஹிராவே! அமைதியாக இரு. உன்மீது நபியும் ஸித்தீக்கும் ஷஹீது(களு)மே இருக்கின்றனர்" என்று சொன்னார்கள்.
அப்போது மலைமீது நபி (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), உஸ்மான் (ரலி), அலீ (ரலி), தல்ஹா (ரலி),ஸுபைர் (ரலி), சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) ஆகியோர் இருந்தனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4797 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் (என் சிற்றன்னை) ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! உன் பெற்றோர் "தமக்கு (போரில்) காயம் ஏற்பட்ட பிறகும் அவர்கள் அல்லாஹ்வுக்கும் (அவன்) தூதருக்கும் செவிசாய்த்தார்கள்' (3:172)என்பதில் அடங்குவர்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உர்வா (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அபூபக்ர் (ரலி) அவர்களையும் ஸுபைர் (ரலி) அவர்களையும் கருத்தில் கொண்டே ஆயிஷா (ரலி) அவர்கள் அவ்வாறு கூறினார்கள்" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4798 உர்வா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் ஆயிஷா (ரலி) அவர்கள் உன் பெற்றோர், "தமக்கு (போரில்) காயம் ஏற்பட்ட பிறகும் அல்லாஹ்வுக்கும் (அவன்) தூதருக்கும் செவிசாய்த்தார்கள்" (3:172) எனும் இறை வசனத்தில் அடங்குவர் என்று கூறினார்கள்.

## பாடம் : 7 அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4799 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வொரு சமுதாயத்துக்கும் (அதன்) நம்பிக்கைக்குரியவர் ஒருவர் உண்டு. சமுதாயமே! நமது நம்பிக்கைக்குரியவர் அபூ உபைதா பின் அல்ஜர்ராஹ் அவர்கள்தான்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4800 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
யமன் (ஏமன்)வாசிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "எங்களுக்கு நபிவழியையும் இஸ்லாத்தையும் கற்றுக்கொடுப்பதற்காக எங்களுடன் ஒரு மனிதரை அனுப்பிவையுங்கள்" என்று கேட்டார்கள்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூஉபைதா (ரலி) அவர்களின் கையைப் பிடித்து, "(இதோ) இவர் இந்தச் சமுதாயத்தின் நம்பிக்கைக்குரியவர் ஆவார். (இவரை அழைத்துச் செல்லுங்கள்)" என்று கூறினார்கள்.

4801 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நஜ்ரான் (யமன்)வாசிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நம்பிக்கைக்குரிய மனிதர் ஒருவரை எங்களுடன் அனுப்பிவையுங்கள்" என்று கேட்டார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நம்பகத் தன்மையில் மிகவும் முறையோடு நடந்துகொள்ளும் நம்பிக்கையாளர் (அமீன்) ஒருவரை உங்களுடன் நான் உறுதியாக அனுப்புவேன்" என்று சொன்னார்கள். அப்போது மக்களில் பலர் (அந்த "அமீன்' எனும் பெயருடன் அழைப்பாளராய்ச் செல்லும் சிறப்பு தமக்குக் கிட்டாதா என) தலையை உயர்த்தி (பேரார்வம்) காட்டினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்களை அனுப்பிவைத்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 8 ஹசன் மற்றும் ஹுஸைன் (ரலி) ஆகியோரின் சிறப்புகள்.

4802 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (தம் பேரர்) ஹசன் (ரலி) அவர்கள் குறித்து, "இறைவா! நான் இவரை நேசிக்கிறேன். இவரையும் இவரை நேசிப்பவர்களையும் நீ நேசிப்பாயாக" என்று பிரார்த்தித்தார்கள்.

4803 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு பகல் வேளையில் புறப்பட்டுச் சென்றேன். அவர்கள் என்னுடன் பேசவில்லை; நானும் அவர்களுடன் பேசவில்லை. (மௌனமாக நடந்தோம்.) "பனூ கைனுகா' கடைவீதி வந்தது.
பிறகு அங்கிருந்து திரும்பி (தம் புதல்வி) ஃபாத்திமா (ரலி) அவர்களின் குடிசைக்கு வந்து, "இங்கே அந்தப் பொடிப் பையன் (அதாவது ஹசன்) இருக்கிறானா? இங்கே அந்தப் பொடிப் பையன் இருக்கிறானா?" என்று கேட்டார்கள்.
ஹசனின் தாயார், அவரை நீராட்டி நறுமண மாலையை அணிவிப்பதற்காகவே தாமதப்படுத்துகிறார் என்றே நாங்கள் எண்ணினோம். நீண்ட நேரம் கடந்திருக்கவில்லை. அதற்குள் குழந்தை (ஹசன்) ஓடிவந்தார். உடனே நபியவர்களும் அவரும் ஒருவரையொருவர் கட்டியணைத்துக்கொண்டனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! நான் இவரை நேசிக்கிறேன். இவரையும் இவரை நேசிப்பவர்களையும் நீ நேசிப்பாயாக" என்று பிரார்த்தித்தார்கள்.

4804 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் தோள்மீது ஹசன் பின் அலீ (ரலி) அவர்கள் அமர்ந்திருப்பதை நான் கண்டேன். நபி (ஸல்) அவர்கள், "இறைவா! நான் இவரை நேசிக்கிறேன். நீயும் இவரை நேசிப்பாயாக" என்று பிரார்த்தித்துக்கொண்டிருந்தார்கள்.

4805 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் பேரர்) ஹசன் பின் அலீ (ரலி) அவர்களைத் தமது தோள்மீது வைத்துக்கொண்டு, "இறைவா! நான் இவரை நேசிக்கிறேன். நீயும் இவரை நேசிப்பாயாக" என்று கூறிக்கொண்டிருந்ததை நான் கண்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4806 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களையும் (அவர்களுடைய பேரர்களான) ஹசன், ஹுசைன் (ரலி) ஆகியோரையும் அவர்களது கறுப்பு வெள்ளைக் கோவேறு கழுதையில் ஏற்றி அழைத்து வந்து, நபி (ஸல்) அவர்களின் இல்லத்திற்குக் கொண்டுவந்து சேர்த்தேன். இதோ இவர் (நபிக்கு) முன்பக்கத்திலும் இதோ இவர் (நபிக்கு) பின்பக்கத்திலும் இருந்தனர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 9 நபி (ஸல்) அவர்களுடைய குடும்பத்தாரின் சிறப்புகள்.

4807 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் காலையில் நபி (ஸல்) அவர்கள் ஒட்டகச் சேணத்தின் உருவம் பொறிக்கப்பட்ட கறுப்புநிற கம்பளிப் போர்வை அணிந்து கொண்டு புறப்பட்டார்கள். அப்போது (அவர்களுடைய பேரர்) ஹசன் பின் அலீ (ரலி) அவர்கள் வந்தார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் ஹசன் (ரலி) அவர்களை (தமது போர்வைக்குள்) நுழைத்துக்கொண்டார்கள்;பிறகு ஹுசைன் (ரலி) அவர்கள் வந்தபோது அவர்களும் (போர்வைக்குள்) நபி (ஸல்) அவர்களுடன் நுழைந்துகொண்டார்கள்; பிறகு (மகள்) ஃபாத்திமா (ரலி) அவர்கள் வந்தபோது, அவர்களையும் (போர்வைக்குள்) நுழைத்துக்கொண்டார்கள். பிறகு (மருமகனும் தமது வீட்டில் வளர்ந்தவருமான) அலீ (ரலி) அவர்கள் வந்தபோது அவர்களையும் போர்வைக்குள் நுழைத்துக்கொண்டார்கள்.
பிறகு, "இவ்வீட்டாராகிய உங்களைவிட்டு அசுத்தத்தை நீக்கவும், உங்களை முழுமையாகப் பரிசுத்தப்படுத்தவுமே அல்லாஹ் விரும்புகிறான்" (33:33) எனும் இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 10 ஸைத் பின் ஹாரிஸா (ரலி), உசாமா பின் ஸைத் (ரலி) ஆகியோரின் சிறப்புகள்.

4808 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"வளர்ப்புப் புதல்வர்களை அவர்களின் சொந்தத் தந்தையுடன் சேர்த்தே அழையுங்கள்; அதுவே அல்லாஹ்விடம் நீதியானது" (33:5) எனும் இறைவசனம் அருளப்படும்வரை, நாங்கள்

(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களால் வளர்க்கப்பட்ட) ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்களை, ஸைத் பின் முஹம்மத் (முஹம்மதின் புதல்வர் ஸைத்) என்றே அழைத்து வந்தோம்.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4809 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களைத் தளபதியாக்கி (ஷாம் நாட்டுக்கு) ஒரு படைப்பிரிவை அனுப்பினார்கள். மக்களில் சிலர் (இளம் வயதைக் காரணம் காட்டி) உசாமா (ரலி) அவர்களின் தலைமையைக் குறை கூறினர்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடையே) நின்று, "(இப்போது) இவரது தலைமையை நீங்கள் குறை கூறுகிறீர்கள் என்றால், (இது ஒன்றும் புதிதல்ல.) இதற்கு முன்பு (மூத்தா போரின்போது) இவருடைய தந்தை (ஸைத்-ரலி)யின் தலைமையையும்தான் நீங்கள் குறை கூறிக்கொண்டிருந்தீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் (ஸைத்) தலைமைப் பொறுப்புக்கு தகுதியானவராகவே இருந்தார். மேலும், அவர் மக்களிலேயே எனக்கு மிகவும் விருப்பமானவராகவும் இருந்தார். அவருக்குப்பின் மக்களிலேயே இவர் (உசாமா) என் அன்புக்குரியவர் ஆவார்" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4810 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது இருந்தபடி, "(இப்போது) இவரது தலைமையைக் குறை கூறுகிறீர்கள் என்றால், (இது ஒன்றும் புதிதல்ல!) இவருக்குமுன் இவருடைய தந்தை (ஸைத்) அவர்களின் தலைமையையும் நீங்கள் குறை கூறிக் கொண்டிருந்தீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் அதற்குத் தகுதியானவராகவே இருந்தார். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவராக இருந்தார். அல்லாஹ்வின் மீதாணையாக! இவரும் அதற்குத் தகுதியானவரே. அல்லாஹ்வின் மீதாணையாக! அவருக்குப்பின் (அவருடைய புதல்வரான) இவர் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவர் ஆவார். இவர் தொடர்பாக உங்களுக்கு நான் அறிவுறுத்த விரும்புகிறேன். ஏனெனில், இவர் உங்களில் தகுதியானவர்களில் ஒருவராவார்" என்று உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களைக் குறித்துக் கூறினார்கள்.

## பாடம் : 11 அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4811 அப்துல்லாஹ் பின் அபீமுளைக்கா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களிடம் அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் (ரலி) அவர்கள், "நானும் நீங்களும் இப்னு அப்பாஸும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) (அவர்கள்

ஒரு பயணத்தை முடித்துத் திரும்பியபோது) அவர்களை எதிர்கொண்டு வரவேற்கச் சென்றதை நீங்கள் நினைவில் வைத்திருக்கிறீர்களா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்கள், "ஆம்" என்றார்கள். அப்போது (அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் (ரலி) அவர்கள்), "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களை (என்னையும் இப்னு அப்பாஸையும்) வாகனத்தில் ஏற்றிக்கொண்டார்கள்; உங்களை விட்டுவிட்டார்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அபீ முளைக்கா (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4812 அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பயணத்தை முடித்துக்கொண்டு (ஊருக்குள்) வரும்போது, அவர்களுடைய குடும்பத்துச் சிறுவர்களால் அவர்கள் எதிர்கொண்டு வரவேற்கப் படுவார்கள். இவ்வாறு ஒருமுறை அவர்கள் ஒரு பயணத்திலிருந்து வந்தபோது நான் முந்திக்கொண்டு அவர்களிடம் சென்றேன். உடனே அவர்கள் என்னை (தமது வாகனத்தில்) முன்பக்கத்தில் ஏற்றிக்கொண்டார்கள். பிறகு ஃபாத்திமா (ரலி) அவர்களின் இரு புதல்வர்களில் ஒருவர் அங்கு கொண்டுவரப்பட்டார். அவரைத் தமக்குப் பின்பக்கத்தில் ஏற்றிக்கொண்டார்கள். நாங்கள் மூவரும் ஒரே வாகனத்தில் அமர்ந்தவாறு மதீனாவிற்குள் நுழைந்தோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4813 அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பயணத்திலிருந்து திரும்பி (ஊருக்குள்) வரும்போது, (அவர்களுடைய குடும்பத்துச் சிறுவர்களான) நாங்கள் அவர்களை எதிர்கொண்டு வரவேற்போம். இவ்வாறு ஒரு முறை நானும் ஹசன் அல்லது ஹுசைன் ஆகியோரில் ஒருவரும் அவர்களை எதிர்கொண்டு வரவேற்றபோது, எங்களில் ஒருவரைத் தமக்கு முன்பக்கத்திலும் மற்றொருவரைப் பின்பக்கத்திலும் தமது வாகனத்தில் ஏற்றிக்கொண்டார்கள். நாங்கள் (மூவரும் ஒரே வாகனத்தில் அமர்ந்தபடி) மதீனாவிற்குள் நுழைந்தோம்.

4814 அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைத் தமது வாகனத்தில் தமக்குப் பின்னால் ஏற்றிக்கொண்டு ஒரு விஷயத்தை இரகசியமாக என்னிடம் சொன்னார்கள். அதை நான் மக்களில் யாரிடமும் சொல்லமாட்டேன்.

## பாடம் : 12 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை கதீஜா (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4815 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உலகின் (அன்றைய) பெண்களிலேயே சிறந்தவர் மர்யம் பின்த் இம்ரான் ஆவார். (இன்று) உலகப் பெண்களிலேயே சிறந்தவர் கதீஜா பின்த் குவைலித் ஆவார்.
இதை அலீ (ரலி) அவர்கள் கூஃபா நகரில் குறிப்பிட்டதாக அப்துல்லாஹ் பின் ஜஅஃபர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் எட்டு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூகுரைப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இதைக் கூறியபோது அறிவிப்பாளர் வகீஉ (ரஹ்) அவர்கள் வானத்தையும் பூமியையும் நோக்கி (இம்மையிலும் மறுமையிலும் சிறந்தவர்) என்று சைகை செய்தார்கள்.

4816 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆண்களில் பலபேர் முழுமை பெற்றிருக்கிறார்கள். ஆனால், பெண்களில் இம்ரானின் புதல்வி மர்யமையும், ஃபிர்அவ்னின் துணைவியார் ஆசியாவையும் தவிர வேறெவரும் முழுமை பெறவில்லை. மற்றப் பெண்களை விட ஆயிஷாவுக்கு இருக்கும் சிறப்பானது, எல்லா வகை உணவுகளையும்விட "ஸரீத்' (தக்கடி) எனும் உணவுக்கு இருக்கும் சிறப்பைப் போன்றதாகும்.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4817 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்களிடம் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! இதோ! கதீஜா தம்முடன் குழம்பு, அல்லது உணவு, அல்லது குடி பானம் உள்ள பாத்திரத்தை எடுத்துக்கொண்டு உங்களை நோக்கி வந்துகொண்டிருக்கிறார். அவர் உங்களிடம் வந்தவுடன் அவருக்கு அவருடைய இறைவனின் தரப்பிலிருந்தும் என் தரப்பிலிருந்தும் முகமன் (சலாம்) கூறி, அவருக்குச் சொர்க்கத்தில் கூச்சல் குழப்பமோ களைப்போ காணமுடியாத முத்து மாளிகை ஒன்று தரப்படவிருப்பதாக நற்செய்தி சொல்லுங்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "என் தரப்பிலிருந்தும்' எனும் சொற்றொடர் இடம்பெறவில்லை.

4818 இஸ்மாயீல் பின் அபீகாலித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கதீஜா (ரலி) அவர்களிடம், அவருக்குச் சொர்க்கத்தில் முத்து மாளிகை ஒன்று கிடைக்கவிருப்பதாக நற்செய்தி கூறிவந்தார்களா?"என்று கேட்டேன்.
அதற்கு அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள், "ஆம்; சொர்க்கத்தில் கூச்சல் குழப்பமோ களைப்போ இல்லாத முத்து மாளிகை ஒன்று அவர்களுக்குக் கிடைக்க விருப்பதாக நற்செய்தி சொன்னார்கள்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4819 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கதீஜா பின் குவைலித் (ரலி) அவர்களுக்குச் சொர்க்கத்தில் மாளிகை ஒன்று கிடைக்கவிருப்பதாக நற்செய்தி சொன்னார்கள்.

4820 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(தன்மான உணர்ச்சியால்) கதீஜா (ரலி) அவர்களின் மீது நான் வைராக்கியம் கொண்டதைப் போன்று (நபி (ஸல்) அவர்களின் துணைவியரில்) எந்தத் துணைவியரின் மீதும் நான் வைராக்கியம் கொண்டதில்லை. ஏனெனில், கதீஜா (ரலி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் (அடிக்கடி) நினைவுகூர்வதை நான் கேட்டுவந்தேன்.
-என்னை நபி (ஸல்) அவர்கள் மணம் புரிந்து கொள்வதற்கு மூன்று வருடங்களுக்கு முன்பே கதீஜா இறந்துவிட்டிருந்தார்.–
மேலும், முத்து மாளிகை ஒன்று சொர்க்கத்தில் கதீஜாவுக்கு கிடைக்கவுள்ளது என்று அவர்களுக்கு நற்செய்தி சொல்லும்படி நபி (ஸல்) அவர்களுக்கு அவர்களுடைய இறைவன் கட்டளையிட்டிருந்தான். நபி (ஸல்) அவர்கள் ஆட்டை அறுத்து (அதன் இறைச்சியில் சிறிதளவை) கதீஜா (ரலி) அவர்களின் தோழியருக்கு அன்பளிப்பாகக் கொடுத்தனுப்புவார்கள்.

4821 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கதீஜா (ரலி) அவர்கள்மீது நான் வைராக்கியம் கொண்டதைப் போன்று நபி (ஸல்) அவர்களின் வேறெந்த துணைவியர்மீதும் வைராக்கியம் கொண்டதில்லை. அவர்களை நான் சந்தித்ததில்லை. நபி (ஸல்) அவர்கள் ஆட்டை அறுத்தால், "கதீஜாவின் தோழியருக்கு இதைக் கொடுத்தனுப்புங்கள்" என்று கூறுவார்கள்.
ஒரு நாள் நான் வைராக்கியம் கொண்டு, "(பெரிய) கதீஜா!" என்று நபி (ஸல்) அவர்களிடம் கூறினேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "(நான் என்ன செய்ய?) அவர்மீது எனக்கு அன்பு ஏற்படுத்தப்பட்டுவிட்டதே!" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஆட்டை அறுக்கும் செய்தி வரையே இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னுள்ள விவரங்கள் இடம்பெறவில்லை.

4822 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் கதீஜா (ரலி) அவர்கள்மீது வைராக்கியம் கொண்டதைப் போன்று, நபி (ஸல்) அவர்களின் வேறெந்த துணைவியர்மீதும் வைராக்கியம் கொண்டதில்லை. ஏனெனில், நபி (ஸல்) அவர்கள் கதீஜா அவர்களைப் பற்றி அடிக்கடி நினைவு கூர்ந்துவந்தார்கள். ஆனால், நான் கதீஜா அவர்களைப் பார்த்ததே கிடையாது.

4823 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கதீஜா (ரலி) அவர்கள் இறக்கும்வரை நபி (ஸல்) அவர்கள் வேறு யாரையும் மணமுடிக்கவில்லை.

4824 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கதீஜா (ரலி) அவர்களின் (இறப்புக்குப்பின் அவர்களுடைய) சகோதரி ஹாலா பின்த் குவைலித் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வர அனுமதி கேட்டார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (கதீஜா அவர்களைப் போன்ற குரலில் ஹாலாவும் அனுமதி கேட்ட காரணத்தால்) கதீஜா (ரலி) அவர்கள் அனுமதி

கேட்கும் விதத்தை நினைவு கூர்ந்து மகிழ்ச்சியால் (உணர்ச்சிவசப்பட்டு) "இறைவா! இவர் ஹாலா பின்த் குவைலித்"என்று கூறினார்கள்.
உடனே நான் ரோஷமடைந்து, "எப்போதோ இறந்துவிட்ட தாடைகள் சிவந்த ஒரு குறைஷி மூதாட்டியை ஏன் (எப்போது பார்த்தாலும்) நினைவுகூர்கிறீர்கள்? அவருக்குப் பதிலாக (பருவத்தாலும் அழகாலும்) அவரை விடச் சிறந்த மனைவியை உங்களுக்கு அல்லாஹ் கொடுத்துவிட்டானே! (அப்படியிருக்க இன்னும் ஏன் அவரையே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?)" என்று கேட்டேன்.

**பாடம் : 13 ஆயிஷா (ரலி) அவர்களின் சிறப்பு.**

4825 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என்னிடம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மூன்று இரவுகள் உன்னை நான் கனவில் கண்டுள்ளேன். வானவர் ஒருவர் உன்னைப் பட்டுத் துணியொன்றில் என்னிடம் எடுத்து வந்து, "இவர் உங்கள் மனைவி"என்று கூறுகிறார். அப்போது நான் உன் முக்காட்டுத் துணியை விலக்கிப் பார்த்தேன். அதில் இருந்தது நீதான். அப்போது நான் "இ(க்கனவான)து அல்லாஹ்வின் தரப்பிலிருந்து வந்ததாயின், இதை அல்லாஹ் நனவாக்குவான்" என்று கூறலானேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4826 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எப்போது நீ என்மீது திருப்தியுடன் இருக்கிறாய்; எப்போது நீ என்மீது கோபத்துடன் இருக்கிறாய் என்று நான் நன்றாக அறிந்துவைத்துள்ளேன்" என்று சொன்னார்கள்.
அதற்கு நான், "எப்படி நீங்கள் அறிந்து கொள்வீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "என்மீது நீ திருப்தியுடன் இருக்கும் போது (நீ பேசினால்), 'இல்லை; முஹம்மதின் அதிபதிமீது சத்தியமாக!' என்று கூறுவாய். என்மீது கோபமாய் இருந்தால், 'இல்லை; இப்ராஹீம் (அலை) அவர்களுடைய அதிபதிமீது சத்தியமாக! என்று கூறுவாய்" என்று சொன்னார்கள்.

நான், "அல்லாஹ்வின் மீதாணையாக! ஆம் (உண்மைதான்), அல்லாஹ்வின் தூதரே! நான் தங்களது பெயரைத்தான் கோபித்துக்கொள்வேன் (தங்கள்மீதன்று)" என்று கூறினேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்தள்ளது.
அதில், "இல்லை; இப்ராஹீம் (அலை) அவர்களின் அதிபதிமீது சத்தியமாக!" என்பதுவரையே இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னுள்ளவை இடம்பெறவில்லை.

4827 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் பொம்மைகள் வைத்து விளையாடுவேன். என் தோழியர் என்னிடம் (விளையாட) வருவார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கண்டதும் என் தோழியர் (பயந்துபோய்) ஒளிந்துகொள்வார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் தோழியரை (என்னுடன் சேர்ந்து விளையாட) என்னிடம் அனுப்பிவைப்பார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஜரீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் நபி (ஸல்) அவர்களது இல்லத்தில் பொம்மைகள் ("பனாத்')வைத்து விளையாடுவேன்" என்று இடம்பெற்றுள்ளது.

4828 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
மக்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் வீட்டில் தங்கும் முறை நாளையே, தம்முடைய அன்பளிப்புகளை (அவர்களுக்கு) வழங்குவதற்காகத் தேர்ந்தெடுத்துவந்தார்கள். அதன் மூலம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உவப்பைப் பெற விரும்பியே அப்படிச் செய்தனர்.

4829 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் துணைவியர் நபியவர்களின் புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்களை (ஒரு முறை) நபியவர்களிடம் அனுப்பிவைத்தார்கள். ஃபாத்திமா (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களிடம் வந்து, உள்ளே வர அனுமதி கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் என்னுடன் எனது போர்வைக்குள் படுத்திருந்தார்கள். ஃபாத்திமா (ரலி) அவர்களுக்கு உள்ளே வர அனுமதியளித்தார்கள்.
ஃபாத்திமா (ரலி) அவர்கள் (உள்ளே வந்து), "அல்லாஹ்வின் தூதரே! தங்கள் துணைவியர் அபூகுஹாஃபாவின் புதல்வர் (அபூபக்ர்) உடைய மகள் (ஆயிஷா) விஷயத்தில் (தாங்கள் அன்பு காட்டுவதைப் போன்றே பிற துணைவியரிடமும் அன்பு காட்டி) நீதியுடன் நடந்து கொள்ளும்படி கேட்டு என்னைத் தங்களிடம் அனுப்பிவைத்துள்ளார்கள்" என்று கூறினார். நான் அமைதியாக இருந்தேன்.

நபி (ஸல்) அவர்கள், "என் அன்பு மகளே! நான் நேசிப்பதை நீயும் நேசிப்பாய் அல்லவா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "ஆம் (தாங்கள் நேசிப்பதை நானும் நேசிக்கிறேன்)" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் (என்னைக் காட்டி) "அப்படியானால், இவரை நேசிப்பாயாக" என்று கூறினார்கள்.
நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்டு ஃபாத்திமா (ரலி) அவர்கள் எழுந்து, நபி (ஸல்) அவர்களின் துணைவியரிடம் திரும்பிச் சென்று, தாம் நபி (ஸல்) அவர்களிடம் சொன்னதையும் அதற்கு நபி (ஸல்) அவர்கள் அளித்த பதிலையும் தெரிவித்தார்கள்.
அதற்கு நபி (ஸல்) அவர்களின் துணைவியர், எங்களுக்கு நீங்கள் எந்த நன்மையும் செய்து விட்டதாக நாங்கள் கருதவில்லை. ஆகவே, (மீண்டும்) நபி (ஸல்) அவர்களிடம் திரும்பிச் சென்று, "தங்கள் துணைவியார் அபூகுஹாஃபாவின் புதல்வர் (அபூபக்ர்) உடைய மகள்

(ஆயிஷா) விஷயத்தில் நீதியுடன் நடந்துகொள்ளும்படி கேட்கிறார்கள்" என்று கூறுமாறு சொன்னார்கள்.
அதற்கு ஃபாத்திமா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! (இனி) ஆயிஷா (ரலி) அவர்கள் தொடர்பாக நான் நபியவர்களிடம் ஒருபோதும் பேசமாட்டேன்" என்று கூறி (மறுத்து) விட்டார்கள்.
ஆகவே, நபி (ஸல்) அவர்களின் துணைவியர் தங்களில் ஒருவரான ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களை அனுப்பிவைத்தார்கள். ஸைனப் அவர்கள்தான் நபியவர்களின் துணைவியரில் நபியவர்களிடம் அந்தஸ்து பெற்றிருந்த விஷயத்தில் எனக்குப் போட்டியாக இருந்தவராவார். மார்க்க ஈடுபாட்டிலும் இறைவனை அஞ்சி நடப்பதிலும் உண்மை பேசுவதிலும் உறவுகளை அனுசரிப்பதிலும் தாராளமாகத் தானம் வழங்குவதிலும் இறைநெருக்கத்தையும் வாய்மையையும் தரும் நற்செயல்களில் தம்மைத் தீவிரமாக ஈடுபடுத்திக்கொள்வதிலும் ஸைனப் அவர்களைவிடச் சிறந்த ஒரு பெண்ணை நான் ஒருபோதும் கண்டதில்லை. ஆயினும், அவர் விரைவாகக் கோபப்படக்கூடியவராக இருந்தார். அதே வேகத்தில் கோபம் தணியக்கூடியவராகவும் இருந்தார்.

அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து உள்ளே நுழைய அனுமதி கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் போர்வைக்குள் என்னுடன் இருந்தார்கள். ஃபாத்திமா (ரலி) அவர்கள் தம்மிடம் வந்தபோது இருந்த நிலையிலேயே அப்போதும் நபியவர்கள் இருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் ஸைனப் (ரலி) அவர்களுக்கு உள்ளேவர அனுமதியளித்தார்கள்.
ஸைனப் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் அபூகுஹாஃபாவின் புதல்வர் (அபூபக்ர்) உடைய புதல்வி (ஆயிஷா) விஷயத்தில் (அவரிடம் அன்பு காட்டுவதைப் போன்றே தங்களிடமும் அன்புகாட்டி) நீதியுடன் நடந்துகொள்ளுமாறு கேட்டு என்னைத் தங்களிடம் தங்களுடைய துணைவியர் அனுப்பியுள்ளார்கள்" என்று கூறினார்கள்.
பிறகு ஸைனப் என்னை எல்லைமீறி ஏசினார். நான் (அவருக்குப் பதில் சொல்ல) நபி (ஸல்) அவர்கள் எனக்கு அனுமதியளிக்கிறார்களா எனக் காத்திருந்தேன். கண் சாடையாவது செய்கிறார்களா என்று எதிர்பார்த்தேன். ஆனால்,ஸைனப் அவர்கள் தொடர்ந்து ஏசிக்கொண்டேபோக அவருக்கு நான் பதிலடி கொடுப்பதை நபி (ஸல்) அவர்கள் வெறுக்கமாட்டார்கள் என நான் அறிந்து கொண்டேன்.

நான் அவருக்குப் பதில் சொல்ல ஆரம்பித்து, அவரை வாயடைக்கச் செய்ய நீண்ட நேரம் பிடிக்கவில்லை. அப்போது நபி (ஸல்) அவர்கள் புன்னகைத்தபடியே "இவள் அபூபக்ரின் மகளாயிற்றே!" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும், அதில் "நான் அவருக்குப் பதில் சொல்ல ஆரம்பித்து, வெகுவிரைவிலேயே அவரை முற்றாக அடக்கிவிட்டேன்" என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

4830 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மரணப் படுக்கையில் இருந்தபோது) என்னிடம் தங்கும் நாள் தள்ளிப்போவதாக எண்ணிக் கொண்டு, "இன்று நான் எங்கிருப்பேன்? நாளை நான் எங்கிருப்பேன்?" என்று கேட்டுக்கொண்டிருந்தார்கள். எனது முறைநாளில் எனது நுரையீரலு(ள்ள பகுதி)க்கும் காறையெலும்பு(ள்ள பகுதி)க்கும் நடுவில் (அவர்கள் தலை சாய்ந்திருந்த நிலையில்) அவர்களின் உயிரை அல்லாஹ் கைப்பற்றினான்.

4831 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறப்பதற்கு முன்பு அவர்கள் என் நெஞ்சின் மீது தம்மைச் சாய்த்தபடி இருக்க,அவர்கள் (வாய்) பக்கம் நான் காது தாழ்த்திக் கேட்டுக் கொண்டிருந்த போது, அவர்கள் "இறைவா! என்னை மன்னித்து,எனக்குக் கருணை புரிவாயாக! (சொர்க்கத்தில்) என்னை (உயர்ந்த) தோழர்களுடன் சேர்த்தருள்வாயாக" என்று பிரார்த்திப்பதை நான் செவியுற்றேன்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4832 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"உலக வாழ்வு, மறுமை வாழ்வு ஆகிய இரண்டில் தாம் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வாய்ப்பு வழங்கப்படாமல் எந்த இறைத்தூதரும் இறப்பதில்லை" என்று (நபி (ஸல்) அவர்கள் கூறுவதை) நான் செவியுற்று வந்தேன்.
நபி (ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது அவர்களின் தொண்டை கட்டிக்கொண்டுவிட (கம்மிய, கரகரப்பான குரலில்), "அல்லாஹ்வின் அருள் பெற்ற இறைத்தூதர்கள், உண்மையாளர்கள், உயிர்த்தியாகிகள், நல்லவர்கள் ஆகியோருடன் இருப்பார்கள். இவர்கள்தான் மிகச் சிறந்த நண்பர்கள் ஆவர்" (4:69) எனும் இறைவசனத்தைக் கூறுவதை நான் கேட்டேன்.
ஆகவே "இம்மை மறுமை ஆகிய இரண்டிலொன்றைத் தேர்வு செய்யும் வாய்ப்பு இப்போது அவர்களுக்கும் வழங்கப்பட்டுவிட்டது" என்று நான் எண்ணிக்கொண்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4833 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆரோக்கியமானவர்களாய் இருந்தபோது, "சொர்க்கத்தில் தமது இருப்பிடம் காட்டப்பட்டு, பிறகு (இன்னும் சில காலம் உயிர் வாழ்வதற்கு) வாய்ப்பளிக்கப்படாத வரை எந்த இறைத்தூத(ரின் உயி)ரும் கைப்பற்றப் படவில்லை" என்று கூறுவார்கள்.
பிறகு அவர்களுக்கு நோய் கண்டு, அவர்கள் தமது தலையை எனது மடிமீது வைத்திருந்த நிலையில் சிறிது நேரம் மயக்கமுற்றார்கள். பிறகு அவர்களுக்கு மயக்கம் தெளிந்த போது வீட்டின் கூரையை நோக்கி அவர்களின் பார்வை நிலைகுத்தி நின்றது. பிறகு, "இறைவா!

(சொர்க்கத்தில்) உயர்ந்த தோழர்களுடன் (என்னைச் சேர்த்தருள்)" என்று சொன்னார்கள். அப்போது நான், "அவர்கள் (இப்போது) நம்முடன் இருப்பதை விரும்பவில்லை; (மறுமைப் பெருவாழ்வைத் தேர்ந்தெடுத்துக் கொண்டுவிட்டார்கள்)" என்று (மனதிற்குள்) கூறிக்கொண்டேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆரோக்கியமானவர்களாய் இருந்தபோது, "சொர்க்கத்தில் தமது இருப்பிடம் காட்டப்பட்டுப் பிறகு (இன்னும் சில காலம் உயிர் வாழ்வதற்கு) வாய்ப்பளிக்கப்படாத வரை எந்த இறைத்தூத(ரின் உயி)ரும் கைப்பற்றப் படவில்லை" என்று அவர்கள் கூறிய சொல் இதுதான் என நான் புரிந்துகொண்டேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேசிய இறுதி வார்த்தை "அல்லாஹும்மர் ர∴பீக்கல் அ∴லா' (இறைவா! உயர்ந்த தோழர்களுடன் என்னையும் சேர்த்தருள்) என்பதாகவே இருந்தது. இதை அறிஞர்கள் பலர் கூடியிருந்த அவையில் சயீத் பின் அல்முசய்யப், உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) ஆகியோர் அறிவித்தனர்.

4834 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பயணம் மேற்கொள்ள விரும்பினால் தம் துணைவியரிடையே சீட்டுக் குலுக்குவார்கள். (யாருடைய பெயர் வருகிறதோ அவரைத் தம்முடன் அழைத்துச் செல்வார்கள்.) (ஒரு முறை) எனது பெயரும் ஹ∴ப்ஸாவின் பெயரும் (குலுக்கலில்) வந்தன.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் இருவரும் புறப்பட்டுச் சென்றோம். இரவு நேரப் பயணத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னுடன் பேசிக் கொண்டேவருவார்கள். (ஒரு நாள்) ஹ∴ப்ஸா என்னிடம், "இன்றிரவு நீங்கள் எனது ஒட்டகத்தில் பயணம் செய்துபாருங்கள்; நான் உங்களது ஒட்டகத்தில் பயணம் செய்து பார்க்கிறேன்" என்று கேட்டார்கள். நான் "சரி" என்று (சம்மதம்) கூறினேன்.

ஆகவே, நான் ஹ∴ப்ஸாவின் ஒட்டகத்தில் ஏறிக்கொண்டேன்; ஹ∴ப்ஸா எனது ஒட்டகத்தில் ஏறிக்கொண்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நான் முதலில் ஏறிவந்த) எனது ஒட்டகத்தை நோக்கி வந்தார்கள். அதில் ஹ∴ப்ஸா இருந்தார். அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முகமன் (சலாம்) சொன்னார்கள். பிறகு அவருடன் பயணத்தைத் தொடர்ந்தார்கள்.

(பயணத்தின் இடையே) அவர்கள் ஓர் இடத்தில் இறங்கித் தங்கினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் காணாமல் அவர்களை நான் தேடினேன். (தன்மான உணர்வினால்) எனக்கு ரோஷம் ஏற்பட்டது. அவர்கள் இறங்கிய அந்த நேரம் நான் எனது இரு கால்களையும் "இத்கிர்' புற்களுக்கிடையே (புகுத்தி) வைத்துக்கொண்டு, "இறைவா! ஒரு தேளையோ அல்லது பாம்பையோ என்மீது ஏவிவிடு! அது என்னைத் தீண்டட்டும்" என்று சொன்னேன். (இப்படி என்னை நானே கடிந்து கொள்ளத்தான் முடிந்ததே தவிர,) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை (ஹ∴ப்ஸாவுடன் தங்கியதற்காக) என்னால் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4835 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(உலகின் மற்ற) பெண்களைக் காட்டிலும் ஆயிஷாவுக்கு இருக்கும் சிறப்பானது, (மற்ற) உணவுகளைக் காட்டிலும் "ஸரீத்' (தக்கடி) எனும் உணவுக்கு இருக்கும் சிறப்பைப் போன்றதாகும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4836 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ஒரு நாள்) என்னிடம், "(இதோ வானவர்) ஜிப்ரீல் உனக்கு முகமன் (சலாம்) கூறுகிறார்" என்று சொன்னார்கள். நான் "வ அலைஹிஸ் ஸலாம் வ ரஹ்மத் துல்லாஹி" (அவர்மீதும் சாந்தியும் இறைவனின் கருணையும் உண்டாகட்டும்) என்று (பதில் சலாம்) சொன்னேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4837 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு நாள் என்னிடம்) "ஆயிஷ்! இதோ (வானவர்) ஜிப்ரீல் உனக்கு சலாம் உரைக்கின்றார்" என்று சொன்னார்கள். நான் "வ அலைஹிஸ் ஸலாம் வ ரஹ்மத்துல்லாஹி" (அவர்மீதும் சாந்தியும் இறைவனின் கருணையும் உண்டாகட்டும்) என்று (பதில் சலாம்) சொன்னேன். நான் பார்க்க முடியாததை அவர்கள் பார்க்கிறார்கள்.

## பாடம் : 14 "உம்மு ஸர்உ' எனும் பெண்ணைப் பற்றிய செய்தி.

4838 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
((முற்காலத்தில்) பதினொன்று பெண்கள் (ஓரிடத்தில் கூடி) அமர்ந்துகொண்டு ஒவ்வொருவரும் தத்தம் கணவர் குறித்த செய்திகளில் எதையும் மூடிமறைக்காமல் (உள்ளதை உள்ளபடி) உரைப்பதென உறுதிமொழியும் தீர்மானமும் எடுத்துக்கொண்டனர்.
முதலாவது பெண் கூறினார்: என் கணவர் (உயரமான) மலைச் சிகரத்தில் வைக்கப்பட்டுள்ள மிகவும் இளைத்துப்போன ஒட்டகத்தின் இறைச்சிக்கு நிகரானவர். (இளைத்த ஒட்டகத்தின் இறைச்சியாயினும் அதை எடுக்க) மேலே செல்லலாம் என்றால், (அந்த மலைப் பாதை) சுலபமானதாக இல்லை. (சிரமத்தைத் தாங்கி) மேலே ஏற (அது ஒன்றும்) கொழுத்த (ஒட்டகத்தின்) இறைச்சியுமில்லை.
இரண்டாவது பெண் கூறினார்: நான் என் கணவர் பற்றிய செய்திகளை அம்பலப்படுத்தப் போவதில்லை. (அப்படி அம்பலப்படுத்த முயன்றாலும்) அவரைப் பற்றிய செய்திகளை

ஒன்றுகூட விடாமல் சொல்ல முடியுமா என்ற அச்சமும் எனக்கு உண்டு. அவ்வாறு கூறுவதானாலும் அவரது வெளிப்படையான மற்றும் அந்தரங்கமான குற்றங்களைத்தான் கூற வேண்டியதிருக்கும்.

மூன்றாவது பெண் கூறினார்: என் கணவர் மிகவும் உயரமான மனிதர். அவரைப் பற்றி நான் (ஏதேனும்) பேசி (அது அவரது காதுக்கு எட்டி)னால் நான் விவாகரத்துச் செய்யப்பட்டு விடுவேன்; (அதே நேரத்தில் அவரைப் பற்றி எதுவும் பேசாமல்) நான் மௌனமாயிருந்தால் அந்தரத்தில் விடப்படுவேன். (என்னுடன் நல்லபடியாக வாழவுமாட்டார்; என்னை விவாகரத்தும் செய்யமாட்டார்.)

நான்காவது பெண் கூறினார்: என் கணவர் (மக்கா உள்ளிட்ட) "திஹாமா' பகுதியின் இரவு நேரத்தைப் போன்றவர் (இதமானவர்). (அவரிடம்) கடும் வெப்பமும் இல்லை; கடுங்குளிருமில்லை. (அவரைப் பற்றி எனக்கு) அச்சமும் இல்லை; (என்னைப் பற்றி அவரும்) துச்சமாகக் கருதியதுமில்லை.

ஐந்தாவது பெண் கூறினார்: என் கணவர் (வீட்டுக்குள்) நுழைந்தால், சிறுத்தையாகிவிடுவார். வெளியே போனால் சிங்கமாகிவிடுவார். (வீட்டினுள்) தாம் கண்டுபிடித்த (குறைபாடுகள் முதலிய)வை பற்றி எதுவும் கேட்கமாட்டார்.

ஆறாவது பெண் கூறினார்: என் கணவர் உண்டாலும் வாரி வழித்து உண்டுவிடுகிறார். குடித்தாலும் மிச்சம் மீதி வைக்காமல் குடித்துவிடுகிறார். படுத்தாலும் (விலகி) சுருண்டு போய்ப் படுத்துக்கொள்கிறார். என் சஞ்சலத்தை அறிய தம் கையைக்கூட அவர் (என் ஆடைக்குள்) நுழைப்பதில்லை.

ஏழாவது பெண் கூறினார்: என் கணவர் "விவரமில்லாதவர்' அல்லது "ஆண்மையில்லாதவர்'; சற்றும் விவேகமில்லாதவர். எல்லா நோய்களும் (குறைகளும்) அவரிடம் உண்டு. (அவரிடம் பேசினால் உன்னை ஏசுவார். கேலி செய்தால்) உன் தலையைக் காயப்படுத்துவார். (கோபம் வந்துவிட்டால்) உன் உடலைக் காயப்படுத்துவார். அல்லது இரண்டையும் செய்வார்.

எட்டாவது பெண் கூறினார்: என் கணவர் முகர்வதற்கு மரிக்கொழுந்தைப் போன்று மணக்கக்கூடியவர்; தொடுவதற்கு முயலைப் போன்ற (மிருதுவான மேனி உடைய)வர்.

ஒன்பதாவது பெண் கூறினார்: என் கணவர் (அவரை நாடி வருவோரைக் கவரும் வகையில்) உயரமான தூண்(கள் கொண்ட மாளிகை) உடையவர். நீண்ட வாளுறை கொண்ட (உயரமான)வர். (விருந்தினருக்கு சமைத்துப் போட்டு வீட்டு முற்றத்தில்) சாம்பலை நிறைத்து வைத்திருப்பவர். (மக்கள் அவரைச் சந்திப்பதற்கு வசதியாக) சமுதாயக் கூடத்திற்கு அருகிலேயே வீட்டை அமைத்திருப்பவர்.

பத்தாவது பெண் கூறினார்: என் கணவர் செல்வந்தர். எத்துணை பெரும் செல்வந்தர் தெரியுமா? எல்லா செல்வந்தர்களையும்விட மேலான செல்வந்தர். அவரிடம் ஏராளமான ஒட்டகங்கள் உள்ளன. (அவற்றை அறுத்து விருந்தினருக்குப் பரிமாறுவதற்கு வசதியாகப்) பெரும்பாலும் அவை தொழுவங்களிலேயே இருக்கும். (விருந்தினர் வராத சில நாட்களில் மட்டும்) குறைவாகவே மேய்ச்சலுக்கு விடப்படும். (விருந்தினர் வருகையை முன்னிட்டு மகிழ்ச்சியில் ஒலிக்கப்படும்) குழலோசையை அந்த ஒட்டகங்கள் கேட்டுவிட்டால், தாம் அழிந்தோம் என அவை உறுதி செய்துகொள்ளும்.

பதினொன்றாவது பெண் (அவர்தான் உம்மு ஸர்உ) கூறினார்: என் கணவர் (பெயர்) அபூஸர்உ. அபூஸர்உ எத்தகையவர் தெரியுமா? ஆபரணங்களை அவர் என் காதுகளில் ஊஞ்சலாடச் செய்திருக்கிறார். (ஆசையாசையாக உணவளித்து) என் புஜங்களைக் கொழுக்கச் செய்துள்ளார். அவர் என்னைப் பூரிப்படையச் செய்திருக்கிறார். என் மனம் நிறைந்திருக்கிறது. ஒரு மலைக் குகையில் (அல்லது "ஷிக்' எனுமிடத்தில்) சிறிய ஆட்டு மந்தையுடன் (திரிந்துகொண்டு) இருந்த குடும்பத்தில் என்னைக் கண்ட அவர், என்னை (மனைவியாக ஏற்று) குதிரைகளும் ஒட்டகங்களும் உள்ள, தானியக் களஞ்சியமும் கால்நடைச் செல்வங்களின் அரவமும் நிறைந்த (அவரது பண்ணை) வீட்டில் என்னை வாழச் செய்தார்.

நான் அவரிடம் (சுதந்திரமாகப்) பேசுவேன்; நான் அலட்சியப்படுத்தப்பட்டதில்லை. நான் தூங்கினாலும் (நிம்மதியாக) முற்பகல் வரை தூங்குகிறேன். (என் தூக்கத்தை யாரும் கலைப்பதில்லை.) நான் (உண்டாலும்) பருகினாலும் பெருமிதப்படும் அளவுக்கு (உண்ணுகிறேன்) பருகுகிறேன்.

(என் கணவரின் தாயார்) "உம்மு அபீஸர்உ' எத்தகையவர் தெரியுமா? அவரது வீட்டுத் தானியக் களஞ்சியம் (எப்போதும்) கனமாகவே இருக்கும். அவரது வீடு விசாலமானதாகவே இருக்கும்.

(என் கணவரின் புதல்வர்) "இப்னு அபீ ஸர்உ' எத்தகையவர் தெரியுமா? அவரது படுக்கை உருவப்பட்ட கோரையைப் போன்று (அல்லது உறையிலிருந்து எடுக்கப்பட்ட வாளைப் போன்று மெல்லியதாக) இருக்கும். (கச்சிதமான உடலமைப்பு உள்ளவர்.) ஓர் ஆட்டுக் குட்டியின் சப்பை (இறைச்சி) அவரது வயிறை நிறைத்துவிடும். (அந்த அளவுக்குக் குறைவாக உண்ணுபவர்.)

(என் கணவரின் புதல்வி) பின்த் அபீஸர்உ எத்தகையவர் தெரியுமா? தம் தாய் தந்தைக்கு அடங்கி நடப்பவர். (கட்டான உடல்வாகு கொண்ட) அவரது ஆடை நிறைவானதாக இருக்கும். அண்டை வீட்டுக்காரி அவரைக் கண்டு பொறாமை கொள்வாள்.

(என் கணவர்) அபூஸர்உ உடைய பணிப்பெண் எத்தகையவர் தெரியுமா? அவள் எங்கள் (இரகசியச்) செய்திகளை அறவே வெளியிடுவதில்லை. வீட்டிலுள்ள உணவுப் பொருட்களைச் சேதப்படுத்துவதுமில்லை. வீட்டில் குப்பைகூளங்கள் சேர விடுவதுமில்லை. (அவ்வளவு நம்பிக்கையானவள்; பொறுப்பு மிக்கவள்; தூய்மை விரும்பி.)

(ஒரு நாள்) பால் பாத்திரங்களில் (மோர் கடைந்து) வெண்ணெய் எடுக்கப்படும் (வசந்த கால அதிகாலை) நேரம் (என் கணவர்) "அபூஸர்உ' வெளியே சென்றார். (வழியில்) ஒரு பெண்ணைச் சந்தித்தார். அவளுடன் சிறுத்தைகள் போன்ற அவளுடைய இரு குழந்தைகள் இருந்தன. அந்தக் குழந்தைகள் அவளது இடுப்புக்குக் கீழே (மடியில்) இருந்து இரு மாதுளங்கனிகளைத் தொட்டு விளையாடிக்கொண்டிருந்தனர். ஆகவே, (அவளது கட்டழகில் மனதைப் பறி கொடுத்து) என்னை மணவிலக்குச் செய்துவிட்டு, அவளை மணமுடித்துக் கொண்டார்.

அவருக்குப் பின்னர் இன்னொரு நல்ல மனிதருக்கு நான் வாழ்க்கைப்பட்டேன். அவர் அதி விரைவாகச் செல்லும் குதிரையில் ஏறி, (பஹ்ரைன் நாட்டிலுள்ள) "கத்து' எனும் இடத்தைச் சேர்ந்த ஈட்டியொன்றைப் பிடித்துக்கொண்டு புறப்பட்டுச் சென்றார். மாலையில் வீடு

திரும்பியபோது, ஏராளமான கால்நடைகளை என்னிடம் கொண்டுவந்தார். ஒவ்வொரு கால்நடையிலிருந்தும் ஒரு ஜோடியை எனக்கு வழங்கினார். "(இவற்றை அறுத்து) உம்மு ஸர்உவே! (நன்றாக) நீயும் சாப்பிடு; உன் தாய் வீட்டாருக்கும் சாப்பிடக் கொடு" என்றார்.

(ஆனாலும்) அவர் எனக்கு (அன்புடன்) வழங்கிய அனைத்துப் பொருள்களையும் ஒன்றாய்க் குவித்தாலும், (என் முதல் கணவரான) அபூஸர்உவின் சின்னஞ்சிறு பாத்திரத்தின் அந்தஸ்தைக் கூட அவை எட்டா.

(ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:) (என்னருமைக் கணவரான) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "(ஆயிஷாவே!) உம்மு ஸர்வுக்கு அபூஸர்உ எப்படியோ அப்படியே உனக்கு நானும் (சிறிதைக் கொடுத்தாலும் சிறப்பாகக் கொடுக்கும் அன்பான கணவராக) இருப்பேன்" என்றார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், ஏழாவது பெண் "(என் கணவர்) ஆண்மையில்லாதவர்" என்று மட்டும் கூறியதாக இடம் பெற்றுள்ளது; (அல்லது விவரமில்லாதவர் எனும்) ஐயப்பாடு இடம்பெறவில்லை.

(அபூஸர்உவின் புதல்வி குறித்து) "அவள் மேலாடை வெறுமையானவள்; (அவளுடைய கணவரின்) துணைவியரிலேயே மேலானவள்; அவளுடைய சக்களத்தியரை மலடியாக்கி விட்டாள்" என்று காணப்படுகிறது.

(அபூஸர்உவின் பணிப்பெண் குறித்து) "அவள் (உணவுப் பொருட்களை) சேதப்படுத்துவதில்லை" என்பதைக் குறிக்க ("வலா துனக்கிஸு" என்பதற்குப் பதிலாக) "வலா தன்குஸு மீரத்தனா தன்கீஸா" என்று காணப்படுகிறது.

"(என் இரண்டாம் கணவர்) இறைச்சிக்காக அறுக்கப்படும் ஒவ்வொரு கால்நடையிலிருந்தும் ஒரு ஜோடியை எனக்கு வழங்கினார்" என்று "உம்மு ஸர்உ" கூறியதாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 15 நபி (ஸல்) அவர்களின் புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்களின் சிறப்புகள்.**

4839 மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி, "ஹிஷாம் பின் அல்முஃகீரா கோத்திரத்தார், தங்கள் (உறவினரான அபூ ஜஹ்லுடைய) மகளை அலீ பின் அபீதாலிப் அவர்களுக்கு மணமுடித்துவைக்க (என்னிடம்) அனுமதி கோரினர். அவர்களுக்கு நான் அனுமதியளிக்க மாட்டேன். மீண்டும் அவர்களுக்கு நான் அனுமதியளிக்க மாட்டேன். மீண்டும் அவர்களுக்கு நான் அனுமதியளிக்க மாட்டேன். (எத்தனை முறை கேட்டாலும் அனுமதியளிக்க மாட்டேன்.)

அலீ பின் அபீதாலிப் அவர்கள் என் மகளை (ஃபாத்திமாவை) மணவிலக்குச் செய்துவிட்டு, அவர்களுடைய மகளை மணமுடித்துக்கொள்ள விரும்பினாலே தவிர (அவர்களுக்கு நான் அனுமதி வழங்கமாட்டேன்). என் மகள் (ஃபாத்திமா),என்னில் ஒரு பகுதியாவார். அவரை வெறுப்படையச் செய்வது என்னை வெறுப்படையச் செய்வதாகும். அவரை மனவேதனைப் படுத்துவது என்னை மனவேதனைப்படுத்துவதாகும்" என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4840 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(என் மகள்) ஃபாத்திமா என்னில் ஒரு பகுதியாவார்; அவரை மனவேதனைப்படுத்துவது என்னை மனவேதனைப்படுத்துவதாகும்.
இதை மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4841 அலீ பின் அல்ஹுசைன் (ஸைனுல் ஆபிதீன் – ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (எங்கள் தந்தை) ஹுசைன் பின் அலீ (ரலி) அவர்கள் கொல்லப்பட்ட காலத்தில் யஸீத் பின் முஆவியாவைச் சந்தித்துவிட்டு, மதீனாவுக்கு வந்தோம். அங்கு என்னை மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்கள் சந்தித்தார்கள்.
அப்போது அவர்கள், "என்னிடம் தங்களுக்குத் தேவை ஏதுமிருக்கிறதா? அதை நிறைவேற்றிட எனக்குக் கட்டளையிடுகிறீர்களா? (நான் நிறைவேற்றித்தர ஆயத்தமாயிருக்கிறேன்)" என்று கேட்டார்கள். நான் அவர்களிடம், "அப்படி ஏதுமில்லை" என்று பதிலளித்தேன்.
மிஸ்வர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வாளை என்னிடம் கொடுக்கிறீர்களா? ஏனெனில்,அந்த (பனூ உமய்யா) கூட்டத்தார் தமது அதிகாரத்தைப் பயன்படுத்தி உங்களிடமிருந்து அந்த வாளைப் பறித்துக்கொள்வார்களோ என்று நான் அஞ்சுகிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் அதை என்னிடம் கொடுத்தால் என் உயிர் போகும்வரை ஒருபோதும் அது அவர்களிடம் போய்ச் சேராது" என்று கூறினார்கள். (பிறகு பின்வரும் சம்பவத்தை விவரிக்கலானார்கள்:)
ஃபாத்திமா (ரலி) அவர்கள் (தம் துணைவியாக) இருக்கும்போதே, அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் அபூஜஹ்லுடைய மகளை (மணந்து கொள்ளப்) பெண் பேசினார்கள். (இது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் காதுக்கு எட்டிய போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அது குறித்து மக்களிடம் தமது இந்த மிம்பரில் (நின்றபடி) உரையாற்றியதை நான் செவியுற்றேன். –அப்போது நான் பருவவயதை அடைந்து விட்டிருந்தேன்.–
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(என் மகள்) ஃபாத்திமா என்னில் ஒரு பகுதியாவார். அவர் தனது மார்க்க விவகாரத்தில் சோதனைக்குள்ளாக்கப்படுவார் என்று நான் அஞ்சுகிறேன்" என்று கூறிவிட்டு, பனூ அப்தி ஷம்ஸ் குலத்தைச் சேர்ந்த தம்முடைய மருமகன் ஒருவரை ("அபுல்ஆஸ் பின் ரபீஆ') பற்றிக் குறிப்பிட்டார்கள்; அவர் (அவருடைய மாமனாரான) தம்முடன் நல்ல மருமகனாக நடந்துகொண்டதைப் பாராட்டினார்கள்: அப்போது அவர்கள், "அவர் என்னிடம் பேசினார். (பேசியபடி) வாய்மையுடன் நடந்து கொண்டார். எனக்கு வாக்குறுதியளித்தார்; அதை எனக்கு நிறைவேற்றித்தந்தார்.
மேலும், நான் அனுமதிக்கப்பட்ட ஒன்றை தடை செய்யக்கூடியவன் அல்லன்; தடை செய்யப் பட்ட ஒன்றை அனுமதிக்கக்கூடியவனும் அல்லன். (அலீ இரண்டாவது பெண்ணை மணந்து கொள்வதை நான் தடுக்க முடியாது.)
ஆயினும், அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதரின் மகளும் இறை விரோதியின் (அபூ ஜஹ்லின்) மகளும் ஒரே இடத்தில் (ஒரே நபருடைய மணபந்தத்தில்) ஒருபோதும் ஒன்றுசேர முடியாது" என்று கூறினார்கள்.

4842 மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்கள் தம்மிடம் (மனைவியாக) இருக்கவே, அபூஜஹ்லுடைய மகளை (இரண்டாம் தாரமாக மணம் புரிந்துகொள்ள)ப் பெண் பேசினார்கள்.
அதைப் பற்றிக் கேள்விப்பட்ட ஃபாத்திமா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "(தந்தையே!) நீங்கள் உங்களுடைய புதல்வியருக்காக (அவர்கள் மனவேதனைக்கு உள்ளாக்கப்படும்போது) கோபப்படமாட்டீர்கள் என்று உங்கள் சமுதாயத்தார் பேசிக்கொள்கின்றனர். இதோ (உங்கள் மருமகன்) அலீ அபூஜஹ்லுடைய மகளை மணக்கவிருக்கிறார்" என்று சொன்னார்கள்.

இதையொட்டி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உரையாற்ற) எழுந்தார்கள்.
அவர்கள் ஏகத்துவ உறுதிமொழி கூறி (இறைவனைப் புகழ்ந்து)விட்டு, "இறைவாழ்த்துக்குப் பின்! (என் மூத்த மகள் ஸைனபை) அபுல்ஆஸ் பின் அர்ரபீஉக்கு நான் மணமுடித்து வைத்தேன். அவர் என்னிடம் (தம் மனைவியை மதீனாவுக்கு அனுப்பிவைப்பதாக வாக்களித்துப்) பேசினார்; (பேசியபடி) வாய்மையுடன் நடந்துகொண்டார். முஹம்மதின் மகள் ஃபாத்திமா என்னில் ஒரு பகுதியாவார். (அபூஜஹ்லின் குடும்பத்தாராகிய) அவர்கள் என் மகளை (அவருடைய மார்க்க விஷயத்தில்) குழப்பிவிடுவதையே நான் வெறுக்கிறேன்.
அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதருடைய மகளும் அல்லாஹ்வின் பகைவனுடைய மகளும் ஒரே மனிதரிடம் (அவரது மணபந்தத்தில்) ஒருபோதும் ஒன்றுசேர முடியாது" என்று கூறியதை நான் கேட்டேன்.
பிறகு அலீ (ரலி) அவர்கள் (அபூஜஹ்லுடைய மகளைப்) பெண் பேசுவதை (தொடராமல்) விட்டு விட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4843 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மரணப்படுக்கையில் இருந்தபோது) தம் புதல்வி ஃபாத்திமாவை அழைத்து,அவரிடம் ஏதோ இரகசியமாகச் சொன்னார்கள். அதைக் கேட்டு ஃபாத்திமா அழுதார். மீண்டும் ஏதோ இரகசியமாகச் சொன்னார்கள். (அதைக் கேட்டவுடன்) ஃபாத்திமா சிரித்தார்.
நான் ஃபாத்திமாவிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களிடம் ஏதோ இரகசியமாகச் சொல்ல, அதைக் கேட்டு நீங்கள் அழுதீர்கள். பிறகு உங்களிடம் ஏதோ இரகசியமாகச் சொன்னார்கள். அப்போது நீங்கள் சிரித்தீர்களே,அது என்ன?" என்று கேட்டேன்.
அதற்கு ஃபாத்திமா, "என்னிடம் இரகசியமாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இந்த நோயிலேயே) தாம் இறக்கவிருப்பதாகத் தெரிவித்தார்கள். ஆகவே, நான் அழுதேன். பிறகு அவர்களின் குடும்பத்தாரில் முதலாவதாக அவர்களைத் தொடர்ந்து (இறைவனிடம்) செல்லவிருப்பது நான்தான் என்று இரகசியமாகச் சொன்னார்கள். அதனால் நான் (மகிழ்ச்சியடைந்து) சிரித்தேன்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4844 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவர்கூட விடுபடாமல் அனைவரும் நபி (ஸல்) அவர்(களின் இறப்பு நெருங்கியபோது அவர்)களுக்கு அருகில் இருந்தோம். அப்போது (நபியவர்களின் புதல்வி) ஃபாத்திமா (ரலி) அவர்கள் நடந்துவந்தார்கள். அவரது நடை சிறிதும் பிசகாமல் அப்படியே நபி (ஸல்) அவர்களின் நடையைப் போன்றே இருந்தது.
ஃபாத்திமாவைக் கண்டதும் நபி (ஸல்) அவர்கள், "என் மகளே! வருக!" என்று வரவேற்றார்கள். பிறகு அவரை "தமது வலப் பக்கத்தில்' அல்லது "இடப் பக்கத்தில்' அமர்த்திக்கொண்டார்கள். பிறகு அவரிடம் ஏதோ இரகசியமாகச் சொன்னார்கள். அதைக் கேட்டபோது ஃபாத்திமா பலமாக அழுதார். அவருடைய பதற்றத்தைக் கண்ட நபி (ஸல்) அவர்கள் இரண்டாவது முறையாக அவரிடம் ஏதோ இரகசியமாகச் சொன்னார்கள். அப்போது அவர் சிரித்தார்.

அப்போது அவரிடம் நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் துணைவியரை விட்டுவிட்டு உங்களிடம் மட்டும் ஏதோ இரகசியமாகச் சொன்னார்கள். பிறகு நீங்கள் அழுதீர்களே?" என்று கேட்டேன்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்தபோது ஃபாத்திமாவிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களிடம் என்ன சொன்னார்கள்?" என்று கேட்டேன். அதற்கு ஃபாத்திமா, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரகசியமாகச் சொன்னதை நான் வெளிப்படுத்த விரும்பவில்லை" என்று கூறிவிட்டார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்தபோது ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் நான், "உங்கள்மீது எனக்குள்ள உரிமையை முன்வைத்து நம்பிக்கையுடன் கேட்கிறேன். அந்த இரகசியம் என்னவென்று நீங்கள் சொல்லியே ஆகவேண்டும்" என்றேன். ஃபாத்திமா, "சரி! இப்போது (அதைத் தெரிவிக்கிறேன்)" என்று கூறிவிட்டுப் பின்வருமாறு தெரிவித்தார்:
முதலாவது முறை என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரகசியம் சொன்னபோது (பின்வருமாறு) கூறினார்கள்: எனக்கு (வானவர்) ஜிப்ரீல் ஒவ்வோர் ஆண்டும் ஓரிரு முறை குர்ஆனை ஓதிக்காட்(டி நினைவூட்)டுவார். ஆனால், அவர் இந்த முறை இரண்டு தடவை ஓதிக் காட்டினார். (இதிலிருந்து) என் இறப்பு நெருங்கிவிட்டதாகவே நான் கருதுகிறேன். ஆகவே, நீ அல்லாஹ்வை அஞ்சிக்கொள். பொறுமையுடன் இரு. நான் உனக்கு முன்னால் நல்லபடியாக (இவ்வுலகைவிட்டு) சென்றுவிடுவேன்.
ஆகவேதான், உங்கள் முன்னிலையில் நான் அவ்வாறு அழுதேன். எனது பதற்றத்தைக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரண்டாவது முறையாக, "ஃபாத்திமா! "இறைநம்பிக்கையுள்ள பெண்களுக்கு' அல்லது "இந்தச் சமுதாயத்தின் பெண்களுக்கு' தலைவியாக இருக்க நீ விரும்பவில்லையா?" என்று இரகசியமாகக் கேட்டார்கள். ஆகவேதான், உங்கள் முன்னிலையில் அவ்வாறு சிரித்தேன்.

4845 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவர்கூட விடுபடாமல் (நாங்கள்) அனைவரும் (நபி (ஸல்) அவர்களுக்கு இறப்பு நெருங்கிக்கொண்டிருந்தபோது) அவர்களுக்கு அருகில் இருந்தோம்.

அப்போது ஃபாத்திமா (ரலி) அவர்கள் (தம் தந்தையை நோக்கி) நடந்துவந்தார். அவரது நடை அப்படியே நபி (ஸல்) அவர்களின் நடையைப் போன்றே இருந்தது. அப்போது நபி (ஸல்) அவர்கள், "வருக! என் மகளே!" என்று அழைத்து,தமக்கு வலப் பக்கத்தில் அல்லது இடப் பக்கத்தில் அமர்த்திக்கொண்டார்கள்.
பிறகு ஃபாத்திமாவிடம் இரகசியமாக ஏதோ ஒரு விஷயத்தைச் சொன்னார்கள். அதைக் கேட்டதும் ஃபாத்திமா அழுதார். பிறகு அவரிடம் இரகசியமாக ஏதோ (இன்னொரு விஷயத்தைச்) சொன்னார்கள். அதைக் கேட்டதும் அவர் சிரித்தார். நான் அவரிடம் "ஏன் அழுதீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்ன இரகசியத்தை நான் வெளிப்படுத்த விரும்பவில்லை" என்று கூறினார்.
அப்போது நான், "இன்றைய தினத்தைப் போன்று துக்கம் அண்டிய ஒரு மகிழ்ச்சியை (எப்போதும்) நான் பார்த்ததில்லை"என்று சொல்லிவிட்டு, அழுதுகொண்டிருந்த அவரிடம், "எங்களை விட்டு உங்களிடம் மட்டும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏதோ சொன்னார்கள். (அதைக் கேட்டு) பிறகு நீங்கள் அழுகிறீர்களே! (அப்படி) அவர்கள் என்ன சொன்னார்கள்?" என்று (மீண்டும்) கேட்டேன்.

அப்போதும் அவர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரகசியமாகச் சொன்னதை நான் வெளிப்படுத்த விரும்பவில்லை" என்று கூறிவிட்டார்.
இறுதியில் நபி (ஸல்) அவர்கள் இறந்தபின் ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் அது குறித்துக் கேட்டேன். அப்போது அவர்கள் கூறினார்கள்: நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "(வானவர்) ஜிப்ரீல் என்னை ஒவ்வோர் ஆண்டும் ஒரு முறை குர்ஆனை ஓதச் செய்துவந்தார். இந்த ஆண்டு மட்டும் என்னை இரு முறை ஓதச் செய்தார். என் வாழ்நாள் முடிவடையும் நேரம் வந்துவிட்ட(தைக் குறிப்ப)தாகவே அதை நான் கருதுகிறேன். என் குடும்பத்தாரில் என்னை முதலில் வந்தடையப்போவது நீதான். நான் உனக்கு முன்னால் நல்லபடியாக (இவ்வுலகை விட்டு) சென்றுவிடுவேன்" என்று கூறினார்கள். ஆகவே, நான் அழுதேன்.
பிறகு என்னிடம் "இறைநம்பிக்கையுள்ள பெண்களுக்கு' அல்லது "இந்தச் சமுதாயத்தின் பெண்களுக்கு'த் தலைவியாக இருக்க நீ விரும்பவில்லையா என்று இரகசியமாகக் கேட்டார்கள். அதற்காக நான் சிரித்தேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 16 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை உம்மு சலமா (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4846 அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சல்மான் அல்ஃபாரிசீ (ரலி) அவர்கள், "உங்களால் இயன்றால் கடைத்தெருவுக்குள் நுழையும் முதல் ஆளாகவும் அதைவிட்டு வெளியேறும் இறுதி ஆளாகவும் இருக்காதீர்கள். ஏனெனில், கடைத்தெருவே ஷைத்தானின் போர்க்களமாகும். அங்குதான் ஷைத்தான் (முகாமிட்டு) தனது சேனையின் கொடியை நட்டுவைக்கிறான்" என்று கூறினார்கள்.
இந்தத் தகவல் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அபூஉஸ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது: மேலும் (பின்வருமாறும்) எனக்குச் செய்தி எட்டியது:

நபி (ஸல்) அவர்களிடம் (அவர்களுடைய துணைவி) உம்மு சலமா (ரலி) அவர்கள் இருந்தபோது, (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் (ஒரு மனிதரின் தோற்றத்தில்) நபி (ஸல்) அவர்களிடம் வந்து பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு எழுந்து (சென்று)விட்டார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் உம்மு சலமா (ரலி) அவர்களிடம் "இவர் யார் (தெரியுமா)?" என்றோ, அல்லது இது போன்ற வேறொரு வார்த்தையைக் கூறியோ கேட்டார்கள். உம்மு சலமா (ரலி) அவர்கள், "இவர் (தங்களுடைய தோழர்) திஹ்யா" என்று பதிலளித்தார்கள். (நபி (ஸல்) அவர்கள் ஏதும் கூறாமல் எழுந்து சென்றுவிட்டார்கள்.)
உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! நபி (ஸல்) அவர்கள், நாங்கள் பேசிக்கொண்ட விஷயம் குறித்து (மக்களிடையே) நிகழ்த்திய உரையை நான் செவியுறும் வரை அ(ப்போது வந்த)வர் திஹ்யா (ரலி) அவர்கள்தான் என்றே நினைத்திருந்தேன். (அந்த உரையைக் கேட்ட பின்புதான் அவர் திஹ்யாவின் உருவில் வந்த வானவர் ஜிப்ரீல் என்று நான் விளங்கிக்கொண்டேன்.)
(அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுலைமான் பின் தர்கான் அத்தைமீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (இந்தச் செய்தியை எனக்கு அறிவித்த) அபூஉஸ்மான் (ரஹ்) அவர்களிடம், "இந்த ஹதீஸைத் தாங்கள் யாரிடமிருந்து செவியுற்றீர்கள்?" என்று கேட்டேன். அவர்கள், "உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களிடமிருந்து" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 17 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஸைனப் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4847 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியரான எங்களிடம்), "(என் மரணத்திற்குப்பின்) உங்களில் கை நீளமானவரே என்னிடம் முதலில் வந்து சேருவார்" என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியர் (ஒரு குச்சியை எடுத்து), தங்களில் கை நீளமானவர் யார் என்று அளந்துபார்க்கலாயினர். (உண்மையில்) எங்களில் ஸைனப் (ரலி) அவர்களே கை நீளமானவராய் இருந்தார். ஏனெனில், அவர்தான் கைத்தொழில் செய்து, (அதிகமாக) தர்மம் செய்யக்கூடியவராக இருந்தார்.

## பாடம் : 18 உம்மு அய்மன் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4848 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உம்மு அய்மன் (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்திற்குச்) சென்றார்கள். அவர்களுடன் நானும் சென்றேன்.
உம்மு அய்மன் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு பாத்திரத்தைக் கொடுத்தார்கள். அதில் ஏதோ குடிபானம் இருந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் நோன்பாளியாக இருப்பதைக் கண்டார்களோ, அல்லது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அ(ந்தப் பானத்)தை விரும்பவில்லையோ தெரியவில்லை. (அதை அவர்கள் பருக மறுத்துவிட்டார்கள்.)

அதற்காக உம்மு அய்மன் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை உரத்த குரலில் கோபமாகக் கடிந்துகொண்டார்கள்.

4849 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் இறப்புக்குப்பின் (கலீஃபா) அபூபக்ர் (ரலி) அவர்கள் உமர் (ரலி) அவர்களிடம், "நம்மை (அம்மையார்) உம்மு அய்மன் (ரலி) அவர்களிடம் அழைத்துச் செல்லுங்கள். அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சந்தித்துவந்ததைப் போன்று நாமும் சந்தித்துவருவோம்" என்று கூறினார்கள்.
அவ்வாறே உம்மு அய்மன் (ரலி) அவர்களிடம் நாங்கள் சென்றபோது அவர்கள் அழுதார்கள். அப்போது அவர்கள் இருவரும், "ஏன் அழுகிறீர்கள்? (நம்மிடம் இருப்பதைவிட) அல்லாஹ்விடம் இருப்பது அவனுடைய தூதர் (ஸல்) அவர்களுக்குச் சிறந்ததாயிற்றே?" என்று கேட்டார்கள்.
அதற்கு உம்மு அய்மன் (ரலி) அவர்கள், "அல்லாஹ்விடம் இருப்பது அவனுடைய தூதர் (ஸல்) அவர்களுக்குச் சிறந்ததாகும் என்பதை நான் அறியாமல் அழவில்லை. மாறாக, (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் இறப்போடு) வானிலிருந்து இறைச் செய்தி (வஹீ) வருவது நின்றுவிட்டதே! (அதற்காகத் தான் அழுகிறேன்)" என்று கூறி, அவர்கள் இருவரையும் அழச்செய்துவிட்டார்கள். அவருடன் சேர்ந்து அவர்கள் இருவருமே அழலாயினர்.

## பாடம் : 19 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களின் தாயார் உம்மு சுலைம் (ரலி), பிலால் (ரலி) ஆகியோரின் சிறப்புகள்.

4850 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்களைத் தவிர, தம் துணைவியரல்லாத வேறெந்த (அந்நியப்) பெண்களிடமும் (அவர்களது இல்லங்களுக்குச்) செல்லமாட்டார்கள். என் தாயாரின் இல்லத்திற்கு மட்டுமே செல்வார்கள்.
நபியவர்களிடம் இது குறித்துக் கேட்கப்பட்டபோது, "நான் உம்மு சுலைமிடம் பரிவு காட்டுகிறேன். அவருடைய சகோதரர் (ஹராம் பின் மில்ஹான் – ரலி) என்னு(டைய பிரசாரப் படையினரு)டன் இருந்தபோது, (பிஃரு மஊனா எனுமிடத்தில்) கொல்லப்பட்டார்" என்று சொன்னார்கள்.

4851 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் (கனவில்) சொர்க்கத்தில் நுழைந்தேன். அங்கு ஒரு காலடிச் சப்தத்தைக் கேட்டேன். அப்போது "இது யார்?" என்று கேட்டேன். அ(ங்கிருந்த வான)வர்கள், "இவர்தான் அனஸ் பின் மாலிக் அவர்களின் தாயார் ஃகுமைஸா பின்த் மில்ஹான்" என்று பதிலளித்தனர்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4852 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனக்கு (கனவில்) சொர்க்கம் காட்டப்பட்டது. அங்கு நான் அபூதல்ஹா அவர்களின் துணைவியாரை (உம்மு சுலைமை)க் கண்டேன். பிறகு எனக்கு முன்னால் மெல்லிய

காலடியோசையைச் செவியுற்றேன். அங்கு (யார் என்று பார்த்தபோது) பிலால் அவர்கள் இருந்தார்கள்.

## பாடம் : 20 அபூதல்ஹா அல்அன்சாரீ (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4853 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்களுக்கு (அவர்களின் இரண்டாவது கணவர்) அபூதல்ஹா (ரலி) அவர்கள் மூலம் பிறந்த மகனொருவர் இறந்துவிட்டார். அப்போது உம்மு சுலைம் (ரலி) அவர்கள் தம் குடும்பத்தாரிடம், "(என் கணவர்) அபூதல்ஹா (ரலி) அவர்களிடம், அவருடைய மகன் (இறந்ததைப்) பற்றி நானாகச் சொல்லாத வரையில் நீங்கள் சொல்ல வேண்டாம்" என்று கூறினார்கள். (வெளியூர் சென்றிருந்த) அபூதல்ஹா (ரலி) அவர்கள் (வீட்டுக்கு) வந்தபோது, அவருக்கு அருகில் என் தாயார் இரவு உணவை வைத்தார்கள். அபூதல்ஹா (ரலி) அவர்கள் உணவை உண்டார்கள்; பருகினார்கள்.
பிறகு உம்மு சுலைம் (ரலி) அவர்கள் (துயரத்தை மறைத்துக்கொண்டு) முன்பு எப்போதும் அலங்கரித்துக் கொள்வதைவிட அழகாகத் தம் கணவருக்காகத் தம்மை அலங்காரம் செய்துகொண்டார்கள். பிறகு இருவரும் தாம்பத்திய உறவில் ஈடுபட்டனர்.

கணவரின் பசி அடங்கி, தம்மிடம் (தேவையானதை) அனுபவித்துக்கொண்டதைக் கண்ட போது, "அபூதல்ஹா அவர்களே! ஒரு கூட்டத்தார் தம் பொருட்களை ஒரு வீட்டாரிடம் இரவலாகக் கொடுத்திருந்து, பிறகு அவர்கள் தாம் இரவலாகக் கொடுத்துவைத்திருந்த பொருட்களைத் திரும்பத்தருமாறு கேட்கும்போது அவர்களிடம் (திருப்பித் தரமுடியாது என) மறுக்கும் உரிமை அவ்வீட்டாருக்கு உண்டா?" என்று கேட்டார்கள். அதற்கு அபூதல்ஹா (ரலி) அவர்கள், "இல்லை" என்று கூறினார்கள்.
உம்மு சுலைம் (ரலி) அவர்கள் (அபூதல்ஹா (ரலி) அவர்களிடம்), "அவ்வாறாயின், தங்கள் மகனுக்காக (அல்லாஹ்விடம்) நன்மையை எதிர்பாருங்கள்" என்று கூறினார்கள். (தம்முடைய மகன் இறந்துவிட்டதைப் புரிந்துகொண்ட) அபூதல்ஹா (ரலி) அவர்கள் கோபப்பட்டார்கள். "நான் (இன்பத்தில்) தோய்ந்திருக்கும்வரை (இதைப் பற்றி என்னிடம் சொல்லாமல்) விட்டுவிட்டு, இப்போது என் மகனைப் பற்றிச் சொல்கிறாயே!" என்று கூறினார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, நடந்ததை அவர்களிடம் தெரிவித்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கடந்த இரவில் (நிகழ்ந்த உறவில்) அல்லாஹ் உங்கள் இருவருக்கும் வளம் புரிவானாக!" என்று சொன்னார்கள். பின்னர் உம்மு சுலைம் (ரலி) அவர்கள் கர்ப்பமுற்றார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தார்கள். அவர்களுடன் உம்மு சுலைம் (ரலி) அவர்களும் இருந்தார்கள். (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தை முடித்துக்கொண்டு மதீனாவுக்கு வந்தால் இரவு நேரத்தில் தமது வீட்டுக்குச் செல்ல மாட்டார்கள்) அவ்வழக்கப்படியே அவர்கள் மதீனாவை நெருங்கியபோது உம்மு சுலைம் (ரலி) அவர்களுக்குப் பிரசவ வலி வந்துவிட்டது. இதனால் ஊருக்குள் செல்ல முடியாமல் அபூ தல்ஹா (ரலி) அவர்கள் தடுக்கப்பட்டார்கள்.

இந்நிலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனா) சென்றார்கள். அப்போது அபூதல்ஹா (ரலி) அவர்கள், "என் இறைவா! உன் தூதர் (ஸல்) அவர்கள் (ஊரிலிருந்து) புறப்பட்டுச் செல்லும்போது அவர்களுடன் நானும் புறப்பட்டுச் செல்வதும், அவர்கள் திரும்பி (ஊருக்குள்) நுழையும்போது அவர்களுடன் நானும் நுழைவதும்தான் எனக்கு விருப்பமானது என்பதை நீ அறிவாய். ஆனால், (இப்போது) நான் ஊருக்குள் செல்ல முடியாமல் தடுக்கப்பட்டுவிட்டேன். இதை நீயே பார்க்கிறாய்" என்று பிரார்த்தித்தார்கள்.

அப்போது உம்மு சுலைம் (ரலி) அவர்கள், "அபூதல்ஹா அவர்களே! நான் உணர்ந்துவந்த (வலி) எதையும் (இப்போது) நான் உணரவில்லை" என்று கூறிவிட்டு, "நீங்கள் செல்லுங்கள்" என்று கூறினார்கள். அவ்வாறே நாங்கள் சென்றோம்.

அவ்விருவரும் ஊருக்குள் நுழைந்தபோது என் தாயாருக்கு (மீண்டும்) பிரசவ வலி ஏற்பட்டு, அவர் ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தார். அப்போது என்னிடம் என் தாயார், "அனஸே! இந்தக் குழந்தையை நீ காலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுசெல்லும் வரையில் அவனுக்கு யாரும் பாலூட்டிவிட வேண்டாம்" என்று கூறினார்கள்.

அவ்வாறே காலை நேரமானதும், நான் குழந்தையைத் தூக்கிக்கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அடையாளமிடும் கருவியுடன் (தமது ஒட்டகத்திற்கு அடையாளமிட்டுக்கொண்டு) இருப்பதை நான் கண்டேன்.

என்னை அவர்கள் கண்டதும், "உம்மு சுலைமுக்குக் குழந்தை பிறந்துவிட்டது போலும்!" என்றார்கள். நான் "ஆம்' என்றேன். உடனே அவர்கள் அடையாளமிடும் கருவியை (கீழே) வைத்து விட்டார்கள். நான் குழந்தையைக் கொண்டுபோய் அவர்களது மடியில் வைத்தேன்.

அப்போது அவர்கள் மதீனாவின் (உயர் ரகப் பேரீச்சம் பழமான) "அஜ்வா'க்களில் ஒன்றைக் கொண்டுவரச் சொல்லி,அதைத் தமது வாயிலிட்டு நன்றாக மென்று கூழாக்கி, குழந்தையின் வாயில் இட்டார்கள். குழந்தை நாக்கைச் சுழற்றி அதைச் சுவைக்கலாயிற்று.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அன்சாரிகளுக்குப் பேரீச்சம் பழத்தின் மீதுள்ள விருப்பத்தைப் பாருங்கள்" என்று கூறிவிட்டு, குழந்தையின் முகத்தைத் தடவி அதற்கு "அப்துல்லாஹ்' எனப் பெயர் சூட்டினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "அபூதல்ஹா (ரலி) அவர்களின் புதல்வர் ஒருவர் இறந்துவிட்டார்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 21 பிலால் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4854 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு நாள்) அதிகாலைத் தொழுகையின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிலால் (ரலி) அவர்களிடம், "பிலாலே! இஸ்லாத்தில் இணைந்த பிறகு பயனுள்ளதாக நீர்

கருதிச் செய்துவரும் நற்செயல் ஒன்றைப் பற்றிக் கூறுவீராக. ஏனெனில், சொர்க்கத்தில் உமது காலணி ஓசையை எனக்கு முன்னால் நான் செவியுற்றேன்" என்று சொன்னார்கள்.
அதற்கு பிலால் (ரலி) அவர்கள், "நான் இஸ்லாத்தில் இணைந்தபிறகு பயனுள்ளதாகக் கருதி அப்படி (பிரமாதமாக) எந்த நற்செயலையும் செய்யவில்லை. ஆயினும், நான் இரவிலோ பகலிலோ எந்த நேரத்தில் முழுமையாக அங்கத் தூய்மை (உளூ) செய்தாலும், அந்த அங்கத் தூய்மை மூலம் நான் தொழ வேண்டும் என அல்லாஹ் என் விஷயத்தில் விதித்துள்ள அளவுக்கு (கூடுதல் தொழுகையை)த் தொழாமல் இருந்ததில்லை. (இதுவே இஸ்லாத்தில் நான் செய்த பயனுள்ள நற்செயலாகக் கருதுகிறேன்)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 22 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) மற்றும் அவர்களுடைய தாயார் ஆகியோரின் சிறப்புகள்.**

4855 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"யார் இறைநம்பிக்கை கொண்டு நற்செயல்கள் புரிந்தார்களோ அவர்கள் (தடை செய்யப் பட்டதை முன்பு) உட்கொண்டதால் அவர்கள்மீது எந்தக் குற்றமும் இல்லை. ஆனால், அவர்கள் (இறைவனை) அஞ்சி, (முழுமையாக) இறைநம்பிக்கை கொண்டு நற்செயல்கள் புரிந்து, பின்னரும் (இறைவனை) அஞ்சி இறைநம்பிக்கை(யில் நிலையாக இருந்து)கொண்டு, பின்னரும் (இறைவனை) அஞ்சி நன்மை செய்திருக்க வேண்டும். (இவ்வாறு) நன்மை செய்வோரை அல்லாஹ் நேசிக்கின்றான்" (5:93) எனும் இந்த இறைவசனம் முழுமையாக அருளப்பெற்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "நீங்களும் அவர்களில் ஒருவர்தான்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4856 அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நானும் என் சகோதரர் ஒருவரும் யமன் (ஏமன்) நாட்டிலிருந்து வந்து (மதீனாவில்) சிறிது காலம் (தங்கி) இருந்தோம். அப்போது அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களும் அவருடைய தாயாரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவர்களுடைய வீட்டினுள்) அதிகமாகச் சென்றுவருவதையும் அவர்களுடனேயே எப்போதும் இருப்பதையும் கண்டு, அவர்கள் இருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்றே நாங்கள் கருதினோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நானும் என் சகோதரர் ஒருவரும் யமன் நாட்டிலிருந்து (மதீனாவுக்கு) வந்தோம்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

4857 அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூமூசா (ரலி) அவர்கள், "நான் (யமன் நாட்டிலிருந்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தபோது அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் குடும்பத்தாரில் ஒருவர் என்றே கருதினேன்" என்றோ அல்லது இதைப் போன்றோ கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4858 அபுல்அஹ்வஸ் (அவ்ஃப் பின் மாலிக் – ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் இறந்த போது நான் அபூமூசா (ரலி), அபூமஸ்ஊத் (ரலி) ஆகியோருடன் இருந்தேன். அப்போது அவர்களில் ஒருவர் மற்றவரிடம், "இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் தமக்குப்பின் தம்மைப் போன்ற ஒருவரை விட்டுச்சென்றுள்ளார்கள் என நீங்கள் கருதுகிறீர்களா?" என்று கேட்டார். அதற்கு மற்றவர், "அவ்வாறு (யாரையும் அவர் விட்டுச்செல்லவில்லை என்று) நீங்கள் சொன்னால், (அது தவறாகாது. ஏனெனில்,) நாம் திரையிடப்பட்டு (நபியவர்களின் இல்லத்திற்கு வெளியே நிறுத்தப்பட்டு) இருந்தபோது, அவர் (மட்டுமே) உள்ளே அனுமதிக்கப்பட்டிருந்தார். நாம் வெளியூரிலிருந்தபோது அவர் (உள்ளூரில் நபியவர்களுக்கு) அருகில் இருந்தார்" என்று சொன்னார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4859 அபுல் அஹ்வஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் உயிரோடிருந்த காலத்தில் ஒரு நாள்) நாங்கள் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களின் மாணவர்கள் சிலருடன் அபூமூசா (ரலி) அவர்களுடைய இல்லத்தில் இருந்தோம். அப்போது அம்மாணவர்கள் (இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிமிருந்து கேட்டு எழுதிவைத்திருந்த) குர்ஆன் பிரதியொன்றைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.
பிறகு இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் எழுந்தார்கள். அப்போது அபூமஸ்ஊத் அல்அன்சாரீ (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தமக்குப்பின் இதோ நிற்கிறாரே இவரைவிட, அல்லாஹ் இறக்கிய (வேதத்)தை நன்கு அறிந்த ஒருவரை விட்டுச்செல்ல வில்லை" என்று கூறினார்கள்.
உடனே அபூமூசா (ரலி) அவர்கள், "நீங்கள் இவ்வாறு கூறினால், அது சரிதான். (ஏனெனில்,) நாம் (நபியவர்களுடன்) இல்லாதபோது இவர் (நபியவர்களுடன்) இருந்துவந்தார். நாம் திரையிடப்பட்டு (நபியின் இல்லத்துக்கு வெளியே நிறுத்தப்பட்டு) இருந்தபோது இவர் உள்ளே அனுமதிக்கப்பட்டுவந்தார்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஓர் அறிவிப்பில் "நான் அபூ மூசா (ரலி) அவர்களிடம் சென்றேன். அங்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி),அபூமூசா (ரலி) ஆகிய இருவரையும் கண்டேன்..." என்று காணப்படுகிறது.
மற்ற அறிவிப்புகளில், "நான் ஹுதைஃபா (ரலி), அபூமூசா (ரலி) ஆகியோருடன் அமர்ந்திருந்தேன்" என்று ஸைத் பின் வஹ்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே

இடம்பெற்றுள்ளன. ஆனால், முந்தைய ஹதீஸே முழுமையானதும் கூடுதல் தகவல் உள்ளதும் ஆகும்.

4860 ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "யார் மோசடி செய்கிறாரோ அவர், தாம் மோசடி செய்தவற்றுடன் மறுமை நாளில் வருவார்" (3:161) எனும் இறைவசனத்தை ஓதிக்காட்டி விட்டு, "யாருடைய ஓதல் முறைப்படி நான் ஓத வேண்டுமெனக் கூறுகிறீர்கள்? நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எழுபதுக்கும் மேற்பட்ட அத்தியாயங்களை ஓதிக்காட்டியுள்ளேன்.அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்கள்,அவர்களிலேயே நான்தான் இறைவேதத்தை நன்கு கற்றவன் என்பதை அறிந்துள்ளார்கள். என்னைவிட (இறைவேதத்தை) நன்கு அறிந்த ஒருவர் இருக்கிறார் என நான் அறிந்தால், (அவர் எங்கு இருந்தாலும் சரி) அவரை நோக்கி நான் பயணம் மேற்கொள்வேன்" என்று கூறினார்கள்.
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்கள் கூடியிருந்த (அந்த) அவையில் வீற்றிருந்தேன். அவர்களில் எவரும் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதற்கு மறுப்பும் தெரிவிக்கவில்லை; அதற்காக அவரைக் குறை கூறவுமில்லை.

4861 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அ(ந்த ஏக இறை)வன் மீதாணையாக! அல்லாஹ்வின் வேதத்திலுள்ள ஒவ்வோர் அத்தியாயமும் அது எங்கே அருளப்பெற்றது என்பதை நான் நன்கு அறிவேன்; ஒவ்வொரு வசனமும் எது தொடர்பாக அருளப்பெற்றது என்பதையும் நான் நன்கு அறிவேன்.
என்னைவிட அல்லாஹ்வின் வேதத்தை நன்கறிந்தவர் யாரேனும், ஒட்டகம் சென்றடையும் தூரத்தில் இருந்தால், நான் (அவரிடமிருந்து அதைக் கற்றுக்கொள்வதற்காக) அவரை நோக்கி நிச்சயம் பயணம் புறப்பட்டுவிடுவேன்.
இதை மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4862 மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களிடம் சென்று "அவர்களுடன்' அல்லது "அவர்களுக்கு அருகில்' (இப்னு நுமைரின் அறிவிப்பிலுள்ள ஐயம்) பேசிக்கொண்டிருப்போம்.
ஒரு நாள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களைப் பற்றிப் பேசினோம். அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள், "நீங்கள் ஒரு மனிதரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளீர்கள். (அவர் எத்தகைய மனிதரென்றால்,) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (1) "உம்மு அப்தின் புதல்வர் (அப்துல்லாஹ் பின் மஸ்ஊத்), (2) முஆத் பின் ஜபல், (3)உபை பின் கஅப், (4) அபூஹுதைஃபாவின் முன்னாள் அடிமையான சாலிம் ஆகிய நால்வரிடமிருந்தும் குர்ஆனை ஓதக் கற்றுக்கொள்ளுங்கள்' என்று சொல்லி, அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் அவர்களையே முதலாவதாகக் குறிப்பிட்டார்கள். நான் அதைக் கேட்ட பிறகு அவரை என்றென்றும் நேசித்துக்கொண்டிருக்கிறேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4863 மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு நாள்) அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அருகில் இருந்தோம். அப்போது அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களைப் பற்றி ஏதோ பேசிக்கொண்டோம். அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள், "அந்த மனிதர் எத்தகையவரென்றால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உம்மு அப்தின் புதல்வர் (இப்னு மஸ்ஊத்), உபை பின் கஅப், ஹுதைஃபாவின் முன்னாள் அடிமையான சாலிம், முஆத் பின் ஜபல் ஆகிய நால்வரிடமிருந்தும் குர்ஆனை ஓதக் கற்றுக்கொள்ளுங்கள்" என்று சொல்லி, இப்னு மஸ்ஊத் அவர்களை முதலாவதாகக் குறிப்பிட்டதை நான் கேட்டேன். அப்போதிருந்து அவரை என்றென்றும் நேசித்துக் கொண்டிருக்கிறேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், உபை பின் கஅபுக்குமுன் முஆத் பின் ஜபல் அவர்களது பெயர் இடம்பெற்றுள்ளது. அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் முஆத் பின் ஜபல் அவர்களுக்குமுன் உபை பின் கஅப் அவர்களது பெயர் இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீ அதீ (ரஹ்), முஹம்மத் பின் ஜஅஃபர் (ரஹ்) ஆகியோரது அறிவிப்புகளில் ஷுஅபா (ரஹ்) அவர்கள் அந்நால்வரை வரிசைப்படுத்திக் கூறியது தொடர்பாக வித்தியாசமாக அறிவித்துள்ளனர்.

4864 மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களுக்கு அருகில் மக்கள் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களைப் பற்றிப் பேசினர். அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள், "அவர் எத்தகைய மனிதரென்றால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இப்னு மஸ்ஊத், ஹுதைஃபாவின் முன்னாள் அடிமையான சாலிம், உபை பின் கஅப், முஆத் பின் ஜபல் ஆகிய நால்வரிடமிருந்தும் குர்ஆனை ஓதக் கற்றுக்கொள்ளுங்கள் என்று சொன்னார்கள். அதைக் கேட்டதிலிருந்து என்றென்றும் அவரை நேசிக்கலானேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் (இறுதியில் சொல்லப்பட்ட) இவ்விருவரையுமே முதலில் அம்ர் பின் முர்ரா (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டார்கள். "அவ்விருவரில் முதலில் யாரைச் சொன்னார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை" என்று ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 23 உபை பின் கஅப் (ரலி) மற்றும் அன்சாரிகளில் ஒரு குழுவினரின் சிறப்புகள்.

4865 கத்தாதா பின் திஆமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் நான்கு பேர் (கொண்ட குழுவினர்) குர்ஆனை (மனனம் செய்து) திரட்டினார்கள். அவர்கள் அனைவருமே அன்சாரிகள் ஆவர். 1. முஆத் பின் ஜபல் 2. உபை பின் கஅப் 3. ஸைத் பின் ஸாபித் 4. அபூஸைத் (ரலி) ஆகியோர்தான் அவர்கள்" என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் அனஸ் (ரலி) அவர்களிடம், "அபூஸைத் என்பவர் யார்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "என் தந்தையின் சகோதரர்களில் ஒருவர்" என்று பதிலளித்தார்கள்.

4866 கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் குர்ஆனை (மனனம் செய்து) திரட்டியவர்கள் யார்?" என்று கேட்டேன்.
"அவர்கள், நால்வர்: 1. உபை பின் கஅப். 2. முஆத் பின் ஜபல். 3. ஸைத் பின் ஸாபித். 4. அன்சாரிகளில் ஸைத் எனப்படும் ஒரு மனிதர்" என்று அனஸ் (ரலி) அவர்கள் பதிலளித்தார்கள்.

4867 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உபை பின் கஅப் (ரலி) அவர்களிடம், "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் உங்களுக்கு (குர்ஆனின் 98ஆவது அத்தியாயத்தை) ஓதிக்காட்டும் படி எனக்குக் கட்டளையிட்டான்" என்று சொன்னார்கள்.
அதற்கு உபை பின் கஅப் (ரலி) அவர்கள், "அல்லாஹ் என் பெயரைத் தங்களிடம் குறிப்பிட்டானா?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஆம்;) அல்லாஹ் தான் உங்கள் பெயரை என்னிடம் குறிப்பிட்டான்"என்று பதிலளித்தார்கள். அதைக் கேட்டு உபை பின் கஅப் (ரலி) அவர்கள் (மகிழ்ச்சிப் பெருக்கால்) அழத் தொடங்கினார்கள்.

4868 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உபை பின் கஅப் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ், உங்களுக்கு "லம் யகுனில்லதீன..." (எனத் தொடங்கும் 98ஆவது) அத்தியாயத்தை ஓதிக்காட்டுமாறு எனக்குக் கட்டளையிட்டான்" என்று கூறினார்கள்.
அதற்கு உபை (ரலி) அவர்கள், "என் பெயரைக் குறிப்பிட்டா (அப்படிச்) சொன்னான்?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள். அதைக் கேட்டு உபை பின் கஅப் (ரலி) அவர்கள் (ஆனந்த மேலீட்டால்) அழுதார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 24 சஅத் பின் முஆத் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4869 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
சஅத் பின் முஆத் (ரலி) அவர்களின் பிரேதம் (ஜனாஸா) மக்கள் முன்னிலையில் வைக்கப்பட்டிருந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சஅத் பின் முஆத் அவர்களின் இறப்புக்காக அளவற்ற அருளாள(னான இறைவ)னின் அரியணை (அர்ஷ்) அசைந்தது" என்று சொன்னார்கள்.

4870 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சஅத் பின் முஆத் அவர்களின் இறப்புக்காக அளவற்ற அருளாள(னான இறைவ)னின் அரியணை (அர்ஷ்) அசைந்தது.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4871 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அவர்களது (அதாவது சஅத் (ரலி) அவர்களது) பிரேதம் வைக்கப்பட்டிருந்தபோது நபி (ஸல்) அவர்கள், "சஅத் அவர்களின் இறப்புக்காக அளவற்ற அருளாள(னான இறைவ)னின் அரியணை (அர்ஷ்) அசைந்தது" என்று சொன்னார்கள்.

4872 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பட்டுஅங்கி ஒன்று அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்கள் அதைத் தொட்டுப் பார்த்து அதன் மென்மையைக் கண்டு வியப்படையலானார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதன் மென்மையைக் கண்டு நீங்கள் வியக்கிறீர்களா? (சொர்க்கத்தில்) சஅத் பின் முஆத் அவர்களுக்குக் கிடைக்கவிருக்கும் கைக்குட்டைகள் இதைவிடச் சிறந்தவையும் மென்மையானவையும் ஆகும்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தும் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தும் மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் பராஉ (ரலி) அவர்களது அறிவிப்பில், "(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பட்டாடை ஒன்று கொண்டுவரப்பட்டது" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. அனஸ் (ரலி) அவர்களது அறிவிப்பிலும் இவ்வாறே அல்லது இதைப் போன்றே இடம்பெறுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ (ரலி), அனஸ் (ரலி) ஆகியோரிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4873 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு மெல்லிய பட்டாலான மேலங்கி ஒன்று அன்பளிப்பாகத் தரப்பட்டது. அவர்கள், பட்டாடை அணிவதை (ஆண்களுக்கு)த் தடை செய்துவந்தார்கள். மக்களோ அந்த மேலங்கி(யின் தரம் மற்றும் மென்மை)யைக் கண்டு வியந்தார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன் மீதாணையாக! சொர்க்கத்தில் சஅத் பின் முஆத் அவர்களுக்குக் கிடைக்கவிருக்கும் கைக்குட்டைகள் இதைவிட அழகானவை ஆகும்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "தூமத்துல் ஜந்தல்' பகுதியின் அரசர் "உகைதிர்' அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பட்டு அங்கி ஒன்றை அன்பளிப்பாகத் தந்தார்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
அதில் "அவர்கள் பட்டாடை அணிவதை (ஆண்களுக்கு)த் தடை செய்துவந்தார்கள்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

## பாடம் : 25 அபூதுஜானா சிமாக் பின் கரஷா (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4874 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உஹுதுப் போர் நாளில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாள் ஒன்றை எடுத்து, "என்னிடமிருந்து இதைப் பெற்றுக்கொள்பவர் யார்?" என்று கேட்டார்கள். மக்களில் ஒவ்வொருவரும் "நான், நான்" எனத் தம் கைகளை நீட்டினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதற்குரிய கடமை(யை நிறைவேற்றும் வாக்குறுதி)யுடன் இதை வாங்கிக்கொள்பவர் யார்?" என்று கேட்டார்கள். மக்கள் அனைவரும் பின்வாங்கிவிட்டார்கள்.
அப்போது அபூதுஜானா சிமாக் பின் கரஷா (ரலி) அவர்கள், "நான் அதற்குரிய கடமை(யை நிறைவேற்றும் வாக்குறுதி)யுடன் இதை வாங்கிக்கொள்கிறேன்" என்று கூறி, அதைப் பெற்றுச் சென்று, (எதிரணியிலிருந்த) இணைவைப்பாளர்களின் மண்டையைப் பிளந்தார்கள்.

## பாடம் : 26 ஜாபிர் (ரலி) அவர்களின் தந்தை அப்துல்லாஹ் பின் அம்ர் பின் ஹராம் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4875 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உஹுதுப் போர் நாளில் என் தந்தையின் உடல் சிதைக்கப்(பட்டு காது, மூக்கு உள்ளிட்ட உறுப்புகள் அறுக்கப்)பட்ட நிலையில் ஒரு துணியில் போர்த்திக் கொண்டுவரப்பட்டது. நான் (என் தந்தையின் முகத்திலிருந்த) துணியை விலக்கப்போனேன். என் குலத்தார் என்னைத் தடுத்துவிட்டனர். பிறகு மறுபடியும் துணியை விலக்கப்போனேன். அப்போதும் என் குலத்தார் என்னைத் தடுத்துவிட்டனர்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரேதத்தைத் "தூக்கினார்கள்'; அல்லது "தூக்கும்படி உத்தரவிட்டார்கள்'.அவ்வாறே தூக்கப்பட்டபோது யாரோ ஒரு பெண் "அழும் சப்தம்' அல்லது "ஓலமிடும் சப்தம்' கேட்டது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் அது?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "அம்ர் (பின் ஹராம்) அவர்களின் புதல்வி' அல்லது "அம்ர் (பின் ஹராம்) அவர்களின் சகோதரி' என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஏன் அழுகிறாய்? வானவர்கள் தம் இறக்கைகளை விரித்து அவர் தூக்கப்படும்வரை நிழல் கொடுத்துக் கொண்டேயிருந்தார்கள் (இத்தகைய சிறப்புக்குரிய ஒருவருக்காக ஏன் அழவேண்டும்?)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4876 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தந்தை உஹுதுப் போரில் கொல்லப்பட்டார்கள். பிறகு (அவர்களது உடல் கொண்டுவரப்பட்டபோது) அவர்களின் முகத்திலிருந்த துணியை விலக்கி நான் அழலானேன். மக்கள் என்னைத் தடுக்கலாயினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைத் தடுக்கவில்லை. (என் அத்தை) ஃபாத்திமா பின்த் அம்ர் பின் ஹராம் (ரலி) அவர்களும் அழலானார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ அழுதாலும் அழாவிட்டாலும் அவரை நீங்கள் தூக்கும்வரை வானவர்கள் தம் இறக்கைகளை விரித்து அவருக்கு நிழல் கொடுத்துக் கொண்டேயிருப்பார்கள்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் வானவர்களைப் பற்றியோ அப்பெண்மணி அழுதது பற்றியோ குறிப்பு இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "உஹுதுப் போர் நாளில் காது, மூக்கு ஆகிய உறுப்புகள் துண்டிக்கப்பட்ட நிலையில் என் தந்தையின் உடல் கொண்டுவரப்பட்டு நபி (ஸல்) அவர்களுக்கு முன்னால் வைக்கப்பட்டது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 27 ஜுலைபீப் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4877 அபூபர்ஸா அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஒரு போர் பயணத்தில் இருந்தார்கள். பிறகு அவர்களுக்கு அல்லாஹ் போர்ச் செல்வங்களை வழங்கினான். அப்போது நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களிடம், "(உங்களில்) யாரையேனும் காணாமல் நீங்கள் தேடுகிறீர்களா?" என்று கேட்டார்கள். தோழர்கள் "ஆம்; இன்ன மனிதரையும் இன்ன மனிதரையும் இன்ன மனிதரையும் (காணாமல் தேடுகிறோம்)" என்று கூறினார்கள். பிறகு (மீண்டும்), "(உங்களில்) யாரையேனும் காணாமல் தேடுகிறீர்களா?" என்று நபியவர்கள் கேட்டார்கள். தோழர்கள், "ஆம்; இன்ன மனிதரையும் இன்ன மனிதரையும் இன்ன மனிதரையும் (காணாமல் தேடுகிறோம்)" என்று கூறினர்.
பிறகு (மூன்றாவது முறையாக) "(உங்களில்) யாரையேனும் காணாமல் நீங்கள் தேடுகிறீர்களா?" என்று கேட்டார்கள். தோழர்கள், "இல்லை (எல்லாரும் கிடைத்துவிட்டனர்)" என்று பதிலளித்தார்கள்.
நபி (ஸல்) அவர்கள், "நான் ஜுலைபீபைக் காணாமல் தேடுகிறேன். நீங்களும் அவரைத் தேடுங்கள்" என்று கூறினார்கள். கொல்லப்பட்டவர்களிடையே அவர் தேடப்பட்டார். (எதிரிகளில்) ஏழு பேரின் உடல்களுக்கு அருகில் அவரது உடலைக் கண்டனர். ஜுலைபீப் அந்த எழுவரையும் கொல்ல, அவர்களும் ஜுலைபீபைக் கொன்றுவிட்டிருந்தனர்.
நபி (ஸல்) அவர்கள் வந்து ஜுலைபீப் (ரலி) அவர்களுக்கு அருகில் நின்று, "இவர் (எதிரிகளில்) எழுவரைக் கொன்றார். அவர்களும் இவரைக் கொன்றுவிட்டனர். (இதோ) இவர்

என்னைச் சேர்ந்தவர் ஆவார். நான் இவரைச் சேர்ந்தவன் ஆவேன். இவர் என்னைச் சேர்ந்தவர் ஆவார். நான் இவரைச் சேர்ந்தவர் ஆவேன்" என்று கூறினார்கள்.
பிறகு அவரைத் தமது (முன்)கையில் வைத்துத் தூக்கிக்கொண்டார்கள். நபி (ஸல்) அவர்களின் கைகளைத் தவிர (கட்டிலாக) வேறெதுவும் அவருக்கு இருக்கவில்லை. பிறகு குழி தோண்டப்பட்டு அவரது உடல் குழிக்குள் வைக்கப்பட்டது. இந்த அறிவிப்பில், அவர் நீராட்டப்பட்டாரா என்பது பற்றிய குறிப்பு இல்லை.

## பாடம் : 28 அபூதர் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4878 அபூதர் அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (மூவர்) எங்கள் "ஃகிஃபார்' குலத்தாரைவிட்டுப் புறப்பட்டோம். ஃகிஃபார் குலத்தார் (போர் தடை செய்யப்பட்ட) புனித மாதங்களையும் (வழிப்பறி, போர் ஆகியவற்றுக்கு) அனுமதிக்கப்பட்ட மாதமாக ஆக்கிக்கொண்டிருந்தனர்.
ஆகவே, நானும் என சகோதரர் உனைஸும் எங்கள் தாயாரும் (ஃகிஃபார் குலத்தாரின் வசிப்பிடத்தைவிட்டுப்) புறப்பட்டு எங்கள் தாய்மாமன் ஒருவரிடம் வந்து தங்கினோம். எங்கள் மாமன் எங்களைக் கண்ணியமாக நடத்தினார்; உபசரித்தார். அதைக் கண்டு அவருடைய சமுதாயத்தார் எங்கள் மீது பொறாமைப்பட்டார்கள். அவரிடம், "நீர் உம்முடைய குடும்பத்தாரைவிட்டுப் புறப்பட்டுச் சென்றதும் அவர்களிடம் உனைஸ் வந்துபோகிறார்" என்று (அவதூறு) கூறினர்.

ஆகவே, எங்கள் தாய்மாமன் எங்களிடம் வந்து தம்மிடம் கூறப்பட்டதை வெளிப்படையாகப் பேசினார். அப்போது நான், "நீர் செய்த உபகாரத்தை நீரே அசிங்கப்படுத்திவிட்டீரே! இதற்குமேல் எங்களால் உம்முடன் சேர்ந்திருக்க இயலாது. எங்கள் ஒட்டகங்களை எங்களிடம் கொண்டுவாரும்" என்றேன்.
அவ்வாறே (எங்கள் ஒட்டகங்கள் கொண்டு வரப்பட்டபோது) அவற்றில் நாங்கள் ஏறிப் புறப்பட்டோம். அப்போது எங்கள் மாமன் (தாம் சொன்னதை நினைத்து வருந்தியவராக) தம்மீது தமது ஆடையைப் போட்டு மூடிக் கொண்டு அழலானார்.
நாங்கள் பயணம் செய்து மக்காவுக்கு அருகில் ஓரிடத்தில் இறங்கினோம். அங்கு (என் சகோதரர்) உனைஸ் (ஒரு கவிஞரிடம் அவரது) ஒட்டக மந்தைக்கு எங்கள் ஒட்டக மந்தையைப் பந்தயமாக வைத்து(க் கவிதை)ப் போட்டி நடத்தினார். இறுதியில் இருவரும் ஒரு குறிகாரரிடம் (தீர்ப்புக்காகச்) சென்றனர். அந்தக் குறிகாரர் உனைஸைத் தேர்வு செய்தார். இதையடுத்து உனைஸ் எங்கள் ஒட்டக மந்தையுடன் (போட்டிக் கவிஞரின்) ஒட்டக மந்தையையும் சேர்த்துக் கொண்டுவந்தார்.
(இந்த ஹதீஸை அபூதர்ரிடமிருந்து அறிவிக்கும் அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:)
அபூதர் (ரலி) அவர்கள் (என்னிடம்) "என் சகோதரரின் புதல்வரே! நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சந்திப்பதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்பே தொழுதிருக்கிறேன்" என்று கூற, அதற்கு நான், "யாரைத் தொழுதீர்கள்?"என்று கேட்டேன். அதற்கு அபூதர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வை" என்று கூறினார்கள்.

நான், "எதை நோக்கித் தொழுதீர்கள்?" என்று கேட்டேன். "என் இறைவன் என்னை முன்னோக்கச் செய்த திசையை முன்னோக்கினேன். நான் இரவுத் தொழுகை (இஷாவை) தொழுதுவிட்டு இரவின் இறுதி நேரமாகும்போது துணியைப் போல (சுருண்டு) கிடந்து சூரியன் உதிக்கும்வரை உறங்குவேன்" என்று கூறினார்கள்.
(தொடர்ந்து அபூதர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:)
என்னிடம் உனைஸ், "நான் ஓர் அலுவல் நிமித்தம் மக்காவுக்குச் செல்கிறேன். ஆகவே, நீர் (என் பணிகள் எல்லாவற்றையும்) கவனித்துக்கொள்வீராக" என்று கூறிவிட்டு, மக்காவுக்குச் சென்றார். பின்னர் தாமதமாகவே உனைஸ் என்னிடம் திரும்பிவந்தார். அப்போது அவரிடம் நான், "(இத்தனை நாட்கள்) என்ன செய்தாய்?" என்று கேட்டேன். அதற்கு உனைஸ், "நீர் கடைப்பிடிக்கும் மார்க்கத்தில் இருக்கும் ஒரு மனிதரை மக்காவில் சந்தித்தேன். அவர் "அல்லாஹ்தான் தம்மைத் தூதராக அனுப்பியுள்ளான்' என்று கூறுகிறார்" என்று சொன்னார்.
நான், "மக்கள் என்ன சொல்கிறார்கள்?" என்று கேட்டேன். அதற்கு உனைஸ், "(அவர் ஒரு) கவிஞர், சோதிடர்,சூனியக்காரர் என்று சொல்கிறார்கள்" என்றார். ஆனால், கவிஞர்களில் ஒருவராக இருந்த உனைஸ் கூறினார்:

நான் சோதிடர்களின் சொற்களைச் செவியுற்றுள்ளேன். ஆனால், இவரது சொல் சோதிடர்களின் சொற்களைப் போன்றில்லை. அனைத்து வகையான கவிதைகளோடும் அவருடைய சொற்களை நான் ஒப்பிட்டுப் பார்த்துவிட்டேன். (நான் மட்டுமல்ல) வேறு எந்தக் கவிஞரின் நாவும் அந்த மனிதரின் சொற்களைக் கவிதை என ஏற்காது. அல்லாஹ்வின் மீதாணையாக! நிச்சயமாக அவர் ஓர் உண்மையாளர். அந்த மக்கள்தான் பொய்யர்கள்.
பிறகு நான் (என் சகோதரர் உனைஸிடம்), "இனி (என் பணிகளை) நீர் கவனித்துக் கொள்வீராக. நான் சென்று (அவரைப்) பார்த்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு மக்காவுக்குச் சென்றேன்.
மக்காவாசிகளில் நலிந்த ஒருவரைச் சந்தித்து, அவரிடம், "நீங்கள் "மதம் மாறியவர்' என்றழைக்கக் கூடிய இந்த மனிதர் எங்கே?" என்று கேட்டேன். உடனே அவர், "இதோ! மதம் மாறிய இவரைக் கவனியுங்கள்" என்று கூறி, என்னைச் சுட்டிக்காட்டினார். உடனே அந்தப் பள்ளத்தாக்கிலிருந்த மக்கள் ஓடுகள், எலும்புகள் (எனக் கையில் கிடைத்த) அனைத்தையும் எடுத்துவந்து என்னைத் தாக்கினர்.

நான் மயக்கமுற்று விழுந்தேன். பிறகு நானாக மயக்கம் தெளிந்து எழுந்தபோது சிவப்பு நிற சிலையைப் போன்றிருந்தேன். பின்னர் நான் "ஸம்ஸம்' கிணற்றுக்கு வந்து, என் உடலில் படிந்திருந்த இரத்தத்தைக் கழுவினேன். ஸம்ஸம் தண்ணீரை அருந்தினேன். என் சகோதரர் புதல்வரே! (அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித்தே!) இவ்வாறு நான் முப்பது நாட்கள் அங்கு தங்கியிருந்தேன். ஸம்ஸம் கிணற்றின் தண்ணீரைத் தவிர வேறெந்த உணவும் இல்லை. ஆனால், என் வயிற்றிலிருந்த மடிப்பு அகலும் அளவுக்கு நான் பருமனாகிவிட்டேன். என் ஈரலில் பசிக்கொடுமை தெரியவில்லை.
நன்கு நிலாக்காயும் ஒரு பிரகாசமான இரவில் மக்காவாசிகள் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தனர். அப்போது இறையில்லம் கஅபாவை யாரும் (தவாஃப்) சுற்றவில்லை.

மக்காவைச் சேர்ந்த இரு பெண்கள் மட்டும் (ஸஃபா மற்றும் மர்வாவில் இருந்த) இசாஃப், நாயிலா எனும் கடவுள் சிலைகளிடம் பிரார்த்தித்துக்கொண்டிருந்தனர். அவர்கள் (ஸஃபா – மர்வாவைச்) சுற்றிவரும்போது என்னிடம் வந்தனர்.
அவர்களிடம் நான், "அந்தச் சிலைகளில் ஒன்றை மற்றொன்றுக்கு மணமுடித்து வைத்து விடு" என்று சொன்னேன். ஆனால், அவர்கள் இருவரும் அவற்றைப் பிரார்த்திப்பதிலிருந்து விலகவில்லை.
பிறகு (மற்றொரு சுற்றில்) அவர்கள் இருவரும் என்னிடம் வந்தபோது, ஒளிவு மறைவின்றி "(அவ்விரு சிலைகளும்) மரக்கட்டைக்கு நிகரான இன உறுப்புகளைப் போன்றவை" என்று சொன்னேன்.
அப்போது (எனக்குச்) சாபம் கொடுத்த அவ்விரு பெண்களும் "எங்கள் ஆட்களில் யாரேனும் இங்கிருந்திருந்தால் (நடந்திருப்பதே வேறு)" என்று சொல்லிக்கொண்டே சென்றனர்.

அப்போது அங்கு கீழிறங்கி வந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் அவ்விரு பெண்களை எதிர்கொண்டனர். "உங்கள் இருவருக்கும் என்ன நேர்ந்தது?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்க, அதற்கு அப்பெண்கள், "கஅபாவுக்கும் அதன் திரைக்குமிடையே மதம் மாறிய ஒருவர் இருக்கிறார் (அவர் எங்கள் சிலைகளைக் கேவலப்படுத்தி எங்களை மனவேதனைப்படுத்திவிட்டார்)" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் (உங்களிடம்) என்ன சொன்னார்?" என்று கேட்டார்கள். அதற்கு அப்பெண்கள், "அவர் எங்களிடம் வாய்க்கு ஒவ்வாத வார்த்தையைச் சொன்னார்" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (கஅபாவுக்கு) வந்து "ஹஜருல் அஸ்வதை'த் தொட்டு முத்தமிட்டுவிட்டு,கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வந்தார்கள். அவர்களுடன் அவர்களுடைய நண்ப(ர் அபூபக்)ரும் சுற்றிவந்தார். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுதார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும், நானே முதலில் (சென்று) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! அஸ்ஸலாமு அலைக்க! (உங்களுக்குச் சாந்தி உண்டாகட்டும்)" என இஸ்லாமிய முகமன் கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வ அலைக்க, வ ரஹ்மத்துல்லாஹ் (அவ்வாறே உங்களுக்கும் சாந்தியும் இறையருளும் கிடைக்கட்டும்)" என்று பதில் சொன்னார்கள்.

பிறகு "நீங்கள் யார்?" என்று கேட்டார்கள். நான், "ஃகிஃபார் குலத்தைச் சேர்ந்தவன்" என்று பதிலளித்தேன். நான் அவ்வாறு (என் குலத்தாரின் பெயரைக்) கூறியதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் (கை) விரல்களைத் தமது நெற்றியின்மீது வைத்தார்கள். அப்போது நான் எனக்குள்ளே, "நான் ஃகிஃபார் குலத்தாரோடு இணைத்து என்னை அறிமுகப்படுத்திக் கொண்டதை அவர்கள் வெறுக்கிறார்கள்" என்று சொல்லிக்கொண்டேன்.
பிறகு (அன்போடு) அவர்களது கரத்தைப் பற்றிக்கொள்ளப்போனேன். ஆனால், அவர்களுடைய நண்பர் (அபூபக்ர்) என்னைத் தடுத்துவிட்டார். அல்லாஹ்வின் தூதரைப் பற்றி என்னைவிட அவரே நன்கறிந்தவராக இருந்தார்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தலையை உயர்த்தி, "எத்தனை நாட்களாக இங்கிருக்கிறீர்?" என்று கேட்டார்கள். அதற்கு நான், "இரவு பகலென முப்பது நாட்களாக இங்கிருந்துகொண்டிருக்கிறேன்" என்று சொன்னேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இத்தனை நாட்களாக) உமக்கு உணவளித்து வந்தவர் யார்?" என்று கேட்டார்கள். அதற்கு நான், "ஸம்ஸம் தண்ணீரைத் தவிர வேறெந்த உணவும் எனக்குக் கிடைக்கவில்லை. ஆனாலும்,என் வயிற்றின் மடிப்புகள் அகலும் அளவுக்கு நான் பருமனாகிவிட்டேன். என் ஈரலில் பசிக்கொடுமை தெரியவில்லை" என்று சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது (ஸம்ஸம்) வளமிக்கதாகும். அது(ஒரு வகையில்) வயிற்றை நிரப்பும் உணவாகும்" என்று சொன்னார்கள்.
அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! இவருக்கு இன்றிரவு உணவளிக்க எனக்கு அனுமதி அளியுங்கள்" என்று கேட்டார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் சென்றார்கள். அவர்களுடன் நானும் சென்றேன்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் கதவைத் திறந்து எங்களுக்காக "தாயி∴ப்' நகர உலர்ந்த திராட்சையை அள்ளித் தரலானார்கள். அதுவே நான் மக்காவில் உண்ட முதல் உணவாகும். பின்னர் இதே நிலையில் சில நாட்கள் இருந்தேன்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நான் சென்றேன். அப்போது அவர்கள், பேரீச்சந்தோட்டங்கள் நிறைந்த ஒரு பூமி எனக்கு (கனவில்) காட்டப்பட்டது. அது "யஸ்ரிப்' (மதீனா) என்றே நான் கருதுகிறேன். ஆகவே, நீங்கள் என்னைப் பற்றி(ய செய்தியை) உங்கள் குலத்தாரிடம் கொண்டு போய்ச் சேர்ப்பீர்களா? அல்லாஹ் உங்கள் மூலம் அவர்களுக்குப் பயனளிக்கக்கூடும். (நல்வழி அடைந்தால்) அவர்களுக்காக உங்களுக்கும் அவன் பிரதிபலன் அளிப்பான்"என்று கூறி (என்னை அனுப்பி)னார்கள்.
ஆகவே, நான் (என் சகோதரர்) உனைஸிடம் திரும்பிச் சென்றேன். அப்போது உனைஸ் "நீங்கள் என்ன செய்தீர்கள்?"என்று கேட்டார். "நான் இஸ்லாத்தை ஏற்று, (அதை) உண்மையென நம்பினேன்" என்று கூறினேன். உனைஸ், "(நீங்கள் ஏற்றுள்ள) உமது மார்க்கத்தைப் புறக்கணிக்கும் எண்ணம் எனக்கு இல்லை. நானும் இஸ்லாத்தை ஏற்று, (அதை) உண்மையென நம்புகிறேன்" என்று கூறினார்.

பிறகு நாங்கள் எங்கள் தாயாரிடம் சென்றோம். (நாங்கள் இஸ்லாத்தைத் தழுவிய விவரத்தைக் கூறினோம்.) அப்போது என் தாயார், "(நீங்கள் இருவரும் ஏற்றுள்ள) உங்கள் மார்க்கத்தைப் புறக்கணிக்கும் எண்ணம் எனக்கு இல்லை. நானும் இஸ்லாத்தைத் தழுவி, (அதை) உண்மையென நம்புகிறேன்" என்று கூறினார்.
பிறகு நாங்கள் எங்கள் வாகனத்தில் ஏறி எங்கள் "∴கி∴பார்' குலத்தாரைச் சென்றடைந்தோம். அவர்களில் பாதிப்பேர் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டனர். அவர்களுக்கு அய்மா பின் ரஹளா அல்∴கி∴பாரீ (ரலி) அவர்கள் முன்னின்று தொழுகை நடத்தினார்; அவரே அம்மக்களுக்குத் தலைவராக இருந்தார்.
∴கி∴பார் குலத்தாரில் இன்னும் பாதிப்பேர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வரும்போது நாங்கள் இஸ்லாத்தை ஏற்போம்" என்று கூறினர். அவ்வாறே

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது,எஞ்சியிருந்த பாதிப்பேரும் இஸ்லாத்தை ஏற்றனர்.

"அஸ்லம்' குலத்தார் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்) சென்று, "அல்லாஹ்வின் தூதரே! எங்கள் சகோதரக் குலத்தார் எந்த அடிப்படையில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்களோ அதே அடிப்படையில் நாங்களும் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டோம்" என்று கூறினர்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(பெயருக்கேற்பவே) "ஃகிஃபார்' குலத்தாரை அல்லாஹ் மன்னித்துவிட்டான்; "அஸ்லம்' குலத்தாரைப் பாதுகாப்புப் பெற்றவர்களாக ஆக்கிவிட்டான்" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூதர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "நான் (அங்கு) சென்று பார்த்துவருகிறேன். அதுவரை நீர் (என் பணிகளைக்) கவனித்துக்கொள்வீராக" என்று கூறினேன்.

அதற்கு உனைஸ் "சரி' என்று கூறிவிட்டு, "மக்காவாசிகளிடம் எச்சரிக்கையாக இருங்கள். ஏனெனில், அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மீது கடுமையான கோபத்தில் இருக்கிறார்கள்; வெறுப்பை வெளிப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள்" என்று சொன்னார் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் அறிவிப்பாளர் அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் பின்வருமாறு அறிவிக்கிறார்கள்: அபூதர் (ரலி) அவர்கள் (என்னிடம்), "என் சகோதரர் மகனே! நபி (ஸல்) அவர்கள் இறைத்தூதராக அனுப்பப்படுவதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே நான் தொழுதிருக்கிறேன்" என்று கூறினார்கள்.

நான், "அப்போது நீங்கள் எதை முன்னோக்கி(த் தொழுது)வந்தீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹ் என்னை முன்னோக்கச் செய்த திசையில்" என்று பதிலளித்தார்கள் என ஹதீஸ் தொடர்கிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகின்றன.

மேலும் அந்த அறிவிப்பில், "உனைஸும் அந்த இன்னொரு மனிதரும் (கவிதைப் போட்டிக்காக) சோதிடர்களில் ஒருவரிடம் சென்றனர். அப்போது என் சகோதரர் உனைஸ், அந்தச் சோதிடரைப் புகழ்ந்து கவிதை பாடிக்கொண்டே அந்த மனிதரை வென்றுவிட்டார். பிறகு அந்த மனிதரிடமிருந்த ஒட்டக மந்தையை (பரிசாகப்) பெற்று எங்கள் மந்தையோடு சேர்த்துக்கொண்டோம்" என்றும் இடம்பெற்றுள்ளது.

அதே அறிவிப்பில், "...பிறகு நபி (ஸல்) அவர்கள் சென்று இறையில்லம் கஅபாவைச் சுற்றி (தவாஃப்) வந்துவிட்டு,மகாமு இப்ராஹீமுக்குப் பின்னால் நின்று இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். அப்போது அவர்களிடம் நான் சென்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இஸ்லாமிய முகமனை முதன் முதலில் கூறியவன் நான்தான். நான், "அல்லாஹ்வின் தூதரே! அஸ்ஸலாமு அலைக்க' என்று சொன்னேன். அதற்கு அவர்கள் "வ அலைக்கஸ் ஸலாம்' (என்று பதில் சொல்லிவிட்டு) "நீங்கள் யார்?' என்று கேட்டார்கள்" என்றும் இடம்பெற்றுள்ளது.

மேலும் அந்த அறிவிப்பில், "எத்தனை நாட்களாக இங்கு இருக்கிறீர்?" என்று கேட்டார்கள். நான், "பதினைந்து நாட்களாக என்று பதிலளித்தேன்" என்று காணப்படுகிறது. இந்த அறிவிப்பில், "இன்றிரவு இவருக்கு விருந்தளிக்கும் (மகத்தான) வாய்ப்பினை எனக்கு வழங்குங்கள்" என்று அபூபக்ர் (ரலி) அவர்கள் கேட்டார்கள் என்றும் இடம்பெற்றுள்ளது.

4879 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூதர் (அல்ஃகிஃபாரீ) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் மக்காவில் இறைத்தூதராக நியமிக்கப்பட்ட செய்தி எட்டியபோது, தம் சகோதரர் (உனைஸ்) இடம், "இந்தப் பள்ளத்தாக்கை (மக்காவை) நோக்கிப் பயணம் செய்து, தமக்கு வானத்திலிருந்து இறைச்செய்தி வருவதாகக் கூறிவரும் இந்த மனிதரைக் குறித்த விவரத்தை (திரட்டி) என்னிடம் கொண்டுவந்து சொல். அவரது சொல்லை அவரிடமிருந்தே கேட்டபிறகு என்னிடம் வா" என்று கூறியனுப்பினார்கள். அவ்வாறே அந்தச் சகோதரர் புறப்பட்டு மக்காவுக்குச் சென்று நபி (ஸல்) அவர்களின் சொல்லைக் கேட்டார். பிறகு அபூதர் (ரலி) அவர்களிடம் திரும்பிச் சென்று, "அவர் நற்குணங்களைக் கடைப்பிடிக்கும்படி (மக்களுக்கு) கட்டளையிடுவதை நான் பார்த்தேன். ஒரு வாக்கையும் (அவரிடமிருந்து செவியுற்றேன்); அது கவிதை இல்லை" என்று சொன்னார். அபூதர், "நான் விரும்பிய விதத்தில் (போதுமான விவரங்களுடன் என்னிடம் வந்து) நீ என்னைத் திருப்தியடையச் செய்யவில்லை" என்று கூறிவிட்டார்கள். பிறகு பயண உணவு எடுத்துக்கொண்டு நீர் நிரம்பிய தமது தோல்பை ஒன்றைச் சுமந்துகொண்டு அபூதர் புறப்பட்டார். மக்கா வந்தடைந்து (கஅபா) பள்ளிவாசலுக்குச் சென்றார்.

நபி (ஸல்) அவர்களை அபூதர் அறியாதவராயிருந்த காரணத்தால் அவர்களைத் தேடினார். (அங்கிருந்த குறைஷியர் தமக்குத் தொல்லை தரக்கூடும் என்பதால் அவர்களிடம்) நபியவர்களைப் பற்றிக் கேட்க அவர் விரும்பவில்லை.
இரவு நேரமானதும் (அங்கேயே) படுத்துக்கொண்டார். அப்போது அலீ (ரலி) அவர்கள் அவரைக் கண்டு, அவர் வெளியூர்க்காரர் என்பதைப் புரிந்துகொண்டார்கள். அலீ (ரலி) அவர்களைக் கண்டவுடன் (அலீ (ரலி) அவர்களின் அழைப்பின் பேரில்) அபூதர் அவர்கள் அலீ (ரலி) அவர்களைப் பின்தொடர்ந்து (அவர்களது இல்லத்திற்குச்) சென்றார்கள். விடியும்வரை அவர்களில் எவரும் மற்றவரிடம் எதைப் பற்றியும் கேட்டுக்கொள்ளவில்லை.
(விடிந்த) பிறகு அபூதர் தம் தோல்பையையும் பயண உணவையும் தூக்கிக்கொண்டு பள்ளிவாசலுக்குச் சென்றார். அன்று மாலையாகும்வரை நபி (ஸல்) அவர்களைக் காணாத நிலையிலேயே அன்றைய பகலைக் கழித்தார்.
பிறகு தமது படுக்கைக்குத் திரும்பினார். அன்றும் அலீ (ரலி) அவர்கள் அவரைக் கடந்துசென்றார்கள். "தமது தங்குமிடத்தைக் கண்டுபிடிக்கும் நேரம் இம்மனிதருக்கு இன்னும் வரவில்லையோ?" என்று கூறிவிட்டு, அவரை(ப் படுக்கையிலிருந்து) எழுப்பித் தம்முடன் அழைத்துச் சென்றார்கள். (அன்றும்) அவர்களில் எவரும் மற்றவரிடம் எதைப் பற்றியும் கேட்டுக்கொள்ளவில்லை.
மூன்றாம் நாள் வந்தபோதும் அபூதர் அவ்வாறே செய்தார். அன்றும் அலீ (ரலி) அவர்கள் அவரை(ப் படுக்கையிலிருந்து) எழுப்பி தம்முடன் அழைத்துச் சென்றார்கள்.

பிறகு, "நீங்கள் எதற்காக இந்த ஊருக்கு வந்தீர்கள் என்று எனக்குச் சொல்லக் கூடாதா?" என்று கேட்டார்கள். அபூதர், "(நான் தேடிவந்ததை அடைய) எனக்குச் சரியான வழிகாட்டுவதாக நீங்கள் உறுதிமொழியளித்தால் (நீங்கள் கேட்டதைச்) செய்கிறேன்" என்று பதிலளித்தார். அலீ (ரலி) அவர்களும் அவ்வாறே உறுதி மொழியளிக்க, அபூதர் (தாம் வந்த காரணத்தை) அவர்களுக்குத் தெரிவித்தார்.
அப்போது அலீ (ரலி) அவர்கள், "(நீர் தேடிவந்த) அந்த மனிதர் உண்மையாளர்தான்; அவர் அல்லாஹ்வின் தூதர்தான். காலையில் நீங்கள் என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள். (நாம் செல்லும் போது) உங்களுக்குத் தீங்கு விளைவிக்கும் என்று நான் அஞ்சுகின்ற எதையேனும் நான் கண்டால், சிறுநீர் கழிப்பதைப் போன்று நின்றுகொள்வேன். நான் (நிற்காமல்) போய்க்கொண்டேயிருந்தால், நான் நுழையும் வீட்டுக்குள் நீங்களும் நுழையும்வரை என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள்" என்று சொன்னார்கள்.

அபூதர்ரும் அவ்வாறே செய்தார். அலீ (ரலி) அவர்களைப் பின்தொடர்ந்து நடந்தார். இறுதியில், அலீ (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் தங்கியிருந்த வீட்டில் நுழைந்தபோது அவர்களுடன் அபூதர்ரும் நுழைந்தார். அங்கு நபி (ஸல்) அவர்களின் சொல்லைச் செவியுற்று அதே இடத்தில் இஸ்லாத்தை ஏற்றார்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் அபூதர் (ரலி) அவர்களிடம், "நீங்கள் உங்கள் "ஃகிஃபார்' குலத்தாரிடம் திரும்பிச் சென்று என் கட்டளை உங்களிடம் வந்துசேரும்வரை (இஸ்லாத்தின் செய்தியை) அவர்களுக்குத் தெரிவியுங்கள்" என்று சொன்னார்கள்.
அபூதர் (ரலி) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த ஏக இறை)வன்மீது சத்தியமாக! நான் இந்தச் செய்தியை (மக்கா இறைமறுப்பாளர்களான) இவர்களிடையேயும் உரக்கச் சொல்வேன்" என்று சொல்லிவிட்டு, (கஅபா) பள்ளிவாசலுக்கு வந்து, உரத்த குரலில் "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும் முஹம்மத் (ஸல்) அவர்கள் இறைவனின் தூதர் என்றும் நான் உறுதிமொழிகிறேன்" என்று கூறினார்.

உடனே அங்கிருந்த (குறைஷி) மக்கள், கொதித்தெழுந்து, அவரை அடித்துக் கீழே சாய்த்தனர். அப்பாஸ் (ரலி) அவர்கள் வந்து, அவர்மீது கவிழ்ந்து படுத்து (அடி விழாமல் தடுத்து)க் கொண்டார்கள். "உங்களுக்குக் கேடு உண்டாகட்டும்! இவர் "ஃகிஃபார்' குலத்தைச் சேர்ந்தவர் என்பதும், உங்கள் வணிகர்கள் செல்லும் வழி (ஃகிஃபார் குலத்தார் வசிக்கும்) ஷாம் (சிரியா) நாட்டுப் பாதையில்தான் உள்ளது என்பதும் உங்களுக்குத் தெரியாதா?" என்று சொல்லி அவர்களிடமிருந்து அபூதர் (ரலி) அவர்களைக் காப்பாற்றினார்கள்.
அபூதர் (ரலி) அவர்கள் அடுத்த நாள் மீண்டும் (பள்ளிவாசலுக்குச் சென்று) அதே போன்று (உரத்த குரலில் உறுதிமொழி) சொல்ல, அவர்மீது பாய்ந்து (குறைஷியர்) தாக்கினர். (அன்றும்) அப்பாஸ் (ரலி) அவர்கள் அபூதர் (ரலி) அவர்கள்மீது கவிழ்ந்து படுத்து (அடி விழாமல்) அவரைக் காப்பாற்றினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 29 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4880 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் இஸ்லாத்தை ஏற்றதிலிருந்து (நான் சந்திக்க அனுமதி கேட்ட எந்தச் சமயத்திலும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைத் தடுத்ததில்லை. சிரித்த முகத்துடனே தவிர அவர்கள் என்னைக் கண்டதில்லை.
இதைக் கைஸ் பின் அபீஹாஸிம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4881 மேற்கண்ட ஹதீஸ் ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நான் இஸ்லாத்தை ஏற்றதிலிருந்து (நான் சந்திக்க அனுமதி கேட்ட எந்தச் சமயத்திலும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைத் தடுத்ததில்லை. என் முகத்திற்கெதிரே புன்னகைக்காமல் என்னை அவர்கள் கண்டதில்லை" என்று இடம்பெற்றுள்ளது.
அவற்றில் இப்னு இத்ரீஸ் (ரஹ்) அவர்களிடமிருந்து இப்னு நுமைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில், "நான் குதிரையின் மீது (சரியாக) உட்கார முடியாதவனாயிருக்கிறேன் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் முறையிட்டேன். ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் நெஞ்சில் அடித்து, இறைவா! இவரை உறுதிப்படுத்துவாயாக! இவரை நல்வழி காட்டுபவராகவும் நல்வழியில் செலுத்தப்பட்டவராகவும் ஆக்குவாயாக என்று பிரார்த்தித்தார்கள்" என ஜரீர் (ரலி) அவர்கள் கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4882 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அறியாமைக் காலத்தில் "துல்கலஸா' என்றழைக்கப்பட்டுவந்த (இணைவைப்பாளர்களின்) ஆலயம் ஒன்று இருந்தது. அது "யமன் நாட்டு கஅபா' என்றும் "ஷாம் நாட்டு (திசையை நோக்கி வாசல் அமைந்த) கஅபா' என்றும் அழைக்கப்பட்டுவந்தது.
என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்னை துல்கலஸாவிலிருந்தும் யமன் நாட்டு கஅபா, ஷாம் நாட்டு கஅபா எனப்படும் அந்த ஆலயத்தி(ன் கவலையி)லிருந்தும் விடுவிப்பீரா?" என்று கேட்டார்கள்.
உடனே நான் "அஹ்மஸ்' எனும் (என்) குலத்தைச் சேர்ந்த நூற்றைம்பது குதிரை வீரர்களுடன் அங்கு விரைந்தேன். அதை நாங்கள் உடைத்துவிட்டு அதனருகில் இருந்தவர்களைக் கொன்றோம். பிறகு நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து நடந்ததைத் தெரிவித்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்காகவும் (இந்த நடவடிக்கையில் பங்கேற்ற) "அஹ்மஸ்' குலத்தாருக்காகவும் பிரார்த்தித்தார்கள்.

4883 ஜரீர் பின் அப்தில்லாஹ் அல்பஜலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "ஜரீரே! துல்கலஸாவி(ன் கவலையி)லிருந்து என்னை நீங்கள் விடுவிக்கமாட்டீர்களா?" என்று கேட்டார்கள். அது "கஸ்அம்' குலத்தாரின் ஓர் ஆலயமாக இருந்தது. அது "யமன் நாட்டு கஅபா' என்று அழைக்கப்பட்டுவந்தது.
எனவே, நான் ("அஹ்மஸ்' குலத்தைச் சேர்ந்த) நூற்றைம்பது குதிரை வீரர்களுடன் விரைந்தேன். நான் குதிரையின் மீது (சரியாக) அமர முடியாதவனாக இருந்தேன். இது பற்றி நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறினேன். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கரத்தால் என் நெஞ்சில் அடித்து, "இறைவா! இவரை உறுதிப்படுத்துவாயாக! இவரை நல்வழி காட்டுபவராகவும் நல்வழியில் செலுத்தப்பட்டவராகவும் ஆக்குவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

உடனே நான் அங்கு சென்று அதைத் தீயிட்டு எரித்துவிட்டேன். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அந்த நற்செய்தியைச் சொல்வதற்காக எங்களில் "அபூஅர்த்தாத்' எனப்படும் ஒரு மனிதரை அனுப்பினேன். அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, "அ(ந்த ஆலயத்)தைச் சிரங்கு பிடித்த ஒட்டகத்தைப் போன்று ஆக்கிவிட்டுத்தான் உங்களிடம் வந்துள்ளேன்" என்று சொன்னார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அஹ்மஸ் குலத்தாரின் குதிரைகளுக்காகவும் அக்குலத்தாருக்காகவும் வளம் வேண்டி ஐந்து முறை பிரார்த்தித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாவும் வந்துள்ளது.
அவற்றில் மர்வான் அல்ஃபஸாரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஜரீர் (ரலி) அவர்களிடமிருந்து நற்செய்தி சொல்லும் தூதுவராக அபூஅர்த்தாத் ஹுஸைன் பின் ரபீஆ (ரலி) அவர்கள் வந்து நபி (ஸல்) அவர்களிடம் (அந்த) நற்செய்தியைச் சொன்னார்" என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 30 அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4884 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்குச் சென்றார்கள். நான் அவர்களுக்காக (அங்கத் தூய்மை செய்ய) தண்ணீர் வைத்தேன். அவர்கள் வெளியே வந்ததும் "இதை வைத்தவர் யார்?" என்று கேட்டார்கள். மக்கள், "இப்னு அப்பாஸ்' என்று கூறினர். நபி (ஸல்) அவர்கள், "இறைவா! அவருக்கு மார்க்கத்தில் (நல்ல) விளக்கத்தை அளிப்பாயாக"என்று பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பிலேயே மேற்கண்டவாறு இடம்பெற்றுள்ளது. அபூபக்ர் பின் அந்நள்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (மக்கள் என்பதற்குப் பதிலாக) "நான், இப்னு அப்பாஸ்(தான் வைத்தேன்)"என்று கூறியதாக இடம் பெற்றுள்ளது.

**பாடம் : 31 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களின் சிறப்புகள்.**

4885 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களது காலத்தில்) கண்ட கனவில், எனது கையில் பட்டுத் துண்டு இருப்பதைப் போன்றும் சொர்க்கத்தில் நான் விரும்புகின்ற இடத்திற்கெல்லாம் அது என்னைத் தூக்கிக்கொண்டு பறப்பதைப் போன்றும் கண்டேன். இது குறித்து நான் (என் சகோதரி) ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம் எடுத்துரைத்தேன். அது குறித்து ஹஃப்ஸா, நபி (ஸல்) அவர்களிடம் விவரித்தபோது நபி (ஸல்) அவர்கள், "அப்துல்லாஹ் ஒரு நல்ல மனிதர் என்றே நான் அறிகிறேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4886 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உயிரோடிருந்த காலத்தில் ஒரு மனிதர் கனவொன்றைக் கண்டால்,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அதை விவரித்துச் சொல்வார். அவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் விவரித்துச் சொல்வதற்காகக் கனவொன்றை நானும் காண வேண்டும் என்று ஆசைப்பட்டேன். (அப்போது) நான் மணமாகாத ஓர் இளைஞனாக இருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் பள்ளிவாசலில் நான் உறங்குவது வழக்கம்.
(ஒரு நாள்) கனவில் இவ்வாறு கண்டேன்: வானவர்கள் இருவர் என்னைப் பிடித்து நரகத்தை நோக்கிக் கொண்டுசென்றார்கள். கிணற்றின் சுற்றுச் சுவரைப் போன்று அதற்குச் சுற்றுச்சுவர் எழுப்பப்பட்டிருந்தது. மேலும் கிணற்றின் இரு பக்கங்களிலுமுள்ள கல் தூண்களைப் போன்று இரு தூண்கள் அதற்கும் இருந்தன. அதனுள் எனக்குத் தெரிந்த மக்கள் சிலர் இருந்தனர்.
உடனே நான், "நரகத்திலிருந்து காக்கும்படி அல்லாஹ்விடம் கோருகின்றேன்; நரகத்திலிருந்து காக்கும்படி அல்லாஹ்விடம் கோருகின்றேன்; நரகத்திலிருந்து காக்கும்படி அல்லாஹ்விடம் வேண்டுகின்றேன்" என்று பிரார்த்திக்கலானேன். (அப்போது என்னைப் பிடித்துச் சென்ற) அவ்விரு வானவரையும் வேறொரு வானவர் சந்தித்தார். அவர் என்னிடம், "இனி ஒருபோதும் நீங்கள் பீதியடையமாட்டீர்கள்" என்று சொன்னார்.
நான் இதை (என் சகோதரியும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியாருமான) ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம் விவரித்தேன். ஹஃப்ஸா (ரலி) அவர்கள், அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் விவரித்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்துல்லாஹ் (பின் உமர்) ஒரு நல்ல மனிதர்;அவர் இரவின் ஒரு பகுதியில் தொழுதால் (நன்றாயிருக்கும்)" என்று சொன்னார்கள்.
(இதை அறிவித்த அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களின் புதல்வர்) சாலிம் (ரஹ்) அவர்கள், "(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இப்படிச் சொன்னதிலிருந்து) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் இரவில் சிறிது நேரம் மட்டுமே உறங்குபவராயிருந்தார்கள்" என்று கூறுகிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "நான் குடும்பம் (மனைவி, மக்கள்) இல்லாதவனாயிருந்தபோது இரவில் பள்ளிவாசலில் உறங்கிவந்தேன். (ஒரு நாள்) கனவில் ஒரு கிணற்றை நோக்கி நான் இழுத்துச் செல்லப்படுவதைப் போன்று கண்டேன்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 32 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4887 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாயார் உம்மு சுலைம் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! (இதோ) உங்கள் சேவகர் அனஸ். அவருக்காகப் பிரார்த்தியுங்கள்" என்றார்கள்.
நபி (ஸல்) அவர்கள், "இறைவா! அனஸின் செல்வத்தையும் குழந்தைகளையும் அதிகமாக்குவாயாக! அவருக்கு நீ வழங்கியுள்ள (ஆயுள் முதலான)வற்றில் வளம் சேர்ப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "(என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! (இதோ) உங்கள் சேவகர் அனஸ்..."என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்டவையே.
- மேற்கண்ட அதே ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4888 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் (எங்கள் இல்லத்திற்கு) வந்தார்கள். அப்போது அங்கு நானும் என் தாயாரும் என் தாயின் சகோதரி உம்மு ஹராம் (ரலி) அவர்களுமே இருந்தோம். அப்போது என் தாயார், "அல்லாஹ்வின் தூதரே! (இதோ) உங்கள் அன்பு சேவகர் (அனஸ்). அவருக்காகப் பிரார்த்தியுங்கள்" என்று கேட்டுக்கொண்டார்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் எனக்காக எல்லாவித நலன்களும் வேண்டிப் பிரார்த்தித்தார்கள். அவர்கள் தமது பிரார்த்தனையின் முடிவில், "இறைவா! அனஸின் செல்வத்தையும் குழந்தைகளையும் அதிகமாக்கி, அ(வருக்கு நீ அளித்திருப்ப)தில் வளம் சேர்ப்பாயாக!" என்று எனக்காக வேண்டினார்கள்.

4889 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாயார் என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்றார்கள். அப்போது தமது முக்காட்டுத் துணியில் ஒரு பகுதியை எனக்குக் கீழாடையாகவும் மற்றொரு பகுதியை எனக்கு மேல் துண்டாகவும் போர்த்திவிட்டிருந்தார்கள். என் தாயார், "அல்லாஹ்வின் தூதரே! இவர் என் (செல்ல) மகன் அனஸ். தங்களுக்குச் சேவகராகப் பணியாற்றுவதற்காக இவரை உங்களிடம் அழைத்துவந்துள்ளேன். இவருக்காகப் பிரார்த்தியுங்கள்" என்று கூறினார்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! அனஸின் செல்வத்தையும் குழந்தைகளையும் அதிகமாக்குவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! இன்றைய தினத்தில் என்னிடம் ஏராளமான செல்வங்கள் உள்ளன. என் பிள்ளைகள் மற்றும் பிள்ளைகளுடைய பிள்ளைகளின் எண்ணிக்கை சுமார் நூறை எட்டியிருக்கிறது.

4890 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களைக்) கடந்து சென்றார்கள். அப்போது என் தாயார் உம்மு சுலைம் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் குரலைக் கேட்டார்கள். உடனே (அவர்களிடம் சென்று), "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! (இதோ உங்கள் சேவகர்) அனஸ்" என்று கூறினார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்காக மூன்று பிரார்த்தனைகளைச் செய்தார்கள். அவற்றில் இரண்டை நான் இந்த உலகத்திலேயே பார்த்துவிட்டேன். மூன்றாவதை நான் மறுமையில் எதிர்பார்க்கிறேன்.

4891 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சேவகனாக இருந்தபோது) என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது நான் சிறுவர்களுடன் சேர்ந்து விளையாடிக்கொண்டிருந்தேன். நபி (ஸல்) அவர்கள் எங்களுக்கு முகமன் (சலாம்) சொன்னார்கள். பிறகு என்னை ஓர் அலுவல் நிமித்தம் (ஓரிடத்திற்கு) அனுப்பிவைத்தார்கள். நான் என் தாயாரிடம் தாமதமாகவே வந்தேன். நான் (வீட்டுக்கு) வந்தபோது என் தாயார், "உன் தாமதத்திற்கு என்ன காரணம்?" என்று கேட்டார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் அலுவலுக்காக என்னை அனுப்பி வைத்தார்கள்" என்று பதிலளித்தேன். அப்போது என் தாயார், "என்ன அலுவல்?" என்று கேட்டார்கள். நான், "அது இரகசியம்" என்று சொன்னேன். என் தாயார், "நீ அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் இரகசியத்தை யாரிடமும் சொல்லாதே" என்று கூறினார்கள்.
(இதன் அறிவிப்பாளரான) ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (அனஸ் (ரலி) அவர்கள் இந்த ஹதீஸை என்னிடம் அறிவித்தபோது) "அல்லாஹ்வின் மீதாணையாக! அந்த இரகசியத்தை நான் யாரிடமாவது சொல்வதாயிருந்தால் ஸாபித்தே! உங்களிடம் அதைச் சொல்லியிருப்பேன் (அதை நான் என்றைக்கும் யாரிடமும் அதைச் சொல்ல மாட்டேன்)" என்று கூறினார்கள்.

4892 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் என்னிடம் ஓர் இரகசியம் சொன்னார்கள். அவர்களது இறப்புக்குப் பிறகும்கூட ஒருவரிடமும் அதை நான் தெரிவிக்கவில்லை. என்னிடம் (என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்கள் அது குறித்துக் கேட்டார்கள். அதை நான் அவருக்கும் தெரிவிக்கவில்லை.

## பாடம் : 33 அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4893 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பூமியின்மீது நடமாடும் எவரையும் "இவர் சொர்க்கவாசி" என்று சொல்லி நான் கேட்டதில்லை; அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்களைத் தவிர.

4894 கைஸ் பின் உபாத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மதீனாவில் (மஸ்ஜிதுந் நபவீ பள்ளி வாசலில்) மக்களில் சிலருடன் இருந்தேன். அவர்களில் நபித்தோழர்கள் சிலரும் இருந்தனர். அப்போது ஒரு மனிதர் வந்தார். அவரது முகத்தில் சிரம்பணிந்(து சஜ்தா செய்)ததற்கான அடையாளம் இருந்தது. மக்களில் சிலர், "இவர் சொர்க்கவாசிகளில் ஒருவர்; இவர் சொர்க்கவாசிகளில் ஒருவர்" என்று சொன்னார்கள். அவர் இரண்டு ரக்அத்கள் தொழுதார்; அவற்றை (அதிக நேரம் எடுக்காமல்) சுருக்கமாகத் தொழுதார். பிறகு அவர் வெளியேற, நான் அவரைப் பின்தொடர்ந்து சென்றேன். அவர் தமது இல்லத்திற்குள் நுழைந்தபோது நானும் நுழைந்தேன். நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம்.
அவர் சகஜ நிலைக்கு வந்தபோது, "நீங்கள் சற்று முன்னர் (பள்ளிவாசலுக்குள்) நுழைந்த சமயம், ஒரு மனிதர் இப்படி (நீங்கள் சொர்க்கவாசி என்று) சொன்னார்" என அவரிடம் சொன்னேன். அவர் கூறினார்: அல்லாஹ் தூயவன் (சுப்ஹானல்லாஹ்)! தமக்குத் தெரியாததைக் கூறுவது எவருக்கும் முறையாகாது. ஏன் அவ்வாறு (மக்கள் பேசிக் கொள்கிறார்கள்) என்று உங்களுக்கு இதோ தெரிவிக்கிறேன்:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் கனவொன்று கண்டேன். அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் விவரித்தேன். நான் ஒரு பூங்காவில் இருப்பதைப் போன்று கண்டேன். (அதன் விசாலத்தையும் புற்பூண்டுகளையும் பசுமையையும் வர்ணித்தார்) பூங்காவின் நடுவே இரும்பாலான தூண் ஒன்று இருந்தது. அதன் அடிப்பகுதி தரையிலும் மேற்பகுதி வானத்திலும் இருந்தது. அதற்கும் மேலே "கைப்பிடி' ஒன்று இருந்தது. என்னிடம் "இதில் ஏறு" என்று சொல்லப்பட்டது. நான் "என்னால் இயலாதே!" என்று சொன்னேன்.
அப்போது என்னிடம் "மின்ஸஃப்' ஒருவர் வந்தார் ("மின்ஸஃப்' என்பதற்கு ஊழியர் என்பது பொருள் என அறிவிப்பாளர் இப்னு அவ்ன் சொல்கிறார்). அவர் என் ஆடையைப் பிடித்து பின்பக்கமாக என்னை இவ்வாறு தூக்கிவிட்டார். அதைச் சைகையால் செய்து காட்டுகிறார். உடனே நான் அந்தத் தூணில் ஏறினேன். இறுதியில் அதன் உச்சிக்கு நான் சென்று அந்தப் பிடியைப் பற்றினேன். அப்போது என்னிடம் "நன்கு பற்றிப் பிடித்துக்கொள்" என்று சொல்லப்பட்டது. (நான் அதைப் பற்றிக்கொண்டேன்.) அந்தப் பிடி என் கையில் இருக்க, (திடுக்கிட்டு) நான் விழித்தேன்.
நபி (ஸல்) அவர்களிடம் அதை நான் விவரித்தபோது, "அந்தப் பூங்காதான் இஸ்லாம். அந்தத் தூண் இஸ்லாம் எனும் தூணாகும். அந்தப் பிடி பலமான (இறைநம்பிக்கை எனும்) பிடியாகும். ஆகவே, நீங்கள் இறக்கும்வரை இஸ்லாத்திலேயே நிலைத்து நிற்பீர்கள்" என்று நபியவர்கள் பதிலளித்தார்கள். (இப்படிச் சொன்ன) அந்த மனிதர் அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்கள்தான்.

4895 கைஸ் பின் உபாத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலில்) வட்ட(மாக மக்கள் வீற்றிருந்த ஓர்) அவையில் இருந்தேன். அதில் சஅத் பின் மாலிக் (ரலி), இப்னு உமர் (ரலி) ஆகியோர் இருந்தனர். அப்போது அப்துல் லாஹ் பின் சலாம் (ரலி) அவர்கள் (எங்களைக்) கடந்து சென்றார்கள்.
அப்போது அ(ங்கிருந்த)வர்கள், "இவர் சொர்க்கவாசிகளில் ஒருவர்" என்று கூறினர். உடனே நான் (அங்கிருந்து) எழுந்து அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்களிடம் (சென்று), "மக்கள் இப்படி இப்படிக் கூறினர்" என்று சொன்னேன்.
அதற்கு அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்கள், "அல்லாஹ் தூயவன். தமக்குத் தெரியாததைச் சொல்வது எவருக்கும் தகாது. (அவர்கள் இப்படிச் சொல்வதற்குக் காரணம் ஒன்று உண்டு:) நான் ஒரு கனவு கண்டேன். ஒரு பசுமையான பூங்காவில் தூண் ஒன்று வைக்கப்பட்டிருந்தது. பின்பு அது அங்கு நாட்டப்பட்டது. அதன் மேற்பகுதியில் "பிடி' ஒன்று இருந்தது. அதன் கீழ்ப் பகுதியில் "மின்ஸஃப்' ஒருவர் இருந்தார். (மின்ஸஃப் என்பதற்கு ஊழியர் என்பது பொருள்)
அப்போது என்னிடம் "இதில் ஏறு" என்று சொல்லப்பட்டது. நான் அதில் ஏறி அந்தப் பிடியைப் பற்றினேன். பிறகு அதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்த போது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்துல்லாஹ் பலமான பிடி(யான இஸ்லாமிய நெறி)யைப் பற்றிய நிலையில் இறப்பார்" என்று கூறினார்கள்.

4896 கரஷா பின் அல்ஹுர்ரு (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் மதீனாவின் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் வட்ட(மாக மக்கள் வீற்றிருந்த) அவையொன்றில் அமர்ந்திருந்தேன். அங்கு அழகிய தோற்றத்துடன் முதியவர் ஒருவர் இருந்தார். அவர்தான் அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்கள்.
அவர்கள் மக்களுக்கு அழகிய ஹதீஸ் ஒன்றைக் கூறலானார்கள். பிறகு அவர்கள் எழுந்து சென்றபோது மக்கள், "சொர்க்கவாசிகளில் ஒருவரைப் பார்க்க விரும்புகின்றவர் (இதோ) இவரைப் பார்த்துக்கொள்ளட்டும்" என்று கூறினர். அப்போது நான், "அல்லாஹ்வின் மீதாணையாக! அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்களைப் பின்தொடர்ந்து சென்று, அவர்களது இல்லத்தை நான் அறிந்துகொள்வேன்" என்று கூறிக்கொண்டு அவர்களைப் பின்தொடர்ந்து சென்றேன்.
அவர்கள் நடந்து, மதீனாவைவிட்டு வெளியேறும் தூரத்திற்குச் சென்று தமது இல்லத்திற்குள் நுழைந்தார்கள். பிறகு நான் (சென்று) அவர்களிடம் உள்ளே நுழைய அனுமதி கேட்டேன். அவர்கள் எனக்கு அனுமதியளித்தார்கள்.
பிறகு என்னிடம், "என் சகோதரர் புதல்வரே! உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்கள். அவர்களிடம் நான், "நீங்கள் எழுந்து சென்றபோது உங்களைப் பற்றி மக்கள், "சொர்க்கவாசிகளில் ஒருவரைப் பார்க்க விரும்புகின்றவர் (இதோ) இவரைப் பார்த்துக் கொள்ளட்டும்' என்று கூறியதைக் கேட்டேன். ஆகவே, தங்களுடன் இருப்பதை நான் விரும்பினேன்" என்று சொன்னேன். அதற்கு அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்கள் கூறினார்கள்: சொர்க்கவாசிகளை அல்லாஹ்வே நன்கறிவான். மக்கள் ஏன் இவ்வாறு கூறினர் என உமக்கு நான் தெரிவிக்கிறேன்:

(ஒரு நாள்) நான் உறங்கிக்கொண்டிருந்த போது (கனவில்) ஒரு மனிதர் என்னிடம் வந்து, "எழுங்கள்" என்று சொல்லிவிட்டு, எனது கையைப் பிடித்துக்கொண்டார். அவருடன் நான் நடந்தேன். அப்போது நான் எனக்கு இடப் பக்கத்தில் தெளிவான பல பாதைகளைக் கண்டேன். அதில் நான் செல்லப்போனேன். அப்போது அந்த மனிதர் என்னிடம், "அவற்றில் நீங்கள் செல்லாதீர்கள். இவை இடப் புறத்திலிருப்போரின் (நரகவாசிகளின்) பாதைகள்" என்று கூறினார்.

எனக்கு வலப் பக்கத்தில் பல நேரான பாதைகள் இருந்தன. அப்போது அந்த மனிதர், "இதில் செல்லுங்கள்" என்று கூறினார். பிறகு என்னை அழைத்துக்கொண்டு ஒரு மலை அருகே சென்றார். "இதில் ஏறுங்கள்" என்று கூறினார். அதில் நான் ஏறப்போனபோது மல்லாந்து விழலானேன். இவ்வாறு பல முறை செய்தேன்.

பிறகு அவர் என்னை ஒரு தூண் அருகே அழைத்துச் சென்றார். அதன் மேற்பகுதி வானத்தில் இருந்தது. அதன் கீழ்ப்பகுதி தரையில் இருந்தது. அத்தூணுக்கு மேலே வளையம் ஒன்று இருந்தது. அவர் என்னிடம், "இதற்கு மேலே ஏறுங்கள்" என்று கூறினார். நான், "இதில் எப்படி ஏறுவேன்? அதன் மேற்பகுதி வானத்தில் இருக்கிறதே!" என்று கேட்டேன். உடனே அவர் என்னைப் பிடித்து மேலே வீசினார். உடனே நான் அந்த வளையத்தைப் பிடித்துத் தொங்கினேன்.

பிறகு அவர் அந்தத் தூணை அடித்தார். அது கீழே விழுந்துவிட்டது. அப்போதும் நான் அந்த வளையத்தைப் பிடித்துக்கொண்டு தொங்கிக்கொண்டிருந்தேன். விடிந்தவுடன் நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று அதைப் பற்றி அவர்களிடம் விவரித்தேன்.

அப்போது நபி (ஸல்) அவர்கள், "உங்களுக்கு இடப் பக்கத்தில் நீங்கள் கண்ட பாதைகள் இடப் புறக்காரர்களின் (நரகவாசிகளின்) பாதைகளாகும். உங்களுக்கு வலப் பக்கத்திலிருந்த பாதைகள் வலப் புறக்காரர்களின் (சொர்க்கவாசிகளின்) பாதைகளாகும். அந்த மலை உயிர்த்தியாகிகளின் இருப்பிடமாகும். அதை உங்களால் ஒருகாலும் அடைய முடியாது. அந்தத் தூண் இஸ்லாம் எனும் தூணாகும்.அந்தப் பிடி (வளையம்) இஸ்லாத்தின் பிடியாகும். நீங்கள் இறக்கும்வரை எப்போதும் அதைப் பலமாகப் பற்றிக்கொண்டே இருப்பீர்கள்" என்று சொன்னார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 34 ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4897 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

(மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கவி பாடிக்கொண்டிருந்தபோது, அங்கு (கலீஃபா) உமர் (ரலி) அவர்கள் வந்தார்கள். ஹஸ்ஸானை நோக்கி (அமைதியாக இருக்கும்படி) சைகை செய்தார்கள்.

ஹஸ்ஸான் (ரலி) அவர்கள், "நான் இந்தப் பள்ளிவாசலில் உங்களைவிடச் சிறந்தவர் (நபியவர்கள்) இருந்தபோது கவிபாடிக்கொண்டிருந்தேன்" என்று கூறிவிட்டு, என்னை நோக்கித் திரும்பி, "அல்லாஹ்வின் பெயரால் உம்மிடம் கேட்கிறேன்: (என்னிடம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஹஸ்ஸானே!) என் சார்பாக (எதிரிகளின் வசைக் கவிகளுக்கு) நீங்கள் (கவிகளாலேயே) பதிலளியுங்கள். இறைவா! ஹஸ்ஸானுக்கு "ரூஹுல் குதுஸ்' (தூய ஆத்மா வானவர் ஜிப்ரீல்) மூலம் வலிமையூட்டுவாயாக!" என்று

கூறியதை நீங்கள் செவியுற்றிருக்கிறீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு நான் "ஆம்; இறைவா (நீயே சாட்சி)!" என்று பதிலளித்தேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஹஸ்ஸான் (ரலி) அவர்கள் ஓர் அவையில் இருந்தார்கள். அதில் அபூ ஹுரைரா (ரலி) அவர்களும் இருந்தார்கள். அப்போது ஹஸ்ஸான் (ரலி) அவர்கள், "அபூ ஹுரைரா அவர்களே! அல்லாஹ்வின் பெயரால் உம்மிடம் கேட்கிறேன்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இவ்வாறு) கூறியதை நீங்கள் செவியுற்றீர்களா?" என்று வினவியதாக இடம்பெற்றுள்ளது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம் பெற்றுள்ளன.

4898 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி) அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்களிடம், "அபூ ஹுரைரா அவர்களே! அல்லாஹ்வின் பெயரால் உங்களிடம் கேட்கிறேன்: நபி (ஸல்) அவர்கள், 'ஹஸ்ஸானே! அல்லாஹ்வின் தூதர் சார்பாக எதிரிகளுக்கு (உம் கவிதை மூலம்) பதிலளிப்பீராக! இறைவா! "ரூஹுல் குதுஸ்' (எனும் தூய ஆத்மா ஜிப்ரீல்) மூலம் இவருக்கு வலிமையூட்டுவாயாக!' என்று கூறியதை நீங்கள் செவியுற்றீர்களா?" என்று கேட்டு சாட்சியம் சொல்ல அழைத்தார்கள். அப்போது அபூஹுரைரா (ரலி) அவர்கள் "ஆம் (செவியுற்றேன்)" என்று (சாட்சியம்) கூறினார்கள்.

4899 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பனூ குறைழா போரின்போது, கவிஞர்) ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி) அவர்களிடம், "எதிரிகளுக்கு எதிராக வசைக்கவி பாடுங்கள். ஜிப்ரீல் உங்களுடன் (உறுதுணையாக) இருப்பார்" என்று கூறியதை நான் கேட்டேன்.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4900 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தாயார் அஸ்மாவின் சகோதரி) ஆயிஷா (ரலி) அவர்களுக்கெதிராக (அவதூறு சம்பவத்தில்) அதிகமாகப் பேசியவர்களில் ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி) அவர்களும் ஒருவராயிருந்தார். ஆகவே, அவரை நான் ஏசினேன். அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், "என் சகோதரி (அஸ்மாவின்) மகனே! அவரை (ஏசாதே) விட்டுவிடு. ஏனெனில்,அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சார்பாக (எதிரிகளைத் தாக்கி) வசைக்கவி பாடுபவராக இருந்தார்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4901 மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்களுக்கு அருகில் ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி) அவர்கள் இருந்து கவி பாடிக்கொண்டும் தம் பாடல்களால் (ஆயிஷா (ரலி) அவர்களைப்) பாராட்டிக்கொண்டுமிருந்தார்கள்.
"நீங்கள் பத்தினி;
அறிவாளி;
சந்தேகத்திற்கப்பாற்பட்டவர்.
(அவதூறு பேசுவதன்மூலம்)
பேதைப் பெண்களின்
மாமிசங்களைப் புசித்துவிடாமல்
பட்டினியோடு காலையில் எழுபவர்"
என்று ஹஸ்ஸான் (ரலி) அவர்கள் (ஆயிஷா (ரலி) அவர்களைக் குறித்து) கவிதை பாடினார்கள்.
அதைக் கேட்ட ஆயிஷா (ரலி) அவர்கள், "ஆனாலும், நீங்கள் அப்படியல்ல. (என்னைப் பற்றி அவதூறு பேசியவர்களுடன் சேர்ந்து கொண்டு நீங்களும் புறம் பேசினீர்கள்)" என்று கூறினார்கள்.
அப்போது நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "இவரைத் தங்களிடம் வர ஏன் அனுமதிக்கிறீர்கள்? அல்லாஹ் (தனது வேதத்தில்) "அவர்களில் (அவதூறு பரப்புவதில்) பெரும் பங்கு வகித்தவருக்குக் கடினமான வேதனையுண்டு' (24:11)எனக் கூறுகின்றானே?" என்று கேட்டேன்.
அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "கண் பார்வையை இழப்பதைவிட கொடிய வேதனை ஏது?" என்று கூறிவிட்டு, "அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சார்பாக (எதிரிகளைத் தாக்கி) பதில் கவிபாடுபவராக, அல்லது வசைக்கவி பாடுபவராக இருந்தார்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மஸ்ரூக் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காக (கவிதையால்) பதிலடி கொடுக்கக் கூடியவராக இருந்தார்"என்று இடம்பெற்றுள்ளது. "நீங்கள் பத்தினி; அறிவாளி..." என்று தொடங்கும் கவிதை இடம்பெறவில்லை.

4902 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஹஸ்ஸான் (ரலி) அவர்கள் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! அபூசுஃப்யானுக்கெதிராக (அவருடைய வசைக்கவிகளுக்குப் பதிலடி கொடுக்க) எனக்கு அனுமதி அளியுங்கள்" என்று கேட்டார்கள்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(அவரோடு இணைந்துள்ள) என்னுடைய வமிசாவளியை அவரிடமிருந்து எப்படி (பிரித்துப் பாடுவீர்கள்)?" என்று கேட்டார்கள். அதற்கு ஹஸ்ஸான் (ரலி) அவர்கள், "தங்களை மேன்மைப்படுத்தியுள்ள (இறை)வன் மீதாணையாக! (அவர்களைப் பற்றி நான் எதிர்க் கவிகூறும்போது) குழைத்த மாவிலிருந்து முடி உருவப்படுவதைப் போன்று உங்களை உருவி எடுத்துவிடுவேன்" என்று கூறினார்கள்.

"ஹாஷிம் கிளையின்
மக்ஸூம் குலமகளின் மக்களுக்கே
மேன்மையின் சிகரம் உரியது.
ஆனால்,
(அபூசுஃப்யானே!) உமது தந்தை,
(அப்து மனாஃபின்)
அடிமையாவார்"
என்பதே (இயைபுத் தொடையில் அமைந்த) அவரது அந்தக் கவிதையாகும்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் (குறைஷி) இணைவைப்பாளர்களைத் தாக்கி (எதிர்க் கவி) பாட அனுமதி கேட்டார்கள்" என்றே ஹதீஸ் ஆரம்பமாகிறது. "அபூசுஃப்யானுக்கெதிராக' எனும் குறிப்பு இல்லை. அதில் ("குழைத்த மாவு' என்பதைக் குறிக்க "அல்கமீர்' என்பதற்குப் பகரமாக) "அல்அஜீன்' எனும் சொல் காணப்படுகிறது.

4903 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (ஹுதைபியா பயணத்தின்போது) "குறைஷியருக்கெதிராக வசைக்கவி பாடுங்கள். ஏனெனில், அது ஈட்டியைவிட பலமாக அவர்களைத் தாக்கக்கூடியதாகும்" என்று கூறினார்கள். "அவர்களுக்கெதிராக வசைக்கவி பாடுங்கள்" என்று அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலி) அவர்களுக்குக் கூறியனுப்பினார்கள். அவ்வாறே, அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலி) அவர்கள் குறைஷியருக்கெதிராக வசைக்கவி பாடினார்கள். ஆனால், அது நபியவர்களுக்குத் திருப்தியளிக்கவில்லை. எனவே, கஅப் பின் மாலிக் (ரலி) அவர்களுக்கு ஆளனுப்பினார்கள்.
பிறகு ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி) அவர்களிடம் ஆளனுப்பினார்கள். நபி (ஸல்) அவர்களிடம் ஹஸ்ஸான் (ரலி) அவர்கள் வந்தபோது, "தனது வாலை(ச் சுழற்றி) அடிக்கும் இந்தச் சிங்கத்திடம் ஆளனுப்ப இப்போதுதான் உங்களுக்கு நேரம் வந்திருக்கிறது" என்று கூறிவிட்டுத் தமது நாவை வெளியே நீட்டி அதைச் சுழற்றத் தொடங்கினார்கள். (நபி (ஸல்) அவர்களை நோக்கி) "தங்களைச் சத்திய (மார்க்கத்)துடன் அனுப்பியவன் மீதாணையாக! தோலைக் கிழிப்பதைப் போன்று நான் எனது நாவால் அவர்களை (அவர்களது குலப் பெருமையை)க் கிழித்தெறிவேன்" என்று கூறினார்கள்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவசரப்படாதீர். அபூபக்ர், குறைஷியரின் வமிசாவளி குறித்து நன்கறிந்தவர். குறைஷியரோடு எனது வமிசமும் இணைந்துள்ளது. அபூபக்ர் உம்மிடம் எனது வமிசாவளியைத் தனியாகப் பிரித்தறிவிப்பார்" என்று கூறினார்கள்.
ஆகவே, ஹஸ்ஸான் (ரலி) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் சென்று, (குறைஷி வமிசாவளி பற்றி கேட்டு)விட்டுத் திரும்பி வந்து, "அல்லாஹ்வின் தூதரே! அபூபக்ர் (ரலி) அவர்கள் உங்களது வமிசாவளியை எனக்குப் பிரித்தறிவித்தார்கள். தங்களைச் சத்தியத்துடன் அனுப்பியவன் மீதாணையாக! குழைத்த மாவிலிருந்து முடி

உருவப்படுவதைப் போன்று அவர்களிடமிருந்து உங்களை நான் உருவியெடுத்துவிடுவேன்" என்று கூறினார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஸ்ஸான் (ரலி) அவர்களிடம், "நீங்கள் அல்லாஹ்வின் சார்பாகவும் அவன் தூதர் சார்பாகவும் பதிலடி கொடுக்கும்வரை "ரூஹுல் குதுஸ்' (எனும் தூய ஆத்மா ஜிப்ரீல்) உம்மோடு உறுதுணையாக இருந்துகொண்டிருப்பார்" என்று கூறியதை நான் கேட்டேன். மேலும், நபி (ஸல்) அவர்கள், "குறைஷியருக்கெதிராக ஹஸ்ஸான் வசைக்கவி பாடினார். நம்மையும் திருப்திப்படுத்தினார். தாமும் திருப்தி கொண்டார்" என்று கூறினார்கள்.
ஹஸ்ஸான் (ரலி) அவர்கள் (ஹுதைபியா வில்) பாடிய கவி வருமாறு:
நீ, முஹம்மத் (ஸல்) அவர்களை
இகழ்ந்து வசைக்கவி பாடுகிறாய்.
நான் அவர் சார்பாக
எதிர்க்கவி பாடுகிறேன்.
அதற்காக அல்லாஹ்விடமே
நற்பலன் உண்டு (எனக்கு).
நீ
தயாள மனத்தவரும்
பயபக்தியாளருமான
இறைத்தூதர் முஹம்மதை இகழ்ந்து
வசைக்கவி பாடுகிறாய்!
கொடுத்த வாக்கை நிறைவேற்றுவதே
அவர்தம் பண்பு.
என் தந்தையும்
என் தந்தையின் தந்தையும்
எந்தன் மானமரியாதையும்
உங்களிடமிருந்து
முஹம்மத் (ஸல்) அவர்களைக்
காக்கும் கேடயம்.
"கதா' மலைக்குன்றின்
இரு மருங்கிலிருந்தும்
புழுதி கிளப்பும்
குதிரைகளை நீங்கள் காணாவிட்டால்
என் மகள்
இறந்துபோகட்டும்!
(விறைப்பிலும் வலுவிலும்)
கடிவாளங்களுக்குப் போட்டி போடும்
அக்குதிரைகளின் முதுகுகளில்
(இரத்த) தாகம் கொண்ட
ஈட்டிகளே வீற்றிருக்கும்.

அக்குதிரைகள்
ஒன்றையொன்றை முந்திக்கொண்டு
உங்களை முன்னோக்கி
விரைந்தோடி வரும்.
எங்கள் மங்கையர்
தம் முக்காட்டுத் துணிகளால்
அவற்றுக்கு
முகம் துடைத்துவிடுவர்.
நாங்கள்
(மக்காவுக்குள் நுழையும்போது)
கண்டுகொள்ளாமல்
நீங்கள் விட்டுவிட்டால்
நாங்கள் உம்ரா வழிபாட்டை
நன்கே நிறைவேற்றுவோம்.
அதுவே
எங்களுக்கு வெற்றியாக மாறும்;
திரையும் விலகும்.
இல்லாவிட்டால்
அல்லாஹ், தான் நாடியவர்களை
கண்ணியப்படுத்தும் போர்த் தினத்துக்காக
நீங்கள் பொறுமையோடு காத்திருங்கள்.
"உண்மையை
ஒளிவு மறைவின்றிப் பேசும்
அடியார் ஒருவரை
நான் அனுப்பியுள்ளேன்"
என்று அல்லாஹ் சொன்னான்.
"நான் ஒரு படையைத்
தயாரித்துள்ளேன்;
அவர்களே அன்சாரிகள்;
எதிரிகளைச் சந்திப்பதே
அவர்தம் இலக்கு"
என்றும் அல்லாஹ் சொன்னான்.
நாங்கள்
அனுதினமும்
"மஅத்' (குறைஷி) குலத்தாரிடமிருந்து
வசை மொழியும்
போர் முனையும்
வசைக் கவியும்
சந்திப்பதுண்டு.

உங்களில்
அல்லாஹ்வின் தூதரை
இகழ்ந்து பாடுபவர் யார்?
அவரைப் புகழ்ந்து
அவருக்கு உதவுபவர் யார்?
அவரைப் பொறுத்தவரை
(இருவரும்) சமமே!
இறையின் தூதர் ஜிப்ரீல்
எம்மிடையே உள்ளார்.
அந்தத் தூய ஆத்மாவிற்கு
நிகராருமில்லை (இங்கு).

## பாடம் : 35 அபூஹுரைரா அத்தவ்சீ (ரலி) அவர்களின் சிறப்புகள்.

4904 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாயார் இணைவைப்பாளராக இருந்த போது, இஸ்லாத்திற்கு (வருமாறு) அவருக்கு நான் அழைப்பு விடுத்துவந்தேன். ஒரு நாள் நான் அவருக்கு (இஸ்லாமிய) அழைப்பு விடுத்தபோது, அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் குறித்து நான் விரும்பாத (வசை மொழிகள்) சிலவற்றை என் காதுபடக் கூறினார்.
உடனே நான் அழுதுகொண்டே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! நான் என் தாயாருக்கு இஸ்லாமிய அழைப்பு விடுத்துவந்தேன். அவர் மறுத்துவந்தார். இன்றைய தினமும் அவருக்கு நான் அழைப்பு விடுத்தேன். அவர் உங்களைக் குறித்து நான் விரும்பாத (வசை மொழிகள்) சிலவற்றை என் காதுபடக் கூறினார். ஆகவே, (இந்த) அபூஹுரைராவின் அன்னைக்கு நல்வழி காட்டுமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று கூறினேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! அபூஹுரைராவின் அன்னைக்கு நல்வழி காட்டுவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள். நபி (ஸல்) அவர்களின் பிரார்த்தனையைக் கேட்டுப் புளகாங்கிதம் அடைந்தவனாக நான் (வீட்டை நோக்கிப்) புறப்பட்டேன். நான் வீட்டு வாசலை அடைந்தபோது (உள்ளே) அது தாழிடப்பட்டிருந்தது. என் தாயார் என் காலடிச் சப்தத்தைக் கேட்டுவிட்டு, "அபூஹுரைரா அங்கேயே இரு" என்று கூறினார்.
அப்போது தண்ணீர் புழங்கும் சப்தம் எனக்குக் கேட்டது. என் தாயார் குளித்துவிட்டு, தமது சட்டையை அணிந்துகொண்டு, முக்காட்டுத் துணி அணியாமல் விரைந்து வந்து கதவைத் திறந்தார். பிறகு, "அபூஹுரைரா! அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று நான் உறுதி மொழிகிறேன்; முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனுடைய அடியாரும் தூதருமாவார் என்றும் உறுதி மொழிகிறேன்" என்று கூறினார்.
உடனே நான் மகிழ்ச்சியில் அழுது கொண்டே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் திரும்பிச் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! ஒரு மகிழ்ச்சியான செய்தி. அல்லாஹ் உங்களின் பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டு விட்டான். அபூஹுரைராவின் அன்னைக்கு நல்வழி காட்டிவிட்டான்" என்று சொன்னேன்.

அதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறைவனைப் போற்றிப் புகழ்ந்தார்கள். நல்ல வார்த்தைகளைச் சொன்னார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதரே! இறை நம்பிக்கையுள்ள அடியார்களுக்கு என்மீதும் என் தாயார்மீதும் நேசம் ஏற்படவும் அவர்கள் மீது எனக்கும் என் தாயாருக்கும் நேசம் ஏற்படவும், தாங்கள் பிரார்த்தியுங்கள்" என்று கேட்டேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! உன்னுடைய இந்தச் சிறிய அடியார் (அபூஹுரைரா) மீதும் அவருடைய தாயார்மீதும் இறைநம்பிக்கையாளர்களான உன் அடியார்களுக்கு நேசத்தை ஏற்படுத்துவாயாக! இறைநம்பிக்கையாளர்கள்மீது இவர்களுக்கு நேசத்தை ஏற்படுத்துவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
எனவேதான், என்னைப் பார்க்காவிட்டாலும் என்னைப் பற்றிக் கேள்விப்படும் எந்த ஓர் இறை நம்பிக்கையாளரும் என்னை நேசிக்காமல் இருப்பதில்லை.

4905 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அபூஹுரைரா, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அதிகமான ஹதீஸ்களை அறிவிக்கின்றாரே!" என்று நீங்கள் (குறை) கூறுகிறீர்கள். (இந்தக் குற்றச்சாட்டு சரியா, தவறா என்பதை அறிய) அல்லாஹ்விடம் குறித்த நேரம் ஒன்று உண்டு.
நான் ஓர் ஏழை மனிதன். நான் என் வயிறு நிரம்பினால் போதும் (பெரிய அளவில் பொருளாதாரம் எதுவும் தேவையில்லை) என்ற திருப்தியுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பணிவிடைகள் செய்துவந்தேன். முஹாஜிர்கள் கடைவீதிகளில் வணிகம் செய்வதில் கவனமாக இருந்தார்கள். அன்சாரிகளோ தம் (வேளாண்) செல்வங்களைப் பராமரிப்பதில் கவனம் செலுத்திவந்தார்கள். (ஆனால், நானோ அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடையே இருந்துவந்தேன்.)
இந்நிலையில் (ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் தமது துணியை (மேல் துண்டை) விரித்து வைத்(திருந்து பிறகு அதைச் சுருட்டி நெஞ்சோடு அணைத்)துக் கொள்கிறாரோ அவர் என்னிடமிருந்து கேட்ட எதையும் ஒருபோதும் மறக்கமாட்டார்" என்று சொன்னார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேசி முடிக்கும்வரை நான் எனது துணியை விரித்(துப் பிடித்)தேன். பிறகு அதை என் நெஞ்சோடு சேர்த்து அணைத்துக்கொண்டேன். அதன் பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து கேட்ட எதையும் நான் மறந்ததில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அன்சாரிகள் (வேளாண்) செல்வங்களைப் பராமரிப்பதில் கவனம் செலுத்திவந்தார்கள்" என்பதோடு ஹதீஸ் முடிகிறது. அதற்குப் பிறகுள்ள குறிப்புகள் இடம்பெறவில்லை.

4906 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் சிறிய தாயார்) ஆயிஷா (ரலி) அவர்கள் என்னிடம், "அபூஹுரைரா(வின் நடவடிக்கை) உனக்கு வியப்பூட்டவில்லையா? (ஒரு நாள்) அவர் வந்து என் அறைக்கருகில் அமர்ந்து என் காதில் விழும் விதமாக நபிமொழிகளை அறிவித்துக்கொண்டிருந்தார்.
அப்போது நான் கூடுதல்தொழுகை (நஃபில்) தொழுதுகொண்டிருந்தேன். நான் தொழுது முடிப்பதற்குமுன் அவர் எழுந்து சென்றுவிட்டார். அவர் என்னிடம் சிக்கியிருந்தால், 'நீங்கள் ஒன்றன்பின் ஒன்றாக ஹதீஸ்களை அறிவித்துக்கொண்டிருப்பதைப் போன்று, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொடர்ச்சியாக (ஹதீஸ்களை) அறிவித்துக் கொண்டிருக்கவில்லை' என்று அவருக்கு மறுப்புத் தெரிவித்திருப்பேன்" என்று கூறினார்கள்.
- அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அபூஹுரைரா அதிகமான நபிமொழிகளை அறிவிக்கிறாரே!" என்று மக்கள் (குறை) கூறுகிறார்கள். (இந்தக் குற்றச்சாட்டு சரியா, தவறா என்பதை அறிய) அல்லாஹ்விடம் குறித்த நேரம் ஒன்று உண்டு. "முஹாஜிர்களுக்கும் அன்சாரிகளுக்கும் என்ன நேர்ந்தது? அபூஹுரைராவைப் போன்று (அதிகமான) நபிமொழிகளை அவர்கள் அறிவிப்பதில்லையே!" என்றும் கேட்கிறார்கள். அது குறித்து அவர்களுக்கு விளக்கப்போகிறேன்:
என் அன்சாரி சகோதரர்கள் தம் நிலபுலன்களில் (விவசாயத்தில்) கவனம் செலுத்தி வந்தார்கள். என் முஹாஜிர் சகோதரர்கள் கடைவீதிகளில் வியாபாரம் செய்வதில் கவனம் செலுத்திவந்தார்கள். அதே நேரத்தில் நானோ, என் வயிற்றை நிரப்பும் (வருவாய் போதுமென்ற) திருப்தியுடன் (பொருள் சேர்க்கும் பணியில் ஈடுபடாமல்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடனேயே எப்போதும் இருந்துவந்தேன். மக்கள் (வருவாய் தேடி) வெளியே சென்றுவிடும்போதும் நான் அல்லாஹ்வின் தூதருடனேயே இருப்பேன்; அவர்கள் (நபிமொழிகளை) மறந்துவிடும்போது நான் (அவற்றை) நினைவில் வைத்திருப்பேன்.

ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் யார் தமது ஆடையை விரித்து வைத்து, என்னுடைய இந்த உரையை வாங்கி, பிறகு தமது நெஞ்சோடு சேர்த்து (அணைத்து)க்கொள்கிறாரோ அவர் (என்னிடமிருந்து) கேட்ட எதையும் மறக்கமாட்டார்" என்று கூறினார்கள்.
உடனே நான் என் மீதிருந்த போர்வையை விரித்(துப் பிடித்)தேன். பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது உரையை முடிக்கும்வரை அதை விரித்து வைத்திருந்துவிட்டு, பிறகு அதை என் நெஞ்சோடு சேர்த்து (அணைத்து)க்கொண்டேன். அன்றைய தினத்திற்குப் பிறகு அவர்கள் எனக்கு அறிவித்த செய்திகள் எதையும் நான் மறந்ததேயில்லை.

அல்லாஹ் தனது வேதத்தில் அருளியுள்ள இரு வசனங்கள் மட்டும் இல்லாவிட்டால் நான் (நபிமொழிகளில்) எதையுமே ஒருபோதும் அறிவித்திருக்கமாட்டேன். (இவைதான் அந்தத் திரு வசனங்கள்:)
"நாம் அருளிய சான்றுகளையும் நல்வழியையும் வேதத்தில் நாம் மக்களுக்குத் தெளிவுபடுத்திய பிறகும் அவற்றை மறைப்பவர்களை அல்லாஹ் சபிக்கின்றான்; சபிப்போரும் அவர்களைச் சபிக்கின்றனர்.

எனினும், பாவத்திலிருந்து மீண்டு, (தம்மைச்) சீர்திருத்தி, (தாம் மறைத்தவற்றைத்) தெளிவுபடுத்தியவர்களைத் தவிர. அவர்களை நான் மன்னிப்பேன். நான் மிகவும் மன்னிப்பவனும் பெருங்கருணையாளனும் ஆவேன்". (2:159,160)
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அபூஹுரைரா அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அதிகமான ஹதீஸ்களை அறிவிக்கின்றார் என்று நீங்கள் (குறை) கூறுகிறீர்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

## பாடம் : 36 பத்ருப் போரில் கலந்துகொண்டவர்களின் சிறப்புகளும் ஹாத்திப் பின் அபீபல்த்தஆ (ரலி) அவர்களின் நிகழ்ச்சியும்.

4907 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னையும் ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி), மிக்தாத் பின் அல்அஸ்வத் (ரலி) ஆகியோரையும், நீங்கள் "ரவ்ளத்து காக்' எனும் இடத்திற்குச் செல்லுங்கள். ஏனெனில், அங்கு ஒட்டகப் பல்லக்கில் ஒரு பெண் இருக்கிறாள். அவளிடம் ஒரு கடிதம் இருக்கும். அதை அவளிடமிருந்து எடுத்துக்கொள்ளுங்கள்" என்று கூறியனுப்பினார்கள்.
அவ்வாறே நாங்கள் சென்றோம். எங்களைச் சுமந்துகொண்டு எங்கள் குதிரைகள் விரைந்து சென்றன. (அந்த இடத்தை அடைந்தோம்.) அங்கு அந்தப் பெண் இருந்தாள். நாங்கள் அவளிடம், "அந்தக் கடிதத்தை வெளியே எடு" என்று சொன்னோம். அவள் "என்னிடம் கடிதம் எதுவுமில்லை" என்று சொன்னாள். நாங்கள், "நீயாகக் கடிதத்தை எடுத்து(க் கொடுத்து)விடு; இல்லாவிட்டால் (சோதனைக்காக) உன் ஆடையை நீ அவிழ்க்க வேண்டியதிருக்கும்" என்று கூறினோம்.

உடனே அவள் (இடுப்புவரை நீண்டிருந்த) தனது சடையின் பின்னல்களுக்கிடையிலிருந்து கடிதத்தை வெளியே எடுத்தாள். நாங்கள் அந்தக் கடிதத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவந்தோம்.
அதில், ஹாத்திப் பின் அபீபல்த்தஆ (ரலி) அவர்கள், மக்காவாசிகளான இணை வைப்பாளர்களில் சிலருக்கு,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் (போர்) விவகாரம் குறித்து சிலவற்றை (முன் கூட்டியே) தெரிவித்திருந்தார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஹாத்திபே! என்ன இது?" என்று கேட்டார்கள்.
ஹாத்திப் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என் விஷயத்தில் அவசரப்பட்டு (நடவடிக்கை எடுத்து)விடாதீர்கள். நான் குறைஷியரைச் சார்ந்து வாழ்பவனாகவே இருந்து வந்தேன். (அதாவது குறைஷியரின் நட்புக் குலத்தாராகவே இருந்துவந்தார்; குறைஷிக் குலத்தில் ஒருவராக இருக்கவில்லை என சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.) தங்களுடன் இருந்துவந்த முஹாஜிர்களுக்கு அவர்களுடைய குடும்பத்தாரைப் பாதுகாப்பதற்கு மக்கா நகரில் உறவினர் பலர் இருந்தனர்.

எனக்கு அவர்களிடையே அத்தகைய உறவினர் எவரும் இல்லாததால் (இணை வைப்பாளர்களான) மக்காவாசிகளுக்கு நான் உபகாரம் எதையாவது செய்து, அதற்குப் பிரதியுபகாரமாக அவர்கள் (அங்குள்ள) என் (பலவீனமான) உறவினரைக் காப்பாற்றட்டும் என்று விரும்பினேன். (அதனால்தான் இணைவைப்பாளர்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க இத்தகவல்களைத் தெரிவித்தேன்.) நான் என் மார்க்கமான இஸ்லாத்தைவிட்டு வேறு மதத்தை ஏற்பதற்காகவோ, இறைமறுப்பாலோ, இஸ்லாத்தைத் தழுவியபின் இறைமறுப்பை விரும்பியோ இப்படிச் செய்யவில்லை" என்று கூறினார்கள்.

இதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவர் சொல்வது உண்மையே" என்றார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என்னை விடுங்கள். இந்த நயவஞ்சகனின் கழுத்தை வெட்டிவிடுகிறேன்" என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவர் பத்ருப்போரில் கலந்துகொண்டிருக்கிறார். உமக்கென்ன தெரியும்? பத்ருப்போரில் கலந்துகொண்டவர்களை நோக்கி, "நீங்கள் விரும்பியதைச் செய்யுங்கள். உங்களை மன்னித்துவிட்டேன்' என்று அல்லாஹ் கூறிவிட்டிருக்கலாம்" என்று சொன்னார்கள்.

அப்போது அல்லாஹ், "இறைநம்பிக்கை கொண்டவர்களே! எனக்கும் உங்களுக்கும் பகைவர்களாக இருப்போரைப் பாதுகாவலர்களாக ஆக்கிக்கொள்ளாதீர்கள்" (60:1) எனும் வசனத்தை அருளினான்.

இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்), ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் இந்த வசனம் அருளப்பெற்றது பற்றிய குறிப்பு இல்லை. இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அறிவிப்பாளர் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் அந்த வசனத்தை ஓதிக்காட்டியதாக இடம்பெற்றுள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குதிரைவீரர்களான என்னையும் அபூமர்ஸத் அல்ஃகனவீ (ரலி) அவர்களையும் ஸுபைர் பின் அல்அவ்வாம் (ரலி) அவர்களையும் "நீங்கள் "ரவ்ளத்து காக்' எனும் இடம் வரை செல்லுங்கள். அங்கு இணைவைப்பாளர்களில் ஒரு பெண் இருப்பாள். அவளிடம் ஹாத்திப் பின் அபீபல்த்தஆ (மக்கா) இணை வைப்பாளர்களுக்கு எழுதிய கடிதம் ஒன்று இருக்கும்" என்று கூறியனுப்பினார்கள் என்று இடம்பெற்றுள்ளது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

4908 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை) ஹாத்திப் (ரலி) அவர்களின் அடிமை ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து (தம் உரிமையாளர்) ஹாத்திபைப் பற்றி முறையிட்டார்; "அல்லாஹ்வின் தூதரே! ஹாத்திப் கட்டாயம் நரகத்திற்குத்தான் செல்வார்" என்று கூறினார்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ தவறாகச் சொல்கிறாய். அவர் (நரகத்திற்குச்) செல்லமாட்டார். ஏனெனில், அவர் பத்ருப்போரிலும் ஹுதைபியாவிலும் கலந்துகொண்டிருக்கிறார்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 37 "பைஅத்துர் ரிள்வான்' ஒப்பந்தத்தில் கலந்துகொண்டு, அந்த மரத்தின் கீழ் உறுதிப் பிரமாணம் அளித்தவர்களின் சிறப்புகள்.**

4909 (ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்களின் துணைவியார்) உம்மு முபஷ்ஷிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம், "அல்லாஹ் நாடினால் அந்த மரத்தின் கீழ் வாக்குப் பிரமாணம் அளித்தவர்களில் யாரும் நரகத்திற்குள் நுழையமாட்டார்கள்" என்று கூறினார்கள். அதற்கு ஹஃப்ஸா (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே! அப்படியல்ல" என்று கூறினார்கள்.
உடனே நபி (ஸல்) அவர்கள், ஹஃப்ஸா (ரலி) அவர்களைக் கண்டித்தார்கள். அப்போது ஹஃப்ஸா (ரலி) அவர்கள், "உங்களில் யாரும் அ(ந்த நரகத்)தைக் கடக்காமல் இருக்க முடியாது" (19:71) எனும் வசனத்தை ஓதிக்காட்டினார்கள். நபி (ஸல்) அவர்கள், "பின்னர் (நம்மை) அஞ்சி நடந்தோரை நாம் காப்பாற்றுவோம். அநீதி இழைத்தோரை மண்டியிட்டோராக அதிலேயே விட்டுவிடுவோம்" (19:72) என்றும் அல்லாஹ் கூறியுள்ளான் என்றார்கள்.

**பாடம் : 38 அஷ்அரீ குலத்தைச் சேர்ந்த அபூமூசா (ரலி), அபூஆமிர் (ரலி) ஆகியோரின் சிறப்புகள்.**

4910 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடையில் "ஜிஅரானா' எனுமிடத்தில் தங்கியிருந்தபோது அவர்களுடன் நானும் இருந்தேன்; அவர்களுடன் பிலால் (ரலி) அவர்களும் இருந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களிடம் கிராமவாசியொருவர் வந்து, "முஹம்மதே! நீங்கள் எனக்கு வாக்களித்ததைக் கொடுக்கமாட்டீர்களா?"என்று கேட்டார்.
நபி (ஸல்) அவர்கள், "நற்செய்தியைப் பெற்றுக்கொள்" என்று சொன்னார்கள். அதற்கு அவர் "நற்செய்தியைப் பெற்றுக்கொள் என்று என்னிடம் பலமுறை சொல்லிவிட்டீர்களே!" என்று கேட்டார். உடனே நபி (ஸல்) அவர்கள் என்னையும் பிலால் (ரலி) அவர்களையும் நோக்கி கோபத்திலுள்ள ஒரு மனிதரைப் போன்று திரும்பி, "இவர் (எனது) நற்செய்தியை ஏற்க மறுத்துவிட்டார். நீங்கள் இருவரும் அதை ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று சொன்னார்கள்.
நாங்கள் இருவரும் "நாங்கள் ஏற்றுக் கொண்டோம், அல்லாஹ்வின் தூதரே!" என்று சொன்னோம். பிறகு நபி (ஸல்) அவர்கள், "தண்ணீருள்ள ஒரு பாத்திரத்தைக் கொண்டு வரச் சொல்லி, அதில் தம் கைகளையும் முகத்தையும் கழுவி அந்தப் பாத்திரத்திற்குள் உமிழ்ந்தார்கள். பிறகு "நீங்கள் இருவரும் இதில் சிறிது அருந்திவிட்டு, உங்கள் முகங்களிலும் மார்புகளிலும் ஊற்றிக்கொள்ளுங்கள்; நற்செய்தியைப் பெற்றுக்கொள்ளுங்கள்"

என்று சொன்னார்கள். நாங்கள் அந்தப் பாத்திரத்தை எடுத்து நபியவர்கள் கூறியதைப் போன்றே செய்தோம்.
அப்போது இறைநம்பிக்கையாளர்களின் அன்னை உம்மு சலமா (ரலி) அவர்கள் திரைக்குப் பின்னாலிருந்து எங்கள் இருவரையும் அழைத்து, "உங்கள் அன்னைக்காகவும் (அதாவது எனக்காகவும்) அதிலிருந்து சிறிது தண்ணீரை மீதி வையுங்கள்" என்று சொன்னார்கள். அவ்வாறே நாங்கள் இருவரும் அதில் சிறிது தண்ணீரை மீதி வைத்தோம்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4911 அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் ஹுனைன் போர் முடிந்த பின்னர் அபூஆமிர் (ரலி) அவர்களின் தலைமையில் "அவ்தாஸ்' பள்ளத்தாக்கிற்கு ஒரு படைப் பிரிவை அனுப்பினார்கள். அப்போது அபூஆமிர் (ரலி) அவர்கள் (கவிஞன்) "துரைத் பின் அஸ்ஸிம்மா'வைச் சந்தித்தார்கள்.
(அவர்கள் இருவருக்குமிடையே நடந்த சண்டையில்) "துரைத்' கொல்லப்பட்டான்; அவனுடைய தோழர்களை அல்லாஹ் தோற்கடித்தான். அபூஆமிர் அவர்களுடன் என்னையும் நபி (ஸல்) அவர்கள் (அந்தப் போருக்கு) அனுப்பியிருந்தார்கள். அப்போரின்போது அபூஆமிர் அவர்களின் முழங்கால்மீது அம்பு (வந்து) பாய்ந்தது. "பனூ ஜுஷம்' குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதனே அந்த அம்பை எய்து, அதை அவர்களது முழங்காலில் நிறுத்தினான்.
உடனே நான் அபூஆமிர் அவர்களுக்கு அருகில் சென்று, "என் தந்தையின் சகோதரரே! உங்கள்மீது அம்பெய்தவன் யார்?" என்று கேட்டேன். "இதோ அங்கே தெரிகிறானே அவன்தான் என்மீது அம்பெய்து என்னைக் கொன்றவன்"என்று எனக்குச் சைகை செய்து காட்டினார்கள். நான் அவனைக் குறி வைத்து நேராக அவனை நோக்கிச் சென்று அவனை அடைந்தேன். என்னைக் கண்டதும் அவன் புறமுதுகிட்டு ஓடலானான். "புறமுதுகிட்டு ஓடுகிறாயே உனக்கு வெட்கமில்லையா? நீ ஓர் அரபியன் இல்லையா? நீ நிற்கமாட்டாயா?" என்று அவனிடம் கேட்டுக்கொண்டே அவனைப் பின்தொடர்ந்தேன். உடனே அவன் (ஓடு வதை) நிறுத்திக்கொண்டான்.

பிறகு நானும் அவனும் நேருக்குநேர் சந்தித்து, வாளால் மாறி மாறித் தாக்கிக்கொண்டோம். அவனை நான் வாளால் வெட்டிக் கொன்றேன். பிறகு அபூஆமிர் அவர்களிடம் திரும்பி வந்து, "உங்களைக் கொ(ல்ல முய)ன்றவனை அல்லாஹ் கொன்றொழித்துவிட்டான்" என்று சொன்னேன். பிறகு "(எனது முழங்காலில் தைத்திருக்கும்) இந்த அம்பைப் பிடுங்கி எடுங்கள்" என்று அபூஆமிர் (ரலி) அவர்கள் கூற, உடனே நான் அதைப் பிடுங்கினேன். அதிலிருந்து நீர் கொட்டியது.
அப்போது அபூஆமிர் அவர்கள், "என் சகோதரர் மகனே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று அவர்களுக்கு என் முகமன் (சலாம்) கூறி, அபூஆமிர் தமக்காகப் பாவமன்னிப்புக் கோரும்படி கூறியதாகச் சொல்வீராக!"என்றார்கள்.
பிறகு அபூஆமிர் (ரலி) அவர்கள் என்னை மக்களுக்குத் தளபதியாக நியமித்துவிட்டுச் சிறிது நேரத்திற்குப்பின் இறந்துவிட்டார்கள்.
நான் (அங்கிருந்து) திரும்பி நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். அப்போது அவர்கள் ஒரு வீட்டில் (பேரீச்ச நாரினால் வேயப்பட்ட) கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்தார்கள். அதன் மீது

விரிப்பு ஒன்று இருந்தது. எனினும், கட்டிலின் கயிறு நபி (ஸல்) அவர்களின் முதுகிலும் விலாப் புறங்களிலும் அடையாளம் பதிந்திருந்தது.
அப்போது அவர்களிடம் எங்கள் (படையினர் பற்றிய) செய்தியையும் அபூஆமிர் (ரலி) அவர்களது செய்தியையும் கூறி,தமக்காகப் பாவமன்னிப்புக் கோரும்படி அபூஆமிர் வேண்டியது பற்றியும் கூறினேன்.
உடனே நபி (ஸல்) அவர்கள் தண்ணீர் கொண்டுவரும்படி கூறி, அதில் அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள். பிறகு தம் அக்குள்களின் வெண்மையை நான் பார்க்குமளவுக்குத் தம் இரு கைகளையும் உயர்த்தி, "இறைவா! அபூஆமிர் உபைதுக்கு நீ மன்னிப்பு அளிப்பாயாக! மறுமை நாளில் உன் "படைப்பினங்களில்' அல்லது "மனிதர்களில்' பலரையும்விட (தகுதியில்) உயர்ந்தவராக அவரை ஆக்குவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
உடனே நான், "எனக்காகவும் பாவமன்னிப்புக் கோருங்கள், அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினேன். அதற்கு அவர்கள், "இறைவா! "(அபூமூசா) அப்துல்லாஹ் பின் கைஸின் பாவத்தை மன்னித்து, மறுமை நாளில் கண்ணியமான இருப்பிடத்திற்கு அவரை அனுப்புவாயாக" என்று பிரார்த்தித்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூபுர்தா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (நபி (ஸல்) அவர்கள் செய்த) இரு பிரார்த்தனைகளில் முந்தியது அபூஆமிர் (ரலி) அவர்களுக்கும் இரண்டாவது (என் தந்தை) அபூமூசா (ரலி) அவர்களுக்கும் உரியதாகும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 39 அஷ்அரீ குலத்தாரின் சிறப்புகள்.

4912 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"அஷ்அரீ' குலத்தைச் சேர்ந்த என் நண்பர்கள் (தம் பணிகளை முடித்துக்கொண்டு) இரவில் (இருப்பிடங்களில்) நுழையும்போது, அவர்கள் குர்ஆன் ஓதும் ஓசையை நான் அறிவேன். பகல் நேரங்களில் அவர்கள் தங்கியிருக்கும் இடங்களை நான் பார்த்திருக்காவிட்டாலும் இரவில் அவர்கள் குர்ஆன் ஓதும் ஓசையைக் கேட்டு அவர்கள் தங்கியிருக்கும் இடங்களை நான் அடையாளம் கண்டுகொள்கிறேன்.
அவர்களில் விவேகம் மிக்க ஒருவர் இருக்கிறார். அவர் "குதிரைப் படையினரை' அல்லது "எதிரிகளை'ச் சந்தித்தால்,அவர்களைப் பார்த்து (வெருண்டோடாமல்) "என் தோழர்கள், தங்களுக்காகக் காத்திருக்கும்படி உங்களுக்கு உத்தரவிடுகின்றனர்' என்று கூறுவார்.

4913 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அறப்போரின்போது "அஷ்அரீ' குலத்தாரின் பயண உணவு (இருப்புக்) குறைந்துவிட்டால், அல்லது மதீனாவில் தம் மனைவி, மக்களின் உணவு (இருப்புக்) குறைந்துபோய் விட்டால், தம்மிடம் (எஞ்சி) இருப்பதை ஒரு துணியில் சேகரித்து, பிறகு ஒரே பாத்திரத்தின் மூலம் சமமாக அதைத் தமக்கிடையே பங்கிட்டுக்கொள்வார்கள். அவர்கள் என்னைச் சேர்ந்தவர்கள்; நான் அவர்களைச் சேர்ந்தவன்.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 40 அபூசுஃப்யான் பின் ஹர்ப் (ரலி) அவர்களின் சிறப்புகள்.**

4914 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஸ்லிம்கள் அபூசுஃப்யான் (ரலி) அவர்களை (அவர்கள் இஸ்லாத்தை ஏற்ற பிறகும்) ஏறெடுத்துப் பார்க்காமலும் அவரைத் தம் அவைகளில் அனுமதிக்காமலும் இருந்து வந்தனர். (இந்நிலையில்,) அவர் நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! மூன்று கோரிக்கைகளை எனக்கு (நிறைவேற்றி)த் தாருங்கள்" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "ஆ(கட்டு)ம்" என்றார்கள். அபூசுஃப்யான் (ரலி) அவர்கள், "என்னிடம் அரபியரிலேயே மிகவும் அழகான இலட்சணமான பெண் இருக்கிறார். அவர்தான் (என் மகள்) உம்மு ஹபீபா பின்த் அபீசுஃப்யான். அவரைத் தங்களுக்கு நான் மணமுடித்துத் தருகிறேன்" என்றார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "ஆ(கட்டு)ம்" என்றார்கள்.
அடுத்து "தாங்கள் (என் புதல்வர்) "முஆவியா'வை தங்களுடைய எழுத்தராக ஆக்கிக் கொள்ளுங்கள்" என்றார்கள். அதற்கும் நபி (ஸல்) அவர்கள், "ஆ(கட்டு)ம்" என்றார்கள். அடுத்து "படைப் பிரிவொன்றுக்கு என்னைத் தலைவராக்குங்கள். முஸ்லிம்களுடன் நான் போரிட்டுக் கொண்டிருந்ததைப் போன்று இறைமறுப்பாளர்களுடனும் நான் போரிட வேண்டும் (அவற்றின் மூலம் முஸ்லிம்களுக்கு என்மீதுள்ள வெறுப்பை நான் அகற்றிக்கொள்வேன்)" என்றார்கள். அதற்கும் நபி (ஸல்) அவர்கள் "ஆ(கட்டு)ம்" என்றார்கள்.
இதன் அறிவிப்பாளரான அபூஸுமைல் சிமாக் பின் அல்வலீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அபூசுஃப்யான் (ரலி) அவர்கள் இவற்றைக் கோராமலிருந்தால், அவற்றை நபி (ஸல்) அவர்கள் அவருக்குக் கொடுத்திருக்கமாட்டார்கள். ஏனெனில், நபி (ஸல்) அவர்கள் தம்மிடம் எதைக் கேட்டாலும் "ஆ(கட்டு)ம்" என்றே கூறுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 41 ஜஅஃபர் பின் அபீதாலிப் (ரலி), அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) மற்றும் அவர்களுடன் (அபிசீனியாவிலிருந்து) கப்பலில் வந்தோர் ஆகியோரின் சிறப்புகள்.**

4915 அபூபுர்தா ஆமிர் பின் அபீமூசா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) அபூமூசா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்காவிலிருந்து புலம்பெயர்ந்து மதீனாவை நோக்கி ஹிஜ்ரத்) புறப்பட்டுவிட்ட செய்தி, நாங்கள் யமன் நாட்டில் இருந்தபோது எங்களுக்குத் தெரியவந்தது. உடனே நானும் என் இரு சகோதரர்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி ஹிஜ்ரத் செய்யப் புறப்பட்டோம். அவர்களில் ஒருவர் அபூபுர்தா ஆவார்; மற்றொருவர் அபூருஹ்ம் ஆவார். நான்தான் அவர்களில் இளையவன் ஆவேன்" என்று கூறிவிட்டு, "என் (அஷ்அரீ) குலத்தாரில் "ஐம்பதுக்கும் மேற்பட்டவர்களுடன்' அல்லது "ஐம்பத்திரண்டு பேர்களுடன்' அல்லது "ஐம்பத்து மூன்று பேர்களுடன்' சேர்ந்து நாங்கள் சென்றோம்" என்று (அபூமூசா (ரலி) அவர்கள்) கூறினார்கள். பிறகு பின்வருமாறும் குறிப்பிட்டார்கள்:
நாங்கள் ஒரு கப்பலில் ஏறி (மதீனாவை நோக்கி)ப் பயணம் செய்தோம். எங்கள் கப்பல் (திசைமாறி) அபிசீனியாவில் (மன்னர்) நஜாஷீயிடம் எங்களை (கொண்டு சென்று)

இறக்கிவிட்டது. அங்கு ஜஅ்ஃபர் பின் அபீதாலிப் (ரலி) அவர்களையும் அவர்களுடைய சகாக்களையும் நஜாஷீக்கு அருகில் சந்திக்க நேர்ந்தது. (ஏற்கெனவே அவர்கள் மக்காவிலிருந்து அங்கு வந்து தங்கியிருந்தனர்.)
அப்போது ஜஅ்ஃபர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களை அனுப்பி (இங்கு) தங்கியிருக்கும்படி உத்தரவிட்டார்கள். நீங்களும் எங்களுடன் (இங்கேயே) தங்கிவிடுங்கள்" என்று கூறினார்கள்.
ஆகவே, நாங்களும் அவர்களுடன் (அபிசீனியாவில்) தங்கினோம். இறுதியில் நாங்கள் அனைவரும் சேர்ந்து (மதீனா) வந்துசேர்ந்தோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபரை வெற்றி கொண்ட சந்தர்ப்பத்தில் நாங்கள் அவர்களைச் சென்றடைந்தோம். அப்போது அவர்கள் (கைபர் போரில் கிடைத்த செல்வங்களில்) "எங்களுக்கும் பங்கு கொடுத்தார்கள்'. அல்லது "எங்களுக்கும் அதிலிருந்து கொடுத்தார்கள்'. கைபர் போரில் கலந்து கொள்ளாத எவருக்கும் அதிலிருந்து எதையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பங்கிட்டுத் தரவில்லை; தம்முடன் அதில் கலந்துகொண்டவர்களுக்கு மட்டுமே பங்கிட்டுத் தந்தார்கள்.
ஆனால், ஜஅ்ஃபர் (ரலி) அவர்களுடனும் அவர்களுடைய சகாக்களுடனும் எங்களது கப்பலில் வந்தவர்களுக்கு மட்டும் ((முஸ்லிம்களிடம் ஆலோசனை கலந்து ஒப்புதல் பெற்றபின்) பங்கிட்டுக் கொடுத்தார்கள்.

அப்போது மக்களில் சிலர் கப்பலில் வந்தவர்களான எங்களை நோக்கி, "உங்களுக்கு முன்பே நாங்கள் ஹிஜ்ரத் செய்துவிட்டோம்" என்று கூறலானார்கள்.
- எங்களுடன் (மதீனாவுக்கு) வந்தவர்களில் ஒருவரான (ஜஅ்ஃபர் (ரலி) அவர்களின் துணைவியார்) அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியார் ஹஃப்ஸா பின்த் உமர் (ரலி) அவர்களைச் சந்திப்பதற்காகச் சென்றார்கள். நஜாஷீ மன்னரை நோக்கி (அபிசீனியாவிற்கு) ஹிஜ்ரத் செய்தவர்களில் அஸ்மாவும் ஒருவராவார்.
ஹஃப்ஸா (ரலி) அவர்களுக்கு அருகில் அஸ்மா (ரலி) அவர்கள் இருந்தபோது, அங்கு உமர் (ரலி) அவர்கள் வந்தார்கள். உமர் (ரலி) அவர்கள் அஸ்மாவைக் கண்டபோது "இவர்யார்?" என்று (தம் மகள்) ஹஃப்ஸாவிடம் கேட்டார்கள். "இவர் அஸ்மா பின்த் உமைஸ்" என்று ஹஃப்ஸா பதிலளித்தார்கள்.
உமர் (ரலி) அவர்கள், "இவர் அபிசீனிய (ஹிஜ்ரத்கார)ரா? இவர் கடல் மார்க்கமாக (மதீனா) வந்தவரா?" என்று கேட்டார்கள். அதற்கு அஸ்மா (ரலி) அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள்.
அப்போது உமர் (ரலி) அவர்கள், "உங்களுக்கு முன்பே நாங்கள் (மதீனாவுக்கு) ஹிஜ்ரத் செய்து வந்துவிட்டோம். ஆகவே, உங்களைவிட நாங்களே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு மிகவும் உரியவர்கள் (நெருக்கமானவர்கள்)" என்று கூறினார்கள்.
இதைக் கேட்டு அஸ்மா (ரலி) அவர்கள் கோபப்பட்டு, ஏதோ சொல்லிவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்: உமரே! நீங்கள் தவறாகச் சொல்கிறீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! (நீங்கள் கூறியதைப் போன்று) இல்லை. நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (அவர்களுக்கு அருகிலேயே) இருந்தீர்கள். உங்களில் பசித்தவருக்கு அவர்கள்

உணவளித்தார்கள். உங்களில் அறியாதவருக்கு அவர்கள் அறிவூட்டினார்கள். (உடல் மற்றும் அறிவுரீதியாக அவர்களிடமிருந்து நீங்கள் உதவி பெற்றுவந்தீர்கள்.)
நாங்களோ உறவிலும் மார்க்கத்திலும் வெகு தொலைவிலிருக்கும் அபிசீனிய "நாட்டில்' அல்லது "அந்தப் பகுதியில்'இருந்தோம். அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவுமே இவ்வாறு செய்தோம். அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் சொன்னதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவிக்காமல் நான் எதையும் உண்ணவோ பருகவோமாட்டேன். நாங்கள் துன்புறுத்தப்பட்டோம்; அச்சுறுத்தப்பட்டோம்.
நான் இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறி அவர்களிடம் (நியாயம்) கேட்கப்போகிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் பொய் சொல்லமாட்டேன். திரித்துப் பேசவு மாட்டேன்; நீங்கள் சொன்னதைவிடக் கூட்டிச் சொல்லவுமாட்டேன்.

பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அங்கு) வந்தபோது, அஸ்மா பின்த் உமைஸ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! உமர் (ரலி) அவர்கள் இப்படி இப்படிச் சொன்னார்கள்" என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர், உங்களை விட எனக்கு உரியவர் அல்லர். அவருக்கும் அவருடைய சகாக்களுக்கும் ஒரேயொரு ஹிஜ்ரத் (செய்த சிறப்பு)தான் உண்டு. (அபிசீனியாவிலிருந்து) கப்பலில் வந்தவர்களே! உங்களுக்கு (அபிசீனியாவுக்கு ஒன்றும், மதீனாவுக்கு ஒன்றுமாக) இரண்டு ஹிஜ்ரத் (செய்த சிறப்பு) உண்டு" என்று கூறினார்கள்.
அஸ்மா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அபூமூசாவும் அவர்களுடைய கப்பல் தோழர்களும் கூட்டம் கூட்டமாக என்னிடம் வந்து, இந்த ஹதீஸ் குறித்துக் கேட்பார்கள். அவர்களைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிய இந்தப் புகழுரையைவிட இந்த உலகத்தில் வேறெதுவும் அவர்களின் மகிழ்ச்சிக்குரியதாகவோ அவர்களின் மனதில் பெருமிதத்துக்குரியதாகவோ இருக்கவில்லை.
என்னிடம் அபூமூசா (ரலி) அவர்கள் இந்த ஹதீஸைத் திரும்பத்திரும்பக் கேட்டுக் கொண்டேயிருந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 42 சல்மான் (ரலி), ஸுஹைப் (ரலி), பிலால் (ரலி) ஆகியோரின் சிறப்புகள்.**

4916 ஆயித் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
சல்மான், ஸுஹைப், பிலால் (ரலி) ஆகியோர் கொண்ட ஒரு குழுவினரிடம் (அது வரை இஸ்லாத்தை எற்காதிருந்த) அபூசுஃப்யான் வந்தபோது, அக்குழுவினர் "அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த இறைவிரோதியின் கழுத்தில் (இன்னும்) உரிய முறையில் இறைவனின் வாட்கள் பதம் பார்க்கவில்லையே!" என்று கூறினர்.
அப்போது அவர்களிடம் அபூபக்ர் (ரலி) அவர்கள், "குறைஷியரில் மூத்தவரும் அவர்களின் தலைவருமான ஒருவரைப் பார்த்தா இவ்வாறு கூறுகிறீர்கள்!" என்று (கடிந்து) கூறினார்கள்.
பிறகு நபி (ஸல்) அவர்களிடம் சென்று அதைப் பற்றி அபூபக்ர் (ரலி) அவர்கள் தெரிவித்தபோது, "அபூபக்ரே! நீங்கள் அ(க்குழுவிலுள்ள)வர்களைக் கோபப்படுத்தியிருப்பீர்கள்

போலும்! அவர்களை நீங்கள் கோபப்படுத்தியிருந்தால், உங்கள் இறைவனை நீங்கள் கோபப்படுத்திவிட்டீர்கள்" என்று சொன்னார்கள்.
ஆகவே, அவர்களிடம் அபூபக்ர் (ரலி) அவர்கள் வந்து, "என் சகோதரர்களே! நான் உங்களைக் கோப்படுத்திவிட்டேனா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "இல்லை, எங்கள் அருமைச் சகோதரரே! அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக!" என்று கூறினார்கள்.

## பாடம் : 43 அன்சாரிகளின் சிறப்புகள்.

4917 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அப்போது உங்களில் இரு குழுவினர் துணிவிழந்து (திரும்பி)விட எண்ணினர். ஆனால், அவர்களுக்கு அல்லாஹ் உதவியாள(னாய் இருந்தா)ன்" (3:122) எனும் இறை வசனம், பனூ சலிமா மற்றும் பனூ ஹாரிஸா கூட்டத்தாராகிய எங்களைக் குறித்தே அருளப்பெற்றது. "இந்த வசனம் அருளப்பெறாமலிருந்திருந்தால் நன்றாயிருந்திருக்குமே' என்று நாங்கள் விரும்பமாட்டோம். ஏனெனில், வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "அவர்களுக்கு அல்லாஹ் உதவியாள(னாய் இருந்தா)ன்" என்று (எங்களை மேன்மைப்படுத்திக்) கூறுகிறானே (பிறகு எப்படி அவ்வாறு விரும்ப முடியும்?).
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4918 ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! அன்சாரிகளுக்கும் அன்சாரிகளின் பிள்ளைகளுக்கும் அன்சாரிகளின் பிள்ளைகளின் பிள்ளைகளுக்கும் நீ மன்னிப்பு வழங்குவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

4919 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அன்சாரிகளுக்காகப் பாவமன்னிப்பு வேண்டிப் பிரார்த்தித்தார்கள். அன்சாரிகளின் சந்ததிகளுக்கும் அன்சாரிகளால் விடுதலை செய்யப்பட்ட அடிமைகளுக்கும் பாவமன்னிப்பு வேண்டிப் பிரார்த்தித்தார்கள் என்றே நான் எண்ணுகிறேன். இதில் நான் ஐயம் கொள்ளவில்லை.

4920 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
திருமண விருந்தொன்றுக்குச் சென்று விட்டுத் திரும்பிக்கொண்டிருந்த (அன்சாரிப்) பெண்களையும் சிறுவர்களையும் நோக்கி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்று அவர்களுக்கு நேராக நின்று, "இறைவா! (நீயே சாட்சி)" என்று கூறிவிட்டு, "மக்களிலேயே நீங்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள். இறைவா! (நீயே சாட்சி) மக்களிலேயே நீங்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள்" என்று அன்சாரிகளைப் பற்றிக் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4921 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அன்சாரிப் பெண்களில் ஒருவர் வந்தார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தனியாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன் மீதாணையாக! (அன்சாரிகளான) நீங்கள் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவர்கள்" என்று மூன்று முறை சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4922 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அன்சாரிகள் என் இரைப்பை; என் கருவூலம் ஆவர். இனி (அன்சாரிகள் அல்லாத) மக்கள் பெருகுவார்கள். (அன்சாரிகள்) குறைந்துவிடுவார்கள். ஆகவே, அன்சாரிகளில் நன்மை புரிபவர்களிடமிருந்து (அதை) ஏற்றுக்கொள்ளுங்கள்; அவர்களில் தவறிழைப்பவர்களை (பெருந்தன்மையுடன்) மன்னித்து விடுங்கள்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 44 அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களின் சிறப்பு.

4923 அபூஉசைத் மாலிக் பின் ரபீஆ அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது பனூ நஜ்ஜார் குடும்பமாகும். பிறகு பனூ அப்தில் அஷ்ஹல் குடும்பமாகும். பிறகு பனுல் ஹாரிஸ் பின் அல்கஸ்ரஜ் குடும்பமாகும். பிறகு பனூ சாஇதா குடும்பமாகும். அன்சாரி கிளைக் குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை உண்டு" என்று சொன்னார்கள்.
அப்போது (பனூ சாஇதா குடும்பத்தைச் சேர்ந்தவரான) சஅத் (பின் உபாதா (ரலி) அவர்கள்), "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களைவிட (மற்ற மூன்று குலங்களைச்) சிறப்பித்துக் கூறியதாகவே நான் அறிகிறேன்" என்று சொன்னார்கள். அப்போது அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இங்கே குறிப்பிடப்படாத இன்னும்) பலரையும்விட உங்களைச் சிறப்பித்துக் கூறி விட்டார்களே!" என்று சொல்லப்பட்டது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஉசைத் அல்அன்சாரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாக வந்துள்ளது.
ஆனால், ஹதீஸி(ன் இறுதியி)ல் இடம்பெற்றுள்ள சஅத் பின் உபாதா (ரலி) அவர்களின் கூற்று இங்கு இடம்பெறவில்லை.

4924 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது பனூ அப்தில் அஷ்ஹல் அந்நஜ்ஜார் குடும்பமாகும். பிறகு பனுல் ஹாரிஸ் பின் அல்கஸ்ரஜ் குடும்பமும் பனூ சாஇதா குடும்பமும் ஆகும்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்ராஹீம் பின் முஹம்மத் பின் தல்ஹா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை அபூஉசைத் (ரலி) அவர்கள், (மதீனா ஆட்சியரான) வலீத் பின் உத்பாவுக்கு அருகில் உரையாற்றியபோது கூறினார்கள். மேலும், அவர்கள் "அல்லாஹ்வின் மீதாணையாக! அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் ஒன்றுக்கு நான் முதலிடம் தருவதாக இருந்தால், (பனூ சாஇதா எனும்) என் குடும்பத்தாருக்கே முதலிடம் அளித்திருப்பேன்" என்றும் சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4925 அபூஉசைத் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது 'பனுந் நஜ்ஜார்' குடும்பமாகும். பிறகு 'பனூ அப்தில் அஷ்ஹல்' குடும்பமாகும். பிறகு 'பனுல் ஹாரிஸ் பின் அல்கஸ்ரஜ்' குடும்பமாகும். பிறகு 'பனூ சாஇதா' குடும்பமாகும். அன்சாரி கிளைக் குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை உள்ளது" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளரான அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அபூஉசைத் (ரலி) அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்மீது இட்டுக்கட்டுவேனா? நான் பொய்யுரைப்பவனாயிருந்தால், என் பனூசாஇதா குடும்பத்தாரையே முதலில் கூறியிருப்பேன்" என்று கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறிய செய்தி சஅத் பின் உபாதா (ரலி) அவர்களுக்கு எட்டியபோது,அவர்கள் மன வேதனைப்பட்டார்கள். மேலும், "(பனூ சாஇதா குலத்தாராகிய) நாங்கள் நான்காவது இடத்திற்குத் தள்ளப்பட்டுவிட்டோம். என் கழுதையில் சேணம் பூட்டுங்கள்; நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் செல்லப்போகிறேன்" என்று கூறினார்கள்.

அப்போது அவர்களிடம் அவர்களுடைய சகோதரர் மகன் சஹ்ல் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கருத்துக்கு மறுப்புத் தெரிவிக்க நீங்கள் செல்லப் போகிறீர்களா? அல்லாஹ்வின் தூதர்தான் (இதைப் பற்றி) நன்கு அறிந்தவர்கள். (சிறப்பித்துக் கூறப்பட்ட) நான்கு குடும்பங்களில் நான்காவது குடும்பமாக நீங்கள் இருப்பது போதுமாகவில்லையா?" என்று கேட்டார்கள்.
உடனே சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்" என்று கூறிவிட்டுத் திரும்பிவிட்டார்கள். மேலும், தமது கழுதையை அவிழ்த்துவிடும்படியும் கட்டளையிட்டார்கள். அவ்வாறே அது அவிழ்த்துவிடப்பட்டது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஉசைத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "அன்சாரிகளில் சிறந்தவர்கள் அல்லது அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி, கிளைக் குடும்பங்கள் தொடர்பான மேற்கண்ட தகவல்கள் இடம்பெற்றுள்ளன. அதில், சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள் பற்றிய நிகழ்வு இடம்பெறவில்லை.

4926 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், முஸ்லிம்கள் திரளாகக் குழுமியிருந்த ஓர் அவையில், "அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்ததைப் பற்றி உங்களுக்குச் சொல்லட்டுமா?" என்று கேட்டார்கள். மக்கள், "ஆம்; அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அவர்கள்) "பனூ அப்தில் அஷ்ஹல்' குடும்பத்தார் ஆவர்" என்றார்கள். மக்கள், "பிறகு யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பிறகு "பனுந் நஜ்ஜார்' குடும்பத்தார்" என்றார்கள். மக்கள், "பிறகு யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்க, "பிறகு "பனுல் ஹாரிஸ் பின் அல்கஸ்ரஜ்' குடும்பத்தார்" என்றார்கள்.
"பிறகு யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று மக்கள் கேட்டதற்கு, "பிறகு "பனூ சாஇதா' குடும்பத்தார்" என்று விடையளித்தார்கள். "பிறகு யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று மககள் கேட்க, "பிறகு அன்சாரி கிளைக் குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை உள்ளது" என்று பதிலளித்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம் குலத்தாரின் பெயரை நான்காவதாகக் கூறியதைக் கேட்டு சஅத் பின் உபாதா (ரலி) அவர்கள் கோபத்துடன் எழுந்து, "நான்கு குடும்பங்களில் நாங்கள் தான் கடைசியா?" என்று கேட்டபடி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அது பற்றிப்) பேச முனைந்தார்கள்.
அப்போது அவர்களுடைய குலத்தைச் சேர்ந்த சிலர், "அமருங்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்கள் குடும்பத்தை நான்கு குடும்பங்களில் ஒன்றாகக் குறிப்பிட்டதே உங்களுக்குத் திருப்தியளிக்கவில்லையா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெயர் குறிப்பிடாமல் விட்ட குடும்பத்தாரின் எண்ணிக்கையே, பெயர் குறிப்பிட்ட குடும்பங்களின் எண்ணிக்கையைவிட அதிகமாகும்" என்று கூறினர்.
ஆகவே, சஅத் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அது குறித்துப்) பேசாமல் விலகிக்கொண்டார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 45 அன்சாரிகளுடன் நல்லுறவு பாராட்டல்.

4927 அனஸ் பின் மாலிக் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஜரீர் பின் அப்தில்லாஹ் அல்பஜலீ (ரலி) அவர்களுடன் ஒரு பயணத்தில் சென்றேன். அவர்கள் எனக்குப் பணிவிடைகள் செய்துவந்தார்கள். நான் "(எனக்கு) நீங்கள் (பணிவிடைகள்) செய்ய வேண்டாம்" என்று அவர்களிடம் கூறினேன்.

அதற்கு ஜரீர் (ரலி) அவர்கள், "அன்சாரிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குச் செய்த (உயர்ந்த நன்மை) ஒன்றை நான் பார்த்திருக்கிறேன். (அன்றே) "அன்சாரிகளில் எவருடன் நான் சென்றாலும் அவருக்கு நான் பணிவிடைகள் செய்தே தீருவேன்' என்று சத்தியம் செய்துவிட்டேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னுல் முஸன்னா (ரஹ்), இப்னு பஷ்ஷார் (ரஹ்) ஆகியோரின் அறிவிப்புகளில், "ஜரீர் (ரலி) அவர்கள் அனஸ் (ரலி) அவர்களைவிடப் பெரியவராக இருந்தார்கள்" என்றும், இப்னு பஷ்ஷார் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அனஸ் (ரலி) அவர்களைவிட வயதில் மூத்தவராக இருந்தார்கள்" என்றும் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 46 நபி (ஸல்) அவர்கள் "ஃகிஃபார்' மற்றும் "அஸ்லம்' குலத்தாருக்காகச் செய்த பிரார்த்தனை.

4928 அபூதர் அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஃகிஃபார் குலத்தாருக்கு அல்லாஹ் மன்னிப்பு வழங்குவானாக. அஸ்லம் குலத்தாரை அல்லாஹ் அமைதி காணச்செய்வானாக" என்று பிரார்த்தித்தார்கள்.

4929 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "நீங்கள் உங்கள் (ஃகிஃபார்) குலத்தாரிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அஸ்லம் குலத்தாரை அல்லாஹ் அமைதி காணச்செய்வானாக! ஃகிஃபார் குலத்தாருக்கு அல்லாஹ் மன்னிப்பு வழங்குவானாக!' எனப் பிரார்த்தித்தார்கள் என்று கூறுங்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூதர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4930 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "அஸ்லம் குலத்தாரை அல்லாஹ் அமைதி காணச்செய்வானாக. ஃகிஃபார் குலத்தாருக்கு அல்லாஹ் பாவ மன்னிப்பு அருள்வானாக" என்று பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
இதே ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வாயிலாகவும் ஏழு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4931 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அஸ்லம் குலத்தாருக்கு அல்லாஹ் அமைதியை வழங்கிவிட்டான். ஃகிஃபார் குலத்தாருக்கு அல்லாஹ் பாவமன்னிப்பு அருளிவிட்டான். இவ்வாறு நான் சொல்லவில்லை. வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்தான் சொன்னான்" என்றார்கள்.

4932 கு∴பா∴ப் பின் ஈமா அல்∴கி∴பாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒரு தொழுகையில், "இறைவா! பனூ லிஹ்யான், ரிஅல், தக்வான் ஆகியோரைச் சபிப்பாயாக! உஸைய்யா குலத்தார் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறுசெய்துவிட்டனர். ∴கி∴பார் குலத்தாருக்கு அல்லாஹ் பாவமன்னிப்பு வழங்குவானாக! அஸ்லம் குலத்தாரை அல்லாஹ் அமைதி காணச் செய்வானாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

4933 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
∴கி∴பார் குலத்தாருக்கு அல்லாஹ் பாவமன்னிப்பு வழங்குவானாக! அஸ்லம் குலத்தாரை அல்லாஹ் அமைதி காணச்செய்வானாக! உஸைய்யா குலத்தார் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறுசெய்துவிட்டனர்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஸாலிஹ் மற்றும் உசாமா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி இவ்வாறு கூறினார்கள்" என்று காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 47 ∴கி∴பார், அஸ்லம், ஜுஹைனா, அஷ்ஜஉ, முஸைனா, தமீம், தவ்ஸ், தய்யி ஆகிய குலத்தாரின் சிறப்புகள்.

4934 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அன்சாரிகளும், முஸைனா குலத்தாரும், ஜுஹைனா குலத்தாரும், ∴கி∴பார் குலத்தாரும், அஷ்ஜஉ குலத்தாரும், பனூ அப்தில்லாஹ் குலத்தில் இருப்போருமே (இஸ்லாத்தை, அதன் ஆரம்பக் கட்டத்திலேயே தழுவிய காரணத்தால்) என் சிறப்பு உதவியாளர்கள் ஆவர்; மற்றவர்கள் அல்லர். அவர்களுக்கு அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே பொறுப்பாளர்கள் ஆவர். - இதை அபூஅய்யூப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4935 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குறைஷியரும், அன்சாரிகளும், முஸைனா குலத்தாரும், ஜுஹைனா குலத்தாரும், அஸ்லம் குலத்தாரும், ∴கி∴பார் குலத்தாரும், அஷ்ஜஉ குலத்தாரும் என் சிறப்பு உதவியாளர்கள் ஆவர். அவர்களுக்கு அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் அன்றி பொறுப்பாளர்கள் வேறெவரும் இலர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் சில குலத்தார் குறித்து அறிவிப்பாளர் சஅத் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்கள் கூறுகையில் "நான் அறிந்தவரையில் இவ்வாறு தான்" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

4936 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அஸ்லம், ஃகிஃபார், முஸைனா, "ஜுஹைனா குலத்தில் இருப்போர்' அல்லது ஜுஹைனா ஆகிய குலங்கள், பனூ தமீம்,பனூ ஆமிர் மற்றும் ஒன்றுக்கு ஒன்று நட்புறவு கொண்டிருந்த அசத் மற்றும் ஃகதஃபான் குலங்கள் ஆகியவற்றைவிடச் சிறந்தவை ஆகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4937 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! ஃகிஃபார், அஸ்லம், "முஸைனா', அல்லது "முஸைனா குலத்தில் இருப்போர்', "ஜுஹைனா குலத்தில் இருப்போர்' அல்லது "ஜுஹைனா' ஆகிய குலங்கள் மறுமை நாளில் அல்லாஹ்விடம் அசத், தய்யி, ஃகதஃபான் ஆகிய குலங்களைவிடச் சிறந்தவையாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

4938 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அஸ்லம் குலத்தாரும், ஃகிஃபார் குலத்தாரும், "முஸைனா மற்றும் ஜுஹைனா குலத்தாரில் சில குடும்பங்களும்'அல்லது "ஜுஹைனா மற்றும் முஸைனா குலத்தாரில் சில குடும்பங்களும்' மறுமை நாளில் அல்லாஹ்விடம் அசத், ஃகதஃபான், ஹவாஸின், தமீம் ஆகிய குலங்களைவிடச் சிறந்தவை ஆகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4939 அபூபக்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(பனூ தமீம் குலத்தைச் சேர்ந்த) அக்ரஉ பின் ஹாபிஸ் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, ஹஜ் பயணிகளின் பொருட்களைக் களவாடிய அஸ்லம், ஃகிஃபார், முஸைனா ஆகிய குலங்கள்தான் தங்களிடம் (வந்து இஸ்லாத்தைக் கடைப்பிடிப்பதாக) வாக்குறுதி அளித்துள்ளனர்" என்று கூறினார்கள். (ஜுஹைனா குலத்தையும் குறிப்பிட்டார்கள் என்றே நான் கருதுகிறேன் என அறிவிப்பாளர் முஹம்மத் (ரஹ்) அவர்களே ஐயத்துடன் அறிவிக்கிறார்).
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அஸ்லம், ஃகிஃபார், முஸைனா (ஜுஹைனாவையும் குறிப்பிட்டார்கள் என்றே நான் கருதுகிறேன்) ஆகிய குலத்தார், பனூ தமீம், பனூ ஆமிர், அசத், ஃகதஃபான் ஆகிய குலத்தாரைவிடச் சிறந்தவர்களாக இருந்தாலுமா அவர்கள் நஷ்டமடைந்து இழப்புக்குள்ளாகிவிட்டனர், சொல்லுங்கள்" என்று கேட்டார்கள்.
அதற்கு அக்ரஉ (ரலி) அவர்கள் "ஆம்' (இழப்புக்குள்ளாகிவிட்டார்கள்) என்று பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த

ஏகயிறை)வன் மீதாணையாக! அவர்கள் இவர்களைவிட மிகவும் சிறந்தவர்களே" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூபக்ரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஜுஹைனா குலத்தாரும்' என்று உறுதிபடவே இடம்பெற்றுள்ளது. "ஜுஹைனா குலத்தாரையும் குறிப்பிட்டார்கள் என்று நான் கருதுகிறேன்" என்று (ஐயத்துடன்) இடம்பெறவில்லை.

4940 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அஸ்லம், ஃகிஃபார், முஸைனா, ஜுஹைனா ஆகிய குலத்தார் பனூ தமீம், பனூ ஆமிர் மற்றும் நட்புறவுக் குலங்களான பனூ அசத், ஃகதஃபான் ஆகியவற்றைவிடச் சிறந்தவர்களாவர்.
இதை அபூபக்ரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூபக்ரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4941 அபூபக்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஜுஹைனா, அஸ்லம், ஃகிஃபார் ஆகிய குலங்கள், பனூ தமீம், பனூ அப்தில்லாஹ் பின் ஃகதஃபான், ஆமிர் பின் ஸஅஸஆ ஆகிய குலங்களைவிடச் சிறந்தவையாக இருந்தாலுமா, கூறுங்கள்?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உரத்த குரலில் கேட்டார்கள்.
அதற்கு மக்கள், "அப்போது (பனூ தமீம் உள்ளிட்ட) அவர்கள் நஷ்டமடைந்துவிட்டார்கள்; இழப்புக்குள்ளாகிவிட்டார்கள்,அல்லாஹ்வின் தூதரே!" என்று பதிலளித்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) "(ஆம்;) அவர்கள் இவர்களைவிடச் சிறந்தவர்களே" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூகுரைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (குலங்கள் வரிசையில் சற்று முன்பின்னாக) "ஜுஹைனா, முஸைனா, அஸ்லம், ஃகிஃபார் ஆகிய குலத்தார்..." என்று ஆரம்பமாகிறது.

4942 அதீ பின் ஹாத்திம் அத்தாயீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (ஒரு முறை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடம் சென்றபோது அவர்கள் என்னிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முகத்தையும் அவர்களுடைய தோழர்களின் முகங்களையும் (மகிழ்ச்சியால்) வெண்மையாக்கிய முதலாவது தர்மப் பொருட்கள், தய்யீ குலத்தார் அளித்ததாகும். அதை நீங்கள் தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவந்தீர்கள்" என்று கூறினார்கள்.

4943 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
துஃபைல் பின் அம்ர் அத்தவ்ஸீ (ரலி) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் (நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! (எங்கள்) தவ்ஸ் குலத்தார் (இஸ்லாத்தை ஏற்க) மறுத்து நிராகரித்துவிட்டார்கள். அவர்களுக்கெதிராகப் பிரார்த்தியுங்கள்" என்று கேட்டுக்கொண்டனர்.

அப்போது "தவ்ஸ் குலத்தார் அழிந்தனர்" என்று கூறப்பட்டது. நபி (ஸல்) அவர்கள், "இறைவா! தவ்ஸ் குலத்தாரை நல்வழியில் செலுத்துவாயாக! அவர்களை (எம்மிடம்) கொண்டுவந்து சேர்ப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

4944 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பனூ தமீம் குலத்தார் பற்றிக் கூறிய மூன்று விஷயங்களைக் கேட்டதிலிருந்து நான் அ(க் குலத்த)வர்களை எப்போதும் நேசிக்கலானேன்.
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்கள் (பனூ தமீம் குலத்தார்) என் சமுதாயத்தாரிலேயே மிகக் கடுமையாக தஜ்ஜாலை எதிர்ப்பார்கள்" என்று சொன்னார்கள்.
(ஒரு முறை) பனூ தமீம் குலத்தாரின் தர்மப் பொருள்கள் வந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவை எங்கள் இனத்தாரின் தர்மப் பொருட்கள்" என்று கூறினார்கள்.
(ஒரு முறை) ஆயிஷா (ரலி) அவர்களிடம் பனூ தமீம் குலத்தாரின் பெண் போர்க் கைதி ஒருவர் இருந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "நீ இப்பெண்ணை விடுதலை செய்துவிடு. ஏனெனில், இவள் இஸ்மாயீல் (அலை) அவர்களின் சந்ததிகளில் ஒருத்தி" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பனூ தமீம் பற்றிக் கூறிய மூன்று விஷயங்களைக் கேட்டதிலிருந்து நான் எப்போதும் அவர்களை நேசிக்கலானேன்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகின்றன.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பனூ தமீம் குலத்தாரின் மூன்று பண்புகளைக் கூறக் கேட்டதன் பின்னர் அவர்களை எப்போதும் நான் நேசித்துக் கொண்டிருக்கிறேன்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும், அதில் "மக்களிலேயே போர்க்களங்களில் அறப்போர் புரிவதில் அவர்கள் மிகவும் கடுமையானவர்கள்" என்று (பொதுவாகவே) இடம்பெற்றுள்ளது. தஜ்ஜாலைப் பற்றிய குறிப்பு இல்லை.

## பாடம் : 48 மக்களிலேயே சிறந்தவர்கள்.

4945 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களை நீங்கள் மூலகங்களாகக் காண்பீர்கள். அறியாமைக் காலத்தில் அவர்களில் சிறந்தவர்களாயிருந்தவர்கள் இஸ்லாத்தை ஏற்ற பின்பும் சிறந்தவர்கள்தான்; அவர்கள் மார்க்க விளக்கத்தைப் பெற்றுக்கொண்டால்! (இஸ்லாம் எனும்) இந்த விஷயத்தில் நுழைவதற்குமுன் அதைக் கடுமையாக வெறுத்தவர்களே. பின்னர் அதில் மக்களிலேயே சிறந்தவர்களாக இருப்பதை நீங்கள் காண்பீர்கள். மனிதர்களிலேயே மிகவும்

மோசமானவனாகவே இரட்டை முகத்தானைக் காண்பீர்கள். அவன் இவர்களிடம் செல்லும் போது ஒரு முகத்துடனும் அவர்களிடம் செல்லும் போது இன்னொரு முகத்துடனும் செல்வான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "மக்களை நீங்கள் மூலகங்களாகக் காண்பீர்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
அபூஸுர்ஆ மற்றும் அஃரஜ் (ரஹ்) ஆகியோரின் அறிவிப்புகளில், "இந்த தலைமைப் பதவி விஷயத்தில் தாமாக விழும்வரை அதில் கடுமையான வெறுப்புக் காட்டக்கூடியவர்களையே நீங்கள் மக்களில் சிறந்தவர்களாகக் காண்பீர்கள்" என்று காணப்படுகிறது.

## பாடம் : 49 குறைஷிப் பெண்களின் சிறப்புகள்.

4946 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒட்டகத்தில் பயணம் செய்த (அரபுப்) பெண்களிலேயே சிறந்தவர்கள் "குறைஷிப் பெண்கள் ஆவர்' அல்லது "நல்ல குறைஷிப் பெண்கள் ஆவர்'. அவர்கள் அநாதைக் குழந்தைகள்மீது அதிகமான பாசம் கொண்டவர்கள்; தம் கணவனின் செல்வத்தை நன்கு பேணிக்காப்பவர்கள் ஆவர்.– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவ்விரு அறிவிப்புகளிலும் நபி (ஸல்) அவர்கள் மேற்கண்டவாறு கூறியதாக இடம் பெற்றுள்ளது. ஆயினும், தாவூஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் குழந்தைகள் மீது அதிகப் பாசம் கொண்டவர்கள்' என்று (பொதுவாகவே) இடம்பெற்றுள்ளது. "அநாதைக் குழந்தைகள்' என்ற குறிப்பு இல்லை.

4947 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
குறைஷிப் பெண்கள்தான் ஒட்டகத்தில் பயணம் செய்த (அரபுப்) பெண்களிலேயே சிறந்தவர்கள். (தம்) குழந்தைகள்மீது அதிகப் பரிவுடையவர்கள். தம் கணவனின் செல்வத்தை நன்கு பேணிப் பாதுகாக்கக்கூடியவர்கள்.
இதன் அறிவிப்பாளரான அபூஹுரைரா (ரலி) அவர்கள் மேற்கண்டவாறு அறிவித்து விட்டுத் தொடர்ந்து, "இம்ரானின் புதல்வி மர்யம் (அலை) அவர்கள் ஒட்டகம் எதிலும் பயணம் செய்ததேயில்லை" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நபி (ஸல்) அவர்கள் "உம்มு ஹானீ பின்த் அபீதாலிப் (ரலி)' அவர்களைத் தமக்காகப் பெண் கேட்டார்கள். அதற்கு உம்மு ஹானீ அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! எனக்கு வயதாகி விட்டது; எனக்குக் குழந்தை குட்டிகளும் உள்ளனர்" என்று கூறி (மறுத்து)

விட்டார்கள். அப்போது தான் நபி (ஸல்) அவர்கள், (மேற்கண்டவாறு) "ஒட்டகத்தில் பயணம் செய்த பெண்களிலேயே சிறந்தவர்கள்..." என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.
ஆயினும் இவற்றில் "(தம்) குழந்தைகள் மீது அதிகப் பாசமுடையவர்கள்" எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

4948 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒட்டகத்தில் பயணம் செய்த பெண்களிலேயே சிறந்தவர்கள் நல்ல குறைஷிப் பெண்களேயாவர். அவர்கள் (தம்) குழந்தைகள்மீது அதிகப் பாசமுடையவர்கள். தம் கணவனின் செல்வத்தை நன்கு பேணிக்காப்பவர்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து அப்படியே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 50 நபி (ஸல்) அவர்கள் தம் (முஹாஜிர் – அன்சாரித்) தோழர்களிடையே சகோதரத்துவத்தை ஏற்படுத்தியது.

4949 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (முஹாஜிரான) அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்களுக்கும் (அன்சாரியான) அபூதல்ஹா (ரலி) அவர்களுக்கும் இடையே சகோதரத்துவத்தை ஏற்படுத்தினார்கள்.

4950 ஆஸிம் பின் சுலைமான் அல்அஹ்வல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், "இஸ்லாத்தில் (மனிதர்களாக ஏற்படுத்திக் கொள்கிற ஒருவருக்கொருவர் வாரிசாகிக் கொள்ளும் ஒப்பந்த) நட்புறவு முறை இல்லை" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் எனத் தங்களுக்குச் செய்தி கிடைத்ததா? என்று கேட்கப்பட்டது.
அதற்கு அனஸ் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது வீட்டில் வைத்து குறைஷி (முஹாஜிர்)களுக்கும் (மதீனா) அன்சாரிகளுக்கும் இடையே நட்புறவு முறையை ஏற்படுத்தியிருந்தார்களே!"என்றார்கள்.

4951 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்த எனது வீட்டில் வைத்து குறைஷி (முஹாஜிர்)களுக்கும் (மதீனா) அன்சாரிகளுக்கும் இடையே நட்புறவு முறையை ஏற்படுத்தினார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4952 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இஸ்லாத்தில் (மனிதர்களாக ஏற்படுத்திக்கொள்கிற ஒப்பந்த) நட்புறவு முறை இல்லை. அறியாமைக் காலத்தில் நடைபெற்ற ஒப்பந்த நட்புறவுகள் இஸ்லாத்திற்குப் பிறகு இன்னும் பலத்தை அதிகரிக்கவே செய்யும். (காலாவதியாகிவிடாது.)

இதை ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 51 நபி (ஸல்) அவர்கள் உயிருடன் இருந்தது அவர்களுடைய தோழர்களுக்குப் பாதுகாப்பாகவும் நபித்தோழர்கள் உயிருடன் இருந்தது (ஒட்டுமொத்த) சமுதாயத்திற்குப் பாதுகாப்பாகவும் அமைந்தது பற்றிய விளக்கம்.

4953 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மஃக்ரிப் தொழுகையைத் தொழுதோம். பிறகு நாங்கள், "நாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இஷாத் தொழுகை தொழும்வரை (இங்கேயே) அமர்ந்திருந்தால் நன்றாயிருக்கும்" என்று கூறிக் கொண்டு (அங்கேயே) அமர்ந்திருந்தோம்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து, "ஏன் இங்கேயே இருந்துகொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் தங்களுடன் மஃக்ரிப் தொழுகையைத் தொழுதுவிட்டுப் பிறகு "தங்களுடன் இஷாத் தொழுகையையும் தொழும்வரை அமர்ந்திருப்போம்' என்று கூறினோம்" என்றோம்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் செய்தது "நன்று' அல்லது "சரி' என்று சொல்லி விட்டு, வானத்தை நோக்கித் தமது தலையை உயர்த்தினார்கள். –(பொதுவாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிகமாக வானத்தை நோக்கித் தமது தலையை உயர்த்தக்கூடியவராக இருந்தார்கள்.–
பிறகு, "நட்சத்திரங்கள் வானத்திற்குப் பாதுகாப்பாகும். நட்சத்திரங்கள் போய்விட்டால் வானத்திற்கு வாக்களிக்கப்பட்டது வந்துவிடும். நான் என் தோழர்களுக்குப் பாதுகாப்பு ஆவேன். நான் போய்விட்டால் என் தோழர்களுக்கு வாக்களிக்கப்பட்டது வந்துவிடும். என் தோழர்கள் என் சமுதாயத்தாருக்குப் பாதுகாப்பு ஆவார்கள். என் தோழர்கள் போய்விட்டால் என் சமுதாயத்தாருக்கு வாக்களிக்கப்பட்டது வந்துவிடும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 52 நபித்தோழர்கள், பிறகு அவர்களை அடுத்து வந்தவர்கள் (தாபிஈன்), பிறகு அவர்களை அடுத்து வந்தவர்கள் (தபஉத் தாபிஈன்) ஆகியோரின் சிறப்பு.

4954 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களில் ஒரு குழுவினர் அறப்போர் புரியச் செல்கின்ற ஒரு காலம் வரும். அப்போது அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்தவர்கள் (நபித்தோழர்கள்) எவரேனும் உங்களிடையே இருக்கிறார்களா?" என்று கேட்கப்படும். அதற்கு அக்குழுவினர், "ஆம் (இருக்கிறார்கள்)" என்று பதிலளிப்பார்கள். ஆகவே, அவர்களுக்கு வெற்றியளிக்கப்படும்.
பிறகு (அடுத்த தலைமுறை) மக்களில் மற்றொரு குழுவினர் அறப்போர் புரியச் செல்வார்கள். அப்போது அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டிருந்தவர்களைப் பார்த்தவர்கள் (தாபிஉகள்) எவரேனும் உங்களிடையே

இருக்கிறார்களா?" என்று கேட்கப்படும். அப்போது அக்குழுவினர் "ஆம் (இருக்கிறார்கள்)" என்று பதிலளிப்பார்கள். ஆகவே, அவர்களுக்கும் வெற்றியளிக்கப்படும்.
பிறகு (அதற்கடுத்த தலைமுறை) மக்களில் வேறொரு குழுவினர் அறப்போருக்குப் புறப்பட்டுச் செல்வார்கள். அப்போது அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தோழமை கொண்டிருந்தவர்களுடன் தோழமைகொண்டிருந்தவர்கள் (தபஉத் தாபிஈன்) எவரேனும் உங்களிடையே இருக்கிறார்களா?" என்று கேட்கப்படும். அதற்கு அக்குழுவினர் "ஆம் (இருக்கிறார்கள்)" என்று பதிலளிப்பார்கள். ஆகவே, அவர்களுக்கும் வெற்றியளிக்கப்படும்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4955 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களிடம் ஒரு காலம் வரும். அப்போது அவர்களிலிருந்து ஒரு படைப்பிரிவு அனுப்பப்படும். அப்போது "நபித்தோழர்களில் எவரையேனும் உங்களில் காண்கிறீர்களா என்று பாருங்கள்" என்று கூறுவர். அப்போது ஒரு மனிதர் காணப்படுவார். ஆகவே, அவருக்காக அப்படைக்கு வெற்றியளிக்கப்படும்.
பிறகு (அடுத்த தலைமுறையில்) இரண்டாவது படைப்பிரிவு ஒன்று அனுப்பப்படும். அப்போது "நபித்தோழர்களைப் பார்த்தவர்கள் (தாபிஉ) எவரேனும் அவர்களிடையே இருக்கிறார்களா?" என்று கேட்பார்கள். (அப்போது ஒரு மனிதர் காணப்படுவார்.) ஆகவே, அவருக்காக அப்படைக்கு வெற்றியளிக்கப்படும்.
பிறகு (அதற்கடுத்த தலைமுறையில்) மூன்றாவது படைப்பிரிவு அனுப்பப்படும். அப்போது "நபித்தோழர்களைப் பார்த்தவர்களைப் பார்த்தவர்கள் (தபஉத் தாபிஉ) எவரையேனும் அவர்களிடையே நீங்கள் காண்கிறீர்களா?" என்று கேட்கப்படும்.
பிறகு (அதற்கடுத்த தலைமுறையில்) நான்காவது படைப்பிரிவு அனுப்பப்படும். அப்போது நபித்தோழர்களைப் பார்த்த ஒருவரை (தாபிஉ) பார்த்தவரை (தபஉத் தாபிஉ) பார்த்த எவரேனும் அவர்களிடையே நீங்கள் காண்கிறீர்களா,பாருங்கள்" என்று சொல்லப்படும். அத்தகைய ஒருவர் காணப்படுவார். ஆகவே, அவருக்காக அப்படைக்கு வெற்றியளிக்கப் படும்.

4956 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் சிறந்தவர்கள் என்னை ஒட்டியுள்ள தலைமுறையினர் ஆவர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு ஒரு சமுதாயத்தார் வருவார்கள். அவர்களது சாட்சியம் அவர்களது சத்தியத்தையும், அவர்களது சத்தியம் அவர்களது சாட்சியத்தையும் முந்திக்கொள்ளும்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஹன்னாத் பின் அஸ்ஸரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "தலைமுறையினர்' எனும் சொற்றொடர் இடம்பெறவில்லை. குதைபா பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பிறகு "சமுதாயங்கள் பல வரும்" என்று இடம்பெற்றுள்ளது.

4957 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "மக்களில் சிறந்தோர் யார்?" என்று கேட்கப் பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(மக்களில் சிறந்தோர்) என் தலை முறையினர், பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு ஒரு சமுதாயத்தார் வருவார்கள். அவர்களது சாட்சியம் அவர்களின் சத்தியத்தையும், அவர்களது சத்தியம் அவர்களது சாட்சியத்தையும் முந்திக்கொள்ளும்" என்று விடையளித்தார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நாங்கள் சிறுவர்களாயிருந்தபோது எங்களை "அஷ்ஹது பில்லாஹ்' (அல்லாஹ்வின் பெயரால் நான் சாட்சியம் அளிக்கிறேன்) என்றோ, "அலய்ய அஹ்துல்லாஹ்' (அல்லாஹ்வுடன் செய்துகொண்ட ஒப்பந்தப்படி) என்றோ கூறுவதை அவர்கள் (நபித்தோழர்கள்) தடுத்து வந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இருவரின் அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

4958 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "மக்களில் சிறந்தவர்கள் என் தலைமுறையினர் ஆவர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள்" என்று கூறிவிட்டு, மூன்றாவது தடவையில் அல்லது நான்காவது தடவையில் "அவர்களுக்குப் பிறகு சிலர் வருவார்கள். அவர்களது சாட்சியம் அவர்களின் சத்தியத்தையும், அவர்களது சத்தியம் அவர்களின் சாட்சியத்தையும் முந்திக்கொள்ளும்" என்று கூறினார்கள்.

4959 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் சமுதாயத்தாரில் சிறந்தவர்கள், நான் யாரிடையே அனுப்பப்பட்டுள்ளேனோ அந்தத் தலைமுறையினர் ஆவர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள்" என்று கூறிவிட்டு, -மூன்றாவது முறையும் அவ்வாறு கூறினார்களா, இல்லையா என்பதை அல்லாஹ்வே அறிவான்– "பிறகு அவர்களுக்குப்பின் ஒரு சமுதாயத்தார் வருவார்கள். அவர்கள் உண்டு கொழுப்பதை விரும்புவார்கள். சாட்சியமளிக்கும்படி கோரப்படுவதற்கு முன்பே (தாமாக முன்வந்து) சாட்சியம் அளிப்பார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ("பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள்' என்று) இரண்டு முறை கூறினார்களா அல்லது மூன்று முறை கூறினார்களா

என்பது எனக்குத் தெரியவில்லை என அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

4960 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் (மக்களில்) சிறந்தவர்கள் என் தலைமுறையினர் ஆவர். பிறகு அவர்களை (உங்களை) அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள்" என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தலைமுறையினருக்குப் பிறகு ("அவர்களை அடுத்து வருபவர்கள்' என்று) இரண்டு தடவை கூறினார்களா, அல்லது மூன்று முறை கூறினார்களா என்பது எனக்குத் தெரியவில்லை.
பிறகு "அவர்களுக்குப்பின் ஒரு சமுதாயத்தார் (வர) இருக்கிறார்கள். அவர்கள் சாட்சியமளிக்கும்படி கோரப்படாமலேயே (தாமாக) சாட்சியம் அளிப்பார்கள். அவர்கள் நம்பிக்கை மோசடி செய்வார்கள்; அவர்களிடம் எதையும் நம்பி ஒப்படைக்கப்படமாட்டாது. அவர்கள் நேர்ச்சை செய்வார்கள்; ஆனால், அதை நிறைவேற்றமாட்டார்கள். அவர்களிடையே உண்டு கொழுக்கும் (தொந்தி பெருக்கும்) நிலை தோன்றும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தலைமுறையினர் பற்றிக் குறிப்பிட்ட பிறகு இரண்டு தலைமுறையினரைக் கூறினார்களா, அல்லது மூன்று தலைமுறையினரைக் கூறினார்களா என்பது எனக்குத் தெரியவில்லை" என்று இடம்பெற்றுள்ளது.
ஷபாபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஸஹ்தம் பின் முளர்ரிப் (ரஹ்) அவர்கள் ஒரு தேவைக்காகக் குதிரையில் என்னிடம் வந்திருந்தபோது, இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாக (மேற்கண்ட ஹதீஸை) அறிவித்தார்கள்" என்று காணப்படுகிறது.
யஹ்யா பின் சயீத், ஷபாபா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் ("நிறைவேற்றமாட்டார்கள்' என்பதைக் குறிக்க "வலா யூ∴பூன' என்பதற்குப் பதிலாக) "வலா ய∴பூன' என்று இடம் பெற்றுள்ளது.
பஹ்ஸ் பின் அசத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "யூ∴பூன' என்றே (முஹம்மத் பின் ஜஅ∴பர் (ரஹ்) அவர்களது அறிவிப்பிலுள்ளதைப் போன்றே) காணப்படுகிறது.

4961 மேற்கண்ட ஹதீஸ் இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், "இந்தச் சமுதாயத்தில் சிறந்தவர்கள், நான் யாரிடையே அனுப்பப்பெற்றுள்ளேனோ அந்தத் தலைமுறையினர் ஆவர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள்" என்று இடம் பெற்றுள்ளது.
அபூஅவானா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மூன்றாவது தடவையில் ("பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள்' என்று) கூறினார்களா, இல்லையா என்பது எனக்குத் தெரியவில்லை" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

கத்தாதா (ரஹ்) அவர்களிடமிருந்து ஹிஷாம் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில், "சத்தியம் செய்யும்படி கேட்கப்படாமலேயே சத்தியப் பிரமாணம் செய்ய அவர்கள் தாமாகவே முன்வருவார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

4962 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம், "மக்களில் சிறந்தவர் யார்?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(மக்களில் சிறந்தவர்கள்) நான் யாரிடையே இருக்கிறேனோ அந்தத் தலைமுறையினர். பிறகு இரண்டாவது தலைமுறையினர். பிறகு மூன்றாவது தலைமுறையினர்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 53 "இன்று பூமியில் இருப்பவர்களில் எவரும் ஒரு நூற்றாண்டுக்குப்பின் உயிருடன் இருக்கமாட்டார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.

4963 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது இறுதிக் காலத்தில் ஓர் இரவில் எங்களுக்கு இஷாத் தொழுகை தொழுவித்து, சலாம் கொடுத்து முடித்தபோது எழுந்து, "இந்த இரவைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா? (இன்றிலிருந்து) நூறாம் ஆண்டின் துவக்கத்தில், இன்று பூமியில் இருக்கும் எவரும் எஞ்சியிருக்கமாட்டார்கள்" என்று கூறினார்கள்.
மக்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் ஹதீஸ்களில் நூறாண்டைப் பற்றிய இந்த ஹதீஸைத் தவறாகப் புரிந்து(கொண்டு, நூறு ஆண்டுகளுக்குப் பின் உலகம் அழிந்து விடும்போலும் என்று புரிந்து)கொண்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியது, இன்று பூமியில் இருப்பவர்களில் எவரும் நூறு ஆண்டுகளுக்குப் பின் இருக்கமாட்டார்கள் என்ற பொருளில்தான்.
இதன் மூலம், அன்று இருந்த தலைமுறையினர் நூறு ஆண்டுகளுக்குள் முடிந்து போவர் என்பதையே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கருதினார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4964 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இறப்பதற்கு ஒரு மாதத்திற்கு முன்னர், "என்னிடம் மறுமை நாளைப் பற்றிக் கேட்கிறீர்களா? அதைப் பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. நான் அல்லாஹ்வின்மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்: (இன்றிலிருந்து) ஒரு நூறாண்டுக்குள் இன்று பூமியில் இருப்பவர்களில் எவரும் இருக்கமாட்டார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், "இன்று உயிருடன் இருப்பவர்களில் எவரும் ஒரு நூறாண்டுகளுக்குள் உயிருடன் இருக்கமாட்டார்கள் என்று தாம் இறப்பதற்கு ஒரு மாதத்திற்குமுன் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என இடம்பெற்றுள்ளது.
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களது மற்றோர் அறிவிப்பில், அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் இதற்கு "இன்று உயிருடன் இருப்பவர்களின் ஆயுள் குறைவானதாகும்" என்று விளக்கம் அளித்ததாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

4965 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "தபூக்' போரிலிருந்து திரும்பியபோது அவர்களிடம் மக்கள் மறுமை நாளைப் பற்றிக் கேட்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "(அது அல்லாஹ்வுக்கே தெரியும். ஆனால்,) இன்று உயிர் வாழ்வோரில் யாரும் ஒரு நூற்றாண்டுக்குள் இருக்கமாட்டார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4966 சாலிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஜாபிர் (ரலி) அவர்கள், "இன்று உயிர் வாழ்வோரில் யாரும் ஒரு நூற்றாண்டை எட்டமாட்டார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாகக் குறிப்பிட்டார்கள். உடனே இது குறித்து நாங்கள் அவர்களிடம் விவாதித்தோம். அப்போது "அன்றைய நாளில் படைக்கப்பட்டு (உயிருடனு)ள்ள ஒவ்வொருவரையுமே இது குறிக்கும்" என்று சொன்னார்கள்.

## பாடம் : 54 நபித்தோழர்களை ஏசுவது தடை செய்யப்பட்டதாகும்.

4967 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் தோழர்களை ஏசாதீர்கள். என் தோழர்களை ஏசாதீர்கள். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன்மீது சத்தியமாக! உங்களில் ஒருவர் உஹுத் மலையளவுக்குத் தங்கத்தை (தானமாகச்) செலவிட்டாலும், என் தோழர்கள் (இறைவழியில்) செலவிட்ட இரு கையளவு, அல்லது அதில் பாதியளவைக் கூட எட்ட முடியாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4968 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபித்தோழர்களான) காலித் பின் அல் வலீத் (ரலி) அவர்களுக்கும் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களுக்கும் இடையே ஏதோ (பிரச்சினை) இருந்தது. காலித் (ரலி) அவர்கள் (அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களை) ஏசினார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் தோழர்களில் யாரையும் ஏசாதீர்கள். உங்களில் ஒருவர் உஹுத் மலையளவு தங்கத்தை (தர்மமாகச்) செலவிட்டாலும் என்

தோழர்கள் (இறைவழியில்) செலவிட்ட இரு கையளவு, அல்லது அதில் பாதியளவைக்கூட எட்ட முடியாது" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஷுஅபா மற்றும் வகீஉ (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி), காலித் பின் அல்வலீத் (ரலி) ஆகியோரைப் பற்றிய குறிப்பு இல்லை.

## பாடம் : 55 உவைஸ் அல்கரனீ (ரஹ்) அவர்களின் சிறப்புகள்.

4969 உசைர் பின் ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) கூஃபாவாசிகளின் தூதுக்குழு ஒன்று (கலீஃபா) உமர் (ரலி) அவர்களிடம் வந்தது. அவர்களிடையே உவைஸ் அவர்களைப் பழித்துப் பேசிவந்த மனிதர் ஒருவரும் இருந்தார்.
உமர் (ரலி) அவர்கள், "இங்கு (உங்களில்) "கரன்' குலத்தைச் சேர்ந்தவர்களில் யாரேனும் இருக்கிறாரா?" என்று கேட்டார்கள். அப்போது அந்த மனிதர் வந்தார்.
அப்போது உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களிடம் யமன் நாட்டிலிருந்து ஒரு மனிதர் வருவார். அவர் "உவைஸ்' எனப்படுவார். அவர் யமன் நாட்டில் தம் தாயார் ஒருவரை மட்டுமே விட்டுவருவார். அந்த மனிதருடைய மேனியில் வெண்குஷ்டம் ஏற்பட்டிருந்தது. ஆகவே, அவர் அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார். அதையடுத்து ஒரு தீனார் அல்லது ஒரு திர்ஹம் அளவு இடத்தைத் தவிர (மற்ற இடங்களிலிருந்து) அதை அல்லாஹ் குணப்படுத்தினான்.
ஆகவே, உங்களில் யாரேனும் அவரைச் சந்தித்தால் அவர் உங்களுக்காகப் பாவமன்னிப்புக் கோரட்டும் (அவரிடம் உங்கள் பாவமன்னிப்புக்காகப் பிரார்த்திக்கச் சொல்லவும்)" என்று கூறினார்கள்.

4970 மேற்கண்ட ஹதீஸ் உசைர் பின் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தாபிஉகளில் (உங்களைத் தொடர்ந்து வருவோரில்) சிறந்தவர் உவைஸ் எனப்படும் ஒரு மனிதர் ஆவார். அவருக்குத் தாயார் ஒருவர் இருப்பார்; அந்த மனிதருக்கு வெண்குஷ்டம் இருக்கும். (அவரைக் கண்டால்) உங்களுக்காகப் பாவமன்னிப்பு வேண்டிப் பிரார்த்திக்கச் சொல்லுங்கள்' என்று கூறினார்கள்" என உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

4971 உசைர் பின் ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடம் யமன்வாசிகளின் உதவிப் படைகள் வந்தால், அவர்களிடம் "உங்களிடையே உவைஸ் பின் ஆமிர் (எனப்படும் மனிதர் ஒருவர்) இருக்கிறாரா?" என்று கேட்பார்கள்.
இந்நிலையில் (ஒரு முறை) உவைஸ் (ரஹ்) அவர்களிடம் உமர் (ரலி) அவர்கள் வந்து, "நீர்தான் உவைஸ் பின் ஆமிரா?" என்று கேட்டார்கள். அதற்கு உவைஸ் அவர்கள் "ஆம்' என்றார்கள்.

உமர் (ரலி) அவர்கள், "முராத் (மூலக்) கோத்திரத்தையும் பிறகு "கரன்' (கிளைக்) குலத்தையும் சேர்ந்தவரா (நீங்கள்)?" என்று கேட்டார்கள். அதற்கு உவைஸ் அவர்கள் "ஆம்' என்றார்கள். உமர் (ரலி) அவர்கள், "உங்களுக்கு வெண்குஷ்டம் ஏற்பட்டு, அதில் ஒரு திர்ஹம் அளவைத் தவிர மற்றது (உமது பிரார்த்தனை மூலம்) குணமாகிவிட்டதா?" என்று கேட்டார்கள்.
அதற்கும் உவைஸ் அவர்கள் "ஆம்' என்றார்கள். உமர் (ரலி) அவர்கள், "உமக்குத் தாயார் ஒருவர் இருக்கிறாரா?" என்று கேட்டார்கள். அதற்கு உவைஸ் அவர்கள் "ஆம்' என்று பதிலளித்தார்கள்.

உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யமன்வாசிகளின் உதவிப் படையினருடன் "முராத்' (மூலக்) கோத்திரத்தையும் பின்னர் "கரன்' (கிளைக்) குலத்தையும் சேர்ந்த உவைஸ் பின் ஆமிர் என்பவர் உங்களிடம் வருவார். அவருக்கு வெண்குஷ்டம் ஏற்பட்டு, பின்னர் ஒரு திர்ஹம் அளவைத் தவிர மற்றவை குணமாயிருக்கும். அவருக்குத் தாயார் ஒருவர் இருப்பார். அவருக்கு உவைஸ் ஊழியம் புரிபவராக இருப்பார். அவர் அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டால், அல்லாஹ் அதை நிறைவேற்றி வைப்பான். (உமரே!) அவர் உமக்காகப் பாவமன்னிப்புக் கோரிப் பிரார்த்திக்க வாய்ப்புக் கிட்டினால் அவரைப் பிரார்த்திக்கச் சொல்லுங்கள்" என்று கூறினார்கள். ஆகவே, எனக்காகப் பாவமன்னிப்பு வேண்டி பிரார்த்தியுங்கள்.
அவ்வாறே உவைஸ் (ரஹ்) அவர்களும் உமருக்காகப் பாவமன்னிப்பு வேண்டிப் பிரார்த்தித்தார்கள். பிறகு உமர் (ரலி) அவர்கள், "நீங்கள் எங்கே செல்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு உவைஸ் (ரஹ்) அவர்கள், "கூஃபாவிற்கு' என்று பதிலளித்தார்கள். உமர் (ரலி) அவர்கள், "கூஃபாவின் ஆளுநரிடம் உமக்காகப் (பரிந்துரைத்து) கடிதம் எழுதட்டுமா?" என்று கேட்டார்கள். அதற்கு உவைஸ் (ரஹ்) அவர்கள், "சாதாரண மக்களில் ஒருவனாக நான் இருப்பதே எனக்கு மிகவும் விருப்பமானதாகும்" என்று கூறிவிட்டார்கள்.
அடுத்த ஆண்டில் "கரன்' குலத்தைச் சேர்ந்த பிரமுகர்களில் ஒருவர் ஹஜ்ஜுக்காகச் சென்றிருந்த போது உமர் (ரலி) அவர்களைத் தற்செயலாகச் சந்தித்தார்.

அப்போது அவரிடம் உமர் (ரலி) அவர்கள் உவைஸ் (ரஹ்) அவர்களைப் பற்றி விசாரித்தார்கள். அதற்கு அவர், "மிக எளிய குடிலில் (நெருக்கடியான வாழ்விலும்) மிகக் குறைவான வாழ்க்கைச் சாதனங்களிலுமே அவரை விட்டுவந்துள்ளேன்" என்று கூறினார்.
அப்போது உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "யமன்வாசிகளின் உதவிப் படையினருடன் "முராத்' (மூலக்) கோத்திரத்தையும் பின்னர் "கரன்' (கிளைக்) குலத்தையும் சேர்ந்த உவைஸ் பின் ஆமிர் என்பவர் உங்களிடம் வருவார். அவருக்கு (மேனியில்) வெண்குஷ்டம் ஏற்பட்டுப் பின்னர் ஒரு திர்ஹம் அளவு இடத்தைத் தவிர மற்றவை குணமாகியிருக்கும்.
அவருக்குத் தாயார் ஒருவர் இருப்பார். அவருக்கு உவைஸ் ஊழியம் புரிபவராக இருப்பார். அவர் அல்லாஹ்வின்மீது சத்தியம் செய்தால், அல்லாஹ் அதை நிறைவேற்றி வைப்பான். (உமரே!) அவர் உமக்காகப் பாவ மன்னிப்புக் கோரிப் பிரார்த்திக்கும் வாய்ப்புக் கிட்டினால் அவரிடம் பிரார்த்திக்கச் சொல்லுங்கள் என்று கூறினார்கள்" என்றார்கள்.

ஆகவே, அப்பிரமுகர் உவைஸ் (ரஹ்) அவர்களிடம் சென்று, "எனக்காகப் பாவமன்னிப்பு வேண்டிப் பிரார்த்தியுங்கள்" என்று கூறினார். அப்போது உவைஸ் அவர்கள், "நீர்தான் இப்போது புனிதப் பயணம் ஒன்றை முடித்து வந்துள்ளீர். ஆகவே, நீர்தான் எனக்காகப் பாவமன்னிப்புக் கோர வேண்டும்" என்றார்கள்.

"நீர் உமர் (ரலி) அவர்களைச் சந்தித்தீரா?" என்று கேட்டார்கள். அவர் "ஆம்' என்றார். பிறகு அவருக்காகப் பாவமன்னிப்பு வேண்டிப் பிரார்த்தித்தார்கள். அப்போதுதான் மக்களும் உவைஸ் அவர்களை அறிந்துகொண்டனர். பிறகு உவைஸ் அவர்கள் தமது திசையில் நடக்கலானார்கள்.

தொடர்ந்து (உசைர் பின் ஜாபிர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:) நான் உவைஸ் அவர்களுக்கு (நல்ல) போர்வையொன்றை அணியக் கொடுத்தேன். அவரை யாரேனும் ஒருவர் காணும்போதெல்லாம் "உவைஸ் அவர்களுக்கு இந்தப் போர்வை எப்படிக் கிடைத்தது?" என்று கேட்பார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 56 எகிப்துவாசிகளின் நலனைக் காக்குமாறு நபி (ஸல்) அவர்கள் கூறிய அறிவுரை.

4972 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "நீங்கள் விரைவில் ஒரு நாட்டை வெற்றி கொள்வீர்கள். அங்கு "கீராத்' எனும் சொல்லே ஆளப்படும். அந்நாட்டவரின் நலன் காக்குமாறு நான் கூறும் அறிவுரையை ஏற்றுக் கொள்ளுங்கள். ஏனெனில், அவர்களுக்கு நாம் கடமைப்பட்டுள்ளோம். அவர்களுடன் நமக்கு உறவு (முறையு)ம் உண்டு. அவர்களில் இருவர் ஒரு செங்கல் அளவு நிலத்துக்காகச் சண்டையிட்டுக்கொள்வதைக் கண்டால் அங்கிருந்து நீங்கள் வெளியேறிவிடுங்கள்" என்று சொன்னார்கள்.

இதன் அறிவிப்பாளர் அப்துர் ரஹ்மான் பின் ஷுமாஸா அல்மஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: பிறகு அபூதர் (ரலி) அவர்கள், ஷுரஹ்பீல் பின் ஹசனாவின் புதல்வர்களான ரபீஆவும் அப்திர் ரஹ்மானும் ஒரு செங்கல் அளவு நிலத்துக்காகச் சண்டையிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டபோது அங்கிருந்து புறப்பட்டுவிட்டார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4973 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "நீங்கள் விரைவில் எகிப்தை வெற்றி கொள்வீர்கள். அது "கீராத்' எனும் சொல் புழங்கப்படும் பூமியாகும். எகிப்தை நீங்கள் வெற்றி கொண்டால் அந்நாட்டவருடன் நன்முறையில் நடந்துகொள்ளுங்கள். ஏனெனில், அவர்களுக்கு நாம் கடமைப்பட்டுள்ளோம். அவர்களுடன் நமக்கு உறவு (முறையு)ம் உண்டு. அல்லது அவர்களுக்கு நாம் கடமைப்பட்டுள்ளோம். (பெண் எடுத்த வகையில்) அவர்களுடன் நமக்குப் பந்தமும் உண்டு.

(அபூதர்ரே!) அங்கு ஒரு செங்கல் அளவு நிலத்துக்காக அவர்களில் இருவர் சண்டையிட்டுக் கொள்வதை நீங்கள் கண்டால் அங்கிருந்து வெளியேறிவிடுங்கள்" என்று கூறினார்கள்.

அவ்வாறே (அந்நாட்டை வெற்றி கொண்ட பின்னர்) அப்துர் ரஹ்மான் பின் ஷுரஹ்பீல் பின் ஹசனாவும் அவருடைய சகோதரர் ரபீஆவும் ஒரு செங்கல் அளவு நிலத்துக்காகச் சண்டையிட்டுக்கொள்வதை நான் கண்டேன். ஆகவே அங்கிருந்து வெளியேறிவிட்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 57 ஓமன் (உமான்)வாசிகளின் சிறப்பு.

4974 அபூபர்ஸா அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதரை அரபுக் குலங்களில் ஒரு குலத்தாரிடம் அனுப்பிவைத்தார்கள். அவர்கள் அந்த மனிதரை ஏசியும் அடித்தும் விட்டனர். பிறகு அந்த மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து (நடந்ததைத்) தெரிவித்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் ஓமன்வாசிகளிடம் சென்றிருந்தால் அவர்கள் உம்மை ஏசியிருக்கவுமாட்டார்கள்; அடித்திருக்கவுமாட்டார்கள்" என்று கூறினார்கள்.

## பாடம் : 58 ஸகீஃப் குலத்தின் பெரும் பொய்யன் மற்றும் நாசகாரன் ஆகியோரைப் பற்றிய குறிப்பு.

4975 அபூநவ்ஃபல் முஸ்லிம் பின் அபீஅக்ரப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஹஜ்ஜாஜ் பின் யூசுஃபின் படையால் கொல்லப்பட்டு, பேரீச்ச மரத்தில் சிலுவையிலேற்றித் தலைகீழாகத் தொங்கவிடப்பட்டிருந்த) அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களது உடலை நான் மதீனா(விலிருந்து மக்கா வரும் வழியிலுள்ள) "அகபா' பள்ளத்தாக்கில் கண்டேன்.
அப்போது குறைஷியரும் மற்ற மக்களும் அவரது உடலை(ப் பார்த்துவிட்டு)க் கடந்து செல்லலானார்கள். இறுதியில் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் வந்து அவர்களுக்கு அருகில் நின்று, "அபூகுபைபே! உம்மீது சாந்தி உண்டாகட்டும்; அபூகுபைபே! உம்மீது சாந்தி உண்டாகட்டும்; அபூகுபைபே! உம்மீது சாந்தி உண்டாகட்டும். அல்லாஹ்வின் மீதாணையாக! இதில் (ஆட்சியாளருக்கெதிரான போராட்டத்தில்) ஈடுபட வேண்டாமென உம்மை நான் தடுத்துவந்தேனே! அல்லாஹ்வின் மீதாணையாக! இதில் ஈடுபட வேண்டாமென உம்மை நான் தடுத்து வந்தேனே! அல்லாஹ்வின் மீதாணையாக! இதில் ஈடுபட வேண்டாமென உம்மை நான் தடுத்துவந்தேனே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அறிந்தவரை நீர் அதிகமாக நோன்பு நோற்பவராகவும் அதிகமாக நின்று வழிபடக்கூடியவராகவும் உறவுகளை அரவணைக்கக்கூடியவராகவும் இருந்தீர்! அல்லாஹ்வின் மீதாணையாக! சமுதாயத்தில் நீர் மிகவும் தீயவர் என்றால், (இன்றைய) மக்களில் வேறு யார் நல்லவர்கள்?" என்று கூறிவிட்டுப் பிறகு அங்கிருந்து சென்றுவிட்டார்கள்.
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் (இப்னுஸ் ஸுபைருக்கு அருகில்) நின்றதைப் பற்றியும் அவர்கள் பேசியதைப் பற்றியும் ஹஜ்ஜாஜுக்குச் செய்தி எட்டியபோது, உடனே அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைரின் உடலை நோக்கி ஆளனுப்பினார்.

அவரது உடல் மரத்திலிருந்து இறக்கப்பட்டு, யூதர்களின் மையவாடியில் போடப்பட்டது. பிறகு அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களின் தாயார் அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்களைத் தம்மிடம் வரும்படி ஹஜ்ஜாஜ் ஆளனுப்பினார். ஆனால், ஹஜ்ஜாஜிடம் வர அஸ்மா (ரலி) அவர்கள் மறுத்துவிட்டார்கள். மீண்டும் தம் தூதரை அனுப்பி, "ஒன்று நீயாக வருகிறாயா, அல்லது உமது சடையைப் பிடித்து இழுத்துவரக்கூடியவரை உன்னிடம் நான் அனுப்பட்டுமா?" என்று ஹஜ்ஜாஜ் கேட்டார்.

அப்போதும் அஸ்மா (ரலி) அவர்கள் வர மறுத்ததோடல்லாமல், "அல்லாஹ்வின் மீதாணையாக! எனது சடையைப் பிடித்து என்னை இழுத்துக் கொண்டுவரக்கூடியவரை நீர் அனுப்பாத வரையில் நான் உம்மிடம் வரப்போவதில்லை" என்று கூறிவிட்டார்கள்.

உடனே ஹஜ்ஜாஜ், "என் செருப்புகள் எங்கே?" என்று கூறி அதைப் பெற்று (அணிந்து) கொண்டு, பிறகு (இறுமாப்போடு) விரைவாக நடந்து அஸ்மா (ரலி) அவர்களிடம் வந்தார். பிறகு "அல்லாஹ்வின் விரோதியை (உமது மகனை) என்ன செய்தேன் பார்த்தாயா?" என்று கேட்டார்.

அதற்கு அஸ்மா (ரலி) அவர்கள் கூறினார்கள்: நீ (என் மகன்) அப்துல்லாஹ்வின் இம்மையைச் சீரழித்துவிட்டாய்; அவரோ உன் மறுமையைச் சீரழித்துவிட்டார் என்றே நான் கருதுகிறேன். நீ அவரை "இரு கச்சுடையாளின் புதல்வரே!'என (நகைப்போடு) அழைப்பாய் என்று எனக்குத் தகவல் கிடைத்தது. (ஆம்) அல்லாஹ்வின் மீதாணையாக! இரு கச்சுடையாள் நான்தான். (மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் மேற்கொண்ட) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உணவையும், (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்களின் உணவையும் அவ்விரு கச்சுகளில் ஒன்றால் கட்டி எடுத்துச்சென்றேன். மற்றொன்று ஒரு பெண்ணிடம் அவசியம் இருக்க வேண்டிய கச்சாகும்.

நினைவிற்கொள்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம், "ஸகீஃப் குலத்தாரில் மகா பொய்யன் ஒருவனும் நாசகாரன் ஒருவனும் இருப்பார்கள்" என்று கூறினார்கள். மகா பொய்யனை (முக்தார் பின் அபீஉபைத்) நாங்கள் பார்த்துவிட்டோம். அந்த நாசகாரன் நீதான் என்றே நான் கருதுகிறேன்" என்று கூறினார். உடனே ஹஜ்ஜாஜ் அங்கிருந்து எழுந்து சென்றுவிட்டார்; அஸ்மா (ரலி) அவர்களுக்குப் பதிலேதும் சொல்லவில்லை.

## பாடம் : 59 பாரசீகர்களின் சிறப்பு.

4976 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மார்க்க (ஞான)ம் "கிருத்திகா' நட்சத்திரக் குழுமத்தின் (ஸுரய்யா) அருகில் இருந்தாலும், அதைப் "பாரசீகர்களில்' அல்லது "பாரசீக மக்களில்' ஒருவர் எடுத்துக்கொண்டுவந்து விடுவார்" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4977 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை) நாங்கள் நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் அமர்ந்திருந்தோம். அப்போது அவர்களுக்கு "அல்ஜுமுஆ'எனும் (62ஆவது) அத்தியாயம் அருளப்பெற்றது. நபி (ஸல்) அவர்கள் அ(ந்த அத்தியாயத்)தை ஓதிக்கொண்டு வந்து, "இன்னும் இவர்களுடன் வந்து

சேராமலிருக்கும் ஏனைய மக்களுக்காகவும் (இத்தூதரை அவன் அனுப்பியுள்ளான்)" (62:3) எனும் வசனம் வந்தபோது, மக்களில் ஒருவர், "அந்த (ஏனைய) மக்கள் யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். ஒரு தடவை, அல்லது இரண்டு தடவை, அல்லது மூன்று தடவை அவர் கேட்கும்வரை அவருக்கு நபி (ஸல்) அவர்கள் பதிலளிக்கவில்லை.
அப்போது எங்களிடையே சல்மான் அல்ஃபாரிசீ (ரலி) அவர்கள் இருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் சல்மான் (ரலி) அவர்கள்மீது தமது கையை வைத்துவிட்டுப் பிறகு, "கிருத்திகா (ஸுரய்யா) நட்சத்திரக் குழுமத்தின் அருகில் இறைநம்பிக்கை (ஈமான்) இருந்தாலும், இவர்களில் சிலர் அதை அடைந்தே தீருவர்" என்று கூறினார்கள்.

**பாடம் : 60 "மனிதர்கள் நூறு ஒட்டகங்களைப் போன்றவர்கள். அவற்றில் பயணத்திற்குப் பயன்படும் ஒட்டகத்தை (மிக அரிதாகவே தவிர) நீங்கள் காணமாட்டீர்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.**

4978 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மனிதர்களை நீங்கள் நூறு ஒட்டகங்களைப் போன்று காண்பீர்கள். அவற்றில் பயணத்திற்குப் பயன்படும் ஒட்டகத்தை ஒருவர் (மிக அரிதாகவே தவிர) காணமாட்டார்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 45 - பெற்றோருக்கு நன்மை செய்வதும், உறவைப் பேணி வாழ்வதும்

## பாடம் : 1 பெற்றோருக்கு நன்மை செய்வதும் அவர்களே அதற்கு முன்னுரிமை பெற்றவர்கள் என்பதும்.

4979 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "நான் அழகிய முறையில் உறவாடுவதற்கு மக்களிலேயே மிகவும் தகுதியானவர் யார்?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உன் தாய்" என்றார்கள். அவர் "பிறகு யார்?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உன் தாய்" என்றார்கள். அவர் "பிறகு யார்?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உன் தாய்" என்றார்கள். அவர் (நான்காவது முறையாக) "பிறகு யார்?" என்று கேட்டதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உன் தந்தை" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் குதைபா பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் அழகிய முறையில் உறவாடுவதற்கு மிகவும் தகுதியானவர் யார்?" என்றே இடம்பெற்றுள்ளது. "மக்களில் (மிகவும் தகுதியானவர் யார்?)" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

4980 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! நான் அழகிய முறையில் உறவாடுவதற்கு மக்களிலேயே மிகவும் தகுதியானவர் யார்?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், உன் தாய், பிறகு உன் தாய், பிறகு உன் தாய். பிறகு உன் தந்தை. பிறகு உனக்கு மிகவும் நெருக்கமானவர். (அடுத்து) உனக்கு மிகவும் நெருக்கமானவர்" என்று விடையளித்தார்கள்.

4981 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
மேலும் அவற்றில், "ஆம்; உன் தந்தையின் மீது அறுதி(யிட்டுச் சொல்கிறேன்). உமக்கு (தக்க) பதில் கிடைக்கும்" என்று (கூறிவிட்டுப் பதில்) சொன்னார்கள்" எனக் கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

4982 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் உஹைப் பின் காலித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நன்மை செய்வதற்கு மிகவும் தகுதியானவர் யார்?"என அம்மனிதர் கேட்டார் என்று இடம்பெற்றுள்ளது.

முஹம்மத் பின் தல்ஹா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் அழகிய முறையில் உறவாடுவதற்கு மக்களிலேயே மிகவும் தகுதியானவர் யார்?" என்று அவர் கேட்டார் என்று இடம்பெற்றுள்ளது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

4983 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அறப்போரில் கலந்துகொள்ள அனுமதி கேட்பதற்காக நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். நபி (ஸல்) அவர்கள், "உன் தாய் தந்தையர் உயிருடன் இருக்கின்றனரா?" என்று கேட்டார்கள். அதற்கு அம்மனிதர் "ஆம்" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின் (திரும்பிச் சென்று) அவர்கள் இருவருக்காகவும் பாடுபடு" என்றார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாக வந்துள்ளது.

4984 மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களை நோக்கி வந்து, "நான் அல்லாஹ்விடமிருந்து நற்பலனை எதிர்பார்த்துப் புலம்பெயர்ந்து (ஹிஜ்ரத்) செல்வதற்கும் அறப்போர் புரிவதற்கும் தங்களிடம் உறுதிமொழி அளிக்கிறேன்" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், "இப்போது உன் தாய் தந்தையரில் யாரேனும் உயிருடன் இருக்கின்றனரா?" என்று கேட்டார்கள். அதற்கு அம்மனிதர், "ஆம்; இருவருமே உயிருடன் இருக்கின்றனர்" என்று பதிலளித்தார்.
நபி (ஸல்) அவர்கள், "நீ அல்லாஹ்விடமிருந்து நற்பலனை எதிர்பார்க்கிறாய் (அல்லவா)?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "ஆம்" என்றார். நபி (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின், நீ திரும்பிச்சென்று அவர்கள் இருவரிடமும் அழகிய முறையில் உறவாடு" என்று சொன்னார்கள்.

## பாடம் : 2 கூடுதலான தொழுகை போன்றவற்றில் ஈடுபடுவதைவிடப் பெற்றோருக்கு நன்மை செய்வதற்கே முன்னுரிமை அளிக்க வேண்டும்.

4985 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(பனூ இஸ்ராயீல் சமுதாயத்தைச் சேர்ந்த நல்ல மனிதரான) ஜுரைஜ் என்பவர் தமது ஆசிரமத்தில் (இறைவனை) வழிபட்டுக்கொண்டிருந்தார். அப்போது அவரிடம் அவருடைய தாயார் வந்(து அவரை அழைத்)தார்.
-அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஜுரைஜை அவருடைய தாயார் அழைத்த முறையையும், அப்போது அவர் தமது புருவத்துக்கு மேலே கையை எப்படி வைத்திருந்தார்; பிறகு ஜுரைஜை நோக்கித் தமது தலையை உயர்த்தி எப்படி அழைத்தார் என்பதையும் சைகை செய்துகாட்டினார்கள். அதைப் போன்றே அபூஹுரைரா (ரலி) அவர்கள் சைகை செய்துகாட்ட, அறிவிப்பாளர் அபூ ராஃபிஉ (ரஹ்) அவர்கள் அவ்வாறே சைகை செய்து

காட்டினார்கள் என ஹுமைத் பின் ஹிலால் (ரஹ்) அவர்கள் இதை அறிவிக்கும் போது விளக்கினார்கள்.-

ஜுரைஜின் தாயார், "ஜுரைஜே! நான் உன்னுடைய தாய் (அழைக்கிறேன்); என்னிடம் பேசு" என்று கூறினார். அப்போது ஜுரைஜ் தொழுதுகொண்டிருப்பதைத் தாயார் கண்டார். உடனே ஜுரைஜ், "இறைவா! என் தாயா? என் தொழுகையா? (எதற்கு நான் முன்னுரிமை கொடுப்பேன்?)" என்று கூறிவிட்டு, தொழுகையையே தேர்ந்தெடுத்தார். உடனே அவருடைய தாயார் திரும்பிச் சென்றுவிட்டார். பிறகு மறுபடியும் அவரை அழைத்தார். "ஜுரைஜே! நான் உன் தாய் (அழைக்கிறேன்);என்னிடம் பேசு" என்று கூறினார். அப்போது(ம் தொழுது கொண்டிருந்த) ஜுரைஜ், "இறைவா! என் தாயா? எனது தொழுகையா?" என்று கூறிவிட்டு மீண்டும் தொழுகையையே தேர்ந்தெடுத்தார்.

அப்போது அவருடைய தாயார், "இறைவா! இதோ என் மகன் ஜுரைஜிடம் நான் பேசினேன். அவன் என்னிடம் பேச மறுத்துவிட்டான். இறைவா! விபசாரிகளை அவனுக்கு நீ காட்டாமல் அவனுக்கு (ஜுரைஜுக்கு) நீ மரணத்தைத் தந்துவிடாதே" என்று பிரார்த்தித்தார்.

(அந்நேரத்தில்) ஜுரைஜுக்கெதிராக அவருடைய தாயார், ஜுரைஜ் வேறு சோதனைக்குள்ளாக்கப்பட வேண்டும் என்று பிரார்த்திருந்தால், அவ்வாறே அவர் சோதனைக்குள்ளாக்கப்பட்டிருப்பார். (ஆனால், விபசாரிகளைக் கண்ணில் படவைக்கும் குறைந்தபட்ச சோதனையையே அவருடைய தாயார் வேண்டினார்.)

ஆடு மேய்க்கும் இடையன் ஒருவன் ஜுரைஜின் ஆசிரமத்துக்கு வருவது வழக்கம். (இந்நிலையில் ஒரு நாள்) அந்தக் கிராமத்திலிருந்து (விபசாரியான) பெண்ணொருத்தி வந்தாள். அவளுடன் அந்த இடையன் விபசாரத்தில் ஈடுபட்டான். பிறகு அவள் கர்ப்பமுற்று ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தாள். அவளிடம் "இது யாருடைய குழந்தை?" என்று கேட்கப்பட்டது. "இதோ இந்த ஆசிரமத்தில் இருப்பவரால்தான் (இக்குழந்தை பிறந்தது)" என்று அவள் கூறினாள்.

உடனே மக்கள் (வெகுண்டெழுந்து) கோடரிகளையும் மண்வெட்டிகளையும் எடுத்துக்கொண்டு வந்து ஜுரைஜை அழைத்தனர். அப்போது அவர் தொழுதுகொண்டிருந்ததால் அவர்களிடம் அவர் பேசவில்லை. உடனே (கோபம் கொண்ட) அம்மக்கள் அவருடைய ஆசிரமத்தைத் தகர்க்கலாயினர்.

இதைக் கண்ட ஜுரைஜ் (தம் ஆசிரமத்திலிருந்து) இறங்கி வந்தார். மக்கள், "இதோ இவள் என்ன சொல்கிறாள் என்பதைக் கேள்" என்று கூறினர். ஜுரைஜ் புன்னகைத்துவிட்டு, அந்த (விபசாரியின்) குழந்தையின் தலையை தடவிக் கொடுத்தார்.

பிறகு "உன் தந்தை யார்?" என்று கேட்டார். (பேசும் பருவத்தை அடையாதிருந்த) அக்குழந்தை, "(இன்ன) ஆட்டிடையன்தான் என் தந்தை" என்று கூறியது.

இதை அக்குழந்தையிடமிருந்து செவியுற்ற அம்மக்கள், (தமது தவறை உணர்ந்து) "நாங்கள் இடித்துத் தகர்த்த உங்கள் ஆசிரமத்தைத் தங்கத்தாலும் வெள்ளியாலும் கட்டித்தருகிறோம்" என்று (ஜுரைஜிடம்) கூறினர். அதற்கு ஜுரைஜ் "இல்லை; முன்பிருந்ததைப் போன்று மீண்டும் மண்ணால் கட்டித்தாருங்கள் (அதுவே போதும்)" என்று கூறிவிட்டு,மேலே ஏறிச் சென்றுவிட்டார்.

4986 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மூன்று பேரைத் தவிர வேறெவரும் தொட்டிலில் (குழந்தையாக இருந்தபோது) பேசியதில்லை. ஒருவர் மர்யமின் புதல்வர் ஈசா (அலை) அவர்கள்; (மற்றொருவர்) ஜுரைஜின் பிள்ளை (என அவதூறு சொல்லப்பட்ட குழந்தை).
ஜுரைஜ் (பனூ இஸ்ராயீல் சமுதாயத்தைச் சேர்ந்த) வணக்கசாலியான மனிதராயிருந்தார். அவர் ஆசிரமம் ஒன்றை அமைத்துக்கொண்டு அதில் இருந்து (வழிபட்டு)வந்தார். (ஒரு முறை) அவர் தொழுதுகொண்டிருந்தபோது அவரிடம் அவருடைய தாயார் வந்து, "ஜுரைஜே!" என்று அழைத்தார். அப்போது ஜுரைஜ், "என் இறைவா! என் தாயா? எனது தொழுகையா?" (என் தாய்க்குப் பதிலளிப்பதா, அல்லது தொழுகையைத் தொடர்வதா?) என்று (மனதிற்குள்) வினவிக்கொண்டு, தொழுகையில் கவனம் செலுத்தினார்.
ஆகவே, அவருடைய தாயார் (கோபித்துக்கொண்டு) திரும்பிச்சென்றுவிட்டார். மறுநாளும் அவர் தொழுதுகொண்டிருந்த போது அவரிடம் அவருடைய தாயார் வந்து, "ஜுரைஜே!" என்று அழைத்தார். அப்போதும் அவர், "என் இறைவா! என் தாயா? எனது தொழுகையா?" என்று (மனதிற்குள்) வினவிக்கொண்டு, தொடர்ந்து தொழுகையில் கவனம் செலுத்தினார். ஆகவே, (அன்றும்) அவருடைய தாயார் (கோபித்துக்கொண்டு) திரும்பிச் சென்றுவிட்டார்.
அதற்கடுத்த நாளும் அவருடைய தாயார் வந்தார். அப்போதும் அவர் தொழுது கொண்டிருந்தார். அவர், "ஜுரைஜே!" என்று அழைத்தார். ஜுரைஜ், "என் இறைவா! என் தாயா? எனது தொழுகையா?" என்று (தமக்குள்) வினவிக்கொண்டு தொழுகையில் கவனம் செலுத்தினார். ஆகவே, அவருடைய தாயார் (கோபித்துக்கொண்டு), "இறைவா! அவனை (ஜுரைஜை) விபசாரிகளின் முகத்தில் விழிக்கச் செய்யாமல் மரணிக்கச் செய்யாதே" என்று பிரார்த்தித்தார்.

பனூ இஸ்ராயீல் சமுதாயத்தார் ஜுரைஜைப் பற்றியும் அவருடைய வணக்க வழிபாடுகளைப் பற்றியும் (புகழ்ந்து) பேசிக்கொண்டனர். பனூ இஸ்ராயீலில் அழகுக்குப் பெயர்போன, விபசாரத்தில் ஈடுபட்டுவந்த பெண் ஒருத்தி இருந்தாள். அவள் (பனூ இஸ்ராயீல் மக்களிடம்), "நீங்கள் விரும்பினால் உங்களுக்காக அவரைக் குழப்பத்தில் ஆழ்த்துகிறேன்" என்று கூறிவிட்டு, அவரிடம் தன்னை ஒப்படைத்தாள். ஆனால், அவளை ஜுரைஜ் ஏறெடுத்தும் பார்க்கவில்லை.
ஆகவே, (அவரைப் பழிவாங்குவதற்காக) அவள் ஓர் ஆட்டு இடையனிடம் சென்றாள். அவன் ஜுரைஜின் ஆசிரமத்துக்கு வருவது வழக்கம். தன்னை அனுபவித்துக்கொள்ள அந்த இடையனுக்கு அவள் வாய்ப்பளித்தாள். அவனும் அவளுடன் (தகாத) உறவில் ஈடுபட்டான். (இதில்) அவள் கர்ப்பமுற்றாள். குழந்தை பிறந்ததும், "இது ஜுரைஜுக்குப் பிறந்த குழந்தை" என்று (மக்களிடம்) கூறினாள். எனவே, மக்கள் (வெகுண்டெழுந்து) ஜுரைஜிடம் வந்து அவரைக் கீழே இறங்கிவரச் செய்துவிட்டு, அவரது ஆசிரமத்தை இடித்துத் தகர்த்துவிட்டனர். அவரையும் அடிக்கலாயினர்.
அப்போது ஜுரைஜ், "உங்களுக்கு என்ன நேர்ந்தது? (ஏன் இப்படிச் செய்கிறீர்கள்?)" என்று கேட்டார். மக்கள், "நீர் இந்த விபசாரியுடன் உறவுகொண்டு அதன் மூலம் அவள் குழந்தை பெற்றெடுத்துவிட்டாள்" என்று கூறினார். உடனே ஜுரைஜ், "அந்தக் குழந்தை எங்கே?" என்று கேட்டார். மக்கள் அந்தக் குழந்தையைக் கொண்டுவந்தனர்.

அப்போது ஜுரைஜ், "நான் தொழுது கொள்ளும்வரை என்னை விட்டுவிடுங்கள்" என்று கூறிவிட்டுத் தொழுதார். தொழுகை முடிந்ததும் அந்தக் குழந்தையிடம் வந்து, அதன் வயிற்றில் (தமது விரலால்) குத்தினார். பிறகு "குழந்தாய்! உன் தந்தை யார்?" என்று கேட்டார். அதற்கு அக்குழந்தை, "இன்ன ஆட்டு இடையன்தான் (என் தந்தை)" என்று பேசியது. (உண்மையை உணர்ந்துகொண்ட) அம்மக்கள், ஜுரைஜை முன்னோக்கிவந்து அவரை முத்தமிட்டு அவரைத் தொட்டுத்தடவினர். மேலும், "தங்களது ஆசிரமத்தை நாங்கள் தங்கத்தால் கட்டித்தருகிறோம்" என்று கூறினார்கள். அதற்கு ஜுரைஜ், "இல்லை; முன்பிருந்ததைப் போன்று களிமண்ணால் கட்டித்தாருங்கள் (அதுவே போதும்)" என்று கூறிவிட்டார். அவ்வாறே மக்களும் கட்டித்தந்தனர்.
(மழலைப் பருவத்தில் பேசிய மூன்றாமவர்:) ஒரு குழந்தை தன் தாயிடம் பாலருந்திக்கொண்டிருந்தது. அப்போது வனப்புமிக்க ஒரு மனிதன் மிடுக்கான வாகனமொன்றில் பயணம் செய்து கொண்டிருந்தான். உடனே அக்குழந்தையின் தாய், "இறைவா! இதோ இவனைப் போன்று என் மகனையும் ஆக்குவாயாக!" என்று பிரார்த்தித்தாள். அக்குழந்தை மார்பை விட்டுவிட்டு அப்பயணியைத் திரும்பிப்பார்த்து, "இறைவா! இவனைப் போல் என்னை ஆக்கிவிடாதே" என்று பேசியது. பிறகு மறுபடியும் மார்புக்குச் சென்று பால் அருந்தலாயிற்று.

-இந்த இடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அந்தக் குழந்தை பால் குடித்ததை அறிவிக்கும் முகமாக, தமது ஆட்காட்டி விரலை வாயில் வைத்து உறிஞ்சுவதைப் போன்று சைகை செய்து காட்டியதை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
பிறகு தாயும் மகவும் ஓர் அடிமைப் பெண்ணைக் கடந்துசென்றனர். மக்கள் அவளை, "நீ விபசாரம் செய்தாய்;திருடினாய்" என்று (இடித்துக்) கூறி அடித்துக்கொண்டிருந்தனர். ஆனால் அவளோ, "அல்லாஹ்வே எனக்குப் போதுமானவன்; பொறுப்பாளர்களில் அவனே நல்லவன்" என்று கூறிக்கொண்டிருந்தாள். அப்போது அக்குழந்தையின் தாய், "இறைவா! என் மகனை இவளைப் போன்று ஆக்கிவிடாதே" என்று கூறினாள். உடனே அக்குழந்தை பால் அருந்துவதை நிறுத்திவிட்டு அந்த அடிமைப் பெண்ணை நோக்கி(த் திரும்பி), "இறைவா! என்னை இவளைப் போன்று ஆக்குவாயாக!" என்று கூறியது.
அந்த இடத்தில் தாயும் மகவும் பேசிக் கொண்டனர். தாய் சொன்னாள்: உன் தொண்டை அறுபடட்டும்! அழகிய தோற்றம் கொண்ட மனிதர் ஒருவர் கடந்து சென்றபோது நான், "இறைவா! இதோ இவனைப் போன்று என் மகனை ஆக்குவாயாக" என்று கூறினேன். அப்போது நீ "இறைவா! இவனைப் போன்று என்னை ஆக்கிவிடாதே!" என்று கூறினாய்.
பிறகு மக்கள், "விபச்சாரம் செய்துவிட்டாய்; திருடிவிட்டாய்' என்று (இடித்துக்)கூறி அடித்துக் கொண்டிருந்த இந்த அடிமைப் பெண்ணைக் கடந்துசென்றபோது நான், "இறைவா! என் மகனை இவளைப் போன்று ஆக்கிவிடாதே!" என்று பிரார்த்தித்தேன். அப்போது நீ "இறைவா! இவளைப் போன்று என்னை ஆக்குவாயாக!" என்று கூறினாய். (ஏன் அப்படிச் சொன்னாய்? என்று கேட்டாள்.)
அதற்கு அக்குழந்தை, "(வாகனத்தில் சென்ற) அந்த மனிதன் (அடக்குமுறைகளை அவிழ்த்து விடும்) கொடுங்கோலனாக இருந்தான். ஆகவே, நான் "இறைவா! இவனைப் போன்று என்னை ஆக்கிவிடாதே!' என்று கூறினேன். "நீ விபசாரம் செய்துவிட்டாய்' என்று

கூறிக்கொண்டிருந்தனரே அப்பெண் விபசாரம் செய்யவுமில்லை. "நீ திருடிவிட்டாய்' என்று அவர்கள் கூறிக்கொண்டிருந்தனர். ஆனால், அவள் திருடவுமில்லை. ஆகவேதான், "இறைவா! அவளைப் போன்று என்னையும் (நல்லவளாக) ஆக்குவாயாக!' என்று கூறினேன்" என்று பதிலளித்தது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம்: 3 முதுமைப் பருவத்தில் பெற்றோர் இருவரையுமோ, அல்லது அவர்களில் ஒருவரையோ அடைந்தும் (அவர்களுக்கு நன்மை செய்து) சொர்க்கம் செல்லத் தவறியவரின் மூக்கு மண்ணைக் கவ்வட்டும்.**

4987 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "மூக்கு மண்ணைக் கவ்வட்டும்; பிறகும் மூக்கு மண்ணைக் கவ்வட்டும்; பிறகும் மூக்கு மண்ணைக் கவ்வட்டும்" என்று கூறினார்கள். "யார் (மூக்கு), அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்கப்பட்டது.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "தம் பெற்றோரில் ஒருவரையோ அல்லது அவர்கள் இருவரையுமோ முதுமைப் பருவத்தில் அடைந்தும் (அவர்களுக்கு உடலாலும் பொருளாலும் ஊழியம் செய்து, அதன் மூலம்) சொர்க்கம் செல்லத் தவறியவரின் (மூக்குத் தான்)" என்று பதிலளித்தார்கள்.

4988 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவனது மூக்கு மண்ணைக் கவ்வட்டும்; பிறகும் அவனுடைய மூக்கு மண்ணைக் கவ்வட்டும்; பிறகும் அவனுடைய மூக்கு மண்ணைக் கவ்வட்டும்" என்று சொன்னார்கள். "அல்லாஹ்வின் தூதரே! யார்?" என்று கேட்கப்பட்டது.
அதற்கு அவர்கள், "தம் தாய் தந்தையரில் ஒருவரையோ அல்லது அவ்விருவரையுமோ முதுமைப் பருவத்தில் அடைந்த பிறகும் (அவர்களுக்கு நன்மை செய்து, அதன் மூலம்) சொர்க்கம் செல்லத் தவறியவன்தான்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அவனுடைய மூக்கு மண்ணைக் கவ்வட்டும்' என்று மூன்று தடவை சொன்னார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

**பாடம் : 4 தாய், தந்தை உள்ளிட்ட நெருங்கிய உறவினரின் நண்பர்களுடன் நல்லுறவு பாராட்டுவதன் சிறப்பு.**

4989 அப்துல்லாஹ் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களை, கிராமவாசிகளில் ஒருவர் மக்கா செல்லும் சாலையில் சந்தித்தபோது,அவருக்கு அப்துல்லாஹ் முகமன் (சலாம்) கூறி, அவரைத் தாம்

பயணம் செய்துவந்த கழுதையில் ஏற்றிக் கொண்டார்கள். மேலும், அவருக்குத் தமது தலைமீதிருந்த தலைப்பாகையை (கழற்றி)க் கொடுத்தார்கள். அப்போது நாங்கள் அவர்களிடம், "அல்லாஹ் உங்களைச் சீராக்கட்டும்! இவர்கள் கிராமவாசிகள். இவர்களுக்குச் சொற்ப அளவு கொடுத்தாலே திருப்தியடைந்து விடுவார்கள்" என்று கூறினோம்.
அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "இவருடைய தந்தை (என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களின் அன்புக்குரியவராக இருந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நல்லறங்களில் மிகவும் சிறந்தது, ஒரு பிள்ளை தன் தந்தையின் அன்புக்குரியவர்களுடன் நல்லுறவு பாராட்டுவதாகும்" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" எனக் கூறினார்கள்.

4990 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நல்லறங்களில் மிகவும் சிறந்தது, ஒரு மனிதர் தம் தந்தையின் அன்பர்களுடன் நல்லுறவு பாராட்டுவதாகும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4991 அப்துல்லாஹ் பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் மக்காவுக்குப் பயணம் மேற்கொண்டால், அவர்களுடன் கழுதையொன்று இருக்கும். ஒட்டக வாகனத்தில் பயணம் செய்து களைத்து விட்டால், அக்கழுதைமீது ஓய்வெடுத்துக்கொள்வார்கள். மேலும், தலைப்பாகையொன்றும் அவர்களிடம் இருந்தது. அதை அவர்கள் தமது தலையில் கட்டிக்கொள்வார்கள். இந்நிலையில் ஒரு நாள் அவர்கள் அந்தக் கழுதையில் (பயணம் செய்துகொண்டு) இருந்தபோது, கிராமவாசி ஒருவர் அவர்களைக் கடந்துசென்றார்.
உடனே அவரிடம் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "நீங்கள் இன்ன மனிதரின் புதல்வரான இன்ன மனிதரல்லவா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் 'ஆம்' என்றார். உடனே அப்துல்லாஹ் (ரலி) அவர்கள், தமது கழுதையை அக்கிராமவாசியிடம் கொடுத்து "இதில் ஏறிக்கொள்ளுங்கள்" என்றார்கள்; தலைப்பாகையைக் கொடுத்து, "இதைத் தலையில் கட்டிக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.

அப்போது அவர்களிடம் அவர்களுடைய தோழர்களில் சிலர், "அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக! தாங்கள் ஓய்வெடுப்பதற்காக (மாற்று வாகனமாகப்) பயன்படுத்திவந்த கழுதையை இந்தக் கிராமவாசிக்குக் கொடுத்துவிட்டீர்களே? (பயணத்தின்போது) தாங்கள் தலையில் கட்டிக்கொண்டிருந்த தலைப்பாகையையும் கொடுத்துவிட்டீர்களே?" என்று கேட்டார்கள்.
அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நல்லறங்களில் மிகவும் சிறந்தது, ஒரு மனிதர் தம் தந்தை மறைந்தபின் அவருடைய அன்புக்குரியவர்களுடன் நல்லுறவு பாராட்டுவதாகும்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன். இந்தக் கிராமவாசியின் தந்தை (என் தந்தை) உமர் (ரலி) அவர்களின் நண்பராக இருந்தார்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம்: 5 நன்மை (அல்பிர்ரு), தீமை (அல்இஸ்மு) ஆகியவற்றின் விளக்கம்.

4992 நவ்வாஸ் பின் சம்ஆன் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நன்மை ("அல்பிர்ரு') மற்றும் தீமை ("அல்இஸ்மு') பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், "நன்மை என்பது நற்பண்பாகும். தீமை என்பது எந்தச் செயல் குறித்து உனது உள்ளத்தில் நெருடல் ஏற்படுவதுடன், அதை மக்கள் தெரிந்துகொள்வதை நீ வெறுப்பாயோ அதுவாகும்" என்று விடையளித்தார்கள்.

4993 நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் மதீனாவில் ஓராண்டு காலம் தங்கியிருந்தேன். அவர்களிடம் கேள்வி கேட்டு விடை தெரிந்துகொள்வ(து இயலாமல் போய் விடுமோ என்ப)தே ஹிஜ்ரத் செய்(து மதீனாவில் வந்து குடியேறு)வதற்கு எனக்குத் தடையாக இருந்தது. எங்களில் ஒருவர் ஹிஜ்ரத் செய்து (மதீனாவுக்கு வந்து குடியேறி)விட்டால், அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எதைப் பற்றியும் கேள்வி கேட்காமலிருந்தார். (வெளியூர்காரர்கள் கேட்கட்டும். அதன் மூலம் நாம் அறிந்து கொள்வோம் என்று இருந்துவிடுவார்.) (இந்த வகையில்,)நான் அவர்களிடம் நன்மையைப் பற்றியும் தீமையைப் பற்றியும் கேட்டேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நன்மை என்பது, நற்பண்பாகும். தீமை என்பது, எந்தச் செயல் குறித்து உனது உள்ளத்தில் நெருடல் ஏற்படுவதுடன், அதைப் பற்றி மக்கள் அறிந்துகொள்வதை நீ வெறுப்பாயோ அதுவாகும்" என்று விடையளித்தார்கள்.

## பாடம் : 6 உறவைப் பேணுவதும், உறவை முறிப்பது தடை செய்யப்பட்டதாகும் என்பதும்.

4994 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் படைப்பினங்களைப் படைத்து முடித்தபோது "உறவு" எழுந்து, (இறைஅரியணையின் கால்களைப் பற்றிக்கொண்டு) "(மனிதர்கள் தம்) உறவுகளைத் துண்டிப்பதிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோரியே இப்படி நிற்கிறேன்" என்று கூறி (மன்றாடி)யது.
அல்லாஹ், "ஆம்; உன்னை (அதாவது உறவை)ப் பேணி நடந்துகொள்பவனுடன் நானும் நல்ல முறையில் நடந்துகொள்வேன் என்பதும், உன்னைத் துண்டித்துவிடுபவனை நானும் துண்டித்துவிடுவேன் என்பதும் உனக்குத் திருப்தியளிக்கவில்லையா?" என்று கேட்டான். அதற்கு உறவு, "ஆம் (திருப்தியே) என் இறைவா!" என்று கூறியது. அல்லாஹ், "அது உனக்காக நடக்கும்" என்று சொன்னான் என்றார்கள்.
பிறகு, "நீங்கள் விரும்பினால் "நீங்கள் புறக்கணித்து பூமியில் குழப்பம் ஏற்படுத்தவும், உங்கள் உறவுகளை முறிக்கவும் முயல்வீர்களா? அவர்களையே அல்லாஹ் சபித்தான். அவர்களைச் செவிடாக்கினான். அவர்களின் பார்வைகளைக் குருடாக்கினான். அவர்கள் இக்குர்ஆனைச் சிந்திக்க வேண்டாமா? அல்லது அவர்களின் உள்ளங்கள்மீது அதற்கான பூட்டுக்கள் உள்ளனவா?' (47:22-24) ஆகிய இறைவசனங்களை ஓதிக்கொள்ளுங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4995 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறைவன் படைப்பினங்களைப் படைத்து முடித்தபோது) உறவானது, இறை அரியணையைப் பிடித்துக்கொண்டு, "என்னோடு ஒட்டி வாழ்பவனுடன் இறைவனும் உறவாடுவான். என்னை முறித்துக்கொள்பவனை இறைவனும் முறித்துக்கொள்வான்" என்று கூறியது.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4996 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முறித்து வாழ்பவன் -அதாவது உறவைத் துண்டித்து வாழ்பவன்– சொர்க்கத்தில் நுழைய மாட்டான். – இதை ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

4997 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உறவை முறித்து வாழ்பவன் சொர்க்கத்தில் நுழையமாட்டான்.
இதை ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்களிடமிருந்தே வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறக்கேட்டேன்" என்று காணப்படுகிறது.

4998 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தமது வாழ்வாதாரம் (ரிஸ்க்) விசாலமாக்கப்படுவதை, அல்லது வாழ்நாள் நீட்டிக்கப்படுவதை விரும்புகின்றவர் தமது உறவைப் பேணி வாழட்டும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

4999 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தமது வாழ்வாதாரம் (ரிஸ்க்) விசாலமாக்கப்படுவதையும் வாழ்நாள் நீட்டிக்கப்படுவதையும் விரும்புகின்றவர் தமது உறவைப் பேணி வாழட்டும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5000 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! எனக்கு உறவினர்கள் சிலர் உள்ளனர். அவர்களுடன் நான் ஒட்டி உறவாடுகிறேன். ஆனால், அவர்கள் எனது உறவை முறிக்கின்றனர். நான் அவர்களுக்கு உபகாரம் செய்கிறேன். ஆனால், அவர்கள் எனக்கு அபகாரம் செய்கிறார்கள். (என்னைப் புண்படுத்தும்போது) அவர்களை நான் சகித்துக் கொள்கிறேன். (ஆனாலும்,) அவர்கள் என்னிடம் அறியாமையோடு நடந்துகொள்கிறார்கள்" என்று கூறினார்.
நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் சொன்னதைப் போன்று நீங்கள் நடந்திருந்தால், அவர்களது வாயில் நீங்கள் சுடு சாம்பலைப் போட்டவரைப் போன்றுதான். இதே நிலையில் நீங்கள்

நீடித்திருக்கும்வரை இறைவனிடமிருந்து ஓர் உதவியாளர் அவர்களுக்கெதிராக உங்களுடன் இருந்துகொண்டேயிருப்பார்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 7 ஒருவருக்கொருவர் பொறாமை கொள்வது, கோபப்படுவது, பிணங்கிக்கொள்வது ஆகியவை தடை செய்யப்பட்டவையாகும்.

5001 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவருக்கொருவர் கோபம் கொள்ளாதீர்கள்; பொறாமை கொள்ளாதீர்கள்; பிணங்கிக் கொள்ளாதீர்கள். அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள். ஒரு முஸ்லிம் தம் சகோதரருடன் (மனஸ்தாபம் கொண்டு) மூன்று நாட்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்ட (ஹலாலான) செயலன்று.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "உறவை முறித்துக்கொள்ளாதீர்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மஅமர் (ரஹ்) அவர்களிடமிருந்து யஸீத் பின் ஸுரைஉ (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில் மேற்கண்ட (கோபம், பொறாமை, பிணக்கு, உறவை முறித்தல் ஆகிய) நான்கு குணங்கள் குறித்தும் இடம்பெற்றுள்ளன.
அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்கள் (மஅமர் (ரஹ்) அவர்களிடமிருந்து) அறிவிக்கும் அறிவிப்பில், "ஒருவருக்கொருவர் பொறாமை கொள்ளாதீர்கள்; உறவை முறித்துக் கொள்ளாதீர்கள்; பிணங்கிக்கொள்ளாதீர்கள்" என்று (மூன்று குணங்கள் மட்டுமே) இடம் பெற்றுள்ளன.

5002 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவருக்கொருவர் பொறாமை கொள்ளாதீர்கள்; கோபம் கொள்ளாதீர்கள்; உறவை முறித்துக் கொள்ளாதீர்கள். அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு செலுத்துவதில்) சகோதரர்களாய் இருங்கள்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிட்டுள்ளதைப் போன்று (சகோதரர்களாய் இருங்கள்)" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

பாடம் : 8 மார்க்க ரீதியான எந்தக் காரணமுமின்றி (ஒருவரிடம்) மூன்று நாட்களுக்குமேல் பேசாமல் இருப்பது தடை செய்யப்பட்டதாகும்.

5003 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிம் தம் (கொள்கைச்) சகோதரரிடம் (மனஸ்தாபம் கொண்டு) மூன்று நாட்களுக்குமேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்டதன்று. அவர்கள் இருவரும் சந்திக்கும் போது (இவரைவிட்டு) அவரும், (அவரை விட்டு) இவரும் முகத்தைத் திருப்பிக்கொள்வர். (இவ்வாறு செய்யலாகாது.) இவ்விருவரில் சிறந்தவர் யாரெனில், யார் முகமனை (சலாமை) முதலில் தொடங்குகிறாரோ அவர்தான்.
இதை அபூஅய்யூப் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஅய்யூப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் எட்டு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அனைத்து அறிவிப்புகளிலும் ("அவரும் இவரும் முகத்தைத் திருப்பிக்கொள்வர்' என்பதைக் குறிக்க) "ஃப யுஅரிளு ஹாதா வ யுஅரிளு ஹாதா' என்றே இடம்பெற்றுள்ளது. மாலிக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டும் "ஃப யஸுத்து ஹாதா வ யஸுத்து ஹாதா' என இடம்பெற்றுள்ளது.

5004 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இறைநம்பிக்கையாளர் தம் சகோதரரிடம் மூன்று நாட்களுக்குமேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்டதன்று.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5005 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மூன்று நாட்களுக்குப்பின் பேசாமலிருத்தல் கூடாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 9 (ஆதாரமின்றிப் பிறரைச்) சந்தேகிப்பது, துருவித்துருவி ஆராய்வது, போட்டி பொறாமை கொள்வது, (வாங்கும் எண்ணமின்றி) பொருளின் விலையை ஏற்றிக் கேட்பது உள்ளிட்டவை தடை செய்யப்பட்டவையாகும்.

5006 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(ஆதாரமில்லாமல் பிறரைச்) சந்தேகிப்பது குறித்து உங்களை நான் எச்சரிக்கிறேன். ஏனெனில் சந்தேகம் கொள்வது,பெரும் பொய்யாகும். (பிறரைப் பற்றித்) துருவித்துருவிக் கேட்காதீர்கள்; (அவர்களின் அந்தரங்கம் பற்றி) ஆராயாதீர்கள். (நீங்கள் வாழ்வதற்காகப் பிறர் வீழ வேண்டுமெனப்) போட்டியிட்டுக்கொள்ளாதீர்கள்; பொறாமை கொள்ளாதீர்கள்; கோபம் கொள்ளாதீர்கள். பிணங்கிக்கொள்ளாதீர்கள். (மாறாக) அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5007 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(ஒருவருக்கொருவர் மனஸ்தாபம் கொண்டு) பேசாமல் இருக்காதீர்கள். பிணங்கிக் கொள்ளாதீர்கள். (பிறரைப் பற்றித்) துருவித் துருவிக் கேட்காதீர்கள். ஒருவர் வியாபாரம் செய்துகொண்டிருக்கும்போது மற்றவர் தலையிட்டு வியாபாரம் செய்யவேண்டாம். (மாறாக) அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5008 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பொறாமை கொள்ளாதீர்கள். கோபம் கொள்ளாதீர்கள். (பிறர் அந்தரங்கம் பற்றித்) துருவித் துருவி ஆராயாதீர்கள்;துருவித்துருவிக் கேட்காதீர்கள். (பிறரை அதிகவிலை கொடுத்து வாங்க வைப்பதற்காக விற்பனைப் பொருளை) ஏற்றிக் கேட்காதீர்கள். (மாறாக,) அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "உறவை முறித்துக்கொள்ளாதீர்கள். பிணங்கிக்கொள்ளாதீர்கள். கோபம் கொள்ளாதீர்கள். பொறாமை கொள்ளாதீர்கள். அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிட்டுள்ளதைப் போன்று சகோதரர்களாய் இருங்கள்" என்று காணப்படுகிறது.

5009 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கோபம் கொள்ளாதீர்கள். பிணங்கிக் கொள்ளாதீர்கள். (நீங்கள் வாழ பிறர் வீழவேண்டுமெனப்) போட்டியிட்டுக்கொள்ளாதீர்கள். அல்லாஹ்வின் அடியார்களே! சகோதரர்களாய் இருங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 10 ஒரு முஸ்லிமுக்கு அநீதியிழைப்பது, துரோகம் செய்வது, அவரைக் கேவலப்படுத்துவது, அவரது உயிர், மானம்,பொருள் ஆகியவற்றைப் பறிப்பது ஆகியன தடை செய்யப்பட்டவையாகும்.

5010 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பொறாமை கொள்ளாதீர்கள். (பிறரை அதிக விலை கொடுத்து வாங்கவைப்பதற்காக விற்பனைப் பொருளின்) விலையை ஏற்றிக் கேட்காதீர்கள். கோபம் கொள்ளாதீர்கள். பிணங்கிக்கொள்ளாதீர்கள். ஒருவர் வியாபாரம் செய்துகொண்டிருக்கும்போது மற்றவர் தலையிட்டு வியாபாரம் செய்யவேண்டாம். (மாறாக,) அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள்.
ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்குச் சகோதரர் ஆவார். அவர் தம் சகோதரருக்கு அநீதியிழைக்கவோ,அவருக்குத் துரோகமிழைக்கவோ, அவரைக் கேவலப்படுத்தவோ வேண்டாம். இறையச்சம் (தக்வா) இங்கே இருக்கிறது. (இதைக் கூறியபோது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது நெஞ்சை நோக்கி மூன்று முறை சைகை செய்தார்கள். ஒருவர் தம் சகோதர முஸ்லிமைக் கேவலப்படுத்துவதே அவருடைய

தீமைக்குப் போதிய சான்றாகும். ஒவ்வொரு முஸ்லிமுக்கும் மற்ற முஸ்லிம்களின் உயிர், பொருள், மானம் ஆகியவை தடை செய்யப்பட்டவையாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5011 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகச் சற்று கூடுதல் குறைவுடன் இடம்பெற்றுள்ளது.
அதில், "அல்லாஹ் உங்கள் உடல்களையோ உருவங்களையோ பார்ப்பதில்லை. மாறாக, உங்கள் உள்ளங்களையே பார்க்கின்றான்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிவிட்டுத் தம் விரல்களால் தமது நெஞ்சை நோக்கி சைகை செய்தார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5012 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், உங்கள் தோற்றங்களையோ உங்கள் செல்வங்களையோ பார்ப்பதில்லை. மாறாக, உங்களுடைய உள்ளங்களையும் செயல்களையுமே அவன் பார்க்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 11 ஒருவருக்கொருவர் பகைமை கொள்வதற்கும் பேசாமல் இருப்பதற்கும் வந்துள்ள தடை.

5013 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தின் கதவுகள் திங்கட்கிழமையும் வியாழக்கிழமையும் திறக்கப்படுகின்றன. அப்போது அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காத ஒவ்வோர் அடியாருக்கும் மன்னிப்பு வழங்கப்படுகிறது; தமக்கும் தம் (முஸ்லிம்) சகோதரருக்கும் இடையே பகைமையுள்ள மனிதரைத் தவிர.
அப்போது "இவ்விருவரும் தமக்கிடையே சமாதானம் செய்துகொள்ளும்வரை இவர்களை விட்டுவையுங்கள்;இவ்விருவரும் தமக்கிடையே சமாதானம் செய்துகொள்ளும்வரை இவர்களை விட்டுவையுங்கள்; இவ்விருவரும் சமாதானம் செய்துகொள்ளும்வரை இவர்களை விட்டுவையுங்கள்" என்று கூறப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அப்துல் அஸீஸ் அத்தாரவர்தீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "பேசிக்கொள்ளாத இருவரைத் தவிர" (இல்லல் முத்தஹாஜிரைனி) என்று இடம்பெற்றுள்ளது. குதைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில் அதே பொருள் கொண்ட மற்றொரு சொற்றொடரில் "இல்லல் முஹ்தஜி ரைனி" என்று காணப்படுகிறது.

5014 ஒரு முறை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக (பின்வருமாறு) கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒவ்வொரு வியாழக்கிழமையும் திங்கட்கிழமையும் (மனிதர்களின் அனைத்துச்) செயல்களும் (அல்லாஹ்விடம்) சமர்ப்பிக்கப்படுகின்றன. அன்றைய தினத்தில் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், தனக்கு எதையும் இணைவைக்காத ஒவ்வொரு மனிதருக்கும் மன்னிப்பு அளிக்கின்றான்; தமக்கும் தம் சகோதரருக்குமிடையே பகைமை உள்ள ஒரு மனிதரைத் தவிர.
அப்போது இவ்விருவரும் சமாதானமாகிக்கொள்ளும்வரை இவர்களை விட்டுவையுங்கள். இவ்விருவரும் சமாதானமாகிக்கொள்ளும்வரை இவர்களை விட்டுவையுங்கள்" என்று கூறப்படுகிறது.
- மனிதர்களின் செயல்கள் ஒவ்வொரு வாரமும் திங்கட்கிழமை, வியாழக்கிழமை ஆகிய இரு தினங்களிலும் (அல்லாஹ்விடம்) சமர்ப்பிக்கப்படுகின்றன. அப்போது, "இறைநம்பிக்கையுள்ள ஒவ்வோர் அடியாருக்கும் மன்னிப்பு அளிக்கப்படுகிறது;தமக்கும் தம் சகோதரருக்குமிடையில் பகைமையுள்ள அடியாரைத் தவிர. அப்போது, "இவ்விருவரும் (சமாதானத்தின்பால்) திரும்பும்வரை இவ்விருவரையும் விட்டுவையுங்கள். அல்லது தாமதப்படுத்துங்கள்" என்று கூறப்படுகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 12 அல்லாஹ்வுக்காக நேசிப்பதன் சிறப்பு.

5015 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் மறுமை நாளில், "என்னைக் கண்ணியப்படுத்துவதற்காக ஒருவரையொருவர் நேசித்துக்கொண்டவர்கள் எங்கே? எனது நிழலைத் தவிர வேறு நிழலில்லாத இன்றைய தினத்தில் அவர்களுக்கு நான் எனது நிழலில் நிழலளிக்கிறேன்" என்று கூறுவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5016 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் தம் (கொள்கை)ச் சகோதரரைச் சந்திப்பதற்காக வேறோர் ஊருக்குச் சென்றார். அல்லாஹ், அவர் செல்லும் வழியில் அவரை எதிர்பார்த்தபடி வானவர் ஒருவரை அமரச் செய்தான். அந்த மனிதர் அவரிடம் வந்தபோது, "எங்கே செல்கிறாய்?" என்று அந்த வானவர் கேட்டார்.
அதற்கு அந்த மனிதர், "இந்த ஊரிலுள்ள என் சகோதரர் ஒருவரைச் சந்திப்பதற்காகச் செல்கிறேன்" என்று கூறினார்.
அதற்கு அவ்வானவர், "அவர் உமக்குச் செலுத்த வேண்டிய பிரதியுபகாரம் ஏதேனும் உள்ளதா?" என்று கேட்டார்.அதற்கு அம்மனிதர், "இல்லை; எனினும் நான் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வுக்காக அவரை நேசிக்கிறேன்" என்று கூறினார்.

அதற்கு அந்த வானவர், "நீ அல்லாஹ்வுக்காக அவரை நேசித்ததைப் போன்றே அல்லாஹ்வும் உன்னை நேசிக்கிறான் என்பதைத் தெரிவிக்க அல்லாஹ்வால் உம்மிடம் அனுப்பப்பெற்ற தூதர் ஆவேன் நான்" என்று சொன்னார்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 13 நோயாளிகளை நலம் விசாரிப்பதன் சிறப்பு.

5017 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நோயாளியை நலம் விசாரித்துக்கொண்டிருப்பவர், திரும்பிவரும்வரை சொர்க்கத்தின் கனிகளைப் பறித்துக்கொண்டிருக்கிறார்.
இதை ஸவ்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5018 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நோயாளியை நலம் விசாரிக்கச் சென்றவர் திரும்பி வரும்வரை சொர்க்கத்தின் கனிகளைப் பறித்துக்கொண்டேயிருக்கிறார்.
இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அடிமையான ஸவ்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5019 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிம் (உடல் நலிவுற்ற) தம் சகோதர முஸ்லிமை உடல்நலம் விசாரிக்கச் சென்றால், அவர் திரும்பி வரும்வரை சொர்க்கத்தின் கனிகளைப் பறித்துக் கொண்டேயிருக்கிறார்.– இதை ஸவ்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5020 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அடிமையான ஸவ்பான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நோயாளியை நலம் விசாரிக்கச் சென்றவர் சொர்க்கத்தின் "குர்ஃபா'வில் இருக்கிறார்" என்று கூறினார்கள். அப்போது "அல்லாஹ்வின் தூதரே! சொர்க்கத்தின் "குர்ஃபா' என்றால் என்ன?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அதன் கனிகளைப் பறிப்பதாகும்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஸவ்பான் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஓர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5021 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் மறுமை நாளில் (ஒரு மனிதரிடம்), "ஆதமின் மகனே! (மனிதா!) நான் நோயுற்றிருந்தபோது என்னை உடல்நலம் விசாரிக்க நீ வரவில்லையே (ஏன்)?" என்று கேட்பான். அதற்கு மனிதன், "என் இறைவா! நீயோ அகிலத்தாரின் அதிபதியாயிருக்க, உன்னை நான் எவ்வாறு உடல்நலம் விசாரிப்பேன்?" என்று

கேட்பான். அதற்கு அல்லாஹ், "உனக்குத் தெரியுமா? என் அடியானான இன்ன மனிதன் நோய்வாய்ப்பட்டிருந்தபோது அவனிடம் சென்று நீ நலம் விசாரிக்கவில்லை. தெரிந்துகொள்: அவனை உடல்நலம் விசாரிக்க நீ சென்றிருந்தால் அவனிடம் என்னைக் கண்டிருப்பாய்" என்று கூறுவான்.
மேலும் அல்லாஹ், "ஆதமின் மகனே! (மனிதா!) நான் உன்னிடம் உணவு கேட்டேன். ஆனால், நீ எனக்கு உணவளிக்கவில்லை" என்பான். அதற்கு மனிதன், "என் இறைவா! நீ அகிலத்தாரின் அதிபதியாயிருக்க, உனக்கு நான் எவ்வாறு உணவளிக்க இயலும்?" என்று கேட்பான். அதற்கு அல்லாஹ், "உனக்குத் தெரியுமா? உன்னிடம் என் அடியானான இன்ன மனிதன் உண்பதற்கு உணவு கேட்டான். ஆனால், அவனுக்கு நீ உணவளிக்கவில்லை. தெரிந்துகொள்: அவனுக்கு நீ உணவளித்திருந்தால் அ(தற்குரிய)தை என்னிடம் நீ கண்டிருப்பாய்" என்று கூறுவான்.

மேலும் "ஆதமின் மகனே! (மனிதா!) நான் உன்னிடம் குடிப்பதற்கு தண்ணீர் கேட்டேன். ஆனால், எனக்கு நீ தண்ணீர் தரவில்லை" என்று அல்லாஹ் கூறுவான். அதற்கு மனிதன், "என் இறைவா! நீயோ அகிலத்தாரின் அதிபதியாயிருக்க,உனக்கு நான் எவ்வாறு தண்ணீர் தர இயலும்?" என்று கேட்பான். அதற்கு அல்லாஹ், "என் அடியானான இன்ன மனிதன் உன்னிடம் குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டான். ஆனால், அவனுக்கு நீ தண்ணீர் கொடுக்கவில்லை. தெரிந்துகொள்: அவனுக்குக் குடிப்பதற்கு நீ தண்ணீர் கொடுத்திருந்தால் அ(தற்குரிய)தை என்னிடம் நீ கண்டிருப்பாய்" என்று கூறுவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 14 ஓர் இறைநம்பிக்கையாளரின் காலில் தைக்கும் முள் உள்பட அவருக்கு ஏற்படும் நோய் நொடிகள், துயரம் போன்றவற்றுக்காக அவருக்கு நற்பலன் வழங்கப்படுகிறது.

5022 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைவிடக் கடுமையாக நோய்வாய்ப்பட்ட வேறெவரையும் நான் கண்டதில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5023 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டுக் காய்ச்சலால் சிரமப்பட்டுக் கொண்டிருந்தபோது நான் அவர்களிடம் சென்றேன். அவர்களை(ப் பரிவோடு) எனது கையால் தொட்டு, "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் கடும் காய்ச்சலால் சிரமப்படுகிறீர்களே!" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்; உங்களில் இருவர் காய்ச்சலால் அடையும் துன்பத்தைப் போன்று நான் ஒருவனே சிரமப்படுகிறேன்" என்றார்கள். நான், "இத்துன்பத்தின் காரணமாகத் தங்களுக்கு இரு (மடங்கு) நன்மைகள் உண்டு தானே?" என்று கேட்டேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம்' என்று கூறிவிட்டுப் பிறகு, "ஒரு முஸ்லிமுக்கு ஏற்படும் நோயாயினும்,அது அல்லாத வேறு எந்தத் துன்பமாயினும் (அதற்கு ஈடாக), மரம் தன் இலைகளை உதிர்த்துவிடுவதைப் போன்று அவருடைய பாவங்களை அல்லாஹ் உதிர்க்காமல் இருப்பதில்லை" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "எனது கையால் அவர்களை(ப் பரிவோடு) தொட்டேன்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஆம்; என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! பூமியின் மீதுள்ள ஒரு முஸ்லிமுக்கு (ஏற்படும் எந்த நோயாயினும்...)" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று இடம்பெற்றுள்ளது.

5024 அஸ்வத் பின் யஸீத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள் "மினா'வில் இருந்தபோது அவர்களிடம் குறைஷிக் குலத்தைச் சேர்ந்த இளைஞர் ஒருவர் வந்தார். அப்போது அ(ங்கிருந்த)வர்கள் சிரித்துக் கொண்டிருந்தார்கள். உடனே ஆயிஷா (ரலி) அவர்கள், "உங்களுடைய சிரிப்புக்கு என்ன காரணம்?" என்று கேட்டார்கள். அதற்கு அம் மக்கள், "இன்ன மனிதர் கூடாரத்தின் கயிற்றில் இடறி விழுந்துவிட்டார். அவரது கழுத்தோ கண்ணோ போயிருக்கும் (நல்லவேளை பிழைத்துக்கொண்டார்)" என்று கூறினர்.
அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், "(இதற்கெல்லாம்) சிரிக்காதீர்கள். ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒரு முஸ்லிமைத் தைக்கும் ஒரு முள்ளாயினும் அதைவிடச் சிறிய துன்பம் எதுவாயினும், அதற்காக அவருக்கு ஓர் அந்தஸ்து பதிவு செய்யப்படுகிறது; அதற்குப் பகரமாக அவருடைய தவறுகளில் ஒன்று துடைக்கப்படுகிறது' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5025 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இறைநம்பிக்கையாளரைத் தைக்கும் ஒரு முள்ளாயினும் அதைவிட அற்பமானதாயினும் அதற்குப் பதிலாக அவருக்கு ஓர் அந்தஸ்தை அல்லாஹ் உயர்த்துகிறான்; அல்லது அவருடைய தவறு ஒன்றை அவரைவிட்டுத் துடைத்துவிடுகிறான்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5026 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இறைநம்பிக்கையாளரைத் தைக்கும் ஒரு முள்ளாயினும் அதைவிட அற்பமானதாயினும் அதற்குப் பதிலாக அல்லாஹ் அவருடைய தவறுகளில் சிலவற்றைக் கழித்துவிடுகிறான்.

இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5027 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமைத் தைக்கும் முள் உள்பட எத்துன்பமாயினும் அதற்குப் பதிலாக அவரது பாவம் மன்னிக்கப்படாமல் இருப்பதில்லை.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5028 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இறைநம்பிக்கையாளரைத் தைக்கும் முள் உள்பட எத்துன்பமாயினும் அதற்குப் பதிலாக "அவருடைய தவறுகளில் சில கழிக்கப்படாமல்' அல்லது "அவருடைய தவறுகளில் சில மன்னிக்கப்படாமல்' இருப்பதில்லை. (அறிவிப்பாளர் உர்வா (ரஹ்) அவர்கள் இவ்விரண்டில் எதைக் கூறினார் என்பது அறிவிப்பாளர் யஸீத் பின் குஸைஃபா (ரஹ்) அவர்களுக்குத் தெரியவில்லை.)
இதை நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5029 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இறைநம்பிக்கையாளரைத் தைக்கும் முள் உள்பட (துன்பங்கள்) எதுவாயினும் அதற்குப் பதிலாக அல்லாஹ் அவருக்கு ஓர் நன்மையைப் பதிவு செய்யாமல், அல்லது அதற்குப் பதிலாக அவருடைய தவறுகளில் ஒன்று மன்னிக்கப்படாமல் இருப்பதில்லை.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5030 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இறைநம்பிக்கையாளருக்கு ஏற்படும் வலி, துன்பம், நோய், கவலை, அவர் உணரும் சிறு மனவேதனை உள்பட எதுவாயினும் அதற்குப் பதிலாக அவருடைய பாவங்களில் சில மன்னிக்கப்படாமல் இருப்பதில்லை.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி), அபூ ஹுரைரா (ரலி) ஆகியோர் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"தீமை செய்பவர் அதற்குரிய தண்டனை வழங்கப்படுவார்" (4:123) எனும் இறைவசனம் அருளப்பெற்றபோது, அது முஸ்லிம்களுக்குக் கடுமையான கவலையை ஏற்படுத்தியது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நற்செயல்களில்) நடுநிலையாகச் செயல்படுங்கள்; சரியானதைச் செய்யுங்கள். (நாம் மிகப்பெரிய அளவில் வழிபாடுகள் செய்யவில்லையே என வருந்தாதீர்கள்.) ஏனெனில், கால் இடறி (காயமடைவது), அல்லது முள் தைப்பது உள்பட ஒரு முஸ்லிமுக்கு ஏற்படும் ஒவ்வொரு துன்பமும் அவருக்குப் பாவப் பரிகாரமாகவே அமையும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
முஸ்லிம் (பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான்) கூறுகிறேன்:

(இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்தொடரில் இடம்பெற்றுள்ள) இப்னு முஹைஸின் என்பவர், மக்காவாசியான உமர் பின் அப்திர் ரஹ்மான் பின் முஹைஸின் என்பவர் ஆவார்.

5031 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (உடல் நலிவுற்றிருந்த) உம்முஸ் ஸாயிப் அல்லது உம்முல் முசய்யப் எனும் பெண்மணியிடம் (உடல்நலம் விசாரிக்கச்) சென்றார்கள். அப்போது "உம்முஸ் ஸாயிபே! அல்லது உம்முல் முசய்யபே! உமக்கு என்ன நேர்ந்தது? ஏன் நடுங்கிக்கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்கள்.
அதற்கு அப்பெண், "காய்ச்சல். அதில் அல்லாஹ் வளம் சேர்க்காமல் இருக்கட்டும்!" என்று கூறினார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "காய்ச்சலை ஏசாதே! ஏனெனில் அது, கொல்லனின் உலை இரும்பின் துருவை அகற்றிவிடுவதைப் போன்று, ஆதமின் மக்களின் (மனிதர்களின்) தவறுகளை அகற்றி விடுகிறது" என்று கூறினார்கள்.

5032 அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் என்னிடம், "சொர்க்கவாசிகளில் ஒரு பெண்மணியை உங்களுக்குக் காட்டட்டுமா?" என்று கேட்டார்கள். நான் "சரி! (காட்டுங்கள்)" என்று சொன்னேன். அவர்கள், "(இதோ) இந்தக் கறுப்பு நிறப் பெண்மணிதான் அவர். இவர் (ஒரு தடவை) நபி (ஸல்) அவர்களிடம் வந்து, 'நான் வலிப்பு நோயால் பாதிக்கப்படுகிறேன். அப்போது (என் உடலிலிருந்து ஆடை விலகி) உடல் திறந்துகொள்கிறது. ஆகவே, எனக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்றார்.
நபி (ஸல்) அவர்கள், "நீ நினைத்தால் பொறுமையாக இருக்கலாம். (இதற்குப் பதிலாக) உனக்குச் சொர்க்கம் கிடைக்கும். நீ விரும்பினால் உனக்குக் குணமளிக்கும்படி அல்லாஹ்விடம் நான் வேண்டுகிறேன்" என்று சொன்னார்கள். இப்பெண்மணி "நான் பொறுமையாகவே இருந்துவிடுகிறேன். ஆயினும், (வலிப்பு வரும்போது ஆடை விலகி) என் உடல் திறந்துகொள்கிறது. அப்படித் திறக்காமலிருக்க அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று சொன்னார். அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் இப்பெண்ணுக்காகப் பிரார்த்தனை செய்தார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 15 அநீதியிழைப்பது தடை செய்யப்பட்டதாகும்.

5033 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வளமும் உயர்வும் மிக்க அல்லாஹ் பின்வருமாறு கூறியதாக அறிவித்தார்கள்:
என் அடியார்களே!
அநீதியிழைப்பதை எனக்கு நானே தடை செய்துகொண்டேன். அதை உங்களிடையேயும் தடை செய்யப்பட்டதாக ஆக்கிவிட்டேன். ஆகவே, நீங்கள் ஒருவருக்கொருவர் அநீதியிழைக்காதீர்கள்.
என் அடியார்களே!

உங்களில் யாரை நான் நல்வழியில் செலுத்தினேனோ அவர்களைத் தவிர மற்ற அனைவரும் வழி தவறியவர்களே. ஆகவே, என்னிடமே நல்வழியில் செலுத்துமாறு கேளுங்கள். உங்களை நான் நல்வழியில் செலுத்துவேன்.

என் அடியார்களே!

உங்களில் யாருக்கு நான் உணவளித்துள்ளேனோ அவர்களைத் தவிர மற்ற அனைவரும் பசித்திருப்பவர்களே. ஆகவே, என்னிடமே உணவாதாரத்தைக் கேளுங்கள். நான் உங்களுக்கு உணவளிக்கிறேன்.

என் அடியார்களே!

உங்களில் யாருக்கு நான் ஆடையணிவித்துள்ளேனோ அவர்களைத் தவிர மற்ற அனைவரும் நிர்வாணமானவர்களே. ஆகவே, என்னிடமே ஆடை கேளுங்கள். நான் உங்களுக்கு ஆடையணிவிக்கிறேன்.

என் அடியார்களே!

நீங்கள் இரவிலும் பகலிலும் பாவம் செய்கிறீர்கள். நான் அனைத்துப் பாவங்களையும் மறைத்துக் கொண்டிருக்கிறேன். ஆகவே, என்னிடமே பாவமன்னிப்புக் கோருங்கள். நான் உங்கள் பாவங்களை மன்னிக்கிறேன்.

என் அடியார்களே!

உங்களால் எனக்கு எவ்விதத் தீங்கும் அளிக்க முடியாது; மேலும், உங்களால் எனக்கு எவ்விதப் பயனும் அளிக்க முடியாது.

என் அடியார்களே!

உங்களில் முற்காலத்தார், பிற்காலத்தார், மனிதர்கள், ஜின்கள் ஆகிய அனைவரும் உங்களில் மிகவும் இறையச்சமுடைய ஒரு மனிதரைப் போன்று மாறிவிட்டாலும் அது எனது ஆட்சியில் எதையும் அதிகமாக்கி விடுவதில்லை.

என் அடியார்களே!

உங்களில் முற்காலத்தார், பிற்காலத்தார், மனிதர்கள், ஜின்கள் ஆகிய அனைவரும் மிகவும் தீய மனிதர் ஒருவரைப் போன்று மாறிவிட்டாலும் அது எனது ஆட்சியில் எதையும் குறைத்துவிடப்போவதில்லை.

என் அடியார்களே!

உங்களில் முற்காலத்தார், பிற்காலத்தார், மனிதர்கள், ஜின்கள் ஆகிய அனைவரும் சேர்ந்து ஒரே திறந்த வெளியில் நின்று என்னிடத்தில் (தத்தம் தேவைகளைக்) கோரினாலும் ஒவ்வொரு மனிதருக்கும் அவர் கேட்பதை நான் கொடுப்பேன். அது என்னிடத்தில் இருப்பவற்றில் எதையும் குறைத்துவிடுவதில்லை; கடலில் நுழை(த்து எடு)க்கப்பட்ட ஊசி (தண்ணீரைக்) குறைப்பதைப் போன்றே தவிர (குறைக்காது)!

என் அடியார்களே!

நீங்கள் செய்துவரும் நல்லறங்களை நான் உங்களுக்காக எண்ணிக் கணக்கிடுகிறேன். பிறகு அதன் நற்பலனை நான் முழுமையாக வழங்குவேன். நல்லதைக் கண்டவர் அல்லாஹ்வைப் போற்றிப் புகழட்டும். அல்லதைக் கண்டவர் தம்மையே நொந்துகொள்ளட்டும்!

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சயீத் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

(இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) அபூஇத்ரீஸ் அல்கவ்லானீ (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸ் குத்சியை அறிவிக்கும்போது, (இந்த இறைச்செய்தியைக் கண்ணியப்படுத்துவதற்காக) முழந்தாளிட்டு நின்றுகொள்வார்கள்.
- அபூதர் (ரலி) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் அபூமுஸ்ஹிர் (ரஹ்) அவர்கள் வாயிலாக மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், மர்வான் பின் முஹம்மத் (ரஹ்) அவர்களே அபூமுஸ்ஹிர் (ரஹ்) அவர்களைவிட ஹதீஸ் அறிவிப்பில் முழுமையானவர் ஆவார்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூதர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் அநீதியிழைப்பதை என்மீதும் தடை செய்துகொண்டேன். என் அடியார்கள் மீதும் தடைசெய்துவிட்டேன். ஆகவே, நீங்கள் ஒருவருக்கொருவர் அநீதி இழைக்காதீர்கள்" என்று வளமும் உயர்வும் மிக்க தம் இறைவனிடமிருந்து கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும், அபூஇத்ரீஸ் அல்கவ்லானீ (ரஹ்) அவர்கள் அறிவித்த மேற்கண்ட ஹதீஸே இதைவிட முழுமையானதாகும்.

5034 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அநீதியிழைப்பதிலிருந்து தவிர்ந்துகொள்ளுங்கள். ஏனெனில் அநீதியானது, மறுமை நாளில் பல இருள்களாகக் காட்சி தரும். கருமித்தனத்திலிருந்து தவிர்ந்துகொள்ளுங்கள். ஏனெனில் கருமித்தனமானது, உங்களுக்கு முன்னிருந்தவர்களை அழித்தது; இரத்தங்களைச் சிந்துவதற்கும் இறைவனால் அவர்களுக்குத் தடை செய்யப்பட்டவற்றை அனுமதிக்கப் பட்டவையாக ஆக்கிக் கொள்வதற்கும் தூண்டுகோலாக இருந்தது.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5035 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அநீதி, மறுமை நாளில் பல இருள்களாகக் காட்சி தரும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5036 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின் சகோதரன் ஆவான். அவனுக்கு அநீதியிழைக்கவுமாட்டார்; (பிறரது அநீதிக்கு அவன் ஆளாகும்படி) அவனைக் கைவிட்டு விடவுமாட்டார். யார் தம் சகோதரனின் தேவையை நிறைவு செய்வதில் ஈடுபட்டிருக்கிறாரோ அவரது தேவையை நிறைவு செய்வதில் அல்லாஹ்வும் ஈடுபட்டிருக்கிறான். யார் ஒரு முஸ்லிமின் ஒரு துன்பத்தை நீக்குகிறாரோ அதற்குப் பகரமாக அவரைவிட்டு அல்லாஹ் மறுமை நாளில் அவருடைய துன்பங்களில் ஒன்றை நீக்குகிறான். யார் ஒரு முஸ்லிமின் குறைகளை மறைக்கிறாரோ அவருடைய குறைகளை மறுமை நாளில் அல்லாஹ்வும் மறைக்கிறான்.

இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5037 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடம்), "திவாலாகிப்போனவன் என்றால் யார் என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். மக்கள், "யாரிடம் வெள்ளிக்காசோ (திர்ஹம்) பொருட்களோ இல்லையோ அவர்தான் எங்களைப் பொறுத்தவரை திவாலானவர்" என்று பதிலளித்தார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் சமுதாயத்தாரில் திவாலாகிப்போனவர் ஒருவராவார். அவர் மறுமை நாளில் தொழுகை, நோன்பு, ஸகாத் ஆகியவற்றுடன் வருவார். (அதே நேரத்தில்) அவர் ஒருவரைத் திட்டியிருப்பார். ஒருவர்மீது அவதூறு சொல்லியிருப்பார். ஒருவரது பொருளை (முறைகேடாகப்) புசித்திருப்பார். ஒருவரது இரத்தத்தைச் சிந்தியிருப்பார். ஒருவரை அடித்திருப்பார். ஆகவே, அவருடைய நன்மைகளிலிருந்து சில இவருக்குக் கொடுக்கப்படும்;இன்னும் சில அவருக்குக் கொடுக்கப்படும். அவருடைய நன்மைகளிலிருந்து எடுத்துக் கொடுப்பதற்குமுன் நன்மைகள் தீர்ந்துவிட்டால், (அவரால் பாதிக்கப்பட்ட) மக்களின் பாவங்களிலிருந்து சில எடுக்கப்பட்டு, இவர்மீது போடப்படும். பிறகு அவர் நரக நெருப்பில் தூக்கியெறியப்படுவார் (அவரே திவாலாகிப்போனவர்)" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5038 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் உரிமைகளை உரியவர்களிடம் நிச்சயமாக நீங்கள் ஒப்படைப்பீர்கள். எந்த அளவுக்கென்றால்,கொம்பில்லாத ஆட்டுக்காக (அதை முட்டிய) கொம்புள்ள ஆட்டிடம் பழிவாங்கப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5039 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் (இவ்வுலகில்) அநீதி இழைப்பவனுக்கு (விட்டுக்கொடுத்து) அவகாசமளிப்பான். இறுதியில் அவனைப் பிடித்துவிட்டால், அவனைத் தப்பவிடமாட்டான்" என்று கூறிவிட்டு, "அநீதி இழைத்த ஊர்(க்காரர்)களைப் பிடிக்கும்போது இவ்வாறே உம்முடைய இறைவன் பிடிக்கிறான். அவனது பிடி வதைக்கக்கூடியது; கடுமையானது" (11:102) எனும் இறைவசனத்தை ஓதிக்காட்டினார்கள்.

## பாடம் : 16 அநீதியிழைத்த சகோதரனுக்கும் அநீதிக்குள்ளான சகோதரனுக்கும் உதவுதல்.

5040 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு போரின்போது) முஹாஜிர்களில் ஓர் இளைஞரும் அன்சாரிகளில் ஓர் இளைஞரும் சண்டையிட்டுக்கொண்டனர். அப்போது "அந்த முஹாஜிர்' அல்லது "முஹாஜிர்கள்', "முஹாஜிர்களே (உதவிக்கு வாருங்கள்)" என்று அழைத்தார். அந்த அன்சாரி, "அன்சாரிகளே! (உதவிக்கு வாருங்கள்)!" என்று அழைத்தார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்கள் புறப்பட்டு வந்து, "என்ன இது, அறியாமைக் காலத்தவரின் கூப்பாடு?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "இல்லை; அல்லாஹ்வின் தூதரே! இளைஞர்கள் இருவர் சண்டையிட்டுக்கொண்டனர். அவர்களில் ஒருவர் மற்றவரின் புட்டத்தில் அடித்துவிட்டார்" என்று கூறினர்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பிரச்சினை இல்லை. ஒருவர் தம் சகோதரர் அநீதியிழைப்பவராக இருக்கும் நிலையிலும் அநீதிக்குள்ளானவராக இருக்கும் நிலையிலும் அவருக்கு உதவட்டும். (அது எவ்வாறெனில்) அவர் அநீதியிழைப்பவராக இருந்தால், (அநீதியிழைக்கவிடாமல்) அவரைத் தடுக்கட்டும்! அதுவே அவருக்குச் செய்யும் உதவியாகும். அவர் அநீதியிழைக்கப்பட்டவராக இருந்தால், அவருக்கு உதவி செய்யட்டும்" என்று கூறினார்கள்.

5041 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நாங்கள் ("பனூ முஸ்தலிக்' எனும்) ஓர் அறப்போரில் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது முஹாஜிர்களில் ஒருவர் அன்சாரிகளில் ஒருவரை (விளையாட்டாக)ப் புட்டத்தில் அடித்துவிட்டார். அப்போது (அடி வாங்கிய) அன்சாரி, "அன்சாரிகளே! (உதவிக்கு வாருங்கள்)" என்று அழைத்தார். அந்த முஹாஜிர், "முஹாஜிர்களே! (உதவிக்கு வாருங்கள்)" என்று அழைத்தார்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வந்து), "இது என்ன அறியாமைக் காலக் கூப்பாடு?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! முஹாஜிர்களில் ஒருவர் அன்சாரிகளில் ஒருவரைப் புட்டத்தில் அடித்துவிட்டார்" என்று கூறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இத்தகைய கூப்பாடுகளைக் கைவிடுங்கள். (இனமாச்சரியங்களைத் தூண்டுகின்ற) இக்கூப்பாடுகள் நாற்றம் வீசக்கூடியவை" என்று கூறினார்கள்.

அப்போது (மதீனாவாசியான நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் பின் உபை இதைக் கேட்டுவிட்டு "அப்படியா அவர்கள் (முஹாஜிர்கள்) செய்துவிட்டார்கள்? அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் மதீனாவுக்குத் திரும்பிச்சென்றால் (எங்கள் இனத்தாரான) கண்ணியவான்கள் இழிந்தோ(ராகிய முஹாஜி)ர்களை நிச்சயமாக அங்கிருந்து வெளியேற்றி விடுவர்" என்று (அன்சாரிகளுக்காகப்) பேசினார்.

(இச்செய்தி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் தோழர்களுக்கும் எட்டியபோது) உமர் (ரலி) அவர்கள் எழுந்து, "என்னை விடுங்கள். இந்த நயவஞ்சகனின் கழுத்தை வெட்டிவிடுகிறேன்" என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரை விட்டுவிடுங்கள். முஹம்மத் தம் தோழர்களையே கொலை செய்கிறார் என்று மக்கள் பேசிவிடக் கூடாது" என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5042 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

முஹாஜிர்களில் ஒருவர் அன்சாரிகளில் ஒருவரைப் புட்டத்தில் அடித்துவிட்டார். அந்த அன்சாரி நபி (ஸல்) அவர்களிடம் வந்து அவரைப் பழிக்குப் பழி வாங்க வேண்டுமெனக்

கோரினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இத்தகைய (இன மாச்சரியங்களைத் தூண்டும்) கூப்பாடுகளை விடுங்கள். இவை நாற்றம் வீசக்கூடியவை" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 17 இறைநம்பிக்கையாளர்கள் ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துவதும் பரிவு காட்டுவதும் தோள் கொடுத்து ஒத்துழைப்பதும்.

5043 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளர்கள் ஒருவருக்கொருவர் (ஒத்துழைக்கும் விஷயத்தில்) ஒரு கட்டடத்தைப் போன்றவர்கள் ஆவர். கட்டடத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதிக்கு வலுசேர்க்கிறது.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஏழு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5044 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துவதிலும் கருணை புரிவதிலும் பரிவு காட்டுவதிலும் இறை நம்பிக்கையாளர்களின் நிலையானது, ஓர் உடலின் நிலையைப் போன்றதாகும். உடலின் ஓர் உறுப்பு சுகவீனமடைந்தால், அதனுடன் மற்ற உறுப்புகளும் (சேர்ந்துகொண்டு) உறங்காமல் விழித்துக்கொண்டிருக்கின்றன. அத்துடன் உடல் முழுவதும் காய்ச்சலும் கண்டுவிடுகிறது.
இதை நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5045 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளர்கள் ஒரே மனிதனைப் போன்றவர்கள். அவனுக்குத் தலையில் சுகவீனமேற்பட்டால் உடல் முழுவதும் காய்ச்சல் கண்டுவிடுகிறது. அதனுடன் மற்ற உறுப்புகளும் (சேர்ந்துகொண்டு) உறங்காமல் விழித்திருக்கின்றன.
இதை நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முஸ்லிம்கள் ஒரே மனிதனைப் போன்றவர்கள். அவனது கண்ணுக்கு நோய் ஏற்பட்டால், உடல் முழுவதும் நோய்வாய்ப்படுகிறது. அவனது தலைக்கு நோய் ஏற்பட்டால், உடல் முழுவதும் நோய் காண்கிறது.
இதை நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 18 ஏசுவதற்கு வந்துள்ள தடை

5446 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவரையொருவர் ஏசிக்கொள்ளும் இருவரில் முதலில் ஏச ஆரம்பித்தவரையே குற்றம் சாரும்; அநீதிக்குள்ளானவர் வரம்பு மீறாத வரை!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 19 மன்னிப்பும் பணிவும் விரும்பத்தக்க குணங்களாகும்.

5447 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தர்மம் செல்வத்தைக் குறைப்பதில்லை. மன்னிப்பதால் ஓர் அடியாருக்கு அல்லாஹ் கண்ணியத்தையே அதிகப்படுத்துகிறான். அல்லாஹ்வுக்காக ஒருவர் பணிவு காட்டினால் அவரை அல்லாஹ் உயர்த்தாமல் இருப்பதில்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 20 புறம் பேசுவது தடை செய்யப்பட்டதாகும்.

5048 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "புறம் பேசுதல் என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்" என்று பதிலளித்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் உம்முடைய சகோதரரைப் பற்றி அவர் விரும்பாத ஒன்றைக் கூறுவதாகும்" என்று பதிலளித்தார்கள்.
அப்போது, "நான் சொல்லும் குறை என் சகோதரரிடம் இருந்தாலுமா? (புறம் பேசுதலாக ஆகும்), கூறுங்கள்" என்று கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் சொல்லும் குறை உம்முடைய சகோதரரிடம் இருந்தால்தான், நீர் அவரைப் பற்றிப் புறம் பேசினீர் என்றாகும். நீர் சொன்ன குறை அவரிடம் இல்லாவிட்டாலோ, நீர் அவரைப் பற்றி அவதூறு சொன்னவராவீர்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 21 அல்லாஹ் ஒருவரது குறையை இவ்வுலகில் மறைத்துவிட்டால், மறுமையிலும் அதை அவன் மறைப்பான் எனும் நற்செய்தி.

5049 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் ஓர் அடியாரின் குறையை இவ்வுலகில் மறைத்துவிட்டால், அதை அவன் மறுமை நாளிலும் மறைக்காமல் இருப்பதில்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5050 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் அடியார் மற்றோர் அடியாரின் குறையை இவ்வுலகில் மறைத்தால், அவருடைய குறையை அல்லாஹ் மறுமை நாளில் மறைக்காமல் இருப்பதில்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 22 அருவருப்பாகப் பேசும் ஒருவரிடமிருந்து தம்மைத் தற்காத்துக்கொள்வதற்காக அவரிடம் ஒருவர் கனிவாகப் பேசுவது.**

5051 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (எங்கள் வீட்டுக்குள் வர) நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அவரை உள்ளே வரச்சொல்லுங்கள். அந்தக் கூட்டத்தாரிலேயே (இவர்) மோசமானவர்" என்று அவரைப் பற்றிச் சொன்னார்கள். (வீட்டுக்கு உள்ளே) அவர் வந்தபோது (எல்லாரிடமும் பேசுவதைப் போன்றே) அவரிட(மு)ம் நபி (ஸல்) அவர்கள் கனிவாகப் பேசினார்கள். (அவர் பேசிவிட்டு எழுந்து சென்றதும்) நான், "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் அவரைக் குறித்து ஒரு விதமாகச் சொன்னீர்கள். பிறகு அவரிடமே கனிவாகப் பேசினீர்களே?" என்று கேட்டேன்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "ஆயிஷா! அல்லாஹ்விடம் மறுமை நாளில் தகுதியால் மிகவும் மோசமானவர் யாரெனில், மக்கள் எவரது அருவருப்பான பேச்சுகளிலிருந்து (தம்மைத்) தற்காத்துக் கொள்ள ஒதுங்கிக்கொள்கிறார்களோ அவர்தான். (அருவருப்பான பேச்சுகள் பேசும் அவர் குறித்து எச்சரிக்கை செய்யவே அவரைப் பற்றி அவ்வாறு சொன்னேன்)" என்றார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் (வார்த்தைகளில் சிறிது வேறுபாட்டுடன்) வந்துள்ளது.

**பாடம் : 23 நளினத்தின் சிறப்பு.**

5052 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நளினத்தை இழந்தவர் நன்மைகளை இழந்தவர் ஆவார்.
இதை ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5053 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நளினத்தை இழந்தவர் நன்மையை இழந்தவர் ஆவார்.
இதை ஜரீர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஏழு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5054 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நளினத்தை இழந்தவர் நன்மைகளை இழந்தவர் ஆவார்.
இதை ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5055 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "ஆயிஷா! அல்லாஹ் மென்மையானவன். மென்மையான போக்கையே அவன் விரும்புகிறான். வன்மைக்கும் பிறவற்றுக்கும் வழங்காததையெல்லாம் அவன் மென்மைக்கு வழங்குகிறான்" என்று கூறினார்கள்.

5056 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மென்மை எதில் இருந்தாலும், அதை அது அழகாக்கிவிடும். மென்மை அகற்றப்பட்ட எந்த ஒன்றும் அலங்கோலமாகிவிடும்.
இதை நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5057 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஆயிஷா (ரலி) அவர்கள் (பயணத்துக்குப் பழக்கப்படாத) முரட்டு சுபாவமுடைய ஒட்டகம் ஒன்றில் ஏறிச்சென்றார்கள். அப்போது அதை விரட்டலானார்கள். அப்போது அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஆயிஷா!) நளினத்தைக் கையாள்வாயாக" என்று கூறிவிட்டு, மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 24 கால்நடைகள் முதலியவற்றைச் சபிப்பது தடை செய்யப்பட்டதாகும்.

5058 இம்ரான் பின் ஹுசைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்திலிருந்தபோது, அன்சாரிகளில் ஒரு பெண் ஒட்டகமொன்றின்மீது அமர்ந்திருந்தார். அந்த ஒட்டகம் முரண்டு பிடித்தபோது அப்பெண் அ(ந்த ஒட்டகத்)தைச் சபித்தார். இதைச் செவியுற்ற அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதன் மீதுள்ளவற்றை அகற்றிவிட்டு, அதை விட்டு விடுங்கள். ஏனெனில், அது சாபத்திற்குள்ளானதாகும்" என்று கூறினார்கள்.
அதையடுத்து அந்த ஒட்டகம் மக்களிடையே நடந்து செல்வதையும், அதை எவரும் சீண்டாமலிருந்ததையும் இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5059 மேற்கண்ட ஹதீஸ் இம்ரான் பின் ஹுசைன் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஹம்மாத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அந்தச் சாம்பல் நிற ஒட்டகத்தை நான் இப்போதும் பார்ப்பதைப் போன்றுள்ளது" என்று இம்ரான் பின் ஹுசைன் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.
அப்துல் வஹ்ஹாப் அஸ்ஸகஃபீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அதன் மீதுள்ளவற்றை அகற்றிவிட்டு அதை வெறுமேனியாக விட்டுவிடுங்கள். ஏனெனில், அது சாபத்துக்குரியதாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

5060 அபூபர்ஸா அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஓர் அடிமைப் பெண் ஒட்டகமொன்றின் மீதிருந்த(படி பயணம் செய்துகொண்டிருந்)தார். அதன் மீது மக்களின் பயணச் சாதனங்கள் சில இருந்தன. (முன்னே) சென்றுகொண்டிருந்த நபி (ஸல்) அவர்களையும் குறுகலான மலை வருவதையும் கண்ட அப்பெண், "ஹல்!" என அந்த ஒட்டகத்தை அதட்டிவிட்டு, "இறைவா! இ(ந்த ஒட்டகத்)தை நீ சபிப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "சாபத்தைச் சுமந்துவரும் இந்த ஒட்டகம் நம்முடன் வர வேண்டாம்" என்று கூறினார்கள்.

5061 மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் சாபத்தைச் சுமந்துள்ள எந்த வாகனமும் நம்முடன் வரவேண்டாம் என்றோ, அல்லது இதைப் போன்றோ கூறியதாகக் கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

5062 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒரு வாய்மையாளர் அதிகமாகச் சாபமிடுபவராக இருப்பது தகாது" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5063 ஸைத் பின் அஸ்லம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல் மலிக் பின் மர்வான் (தம் விருந்தினராக வந்திருந்த நபித்தோழியரில் ஒருவரான) உம்முத் தர்தா (ரலி) அவர்களுக்குத் தம் சார்பாக வீட்டு அலங்காரப் பொருட்களை அனுப்பிவைத்தார். (உம்முத் தர்தா (ரலி) அவர்களைத் தம் மனைவியரின் இல்லத்திற்கு வரவழைத்து அவரிடம் நபிமொழிகளைக் கேட்பார்.)
ஒரு நாள் இரவில் அப்துல் மலிக் எழுந்து தம் ஊழியரை அழைத்தார். அவர் தாமதமாக வந்த போது அவரைச் சபித்தார். காலையானதும் அப்துல் மலிக்கிடம் உம்முத் தர்தா (ரலி) அவர்கள் கூறினார்கள்: இன்றிரவு நீங்கள் உங்கள் ஊழியரை அழைத்தபோது, அவரைச் சபிப்பதை நான் செவியுற்றேன். (என் கணவர்) அபுத்தர்தா (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறியதை நான் கேட்டுள்ளேன்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதிகமாகச் சபிப்பவர்கள் மறுமை நாளில் பரிந்துரைப்பவர்களாகவோ சாட்சியமளிப்பவர்களாகவோ இருக்கமாட்டார்கள்" எனக் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஸைத் பின் அஸ்லம் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5064 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அதிகமாகச் சபிப்பவர்கள் மறுமை நாளில் சாட்சியமளிப்பவர்களாகவோ பரிந்துரைப்பவர்களாகவோ இருக்கமாட்டார்கள்.
இதை அபுத்தர்தா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5065 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களிடம்) "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் இணைவைப்பாளர் களுக்கெதிராக(ச் சாபமிட்டுப்) பிரார்த்தியுங்கள்" என்று கூறப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நான் சாபமிடுபவனாக அனுப்பப்படவில்லை. நான் அருளாகவே அனுப்பப்பெற்றுள்ளேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 25 நபி (ஸல்) அவர்கள் ஒருவருக்கெதிராகப் பிரார்த்திக்கவோ ஏசவோ சபிக்கவோ செய்து, அவற்றுக்கு அவர் தகுதியானவராக இல்லாதிருந்தால், அவருக்கு அது பாவப் பரிகாரமாகவும் நற்பலனாகவும் அருளாகவும் மாறிவிடும்.**

5066 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இரண்டு பேர் வந்தார்கள்; நபியவர்களிடம் எதைப் பற்றியோ பேசினார்கள். அவர்கள் என்ன பேசினார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. அவர்கள் இருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கோபப்படுத்திவிட்டனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்விருவரையும் சபித்து ஏசிவிட்டார்கள்.

அவர்கள் இருவரும் சென்றதும், நான், "அல்லாஹ்வின் தூதரே! நன்மைகளில் எதையேனும் யார் அடைந்துகொண்டாலும், இவ்விருவர் (மட்டும்) அதை அடையப்போவதில்லை" என்று கூறினேன். அதற்கு "அது எதனால்?" என்று நபியவர்கள் கேட்டார்கள். நான், "அவ்விருவரையும் தாங்கள் சபித்தீர்களே? ஏசினீர்களே?" என்று பதிலளித்தேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் என் இறைவனிடம் நிபந்தனையிட்டுக் கூறியுள்ளதை நீ அறியவில்லையா? 'இறைவா! நான் ஒரு மனிதனே! நான் முஸ்லிம்களில் ஒருவரைச் சபித்திருந்தால், அல்லது ஏசியிருந்தால் அதை அவருக்குப் பாவப் பரிகாரமாகவும் நன்மையாகவும் ஆக்கிவிடுவாயாக' என்று கூறியுள்ளேன்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஈசா பின் யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் இருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தனியாகப் பேசினர். அப்போது அவ்விருவரையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏசினார்கள்;சபித்தார்கள். பிறகு அவ்விருவரையும் வெளியேற்றிவிட்டார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

5067 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! நான் ஒரு மனிதனே. ஆகவே, நான் முஸ்லிம்களில் எவரையேனும் ஏசியிருந்தால், அல்லது சபித்திருந்தால், அல்லது அடித்திருந்தால் அவற்றை அவருக்குப் பாவப்பரிகாரமாகவும் அருளாகவும் மாற்றிடுவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்கள் வாயிலாகவும் மற்றோர் அறிவிப்பாளர் தொடரில் வந்துள்ளது.

ஆயினும் அதில், "பாவப்பரிகாரமாகவும், நன்மையாகவும் (மாற்றிடுவாயாக!)" என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஈசா பின் யூனுஸ் (ரஹ்) அவர்கள் "நன்மையாகவும்' என்பதை அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் அறிவிப்பிலும், "அருளாகவும்" என்பதை ஜாபிர் (ரலி) அவர்களது அறிவிப்பிலும் இடம்பெறச்செய்துள்ளார்கள்.

5068 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "இறைவா! நான் உன்னிடம் ஓர் உறுதிமொழி எடுக்கிறேன். அதற்கு நீ மாறு செய்யமாட்டாய். (அது) நான் ஒரு மனிதனே. ஆகவே, நான் எந்த இறை நம்பிக்கையாளரையாவது (கடிந்து கொண்டு) மனவேதனைப்படுத்தியிருந்தால், ஏசியிருந்தால், சபித்திருந்தால், அடித்திருந்தால், அதையே அவருக்கு அருளாகவும் பாவப்பரிகாரமாகவும் மறுமை நாளில் உன்னிடம் அவருக்கு நெருக்கத்தை ஏற்படுத்தும் அம்சமாகவும் மாற்றிவிடுவாயாக!" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் ("அவரை அடித்திருந்தால்' என்பதைக் குறிக்க) "ஜலத்துஹு' (ஷீóகூóகுøõடூõõ) என்றே இடம்பெற்றுள்ளது. இது அபூஹுரைரா (ரலி) அவர்களின் மொழி வழக்காகும். (ஹதீஸின் மூலத்தில் இருப்பது) "ஜலத்துஹு'(ஷீóகூóகுúஸீõடூõ) என்பதேயாகும்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5069 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! முஹம்மத் ஒரு மனிதரே! (எல்லா) மனிதர்களும் கோபப்படுவதைப் போன்றே அவரும் கோபப்படுவார். நான் உன்னிடம் ஓர் உறுதிமொழி எடுத்துள்ளேன். அதற்கு நீ மாறு செய்யமாட்டாய். அதாவது நான் எந்த இறை நம்பிக்கையாளரையாவது மனவேதனைப் படுத்தியிருந்தால், அல்லது ஏசியிருந்தால்,அல்லது அடித்திருந்தால் அதையே அவருக்குப் பாவப்பரிகாரமாகவும் அவருக்கு மறுமை நாளில் உன்னிடத்தில் நெருக்கத்தை ஏற்படுத்தும் அம்சமாகவும் மாற்றிடுவாயாக!" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்.

5070 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! நான் இறைநம்பிக்கையுள்ள எந்த அடியாரையாவது ஏசியிருந்தால்,அதையே அவருக்கு மறுமைநாளில் உன்னிடம் நெருக்கத்தை ஏற்படுத்தும் அம்சமாக மாற்றிவிடுவாயாக!" என்று கூறியதைக் கேட்டுள்ளேன்.

5071 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! நான் உன்னிடம் ஓர் உறுதிமொழி எடுத்துள்ளேன். அதற்கு நீ ஒருபோதும் மாறு செய்யமாட்டாய். அதாவது நான் எந்த இறை நம்பிக்கையாளரையாவது ஏசியிருந்தால், அல்லது அடித்திருந்தால் அதையே அவருக்கு மறுமையில் பாவப்பரிகாரமாக மாற்றி விடுவாயாக!" என்று கூறியதைக் கேட்டேன்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5072 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் ஒரு மனிதரே. நான் வல்லமையும் மாண்பும் மிக்க என் இறைவனிடம் ஒரு நிபந்தனையை முன்வைத்துள்ளேன். (அது) நான் முஸ்லிம்களில் ஓர் அடியாரை ஏசியிருந்தால், அல்லது திட்டியிருந்தால், அதை அவருக்குப் பாவப்பரிகாரமாகவும் நன்மையாகவும் மாற்றி விடுவாயாக (என்பதாகும்)" என்று கூறியதைக் கேட்டுள்ளேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5073 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் தாயார் உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம் அநாதைச் சிறுமி ஒருத்தி இருந்தாள். (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தச் சிறுமியைப் பார்த்துவிட்டு, "நீயா அது? மிகவும் பெரியவளாகிவிட்டாயே! உன் வயது அதிகரிக்காமல் போகட்டும்!" என்று கூறினார்கள். அந்த அநாதைச் சிறுமி அழுதுகொண்டே உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம் திரும்பிச் சென்றாள். உம்மு சுலைம் (ரலி) அவர்கள், "மகளே! உனக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். அதற்கு அந்தச் சிறுமி, "நபி (ஸல்) அவர்கள் என் வயது அதிகரிக்காமல் போகட்டும் என எனக்கெதிராகப் பிரார்த்தித்துவிட்டார்கள். இனி ஒருபோதும் என் வயது அதிகமாகாது?" என்று கூறினாள்.
உடனே உம்மு சுலைம் (ரலி) அவர்கள் தமது முக்காட்டுத் துணியை தலையில் சுற்றிக்கொண்டு வேகமாகப் புறப்பட்டுச் சென்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உம்மு சுலைமே! உமக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்டார்கள். அதற்கு உம்மு சுலைம் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் நபியே! என்னிடமிருக்கும் அநாதைச் சிறுமிக்கெதிராகத் தாங்கள் பிரார்த்தித்தீர்களா?" என்று கேட்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள், "என்ன விஷயம், உம்மு சுலைமே?" என்று கேட்டார்கள். உம்மு சுலைம் (ரலி) அவர்கள், "அவளுடைய வயது அதிகரிக்காமல் போகட்டும். அவளுடைய ஆயுள் கூடாமல் போகட்டும் எனத் தாங்கள் பிரார்த்தித்ததாக அச்சிறுமி கூறினாள்" என்றார்கள். இதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்தார்கள்.
பிறகு, "உம்மு சுலைமே! நான் என் இறைவனிடம் முன்வைத்துள்ள நிபந்தனையை நீ அறிவாயா? நான் என் இறைவனிடம், "நான் ஒரு மனிதனே! எல்லா மனிதர்களும் மகிழ்ச்சியடைவதைப் போன்று நானும் மகிழ்ச்சியடைகிறேன். எல்லா மனிதர்களும் கோபப்படுவதைப் போன்று நானும் கோபப்படுகிறேன். ஆகவே, நான் என் சமுதாயத்தாரில் யாரேனும் ஒருவருக்கெதிராகப் பிரார்த்தித்து அதற்கு அவர் தகுதியானவராக இல்லாதிருந்தால்,அப்பிரார்த்தனையையே அவருக்குப் பாவப்பரிகாரமாகவும் மறுமை நாளில் இறைவனிடம் நெருக்கமாக்கும் அம்சமாகவும் மாற்றிவிடுவாயாக!' என்ற நிபந்தனையை முன்வைத்துள்ளேன்" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூமஅன் அர்ரகாஷீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (அநாதைச் சிறுமி என்று வரும்) மூன்று இடங்களிலும் (அதைக் குறிக்க "யதீமா" எனும் சொல்லுக்குப் பகரமாக) "யுதய்யிமா" எனும் சொல் ஆளப்பட்டுள்ளது. (பொருள்: மிகச்சிறிய அநாதைச் சிறுமி.)

5074 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள். உடனே நான் (ஓடிச் சென்று) ஒரு கதவுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து (செல்லமாக) என் தோள்களுக்கிடையே ஒரு தட்டு தட்டிவிட்டு, "நீ போய் முஆவியா (பின் அபீசுஃப்யான்) அவர்களை என்னிடம் வரச்சொல்" என்று கூறினார்கள். (அவர் நபி (ஸல்) அவர்களின் எழுத்தராக இருந்தார்.)
அவ்வாறே நான் சென்றுவிட்டு வந்து, "அவர் சாப்பிட்டுக்கொண்டிருக்கிறார்" என்று சொன்னேன். பிறகு (மீண்டும்) என்னிடம், "நீ போய் முஆவியா அவர்களை என்னிடம் வரச் சொல்" என்று கூறினார்கள். மீண்டும் நான் சென்றுவிட்டு வந்து, "அவர் (இன்னும்) சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்" என்று சொன்னேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ், அவருடைய வயிறை நிரப்பாமல் விடட்டும்!" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் (எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த) உமய்யா பின் காலித் (ரஹ்) அவர்களிடம், (ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ள) "ஹத்தஅனீ" எனும் சொல்லுக்கு என்ன பொருள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "என் பின்தலையில் ஒரு தட்டு தட்டினார்கள்" என்பது பொருள் என்றார்கள்.

5075 மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் (ஒரு முறை) சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள். உடனே நான் சென்று ஒளிந்துகொண்டேன்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 26 இரட்டை முகத்தான் பற்றிய பழிப்புரையும் அவனது செயல் தடை செய்யப் பட்டதாகும் என்பதும்.

5076 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மனிதர்களில் மிகவும் தீயவன், இரட்டை முகம் கொண்டவன் ஆவான். அவன் இவர்களிடம் செல்லும்போது ஒரு முகத்துடனும் அவர்களிடம் செல்லும்போது இன்னொரு முகத்துடனும் செல்கிறான்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5077 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மனிதர்களில் மிகவும் தீயவன், இரட்டை முகம் கொண்டவன் ஆவான். அவன் இவர்களிடம் செல்லும்போது ஒரு முகத்துடனும் அவர்களிடம் செல்லும்போது இன்னொரு முகத்துடனும் செல்கிறான்" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5078 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மனிதர்களிலேயே மிகவும் தீயவனாக இரட்டை முகத்தானைக் காண்பீர்கள். அவன் இவர்களிடம் செல்லும்போது ஒரு முகத்துடனும் அவர்களிடம் செல்லும்போது இன்னொரு முகத்துடனும் செல்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 27 பொய் தடை செய்யப்பட்டதாகும் என்பதும் பொய்யில் அனுமதிக்கப்பட்டது எது என்பது பற்றிய விளக்கமும்.

5079 ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி அளித்த முதலாம் முஹாஜிர்களில் ஒருவரான என் தாயார் உம்மு குல்ஸூம் பின்த் உக்பா பின் அபீமுஐத் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(பரஸ்பரம் பிணக்கு கொண்ட இருதரப்பாரிடம் நல்லதைப் புனைந்து கூறி) மக்களிடையே சமாதானத்தை ஏற்படுத்துபவர் பொய்யர் அல்லர். அவர் நல்லதையே சொல்கிறார்; நன்மையையே எடுத்துரைக்கிறார்" என்று கூறுவதை நான் கேட்டேன்.
இதன் அறிவிப்பாளரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
மக்கள் பொய் என்று சொல்லக்கூடிய எதற்கும் (மார்க்கத்தில்) அனுமதியுள்ளதாக நான் கேள்விப்படவில்லை; மூன்று பொய்களைத் தவிர!
1. போர் (தந்திரத்திற்காகச் சொல்லப்படும் பொய்).
2. மக்களிடையே சமாதானத்தை உருவாக்குவதற்காகச் சொல்லப்படும் பொய்.
3. (குடும்ப ஒற்றுமைக்காக) கணவன் மனைவியிடமும், மனைவி கணவனிடமும் சொல்லும் பொய்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், சாலிஹ் பின் கைசான் அவர்களது அறிவிப்பில், "உம்மு குல்ஸூம் (ரலி) அவர்கள், "மக்கள் பேசும் பொய்களில் மூன்றைத் தவிர வேறெதற்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளித்ததை நான் கேட்டதில்லை; (மேற்கண்ட) மூன்று விஷயங்களில் தவிர' என்று கூறினார்கள்" என இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "அவர் நன்மையையே எடுத்துரைக்கிறார்" என்பதுவரையே இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னுள்ளவை இடம்பெறவில்லை.

**பாடம் : 28 கோள் சொல்வது தடை செய்யப்பட்டதாகும்.**

5080 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஹம்மத் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "அல்அள்ஹு" (பொய், அவதூறு) என்றால் என்னவென்று உங்களுக்கு நான் அறிவிக்க வேண்டாமா?" என்று கேட்டுவிட்டு, "அது மக்களிடையே கோள் சொல்வதாகும்" என்று கூறினார்கள். மேலும், "ஒரு மனிதர் உண்மை பேசிக்கொண்டே இருப்பார். இறுதியில் "ஸித்தீக்' (மாபெரும் வாய்மையாளர்) எனப் பதிவு செய்யப்படுவார். ஒரு மனிதர் பொய் பேசிக்கொண்டேயிருப்பார். இறுதியில் "பெரும் பொய்யர்' எனப் பதிவு செய்யப்பட்டுவிடுவார்" என்றும் முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 29 பொய் அருவருப்பானது; உண்மை அழகானது என்பதும், உண்மையின் சிறப்பும்.**

5081 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உண்மை, நன்மைக்கு வழிகாட்டும். நன்மை சொர்க்கத்திற்கு வழிகாட்டும். ஒரு மனிதர் உண்மை பேசிக்கொண்டே இருப்பார். இறுதியில் அவர் "வாய்மையாளர்' (ஸித்தீக்) எனப் பதிவு செய்யப்படுவார். பொய், தீமைக்கு வழி வகுக்கும்;தீமை நரகத்திற்கு வழி வகுக்கும். ஒரு மனிதர் பொய் பேசிக்கொண்டேயிருப்பார். இறுதியில் அவர் "பெரும் பொய்யர்' எனப் பதிவு செய்யப்பட்டுவிடுவார்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5082 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உண்மை என்பது நன்மையாகும். நன்மை சொர்க்கத்திற்கு வழிகாட்டும். ஓர் அடியார் உண்மையைத் தேர்ந்தெடுத்துப் பேசிக்கொண்டே இருப்பார். இறுதியில் அல்லாஹ்விடம் "வாய்மையாளர்' (ஸித்தீக்) எனப் பதிவு செய்யப்பட்டுவிடுவார். பொய் என்பது தீமையாகும். தீமை நரகநெருப்புக்கு வழிவகுக்கும். ஓர் அடியார் பொய்யைத் தேர்ந்தெடுத்துப் பேசிக்கொண்டே இருப்பார். இறுதியில் "பொய்யர்' எனப் பதிவு செய்யப்பட்டுவிடுவார்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5083 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உண்மையே பேசுங்கள். உண்மை நன்மைக்கு வழிகாட்டும். நன்மை சொர்க்கத்திற்கு வழிகாட்டும். ஒரு மனிதர் உண்மை பேசிக்கொண்டே இருப்பார்; அதை தேர்ந்தெடுத்துப் பேசிவருவார். இறுதியில் அல்லாஹ்விடம் "வாய்மையாளர்' (ஸித்தீக்) எனப் பதிவு செய்யப்பட்டுவிடுவார்.

பொய் பேசாதீர்கள். பொய் தீமைக்கு வழி வகுக்கும். தீமை நரக நெருப்புக்கு வழி வகுக்கும். ஒரு மனிதர் பொய் பேசிக்கொண்டே இருப்பார்; அதைத் தேர்ந்தெடுத்துப் பேசிவருவார். இறுதியில் அல்லாஹ்விடம் "பொய்யர்' எனப் பதிவு செய்யப்பட்டுவிடுவார்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஈசா பின் யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "தேர்ந்தெடுத்து உண்மையே பேசிவருவார்; தேர்ந்தெடுத்துப் பொய்யே பேசிவருவார்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை. இப்னு முஸ்ஹிர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இறுதியில் அவரை அல்லாஹ் ("வாய்மையாளர்' அல்லது "பொய்யர்' எனப்) பதிவு செய்துவிடுகிறான்" என்று காணப்படுகிறது.

## பாடம் : 30 கோபத்தின்போது தம்மைக் கட்டுப்படுத்திக்கொள்பவரின் சிறப்பும், கோபம் விலக என்ன வழி என்பதும்.

5084 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "உங்களில் "சந்ததியிழந்தவன்' (அர்ரகூப்) என்று யாரைக் கருதுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். "குழந்தைப் பாக்கியமற்றவரையே (நாங்கள் "அர்ரக்கூப்' எனக் கருதுகிறோம்)" என்று பதிலளித்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவன் சந்ததியிழந்தவன் அல்லன். மாறாக,தம் குழந்தைகளில் எதுவும் (தமக்கு) முன்பே இறக்காதவனே சந்ததியிழந்தவன் ஆவான்" என்று கூறினார்கள்.
பிறகு, "உங்களில் வீரன் என யாரைக் கருதுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். நாங்கள், "எவராலும் அடித்து வீழ்த்த முடியாதவனே (வீரன் என நாங்கள் கருதுகிறோம்)" என்று பதிலளித்தோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவன் வீரனல்லன். மாறாக, வீரன் என்பவன், கோபத்தின்போது தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்பவனே ஆவான்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5085 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அடித்து வீழ்த்துபவன் வீரனல்லன். உண்மையில் வீரன் என்பவன், கோபத்தின்போது தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்பவனே ஆவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5086 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அடித்து வீழ்த்துபவன் வீரனல்லன்" என்று கூறினார்கள். மக்கள், "அப்படியானால், வீரன் என்பவன் யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "கோபத்தின்போது தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்பவனே (வீரன் ஆவான்)" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5087 சுலைமான் பின் ஸூரத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் அருகில் இரண்டு மனிதர்கள் ஒருவரையொருவர் ஏசிக்கொண்டனர். அவர்களில் ஒருவருடைய கண்கள் (கோபத்தால்) சிவந்து, கழுத்து நரம்புகள் புடைக்கலாயின.
நபி (ஸல்) அவர்கள், "எனக்கு ஒரு (பிரார்த்தனை) வார்த்தை தெரியும். அதை அவர் சொல்வாராயின் அவருக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய (கோப) உணர்ச்சி விலகிவிடும். "அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்' (ஷைத்தானிடமிருந்து காக்குமாறு அல்லாஹ்விடம் வேண்டுகிறேன்) (என்பதே அது)" என்று கூறினார்கள். (மக்கள் கோபத்திலிருந்த அந்த மனிதரிடம் இதை எடுத்துரைத்தபோது) அந்த மனிதர், "எனக்குப் பைத்தியம் பிடித்திருப்பதாகத் தெரிகிறதா?" என்று கேட்டார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் இப்னுல் அலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அந்த மனிதர்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

5088 சுலைமான் பின்த் ஸூரத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் இரண்டு பேர் ஒருவரையொருவர் ஏசிக்கொண்டனர். அவர்களில் ஒருவருக்குக் கோபமேற்பட்டு அவரது முகம் சிவக்கலாயிற்று. அவரை உற்றுப் பார்த்த நபி (ஸல்) அவர்கள், "எனக்கு ஒரு (பிரார்த்தனை) வார்த்தை தெரியும். அதை அவர் சொல்வாராயின் அ(வருக்கு ஏற்பட்டிருக்கும் கோபமா ன)து அவரைவிட்டுப் போய்விடும். "அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்' (என்பதே அந்த வார்த்தை)" என்று சொன்னார்கள்.
நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்டவர்களில் ஒருவர் அந்த மனிதரை நோக்கிச் சென்று, "சற்று முன்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்ன சொன்னார்கள் என்று உமக்குத் தெரியுமா? எனக்கு ஒரு (பிரார்த்தனை) வார்த்தை தெரியும். அதை இவர் சொல்வாராயின் இ(வருக்கு ஏற்பட்டுள்ள கோபமான)து இவரைவிட்டுப் போய்விடும். "அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தா னிர் ரஜீம்' (என்பதே அந்த வார்த்தை) என்று கூறினார்கள்" என்றார். அதற்கு அந்த மனிதர், "நான் உனக்குப் பைத்தியக்காரனாகத் தெரிகிறேனா?" என்று கேட்டார்.
- மேற்கண்ட ஹதீஸ் சுலைமான் பின் ஸூரத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 31 மனிதன் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியாத (பலவீனமான) படைப்பாகவே படைக்கப்பட்டுள்ளான்.**

5089 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் (முதல் மனிதர்) ஆதம் (அலை) அவர்களைச் சொர்க்கத்தில் (களிமண்ணால்) படைத்து, தான் நாடிய காலம்வரை அப்படியே விட்டுவிட்டான். இப்லீஸ் அதைச் சுற்றி வந்து அது என்னவென்று உற்றுப் பார்க்கலானான். வயிறு உள்ளதாக அதைக் கண்டபோது "தன்னைத்தானே கட்டுப்படுத்திக்கொள்ள முடியாத (கட்டுப்பாடற்ற) படைப்பாகவே அது படைக்கப்பட்டுள்ளது" என அவன் அறிந்துகொண்டான்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 32 முகத்தில் அடிக்கலாகாது.**

5090 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் சகோதரரிடம் சண்டையிட்டால், முகத்தில் அடிப்பதைத் தவிர்க்கட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "உங்களில் ஒருவர் (தம் சகோதரரை) அடித்தால்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.

5091 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் சகோதரரிடம் சண்டையிட்டால், முகத்தில் அடிப்பதைத் தவிர்க்கட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5092 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் சகோதரரிடம் சண்டையிட்டால், முகத்தில் அறைவதைத் தவிர்க்கட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5093 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் சகோதரரிடம் சண்டையிட்டால், முகத்தில் அடிப்பதைத் தவிர்க்கட்டும். ஏனெனில், அல்லாஹ் (முதல் மனிதர்) ஆதமைத் தனது உருவத்திலேயே படைத்தான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5094 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் சகோதரரிடம் சண்டையிட்டால், முகத்தில் அடிப்பதைத் தவிர்க்கட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 33 நியாயமான காரணமின்றி மக்களைத் தண்டிப்பதற்கு வந்துள்ள கடுமையான கண்டனம்.

5095 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) ஹிஷாம் பின் ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் ஷாம் (சிரியா) நாட்டில் மக்களில் சிலரைக் கடந்துசென்றார்கள். அவர்களது தலையில் ஆலிவ் எண்ணெய் ஊற்றப்பட்டு வெயிலில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தனர். ஹிஷாம் (ரலி) அவர்கள், "என்ன இது?" என்று கேட்டார்கள். "கராஜ் (வரி செலுத்தாதது) தொடர்பாகத் தண்டிக்கப்படுகின்றனர்" என்று சொல்லப் பட்டது.
அப்போது ஹிஷாம் (ரலி) அவர்கள், "அறிக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவ்வுலகில் மக்களை (நியாயமின்றி) வேதனை செய்பவர்களை அல்லாஹ் வேதனை செய்வான்" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்"என்றார்கள்.

5096 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) ஹிஷாம் பின் ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் ஷாம் (சிரியா) நாட்டில் விவசாயிகளில் சிலரைக் கடந்து சென்றார்கள். அவர்கள் வெயிலில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தனர். ஹிஷாம் (ரலி) அவர்கள், "இவர்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். மக்கள், "ஜிஸ்யா (செலுத்த மறுத்தது) தொடர்பாகப் பிடிக்கப்பட்டனர்" என்று பதிலளித்தனர்.
அப்போது ஹிஷாம் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இவ்வுலகில் மக்களை (நியாயமின்றி) வேதனை செய்பவர்களை அல்லாஹ் வேதனை செய்வான்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஜரீர் பின் அப்தில் ஹமீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அன்றைய தினத்தில் பாலஸ்தீனத்தின் ஆட்சியாளராக உமைர் பின் சஅத் என்பவர் இருந்தார். அவரிடம் ஹிஷாம் (ரலி) அவர்கள் சென்று (மக்களுக்கு இழைக்கப்படும் வேதனையைத்) தெரிவித்தார்கள். உடனே உமைர் பின் சஅத் ஆணையின் பேரில் அந்த விவசாயிகள் விடுவிக்கப்பட்டனர்" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5097 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஹிஷாம் பின் ஹகீம் (ரலி) அவர்கள், "ஹிம்ஸ்' பகுதியின் ஆட்சியர் ஒருவர், ஜிஸ்யா செலுத்தாதது தொடர்பாக விவசாயிகளில் சிலரை வெயிலில் நிறுத்திவைத்திருப்பதைக் கண்டார்கள்.

அப்போது ஹிஷாம் (ரலி) அவர்கள் "என்ன இது?" என்று கேட்டுவிட்டு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வுலகில் மக்களை (நியாயமின்றி) வேதனை செய்பவர்களை அல்லாஹ் வேதனை செய்வான் என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

பாடம் : 34 பள்ளிவாசல், கடைத்தெரு உள்ளிட்ட மக்கள் கூடுகின்ற பொது இடங்களில் ஆயுதத்தைக் கொண்டுசெல்பவர், அதன் முனைப் பகுதியைப் பிடித்து (மறைத்து)க் கொள்ளுமாறு வந்துள்ள கட்டளை.

5098 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் ஒருவர் அம்புகளுடன் நடந்து சென்றார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அம்புகளின் முனைகளைப் பிடித்து (மறைத்து)க் கொள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5099 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் பள்ளிவாசலில் அம்புகளில் சிலவற்றை, அவற்றின் முனைகள் வெளியே தெரியுமாறு எடுத்துச் சென்றார். அப்போது அவை எந்த முஸ்லிமையும் கீறி(க் காயப் படுத்தி)விடாதபடி எடுத்துச் செல்லுமாறு அவர் கட்டளையிடப்பட்டார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5100 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் பள்ளிவாசலில் அம்புகளைத் தர்மம் செய்துகொண்டிருந்தார். அப்போது அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவற்றின் முனையைப் பிடித்து (மறைத்து)க் கொண்டுதான் செல்ல வேண்டுமெனக் கட்டளையிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5101 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவர் பள்ளிவாசலிலோ அல்லது கடைத்தெருவிலோ தமது கையில் அம்புடன் நடந்துசென்றால், அதன் முனையைப் பிடித்து (மறைத்து)க் கொண்டு செல்லட்டும்; அதன் முனையைப் பிடித்து (மறைத்து)க்கொண்டு செல்லட்டும்; அதன் முனையைப் பிடித்து (மறைத்து)க்கொண்டு செல்லட்டும்!" என்று (மும்முறை) கூறினார்கள்.
ஆனால், அல்லாஹ்வின் மீதாணையாக! எங்களில் சிலர் வேறுசிலரின் முகங்களுக்கெதிரே அம்புகளை உயர்த்திப் பிடிக்காத வரையில் நாங்கள் இறக்கவில்லை.

5102 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம்முடன் அம்புகள் இருக்கும் நிலையில் நமது பள்ளிவாசலிலோ அல்லது கடைத்தெருவிலோ நடந்துசென்றால், அவற்றில் எதுவும் முஸ்லிம்களில் ஒருவரைக் காயப்படுத்திவிடாமலிருக்க "அவற்றின் முனைகளைத் தமது கரத்தால் பிடித்து

(மறைத்து)க் கொள்ளட்டும்!' அல்லது "அவற்றின் முனைகளை கைக்குள் வைத்துக் கொள்ளட்டும்!'
இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 35 ஒரு முஸ்லிமை நோக்கி ஆயுதத்தைக் காட்டி சைகை செய்வதற்கு வந்துள்ள தடை.

5103 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபுல்காசிம் (முஹம்மத் – ஸல்) அவர்கள், "ஒருவர் தம் சகோதரரை நோக்கி ஆயுதத்தைக் காட்டி சைகை செய்தால்,அவர் அதைக் கைவிடும்வரை அவரை வானவர்கள் சபிக்கின்றனர். அவர் உடன்பிறந்த சகோதரராய் இருந்தாலும் சரியே" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5104 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் உங்கள் சகோதரரை நோக்கி ஆயுதத்தைக் காட்டி சைகை செய்யவேண்டாம். ஏனெனில், உங்களுக்குத் தெரியாமலேயே ஷைத்தான் உங்கள் கையிலிருந்து அதைப் பறித்து (சகோதரரைத் தாக்கி)விடக்கூடும். அதனால் நீங்கள் நரகப் படுகுழியில் வீழ்ந்து விடுவீர்கள்.

## பாடம் : 36 தொல்லை தரும் பொருட்களைப் பாதையிலிருந்து அகற்றுவதன் சிறப்பு.

5105 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் ஒரு சாலை வழியே நடந்து செல்லும்போது பாதையில் முட்கிளையொன்றைக் கண்டார். உடனே அதை (எடுத்து) தள்ளிப்போட்டார். அவரது இந்த நற்செயலை அல்லாஹ் நன்றியுடன் ஏற்று, அவருக்குப் பாவமன்னிப்பு அருளினான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5106 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் நடைபாதையில் கிடந்த மரக்கிளையொன்றைக் கடந்து சென்றார். அப்போது அவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! முஸ்லிம் (பாதசாரி)களுக்குத் தொல்லை தராமலிருப்பதற்காக இதை நான் அப்புறப்படுத்துவேன்" என்று கூறி(விட்டு அதை அப்புறப்படுத்தி)னார். இதன் காரணமாக, அவர் சொர்க்கத்தில் அனுமதிக்கப்பட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5107 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் நடுவழியில் கிடந்து மக்களுக்கு இடையூறு அளித்துவந்த மரமொன்றை வெட்டி (அப்புறப்படுத்தி)யதற்காகச் சொர்க்கத்தில் நடமாடுவதை நான் கண்டேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5108 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களுக்குத் தொல்லை கொடுத்துவந்த மரமொன்றை, ஒரு மனிதர் வந்து வெட்டி (அப்புறப்படுத்தி)னார். இ(ந்த நற்செயலைச் செய்த)தற்காக அவர் சொர்க்கத்திற்குள் நுழைந்தார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5109 அபூபர்ஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் நபியே! நான் பயனடையக்கூடிய (நற்செயல்) ஒன்றை எனக்குக் கற்றுத் தாருங்கள்" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், "முஸ்லிம்கள் நடமாடும் பாதையிலிருந்து தொல்லை தரும் பொருட்களை அப்புறப்படுத்துவீராக" என்று கூறினார்கள்.

5110 அபூபர்ஸா அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் (இறந்து) போய்விட்ட பின்னரும் நான் வாழக்கூடிய நிலை ஏற்படுமா என்பது எனக்குத் தெரியாது. ஆகவே, எனக்கு அல்லாஹ் பயனளிக்கக்கூடிய (நற்செயல்) சிலவற்றை முன்கூட்டியே சொல்லித்தாருங்கள்?" என்று கேட்டேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்னின்னதைச் செய்வீராக" (அறிவிப்பாளர் அபூபக்ர் அதை மறந்துவிட்டார்) என்று கூறிவிட்டு, "தொல்லை தரும் பொருட்களைப் பாதையிலிருந்து அப்புறப்படுத்துவீராக" என்று கூறினார்கள்.

## பாடம் : 37 பூனை முதலிய தீங்கு செய்யாத பிராணிகளை வேதனை செய்வது தடை செய்யப்பட்டதாகும்.

5111 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பூனையொன்றைச் சாகும்வரை சிறை வைத்த காரணத்தால் ஒரு பெண் நரகத்தில் நுழைந்தாள். அதை அடைத்து வைத்திருந்தபோது, அவள் அதற்குத் தீனியும் போடவில்லை; குடிப்பதற்கும் (எதுவும்) கொடுக்கவில்லை; பூமியின் புழுப்பூச்சிகளைத் தின்பதற்கு அதை அவள் (திறந்து)விடவுமில்லை.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5112 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பெண், பூனையொன்றைக் கட்டிவைத்தாள். அதற்குத் தீனியும் போடவில்லை; குடிப்பதற்கு எதுவும் கொடுக்கவுமில்லை; பூமியிலுள்ள புழுப்பூச்சிகளைத் தின்று (பிழைத்துக்) கொள்ளட்டும் என்று அதை (அவிழ்த்து)விடவுமில்லை. அதன் காரணத்தால் அவள் (நரகத்தில்) வேதனை செய்யப்பட்டாள்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வாயிலாக மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5113 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பெண், தான் கட்டிவைத்த பூனையொன்றின் காரணத்தால் நரகத்திற்குள் நுழைந்தாள். அவள் அதற்குத் தீனி போடவுமில்லை. பூமியிலுள்ள புழுப்பூச்சிகளைத் தின்று (பிழைத்துக்) கொள்ளட்டும் என்று அதை அவிழ்த்துவிடவுமில்லை. இறுதியில் அது (பட்டினியால்) மெலிந்துபோய் செத்துவிட்டது.

## பாடம் : 38 பெருமை தடை செய்யப்பட்டதாகும்.

5114 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கண்ணியம், அ(ந்த இறை)வனுடைய கீழாடையாகும். பெருமை அவனுடைய மேலாடையாகும். (அல்லாஹ் கூறினான்:) ஆகவே, (அவற்றில்) யார் என்னோடு போட்டியிடுகிறானோ அவனை நான் வதைத்துவிடுவேன்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி), அபூஹுரைரா (ரலி) ஆகியோர் அறிவிக்கிறார்கள்.

## பாடம் :39 இறையருள்மீது யாரையும் நம்பிக்கையிழக்கச் செய்வது தடை செய்யப் பட்டதாகும்.

5115 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(முற்காலத்தில் வாழ்ந்த) ஒரு மனிதர், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இன்ன மனிதனை அல்லாஹ் மன்னிக்கமாட்டான்" என்று கூறினார். அல்லாஹ், "இன்ன மனிதனை நான் மன்னிக்கமாட்டேன் என என்மீது சத்தியமிட்டுச் சொன்னவன் யார்? நான் அந்த மனிதனை மன்னித்துவிட்டேன். உன் நல்லறங்களை அழித்துவிட்டேன்" என்றோ, அதைப் போன்றோ கூறினான்.
இதை ஜுன்தப் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 40 பலவீனமானோர் மற்றும் அடக்கத்தோடு வாழ்வோரின் சிறப்பு

5116 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(புழுதி படிந்த) பரட்டைத் தலை கொண்ட, வீட்டுவாசல்களில் தடுத்து நிறுத்தப்படக்கூடிய எத்தனையோ பேர், (அல்லாஹ்விடம் தகுதியால் உயர்ந்தவர்கள் ஆவர்.) அவர்கள் அல்லாஹ்வின் மேல் ஆணையிட்டு (எதையேனும்) கூறுவார்களானால், அல்லாஹ் அதை மெய்யாக்குவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 41 "மக்கள் நாசமாகிவிட்டனர்" என்று கூறுவது தடை செய்யப்பட்டதாகும்.

5117 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
'மக்கள் நாசமாகிவிட்டனர்' என்று ஒருவர் கூறினால், அவர்களைவிட அவரே மிகவும் நாசமடைந்தவர் ஆவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளன.
(ஸஹீஹ் முஸ்லிமின் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"அவர் அவர்களை நாசமாக்கிவிட்டார்' ("அஹ்லகஹும்') என்பதா? அல்லது "அவரே அவர்களைவிட மிகவும் நாசமடைந்தவர்' ("அஹ்லகுஹும்') என்பதா என்று எனக்குத் தெரியவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 42 அண்டை வீட்டார் குறித்த அறிவுரையும் அவர்களுக்கு நன்மை செய்வதும்.

5118 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அண்டை வீட்டார் குறித்து என்னிடம் (வானவர்) ஜிப்ரீல் அறிவுறுத்திக்கொண்டேயிருந்தார். எந்த அளவுக்கென்றால், (எங்கே) அண்டை வீட்டாரை எனக்கு (எனது சொத்தில்) வாரிசாக்கியேவிடுவாரோ என்றுகூட நான் எண்ணினேன்" என்று கூறியதை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5119 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அண்டை வீட்டார் குறித்து என்னிடம் (வானவர்) ஜிப்ரீல் அறிவுறுத்திக் கொண்டேயிருந்தார். எந்த அளவுக்கென்றால், (எங்கே) அண்டை வீட்டாரை எனக்கு அவர் வாரிசாக்கிவிடுவாரோ என்றுகூட நான் எண்ணினேன்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5120 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என்னிடம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அபூதர்! நீர் குழம்பு சமைத்தால் அதில் அதிகமாகத் தண்ணீர் சேர்த்துக்கொள்வீராக. உம்முடைய அண்டை வீட்டாரையும் கவனித்துக்கொள்வீராக" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5121 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என் உற்ற தோழர் (நபி (ஸல்) அவர்கள்,) என்னிடம், "நீர் குழம்பு சமைத்தால் அதில் அதிகமாகத் தண்ணீர் சேர்த்து, உம்முடைய அண்டை வீட்டார்களில் ஒரு வீட்டாரைப் பார்த்து அதிலிருந்து சிறிதளவை அவர்களுக்கும் கொடுத்துதவுக!" என்று அறிவுறுத்தினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 43 ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது முகமலர்ச்சி காட்டுவது விரும்பத்தக்கதாகும்.

5122 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் நபி (ஸல்) அவர்கள், "நல்லறங்களில் எதையும் அற்பமாகக் கருதாதீர்; உம்முடைய சகோதரரை மலர்ந்த முகத்துடன் நீர் சந்திப்பதானாலும் சரியே" என்று கூறினார்கள்.

## பாடம் : 44 தடை செய்யப்படாத விஷயங்களில் பிறருக்காகப் பரிந்து பேசுவது விரும்பத் தக்கதாகும்.

5123 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
தேவையுடையவர் யாரேனும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தால், தம்முடன் அமர்ந்திருப்பவர்களை முன்னோக்கி, "(இவருக்காக என்னிடம்) பரிந்துரை செய்யுங்கள்; அதனால் உங்களுக்கும் நற்பலன் வழங்கப்படும்;அல்லாஹ் தன் தூதருடைய நாவால் தான் விரும்பியதைத் தீர்ப்பளிக்கட்டும்" என்று கூறுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் :45 நல்லோருடன் நட்புகொள்வதும் கெட்ட நண்பர்களிடமிருந்து விலகியிருப்பதும் விரும்பத்தக்கவையாகும்.

5124 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நல்ல நண்பன் மற்றும் கெட்ட நண்பனின் நிலையானது, கஸ்தூரி வியாபாரியின் நிலையையும், (உலைக்களத்தில்) உலை ஊதுகின்றவனின் நிலையையும் ஒத்திருக்கிறது. கஸ்தூரி வியாபாரி, ஒன்று அதை உனக்கு அன்பளிப்பாக வழங்கலாம். அல்லது நீ அவனிடமிருந்து (அதை விலைக்கு) வாங்கிக்கொள்ளலாம். அல்லது அதிலிருந்து நீ நறுமணத்தையேனும் பெறலாம். ஆனால், உலை ஊதுபவனோ, ஒன்று உனது ஆடையை எரித்துக் கரித்து விடுவான்;அல்லது (அவனிடமிருந்து) துர்வாடையையாவது அடைந்தே தீருவாய்.

இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 46 பெண் குழந்தைகளுக்கு நன்மை செய்வதன் சிறப்பு.

5125 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு பெண் என்னிடம் (ஏதேனும் தரும்படி) கேட்டு வந்தார். அவருடன் அவருடைய இரு பெண் குழந்தைகளும் இருந்தனர். அப்போது அவருக்கு(க் கொடுக்க) என்னிடம் ஒரே ஒரு பேரீச்சம் பழத்தைத் தவிர வேறெதுவும் கிடைக்கவில்லை. ஆகவே, நான் அதை அவருக்குக் கொடுத்தேன். உடனே அதை வாங்கி, அதை இரண்டாகப் பிட்டு குழந்தைகள் இருவருக்கும் பங்கிட்டுக் கொடுத்து விட்டார். அதிலிருந்து சிறிதளவும் அவர் சாப்பிடவில்லை.
பிறகு அவரும் அவருடைய குழந்தைகளும் எழுந்து சென்றுவிட்டனர். பின்னர் நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தபோது, அந்தப் பெண்ணைப் பற்றிய செய்தியை அவர்களிடம் சொன்னேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "யார் இப்பெண் குழந்தைகளில் ஒன்றின் மூலம் சோதிக்கப்பட்டபோதும் அவர்களுக்கு நன்மை புரிவாரோ அவருக்கு அக்குழந்தைகள் நரகத்திலிருந்து காக்கும் திரையாக இருப்பார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5126 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஓர் ஏழைப்பெண் தன்னுடைய இரு பெண்குழந்தைகளைத் தூக்கிக்கொண்டு என்னிடம் வந்தார். அவருக்கு நான் மூன்று பேரீச்சம் பழங்களைக் கொடுத்தேன். உடனே அவர் தம் குழந்தைகளில் ஆளுக்கொரு பேரீச்சம் பழத்தைக் கொடுத்துவிட்டு, ஒரு பேரீச்சம் பழத்தைச் சாப்பிடுவதற்காக வாயருகில் கொண்டுசென்றார்.
அந்த ஒரு பேரீச்சம் பழத்தையும் அக்குழந்தைகள் கேட்டனர். உடனே அப்பெண் தாம் சாப்பிட நாடியிருந்த அந்தப் பேரீச்சம் பழத்தை இரண்டாகப் பிட்டு அவ்விரு குழந்தைகளிடையே பங்கிட்டுக் கொடுத்துவிட்டார். அவருடைய நிலை என்னை ஆச்சரியப்படுத்தியது.
ஆகவே, அவர் செய்ததை நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவருடைய இச்செயலின் காரணத்தால் அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தைக் கடமையாக்கிவிட்டான்'. அல்லது "அவரது இச்செயலின் காரணத்தால் அவரை நரகத்திலிருந்து விடுதலை செய்துவிட்டான்' என்று சொன்னார்கள்.

5127 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் இரு பெண்குழந்தைகளை, அவர்கள் பருவ வயதடையும் வரை பொறுப்பேற்று கருத்தாக வளர்க்கிறாரோ அவரும் நானும் மறுமை நாளில் இப்படி வருவோம்" என்று கூறிவிட்டு, தம் விரல்களை இணைத்துக் காட்டினார்கள்.

**பாடம் : 47 தமது குழந்தை இறந்தும் நன்மையை எதிர்பார்(த்துப் பொறுமை கா)ப்பவரின் சிறப்பு.**

5128 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமுடைய பிள்ளைகளில் மூவர் (பருவ வயதுக்கு முன்பே) இறந்துபோனால், அந்த மனிதரை நரகம் தீண்டாது; ("உங்களில் யாரும் நரகத்தைக் கடக்காமல் செல்ல முடியாது' என்று அல்லாஹ் செய்துள்ள) சத்தியத்தைச் செயல்படுத்துவதற்காக (நரகத்தின் வழியே செல்வதை)த் தவிர.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அந்த மனிதர் நரகத்தில் நுழையமாட்டார்; ("உங்களில் யாரும் நரகத்தைக் கடக்காமல் செல்ல முடியாது' என்று அல்லாஹ் செய்துள்ள) சத்தியத்தைச் செயல்படுத்துவதற்காக (நரகத்தின் வழியே செல்வதை)த் தவிர" என்று இடம்பெற்றுள்ளது.

5129 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிப் பெண்களிடம், "உங்களில் ஒருவருடைய மூன்று பிள்ளைகள் (பருவ வயதை அடைவதற்குமுன்) இறந்தும் அப்பெண் நன்மையை எதிர்பார்(த்து பொறுமை கா)த்தால்,அவர் சொர்க்கத்தில் நுழையாமல் இருப்பதில்லை" என்று கூறினார்கள்.
அப்போது அப்பெண்களில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! இரு பிள்ளைகள் இறந்தாலுமா?" என்று கேட்டார். "இரு பிள்ளைகள் இறந்தாலும்தான்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விடையளித்தார்கள்.

5130 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி வந்து, "அல்லாஹ்வின் தூதரே! (பெண்கள்) உங்கள் உரைகளை(க் கேட்க முடியாதவாறு) ஆண்களே (அந்த வாய்ப்புகளைத்) தட்டிச் சென்றுவிடுகின்றனர். ஆகவே,எங்களுக்கென ஒரு நாளை நீங்களே நிர்ணயம் செய்யுங்கள். அந்நாளில் நாங்கள் தங்களிடம் வருகிறோம். அல்லாஹ் தங்களுக்குக் கற்றுக் கொடுத்தவற்றிலிருந்து எங்களுக்கு நீங்கள் கற்றுக்கொடுங்கள்" என்று கேட்டார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இன்ன இன்ன நாளில் நீங்கள் ஒன்று கூடுங்கள்" என்று சொன்னார்கள். அவ்வாறே அவர்கள் ஒன்றுகூடினர். அந்த நாட்களில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெண்களிடம் சென்று தமக்கு அல்லாஹ் கற்றுக் கொடுத்தவற்றிலிருந்து அப்பெண்களுக்குக் கற்றுக்கொடுத்தார்கள்.
(ஒரு நாள்), "உங்களில் எந்தப் பெண் தனக்கு (மரணம் வருவதற்கு) முன்பாக, தன் பிள்ளைகளில் மூன்று பேரை இழந்துவிடுகிறாரோ அவருக்கு அப்பிள்ளைகள் நரகத்திலிருந்து காக்கும் திரையாக மாறிவிடுவார்கள்" என்று சொன்னார்கள்.

அப்போது அப்பெண்களில் ஒருவர், "இரண்டு பிள்ளைகளை இழந்துவிட்டாலுமா? இரண்டு பிள்ளைகளை இழந்துவிட்டாலுமா? இரண்டு பிள்ளைகளை இழந்துவிட்டாலுமா?" என்று (மூன்றுமுறை திரும்பத்திரும்பக்) கேட்க, "இரண்டு பிள்ளைகளை இழந்துவிட்டாலும்தான்; இரண்டு பிள்ளைகளை இழந்துவிட்டாலும்தான்; இரண்டு பிள்ளைகளை இழந்துவிட்டாலும் தான்" என்று (மும்முறை) நபியவர்கள் பதிலளித்தார்கள்.

5131 மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவ்வாறே, அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "பருவ வயதை அடையா மூன்று பிள்ளைகளை" எனும் குறிப்பு இடம் பெற்றுள்ளது.

5132 அபூஹஸ்ஸான் (முஸ்லிம் பின் அப்தில்லாஹ் – ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூஹுரைரா (ரலி) அவர்களிடம், "என்னுடைய ஆண் குழந்தைகள் இருவர் இறந்துவிட்டனர். நாங்கள் இழந்துவிடும் குழந்தைகள் தொடர்பாக எங்கள் உள்ளங்களுக்கு ஆறுதல் அளிக்கும் வகையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்ன ஹதீஸ் ஒன்றை எனக்கு நீங்கள் அறிவிக்கக் கூடாதா?" என்று கேட்டேன்.
அபூஹுரைரா (ரலி) அவர்கள் "ஆம்" என்று கூறிவிட்டு, "குழந்தைகள், சொர்க்கத்தின் நுண்ணுயிர்கள் ஆவர்.அக்குழந்தைகளில் ஒன்று தனது தந்தையை, அல்லது பெற்றோரைச் சந்திக்கும்போது அவரது ஆடையை, அல்லது அவரது கையைப் பிடித்துக்கொள்ளும். – (அபூஹஸ்ஸானே!) நான் உங்களுடைய இந்த ஆடையின் ஓரத்தைப் பிடித்துக் கொண்டிருப்பதைப் போன்று– பிறகு தன்னையும் தன் பெற்றோரையும் அல்லாஹ் சொர்க்கத்திற்குள் நுழைவிக்கும்வரை விடாது; அல்லது விலகாது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் சுவைத் பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நாங்கள் இழந்துவிடும் குழந்தைகள் தொடர்பாக எங்கள் உள்ளங்களுக்கு ஆறுதல் அளிக்கும் வகையில் தாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து ஏதேனும் செவியுற்றீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள் "ஆம் என்றார்கள்" என இடம் பெற்றுள்ளது.

5133 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி தன் குழந்தையுடன் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! (உடல் நலமில்லாத) இந்தக் குழந்தைக்காகப் பிரார்த்தியுங்கள். (இதற்குமுன்) நான் மூன்று குழந்தைகளை நல்லடக்கம் செய்துவிட்டேன்" என்று கூறினார். "மூன்று குழந்தைகளை நல்லடக்கம் செய்துவிட்டாயா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு அப்பெண், "ஆம்" என்றார். நபி (ஸல்) அவர்கள், "நரக நெருப்பிலிருந்து (உன்னைக் காக்க) நீ பலமான வேலி அமைத்துக்கொண்டுவிட்டாய்" என்று சொன்னார்கள்.
மேற்கண்ட ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5134 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி தன்னுடைய ஆண் குழந்தையுடன் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! இவன் உடல் நலிவுற்றுள்ளான். இவனுக்கு ஏதேனும் நேர்ந்து விடுமோ என நான் அஞ்சுகிறேன். (இதற்கு முன்) நான் மூன்று குழந்தைகளை நல்லடக்கம் செய்துவிட்டேன்" என்று கூறினார்.
நபி (ஸல்) அவர்கள், "நரக நெருப்பிலிருந்து (உன்னைக் காக்க) நீ பலமான வேலி அமைத்துக்கொண்டுவிட்டாய்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 48 அல்லாஹ் ஓர் அடியாரை நேசிக்கும் போது, அவர்மீது தன் அடியார்களுக்கும் நேசத்தை ஏற்படுத்துகிறான்.

5135 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் ஓர் அடியாரை நேசிக்கும்போது, (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களை அழைத்து, "நான் இன்ன மனிதரை நேசிக்கிறேன். நீரும் நேசிப்பீராக' என்று கூறுகின்றான். ஆகவே, ஜிப்ரீல் (அலை) அவர்களும் அவரை நேசிப்பார். பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் வானத்தில், "அல்லாஹ் இன்ன மனிதரை நேசிக்கிறான். ஆகவே, நீங்களும் அவரை நேசியுங்கள்" என்று அறிவிப்பார். அவ்வாறே விண்ணகத்தாரும் அவரை நேசிப்பார்கள். பிறகு பூமியில் அவருக்கு அங்கீகாரம் வழங்கப்படும்.
அவ்வாறே, அல்லாஹ் ஓர் அடியார்மீது கோபம் கொள்ளும்போது, (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களை அழைத்து, "நான் இன்ன மனிதர்மீது கோபம் கொண்டுள்ளேன். நீரும் அவர்மீது கோபம் கொள்வீராக" என்று கூறுகின்றான். ஆகவே, ஜிப்ரீல் (அலை) அவர்களும் அவர்மீது கோபம் கொள்கிறார். பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள்,விண்ணகத்தாரிடையே, "அல்லாஹ் இன்ன மனிதர்மீது கோபம் கொண்டுள்ளான். ஆகவே, நீங்களும் அவர்மீது கோபம் கொள்ளுங்கள்" என்று அறிவிப்பார். அவ்வாறே விண்ணகத்தாரும் அவர்மீது கோபம் கொள்வார்கள். பிறகு பூமியில் அவர்மீது கோபம் ஏற்படுத்தப்படுகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் கோபத்தைப் பற்றிய குறிப்பு இல்லை. (நேசத்தைப் பற்றிய குறிப்பு மட்டுமே இடம்பெற்றுள்ளது.)

5136 சுஹைல் பின் அபீஸாலிஹ் தக்வான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு ஹஜ்ஜின்போது) அரஃபா பெருவெளியில் இருந்தோம். அப்போது (கலீஃபா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் எங்களைக் கடந்துசென்றார்கள். அவர்கள் (அந்த ஆண்டின்) ஹாஜிகளுக்குத் தலைவராக இருந்தார்கள். அப்போது மக்கள் எழுந்து அவரை உற்றுப் பார்த்தனர்.
நான் என் தந்தை (அபூஸாலிஹ்) அவர்களிடம், "தந்தையே! (கலீஃபா) உமர் பின் அப்தில் அஸீஸ் அவர்களை இறைவன் நேசிப்பதாகவே நான் கருதுகிறேன்" என்று சொன்னேன். என்

தந்தை "அது ஏன்?" என்று கேட்டார்கள். நான், "மக்கள் மனதில் அவருக்கிருக்கும் நேசத்தின் அடிப்படையிலேயே (நான் கூறுகிறேன்)" என்றேன்.
அப்போது என் தந்தை, "நீ சொன்னது சரி தான்! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்று கூறிவிட்டு மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி அறிவித்தார்கள்.

## பாடம் : 49 உயிர்கள் பல்வேறு வகைப்பட்டவையாகும்.

5137 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உயிர்கள் பல்வேறு வகைப்பட்டவையாகும். அவற்றில் ஒன்றுக்கொன்று (குணத்தால்) ஒத்துப்போகின்றவை பரஸ்பரம் நேசிக்கின்றன. ஒன்றுக்கொன்று (குணத்தால்) வேறுபட்டிருப்பவை பரஸ்பரம் முரண்பட்டு (எதிராகி)விடுகின்றன.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5138 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மனிதர்கள் வெள்ளி மூலகங்களையும் பொன் மூலகங்களையும் போன்றவர்கள். அறியாமைக்காலத்தில் அவர்களில் சிறந்தவர்களாயிருந்தவர்கள் இஸ்லாத்திற்கு வந்த பின்பும் சிறந்தவர்களே; மார்க்க அறிவைப் பெற்றுக்கொண்டால். உயிர்கள் பல்வேறு வகைப்பட்டவை ஆகும். அவற்றில் ஒன்றுக்கொன்று (குணத்தால்) ஒத்துப்போகின்றவை (உடலுக்குள் வந்த பின்பு) பரஸ்பரம் நேசிக்கின்றன. ஒன்றுக்கொன்று (குணத்தால்) வேறுபட்டிருப்பவை பரஸ்பரம் முரண்பட்டு (எதிராகி)விடுகின்றன.
இந்த ஹதீஸை, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 50 மனிதன் யார்மீது அன்பு கொண்டுள்ளானோ அவர்களுடன்தான் இருப்பான்.

5139 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமவாசி ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "மறுமை நாள் எப்போது வரும்?" என்று கேட்டார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதற்காக நீ என்ன (நற்செயல்களைத்) தயார் செய்துவைத்திருக்கிறாய்?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர், "அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர் மீதும் நேசம் வைத்துள்ளேன்" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ நேசித்தவர்களுடன்தான் (மறுமையில்) இருப்பாய்" என்று சொன்னார்கள்.

5140 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (நபி (ஸல்) அவர்களிடம்), "அல்லாஹ்வின் தூதரே! மறுமை நாள் எப்போது வரும்?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "அதற்காக நீ என்ன (நற்செயல்களைத்) தயார் செய்து வைத்திருக்கிறாய்?" என்று கேட்டார்கள். அம்மனிதர் (தாம் புரிந்துள்ள நற்செயல்கள்) எதையும் பெரிய அளவில் கூறவில்லை. அவர், "நான் அல்லாஹ்வையும் அவனுடைய

தூதரையும் நேசிக்கிறேன்" என்றார். நபி (ஸல்) அவர்கள், "நீ நேசித்தவர்களுடன்தான் (மறுமையில்) இருப்பாய்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், "கிராமவாசிகளில் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது. ஆயினும் அவற்றில், "நான் என்னை மெச்சிக்கொள்ளும் அளவுக்கு அதிகமான நற்செயல்கள் எதையும் தயார் செய்துவைக்கவில்லை" என்று அம்மனிதர் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

5141 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! மறுமை நாள் எப்போது வரும்?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மறுமைக்காக நீ என்ன (நற்செயல்களைத்) தயார் செய்துவைத்திருக்கிறாய்?" என்று கேட்டார்கள். அவர், "அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர்மீதும் கொண்ட அன்பை" என்று சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால், நீ நேசித்தவர்களுடன் தான் (மறுமையில்) இருப்பாய்" என்று சொன்னார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படியானால், நீ நேசித்தவர்களுடன்தான் (மறுமை யில்) நீ இருப்பாய்" என்று சொன்னதைக் கேட்டு நாங்கள் மகிழ்ச்சியடைந்தோம். இதைப் போன்று நாங்கள் இஸ்லாத்தைத் தழுவியபின் வேறு எதற்காகவும் மகிழ்ச்சியடைந்ததில்லை.
ஆகவே, நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் அபூபக்ர் (ரலி) அவர்களையும் உமர் (ரலி) அவர்களையும் நேசிக்கிறேன். மேலும், அவர்களை நேசித்த காரணத்தால் (மறுமையில்) அவர்களுடன்தான் நான் இருப்பேன் என்று நம்புகிறேன்; அவர்களுடைய நற்செயல்கள் அளவுக்கு நான் நற்செயல்கள் புரியாவிட்டாலும் சரியே!
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஆகவே, நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும்... நேசிக்கிறேன்" என்பதும் அதற்குப் பின்னுள்ளதும் இடம் பெறவில்லை.

5142 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் பள்ளிவாசலிலிருந்து புறப்பட்டுச் சென்றபோது பள்ளிவாசலின் முற்றத்தின் அருகில் ஒரு மனிதரைச் சந்தித்தோம். அவர், "அல்லாஹ்வின் தூதரே! மறுமை எப்போது வரும்?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதற்காக நீ (முன்னேற்பாடாக) என்ன (நற்செயல்களைத்) தயார் செய்துவைத்துள்ளாய்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் (பதிலளிக்காமல்) அடங்கிப் போனவரைப் போன்றிருந்தார்.

பிறகு, "அல்லாஹ்வின் தூதரே! அதற்காக நான் பெரிதாகத் தொழுகையையோ நோன்பையோ தானதர்மங்களையோ முன்னேற்பாடாகச் செய்துவைக்கவில்லை. ஆயினும், நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறேன்" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ நேசித்தவர்களுடன் தான் (மறுமையில்) இருப்பாய்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5143 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! ஒருவர் (நன்)மக்களை நேசிக்கிறார். ஆனால், (செயல்பாட்டிலும் தகுதியிலும்) அவர்களை அவர் எட்டவில்லை. அவர் விஷயத்தில் தாங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மனிதன் யார்மீது அன்பு கொண்டுள்ளானோ அவர்களுடன்தான் இருப்பான்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் வாயிலாகவும் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், "ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 51 நல்ல மனிதருக்குக் கிடைக்கும் பாராட்டு நற்செய்தியே; அதனால் அவருக்கு எந்தப் பாதிப்புமில்லை.

5144 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "ஒரு மனிதர் நற்செயல் புரிகிறார். அதற்காக அவரை மக்கள் பாராட்டிப் பேசுகின்றனர். இதைப் பற்றித் தாங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்கப்பட்டது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அது இறைநம்பிக்கையாளருக்கு முன் கூட்டியே வரும் நற்செய்தியாகும்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூதர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் ஷுஅபா (ரஹ்) அவர்களிடமிருந்து வரும் அனைத்து அறிவிப்புகளிலும் (அப்துஸ் ஸமத் (ரஹ்) அவர்கள் வழியாக வரும் அறிவிப்பைத் தவிர), "அதற்காக அவரை மக்கள் நேசிக்கின்றனர்" என்று காணப்படுகிறது.

அப்துஸ் ஸமத் (ரஹ்) அவர்கள் வழியாக வரும் அறிவிப்பில் மேற்கண்ட ஹதீஸ் உள்ளதைப் போன்றே, "அதற்காக அவரை மக்கள் பாராட்டுகின்றனர்" என்று இடம் பெற்றுள்ளது.

# அத்தியாயம் : 46 - (தலை)விதி

**பாடம் : 1 மனிதன் தன் தாயின் வயிற்றில் படைக்கப்படும் விதமும், அவனுடைய வாழ்வாதாரம், ஆயுள், செயல், நற்பேறு - துர்பேறு ஆகியவை பதிவு செய்யப்படுவதும்.**

5145 உண்மையே பேசியவரும் உண்மையே அறிவிக்கப்பட்டவருமான அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் தாயின் வயிற்றில் நாற்பது நாட்கள் (கருவாக) சேமிக்கப்படுகிறார். பிறகு வயிற்றிலேயே அதைப் போன்றே (நாற்பது நாட்கள்) அந்தக் கரு (அட்டை போன்று கருப்பையின் சுவரைப் பற்றிப் பிடித்துத் தொங்கும்) ஒரு கருக்கட்டியாக மாறுகிறது. பிறகு வயிற்றில் அதைப் போன்றே (மேலும் நாற்பது நாட்கள் மெல்லப்பட்ட சக்கை போன்ற) ஒரு சதைப் பிண்டமாக மாறிவிடுகிறது. பிறகு அதனிடம் ஒரு வானவர் அனுப்பப்படுகிறார். அவர் அதில் உயிரை ஊதுகிறார். (அதற்கு முன்பே) அந்த மனிதனின் வாழ்வாதாரம், வாழ்நாள், செயல்பாடு, அவன் நற்பேறற்றவனா அல்லது நற்பேறு பெற்றவனா ஆகிய நான்கு விஷயங்களை எழுதுமாறு அவர் பணிக்கப்படுகிறார்.
எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அ(ந்த ஓரிறை)வன் மீதாணையாக! உங்களில் ஒருவர் சொர்க்கவாசிகளின் (நற்)செயலைச் செய்துகொண்டே செல்வார். அவருக்கும் சொர்க்கத்துக்குமிடையே ஒரு முழம் இடைவெளிதான் இருக்கும்; அதற்குள் விதி அவரை முந்திக்கொள்ள, அவர் நரகவாசிகளின் செயலைச் செய்து அதன் காரணத்தால் நரகத்தினுள் புகுந்துவிடுவார்.

(இதைப் போன்றே) உங்களில் ஒருவர் நரகவாசிகளின் (தீய)செயலைச் செய்துகொண்டே செல்வார். இறுதியில் அவருக்கும் நரகத்துக்குமிடையே ஒரு முழம் இடைவெளிதான் இருக்கும்; அதற்குள் அவரது விதி அவரை முந்திக்கொள்ள, அவர் சொர்க்கவாசிகளின் செயலைச் செய்து அதன் விளைவாகச் சொர்க்கத்தில் புகுந்துவிடுவார்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உங்களில் ஒருவர் தம் தாயின் வயிற்றில் நாற்பது இரவுகள் (கருவாக) சேமிக்கப்படுகிறார்" என்று காணப்படுகிறது. ஷுஅபா (ரஹ்) அவர்களிடமிருந்து முஆத் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில், "நாற்பது இரவுகளும் நாற்பது பகல்களும்' என்று இடம் பெற்றுள்ளது. ஜரீர் மற்றும் ஈசா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "நாற்பது நாட்கள்' என்று உள்ளது.

5146 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
விந்துத்துளி தாயின் கருப்பையில் நாற்பது அல்லது நாற்பத்தைந்து நாட்கள் தங்கியிருந்த பின்னர் அந்த விந்துத்துளிக்குள் வானவர் ஒருவர் சென்று, "இறைவா! இவன் நற்பேறற்றவனா?அல்லது நற்பேறு பெற்றவனா?" என்று கேட்கிறார். பிறகு

(இறைக்கட்டளைக்கேற்ப) அதைக் குறித்து எழுதப்படுகிறது. பிறகு "இறைவா! இது ஆணா? அல்லது பெண்ணா?" என்று கேட்டு அதற்கேற்ப எழுதப்படுகிறது.
அவனுடைய செயல்பாடு, இயக்கம், வாழ்நாள், வாழ்வாதாரம் ஆகியவையும் எழுதப்படுகின்றன. பிறகு ஏடுகள் சுருட்டப்பட்டுவிடுகின்றன. பிறகு அதில் கூட்டப் படுவதுமில்லை; குறைக்கப்படுவதுமில்லை.
இதை ஹுதைஃபா பின் அசீத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5147 அபுத்துஃபைல் ஆமிர் பின் வாஸிலா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "நற்பேறற்றவன் என்பவன், தன் தாயின் வயிற்றிலேயே நற்பேறற்றவனா(கப் பதிவா)கிவிட்டவன் ஆவான்; நற்பேறு பெற்றவன் என்பவன், பிறர் மூலம் அறிவுரை வழங்கப்பட்டவன் ஆவான்" என்று கூறியதைக் கேட்டேன்.
உடனே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களில் ஹுதைஃபா பின் அசீத் அல்ஃகிஃபாரீ (ரலி) எனப்படும் ஒருவரிடம் சென்று, அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதைத் தெரிவித்துவிட்டு, "செயல்படாமலேயே ஒருவன் எவ்வாறு நற்பேறற்றவனாக ஆகமுடியும்?" என்று கேட்டேன். அதற்கு ஹுதைஃபா பின் அசீத் (ரலி) அவர்கள் கூறினார்கள்: இதைக்கேட்டு நீங்கள் வியப்படைகிறீர்களா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறியதை நான் கேட்டுள்ளேன்:
விந்து கருப்பைக்குச் சென்று நாற்பத்து இரண்டு இரவுகள் கழிந்ததும் அதனிடம் அல்லாஹ் வானவர் ஒருவரை அனுப்புகிறான். பிறகு (மூன்றாவது நாற்பது கழிந்தபின்) அதற்கு உருவமளித்து, அதற்குச் செவிப்புலனையும் பார்வையையும் தோலையும் சதையையும் எலும்பையும் படைக்கிறான்.

பிறகு (நாற்பத்து இரண்டு நாட்கள் கழிந்ததும் அனுப்பப்பட்ட) அந்த வானவர், "இறைவா! இது ஆணா, பெண்ணா?" என்று கேட்கிறார். அப்போது உம்முடைய இறைவன் தான் நாடியதைத் தீர்ப்பளிக்கிறான். (அவ்வாறே) அந்த வானவரும் எழுதிப் பதிவு செய்கிறார். பிறகு அவர், "இறைவா! இதன் வாழ்நாள் (எவ்வளவு?)" என்று கேட்கிறார். அப்போது உம்முடைய இறைவன் தான் நாடியதைச் சொல்கிறான். (அதன்படி) அந்த வானவரும் எழுதிப் பதிவு செய்கிறார்.
பிறகு அவர், "இறைவா! இதன் வாழ்வாதாரம் (எவ்வளவு)?" என்று கேட்கிறார். அப்போது உம்முடைய இறைவன் தான் நாடியதைத் தீர்ப்பளிக்கிறான். (அதன்படி) அந்த வானவரும் எழுதிப் பதிவு செய்துவிட்டுப் பிறகு தமது கையில் அந்த ஏட்டை எடுத்துக்கொண்டு வெளியேறிவிடுகிறார். (தமக்கு) ஆணையிடப்பட்டதைவிட அவர் கூட்டுவதுமில்லை; குறைப்பதுமில்லை.
மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5148 அபுத்து..ஃபைல் ஆமிர் பின் வாஸிலா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் அபூசரீஹா ஹுதைஃபா பின் அசீத் அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறியதை இந்த என் காதுகளால் கேட்டேன் என்று கூறினார்கள்:
விந்துத்துளி தாயின் கருப்பையில் நாற்பது இரவுகள் தங்கியிருக்கிறது. பிறகு அதனுள் வானவர் ஒருவர் ஊடுருவுகிறார் "அதைப் படைக்கவிருக்கும் வானவர்' என்று அப்துல்லாஹ் பின் அதாஉ (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என்றே நான் கருதுகிறேன் என்கிறார் அறிவிப்பாளர் ஸுஹைர் அபூகைஸமா. பிறகு அவ்வானவர் "இது ஆணா,பெண்ணா?" என்று கேட்கிறார். அப்போது அல்லாஹ் அதை ஆணாகவோ அல்லது பெண்ணாகவோ ஆக்குகிறான்.
பிறகு அவ்வானவர், "இறைவா! இவன் ஊனமற்றவனா? ஊனமுள்ளவனா?" என்று கேட்கிறார். அப்போது அவனை அல்லாஹ் ஆரோக்கியமானவனாகவோ அல்லது ஆரோக்கியமற்றவனாகவோ ஆக்குகிறான். பிறகு அவ்வானவர், "இவனது வாழ்வாதாரம் என்ன? இவனது வாழ்நாள் எவ்வளவு? இவனுடைய குணங்கள் என்ன?" என்று கேட்கிறார். பிறகு அவனை அல்லாஹ் நற்பேறற்றவனாகவோ அல்லது நற்பேறு பெற்றவனாகவோ ஆக்குகிறான்.
- மேற்கண்ட ஹதீஸ் நபித்தோழர் ஹுதைஃபா பின் அசீத் அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ் தனது நாட்டப்படி எதையேனும் படைக்க நாடும்போது, நாற்பதுக்கு மேற்பட்ட இரவுகள் கழிந்தபின் அந்தக் கருப்பைக்கென நியமிக்கப்பட்ட வானவர் ஒருவர்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5149 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் தாயின் கருப்பைக்கென வானவர் ஒருவரைப் பொறுப்பாளராக நியமிக்கிறான். அவர், "இறைவா! இது (ஒரு துளி) விந்து. இறைவா! இது பற்றித் தொங்கும் கரு. இறைவா! இது (மெல்லப்பட்ட சக்கை போன்ற) சதைப் பிண்டம்" என்று கூறிக்கொண்டிருப்பார்.
அதை அல்லாஹ் படைத்(து உயிர் தந்)திட நாடும்போது, "இறைவா! இது ஆணா,பெண்ணா? நற்பேறற்றதா? நற்பேறு பெற்றதா? (இதன்) வாழ்வாதாரம் எவ்வளவு? (இதன்) ஆயுள் எவ்வளவு?" என்று கேட்பார். (அல்லாஹ்வால் இவையனைத்தும் தெரிவிக்கப்பட்டு) தாய் வயிற்றில் அது இருக்கும் போதே பதிவு செய்யப்படுகின்றன.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5150 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் பிரேத நல்லடக்கம் (ஜனாஸா) ஒன்றில் கலந்துகொள்வதற்காக "பகீஉல் ஃகர்கத்' பொது மையவாடியில் இருந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து அமர்ந்தார்கள். நாங்களும் அவர்களைச் சுற்றி அமர்ந்தோம். நபியவர்களுடன் ஓர் ஊன்றுகோல் இருந்தது. அப்போது அவர்கள் (தமது தலையைக்)

கவிழ்த்தவாறு ஊன்றுகோலைத் தரையில் குத்திக் கீறியபடி (ஆழ்ந்த கவலையிலும் யோசனையிலும்) இருக்கலானார்கள்.
பிறகு, "உங்களில் யாரும், பிறந்துவிட்ட எந்த உயிரும் தமது இருப்பிடம் சொர்க்கத்திலா, அல்லது நரகத்திலா என்று அல்லாஹ்வால் எழுதப்படாமல் இருப்பதில்லை; அது நற்பேறற்றதா, அல்லது நற்பேறு பெற்றதா என்று எழுதப்பட்டிராமல் இல்லை" என்று சொன்னார்கள்.
அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் நல்லறங்கள் செய்யாமல், எங்கள் (தலை) எழுத்தின் மீது (பாரத்தைப் போட்டுவிட்டு) இருந்துவிடமாட்டோமா" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் (விதியில்) நற்பேறு பெற்றவராக இருப்பாரோ அவர் நற்பேறு பெற்றவர்களின் செயலுக்கு மாறுவார். யார் (விதியில்) நற்பேறற்றவராக இருப்பாரோ அவர் நற்பேறற்றவர்களின் செயலுக்கு மாறுவார்" என்று கூறினார்கள்.
மேலும் அவர்கள், "நீங்கள் செயலாற்றுங்கள். (நல்லார், பொல்லார்) எல்லாருக்கும் (அவரவர் செல்லும்வழி) எளிதாக்கப்பட்டுள்ளது. நல்லவருக்கு நல்லவர்களின் செயலைச் செய்ய வகை செய்யப்படும். கெட்டவருக்குக் கெட்டவர்களின் செயலைச் செய்ய வகைசெய்யப்படும்" என்று கூறினார்கள்.

பிறகு "யார் (பிறருக்கு) வழங்கி (இறைவனை) அஞ்சி, நல்லவற்றை உண்மைப் படுத்துகிறாரோ அவருக்குச் சுலபமான வழியை எளிதாக்குவோம். யார் கஞ்சத்தனம் செய்து, தேவையற்றவராகத் தன்னைக் கருதி, நல்லதை நம்ப மறுக்கிறாரோ, அவருக்குச் சிரமத்தின் வழியை எளிதாக்குவோம்" (92:5-10) எனும் வசனங்களை ஓதிக்காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "குச்சியொன்றை எடுத்தார்கள்" என்று காணப்படுகிறது. "ஊன்றுகோல்' எனும் குறிப்பு இல்லை. "பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த வசனங்களை ஓதினார்கள்" என அபுல்அஹ்வஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் காணப்படுகிறது.

5151 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கையிலிருந்த குச்சியால் தரையைக் குத்திக் கீறியபடி (தலையைக் கவிழ்த்தவாறு) உட்கார்ந்திருந்தார்கள். பிறகு தமது தலையை உயர்த்தி, "உங்களில் (பிறந்துவிட்ட) எவருக்கும் சொர்க்கத்திலுள்ள, அல்லது நரகத்திலுள்ள அவரது இருப்பிடம் அறியப்படாமல் இருப்பதில்லை" என்று கூறினார்கள்.
மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! பிறகு எதற்காக நாங்கள் நல்லறங்கள் செய்ய வேண்டும்? நாங்கள் (எங்கள் விதியின் மீது) பாரத்தைப் போட்டுவிட்டு (நல்லறங்கள் ஏதும் செய்யாமல்) இருந்துவிடமாட்டோமா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை; நீங்கள் செயலாற்றுங்கள். (நல்லார், பொல்லார்) எல்லாருக்கும் அவரவர் எதற்காகப் படைக்கப்பட்டுள்ளனரோ அது எளிதாக்கப்படும்" என்று கூறினார்கள்.

பிறகு, "யார் (பிறருக்கு) வழங்கி (இறைவனை) அஞ்சி, நல்லவற்றை உண்மைப் படுத்துகிறாரோ..." என்று தொடங்கி, "சிரமத்தின் வழியை எளிதாக்குவோம்" (92:5-10) என்பது வரை ஓதிக்காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5152 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
("விடைபெறும்' ஹஜ்ஜின்போது) சுராக்கா பின் மாலிக் பின் ஜுஅஷும் (ரலி) அவர்கள் (நபி (ஸல்) அவர்களிடம்) வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் இப்போதுதான் படைக்கப்பட்டிருக்கிறோம் என்பதைப் போன்று (எண்ணிக்கொண்டு) எங்களுக்கு எங்களது மார்க்கத்தைத் தெளிவாகச் சொல்லுங்கள். இன்றைக்கு நல்லறங்கள் புரிவது எப்படி? எழுதுகோல்கள் எழுதி முடித்துவிட்ட, (ஏற்கெனவே) நடந்துவிட்ட விதிகளின்படியா? அல்லது (புதிதாக) நாங்களாகவே எதிர்கொள்ளும் (செயல்பாடுகளின்) அடிப்படையிலா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை; மாறாக எழுதுகோல்கள் எழுதி முடித்துவிட்ட, (ஏற்கெனவே) நடந்து விட்ட விதிகளின்படிதான்" என்று கூறினார்கள்.
சுராக்கா (ரலி) அவர்கள், "அப்படியானால் நாங்கள் ஏன் நல்லறங்கள் புரிய வேண்டும்?" என்று கேட்டார்கள். (அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், என்ன கூறினார்கள் என்பதை அறிவித்த) அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் ஏதோ சொன்னார்கள். அதை நான் புரிந்து கொள்ளவில்லை. "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்ன சொன்னார்கள்?"என்று நான் (ஸுஹைர்) கேட்டேன்.
அதற்கு அபுஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள், "நீங்கள் செயலாற்றுங்கள். (நல்லார், பொல்லார்) எல்லாருக்கும் அவரவர் செல்லும் பாதை எளிதாக்கப்பட்டுள்ளது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "செயலாற்றக்கூடிய ஒவ்வொருவரும் தமது செயலுக்கு வழிவகை செய்யப்படுவார்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

5153 இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நபி (ஸல்) அவர்களிடம்,) "அல்லாஹ்வின் தூதரே! சொர்க்கவாசிகள் யார், நரகவாசிகள் யார் என்பது (முன்பே அல்லாஹ்வுக்குத்) தெரியுமா?" என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள், "ஆம் (தெரியும்)" என்று சொன்னார்கள். "அவ்வாறாயின், ஏன் நற்செயல் புரிபவர்கள் நற்செயல் புரிய வேண்டும்?" என்று வினவப்பட்டது.
நபி (ஸல்) அவர்கள், "(நீங்கள் செயல்படுங்கள்) ஒவ்வொருவரும் எ(தை அடை)வதற்காகப் படைக்கப்பட்டுள்ளார்களோ அது எளிதாக்கப்படும்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஏழு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில் "நான் (நபி (ஸல்) அவர்களிடம்), அல்லாஹ்வின் தூதரே...?" என்று கேட்டேன் என இடம்பெற்றுள்ளது.

5154 அபுல்அஸ்வத் அத்தியலீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் இம்ரான் பின் அல்ஹுஸைன் (ரலி) அவர்கள், "மனிதர்கள் இன்று நற்செயல் புரிவதும் அதற்காக முனைந்து செயலாற்றுவதும் ஏற்கெனவே அவர்கள்மீது தீர்மானிக்கப் பட்டுவிட்ட, முன்பே முடிவு செய்யப்பட்டுவிட்ட விதியின் அடிப்படையிலா? அல்லது அவர்களுக்கெதிரான ஆதாரத்தை நிலைநிறுத்தும் வகையில், அவர்களுடைய இறைத்தூதர்கள் அவர்களிடம் கொண்டுவந்துள்ளவற்றை ஏற்றுச் செயல்படுத்துவதைப் பொறுத்தா?" என்று கேட்டார்கள். அதற்கு நான், "இல்லை; ஏற்கெனவே அவர்கள்மீது தீர்மானிக்கப்பட்டுவிட்ட, நடந்துமுடிந்த (விதியின்) அடிப்படையில் தான்" என்று சொன்னேன்.
அதற்கு இம்ரான் (ரலி) அவர்கள், "இது அநீதியாகாதா?" என்று கேட்டார்கள். அதைக் கேட்டு நான் கடுமையாக அதிர்ந்துவிட்டேன். மேலும், "அனைத்தும் அல்லாஹ்வின் படைப்பே; அவனது அதிகாரத்துக்குட்பட்டவையே. அவன் செய்வது குறித்து யாரும் கேள்வி கேட்க முடியாது. ஆனால், மனிதர்கள் விசாரிக்கப்படுவார்கள்" என்று சொன்னேன்.

அப்போது இம்ரான் (ரலி) அவர்கள், "அல்லாஹ் உங்களுக்கு அருள்புரியட்டும். உங்கள் அறிவைப் பரிசோதிப்பதற்காகவே நான் கேள்வி கேட்டேனே தவிர, வேறெதற்கும் நான் கேள்வி கேட்கவில்லை" என்று கூறிவிட்டுப் பின்வருமாறு சொன்னார்கள்:
"முஸைனா' குலத்தைச் சேர்ந்த இரண்டு பேர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! மனிதர்கள் இன்று நற்செயல் புரிவதும் அதற்காக முனைந்து செயல்படுவதும் ஏற்கெனவே தீர்மானிக்கப்பட்ட,முன்பே முடிவு செய்யப்பட்டு விட்ட விதியின் அடிப்படையிலா? அல்லது அவர்களுக்கெதிரான ஆதாரத்தை நிலைநிறுத்தும் வகையில், அவர்களுடைய இறைத்தூதர்கள் அவர்களிடம் கொண்டுவந்துள்ளவற்றை ஏற்றுச் செயல்படுத்துவதைப் பொறுத்தா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை; ஏற்கெனவே அவர்கள் மீது தீர்மானிக்கப்பட்டுவிட்ட, அவர்கள் விஷயத்தில் முடிவாகிவிட்ட (விதியின்) அடிப்படையில் தான்" என்று கூறிவிட்டு இதை உண்மைப்படுத்தும் சான்று வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் வேதத்தில் உள்ளது என்று கூறி, பின்வரும் வசனங்களை ஓதிக் காட்டினார்கள்: உயிரின் மீதும், அதை வடிவமைத்து, அதன் நன்மையையும் தீமையையும் அதற்கு அறிவித்தவன்மீதும் சத்தியமாக! (91:7,8)

5155 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் நீண்ட காலம் சொர்க்கவாசிகளின் (நற்)செயலைச் செய்துகொண்டே வருவார். பிறகு அவரது செயல் நரகவாசிகளின் செயலாக முடிக்கப்படும். ஒரு மனிதர் நீண்ட காலம் நரகவாசிகளின் (தீய)செயலைச் செய்துகொண்டே வருவார். பிறகு அவரது செயல் சொர்க்கவாசிகளின் செயலாக முடிக்கப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5156 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர், மக்களின் பார்வையில் சொர்க்கவாசிகளின் செயலைச் செய்துகொண்டே இருப்பார். (உண்மையில்) அவர் நரகவாசிகளில் ஒருவராய் இருப்பார். ஒரு மனிதர், மக்களின் பார்வையில் நரகவாசிகளின் செயலைச் செய்து கொண்டே இருப்பார். (உண்மையில்) அவர் சொர்க்கவாசிகளில் ஒருவராய் இருப்பார்.
இதை சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 2 ஆதம் (அலை) அவர்களுக்கும் மூசா (அலை) அவர்களுக்கும் இடையே நடந்த தர்க்கம்.

5157 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதம் (அலை) அவர்களும் மூசா (அலை) அவர்களும் தர்க்கம் செய்துகொண்டார்கள். மூசா (அலை) அவர்கள், "ஆதம் அவர்களே! எங்கள் தந்தையான நீங்கள் (உங்கள் பாவத்தின் காரணத்தால்) எங்களை இழப்புக்குள்ளாக்கிவிட்டீர்கள்;சொர்க்கத்திலிருந்து எங்களை வெளியேற்றிவிட்டீர்கள்" என்று சொன்னார்கள்.
அதற்கு மூசாவிடம் ஆதம் (அலை) அவர்கள், "நீர்தான் மூசாவா? அல்லாஹ், தன்னுடன் உரையாடுவதற்கு உம்மையே தேர்ந்தெடுத்தான்; அவன் தனது கையால் உமக்காக (வேதத்தை) எழுதினான். (இத்தகைய) நீங்கள், அல்லாஹ் என்னைப் படைப்பதற்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே என்மீது அவன் விதித்துவிட்ட ஒரு விஷயத்திற்காக என்னைப் பழிக்கின்றீர்களா?" என்று கேட்டார்கள்.
(இந்த பதில் மூலம்) மூசா (அலை) அவர்களை ஆதம் (அலை) அவர்கள் தோற்கடித்து விட்டார்கள்;தோற்கடித்துவிட்டார்கள்" என (இரண்டு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் இப்னு அபீஉமர் அல்மக்கீ (ரஹ்), அஹ்மத் பின் அப்தா (ரஹ்) ஆகியோரின் அறிவிப்புகளில் ஒன்றில், "வரைந்தான்' ("கத்த') என இடம்பெற்றுள்ளது. மற்றொன்றில் "அவன் தனது கரத்தால் உமக்காக "தவ்ராத்'தை எழுதினான்" என்று ஆதம் (அலை) அவர்கள் கூறியதாகக் காணப்படுகிறது.

5158 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதம் (அலை) அவர்களும் மூசா (அலை) அவர்களும் தர்க்கம் செய்தார்கள். (அதில்) மூசா (அலை) அவர்களை ஆதம் (அலை) அவர்கள் தோற்கடித்துவிட்டார்கள். ஆதம் (அலை) அவர்களிடம் மூசா (அலை) அவர்கள், "நீங்கள்தான் மனிதர்களை வழி தவறச்செய்து, அவர்களைச் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றிய ஆதமா?" என்று கேட்டார்கள். அதற்கு ஆதம் (அலை) அவர்கள், "அல்லாஹ் அனைத்துப் பொருட்களைப் பற்றிய அறிவையும் வழங்கி, தனது தூதுத்துவத்தால் மற்ற மக்களைவிடத் தேர்ந்தெடுத்த மனிதர் நீர்தானே?" என்று கேட்டார்கள்.

அதற்கு மூசா (அலை) அவர்கள், "ஆம்' என்று கூறினார்கள். "அவ்வாறாயின், நான் படைக்கப்படுவதற்கு முன்பே என்மீது விதிக்கப்பட்டுவிட்ட ஒரு விஷயத்திற்காக என்னைப் பழிக்கிறீரா?" என்று கேட்டார்கள். (இந்தக் கேள்வியின் மூலம் மூசா (அலை) அவர்களை ஆதம் (அலை) அவர்கள் தோற்கடித்துவிட்டார்கள்.)
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5159 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதம் (அலை) அவர்களும் மூசா (அலை) அவர்களும் தம் இறைவன் அருகில் தர்க்கம் செய்தார்கள். அப்போது மூசா (அலை) அவர்களை ஆதம் (அலை) அவர்கள் தோற்கடித்து விட்டார்கள். மூசா (அலை) அவர்கள், "அல்லாஹ் தனது கையால் உங்களைப் படைத்து, உங்களுக்குள் தனது உயிரை ஊதி, தன் வானவர்களை உங்களுக்குச் சிரம்பணியச் செய்து, உங்களைச் சொர்க்கத்தில் குடியிருக்கச்செய்த ஆதம் நீங்கள்தானே! பிறகு நீங்கள் உங்களது பாவத்தின் மூலம் (உங்கள் வழித் தோன்றல்களான) மனிதர்களை பூமிக்கு இறங்கச் செய்துவிட்டீர்கள்" என்று கூறினார்கள்.
அதற்கு ஆதம் (அலை) அவர்கள், "அல்லாஹ் தன் தூதுத்துவச் செய்திகளை தெரிவிக்கவும் தன்னிடம் உரையாடவும் உம்மைத் தேர்ந்தெடுத்து, அனைத்துப் பொருட்களைப் பற்றிய விளக்கமும் உள்ள பலகைகளை உமக்கு வழங்கி, தன் அருகில் வரச்செய்து இரகசியமாக உரையாடிய மூசா நீர்தானே! நான் படைக்கப்படுவதற்கு எத்தனை ஆண்டுகளுக்கு முன் அல்லாஹ் தவ்ராத்தை எழுதியதாக நீர் கண்டீர்?" என்று கேட்டார்கள்.

அதற்கு மூசா (அலை) அவர்கள், "நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால்" என்று பதிலளித்தார்கள். "அதில், ஆதம் தம் இறைவனுக்கு மாறுசெய்தார். எனவே, அவர் வழி தவறினார் என்று எழுதப்பட்டிருந்ததா?" என்று கேட்டார்.
அதற்கு மூசா (அலை) அவர்கள், "ஆம்' என்றார்கள். "அவ்வாறாயின், என்னைப் படைப்பதற்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே எதை நான் செய்வேன் என்று இறைவன் என்மீது விதியாக்கிவிட்டானோ அதைச் செய்ததற்காக என்னை நீங்கள் பழிக்கிறீரா?" என்று ஆதம் (அலை) அவர்கள் கேட்டார்கள்.
(இந்தக் கேள்வியின் மூலம்) மூசா (அலை) அவர்களை ஆதம் (அலை) அவர்கள் தோற்கடித்துவிட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதம் (அலை) அவர்களும் மூசா (அலை) அவர்களும் தர்க்கம் செய்தார்கள். அப்போது ஆதம் (அலை) அவர்களிடம் மூசா (அலை) அவர்கள், "உங்களைச் சொர்க்கத்திலிருந்து வெளியேற்ற உங்கள் தவறே காரணமாக அமைந்ததே அந்த ஆதம் நீங்கள்தானா?" என்று கேட்டார்கள்.
அதற்கு ஆதம் (அலை) அவர்கள், "நீங்கள், அல்லாஹ் தன் தூதுத்துவச் செய்திகளை தெரிவிக்கவும் தன்னுடன் உரையாடவும் தேர்ந்தெடுத்துக்கொண்ட மூசாதானே? அவ்வாறிருந்தும், நான் படைக்கப்படுவதற்கு முன்பே என்மீது விதிக்கப்பட்டுவிட்ட ஒரு

விஷயத்திற்காக என்னைப் பழிக்கிறீர்களே (ஏன்)?" என்று கேட்டார்கள். (இந்தக் கேள்வியின் மூலம்) மூசா (அலை) அவர்களை ஆதம் (அலை) அவர்கள் வென்றுவிட்டார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5160 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், வானங்களையும் பூமியையும் படைப்பதற்கு ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, படைப்பினங்களின் விதிகளை எழுதிவிட்டான். (அப்போது) அவனது அரியணை (அர்ஷ்) தண்ணீரின் மேல் இருந்தது.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "(அப்போது) அவனது அரியணை (அர்ஷ்) தண்ணீரின் மேல் இருந்தது" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

**பாடம் : 3 உயர்ந்தோன் அல்லாஹ் மனிதர்களின் உள்ளங்களைத் தான் நாடிய வகையில் மாற்றுகிறான்.**

5161 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆதமின் மக்களின் (மனிதர்களின்) உள்ளங்கள் அனைத்தும் அளவற்ற அருளாளனின் இரு விரல்களுக்கிடையே ஒரேயோர் உள்ளத்தைப் போன்று உள்ளன. அதைத் தான் நாடிய முறையில் அவன் மாற்றுகிறான்" என்று கூறிவிட்டு, "இறைவா! உள்ளங்களைத் திருப்புகின்றவனே! எங்கள் உள்ளங்களை உனக்குக் கீழ்ப்படிவதற்குத் திருப்புவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 ஒவ்வொன்றும் விதியின்படியே (நடக்கிறது).**

5162 தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"ஒவ்வொன்றும் விதியின்படியே" என்று கூறிவந்த தோழர்களில் சிலரை நான் சந்தித்திருக்கிறேன். அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "ஒவ்வொரு பொருளும் விதியின்படியே."இயலாமை, புத்திசாலித்தனம் ஆகியவை உள்பட" அல்லது "புத்திசாலித்தனம், இயலாமை ஆகியவை உள்பட" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) சொன்னார்கள் என்று கூறியதைக் கேட்டுள்ளேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5163 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) குறைஷி இணைவைப்பாளர்கள் விதி தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் விவாதிக்க வந்தனர். அப்போது, "அவர்கள் நரகத்தில் முகம்குப்புற இழுத்துவரப்படும் நாளில் "நரகத்தின் வேதனையைச் சுவையுங்கள்' (என்று கூறப்படும்). ஒவ்வொரு பொருளையும் நாம் திட்டமிட்டபடியே படைத்துள்ளோம்" (54:48,49) எனும் இறைவசனங்கள் அருளப்பெற்றன.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 5 விபசாரம் முதலானவற்றில் மனிதனுக்குள்ள பங்கு விதியில் எழுதப்பட்டுவிட்டது.

5164 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
விபசாரத்தில் ஆதமின் மக(ன் மனித)னுக்குள்ள பங்கை இறைவன் எழுதியுள்ளான். அதை அவன் அடைந்தே தீருவான். (மனிதனின் கண்ணும் நாவும்கூட விபசாரம் செய்கின்றன.) கண்ணின் விபசாரம் (தவறான) பார்வையாகும். நாவின் விபசாரம் (ஆபாசமான) பேச்சாகும். மனம் ஏங்குகிறது; இச்சை கொள்கிறது. மர்ம உறுப்பு இவை அனைத்தையும் உண்மையாக்குகிறது; அல்லது பொய்யாக்குகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளரான இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துள்ள இந்த ஹதீஸை விடச் சிறு பாவங்களுக்கு எடுத்துக்காட்டாக வேறெதையும் நான் காணவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5165 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
விபசாரத்தில் மனிதனுக்குள்ள பங்கு (விதியில்) எழுதப்பட்டுள்ளது. அதை அவன் அடையக் கூடியவனாகவே உள்ளான். கண்கள் செய்யும் விபசாரம் (தவறான) பார்வையாகும். காதுகள் செய்யும் விபசாரம் (ஆபாசப் பேச்சுகளைச்) செவியுறுவதாகும். நாவு செய்யும் விபசாரம் (ஆபாசப்) பேச்சாகும். கை செய்யும் விபசாரம் (அந்நியப் பெண்ணைப்) பற்றுவதாகும். கால் செய்யும் விபசாரம் (தவறான உறவைத் தேடி) அடியெடுத்து வைப்பதாகும். மனம் இச்சை கொள்கிறது; ஏங்குகிறது. மர்ம உறுப்பு அதை உண்மையாக்குகிறது; அல்லது பொய்யாக்குகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 6 "எல்லாக் குழந்தைகளுமே இயற்கையி(ன் மார்க்கத்தி)ல்தான் பிறக்கின்றன'' என்பதன் பொருளும், இறைமறுப்பாளர்கள் மற்றும் முஸ்லிம்களின் இறந்துவிட்ட குழந்தைகளின் நிலையும்.

5166 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு விலங்கு முழு வளர்ச்சி பெற்ற விலங்கைப் பெற்றெடுப்பதைப் போன்றே, எல்லாக் குழந்தைகளுமே இயற்கையி(ன் மார்க்கத்தி)ல்தான் பிறக்கின்றன. விலங்குகள் நாக்கு, மூக்கு

வெட்டப்பட்ட நிலையில் பிறப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? (முழுமையான விலங்கை அங்க சேதப்படுத்துவதைப் போன்று), பெற்றோர்கள்தான் குழந்தைகளை (ஓரிறை மார்க்கத்திலிருந்து திருப்பி) யூதர்களாகவோ, கிறித்தவர்களாகவோ, அக்னி ஆராதனையாளர்களாகவோ ஆக்கிவிடுகின்றனர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துவிட்டுப் பிறகு, நீங்கள் விரும்பினால், "இது அல்லாஹ்வின் இயற்கையான மார்க்கம். இதன் மீதே மனிதர்களை அல்லாஹ் படைத்துள்ளான். அல்லாஹ்வின் படைப்பில் எந்த மாற்றலும் இல்லை" (30:30) எனும் வசனத்தை ஓதிக்கொள்ளுங்கள் என்றார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "ஒரு விலங்கு விலங்கைப் பெற்றெடுத்ததைப் போன்றே" எனும் (வாசகம்) இடம் பெற்றுள்ளது. "முழு வளர்ச்சி பெற்ற' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
- அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எல்லாக் குழந்தைகளும் இயற்கை(யின் மார்க்கத்தி)ல்தான் பிறக்கின்றன" என்று கூறினார்கள். நீங்கள் "இது அல்லாஹ்வின் இயற்கையான மார்க்கம். இதன்மீதே மனிதர்களை அல்லாஹ் படைத்துள்ளான். அல்லாஹ்வின் படைப்பில் எந்த மாற்றலும் இல்லை. இதுவே நேரான மார்க்கம்" (30:30) எனும் வசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5167 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எல்லாக் குழந்தைகளும் இயற்கையி(ன் மார்க்கத்தி)ல்தான் பிறக்கின்றன. அவர்களின் பெற்றோர்கள்தான் அவர்களை யூதர்களாகவோ கிறித்தவர்களாகவோ, இணைவைப்பாளர்களாகவோ ஆக்கிவிடுகின்றனர்" என்று சொன்னார்கள்.
அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! அதற்கு முன்னர் (அறியாப் பருவத்திலேயே) இறந்துவிட்டால், அதன் நிலை (என்ன என்பது) பற்றி என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்கள் (உயிருடன் வாழ்ந்தால்) எவ்வாறு செயல்பட்டிருப்பார்கள் என்பதை அல்லாஹ் நன்கு அறிவான்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "எல்லாக் குழந்தைகளும் (இயற்கை) மார்க்கத்தில் இருக்கும் நிலையில்தான் பிறக்கின்றன" என இப்னு நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் இடம்பெற்றுள்ளது.
அபூமுஆவியா (ரஹ்) அவர்களிடமிருந்து அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில், "இந்த (இயற்கை) மார்க்கத்தில்தான் பிறக்கின்றன; அதைப் பற்றி (அதாவது தனது நிலையைப் பற்றி) அதன் நாவு தெளிவுபடுத்தும்வரை" என்று காணப்படுகிறது.

அபூமுஆவியா (ரஹ்) அவர்களிடமிருந்து அபூகுறைப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில், "பிறக்கின்ற எந்தக் குழந்தையும் இந்த இயற்கையி(ன் மார்க்கத்தி)ல்தான் பிறக்கின்றன; அதன் நாவு அதைப் பற்றி பேசும்வரை" என்று காணப்படுகிறது.

5168 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பிறக்கின்ற எல்லாக் குழந்தைகளும் இந்த இயற்கையி(ன் மார்க்கத்தி)ல்தான் பிறக்கின்றன. அவர்களின் பெற்றோர்கள்தான் அவர்களை யூதர்களாகவும் கிறித்தவர்களாகவும் ஆக்கிவிடுகின்றனர். ஒரு விலங்கு (முழு வளர்ச்சி பெற்ற விலங்கைப்) பெற்றெடுப்பதைப் போன்றுதான் (இது). நீங்கள் அதன் நாக்கு, மூக்கு போன்ற உறுப்புகளை வெட்டிச் சேதப்படுத்தாத வரை நாக்கு, மூக்கு வெட்டப்பட்ட நிலையில் அது பிறப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?" என்று கூறினார்கள்.
மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! சிறிய வயதில் இறந்துவிட்டவரின் நிலை பற்றி என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்கள் (உயிருடன் வாழ்ந்தால்) எவ்வாறு செயல்பட்டிருப்பார்கள் என்பதை அல்லாஹ் நன்கு அறிவான்" என்று சொன்னார்கள்.

5169 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தாயின் வயிற்றிலிருந்து பிறக்கும் ஒவ்வொரு மனிதனும் இயற்கையி(ன் மார்க்கத்தி)ல்தான் பிறக்கிறான். அவனுடைய பெற்றோர்கள்தான் பின்னர் அவனை யூதனாகவோ கிறித்தவனாகவோ அக்னி ஆராதனையாளனாகவோ ஆக்கிவிடுகின்றனர். அவர்கள் இருவரும் முஸ்லிம்களாயிருந்தால், அவனும் முஸ்லிமாகிவிடுகிறான். தாயின் வயிற்றிலிருந்து பிறக்கும் ஒவ்வொரு குழந்தையின் விலாப்புறத்திலும் ஷைத்தான் குத்துகிறான்; மர்யமையும் அவருடைய புதல்வர் (ஈசா) அவர்களையும் தவிர!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5170 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், இணைவைப்போரின் குழந்தைகள் குறித்து ("அவர்கள் இறந்துவிட்டால் அவர்களின் முடிவு யாது' என்று) கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(உயிருடன் வாழ்ந்தால்) அவர்கள் எவ்வாறு செயல்பட்டிருப்பார்கள் என்பதை அல்லாஹ் நன்கறிவான்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஷுஐப் (ரஹ்), மஅகில் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "இணைவைப்பாளர்களின் சந்ததிகள் பற்றிக் கேட்கப்பட்டது" என்று காணப்படுகிறது.

5171 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இணைவைப்பாளர்களின் குழந்தைகள் சிறிய வயதிலேயே இறந்துவிட்டால், அவர்களின் நிலை என்ன என்பது பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(உயிருடன் வாழ்ந்தால்) அவர்கள் எவ்வாறு செயல்பட்டிருப்பார்கள் என்பதை அல்லாஹ் நன்கறிவான்"என்று விடையளித்தார்கள்.

5172 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இணைவைப்போரின் குழந்தைகள் (இறந்து விட்டால் அவர்களின் முடிவு யாது என்பது) பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கு அவர்கள், "அவர்களை அல்லாஹ் படைத்தபோதே, அவர்கள் (உயிருடன் வாழ்ந்தால்) எவ்வாறு செயல்பட்டிருப்பார்கள் என்பதை நன்கறிவான்" என்று சொன்னார்கள்.

5173 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"களிர்' அவர்கள் கொன்றுவிட்ட சிறுவன் (இறை)மறுப்பாளனாகவே படைக்கப்பட்டான். அவன் (உயிருடன்) வாழ்ந்திருந்தால் தன் பெற்றோரை வழிகேட்டிலும் (இறை)மறுப்பிலும் தள்ளிவிட்டிருப்பான்.
இதை உபை பின் கஅப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5174 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில்) ஒரு குழந்தை இறந்துபோனது. அப்போது நான், "அதற்கு நல்வாழ்த்துகள்! அது சொர்க்கத்தின் சிட்டுக்குருவிகளில் ஒரு சிட்டுக்குருவி" என்று சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனக்குத் தெரியாதா? அல்லாஹ் சொர்க்கத்தையும் நரகத்தையும் படைத்தபோதே, அதற்கெனச் சிலரையும் இதற்கெனச் சிலரையும் படைத்துவிட்டான்" என்று சொன்னார்கள்.

5175 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அன்சாரிகளில் ஒரு குழந்தை இறந்தபோது, அதன் பிரேத நல்லடக்கத்திற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அழைக்கப்பட்டார்கள். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! அக்குழந்தைக்கு நல்வாழ்த்துகள்! அது சொர்க்கத்தின் சிட்டுக் குருவிகளில் ஒரு சிட்டுக்குருவி. அது எந்தத் தீமையையும் செய்யவில்லை. அதற்கான பருவத்தையும் அது அடையவில்லை" என்று சொன்னேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வேறு ஏதேனும் உண்டா, ஆயிஷா? அல்லாஹ் சொர்க்கத்திற்கென்றே சிலரைப் படைத்துள்ளான். அவர்கள் தம் பெற்றோரின் முதுகுத்தண்டுகளில் இருந்தபோதே அதற்காகவே அவர்களை அவன் படைத்துவிட்டான்; நரகத்திற்கென்றே சிலரைப் படைத்தான். அவர்கள் தம் பெற்றோரின் முதுகுத்தண்டுகளில் இருந்தபோதே அதற்காகவே அவர்களைப் படைத்துவிட்டான்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 7 வாழ்நாள், வாழ்வாதாரம் உள்ளிட்டவை முன்பே விதியில் எழுதப்பட்டிருப்பதை விடக் கூடவோ குறையவோ செய்யாது.**

5176 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு ஹபீபா (ரலி) அவர்கள், "இறைவா! என் கணவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், என் தந்தை அபூசுஃப்யான், என் சகோதரர் முஆவியா ஆகியோர் (நீண்ட நாட்கள் வாழ்வதன்) மூலம் எனக்குப் பயனளிப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "நீ (ஏற்கெனவே) நிர்ணயிக்கப்பட்டுவிட்ட ஆயுளையும் குறிக்கப்பட்டுவிட்ட (வாழ்)நாட்களையும் பங்கிடப்பட்டுவிட்ட வாழ்வாதாரத்தையும் அல்லாஹ்விடம் கேட்டிருக்கிறாய். அல்லாஹ் அவற்றில் எதையும், அதற்குரிய நேரத்திற்கு முன்பே ஒருபோதும் கொண்டுவந்துவிடவுமாட்டான்; அவற்றில் எதையும்,அதற்குரிய நேரத்தைவிட்டுத் தாமதப்படுத்தவுமாட்டான். நரக நெருப்பின் வேதனையிலிருந்தோ, அல்லது மண்ணறையின் வேதனையிலிருந்தோ உன்னைக் காக்கும்படி நீ அல்லாஹ்விடம் வேண்டியிருந்தால் நன்றாகவும் சிறந்ததாகவும் இருந்திருக்கும்" என்று சொன்னார்கள்.

அப்போது நபி (ஸல்) அவர்களிடம் குரங்குகள் பற்றி பேசப்பட்டது. – பன்றிகளாக உருமாற்றப்பட்ட (பனூ இஸ்ராயீல் சமுதாயத்த)வர்கள் பற்றியும் பேசப்பட்டது என்று அல்கமா (ரஹ்) அவர்கள் கூறியதாகவே நான் கருதுகிறேன் என அறிவிப்பாளர் மிஸ்அர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ் ஊருமாற்றிய எந்தச் சமுதாயத்தாருக்கும் சந்ததிகளையோ வழித்தோன்றல்களையோ அவன் ஏற்படுத்தியதில்லை. குரங்குகளும் பன்றிகளும் அதற்கு முன்பே இருந்தன" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
இப்னு பிஷ்ர் (ரஹ்) அவர்கள் இடம்பெற்றுள்ள இந்த அறிவிப்பிலும், வகீஉ (ரஹ்) அவர்கள் இடம்பெற்றுள்ள மேற்கண்ட அறிவிப்பிலும் "நரகநெருப்பின் வேதனையிலிருந்தும் மண்ணறையின் வேதனையிலிருந்தும் (உன்னைக் காக்கும்படி நீ கேட்டிருந்தால் நன்றாகவும் சிறந்ததாகவும் இருந்திருக்கும்)" என்றே காணப்படுகிறது.

5177 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
உம்மு ஹபீபா (ரலி) அவர்கள், "இறைவா! என் கணவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், என் தந்தை அபூசுஃப்யான், என் சகோதரர் முஆவியா ஆகியோர் (நீண்ட காலம் வாழ்வதன்) மூலம் எனக்குப் பயனளிப்பாயாக!"என்று பிரார்த்தித்தார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஏற்கெனவே) நிர்ணயிக்கப்பட்டுவிட்ட ஆயுளுக்காகவும் (வரையறுக்கப்பட்டுவிட்ட) காலடிகளுக்காகவும் பங்கிடப்பட்டுவிட்ட வாழ்வாதாரங்களுக்காகவும் நீ அல்லாஹ்விடம் பிரார்த்தித்திருக்கிறாய். அல்லாஹ் அவற்றில் எதையும், அதற்குரிய நேரத்திற்கு முன்பே கொண்டுவரமாட்டான்;அவற்றில்

எதையும், அதற்குரிய நேரத்தை விட்டுத் தாமதப்படுத்தவுமாட்டான். அல்லாஹ்விடம் நரக நெருப்பின் வேதனையிலிருந்தும் மண்ணறையின் வேதனையிலிருந்தும் காக்கும்படி நீ வேண்டியிருந்தால் உனக்கு நன்றாயிருந்திருக்கும்" என்றார்கள்.
அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! (தற்போதுள்ள) குரங்குகளும் பன்றிகளும் உருமாற்றப்பட்ட (பனூ இஸ்ராயீல் சமுதாயத்த)வர்களில் உள்ளவையோ?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், எந்த ஒரு சமுதாயத்தையும் அழித்துவிட்டு அல்லது வேதனைப்படுத்திவிட்டு, அவர்களுக்குச் சந்ததியினரை ஏற்படுத்துவதில்லை. குரங்குகளும் பன்றிகளும் அதற்கு முன்பே இருந்தன" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "சென்றடையும் காலடிகளுக்காகவும்' என்று காணப்படுகிறது. சுலைமான் பின் மஅபத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அதற்குரிய நேரத்திற்கு முன்பே, அதாவது அது நிகழ்வதற்கு முன்பே என்று சிலர் அறிவித்துள்ளனர்.

## பாடம் : 8 வலிமையை உருவாக்கிக்கொள்ளும்படியும், தளர்ச்சியைக் கைவிடும்படியும், இறைவனிடம் உதவி தேடும்படியும்,விதியை இறைவனிடமே ஒப்படைத்து விடும்படியும் வந்துள்ள கட்டளை.

5178 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பலமான இறைநம்பிக்கையாளர், பலவீனமான இறைநம்பிக்கையாளரைவிடச் சிறந்தவரும் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானவரும் ஆவார். ஆயினும், அனைவரிடமும் நன்மை உள்ளது.
உனக்குப் பயனளிப்பதையே நீ ஆசைப்படு. இறைவனிடம் உதவி தேடு. நீ தளர்ந்துவிடாதே. உனக்கு ஏதேனும் துன்பம் ஏற்படும்போது, "நான் (இப்படிச்) செய்திருந்தால் அப்படி அப்படி ஆயிருக்குமே!" என்று (அங்கலாய்த்துக்) கூறாதே.
மாறாக, "அல்லாஹ்வின் விதிப்படி நடந்துவிட்டது. அவன் நாடியதைச் செய்துவிட்டான்" என்று சொல். ஏனெனில், ("இப்படிச் செய்திருந்தால் நன்றாயிருந்திருக்குமே' என்பதைச் சுட்டும்) "லவ்' எனும் (வியங்கோள் இடைச்)சொல்லானது ஷைத்தானின் செயலுக்கே வழி வகுக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 47 - கல்வி

**பாடம் : 1 குர்ஆனில் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களுக்கு இடமளிக்கும் வசனங்களைப் பின்தொடர்வது தடை செய்யப்பட்டதாகும் என்பதும், அவ்வாறு பின்தொடர்பவர்கள் குறித்து வந்துள்ள எச்சரிக்கையும், குர்ஆனில் கருத்து முரண்பாடு கொள்வதற்கு வந்துள்ள தடையும்.**

5179 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நபியே!) அவனே உமக்கு இவ்வேதத்தை அருளினான். அதில் (பொருள்) உறுதி செய்யப்பட்ட வசனங்களும் உள்ளன. அவைதான் இவ்வேதத்தின் அடிப்படையாகும். பல பொருள்களுக்கு இடமளிக்கும் வேறுசில வசனங்களும் (அதில்) உள்ளன. யாருடைய உள்ளத்தில் கோளாறு உள்ளதோ அவர்கள், வேதத்தில் பல பொருள்களுக்கு இடமளிப்பவற்றையே பின்தொடர்வர். குழப்பம் செய்ய விரும்பியும், அவற்றுக்கு (சுயமாக) விளக்கம் அளிக்க விரும்பியுமே (அவர்கள் அவ்வாறு செய்கிறார்கள்).
ஆனால், அவற்றின் (மெய்ப்)பொருளை அல்லாஹ்வையன்றி வேறு யாரும் அறியார். கல்வியில் தேர்ந்தவர்கள், நாங்கள் அவற்றை நம்புகிறோம்; (அவை) அனைத்தும் எங்கள் இறைவனிடமிருந்து வந்தவையே" என்று கூறுவர். அறிவுடையோர் தவிர (வேறு யாரும் இதை) உணர்வதில்லை" (3:7) எனும் இறை வசனத்தை ஓதிவிட்டு, "பல பொருள்களுக்கு இடமளிக்கும் வசனங்களைப் பின்தொடர்வோரை நீங்கள் கண்டால், அவர்கள்தான் (இந்த வசனத்தில்) அல்லாஹ் குறிப்பிட்டுள்ள ஆட்கள் (என்பதை அறிந்து),அவர்களிடம் எச்சரிக்கையாயிருங்கள்" என்று சொன்னார்கள்.

5180 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் காலையில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது இரண்டுபேர் குர்ஆனின் ஒரு வசனம் தொடர்பாகக் கருத்து முரண்பாடு கொண்டு சர்ச்சை செய்து கொள்ளும் சப்தத்தைக் கேட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது முகத்தில் கோபம் தென்பட எங்களிடம் வெளியே வந்து, "உங்களுக்கு முன்னிருந்தோர், வேதத்தில் கருத்து முரண்பாடு கொண்டதால்தான் அழிந்துபோயினர்" என்று சொன்னார்கள்.
இதை அப்துல்லாஹ் பின் ரபாஹ் அல் அன்சாரீ (ரலி) அவர்கள் தமக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டதாக அறிவிப்பாளர் அபூ இம்ரான் அல்ஜவ்னீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

5181 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களின் உள்ளங்கள் ஒன்றுபட்டிருக்கும் வரை குர்ஆனை ஓதுங்கள். (அதன் கருத்தை அறிவதில்) முரண்பாடு தோன்றினால் (அந்த இடத்தைவிட்டு) எழுந்துவிடுங்கள்.
இதை ஜுன்தப் பின் அப்தில்லாஹ் அல்பஜலீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5182 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களின் உள்ளங்கள் ஒன்றுபட்டிருக்கும்வரை குர்ஆனை ஓதுங்கள். முரண்பாடு தோன்றினால் எழுந்துவிடுங்கள்.- இதை ஜுன்தப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அபூஇம்ரான் அல்ஜவ்னீ (ரஹ்) அவர்கள், நாங்கள் கூஃபாவில் இளைஞர்களாக இருந்த போது எங்களிடம் ஜுன்தப் (ரலி) அவர்கள், மேற்கண்டவாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகச் சொன்னார்கள்" என்று காணப்படுகிறது.

## பாடம் : 2 கடுமையாகச் சச்சரவு செய்பவன்.

5183 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மனிதர்களிலேயே அல்லாஹ்விடம் மிகவும் கோபத்துக்குரியவன், (உண்மையை மறுத்துப் பொய்மையை நிலைநாட்ட) கடுமையாகச் சச்சரவு செய்பவன் ஆவான்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 3 யூதர்கள் மற்றும் கிறித்தவர்களின் வழிமுறைகளைப் பின்பற்றல்.

5184 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
"உங்களுக்கு முன்னிருந்தவர்களின் வழிமுறைகளை நீங்கள் சாணுக்குச் சாண், முழத்துக்கு முழம் பின்பற்றுவீர்கள். எந்த அளவுக்கென்றால், அவர்கள் ஓர் உடும்பின் பொந்துக்குள் நுழைந்தால் கூட நீங்கள் அவர்களைப் பின்பற்றி நுழைவீர்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! ("நாங்கள் பின்பற்றக்கூடியவர்கள்' என்று) யூதர்களையும் கிறித்தவர்களையுமா (நீங்கள் குறிப்பிடுகிறீர்கள்)?" என்று கேட்டோம். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வேறு யாரை?" என்று (திருப்பிக்) கேட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 4 எல்லை மீறுபவர்கள் அழிந்தனர்.

5185 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "எல்லை மீறுபவர்கள் அழிந்தனர்" என்று மூன்று முறை கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 5 இறுதிக் காலத்தில் கல்வி அகற்றப்படுவதும் கைப்பற்றப்படுவதும் அறியாமையும் குழப்பங்களும் வெளிப்படுவதும்.**

5186 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கல்வி அகற்றப்படுவதும் அறியாமை நிலைத்துவிடுவதும் மது (அதிகமாக) அருந்தப் படுவதும் விபசாரம் பகிரங்கமாக நடைபெறுவதும் (யுக)முடிவு நாளின் அடையாளங்களில் உள்ளவையாகும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5187 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் கேட்ட ஒரு நபிமொழியை உங்களுக்கு அறிவிக்கட்டுமா? எனக்குப் பின்னர் வேறெவரும் அவர்களிடமிருந்து அதைக் கேட்டு உங்களுக்கு அறிவிக்கமுடியாது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: கல்வி அகற்றப்படுவதும் அறியாமை வெளிப்படுவதும் விபசாரம் பரவலாக நடைபெறுவதும் மது (அதிகமாக) அருந்தப்படுவதும் (குடும்பத்தில்) ஐம்பது பெண்களுக்கு ஒரே ஆண் நிர்வாகியாக இருக்கும் அளவுக்கு ஆண்கள் (எண்ணிக்கை குறைந்து) போய், பெண்கள் அதிகமாக ஆவதும் யுகமுடிவு நாளின் அடையாளங்களில் உள்ளவையாகும்.
இதை கத்தாதா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் பிஷ்ர் மற்றும் அப்தா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில் "எனக்குப் பின்னர் வேறெவரும் உங்களுக்கு அறிவிக்காத நபிமொழி ஒன்றை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறக்கேட்டுள்ளேன்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5188 அபூவாயில் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி), அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) ஆகியோருடன் அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள் இருவரும், "மறுமை நாளுக்கு முன் ஒரு காலகட்டம் வரும். அப்போது கல்வி அகற்றப்பட்டுவிடும்; அறியாமை நிலவும்; 'ஹர்ஜ்' பெருகிவிடும். 'ஹர்ஜ்' என்பது கொலையாகும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்கள்.– இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இரு அறிவிப்புகளில் "நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி), அபூமூசா (ரலி) ஆகியோருடன் அமர்ந்திருந்தேன். அவர்கள் இருவரும் உரையாடிக்கொண்டிருந்தனர். அப்போது அவர்கள் இருவரும் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று கூறினர்" என்று

அபூவாயில் (ஷகீக் பின் சலமா-ரஹ்) அவர்கள் கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்கள் வழியாக மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூவாயில் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது: நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி), அபூ மூசா (ரலி) ஆகியோருடன் அமர்ந்திருந்தேன். அவர்கள் இருவரும் உரையாடிக்கொண்டிருந்தனர். அப்போது அபூமூசா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே அறிவித்தார்கள்.

5189 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இறுதிக் காலத்தில்) காலம் சுருங்கிவிடும்; கல்வி கைப்பற்றப்பட்டுவிடும்; குழப்பங்கள் வெளிப்படும்; (பேராசையின் விளைவாக மக்களின் மனங்களில்) கருமித்தனம் உருவாக்கப்படும்; "ஹர்ஜ்' பெருகிவிடும்" என்று சொன்னார்கள்.
"மக்கள், "ஹர்ஜ்' என்றால் என்ன?" என்று கேட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கொலை' என்று விடையளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "காலம் சுருங்கிவிடும்; கல்வி கைப்பற்றப்பட்டுவிடும்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5190 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "காலம் சுருங்கிவிடும்; கல்வி குறைந்துவிடும்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது, மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே தொடருகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் எட்டு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் "கருமித்தனம் உருவாக்கப்படும்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

5191 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், மக்களி(ன் மனங்களி)லிருந்து கல்வியை ஒரேயடியாகப் பறித்துக்கொள்ள மாட்டான். மாறாக,கல்விமான்களைக் கைப்பற்றிக் கொள்வதன் மூலம் கல்வியைக் கைப்பற்றுகிறான். இறுதியில் ஒரு கல்வியாளரைக்கூட அவன் விட்டுவைக்காதபோது, மக்கள் அறிவீனர்களையே தலைவர்களாக ஆக்கிக்கொள்வார்கள். அவர்களிடம் கேள்வி கேட்கப்படும். அறிவில்லாமலேயே அவர்கள் தீர்ப்பு வழங்குவார்கள். (இதன் மூலம்) தாமும் வழிதவறி, பிறரையும் வழிதவறச் செய்வார்கள்.
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பதிமூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் உமர் பின் அலீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "பிறகு ஓர் ஆண்டுக்குப் பின் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களை நான் சந்தித்தபோது, அவர்களிடம் அந்த ஹதீஸ் குறித்துக் கேட்டேன். அப்போதும் அவர்கள் முன்பு போன்றே (எந்த மாற்றமுமின்றி) அந்த ஹதீஸை அறிவித்தார்கள்" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5192 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் (என் சிறிய தாயார்) ஆயிஷா (ரலி) அவர்கள், "என் சகோதரி (அஸ்மாவின்) மகனே! (நபித்தோழர்) அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் நம்மைக் கடந்து ஹஜ்ஜுக்குச் செல்லவிருக்கிறார்கள் என எனக்குச் செய்தி வந்துள்ளது. எனவே, அவரைச் சந்தித்து அவரிடம் (மார்க்க விளக்கங்களைக்) கே(ட்டுத் தெரிந்துகொ)ள். ஏனெனில், அவர் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அதிகமான கல்வியறிவைப் பெற்றுள்ளார்"என்று கூறினார்கள். ஆகவே, நான் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களைச் சந்தித்து, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அவர் கூறி வந்த பல்வேறு செய்திகள் குறித்துக் கேட்டேன். அவற்றில் பின்வரும் செய்தியும் ஒன்றாகும்.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ் மனிதர்களி(ன் மனங்களி)லிருந்து ஒரேயடியாகக் கல்வியைப் பறித்துக்கொள்ளமாட்டான். மாறாக, கல்விமான்களை அவர்களது கல்வியுடன் கைப்பற்றிக்கொள்வான். பின்னர் மக்களிடையே அறிவீனர்களான தலைவர்களையே அல்லாஹ் விட்டுவைப்பான். அவர்கள் அறிவின்றியே மக்களுக்குத் தீர்ப்பு வழங்குவார்கள். (இதன்மூலம்) தாமும் வழிதவறி, பிறரையும் வழிதவறச் செய்வார்கள்.
பிறகு நான் இந்த ஹதீஸை ஆயிஷா (ரலி) அவர்களிடம் தெரிவித்தேன். அதை ஆயிஷா (ரலி) அவர்கள் பாரதூரமாகக் கருதி அதை மறுத்தார்கள். "இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதைத் தாம் கேட்டதாக அப்துல்லாஹ் பின் அம்ர் உன்னிடம் சொன்னாரா?" என்று கேட்டார்கள்.
அடுத்த ஆண்டு ஆனபோதும் என்னிடம் ஆயிஷா (ரலி) அவர்கள், "அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் ஹஜ்ஜுக்கு வந்துள்ளார்கள். அவரைச் சந்தித்துப் பேச்சுக் கொடுத்து முன்பு உன்னிடம் அவர் சொன்ன கல்வி தொடர்பான அந்த ஹதீஸைப் பற்றி அவரிடம் கேள்" என்றார்கள். அவ்வாறே நான் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களைச் சந்தித்து அவர்களிடம் கேட்டேன். முதல் முறை என்னிடம் அறிவித்ததைப் போன்றே (எந்த மாற்றமுமின்றி அந்த ஆண்டிலும்) என்னிடம் அறிவித்தார்கள்.
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் அதைத் தெரிவித்தபோது அவர்கள், "அவர் உண்மையே கூறியிருக்கிறார் என்று நான் கருதுகிறேன்; சிறிதும் கூட்டவோ குறைக்கவோ செய்யவில்லை என்றே நான் கருதுகிறேன்"என்றார்கள்.

**பாடம் : 6 ஒருவர் (மார்க்கத்தில்) நல்ல அல்லது கெட்ட நடைமுறையை உருவாக்குவதும், நல்வழி அல்லது தீய வழிக்கு (மக்களை) அழைப்பதும்.**

5193 ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கம்பளியாடை அணிந்த கிராமவாசிகளில் சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அவர்களது வறியநிலையை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கண்டார்கள். அவர்களுக்குத் தேவை ஏற்பட்டிருந்தது. ஆகவே, (அவர்களுக்குத்) தானதர்மம் செய்யும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களைத் தூண்டினார்கள். மக்கள் (தர்மம் செய்வதில்) தயக்கம் காட்டினர். அ(தன் அடையாளமான)து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகத்தில் தென்பட்டது.
பிறகு அன்சாரிகளில் ஒருவர் ஒரு பை நிறைய வெள்ளியுடன் வந்தார். பிறகு மற்றொருவர் (தர்மத்தைக்கொண்டு) வந்தார். பிறகு ஒவ்வொருவராக (தம்மிடமிருந்த பொருள்களுடன்) வந்தனர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது முகத்தில் மகிழ்ச்சி தெரிந்தது.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யார் இஸ்லாத்தில் (அதன் அடிப்படைக்கு முரண்படாத வகையில்) ஓர் அழகிய நடைமுறையை உருவாக்கி, அவருக்குப்பின் அந்த நடைமுறை செயல்படுத்தப்படுகிறதோ அதன்படி செயல்படுபவர்களின் நன்மை போன்றது அ(ந்த நடைமுறையை உருவாக்கிய)வருக்கு உண்டு. அதற்காக அவர்களது நன்மையில் எதுவும் குறைந்துவிடாது.
யார் இஸ்லாத்தில் (அதன் அடிப்படைக்கு எதிரான) ஒரு தீயநடைமுறையை உருவாக்கி விட, அவருக்குப் பிறகும் அந்த நடைமுறை செயல்படுத்தப்படுகிறதோ அவருக்குப்பின் அதன்படி செயல்படுகிறவர்களின் பாவம் போன்றது அவருக்கு உண்டு. அ(தன்படி செயல்பட்ட)வர்களின் பாவத்திலிருந்து எதுவும் குறையாது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜரீர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உரையாற்றினார்கள். அப்போது தானதர்மம் செய்யும்படி (மக்களைத்) தூண்டினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "ஓர் அடியார் நல்ல நடைமுறையொன்றை உருவாக்கி அவருக்குப்பின் அது செயல் படுத்தப்பட்டால்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் ஜரீர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5194 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மக்களை) நல்வழிக்கு அழைத்தவருக்கு, அவரைப் பின்தொடர்ந்தவர்களின் நன்மைகளைப் போன்றது உண்டு. அது அ(வ்வாறு பின்தொடர்ந்த)வர்களின் நன்மையில் எதையும்

குறைத்துவிடாது. தவறான வழிக்கு மக்களை அழைத்தவருக்கு, அவரைப் பின்தொடர்ந்தவர்களுக்குரிய பாவங்களைப் போன்றது உண்டு. அது அவர்களது பாவத்தில் எதையும் குறைத்துவிடாது.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 48 - பிரார்த்தனைகள்

## பாடம் : 1 அல்லாஹ்வை நினைவுகூருமாறு வந்துள்ள தூண்டல்.

5195 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் கூறுகின்றான்: என்னைக் குறித்து என் அடியான் எப்படி நினைக்கிறானோ அப்படியே நான் அவனிடம் நடந்துகொள்வேன். அவன் என்னை நினைவுகூரும்போது அவனுடன் நான் இருப்பேன்.
அவன் தனது உள்ளத்தில் என்னை நினைவுகூர்ந்தால், நானும் எனது உள்ளத்தில் அவனை நினைவுகூருவேன். என்னை ஓர் அவையோர் மத்தியில் அவன் நினைவுகூர்ந்தால், அவர்களைவிடச் சிறந்த ஓர் அவையோரிடம் அவனை நான் நினைவுகூருவேன். அவன் என்னை ஒரு சாண் அளவு நெருங்கினால், நான் ஒரு முழம் அளவு அவனை நெருங்குவேன். அவன் ஒரு முழம் அளவு என்னை நெருங்கினால், (வலமாகவும் இடமாகவும் விரிந்த) இரு கைகளின் நீட்டளவு அவனை நான் நெருங்குவேன். என்னை நோக்கி அவன் நடந்துவந்தால், அவனை நோக்கி நான் ஓடிச்செல்வேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அவன் ஒரு முழம் அளவு என்னை நெருங்கினால், (வலம் இடமாக விரிந்த) இரு கைகளின் நீட்டளவு அவனை நான் நெருங்குவேன்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

5196 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் கூறினான்: என் அடியான் ஒரு சாண் அளவு என்னை முன்னோக்கி வந்தால் ஒரு முழம் அளவு அவனை நான் முன்னோக்கிச் செல்வேன். ஒரு முழம் அளவு அவன் என்னை முன்னோக்கி வந்தால், (வலம் இடமாக விரிந்த) இரு கை நீட்டளவு அவனை நான் முன்னோக்கிச் செல்வேன். இரு கை நீட்டளவு அவன் என்னை முன்னோக்கி வந்தால், அதைவிட விரைவாக (நெருங்கி) அவனிடம் நான் செல்வேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5197 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்கா செல்லும் சாலையில் பயணம் மேற்கொண்ட போது "ஜும்தான்" எனப்படும் மலையொன்றைக் கடந்து சென்றார்கள். அப்போது, "செல்லுங்கள்: இது "ஜும்தான்' மலை ஆகும். தனித்துவிட்டவர்கள் வெற்றி பெற்றனர்" என்று சொன்னார்கள்.
மக்கள், "தனித்துவிட்டவர்கள் என்போர் யார், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வை அதிகமாக நினைவுகூரும் ஆண்களும் நினைவுகூரும் பெண்களும் ஆவர்" என்று பதிலளித்தார்கள்.

## பாடம் : 2 அல்லாஹ்வின் திருநாமங்களும் அவற்றை மனனமிட்டவரின் சிறப்பும்.

5198 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வுக்குத் தொண்ணூற்று ஒன்பது பெயர்கள் உள்ளன. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் சொர்க்கம் செல்வார். மேலும், அல்லாஹ் ஒற்றையானவன். ஒற்றைப்படையையே அவன் விரும்புகிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீஉமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("அவற்றை மனனமிட்டவர்' என்பதைக் குறிக்க "மன் ஹஃபிழஹா' என்பதற்குப் பகரமாக) "மன் அஹ்ஸாஹா' என இடம்பெற்றுள்ளது.

5199 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வுக்குத் தொண்ணூற்று ஒன்பது (நூற்றுக்கு ஒன்று குறைவான) பெயர்கள் உள்ளன. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் சொர்க்கம் நுழைவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ் ஒற்றையானவன். ஒற்றைப்படையையே அவன் விரும்புகிறான்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 3 இறைவனிடம் பிரார்த்திக்கும்போது வலியுறுத்திக் கேட்க வேண்டும். "நீ நினைத்தால் வழங்குவாயாக!' என்று கேட்கலாகாது.

5200 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் பிரார்த்தித்தால் பிரார்த்தனையில் (இறைவனிடம்) வலியுறுத்திக் கேளுங்கள். "இறைவா! நீ நினைத்தால் எனக்கு வழங்குவாயாக!" என்று சொல்ல வேண்டாம். (வலியுறுத்திக் கேட்பது இறைவனை நிர்பந்திப்பதாகாது.) ஏனெனில்,இறைவனை நிர்பந்திப்பவர் யாருமில்லை.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5201 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் பிரார்த்தித்தால், "இறைவா! நீ நினைத்தால் எனக்கு மன்னிப்பு வழங்குவாயாக!" என்று கேட்க வேண்டாம். மாறாக, (இறைவனிடம்) வலியுறுத்திக் கேளுங்கள். பெரிதாக ஆசைப்படுங்கள். ஏனெனில், அவன் கொடுக்கின்ற எதுவும் அவனுக்குப் பெரிதன்று.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5202 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யாரும் பிரார்த்திக்கும்போது "இறைவா! நீ நினைத்தால் எனக்கு மன்னிப்பு வழங்குவாயாக! இறைவா! நீ நினைத்தால் எனக்குக் கருணை புரிவாயாக!" என்று கேட்க வேண்டாம். (மாறாக) பிரார்த்திக்கும்போது (இறைவனிடம்) வலியுறுத்திக் கேளுங்கள். ஏனெனில், இறைவன் தான் நாடியதைச் செய்து முடிப்பவன். அவனை நிர்பந்திப்பவர் யாருமில்லை.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 4 ஒருவர் தமக்கு நேர்ந்த துன்பத்தின் காரணத்தால் மரணத்தை விரும்புவது வெறுக்கத்தக்கதாகும்.**

5203 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யாரும் தமக்கு நேர்ந்துவிட்ட ஒரு துன்பத்தின் காரணத்தால் மரணத்தை விரும்ப வேண்டாம். அவ்வாறு மரணத்தை விரும்பித் தான் ஆகவேண்டும் என்றிருந்தால், "இறைவா! (நான்) உயிர் வாழ்வது எனக்கு நன்மையாக இருப்பின், என்னை உயிர் வாழச் செய்வாயாக! நான் இறந்துவிடுவதே எனக்கு நன்மையாக இருப்பின், எனக்கு இறப்பைத் தருவாயாக!" என்று கேட்கட்டும்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில், "தம்மைத் தாக்கிவிட்ட துன்பத்தின் காரணத்தால்' என்று காணப்படுகிறது.

5204 நள்ர் பின் அனஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) அனஸ் (ரலி) அவர்கள், "உங்களில் யாரும் மரணத்தை விரும்பவேண்டாம்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியிராவிட்டால், இறப்பை நான் விரும்பியிருப்பேன்" என்று கூறினார்கள்.
நள்ர் பின் அனஸ் (ரஹ்) அவர்கள் இதை அறிவித்தபோது, (அவர்களுடைய தந்தை) அனஸ் (ரலி) அவர்கள் உயிரோடு இருந்தார்கள்.

5205 கைஸ் பின் அபீஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் கப்பாப் பின் அல்அரத் (ரலி) அவர்களிடம் (அவர்களை உடல் நலம் விசாரிக்கச்) சென்றோம். அவர்கள் (கடும் வயிற்றுவலிக்குச் சிகிச்சை பெறுவதற்காக) தமது வயிற்றில் ஏழுமுறை சூடு போட்டிருந்தார்கள். அப்போது அவர்கள் "மரணத்தை வேண்டிப் பிரார்த்தனை செய்ய வேண்டாமென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தடை விதித்திராவிட்டால், மரணத்தை வேண்டி நான் பிரார்த்தித்திருப்பேன்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் கைஸ் பின் அபீஹாஸிம் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் ஏழு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5206 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாரும் மரணத்தை விரும்ப வேண்டாம். மரணம் வருவதற்கு முன்பே அதை வேண்டிப் பிரார்த்திக்க வேண்டாம். (ஏனெனில்,) உங்களில் ஒருவர் இறந்துவிட்டால்,அவரது (நற்)செயல் நின்றுவிடுகிறது. இறைநம்பிக்கையாளருக்கு அவரது ஆயுள் நன்மையையே அதிகமாக்கும்.

**பாடம் : 5 யார் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புகிறாரோ அவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். யார் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுக்கிறாரோ அவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்.**

5207 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புகிறாரோ அவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். யார் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுக்கிறாரோ அவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்.
இதை உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5208 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புகிறாரோ அவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். யார் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுக்கிறாரோ அவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்" என்று சொன்னார்கள். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! மரணத்தை வெறுப்பதையா (நீங்கள் சொல்கிறீர்கள்)? அவ்வாறாயின், (மனிதர்களாகிய) நாங்கள் அனைவருமே மரணத்தை வெறுக்கத்தானே செய்வோம்?" என்று கேட்டேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அல்லாஹ்வைச் சந்திப்பது என்பதற்குப் பொருள்) அதுவல்ல. மாறாக, இறை நம்பிக்கையாளருக்கு, (மரண வேளையில்) இறைவன் கருணை புரியவிருப்பதாகவும் அவரைப் பற்றி அல்லாஹ் திருப்தி அடைந்திருப்பதாகவும் அவருக்குச் சொர்க்கத்தை வழங்கவிருப்பதாகவும் நற்செய்தி கூறப்படும். அப்போது அவர் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புவார், அல்லாஹ்வும் அவரைச் சந்திக்க விரும்புவான். இறைமறுப்பாளருக்கு, (மரணவேளை நெருங்கும்போது) அல்லாஹ் வழங்கவிருக்கும் வேதனை குறித்தும் அவர்மீது அல்லாஹ் கோபம் கொண்டிருப்பது குறித்தும் அறிவிக்கப்படும். அப்போது அவர் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுப்பார். அல்லாஹ்வும் அவரைச் சந்திப்பதை வெறுப்பான்" என்று (விளக்கம்) சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5209 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புகிறாரோ அவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். யார் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுக்கிறாரோ அவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான். (ஆனால்,) மரணமோ அல்லாஹ்வைச் சந்திப்பதற்கு முன்பே நிகழ்ந்துவிடுகிறது.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5210 ஷுரைஹ் பின் ஹானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புகிறாரோ அவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். யார் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுக்கிறாரோ அவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்" என்று சொன்னார்கள் என அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.
(இதைக் கேட்ட) நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, "இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! அபூஹுரைரா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக ஒரு ஹதீஸை அறிவித்தார்கள். அவர்கள் கூறியதைப் போன்று இருந்தால் நாங்கள் (அனைவரும்) அழிந்தோம்" என்று சொன்னேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கூற்று யாருக்குப் பொருந்துகிறதோ அவர் (உண்மையில்) அழிந்தவர்தான். அது என்ன (ஹதீஸ்)?" என்று கேட்டார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் 'யார் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புகிறாரோ அவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். யார் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுக்கிறாரோ அவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்' என்று கூறினார்கள். எங்களில் மரணத்தை வெறுக்காதவர் யாருமில்லையே?" என்று சொன்னேன்.
அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறத்தான் செய்தார்கள். ஆனால்,இதன் விளக்கம் நீங்கள் நினைப்பதைப் போன்றில்லை. பார்வை நிலை குத்தி, மூச்சிறைத்து, ரோமக்கால்கள் சிலிர்த்து நின்று, கைவிரல்கள் மடங்கிக் கொள்ளும் (மரண)வேளையில், யார் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புகிறரோ அவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். யார் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுக்கிறாரோ அவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்" (என்பதே அதற்கு விளக்கம்) என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5211 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புகிறாரோ அவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். யார் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுக்கிறாரோ அவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 6 இறைவனை நினைவுகூரல் (திக்ர்), பிரார்த்தனை (துஆ), இறைவனை நெருங்குதல் ஆகியவற்றின் சிறப்பு.**

5212 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் கூறுகின்றான்: என்னைக் குறித்து என் அடியான் எப்படி நினைக்கிறானோ அப்படியே நான் அவனிடம் நடந்து கொள்வேன். அவன் என்னிடம் பிரார்த்திக்கும்போது அவனுடன் நான் இருப்பேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5213 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் கூறினான்:
என் அடியான் என்னிடம் ஒரு சாண் அளவுக்கு நெருங்கினால் நான் அவனிடம் ஒரு முழம் அளவுக்கு நெருங்குகிறேன். அவன் என்னிடம் ஒரு முழம் நெருங்கினால் நான் அவனிடம் (விரிந்த) இரு கைகளின் நீட்டளவுக்கு நெருங்குகிறேன். அவன் என்னிடம் நடந்துவந்தால் நான் அவனிடம் ஓடிச்செல்கிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அவன் என்னிடம் நடந்துவந்தால் நான் அவனிடம் ஓடிச்செல்கிறேன்" எனும் குறிப்பு இல்லை.

5214 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் கூறுகின்றான்: என்னைக் குறித்து என் அடியான் எப்படி நினைக்கிறானோ அப்படியே நான் அவனிடம் நடந்துகொள்கிறேன். அவன் என்னை நினைவுகூரும்போது அவனுடன் நான் இருப்பேன். அவன் தனது உள்ளத்தில் என்னை நினைவு கூர்ந்தால் நானும் எனது உள்ளத்தில் அவனை நினைவுகூருவேன். என்னை ஓர் அவையோரிடையே அவன் நினைவுகூர்ந்தால் அவர்களைவிடச் சிறந்த ஓர் அவையோரிடையே அவனை நான் நினைவுகூருவேன்.
அவன் என்னிடம் ஒரு சாண் அளவுக்கு நெருங்கினால் நான் அவனிடம் ஒரு முழம் நெருங்குவேன். அவன் என்னிடம் ஒரு முழம் அளவுக்கு நெருங்கினால் நான் அவனிடம் (விரிந்த) இரு கைகளின் நீட்டளவுக்கு நெருங்குவேன். அவன் என்னிடம் நடந்துவந்தால் நான் அவனிடம் ஓடிச்செல்கிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5215 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் கூறுகின்றான்: ஒரு நன்மை செய்தவருக்கு அதைப் போன்ற பத்து மடங்கு நற்பலன்கள் உண்டு. அதைவிடக் கூடுதலாகவும் நான்

வழங்குவேன். ஒரு தீமையைச் செய்தவருக்கு அதைப் போன்ற ஒரு தீமையே (குற்றமே) உண்டு. அல்லது (அவரை) நான் மன்னித்துவிடுவேன்.
யார் என்னிடம் ஒரு சாண் அளவுக்கு நெருங்குகிறாரோ நான் அவரிடம் ஒரு முழம் அளவுக்கு நெருங்குகிறேன். யார் என்னிடம் ஒரு முழம் அளவுக்கு நெருங்குகிறாரோ நான் அவரிடம் (விரிந்த) இரு கைகளின் நீட்டளவுக்கு நெருங்குகிறேன். யார் என்னிடம் நடந்து வருகிறாரோ நான் அவரிடம் ஓடிச்செல்கிறேன். ஒருவர் எதையும் எனக்கு இணை வைக்காமால் பூமி நிறைய (சிறு) பாவங்களுடன் என்னிடம் வந்தாலும் அதைப் போன்று (பூமி நிறைய) மன்னிப்புடன் நான் அவரை எதிர்கொள்கிறேன்.
இதை அபூதர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூதர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அதைப் போன்ற பத்து மடங்கு நற்பலன்கள் அவருக்கு உண்டு. அல்லது நான் அதை விடக் கூடுதலாகவும் (அவருக்கு) வழங்குவேன்" என்று (சிறு வித்தியாசத்துடன்) இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 7 இம்மையிலேயே தண்டனையை விரைவாக வழங்கிவிடுமாறு பிரார்த்திப்பது வெறுக்கத்தக்கதாகும்.

5216 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முஸ்லிம்களில் ஒருவரை உடல்நலம் விசாரிப்பதற்காகச் சென்றார்கள். அவர் கோழிக் குஞ்சைப் போன்று நலிந்து பலவீனத்துடன் காணப்பட்டார். அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ ஏதேனும் பிரார்த்தித்து வந்தாயா? அல்லது இறைவனிடம் ஏதேனும் வேண்டிவந்தாயா?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர் "ஆம்; நான், இறைவா! நீ மறுமையில் அளிக்கவிருக்கும் தண்டனையை முன்கூட்டி இவ்வுலகிலேயே எனக்குத் தந்துவிடு என்று பிரார்த்தித்துவந்தேன்" என்று கூறினார்.
அதைக்கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வியப்புடன்) "அல்லாஹ் தூயவன் (சுப்ஹானல்லாஹ்!) "உன்னால் அதைத் தாங்க முடியாது'. அல்லது "உன்னால் அதற்கு இயலாது' என்று கூறிவிட்டு, நீ "இறைவா! இம்மையிலும் எமக்கு நன்மையை வழங்குவாயாக! மறுமையிலும் எமக்கு நன்மையை வழங்குவாயாக! நரக வேதனையிலிருந்து எம்மைக் காப்பாயாக!" என்று பிரார்த்தித்திருக்கக் கூடாதா? என்று கேட்டார்கள்.
பிறகு அவருக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள்; அவருக்கு அல்லாஹ் நிவாரணத்தை வழங்கினான்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நரக வேதனையிலிருந்து எம்மைக் காப்பாயாக!" என்பதுவரையே இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னுள்ள குறிப்புகள் இடம் பெறவில்லை.

5217 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களில் ஒருவரை உடல் நலம் விசாரிப்பதற்காகச் சென்றார்கள். அவர் கோழிக் குஞ்சைப் போன்று மாறிவிட்டிருந்தார். மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும் அதில், "இறைவனின் வேதனையைத் தாங்க உனக்குச் சக்தி இல்லை" என்று கூறியதாகக் காணப்படுகிறது. "பிறகு அவருக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள். அவருக்கு அல்லாஹ் நிவாரணத்தை வழங்கினான்" எனும் குறிப்பு இல்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 8 இறைவனை நினைவுகூரும் அவைகளின் சிறப்பு.

5218 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வளமும் உயர்வும் மிக்க அல்லாஹ்விடம் கூடுதல் வானவர்கள் சிலர் உள்ளனர். அவர்கள் பூமியில் சுற்றிவருகின்றனர். அல்லாஹ்வை நினைவுகூர்ந்து போற்றும் சபைகளைத் தேடி வருகின்றனர். அல்லாஹ்வைப் போற்றும் சபை ஒன்றை அவர்கள் கண்டால், அவர்களுடன் அவ்வானவர்களும் அமர்ந்துகொள்கின்றனர். அவர்களில் சிலர் வேறுசிலரைத் தம் இறக்கைகளால் சூழ்ந்து, தமக்கும் முதல் வானத்துக்கும் இடையே உள்ள பகுதியை நிரப்புகின்றனர். (இறைவனை நினைவுகூரும்) அம்மக்கள் கலைந்து சென்றதும் அ(ந்த வான)வர்கள் வானுலகிற்கு ஏறிச் செல்கின்றனர்.

அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், அவர்களிடம் –அவர்களை நன்கறிந்திருந்தும்– "நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்கிறான். அதற்கு வானவர்கள், "பூமியிலுள்ள உன் அடியார்கள் சிலரிடமிருந்து நாங்கள் வருகிறோம். அவர்கள் உன்னைத் தூய்மையானவன் என்று கூறித் துதிக்கின்றனர்; உன்னைப் பெருமைப்படுத்திக் கொண்டும், உன்னை ஏகன் என்று கூறிக்கொண்டும், உன்னைப் புகழ்ந்து போற்றிக் கொண்டும், உன்னிடத்தில் வேண்டிக்கொண்டும் இருக்கின்றனர்" என்று கூறுகின்றனர்.
அதற்கு இறைவன், "என்னிடம் அவர்கள் என்ன வேண்டுகின்றனர்?" என்று (தனக்குத் தெரியாதது போலக்)கேட்கிறான். வானவர்கள், "அவர்கள் உன்னிடம் சொர்க்கத்தை வேண்டுகின்றனர்"
என்பார்கள். அதற்கு இறைவன், "அவர்கள் என் சொர்க்கத்தைப் பார்த்ததுண்டா?" என்று கேட்பான்.
அதற்கு வானவர்கள், "இல்லை, இறைவா!" என்று பதிலளிப்பார்கள். அதற்கு இறைவன், "அவ்வாறாயின், என் சொர்க்கத்தை அவர்கள் பார்த்திருந்தால் அவர்கள் நிலை எப்படியிருக்கும்?" என்று கூறுவான்.
மேலும், "உன்னிடம் அவர்கள் பாதுகாப்புக் கோருகின்றனர்" என்றும் வானவர்கள் கூறுகின்றனர். அதற்கு இறைவன், "என்னிடம் அவர்கள் எதிலிருந்து (காக்குமாறு) பாதுகாப்புக் கோருகின்றனர்?" என்று கேட்பான். அதற்கு வானவர்கள், "உன் நரகத்திலிருந்து, இறைவா!" என்று பதிலளிப்பார்கள்.

இறைவன், "அவர்கள் எனது நரகத்தைப் பார்த்திருக்கிறார்களா?" என்று கேட்பான். வானவர்கள், "இல்லை" என்பார்கள். அதற்கு இறைவன், "அவ்வாறாயின் என் நரகத்தை அவர்கள் பார்த்திருந்தால் அவர்கள் நிலை எப்படியிருக்கும்?" என்று கூறுவான்.
மேலும், "அவர்கள் உன்னிடம் பாவமன்னிப்புக் கோருகிறார்கள்" என்றும் வானவர்கள் கூறுவார்கள். அதற்கு இறைவன், "அவர்களுடைய பாவங்களை நான் மன்னித்துவிட்டேன். அவர்கள் வேண்டியதையும் அவர்களுக்கு நான் வழங்கிவிட்டேன். அவர்கள் எதிலிருந்து பாதுகாப்புக் கோரினார்களோ அதிலிருந்து அவர்களை நான் காப்பாற்றிவிட்டேன்" என்று கூறுவான்.
அப்போது வானவர்கள், "இறைவா! (அந்த) சபையோரிடையே அதிகப் பாவங்கள் புரியும் இன்ன மனிதன் இருந்தான். அவன் அவ்வழியே கடந்து சென்றபோது அவர்களுடன் அமர்ந்துகொண்டான்" என்று கூறுகின்றனர்.
அதற்கு இறைவன், "அவனையும் நான் மன்னித்துவிட்டேன். அவர்கள் ஒரு கூட்டத்தார் ஆவர். அவர்களுடன் அமர்ந்திருந்தவர் அவர்களால் (பாக்கியம் பெறுவாரே தவிர) பாக்கியமற்றவராக ஆகமாட்டார்" என்று கூறுவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 9 "இறைவா! இம்மையிலும் எங்களுக்கு நன்மையை வழங்குவாயாக! மறுமையிலும் (எங்களுக்கு) நன்மையை வழங்குவாயாக! நரக வேதனையிலிருந்து எங்களைக் காப்பாயாக!" என்று பிரார்த்திப்பதன் சிறப்பு.**

5219 அப்துல் அஸீஸ் பின் ஸுஹைப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
கத்தாதா (ரஹ்) அவர்கள் அனஸ் (ரலி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்கள் அதிகமாகப் பிரார்த்தித்துவந்த பிரார்த்தனை எது?" என்று கேட்டார்கள். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் அதிகமாகப் பிரார்த்தித்துவந்த பிரார்த்தனை, "அல்லாஹும்ம! ஆத்தினா ஃபித் துன்யா ஹசனத்தன் வஃபில் ஆகிரத்தி ஹசனத்தன் வகினா அதாபந் நார்" (இறைவா! இம்மையிலும் எங்களுக்கு நன்மையை வழங்குவாயாக! மறுமையிலும் (எங்களுக்கு) நன்மையை வழங்குவாயாக! நரக வேதனையிலிருந்து எங்களைக் காப்பாயாக!") என்பதாகும்" என்று விடையளித்தார்கள்.
அனஸ் (ரலி) அவர்கள் ஏதேனும் பிரார்த்தனை செய்ய நாடினால் இந்தப் பிரார்த்தனையையே செய்வார்கள். வேறு பிரார்த்தனைகள் செய்யும்போதும் இதைச் சேர்த்துக் கொள்வார்கள்.

5220 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ரப்பனா! ஆத்தினா ஃபித்துன்யா ஹசனத்தன் வஃபில் ஆகிரத்தி ஹசனத்தன் வகினா அதாபந் நார்" (எங்கள் இறைவா! இம்மையிலும் எங்களுக்கு நன்மையை வழங்குவாயாக! மறுமையிலும் நன்மையை வழங்குவாயாக! நரக வேதனையிலிருந்து எங்களைக் காப்பாயாக!) என்று பிரார்த்தித்துவந்தார்கள்.

**பாடம் : 10 லாயிலாஹ இல்லல்லாஹ் ("அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை") என்று உறுதிமொழிவது, சுப்ஹானல்லாஹ் ("அல்லாஹ் தூய்மையானவன்") என்று துதிப்பது மற்றும் பிரார்த்திப்பது ஆகியவற்றின் சிறப்பு.**

5221 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு, லா ஷரீக்க லஹு, லஹுல் முல்கு, வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர்" (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை. அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. அவனுக்கே புகழ் அனைத்தும் உரியன. அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன்) என்று யார் ஒரு நாளில் நூறு முறை சொல்கிறாரோ அவருக்கு, அது பத்து அடிமைகளை விடுதலை செய்ததற்குச் சமமாகும்.
மேலும், அவருக்கு நூறு நன்மைகள் எழுதப்படும். அவரிடமிருந்து (அவர் செய்த) நூறு தவறுகள் அழிக்கப்படும். அந்த நாளின் மாலை நேரம் வரும்வரை ஷைத்தானிலிருந்து (பாதுகாக்கும்) அரணாகவும் அது அவருக்கு இருக்கும். அவர் புரிந்த இந்த நற்செயலை விடச் சிறந்ததை வேறு யாரும் செய்திட முடியாது; ஒருவர் இதைவிட அதிகமான (தடவைகள் இதை ஓதினால், அல்லது மிக முக்கியமான ஒரு) நற்செயல் புரிந்தால் தவிர.
"சுப்ஹானல்லாஹி வ பிஹம்திஹி" (அல்லாஹ் தூயவன் என்று போற்றித் துதிக்கிறேன்) என்று யார் ஒரு நாளில் நூறு முறை சொல்வாரோ அவருடைய தவறுகள் அழிக்கப் படுகின்றன; அவை கடலின் நுரை போன்று (அதிகமாக) இருந்தாலும் சரியே!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5222 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் காலையிலும் மாலையிலும் நூறு முறை "சுப்ஹானல்லாஹி வ பிஹம்திஹி" (அல்லாஹ் தூயவன் எனப் போற்றிப் புகழ்கிறேன்) என்று சொல்கிறாரோ அவர் கொண்டுவந்த (நல்லறத்)தைவிடச் சிறந்ததை வேறெவரும் மறுமைநாளில் கொண்டு வருவதில்லை; அவர் சொன்ன அளவுக்குச் சொன்னவரையும் அல்லது அதைவிடக் கூடுதலாகச் சொன்னவரையும் தவிர.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5223 அம்ர் பின் மைமூன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்க லஹு, லஹுல் முல்க்கு வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர்" (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை துணை கிடையாது. அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. அவனுக்கே புகழ் அனைத்தும் உரியன. அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன்) என்று யார் பத்து முறை ஓதுகிறாரோ அவர், இஸ்மாயீல் (அலை) அவர்களின் சந்ததியினரில் நால்வரை (அடிமைத்தளையிலிருந்து) விடுதலை செய்தவரைப் போன்றவர் ஆவார்.

(முஸ்லிம் பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான் கூறுகிறேன்:)
அம்ர் பின் மைமூன் (ரஹ்) அவர்களின் இந்த (மவ்கூஃப்) ஹதீஸை எனக்கு அறிவித்த சுலைமான் பின் உபைதில்லாஹ் (ரஹ்) அவர்கள் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இதை அறிவித்துள்ளார்கள். அதில் அறிவிப்பாளர் ஷஅபீ (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறியதாக இடம்பெற்றுள்ளது:
நான் எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த ரபீஉ பின் குஸைம் (ரஹ்) அவர்களிடம், "இதை யாரிடமிருந்து தாங்கள் செவியுற்றீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அம்ர் பின் மைமூன் (ரஹ்) அவர்களிடமிருந்து" என்று பதிலளித்தார்கள். ஆகவே, நான் அம்ர் பின் மைமூன் (ரஹ்) அவர்களிடம் சென்று, "இதை யாரிடமிருந்து தாங்கள் செவியுற்றீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இப்னு அபீலைலா (ரஹ்) அவர்களிடமிருந்து" என்று பதிலளித்தார்கள்.
ஆகவே, நான் இப்னு அபீலைலா (ரஹ்) அவர்களிடம் சென்று, "இதை யாரிடமிருந்து தாங்கள் செவியுற்றீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னதாக அபூஅய்யூப் அல்அன்சாரீ (ரலி) அவர்களிடமிருந்து (நான் செவியுற்றேன்)" என்று சொன்னார்கள். (ஆகவே, இது அம்ர் பின் மைமூன் (ரஹ்) அவர்களின் சொல்லன்று; நபி (ஸல்) அவர்களின் ஹதீஸாகும்.)

5224 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(இறைவனைத் துதிக்கும்) இரண்டு வாக்கியங்கள் நாவுக்கு எளிதானவை; (நன்மை தீமை நிறுக்கப்படும்) தராசில் கனமானவை; அளவற்ற அருளாளனுக்குப் பிரியமானவை ஆகும். (அவை:)
1. சுப்ஹானல்லாஹி வ பிஹம்திஹி (அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து அவனைத் தூயவன் எனத் துதிக்கிறேன்).
2. சுப்ஹானல்லாஹில் அழீம் (கண்ணிய மிக்க அல்லாஹ்வைத் தூயவன் எனத் துதிக்கிறேன்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்குஅறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5225 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"சுப்ஹானல்லாஹி, வல்ஹம்து லில்லாஹி வ லாயிலாஹ இல்லல்லாஹு, வல்லாஹு அக்பர்' (அல்லாஹ் தூயவன்;அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியன. அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை; அல்லாஹ் மிகவும் பெரியவன்) என்று நான் கூறுவதானது, சூரியன் எதன் மீது உதிக்கிறதோ அ(ந்த உலகத்)தைவிட எனக்கு மிகவும் பிரியமானதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5226 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமவாசி ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் சொல்லிக் கொள்ள எனக்கு ஏதேனும் (துதி) வாக்கியத்தைக் கற்றுத்தாருங்கள்" என்று கேட்டார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "லாயிலாஹ இல்லல்லாஹு, வஹ்தஹு, லா ஷரீக்க லஹு,அல்லாஹு அக்பர் கபீரா, வல்ஹம்து லில்லாஹி கஸீரா, சுப்ஹானல்லாஹி ரப்பில் ஆலமீன், லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அஸீஸில் ஹகீம் (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை. அல்லாஹ் மிகவும் பெரியவன். அவனைப் பெரியவன் எனப் பெருமைப்படுத்துகிறேன். அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது என அதிகமாகப் புகழுகிறேன். அனைத்துலகின் அதிபதியான அல்லாஹ் (அனைத்துக் குறைபாடுகளிலிருந்தும்) தூய்மையானவன். மிகைத்தவனும் ஞானமுடைய வனுமான அல்லாஹ்வின் உதவியின்றி யுக்தியுமில்லை; சக்தியுமில்லை.) என்று சொல்வீராக!" என்று கூறினார்கள்.
அதற்கு அந்தக் கிராமவாசி, "இவை என் இறைவனுக்குரியவையாகும். எனக்குரியவை என்ன?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹும் மஃக்ஃபிர்லீ வர்ஹம்னீ வஹ்தினீ வர்ஸுக்னீ" என்று சொல்வீராக! என்றார்கள். (பொருள்: இறைவா! எனக்கு மன்னிப்பு வழங்குவாயாக! எனக்குக் கருணை புரிவாயாக. என்னை நல்வழியில் செலுத்துவாயாக! எனக்கு வாழ்வாதாரம் வழங்குவாயாக!")
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான மூசா அல்ஜுஹனீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: "வ ஆஃபினீ (எனக்கு ஆரோக்கியம் வழங்குவாயாக!) என்ற சொல்லும் இந்த ஹதீஸில் உள்ளதா என என்னால் அறுதியிட்டுச் சொல்ல முடியவில்லை.
இப்னு அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், மூசா அல்ஜுஹனீ அவர்களின் கூற்று இடம்பெறவில்லை.

5227 தாரிக் பின் அஷ்யம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (புதிதாக) இஸ்லாத்தைத் தழுவியவருக்கு "அல்லாஹும் மஃக்ஃபிர் லீ வர்ஹம்னீ, வஹ்தினீ, வர்ஸுக்னீ என்று (கூறுமாறு) கற்பித்து வந்தார்கள். (பொருள்: இறைவா! என்னை மன்னிப்பாயாக; எனக்குக் கருணை புரிவாயாக; என்னை நல்வழியில் செலுத்துவாயாக! எனக்கு வாழ்வாதராம் வழங்குவாயாக!)

5228 தாரிக் பின் அஷ்யம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒருவர் புதிதாக இஸ்லாத்தைத் தழுவினால், அவருக்கு நபி (ஸல்) அவர்கள் தொழுகையைக் கற்றுக்கொடுப்பார்கள். பிறகு "அல்லஹும்மஃக்பிர் லீ வர்ஹம்னீ வஹ்தினீ வ ஆஃபினீ வர்ஸுக்னீ" எனும் இந்த வாக்கியங்களைச் சொல்லிப் பிரார்த்திக்கும்படி கட்டளையிடுவார்கள். (பொருள்: இறைவா! என்னை மன்னிப்பாயாக! எனக்குக் கருணை புரிவாயாக! என்னை நல்வழியில் செலுத்துவாயாக! எனக்கு ஆரோக்கியத்தை வழங்குவாயாக! எனக்கு வாழ்வாதாரத்தை வழங்குவாயாக!)

5229 தாரிக் பின் அஷ்யம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் இறைவனிடம் பிரார்த்திக்கும்போது என்ன சொல்ல வேண்டும்?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்மஃக்ஃபிர்லீ வர்ஹம்னீ வ ஆஃபினீ வர்ஸுக்னீ (இறைவா! என்னை மன்னிப்பாயாக! எனக்குக் கருணை புரிவாயாக! எனக்கு ஆரோக்கியத்தை வழங்குவாயாக! எனக்கு வாழ்வாதாரத்தை அளிப்பாயாக!) என்று சொல்வீராக" என்றார்கள்.
இதைக் கூறியபோது, தமது பெருவிரலைத் தவிர மற்ற விரல்களை ஒவ்வொன்றாக மடக்கிக்கொண்டு, "இவை உம்முடைய இம்மை மறுமை அனைத்தையும் உள்ளடக்கிக் கொள்ளக்கூடியவை" என்று சொன்னார்கள்.

5230 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருகில் இருந்தோம். அப்போது அவர்கள், "உங்களில் ஒருவரால் ஒவ்வொரு நாளும் ஆயிரம் நன்மைகளைச் சம்பாதிக்க முடியாதா?" என்று கேட்டார்கள். அப்போது அங்கு அமர்ந்திருந்தவர்களில் ஒருவர், "எங்களில் ஒருவர் (ஒவ்வொரு நாளும்) ஆயிரம் நன்மைகளை எவ்வாறு சம்பாதிக்க முடியும்?" என்று கேட்டார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் (ஒவ்வொரு நாளும்) நூறு முறை ("சுப்ஹானல்லாஹ்' என்று கூறித்) துதிக்க, அவருக்கு ஆயிரம் நன்மைகள் எழுதப்படுகின்றன. அல்லது அவர் செய்த ஆயிரம் தவறுகள் அவரைவிட்டுத் துடைக்கப்படுகின்றன" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 11 குர்ஆனை ஓதுவதற்கும் இறைவனை நினைவுகூர்ந்து போற்றுவதற்கும் ஒன்றுகூடுவதன் சிறப்பு.

5231 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் இம்மையில் ஓர் இறைநம்பிக்கையாளரின் துன்பங்களில் ஒன்றை அகற்றுகிறாரோ அவருடைய மறுமைத் துன்பங்களில் ஒன்றை அல்லாஹ் அகற்றுகிறான். யார் சிரமப்படுவோருக்கு உதவி செய்கிறாரோ அவருக்கு அல்லாஹ் இம்மையிலும் மறுமையிலும் உதவி செய்கிறான். யார் ஒரு முஸ்லிமின் குறைகளை மறைக்கிறாரோ அவருடைய குறைகளை அல்லாஹ் இம்மையிலும் மறுமையிலும் மறைக்கிறான். அடியான் தன் சகோதரன் ஒருவனுக்கு உதவி செய்துகொண்டிருக்கும்வரை அந்த அடியானுக்கு அல்லாஹ் உதவி செய்துகொண்டிருக்கிறான்.
யார் கல்வியைத் தேடி ஒரு பாதையில் நடக்கிறாரோ அவருக்கு அதன் மூலம் சொர்க்கத்திற்குச் செல்லும் பாதையை அல்லாஹ் எளிதாக்குகிறான். மக்கள் இறையில்லங்களில் ஒன்றில் ஒன்றுகூடி, அல்லாஹ்வின் வேதத்தை ஓதிக்கொண்டும் அதை ஒருவருக்கொருவர் படித்துக்கொடுத்துக் கொண்டும் இருந்தால், அவர்கள்மீது அமைதி இறங்குகிறது. அவர்களை இறையருள் போர்த்திக்கொள்கிறது. அவர்களை வானவர்கள்

சூழ்ந்துகொள்கின்றனர். மேலும் இறைவன், அவர்களைக் குறித்துத் தம்மிடம் இருப்போரிடம் (பெருமையுடன்) நினைவுகூருகிறான்.
அறச் செயல்களில் பின்தங்கிவிட்ட ஒருவரைக் குலச்சிறப்பு முன்னுக்குக் கொண்டு வந்துவிடுவதில்லை.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் அபூஉசாமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், சிரமப்படுவோருக்கு உதவி செய்வது தொடர்பான குறிப்பு இடம்பெறவில்லை.

5232 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்கள் ஓரிடத்தில் அமர்ந்து வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வை நினைவுகூர்ந்து போற்றிக்கொண்டிருக்கும்போது, அவர்களை வானவர்கள் சூழ்ந்துகொள்கின்றனர். அவர்களை இறையருள் போர்த்திக்கொள்கிறது. அவர்கள்மீது அமைதி இறங்குகிறது. அவர்களைக் குறித்து அல்லாஹ் தன்னிடம் இருப்போரிடம் (பெருமையுடன்) நினைவுகூருகிறான்.
இதை அபூஹுரைரா (ரலி), அபூசயீத் அல்குத்ரீ (ரலி) ஆகியோர் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5233 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
பள்ளிவாசலில் வட்டமாக அமர்ந்திருந்த ஒரு குழுவினரிடம் முஆவியா (ரலி) அவர்கள் புறப்பட்டுவந்து, "நீங்கள் இங்கு அமர்ந்திருப்பதற்கு என்ன காரணம்?" என்று கேட்டார்கள். அதற்கு அக்குழுவினர், "அல்லாஹ்வை நினைவுகூர்ந்து போற்றுவதற்காக அமர்ந்துள்ளோம்" என்று கூறினர். அதற்கு முஆவியா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதற்காகத்தான் நீங்கள் அமர்ந்துள்ளீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அக்குழுவினர், "அல்லாஹ்வின்மீது சத்தியமாக! அதற்காகத்தான் நாங்கள் அமர்ந்துள்ளோம்" என்று கூறினர்.
முஆவியா (ரலி) அவர்கள் கூறினார்கள்: உங்கள்மீது சந்தேகப்பட்டு நான் உங்களைச் சத்தியமிட்டுக் கூறச் சொல்லவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் என் அளவுக்கு நெருக்கமாக இருந்தவர்களில் எவரும் என்னைவிடக் குறைவான ஹதீஸ்களை அவர்களிடமிருந்து அறிவிக்கவில்லை. (நானே மிகக் குறைவான ஹதீஸ்களை அறிவித்தவன்.)
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு முறை) வட்டமாக அமர்ந்திருந்த தம் தோழர்களில் சிலரிடம் வந்து, "நீங்கள் (இங்கு) அமர்ந்திருப்பதற்கு என்ன காரணம்?" என்று கேட்டார்கள். அதற்குத் தோழர்கள், "அல்லாஹ் எங்களுக்கு இஸ்லாத்திற்கு நேர்வழி காட்டியதற்காகவும், எங்களுக்கு அருட்கொடைகள் புரிந்ததற்காகவும் அவனை நினைவுகூர்ந்து போற்றுவதற்காக அமர்ந்திருக்கிறோம்" என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதற்காகத் தான் நீங்கள் அமர்ந்துள்ளீர்களா?" என்று கேட்டார்கள்.

அதற்குத் தோழர்கள், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதற்காகத்தான் நாங்கள் அமர்ந்துள்ளோம்" என்று கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அறிந்துகொள்ளுங்கள்! உங்கள்மீது சந்தேகம் கொண்டுச் சத்தியமிட்டு உங்களிடம் நான் கேட்கவில்லை. மாறாக, (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னிடம் வந்து, "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் உங்களைப் பற்றி வானவர்களிடம் பெருமையுடன் பேசிக்கொள்கிறான்" என்று தெரிவித்தார் என்றார்கள்.

பாடம் : 12 பாவமன்னிப்புக் கோருவதும் அதை அதிகமாகச் செய்வதும் விரும்பத்தக்கதாகும்.

5234 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எனது உள்ளத்தின் மீதும் திரையிடப்படுகிறது. நான் ஒவ்வொரு நாளும் நூறு முறை அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருகிறேன்.
இதை அஃகர்ரு பின் யசார் அல்முஸனீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5235 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மக்களே! அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருங்கள். ஏனெனில், நான் ஒவ்வொரு நாளும் அவனிடம் நூறுமுறை பாவமன்னிப்புக் கோருகிறேன்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5236 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சூரியன் மேற்கிலிருந்து உதிப்பதற்கு (யுகமுடிவுக்கு)முன் யார் பாவமன்னிப்புக் கோரித் திருந்திவிடுகிறாரோ அவருடைய பாவமன்னிப்புக் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக்கொள்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 13 மெல்லிய குரலில் இறைவனைத் துதிப்பதே விரும்பத்தக்கதாகும்.

5237 அபூமூசா அப்துல்லாஹ் பின் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் (கைபர்) பயணத்தில் இருந்தோம். அப்போது மக்கள் உரத்த குரலில் "அல்லாஹு அக்பர்" (இறைவன் மிகப்பெரியவன்) என்று (தக்பீர்) கூறலாயினர். அப்போது நபி (ஸல்) அவர்கள், "மக்களே! உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள். மென்மையாக (மெதுவாக)க் கூறுங்கள். (ஏனெனில்), நீங்கள் காது கேட்காதவனையோ இங்கு இல்லாதவனையோ அழைப்பதில்லை. (மாறாகச்) செவியுறுவோனையும் அருகிலிருப்பவனையுமே அழைக்கிறீர்கள். அவன் உங்களுடனேயே இருக்கிறான்" என்று சொன்னார்கள்.

அப்போது நான் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னாலிருந்துகொண்டு, "லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்" (அல்லாஹ்வின் உதவியில்லாமல் யுக்தியுமில்லை; சக்தியுமில்லை) என்று கூறிக் கொண்டிருந்தேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அப்துல்லாஹ் பின் கைஸே! உங்களுக்குச் சொர்க்கத்தின் கருவூலங்களில் ஒரு கருவூலத்தை நான் அறிவித்துத் தரட்டுமா?" என்று கேட்டார்கள். நான், "ஆம் (அறிவித்துத் தாருங்கள்), அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "'லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்' என்று சொல்லுங்கள்"என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5238 அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள் (ஒரு பயணத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு மலைக் கணவாயில் சென்றுகொண்டிருந்தார்கள். அப்போது ஒரு மனிதர் ஒவ்வொரு கணவாயில் ஏறும்போதும் "லாயிலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்' (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை; அல்லாஹ் மிகவும் பெரியவன்) என்று (உரத்த குரலில்) அழைக்கலானார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் காது கேட்காதவனையோ இங்கில்லாதவனையோ அழைக்கவில்லை. (எனவே, மெதுவாக அவனை அழையுங்கள்)" என்று சொன்னார்கள்.
பிறகு "அபூமூசா!' அல்லது "அப்துல்லாஹ் பின் கைஸே' (என்றழைத்து), "சொர்க்கத்தின் கருவூலங்களில் உள்ள ஒரு வார்த்தையை நான் உங்களுக்கு அறிவித்துத் தரட்டுமா?" என்று கேட்டார்கள். நான் "அது என்ன, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "(அந்த வார்த்தை) லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் (என்பதாகும்)" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தின்போது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தோம்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகின்றன.

5239 மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஓர் அறப்போருக்குச் சென்றோம்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. அதில் "நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவன் உங்களுடைய வாகனப் பிராணியின் கழுத்தைவிட உங்களுக்கு மிகவும்

அருகிலிருக்கிறான்" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது. அந்த அறிவிப்பில் "லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்" பற்றிய குறிப்பு இல்லை.

5240 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ""சொர்க்கத்தின் கருவூலங்களில் உள்ள ஒரு வார்த்தையை' அல்லது "சொர்க்கத்தின் கருவூலங்களில் ஒரு கருவூலத்தை' உங்களுக்கு அறிவித்துத் தரட்டுமா?" என்று கேட்டார்கள். நான் "ஆம் (அறிவியுங்கள்)" என்று சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அந்த வார்த்தை) லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் (என்பதாகும்)" என்று சொன்னார்கள்.

5241 அபூபக்ர் அஸ்ஸித்தீக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "தொழுகையில் (அத்தஹிய்யாத் இருப்பில்) நான் பிரார்த்திப்பதற்கு ஒரு பிரார்த்தனையை எனக்குக் கற்றுத்தாருங்கள்" என்று கேட்டேன். அப்போது "அல்லாஹும்ம இன்னீ ழலம்த்து நஃப்சீ ழுல்மன் கபீரன் (அல்லது கஸீரன்) வலா யஃக்ஃபிருத் துனூப இல்லா அன்த்த. ஃபஃக்ஃபிர்லீ மஃக்ஃபிரத்தம் மின் இந்திக்க வர்ஹம்னீ. இன்னக்க அன்த்தல் ஃகஃபூருர் ரஹீம்" என்று கூறுங்கள் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.
(பொருள்: இறைவா! எனக்கு நானே பெருமளவில் (அல்லது "அதிகமாக') அநீதி இழைத்துக் கொண்டேன். உன்னைத் தவிர வேறெவரும் பாவங்களை மன்னிக்க முடியாது. எனவே, உன்னிடமிருந்து எனக்கு மன்னிப்பு வழங்குவாயாக! மேலும், எனக்குக் கருணை புரிவாயாக! நிச்சயமாக நீ பெரிதும் மன்னிப்பவனும் அதிகக் கருணையுடையவனும் ஆவாய்.)
இதை அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூபக்ர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! நான் எனது தொழுகையிலும் எனது இல்லத்திலும் பிரார்த்திக்க ஒரு பிரார்த்தனையைக் கற்றுத்தாருங்கள்' என்று கேட்டேன்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. அவற்றில் "அதிகமாக (கஸீரன்) அநீதி இழைத்துக்கொண்டேன்" என்றே இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 14 குழப்பங்கள் (சோதனைகள்) முதலியவற்றிலிருந்து இறைவனிடம் பாதுகாப்புக் கோரல்.

5242 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு இறைவனிடம் வேண்டிப்) பிரார்த்தித்து வந்தார்கள்: அல்லாஹும்ம! ஃப இன்னீ அஊது பிக்க மின் ஃபித்னத்திந் நாரி, வ அதாபிந் நாரி, வ ஃபித்னத்தில் கப்ரி, வ அதாபில் கப்ரி, வ மின் ஷர்ரி ஃபித்னத்தில் ஃகினா, வ

மின் ஷர்ரி ஃபித்னத்தில் ஃபக்ரி, வ அஊது பிக்க மின் ஷர்ரி ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜால். அல்லாஹும்மஃக்சில் கத்தாயாய பி மாயிஸ் ஸல்ஜி வல்பரத். வ நக்கி கல்பீ மினல் கத்தாயா கமா நக்கைத்தஸ் ஸவ்பல் அப்யள மினத் தனஸ். வ பாஇத் பைனீ வ பைன கத்தாயாய கமா பாஅத்த பைனல் மஷ்ரிக்கி வல்மஃக்ரிப். அல்லாஹும்ம! ஃப இன்னீ அஊது பிக்க மினல் கசலி வல்ஹரமி வல்மஃஸமி வல் மஃக்ரம்.'

(பொருள்: இறைவா! உன்னிடம் நான் நரகத்தின் சோதனையிலிருந்தும் நரகத்தின் வேதனையிலிருந்தும், மண்ணறையின் சோதனையிலிருந்தும் மண்ணறையின் வேதனையிலிருந்தும், செல்வத்தின் சோதனையின் தீங்கிலிருந்தும் வறுமையின் சோதனையின் தீங்கிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்; (மகா பொய்யன்) மஸீஹுத் தஜ்ஜாலின் சோதனையின் தீங்கிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்.

இறைவா! பனிக்கட்டி நீராலும் ஆலங்கட்டி நீராலும் என்னிலிருந்து என் பாவங்களைக் கழுவி விடுவாயாக! நீ வெண்மையான ஆடையை அழுக்கிலிருந்து தூய்மைப்படுத்துவதைப் போன்று என் உள்ளத்தைத் தவறுகளிலிருந்து தூய்மைப்படுத்துவாயாக! கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையே நீ ஏற்படுத்திய இடைவெளியைப் போன்று எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ இடைவெளியை ஏற்படுத்துவாயாக! இறைவா! சோம்பலிலிருந்தும் தள்ளாமையிலிருந்தும் பாவத்திலிருந்தும் கடனிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.)

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 15 இயலாமை, சோம்பல் உள்ளிட்டவற்றிலிருந்து இறைவனிடம் பாதுகாப்புக் கோரல்.

5243 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மினல் அஜ்ஸி வல்கசலி, வல்ஜுப்னி,வல்ஹரமி, வல்புக்ல். வ அஊது பிக்க மின் அதாபில் கப்ரி வ மின் ஃபித்னத்தில் மஹ்யா வல்மமாத்" என்று பிரார்த்தித்துவந்தார்கள்.

(பொருள்: இறைவா! உன்னிடம் நான் இயலாமையிலிருந்தும் சோம்பலிலிருந்தும் கோழைத்தனத்திலிருந்தும் தள்ளாமையிலிருந்தும் கருமித்தனத்திலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். மண்ணறையின் வேதனையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். வாழ்வின் சோதனையிலிருந்தும் மரணத்தின் சோதனையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்.)

- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், "வாழ்வின் சோதனையிலிருந்தும் மரணத்தின் சோதனையிலிருந்தும் (வ மின் ஃபித்னத்தில் மஹ்யா வல்மமாத்)" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

5244 அனஸ் பின் மாலிக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள், (மேற்கண்ட) பல்வேறு அம்சங்களிலிருந்தும் கருமித்தனத்திலிருந்தும் காக்குமாறு இறைவனிடம் வேண்டினார்கள்.

5245 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மினல் புக்லி, வல்கசலி, வ அர்த லில் உமுரி, வ அதாபில் கப்ரி, வ ஃபித்னத்தில் மஹ்யா வல்மமாத்" எனப் பிரார்த்தித்து வந்தார்கள்.
(பொருள்: இறைவா! கருமித்தனத்திலிருந்தும், சோம்பலிலிருந்தும், தள்ளாத வயதிலிருந்தும், மண்ணறையின் வேதனையிலிருந்தும், வாழ்வின் சோதனையிலிருந்தும், இறப்பின் சோதனையிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்.)

**பாடம் : 16 விதியின் கேடு, அழிவில் வீழ்வது உள்ளிட்டவற்றிலிருந்து இறைவனிடம் பாதுகாப்புக் கோரல்.**

5246 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் விதியின் கேடு, அழிவில் வீழ்வது, எதிரிகள் (கைகொட்டிச்) சிரிக்கும் நிலைக்கு ஆளாவது, தாங்க முடியாத சோதனை ஆகியவற்றிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோரிவந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அம்ர் அந்நாஜித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் காணப்படுகிறது: "இந்த நான்கில் ஒன்றை நான்தான் கூடுதலாக அறிவித்துவிட்டேனோ என்று சந்தேகப்படுகிறேன்" என சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

5247 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யாரேனும் (பயணத்தில்) ஓரிடத்தில் இறங்கித் தங்கிவிட்டுப் பின்னர் "அஊது பி கலிமாத்தில் லாஹித் தாம்மாத்தி மின் ஷர்ரி மா கலக்' என்று கூறிப் பிரார்த்தித்தால், அந்த இடத்திலிருந்து அவர் புறப்பட்டுச் செல்லும்வரை எதுவும் அவருக்குத் தீங்கிழைக்காது.
(பொருள்: அல்லாஹ்வின் முழுமையான சொற்களின் மூலம் அவனுடைய படைப்பினங்களின் தீங்கிலிருந்து நான் பாதுகாப்புக் கோருகிறேன்.)
இதை கவ்லா பின்த் ஹகீம் அஸ்ஸுலமிய்யா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5248 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் (பயணத்தில்) ஓரிடத்தில் இறங்கித் தங்கும்போது. "அஊது பி கலிமாத்தில் லாஹித் தாம்மாத்தி மின் ஷர்ரி மா கலக' என்று கூறினால். அவர் அங்கிருந்து புறப்பட்டுச் செல்லும்வரை அவருக்கு எதுவும் தீங்கிழைக்காது.
இதை கவ்லா பின்த் ஹகீம் அஸ்ஸுல மிய்யா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நேற்றிரவு என்னைத் தேள் ஒன்று கொட்டிவிட்டது. அதனால் நான் (நிம்மதியான தூக்கத்தை) இழந்துவிட்டேன்" என்று கூறினார்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீ மாலைப் பொழுதை அடையும்போது, "அஊது பிகலி மாத்தில்லாஹித் தாம்மாத்தி மின் ஷர்ரி மா கலக்' என்று கூறியிருந்தால் அது உனக்குத் தீங்கிழைத்திருக்காது" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், ஒரு மனிதர் "அல்லாஹ்வின் தூதரே! என்னைத் தேள் கொட்டிவிட்டது" என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 17 உறங்கச் செல்லும்போது படுக்கையில் கூற வேண்டியவை.

5249 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீ உன் படுக்கைக்குச் செல்லும்போது தொழுகைக்காக அங்கத் தூய்மை (உளூ) செய்வதைப் போன்று அங்கத் தூய்மை செய்துகொள். பிறகு உன் வலப் பக்கத்தில் சாய்ந்து படு. பிறகு "அல்லாஹும்ம! இன்னீ அஸ் லம்த்து வஜ்ஹீ இலைக்க, வ ஃபவ்வள்த்து அம்ரீ இலைக்க, வ அல்ஜஃத்து ழஹ்ரீ இலைக்க; ரஃக்பத்தன் வ ரஹ்பத்தன் இலைக்க. லா மல்ஜஅ வலா மன்ஜா மின்க்க இல்லா இலைக்க. ஆமன்த்து பி கித்தாபிக் கல்லதீ அன்ஸல்த்த. வபி நபிய்யிக்கல்லதீ அர்சல்த்த" என்று ஓதிக்கொள்.
(பொருள்: இறைவா! எனது முகத்தை உனக்குக் கீழ்ப்படியச் செய்துவிட்டேன். என் காரியம் அனைத்தையும் உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன். என் முதுகை உன்னளவில் சாய்த்து விட்டேன். உன்மீதுள்ள ஆவலிலும் அச்சத்திலும்தான் (இவற்றை நான் செய்தேன்). உன்னிடமிருந்து தப்பிக்கவும் ஒதுங்கிடவும் உன்னைத் தவிர வேறு போக்கிடமில்லை. நீ அருளிய உனது வேதத்தையும் நீ அனுப்பிய உன்னுடைய நபியையும் நான் நம்பினேன்.)
இந்தப் பிரார்த்தனையை (இரவின்) இறுதிப் பேச்சாக ஆக்கிக்கொண்டு, அன்றைய இரவில் நீ இறந்துவிட்டால், (இஸ்லாம் எனும்) இயற்கை மரபில் நீ இறந்தவன் ஆவாய்.

இதன் அறிவிப்பாளரான பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் இவற்றை நினைவிலிருத்துவதற்காகத் திரும்ப ஓதிக்காட்டினேன். அப்போது ("நீ அனுப்பிய உன் நபியையும் நான் நம்பினேன்' என்பதற்குப் பதிலாக) "நீ அனுப்பிய உன் ரசூலையும் நான் நம்பினேன்' என்று நான் சொல்லிவிட்டேன். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ அனுப்பிய உன் நபியையும் நான் நம்பினேன் என்று சொல்வீராக" என (திருத்தி)க் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் மன்சூர் (ரஹ்) அவர்களது (மேற்கண்ட) அறிவிப்பே முழுமையானதாகும். ஹுஸைன் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர் (இறக்காமல்) காலைப் பொழுதை அடைந்தாலும் நன்மையையே அடைந்துகொண்டார்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5250 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம், நீ இரவில் படுக்கைக்கு (உறங்க)ச் செல்லும்போது, "அல்லாஹும்ம! அஸ்லம்த்து ந.்ப்சீ இலைக்க, வ வஜ்ஜஹ்த்து வஜ்ஹீ இலைக்க, வ அல்ஜ.்த்து ழஹ்ரீ இலைக்க, வ .்பவ்வள்த்து அம்ரீ இலைக்க; ரக.்பத்தன் வ ரஹ்பத்தன் இலைக்க. லா மல்ஜஅ வலா மன்ஜா மின்க்க இல்லா இலைக்க, ஆமன்த்து பி கித்தாபிக்கல்லதீ அன்ஸல்த்த வபி ரசூலிக்கல்லதீ அர்சல்த்த" என்று சொல்லும்படி உத்தரவிட்டார்கள்.
"அவர் (இவ்வாறு பிரார்த்தித்துவிட்டு உறங்கும்போது) இறந்துவிட்டால் (இஸ்லாம் எனும்) இயற்கை மரபில் இறந்தவராவார்" என்றும் கூறினார்கள்.
(பொருள்: இறைவா! என்னை நான் உன்னிடம் ஒப்படைத்தேன். என் முகத்தை உன்னளவில் திருப்பிவிட்டேன். எனது முதுகை உன்னளவில் சாய்த்துவிட்டேன். என் காரியங்கள் அனைத்தையும் உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன். உன்மீதுள்ள அன்பிலும் அச்சத்திலும்தான் (இவற்றை நான் செய்தேன்). உன்னிடமிருந்து தப்பிக்கவும் ஒதுங்கிடவும் உன்னைத் தவிர வேறு போக்கிடம் இல்லை. நீ அருளிய உன்னுடைய வேதத்தையும் நீ அனுப்பிய உன் ரசூலையும் நான் நம்பினேன்.)
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னு பஷ்ஷார் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இரவில்' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

5251 மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இன்ன மனிதரே! நீர் உமது படுக்கைக்குச் செல்லும்போது (இவ்வாறு சொல்வீராக...)" என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. ஆயினும் அதில், ("நீ அனுப்பிய உன்னுடைய ரசூலையும் நம்பினேன்" என்பதற்குப் பகரமாக) "நீ அனுப்பிய உன்னுடைய நபியையும் நான் நம்பினேன்" என்று கூறியதாகவும், (இவ்வாறு பிராத்தித்துவிட்டு) அன்றிரவிலேயே நீ இறந்துவிட்டால் (இஸ்லாம் எனும்) இயற்கை மரபிலேயே இறந்தவன் ஆவாய். காலையில் (உயிருடன் விழித்து) எழுந்தால், (இந்தப் பிரார்த்தனைகளின்) நன்மைகளைப் பெற்றுக்கொள்வாய்" என்று கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இவ்வாறு பிரார்த்திக்குமாறு) ஒரு மனிதருக்கு உத்தரவிட்டார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. "நீ காலையில் (உயிருடன் விழித்து) எழுந்தால் (இந்தப் பிரார்த்தனைக்கான) நன்மையைப் பெற்றுக்கொள்வாய்" எனும் குறிப்பு காணப்படவில்லை.

5252 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் உறங்கச் செல்லும்போது, "அல்லாஹும்ம! பிஸ்மிக்க அஹ்யா, வ பிஸ்மிக்க அமூத்து (இறைவா! உனது பெயராலேயே உயிர் பெறுகிறேன்; உனது பெயர்

கூறியே இறக்கிறேன்.) என்று கூறுவார்கள். உறக்கத்திலிருந்து விழித்தெழும்போது, "அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஅத மா அமாத்தனா வ இலைஹிந் நுஷூர் (அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அவனே நம்மை இறக்கச்செய்த பின்னர் நமக்கு உயிரூட்டினான். மேலும், அவனிடமே செல்ல வேண்டியுள்ளது.)" என்று கூறுவார்கள்.

5253 அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "ஒருவர் உறங்கச் செல்லும்போது "அல்லஹும்ம! கலக்த்த நஃப்சீ, வ அன்த்த தவஃப்பாஹா, லக்க மமாத்துஹா வ மஹ்யாஹா, இன் அஹ்யய்த்தஹா ஃபஹ்ஃபழ்ஹா, வ இன் அமத்தஹா ஃபக்ஃபிர் லஹா, அல்லஹும்ம! இன்னீ அஸ்அலுக்கல் ஆஃபியா' (இறைவா! நீயே என் உயிரைப் படைத்தாய். நீயே அதனைக் கைப்பற்றிக்கொள்கிறாய். அதன் இறப்பும் வாழ்வும் உனக்கே உரியன. அதை நீ உயிரோடு விட்டுவைத்தால் அதை நீ காப்பாற்றுவாயாக! அதை நீ இறக்கச் செய்து விட்டால் அதற்கு மன்னிப்பு வழங்குவாயாக! இறைவா! உன்னிடம் நான் ஆரோக்கியத்தை வேண்டுகிறேன்) என்று கூறும்படி உத்தரவிட்டார்கள்.
அப்போது அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர், "இதைத் தாங்கள் தங்கள் தந்தை உமர் (ரலி) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "உமர் (ரலி) அவர்களைவிடச் சிறந்தவரான அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5254 சுஹைல் பின் அபீஸாலிஹ் தக்வான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(எங்கள் தந்தை) அபூஸாலிஹ் தக்வான் (ரஹ்) அவர்கள், எங்களில் ஒருவர் உறங்கச் செல்லும் போது வலப் பக்கத்தில் சாய்ந்து படுத்துக்கொண்டு, "அல்லாஹும்ம! ரப்பஸ் ஸமாவாத்தி வ ரப்பல் அர்ளி வ ரப்பல் அர்ஷில் அழீம். ரப்பனா வ ரப்ப குல்லி ஷையின். ஃபாலிக்கல் ஹப்பி வந்நவா வ முன்ஸிலத் தவ்ராத்தி வல்இன்ஜீலி வல்ஃபுர்கான், அஊது பிக்க மின் ஷர்ரி குல்லி ஷையின். அன்த்த ஆகிதும் பி நாஸியத்திஹ், அல்லாஹும்ம! அன்த்தல் அவ்வலு; ஃப லைஸ கப்லக்க ஷைஉன், வ அன்த்தல் ஆகிரு; ஃப லைஸ பஅதக்க ஷைஉன். வ அன்த்தழ் ழாஹிரு; ஃப லைஸ ஃபவ்கக்க ஷைஉன், வ அன்த்தல் பாத்தினு; ஃப லைஸ தூனக்க ஷைஉன், இக்ளி அன்னா அத்தைன வ அஃக்னினா மினல் ஃபக்ர்" என்று கூறும்படி உத்தரவிடுவார்கள். மேலும் இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்ததாகவும் கூறுவார்கள்.
(பொருள்: இறைவா! வானங்களின் அதிபதியே! பூமியின் அதிபதியே! மகத்தான அரியணையின் அதிபதியே! எங்கள் இறைவா! அனைத்துப் பொருட்களின் அதிபதியே! தானிய வித்துகளையும் விதைகளையும் பிரி(த்து தாவர வர்க்கத்தை முளைப்பி)ப்பவனே! தவ்ராத், இன்ஜீல், ஃபுர்கான் (குர்ஆன்) ஆகிய வேதங்களை அருளியவனே!
அனைத்துப் பொருட்களின் தீங்கிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன். அவற்றின் முன்நெற்றி ரோமங்களை நீயே பிடித்துள்ளாய். இறைவா! நீயே ஆரம்பமானவன்; உனக்கு முன்னர் வேறெதுவும் இல்லை. நீயே இறுதியானவன்; உனக்குப் பின்னர்

வேறெதுவும் இல்லை. நீயே மேலானவன்; உனக்கு மேலே வேறொன்றுமில்லை. நீயே அடித்தளமானவன்; உனக்குக் கீழே வேறொன்றுமில்லை. எங்கள் கடன்களை நிறைவேற்றி வைப்பாயாக! வறுமையிலிருந்து காத்து எங்களைத் தன்னிறைவு கொள்ளச்செய்வாயாக!)

5255 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாங்கள் உறங்கச் செல்லும்போது மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி பிரார்த்திக்கும் படி உத்தரவிடுவார்கள்" என்று காணப்படுகிறது. மேலும் அதில், ("மின் ஷர்ரி குல்லி ஷையின் அன்த்த ஆகிதும் பி நாஸியத்திஹ்' என்பதற்குப் பகரமாக) "மின் ஷர்ரி குல்லி தாப்பத்தின் அன்த்த ஆகிதும் பிநாஸியத் திஹா" என்று இடம்பெற்றுள்ளது.
(பொருள்: அனைத்து உயிரினங்களின் தீங்கிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன். அவற்றின் முன்நெற்றி ரோமங்களை நீயே பிடித்துள்ளாய்.)

5256 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், (ஒரு முறை) ஃபாத்திமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து (தமக்கு ஒத்தாசையாகப் பணிபுரிய) அடிமை ஒருவரைத் தருமாறு கேட்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹும்ம! ரப்பஸ் ஸமாவாத்திஸ் ஸப்இ..." (இறைவா! ஏழு வானங்களின் அதிபதியே!...)" என்று தொடங்கி மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி பிரார்த்திக்குமாறு கூறியதாகக் காணப்படுகிறது.

5257 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் படுக்கைக்குச் சென்றால், உங்களது கீழங்கியின் ஓரத்தால் விரிப்பைத் தட்டிவிடுங்கள். அல்லாஹ்வின் பெயர் (பிஸ்மில்லாஹ்) கூறுங்கள். ஏனெனில், நீங்கள் இல்லாதபோது உங்களது விரிப்பில் என்ன (விஷஜந்து) புகுந்துகொண்டது என்பது உங்களுக்குத் தெரியாது. பிறகு படுக்கத் தயாராகும்போது வலப் பக்கத்தில் சாய்ந்து படுத்துக்கொண்டு, பின்வருமாறு பிரார்த்தியுங்கள்:
சுப்ஹானகல்லாஹும்ம! ரப்பீ பிக்க வளஅத்து ஜன்பீ, வ பிக்க அர்ஃபஉஹு, இன் அம்சக்த்த நஃப்சீ ஃபக்ஃபிர் லஹா. வ இன் அர்சல்த் தஹா ஃபஹ்ஃபழ்ஹா பி மா தஹ்ஃபழு பிஹி இபாதக்கஸ் ஸாலிஹீன்.

(பொருள்: இறைவா! நீ (அனைத்துக் குறைகளிலிருந்தும்) தூய்மையானவன். என் இரட்சகா! உன் பெயரால் என் விலாவை (தரையில்) வைத்தேன். உன் உதவியாலேயே (மீண்டும்) எழுவேன். என் உயிரை நீ கைப்பற்றிக்கொண்டால், அதை மன்னிப்பாயாக! அதை நீ (உன் வசம் வைத்துக்கொள்ளாமல்) விட்டுவிட்டால், உன் நல்லடியார்களை எதன் மூலம் பாதுகாப்பாயோ அதன் மூலம் என் உயிரையும் காத்திடுவாயாக!)
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், ("சுப்ஹானக்கல்லாஹும்ம! ரப்பீ!" என்பதற்குப் பகரமாக) பிஸ்மிக்க ரப்பீ வளஅத்து ஜன்பீ (என் அதிபதியே! உன் பெயரால் என் விலாவை (தரையில்) வைத்தேன்)" என்றும், ("ஃப இன் அம்சக்த்த நஃப்சீ ஃபக்ஃபிர் லஹா" என்பதற்குப் பகரமாக) "ஃப இன் அஹ்யய்த்த நஃப்சீ ஃபர்ஹம்ஹா" என்றும் காணப்படுகிறது. (பொருள்: அதை நீ உயிரோடு வாழச்செய்தால் அதற்கு நீ கருணை புரிவாயாக!)

5258 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் படுக்கைக்குச் செல்லும்போது "அல்ஹம்து லில்லாஹில்லதீ அத்அமனா வ சகானா வ கஃபானா வ ஆவானா. ஃபகம் மிம்மன் லா காஃபிய லஹு, வலா முஃவிய" என்று கூறுவார்கள்.
(பொருள்: அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அவனே நமக்கு உணவளித்தான்; குடிநீர் வழங்கினான்; (நம் தேவைகளை நிறைவேற்றி) போதுமான அளவுக்குக் கொடுத்தான்; (தங்க இடமளித்து) தஞ்சமளித்தான். ஆனால்,போதுமாக்கிவைப்பதற்கோ தஞ்சமளிப்பதற்கோ ஆளில்லாமல் எத்தனையோ பேர் இருக்கின்றனர்.)

## பாடம் : 18 செய்தவற்றின் தீங்கிலிருந்தும் செய்யத் தவறியவற்றின் தீங்கிலிருந்தும் இறைவனிடம் பாதுகாப்புக் கோரல்.

5259 ஃபர்வா பின் நவ்ஃபல் அல்அஷ்ஜஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் வேண்டிவந்த பிரார்த்தனைகள் குறித்துக் கேட்டேன். ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மின் ஷர்ரி மா அமில்த்து, வ மின் ஷர்ரி மா லம் அஃமல்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்திப்பார்கள் எனப் பதிலளித்தார்கள்.
(பொருள்: இறைவா! நான் செய்தவற்றின் தீங்கிலிருந்தும் நான் செய்யத் தவறியவற்றின் தீங்கிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஃபர்வா பின் நவ்ஃபல் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது: நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் வேண்டிய பிரார்த்தனை குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், "அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மின் ஷர்ரி மா அமில்த்து. வ ஷர்ரி மா லம் அஃமல்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்திப்பார்கள் என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஃபர்வா பின் நவ்ஃபல் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ஜஅஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("வ ஷர்ரி மா லம் அஃமல்" என்பதற்குப் பகரமாக) "வ மின் ஷர்ரி மா லம் அஃமல்" என்று சிறிய வித்தியாசத்துடன்) இடம்பெற்றுள்ளது.

5260 ஃபர்வா பின் நவ்ஃபல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தமது பிரார்த்தனையில் "அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மின் ஷர்ரி மா அமில்த்து வ ஷர்ரி மா லம் அஃமல்" என்று கூறுவார்கள்.
(பொருள்: இறைவா! நான் செய்தவற்றின் தீங்கிலிருந்தும், நான் செய்யத் தவறியவற்றின் தீங்கிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.)

5261 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம! லக்க அஸ்லம்த்து, வ பிக்க ஆமன்த்து, வ அலைக்க தவக்கல்த்து, வ இலைக்க அனப்த்து, வ பிக்க காஸம்த்து. அல்லாஹும்ம! இன்னீ அஊது பி இஸ்ஸத்திக்க,லாயிலாஹ இல்லா அன்த்த, அன் துளில்லனீ, அன்த் தல் ஹய்யுல்லதீ லா யமூத்து, வல்ஜின்னு வல்இன்ஸு யமூத்தூன்" என்று பிரார்த்தித்துவந்தார்கள்.
(பொருள்: இறைவா! உனக்கே அடிபணிந்தேன். உன்மீதே நம்பிக்கை கொண்டுள்ளேன். உன்னையே சார்ந்துள்ளேன். உன்னிடமே திரும்புகிறேன். உன் உதவியாலேயே (எதிரிகளிடம்) வழக்காடுவேன். இறைவா! நான் வழிதவறாமலிருக்க உனது வல்லமையின் மூலம் நான் பாதுகாப்புக் கோருகிறேன். உன்னைத் தவிர வேறு இறைவனில்லை. ஜின் இனத்தாரும் மனித குலத்தாரும் இறந்துவிடுவார்கள்; ஆனால் நீ இறக்காமல் நிலைத்திருப்பவன்.)

5262 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பயணத்தில் இருந்து, அதிகாலை முன்நேரத்தை அடைந்தால், "சமிஅ சாமிஉன் பி ஹம்தில்லாஹி வ ஹுஸ்னி பலாயிஹி அலைனா. ரப்பனா ஸாஹிப்னா. வ அஃப்ளில் அலைனா. ஆயிதம் பில்லாஹி மினந் நார்"என்று பிரார்த்திப்பார்கள்.
(பொருள்: அல்லாஹ் நமக்குப் புரிந்த நல்லுபகாரத்திற்காக அவனை நாம் போற்றிப் புகழ்வதைக் கேட்பவர் கேட்டுவிட்டார். (அல்லது கேட்பவர் பிறருக்கு எடுத்துரைக்கட்டும்.) எங்கள் இரட்சகா! எங்களுடன் வருவாயாக! எங்கள்மீது கருணை பொழிவாயாக! நரக நெருப்பிலிருந்து காப்பாயாக!)

5263 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு பிரார்த்திப்பது வழக்கம்: அல்லாஹும் மஃக்ஃபிர் லீ கத்தீஅத்தீ, வ ஜஹ்லீ, வ இஸ்ராஃபீ ஃபீ அம்ரீ, வ மா அன்த்த அஉலமு பிஹி மின்னீ. அல்லாஹும்மஃக்ஃபிர்லீ ஜித்தீ, வ ஹஸ்லீ வ கத்தஈ வ அம்தீ, வ குல்லு தாலிக்க இந்தீ. அல்லாஹும்மஃக்ஃபிர் லீ மா கத்தம்த்து, வ மா அக்கர்த்து, வ மா அஸ்ரர்த்து, வ மா அஉலன்த்து. வ மா அன்த்த அஉலமு பிஹி மின்னீ. அன்த்தல் முகத்திமு வ அன்த்தல் முஅக்கிரு. வ அன்த்த அலா குல்லி ஷையின் கதீர்.
(பொருள்: இறைவா! என் குற்றத்தையும் அறியாமையையும் என் செயலில் நான் மேற்கொண்ட விரயத்தையும் மன்னிப்பாயாக. மேலும், என்னைவிட நீ எதையெல்லாம் அறிந்துள்ளாயோ அதையும் மன்னிப்பாயாக! இறைவா! நான் வினையாகச் செய்ததையும்

விளையாட்டாகச் செய்ததையும் தவறுதலாகச் செய்ததையும் வேண்டுமென்றே செய்ததையும் மன்னிப்பாயாக! இவை யாவும் என்னிடம் இல்லாமலில்லை.
இறைவா! நான் முன்பு செய்ததையும் (அதன்) பின்பு செய்ததையும் இரகசியமாகச் செய்ததையும் பகிரங்கமாகச் செய்ததையும் என்னைவிட நீ எவற்றையெல்லாம் அறிந்துள்ளாயோ அவற்றையும் மன்னிப்பாயாக! நீயே முன்னேற்றம் அடையச் செய்பவன். நீயே பின்னடைவு ஏற்படுத்துபவன். நீ அனைத்தின் மீதும் ஆற்றல் உள்ளவன்.)
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5264 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வருமாறு பிரார்த்தித்துவந்தார்கள்:
அல்லாஹும்ம! அஸ்லிஹ் லீ தீனியல்லதீ ஹுவ இஸ்மத்து அம்ரீ.
வ அஸ்லிஹ் லீ துன்யாயல்லத்தீ ஃபீஹா மஆஷீ.
வ அஸ்லிஹ் லீ ஆகிரத்தியல்லத்தீ ஃபீஹா மஆதீ.
வஜ்அலில் ஹயாத்த ஸியாதத்தன் லீ ஃபீ குல்லி கைர்.
வஜ்அலில் மவ்த்த ராஹத்தன் லீ மின் குல்லி ஷர்.
(பொருள்: இறைவா! எனது நடத்தைக்குப் பாதுகாப்பாக உள்ள எனது மார்க்கத்தை எனக்குச் சீர்படுத்துவாயாக!
நான் வாழ வேண்டிய இம்மையை எனக்குச் சீர்படுத்துவாயாக!
நான் திரும்பி வரவுள்ள மறுமையை எனக்குச் சீர்படுத்துவாயாக!
வாழ்க்கையை, எல்லா நன்மைகளையும் கூடுதலாகச் செய்வதற்கு எனக்குக் காரணமாக்குவாயாக!
மரணத்தை, எல்லாத் தீமைகளிலிருந்தும் பாதுகாப்புப் பெறுவதற்கு எனக்குக் காரணமாக்குவாயாக!)

5265 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹும்ம! இன்னீ அஸ்அலுக்கல் ஹுதா, வத்துகா, வல் அஃபாஃப வல் ஃகினா" என்று பிரார்த்தித்துவந்தார்கள்.
(பொருள்: இறைவா! உன்னிடம் நான் நல்வழியையும் இறையச்சத்தையும் சுய கட்டுப்பாட்டையும் தன்னிறைவையும் வேண்டுகிறேன்.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இப்னுல் முஸன்னா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("சுய கட்டுப்பாடு' என்பதைக் குறிக்க "அஃபாஃப்'என்பதற்குப் பகரமாக) "அல்இஃப்பத்த' எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

5266 அபூஉஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிவந்ததைப் போன்றுதான் நான் உங்களிடம் அறிவிக்கிறேன்" என்று கூறிவிட்டுப் பின்வருமாறு சொன்னார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வருமாறு பிரார்த்திப்பது வழக்கம்:
அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மினல் அஜ்ஸி, வல்கசலி, வல்ஜுப்னி, வல் புக்லி, வல்ஹரமி, வ அதாபில் கப்ர். அல்லாஹும்ம! ஆத்தி ந..ப்சீ தக்வாஹா, வ ஸக்கிஹா, அன்த்த கைரு மன் ஸக்காஹா. அன்த்த வலிய்யுஹா வ மவ்லாஹா. அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மின் இல்மின் லா யன்..பஉ, வ மின் கல்பின் லா யக்ஷஉ, வ மின் ந..ப்சின் லா தஷ்பஉ, வ மின் தஅவத்தின் லா யுஸ்தஜாபு லஹா.
(பொருள்: இறைவா! உன்னிடம் நான் இயலாமையிலிருந்தும் சோம்பலிலிருந்தும் கோழைத்தனத்திலிருந்தும் கருமித்தனத்திலிருந்தும் தள்ளாமையிலிருந்தும் மண்ணறையின் வேதனையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! எனது உள்ளத்தில் உன்னைப் பற்றிய அச்சத்தை ஏற்படுத்தி, அதைத் தூய்மைப்படுத்துவாயாக! அதைத் தூய்மைப்படுத்துவோரில் நீயே சிறந்தவன். நீயே அதன் உரிமையாளன்; அதன் காவலன். இறைவா! உன்னிடம் நான் பயனளிக்காத கல்வியிலிருந்தும் உன்னை அஞ்சாத உள்ளத்திலிருந்தும் திருப்தியடையாத மனத்திலிருந்தும் ஏற்கப்படாத பிரார்த்தனையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்.)
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5267 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மாலை நேரத்தை அடையும்போது, "அம்சைனா வ அம்சல் முல்க்கு லில்லாஹ்;வல்ஹம்து லில்லாஹ். லாயிலாஹ இல்லல்லாஹு, வஹ்தஹு, லா ஷரீக்க லஹு" என்று கூறுவார்கள்.
(பொருள்: நாங்கள் மாலைப் பொழுதை அடைந்தோம். மாலைப் பொழுதின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை.)
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹசன் பின் உபைதில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
ஸுபைத் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் இப்ராஹீம் பின் சுவைத் (ரஹ்) அவர்களிடமிருந்து பின்வருமாறு கூடுதலாக மனனமிட்டதாகவும் என்னிடம் அறிவித்தார்கள்:
லஹுல் முல்க்கு வ லஹுல் ஹம்து. வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். அல்லாஹும்ம! அஸ்அலுக்க கைர ஹாதி ஹில் லைலா. வ அஊது பிக்க மின் ஷர்ரி ஹாதிஹில் லைலா. வ ஷர்ரி மா பஅதஹா. அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மினல் கசலி, வ சூயில் கிபர். அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மின் அதாபின் ..பிந்நாரி, வ அதாபின் ..பில்கப்ர்.
(பொருள்: ஆட்சி அவனுக்கே உரியது. புகழும் அவனுக்கே உரியது. அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் உள்ளவன். இறைவா! உன்னிடம் நான் இந்த இரவின் நன்மையை

வேண்டுகிறேன். மேலும், உன்னிடம் நான் இந்த இரவின் தீங்கிலிருந்தும் அதற்குப் பின்னுள்ள தீமையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! சோம்பலிலிருந்தும் முதுமையின் கேட்டிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! நரக நெருப்பிலுள்ள வேதனையிலிருந்தும் மண்ணறையிலுள்ள வேதனையிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்.)
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5268 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மாலைப் பொழுதை அடையும்போது "அம்சைனா வ அம்சல் முல்க்கு லில்லாஹ். வல்ஹம்து லில்லாஹ், லாயிலாஹ இல்லல்லாஹு, வஹ்தஹு, லா ஷரீக்க லஹு" என்று கூறுவார்கள்.
(பொருள்: நாங்கள் மாலைப் பொழுதை அடைந்தோம். மாலைப் பொழுதின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே. அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை.)
அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹசன் பின் உபைதில்லாஹ் (ரஹ்) அவர்கள், "லஹுல் முல்க்கு, வ லஹுல் ஹம்து,வஹுவ அலா குல்லி ஷையின் கதீர்" என்றும் இப்ராஹீம் பின் சுவைத் (ரஹ்) அவர்கள் கூறியதாகவே நான் கருதுகிறேன் என்று கூறுகிறார்கள்.
(பொருள்: அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. எல்லாப் புகழும் அவனுக்கே உரியது. அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் உள்ளவன்.)

மேலும், நபி (ஸல்) அவர்கள், "ரப்பி! அஸ்அலுக்க கைர மா ஃபீஹாதிஹில் லைலத்தி வ கைர மா பஅதஹா. வ அஊது பிக்க மின் ஷர்ரி மா ஃபீஹாதிஹில் லைலத்தி வ ஷர்ரி மா பஅதஹா. ரப்பி! அஊது பிக்க மினல் கசலி, வ சூயில் கிபர். ரப்பி! அஊது பிக்க மின் அதாபின் ஃபிந்நாரி, வ அதாபின் ஃபில்கப்ர்" என்றும் கூறுவார்கள்.
(பொருள்: என் இறைவா! இந்த இரவிலுள்ள நன்மையையும் அதற்குப் பின்னுள்ள நன்மையையும் உன்னிடம் நான் வேண்டுகிறேன். இந்த இரவிலுள்ள தீங்கிலிருந்தும் அதற்குப் பின்னுள்ள தீங்கிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன். என் இறைவா! உன்னிடம் நான் சோம்பலிலிருந்தும் முதுமையின் கேட்டிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்.என் இறைவா! நரக நெருப்பிலுள்ள வேதனையிலிருந்தும் மண்ணறையிலுள்ள வேதனையிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்.)
இவ்வாறே நபி (ஸல்) அவர்கள் காலைப் பொழுதை அடையும்போது "அஸ்பஹ்னா. வ அஸ்பஹல் முல்க்கு லில்லாஹ்" (நாங்கள் காலைப் பொழுதை அடைந்தோம். காலைப் பொழுதின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது.) என்று கூறி (மற்றதையும் ஓதி)னார்கள்.

5269 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மாலைப் பொழுதை அடையும்போது "அம்சைனா வ அம்சல் முல்க்கு லில்லாஹ். வல்ஹம்து லில்லாஹ். லாயிலாஹ இல்லல்லாஹு, வஹ்தஹு, லா ஷரீக்க லஹு, அல்லாஹும்ம! இன்னீ அஸ்அலுக்க மின் கைரி ஹாதிஹில் லைலா. வ கைரி மா ஃபீஹா. வ அஊது பிக்க மின் ஷர்ரிஹா, வ ஷர்ரி மா

ஃபீஹா. அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மினல் கசலி, வல்ஹரமி, வ சூயில் கிபரி, வ ஃபித்னத்தித் துன்யா, வ அதாபில் கப்ர்" என்று கூறுவார்கள்.
(பொருள்: நாங்கள் மாலைப் பொழுதை அடைந்தோம். மாலைப் பொழுதின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையாக யாருமில்லை. இறைவா! இந்த இரவின் நன்மையையும் அதற்குப் பின்னுள்ள நன்மையையும் உன்னிடம் நான் வேண்டுகிறேன். அதன் தீமையிலிருந்தும் அதற்குப் பின்னுள்ள தீமையிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! சோம்பலிலிருந்தும் தள்ளாமையிலிருந்தும் முதுமையின் கேட்டிலிருந்தும் இம்மையின் சோதனையிலிருந்தும் மண்ணறையின் வேதனையிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்.)
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹசன் பின் உபைதில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
இதில் ("லா ஷரீக்க லஹு – அவனுக்கு இணையாக யாருமில்லை என்பதற்குப் பிறகு) "லஹுல் முல்க்கு. வ லஹுல் ஹம்து. வஹுவ அலா குல்லி ஷையின் கதீர்" (ஆட்சி அவனுக்கே உரியது. புகழும் அவனுக்கே உரியது. அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன்) என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாக ஸுபைத் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூடுதலாக அறிவித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5270 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "லாயிலாஹ இல்லல்லாஹு. வஹ்தஹு. அஅஸ்ஸ ஜுன்தஹு. வ நஸர அப்தஹு. வ ஃகலபல் அஹ்ஸாப வஹ்தஹு. ஃபலா ஷைய்அ பஅதஹு" என்று கூறிவந்தார்கள்
(பொருள்: அல்லாஹுவைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். தன் படையினரை அவனே கண்ணியப்படுத்தினான். தன் அடிமை(யாகிய என)க்கு அவனே உதவினான். கூட்டுப் படையினரை அவனே தனியொருவனாக வென்றான். அவனுக்குப் பின்னால் (நிலையானது) வேறெதுவும் இல்லை.)

5271 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹும்மஹ்தினீ, வ சத்தித்னீ" (இறைவா! எனக்கு நல்வழி காட்டுவாயாக! நேர்மையானதைச் சரியாகச் செய்ய எனக்கு வாய்ப்பளிப்பாயாக!) என்று பிரார்த்திப்பீராக. அப்போது (வழி தவறியவனுக்குச் சரியான) வழியை நீர் காட்டுவதையும், (வளைந்த) அம்பை நிமிர்த்தி நேராக்குவதையும் நினைத்துக் கொள்வீராக" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "என்னிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்கல் ஹுதா வஸ்ஸதாத' (இறைவா! உன்னிடம் நான் நல்வழியையும்

நேர்மையையும் வேண்டுகிறேன்) என்று சொல்வீராக என்றார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகி, தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ள விவரங்கள் இடம்பெறுகின்றன.

## பாடம் : 19 பகலின் ஆரம்ப நேரத்திலும் உறங்கச் செல்லும்போதும் இறைவனைத் துதித்தல்.

5272 (நபி (ஸல்) அவர்களின் துணைவியார்) ஜுவைரியா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகைக்குப்பின் அதிகாலையில் என்னிடமிருந்து புறப்பட்டுச் சென்றார்கள். அப்போது நான் எனது தொழுமிடத்தில் அமர்ந்திருந்தேன். பிறகு அவர்கள் முற்பகல் தொழுகை (ளுஹா) தொழுதுவிட்டு வந்தார்கள். அப்போதும் நான் (அதே இடத்தில்) அமர்ந்திருந்தேன். அப்போது என்னிடம், "நான் உன்னிடமிருந்து சென்றது முதல் இதே நிலையில்தான் நீ இருந்துகொண்டிருக்கிறாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்" என்றேன்.
நபி (ஸல்) அவர்கள், "நான் உன்னிடமிருந்து சென்றதற்குப் பிறகு நான்கு (துதிச்) சொற்களை மூன்று முறை சொன்னேன். அவற்றை இன்றைக்கெல்லாம் நீ சொன்னவற்றுடன் மதிப்பிட்டால், நீ சொன்னவற்றை அவை மிகைத்துவிடும். (அவை:) சுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி அதத கல்கிஹி, வ ரிளா நஃப்சிஹி, வ ஸினத்த அர்ஷிஹி, வ மிதாத கலிமாத்திஹி (ஆகியவையாகும்)" என்றார்கள்.
(பொருள்: அல்லாஹ்வுடைய படைப்புகளின் எண்ணிக்கை அளவுக்கும், அவன் உவக்கும் அளவுக்கும், அவனது அரியணையின் எடையளவுக்கும், அவனுடைய சொற்களின் எண்ணிக்கை அளவுக்கும் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து அவனைத் தூயவன் எனத் துதிக்கிறேன்.)
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- ஜுவைரியா (ரலி) அவர்களிடமிருந்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கும் மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதிகாலைத் தொழுகையைத் தொழச் சென்றபோது, அல்லது அதிகாலைத் தொழுகையைத் தொழுது முடித்தபின் என்னைக் கடந்து சென்றார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகி மேற்கண்ட தகவல்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றில் (அந்த நான்கு சொற்களைச் சற்று வித்தியாசத்துடன்) "சுப்ஹானல்லாஹி அதத கல்கிஹி, சுப்ஹானல்லாஹி ரிளா நஃப்சிஹி, சுப்ஹானல்லாஹி ஸினத்த அர்ஷிஹி, சுப்ஹானல்லாஹி மிதாத கலிமாத் திஹி" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.
(பொருள்: அல்லாஹ்வை அவனுடைய படைப்புகளின் எண்ணிக்கை அளவுக்குத் தூயவன் எனத் துதிக்கிறேன். அல்லாஹ்வை அவன் உவக்கும் அளவுக்குத் தூயவன் எனத் துதிக்கிறேன். அல்லாஹ்வை அவனது அரியணையின் எடையளவுக்குத் தூயவன் எனத் துதிக்கிறேன். அல்லாஹ்வை அவனுடைய சொற்களின் எண்ணிக்கை அளவுக்குத் தூயவன் எனத் துதிக்கிறேன்.)

5273 அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் துணைவி) ஃபாத்திமா திரிகை சுற்றுவதால் தமது கையில் ஏற்பட்ட காய்ப்பு குறித்து (தம் தந்தை நபி (ஸல்) அவர்களிடம்) முறையிட்டார். அப்போது போர்க் கைதிக(ளான அடிமைக)ள் சிலர் நபி (ஸல்) அவர்களிடம் வந்திருந்தனர். ஆகவே, (தம் பணிகளில் தமக்கு உதவ அடிமையொருவரைக் கேட்பதற்காக) நபி (ஸல்) அவர்களிடம் ஃபாத்திமா சென்றார். ஆனால், நபி (ஸல்) அவர்களைக் காணமுடியவில்லை. (எனவே,) ஆயிஷா (ரலி) அவர்களைச் சந்தித்து, (தாம் வந்த நோக்கத்தை)த் தெரிவித்தார். நபி (ஸல்) அவர்கள் வீட்டுக்கு வந்தபோது ஆயிஷா (ரலி) அவர்கள் ஃபாத்திமா வந்த விவரத்தைத் தெரிவிக்கவே, நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள்.
அப்போது நாங்கள் படுக்கைக்குச் சென்றுவிட்டிருந்தோம். (நபியவர்களைப் பார்த்த) உடனே நாங்கள் எழுந்திருக்கப்போனோம். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அப்படியே இருங்கள்" என்று கூறிவிட்டு, எனக்கும் ஃபாத்திமாவுக்கும் இடையே அமர்ந்தார்கள். எனது நெஞ்சின் மீது அவர்களது பாதம் பட்டு அதன் குளிர்ச்சியை நான் உணர்ந்தேன் (அந்த அளவுக்கு அவர்கள் எங்களிடையே நெருக்கமாக அமர்ந்தார்கள்).

பிறகு அவர்கள், "நீங்கள் இருவரும் கேட்டதைவிடச் சிறந்ததை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? நீங்கள் இருவரும் உங்கள் படுக்கைக்குச் செல்லும்போது, முப்பத்து நான்கு முறை "அல்லாஹு அக்பர்' (அல்லாஹ் மிகவும் பெரியவன்) என்றும், முப்பத்து மூன்று முறை "சுப்ஹானல்லாஹ்' (அல்லாஹ் தூயவன்) என்றும், முப்பத்து மூன்று முறை "அல்ஹம்து லில்லாஹ்' (அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும்) என்றும் சொல்லுங்கள். அது உங்கள் இருவருக்கும் பணியாள் ஒருவர் இருப்பதைவிடச் சிறந்ததாகும்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நீங்கள் இருவரும் இரவில் உங்கள் படுக்கைக்குச் செல்லும்போது..." என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அலீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது:
அலீ (ரலி) அவர்கள், "இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் கூறிய நாளிலிருந்து அதை நான் ஓதாமல் விட்டதில்லை" என்று சொன்னார்கள். அப்போது "ஸிஃப்பீன் போர் நடைபெற்ற இரவில்கூடவா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அலீ (ரலி) அவர்கள், "ஸிஃப்பீன் போர் நடைபெற்ற இரவில்கூட ஓதாமல் இருந்ததில்லை" என்று பதிலளித்தார்கள்.
முஜாஹித் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான், ஸிஃப்பீன் போர் நடைபெற்ற இரவில்கூடவா?" என்று கேட்டேன் என அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரஹ்) அவர்கள் கூறியதாகக் காணப்படுகிறது.

5274 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஃபாத்திமா (ரலி) அவர்கள் பணியாள் ஒருவரைக் கேட்பதற்காக நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். தமது பணி(ச்சுமை) பற்றி நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டார்கள். அப்போது "நம்மிடம் உனக்குப் பணியாளர் கிடைக்கப்போவதில்லை. பணியாளர் ஒருவரை விடச் சிறந்த ஒன்றை உனக்கு அறிவிக்கட்டுமா? நீ உனது படுக்கைக்குச் செல்லும்போது, முப்பத்து மூன்று முறை "சுப்ஹானல்லாஹ்' என்றும், முப்பத்து மூன்று முறை "அல்ஹம்து லில்லாஹ்' என்றும், முப்பத்து நான்கு முறை "அல்லாஹு அக்பர்' என்றும் சொல்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

பாடம் : 20 சேவல் கூவும்போது, இறைவனிடம் பிரார்த்திப்பது விரும்பத்தக்கதாகும்.

5275 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் சேவல் கூவுகின்ற சப்தத்தைக் கேட்டால், அல்லாஹ்விடம் அவனது அருளைக் கேளுங்கள். ஏனெனில், அது வானவரைப் பார்த்திருக்கிறது (அதனால்தான் கூவுகின்றது.); கழுதை கத்தும் சப்தத்தைக் கேட்டால்,ஷைத்தானிடமிருந்து காக்குமாறு அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். ஏனெனில், அது ஷைத்தானைப் பார்த்திருக்கிறது. (அதனால்தான் கத்துகிறது.)
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 21 துன்பத்தின்போது ஓத வேண்டிய பிரார்த்தனை.

5276 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் துன்பத்தின்போது, பின்வருமாறு கூறுவார்கள்:
லாயிலாஹ இல்லல்லாஹு அழீமுல் ஹலீம்.
லாயிலாஹ இல்லல்லாஹு ரப்புல் அர்ஷில் அழீம்.
லாயிலாஹ இல்லல்லாஹு ரப்புஸ் ஸமா வாத்தி, வ ரப்புல் அர்ளி, வரப்புல் அர்ஷில் கரீம்.
(பொருள்: கண்ணியம் வாய்ந்தோனும் பொறுமை மிக்கோனுமான அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. மகத்தான அரியணையின் அதிபதியான அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. வானங்களின் அதிபதியும் பூமியின் அதிபதியும் மாட்சிமை மிக்க அரியணையின் அதிபதியுமான அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை.)
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும், மேற்கண்ட அறிவிப்பே முழுமையானதாகும்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவற்றால் பிரார்த்தித்து வந்தார்கள்; துன்பம் நேரும்போது அவ்வாறு கூறிவந்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள்

மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றாலும் ("ரப்புஸ் ஸமாவாத்தி வ ரப்புல் அர்ளி') என்பதற்குப் பகரமாக "ரப்புஸ் ஸமாவாத்தி வல்அர்ளி (வானங்கள் மற்றும் பூமியின் அதிபதியுமான) என்று (சிறு வித்தியாசத்துடன்) காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்களுக்கு எதேனும் மனக்கவலை ஏற்பட்டால்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. ஆயினும் அதனுடன், "லாயிலாஹ இல்லல் லாஹு ரப்புல் அர்ஷில் கரீம் (மாட்சிமை மிக்க அரியணையின் அதிபதியான அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை) என்பதும் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 22 சுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி (அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து அவன் தூயவன் எனத் துதிக்கின்றேன்) என்று துதிப்பதன் சிறப்பு.**

5277 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "(இறைவனைத் துதிக்கும்) சொற்களில் மிகவும் சிறந்தது எது?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அல்லாஹ், "தன் வானவர்களுக்காக' அல்லது "தன் அடியார்களுக்காக' "சுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி' (அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து அவன் தூயவன் எனத் துதிக்கிறேன்) என்பதையே தேர்ந்தெடுத்துள்ளான்" என்று பதிலளித்தார்கள்.

5278 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான வார்த்தையை நான் உமக்குத் தெரிவிக்கட்டுமா?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான (அந்த) வார்த்தையை எனக்குத் தெரிவியுங்கள்" என்று கூறினேன். அதற்கு, "அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான வார்த்தை "சுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி' (அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து துதிக்கிறேன்) என்பதாகும்" என்று கூறினார்கள்.

**பாடம் : 23 கண்ணெதிரே இல்லாத முஸ்லிம்களுக்காகப் பிரார்த்திப்பதன் சிறப்பு.**

5279 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முஸ்லிமான அடியார், கண்ணெதிரே இல்லாத தம் சகோதரருக்காகப் பிரார்த்திக்கும் போது, வானவர் "உனக்கும் அதைப் போன்றே கிடைக்கட்டும்!" என்று கூறாமல் இருப்பதில்லை.
இதை அபுத்தர்தா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5280 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒருவர், கண்ணெதிரே இல்லாத தம் சகோதரருக்காகப் பிரார்த்தித்தால், அதற்கென நியமிக்கப்பட்டுள்ள வானவர், "ஆமீன் (இறைவா! ஏற்றுக்கொள்வாயாக) அதைப் போன்றே உமக்கும் கிடைக்கட்டும்!" என்று கூறுகிறார்.
இதை என் தலைவர் (அபுத்தர்தா) என்னிடம் கூறினார் என (அபுத்தர்தா (ரலி) அவர்களின் மனைவி) உம்முத் தர்தா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5281 ஸஃப்வான் பின் அப்தில்லாஹ் பின் ஸஃப்வான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
தர்தா (ரஹ்) அவர்கள் ஸஃப்வான் (ரஹ்) அவர்களின் மனைவியாக இருந்தார் (என்பது குறிப்பிடத்தக்கது). ஸஃப்வான் கூறுகிறார்:
நான் ஷாம் (சிரியா) நாட்டுக்குச் சென்றபோது (என் மனைவியின் தந்தை) அபுத்தர்தா (ரலி) அவர்களது இல்லத்திற்குச் சென்றேன். அங்கு அவரைக் காணமுடியவில்லை. (என் மனைவியின் தாய்) உம்முத் தர்தா (ரஹ்) அவர்களைக் கண்டேன். அவர் என்னிடம், "இந்த ஆண்டில் நீங்கள் ஹஜ்ஜுக்குச் செல்ல நாடியுள்ளீர்களா?" என்று கேட்டார்.
நான் "ஆம்" என்றேன். அதற்கு அவர் சொன்னார்: அவ்வாறாயின் எங்கள் நலனுக்காகவும் பிரார்த்தியுங்கள். ஏனெனில்,நபி (ஸல்) அவர்கள், "ஒரு முஸ்லிம் கண்ணெதிரே இல்லாத தம் சகோதரருக்காகச் செய்யும் பிரார்த்தனை அங்கீகரிக்கப்படுகிறது. அந்த முஸ்லிமின் தலைக்கருகில் அதற்கென நியமிக்கப்பட்டுள்ள வானவர் ஒருவர் உள்ளார். அந்த முஸ்லிம் தம் சகோதரருக்காக நன்மை வேண்டிப் பிரார்த்திக்கும்போதெல்லாம், அதற்கென நியமிக்கப்பட்டுள்ள அந்த வானவர், "இறைவா! (இவருடைய பிரார்த்தனையை) ஏற்றுக்கொள்வாயாக! அதைப் போன்றே உமக்கும் கிடைக்கட்டும் எனப் பிரார்த்திக்கிறார்" என்று கூறினார்கள்.
பிறகு நான் (அங்கிருந்து) புறப்பட்டுக் கடைத்தெருவுக்குச் சென்றபோது, அபுத்தர்தா (ரலி) அவர்களைச் சந்தித்தேன். நபி (ஸல் அவர்கள் அவ்வாறு கூறியதாக அவர்களும் என்னிடம் அறிவித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஸஃப்வான் பின் அப்தில்லாஹ் பின் ஸஃப்வான் (ரஹ்) அவர் களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாக வந்துள்ளது.

## பாடம் : 24 உணவு உண்ட பின்பும் பானம் பருகிய பின்பும் "அல்ஹம்து லில்லாஹ்' கூறுவது விரும்பத்தக்கதாகும்.

5282 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு முறை உணவு உண்ட பின்னர் அதற்காக அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்கின்ற, அல்லது ஒரு முறை பானம் அருந்திய பிறகு அதற்காக அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்கின்ற அடியான் குறித்து அல்லாஹ் உவகை கொள்கிறான்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 25 "நான் பிரார்த்தித்தேன். என் பிரார்த்தனை ஏற்கப்படவில்லை'' என்று கூறி அவசரப்படாத வரையில் ஒருவரது பிரார்த்தனை ஏற்கப்படுகிறது.**

5283 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"நான் பிரார்த்தித்தேன். ஆனால், என் பிரார்த்தனை ஏற்கப்படவில்லை" என்று கூறி, உங்களில் ஒருவர் அவசரப்படாத வரையில் அவரது பிரார்த்தனை ஏற்கப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5284 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"நான் என் இறைவனிடம் பிரார்த்தித்தேன். ஆனால், அவன் என் பிரார்த்தனையை ஏற்க வில்லை" என்று கூறி,உங்களில் ஒருவர் அவசரப்படாத வரையில் அவரது பிரார்த்தனை ஏற்கப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5285 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஓர் அடியார் பாவமானதையோ அல்லது உறவைத் துண்டிப்பதையோ வேண்டிப் பிரார்த்திக்காத வரையிலும் அவசரப்படாதவரையிலும் அவரது பிரார்த்தனை ஏற்கப்பட்டுக் கொண்டேயிருக்கிறது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது, "அல்லாஹ்வின் தூதரே! "அவசரப்படுதல்' என்றால் என்ன?" என்று கேட்கப்பட்டது.
அதற்கு, "ஒருவர் நான் பிரார்த்தித்தேன். (மீண்டும்) பிரார்த்தித்தேன். ஆனால், அவன் என் பிரார்த்தனையை ஏற்பதாகத் தெரியவில்லை" என்று கூறி, சலிப்படைந்து பிரார்த்திப்பதைக் கைவிட்டுவிடுவதாகும்" என்று பதிலளித்தார்கள்.

**பாடம் : 26 சொர்க்கவாசிகளில் பெரும்பாலோர் ஏழைகளாவர்; நரகவாசிகளில் பெரும்பாலோர் பெண்களாவர் என்பதும் பெண்களால் ஏற்படும் சோதனை பற்றிய விளக்கமும்.**

5286 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் சொர்க்கத்தின் வாசலில் நின்றிருந்தேன். அதில் நுழைபவர்களில் பெரும்பாலானோர் ஏழைகளாகவே இருந்தார்கள். தனவந்தர்கள் (சொர்க்கத்தில் நுழைந்துவிடாமல் கேள்வி கணக்கிற்காகத்) தடுத்து நிறுத்தப்பட்டிருந்தனர்; ஆனால், (தனவந்தர்களில்) நரகவாசிகளை நரகத்திற்குக் கொண்டுசெல்லுமாறு ஆணையிடப்பட்டிருந்தது. நான் நரகத்தின் வாசலில் நின்றிருந்தேன். அதில் நுழைபவர்களில் பெரும்பாலானோர் பெண்களாகவே இருந்தார்கள்.
இதை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5287 முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் சொர்க்கத்தை எட்டிப்பார்த்தேன். அங்கு வசிப்போரில் அதிகமானவர்களாக ஏழைகளையே கண்டேன். நரகத்தையும் எட்டிப்பார்த்தேன். அதில் வசிப்போரில் அதிகமானவர்களாகப் பெண்களையே கண்டேன்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்கள் நரகத்தை எட்டிப்பார்த்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற் றுள்ளன.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5288 அபுத்தய்யாஹ் யஸீத் பின் ஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முதர்ரிஃப் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்களுக்கு இரு துணைவியர் இருந்தனர். அவர் (ஒருமுறை) அவ்விருவரில் ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் வந்தபோது, "இன்னவளிடமிருந்து வருகிறீர்களா?" என்று அந்த மற்றொரு மனைவி கேட்டார்.
அதற்கு முதர்ரிஃப் (ரஹ்) அவர்கள், "நான் இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களிடமிருந்து வருகிறேன். இம்ரான் (ரலி) அவர்கள், 'சொர்க்கத்தில் வசிப்போரில் மிகவும் குறைவானவர்கள் பெண்களே' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என எங்களுக்கு அறிவித்தார்கள்" என்றார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபுத்தய்யாஹ் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் முதர்ரிஃப் (ரஹ்) அவர்கள், "எனக்கு இரு துணைவியர் இருந்தனர்..." என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகி,மேற்கண்ட தகவல்கள் இடம்பெற்றுள்ளன.

5289 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹும்ம! இன்னீ அஊது பிக்க மின் ஸவாலி நிஅமத்திக்க, வ தஹவ்வுலி ஆஃபியத்திக்க, வ ஃபுஜாஅத்தி நிக்மத்திக்க, வ ஜமீஇ சகத்திக்க" என்பது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பிரார்த்தனைகளில் ஒன்றாக இருந்தது.
(பொருள்: இறைவா! உன் அருட்கொடைகள் (முற்றாக) நீங்குவதிலிருந்தும், நீ வழங்கிய (ஆரோக்கியம், செல்வம் போன்ற) நன்மைகள் (நோய், வறுமை போன்ற தீங்குகளாக) மாறி விடுவதிலிருந்தும், உனது தண்டனை திடீரென வருவதிலிருந்தும், உனது கோபத்திற்கு உள்ளாக்கும் அனைத்து அம்சங்களிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்.)

5290 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆண்களுக்குப் பெண்களைவிட அதிகமாக இடரளிக்கும் வேறு எந்தச் சோதனையையும் என(து வாழ்நாளு)க்குப் பிறகு நான் விட்டுச்செல்லவில்லை.
இதை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5291 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆண்களுக்குப் பெண்களைவிட அதிகமாக இடரளிக்கும் எந்தச் சோதனையையும் நான் எனக்குப் பின்னால் மக்களிடையே விட்டுச்செல்லவில்லை.

இதை உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களும் சயீத் பின் ஸைத் பின் அம்ர் பின் நுஃபைல் (ரலி) அவர்களும் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் உசாமா பின் ஸைத் (ரலி) மற்றும் சயீத் பின் ஸைத் பின் அம்ர் பின் நுஃபைல் (ரலி) ஆகியோரிடமிருந்து மேலும் எட்டு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5292 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்த உலகம் இனிமையானதும் பசுமையானதும் ஆகும். அதில் உங்களை அல்லாஹ் பொறுப்பாளர்களாக ஆக்கி,நீங்கள் எவ்வாறு செயல்படுகிறீர்கள் என்று பார்க்கிறான். ஆகவே, இவ்வுலகத்தின் சோதனையிலிருந்தும் பெண்களின் சோதனையிலிருந்தும் உங்களைக் காத்துக்கொள்ளுங்கள். ஏனெனில், பனூ இஸ்ராயீல் சமதாயத்தாரிடையே நடைபெற்ற முதல் குழப்பம் பெண்களால்தான் ஏற்பட்டது.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் பஷ்ஷார் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நீங்கள் எவ்வாறு செயல்படுகிறீர்கள் என்று பார்ப்பதற்காக (அவ்வாறு இனிமையும் பசுமையும் நிறைந்ததாக அதை ஆக்கியுள்ளான்)" என்று காணப்படுகிறது.

## பாடம் : 27 குகையில் சிக்கிக்கொண்ட மூவரின் நிகழ்ச்சியும், நல்லறங்களை முன்வைத்து உதவி கோருவதும்.

5293 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களில்) மூன்று பேர் நடந்து சென்றுகொண்டிருந்தபோது (திடீரென) மழை பிடித்துக்கொண்டது. ஆகவே, அவர்கள் மலைக்குகையொன்றில் ஒதுங்கினார்கள். (அவர்கள் உள்ளே நுழைந்த) உடனே மலையிலிருந்து உருண்டுவந்த ஒரு பாறை குகைவாசலை அடைத்துக்கொண்டது. (வெளியேற முடியாமல் திணறிய) அவர்கள் (மூவரும்) அப்போது தமக்குள், "நாம் (வேறெவருடைய திருப்திக்காகவுமின்றி) அல்லாஹ்வுக்காக (என்று தூய்மையான முறையில்) செய்த நற்செயல்களை நினைத்துப் பார்த்து, அவற்றை முன்வைத்து அல்லாஹ்விடம் பிரார்த்திப்போம். அவன் நம்மை விட்டு இதை அகற்றிவிடக்கூடும்" என்று பேசிக்கொண்டனர்.

எனவே, அவர்களில் ஒருவர் இவ்விதம் (இறைவனிடம்) வேண்டினார்:
இறைவா! எனக்கு முதிர்ந்த வயதுடைய தாய் தந்தையர் இருவரும் மனைவியும் இருந்தனர். எனக்குச் சிறு குழந்தைகளும் உண்டு. நான் இவர்களைப் பராமரிப்பதற்காக ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தேன். மாலையில் அவர்களிடம் நான் திரும்பி வந்த பின் ஆட்டின் பாலைக் கறந்து கொண்டுவந்து, என் குழந்தைகளுக்கு ஊட்டுவதற்கு முன்பாக என் தாய் தந்தையருக்கு முதலில் ஊட்டுவேன். ஒரு நாள் இலை தழைகளைத் தேடியபடி வெகுதூரம் சென்றுவிட்டேன். அதனால் அந்திப் பொழுதிலேயே (வீட்டுக்கு) வர முடிந்தது.

அப்போது (என் தாய் தந்தை) இருவரும் உறங்கிவிட்டிருக்கக் கண்டேன். உடனே எப்போதும் போல பால் கறந்து, பால் செம்புடன் வந்தேன். பெற்றோரைத் தூக்கத்திலிருந்து எழுப்பிவிட மனமில்லாமல் அவர்கள் இருவருடைய தலைமாட்டில் நின்றுகொண்டேன். அவர்கள் இருவருக்குமுன் குழந்தைகளுக்கு ஊட்டுவதையும் நான் விரும்பவில்லை. என் குழந்தைகளோ எனது காலருகில் (பால் கேட்டுக்) கூச்சலிட்டுக்கொண்டிருந்தனர். இதே நிலையில் நானும் அவர்களும் இருந்து கொண்டிருக்க, வைகறை வந்துவிட்டது.
(இறைவா!) நான் இச்செயலை உனது உவப்பை நாடியே செய்தேன் என்று நீ கருதியிருந்தால், எங்களுக்கு இந்தப் பாறையைச் சற்றே நகர்த்துவாயாக! அதன் வழியாக நாங்கள் ஆகாயத்தைப் பார்த்துக்கொள்வோம்.
அவ்வாறே அவர்களுக்கு அல்லாஹ் பாறையைச் சற்றே நகர்த்திக்கொடுத்தான். அதன் வழியாக அவர்கள் ஆகாயத்தைப் பார்த்தார்கள்.

இரண்டாமவர் பின்வருமாறு வேண்டினார்:
இறைவா! எனக்கு என் தந்தையின் சகோதரருடைய புதல்வி ஒருத்தி இருந்தாள். பெண்களை ஆண்கள் நேசிப்பதிலேயே மிகவும் ஆழமாக அவளை நான் நேசித்தேன். (ஒரு நாள்) அவளிடம் அவளைக் கேட்டேன். நான் அவளிடம் நூறு பொற்காசுகள் கொண்டுவந்து கொடுத்தால் தவிர (எனக்கு இணங்க முடியாதென) அவள் மறுத்துவிட்டாள். நான் கடுமையாக உழைத்து, (அந்த) நூறு பொற்காசுகளைச் சேகரித்தேன்.
அவற்றை எடுத்துக்கொண்டு சென்று அவளைச் சந்தித்து, அவளுடைய இரு கால்களுக்கிடையே அமர்ந்தபோது அவள், "அல்லாஹ்வின் அடியானே! அல்லாஹ்வை அஞ்சிக்கொள். முத்திரையை அதற்குரிய (சட்டபூர்வ) உரிமை(யான திருமணம்) இன்றித் திறவாதே" என்று சொன்னாள். உடனே நான் அவளை விட்டுவிட்டு எழுந்துவிட்டேன்.
(இறைவா!) இதை உனது உவப்பைப் பெறவிரும்பியே நான் செய்ததாக நீ கருதினால், இந்தப் பாறையை எங்களுக்காக இன்னும் சற்று நகர்த்துவாயாக! அவ்வாறே அவர்களுக்கு (அல்லாஹ் இன்னும்) சற்றே நகர்த்தினான்.

மற்றொருவர் (பின்வருமாறு) வேண்டினார்: இறைவா! நான் ஒரு "ஃபரக்' அளவு நெல்லைக் கூலியாக நிர்ணயித்து கூலியாள் ஒருவரை பணியமர்த்தினேன். அவர் தமது வேலையை முடித்து விட்டு, "என் உரிமையை (கூலியை)க் கொடு" என்று கேட்டார். நான் ஒரு "ஃபரக்' அளவு நெல்லை அவர்முன் வைத்தபோது அதை அவர் (பெற்றுக்கொள்ளாமல்) புறக்கணித்து(ச் சென்று)விட்டார்.
பின்னர் நான் அதை நிலத்தில் விதைத்துத் தொடர்ந்து விவசாயம் செய்துவந்தேன். அதி(ல் கிடைத்த வருவாயி)லிருந்து பல மாடுகளையும் அவற்றுக்கான இடையர்களையும் நான் சேகரித்து விட்டேன். பின்னர் (ஒரு நாள்) அவர் என்னிடம் வந்து, "அல்லாஹ்வை அஞ்சு! எனது உரிமையில் எனக்கு அநீதி இழைக்காதே" என்று கூறினார்.
அதற்கு நான், "அந்த மாடுகளிடத்திலும் அவற்றின் இடையர்களிடத்திலும் நீ சென்று, அவற்றை எடுத்துக்கொள். (அவை உனக்கே உரியவை)" என்று சொன்னேன். அதற்கு அந்த மனிதர், "அல்லாஹ்வை அஞ்சு. என்னைப் பரிகாசம் செய்யாதே" என்று சொன்னார்.

நான், "உன்னை நான் பரிகாசம் செய்யவில்லை. இந்த மாடுகளையும் இடையர்களையும் நீயே எடுத்துக்கொள்" என்று சொன்னேன். அவர் அவற்றைப் பிடித்துக்கொண்டு சென்றார்.
(இறைவா!) நான் இந்த (நற்)செயலை உன் உவப்பைப் பெற விரும்பியே செய்ததாக நீ கருதியிருந்தால் மீதியுள்ள அடைப்பையும் நீ அகற்றுவாயாக!
அவ்வாறே மீதியிருந்த அடைப்பையும் அல்லாஹ் அகற்றி (அவர்களை வெளியேற்றி) விட்டான்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் பத்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அனைவரது அறிவிப்பிலும் ("அவர்கள் மூவரும் நடந்து சென்றுகொண்டிருந்தனர்' என்பதைக் குறிக்க) "கரஜூ யம்ஷூன' எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது. சாலிஹ் பின் கைஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "யத்தமாஷவ்ன' என்று காணப்படுகிறது.
உபைதுல்லாஹ் பின் உமர் பின் ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டும் "புறப்பட்டுச் சென்றனர்" என்று இடம்பெற்றுள்ளது. ("நடந்து சென்றனர்" என்று இல்லை.)

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களில் மூன்றுபேர் கொண்ட ஒரு குழுவினர் நடந்து சென்றனர். இறுதியில் இரவு ஓய்வு எடுப்பதற்காக ஒரு குகைக்குள் ஒதுங்கினர்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி மேற்கண்ட ஹதீஸில் உள்ள விவரங்கள் இடம்பெற்றுள்ளன.
ஆயினும் அவற்றில், "ஒரு மனிதர் "இறைவா! எனக்கு முதிர்ந்த வயதுடைய பெற்றோர் இருந்தார்கள். நான் இரவில் அவர்கள் இருவருக்கும் பால் கறந்து கொடுப்பதற்குமுன் குடும்பத்தாருக்கோ குழந்தைகளுக்கோ பால் கொடுப்பதில்லை" என்று கூறியதாகவும், மற்றொருவர், "அவள் (எனக்கு இணங்க) மறுத்துவிட்டாள். பஞ்சம் நிறைந்த ஓராண்டு வந்தபோது (பொருளாதார நெருக்கடி ஏற்பட்டு) அவள் என்னிடம் வந்தாள். (அவளை அடைந்துகொள்வதற்காக) அவளிடம் நான் நூற்று இருபது பொற்காசுகளைக் கொடுத்தேன்" என்று சொன்னதாகவும்,இன்னொருவர், "அவரது கூலியை முதலீடாக்கி (நான் விவசாயம் செய்து அதனால் கால்நடைச்) செல்வங்கள் பெருகி,ஆரவாரம் செய்து கொண்டிருந்தன" என்று கூறியதாகவும் காணப்படுகிறது.
மேலும், "பிறகு அவர்கள் மூவரும் அந்தக் குகையிலிருந்து வெளியேறி நடந்தனர்" என்றும் இடம்பெற்றுள்ளது.

# அத்தியாயம் : 49 - பாவமீட்சி

**பாடம் : 1 பாவமீட்சி பெறுமாறு வந்துள்ள தூண்டலும் அதைக் கண்டு (இறைவன்) மகிழ்வதும்.**

5294 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "என்னைக் குறித்து என் அடியான் எப்படி நினைக்கிறானோ அப்படியே நான் அவனிடம் நடந்துகொள்கிறேன். அவன் என்னை நினைவு கூரும்போது அவனுடன் நான் இருப்பேன்" என்று கூறினான்.
அல்லாஹ்வின் மீதாணையாக! பாலைவனத்தில் தொலைத்துவிட்ட தமது ஒட்டகத்தைக் கண்டுபிடிக்கும்போது,உங்களில் ஒருவருக்கு ஏற்படும் மகிழ்ச்சியைவிட, தன் அடியான் பாவமன்னிப்புக் கோரி மீட்சி பெறுவதால் அல்லாஹ் அதிகமாக மகிழ்ச்சி அடைகிறான்.
யார் என்னிடம் ஒரு சாண் அளவு நெருங்குகிறாரோ, நான் அவரிடம் ஒரு முழம் அளவு நெருங்குகிறேன். யார் என்னிடம் ஒரு முழம் நெருங்குகிறாரோ, நான் அவரிடம் (வலம் இடமாக விரிந்த) இரு கை நீட்டளவு நெருங்குகிறேன். அவர் என்னை நோக்கி நடந்து வந்தால், நான் அவரை நோக்கி ஓடிச்செல்கிறேன் (என்று அல்லாஹ் கூறினான்).
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5295 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
காணாமல்போன ஒட்டகத்தைக் கண்டு பிடிக்கும்போது, உங்களில் ஒருவருக்கு ஏற்படும் மகிழ்ச்சியைவிட, உங்களில் ஒருவர் பாவமன்னிப்புக் கோரி மீட்சி பெறுவதால் அல்லாஹ் அதிகமாக மகிழ்ச்சி அடைகிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5296 ஹாரிஸ் பின் சுவைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தபோது, அவர்களை உடல் நலம் விசாரிப்பதற்காக நான் சென்றேன். அப்போது அவர்கள் எங்களுக்கு இரு ஹதீஸ்களை அறிவித்தார்கள். அவற்றில் ஒன்றைத் தாமாகக் கூறினார்கள். மற்றொன்றை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகக் குறிப்பிட்டார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அவர்கள் சொன்னதாவது:
ஒரு மனிதன் (பயணத்தினிடையே ஓய்வெடுப்பதற்காக) ஆபத்துகள் நிறைந்த (வறண்ட) பாலைவனத்தில் (இறங்கி) உறங்கினான். அவனுடன் அவனது வாகன(மான ஒட்டக)மும் இருந்தது. அதில் அவனுடைய உணவும் நீரும் இருந்தன. அவன் (உறங்கிவிட்டு) விழித்தெழுந்தபோது, அவனது ஒட்டகம் (தப்பியோடிப்) போயிருந்தது. அவன் அதைத் தேடிச் சென்றபோது, அவனுக்குக் கடுமையான தாகம் ஏற்பட்டது. அவன், "நான் முன்பிருந்த இடத்திற்கே திரும்பிச் சென்று சாகும்வரை உறங்கப்போகிறேன்" என்று கூறியபடி (அங்கு திரும்பிச் சென்று) தனது கொடுங்கையில் தலை வைத்துச் சாகும்வரை உறங்கப் போனான்.

பிறகு (திடீரென) அவன் விழித்துப் பார்த்த போது, அவனுக்கருகில் அவனது ஒட்டகம் இருந்தது. அதில் அவனது பயண உணவும் நீரும் இருந்தன. அப்போது அவன் தனது ஒட்டகத்தாலும் உணவாலும் அடைகின்ற மகிழ்ச்சியைவிட,இறைநம்பிக்கையுள்ள அடியார் பாவமன்னிப்புக் கோரி மீட்சி பெறுவதால் அல்லாஹ் அதிகம் மகிழ்கின்றான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் ("வறண்ட பாலைவனம்' என்பதைக் குறிக்க "தவிய்யத்' என்பதற்குப் பகரமாக) "தாவியத்' எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

5297 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் இரு ஹதீஸ்களை எனக்குச் சொன்னார்கள். ஒன்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகவும், மற்றொன்று தாமாகவும் தெரிவித்தார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது.

5298 சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் உரையாற்றும்போது, பின்வருமாறு கூறினார்கள்:
ஒரு மனிதர் தமது ஒட்டகத்தில் தமது பயண உணவையும் தோல் பையையும் ஏற்றிக்கொண்டு பயணம் செய்தார். வறண்ட பாலைவனத்தில் அவர் சென்றுகொண்டிருந்த போது, மதிய ஓய்வு நேரம் வரவே, அவர் இறங்கி, ஒரு மரத்தின் கீழ் தம்மையும் அறியாமல் உறங்கிவிட்டார். அப்போது அவரது ஒட்டகம் தப்பியோடியது. அவர் விழித்தெழுந்தபோது (ஒட்டகத்தைக் காணாததால்) ஓடிப்போய் ஒரு குன்றின் மேலேறிப் பார்த்தார். எதையும் அவர் காணவில்லை. பிறகு மற்றொரு குன்றின் மீதேறிப் பார்த்தார். அங்கும் எதையும் காணவில்லை. பிறகு வேறொரு குன்றின் மீதேறிப் பார்த்தார். எதையும் காணவில்லை.
ஆகவே, முன்பு ஓய்வெடுத்த இடத்துக்கே திரும்பிவந்து அமர்ந்துகொண்டார். அப்போது அவரது ஒட்டகம் அவரை நோக்கி வந்து கொண்டிருந்தது. அது வந்து தனது கடிவாளத்தை அவரது கையில் இட்டது. இந்த நிலையில் அவர் தனது ஒட்டகத்தைக் காணும்போது அடைந்த மகிழ்ச்சியைவிடத் தன் அடியார் பாவமன்னிப்புக் கோரி மீட்சி பெறுவதால் அல்லாஹ் அதிகம் மகிழ்ச்சி அடைகிறான்.
இதை நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகத் தெரிவித்தார்கள் என ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள். ஆனால், நுஅமான் (ரலி) அவர்கள் அவ்வாறு கூறியதை நான் (சிமாக்) செவியுறவில்லை.

5299 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்களிடம்), "ஒரு மனிதர் உணவோ நீரோ கிடைக்காத வறண்ட பாலைவனத்தில் (ஓய்வெடுத்துக்கொண்டு) இருந்தபோது, அவரது ஒட்டகம் தனது கடிவாளத்தை இழுத்துக்கொண்டு ஓடிவிட்டது. அந்த மனிதரின் உணவும் பானமும் அதன் மீதே இருந்தன. அந்த மனிதர் அதைத் தேடிப் புறப்பட்டார். அதனால் அவர் மிகுந்த சிரமத்திற்கு உள்ளானார். (ஓடிப்போன) அந்த ஒட்டகம் ஒரு மரத்தைக் கடந்தபோது

அதன் கடிவாளம் அந்த மரத்தின் வேரில் மாட்டிக்கொண்டது. அதில் சிக்கிக்கொண்டு இருந்தபோது அந்த மனிதர் அதைக் கண்டார். அப்போது அந்த மனிதர் அடையும் மகிழ்ச்சியைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார்கள்.
அதற்கு நாங்கள், "மிகவும் அதிகமாக (மகிழ்ச்சி அடைந்திருப்பார்), அல்லாஹ்வின் தூதரே!" என்று சொன்னோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அறிந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! தனது ஒட்டகத்தைக் கண்ட அந்த மனிதர் அடையும் மகிழ்ச்சியை விடத் தன் அடியான் பாவமன்னிப்புக் கோரி மீட்சி பெறுவதால் அல்லாஹ் அதிகமாக மகிழ்ச்சி அடைகிறான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5300 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் வறண்ட பாலைவனத்தில் ஒட்டகத்தில் பயணம் மேற்கொண்டார். (அவர் ஓரிடத்தில் இறங்கி ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது) அவரது ஒட்டகம் தப்பியோடி விட்டது. அதன் மீதே அவரது உணவும் பானமும் இருந்தன. அவர் (தமது ஒட்டகத்தைத் தேடியலைந்து அதைக் கண்டுபிடிக்க முடியாமல்) நம்பிக்கையிழந்து, ஒரு மரத்திற்கு அருகில் வந்து, அதன் நிழலில் படுத்திருந்தார்.
தமது ஒட்டகத்தைக் கண்டுபிடிக்க முடியாமல் அதே நிலையில் அவர் நிராசையுடன் இருந்தபோது, அந்த ஒட்டகம் (வந்து) தமக்கு அருகில் நிற்பதை அவர் கண்டார். உடனே அதன் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டார். பிறகு மகிழ்ச்சிப் பெருக்கால் அவர், ("இறைவா! நீ என் இறைவன்; நான் உன் அடிமை" என்று சொல்வதற்குப் பதிலாக) "இறைவா! நீ என் அடிமை; நான் உன் இறைவன்" என்று தவறுதலாகச் சொல்லிவிட்டார். இந்த மனிதரைவிடத் தன் அடியான் பாவமன்னிப்புக் கோரி தன்னிடம் மீளுவதால் அல்லாஹ் அதிகம் மகிழ்ச்சி அடைகிறான்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5301 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வறண்ட பாலைவனத்தில் தொலைந்து போய்விட்ட தமது ஒட்டகத்தை உறங்கியெழும்போது கண்டுபிடித்த மனிதரைவிடத் தன் அடியான் பாவமன்னிப்புக் கோரி, தன்னிடம் மீளுவதால் அல்லாஹ் அதிகம் மகிழ்ச்சி அடைகிறான்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 2 பாவமன்னிப்புக் கோரி பாவமீட்சி பெறுவதால் பாவங்கள் அகன்றுவிடுகின்றன.

5302 அபூஸிர்மா மாலிக் பின் கைஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூஅய்யூப் அல்அன்சாரீ (ரலி) அவர்களுக்கு இறப்பு நெருங்கியபோது, "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்ற ஒரு செய்தியை உங்களிடம் கூறாமல் மறைத்துவைத்திருந்தேன். (அதை இப்போது உங்களிடம் கூறுகிறேன்:)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீங்கள் பாவம் செய்யாதவர்களாக இருந்து விட்டால், நிச்சயமாகப் பாவம் செய்கின்ற ஒரு படைப்பை அல்லாஹ் உருவாக்கி அவர்களுடைய பாவங்களை அவன் மன்னிக்கவே செய்வான் என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

5303 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் பாவங்கள் செய்து, அவற்றை அல்லாஹ் உங்களுக்கு மன்னிக்கும் நிலை இல்லாதிருந்தால், பாவங்கள் செய்யும் மற்றொரு சமுதாயத்தை அல்லாஹ் கொண்டு வருவான்; அப்பாவங்களை அவர்களுக்கு மன்னிக்கவும் செய்வான்.
இதை அபூஅய்யூப் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5304 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நீங்கள் பாவம் செய்யாதவர்களாக இருந்தால், அல்லாஹ் உங்களை அகற்றிவிட்டு, பாவம் செய்கின்ற மற்றொரு சமுதாயத்தைக் கொண்டுவருவான். அவர்கள் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருவார்கள். அல்லாஹ்வும் அவர்களை மன்னிப்பான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 3 எல்லா நேரங்களிலும் இறைவனை நினைவுகூரல், மறுமை நிகழ்வுகளைச் சிந்தித்தல், இறைவன் கண்காணிக்கிறான் என உணர்தல் ஆகியவற்றின் சிறப்பும், சில நேரங்களில் இந்த உணர்வுகளிலிருந்து விடுபட்டு இம்மை விவகாரங்களில் ஈடுபடலாம் என்பதும்.

5305 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் எழுத்தர்களில் ஒருவரான ஹன்ழலா பின் அர்ரபீஉ அல்உசைதீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அபூபக்ர் (ரலி) அவர்கள் என்னைச் சந்தித்து, "ஹன்ழலா, எப்படி இருக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். நான், "ஹன்ழலா நயவஞ்சகனாகிவிட்டான்" என்று சொன்னேன். அதற்கு "அல்லாஹ் தூயவன்; என்ன சொல்கிறீர்கள்?"என்று கேட்டார்கள். அதற்கு நான், "நாம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கருகில் இருக்கும்போது அவர்கள் சொர்க்கம், நரகம் ஆகியவற்றைப் பற்றி நாம் நேரடியாகப் பார்ப்பதைப் போன்று நினைவூட்டுகிறார்கள். அவர்களிடமிருந்து நாம் புறப்பட்டு (வீட்டுக்கு) வந்ததும் துணைவியருடனும் குழந்தை குட்டிகளுடனும் கலந்துறவாடுகிறோம்; பிழைப்புகளில் ஈடுபட்டுவிடுகிறோம்.(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னவற்றில்) அதிகமானவற்றை மறந்துவிடுகிறோம்" என்று சொன்னேன்.
அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! இதே நிலையை நாமும் சந்திக்கிறோம்" என்று கூறினார்கள். பிறகு நானும் அபூபக்ர் (ரலி) அவர்களும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றோம்.
நான், "அல்லாஹ்வின் தூதரே! ஹன்ழலா நயவஞ்சனாகிவிட்டான்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்ன அது?" என்று கேட்டார்கள். அதற்கு

நான், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் உங்கள் அருகிலிருக்கும்போது தாங்கள் எங்களுக்கு நரகத்தையும் சொர்க்கத்தையும் நாங்கள் நேரடியாகப் பார்ப்பதைப் போன்று நினைவூட்டுகிறீர்கள். நாங்கள் உங்களிடமிருந்து புறப்பட்டுச் சென்றதும் துணைவியருடனும் குழந்தை குட்டிகளுடனும் கலந்துறவாடுகிறோம்; பிழைப்புகளில் ஈடுபட்டுவிடுகிறோம். அதிகமானவற்றை மறந்து விடுகிறோம்" என்று சொன்னேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நீங்கள் என்னிடம் இருக்கும்போதுள்ள நிலையிலும் இறை எண்ணத்திலும் எப்போதும் இருந்தால், உங்கள் படுக்கைகளிலும் நீங்கள் செல்லும் வழிகளிலும் வானவர்கள் (வந்து) உங்களுடன் கை குலுக்கியிருப்பார்கள். மாறாக, ஹன்ழலா! (இப்படிச்) சில நேரம் (அப்படிச்) சில நேரம்" என்று மூன்று முறை கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5306 ஹன்ழலா பின் அர்ரபீஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இருப்போம். அப்போது அவர்கள் எங்களுக்கு அறிவுரை கூறுவார்கள். அப்போது நரகத்தை நினைவூட்டுவார்கள். பிறகு நான் எனது வீட்டுக்கு வரும்போது, குழந்தைகளைக் குதூகலப்படுத்துவேன்; மனைவியுடன் விளையாடி மகிழ்வேன்.

(ஒரு நாள் வீட்டிலிருந்து) புறப்பட்டுச் சென்றேன். அப்போது அபூபக்ர் (ரலி) அவர்களை (வழியில்) சந்தித்தபோது, அது குறித்து அவர்களிடம் சொன்னேன். அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள், "நீங்கள் சொல்வதைப் போன்றுதான் நானும் செய்கிறேன்" என்று கூறினார்கள்.
பிறகு நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சந்தித்தோம். அப்போது "அல்லாஹ்வின் தூதரே! ஹன்ழலா நயவஞ்சகனாகிவிட்டான்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "என்ன சொல்கிறீர்?"என்று கேட்டார்கள். அவர்களிடம் (எங்கள் நிலை குறித்த) செய்தியைச் சொன்னேன். அபூபக்ர் (ரலி) அவர்கள், "இவர் செய்ததைப் போன்றுதான் நானும் செய்கிறேன்" என்று கூறினார்கள்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இப்படிச்) சில நேரம்; (அப்படிச்) சில நேரம். இறைவனைத் துதிக்கும்போதிருக்கும் நிலையில் உங்கள் உள்ளம் எப்போதும் இருக்குமானால், வானவர்கள் உங்களிடம் கைலாகு கொடுத்திருப்பார்கள். நீங்கள் செல்லும் வழிகளில் (அவர்கள் உங்களிடம் வந்து) உங்களுக்கு முகமன் (சலாம்) கூறியிருப்பார்கள்" என்று கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் (நபி (ஸல்) அவர்களின்) எழுத்தரான ஹன்ழலா அத்தமீமீ அல்உசைதீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் இருக்கும்போது, அவர்கள் எங்களுக்குச் சொர்க்கத்தையும் நரகத்தையும் நினைவூட்டுவார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

**பாடம் : 4 இறைவனின் கருணை விசாலமானது; அது அவனது கோபத்தை வென்றுவிட்டது.**

5307 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் படைப்புகளைப் படைத்தபோது, தனது அரியணைக்கு மேலே தனக்கு அருகிலுள்ள தனது பதிவேட்டில் "என் கருணை என் கோபத்தை வெல்லும்" என்று எழுதினான்.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5308 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "என் கருணை என் கோபத்தை முந்திவிட்டது" என்று சொன்னான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5309 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் (படைப்புகளைப்) படைக்கும் பணியை நிறைவு செய்தபோது, தனக்கு அருகில் வைக்கப்பட்டுள்ள தனது பதிவேட்டில் "என் கருணை என் கோபத்தை வெல்லும்" என்று (கருணையைத்) தனக்குத் தானே விதியாக்கிக்கொள்ளும் வகையில் எழுதினான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5310 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் அன்பை நூறு பாகங்களாகப் பங்கிட்டான். அவற்றில் தொண்ணூற்று ஒன்பது பாகங்களைத் தன்னிடமே வைத்துக்கொண்டான். (மீதியிருக்கும்) ஒன்றையே பூமியில் இறக்கினான். இந்த ஒரு பங்கினால்தான் படைப்பினங்கள் ஒன்றன் மீதொன்று பாசம் காட்டுகின்றன. எந்த அளவுக்கென்றால், மிதித்துவிடுவோமா என்ற அச்சத்தால் பிராணி தனது குட்டியைவிட்டுக் கால்குளம்பைத் தூக்கிக்கொள்கிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5311 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ், அன்பை நூறு பாகங்களாகப் படைத்தான். அவற்றில் ஒன்றை தன் படைப்பினங்களிடையே வைத்தான். தொண்ணூற்று ஒன்பது பாகங்களைத் தன்னிடமே பத்திரப்படுத்திக்கொண்டான்.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5312 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அன்பின் நூறு பாகங்களும் அல்லாஹ்வுக்கே உரியவையாகும். அவற்றில் ஒன்றை ஜின், மனிதன், மிருகங்கள்,ஊர்வன ஆகியவற்றுக்கிடையே இறக்கினான். இந்த ஒரு பங்கினால் தான் அவை ஒன்றன்மீதொன்று பாசம் கொள்கின்றன; பரிவு காட்டுகின்றன. அதன் மூலம்தான் காட்டு விலங்குகூட தன் குட்டிமீது பாசம் காட்டுகிறது. (அவற்றில்) தொண்ணூற்று ஒன்பது பாகம் அன்பை அல்லாஹ் ஒதுக்கி வைத்துள்ளான். அவற்றின் மூலம் மறுமை நாளில் தன் (நல்ல) அடியார்களுக்கு (விஷேசமாக) அன்பு காட்டுவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5313 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அன்பின் நூறு பாகங்களும் அல்லாஹ்வுக்கே உரியவையாகும். அவற்றில் ஒரு பங்கினால் தான் படைப்பினங்கள் தமக்கிடையே பரிவு காட்டுகின்றன. தொண்ணூற்று ஒன்பது பாகம் அன்பு, மறுமை நாளுக்கு உரியவையாகும்.
இதை சல்மான் அல்ஃபாரிசீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் சல்மான் அல்ஃபாரிசீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5314 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் வானங்கள், பூமி ஆகியவற்றைப் படைத்த நாளில் அன்பை நூறு பாகங்களாகப் படைத்தான். அவற்றில் ஒவ்வொரு பாகமும் வானம் பூமிக்கிடையே உள்ள (இடத்)தை அடைத்துக் கொள்ளும் அளவுடையதாகும். அவற்றில் ஒரு பாகத்தையே பூமியில் வைத்தான். அந்த ஒரு பாகத்தினால்தான் தாய் தன் குழந்தைமீது பாசம் கொள்கிறாள். மிருகங்களும் பறவைகளும் ஒன்றன் மீதொன்று அன்பு காட்டுகின்றன. மறுமை நாள் வரும்போது இந்த ஓர் அன்புடன் சேர்த்து அன்பை இறைவன் (நூறாக) முழுமையாக்குவான்.
இதை சல்மான் அல்ஃபாரிசீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5315 உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஹவாஸின் குலத்தைச் சேர்ந்த) கைதிகள் சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டார்கள். அந்தக் கைதிகளில் ஒரு பெண் (தனது மார்பில் சுரந்த பாலை ஊட்டுவதற்காகத் தனது குழந்தையைத்) தேடினாள். (குழந்தை கிடைக்கவில்லை. எனவே,) கைதிகளிடையே எந்தக் குழந்தையைக் கண்டாலும் அதை (வாரி) எடுத்து, தனது வயிற்றோடு அணைத்துப் பாலூட்டலானாள். (தனது குழந்தை கிடைத்ததும் அதையும் நெஞ்சணைத்துப் பாலூட்டினாள்.)
அப்போது எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்தப் பெண் தனது குழந்தையைத் தீயில் எறிவாளா,சொல்லுங்கள்?" என்றார்கள். நாங்கள், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! எந்நிலையிலும் அவளால் எறிய முடியாது" என்று சொன்னோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்தக் குழந்தையின் மீது இவளுக்குள்ள அன்பைவிட அல்லாஹ் தன் அடியார்கள்மீது மிகவும் அன்பு வைத்துள்ளான்" என்று சொன்னார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5316 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளர் அல்லாஹ்விடமுள்ள தண்டனையைப் பற்றி நன்கறிவாரானால், (அதிலிருந்து தப்பித்தால் போதும் என்று கருதுவாரே தவிர,) அவனது சொர்க்கத்தின் மீது (இறைநம்பிக்கையாளர்களில்) யாரும் ஆசை கொள்ளமாட்டார்கள். இறைமறுப்பாளர் அல்லாஹ்விடமுள்ள கருணையைப் பற்றி நன்கறிவாரானால், அவனது சொர்க்கத்தைப் பற்றி (இறைமறுப்பாளர்களில்) யாருமே நிராசை கொள்ளமாட்டார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5317 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(முற்காலத்தில்) நன்மை எதையும் அறவே செய்யாத ஒரு மனிதர் தம் குடும்பத்தாரிடம், "நான் இறந்துவிட்டால் என்னை எரித்து, (சாம்பலாக்கி) அந்தச் சாம்பலில் பாதியைத் தரையிலும் பாதியைக் கடலிலும் தூவி விடுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! என் மீது இறைவனுக்குச் சக்தி ஏற்பட்டால், உலக மக்களில் யாருக்கும் அளிக்காத வேதனையை அவன் எனக்கு அளித்துவிடுவான்" என்று சொல்லி(விட்டு இறந்து)விட்டார்.
அவ்வாறே அந்த மனிதர் இறந்ததும் அவர் சொன்னதைப் போன்றே குடும்பத்தார் செய்தனர். பிறகு அல்லாஹ் தரைக்கு ஆணையிட்டு அதிலிருந்த அவரது உடலை ஒன்று திரட்டினான்; கடலுக்கு ஆணையிட்டு அதிலிருந்த அவரது உடலை ஒன்றுதிரட்டினான். பிறகு, "நீ எதற்காக இப்படிச் செய்தாய்?" என்று கேட்டான். அதற்கு அவர், "என் இறைவா! உன்மீதுள்ள அச்சத்தால்தான் (இப்படிச் செய்தேன்). நீ நன்கறிந்தவன்" என்று சொல்ல, அவரை அல்லாஹ் மன்னித்துவிட்டான்.– இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5318 மஅமர் பின் ராஷித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள், "வியப்பூட்டும் இரு ஹதீஸ்களை உமக்கு நான் அறிவிக்கட்டுமா?" என்று கூறிவிட்டு, நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்ததாக ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் தெரிவித்த பின்வரும் ஹதீஸைச் சொன்னார்கள்:
(முற்காலத்தில் பாவச்செயல்களால் ஒருவர்) தமக்குத்தாமே எல்லை மீறி நடந்தார். அவருக்கு மரண வேளை வந்தபோது, தம் புதல்வர்களிடம் இறுதி விருப்பம் தெரிவித்தார். "நான் இறந்து விட்டால் என்னை எரித்துத் தூளாக்கி,பிறகு கடலில் காற்றில் தூற்றுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! என்மீது என் இறைவனுக்குச் சக்தியேற்பட்டால் எவரையும் வேதனை செய்யாத அளவுக்கு ஒரு வேதனையை (தண்டனையாக) எனக்கு அவன் நிச்சயமாக அளிப்பான்" என்று கூறினார்.
அவ்வாறே (அவர் இறந்ததும் அவருடைய) புதல்வர்கள் செய்தனர். பிறகு அல்லாஹ், பூமியை நோக்கி, "நீ எடுத்ததை (ஒன்றுசேர்த்து)க் கொடுத்துவிடு" என்று கட்டளையிட்டான். அப்போது அந்த மனிதர் (அல்லாஹ்வின் முன்னிலையில் முழு வடிவில்) நின்றார். அவரிடம் அல்லாஹ், "நீ இப்படிச் செய்ய என்ன காரணம்?" என்று கேட்டான்.
அந்த மனிதர், "என் இறைவா! உன் மீதுள்ள அச்சம்தான் (காரணம்)" என்று பதிலளித்தார். இவ்வாறு அவர் கூறியதால் அவருக்கு அல்லாஹ் மன்னிப்பு வழங்கினான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேலும் ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் இன்னொரு ஹதீஸையும் கூறினார்கள். அது வருமாறு:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு பூனையை, அது சாகும்வரை (பட்டினி போட்டு) கட்டிவைத்த காரணத்தால் ஒரு பெண் நரகத்தில் நுழைந்தாள். அவளும் அதற்குத் தீனி போடவில்லை; பூமியின் புழு பூச்சிகளைத் தின்று பிழைத்துக்கொள்ளட்டும் என அதை அவள் அவிழ்த்துவிடவுமில்லை. முடிவில் அது மெலிந்து போய் செத்துவிட்டது.
ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: எந்த மனிதரும் (இறையருளை) முழுவதுமாக நம்பி (நல்லறங்கள் செய்யாமல்) இருந்துவிடக் கூடாது என்பதற்காகவும், எந்த மனிதரும்

(இறையருள்மீது) அவநம்பிக்கை கொண்டுவிடக் கூடாது என்பதற்காகவுமே இந்தத் தகவல் கூறப்படுகிறது.

5319 மேற்கண்ட ஹதீஸ் மஅமர் (ரஹ்) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அவருக்கு அல்லாஹ் மன்னிப்பு வழங்கினான்" என்பதுவரையே இடம்பெற்றுள்ளது. பூனையைக் கட்டிப்போட்ட அந்தப் பெண்ணைப் பற்றிய செய்தி இடம்பெறவில்லை.
ஸுபைதீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், அவரது உடலிலிருந்து எடுத்துக்கொண்ட ஒவ்வொரு பொருளிடமும் "அவரது உடலிலிருந்து நீ எடுத்ததைக் கொடுத்துவிடு' என்று கட்டளையிட்டான்" என இடம்பெற்றுள்ளது.

5320 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுக்குமுன் வாழ்ந்த ஒரு மனிதருக்கு அல்லாஹ் செல்வத்தையும் பிள்ளைகளையும் வழங்கியிருந்தான். (அவருக்கு இறப்பு நெருங்கியபோது) அவர் தம் பிள்ளைகளிடம், "நான் சொல்வதைப் போன்று நீங்கள் செய்ய வேண்டும். இல்லாவிட்டால், என் சொத்துக்களைப் பிறருக்கு வழங்கிவிடுவேன். நான் இறந்துவிட்டால் என்னை எரித்து, தூளாக்கி விடுங்கள். பிறகு அந்தச் சாம்பலைக் காற்றில் தூற்றுங்கள். ஏனெனில், நான் (எனது மறுமைக்காக) அல்லாஹ்விடம் எந்த நன்மையையும் சேமிக்கவில்லை. அல்லாஹ் என்னைத் தண்டிப்பதற்குச் சக்தி பெற்றே உள்ளான்" என்று கூறி உறுதிமொழி வாங்கிக்கொண்டார்.
என் இறைவன் மீதாணையாக! (அவர் இறந்தவுடன்) அவ்வாறே அவர்கள் செய்தார்கள். பிறகு அல்லாஹ் (பழையபடி முழு மனிதராக அவரை எழுப்பி), "இவ்வாறு நீ செய்யக் காரணம் என்ன?" என்று கேட்டான். அம்மனிதர் "உன்மீதான அச்சத்தின் காரணத்தால்தான்" என்று கூறினார். அவரை (அந்த நேரத்தில் இறையச்சம் தான் காப்பாற்றியது) அதைத் தவிர வேறெதுவும் காப்பாற்றவில்லை.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5321 மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஷைபான் மற்றும் அபூஅவானா (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "மக்களில் ஒருவருக்கு அல்லாஹ் செல்வத்தையும் பிள்ளைகளையும் வழங்கியிருந்தான்" என்று இடம்பெற்றுள்ளது.
முஅதமிர் பின் சுலைமான் அத்தைமீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஃப இன்னஹு லம் யப்தயிர் இந்தல்லாஹி கைரன்" என்பதற்கு "அவர் அல்லாஹ்விடம் எந்த நன்மையையும் சேமித்திருக்கவில்லை" என்று கத்தாதா (ரஹ்) அவர்கள் பொருள் செய்ததாக இடம் பெற்றுள்ளது.
(இதைக் குறிக்க) ஷைபான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஃப இன்னஹு மப்தஅர இந்தல்லாஹி கைரன்' (அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் அல்லாஹ்விடம் எந்த நன்மையையும் சேமித்திருக்கவில்லை) என்றும்,அபூஅவானா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மம்தஅர' (அவர் சேமித்திருக்கவில்லை) என்றும் காணப்படுகிறது.

**பாடம் : 5 பாவங்களைத் திரும்பத் திரும்பச் செய்து திரும்பத் திரும்ப பாவமன்னிப்புக் கோரினாலும் பாவமன்னிப்புக் கோரிக்கை ஏற்கப்படல்.**

5322 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் வல்லமையும் மாண்பும் மிக்க தம் இறைவன் குறித்து அறிவித்தார்கள்: ஓர் அடியார் ஒரு பாவம் செய்துவிட்டார். பிறகு "இறைவா! (நான் ஒரு பாவம் செய்து விட்டேன்.) என் பாவத்தை மன்னிப்பாயாக!" என்று கூறினார். உடனே வளமும் உயர்வும் உள்ள இறைவன், "என் அடியான் ஒரு பாவம் செய்துவிட்டுப் பிறகு தனக்கோர் இறைவன் இருக்கின்றான் என்றும், அவன் பாவங்களை மன்னிக்கவும் செய்வான்;பாவங்களுக்காகத் தண்டிக்கவும் செய்வான் என்றும் அறிந்துகொண்டான்" என்று சொல்கிறான். பிறகு அந்த அடியார் மீண்டும் ஒரு பாவத்தைச் செய்துவிட்டு, "என் இறைவா! என் பாவத்தை மன்னிப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்.
அப்போதும் வளமும் உயர்வும் உள்ள இறைவன், "(இம்முறையும்) என் அடியான் ஒரு பாவத்தைச் செய்துவிட்டுப் பிறகு, தனக்கோர் இறைவன் இருக்கின்றான் என்றும், அவன் பாவங்களை மன்னிக்கவும் செய்வான்; பாவங்களுக்காகத் தண்டிக்கவும் செய்வான் என்று அறிந்துகொண்டான்" என்று சொல்கிறான்.
பிறகு அந்த அடியார் மீண்டும் ஒரு பாவத்தைச் செய்துவிட்டு, "என் இறைவா! எனது பாவத்தை மன்னிப்பாயாக!" என்று பிரார்த்தித்தார். அப்போதும் வளமும் உயர்வும் உள்ள இறைவன், "என் அடியான் (இம்முறையும்) ஒரு பாவத்தைச் செய்துவிட்டுப் பிறகு தனக்கோர் இறைவன் இருக்கின்றான் என்றும், அவன் பாவங்களை மன்னிக்கவும் செய்வான்; பாவங்களுக்காகத் தண்டிக்கவும் செய்வான் என்றும் அறிந்துகொண்டான். நீ நாடியதைச் செய்; நான் உனது பாவத்தை மன்னித்துவிட்டேன்" என்று சொல்கிறான்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல் அஃலா பின் ஹம்மாத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: "நீ நாடியதைச் செய்துகொள்" என மூன்றாவது தடவையில் இறைவன் சொல்கிறானா, அல்லது நான்காவது தடவையில் சொல்கிறானா என்பது எனக்குத் தெரியவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5323 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஓர் அடியார் ஒரு பாவத்தைச் செய்துவிட்டார்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
அதில், "அந்த அடியார் பாவம் செய்தார்" என மூன்று முறை ஹம்மாத் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாகவும்,மூன்றாவது தடவையில் "நான் என் அடியானை மன்னித்து விட்டேன். அவன் நாடியதைச் செய்துகொள்ளட்டும்"என்று இறைவன் கூறியதாகவும் இடம் பெற்றுள்ளது.

5324 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், பகலில் பாவம் புரிந்தவர்கள் பாவமன்னிப்புக் கோருவதற்காக இரவில் தனது கையை நீட்டுகிறான்; இரவில் பாவம் புரிந்தவர்கள் பாவமன்னிப்புக் கோருவதற்காக பகலில் கையை நீட்டுகிறான். சூரியன் மேற்கிலிருந்து உதிக்கும் (யுக முடிவு நாள்)வரை (ஒவ்வொரு நாளும் இவ்வாறு செய்துகொண்டிருக்கிறான்).
இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 6 அல்லாஹ்வின் தன்மானமும் மானக்கேடான செயல்களை அவன் தடை செய்திருப்பதும்.

5325 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வைவிட மிகவும் புகழை விரும்புகின்றவர் வேறெவருமிலர். அதனால்தான், அவன் தன்னைத்தானே புகழ்ந்துகொண்டுள்ளான். அல்லாஹ்வைவிட அதிகத் தன்மானமுள்ளவர் வேறெவருமிலர். ஆகவேதான், மானக்கேடான (ஆபாசமான) விஷயங்களுக்கு அவன் தடை விதித்துள்ளான்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5326 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வைவிட அதிகத் தன்மானமுள்ளவர் வேறெவருமிலர். அதனால்தான், மானக்கேடான செயல்களில் வெளிப்படையானவற்றுக்கும் மறைமுகமானவற்றுக்கும் அவன் தடைவிதித்துள்ளான். அல்லாஹ்வைவிட மிகவும் புகழை விரும்புகின்றவர் வேறெவருமிலர்.– இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5327 அம்ர் பின் முர்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூவாயில் (ரஹ்) அவர்கள், நபி (ஸல்) அவர்களிடமிருந்து அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாகப் பின்வருமாறு அறிவித்தார்கள்:
அல்லாஹ்வைவிட அதிகத் தன்மானமுள்ளவர் வேறெவருமிலர். அதனால்தான், மானக்கேடான செயல்களில் வெளிப்படையானவற்றுக்கும் மறைமுகமானவற்றுக்கும் அவன் தடைவிதித்துள்ளான். அல்லாஹ்வைவிட மிகவும் புகழை விரும்புகின்றவர் வேறெவருமிலர். ஆகவேதான், அவன் தன்னைத் தானே புகழ்ந்துகொண்டுள்ளான்.
நான் அபூவாயில் (ரஹ்) அவர்களிடம், "இதை நீங்கள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்து (நேரடியாகச்) செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அபூவாயில் (ரஹ்) அவர்கள், "ஆம், அவர்கள் நபி (ஸல்) அவர் களிடமிருந்து அதை அறிவித்தார்கள்" என்று விடையளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது

5328 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வைவிட மிகவும் புகழை விரும்புகின்றவர் வேறெவருமிலர். அதனால்தான்,அவன் தன்னைத் தானே புகழ்ந்துகொண்டுள்ளான். அல்லாஹ்வைவிட அதிகத் தன்மானமுள்ளவர் வேறெவருமிலர். ஆகவேதான், மானக்கேடான செயல்களுக்கு அவன் தடை விதித்துள்ளான். அல்லாஹ்வைவிட அதிகமாகத் திருந்துவதற்கு வாய்ப்பு அளிப்பதை விரும்பக்கூடியவர் வேறெவருமிலர். அதனால்தான், அவன் வேதங்களை அருளினான்; தூதர்களை அனுப்பினான்.
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5329 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வும் ரோஷம் கொள்கிறான். இறைநம்பிக்கையாளரும் ரோஷம் கொள்கிறார். ஓர் இறைநம்பிக்கையாளர்,அல்லாஹ் தடை செய்தவற்றைச் செய்யும்போதே அல்லாஹ் ரோஷம் கொள்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வைவிட அதிகத் தன்மானமுள்ளவர் வேறு யாருமில்லை.
இதை அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட அபூஹுரைரா (ரலி) அவர்களது ஹதீஸ் வேறு இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5330 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வைவிட அதிகத் தன்மானமுள்ளவர் வேறெவருமில்லை.
இதை அஸ்மா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5331 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளரும் ரோஷம் கொள்கிறார். அவரைவிடக் கடுமையாக அல்லாஹ் ரோஷம் கொள்கிறான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 7 "நன்மைகள் தீமைகளை அழித்து விடும்" (11:114) எனும் இறை வசனம்.

5332 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (அந்நியப்) பெண் ஒருத்தியை முத்தமிட்டுவிட்டார். பிறகு நபி (ஸல்) அவர்களிடம் அந்த மனிதர் வந்து (பரிகாரம் கேட்டு) நடந்ததைச் சொன்னார். அப்போது "பகலின் இரு ஓரங்களிலும், இரவின் சில பகுதிகளிலும் தொழுகையை நிலை நாட்டுவீராக! நன்மைகள் தீமைகளை அழித்துவிடும். இது படிப்பினை பெறுவோருக்கு ஒரு பாடமாகும்" (11:114) எனும் இறைவசனம் அருளப்பெற்றது.

அந்த மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! இது எனக்கு மட்டுமா? (அல்லது அனைவருக்குமா?)" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "என் சமுதாயத்தாரில் இப்படிச் செய்துவிட்ட அனைவருக்கும்தான்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5333 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, தாம் (அந்நியப்) பெண் ஒருத்தியை முத்தமிட்டுவிட்டதாக,அல்லது தொட்டுவிட்டதாக, அல்லது வேறேதோ செய்துவிட்டதாகச் சொன்னார். அவர் அதற்குப் பரிகாரம் கேட்பதைப் போன்றிருந்தது. அப்போது அல்லாஹ் அந்த வசனத்தை (11:114) அருளினான்" என்றும் அதற்கு பின்னுள்ளவையும் இடம்பெற்றுள்ளன.

5334 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒரு மனிதர் (அந்நியப்) பெண் ஒருத்தியிடம் உடலுறவு நீங்கலாக (மற்றச் செயல்) ஒன்றைச் செய்துவிட்டார். பிறகு உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களிடம் வந்(து அதைப் பற்றித் தெரிவித்)தார். அதைப் பெருங்குற்றமாக உமர் (ரலி) அவர்கள் கருதினார்கள். பிறகு அந்த மனிதர் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் வந்(து தெரிவித்)தபோது, அவர்களும் அதைப் பெருங்குற்றமாகக் கருதினார்கள். பிறகு அந்த மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்" என்றும் மேற்கண்ட ஹதீஸில் உள்ள தகவல்களும் இடம்பெற்றுள்ளன.

5335 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் மதீனாவின் புறநகர்ப் பகுதியில் ஒரு பெண்ணிடம் தவறாக நடந்துகொண்டேன். அவளுடன் உடலுறவு கொள்வதைத் தவிர வேறு செயல்களைச் செய்துவிட்டேன். இதோ நான் (இங்கு தயாராக நிற்கிறேன்). என் விஷயத்தில் நீங்கள் நாடியதை நிறைவேற்றுங்கள்" என்று கூறினார்.
அவரிடம் உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வே உனது குற்றத்தை மறைத்துவிட்டிருக்க, நீ உன் குற்றத்தை மறைத்திருக்கக் கூடாதா?" என்று கேட்டார்கள். ஆனால், அந்த மனிதருக்கு நபி (ஸல்) அவர்கள் பதிலேதும் கூறவில்லை.
பிறகு அந்த மனிதர் எழுந்து சென்றுவிட்டார். பின்னர் நபி (ஸல்) அவர்கள் அவரை அழைத்துவர அவருக்குப் பின்னால் ஆளனுப்பினார்கள். அவரிடம், "பகலின் இரு ஓரங்களிலும் இரவின் சில பகுதிகளிலும் தொழுகையை நிலைநாட்டுவீராக! நன்மைகள் தீமைகளை அழித்துவிடும். இது படிப்பினை பெறுவோருக்கு ஒரு பாடமாகும்" (11:114)எனும் இந்த இறைவசனத்தை ஓதிக்காட்டினார்கள்.
அப்போது அங்கிருந்த மக்களில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! இது இவருக்கு மட்டும் உரியதா? (அல்லது அனைவருக்குமா?)" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இல்லை; மக்கள் அனைவருக்கும் உரியதுதான்" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5336 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "முஆத் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! இ(ந்தப் பரிகாரமான)து இவருக்கு மட்டும் உரியதா? அல்லது எங்கள் அனைவருக்கும் உரியதா?" என்று கேட்க, நபி (ஸல்) அவர்கள், "இல்லை; உங்கள் அனைவருக்கும் உரியதுதான்" என்று பதிலளித்ததாகக் காணப்படுகிறது.

5337 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் தண்டனைக்குரிய குற்றமொன்றைச் செய்துவிட்டேன். ஆகவே, என்மீது தண்டனையை நிறைவேற்றுங்கள்" என்றார். அப்போது தொழுகை நேரம் வந்துவிடவே, அவர் நபி (ஸல்) அவர்களுடன் தொழுதார்.
தொழுகையை முடித்தபோது, "அல்லாஹ்வின் தூதரே! நான் தண்டனைக்குரிய குற்றமொன்றைச் செய்துவிட்டேன். ஆகவே, அல்லாஹ்வின் வேதத்தி(லுள்ளபடி தண்டனையி)னை என்மீது நிறைவேற்றுங்கள்" என்று கூறினார்.
நபி (ஸல்) அவர்கள், "எம்முடன் சேர்ந்து நீர் தொழுதீர் அல்லவா?" என்று கேட்டார்கள். அவர் "ஆம் (தொழுதேன்)"என்றார். நபி (ஸல்) அவர்கள், "உமது பாவம் மன்னிக்கப்பட்டுவிட்டது" என்று சொன்னார்கள்.

5338 அபூஉமாமா அல்பாஹிலீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் அமர்ந்திருந்தார்கள். அவர்களுடன் நாங்களும் அமர்ந்திருந்தோம். அப்போது ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் தண்டனைக்குரிய குற்றமொன்றைச் செய்துவிட்டேன். ஆகவே, எனக்குத் தண்டனையை நிறைவேற்றுங்கள்" என்று கூறினார். அவருக்குப் பதிலளிக்காமல் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமைதியாக இருந்தார்கள்.
பிறகு (மீண்டும்) அவர், "அல்லாஹ்வின் தூதரே! நான் தண்டனைக்குரிய குற்றமொன்றைச் செய்து விட்டேன். ஆகவே,எனக்குத் தண்டனையை நிறைவேற்றுங்கள்" என்று கூறினார். அப்போதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்குப் பதிலளிக்காமல் அமைதியாக இருந்தார்கள்.
பிறகு தொழுகைக்காக "இகாமத்' சொல்லப்பட்டது. தொழுகை முடிந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திரும்பிச் சென்றபோது, அந்த மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பின்தொடர்ந்து சென்றார். அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்ன பதிலளிக்கிறார்கள் என்பதைக் காண்பதற்காக அவர்களை நான் பின்தொடர்ந்தேன். அந்த மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! நான் தண்டனைக்குரிய குற்றமொன்றைச் செய்துவிட்டேன். ஆகவே, எனக்குரிய தண்டனையை நிறைவேற்றுங்கள்" என்று கூறினார்.
அப்போது அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் உமது வீட்டிலிருந்து புறப்படும்போது அழகிய முறையில் அங்கத்தூய்மை (உளூ) செய்யவில்லையா?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர் "ஆம் (செய்தேன்);அல்லாஹ்வின் தூதரே!" என்றார்.

"பிறகு நம்முடன் சேர்ந்து நீர் தொழவில்லையா?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.
அந்த மனிதர் "ஆம் (தொழுதேன்); அல்லாஹ்வின் தூதரே!" என்றார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் 'உமக்குரிய தண்டனையை' அல்லது 'உமது பாவத்தை' மன்னித்துவிட்டான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 8 அதிகமான கொலைகள் செய்தவராயிருந்தாலும், கொலையாளியின் பாவமன்னிப்புக் கோரிக்கையும் ஏற்கப்படும்.

5339 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுக்குமுன் வாழ்ந்தவர்களில் ஒரு மனிதர் இருந்தார். அவர் தொண்ணூற்று ஒன்பது மனிதர்களைக் கொன்றுவிட்டிருந்தார்.
பிறகு அவர் அக்கால மக்களில் நன்கறிந்த அறிஞர் யார் என விசாரித்தார். அவருக்கு ஒரு பாதிரியார் காட்டப்பட்டார். அவர் அந்தப் பாதிரியாரிடம் சென்று, "நான் தொண்ணூற்று ஒன்பது மனிதர்களைக் கொன்றுவிட்டேன். எனக்குப் பாவமன்னிப்புக் கிடைக்குமா?" என்று கேட்டார். அந்தப் பாதிரியார், "கிடைக்காது' என்று கூறவே, அவரையும் அந்த மனிதர் கொன்று, எண்ணிக்கையை நூறாக முழுமையாக்கிவிட்டார்.
பிறகு மீண்டும் அக்கால மக்களில் நன்கறிந்த அறிஞரைப் பற்றி அவர் விசாரித்தார். அப்போது அறிஞர் ஒருவர் அவருக்குக் காட்டப்பட்டார். (அவரிடம் சென்று) அந்த மனிதர், "நான் நூறு கொலைகள் செய்துவிட்டேன். எனக்குப் பாவமன்னிப்புக் கிடைக்குமா?" என்று கேட்டார். அதற்கு அந்த அறிஞர், "ஆம் (கிடைக்கும்). இறைவனுக்கும் பாவமன்னிப்புக் கோரிக்கைக்கும் இடையே யார் குறுக்கே வந்து நிற்க முடியும்? நீ (நல்லோர் வாழும்) இன்ன ஊருக்குப் போ. அங்கு மக்கள் சிலர் இருப்பார்கள். அவர்கள் இறைவனை வழிபட்டுக் கொண்டிருப்பார்கள். அவர்களுடன் சேர்ந்து நீயும் இறைவனை வழிபடு. நீ உனது ஊருக்குத் திரும்பிச் செல்லாதே! ஏனெனில், அது தீய ஊராகும்"என்று சொன்னார்.

அவ்வாறே, அந்த மனிதர் (நல்லோர் வாழும்) அந்த ஊரை நோக்கிச் சென்றுகொண்டிருந்த போது, பாதி வழியில் இறந்துவிட்டார். அப்போது இறையருளைக் கொண்டுவரும் வானவர்களும் இறை தண்டனைகளை நிறைவேற்றும் வானவர்களும் அவர் விஷயத்தில் (அவரை யார் அழைத்துச் செல்வது) என்று சர்ச்சை செய்துகொண்டனர்.
அப்போது அருளின் வானவர்கள், "இவர் பாவமன்னிப்புக் கோரி பாவத்திலிருந்து மீண்டு தமது உள்ளத்தால் இறைவனை நோக்கி வந்துகொண்டிருந்தார்" என்று கூறினர். தண்டனையின் வானவர்கள், "இவர் சிறிதும் நன்மைகளைச் செய்யாதவர்" என்று கூறினர்.
அப்போது மற்றொரு வானவர் மனிதத் தோற்றத்தில் அங்கு வந்தார். அவரை அவ்விரு வானவர்களும் நடுவராக வைத்துக்கொண்டனர். அப்போது அந்த வானவர், "இவ்விரு ஊர்களுக்குமிடையிலுள்ள தூரத்தைக் கணக்கெடுங்கள். அவற்றில் எந்த ஊருக்கு மிக அருகில் அவரது உடல் இருக்கிறதோ அந்த ஊருக்குரியவராகவே அவர் இருப்பார்"என்று சொன்னார்.

அவ்வாறே கணக்கெடுத்தபோது, (அவர் வசித்துவந்த ஊரைவிட) அவர் நாடிவந்த ஊரே அவருக்கு மிகவும் சமீபமாக இருப்பதைக் கண்டனர். ஆகவே, அவரை அருளின் வானவர்கள் கைப்பற்றிக்கொண்டனர்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"அவர் (இறக்கும் தறுவாயில்) தமது நெஞ்சை (அந்த நல்ல ஊர் இருக்கும் திசை நோக்கி சாய்த்துக்கொண்(டே இறந்துவிட்)டார்" என்று எங்களிடம் கூறப்பட்டது என ஹசன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

5340 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(பனூ இஸ்ராயீல் சமுதாயத்தைச் சேர்ந்த) ஒரு மனிதர் தொண்ணூற்றொன்பது மனிதர்களைக் கொன்றுவிட்டு, "எனக்குப் பாவமன்னிப்புக் கிடைக்குமா?" என்று கேட்கலானார். ஒரு பாதிரியாரிடம் சென்று கேட்டபோது அவர் "உனக்குப் பாவமன்னிப்புக் கிடைக்காது" என்று சொல்லி விட்டார்.
ஆகவே, அவர் அந்தப் பாதிரியாரையும் கொன்றுவிட்டார். பிறகும் அவர் ("எனக்குப் பாவமன்னிப்புக் கிடைக்குமா?"என்று) கேட்கலானார். (நல்லவர்கள் வாழும் இன்ன ஊருக்குப் போ. உனக்குப் பாவமன்னிப்புக் கிடைக்கும் என்று கூறப்பட்டது.) பிறகு அவர் (தமது) ஊரிலிருந்து நன்மக்கள் வாழும் மற்றோர் ஊருக்குப் புறப்பட்டார். அவர் (பாதி) வழியில் ஓரிடத்தில் இருந்தபோது, மரணம் அவரைத் தழுவியது. (இறக்கும் தறுவாயில்) அவர் தமது நெஞ்சை அந்த (நன்மக்கள் வாழும் ஊர் இருக்கும் திசை நோக்கி) சாய்த்துக்கொண்டே இறந்துவிட்டார்.
அப்போது இறையருளைக் கொண்டுவரும் வானவர்களும் இறைதண்டனைகளை நிறைவேற்றும் வானவர்களும் அவர் விஷயத்தில் (அவரது உயிரை யார் எடுத்துச்செல்வது என்று) சச்சரவிட்டுக் கொண்டனர். அப்போது அந்த மனிதருடைய உடல், அவர் செல்லவிருந்த ஊருக்கு (அவர் புறப்பட்டுவந்த ஊரைவிட) ஒரு சாண் அளவுக்குச் சமீபமாக இருந்த காரணத்தால், அவர் அந்த (நன்மக்கள் வாழும்) ஊர்க்காரர்களில் ஒருவராகவே ஆக்கப்பட்டார். - இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5341 மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல் குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அப்போது அல்லாஹ் அ(வர் புறப்பட்டு வ)ந்த ஊரை நோக்கி, "நீ விலகிச்செல்' என்றும், அ(வர் செல்லவிரு)ந்த ஊரை நோக்கி "நீ நெருங்கிவா' என்றும் அறிவித்தான்" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5342 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் மறுமை நாளில் ஒவ்வொரு முஸ்லிமிடமும் ஒரு யூதரையோ அல்லது கிறித்தவரையோ ஒப்படைத்து, "இவன்தான் உன்னை நரகத்திலிருந்து விடுவித்தான்" என்று சொல்வான்.

இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5343 அவ்ன் பின் அப்தில்லாஹ் (ரஹ்), சயீத் பின் அபீபுர்தா (ரஹ்) ஆகியோர் கூறியதாவது:
"ஒரு முஸ்லிமான மனிதர் இறக்கும்போது நரகத்தில் அவரது இடத்திற்கு யூதர் ஒருவரையோ கிறித்தவர் ஒருவரையோ அல்லாஹ் அனுப்பாமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக (தம் தந்தை) அபூமூசா (ரலி) அவர்கள் கூறினார்கள் என அபூபுர்தா (ரஹ்) அவர்கள் (கலீ..பா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களிடம் அறிவித்தார்கள்.
அப்போது உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள், "எவனைத் தவிர வேறு இறைவனில்லையோ அ(ந்த ஏக இறை)வன் மீது சத்தியமாக! இதை உம்முடைய தந்தை (அபூமூசா (ரலி) அவர்கள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றதாக உம்மிடம் கூறினார்களா?" என்று மூன்று முறை கேட்டார்கள். அபூபுர்தா (ரஹ்) அவர்கள், அவ்வாறே சத்தியமிட்டுக் கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளரான கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் அபூபுர்தா (ரஹ்) அவர்களைச் சத்தியமிட்டுக் கூறச் சொன்னதாக சயீத் பின் அபீபுர்தா (ரஹ்) அவர்கள் என்னிடம் அறிவிக்கவில்லை. ஆனால், அவ்ன் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் அவ்வாறு அறிவித்தபோது, அதற்கு சயீத் பின் அபீபுர்தா (ரஹ்) அவர்கள் மறுப்புத் தெரிவிக்கவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5344 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் முஸ்லிம்களில் சிலர் மலைகளைப் போன்ற பாவங்களுடன் வருவார்கள். ஆனால், அவற்றை அவர்களுக்கு அல்லாஹ் மன்னித்துவிட்டு, யூதர்கள்மீதும் கிறித்தவர்கள் மீதும் அவற்றை வைத்துவிடுவான்.இவ்வாறே நான் கருதுகிறேன்.
இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூரவ்ஹ் ஹரமீ பின் உமாரா (ரஹ்) அவர்கள், "இவ்வாறே நான் கருதுகிறேன் எனும் ஐயப்பாட்டைத் தெரிவித்த அறிவிப்பாளர் யார் என்பது எனக்குத் தெரியவில்லை" என்று கூறுகிறார்கள்.
அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்து இதைச் செவியுற்ற (அவர்களுடைய புதல்வரான) அபூபுர்தா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த ஹதீஸை நான் (கலீ..பா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களிடம் அறிவித்தபோது அவர்கள், "இதை நபி (ஸல்) அவர்களிடமிருந்தா உம்முடைய தந்தை அறிவித்துள்ளார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு நான் "ஆம்' என்றேன்.

5345 ஸ..ப்வான் பின் முஹ்ரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் இப்னு உமர் (ரலி) அவர்களிடம், "(மறுமை நாளில் அல்லாஹ்வுக்கும் அவனுடைய அடியார்களுக்கும் இடையே நடக்கும்) இரகசிய உரையாடல் தொடர்பாக

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் என்ன செவியுற்றீர்கள்?" என்று கேட்டார். அதற்கு இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மறுமை நாளில் இறை நம்பிக்கையாளர் ஒருவர் வல்லமையும் மாண்பும் மிக்க தம் இறைவனுக்கு அருகில் கொண்டுசெல்லப்படுவார். இறைவன் தனது திரையைப் போட்டு (அவரை மறைத்து)விடுவான். அப்போது அந்த இறைநம்பிக்கையாளர் இறைவனிடம் தம் பாவங்களை ஒப்புக் கொள்வார். "நீ (உலகத்தில் செய்த இன்னின்ன பாவங்களை) அறிவாயா?" என்று இறைவன் கேட்பான்.
அதற்கு அந்த நம்பிக்கையாளர், "என் இறைவா! நான் (அவற்றை) அறிவேன்" என்று கூறுவார். அப்போது இறைவன், "நான் அவற்றை உலகில் (மற்றவருக்குத் தெரியாமல்) மறைத்தேன்; இன்று நான் அவற்றையெல்லாம் உனக்காக மன்னித்துவிடுகிறேன்" என்று சொல்வான். பின்னர் அவருடைய நன்மைகளின் ஏடு அவரிடம் கொடுக்கப்படும். இறைமறுப்பாளர்களையும் நயவஞ்சகர்களையும் காட்டி, "இவர்கள்தான் அல்லாஹ்வின் மீது பொய்யுரைத்தவர்கள்"என்று படைப்பினங்களுக்கிடையே அறிவிக்கப்படும்.

## பாடம் : 9 கஅப் பின் மாலிக் (ரலி) மற்றும் அவர்களுடைய இரு தோழர்களின் பாவமன்னிப்புக் கோரிக்கை ஏற்கப்பட்ட நிகழ்ச்சி.

5346 கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
தபூக் போரைத் தவிர, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட எந்தப் போரிலும் ஒருபோதும் நான் கலந்துகொள்ளாமல் இருந்ததில்லை. தவிரவும், நான் பத்ருப் போரிலும் கலந்துகொள்ளவில்லைதான். ஆயினும்,பத்ரில் கலந்துகொள்ளாத எவரையும் (அல்லாஹ்) கண்டிக்கவில்லை. (ஏனெனில்,) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் குறைஷியரின் வணிகக் குழுவை (வழிமறிக்க) நாடியே (பத்ருக்குப்) போனார்கள். (போன இடத்தில்) போர் செய்யும் திட்டம் இல்லாமலேயே முஸ்லிம்களையும் எதிரிகளையும் அல்லாஹ் (பத்ருக் களத்தில்) சந்திக்கும்படி செய்துவிட்டான்.
"இஸ்லாத்தில் நாங்கள் நிலைத்திருப்போம்" என (அன்சாரிகளான) நாங்கள் உறுதிமொழி அளித்த "அகபா இரவில்' அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நானும் இருந்தேன். இதற்குப் பதிலாகப் பத்ருப் போரில் கலந்துகொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்க வேண்டும் என நான் விரும்பியதில்லை. "அல்அகபா' பிரமாணத்தை விட "பத்ருப்போர்' மக்களிடையே பெரிதாகப் பேசப்பட்டாலும் சரியே!
தபூக் போரில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் கலந்துகொள்ளாதது(ம் அதையடுத்து நடந்த நிகழ்ச்சிகளும்) குறித்த என் செய்திகள் சில பின்வருமாறு:
அந்த (தபூக்) போரில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் கலந்துகொள்ளாத போது இருந்த உடல் பலமும் பொருள் வசதியும் (என் வாழ்நாளில்) வேறெப்போதும் எனக்கு இருந்ததில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அதற்குமுன் ஒரே நேரத்தில் இரண்டு ஒட்டக வாகனங்கள் ஒருபோதும் என்னிடம் இருந்ததில்லை. ஆனால், அந்தப் போரின்போது ஒரே நேரத்தில் இரண்டு ஒட்டகங்களை நான் வைத்திருந்தேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கடுமையான கோடை காலத்தில் அந்தப் போருக்குப் புறப்படவிருந்தார்கள். தொலைதூரப் பயணம் மேற்கொள்ள வேண்டியிருக்கும் என்றும், பெரும் (பாலைவன) வனாந்திரப் பிரதேசத்தைக் கடந்துசெல்ல வேண்டியிருக்கும் என்றும் அதிக (எண்ணிக்கையிலான) எதிரிகளைச் சந்திக்க வேண்டியிருக்கும் என்றும் எதிர்பார்த்தார்கள்.
எனவே, முஸ்லிம்களுக்கு அவர்கள் எதிர்கொள்ள வேண்டியது பற்றி வெளிப்படையாகவே தெரிவித்துவிட்டார்கள். அப்போதுதான் அவர்கள் தங்களின் போருக்காக ஆயத்தப் பணிகளை மேற்கொள்ள முடியும். தாம் விரும்பிய இலக்(கான "தபூக்')கை முஸ்லிம்களுக்குத் தெரிவித்தும் விட்டார்கள்.
"எழுதப்படும் எந்த (பெயர்)ப் பதிவேடும் இத்தனை பேருக்கு இடமளிக்காது' எனும் அளவுக்கு முஸ்லிம்கள் பெரும் எண்ணிக்கையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தார்கள்.
(போரில் கலந்துகொள்ளாமல்) தலைமறைவாகிவிடலாமென நினைக்கும் எந்த மனிதரும், அல்லாஹ்விடமிருந்து அறிவிப்பு (வஹீ) வராதவரையில் (தாம் போருக்கு வராத) விஷயம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குத் தெரியவராது என நினைக்காமலிருப்பது அரிதேயாகும் (அந்த அளவுக்குப் படையினரின் எண்ணிக்கை மிகுந்திருந்தது. பேரீச்சம்) பழங்கள் பழுத்து மர நிழல்கள் அடர்ந்திருந்த (அறுவடைக் காலமான அந்த வெப்பம் மிகுந்த வெயில்) காலத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தப் போருக்குச் செல்ல ஆயத்தமானார்கள். அதற்குச் செல்ல நானும் ஆசைப்பட்டேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அவர்களுடன் முஸ்லிம்களும் பயண ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தனர். நானும் அவர்களுடன் சேர்ந்துகொண்டு பயண ஏற்பாடுகளைச் செய்ய காலை நேரத்தில் செல்லலானேன். எனது பயணத்திற்கான எந்த ஏற்பாட்டையும் செய்து முடிக்காமல் திரும்பி வந்துவிடுவேன். "நினைக்கும்போது அந்த ஏற்பாடுகளைச் செய்து முடிக்க எனக்குத்தான் சக்தியிருக்கிறதே! (பிறகு, நான் ஏன் அவசரப்பட வேண்டும்?)" என்று என் மனத்திற்குள் கூறிக்கொள்வேன். என் நிலை இப்படியே நீடித்துக்கொண்டிருந்தது. மக்கள் (பயணம் புறப்பட) சிரமப்பட்டுக் கொண்டிருந்தனர். (ஒரு வழியாகப் பயண ஏற்பாடு முடிந்தது.)
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும், அவர்களுடன் முஸ்லிம்களும் (ஒரு) காலை நேரத்தில் புறப்பட்டுவிட்டார்கள். அப்போதும் நான் என் பயணத்துக்கு வேண்டிய எந்த ஏற்பாட்டையும் செய்து முடித்திருக்கவில்லை. பிறகு (மறுநாள்) காலை சென்றேன். எதையும் முடிக்காமல் திரும்பினேன். என் நிலை இப்படியே (இன்று, நாளை என) இழுத்துக்கொண்டே சென்றது.
முஸ்லிம்கள் விரைவாகப் புறப்பட்டுச் சென்றுவிட்டனர். (எனக்கு) அந்தப் போர் கை நழுவி விட்டது. நான் உடனடியாகப் புறப்பட்டுச் சென்று படையினருடன் சேர்ந்துகொள்ளலாம் என்று நினைத்தேன். அப்படி நான் செய்திருந்தால், நன்றாக இருந்திருக்கும். (ஆனால், என்ன செய்வது?) அது என் விதியில் எழுதப்பட்டிருக்கவில்லை.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் போருக்குச் சென்றதன் பின்னர், மதீனாவில் நான் மக்களிடையே சுற்றிவரலானேன். அப்போது எனக்குப் பெரும் வருத்தமே ஏற்பட்டது.

நயவஞ்சகர் எனச் சந்தேகிக்கப்பட்ட மனிதர்களையும், இறைவனால் சலுகை வழங்கப்பட்ட (முதியோர், பெண்கள் போன்ற) பலவீனர்களையும் தவிர வேறெவரையும் எனக்கு முன்மாதிரியாக நான் (மதீனாவிற்குள்) பார்க்கவில்லை.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தபூக் சென்றடையும்வரையில் என்னை நினைவு கூரவேயில்லை. தபூக்கில் மக்களிடையே அமர்ந்திருந்தபோதுதான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கஅப் பின் மாலிக் என்ன ஆனார்?" என்று கேட்டார்கள். பனூ சலிமா குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! அவருடைய இரு ஆடைகளும் அவற்றைத் தம் தோள்களில் போட்டு அவர் (அழகு) பார்த்துக்கொண்டிருப்பதும்தான் அவரை வரவிடாமல் தடுத்துவிட்டன" என்று கூறினார்.

உடனே முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் (அந்த மனிதரை நோக்கி), "நீர் சொன்னது தவறு. அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதரே! அவரைக் குறித்து நல்லதைத் தவிர வேறெதையும் நாங்கள் அறிந்திருக்கவில்லை" என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பதிலேதும் கூறாமல்) மௌனமாகவே இருந்தார்கள். இவ்வாறு அவர்கள் இருந்தபோது, (பாலைவெளியில்) கானல் நீரினூடே வெள்ளை ஆடை அணிந்து ஒரு மனிதர் வருவதைக் கண்டார்கள்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் அபூகைஸமாவாகவே இருக்க வேண்டும்" என்று சொன்னார்கள். அவர் அபூகைஸமா அல்அன்சாரீ (ரலி) அவர்களாகவே இருந்தார். அவர்தான் ஒரு "ஸாஉ' பேரீச்சம் பழத்தைத் தானமாகக் கொண்டுவந்தபோது நயவஞ்சகர்களின் பரிகாசத்திற்கு ஆளானவர் ஆவார்.

(தொடர்ந்து) கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தபூக்கிலிருந்து) திரும்பி வந்துகொண்டிருக்கிறார்கள் என்ற செய்தி எனக்கு எட்டிய போது, பெருங்கவலை என்னை ஆட்கொண்டது. (அல்லாஹ்வின் தூதரிடம் சாக்குப்போக்குச் சொல்வதற்காகப்) பொய்யான காரணங்களை நான் யோசிக்கத் தொடங்கினேன்.

"நாளை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கடுங்கோபத்திலிருந்து நான் எப்படித் தப்புவேன்?" என்று (எனக்கு நானே) கேட்டுக்கொண்டேன். அதற்காக நான் என் குடும்பத்தாரில் கருத்துள்ள ஒவ்வொருவரிடமும் (ஆலோசனை) உதவி தேடலானேன்.

ஆனால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனாவை) நெருங்கி வந்துவிட்டார்கள் என்று எனக்குச் சொல்லப்பட்டபோது, (நான் புனைந்துவைத்திருந்த) பொய்மை என் மனத்தை விட்டு விலகிவிட்டது. பொய்யான காரணம் எதையும் சொல்லி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து ஒருபோதும் தப்பித்துக்கொள்ள முடியாது (அல்லாஹ் எல்லாவற்றையும் அறிந்தவன். அவன் தன் தூதருக்கு உண்மை நிலவரத்தைத் தெரிவித்துவிடுவான்) என்று உணர்ந்து, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உண்மையே சொல்ல வேண்டும் என முடிவு செய்தேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காலை நேரத்தில் (மதீனாவுக்கு) வருகை புரிந்தார்கள். (பொதுவாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்திலிருந்து திரும்பி வந்தால், முதலில் பள்ளிவாசலுக்குச் சென்று அங்கு இரண்டு ரக்அத்கள் தொழுதபின் மக்களைச் சந்திப்பதற்காக (அங்கு) அமர்ந்துகொள்வது அவர்களது வழக்கம்.

(வழக்கம்போல்) அவ்வாறு அவர்கள் செய்தபோது, (தபூக் போரில் கலந்துகொள்ளச் செல்லாமல்) பின்தங்கிவிட்டவர்கள் அவர்களிடம் வந்து, அவர்களுக்கு முன்னால்

சத்தியமிட்டு (தாம் போருக்கு வராமல் போனதற்கு) சாக்குப்போக்குக் கூறத் தொடங்கினர். அவர்கள் எண்பதுக்கும் மேற்பட்ட நபர்களாக இருந்தனர். அவர்கள் சொன்ன வெளிப்படையான காரணங்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏற்றுக்கொண்டு, அவர்களிடம் உறுதிப் பிரமாணம் வாங்கிக் கொண்டு, அவர்களுக்காகப் பாவமன்னிப்பும் தேடினார்கள். அவர்களின் அந்தரங்கத்தை அல்லாஹ்விடமே ஒப்படைத்து விட்டார்கள்.

இறுதியில் நான் (அவர்களிடம்) வந்தேன். அவர்களுக்கு நான் சலாம் சொன்னபோது கோபத்திலிருப்பவர் எவ்வாறு புன்னகைப்பாரோ அவ்வாறு புன்னகைத்தார்கள். பிறகு, "(அருகில்) வாருங்கள்!" என்று கூறினார்கள். உடனே நான் (சில எட்டுகள் வைத்து) நடந்து சென்று அவர்கள் முன்னிலையில் அமர்ந்து கொண்டேன். அப்போது அவர்கள் என்னிடம், "(போரில்) நீங்கள் ஏன் கலந்துகொள்ளவில்லை? நீங்கள் (போருக்காக) ஒட்டக வாகனம் வாங்கி வைத்துக்கொண்டிருக்கவில்லையா?" என்று கேட்டார்கள்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் மீதாணையாக! தாங்கள் அல்லாத (வேறு எவரேனும் ஓர்) உலகாயதவாதிக்கு அருகில் நான் அமர்ந்திருந்தால், ஏதாவது (பொய்யான) சாக்குப்போக்குச் சொல்லி அவரது கோபத்திலிருந்து தப்பிக்க உடனடியாக வழி கண்டிருப்பேன். (எவராலும் வெல்ல முடியாத) வாதத்திறன் எனக்கு வழங்கப்பட்டுள்ளது. ஆயினும், அல்லாஹ்வின் மீதாணையாக! தங்களிடம் ஏதாவது பொய்யைச் சொல்லி இன்று உங்களை நான் திருப்திபடுத்திவிட்டாலும், அல்லாஹ் வெகுவிரைவில் (உண்மை நிலவரத்தைத் தங்களுக்குத் தெரியப்படுத்தி) என்மீது தங்களைக் கடுங்கோபம் கொள்ளச் செய்துவிடுவான் என்பதை நான் நன்கு அறிந்துள்ளேன்.

(அதே சமயம்) தங்களிடம் நான் உண்மையைச் சொல்லிவிட்டால் (தற்சமயம்) அது தொடர்பாக என்மீது தாங்கள் வருத்தப்படுவீர்கள். ஆயினும், இந்த விஷயத்தில் அல்லாஹ்விடமே இறுதி முடிவை நான் எதிர்பார்க்கிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! (நான் போரில் கலந்துகொள்ளாததற்கு) என்னிடம் எந்தக் காரணமும் இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! தங்களுடன் நான் வராமல் பின்தங்கிவிட்ட அந்த நேரத்தில் எனக்கிருந்த உடல் பலமும் வசதி வாய்ப்பும் அதற்கு முன் ஒருபோதும் எனக்கு இருந்ததில்லை" என்று சொன்னேன்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதோ இவர் உண்மையே சொன்னார்" (என்று கூறிவிட்டு, என்னை நோக்கி) "சரி, எழுந்து செல்லுங்கள். உங்கள் விஷயத்தில் அல்லாஹ்வே தீர்ப்பளிப்பான்" என்று சொன்னார்கள். உடனே நான் எழுந்து சென்றுவிட்டேன். பனூ சலிமா (எனும் என்) குலத்தைச் சேர்ந்த சிலர் என்னைப் பின்தொடர்ந்து ஓடிவந்து, "அல்லாஹ்வின் மீதாணையாக! இதற்கு முன்னால் எந்தக் குற்றத்தையும் நீங்கள் செய்ததாக நாங்கள் அறிந்ததில்லை. போரில் கலந்துகொள்ளாத (மற்ற)வர்கள் சொன்ன அதே (பொய்க்) காரணத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சொல்வதற்குக்கூட உங்களால் இயலாமற்போய்விட்டதே! நீங்கள் செய்த குற்றத்திற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்கும் பாவமன்னிப்பே உங்களுக்குப் போதுமானதாய் இருந்திருக்குமே!" என்று சொன்னார்கள்.

அல்லாஹ்வின் மீதாணையாக! பனூ சலிமா குலத்தார் என்னைக் கடுமையாகப் பழித்துக்கொண்டேயிருந்தனர். எந்த அளவுக்கென்றால், நான் (அல்லாஹ்வின் தூதரிடம்) திரும்பிச் சென்று (இதற்குமுன்) நான் சொன்னது பொய் என்று (கூறி, போரில் கலந்து

கொள்ளாததற்கு ஏதாவது பொய்க் காரணத்தைச்) சொல்லிவிடலாமா என்றுகூட நினைத்தேன்.

பிறகு நான் பனூ சலிமா குலத்தாரை நோக்கி, "(தீர்ப்பு தள்ளிவைக்கப்பட்ட) இந்த நிலையை, என்னுடன் வேறு யாரேனும் சந்தித்திருக்கிறார்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம். உம்முடன் இரண்டு பேர் இதே நிலையைச் சந்தித்திருக்கிறார்கள். அவர்கள் இருவரும் நீங்கள் சொன்னதைப் போன்றே (உண்மையான காரணத்தை அல்லாஹ்வின் தூதரிடம்) கூறினர். உங்களிடம் சொல்லப்பட்டதுதான் அவர்களிடமும் சொல்லப்பட்டது" என்று கூறினர்.

அப்போது நான், "அவர்கள் இருவரும் யார்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "முராரா பின் அர்ரபீஆ அல்ஆமிரீ (ரலி) அவர்களும், ஹிலால் பின் உமய்யா அல்வாகிஃபீ (ரலி) அவர்களும்" என்று பத்ருப் போரில் கலந்துகொண்ட இரண்டு நல்ல மனிதர்களின் பெயர்களை என்னிடம் கூறினர். அவர்கள் இருவராலும் (எனக்கு) ஆறுதல் கிடைத்தது. அவர்கள் இருவரின் பெயர்களையும் பனூ சலிமா குலத்தார் என்னிடம் சொன்னவுடன் நான் (என் இல்லத்திற்குச்) சென்று விட்டேன்.

அந்தப் போரில் கலந்துகொள்ளாதவர்களில் எங்கள் மூவரிடம் மட்டும் (யாரும்) பேசக் கூடாதென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முஸ்லிம்களுக்குத் தடைவிதித்து விட்டார்கள். எனவே, மக்கள் எங்களைத் தவிர்த்தனர். அவர்கள் (முற்றிலும்) எங்கள் விஷயத்தில் மாறிப்போய்விட்டனர். (வெறுத்துப்போனதால்) என் விஷயத்தில் இப்புவியே மாறிவிட்டது போலவும், அது எனக்கு அந்நியமானது போலவும் நான் கருதினேன்.

இதே நிலையில் நாங்கள் ஐம்பது நாட்கள் இருந்தோம். என்னுடைய இரு சகாக்களும் (முராராவும் ஹிலாலும்) செயலிழந்துபோய்த் தம் இல்லங்களிலேயே அமர்ந்துகொண்டு அழுதுகொண்டிருந்தனர். ஆனால், நான் மக்களிலேயே இளம் வயதினனாகவும் பலமிக்கவனாகவும் இருந்தேன். எனவே, நான் (வீட்டைவிட்டு) வெளியேறி (முஸ்லிம்களுடன்) தொழுகையில் கலந்துகொண்டும், கடை வீதிகளில் சுற்றிக்கொண்டும் இருந்தேன். என்னிடம் யாரும் பேசமாட்டார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்துக்கொண்டு அமர்ந்திருக்கும் போது அவர்களிடம் நான் சென்று அவர்களுக்கு சலாம் கூறுவேன். எனக்குப் பதில் சலாம் சொல்வதற்காக அவர்கள், தம் உதடுகளை அசைக்கிறார்களா இல்லையா என்று எனக்கு நானே கேட்டுக்கொள்வேன்.

பிறகு அவர்களுக்கு அருகிலேயே (கூடுதலான) தொழுகைகளை நிறைவேற்றுவேன். அப்போது (என்னை அவர்கள் பார்க்கிறார்களா என்று) ஓரக்கண்ணால் திருட்டுத்தனமாகப் பார்ப்பேன். நான் எனது தொழுகையில் ஈடுபட்டவுடன் அவர்கள் என்னைக் கவனிப்பதும், அவர்கள் பக்கம் நான் திரும்பும்போது அவர்கள் என்னிடமிருந்து முகத்தைத் திருப்பிக் கொள்வதுமாக இருந்தார்கள்.

மக்களின் புறக்கணிப்பு நீடித்துக்கொண்டே சென்றபோது, நான் நடந்துபோய் அபூகத்தாதா (ரலி) அவர்களின் தோட்டத்தின் மதில்மீது ஏறினேன். –அவர் என் தந்தையின் சகோதரர் புதல்வரும், மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவரும் ஆவார்– அவருக்கு நான் சலாம் சொன்னேன். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் எனக்குப் பதில் சலாம் சொல்லவில்லை. உடனே நான், "அபூகத்தாதா! அல்லாஹ்வை முன்வைத்து உம்மிடம் கேட்கிறேன்.

அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நான் நேசிக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டேன். அதற்கு அவர் (பதிலேதும் கூறாமல்) மௌனமாயிருந்தார்.
பிறகு மீண்டும் அவரிடம் அல்லாஹ்வை முன்வைத்து முன்பு போலவே கேட்டேன். அப்போதும் அவர் மௌனமாகவே இருந்தார். (மூன்றாம் முறையாக) மீண்டும் அவரிடம் நான் அல்லாஹ்வை முன்வைத்துக் கேட்டேன். அப்போது அவர், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்" என்று (மட்டும்) பதிலளித்தார். அப்போது என் இரு விழிகளும் (கண்ணீரைப்) பொழிந்தன. பிறகு (மறுபடியும்) சுவரேறி திரும்பி வந்துவிட்டேன்.
(நிலைமை இவ்வாறு நீடித்துக்கொண்டிருக்க ஒரு நாள்) மதீனாவின் கடைத்தெருவில் நடந்துகொண்டிருந்தேன். அப்போது மதீனாவுக்கு உணவு தானிய விற்பனைக்காக வந்திருந்த ஷாம் (சிரியா) நாட்டு விவசாயிகளில் ஒருவர், "கஅப் பின் மாலிக்கை எனக்கு அறிவிப்பவர் யார்?" என்று (என்னைக் குறித்து) விசாரித்துக்கொண்டிருந்தார். மக்கள் என்னை நோக்கி அவருக்குச் சைகை செய்யலாயினர். உடனே அவர் என்னிடம் வந்து, "ஃகஸ்ஸான்' நாட்டின் அரசனிடமிருந்து (எனக்கு எழுதப்பட்டிருந்த) கடிதமொன்றைத் தந்தார். நானும் எழுத(ப் படிக்க)த் தெரிந்தவனாக இருந்தேன். ஆகவே, அதை நான் வாசித்துப் பார்த்தேன். அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:
இறைவாழ்த்துக்குப் பின்! உங்கள் தோழர் (முஹம்மத்) உங்களைப் புறக்கணித்து (ஒதுக்கி)விட்டார் என்று எமக்குச் செய்தி எட்டியது. உங்களை இழிவு செய்து (உங்கள் உரிமைகள்) வீணடிக்கப்படும் நாட்டில் நீங்கள் நீடிக்க வேண்டுமென்ற அவசியத்தை உங்களுக்கு அல்லாஹ் ஏற்படுத்தவில்லை. எனவே, எங்களிடம் வந்துவிடுங்கள். நாங்கள் உங்களிடம் நேசம் காட்டுகிறோம்.

இதை நான் படித்தபோது, "இது இன்னொரு சோதனையாயிற்றே!" என்று (என் மனதிற்குள்) கூறிக்கொண்டு, அதை எடுத்துச் சென்று (ரொட்டி சுடும்) அடுப்பிலிட்டுப் பொசுக்கிவிட்டேன்.
ஐம்பது நாட்களில் நாற்பது நாட்கள் கழிந்து, இறை அறிவிப்பு (வஹீ) வருவதும் தாமதமாயிருந்த போது,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தூதர் ஒருவர் என்னிடம் வந்தார். "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நீங்கள் உங்கள் மனைவியரிடமிருந்து விலகிவிட வேண்டுமென்று உத்தரவிடுகிறார்கள்" என்று அவர் கூறினார். அதற்கு நான், "அவளை நான் விவாகரத்துச் செய்துவிடவா? அல்லது நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டேன். அவர், "இல்லை (விவாகரத்துச் செய்ய வேண்டாம்). அவரைவிட்டு நீங்கள் விலகியிருக்க வேண்டும். அவரை நெருங்கக்கூடாது (இதுவே இறைத்தூதர் உத்தரவு)" என்று கூறினார்.
இதைப் போன்றே, என் இரு சகாக்களுக்கும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (உத்தரவு) அனுப்பியிருந்தார்கள். ஆகவே, நான் என் மனைவியிடம், "உன் குடும்பத்தாரிடம் சென்றுவிடு; இந்த விஷயத்தில் அல்லாஹ் தீர்ப்பளிக்கும் வரையில் அவர்களிடமே இருந்துவா" என்று சொன்னேன்.
(என் சகா) ஹிலால் பின் உமய்யா (ரலி) அவர்களின் துணைவியார் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! (என் கணவர்) ஹிலால் பின் உமய்யா செயல்பட முடியாத முதியவர். அவரிடம் ஊழியர் யாருமில்லை. நானே (தொடர்ந்து) அவருக்கு ஊழியம் செய்வதைத் தாங்கள் வெறுப்பீர்களா?" என்று கேட்டார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை. ஆயினும், அவர் உன்னை (தாம்பத்திய உறவு கொள்ள) நெருங்க வேண்டாம்" என்று சொன்னார்கள். ஹிலால் அவர்களின் மனைவி, "அல்லாஹ்வின் மீதாணையாக! என் கணவரிடம் எந்த இயக்கமும் இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அவரது விஷயத்தில் இந்த நிகழ்ச்சி நடைபெற்றதிலிருந்து இன்றுவரையில் அவர் அழுதுகொண்டேயிருக்கிறார்" என்று (அல்லாஹ்வின் தூதரிடம்) கூறினார்.

(தொடர்ந்து) கஅப் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

என் வீட்டாரில் ஒருவர், தம் கணவருக்குப் பணிவிடை செய்ய ஹிலால் பின் உமய்யா அவர்களின் மனைவியை அனுமதித்ததைப் போன்று, உங்கள் மனைவியை (உங்களுக்குப் பணிவிடை செய்ய) அனுமதிக்கும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டால் (நன்றாயிருக்குமே!)" என்று கூறினார்.

அதற்கு நான், "என் மனைவி விஷயத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் நான் அனுமதி கேட்கமாட்டேன். என் மனைவி விஷயமாக நான் அனுமதி கோரும்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்ன (பதில்) சொல்வார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. நானோ இளைஞனாகவேறு இருக்கிறேன். (ஹிலால், என்னைவிட வயதில் பெரியவர். அதனால் அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சலுகை காட்டியிருக்கலாம்)" என்று கூறி (மறுத்து)விட்டேன். அதற்குப் பின் பத்து நாட்கள் இவ்வாறே கழிந்தன. எங்களிடம் பேசக் கூடாதென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்த நாளிலிருந்து ஐம்பது நாட்கள் பூர்த்தியாயின.

நான் ஐம்பதாம் நாளின் ஃபஜ்ருத் தொழுகையை எங்கள் வீடுகளில் ஒன்றின் மாடியில் நிறைவேற்றிவிட்டு, அல்லாஹ் எங்கள் மூவரையும் குறித்து (9:118ஆவது வசனத்தில்) குறிப்பிட்டுள்ள நிலையில் அமர்ந்திருந்தேன்: (அதாவது:) "பூமி இத்தனை விசாலமாய் இருந்தும் என்னைப் பொறுத்தவரையில் அது குறுகி, நான் உயிர்வாழ்வதே மிகக் கஷ்டமாயிருந்தது." அப்போது "சல்உ' மலை மீதேறி பொது அறிவிப்புச் செய்பவர் ஒருவர் உரத்த குரலில், "கஅப் பின் மாலிக்கே! நற்செய்தி பெறுவீராக!" என்று கூறினார்.

உடனே நான் சஜ்தாவில் விழுந்தேன். மகிழ்ச்சி வந்துவிட்டது என்று நான் அறிந்து கொண்டேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுதுகொண்டிருந்த போது, (வஹீ அறிவிக்கப்பட்டு) எங்களது பாவமன்னிப்புக் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக்கொண்டான் என்று அறிவித்துவிட்டார்கள். உடனே மக்கள் எங்களுக்கு நல்வாழ்த்துச் சொல்ல வரலாயினர். என் இரு சகாக்களையும் நோக்கி நற்செய்தி சொல்பவர்கள் சென்றனர். என்னை நோக்கி ஒருவர் குதிரையில் விரைந்து வந்தார்.

"அஸ்லம்' குலத்தைச் சேர்ந்த ஒருவர் எனக்காக (நற்செய்தி சொல்ல) ஓடிச்சென்று மலைமீது ஏறிக்கொண்டார். (மேலும், உரத்த குரலில் எனக்கு நற்செய்தி சொன்னார். மலைமீதிருந்து வந்த) அந்தக் குரலொலி அக்குதிரையைவிட வேகமாக வந்துசேர்ந்தது.

எவரது குரலை (மலைமீதிருந்து) கேட்டேனோ அவர் என்னிடம் நற்செய்தி சொல்ல (நேரடியாக) வந்தபோது, நான் என் இரு ஆடைகளையும் கழற்றி அவர் சொன்ன நற்செய்திக்குப் பகரமாக (பரிசாக) அவருக்கு அணிவித்தேன்.அல்லாஹ்வின் மீதாணையாக! (ஆடைகளில்) அந்த இரண்டைத் தவிர வேறெதுவும் அப்போது எனக்குச் சொந்தமானதாக

இருக்கவில்லை. (வேறு) இரண்டு ஆடைகளை (அபூகத்தாதா அவர்களிடமிருந்து) இரவல் வாங்கி அணிந்துகொண்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி நடந்தேன்.
அப்போது (வழியில்) மக்கள் கூட்டங்கூட்டமாக வந்து என்னைச் சந்தித்து, எனக்குப் பாவ மன்னிப்புக் கிடைத்ததால், "அல்லாஹ் உங்கள் பாவத்தை மன்னித்துவிட்டதற்காக உங்களுக்கு வாழ்த்துச் சொல்கிறோம்" என்று கூறலாயினர். நான் சென்று (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்குள் நுழைந்தேன். அங்கு தம்மைச் சுற்றிலும் மக்களிருக்க,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்திருந்தார்கள்.
அப்போது என்னை நோக்கி தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்கள் எழுந்தோடி வந்து எனக்குக் கைலாகு கொடுத்து என்னை வாழ்த்தினார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! முஹாஜிர்களில் தல்ஹாவைத் தவிர வேறெவரும் என்னை நோக்கி எழுந்து வரவில்லை. – தல்ஹா (ரலி) அவர்கள் காட்டிய இந்த அன்பை ஒருபோதும் கஅப் மறக்கவில்லை.–
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முகமன் (சலாம்) சொன்னபோது, சந்தோஷத்தில் அவர்கள் முகம் ஒளிர, "உம்மை உம்முடைய தாய் பெற்றெடுத்தது முதல் நீர் கடந்துவந்த நாட்களில் மிகச் சிறந்த நாளான இன்று உமக்கு (பாவமன்னிப்புக் கிடைத்த) நற்செய்தி பெறுக" என்று சொன்னார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! (இந்த நற்செய்தியைத்) தாங்களே தங்கள் தரப்பிலிருந்து தெரிவிக்கிறீர்களா? அல்லது அல்லாஹ்வின் தரப்பிலிருந்து (வந்த வேதஅறிவிப்பின் அடிப்படையில்) அறிவிக்கிறீர்களா?" என்று கேட்டேன்.

அவர்கள், "இல்லை (என் தரப்பிலிருந்து நான் இதைத் தெரிவிக்கவில்லை). அல்லாஹ்வின் தரப்பிலிருந்து (வந்துள்ள வேதஅறிவிப்பின் அடிப்படையில்)தான் தெரிவிக்கிறேன்" என்று சொன்னார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஏதாவது மகிழ்ச்சி ஏற்படும்போது அவர்களது முகம் சந்திரனின் ஒரு துண்டு போன்றாகி ஒளிரும். அவர்களது முகம் ஒளிர்வதை வைத்து அவர்களது மகிழ்ச்சியை நாங்கள் அறிந்துகொள்வோம்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் நான் அமர்ந்தபோது, "அல்லாஹ்வின் தூதரே! எனது பாவம் மன்னிக்கப்பட்டதற்காக என் சொத்துகள் அனைத்தையும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் (அவர்கள் விரும்பும் வழியில் செலவிட்டுக் கொள்வதற்காக) தானமாக அளித்துவிடுகிறேன்" என்று சொன்னேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்கள் செல்வத்தில் சிறிதளவை உங்களுக்காக வைத்துக்கொள்ளுங்கள். அதுவே உங்களுக்கு நல்லது" என்று கூறினார்கள்.
"கைபர் போரில் எனக்குக் கிடைத்த பங்கை நான் (எனக்காக) வைத்துக்கொள்கிறேன். அல்லாஹ்வின் தூதரே! உண்மை பேசிய காரணத்தால்தான் அல்லாஹ் என்னைக் காப்பாற்றினான். (உண்மைக்குக் கிடைத்த பரிசாக) என் பாவமன்னிப்புக் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டதையடுத்து நான் உயிரோடு வாழும்வரையில் உண்மையைத் தவிர வேறெதையும் பேசமாட்டேன்" என்று கூறினேன்.
ஆகவே, அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இந்த வார்த்தையை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறிய நாளிலிருந்து இன்றுவரை உண்மை பேசியதற்காக எனக்கு அல்லாஹ் அருள் புரிந்ததைப் போன்று வேறெந்த முஸ்லிமுக்கும் அல்லாஹ் அருள் புரிந்ததாக நான் அறியவில்லை. இந்த உறுதிமொழியை நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்)

அவர்களிடம் சொன்ன நாளிலிருந்து இந்த நாள்வரை நான் பொய்யை நினைத்துப் பார்த்ததுகூட இல்லை. நான் (உயிரோடு) எஞ்சியிருக்கும் நாட்களிலும் அல்லாஹ் என்னை (பொய் சொல்லவிடாமல்) பாதுகாப்பான் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

மேலும், வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "உறுதியாக, அல்லாஹ் இந்த நபியையும், ஹிஜ்ரத் செய்தோரையும், அன்சாரிகளையும் மன்னித்துவிட்டான். அவர்களில் ஒரு பிரிவினரின் உள்ளங்கள் தடம்புரள முற்பட்ட பின்னரும், சிரமமான காலகட்டத்தில் நபியைப் பின்பற்றிய அவர்களை அல்லாஹ் மன்னித்தான். அவன் அவர்களிடம் நிகரற்ற அன்புடையோன்; இரக்கமுடையோன். தீர்ப்பு நிறுத்திவைக்கப்பட்ட அந்த மூவரையும் (இறைவன் மன்னித்தான்). பூமி விசாலமானதாக இருந்தும் அவர்களைப் பொறுத்தவரையில் அது குறுகிவிட்டது" என்று தொடங்கி, "இறைநம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சுங்கள். உண்மையாளர்களுடன் இருங்கள்" (9:117-119) என்பதுவரையுள்ள வசனங்களை அருளினான்.

அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் எனக்கு இஸ்லாத்திற்கு வழிகாட்டியபின், தன் தூதர் (ஸல்) அவர்களிடம் என்னை உண்மை பேசவைத்து உபகாரம் புரிந்ததைப் போன்று வேறெந்த உபகாரத்தையும் நான் மிகப்பெரியதாக ஒருபோதும் கருதவில்லை. நான் அவர்களிடம் பொய் பேசியிருந்தால், (போருக்குச் செல்லாமல்) பொய் சொன்னவர்(களான நயவஞ்சகர்)கள் அழிந்துபோனதைப் போன்று நானும் அழிந்துவிட்டிருப்பேன். ஏனெனில், இறைவன் வேதஅறிவிப்பு (வஹீ) அருளியபோது, யாருக்கும் சொல்லாத கடுமையான சொற்களைப் பொய் சொன்னவர்கள் குறித்து அருளினான்.

"நீங்கள் அவர்களிடம் திரும்பும்போது அவர்களை நீங்கள் விட்டுவிடுவதற்காக உங்களிடம் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்கின்றனர். அவர்களை விட்டுவிடுங்கள். அவர்கள் அசுத்தமானவர்கள். அவர்களின் தங்குமிடம் நரகம். இது அவர்கள் செய்து கொண்டிருந்ததற்கான தண்டனை. நீங்கள் அவர்கள்மீது திருப்தியடைய வேண்டுமென்பதற்காக உங்களிடம் அவர்கள் சத்தியம் செய்கின்றனர். நீங்கள் அவர்கள்மீது திருப்தி கொண்டாலும், அல்லாஹ் குற்றம்புரியும் இக்கூட்டத்தாரைப் பொருந்திக் கொள்ளமாட்டான்" (9:95,96) என்று (கண்டித்து) அல்லாஹ் கூறினான்.

குறிப்பாக, எங்கள் மூவரின் விவகாரம் மட்டும் தள்ளிவைக்கப்பட்டிருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,தம்மிடம் (பொய்ச்) சத்தியம் செய்தவர்களை ஏற்றுக் கொண்டு, அவர்களிடம் உறுதிப் பிரமாணம் பெற்று,அவர்களுக்காகப் பாவமன்னிப்பும் தேடினார்கள். (எங்களது) இந்த விவகாரத்தில் அல்லாஹ்வே தீர்ப்பளிக்கும்வரையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் விவாகரத்தைத் தள்ளிப்போட்டுவந்தார்கள்.

இதனால்தான் அல்லாஹ் எங்களைக் குறித்து, "போருக்குச் செல்லாமல் பின்தங்கிவிட்ட மூவர்' என்று (போரைக் குறிப்பிட்டுக்) கூறாமல், "பின்தங்கிவிட்ட மூவர்' (9:118) என்று பொதுவாகவே குறிப்பிட்டுள்ளான். "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்மிடம் பொய்யான சாக்குப்போக்குக் கூறியவர்களின் காரணங்களை உடனுக்குடன் ஏற்றுக் கொண்டது போலல்லாமல், எங்கள் விவகாரத்தை (உடனே தீர்க்காது) அல்லாஹ் தள்ளிப் போட்டு வந்தான்" என்பதே அதன் கருத்தாகும்.

"தபூக் போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் செல்லாமல், தாம் பின்தங்கிவிட்ட காலகட்டத்தைக் குறித்து தம் தந்தை கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவித்தபோது, இதை அவர்கள் கூற நான் கேட்டேன்" என்று கஅப் பின் மாலிக் (ரலி) அவர்களின் புதல்வர் அப்துல்லாஹ் பின் கஅப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் முதுமை அடைந்து கண்பார்வை இழந்துவிட்ட சமயத்தில், அவர்களுடைய மக்களிலேயே அவர்களை அப்துல்லாஹ் பின் கஅப் (ரஹ்) அவர்களே கைப்பிடித்து அழைத்துச் செல்பவராயிருந்தார்கள்.
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரோம பைஸாந்தியர்களையும் ஷாமிலிருந்த அரபுக் கிறித்தவர்களையும் நோக்கி தபூக் போருக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்" என்று இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் கஅப் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5347 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "தபூக் போரின்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் செல்லாமல், தாம் பின்தங்கிவிட்டதைக் குறித்து கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவித்தபோது இதை அவர்கள் கூற நான் கேட்டேன்" என கஅப் பின் மாலிக் (ரலி) அவர்களின் புதல்வர் உபைதுல்லாஹ் பின் கஅப் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள் என்று இடம்பெற்றுள்ளது.
"இந்த உபைதுல்லாஹ் பின் கஅப் (ரஹ்) அவர்களே கஅப் (ரலி) அவர்கள் முதுமை அடைந்து, கண்பார்வை இழந்துவிட்ட சமயத்தில் அவர்களைக் கைப்பிடித்து அழைத்துச் செல்பவராயிருந்தார்" என்றும் அதில் இடம் பெற்றுள்ளது.
மேலும் இந்த அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் அறப்போருக்குச் செல்ல நாடினால் பெரும்பாலும் வேறெதற்கோ செல்வதைப் போன்று (தந்திரமாக) அதை மறைப்பார்கள். இந்த நிலையில் தபூக் போர் (நேரம்) வந்தபோது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி கூடுதல் தகவலுடன் இடம்பெற்றுள்ளது.
இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களின் சகோதரர் புதல்வரான முஹம்மத் பின் அப்தில்லாஹ் பின் முஸ்லிம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அபூகைஸமா (ரலி) அவர்களைப் பற்றியும் நபி (ஸல்) அவர்கள் (தபூக்கிலிருந்த போது) அவர்களிடம் அபூகைஸமா (ரலி) அவர்கள் வந்துசேர்ந்ததைப் பற்றியும் குறிப்பு இல்லை.

5348 மேற்கண்ட ஹதீஸ், உபைதில்லாஹ் பின் கஅப் (ரஹ்) அவர்கள் தம் தந்தை கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாக மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
இந்த அறிவிப்பிலும் உபைதுல்லாஹ் பின் கஅப் (ரஹ்) அவர்களே தம் தந்தை கஅப் (ரலி) அவர்களிடமிருந்து அறிவித்ததாகவும், அவரே தம் தந்தை கஅப் (ரலி) அவர்கள் கண்பார்வை இழந்துவிட்ட சமயம் அவர்களைக் கைப்பிடித்து அழைத்துச் செல்பவராகவும், அவருடைய குலத்தாரிலேயே நன்கறிந்தவராகவும், நபித்தோழர்கள் அறிவித்த ஹதீஸ்களை நன்கு மனனம் செய்தவராகவும் இருந்தார் என்று காணப்படுகிறது.
மேலும், அதில் "உபைதில்லாஹ் பின் கஅப் (ரஹ்) அவர்கள், பாவமன்னிப்பு ஏற்கப்பட்ட மூவரில் ஒருவரான என் தந்தை கஅப் (ரலி) அவர்கள் கூறினார்கள்: இரு போர்களைத்

தவிர, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட எந்தப் போரிலும் நான் கலந்துகொள்ளாமல் இருந்ததில்லை' என்று கூறினார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மேலும், இந்த அறிவிப்பில், "பத்தாயிரத்துக்கும் அதிகமான மக்களுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தபூக்) போருக்குப் புறப்பட்டுச் சென்றார்கள். பதிவு செய்து பாதுகாக்கப்படும் எந்த ஏடும் அத்தனைப் பேருக்கு இடமளிக்காது (அந்த அளவுக்கு பெரும் எண்ணிக்கையில் மக்கள் இருந்தார்கள்)" என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 10 அவதூறு சம்பவமும் அவதூறு கூறியோரின் பாவமன்னிப்புக் கோரிக்கை ஏற்கப்பட்டதும்.

5349 இப்னு ஷிஹாப் (முஹம்மத் பின் முஸ்லிம்) அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் சயீத் பின் அல்முசய்யப், உர்வா பின் அஸ்ஸுபைர், அல்கமா பின் வக்காஸ், உபை துல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உத்பா பின் மஸ்ஊத் (ரஹ்) ஆகியோர் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் குறித்து அவதூறு கூறியவர்கள் என்ன சொன்னார்கள் என்பது பற்றியும், அவதூறு கற்பித்தவர்கள் சொன்னவற்றிலிருந்து ஆயிஷா (ரலி) அவர்கள் தூய்மையானவர்களென்று அல்லாஹ் (குர்ஆனில்) அறிவிப்புச் செய்ததைப் பற்றியும் தெரிவித்தனர்.
மேற்கண்ட நால்வரில் ஒவ்வொருவரும் இந்தச் சம்பவத்தில் ஆளுக்கொரு பகுதியினை எனக்கு அறிவித்தனர். அவர்களில் சிலர் வேறுசிலரைவிட ஹதீஸை நன்கு மனனமிட்டு வைத்திருந்தாலும், ஒருவரது அறிவிப்பு மற்றவரது அறிவிப்பை உறுதிப்படுத்தும் வகையில் அமைந்திருந்தது. அவர்கள் ஒவ்வொருவரும் அறிவித்ததை நான் மனனமிட்டுள்ளேன். ஒருவரது அறிவிப்பு மற்றவரது அறிவிப்பை உறுதிப்படுத்துகிறது. அவர்கள் (நால்வரும்) கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (எங்கேனும் பயணம்) புறப்பட விரும்பினால், தம் துணைவியரிடையே (எவரைத் தம்முடன் அழைத்துச் செல்வது எனத் தீர்மானித்திட) சீட்டுக் குலுக்கிப் போடுவார்கள். அவர்களில் எவரது (பெயருள்ள) சீட்டு வருகிறதோ அவரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு செல்வார்கள்.
இவ்வாறே அவர்கள் தாம் மேற்கொண்ட (பனுல் முஸ்தலிக் என்ற) ஒரு போரின்போது, எங்களிடையே சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள். அதில் எனது (பெயருள்ள) சீட்டு வந்தது.
ஆகவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (பயணம்) புறப்பட்டுச் சென்றேன். இது (பெண்கள் கடைப்பிடிக்க வேண்டிய "ஹிஜாப்' எனும்) "பர்தா' சட்டம் அருளப்பட்ட பிறகு நடந்ததாகும்.
(அப்பயணத்தின்போது) நான் எனது ஒட்டகச் சிவிகையில் வைத்துத் தூக்கிச் செல்லப் படுவேன். பயணத்தினிடையே அதனுள் நான் இருக்கும் நிலையிலேயே கீழே இறக்கிவைக்கவும் படுவேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தப் போர் முடிந்து (வெற்றியுடன்) திரும்பிக் கொண்டிருந்தபோது, நாங்கள் மதீனாவை நெருங்கியதும் இரவு வேளையில் (ஓரிடத்தில்) தங்கும்படி அறிவிப்புச் செய்தார்கள்.
அவர்கள் தங்கும்படி அறிவிப்புச் செய்தபோது நான் (சிவிகையிலிருந்து) எழுந்து (இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக மறைவிடம் தேடி) படையைக் கடந்து (தனியாகச்) சென்றேன். எனது இயற்கைத் தேவையை நான் முடித்துக்கொண்டபின் முகாமை நோக்கி வந்தேன்.
அப்போது (என் கழுத்திலிருந்து யமன் நாட்டு) "ழஃபாரீ' நகர முத்து மாலையொன்று அறுந்து (விழுந்து)விட்டது. ஆகவே, நான் திரும்பிச் சென்று என் மாலையைத் தேடலானேன். அதைத் துழாவிக் கொண்டிருந்தது, (நான் சீக்கிரம் திரும்பிவந்து படையினருடன் சேரவிடாமல்) என்னைத் தடுத்துவிட்டது.
எனக்காகச் சிவிகையை ஒட்டகத்தில் (ஏற்றிக்) கட்டும் குழுவினர் என் சிவிகைக்குள் நான் இருப்பதாக எண்ணிக்கொண்டு அதைத் தூக்கி, நான் பயணம் செய்துவந்த ஒட்டகத்தின் மீது வைத்துக் கட்டிவிட்டனர்.

அந்தக் காலகட்டத்தில் பெண்கள் மெலிந்தவர்களாக இருந்தனர். உடல் கனக்கும் அளவுக்கு அவர்களுக்குச் சதை போட்டிருக்கவில்லை. (அப்போதைய) பெண்கள் சிறிதளவு உணவையே உண்பார்கள். ஆகவே, அந்தச் சிவிகையைத் தூக்கியபோதும் அதை ஒட்டகத்தில் வைத்துக் கட்டியபோதும் அது கனமில்லாமல் இருந்ததை அம்மக்கள் வித்தியாசமாகக் கருதவில்லை. மேலும், நான் அப்போது வயது குறைந்த இளம்பெண்ணாகவேறு இருந்தேன்.
எனவே, அவர்கள் ஒட்டகத்தைக் கிளப்பி (அதில் நானிருப்பதாக நினைத்து)க்கொண்டு சென்றுவிட்டனர். படை கடந்து சென்ற பிறகு, (காணாமற்போன) கழுத்து மாலை கிடைத்து விட்டது. நான் அவர்கள் தங்கியிருந்த இடத்திற்கு வந்தேன். அங்கு அழைப்பதற்கு யாருமில்லை; பதிலளிப்பதற்கும் எவருமில்லை. எனவே, நான் (ஏற்கெனவே) தங்கியிருந்த இடத்தை நாடிப் போனேன். நான் காணாமல் போயிருப்பதை அறிந்து படையினர் நிச்சயம் என்னிடம் திரும்பி வருவார்கள் என்று நான் கருதினேன். நான் எனது இடத்தில் அமர்ந்திருக்க, என் கண்ணில் உறக்கம் மேலிட்டது. நான் தூங்கிவிட்டேன்.
படை சென்றதற்குப் பின்னர் (படையினர் முகாமிட்டிருந்த இடத்தில் தவறவிட்டுச் சென்ற பொருட்களை எடுத்துச் செல்வதற்காக) ஸஃப்வான் பின் முஅத்தல் அஸ்ஸுலமீ அத்தக்வானீ என்பார் இரவின் பிற்பகுதியில் புறப்பட்டு, நான் தங்கியிருந்த இடத்திற்கு அருகில் அதிகாலையில் வந்துசேர்ந்தார்.
அங்கே தூங்கிக்கொண்டிருந்த ஒரு மனிதனின் உருவத்தைப் பார்க்கவே அவர் என்னிடம் வந்தார். என்னைப் பார்த்ததும் அவர் அடையாளமும் கண்டுகொண்டார். பர்தாவுடைய சட்டம் அருளப்படுவதற்கு முன்னர் அவர் என்னைப் பார்த்திருந்தார். அவர் என்னை அறிந்துகொண்டு, "இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்' (நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள். மேலும், நாம் அவனிடமே திரும்பிச் செல்லவிருக்கிறோம்) என்று அவர் கூறிய சப்தத்தைக் கேட்டு நான் கண்விழித்தேன். உடனே எனது மேலங்கியால் முகத்தை மறைத்துக்கொண்டேன்.

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் என்னிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அவர் "இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜி ஊன்' என்று கூறியதைத் தவிர வேறெதையும் அவரிடமிருந்து நான் செவியுறவுமில்லை. பிறகு அவர் தமது ஒட்டகத்தை மண்டியிடச் செய்து (நான் ஏறிக்கொள்வதற்கு ஏதுவாக) அதன் முன்னங்காலை (தமது காலால்) மிதித்துக்கொள்ள, நான் அதில் ஏறிக்கொண்டேன். அவர் நானிருந்த ஒட்டகத்தை இழுத்துச் செல்லலானார்.
இறுதியில் படையினர் (மதிய ஓய்வுக்காக) நண்பகல் வெயில் நேரத்தில் (ஓரிடத்தில்) தங்கி விட்ட பின்னர் நாங்கள் அவர்களைச் சென்றடைந்தோம். அப்போது (எங்கள் இருவரையும் கண்டு அவதூறு பேசி) என் விஷயத்தில் அழிந்தவர்கள் அழிந்துபோனார்கள். என்மீது அவதூறு (பிரசாரம்) செய்ததில் பெரும் பங்கு எடுத்துக்கொண்டிருந்தவன் அப்துல்லாஹ் பின் உபை பின் சலூல் (எனும் நயவஞ்சகர்களின் தலைவன்) ஆவான்.
பிறகு நாங்கள் (அனைவரும்) மதீனா வந்தடைந்தோம். நாங்கள் மதீனா வந்தபின் ஒரு மாத காலம் நான் நோயுற்றுவிட்டேன். மக்களோ அவதூறு கற்பித்தவர்களின் சொல்லில் மூழ்கிப்போயிருந்தார்கள். இந்த அவதூறு எதுவுமே எனக்குத் தெரியாது.
நான் நோயுறும்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வழக்கமாகக் காட்டுகின்ற பரிவை (இம்முறை நான் நோயுற்றிருந்தபோது) அவர்களிடம் காணமுடியாமல் போனது எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வருவார்கள்; சலாம் சொல்வார்கள்; பிறகு "எப்படி இருக்கிறாய்?' என்று கேட்பார்கள். அவ்வளவுதான். இதுவே எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. (என்னைப் பற்றி வெளியே பேசப்பட்டுவந்த) அந்தத் தீயசொல் பற்றி ஒரு சிறிதும் (உடல் நலம் தேறுவதற்குமுன்) எனக்குத் தெரியாது.

நோயிலிருந்து குணமடைந்தபின் நானும் மிஸ்தஹின் தாயாரும் நாங்கள் கழிப்பிடமாகப் பயன்படுத்திவந்த "மனாஸிஉ' (எனப்படும் புறநகர்ப் பகுதியை) நோக்கிச் சென்றோம். நாங்கள் இரவு நேரங்களில் மட்டுமே இவ்வாறு செல்வோம். எங்கள் வீடுகளுக்கு அருகிலேயே கழிப்பிடங்களை அமைத்துக்கொள்வதற்கு முன்னால் இவ்வாறு (புறநகர்ப் பகுதிகளுக்கு) நாங்கள் சென்றுகொண்டிருந்தோம். கழிப்பிடம் நோக்கி வெளியே செல்லும் எங்களது இந்தப் பழக்கம் பண்டைய அரபுகளின் பழக்கத்தை ஒத்ததாயிருந்தது. அன்று நாங்கள் எங்கள் வீடுகளுக்கு அருகிலேயே கழிப்பிடங்கள் அமைப்பதைத் தொந்தரவாகக் கருதிவந்தோம்.
நானும் உம்மு மிஸ்தஹும் நடந்தோம். அவர் அபூருஹ்ம் பின் அப்தில் முத்தலிப் பின் அப்தி மனாஃப் அவர்களின் புதல்வியாவார். (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்களின் தாயின் சகோதரியான "(ராயித்தா) பின்த் ஸக்ர் பின் ஆமிர்'தான் உம்மு மிஸ்தஹின் தாயாராவார். உம்மு மிஸ்தஹின் புதல்வரே மிஸ்தஹ் பின் உஸாஸா பின் அப்பாத் பின் முத்தலிப் ஆவார்.
ஆக, (என் உறவினரான) அபூருஹ்மின் மகள் உம்மு மிஸ்தஹும் நானும் எங்கள் இயற்கைக் கடனை முடித்துக்கொண்டு எனது வீடு நோக்கித் திரும்பிக்கொண்டிருந்தோம். அப்போது உம்மு மிஸ்தஹ் தமது ஆடையில் இடறிக்கொண்டார். உடனே அவர், "மிஸ்தஹ் நாசமாகட்டும்' என்று (தம் புதல்வரைச் சபித்தவராகக்) கூறினார். நான் அவரிடம், "மிக

மோசமான சொல்லைச் சொல்லிவிட்டீர். பத்ருப் போரில் கலந்துகொண்ட ஒரு மனிதரையா ஏசுகிறீர்கள்?" என்று கேட்டேன்.

அதற்கு அவர், "அம்மா! அவர் என்ன சொன்னார் என்பதை நீங்கள் கேள்விப்படவில்லையா?" என்று கேட்டார். "என்ன சொன்னார்?" என நான் வினவ, அவதூறு கற்பித்தவர்கள் சொன்ன (அபாண்டத்)தை அப்போது அவர் எனக்குத் தெரிவித்தார். அதைக் கேட்டு எனது உடல்நிலை இன்னும் மோசமாகிவிட்டது.

நான் எனது வீட்டுக்குத் திரும்பி வந்தபோது, (என் கணவர்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து எனக்கு சலாம் சொல்லிவிட்டு, "எப்படி இருக்கிறாய்?" என்று கேட்டார்கள். அப்போது நான், "என் தாய் தந்தையரிடம் செல்ல எனக்கு அனுமதி தருவீர்களா?" என்று கேட்டேன். (உண்மையிலேயே அப்படியொரு வதந்தி உலவுகிறதா என்று விசாரித்து என்மீதான அவதூறு) செய்தியை என் பெற்றோரிடமிருந்து (அறிந்து) உறுதிப்படுத்திக் கொள்ளவே அப்போது நான் விரும்பினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு அனுமதியளித்தார்கள். உடனே நான் என் பெற்றோரிடம் வந்(து சேர்ந்)தேன்.

நான் என் தாயாரிடம், "அம்மா! மக்கள் (என்னைப் பற்றி) என்ன பேசிக்கொள்கிறார்கள்?" என்று கேட்டேன். என் தாயார், "அன்பு மகளே! உன்மீது (இந்த விஷயத்தைப்) பெரிதுபடுத்திக் கொள்ளாதே. அல்லாஹ்வின் மீதாணையாக! சக்களத்திகள் பலரும் இருக்க, தம் கணவரிடம் பிரியத்துக்குரியவளாக இருக்கும் அழகொளிரும் பெண்ணைக் குறித்து அவளுடைய சக்களத்திகள் அதிகமாக (வதந்திகள்) பேசத்தான் செய்வார்கள். அவ்வாறு பேசாமலிருப்பது (பெரும்பாலும்) குறைவேயாகும்" என்று கூறினார்.

நான் "சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்) இப்படியா மக்கள் பேசிவிட்டார்கள்!" என்று (வியப்புடன்) சொன்னேன். அன்றிரவு விடிய விடிய நான் அழுதேன். என் கண்ணீரும் நிற்கவில்லை; உறக்கமும் என்னைத் தழுவவில்லை. காலை நேரம் வந்தபோதும் அழுதேன்.

(இதற்கிடையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் மனைவியை (அதாவது என்னை)ப் பிரிந்துவிடுவது குறித்து ஆலோசனை கேட்பதற்காக அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களையும், உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களையும் அழைத்தார்கள். அத்தருணத்தில் வேதஅறிவிப்பு (வஹீ) தாமதமாயிருந்தது.

உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களோ, நான் நிரபராதி எனத் தாம் அறிந்துள்ளதையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உள்ளத்தில் (குடும்பத்தார்மீது) இருந்த பாசத்தில் தாம் அறிந்துள்ளதையும் வைத்து ஆலோசனை கூறினார்கள். "அல்லாஹ்வின் தூதரே! அவர்கள் உங்கள் துணைவியார். அவர்களிடம் நல்ல(குணத்)தைத் தவிர வேறெதையும் நான் அறியவில்லை" என்று உசாமா (ரலி) அவர்கள் சொன்னார்கள்.

அலீ பின் அபீதாலிப் அவர்களோ (நபியவர்களின் மனவேதனையைக் குறைக்கும் விதமாக), "அல்லாஹ் உங்களுக்கு எந்த நெருக்கடியையும் ஏற்படுத்தவில்லை. ஆயிஷா அன்றி மனைவியர் பலர் இருக்கின்றனரே! பணிப்பெண் (பரீரா) இடம் கேட்டால், அவள் உங்களிடம் உண்மையைச் சொல்வாள்" என்று கூறினார்கள்.

ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பணிப்பெண்) பரீராவை அழைத்து, "பரீரா! ஆயிஷாவிடம் உனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தும் (செயல்) எதையாவது நீ பார்த்திருக்கிறாயா?" என்று கேட்டார்கள். அதற்கு பரீரா, "தங்களைச் சத்திய (மார்க்க)த்துடன்

அனுப்பியவன் மீதாணையாக! அவர், தம் வீட்டாரின் குழைத்த மாவை அப்படியே விட்டுவிட்டு உறங்கிப்போய்விடுவார். வீட்டிலுள்ள ஆடு வந்து அதைத் தின்றுவிடும். அத்தகைய (விவரமும்) வயது(ம்) குறைந்த இளம் பெண் என்பதைத் தவிர, அவரைக் குறை சொல்லக்கூடிய விஷயம் எதையும் அவரிடம் நான் பார்க்கவில்லை" என்று பதில் கூறினார்.
பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் பின் உபை பின் சலூலுக்கு எதிராக உதவி கோரியபடி சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது நின்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை மீதிருந்தபடி, "முஸ்லிம் சமுதாயமே! என் வீட்டார் விஷயத்தில் (வதந்தி கிளப்பி எனக்கு) மனவேதனையை அளித்த ஒரு மனிதனுக்கெதிராக எனக்கு உதவி புரிபவர் யார்? ஏனெனில், அல்லாஹ்வின் மீதாணையாக! என் வீட்டாரிடம் நான் நல்லதையே அறிவேன். அவர்கள் (அவதூறு கிளப்பியோர்) ஒரு மனிதரை (என் வீட்டாருடன் இணைத்து) அவதூறு கூறியுள்ளனர். அந்த மனிதரைப் பற்றியும் நான் நல்லதையே அறிவேன். நான் இருக்கும்போதுதான் அவர் என் வீட்டிற்கு வந்திருக்கிறார் (தனியாக வந்ததில்லை)" என்று கூறினார்கள்.
உடனே (அவ்ஸ் கூட்டத்தைச் சேர்ந்த) சஅத் பின் முஆத் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! அவனுக்கெதிராகத் தங்களுக்கு நான் உதவுகிறேன். அவன் (எங்கள்) அவ்ஸ் குலத்தைச் சேர்ந்தவனாயிருந்தால்,அவனது கழுத்தை நாங்கள் துண்டித்துவிடுகிறோம். அவன் எங்கள் சகோதரர்களான "கஸ்ரஜ்' குலத்தைச் சேர்ந்தவனாக இருந்தால், (என்ன செய்ய வேண்டுமென்று) தாங்கள் எங்களுக்கு உத்தரவிடுங்கள். தங்கள் உத்தரவை நாங்கள் செய்து முடிக்கிறோம்" என்று கூறினார்கள்.

உடனே கஸ்ரஜ் குலத்தின் தலைவரான சஅத் பின் உபாதா எழுந்தார். இவர் (அதற்குமுன்) நல்ல மனிதராகத்தான் இருந்தார். குல மாச்சரியம் அவரை விவரமில்லாமல் பேச வைத்துவிட்டது. அவர் (அவ்ஸ் குலத்தவரான) சஅத் பின் முஆதை நோக்கி, "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! தவறாகச் சொல்லிவிட்டீர். அவனை நீர் கொல்லமாட்டீர். அவனைக் கொல்ல உம்மால் முடியவும் செய்யாது" என்று சொன்னார்.
உடனே உசைத் பின் ஹுளைர் (ரலி) அவர்கள் எழுந்து நின்றார். இவர் (அவ்ஸ் குலத்தைச் சேர்ந்த) சஅத் பின் முஆத் (ரலி) அவர்களின் தந்தையின் சகோதரர் புதல்வர் ஆவார். உசைத் (ரலி) அவர்கள் சஅத் பின் உபாதா அவர்களிடம் "நீர்தான் தவறாகப் பேசினீர். அல்லாஹ்வின் மீதாணையாக! அவனை நாங்கள் கொன்றே தீருவோம். நீர் ஒரு நயவஞ்சகர். அதனால்தான் நயவஞ்சகர்களுக்காக வாதாடுகின்றீர்" என்று சொன்னார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடைமீது நின்றுகொண்டிருக்க, அவ்ஸ், கஸ்ரஜ் ஆகிய இரு குலத்தாரும் ஒருவர் மீதொருவர் பாய்ந்து சண்டையிட்டுக் கொள்ளத் தயாராகிவிட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மேடையிலிருந்து இறங்கி) அவர்கள் அனைவரும் மௌனமாகும்வரை அவர்களை அமைதிப்படுத்திக் கொண்டிருந்தார்கள். பிறகு தாமும் அமைதியாகிவிட்டார்கள்.
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
அன்றைய நாள் முழுவதும் நான் அழுது கொண்டேயிருந்தேன். என் கண்ணீரும் ஓயவில்லை; என்னை உறக்கமும் தழுவவில்லை. அடுத்த நாள் இரவும் அழுதுகொண்டிருந்தேன். அப்போதும் என் கண்ணீரும் ஓயவில்லை; என்னை உறக்கமும்

தழுவவில்லை. அழுகை என் ஈரலைப் பிளந்துவிடுமோ என என் பெற்றோர் எண்ணி (கலங்கி)க்கொண்டிருந்தனர்.
நான் அழுதுகொண்டிருக்க, என்னருகில் என் தாய் தந்தையர் அமர்ந்துகொண்டிருந்த போது, அன்சாரிப்பெண் ஒருவர் வந்து என்னிடம் (உள்ளேவர) அனுமதி கோரினார். நான் அவருக்கு அனுமதியளித்தவுடன் அவரும் அழுதபடி அமர்ந்துகொண்டார்.
நாங்கள் இவ்வாறு இருக்கையில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து சலாம் கூறிவிட்டு அமர்ந்தார்கள். (என்னைப் பற்றி) அவதூறு சொல்லப்பட்ட நாளிலிருந்து அவர்கள் என்னருகே அமர்ந்ததில்லை. ஒரு மாதகாலம்வரை என் விஷயத்தில் (அல்லாஹ்விடமிருந்து தீர்ப்பு) எதுவும் அவர்களுக்கு "வஹீ"யாக அருளப்படாமலேயே இருந்தது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்தபின், ஏகத்துவ உறுதிமொழி கூறி (இறைவனைப் புகழ்ந்துவிட்டு), "ஆயிஷா! உன்னைக் குறித்து இன்னின்னவாறு எனக்குச் செய்தி வந்தது. நீ நிரபராதியாக இருந்தால், அல்லாஹ் விரைவில் உன்னைக் குற்றமற்றவள் என்று (வஹீயின் மூலம்) அறிவித்துவிடுவான். (ஒருகால்) நீ குற்றமேதும் செய்திருந்தால், அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி அவன் பக்கம் திரும்பிவிடு. ஏனெனில், அடியான் தனது பாவத்தை ஒப்புக்கொண்டு, (மனம் திருந்தி) பாவமன்னிப்புக் கோரினால், அவனது கோரிக்கையை ஏற்று அவனை அல்லாஹ் மன்னிக்கின்றான்" என்று சொன்னார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது பேச்சை முடித்தபோது, எனது கண்ணீர் (முழுவதுமாக) நின்றுபோய்விட்டிருந்தது. அதில் ஒரு துளியும் (எஞ்சியிருப்பதாக) நான் உணரவில்லை. அப்போது நான் என் தந்தை (அபூபக்ர் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னதற்குப் பதில் சொல்லுங்கள்" என்றேன். அதற்கு என் தந்தை, "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் என்ன (பதில்) சொல்வது என்பதே எனக்குத் தெரியவில்லை" என்று கூறினார்கள்.
பிறகு நான் என் தாயார் (உம்மு ரூமான்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பதில் கூறுங்கள்" என்று சொன்னேன். அதற்கு என் தாயார், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு என்ன பதில் சொல்வது என்பதே எனக்குத் தெரியவில்லை" என்று கூறினார்கள். அதற்கு நான், "நானோ வயது குறைந்த இளம்பெண். குர்ஆனிலிருந்து நிறையத் தெரியாதவள். இந்நிலையில் (மக்கள் என்னைப் பற்றிப் பேசிக்கொண்ட) இந்தச் செய்தியை நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். அது உங்கள் மனங்களில் பதிந்துபோய், அதை உண்மை என்று நீங்கள் நம்பிவிட்டீர்கள் என்பதை அல்லாஹ்வின் மீதாணையாக நான் அறிவேன்.
ஆகவே, உங்களிடம் நான் குற்றமற்றவள் என்று கூறினால், -நான் குற்றமற்றவள் என்பது அல்லாஹ்வுக்குத் தெரியும்– அதை நீங்கள் நம்பப்போவதில்லை. நான் (குற்றம்) ஏதேனும் புரிந்திருப்பதாக ஒப்புக்கொண்டால், -நான் குற்றமற்றவள் என்பது அல்லாஹ்வுக்குத் தெரியும்– நான் சொல்வதை அப்படியே (உண்மை என்று ஏற்று) என்னை நம்பிவிடுவீர்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! (எனக்கும்) உங்களுக்கும் நபி யூசுஃப் (அலை) அவர்களின் தந்தை (நபி யஅகூப் – அலை) அவர்களையே உவமானமாகக் காண்கிறேன் (அதாவது:)

"(இதைச்) சகித்துக்கொள்வதே நல்லது; நீங்கள் புனைந்து சொல்லும் விஷயத்தில் அல்லாஹ்விடம்தான் நான் பாதுகாப்புக் கோர வேண்டும்" (12:18) என்று (யஅகூப் (அலை) அவர்கள் கூறியதைச்) சொன்னேன்.
பிறகு படுக்கையில் திரும்பிப் படுத்துக்கொண்டேன். அல்லாஹ்வின் மீதாணையாக! அப்போது நான் குற்றமற்றவள் என்பதையும், நான் குற்றமற்றவள் என நிச்சயம் அல்லாஹ் அறிவிப்பான் என்பதையும் நன்கறிவேன். ஆயினும்,அல்லாஹ்வின் மீதாணையாக! ஓதப்படுகின்ற வஹீயை (வேதஅறிவிப்பை) என் விஷயத்தில் அல்லாஹ் அருள்வான் என்று நான் நினைத்தும் பார்த்திருக்கவில்லை. அல்லாஹ் என் தொடர்பாக ஏதேனும் ஓதப்படுகின்ற ஒன்றைச் சொல்கின்ற அளவுக்கு நான் உயர்ந்தவள் அல்லள் என்பதே என் மனத்தில் என்னைப் பற்றிய முடிவாக இருந்தது. மாறாக, அல்லாஹ் என்னைக் குற்றமற்றவள் என அறிவிக்கும் ஒரு கனவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது உறக்கத்தில் காண்பார்கள் என்றே நான் எதிர்பார்த்திருந்தேன்.
அல்லாஹ்வின் மீதாணையாக! (எங்கள் வீட்டில் அமர்ந்திருந்த இடத்திலிருந்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்திருக்கவுமில்லை; வீட்டார் எவரும் வெளியே செல்லவுமில்லை. அதற்குள் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், தன் தூதர் (ஸல்) அவர்களுக்கு (குர்ஆன் வசனங்களை) அருளத் தொடங்கிவிட்டான்.

உடனே அவர்களுக்கு (வேதஅறிவிப்பு வருகின்ற நேரங்களில்) ஏற்படும் கடுமையான சிரம நிலை அவர்களைப் பற்றிக்கொண்டது. அது கடுங்குளிர் காலமாயிருந்தும், அவர்களின் மேனியிலிருந்து வியர்வைத் துளிகள் முத்துகளைப் போன்று வழியத் தொடங்கிவிட்டன. அவர்களுக்கு அருளப்பெற்ற இறைவசனத்தின் பாரத்தினால்தான் (அவர்களுக்கு வியர்வை அரும்பி வழியுமளவுக்கு) இந்தச் சிரமநிலை ஏற்பட்டது. அந்த நிலை அல்லாஹ்வின் தூதரைவிட்டு விலகியவுடன் (மகிழ்ச்சியோடு) சிரித்தவாறே அவர்கள் பேசிய முதல் வார்த்தை, "ஆயிஷா! நற்செய்தி பெற்றுக்கொள். அல்லாஹ் உன்னைக் குற்றமற்றவள் என்று அறிவித்துவிட்டான்" என்பதாகவே இருந்தது.
உடனே என் தாயார் என்னிடம் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் எழுந்துசெல்" என்று கூறினார்கள். அதற்கு நான், "அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களிடம் நான் எழுந்து செல்லமாட்டேன். என்னைக் குற்றமற்றவள் என அறிவித்த அல்லாஹ்வையே புகழ்(ந்து அவனுக்கு நன்றி செலுத்து)வேன்" என்று சொன்னேன். அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "அவதூறு கற்பித்தவர்கள் உங்களில் ஒரு குழுவினர்தான்" என்று தொடங்கும் பத்து வசனங்களை (24:11-20) அருளினான்.
என் குற்றமற்ற நிலை தொடர்பாக வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் இந்த வசனங்களை அருளியபோது, (என் தந்தை) அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! (என் மகள்) ஆயிஷா குறித்து "மிஸ்தஹ்' அவதூறு கூறிய பின்பு ஒருபோதும் அவருக்காக நான் சிறிதும் செலவிடமாட்டேன்" என்று (சத்தியமிட்டுக்) கூறினார்கள். மிஸ்தஹ் பின் உஸாஸா (தாய் வழியில்) தமக்கு உறவினர் என்பதாலும், அவர் ஏழை என்பதாலும் அவருக்காக அபூபக்ர் (ரலி) அவர்கள் உதவித் தொகை வழங்கிவந்தார்கள்.

அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "உங்களில் செல்வமும் தயாள குணமும் படைத்தோர் (தம்) உறவினர்களுக்கோ ஏழைகளுக்கோ அல்லாஹ்வின் பாதையில் ஹிஜ்ரத் செய்தவர்களுக்கோ எதுவும் வழங்கமாட்டேன் என்று சத்தியம் செய்ய வேண்டாம்" என்று தொடங்கி, "அல்லாஹ் உங்களுக்கு மன்னிப்பு வழங்குவதை நீங்கள் விரும்பமாட்டீர்களா..." (24:22) என்பது வரையிலான வசனத்தை அருளினான்.
-"அல்லாஹ்வின் வேதத்திலுள்ள வசனங்களிலேயே (இறைமன்னிப்பை) மிகவும் எதிர் பார்க்கவைக்கும் வசனம் இதுதான்" என்று அறிவிப்பாளர் அப்துல்லாஹ் பின் அல்முபாரக் (ரஹ்) அவர்கள் கூறியதாக ஹிப்பான் பின் மூசா (ரஹ்) அவர்கள் தெரிவித்தார்கள்.
உடனே அபூபக்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் எனக்கு மன்னிப்பு வழங்க வேண்டுமென்றே நான் விரும்புகிறேன்" என்று கூறிவிட்டு, மிஸ்தஹுக்கு ஏற்கெனவே தாம் செலவிட்டு வந்ததைத் திரும்பவும் தொடரலானார்கள். "அவருக்கு(ச் செய்யும் இந்த உதவியை) ஒரு போதும் நான் நிறுத்தமாட்டேன்" என்றும் சொன்னார்கள்.
(குர்ஆனில் எனது கற்பொழுக்கம் குறித்த வசனங்கள் அருளப்படுவதற்கு முன்னால்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னைப் பற்றித் தம்முடைய (இன்னொரு) துணைவியான ஸைனப் பின்த் ஜஹ்ஷிடம் விசாரித்திருந்தார்கள். "(ஸைனபே!) நீ (ஆயிஷா குறித்து) என்ன அறிந்திருக்கிறாய்? அல்லது பார்த்திருக்கிறாய்?" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர், "அல்லாஹ்வின் தூதரே! என் காதையும் என் கண்ணையும் (அவற்றின்மேல் பழி போடாமல்) நான் பாதுகாத்துக்கொள்கிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! ஆயிஷாவைக் குறித்து நான் நல்லதையே அறிவேன்" என்று கூறினார்கள்.
ஸைனப் அவர்கள்தான் நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் எனக்கு (அழகிலும் நபியின் அன்பிலும்) போட்டியாக இருந்தவர். ஆயினும், அல்லாஹ் அவரை (இறையச்சமுடைய) பேணுதலான பண்பைக் கொடுத்துப் பாதுகாத்திருந்தான். ஆனால், ஸைனபுக்காக அவருடைய சகோதரி ஹம்னா பின்த் ஜஹ்ஷ் (என்னுடன்) மோதிக்கொள்ளலானார். (என் விஷயத்தில்) அவதூறு பேசி அழிந்துபோனவர்களுடன் அவரும் அழிந்துபோனார்.
அறிவிப்பாளர் ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள், "இதுதான் அந்த (நால்வர்) குழுவிடமிருந்து எனக்குக் கிடைத்த அறிவிப்பாகும்"என்று கூறுகிறார்கள்.
யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("சஅத் பின் உபாதா அவர்களைக் குலமாச்சரியம் விவரமில்லாமல் பேசவைத்துவிட்டது" என்பதற்குப் பகரமாக) "குலமாச்சரியம் அவரை உசுப்பிவிட்டது" என்று இடம்பெற்றுள்ளது.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாக வந்துள்ளது.

5350 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஃபுலைஹ் பின் சுலைமான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "சஅத் பின் உபாதா அவர்களைக் குலமாச்சரியம் விவரமில்லாமல் பேசவைத்துவிட்டது" என்று இடம் பெற்றுள்ளது.

சாலிஹ் பின் கைசான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "குலமாச்சரியம் அவரை உசுப்பி விட்டது" என்றும், உர்வா பின் அஸ்ஸுபைர் பின்வருமாறு கூறியதாகக் கூடுதலாகவும் இடம்பெற்றுள்ளது:

ஆயிஷா (ரலி) அவர்கள் தமக்கு முன்னால் (அவதூறு கூறியவர்களில் ஒருவரான) ஹஸ்ஸான் பின் ஸாபித் (ரலி) அவர்கள் ஏசப்படுவதை விரும்பாதவர்களாக இருந்தார்கள். மேலும், "அந்த ஹஸ்ஸான் (ரலி) அவர்கள்தான், "(பகைவர்களே!) என் தந்தையும், என் தந்தையின் தந்தையும், எனது மானமும் உங்களிடமிருந்து முஹம்மத் (ஸல்) அவர்களின் மானத்தைக் காக்கும் கேடயமாகும்' எனும் கவிதையைச் சொன்னவர்" என்றும் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

மேலும், ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! எவரைக் குறித்து (அந்தப் பழிச்சொல்) சொல்லப்பட்டதோ அந்த மனிதர் (ஸஃப்வான், தம் அன்னையான என்னுடன் தம்மை இணைத்து அவதூறு பேசுவதைக் கேட்டு), "சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்); எனது உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! நான் ஒருபோதும் எந்த (அந்நியப்) பெண்ணின் ஆடையையும் அகற்றியதில்லை" என்று கூறினார். அதன் பிறகு அவர் அல்லாஹ்வின் பாதையில் (உயிர்த் தியாகியாகக்) கொல்லப்பட்டார்" என்று கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

யஅகூப் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "படையினர் கடுமையான வெயிலுள்ள நண்பகல் நேரத்தில் (மதிய ஓய்வுக்காக) இறங்கித் தங்கியிருந்தனர் ("மூஇரீன ஃபீ நஹ்ரிழ் ழஹீரா')" என்று இடம் பெற்றுள்ளது. அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மூஃகிரீன' என்று இடம்பெற்றுள்ளது.

அப்து பின் ஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் அப்துர் ரஸ்ஸாக் (ரஹ்) அவர்களிடம் "மூஃகிரீன் என்பதற்குப் பொருள் என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "(அதன் வேர்ச்சொல்லான) "வஃக்ரத்' என்பது "கடுமையான வெயிலைக் குறிக்கும்" என்றார்கள்.

5351 மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது:

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: என்னைப் பற்றி அவதூறு பேசப்பட்டபோது, எனக்கு இன்னும் அதைப் பற்றி தெரிந்திராத நிலையில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னைப் பற்றி உரையாற்ற மக்களிடையே) எழுந்து நின்றார்கள்.

ஏகத்துவ உறுதிமொழி கூறி, அல்லாஹ்வை அவன் தகுதிக்கேற்ப போற்றிப் புகழ்ந்துவிட்டு, "என் வீட்டார்மீது அபாண்டமாகப் பழி சுமத்தியவர்கள் விஷயத்தில் (அவர்களை என்ன செய்வதென்று) எனக்கு ஆலோசனை கூறுங்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என் வீட்டாரிடம் எந்தக் கெட்டப்பழக்கத்தையும் நான் காணவில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! எவரிடம் எந்தத் தீய நடத்தையையும் நான் காணவில்லையோ அத்தகைய ஒருவருடன் என் வீட்டாரை இணைத்து அவர்கள் பழி சுமத்தியுள்ளார்கள். நான் இருக்கும்போதே தவிர வேறெப்போதும் அவர் என் வீட்டினுள் நுழைந்ததில்லை. நான் பயணத்தில் வெளியே செல்லும்போதெல்லாம், அவரும் என்னுடனேயே இருப்பார்" என்று

சொன்னார்கள் என ஹதீஸ் ஆரம்பமாகி மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
மேலும், இந்த அறிவிப்புகளில், "அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் வீட்டிற்கு வந்திருந்து என் பணிப்பெண்ணிடம் என்னைப் பற்றிக் கேட்டிருந்தார்கள். அவள், "அல்லாஹ்வின் மீதாணையாக! ஆடு நுழைந்து அவர் "குழைத்துவைத்த மாவை' அல்லது "அவர் பிசைந்துவைத்த மாவை'த் தின்றுவிட்டுச் செல்லும் அளவுக்கு (மெய்மறந்து) உறங்கி விடுவார் என்பதைத் தவிர வேறு எந்தக் குறையையும் நான் (ஆயிஷாவிடம்) அறிய வில்லை" என்று சொல்லியிருந்தாள்.
அப்போது நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவர் அவளை அதட்டி, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உண்மையைச் சொல்" என்று அவளிடம் வெளிப்படையாக விஷயத்தை விளக்கினார்.
அப்போது அவள், "அல்லாஹ் தூயவன். அல்லாஹ்வின் மீதாணையாக! பொற்கொல்லன், (தூய்மையான) சிவப்புத் தங்கக்கட்டியை எப்படி மாசு மருவற்றதாகக் கருதுவானோ அவ்வாறே நான் அவரைக் கருதுகிறேன்" என்று சொன்னாள்.
எந்த மனிதருடன் (என்னை இணைத்து) அவதூறு பேசப்பட்டதோ அந்த மனிதருக்கும் இந்த விஷயம் எட்டியது. அவர் "சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்). நான் ஒருபோதும் எந்த (அந்நியப்) பெண்ணின் ஆடையையும் அகற்றியதில்லையே!" என்று சொன்னார். பிறகு அவர் அல்லாஹ்வின் பாதையில் (ஓர் அறப்போரில்) வீரமரணம் அடைந்தார்.
மேலும், ஆயிஷா (ரலி) அவர்கள் இவ்வாறு கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது: (முஸ்லிம்களில்) அதைப் பற்றிப் பேசியவர்கள் மிஸ்தஹும் ஹம்னாவும் ஹஸ்ஸானும் ஆவர். நயவஞ்சகன் "அப்துல்லாஹ் பின் உபை'தான் (நடக்காத ஒன்றை நடந்ததாக) ஜோடித்து, அதைப் பரப்பிவந்தவன் ஆவான். அவதூறு பரப்பியவர்களில் பெரும்பங்கு வகித்தவனும் அவன்தான்; ஹம்னாவும்கூட.

## பாடம் : 11 நபி (ஸல்) அவர்களின் அடிமைப் பெண்மீது சுமத்தப்பட்ட அவதூறுக் குற்றச்சாட்டு உண்மைக்குப் புறம்பானதாகும்.

5352 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அடிமைப் பெண்ணுடன் இணைத்து ஒரு மனிதர் அவதூறு சொல்லப்பட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம், "நீங்கள் சென்று அவருடைய கழுத்தை வெட்டிவிடுங்கள்" என்று சொன்னார்கள். அவ்வாறே அலீ (ரலி) அவர்கள் சென்ற போது, அவர் (சுற்றுச்சுவர் இல்லாத) ஒரு கிணற்றில் குளித்துக்கொண்டிருந்தார். அவரிடம் அலீ (ரலி) அவர்கள், "மேலே வா" என்று தமது கையைக் கொடுத்து அவரை வெளியேற்றினார்கள்.
அப்போது அவர் இன உறுப்பு துண்டிக்கப்பட்டவராக, இன உறுப்பே அற்றவராக இருந்தார். ஆகவே, அலீ (ரலி) அவர்கள் அவரை(க் கொல்லாமல்) விட்டுவிட்டார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! அவர் இன உறுப்பு துண்டிக்கப்பட்டவர்; இன உறுப்பே அற்றவர் ஆவார்" என்று சொன்னார்கள்.

# அத்தியாயம் : 50 - நயவஞ்சகத் தன்மைகளும் அதற்குரிய தண்டனைகளும்

## நயவஞ்சகர்களின் தன்மைகளும் அவர்களுக்கான விதிகளும்.

5353 ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்திற்காகப் புறப்பட்டோம். அப்பயணத்தில் (உணவுப் பற்றாக்குறையால்) மக்களுக்குச் சிரமம் ஏற்பட்டது. அப்போது (நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் பின் உபை பின் சலூல் தம் நண்பர்களிடம், "அல்லாஹ்வின் தூதருடன் இருக்கும் இவர்களுக்கு நீங்கள் செலவு செய்யாதீர்கள். அவர்கள் அல்லாஹ்வின் தூதரிடமிருந்து விலகிச் சென்றுவிடுவார்கள்" என்றும், "நாம் மதீனாவுக்குத் திரும்பிச் சென்றால், (எம்முடைய இனத்தாரான) கண்ணியவான்கள் இழிந்தோ(ராகிய முஹாஜி)ர்களை அங்கிருந்து வெளியேற்றிவிடுவர்" என்றும் சொன்னான்.
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, அ(வர் சொன்ன)தை அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அப்துல்லாஹ் பின் உபையிடம் ஆளனுப்பினார்கள். (அவர் வந்தவுடன்) அவரிடம் (அது குறித்துக்) கேட்டார்கள். தாம் அப்படிச் செய்யவேயில்லை என்று அவன் சத்தியம் செய்து சாதித்தார்.

அவர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஸைத் பொய் சொல்லிவிட்டார்" என்று (என்னைப் பற்றிக்) கூறினார். (அவருடன் சேர்ந்து) மக்களில் சிலரும் அப்படிச் சொன்னதால் என் உள்ளத்தில் கடுமை(யான வேதனை) ஏற்பட்டது. அப்போது என் வாய்மையைக் குறிக்கும் வகையில் "(நபியே!) இந்த நயவஞ்சகர்கள் உங்களிடம் வருகின்றபோது..." (63:1) என்று தொடங்கும் வசனத்தை அல்லாஹ் அருளினான்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த நயவஞ்சகர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோர அவர்களை அழைத்தார்கள். (அவர்கள் அதற்கு இணங்காமல்) தமது தலையைத் திருப்பிக் கொண்டார்கள்.
(மேற்கண்ட வசனத்தின் மூலத்திலுள்ள) "குஷுபும் முசன்னதா' (சாய்த்துவைக்கப்பட்ட மரக்கட்டை) என்பது, அவர்கள் மிகவும் அழகானவர்களாக (வாட்ட சாட்டமானவர்களாக) இருந்ததைக் குறிக்கிறது.

5354 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் பின் உபையின் (பிரேதம் சவக்குழிக்குள் வைக்கப்பட்ட பிறகு அந்த) சவக்குழிக்கு வந்து, அந்தப் பிரேதத்தை வெளியே எடுத்துத் தமது மடியில் வைத்து, அதன் மீது தமது உமிழ்நீரை உமிழ்ந்து, தமது அங்கியையும் அதற்கு அணிவித்தார்கள். (இதற்குக் காரணம் என்னவோ) அல்லாஹ்வே அறிந்தவன்!
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "நபி (ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் பின் உபையின் பிரேதம் சவக்குழிக்குள் வைக்கப்பட்ட பிறகு அங்கு வந்தார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5355 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் பின் உபை பின் சலூல் இறந்தபோது, அவருடைய புதல்வர் அப்துல்லாஹ் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, தம் தந்தைக்குப் பிரேத ஆடை (கஃபன்) அணிவிப்பதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அங்கியைத் தருமாறு கோரினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவரிடம் தமது அங்கியைக் கொடுத்தார்கள். பிறகு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் தம் தந்தைக்கு இறுதித் தொழுகையை முன்னின்று நடத்தும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டார். அவருக்கு இறுதித் தொழுகை நடத்துவதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்தார்கள்.
அப்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் எழுந்து, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஆடையைப் பிடித்துக்கொண்டு, "அல்லாஹ்வின் தூதரே! இவருக்கு(ப் பாவமன்னிப்புக் கோரி) பிரார்த்தனை செய்ய வேண்டாமென அல்லாஹ் உங்களுக்குத் தடை விதித்திருக்க, இவருக்கா தொழுவிக்கப்போகிறீர்கள்?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(பாவமன்னிப்புக் கோரவும் கோராமலிருக்கவும்) எனக்கு அல்லாஹ் உரிமையளித்துள்ளான். "(நபியே!) நீர் அவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோருவீராக; அல்லது கோராமலிருப்பீராக. (இரண்டும் சமம்தான்.) அவர்களுக்காக நீர் எழுபது முறை பாவமன்னிப்புக் கோரினாலும் அவர்களை ஒருபோதும் அல்லாஹ் மன்னிக்கமாட்டான்' (9:80) என்றே அல்லாஹ் கூறுகின்றான். நான் எழுபது முறையைவிட அதிகமாக இவருக்காகப் பாவமன்னிப்புக் கோருவேன்" என்று சொன்னார்கள்.
உமர் (ரலி) அவர்கள், "இவன் நயவஞ்சகனாயிற்றே!" என்று சொன்னார்கள். இருந்தும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு (ஜனாஸாத்) தொழுகையை முன்னின்று நடத்தினார்கள். அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "அவர்களில் இறந்துவிட்ட எவருக்காகவும் (நபியே!) நீர் தொழுவிக்க வேண்டாம். அவருடைய மண்ணறை அருகேயும் நிற்க வேண்டாம்" எனும் (9:84ஆவது) வசனத்தை அருளினான்.

5356 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "(9:84ஆவது வசனம் அருளப்பெற்ற) பிறகு அவர்களுக்குத் தொழுவிப்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விட்டுவிட்டார்கள்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5357 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
இறையில்லம் கஅபா அருகே மூன்றுபேர் ஒன்றுகூடினர். அவர்களில் "குறைஷியர் இருவரும் ஸகஃபீ குலத்தார் ஒருவரும்' அல்லது "ஸகஃபீ குலத்தார் இருவரும் குறைஷி

ஒருவரும்' இருந்தனர். அவர்களது உள்ளத்தில் புரிந்துகொள்ளும் ஆற்றல் குறைவாகவே இருந்தது. (ஆனால்,) வயிற்றுச் சதை (தொந்தி) அதிகமாகத்தான் இருந்தது. அவர்களில் ஒருவர், "அல்லாஹ், நாம் சொல்வதைக் கேட்கின்றான் என்று நீங்கள் கருதுகிறீர்களா?" என்று கேட்க, மற்றொருவர், "நாம் உரக்கப் பேசினால் அவன் கேட்பான்; மெதுவாகப் பேசினால் கேட்கமாட்டான்" என்று சொன்னார். இன்னொருவர், "நாம் உரக்கப் பேசும்போது அவன் கேட்கிறான் என்றால், நாம் மெதுவாகப் பேசும் போதும் அவன் நிச்சயம் கேட்கவே செய்வான்" என்று சொன்னார்.

அப்போதுதான் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "(உலகில் நீங்கள் குற்றங்களைச் செய்தபோது) உங்களின் காதுகளும் கண்களும் தோல்களும் உங்களுக்கெதிராகச் சாட்சியம் அளிக்கும் என்பதை அஞ்சிக்கூட (குற்றங்களிலிருந்து) தவிர்ந்துகொள்பவர்களாக நீங்கள் இருக்கவில்லை" (41:22) எனும் வசனத்தை அருளினான்.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5358 ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் உஹுது(ப் போரு)க்காகப் புறப்பட்டுச் சென்றபோது, அவர்களுடனிருந்தவர்களில் சிலர் (நயவஞ்சகர்கள்) திரும்பி வந்துவிட்டனர். (இவர்கள்மீது என்ன நடவடிக்கை எடுப்பது என்பது தொடர்பாக) நபித்தோழர்கள் இரு பிரிவினராகப் பிரிந்துவிட்டார்கள்.

அவர்களில் சிலர், "அ(வ்வாறு திரும்பிச் சென்ற)வர்களைக் கொன்றுவிடுவோம்" என்று கூறினர். வேறுசிலர், "இல்லை (அவர்களைக் கொல்லவேண்டாம்)" என்று கூறினர். அப்போதுதான் "உங்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? நயவஞ்சகர்கள் விஷயத்தில் நீங்கள் இரு பிரிவினர்களாக உள்ளீர்கள்" (4:88) எனும் வசனத்தை அல்லாஹ் அருளினான்.

- மேற்கண்ட ஹதீஸ் ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5359 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் நயவஞ்சகர்களில் சிலர், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அறப்போருக்குப் புறப்பட்டுச் செல்லும்போது, அவர்களுடன் செல்லாமல் ஊரிலேயே தங்கிவிடுவார்கள். (அவ்வாறு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் செல்லாமல் தங்கிவிட்டதைப் பற்றி அவர்கள் பூரிப்பும் அடைந்து கொள்வார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (போரிலிருந்து திரும்பி)வந்தால், அவர்களிடம் (போய்,தாம் கலந்துகொள்ளாமல் போனதற்குச்) சாக்குப்போக்குகளைக் கூறி (பொய்ச்) சத்தியம் செய்வார்கள். தாம் செய்யாத (நற்) செயல்களுக்காகத் தாம் புகழப்பட வேண்டுமென்றும் விரும்புவார்கள்.

அப்போதுதான், "தாம் செய்த (தீய)வை குறித்துப் பூரித்துக்கொண்டும், தாம் செய்யாதவற்றுக்காகப் பாராட்டப்பட வேண்டும் என விரும்பிக்கொண்டும் இருப்போர் வேதனையிலிருந்து தப்பித்தவர்கள் என்று ஒருபோதும் (நபியே!) நீர் எண்ண வேண்டாம்;

வதைக்கும் வேதனை தான் அவர்களுக்கு உண்டு" (3:188) எனும் இறைவசனம் அருளப்பெற்றது. - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5360 ஹுமைத் பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(மதீனா ஆளுநர்) மர்வான் பின் அல்ஹகம் தம் காவலரிடம், "ராஃபிஉ! நீ இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்று, "தாம் செய்தவை குறித்து மகிழ்ச்சியடைகின்ற, தாம் செய்யாத (நற்)செயல்களுக்காக (சாதனைகளுக்காக)ப் புகழப்பட வேண்டுமென்று விரும்புகின்ற ஒவ்வொரு மனிதரும் வேதனை செய்யப்படுவார் என்றிருப்பின், நாம் அனைவருமே நிச்சயமாக வேதனை செய்யப்பட வேண்டிவருமே!' என்று (நான் வினவியதாகக்) கேள்" என்று சொன்னார்.
(அவ்வாறே இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்று ராஃபிஉ கேட்டபோது) "உங்களுக்கு இந்த வசனம் தொடர்பாக என்ன (குழப்பம்) நேர்ந்தது? இந்த வசனம் வேதக்காரர்கள் தொடர்பாகவே அருளப்பெற்றது" என்று கூறிவிட்டு, "வேதம் வழங்கப்பெற்றோரிடம் நீங்கள் மக்களுக்கு அ(ந்த வேதத்)தை நிச்சயமாகத் தெளிவுபடுத்தி விடவேண்டும்; அதை நீங்கள் மறைக்கக் கூடாது என அல்லாஹ் உறுதிமொழி பெற்றதை (நபியே!) எண்ணிப்பார்ப்பீராக" (3:187) எனும் வசனத்தை ஓதினார்கள்.
பிறகு "தாம் செய்த (தீய)வை குறித்துப் பூரித்துக்கொண்டும் தாம் செய்யாதவற்றுக்காகப் பாராட்டப்பட வேண்டும் என விரும்பிக் கொண்டும் இருப்போர் வேதனையிலிருந்து தப்பித்தவர்கள் என்று (நபியே!) ஒருபோதும் நீர் எண்ண வேண்டாம்" (3:188) எனும் வசனத்தையும் ஓதிக்காட்டினார்கள்.
மேலும், "நபி (ஸல்) அவர்கள் (யூதர்களை அழைத்து) அவர்களிடம் ஒரு விஷயம் (தவ்ராத்தில் உள்ளதா என்பது) குறித்துக் கேட்டார்கள். அப்போது யூதர்கள் அதை மறைத்துவிட்டு, (உண்மைக்குப் புறம்பான) வேறொன்றை நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் கேட்டதற்குச் சரியான தகவலைத் தந்துவிட்டதைப் போன்று காட்டிக்கொண்டும், அதற்காக நபி (ஸல்) அவர்களிடம் பாராட்டை எதிர்பார்ப்பதைப் போன்றும், நபி (ஸல்) அவர்கள் கேட்டதைப் பற்றிச் சொல்லாமல் தாம் மறைத்துவிட்டதைக் குறித்து மகிழ்ச்சியடைந்துகொண்டும் புறப்பட்டுச் சென்றனர்.
(அப்போதுதான் மேற்கண்ட (3:188ஆவது) வசனம் அருளப்பெற்றது)" என்றும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5361 கைஸ் பின் உபாத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அம்மார் பின் யாசிர் (ரலி) அவர்களிடம், "நீங்கள் அலீ (ரலி) அவர்கள் விஷயத்தில் செய்துவிட்ட இந்தச் செயலை நீங்களாக உங்கள் யோசனைப்படி செய்தீர்களா? அல்லது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உங்களிடம் கூறிய ஏதேனும் அறிவுரைப்படி செய்தீர்களா?" என்று கேட்டேன்.
அதற்கு அம்மார் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மக்கள் அனைவரிடமும் கூறாத ஓர் அறிவுரையை எங்களிடம் மட்டும் கூறவில்லை. மாறாக, நபி (ஸல்) அவர்கள் "என் தோழர்களிடையே பன்னிரண்டு நயவஞ்சகர்கள் இருக்கிறார்கள்.

அவர்களில் எட்டுப்பேர், ஊசித் துவாரத்திற்குள் ஒட்டகம் நுழையாத வரை சொர்க்கத்திற்குள் நுழையமாட்டார்கள். நரக நெருப்பின் ஒரு தீப்பந்தமே அவர்கள் எட்டுப் பேருக்கும் போதுமானதாகும்' என்று கூறினார்கள் என ஹுதைஃபா (ரலி) அவர்கள் சொன்னார்கள்" என்றார்கள்.
மற்ற நால்வர் குறித்து அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறியது என் நினைவில் இல்லை என அறிவிப்பாளர் அஸ்வத் பின் ஆமிர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

5362 கைஸ் பின் உபாத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அம்மார் பின் யாசிர் (ரலி) அவர்களிடம், "நீங்கள் (அலீ (ரலி) அவர்களுடன் சேர்ந்து) போரிட்டுவருவதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்? அதை நீங்கள் சுயமான முடிவுப்படி மேற்கொள்கிறீர்களா? ஏனெனில், உங்களின் சுயமுடிவு தவறானதாகவும் இருக்கலாம்; சரியானதாகவும் இருக்கலாம்.அல்லது உங்களிடம் (அவ்வாறு போரிடுமாறு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அறிவுரை கூறினார்களா?" என்று கேட்டோம்.
அதற்கு அம்மார் (ரலி) அவர்கள், "மக்கள் அனைவரிடமும் கூறாத அறிவுரை எதையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் கூறவில்லை. (ஆனால்,) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் சமுதாயத்தாரிடையே பன்னிரண்டு நயவஞ்சகர்கள் இருக்கிறார்கள்...' என்று மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று கூறினார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

ஷுஅபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அம்மார் (ரலி) அவர்கள் இதை ஹுதைஃபா (ரலி) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள் என்றே நான் கருதுகிறேன்" என்று கூறியதாக இடம் பெற்றுள்ளது.
ஃகுன்தர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "என் சமுதாயத்தாரிடையே பன்னிரெண்டு நயவஞ்சகர்கள் இருக்கிறார்கள். ஊசித் துவாரத்திற்குள் ஒட்டகம் நுழையாத வரை அவர்கள் சொர்க்கத்திற்குள் நுழையவுமாட்டார்கள்; அதன் வாடையைக்கூட நுகரவுமாட்டார்கள். நரக நெருப்பின் விளக்கே ("துபைலா') அந்த எட்டுப் பேருக்கும் போதுமானதாகும். அது அவர்களது தோள்களிடையே வெளிப்பட்டு அவர்களது நெஞ்சுகளுக்கு மேலே வந்துவிடும்" என்று கூறியதாக நான் கருதுகிறேன் என்று காணப்படுகிறது.

5363 அபுத்துஃபைல் (ஆமிர் பின் வாஸிலா-ரலி) அவர்கள் கூறியதாவது:
கணவாய்வாசிகளில் ஒருவருக்கும் ஹுதைஃபா (ரலி) அவர்களுக்கும் இடையே மக்கள் மத்தியில் ஏற்படும் பிரச்சினை ஒன்று ஏற்பட்டது. அப்போது, (அந்த மனிதரிடம்) ஹுதைஃபா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வை முன்வைத்து உம்மிடம் கேட்கிறேன். அந்தக் கணவாய்வாசிகள் எத்தனை பேர் இருந்தனர்?" என்று கேட்டார்கள். (அந்த மனிதர் மௌனமாக இருக்கவே,) அவரிடம் அங்கிருந்த மக்கள், "அவர் கேட்டதற்குப் பதில் சொல்" என்று கூறினர். அந்த மனிதர், "அவர்கள் பதினான்கு பேர் இருந்தார்கள் என எங்களிடம் தெரிவிக்கப்பட்டது" என்றார்.

(ஹுதைஃபா (ரலி) அவர்கள் கூறினார்கள்:) அவர்களில் நீரும் ஒருவராக இருந்தால், (கணவாயிலிருந்த) மக்களின் எண்ணிக்கை பதினைந்தாக உயரும். நான் அல்லாஹ்வை சாட்சியாக்கிக் கூறுகிறேன்: அவர்களில் பன்னிரெண்டு பேர் இவ்வுலகிலும் சாட்சிகள் நிற்கும் (மறுமை) நாளிலும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எதிரிகளாவர். மற்ற மூன்று பேரை நபியவர்கள் மன்னித்துவிட்டார்கள்.
(காரணம்) அவர்கள் மூவரும், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பொது அறிவிப்பாளரின் அறிவிப்பை நாங்கள் செவியுறவுமில்லை; அந்த மக்கள் தீட்டியிருந்த திட்டத்தை நாங்கள் அறிந்திருக்கவுமில்லை" என்று கூறி (மன்னிப்புக் கோரி)னர்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கருங்கற்கள் நிறைந்த ("ஹர்ரா'ப்) பகுதியில் இருந்தார்கள். பிறகு (தபூக் நோக்கி) நடந்தார்கள். அப்போது "(நீங்கள் தங்கப்போகுமிடத்திலுள்ள) நீர்நிலையில் தண்ணீர் மிகக் குறைவாகவே இருக்கும். என்னை முந்திக்கொண்டு யாரும் அங்கு செல்ல வேண்டாம்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
ஆனால், அவர்களை முந்திக்கொண்டு சிலர் அங்கு சென்றுவிட்டிருப்பதைக் கண்டார்கள். அன்றைய தினத்தில் அவர்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சபித்தார்கள்.

5364 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் (குறைஷியரின் குதிரைப்படையை நோட்டமிடுவதற்காக ஹுதைபிய்யா அருகிலுள்ள) "ஸனிய்யத்துல் முரார்' கணவாயில் (முதலில்) ஏறுகிறாரோ அவருக்கு பனூ இஸ்ராயீல் சமுதாயத்துக்கு மன்னிப்பு வழங்கப்பட்டதைப் போன்று மன்னிப்பு வழங்கப்படும்" என்று கூறினார்கள்.
"கஸ்ரஜ்' குலத்தைச் சேர்ந்த எங்களது குதிரைப் படையினரே அதன் மீது முதலில் ஏறினர். பிறகு மற்றவர்கள் ஏறினர். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சிவப்பு ஒட்டகத்தில் வரும் மனிதரைத் தவிர மற்ற அனைவரும் பாவமன்னிப்பு அளிக்கப் பட்டுவிட்டனர்" என்று கூறினார்கள்.
உடனே நாங்கள் அந்த மனிதரிடம் சென்று, "நீ வந்து, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உமக்காகப் பாவமன்னிப்புக் கோரச் சொல்" என்று கூறினோம்.
அதற்கு அந்த மனிதர், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்கள் தோழர் எனக்குப் பாவமன்னிப்புக் கோருவதைவிட காணாமற்போன எனது ஒட்டகம் எனக்கு (திரும்பக்) கிடைப்பதே எனக்கு மிகவும் விருப்பமானதாகும்" என்று சொன்னார். அப்போது அந்த மனிதர் காணாமற்போன தனது ஒட்டகத்தைத் தேடிக்கொண்டிருந்தார்.

5365 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "யார் "ஸனிய்யத்துல் முரார்' அல்லது "ஸனிய்யத்துல் மரார்' கணவாயில் முதலில் ஏறுகிறாரோ..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது.
இந்த அறிவிப்பில், "அப்போது கிராமவாசியொருவர் தமது காணாமற்போன ஒட்டகத்தைத் தேடிக்கொண்டு வந்தார்"என்று இடம்பெற்றுள்ளது.

5366 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
எங்களில் பனுந் நஜ்ஜார் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதர் இருந்தார். அவர் (இஸ்லாத்தைத் தழுவி) "அல்பகரா", "ஆலு இம்ரான்" ஆகிய (குர்ஆன்) அத்தியாயங்களை ஓதி முடித்தார். அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காக (வேதஅறிவிப்பை) எழுதுபவராக இருந்தார். பிறகு அவர் (தமது பழைய கிறித்தவ மதத்துக்கே) ஓடிப்போய்,வேதக்காரர்களுடன் சேர்ந்துகொண்டார். வேதக்காரர்கள் அவரைத் தூக்கிவைத்துக் கொண்டாடினர். "இவர் முஹம்மதுக்காக (வேத அறிவிப்பை) எழுதிவந்தார்" என்று கூறி, அவரால் பெருமைப்பட்டுக் கொண்டனர்.

இதே நிலையில், (ஒரு நாள்) அவர்களுக்கு மத்தியில் வைத்து அவரது கழுத்தை அல்லாஹ் முறித்துவிட்டான். (அவர் இறந்து விட்டார்.) ஆகவே, அவருக்காகச் சவக்குழி தோண்டி அவரைப் புதைத்துவிட்டனர். காலை நேரமானபோது அவரைப் பூமி (குழிக்கு வெளியில்) தூக்கியெறிந்துவிட்டிருந்தது. பிறகு மீண்டும் அவருக்காகக் குழி தோண்டி அவரைப் புதைத்தனர்.
மறுநாள் காலையிலும் பூமி (குழிக்கு வெளியில்) அவரைத் தூக்கியெறிந்துவிட்டிருந்தது. பிறகு மறுபடியும் அவர்கள் அவருக்காகக் குழி தோண்டி அவரைப் புதைத்தனர். மறுநாள் காலையிலும் பூமி அவரை (குழிக்கு வெளியில்) தூக்கியெறிந்துவிட்டிருந்தது. ஆகவே, அவர்கள் அவரை (புதைக்காமல்) அப்படியே போட்டுவிட்டார்கள்.

5367 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தை முடித்துவிட்டு வந்து கொண்டிருந்தார்கள். மதீனாவுக்கு அருகில் அவர்கள் வந்தபோது, கடுமையான (சூறாவளிக்) காற்று வீசியது.அது பயணிகளை மண்ணுக்குள் புதைத்துவிடப் பார்த்தது.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இந்தக் காற்று ஒரு நயவஞ்சகனைக் கொல்வதற்காக அனுப்பப்பட்டுள்ளது" என்று கூறினார்கள். மதீனாவுக்குள் வந்தபோது, நயவஞ்சகர்களின் பெருந்தலைவன் ஒருவன் இறந்துவிட்டிருந்தான்.

5368 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் காய்ச்சல் கண்டிருந்த ஒரு மனிதரை உடல்நலம் விசாரிப்பதற்காகச் சென்றோம். அப்போது நான் எனது கையை அவர் மீது வைத்தேன். (அவரது உடல் அனலாகத் தகித்தது.) அப்போது நான், "அல்லாஹ்வின் மீதாணையாக! இன்று போல் கடுமையான வெப்பமுள்ள ஒரு மனிதரை நான் கண்டதேயில்லை" என்று சொன்னேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மறுமைநாளில் இவரைவிடக் கடுமையான வெப்பத்திற்கு ஆளாகுவோரை நான் அறிவிக்கட்டுமா? இதோ வாகனத்தில் திரும்பிக்கொண்டிருக்கும் இவ்விரு மனிதர்கள்தான்" என்று தம் தோழர்களிடையேயிருந்த இரு மனிதர்களைப் பற்றிச் சொன்னார்கள்.

5369 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நயவஞ்சகனின் நிலை இரு கிடாக்களிடையே சுற்றிவரும் பெட்டை ஆட்டின் நிலையைப் போன்றதாகும். ஒருமுறை இதனிடம் செல்கிறது; மறுமுறை அதனிடம் செல்கிறது.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் அதில், "ஒரு முறை இதற்கு இணங்குகிறது; மறுமுறை அதற்கு இணங்குகிறது" என்று இடம்பெற்றுள்ளது.மறுமை, சொர்க்கம், நரகம் ஆகியவற்றின் நிலை.

5370 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் உடல் பருத்த கொழுத்த மனிதன் ஒருவன் வருவான். அல்லாஹ்விடம் கொசுவின் இறக்கையளவு எடைகூட அவன் (மதிப்புப்) பெறமாட்டான்.
"மறுமை நாளில் அவர்(களின் செயல்)களுக்கு எந்த எடையையும் நாம் ஏற்படுத்த மாட்டோம்" (18:105) எனும் இறை வசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5371 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
யூதமத அறிஞர் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "முஹம்மதே!' அல்லது "அபுல் காசிமே!' என்றழைத்து, "அல்லாஹ் மறுமை நாளில் வானங்களை ஒரு விரல்மீதும், பூமிகளை ஒரு விரல்மீதும், மலைகள் மற்றும் மரங்களை ஒரு விரல்மீதும், தண்ணீர் மற்றும் ஈர மண்ணை ஒரு விரல்மீதும், இதர படைப்பினங்கள் அனைத்தையும் ஒரு விரல்மீதும் வைத்துக்கொண்டு அவற்றை அசைத்தவாறே, 'நானே அரசன்; நானே அரசன்' என்று சொல்வான்" என்றார்.
அவர் கூறியதைக் கேட்டு வியப்படைந்து அந்த அறிஞரின் கருத்தை உண்மையென ஆமோதிக்கும் வகையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்தார்கள்.
பிறகு "அவர்கள் அல்லாஹ்வை எவ்வாறு மதிக்க வேண்டுமோ, அவ்வாறு மதிக்கவில்லை. மறுமைநாளில் பூமி முழுவதும் அவன் கைப்பிடியில் இருக்கும். வானங்கள் அவனது வலக் கரத்தில் சுருட்டப்பட்டிருக்கும். அவர்கள் இணை வைப்பவற்றிலிருந்து அவன் தூயவன்; உயர்ந்தவன்" (39:67) எனும் வசனத்தை ஓதினார்கள்.

5372 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "யூதர்களில் ஓர் அறிஞர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன. அவற்றில் "பிறகு அவற்றை அவன் அசைப்பான்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
மேலும், "அந்த அறிஞர் கூறியதைக் கேட்டு வியப்படைந்து, அவரது கருத்தை உண்மையென ஆமோதிக்கும் வகையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள்

தெரியச் சிரித்ததை நான் பார்த்தேன்" என்றும், பிறகு "அவர்கள் அல்லாஹ்வை எவ்வாறு மதிக்க வேண்டுமோ அவ்வாறு மதிக்கவில்லை" (39:67) என்று தொடங்கும் வசனத்தை ஓதினார்கள்" என்றும் இடம்பெற்றுள்ளது.

5373 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
வேதக்காரர்களில் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அபுல் காசிமே! அல்லாஹ் (மறுமை நாளில்) வானங்களை ஒரு விரல்மீதும் பூமிகளை ஒரு விரல் மீதும் மரங்கள் மற்றும் ஈர மண்ணை ஒரு விரல்மீதும் (இதர) படைப்புகளை ஒரு விரல் மீதும் வைத்துக்கொண்டு, பிறகு "நானே அரசன்; நானே அரசன்' என்று சொல்வான்" என்றார்.
(இதைக் கேட்டு) நபி (ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்ததை நான் பார்த்தேன். பிறகு "அவர்கள் அல்லாஹ்வை எவ்வாறு மதிக்க வேண்டுமோ அவ்வாறு மதிக்கவில்லை" (39:67) என்று தொடங்கும் வசனத்தை ஓதினார்கள்.
இதை அல்கமா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5374 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "மேலும் மரங்களை ஒரு விரல்மீதும், ஈர மண்ணை ஒரு விரல்மீதும்' என்று காணப்படுகிறது. ஜரீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இதரப் படைப்புகளை ஒரு விரல்மீதும்' எனும் குறிப்பு இல்லை. ஆயினும் அவரது அறிவிப்பில் "மலைகளை ஒரு விரல்மீது' என்று இடம்பெற்றுள்ளது. மேலும் ஜரீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அந்த வேதக்காரர் கூறியதைக் கேட்டு வியப்படைந்து, அவரது கருத்தை உண்மையென ஆமோதிக்கும் வகையில் (சிரித்தார்கள்)" எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5375 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வளமும் உயர்வுமிக்க அல்லாஹ், மறுமை நாளில் பூமியைத் தனது கைப்பிடிக்குள் அடக்கிக் கொள்வான்; வானத்தைத் தனது வலக் கரத்தில் சுருட்டிக்கொள்வான்; பிறகு "நானே அரசன்; பூமியின் அரசர்கள் எங்கே?" என்று கேட்பான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5376 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் மறுமைநாளில் வானங்களைச் சுருட்டுவான். பிறகு அவற்றைத் தனது வலக் கரத்தில் எடுத்துக்கொள்வான். பிறகு "நானே அரசன். அடக்குமுறையாளர்கள் எங்கே? ஆணவம் கொண்டவர்கள் எங்கே?" என்று கேட்பான். பிறகு பூமிகளைத் தனது இடக் கரத்தில் சுருட்டிக்கொள்வான். பிறகு "நானே அரசன். அடக்கு முறையாளர்கள் எங்கே? ஆணவம் கொண்டவர்கள் எங்கே?" என்று கேட்பான்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5377 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் தன் வானங்களையும் பூமிகளையும் தன்னுடைய இரு கரங்களிலும் எடுத்துக்கொண்டு, "நானே

அல்லாஹ். நானே அரசன்" என்று கூறுவான் என்றார்கள். இதைக் கூறியபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் விரல்களை மடக்கிவிட்டு, பிறகு அவற்றை விரித்தார்கள்.
இதைக் கூறுகையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்றுகொண்டிருந்த சொற்பொழிவு மேடை (மிம்பர்) கீழே அசைந்துகொண்டிருந்ததை நான் கண்டேன். எங்கே அது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களோடு கீழேவிழுந்துவிடுமோ! என்று எனக்கு நானே கூறிக்கொண்டேன். (அந்த அளவுக்கு அது அசைந்துகொண்டிருந்தது.)
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எவ்வாறு கூறினார்கள் என்பதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் விவரிப்பதை உற்றுக் கவனித்த உபைதுல்லாஹ் பின் மிக்சம் (ரஹ்) அவர்களே இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கி றார்கள்.

5378 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள் ளது.
அதில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது நின்றுகொண்டு, "வல்லமையும் மாண்பும் மிக்கவனும் அடக்கியாள்பவனுமான அல்லாஹ், தன் வானங்களையும் பூமிகளையும் தன்னுடைய இரு கரங்களில் எடுத்துக்கொள்வான் என்று கூறினார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெறுகின்றன.

## பாடம் : 1 படைப்பின் ஆரம்பமும் (ஆதி மனிதர்) ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்டதும்.

5379 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது கையைப் பிடித்துக்கொண்டு, "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் சனிக்கிழமையன்று மண்ணை (பூமியை)ப் படைத்தான். அதில் மலைகளை ஞாயிற்றுக்கிழமையன்று படைத்தான். மரங்களை திங்கட்கிழமை படைத்தான். துன்பத்தை செவ்வாய் கிழமையன்றும் ஒளியை புதன்கிழமையன்றும் படைத்தான். வியாழக்கிழமையன்று உயிரினங்களைப் படைத்து பூமியில் பரவச் செய்தான். (ஆதி மனிதர்) ஆதம் (அலை) அவர்களை வெள்ளிக்கிழமை அஸ்ருக்குப்பின் அந்த நாளின் இறுதி நேரத்தில் அஸ்ருக்கும் இரவுக்குமிடையேயுள்ள நேரத்தில் இறுதியாகப் படைத்தான்" என்று கூறினார்கள்.– இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 2 மறுமை நாளில் இறந்தவர்கள் அனைவரும் எழுப்பப்படுவதும் ஒன்று திரட்டப்படுவதும் அன்று பூமியின் நிலையும்.

5380 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(உமியோ தவிடோ கலக்காத) சுத்தமான மாவினாலான ரொட்டியைப் போன்று, தூய வெண்மையான (சம)தளத்தின் மீது மறுமை நாளில் மனிதர்கள் அனைவரும் ஒன்றுதிரட்டப் படுவார்கள். அந்தப் பூமியில் (மலை, மடு, காடு, வீடு என) எந்த அடையாளமும் யாருக்கும் இருக்காது.

இதை சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5381 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அந்நாளில் பூமி, வேறு பூமியாகவும் வானங்களும் (வேறு வானங்களாகவும்) மாற்றப்படும்" (14:48) எனும் இறைவசனத்தை ஓதிக்காட்டி, "அல்லாஹ்வின் தூதரே! அன்றைய நாளில் மக்கள் அனைவரும் எங்கே இருப்பார்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அஸ்ஸிராத் (எனும் நரகப் பாலத்தின்) மீது" என்று பதிலளித்தார்கள்.

பாடம் : 3 சொர்க்கவாசிகளுக்கு அளிக்கப்படும் விருந்து.

5382 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மறுமை நாளில் இந்தப் பூமி, (அடுப்பில் இருக்கும்) ஒரு ரொட்டியைப் போன்று (சமதளமாக) மாறிவிடும். பயணத்திலுள்ள உங்களில் ஒருவர் தமது ரொட்டியை (ஒரு கையிலிருந்து மறு கைக்கு மாற்றி) தட்டிப்போடுவதைப் போன்று, சர்வ வல்லமை படைத்த (இறை)வன் பூமியைத் தனது கரத்தால் புரட்டிப்போடுவான். அதையே சொர்க்கவாசிகளுக்கு விருந்தாக்குவான்" என்று சொன்னார்கள்.
அப்போது யூதர்களில் ஒருவர் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம்) வந்து, "அபுல்காசிமே! அளவற்ற அருளாளன் தங்களுக்கு வளம் வழங்கட்டும்! மறுமைநாளில் சொர்க்கவாசிகளின் விருந்துணவு என்னவென்று உங்களுக்கு நான் தெரிவிக்கட்டுமா?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சரி' என்றார்கள்.
அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னதைப் போன்றே, "மறுமை நாளில் இந்தப் பூமி ஒரேயொரு ரொட்டியைப் போன்று (சமதளமாக) இருக்கும்" என்று கூறினார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களைக் கூர்ந்து பார்த்துவிட்டு, தம் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்தார்கள்.

பிறகு "(அபுல்காசிமே!) உங்களுக்குச் சொர்க்கவாசிகளின் குழம்பு எது எனத் தெரிவிக்கட்டுமா?" என்று அந்த யூதர் கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "சரி' என்றார்கள்.
அவர், "அவர்களின் குழம்பு "பாலாம் மற்றும் நூன்' என்றார். மக்கள் "இது என்ன?" என்று கேட்டார்கள். அந்த யூதர், ("அவை) காளை மாடும் மீனும் ஆகும். அவ்விரண்டின் ஈரல்களுடன் ஒட்டிக்கொண்டிருக்கும் தனித் துண்டை (மட்டுமே சொர்க்கவாசிகளில்) எழுபதாயிரம் பேர் புசிப்பார்கள்" என்று கூறினார்.

5383 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யூதர்களில் (முக்கியப் பிரமுகர்கள்) பத்துப் பேர் என்னைப் பின்பற்றியிருப்பார்களாயின், பூமியின் மீதுள்ள அனைத்து யூதர்களும் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டிருப்பார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 4 நபி (ஸல்) அவர்களிடம் யூதர்கள் உயிரைப் பற்றிக் கேள்வி கேட்டதும், "(நபியே!) உயிரைப் பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள்'' (17:85) எனும் வசனமும்.**

5384 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு வேளாண் பூமியில் (பேரீச்சந்தோப்பில்) சென்று கொண்டிருந்தேன். அவர்கள் பேரீச்ச மட்டை ஒன்றை (கையில்) ஊன்றியிருந்தார்கள். அப்போது யூதர்கள் சிலரைக் கடந்து சென்றார்கள்.
அவர்களில் ஒருவர் இன்னொருவரிடம் (நபியவர்களைச் சுட்டிக்காட்டி), "இவரிடம் உயிரைப் பற்றிக் கேளுங்கள்" என்றார். மற்றவர்கள், "உங்களுக்கு அதற்கான தேவை என்ன ஏற்பட்டது? நீங்கள் விரும்பாத ஒன்றை அவர் உங்களிடம் சொல்லிவிடக் கூடாது (எனவே, அவரிடம் நீங்கள் கேட்க வேண்டாம்)" என்றார்கள். பின்னர் அவர்கள், "(சரி) அவரிடம் கேளுங்கள்" என்றனர்.

உடனே அவர்களில் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் எழுந்துவந்து, அவர்களிடம் உயிரைப் பற்றிக் கேட்டார். நபி (ஸல்) அவர்கள் மௌனமாக இருந்தார்கள். அவர்களுக்கு எந்தப் பதிலும் அளிக்கவில்லை. அவர்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) அருளப்படுகின்றது என நான் அறிந்து கொண்டேன். ஆகவே, நான் அதே இடத்தில் நின்றுகொண்டேன்.
வேத அறிவிப்பு (வஹீ) இறங்கியபோது, அவர்கள் "(நபியே!) உயிரைப் பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். "உயிர் என்பது என் இறைவனின் கட்டளைப்படி உள்ளது. நீங்கள் குறைவாகவே கல்வி கொடுக்கப்பட்டுள்ளீர்கள்' என்று கூறுவீராக" (17:85) எனும் இறை வசனத்தைக் கூறினார்கள்.

5385 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நான் நபி (ஸல்) அவர்களுடன் மதீனாவில் ஒரு வேளாண் பூமியில் சென்று கொண்டிருந்தேன்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
அவற்றில் அலீ பின் கஷ்ரம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("நீங்கள் கொடுக்கப் பட்டுள்ளீர்கள்" என்பதற்குப் பதிலாக) "அவர்கள் கொடுக்கப்பட்டுள்ளார்கள்" என்று இடம் பெற்றுள்ளதாக ஈசா பின் யூனுஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாகக் காணப்படுகிறது. வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "நீங்கள் கொடுக்கப்பட்டுள்ளீர்கள்" என்றே இடம்பெற்றுள்ளது.

5386 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்கள் ஒரு பேரீச்சந்தோட்டத்தில் பேரீச்ச மட்டை ஒன்றை (கையில்) ஊன்றியபடி இருந்தார்கள்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகி மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது. இந்த அறிவிப்பிலும் "நீங்கள் கொடுக்கப்பட்டுள்ளீர்கள்" என்றே காணப்படுகிறது.

5387 கப்பாப் பின் அல்அரத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(இணைவைப்பாளர்) ஆஸ் பின் வாயில் என்பவர் எனக்குக் கடன் தர வேண்டியிருந்தது. அதைத் தரும்படி கேட்டு அவரிடம் நான் சென்றேன். அவர், "நீ முஹம்மதை நிராகரிக்காத வரை நான் (உனது கடனை) உனக்குத் தரமாட்டேன்" என்று சொன்னார்.
நான், "அல்லாஹ் உன்னை மரணிக்கச் செய்து, பிறகு நீ (மறுமையில் உயிருடன்) எழுப்பப்படும்வரை நான் முஹம்மத் (ஸல்) அவர்களை நிராகரிக்கமாட்டேன்" என்று கூறினேன். அவர், "நான் இறந்து மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பப்படுவேனா? அவ்வாறாயின், நான் (மறுமையில்) பொருட் செல்வத்தையும் மக்கட் செல்வத்தையும் திரும்பப் பெறும்போது நான் உனது கடனைச் செலுத்துவேன்" என்று (கிண்டலாகச்) சொன்னார்.
அப்போதுதான், "நம் வசனங்களை மறுத்தவனைக் கண்டீரா? எனக்குச் செல்வமும் சந்ததியும் வழங்கப்படும் என்று கூறுகிறான். மறைவானவற்றை இவன் கண்டுபிடித்து விட்டானா? அல்லது அளவற்ற அருளாளனிடம் ஏதேனும் உறுதிமொழியைப் பெற்றானா? அவ்வாறு ஏதுமில்லை. அவன் சொல்வதை நாம் பதிவு செய்வோம். அவனுக்கு வேதனையை ஒரேடியாக நீட்டுவோம். அவன் எதைப் பற்றிப் பேசினானோ அதற்கு (அவனுடைய செல்வங்களுக்கும் சந்ததிகளுக்கும்) நாமே வாரிசாகிவிடுவோம். தன்னந்தனியாகவே நம்மிடம் அவன் வருவான்" (19:77-80) எனும் இந்த வசனங்கள் அருளப்பெற்றன.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5388 மேற்கண்ட ஹதீஸ் கப்பாப் பின் அல்அரத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஜரீர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் அறியாமைக் காலத்தில் கொல்லனாக வேலை பார்த்துவந்தேன். ஆஸ் பின் வாயில் என்பாருக்கு ஒரு வேலையைச் செய்து கொடுத்துவிட்டு அதற்குரிய கூலியைக் கேட்பதற்காக அவரிடம் சென்றேன்" என்று கப்பாப் (ரலி) அவர்கள் கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது.

## பாடம் : 5 "(நபியே!) நீர் அவர்களுடன் இருக்கும்போது அவர்களை அல்லாஹ் தண்டிப்பவனாக இல்லை" (8:33) எனும் வசனம்.

5389 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(குறைஷி இணைவைப்பாளர்களின் தலைவனாயிருந்த) அபூஜஹ்ல், "அல்லாஹ்வே! இது (குர்ஆன்) உன்னிடமிருந்து வந்த உண்மையாக இருந்தால், எங்கள்மீது வானத்திலிருந்து கல் மழையைப் பொழியச்செய். அல்லது வதைக்கும் வேதனையை எங்களுக்குக் கொண்டுவா" என்று சொன்னான்.
அப்போது "(நபியே!) நீர் அவர்களுடன் இருக்கும்போது அவர்களை அல்லாஹ் தண்டிப்பவனாக இல்லை. அவர்கள் பாவமன்னிப்புத் தேடிக்கொண்டிருக்கும்போதும் அவர்களை அல்லாஹ் தண்டிப்பவனாக இல்லை. மஸ்ஜிதுல் ஹராமுக்கு அவர்கள் நிர்வாகிகளாக (தகுதி) இல்லாத நிலையிலும், (மக்களை) அவர்கள் தடுத்துக்கொண்டிருக்கும்

போது, அவர்களை ஏன் அல்லாஹ் தண்டிக்கக்கூடாது?" (8:33,34) என்று தொடங்கும் வசனங்கள் முழுமையாக அருளப்பெற்றன.

**பாடம் : 6 "தன்னைத் தன்னிறைவுள்ளவன் எனக் கருதியதால் மனிதன் எல்லை மீறுகிறான்'' (96:6,7) எனும் வசனங்கள்.**

5390 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மக்காவில் ஒரு முறை) அபூஜஹ்ல், "உங்களிடையே முஹம்மத் (இறைவனை வணங்குவதற்காக) மண்ணில் தமது முகத்தை வைக்கிறாரா?" என்று கேட்டான். அப்போது "ஆம்' என்று சொல்லப்பட்டது. அவன், "லாத் மற்றும் உஸ்ஸாவின் மீதாணையாக! அவ்வாறு அவர் செய்துகொண்டிருப்பதை நான் கண்டால், அவரது பிடரியின் மீது நிச்சயமாக நான் மிதிப்பேன்; அல்லது அவரது முகத்தை மண்ணுக்குள் புதைப்பேன்" என்று சொன்னான்.
அவ்வாறே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுதுகொண்டிருந்தபோது, அவர்களது பிடரியின் மீது மிதிப்பதற்காக அவர்களை நோக்கி வந்தான். அப்போது அவன் தன் கைகளால் எதிலிருந்தோ தப்பிவருவதைப் போன்று சைகை செய்தவாறு வந்தவழியே பின்வாங்கி ஓடினான். இதைக் கண்ட மக்கள் திடுக்குற்றனர். அவனிடம், "உனக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்கப்பட்டது.
அதற்கு அவன், "எனக்கும் அவருக்குமிடையில் நெருப்பாலான அகழ் ஒன்றையும் பீதியையும் இறக்கைக(ள் கொண்ட வானவர்)களையும் கண்டேன்" என்று சொன்னான்.
(இதைப் பற்றிக் கூறுகையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவன் மட்டும் என்னை நெருங்கியிருந்தால் அவனுடைய உறுப்புகளை ஒவ்வொன்றாக வானவர்கள் பிய்த்தெடுத்திருப்பார்கள்" என்று சொன்னார்கள்.
ஆகவே வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "அவ்வாறில்லை! தன்னைத் தன்னிறைவு பெற்றவன் எனக் கருதியதால் மனிதன் எல்லை மீறுகிறான். உம்முடைய இறைவனிடமே திரும்பிச் செல்ல வேண்டியுள்ளது. தொழும் அடியாரைத் தடுப்பவனை நீர் பார்க்க வில்லையா? அவர் நல்வழியில் இருப்பதையோ, அல்லது இறையச்சத்தை ஏவுவதையோ அவன் (அபூஜஹ்ல்) பொய்யெனக் கருதி அலட்சியம் செய்வதை நீர் கவனித்தீரா? அல்லாஹ் பார்க்கின்றான் என்பதை அவன் அறியவில்லையா?
அவ்வாறில்லை. அவன் விலகிக்கொள்ளவில்லையானால் முன்நெற்றியைப் பிடிப்போம். அது குற்றமிழைத்துப் பொய் கூறிய (மனிதனின்) முன்நெற்றி. அவன் தன் சபையோரை அழைத்துப் பார்க்கட்டும்! நாம் நரகின் காவலர்களை அழைப்போம். எனவே, அவனுக்குக் கட்டுப்படாதீர்" (96:6-19) எனும் வசனங்களை அருளினான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் உபைதுல்லாஹ் பின் முஆத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவனுக்கு அவர் எதைக் கட்டளையிட்டாரோ அதை அவன் பொய்யெனக் கருதி அலட்சியம் செய்வதை நீர் கவனித்தீரா?" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது. முஹம்மத் பின் அப்தில் அஃலா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவன் தன் சபையோரை அழைக்கட்டும்" என்பதற்கு, "அவன் தன் சமுதாயத்தாரை அழைக்கட்டும்" என்று பொருள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 7 புகை.**

5391 மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒரு முறை) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் அமர்ந்திருந்தோம். அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் எங்களிடையே சாய்ந்து படுத்திருந்தார்கள். அப்போது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "அபூஅப்திர் ரஹ்மானே! (கூஃபாவின்) "கிந்தா' தலைவாயிலருகே பேச்சாளர் ஒருவர் பேசிக்கொண்டிருக்கிறார். அவர் "புகை' எனும் அடையாளம் (இனிமேல்தான்) நிகழும். அது (மறுமை நெருங்கும்போது வந்து) இறை மறுப்பாளர்களின் நாசியைப் பற்றிக்கொள்ளும். ஆனால், அது இறைநம்பிக்கையாளர்களுக்கு ஜலதோஷம் போன்றதையே ஏற்படுத்தும் என்று கூறுகிறார்" என்றார்.
உடனே அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கடும் கோபத்தோடு எழுந்து அமர்ந்து, பின்வருமாறு கூறினார்கள்: மக்களே! அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள். உங்களில் ஒன்றைப் பற்றி அறிந்தவர் அதைப் பற்றிப் பேசட்டும். அறியாதவர், "அல்லாஹ்வே நன்கறிந்தவன்" என்று கூறட்டும். ஏனெனில், தாம் அறியாததைப் பற்றி "அல்லாஹ்வே நன்கறிந்தவன்' என்று கூறுபவரே உங்களில் அறிஞர் ஆவார். அல்லாஹ் தன் தூதரிடம், "இதற்காக உங்களிடம் நான் எந்தக் கூலியும் கேட்கவில்லை. நான் சுயமாக உருவாக்கிக் கூறுபவன் அல்லன் என்று (நபியே!) நீர் கூறுவீராக" (38:86) எனக் கூறியுள்ளான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (இணைவைக்கும்) மக்கள் புறக்கணிப்பதைக் கண்டபோது, "இறைவா! யூசுஃப் (அலை) அவர்களது காலத்து ஏழு பஞ்சம் நிறைந்த ஆண்டுகளைப் போன்று இவர்களுக்கும் ஏழு (பஞ்ச) ஆண்டுகளைக் கொடுப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.
உடனே அவர்களைப் பஞ்சம் வாட்டியது. அனைத்தையும் அது அழித்துவிட்டது. எந்த அளவுக்கென்றால், (பசியால்) அவர்கள் தோல்களையும் செத்தவற்றையும் உண்டனர். அவர்களில் ஒருவர் (பசி மயக்கத்தால் கண் பஞ்சடைந்து) வானத்தைப் பார்க்கும்போது, (தமக்கும் வானத்துக்கும் இடையே) புகை போன்ற ஒன்றையே கண்டார்.
இந்நிலையில் (இணைவைப்பாளர்களின் தலைவராயிருந்த) அபூசுஃப்யான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "முஹம்மதே! அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுமாறும் உறவுகளைப் பேணி வாழுமாறும் கட்டளையிடுவதற்காகவே நீர் வந்துள்ளீர். ஆனால், உம்முடைய சமூகத்தாரோ (பஞ்சத்தால்) அழிந்துவிட்டனர். ஆகவே, அவர்களுக்காக நீர் பிரார்த்திப்பீராக!" என்று கூறினார்.
(அப்போதுதான்) வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "வானம் தெளிவான புகையைக் கொண்டுவரும் நாளை எதிர்பார்ப்பீராக! அது மக்களைச் சூழ்ந்துகொள்ளும். இதுவே வதைக்கும் வேதனையாகும்" என்று தொடங்கி, "வேதனையைச் சிறிது நீக்குவோம். நீங்கள் (பழைய நிலைக்குத்) திரும்புவீர்கள்" என்பதுவரையுள்ள (44:10-15)வசனங்களை அருளினான்.
(இது இவ்வுலகில் பஞ்சத்தால் கண்ணை மறைத்த புகை மூட்டத்தையே குறிக்கிறது.) மறுமை நாளின் வேதனை(யாக இருந்தால், அது) சிறிதேனும் அகற்றப்படுமா?
அடுத்து "மிகப் பலமாக அவர்களை நாம் பிடிக்கும் நாளில் (அவர்களைத்) தண்டிப்போம்" (44:16) என்றும் அல்லாஹ் கூறுகின்றான்.

இந்தப் பிடி பத்ருப்போர் நாளில் நடந்தது. புகை, கடுமையான பிடி, வேதனை, ரோம (பைஸாந்திய)ர்கள் (தோற்கடிக்கப்பட்டுப் பிறகு வென்றது) ஆகிய அடையாளங்கள் நடந்துமுடிந்து விட்டன.

5392 மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் வந்து, "(கூஃபாவின் இந்தப்) பள்ளிவாசலில் ஒரு மனிதர் குர்ஆனுக்குச் சுயவிளக்கம் கொடுத்துக்கொண்டிருந்த நிலையில் அவரிடமிருந்து நான் வந்துள்ளேன். அவர், "வானம் தெளிவான புகையைக் கொண்டுவரும் நாளை எதிர்பார்ப்பீராக' (44:10) எனும் இந்த வசனத்துக்கு, "மறுமை நாள் நெருங்கும்போது மக்களிடம் ஒரு புகை வந்து அவர்களது நாசிகளைப் பற்றிக்கொள்ளும். அதனால் அவர்களுக்கு ஜலதோஷம் போன்று ஏற்படும்' என விளக்கமளிக்கிறார்" என்று சொன்னார். அப்போது அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்:
ஒன்றைப் பற்றி அறிந்தவர் அது குறித்துப் பேசட்டும். அறியாதவர், "அல்லாஹ்வே நன்கறிந்தவன்" என்று சொல்லட்டும். ஏனெனில், தாம் அறியாத ஒன்றைப் பற்றி (தம்மிடம் கேட்கப்படும்போது) ஒருவர் "அல்லாஹ்வே நன்கறிந்தவன்" என்று கூறுவது அந்த மனிதரின் அறிவின்பாற்பட்டதாகும்.

இது (புகைச் சம்பவம்), எப்போது நடந்ததெனில், குறைஷியர் நபி (ஸல்) அவர்களுக்கு மாறு செய்தபோது, நபி (ஸல்) அவர்கள் "யூசுஃப் (அலை) அவர்களது காலத்தில் ஏற்பட்ட ஏழு (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைப் போன்று இவர்களுக்குப் பஞ்சத்தைக் கொடுப்பாயாக!" என்று அவர்களுக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்.
அதையடுத்து அவர்களுக்குப் பஞ்சமும் துன்பமும் ஏற்பட்டது. எந்த அளவுக்கென்றால், அவர்களில் ஒருவர் (பசி மயக்கத்தில்) வானத்தைப் பார்க்கும்போது தமக்கும் வானத்திற்கும் இடையே புகை போன்ற ஒன்றையே துன்பத்தால் காணலானார். அவர்கள் எலும்புகளைச் சாப்பிடும் நிலைக்கு ஆளாயினர். அப்போது நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே!"முளர்' குலத்தாருக்காகப் பாவமன்னிப்பு வேண்டிப் பிரார்த்தியுங்கள். அவர்கள் பாதிக்கப்பட்டுள்ளனர்" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், "(இறை மறுப்பாளர்களான) முளர் குலத்தாருக்கா? நீர் துணிவுமிக்கவர்தான்" என்று கூறிவிட்டு, அவர்களுக்காக அல்லாஹ்விடம் (மழை வேண்டிப்) பிரார்த்தித்தார்கள்.
அப்போதுதான் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "வேதனையைச் (சற்று) நாம் நீக்குவோம். நீங்கள் (பழைய நிலைக்குத்) திரும்புவீர்கள்" (44:15) எனும் வசனத்தை அருளினான்.
பிறகு மழை பொழிந்து (பஞ்சம் விலகி) செழிப்பு ஏற்பட்டபோது, முந்தைய (இணை வைக்கும்) நிலைக்கே அவர்கள் திரும்பிச்சென்றனர். அப்போதுதான் அல்லாஹ், "வானம் தெளிவான புகையைக் கொண்டு வரும் நாளை எதிர்பார்ப்பீராக! அது மக்களைச் சூழ்ந்துகொள்ளும். இதுவே வதைக்கும் வேதனையாகும்" (44:10-12) எனும் வசனங்களை அருளினான்.

"மிகப் பலமாக அவர்களை நாம் பிடிக்கும் நாளில் அவர்களைத் தண்டிப்போம்" (44:16) எனும் வசனம், பத்ருப்போர் நாளைக் குறிக்கும்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5393 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(மறுமை நாளின் அடையாளங்களில்) ஐந்து அடையாளங்கள் (வந்து) சென்றுவிட்டன. ஒன்று, புகை. இரண்டாவது,இறைவனின் தண்டனை. மூன்றாவது, ரோமர்கள் (தோல்வியடைந்து, மீண்டும் அவர்கள் வெற்றிபெற்றது). நான்காவது,இறைவனின் கடுமையான பிடி. ஐந்தாவது, சந்திரன் பிளப்பது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5394 உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"(மறுமையின் பெரிய வேதனை அல்லாமல் (இம்மையிலும்) சிறிய வேதனையை அவர்களுக்குச் சுவைக்கச் செய்கிறோம்" (32:21) எனும் இறைவசனத்திலுள்ள சிறிய வேதனை என்பது, இவ்வுலகில் நிகழ்ந்த சோதனைகள்,ரோமர்கள் (தோற்கடிக்கப்பட்டு மீண்டும் அவர்கள் வெற்றி பெற்றது), இறைவனின் கடுமையான பிடி, அல்லது புகை ஆகியவையாகும்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
இறைவனின் கடுமையான பிடி, அல்லது புகை என அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்களே ஐயப்பாட்டுடன் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 8 சந்திரன் (இரண்டாகப்) பிளந்த சம்பவம்.

5395 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நான் இறைவனின் தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5396 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நாங்கள் (மக்காவிலுள்ள) "மினா" எனுமிடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. (பிளவுண்ட சந்திரனின்) ஒரு துண்டு (ஹிரா) மலைக்கு அப்பா(ல் மேற்பகுதியி)லும் மற்றொரு துண்டு மலைக்குக் கீழேயும் சென்றது.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம், "(நான் இறைவனின் தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5397 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. அந்த (ஹிரா) மலை,சந்திரனின் ஒரு துண்டை மறைத்தது. மற்றொரு துண்டு, மலைக்கு மேலே இருந்தது.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! நீயே சாட்சியாக இரு" என்று சொன்னார்கள்.
- இப்னு உமர் (ரலி) அவர்கள் வாயிலாகவும் மேற்கண்ட ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர் களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் இப்னு அதீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நீங்கள் சாட்சிகளாக இருங்கள்; நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இரண்டு முறை) கூறியதாக இடம்பெற்றுள்ளது.

5398 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்காவாசிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஓர் அற்புதச் சான்றைக் காட்டும்படி கேட்டார்கள். ஆகவே,சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளப்பதை (தாம் இறைவனின் தூதர் என்பதற்குச் சான்றாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5399 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அபூதாவூத் அத்தயாலிசீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் பிளந்தது" என்று இடம்பெற்றுள்ளது.

5400 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் பிளந்தது.

## பாடம் : 9 புண்படுத்தப்பட்டும்கூட (தண்டிக்காமல்) பொறுமைகாப்பவர் அல்லாஹ்வைவிட வேறு யாருமில்லை.

5401 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மனவேதனைக்குள்ளாக்கும் செய்தியைக் கேட்டும் (உடனே தண்டித்துவிடாமல்) மிகவும் பொறுமை காப்பவர் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வைவிட வேறு யாருமில்லை. (மனிதர்களால்) அவனுக்கு இணை கற்பிக்கப்படுகிறது; அவனுக்குக் குழந்தை இருப்பதாகப் பேசப்படுகிறது. அதன் பிறகும் அவர்களுக்கு உடல் நலத்தையும் உணவு வளத்தையும் அவன் வழங்கிக்கொண்டிருக்கின்றான்.

இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அவனுக்குக் குழந்தை இருப்பதாகப் பேசப்படுகிறது" எனும் குறிப்பு இடம்பெற வில்லை.

5402 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மனவேதனைக்குள்ளாக்கும் செய்தியைக் கேட்டும் (உடனே தண்டித்துவிடாமல்) மிகவும் பொறுமைகாப்பவர் உயர்ந்தோன் அல்லாஹ்வைவிட வேறு யாருமில்லை. மனிதர்கள் (சிலர்) அவனுக்கு இணையை ஏற்படுத்துகின்றனர்;அவனுக்குக் குழந்தை இருப்பதாகக் கூறுகின்றனர். அவ்வாறிருந்தும், அவர்களுக்கு உணவு வளத்தையும் உடல்நலத்தையும் (வேறு பல கொடைகளையும்) அவன் வழங்கிக் கொண்டிருக்கின்றான்.
இதை அபூமூசா அப்துல்லாஹ் பின் கைஸ் அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 10 பூமி நிறையப் பொன்னை ஈடாகக் கொடுத்தேனும் தண்டனையிலிருந்து விடுதலை பெற விரும்புகிறாயா என இறைமறுப்பாளர்களிடம் கேட்கப்படும்.

5403 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மறுமை நாளில்) நரகவாசிகளிலேயே மிகக் குறைவான வேதனை அளிக்கப்படுபவரிடம், "பூமியும் அதிலிருப்பவையும் உனக்கே சொந்தம் என்றிருந்தால், நீ அவற்றை ஈடாகத் தர(வும் அதன் மூலம் இந்த வேதனையிலிருந்து விடுதலை பெறவும்) முன்வருவாய் அல்லவா?" என்று வளமும் உயர்வும் உள்ள அல்லாஹ் கேட்பான். அதற்கு அவர், "ஆம்' என்று பதிலளிப்பார்.
அப்போது அல்லாஹ், "நீ (ஆதி மனிதர்) ஆதமின் முதுகுத்தண்டில் (அணுவாக) இருந்த போது, இதைவிட எளிதான ஒன்றையே (அதாவது) எனக்கு எதையும் இணை கற்பிக்காதே! உன்னை நான் நரகத்தில் புகுத்தமாட்டேன் என்பதையே) உன்னிடமிருந்து நான் எதிர்பார்த்தேன். ஆனால், (பூமிக்கு உன்னை அனுப்பியபோது) எனக்கு இணை கற்பிப்பதைத் தவிர வேறெதற்கும் நீ ஒப்புக்கொள்ளவில்லையே!" என்று கூறுவான்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "உன்னை நான் நரகத்தில் புகுத்த மாட்டேன்" எனும் குறிப்பு இல்லை.

5404 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் இறைமறுப்பாளனிடம், "உனக்குப் பூமி நிறையத் தங்கம் சொந்தமாக இருந்தால், நீ அதை ஈடாகத் தர(வும் அதன் மூலம் இந்த வேதனையிலிருந்து விடுதலை பெற)வும் முன்வருவாயல்லவா?" என்று கேட்கப்படும். அதற்கு அவன், "ஆம்' என்று பதிலளிப்பான். அப்போது இதைவிடச் சுலபமான ஒன்றே (அல்லாஹ்வுக்கு இணை

கற்பிக்காமலிருப்பதே) உன்னிடம் கோரப்பட்டிருந்தது. (ஆனால், அதை நீ ஏற்கவில்லை)" என்று கூறப்படும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5405 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அப்போது அந்த இறைமறுப்பாளனிடம், "நீ பொய் சொல்கிறாய். இதைவிடச் சுலபமான ஒன்றே உன்னிடம் கோரப்பட்டிருந்தது என்று கூறப்படும்" என இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 11 (மறுமை நாளில்) இறைமறுப்பாளன் தனது முகத்தால் (நடத்தி) இழுத்துச் செல்லப்படுவான்.**

5406 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! (25:34ஆவது இறைவசனத்தின்படி) மறுமை நாளில் இறைமறுப்பாளர் தமது முகத்தால் (நடத்தி) இழுத்துச் செல்லப்படுவது எப்படி?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இம்மையில் அவனை இரு கால்களால் நடக்கச் செய்த (இறை)வனுக்கு, மறுமை நாளில் அவனை அவனது முகத்தால் நடக்கச் செய்ய முடியாதா?" என்று (திருப்பிக்) கேட்டார்கள்.
(இதை அறிவித்த) கத்தாதா பின் திஆமா (ரஹ்) அவர்கள், "ஆம் (முடியும்), எங்கள் இறைவனின் வல்லமை மீதாணையாக!" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 12 இவ்வுலகில் சுகபோகமாக வாழ்ந்தவர் நரகத்தில் சிறிது நேரம் அமிழ்த்தப் படுவதும், இவ்வுலகில் கடுமையான சோதனைகளை அனுபவித்தவர் சொர்க்கத்தைச் சிறிது நேரம் அனுபவிப்பதும்.**

5407 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இவ்வுலகில் செல்வச் செழிப்புடன் வாழ்ந்த நரகவாசிகளில் ஒருவர் மறுமை நாளில் கொண்டுவரப்பட்டு, நரகத்தில் ஒருமுறை அமுத்தி எடுக்கப்படுவார். பிறகு அவரிடம், "ஆதமின் மகனே (மனிதா)! (உலக வாழ்வில்) எப்போதேனும் நல்லதைப் பார்த்தாயா? எப்போதேனும் அருட்கொடை ஏதும் உனக்குக் கிடைத்ததா?" என்று கேட்கப்படும். அதற்கு அவர், "அல்லாஹ்வின் மீதாணையாக, இல்லை என் இறைவா!" என்று பதிலளிப்பார்.
அவ்வாறே, இவ்வுலகில் கடுமையான துன்பத்தில் வாழ்ந்த சொர்க்கவாசிகளில் ஒருவர் மறுமைநாளில் கொண்டுவரப்பட்டு, சிறிது நேரம் சொர்க்கத்திற்குள் செல்ல அனுமதிக்கப் படுவார். பிறகு அவரிடம், "ஆதமின் மகனே! (உலகில்) எப்போதேனும் சிரமத்தைக் கண்டாயா? எப்போதேனும் துன்பம் ஏதும் உமக்கு ஏற்பட்டதா?" என்று கேட்கப்படும். அதற்கு அவர் "அல்லாஹ்வின் மீதாணையாக! இல்லை, என் இறைவா! ஒருபோதும் எனக்கு எந்தத் துன்பமும் ஏற்பட்டதில்லை. ஒரு போதும் நான் சிரமத்தைக் கண்டதுமில்லை" என்று கூறுவார்.– இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 13 இறைநம்பிக்கையாளர் செய்த நற்செயல்களுக்கான நன்மைகள் இம்மையிலும் மறுமையிலும் வழங்கப்படும். இறை மறுப்பாளர் செய்த நற்செயல்களுக்கான நன்மைகள் முன்கூட்டியே இம்மையில் வழங்கப்பட்டுவிடும்.**

5408 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் எந்த இறைநம்பிக்கையாளருக்கும் (அவர் செய்த நற்செயலுக்கான) நன்மையில் அநீதி இழைப்பதில்லை. அதற்குரிய நன்மை இம்மையிலும் அவருக்கு வழங்கப்படும். அதற்குரிய நன்மை மறுமையிலும் அவருக்கு வழங்கப்படும். (ஏக) இறைமறுப்பாளர் இறைவனுக்காகச் செய்த நற்செயல்களின் பலனால் இம்மையில் (மட்டும்) அவருக்கு உணவளிக்கப்படும். அவர் மறுமையை அடையும்போது, அவருக்கு வழங்கப்படுவதற்கு நன்மையேதும் இராது.– இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5409 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இறைமறுப்பாளர் நற்செயல் ஒன்றைச் செய்தால், அதற்குரிய பலன் இவ்வுலகிலேயே அவருக்கு வழங்கப்பட்டுவிடும். இறைநம்பிக்கையாளரின் நிலை என்னவெனில், அவர் செய்த நற்செயல்களுக்குரிய நன்மைகளை இறைவன் மறுமை நாளில் வழங்குவதற்காகப் பத்திரப் படுத்துகிறான். மேலும், அவர் கீழ்ப்படிந்து நடப்பதற்கேற்ப இவ்வுலகிலும் அவருக்கு வாழ்வாதாரத்தை வழங்குகிறான்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 14 ஓர் இறைநம்பிக்கையாளரின் நிலை (இளம்) பயிர் போன்றதாகும்; இறை மறுப்பாளனின் நிலை தேவதாரு மரத்தைப் போன்றதாகும்.**

5410 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் இறைநம்பிக்கையாளரின் நிலையானது, (இளம்) பயிர் போன்றதாகும். காற்று அதைச் சாய்த்துக்கொண்டேயிருக்கும். (அவ்வாறே) இறைநம்பிக்கையாளருக்குச் சோதனைகள் ஏற்பட்டுக்கொண்டேயிருக்கும்.
நயவஞ்சகனின் நிலை, (விறைப்பாக நிற்கும்) தேவதாரு மரத்தைப் போன்றதாகும். (பலமாக வீசும்) காற்று அதை வேரோடு சாய்த்துவிடுகிறது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ("சாய்த்துக்கொண்டேயிருக்கும்' என்பதைக் குறிக்க "துமீலுஹு' என்பதற்குப் பகரமாக) "துஃபீஉஹு' எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

5411 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளரின் நிலை, காற்றில் அசையும் இளம் தளிர்ப் பயிருக்கு ஒப்பானதாகும். அது முற்றிய பயிராகும்வரை அதைக் காற்று ஒரு முறை சாய்த்து, மறுமுறை நிமிர்ந்து நிற்கச் செய்யும்.
இறைமறுப்பாளனின் நிலை, தனது அடித்தண்டின் மீது விறைப்பாக நிமிர்ந்து நிற்கும் தேவதாரு மரத்திற்கு ஒப்பானதாகும். அது ஒரேடியாக வேரோடு சாய்ந்து விழும்வரை அதை எதுவும் சாய்ப்பதில்லை.
இதை கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5412 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளரின் நிலை, காற்றில் அசையும் இளம் தளிர்ப் பயிருக்கு ஒப்பானதாகும். அதன் தவணை முடியும்வரை அதைக் காற்று ஒரு முறை சாய்த்து, மறுமுறை நிமிர்ந்து நிற்கச் செய்யும். நயவஞ்சகனின் நிலை விறைப்பாக நிற்கும் தேவதாரு மரத்திற்கு ஒப்பானதாகும். அது ஒரேயடியாக வேரோடு சாயும்வரை அதை(க் காற்று) எதுவும் செய்து விடுவதில்லை.– இதை கஅப் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5413 மேற்கண்ட ஹதீஸ் கஅப் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் பிஷ்ர் பின் அஸ்ஸரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இறைமறுப்பாளனின் நிலை தேவதாரு மரத்திற்கு ஒப்பானதாகும்" என்று இடம்பெற்றுள்ளது. முஹம்மத் பின் ஹாத்திம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நயவஞ்சகனின் நிலை..." என்று காணப்படுகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5414 மேற்கண்ட ஹதீஸ் கஅப் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் யஹ்யா அல்கத்தான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இறைமறுப்பாளனின் நிலை தேவதாரு மரத்திற்கு ஒப்பானதாகும்" என்று இடம்பெற்றுள்ளது. மற்றவர்களின் அறிவிப்பில் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே ("நயவஞ்சகனின் நிலை' என்று) காணப்படுகிறது.

## பாடம் : 15 இறைநம்பிக்கையாளரின் நிலை பேரீச்ச மரத்திற்கு ஒப்பானதாகும்.

5415 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மரங்களில் ஒன்று உண்டு. அதன் இலை உதிர்வதில்லை. அது முஸ்லிமுக்கு ஒப்பானதாகும். அது என்ன மரம் என்று எனக்குச் சொல்லுங்கள்?" என்று கேட்டார்கள். அப்போது மக்களின் எண்ணங்களில் அது காட்டு மரம் என்றே தோன்றியது. என் மனதில் அது பேரீச்ச மரமாகத்தானிருக்கும் என்று தோன்றினாலும் வெட்கப்பட்டு(க் கொண்டு சொல்லாமல் இருந்து)விட்டேன். பின்னர்,

"அல்லாஹ்வின் தூதரே! அது என்ன மரம் என்று நீங்களே எங்களுக்கு அறிவியுங்கள்?' என்று மக்கள் கேட்டனர். அதற்கு அவர்கள் "அது பேரீச்ச மரம்" என்றார்கள்.
பிறகு என் தந்தை உமர் (ரலி) அவர்களிடம் அதைப் பற்றி நான் சொன்னபோது, "நீ (வெட்கப் படாமல்) "அது பேரீச்ச மரம்தான்' என்று கூறியிருந்தால் இன்னின்னவை எனக்குக் கிடைப்பதைவிட அது எனக்கு மிகவும் விருப்பமானதாக இருந்திருக்கும்" என்று சொன்னார்கள். – இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5416 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களிடம், "ஒரு மரத்தைப் பற்றி எனக்குத் தெரிவியுங்கள். அதன் நிலை இறைநம்பிக்கையாளருக்கு ஒப்பானதாகும்" என்று சொன்னார்கள். மக்கள், காட்டு மரங்களில் ஒன்றை நினைத்தனர். என் மனத்தில் அது பேரீச்ச மரம்தான் என்று தோன்றியது. அது பேரீச்ச மரம்தான் என்று சொல்ல நான் விரும்பினேன்.
ஆயினும், அங்கு வயதில் மூத்தவர்கள் இருந்ததால் நான் சொல்வதற்கு அஞ்சினேன். மக்கள் (பேசாமல்) வாய் மூடி இருந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அது பேரீச்ச மரம்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. அவற்றில் முஜாஹித் (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறியதாகக் காணப்படுகிறது:
நான் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களுடன் மதீனாவரை சென்றேன். அப்போது அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து எந்த ஹதீஸையும் கூறியதை நான் கேட்கவில்லை. ஒரேயொரு ஹதீஸை மட்டும் அவர்கள் கூறினார்கள்: "நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தபோது பேரீச்ச மரத்தின் குருத்து ஒன்று கொண்டுவரப்பட்டது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் பேரீச்ச மரத்தின் குருத்து ஒன்று கொண்டு வரப்பட்டது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகின்றன.
- அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள், "ஒரு முஸ்லிமான மனிதரை ஒத்திருக்கும்' அல்லது "(அவரைப்) போன்றிருக்கும்' ஒரு மரத்தை எனக்கு அறிவியுங்கள். அதன் இலை உதிராது. அது தன் கனிகளை எல்லாப் பருவங்களிலும் கொடுத்துக்கொண்டிருக்கும் என்று சொன்னார்கள்.
அப்போது என் மனத்தில், "அது பேரீச்ச மரம்தான்" என்று தோன்றியது. அபூபக்ர், உமர் (போன்றவர்களே பதில்) பேசாமல் இருப்பதை நான் கண்டேன். ஆகவே, நான் எதையும் பேசவோ, சொல்லவோ விரும்பவில்லை. பின்னர் (என் மனத்தில் தோன்றியதை நான்

சொல்லாமலிருந்துவிட்டது குறித்து என் தந்தை உமர் (ரலி) அவர்களிடம் சொன்ன போது), "நீ அதைச் சொல்லியிருந்தால் இன்ன இன்ன (செல்வம் கிடைப்ப)தைவிட எனக்கு மிகவும் பிரியமானதாய் இருந்திருக்கும்" என்று சொன்னார்கள்.

**பாடம் : 16 மக்களிடையே குழப்பத்தை ஏற்படுத்துவதற்காக அவர்களிடையே ஷைத்தான் பிளவை உருவாக்குகிறான்; அவன் தன் படைகளை அனுப்புகிறான் என்பதும், ஒவ்வொரு மனிதனுடனும் (ஷைத்தானிய) கூட்டாளி ஒருவன் இருக்கிறான் என்பதும்.**

5417 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அரேபிய தீபகற்பத்தில் தொழுகையாளர்கள் தன்னை வணங்குவார்கள் என்ற நம்பிக்கையை ஷைத்தான் இழந்துவிட்டான். எனினும், அவர்களிடையே பிளவை உருவாக்குவ(தில் வெற்றி கண்டு விட்டா)ன்.
இதை ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5418 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இப்லீஸின் சிம்மாசனம் கடலின் மீது அமைந்துள்ளது. அவன் (அங்கிருந்தே) தன் படைகளை அனுப்பி, மக்களிடையே குழப்பங்களை ஏற்படுத்துகிறான். மக்களிடையே பெருங்குழப்பத்தை ஏற்படுத்துகின்ற (ஷைத்தான் எவனோ அ)வனே இப்லீஸிடம் மிகவும் மரியாதைக்குரியவன் ஆவான்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5419 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இப்லீஸ், தனது சிம்மாசனத்தை (கடல்)நீரின் மீது அமைக்கிறான். பிறகு தன் பட்டாளங்களை (மக்களிடையே) அனுப்புகிறான். அவர்களில் மிகப்பெரும் குழப்பத்தை ஏற்படுத்துகின்ற (ஷைத்தான் எவனோ அ)வனே இப்லீஸிடம் மிகவும் நெருங்கிய அந்தஸ்தைப் பெறுகிறான். அவனிடம் ஷைத்தான்களில் ஒருவன் (திரும்பி)வந்து "நான் இன்னின்னவாறு செய்தேன்" என்று கூறுவான்.
அப்போது இப்லீஸ், "(சொல்லிக்கொள்ளும் அளவுக்கு) நீ எதையும் செய்யவில்லை" என்று கூறுவான். பிறகு அவர்களில் மற்றொருவன் வந்து, "நான் ஒரு மனிதனுக்கும் அவனுடைய மனைவிக்கும் இடையே பிரிவை ஏற்படுத்தாமல் அவனை நான் விட்டுவைக்கவில்லை" என்று கூறுவான். அப்போது இப்லீஸ், அவனை அருகில் வரச்செய்து, "நீதான் சரி(யான ஆள்)" என்று (பாராட்டிக்) கூறுவான்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அஃமஷ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த) அபூசுஃப்யான் தல்ஹா பின் நாஃபிஉ (ரஹ்) அவர்கள், "அப்போது அந்த ஷைத்தானை இப்லீஸ் கட்டியணைத்துக்கொள்கிறான் (பிறகு அவ்வாறு பாராட்டுகிறான்)" என்று கூறியதாகவே நான் கருதுகிறேன்.

5420 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஷைத்தான்(களின் தலைவன்), தன் பட்டாளங்களை அனுப்பிவைக்கிறான். அவர்கள் மக்களிடையே குழப்பங்களை ஏற்படுத்துகின்றனர். அவர்களில் மிகப்பெரும் குழப்பத்தை ஏற்படுத்துகின்ற (ஷைத்தான் எவனோ அ)வனே இப்லீஸிடம் மிகவும் நெருங்கிய அந்தஸ்தைப் பெறுகிறான்.– இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5421 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஜின் இனத்தைச் சேர்ந்த கூட்டாளியொருவன் (ஷைத்தான்) தம்முடன் நியமனம் செய்யப்படாமல் உங்களில் எவரும் இல்லை" என்று கூறினார்கள். அப்போது, "தங்களுடனுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று மக்கள் கேட்டனர். அதற்கு அவர்கள், "என்னுடனும்தான். ஆயினும் அல்லாஹ்,அவனுக்கெதிராக எனக்கு உதவி செய்துவிட்டான். அவன் (எனக்குப்) பணிந்துவிட்டான். ஆகவே, எனக்கு அவன் நல்லதையே கூறுவான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், சுஃப்யான் பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஜின்களிலுள்ள (ஷைத்தான்) கூட்டாளியொருவனும் வானவர்களிலுள்ள கூட்டாளியொருவரும் நியமனம் செய்யப்படாமல் உங்களில் எவரும் இல்லை" என்று இடம்பெற்றுள்ளது.

5422 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம் தங்கியிருந்த நாளில்) ஓர் இரவில் என்னிடமிருந்து புறப்பட்டுச் சென்றார்கள். அவர்கள்மீது எனக்கு ரோஷம் ஏற்பட்டது. பிறகு அவர்கள் (திரும்பி)வந்து என் நடவடிக்கையைக் கண்டபோது, "ஆயிஷா! உனக்கு என்ன நேர்ந்தது? ரோஷம் கொண்டுவிட்டாயா?" என்று கேட்டார்கள். அதற்கு நான், "என்னைப் போன்ற ஒருத்தி (பல துணைவியர் உள்ள) தங்களைப் போன்ற ஒருவர்மீது ரோஷம் கொள்ளாமல் எப்படி இருக்க முடியும்?" என்று சொன்னேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன் ஷைத்தான் உன்னிடம் வந்து விட்டானா?" என்று கேட்டார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! என்னுடனும் ஷைத்தான் உள்ளானா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்' என்றார்கள். "ஒவ்வொரு மனிதனுடனும் (ஷைத்தான்) உள்ளானா?" என்று கேட்டேன். அதற்கும் அவர்கள் "ஆம்' என்றார்கள். நான், "தங்களுடனுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம். ஆயினும்,என் இறைவன் அவனுக்கெதிராக எனக்கு உதவி செய்துவிட்டான். அவன் (எனக்குப்) பணிந்துவிட்டான்" என்று சொன்னார்கள்.

**பாடம் : 17 எவரும் தமது நற்செயலால் (மட்டும்) சொர்க்கத்தில் நுழைந்துவிடுவதில்லை. மாறாக, அல்லாஹ்வின் கருணையால்தான் நுழைவார்.**

5423 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் யாரையும் அவரது நற்செயல் காப்பாற்றாது (மாறாக,அல்லாஹ்வின் தனிப்பெருங்கருணையே காப்பாற்றும்)" என்று சொன்னார்கள். ஒரு மனிதர், "தங்களையுமா காப்பாற்றாது, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்னையும்தான் காப்பாற்றாது; அல்லாஹ் (தன்) பேரருளால் என்னை அரவணைத்துக்கொண்டால் தவிர" என்று கூறிவிட்டு, "எனவே (வழிபாடுகள், நல்லறங்கள் ஆகியவற்றில் எல்லை மீறிவிடாமல்) நடுநிலையோடு செயல்படுங்கள்"என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "அல்லாஹ் தனது பேரருளாலும் தனிக்கருணையாலும் (அரவணைத்துக் கொண்டால் தவிர)" என்று காணப்படுகிறது. அதில், "எனவே, நடுநிலையோடு செயல்படுங்கள்" எனும் குறிப்பு இல்லை.

5424 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "யாரையும் அவரது நற்செயல் சொர்க்கத்திற்குள் நுழைவிக்காது" என்று சொன்னார்கள். அப்போது, "தங்களையுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(ஆம்) என்னையும்தான்;என் இறைவன் (தனது) பேரருளால் என்னை அரவணைத்துக்கொண்டால் தவிர" என்று கூறினார்கள்.

5425 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "உங்களில் யாரையும் அவரது நற்செயல் காப்பாற்றப் போவதில்லை" என்று சொன்னார்கள். "தங்களையுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று மக்கள் கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் "என்னையும்தான்;அல்லாஹ் தனது மன்னிப்பாலும் பேரருளாலும் என்னை அரவணைத்துக்கொண்டால் தவிர" என்று சொன்னார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு அவ்ன் (ரஹ்) அவர்கள், "என்னையும் தான்; அல்லாஹ் தனது மன்னிப்பாலும் பேரருளாலும் என்னை அரவணைத்துக்கொண்டால் தவிர" என்று கூறியபோது தமது கையைத் தமது தலையை நோக்கிச் சுட்டிக்காட்டி சைகை செய்தார்கள்.

5426 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யாரையும் அவரது நற்செயல் காப்பாற்றப் போவதில்லை" என்று சொன்னார்கள். "தங்களையுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று மக்கள் கேட்டனர். அதற்கு அவர்கள், "என்னையும்தான்; அல்லாஹ் தனது பேரருளால் என்னை அரவணைத்துக்கொண்டால் தவிர" என்று கூறினார்கள்.

5427 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் யாரையும் அவரது நற்செயல் ஒருபோதும் சொர்க்கத்தில் நுழைவிக்காது" என்று கூறினார்கள். மக்கள், "தங்களையுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(ஆம்) என்னையும்தான்; அல்லாஹ் தனது தனிக்கருணையாலும் பேரருளாலும் என்னை அரவணைத்துக் கொண்டால் தவிர" என்று சொன்னார்கள்.

5428 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நடுநிலையோடு (நற்)செயல் புரியுங்கள். (அல்லது) அதற்கு நெருக்கமாக (நற்)செயல் புரியுங்கள். அறிந்துகொள்ளுங்கள்: உங்களில் யாரையும் அவரது நற்செயல் ஒருபோதும் காப்பாற்றாது"என்று சொன்னார்கள். மக்கள், "தங்களையுமா (தங்களின் நற்செயல் காப்பாற்றுவதில்லை), அல்லாஹ்வின் தூதரே?"என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்னையும்தான்; அல்லாஹ் தனது தனிக் கருணையாலும் பேரருளாலும் என்னை அரவணைத்துக்கொண்டால் தவிர" என்று சொன்னார்கள்.
- ஜாபிர் (ரலி) அவர்கள் வாயிலாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது.
- மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் மேற்கண்ட ஹதீஸ் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "நற்செய்தி பெறுங்கள்" என்று (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக) கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5429 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் யாரையும் அவரது நற்செயல் சொர்க்கத்திலும் நுழைவிக்காது; நரகத்திலிருந்தும் காப்பாற்றாது. என்னையும் சேர்த்துத் தான்; அல்லாஹ்வின் பேரருள் (எனக்குக்) கிடைத்தால் தவிர.– இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக் கிறார்கள்.

5430 அபூசலமா பின் அப்திர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறிவந்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நடுநிலையாக (நற்)செயலாற்றுங்கள். (அல்லது) அதற்கு நெருக்கமாகச் செயலாற்றுங்கள். நற்செய்தி பெற்றுக்கொள்ளுங்கள். ஏனெனில், யாரையும் அவரது நற்செயல் ஒருபோதும் சொர்க்கத்தில் நுழைவிக்காது" என்று கூறினார்கள்.
மக்கள், "தங்களையுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்னையும்தான்; அல்லாஹ் தனது பேரருளால் என்னை அரவணைத்துக் கொண்டால் தவிர. அறிந்துகொள்ளுங்கள்! நற்செயல்களில் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானது (எண்ணிக்கையில்) குறைவாக இருந்தாலும் (தொடர்ந்து செய்யப்படும்) நிலையான நற்செயலே ஆகும்" என்று சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில் "நற்செய்தி பெறுங்கள்" எனும் குறிப்பு இல்லை.

பாடம் : 18 நற்செயல்களை அதிகமாகச் செய்வதும் வழிபாடுகளில் கூடுதல் ஈடுபாடு காட்டுவதும்.

5431 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தம் பாதங்கள் புடைக்கும் அளவுக்கு நின்று தொழுவார்கள். அவர்களிடம், "இந்த அளவுக்கு நீங்கள் சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டுமா? தங்களின் முந்தைய மற்றும் பிந்தைய தவறுகளை அல்லாஹ் மன்னித்துவிட்டானே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "நான் நன்றியுள்ள அடியானாக இருக்கவேண்டாமா?" என்று கேட்டார்கள்.

5432 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தம் பாதங்கள் வீங்கும் அளவுக்கு நின்று தொழுதார்கள். மக்கள், "தங்களின் முந்தைய மற்றும் பிந்தைய தவறுகளை அல்லாஹ் மன்னித்துவிட்டானே (பிறகு ஏன் தாங்கள் இந்த அளவுக்குச் சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டும்)?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "நான் நன்றியுள்ள அடியானாக இருக்க வேண்டாமா?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5433 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழும்போது தம் கால்களில் வெடிப்பு ஏற்படும் அளவுக்குத் தொழுவார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! இப்படிச் செய்கிறீர்களே! தங்களின் முந்தைய மற்றும் பிந்தைய தவறுகள் மன்னிக்கப்பட்டு விட்டனவே?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆயிஷா! நான் நன்றியுள்ள அடியானாக இருக்க வேண்டாமா?" என்று கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

பாடம் : 19 அறிவுரை வழங்குவதில் நடுநிலைப் போக்கு.

5434 அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களின் வீட்டுவாசலில் அவர்களை எதிர் பார்த்துக் காத்திருந்தோம். அப்போது யஸீத் பின் முஆவியா அந்நகஈ (ரஹ்) எங்களைக் கடந்து சென்றார். அவரிடம், "நாங்கள் இங்கிருப்பதைப் பற்றி அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் அறிவியுங்கள்" என்று சொன்னோம்.

அவர் உள்ளே நுழைந்த சிறிது நேரத்திற்குள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் வெளியே வந்து, "நீங்கள் இங்கு இருக்கும் விஷயம் எனக்குத் தெரிவிக்கப்பட்டது. (இருந்தாலும்,) நான் உங்களுக்குச் சடைவை ஏற்படுத்திவிடுவேனோ எனும் அச்சம்தான்

உங்களிடையே வரவிடாமல் என்னைத் தடுத்துவிட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாங்கள் சடைவு அடைவதை விரும்பாமல் (சந்தர்ப்ப சூழ்நிலைகளைக் கவனித்து) விட்டு விட்டு எங்களுக்கு அறிவுரை வழங்கிவந்தார்கள். (இதுவே உங்களிடையே அறிவுரை வழங்க வரவிடாமல் என்னைத் தடுக்கிறது") என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஐந்து அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5435 அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் ஒவ்வொரு வியாழக்கிழமையும் எங்களுக்கு (ஹதீஸ் அறிவித்து) அறிவுரை வழங்கிவந்தார்கள். இந்நிலையில் அவர்களிடம் ஒரு மனிதர், "அபூஅப்திர் ரஹ்மானே! தங்களின் ஹதீஸ் அறிவிப்பை நாங்கள் நேசிக்கிறோம்; ஆசிக்கிறோம். தாங்கள் ஒவ்வொரு தினமும் எங்களுக்கு ஹதீஸ் அறிவிப்பதை நாங்கள் பெரிதும் விரும்புகிறோம்" என்று கூறினார்.

அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "நான் உங்களுக்குச் சடைவை ஏற்படுத்திவிடுவேனோ எனும் அச்சம்தான் உங்களுக்கு (நாள்தோறும்) ஹதீஸ் அறிவிக்க விடாமல் என்னைத் தடுத்துவிட்டது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நாங்கள் சடைவு அடைவதை விரும்பாமல் (சந்தர்ப்ப சூழ்நிலைகளைக் கவனித்து) விட்டு விட்டு எங்களுக்கு அறிவுரை வழங்கிவந்தார்கள். (இதுவே உங்களிடையே அறிவுரை வழங்க வரவிடாமல் என்னைத் தடுக்கிறது") என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

# அத்தியாயம் : 51 - மறுமை சுவர்க்கம் நரகம்

## பாடம் : 1 சொர்க்கமும் அதிலுள்ள இன்பங்களின் தன்மையும் சொர்க்கவாசிகளின் நிலையும்.

5436 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சிரமங்களால் சொர்க்கம் சூழப்பெற்றுள்ளது. மன இச்சைகளால் நரகம் சூழப்பெற்றுள்ளது.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்கள் வாயிலாக மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

5437 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "என் நல்லடியார்களுக்காக எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் உள்ளத்திலும் தோன்றியிராத இன்பங்களை (சொர்க்கத்தில்) நான் தயார்படுத்தி வைத்துள்ளேன்" என்று கூறினான்.
இதன் அறிவிப்பாளரான அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
இதைக் குர்ஆனிலுள்ள "அவர்கள் செய்துகொண்டிருந்த (நற்)செயல்களின் பலனாக அவர்களுக்காக மறைத்துவைக்கப்பட்டுள்ள கண்குளிர்ச்சியை எவரும் அறியமாட்டார்" (32:17) எனும் வசனம் உறுதிப்படுத்துகிறது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5438 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "என் நல்லடியார்களுக்காக எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் உள்ளத்திலும் தோன்றியிராத இன்பங்களை நான் (சொர்க்கத்தில்) தயார்படுத்தி வைத்துள்ளேன்" என்று கூறினான். எனினும், (சொர்க்கத்தின் இன்பங்கள் குறித்து) அல்லாஹ் உங்களுக்கு அறிவித்துள்ளது சொற்பமே! – இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5439 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "நான் என் நல்லடியார்களுக்காக எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் உள்ளத்திலும் தோன்றியிராத இன்பங்களை (சொர்க்கத்தில்) தயார்படுத்தி வைத்துள்ளேன்"என்று கூறினான். (சொர்க்கத்தின் இன்பங்கள் குறித்து) உங்களுக்கு அல்லாஹ் அறிவித்திருப்பது சொற்பமே!
இதை அறிவித்த அபூஹுரைரா (ரலி) அவர்கள் பிறகு, "அவர்கள் செய்துகொண்டிருந்த (நற்)செயல்களின் பலனாக அவர்களுக்காக மறைத்துவைக்கப்பட்டுள்ள கண் குளிர்ச்சியை எவரும் அறியமாட்டார்" (32:17) எனும் வசனத்தை ஓதிக்காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5440 அபூஹாஸிம் சலமா பின் தீனார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சஹ்ல் பின் சஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஓர் அவையில் இருந்தேன். அப்போது அவர்கள் சொர்க்கத்தின் நிலை குறித்து பேசினார்கள்" என்று முழுமையாக ஹதீஸை அறிவித்தார்கள்.
பிறகு இறுதியில் "அதில் எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் உள்ளத்திலும் தோன்றியிராத இன்பங்கள் உள்ளன" என்றும் கூறிவிட்டு, "அச்சத்துடனும் எதிர்பார்ப்புடனும் தம் இறைவனைப் பிரார்த்திக்க அவர்களின் விலாப் புறங்கள் படுக்கைகளிலிருந்து விலகும்; நாம் வழங்கியவற்றிலிருந்து (நல்வழியில்) செலவிடுவார்கள். அவர்கள் செய்துகொண்டிருந்த (நற்)செயல்களின் பலனாக அவர்களுக்காக மறைத்து வைக்கப்பட்டுள்ள கண்குளிர்ச்சியை எவரும் அறியமாட்டார்" (32:16,17) எனும் வசனங்களை ஓதினார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது

**பாடம் : 2 சொர்க்கத்தில் ஒரு மரம் உள்ளது. அதன் நிழலில் பயணிப்பவர் நூறு வருடங்கள் பயணித்தாலும் அதைக் கடந்து செல்ல முடியாது.**

5441 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் ஒரு மரம் உள்ளது. அதன் நிழலில் ஒரு பயணி நூறு வருடங்கள் பயணிப்பார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5442 மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நூறு வருடங்கள் பயணித்தாலும் அதைக் கடந்து செல்லமாட்டார்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5443 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் ஒரு மரம் உள்ளது. அதன் நிழலில் பயணிப்பவர் நூறு வருடங்கள் பயணித்தாலும் அதைக் கடந்து செல்ல முடியாது.
இதை சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸின் அறிவிப்பாளர் அபூ ஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் இந்த ஹதீஸை நுஅமான் பின் அபீ அய்யாஷ் (ரஹ்) அவர்களிடம் கூறினேன். அப்போது அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்:
"சொர்க்கத்தில் ஒரு மரம் உள்ளது. (அதன் நிழலில்) விரைந்துசெல்லும் கட்டான உடலுள்ள பயிற்சியளிக்கப்பட்ட உயர்ரகக் குதிரை நூறாண்டுகள் பயணித்தாலும் அதைக்கடக்க முடியாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள்" என்றார்கள்.

**பாடம் : 3 சொர்க்கவாசிகள்மீது இறைவன் தனது உவப்பை அருள்வதும் அதன் பின்னர் ஒருபோதும் அவர்கள்மீது கோபப்படாமல் இருப்பதும்.**

5444 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் (மறுமையில்) சொர்க்கவாசிகளை நோக்கி, "சொர்க்கவாசிகளே!" என்று அழைப்பான். அதற்கு அவர்கள், "எங்கள் அதிபதியே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறோம். நன்மைகள் அனைத்தும் உன் கரங்களிலேயே உள்ளன" என்று பதிலளிப்பார்கள். அப்போது அல்லாஹ், "திருப்தி அடைந்தீர்களா?' என்று கேட்பான். அதற்கு சொர்க்கவாசிகள், "உன் படைப்புகளில் யாருக்கும் நீ வழங்கியிராத (கொடைகள், இன்பங்கள் ஆகிய)வற்றை எங்களுக்கு நீ வழங்கியிருக்க, நாங்கள் திருப்தியடையாமல் இருப்போமா?" என்று கூறுவார்கள்.
அப்போது அல்லாஹ், "இதைவிடவும் சிறந்த ஒன்றை உங்களுக்கு நான் வழங்கட்டுமா?" என்பான். அவர்கள், "அதிபதியே! இதை விடச் சிறந்தது எது?" என்று கேட்பார்கள். அதற்கு அல்லாஹ், "உங்கள்மீது என் உவப்பை அருள்கிறேன்; இனி ஒருபோதும் உங்கள்மீது நான் கோபப்படமாட்டேன்" என்று கூறுவான்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 4 சொர்க்கவாசி(களில் கீழ்த் தட்டில் இருப்பவர்)கள் (மேல்)அறைகளில் உள்ளவர்களை வானிலுள்ள நட்சத்திரங்களைப் பார்ப்பதைப் போன்று பார்ப்பது.**

5445 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கவாசி(களில் கீழ்த் தட்டில் இருப்பவர்)கள் மேல்அறை(களில் உள்ளவர்)களை, வானில் நீங்கள் நட்சத்திரங்களைப் பார்ப்பதைப் போன்று பார்ப்பார்கள்.
இதை சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- (மேற்கண்ட ஹதீஸின் அறிவிப்பாளரான) அபூஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் இந்த ஹதீஸை நுஅமான் பின் அபீ அய்யாஷ் (ரஹ்) அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அவர்கள் கூறினார்கள்: அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள், (இந்த ஹதீஸை அறிவித்துவிட்டு) "கிழக்கு அடிவானில், அல்லது மேற்கு அடிவானில் நீங்கள் ஒளிரும் நட்சத்திரத்தைப் பார்ப்பதைப் போன்று" என்று (கூடுதலாக) அறிவித்ததை நான் கேட்டேன்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5446 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சொர்க்கவாசிகள் தமக்கு மேலேயுள்ள (சிறப்பு) அறைகளில் வசிப்பவர்களை,அடிவானில் கிழக்கிலிருந்தோ மேற்கிலிருந்தோ பயணிக்கிற ஒளிரும் நட்சத்திரத்தைப் பார்ப்பதைப் போன்று (ஆர்வத்துடன்) பார்ப்பார்கள். (தகுதியில்) தமக்கும் அவர்களுக்குமிடையே ஏற்றத்தாழ்வைக் கண்டு (ஏக்கம் கொண்டுதான்) அப்படிப் பார்ப்பார்கள்" என்று கூறினார்கள்.
(இதைக் கேட்ட) நபித்தோழர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அவை நபிமார்களின் தங்குமிடங்கள் தானே? மற்றவர்கள் அவற்றை அடைய முடியாதுதானே?" என்று கேட்டனர். அல்லாஹ்வின்

தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை. என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீதாணையாக! அ(ங்கே தங்குப)வர்கள் அல்லாஹ்வின் மீது (உறுதியான) நம்பிக்கை கொண்டு இறைத்தூதர்களை உண்மையாளர்கள் என (முறையாக) ஏற்றுக்கொண்ட மக்களே ஆவர்" என்று பதிலளித்தார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 5 நபி (ஸல்) அவர்களைப் பார்ப்பதற்காகத் தம் குடும்பத்தாரையும் செல்வத்தையும் தியாகம் செய்ய விரும்புவோர் பற்றிய குறிப்பு.**

5447 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் என்னை ஆழமாக நேசிப்போரில் சிலர் எனக்குப்பின் தோன்றுவார்கள். அவர்களில் ஒருவர் என்னைப் பார்க்க வேண்டுமே என்பதற்காகத் தம் குடும்பத்தாரையும் செல்வத்தையும்கூடத் தியாகம் செய்ய விரும்புவார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் :6 சொர்க்கத்திலுள்ள சந்தையும் அதில் சொர்க்கவாசிகள் அடைந்துகொள்ளும் அருட்கொடையும் அலங்காரமும்.**

5448 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் (மக்கள் ஒன்றுகூடும்) சந்தை ஒன்று உண்டு. அங்கு ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் சொர்க்கவாசிகள் வருவார்கள். அப்போது வட பருவக் காற்று வீசி அவர்களுடைய முகங்களிலும் ஆடையிலும் (கஸ்தூரி மண்ணை) வாரிப்போடும். உடனே அவர்கள் மேன்மேலும் அழகும் பொலிவும் பெறுவார்கள். பிறகு அழகும் பொலிவும் அதிகமாகப் பெற்ற நிலையில் அவர்கள் தங்கள் துணைவியரிடம் திரும்பிச் செல்வார்கள்.
அப்போது அவர்களிடம் அவர்களுடைய துணைவியர், "எங்களிடமிருந்து சென்ற பின்னர் கூடுதலான அழகும் பொலிவும் பெற்றுவிட்டீர்களே!" என்று கூறுவர். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் சென்ற பிறகு நீங்களும்தான் கூடுதலான அழகும் பொலிவும் பெற்றிருக்கிறீர்கள்" என்று கூறுவர்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் :7 சொர்க்கத்தில் நுழையும் முதல் அணியினரின் முகம் பௌர்ணமி இரவின் முழு நிலவைப் போன்றிருக்கும் என்பதும்,அவர்களின் இதர தன்மைகளும், அவர்களின் துணைவியர் பற்றிய குறிப்பும்.**

5449 முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) மக்கள், "சொர்க்கத்தில் அதிக எண்ணிக்கையில் இருப்பவர்கள் ஆண்களா, அல்லது பெண்களா?" என்று பெருமையுடன் பேசிக்கொண்டிருந்தனர்; அல்லது விவாதித்துக் கொண்டிருந்தனர்.
அப்போது அபூஹுரைரா (ரலி) அவர்கள், "அபுல்காசிம் (ஸல்) அவர்கள், "சொர்க்கத்தில் நுழைகின்ற முதல் அணியினர்,பௌர்ணமி இரவில் ஒளிரும் சந்திரனைப் போன்று தோற்றமளிப்பார்கள். அவர்களுக்குப் பின்னே நுழைபவர்கள்,வானில் பேரொளி வீசும்

நட்சத்திரத்தைப் போன்றிருப்பார்கள். அவர்களில் ஒவ்வொருவருக்கும் இரு துணைவியர் இருப்பர். அப்பெண்களின் காலின் எலும்பு மஜ்ஜை அவர்களது (கால்) சதைக்கு அப்பாலிருந்து (அவர்களது பேரழகின் காரணத்தால்) வெளியே தெரியும். சொர்க்கத்தில் துணைவி இல்லாத எவரும் இருக்கமாட்டார்' என்று கூறவில்லையா?" எனக் கேட்டார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "(ஒரு முறை) ஆண்களும் பெண்களும் "சொர்க்கத்தில் அதிக எண்ணிக்கையில் யார் இருப்பார்கள்' என்று வழக்காடிக்கொண்டிருந்தனர். அப்போது அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் (அதைப் பற்றிக்) கேட்டார்கள். அப்போது அபூஹுரைரா (ரலி) அவர்கள், "அபுல்காசிம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்' என்று மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று அறிவித்தார்கள்" என்று காணப்படுகிறது.

5450 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் நுழையும் முதல் அணியினர் பௌர்ணமி இரவில் ஒளிரும் சந்திரனைப் போன்று (அழகாகத்) தோற்றமளிப்பார்கள். பிறகு அவர்களுக்கு அடுத்து நுழைபவர்கள் விண்ணில் நன்கு பிரகாசிக்கும் நட்சத்திரத்தைப் போன்று காட்சியளிப்பார்கள். சொர்க்கத்தில் அவர்கள் மலஜலம் கழிக்கமாட்டார்கள். மூக்குச் சிந்தவுமாட்டார்கள். எச்சில் துப்பவுமாட்டார்கள்.
அவர்களின் சீப்புகள் தங்கத்தாலானவை. அவர்களது வியர்வையில் கஸ்தூரி மணம் கமழும். அவர்களுடைய (நறுமணப் புகையிடும்) தூபக் கலசங்கள் அகிலால் எரிக்கப்படும். அவர்களுடைய துணைவியர் கண்ணழகுக் கன்னியர் (அல்ஹூருல் ஈன்) ஆவர். அவர்கள் அனைவரது குணமும் ஒரே மனிதரின் குணமாகவே அமைந்திருக்கும். அவர்கள் தம் தந்தை ஆதம் (அலை) அவர்களின் தோற்றத்தில் வானத்தில் (முட்டும் விதத்தில்) அறுபது முழம் உயரம் கொண்டவர்களாயிருப்பார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5451 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் சொர்க்கத்தில் நுழையும் முதல் அணியினர் பௌர்ணமி இரவில் ஒளிரும் சந்திரனைப் போன்று தோற்றமளிப்பார்கள். பிறகு அவர்களுக்கு அடுத்து நுழைபவர்கள் விண்ணில் நன்கு பிரகாசிக்கும் நட்சத்திரத்தைப் போன்று காட்சியளிப்பார்கள். அவர்களுக்குப் பிறகு இன்னும் பல படித்தரங்களும் உண்டு.
(சொர்க்கத்தில்) அவர்கள் மலஜலம் கழிக்கமாட்டார்கள். மூக்குச் சிந்தவுமாட்டார்கள். சளி துப்பவுமாட்டார்கள். அவர்களின் (தலைவாரும்) சீப்புகள் தங்கத்தாலானவை. அவர்களுடைய (நறுமணப் புகையிடும்) தூபக் கலசங்கள் அகில் குச்சியால் எரிக்கப்படும். அவர்களுடைய வியர்வையில் கஸ்தூரி மணம் கமழும். அவர்கள் அனைவரது குணமும் ஒரே மனிதரின் குணத்தைப் போன்றிருக்கும். அவர்கள் தம் தந்தை ஆதம் (அலை) அவர்களைப் போன்று அறுபது முழம் உயரம் கொண்டவர்களாயிருப்பார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் அனைவரது குணமும் ஒரே மனிதரின் குணத்தில் அமைந்திருக்கும்" என்று காணப்படுகிறது. அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் அனைவரது (உடல்) அமைப்பும் ஒரே மனிதரின் (உடல்) அமைப்பில் இருக்கும்" என்று இடம்பெற்றுள்ளது. அதாவது "அவர்கள் தம் தந்தை (ஆதம் (அலை) அவர்களின் தோற்றத்தில் இருப்பார்கள்" என்று இப்னு அபீஷைபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

**பாடம் : 8 சொர்க்கம் மற்றும் சொர்க்கவாசிகள் பற்றிய வர்ணனையும் அவர்கள் காலையிலும் மாலையிலும் இறைவனைத் துதிப்பதும்.**

5452 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் நுழையும் முதல் அணியினரின் முகங்கள் பௌர்ணமி இரவில் ஒளிரும் சந்திரனைப் போன்று தோற்றமளிக்கும். சொர்க்கத்தில் அவர்கள் சளி உமிழமாட்டார்கள். மூக்குச் சிந்தவுமாட்டார்கள். மலஜலம் கழிக்கவுமாட்டார்கள். அவர்களுடைய பாத்திரங்களும் (தலைவாரும்) சீப்புகளும் தங்கத்தாலும் வெள்ளியாலும் ஆனவை. அவர்களுடைய (நறுமணப் புகையிடும்) தூபக் கலசங்கள் அகிலால் எரிக்கப்படும். அவர்களின் வியர்வையில் கஸ்தூரி மணம் கமழும்.
அவர்களில் ஒவ்வொருவருக்கும் இரு துணைவியர் இருப்பர். அவர்களது காலின் எலும்பு மஜ்ஜைகூட (கால்) சதைக்கு அப்பாலிருந்து அவர்களது பேரழகின் காரணத்தால் வெளியே தெரியும். அவர்களுக்கிடையே எந்த மன வேறுபாடும் இருக்காது. எந்தவிதக் குரோதமும் இருக்காது. அவர்களுடைய உள்ளங்கள் ஒரே மனிதரின் உள்ளத்தைப் போன்றிருக்கும். (நன்றிக்காக) அவர்கள் காலையும் மாலையும் இறைவனை (தூயவன் என)த் துதிப்பார்கள்.

5453 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "சொர்க்கவாசிகள் சொர்க்கத்தில் உண்பார்கள்; பருகுவார்கள். எச்சில் துப்பமாட்டார்கள். மலஜலம் கழிக்கமாட்டார்கள். மூக்குச் சிந்தவுமாட்டார்கள்" என்று கூறினார்கள்.
மக்கள், "(அவர்கள் உண்ணும்) உணவின் நிலை என்ன? (அது எப்படி கழிவாக வெளியேறும்?)" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(நறுமணமுள்ள) ஏப்பமாகவும் கஸ்தூரி மணம் கமழும் வியர்வையாகவும் வெளியேறும். மூச்சு விடுமாறு அகத்தூண்டல் ஏற்படுவதைப் போன்று இயல்பாகவே இறைவனைத் துதித்துக்கொண்டும் போற்றிக்கொண்டும் இருக்குமாறு அவர்களுக்கு அகத்தூண்டல் ஏற்படும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், "கஸ்தூரி மணம் கமழும் வியர்வையாகவும் வெளியேறும்" என்பதுவரையே இடம் பெற்றுள்ளது.

5454 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கவாசிகள் சொர்க்கத்தில் உண்பார்கள்; பருகுவார்கள். மலம் கழிக்கமாட்டார்கள். மூக்குச் சிந்தவுமாட்டார்கள். சிறுநீர் கழிக்கவுமாட்டார்கள். அவர்கள் உண்ணும் உணவு கஸ்தூரி மணம் கமழும் வியர்வை போன்று, ஏப்பமாக வெளியேறும். மூச்சு விடுமாறு அகத்தூண்டல் ஏற்படுவதைப் போன்று இயல்பாகவே இறைவனைத் துதித்துக்கொண்டும் போற்றிக்கொண்டும் இருக்குமாறு அவர்களுக்கு அகத்தூண்டல் ஏற்படும்.
இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.
அவற்றில் ஹஜ்ஜாஜ் பின் அஷ்ஷாஇர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் உண்ணும் அந்த உணவு' என்று இடம்பெற்றுள்ளது.

5455 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "மூச்சு விடுமாறு அகத்தூண்டல் ஏற்படுவதைப் போன்று இயல்பாகவே இறைவனைத் துதித்துக்கொண்டும் இறைவனைப் பெருமைப்படுத்திக்கொண்டும் இருக்குமாறு அவர்களுக்கு அகத்தூண்டல் ஏற்படும்" என்று காணப்படுகிறது.

## பாடம் : 9 சொர்க்கவாசிகள் அனுபவிக்கும் இன்பங்கள் நிலையானவை என்பதும், "இது தான் சொர்க்கம்; நீங்கள் நற்செயல் புரிந்துகொண்டிருந்ததற்காக இது உங்களுக்கு உடைமையாக்கப் பட்டுள்ளது என்று அவர்களிடம் எடுத்துச்சொல்லப்படும்'' (7:43) எனும் இறைவசனமும்.

5456 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் நுழைபவர் இன்பத்திலேயே இருப்பார்; துன்பம் காணமாட்டார். அவரது ஆடை இற்றுப்போகாது. அவரது இளமை அழிந்துபோகாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5457 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(சொர்க்கவாசிகள் சொர்க்கத்தில் நுழைந்த பின்னர்) பொது அறிவிப்பாளர் ஒருவர், "(இனி) நீங்கள் ஆரோக்கியத்துடனேயே இருப்பீர்கள்; ஒருபோதும் நோய் காணமாட்டீர்கள். நீங்கள் உயிருடன் தான் இருப்பீர்கள்;ஒருபோதும் இறக்கமாட்டீர்கள். இளமையோடுதான் இருப்பீர்கள்; ஒருபோதும் முதுமையடையமாட்டீர்கள். நீங்கள் இன்பத்தோடுதான் இருப்பீர்கள்; ஒருபோதும் துன்பம் காணமாட்டீர்கள்" என்று அறிவிப்புச் செய்வார்.
இதையே வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "இதுதான் சொர்க்கம்; நீங்கள் (உலகில்) நற்செயல் புரிந்துகொண்டிருந்ததற்காக இது உங்களுக்கு உடைமையாக்கப்பட்டுள்ளது என்று அவர்களிடம் எடுத்துச் சொல்லப்படும்" (7:43) என்று கூறுகின்றான்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி), அபூ ஹுரைரா (ரலி) ஆகியோர் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 10 சொர்க்கக் கூடாரங்களின் நிலையும் அவற்றில் இறைநம்பிக்கையாளர்களுக்குத் துணைவியர் பலர் இருப்பதும்.**

5458 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளருக்குச் சொர்க்கத்தில் ஒரு கூடாரம் உண்டு. அது நடுவில் துளையுள்ள (பிரமாண்டமான) முத்தால் ஆனதாகும். அதன் உயரம் அறுபது மைல்களாகும். அதில் இறை நம்பிக்கையாளருக்குத் துணைவியர் பலர் இருப்பர். அவர்களிடம் இறைநம்பிக்கையாளர் சுற்றி வருவார். அவர்களில் ஒருவர் மற்றவரைப் பார்க்க முடியாது.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5459 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நடுவில் துளையுள்ள முத்தாலான (பிரமாண்டமான) கூடாரம் ஒன்று சொர்க்கத்தில் உண்டு. அதன் அகலம் அறுபது மைல்களாகும். அதன் ஒவ்வொரு மூலையிலும் இறை நம்பிக்கையாளருக்குத் துணைவியர் இருப்பர். அவர்கள் மற்றவர்களைப் பார்க்க முடியாது. இறைநம்பிக்கையாளர் அவர்களைச் சுற்றிவருவார்.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5460 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(சொர்க்கத்திலுள்ள) கூடாரம் என்பது, ஒரு (பிரமாண்டமான) முத்தாகும். அதன் உயரம் அறுபது மைல்களாகும். அதன் ஒவ்வொரு மூலையிலும் இறைநம்பிக்கையாளருக்குத் துணைவியர் இருப்பர். அவர்களை மற்றவர்கள் பார்க்க முடியாது.
இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 11 இவ்வுலகிலுள்ள சொர்க்க நதிகள்.**

5461 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சைஹான், ஜைஹான், ஃபுராத், நீல் ஆகியவை சொர்க்க நதிகளில் உள்ளவையாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 12 சொர்க்கத்தில் நுழையும் மக்கள் சிலருடைய உள்ளங்கள் பறவைகளின் உள்ளத்தைப் போன்றிருக்கும்.**

5462 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் மக்கள் சிலர் நுழைவார்கள். அவர்களுடைய உள்ளங்கள் பறவைகளின் உள்ளத்தைப் போன்றிருக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5463 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் (ஆதிமனிதர்) ஆதமை அவரது (அழகான) உருவத்தில் படைத்தான்.அவரது உயரம் அறுபது முழங்களாகும். அவரைப் படைத்தபோது, "நீர் சென்று, அங்கு அமர்ந்திருக்கும் வானவர்கள் குழுவுக்கு முகமன் (சலாம்) கூறுவீராக; அவர்கள் உமக்குக் கூறும் (பதில்) வாழ்த்தைக் கேட்டுக்கொள்வீராக. ஏனெனில், அதுதான் உங்களது முகமனும் உங்களுடைய சந்ததிகளின் முகமனும் ஆகும்" என்று இறைவன் சொன்னான்.
அவ்வாறே ஆதம் (அலை) அவர்கள் (வானவர்களிடம்) சென்று, "அஸ்ஸலாமு அலைக்கும்" (உங்களுக்குச் சாந்தி உண்டாகட்டும்) என்று (முகமன்) சொன்னார்கள்.
அதற்கு வானவர்கள், "அஸ்ஸலாமு அலைக்க வ ரஹ்மத்துல்லாஹ்" (சாந்தியும் இறைவனின் பேரருளும் உங்கள்மீதும் பொழியட்டும்) என்று பதில் (முகமன்) கூறினர். அவர்கள் (தமது பதிலில்) "இறைவனின் பேரருளும்' (வ ரஹ்மத்துல்லாஹ்) என்பதைக் கூடுதலாகச் சொன்னார்கள்.
ஆகவே, (மறுமை நாளில்) சொர்க்கத்தில் நுழைபவர்கள் ஒவ்வொருவரும் அறுபது முழம் உயரம் கொண்ட ஆதம் (அலை) அவர்களின் உருவத்தில்தான் நுழைவார்கள். அவருக்குப் பிறகு இன்று வரை அவருடைய சந்ததிகள் (உயரத்தில்) குறைந்துகொண்டே வருகின்றனர்.

**பாடம் : 13 நரக நெருப்பின் கடுமையான வெப்பமும் அதன் ஆழத்தின் அளவும் அது நரகவாசிகளைத் தீண்டும் அளவும்.**

5464 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அன்றைய நாளில் நரகம் எழுபதாயிரம் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டுக் கொண்டு வரப்படும். ஒவ்வொரு சங்கிலியுடனும் எழுபதாயிரம் வானவர்கள் இருந்து, இழுத்து வருவார்கள்.இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5465 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "ஆதமின் மகன் (மனிதன்) பற்றவைக்கும் (பூமியிலுள்ள) இந்த நெருப்பானது, நரக நெருப்பிலுள்ள வெப்பத்தின் எழுபது பாகங்களில் ஒரு பாகமாகும்" என்று சொன்னார்கள்.
அதற்கு மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் மீதாணையாக! (நரகவாசிகளைத் தண்டிக்க பூமியிலுள்ள) இந்த நெருப்பே போதுமானதாய் இருக்கிறதே?" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அந்த நெருப்பு (பூமியிலுள்ள) இந்த நெருப்பைவிட அறுபத்தொன்பது பாகம் கூடுதலாக வெப்பமேற்றப்பட்டுள்ளது. அதில் ஒவ்வொரு பாகமும் (பூமியிலுள்ள) இந்த நெருப்பின் வெப்பம் கொண்டதாயிருக்கும்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5466 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது, ஏதோ விழுந்த சப்தத்தை அவர்கள் கேட்டார்கள். (நாங்களும் கேட்டோம்.) அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது என்ன (சப்தம்) என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்" என்று சொன்னோம். நபி (ஸல்) அவர்கள், "இது எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் நரகத்திற்குள் தூக்கியெறியப்பட்ட ஒரு கல்லாகும். அது இந்த நேரம்வரை நரகத்திற்குள் சென்று இப்போதுதான் அதன் ஆழத்தை எட்டியது" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அது கீழே விழுந்துவிட்டது. அது விழுந்த சப்தத்தைத்தான் (இப்போது) நீங்கள் செவியுற்றீர்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

5467 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகம், நரகவாசிகளில் சிலரை அவர்களின் கணுக்கால்கள்வரை தீண்டும். வேறு சிலரை அவர்களது இடுப்புவரை தீண்டும். இன்னும் சிலரை அவர்களது கழுத்துவரை தீண்டும்.
இதை சமுரா பின் ஜுன்தப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5468 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகம், நரகவாசிகளில் சிலரை அவர்களின் கணுக்கால்கள் வரை தீண்டும். வேறு சிலரை முழங்கால்கள்வரை தீண்டும். மற்றச் சிலரை இடுப்புவரை தீண்டும். இன்னும் சிலரைக் கழுத்துவரை தீண்டும்.- இதை சமுரா பின் ஜுன்தப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் சமுரா பின் ஜுன்தப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ("அவர்களது இடுப்புவரை' என்பதைக் குறிக்கும்) "ஹுஜ்ஸத்திஹி' என்பதற்குப் பதிலாக "ஹிக்வைஹி'என்று இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 14 நரகத்தில் அக்கிரமக்காரர்கள் நுழைவர். சொர்க்கத்தில் அப்பாவிகள் நுழைவர்.

5469 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகமும் சொர்க்கமும் வாக்குவாதம் செய்துகொண்டன. நரகம், "அக்கிரமக்காரர்களும் ஆணவம் கொண்டவர்களுமே எனக்குள் நுழைவார்கள்" என்று சொன்னது. சொர்க்கம், "பலவீனர்களும் ஏழைகளுமே எனக்குள் நுழைவார்கள்" என்று சொன்னது.
அப்போது வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் நரகத்திடம், "நீ எனது வேதனை. உன் மூலம் நான் நாடியவர்களுக்கு வேதனை கொடுக்கிறேன்" என்றும், சொர்க்கத்திடம், "நீ எனது பேரருள். உன் மூலம் நான் நாடியவர்களுக்கு அருள் புரிகிறேன்" என்றும் கூறினான். பிறகு (இரண்டையும் நோக்கி), "உங்களில் ஒவ்வொன்றையும் நிரப்புபவர்கள் (மக்களிடையே) உள்ளனர்" என்று சொன்னான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5470 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகமும் சொர்க்கமும் வாக்குவாதம் செய்துகொண்டன. நரகம், "பெருமையடிப்பவர் களுக்காகவும் அக்கிரமக்காரர்களுக்காகவும் நான் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளேன்" என்று சொன்னது. சொர்க்கம், "எனக்கு என்ன நேர்ந்ததோ! மக்களில் பலவீனர்களும் அவர்களில் கீழ்நிலையினரும் இயலாதவர்களுமே (அதிகமாக) என்னுள் நுழைவார்கள்" என்று கூறியது.
அப்போது அல்லாஹ் சொர்க்கத்திடம், "நீ எனது பேரருள். உன் மூலமே என் அடியார்களில் நான் நாடிய சிலருக்கு அருள் புரிகிறேன்" என்று கூறினான். நரகத்திடம், "நீ எனது வேதனை. உன் மூலமே என் அடியார்களில் நான் நாடிய சிலருக்கு வேதனை கொடுக்கிறேன்" என்று கூறினான். பிறகு (அவ்விரண்டையும் நோக்கி), "உங்களில் ஒவ்வொருவருக்கும் நிரம்பத் தரப்படும்" என்று சொன்னான்.
ஆனால், நரகமோ இறைவன் தனது பாதத்தை அதன் மீது வைக்காத வரை (வயிறு) நிரம்பாது. இறைவன் தனது பாதத்தை வைக்கும்போது, நரகம் "போதும்; போதும்" என்று கூறும். அப்போதுதான் அதற்கு வயிறு நிரம்பும். மேலும், நரகத்தின் ஒரு பகுதியை மற்றொரு பகுதியுடன் இணைக்கப்படும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், ("வாக்குவாதம் செய்துகொண்டன' என்பதைக் குறிக்க "தஹாஜ்ஜத்' என்பதற்குப் பகரமாக) "இஹ்தஜ்ஜத்' எனும் சொல் இடம்பெற்றுள்ளது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5471 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கமும் நரகமும் வாக்குவாதம் செய்துகொண்டன. நரகம், "பெருமையடிப்பவர் களுக்காகவும் அக்கிரமக்காரர்களுக்காகவும் நான் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளேன்" என்று சொன்னது. சொர்க்கம், "எனக்கு என்ன நேர்ந்ததோ! மக்களில் பலவீனர்களும் அவர்களில் கீழ் நிலையினரும் அப்பாவிகளுமே (அதிகமாக) எனக்குள் நுழைவார்கள்" என்று கூறியது.

அல்லாஹ் சொர்க்கத்திடம், "நீயே எனது பேரருள். உன் மூலம் என் அடியார்களில் நான் நாடிய சிலருக்கு அருள்புரிகிறேன்" என்றும் நரகத்திடம், "நீ எனது வேதனை(க்காகத்)தான். உன் மூலம் என் அடியார்களில் நான் நாடிய சிலருக்கு வேதனை கொடுக்கிறேன். உங்களில் ஒவ்வொருவருக்கும் (வயிறு) நிரம்பத் தரப்படும்" என்றும் கூறினான்.
ஆனால், நரகமோ வளமும் உயர்வும் மிக்க இறைவன் தனது காலை அதன் மீது வைக்காத வரை (வயிறு) நிரம்பாது. (இறைவன் காலை வைக்கும்போது,) நரகம் "போதும்; போதும்" என்று கூறும். அப்போதுதான் அதற்கு வயிறு நிரம்பும். மேலும், (நரகத்துக்கென அல்லாஹ் புதிதாக யாரையும் படைப்பதில்லை. மாறாக,) நரகத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதியுடன் இணைக்கப்படும்.

அல்லாஹ் தன் படைப்புகளில் யாருக்கும் அநீதியிழைக்க மாட்டான். ஆனால், சொர்க்கத்தி(ல் மீதியிருக்கும் இடத்தி)ற்கென்றே புதிதாகச் சிலரைப் படை(த்து அதை நிறைப்)பான்.

- மேற்கண்ட ஹதீஸ், அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "சொர்க்கமும் நரகமும் வாக்குவாதம் செய்துகொண்டன" என்று தொடங்கி, "உங்களில் ஒவ்வொருவருக்கும் (வயிறு) நிரம்பத் தருவது என் பொறுப்பாகும்" என்பதுவரை இடம் பெற்றுள்ளது. அதற்குப் பின்னுள்ள கூடுதல் தகவல்கள் இல்லை.

5472 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(நரகவாசிகள் அனைவரும் நரகத்தில் போடப்பட்ட பின்னரும் நரகம் (வயிறு) நிரம்பாத காரணத்தால்) "இன்னும் அதிகம் இருக்கிறதா?" என்று கேட்டுக்கொண்டேயிருக்கும். இறுதியில் கண்ணியத்தின் அதிபதி(யான இறைவன்) தனது பாதத்தை அதில் வைப்பான். அப்போது அது "போதும்; போதும், உன் கண்ணியத்தின் மீதாணையாக!" என்று கூறும். நரகத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதியுடன் இணைக்கப்படும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர் களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5473 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(நரகவாசிகள்) நரகத்தில் போடப்பட்டுக் கொண்டேயிருப்பார்கள். நரகம் (வயிறு நிரம்பாமல்) "இன்னும் அதிகம் இருக்கிறதா?" என்று கேட்கும்; இறுதியில் கண்ணியத்தின் அதிபதி (யான இறைவன்), நரகத்தில் தனது பாதத்தை வைப்பான். உடனே நரகத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதியுடன் ஒட்டிக்கொள்ளும். பிறகு, "போதும்; போதும். உன் கண்ணியத்தின் மீதும், உன் கொடையின் மீதும் சத்தியமாக!" என்று நரகம் கூறும்.
சொர்க்கத்தில் இடம் மீதி இருந்து கொண்டேயிருக்கும். இறுதியில், சொர்க்கத்திற்கென அல்லாஹ் புதியவர்களைப் படைத்து, சொர்க்கத்தில் மீதியுள்ள இடத்தில் அவர்களைக் குடியமர்த்துவான்.
இதை, "நாம் நரகத்திடம் "உனக்கு (வயிறு) நிரம்பிவிட்டதா?' என்று கேட்கும் நாளில் "இன்னும் அதிகம் இருக்கிறதா?'என்று அது கேட்கும்" (50:30) எனும் இறைவசனத்தி(ன் விளக்கவுரையி)ல் அப்துல் வஹ்ஹாப் பின் அதாஉ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.
இதை நபி (ஸல்) அவர்களிடமிருந்து அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5474 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(சொர்க்கவாசிகள் சொர்க்கத்திற்குள் நுழைந்த பின்னர்) சொர்க்கத்தில் அல்லாஹ் நாடிய அளவு இடம் மீதியிருக்கும். பிறகு அல்லாஹ், தான் நாடியவற்றில் ஒரு படைப்பை சொர்க்கத்திற்கென உருவாக்குவான்.- இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5475 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் கறுப்பு வெள்ளை ஆடு ஒன்றின் தோற்றத்தில் மரணம் கொண்டுவரப்படும். பிறகு அதைச் சொர்க்கத்திற்கும் நரகத்திற்குமிடையே நிறுத்தப்படும் (என அபூகுறைப் (ரஹ்)

அவர்களது அறிவிப்பில் கூடுதலாக இடம்பெற்றுள்ளது). பிறகு "சொர்க்கவாசிகளே! இது (என்னவென்று) உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்கப்படும். அப்போது சொர்க்கவாசிகள் தலையைத் தூக்கிப் பார்ப்பார்கள். மேலும், "ஆம்; (தெரியும்) இதுதான் மரணம்" என்று பதிலளிப்பார்கள்.(அவர்கள் அனைவரும் அதை முன்பே பார்த்திருக்கிறார்கள்.)

பிறகு (நரகவாசிகளை நோக்கி), "நரகவாசிகளே! இது (என்னவென்று) உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்கப்படும். அவர்களும் தலையைத் தூக்கிப் பார்த்துவிட்டு, "ஆம் (தெரியும்). இதுதான் மரணம்" என்று பதில் சொல்வார்கள். (அவர்கள் அனைவரும் அதை முன்பே பார்த்துள்ளனர்.)

உடனே (இறைவனின்) கட்டளைக்கேற்ப அது (ஆட்டின் உருவத்திலுள்ள மரணம்) அறுக்கப் பட்டுவிடும். பிறகு "சொர்க்கவாசிகளே! நிரந்தரம்; இனி மரணமே இல்லை. நரகவாசிகளே! நிரந்தரம்; இனி மரணம் என்பதே இல்லை"என்று கூறப்படும்.

இதை அறிவித்த அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

இதைக் கூறிவிட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நபியே!) அவர்கள் எண்ணிப் பார்க்காமலும் நம்பிக்கை கொள்ளாமலும் இருக்கும் நிலையில் காரியம் முடிக்கப்பட்டு, துக்கம் ஏற்படும் அந்த நாளைப் பற்றி எச்சரிப்பீராக!" (19:39) எனும் இறைவசனத்தை ஓதிக்காட்டியவாறு தமது கரத்தால் இந்தப் பூமியை நோக்கி சைகை செய்தார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5476 மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "சொர்க்கவாசிகள் சொர்க்கத்திற்கும் நரகவாசிகள் நரகத்திற்கும் அனுப்பப்பட்ட பின் "சொர்க்கவாசிகளே!' என அழைக்கப்படும் என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

இந்த அறிவிப்பில், "இதையே வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் (19:39 ஆவது வசனத்தில்) குறிப்பிடுகின்றான்"என இடம்பெற்றுள்ளது. "பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்த வசனத்தை) ஓதிக்காட்டினார்கள்"என்பதும், "தமது கரத்தால் பூமியை நோக்கி சைகை செய்தார்கள்" என்பதும் இடம்பெறவில்லை.

5477 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ், சொர்க்கவாசிகளை சொர்க்கத்திற்கும் நரகவாசிகளை நரகத்திற்கும் அனுப்பிய பிறகு ஓர் அறிவிப்பாளர் அவர்களிடையே நின்று, "சொர்க்கவாசிகளே! இனி மரணம் இல்லை. நரகவாசிகளே! இனி மரணம் இல்லை. (உங்களில்) ஒவ்வொருவரும் அவரவர் இருக்குமிடத்தில் நிரந்தரமாக இருப்பார்கள்" என்று அறிவிப்பார்.

இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5478 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

சொர்க்கவாசிகள் சொர்க்கத்திற்கும் நரகவாசிகள் நரகத்திற்கும் சென்று சேர்ந்த பிறகு "மரணம்' (ஓர் ஆட்டின் உருவத்தில்) கொண்டுவரப்பட்டு, சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் இடையே

நிறுத்தப்படும். பின்னர் அது அறுக்கப்படும். பிறகு பொது அறிவிப்பாளர் ஒருவர், "சொர்க்கவாசிகளே! (இனி) மரணம் என்பதே கிடையாது; நரகவாசிகளே! (இனி) மரணம் என்பதே கிடையாது" என்று அறிவிப்பார். அப்போது சொர்க்கவாசிகளுக்கு மகிழ்ச்சிக்கு மேல் மகிழ்ச்சி அதிகமாகும். நரகவாசிகளுக்குக் கவலைக்கு மேல் கவலை அதிகமாகும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

5479 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(நரகத்தில்) இறைமறுப்பாளனின் "கடைவாய்ப்பல்' அல்லது "கோரைப்பல்' உஹுத் மலையைப் போன்றிருக்கும். அவனது தோலின் பருமன் மூன்று நாள் பயணத் தொலைவுடையதாக இருக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5480 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகத்தில் இறைமறுப்பாளனின் இரு தோள்களுக்கிடையே உள்ள தூரம், துரிதமாக வாகனத்தில் பயணிப்பவர் மூன்று நாட்கள் கடக்கும் தூரமாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அஹ்மத் பின் உமர் அல்வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நரகத்தில்' எனும் குறிப்பு இல்லை.

5481 ஹாரிஸா பின் வஹ்ப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (ஒரு முறை பின்வருமாறு) கூறியதைக் கேட்டேன்: சொர்க்கவாசிகள் யார் என்று உங்களுக்குத் தெரிவிக்கட்டுமா? மக்கள், "ஆம் (தெரிவியுங்கள்)" என்றார்கள். நபி (ஸல்) அவர்கள், "(மக்களின் பார்வையில்) அவர்கள் பலவீனமானவர்கள்; பணிவானவர்கள். (ஆனால்,) அவர்கள் அல்லாஹ்வின் மேல் ஆணையிட்டு (எதையேனும்) கூறுவார்களானால், அல்லாஹ் அதை (அவ்வாறே) நிறைவேற்றிவைப்பான்" என்று சொன்னார்கள்.
பிறகு "நரகவாசிகள் யார் என்று உங்களுக்கு நான் தெரிவிக்கட்டுமா?" என்று கேட்டார்கள். மக்கள், "ஆம்' என்றார்கள்."அவர்கள் இரக்கமற்றவர்கள்; உண்டு கொழுத்தவர்கள்; பெருமையடிப்பவர்கள் ஆவர்" என்று நபியவர்கள் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஹாரிஸா பின் வஹ்ப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், ("உங்களுக்கு நான் தெரிவிக்கட்டுமா' (அலா உக்பிருக்கும்) என்பதற்குப் பகரமாக) "உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா?' (அலா அதுல்லுக்கும்) என்று இடம்பெற்றுள்ளது.

5482 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கவாசிகள் யார் என்று உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? அவர்கள் (மக்களின் பார்வையில்) பலவீனமானவர்கள்; பணிவானவர்கள். (ஆனால்,) அவர்கள் அல்லாஹ்வின் மேல் ஆணையிட்டு (எதையேனும்) கூறுவார்களானால், அல்லாஹ் அதை (அவ்வாறே) நிறைவேற்றி வைப்பான். நரகவாசிகள் யார் என்று உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? அவர்கள்

இரக்கமற்றவர்கள்; ஒரு வமிசத்தில் பிறந்ததாகப் பொய்யாக வாதிடுபவர்கள்; பெருமை அடிப்பவர்கள். - இதை ஹாரிஸா பின் வஹ்ப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5483 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பரட்டைத் தலையுடைய, வீட்டுவாசல்களுக்கு வெளியே தடுத்து நிறுத்தப்படக்கூடிய எத்தனையோ பேர், (அல்லாஹ்விடம் தகுதியால் உயர்ந்தவர்களாய் இருப்பர்.) அவர்கள் அல்லாஹ்வின் மேல் ஆணையிட்டு (எதையேனும்) கூறுவார்களானால், அல்லாஹ் அதை (அவ்வாறே) உண்மையாக்குவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5484 அப்துல்லாஹ் பின் ஸம்ஆ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உரையாற்றினார்கள். அப்போது (இறைத்தூதர் ஸாலிஹ் (அலை) அவர்களின் தூதுவத்திற்குச் சான்றாகப் பாறையிலிருந்து வெளிப்பட்ட) ஒட்டகத்தையும் அத(ன் கால் நரம்பி)னைத் துண்டித்துக் கொன்றவனையும் நினைவு கூர்ந்தார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்களில் நற்பேறற்ற ஒருவன் முன் வந்தான்" (91:12) எனும் இறைவசனத்தைக் கூறிவிட்டு, "அபூஸம்ஆவைப் போன்று ஸாலிஹ் (அலை) அவர்களின் (ஸமூத்) சமுதாயத்தில் மதிப்புமிக்கவனும் ஆதிக்கவாதியும் பலசாலியுமான ஒருவன் அந்த ஒட்டகத்(தைக் கொல்வ)துக்காக முன்வந்தான்" என்று சொன்னார்கள்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெண்க(ளின் உரிமைக)ள் குறித்து அறிவுறுத்தினார்கள்; பிறகு "உங்களில் ஒருவர் தம் மனைவியை (அடிமையை அடிப்பதைப் போன்று) அடிக்க முற்படுகிறார். (ஆனால்,) அவரே அந்நாளின் இறுதியில் (இரவில்) அவளுடன் (தாம்பத்திய உறவுக் காக)படுக்க நேரலாம். (இது முறையா?)" என்று கூறினார்கள்.

பிறகு (உடலிலிருந்து பிரியும்) நாற்ற வாயு காரணமாக மக்கள் சிரிப்பது குறித்து, "(அப்படிச் சிரிக்க வேண்டாமெனக் குறிப்பிடும் வகையில்) உங்களில் ஒருவர் தாம் செய்யும் ஒரு செயலுக்காக (அதே செயலைப் பிறர் செய்யும்போது) ஏன் சிரிக்கிறார்?" என்று கேட்டு உபதேசித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அடிமைப் பெண்ணை அடிப்பதைப் போன்று' எனக் காணப்படுகிறது. அபூகுறைப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஆண் அடிமையை அடிப்பதைப் போன்று' என இடம்பெற்றுள்ளது.

5485 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இதோ இந்த பனூ கஅப் குலத்தாரின் தந்தையான "அம்ர் பின் லுஹை பின் கம்ஆ பின் கிந்தி∴ப்' தனது குடலை இழுத்தபடி நரகத்தில் சென்றுகொண்டிருப்பதை நான் கண்டேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5486 சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(5:103ஆவது இறைவசனத்திலுள்ள) "பஹீரா" என்பது, (அறியாமைக் கால) சிலைகளுக்காக (அவற்றின் பெயரால்) பால் கறக்கக்கூடாதெனத் தடை விதிக்கப்பட்டுவந்த ஒட்டகமாகும்; மக்களில் யாரும் அதன் பாலைக் கறக்கமாட்டார்கள்.
"சாயிபா" என்பது, (அறியாமைக் காலத்தில் நோய் நிவாரணம் போன்ற தேவைகள் நிறைவேற வேண்டும் என்ற வேண்டுதலில்) சிலைகளுக்காக (நேர்ந்து) சுதந்திரமாகத் திரியவிடப்பட்டு வந்த ஒட்டகமாகும். அதன் மீது எந்தச் சுமையும் ஏற்றப்படாது.

அபூஹுரைரா (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகப் பின்வருமாறு சொன்னார்கள்: "அம்ர் பின் ஆமிர் அல்குஸாஈ" தமது குடலை இழுத்தபடி நரகத்தில் சென்று கொண்டிருப்பதை நான் கண்டேன். முதன் முதலாக "சாயிபா" (ஒட்டகத்தைச் சிலைகளுக்காக நேர்ச்சை செய்து) திரியவிட்டவர் அவர்தான்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5487 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரு பிரிவினர் நரகவாசிகளில் அடங்குவர். அவ்விரு பிரிவினரை நான் பார்த்ததில்லை. (முதலாம் பிரிவினர் யாரெனில்,) பசு மாட்டின் வாலைப் போன்ற (நீண்ட) சாட்டைகளைத் தம்மிடம் வைத்துக்கொண்டு மக்களை அடி(த்து இம்சி)க்கும் கூட்டத்தார்.
(இரண்டாம் பிரிவினர் யாரெனில்,) மெல்லிய உடையணிந்து, தம் தோள்களைச் சாய்த்தபடி (தளுக்கி குலுக்கி கர்வத்துடன்) நடந்து (அந்நிய ஆடவர்களின் கவனத்தை) தம் பக்கம் ஈர்க்கக்கூடிய பெண்கள் ஆவர். அவர்களின் தலை(முடி) சரிந்து நடக்கக்கூடிய கழுத்து நீண்ட ஒட்டகத்தைப் போன்றிருக்கும். அவர்கள் சொர்க்கத்தில் நுழையமாட்டார்கள்; (ஏன்) அதன் வாடையைக்கூட நுகரமாட்டார்கள். சொர்க்கத்தின் நறுமணமோ இவ்வளவு இவ்வளவு தொலைவிலிருந்து வீசிக்கொண்டிருக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5488 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என்னிடம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ நீண்டநாள் வாழ்ந்தால் ஒரு சமுதாயத்தைப் பார்க்கக்கூடும். அவர்களின் கைகளில் மாட்டின் வாலைப்போன்று (நீளமான சாட்டைகள்) இருக்கும். அவர்கள் அல்லாஹ்வின் கோபத்துடனேயே காலையில் புறப்படுவார்கள். அல்லாஹ்வின் கடுங்கோபத்துடனேயே மாலையில் திரும்புவார்கள்.

5489 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
(என்னிடம்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் நீண்ட நாள் வாழ்ந்தால் ஒரு சமுதாயத்தைப் பார்க்கக்கூடும். அவர்கள் அல்லாஹ்வின் கடுங்கோபத்துடனேயே காலையில் புறப்படுவார்கள். அவனுடைய சாபத்துடனேயே மாலையில் திரும்புவார்கள். அவர்களின் கைகளில் மாட்டின் வாலைப் போன்றவை (நீளமான சாட்டைகள்) இருக்கும்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 15 உலக அழிவும் மறுமை நாளில் (மக்கள் அனைவரும்) ஒன்றுதிரட்டப்படுவதும்.**

5490 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் மீதாணையாக! மறுமையோடு ஒப்பிடும்போது இவ்வுலகின் நிலையானது, உங்களில் ஒருவர் தமது இந்த -அதாவது சுட்டு- விரலை (அறிவிப்பாளர் யஹ்யா சுட்டு விரலால் சைகை செய்கிறார்) கடலில் வைப்பதைப் போன்றுதான். அதில் எந்த அளவு தண்ணீர் ஒட்டிக்கொள்கிறது என்று அவர் பார்க்கட்டும். (அந்த அளவு குறைவானதேயாகும்.)
இதை பனூ ஃபிஹ்ர் குலத்தாரில் ஒருவரான முஸ்தவ்ரித் பின் ஷத்தாத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூஉசாமா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அறிவிப்பாளர் இஸ்மாயீல் பின் அபீ காலித் (ரஹ்) அவர்கள் தமது பெருவிரலால் (கடலில் நுழைப்பதைப் போன்று) சைகை செய்தார்கள்" என்று காணப்படுகிறது.
யஹ்யா பின் யஹ்யா (ரஹ்) அவர்களைத் தவிர மற்ற அனைவரது அறிவிப்பிலும், "(இவ்வாறு) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்" என முஸ்தவ்ரித் பின் ஷத்தாத் (ரலி) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

5491 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"மக்கள் மறுமைநாளில் செருப்பணியாதவர்களாக, நிர்வாணமானவர்களாக, விருத்த சேதனம் செய்யப்படாதவர்களாக ஒன்றுதிரட்டப்படுவார்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன். உடனே நான், "அல்லாஹ்வின் தூதரே! (நிர்வாணமான) பெண்கள் மற்றும் ஆண்கள் அனைவரும் ஒருவரையொருவர் பார்ப்பார்களே?" என்று கேட்டேன்.
"ஆயிஷா! அவர்களில் சிலர் வேறு சிலரைப் பார்க்கும் எண்ணம் ஏற்படாத அளவுக்கு (அப்போதைய) நிலைமை மிகக் கடுமையானதாக இருக்கும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.அவற்றில் ஹாத்திம் பின் அபீஸஃகீரா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "விருத்தசேதனம் செய்யப்படாதவர்களாக' எனும் குறிப்பு இல்லை.

5492 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் உரையாற்றியபோது, "நீங்கள் செருப்பணியாமல் வெறுங்காலால் நடந்தவர்களாக, நிர்வாணமானவர்களாக, விருத்தசேதனம் செய்யப்படாதவர்களாக அல்லாஹ்வைச் சந்திப்பீர்கள்" என்று கூறியதை நான் கேட்டேன்.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஸுஹைர் பின் ஹர்ப் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உரையாற்றிய போது' எனும் குறிப்பு இல்லை.

5493 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே நின்று (எங்களுக்கு) அறிவுரை வழங்கிக்கொண்டிருந்தார்கள்.
அப்போது (பின்வருமாறு) கூறினார்கள்:
மக்களே! (மறுமை நாளில்) நீங்கள் செருப்பணியாதவர்களாக, நிர்வாணமானவர்களாக, விருத்தசேதனம் செய்யப்படாதவர்களாக அல்லாஹ்விடம் ஒன்றுதிரட்டிக்கொண்டு வரப்படுவீர்கள். அல்லாஹ் கூறுகின்றான்: முதன் முதலாக அவர்களை நாம் படைத்ததைப் போன்றே (அந்நாளில்) அவர்களை நாம் மீண்டும் படைப்போம். இது நம்மீது (பொறுப்பாகிவிட்ட) வாக்குறுதியாகும். இதை நாம் நிச்சயமாகச் செய்வோம் (21:104).
கவனத்தில் வையுங்கள்! மறுமை நாளில் படைப்பினங்களிலேயே முதன் முதலாக ஆடையணிவிக்கப்படுபவர் இப்ராஹீம் (அலை) அவர்கள் ஆவார்கள்.
கவனத்தில் வையுங்கள்! என் சமுதாயத்தாரில் சிலர் இடப் பக்கமாக (நரகம் நோக்கி)க் கொண்டு செல்லப்படுவார்கள். அப்போது நான் "என் இறைவா! (இவர்கள்) என் தோழர்கள்" என்பேன். அப்போது "(இவர்கள்) உம(து இறப்பு)க்குப்பின் (மார்க்கத்தில்) என்னவெல்லாம் புதிது புதிதாக உருவாக்கினார்கள் என்பது உமக்குத் தெரியாது" என்று கூறப்படும்.
அப்போது நான், நல்லடியார் (நபி ஈசா (அலை) அவர்கள்) சொன்னதைப் போன்று, "(இறைவா!)" நான் அவர்களுடன் இருந்தவரை அவர்களைக் கண்காணிப்பவனாகவே இருந்தேன். நீ என்னைத் திரும்ப அழைத்துக்கொண்டபோது, நீயே அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தாய். நீ அனைத்தையும் கண்காணிப்பவன். அவர்களை நீ தண்டித்தால் அவர்கள் உன் அடியார்களே. அவர்களை நீ மன்னித்தால் நீ மிகைத்தவன்; ஞானமிக்கவன்" (5:117,118) என்று சொல்வேன்.
அப்போது என்னிடம், "நீர் இவர்களைவிட்டுப் பிரிந்ததிலிருந்து இவர்கள் தம் குதிகால் (சுவடு)களின் வழியே மார்க்கத்திலிருந்து வெளியேறிக்கொண்டேயிருந்தார்கள்" என்று கூறப்படும்.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் வகீஉ மற்றும் முஆத் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பிலேயே "அப்போது, இவர்கள் உம(து இறப்பு)க்குப் பின் (மார்க்கத்தில்) என்னவெல்லாம் புதிது புதிதாக உருவாக்கினார்கள் என்பது உமக்குத் தெரியாது" எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

5494 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மறுமை நாள் வருவதற்குச் சற்றுமுன் கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி) மக்கள் மூன்று பிரிவினராக ஒன்றுதிரட்டப்படுவார்கள். (அவற்றில் முதல் பிரிவினர்) அச்சத்துடனும் ஆர்வத்துடனும் செல்வார்கள். (இரண்டாவது பிரிவினர் வாகனப் பற்றாக்குறையினால் தாமதித்துப் பின்னர்) ஒரே ஒட்டகத்தின் மீது இரண்டு பேராக, ஒரே ஒட்டகத்தின் மீது மூன்று பேராக, ஒரே ஒட்டகத்தின் மீது நான்கு பேராக, ஒரே ஒட்டகத்தின் மீது பத்துப் பேராகச் செல்வார்கள்.
அவர்களில் எஞ்சியவர்(களே மூன்றாவது பிரிவினராவர். அவர்)களைப் பூமியில் ஏற்படும் (ஒரு பெரும்) "தீ' ஒன்றுதிரட்டும். அவர்கள் இரவில் ஓய்வெடுக்கும்போதும், மதிய ஓய்வெடுக்கும்

போதும், காலை நேரத்தை அடையும்போதும், மாலை நேரத்தை அடையும் போதும் (இப்படி எல்லா நேரங்களிலும்) அந்தத் தீ அவர்களுடனேயே இருக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 16 மறுமை நாளின் நிலை. அதன் அமளிகளிலிருந்து தப்பிக்க நமக்கு அல்லாஹ் உதவி புரிவானாக!**

5495 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "அந்நாளில் அகிலத்தின் இறைவன் முன்னால் மனிதர்கள் நிற்பார்கள்" (83:6) எனும் இறைவசனத்தை ஓதிவிட்டு, "(அன்று) தம் காதுகளில் பாதிவரை தேங்கி நிற்கும் தமது வியர்வையில் அவர்களில் ஒருவர் நின்றுகொண்டிருப்பார்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் அல்முஸன்னா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "மக்கள் நிற்பார்கள்' என்றே வசனத்தொடர் ஆரம்பமாகிறது. "அந்நாளில்' என்று அவர்கள் அறிவிக்க வில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் எட்டு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் மூசா பின் உக்பா மற்றும் ஸாலிஹ் பின் கைசான் (ரஹ்) ஆகியோரது அறிவிப்பில், "எந்த அளவுக்கு (அவர்கள் நிற்பார்கள்) என்றால், தம் காதுகளில் பாதிவரை தேங்கி நிற்கும் தமது வியர்வையில் அவர்களில் ஒருவர் மறைந்துபோய்விடுவார்" என்று இடம்பெற்றுள்ளது.

5496 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மறுமை நாளில் (மனிதர்களின் தலைக்கருகில் நெருங்கிவரும் சூரியனால்) ஏற்படும் வியர்வை, தரையினுள் இரு கை நீட்டளவில் எழுபது முழம்வரை சென்று, (தரைக்குமேல்) "அவர்களின் வாயை' அல்லது "அவர்களது காதை' எட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
("அவர்களின் வாயை' அல்லது "அவர்களின் காதை' ஆகிய) இவற்றில் அறிவிப்பாளர் அபுல் ஃகைஸ் (ரஹ்) அவர்கள் எதைக் கூறினார்கள் என்பதில் ஸவ்ர் (ரஹ்) அவர்களே ஐயப்பாட்டை வெளியிட்டுள்ளார்கள்.

5497 மிக்தாத் பின் அல்அஸ்வத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"மறுமை நாளில் சூரியன் படைப்பினங்களுக்கு அருகில் கொண்டுவரப்படும். எந்த அளவுக்கென்றால், அவர்களுக்கும் அதற்கும் இடையில் ஒரு மைல் தொலைதூரமே இருக்கும். அப்போது மக்கள் தம் செயல்களுக்கேற்ப வியர்வையில் மூழ்குவார்கள். சிலரது வியர்வை அவர்களின் கணுக்கால்கள்வரையிலும், சிலரது வியர்வை முழங்கால்கள் வரையிலும், சிலரது வியர்வை இடுப்பு வரையிலும், சிலரது வியர்வை வாய் வரையிலும் எட்டிவிடும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்.
இதைக் கூறியபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கையால் வாயை நோக்கி சைகை செய்தார்கள்.

இதன் அறிவிப்பாளரான சுலைம் பின் ஆமிர் (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! "மைல்' என்று பூமியின் தொலைதூர அளவைக் குறிப்பிட்டார்களா? அல்லது கண்ணில் தீட்டப் பயன்படும் அஞ்சனக்கோலின் அளவைக் குறிப்பிட்டார்களா என்பது எனக்குத் தெரியவில்லை" என்று கூறினார்கள்.

**பாடம் : 17 சொர்க்கவாசிகளையும் நரகவாசிகளையும் இவ்வுலகிலேயே அடையாளம் கண்டு கொள்ளத்தக்க பண்புகள்.**

5498 இயாள் பின் ஹிமார் அல்முஜாஷிஈ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நாள் உரையாற்றியபோது பின்வருமாறு கூறினார்கள்:
அறிந்துகொள்ளுங்கள்: என் இறைவன் இன்றைய தினம் எனக்குக் கற்றுத் தந்தவற்றிலிருந்து நீங்கள் அறியாதவற்றை உங்களுக்குக் கற்றுத்தருமாறு எனக்குக் கட்டளையிட்டான்.
(இறைவன் கூறினான்:) நான் ஓர் அடியானுக்கு வெகுமதியாக வழங்கியுள்ள அனைத்துப் பொருட்களும் அவனுக்கு அனுமதிக்கப்பட்டவையே ஆகும். நான் என் அடியார்கள் அனைவரையும் (இயற்கையிலேயே) உண்மை வழி நின்றவர்களாகவே படைத்தேன். (ஆயினும்) அவர்களிடம் ஷைத்தான் வந்து அவர்களது இயற்கை நெறியிலிருந்து அவர்களைப் பிறழச்செய்துவிட்டான். நான் அவர்களுக்கு அனுமதித்துள்ளவற்றைத் தடைசெய்யப் பட்டவையாக ஆக்கிவிட்டான்; நான் எனக்கு இணை கற்பிப்பதற்கு எந்தச் சான்றையும் இறக்காத நிலையில் எனக்கு இணை கற்பிக்குமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டுவிட்டான்.
அல்லாஹ் பூமியில் வசித்துக்கொண்டிருப்போரைப் பார்த்து, அவர்களில் அரபியர், அரபியரல்லாதோர் அனைவர்மீதும் (அவர்கள் இணை கற்பித்துக்கொண்டிருந்ததால்) கடுங்கோபம் கொண்டான்; வேதக்காரர்களில் (இணைவைக்காமல்) எஞ்சியிருந்தோரைத் தவிர! மேலும் (என்னிடம்) இறைவன், நான் உம்மைச் சோதிப்பதற்கும் உம்மைக் கொண்டு (பிறரைச்) சோதிப்பதற்குமே உம்மை நான் அனுப்பினேன். (வெள்ள)நீரில் அழிந்துபோய்விடாத வேதத்தையும் உமக்கு நான் அருளினேன். அதை உறங்கும்போதும் விழித்திருக்கும் நிலையிலும் நீர் ஓதுகின்றீர்" என்று கூறினான்.

மேலும், என் இறைவன் குறைஷியரை எரித்துவிடுமாறு எனக்குக் கட்டளையிட்டான். அப்போது நான் "என் இறைவா! அவர்கள் என் தலையை நொறுக்கி ஒரு ரொட்டியைப் போன்று ஆக்கிவிடுவார்களே?" என்று கூறினேன். இறைவன், "உம்மை (உமது பிறந்தகத்திலிருந்து) அவர்கள் வெளியேற்றியதைப் போன்று அவர்களை நீர் வெளியேற்றிவிடும். அவர்களிடம் அறப்போர் புரியும். உமக்கு நாம் உதவுவோம். (நல்வழியில்) நீர் செலவிடும். உமக்கு நாம் செலவிடுவோம். (அவர்களை நோக்கி) ஒரு படையை அனுப்பும். அதைப் போன்று ஐந்து மடங்கு படையை நாம் அனுப்புவோம். உமக்குக் கீழ்ப்படிபவர்களுடன் சேர்ந்து உமக்கு மாறுசெய்வோருடன் நீர் போரிடும்" என்று கூறினான்.
மேலும், சொர்க்கவாசிகள் மூவர் ஆவர். ஒருவர், நீதிநெறி வழுவாமல் வாரி வழங்கி நல்லறம் புரிய வாய்ப்பளிக்கப்படும் அரசர். இரண்டாமவர், உறவினர்களிடமும் மற்ற முஸ்லிம்களிடமும் அன்புடனும் இரக்கத்துடனும் நடந்துகொள்பவர். மூன்றாமவர், குழந்தை குட்டிகள் இருந்தும்

(தவறான வழியில் பொருளீட்டிவிடாமல்) தன் மானத்துடனும் சுயமரியாதையுடனும் வாழ்கின்ற மனிதர்.

நரகவாசிகள் ஐவர் ஆவர். முதலாமவர், புத்தி சாதுர்யம் இல்லாத பலவீனர். அவர் (சுயகாலில் நிற்காமல்) உங்களையே பின்தொடர்வார். தமக்கென குடும்பத்தையோ செல்வத்தையோ தேடிக்கொள்ளமாட்டார். இரண்டாமவர்,எந்த ஆசையையும் விட்டுவைக்காத மோசடிக்காரர். அற்பமானதே ஆனாலும் மோசடி செய்(தாவது அதை அடை)யாமல் விடமாட்டார். மூன்றாமவர், காலையிலும் மாலையிலும் உம்முடைய வீட்டார் விஷயத்திலும் உமது செல்வம் விஷயத்திலும் உமக்குத் துரோகமிழைப்பவர்.

(நரகவாசிகளின் குணங்களில் நான்காவதாக) கருமித்தனத்தை அல்லது பொய்யைக் கூறினார்கள். ஐந்தாமவன், "அதிகமாக அருவருப்பாகப் பேசுகின்ற ஒழுங்கீனன்" என்று குறிப்பிட்டார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் அபூ ஃகஸ்ஸான் அல்மிஸ்மஈ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நல்வழியில் செலவிடுவீராக! உமக்கு நாம் செலவிடுவோம்" எனும் குறிப்பு இடம்பெறவில்லை.

- மேற்கண்ட ஹதீஸ், இயாள் பின் ஹிமார் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "நான் ஓர் அடியானுக்கு வெகுமதியாக வழங்கியுள்ள அனைத்துப் பொருட்களுமே (அவனுக்கு) அனுமதிக்கப்பட்டவையாகும்" எனும் குறிப்பு இல்லை.

- மேற்கண்ட ஹதீஸ் இயாள் பின் ஹிமார் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நாள் உரையாற்றினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.

5499 மேற்கண்ட ஹதீஸ் முஜாஷிஉ குலத்தாரான இயாள் பின் ஹிமார் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே நின்று உரையாற்றினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. இந்த அறிவிப்பில், "பணிவாக நடந்துகொள்ளுங்கள். உங்களில் ஒருவர் மற்றவரிடம் பெருமையடிக்க வேண்டாம். ஒருவர் மற்றவரிடம் எல்லை மீற வேண்டாம்" என்று இறைவன் எனக்கு அறிவித்தான் என நபி (ஸல்) அவர்கள் கூறியதாகக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

மேலும், (நரகவாசிகளில் முதலாமவர் குறித்து) "அவர்கள் உங்களையே பின் தொடர்ந்து கொண்டிருப்பார்கள். அவர்கள் தமக்கெனக் குடும்பத்தையோ செல்வத்தையோ தேடிக்கொள்ள மாட்டார்கள்" என்று (சிறு வேறுபாட்டுடன்) இடம்பெற்றுள்ளது. அதில் கத்தாதா (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறியதாகவும் காணப்படுகிறது:

நான் முதர்ரிஃப் (ரஹ்) அவர்களிடம், "அபூஅப்தில்லாஹ்! இப்படியும் நடக்குமா? (தமக்கென குடும்பத்தையோ செல்வத்தையோ தேடிக்கொள்ளாதவர்களும் உண்டா?)" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "ஆம்; அல்லாஹ்வின் மீதாணையாக! இ(த்தகைய)வர்களை நான் அறியாமைக் காலத்தில் (இருந்ததாக அவர்களுடைய வரலாறுகளில்) கண்டிருக்கிறேன். ஒரு

மனிதர் ஒரு குலத்தாருக்காகக் கால்நடைகளை மேய்ப்பார். (அதற்காகக் கூலி எதையும் பெறமாட்டார்.) அவரது தாம்பத்திய உறவுக்காக அக்குலத்தாரின் அடிமைப் பெண் மட்டும் அவருக்குக் கிடைப்பாள்" என்று கூறினார்கள்.

**பாடம் : 18 இறந்தவருக்குச் சொர்க்கத்திலுள்ள அல்லது நரகத்திலுள்ள அவரது இருப்பிடம் எடுத்துக்காட்டப்படுவதும்,மண்ணறையில் (கப்று) வேதனை உண்டு என்பதற்கான சான்றும், அதன் வேதனையிலிருந்து (காக்குமாறு இறைவனிடம்) பாதுகாப்புக் கோருவதும்.**

5500 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் இறந்துவிட்டால் (மறுமையில்) அவர் (தங்கப்போகும்) இருப்பிடம் காலையிலும் மாலையிலும் அவருக்கு எடுத்துக்காட்டப்படும். அவர் சொர்க்கவாசியாக இருந்தால், சொர்க்கத்தில் இருப்பதாகவும் நரகவாசியாக இருந்தால் நரகத்திலிருப்பதாகவும் (எடுத்துக்காட்டப்படும்). அப்போது "இதுதான் உமது இருப்பிடம்; மறுமை நாளில் இதை நோக்கியே அல்லாஹ் உம்மை எழுப்புவான்" என்று கூறப்படும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5501 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் இறந்துவிட்டால் (மறுமையில்) அவர் (தங்கப்போகும்) இருப்பிடம் காலையிலும் மாலையிலும் அவருக்கு எடுத்துக்காட்டப்படும். அவர் சொர்க்கவாசியாக இருந்தால் (எடுத்துக் காட்டப்படும் இடமும்) சொர்க்கமாக இருக்கும். அவர் நரகவாசியாக இருந்தால் (எடுத்துக் காட்டப்படும் இடமும்) நரகமாக இருக்கும். பிறகு "இதுவே உமது இருப்பிடம். மறுமை நாளில் இதை நோக்கியே நீர் எழுப்பப்படுவீர்" என்று கூறப்படும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5502 ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள் பனூந் நஜ்ஜார் குலத்தாருக்குச் சொந்தமான தோட்டமொன்றில் தமது கோவேறு கழுதையின் மீதிருந்தார்கள். அப்போது அவர்களுடன் நாங்களும் இருந்தோம். அப்போது அவர்களது கோவேறு கழுதை அவர்களைத் தூக்கியெறியும் அளவுக்கு வெருண்டோடியது.
அங்கு ஆறு அல்லது ஐந்து அல்லது நான்கு மண்ணறைகள் இருந்தன. (இவ்வாறுதான் சயீத் அல்ஜுரைரீ (ரஹ்) அவர்கள் அறிவித்துவந்ததாக இப்னு உலய்யா (ரஹ்) அவர்கள் தெரிவித்தார்கள்.) அப்போது நபி (ஸல்) அவர்கள், "இந்த மண்ணறைகளில் அடக்கம் செய்யப்பட்டிருப்பவர்களைப் பற்றி யார் அறிவார்?" என்று கேட்டார்கள். ஒரு மனிதர், "நான் (அறிவேன்)" என்றார்.
நபி (ஸல்) அவர்கள், "இவர்கள் எப்போது இறந்தார்கள்?" என்று கேட்டார்கள். அவர், "இணைவைப்பு (கோலோச்சியிருந்த அறியாமை)க் காலத்தில் இறந்தனர்" என்று பதிலளித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இந்தச் சமுதாயம் மண்ணறைகளில் சோதிக்கப்படுகின்றது. நீங்கள் (இறந்தவர்களைப்) புதைக்காமல் விட்டுவிடுவீர்கள் என்ற அச்சம் மட்டும் எனக்கில்லையாயின், நான் செவியுறும் மண்ணறையின் வேதனையை உங்களுக்கும் கேட்கச் செய்யும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தித்து இருப்பேன்" என்று கூறினார்கள்.

பிறகு எங்களை நோக்கித் தமது முகத்தைத் திருப்பி, "நரக நெருப்பின் வேதனையிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள்" என்றார்கள். மக்கள், "நரக நெருப்பின் வேதனையிலிருந்து நாங்கள் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறோம்" என்று கூறினர்.
பிறகு "மண்ணறையின் வேதனையிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள்" என்றார்கள். மக்கள், "மண்ணறையின் வேதனையிலிருந்து நாங்கள் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறோம்" என்று கூறினர்.
நபி (ஸல்) அவர்கள், "குழப்பங்களில் வெளிப்படையானவை மறைமுகமானவை அனைத்திலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள்" என்று கூறினார்கள். மக்கள், "குழப்பங்களில் வெளிப்படையானவை மறைமுகமானவை அனைத்திலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறோம்" என்று கூறினர்.
நபி (ஸல்) அவர்கள், "தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள்" என்றார்கள். மக்கள், "தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்து நாங்கள் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறோம்" என்று கூறினர்.
இதன் அறிவிப்பாளரான அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள், "இதை நான் நபி (ஸல்) அவர்களிடமிருந்து நேரடியாகக் கேட்கவில்லை. மாறாக, ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்களே எனக்கு இதை அறிவித்தார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5503 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் இறந்தவர்களைப் புதைக்காமல் விட்டுவிடுவீர்களோ என்ற அச்சம் எனக்கில்லையாயின், மண்ணறையின் வேதனையை உங்களுக்குக் கேட்கச் செய்யுமாறு நான் அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்திருப்பேன்.
இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5504 அபூஅய்யூப் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சூரியன் மறைந்தபின் வெளியே புறப்பட்டார்கள். அப்போது ஒரு சப்தத்தைக் கேட்டுவிட்டு "யூதர்கள், அவர்களின் கல்லறைகளில் வேதனை செய்யப்படுகிறார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் ஏழு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5505 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் அடியார் மண்ணறையில் அடக்கம் செய்யப்பட்டு அவருடைய நண்பர்கள் திரும்பிச் செல்லும்போது, அவர்களது காலணியின் ஓசையை இறந்தவர் செவியேற்பார். அப்போது அவரிடம் இரு வானவர்கள் வந்து அவரை எழுப்பி உட்காரவைத்து, "இந்த மனிதரைப் பற்றி என்ன சொல்லிக்கொண்டிருந்தாய்?" என்று (என்னைப் பற்றிக்) கேட்பார்கள். இறை நம்பிக்கையாளரோ, "இவர் அல்லாஹ்வின் அடியாரும் தூதருமாவார் என்று நான் உறுதிமொழிகிறேன்" என்று கூறுவார்.

அப்போது அவரிடம் "(நீ இறைநம்பிக்கையற்றவராக இருந்திருந்தால்) நரகத்தில் நீ தங்கப்போகும் இடத்தைப் பார். (நீ நம்பிக்கையாளனும் நல்லவனுமாக இருப்பதால்) அல்லாஹ் இதற்குப் பகரமாக உனக்குச் சொர்க்கத்தில் தங்குமிடத்தை ஏற்படுத்தியுள்ளான்" என்று கூறப்படும். அவர் அவ்விரண்டையும் ஒரே நேரத்தில் பார்ப்பார்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளரான கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
"அப்போது இறைநம்பிக்கையாளருக்கு எழுபது முழம் அளவுக்கு மண்ணறை விசாலமாக்கப் படும். அவர்கள் எழுப்பப்படும் (மறுமை) நாள்வரை அது மகிழ்ச்சியூட்டும் இன்பங்களால் நிரப்பப்படும்" என்றும் எங்களிடம் கூறப்பட்டது.

5506 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறந்தவரை மண்ணறைக்குள் வைத்து (அடக்கம் செய்து)விட்டு மக்கள் திரும்பிச் செல்லும் போது, அவர்களின் காலணி ஓசையை இறந்தவர் செவியேற்பார்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5507 மேற்கண்ட ஹதீஸ் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதில், "ஓர் அடியார் மண்ணறையில் வைத்து அடக்கம் செய்யப்பட்டு அவருடைய தோழர்கள் திரும்பிச் செல்லும்போது..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற் றுள்ளன.

5508 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"இறைநம்பிக்கை கொண்டோரை உறுதியான கொள்கையின் மூலம் இவ்வுலக வாழ்க்கையிலும் மறுமையிலும் அல்லாஹ் நிலைப்படுத்துகின்றான்" (14:27) எனும் இறைவசனம் மண்ணறை(யில் நடைபெறும்) வேதனை தொடர்பாகவே அருளப்பெற்றது.
அ(டக்கம் செய்யப்பட்ட)வரிடம், "உன் இறைவன் யார்?" என்று கேட்கப்படும். அதற்கு அவர், "என் இறைவன் அல்லாஹ். என்னுடைய நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் ஆவார்கள்" என்று பதிலளிப்பார். இதையே மேற்கண்ட (14:27ஆவது) வசனம் குறிப்பிடுகிறது.
இதை பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5509 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"இறைநம்பிக்கை கொண்டோரை உறுதியான கொள்கையின் மூலம் இவ்வுலக வாழ்க்கையிலும் மறுமையிலும் அல்லாஹ் நிலைப்படுத்துகின்றான்" (14:27) எனும் இறைவசனம் மண்ணறை வேதனை தொடர்பாகவே அருளப்பெற்றது.
இதை கைஸமா பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த அறிவிப்பு மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5510 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:) இறைநம்பிக்கையாளரின் உயிர் பிரியும்போது அதை இரு வானவர்கள் எடுத்துக்கொண்டு (வானுலகிற்கு) ஏறிச் செல்கிறார்கள்.

-புதைல் பின் மைசரா (ரஹ்) அவர்கள் இதை அறிவிக்கும்போது, அந்த உயிரிலிருந்து வரும் நறுமணம் குறித்தும் அதில் கஸ்தூரி மணம் கமழும் என்பது குறித்தும் குறிப்பிட்டார்கள் என அறிவிப்பாளர் ஹம்மாம் பின் ஸைத் (ரஹ்) அவர்கள் தெரிவிக்கிறார்கள்.-
அப்போது வானுலகவாசிகள் (வானவர்கள்), "ஒரு நல்ல ஆன்மா பூமியிலிருந்து வந்திருக்கிறது. அல்லாஹ் உனக்குப் பேரருள் புரிவானாக. நீ குடியிருந்துவந்த உடலுக்கும் பேரருள் புரிவானாக!" என்று பிரார்த்திப்பார்கள். பிறகு அந்த உயிர் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்விடம் கொண்டுசெல்லப்படுகிறது. பிறகு அல்லாஹ், "இதை இறுதித் தவணைவரை (மறுமை நாள்வரை தங்கவைக்கப்பதற்காகக்) கொண்டுசெல்லுங்கள்" என்று கூறுவான்.
ஓர் இறைமறுப்பாளர் உயிர் பிரியும்போது -அந்த உயிரிலிருந்து துர்வாடை கிளம்புவது பற்றியும் வானிலுள்ளோர் அதைச் சபிப்பார்கள் என்பது பற்றியும் புதைல் (ரஹ்) அவர்கள் தெரிவித்ததாக ஹம்மாத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் -வானுலகவாசிகள், "ஒரு தீய ஆன்மா பூமியிலிருந்து வந்திருக்கிறது" என்று கூறுகின்றனர். அப்போது "இதை இறுதித் தவணைவரை கொண்டு செல்லுங்கள்" என்று கூறப்படுகிறது.
இதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுகையில், தம்மிடமிருந்த மிருதுவான துணியைத் தமது மூக்குவரை "இப்படி' கொண்டுசென்றார்கள் என்றும் அபூஹுரைரா (ரலி) அவர்கள் (சைகை செய்து) கூறினார்கள்.

5511 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு பயணத்தில்) நாங்கள் உமர் (ரலி) அவர்களுடன் மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடையே (ஓரிடத்தில்) இருந்தோம். அப்போது (வானில்) பிறை தென்படுகிறதா என நாங்கள் பார்த்தோம். நான் கூர்மையான பார்வையுடைய மனிதனாக இருந்தேன். எனவே, நான் பிறையைப் பார்த்துவிட்டேன். என்னைத் தவிர பிறையைப் பார்த்ததாகக் கூற வேறெவரும் இருக்கவில்லை. அப்போது நான் உமர் (ரலி) அவர்களிடம், "நீங்கள் அதைப் பார்க்கவில்லையா?" என்று கேட்டேன். அதைத் தாம் பார்க்கவில்லை என அவர்கள் கூறலானார்கள். "நான் எனது படுக்கையில் இருக்கும் போது அதைப் பார்ப்பேன்" என்றும் கூறலானார்கள். பிறகு உமர் (ரலி) அவர்கள் பத்ருப் போரில் கலந்துகொண்டவர்களைப் பற்றி எங்களிடம் கூறலானார்கள்.
பத்ருப் போருக்கு முந்தைய நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் பத்ருப் போரில் எதிரிகள் மாண்டு கிடக்கவிருக்கும் இடங்களைக் காட்டலானார்கள். "அல்லாஹ் நாடினால் இதுதான் நாளை இன்ன மனிதன் மாண்டு கிடக்கும் இடம்" என்று குறிப்பிட்டார்கள். சத்திய (மார்க்க)த்துடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அனுப்பியவன் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட இடங்களில் பிசகாமல் சரியாக அவர்கள் மாண்டு கிடந்தனர்.
பிறகு அவர்கள் அனைவரும் ஒரு கிணற்றில் ஒருவர்பின் ஒருவராகப் போடப்படலாயினர். பிறகு அவர்க(ளின் சடலங்க)ளை நோக்கிச் சென்ற அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (அவற்றைப் பார்த்து), "இன்னாரின் மகன் இன்னாரே! இன்னாரின் மகன் இன்னாரே! அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உங்களுக்கு வாக்களித்ததை நீங்கள் உண்மையானதாகக் கண்டீர்களா? ஏனெனில், அல்லாஹ் எனக்கு வாக்களித்ததை நான் உண்மையானதாகக் கண்டேன்" என்று கூறினார்கள்.

நான், "அல்லாஹ்வின் தூதரே! உயிரற்ற சடலங்களிடம் எப்படிப் பேசுகிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் கூறுவதை இவர்களைவிட நன்கு செவியேற்பவர்களாக நீங்கள் இல்லை. எனினும், அவர்களால் எனக்குப் பதிலேதும் கூற முடியாது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5512 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பத்ருப் போரில் கொல்லப்பட்டவர்க(ளின் உடல்)களை மூன்று நாட்கள் (அப்படியே) விட்டுவிட்டார்கள். பிறகு அவர்கள் அருகில் சென்று நின்றுகொண்டு, "அபூஜஹ்ல் பின் ஹிஷாமே! உமய்யா பின் கலஃபே! உத்பா பின் ரபீஆவே! ஷைபா பின் ரபீஆவே! உங்கள் இறைவன் வாக்களித்ததை நீங்கள் உண்மையானதாகக் காணவில்லையா? ஏனெனில், எனக்கு என் இறைவன் வாக்களித்ததை நான் உண்மையானதாகக் கண்டேன்" என்று கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்ட உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அவர்களால் எப்படிக் கேட்க முடியும்? எவ்வாறு அவர்களால் பதிலளிக்க இயலும்? அவர்கள் முடைநாற்றம் வீசும் பிணங்களாகிவிட்டார்களே?" என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன்மீதாணையாக! நான் கூறுவதை இவர்களைவிட நன்கு செவியேற்பவர்களாக நீங்கள் இல்லை. எனினும், அவர்களால் பதிலளிக்க இயலாது" என்று கூறினார்கள். பிறகு அவர்களை இழுத்துச் சென்று கற்சுவர் எழுப்பப்பட்டிருந்த கிணற்றில் போடுமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவர்கள் பத்ரிலிருந்த ஒரு பாழுங்கிணற்றில் போடப்பட்டனர்.

5513 மேற்கண்ட ஹதீஸ் அபூதல்ஹா (ரலி) அவர்களிடமிருந்து இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "பத்ருப்போர் நாளன்று எதிரிகளைத் தோற்கடித்த பின்னர் இருபதுக்கும் அதிகமான, அல்லது இருபத்து நான்கு குறைஷித் தலைவர்களின் சடலங்களைப் பத்ரிலிருந்த உள்சுவர் எழுப்பப்பட்ட கிணறு ஒன்றில் தூக்கிப்போடுமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 19 (மறுமை நாளில்) விசாரணை நடைபெறும் என்பதற்கான சான்று.

5514 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(மறுமை நாளில்) விசாரணை செய்யப்படுபவர் வேதனை செய்யப்படுவார்"என்று சொன்னார்கள். நான், "வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் "எவரது வினைப் பதிவேடு அவரது வலக்கரத்தில் வழங்கப்படுமோ அவரிடம் எளிதான முறையில் விசாரிக்கப்படும்' (84:8) என்றல்லவா கூறுகின்றான்?" என்று கேட்டேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இ(ந்த வசனமான)து, (கேள்வி கணக்கு தொடர்பானது அன்று; மாறாக மனிதர்கள் புரிந்த நன்மை தீமைகளின் பதிவேட்டை) அவர்களுக்கு முன்னால் சமர்ப்பிக்கப்படுவது பற்றியதாகும்;கேள்வி கணக்கின்போது யார் துருவித் துருவி

விசாரிக்கப்படுவாரோ அவர் வேதனை செய்யப்படுவார்" என்று கூறினார்கள். -இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5515 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "(மறுமை நாளில்) விசாரணை செய்யப்படும் எவரும் அழிந்தே போய் விடுவார்" என்று சொன்னார்கள். நான், "அல்லாஹ்வின் தூதரே! "எவரது வினைப் பதிவேடு அவரது வலக்கரத்தில் வழங்கப்படுமோ அவரிடம் எளிதான முறையில் விசாரிக்கப்படும்' (84:8) என்றல்லவா அல்லாஹ் கூறுகின்றான்?" என்று கேட்டேன்.
நபி (ஸல்) அவர்கள், "இது (கேள்வி கணக்கு தொடர்பானது அன்று; மாறாக, மனிதர்கள் புரிந்த நன்மை தீமைகளின் பதிவேடு) அவர்களுக்கு முன்னால் சமர்ப்பிக்கப்படுவது பற்றியதாகும்; எனினும், கேள்வி கணக்கின் போது யார் துருவித்துருவி விசாரிக்கப்படுவாரோ அவர் அழிந்தார்" என்று சொன் னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நபி (ஸல்) அவர்கள் "கேள்விகணக்கின்போது யார் துருவித்துருவி விசாரிக்கப்படுவாரோ அவர் அழிந்தார்' என்று கூறினார்கள்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

**பாடம் : 20 இறப்பின்போது உயர்ந்தோன் அல்லாஹ் குறித்து நல்லெண்ணம் கொள்ளுமாறு வந்துள்ள கட்டளை.**

5116 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் இறப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன்னால், "உங்களில் ஒருவர் அல்லாஹ் குறித்து நல்லெண்ணம் கொள்ளாமல் மரணிக்க வேண்டாம்" என்று கூறியதை நான் கேட்டேன்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிட மிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5517 ஜாபிர் பின் அப்தில்லாஹ் அல் அன்சாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன்னால், "உங்களில் ஒருவர் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் குறித்து நல்லெண்ணம் கொண்டிருக்கும் நிலையில் அல்லாமல் மரணிக்க வேண்டாம்"என்று கூறியதை நான் கேட்டேன்.

5518 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "ஒவ்வோர் அடியாரும், தாம் இறக்கும்போதிருந்த (மன)நிலையிலேயே எழுப்பப்படுவார்" என்று கூறியதை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

-மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.அதில், "நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்" என்ற குறிப்பு இல்லை.

5519 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஒரு சமுதாயத்தின் மீது வேதனையை இறக்க அல்லாஹ் நாடிவிட்டால்,அதிலுள்ளவர்கள் அனைவரையும் அந்த வேதனை தாக்கும். பிறகு அவர்கள் தம் செயல்களுக்கு ஏற்ப (மறுமையில்) எழுப்பப்படுவார்கள்" என்று கூறியதை நான் கேட்டேன்.

## அத்தியாயம் : 52 - குழப்பங்களும், மறுமை நாளின் அடையாளங்களும்

**பாடம் : 1 குழப்பங்கள் நெருங்கிவிட்டதும், யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச்சுவர் திறந்துவிட்டதும்.**

5520 ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) நபி (ஸல்) அவர்கள் (திடுக்கிட்டுத்) தூக்கத்திலிருந்து விழித்தெழுந்து, "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. நெருங்கிவிட்ட ஒரு தீமையின் காரணமாக அரபியருக்குக் கேடுதான். இன்று யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச் சுவரிலிருந்து இந்த அளவுக்குத் திறக்கப்பட்டுள்ளது" என்று கூறினார்கள்.
-அறிவிப்பாளர் சுஃப்யான் பின் உயைனா (ரஹ்) அவர்கள் ("இந்த அளவுக்கு' என்று கூறியபோது) தம் கைவிரல்களால் (அரபி எண் வடிவில்) 10 என்று மடித்துக் காட்டினார்கள்.-
அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! நல்லவர்கள் நம்மிடையே இருக்கும்போதா நமக்கு அழிவு ஏற்படும்?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "ஆம்; தீமை பெருத்து விட்டால்" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5521 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் முகம் சிவந்த நிலையில் பதற்றத்துடன் "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை. நெருங்கிவிட்ட ஒரு தீமையின் காரணமாக அரபியருக்குக் கேடு தான். இன்று யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச் சுவரிலிருந்து இந்த அளவுக்குத் திறக்கப் பட்டுள்ளது" என்று கூறியபடி வெளியேறினார்கள்.
("இந்த அளவுக்கு' என்று கூறியபோது) பெருவிரலையும் அதற்கு அடுத்துள்ள (சுட்டு) விரலையும் வளையமிட்டுக் காட்டினார்கள். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! நல்லவர்கள் நம்மிடையே இருக்கும்போதுமா நமக்கு அழிவு ஏற்படும்?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "ஆம்; தீமை பெருத்துவிட்டால்" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5522 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "இன்று யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச் சுவரிலிருந்து இந்த அளவுக்குத் திறக்கப்பட்டுள்ளது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான உஹைப் பின் காலித் (ரஹ்) அவர்கள், ("இந்த அளவுக்கு' என்று கூறியபோது) தம் விரல்களால் (அரபி எண் வடிவில்) 90 என்று மடித்துக் காட்டினார்கள்.

## பாடம் : 2 இறையில்லம் கஅபாவை நாடிவரும் படையினர் பூமிக்குள் புதைந்துபோவது பற்றிய முன்னறிவிப்பு.

5523 உபைதுல்லாஹ் இப்னு கிப்திய்யா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஹாரிஸ் பின் அபீரபீஆ மற்றும் அப்துல்லாஹ் பின் ஸஃப்வான் (ரஹ்) ஆகியோர் இறைநம்பிக்கையாளர்களின் அன்னை உம்மு சலமா (ரலி) அவர்களிடம் சென்றனர். அப்போது அவ்விருவருடன் நானும் இருந்தேன். அவர்கள் இருவரும் உம்மு சலமா (ரலி) அவர்களிடம், பூமிக்குள் புதைந்துபோகும் படையினரைப் பற்றிக் கேட்டார்கள். -இது அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களின் காலத்தில் நடைபெற்றது.-
அதற்கு உம்மு சலமா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒருவர் இறையில்லம் கஅபா (எல்லை)க்குள் அபயம் தேடி வருவார். அவரை நோக்கிப் படையொன்று அனுப்பப்படும். அப்படையினர் ஒரு சமவெளியில் இருக்கும்போது, பூமிக்குள் புதைந்துபோய் விடுவார்கள்" என்று சொன்னார்கள்.
உடனே நான், "அல்லாஹ்வின் தூதரே! நிர்பந்தமாகப் புறப்பட்டு வந்தவரின் நிலை என்ன?" என்று கேட்டேன். "அவர்களுடன் சேர்த்து அவரும் புதைந்துபோவார். எனினும், மறுமை நாளில் அவரது எண்ணத்திற்கேற்ப அவர் எழுப்பப்படுவார்" என்று கூறினார்கள் என்றார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூஜஅஃபர் (ரஹ்) அவர்கள், "('சமவெளி' என்பது) மதீனாவிலுள்ள சமவெளி (பைதாஉல் மதீனா) ஆகும்" என்று கூறினார்கள்.

5524 மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் அப்துல் அஸீஸ் பின் ருஃபைஉ (ரஹ்) அவர்கள், "நான் அபூஜஅஃபர் (ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது, "பூமியில் ஒரு சமவெளியில் என்றே உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறினார்கள்' என்றேன். அதற்கு அபூஜஅஃபர் (ரஹ்) அவர்கள், "அவ்வாறில்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! அது மதீனாவிலுள்ள பைதா(சமவெளி) ஆகும்' என்று கூறினார்கள்" என்றார்கள்.

5525 ஹஃப்ஸா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
நபி (ஸல்) அவர்கள், "இந்த இறையில்லத்தின் மீது போர் தொடுக்க எண்ணி ஒரு படையினர் நிச்சயமாக வருவார்கள். அவர்கள் பூமியில் ஒரு சமவெளியில் இருக்கும்போது, நடுவிலுள்ள அணியினர் பூமிக்குள் புதைந்து போவார்கள். முன்னாலுள்ள அணியினர் பின்னாலிருக்கும் அணியினரை அழைப்பார்கள். பிறகு அவர்களும் பூமிக்குள் புதைந்து போவார்கள். இறுதியில் அங்கிருந்து தப்பித்து வந்து, அவர்களைப் பற்றிய செய்தி அறிவிப்பவர் மட்டுமே எஞ்சியிருப்பார்.
(இதை அப்துல்லாஹ் பின் ஸஃப்வான் (ரஹ்) அவர்கள் அறிவித்தபோது,) ஒரு மனிதர், "நீர் ஹஃப்ஸா (ரலி) அவர்களின் மீது பொய்யுரைக்கவில்லை என நான் சாட்சியம் கூறுகிறேன். மேலும், ஹஃப்ஸா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் மீது பொய்யுரைக்கவில்லை என்றும் நான் சாட்சியமளிக்கிறேன்" என்றார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5526 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இந்த இல்லத்தை -அதாவது கஅபாவை- நோக்கி அபயம் தேடி ஒரு கூட்டத்தார் வருவார்கள். அவர்களிடம் ஆதரவுப் படையினரோ ஆட்பலமோ முன்னேற்பாடோ இருக்காது. (அவர்களைத் தாக்குவதற்காக) படை ஒன்று அவர்களிடம் அனுப்பப்படும். அப்படையினர் ஒரு சமவெளியில் இருக்கும்போது அவர்கள் பூமிக்குள் புதைந்து போய்விடுவார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான யூசுஃப் பின் மாஹக் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
(இந்த ஹதீஸை அப்துல்லாஹ் பின் ஸஃப் வான் (ரஹ்) அவர்கள் எனக்கு அறிவித்த போது) நான், "ஷாம் (சிரியா)வாசிகள் அன்றைய நாளில் மக்கா நோக்கிப் பயணம் மேற்கொள்வார்கள்" என்று சொன்னேன். அதற்கு அப்துல்லாஹ் பின் ஸஃப்வான் (ரஹ்) அவர்கள், "அறிந்துகொள்ளுங்கள்! அது (பூமிக்குள் புதைந்துபோகும்) இந்தப் படையல்ல" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஸைத் பின் அபீஉனைசா (ரஹ்) அவர்கள் வாயிலாக மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது. ஆயினும், அதில் அப்துல்லாஹ் பின் ஸஃப்வான் (ரஹ்) அவர்கள் கூறிய படையினர் பற்றிய குறிப்பு இல்லை.

5527 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் படுக்கையில் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தார்கள். நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் உறங்கும்போது ஏதோ செய்துகொண்டிருந்தீர்கள். இவ்வாறு நீங்கள் எப்போதும் செய்வதில்லையே!" என்று கேட்டோம். அதற்கு, "ஓர் ஆச்சரியமான செய்தி(யினால் நான் அவ்வாறு செய்து கொண்டிருந்தேன்).என் சமுதாயத்தாரில் சிலர், இறையில்லம் கஅபாவில் தஞ்சம் புகுந்துள்ள குறைஷியரில் ஒருவருக்காக இறையில்லத்தை நோக்கி (படையெடுத்து) வருவார்கள். அவர்கள் ("பைதா எனும்) சமவெளியில் இருக்கும்போது பூமிக்குள் புதைந்துபோவார்கள்" என்று கூறினார்கள்.
நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! சாலையில் பல்வேறு மக்களும் திரண்டிருப்பார்களே (அவர்கள் அனைவரும் புதைந்துபோவார்களே)?" என்று கேட்டோம். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்; அவர்களில் பார்வையாளர்கள், நிர்பந்தமாக அழைத்து வரப்பட்டவர்கள், வழிப்போக்கர்கள் ஆகியோரும் இருப்பார்கள். அவர்கள் அனைவரும் ஒட்டுமொத்தமாக அழிந்துபோவார்கள். பிறகு பல்வேறு நிலைப்பாடு கொண்டவர்களாய் அவர்கள் எழுப்பப்படுவார்கள். அவர்களின் எண்ணங்களுக்கேற்ப அவர்களை அல்லாஹ் (மறுமை நாளில்) எழுப்புவான்" என்று சொன்னார்கள்.

## பாடம் : 3 மழைத் துளிகள் விழுவதைப் போன்று குழப்பங்கள் (தொடர்ந்து) நிகழும் என்பது பற்றிய முன்னறிவிப்பு.

5528 உசாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் மதீனாவின் கோட்டைகளில் ஒன்றின் மீது ஏறிக்கொண்டு (நோட்டமிட்டபடி), "நான் பார்க்கின்றவற்றை நீங்கள் பார்க்கிறீர்களா? நான் மழைத்துளிகள் விழுவதைப் போன்று உங்கள் வீடுகள் நெடுகிலும் குழப்பங்கள் நிகழப்போவதைப் பார்க்கிறேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் உசாமா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5529 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
விரைவில் குழப்பங்கள் சில தோன்றும். அவற்றுக்கிடையே (மௌனமாகி) அமர்ந்திருப்பவர், (அவற்றுக்காக) எழுந்து நிற்பவரை விடவும், அவற்றுக்கிடையே எழுந்து நிற்பவர், நடப்பவரை விடவும், அவற்றுக்கிடையே நடப்பவர், (அவற்றை நோக்கி) ஓடுபவரைவிடவும் சிறந்தவர் ஆவார்.
அவற்றில் யார் தம்மை ஈடுபடுத்திக்கொள்கிறாரோ அவரை அழிக்க அவை முற்படும். அப்போது யார் ஒரு புகலிடத்தைப் பெறுகிறாரோ, அவர் அதன் மூலம் தம்மைத் தற்காத்துக் கொள்ளட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5530 மேற்கண்ட ஹதீஸ் நவ்ஃபல் பின் முஆவியா பின் உர்வா (ரலி) அவர்கள் வாயிலாக மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "தொழுகைகளில் ஒன்று (அஸ்ர்) உள்ளது. அதைத் தவறவிட்டவர் தம் குடும்பத்தாரையும் சொத்துக்களையும் விட்டுத் தனிமைப்படுத்தப்பட்டதைப் போன்றவர் ஆவார்" என்று கூடுதலாக இடம் பெற்றுள்ளது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

5531 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சில குழப்பங்கள் தோன்றும். அப்போது படுத்து உறங்கிக்கொண்டிருப்பவர் விழித்திருப்பவரை விடவும், விழித்திருப்பவர் (அவற்றுக்காக) எழுந்து நடப்பவரைவிடவும், அவற்றுக்காக எழுந்து நடப்பவர் (அவற்றுக்காக) எழுந்து ஓடுபவரைவிடவும் சிறந்தவர் ஆவார். அப்போது யார் ஒரு புகலிடத்தையோ காப்பிடத்தையோ பெறுகின்றாரோ அவர் (அதன் மூலம்) தம்மைத் தற்காத்துக் கொள்ளட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5532 உஸ்மான் அஷ்ஷஹ்ஹாம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் ஃபர்கத் அஸ்ஸபகீ (ரஹ்) அவர்களும் முஸ்லிம் பின் அபீபக்ரா (ரஹ்) அவர்களிடம் அவர்களது வசிப்பிடத்திற்குச் சென்றோம். அவர்களிடம் நாங்கள் சென்றடைந்து, "குழப்பங்கள் தொடர்பாக தாங்கள் தங்கள் தந்தை (அபூபக்ரா-ரலி) அறிவித்த ஹதீஸ் எதையேனும் செவியுற்றீர்களா?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள் கூறினார்கள்: "ஆம்' (என் தந்தை) அபூபக்ரா (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறியதைக் கேட்டேன்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "விரைவில் குழப்பங்கள் சில தோன்றும். அறிந்து கொள்ளுங்கள். பின்னர் ஒரு குழப்பம் தோன்றும். அதற்கிடையே உட்கார்ந்து கொண்டிருப்பவர் (அதற்காக) எழுந்து நடப்பவரை விடவும், அதற்காக எழுந்து நடப்பவர் அதை நோக்கி ஓடுபவரைவிடவும் சிறந்தவர் ஆவார். கவனத்தில் கொள்ளுங்கள்: அந்தக் குழப்பம் நிகழ்ந்துவிட்டால் தம்மிடம் ஒட்டகங்கள் வைத்திருப்பவர், அவற்றிடம் சென்றடையட்டும்.

தம்மிடம் ஆடுகள் வைத்திருப்பவர், அவற்றிடம் சென்றடையட்டும். தம்மிடம் நிலம் வைத்திருப்பவர் தமது நிலத்திற்குச் சென்றுவிடட்டும்" என்று கூறினார்கள்.

அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! தம்மிடம் ஒட்டகமோ ஆடோ நிலமோ இல்லாதவர் என்ன செய்யவேண்டும் எனக் கூறுகிறீர்கள்?" என்று கேட்டார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர் தமது வாள்முனையை ஒரு கல்லால் அடித்து முறித்துவிட்டு,(சண்டையிலிருந்து) தம்மைத் தற்காத்துக்கொள்ள முடிந்தால் அவர் தற்காத்துக் கொள்ளட்டும்" என்று கூறினார்கள். (பின்னர்) "இறைவா! (நீ தெரிவிக்கச் சொன்னவற்றை) நான் தெரிவித்துவிட்டேனா? இறைவா! நான் தெரிவித்துவிட்டேனா? இறைவா! நான் தெரிவித்து விட்டேனா?" என்று (மூன்று முறை) கூறினார்கள்.

அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! (குழப்பமான காலகட்டத்தில்) என்னைக் கட்டாயப்படுத்தி இரு அணிகளில் ஒன்றுக்கு, அல்லது இரு குழுக்களில் ஒன்றுக்கு நான் இழுத்துச் செல்லப்பட்டு, என்னை ஒரு மனிதர் தமது வாளால் வெட்டிவிட்டால், அல்லது எங்கிருந்தோ வந்த மர்ம அம்பு என்னைக் கொன்றுவிட்டால் (எனது நிலை) என்ன கூறுங்கள்" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அ(வ்வாறு செய்த)வர், தமது பாவத்துடனும் உமது பாவத்துடனும் திரும்பிச் சென்று, நரகவாசிகளில் ஒருவராகிவிடுவார்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் வகீஉ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "தம்மைத் தற்காத்துக்கொள்ள முடிந்தால் அவர் தம்மைத் தற்காத்துக்கொள்ளட்டும்" என்பதோடு ஹதீஸ் நிறைவடைகிறது. அதற்குப் பின்னுள்ள குறிப்புகள் இடம்பெற வில்லை. இப்னு அபீஅதீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (மேற்கண்ட ஹதீஸில் உள்ள விவரங்கள்) முழுமையாக இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 4 இரண்டு முஸ்லிம்கள் வாட்களால் சந்தித்துக்கொண்டால்...

5533 அஹ்னஃப் பின் கைஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(அலீ (ரலி) அவர்களது காலத்தில் உள்நாட்டு அரசியல் குழப்பம் தலைதூக்கியிருந்த காலகட்டத்தில்) நான் இந்த மனிதரை (அலீ (ரலி) அவர்களை) நாடிப் புறப்பட்டேன். அப்போது என்னை அபூபக்ரா (ரலி) அவர்கள் எதிர்கொண்டு, "எங்கே செல்கிறீர்?" என்று கேட்டார்கள்.

நான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய பெரிய தந்தையின் மகன் -அதாவது அலீ (ரலி)- அவர்களுக்கு உதவப்போகிறேன்" என்று சொன்னேன். அப்போது அவர்கள், "அஹ்னஃபே! திரும்பிச் சென்றுவிடுங்கள். ஏனெனில்,அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், 'இரண்டு முஸ்லிம்கள் தம் வாட்களால் ஒருவரையொருவர் சந்தித்(து சண்டையிட்டு மடிந்)தால் அவர்களில் கொன்றவர், கொல்லப்பட்டவர் ஆகிய இருவருமே நரகத்திற்குச் செல்வார்கள்'என்று கூறியதை நான் கேட்டேன்.
அப்போது "அல்லாஹ்வின் தூதரே! இவர் கொலைகாரர் (தண்டனை பெறுவது சரிதான்); ஆனால், கொல்லப்பட்டவரின் நிலை என்ன?' என்று கேட்கப்பட்டது. அல்லது நான் கேட்டேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கொல்லப்பட்டவரும் தம் தோழரைக் கொல்ல வேண்டும் என்ற எண்ணத்துடன்தான் இருந்தார்' என்று பதிலளித்தார்கள்" என்றார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5534 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரண்டு முஸ்லிம்கள் தம் வாட்களால் ஒருவரையொருவர் சந்தித்(து மடிந்)தால் அவர்களில் கொன்றவர்,கொல்லப்பட்டவர் ஆகிய இருவருமே நரகத்திற்குச் செல்வார்கள்.
இதை அபூபக்ரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5535 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரண்டு முஸ்லிம்கள் பரஸ்பரம் தம் சகோதரருக்கு எதிராக ஆயுதமேந்தும்போது, அவர்கள் இருவருமே நரகத்தின் விளிம்பில் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் மற்றவரைக் கொன்றுவிட்டால், அவர்கள் இருவருமே நரகத்திற்குள் நுழைந்துவிடுகின்றனர்.
இதை அபூபக்ரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5536 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: இரு பெருங்குழுவினர் ஒருவரோடொருவர் போரிட்டுக் கொள்ளாதவரை யுக முடிவு நாள் வராது. அவ்விரு குழுக்களிடையே பெரும் போர் நிகழும். ஆனால்,அவ்விரு குழுவினரும் முன்வைக்கும் வாதம் ஒன்றாகவே இருக்கும்.

5537 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஹர்ஜ் பெருகாதவரை யுக முடிவு நாள் வராது" என்று கூறினார்கள். மக்கள், "ஹர்ஜ் என்றால் என்ன, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "கொலை; கொலை" என்று பதிலளித்தார்கள்.

**பாடம் : 5 இந்தச் சமுதாயத்தில் சிலரால் சிலருக்கு அழிவு ஏற்படும் (என்பது பற்றிய முன்னறிவிப்பு).**

5538 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் எனக்காகப் பூமியைச் சுருட்டிக் காட்டினான். நான் அதன் கிழக்குப் பகுதிகளையும் மேற்குப் பகுதிகளையும் பார்த்தேன். அதில் எனக்குச் சுருட்டிக் காட்டப்பட்ட அளவுக்கு என் சமுதாயத்தாரின் ஆட்சி விரிவடையும். எனக்குச் சிவப்பு மற்றும் வெள்ளை நிறத்தாலான (தங்கம் மற்றும் வெள்ளியின்) இரு கருவூலங்கள் வழங்கப்பட்டன. நான் என் இறைவனிடம் என் சமுதாயத்தைப் பஞ்சத்தால் ஒட்டுமொத்தமாக அழித்துவிடாதே எனப் பிரார்த்தித்தேன்.

மேலும், "அவர்கள்மீது அவர்களிடையே உள்ள எதிரிகளைத் தவிர வெளி எதிரிகளைச் சாட்டி விடாதே. அவ்வாறு நீ சாட்டினால், அவர்களது ஆட்சியும் கண்ணியமும் முற்றாக அழிந்துவிடும்" என்றும் பிரார்த்தித்தேன்.
என் இறைவன், "முஹம்மதே! நான் ஒன்றை முடிவு செய்துவிட்டால் அது மாற்றப்படாது. நான் உம்முடைய சமுதாயத்தைப் பஞ்சத்தால் ஒட்டுமொத்தமாக அழிக்கமாட்டேன் என்பதை உமக்கு (வாக்குறுதியாக) அளிக்கிறேன். மேலும், அவர்களுக்கெதிராக அவர்களிடையேயுள்ள எதிரிகள் அல்லாமல் வெளி எதிரிகளைச் சாட்டி, அவர்களது ஆட்சியை முற்றாக அழிக்கமாட்டேன்; எதிரிகள் பூமியின் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் அவர்களுக்கு எதிராகத் திரண்டாலும் சரியே! ஆனால், அவர்களிலேயே சிலர் சிலரை அழிப்பார்கள். அவர்களிலேயே சிலர் சிலரைச் சிறைபிடிப்பார்கள்" என்று கூறினான்.
இதை ஸவ்பான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஸவ்பான் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ் எனக்காகப் பூமியைச் சுருட்டிக் காட்டினான். நான் அதன் கிழக்குப் பகுதிகளையும் மேற்குப் பகுதிகளையும் பார்த்தேன். மேலும், சிவப்பு மற்றும் வெள்ளை நிறத்தாலான (தங்கம் மற்றும் வெள்ளியாலான) இரு கருவூலங்களை எனக்கு வழங்கினான்..." என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5539 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மதீனா புறநகரில் மேட்டுப் பகுதியான) "ஆலியா'விலிருந்து வந்து பனூ முஆவியா பள்ளிவாசலைக் கடந்து சென்றார்கள். அப்போது பள்ளிவாசலுக்குள் நுழைந்து இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். அவர்களுடன் நாங்களும் தொழுதோம். பிறகு நீண்ட நேரம் தம் இறைவனிடம் பிரார்த்தித்தார்கள்.
பிறகு எங்களை நோக்கித் திரும்பி, "நான் என் இறைவனிடம் மூன்று கோரிக்கைகளை முன்வைத்துப் பிராத்தித்தேன். அவற்றில் இரண்டை எனக்குத் தந்தான்; ஒன்றை மறுத்து விட்டான். நான் என் இறைவனிடம், "என் சமுதாயத்தாரை (ஒட்டுமொத்தமாக) பஞ்சத்தால் அழித்துவிடாதே' என்று பிரார்த்தித்தேன். அதை எனக்கு அவன் வழங்கினான். அவனிடம் நான் "என் சமுதாயத்தாரை வெள்ள நீரில் (ஒட்டுமொத்தமாக) மூழ்கடித்துவிடாதே' என்று பிரார்த்தித்தேன். அதையும் எனக்கு அவன் வழங்கினான். அவனிடம் நான் "(என் சமுதாயத்தார்) தமக்கிடையே மோதிக்கொள்ளக்கூடாது' எனப் பிரார்த்தித்தேன். ஆனால், (அந்தப் பிரார்த்தனையை ஏற்க) அவன் மறுத்துவிட்டான்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5540 மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ("ஆலியா' பகுதியிலிருந்து) வந்தேன். அப்போது அவர்களுடன் அவர்களுடைய தோழர்களில் சிலரும் இருந்தனர். அப்போது

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பனூ முஆவியா பள்ளிவாசலைக் கடந்து சென்றார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

பாடம் : 6 யுக முடிவு நாள்வரை நிகழவிருப்பது பற்றி நபி (ஸல்) அவர்கள் செய்த முன்னறிவிப்பு.

5541 அபூஇத்ரீஸ் அல்கவ்லானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! நான்,எனக்கும் யுக முடிவு நாளுக்குமிடையே நிகழப்போகும் குழப்பங்கள் குறித்து மக்களிலேயே நன்கு அறிந்தவன் ஆவேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைக் குறித்து எனக்குச் சிலவற்றை இரகசியமாகச் சொல்லியிருந்ததே அதற்குக் காரணமாகும். மற்றவர்கள் அவற்றை அறிவிக்கவில்லை.
எனினும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் அவையில் குழப்பங்கள் குறித்துப் பேசினார்கள். அங்கு நானும் இருந்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (நிகழப்போகும்) குழப்பங்களை எண்ணிக் கணக்கிட்டபடி, "அவற்றில் மூன்று குழப்பங்கள் உள்ளன. அவை எதையுமே விட்டுவைக்காது. அவற்றில் இன்னும் சில குழப்பங்கள் உள்ளன. அவை கோடைகால (வெப்பக்)காற்றைப் போன்றவையாகும். அவற்றில் சிறிய குழப்பங்களும் உள்ளன;பெரிய குழப்பங்களும் உள்ளன" என்று கூறினார்கள்.
(இந்தச் செய்தியைச் செவியுற்ற) அக்குழுவினரில் என்னைத் தவிர மற்ற அனைவரும் (இறந்து) போய்விட்டனர்.

5542 ஹுதைஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடையே நீண்ட நேரம் நின்று கொண்டு, யுக முடிவு நாள் ஏற்படும் வரையிலான எந்தத் தகவலையும் ஒன்றுவிடாமல் குறிப்பிட்டார்கள். அதை மனனமிட்டவர்கள் மனனமிட்டுக்கொண்டார்கள். அதை மறந்தவர்கள் மறந்து விட்டார்கள். இதோ இந்த என் தோழர்கள் அதை அறிந்துகொண்டனர். அவற்றில் ஏதேனும் ஒன்றை நான் மறந்துவிட்டிருந்தாலும் அதை நேரில் காணும் போது, அது என் நினைவிற்கு வந்துவிடும்; தம்மைவிட்டு மறைந்துவிட்ட ஒருவரது முகத்தை (மீண்டும்) பார்க்கும்போது அவரை ஒருவர் அடையாளம் கண்டுகொள்வதைப் போன்று.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஹுதைஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அதை மறந்தவர்கள் மறந்துவிட்டார்கள்" என்பதுவரையே இடம்பெற்றுள்ளது. அதற்குப் பின்னுள்ளவை இடம்பெறவில்லை.

5543 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், யுக முடிவு நாள்வரை ஏற்படும் (குழப்பங்கள்) அனைத்தையும் பற்றி எனக்குத் தெரிவித்தார்கள். அவற்றில் ஒவ்வொன்றைக் குறித்தும் அவர்களிடம் நான் கேள்வி கேட்(டுத் தெரிந்து கொண்)டேன். ஆனால், "மதீனாவாசிகளை மதீனாவிலிருந்து வெளியேற்றுவது எது?" என்பதைப் பற்றி அவர்களிடம் நான் கேட்கவில்லை.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5544 அபூஸைத் அம்ர் பின் அக்தப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு "ஃபஜ்ர்' தொழுகை தொழுவித்து விட்டு, சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதேறி எங்களுக்கு உரையாற்றினார்கள். இறுதியில் லுஹர் தொழுகை நேரம் வந்தபோது (மேடையிலிருந்து) இறங்கி, தொழுவித்துவிட்டுப் பிறகு மீண்டும் மேடைமீதேறி "அஸ்ர்' தொழுகைவரை உரையாற்றினார்கள். பிறகு மேடையிலிருந்து இறங்கி (அஸ்ர் தொழுகை) தொழுவித்து விட்டு பிறகு மறுபடியும் மேடைமீதேறி சூரியன் மறையும்வரை உரையாற்றினார்கள். நடந்தவை, நடக்கவிருப்பவை அனைத்தையும் பற்றி (அன்று) எங்களுக்குத் தெரிவித்தார்கள். எங்களில் நன்கறிந்தவர் (அவற்றை) நன்கு மனனமிட்டவர் ஆவார்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 7 கடல் அலை போன்று அடுக்கடுக்காய் வரும் குழப்பங்கள்.

5545 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் (ஒருமுறை கலீஃபா) உமர் (ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள், "உங்களில் யார் (இனி தலைதூக்கவிருக்கும்) குழப்பங்கள் (ஃபித்னா) பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னதை, அவர்கள் சொன்னதைப் போன்றே நினைவில் வைத்திருக்கிறார்?" என்று கேட்டார்கள். "நான் (நினைவில் வைத்திருக்கிறேன்)"என்றேன்.
அதற்கு உமர் (ரலி) அவர்கள் "நீர் துணிவு மிக்க மனிதர்தான்" என்று கூறிவிட்டு, "எப்படிச் சொன்னார்கள்?" என்று கேட்டார்கள். நான், "ஒரு மனிதன் தன் குடும்பத்தார் விஷயத்திலும் (அதாவது அவர்கள்மீது அளவு கடந்த பாசம் வைத்திருப்பதன் மூலமும்), தனது செல்வம் விஷயத்திலும் (அதாவது அது இறைவனைப் பணிந்து வாழும் வாழ்க்கையிலிருந்து திசை திருப்புவதன் மூலமும்), தன் விஷயத்திலும், தன் குழந்தை குட்டிகள் விஷயத்திலும், தன் அண்டை வீட்டார் விஷயத்திலும் (நிறைவேற்ற வேண்டிய உரிமைகளில் குறைவைப்பதன் மூலமும்) சோதனையில் (ஃபித்னா) ஆழ்த்தப்படும்போது தொழுகை, தானதர்மம், நன்மை புரியும்படி ஏவுதல், தீமையிலிருந்து தடுத்தல் ஆகியவை அதற்கான பரிகாரமாக அமையும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதைக் கேட்டேன் என்றேன்.

உமர் (ரலி) அவர்கள், "நான் (சோதனை எனும் பொருள் கொண்ட ஃபித்னாவான) இதைப் பற்றிக் கேட்கவில்லை. கடல் அலையைப் போன்று அடுக்கடுக்காக ஏற்படக்கூடிய (அல்லாஹ்வின் தூதரால் முன்னறிவிப்புச் செய்யப்பட்ட "குழப்பம்'எனும் பொருள் கொண்ட ஃபித்னா)வைப் பற்றியே கேட்கிறேன்" என்று சொன்னார்கள்.
நான், "இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! உங்களுக்கும் அதற்குமிடையே என்ன தொடர்பு? (அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை.) உங்களுக்கும் அதற்குமிடையே மூடப்பட்ட கதவொன்று உள்ளது (உங்கள் ஆட்சியில் அவற்றில் ஏதும் தலைதூக்கப் போவதில்லை)" என்று கூறினேன்.

உமர் (ரலி) அவர்கள், "அந்தக் கதவு உடைக்கப்படுமா? அல்லது திறக்கப்படுமா?" என்று கேட்டார்கள். நான், "இல்லை;அது உடைக்கப்படும்" என்று பதிலளித்தேன். அதற்கு உமர் (ரலி) அவர்கள், "(அப்படியானால்) அது ஒருபோதும் மூடப்படாமலிருக்க ஏற்றதே ஆகும்" என்று சொன்னார்கள்.
(இதன் அறிவிப்பாளரான) ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நாங்கள் ஹுதைஃபா (ரலி) அவர்களிடம், "உமர் (ரலி) அவர்கள் அந்தக் கதவு (என்பது) யாரைக் குறிக்கும் என அறிந்திருந்தார்களா?" என்று கேட்டோம்.
ஹுதைஃபா (ரலி) அவர்கள், "ஆம்; பகலுக்குமுன் இரவு உண்டு என்பதை அறிவதைப் போன்று உமர் (ரலி) அவர்கள் அதை அறிந்திருந்தார்கள். ஏனெனில், பொய்கள் கலவாத செய்தியையே நான் அவருக்கு அறிவித்தேன்" என்று பதிலளித்தார்கள்.
அந்தக் கதவு என்பது யாரைக் குறிக்கிறது என ஹுதைஃபா (ரலி) அவர்களிடம் கேட்க நாங்கள் அஞ்சினோம். எனவே,அவர்களிடம் மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்களைக் கேட்கச் சொன்னோம். அவர் (அந்தக் கதவு என்பது யாரைக் குறிக்கிறது என்று) கேட்டதற்கு ஹுதைஃபா (ரலி) அவர்கள், "உமர் (ரலி) அவர்கள்தான் அந்தக் கதவு" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5546 மேற்கண்ட ஹதீஸ் ஹுதைஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஐந்து அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஹுதைஃபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "உமர் (ரலி) அவர்கள், "குழப்பங்கள்' (ஃபித்னா) பற்றி எமக்கு அறிவிப்பவர் யார்?" என்று கேட்டார்கள் என ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5547 ஜுன்துப் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(கூஃபாவாசிகள் உஸ்மான் (ரலி) அவர்கள் நியமனம் செய்த ஆளுநரைத் திருப்பியனுப்பிய) "அல்ஜரஆ' தினத்தன்று நான் (கூஃபாவில் ஓரிடத்திற்கு) வந்தேன். அப்போது, அங்கு ஒரு மனிதர் அமர்ந்திருந்தார்.
நான், "இன்றைய தினம் இங்கு இரத்த ஆறு ஓடப்போகிறது" என்று சொன்னேன். அந்த மனிதர், "அல்லாஹ்வின் மீதாணையாக! இல்லை; (இரத்த ஆறு ஓடாது)" என்று சொன்னார். நான், "ஆம்; அல்லாஹ்வின் மீதாணையாக! (இரத்த ஆறு ஓடும்)" என்றேன். அந்த மனிதர், "அல்லாஹ்வின் மீதாணையாக! இல்லை (ஓடாது)" என்றார். நான், "ஆம்;அல்லாஹ்வின் மீதாணையாக (இரத்த ஆறு ஓடும்)" என்றேன். அவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! இல்லை (இரத்த ஆறு ஓடாது). இவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள்" என்றார்.
நான், "இன்று முதல் நீர் எனக்கு ஒரு தீயநண்பர் ஆவீர். நான் உமக்கு மாறாகப் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டுக்கொண்டிருக்கிறீர். நீர் இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றிருந்தும் (ஆரம்பத்திலேயே) என்னை நீர் தடுக்கவில்லையே?" என்று சொன்னேன். பிறகு "ஏனிந்தக் கோபம்?' என்று (எனக்கு நானே)

கூறிக்கொண்டு, அவரை நோக்கிச் சென்று அவரைப் பற்றி விசாரித்தேன். அந்த மனிதர் ஹுதைஃபா (ரலி) அவர்களாவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 8 யூப்ரடீஸ் நதி வற்றி, தங்க மலை ஒன்றை வெளிப்படுத்தாத வரை யுக முடிவு நாள் வராது.**

5548 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(மேற்காசியாவில் பாயும்) யூப்ரடீஸ் நதியானது வற்றி, தங்க மலை ஒன்றை வெளிப்படுத்தாத வரை யுக முடிவு நாள் வராது. அதற்காக (உரிமை கொண்டாடி) மக்கள் சண்டையிட்டுக்கொள்வர். அப்போது ஒவ்வொரு நூறு பேரிலிருந்தும் தொண்ணூற்றொன்பது பேர் கொல்லப்படுவர். அவர்களில் ஒவ்வொருவரும் "உயிர் பிழைப்பவர் நானாக இருக்க வேண்டுமே!' என்று கூறுவர்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் தக்வான் (ரஹ்) அவர்கள், "அதை நீ கண்டால், அதை நெருங்க வேண்டாம்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகக் கூடுதலாக அறிவிக்கிறார்கள்.

5549 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யூப்ரடீஸ் நதியானது வற்றி, தங்கப் புதையல் ஒன்றை வெளிப்படுத்தப்போகிறது. அப்போது அங்கிருப்பவர்கள் அதிலிருந்து எதையும் எடுத்துவிட வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5550 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யூப்ரடீஸ் நதியானது வற்றி, தங்கமலை ஒன்றை வெளிப்படுத்தப்போகிறது. அப்போது அங்கிருப்பவர்கள் அதிலிருந்து எதையும் எடுத்துவிட வேண்டாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5551 அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் பின் நவ்ஃபல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் உபை பின் கஅப் (ரலி) அவர்களுடன் நின்றுகொண்டிருந்தேன். அப்போது அவர்கள், "உலகத்தைத் தேடுவதில் மக்கள் தம் கழுத்துகளை நீட்டிக் கொண்டேயிருக்கிறார்கள் (அல்லவா?)" என்று கூறினார்கள். நான் "ஆம்' என்றேன். அதற்கு உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறியதை நான் கேட்டுள்ளேன்:
யூப்ரடீஸ் நதியானது வற்றி, தங்கமலை ஒன்றை வெளிப்படுத்தப்போகிறது. அதைப் பற்றி மக்கள் கேள்விப்படும்போது,அதை நோக்கிச் செல்வார்கள். அப்போது அந்த மலை அருகில் இருப்பவர், "அதிலிருந்து சிறிதளவை எடுத்துக்கொள்ளட்டும் என மக்களை நாம் விட்டு விட்டால், முழுவதுமாகக் கொண்டு போய்விடுவார்கள்" என்று கூறுவார். எனவே, அதற்காகச் சண்டையிட்டுக்கொள்வார்கள். அப்போது ஒவ்வொரு நூறு பேரிலிருந்தும் தொண்ணூற்றொன்பது பேர் கொல்லப்படுவார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூகாமில் ஃபுளைல் பின் ஹுஸைன் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நானும் உபை பின் கஅப் (ரலி) அவர்களும் ஹஸ்ஸான் கோட்டையின் நிழலில் நின்று கொண்டிருந்தோம்" என (அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் பின் நவ்ஃபல் (ரஹ்) அவர்கள் கூறியதாக) ஹதீஸ் ஆரம்பமாகிறது.

5552 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இராக், தனது (நாணயமான) திர்ஹமையும் (அளவையான) கஃபீஸையும் (தர) மறுக்கும். ஷாம், (சிரியா) தனது (அளவையான) "முத்யு'வையும் தீனாரையும் (தர) மறுக்கும். மிஸ்ர் (எகிப்து), தனது (அளவையான) "இர்தப்பை'யும் தீனாரையும் (தர) மறுக்கும். ஆரம்ப நிலைக்கே நீங்கள் திரும்பிச் செல்வீர்கள். ஆரம்ப நிலைக்கே நீங்கள் திரும்பிச் செல்வீர்கள். ஆரம்ப நிலைக்கே நீங்கள் திரும்பிச் செல்வீர்கள்.
இதை அறிவித்த அபூஹுரைரா (ரலி) அவர்கள், "இதற்கு அபூஹுரைராவின் சதையும் இரத்தமும் சாட்சியமளிக்கின்றன" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 9 கான்ஸ்டாண்டிநோபிள் வெற்றி கொள்ளப்படுவதும், (மகா பொய்யன்) தஜ்ஜால் புறப்படுவதும், மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்கள் இறங்குவதும்.

5553 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ரோம பைஸாந்தியர், அஃமாக் மற்றும் தாபிக் ஆகிய இடங்களில் நிலைகொள்ளாத வரை யுக முடிவு நாள் ஏற்படாது. அவர்களை நோக்கி மதீனாவிலிருந்து ஒரு படை புறப்படும். அன்றைய நாளில் பூமியில் வசிப்போரில் அவர்களே சிறந்தவர்களாயிருப்பர். அவர்கள் அணி வகுத்து நிற்கும்போது ரோமர்கள், எங்களுக்கும் எங்களில் சிறைக்கைதிகளாகப் பிடிக்கப் பட்டோருக்குமிடையே நாங்கள் போர் செய்ய எங்களை விட்டு விடுங்கள்" என்று கூறுவார்கள்.

அப்போது முஸ்லிம்கள், "இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! எங்கள் சகோதரர்கள் மீது போர் தொடுக்க உங்களை நாங்கள் அனுமதிக்கமாட்டோம்" என்று சொல்வார்கள்.
ஆகவே, ரோமர்கள் முஸ்லிம்கள் மீது போர் தொடுப்பார்கள். அப்போது முஸ்லிம்களில் மூன்றிலொரு பகுதியினர் தோற்று வெருண்டோடுவார்கள். அவர்களை அல்லாஹ் ஒருபோதும் மன்னிக்கவே மாட்டான். அவர்களில் மூன்றிலொரு பகுதியினர் கொல்லப்படுவார்கள். அவர்கள் அல்லாஹ்விடம் மிகச் சிறந்த உயிர்த்தியாகிகளாவர்; மூன்றிலொரு பகுதியினர் (ரோமர்களை) வெற்றிகொள்வார்கள். அவர்கள் (அதன் பின்னர்) ஒருபோதும் சோதனைக்குள்ளாக்கப் படமாட்டார்கள். இவ்வாறு அவர்கள் கான்ஸ்டாண்டிநோபிளை வெற்றி கொள்வார்கள்.

அவர்கள் தம் வாட்களை ஆலிவ் மரங்களில் தொங்கவிட்டுப் போர்ச்செல்வங்களை பங்கிட்டுக்கொண்டிருக்கும்போது,அவர்களிடையே ஷைத்தான், "நீங்கள் புறப்பட்டு வந்த பின் உங்கள் குடும்பத்தாரிடையே மசீஹ் (தஜ்ஜால்) வந்துவிட்டான்" என்று குரலெழுப்புவான்.
உடனே அவர்கள் தம் குடும்பத்தாரை நோக்கிப் புறப்பட்டுச் செல்வார்கள். ஆனால், அது பொய்யான செய்தியாயிருக்கும். அவர்கள் ஷாமுக்கு (சிரியா) வரும்போது "மசீஹ்' (தஜ்ஜால்)

புறப்படுவான். இந்நிலையில் அவர்கள் போருக்காக ஆயத்தமாகி அணிகளைச் சீர் செய்து கொண்டிருக்கும்போது, தொழுகைக்காக இகாமத் சொல்லப்படும். அப்போது மர்யமின் புதல்வர் ஈசா (அலை) அவர்கள் (வானிலிருந்து) இறங்கி வந்து அவர்களுக்குத் தலைமையேற்பார்கள்.

அவரை அல்லாஹ்வின் விரோதி (தஜ்ஜால்) காணும்போது, தண்ணீரில் உப்பு கரைவதைப் போன்று கரைந்துபோவான். அவனை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டால்கூட அவன் தானாகக் கரைந்து அழிந்துவிடுவான். ஆயினும், ஈசாவின் கரத்தால் அவனை அல்லாஹ் அழிப்பான். அப்போது ஈசா (அலை) அவர்கள் தமது ஈட்டி முனையில் படிந்துள்ள அவனது இரத்தத்தை மக்களுக்குக் காட்டுவார்கள்.இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம் : 10 ரோமின் மக்கள் தொகை அதிகமாக இருக்கும்போதே யுக முடிவு ஏற்படும்.

5554 உலைய்யு பின் ரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஸ்தவ்ரித் பின் ஷத்தாத் அல்குறஷீ (ரலி) அவர்கள், அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ரோமின் மக்கள் தொகை அதிகமாக இருக்கும்போதே யுக முடிவு ஏற்படும்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள். அப்போது அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள், "நீர் சொல்வதை யோசித்துக் கொள்ளும்"என்று கூறினார்கள். அதற்கு முஸ்தவ்ரித் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றதையே நான் சொல்கிறேன்" என்றார்கள்.
அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள், "நீர் இவ்வாறு கூறுவீராயின் அவர்களிடையே (ரோமர்களிடையே) நான்கு குணங்கள் இருக்கும் (என்பதையும் அறிந்துகொள்க என்றார்கள். (அவையாவன:)
1. அவர்கள் சோதனையின்போது மக்களிலேயே மிகவும் நிதானத்தைக் கடைப்பிடிப்பவர்கள் ஆவர்.
2. சோதனைக்குப் பின்னர் மிக விரைவாக விழித்துக்கொள்பவர்கள்.
3. (களத்திலிருந்து) வெருண்டோடிய பின்னர் மிக விரைவாகத் திரும்பி வருபவர்கள்.
4. ஏழைகள், அநாதைகள், நலிந்தோர் ஆகியோருக்கு நல்லுதவிகள் புரிபவர்கள். ஐந்தாவதாக அவர்களிடம் அழகிய குணம் ஒன்று உண்டு. ஆட்சியாளர்களின் அநீதியிலிருந்து (மக்களைக்) காப்பவர்கள்.

5555 அப்துல் கரீம் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஸ்தவ்ரித் அல்குறஷீ (ரலி) அவர்கள், "ரோமின் மக்கள் தொகை அதிகமாக இருக்கும்போதே யுகமுடிவு ஏற்படும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்" என்று கூறினார்கள். இச்செய்தி அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களுக்கு எட்டியபோது, "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக உங்களிடமிருந்து அறிவிக்கப்படும் இந்த ஹதீஸ்கள் என்ன?" என்று கேட்டார்கள்.
அதற்கு முஸ்தவ்ரித் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றதையே கூறினேன்" என்றார்கள். அதற்கு அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள், "நீர் இவ்வாறு சொல்லியிருந்தால், "அவர்கள் (ரோமர்கள்) சோதனையின்போது மிகவும் நிதானத்தைக் கடைப்பிடிப்பவர்கள்; சோதனையின்போது மக்களில் நன்கு நிவாரணம்

மேற்கொள்பவர்கள்; தம்மிடையேயுள்ள ஏழைகளுக்கும் நலிந்தவர்களுக்கும் மக்களிலேயே நல்லுதவி புரிபவர்கள்' (என்பதையும் சேர்த்து அறிந்துகொள்க" என்று கூறினார்கள்.

**பாடம் : 11 தஜ்ஜால் புறப்படும் வேளையில் ரோமர்கள் ஏராளமானோரைக் கொலை செய்து முன்னேறுவார்கள்.**

5556 யுசைர் பின் ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஒரு முறை இராக்கிலுள்ள) கூஃபாவில் அனல்காற்று வீசியது. அப்போது ஒரு மனிதர், "அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் அவர்களே! யுகமுடிவு வந்துவிட்டது" என்று திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டே வந்தார். உடனே சாய்ந்துகொண்டிருந்த அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் நேராக எழுந்து அமர்ந்து, "சொத்துகள் பங்கு போடப்படாத நிலையும் போர்ச்செல்வத்தின் மூலம் மகிழ்ச்சியடையாத நிலையும் ஏற்படாத வரையில் யுகமுடிவு ஏற்படாது" என்று கூறிவிட்டு, தமது கரத்தால் (ஷாம் நாட்டின் திசையை நோக்கி) சைகை செய்து, "இஸ்லாமியரைத் தாக்குவதற்காக எதிரிகளின் படையொன்று ஒன்றுதிரளும். அவர்களை எதிர்கொள்வதற்காக இஸ்லாமியரும் ஒன்றுதிரளுவர்" என்று கூறினார்கள்.

உடனே நான், "ரோம (இத்தாலியக் கிறித்தவ)ர்களையா (எதிரிகள் என்று) கூறுகிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் "ஆம்' என்று கூறிவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:

அந்தப் போரின்போது கடுமையான பலப்பிரயோகம் இருக்கும். அப்போது முஸ்லிம்கள் முதலில் ஒரு படையை அனுப்புவார்கள். ஒன்று வீர மரணம், அல்லது வெற்றியை இலக்காகக் கொண்டு அவர்கள் புறப்பட்டுச் செல்வார்கள். அவர்கள் (சென்று) போரிட்டுக்கொண்டிருக்கும்போது இரவு நேரம் குறுக்கிட்டுவிடும். ஆகவே, அவர்களில் எவரும் வெற்றி பெறாமல் இரு அணியினரும் (தாக்குதலை நிறுத்திவிட்டுத் தமது முகாமிற்குத்) திரும்பிவிடுவர். ஆனால்,முதலில் சென்ற படையினர் (போரில்) அழிந்துவிடுவர்.

பிறகு (மறுநாள்) முஸ்லிம்கள், ஒன்று வீர மரணம் அல்லது வெற்றி என்ற இலக்கில் மற்றொரு படையை முதலில் அனுப்புவார்கள். அவர்கள் (சென்று) போரிட்டுக்கொண்டிருப்பார்கள். இரவு குறுக்கிடும்போது அவர்களில் எவருமே வெற்றி பெறாமல் திரும்பி விடுவர். ஆனாலும், முதலில் சென்ற அணியினர் அழிந்துவிடுவார்கள்.

பிறகு (மூன்றாம் நாளு)ம், ஒன்று வீர மரணம் அல்லது வெற்றியை இலக்காக்கி மற்றொரு படையை முஸ்லிம்கள் அனுப்புவார்கள். அவர்கள் (சென்று) மாலை நேரமாகும் வரை போரிட்டு எவருக்கும் வெற்றிகிட்டாமல் திரும்பிவிடுவர். அப்போதும் முதலில் சென்ற அணியினர் அழிந்துவிடுவார்கள்.

நான்காம் நாளாகும்போது முஸ்லிம் (படை)களில் எஞ்சியிருப்பவர்கள் எதிரிகளை நோக்கி முன்னேறிச் செல்வார்கள். அப்போது அவர்களுக்கு அல்லாஹ் தோல்வியையே தருவான். (இருந்தாலும்) அவர்கள் ஏராளமான பேரைக் கொன்றுவிட்டிருப்பார்கள். அதைப் போன்ற ஓர் உயிரிழப்பை உலகம் கண்டிராது. எந்த அளவுக்கென்றால், அவர்களைச் சுற்றி பறவைகள் பறக்கும். அவற்றில் ஒன்றுகூட அவர்களைக் கடந்து செல்ல முடியாமல் செத்து விழும் (அந்த அளவுக்குப் பெரிய பரப்பளவில் அவர்கள் மடிந்து கிடப்பார்கள்). நூறு பேர் கொண்ட ஒரு குடும்பத்தில் ஒரேயொருவர் மட்டுமே எஞ்சுவார்.

அப்போது எந்தப் போர்ச் செல்வத்தைக் கொண்டு மகிழ்ச்சி ஏற்படும்? அல்லது எந்தச் சொத்து பங்கிடப்படும்? இவ்வாறே அவர்கள் இருந்துகொண்டிருக்கும்போது இதைவிட மிகப்பெரிய பேராபத்து ஒன்றைப் பற்றி அவர்கள் கேள்விப்படுவார்கள். அப்போது ஒருவர் (வந்து), "உங்கள் குடும்பத்தாரிடையே தஜ்ஜால் வந்துவிட்டான்" என்று கூவியறிவிப்பார். உடனே அவர்கள் தம் கைகளிலுள்ளவற்றை அப்படியே போட்டுவிட்டு (தம் குடும்பத்தாரை) முன்னோக்கிவருவார்கள். முன்னதாக (தஜ்ஜாலைப் பற்றி அறிவதற்காக) பத்துக் குதிரை வீரர்களை உளவு பார்ப்பதற்காக அனுப்பி வைப்பார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான் அவர்களுடைய பெயர்களையும் அவர்களுடைய தந்தையரின் பெயர்களையும் அவர்களுடைய குதிரைகளின் நிறங்களையும் நன்கறிவேன். அன்றைய நாளில் பூமியின் மீதுள்ள குதிரை வீரர்களில் அவர்களே சிறந்தவர்கள்; அல்லது அன்றைய நாளில் பூமியின் மீதுள்ள சிறந்த குதிரை வீரர்களில் அவர்களும் அடங்குவர்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இப்னு அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (யுசைர் பின் ஜாபிர் என்பதற்குப் பகரமாக) உசைர் பின் ஜாபிர் என்று இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் யுசைர் பின் ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் இருந்தேன். அப்போது அனல் காற்று வீசியது" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளவாறே இடம்பெற்றுள்ளன.
ஆனாலும், மேற்கண்ட அறிவிப்பே முழுமையானதும் விரிவானதும் ஆகும்.
- மேற்கண்ட ஹதீஸ் உசைர் பின் ஜாபிர் (ரலி) அவர்கள் வாயிலாக மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.
அதில், "நான் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களது இல்லத்தில் இருந்தேன். அப்போது வீடு நிறைய மக்கள் இருந்தனர். அப்போது கூஃபாவில் அனல் காற்று வீசியது" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 12 தஜ்ஜால் வருவதற்குமுன் முஸ்லிம்களுக்குக் கிட்டும் வெற்றிகள்.**

5557 நாஃபிஉ பின் உத்பா பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஒரு போரில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது கம்பளியாடை அணிந்த ஒரு கூட்டத்தார் மேற்கிலிருந்து வந்து ஒரு குன்றின் அருகில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்துகொண்டிருந்தார்கள். அக்கூட்டத்தார் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில்) நின்றுகொண்டிருந்தார்கள்.
அப்போது என் மனம், "நீ சென்று அவர்களுக்கும் அல்லாஹ்வின் தூதருக்குமிடையே நின்று கொள். அல்லாஹ்வின் தூதரை அவர்கள் திடீரெனத் தாக்கிவிட வேண்டாம்" என்று சொன்னது. பிறகு நான், "அவர்களுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏதேனும் இரகசியம் பேசிக்கொண்டிருக்கலாம்" என்று நினைத்தேன். பிறகு அவர்களிடம் வந்து அவர்களுக்கும்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கும் நடுவில் நின்றுகொண்டேன். அப்போது என் கைவிரல்களில் எண்ணியபடி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான்கு விஷயங்களை மனனமிட்டேன்.

1. நீங்கள் அரபு தீபகற்பம் முழுவதையும் போரிட்டு வெற்றி காணும் நிலையை அல்லாஹ் ஏற்படுத்துவான்.
2. பிறகு பாரசீகர்களை வெற்றி கொள்ளும் நிலையை அல்லாஹ் ஏற்படுத்துவான்.
3. பிறகு ரோம (பைஸாந்திய)ர்களுடன் போரிட்டு வெற்றி கொள்ளும் நிலையை அல்லாஹ் ஏற்படுத்துவான்.
4. பிறகு நீங்கள் (மகா குழப்பவாதியான) தஜ்ஜாலுடன் போரிட்டு அவனையும் வெற்றி கொள்ளும் நிலையை அல்லாஹ் ஏற்படுத்துவான்.

இதன் அறிவிப்பாளரான ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
(இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) நாஃபிஉ பின் உத்பா (ரலி) அவர்கள், "ஜாபிரே! ரோமர்கள் வெற்றி கொள்ளப்படாத வரை தஜ்ஜால் புறப்பட்டு வருவான் என நாங்கள் கருதவில்லை" என்றார்கள்.

பாடம் : 13 யுக முடிவு நாளுக்கு முந்தைய சில அடையாளங்கள்.

5558 அபூசரீஹா ஹுதைஃபா பின் அசீத் அல்ஃகிஃபாரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) நாங்கள் (நபி (ஸல்) அவர்களது அறைக்குக் கீழே) பேசிக்கொண்டிருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் எங்களை எட்டிப்பார்த்து, "எதைப் பற்றி பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். மக்கள், "யுகமுடிவு நாளைப் பற்றி (பேசிக் கொண்டிருக்கிறோம்)" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் (பெரிய) பத்து அடையாளங்களைக் காணாத வரை யுகமுடிவு நாள் ஏற்படவே செய்யாது" என்று கூறிவிட்டு, அந்த அடையாளங்களைப் பற்றிக் கூறினார்கள்:

1. புகை, 2. தஜ்ஜால், 3. (பேசும்) பிராணி, 4. மேற்கிலிருந்து சூரியன் உதிப்பது, 5. மர்யமின் புதல்வர் ஈசா (அலை) அவர்கள் இறங்குதல், 6. யஃஜூஜ், மஃஜூஜ், 7.8.9. மூன்று நில நடுக்கங்கள். ஒன்று கிழக்கிலும், மற்றொன்று மேற்கிலும், இன்னொன்று அரபு தீபகற்பத்திலும், 10. இறுதியாக யமன் நாட்டிலிருந்து ஒரு நெருப்பு கிளம்பி மக்களை விரட்டிக்கொண்டு வந்து ஓரிடத்தில் ஒன்றுகூட்டும்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5559 அபூசரீஹா ஹுதைஃபா பின் அசீத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (மாடி) அறையொன்றில் இருந்தார்கள். நாங்கள் கீழே இருந்தோம். அப்போது அவர்கள் எங்களை எட்டிப்பார்த்து, "என்ன பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். நாங்கள், "யுக முடிவைப் பற்றி (பேசிக்கொண்டிருக்கிறோம்)" என்று சொன்னோம்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "பத்து அடையாளங்கள் நிகழாதவரை யுகமுடிவு நாள் வராது. 1. கிழக்கில் ஒரு நிலநடுக்கம் 2. மேற்கில் ஒரு நிலநடுக்கம் 3. அரபு தீபகற்பத்தில் ஒரு நிலநடுக்கம் 4. புகை 5. தஜ்ஜால் 6.பூமிக்குள்ளிருந்து வெளிப்படும் (அதிசயப்) பிராணி 7. யஃஜூஜ், மஃஜூஜ் 8. சூரியன் மேற்கிலிருந்து உதிப்பது 9. (யமன் நாட்டிலுள்ள)"அதன்' பகுதியின்

கடைக்கோடியிலிருந்து ஒரு நெருப்புக் கிளம்பி மக்களை வாகனங்களில் ஏறிப் பயணம் புறப்படச் செய்வது.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
ஹுதைஃபா பின் அசீத் (ரலி) அவர்களிடமிருந்து அபுத்துஃபைல் (ரஹ்) அவர்களும் அபுத்துஃபைலிடமிருந்து அப்துல் அஸீஸ் பின் ருஃபைஉ (ரஹ்) அவர்களும் அறிவிக்கும் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் எனக்குக் கிடைத்தது. அதில் மேற்கண்ட செய்தி அபூசரீஹா ஹுதைஃபா (ரலி) அவர்களின் கூற்றாகவே வந்துள்ளது. நபி (ஸல்) அவர்கள் சொன்னதாக இல்லை.
ஹுதைஃபா (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கும் இந்த ஹதீஸை மேற்கண்ட இரு அறிவிப்பாளர்களில் ஒருவர்,பத்தாவது "மர்யமின் புதல்வர் ஈசா (அலை) அவர்கள் (வானிலிருந்து) இறங்குதல்' என்றும், மற்றொருவர் "ஒரு காற்று கிளம்பி மக்களைக் கடலில் தூக்கி வீசுதல்' என்றும் கூறினர்.

5560 மேற்கண்ட ஹதீஸ் அபூசரீஹா ஹுதைஃபா பின் அசீத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மாடி)அறை ஒன்றில் இருந்தார்கள். அப்போது அதற்குக் கீழே நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே தொடர்கின்றன.
அதில் அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்கள், "ஃபுராத் அல்கஸ்ஸார் (ரஹ்) அவர்கள் "அந்த நெருப்பு அவர்கள் வாகனங்களிலிருந்து இறங்கித் தங்கும்போதும் அவர்கள் மதிய ஓய்வு மேற்கொள்ளும்போதும் அவர்களுடனேயே இருக்கும்' என்று கூறியதாகவே நான் கருதுகிறேன்" எனத் தெரிவித்ததாக இடம்பெற்றுள்ளது.
மேலும் ஷுஅபா (ரஹ்) அவர்கள், "இந்த ஹதீஸை அபூசரீஹா (ரலி) அவர்களிடமிருந்து அபுத்துபைல் (ரஹ்) அவர்களும் அவர்களிடமிருந்து மற்றொரு மனிதரும் எனக்கு அறிவித்தனர்" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் கூறியதாகக் குறிப்பு இல்லை.

மேலும் அபூசரீஹாவிடமிருந்து அறிவிக்கும் இவ்விருவரில் ஒருவர், "மர்யமின் புதல்வர் ஈசா (அலை) அவர்கள் (வானிலிருந்து) இறங்குவார்கள்' என்பதையும், மற்றொருவர் "ஒரு காற்று கிளம்பி மக்களைத் தூக்கிக் கடலில் வீசும்' என்பதையும் குறிப்பிட்டனர்" என்று காணப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசரீஹா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் ஓர் அறிவிப்பில், "நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். அப்போது (மாடியிலிருந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களை எட்டிப்பார்த்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது.
மற்றோர் அறிவிப்பில், "பத்தாவது அடையாளம், மர்யமின் புதல்வர் ஈசா (அலை) அவர்கள் (வானிலிருந்து) இறங்குவதாகும்" என்று இடம்பெற்றுள்ளது. அதில் இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்தொடரை அப்துல் அஸீஸ் பின் ருஃபை (ரஹ்) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக முடிக்கவில்லை. அபூசரீஹா (ரலி) அவர்கள் கூறியதாகவே முடிக்கிறார்கள்.

**பாடம் : 14 ஹிஜாஸ் பகுதியிலிருந்து ஒரு நெருப்பு கிளம்பாத வரை யுக முடிவு நாள் வராது.**

5561 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஹிஜாஸ் பகுதியிலிருந்து ஒரு நெருப்பு கிளம்பி, (ஷாம் நாட்டிலுள்ள) "புஸ்ரா' (ஹவ்ரான்) எனும் ஊரிலுள்ள ஒட்டகங்களின் பிடரிகளை ஒளிரச் செய்யாத வரை யுகமுடிவு நாள் வராது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 15 யுக முடிவு நாளுக்குமுன் மதீனாவின் குடியிருப்புகளின் நிலை.**

5562 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(யுக முடிவு நாளுக்குமுன் மதீனாவிலுள்ள) குடியிருப்பு (பகுதி)கள் "இஹாப்' அல்லது "யஹாப்' எனுமிடத்திற்குச் சென்றுவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஸுஹைர் பின் முஆவியா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) சுஹைல் பின் அபீஸாலிஹ் (ரஹ்) அவர்களிடம், "இந்த (இஹாப் எனும்) இடம் மதீனாவிலிருந்து எவ்வளவு தொலைவில் உள்ளது?" என்று கேட்டேன். அவர்கள், "இவ்வளவு இவ்வளவு மைல் தூரத்தில் உள்ளது" என்று பதிலளித்தார்கள்.

5563 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மழை பொய்த்துவிடுவதற்குப் பெயர் பஞ்சமன்று. மாறாக, பஞ்சம் என்பது, மழை பெய்து கொண்டேயிருந்தும் பூமியில் (புற்பூண்டுகள்) எதுவும் முளைக்காமலிருப்பதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம் : 16 ஷைத்தானின் இரு கொம்புகள் உதயமாகும் கிழக்குத் திசையிலிருந்தே குழப்பங்கள் தோன்றும்.**

5564 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கிழக்குத் திசையை முன்னோக்கி, "நினைவில் கொள்ளுங்கள்: குழப்பம் இங்கிருந்துதான் தோன்றும். நினைவில் கொள்ளுங்கள்: குழப்பம் இங்கிருந்துதான் தோன்றும்; ஷைத்தானின் கொம்பு உதயமாகும் இடத்திலிருந்து" என்று கூறியதை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

5565 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஃப்ஸா (ரலி) அவர்களது வீட்டுவாசலில் நின்றுகொண்டு, கிழக்குத் திசையை நோக்கித் தமது கையால் சைகை செய்து, "குழப்பம், இங்கிருந்துதான் தோன்றும்; ஷைத்தானின் கொம்பு உதயமாகும் இடத்திலிருந்து" என்று இரண்டு அல்லது மூன்று முறை கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் உபைதுல்லாஹ் பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களது வீட்டுவாசலில் நின்று கொண்டிருந்தார்கள்" என்று இடம்பெற்றுள்ளது.

5566 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கிழக்குத்திசையை முன்னோக்கி, "நினைவில் கொள்ளுங்கள்: குழப்பம் இங்கிருந்துதான் தோன்றும். நினைவில் கொள்ளுங்கள்: குழப்பம் இங்கிருந்துதான் தோன்றும்; நினைவில் கொள்ளுங்கள்: குழப்பம் இங்கிருந்துதான் தோன்றும்; ஷைத்தானின் கொம்பு உதயமாகும் இடத்திலிருந்து" என்று சொன்னார்கள்.

5567 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களது வீட்டிலிருந்து புறப்பட்டு வந்து, "இறைமறுப்பின் தலை (குழப்பம்), இங்கிருந்து -அதாவது கிழக்கிலிருந்து-தான் தோன்றும்; ஷைத்தானின் கொம்பு உதயமாகும் இடத்திலிருந்து" என்று சொன்னார்கள்.

5568 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கரத்தால் கிழக்குத்திசையை நோக்கி சைகை செய்து, "நினைவில் கொள்ளுங்கள்: குழப்பம் இங்கிருந்துதான் தோன்றும். நினைவில் கொள்ளுங்கள் குழப்பம் இங்கிருந்துதான் தோன்றும்"என்று மூன்று முறை கூறிவிட்டு, "ஷைத்தானின் கொம்புகள் உதயமாகும் இடத்திலிருந்து' என்று கூறியதைக் கேட்டேன்.

5569 ஃபுளைல் பின் ஃகஸ்வான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
சாலிம் பின் அப்தில்லாஹ் பின் உமர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: இராக்வாசிகளே! நீங்கள் பெரும்பாவத்தைச் செய்துகொண்டு, சிறுபாவத்தைப் பற்றிக் கேட்டுக்கொண்டிருப்பது வியப்பையே அளிக்கிறது. என் தந்தை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறியதை நான் கேட்டுள்ளேன்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கிழக்குத்திசையை நோக்கித் தமது கரத்தால் சைகை செய்தவாறு, குழப்பம் இங்கிருந்துதான் தோன்றும்; ஷைத்தானின் கொம்புகள் உதயமாகும் இடத்திலிருந்து" என்று கூறியதை நான் கேட்டேன்.

(இராக்வாசிகளே!) உங்களில் சிலர் சிலரது கழுத்தை வெட்டிக்கொண்டிருக்கிறீர்கள். (அதைப் பற்றிக்கேட்டால் இறைத்தூதர் மூசா, ஃபிர்அவ்னின் குடும்பத்தாரில் ஒருவனைக் கொன்றதைச் சான்றாகக் கூறுவீர்கள்.) மூசா (அலை) அவர்கள் ஃபிர்அவ்னின் குடும்பத்தாரில் ஒருவனைத் தவறுதலாகவே கொன்றார்கள்.
எனவேதான், வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் மூசா (அலை) அவர்களிடம், "நீர் ஓர் உயிரைக் கொன்றிருந்தீர். உம்மைக் கவலையிலிருந்து நாம் காப்பாற்றினோம். உம்மைப் பல வழிகளில் சோதித்தோம்" (20:40) என்று கூறினான்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 17 "தவ்ஸ்' குலத்தார் "துல்கலஸா' கடவுள் சிலையை வழிபடாதவரை யுக முடிவு நாள் வராது.**

5570 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"தவ்ஸ்' குலப்பெண்களின் புட்டங்கள் "துல்கலஸா'வைச் சுற்றி அசையாத வரை யுக முடிவு நாள் வராது.
துல்கலஸா என்பது, "தவ்ஸ்' குலத்தார் அறியாமைக்காலத்தில் (யமனிலுள்ள) "தபாலா' எனுமிடத்தில் வழிபட்டுவந்த கடவுள் சிலையாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5571 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அறியாமைக்கால கடவுள் சிலைகளான) "லாத்'தும் "உஸ்ஸா'வும் வழிபாடு செய்யப்படாத வரை இரவும் பகலும் (இல்லாமற்) போகாது" என்று கூறியதைக் கேட்டேன்.
நான், "அல்லாஹ்வின் தூதரே! இணை கற்பிப்போர் வெறுத்தபோதிலும், எல்லா மார்க்கங்களை விட மேலோங்கச் செய்வதற்காக நல்வழியுடனும் உண்மை மார்க்கத்துடனும் அவனே தன் தூதரை அனுப்பினான்" (9:33; 61:9) என அல்லாஹ் அருளியபோது, இந்த மார்க்கம் முழுமையடையும் என்றே நான் எண்ணிக்கொண்டிருந்தேன். (ஆனால்,தாங்கள் வேறு விதமாகச் சொல்கிறீர்களே!)" என்று கூறினேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(உண்மைதான்) விரைவில் அல்லாஹ் நாடிய அளவு இது நடக்கும். பிறகு அல்லாஹ் நல்ல காற்று ஒன்றை அனுப்புவான். அது யாரது உள்ளத்தில் கடுகுமணியளவு இறைநம்பிக்கை (ஈமான்) உள்ளதோ அந்த ஒவ்வொருவரையும் கைப்பற்றிக்கொள்ளும். பிறகு எந்த நன்மையும் இல்லாதவர்களே (பூமியில்) எஞ்சியிருப்பர். அவர்கள் தம் மூதாதையரின் மார்க்கத்திற்குத் திரும்பிச் சென்றுவிடுவர்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 18 ஒரு மனிதர் மற்றொரு மனிதரின் மண்ணறையைக் கடந்து செல்லும்போது, "நான் இவரது இடத்தில் (இக்குழிக்குள்) இருக்கக் கூடாதா'' என்று ஆசைப்படாத வரை யுக முடிவு நாள் வராது; அவர் அனுபவிக்கும் சோதனையே அதற்குக் காரணமாகும்.**

5572 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் மற்றொரு மனிதரின் மண்ணறையை (கப்றை)க் கடந்து செல்லும்போது, "அந்தோ! நான் இவரது இடத்தில் (கப்றுக்குள்) இருக்கக் கூடாதா?" என்று (ஏக்கத்துடன்) கூறாதவரை யுக முடிவு நாள் வராது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5573 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! ஒரு மனிதர் (மற்றொரு மனிதரின்) மண்ணறையை (கப்றை)க் கடந்து செல்லும்போது, அதன்மீது அவர் படுத்துப்புரண்டவாறு "அந்தோ! நான் இந்த மண்ணறையில் இருப்பவரது இடத்தில் இருக்கக்கூடாதா" என்று கூறாத வரை உலகம் அழியாது. இ(வ்வாறு அவர் செய்வ)தற்கு,அவர் (வாழ்க்கையில்) சந்திக்கும் சோதனையே காரணமாக இருக்குமே தவிர, மார்க்கம் காரணமாக இருக்காது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5574 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன்மீது சத்தியமாக! மக்களுக்கு ஒரு காலம் நிச்சயமாக வரும். (அப்போது) கொலை செய்தவனுக்குத் தான் எதற்காகக் கொலை செய்தான் என்பது தெரியாது. கொல்லப்பட்டவனுக்குத் தான் எதற்காகக் கொல்லப்பட்டான் என்பது தெரியாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5575 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அ(ந்த இறை)வன்மீது சத்தியமாக! மக்களுக்கு ஒருநாள் வராதவரை உலகம் அழியாது. அன்று கொலை செய்தவனுக்குத் தான் எதற்காகக் கொன்றோம் என்பது தெரியாது. கொல்லப்பட்டவனுக்குத் தான் எதற்காகக் கொல்லப்பட்டோம் என்பது தெரியாது" என்று கூறினார்கள்.
அப்போது "அது எவ்வாறு நடக்கும்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கொலை சர்வ சாதாரணமாகிவிடும். கொன்றவனும் கொல்லப்பட்டவனும் நரகத்திற்குச் செல்வார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5576 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அபிசீனியாவைச் சேர்ந்த மெலிந்த கால்கள் உடைய ஒரு மனிதன் கஅபாவை (இடித்து)ப் பாழாக்குவான். - இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5577 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அபிசீனியாவைச் சேர்ந்த மெலிந்த கால்கள் உடைய ஒரு மனிதன் கஅபாவை (இடித்து)ப் பாழாக்குவான்.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5578 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அபிசீனியாவைச் சேர்ந்த மெலிந்த கால்கள் உடைய ஒரு மனிதன் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் இல்லத்தை (கஅபாவை இடித்து)ப் பாழாக்குவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5579 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"கஹ்தான்' குலத்திலிருந்து ஒரு மனிதர் தோன்றி, தமது கைத்தடியால் மக்களை வழி நடத்தாத வரை யுக முடிவு நாள் வராது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5580 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"ஜஹ்ஜாஹ்' எனப்படும் ஒரு மனிதர் அரசாளாத வரை இரவு பகல் (மாற்றம் நின்று, உலகம் அழிந்து) போகாது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
முஸ்லிம் (பின் அல்ஹஜ்ஜாஜ் ஆகிய நான்) கூறுகிறேன்: ஷரீக், உபைதுல்லாஹ், உமைர், (இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துல் கபீர் ஆகிய நால்வரும் சகோதர்கள் ஆவர். அப்துல் மஜீத் என்பவரே இந்நால்வரின் தந்தை ஆவார்.

5581 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தோலால் மூடப்பட்ட கேடயங்களைப் போன்ற முகங்களைக் கொண்ட ஒரு சமுதாயத்தாருடன் நீங்கள் போர் புரியாதவரை யுக முடிவு நாள் வராது. முடியாலான காலணிகளை அணியும் ஒரு கூட்டத்தாருடன் நீங்கள் போர் புரியாதவரை யுக முடிவுநாள் வராது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5582 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முடியாலான காலணிகளை அணியும் ஒரு சமுதாயத்தார் உங்களுடன் போர் செய்யாதவரை யுக முடிவுநாள் வராது. அவர்களின் முகங்கள் தோலால் மூடப்பட்ட கேடயங்களைப் போன்றிருக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5583 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முடியாலான காலணிகளை அணியும் ஒரு கூட்டத்தாருடன் நீங்கள் போர் புரியாதவரை யுக முடிவுநாள் வராது. சிறிய கண்களும் சப்பை மூக்குகளும் கொண்ட ஒரு சமுதாயத்தாருடன் நீங்கள் போரிடாத வரை யுக முடிவுநாள் வராது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5584 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முடியை (உடையாக) அணிந்து, முடியில் (காலணி தயாரித்து) நடக்கின்ற, தோலால் மூடப்பட்ட கேடயங்களைப் போன்ற முகங்களைக் கொண்ட சமுதாயத்தாரான துருக்கியருடன் முஸ்லிம்கள் போரிடாத வரை யுக முடிவுநாள் வராது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5585 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யுக முடிவு நாளுக்கு முன், முடியாலான காலணிகளை அணிகின்ற சிவந்த முகமும் சிறிய கண்களும் கொண்ட ஒரு கூட்டத்தாருடன் நீங்கள் போர் செய்வீர்கள். அவர்களின் முகங்கள் தோலால் மூடப்பட்ட கேடயங்களைப் போன்று (அகன்று) இருக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5586 அபூநள்ரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள், "இராக்வாசிகளிடம் (அவர்களின் அளவையான) கஃபீஸோ (அவர்களின் நாணயமான) திர்ஹமோ கொண்டுவரப்படாத நாள் விரைவில் வரப்போகிறது" என்று கூறினார்கள். நாங்கள், "எங்கிருந்து கொண்டுவரப்படாது?" என்று கேட்டோம்.
"அரபியல்லாத பிறமொழி பேசுபவர்கள் அவற்றைத் தர மறுப்பார்கள்" என்று கூறிவிட்டுப் பிறகு "ஷாம் (சிரியா)வாசிகளிடம் தீனாரோ (அவர்களின் அளவையான) 'முத்யோ' கொண்டு வரப்படாத நாள் விரைவில் வரப்போகிறது" என்று கூறினார்கள். நாங்கள், "எங்கிருந்து கொண்டு வரப்படாது?" என்று கேட்டோம். அதற்கு "ரோம(பைஸாந்திய)ர்களிடமிருந்து கொண்டு வரப்படாது" என்று கூறிவிட்டு, சிறிது நேரம் அமைதியாக இருந்தார்கள்; பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என் இறுதிச் சமுதாயத்தில் ஓர் ஆட்சியாளர் (கலீஃபா) இருப்பார். அவர் எண்ணிப் பார்க்காமல் வாரி வாரி வழங்குவார் என்று கூறினார்கள்" என்றார்கள்.
இதன் அறிவிப்பாளரான ஜுரைரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான், அபூநள்ரா மற்றும் அபுல்அலா (ரஹ்) ஆகியோரிடம், "அந்த ஆட்சியாளர் உமர் பின் அப்தில் அஸீஸ் அவர்கள்தான் என நீங்கள் இருவரும் கருதுகிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் இருவரும் 'இல்லை' எனப் பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5587 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்கள் கலீஃபாக்களில் ஒருவர் வருவார். அவர் செல்வத்தை வாரி வாரி வழங்குவார். எண்ணிக் கணக்குப் பார்க்கமாட்டார்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அலீ பின் ஹுஜ்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் ('செல்வத்தை வாரி வழங்குவார்' என்பதைக் குறிக்க 'யஹ்ஸூ' என்பதற்குப் பகரமாக) 'யஹ்ஸில் மால' என்று இடம்பெற்றுள்ளது.

5588 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறுதிக் காலத்தில் ஒரு கலீஃபா வருவார். அவர் செல்வத்தை (மக்களிடையே) பங்கிட்டுக் கொடுப்பார்; எண்ணிக் கணக்குப் பார்க்க மாட்டார்.

இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களும் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களும் அறிவிக்கின்றனர்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் வழியாக மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

5589 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அம்மார் (ரலி) அவர்கள் அகழ் தோண்டிக்கொண்டும் தமது தலையில் படிந்திருந்த மண்ணைத் துடைத்துக்கொண்டும் இருக்கலானார்கள். இதைக் கண்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அம்மார் (ரலி) அவர்களிடம் "சுமய்யாவின் மகனுக்கு ஏற்படவுள்ள துன்பமே! (புஃஸ இப்னி சுமய்யா) உம்மை ஒரு கலகக்கூட்டத்தார் கொன்று விடுவார்கள்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5590 மேற்கண்ட ஹதீஸ் மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில், காலித் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("புஃஸ இப்னி சுமய்யா' என்பதற்குப் பகரமாக) "வய்ஸ இப்னி சுமய்யா (பாவம்! சுமைய்யாவின் மகன்)' அல்லது "யா வய்ஸ இப்னி சுமய்யா' (சுமய்யாவின் மகன் அப்பாவியே!) என்று காணப்படுகிறது.

5591 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அம்மார் (ரலி) அவர்களிடம், "உம்மைக் கலகக்கார கூட்டத்தார் கொன்றுவிடுவார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்து.
- மேற்கண்ட ஹதீஸ் உம்மு சலமா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5592 உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அம்மார் (ரலி) அவர்களைப் பற்றி), "அம்மாரை ஒரு கலகக்கார கூட்டத்தார் கொன்றுவிடுவர்" என்று சொன்னார்கள்.

5593 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள், "இக்குறைஷிக் குலத்தவர்(களில் சிலர்) என் சமுதாயத்தாரை அழிப்பார்கள்" என்று சொன்னார்கள். மக்கள் "(அப்படி ஒரு நிலைவந்தால்) நாங்கள் என்ன செய்ய வேண்டுமென நீங்கள் கட்டளையிடுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், "அவர்களிடமிருந்து மக்கள் விலகி வாழ்ந்தால் நன்றாயிருக்கும்" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5594 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(பாரசீக மன்னர்) "கிஸ்ரா' (குஸ்ரூ) இறந்துவிட்டார். அவருக்குப் பிறகு வேறொரு "கிஸ்ரா' வரமாட்டார். (ரோம பைஸாந்திய மன்னர்) கைசர் (சீசர்) இறந்துவிட்டால், அவருக்குப்பின் வேறொரு கைசர் வரமாட்டார். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! அவர்கள் இருவரின் கருவூலங்களும் நிச்சயமாக இறைவழியில் செலவிடப்படும்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5595 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(தற்போதுள்ள) "கிஸ்ரா' அழிந்துவிட்டார். இவருக்குப் பிறகு வேறொரு "கிஸ்ரா' வரமாட்டார். (தற்போதைய) கைஸரும் அழிந்துவிடுவார். அவருக்குப் பின் வேறொரு கைஸர் வரமாட்டார். அவர்கள் இருவரின் கருவூலங்களும் இறைவழியில் பங்கிடப்படும்" என்று கூறினார்கள்.

5596 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "(தற்போதுள்ள) கிஸ்ரா அழிந்துவிட்டால் அவருக்குப் பிறகு வேறொரு கிஸ்ரா வரமாட்டார்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5597 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "முஸ்லிம்களில் அல்லது இறை நம்பிக்கையாளர்களில் ஒரு குழுவினர்,வெள்ளை மாளிகையில் இருக்கும் "கிஸ்ரா' மன்னருடைய குடும்பத்தாரின் கருவூலத்தை வெற்றி கொள்வார்கள்"என்று கூறியதை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் குதைபா பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "முஸ்லிம்களில் (ஒரு குழுவினர்)' என்றே ஐயப்பாடின்றி இடம் பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
- அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "ஒரு பகுதி கரையிலும் மற்றொரு பகுதி கடலிலும் அமைந்துள்ள ஒரு நகரத்தைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?" என்று கேட்டார்கள். மக்கள், "ஆம்; அல்லாஹ்வின் தூதரே!" என்று பதிலளித்தார்கள்.
நபி (ஸல்) அவர்கள், "இஸ்ஹாக் (அலை) அவர்களின் வழித்தோன்றல்களில் எழுபதாயிரம் பேர் அந்நகரத்தின் மீது போர் தொடுக்காத வரை யுக முடிவுநாள் வராது. அவர்கள் வந்து (அந்நகரத்தில்) இறங்கும்போது அவர்கள் எந்த ஆயுதத்தைக் கொண்டும் சண்டையிட மாட்டார்கள்; அம்பெய்யவுமாட்டார்கள். அவர்கள் "லாயிலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்' (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை; அல்லாஹ் மிகப் பெரியவன்) என்றே கூறுவார்கள். உடனே அந்நகரத்தில் கடலிலுள்ள ஒரு பகுதி வீழ்ந்துவிடும்.
பிறகு அவர்கள் இரண்டாவது முறை "லாயிலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்' என்று கூறுவார்கள். உடனே அதன் மறுபகுதி வீழ்ந்துவிடும். பிறகு அவர்கள் மூன்றாவது முறை "லாயிலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்' என்று கூறுவார்கள். உடனே அவர்களுக்கு

வழி திறக்கும். அதில் நுழைந்து போர்ச்செல்வங்களைத் திரட்டுவார்கள். அவர்கள் போர்ச் செல்வங்களைப் பங்கிட்டுக்கொண்டிருக்கும்போது ஒருவர் வந்து உரத்த குரலில், "தஜ்ஜால் புறப்பட்டுவிட்டான்" என்று அறிவிப்பார். உடனே அவர்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு (தஜ்ஜாலை நோக்கி) திரும்பிச் செல்வார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5598 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் யூதர்களுடன் போர் புரிந்து அவர்களைக் கொல்வீர்கள். எந்த அளவுக்கென்றால், (கல்லின் பின்னால் ஒரு யூதன் ஒளிந்துகொள்வான்.) அப்போது அந்தக் கல், "முஸ்லிமே! இதோ ஒரு யூதன். நீ வந்து, அவனைக் கொன்றுவிடு" என்று கூறும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "இதோ ஒரு யூதன் எனக்குப் பின்னால் (ஒளிந்துகொண்டிருக்கிறான்)" என்று அந்தக் கல் கூறும் என இடம்பெற்றுள்ளது.

5599 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்களும் யூதர்களும் போரிட்டுக்கொள்வீர்கள். (யூதன் ஒருவன் கல்லுக்குப் பின்னால் ஒளிந்து கொள்வான்.) அப்போது அந்தக் கல், "முஸ்லிமே! இதோ எனக்குப் பின்னால் யூதன் ஒருவன் இருக்கிறான். நீ வந்து அவனைக் கொன்றுவிடு" என்று கூறும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5600 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யூதர்கள் உங்களுடன் போரிடுவார்கள். அப்போது அவர்கள்மீது உங்களுக்குச் செல்வாக்கு ஏற்படும். எந்த அளவுக்கென்றால், அந்தக் கல், "முஸ்லிமே! இதோ எனக்குப் பின்னால் யூதன் ஒருவன் இருக்கிறான். அவனைக் கொன்றுவிடு" என்று கூறும்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5601 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
முஸ்லிம்கள் யூதர்களுடன் போர் தொடுக்காத வரை யுக முடிவுநாள் வராது. அப்போது முஸ்லிம்கள் (பதிலடியாக) யூதர்களைக் கொல்வார்கள். எந்த அளவுக்கென்றால், யூதன் ஒருவன் அந்தக் கல்லுக்கும் மரத்துக்கும் பின்னால் ஒளிந்துகொள்வான். உடனே அந்தக் கல், அல்லது அந்த மரம், "முஸ்லிமே! அல்லாஹ்வின் அடியாரே! இதோ எனக்குப் பின்னால் யூதன் ஒருவன் இருக்கிறான். உடனே நீ வந்து அவனைக் கொன்றுவிடு" என்று கூறும். பெரிய உடை மரத்தைத் தவிர. ஏனெனில், அது யூதர்களின் மரமாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5602 ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யுக முடிவு நாளுக்கு முன் பெரும் பொய்யர்கள் சிலர் வருவார்கள்" என்று கூறியதை நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அபுல்அஹ்வஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், உடனே நான் ஜாபிர் (ரலி) அவர்களிடம், "இதை நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள் "ஆம்' என்றார்கள் என இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், சிமாக் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், என் சகோதரர் முஹம்மத் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள், ஜாபிர் பின் சமுரா (ரலி) அவர்கள், "அவர்கள் குறித்து நீங்கள் எச்சரிக்கையாக இருந்துகொள்ளுங்கள்" என்று கூறியதை நான் கேட்டேன் எனத் தெரிவித்ததாக இடம் பெற்றுள்ளது.

5603 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பெரும் பொய்யர்களான சுமார் முப்பது "தஜ்ஜால்'கள் அனுப்பப்படாமல் யுக முடிவுநாள் வராது. அவர்களில் ஒவ்வொருவரும் தம்மை இறைவனின் தூதர் என்று சொல்லிக்கொள்வார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 19 இப்னு ஸய்யாத் பற்றிய குறிப்பு.

5604 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சிறுவர்கள் சிலரைக் கடந்து சென்றோம். அவர்களிடையே இப்னு ஸய்யாதும் இருந்தான். (எங்களைக் கண்டதும்) சிறுவர்கள் ஓடிவிட்டனர். இப்னு ஸய்யாத் (மட்டும்) அப்படியே உட்கார்ந்துகொண்டான். அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெறுத்ததைப் போன்றிருந்தது. ஆகவே, அவனிடம், "உன் கரங்கள் மண்ணைத் தழுவட்டும்! நான் அல்லாஹ்வின் தூதர் என நீ உறுதிமொழி அளிக்கிறாயா?" என்று கேட்டார்கள். அதற்கு அவன், "இல்லை; நான் அல்லாஹ்வின் தூதர் என நீர் சாட்சியமளிக்கிறீரா?" என்று கேட்டான்.
அப்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என்னை விடுங்கள். நான் அவனைக் கொன்றுவிடுகிறேன்" என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீர் கருதக்கூடிய ஒருவனாக (தஜ்ஜாலாக) இவன் இருந்தால், உம்மால் ஒருபோதும் அவனைக் கொல்லமுடியாது. (அந்தப் பொறுப்பு கொடுக்கப்பட்டவர் ஈசா (அலை) அவர்களே)" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5605 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நடந்துசென்றோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இப்னு ஸய்யாதைக் கடந்து சென்றார்கள். அவனிடம், "நான் உனக்காக (என் மனதிற்குள்) ஒன்றை மறைத்துவைத்துள்ளேன் (அது என்ன?)" என்று கேட்டார்கள். அதற்கு அவன் "துக்' என்று சொன்னான். (அதாவது "துகான்' எனும் அத்தியாயத்தை (44) "துக்' என அரைகுறையாகச் சொன்னான்.) அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தூரப்போ! உன்னால் உனது எல்லையைத் தாண்ட முடியாது" என்று சொன்னார்கள்.
அப்போது உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என்னை விடுங்கள். நான் அவனது கழுத்தை வெட்டிவிடுகிறேன்" என்று சொன்னார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவனை விட்டுவிடுக. நீர் அஞ்சுகின்ற ஒருவனாக (தஜ்ஜாலாக) இவன் இருந்தால், இவனைக் கொல்ல உம்மால் முடியாது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5606 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் அபூபக்ர் மற்றும் உமர் (ரலி) ஆகியோரும் மதீனாவின் வீதியொன்றில் அவனை (இப்னு ஸய்யாதை)ச் சந்தித்தார்கள். அவனிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் இறைவனின் தூதர் என நீ சாட்சியம் அளிக்கிறாயா?"என்று கேட்டார்கள். அதற்கு அவன், "நான் இறைவனின் தூதர் என நீர் சாட்சியம் அளிக்கிறீரா?" என்று (திருப்பிக்) கேட்டான். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் அல்லாஹ்வையும் அவனுடைய வானவர்களையும் அவனுடைய வேதங்களையும் நம்பிக்கை கொண்டேன். நீ என்ன காண்கிறாய்?" என்று கேட்டார்கள். அதற்கு இப்னு ஸய்யாத், "தண்ணீரின் மீது சிம்மாசனம் ஒன்றைக் காண்கிறேன்" என்று சொன்னான்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ கடல்மீதுள்ள இப்லீஸின் சிம்மாசனத்தையே காண்கிறாய்" என்று கூறிவிட்டு, "இன்னும் என்ன காண்கிறாய்?" என்று கேட்டார்கள். அதற்கு அவன், "(அல்லாஹ்விடமிருந்து செய்திகளைக் கொண்டுவரும்) இரு உண்மையாளர்களையும் ஒரு பொய்யரையும், அல்லது இரு பொய்யர்களையும் ஓர் உண்மையாளரையும் நான் காண்கிறேன்" என்று சொன்னான். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவனுக்குக் குழப்பம் ஏற்பட்டுள்ளது. அவனை விட்டுவிடுங்கள்" என்று கூறினார்கள்.

5607 மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் வழியாகவும் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
"நபி (ஸல்) அவர்கள் தம்முடன் அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோர் இருக்க, இப்னு ஸாயிதைச் சந்தித்தார்கள். அப்போது இப்னு ஸாயித் சிறுவர்களுடன் (விளையாடிக் கொண்டு) இருந்தான்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற தகவல்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன.

5608 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு ஸாயிதுடன் மக்காவரை பயணம் மேற்கொண்டேன். அப்போது அவன் என்னிடம், "நான் மக்களில் சிலரைச் சந்தித்தேன். அவர்கள் என்னை "தஜ்ஜால்' எனக் கருதுகின்றனர்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தஜ்ஜாலுக்குக் குழந்தை இருக்காது' என்று கூறியதை நீங்கள் கேட்கவில்லையா?" என்று கேட்டான். நான், "ஆம் (கேட்டுள்ளேன்)" என்றேன்.
அவன், "எனக்குக் குழந்தை உள்ளது" என்று கூறிவிட்டு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "தஜ்ஜால் மதீனாவுக்குள்ளும் மக்காவுக்குள்ளும் நுழையமாட்டான்' என்று கூறியதை நீங்கள் கேட்டதில்லையா?" என்றான். நான் "ஆம் (கேட்டுள்ளேன்)" என்றேன். அவன், "நான் மதீனாவில் பிறந்தேன். இதோ நான் மக்காவுக்குச் செல்லப் போகிறேன்" என்று கூறினான்.
பிறகு இறுதியாக அவன், "அறிந்துகொள்க: அல்லாஹ்வின் மீதாணையாக! நான் தஜ்ஜாலின் பிறப்பையும் அவனது வசிப்பிடத்தையும் இப்போது அவன் எங்கே இருக்கிறான் என்பதையும் நன்கறிவேன்" என்று கூறி, என்னைக் குழப்பிவிட்டான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5609 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
இப்னு ஸாயித் என்னிடம் பேசியபோது, அவனைப் பழிப்பதற்கு எனக்கு வெட்கமாக இருந்தது. அவன், "(விவரம் தெரியாத காரணத்தால், என்னை "தஜ்ஜால்' என்று நினைக்கும்) பொது மக்களை நான் பொருட்படுத்தவில்லை. (ஆனால்,) முஹம்மத் (ஸல்) அவர்களின் தோழர்களே! உங்களுக்கும் எனக்குமிடையே என்ன பிரச்சினை? நபி (ஸல்) அவர்கள், "அவன் (தஜ்ஜால்) யூதன்' என்று சொல்லவில்லையா? ஆனால், நானோ இஸ்லாத்தை ஏற்றுவிட்டேன்; "அவனுக்குக் குழந்தையேதும் பிறக்காது' என்று நபியவர்கள் சொன்னார்கள். எனக்குக் குழந்தை இருக்கிறது. "அவன் மக்காவுக்குள் நுழைவதை அல்லாஹ் தடைசெய்துவிட்டான்' என்று நபியவர்கள் கூறினார்கள். நான் ஹஜ் செய்துவிட்டேன்" என்று கூறினான்.
இவ்வாறு அவனது சொல்,என்னில் ஒரு மதிப்பை உண்டாக்கும் அளவுக்கு அவன் பேசிக்கொண்டேயிருந்தான். பிறகு அவன், "அறிந்துகொள்க: அல்லாஹ்வின் மீதாணையாக! இப்போது அவன் (தஜ்ஜால்) எங்கே இருக்கிறான் என்பதை நான் அறிவேன். அவனுடைய தந்தையையும் தாயையும் நான் அறிவேன்" என்றான். அவனிடம் "அந்த (தஜ்ஜால் எனும்) மனிதனாக நீ இருக்க வேண்டும் என ஆசைப்படுகிறாயா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவன், "அவ்வாறு என்னிடம் கோரப்பட்டால் அதை நான் வெறுக்கமாட்டேன்" என்றான்.
இந்தத் தகவல் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

5610 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) நாங்கள் ஹஜ்ஜுக்கு, அல்லது உம்ராவுக்குச் சென்றோம். எங்களுடன் இப்னு ஸாயிதும் இருந்தான். (வழியில்) நாங்கள் ஓரிடத்தில் தங்கினோம். (ஓய்வெடுப்பதற்காக) மக்கள் கலைந்து சென்றபின் நானும் இப்னு ஸாயிதும் மட்டுமே எஞ்சியிருந்தோம். அவனைப் பற்றிச் சொல்லப்படுகிற விஷயங்களால் அவனருகில் இருப்பதை நான் மிகவும் வெறுத்தேன். அவன் தனது பயணச் சாமான்களைக் கொண்டுவந்து எனது பயணச் சாமான்களுடன் வைத்தான்.
அப்போது நான், "வெயில் கடுமையாக உள்ளது. அந்த மரத்திற்குக் கீழே நீ உன் பொருட்களை வைத்தால் நன்றாயிருக்குமே" என்றேன். அவ்வாறே அவன் செய்தான். அப்போது ஆட்டு மந்தை ஒன்று வந்தது. உடனே அவன் சென்று, ஒரு பெரிய கோப்பை (நிறைய பால்) உடன் என்னிடம் வந்து, "அபூசயீதே! பருகுவீராக" என்றான். நான், "வெயிலும் கடுமையாக உள்ளது. பாலும் சூடாக

உள்ளது என்று -அவன் கையிலிருந்து வாங்கி அருந்தப் பிடிக்காமல்,அல்லது அவன் கையிலிருந்து வாங்கப் பிடிக்காமல்- சொன்னேன்.

அவன், "அபூசயீதே! நான் ஒரு கயிற்றை எடுத்துவந்து அதை ஒரு மரத்தில் மாட்டி தற்கொலை செய்துகொள்ளலாமா என்று நினைத்தேன். என்னைப் பற்றி மக்கள் பேசிக்கொள்கிற செய்திகளே காரணம். அபூசயீதே! யாருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிய ஹதீஸ் தெரியாவிட்டாலும், அன்சாரிகளே! உங்களுக்குத் தெரியாமல் போகாது.

(அபூசயீதே!) நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஹதீஸ்களை நன்கறிந்தவர்களில் ஒருவரல்லவா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவன் (தஜ்ஜால்) இறைமறுப்பாளன்' என்று சொல்லவில்லையா? நானோ ஒரு முஸ்லிமாக இருக்கிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவன் (தஜ்ஜால்) குழந்தை பாக்கியமற்ற மலடன்' என்று கூறவில்லையா? நானோ என் குழந்தையை மதீனாவில் விட்டுவந்துள்ளேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவன் மதீனாவுக்குள்ளும் மக்காவுக்குள்ளும் நுழையமுடியாது' என்று கூறவில்லையா? நானோ,மதீனாவிலிருந்து மக்காவை நாடி வந்துகொண்டிருக்கிறேன்" என்று சொன்னான்.

இதையெல்லாம் கேட்டு அவனை மன்னிக்கும் அளவுக்கு நான் போய்விட்டேன். பிறகு அவன், "அறிந்துகொள்க: அல்லாஹ்வின் மீதாணையாக! தஜ்ஜாலை நான் அறிவேன். அவனது பிறப்பையும், இப்போது அவன் எங்கே இருக்கிறான் என்பதையும் நான் அறிவேன்" என்றான். அப்போது நான் "காலமெல்லாம் உனக்கு நாசமுண்டாகட்டும்" என்று கூறி (சபித்து)விட்டேன்.

5611 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இப்னு ஸாயிதிடம், "சொர்க்கத்தின் மண் எது?" என்று கேட்டார்கள். அதற்கு அவன், "அபுல்காசிமே! அது (நிறத்தில்) வெண்மையான மாவும் (மணத்தில்) கஸ்தூரியும் ஆகும்" என்றான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சரிதான்" என்றார்கள்.

5612 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

இப்னு ஸய்யாத், நபி (ஸல்) அவர்களிடம் சொர்க்கத்தின் மண்ணைப் பற்றிக் கேட்டான். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "வெண்மையான மாவும் சுத்தமான கஸ்தூரியுமாகும்" என்று பதிலளித்தார்கள்.

5613 முஹம்மத் பின் அல்முன்கதிர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள், "இப்னு ஸாயித்'தான் தஜ்ஜால் என அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து கூறுவதை நான் கண்டேன். நான், "அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து கூறுகிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள், "உமர் (ரலி) அவர்கள் "இப்னு ஸாயித்'தான் தஜ்ஜால் என்று நபி (ஸல்) அவர்களுக்கு அருகிலேயே சத்தியம் செய்து கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களுக்கு மறுப்புத் தெரிவிக்கவில்லை" என்று சொன்னார்கள்.

5614 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

(என் தந்தை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடனும் (அவர்களின் தோழர்களில்) ஒரு குழுவினருடனும் இப்னு ஸய்யாதை நோக்கிச் சென்றார்கள்.

"பனூ மஃகாலா' குலத்தாரின் மாளிகைக்கருகே சிறுவர்களுடன் (சிறுவனாக) அவன் விளையாடிக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். அப்போது இப்னு ஸய்யாத் பருவ வயதை நெருங்கிவிட்டிருந்தான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கரத்தால் அவனது முதுகில் அடிக்கும் வரையில் அவன் எதையுமே உணரவில்லை.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் இறைவனின் தூதர்தான் என்று நீ சாட்சியம் அளிக்கிறாயா?" என்று இப்னு ஸய்யாதிடம் கேட்டார்கள். இப்னு ஸய்யாத் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைக் கூர்ந்து பார்த்துவிட்டு, "நீங்கள் (எழுதப்படிக்கத் தெரியாத மக்களான) "உம்மி' களின் தூதர் என்று நான் சாட்சியம் அளிக்கிறேன்" என்று பதிலளித்தான். மேலும் அவன், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "நான் இறைவனின் தூதர்தான் என்று நீங்கள் சாட்சியம் அளிக்கிறீர்களா?" என்றும் கேட்டான்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (இஸ்லாத்தைப் பற்றி அவனிடம் எதுவும் கேட்காமல்) அவனை விட்டுவிட்டு, "நான் அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர்களின் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளேன்" என்று கூறினார்கள்.

பிறகு அவனிடம், "(உன் நிலை பற்றி) நீ என்ன கருதுகிறாய்?" என்று கேட்டார்கள். அதற்கு இப்னு ஸய்யாத், "எனக்கு மெய்யான செய்திகளும் பொய்யான செய்திகளும் உதிக்கின்றன" என்று கூறினான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உனக்கு இப்பிரச்சினையில் (உண்மையும் பொய்யும் கலந்து) குழப்பம் ஏற்பட்டுள்ளது" என்று கூறிவிட்டு, "நான் ஒன்றை மனதில் உனக்காக (உன்னைச் சோதிப்பதற்காக) மறைத்துவைத்துள்ளேன். (அது என்னவென்று சொல்)" என்று கூறினார்கள். இப்னு ஸய்யாத், "அது "துக்' என்று பதிலளித்தான். (அதாவது "துகான்' (44) எனும் அத்தியாயத்தின் 10ஆவது வசனம் என்பதை அரைகுறையாகச் சொன்னான்.)

உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தூரவிலகிப்போ. நீ உன் எல்லையைத் தாண்டிவிட முடியாது" என்று கூறினார்கள்.

அப்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! என்னை விடுங்கள். இவனது கழுத்தை நான் வெட்டி விடுகிறேன்" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இவன் (இப்னு ஸய்யாத்) அவனாக (தஜ்ஜாலாக) இருந்தால் இவனைக் கொல்லும் பொறுப்பு உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை; இவன் அவனில்லையென்றால், இவனைக் கொல்வதால் உங்களுக்கு நன்மையேதும் இல்லை" என்று சொன்னார்கள்.

- (தொடர்ந்து) அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

அதன் பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் உபை பின் கஅப் (ரலி) அவர்களும் இப்னு ஸய்யாத் தங்கியிருந்த பேரீச்சந்தோட்டத்தை நோக்கி நடக்கலாயினர். பேரீச்சந் தோட்டத்திற்குள் நுழைந்தவுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இப்னு ஸய்யாத் தம்மைப் பார்த்துவிடும் முன்பே அவனிடமிருந்து அவனது பேச்சு எதையாவது கேட்டுவிட வேண்டுமென்று திட்டமிட்டபடி பேரீச்ச மரங்களுக்கிடையில் தம்மை மறைத்துக் கொண்டு நடந்தார்கள். அப்போது இப்னு ஸய்யாத் தனது படுக்கையில் ஒரு பூம்பட்டுப் போர்வைக்குள் எதையோ முணுமுணுத்தபடி படுத்திருந்தான்.

இப்னு ஸய்யாதின் தாய், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேரீச்ச மரங்களுக்கிடையே தம்மை மறைத்துக்கொண்டு வருவதைக் கண்டு, இப்னு ஸய்யாதை, "ஸாஃபியே!" (இது இப்னு ஸய்யாதின் பெயர்) இதோ முஹம்மத்!" என்றாள். உடனே இப்னு ஸய்யாத் குதித்தெழுந்து உட்கார்ந்து கொண்டான். (அதனால் அவனது பேச்சு எதையும் கேட்க முடியவில்லை.)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவள் அவனை அப்படியே விட்டுவிட்டிருந்தால் அவன் (உண்மை நிலையைத்) தெளிவுபடுத்தியிருப்பான்" என்று சொன்னார்கள்.
- அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து நின்று, அல்லாஹ்வை அவனது தகுதிக்கேற்பப் போற்றிப் புகழ்ந்துவிட்டு, தஜ்ஜாலைப் பற்றிப் பின்வருமாறு பேசினார்கள்:
அவனைக் குறித்து உங்களை நான் எச்சரிக்கிறேன். எந்த இறைத்தூதரும் அவனைக் குறித்துத் தம் சமுதாயத்தாரை எச்சரிக்காமல் இருந்ததில்லை. நூஹ் (அலை) அவர்கள் தம் சமுதாயத்தாரை அவனைக் குறித்து எச்சரித்தார்கள். ஆயினும், நான் அவனைப் பற்றி வேறெந்த இறைத்தூதரும் தம் சமுதாயத்தாருக்குச் சொல்லாத ஒரு விவரத்தை உங்களுக்குச் சொல்கிறேன். அவன் ஒற்றைக் கண்ணன் ஆவான்; வளமும் உயர்வும் மிக்க அல்லாஹ் ஒற்றைக் கண்ணன் அல்லன் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
அம்ர் பின் ஸாபித் அல்அன்சாரீ (ரஹ்) அவர்கள், நபித்தோழர்களில் சிலர் தம்மிடம் கூறியதாகப் பின்வருமாறு என்னிடம் தெரிவித்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தஜ்ஜாலைப் பற்றி எச்சரித்த அன்றைய தினத்தில், "தஜ்ஜாலின் இரு கண்களுக்கிடையில் "கா..்பிர்' (இறைமறுப்பாளன்) என்று எழுதப்பட்டிருக்கும். அவனது நடவடிக்கையை வெறுக்கின்ற ஒவ்வொருவரும் அதை வாசிப்பார்கள்; அல்லது ஒவ்வோர் இறைநம்பிக்கையாளரும் வாசிப்பார்கள்" என்றும், "அறிந்து கொள்ளுங்கள்: உங்களில் எவரும் இறப்பதற்கு முன் தம் இறைவனைப் பார்க்கமுடியாது" என்றும் கூறினார்கள்.

5615 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களில் ஒரு குழுவினருடன் (இப்னு ஸய்யாதை நோக்கி) நடந்தார்கள். அவர்களுடன் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களும் இருந்தார்கள். இப்னு ஸய்யாத், பனூ முஆவியா குலத்தாரின் மாளிகைக்கருகே சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். அப்போது அவன் பருவ வயதை எட்டியிருந்தான்.
மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன. அதில் உமர் பின் ஸாபித் (ரஹ்) அவர்கள் கூறிய செய்திவரையே இடம்பெற்றுள்ளது.
இந்த அறிவிப்பில், "அவள் அவனை அப்படியே விட்டுவிட்டிருந்தால் அவன் தனது நிலையை தெளிவுபடுத்தியிருப்பான்" என்பதற்கு "அவனுடைய தாய் அவனை அப்படியே விட்டிருந்தால் அவன் தனது நிலையைத் தெளிவுபடுத்தியிருப்பான்" என்று யஅகூப் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்கள் (விளக்கம்) கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5616 மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களில் ஒரு குழுவினருடன் இப்னு ஸய்யாதைக் கடந்து சென்றார்கள். அவர்களுடன் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்களும்

இருந்தார்கள். இப்னு ஸய்யாத், "பனூ மஃகாலா' குலத்தாரின் மாளிகைக்கருகே சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்தான். அப்போது அவன் சிறுவனாக இருந்தான்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸ்களில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
அவற்றில் அப்து பின் ஹுமைத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உபை பின் கஅப் (ரலி) அவர்களுடன் (இப்னு ஸய்யாத் தங்கியிருந்த) பேரீச்சந் தோட்டத்திற்குச் சென்றதைப் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை.

5617 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் இப்னு ஸாயிதை மதீனாவின் சாலைகளில் ஒன்றில் சந்தித்தார்கள். அவர்கள் அவனிடம் ஏதோ சொல்ல அவன் கோபப்பட்டான். உடனே அவனது உடல், தெருவையே அடைத்துக்கொள்ளும் அளவுக்கு (வீங்கி)ப் புடைத்தது. பின்னர் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் (தம் சகோதரி) ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம் சென்றார்கள். நடந்த செய்தி முன்பே ஹஃப்ஸாவுக்குத் தெரிந்திருந்தது.
அப்போது ஹஃப்ஸா (ரலி) அவர்கள், "அல்லாஹ் உமக்கு அருள்புரியட்டும்! நீர் இப்னு ஸாயிதிடமிருந்து என்ன எதிர்பார்த்தீர்?" என்று கேட்டுவிட்டு, "உமக்குத் தெரியுமா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவன் (தஜ்ஜால்) தனக்கேற்படும் ஒரு கோபத்தின் போதே புறப்படுவான்' என்று கூறியதை நீர் அறியவில்லையா? (ஒருகால் இப்னு ஸய்யாதே தஜ்ஜாலாக இருந்தால் என்னவாயிருக்கும்!)" என்று கேட்டார்கள்.

5618 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், "நான் இப்னு ஸய்யாதை இரு முறை சந்தித்தேன். முதல் முறை சந்தித்துவிட்டு வந்து அவ(னுடைய நண்ப)ர்களில் ஒருவரிடம், "இவன் (இப்னு ஸய்யாத்), அவர் (நபி) என்று நீங்கள் பேசிக்கொள்கிறீர்களா?" எனக் கேட்டேன். அதற்கு அவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! இல்லை" என்று பதிலளித்தார்.
அதற்கு நான், "நீர் என்னிடம் பொய் சொல்கிறீர். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் சிலர் என்னிடம், "அவன் உங்களிலேயே அதிகச்செல்வமும் நிறைய குழந்தைகளும் உள்ளவனாக ஆகாத வரை மரணிக்கமாட்டான்' என்று கூறினார்கள். அவனைப் பற்றி அவ்வாறே இன்றும் அவர்கள் கருதிக்கொண்டிருக்கிறார்கள் (நபி என்று கருதாவிட்டால் அவ்வளவு உறுதியாக நீங்கள் எப்படி இவ்வாறு நம்பினீர்கள்?)" என்று கேட்டேன் என்று கூறினார்கள்.
மேலும், அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: பிறகு நாங்கள் பேசிக்கொண்டிருந்துவிட்டு,அவனிடமிருந்து நான் (புறப்பட்டு) வந்துவிட்டேன். பிறகு அவனை மறுபடியும் நான் சந்தித்தபோது, அவனது கண் ஒன்று வீங்கிப் புடைத்திருந்தது. நான், "இப்போது நான் காணுகின்ற நிலையில் உன்னுடைய கண் எப்போது மாறியது?"என்று கேட்டேன். அதற்கு அவன், "எனக்குத் தெரியாது" என்று பதிலளித்தான். "உன் தலையிலேயே அது இருக்க,உனக்கு எப்படி தெரியாமல் போகும்?" என்று கேட்டேன்.
அதற்கு அவன், "அல்லாஹ் நாடினால் உம்முடைய இந்தக் கைத்தடிக்கும் அல்லாஹ் (இந்தக் குறையுள்ள) கண்ணை உருவாக்குவான்" என்று கூறிவிட்டு, கழுதையைப் போன்று மிகக் கடுமையாகக் கத்தினான். அப்போது என் தோழர்களில் சிலர், என்னிடமிருந்த கைத்தடியால் அது

உடையும் அளவுக்கு நான்தான் அவனை அடித்துவிட்டேன் என்று எண்ணினர். "அல்லாஹ்வின் மீதாணையாக! அ(வன் கத்திய)தற்கான காரணத்தை நான் அறியவில்லை.
பிறகு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் இறைநம்பிக்கையாளர்களின் அன்னை (ஹ∴ப்ஸா-ரலி) அவர்களிடம் சென்று அதைப் பற்றித் தெரிவித்தார்கள். அதற்கு இறை நம்பிக்கையாளர்களின் அன்னை ஹ∴ப்ஸா (ரலி) அவர்கள், "அவனிடம் உமக்கென்ன வேலை?" என்று கேட்டுவிட்டு, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவனுக்கு (தஜ்ஜாலுக்கு) ஏற்படும் ஒரு கோபத்தை முன்னிட்டே அவன் மக்களிடையே முதன் முதலில் புறப்பட்டு வருவான்' என்று கூறியதை நீர் அறியவில்லையா?" என்று கேட்டார்கள்.

**பாடம் : 20 தஜ்ஜால், அவனது தன்மை, அவனு டன் இருப்பவை ஆகியவை பற்றிய குறிப்பு.**

5619 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடையே தஜ்ஜாலைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்போது அவர்கள், "அல்லாஹ் ஒற்றைக் கண்ணன் அல்லன். அறிந்துகொள்ளுங்கள்! மசீஹுத் தஜ்ஜால் வலக்கண் குருடானவன் ஆவான். அவனது கண் (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சையைப் போன்றிருக்கும்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5620 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
எல்லா இறைத்தூதர்களும் தம் சமுதாயத்தாரை மகா பொய்யனான ஒற்றைக் கண்ணன் (தஜ்ஜால்) குறித்து எச்சரிக்காமல் இருந்ததில்லை. அறிந்துகொள்ளுங்கள்: அவன் ஒற்றைக் கண்ணன் ஆவான். ஆனால், உங்கள் இறைவன் ஒற்றைக் கண்ணன் அல்லன். அந்தப் பொய்யனுடைய இரு கண்களுக்கிடையே கா∴ப், ∴ப, ரா (இறைமறுப்பாளன் - கா∴பிர்) என்று (தனித் தனி எழுத்துகளில்) எழுதப்பட்டிருக்கும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது

5621 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தஜ்ஜாலின் இரு கண்களுக்கிடையே கா∴ப், ∴ப, ர -அதாவது கா∴பிர் (இறைமறுப்பாளன்)- என்று எழுதப்பட்டிருக்கும்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5622 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தஜ்ஜால் ஒரு கண் தடவப்பட்டவன் ஆவான். அவனுடைய இரு கண்களுக்கிடையே "கா∴பிர்' என்று எழுதப்பட்டிருக்கும். அதை ஒவ்வொரு முஸ்லிமும் வாசிப்பார்" என்று கூறிவிட்டு,அதைத் தனித்தனியாக (கா∴ப், ∴ப, ர என்று) உச்சரித்துக் காட்டினார்கள்.

5623 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தஜ்ஜால் இடக்கண் குருடானவனும் தலைமுடி நிறைந்தவனும் ஆவான். அவனுடன் சொர்க்கமொன்றும் நரகமொன்றும் இருக்கும். அவனிடம் உள்ள நரகம் சொர்க்கமாகும். அவனிடம் உள்ள சொர்க்கம் நரகமாகும்.
இதை ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5624 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தஜ்ஜாலுடன் என்ன இருக்கும் என்பதை அவனைவிட நான் நன்கறிவேன். ஓடுகின்ற இரு நதிகள் அவனிடம் இருக்கும். அவற்றில் ஒன்று வெளிப்பார்வைக்கு வெண்மையான நீராகக் காட்சி தரும். மற்றொன்று வெளிப்பார்வைக்கு கொழுந்துவிட்டெரியும் நெருப்பாகக் காட்சி தரும்.
அந்த இடத்தை அடைபவர் நெருப்பாகக் காட்சியளிக்கும் நதிக்குச் சென்று, கண்ணை மூடிக் கொண்டு, தலையைத் தாழ்த்தி அதிலிருந்து சிறிது அருந்தட்டும். ஏனெனில், அது குளிர்ந்த நீராகும். தஜ்ஜால் ஒரு கண் தடவப்பட்டவன் ஆவான். அவ(னது கண்ணி)ன் மீது கெட்டியான தோல் ஒன்று (மூடி) இருக்கும். அவனுடைய இரு கண்களுக்கிடையில் "காஃபிர்" (இறை மறுப்பாளன்) என்று எழுதப்பட்டிருக்கும். எழுத்தறிவுள்ள, எழுத்தறிவற்ற ஒவ்வோர் இறை நம்பிக்கையாளரும் அதை வாசிப்பார்.
இதை ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5625 ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தஜ்ஜால் தொடர்பாகக் கூறுகையில், "அவனுடன் நீரும் நெருப்பும் இருக்கும். அவனிடம் உள்ள நெருப்பானது (உண்மையில்) குளிர்ந்த நீராகும். அவனிடமுள்ள நீர் (உண்மையில்) நெருப்பாகும். ஆகவே, (அவனிடமுள்ள தண்ணீரை நம்பி) அழிந்து விடாதீர்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
இந்த ஹதீஸை நானும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றுள்ளேன் என அபூமஸ்ஊத் உக்பா பின் அம்ர் அல்அன்சாரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5626 ரிப்ஈ பின் ஹிராஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூமஸ்ஊத் உக்பா பின் அம்ர் (ரலி) அவர்களுடன் ஹுதைஃபா பின் அல் யமான் (ரலி) அவர்களிடம் சென்றேன். உக்பா (ரலி) அவர்கள் ஹுதைஃபா (ரலி) அவர்களிடம், "நீங்கள் தஜ்ஜால் தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்ற ஹதீஸை எனக்கு அறிவியுங்கள்" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர்கள், "தஜ்ஜால் (யுக முடிவு நாளுக்குமுன்) புறப்பட்டு வருவான். அவனுடன் நீரும் நெருப்பும் இருக்கும். மக்களுக்கு நீராகக் காட்சி தருவது (உண்மையில்) கரிக்கும் நெருப்பாகும். மக்களுக்கு நெருப்பாகக் காட்சி தருவது (உண்மையில்) குளிரான சுவை நீராகும். உங்களில் யார் அந்த இடத்தை அடைகிறாரோ அவர் நெருப்பாகக் காட்சியளிப்பதில் விழட்டும்! ஏனெனில், அது நல்ல சுவை நீராகும்" என்று கூறினார்கள்.

அப்போது உக்பா பின் அம்ர் (ரலி) அவர்கள், ஹுதைஃபா (ரலி) அவர்களின் அறிவிப்பை உண்மைப்படுத்தும் விதமாக, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நானும் (இவ்வாறே) செவியுற்றேன்" என்றார்கள்.

5627 ரிப்ஈ பின் ஹிராஷ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஹுதைஃபா (ரலி) அவர்களும் அபூமஸ்ஊத் உக்பா பின் அம்ர் (ரலி) அவர்களும் (ஓரிடத்தில்) சந்தித்துக்கொண்டனர். அப்போது ஹுதைஃபா (ரலி) அவர்கள், "நான் தஜ்ஜாலுடன் என்ன இருக்கும் என்பதை தஜ்ஜாலைவிட நன்கறிவேன். அவனுடன் நீராலான நதியொன்றும் நெருப்பாலான நதியொன்றும் இருக்கும். நெருப்பாகக் காட்சியளிப்பதே (உண்மையில்) நீராகும். நீராகக் காட்சியளிப்பதே (உண்மையில்) நெருப்பாகும். உங்களில் அந்த இடத்தை அடைபவர் நீரருந்த விரும்பினால், நெருப்பைப் போன்று காட்சியளிப்பதிலிருந்து அருந்தட்டும். ஏனெனில், அதையே அவர் நீராகக் காண்பார்" என்று சொன்னார்கள்.
(இதைக் கேட்ட) அபூமஸ்ஊத் உக்பா பின் அம்ர் (ரலி) அவர்கள், "இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் கூறியதை நானும் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5628 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
நான் உங்களிடம் தஜ்ஜாலைப் பற்றிய செய்தி ஒன்றைச் சொல்லட்டுமா? வேறெந்த இறைத்தூதரும் அதைப் பற்றி தம் சமுதாயத்தாருக்குச் சொன்னதில்லை. அது (என்னவெனில்), அவன் ஒற்றைக்கண்ணன் ஆவான். அவன் தன்னுடன் சொர்க்கம் மற்றும் நரகம் போன்றதைக் கொண்டுவருவான். அவன் எதைச் சொர்க்கம் என்று கூறுகிறானோ, அதுதான் (உண்மையில்) நரகமாக இருக்கும். (இறைத்தூதர்) நூஹ் (அலை) அவர்கள் அவனைக் குறித்துத் தம் சமூகத்தாரை எச்சரித்ததைப் போன்று, நானும் உங்களை (அவனைக் குறித்து) எச்சரிக்கிறேன்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5629 நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு நாள் காலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தஜ்ஜாலைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அவன் தொடர்பாக(ப் பேசியபோது) அவர்கள் (சில சமயம் குரலைத்) தாழ்த்தவும், (சில சமயம்) உயர்த்தவும் செய்தார்கள். இறுதியில் அவன், (அருகிலுள்ள) பேரீச்ச மரத்தோப்புகளுக்கிடையே இருக்கிறானோ என்று நாங்கள் எண்ணும் அளவுக்குப் பேசினார்கள்.
பின்னர் நாங்கள் (மறுபடியும்) மாலைப் பொழுதில் நபியவர்களிடம் வந்தோம். அப்போது தஜ்ஜாலைக் குறித்த அச்சம் எங்கள் முகங்களில் இருப்பதை அவர்கள் அறிந்துகொண்டு, "உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் (இன்று) காலையில் தஜ்ஜாலைப் பற்றிக் குறிப்பிட்டீர்கள். (அப்போது) அவனைப் பற்றி(க் குரலை)த் தாழ்த்தியும் உயர்த்தியும் பேசினீர்கள். இறுதியில் அவன், (அருகிலுள்ள) பேரீச்ச மரத்தோப்புகளுக்கிடையே இருக்கிறானோ என்று நாங்கள் எண்ணும் அளவுக்குப் பேசினீர்கள் (அதுதான் எங்கள் அச்சத்திற்குக் காரணம்)" என்று கூறினோம்.

அப்போது நபியவர்கள், "நான் உங்கள் விஷயத்தில் பெரிதும் அஞ்சுவது தஜ்ஜாலைக் குறித்து அல்ல; நான் உங்களிடையே (உயிருடன்) இருக்கும்போது அவன் தோன்றினால் அவனிடமிருந்து உங்களைக் காக்க நானே வாதாடுவேன். நான் உங்களிடையே இல்லாத போது அவன் வெளிப்பட்டால், அப்போது ஒவ்வொரு (முஸ்லிமான) மனிதரும் தமக்காக வாதாடிக்கொள்ள வேண்டும்; அல்லாஹ் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் எனது சார்பில் பொறுப்பாளனாக இருப்பான்.

தஜ்ஜால் சுருள்முடி கொண்ட ஓர் இளைஞன் ஆவான்; அவனது கண் ஒரே குலையில் துருத்திக் கொண்டிருக்கும் திராட்சை போன்றிருக்கும். உருவத்தில் அவன் அப்துல் உஸ்ஸா பின் கத்தன் என்பவனை ஒத்திருப்பான்.

உங்களில் யார் அவனை அடைகிறாரோ அவர் அவனுக்கெதிராக "அல்கஹ்ஃப்' அத்தியாயத்தின் (18) ஆரம்ப வசனங்களை ஓதிக்கொள்ளட்டும். அவன் சிரியாவுக்கும் இராக்குக்கும் இடையே உள்ள ஒரு பகுதியிலிருந்து புறப்பட்டு வந்து, வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும் அக்கிரமங்களைக் கட்டவிழ்த்துவிடுவான்; அல்லாஹ்வின் அடியார்களே! அப்போது நீங்கள் உறுதியோடு இருங்கள்" என்றார்கள்.

நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! அவன் பூமியில் எத்தனை நாட்கள் தங்கியிருப்பான்?" என்று கேட்டோம். அதற்கு, "நாற்பது நாட்கள்' என்று பதிலளித்த நபியவர்கள், "அன்றைய ஒரு நாள் ஓர் ஆண்டைப் போன்றும், மறுநாள் ஒரு மாதத்தைப் போன்றும், அதற்கு அடுத்த நாள் ஒரு வாரத்தைப் போன்றும், மற்ற நாட்கள் உங்களின் (சாதாரண) நாட்களைப் போன்றும் இருக்கும்" என்று குறிப்பிட்டார்கள்.

நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! ஓர் ஆண்டிற்குச் சமமாக இருக்கும் அந்த ஒரு நாளில், வழக்கமாகத் தொழும் (ஐவேளைத்) தொழுகைகளைத் தொழுதால் போதுமா?" என்று கேட்டோம். அதற்கு நபியவர்கள், "இல்லை (போதாது);அந்த (நீண்ட) நாளை, அதற்கேற்ப மதிப்பிட்டு(த் தொழுது)கொள்ளுங்கள்" என்று பதிலளித்தார்கள்.

நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! பூமியில் அவன் (சுற்றித் திரியும்) வேகம் எப்படி இருக்கும்?" என்று கேட்டோம். அதற்கு நபியவர்கள், "பின்னாலிருந்து காற்று விரட்டிச் செல்லும் மேகம் போன்று (அவன் வேகமாக பூமியைச் சுற்றிவருவான்)" என்றார்கள். மேலும், நபியவர்கள் கூறினார்கள்:

அவன் ஒரு சமுதாயத்தாரிடம் வந்து (தன்னை இறைவன் என்று ஏற்றுக்கொள்ளுமாறு) அவர்களுக்கு அழைப்புவிடுப்பான். அவர்களும் அவன்மீது நம்பிக்கை கொண்டு அவனது அழைப்புக்குப் பதிலளிப்பார்கள். உடனே வானத்திற்கு (மழை பொழியுமாறு) அவன் கட்டளையிட, மழை பொழியும். பூமிக்கு(த்தாவரங்களை முளைக்கச் செய்யுமாறு) கட்டளையிட, அது முளையவைக்கும். (அவற்றை மேய்ந்து) அவர்களின் கால்நடைகள் ஏற்கெனவே இருந்ததைவிட நீண்ட திமில்களைக் கொண்டவையாகவும் மடி கனத்தவையாகவும் வயிறு நிரம்பியவையாகவும் மாலையில் (வீடு) திரும்பும்.

பின்னர், அவன் மற்றொரு சமுதாயத்தாரிடம் வந்து, (தன்னை இறைவன் என்று ஏற்றுக்கொள்ளுமாறு) அவர்களுக்கும் அழைப்பு விடுப்பான். ஆனால், அவனது அழைப்பை அவர்கள் நிராகரித்து விடுவார்கள். அவர்களிடமிருந்து அவன் திரும்பிச் சென்றுவிடுவான். அதனால், அவர்கள் பஞ்சத்தாலும் வறட்சியாலும் பாதிக்கப்பட்டவர்களாகக் காலைப்பொழுதை அடைவார்கள். அவர்களின் கைகளில் அவர்களின் செல்வம் ஏதும் (எஞ்சி) இராது.

அவன் பாழடைந்த இடமொன்றைக் கடந்து செல்வான். அதைப் பார்த்து, "உன்னிடம் இருக்கின்ற புதையல்களை வெளிப்படுத்து" என்று கூறுவான். அப்போது (வெளிப்படும்) அந்தப் புதையல்கள், இராணித் தேனீக்களை (பின்பற்றிச் செல்லும் தேனீக்களை)ப் போன்று அவனைப் பின்தொடர்ந்து செல்லும்.

பின்னர், அவன் வாட்டசாட்டமான இளைஞர் ஒருவரை அழைத்து, அவரை வாளால் வெட்டி இரு துண்டுகளாக்கி,அம்பெய்யும் தூரத்திற்கு இடைவெளிவிட்டு (அவ்விரண்டையும்) போடுவான். பின்னர் அந்தச் சடலத்தை அழைப்பான். உடனே அந்த இளைஞர் முகம் ஒளிர சிரித்துக்கொண்டே எழுந்து வருவார்.

இதற்கிடையே, மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்களை அல்லாஹ் (பூமிக்கு) அனுப்பி வைப்பான். அவர் (சிரியாவின் தலைநகர்) "திமஷ்க்' (டமாஸ்கஸ்) நகரின் கிழக்குப் பகுதியிலுள்ள வெள்ளைக் கோபுரத்திற்கு அருகில் இரு வானவர்களின் இறக்கைகள்மீது தம் கைகளை வைத்தவாறு இறங்குவார்.

அப்போது அவர் குங்குமப்பூ நிறத்தில் இரு ஆடைகளை அணிந்திருப்பார். அவர் தமது தலையைத் தாழ்த்தினால் நீர்த்துளி சொட்டும்; தலையை உயர்த்தினாலோ வெண்முத்தைப் போன்று நீர்த்துளி வழியும். அவரது மூச்சுக் காற்றைச் சுவாசிக்கும் (அதாவது அவரை நெருங்கும்) எந்தவோர் இறைமறுப்பாளனும் சாகாமல் இருக்கமாட்டான். அவர் விடும் மூச்சானது அவரது பார்வை எட்டும் தூரம்வரை செல்லும்.

பின்னர் ஈசா (அலை) அவர்கள் தஜ்ஜாலைத் தேடிச் செல்வார்கள். இறுதியில், (பாலஸ் தீனத்திலுள்ள) "லுத்து' எனும் நகரத்தின் தலைவாயிலருகே அவனைக் கண்டு, அவனைக் கொன்றொழிப்பார்கள். பின்னர் தஜ்ஜாலிடமிருந்து அல்லாஹ் காப்பாற்றிய ஒரு சமுதாயத்தார் மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்களிடம் வருவார்கள். அவர்களின் முகங்களை(ப்பரிவோடு) அவர் தடவிக் கொடுத்துச் சொர்க்கத்தில் அவர்களுக்குக் கிடைக்கவிருக்கும் படித்தரங்கள் குறித்து அவர்களுக்குத் தெரிவிப்பார்.

இதற்கிடையே, ஈசா (அலை) அவர்களுக்கு அல்லாஹ், "நான் என் அடியார்கள் சிலரை வெளி வரச் செய்துள்ளேன். அவர்களுடன் போரிட யாருக்கும் ஆற்றல் கிடையாது. எனவே, (முஸ்லிமான) என் அடியார்களை (சினாயிலுள்ள) "தூர்' மலைக்கு அழைத்துச் சென்று பாதுகாப்பாக வையுங்கள்" என்று (வஹீ) அறிவிப்பான்.

பின்னர், அல்லாஹ் "யஃஜூஜ்' "மஃஜூஜ்' கூட்டத்தாரை அனுப்புவான். அவர்கள் ஒவ்வோர் உயரமான பகுதியிலிருந்தும் வேகமாக(க் கீழே இறங்கி) வருவார்கள். அவர்களில் முதல் அணியினர் (ஜோர்தானில் உள்ள) "தபரிய்யா' ஏரியைக் கடந்து செல்லும்போது, அதிலுள்ள மொத்த நீரையும் குடித்துவிடுவார்கள். அவர்களின் இறுதி அணியினர் அதைக் கடந்து செல்லும்போது. "முன்னொரு காலத்தில் இந்த ஏரியில் தண்ணீர் இருந்திருக்கும்" என்று பேசிக்கொள்வார்கள்.

பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் ("தூர்' மலையில்) முற்றுகையிடப்படுவார்கள். அப்போது (ஏற்படும் பட்டினியால்) அவர்களில் ஒருவருக்குக் காளை மாட்டின் தலை கிடைப்பது, இன்று உங்களில் ஒருவருக்கு நூறு பொற்காசுகள் கிடைப்பதைவிடச் சிறந்ததாக இருக்கும்.

பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (அல்லாஹ்விடம் உதவி கேட்டுப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் பிடரிகளில் புழுக்களை அல்லாஹ் அனுப்புவான். அதனால் அவர்கள் அனைவரும் ஒரே நேரத்தில் பலியாவார்கள். பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (மலையிலிருந்து) தரைக்கு இறங்கி வருவார்கள்.
அப்போது பூமியின் எந்தவொரு சாண் அளவு இடமும், யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் (சடலங்களிலிருந்து வெளிவரும்) கொழுப்பாலும் துர்நாற்றத்தாலும் நிரம்பியிருப்பதையே காண்பார்கள். உடனே இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் அல்லாஹ்விடம் (அவற்றை அகற்றக்கோரிப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது அல்லாஹ் ஒட்டகங்களின் கழுத்துகளைப் போன்று (பெரியதாக உள்ள) பறவைகளை அனுப்புவான். அவை அந்தப் பிணங்களைத் தூக்கிச் சென்று அல்லாஹ் நாடிய இடத்தில் வீசியெறியும்.

பின்னர் அல்லாஹ் மழை பொழியச் செய்வான். அந்த மழை எந்த மண் வீட்டிலும், எந்த முடிவீட்டிலும் படாமல் இருக்காது. இறுதியில், பூமியைக் கழுவி, கண்ணாடி போன்று (சுத்தமாக) ஆக்கிவிடும். பின்னர் பூமிக்கு, "நீ உன் கனி வர்க்கங்களை முளைக்கச் செய்வாயாக; உன்னிடமுள்ள வளங்களை மறுபடியும் தருவாயாக" என்று உத்தரவு பிறப்பிக்கப்படும்.

அன்றைய நாளில் (எந்த அளவுக்கு வளம் கொழிக்குமெனில்), ஒரு குழுவினர் சேர்ந்து ஒரேயொரு மாதுளம் பழத்தை உண்பர். அதன் தொலி அவர்கள் அனைவருக்கும் நிழல் அளிக்கும். அவர்களுக்குப் பால் வளமும் கிட்டும். எந்த அளவுக்கென்றால், பால் தரும் ஓர் ஒட்டகம் ஒரு பெரும் கூட்டத்துக்கே போதுமானதாயிருக்கும். பால் தரும் பசுவொன்று ஒரு குலத்தாருக்கே போதுமானதாயிருக்கும். பால் தரும் ஆடொன்று உறவினர்கள் அடங்கிய ஒரு கூட்டத்திற்கே போதுமானதாயிருக்கும்.

இந்நிலையில், அல்லாஹ் தூய காற்று ஒன்றை அனுப்புவான். அது அவர்களின் அக்குள்களுக்குக் கீழே நுழைந்து அவர்களைப் பிடித்துக்கொள்ளும். இறைநம்பிக்கை கொண்ட ஒவ்வொரு முஸ்லிமின் உயிரையும் அது கைப்பற்றும். அதையடுத்து மக்களில் தீயவர்கள் (மட்டுமே பூமியில்) எஞ்சியிருப்பார்கள். அவர்கள் கழுதைகளைப் போன்று (வெட்ட வெளியில் வைத்துப் பகிரங்கமாக) உடலுறவு கொள்வார்கள். அவர்கள்மீதுதான் உலக முடிவு நாள் ஏற்படும்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5630 மேற்கண்ட ஹதீஸ் வேறு இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "முன்பொரு காலத்தில் இங்கு நீர் இருந்திருக்கிறது" என்பதற்குப் பிறகு, "பின்னர் அவர்கள் பைத்துல் மக்திஸிலுள்ள மலையான "ஜபலுல் கமர்'வரை பயணம் மேற்கொள்வார்கள். அப்போது அவர்கள், "பூமியிலுள்ளவர்கள் அனைவரையும் நாம் கொன்று விட்டோம். வாருங்கள்: வானத்திலுள்ளோரை நாம் கொல்வோம்' என்று கூறியபடி தங்களுடைய அம்புகளை வானை நோக்கி எய்வார்கள். அப்போது அல்லாஹ் அவர்களுடைய அம்புகளை இரத்தம் தோய்த்து திருப்பியனுப்புவான்" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

அலீ பின் ஹுஜ்ர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நான் என் அடியார்கள் சிலரை (மலைகளிலிருந்து) இறக்கிவிட்டுள்ளேன். அவர்களுடன் போரிட யாருக்கும் ஆற்றல் கிடையாது என்று (அல்லாஹ் ஈசா (அலை) அவர்களிடம் அறிவிப்பான்" என) இடம் பெற்றுள்ளது.

பாடம் : 21 தஜ்ஜாலின் தன்மையும், மதீனா நகருக்குள் நுழைய முடியாமல் அவனுக்குத் தடை விதிக்கப்படுவதும், அவன் இறைநம்பிக்கையாளர் ஒருவரைக் கொன்றுவிட்டு உயிர்ப்பிப்பதும்.

5631 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நாள் தஜ்ஜாலைக் குறித்து நீண்ட ஹதீஸ் ஒன்றை அறிவித்தார்கள். (அவனைப் பற்றி) எங்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அறிவித்தவற்றில் பின்வரும் தகவலும் அடங்கும்:
மதீனாவின் பாதைகளில் நுழைவது தடை செய்யப்பட்டிருக்கும் நிலையில் தஜ்ஜால் வருவான். மதீனாவையடுத்து (சிரியா நாட்டுத்திசையில்) உள்ள உவர் நிலம் ஒன்றில் அவன் தங்குவான். அந்நாளில் "மக்களிலேயே சிறந்தவரான ஒரு மனிதர்' அல்லது "மக்களிலேயே சிறந்தவர்களில் ஒரு மனிதர்' அவனை நோக்கிப் புறப்பட்டுச் சென்று, "எவனது செய்தியை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு முன்னறிவிப்புச் செய்தார்களோ அந்த தஜ்ஜால் நீதான் என்று நான் உறுதி கூறுகிறேன்" என்று கூறுவார்.
அப்போது தஜ்ஜால், "நான் இவனைக் கொன்றுவிட்டுப் பிறகு உயிராக்கிவிட்டால் அப்போதுமா (நான் இறைவன் எனும்) என் விஷயத்தில் சந்தேகம் கொள்வீர்கள்?" என்று (மக்களிடம்) கேட்பான். மக்கள், "இல்லை' என்று பதிலளிப்பார்கள். உடனே அவன் அம்மனிதரைக் கொன்றுவிட்டு உயிர்ப்பித்துக் காட்டுவான். அந்த மனிதர் உயிர் பெற்றெழுந்ததும், "அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இன்று உன்னை அறிந்து கொண்டதைவிட வேறெப்போதும் நன்றாக அறிந்துகொண்டதில்லை" என்று சொல்வார். உடனே தஜ்ஜால் அந்த மனிதரைக் கொன்றுவிட விரும்புவான். ஆனால்,அவருக்கெதிராக அவனுக்கு அதிகாரம் வழங்கப்படாது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அபூஇஸ்ஹாக் இப்ராஹீம் பின் சுஃப்யான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அந்த மனிதர் "களிர்' (அலை) அவர்கள்தான் என்று சொல்லப்படுகிறது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5632 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தஜ்ஜால் புறப்பட்டு வரும்போது இறைநம்பிக்கையாளர்களில் ஒருவர் அவனை நோக்கிச் செல்வார். அப்போது அவரை ஆயுதமேந்திய தஜ்ஜாலின் பாதுகாப்புப் படையினர் எதிர்கொண்டு, "எங்கே செல்கிறாய்?" என்று கேட்பார்கள். அந்த மனிதர், "(இப்போது) புறப்பட்டிருக்கும் இந்த மனிதனை நோக்கிச் செல்கிறேன்" என்று பதிலளிப்பார். அதற்கு அவர்கள், "நம் இறைவனை (தஜ்ஜாலை) நீ நம்பவில்லையா?" என்று கேட்பார்கள். அந்த மனிதர், "நம் இறைவன் யார் என்பது தெரியாதது அல்ல" என்று கூறுவார். அதற்கு அவர்கள், "இவனைக் கொல்லுங்கள்" என்று கூறுவார்கள்.

அப்போது அவர்களில் சிலர் சிலரிடம், "உங்கள் இறைவன் (தஜ்ஜால்), யாரையும் தானின்றி கொல்லக்கூடாதென உங்களுக்குத் தடை விதிக்கவில்லையா?" என்று கூறுவார்கள். ஆகவே, அவர்கள் அந்த மனிதரை தஜ்ஜாலிடம் கொண்டுசெல்வார்கள். அந்த இறை நம்பிக்கையாளர் தஜ்ஜாலைக் காணும் போது, "மக்களே! இவன்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட தஜ்ஜால் ஆவான்" என்று சொல்வார்.
உடனே தஜ்ஜாலின் உத்தரவின்பேரில், அவர் பிடித்துக் கொண்டுவரப்பட்டு (தூண்களுக்கிடையே) நிறுத்தப்படுவார். "இவனைப் பிடித்து இவனது தலையைப் பிளந்துவிடுங்கள்" என்று அவன் கட்டளையிடுவான். அப்போது அவர்,முதுகும் வயிறும் வீங்கும் அளவுக்கு அடிக்கப்படுவார்.
பிறகு தஜ்ஜால், "என்மீது நீ நம்பிக்கை கொள்ளவில்லையா?" என்று கேட்பான். அதற்கு அந்த மனிதர், "நீ பெரும் பொய்யன் "மசீஹ்' ஆவாய்" என்று கூறுவார். பிறகு அவரது உச்சந்தலையில் ரம்பத்தை வைத்து அறுத்து அவருடைய இரு கால்கள்வரை தனித்தனியே பிளக்கும்படி கட்டளையிடப்படும். அவ்வாறே செய்து (அவரது உடலை இரு துண்டுகளாக்கியதும்) அவ்விரு துண்டுகளுக்கிடையில் தஜ்ஜால் நடந்து வருவான்.
பிறகு அந்த உடலைப் பார்த்து, "எழு" என்பான். உடனே அந்த மனிதர் (உயிர்பெற்று) நேராக எழுந்து நிற்பார். பிறகு அவரிடம், "என்மீது நம்பிக்கை கொள்கிறாயா?" என்று தஜ்ஜால் கேட்பான். அதற்கு அந்த மனிதர், "உன்னைப் பற்றி இன்னும் கூடுதலாகவே நான் அறிந்து கொண்டேன்" என்று சொல்வார். பிறகு அந்த மனிதர், "மக்களே! (இவன் இவ்வாறெல்லாம் செய்வதால் இவனை இறைவன் என நம்பிவிடாதீர்கள்.) இவன் எனக்குப் பிறகு மக்களில் வேறெவரையும் எதுவும் செய்யமுடியாது" என்று கூறுவார்.
உடனே தஜ்ஜால் அவரை அறுப்பதற்காகப் பிடிப்பான். ஆனால், அப்போது அவரது பிடரியிலிருந்து காறை எலும்புவரையுள்ள பகுதி செம்பாக மாறிவிடும். ஆகவே, அவனால் அவரை ஒன்றும் செய்யமுடியாது. பிறகு தஜ்ஜால் அந்த மனிதரின் கைகளையும் கால்களையும் பிடித்துத் தூக்கியெறிவான். அந்த மனிதரை தஜ்ஜால் நெருப்பில் தூக்கியெறிந்துவிட்டான் என மக்கள் எண்ணிக் கொள்வார்கள். ஆனால், அவர் சொர்க்கத்தில்தான் வீசப்பட்டிருப்பார்.
"இந்த மனிதர்தான் அகிலத்தின் அதிபதியான அல்லாஹ்விடம் மக்களிலேயே மகத்தான உயிர்த்தியாகம் செய்தவர் ஆவார்" என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர் கள் கூறினார்கள்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம்: 22 வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வுக்கு தஜ்ஜால் மிகவும் சாதாரணமானவனே!

5633 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் தஜ்ஜாலைப் பற்றி நான் கேட்(டுத் தெரிந்துகொண்)டதைவிட அதிகமாக வேறெவரும் கேட்(டுத் தெரிந்து கொண்)டதில்லை. நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "அவனைக் குறித்து உமக்கென்ன சிரமம்? அவனால் உமக்கெந்தத் தீங்கும் இல்லை" என்றார்கள்.
நான், "அல்லாஹ்வின் தூதரே! (அவனைக் குறித்து அச்சம்தான். ஏனெனில்,) தஜ்ஜாலுடன் (மலையளவு) உணவும் நதிகளும் இருக்கும் என்று மக்கள் கூறுகிறார்கள்" என்றேன். "(இது என்ன பிரமாதம்? அவன் மூலம் அல்லாஹ் எதையெல்லாம் காட்டவிருக்கிறானோ) அவற்றைவிட இவை அல்லாஹ்வுக்கு மிகவும் சாதாரணமானவையே!" என்று சொன்னார்கள்.

5634 முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களிடம் தஜ்ஜாலைக் குறித்து நான் வினவியதைவிட அதிகமாக வேறெவரும் வினவியதில்லை. நபி (ஸல்) அவர்கள் (என்னிடம்), "உமது கேள்வி என்ன?" என்று கேட்டார்கள். நான், "தஜ்ஜாலுடன் மலையளவு ரொட்டியும் இறைச்சியும் நதியளவு நீரும் இருக்கும் என்று மக்கள் கூறுகிறார்கள்" என்றேன்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(இது என்ன பிரமாதம்? அவன் மூலம் அல்லாஹ் எதையெல்லாம் காட்டவிருக்கிறானோ) அவற்றைவிட இவை அல்லாஹ்வுக்கு மிகவும் சாதாரணமானவையே" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் ஆறு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் யஸீத் பின் ஹாரூன் (ரஹ்), அவர்களது அறிவிப்பில், என்னிடம் நபி (ஸல்) அவர்கள் "அன்பு மகனே!' என்று கூறினார்கள் எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

**பாடம் : 23 தஜ்ஜால் வெளிப்படுவதும், அவன் பூமியில் தங்கியிருப்பதும், ஈசா (அலை) அவர்கள் (வானிலிருந்து) இறங்கிவந்து அவனைக் கொன்றொழிப்பதும், நன்மையும் இறைநம்பிக்கையும் உள்ளவர்கள் (மரித்துப்)போவதும், மக்களிலேயே தீயவர்கள் எஞ்சியிருந்து சிலைகளை வழிபடுவதும், எக்காளம் (ஸூர்) ஊதப்பட்டு மண்ணறைகளில் உள்ளோர் எழுப்பப்படுவதும்.**

5635 யஅகூப் பின் ஆஸிம் பின் உர்வா பின் மஸ்ஊத் அஸ்ஸகஃபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களிடம் வந்து, "யுக முடிவு நாளில் இன்னின்னது நிகழும் எனத் தாங்கள் கூறிவரும் ஹதீஸ் என்ன?" என்று கேட்டார். அதற்கு அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் "சுப்ஹானல்லாஹ்' (அல்லாஹ் தூயவன்), அல்லது "லாயிலாஹ இல்லல்லாஹ்' (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை), அல்லது இவற்றைப் போன்ற ஒரு (துதிச்) சொல்லைக் கூறிவிட்டு, "நான் யாருக்கும் எந்த ஹதீஸையும் ஒருபோதும் அறிவிக்கக்கூடாது என எண்ணியிருந்தேன். நீங்கள் வெகுவிரைவில் ஒரு மகத்தான நிகழ்ச்சியைக் காண்பீர்கள். இறையில்லம் கஅபா எரிக்கப்படும். மேலும் இவ்வாறு, இவ்வாறு நடக்கும் என்றே நான் சொன்னேன் எனக் கூறிவிட்டு, பின்வருமாறு கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

தஜ்ஜால் என் சமுதாயத்தாரிடையே புறப்பட்டுவந்து, நாற்பதுவரை தங்கியிருப்பான். (நாற்பது நாட்களா, அல்லது நாற்பது மாதங்களா, அல்லது நாற்பது ஆண்டுகளா என்பது எனக்குத் தெரியவில்லை.) அப்போது அல்லாஹ், மர்யமின் புதல்வர் ஈசா (அலை) அவர்களை அனுப்புவான். அவர்கள் (சாயலில்) உர்வா பின் மஸ்ஊத் அவர்களைப் போன்றிருப்பார்கள். அவர்கள் தஜ்ஜாலைத் தேடி வந்து அழிப்பார்கள். பிறகு மக்கள் ஏழாண்டுகள் தங்கியிருப்பார்கள். அன்று எந்த இருவருக்குமிடையேயும் பகையுணர்வு இருக்காது.
பிறகு அல்லாஹ் ஷாம் (சிரியா) நாட்டின் திசையிலிருந்து குளிர்ந்த காற்று ஒன்றை அனுப்புவான். அப்போது பூமியின் மீது தமது உள்ளத்தில் கடுகு மணியளவு நன்மை, அல்லது இறைநம்பிக்கை (ஈமான்) உள்ள எவரது உயிரையும் அது கைப்பற்றாமல் விட்டுவைக்காது. எந்த அளவுக்கென்றால், உங்களில் ஒருவர் மலைக்கு நடுவே நுழைந்து விட்டாலும் அங்கும் அது

நுழைந்து அவரது உயிரைக் கைப்பற்றும். இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்.
மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: பிறகு (தீமைகளை நோக்கி) விரைந்து செல்வதில் பறவைகளையும், குணத்தில் மிருகங்களையும் ஒத்த தீய மனிதர்களே எஞ்சியிருப்பார்கள். அவர்கள் எந்த நன்மையையும் அறியவுமாட்டார்கள். எந்தத் தீமையையும் மறுக்கவுமாட்டார்கள். அப்போது அவர்களிடையே ஷைத்தான் காட்சியளித்து, "நீங்கள் (எனக்குப்) பதிலளிக்க மாட்டீர்களா?" என்று கேட்பான். அந்த மக்கள், "நீ என்ன உத்தரவிடுகிறாய்?" என்று கேட்பார்கள். அப்போது ஷைத்தான், சிலைகளை வழிபடுமாறு உத்தரவிடுவான்.
இவ்வாறு அவர்கள் (சிலைவழிபாடு செய்துகொண்டு) இருக்கும்போது அவர்களின் வாழ்வாதாரம் தாராளமானதாய் இருக்கும். அவர்களின் வாழ்க்கை செழிப்பானதாக இருக்கும். பிறகு எக்காளம் (ஸூர்) ஊதப்படும். அதைக் கேட்கும் ஒவ்வொருவரின் கழுத்தும் ஒரு பக்கம் சாயும்; மறுபக்கம் உயரும். (அதாவது சுயநினைவிழந்து மூர்ச்சையாகிவிடுவார்கள்.) தமது ஒட்டகத்தின் தண்ணீர் தொட்டியைச் செப்பனிட்டுக்கொண்டிருக்கும் மனிதர் ஒருவரே அந்தச் சப்தத்தை முதலில் கேட்பார். உடனே அவர் மூர்ச்சையாகி (விழுந்து)விடுவார். (இதையடுத்து) மக்கள் அனைவரும் மூர்ச்சையாகிவிடுவர்.

பிறகு அல்லாஹ் மழையொன்றை அனுப்புவான்; அல்லது இறக்குவான். அது "பனித்துளி' அல்லது "நிழலைப்' போன்றிருக்கும். (அறிவிப்பாளர் நுஅமான் அவர்களே ஐயப்பாட்டுடன் அறிவிக்கிறார்.)
உடனே அதன் மூலம் மனிதர்களின் உடல்கள் மீண்டும் முளைக்கும். பிறகு மறுபடியும் ஒரு முறை எக்காளம் (ஸூர்) ஊதப்படும். அப்போது அவர்கள் அனைவரும் எழுந்து பார்த்துக்கொண்டிருப்பார்கள். பிறகு (மனிதர்களிடம்) "மக்களே! உங்கள் இறைவனிடம் வாருங்கள்" என்றும், (வானவர்களிடம்) "அவர்களைப் பிடித்து நிறுத்துங்கள்;அவர்கள் விசாரிக்கப்பட வேண்டியவர்கள்" என்றும் கூறப்படும்.
பிறகு "நரகத்திற்குச் செல்லவிருப்பவர்களை (மற்றவர்களைவிட்டுத்) தனியாகப் பிரித்திடுங்கள்" என்று கூறப்படும். அப்போது "எத்தனை பேரிலிருந்து (எத்தனை பேரை)?" என்று கேட்கப்படும். அதற்கு "(நரகத்திற்குச் செல்லவிருக்கும்) ஒவ்வோர் ஆயிரம் பேரிலிருந்தும் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேரை" என்று பதிலளிக்கப்படும். (பயங்கர சூழ்நிலையின் காரணத்தால்) பாலகன்கூட நரைத்து (மூப்படைந்து)விடுகின்ற நாள் அதுதான்; கணைக்கால் திறக்கப்படும் நாளும் அது தான்.

5636 மேற்கண்ட ஹதீஸ் யஅகூப் பின் ஆஸிம் பின் உர்வா பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஒரு மனிதர் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களிடம், "யுக முடிவு நாளின்போது இன்னின்னது நடக்கும் என்று நீங்கள் கூறுகிறீர்களா?' என்று கேட்டார். அதற்கு அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள், "உங்களுக்கு எதையும் அறிவிக்கக்கூடாது என்றே நான் எண்ணியிருந்தேன். இதை மட்டும் கூறுகிறேன்: நீங்கள் சிறிது காலத்திற்குப்பின் மாபெரும் நிகழ்வொன்றைக் காண்பீர்கள். அதில் இறையில்லம் கஅபா தீக்கிரையாகும்' என்றோ,அல்லது இது போன்றோ கூறினார்கள்" என ஷுஅபா (ரஹ்) அவர்கள் ஐயப்பாட்டுடன் அறிவிக்கிறார்கள்.

மேலும் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "என் சமுதாயத்தாரிடையே தஜ்ஜால் புறப்பட்டுவருவான்..." என்று கூறி மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே அறிவித்தார்கள்.
அந்த அறிவிப்பில், "(ஷாம் திசையிலிருந்து வீசும் அந்தக் குளிர்ந்த காற்று) தம், உள்ளத்தில் கடுகளவு இறைநம்பிக்கை (ஈமான்) உள்ள எந்த மனித(ரின் உயி)ரையும் கைப்பற்றாமல் விடாது" என்று இடம்பெற்றுள்ளது. (அதில் தமது உள்ளத்தில் கடுகளவு "நன்மை' அல்லது "இறைநம்பிக்கை' என்ற ஐயப்பாடு இடம்பெறவில்லை.)
அறிவிப்பாளர்களில் ஒருவரான முஹம்மத் பின் ஜஅஃபர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த ஹதீஸை எனக்கு ஷுஅபா (ரஹ்) அவர்கள் பலமுறை அறிவித்தார்கள். நானும் இதை அவர்களிடம் (பலமுறை) சொல்லிக் காட்டியுள்ளேன்.

5637 அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து ஒரு ஹதீஸை மனனமிட்டேன். இதுவரை அதை நான் மறக்கவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறியதை நான் கேட்டேன்:
(மறுமை நாளின் அடையாளங்களில்) முதலாவதாக வெளிப்படும் அடையாளம், சூரியன் மேற்கிலிருந்து உதயமாவதும், (பூமியிலிருந்து) ஒரு (அதிசயப்) பிராணி முற்பகல் நேரத்தில் வெளிப்படுவதும் ஆகும். இவ்விரண்டில் எது முதலில் வெளிப்பட்டாலும் மற்றொன்றும் அதைத் தொடர்ந்து வெகுவிரைவில் வெளிப்பட்டுவிடும்.

- அபூஸுர்ஆ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
மதீனாவில் மர்வான் பின் அல்ஹகமுடன் முஸ்லிம்களில் மூன்றுபேர் அமர்ந்து, (மறுமை நாளின்) அடையாளங்கள் குறித்து மர்வான் கூறியதைக் கேட்டுக்கொண்டிருந்தனர். மர்வான், "(மறுமை நாளின் அடையாளங்களில்) முதலாவது அடையாளம் தஜ்ஜால் வெளிப்படுவதாகும்" என்று கூறினார்.
அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள், "(தஜ்ஜாலைப் பற்றி) எதையும் மர்வான் (எனக்குக்) கூறவில்லை. நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்தே (அதைப் பற்றிய) ஹதீஸை மனனமிட்டேன். இதுவரை அதை நான் மறக்கவில்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்று கூறியபடி மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே அறிவித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஸுர்ஆ (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "மக்கள் மர்வான் பின் அல்ஹகம் அருகில் யுக முடிவு நாளைப் பற்றி பேசிக் கொண்டிருந்தனர். அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று அறிவித்தார்கள். அதில் "முற்பகல் நேரத்தில் (அந்தப் பிராணி வெளிப்படும்)" எனும் குறிப்பு இல்லை.

**பாடம் : 24 (தஜ்ஜாலின் உளவாளி) "ஜஸ்ஸாஸா' பற்றிய செய்தி.**

5638 ஆமிர் பின் ஷராஹீல் அஷ்ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் ளஹ்ஹாக் பின் கைஸ் (ரலி) அவர்களின் சகோதரியும், முந்திய முஹாஜிர்களில் ஒருவருமான ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களிடம், "நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்ற ஹதீஸ் ஒன்றை எனக்கு அறிவியுங்கள். அது (நேரடியாக) நீங்கள் அல்லாஹ்வின் தூதரிடமிருந்து கேட்டதாக இருக்க வேண்டும். பிறர் மூலம் கேட்டதாக இருக்க வேண்டாம்" என்று கேட்டேன்.
அப்போது ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள், "நீங்கள் விரும்பினால் நிச்சயமாக அவ்வாறே செய்கிறேன்" என்றார்கள். நான் "ஆம் (அவ்வாறுதான் நான் விரும்புகிறேன்); எனக்கு ஹதீஸ் அறிவியுங்கள்" என்றேன். ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
நான் அன்றைய குறைஷி இளைஞர்களில் சிறந்தவர்களில் ஒருவரான முஃகீராவின் புதல்வருக்கு வாழ்க்கைப்பட்டிருந்தேன். அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்த முதல் போரில் காயப்படுத்தப்பட்ட(வர் ஆவா)ர்.
(அவர் என்னை மணவிலக்குச் செய்து) நான் விதவையாயிருந்தபோது, என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒரு குழுவினர் பெண் கேட்டார்கள். அவர்களில் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களும் ஒருவராவார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் தம்மால் விடுதலை செய்யப்பட்ட அடிமையின் புதல்வரான உசாமா பின் ஸைத் அவர்களுக்காக என்னைப் பெண் கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "என்னை நேசிப்பவர்,உசாமாவையும் நேசிக்கட்டும்" என்று கூறிய செய்தியை நான் அறிந்திருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் பேசியபோது, "என் காரியம் உங்கள் கையில் உள்ளது. நீங்கள் நாடியவருக்கு என்னை மணமுடித்து வையுங்கள்" என்று கூறினேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ உம்மு ஷரீக்கின் இல்லத்துக்குச் சென்று தங்கி இரு" என்று சொன்னார்கள் - உம்மு ஷரீக் (ரலி) அவர்கள் அன்சாரிகளில் வசதி படைத்த பெண்மணியாகவும் அல்லாஹ்வின் பாதையில் பெருமளவில் செலவு செய்யக் கூடியவராகவும் இருந்தார். அவரது இல்லத்தில் விருந்தாளிகள் தங்குவார்கள்.- "அவ்வாறே செய்கிறேன்" என்று நான் கூறினேன்.
பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(வேண்டாம்;) அப்படிச் செய்யாதே! உம்மு ஷரீக் ஏராளமான விருந்தாளிகளை உபசரிக்கும் ஒரு பெண்மணி ஆவார். உன் முகத்திரையோ உன் கணைக்காலிலிருந்து ஆடையோ விலகியிருக்க, நீ விரும்பாத சிலவற்றை மக்கள் பார்க்கும் நிலை ஏற்படுவதை நான் வெறுக்கிறேன். எனவே, நீ உன் தந்தையின் சகோதரரான (அம்ர் - உம்மு மக்தூம் தம்பதியரின் புதல்வரான) அப்துல்லாஹ் பின் அம்ர் பின் உம்மி மக்தூம் அவர்களின் இல்லத்துக்குச் சென்று தங்கியிரு" என்று கூறினார்கள்.
(அப்துல்லாஹ் பின் அம்ர் பின் உம்மி மக்தூம் குறைஷிக் குலத்திலுள்ள பனூ ஃபிஹ்ர் கிளையைச் சேர்ந்தவர் ஆவார். அந்தக் குடும்பத்தில் ஒருவராக ஃபாத்திமா பின்த் கைஸ் இருந்தார்.) அவ்வாறே நான் அவரது இல்லத்திற்குச் சென்று தங்கினேன். என் காத்திருப்புக் காலம் ("இத்தா") முடிந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பொது அறிவிப்பாளர்களில் ஒருவர், "கூட்டுத் தொழுகைக்கு வாருங்கள்" என்று அறிவிப்புச் செய்வதை நான் செவியுற்றேன்.

ஆகவே, நான் பள்ளிவாசலுக்குச் சென்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் தொழுகையை நிறைவேற்றினேன்.

அப்போது நான் ஆண்களின் தொழுகை வரிசைக்குப் பின்னால் உள்ள பெண்களின் தொழுகை வரிசையில் இருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்துச் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது சிரித்தபடியே அமர்ந்தார்கள். "ஒவ்வொருவரும் தாம் தொழுத இடத்தில் அப்படியே இருங்கள்" என்று கூறினார்கள். பிறகு, "நான் உங்களை ஏன் ஒன்று கூட்டினேன் என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். மக்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்" என்று பதிலளித்தார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களுக்கு ஆர்வமூட்டுவதற்கோ அச்சுறுத்துவதற்கோ நான் உங்களை ஒன்றுகூட்டவில்லை. மாறாக, (மற்றொரு தகவலைச் சொல்வதற்காகவே) உங்களை ஒன்றுகூட்டினேன். கிறித்தவ மதத்தைச் சேர்ந்த தமீமுத் தாரீ எனும் ஒரு மனிதர் (என்னிடம்) வந்து வாக்குறுதிப் பிரமாணம் அளித்து இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டார்.

அவர் என்னிடம் ஒரு செய்தியைச் சொன்னார். அது(பெருங்குழப்பவாதியான) மசீஹுத் தஜ்ஜால் குறித்து நான் உங்களிடம் தெரிவித்திருந்த செய்திக்கு ஒத்திருந்தது. அவர் என்னிடம் கூறினார்:
நான் "லக்ம்' , "ஜுதாம்' ஆகிய குலங்களைச் சேர்ந்த முப்பது பேருடன் ஒரு கப்பலில் கடல் பயணம் மேற்கொண்டேன். அப்போது கடல் அலை ஒரு மாதகாலம் எங்களைக் கடலில் அலைக் கழித்துவிட்டது. பிறகு நாங்கள் கடலில் சூரியன் அஸ்தமிக்கும் (மேற்குத்) திசையில் ஒரு தீவில் ஒதுங்கினோம். பிறகு நாங்கள் சிறிய மரக்கலம் ஒன்றில் அமர்ந்து அங்கிருந்த தீவுக்குள் சென்றோம்.
அங்கு (உடல் முழுவதும் அடர்ந்த) முடிகள் நிறைந்த ஒரு பிராணி எங்களைச் சந்தித்தது. அதன் முன்பகுதி எது,பின்பகுதி எது என்றே எங்களால் அறிய முடியவில்லை. (உடல் முழுவதும்) முடிகள் நிறைந்திருந்ததே அதற்குக் காரணம்.
அப்போது நாங்கள், "உனக்குக் கேடுதான். நீ யார்?" என்று கேட்டோம். அதற்கு அந்தப் பிராணி "நான்தான் ஜஸ்ஸாஸா"என்று சொன்னது. "ஜஸ்ஸாஸா என்றால் என்ன?" என்று நாங்கள் கேட்டோம். அதற்கு அந்தப் பிராணி, "கூட்டத்தாரே! இந்த மண்டபத்திற்கு உள்ளே இருக்கும் மனிதரை நோக்கிச் செல்லுங்கள். அவர் உங்களைப் பற்றிய செய்தி அறிய ஆவலாக உள்ளார்" என்று சொன்னது.
அந்தப் பிராணி ஒரு மனிதனைப் பற்றிக் குறிப்பிட்டதைக் கேட்டு அது ஷைத்தானாக இருக்குமோ என்று நாங்கள் பயந்துவிட்டோம். உடனே நாங்கள் அந்த மனிதனை நோக்கி விரைந்து நடந்தோம். நாங்கள் அந்த மண்டபத்தைச் சென்றடைந்தோம். அங்கு மாபெரும் உருவமுடைய மனிதன் ஒருவன் இருந்தான். அவனைப் போன்ற ஒரு படைப்பை நாங்கள் ஒருபோதும் கண்டதில்லை. அவன் சங்கிலியால் பிணைக்கப்பட்டிருந்தான். அவனுடைய கைகள் அவனது தோளோடு சேர்த்து வைத்து இறுகக்கட்டப்பட்டிருந்தன. அவனுடைய முழங்கால்கள் கணுக்கால்களோடு சேர்த்துச் சங்கிலியால் பிணைக்கப்பட்டிருந்தன. அவனிடம் நாங்கள், "உனக்குக் கேடுதான். நீ யார்?" என்று கேட்டோம்.

"என்னைப் பற்றிய தகவலை நிச்சயம் நீங்கள் அறிந்துகொள்வீர்கள். (முதலில்) நீங்கள் யார் என்று கூறுங்கள்?" என்று கேட்டான். "நாங்கள் அரபு மக்கள். நாங்கள் கப்பலொன்றில் கடல் பயணம் மேற்கொண்டோம். கடல் கொந்தளிப்பு ஏற்பட்டு ஒரு மாதகாலமாகக் கடல் அலை எங்களை அலைக்கழித்துவிட்டது. பிறகு நீயிருக்கும் இந்தத் தீவில் நாங்கள் கரை ஒதுங்கினோம். பிறகு நாங்கள் சிறிய மரக்கலம் ஒன்றில் அமர்ந்து இந்தத் தீவுக்குள் நுழைந்தோம்.

அப்போது உடல் முழுவதும் அடர்ந்த முடிகள் கொண்ட பிராணி ஒன்று எங்களைச் சந்தித்தது. உடல் முழுவதும் முடிகள் நிறைந்திருந்த காரணத்தால் அதன் முன்பகுதி எது, பின்பகுதி எது என்று அறிய முடியவில்லை. நாங்கள் "உனக்குக் கேடுதான். நீ யார்?" என்று கேட்டோம். அது "நான்தான் ஜஸ்ஸாஸா" என்று சொன்னது. "ஜஸ்ஸாஸா என்றால் என்ன?" என்று கேட்டோம். அதற்கு அது, "இந்த மண்டபத்திலுள்ள இந்த மனிதரை நோக்கிச் செல்லுங்கள். அவர் உங்களைப் பற்றிய செய்தியை அறிய பெரும் ஆவலுடன் இருக்கிறார்" என்று கூறியது. ஆகவேதான், நாங்கள் உன்னை நோக்கி விரைந்து வந்தோம். அது ஷைத்தானாக இருக்கலாம் என்பதால் எங்களால் அச்சம் கொள்ளாமல் இருக்க முடியவில்லை" என்று சொன்னோம்.

அப்போது அவன், "பைசான் பேரீச்சந்தோட்டத்தைப் பற்றி எனக்குச் சொல்லுங்கள்" என்றான். "அந்தத் தோட்டத்தில் நீ எதைப் பற்றிக் கேட்கிறாய்?" என்று கேட்டோம்.

அதற்கு அவன், "அந்தப் பேரீச்சந்தோட்டத்தின் மரங்கள் கனிகள் தருகின்றனவா என்பதைப் பற்றியே நான் கேட்கிறேன்" என்றான். நாங்கள் "ஆம்' என்று பதிலளித்தோம். அவன், "அறிந்துகொள்ளுங்கள். அது கனியே தராத காலம் நெருங்கிக்கொண்டிருக்கிறது" என்று கூறினான்.

பிறகு "தபரிய்யா நீர்நிலை பற்றி எனக்குச் சொல்லுங்கள்" என்று கேட்டான். "அதில் எதைப் பற்றி நீ கேட்கிறாய்?"என்று நாங்கள் கேட்டோம். அதற்கு அவன், "அதில் தண்ணீர் இருக்கிறதா?" என்று கேட்டான். நாங்கள், "அதில் தண்ணீர் அதிகமாக இருக்கிறது" என்று பதிலளித்தோம். அவன், "அறிந்துகொள்ளுங்கள்: அதிலுள்ள நீர் வற்றும் காலம் நெருங்கிவிட்டது" என்று சொன்னான்.

பிறகு, "(ஷாம் நாட்டிலுள்ள) ஸுஃகர் நீரூற்றைப் பற்றி எனக்குச் சொல்லுங்கள்" என்று கேட்டான். நாங்கள், "அதில் எதைப் பற்றி நீ கேட்கிறாய்?" என்றோம். அதற்கு அவன், "அந்த ஊற்றில் தண்ணீர் உள்ளதா? அந்த ஊற்றுத் தண்ணீரால் மக்கள் பயிர் செய்கிறார்களா?" என்று கேட்டான். நாங்கள் "ஆம், அதில் தண்ணீர் அதிகமாக உள்ளது. அங்குள்ளவர்கள் அந்தத் தண்ணீரால் விவசாயம் செய்கிறார்கள்" என்று சொன்னோம்.

பிறகு அவன், "எழுத்தறிவற்ற மக்களின் இறைத்தூதர் பற்றி எனக்குச் சொல்லுங்கள். அவர் (இப்போது) என்ன செய்கிறார்?" என்று கேட்டான். நாங்கள், "அவர் மக்காவிலிருந்து புறப்பட்டுச் சென்று யஸ்ரிபில் (மதீனாவில்) தங்கியிருக்கிறார்" என்று பதிலளித்தோம்.

அவன், "அவருக்கும் அரபியருக்குமிடையே போர் நடந்ததா?" என்று கேட்டான். நாங்கள், "ஆம்' என்றோம். அவன், "அவர்களை அவர் என்ன செய்தார்?" என்று கேட்டான். நாங்கள், "அவர், தம் அருகிலுள்ள அரபியரை வெற்றி கொண்டுவிட்டார். அரபியர் அவருக்குக் கட்டுப்பட்டு விட்டனர்" என்று சொன்னோம். அதற்கு அவன், "அப்படித்தான் நடந்ததா?" என்று கேட்டான். நாங்கள் "ஆம்' என்றோம்.

அவன், "அறிந்துகொள்ளுங்கள். அவருக்குக் கட்டுப்பட்டு நடப்பதே அவர்களுக்கு நல்லதாகும். (இனி) நான் என்னைப் பற்றி உங்களுக்குச் சொல்கிறேன்: நான்தான் மசீஹ் (அத்தஜ்ஜால்)

ஆவேன். நான் (இங்கிருந்து) புறப்பட அனுமதிக்கப்படும் நாள் நெருங்கிக்கொண்டிருக்கிறது. நான் புறப்பட்டு வந்து, நாற்பது நாட்களில் பூமியில் எந்த ஓர் ஊரையும் விட்டுவைக்காமல் பூமியெங்கும் பயணம் செய்வேன்; மக்காவையும் தைபாவையும் தவிர! அவ்விரண்டிற் குள்ளேயும் நுழைவது எனக்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது. அவ்விரு நகரங்களில் ஏதேனும் ஒன்றில் நுழைய நான் நாடும்போதெல்லாம் என்னை நோக்கி வானவர் ஒருவர் வருவார். அவரது கையில் உருவியவாள் இருக்கும். (அதை வைத்து) அதற்குள் நுழைய விடாமல் அவர் என்னைத் தடுத்துவிடுவார். அதன் ஒவ்வொரு நுழைவாயிலிலும் வானவர் ஒருவர் இருந்து, அதைக் காவல் காத்துக்கொண்டிருப்பார்" என்று கூறினான்.

இதைக் கூறியபின் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம்மிடமிருந்த கைத்தடியால் சொற்பொழிவு மேடைமீது குத்தியவாறு இது -அதாவது மதீனா நகரம்-தான் தைபா; இதுதான் தைபா; இதுதான் தைபா" என்று கூறிவிட்டு, "இதைப்பற்றி நான் உங்களுக்கு (முன்பே) அறிவித்துள்ளேன் அல்லவா?" என்று கேட்டார்கள். மக்கள், "ஆம் (அறிவித்தீர்கள்)" என்று பதிலளித்தனர். "தமீமுத் தாரீ சொன்ன இந்தச் செய்தி, தஜ்ஜாலைப் பற்றியும் மதீனா மற்றும் மக்கா பற்றியும் நான் ஏற்கெனவே உங்களிடம் நான் கூறியிருந்ததற்கு ஒப்பவே அமைந்திருக்கிறது" என்று கூறினார்கள்.
பிறகு அறிந்துகொள்ளுங்கள்: அ(ந்தத் தீவான)து, ஷாம் நாட்டுக் கடலில், அல்லது யமன் நாட்டுக் கடலில் உள்ளது. இல்லை; அது கிழக்குப் பகுதிக் கடலில் உள்ளது. அது கிழக்குப் பகுதிக் கடலில் உள்ளது. அது கிழக்குப் பகுதி கடலில் உள்ளது" என்று (அறுதியிட்டுச்) சொன்னார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இதைக் கூறும்போது கிழக்குத் திசையை நோக்கி தமது கரத்தால் சைகை செய்தார்கள். ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்: இதை நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்தே மனனமிட்டேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5639 ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களிடம் (அவர்களது இல்லத்திற்குச்) சென்றோம். அவர்கள் எங்களுக்கு "ருதப் இப்னு தாப்' எனப்படும் பேரீச்சம் பழங்களை அன்பளிப்பாக வழங்கினார்கள். தொலி இல்லாத கோதுமை மாவால் செய்யப்பட்ட ஒரு வகை பானத்தையும் அருந்தக் கொடுத்தார்கள்.
அப்போது அவர்களிடம் நான், "மூன்று "தலாக்'கும் சொல்லப்பட்டு (தலாக்கை முடிவுக்குக் கொண்டுவரப்பட்டு)விட்ட பெண் எங்கே "இத்தா' இருப்பாள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்: என் கணவர் என்னை மூன்று "தலாக்' சொல்லி (முற்றிலுமாக விடுவித்து)விட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் என்னை என் குடும்பத்தாரிடம் தங்கி "இத்தா' மேற்கொள்ள அனுமதியளித்தார்கள்.
அப்போது மக்களிடையே, "கூட்டுத் தொழுகை நடைபெறப்போகிறது" என்று அறிவிப்புச் செய்யப்பட்டது. அப்போது (பள்ளி வாசலை நோக்கி) நடந்துசென்றவர்களுடன் நானும் சென்று பெண்களின் வரிசையில் முதல் வரிசையில் இருந்தேன். அது ஆண்களின் வரிசையில் இறுதி வரிசைக்கு அடுத்திருந்தது.

அப்போது நபி (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீதிருந்தபடி, "தமீமுத் தாரியின் தந்தையின் சகோதரர் குலத்தைச் சேர்ந்த சிலர் கடல் பயணம் மேற்கொண்டனர்..." என்று தொடங்கி மேற்கண்ட ஹதீஸில் உள்ளபடி அறிவித்தார்கள்.
இந்த அறிவிப்பில், "அப்போது நபி (ஸல்) அவர்கள் தம்மிடமிருந்த கைத்தடியைப் பூமியை நோக்கிச் சாய்த்தவாறு, "இதுதான் தைபா - அதாவது மதீனா' என்று கூறியதை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5640 மேற்கண்ட ஹதீஸ் ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "தமீமுத் தாரீ அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, தாம் கடல் பயணம் மேற்கொண்டபோது (கடல் கொந்தளித்து அவர்களது) கப்பல் திசைமாறி ஒரு தீவில் ஒதுங்கியதாகவும், அப்போது (குடி)தண்ணீரைத் தேடியபடி அவர்கள் அந்தத் தீவுக்குள் போனதாகவும், அப்போது தமது முடியை இழுத்துக்கொண்டு வந்த ஒரு மனிதனைச் சந்தித்ததாகவும் கூறினார்கள்" என்று இடம்பெற்றுள்ளது. மற்றவை மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.
"அந்த மனிதன், கவனியுங்கள்: எனக்குப் புறப்படுவதற்கு அனுமதியளிக்கப்படும்போது எல்லா ஊர்களிலும் என் பாதத்தைப் பதிப்பேன்; தைபா (எனும் மதீனா) தவிர" என்று கூறினான் என்றும், "அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமீமுத் தாரீ தம்மிடம் கூறியதை மக்களிடையே தெரிவித்துவிட்டு, இதுதான் தைபா; அவன்தான் தஜ்ஜால்" என்று கூறியதாகவும் இடம்பெற்றுள்ளது.

5641 மேற்கண்ட ஹதீஸ் ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதமர்ந்து, மக்களே! தமீமுத் தாரீ என்னிடம், தம் சமுதாயத்தாரில் சிலர் தமக்குரிய கப்பலொன்றில் கடல் பயணம் மேற்கொண்டதாகவும், அப்போது கப்பல் உடைந்துவிட்டதாகவும், உடனே அவர்களில் சிலர் கப்பலில் இருந்த பலகைகளில் ஒன்றில் ஏறி கடலிலிருந்து ஒரு தீவுக்குச் சென்றதாகவும் தெரிவித்தார்" என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பிக்கிறது. தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே காணப்படுகிறது.

5642 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
மக்காவையும் மதீனாவையும் தவிர தஜ்ஜாலின் கால்படாத எந்த ஊரும் இராது. மதீனாவின் ஒவ்வொரு நுழைவாயிலிலும் வானவர்கள் அணிவகுத்து நின்று மதீனாவைப் பாதுகாப்பார்கள். ஆகவே, தஜ்ஜால் (மதீனாவுக்கு வெளியிலுள்ள) உவர் நிலத்தில் இறங்கித் தங்குவான். அப்போது மதீனா மூன்று முறை குலுங்கும். உடனே மதீனாவிலிருந்து ஒவ்வொரு இறைமறுப்பாளனும் நயவஞ்சகனும் அவனை நோக்கிப் புறப்பட்டுவருவார்கள்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "ஆகவே, தஜ்ஜால் "அல்ஜுருஃப்' எனும் இடத்திலுள்ள உவர் நிலத்திற்குச் சென்று, தனது கூடாரத்தை அமைப்பான். அப்போது ஒவ்வொரு நயவஞ்சகனும் நயவஞ்சகியும் அவனை நோக்கி (மதீனாவிற்குள்ளிருந்து) புறப்பட்டுவருவார்கள்" என்று இடம் பெற்றுள்ளது.

பாடம் : 25 தஜ்ஜாலைப் பற்றிய இன்னும் சில தகவல்கள்.

5643 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
தஜ்ஜாலைப் பின்தொடர்ந்து "அஸ்பஹான்' (ஈரான்) நாட்டைச் சேர்ந்த யூதர்களில் எழுபதாயிரம் பேர் வருவார்கள். அப்போது அவர்கள் "தயாலிசா' எனும் (கோடு போட்ட கெட்டியான) ஒரு வகை ஆடை அணிந்திருப்பார்கள்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5644 உம்மு ஷரீக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "மக்கள் தஜ்ஜாலிடமிருந்து வெருண்டோடி மலைகளுக்குச் சென்றுவிடுவார்கள்" என்று கூறக்கேட்டேன். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! (இறைவழியில் போராடும்) அரபியர் அப்போது எங்கே இருப்பார்கள்?" என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அப்போது அவர்கள் மிகக் குறைவான எண்ணிக்கையிலேயே இருப்பார்கள்" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உம்மு ஷரீக் (ரலி) அவர்களிடமிருந்தே வேறு இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5645 அபுத்தஹ்மா (ரஹ்), அபூகத்தாதா (ரலி) உள்ளிட்ட ஒரு குழுவினர் கூறியதாவது:
நாங்கள் ஹிஷாம் பின் ஆமிர் (ரலி) அவர்களைக் கடந்து இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களிடம் செல்வோம். ஒரு நாள் ஹிஷாம் (ரலி) அவர்கள், "நீங்கள் என்னைக் கடந்து சில மனிதரை நோக்கிச் செல்கிறீர்கள். அவர்கள் என்னைவிட அதிகமாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அவையில் இருந்ததுமில்லை; என்னைவிட அதிகமாக அவர்களிடமிருந்து ஹதீஸ்களைச் செவியுற்றதுமில்லை.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(முதல் மனிதர்) ஆதம் (அலை) அவர்களைப் படைத்தது முதல் யுக முடிவுநாள் ஏற்படும்வரை தஜ்ஜாலைவிட (குழப்பத்தை ஏற்படுத்துகின்ற) மிகப் பெரும்படைப்பேதும் இல்லை' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இதை ஹுமைத் பின் ஹிலால் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5646 மேற்கண்ட ஹதீஸ் ஹுமைத் பின் ஹிலால் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில் "என் கூட்டத்தைச் சேர்ந்த மூன்றுபேர் கொண்ட ஒரு குழுவினர் என்னிடம் கூறினர். அவர்களில் அபூகத்தாதா (ரலி) அவர்களும் ஒருவராவார். நாங்கள் ஹிஷாம் பின் ஆமிர் (ரலி) அவர்களைக் கடந்து இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களிடம் செல்வோம்" என்று கூறியதாக ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளன. அதில், ("தஜ்ஜாலைவிட மிகப்பெரும் படைப்பு' என்பதற்குப் பதிலாக) "தஜ்ஜாலைவிட மிகப் பெரும் பிரச்சினை' என்று இடம்பெற்றுள்ளது.

5647 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆறு அடையாளங்கள் நடைபெறுவதவற்கு முன் விரைந்து நற்செயல் புரியுங்கள். சூரியன் மேற்கிலிருந்து உதித்தல்,அல்லது புகை, அல்லது தஜ்ஜால், அல்லது (அதிசயப்) பிராணி, அல்லது தனிப்பட்ட முறையில் உங்களுக்கு ஏற்படும் மரணம், அல்லது ஒட்டுமொத்தமாக ஏற்படும் (யுக) முடிவு.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5648 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆறு அடையாளங்கள் ஏற்படுவதற்கு முன் விரைந்து நற்செயல் புரியுங்கள். 1. தஜ்ஜால் 2. புகை. 3. பூமியிலிருந்து வெளிப்படும் (அதிசயப்)பிராணி 4. சூரியன் மேற்கிலிருந்து உதயமாதல் 5. ஒட்டுமொத்தமாக ஏற்படும் (யுகமுடிவு) விஷயம் 6. தனிப்பட்ட முறையில் உங்களில் ஒருவருக்கு ஏற்படும் இறப்பு.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 26 கொந்தளிப்பான காலத்தில் (இறைவனை) வழிபடுவதன் சிறப்பு.

5649 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கொந்தளிப்பான காலத்தில் இறைவனை வழிபடுவது, (நற்பலனில்) என்னிடம் நாடு துறந்து (ஹிஜ்ரத்) வருவதைப் போன்றதாகும்.
இதை மஅகில் பின் யசார் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மஅகில் பின் யசார் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 27 யுக முடிவு நாள் நெருங்குதல்.

5650 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மனிதர்களில் தீயவர்கள் மீதே யுக முடிவு நாள் ஏற்படும். (அதற்கு முன்பே நல்லவர்கள் அனைவரும் மறைந்துவிடுவர்.)
இதை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5651 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், தமது பெருவிரலுக்கு அடுத்த (சுட்டு) விரலையும் நடுவிரலையும் (இணைத்துக் காட்டி) சைகை செய்து, "நானும் யுக முடிவு நாளும் இதோ இதைப் போன்று (நெருக்கமாகவே) அனுப்பப்பட்டுள்ளோம்" என்று கூறியதைக் கேட்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5652 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நானும் யுக முடிவு நாளும் இதோ இந்த (சுட்டு விரல், நடு விரல் ஆகிய) இரு விரல்களைப் போன்று (நெருக்கமாகவே) அனுப்பப்பட்டுள்ளோம்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
கத்தாதா (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை (எனக்கு) அறிவிக்கும்போது, "(உயரத்தில் அவ்விரல்களில்) ஒன்றைவிட மற்றொன்று உயர்ந்திருப்பதைப் போன்று" என்று கூறினார்கள். அதை அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாகத் தெரிவித்தார்களா, அல்லது தாமாகவே கூறினார்களா என்பது எனக்குத் தெரியவில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5653 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நானும் யுக முடிவு நாளும் இவ்வாறு அனுப்பப் பட்டுள்ளோம்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா (ரஹ்) அவர்கள் இதை அறிவிக்கும் போது, தம் சுட்டு விரலையும் நடுவிரலையும் இணைத்து (இவ்வாறு என்று) சைகை செய்து காட்டினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

5654 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம் சுட்டு விரலையும் நடுவிரலையும் இணைத்தவாறு "நானும் யுக முடிவு நாளும் இவ்விரு விரல்களைப் போன்று அனுப்பப் பட்டுள்ளோம்" என்று கூறினார்கள்.

5655 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
கிராமவாசிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வரும்போது யுக முடிவு நாளைப் பற்றி, "அது எப்போது வரும்?" என்று கேட்பார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அம்மக்களிலேயே வயதில் மிகச்சிறிய மனிதரைப் பார்த்து, "இதோ இவர் உயிருடன் வாழ்ந்தால் இவர் முதுமையை அடையாமல் இருக்கும்போதே உங்களின் யுக முடிவு (இறப்பு) நாள் சம்பவிக்கும்" என்று கூறுவார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5656 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "யுக முடிவு நாள் எப்போது வரும்?" என்று கேட்டார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் "முஹம்மத்' எனப்படும் அன்சாரி சிறுவர் ஒருவர் இருந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அந்தச் சிறுவரைக் காட்டி), "இந்தச் சிறுவர் உயிருடன் வாழ்ந்து, அவருக்கு முதுமைப்பருவம் ஏற்படாமலிருக்கும் நிலையில் யுக முடிவு நாள் வரலாம்" என்று கூறினார்கள்.

5657 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம், "யுக முடிவு நாள் எப்போது வரும்?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள் சிறிது நேரம் (பதிலளிக்காமல்) அமைதியாக இருந்தார்கள். பிறகு தமக்கு முன்னாலிருந்த "அஸ்த் ஷனூஆ' குலத்தைச் சேர்ந்த சிறுவர் ஒருவரைக் கூர்ந்து பார்த்துவிட்டு, "இவருக்கு வாழ்நாள் கிடைத்து, முதுமைப் பருவம் ஏற்படாமலிருக்கும்போது யுக முடிவு நாள் வரும்" என்று சொன்னார்கள்.
அந்தச் சிறுவர் அன்று என் வயதொத்தவர்களில் ஒருவராக இருந்தார்.

5658 அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்களின் அடிமைகளில் ஒருவர் (எங்களைக்)கடந்து சென்றார். அவர் என் வயதொத்தவர்களில் ஒருவராக இருந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இவரது வாழ்நாள் தள்ளிப்போய் இவரை முதுமைப் பருவம் அடைவதற்கு முன்பே யுக முடிவு நாள் வந்துவிடும்" என்று சொன்னார்கள்.

5659 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஒரு மனிதர் தமது ஒட்டகத்தில் பால் கறந்து அந்தப் பாத்திரத்தைத் தமது வாயருகே கொண்டுசென்றிருக்கமாட்டார். அதற்குள் யுக முடிவு சம்பவித்துவிடும். இரு மனிதர்கள் துணியை விரித்துப்போட்டுப் பேரம் பேசிக் கொண்டிருப்பார்கள். அவர்கள் பேரத்தை முடிப்பதற்கு முன்பே யுக முடிவு ஏற்பட்டுவிடும். ஒரு மனிதர் தமது தண்ணீர் தொட்டியைச் செப்பனிட்டுக்கொண்டிருப்பார். அவர் அதை முடிப்பதற்கு முன்பே யுக முடிவு ஏற்பட்டுவிடும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 28 இரு எக்காளங்களுக்கும் ("ஸூர்") இடைப்பட்ட காலம்.

5660 அபூஸாலிஹ் ஃதக்வான் அஸ்ஸம்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அந்த இரு எக்காளத்திற்கு (ஸூர்) மத்தியில் (இடைப்பட்ட காலம்) நாற்பதாகும்" என்று கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் தெரிவித்தார்கள்.
அப்போது மக்கள், "அபூஹுரைரா அவர்களே! நாட்களில் நாற்பதா?" என்று கேட்டார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்கள், "(இதற்குப் பதில் சொல்வதிலிருந்து) நான் விலகிக் கொள்கிறேன்" என்று கூறினார்கள். மக்கள், "மாதங்களில் நாற்பதா?"என்று கேட்டார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்கள், "(மீண்டும் நான் விலகிக்கொள்கிறேன்" என்று சொன்னார்கள்.
மக்கள், "வருடங்களில் நாற்பதா?" என்று கேட்டார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்கள் (மீண்டும்), "நான் விலகிக் கொள்கிறேன் (எனக்கு இது குறித்துத் தெரியாது)" என்று கூறிவிட்டு, "பிறகு அல்லாஹ், வானத்திலிருந்து ஒரு நீரை இறக்குவான். உடனே இ(றந்துபோன)வர்கள் பச்சைப் புற்பூண்டுகள் முளைப்பதைப் போன்று எழுவார்கள். மனிதனின் எல்லா உறுப்புகளும் (மண்ணுக்குள்) மக்கிப்போய் விடும்; ஒரே ஒரு எலும்பைத் தவிர! அது (அவனது முதுகுத்தண்டின் வேர்ப் பகுதியிலிருக்கும்) உள்வால் எலும்பின் (அணுவளவு) நுனியாகும். அதை வைத்தே படைப்பினங்கள் (மீண்டும் மறுமை நாளில்) படைக்கப்படும்" என்று சொன்னார்கள்.

5661 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஆதமின் மகனின் (மனிதனின் உடலிலுள்ள) அனைத்துப் பகுதிகளையும் மண் தின்றுவிடும்; மனிதனின் (முதுகுத்தண்டின் வேர்ப்பகுதியிலிருக்கும்) உள்வால் எலும்பின் நுனியைத் தவிர! அதை வைத்தே அவன் (தன் தாயின் கருவறையில் முதன் முதலாக) படைக்கப்பட்டான். அதிலிருந்தே அவன் (மீண்டும் மறுமை நாளில்) படைக்கப்படுவான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5662 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மனிதனின் உடலில் எலும்பு ஒன்று உள்ளது. அதை பூமி ஒருபோதும் புசிக்காது. அதை வைத்தே (மீண்டும்) மறுமை நாளில் அவன் படைக்கப்படுவான்" என்று சொன்னார்கள்.
மக்கள், "அது எந்த எலும்பு அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "உள்வால் எலும்பின் நுனி" என்று பதிலளித்தார்கள்.

# அத்தியாயம் : 53 - உலக ஆசை இல்லாமல் இருப்பதும்,எளிமையாக இருப்பதும்

## பாடம் : 1 உலகப் பற்றின்மையும் தத்துவங்களும்.

5663 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இவ்வுலகம், இறைநம்பிக்கையாளர்களுக்குச் சிறைச்சாலையாகும்; இறைமறுப்பாளர்களுக்குச் சொர்க்கச் சோலையாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5664 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (புறநகர் மதீனாவை ஒட்டியுள்ள) "ஆலியா'வின் ஒரு பகுதி வழியாக ஒரு கடைத்தெருவைக் கடந்து சென்றார்கள். அவர்களுக்குப் பக்கத்தில் மக்களும் இருந்தார்கள். அப்போது அவர்கள், செத்துக் கிடந்த, காதுகள் சிறுத்த ஓர் ஆட்டைக் கடந்து சென்றார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அந்த ஆட்டை எடுத்து, அதன் (சிறிய) காதைப் பிடித்துக்கொண்டு, "உங்களில் யார் இதை ஒரு வெள்ளிக்காசுக்குப் பகரமாக வாங்கிக்கொள்ள விரும்புவார்?" என்று கேட்டார்கள்.
அதற்கு மக்கள், "எதற்குப் பகரமாகவும் அதை வாங்க நாங்கள் விரும்பமாட்டோம்; அதை வைத்துக்கொண்டு நாங்கள் என்ன செய்வோம்?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது உங்களுக்குரியதாக இருக்க வேண்டுமென நீங்கள் விரும்புவீர்களா?" என்று கேட்டார்கள்.
மக்கள், "அல்லாஹ்வின் மீதாணையாக! இது உயிரோடு இருந்தாலும் இது குறையுள்ளதாகும். ஏனெனில், இதன் காது சிறுத்துக் காணப்படுகிறது. அவ்வாறிருக்க, இது செத்துப் போயிருக்கும் போது எப்படி (இதற்கு மதிப்பிருக்கும்)?" என்று கேட்டனர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின், அல்லாஹ்வின் மீதாணையாக! இந்தச் செத்த ஆட்டைவிட இவ்வுலகம் அல்லாஹ்வின் கணிப்பில் உங்களுக்கு அற்பமானதாகும்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், அப்துல் வஹ்ஹாப் அஸ் ஸகஃபீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இந்த ஆடு உயிருடனிருந்தால்கூட அதன் காதுகள் சிறுத்திருப்பதன் காரணமாகக் குறையுள்ளதாகவே இருக்கும்" என்று மக்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

5665 அப்துல்லாஹ் பின் அஷ்ஷிக்கீர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், "மண்ணறைகளைச் சந்திக்கும்வரை அதிகமாக (செல்வத்தை)த் தேடுவது உங்கள் கவனத்தைத் திசை திருப்பிவிட்டது" என்று தொடங்கும் (102ஆவது) அத்தியாயத்தை ஓதிக்கொண்டிருந்தபோது, அவர்களிடம் நான் சென்றேன்.

அப்போது அவர்கள், "ஆதமின் மகன் (மனிதன்), எனது செல்வம்; எனது செல்வம்" என்று கூறுகின்றான். ஆதமின் மகனே! நீ உண்டு கழித்ததையும் உடுத்திக் கிழித்ததையும் தர்மம் செய்து மிச்சப்படுத்தியதையும் தவிர உனது செல்வத்தில் உனக்குரியது எது?" என்று கேட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் அஷ்ஷிக்கீர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் "நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன்..." என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5666 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அடியான், "என் செல்வம்; என் செல்வம்' என்று கூறுகின்றான். அவனுடைய செல்வங்களில் மூன்று மட்டுமே அவனுக்குரியவையாகும். அவன் உண்டு கழித்ததும், அல்லது உடுத்திக் கிழித்ததும், அல்லது கொடுத்துச் சேமித்துக்கொண்டதும்தான் அவனுக்கு உரியவை. மற்றவை அனைத்தும் கைவிட்டுப் போகக்கூடியவையும், மக்களுக்காக அவன் விட்டுச்செல்லக் கூடியவையும் ஆகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5667 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்:
இறந்துபோனவரைப் பின்தொடர்ந்து மூன்று பொருட்கள் செல்கின்றன. அவற்றில் இரண்டு திரும்பிவிடுகின்றன; ஒன்று மட்டுமே அவருடன் தங்கிவிடுகிறது. அவரை அவருடைய குடும்பமும் செல்வமும் அவர் செய்த செயல்களும் பின்தொடர்ந்து செல்கின்றன. (அவற்றில்) அவருடைய குடும்பமும் செல்வமும் திரும்பிவிடுகின்றன. அவருடைய செயல்கள் மட்டுமே அவருடன் தங்கிவிடுகின்றன.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5668 மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
பனூ ஆமிர் பின் லுஅய் குலத்தாரின் ஒப்பந்த நண்பரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பத்ருப்போரில் கலந்துகொண்டவருமான அம்ர் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்களை, "ஜிஸ்யா' (காப்பு)வரி வசூலித்துக் கொண்டுவரும்படி பஹ்ரைனுக்கு அனுப்பினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அக்னி ஆராதனையாளர்களாயிருந்த) பஹ்ரைன்வாசிகளுடன் சமாதான ஒப்பந்தம் செய்துகொண்டு, அவர்களுக்கு அலா பின் அல்ஹள்ரமீ (ரலி) அவர்களைத் தலைவராக நியமித்திருந்தார்கள்.
அபூஉபைதா (ரலி) அவர்கள் (வரி வசூலித்துக்கொண்டு) பஹ்ரைனிலிருந்து நிதியுடன் (மதீனாவுக்கு) வந்தார்கள். அபூஉபைதா (ரலி) அவர்கள் வந்துவிட்டதைக் கேள்விப்பட்ட அன்சாரிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் செல்ல, அது சரியாக ஃபஜ்ருத்

தொழுகையின் நேரமாக இருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அன்சாரிகள் தொழுகையை நிறைவேற்றினார்கள்.
தொழுகை முடிந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திரும்ப, அன்சாரிகள் தம் எண்ணத்தைச் சைகையால் வெளியிட்டனர். (ஆர்வத்துடன் இருந்த) அவர்களைக் கண்டதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்து விட்டு, "அபூஉபைதா சிறிது நிதியுடன் பஹ்ரைனிலிருந்து வந்துவிட்டார் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள் என நான் நினைக்கிறேன்" என்றார்கள்.

அதற்கு அன்சாரிகள், "ஆம்; அல்லாஹ்வின் தூதரே!" என்று பதிலளித்தார்கள். "அவ்வாறாயின், ஒரு நற்செய்தி. உங்களுக்கு மகிழ்வைத் தரும் நிகழ்ச்சி நடக்கும் என்று நீங்கள் எதிர்பார்க்கலாம்" என்று கூறிவிட்டு, "அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களுக்கு வறுமை ஏற்பட்டுவிடும் என்று நான் அஞ்சவில்லை.
ஆயினும், உங்களுக்கு முன்னிருந்தவர்களுக்கு உலகச்செல்வம் தாராளமாகக் கொடுக்கப்பட்டதைப் போன்று உங்களுக்கும் தாராளமாகக் கொடுக்கப்பட்டு, அதற்காக அவர்கள் ஒருவருக்கொருவர் போட்டியிட்டதைப் போன்று நீங்களும் போட்டியிட, (மறுமையின் எண்ணத்திலிருந்து திருப்பி) அவர்களை அழித்துவிட்டதைப் போன்று உங்களையும் அ(ந்த உலகாசையான)து அழித்துவிடுமோ என்றுதான் நான் அஞ்சுகிறேன்" என்று கூறினார்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் மிஸ்வர் பின் மக்ரமா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், சாலிஹ் பின் கைசான் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("அவர்களை அழித்துவிட்டதைப் போன்று உங்களையும் அழித்துவிடுமோ' என்பதற்குப் பகரமாக) "அவர்களின் கவனத்தைத் திருப்பிவிட்டதைப் போன்று உங்களின் கவனத்தையும் திருப்பி விடுமோ' என்று இடம்பெற்றுள்ளது.

5669 அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பாரசீகர்களும் ரோமர்களும் உங்களால் வெற்றி கொள்ளப்படும்போது, நீங்கள் எத்தகைய மக்களாய் இருப்பீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள், "அல்லாஹ் எங்களுக்கு என்ன கட்டளையிட்டுள்ளானோ (அதன்படியே நடந்துகொள்வோம்) அதன்படியே கூறுவோம் (அதாவது நன்றி கூறி அவனைப் போற்றுவோம்)" என்று விடையளித்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "வேறொன்றும் செய்யமாட்டீர்களா?" என்று கேட்டார்கள். பின்னர் "நீங்கள் ஒருவருக்கொருவர் (சுயநலத்துடன்) போட்டி போட்டுக் கொள்வீர்கள். பின்னர் ஒருவருக்கொருவர் பொறாமை கொள்வீர்கள். பின்னர் ஒருவருக்கொருவர் பிணங்கிக் கொள்வீர்கள். பின்னர் ஒருவருக்கொருவர் குரோதம் கொள்வீர்கள். அல்லது இவற்றைப் போன்றதைச் செய்வீர்கள்" என்று கூறிவிட்டு, "பிறகு ஏழை முஹாஜிர்களை நோக்கிச் சென்று, அவர்களில் சிலருக்குச் சிலர்மீது அதிகாரத்தை வழங்குவீர்கள்" என்று கூறினார்கள்.

5670 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
செல்வத்திலும் தோற்றத்திலும் தம்மைவிட மேலான ஒருவரை உங்களில் ஒருவர் கண்டால், உடனே அவற்றில் தம்மைவிடக் கீழிருப்பவர்களை அவர் (நினைத்துப்) பார்க்கட்டும்!
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5671 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுக்குக் கீழிருப்பவர்களைப் பாருங்கள். உங்களைவிட மேலிருப்பவர்களைப் பார்க்காதீர்கள். அதுவே அல்லாஹ் புரிந்திருக்கும் அருட்கொடைகளை நீங்கள் குறைத்து மதிப்பிடாமலிருக்க மிகவும் ஏற்றதாகும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூமுஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "உங்களுக்கு அல்லாஹ் புரிந்திருக்கும்' என்று இடம்பெற்றுள்ளது.

5672 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பனூ இஸ்ராயீல் மக்களில் மூன்று பேர் இருந்தனர். அவர்களில் ஒருவர் தொழு நோயாளியாகவும் மற்றொருவர் வழுக்கைத் தலையராகவும் இன்னொருவர் குருடராகவும் இருந்தனர். அல்லாஹ் அம்மூவரையும் சோதிக்க நாடினான்;எனவே, வானவர் ஒருவரை அவர்களிடம் அனுப்பினான்.
அந்த வானவர் தொழுநோயாளியிடம் வந்து, "உனக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்க அவர், "நல்ல நிறம்,நல்ல தோல்(தான் எனக்கு மிகவும் விருப்பமானவை). மக்கள் என்னை அருவருப்பாகக் கருதக் காரணமான இ(ந்த நோயான)து என்னைவிட்டு விலக வேண்டும்" என்று சொன்னார்.
உடனே அவ்வானவர் (இறைநாட்டப்படி) அவரைத் தம் கைகளால் தடவ அந்த அருவருப்பான நோய் அவரைவிட்டு விலகியது. மேலும், அவருக்கு நல்ல நிறமும் நல்ல தோலும் வழங்கப்பட்டன. பிறகு அவ்வானவர், "செல்வங்களில் உமக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்க, அவர், "ஒட்டகம்தான்' என்றோ அல்லது "பசு மாடுதான்' என்றோ பதிலளித்தார்.
-தொழுநோயாளி மற்றும் வழுக்கைத் தலையர் ஆகிய இருவரில் ஒருவர் ஒட்டகம் என்றோ பசுமாடு என்றோ கூறினார் என இஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் சந்தேகிக்கிறார்கள்.-
ஆகவே, பத்து மாத சினையுள்ள ஒட்டகம் ஒன்று அவருக்கு வழங்கப்பட்டது. அவ்வானவர், "இதில் உனக்கு இறைவன் வளம் (பரக்கத்) வழங்குவானாக!" என்று பிரார்த்தித்தார்.
அடுத்து அந்த வானவர் வழுக்கைத் தலையரிடம் சென்று, "உனக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்டார். அவர் அழகான முடிதான். மக்கள் வெறுக்கும் இந்த வழுக்கை என்னைவிட்டு நீங்க வேண்டும்" என்றார்.
உடனே அவ்வானவர், அவரது தலையைத் தடவினார்; வழுக்கை மறைந்தது; அழகிய முடியைப் பெற்றார். அவ்வானவர், "செல்வங்களில் உமக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்டார்.

அவர், "பசுமாடுதான் (எனக்கு மிகவும் விருப்பமான செல்வம்)" என்று சொன்னார். உடனே அவ்வானவர் அந்த வழுக்கைத் தலையருக்குச் சினையுற்ற பசுமாடு ஒன்றைக் கொடுத்து, "அல்லாஹ் உமக்கு இதில் வளம் (பரக்கத்) புரிவானாக" என்று பிரார்த்தித்தார்.

பிறகு அந்த வானவர் குருடரிடம் சென்று, "உனக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்க, அவர் "அல்லாஹ் என் பார்வையை எனக்குத் திரும்பச் செய்வதும், அதன் மூலம் மக்களை நான் பார்ப்பதும்தான் (எனக்கு மிகவும் விருப்பமானது)" என்று பதிலளித்தார். உடனே அவ்வானவர் அவரைத் தமது கரத்தால் தடவ, அவருக்கு அல்லாஹ் அவரது பார்வையைத் திருப்பித் தந்தான்.

பிறகு அவ்வானவர், "செல்வங்களில் உமக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்டார். அவர் "ஆடு" என்றார். அவருக்கு அவ்வானவர், சினையுற்ற ஆடு ஒன்றைக் கொடுத்தார். (ஒட்டகமும் மாடும் வழங்கப்பெற்ற) இருவரும் நிறைய குட்டிகள் ஈந்திடப்பெற்றனர். (ஆடு வழங்கப்பட்ட) இந்த மனிதரும் நிறைய குட்டிகள் ஈந்திடப்பெற்றார்.

தொழுநோயாளியாய் இருந்தவருக்கு ஒரு பள்ளத்தாக்கு நிரம்ப ஒட்டகங்களும், வழுக்கைத் தலையராய் இருந்தவருக்கு ஒரு பள்ளத்தாக்கு நிரம்ப மாடுகளும், குருடராக இருந்தவருக்கு ஒரு பள்ளத்தாக்கு நிரம்ப ஆடுகளும் சேர்ந்தன.

பிறகு அவ்வானவர் தொழுநோயாளியாய் இருந்தவரிடம் தமது அதே தோற்றத்திலும் அமைப்பிலும் சென்று, "நான் ஓர் ஏழை மனிதன். என் பயணத்தில் வாழ்வாதாரம் அறுபட்டு விட்டது. (செலவுக்குப் பணம் தீர்ந்துபோய்விட்டது.) இன்று உதவிக்கான வழிவகை எனக்கு அல்லாஹ்வையும் பிறகு உன்னையும் தவிர வேறெவருமில்லை. உனக்கு அழகிய நிறத்தையும் நல்ல தோலையும் செல்வத்தையும் கொடுத்த (இறை)வனின் பெயரால் உன்னிடம் ஓர் ஒட்டகத்தைக் கேட்கிறேன். அதன் மீது பயணம் செய்து நான் போக வேண்டிய இடத்திற்குப் போய்ச்சேருவேன்" என்று சொன்னார்.

அதற்கு அந்த மனிதர், "(எனக்குக்)கடமைகள் நிறைய இருக்கின்றன. (எனவே, என்னால் நீ கேட்டதைத் தர முடியாது)"என்றார்.

உடனே அவ்வானவர், "உன்னை எனக்குத் தெரியும் போலுள்ளதே! மக்கள் அருவருக்கின்ற தொழுநோயாளியாக நீ இருக்கவில்லையா? ஏழையாகவும் நீ இருக்கவில்லையா? பிறகு அல்லாஹ் உனக்கு (செல்வத்தை)க் கொடுத்தான் அல்லவா?" என்று கேட்டார்.

அதற்கு அவன், "(இல்லையே; நான் இந்த அழகான நிறத்தையும் தோலையும் மற்றும்) இந்தச் செல்வத்தையும் வாழையடி வாழையாக (என் முன்னோரிடமிருந்து) வாரிசுச் சொத்தாகப் பெற்றேன்" என்று பதிலளித்தான். உடனே அவ்வானவர், "நீ (இக்கூற்றில்) பொய்யனாயிருந்தால், நீ முன்பு எப்படி இருந்தாயோ அப்படியே உன்னை அல்லாஹ் மாற்றிவிடட்டும்" என்று சொன்னார்.

பிறகு வழுக்கைத் தலையரிடம் தமது அதே உருவத்தில் சென்று, முன்பு தொழுநோயாளியிடம் கேட்டதைப் போன்றே கேட்டார். அவரும் முதலாமவர் பதிலளித்ததைப் போன்றே பதிலளித்தார். வானவரும், "நீ (உன் கூற்றில்) பொய்யனாயிருந்தால் நீ முன்பு எப்படியிருந்தாயோ அப்படியே அல்லாஹ் உன்னை மாற்றிவிடட்டும்" என்று சொன்னார்.

பிறகு (இறுதியாக), குருடரிடம் தமது அதே உருவிலும் அமைப்பிலும் வந்து, "நான் ஓர் ஏழை மனிதன்; வழிப்போக்கன். என் பயணத்தில் வாழ்வாதாரம் (வழிச் செலவுக்கான பணம்) தீர்ந்து போய்விட்டது. இன்று எனக்கு உதவிக்கான வழிவகை அல்லாஹ்வையும், பிறகு உன்னையும்

தவிர வேறெவருமில்லை. என் பயணத்தில் என் தேவையைத் தீர்த்துக்கொள்ள உதவும் ஆடு ஒன்றைத் தரும்படி உனக்குப் பார்வையைத் தந்த(இறை)வன் பெயரால் கேட்கிறேன்"என்று சொன்னார்.

(குருடராயிருந்து பார்வை பெற்ற) அந்த மனிதர் வானவரிடம், "நான் குருடனாகத்தான் இருந்தேன். அல்லாஹ் எனக்குப் பார்வையைத் திருப்பித்தந்தான். நீர் விரும்புவதை எடுத்துக்கொள்க; விரும்புவதை விட்டுவிடுக. அல்லாஹ்வின் மீதாணையாக! இன்று நீர் எடுக்கின்ற எந்தப்பொருளையும் திருப்பித் தரும்படி அல்லாஹ்வுக்காக நான் சிரமப்படுத்தமாட்டேன்" என்று சொன்னார்.

உடனே அவ்வானவர், "உமது செல்வத்தை நீரே வைத்துக்கொள்ளும். இது உங்களைச் சோதிப்பதற்காகத்தான். உம்மீது திருப்தி கொள்ளப்பட்டது. உம்முடைய இரு தோழர்கள் (தொழுநோயாளி, வழுக்கைத்தலையர் ஆகியோர்)மீது சினம் கொள்ளப்பட்டது" என்று சொன்னார்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5673 ஆமிர் பின் சஅத் பின் அபீவக்காஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

(என் தந்தை) சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் தம் ஒட்டகங்களுக்கிடையே இருந்தார்கள்.அப்போது அவர்களுடைய புதல்வர் உமர் பின் சஅத் (ரஹ்) அவர்கள் வந்தார்கள்.

அவரை சஅத் (ரலி) அவர்கள் கண்டபோது, "வாகனத்தில் வரும் இந்த மனிதரின் தீமையிலிருந்து நான் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்" என்று கூறினார்கள். அவர் (வாகனத்திலிருந்து) இறங்கி, "நீங்கள் உங்களுடைய ஒட்டகங்களுக்கும் ஆடுகளுக்குமிடையே தங்கிவிட்டீர்கள்; ஆட்சியதிகாரத்திற்காக மக்களைத் தம்மிடையே சண்டையிட்டுக்கொள்ள விட்டுவிட்டீர்கள்" என்று (குறை) கூறினார்.

உடனே, சஅத் (ரலி) அவர்கள் அவரது நெஞ்சில் அடித்து, "பேசாமல் இரு! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் இறையச்சமுள்ள, போதுமென்ற மனமுடைய, (குழப்பங்களிலிருந்து) ஒதுங்கி வாழ்கின்ற அடியானை நேசிக்கின்றான்' என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5674 சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் பாதையில் (இஸ்லாமியப் படையில்) அம்பெய்த அரபியரில் நானே முதலாமவன் ஆவேன். (உண்பதற்கு) எங்களுக்கு "ஹுப்லா' எனும் (முள்) மரத்தின் இலையையும் இந்தக் கருவேல இலையையும் தவிர வேறு உணவு எதுவும் இல்லாதிருக்கும் நிலையில் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (சென்று) அறப்போர் புரிந்து வந்தோம். எந்த அளவுக்கென்றால் (அந்த இலைகளை உண்டு) நாங்கள் ஆடு கழிக்கின்ற (கெட்டிச் சாணத்)தைப் போன்றே மலம் கழித்தோம்.

(இத்தகைய தியாகங்கள் செய்த என்னை) பிறகு (கூ்ஃபாவாசிகளான) பனூ சஅத் குலத்தார் (நான் முறையாகத் தொழுவிப்பதில்லை என்று கூறி எனது) மார்க்க ஈடுபாடு தொடர்பாக என்னைக் குறை கூறலானார்கள். அப்படியானால் (இதுவரை) நான் செய்துவந்த நற்செயல்(கள் எல்லாம்) வீணாகி, இப்போது நான் இழப்புக்குள்ளாகிவிட்டேன் (போலும் என வருந்தினேன்).

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் அப்துல்லாஹ் பின் நுமைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இப்போது" எனும் வார்த்தை இடம்பெறவில்லை.

5675 மேற்கண்ட ஹதீஸ் சஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "எந்த அளவுக்கென்றால் (அந்த இலைகளை உண்டு) நாங்கள் ஆடுகள் கெட்டிச் சாணமிடுவதைப் போன்று எதிலும் ஒட்டாத வகையில் மலம் கழித்தோம்" என்று இடம் பெற்றுள்ளது.

5676 காலித் பின் உமைர் அல்அதவீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உத்பா பின் ஃகஸ்வான் (ரலி) அவர்கள் எங்களிடையே உரையாற்றினார்கள். அப்போது அவர்கள் இறைவனைப் போற்றிப் புகழ்ந்து விட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:
இறைவாழ்த்துக்குப்பின்! இந்த உலகம் விடைபெற்றுக்கொள்வதாக அறிவித்துவிட்டு, விரைவாகத் திரும்பிச் சென்றுகொண்டிருக்கிறது. பருகிக்கொண்டிருப்பவரின் கோப்பையின் அடியில் எஞ்சியிருக்கும் சிறிதளவு பானத்தைப் போன்றே இவ்வுலகின் தவணை எஞ்சியுள்ளது. நீங்கள் இங்கிருந்து புறப்பட்டு நிலையான உலகை நோக்கிச் செல்லப்போகிறீர்கள்.
எனவே உங்களிடம் உள்ள நற்செயல்களுடனேயே நீங்கள் திரும்பிச் செல்லுங்கள். ஏனெனில், "நரகத்தின் விளிம்பிலிருந்து தூக்கிப் போடப்படும் ஒரு கல்லானது, எழுபது ஆண்டுகள் பயணித்தாலும் அதன் அடிப்பாகத்தை அடையாது" என்று எங்களுக்குச் சொல்லப்பட்டது. அல்லாஹ்வின் மீதாணையாக! அந்த நரகம் நிரப்பப்பட்டே தீரும். (இது உங்களுக்கு) ஆச்சரியமளிக்கிறதா?
மேலும், எங்களிடம் "சொர்க்கத்தின் நிலைக்கால்களில் இரு நிலைக்கால்களுக்கிடையேயான தொலைவு நாற்பதாண்டு பயணத் தொலைவாகும்" என்றும் சொல்லப்பட்டது. நிச்சயமாக ஒரு நாள் அந்தச் சொர்க்கம் மக்கள் திரளால் நிரம்பத்தான் போகிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (ஆரம்பமாக இஸ்லாத்தை ஏற்று) இருந்த ஏழு பேரில் ஏழாவது நபராக நான் இருந்தேன். அப்போது உண்பதற்கு இலை தழைகளைத் தவிர வேறு எந்த உணவும் எங்களுக்கு இருக்கவில்லை. (அதை உண்டதால்) எங்கள் வாயெல்லாம் புண்ணாகிவிட்டது.
அப்போது நான் சால்வை ஒன்றைப் பெற்றேன். அதை இரண்டாகக் கிழித்து நானும் சஅத் பின் மாலிக் (ரலி) அவர்களும் பங்கிட்டுக்கொண்டோம். அதன் ஒரு பகுதியை நான் கீழங்கியாக அணிந்துகொண்டேன். அதன் மற்றொரு பகுதியை சஅத் (ரலி) அவர்கள் கீழங்கியாக அணிந்து கொண்டார்கள்.
ஆனால், இன்று எங்களில் ஒருவர் காலைப் பொழுதை அடையும்போது நகரங்களில் ஒன்றுக்கு ஆட்சியராகவே காலைப் பொழுதை அடைகிறார். அல்லாஹ்விடம் நான் சிறியவனாயிருக்க, என் மனதில் (என்னைப் பற்றிப்) பெரியவனாக நான் கருதிக் கொள்வதிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன். (உலகத்தின் மீது பற்றில்லாமல் இருந்த) நபித்துவ(க் கால)ம் முடிந்தே போய்விட்டது. அதன் இறுதிப்பகுதி ஆட்சியதிகாரமாகவே இருக்கும். (இனி) நீங்கள் எங்களுக்குப்பின் ஆட்சித் தலைவர்களிடமிருந்து (சோதனைகளை) அனுபவிப்பீர்கள்.

- மேற்கண்ட ஹதீஸ் அறியாமைக் காலத்தைச் சந்தித்தவரான காலித் பின் உமைர் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "உத்பா பின் ஃகஸ்வான் (ரலி) அவர்கள் உரையாற்றினார்கள். அவர்கள் (அப்போது) பஸ்ராவின் ஆளுநராயிருந்தார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5677 காலித் பின் உமைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உத்பா பின் ஃகஸ்வான் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (ஆரம்பத்தில் இஸ்லாத்தை ஏற்று) இருந்த ஏழு பேரில் ஏழாவது நபராக நான் இருந்தேன். உண்பதற்கு "ஹுப்லா' எனும் (முள்) மரத்தின் இலையே எங்களின் உணவாக இருந்தது. அதனால் எங்கள் வாயெல்லாம் புண்ணாகிவிட்டது" என்று கூறியதைக் கேட்டேன்.

5678 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் மறுமைநாளில் எங்கள் இறைவனைக் காண்போமா?" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மேக மூட்டமில்லாத நண்பகல் நேரத்தில் சூரியனைக் காண்பதற்கு நீங்கள் சிரமப்படுவீர்களா?" என்று கேட்டார்கள்.
மக்கள், "இல்லை' என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மேகமூட்டமில்லாத பௌர்ணமி இரவில் சந்திரனைக் காண்பதற்கு நீங்கள் சிரமப்படுவீர்களா?" என்று கேட்டார்கள். மக்கள் "இல்லை' என்று கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! இவ்விரண்டில் ஒன்றைக் காண்பதற்கு நீங்கள் சிரமப்படாததைப் போன்றே, உங்கள் இறைவனைக் காண்பதற்கும் நீங்கள் சிரமப்படமாட்டீர்கள்.
இறைவன் அடியானைச் சந்தித்து, "இன்ன மனிதனே! உன்னை நான் கண்ணியப்படுத்தி, உன்னைத் தலைவனாக்கி,உனக்குத் துணையை ஏற்படுத்தவில்லையா? குதிரைகளையும் ஒட்டகங்களையும் நான் உன் வசப்படுத்தவில்லையா?உன்னை (செல்வாக்குள்ள) தலைவனாக்கிப் போர்ச்செல்வங்களில் நான்கில் ஒரு பகுதியை உனக்கு உரியதாக்க வில்லையா?" என்று கேட்பான்.

அதற்கு அந்த அடியான், "ஆம்' என்பான். இறைவன், "நீ என்னைச் சந்திப்பாய் என எண்ணினாயா?" என்று கேட்பான். அதற்கு அந்த அடியான், "இல்லை' என்பான். இறைவன், "அவ்வாறாயின், நீ என்னை மறந்ததைப் போன்றே நானும் உன்னை மறந்துவிடுகிறேன்" என்பான்.
பிறகு மற்றோர் அடியானைச் சந்திக்கும் இறைவன், "இன்ன மனிதனே! உன்னைக் கண்ணியப்படுத்தி, உன்னைத் தலைவனாக்கி, உனக்கு(த்தகுந்த) துணையையும் நான் வழங்கவில்லையா? குதிரைகளையும் ஒட்டகங்களையும் நான் உன் வசப்படுத்தவில்லையா? உன்னை (செல்வாக்குள்ள) தலைவனாக்கிப் போர்ச்செல்வத்தில் நான்கில் ஒரு பகுதியை உனக்கு உரிமையாக்கவில்லையா?" என்று கேட்பான்.
அதற்கு அந்த அடியான், "ஆம், என் இறைவா!" என்பான். இறைவன், "நீ என்னைச் சந்திப்பாய் என எண்ணினாயா?"என்று கேட்பான். அதற்கு அந்த அடியான், "இல்லை' என்பான். இறைவன்,

"அவ்வாறாயின், நீ என்னை மறந்ததைப் போன்றே நானும் உன்னை மறந்துவிடுகிறேன்" என்பான்.
பிறகு மூன்றாவது அடியானைச் சந்திக்கும் இறைவன், முன்பு கேட்டதைப் போன்றே அவனிடமும் கேட்பான். அதற்கு அந்த அடியான், "என் இறைவா! நான் உன்னையும் உன் வேதத்தையும் உன் தூதர்களையும் நம்பி, உன்னைத் தொழுது (உனக்காக) நோன்பு நோற்றேன்.தானதர்மம் செய்தேன்" என்று கூறிவிட்டு, தன்னால் இயன்ற நல்ல வார்த்தைகளைக் கூறி இறைவனைப் புகழ்வான்.
அப்போது இறைவன், "நீ இங்கேயே நில்" என்று கூறுவான். பிறகு அவனிடம், "இப்போது உனக்கெதிரான நம்முடைய சாட்சியை நாம் எழுப்பப்போகிறோம்" என்று கூறுவான். அந்த மனிதன், தனக்கெதிராகச் சாட்சியம் சொல்பவர் யார் என்று யோசித்துக்கொண்டிருப்பான். அப்போது அவனது வாய்க்கு முத்திரையிடப்படும். அவனது தொடை, சதை, எலும்பு ஆகியவற்றைப் பார்த்து "பேசுங்கள்" என்று சொல்லப்படும்.
அப்போது அவனுடைய தொடை, சதை, எலும்பு ஆகியவை அவன் செய்தவை பற்றி எடுத்துரைக்கும். அவன் சாக்குப்போக்குச் சொல்லித் தப்பிவிடக் கூடாது என்பதே இதற்குக் காரணம். அவன்தான் நயவஞ்சகன் (முனாஃபிக்) ஆவான். அவன்மீது இறைவன் கடும் கோபம் கொள்வான்.

5679 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருகில் இருந்தோம். அப்போது அவர்கள் சிரித்துவிட்டு, "நான் சிரித்ததற்குக் காரணம் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். நாங்கள் "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்" என்று சொன்னோம்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஓர் அடியான் தன் இறைவனுடன் (மறுமை நாளில்) உரையாடுவது குறித்(து நினைத்)தே (சிரித்தேன்)" என்று கூறிவிட்டுப் பின்வருமாறு சொன்னார்கள்: அடியான் (தன் இறைவனிடம்), "என் இறைவா! நீ எனக்கு அநீதியிழைப்பதிலிருந்து பாதுகாப்பு வழங்குவாய் என உறுதியளிப்பாய் அல்லவா?" என்று கேட்பான்.
அதற்கு இறைவன், "ஆம்' என்பான். அடியான், "அவ்வாறாயின், எனக்கெதிராக (சாட்சியம் கூற) என்னிலிருந்து தவிர வேறெந்த சாட்சியத்தையும் நான் அனுமதிக்கமாட்டேன்" என்று கூறுவான்.
அதற்கு இறைவன், "இன்றைய தினம் உனக்கெதிராகச் சாட்சியமளிக்க நீயும் கண்ணியமிக்க எழுத்தர்(களான வானவர்)களுமே போதும்" என்பான்.பிறகு அவனது வாய்க்கு முத்திரையிடப் படும். அவனுடைய உறுப்புகளிடம், "பேசுங்கள்" என்று சொல்லப்படும். உடனே அவை அந்த அடியான் செய்த செயல்களைப் பற்றி எடுத்துரைக்கும்.
பிறகு அந்த அடியானும் உறுப்புகளும் தனியாகப் பேசுவதற்கு அனுமதியளிக்கப்படும். அப்போது அந்த அடியான், "உங்களுக்கு நாசமுண்டாகட்டும்! தொலைந்துபோங்கள். உங்களுக்காகத் தானே நான் (இவ்வளவு நேரம் இறைவனிடம்) வழக்காடினேன்" என்று (தன் உறுப்புகளிடம்) சொல்வான்.

5680 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! முஹம்மதின் குடும்பத்தாருக்கு (பசியைத் தணிக்கத்) தேவையான அளவு உணவை வழங்குவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

5681 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! முஹம்மதின் குடும்பத்தாருக்கு (பசியைப் போக்கத்) தேவையான அளவு உணவை வழங்குவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.- இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் வந்துள்ளது. அதில் "போதுமான (உணவை வழங்குவாயாக)" என இடம்பெற்றுள்ளது.

5682 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஹம்மத் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்ததிலிருந்து அவர்கள் இறக்கும்வரை, அவர்களின் குடும்பத்தார் கோதுமை உணவைத் தொடர்ந்து மூன்று நாட்கள் வயிறு நிரம்ப உண்டதில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5683 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறுதிப் பயணம் செல்லும்வரை (இறக்கும் வரை), கோதுமை உணவைத் தொடர்ந்து மூன்று நாட்கள் வயிறு நிரம்ப உண்டதில்லை.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5684 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் இறக்கும்வரை அவர்களின் குடும்பத்தார் (தொலி நீக்கப்படாத) கோதுமை உணவைத் தொடர்ந்து இரண்டு நாட்கள் வயிறு நிரம்ப உண்டதில்லை.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5685 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
முஹம்மத் (ஸல்) அவர்களின் குடும்பத்தார் கோதுமை ரொட்டியை (தொடர்ந்து) மூன்று நாட்களுக்கு மேல் வயிறு நிரம்ப உண்டதில்லை.

5686 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஹம்மத் (ஸல்) அவர்கள் இறுதிப்பயணம் செல்லும்வரை (இறக்கும்வரை), அவர்களின் குடும்பத்தார் கோதுமை ரொட்டியை (தொடர்ந்து) மூன்று நாட்கள் வயிறு நிரம்ப உண்டதில்லை.

5687 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஹம்மத் (ஸல்) அவர்களின் குடும்பத்தார் இரண்டு நாட்கள் வயிறு நிரம்ப உண்டிருந்தால், அதில் ஒரு நாள் (வெறும்) பேரீச்சம் பழமாக இருந்திருக்குமே அன்றி, (தொடர்ந்து இரு நாட்களும்) கோதுமை ரொட்டியாக இருந்திருக்காது.

5688 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
முஹம்மத் (ஸல்) அவர்களின் குடும்பத்தாரான நாங்கள் அடுப்பு பற்றவைக்காமல் ஒரு மாதத்தைக் கழித்திருக்கிறோம். அப்போது பேரீச்சம் பழமும் தண்ணீருமே எங்கள் உணவாக இருந்தன.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் "நாங்கள் ஒரு மாதத்தைக் கழித்துவந்தோம்" என்று இடம்பெற்றுள்ளது. "முஹம்மத் (ஸல்) அவர்களின் குடும்பத்தார்' எனும் குறிப்பு இல்லை.
இப்னு நுமைர் (ரஹ்) அவர்களிடமிருந்து அபூகுறைப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பில், "எங்களிடம் சிறிதளவு இறைச்சி (அன்பளிப்பாக) வந்தால் தவிர' என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5689 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
என்(வீட்டு) நிலைப்பேழையிலிருந்த தொலி நீக்கப்படாத சிறிது (வாற்)கோதுமையைத் தவிர, உயிருள்ளவர் உண்ணக்கூடிய பொருள் எதுவும் என் (வீட்டு) நிலைப்பேழையில் இல்லாத நிலையில் தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்தார்கள். அதிலிருந்து எடுத்து நீண்ட காலம் நான் உண்டேன். பிறகு அதை நான் அளந்(து பார்த்)தேன். அதனால் (சிறிது காலத்திற்குள்) அது தீர்ந்துபோய்விட்டது.

5690 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என்னிடம்) ஆயிஷா (ரலி) அவர்கள், "என் சகோதரி (அஸ்மாவின்) மகனே! அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் பிறை பார்ப்போம். அடுத்த பிறையும் பார்ப்போம். அதற்கடுத்த பிறையும் பார்ப்போம். இரண்டு மாதங்கள் மூன்று பிறை பார்த்துவிட்டிருப்போம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் (துணைவியர்) இல்லங்களில் (சமைப்பதற்காக அடுப்பில்) நெருப்பு பற்றவைக்கப்பட்டிராது" என்று கூறினார்கள்.
அதற்கு நான், "என் சிற்றன்னையே! (அப்படியானால்) நீங்கள் எப்படி வாழ்க்கை நடத்தினீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இரு கறுப்பர்களான பேரீச்சம் பழமும் நீரும்தான் (அப்போது எங்கள் உணவு). இருப்பினும்,அன்சாரிகளில் சிலர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அண்டை வீட்டாராக இருந்தனர். அவர்களிடம் (இலவசமாகப் பால் கறந்துகொள்வதற்கான) இரவல் ஒட்டகங்கள் இருந்தன. (அவற்றிலிருந்து பால் கறந்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அவர்கள் (அன்பளிப்பாகக்) கொடுத்தனுப்புவார்கள். அந்தப் பாலை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு அருந்தக் கொடுப்பார்கள்" என்று கூறினார்கள்.

5691 நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ஒரே நாளில் இரண்டு வேளை ரொட்டியும் ஆலிவ் எண்ணெயும் வயிறு நிரம்ப உண்ணாமலேயே இறந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5692 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
இருகறுப்பர்களான பேரீச்சம் பழமும் தண்ணீரும் உட்கொண்டு மக்கள் வயிறு நிரம்பி இருந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5693 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
இரு கறுப்பர்களான பேரீச்சம்பழமும் தண்ணீரும் உட்கொண்டு நாங்கள் வயிறு நிரம்பி இருந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் சுஃப்யான் அஸ்ஸவ்ரீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இரு கறுப்பர்களான பேரீச்சம்பழமும் தண்ணீரும் உட்கொண்டு நாங்கள் வயிறு நிரம்பியிராத நிலையில் (இறந்தார்கள்)" என்று இடம்பெற்றுள்ளது.

5694 அபூஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள், "என் உயிர் யார் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! (அல்லது அபூஹுரைராவின் உயிர் யார் கையில் உள்ளதோ அவன்மீது சத்தியமாக!) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வுலகைப் பிரியும்வரை கோதுமை ரொட்டியைத் தொடர்ந்து மூன்று நாட்கள் தம் குடும்பத்தாருக்கு வயிறு நிரம்ப அளிக்கவில்லை" என்று சொன்னார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5695 அபூஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் தம் விரலால் பல முறை சைகை செய்தபடி, "அபூஹுரைராவின் உயிர் யார் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வுலகைப் பிரியும்வரை அவர்களும் அவர்கள்தம் குடும்பத்தாரும் கோதுமை ரொட்டியை மூன்று நாட்கள் தொடர்ந்து வயிறு நிரம்ப உண்டதில்லை" என்று கூறியதைக் கேட்டேன்.

5696 சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள், "(இன்று) நீங்கள் விரும்பும் உணவும் பானமும் உங்களிடம் இல்லையா? ஆனால்,உங்கள் நபி (ஸல்) அவர்களோ தமது வயிறு நிரம்பும் அளவுக்கு மட்டமான உலர்ந்த பேரீச்சம் பழம் கூட கிடைக்காத நிலையில் இருந்ததை நான் கண்டுள்ளேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

5697 மேற்கண்ட ஹதீஸ் நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், ஸுஹைர் பின் முஆவியா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "ஆனால், நீங்களோ (இன்று) பல வண்ண பேரீச்சம் பழங்களுக்கும், வெண்ணெய்க்கும் குறைவானதைக் கொண்டு திருப்தி அடைவதில்லை" என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5698 சிமாக் பின் ஹர்ப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் உரையாற்றுகையில் பின்வருமாறு கூறினார்கள்: உமர் (ரலி) அவர்கள் (தற்போது) மக்களுக்கு ஏற்பட்டுள்ள வாழ்க்கை வளம் பற்றி நினைவு கூர்ந்தார்கள்.
அப்போது, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது வயிறு நிரம்பும் அளவுக்கு மட்டமான பேரீச்சம் பழம்கூட கிடைக்காத நிலையில் ஒரு நாள் முழுவதும் சுருண்டு கிடப்பதை நான் கண்டுள்ளேன்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5699 அபூஅப்திர் ரஹ்மான் அல்ஹுபுலீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர், "நாம் ஏழை முஹாஜிர்கள் இல்லையா?"என்று கேட்டார். அதற்கு அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள், "நீர் அமைதி காண உமக்கு மனைவி இல்லையா?"என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், "ஆம் (இருக்கிறாள்)" என்றார்.
அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள், "வசிப்பதற்கு உமக்கு வீடு இல்லையா?" என்று கேட்டார்கள். அந்த மனிதர் "ஆம் (இருக்கிறது)" என்றார். "அவ்வாறாயின், நீர் செல்வர்களில் ஒருவராவீர்" என்று கூறினார்கள். அந்த மனிதர் "இத்துடன் என்னிடம் பணியாளர் ஒரு வரும் இருக்கிறார்" என்றார். "அவ்வாறாயின், நீர் மன்னர்களில் ஒருவர் ஆவீர்" என்றார்கள்.

- அபூஅப்திர்ரஹ்மான் அல்ஹுபுலீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்களிடம் மூன்று பேர் வந்தார்கள். அப்போது அவர்களுக்கு அருகில் நானும் இருந்தேன். அவர்கள் (மூவரும்), "அபூமுஹம்மதே! அல்லாஹ்வின் மீதாணையாக! எங்களுக்கு எந்தப் பொருள்மீதும் சக்தி இல்லை. எங்களிடம் செலவழிப்பதற்கு வசதியோ, வாகனமோ, தேவையான வீட்டுப்பொருட்களோ இல்லை" என்று கூறினர்.
அப்போது அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள், "நீங்கள் எதை நாடுகிறீர்கள் (உங்களுக்கு என்ன வேண்டும்)? நீங்கள் விரும்பினால், எம்மிடம் வாருங்கள். நாம் உங்களுக்கு அல்லாஹ் எளிதாக்கியுள்ள செல்வத்தை வழங்குவோம். நீங்கள் விரும்பினால், உங்கள் பிரச்சினையை நாம் அரசரிடம் தெரிவிப்போம். நீங்கள் விரும்பினால், பொறுமையாக இருக்கலாம். ஏனெனில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஏழை முஹாஜிர்கள் மறுமைநாளில் செல்வர்களைவிட நாற்பதாண்டுகளுக்கு முன்பே சொர்க்கத்துக்குச் சென்றுவிடுவார்கள்' என்று கூறியதைக் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
அதற்கு அவர்கள் (மூவரும்), "அப்படியானால், நாங்கள் பொறுமையாக இருக்கிறோம்; எதையும் கேட்கமாட்டோம்"என்று கூறினர்.

## பாடம் : 2 தமக்குத் தாமே அநீதியிழைத்து (அழிவில் சிக்கி)க்கொண்டவர்களின் வசிப்பிடங்களுக்கு அழுதவர்களாகவே தவிர நீங்கள் செல்ல வேண்டாம்.

5700 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(தபூக் பயணத்தின்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஹிஜ்ர்'வாசிகள் (ஸமூத் கூட்டத்தார்) தொடர்பாக, "இறைவனால் வேதனைக்குள்ளாக்கப்பட்ட இந்த மக்களின் இடத்திற்கு அழுதவர்களாகவே தவிர நீங்கள் செல்ல வேண்டாம். உங்களால் அழ முடியாவிட்டால்,

அவ்விடத்திற்குச் செல்லாதீர்கள். அவர்களுக்கு ஏற்பட்டது உங்களுக்கும் ஏற்பட்டுவிடக் கூடாது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5701 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "ஹிஜ்ர்' பிரதேசத்தைக் கடந்து சென்றபோது, "தமக்குத் தாமே அநீதியிழைத்துக் கொண்டவர்களின் வசிப்பிடங்களில் அவர்களுக்கு நேர்ந்த அதே சோதனை உங்களுக்கும் ஏற்பட்டுவிடுமோ என்றஞ்சி, அழுதபடியே தவிர செல்லாதீர்கள்" என்று எங்களிடம் கூறினார்கள். பிறகு தமது வாகனத்தை விரட்டிக் கொண்டு, மிக விரைவாக அந்த இடத்தைக் கடந்துசென்றார்கள்.
இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள், "ஸமூத்' கூட்டத்தாரின் வசிப்பிடமான "ஹிஜ்ர்' பற்றிக் கூறும்போது இதை அறிவித்தார்கள்.

5702 அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(தபூக் பயணத்தில்) மக்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "ஸமூத்' கூட்டத்தார் வாழ்ந்த பகுதியான "ஹிஜ்ர்' பிரதேசத்தில் இறங்கி, அங்கிருந்த கிணறுகளில் நீரிறைத்தார்கள். அதைக் கொண்டு மாவு குழைத்தார்கள்.
அப்போது அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைத்த நீரைக் கொட்டி விடுமாறும், (அந்தத் தண்ணீரால்) குழைக்கப்பட்ட அந்த மாவை ஒட்டகங்களுக்குத் தீனியாகப் போட்டுவிடுமாறும் உத்தரவிட்டார்கள். மேலும், (ஸாலிஹ் நபியின்) ஒட்டகம் வந்து நீரருந்திய கிணற்றிலிருந்து நீரிறைத்துக் கொள்ளுமாறு உத்தரவிட்டார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஆயினும் அதில், ("கிணறுகளிலிருந்து' என்பதைக் குறிக்க "ஆபார்' என்பதற்குப் பதிலாக) "பிஆர்' என்ற சொல்லும், ("குழைத்தார்கள்' என்பதைக் குறிக்க "அஜனூ' என்பதற்குப் பதிலாக) "இஃதஜனூ' என்ற சொல்லும் இடம்பெற்றுள்ளன.

## பாடம் : 3 விதவைகள், ஏழைகள், அநாதைகள் ஆகியோருக்கு உதவி புரிதல்.

5703 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(கணவனை இழந்த) கைம்பெண்ணுக்காகவும் ஏழைக்காகவும் பாடுபடுகின்றவர், அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிபவரைப் போன்றவர் ஆவார். மேலும், "(இரவெல்லாம்) சோர்ந்து விடாது நின்று வணங்கி, (பகலெல்லாம்) விடாது நோன்பு நோற்றவரைப் போன்றவரும் ஆவார்" (என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக) மாலிக் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள் என்றே நான் எண்ணுகிறேன் என அறிவிப்பாளர் அப்துல்லாஹ் பின் மஸ்லமா (ரஹ்) அவர்கள் தெரிவிக்கிறார்கள்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5704 அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நானும் அநாதையின் காப்பாளரும் -அந்த அநாதை உறவுக்காரராகட்டும் அந்நியராகட்டும்- சொர்க்கத்தில் இப்படி இருப்போம்" என்று சைகை செய்து கூறினார்கள்.
இதை அறிவிக்கும்போது மாலிக் பின் அனஸ் (ரஹ்) அவர்கள், தமது சுட்டுவிரலாலும் நடுவிரலாலும் (அவற்றை இணைத்துக் காட்டி) சைகை செய்தார்கள்.

## பாடம் : 4 பள்ளிவாசல்கள் எழுப்புவதன் சிறப்பு.

5705 உபைதுல்லாஹ் அல்கவ்லானீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(கலீஃபா) உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டிய (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலை (விரிவுபடுத்தி)க்கட்ட எண்ணியபோது, அது குறித்து மக்கள் அதிருப்தி தெரிவித்தனர்.
அப்போது உஸ்மான் (ரலி) அவர்கள் மக்களிடம், "நீங்கள் மிக அதிகமாகவே பேசிவிட்டீர்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் அல்லாஹ்வுக்காகப் பள்ளிவாசல் ஒன்றைக் கட்டுகிறாரோ -புகைர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் "அல்லாஹ்வின் உவப்பை நாடி (பள்ளிவாசல் ஒன்றைக் கட்டுகிறாரோ' என்று (ஆஸிம் பின் உமர் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள் என நான் எண்ணுகிறேன் என்று) இடம்பெற்றுள்ளது- அவருக்காக அல்லாஹ் சொர்க்கத்தில் அதைப் போன்ற ஒன்றைக் கட்டுகிறான்' என்று கூறியதை நான் செவியேற்றுள்ளேன்" என்றார்கள்.-இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் ஹாரூன் பின் சயீத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவருக்காக அல்லாஹ் சொர்க்கத்தில் ஒரு வீட்டைக் கட்டுகிறான்" என்று இடம்பெற்றுள்ளது.

5706 மஹ்மூத் பின் லபீத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(கலீஃபா) உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலை (விரிவுபடுத்தி)க்கட்டத் திட்டமிட்டபோது, அதை மக்கள் வெறுத்தனர்; அதை முன்பிருந்த அமைப்பிலேயே விட்டுவிட வேண்டும் என்று விரும்பினர்.
அப்போது உஸ்மான் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "யார் அல்லாஹ்வி(ன் பொருத்தத்தி)ற்காகப் பள்ளிவாசல் ஒன்றைக் கட்டுகிறாரோ அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தில் அதைப்போன்ற ஒன்றைக் கட்டுகிறான்" என்று கூறியதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள்.- இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தில் ஒரு வீட்டைக் கட்டுகிறான்" என இடம் பெற்றுள்ளது.

## பாடம் : 5 ஏழை எளியோருக்கு தானதர்மங்கள் செய்தல்.

5707 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஒரு மனிதர் ஒரு காட்டு நிலத்தில் இருந்த போது, ஒரு மேகத்தினிடையே "இன்ன மனிதரின் தோட்டத்திற்கு நீர் பொழி' என்று ஒரு சப்தம் வருவதைக் கேட்டார். உடனே அந்த மேகம்

நகர்ந்து, கருங்கற்கள் நிறைந்த ஒரு பகுதியில் மழையைப் பொழிந்தது. அங்கிருந்த நீரோடைகளில் ஒன்றில் அந்த நீர் முழுவதும் ஓடியது. உடனே அந்த மனிதர் அந்த நீர்வழியைத் தொடர்ந்தார்.
அப்போது ஒரு மனிதர் தமது தோட்டத்தில் நின்றுகொண்டு மண்வெட்டியால் தண்ணீரை திருப்பிவிட்டுக்கொண்டிருந்தார். அவரிடம், "அல்லாஹ்வின் அடியாரே! உம்முடைய பெயர் என்ன?" என்று கேட்டார். அவர் "இன்னது' என மேகத்தினிடையே கேட்ட அதே பெயரைச் சொன்னார்.
அப்போது அவர், "அல்லாஹ்வின் அடியாரே! ஏன் என் பெயரைக் கேட்கிறீர்?" என்றார். அதற்கு அந்த மனிதர், "நான் மேகத்தினிடையே உமது பெயரைக் குறிப்பிட்டு, "இன்ன மனிதரின் தோட்டத்தில் நீரைப்பொழி' என ஒரு சப்தத்தைக் கேட்டேன். அந்த மேகத்தின் நீர்தான் இது. அந்தத் தோட்டத்தி(ன் மூலம் கிடைக்கும் வருவாயி)ல் நீர் என்ன செய்கிறீர்?"என்று கேட்டார்.
அதற்கு அந்தத் தோட்டக்காரர், "நீங்கள் சொல்வது உண்மையானால், அதன் விளைச்சலில் கிடைக்கும் வருவாயில் மூன்றில் ஒரு பகுதியைத் தர்மம் செய்கிறேன். மற்றொரு மூன்றில் ஒரு பகுதியை நானும் என் மனைவி மக்களும் உண்கிறோம். இன்னொரு மூன்றில் ஒரு பகுதியை மறுபடியும் விவசாயம் செய்கிறேன்" என்று கூறினார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "அதில் (கிடைக்கும் வருவாயில்) மூன்றில் ஒரு பகுதியை ஏழைகள், யாசகர்கள், வழிப்போக்கர்கள் ஆகியோருக்குத் தர்மம் செய்கிறேன்" என்று கூறியதாக இடம்பெற்றுள்ளது.

## பாடம் : 6 அல்லாஹ் அல்லாதவருக்காக நற்செயல் புரிவதன் மூலம் அல்லாஹ்வுக்கு இணை கற்பித்தல்.

5708 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வளமும் உயர்வும் மிக்க அல்லாஹ் கூறினான்: நான் இணையாளர்களைவிட்டும் இணை கற்பித்தலைவிட்டும் அறவே தேவையற்றவன். யாரேனும் என்னுடன் பிறரையும் இணையாக்கி (எனக்காகவும் பிறருக்காகவும்) நற்செயல் புரிந்தால்,அவனையும் அவனது இணைவைப்பையும் (தனியே) விட்டுவிடுவேன்.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5709 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் விளம்பரத்திற்காக நற்செயல் புரிந்தாரோ அவர் (உடைய நோக்கம்) பற்றி அல்லாஹ் (மறுமை நாளில்) விளம்பரப்படுத்துவான். யார் முகஸ்துதிக்காக நற்செயல் புரிந்தாரோ அவரை அல்லாஹ் (மறுமைநாளில்) அம்பலப்படுத்துவான்.
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5710 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
யார் விளம்பரத்திற்காக நற்செயல் புரிகிறாரோ அவர்(கொண்டிருந்த உள்நோக்கம்) பற்றி அல்லாஹ் (மறுமைநாளில்) விளம்பரப்படுத்துவான். யார் முகஸ்துதிக்காக நற்செயல் புரிகிறாரோ அவரை அல்லாஹ் (மறுமைநாளில்) அம்பலப்படுத்துவான்.

இதை ஜுன்துப் பின் அப்தில்லாஹ் அல்பஜலீ அல்அலக்கீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "ஜுன்துப் (ரலி) அவர்கள் தவிர வேறு யாரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இதைக் கூறியதாகத் தெரிவிக்கவில்லை" என்று அறிவிப்பாளர் சலமா பின் குஹைல் (ரஹ்) அவர்கள் கூடுதலாக அறிவித்துள்ளார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் ஜுன்துப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதிலும் அந்தக் கூடுதல் தகவல் இடம்பெற்றுள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் ஜுன்துப் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 7 ஒரே ஒரு வார்த்தைகூட நரகத்தில் தள்ளிவிடும்.

5711 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் அடியார் (பின்விளைவைப் பற்றி யோசிக்காமல்) ஒரு வார்த்தை பேசிவிடுகிறார். அதன் காரணமாக அவர் கிழக்குக்கும் மேற்குக்கும் இடையிலான தொலைவைவிட அதிகமான தூரத்தில் நரகத்தில் விழுகிறார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5712 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
ஓர் அடியார் பின்விளைவை யோசிக்காமல் ஒரு வார்த்தை பேசிவிடுகிறார். அதன் காரணமாக அவர் கிழக்குக்கும் மேற்குக்கும் இடையிலுள்ள தூரத்தைவிட அதிகமான தூரத்தில் நரகத்தில் போய் விழுகிறார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 8 நன்மையை ஏவிக்கொண்டு தாம் அதைச் செய்யாமலும், தீமையைத் தடுத்துக்கொண்டு தாமே அதைச் செய்துகொண்டும் இருப்பவர் அடையும் தண்டனை.

5713 அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களிடம், "நீங்கள் (கலீஃபா) உஸ்மான் (ரலி) அவர்களிடம் சென்று (இந்த அரசியல் குழப்பங்கள் தொடர்பாகப்) பேசக் கூடாதா? (அவர் உங்களுக்கு நெருக்கமானவர் ஆயிற்றே!)" என்று கேட்கப்பட்டது.
அதற்கு உசாமா (ரலி) அவர்கள் கூறினார்கள்: உங்கள் முன்னிலையில்தான் அவர்களிடம் நான் பேச வேண்டும் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா? அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவர்களிடம் அரசியல் குழப்பம் குறித்துப் பேசுவதாயிருந்தால் கலகத்திற்கு வித்திடாமல் இருப்பதற்காக இரகசியமாகவே அவர்களிடம் பேசுகிறேன். ஏனெனில்,கலகத்திற்கு வித்திட்ட முதல் ஆளாக நானிருக்க விரும்பவில்லை.
மேலும், எனக்கு ஆட்சித்தலைவராக இருக்கும் எவரையும், "மக்களில் நீங்கள்தான் சிறந்தவர்' என்று நான் சொல்லமாட்டேன். (அதுவும்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து ஒரு விஷயத்தை நான் செவியுற்ற பிறகு (அவ்வாறு நான் சொல்லமாட்டேன்).

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மறுமை நாளில் ஒரு மனிதர் கொண்டு வரப்பட்டு நரகத்தில் வீசப்படுவார். அப்போது அவரது வயிற்றிலுள்ள குடல்கள் முழுவதும் வெளியே வந்துவிடும். அவர் குடலை இழுத்துக்கொண்டு கழுதை செக்கு இயந்திரத்தைச் சுற்றிவருவதைப் போன்று சுற்றிவருவார். அப்போது நரகவாசிகள் அவரைச் சுற்றி ஒன்றுகூடி, "இன்ன மனிதரே! உமக்கேன் இந்த நிலை? நீர் (உலக வாழ்வின்போது) நற்செயல் புரியுமாறு (மக்களுக்குக்) கட்டளையிட்டு, தீமை புரியவேண்டாம் என (அவர்களை)த் தடுத்துக் கொண்டிருக்(கும் நற்பணி செய்திகொண்டிருக்)க வில்லையா?" என்று கேட்பார்கள்.
அதற்கு அந்த மனிதர், "ஆம்; நற்செயல் புரியும்படி (மக்களுக்கு) நான் கட்டளையிட்டேன்; ஆனால், அந்த நற்செயலை நான் செய்யவில்லை. தீமை புரியவேண்டாம் என (மக்களை) நான் தடுத்தேன்; ஆனால், அந்தத் தீமையை நானே செய்துவந்தேன்" என்று கூறுவார்.
இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூவாயில் ஷகீக் பின் சலமா (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "நாங்கள் உசாமா பின் ஸைத் (ரலி) அவர்களுக்கு அருகில் இருந்தோம். அப்போது ஒரு மனிதர், "நீங்கள் (கலீஃபா) உஸ்மான் (ரலி) அவர்களிடம் சென்று, அவர் செய்துகொண்டிருப்பதைப் பற்றி பேசாமலிருப்பதற்கு என்ன காரணம்?' என்று கேட்டார்" என ஹதீஸ் ஆரம்பமாகிறது. தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம் பெற்றுள்ளது.

**பாடம் : 9 மனிதன் திரைமறைவில் செய்த பாவத்தைத் தானே பகிரங்கப்படுத்துவதற்கு வந்துள்ள தடை.**

5714 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் சமுதாயத்தாரில் (பாவம் செய்த) அனைவரும் (இறைவனால்) மன்னிக்கப்படுவர்; (தம் பாவங்களைத்) தாமே பகிரங்கப்படுத்துகின்றவர்களைத் தவிர! ஓர் அடியான் இரவில் ஒரு (பாவச்) செயல் புரிந்துவிட்டுப் பிறகு காலையானதும் இறைவன் அவனது பாவத்தை (பிறருக்குத் தெரியாமல்) மறைத்துவிட்டிருக்க, "இன்ன மனிதரே! நேற்றிரவு நான் (பாவங்களில்) இன்னின்னதைச் செய்தேன்" என்று அவனே கூறுவது பகிரங்கப்படுத்துவதில் அடங்கும். (அவன் செய்த பாவத்தை) இரவில் (பிறருக்குத் தெரியாமல்) இறைவன் மறைத்துவிட்டான். (ஆனால்,) இறைவன் மறைத்ததைக் காலையில் அந்த மனிதன் தானே வெளிச்சமாக்கி விடுகின்றான்.- இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 10 தும்மி "அல்ஹம்து லில்லாஹ்' ("எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே') என்று கூறியவருக்கு "யர்ஹமுகல்லாஹ்' ("உங்களுக்கு அல்லாஹ் கருணைபுரியட்டும்') என மறுமொழி கூறுவதும், கொட்டாவிவிடுவது அருவருப்பானதாகும் என்பதும்.**

5715 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் இரு மனிதர்கள் தும்மினர். அப்போது அவர்களில் ஒருவருக்கு நபி (ஸல்) அவர்கள் "யர்ஹமுக்கல்லாஹ்' (அல்லாஹ் உமக்குக் கருணை புரிவானாக) என்று மறுமொழி கூறினார்கள். மற்றொருவருக்கு மறுமொழி கூறவில்லை.

மறுமொழி கூறப்படாதவர், "இன்ன மனிதர் தும்மியபோது தாங்கள் அவருக்கு மறுமொழி கூறினீர்கள். நான் தும்மியபோது தாங்கள் எனக்கு மறுமொழி கூறவில்லையே?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இவர் (தும்மியவுடன் "அல்ஹம்து லில்லாஹ்' என்று) இறைவனைப் புகழ்ந்தார். நீர் இறைவனைப் புகழவில்லை (எனவேதான்,அவருக்கு மறுமொழி பகர்ந்தேன். உமக்கு மறுமொழி பகரவில்லை)" என்று பதிலளித்தார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5716 அபூபுர்தா பின் அபீமூசா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை) அபூமூசா (ரலி) அவர்கள், ஃபள்ல் பின் அப்பாஸ் (ரலி) அவர்களின் புதல்வி(யும் தம் துணைவியுமான உம்மு குல்ஸூம் அவர்களது) இல்லத்தில் இருந்தபோது அவர்களிடம் நான் சென்றேன். அப்போது நான் தும்மினேன். ஆனால், என் தந்தை எனக்கு மறுமொழி கூறவில்லை. அவர்களின் துணைவியார் தும்மியபோது மறுமொழி கூறினார்கள்.
நான் என் தாயாரிடம் திரும்பிவந்து, நடந்ததை அவரிடம் தெரிவித்தேன். என் தாயாரிடம் அபூமூசா (ரலி) அவர்கள் வந்தபோது, "உங்களுக்கு அருகில் என் பிள்ளை தும்மியபோது நீங்கள் மறுமொழி கூறவில்லை; அவள் தும்மியபோது மட்டும் மறுமொழி கூறியிருக்கிறீர்கள்" என்று கேட்டார்.
அதற்கு (என் தந்தை) அபூமூசா (ரலி) அவர்கள், "உன் பிள்ளை தும்மியவுடன் "அல்ஹம்து லில்லாஹ்' என்று கூறவில்லை. எனவேதான், நான் அவருக்கு மறுமொழி பகரவில்லை. ஆனால், அவள் தும்மியவுடன் "அல்ஹம்து லில்லாஹ்' என்று கூறினாள். எனவேதான், அவளுக்கு நான் மறுமொழி பகர்ந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவர் தும்மி, "அல்ஹம்து லில்லாஹ்' என்று கூறினால் அவருக்கு நீங்கள் மறுமொழி கூறுங்கள். அவர் "அல்ஹம்து லில்லாஹ்' என்று கூறாவிட்டால், அவருக்கு நீங்கள் மறுமொழி கூறாதீர்கள்' என்று கூற நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5717 சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் ஒரு மனிதர் தும்மி ("அல்ஹம்து லில்லாஹ்' என்று கூறி)னார். அவருக்கு நபி (ஸல்) அவர்கள் "யர்ஹமுகல்லாஹ்' (அல்லாஹ் உமக்குக் கருணை புரிவானாக) என்று மறுமொழி கூறினார்கள். அவரே மற்றொரு முறை தும்மினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இந்த மனிதருக்கு ஜலதோஷம் ஏற்பட்டுள்ளது" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

5718 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
கொட்டாவி ஷைத்தானிடமிருந்தே ஏற்படுகிறது. எனவே, உங்களில் ஒருவருக்குக் கொட்டாவி ஏற்படும்போது இயன்ற வரை அவர் (அதைக்) கட்டுப்படுத்திக்கொள்ளட்டும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5719 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருக்குக் கொட்டாவி ஏற்பட்டால், அவர் தமது வாயின் மீது கையை வைத்து அதைத் தடுக்கட்டும். ஏனெனில், ஷைத்தான் (அப்போது வாய்க்குள்) நுழைகின்றான்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5720 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருக்குக் கொட்டாவி ஏற்பட்டால் தமது கையால் தடுத்துக்கொள்ளட்டும். ஏனெனில், ஷைத்தான் (அப்போது வாய்க்குள்) நுழைகிறான்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5721 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருக்குத் தொழுகையில் கொட்டாவி ஏற்பட்டால், தம்மால் முடிந்த வரை (அதைக்) கட்டுப்படுத்தட்டும். ஏனெனில், ஷைத்தான் (அப்போது வாய்க்குள்) நுழைகிறான்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 11 பல்வேறு (தலைப்பிலான) நபிமொழிகள்.

5722 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
வானவர்கள் ஒளியால் படைக்கப்பட்டனர். "ஜின்'கள் தீப்பிழம்பால் படைக்கப்பட்டனர். (ஆதி மனிதர்) ஆதம், உங்களுக்கு (குர்ஆனில்) கூறப்பட்டுள்ளதைப் போன்று (களிமண்ணால்) படைக்கப் பட்டார்.
இதை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 12 எலியும் அது உருமாற்றம் பெற்ற உயிரினம் என்பதும்.

5723 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பனூ இஸ்ராயீல் சமுதாயத்தில் ஒரு குழுவினர் (மர்மமான முறையில்) காணாமற்போய் விட்டார்கள். அவர்கள் என்ன ஆனார்கள் என்பது தெரியவில்லை. அவர்கள் எலிகளாக (உருமாற்றப்பட்டுவிட்டதாக)வே நான் கருதுகிறேன். எலிகளுக்கு (முன்னால்) ஒட்டகத்தின் பால் வைக்கப்பட்டால், அவை அந்தப் பாலைக்குடிப்பதில்லை. அவற்றுக்கு (முன்பாக) ஆடுகளின் பால் வைக்கப்பட்டால், அந்தப் பாலை அவை குடித்துவிடுகின்றனவே?
இதன் அறிவிப்பாளரான அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை நான் கஅபுல் அஹ்பார் (ரஹ்) அவர்களுக்கு அறிவித்தபோது அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இதைச் சொல்ல நீங்கள் கேட்டீர்களா?" என்று வினவினார்கள். நான், "ஆம்' என்றேன். அவ்வாறே அவர்கள் பலமுறை கேட்டார்கள். "நான் "தவ்ராத்'தையா ஓதுகிறேன் (அதிலிருந்து சொல்வதற்கு)?" என்று நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் என்ன ஆனார்கள் என்று நாம் அறியவில்லை" எனக் காணப்படுகிறது.

5724 முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள், "எலிகள் உருமாற்றம் பெற்ற உயிரினமாகும். அதற்கு அடையாளம் என்னவென்றால்,அவற்றுக்கு முன்பாக ஆடுகளின் பால் வைக்கப்பட்டால், அவை அதைக் குடிக்கின்றன. (ஆனால்,) அவற்றுக்கு (முன்பாக) ஒட்டகங்களின் பால் வைக்கப்பட்டால் அவை அதைச் சுவைப்பதில்லை" என்று சொன்னார்கள்.
அப்போது கஅப் (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இதைச் சொல்ல நீங்கள் கேட்டீர்களா?" என்று அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் வினவினார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்கள், "பிறகு "தவ்ராத்' வேதமா எனக்கு அருளப்பட்டது?" என்று (திருப்பிக்) கேட்டார்கள்.

**பாடம் : 13 ஓர் இறைநம்பிக்கையாளர், ஒரே புற்றில் இரண்டு முறை தீண்டப்படமாட்டார்.**

5725 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளர் ஒரே புற்றில் இரண்டு முறை தீண்டப்படமாட்டார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

**பாடம் : 14 இறைநம்பிக்கையாளரின் அனைத்து அம்சங்களும் நன்மையே ஆகும்.**

5726 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இறைநம்பிக்கையாளரின் நிலையைக்கண்டு நான் வியப்படைகிறேன். அவரது (வாழ்வின்) அனைத்து அம்சங்களும் (அவருக்கு) நன்மையாகவே அமையும். இறை நம்பிக்கையாளருக்கு அல்லாமல் வேறெவருக்கும் இ(ந்தப் பாக்கியமான)து கிட்டுவதில்லை. அவருக்கு ஏதேனும் மகிழ்ச்சி ஏற்பட்டால், அவர் நன்றி செலுத்துகிறார். அது அவருக்கு நன்மையாக அமைகிறது. அவருக்கு ஏதேனும் துயரம் நேர்ந்தால், அவர் பொறுமை காக்கிறார். அதுவும் அவருக்கு நன்மையாக அமைந்துவிடுகிறது.
இதை ஸுஹைப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 15 ஒருவர் குழப்பத்திற்கு ஆளாவார் எனும் அச்சம் இருக்குமானால், அவரை அளவு கடந்து புகழ்வது தடை செய்யப்பட்டுள்ளது.**

5727 அபூபக்ரா நுஃபைஉ பின் அல்ஹாரிஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் ஒரு மனிதர் இன்னொரு மனிதரைப் பற்றிப் புகழ்ந்து பேசினார்.அப்போது நபி (ஸல்) அவர்கள் "உமக்கு நாசம்தான்! உன் சகோதரரின் கழுத்தைத் துண்டித்துவிட்டாயே! உன் சகோதரரின் கழுத்தைத் துண்டித்துவிட்டாயே" என்று பலமுறை கூறினார்கள்.

பிறகு, "உங்களில் ஒருவர் தம் நண்பரைப் புகழ்ந்தேயாக வேண்டும் என்றிருந்தால், "இன்ன மனிதரைப் பற்றி நான் (இவ்வாறு) எண்ணுகிறேன்' என்று (மட்டும்) கூறட்டும். அல்லாஹ்வே அவரைக் குறித்து விசாரணை (செய்து முடிவு) செய்பவன் ஆவான். நான் அல்லாஹ்வை முந்திக்கொண்டு யாரையும் தூய்மையானவர் என்று கூறமாட்டேன். அவரைப் பற்றி இன்னின்னவாறு கருதுகிறேன் என்றுகூட, அவர் அவ்வாறு இருக்கிறார் என அறிந்தால் மட்டுமே கூறட்டும்.

5728 அபூபக்ரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் ஒரு மனிதரைப் பற்றி (புகழ்ந்து) பேசப்பட்டது. அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் தூதருக்குப் பின்னால் இன்னின்ன விஷயத்தில் அந்த மனிதரைவிடச் சிறந்தவர் வேறெவருமில்லை" என்று கூறினார்.
நபி (ஸல்) அவர்கள், "உனக்குக் கேடுதான். உம்முடைய தோழரின் கழுத்தைத் துண்டித்துவிட்டீரே!" என்று பலமுறை கூறிவிட்டு, "உங்களில் ஒருவர் தம் தோழரைப் புகழ்ந்தேயாக வேண்டும் என்றிருந்தால், "இன்ன மனிதரைப் பற்றி நான் (இவ்வாறு) எண்ணுகிறேன்' என்று மட்டும் கூறட்டும். அதுவும் அவர் அவ்வாறு இருப்பதாகக் கருதினால் மட்டுமே கூறட்டும். நான் அல்லாஹ்வை முந்திக்கொண்டு யாரையும் தூய்மையானவர் என்று கூறமாட்டேன்" என்று சொன்னார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் அபூபக்ரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அப்போது ஒரு மனிதர் "அல்லாஹ்வின் தூதருக்குப் பின்னால் அந்த மனிதரைவிடச் சிறந்தவர் வேறெவருமில்லை' என்று கூறினார்" எனும் குறிப்பு இடம் பெறவில்லை.

5729 அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள், ஒரு மனிதர் இன்னொரு மனிதரை அளவுக்கதிகமாகப் புகழ்ந்து பேசிக்கொண்டிருப்பதைச் செவியுற்றார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அந்த மனிதரின் முதுகை அழித்துவிட்டீர்களே! அல்லது முறித்துவிட்டீர்களே" என்று கூறினார்கள்.

5730 அபூமஅமர் அப்துல்லாஹ் பின் சக்பரா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் எழுந்து தலைவர்களில் ஒருவரைப் புகழ்ந்து பேசினார். அப்போது மிக்தாத் பின் அம்ர் (ரலி) அவர்கள், (புகழ்ந்து பேசிக்கொண்டிருந்த அந்த) மனிதரின் மீது மண்ணை அள்ளி வீசலானார்கள். மேலும், "அளவுக்கதிகமாகப் புகழ்ந்து பேசுபவரின் முகங்களில் மண்ணை அள்ளி வீசுமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு உத்தரவிட்டார்கள்" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5731 ஹம்மாம் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் (கலீஃபா) உஸ்மான் (ரலி) அவர்களைப் புகழ்ந்து பேசலானார். அப்போது மிக்தாத் பின் அம்ர் (ரலி) அவர்கள் அவரை நோக்கிச் சென்று முழந்தாளிட்டு அமர்ந்து, அவரது முகத்தில்

பொடிக்கற்களை அள்ளி வீசலானார்கள். மிக்தாத் (ரலி) அவர்கள் உடல் பருமனான மனிதராயிருந்தார்கள். (எனவே தான், முழந்தாளிட்டு அமர்ந்தார்கள்.)
அப்போது உஸ்மான் (ரலி) அவர்கள் அவரைப் பார்த்து, "உமக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்டார்கள். அதற்கு மிக்தாத் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அளவுக்கதிகமாகப் புகழ்பவர்களை நீங்கள் கண்டால் அவர்களுடைய முகங்களில் மண்ணை அள்ளி வீசுங்கள்' என்று கூறினார்கள்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
- மேற்கண்ட ஹதீஸ் மிக்தாத் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## பாடம் : 16 வயதில் பெரியவருக்கு முதலில் கொடுப்பது.

5732 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் ஒரு கனவு கண்டேன். அதில் நான் ஒரு பல்துலக்கும் குச்சியால் பல்துலக்கிக் கொண்டிருந்தேன். அதைப் பெறுவதற்காக இரு மனிதர்கள் முண்டியடித்துக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவர் மற்றவரைவிட வயதில் பெரியவராயிருந்தார். அவர்களில் வயதில் சிறியவருக்கு நான் அந்தக்குச்சியைக் கொடுத்தேன். அப்போது என்னிடம், "முதியவருக்கு முதலில் கொடுங்கள்" என்று சொல்லப்பட்டது. ஆகவே, அதை நான் வயதில் பெரியவராயிருந்தவரிடம் கொடுத்தேன்.
இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பாடம் : 17 நபிமொழியை நிறுத்தி நிதானமாக அறிவிப்பதும் நபிமொழியை எழுதி வைத்துக் கொள்வது தொடர்பான விதியும்.

5733 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள் (ஆயிஷா (ரலி) அவர்களது அறைக்கு அருகில் அமர்ந்து கொண்டு) நபிமொழிகளை அறிவிக்கலானார்கள். அப்போது "அறையின் உரிமையாளரே! நான் சொல்வதைக் கேளுங்கள்! அறையின் உரிமையாளரே! நான் சொல்வதைக் கேளுங்கள்" என்று கூறினார்கள்.

அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் தொழுதுகொண்டிருந்தார்கள். தொழுது முடித்ததும் அவர்கள் என்னிடம், "சற்று முன்னர் இவர் அறிவித்த (விதத்)தையும் இவர் கூறியதையும் நீ கேட்க வில்லையா? நபி (ஸல்) அவர்கள் ஒரு விஷயத்தைச் சொல்கிறார்கள் என்றால், அதை (வார்த்தை வார்த்தையாக, எழுத்து எழுத்தாகக் கணக்கிட்டு) எண்ணக்கூடியவர் எண்ணியிருந்தால், ஒன்று விடாமல் எண்ணிவிடுவார். (அந்த அளவுக்கு நிறுத்தி நிதானமாக, தெளிவாகப் பேசிவந்தார்கள்)" என்று கூறினார்கள்.

5734 அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நான் கூறுவதை எழுதி வைக்காதீர்கள். குர்ஆன் தவிர மற்றதை என்னிடமிருந்து எவரேனும் எழுதி வைத்திருந்தால் அதை அவர் அழித்துவிடட்டும்.

என்னைப் பற்றி அறிவியுங்கள். தவறில்லை. யார் என்னைப் பற்றி (நான் சொல்லாத ஒன்றைச் சொன்னதாக) பொய்யுரைக்கிறாரோ அவர் தமது இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக் கொள்ளட்டும்" என்று கூறினார்கள்.
ஹம்மாம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "யார் வேண்டுமென்றே பொய்யுரைக்கிறாரோ' என்று ஸைத் பின் அஸ்லம் (ரஹ்) அவர்கள் கூறியதாகவே நான் கருதுகிறேன் என இடம் பெற்றுள்ளது.

**பாடம் : 18 தீக்குண்டத்தில் ("அல்உக்தூத்') போடப்பட்டோர், சூனியக்காரன், (வேதக்கார) துறவி, (அற்புதம் நிகழ்த்திய) சிறுவன் ஆகியோர் பற்றிய தகவல்.**

5735 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுக்கு முன்னால் (ஒரு காலத்தில்) அரசன் ஒருவன் வாழ்ந்தான். அவனிடம் (குறி சொல்லும்) சூனியக்காரன் ஒருவன் இருந்தான். அந்தச் சூனியக்காரன் முதுமையடைந்த போது அரசனிடம், "நான் முதுமையடைந்துவிட்டேன். (என்னோடு இந்தச் சூனியக் கலை அழிந்துவிடக் கூடாது.) எனவே, சிறுவன் ஒருவனை அனுப்புங்கள். அவனுக்கு நான் சூனியக் கலையை கற்றுத் தருகிறேன்" என்று சொன்னான். அவ்வாறே, அக்கல்வியை அவன் கற்றுத் தருவதற்காகச் சிறுவன் ஒருவனை அவனிடம் அரசன் அனுப்பினான்.
சிறுவன் சூனியக்காரனிடம் செல்லும் வழியில் துறவி ஒருவர் இருந்தார். அவரிடம் சென்று அமர்ந்து அவருடைய அறிவுரைகளைச் சிறுவன் கேட்கலானான். அது அவனை ஈர்த்தது; அவன் சூனியக்காரனிடம் செல்லும் போதெல்லாம் அந்தத் துறவியிடம் சென்று அமர்ந்து கொள்வான். பிறகு சூனியக்காரனிடம் (தாமதமாகச்) செல்லும்போது அவனைச் சூனியக் காரன் அடிப்பான். இது பற்றி அச்சிறுவன் துறவியிடம் முறையிட்டான்.
அப்போது அந்தத் துறவி சூனியக்காரனைப் பற்றி நீ அஞ்சினால் அவனிடம், "என் வீட்டார் என்னைத் தடுத்துவிட்டனர் (அதனால் தான் தாமதம்) என்று கூறிவிடு; நீ உன் வீட்டாரைப் பற்றி அஞ்சினால், சூனியக்காரன் என்னைத் தடுத்துவிட்டான் (அதனால்தான் தாமதம்) என்று கூறிவிடு" என்று (யோசனை) கூறினார். அவ்வாறே அச்சிறுவன் செய்துகொண்டிருந்தான்.
இந்நிலையில், (ஒருநாள் அச்சிறுவன் செல்லும்போது) மிகப்பெரிய மிருகம் ஒன்றிடம் அவன் வந்தான்.அது மக்களை(ச்செல்லவிடாமல்) தடுத்துக்கொண்டிருந்தது. அப்போது அச்சிறுவன், "இன்று நான் அந்தச் சூனியக்காரன் சிறந்தவனா? அல்லது அந்தத் துறவி சிறந்தவரா என்று அறியப்போகிறேன்" என்று கூறிவிட்டு, ஒரு கல்லை எடுத்து, "இறைவா! அந்தத் துறவியின் நிலை அந்தச் சூனியக்காரனின் நிலையைவிட உனக்கு மிகவும் விருப்பமானதாயிருந்தால், இந்த மிருகத்தைக் கொன்று மக்களைச் செல்லவிடு" என்று கூறி, அந்த மிருகத்தை நோக்கி (கல்லை) எறிந்து, அதைக் கொன்றான். மக்களும் (அச்சமின்றி) நடந்துசென்றனர்.
பிறகு அந்தத் துறவியிடம் சென்று நடந்ததை அவரிடம் தெரிவித்தான். அப்போது அந்தத் துறவி, "அருமை மகனே! நீ இன்று என்னைவிடச் சிறந்தவனாகிவிட்டாய்! உன் தகுதியை நான் இப்போது (கண்கூடாகப்) பார்க்கும் நிலைக்கு நீ வந்துவிட்டாய். இனி நீ சோதனைக் குள்ளாக்கப்படுவாய். அவ்வாறு நீ சோதனைக்குள்ளாக்கப்படும் போது என்னைப் பற்றித் தெரிவிக்காதே" என்று கூறினார்.
அச்சிறுவன் பிறவிக் குருடருக்கும் தொழு நோயாளிகளுக்கும் நிவாரணம் வழங்கினான். இதர நோய்களிலிருந்தும் மக்களுக்கு நிவாரணம் அளித்தான். இதை அரசனின் அவையிலிருந்த

ஒருவர் கேள்விப்பட்டார். அவர் (கண்பார்வையற்ற) குருடராக இருந்தார். அவர் ஏராளமான அன்பளிப்புகளுடன் அச்சிறுவனிடம் சென்று, "நீ எனது இந்த நோயைக் குணப்படுத்திவிட்டால், என்னிடமுள்ள இந்தப் பொருட்கள் அனைத்தும் உனக்கே உரியன" என்று கூறினார்.

அதற்கு அச்சிறுவன், "நான் யாருக்கும் நிவாரணமளிப்பதில்லை; அல்லாஹ்வே நிவாரணமளிக்கின்றான். நீங்கள் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டால் நான் (உங்களுக்காக) அல்லாஹ்விடம் பிரார்த்திப்பேன். அவன் உங்களுக்கு நிவாரணமளிப்பான்" என்று கூறினான்.

அவ்வாறே அக்குருடர் இறைநம்பிக்கை கொண்டபோது, அவருக்கு அல்லாஹ் நிவாரணமளித்தான். பிறகு அவர் வழக்கம் போல அரசனிடம் சென்று அமர்ந்தபோது அவரிடம் அந்த அரசர், "உமது பார்வையை உமக்குத் திருப்பிக்கொடுத்தவர் யார்?" என்று கேட்டான்.

அவர், "என் இறைவன்" என்று பதிலளித்தார். அதற்கு அரசன், "உனக்கு என் அல்லாத வேறு இறைவன் உண்டா?" என்று கேட்டான். அதற்கு அவர், "என் இறைவனும் உன்னுடைய இறைவனும் அல்லாஹ்தான்" என்று சொன்னார்.

உடனே அவரைப் பிடித்து, அந்தச் சிறுவனைப் பற்றி அவர் சொல்லும்வரை அவரை அரசன் வேதனைப்படுத்திக் கொண்டேயிருந்தான். பிறகு அந்தச் சிறுவன் கொண்டுவரப்பட்டான். அப்போது அரசன், "குழந்தாய்! நீ சூனியக்கலையால் பிறவிக்குருடரையும் தொழுநோயாளிகளையும் குணப்படுத்தி இன்னின்னவாறு செய்யுமளவுக்குச் சென்றுவிட்டாய்" என்று கூறினான்.

அதற்கு அச்சிறுவன், "நான் யாருக்கும் நிவாரணமளிப்பதில்லை. அல்லாஹ்வே நிவாரணமளிக்கிறான்" என்று கூறினான். பிறகு அச்சிறுவன் அந்தத் துறவியைப் பற்றித் தெரிவிக்கும்வரை அச்சிறுவனையும் அரசன் வேதனைப்படுத்தலானான்.

பிறகு அந்தத் துறவியும் கொண்டுவரப்பட்டார். அவரிடம், "உமது மார்க்கத்திலிருந்து நீர் திரும்பிவிடும்" என்று கூறப்பட்டது. ஆனால், அவர் மறுத்துவிட்டார். ஆகவே, ரம்பம் ஒன்றைக் கொண்டுவரச்சொல்லி, அவரது உச்சந்தலையில் வைத்து, அவரது உடலை இரண்டாகப் பிளந்தான் அரசன். அவர் இரண்டு துண்டாகி விழுந்தார்.

பிறகு அரசனின் அவையில் இருந்த அந்த மனிதர் கொண்டுவரப்பட்டு, "நீ உனது மார்க்கத்திலிருந்து திரும்பிவிடு!" என்று கூறப்பட்டது. அவரும் மறுத்துவிட்டார். எனவே, அவரது உச்சந்தலையில் ரம்பத்தை வைத்து அறுத்து இரண்டாகப் பிளந்தான் அரசன். அவரும் இரு துண்டுகளாகி விழுந்தார்.

பின்னர் அச்சிறுவன் கொண்டுவரப்பட்டான். அவனிடமும் "நீ உனது மார்க்கத்திலிருந்து திரும்பிவிடு" என்று சொல்லப்பட்டது. அவன் மறுத்துவிட்டான். உடனே அவனைத் தம் ஆட்கள் சிலரிடம் ஒப்படைத்து, "இவனை இன்ன இன்ன மலைக்குக் கொண்டுசெல்லுங்கள். மலை உச்சிக்கு இவனைக் கொண்டு சென்றதும் (அவனிடம் அவனது ஓரிறைக் கொள்கையைக் கைவிடுமாறு கூறுங்கள்.) அவன் தனது மார்க்கத்திலிருந்து திரும்பிவிட்டால் சரி. இல்லையேல், அவனை மலையிலிருந்து தள்ளிவிடுங்கள்" என்று அரசன் கூறினான்.

அவ்வாறே அவர்கள் அச்சிறுவனை மலை உச்சிக்குக் கொண்டுசென்றனர். அப்போது அச்சிறுவன், "இறைவா! நீ நாடிய முறையில் இவர்களிடமிருந்து என்னைக் காப்பாற்று" என்று

பிரார்த்தித்தான். அப்போது அந்த மலை குலுங்கியது. அவர்கள் அனைவரும் மலையிலிருந்து கீழே விழுந்து விட்டனர்.
பிறகு அச்சிறுவன் அரசனை நோக்கி நடந்துவந்தான். அவனிடம் அரசன், "உன்னுடன் வந்தவர்கள் என்ன ஆனார்கள்?"என்று கேட்டான். அதற்கு அச்சிறுவன், "அவர்களிடமிருந்து அல்லாஹ் என்னைக் காப்பாற்றிவிட்டான்" என்று சொன்னான்.
பிறகு அச்சிறுவனைத் தம் ஆட்களில் வேறு சிலரிடம் ஒப்படைத்து, "இவனை மரக்கலமொன்றில் ஏற்றி,நடுக்கடலுக்குக் கொண்டுசெல்லுங்கள். இவன் தனது (ஏகயிறை) மார்க்கத்திலிருந்து திரும்பிவிட்டால் சரி. இல்லையேல், இவனைத் தூக்கிக் கடலுக்குள் எறிந்துவிடுங்கள்" என்று அரசன் உத்தரவிட்டான்.
அவ்வாறே அவர்கள் கொண்டுசென்றபோது அச்சிறுவன், "இறைவா! நீ நாடிய முறையில் இவர்களிடமிருந்து என்னைக் காப்பாற்று" என்று பிரார்த்தித்தான். மரக்கலம் அதிலிருந்தவர்களுடன் சேர்ந்து கவிழ்ந்தது. அவர்கள் அனைவரும் கடலில் மூழ்கினர். பிறகு அச்சிறுவன் (மட்டும்) அரசனை நோக்கி நடந்துவந்தான்.
சிறுவனைக் கண்ட அரசன், "உன்னுடன் வந்தவர்கள் என்ன ஆனார்கள்?" என்று கேட்டான். அதற்கு அச்சிறுவன், "அவர்களிடமிருந்து அல்லாஹ் என்னைக் காப்பாற்றிவிட்டான்" என்று கூறிவிட்டு, அரசனைப் பார்த்து, "நான் சொல்கிறபடி நீ நடந்துகொள்ளாத வரை என்னை உம்மால் கொல்ல முடியாது" என்று கூறினான்.

"அது என்ன?' என்று அரசன் கேட்டான். அதற்கு அச்சிறுவன், "நீ மக்கள் அனைவரையும் திறந்த வெளியொன்றில் ஒன்றுதிரட்டு. என்னைச் சிலுவையில் அறைந்துவிடு. பிறகு என் அம்புக்கூட்டிலிருந்து அம்பு ஒன்றை எடுத்து, வில்லில் பொருத்தி பிறகு, "இச்சிறுவனின் இறைவனான அல்லாஹ்வின் பெயரால்" என்று கூறி, (என்னை நோக்கி) அந்த அம்பைப் பாய்ச்சு. இவ்வாறு நீ செய்தால் உன்னால் என்னைக் கொல்ல முடியும்" என்று கூறினான்.
அவ்வாறே மக்களைத் திறந்த வெளியொன்றில் அரசன் ஒன்றுதிரட்டினான். சிறுவனைச் சிலுவையில் அறைந்தான். பிறகு அச்சிறுவனின் அம்புக்கூட்டிலிருந்து அம்பொன்றை எடுத்து வில்லில் பொருத்தி, "இச்சிறுவனின் இறைவனான அல்லாஹ்வின் பெயரால்" என்று கூறி, அந்தச் சிறுவனை நோக்கி அம்பை எய்தான்.
அந்த அம்பு சிறுவனின் நெற்றிப் பொட்டில் பாய்ந்தது. அச்சிறுவன் அம்பு பாய்ந்த நெற்றிப் பொட்டில் கையை வைத்துக்கொண்டே இறந்துபோனான்.
அதைக் கண்ட மக்கள், "நாங்கள் இச்சிறுவனின் இறைவன்மீது நம்பிக்கை கொண்டோம்; நாங்கள் இச்சிறுவனின் இறைவன்மீது நம்பிக்கை கொண்டோம், நாங்கள் இச்சிறுவனின் இறைவன்மீது நம்பிக்கை கொண்டோம்" என்று கூறினர்.
பிறகு அரசனிடம் வந்து, "(அரசரே!) நீர் எதை அஞ்சிக்கொண்டிருந்தீரோ அதை நேரடியாகப் பார்த்துவிட்டீரா? அல்லாஹ்வின் மீதாணையாக! நீர் அஞ்சியது நடந்தேவிட்டது. மக்கள் அனைவரும் (அச்சிறுவனின் இறைவன்மீது) நம்பிக்கை கொண்டுவிட்டனர்" என்று கூறப்பட்டது.
உடனே அந்த அரசன் தெரு முனைகளில் அகழ் தோண்டுமாறு உத்தரவிட்டான். அவ்வாறே தோண்டப்பட்டதும் அதில் நெருப்பு மூட்டினான்.

பிறகு "யார் (தாம் ஏற்றுக்கொண்ட அந்த ஓரிறை) மார்க்கத்திலிருந்து திரும்பி வரவில்லையோ அவர்களை இதில் எரித்துவிடுங்கள்; அல்லது தூக்கிப்போட்டுவிடுங்கள்" என்று உத்தரவிட்டான். அவ்வாறே அவர்கள் செய்தனர்.
இறுதியில் ஒரு பெண் வந்தாள். அவளுடன் அவளுடைய குழந்தை ஒன்றும் இருந்தது. அ(ந்தத் தீக்குண்டத்)தில் விழ அவள் தயங்கினாள். அப்போது அந்தக் குழந்தை, "அம்மா! (மனதைத் திடப்படுத்தி) பொறுமையுடன் இரு! ஏனெனில், நீ சத்தியத்தில் இருக்கிறாய்" என்று சொன்னது.

**பாடம் : 19 ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவித்த நீண்ட ஹதீஸும், அபுல்யசர் (ரலி) அவர்களின் நிகழ்ச்சியும்.**

5736 உபாதா பின் அல்வலீத் பின் உபாதா பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நானும் என் தந்தை (வலீத் பின் உபாதா பின் அஸ்ஸாமித்-ரஹ்) அவர்களும் அன்சாரிகளில் குறிப்பிட்ட ஒரு கிளையாரிடம், அவர்கள் இறப்பதற்குமுன் (அவர்களிடமுள்ள நபிமொழிக்) கல்வியைக் கற்றுக்கொள்வதற்காகப் புறப்பட்டோம். நாங்கள் முதன் முதலில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர் அபுல்யசர் (ரலி) அவர்களையே சந்தித்தோம்.
அவர்களுடன் அவர்களுடைய அடிமை ஒருவரும் இருந்தார். அவரிடம் பதிவேடுகளில் ஒரு தொகுப்பும் இருந்தது. அபுல்யசர் (ரலி) அவர்களின் உடலில் போர்வை ஒன்றும் "மஆ∴பிர்'எனும் ஊரின் ஆடையொன்றும் இருந்தது. (அதைப் போன்றே) அவர்களுடைய அடிமையின் மீதும் போர்வையொன்றும் "மஆ∴பிரீ' ஆடையொன்றும் இருந்தது.

அபுல்யசர் (ரலி) அவர்களிடம் என் தந்தை, "என் தந்தையின் சகோதரரே! நான் தங்களது முகத்தில் கோபத்தின் அறிகுறியைக் காண்கிறேனே?" என்று கேட்டார்கள். அதற்கு அபுல்யசர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஆம்; "பனூ ஹராம்' குலத்தைச் சேர்ந்த இன்னாரின் புதல்வர் இன்னார் எனக்குக் கடன் தர வேண்டியிருந்தது. (அதை வசூலிப்பதற்காக) நான் சென்று, அவருடைய வீட்டாருக்கு முகமன் (சலாம்) கூறினேன். பிறகு "அவர் இருக்கிறாரா?"என்று கேட்டேன்.வீட்டார், "இல்லை" என்று விடையளித்தனர். அப்போது பருவவயதை நெருங்கி விட்டிருந்த அவருடைய புதல்வர் ஒருவர் வெளியே வந்தார்.
அவரிடம் நான், "உன் தந்தை எங்கே?" என்று கேட்டேன். அதற்கு அவர், "உங்களின் குரலைக் கேட்டதும் அவர் என் தாயாரின் கட்டிலுக்கடியில் நுழைந்துகொண்டார்" என்று பதிலளித்தார்.
உடனே நான், "நீர் எங்கே இருக்கிறீர் என்பதை நான் அறிந்துகொண்டேன். வெளியே வாரும்" என்றேன். அவர் வெளியே வந்தார்.
நான், "என்னிடமிருந்து ஒளிந்துகொள்ள என்ன காரணம்?" என்று கேட்டேன். அவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (உண்மையைச்) சொல்லிவிடுகிறேன். உங்களிடம் பொய் சொல்லமாட்டேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களிடம் பேசும்போது பொய் சொல்லிவிடுவேனோ, அல்லது உங்களுக்கு வாக்களித்துவிட்டு மாறுசெய்துவிடுவேனோ என்றுதான் அஞ்சினேன். நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தோழர் ஆவீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் நெருக்கடியில் இருக்கிறேன்" என்று கூறினார்.
நான், "அல்லாஹ்வின் மீதாணையாகவா" என்று கேட்டேன். அவர் "அல்லாஹ்வின் மீதாணையாகத்தான்" என்றார். நான் (மீண்டும்) "அல்லாஹ்வின் மீதாணையாகவா?" என்று

கேட்டேன். அவர் "அல்லாஹ்வின் மீதாணையாகத்தான்" என்றார். நான் (மறுபடியும்) "அல்லாஹ்வின் மீதாணையாகவா?" என்று கேட்டேன். அவர் "அல்லாஹ்வின் மீதாணையாகத் தான்" என்று (மூன்றாவது முறையும்) பதிலளித்தார்.

பிறகு அவர் தமது (கடன்) பத்திரத்தைக் கொண்டுவந்தார். அதை நான் எனது கையால் அழித்துவிட்டேன். பிறகு "கடனைச் செலுத்துவதற்கு ஏதேனும் கிடைத்தால் எனக்குரிய கடனைச் செலுத்தி விடுங்கள். இல்லாவிட்டால், (கடனைச் செலுத்தாமலிருக்க) உங்களுக்கு அனுமதி உண்டு" என்று கூறிவிட்டேன்.

பிறகு அபுல்யசர் (ரலி) அவர்கள் தம் கண்கள்மீது இரு விரல்களை வைத்துப் பின்வருமாறு கூறினார்கள்: இந்த என்னிரு கண்களும் பார்த்தன; இவ்விரு காதுகளும் கேட்டன; (தமது இதயப் பகுதியில் கையை வைத்து) இந்த உள்ளம் மனனமிட்டது. பின்வருமாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யார் சிரமத்திலிருப்பவருக்கு (அவர் தர வேண்டிய கடனுக்கு) அவகாசம் அளிக்கிறாரோ, அல்லது (கடனைத்) தள்ளுபடி செய்துவிடுகிறாரோ அவருக்கு மறுமையில் அல்லாஹ் தனது நிழலில் நிழல் தருகின்றான்.

அப்போது நான், "என் தந்தையின் சகோதரரே! நீங்கள் உங்கள் அடிமை அணிந்திருக்கும் போர்வையைப் பெற்றுக்கொண்டு உங்களது "மஆஃபிரீ' ஆடையை அவருக்கு அளித்து விட்டாலோ, அல்லது அவரது "மஆஃபிரீ'ஆடையைப் பெற்றுக்கொண்டு உங்களது போர்வையை அவருக்கு அளித்துவிட்டாலோ உங்களுக்கு ஒரு ஜோடி ஆடையும் அவருக்கு ஒரு ஜோடி ஆடையும் கிடைத்து விடுமே!" என்று கேட்டேன்.

அப்போது அபுல்யசர் (ரலி) அவர்கள் (அன்புடன்) என் தலையைத் தடவிவிட்டு, "இறைவா! இ(ச்சிறு)வருக்கு வளம் புரிவாயாக! என் சகோதரரின் புதல்வரே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(உங்கள் அடிமைகளான) அவர்களுக்கு நீங்கள் உண்பதிலிருந்து உணவளியுங்கள். நீங்கள் உடுத்துவதிலிருந்தே அவர்களுக்கும் உடை கொடுங்கள்' என்று கூறினார்கள்" என்றார்கள். அதை அவர்கள் கூறியபோது, "என் இவ்விரு கண்களும் பார்த்தன; இவ்விரு காதுகளும் கேட்டன; (தமது இதயப்பகுதியில் கையை வைத்து) இதோ இந்த உள்ளம் அதை மனனமிட்டுக் கொண்டது. இவர் மறுமை நாளில் என் நன்மைகளை எடுத்துக் கொள்வதைவிட இவ்வுலகில் பொருட்களை அவருக்கு நான் கொடுப்பது எனக்குச் சுலபமானதே"என்று சொன்னார்கள்.

-பிறகு நாங்கள் (இருவரும்) ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது அவர்கள் தமது பள்ளிவாசலில் ஒரே ஓர் ஆடையை போர்த்திக்கொண்டு தொழுது கொண்டிருந்தார்கள். அப்போது நான் மக்களைக் கடந்துசென்று அவர்களுக்கும் "கிப்லா'த் திசைக்குமிடையே அமர்ந்துகொண்டேன்.

அப்போது நான், "அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரியட்டும்! தங்களது மேலாடை தங்களுக்கு அருகில் இருக்கவே,ஒரே ஆடையில் தொழுகிறீர்களே?" என்று கேட்டேன். அப்போது அவர்கள் தம் விரல்களை விரித்து, பின்னர் வில் போன்று வளைத்து, இவ்வாறு என் நெஞ்சில் வைத்துப் பின்வருமாறு கூறினார்கள்: உம்மைப் போன்ற விவரமில்லாதவர் என்னிடம் வந்து, நான் எப்படிச் செய்கிறேன் என்று பார்த்துவிட்டு, அதைப் போன்றே அவரும் செய்ய வேண்டும் என்று நான் விரும்பினேன். (ஒரு முறை) இந்தப் பள்ளிவாசலில் நாங்கள் இருந்தபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள்.

அப்போது அவர்களது கையில் "இப்னு தாப்' வகை பேரீச்சமரத்தின் பாளை ஒன்று இருந்தது. அப்போது பள்ளிவாசலின் "கிப்லா'த் திசை சுவரில் காறி உமிழப்பட்டிருந்த சளியைக் கண்டார்கள். உடனே அதை அந்தப் பாளையால் சுரண்டிவிட்டார்கள்.
பிறகு எங்களை முன்னோக்கி, "உங்களில் யார் தம்மை இறைவன் புறக்கணிக்க வேண்டும் என விரும்புவார்?" என்று கேட்டார்கள். அதைக் கேட்டு நாங்கள் அஞ்சினோம். பிறகு "உங்களில் யார் தம்மை இறைவன் புறக் கணிக்க வேண்டும் என விரும்புவார்?" என்று (மீண்டும்) கேட்டார்கள். நாங்கள் (மறுபடியும்) அஞ்சினோம்.
பிறகு, "உங்களில் யார் தம்மை இறைவன் புறக்கணிக்க வேண்டுமென விரும்புவார்?" என (மூன்றாவது முறையாகக்) கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ்வின் தூதரே! இல்லை; எங்களில் எவரும் (அதை விரும்பமாட்டார்)" என்று பதிலளித்தோம்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவர் தொழுவதற்காக நின்றால், வளமும் உயர்வும் மிக்க அல்லாஹ் அவரது முகத்துக்கெதிராக இருக்கின்றான். ஆகவே, அவர் தமது முகத்துக்கெதிரே உமிழ வேண்டாம். வலப் பக்கத்திலும் உமிழ வேண்டாம். (மாறாக) தமக்கு இடப்பக்கத்தில் இடக் காலுக்குக் கீழே உமிழ்ந்து (மண்ணால் மூடிக்)கொள்ளட்டும். (தம்மையும் அறியாமல்) சளி முந்திவிட்டால் தமது ஆடையில் இவ்வாறு உமிழ்ந்துகொள்ளட்டும்" என்று கூறி, ஆடையின் ஒரு பகுதியை மற்றொரு பகுதியோடு சேர்த்துக் கசக்கினார்கள்.
"பிறகு நறுமணக் கலவை ஏதேனும் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். உடனே இன்ன குடும்பத்தைச் சேர்ந்த ஓர் இளைஞர் எழுந்து, தமது வீட்டாரை நோக்கி விரைந்தார். பிறகு தமது கையில் சிறிது நறுமணக் கலவையுடன் வந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைப் பெற்று அந்தப் பேரீச்சம் பாளையின் நுனியில் வைத்து, பிறகு சளியின் அடையாளம் தெரிந்த அந்த இடத்தில் அதைத் தோய்த்தார்கள். இதை முன்னிட்டே நீங்கள் உங்கள் பள்ளிவாசல்களில் நறுமணங்களை வைக்கும் வழக்கம் தொடங்கியது.

- (தொடர்ந்து ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:)
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ("ஜுஹைனா' குலத்தாரை நோக்கி) "பத்னு புவாத்' போருக்குச் சென்றோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மஜ்தீ பின் அம்ர் அல்ஜுஹனீ என்பவரைத் தேடினார்கள். அப்(பயணத்தின்)போது ஓர் ஒட்டகத்தில் ஐந்து அல்லது ஆறு அல்லது ஏழு பேர் என முறைவைத்து, ஒருவர் பின் ஒருவராகப் பயணித்தோம். (அந்த அளவுக்கு வாகனப் பற்றாக்குறை இருந்தது.)
இந்த நிலையில் அன்சாரிகளில் ஒருவருடைய முறை வந்தபோது, அவர் தமது ஒட்டகத்தை மண்டியிடச் செய்து அதில் ஏறினார். பிறகு அதைக் கிளப்பினார். ஆனால், அது சிறிது (சண்டித்தனம் செய்து) நின்றுவிட்டது. அப்போது அவர் "ஷ்ஃ' என அதை விரட்டிவிட்டு, "உனக்கு அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்!" என்று சபித்தார். இதைச் செவியுற்ற அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தமது ஒட்டகத்தைச் சபித்த இந்த மனிதர் யார்?" என்று கேட்டார்கள். "நான்தான், அல்லாஹ்வின் தூதரே!" என்று அந்த அன்சாரி பதிலளித்தார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதிலிருந்து இறங்கிவிடு! சபிக்கப்பட்ட ஒரு பொருளோடு எங்களுடன் நீர் வரவேண்டாம். நீங்கள் உங்களுக்கெதிராகவோ உங்கள் குழந்தைகளுக்கெதிராகவோ உங்கள் செல்வங்களுக்கெதிராகவோ பிரார்த்திக்காதீர்கள். அல்லாஹ்விடம் கேட்டது கொடுக்கப்படும் நேரமாக அது தற்செயலாக அமைந்துவிட்டால்,

உங்கள் பிரார்த்தனையை அவன் ஏற்றுக்கொள்வான் (அது உங்களுக்குப் பாதகமாக அமைந்துவிடும்)" என்று சொன்னார்கள்.

- (தொடர்ந்து ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:)

நாங்கள் ஒரு பயணத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். ஒரு நாள் மாலை நேரமானபோது நாங்கள் அரபியரின் நீர்நிலையொன்றை நெருங்கினோம். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நமக்கு முன்பே சென்று அங்குள்ள நீர் தொட்டியைச் செப்பனிட்டு, தாமும் நீரருந்தி, நமக்கும் நீர் புகட்டுபவர் யார்?" என்று கேட்டார்கள்.

உடனே நான் எழுந்து, "இந்த மனிதன் (தயாராக இருக்கிறேன்), அல்லாஹ்வின் தூதரே!" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஜாபிருடன் செல்பவர் யார்?" என்று கேட்டார்கள். உடனே ஜப்பார் பின் ஸக்ர் (ரலி) அவர்கள் எழுந்தார்கள். நாங்கள் அந்தக் கிணற்றை நோக்கி நடந்தோம். கிணற்றில் நீரிறைத்து அந்தத் தொட்டிக்குள் ஒரு வாளி,அல்லது இரு வாளித் தண்ணீரை ஊற்றினோம். பிறகு மண்ணைப் பூசி அந்தத் தொட்டியைச் செப்பனிட்டோம். பிறகு கிணற்றிலிருந்து நீரிறைத்து அந்தத் தொட்டியை நிரப்பினோம்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே எங்களிடம் முதலில் வந்தார்கள். எங்களிடம், "நீங்கள் எனக்கு (இதிலுள்ள நீரைப் பயன்படுத்திக்கொள்ள) அனுமதியளிக்கிறீர்களா?" என்று கேட்டார்கள். நாங்கள் "ஆம்;அல்லாஹ்வின் தூதரே!" என்றோம்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது ஒட்டகத்தின் தலையைத் தொட்டிக்குள் சரித்தார்கள். அது நீரருந்தியது. அதன் கடிவாளத்தை இறுக்கிப் பிடித்தபோது காலை அகற்றிவைத்து அது சிறுநீர் கழித்தது. பிறகு ஒட்டகத்துடன் திரும்பிச் சென்று அதை மண்டியிட்டுப் படுக்கவைத்தார்கள்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தத் தண்ணீர் தொட்டிக்கு வந்து, அதிலிருந்து அங்கத்தூய்மை (உளூ) செய்தார்கள். பிறகு நான் எழுந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கத்தூய்மை செய்த இடத்தில் அங்கத்தூய்மை செய்தேன். அப்போது (என்னுடனிருந்த) ஜப்பார் பின் ஸக்ர் (ரலி) அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்றச் சென்றார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுவதற்காக நின்றார்கள். என்மீது போர்வையொன்று இருந்தது. அதன் இரு ஓரங்களையும் பிடித்து தோள்கள்மீது மாற்றிப் போடப்பார்த்தேன். ஆனால், (சிறிதாக இருந்ததால்) அதற்கு வசதிப்படவில்லை. ஆனால், அந்தப் போர்வையில் பல குஞ்சங்கள் இருந்தன. அவற்றை நான் திருப்பிப் போட்டுவிட்டு அதன் இரு ஓரங்களையும் நான் மாற்றிப் போட்டுக்கொண்டேன். பிறகு அந்தப் போர்வையை என் கழுத்தோடு சேர்த்து அணைத்துக் கொண்டேன்.

பிறகு வந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இடப்பக்கத்தில் நின்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது கையைப் பிடித்து அப்படியே சுற்றிவரச் செய்து தமக்கு வலப் பக்கத்தில் நிறுத்தினார்கள்.

பிறகு ஜப்பார் பின் ஸக்ர் (ரலி) அவர்கள் வந்து அங்கத்தூய்மை செய்துவிட்டுப் பிறகு வந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இடப்பக்கத்தில் நின்றார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் இருவரின் கைகளைப் பிடித்து எங்களை (பின் வரிசைக்கு) தள்ளினார்கள். நாங்கள் அவர்களுக்குப் பின்னால் நின்றுகொண்டோம்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நான் அறிந்துகொள்ளாத விதத்தில் என்னை உற்று நோக்கினார்கள். நான் சுதாரித்துக்கொண்டேன். அப்போது "உன் கீழாடையின் நடுப் பகுதியை முடிந்துகொள்" என்று கூறும் விதமாக தமது கையால் சைகை செய்தார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும், "ஜாபிரே!" என்று அழைத்தார்கள். நான், "சொல்லுங்கள்; அல்லாஹ்வின் தூதரே!" என்றேன். "(உனது) ஆடை விசாலமானதாயிருந்தால் அதன் இரு ஓரங்களை வலம் இடமாக மாற்றிப் போட்டுக் கொள். அது சிறியதாக இருந்தால் அதை இடுப்பில் (கீழாடையாக) அணிந்துகொள் (தோள்மீது போட வேண்டியதில்லை)" என்றார்கள்.
- (தொடர்ந்து ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:)
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் சென்றோம். அப்போது எங்களில் ஒவ்வொருவருடைய உணவும் நாளொன்றுக்கு ஒரு பேரீச்சம் பழமாகவே இருந்தது. அதை அவர் வாயிலிட்டுச் சுவைத்துவிட்டு, பிறகு அதைத் தமது ஆடையில் முடிந்து வைத்துக்கொள்வார். (அந்தப் பயணத்தில்) நாங்கள் எங்கள் வில்லால் மரங்களிலிருந்து இலைகளை உதிர்த்து அதைச் சாப்பிட்டோம். எந்த அளவுக்கென்றால், (ஒவ்வாமையால்) எங்கள் வாயெல்லாம் புண்ணாகிவிட்டது.
நான் அறுதியிட்டுச் சொல்கிறேன்: ஒரு நாள் ஒரு மனிதருக்கு அவரது பங்கு கிடைக்காமல் விடுபட்டுவிட்டது. (பங்கிட்டுத்தருபவர் கொடுத்துவிட்டதாக எண்ணிக்கொண்டார். (பசியால் சுருண்டு கிடந்த) அவரைத் தூக்கி நிறுத்தி, "அவருக்குப் பேரீச்சம்பழம் கொடுக்கப் படவில்லை" என நாங்கள் சாட்சியம் கூறிய பிறகே அவருக்குக் கொடுக்கப்பட்டது. அவர் எழுந்து அதைப் பெற்றுக்கொண்டார்.

-நாங்கள் ஒரு பயணத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சென்று ஒரு விசாலமான பள்ளத்தாக்கில் இறங்கினோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காகச் சென்றார்கள். நான் ஒரு குவளையில் தண்ணீர் எடுத்துக்கொண்டு அவர்களைப் பின்தொடர்ந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மறைந்து இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்கேற்ப (மறைவிடம்) ஏதேனும் இருக்கிறதா என்று பார்த்தார்கள். அப்படி ஒன்றையும் காணவில்லை.
அப்போது பள்ளத்தாக்கின் ஓரத்தில் இரு மரங்கள் தென்பட்டன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவற்றில் ஒரு மரத்திற்கு அருகில் சென்று அதன் கிளைகளில் ஒன்றைப் பிடித்து, "அல்லாஹ்வின் ஆணையின்பேரில் எனக்குக் கட்டுப்படு" என்று சொன்னார்கள். ஒட்டகவோட்டியின் கட்டளைக்கு மூக்கணாங்கயிறு இடப்பட்ட ஒட்டகம் கட்டுப்படுவதைப் போன்று, அந்தக் கிளை அவர்களுக்குக் கட்டுப்பட்(டு வளைந்து)விட்டது.
பிறகு இன்னொரு மரத்திற்கு அருகில் சென்று, அதன் கிளைகளில் ஒன்றைப் பிடித்து "அல்லாஹ்வின் ஆணையின்பேரில் எனக்குக் கட்டுப்படு" என்று சொன்னார்கள். முதல் மரத்தைப் போன்றே அதுவும் கட்டுப்பட்டது. அவ்விரண்டுக்கும் மத்தியில் போய் நின்று கொண்டு இரண்டு கிளைகளையும் சேர்த்தார்கள். அப்போது, "அல்லாஹ்வின் ஆணையின்பேரில் எனக்காக ஒன்றிணையுங்கள்" என்று சொன்னார்கள். உடனே அவ்விரண்டும் இணைந்து கொண்டன.

அப்போது நான் அருகிலிருப்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அறிந்து (இன்னும்) தொலைதூரத்திற்குச் சென்று (சிரமப்பட்டு)விடுவார்களோ என்று அஞ்சினேன். ஆகவே, நான் அங்கிருந்து விரைவாக (திரும்பி) வந்துவிட்டேன். நான் மனதிற்குள் (ஏதோ) பேசிக்கொண்டிருந்த அதே நேரத்தில் ஓரக்கண்ணால் நான் பார்த்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்னோக்கி வந்துகொண்டிருந்தார்கள். (இணைந்திருந்த) அவ்விரு மரங்களும் பிரிந்து ஒவ்வொன்றும் (தனித்தனியே) நிமிர்ந்து நின்றன.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறிது நேரம் நின்று, (இரு பக்கங்களிலும் இருந்த மண்ணறைகளை நோக்கி) தமது தலையால் இவ்வாறு சைகை செய்தார்கள். (அறிவிப்பாளர் அபூஇஸ்மாயீல் (ரஹ்) அவர்கள் தமது தலையை வலம் இடமாக அசைத்து சைகை செய்து காட்டினார்கள்.)

பிறகு முன்னோக்கி வந்தார்கள். என்னிடம் வந்து சேர்ந்ததும், "ஜாபிரே! நான் நின்ற இடத்தை நீ பார்த்தாயா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்; அல்லாஹ்வின் தூதரே!" என்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின்,நீ அவ்விரு மரங்களை நோக்கிச் சென்று, அவ்விரு மரங்களிலிருந்தும் தலா ஒரு கிளையை உடைத்துக்கொண்டு வா! நான் நிற்கும் இந்த இடத்திற்கு நீ வந்துசேர்ந்ததும், ஒரு கிளையை உனக்கு வலப் பக்கத்திலும் மற்றொரு கிளையை இடப் பக்கத்திலும் வீசிவிடு" என்று சொன்னார்கள்.

ஆகவே, நான் எழுந்து சென்று கல் ஒன்றை எடுத்து, அதை உடைத்து, அதன் மழுங்கிய பகுதியைத் தீட்டினேன். அது கூர்மையானது. பிறகு அந்த மரங்களை நோக்கிச் சென்று அவ்விரு மரங்களிலிருந்தும் தலா ஒரு கிளையை உடைத்தேன்.

பிறகு அவ்விரு கிளைகளையும் இழுத்துக் கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நின்றிருந்த இடத்திற்கு வந்து நின்று, ஒரு கிளையை எனக்கு வலப்பக்கத்திலும் மற்றொரு கிளையை எனக்கு இடப்பக்கத்திலும் வீசினேன்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை அடைந்து, "அல்லாஹ்வின் தூதரே! (நீங்கள் சொன்னபடியே) செய்துவிட்டேன். எதற்காக (அப்படிச் செய்யச் சொன்னீர்கள்)?" என்று கேட்டேன். அதற்கு "நான் இரு மண்ணறைகளை (கப்றுகளை)க் கடந்துவந்தேன். அவற்றிலுள்ள இருவர் வேதனை செய்யப்பட்டுக்கொண்டிருந்தனர். ஆகவே, அவ்விரு கிளைகளும் உலராமல் இருக்கும்வரை அவ்விருவருக்கும் எனது பரிந்துரையின் பேரில் வேதனை இலேசாக்கப்பட வேண்டுமென நான் விரும்பினேன்" என்று கூறினார்கள்.

-பிறகு நாங்கள் படையினரிடம் வந்துசேர்ந்தோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஜாபிரே! அங்கத்தூய்மை செய்ய யாரிடமாவது தண்ணீர் இருக்கிறதா என்று கேள்" என்று சொன்னார்கள். உடனே நான், "அங்கத்தூய்மை செய்ய தண்ணீர் உண்டா? அங்கத் தூய்மை செய்ய தண்ணீர் உண்டா? அங்கத்தூய்மை செய்ய தண்ணீர் உண்டா?" என்று கேட்டேன்.

பிறகு நான், "அல்லாஹ்வின் தூதரே! பயணிகளிடம் ஒரு சொட்டுத் தண்ணீரைக்கூட நான் காணவில்லை" என்றேன். அன்சாரிகளில் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்காகத் தம் தோல் பைகளில் தண்ணீர் ஊற்றிவைத்து,அதைக் குளுமையாக்கி, பேரீச்ச மட்டை ஒன்றில் அதைத் தொங்கவிட்டிருப்பார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "நீ இன்ன அன்சாரியின் புதல்வர் இன்ன மனிதரிடம் சென்று,அவருடைய தோல் பைகளில் (தண்ணீர்) ஏதேனும் இருக்கிறதா என்று

பார்" என்றார்கள். அவ்வாறே நான் சென்று பார்த்தபோது, அவற்றில் ஒரு பையின் வாய்ப் பகுதியில் இருந்த சிறிது தண்ணீரைத் தவிர வேறெதிலும் தண்ணீரை நான் காணவில்லை. அதை நான் சரித்திருந்தால், அதன் காய்ந்த பகுதிகளே அதை உறிஞ்சிவிட்டிருக்கும்.
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! அவற்றில் ஒரே ஒரு பையின் வாய்ப் பகுதியில் உள்ள சிறிதளவு தண்ணீரைத் தவிர வேறெதிலும் தண்ணீரை நான் காணவில்லை. அதிலுள்ள தண்ணீரை நான் சரித்தால் அதன் உலர்ந்த பகுதிகளே அதை உறிஞ்சிவிட்டிருக்கும்" என்று சொன்னேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "நீ சென்று அதை என்னிடம் கொண்டுவா" என்று சொன்னார்கள். அவ்வாறே அதை நான் கொண்டுவந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது கையில் வாங்கி, ஏதோ கூறலானார்கள். அது என்ன என்று எனக்குத் தெரியவில்லை. பிறகு அந்தப் பையைத் தம் கரங்களால் அழுத்திப் பிழிந்தார்கள்.
பிறகு என்னிடம் அதைக் கொடுத்து, "ஜாபிரே! பெரிய பாத்திரம் ஒன்றைக் கொண்டு வருமாறு அறிவிப்புச் செய்" என்றார்கள். உடனே "பயணிகளிடம் உள்ள ஒரு பெரிய பாத்திரத்தை (யாரேனும்) கொண்டுவாருங்கள்" என்று அறிவிப்புச்செய்தேன். பாத்திரம் எடுத்துக்கொண்டு வரப்பட்டபோது, அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் வைத்தேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்தப் பாத்திரத்தினுள் இவ்வாறு கையைப் பரப்பி, தம் விரல்களை விரித்தார்கள். பிறகு அந்தப் பாத்திரத்தின் அடிப்பகுதியில் கையை வைத்தார்கள். "ஜாபிரே! இதைப் பிடித்துக்கொண்டு,அந்தத் தண்ணீரை என் (கை)மீது ஊற்று! அல்லாஹ்வின் பெயர் (பிஸ்மில்லாஹ்) கூறு" என்று சொன்னார்கள்.
அவ்வாறே நான் ஊற்றி, "பிஸ்மில்லாஹ்' என்று சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் விரல்களினூடே தண்ணீர் பொங்கிவருவதை நான் கண்டேன். பிறகு பாத்திரத்தில் தண்ணீர் பீறிட்டுச் சுழன்றது. இறுதியில் அது நிரம்பியும்விட்டது.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஜாபிரே! தண்ணீர் தேவையுள்ளோரை அழையுங்கள்" என்று கூறினார்கள். (அவ்வாறே நான் அழைத்தேன்.) மக்கள் வந்து தாகம் தீர நீரருந்தினர். பிறகு நான், "தேவையுள்ளோர் யாரேனும் எஞ்சியுள்ளார்களா?" என்று கேட்டேன். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நிரம்பியிருந்த அந்தப் பாத்திரத்திலிருந்து தமது கையை எடுத்துவிட்டார்கள்.
-மக்கள் ("சீஃபுல் பஹ்ர்' படையினர்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தங்களுக்குப் பசி ஏற்பட்டுள்ளதாக முறையிட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் உங்களுக்கு உணவளிக்கக்கூடும்" என்றார்கள். பிறகு நாங்கள் கடலோரத்திற்குச் சென்றோம். அப்போது கடல் அலை எழுந்து (பெரிய கடல்வாழ்) உயிரினம் (திமிங்கலம்) ஒன்றை (கரையில்) போட்டது.

உடனே நாங்கள் அதனருகில் நெருப்பு மூட்டி சமைத்தோம்; பொறித்தோம். வயிறு நிரம்ப உண்டோம். பிறகு நானும் இன்ன மனிதரும் இன்ன மனிதரும் -ஐந்து பேரை எண்ணிக் குறிப்பிட்டு -அந்த மீனின் கண்ணெலும்புக்குள் நுழைந்தோம். எங்களை யாரும் பார்க்கவில்லை. பிறகு நாங்கள் வெளியே வந்தோம். (அந்த அளவுக்கு அதன் கண்ணெலும்பு பெரியதாக இருந்தது)

பிறகு அதன் விலாஎலும்புகளில் ஒன்றை எடுத்து, அதை வில் போல வளைத்து வைத்தோம். பயணிகளிடையே இருந்த மிகப் பெரிய மனிதர் ஒருவரையும், பயணிகளிடையேயிருந்த பெரிய ஒட்டகம் ஒன்றையும், பயணிகளிடையே இருந்த திமிலைப் போர்த்தி மூடும் துணியொன்றையும் கொண்டுவரச்செய்தோம். (அதை அந்த ஒட்டகத்தின் மீது போர்த்தி அந்தப் பெரிய மனிதரை அதிலேற்றிவிட்டோம்.) அவர் அந்த விலா எலும்புக்குக் கீழே தமது தலையைத் தாழ்த்தாமல் நுழைந்து சென்றார் (அந்த அளவுக்கு அதன் எலும்பு பெரியதாக இருந்தது).
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 20 நபி (ஸல்) அவர்கள் புலம்பெயர்ந்து (ஹிஜ்ரத்) சென்ற செய்தி; இதற்கு "ஒட்டகச் சேணம் பற்றிய செய்தி' ("ஹதீஸுர் ரஹ்ல்') என்றும் கூறப்படுவதுண்டு.**

5737 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அபூபக்ர் (ரலி) அவர்கள், என் தந்தை (ஆஸிப் பின் அல்ஹாரிஸ் (ரலி) அவர்களிடம்) அவர்களது வீட்டிற்கு வந்து,அவர்களிடமிருந்து ஓர் ஒட்டகச்சேணத்தை விலைக்கு வாங்கினார்கள். அப்போது அவர்கள் (என் தந்தை) ஆஸிப் (ரலி) அவர்களிடம், "இதை என் வீடுவரை சுமந்துவர உங்கள் புதல்வரை என்னுடன் அனுப்புங்கள்" என்று கேட்டுக் கொண்டார்கள்.
என் தந்தை என்னிடம், "இதைச் சுமந்து வா" என்று சொன்னார்கள். அவ்வாறே அதை நான் சுமந்து சென்றேன். அபூபக்ர் (ரலி) அவர்களுடன் அதன் விலையைப் பெற்றுக்கொள்வதற்காக என் தந்தையும் புறப்பட்டுவந்தார்கள்.
அப்போது அபூபக்ர் (ரலி) அவர்களிடம் என் தந்தை, "அபூபக்ரே! நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மக்காவைத் துறந்து ஹிஜ்ரத்) சென்றபோது, இருவரும் எப்படி (எதிரிகளின் கண்களில் படாமல் சமாளித்துச்) செயல்பட்டீர்கள் என்பதை எனக்கு அறிவியுங்கள்?" என்று கேட்டார்கள். அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
ஆம் (அறிவிக்கிறேன்): நாங்கள் (மூன்று நாட்கள் "ஸவ்ர்' குகையில் தங்கியிருந்துவிட்டு அங்கிருந்து வெளியேறி) அந்த இரவு முழுவதும் பயணம் செய்து, (அடுத்த நாளின்) நண்பகல் நேரமும் வந்துவிட்டது. பாதையில் (வெப்பம் அதிகரித்து) எவரும் நடமாட முடியாதபடி வெறிச்சோடிக் கிடந்தது. அப்போது இதுவரை சூரிய வெளிச்சம் படாத, நிழல் படர்ந்த நீண்ட பாறை ஒன்று எங்களுக்குத் தென்பட்டது. நாங்கள் அங்கு இறங்கினோம்.

நான் அந்தப்பாறையை நோக்கிச் சென்று என் கையால் ஓரிடத்தை, அதன் நிழலில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உறங்குவதற்காகச் சமப்படுத்தினேன். பிறகு அந்த இடத்தில் ஒரு தோல் விரிப்பை விரித்தேன். பிறகு, "அல்லாஹ்வின் தூதரே! நான் உங்களைச் சுற்றிலுமுள்ள சூழலை உங்களுக்காகக் கண்காணித்துக்கொள்கிறேன்;நீங்கள் (நிம்மதியாக) உறங்குங்கள்" என்று கூறினேன். அவ்வாறே அவர்கள் உறங்கினார்கள்.
அவர்களைச் சுற்றிலுமுள்ள சூழலைக் கண்காணித்தபடி நான் புறப்பட்டேன். அப்போது ஆட்டிடையன் ஒருவன் தன் ஆடுகளுடன் அந்தப் பாறையை நோக்கி வந்து கொண்டிருப்பதைக் கவனித்தேன். நாங்கள் வந்த நோக்கத்துடனேயே அவனும் வந்தான்.
அப்போது அவனை நான் எதிர்கொண்டு, "நீ யாருடைய பணியாள், இளைஞரே?" என்று கேட்டேன். அவன், "இந்த (மக்கா) நகரவாசிகளில் (இன்ன பெயருடைய) ஒரு மனிதரின் பணியாள்" என்று

பதிலளித்தான். நான் "உன் ஆடுகளிடம் பால் இருக்கிறதா?" என்று கேட்டேன். அவன் "ஆம் (இருக்கிறது)" என்று பதிலளித்தான்.
"அவ்வாறாயின், எனக்காகப் பால் கற(ந்து கொடு)ப்பாயா?" என்று கேட்டேன். அவன் "ஆம் (கொடுப்பேன்)" என்று சொல்லிவிட்டு, ஆடு ஒன்றைப் பிடித்தான். நான், "மண், முடி, தூசு ஆகிய வற்றிலிருந்து (ஆட்டின்) மடியை உதறி (சுத்தப்படுத்தி)க்கொள்" என்று சொன்னேன்.
-("பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் இதைக் கூறும்போது தம் இரு கைகளில் ஒன்றை மற்றொன்றின் மீது அடித்து உதறிக்காட்டுவதை நான் கண்டேன்" என அறிவிப்பாளர் அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் தெரிவித்தார்கள்.)
பிறகு அந்த இடையன் தன்னிடமிருந்த ஒரு மரப்பாத்திரத்தில் சிறிதளவு பாலைக் கறந்தான். என்னுடன் ஒரு தோல் பாத்திரம் இருந்தது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு நீர் புகட்டவும், அவர்கள் நீர் அருந்தி, அங்கத் தூய்மை செய்யவும் (அது பயன்பட்டது). (அதை நான் என்னுடன் கொண்டுவந்திருந்தேன்.)
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவர்கள் உறங்கிக்கொண்டிருந்த போது) சென்றேன். அவர்களை (தூக்கத்திலிருந்து) எழுப்ப நான் விரும்பவில்லை. (எனினும்,) அவர்களிடம் நான் சென்ற நேரமும் அவர்கள் (தூக்கத்திலிருந்து) எழுந்த நேரமும் ஒன்றாக அமைந்துவிட்டது.

நான் (தோல் பாத்திரத்தில் இருந்த) தண்ணீரை (மரப்பாத்திரத்திலிருந்த) பாலில் அதன் அடிப்பகுதி குளிரும்வரை (அதன் அடர்த்தி நீங்கும்வரை) ஊற்றினேன். பிறகு நான், "அல்லாஹ்வின் தூதரே! இந்தப் பாலைப் பருகுங்கள்" என்று சொன்னேன். நான் திருப்தியடையும்வரை அவர்கள் பருகினார்கள். பிறகு, "(நாம்) புறப்படுவதற்கான நேரம் வரவில்லையா?" என்று கேட்டார்கள். நான், "ஆம் (வந்துவிட்டது)" என்று சொன்னேன்.
சூரியன் உச்சி சாய்ந்த பிறகு நாங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம். எங்களை (மக்கா இணை வைப்பாளர்களில் ஒருவராயிருந்த) சுராக்கா பின் மாலிக் பின்தொடர்ந்து வந்தார்.
நாங்கள் பூமியின் ஓர் இறுகிய பகுதியில் இருந்தோம். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! (எதிரிகளால்) நாம் பின்தொடரப்படுகிறோம்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "கவலைப்படாதீர்கள். அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்" என்று சொன்னார்கள். பிறகு சுராக்காவுக்கெதிராக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். உடனே சுராக்காவுடன் அவரது குதிரை தனது வயிறுவரை பூமியில் புதைந்துவிட்டது.

உடனே சுராக்கா, "நீங்கள் இருவரும் எனக்கெதிராகப் பிரார்த்தித்துவிட்டீர்கள் என்று நான் அறிந்துகொண்டேன். ஆகவே,எனக்காக (இந்தத் தண்டனையிலிருந்து என்னை விடுவிக்கும்படி) நீங்கள் இருவரும் பிரார்த்தியுங்கள்; உங்களைத் தேடி வருபவர்களை நான் திருப்பி அனுப்பி விடுவேன் என்பதற்கு அல்லாஹ்வே சாட்சி" என்று சொன்னார்.
ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சுராக்காவுக்காகப் பிரார்த்தித்தார்கள். உடனே அவர் (அந்தத் தண்டனையிலிருந்து) தப்பினார். அப்போதிருந்து அவர் தம்மைச் சந்திப்பவர் எவராயினும் அவரிடம், "உங்களுக்கு நானே போதுமானவன். நீங்கள் தேடி வந்தவர் இங்கில்லை" என்று கூறாமல் விடவில்லை. மேலும், (எங்களைத் தேடிவந்ததாகச் சொல்லும்)

எவரைச் சந்தித்தாலும் திருப்பி அனுப்பாமல் அவர் இருக்கவில்லை. அவர் எங்களுக்குத் தந்த வாக்குறுதியை நிறைவேற்றினார்.
- மேற்கண்ட ஹதீஸ் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில், "அபூபக்ர் (ரலி) அவர்கள் என் தந்தை (ஆஸிப் பின் அல்ஹாரிஸ்-ரலி) அவர்களிடமிருந்து பதிமூன்று திர்ஹங்களுக்கு ஒட்டகச் சேணமொன்றை விலைக்கு வாங்கினார்கள்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. தொடர்ந்து மேற்கண்ட ஹதீஸில் உள்ள தகவல்கள் இடம்பெற்றுள்ளன. மேலும், அவற்றில் உஸ்மான் பின் உமர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் பின்வரும் தகவலும் இடம்பெற்றுள்ளது:

சுராக்கா (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை) நெருங்கியபோது, அவருக்கெதிராக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். உடனே அவரது குதிரை வயிறுவரை பூமிக்குள் புதைந்துவிட்டது. சுராக்கா குதிரையிலிருந்து குதித்து, "முஹம்மதே! இது உங்களுடைய வேலைதான் என்று நான் அறிந்துகொண்டேன். (நான் சிக்கிக் கொண்டிருக்கும்) இந்த நிலையிலிருந்து என்னை விடுவிக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்.
எனக்குப் பின்னால் (உங்களைத் தேடிவர) இருப்போரிடமிருந்து உங்களை (காட்டிக் கொடுக்காமல்) நான் மறைத்துவிடுவதற்கு உங்களுக்கு நான் வாக்குறுதி அளிக்கிறேன். இதோ எனது அம்புக் கூடு. இதிலிருந்து நீங்கள் (என் வாக்குறுதிக்கு அடையாளமாக) அம்பை எடுத்துக்கொள்ளுங்கள். நீங்கள் எனது ஒட்டகத்தையும் என் அடிமைகளையும் இன்னின்ன இடத்தில் கடந்து செல்வீர்கள். அப்போது உங்களுக்குத் தேவையானதை அதிலிருந்து எடுத்துக்கொள்ளுங்கள்" என்று கூறினார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனது ஒட்டகத்திலிருந்து எனக்கு எதுவும் தேவை யில்லை" என்று கூறிவிட்டார்கள். - பிறகு நாங்கள் இரவு நேரத்தில் மதீனாவுக்கு வந்தோம். அப்போது மதீனாவாசிகள் அவர்களில் யாரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தங்குவது என்ற விஷயத்தில் போட்டி போட்டுக் கொண்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(என் பாட்டனார்) அப்துல் முத்தலிப் அவர்களின் தாய்மாமன்களான "பனுந் நஜ்ஜார்' குலத்தாரிடம் நான் தங்கிக்கொள்கிறேன். இதன் மூலம் அவர்களைக் கௌரவப்படுத்துகிறேன்" என்று கூறினார்கள்.அப்போது ஆண்களும் பெண்களும் (தம் வீடுகளுக்கு மேலே ஏறி(ப்பார்த்துக் கொண்டிருந்த)னர். சிறுவர்களும் பணியாட்களும் (மதீனாவின்) தெருக்களில் "முஹம்மதே! அல்லாஹ்வின் தூதரே! முஹம்மதே! அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறிக்கொண்டு (மகிழ்ச்சியுடன்) கலைந்து சென்றனர்.

# அத்தியாயம் : 54 - விளக்கங்கள்

## திருக்குர்ஆன் விளக்கவுரை.

5738 ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
இவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எமக்கு அறிவித்த ஹதீஸ்களாகும். அவற்றில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இஸ்ரவேலர்களிடம், "ஹித்தத்துன் (எங்களை மன்னிப்பாயாக!) என்று கூறிக் கொண்டே அதன் வாசலில் பணிவாக நுழையுங்கள். உங்களுடைய குற்றங்கள் மன்னிக்கப்படும்" என்று கூறப்பட்டது.
ஆனால், (அவர்கள் தமக்குக் கூறப்பட்ட வார்த்தையை) மாற்றி(க்கூறி)யதோடு தம் புட்டங்களால் தவழ்ந்தபடி வாசலில் நுழைந்தார்கள். மேலும், (உள்ளே நுழையும்போது) "ஹப்பத்துன் ஃபீ ஷஅரத்தின்' (ஒரு வாற்கோதுமைக்குள் ஒரு தானிய வித்து) என்று (பரிகாசமாகச்) சொன்னார்கள்.

5739 அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், நபி (ஸல்) அவர்கள் இறப்பதற்கு முன்பு வரையிலும் அவர்களுக்குத் தொடர்ந்து வேத அறிவிப்பு ("வஹீ') அருளினான். அவர்கள் இறந்த நாட்களில் அருளப்பெற்ற வேதஅறிவிப்பு (மற்ற காலங்களில் அருளப்பெற்றதைவிட) அதிகமாக இருந்தது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

5740 தாரிக் பின் ஷிஹாப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யூதர்கள் (கலீஃபா) உமர் (ரலி) அவர்களிடம், "நீங்கள் ஓர் இறைவசனத்தை ஓதுகிறீர்கள். அந்த வசனம் மட்டும் எங்களிடையே அருளப்பெற்றிருந்தால் அந்நாளை நாங்கள் பண்டிகை நாளாக ஆக்கியிருப்போம்" என்று கூறினர்.
உமர் (ரலி) அவர்கள், "அ(ந்த வசனமான)து, எந்த இடத்தில் அருளப்பெற்றது? எந்த நாளில் அருளப்பெற்றது? அது அருளப்பெற்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கேயிருந்தார்கள் என்பதையெல்லாம் நான் அறிவேன். அது "அரஃபா' நாளில் அருளப்பெற்றது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அரஃபா பெருவெளியில் நின்று கொண்டிருந்தார்கள்" என்று கூறினார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் அஸ்ஸவ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

"இன்று உங்களது மார்க்கத்தை உங்களுக்காக நான் முழுமையாக்கிவிட்டேன். எனது அருட்கொடையை உங்கள்மீது நிறைவாக்கிவிட்டேன்" (5:3) எனும் இறைவசனம் அருளப்பெற்ற நாள் (சிலரது அறிவிப்பிலுள்ளதைப் போன்று) வெள்ளிக்கிழமையாக இருந்ததா, அல்லது இல்லையா என நான் (தீர்மானிக்க முடியாமல்) சந்தேகப்படுகிறேன்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5741 தாரிக் பின் ஷிஹாப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யூதர்கள் (கலீஃபா) உமர் (ரலி) அவர்களிடம், "இன்று உங்களது மார்க்கத்தை உங்களுக்காக நான் முழுமையாக்கிவிட்டேன். எனது அருட்கொடையை உங்கள்மீது நிறைவாக்கிவிட்டேன். இஸ்லாத்தை உங்களுக்குரிய மார்க்கமாக நான் பொருந்திக்கொண்டுவிட்டேன்" (5:3) எனும் இறைவசனம் யூதர் சமுதாயமான எங்களுக்கு அருளப்பெற்றிருந்து, அது அருளப்பெற்ற தினத்தை நாங்கள் அறிந்திருந்தால், அந்நாளைப் பண்டிகை நாளாக நாங்கள் ஆக்கிக் கொண்டாடியிருப்போம்" என்று கூறினர்.
அதற்கு உமர் (ரலி) அவர்கள், "அது அருளப்பெற்ற நாளையும் நேரத்தையும் அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கே இருந்தார்கள் என்பதையெல்லாம் நான் அறிந்துள்ளேன். அது "ஜம்உ' உடைய (முஸ்தலிஃபா) இரவில் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் "அரஃபாத்' பெருவெளியில் இருந்தபோது அருளப்பெற்றது" என்று கூறினார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5742 தாரிக் பின் ஷிஹாப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
யூதர்களில் ஒருவர் (கலீஃபா) உமர் (ரலி) அவர்களிடம் வந்து, "இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! நீங்கள் உங்கள் வேதத்தில் ஓதிக்கொண்டிருக்கும் ஒரு வசனம் யூத சமுதாயமாகிய எங்களுக்கு அருளப்பெற்றிருந்தால், அந்நாளை நாங்கள் பண்டிகை நாளாக ஆக்கியிருப்போம்" என்று கூறினார்.
உமர் (ரலி) அவர்கள், "அது எந்த வசனம்?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த யூதர், "இன்று உங்களது மார்க்கத்தை உங்களுக்காக நான் முழுமையாக்கிவிட்டேன். எனது அருட்கொடையை உங்கள்மீது நிறைவாக்கிவிட்டேன். இஸ்லாத்தை உங்களுக்குரிய மார்க்கமாக நான் பொருந்திக் கொண்டுவிட்டேன்" (5:3) எனும் இறைவசனம்தான் (அது) என்று கூறினார்.
உமர் (ரலி) அவர்கள், "அந்த வசனம் எந்த நாளில் அருளப்பெற்றது; எந்த இடத்தில் அருளப்பெற்றது என்பதையெல்லாம் நான் அறிவேன். அது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அரஃபாத்' பெருவெளியில் இருந்தபோது, ஒரு வெள்ளிக்கிழமை தினத்தில் அருளப்பெற்றது" என்று கூறினார்கள்.

5743 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அநாதை(ப்பெண்களிடம் நேர்மையாக நடக்க இயலாது என நீங்கள் அஞ்சினால், உங்களுக்குப் பிடித்த பெண்களை இரண்டிரண்டாகவோ மும்மூன்றாகவோ நான்கு நான்காகவோ மணந்துகொள்ளுங்கள்" (4:3) எனும் இறைவசனத்தைப் பற்றிக்கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் (பின்வருமாறு) விளக்கமளித்தார்கள்:
என் சகோதரி (அஸ்மாவின்) மகனே! இந்த (வசனத்தில் கூறப்பட்டுள்ள) பெண், தன் காப்பாளரின் மடியில் (பொறுப்பில்) வளர்கின்ற அநாதைப் பெண் ஆவாள். அவரது செல்வத்தில் அவளும் பங்காளியாக இருந்துவருவாள். இந்நிலையில் அவளது செல்வத்தாலும் அழகாலும் கவரப்பட்டு, அவளுடைய காப்பாளர் (மணக்கொடை) விஷயத்தில் நியாயமான முறையில் நடக்காமல், மற்றவர்கள் அவளுக்கு அளிப்பதைப் போன்ற மணக்கொடையை (மஹ்ரை) அளிக்காமல் அவளை மண முடித்துக்கொள்ள விரும்புவார்.

இவ்விதம் காப்பாளர்கள் (தம் பொறுப்பிலிருக்கும்) அநாதைப் பெண்களுக்கு நீதி செலுத்தாமல், அவர்களைப் போன்ற பெண்களுக்குக் கொடுக்கப்படும் மணக்கொடையில் மிக உயர்ந்த மணக்கொடை எதுவோ அதை அவர்களுக்கு அளிக்காமல், அவர்களை மணமுடித்துக் கொள்ள அவர்களுக்கு (இந்த இறைவசனத்தின் வாயிலாக)த் தடை விதிக்கப்பட்டது. அந்தப் பெண்களை விடுத்து, மற்றப் பெண்களில் தமக்கு விருப்பமான பெண்களை (நான்கு பேர்வரை) மணமுடித்துக்கொள்ளுமாறு கட்டளையிடப்பட்டது.

இந்த இறைவசனம் அருளப்பெற்ற பின்பும் மக்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தீர்ப்புக்கேட்டு வரலாயினர். ஆகவே அல்லாஹ், "(நபியே!) பெண்கள் தொடர்பாக அவர்கள் உம்மிடம் மார்க்கத் தீர்ப்பு கேட்கின்றனர். நீர் கூறுவீராக: அவர்கள் குறித்து அல்லாஹ் உங்களுக்குத் தீர்ப்பு வழங்குகின்றான். மேலும், அநாதைப் பெண்களுக்கு நிர்ணயிக்கப்பட்டதை அவர்களுக்கு நீங்கள் வழங்காமலேயே அவர்களை நீங்கள் மணந்து கொள்ள விரும்புவது பற்றியும், பலவீனமான சிறுவர்கள் பற்றியும் (இவ்)வேதத்தில் உங்களுக்கு ஓதிக்காட்டப் படுகின்ற வசனமும் (உங்களுக்குத் தீர்ப்பு வழங்குகின்றது)" (4:127) எனும் இறைவசனத்தை அருளினான்.

"இவ்வேதத்தில் (ஏற்கெனவே) உங்களுக்குக் கூறப்பட்டுள்ளது' என்பது, (இந்த அத்தியாயத்தில்) இறைவன் குறிப்பிட்ட "அநாதை(ப் பெண்களிடம் நேர்மையாக நடக்க இயலாது என நீங்கள் அஞ்சினால், உங்களுக்குப் பிடித்த பெண்களை இரண்டிரண்டாகவோ, மும்மூன்றாகவோ, நான்கு நான்காகவோ மணந்துகொள்ளுங்கள்" (4:3) எனும் இறை வசனத்தையே குறிக்கிறது.

"அவர்களை நீங்கள் மணந்துகொள்ள விரும்புவது பற்றியும்' (4:127) எனும் பிந்திய இறை வசனத்தொடர், உங்களில் (காப்பாளராயிருக்கும்) ஒருவர் தமது (பராமரிப்பில் இருந்துவரும் அநாதைப் பெண்ணை, அவள் செல்வமும் அழகும் குறைந்தவளாக இருக்கும்போது, அவளை (மணந்துகொள்ள) விரும்பாமலிருப்பதைக் குறிக்கும்.

அப்பெண்களை மணந்துகொள்ள காப்பாளர்கள் விரும்பாமலிருந்த காரணத்தால், அவர்கள் எந்த அநாதைப் பெண்களின் செல்வத்துக்கும் அழகுக்கும் ஆசைப்பட்டார்களோ அந்தப் பெண்களையும் நேர்மையான முறையிலேயே அல்லாமல் வேறு எந்த வகையிலும் மணமுடித்துக் கொள்ளலாகாது என்று அவர்களுக்குத் தடை விதிக்கப்பட்டது.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர் களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் உர்வா பின் அஸ் ஸுபைர் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

அவற்றில், "நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா (ரலி) அவர்களிடம், "அநாதை(ப் பெண்களிடம் நேர்மையாக நடக்க இயலாது என நீங்கள் அஞ்சினால்...' (4:3) எனும் இறை வசனத்தைப் பற்றிக் கேட்டேன்" என்று ஹதீஸ் ஆரம்பமாகிறது. மற்ற விளக்கங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

ஹதீஸின் இறுதியில், ("அப்பெண்களை மணந்துகொள்ள காப்பாளர்கள் விரும்பாமலிருந்த காரணத்தால்” என்பதற்கு முன்னால், "அப்பெண்கள் செல்வத்திலும் அழகிலும் குறைந்தவர்களாக இருக்கும்போது, அவர்களை (மணந்துகொள்ள காப்பாளர்கள் விரும்பாமலிருந்த காரணத்தால்)' என்று கூடுதலாக இடம்பெற்றுள்ளது.

5744 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"அநாதை(ப் பெண்களிடம் நேர்மையாக நடக்க இயலாது என நீங்கள் அஞ்சினால்..." (4:3) எனும் வசனம் தொடர்பாக ஆயிஷா (ரலி) அவர்கள் பின்வருமாறு விளக்கமளித்தார்கள்:
இந்த வசனம், தம்மிடமுள்ள செல்வமுடைய அநாதைப் பெண்ணுக்குத் தாமே காப்பாளராகவும் வாரிசாகவும் இருந்துவரும் மனிதர் தொடர்பாக அருளப்பெற்றது. அவளுக்காக வாதாட அவளைத் தவிர வேறெவரும் இல்லை எனும் நிலையில் அவள் இருப்பாள்.அவளது செல்வத்தைத் தக்கவைத்துக் கொள்வதற்காக அவளை அவர் மணமுடித்துக் கொடுக்காமலிருப்பார். இதன் மூலம் அவளுக்கு அவர் இன்னல் ஏற்படுத்தி, உறவையும் கெடுத்துவைத்திருப்பார்.
ஆகவேதான், அநாதைப் பெண்(களை மணந்துகொண்டு அவர்)கள் விஷயத்தில் நேர்மையாக நடக்கமாட்டீர்கள் என்று நீங்கள் அஞ்சினால் உங்களுக்குப் பிடித்த (அதாவது உங்களுக்கு நான் அனுமதித்துள்ள) பெண்களை மணந்துகொள்ளுங்கள். நீங்கள் இன்னல் விளைவிக்கும் இந்த அநாதைப் பெண்களை விட்டுவிடுங்கள் என்று அல்லாஹ் கூறினான்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5745 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அநாதைப் பெண்களுக்கு நிர்ணயிக்கப்பட்டதை அவர்களுக்கு நீங்கள் வழங்காமலேயே அவர்களை நீங்கள் மணந்துகொள்ள விரும்புவது பற்றியும், பலவீனமான சிறுவர்கள் பற்றியும் (இவ்)வேதத்தில் உங்களுக்கு ஓதிக்காட்டப்படுகின்ற வசனமும் (உங்களுக்குத் தீர்ப்பு வழங்குகின்றது)" (4:127) எனும் இறைவசனம் ஓர் அநாதைப் பெண் தொடர்பாக அருளப்பெற்றது.
அவள் ஒரு மனிதரின் பொறுப்பில், அவரது சொத்தில் பங்காளியாக இருந்துவருவாள். அவளை(த் தாமே மணந்துகொள்ள விரும்பினாலும், அவர் முறையாக இல்லறம் நடத்தமாட்டார். அல்லது) தாமும் மணந்துகொள்ள விரும்பமாட்டார். பிறருக்கு அவளை மணமுடித்துக் கொடுத்து தமது சொத்தில் பிறர் பங்காளியாவதையும் விரும்பமாட்டார். எனவே, அவளை(தாமும் மணக்காமலும் யாருக்கும் மணமுடித்துக் கொடுக்காமலும்) முடக்கிவைத்திருப்பார். (இத்தகைய நிலையை இறைவன் தடை செய்தான்.)

5746 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள், "(நபியே!) பெண்கள் தொடர்பாக அவர்கள் உம்மிடம் மார்க்கத் தீர்ப்பு கேட்கின்றனர்..." (4:127)எனும் இறைவசனத்துக்கு விளக்கமளிக்கையில் பின்வருமாறு கூறினார்கள்:
இந்த வசனம் ஓர் அநாதைப் பெண்ணைப் பற்றியதாகும். அவள் ஒரு மனிதரின் பொறுப்பில் இருந்துவருவாள். அவள் அவருடைய பேரீச்சமரங்கள் உள்ளிட்ட செல்வங்களில் பங்காளியாகக் கூட இருக்கக்கூடும். இந்நிலையில் அவளை அவரே மணமுடித்துக்கொள்ள விரும்புவார்.- மேலும், அவளை வேறோர் ஆணுக்கு மணமுடித்துக் கொடுத்து அவ(ளுக்குக் கணவனாக வருகின்றவ)னும் தமது சொத்தில் பங்காளியாக மாறுவதை அவர் வெறுப்பார். எனவே, (எவரையும் மணக்க விடாமல்) அவளை அக்காப்பாளர் முடக்கி வைத்துவந்தார். (அப்போது தான் மேற்கண்ட வசனம் அருளப்பெற்றது.)

5747 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள், "ஏழையாக இருப்பவர் நியாயமாக உண்ணட்டும்" (4:6) எனும் இறை வசனத்துக்குப் பின்வருமாறு விளக்கமளித்தார்கள்:
இந்த வசனம் அநாதைகளை நிர்வகித்து, அவர்களின் செல்வத்தைப் பராமரிக்கும் காப்பாளர்கள் தொடர்பாக அருளப்பெற்றது. அவர் ஏழையாக இருந்தால், (தமது உழைப்புக்கான கூலியாக நியாயமான முறையில்) அநாதைகளின் பொருளை அனுபவிக்கலாம்.

5748 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
ஆயிஷா (ரலி) அவர்கள், "(அநாதைகளைப் பராமரிப்பவர்களில்) செல்வராக இருப்பவர், (அவர்களின் செல்வத்தைத் தொடாமல்) நாணயமாக நடந்துகொள்ளட்டும்; ஏழையாக இருப்பவர் நியாயமாக உண்ணட்டும்" (4:6) எனும் இறைவசனத்திற்குப் பின்வருமாறு விளக்கமளித்தார்கள்:
இந்த வசனம் அநாதைகளின் காப்பாளர் தொடர்பாக அருளப்பெற்றது. அவர் தேவையுடையவராக இருந்தால்,அநாதையின் செல்வத்திலிருந்து அந்த அநாதையின் செல்வத்தின் அளவுக்கேற்ப நியாயமான முறையில் (ஊதியமாக) எடுத்துக்கொள்ளும்படி (அனுமதியளித்து) அருளப்பெற்றது.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப் பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5749 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"(பகைவர்கள்) உங்களு(டைய கணவாய்)க்கு மேற்புறமிருந்தும், உங்களு(டைய கணவாய்)க்குக் கீழ்ப்புறமிருந்தும் உங்களிடம் வந்தபோது, பார்வைகள் நிலைகுத்தி, இதயங்கள் தொண்டைக் குழிகளை அடைத்தபோது..." (33:10) எனும் இறைவசனம் குறிப்பிடும் சம்பவம், அகழ்ப்போர் தினத்தில் நடந்தது.
இதை உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5750 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"ஒரு பெண் தன் கணவனிடமிருந்து ஏற்படும் பிணக்கை, அல்லது புறக்கணிப்பைப் பற்றி அஞ்சினால்..." (4:128) எனும் இறைவசனம், ஒரு பெண் விஷயத்தில் அருளப்பெற்றது. அவள் ஒரு கணவனின் உறவில் நீண்ட காலம் இருந்துவருவாள். பின்னர் ((முதுமை போன்ற காரணத்தால்) அவளை அவர் விவாகரத்துச் செய்து(விட்டு மற்றொருத்தியை மணந்து) கொள்ள விரும்புவார்.
இந்நிலையில் அவள், "என்னை மணவிலக்குச் செய்யாதீர்கள். என்னை (உங்கள் மனைவியாகவே) இருக்க விடுங்கள். என் (தாம்பத்திய உரிமைகள்) விஷயத்தில் நான் விட்டுக் கொடுத்து விடுகிறேன்" என்று கூறுவாள். அப்போதுதான் இந்த வசனம் அருளப்பெற்றது.

5751 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறிய தாவது:
"ஒரு பெண் தன் கணவனிடமிருந்து ஏற்படும் பிணக்கை, அல்லது புறக்கணிப்பைப் பற்றி அஞ்சினால்..." (4:128) எனும் இறை வசனம், ஒரு பெண் தொடர்பாக அருளப்பெற்றது. அவள் ஒருவரின் துணைவியாக இருந்துவருவாள். அவளிடம் உறவும் (தனது) குழந்தையும் இருந்துவரும்.- இந்நிலையில் (முதுமை நோய் போன்ற காரணங்களால்) அவளிடம் கணவர் (தாம்பத்திய உறவுக்காக) அதிகமாக வந்துபோகாமல் இருக்கலாம்.
இந்நிலையில், அவர் தன்னை மண விலக்குச் செய்துவிடுவதை விரும்பாமல் அவள், "என் (தாம்பத்திய உரிமைகள்) விஷயத்தில் உங்களுக்கு விட்டுக் கொடுத்துவிடுகிறேன்" என்று

கூறிவிடுவாள். (இவ்வாறு விட்டுக் கொடுத்து சமரசம் செய்துகொள்வதில் தவறில்லை என இவ்வசனம் கூறுகின்றது.)

5752 உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் ஆயிஷா (ரலி) அவர்கள், "என் சகோதரி(அஸ்மாவின்) மகனே! நபி (ஸல்) அவர்களின் தோழர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோரும்படி (இறைவனால் 59:10ஆவது வசனத்தில்) கட்டளையிடப்பட்டது. ஆனால்,மக்களோ அவர்களை ஏசிக் கொண்டிருக்கின்றனர்" என்று சொன்னார்கள்.
- மேற்கண்ட ஹதீஸ் உர்வா பின் அஸ்ஸுபைர் (ரஹ்) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

5753 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"ஓர் இறைநம்பிக்கையாளரைத் திட்டமிட்டே கொலை செய்தவனுக்கு நரகம்தான் தண்டனை" (4:93) எனும் இறைவசனம் தொடர்பாக (அதன் சட்டம் மாற்றப்பட்டுவிட்டதா, இல்லையா எனும் விஷயத்தில்) கூஃபாவாசிகள் கருத்து வேறுபாடு கொண்டனர்.
எனவே, நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் பயணம் சென்று அது குறித்துக் கேட்டேன். அவர்கள், "இதுதான் (இறைநம்பிக்கையாளரைக் கொலை செய்யும் குற்றம் தொடர்பாக) அருளப்பெற்ற இறுதி வசனமாகும். பிறகு இதை வேறு (வசனம்) எதுவும் மாற்றி விடவில்லை" என்று கூறினார்கள்.

5754 மேற்கண்ட ஹதீஸ் சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்களிடமிருந்தே மேலும் மூன்று அறிவிப்பாளர்தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் முஹம்மத் பின் ஜஅஃபர் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், ("இதுதான் அருளப்பெற்ற இறுதி வசனமாகும் என்பதைக் குறிக்க') "நஸலத் ஃபீ ஆகிரி மா உன்ஸில' என்று இடம்பெற்றுள்ளது. நள்ர் பின் ஷுமைல் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "இது இறுதியாக அருளப்பெற்ற வசனங்களில் உள்ளதாகும்" என்று காணப்படுகிறது.

5755 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அப்துர் ரஹ்மான் பின் அப்ஸா (ரலி) அவர்கள், "ஓர் இறைநம்பிக்கையாளரைத் திட்டமிட்டே கொலை செய்தவனுக்கு நரகம் தான் தண்டனை. அதில் அவன் நிரந்தரமாக இருப்பான்" (4:93) என்று தொடங்கும் இறைவசனம் குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் (விளக்கம்) கேட்கும்படி எனக்கு உத்தரவிட்டார்கள். அவ்வாறே நான் கேட்டேன். அதற்கு அவர்கள், "இ(ந்த 4:93ஆவது வசனத்தின் சட்டத்)தை வேறெந்த வசனமும் மாற்றவில்லை" என்று பதிலளித்தார்கள்.
"அவர்கள் அல்லாஹ்வுடன் வேறு தெய்வங்களிடம் பிரார்த்திக்கமாட்டார்கள். அல்லாஹ் தடை செய்துள்ள எந்த உயிரையும் (சட்டரீதியான) தக்க காரணமின்றி கொல்லமாட்டார்கள்" (25:68) என்று தொடங்கும் இந்த வசனம் குறித்துக் கேட்கும்படியும் உத்தரவிட்டிருந்தார்கள். அது குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "இது இணைவைப்போர் தொடர்பாக அருளப்பெற்றது" என்று பதிலளித்தார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5756 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அவர்கள் அல்லாஹ்வுடன் வேறு தெய்வங்களிடம் பிரார்த்திக்கமாட்டார்கள்" என்று தொடங்கி,"அதில் இழிவுபடுத்தப்பட்டவனாக நிரந்தரமாகத் தங்குவான்" (25:68,69) என்பது வரையிலான வசனங்கள் மக்காவில் அருளப் பெற்றன.
அப்போது இணைவைப்பாளர்கள், "இஸ்லாத்தை ஏற்றுக்கொள்வதால் எங்களுக்கு என்ன பயன்? நாங்கள் அல்லாஹ்வை விட்டு (வேறு கடவுள்களை நோக்கி)த் திரும்பிவிட்டோம். அல்லாஹ் தடைவிதித்த உயிர்களை (சட்டரீதியான) தக்க காரணமின்றி கொலை செய்திருக்கிறோம்.மானக்கேடான செயல்களையும் செய்தோம். (ஆகவே, இனி நாங்கள் இஸ்லாத்தைத் தழுவுவதால் எந்தப் பயனுமில்லை. நமக்கு பாவமன்னிப்புக் கிட்டாது)" என்று கூறினர்.
ஆகவேதான் அல்லாஹ், "மனம்திருந்தி, இறைநம்பிக்கை கொண்டு நல்லறங்கள் செய்தவரைத் தவிர" (25:70) என்று தொடங்கும் வசனத்தை முழுமையாக அருளினான். ஆனால், யார் இஸ்லாத்தைத் தழுவி, அ(தன் சட்டதிட்டத்)தை அறிந்துகொண்ட பின்பும் கொலை செய்கிறாரோ அவருக்குப் பாவமன்னிப்புக் கிடையாது.

5757 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "இறைநம்பிக்கையாளரைத் திட்டமிட்டே கொலை செய்தவனுக்குப் பாவமன்னிப்புக் கிடைக்குமா?" என்று கேட்டேன். அவர்கள், "பாவமன்னிப்புக் கிடையாது" என்று சொன்னார்கள். உடனே நான் அவர்களுக்கு "அல்ஃபுர்கான்' (எனும் 25ஆவது) அத்தியாயத்திலுள்ள (68,69 ஆகிய) வசனங்களை ஓதிக்காட்டினேன்.
அதற்கு அவர்கள், "இது மக்காவில் அருளப்பெற்ற வசனமாகும். இதை மதீனாவில் அருளப்பெற்ற மற்றொரு வசனம் மாற்றிவிட்டது என்று கூறிவிட்டு, "ஓர் இறை நம்பிக்கையாளரைத் திட்டமிட்டே கொலை செய்தவனுக்கு நரகம்தான் தண்டனை. அதில் அவன் நிரந்தரமாக இருப்பான்" (4:93) எனும் இறைவசனமே அது என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5758 உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் பின் உத்பா (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
என்னிடம் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "குர்ஆனில் இறுதியாக அருளப்பெற்ற முழு அத்தியாயம் எதுவென உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். நான், "ஆம்; "அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வந்துவிட்டால்...'என்று தொடங்கும் (110ஆவது) அத்தியாயமே அது" என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள், "உண்மைதான்" என்றார்கள்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் அபூபக்ர் பின் அபீஷைபா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "எந்த அத்தியாயம் (குர்ஆனில் முழுமையாக) அருளப்பெற்றது என உங்களுக்குத் தெரியுமா?" என இடம் பெற்றுள்ளது. "இறுதியாக' எனும் குறிப்பு இடம்பெறவில்லை.
- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.
அதில், "இறுதியாக அருளப்பெற்ற அத்தியாயம்' என இடம்பெற்றுள்ளது. மற்ற விவரங்கள் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே இடம்பெற்றுள்ளன.

5759 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் தமது சிறு ஆட்டு மந்தை(யை மேய்த்துக்கொண்டு அதன்) உடன் இருந்தார். அப்போது (ஒரு படைப்பிரிவில் வந்த) முஸ்லிம்கள் அவரை (வழியில்) சந்தித்தனர். அவர், "அஸ்ஸலாமு அலைக்கும்" (உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும்) என்று (இஸ்லாமிய முகமன்) கூறி, (தம்மை முஸ்லிம் என இனம் காட்டி)னார். ஆனால், அவரைப் பிடித்து அவர்கள் கொன்றுவிட்டனர்; அந்த ஆட்டு மந்தையையும் எடுத்துக்கொண்டனர்.
அப்போதுதான், "உங்களுக்கு முகமன் (சலாம்) கூறியவரிடம் "நீ இறைநம்பிக்கையாளன் அல்லன்' என்று இவ்வுலக வாழ்க்கையின் (அற்பப்) பொருளைப் பெறுவதற்காகக் கூறி (அவரைக் கொன்று)விடாதீர்கள்" (4:94) எனும் வசனம் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
இந்த (4:94ஆவது) வசனத்தின் மூலத்திலுள்ள "அஸ்ஸலம்' எனும் சொல்லை, இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் "அஸ்ஸலாம்' என்று ஓதினார்கள். (பொருள் ஒன்றே.)

5760 பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அறியாமைக் காலத்தில்) அன்சாரிகள் "ஹஜ்' செய்(ய "இஹ்ராம்' கட்டி முடித்)துவிட்டு, மீண்டும் (வீட்டுக்கு) வருவதானால், வீடுகளில் அதன் (முன்பக்க வாசல் வழியாக நுழையாமல்) பின்பக்க வாசல் வழியேதான் நுழைவார்கள்.இந்நிலையில் அன்சாரிகளில் ஒருவர் தமது (வீட்டின்) முன்வாசல் வழியாகவே நுழைந்துவிட்டார். இது குறித்து அவரிடம் (ஆட்சேபணை) கூறப்பட்டது. அப்போதுதான், "நீங்கள் வீடுகளுக்குள் அவற்றின் பின்புற வழியாக வருவது புண்ணியமன்று" (2:189) எனும் இறைவசனத்தொடர் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

## பாடம் : 1 "இறைநம்பிக்கை கொண்டோரின் உள்ளங்கள் அல்லாஹ்வின் நினைவால் பணியும் நேரம் அவர்களுக்கு வரவில்லையா?'' (57:16) எனும் இறை வசனத் தொடர்.

5761 அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டதற்கும், அல்லாஹ் "இறைநம்பிக்கை கொண்டோரின் உள்ளங்கள் அல்லாஹ்வின் நினைவால் பணியும் நேரம் அவர்களுக்கு வரவில்லையா?" (57:16) என்று இந்த வசனத்தின் மூலம் எங்களைக் கண்டிப்பதற்கும் இடையே நான்கு ஆண்டுகள் மட்டுமே இடைவெளி இருந்தது.

## பாடம் : 2 "நீங்கள் தொழுமிடங்கள் ஒவ்வொன்றிலும் உங்களது அலங்காரத்தை மேற்கொள்ளுங்கள்'' (7:31) எனும் வசனத் தொடர்.

5762 இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(அறியாமைக் காலப்) பெண்கள் இறையில்லம் கஅபாவை நிர்வாணமாகச் சுற்றி (தவாஃப்) வருவார்கள். அப்போது அவர்கள், "தவாஃப் ஆடையை இரவல் தருபவர் யார்?" என்று கூறி, (அதைப் பெற்று) தமது இன உறுப்பின் மீது வைத்துக்கொண்டு, பின்வருமாறு பாடுவார்கள்:
"இன உறுப்பில்
சிறிதளவோ முழுவதுமோ

வெளிப்படுகிறது
இந்நாள்.
இதை
எவரும் பார்க்க
அனுமதிக்க முடியாது
என்னால்".

எனவேதான், "நீங்கள் தொழுமிடங்கள் ஒவ்வொன்றிலும் உங்களது அலங்காரத்தை மேற்கொள்ளுங்கள்" (7:31) எனும் வசனம் அருளப்பெற்றது.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**பாடம் : 3 "உங்கள் பெண்களை விபசாரத்திற்கு நிர்பந்திக்காதீர்கள்'' (24:33) எனும் வசனத்தொடர்.**

5763 ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல் லாஹ் பின் உபை பின் சலூல், தன் அடிமைப் பெண்ணிடம், "நீ சென்று விபசாரத்தில் ஈடுபட்டு எதையேனும் ஈட்டி வா" என்று சொன்னான். அப்போதுதான் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ், "கற்பொழுக்கம் நாடும் உங்கள் பெண்களை இவ்வுலக வாழ்க்கையின் சாதனங்களைப் பெறுவதற்காக விபசாரத்துக்கு நிர்பந்திக்காதீர்கள். யாரேனும் அவர்களை நிர்பந்தித்தால் நிர்பந்திக்கப்பட்ட அப்பெண்களை அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்" (24:33) எனும் வசனத்தை அருளினான். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

5764 ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் பின் உபை பின் சலூலிடம் "முசைக்கா', "உமைமா' எனப்படும் இரு அடிமைப் பெண்கள் இருந்தனர். அவன் அவ்விருவரையும் நிர்பந்தித்து விபசாரத்தில் ஈடுபடுத்திவந்தான். அவ்விரு (அடிமைப்) பெண்களும் நபி (ஸல்) அவர்களிடம் (வந்து) அதைப் பற்றி முறையிட்டனர். அப்போதுதான், "உங்கள் பெண்களை விபசாரத்திற்கு நிர்பந்திக்காதீர்கள்" என்று தொடங்கி, "மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்" (24:33)என்பது வரை அல்லாஹ் அருளினான்.

**பாடம் : 4 "இந்த இணைவைப்பாளர்கள் யாரை(த் தெய்வங்களாக) அழைக்கிறார்களோ அவர்களேகூட தம்முடைய (உண்மையான) இறைவனின் நெருக்கத்தை அடைவதற்கான வழியைத் தேடிக்கொண்டிருக்கின்றனர்'' (17:57) எனும் வசனத் தொடர்.**

5765 அபூமஅமர் (ரஹ்) அவர்கள் கூறிய தாவது:
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "இந்த இணைவைப்பாளர்கள் யாரை(த் தெய்வங்களாக) அழைக்கிறார்களோ அவர்களேகூட தம்முடைய (உண்மையான) இறைவனின் நெருக்கத்தை அடைவதற்கான வழியைத் தேடிக்கொண்டிருக்கின்றனர்" (17:57) எனும் வசனம் தொடர்பாக(ப் பின்வருமாறு) விளக்கமளித்தார்கள்:

(அன்றைய இணைவைப்பாளர்களால்) வழிபாடு செய்யப்பட்டுவந்த "ஜின்' இனத்தாரில் சிலர், இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டுவிட்டனர். அவர்களை வழிபட்டுவந்த மக்கள் அவ்வழிபாட்டிலேயே நீடித்துக்கொண்டிருக்க, அந்த "ஜின்' இனத்தாரில் சிலர் இஸ்லாத்தை தழுவிவிட்டனர்.

5766 அபூமஅமர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"இந்த இணைவைப்பாளர்கள் யாரை(த் தெய்வங்களாக) அழைக்கிறார்களோ அவர்களேகூட தம்முடைய (உண்மையான) இறைவனின் நெருக்கத்தை அடைவதற்கான வழியைத் தேடிக்கொண்டிருக்கின்றனர்" (17:57) எனும் வசனம் தொடர்பாக அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) விளக்கமளித்தார்கள்:
மக்களில் சிலர் "ஜின்' இனத்தாரில் சிலரை வழிபட்டுவந்தனர். அப்போது அந்த "ஜின்'கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டனர். மனிதர்கள் தங்களது (ஜின்) வழிபாட்டையே பலமாகப் பிடித்துக் கொண்டிருந்தனர். அப்போதுதான் இந்த 17:57ஆவது வசனம் அருளப்பெற்றது.
- மேற்கண்ட ஹதீஸ் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள் ளது.

5767 அப்துல்லாஹ் பின் உத்பா பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"இந்த இணைவைப்பாளர்கள் யாரை(த் தெய்வங்களாக) அழைக்கிறார்களோ அவர்களேகூட தம்முடைய (உண்மையான) இறைவனின் நெருக்கத்தை அடைவதற்கான வழியைத் தேடிக்கொண்டிருக்கின்றனர்" (17:57) எனும் வசனம் தொடர்பாக அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் பின்வருமாறு விளக்கமளித்தார்கள்:
இந்த வசனம் அரபியரில் சிலர் தொடர்பாக அருளப்பெற்றது. அவர்கள் "ஜின்' இனத்தாரில் சிலரை வழிபட்டுக்கொண்டிருந் தனர். ஆனால், அந்த "ஜின்'கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டுவிட்டனர். இதை உணராமல் அந்த (அரபு) மக்கள் அந்த "ஜின்'களையே வழிபட்டுக்கொண்டிருந்தனர். அப்போதுதான் இந்த வசனம் அருளப்பெற்றது.

**பாடம் : 5 பராஅத் (அத்தவ்பா), அல்அன்ஃபால், அல்ஹஷ்ர் (9,8,59) ஆகிய அத்தியாயங்கள்.**

5768 சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "அத்தவ்பா' எனும் (9ஆவது) அத்தியாயம் தொடர்பாகக் கேட்டேன். அவர்கள் "தவ்பா அத்தியாயமா? அது (நயவஞ்சகர்களை) அம்பலப்படுத்தக்கூடிய அத்தியாயமாகும். அவர்களில் இத்தகையோர் உள்ளனர்; அவர்களில் இத்தகையோர் உள்ளனர் என (நயவஞ்சகர்களிலுள்ள எல்லாப் பிரிவினரையும் இனங்காட்டி) இவ்வத்தியாயம் இறங்கிக் கொண்டேயிருந்தது. எந்த அளவுக்கென்றால், தம்மில் ஒருவரைக்கூட விட்டுவைக்காமல் அனைவர் பற்றியும் அதில் குறிப்பிடப்பட்டுவிட்டது என நயவஞ்சகர்கள் எண்ணினார்கள்" என்று கூறினார்கள்.
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் "அல்அன்ஃபால்' எனும் (8ஆவது) அத்தியாயம் குறித்துக் கேட்டேன். அவர்கள் "அது பத்ருப்போர் (பற்றிப்பேசும்) அத்தியாயமாகும்" என்றார்கள்.
நான் "அல்ஹஷ்ர்' எனும் (59ஆவது) அத்தியாயம் குறித்துக் கேட்டேன். அவர்கள், "அது பனூநளீர் (யூதக்) குலத்தார் குறித்து அருளப் பட்டதாகும்" என்று பதிலளித்தார்கள்.

## பாடம் : 6 மதுவிலக்குச் சட்டம் அருளப்பட்ட விவரம்.

5769 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தந்தை, கலீஃபா) உமர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி உரை நிகழ்த்தினார்கள். அப்போது அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:
இறைவாழ்த்துக்குப்பின்! கவனத்தில் கொள்ளுங்கள்! மது ஐந்து வகைப் பொருட்களால் தயாரிக்கப்பட்டுவந்த நிலையில் மதுபானத் தடை(ச் சட்டம் நடைமுறைக்கு) வந்தது. தொலி நீக்கப்பட்ட கோதுமை, தொலி நீக்கப்படாத கோதுமை,பேரீச்சம் பழம், உலர்ந்த திராட்சை, தேன் ஆகியவையே அந்தப் பொருட்கள் ஆகும். (ஆயினும்,) அறிவுக்குத் திரையிடக்கூடிய அனைத்தும் மதுவாகும்.
மக்களே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மூன்று விஷயங்கள் குறித்துத் தெளிவானதொரு முடிவை நமக்கு எடுத்துரைத்துவிட்டு நம்மைப் பிரிந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும் என நான் விரும்பியதுண்டு:
1. ஒருவரின் சொத்தில் (அவருக்குப் பெற்றோரோ மக்களோ இல்லாமல் சகோதரன் இருக்கும் போது) அவருடைய பாட்டனாருக்கு எவ்வளவு பங்கு கிடைக்கும்?
2. "கலாலா' என்றால் என்ன?
3. வட்டியின் சில வகைகள் குறித்த சட்டம்.

5770 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
(என் தந்தை, கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீதிருந்தபடி பின்வருமாறு கூறியதை நான் கேட்டேன்:
இறைவாழ்த்துக்குப்பின்! மக்களே! மது ஐந்துவகைப் பொருட்களால் தயாரிக்கப்பட்டு வந்த நிலையில் மதுபானத் தடை(ச் சட்டம் நடைமுறைக்கு) வந்தது. திராட்சைப் பழம், பேரீச்சம் பழம், தேன், தொலி நீக்கப்பட்ட கோதுமை, தொலி நீக்கப்படாத கோதுமை ஆகியவையே அப்பொருட்களாகும். (ஆயினும்) அறிவுக்குத் திரையிடக்கூடிய அனைத்தும் மதுவாகும்.
மக்களே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மூன்று விஷயங்கள் குறித்துத் தெளிவானதொரு முடிவை நமக்கு எடுத்துரைத்திருந்தால், நாம் தெளிவு பெற்றிருப்போம் என்று நான் விரும்பியதுண்டு.
1. பாட்டனார். (அதாவது ஒருவருடைய சொத்தில் அவருக்குப் பெற்றோரோ மக்களோ இல்லாமல் சகோதரன் இருக்கும்போது பாட்டனாருக்கு எவ்வளவு பங்கு?)
2. "கலாலா' (என்றால் என்ன?)
3. வட்டியின் சில வகைகள் குறித்த சட்டம்.
- மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.
அவற்றில் இஸ்மாயீல் பின் உலய்யா (ரஹ்) அவர்களது அறிவிப்பில், (மது தயாரிக்கப்படும் பொருட்களில் ஒன்றாக) "திராட்சை' என்பது இடம்பெற்றுள்ளது; மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்று.

ஈசா பின் யூனுஸ் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மற்றொரு ஹதீஸில் இடம் பெற்றுள்ளதைப் போன்று "உலர்ந்த திராட்சை' என்று காணப்படுகிறது.

**பாடம் : 7 "இவர்கள் தம் இறைவனின் (மார்க்க) விஷயத்தில் சண்டையிட்டுக்கொண்ட இரு பிரிவினர் ஆவர்'' (22:19) எனும் வசனத்தொடர்.**

5771 கைஸ் பின் உபாத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
"இவர்கள் தம் இறைவனின் (மார்க்க) விஷயத்தில் சண்டையிட்டுக்கொண்ட இரு பிரிவினர் ஆவர்" (22:19) எனும் வசனம், பத்ருப் போரன்று (பொதுச்சண்டை நடைபெறுவதற்கு முன்) தனித்து நின்று போராடிய, ஹம்ஸா, அலீ, உபைதா பின் அல்ஹாரிஸ் (ரலி) ஆகியோர் தொடர்பாகவும், மற்றும் (இணைவைப்பாளர்களான) ரபீஆவின் புதல்வர்களான உத்பா, ஷைபா மற்றும் வலீத் பின் உத்பா ஆகியோர் தொடர்பாகவும் அருளப்பட்டது" என்று அபூதர் (ரலி) அவர்கள் சத்தியமிட்டுக் கூறியதை நான் செவியுற்றேன்.
- மேற்கண்ட ஹதீஸ் அபூதர் (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## - ஸஹீஹ் முஸ்லிம் நிறைவுற்றது -